ஏழாவது

# அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்.

அருச்சுனனது தீர்த்தயாத்திரைவரலாற்றைக் கூறும் பாகமென்று பொருள். அர்ஜுநன், தீர்த்தயாத்ரா - வடசொற்கள். அருச்சுநன் என்பதற்கு - வெண்ணிறமுடையவனென்று பொருள்; இது - முதலில், இந்நிறமுடைய கார்த்தவீரியமகாராசனுக்குப் பெயராயிருந்து, பின்பு, அவனைப்போன்ற சௌரியதைரியங்களையுடைய இப்பார்த்தனுக்குஇட்டுவழங்கப்பட்டது: இது, உவமவாகுபெயரின்பாற்படும். பார்த்தன் கருநிறமுடையவனாதலால், அவனுக்கு அருச்சுனனென்பது நிறம்பற்றிவந்த இயற்பெயரென்றல் பொருந்தாது. இனி, அருச்சுநன் என்பதற்கு - பசுமைநிறமுடையவனென்று பொருள்கூறுவாருமுளர். அன்றியும், பார்த்தன் பிறந்தபொழுது வெண்ணிறமுடையனாயிருந்து பின்பு கருநிறமடைந்தானென்று கூறலும் உண்டு. தீர்த்தயாத்ரை - புண்யதீர்த்தங்களில் நீராடுதலை உத்தேசித்துப் பிரயாணஞ்செய்தல்.

இச்சருக்கத்திலும் கடவுள்வாழ்த்துச்செய்யுள் காணப்படவில்லை. * இதற்குக் காரணம், திரௌபதிமாலையிட்டசருக்கத்தின்முதலிற் கூறப்பட்டது. இனி, தருமபுத்திரனது நீதிநெறிதவறாத அரசாட்சியிற் சனங்கள் ஒருதுயருமின்றி இனிதுவாழ்ந்தசெய்தியைக் கூறுகிற இச்சருக்கத்து முதற்செய்யுளையே வஸ்துநிர்த்தேசரூபமான மங்களமாக ஆசிரியர் கருதினரெனக் கொள்ளினுமாம்.

## வேறு.

[தருமபுத்திரனது நீதிதவறாத அரசாட்சி.]

க. துன்பம்பய மிடிநோய்பகை சோரங்கொலை யெய்தா
தின்பம்பொரு ளறன்யாவையு மியல்பாதலி னெய்தித்
தன்பைங்குடை நிழன்மன்பதை தரியார்முனை மதியா
வன்பன்றனை நிகர்வாழ்வுற வருநாள்களி லொருநாள்.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) தரியார் முனை மதியா வன்பன் - பகைவர்களுடைய போர்த்திறத்தைப் பொருள்செய்யாத வலிமையையுடையவனான தருமபுத்திரன்,— தன் பைங் குடை நிழல் - தனது குளிர்ந்த குடைநிழலின்கீழுள்ள, மன்பதை - சனங்கள், துன்பம் பயம் மிடி நோய் பகை சோரம் கொலை எய்தாது - துன்பம் அச்சம் வறுமை வியாதி பகை களவு கொலை ஆகிய இத்தீங்குகளை அடையாமல், இன்பம் பொருள் அறன் யாவையும் இயல்பு ஆதலின் எய்தி - இன்பம் செல்வம் தருமம் ஆகிய இவையனைத்தையும் இயல்பாக அடைந்து, தனை நிகர் வாழ்வு உற - தன்னையொத்த இனியவாழ்க்கையை யடையும்படி, வரும் - அரசுசெய்துவருகிற, நாள்களில் - தினங்களுள், ஒரு நாள் - ஒருதினத்தில், (எ - று.)—'திருவாயின் மருங்கே ஒரு வைதிகமுனி வந்து புகுந்தான்' என அடுத்தகவியோடு முடியும்.

தன்குடைநிழலில் மன்பதை தீமையெய்தாது நன்மையெய்தி வாழ்வுறத் தருமன் (அரசாண்டு) வரும் நாள்களில் என இயையும். மன்னுயிரைத் தன்னுயிர்போலப் பாதுகாக்குந் தன்மையோடு, பகைவரை எளிதில் அழிக்கவல்ல வன்மையையுமுடைமை விளங்க, 'தரியார்முனைமதியா வன்பன்' என்றார். நீதிதவறாதஆளுகையைக் குடைநிழலென்றல் மரபு. மன்பதை - மக்கட்பரப்பு; சனசமூகம். தனைநிகர்வாழ்வு என்பது - அரசனாகிய தரும

* "அருமாமறையுணராதலமருசேவடியருளா
லிருமாநிலமிசைதோய்வுறவியலானிரைவழிபோய்த்
திருமாநிகரிடைமாதர்கடிகழ்வேல்விழிமகிழ
வருமாதவன்விளையாடலைமறவாதெனதுளமே"

என்ற ஒருசெய்யுள் இச்சருக்கத்துக்கடவுள்வாழ்த்தாகச் சிலபிரதிகளிற் காணப்படுகிறது.

னது வாழ்க்கையை யொத்த வாழ்க்கை யென்றும், வேறுஒப்புமையில்லா மையால் தன்னைத் தானே யொத்த வாழ்க்கை யென்றும் பொருள்படும். தரியார்-மனம்பொருதவர்; எதிர்மறைவினையாலணையும்பெயர். பைங்குடை யென்பதில், பசுமை - குளிர்ச்சியின்மேலது. நான்குவகைப் புருஷார்த்தங் களுள் வீடு மறுமைக்கு உரியதாதலால், அது தவிர இம்மைக்குஉரியனவான அறம்பொருளின்ப மென்ற மூன்றையும் தலைகீழாக 'இன்பம்பொருளறம்' என மாறுபடவைத்தார், தலைதடுமாற்ற மென்னுந் தந்திரவுத்தியால். எளி தில் எல்லோராலும் விரும்பப்படுவதனால் இன்பம் முன்னும், "பொருளு டையான்கண்ணதே போகம்" என்றபடி இன்பத்துக்குப் பொருள் இன்றி யமையாததால் அதனையடுத்துப் பொருளும், பொருள்படைத்ததன்பயன் தருமஞ்செய்தலும் பொருள்பெறுதற்குக் காரணம் முற்பிறப்பிற்செய்த தரு மமு மாதலால் அதனையடுத்து அறமும் வைக்கப்பட்ட தென்னலாம்.

இதுமுதல் இருபதுகவிகள் - பெரும்பாலும் நான்காஞ்சீரொன்று மாச் சீரும், மற்றைமூன்றும் மாங்கனிச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (க)

[தருமனது அரண்மனைவாயிலில் ஓர் அந்தணன் வந்து முறையிடல்.]

உ. அறையோதவனஞ்சூழ்புவியரசானவனைத்துந்
திறையோடிடமறநிற்பதொர்திருவாயிலின்மருங்கே
யிறையோடுயரிருகையுமெடுத்தெண்ணுறமுறையோ
முறையோவெனவொருவைதிகமுனிவந்துபுகுந்தான்.

(இ - ள்.) அறை - ஒலிக்கின்ற, வநம் - அலைகளையுடைய, வனம்-(கட லின்) நீரினால், சூழ் - சூழப்பட்ட, புவி - பூமியில், அரசு ஆன அனைத்தும் - அரசர்களாகவுள்ள எல்லோரும், திறையோடு - (தாம்தாம் செலுத்தவேண் டிய) திறைப்பொருள்களுடனே, இடம் அற நிற்பது-வெற்றிடமில்லாதபடி [இடம்போதாதபடி] நெருங்கிநிற்கப்பெற்ற, ஓர் - ஒப்பற்ற, திரு வாயில் மருங்கே-சிறந்த அரண்மனைவாயிலின் புறத்தே,--ஒரு வைதிக முனி-வேத வொழுக்கத்தையுடையவனான ஓர் அந்தணன், இறையோடு - வருத்தத்துட னே.உயர் இரு கையும் எடுத்து-இரண்டுகைகளையும்உயரவெடுத்து, எண் உற- (காண்பவர் இது என்னேயென்று)ஆலோசிக்கும்படி. முறையோ முறையோ என -'இதுமுறையோ முறையோ' என்று குறைகூறிமுறையிட்டுக்கொண்டு, வந்து புகுந்தான் - வந்துசேர்ந்தான்; (எ - று.)

அறை - வினைத்தொகை. வநம் - வடசொல். அரசுஎன்பது - பொரு ளால்உயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாதலால்,'அரசானவனைத் து'என்றார். ஓர் - விகாரம். 'இறையோடுயரிருகையு மெடுத்து'என்பதற்கு - தலைமேற் கைகூப்பிக்கொண்டு என்றும் உரைக்கலாம்;இறை-தலை. எண் - எண்ணம்; முதனிலைத்தொழிற்பெயர். முறையோ முறையோ என-முறை ப்பாடு; அடுக்கு - அவலம் பற்றியது: ஓகாரம் - எதிர்மறைமேலது. வேத விதிப்படி ஒழுகுபவன் வைதிகன்; வடமொழித் தத்திதாந்தநாமம். (உ)

[அருச்சுனன் வந்து வினவ, அந்தணன் செய்திகூறல்.]

ங. கடைகாவலர்குறைகூறலும்விசயன்கடிதிற்றன்
புடைகாவலர்தொழவந்துபுவித்தேவனைமறையின்
றொடைகாவலவிதுவென்னெனவவனுந்தொடுகழலோய்
விடைகாவலர்நிரைகொண்டனர்வில்வேடுவரென்றான்.

(இ - ள்.) கடை காவலர் - அரண்மனை வாயில் காவலாளர்கள், குறை கூறலும் - (அந்த அந்தணனது) முறைப்பாட்டை (அரண்மனையினுட் செ ன்று) சொன்னவுடனே, விசயன் - அருச்சுனன், கடிதின்-விரைவாக, தன் புடை காவலர் தொழ வந்து - தனதுபக்கங்களில் அரசர்கள்வணங்க வந்து, புவி தேவனை - பூதேவனாகிய பிராமணனை (நோக்கி), மறையின் தொடை காவல இது என் என-'வேதங்களின்தொடர்ச்சியைப் பாதுகாத்தலில் வல் லவனே! நீ இங்ஙனம் முறையிடுவது என்னகாரணத்தால்?'என்று வினவ,

அவனும் - அந்த அந்தணனும், விடை - (அவ்வினாவிற்கு) விடையாக, 'தொடு கழலோய் - அணிந்த வீரக்கழலையுடையவனே! வில் வேடுவர் நிரை காவலர் கொண்டனர் - வில்லின் திறத்தையுடைய வேடர்கள் (எனது) பசுக்கூட்டங்களை (அவற்றை)க் காக்கின்ற இடையர்களிடத்தினின்று கொள்ளை கொண்டார்கள்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

விடை என்றான் - என்று விடைகூறினானென்க. என்றான் என்பது - என்று சொன்னானென்று பொருள்படுதலால், சொல்லெச்சம். காவலர்-ஐந்தாம்வேற்றுமைத்தொகை, நீக்கப்பொருளது. எதிர்த்த இடையர்களைப்பொருது வென்ற கருவியை யுடைமை தோன்ற, 'வில்வேடுவர்' என்றான். வேடு-மிருகபட்சிகளைப் பிடித்து வருத்துந் தொழில்; அதனையுடையவர், வேடுவர்: வேடர். எனக்குநேர்ந்த இந்த ஆபத்தை நீக்கவல்ல வீரமுடையா யென்பான், 'தொடுகழலோய்' என விளித்தான். கழலோய்-கழலான் என்பதன் விளி; னகரவீற்றுப்பெயர் ஈறுதிரிந்து அயல் ஆகாரம் ஓகாரமாயிற்று. புவித்தேவன் - பூசுரன். வேதங்களை இடைவிடாது பாராயணஞ்செய்பவனே யென்பான், 'மறையின்தொடைகாவல' என்றான். (௩)

[அருச்சுனன் அந்தணனுக்கு அபயமளித்து வில்லெடுக்கச்சென்றவிடத்துத் தருமனுடனே திரௌபதியைக் காணுதல்.]

௪. அஞ்சாதொழிமுனிநீயுனதானின்கணமின்றே
யெஞ்சாவகைதருவேனெனவேவுக்கொருதிலகன்
வெஞ்சாபமெடுப்பான்வருவிசயன்றருமனுடன்
மஞ்சார்பொழில்விளையாடிடுமயில்சீறடிகண்டான்.

(இ - ள்.) 'முனி - முனிவனே! நீ—, அஞ்சாதொழி - அஞ்சவேண்டா: உனது ஆனின் கணம்-உன்னுடைய பசுக்கூட்டத்தை, இன்றே-இப்பொழுதே, எஞ்சா வகை தருவேன் - ஒன்றுங்குறையாதபடி (யான் மீட்டுக்கொணர்ந்து) கொடுப்பேன்,' என-என்று (அந்தணனுக்கு அபயமளித்து) உறுதிமொழிகூறி, வெம் சாபம் எடுப்பான் வரு-கொடிய (தனது) வில்லை யெடுத்தற்குவந்த, ஏவுக்கு ஒரு திலகன் விசயன்-பாணப்பிரயோகவித்தைக்கு ஒரு திலகம்போல அழகுசெய்பவனான அருச்சுனன், மஞ்சு ஆர் பொழில் தருமனுடன் விளையாடிடு மயில் சிறுஅடி கண்டான் - மேகம்படிந்த [உயர்ந்த] சோலையில் தருமபுத்திரனுடனே விளையாடுகிற மயில்போன்ற திரௌபதியினுடைய சிறியபாதங்களைக் கண்டான்; (எ - று.)

"நுதலடிநுசுப்பென மூவழிச் சிறுகி" என்றபடி மகளிர்க்குக் கால்சிறுத்திருத்தல் உத்தமவிலக்கணமாதலால், 'சீறடி' எனப்பட்டது. சிறுமை + அடி = சீறடி; பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டது. ஆனின்—ன், இன்-சாரியைகள். கணம், திலகம், சாபம் - வடசொற்கள். அஞ்சாதொழியென்றதில், ஒழி என்றது - துணிவைவிளக்கும். முனி - அண்மைவிளியாதலின், இயல்பாய் நின்றது. இன்றே, ஏகாரம் - விரைவுகுறிக்கும். ஏவுக்கொருதிலகன் - விற்றிறத்தில் ஒப்பற்ற மேலோன். ஏவுக்கு, ஏ என்ற ஓரெழுத்தொருமொழி - அம்புக்குப் பெயராம்; உ - சாரியை. எடுப்பான் - எச்சம். மஞ்சு ஆர் பொழில் - அழகுநிறைந்த சோலையுமாம். மயில் - ஆகுபெயர். (௪)

[அருச்சுனன் வேடர்களை வென்று நிரைமீட்டல்.]

௫. காணாமெய்ந்நடுங்காவொளிகருகாமனமிகவு
நாணாவிரைவொடுசாயகநாண்வெஞ்சிலைகொள்ளாச
சேணாநெறிசெல்லாநனிசீறாவமர்வெல்லா
மாணாநிரைமீளாவொரிமைப்போதினில்வந்தான்.

(இ - ள்.) காணா - (தருமனுடன் திரௌபதியைக்) கண்டு, மெய் நடுங்கா - (அந்தத் தோஷத்தால்) உடம்புநடுங்கி, ஒளி கருகா - முகத்தில் ஒளிகுன்றி, மனம் மிகவும் நாணா - மனத்தில் மிகவும் வெட்கங்கொண்டு, சாயகம் நாண் வெம் சிலை விரைவொடு கொள்ளா - அம்புகளையும் நாணியை

யுடைய கொடியவில்லையும் விரைவாக எடுத்துக்கொண்டு, சேண் ஆம் நெறி செல்லா - நெடுந்தூரமாகியவழியிற் போய், நனி சீறு அமர் வெல்லா-மிகக் கோபங்கொண்டு போர்செய்து (வேடர்களை) வென்று, மாண் ஆ நிரை மீளா - மாட்சிமைப்பட்ட பசுக்கூட்டங்களை மீட்டு, ஓர் இமை போதினில் வந்தான் - ஒருமாத்திரைப்பொழுதிலே மீண்டு வந்து சேர்ந்தான்; (எ-று.)

வெகுவிரைவில் வந்தானென்றற்கு, 'ஓரிமைப்போதினில் வந்தான்' என்றார். மாண் ஆ - பண்புத்தொகை. பசுக்களுக்கு மாட்சி - ஓமத்துக்கு வேண்டிய பால் தயிர் நெய் முதலியவற்றை அளித்தல் முதலியன. மிகவும், உம்மை - சிறப்பு. காணு, நடுங்கா, கருகா, நாணு, கொள்ளா, செல்லா, சீறு, வெல்லா, மீளா - உடன்பாட் டெச்சங்கள். ஸாயகம் - வடசொல். நனி - மிகுதிகுறிக்கும் விசேடித்தவுரிச்சொல். (ரு)

[அருச்சுனன் தீர்த்தயாத்திரைக்குத் தருமனிடம் விடைபெறுதல்.]

௬. தொறுக்கொண்டவருயிருந்தொறுநிரையுங்கவர்சூரன்
மறுக்கம்படுமறையோன்மனமகிழும்படிநல்கிப்
பொறுக்குந்தவமுனிசொற்படிபுனிதப்புனல்படிவா
னிறுக்குந்துலைநிகர்தம்முனைநிகழ்வோடுபணிந்தான்.

(இ - ள்.) தொறு கொண்டவர் உயிரும் - பசுக்கூட்டங்களைக் கவர்ந்து கொண்டுசென்ற வேடர்களுடைய உயிரையும், தொறு நிரையும் - பசுக்கூட்டத்தையும், கவர் - கவர்ந்துகொண்டு வந்த, சூரன் - வீரனாகிய அருச்சுனன்,—மறுக்கம் படு மறையோன் மனம் மகிழும்படி நல்கி-கலக்கமடைந்த அந்தமுனிவனது மனம் மகிழும்படி (பசுக்கூட்டத்தை அவனுக்குக்) கொடுத்து, (உடனே), பொறுக்கும் தவம் முனி சொல் படி புனிதம் புனல் படிவான் - தாங்கியதவத்தையுடைய நாரதமுனிவனது சொல்லின்படி புண்ணியதீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்தற்பொருட்டு [தான் தீர்த்தயாத்திரை செல்லும் பொருட்டு விடைபெறுதற்காக], நிறுக்கும் துலை நிகர் தம்முனை நிகழ்வோடு பணிந்தான் - (பொருள்களை)நிறுத்து வரையறுக்கின்ற துலாக்கோலையொத்த [நடுவுநிலைமைதவறாத] தமையனான தருமனைப் பிரயாண சந்நாகத்தோடு வணங்கினான்; (எ - று.)

நிரை கவர்தல் - பொருளிலக்கணத்தில் வெட்சி யென்னுந் திணையும், நிரை மீட்டல் - கரந்தை யென்னுந் திணையுமாம்; "வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்" என்பது காண்க. தொறுக்கொண்டவருயிர் கவர்தல் - அவர்களுடைய உயிரை உடம்பினின்று நீக்கல். மறுக்கம் - கலங்குதல்: தொழிற்பெயர்; மறுகு - பகுதி, அம் - விகுதி, விரித்தல் - விகாரம். நிகழ்வு - செலவு. மிக்க அன்புக்கு இடமான அருச்சுனனை விட்டுப்பிரிய மனமில்லை யாயினும் முன் நியமித்துக்கொண்ட வரையறை தவறாது நடத்தல் வேண்டி அநுமதிதரும் நெறியுடையா னென்பார், 'நிறுக்குந் துலைநிகர் தம்முன்' என்றார்; தனதுநாட்டுக் குடிகளை முறைதவறாது நடத்தல்போலவே தாங்களும் நடக்கும்படி நிஷ்பக்ஷபாதமாக நீதி செய்பவ னென்க. பசுப் பெண்டிர் பாலர் பார்ப்பார் துறவோரைப் பாதுகாத்தல் அரசர்க்கு இன்றியமையாமையால், பசுவுக்கும் பார்ப்பானுக்கும் இடர் செய்த வேடர்களை அருச்சுனன் கொன்றான். படிவான் - எச்சம். 'நினைவோடு பணிந்தான்' என்றும் பாடம்; மனத்தில் அன்புடனே பணிந்தா னென்று பொருள். (சு)

## இதுமுதல் அருச்சுனனது தீர்த்தயாத்திரை.

[அருச்சுனன் கங்கையில் நீராடுகையில், நாககன்னியரும் நீராடவருதல்.]

எ. ஆடம்பரமன்வேடமகற்றித்தொழுதகுதொல்
வேடம்பெறுமறையோருடன்விசயன்புரவிசயன்
சூடந்தருபாகீரதிதோய்காலையிலவணே
சேடன்றலமடவார்புனலயர்வானெதிர்சென்றார்.

(இ - ள்.) விசயன் - அருச்சுனன்,—ஆடம்பரம் மன் வேடம் அகற்றி- ஆடம்பரத்தையுடைய தனது இராசவேடத்தைநீக்கி [தீர்த்தயாத்திரைக்கு உரிய வைதிகவேடங் கொண்டு], தொழு தகு தொல் வேடம் பெறு மறையோருடன் - (யாவரும்) வணங்கத்தக்க தொன்றுதொட்டுவருகிற தவத்துக்கு உரிய வேடத்தையுடைய அந்தணர்களுடனே, புர விசயன் சூடம் தரு பாகீரதி தோய் காலையில் - திரிபுரத்தை வென்றவனான சிவபிரானது சடைக்கற்றையினால் தரப்பட்டதாகிய கங்காநதியில் நீராடும்பொழுது, அவணே-அவ்விடத்திலே, சேடன் தலம் மடவார்-ஆதிசேஷனுக்கு உரியதான நாகலோகத்தி லுள்ள மகளிர், புனல் அயர்வான் - நீராடும்பொருட்டு, எதிர் சென்றார் - அவனெதிரில் வந்தார்கள்; (எ - று.)

ஆடம்பரம் - கண்டவளவில் நன்குமதிக்கத்தக்க கம்பீரமான தோற்றம்; ஆடையணிகளால் ஆவது. ஆடம்பரம், வேஷம், புரவிஜயன், ஜடம், ஷேஷன் - வடசொற்கள். கங்காநதியைத் தேவலோகத்திலிருந்து கீழுலகத்திற்குக் கொணர்கையில், அதன் விசையோடுவரும் வெள்ளப்பெருக்கை ஏற்றுக்கொள்ளுதற்கு ஏற்ற வலிமை பூமிக்கு இல்லையென்ற காரணத்தினால் பகீரதன் சிவபெருமானைப் பிரார்த்திக்க, அவனது வேண்டுகோளின்படி அச்சிவபிரான் அந்நதியைச் சடைமுடியில் ஏற்றுப் பின்பு சிறிது சிறிதாகப் பூமியில் விட்டருளியதனால், 'புரவிசயன்சூடந்தரு பாகீரதி' எனப்பட்டது. சேஷனென்ற பெயர் - பிரளயகாலத்திலும் அழியாமல் சேஷித்திருப்பவனென்று காரணப்பொருள்படும்; சேஷித்தல் - மிச்சப்படுதல். இவன், நாகலோகத்திலுள்ள சர்ப்பங்களுக்கெல்லாம் அரசனாதலால், அவ்வுலகம் 'சேடன்றலம்' எனப்பட்டது. மடவார் - மடமையையுடையவர்; மடமையாவது - பலவும் அறிந்தும் ஒன்றும் அறியாததுபோல் இருக்குந் தன்மை: இது, மகளிர்க்கு உரிய முக்கியகுணங்களுள் ஒன்று. அயர்வான் - எச்சம். 'தொழுதகு தொல்வேடம்' என்றதனால், தவவேடத்தின் உயர்வு விளங்கும்; அது - மரவுரியுடுத்தல், சடைமுடிதரித்தல், மான்றோல்போர்த்தல், புலித்தோலிலிருத்தல் முதலியன. (எ)

[அருச்சுனன் உலூபியை மணஞ்செய்துகொள்ளல்.]

அ. ஓடுங்கயல்விழியாரிலுலூபிப்பெயரவளோ
டாடும்புனலிடைநின்றவனநுராகமிகுந்தே
நாடும்பிலவழியேயவள்பின்சென்றுநலத்தா
னீடுங்கொடிமணமெய்தினன்முகில்போலுநிறத்தான்.

(இ - ள்.) முகில் போலும் நிறத்தான்-மேகம்போலுங் கருநிறமுடையனாகிய, ஆடும் புனலிடை நின்றவன் - ஸ்நானஞ்செய்கிற அக்கங்கைநீரில் நின்றவனான அருச்சுனன், ஓடும் கயல் விழியாரில் - (அங்கு நீராட வந்த) காதளவும் ஓடுகிற கயல்மீன்போன்ற கண்களை யுடையவர்களான நாககன்னிகைகளுள், உலூபி பெயரவளோடு - உலூபியென்னும் பெயரையுடையவளுடனே, அநுராகம் மிகுந்து - காதல்மிகுந்து, நாடும் பிலம் வழியே அவள் பின் சென்று - ஆராய்ந்து செல்லத்தக்க பிலத்துவாரவழியாக அவள்பின்னே சென்று, (பாதாளஞ்சேர்ந்து அங்கு),நலத்தால் நீடும் கொடி மணம் எய்தினன் - அழகினால் மிக்க பூங்கொடி போன்ற அவளை மணஞ்செய்துகொண்டான்; (எ - று.)

ஓடும் விழி யென இயையும். ஓடுங்கயலென இயைத்து, பிறழுங்கயல் என்றலும் ஒன்று. 'ஓடுங்கயல்விழியார்' என்றது - மிக்கரூபவதிகளாகிய நாககன்னியரின் கண்ணழகை யுணர்த்தும். 'உலூபிப் பெயரவளுடு அநுராக மிகுந்து' என்று ஏழாம்வேற்றுமை இடப்பொருள் படக் கூறாமல், 'உலூபிப் பெயரவளோடு அநுராகமிகுந்து' என்று மூன்றாம்வேற்றுமை உடனிகழ்ச்சிப்பொருள்படக் கூறியதனால், இவனுக்கு மாத்திரம் அவளிடத்தே அன்பு மிகுதலாகிய ஒருதலைக்காமமாகவன்றி, அவளுக்கும் இவனிடத்து அன்பு மிகுந்தமை கூறியவாறாம். அநுராகம் - வடசொல். புதிதாகச்செல்லும்

மணிதற்குப் பிலவழி இயங்குதற்கு அரிய நெறியென்பது தோன்ற, 'நாடும் பிலவழி' எனப்பட்டது. அந்நாககன்னியருள் உலூபியின் சிறப்பை விளக்குவார், 'நலத்தால் நீடுங் கொடி' என்றார். 'முகில்போலுநிறத்தான்' என்று அருச்சுனனது கறுப்பிலழகை விளக்கியவாறு. மிகுந்தே—ஏ - அசை. நிறத்தான் - பெயரெச்சமுற்று. கொடி - உவமையாகுபெயர். (அ)

[அருச்சுனன் நாகலோகத்திற் சிலநாள் இருந்து, இராவானைப் பெறுதல்.]

௯. இம்மென்றளிமுரல்பாயலிலின்பத்தைவளர்த்தும்
பொம்மென்பரிபுரநாண்மலர்பொற்சென்னியில்வைத்துஞ்
செம்மென்கனியிதழாளொடுசின்னாணலமுற்றா
னம்மென்கொடியனையாளுமிராவானையளித்தாள்.

(இ - ள்.) (அவ்வருச்சுனன்),—இம் என்று அளி முரல் பாயலில் - இம் மென்னும்ஒலிபட வண்டுகள் ஒலிக்கின்ற மலர்ப்படுக்கையில், இன்பத்தை வளர்த்தும் - (அவளோடு) சுகத்தை மிகுதியாகப் பெற்றும்,—பொம்மென் பரிபுரம் நாள் மலர் - பொம்மென்று ஒலிக்கிற சிலம்பென்னும் அணியை யணிந்த அன்றுபூத்ததாமரைமலர்போன்ற அவளுடைய பாதங்களை, பொன் சென்னியில் வைத்தும் - அழகிய தனது சிரசின்மீது கொண்டும்,—செம் மெல் கனி இதழாளொடு - சிவந்த மென்மையான கொவ்வைப்பழம்போன்ற அதரத்தையுடைய அவளுடனே, சில் நாள் நலம் உற்றான் - சிலநாள் இன்பத்தை அநுபவித்தான்; (பின்பு), அம் மெல் கொடி அனையாளும் - அழகிய மென்மையான பூங்கொடியைப் போன்ற அவ்வுலூபியும், இராவானை அளித்தாள் - இராவானென்ற புதல்வனைப் பெற்றாள்; (எ - று.)

இம்மெனல், பொம்மெனல் - ஓசை அநுகரணம். பாயல், அல் - சாரியை. மலர் - காலுக்கு, உவமையாகுபெயர். 'சென்னியில் வைத்து' என்றதற்கு ஏற்ப, 'மலர்' என்றார். இவன் அவளுடைய பாதத்தைச் சிரமேற் சூடுதல், அவள் ஊடல்கொண்டகாலத்தில் அதனைத் தணிவித்தற்கு என்க: ஊடலாவது - ஆடவரும் மகளிரும் இன்பநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்கும் பொருட்டு ஒருவரோடொருவர் சிறிது கொள்ளும் பிணக்கம்; இது - புலவியென்றும், பிரணயகலகமென்றுங் கூறப்படும். இன்சொல் முதலிய வேறு உபாயங்களால் தணிக்கக் கூடிய நிலையைக் கடந்து காலில் விழுதலாகியதோர் உபாயத்தினாலன்றித் தணிக்கக்கூடாத நிலையை யடைந்த பெரும் புலவியைத் தலைமகள் கொண்டகாலத்துத் தலைமகன் யாவரையும் வசப்படுத்தும் இயல்பினதான வணக்கத்தையே அவ்வூடல்தணித்தற்கு உரிய நல்லுபாயமாகக்கொண்டு தலைமகளது காலில் தனது முடி பட விழுந்து வணங்கும் இயல்பைக் கருதி, 'பரிபுரநாண்மலர் பொற்சென்னியில் வைத்து' என்றார்; "சில்லரிக் கிண்கிணி மென் செய்யமலர்ச்சீறடியைத், தொல்லை மணிமுடிமேற் சூட்டினான்" என்றார் நளவெண்பாவிலும். 'செம் மென்கனியிதழாளொடு' என்று அவளது இதழின் அழகை வருணித்ததனால், அதரத்தின் இனிமையைக் குறிப்பித்தவாறும். சில + நாள் = சின்னாள்: இப்புணர்ச்சி - "பலசில வெனுமிவை", "லளவேற்றுமையில்", "னலமுன்றனவும்" என்ற சூத்திரங்களால் அமையும். இராவாந் - வடமொழிப்பெயர்; அராவானெனப் பெயர்குறித்தல், வடநூலுக்கு முரணும். 'இம்மென்றளிமுரல்' என்ற அடைமொழியால், பாயல் - மலர்ப்பள்ளியாயிற்று. (௯)

[அருச்சுனன், நாகலோகத்தினின்று மீண்டு கிழக்குநோக்கிச் செல்லுதல்.]

௰. நாகாதிபன்மகண்மைந்தனலங்கண்டுமகிழ்ந்து
நாகாதிபன்மகன்மீளவுநதியின்வழிவந்து
நாகாதிபன்வண்சாரலினன்னீர்கள்படிந்து
நாகாதிபன்விடுமும்மதநாறுந்திசைபுக்கான்.

(இ - ள்.) நாக அதிபன் மகன் - சுவர்க்கலோகத்துக்குத் தலைவனான இந்திரனது மகனாகிய அருச்சுனன், நாக அதிபன் மகள் மைந்தன் நலம்

கண்டு மகிழ்ந்து - ஒரு நாகராசனது மகளான உலூபியிடத்துத் தோன்றிய அந்தப் புத்திரனது அழகைக் கண்டு சந்தோஷித்து, மீளவும் நதியின் வழி வந்து - மீண்டு பிலவழியாய்க் கங்காநதிக்கு வந்து, நாக அதிபன் வள் சாரலின் நல் நீர்கள் படிந்து - மலையரசனாகிய இமயமலையினது அழகிய சாரலிலுள்ள சிறந்த புண்ணிய தீர்த்தங்களில் நீராடி, (அவ்வடதிசையி னின்று), நாக அதிபன் விடு மும்மதம் நாறும் திசை புக்கான் - யானைகளுக் குத் தலைவனான ஐராவதமென்னும்யானை சொரிகிற மூன்றுவகை மதஜலங் கள் பரிமளிக்கப்பெற்ற கிழக்குத்திசையை யடைந்தான் ; (எ - று.)

"யானையுளரசன்" என்றாற்போல, 'நாகாதிபன்' என்றார். மும்மதம் - கன்னமிரண்டு, குறி ஒன்று ஆக மூன்றிடத்தினின்றும் பெருகுவன ; கர்ண மதம், கபோலமதம், பீஜமதம் என மூன்றுவகை யென்றலும் உண்டு. கிழ க்குத்திசையென்ற பொருளை, 'நாகாதிபன்விடுமும்மதநாறுந் திசை' என வேறுவகையாற் கூறினது, பிறிதினவிற்சியென்னும பொருளணி ; இச் செய்யுளின் அடிதோறும் 'நாக' என்ற சொல் வெவ்வேறுபொருளில்வந்தது, யமக மென்னுஞ் சொல்லணி ; இவ்விரண்டு அணிகளுஞ் சேர்ந்துவந்தத னால், சேர்வையணி. நாக மென்ற வடசொல் - மலையென்ற பொருளில் - சலியாதது என்றும், யானை யென்ற பொருளில் - நகத்தில் [மலையில்] வாழ் வது என்றும் காரணப்பொருள்படும் ; மற்றையபொருட்காரணம் முற்கூற ப்பட்டது. வண்சாரல் - பண்புத்தொகை. (கο)

[யமுனை முதலிய தீர்த்தங்களில் நீராடுதல்.]

கக. தெளிந்தாடரவணையையனிறம்போலநிறக்குங்
களிந்தாநதிமுதலாகியகடவுண்ணதிபலவு
முளிந்தாரழலெழுகானெறிமுக்கோலினராகித்
தெளிந்தாறியபெரியோரொடுசென்றாடினனன்றே.

(இ - ள்.) முக்கோலினர் ஆகி - திரிதண்டத்தை யேந்தியவர்களாய், தெளிந்து - (தத்துவஞானத்தால்) மனந்தெளிந்து, ஆறிய - சாந்தகுணத் தால் அடங்கியிருக்கிற, பெரியோரொடு - சிறந்த முனிவர்களுடனே, முளி ந்து ஆர் அழல் எழு கான் நெறி சென்று - கொதித்து வளாகிற நெருப்பு ஜ்வலிக்கப்பெற்ற [கொடிய] காட்டுவழியிலே போய்,—தெளிந்த ஆடு அரவு அணை ஐயன் நிறம் போல நிறக்கும் - உடல்தெளிந்து படமெடுத்தாடுந் தன்மையுள்ள ஆதிசேஷனைச் சயனமாகக்கொண்ட திருமாலினது திரு நிறம்போலக் கருநிறங்கொண்டுள்ள, களிந்தா நதி முதல் ஆகிய - யமுனாநதி முதலிய, கடவுள் நதி பலவும் - தெய்வத்தன்மையுள்ள நதிகள்பலவற்றிலும், ஆடினன் - நீராடினான் ; (எ - று.)—அன்று, ஏ - ஈற்றசை.

யமுனை - களிந்த மென்னும் மலையினின்றுந் தோன்றி, காளிந்தியென ஒருபெயர் பெறுதலால், 'களிந்தாநதி' எனப்பட்டது. நதிக்குத் தெய்வத் தன்மை - தன்னில் ஒருகால் மூழ்கியவரது அருவினை அனைத்தையும் அகற் றல். 'முளிந்தாரழல்' என்றது - காட்டுத்தீயை ; இதனால், அக்காட்டின் செல்லுதற்கு அருமை கூறியவாறு. "நாலே காகம் முக்கோல் மனையே, ஆயுங்காலை அந்தணர்க்கு உரிய" என்ற தொல்காப்பியத்தாலும், "உறித்தா ழ்ந்த காகமும் உறைசான்ற முக்கோலும். நெறிப்படச் சுவலசைஇ" என்ற கலித்தொகையினாலும், சன்னியாசிகளுக்குத் திரிதண்டம் உரியதாதல் உண ர்க. திரிதண்டம் - மூன்றுகோல் ஒன்றாகச் சேர்த்துக் கட்டப்பட்டது. துறவிகள் முக்கோல்பிடித்தல் - மனமொழி மெய் என்னும் திரிகரணங்களை யும் கண்டபடி செல்லவொட்டாமல் அடக்கித் தம்வசப்படுத்தினமைக்கும், காமம் வெகுளி மயக்க மென்னும் முப்பகையையும் வென்றமைக்கும், மண் ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்னும் ஈஷணாத்ரயங்களையும் சயி த்தமைக்கும் ஓர் அறிகுறியாகு மென்பர். முக்கோல் - வைஷ்ணவசந்யாசிக ளுக்கு உரியது. (கக)

[தென்றிசைநோக்கிவந்து திருவேங்கடமலை சேர்தல்.]

கஉ. பத்திக்குவரம்பாகியபார்த்தன்பலதீர்த்த
மத்திக்கினுமெத்திக்கினுமாமென்றவையாடிச்
சித்திக்கொருவிதையாகியதென்னாட்டினையணுகித்
தத்திச்சொரியருவித்தடவரவக்கிரிசார்ந்தான்.

(இ - ள்.) பத்திக்கு வரம்பு ஆகிய - பத்திக்கு ஓர் எல்லையாக வுள்ள, பார்த்தன் - அருச்சுனன்,—அ திக்கினும் - அந்தக் கீழ்த்திசையிலும், எ திக்கினும் - பலவிடங்களிலும் உள்ள, ஆம் என்றவை - விசேஷமுடையனவா மென்று சொல்லப்பட்டவையான, பல தீர்த்தம் - அநேகதீர்த்தங்களில், ஆடி - நீராடி,—(பின்பு),—சித்திக்கு ஒரு விதை ஆகிய - கருதியபயன் கை கூடுதற்கு ஒப்பற்ற மூலமாயுள்ள, தென் நாட்டினை - தக்ஷிணபூமியை, அணுகி - அடைந்து, தத்தி சொரி அருவி தட அரவக்கிரி சார்ந்தான் - குதித் துப் பாய்கின்ற அருவிகளையுடைய பெரிய திருவேங்கடமலையை யடைந் தான்; (எ - று.)—இத்திருப்பதியிலுள்ள பெருமாள் திருநாமம் - ஸ்ரீநிவா சன்; தாயார் திருநாமம் - அலர்மேன்மங்கை.

பக்தியின் முதிர்ச்சியெல்லை எவ்வளவு உண்டோ அவ்வளவையும் உடையா னென்பதும், பக்திமான்களுள் இவனினும் மேம்பட்டார் இல்லை யென்பதும், 'பத்திக்குவரம்பாகிய பார்த்தன்' என்றதன் கருத்து. இவன் விஷ்ணுபக்தி சிவபக்தி என்றஇரண்டையும் ஒருங்கேஉடைமையால், 'பத்தி' எனப் பொதுப்படக் கூறினார். பக்தி, தீர்த்தம், திக், ஸித்தி, கிரி - வட சொற்கள். வடதிசையில் கங்கைமுதலிய புண்ணியதீர்த்தங்களி லெல்லாம் நீராடியமை போலவே, கிழக்குத்திசையிலும் எல்லாப் புண்ணிய தீர்த்தங் களிலும் நீராடி யென்ற கருத்தை விளக்குதலால், 'அத்திக்கினும்' என்ற உம்மை - இறந்ததுதழுவியஎச்சப்பொருளை யுடையது. எத்திக்கினும், உம் மை - முற்றும்மை. பரதகண்டத்திலே தக்ஷிணதேசமாகிய தமிழ்நாடு, திரு வேங்கடம் திருவரங்கம் அத்திகிரிமுதலிய பலவிஷ்ணுஸ்தலங்களுக்கும், சிதம் பரம் காஞ்சீபுரம் முதலிய பலசிவஸ்தலங்களுக்கும் இடமாய், அடியார்கட் குக் கருதியபயன் கைகூடுதற்கு உரிய தானமாக இருத்தலால், 'சித்திக் கொருவிதையாகிய தென்னாடு' எனப்பட்டது. தென்னாட்டுக்கும் வடநாட் டுக்கும் இடையெல்லை திருவேங்கட மென்பது தோன்ற, 'தென்னாட்டினை யணுகி அரவக்கிரி சார்ந்தான்' என்றார். அரவம் - பாம்பு; இங்கே, ஆதிசே ஷன்; திருவேங்கடமலை, சேஷகிரி யென்று ஒருபெயர் பெறுதலால், 'அர வக்கிரி' எனப்பட்டது. பரமபதநாதனது ஆஜ்ஞையின்படி ஆதிசேஷனே மலையுருவமானதனாலும், மேருமலையிலிருந்து ஆதிசேஷனுடனே வாயுவி னாற் கொணரப்பட்டதனாலும், இதற்கு இப்பெயர் வாய்த்தது: இது - திரு மாலினது திவ்வியதேசங்கள் நூற்றெட்டினுள் ஒன்றும், அவற்றுள் வடநாட் டுத் திருப்பதிகள் பன்னிரண்டில் முதலதுமாகிய தலம். இம்மலையின் நீட்சி முப்பதுகாதமளவும் இருத்தலால், 'தடவரவக்கிரி' எனப்பட்டது. 'தத் திச் சொரி யருவி' என அடைமொழி கொடுத்ததனால், அத்திருமலையில் ஆகாசகங்கை, பாபவிநாசம், பாண்டவதீர்த்தம், குமாரதாரை, தும்புருதீர் த்தம், கோனேரி, ஆழ்வார்தீர்த்தம் முதலிய பல புண்ணியதீர்த்தங்கள் இருத் தல் தோன்றும். விதை - இங்கு இலக்கணையாய், காரணமென்னும்பொருளது.

[காஞ்சீபுரத்தை யடைதல்.]

கங. இச்சைப்படிதன்பேரறமெண்ணான்கும்வளர்க்கும் -
பச்சைக்கொடிவிடையோனொருபாகந்திறைகொண்டாள்
செச்சைத்தொடையினையோனுகர்தீம்பான்மணநாறுங்
கச்சைப்பொருமுலையாளுறைகச்சிப்பதிகண்டான்.

(இ - ள்.) தன் இச்சைப் படி - தனது விருப்பத்தின்படியே, பேர் அறம் எண்ணான்கும் - சிறந்த முப்பத்திரண்டு தருமங்களையும், வளர்க்கும் - வளர்க்கின்ற, பச்சை கொடி - பசியநிறமுள்ள கொடிபோன்றவளும், விடை

யோன் ஒருபாகம் திறை கொண்டாள்-விருஷபவாகனனாகிய சிவபிரானது (திருவுருவத்தில்) வாமபாகத்தைத் தனக்கு உரிய திறைப்பொருளாக [தங்குமிடமாக]க் கொண்டவளும், செச்சை தொடை - வெட்சிப் பூமாலையையுடைய, இளையோன் - இளையகுமாரனான முருகக்கடவுள், நுகர் - அமுதுசெய்த [உண்ட], தீம் பால் - இனிய பாலினது, மணம் - வாசனை, நாறும் - பரிமளிக்கின்ற, கச்சை பொரு முலையாள்-அணிந்த கச்சினை மோதுகின்ற [பருத்த]தனங்களை யுடையவளுமான காமாட்சியம்மை, உறை - எழுந்தருளியிருக்கும் இடமான, கச்சி பதி - காஞ்சீபுரியை, கண்டான் - பார்த்தான் [அடைந்தான்]; (எ - று.)

கச்சிப்பதி - தொண்டைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று: இது, முத்திதரும் நகரம் ஏழனுள் ஒன்றும்; (மற்றவை - அயோத்தி, மதுரை, மாயை, காசி, அவந்தி, துவாரகை என்பன.) கச்சி - காஞ்சீ என்ற வடசொல்லின் சிதைவு. பச்சைக்கொடி, திறைகொண்டாள், முலையாள்-ஒருபொருள்குறிக்கும் பலபெயர்கள். ஒருகாலத்தில் திருக்கைலாசத்திலே உத்தியானவனத்தில் உமாதேவி பரமசிவனது பின்னே வந்து விளையாட்டாக அப்பிரானுடைய இரண்டு திருக்கண்களையும் தனது இரண்டு திருக்கைகளால் ஒருகணப்பொழுது மறைக்க, அம்மாத்திரத்தில் சந்திரசூரியராதியர் அனைவருடைய ஒளிகளும் ஒழிந்து எங்கும் இருள்மூடி யுகங்கள்பலகழிந்து மன்னுயிர்கள் மிகவருந்த, அவ்வருத்தத்தை நெற்றிக்கண்ணின் ஒளியால் நீக்கிய சிவபெருமான், பின்பு உமாதேவியை நோக்கி 'நீ செய்த இக்குற்றந் தீரக் காஞ்சீபுரியிற் சென்று தவம்புரிந்து புனிதையாவாய்' என்று கட்டளையிட, அங்ஙனமே கன்னிகைவடிவமாய்க் காஞ்சீபுரத்திற்குவந்த காமாட்சியம்மை, அங்கு முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்தன ளென்றும், அதற்காகச் சிவபிரான் அக்ஷயபாண்டம் ஒன்றையும், இரண்டு சராவங்களையும், இருநாழிநெல்லையும் அவட்குக்கொடுத்தருளின னென்றும் வரலாறு அறிக. முப்பத்திரண்டு தருமங்களாவன - கோதானம், பூமிதானம், கன்னிகாதானம், சத்திரங்கட்டுதல், குளம்வெட்டுதல், சாலையமைத்தல், தண்ணீர்ப்பந்தல்வைத்தல், ஆவுரிஞ்சுதறிநாட்டல், மடங்கட்டுதல், வீடுகட்டிக்கொடுத்தல், பசுவுக்குப்புல்லிடுதல், விலங்குகட்கு இரைகொடுத்தல், பறவைகட்கு இரையளித்தல், மகப்பெறுவித்தல், மகவளர்த்தல், மகவுக்குப்பாலளித்தல், மகவுக்குச்சோறளித்தல், ஓதுவார்க்கு உணவு அளித்தல், ஏழைகட்கு அன்னமிடுதல், நோய்க்குமருந்துதருதல், விலைகொடுத்து உயிர்காத்தல், ஆடையழுக்ககற்றவண்ணானை வைத்தல், க்ஷௌரத்திற்கு நாவிதனைவைத்தல், தாம்பூலந்தருதல், அணிகலன் அளித்தல், தலைக்கு எண்ணெய்தருதல், பிறர்கடன தீர்த்தல், பிச்சையிடுதல், அகதிப்பிணஞ்சுடுதல், ஆடையளித்தல், தின்பண்டம் நல்கல், துயர்தீர்த்தல் என்பன; இவற்றிற் சில, வேறுவேறாகவுங் கூறப்படும். தனது அழகினால் சிவபிரானைவசப்படுத்திவென்று, அதற்காகஅப்பெருமான் கொடுத்த திறைப்பொருளைப்போல அவனுடம்பில் ஒருபாதியைத் தனக்கு உரியதாக்கிக்கொண்டவ ளென்பது தோன்ற, 'விடையோனொருபாகந் திறைகொண்டாள்' என்றார். செச்சை யென்பது - வெட்சி யென்னும் பொருள தாதலையும், அம்மலர்மாலை முருகனுக்கு உரிய தாதலையும், "செச்சைக்கண்ணியன்" எனத் திருமுருகாற்றுப்படையிலுங்காண்க. மூத்தகுமாரனாகிய விநாயகனை விலக்குதற்கு 'இளையோன்' என்றும், சரவணப்பொய்கையில் தோன்றிய இளங்குழந்தைவடிவான குமாரக்கடவுளுக்குச் சிவபிரான்கட்டளைப்படி உமாதேவி முலைப்பால்கொடுத்தமைபற்றி 'இளையோனுகர் தீம்பான்மணநாறுமுலை' என்றும், காஞ்சீபுரத்தில் காமாட்சியம்மைக்கு உள்ள தலைமை தோன்ற 'அவளுறையுங் கச்சிப்பதி' என்றுங் கூறினார். கச்சிப்பதி - கச்சியாகிய பதி யென இருபெயரொட்டு. இச்சா, வ்ருஷம் என்ற வடசொற்கள் - இச்சை, விடை என விகாரப்பட்டன. எண்ணனைக்கும், உம்மை - முற்றுப்பொருளது. பச்சைக்கொடி - உவமையாகுபெயர்.

[அந்நகரிலுள்ள திருமாலையும், சிவபிரானையும் வணங்கல்.]

கசு. *அயனார்புரிமகசாலையுமணியத்திகிரிக்கே
மயனார்செய்திருக்கோயிலுமாநீழலின்வைகெண்
புயனாருறைமெய்க்கோலமுமுள்ளன்பொடுபோற்றிப்
பயனார்புனனதியேழுமந்நகருபெபடிந்தான்.

(இ - ள்.) அயனார் புரி மகசாலையும் - அங்குப் பிரமதேவர் செய்த யாக சாலையையும், அணி அத்திகிரிக்கே மயனார் செய் திருக்கோயிலும் - அழகிய அத்திகிரியிலே மயன் செய்த திருக்கோயிலையும், மா நீழலின் வைகு எண் புயனார் உறை மெய் கோலமும் - மாமரத்தின் நிழலிலே வீற்றிருக்கின்ற எட்டுத்தோள்களையுடைய சிவபிரான் காட்சிகொடுக்கிற திருமேனிக்கோலத்தையும், உள் அன்பொடு போற்றி - மெய்யன்போடு வணங்கி, அந்நகருடு - அந்தநகரத்திலுள்ள, பயன் ஆர் புனல் நதி ஏழும் - (தம்மில் மூழ்குவார்க்கு) நற்பயன்மிகும்படியான புண்ணியதீர்த்தத்தையுடைய எழுநதிகளிலும், படிந்தான் - நீராடினான்; (எ - று.)—இதிற்குறித்த திருமால்திருநாமம் - வரதராசர்; தாயார் திருநாமம் - பெருந்தேவி; சிவபிரான் திருநாமம் - ஏகாம்பரநாதர்; அம்பிகை திருநாமம் - காமாட்சியம்மை.

நெடுநாள் தவஞ்செய்தும் மனத்தூய்மைபெறாத பிரமதேவன் ஆகாயவாணிகூறியபடி பூலோகத்தில் புண்ணியக்ஷேத்திரங்களெல்லாவற்றுள்ளும் உத்தமமானதும் ஒன்றுஆயிரமாகப் பயன்தருவதுமாகிய சத்தியவிரதக்ஷேத்திரத்தையடைந்து அங்குஅநந்தசரசின்கரையிலுள்ள அஸ்திகிரியை உத்தரவேதியாகக்கொண்டு யாகசாலையமைப்பித்து அசுவமேதயாகஞ்செய்து அதனால் ஸ்ரீமந்நாராயணனை ஆராதிக்க, அந்தயாகாக்கினியிலிருந்து எழுந்த புண்ணியகோடிவிமானத்தில் தேவராசனை திருமால் பிரசன்னனாயினனென்றும், அந்த வரதராஜஸ்வாமியைப் பின்பு கஜேந்திராழ்வான் பூசித்து முதலைபினாலாகியதுயர்தீர்ந்து மேன்மைபெற்றதென்றும், தெய்வத்தச்சரில் ஒருவனானமயன் பிரமன்கட்டளையால் அங்குஎம்பெருமானுக்குத்திருக்கோயில்கட்டியமைத்தனனென்றும் அறிக. அயனார், மயனார், எண்புயனார் என்பவற்றில், 'ஆர்' என்னும் பலர்பால்விகுதி - உயர்வை யுணர்த்தும். அயன் - அஜன் என்ற வடசொல்லின் திரிபு. மகசாலா, ஹஸ்திகிரி - வடசொற்கள். இந்திரனது யானையாகிய ஐராவதம் நெடுநாள்தவஞ்செய்து மலைவடிவங்கொண்டு எம்பெருமானைத்தரித்ததலால் அம்மலைக்கு 'ஹஸ்திகிரி' என்றுபெயராயிற்றென்றும், கஜேந்திராழ்வான் பூசித்துப் பேறுபெற்ற மலையாதலால் அப்பெயர்நிகழ்ந்ததென்றுங் காரணங்கூறுவர்; ஹஸ்தி - யானை. கோயில் - தேவாலயம். நீழல் - நிழலென்பதன் விகாரம். சிவபிரான் எட்டுத்தோள்களையுடையவனாதல் காலவிசேஷத்திலென்க; திரிபுரசங்காரகாலத்திலென்பர். மாநீழலின்வைகெண்புயனார்-ஏகாம்பரநாதஸ்வாமி. காஞ்சீபுரத்தில்வேதவடிவமானஒருமாமரத்தின்கீழ்ச் சிவபிரான் சிவலிங்கவடிவமாய் எழுந்தருளியிருக்கின்றனனென்க. இது பஞ்சசிவலிங்கஸ்தானங்களுள் பிருதிவிலிங்கஸ்தானம்; (அப்புலிங்கஸ்தானம் - திருவானைக்காவும், தேஜோலிங்கஸ்தானம் - திருவண்ணாமலையும், வாயுலிங்கஸ்தானம் - ஸ்ரீகாளஹஸ்தியும், ஆகாசலிங்கஸ்தானம் - சிதம்பரமும் எனக் காண்க.) நதியேழ் - கம்பை, பம்பை, மஞ்சனி, பிச்சி, கலிசசி, மண்ணி, வெஃகா என்பன. அத்திகிரிக்கு என்ற

* இச்செய்யுளின் இடையிரண்டடிகள், யாம் கண்ட எட்டுப்பிரதிகள் நான்கினுள் மூன்றில் அடியில்வருகிறவாறு காணப்படுகின்றன:—

"மயனார்செய்திருக்கோயிலுமாமின்னினொடமரும்
புயனாரணர்மெய்க்கோலமுமுள்ளன்பொடுபோற்றி."

மா மின்னினொடு அமரும் புயல் நாரணர் மெய் கோலம் என்பதற்கு - திருமகளாகிய மின்னலினுடனே பொருந்திய மேகம் போன்ற திருமாலினது திருமேனிக்காட்சி யென்று பொருள்.

நான்கனுருபு - ஏழனுருபின்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். நகரூடு, ஊடு - ஏழனுருபு. (கச)

[திருவண்ணாமலையைத் தொழுதல்.]

கரு. பெற்றாள்சகதண்டங்களனைத்துமம்மைபெற்றும்
முற்றாமுகிழ்முலையாளொடுமுக்கண்ணர்விரும்பும்
பற்றாமெனமிக்கோரிகழ்பற்றொன் றினுமுண்மை
கற்றார்தொழுமருணாசலமன்போடுகைதொழுதான்.

(இ - ள்.) சகத் அண்டங்கள் அனைத்தும் பெற்றாள்-உலகவுருண்டைக ளெல்லாவற்றையும் பெற்றவளும், அவை பெற்றும் முற்றா முகிழ் முலையா ளொடு - அவற்றையெல்லாம் பெற்றும் முதிராத அரும்புபோன்ற [இளமை மாறாத] தனங்களையுடையமங்கையுமாகிய உமாதேவியுடனே, முக்கண்ணர்-மூன்றுதிருக்கண்களையுடையவரான சிவபிரான், விரும்பும் - திருவுள்ளமு வந்து எழுந்தருளியிருக்கிற, பற்று ஆம் - ஸ்தலமாகும் (இது), என-என்ற காரணத்தால், உண்மை கற்றார் - மெய்ப்பொருளறிந்த ஞானிகள், மிக்கோர் இகழ் பற்று ஒன்றினும் - (துக்கதன்றென்று) மேலோர் இகழ்கிற இவ்வுலகப்பற்றுப் பொருந்திய காலத்திலும், தொழும் - வணங்கப்பெற்ற, அருணாசலம் - திருவண்ணாமலையை, அன்போடு கைதொழுதான் - பக்தி யுடன் கைகூப்பிவணங்கினான்; (எ - று.)—இத்தலத்துச் சிவபிரான் திருநா மம் - அருணாசலேசுவரர்: அம்பிகைதிருநாமம் - உண்ணாமுலையம்மை.

ஜகதண்டம் - அண்டகோளம்; "சிவம்சத்தியோடுறின் செகம் விரிந்தி டும், சிவம் சத்தி நீங்கிடிற் செகம தில்லையே" என்றபடி சிவபிரான் தன்னு டைய பராசக்தியான அம்பிகையினது உதவியைக்கொண்டே பிரபஞ்சங் களைப் படைத்தருளுதலாலும், இச்சாமாத்திரத்தால் அவையனைத்தும் உண் டாதல் பற்றி அவற்றைப்பெற்றதனாற் கன்னித்தன்மை அம்பிகைக்கு மாறா ததனாலும், 'பெற்றாள்சகதண்டங்களனைத்தும் அவைபெற்றும் முற்றாமுகிழ் முலையாள்' என்றார். "மும்மையினுயிர்கள் பெற்றும் முகிழ்முலைக்கன்னி யாகு மம்மை" எனக் கந்தபுராணத்தில் வருவதையுங் காண்க. "சிவம் சத் திதன்னை யீன்றும் சத்திதான் சிவத்தை யீன்றும், உவந் திருவரும் புணர்ந் திங்கு உலகுயிரெல்லா மீன்றும், பவன் பிரமசாரியாகும் பான்மொழி கன் னியாகும், தவந்தரு ஞானத்தோர்க்கு இத்தன்மைதான் தெரியுமன்றே" என்னும் சிவஞானசித்தியாரை இங்கேயறிக. இது, முரண்விளைந்தழிவணி யின்பாற்படும்; [விரோதாபாஸாலங்காரம்.] அதன் இலக்கணம்-மேல்நோக் கில் ஒன்றுக்கு ஒன்று மாறுபாடாகவும், உள்நோக்கில் அம்மாறுபாடு இல் லாமலும் அமையக்கூறுதல். இங்கு அனைத்தையும் பெறுதலும் அவைபெற் றும் முற்றா முகிழ்முலையாளாதலும், ஒன்றுக்கொன்று முரணாயினும், சக்தி சொரூபமான அம்பிகைக்கு அத்தன்மையிரண்டும் ஒருங்கே அமைதல் இயல் பானமை காண்க. முகிழ்முலை - உவமைத்தொகை. முக்கண்ணர்-உயர்வுப் பன்மை: 'முக்கண்ணன்' என்று ஒருமையாகவும் பாடம் உண்டு. வலக்கண் சூரியனும், இடக்கண் சந்திரனும், நெற்றிக்கண் அக்கினியுமாக இறைவ னுக்குக் கண்மூன்றும் முச்சுடரென அறிக.

பற்று என்ற சொல், - முதலில் பற்றப்படுமிட மென்ற பொருளிலும், பின்பு உலகத்துப் பொருள்களிடத்து உண்டாகும் ஆசை யென்ற பொரு ளிலும் வந்தது. பற்றாமெனத் தொழுமென இயையும். உலகப்பொருட் பற்று முத்திபெறுதற்குத் தடையாதலாலும், ஆதலால் அது ஒழிக்கத்தக்க தாதலாலும் 'மிக்கோரிகழ்பற்று' எனப்பட்டது. பற்று ஒன்றினுந் தொழுத லாவது - "இருக்கினும் நிற்கும்போதும் இரவுகண்டுயிலும்போதும், பொ ருக்கெனநடக்கும்போதும் பொருந்தியூண் துய்க்கும்போதும், முருக்கிதழ்க் கனிவாயாரை முயங்கி நெஞ்சழியும்போதும், திருக்களாவுடைய நம்பா சிந் தையுன்பாலதாமே" என்றபடி பிரபஞ்சசம்பந்தமான உண்ணல், உடுத்தல்,

உறங்கல் முதலிய தொழில்களைச் செய்யும்பொழுதும் இடைவிடாது சிந்தித்தல்; இது தன்னை நினைத்தமாத்திரத்தில்முத்தியளிக்குந் தலமாதலால், அவ்வுண்மையுணர்ந்தோரால். பற்றற்றே தொழவேண்டுமென்ற நியதி யில்லாமல், பற்று அறுதபொழுதும் தொழப்படு மென்க. இனி, பற்றொன்றினுந் தொழுதல் - ஒருகால் தொழுதார்க்கு அவ்வளவினாலேயே பற்று அறாமல் ஊழ்வினைவசத்தால் இன்னும் பிரபஞ்சசுகதுக்கங்களை அநுபவிக்க வேண்டியிருப்பினும் அதுகாரணமாக உபேக்ஷியாமல் அப்பொழுதும் தொழுதல் என்றுங் கொள்ளலாம்; "நம்பியிரு நெஞ்சமே நாளு மருணகிரி, யும்பர்கோ னன்றுரைத்த வுண்மையை - நம்பிக், கெடுத்தாலுஞ் சோணேசன் கேடபடாதெம்மை, யெடுத்தாலுஞ் சோணேசனென்று" என்ற அருணகிரியந்தாதிச்செய்யுளைக் காண்க. "எண்ணியகரும முடியினு முடியாதொழியினு மீசனைத் தொழுதல் புண்ணியம்" என்பர் மேற் பதினெட்டாம்போர்ச் சருக்கத்திலும். இம்மையிற் கருதியபயனாகிய பற்றறுதல், அழித்தற்கு அரிய பிராரப்தகருமத்தால் ஒருகால் தடைப்பட்டு உடனே கைகூடாவிடினும், மறுமையிற் பேரின்பமநுபவித்தலாகிய பயன் தவறாதாதலின் தொழுவ ரென்க. உண்மைகற்றோர் - மெய்யுணர்ந்தார், தத்துவஞானிகள். தாம்தாம் கடவுளென்னுங் கருத்துக்கொண்டு ஒருவர்க்கொருவர் பகைமைபூண்டு போர்தொடங்கிய பிரமவிஷ்ணுக்களின் மாறுபாட்டை ஒழிக்கும்பொருட்டுப் பரமசிவன் அவ்விருவர்க்கும் நடுவில் ஒரு பெரியசோதிமலைவடிவமாய்த் தோன்றிநின்றன னென்றும், பின்பு சுருங்கிய அந்த அக்கினிமலையே சிறு வண்ணமலை யென்றும், அது அழல்வண்ணமாய்ச் சிவந்திருத்தலால் 'அருணகிரி' எனப் பெயர்பெற்றதென்றும் நூற்கொள்கை. அருணாசலம் - அருண + அசலம்; தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். அசலம் - சலியாதது; மலை. அனைத்தும், உம் - முற்று. பெற்றும், உம் - உயர்வுசிறப்பு. ஒன்றினும், உம் - இழிவுசிறப்பு. ஜகதண்டம் - வடமொழித்தொடர். முற்று முலையென இயையும். 'அனைத்தும்மலை' என்பதில், மகரவொற்று - செய்யுளோசையின்பம் நோக்கிய விரித்தல். இனி, மிக்கோர் இகழ் பற்று ஒன்றினும் பற்றும் என உண்மைகற்றோர் தொழும் என்று எடுத்து - பெரியோர்களால் இகழப்படும் உலகப்பற்று ஒன்றிலும் யாம்தொடர்புகொள்ளோம் என்று [பற்றற்று] மெய்யுணர்ந்த ஞானியர் வணங்குகிற என்று உரைத்தலும் ஒன்று; இப்பொருளில், விரும்பும் அருணாசலம் என இயையும்; பற்றும் என்றது - தன்மைப்பன்மை யெதிர்மறைவினைமுற்று. முந்தினபொருளில் பற்று ஆம் எனத் தொடர்மொழி. ஒன்றின் என்றது - முந்தினபொருளில் எதிர்காலவினையெச்சம்; இப்பொருளில் ஏழாம்வேற்றுமைவிரி. (கரு)

[பெண்ணையாற்றில் நீராடித் திருக்கோவலூரெம்பெருமானைத் தொழுதல்.]

கசு. உருகுங்கமழ்நெய்பாலிருபாலுங்கரையொத்துப்
பெருகுந்துறையேழேழுபிறப்புங்கெடமூழ்கிக்
கருகுங்கருமுகின்மேனியர்கவிஞானியர்கண்ணிற்
பருகுஞ்சுவையமுதானவர்பாதந்தலைவைத்தான்.

(இ - ள்.) உருகும் - உருகுகிற, கமழ் - நறுமணம் வீசுகிற, நெய் - நெய்யும், பால் - பாலும், இரு பாலும்-இரண்டுபக்கங்களிலும், கரை ஒத்து பெருகும் - கரையினளவுக்குச்சரியாகப் பெருகப்பெற்ற, துறை - (பெண்ணையாற்றின்) துறையிலே, ஏழ் ஏழு பிறப்பும் கெட மூழ்கி - எழுமையையுடைய எழுவகைப்பிறப்பும் ஒழியும்படி நீராடி,—கருகும் கரு முகில் மேனியர் - மிகக்கறுத்த காளமேகம் போன்ற திருமேனிசிறத்தை யுடையவரும், கவி ஞானியர் கண்ணின் பருகும் சுவை அமுது ஆனவர் - கவிபாடவல்லவர்களும் தத்துவஞானமுடையவர்களுமான முதலாழ்வார் மூவரும் தம்கண்களால் பிரதியக்ஷமாகக் கண்டு நுகர்ந்த இன்சுவையுடைய அமிருதம் போன்றவரு மான திருக்கோவலூ ரெம்பெருமானுடைய, பாதம் - திரு

வடிகளை, தலை வைத்தான் - தனது முடியின்மேற்கொண்டு வணங்கினான்; (எ - று.)—இங்குப் பெருமாள் திருநாமம் - தேகளீசன், திரிவிக்கிரமன், ஆயனார்; தாயார் திருநாமம் - பூங்கோவல்நாச்சியார், பூங்கோயிலாள்.

திருக்கோவலூ ரென்பது - நடுநாட்டிலுள்ள திருமாலின் திருப்பதி இரண்டினுள் ஒன்றும், தென்பெண்ணையாற்றின்தென்கரையிலுள்ளதுமாகிய திவ்வியதேசம். துறை - நீரில் இறங்குதுறை; இங்கே, ஸ்நாநகட்டம். இதன் முதலிரண்டு அடிகளிற் குறித்த வரலாற்றை "அவ்வைபாடலுக்கு நறுநெய்பால் பெருகி யருந்தமிழறிவினாற் சிறந்து, ..தெய்வமாநதிநீர்பரக்கு நாடு" என இந்நூற் சிறப்புப்பாயிரத்தில் இந்நூலாசிரியர்குமாரர் குறித்ததுங் காண்க. ஒளவையார் திருக்கோவலூர்க்குச் செல்லும்பொழுது, அங்குப் பெண்ணையாற்றங்கரையிலுள்ள பாரியென்னும் இடையனது குடிசைக்குள் நுழைய, மழையில் நனைந்து குளிர்நடுக்கங்கொண்டு வந்த அந்த ஒளவையார்க்கு, அக்குடிசையிலிருந்த அவன்பெண்களான அங்கவை சங்கவை யென்ற மங்கையர் இருவரும் அன்போடு ஆடையும் உணவுங் கொடுத்து உபசரிக்க, அதனால் மகிழ்ச்சிகொண்ட ஒளவையார் அவர்கட்குச் செல்வம் பெருகும்படி கவிபாடியதோடு, அக்கன்னிகைகளைத் தக்க வரனுக்கு மணம்புரிவிக்க விரும்பி, தெய்விகனென்னும் அரசனுக்குக் கொடுப்பதாக நிச்சயித்துச் சேரசோழபாண்டியர்களைச் சீட்டுக்கவியெழுதியனுப்பி வருவித்து விவாகத்திற்கு வேண்டியன வெல்லாஞ் சித்தஞ்செய்து மணத்தைச் சிறப்பாக நடத்தும்பொழுது, பெண்ணைநதியை நோக்கி, இம் மணவிருந்துக்கு வேண்டிய பால்நெய்யாகப் பெருகிவரும்படி "முத்தெறியும் பெண்ணை முதுநீரது தவிர்ந்து, நித்திய நெய்பால் தலைப்பெய்து—குத்திச், செருமலை தெய்வீகன் திருக்கோவலூர்க்கு, வருமளவிற் கொண்டோடிவா" என்று ஒரு வெண்பாப் பாட, அத்தெய்விகவாக்கியத்தின்படி அந்நதி நிறைய நெய்யும் பாலுமாகப் பெருகிய தென்பது, இங்குக் குறித்த கதை.*

உருகும் என்ற பெயரெச்சமும், கமழ் என்ற வினைத்தொகையும் இரண்டும் நெய்க்கு அடைமொழி. நெய்பால் - உம்மைத்தொகை. இருபாலும், உம் - முற்றும்மை. இருபாலுங் கரையொத்துப் பெருகும் - நிறையப் பெருகு மென்றபடி. எழேழுபிறப்பு—"எழுமையெழுபிறப்பு" என்றார் திருக்குறளிலும்: ஒருபிறப்பிற்செய்த வினையின் பயன் எழுபிறப்புவரையிலும் தொடரு மென்பது நூற்கொள்கை. வினைவசத்தால் உயிர்கட்கு நேரக்கூடிய எழுவகைப்பிறப்பு - தேவர், மனிதர், மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. இவ்விரண்டு தன்மையையுங் கருதி 'எழேழுபிறப்பு' என்றார். 'எழேழுபிறப்புங் கெட' என்றது - இனி எந்தவகைப் பிறப்பிலும் ஒருகாலும் பிறந்து வருந்தாதபடி; அதாவது - வினைகள் ஒழியும்படி என்றவாறு. இங்ஙனம் மூழ்கி என்றதனால், அந்நதி தன்னில் ஒருகால் மூழ்கினாரது தீவினை யனைத்தையும் தீர்க்கும் மகிமையுள்ளதென நன்கு விளங்கும். மூழ்கித் தலைவைத்தா னென இயையும். கருகுங் கரு - ஒருபொருட்பன்மொழி. மேனியர், ஆனவர் - உயர்வுப்பன்மை. ஞானியர் - பொருட்பன்மை.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்ற முதலாழ்வார் மூவரும், ஒடுத்திரியும் யோகியர்களாய், செஞ்சொற்கவிகளுமாகி, தம்மில் ஒருவரையொருவர் அறியாமல் தனித்தனியே பலவிடத்தும் சஞ்சரித்து

---

* தொண்டைநாட்டில் ஒருபெண்ணினுடைய விவாகத்தின் பொருட்டுப் பெண்ணையாற்றைப் பாலும் தயிரும் நெய்யுமாகப் பெருகும்படி ஒளவையார் பாடல்பாடின ரென்பர், புலவர்புராணநூலுடையார்: "தொண்டைநாட்டினி லொருபெண் வதுவை முடிந்திடு நிமித்தந் தனிவற் றெளவை, பண்டைநாள் பெண்ணைநன்னீர் பால்தயிர்நெய்யாயாறும் பகர்ந்தா ளென்பார், ......அவள் யாண்டெது சொலினும் நடக்குமென்கை கடமைதானே."

வருகையில், ஒருநாள் சூரியாஸ்தமனமானபின் பொய்கையாழ்வார் திருக்கோவலூரை யடைந்து, அங்கு மிருகண்டுமுனிவரது திருமாளிகையிற் சென்று அதனது இடைகழியிற் சயனித்துக்கொண்டிருந்தார். பின்னர்ப் பூதத்தாழ்வாரும் அவ்விடத்திலே சென்று சேர, பொய்கையாழ்வார், 'இவ்விடம் ஒருவர்படுக்கலாம், இருவர் இருக்கலாம்' என்று சொன்னபின், அவ்வாறே அவ்விருவரும் அங்கு இருந்தனர். அதன்பிறகு பேயாழ்வாரும் அவ்விடத்தை அடைந்திட, முன்னையரிருவரும் 'இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்' என்றுகூற, அங்ஙனமே அம்மூவரும் அவ்விடத்திலே நின்றுகொண்டு எம்பெருமானுடைய திருக்கலியாணகுணங்களை ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டும் கேட்டுக்கொண்டும் மகிழ்ந்திருந்தனர். அவர்களை ஆட்கொண்டு அவர்களால் உலகத்தை உய்விக்க வேண்டுமென்று நினைத்து அம்மூவரையும் ஓரிடத்திற்சேர்த்த திரிவிக்கிரமமூர்த்தி, அவர்களை அநுக்கிரகிக்கும்பொருட்டு அப்பொழுது பேரிருளையும் பெருமழையையும் உண்டாக்கிப் பெரியவடிவத்தோடு அவர்களுடன் சென்று நின்று பொறுக்கவொண்ணாத அதிக நெருக்கத்தைச் செய்தருளினான். அவர்கள் 'முன் இல்லாத நெருக்கம் இப்பொழுது உண்டானது என்ன? பிறர் எவரேனும் இந்தஇடைகழியிற் புகுந்தவா உண்டோ?' என்று சங்கிக்கையில், பொய்கையாழ்வார், பூமியாகிய தகழியில் கடல்நீரையே நெய்யாகக்கொண்டு சூரியனை விளக்காக ஏற்ற, பூதத்தாழ்வார் அன்பாகிய தகழியில் ஆர்வத்தை நெய்யாகவும் சிந்தையைத் திரியாகவுங்கொண்டு ஞானதீபத்தை ஏற்ற, இவ்விரண்டின் ஒளியாலும் இருள் அற்றதனால், பேயாழ்வார் பெருமானைத் தாம்கண்டமை கூறியவளவிலே, மூவரும் எம்பெருமானுடைய சொரூபத்தைக் கண்ணாரக்கண்டு சேவித்து அநுபவித்து ஆனந்தமடைந்து, அப்பெருங்களிப்பு உள்ளடங்காமையால் அதனைப் பிரபந்தமுகமாக வெளியிட்டு உலகத்தாரை வாழ்விக்கக் கருதி, பொய்கையாழ்வார் "வையந்தகளியா" என்று தொடங்கி முதல்திருவந்தாதியைப்பாடியருள, பூதத்தாழ்வார் "அன்பேதகளியா" என்று தொடங்கி இரண்டாந்திருவந்தாதியைஅருளிச்செய்ய, பேயாழ்வார் "திருக்கண்டேன்" என்று தொடங்கி மூன்றாந்திருவந்தாதியைத் திருவாய்மலர்ந்தருளினார் என்பது, பின்னிரண்டடியிற் குறித்த கதை: "பாலருந் தமிழாற் பேர்பெறு பனுவற் பாவலர் பாதிநா ளிரவின், மூவரு நெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு" என்பர் இந்நூற்சிறப்புப்பாயிரத்தும்.

கண்ணிற் பருகும் - ஒன்றன் வினையை மற்றொன்றின்மேல் ஏற்றிக் கூறிய உபசாரவழக்கு; நாவின் வினையைக் கண்ணின்மேல் ஏற்றியது: தாகங்கொண்டவன் ஆதரத்தோடு நீர்பருகுவதுபோல மிக்கஅன்போடு கண்களாற் காணும் என்க; "பருகுவனன்ன ஆர்வத்தனாகி", "பருகுவான் போல நோக்கி" என்பன காண்க. உட்கொண்டாலன்றி இனிமைதாராததும், மிகுதியாகஉண்டால் தெவிட்டுவதுமாகிய தேவாமிருதம்போலன்றி, கண்டவளவிலேயே இனிமைதருவதும் நுகரநுகரத் தெவிட்டாததுமான ஆராவமுதமாய்ச் சிறக்கும் எம்பெருமானென்பது தோன்ற, 'கண்ணிற் பருகுஞ் சுவையமுதானவர்' என்றார். பாதம் - வடசொல். பாதந்தலைவைத்தல்-எம்பெருமானது திருவடி தனதுமுடியிற்படும்படி சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தல். முதலடியில், பால் என்ற சொல் வெவ்வேறுபொருளில் அடுத்துவந்தது-மடக்குஎன்னுஞ் சொல்லணி. ஞானி-ஞ்ஞாநீ என்ற வடசொல்லின் விகாரம். கண்ணின்—இன் - ஏது. (கசு)

[திருவெண்ணெய்நல்லூரையும், திருவதிகையையும், திருவயிந்திரபுரத்தையும் தரிசித்தல்.]

கஎ. ஐயானனனியல்வாணனையடிமைக்கொளமெய்யே
பொய்யாவணமெழுதும்பதிபொற்போடுவணங்கா

மெய்யாகமவதிகைத்திருவீரட்டமுநேமிக்
கையாளனயிந்திரபுரமுங்கண்டுகைதொழுதான்.

(இ - ள்.) ஐ ஆனனன் - ஐந்து திருமுகங்களை யுடையவனுன சிவபிரான், இயல் வாணனை - இயற்றமிழ்ப்புலவரான சுந்தரமூர்த்திநாயனுரை, அடிமை கொள - ஆட்கொள்ளும்பொருட்டு, பொய் ஆவணம் - பொய்யாகிய அடிமையோலையை, மெய்யே எழுதும் - மெய்போலவே எழுதிய, பதி-தலத்தை [திருவெண்ணெய்நல்லூரை], பொற்போடு வணங்கா - அழகாக வணங்கி,—மெய் ஆகமம் அதிகை திரு வீரட்டமும்-உண்மையான ஆகமங்களிற் கூறப்பட்ட விதிப்படி அர்ச்சிக்கப்படுகிற திருவதிகைவீரட்டானத்தையும், நேமி கை ஆளன் அயிந்திர புரமும்-சக்கராயுதத்தையேந்திய திருக்கையையுடையவனுன திருமாலினது திருவயிந்திரபுரத்தையும், கண்டு-தரிசித்து, கை தொழுதான்-கைகூப்பி வணங்கினுன்; (எ - று.)—திருவெண்ணெய்நல்லூர்ச் சிவபிரான் திருநாமம் - தடுத்தாட்கொண்ட ஈசுவரர்; அம்பிகை - வேற்கண்மங்கையம்மை. திருவதிகைச்சிவபிரான் திருநாமம் - வீரட்டானேசுவரர்; அம்பிகை - திருவதிகைநாயகி. திருவயிந்திரபுரத்துத் திருமால் திருநாமம் - தேவநாதன்; தாயார் - ஹேமாப்ஜவல்லி.

வணங்கா என்ற உடன்பாட்டெச்சம், 'கண்டுதொழுதான்' என்றதைக் கொள்ளும். திருப்பதிகளை வணங்கினதாகக் கூறினும், திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள எம்பெருமான்களை வணங்கினதாகவே கருத்து. இந்த மூன்றுதலங்களும் - நடுநாட்டில் உள்ளவை; இவற்றில், முன்னுள்ள இரண்டும் - சிவஸ்தலம்: பின்உள்ளது - விஷ்ணுஸ்தலம்.

கைலாசகிரியில் உள்ள சிவனடியார்களுள் ஒருவராகிய ஆலாலசுந்தரரது அவதாரமாய், திருமுனைப்பாடிநாட்டில் திருநாவலூரில் ஆதிசைவர் குலத்தில் சடையனுரென்னும் சிவாசாரியர்க்கு அவருடைய மனைவியாராகிய இசைஞானியாரிடத்திலே தோன்றியவரும், சைவசமயத்து அறுபத்துமூன்று நாயன்மார்களுள்ளும் சைவசமயகுரவர்நால்வருள்ளும் ஒருவரும், சுந்தரமூர்த்திநாயனுரென்று பெயர்பெறுபவருமாகிய நம்பியாரூரர், புத்தூரிலிருக்கிற சடங்கவிசிவாசாரியருடைய புத்திரியை விவாகஞ்செய்துகொள்ளுஞ் சமயத்தில், சிவபிரான் முன்பு திருக்கைலாசத்தில் அசுந்தரமூர்த்திக்குத் தாம் வாக்குதத்தஞ்செய்திருந்தபடி அவரைப் பிரபஞ்சவாழ்க்கையில் மயங்கவிடாமல் தடுத்து ஆட்கொள்ளும்பொருட்டு அவர் தமக்குப் பரம்பரையாக அடிமையென ஓர் அடிமையோலையைக் கற்பித்துக்கொண்டு ஒருகிழப்பிராமணவடிவத்தோடு அவ்விடத்தில் எழுந்தருளி விவாகத்தைத் தடுத்து 'இந்த நம்பியாரூரன் எனக்கு அடியவன்' என்று வழக்குக்கூறி அதற்கு ஆதாரமாக நம்பியாரூரருடைய பாட்டனுர் தமக்குஎழுதித்தந்த அடிமையோலையின்படி எழுதிய பிரதியோலையென்று ஓர்ஓலையை அவ்விவாகசபையார்முன்னிலையிற் காட்டி மெய்ப்பிக்கத்தொடங்கும்போது, அவ்வோலையை அந்த ஆரூரர் பறித்துக்கிழித்துவிட, பின்பு சிவவேதியர் வாதிட்டு ஆதியில் எழுதிய மூலவோலையைக் காட்டிச்சாதிப்பதாகச் சொல்லி அவரைத் திருவெண்ணெய்நல்லூர்க்கு அழைத்துக்கொண்டுபோய் அங்கு உள்ள அந்தணர்சபைமுன் மூலவோலையைக் காட்ட, அதில் 'திருநாவலூரிலிருக்கின்றஆதிசைவனுகியஆரூரனென்கிறநான், திருவெண்ணெய்நல்லூரிலிருக்கிற பித்தனுக்குப் பரம்பரைத்தொண்டு செய்வதற்கு உள்ளும்புறமும் ஒப்ப உடன்பட்டு எழுதிக்கொடுத்தேன். இப்படிக்கு ஆரூரன்' என்று எழுதியிருந்ததை வாசித்துப்பார்த்த அவ்வந்தணர்கள் அதில்இட்ட கையெழுத்து அவர்பாட்டனுருடைய கையெழுத்தே யென்றும், அதிலிருந்த சாட்சிகள் கையெழுத்தும் சரியானவையே யென்றும் நிச்சயித்து, 'இப்பித்தனுக்கு இவ்வாரூரன் அடிமைசெய்வதே கடமை' என்றுமுடிவுசெய்தபின், சிவவேதியரை நோக்கி 'இவ்வூரில் உமதுஇருப்பு எங்கே?' என்று வினவ, பிராமண

வடிவங்கொண்ட கடவுள் 'காட்டுகிறேன், வாருங்கள்' என்றுசொல்லி, சுந்தரமூர்த்தியும் அந்தணர்களும் பின்னே வர, தாம் அவ்வூரிலிருக்கின்ற திருவருட்டுறையென்னுந் திருக்கோயிலுள் புக்கு மறைந்தருள, அனைவரும்அதிசயிக்க, சிவபிரானதுகட்டளைப்படி சுந்தரமூர்த்தி அவர்க்குஅடியவராய் வன்றொண்டரென்று பெயர்பூண்டு விவாகந்தவிர்ந்து திருப்பதிகங்கள்பாடுவாராயினரென்பது, தடுத்தாட்கொண்ட வரலாறு.

இயல்வாணன்—இயல்-இயற்றமிழுடன், வாணன் - வாழ்பவன். வாணன்-மரூஉ. மெய்யே—ஏ - தேற்றம். ஆவணம் - உரிமைப்பத்திரம். "பொய்யுடையொருவன் சொல்வன்மையினால், மெய்போலும்மே மெய்போலும்மே" என்றபடி தாம் பொய்வழக்கிட்டு அதற்குஆதாரமாகப் பொய்ப்பத்திரம் சிருஷ்டித்துக்காட்டி அவற்றை மெய்யாக்கும் மெய்ப்பத்திரமுமாக மெய்ப்பித்துச் சாதித்துக்கொண்ட அருமை விளங்க, 'மெய்யே பொய்யாவணமெழுதும்' என்றார். இனி, மெய்யே எழுதும் என்பதற்கு - உண்மையாகவே எழுதிய என்றும் பொருள்கொள்ளலாம்; ஓலை பொய்ப்பத்திரமாயினும், அதனை எழுதியது உண்மையேயாதலால். பொற்போடு வணங்குதல் - விதிமுறைப்படி நமஸ்கரித்தல். ஆகமம் - ஆதிகாலத்தில் சிவபிரானது ஐந்து திருமுகங்களினின்றுந் தோன்றியவையும், அச்சிவபிரானைப்பூசிக்கும் முறைகளை விவரமாகக் கூறுபவையுமான காமிகமுதலிய இருபத்தெட்டு நூல்கள். சிறப்புநூலாகிய ஆகமத்தைப் பொதுநூலாகிய வேதத்தைப்போலவே உண்மையானபிரமாணமாகக் கொள்ளுதல் சைவசம்பிரதாயமாதலால், 'மெய்யாகமம்' எனப்பட்டது. சிவபிரானது பராக்கிரமம் விளங்கும்இடமான எட்டுத்தலங்கள் அட்டவீரட்டமென்றும், அட்டவீரட்டானமென்றும் பெயர்பெறும். வீரட்டம், வீரட்டானம் - வீரஸ்தானம். அவற்றில் திருவதிகை திரிபுரத்தையெரித்த தலம்; (திருநாவுக்கரசு நாயனாரைச் சூலைநோய் தவிர்த்து ஆட்கொண்ட தலம் இதுவே.) "பூமன்சிரங் கண்டியூர்தக்கன் கோவல் புரமதிகை, மாமனை பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர், காமன் குறுக்கை யமன் கடவூர் இந்தக்காசினியில். தேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே" என்றதனால் அட்டவீரட்டத்தின் தன்மை யறிக. ஆகமம் நேர், அதீந்தபுரம் - பாடபேதங்கள். அதி - நாகங்களுக்கு, இந்திரன் - தலைவனான ஆதிசேடன்; ஆதியில் ஆதிசேடனால் பூசிக்கப்பட்டபடியால், இவ்வூர்க்கு அதீந்திரபுரமென்று பெயராயிற்று; இது, கருடநதியின்கரையிலுள்ள திருப்பதி. எழுதும் என்னும் பெயரெச்சம், பதியென்னும் இடப்பெயர் கொண்டது. (கஎ)*

[சிதம்பரஞ்சேர்ந்து நடராசப்பெருமானைத் தரிசித்தல்.]

கஅ. † இன்னம்பலபலயோனியில்வெய்தாநெறிபெறவே
முன்னம்பலரடிதேடவுமுடிதேடவுமெட்டா
வன்னம்பலபயில்வார்புனலணிதில்லையுளாடும்
பொன்னம்பலநாதன்கழல்பொற்போடுபணிந்தான்.

* இச்செய்யுளின் பின், அடியில் வருகிற செய்யுளொன்று ஏடுகளிற் காணப்படுகிறது:—

"மாவிந்தையநிலமங்கையுமலர்மாணடிவருடத்
தாவும்மரவணைமேல்விழிதுயிலுந்தனிமுதலைப்
பூவுந்தியபொழில்சூழ்தருபொற்சித்திரகூடக்
கோவிந்தனையடிபன்முறைதொழுதுட்களிகொண்டான்."

† இச்செய்யுளின்இரண்டாமடி அடியில்வருமாறு ஏடுகளிற்காணப்படுகிறது:—"முன்னம்பலர்நறுமாமலர்முறைதூய்மகிழ்வெய்த."

(இ - ள்.) முன்னம் - முற்காலத்தில்,பலர் - பலதேவர்கள், அடி தேடவும் முடி தேடவும்-திருவடியைத் தேடவும் திருமுடியைத் தேடவும், எட்டா -(அவர்கட்கு) எட்டாமல் பெருவடிவங் கொண்டிருந்தவரும், அன்னம் பல பயில் வார்புனல் அணி தில்லையுள் ஆடும் பொன்அம்பலம் நாதன்-அன்னப்பறவைகள் பல தங்கப்பெற்ற மிக்கநீர்வளத்தையுடைய அழகியசிதம்பர தலத்திலே திருநடனஞ்செய்கின்ற கனகசபைக்குத் தலைவருமான சிவபிரானுடைய,கழல்-திருவடிகளை, (அருச்சுனன்), இன்னம் பல பல யோனியில் எய்தாநெறி பெறவே-தான் மீண்டும் பற்பலவகைப்பட்டபிறப்புக்களிற் பிறவாத தன்மையை அடையும்படி, பொற்போடு பணிந்தான்-அழகிதாக வணங்கினான்; (எ - று.)—இங்குச் சிவபிரான் திருநாமம் - சபாநாயகர்; அம்பிகை - சிவகாமியம்மை.

தில்லை யென்ற தலம் - எல்லாச் சிவதலங்களுள்ளும் தலைமையானது; கோயிலென்னும் மறுபெயருடையது: சோழநாட்டில் காவேரிக்கு வடக்கில் உள்ளது; இச்சிதம்பரதலமுள்ள இடம், ஆதியில் தில்லையென்னும் மரம் அடர்ந்த காடாயிருந்ததனால், 'தில்லை' என்றும், 'தில்லைவனம்' என்றும் பெயர்பெறும். மறுபடி சன்மமெடுக்காமல் வினைதீர்ந்து பிறப்பற்று முத்தி பெறும்படி என்பது, முதலடியின் கருத்து. பலபலயோனி - நால்வகைத் தோற்றத்து எழுவகைப்பிறப்பின் எண்பத்துநான்குநூறாயிரம்யோனிபேதங்கள். எட்டாநாதனென இயையும். 'பலரடிதேடவு முடிதேடவுமெட்டா நாதன்' என்றது-தாம்தாம் கடவுளென்னுங் கருத்துக்கொண்டு ஒருவர்க்கு ஒருவர் பகைமைபூண்டு போர்தொடங்கிய பிரமவிஷ்ணுக்களின் மாறுபாட்டை யொழிக்கும்பொருட்டுப் பரமசிவன் அவ்விருவர்க்கும் நடுவில் ஒரு பெரிய சோதிவடிவமாய்த் தோன்றி நின்று 'இதன் அடியையும் முடியையும் தேடுமின்' என்ன, 'அதனை முன்னங்கண்டவரே முதல்வர்' என்று சொல்லிப் பிரமன் அன்னப்பறவைவடிவமாய் முடியைக்காண விண்பறந்தும்,விஷ்ணு பன்றியுருவமாய் அடியைக்காண மண்ணிடந்துஞ் சென்று பலகாலம் தேடியும் முடியடிகளைக் காணுமற்போயின ரென்ற கந்தபுராணக்கதையை உட்கொண்டு. ஒன்றுக்குமேற்பட்டதைப் பன்மையென்று கூறுவது தமிழ் வழக்காதலால், இங்கு இருவர் 'பலர்' எனப்பட்டனர். (வடமொழியிலக்கணத்திலுள்ள த்விவசநமும் [இருமையெண்ணும்] தமிழில் பன்மையில் அடக்கப்படுதல் காண்க.) அன்னம் - ஹம்ஸம் என்ற வடசொல்லின் சிதைவு. 'அன்னம் பல பயில்' என்ற அடைமொழி, நீர்வளச்சிறப்பை விளக்கும். நீர் வளம்மிக்க தாமரையோடையில் வாழ்தல், அன்னப்பறவையின் இயல்பு. பொன்னம்பலம் - பொன்மயமான சபை; இது, பஞ்சசபைகளுள் ஒன்று: அவையாவன - கனகசபை சிதம்பரத்திலும், இரசதசபை மதுரையிலும், தாமிரசபை திருநெல்வேலியிலும், இரத்தினசபை திருவாலங்காட்டிலும், சித்திரசபை திருக்குற்றாலத்திலு மெனக் காண்க.அம்பலம்-அம்பரமென்ற வடசொல்லின் விகாரம். யோநி, நாதன் - வடசொற்கள். (கஅ)

[திருவரங்கஞ் சேர்ந்து, நம்பெருமாளைத் திருவடிதொழுதல்.]

கக. இலங்காபுரிமுன்செற்றவனிருபோதும்வணங்கத்
துலங்காடரவணைமேலறிதுயில்கொண்டவர்பொற்றாள்
பொலங்காவிரியிருபாலும்வரப்பூதலமங்கைக்
கலங்காரமளிக்குந்தென்னரங்கத்திடைதொழுதான்.

(இ - ள்.) இலங்காபுரி முன் செற்றவன்-இலங்கைநகரத்தை முன்பு அழித்தவனான இராமபிரான், இரு போதும் - (காலை மாலை யென்னும்)இரண்டுசந்தியா காலங்களிலும், வணங்க-சேவிக்க, துலங்கு ஆடு அரவு அணை மேல் அறி துயில் கொண்டவர் - விளங்குகிற படமெடுத்தாடுந்தன்மையுள்ள

ஆதிசேஷனாகிய சயனத்தின்மேல் யோகநித்திரைசெய்தருளுகிற எம்பெருமானுடைய, பொன் தாள் - அழகிய திருவடிகளை,—பொலம் காவிரி இருபாலும் வர - அழகியகாவேரிநதி இரண்டுபக்கங்களிலும்பிரிந்து பெருகிவர, பூதலம் மங்கைக்கு அலங்காரம் அளிக்கும் - பூமிதேவிக்கு அழகைச்செய்கின்ற, தென் அரங்கத்திடை - அழகிய ஸ்ரீரங்கத்திலே, தொழுதான் - வணங்கினான்; (எ - று.)—இங்குப் பெருமாள்திருநாமம் - ஸ்ரீரங்கநாதன்; பிராட்டி - ஸ்ரீரங்கநாயகி.

திருவரங்கம் - நூற்றெட்டுத் திருமால் திருப்பதிகளுள் தலைமைபூண்டது; சோழநாட்டில் உபயகாவேரிமத்தியில் உள்ளது: கோயிலென்றும், பெரியகோயி லென்றும் மறுபெயருடையது. பிரணவாகாரமான ஸ்ரீரங்கவிமானத்திலே ஆதிசேஷசயனத்திலே திருமகளும்நிலமகளும் திருவடிவருடப் பள்ளிகொண்டருளும் திருமால்,ஆதியில் சத்தியலோகத்தில்பிரமதேவனது திருவாராதனத்திருவுருவமாயிருந்தான். பின்பு சூரியகுலத்திற்பிறந்த இக்ஷ்வாகு மகாராசன், பிரமனைக்குறித்துப் பலகாலம் அரும்பெருந்தவம் புரிந்து, அத்தேவனருளால் அவ்வெம்பெருமானைத் தான் பெற்றுத் திருவயோத்திக்கு எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்துபிரதிஷ்டித்துத் திருவாராதனஞ் செய்துவந்தான். அந்த ஸ்ரீரங்கநாதனே இக்ஷ்வாகுமுதல் இராமபிரான்வரையிலுள்ளஇரவிகுலமன்னவரெல்லோர்க்கும்குலதெய்வமாகிவிளங்கினான். இராமபிரான் தனது பட்டாபிஷேகத்தின்பின்பு சுக்கிரீவன்முதலிய அனைவர்க்கும் விடைகொடுத்து அவரவரை ஊர்க்கு அனுப்பும்பொழுது தனதுதிருவாராதனமான அந்தஎம்பெருமானைத் தனக்கு மிகவும் அந்தரங்கனான விபீஷணாழ்வானிடங் கொடுத்து, ஆராதித்துவருமபடி நியமித்து அனுப்பினான்; அங்ஙனமே அவ்வரக்கர்பெருமான் அவ்வமரர்பெருமானை அவ்விமானத்துடனே எழுந்தருளப் பண்ணிக்கொண்டு இலங்கைநோக்கிச் செல்லும்பொழுது, இடைவழியில் உபயகாவேரி மத்தியிலே பெருமான் புடைபெயராது விமானத்துடனே நிலைநின்றருளினான்: அங்ஙனம்திருமால் திருவுள்ளமுவந்துதங்கிய திவ்வியதேசமே, பூலோகவைகுண்ட மெனப்படுகிற மகிமையையுடைய ஸ்ரீரங்கம்.(ஸ்ரீவைகுண்டம் திருப்பாற்கடல் யோகியரதுஉள்ளக்கமலம் என்னும் இவையனைத்தினும் பிரியமான தென்று திருமால்) திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கும் இடமாதல்பற்றி, 'ரங்கம்' என்று அவ்விமானத்துக்குப் பெயர். ரங்க மென்னும் வடமொழி, அரங்க மென முதற்குறிலை முதலிற் பெற்றுவந்தது.

'இலங்காபுரியையழித்தவன்' என்றதன் பொருள் - தென்கடலிடையிலுள்ள அவ்விலங்கைத்தீவைத் தனக்கு இராசதானியாகக்கொண்டு அதனை அரசாண்ட இராட்சசராசனான இராவணன்முதலிய அரக்கர்களைவேரோடு அழித்தவ னென்பது; இவ்வரலாறு இராமாயணத்திற் பிரசித்தம். இராமன் ரங்கநாதனை வணங்கினமையை "ஆனவன்றனொடு மாயிரமௌலியான், தானநண்ணினன் தத்துவநண்ணினான்", "நண்ணிநாகணைவள்ளலை நான்மறைப், புண்ணியப்புனலாட்டிப் புலமையோ, ரெண்ணு நல்வினை முற்றுவித் தேற்றினான்" எனக் கம்பரும் கூறியமை காண்க. திருமாலாகிய இராமபிரான் தானே திருமாலாகிய அரங்கநாதனை வணங்குதல் எங்ஙனம் இயையுமெனின், கூத்தாடுபவர் ஒவ்வொருவேஷங் கொள்ளுங் காலத்தில் அவ்வதற்கு ஏற்பவே நடித்தல்போல, அவ்வெம்பெருமான் ஒவ்வொருவடிவமாகத் திருவவதரித்தகாலத்தில் அவ்வதற்குஉரிய சாதி குணம் தொழில் முதலிய இயல்புகளையெல்லாம் ஏறிட்டுக்கொண்டு அதற்குஏற்ப ஒழுகுதல் மரபாதலால், "ஆத்மாநம் மாநுஷம் மந்யே [என்னை நான் மனிதனாகவே நினைக்கிறேன்]" என்றுகூறிய இராமபிரான் மனைவியைப்பிரிந்துவருந்துதல் முதலிய மனி

தார்க்கு உரிய செயல்களை அநுசரித்தாற் போலவே, தான் பிறந்தகுலத்தின் தெய்வத்தைத் தன்முன்னோர்முறைப்படி வணங்கி வழிபட்டன னாதலின் இயையுமென்க. இங்ஙனம் பெருமாளாகிய இராமபிரானால் வணங்கப்பட்டமைபற்றி, அரங்கநாதனுக்குப் பெரியபெருமா ளென்று திருநாமம். 'இலங்கா நகு முடிவானவ ரிருபோதும் வணங்க' என்ற பாடத்துக்கு-ஒளிவீசிவிளங்குகிற கிரீடத்தையுடைய தேவர்கள் அல்லும்பகலும் வணங்க என்று பொருள். ஆதிசேஷன் தனது ஆயிரந்தலைகளிலு முள்ள மாணிக்கங்களி னொளியை வெளிவீசுதல்பற்றி, அதற்கு, 'துலங்கு' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது; "இருளிரியச் சுடர்மணிக ளிமைக்கு நெற்றி யினத்துத்தியணி பணை மாயிரங்க ளார்ந்த, அரவரசப் பெருஞ்சோதி யனந்த னென்னும் அணிவிளங்கு முயர்வெள்ளை யணையை மேவித், திருவரங்கப் பெருநகருட் டெண்ணீர்ப்பொன்னி திரைக்கையா லடிவருடப் பள்ளிகொள்ளுங், கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண் டென் கண்ணிணைகளென்றுகொலோ களிக்கு நாளே" என்றார் குலசேகராழ்வாரும். அறிதுயில்-எல்லாவற்றையும் அறிந்துகொண்டே செய்யும் நித்திரை. உலகத்தில் அனைவரும் இயல்பாகத் தம்மையறியாது மெய்ம்மறந்து கொள்ளுந் தூக்கம்போலன்றி எம்பெருமான் லோகரக்ஷணசிந்தனைசெய்துகொண்டே தூங்குவதுபோலத் தோன்றுதலால், அந்த நித்திரை 'அறிதுயில்' எனப்பட்டது. அறிதுயில், யோகத்துயில், விழிதுயில், துயிலாத்துயில், பொய்த்துயில், கள்ளத்துயில் என்பன, ஒருகருத்தடையன; "உறங்குவான்போல் யோகுசெய்த பெருமான்" என்றார் ஆழ்வாரும். துயில்-முதனிலைத்தொழிற்பெயர். பொற்றாள்-பொன்னினாலாகிய கழலை யணிந்த திருவடியுமாம்; அப்பொழுது, பொன்-கருவியாகுபெயர். "மலைத்தலையகடற்காவிரி, புனல்பரந்துபொன்கொழிக்கும்" என்றபடி தான்பெருகும்பொழுது பொன்னைக் கொழித்துக்கொண்டு வந்து பொன்னியென ஒருபெயர்பெறுதலால்,'பொலங்காவிரி' எனப்பட்டதாகவுங் கொள்ளலாம். காவிரி - காவேரி யென்ற வடசொல்லின் விகாரம். அச்சொல் - கவேரனென்னும் அரசனுக்கு மகளாகத் தோன்றியவ ளென்றும், கவேரமென்னும்மலையினின்றுந் தோன்றிய தென்றும் காரணப்பொருள்படும். நிலவுலகத்திலுள்ள திவ்வியக்ஷேத்திரங்க ளெல்லாவற்றுள்ளும் சிறந்ததாதலாலும்,திருமாலினது திருவுள்ளத்துக்கு மிகவும்பாங்காயிருத்தலாலும், 'பூமிக்குஅழகுசெய்கிற அரங்கம்' எனப்பட்டது. அலங்காரம்-வடசொல். இனி, அலங்குஆரம்எனப்பிரித்து 'பூமிதேவிக்கு அசைகின்ற முத்துமாலையைத் தருகிற வென்றும் பொருள்கொள்ளலாம்; யாற்றுப்பெருக்கைப் பூமிதேவிக்குஆரம்போலுமென்றல் மரபு. தென்னரங்கம்என்பதற்கு-தென்திசையிலுள்ளதான திருவரங்கமென்றும் பொருள்கொள்ளலாம்; அப்பொழுது 'தெற்கு' என்ற அடைமொழி - இனம்விலக்குதற்கன்றி இயல்பு குறித்தற்கு வந்ததென்க.* செற்றவன் என்ற இறந்தகாலவினையாலணையும் பெயரில், செறு - பகுதி. இலங்காபுரி யென்ற இருபெயரொட்டுப்பண்புத்தொகை - வடநூல்முடிபு. துலங்கு, ஆடு என்ற வினைத்தொகையிரண்டும் - 'அரவு' என்ற பெயரைக் கொண்டன. அறிதுயில்-வினைத்தொகை. (கக) †

---

*'வேங்கடமுங் குமரியும் யாண்டைய என்றால், வடவேங்கடம் தென்குமரி என வேண்டுதலின், அதனை விளங்கக் கூறினார்'என்பது, தொல்காப்பிய நச்சினார்க்கினியம்.

† இச்செய்யுளின் பின், அடியில் வருகிற செய்யுள் சிலபிரதிகளிற் காணப்படுகிறது:—

" ஆங்கப்பணவத்துட்பொருளரிதாளிணைதொழுது
பாங்கர்ப்புதுவெயில்வீசுபல்பருமாமணிகுயிலா

[பலதீர்த்தங்களில் நீராடி மதுரை சேர்தல்.]

உ0. வளவன்பதிமுதலாகவயங்கும்பதிதோறுந்
துளவங்கமழதிசீதளதோயங்கள்படிந்தே
யிளவண்டமிழெழுதேடுமுன்னெதிரேறியதுறைசூழ்
தளவங்கமழ்புறவஞ்செறிதண்கூடல்புகுந்தான்.

(இ - ள்.) வளவன் பதி முதல் ஆக - சோழனது இராசதானியான உறையூர் முதலாக, வயங்கும் - சிறப்புப்பெற்றுவிளங்குகிற, பதி தோறும் - விஷ்ணுஸ்தலங்களிலெல்லாம், துளவம் கமழ் அதி சீதள தோயங்கள் படிந்தே-(அத்திருமாலுக்குஉரிய) திருத்துழாயின் திருமணம் வீசப்பெற்ற மிகக் குளிர்ச்சியான தீர்த்தங்களில் நீராடிக்கொண்டே,—இள வள் தமிழ் எழுது ஏடு முன் எதிர் ஏறிய துறை சூழ் - இளமையையும் வண்மையையுமுடைய தமிழ்ப்பாஷையை எழுதப்பெற்ற ஏடு முன்பு கரையெதிர்த்துச்சென்ற (வையையாற்றின்) துறை யடுத்ததும், தளவம் கமழ் புறவம் செறி - முல்லை மலர் மணம்வீசப்பெற்ற வனம் சார்ந்ததுமான, தண் கூடல்-குளிர்ந்த மதுரையினுள், புகுந்தான் - சென்று சேர்ந்தான்; (எ - று.)——உறையூரில் எழுந்தருளியிருக்கிற பெருமாள் திருநாமம்-அழகியமணவாளன்; பிராட்டி-உறையூர்நாச்சியார்.

சோழராசர்களுக்குஉரிய இராசதானிகள் *ஐந்தனுள் உறையூர் ஒன்றுதலாலும், அது திருவரங்கத்தையடுத்த திருமால்திருப்பதியாதலாலும்,'வளவன்பதி' என்றதற்கு - உறையூரென்று பொருள்கொள்ளப்பட்டது. 'வளவன்பதி முதலாக வயங்கும்' என்றதையும், 'துளவங்கமழதிசீதள தோயங்கள் படிந்தே' என்பதையும் நோக்கி, 'பதிதோறும்' என்பதற்கு - விஷ்ணுஸ்தலங்களிளெல்லாமென்றே பொருள்கொள்ளவேண்டியதாயிற்று. எம்பெருமானது திருமஞ்சன திவ்வியதீர்த்தத்தின் சம்பந்தம்பெறுதல் தோன்ற, 'துளவங்கமழ்தோயம்' எனப்பட்டது. துளவம் - துளஸீ என்ற வடசொல்லின் சிதைவு. அதிசீதளதோயம் - வடமொழித்தொடர். வளவன் - வளமுடையவன்;நிலவளம்முதலியபலவளங்களுக்குங் காரணமான நீர்வளம் நிலைமாறாமைக்குக்காரணமான காவிரிநதி பாயப்பெற்ற நாடுடையனாய்ச் செல்வவளத்திற் சிறத்தலால், வளவனென்று சோழனுக்கு ஒருபெயர்.'முதலாக' என்றது, திருக்கரம்பனூர், திருவெள்ளறை முதலியவற்றை.

மூன்றாமடியிற் குறித்த கதை:—திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சமணர்களை வென்று சைவமதத்தை நிலைநிறுத்தும்பொருட்டுப் பாண்டியநாட்டுக்குச் சென்றபொழுது சமணர்கள் அரசன்முன்னிலையில் 'நாம்இருதிறத்தேமும் நமது சமயசித்தாந்தத்தை யெழுதிய ஏட்டை ஓடுகின்ற வையையாற்றிலே இடுவோம்; அவற்றில் எதிர்ந்துசெல்லும் ஏடே மெய்ப்பொருளையுடையது' என்றுசொல்ல, அதற்கு நாயனார் உடன்பட்டபின், சமணர்கள் "அத்தி நாத்தி" என்னுந் தங்கள்மதக்கோட்பாட்டை எழுதியஏட்டைநதிப்பெருக்கில் இடுதலும், அதனை அப்பெருக்கு அடித்துக்கொண்டுபோய்விட்டவுடனே, நாயனார்"வாழ்கவந்தணர்"என்றுதொடங்கும் பாசுரத்தைப் பாடி ஏட்டில் எழுதி அந்தஏட்டைத் தமதுகையினால் வைகைநதியில் இட, அவ்வேடு நதியிலே எதிர்ந்து நீரைக்கிழித்துக்கொண்டு சென்றதென்பதாம்.

---

வோங்கிக்கிளர்பொலன்மண்டபமொருதன்பெயராலத்
தூங்கற்கரிநடையிந்திரசுதனென்றுபடைத்தான்."
(ஸ்ரீரங்கத்தில் அம்மண்டபம், அருச்சுனமண்டப மென்று வழங்கும்.)
*காவிரிப்பூம்பட்டினம்,கருவூர்,திருவாரூர்,உறையூர்,திருச்சேய்ஞலூர்.

இனி, ஒருசமயத்திற் பிறநாடுகளினின்றுவந்த எண்ணாயிரம் சமண முனிவர்கள் தனித்தனி ஒவ்வொருவெண்பாவைப் பாடி ஏட்டிலெழுதித் தம் தமது பீடத்தின்கீழ் வைத்துவிட்டுப் போய்விட, பாண்டியன் அவற்றை யெடுத்து வையையாற்றில் எறிந்துவிடும்படி ஏவ, அங்ஙனம் எடுத்து எறியப் பட்ட அவற்றுள் நானூறுபாடல்கள் நீர்செல்லுமுறையிற் சென்று கடலிற் சேராமல் நீர்ப்பெருக்கில் எதிரேறிச்சென்றன; அவையே நாலடிநானூறு என்னுங் கதையையுங் கொள்ளலாம்.

இதனால், பாண்டியநாட்டு வையைநதி வைதிகமதத்தின் பெருமையை யும், தமிழ்ப்பாடல்களின அருமையையும் தெரிந்து வெளியிட்ட தெய்வத் தன்மை யுடையதென நன்கு விளங்கும்; "கூறியசெஞ்சொலேடு குறித் தெதிர்கொண்டவையை, யாறுடையவன்" என்பர், மேற் கன்னபருவத்தும்.

தமிழுக்கு இளமை - நாள்தோறும் வளர்ச்சிபெறும் நிலைமை; "கன் னித்தமிழ்" என்பதுங் காண்க. அதற்கு வண்மை - வேண்டின சொற்பொ ருட்கருத்துக்களையெல்லாம் குறைவறத் தன்னிற் கொண்டிருத்தலோடு, வேறுபலபாஷைகள் தன்னினின்று உற்பத்தியாதற்கு இடமாயிருத்தல். தமிழ் - இங்குத் தமிழ்ப்பாட்டுக்கு ஆகுபெயர். புறவம் - கொல்லை; முல்லை நிலம்: காடும், காடுசார்ந்த இடமும். ஒருகாலத்தில் வருணன் மாறுபட்டு ஏழுமேகங்களையும் அளவின்றி மழைபொழிந்து மதுரையை யழிக்கும்படி ஏவ அங்ஙனமே வந்த ஏழுமேகங்களையுந் தடுக்கும்பொருட்டு அக்கடவுள் கட்டளையால் அவரது சடையிலுள்ள நான்குமேகங்களும் மேலுயர்ந்து நான்குமாடமாகக் கூடப்பெற்றதனால், மதுரை, நான்மாடக்கூடலென்றும், மாடக்கூடலென்றும், கூடலென்றும் பெயர்பெற்றதென்று திருவிளையா டற்புராணம் கூறும். படிந்தே புகுந்தானென இயையும். சூழ், செறி, தண் என்ற மூன்றும் - கூடற்கு அடைமொழி. (உ0)

வேறு.

[அருச்சுனன் மதுரையிற் பாண்டியராசனைக் காணுதல்.]

உக. குன்றிலிள வாடைவரும் பொழுதெல்லா மலர்ந்ததிருக்கொன்றை நாறத்
தென்றல்வரும் பொழுதெல்லாஞ் செழுஞ்சாந்தின் மணநாறுஞ் செல்வ வீதி
நன்றறிவார் வீற்றிருக்கு நான்மாடக் கூடல்வள நகரி யாளும்
வென்றிபுனை வடிசுடர்வேல் மீனவனை வானவர்கோன் மதலை கண்டான்.

(இ - ள்.) குன்றில் - கைலாசகிரியிலிருந்து, இள வாடை வரும் பொழுது எல்லாம் - இளமையான வடதிசைக்காற்று வரும்பொழுதெல்லாம், மலர்ந்த திரு கொன்றை நாற - மலர்ந்த சிறந்த கொன்றைமலர் வாசனைவீச, தென்றல் வரும் பொழுது எல்லாம் - (பொதியமலையிலிருந்து) தென்றற் காற்று வரும்பொழுதெல்லாம், செழுஞ் சாந்தின் மணம் நாறும் - செழிப் பான சந்தனத்தின் வாசனை வீசப்பெற்ற, செல்வம் வீதி - செல்வவளமமை ந்த வீதிகளை யுடைய, நன்று அறிவார் வீற்றிருக்கும் நான்மாடக்கூடல் வளம் நகரி - நன்மையையறியும் மேன்மக்கள் வீற்றிருக்கப்பெற்ற நான்மாடக் கூட லென்னும் ஒருபெயரையுடைய சிறந்த மதுராபுரியை, ஆளும் - அரசா ளுகிற, வென்றி புனை வடி சுடர் வேல் மீனவனை - வெற்றிபொருந்தியதும் கூர்நுனியுள்ளதும் ஒளியையுடையதுமான வேலாயுதத்தை யேந்திய பாண் டியராசனை, வானவர் கோன் மதலை - தேவராசனான இந்திரனது குமாரனா கிய அருச்சுனன், கண்டான் - (அரண்மனையிற்சென்றுசந்தித்துப்)பார்த்தான்.

மதுரை பாண்டியநாட்டுஇராசதானி யாதலால் அதிலே இருந்து நாட் டை யரசாளுகிற அரச னென்பார் 'நான்மாடக்கூடல் வளநகரி யாளும் மீனவன்' என்றார். மீனவன் - மீன்வடிவ மெழுதிய கொடியை யுடையவன். அப்பொழுது அரசாண்ட பாண்டியராசனது பெயர் சித்திரவாகன னென்

பது, மேல் இருபத்தோராங்கவியால் விளங்கும். சிறப்பினால், குன்று, கைலாசமெனப்பட்டது. இடம் - ஐந்தனுருபு, நீக்கம். வாடை - வடதிசைக்காற்று; வடக்கிலிருந்து வருவது எனப் பொருள்படும். இதிற் பகுதியாகிய வடக்கு என்பது - ஈற்றுயிர்மெய்யும் ககரவொற்றும் அகரமும் கெட்டு முதல்நீண்டது; [நன் - உயிர் - கசு.] தென்றல் - தென்றிசைக்காற்று, தெற்கிலிருந்து வருவதெனப் பொருள்படும். இதிற் பகுதியாகிய தெற்கு என்பது - ஈறு கெட்டு றகரம் னகரமாகத் திரிந்தது; அல் - பெயர்விகுதி; து - சாரியை: அது உகரங்கெட்டுத் தகரம் றகரமானது - சந்தி. சாந்து - சந்தனமென்ற வடசொல்லின் விகாரம். வீதி, நகரி - ஈறு இகரமான வடசொற்கள். வீதி - தெரு. சிவபிரான் அணிந்த கொன்றையென்ற சிறப்புப்பற்றி 'திருக்கொன்றை' என்றார். "விடையா வடந்தைசெய் வெள்ளியம் பொருப்பினும், தென்கால் விடுக்குஞ் செம்பிற் பொருப்பினும்" என்று பிறரும் வாடைக்காற்றைக் கைலாசத்தினின்று வருவதெனக் கூறினமை காண்க. இனி, மலர்ந்த திருக்கொன்றை வடதிருவாலவாயிலெழுந்தருளியிருக்கிற சிவலிங்கப்பெருமான் சூடியதுமாம். "சந்தனப் பொதியத்தடவரை" என்றபடி சந்தன மரங்களை மிகுதியாகவுடைமையால் சந்தனசைலமென்று ஒருபெயர் பெறுகிற பொதியமலையினின்று வருவதான தென்றற்காற்று, சந்தனத்தின் நறுமணம் நாறுமென்க. தென்றற்காற்றுப் பொதியமலையிலிருந்து வருவதை 'மலயமாருதம்' என்ற அதன்பெயரினாலும் அறிக. நல்லிசைப்புலவர்களெனப்படுகிற சங்கப்புலவர்கள்போன்ற நன்மக்களை யுடைமை தோன்ற, 'நன்றறிவார் வீற்றிருக்கும் நான்மாடக்கூடல்' எனப்பட்டது. நன்றறிவார் - விவேகிகள். வீற்றிருத்தல் - மிக்கசிறப்புடன் இருத்தல். வடிவேல - வடிக்கப்பட்டவேல்; வடித்தல் - நெருப்பிலிட்டுக்காய்ச்சியடித்துக் கூராக்குதல்: தேய்த்தெடுக்கப்பட்டவேலெனினுமாம்.

இதுமுதல் இருபத்தொருகவிகள் - பெரும்பாலும் முதல்நான்குசீரும் காய்ச்சீர்களும், மற்றையிரண்டும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். இவற்றில் ஈற்றுச்சீர் தேமாச்சீராகவே நிற்கும். (உக)

[அருச்சுனனுக்கும் பாண்டியனுக்கும் நிகழ்ந்த சம்பாஷணை.]

உஉ. அந்நிலத்தினவரல்லாவந்தணரோடிவனவனுக்காசிகூற, வெந்நிலத்தெப்பதியெத்திசைக்குப்போகின்றீரென்றுபோற்றிச், சென்னியர்க்கும் வில்லவர்க்குமணிமுடியாங்கனைகழற்காற்செழியன்கேட்பக், கன்னியைக்கண்ணுற்றாடவந்தனமென்றனன்மெய்ம்மைக்கடவுள்போல்வான்.

(இ - ள்.) இவன் - இந்தஅருச்சுனனானவன், அந்நிலத்தினவர் அல்லா அந்தணரோடு - அப்பாண்டியநாட்டவரல்லாத [தன்னுடன்வந்த வெவ்வேறுநாட்டினரான] அந்தணர்களுடன் (சென்று), அவனுக்கு ஆசி கூற - அந்தப்பாண்டியனுக்கு வாழ்த்துச்சொல்ல,— சென்னியர்க்கும்வில்லவர்க்கும் மணி முடி ஆம் கனை கழல் கால் செழியன் - சோழராசர்களுக்கும் சேரராசர்களுக்கும் முடியிற்கொள்ளும் இரத்தினகிரீடம்போன்ற ஒலிக்கின்றவீரக்கழலையணிந்த பாதங்களையுடைய பாண்டியராசன், போற்றி - (அவ்வருச்சுனனை) வணங்கித் துதித்து, எந்நிலத்தீர் எப்பதியீர் எத்திசைக்கு போகின்றீர் என்று கேட்ப - '(நீவிர்) எத்தேயத்தீர்? எவ்வூரீர்? (இப்பொழுது) எவ்விடத்துக்குச் செல்கின்றீர்?' என்று (மரியாதையாக) வினவ,—மெய்ம்மை கடவுள் போல்வான் - சத்தியத்துக்கு உரிய அதிதேவதைபோல்பவனான அருச்சுனன், கன்னியை கண்ணுற்று ஆட வந்தனம் என்றனன் - 'கன்னியைப் பார்த்து ஆடுதற்கு வந்தோம்' என்று சொன்னான்; (எ - று.)

கீழ் ஏழாங்கவியிற் கூறியபடி அருச்சுனன் ராஜவேஷத்தைவிட்டு வை

திகமான முனிவேஷம் பூண்டு பலஅந்தணர்களுடன் சென்றனனாதலால் அந்தவேஷத்திற்கு ஏற்ப க்ஷத்திரியனான பாண்டியனுக்கு ஆசீர்வாதஞ்செய்து அவன் தன்னைவணங்கப்பெற்றன னென்க. நிலத்தீர், பதியீர், போகின்றீர் என்பன - உயர்வுப்பன்மை; மற்றை யந்தணர்களை யுளப்படுத்திய பன்மை யெனினுமாம். சேரநாட்டரசரும் சோழநாட்டரசரும் பாண்டியராசனுக்குக் கீழ்ப்படிந்து அவனுடைய அடிகளில் தமதுமுடி படும்படி விழுந்துவணங்க அவர்கள் முடிமேல் அடிவைக்குந் தர முடையான் பாண்டிய னென்பது, மூன்றாமடியில் விளக்கப்பட்டது. சென்னியர்-தலைமைபெற்றவர்; சென்னி - தலை. வில்லவர் - வில்வடிவமெழுதிய கொடியை யுடையோர். மணி முடியாம் காலென இயையும். செழியன் - செழுமையை யுடையவன். 'கன்னியைக் கண்ணுற்று ஆடவந்தனம்' என்பது - குமரியெனப்படும் நதியைத் தரிசித்து அதில் நீராடுதற்கு வந்தோம் நாங்கள் என்று வெளிப்படைப்பொருள் படுவதோடு, உனது மகளான கன்னிகையைப் பார்த்து அவளோடு லீலை செய்ய வந்தோம் யாம் என்று உள்ளுறைபொருளும் படுதல் காண்க. இங்ஙனம் மனத்திலுள்ள கருத்து அமைய உண்மையாகப் பேசுஞ் சொற்சாதுரியமுடைமையால், 'மெய்ம்மைக்கடவுள் போல்வான்' என்றார். சீவகசிந்தாமணியில் சீவகனுக்கும் சுரமஞ்சரிக்கும் நடந்த சம்பாஷணையைக் கூறுமிடத்து "வந்தவர வென்னையென வாட்கண்மட வாய்கேள், சிந்தைநலி கின்ற திரு நீர்க்குமரியாட, அந்திலதை யாயனென்னை மொழிகென்றாள், முந்திநலி கின்றமுது மூப்பொழியு மென்றான்" என்ற செய்யுள் இங்கு நோக்கத்தக்கது. அதனுரையில் நச்சினார்க்கினியர் 'சிந்தையிலே நின்று வருத்துகின்ற அழகிய நீர்மையை யுடைய நின்னைப் புணரவந்தேன் என்றானாக, அச்சொல்லை, ஆடவேண்டுமென்று நினைத்தலிற் சித்தத்தை நலிகின்ற தீர்த்தமாகிய குமரியாற்றை ஆடவந்தே னென்றானாக இவள் கருதி' என உரைத்ததும் காண்க. 'வந்தனம்' என்பது - வெளிப்பொருளுக்கு உளப்பாட்டுத்தன்மைப்பன்மையும், உட்பொருளுக்குத் தனித்தன்மைப்பன்மையு மாம். முற்காலத்திற் குமரி யென ஓர்நதியா யிருந்தது பிற்காலத்திற் கடல்கொள்ளப்பட்டுக் கன்னியாகுமரி யென்னும் முனையாக இக்காலத்தில் வழங்குகின்றதென அறிக. 'கன்னியைக் கண்ணுற்று ஆட வந்தனம்' என்பதில், (பஞ்சகன்னிகைகளுள் ஒருத்தியான) திரௌபதியைத் (தருமபுத்திரனுடன்) கண்டதனால் தீர்த்தயாத்திரை செய்யவந்தே னென்றும் ஒருபொருள்படுதல் காண்க. "செவ்வி மென்போகமா மகளிர் தம்முனையினும் நாத்தவறா வடல்வீமன்" என்றாற் போலக் காதல் கைவிஞ்சியபொழுதும் பொய்ம்மைமொழி புகலாத உயர்வு தோன்ற, இங்கு, அருச்சுனன், 'மெய்ம்மைக்கடவுள் போல்வான்' என்று சிறப்பித்துக் கூறப்பட்டான். (உஉ)

[அருச்சுனன்முதலியோர்க்குப் பாண்டியன் சோலையில் விருந்துசெய்தல்.]

உ௩. வெய்தின்மகபதிமுடியில்வளையெறிந்துமீண்டநாள்விண்ணின்மாதர்
கொய்துமலர்தொலையாதகுளிர்தருக்களொருகோடிகொண்டுபோந்து
மைதவழ்தன்றடங்கோயில்வளநதமதனொருமருங்குவைத்தகாவிற்
கைதவர்கோன்மற்றவர்க்குப்போனகஞ்செய்தருந்துமிடங்கற்பித்தானே.

(இ - ள்.) வெய்தின் - விரைவாக [அல்லது கடுமையாக], மகபதி முடியில் வளை எறிந்து - (உக்கிரகுமாரபாண்டியன்) இந்திரனுடைய முடியிலே வளை யென்னும் ஆயுதத்தை வீசி, (அதனால் அவனை மகுடபங்கப்படுத்தி வென்று), மீண்ட நாள்-(தனது நகரத்துக்குத்) திரும்பியகாலத்தில், விண்ணின் மாதர் கொய்து மலர் தொலையாத குளிர் தருக்கள் ஒரு கோடி கொண்டு போந்து - தேவமகளிர் (பூக்களைக்) கொய்தும் பூக்கள்குறைவுபடாத [மேன்மேற் பூக்கும் மிக்கமலர்களை யுடைய] குளிர்ந்த (கற்பகம் முதலிய) மிகப்பல

தேவதருக்களை (சுவர்க்கலோகத்திலிருந்து) பெயர்த்துக்கொண்டுவந்து, மைதவழ் தன் தட கோயில் வருதம் அதன் ஒரு மருங்கு வைத்த - (மிக்க உயர்ச்சியால்) மேகங்கள் தவழப்பெற்ற தனது பெரிய அரண்மனையாகிய தங்குமிடத்தின் ஒருபுறத்தில் வைக்கப்பெற்றதான, காவில் - சோலையிலே, கைதவர் கோன் - பாண்டியர்தலைவனான சித்திரவாகனன், அவர்க்கு - அந்த அருச்சுனன் முதலானவர்களுக்கு, போனகம் செய்து அருந்தும் இடம் கற்பித்தான் - உணவு சித்தஞ்செய்து உண்ணுமிடத்தை நியமித்தான்; (எ - று.)

மலயத்துவசபாண்டியனது புகளாகிய தடாதகைப்பிராட்டியைச் சுந்தரபாண்டியவடிவாக மணம்புரிந்துகொண்ட சிவபெருமான் அவளிடந் தனக்குப்பிறந்த குமாரனாகிய உக்கிரபாண்டியனுக்கு முடிசூட்டி அவனுக்குப் பகையாகும் கடலையும் இந்திரனையும் மேருமலையையும் வெல்லுமாறு அவனுக்கு வேலும் வளையுஞ் செண்டும் அளித்துப் போயினன்; பின்பு உக்கிரபாண்டியன் ஒருகாலத்தில் தன் நாட்டில் மழைபொழியவில்லையென்ற காரணத்தாற் கோபங்கொண்டு, பொதியமலையில் மேய்ந்திருந்த மேகங்களைப் பிடித்துத் தளைசெய்து சிறையிலிட, அதனையறிந்து இந்திரன் எதிர்த்துவந்து கொடும்போர் புரிய, அப்போரிற் பாண்டியன் தன்கையிலிருந்த வளையைச் சுழற்றி இந்திரன்மேல் வீச, அது இந்திரனுடைய வச்சிராயுதத்தை வீழ்த்தி அவனது கிரீடத்தைக் கீழேதள்ளிச் சிதைக்க, இந்திரன் அஞ்சித் தோற்றோடினன் என்பது, இங்குக் குறித்த கதை. அங்ஙனம் அவன் இந்திரனை வென்ற நாளில் இந்திரனது செல்வமான கற்பகம் முதலிய தேவதருக்களைத் தேவலோகத்தினின்று வலியக் கவர்ந்து தனது நகரத்து அரண்மனையைச் சார்ந்த பூஞ்சோலையில் நாட்டினனென்பதை, கண்ணன் இந்திரனை வென்று பாரிசாததருவைச் சுவர்க்கத்தினின்று வலியக்கொணர்ந்து துவாரகையிற் சத்தியபாமைவீட்டுப் புறங்கடைத்தோட்டத்தில் நட்டினமைபோலக் கொள்க.

வெய்து - வெம்மையென்னும் பண்பினடியாய்ப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்றெச்சவினையுரி; இன் - சாரியை. மகபதி - வடசொல்: யாகங்கட்குத் தலைவன்; (நூறுஅசுவமேத) யாகஞ்செய்து இந்திரபதவிபெற்றவன். தரு - மரம், வருதம் - இருப்பிடம்; வடசொற்கள். வருதமதன் என்பதில், 'அது' என்பது - பகுதிப்பொருள் விகுதி, அன் - சாரியை. கா - பாதுகாக்கப்படுவது. கைதவர் - பாண்டியர். மற்று, ஏ - அசைகள். (உரு)

[பாண்டியனதுமகள அச்சோலையில் விளையாடவருதல்.]

௨௬. வேதியரொடக்காவிலிளைப்பாறியிருந்தளவின்மின்குழாம்போற்
றாதியருஞ்சேடியருந்தற்சூழச்சிலைமதனன்றனிசேவிக்கச் [வீசி
சோதியரிச்சிலம்பரற்றத்துணைநெடுங்கண்செவியளப்பத்தொடித்தோள
யாதியரவிந்தையெனநிருபன்மகள்விளையாடற்காங்குவந்தாள்.

(இ - ள்.) வேதியரொடு அ காவில் இளைப்பு ஆறி இருந்த அளவில் - (விருந்துண்ட அருச்சுனன்) பிராமணர்களுடன் அந்தச்சோலையில் இளைப்புத்தணிந்துகொண்டிருந்த சமயத்தில்,--நிருபன் மகள் - பாண்டியராசனுடைய பெண்,—மின் குழாம் போல் தாதியரும் சேடியரும் தன் சூழ - மின்னற்கூட்டம்போல அடிமைப்பெண்களும் தோழிப்பெண்களும் தன்னைச் சூழ்ந்து வரவும், சிலை மதனன் தனி சேவிக்க - (கரும்பு) வில்லையுடைய மன்மதன் தனியே வழிபடவும், சோதி அரி சிலம்பு அரற்ற - ஒளியையும் பரலையுமுடைய சிலம்பென்னுங் காலணிகள் ஒலிக்கவும், துணை நெடுங் கண் செவி அளப்ப - (வேறுஒப்புமைஇல்லாமல்) ஒன்றோடொன்றுஒத்த நீண்ட கண்கள் காதுகளை யளாவவும், தொடி தோள் வீசி - தொடியென்னும்வளையலை யணிந்த கைகளை வீசிக்கொண்டு, ஆதி அரவிந்தை என - மேன்மையையுடைய

திருமகள்போல, விளையாடற்கு ஆங்கு வந்தாள் - விளையாடும்பொருட்டு அவ்விடத்திற்கு வந்தாள்; (எ - று.)

இருந்தளவு - தொகுத்தல். மின் - மகளிர்க்கு வடிவொளியில் உவமம். தாதியர் - குற்றேவல்செய்யும் மகளிர்; தாதி - தாஸீயென் வடசொல்லின் விகாரம். தாதியர் - செவிலித்தாயரு மாம். சேடி - சேடன் என்பதன் பெண்பால்: வடசொல். மிக்கஅழகும் உரியபருவமும் பெற்றுக் கண்டவர் கண்கவர்ந்து அவர்கட்குக் காதல்விளைக்குந் தன்மையிற் சிறத்தலால், அவளைக் காமக்கடவுள் வழிபடுவ ளென்க. மதனன் - (அனைவரையும்) மதிக்கச் செய்பவன்; மதித்தல் - காதலாற் களித்தல். அரி - சிலம்பின் பருக்கைக் கல். அரிச்சிலம்பு - தவளையினொலிபோன்ற ஒலியை யுடைய சிலம்பு எனினுமாம். சிலம்புவது சிலம்பு எனக் காரணக்குறி; சிலம்புதல் - ஒலித்தல். துணை நெடுங் கண் செவி அளப்ப - கண்கள் பிறழ்ந்துநோக்க என்றபடி. சீவகசிந்தாமணியில் "வஞ்சியிடை நுடங்க மயில் கைவீசி நடந்ததே" என்றாற் போல 'தொடித்தோள் வீசி வந்தாள்' என்றார்; அங்கு நச்சினார்க்கினியர் 'கைவீசி யென்று வருந்தாமை கூறினார்' என்றதை உணர்க. ஆதி - பழமையுமாம். அரவிந்தம் - தாமரைமலர்; அதில் வாழ்பவள், அரவிந்தை. சிந்தாமணியில் "தாமரைத்திருமகளிவளென" என்றவிடத்து நச்சினார்க்கினியர் 'திருஉவமம் - வடிவிற்கும், நல்வினையுடையோனிடத்து ஏகுந் துணையும் பொதுவாயிருத்தற்கும்' என்றார். சூழ, சேவிக்க, அரற்ற, அளப்ப, வீசி என்பன - எண்ணும்மை தொக்கதனால், வினைசசெவ்வெண்; வந்தாள் என்பதைக் கொண்டு முடியும். பாண்டியன்மகள் பெயர் சித்திராங்கதை யென்பது, மேல் உ௯-ஆம் கவியால் விளங்கும். (உ௪)

[அருச்சுனன் அவளைக்கண்டு பெருங்காதல் கொள்ளுதல்.]

* உ௫. பச்சென்றதிருநிறமுஞ்சேயிதழும்வெண்ணகையும்பார்வையென்னு
நச்சம்புமமுதூறநவிற்றுகின்றமடமொழியுநாணும்பூணுங்
கச்சின்கணடங்காதகனதனமுநுண்ணிடையுங்கண்டுசோர்ந்தான்
பிச்சன்போலாயினனப்பெண்கொடிமெய்ந்நலமுழுதும்பெறுவானின்றான்.

(இ - ள்.) அ பெண் கொடி மெய் நலம் முழுதும் பெறுவான் நின்றான் - அந்தப் பூங்கொடிபோன்ற பெண்ணினது உடம்பைத் தழுவுதலாலாகும் இன்பம்முழுவதையும் இனிப் பெறுபவனாய் நின்றவனான அருச்சுனனானவன்,—(அவளுடைய), பச்சென்ற திரு நிறமும் - பசுமையான அழகிய நிறத்தையும், சேய் இதழும் - செந்நிறமான அதரத்தையும், வெள் நகையும் - வெண்ணிறமான பற்களையும், பார்வை என்னும் நஞ்சு அம்பும் - கண்ணின்பார்வை யென்கிற விஷந்தீற்றிய அம்பையும், அமுது ஊற நவிற்றுகின்ற மட மொழியும் - அமிருதம்போன்ற மிக்கஇனிமை மேன்மேலுண்டாகப் பேசுகின்ற அழகிய பேச்சுக்களையும், நாணும் - நாணமென்னுங் குணத்தையும், பூணும் கச்சின் கண் அடங்காத கன தனமும் - தரிக்கிற கச்சுக்கு அடங்காத பருத்த தனங்களையும், நுண் இடையும் - நுண்ணிய இடையையும், கண்டு - பார்த்து, சோர்ந்து - மனந்தளர்ந்து, பிச்சன் போல் ஆயினன் - பித்துக்கொண்டவன் போலாயினான் [காதற்பித்தந் தலைக்கொண்டன னென்றபடி]; (எ - று.)

முதலடியில் பச்சென்ற சேய் வெள் எனவும், இரண்டாமடியில் நஞ்சு அமுது எனவும், மூன்றாமடியில் கனம் நுண் எனவும் மாறுபட்டசொற்கள் வந்தது - தொடைமுரண். சேயிதழ் - செம்மையென்னும் பண்பு, ஈறுபோய் ஆதிநீண்டு முன்நின்ற மகரமெய் யகரமாகத் திரிந்து 'சேய்' என நின்றது. நகை - சிரிப்புமாம். நச்சம்பு - வேற்றுமையில் மென்றொடர் வன்றொடரா

* இக்கவி, விலக்குதற்கு உரியது; ஆனால், விலக்கப்படவில்லை.

யிற்று. "காமுற்ற பெண்ணுக்கு அணிகலம் நாணுடைமை" என்றபடி நாணம் மகளிர்க்கு உரிய குணங்களிற் சிறந்ததாதலால், அதனை யெடுத்துக் கூறினார். பூணும் என்பதற்கு - ஆபரணங்களையும் என்று பொருள்கொண்டு செயற்கையழகையும் எனினுமாம். 'சுருங்கச்சொல்லல்' என்னும் அழகுபற்றி 'கண்டு' எனப் பொதுப்படக் கூறினாராயினும், 'ஏற்புழிக்கோடல்' என்னும் உத்தியால், மொழிகண்டு-பேச்சைக்கேட்டு எனக்கொள்க; இனி, உள்ளத்தால் நோக்கி யெனினுமாம்: கருதி யென்றபடி. பிச்சன் - பித்த னென்பதன் போலி. பெறுவான் - முற்றெச்சம்; பெற என எச்சமே யாகவுமாம். அழகிய பார்வையின் கொடுமையுங் கூர்மையும் பற்றி, நச்சரம்பென்றார். அன்றியும், கரியமையிட்ட கூரிய கண்ணுக்குக் காயநஞ்சுதீற்றிய கூரியஅம்பு உவமையாம். தன்வசந்தப்பிக் காமவசத்த னாயினனென்பது, 'பிச்சன்போலாயினன்' என்பதன் கருத்து. (உரு)

[சித்திராங்கதை பூக்கொய்து ஒருசெய்குன்றிற் சேர்தல்.]

உசு. புத்திரர்வேறில்லாதுபுரிவரியதவம்புரிந்துபூழியர்வேந்தன்
சித்திரவாகனன்பயந்தசித்திராங்கதையென்னுஞ்செஞ்சொல்வஞ்சி
பத்திரமுநறுமலருமவயவம்போல்விளங்குவனபலவுங்கொய்து
மித்திரமாமகளிருடன்விரவியொருசெய்குன்றின்மேயினாளே.

(இ - ள்.) பூழியர் வேந்தன் சித்திரவாகனன்-பாண்டியகுலத்துக்குத் தலைவனான சித்திரவாகன னென்னும் அரசன், புரிவு அரிய தவம் புரிந்து - செய்தற்கு அருமையான தவத்தைச் செய்து, புத்திரர் வேறு இல்லாது பயந்த வேறுபுதல்வரில்லாமற் பெற்ற [தனிமகளான], சித்திராங்கதை என்னும் செம் சொல் வஞ்சி - சித்திராங்கதை யென்னும் பெயருள்ள இனியசொற்களையுடைய வஞ்சிக்கொடிபோன்ற பெண்ணானவள், அவயவம் போல விளங்குவன பத்திரமும் நறு மலரும் பலவும் கொய்து - (தனது) உறுப்புக்கள்போல விளங்குவனவான தளிர்களும் நறுமணமுள்ள பூக்களுமாகிய பலவற்றையும் பறித்துக்கொண்டு, மித்திரமா மகளிருடன் விரவி - சிறந்த தோழிப்பெண்களுடன் கூடி, ஒரு செய் குன்றில் மேயினாள் - ஒருசெய்குன்றிற் போய்ச்சேர்ந்தாள்; (எ - று.)

பூழியர் - பாண்டியர். சித்ரவாஹநன் என்ற வடமொழிப்பெயர் - அழகியவாகனத்தை யுடையவ னென்றும், சித்ராங்கதா என்ற வடமொழிப்பெயர்-அழகிய தோள்வளையை யுடையவ ளென்றும் பொருள்படும். வஞ்சி-உவமையாகுபெயர்; ஒல்கி ஒசியும் மெல்லிய வடிவில் உவமை. பத்ரம், அவயவம், மித்ரம் - வடசொற்கள். பத்திரம் - மாந்தளிர் முதலியன; அவை - மகளிர்மேனி முதலியவற்றிற்கு உவமம். மலர் - முல்லைமுதலியன; அவை-பல்முதலியவற்றிற்கு உவமம். மித்திரமா மகளிர் என்றும் பதம் பிரிக்கலாம். செய் குன்று - படைப்புக்காலத்தில் இயற்கையாக அமைந்த மலையன்றிப் பிற்காலத்தில் விளையாட்டுக்காக மலைபோலஅமைக்கப்பட்ட இடம்: செயற்கைக் குன்று. மேயினாள் என்பதில், மேவு என்ற பகுதி ஈறு தொக்கது; இன் - இடைநிலை என்றால், ய் - எழுத்துப்பேறு: ய் - இடைநிலை என்றால், இன் - சாரியை. (உசு)

[அருச்சுனன் தனதுவடிவத்தைச் சித்திராங்கதை காணும்படி அச்செய்குன்றில் அவளெதிரில் தனியேசென்று நிற்றல்.]

உஎ. முன்னுருவந்தனைமாற்றிமுகில்வாகன்றிருமதலைமோகியாகித்
தன்னுருவந்தனைக்கொண்டுசாமனிலுங்காமனிலுந்தயங்குமெய்யோன்
பொன்னுருவமெனமலர்ந்துபொலிந்ததொருசண்பகத்தின்பூந்தண்ணிழல்
மின்னுருவநுண்ணிடையாள்விழிகளிக்கப்படிநின்றான்வீரரேறே.

(இ - ள்.) முகில் வாகன் திரு மதலை-மேகத்தை வாகனமாகவுடையவ

னான இந்திரனுடைய சிறந்தகுமாரனும், வீரர் ஏறு - வீரர்கட்குச் சிங்கம் போன்றவனுமான அருச்சுனன், மோகி ஆகி-(அச்சித்திராங்கதையினிடம்) மோகங்கொண்டவனாய், முன் உருவந்தனை மாற்றி - முன்பு தான்கொண்டுள்ள தவவேடத்தை யொழித்து, தன் உருவந்தனை கொண்டு - தனது நிஜ வடிவத்தைக் கொண்டு, சாமனினும் காமனினும் தயங்கும்மெய்யோன-சாமனைக்காட்டிலும் (அவனது தமையனான) மன்மதனைக் காட்டிலும் அழகியதாய் விளங்குகிற வடிவத்தை யுடையவனாய், பொன் உருவம் என மலர்ந்து பொலிந்தது ஒரு சண்பகத்தின் பூந்தண் நிழல் - பொன்னின்வடிவம்போல மலர்ந்துவிளங்குகிற ஒருசண்பகமரத்தினது அழகிய குளிர்ந்த நிழலில், மின் உருவம் நுண் இடையாள் விழி களிக்கும்படி நின்றான் - மின்னலின்வடிவம் போன்ற இடையை யுடையவளான அவள் (தன்னைக் கண்டு) கண்கள் களிக்கும்படி நின்றான்; (எ - று.)

மோஹம் - ஆசைமயக்கம், அதனையுடையவன், மோஹீ: வடசொல். சூடாமணியில் "காமனுஞ் சாமனு மென்னுங் காட்சிய" என்றவிடத்து நச்சினார்க்கினியர் 'சாமன் - காமன்தம்பி' என்றதை உணர்க. காமனென்றது - கண்ணபிரானுக்கு ருக்மிணியினிடந் தோன்றின மன்மதனது அவதாரமான பிரத்யும்நனையென்றும், சாமனென்றது - கண்ணபிரானுக்கு ஜாம்பவதியினிடந் தோன்றின சாம்பனை யென்றுங் கொள்வர். சண்பகம் - சம்பகம் என்ற வடசொல்லின் விகாரம். வீரர் ஏறு - மிருகங்களில்தலைமையாகிய சிங்கம்போல வீரர்களிற் சிறந்தவன் என்றபடி; வீரர்களாகிய யானைகளை யழித்தலிற் சிங்கம்போன்றவனென்றுங் கொள்ளலாம்: ஏறு - சிங்கத்தின் ஆண்மை பெயர். மெய்யோன் - குறிப்புமுற்றெச்சம். (உஎ)

[சித்திராங்கதை தனியிடத்து அருச்சுனனைக் காணுதல்.]

உஅ. வண்டாணந்திரிதடத்துவரிவண்டினம்பாடமயில்களாடத், தண்டாமெய்க்கிளிக்கூட்டஞ்சான்றோர்களுரைபயிற்றத்தமிழ்கண்மூன்றுங், கொண்டாடியிளம்பூவைக்குழாந்தலைசாய்த்துளமுருகுங்குன்றினாங்கட், கண்டாள்குமரனைத்தங்கொடிக்கயலைப்புறங்காணுங்கண்ணினாளே.

(இ - ள்.) வண்டாணம் திரி தடத்து - வண்டாணமென்னும் ஒருசாதி நாரைகள் (நீர்வளமிகுதியால்) திரியப்பெற்ற பக்கங்களில், வரி வண்டின் இனம் பாட - உத்தப்புள்ளிகளையுடைய வண்டுகளின் கூட்டம் பாட, மயில்கள் ஆட - மயில்கள் கூத்தாட, தண்டா மெய் கிளி கூட்டம் சான்றோர்கள் உரை பயிற்ற - குளிர்ச்சியான [கண்ணுக்கு இனிய] ஆரம்போன்ற கழுத்தின் இரேகையுள்ள உடம்பையுடைய கிளிகளின் கூட்டம் தண்டமிழ்ச் சான்றோர்களான சங்கப்புலவர் முதலியோருடைய சொற்களைப் பழகிச்சொல்ல, இளம் பூவை குழாம் தமிழ்கள் மூன்றும் கொண்டாடி தலைசாய்த்து உளம் உருகும் - இளமையான நாகணவாய்ப்பறவைகளின் கூட்டம் அந்தமூவகைத்தமிழையுங் கொண்டாடித் தலையைச் சாய்த்து மனமுருகப்பெற்ற, குன்றின் - அந்தச் செய்குன்றில், ஆங்கண் - அவ்விடத்தில் [சண்பகநிழலில்],—தம் கொடி கயலை புறங்காணும் கண்ணினாள் - தங்கள்கொடியாகிய கயல்மீனை வென்று முதுகுகாணுங் கண்களையுடையளான அச்சித்திராங்கதை, அ குமரனை கண்டாள் - இளவீரனான அவ்வருச்சுனனைக் கண்டாள்.

தடம் - மலைப்பக்கம். வரிவண்டு - இசைப்பாட்டையுடைய வண்டுஎனினுமாம். வண்டு, நல்லமணத்தே செல்லும். தண்டார் மெய்க்கிளி - "செந்தார்ப் பசுங்கிளியார்" என்றார் பிறரும். சான்றோர்கள் - கல்வி கேள்வி அறிவு ஒழுக்கங்களினால் நிறைந்த பெரியோர். தமிழ்கள் மூன்று - இயல், இசை, நாடகம் என்பன. இனிமையாகப் பேசும் இயல்பின வாதலால், கிளியையும் பூவையையும் எடுத்துக்கூறினார். குமரன்-இளமகன். பாண்டியர் மீன்வடிவ

மெழுதிய துவசமுடையவ ராதலால், 'தம் கொடிக்கயல்' எனப்பட்டது. வடிவழகினுலும் பிறழ்ச்சியினுலும் கயல்மீனினும் மேம்பட்ட கண்ணென்க. புறங்காணும் - புறந்தரச் செய்யும். பாட, ஆட, பயிற்ற, உருகும் குன்று என்க. உருகும்குன்று - பெயரெச்சம், இடப்பெயர் கொண்டது. (உ௯)

உ௬.—இச்செய்யுள், பரீக்ஷைக்குப் பாடமில்லை.

[அருச்சுனனும் சித்திராங்கதையும் காந்தர்வவிவாகமுறையாற் கூடிப் பிரிந்த பின்பு சித்திராங்கதை அச்செய்தியைத் தன்தோழியர்க்குச் சொல்லுதல்.]

௩0. கூடியிருவருமொருவரெனவிதயங்கலந்ததற்பின்குறித்ததூநீ
ராடியவந்ததுந்தன்னையருச்சுனனென்பதுமிளமானறியக்கூறி
நீடியதென்றையுறுவர்நீயினிபோமெனவுரைப்பநெடுங்கண்ணாள்போய்ச்
சேடியருக்கஞ்ஞான்றுநிகழ்ந்தவெலாமகிழ்ந்துருகிச்செப்பினளே.

(இ - ள்.) இருவரும் ஒருவர் என கூடி இதயம் கலந்ததன் பின் - (அக்குமரனும் குமரியுமாகிய) இரண்டுபேரும் ஒருவர்போலத் தம்மிற் கூடி மனங்கலந்த பின்பு,—(குமரன்), குறித்த தூ நீர் ஆடிய வந்ததும் - நியமிக்கப்பட்ட பரிசுத்தமான தீர்த்தயாத்திரை செய்தற்குத் தான் வந்ததையும், தன்னை அருச்சுனன் என்பதும்-தான் அருச்சுனன் என்பதையும், இள மான் அறிய கூறி-இளமையான மான்போன்ற அச்சித்திராங்கதைஅறியும்படி சொல்லி, நீடியது என்று ஐயுறுவர் நீ இனி ஏகு என உரைப்ப - '(இங்குப்) பொழுது நீட்டித்ததென்று (உன்னைச் சேர்ந்தவர்) சங்கைகொள்வர் நீ இனிப் போ' என்று சொல்ல,—நெடுங் கண்ணாள் - நீண்டகண்களையுடையவளான அவள், போய் அஞ்ஞான்று நிகழ்ந்த எலாம் சேடியருக்கு மகிழ்ந்து உருகி செப்பினள்-அப்பொழுதுநேர்ந்த செயல்கள்முழுவதையும் தோழியர்களுக்கு மனமகிழ்ந்து உருகிச் சொன்னாள்; (எ - று.)

இருவரும் ஒருவ ரெனக் கூடி. - "எரிமாமணி மார்பனும் ஏந்திழையும் அருமாமணி நாகரி னாயினரே" என்றாற்போலக் கொள்க. தூநீர் - தூய்மையென்ற பண்புப்பெயர், ஈறுபோய் இடையகரமும் கெட்டது; நீர் ஆடிய - தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்தற்கு. ஆடிய - செய்யிய என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம். குறித்த தூநீ ராடிய - முன்குறித்த கன்னியாகுமரியில் தீர்த்தமாட எனினுமாம். மான் - உவமையாகுபெயர். ஐயுறுவர் - ஐயமுறுவ ரென்பதன் விகாரம். நிகழ்ந்த - பலவின்பாலிறந்தகாலவினையாலணையும்பெயர். தனக்கு நேர்ந்த இன்பத்தை நினைக்குந்தோறும் மகிழ்ந்து மனமுருகுதல் தோன்ற, 'மகிழ்ந்து உருகி' என்றார். (௩0)

[சித்திராங்கதையின் விரகதாபம்.]

௩௧. கவுரியர்கோன்றிருமகளைக்கண்ணனையார்கொண்டுபோய்க்கன்னிமாடத், தவிருமணிப்பரியங்கத்தையமளியேற்றியபின்னனங்கன்போரா, னவிருடைமாமயலுழந்துநயனங்கள்பொருந்தாமனாணுறாமற், றவிர்கெனவுந்தவிராமற்றன்விரகங்கரையழிந்துதளர்ந்தாண்மன்னோ.

(இ - ள்.) கவுரியர் கோன் திரு மகளை - பாண்டியர்தலைவனான சித்திரவாகனனுடைய அழகியபெண்ணான அவளை, கண் அனையார் - அவள்கண் போன்றவர்களான தோழியர்கள், கொண்டு போய் - கொண்டு சென்று, கன்னி மாடத்து - கன்னிமாடத்தில், அவிரும் மணி பரியங்கத்து - விளங்குகிற இரத்தினங்கள்பதித்த கட்டிலில், ஐ அமளி - பஞ்சசயனத்தில், ஏற்றிய பின்-ஏற்றினபின்பு, (அவள்), அனங்கன் போரால்-மன்மதனுடைய போரினால் [காமவேதனையினால்], நவிர் உடை மா மயல் உழந்து - புன்மையையுடைய மிக்க மோகத்தை யடைந்து, நயனங்கள் பொருந்தாமல் - கண்கள் இமைமூடித் துயில்கொள்ளாமலும், நாண் உறாமல் - நாணமில்லாமலும், தவிர்க எனவும் தவிராமல் - '(இத்துன்பம்) ஒழிக' என்று (தோழியர் தணிவு)

கூறவும் ஒழியாமலும், தன் விரகம் கரை அழிந்து தளர்ந்தாள்-தனது காதல் நோயினால் எல்லைகடந்து வருந்தினாள்; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை.

கவுரியர் - கௌரியர்: பாண்டியர்; முதற்போலி. கண் அனையார் - இன்றியமையாத சிறந்தஉறுப்பாகிற கண்கள்போல இன்றியமையாத சிறந்த தோழியரென்க. கன்னிமாடம் - அரண்மனை அந்தப்புரத்தில் கலியாணமாகாத பெண்கள் வசிக்கு மிடம். ஐ அமளி-இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர், அன்னத்தூவி என்னும் இவ்வைந்துபொருள்களைத்தனித்தனிகொண்டு அடைத்துச்செய்த ஐவகைமெத்தை; இவற்றை ஒன்றன்மேலொன்றாக அடுக்கி அமைத்தல், மரபு. அநங்கன்-வடசொல்; அங்கமில்லாதவன்: சிவபிரானது நெற்றிக்கண்ணின் நெருப்பினால் எரிக்கப்பட்டு அங்கத்தையிழந்தவன். 'கன்னியர்க்கு இது தகாது' என்று பலரும் தூற்றும் இயல்பின தென்பது தோன்ற, 'நவிருடை மாமயல்' எனப்பட்டது. பர்யங்கம், நயநம், விரஹம்-வடசொற்கள். தவிர்கென - வியங்கோளீறு தொகுத்தல். விரஹம் - பிரிவு.

[இதுவும் அது.]

கஉ. தங்கண்மலைச்சந்தனத்தைத் தழற்குழம்போவிதுவென்னுந்தாபந் தோன்றத், தங்கள்கடற்றண்முத்தைக் கண்முத்தானீறாக்குந்தக்கோராய்ந்த, தங்கடமிழ்க்குழலிசையைத்தன்செவிக்குவிடமென்னுந்தபனனேகத், தங்கள்குலக்கலைமதியைத்தபனனெனுமென்பட்டாடனிபொருதாள்.

(இ - ள்.) (சித்திராங்கதை), தாபம் தோன்ற-(தாபபரிகாரம் எது செய்தாலும் அதனால் தனது) விரகதாபம் (சிறிதுந்தணியாமல்) மேல்மேல் உண்டாக, தங்கள் மலை சந்தனத்தை தழல் குழம்போ இது என்னும் - தங்கள் பொதியமலையி லுள்ள சந்தனத்தின் குழம்பை 'இது அக்கினிக்குழம்போ' என்று சொல்வாள்; தங்கள் கடல் தண் முத்தை கண் முத்தால் நீறு ஆக்கும்-தங்கள் கடலி லுண்டாகிய குளிர்ந்தமுத்தை முத்துப்போன்ற (தனது) கண்ணீர்த்துளியினாற் சாம்பலாம்படி செய்திடுவாள்; தக்கோர் ஆய்ந்த தங்கள் தமிழ் குழல் இசையை தன் செவிக்கு விடம் என்னும்-(சங்கப்புலவர்கள் முதலிய) பெரியோர்கள் ஆராய்ந்த தங்கட்குஉரிய தமிழ்நூலின் முறைமைப்படி பாடிய புல்லாங்குழலின் கீதத்தைத் தனதுகாதுக்கு விஷமென்று சொல்வாள்; தபனன் ஏக தங்கள் குலம் கலை மதியை தபனன் எனும் - தபிக்குந் தன்மையுள்ள சூரியன் அஸ்தமித்தபின்பு (தோன்றிய) தங்கள் குலத்துக்கு ஆதிபுருஷனான கலைகள் நிறைந்த பூர்ணசந்திரனை 'இது சூரியன்' என்பாள்; தனி பொருதாள் என் பட்டாள் - தனிமையைப் பொறுதவளாய்(அவள்) என்னபாடு பட்டாள்! [மிகத் தவித்தாளென்றபடி]; (எ - று.)

இயல்பிற் குளிர்ச்சியையும் இனிமையையுஞ் செய்கிற சந்தனக்குழம்பு, முத்துமாலை, வேய்ங்குழலிசை, சந்திரன் என்பன பிரிவுத் துன்பமுடையார்க்கு அத்தாபந் தீர்த்துக் குளிர்ச்சியையும் இனிமையையுஞ் செய்யமாட்டாமையோடு காமோத்தீபகமாய் அத்தாபத்தை மிகுவிப்பனவு மாதலால், அவற்றை விரகிகள் வெறுக்குந்தன்மை இங்கு உணரத்தக்கது. பொதியமலை, பாண்டியநாட்டிலே இருத்தலால், 'தங்கள் மலை' எனப்பட்டது. பாண்டியநாட்டைச்சார்ந்த கடலில் முத்துக்கள் மிகுதியாக உண்டாவது, பிரசித்தம்; "பூழியர்கோன், தென்னாடு முத்துடைத்து" என்பதுங் காண்க. தமிழ்ப்பாஷை பாண்டியராசர்களாற் போற்றிவளர்க்கப்பட்டமைபற்றி, 'தங்கள்தமிழ்' என்றார். பாண்டியர் சந்திரகுலத்தவ ரென்பது பிரசித்தம். 'கண்முத்து' என்ற விடத்து, 'முத்து' என்றது - நீர்த்துளிக்கு உவமையாகுபெயர். விரகிகளுடைய கண்களினின்று பெருகும் நீர்த்துளி அத்தாபத்தால் மிக வெவ்விதாயிருத்தலால், 'தண்முத்தைக் கண்முத்தால் நீறாக்கும்' என்றார். தபநன் - வடசொல். (கஉ)

[அச்செய்தியைச் செவிலித்தாயர் அரசனிடஞ் சொல்லுதல்.]

௩௩. அங்குயிர்போலிருமருங்குமாயமடமகளிரிருந்தாற்றவாற்றக், கங்குலெனும்பெருங்கடலைக்கரைகண்டாள்கடற்புறத்தேகதிருங்கண்டா, ளிங்கிவள்போய்மலர்க்காவினெழில்விசயற்கீடழிந்தவின்னலெல்லாஞ், சங்கெறியுந்தடம்பொருநைத்துறைவனுக்குச்செவிலியராந்தாயர்சொன்னார்.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்தில், உயிர் போல்—, இரு மருங்கும் - இரண்டுபக்கத்திலும், ஆயம் மட மகளிர் தோழியராகிய இளம்பெண்கள், இருந்து—, ஆற்ற ஆற்ற - (தாங்கள் செய்யும் சைத்தியஉபசாரங்களினால் தாபத்தைத்) தணிக்கத் தணிக்க, (சித்திராங்கதை), கங்குல எனும் பெருங் கடலை கரை கண்டாள் - இராத்திரிகாலமாகிய பெரியகடலைக் கரைகண்டவளாய் [இரவை அரிதிற் கழித்து], கடல் புறத்தே கதிரும் கண்டாள் - கீழ்கடலின் மீதே சூரியனையும் (உதிக்கக்) கண்டாள்: இங்கு - இவ்வாறு, இவள் - இச்சித்திராங்கதை, போய்—, மலர் காவின் - பூஞ்சோலையிலே, எழில் விசயற்கு - அழகிய அருச்சுனனுக்கு, ஈடு அழிந்த - மனவலிமை யழிந்த, இன்னல் எல்லாம் - துன்பம் முழுவதையும், சங்கு எறியும் தட பொருநை துறைவனுக்கு - சங்குகளை வீசுகிற பெரிய பொருநையாற்றின் துறையையுடையவனான அப்பாண்டியராசனுக்கு, செவிலியர் ஆம் தாயர் - (அச்சித்திராங்கதையினது) செவிலித்தாய்மார், சொன்னார் - சொன்னார்கள்; (எ - று.)

அத்தோழியரது இன்றியமையாமையையும் மிக்க அன்புடைமையையும் விளக்குதற்கு, 'உயிர்போல்' என உவமைகூறினார். "ஊழிபல வோரிரவாயிற்றோ வென்னும்" என்றபடி விரகர்களுக்கு இராப்பொழுது நீட்டித்ததாய்த் தோன்றிக் கழத்தற்கு அரிதாதல்பற்றி, 'கங்குலெனும் பெருங்கடல்' எனப்பட்டது. பொருநை - தாமிரபர்ணி. 'கண்டாள்' என்னும் இரண்டனுள், முந்தினது - முற்றெச்சம். செவிலியர் - வளர்த்ததாயர். ஆயம் - தோழியர் கூட்டம். ஆற்ற ஆற்ற - அடுக்கு, இடைவிடாமைப் பொருளது. காவின், இன் - ஏழனுருபு. சங்கு - சங்கமென்ற வடசொல்லின் விகாரம். கதிர் - ஒளி; சூரியனுக்குச் சினையாகுபெயர். துறைவன், வ் - பெயரிடைநிலை. (௩௩)

[அருச்சுனனது வரவை யறிந்து பாண்டியன் மகிழ்தல்.]

௩௪. ஐந்தருவினீழலின்வாழரியுடனேயோரரியாசனத்தில்வைகிப்
புந்தியுறவொருவருமுன்பூணாதமணிய ரம்பூண்டகோமா
னந்தவுரைசெவிப்படலுமதிதூரம்விழைவுடன்சென்றாடுதீர்த்தம் [ன்.
வந்ததுநந்தவப்பயனென்றுட்கொண்டான்மகோததியும்வணங்குந்தாளா

(இ - ள்.) ஐந் தருவின் - பஞ்சகற்பகதருக்களின், நீழலின் - நிழலில், வாழ் - வாழ்கின்ற, அரியுடனே - இந்திரனுடனே, ஓர் அரி ஆசனத்தில் வைகி - ஒருசிங்காதனத்திலே உடன் வீற்றிருந்து, முன் ஒருவரும் பூணாத மணி ஆரம் புந்தி உற பூண்ட - முன்பு ஒருவரும் அணிந்திராத இரத்தினஹாரத்தை மனம் மகிழ அணிந்துகொண்ட, கோமான் - தலைவனும், மகா உததியும் வணங்கும் தாளான் - பெருங்கடலும் வணங்கும் பாதங்களை யுடையவனுமான அப்பாண்டியராசன்,— அந்த உரை செவி படலும் - (செவிலித்தாயர் சொன்ன) அவ்வார்த்தை தன்காதிற் பட்டவுடனே, அதி தூரம் விழைவுடன் சென்று ஆடு தீர்த்தம் வந்தது நம் தவம் பயன் என்று உள் கொண்டான் - 'வெகுதூரம் விருப்பத்தோடுசென்று ஸ்நாநஞ்செய்யுந் தீர்த்தயாத்திரையை உத்தேசித்து (அருச்சுனன் இங்கு) வந்தது நமது தவத்தின் பயனே' என்று எண்ணி மகிழ்ந்தான்; (எ - று.)

ஐந்தரு - ஸந்தாநம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம், அரிசந்தநம் என்பன. கற்பகவிருக்ஷங்களின் நிழலில் இந்திரன் அரசுவீற்றிருத்தலை "இந்தவிர்க்கற்பக நறுந்தேனிடைதுளிகரு நிழலிருக்கை" என்ற கம்பராமாயணத்

தினும் அறிக. ஹரி, ஆஸநம், புத்தி, ஹாரம், தீர்த்தம், தபஸ், பலம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. அதிதூரம், மஹோததி-வடமொழித்தொடர்கள். மகோததி - குணசந்தி பெற்றது; "அ ஆ முன் உ ஊ வரின், இரண்டுங் கெட ஓர் ஓகாரம் தோன்றும்." உம்-உயர்வுசிறப்பு. ஹரியென்பது - இந்திரனைக் குறிக்கும்போது (பகைவர்களான அசுரர்முதலியோரை) அழிப்பவனென்றும், சிங்கத்தைக் குறிக்கும்போது (யானைமுதலிய பிராணிகளை) அழிப்பதென்றும் காரணப்பொருள்படும். 'நம்' என்றதைத் தனித்தன்மைப் பன்மையென்றாவது, தனதுசந்ததியாரையும் உளப்படுத்தியதென்றாவது கொள்க.

முருகக்கடவுளின் அம்சமான உக்கிரகுமாரபாண்டியன் அரசாளும்நாளில், தமிழ்நாடு முழுவதும் பன்னிரண்டுவருஷம் மழைபொழியாது ஒழியப் பஞ்சமுற்று வருந்துதல் கண்டு, சேரசோழபாண்டிய ரென்னும் அரசர் மூவரும் பொதியமலையிற்சென்று அகஸ்தியமுனிவரைக் கண்டு அவரருளியபடி நோன்புநோற்று ஆகாயமார்க்கமாகச் செல்லுந் திறமபெற்று, மழைபெய்விப்பவனான இந்திரனது சுவர்க்கலோகத்துக்குச் சென்று சேர, இவர்கள் வரவையறிந்து இந்திரன் இவர்களிருக்கும்பொருட்டுத் தன்ஆசனத்தில் தாழத் தனியே மூன்றுசிங்காதனம் இடுவித்தான்; இவர்களுட் சேரனும் சோழனும் இந்திரன் காட்டிய அவ்வாசனங்களில் வீற்றிருக்க, உக்கிரபாண்டியனோ அங்ஙனமன்றி இந்திரனுடைய சிங்காதனத்தில் ஏறி அர்த்தாசனத்திற் சமமாக வீற்றிருந்தான்; அதுகண்டு பொறாமைகொண்ட தேவராஜன், மற்றையிருவரையும் வந்தகாரியம் விசாரித்து, உடனே அவர்கள்நாடுகளில் மழைபொழியுமாறு வரங்கொடுத்து, அவர்கட்குப் பலசிறப்புக்கள்செய்து அனுப்பியபின்பு, பாண்டியனைச் செருக்கடக்குமாறு கருதி ஒருசூழ்ச்சி செய்து அவனுக்கு மிகஉயர்வாகிய வரிசைசெய்வான்போல, எண்ணிறந்த பலர் தாங்கி மிகமெலிந்து வருந்தும்படியான மிக்கபாரமுள்ளதொரு பெரியஆரத்தை அவனுக்குக் கொடுக்க, உடனே அவன் அதனைத் தனது திறமையால் எளிதில்வாங்கிப் பூமாலைபோலத் தனதுகழுத்திலே தரித்துக் கொள்ள, இந்திரன் அதுகண்டு அதிசயங்கொண்டு 'இன்றுதொட்டு உன்னை ஆரந்தாங்குபாண்டியனென்று உலகமெல்லாம் நன்குமதிக்கக்கடவது' என்று சொல்ல, பாண்டியன் மதுரைக்கு மீண்டனன் என்பது, முன்னிரண்டடியிற் குறித்த கதை. 'மகோததியும் வணங்குந் தாளான்' என்ற விவரம் - உக்கிரபாண்டியன் அநேகஅசுவமேதயாகங்கள் செய்ததுகண்டு பொறாமைகொண்ட இந்திரன், கடலரசனான வருணனையழைத்து 'நீ சென்று மதுரையை யழிப்பாய்' என்ன, அங்ஙனமே நடுநிசியிற் கடல் பொங்கி மதுரையைச் சமீபித்தபோது, பாண்டியன், தனதுதந்தையினால் முன்பு தனக்குக் கொடுக்கப்பட்ட வேற்படையை எறிய, அது பட்டவுடனே கடல் வறண்டு வலிமைகெட்டு, தோற்ற பகைவர் வென்றவன்காலில் விழுந்து வணங்குதல் போலப் பாண்டியனது காலின்மட்டமாயிற்று என்பது. இக்குலத்துமுன்னோனான உக்கிரபாண்டியனது வரலாற்றை இவன்மேலேற்றிக் கூறினார்; இங்ஙனங் கூறுதல், ஒருவகைக் கவிமரபு. "காலினால் துகைத்து வேலைக் கனைகடலேழு முன்னாள், வேலினாற் சுவற்றுங் கொற்ற வெங்கயல் விலோத வீரன்" என்பர் மேற் பதினேழாம்போர்ச்சருக்கத்தும். மகோததியும் வணங்குந் தாளான் - "பரவைபணிந்ததுஞ் சோழன்பதந்தனையோ அம்மானே, பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே அம்மானே" என்று புகழேந்திப்புலவர் பாடியதுங் காண்க. (௩௪)

௩௫:—இச்செய்யுள், பரீக்ஷைக்குப் பாட மில்லை.

[பாண்டியன் அருச்சுனனை நோக்கி 'என்மகளை உனக்கு மணஞ்செய்விப்பேன்' என்றல்.]

கூசு. பஞ்சவரினடுப்பிறந்தோன்பஞ்சவன்பேரவையெய்திப்பஞ்சபாண
வஞ்சகன்செய்வஞ்சனையான்மதிமயங்கியிருந்துழியம்மதுரைவேந்தன்
சஞ்சரிகநறுமலர்த்தார்த்தனஞ்சயனென்றறிந்தெழுந்துதழீஇக்கொண்டாங்க
ணஞ்சலினியுனக்குரியள்யான்பயந்தகடற்பிறவாவமுதமென்றான்.

(இ - ள்.) பஞ்சவரில் நடு பிறந்தோன் - பஞ்சபாண்டவர்களுள் (மூன்றாமவனாய்) நடுவிற் பிறந்தவனான அருச்சுனன், பஞ்சவன் பேர் அவை எய்தி - பாண்டியனுடைய பெரியசபையை அடைந்து, பஞ்ச பாண வஞ்சகன் செய் வஞ்சனையால் மதி மயங்கி இருந்த உழி - ஐந்துஅம்புகளையுடையனாய் அனைவரையும் மயக்கத் தன்வசப்படுத்துகிறவனான மன்மதன் செய்த மோகத்தால் அறிவுமயங்கி இருந்தபொழுது, அம்மதுரை வேந்தன்-(பாண்டிய நாட்டு ராஜதானியாகிய)மதுரைக்குத் தலைவனான அப்பாண்டியராஜன், ஆங்கண் - அவ்விடத்தில், சஞ்சரிகம் நறு மலர் தார் தனஞ்சயன் என்று அறிந்து எழுந்து தழீஇக்கொண்டு - (அவனை) வண்டுகள் மொய்க்கிற வாசனை வீசும் மலர்மாலையையுடைய அருச்சுனனென்று அறிந்து எழுந்து தழுவி யுபசரித்து, 'அஞ்சல் - அஞ்சவேண்டா: யான் பயந்த கடல் பிறவா அமுதம் - யான் பெற்ற மகளும் பாற்கடலினின்று தோன்றாததோர் அமிருதம் போன்றவளுமான சித்திராங்கதை, இனி உனக்கு உரியள - இனி உனக்கு உரியவள்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

பஞ்சவர் - ஐவர்; ஐந்து என்னும் பொருள் தரும் 'பஞ்ச' என்னும் வடமொழி யெண்ணுப்பெயரினடியாப்பிறந்த பெயர்: இங்கே, தொகைக்குறிப்பு. மன்மதனது பஞ்சபாணம் - தாமரைமலர், அசோகமலர், மாமலர், முல்லைமலர், நீலோற்பலமலர் என்பன. அவ்வம்புகளை வெளிப்படையாக நின்று உடம்பின்மேலெய்து அதனைவருத்துதலன்றி மறைந்துநின்று மனத்திலெய்து அதனையுமுட்பட வருத்துதலால், மன்மதனை 'வஞ்சகன்' என்றார். இருந்துழி - பெயரெச்சவீறு தொகுத்தல். சஞ்சரிகம் என்ற வடமொழிப்பெயர்- (எப்பொழுதும்) திரிவது என்று பொருள்படும். தழீஇ - சொல்லிசையளபெடை. அஞ்சல் - எதிர்மறையொருமையேவல். தீர்த்தயாத்திரைக்குவந்த தவவேடமுடையானொருவனுக்கு அரசன் தன்மகளைக் கொடுக்க இசைவனோ வென்று ஐயமுற்று அஞ்சவேண்டா வென்றும், தந்தையின் உடன்பாடின்றி மகளைத் தன்வசப்படுத்திக்கொண்டமை தெரிந்து அத்தந்தை என்ன மாறுபாடுகொள்வனோ வென அஞ்சவேண்டா வென்றுங் கூறுவான், 'அஞ்சல்' என அபயம் அளித்தான். அமுதம் - உவமையாகுபெயர்; சொல்நிலையால் அஃறிணையாயினும், இங்குப் பொருள்நிலையால் உயர்திணையாதலால், 'உரியள்' என்ற பெண்பால்முற்றைக் கொண்டது. 'கடற்பிறவா அமுதம்' என்றது-இல்பொருளுவமை; அத்தேவாமிருதத்தினுஞ் சிறந்தவளென்றபடி.

[இதுவும், அடுத்த கவியும்- ஒருதொடர்; பாண்டியன் அருச்சுனனிடம் ஒருவரம் வேண்டிப் பெறுதல்.]

கூஎ. கேண்மதியோர்மொழிமுன்னங்கேண்மையினங்குலத்தொருவன்
கிரீசன்றனைத், தாண்மலரன்புறப்பணிந்துதவம்புரிந்தான்மகப்பொருட்டா
ற்றரித்தகொன்றை, நாண்மலரோன்வெளிநின்றந்நரபதிக்குநின்குலத்துநரே
சர்யார்க்கும், வாண்மருவுங்கரதலத்தோயோரொருமாமகவென்றுவரமுமீந்
தான்.

(இ - ள்.) ஓர் மொழி கேள்மதி-(யான் சொல்லும்) ஒருவார்த்தையைக் கேட்பாயாக:—முன்னம் - முற்காலத்தில், நம் குலத்து ஒருவன் - நமதுகுலத்துத் தோன்றியிருந்த ஓரரசன், மகப்பொருட்டால் - புத்திரபாக்கியத்

தின்பொருட்டு, கிரீசன்தன்னை - சிவபிரானை, கேண்மையின் - உரிமையோடு, அன்பு உற - அன்பு மிக, தாள் மலர் பணிந்து - திருவடித்தாமரைகளில் வணங்கி, தவம் புரிந்தான் - தவஞ்செய்தான்; தரித்த கொன்றை நாள் மலரோன் - அன்றுமலர்ந்த [புதிய] கொன்றைமலர்களைத் தரித்தவனான அச்சிவபிரான், வெளி நின்று - வெளிப்பட்டுத் தரிசனந் தந்துநின்று, 'வாள் மருவும் கரதலத்தோய் - வாளாயுதம் பொருந்திய கையையுடையவனே! நின் குலத்து நரேசர் யார்க்கும் ஓர் ஒரு மா மகவு - உனதுகுலத்திலரசரெல்லோர்க்கும் ஒவ்வொரு சிறந்தகுழந்தையே (தவறாமல்) உண்டாகுக,' என்று—, அ நரபதிக்கு - அந்த அரசனுக்கு, வரமும் ஈந்தான் - வரத்தையுங் கொடுத்தான்; (எ - று.)

இங்ஙனம் பிள்ளைபெறுதற்பொருட்டுச் சிவபிரானைக்குறித்துத் தவஞ்செய்து வரம்பெற்ற பாண்டியகுலத்துப் பூர்விகவரசனதுபெயர் பிரபஞ்சநனென்று வியாசபாரதத்தினால் விளங்குகின்றது. கேண்மதி என்பதில், மதி - முன்னிலையசை; [நன் - இடை - உக.] இனி, கேள் மதி என இரண்டையும் வினைப்பகுதிதானே ஏவலொருமையில் வந்ததாக் கொண்டு, என் வார்த்தையைக் கேள் (அதனை) ஆலோசித்துப் பார் என்றலும் ஒன்று. சிவபிரான் சுந்தரபாண்டியனாகி இக்குலத்தைப் பெருமைப்படுத்தி அதனிடத்து அன்புகொண்ட உரிமைபற்றி, 'கேண்மையின்' என்றார். நா - தனித்தன்மைப்பன்மை; 'எம்' என்றும் பாடமுண்டு. கிரீசன் - கிரி+ஈசன்: வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி; "இ ஈ முன் இ ஈ வரின், இரண்டும் கெட ஓர் ஈகாரம் தோன்றும்". கைலாசகிரிக்குத் தலைவன். தாள்மலர் - மலர்போன்ற தாள் என முன்பின்னாகத் தொக்குவந்த உவமத்தொகை. மக - இளமை: குழந்தைக்குப் பண்பாகுபெயர்; இது உகரச்சாரியை பெற்று 'மகவு' என நிற்கும். ஓரொருமகவென்றவிடத்து மகவென்றது - ஆண் பெண் என்ற இரண்டுக்கும் பொது. நரபதி - மனிதர்க்குத் தலைவன். நரேசர் - மனிதர்க்குத் தலைவர்; இரண்டும் வடமொழித்தொடர். நரேசர் - நர+ஈசர்: குணசந்தி: "அ ஆ முன் இ ஈ வரின், இரண்டுங் கெட ஓர் ஏகாரம் தோன்றும்." 'வரமும் ஈந்தான்' என்றஉம்மை 'வெளிநின்று' என்றதை நோக்கி இறந்தது தழுவிய எச்சமாம். பொருட்டு - நான்காம்வேற்றுமைச் சொல்லுருபு; ஆல்- அசை. கரதலம் - வடமொழித்தொடர். (கஎ)

கஅ. அன்றுரைத்தவரத்தின்வழியநேகரவனிபருமகவளித்தாரொன்றொன்
றொன்றுரைக்கமறாதொழிநீயொருமகவும்பெண்மகவாயுதித்ததென்பா
னன்றுரைக்குமொழியாயென்னவ்விபெறுமகவெனக்கேநல்கவேண்டு
மென்றுரைத்தான்மன்றல்பெறவிருந்தோனுமாமனுரைக்கிசைந்தானன்றே.

(இ - ள்.) அன்று உரைத்த வரத்தின் வழி - அந்நாளிற் (சிவபிரான்) சொல்லியருளிய வரத்தின்படியே, அவனிபர் அநேகரும்-(எம்குலத்து) அரசரெல்லாரும், மகவு ஒன்று ஒன்று அளித்தார்-பிள்ளைஒவ்வொன்றைப் பெற்றார்கள்; என்பால் - என்னிடத்தில், ஒரு மகவும் - அவ்வொருகுழந்தைதானும், பெண் மகவு ஆய் உதித்தது - பெண்குழந்தையாய்ப் பிறந்தது; நன்று உரைக்கும் மொழியாய் - நல்லனவாகவே பேசும் பேச்சுக்களை யுடையவனே! ஒன்று உரைக்க நீ மறாதொழி - (யான்) ஒருவேண்டுகோளைச் சொல்ல (அதனை) நீ மறுக்காமலிருப்பாய்; (அவ்வேண்டுகோள் யாதெனின்),—என் நவ்வி பெறும் மகவு எனக்கே நல்கவேண்டும்-மான்போன்ற எனதுமகள் பெறும் ஒற்றைப்பிள்ளையை எனக்கே (எனது சந்ததிவிருத்தியின்பொருட்டு அபிமானபுத்திரனாகக்) கொடுக்கவேண்டும், என்று உரைத்தான்-என்று (சித்திரவாகநபாண்டியன்) சொன்னான்; மன்றல் பெற இருந்தோனும் - (சித்திராங்கதையின்)விவாகத்தைப் பெற இருந்தவனான அருச்சுனனும், மாமன் உரை

க்கு இசைந்தான் - தனக்கு மாமனாராகும் அவ்வரசனுடைய அச்சொல்லுக்குஇணங்கினன்; (எ-று.)—அன்றே-ஈற்றசை; அப்பொழுதேயெனினுமாம்.

அவநிபர் - வடசொல்; பூமியைக்காப்பவர். 'ஒன்றுரைக்க' என்ற விடத்து, ஒன்று என்பது - ஒருவார்த்தையைக் குறித்தலால, எண்ணலளவையாகுபெயர். நவ்வி - உவமையாகுபெயர். மாமன - மனைவியின்தந்தை. தன் கருத்திற்கு அவனை உடன்படுத்தவேண்டி, 'நன்று உரைக்கும மொழியாய்' எனச் சிறப்பித்து விளித்தான். 'மன்றல் பெற இருந்தோனும் மாமனுரைக்கு இசைந்தான்' என்றதனால், அதற்கு உடன்படுதல் அரிதாயினும மன்றல பெறவேண்டுங்கருத்தினால் உடன்பட்டன னென்றவாறும். இசைந்தான் நன்றேயென்று பதம்பிரித்தும உரைககலாம். 'மருதொழு' என்றதில், 'ஒழு' என்றது - துணிவுப்பொருளை யுணர்த்தும். (ஙஅ)

[இதுமுதல் மூன்று கவிகள் - அருச்சுனனுக்கும், சித்திராங்கதைக்கும் நடந்த விவாகத்தைக் கூறும்.]

ஙகூ. தெண்டிரைகைதொழுகழலோன்றிருமகட்குவதுவையெனச்சேரசோழ,ரெண்டிசையின்முடிவேந்தரெல்லோருமுனிகணத்தோரெவருமீண்ட, வண்டர்பிரானளித்தசிலையாண்டகையையலங்காரமனைத்துஞ்செய்து, மண்டபமொன்றினிலறுகால்வண்ணமணிப்பலகையின்மேல்வைத்தாரன்றே.

(இ - ள்.) தெள் திரை கை தொழு கழலோன் - தெளிவான அலைகளையுடையதான கடலரசனாற் கைகூப்பிவணங்கப்பட்ட பாதங்களையுடையவனான பாண்டியராசன், திருமகட்கு வதுவை என-தனதுசிறந்தபெண்ணுக்கு விவாகமென்று எங்குஞ் செய்தி தெரிவிக்க,—சேர சோழர் - சேரநாட்டரசனும் சோழநாட்டரசனும், எண் திசையின் முடி வேந்தர் எல்லோரும - எட்டுத்திக்குக்களிலுமுள்ள கிரீடாதிபதிகளான மற்றும் அரசர்களனைவரும், முனி கணத்தோர எவரும-இருடிகள்கூட்டத்தாரெல்லோரும், ஈண்ட-(அவ்விவாகத்தின்பொருட்டு மதுரைக்கு வந்துசேர்ந்து) நெருங்க,—அண்டர் பிரான் அளித்த சிலை ஆண் தகையை - தேவராஜனான இந்திரன் பெற்ற வில்வீரனான அருச்சுனனை, அலங்காரம் அனைத்தும் செய்து - எல்லாஅலங்காரங்களையுஞ் செய்து, மண்டபம் ஒன்றினில்- ஒருமண்டபத்தில் [கலியாணமண்டபத்தில்], அறு கால் வண்ணம் மணி பலகையின்மேல் - ஆறுகால்களையுடைய அழகிய இரத்தினமயமான பீடத்தின்மேல், வைத்தார் - இருக்கச்செய்தார்கள் ; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

'வைத்தார்' என்ற முற்றுக்கு உரிய எழுவாய் 'புரோகிதன் முதலியோர்' என வருவிக்க. தெண்டிரை - பண்புத்தொகை; இங்கே, அன்மொழித்தொகை யென்றாவது, அடையடுத்தசினையாகுபெய ரென்றாவது கொள்க. உக்கிரபாண்டியன் கடல்சுவற வேல்விட்டபோது வற்றிய சமுத்திரராசனான வருணன் தோற்று அவனை வணங்கின னென்க. தலைமையும், அடுத்தநாடுகளினரசராதலும், நண்புஉரிமையும், தமிழ்நாட்டரசராந்தொடர்பும் பற்றி, சேரசோழரைத் தனியே யெடுத்து முதலிற் கூறினர். ஆண்தகை - ஆண்மைக்குணமுடையவன் : பண்புத்தொகையன்மொழி. அலங்காரம், மண்டபம், மணி, பலகா - வடசொற்கள். (ஙகூ)

சO. கோமடந்தைகளிகூரப்புகழ்மடந்தைகளிகூரக்கொற்றவிந்தை
மாமடந்தைகளிகூரமணவினையொப்பனைக்குரியமடந்தைமார்கள்
பூமடந்தையனையாளைப்பூட்டியவெண்டரளமணிப்பூண்களாலே
நாமடந்தைநிகராக்கிநாயகன்றன்வலப்பாகநண்ணுவித்தார்.

(இ - ள்.) கோ மடந்தை களி கூர-ராஜலக்ஷ்மி களிப்பு மிகவும், புகழ் மடந்தை களி கூர - கீர்த்திலக்ஷ்மி களிப்பு மிகவும், கொற்றம் விந்தை மா மடந்தை களி கூர - வெற்றியையுடைய வீரலக்ஷ்மியாகிய சிறந்தபெண்

களிப்பு மிகவும், மணம் வினை ஒப்பனைக்கு உரிய மடந்தைமார்கள் - கலியாணத்துக்கு ஏற்ற அலங்காரங்களைச் செய்தற்கு உரியவர்களான மாதர்கள், பூமடந்தை அனையாளை - (செந்நிறமுடைய) லக்ஷ்மிபோன்றவளான அச்சித்திராங்கதையை, பூட்டிய வெள் தரளம் மணி பூண்களாலே - (அவளுக்குத் தாங்கள்) அணிந்த வெண்ணிறமான முத்துக்களாலும் வேறு இரத்தினங்களினாலு மாகிய ஆபரணங்களினால், நா மடந்தை நிகர் ஆக்கி - சரசுவதிக்குச் சமானமாம்படி யலங்கரித்து, நாயகன்தன் வலம் பாகம் நண்ணுவித்தார் - கணவனான அருச்சுனனுடைய வலப்பக்கத்தில் இருக்கவைத்தார்கள்.

"வெள்ளைக்கலையுடுத்து வெள்ளைப்பணிபூண்டு" என்றபடி வெண்ணிறமான ஆடையாபரணங்களைத் தரித்த வெண்ணிறமுள்ள சரஸ்வதிபோலாம்படி சித்திராங்கதையைப் பூட்டியவெண்தரளமணிப்பூண்களாற் செய்தன ரென்க. 'களிகூர' என்ற செயவெனெச்சம் மூன்றும்-வினைச்செவ்வெண், 'நண்ணுவித்தார்' என்பதனோடு இயையும். "திருமக ளிவளைச் சேர்ந்தான் தெண்டிரையாடைவேலி, யிருநிலமகட்குமசெம்பொன்னேமிக்குமிறைவனாகும், செருநிலத் திவளைவென் றி திருவினுக்கு உரியர்" என்றபடி, உத்தமவிலக்கணம நிறைந்தவளான இவள் தன்னை மணஞ்செய்துகொண்டவனுக்கு அரசும் புகழும் வீரமும வெற்றியுஞ் சிறக்கும்படியான பாக்கியத்தையுடையளாதலால், இவளை அருச்சுனனது பக்கத்தில் விவாகத்தின்பொருட்டு இருத்துகையில் கோமடந்தையும் புகழ்மடந்தையும் விந்தைமடந்தையும் களிகூரலாயின ரென்க. போர்வெற்றிக்கு உரிய தலைவியான துர்க்கை, விந்தியமலையிற் கோயில்கொண்டு வாழ்தலால், 'விந்தை' எனப் பெயர்பெறுவள். பூமடந்தை-மலர்களுட்சிறந்த தாமரைமலரில் வாழும் பெண். நாமடந்தை-பிரமனுடைய நாவிலும், அனைவருடைய நாவிலும் வாழும் பெண். தரளம், நாயகன், பாகம் - வடசொற்கள். மணவினையொப்பனை - மணக்கோலம். (சo)

சக.—இச்செய்யுள், பரீக்ஷைக்குப் பாட மில்லை.

இருவர்க்கும் சிறப்பாக விவாகம் நடந்தது.

## வேறு.

[இருவரும் கூடி இன்ப மனுபவித்தல்.]

* சஉ. நோக்கியகண் ணிமையாம னோக்கி நோக்கி நுண்ணியமென் புலவியிலே நொந்து நொந்து, தேக்கியசெங் கனியிதழா ரமுதுண் டுண்டு சேர்த்தியகைந் நெகிழாமற் சேர்ந்து சேர்ந்து, தூக்கியபொற் றுலையினநு ராகமேன் மேற் றொடரவரும் பெரும்போகந் துய்த்தார் முன்னைப், பாக்கியம்வந் திருவருக்கும் பலித்த தல்லாற் பயனதெ திப்படியார் பயன்பெற் றாரே.

(இ - ள்.) நோக்கிய கண் இமையாமல் நோக்கி நோக்கி - பார்த்தகண் இமையாதபடி (ஒருவரையொருவர்) இடைவிடாது பார்த்துப்பார்த்தும், நுண்ணிய மெல் புலவியிலே நொந்து நொந்து - நுட்பமான மெல்லிய ஊடலிலே இடையிடையே வருந்திவருந்தியும், தேக்கிய செம் கனி இதழ் ஆர் அமுது உண்டு உண்டு - ரசம்நிறைந்த சிவந்த பழம்போன்ற அதரத்திற் பொருந்திய அமிருதத்தை அடுத்தடுத்துப்பருகியும், சேர்த்திய கை நெகிழாமல் சேர்ந்து சேர்ந்து -அணைத்த கை நெகிழாதபடி பன்முறை இறுகத்தழுவியும், பொன் தூக்கிய துலையின் அநுராகம் மேல் மேல் தொடர - பொன்னை நிறுக்கின்ற தராசுகோல்போல (இருதலையிலுஞ் சமமாக) ஆசை மேலும்மேலும் இடைவிடாது அமைய, அரும் பெரும் போகம் துய்த்தார் - அருமையான சிறந்த கலவியின்பத்தை அநுபவித்தார்கள் : முன்னை பாக்கியம் வந்து இருவருக்

* இக்கவி, விலக்குதற்கு உரியது; ஆனால் விலக்கப்படவில்லை.

கும் பலித்தது அல்லால் - (மிக்கநன்மைக்குஏதுவான) முற்பிறப்பிற் செய்த நல்வினை (இங்ஙனம்)வந்து இவ்விருவர்க்கும் வாய்த்ததே யல்லாமல், பாயல் நலத்து இப்படி யார் பயன் பெற்றார் - படுக்கையிலடையுஞ்சிற்றின்பத தில் இவ்வாறு மேம்பட்ட பயன் பெறறவர் வேறு யார் உளர்? [எவருமில்லை யென்றபடி.]; (எ - று.)

நோக்கிநோக்கி, நொந்துநொந்து, உண்டுஉண்டு, சேர்ந்துசேர்ந்து என்ற அடுக்குக்கள் - பன்முறைப்பொருளன. புலவி - புலத்தல்; 'வி' விகுதி பெற்ற தொழிற்பெயர். புலவியாவது - ஆடவரும் மகளிரும் இன்பநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்கும்பொருட்டு ஒருவரோடொருவர் பிணங்குதல்; இது, பிரணயகலக மெனப்படும். தலைமகனும் தலைமகளும் ஒருசயனத்திற் கூடி யிருக்கையில் அவனிடத்துப் புலவிகொள்ளுதற்குக் காரணமான குற்றம் யாதும் இல்லையாகவும் ஆசைமிஞ்சுதலால் நுண்ணியதோர்காரணம் உள்ளதாக உட்கொண்டு அதனை அவன்மேல் ஏற்றி அவள் புலவிகொள்ளு தலாகிய புலவிநுணுக்க மென்று உணர்த்துதற்கு 'நுண்ணியபுலவி' என்றார். மென்புலவி - "உப்புஅமைந்தற்றால் புலவி அதுசிறிது, மிக்கற்றால் நீள விடல்" என்றபடி இன்பஞ்செய்தற்கு வேண்டுமளவினதாகக் கொண்டு அவ் வளவோடு தணியும் புலவி யென்றபடி. "நினைத்திருந்து நோக்கினுங் காயும் அனைத்தும்நீர், யாருள்ளி நோக்கினீ ரென்று" என்றபடி தனது ஒப்பில்லாத அழகை நினைந்து தன்னையே நாயகன் இமையாதுநோக்கும்போது 'நும்மாற் காதலிக்கப்பட்டாருள் யாரையொப்பே னென்று என்னை நோக்கினீர்' என நாயகி புலவிநுணுக்கங்கொள்ளும இயல்பு தோன்ற, நோக்கியகண் இமையாமல் நோக்கிநோக்கி' என்றதை யடுத்து 'நுண்ணிய மென்புலவியிலே நொந்துநொந்து' என்றார். அப்புலவி மிகமுதிர்ந்து துனியாகாது அளவில் தணிந்தமை, அதனையடுத்து 'இதழாரமுதுண்டுண்டு,' 'சேர்ந்துசேர்ந்து'என்ற வற்றால் உணர்த்தப்பட்டது. 'இதழாரமுதுண்டு' என்பது - அதரபானம். வரும் எனப் பதம்பிரித்து, மேல்மேலவளரும் எனினுமாம். மற்றைப்பொருள் களை நிறுக்குந் தராசினும் பொன்னைநிறுக்குந்தராசு இருதட்டுஞ் சிறிதும் ஏற்றத்தாழ்வின்றி யிருத்தல் இயல்பாதலால, இருவரன்பும் சிறிதும் ஏற்றத்தாழ் வின்றித் தம்மிலொத்திருத்தற்குப் பொற்றராசை உவமைகூறினார். அநுராகம், போகம், பாக்யம்-வடசொற்கள். பாயல், அல்-சாரியை. நலம்- 'அம்' விகுதி பெற்ற பண்புப்பெயர்.

இதுமுதற் பதினொருகவிகள் - கீழ்த் திரௌபதிமாலையிட்டசருக்கத்தின் சஅ - ஆம் கவிபோன்ற எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (சஉ)

[அருச்சுனன் சித்திராங்கதையினிடமாகப் பெற்ற புதல்வனைச் சித்திர வாகனனுக்குக் கொடுத்தல்.]

சங. பன்னாளினெடும்போகம்பயின்றபின்னர்ப்பப்புருவாகனனென்னும் பைதற்றிங்க, ளன்னானையவள்பயந்தாள் பயந்தபோதேயம்மகவை யுவகையுடனவனுமீந்தான், றென்னனெனுமிளிமுரலவேம்பின்றண்டார்த்தேம்பாசில் வழங்குபுயத்தென்னர்கோவு. நின்னலென்மரபு நிலைபெற்றதென்று நேயமுடன்கவர்ந்துதுயர்நீங்கினனே.

(இ - ள்.) பல் நாளில் நெடும் போகம் பயின்ற பின்னர் - (இவ்வாறு) பலநாள் பெரியஇன்பத்தை (இருவரும்) அனுபவித்தபின்பு, அவள் - அச்சித்திராங்கதை, பப்புருவாகனன் என்னும் பைதல் திங்கள் அன்னானை பயந்தாள் - பப்புருவாகன னெனப் பெயர்பெறும் இளம்பிறைச்சந்திரன்போன்ற புத்திரனைப் பெற்றாள்; பயந்த போதே - பெற்றபொழுதே, அவனும் உவகையுடன் அ மகவை ஈந்தான் - அவ்வருச்சுனனும் மகிழ்ச்சியோடு அப்பிள்ளையை (முன்புகுறித்தபடி சித்திரவாகனபாண்டியனுக்கு)க் கொடுத்தான்;

தென்னு என்று அளி முரல - 'தென்னு' என்று வண்டுகள் ஒலித்து இசைக்க, வேம்பின் தண் தார் தேம் பரிசில் வழங்கு - (தானணிந்த) குளிர்ந்த வேப்பம்பூமாலையிலுள்ள தேனை (அவ்வண்டுகளுக்கு) வெகுமதியாகக் கொடுக்கின்ற, புயம் - தோள்களையுடைய, தென்னர் கோவும் - பாண்டியர்தலைவனான சித்திரவாகனனும், நின்னால் என் மரபு நிலை பெற்றது என்று - 'உன்னால் எனது சந்ததி அழிவின்றி நிலைத்தது' என்று (அருச்சுனனைநோக்கி உபசார வார்த்தை) சொல்லி, நேயமுடன் கவர்ந்து - அன்போடு (அப்பிள்ளையை) வாங்கிக்கொண்டு, துயர் நீங்கினான் - (புத்திரசந்ததியில்லாதிருந்ததனாலாகிய) தனது துன்பம் ஒழியப்பெற்றான்; (எ - று.)

"தென்னதென வென்று வண்டுமுரல் திருவேங்கடம்" என்றபடி வண்டுகள் தென்னவென்று ஒலிக்கும் இசைக்குறிப்புவாய்பாடும், 'தென்னன்' என்பது ஈறுதிரிந்து ஈற்றயல்நீண்ட விளியாய்த் தென்னனே யென்று பொருள்படும் ஆடூஉமுன்னிலையுமாகிய இருபொருள் இரட்டுறமொழித லென்னும் உத்தியால் ஒருங்கே யமைய 'தென்னவென்று அளிமுரல' என்றார். 'தென்ன' என்று பாண்டியனை விளித்து முன்னிலைப்படுத்தி இசைபாடி வரும் பாணர்களுக்கு அவர்கள் வேண்டிய இன்னுணவுமுதலிய பரிசுகளை இருகையாலும் வழங்கும் பாண்டியரியல்பின்படி, 'தென்ன' என்று இசை பாடிவந்தவண்டுகளுக்குப் பிரியமான தேனைத் தோள்களில்தரித்த வேப்பம்பூமாலையினின்று வழங்கும் பாண்டியனென்றவாறு; ஆறறிவுடைய மக்கட்குப் போலவே அவ்வறிவிற்குறைபாடுடைய உயிர்கட்கும் தன்னைச்சார்ந்தவிடத்துப் பரிசுகொடுக்கும் பெருங்கொடையாள னென்பது விளங்கும். இதனை "முல்லைக்குத் தேருமயிலுக்குப் போர்வையும், எல்லைநீர்ஞாலத் திசைவிளங்கத் - தொல்லை, இரவாம லீந்த இறைவர்போல் நீயும், கரவாம லீகை கடன்" என்றாற்போலக் கொள்க. இப்படிப்பட்ட பெருவள்ளல் தன் மரபு இடையறாமைப்பொருட்டே அருச்சுனனிடம் மகவை வேண்டிப்பெற்றன னென்பது தொனிக்கும். தென்னர் - பரதகண்டத்தின் தென்னாடாகிய பாண்டியநாட்டை யாள்பவர். உவகையுடன் - இம்மைமறுமைப்பயன்களை விளைக்கின்ற புத்திரனைப் பிறர்க்குக் கொடுத்துவிடுகிறேனே யென்ற மனக்குறைபாடு இல்லாமல் என்றபடி. பைதல் - பையல். அளி - வடசொல். தேன் + பரிசில்=தேம்பரிசில்; தேன்மொழி வலிவர ஈறுபோய் மெலி மிக்கது; [நன் - மெய் - கக.] பரிசில், இல் - சாரியை. 'அவனும்', 'கோவும்' என்ற உம்மைகள் - எச்சப்பொருளன. பப்ருவாஹநன் என்ற வடமொழிப்பெயர் - பிங்கலவர்ணமான குதிரைகளை யுடையவ னென்று பொருள்படும். (சங)

[அருச்சுனன் பிரயாணப்பட்டுத் திருமாலிருஞ்சோலைமலையைத் தரிசித்தல்.]

சச. பார்த்தனருச்சுனன்கரியோன்விசயன்பாகசாதனிசவ்வியசாசிபற்குனன், பாரேத்துதனஞ்சயன்கிரீடிசுவேதவாகனெனுநாமம்படைத்தபிரான்
யாழோரின்பம், வாய்த்தவிதழமுதமொழிப்பேதைதாதைமனையிருக்கத்திருவழுதிவளநாடுள்ள, தீர்த்தமுழுவதுமாடியன்பாற்றென்பாற்றிருமலையுங்கை
தொழுதுசிந்தித்தானே.

(இ - ள்.) பார்த்தன்—, அருச்சுனன்—, கரியோன் - கருநிறமுடையவன் [கிருஷ்ணன்], விசயன்—, பாகசாதனி - பாகசாஸநி, சவ்வியசாசி - ஸவ்யஸாசீ, பற்குனன் - பல்குநன், பார் ஏத்து தனஞ்சயன் - உலகத்தவர் புகழும் தநஞ்சயன், கிரீடி-கிரீடீ, சுவேதவாகன்—, எனும் நாமம்-என்கிற (பத்துப்) பெயர்களையும், படைத்த - பெற்ற, பிரான் - அரசனான அருச்சுனனவன்,—யாழோர் இன்பம் வாய்த்த இதழ் அமுதம் மொழி பேதை தாதை மனை இருக்க - காந்தர்வவிவாகம்பெற்ற அமிருதம்போன்ற அதரத்தையும் அமிருதம்போன்ற இன்சொற்களையுமுடைய இளம்பெண்ணான சித்

திராங்கதை (தனது)தந்தையின்வீட்டிலே யிருக்க [அவளை அங்குஇருத்தி], திரு வழுதி வளம் நாடு உள்ள தீர்த்தம் முழுவதும் ஆடி - சிறந்த வளப்பமுடைய பாண்டியநாட்டி லுள்ள புண்ணியதீர்த்தங்களெல்லாவற்றிலும் தான் ஸ்நாநஞ்செய்பவனாய்(ப் புறப்பட்டு), அன்பால் - அன்போடு, தென்பால் திருமலையும் கைதொழுது சிந்தித்தான் - தென்திசையிலுள்ள அழகர்திருமலையையுங் கைகூப்பி வணங்கித் தியானித்தான்; (எ - று.)

இத்தலத்திலுள்ள பெருமாள்திருநாமம் - அழகர். பிராட்டிமார் - சுந்தரவல்லி, பூதேவி. இச்சோலைமலை வடக்கிலுள்ள திருமலையெனப்படுகிற திருவேங்கடமலையோடு ஒருங்குவைத்து நன்குமதிக்கப்படுதல் தோன்ற, 'தென்பால் திருமலை' என்றார். 'தென்பால் திருமலையுங் கைதொழுது' என்ற உம்மை-இறந்ததுதழுவிய எச்சமாய், கீழ்ப் பன்னிரண்டாங்கவியில் 'அரவக்கிரி சார்ந்தான்' என்றதை நோக்கும்.

பார்த்தன் - திரௌபதிமாலையிட்டசருக்கம் எ - இலும், அருச்சுனன் - இச்சருக்கத்தின்தொடக்கத்திலும், விசயன் - திரௌபதிமாலை கூ - இலும், தனஞ்சயன் - திரௌபதிமாலை உ - இலும் பெயர்க்காரணப்பொருள் காண்க. பாகசாஸநன் - இந்திரன்; அவனதுமகன், பாகசாஸநி எனத் தத்திதாந்தநாமம். ஸவ்யஸாசீ - (வலக்கையினால்மாத்திரமன்றி இடக்கையினாலும் அம்புதொடுப்பவன். பல்குநன் - பங்குனிமாதத்தில் உத்தரபல்குநி நக்ஷத்திரத்திற் பிறந்தவன். கிரீடீ-பாசுபதம்பெற்றபின்பு இந்திரலோகத்துக்குச் செல்லும்போது அவ்விந்திரனாற் சுவர்க்கத்தில் இளவரசுமுடிசூட்டப் பெறுபவன். சுவேதவாஹன் - வெண்ணிறமான குதிரைகளை யுடையவன்; காண்டவதகனஞ்செய்யுமாறு அநுமதிதரும்போது அக்கினிபகவானாற் கொடுக்கப்படும் நான்குவெள்ளைக்குதிரைகளைப் பூண்ட தேரைப் பெறுதலால், இவனுக்கு இப்பெயர். 'பார்த்தன்.........எனும் நாமம் படைத்தபிரான்'— "ஐயிருநாமத்தோன்" என்பர் மேல் வாசுதேவனைப் படைத்துணையழைத்த சருக்கத்தும்.

காந்தர்வம் - எட்டுவகைமணங்களுள் ஒன்று; அவையாவன - பிரமம், தைவம், பிராஜாபத்யம், ஆர்ஷம், ஆசுரம், காந்தர்வம், இராக்கதம், பைசாசம் என்பன. அவற்றுள், காந்தர்வமாவது - தலைமகனும் தலைமகளும் தம்மிற் சந்தித்து ஒத்தஅன்பினராய்க் கொடுப்பாரும் அடுப்பாருமின்றித் தாமே கூடுங் கூட்டம்; இதற்கு 'யாழோர்கூட்டம்' என்று தமிழிற் பெயர்: இது நல்வினைப்பயனால் தனியே ஒருவரை யொருவர் சந்தித்துக் கூடுகிற கந்தர்வர்களின் வழக்கத்தைத் தழுவியதாதலால் 'காந்தர்வம்' என்று பெயர்பெறும். கந்தர்வர் எப்பொழுதும் வீணைகைக்கொண்டு இசைபாடுந்தன்மையராதலால், 'யாழோர்' எனப் பெயர்பெற்றனர்; "துறையமைநல்யாழ்த் துணைமையோ ரியல்பே" என்ற தொல்காப்பியமுங் காண்க. இவ்விவாகம், பின்பு தந்தைதாயர் முதலிய பெரியோர்களால் அங்கீகரிக்கப்படும்; "காந்தர்வமென்னும் விவாகத்தாற் பலஇராசவிருடிகன்னிகைகள் மணஞ்செய்யப்பட்டனராகவும், அவர்கள்தந்தையரால் ஆமோதிக்கப்பட்டனராகவுங் கேள்விக்கு வருகிறார்கள்" என்று வடமொழிச்சாகுந்தலநாடகத்திற் கூறினது, இங்கு உணரத்தக்கது.

'அமுதம்' என்பது, மத்திமதீபமாக, முன்நின்ற 'இதழ்' என்றதனோடும், பின்நிற்கும் 'மொழி' என்பதனோடுங் கூட்டப்பட்டது. பார்-இடவாகு பெயர். நாமம் - வடசொல். (சச)

[அருச்சுனன் அப்பாற் சென்று சேதுதரிசனஞ் செய்தல்.]

**சரு. கன்றியவெங்கரன்முதலோர்களத்தில் வீழக்கவிகுலநாயகனிதயங் கலங்கிவீழ, வொன்றுபடமரமேழுமுததியேழுமுடுருவச்சரந்தொடுத்தவொரு**

வில்வீரன், றுன்றியெழுபதுவெள்ளங்குரங்கின்சேனைசூழ்போதவாய்த்த திருத்துணைவனோடுஞ்,சென்றவழியின்றளவுந்துளவநாறுஞ்சேதுதரிசனஞ் செய்தான்றிறல்வல்லோனே.

(இ - ள்.) கன்றிய வெம் கரன் முதலோர் களத்தில் வீழ - கோபித்த கொடிய கரன்முதலான இராக்கதர்கள் போர்க்களத்தில் இறந்துவிழவும், கவி குலம் நாயகன் இதயம் கலங்கி வீழ - குரங்குக்கூட்டத்துக்குத் தலைவனை வாலி மனங்கலங்கி விழவும், மரம் ஏழும் உததி ஏழும் ஒன்றுபட ஊடுருவ - ஏழுமராமரங்களும் ஏழுகடல்களும் ஒருசேர ஊறுபடவும், சரம் தொடுத்த - அம்பைச் செலுத்திய, ஒரு வில் வீரன் - ஒப்பற்ற வில்வீரனை ஸ்ரீராமபிரான், எழுபது வெள்ளம் குரங்கின் சேனை துன்றி சூழ்போத-எழுபது வெள்ளமென்னுந் தொகையுள்ள வானரசேனை நெருங்கி(த்தன்னை)ச்சூழ்ந்துவர, வாய்த்த திரு துணைவனோடும்-தனக்குஇயைந்த சிறந்ததம்பியான இலக்குமணனுடனே, சென்ற - கால்களால் நடந்துபோன, வழி - வழியாதலால், இன்று அளவும் துளவம் நாறும் -(அவ்விராமபிரானது திருவடிகளில் அன்பர்கள்அர்ச்சித்த) திருத்துழாயின் வாசனை இன்றைவரையிலும் வீசப்பெற்ற, சேது - சேதுஎன்னுந் திருவணையை, திறல் வல்லோன் - போர்த்திறத்தில் வல்லவனை அருச்சுனன், தரிசனம் செய்தான் - பார்த்தான்; (எ - று.)

"கங்கையோடி யமுனை கோதாவரியொடு களிந்தை சூழ்ந்த, பொங்கு நீர் நதிகள் யாவும் படிந்தலாற் புன்மைபோகா, சங்கெறி தரங்க வேலை தட்டவிச் சேதுவென்னும், இங்கிதி னெதிர்ந்தோர் புன்மை யாவையும் நீங்குமன்றே" என்று இராமாயணத்திற் கூறியபடி, சேது தன்னைத் தரிசித்தமாத்திரத்திலே எல்லாப்பாவங்களையும் போக்கி எல்லாநன்மைகளையுந் தருந் தன்மைய தாதலால், 'சேதுதரிசனஞ்செய்தான்' என்றார். சேது - இராமபிரான் வானரசேனையுடன் இலங்கைசேரும்பொருட்டு இடையிலுள்ள தென்கடலைக் கடத்தற்காக அதில் வானரர்களைக்கொண்டு மலைகளைக்கொணர்வித்து அவற்றாற் கட்டுவித்த அணை. நூறுயோசனை நீளமுள்ள அதன்மேல் இராமபிரான் அன்பர்களிட்ட திருத்துழாயின் நறுமணம் நீங்காத திருவடிகளால் மிதித்து நடந்து சென்றதனால், அத்துழாயின்மணம் இப்பொழுதும் ஒழியாது அங்குச் செறிந்திருக்கு மென்றார்; இதனால், திருமால் சாத்திய திருத்துழாயின் மணமிகுதியும், அவ்வழியின்மேன்மையும் விளங்கும். திருத்துழாய், திருமாலுக்கும் அத்திருமாலினது திருவவதார மூர்த்திகளுக்கும் உரியது: "தேன்பிடிக்குந் தண்துழாய்ச் செங்கட் கருமுகிலை, மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோல்" எனப் புகழேந்திப்புலவரும் இராமபிரானுக்குத் திருத்துழாய் உரியதென்றமை காண்க. தம்பியர்மூவருள் தமையனார்க்குக் குற்றேவல்செய்தலையே தனக்குஉரியதொழிலாகக்கொண்டு வனத்திலும் விடாது தொடர்ந்துசென்று பலவகைப்பணிவிடை புரிந்து ஆபத்துக்கு உதவியவன் இலக்குமணனே யாதலால், அவனை 'வாய்த்த திருத்துணைவன்' என்றார். வாய்த்ததிருத்துணைவனென்றது, சுக்கிரீவனை யென்றலும் ஒன்று. 'துணைவரோடும்' என்ற பாடத்துக்கு - அங்கதன் அநுமான் ஜாம்பவான் நீலன் நளன் முதலிய பிரதானவீரர்களையெல்லாங் குறிக்குமென்க. வெள்ளம் - ஒருபெருந்தொகை.

கரன் என்ற வடமொழிப்பெயர் - கொடியவனென்று பொருள்படும்; இவன் - இராவணனுக்குத் தம்பிமுறையுள்ளானோர் அரக்கன்: தண்டகாரணியத்திலே இராவணன்தங்கையான சூர்ப்பணகை வசித்தற்கென்று அவ்விராவணன் குறித்த ஜனஸ்தாந மென்னு மிடத்தில் அவளுக்குப் பாதுகாவலாக அவனால் நியமித்துவைக்கப்பட்ட பெரியஅரக்கர்சேனைக்கு முதல் தலைவன். சூர்ப்பணகை தனதுசிலஉறுப்புக்களை யறுத்திட்ட இராமலக்ஷ்

மணர்மீது கூறுக்கொண்டு சென்று கரன்காலில் விழுந்துமுறையிட, அவன் மிகப்பெரியசேனையோடும் அறுபதுலக்ஷம் படைவீரரோடும் சேனைத்தலைவர் பதினால்வரோடும் தூஷணன் திரிசிரா என்னும் முக்கியசேனாதிபதிகளோடும் புறப்பட்டுவந்து போர்தொடங்குகையில், இராமன், லக்ஷ்மணனைச் சீதைக்குக் காவலாகப் பர்ணசாலையில் நிறுத்தித் தான் தனியேசென்று எதிர்த்துப் பெரும்போர்செய்து பலரையும் அழித்து முடிவிற் கரனையுந் துணித்து வெற்றிகொண்டனன்.

வாலி - இந்திரன்மகன்; பலபராக்கிரமங்களிற் சிறந்தவன்; சூரியபுத்திரனான சுக்கிரீவனது தமையன்; கிஷ்கிந்தாநகரத்தை யாண்ட வாநரராஜன்; தன்னை யெதிர்த்தவர் வலிமையிற் பாதி தன்னிடம் வந்துகூடும்படி வரம் பெற்றவன்; ஒவ்வொருநாளும் நான்குகடலினுஞ் சென்று ஸ்நாநம்முதலிய தனதுநியமங்களை முடித்துக்கொண்டு வருபவன்; இராவணனையும் ஒருகால் வென்றவன். சீதையைத் தேடிக்கொண்டுவந்த இராமலக்ஷ்மணர்களோடு அநுமான்மூலமாக நண்புகொண்ட சுக்கிரீவன் தனக்குப் பலஇடையூறியற்றிய தன்தமையனான வாலியைக் கொன்று உதவிபுரியுமாறு இராமனை வேண்ட, அதற்குஇரங்கிய பெருமான், சுக்கிரீவனை வாலியோடு வலியப்போர் செய்யச்சொல்லி, அங்ஙனம் அவ்விருவரும் பொருகையில் மறைவிலிருந்து அம்புதொடுத்து வாலியை வதைத்தனன்.

இராமலக்ஷ்மணரை அநுமான்மூலமாகச் சுக்கிரீவன் சிநேகித்தபிறகு, தனதுபகைவனான வாலியைக் கொல்லும் வல்லமை இராமனுக்கு உண்டோ இல்லையோ என்று ஐயமுற்றுத் தன்சந்தேகந் தீரும்படி 'எதிரிலிருந்த ஏழு மராமரங்களையும் ஏககாலத்தில் தொளைபடும்படி எய்யவேண்டும்' என்று சொல்ல, உடனே இராமபிரான் ஒரேஅம்புதொடுத்து அம்மரங்களேழையும் துளைப்படுத்தினன்.

இராவணனாற் கவரப்பட்ட சீதாபிராட்டி இலங்கையிலிருக்கிற செய்தியை அநுமான் சென்று அறிந்துவந்து சொன்னபின்பு இராமபிரான் வாநரசேனையுடனே புறப்பட்டுச் சென்று கடற்கரையையடைந்து, கடலைக்கடக்க உபாயஞ்சொல்லவேண்டு மென்று அக்கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்து அங்குத் தருப்பசயனத்திலே படுத்து ஏழுநாளளவும் பிராயோபவேசமாகக் கிடக்க, சமுத்திரராஜன் அப்பெருமானதுமகிமையை அறியாமல் உபேக்ஷையாயிருக்க, ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு, அனைவரும் நடந்துசெல்லும்படி கடலை வற்றச்செய்வேனென்று ஆக்நேயாஸ்திரத்தைத் தொடுக்கத் தொடங்கியவளவிலே, அதன்உக்கிரத்தால் வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து அப்பெருமானைச் சரணமடைந்து, கடல்வடிவமான தன் மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு ஒடுங்கிநிற்க, பின்பு இராமமூர்த்தி வாநரங்களைக்கொண்டு மலைகளாற் சேதுபந்தனஞ் செய்தனன். இராமன் அங்ஙனம் ஆக்நேயாஸ்திரம் பிரயோகித்தபோது இவ்வுவர்க்கடலொன்றேயன்றி மற்றைக்கடல்கள்யாவும் தவித்தன என்பதை "அண்டமூலத்துக்கப்பாலாழியுங் கொதித்தது ஏழு, தெண்டிரைக்கடலின் செய்கை செப்பியென் தேவன் சென்னி, பண்டைநா ளிருந்த கங்கைநங்கையும் பதைத்தாள் பார்ப்பான், குண்டிகையிருந்த நீரும் குளுகுளு கொதித்ததன்றே" என்ற கம்பராமாயணத்தினாலும் அறிக.

கபிகுலநாயகன், ஸேதுதர்சநம் - வடமொழித்தொடர்கள். சூழ்போத, போத - துணைவினை. (சரு)

[சேதுவின் வருணனை.]

சசு. வன்றிரைவெங்களிற்றினங்களிரண்டுபாலுமலையாமலிடுங்கணைய மரனேபோலும், தன்றலைகளமிழாமலெடுப்பான்மேருத்தாழ்கடலினீட்டிய

தோர்தடக்கைபோலு, மன்றியிருபூதலமுமிருதட்டாகவகத்தியன்வாழ்குன்றினையுமணிமுக்கோணக், குன்றினையுஞ்சீர்தூக்கிநிறுப்பதாகக்கோகநதனமைத்த துலைக்கோலும்போலும.

(இ - ள்.) (அந்தச்சேதுவானது), வல் திரை - பெரியஅலைகளாகிய, வெம் களிறு இனங்கள் - வெவ்வியமதயானைகள், இரண்டு பாலும் மலையாமல - இரண்டுபக்கத்திலும் (ஒன்றோடொன்று) போர்செய்யாதபடி, இடும் - (இரண்டுக்கும் நடுவிலே) இட்ட, கணையம் மரனே - கணையமரத்தையே, போலும் - ஒக்கும்; (மற்றும்), மேரு-மகாமேருமலை, தன் தலைகள் அமிழாமல் எடுப்பான் - (வாயுவினாற் பறித்தெறியப்பட்ட) தனது சிகரங்கள் அமிழாமல் (அவற்றை) எடுத்தற்கு, தாழ் கடலில் நீட்டியது - ஆழமான கடலில் நீட்டியதான, ஓர் தட கை - ஒரு பெரியகையை, போலும் - ஒக்கும்; அன்றி - இவைகளல்லாமல், இரு பூதலமும் இரு தட்டு ஆக - (ஜம்பூத்வீபமும் இலங்காத்வீபமும் என்னும்) இரண்டுபூமியினிடங்களும் இரண்டுதட்டுக்களாக அமைய,(அவற்றின்மேல் வைத்து), அகத்தியன் வாழ் குன்றினையும் அணி முக்கோணக் குன்றினையும் சீர்தூக்கி நிறுப்பது ஆக-அகஸ்தியமுனிவன் வாழிடமான பொதியமலையையும் அழகிய திரிகோணமலையையும் (இவற்றில் எது கனம்பொருந்தியதென்று) நிறுத்து வரையறைசெய்யுமாறு, கோகநதன் அமைத்த - பிரமன் நாட்டிய, துலை கோலும் - தராசுகோலையும, போலும் - ஒக்கும்; (எ-று.)

**பலபொருளுவமையணி.** கருநிறமாய் வலிமையோடெழுந்து மோதுதலால, அலை, களிறெனப்பட்டது. இரண்டுபக்கத்தும் அலைபிரிந்து மோத இடையிலே பொருந்திய நீண்ட சேது, இருதிறத்துயானைகள் ஒன்றோடொன்று மோதாதபடி அவற்றினிடையிலிட்ட காவல்தடைமரம்போலுமென்க.

முன்னொருகால் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார் பலசாலியென்று விவாதம் உண்டாக, அதனைப் பரீக்ஷித்தறியும்பொருட்டு வாயுதேவன் மேருமலையின் சிகரத்தைப் பெயர்த்துத் தள்ளுவதென்றும், ஆதிசேஷன் அது பெயரவொட்டாமற் காத்துக்கொள்வதென்றும் கோட்பாடு உண்டாகி, அங்ஙனமே இருவரும் தேவர்கள் முதலியோர்களுடைய முன்னிலையில் தம்தம்வலிமையைக் காட்டத்தொடங்கியபொழுது, ஆதிசேஷன் தனது ஆயிரம்படங்களாலும் மேருமலையின் ஆயிரம்சிகரங்களையும் கவித்துக்கொண்டு பெயரவொட்டாமல வெகுநேரங் காக்க, பின்பு வாயுதேவன் தன்வலிமையால அம்மலைச்சிகரங்களில மூன்றைப்பெயர்த்துக்கொண்டு போய்த் தென்கடலில் தள்ளிவிட்டனன் அவையே இலங்கைநகர்க்கு இருப்பிடமான திரிகூடமுதலியன என்பது, இரண்டாமடியில் அறியவேண்டிய கதை.

முக்கோணக்குன்று - திரிகோணாசலம்; இது - இலங்கைத்தீவிலுள்ள தேவாரம்பெற்ற சிவதலமிரண்டில் ஒன்று. அகஸ்தியமகாமுனிவன் சிவபிரானோடொத்த மகிமையுடையவனாதலால், அவனிருக்கிற பொதியமலையும் சிவபிரானிருக்கிற கைலாசகிரியின் கொடுமுடியான திரிகோணமலையும் தம்மிலொத்தனவாய்ச் சீர்தூக்குதற்கு ஏற்றன வென்க. கோகநதம் - தாமரை; இவ்வடசொல்—கோகம் - சக்கரவாகப்பறவைகள், நதம் - கூவியொலித்தற்கு இடமானது என்று பொருள்படும். கோகநதன் - தாமரைமலரில் வாழ்பவன். துலைக்கோலு:, உம் - இறந்ததுதழுவியஎச்சம். எடுப்பான் - எதிர்காலவினையெச்சம். அகஸ்த்யன் என்ற வடசொல் - (விந்திய) மலையை அடக்கினவ னென்று பொருள்படும்: அகம் - செல்லாதது: அசலம்; மலை. ()

[அருச்சுனன் சிலதீர்த்தங்களில் நீராடி மேல்கடல்சேர்தல்.]

சஎ. அண்டர்தமகங்கையினும்வரனுண்டென்றென்றரம்பையரோடவ ணியில்வந்தாடுங்கன்னித், தண்டுறையுந்தண்பொருநைப்பாவநாசத்தடந்து றையும்படிந்துநதித்தடமேபோந்து, பண்டுமழுப்படையோனம்மழுவாற்கொ ண்டபாக்கியபூமியுஞ்சேரன்பதிகளியாவுங், கண்டுமனங்களிகூரச்சென்றுமே லைக்கடல்கண்டானுரகதலங்கண்டுமீண்டான்.

(இ - ள்.) உரக தலம் கண்டு மீண்டான் - நாகலோகத்துக்குச் சென்று அதனைக்கண்டு திரும்பிவந்தவனான அருச்சுனனானவன்,—அண்டர் - தேவர்கள், தம கங்கையினும் வரன் உண்டு என்று என்று-தங்களுடைய கங்காநதியைக்காட்டிலும் மேன்மையுள்ளதென்று எண்ணியும் சொல்லியும், அரம்பையரோடு அவனியில் வந்து ஆடும்-தேவமாதர்களுடனே பூமியில் வந்து ஸ்நானஞ்செய்யப்பெற்ற, கன்னி தண் துறையும் - கன்னியாகுமரியென்னும் நதியினது குளிர்ச்சியான துறையிலும், தண் பொருநை பாவநாசம் தட துறையும் - குளிர்ச்சியான பொருநையாற்றினது பாவநாசமென்கிற பெரியதுறையிலும், படிந்து - நீராடி, நதி தடமே போந்து - அந்நதியின்கரைவழியாய்ச் சென்று, பண்டு மழு படையோன் அ மழுவால் கொண்ட பாக்கிய பூமியும் - முற்காலத்திற் பரசுராமன் (தனது) பரசுஎன்னும் ஆயுதத்தாற் கொண்ட சிறந்தபூமியையும், சேரன் பதிகள் யாவும் - மற்றும் சேரராசனுடைய ஊர்களெல்லாவற்றையும், கண்டு - பார்த்து, மனம் களி கூர - மனத்திற் களிப்பு மிக, சென்று - (பூமிப்பிரதக்ஷிணமாக அப்பால்) நடந்து, மேலை கடல் கண்டான் - மேற்குத்திக்கிலுள்ள கடலைப் பார்த்தான்; (எ - று.)

தம, அ-சாரியை; ஆறனுருபுஎனவுங் கொள்ளலாம்: "ஆறனொருமைக்கு அதுவும் ஆதுவும், பன்மைக்கு அவ்வும் உருபாம்" என்றது பெரும்பான்மைபற்றியதேயன்றி நியதியன்றெனஅறிக; அதனால், இங்கு, கொண்டு முடிக்குஞ்சொல் ஒருமையாயிருக்கையில் 'அ' என்ற ஆறனுருபு வந்ததென்க. உம்-உயர்வுசிறப்பு. அண்டர் 'தமகங்கை' என்றது, சுவர்க்கலோகத்திலுள்ள தேவகங்காநதியை. வரன் - வர மென்ற வடசொல்லின் ஈற்றுப்போலி. ரம்பா என்ற வடசொல், அரம்பையென விகாரப்பட்டது; இது ஒருதேவமாதின் பெயர்: அரம்பையர் - ரம்பை முதலியோ ரென்க. துறை - நீரிலிறங்கு துறை; ஸ்நாநகட்டம். தன்னிடம்வந்து மூழ்குவாருடைய பாவங்களையெல்லாம் நாசஞ்செய்தலால், பாவநாசம என்று பெயராயிற்று. மழு - கோடாலி. மழுப்படையோன் - மழுவாகிய ஆயுதத்தை யுடையவன்; பரசுராமன் இருபத்தொருதலைமுறை அரசர்களைப் பொருதழித்துத் தன்வசப்படுத்திய பூமி முழுவதையும் காசியபமுனிவனுக்குத் தானஞ்செய்தபின்னர், அம்முனிவன் 'நீ எனக்குக் கொடுத்துவிட்டதான பூமியில் வசித்தல் தகுதியன்று' என்ன, பரசுராமன் 'அங்ஙனமே யாகுக' என்று கடற்கரைசேர்ந்து தனக்கு இடங்கொடுக்கும்படி அக்கடலை வேண்டி, அதன்அநுமதிப்படி அதில் தனதுகோடாலிப்படையை வீசியெறிய, அது சென்று விழுந்த பன்னிரண்டுயோசனையளவுதூரம் கடல் விலகிவிட, அப்பூமியில் அப்பெருமான் வசித்தனன்; அவ்விடம் பரசுராமக்ஷேத்திரமென்று பெயர்பெறும்: அது, மலைநாட்டின் முக்கியமான பாகமாம். திருமாலின்ஆறுவதுதிருவவதாரமான பரசுராமபிரான் வேண்டிப்பெற்றுவசித்த மகிமையுடைய புண்ணியக்ஷேத்திர மாதலால், 'பாக்கியபூமி' எனப்பட்டது. மேற்கு+கடல்=மேலைக்கடல்: திசைப்பெயர் ஈறுபோய் றகரம் லகரமாயிற்று; ஐ - சாரியை. உரகதலம்கண்டு மீண்டமை, உலூபியை மணஞ்செய்தபொழுது; அது, இச்சருக்கத்தின்முதலில் விவரிக்கப்பட்டது.

(சஎ)

[ஐந்துதேவமாதர்களின் சாபத்தை நீக்கிக் கோகர்ணம் சேரதல்.]

சஅ. அந்தநெடுந்திசைப்புனல்களாடுநாளிலைந்துதடத்தரம்பையரோ ரைவர்சேர, விந்திரன்வெஞ்சாபத்தாலிடங்கராகியிடருழந்தோர்பழையவடி வெய்தநல்கிச், சிந்துதிரைநதிபலவுஞ்சென்றுதோய்ந்துதிங்களுடனரவுறவு செய்யும்வேணிக், கொந்தவிழுமலரிதழித்தொடையோன்வைகுங்கொடிமதில் சூழ்கோகன்னங்குறுகினனே.

(இ - ள்.) அந்த நெடுந் திசை புனல்கள் ஆடும் நாளில்-அந்தப் பெரிய மேற்குத்திக்கிலுள்ள தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்கிற காலத்தில்,—இந்திரன் வெம் சாபத்தால்-இந்திரன்காரணமாகவந்தகொடியசாபத்தினால், ஐந்து தடத்து - ஐந்துதடாகங்களில், சேர - ஒருசேர, இடங்கர் ஆகி இடர் உழந்தோர் - முதலைகளாகித் துன்பமனுபவித்துவருகிறவர்களான, அரம்பையர் ஓர் ஐவர் - ஐந்துதேவமாதர்கள், பழைய வடிவு எய்த - (சாபத்தினாலாகிய முதலைவடிவம்நீங்கிப்) பழமையான தங்கள்நிஜவடிவத்தை யடையும்படி, நல்கி - அருள்செய்து,—சிந்து திரை நதி பலவும் சென்று தோய்ந்து - வீசுகிற அலைகளையுடைய நதிகள்பலவற்றிலும் போய்த் தீர்த்த மாடி,—திங்களுடன் அரவு உறவு செய்யும் வேணி - சந்திரனுடனே பாம்பு நண்பாக ஒருங்குவசிக்கப்பெற்ற சடைமுடியிலே, கொந்து அவிழும் இதழி மலர் தொடையோன் - கொத்துக்கொத்தாக மலருங் கொன்றைப்பூமாலையை யணிந்தவனை சிவபிரான், வைகும் - வீற்றிருக்கின்ற, கொடி மதில் சூழ் கோகன்னம்- துவசங்கள்நாட்டிய மதில்களசூழ்ந்த திருக்கோகர்ணமென்ற தலத்தை, குறுகினன் - போய்ச்சேர்ந்தான் ; (எ - று.)

அருச்சுனன், தீர்த்தயாத்திரைசெய்கையில ஸௌபத்ரதீர்த்தம், பௌலோமதீர்த்தம், காரந்தமதீர்த்தம், அசுவமேதபலதீர்த்தம், பாரதவாஜ தீர்த்தம என்னும ஐந்துபுண்ணியதீர்த்தங்களைக் கண்டு, அவற்றில் ஐந்து முதலைகள் இருந்து இறங்குபவரையெல்லாங் கவர்தலால் அவை அனைவராலும் நீராடாது விடப்படுகின்றன வென்று அறிந்து அம்முதலைகளைத் தொலைக்கக் கருதி, மிக்கதைரியத்தோடு அவற்றில் அகஸ்தியதீர்த்தமான ஸௌபத்திரத்தில் இறங்கி நீராட, அதிலிருந்தபெரியமுதலை அருச்சுனனைப் பற்றிக்கொண்டது; அவன் அதனை விடாமல் தனதுவலிமையினால் இழுத்துக் கரையிற் சேர்த்தவளவில், அம்முதலை, திவ்வியசௌந்தரியமுடைய ஒரு தேவமாதாக மாறிற்று; அதுகண்டு வியந்த அருச்சுனன் ' நீ யார்? உன்வரலாறு என்ன?' என்றுவினவ, அவள் கூறுவாள்:—'குபேரனுக்குப் பிரியமானவளான வர்க்கையென்னும் அப்சரப்பெண் யான். ஸௌரபேயி, ஸமீசீ, புத்புதா, லதா என்ற எனதுதோழியர் நால்வருடன் யான்செல்லுகையில் மிக்கஅழகுள்ள ஒருமுனிவன் பெருந்தவஞ்செய்தல் கண்டு அத்தவத்துக்கு இடையூறுசெய்யக் கருதி, நாங்களைவரும் ஆடல் பாடல் முதலிய விநோதங்களால் அவன்மனத்தைக் கலக்கத்தொடங்கியபோது, நிலைகலங்காத அவன் எங்களை முதலைகளாகும்படி சபித்தான்; உடனே நாங்கள் அவனையே சரணமடைந்து. எங்கள்பிழையைப் பொறுத்தருளுமாறு பிரார்த்திக்க, 'நூறுவருஷம் கழித்தவளவில் உங்களை ஓர்உத்தமபுருஷன் நீரினின்று கரையேற்றுவன்: அப்பொழுது உங்கட்கு இச்சாபவடிவம் ஒழியும் என்று சாபவிடை கூறியருளினன்: அதுமுதல் நாங்கள் முதலைகளாய் இந்தஐந்து தீர்த்தங்களிலும் வசிக்கிறோம்; என்னைப்போலவே மற்றைநால்வரையும் நீ சாபந்தவிர்த்தருளுக' என்று கூற, அருச்சுனன் அங்ஙனமே மற்றையதீர்த்தங்களிலும் இறங்கி அம்முதலைகளையும் இழுத்து வெளியேவிட, அவையும் தேவமாதர்களாய்ச் சென்றன. பின்பு அனைவரும அச்சமின்றி அத்தீர்த்தங்களில் இறங்கி நீராடலாயிற்று என்ற வரலாற்றின் விவரத்தை முதனூலால்

அறிக. தவவேள்விகள் செய்வார்க்குப் பெரும்பாலும் இடையூறுசெய்விப்பவன் இந்திரனுதலால், அவன்கட்டளையால் இவர்கள் அம்முனிவனது தவத்துக்கு இடையூறுசெய்கையிற் சாபம்நேர்ந்ததென்றுகொண்டு, 'இந்திரன் வெம்சாபம்' எனப்பட்டதென்க. அன்றி, இந்திரனென்பது தலைவனென்ற பொருளில் வருதலால், இங்கு முநீந்திரன் அதாவது முனிவர்தலைவன் என்று கொள்ளுதல நன்கு பொருந்தும்.

சந்திரனுக்கும் இராகுகேதுக்களாகிய பாம்புகளுக்கும் பகைமையுள்ளதனால், அப்படிப்பட்ட பகைமை இங்கு இல்லையென்பது தோன்ற, 'திங்களுடன் அரவு உறவுசெய்யும் வேணி' என்றார். வேணி, கோகர்ணம்-வடசொற்கள். கொந்து-கொத்து என்பதன்மெலித்தல்விகாரம். தொடை-தொடுக்கப்படுவது; ஐ-செயப்படுபொருள் விகுதி. கோகர்ணம-துளுவநாட்டில் உள்ள சிவதலம். கோகர்ணம - பசுவின்காது; இராவணன் தவஞ்செய்து தனது இலங்கை அழியாதிருத்தற்பொருட்டு அங்குத் தாபித்துப் பூசித்தற்காகப் பெற்றுச் சென்ற சிவலிங்கம் தேவர்கள் விநாயகமூர்த்தியைக்கொண்டு செய்த சூழ்ச்சியால் இடையில் தங்கிஇராவணன் இருபதுகைகளாலும் பற்றியிழுக்கவும் வாராது பசுவின்காதுபோலக் குழைந்துகாட்டிய தலமாதலால, இது, கோகர்ணமெனப்படும். சிந்துதிரை-கரைகளையழிக்கும் அலையெனினுமாம்.

[அருச்சுனன் துவாரகைசார்ந்து சந்யாசிவேஷங் கொள்ளல.]

எகூ. ஆகன்னமுறச்செம்பொன்வரைவில்வாங்கியவுணர்புரங்கட்டழித்தோனடியில்வீழ்ந்து, கோகன்னவளம்பதியிற்றன்பின்வந்தகுலமுனிவர்தமையிருத்திக்கோட்டுக்கோட்டு, நாகன்னம்பெடையுடனேயாடுங்கஞ்சநறைவாவிவண்டுவரைநண்ணியாங்கட், பாகன்னமொழிக்கனிவாய்முத்தமூரற்பாவைநலம்பெறமுக்கோற்பகவனானான்.

(இ - ள்.) ஆகன்னம் உற - காதளவும்பொருந்த, செம் பொன் வரைவில் வாங்கி - சிவந்த பொன்மயமான மேருமலையாகிய வில்லை வளைத்து (ஆதிசேஷனாகிய நாணியை இழுத்து விஷ்ணுவாகிய அம்பைத் தொடுத்து), அவுணர் புரம் கட்டு அழித்தோன் - அசுரர்கள்வசித்த திரிபுரத்தை முற்றும் அழித்தவனான சிவபிரானது, அடியில் - திருவடிகளில், வீழ்ந்து - விழுந்து [சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து], (அருச்சுனன்), கோகன்னம் வளம் பதியில்-வளப்பமுடைய அந்தக் கோகர்ணமென்ற திருப்பதியிலே, தன் பின் வந்த குலம் முனிவர்தமை இருத்தி - தன்னுடன்வந்த சிறந்தமுனிவர்களை இருக்கச்செய்து,— கோடு - நீர்க்கரைகளிலுள்ள, கோடு நாகு - சங்கின்பேடைகள், அன்னம் பெடையுடனே ஆடும் - அன்னப்பேடைகளுடனே விளையாடப்பெற்ற, கஞ்சம் நறை வாவி - தாமரைமலர்களின் நறுமணத்தையுடைய தடாகங்கள் பொருந்திய, வள் துவரை - வளப்பமுள்ள துவாரகாபுரியை, நண்ணி - சார்ந்து, ஆங்கண் - அவ்விடத்தில், பாகு அன்ன மொழி கனி வாய் முத்தம் மூரல் பாவை நலம் பெற - கருப்பஞ்சாற்றின் பாகைப்போன்ற [இனிய] சொற்களையும் கொவ்வைப்பழம்போலச் சிவந்த வாயையும் முத்துப்போல வெள்ளிய பற்களையுமுடைய சித்திரப்பாவைபோல அழகியவளான சுபத்திரையினது இன்பத்தைப் பெற(விரும்பி அதைக்குறித்து), முக்கோல் பகவன் ஆனான் - திரிதண்டத்தையுடைய சன்னியாசியாயினான்; (எ - று.)

கோகர்ணத்துச் சிவபிரான் திருநாமம் - மகாபலேசுவரர்; இப்பெயர், இராவண னிட்டது. அம்பிகை - பெரியநாயகியம்மை. ஆகர்ணம் - வடசொல் விகாரப்பட்டது. நாகு, பெடை - பெண்மைப்பெயர்கள். நீர்வாழுயிராகிய சங்கு நீர்வாழ்பறவையான அன்னத்துடன் விளையாடுமென்க. கஞ்ஜம் - வடசொல்; நீரில்தோன்றுவது; கம் - நீர். நறை - தேனுமாம். பகவன்-பகவார் என்ற வடசொல்லின் விகாரம்; நிறைந்தமகிமை, தைரியம், கீர்த்தி,

ஐசுவரியம், ஞானம், வைராக்கியம் என்ற ஆறுகுணங்களுக்கும் 'பகம்' என்று பெயராதலால், 'பகவான்' என்பதற்கு - இந்தஆறுகுணங்களையுமுடையவனென்பது பொருள். வைஷ்ணவர்களான துவாரகாவாசிகளுக்கு நம்பிக்கையுண்டாக்கும்பொருட்டு அவர்கள் மதிக்கத்தக்கதான வைஷ்ணவசன்னியாசிவேஷத்தைக் கொண்டனனென்பது, 'முக்கோற்பகவனானான்' என்றதனால் விளங்கும். (சக)

[அருச்சுனன் ரைவதககிரியில் ஓர்ஆலமரத்தினடியிற் சேர்தல்.]

ருO. வெங்கதிர்போய்க்குடதிசையில்வீழ்ந்தபின்னர்வீழாமன்மாலையின்வாய்மீண்டுமந்தச்,செங்கதிர்வந்தெழுந்ததெனமீதுபோர்த்தசெய்யவாடையுந்தானுந்தீர்த்தவாரிச், சங்கதிருமணிவீதிநகரிசூழ்ந்ததடஞ்சாரலிரைவதகசைலநண்ணிப், பொங்கதிர்பைம்புயலெழுந்துபொழியுங்கங்குற்போயொருநீள்வடதருவின்பொதும்பர்சேர்ந்தான்.

(இ - ள்.) வெம் கதிர் - உஷ்ணமான கிரணங்களையுடையவனாகிய சூரியன், போய்,— குடதிசையில் வீழ்ந்த பின்னர் - மேற்குத்திக்கில் விழுந்து மறைந்தபின்பு [சூர்யாஸ்தமனமானபின்பு],— அந்த செம் கதிர் - சிவந்தகிரணங்களையுடையனான அச்சூர்யன்தானே, வீழாமல் மாலையின்வாய் மீண்டும் வந்து எழுந்தது என - அஸ்தமித்தொழியாமல மாலைக்காலத்தில் திரும்பவும் வந்து உதித்ததுபோல, மீது போர்த்த செய்ய ஆடையும் தானும்-உடம்பின் மேல் தரித்த செந்நிறமான காஷாயவஸ்திரமும் தானுமாக, (அருச்சுனன்), தீர்த்தம் வாரி சங்கு அதிரும் அணி வீதி நகரி சூழ்ந்த தட சாரல் இரைவதக சைலம் நண்ணி-கடல்நீரிலுள்ளசங்குகள் ஒலிக்கும் அழகியவீதிகளையுடைய துவாரகாபுரியைச் சார்ந்த விசாலமான சாரல்களையுடைய ரைவதகமென்னும் மலையை அடைந்து, பொங்கு அதிர் பைம் புயல் எழுந்து பொழியும் கங்குல் போய் - பொலிவுபெற்று ஆரவாரிக்கிற காளமேகங்கள் மேலெழுந்து மழைபொழிகின்ற இராக்காலத்திலே போய், ஒரு நீள் வடதருவின் பொதும்பர் சேர்ந்தான் - உயர்ந்ததோர் ஆலமரத்தினது செறிவை அடைந்தான்.

செந்நிறவாடைபோர்த்து மேற்றிசையில் விளங்கும் அருச்சுனனுக்கு மேற்றிசையிலுதித்த சூரியனை உவமைகூறினார். 'வீழாமல் மாலையின்வாய் மீண்டும அந்தச்செங்கதிர்வந்தெழுந்தது' என்றது-இல்பொருளுவமம். வெங்கதிர், செங்கதிர் - பண்புத்தொகையன்மொழிகள்; ஆடையடுத்த சினையாகு பெயரெனினுமாம். மாலையின்வாய், வாய்-ஏழனுருபு. செய்ய ஆடை-காவி தோய்த்த உடை. 'தீர்த்தவாரிச்சங்கதிருமணிவீதி' என்ற தொடர்-வெற்றிச் சங்கு மங்கலச்சங்கு கொடைச்சங்கு என்ற சங்கவாத்தியங்கள் அந்நகரத்து வீதிகளில் எங்கும் எப்பொழுதும் முழங்குதலையும், அந்நகரம் கடல்சூழ்ந்ததாதலாற் கடல்வாழுயிரான சங்குகள் தவழ்ந்து சென்று அந்நகர்வீதிகளிலுலாவுதலையுங் குறிக்கும். சைலம்-வடசொல்; சிலைமயமானது: சிலை-கல். வடதரு - வடமொழித்தொடர். பொதும்பு என்ற மென்றொடர்க்குற்றியலுகரத்துக்கு அர்-போலி. 'புயலெழுந்து பொழியுங்கங்குல்' என்றதனால், மழைக்காலமெனவிளங்கும். ஆடையும்தானும் சேர்ந்தான்-சிறப்புப்பற்றி வந்த திணைவழுவமைதி; [நன் - பொது - உஎ.]

[மழைக்காலவருணனை.]

ருக. இந்திரற்குத்திருமதலைமன்றலெண்ணியாதவர்கோன்வளம்பதியிலெய்தினனென், றந்தரத்தைநீலத்தால்விதானமாக்கியண்டமுறவிடிமுரசமார்ப்பவார்ப்ப, வந்திரட்டைவரிசிலையாற்பஞ்சவண்ணமகரதோரணநாட்டிவயங்குமின்னான், முந்துறத்தீபமுமெடுத்துத்தாரைமுத்தான்முழுப்பொரிசிந்தினகாலமுகில்களம்மா.

(இ - ள்.) காலம் முகில்கள் - கார்காலத்து மேகங்களானவை,—இந்தி

ரற்கு திருமதலை மன்றல் எண்ணி யாதவர் கோன் வளம் பதியில் எய்தினன் என்று - (தங்களை வாகனமாகக்கொண்டு செலுத்துந் தலைவனான) இந்திரனுடைய சிறந்தகுமாரனான அருச்சுனன் விவாகத்தைக்குறித்து யதுகுலத்தார்க்குத்தலைவனான கண்ணபிரானுடைய வளப்பம்பொருந்திய நகரத்திற்கு வந்தா னென்று அறிந்து, (அவ்விவாகத்தின்பொருட்டு), அந்தரத்தை நீலத்தால் விதானம் ஆக்கி - ஆகாயத்தை நீலநிறமுள்ள பட்டினால் மேற்கட்டியமைத்து அலங்கரித்து, இடி முரசம் அண்டம் உற ஆர்ப்ப ஆர்ப்ப-இடிகளாகிய பேரிகைவாத்தியங்கள் ஆகாயத்தையளாவ மிகுதியாகஒலிக்க, வந்து—, இரட்டை வரி சிலையால் பஞ்சவண்ணம் மகரதோரணம் நாட்டி - இரட்டையாகவிளங்குகிற நீண்ட இந்திரவில்லின் தோற்றத்தால் ஐவகைநிறங்களையுடைய மகரதோரணங்களைக் கட்டிநிறுத்தி, வயங்கும் மின்னால் முந்துற தீபமும் எடுத்து - விளங்குகிற மின்னல்களினால் முற்பட விளக்குக்களையும் ஏந்தி, தாரை முத்தால் முழு பொரி சிந்தின - தாரையாகச்சொரியும் மழைத்துளிகளினால் முழுப்பொரிகளையுஞ் சிந்தின; அம்மா - ஆச்சரியம்! (எ - று.)

அம்மா - வியப்பிடைச்சொல; அசேதனமான மேகங்கள் தங்கள் தலைவனது குமாரனுடைய கலியாணத்தைக்குறித்து இவ்வளவுஜாக்கிரதையாகப் பலவகையலங்காரம் முதலிய சந்நாகங்களைச் செய்த அற்புதத்தைக்குறித்து 'அம்மா' என வியந்தன ரென்க. இந்திரற்குத் திருமதலை - நான்கனுருபு, முறைப்பொருளது. நீலநிறமானமேகங்கள் வானத்தில் இடைவிடாதுபரவி அவ்விடத்தை மறைத்ததையே 'நீலத்தால் விதானமாக்கி' என்றார். இரட்டைவரிசிலை- கிழக்கு மேற்கு என்னும் இரண்டுதிக்குக்களிலுங் காணப்படும் இந்திரவில்லின் தோற்ற மென்றுங் கொள்வர். பஞ்சவர்ணம் - வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை என்பன. மகரதோரணம்-சுறாமீன்வடிவமையத் தூக்குந் தோரணம். இந்திரவில்லில் பலவகைநிறங்களும் இருத்தல்பற்றி, 'சிலையாற் பஞ்சவண்ணமகரதோரணம் நாட்டி' என்றார். தீபமேந்துதல் - அஷ்டமங்கலத்துள் ஒன்று. நெற்பொரி சிந்துதலும் மணத்துக்கு உரியது. தாரைமுத்து - ஆலாங்கட்டியுமாம். மழைத்தாரைகளோடு சொரியும் முத்துக்களென்றலு மொன்று: முத்துப்பிறக்குமிடங்களுள் மேகமும் ஒன்றாதல் அறிக. காலமுகில்கள்-கரியமேகங்க ளெனினுமாம். முழுப்பொரி - முரிவில்லாத பொரி. தற்குறிப்பேற்றவணி. (ருக)

[அருச்சுனன் கண்ணனை நினைக்க, அப்பெருமான் அங்குத் தோன்றுதல்.]

ருஉ. யாங்கருதிவருங்கருமமுடிப்பானெண்ணிலிராமன்முதல்யதுகுலத்தோரிசையாரென்று, பாங்குடனேதனக்குயிராந்துளபமௌலிப்பரந்தாமன்றனைநினைந்தான்பார்த்தனாகப், பூங்கமலமலரோடையனையான்றானும்பொன்னெடுந்தேர்ப்பாகனுமேயாகப்போந்து, நீங்கரியநண்பினனாய்நெடுநாணீங்குநேயத்தோனினைவின்வழிநேர்பட்டானே.

(இ - ள்.) எண்ணில் - ஆலோசிக்குமிடத்து, யாம் கருதி வரும் கருமம் முடிப்பான் - நாம் நினைத்துவந்த காரியத்தை நிறைவேற்றுதற்கு, இராமன் முதல் யதுகுலத்தோர் இசையார் - பலராமன் முதலிய யதுவம்சத்தரசர்கள் உடன்படார், என்று - என்று ஆலோசித்து, பார்த்தன் - அருச்சுனன், பாங்குடனே - உரிமையுடனே, தனக்கு உயிர் ஆம் துளபம் மௌலி பரந்தாமன்தனை நினைந்தான் ஆக - தனக்கு உயிர்போன்றவனான திருத்துழாய் மாலையைத்தரித்தமுடியையுடைய ஸ்ரீகிருஷ்ணனை நினைத்தனனாக, பூ கமலம் மலர் ஓடை அனையான் - பொலிவுள்ள தாமரைமலரோடையைப் போன்றவனான அப்பெருமான், தானும் பொன் நெடுந் தேர் பாகனுமே ஆக போந்து - தானும் பொன்மயமான பெரிய தனதுதேரைச் செலுத்துகிற சாரதியுமேயாக (ஏகாந்தமாய்ப்)புறப்பட்டு, நீங்கு அரிய நண்பினன் ஆய் நெடு நாள்

நீங்கும் நேயத்தோன் நினைவின் வழி நேர்பட்டான் - பிரிதற்குஅரிய நண்பனாய்ப் பலநாளாகத் தன்னைப் பிரிந்திருந்த அன்புடையோனான அருச்சுனன் நினைத்தபடியே அவனெதிரில் வந்து தோன்றினான்; (எ - று.)

யாம் - தனித்தன்மைப்பன்மை. சர்மம் - வடசொல். முடிப்பான் - எச்சம். பரந்தாமன் என்ற வடமொழிப் பெயர் - எல்லாஒளிகளினும் மேம்பட்ட ஒளியையுடையவனென்றும், எல்லாஇடங்களினும் மேலான இடத்தையுடையவனென்றும் பொருள்படும்; தாமம்-ஒளி, இடம். "வாய் கண் கை யுந்தி பதம் கோகனகம்" என்றபடி திருக்கண்கள் திருக்கைகள் திருவடிகள் திருநாபிமுதலிய பலஉறுப்புக்கள் தாமரைமலர்போலிருக்கப் பசுஞ்சாமத்திருமேனிநிறம் தாமரையிலைபோலுதலால், 'பூங்கமலமலரோடையனையான்' என்றார். வெயிலினால் வருந்தித் தன்னையடைந்தோர்க்கு அத்தாபத்தைப் போக்கித் தண்மைசெய்யும் நீரோடைபோல ஏதேனும் இடருற்றுத் தன்னையடைந்தோர்க்கு அவ்விடர்தவிர்த்துக் குளிர்ந்தகருணை செய்பவனென்பது, 'ஓடையனையான்' என்றதனால் விளங்கும். ஓடை - (நீர்)ஓடுமிடமெனக் காரணக்குறி. கண்ணனதுதேர்ப்பாகன் - தாருகனென்பான். நெடுநாள் - இந்திரப்பிரத்தநகரப்பிரவேசத்தின் பின்புமுதல் பாகனுமே, ஏ - பிரிநிலை. நீங்குதற்கரிய நண்பனாய் நெடுநாள் நீங்கியிருந்த அன்புடையான் தன்னிடம் வந்து ஒருகுறைவேண்டியவிடத்து அவன்வேண்டியபடி அக்குறையை முடித்து உதவுதலாகிய உயிர்நண்பனது இயல்பின்படி அருச்சுனனிடத்துக் கண்ணன் நேர்பட்டனனென்பது, ஈற்றடியினால் விளக்கப்பட்டது. (ருஉ)

[கண்ணன் அருச்சுனனை வந்தகாரியம் வினவித் துவாரகைசேர்தல்.]

ருங. யதியாகியவணிருந்ததோழன் றன்னையதுகுலநாயகன்பரிவோடிறைஞ்சவன்பா, லதியானநெடுஞ்சுருதியாசிகூறியாகமுறத்தழீஇமகிழ்வுற்றாலநீழன், மதியார்செஞ்சடைமுடியோனென்னவைகிவந்தவாறுரைப்பநெடுமாலுங்கேட்டுத், துதியாடிக்காலையிலேவருதுமென்றுசொற்றிமைப்பின்மீளவும்போய்த்துவரைசேர்ந்தான்.

(இ - ள்.) யதி ஆகி அவண் இருந்த தோழன்தன்னை - சன்னியாசியாய் அவ்விடத்திலேயிருந்த நண்பனான அருச்சுனனை, யதுகுலம் நாயகன் - யதுகுலத்துக்குத் தலைவனான கண்ணன், பரிவோடு இறைஞ்ச - அன்போடு வணங்க, (அவ்வருச்சுனன்), அன்பால் - அன்போடு, அதி ஆன நெடுஞ் சுருதி ஆசி கூறி - மிகுதியான பெரிய வேதவாக்கியங்களைக்கொண்டு (கண்ணனுக்கு) ஆசீர்வாதஞ் செய்து, ஆகம் உற தழீஇ மகிழ்வுற்று - தன்மார்பிலே அவன் மார்பு பொருந்தத் தழுவி மகிழ்ச்சியுற்று, ஆலம் நீழல் மதி ஆர் செம் சடை முடியோன் என்ன வைகி - ஆலமரத்தினதுநிழலிலே சந்திரன்பொருந்திய சிவந்த சடைமுடியையுடையனான சிவபிரான்போல வீற்றிருந்து, வந்த ஆறு உரைப்ப - தான் வந்தகாரியத்தைச் சொல்ல, நெடு மாலும் - மகாவிஷ்ணுவாகிய கண்ணபிரானும், கேட்டு - (அதனைக்) கேட்டு, துதியாடி - கொண்டாடி, காலையிலே வருதும் என்று சொற்று - 'மறுநாளுதயகாலத்திலே வருவோம்' என்று சொல்லி, இமைப்பில் மீளவும் போய் துவரை சேர்ந்தான் - இமைப்பொழுதிலே [வெகுவிரைவாகத்] திரும்பவும் சென்று துவாரகையையடைந்தான்; (எ - று.)

தேவாதிதேவனான தனது நிஜவடிவத்தைவிட்டு மானுடவேடம் பூண்டு திருவவதரித்துக் கிருகஸ்தாச்சிரமதருமத்தில் நிலைநிற்கிற திருமாலாகிய கண்ணபிரான் தனது அந்நிலைமைக்கு ஏற்பச் சன்னியாசியான அருச்சுனனை நமஸ்கரிக்க, அவனும் தான் பூண்ட சன்னியாசிவேஷத்துக்கு ஏற்ப வேதமுறைப்படி ஆசீர்வாதங் கூறினனென்க. தக்ஷிணாமூர்த்திவடிவமான சிவபெருமான் கைலாசகிரியிற் கல்லாலமரத்தின்கீழ் வீற்றிருத்தலை "ஆலமர

நீழல் அறம் நால்வர்க்கு அன்றுஉரைத்த, ஆலமமர் கண்டத்து அரன்" என்ற பெரியோரருளிச்செயலினாலும் அறிக. தவவேடம் பூண்டு ஆலமரத்தின்நிழலில் வீற்றிருத்தலும் கபடநாடகசூத்திரதாரியான கண்ணபிரானால் ஒருசமயத்தில் வணங்கி யுயர்த்தப்படுதலும் பற்றி, 'ஆலநீழல் மதியார் செஞ்சடை முடியோனென்ன வைகி' என்றார். 'அதியான நெடுஞ்சுருதி ஆசிகூறி' என்ற சொற்போக்கினால், அருச்சுனன் தனதுஉண்மைநிலையின் வரம்புகடந்து வாழ்த்துக்கூறின னென்பதைப் பெறவைத்தவாறும். தமீஇ - சொல்லிசை யளபெடை. ஆலம், அம் - சாரியை. 'வருதும்' என்றது, சுற்றத்தாரையுங் கூட்டும் உளப்பாட்டுத்தன்மைப்பன்மை: இங்கு, தும் - விகுதி, எதிர்காலங் காட்டிற்று. இமைப்பு - தொழிலாகுபெயர். அதி - வடமொழியிடைச் சொல். துதி ஆடுதல் - தோத்திரஞ்செய்தல்; ஸ்துதி - வடசொல். (ருஙு)

ருச.—இச்செய்யுள் பரிசோதிக்குப் பாட மில்லை.

மறுநாளுதயத்திற் கண்ணபிரான் சொன்னபடி மழைக்காலத்து இந்திரவிழாக் கொண்டாடும்பொருட்டுத் துவாரகாபுரியிலுள்ள சகலஜனங்களோடும் ராஜகுலத்தார்களோடும் பலராமன் ரைவதககிரிக்கு வந்துசேர, அவனுடனே கண்ணன்தங்கையான சுபத்திரையும் தோழியரோடு அங்கு வந்தனள். (ருச)

[அனைவரும் அருச்சுனசன்னியாசியை வணங்கினபின்பு கண்ணன் வந்து வணங்குதல்.]

ருரு. முக்கோலுங்கமண்டலமுஞ்செங்கற்றூசுமுந்நூலுஞ்சிகையுமாய்முதிர்ந்துதோன்று, மக்கோலமனைவருங்கைதொழுதுநோக்கியருணலம்பெற்ற கன்றதற்பினனைத்துலோகத், தெக்கோலயோனிகட்குமுயிராய்த்தோற்றமீரைந்தாய்ப்பாற்கடலினிடையேவைகு, மைக்கோலமுகில்வண்ணன்றானுமெய்திமனவணக்கம்புரிவோனைவணங்கினானே.

(இ - ள்.) முக்கோலும் - திரிதண்டமும், கமண்டலமும் - ஜலபாத்திரமும், செங்கல் தூசும் - காவிவஸ்திரமும், முந்நூலும் - பூணூலும், சிகையும் - குடுமியும், (ஆகிய வைஷ்ணவசன்னியாசிகளுக்கு உரிய ஐந்து அடையாளங்களும்), ஆய் - பொருந்தி, முதிர்ந்து தோன்றும் - பூர்ணமாய விளங்குகிற, அ கோலம் - அந்தத்துறவிவடிவத்தை, அனைவரும் - (கீழ்ச்சொன்ன பலராமன்முதலியோர்) எல்லோரும், நோக்கி - பார்த்து [தரிசித்து], கைதொழுது - கைகூப்பி நமஸ்கரித்து, அருள் நலம் பெற்று - (அச்சன்னியாசியினுடைய) கருணையாகிய நல்லஅநுக்கிரகத்தைப் பெற்று, அகன்றதன் பின் - நீங்கின பின்பு,—அனைத்து லோகத்து - சகலலோகங்களிலு முள்ள, எ கோலம் யோனிகட்கும் - பலவகைவடிவமுள்ள எல்லாப்பிறப்புக்களிலும் வாழ்கிற உயிர்களனைத்துக்கும், உயிர் ஆய் - உயிராகி, தோற்றம் ஈர்ஐந்து ஆய் - பத்துவகைப் பிறப்புக்கள் கொண்டு, பாற்கடலின் இடையே வைகும் - திருப்பாற்கடலின்நடுவிலே (வியூகமூர்த்தியாய்) எழுந்தருளியிருக்கிற, மை கோலம் முகில் வண்ணன்தானும் - கருநிறமான அழகிய மேகம்போன்ற திருமேனிநிறத்தை யுடையவனான ஸ்ரீக்ருஷ்ணனும், எய்தி - அருகில் வந்து, மனவணக்கம் புரிவோனை வணங்கினான் - (தன்னை) மனத்தால்வணங்குதல்செய்பவனான அருச்சுனனை(த் தான் காயத்தால்) வணங்கினான்; (எ - று.)

முக்கோலும் கமண்டலமும் செங்கல்தூசும் முந்நூலும் சிகையும் - இவை 'துறவிகள் பஞ்சமுத்திரை' எனப்படும்; அங்கிரா வென்னும் முனிவர் கூறின யதிலக்ஷணம் இத்தன்மைத்தே: வடமொழி மகாபாரதத்திலும் இங்ஙனமே யதிலக்ஷணம் கூறப்பட்டுள்ளது; ஆசிரியர் தொல்காப்பியனார் "நூலே கரகம் முக்கோல் மணையே, ஆயுங்காலை அந்தணர்க்கு உரிய" என்றதுங் காண்க. கமண்டலம், சிகா, லோகம், யோநி-வடசொற்கள். செங்கல் -

செந்நிறமான காவிக்கல்; அது தோய்த்த ஆடை யென்க. முந்நூல் - முப்புரி நூல். தேகத்தில் ஜீவாத்மாபோல அந்தஜீவாத்மாக்களெல்லாவற்றுள்ளும் பரமாத்மா பிரவேசித்து அந்தராத்மாவாய்நின்று அவற்றை இயங்குவிக்கிற அந்தர்யாமித்வம், 'அனைத்துலோகத்து எக்கோலயோனிகட்கும் உயிராய்' என்றதனால் உணர்த்தப்பட்டது. அனைத்துலோகத்து எக்கோலயோனிகள்-இச்சருக்கத்து கஅ - ஆம் செய்யுளில் "பலபலயோனி" என்றவிடத்துக் காண்க. யோனிகட்கும், உம்மை - முற்றும்பொருளது. தோன்றுவது, தோற்றம். 'தோற்றமீரைந்து' என்றது - மத்ஸ்யம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனன், பரசுராமன், தசரதராமன், பலராமன், கிருஷ்ணன், கல்கி என்ற தசாவதாரங்களை யுணர்த்தும். கர்மவசத்தால் ஜீவாத்மாக்களுக்கு நேர்கிற ஜன்மங்கள்போலன்றி இவ்வவதாரங்கள் பரமாத்மாவினால் துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனத்தின்பொருட்டு இச்சாமாத்திரத்தாற் கொள்ளப்படுகின்றன வென்பதனை யறிக. திருமாலுக்கு மற்றும் பற்பலஅவதாரங்கள் நூல்களிற் கூறப்படினும் இப்பத்துமே முக்கியாவதாரங்களா மென வுணர்க. திருப்பாற்கடலி லெழுந்தருளியிருக்கிற வியூகமூர்த்திகள் - வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்நன், அநிருத்தன் என நான்காம். அருச்சுனன் சன்னியாசிவேட முடைமையால், காயத்தால்வணங்காதொழிந்தன னென்க. 'முகில்வண்ணன்' என்பது-காளமேகம்போன்ற நிறத்தையுடையவ னென்ற பொருளுடன், அம்மேகம்போலக் கைம்மாறுகருதாது கருணைமழைபொழியுந் தன்மைய னென்ற பொருளையுங் கொள்ளும். (௫௫)

[இதுவும், அடுத்த கவியும்-குளகம்; கண்ணன் அருச்சுனனுக்குச் சூழ்ச்சிசொல்லிச் சுபத்திரையை அம்முனிவனுக்குப் பணிவிடைபுரியுமாறு பணித்தல்.]

௫௬. துன்னியிருவருமொருப்பட்டிருந்தகாலைச்சுபத்திரையதடங்குன்றின்சூழலோர்சார், மின்னியபைம்புயலினெழிலிரேகைபோலவெளிப்படவும் மெய்புளகமேன்மேலேறிக்,கன்னியிளந்தனிக்கடம்புமலர்ந்ததென்னக்கண்ட விழியிமையாதகாட்சிகாணா, மன்னியமாதவத்தோனைமந்தமூரன்மாதவன் மைத்துனமையினான்மகிழ்ச்சிகூர்ந்தே.

(இ - ள்.) இருவரும்-(அருச்சுனன் கிருஷ்ணன் என்ற) இரண்டுபேரும், துன்னி - சந்தித்து, ஒருப்பட்டு-(மனம்) ஒருமைப்பட்டு, இருந்த காலை - (ஏகாந்தத்தில்) இருந்த பொழுது,—சுபத்திரை—, அ தட குன்றின் சூழல் ஓர் சார் - பெரிய அந்தரைவதகமலையின் சாரலில் ஓரிடத்தில், பைம் புயலின் மின்னிய எழில் இரேகை போல வெளிப்படவும் - காளமேகத்தில் மின்னிய (மின்னலின்) அழகியதோற்றம்போலத்தோன்றியவளவில், (அருச்சுனன்), மெய் மேல்மேல் புளகம் ஏறி-உடம்பு மேன்மேல் மிகுதியாக மயிர்ச்சிலிர்ப்புக் கொள்ளப்பெற்று, கன்னி இளந் தனி கடம்பு மலர்ந்தது என்ன - மிகவும் இளமையான ஒருகடப்பமரம் மலர்ந்தாற்போல, கண்ட விழி இமையாத - (அவளைப்) பார்த்த கண்கள் இமையாதபடி யிருக்கிற, காட்சி - தோற்றத்தை, காணா - கண்டு, மந்தம் மூரல் மாதவன் - புன்சிரிப்பையுடையவனான கண்ணபிரான், மைத்துனமையினால்-(தனக்கு அவன்) மைத்துனனாகும் முறைமையினால், மகிழ்ச்சி கூர்ந்து - (அவன்விஷயத்தில்) மகிழ்ச்சி மிகுந்து, மன்னிய மா தவத்தோனை - பொருந்திய சிறந்ததவவேடத்தையுடையவனான அவ்வருச்சுனனை நோக்கி, (எ-று.)—'கூறி' என அடுத்தகவியோடு தொடரும்.

ஸுபத்ரா என்ற வடமொழிப்பெயர் - நல்ல மங்களங்களை யுடையவளென்று பொருள்படும்; மங்களகரமான நல்லிலக்கணமமைந்தவ ளென்க. குன்றின் சூழலுக்குக் காளமேகமும், மெல்லிதாய் ஒல்கிஒசிந்து விளங்கும் வடிவத்தையுடைய சுபத்திரைக்கு மின்னல்ரேகையும் உவமை. ரேகா, புளகம், மந்தம்-வடசொற்கள். 'கன்னி யிளந் தனிக் கடம்பு மலர்ந்த தென்ன'

என்றது-மத்திமதீபமாய், முன்நின்ற 'மெய்புளகம் மேல்மேல் ஏறு'தற்கும், பின்நிற்கும் 'கண்டவிழி இமையா' மைக்கும் உவமையாம். மேல்மேல் - அடுக்கு, மிகுதி பற்றியது, கன்னி, இளை - ஒருபொருட்பன்மொழி. காணப்படுவது, காட்சி; 'சி' விகுதிபெற்ற தொழிலாகுபெயர். மாதவன் என்ற வடமொழிப்பெயர்—மா - இலக்குமிக்கு, தவன் - கணவன் என்று பொருள்படும். மைத்துனமை-கண்ணனுக்கு அருச்சுனன் அத்தைமகனாகும் உரிமை; கண்ணனது தந்தையான வசுதேவனுக்கு உடன்பிறந்தவளான குந்தியின் குமாரனாதல் காண்க. மைத்துனமை யென்பதற்கு வேறுசிலவகையாகவும் பொருள்கொள்ளலாம். "பெற்றம், புலியின்தோல்போர்த்து" என்றபடி அருச்சுனன் கொண்டுள்ள கபடசன்னியாசிவேஷத்தின் நிலைமையைத் திருவுள்ளம்பற்றிக் கண்ணபிரான் புன்முறுவல் கொண்டனன். (௫௬)

* ௫எ. அடிகடிருவுளத்தெண்ணமெம்மனோர்களறியினிசையலர்பலரிங் கறிவுறுமற், கடியயர்வுற்றும்பதிகொண்டடைகவென்றுங்காவலர்க்குக்கடனென்றுங்கசியக்கூறிக், கொடியிடைவெங்களபமுலைக்கன்னிமானைக்கூயணங்கேமெய்ம்மையுறக்கொண்டகோலப், படிவமுனிக்கிருபருவம்பணித்தவேவல்பரிவுடனீபுரியென்றுபணித்திட்டானே.

(இ - ள்.) 'அடிகள் திருஉளத்து எண்ணம் - சுவாமிகளுடைய திருவுள்ளக்கருத்தை, எம்மனோர்கள் அறியின் - எம்மவர்கள் அறிந்தால், பலர் இசையலர் - (அதற்குப்) பலர் இணங்கமாட்டார்: (ஆதலால்), இங்கு-இவ்விடத்தில், அறிவு உறுமல் - (அவர்கள்) அறியாதபடி [ரகசியமாக], கடி அயர்வு உற்று -(சுபத்திரையை) விவாகஞ்செய்துகொண்டு, உம் பதி கொண்டு அடைக - உமதுநகரத்துக்கு (அவளை) உடன் அழைத்துக்கொண்டு சென்று சேர்வீராக', என்றும்—, காவலர்க்கு கடன் என்றும் - '(இங்ஙனம் பலருமறியாதபடி ஒருகன்னிகையை மணந்து உடன்கொண்டுசெல்லுதல்) அரசர்கட்கு முறைமையே' என்றும், கசிய கூறி-(அவ்வருச்சுனனது மனம்) மகிழும்படி சொல்லி,—கொடி இடை வெம் களபம் முலை கன்னி மானை கூய் - பூங்கொடிபோன்ற [நுண்ணிய] இடையையும் விரும்பப்படுங் கலவைச்சந்தனமணிந்த தனங்களையுமுடைய இளமையானமான்போன்ற சுபத்திரையையழைத்து, 'அணங்கே - பெண்ணே! மெய்ம்மை உற கொண்ட கோலம் படிவம் முனிக்கு - உண்மையாகக் கொண்ட அழகிய சன்னியாசிவேஷத்தையுடைய இம்முனிவனுக்கு, நீ—, இரு பருவம்-நான்குமாசகாலம், பரிவுடன்-அன்போடு, பணித்த ஏவல் புரி - நியமித்த குற்றேவல்களைச் செய்வாய்,' என்று பணித்திட்டான் - என்று கட்டளையிட்டான் ; (எ - று.)

இராஜகன்னிகைகள் பெரியோர்சொற்படி முனிவர்கட்கு முறைதவறாது குற்றேவல்செய்து அவரநுக்கிரகம்பெறுதல் மரபாதலை, இந்தயதுகுலத்தவளான குந்தி கன்னிகையாயிருந்தபொழுது தந்தைசொற்படி துருவாசமுனிக்குப் பலநாள் பணிவிடைபுரிந்து சிறந்தஅருள்பெற்றதனாலும் அறிக. ஒருநாளுக்கு மேல் ஓர்ஊரில் தங்காமல் கிராமைகராத்திரமாய்த்திரியும் முறைமையை யுடையரான சன்னியாசிகள் மழைக்காலமாகிய நான்கு மாசங்களில் மாத்திரம் ஒரேயிடத்தில் வசித்திருக்கலா மென்பது, நூற்கொள்கை; அந்தச்சாதுர்மாஸ்யசங்கல்பவிதிப்படி இத்துறவி இப்பொழுது இங்கு நான்குமாசகாலம் இருப்ப னென்றுகொண்டு, 'இருபருவம்' என்றார். பருவம் என்பது-இரண்டுமாச மாதலை 'இளவேனிற்பருவம்' முதலிய இடங்களிலுங் காண்க; பருவம், இருது என்பன - ஒருபொருளன. 'தாதபாதா:,' 'ஆசார்யபாதா:' என்ற இடங்களில் 'பாதா:' என்ற வடசொல் உயர்ந்தோரென்ற பொருளை யுணர்த்துதல் போல, 'அடிகள்' என்ற தமிழ்ச்சொல் பெ

* இக்கவி, விலக்குதற்கு உரியது; ஆனால் விலக்கப்படவில்லை.

ரியோரென்றபொருளை யுணர்த்தி, தனித்தும் நிற்கும். இங்கு, இது - முன்னிலைப்படர்க்கை; இடவழுவமைதி: உம்முடைய என்று பொருள்; முன்னிலைப்பொருளைப் படர்க்கைச்சொல்லாற் குறித்தல், உபசாரம். எம்மனோர் - கிளைப்பெயர்; யாம் என்ற பகுதி, எம் என விகாரப்பட்டது; அன் - சாரியை; ஆர் - விகுதி; விகுதி முதல் ஆகாரம் ஓவாயிற்று. எம் அனோர் எனப்பிரித்து, எம்மோடொத்தவரென்றலும் ஒன்று. கள் - விகுதிமேல்விகுதி. பலர் அறிவுறாமல் என இயைத்தும் உரைக்கலாம். கடி - உரிச்சொல். அயர்வு - செய்தல். 'உம்' என்றது, உயர்வுப்பன்மை. "வெம்மை வேண்டல்" என்ற தொல்காப்பியத்தால், வெம்மை யென்பது-விருப்பத்தையும் உணர்த்துதலை யறிக. களபம் - யானை யெனக் கொண்டும் உரைக்கலாம். கூய், கூ - பகுதி, ய் - இறந்தகாலவினையெச்சவிகுதி. சுபத்திரையைத் துரியோதனனுக்கு மணஞ்செய்யவேண்டு மென்பது மூத்தவனான பலராமனது உத்தேசமாதலால், 'அடிகள் திருவுளத்து எண்ணம் எம்மனோர்கள் அறியின் இசையலர் பலர்' என்றான். 'காவலர்க்குக் கடன்' என்றது, இது பழியாகாது என்றற்கு. கண்ணனுக்கு அருச்சுனன்பக்கல் உள்ள சிநேகவாற்சலியம் விளங்க 'கசியக்கூறி' என்றார். (௫எ)

௫அ, ௫௯, ௬0, ௬௧, ௬௨ - இந்த ஐந்துசெய்யுள்களும் பரீக்ஷைக்குப் பாடமில்லை.

சுபத்திரை அத்துறவியை அருச்சுன னென்று அறியாமலே கண்ணன் கட்டளைப்படி அந்தப்புரத்திற் கொண்டுசென்று பலநாள் இனிது உபசரித்து வர, அருச்சுனனும் அவளிடத்து மேல்மேற் காதல் கூர்ந்தனன்.

## வேறு.

[சிலஅடையாளங்களாற் சுபத்திரை அச்சன்னியாசியைக் குறித்துச் சங்கித்தல்.]

௬௩. நல்லி லக்கணம் பலவுடை யவயவ நலத்தால்
வில்லி லக்கணத் தழும்புடைக் கரங்களான் மிகவுந்
தொல்லி லக்கணம் பலவுடைச் சுபத்திரை யொருத
னில்லி லக்கண வனையிவன் யார்கொலென் றயிர்த்தாள்.

(இ - ள்.) தொல் இலக்கணம் பல உடை சுபத்திரை - (நூல்களிற் கூறப்பட்டுத்) தொன்றுதொட்டுவருகிற உத்தமஸ்திரீலக்ஷணங்கள் பலவற்றையுமுடைய சுபத்திரையானவள்,—நல் இலக்கணம் பல உடை அவயவம் நலத்தால் - (ஆடவர்க்குஉரிய) உத்தமலக்ஷணங்கள் பலவற்றையுமுடைய (அத்துறவியினது) உறுப்புக்களின் அழகினாலும், வில் இலக்கணம் தழும்பு உடை கரங்களால் - அவன்கைகளிலுள்ள இலக்கணமமைந்த வில்லின்தழும்புகளினாலும், ஒரு தன் இல்லில் அ கணவனை - ஒப்பற்ற தன்வீட்டில் தனியனாயிருக்கிற தனக்குக்கணவனாகும் அவனை, இவன் யார் கொல் என்று மிகவும் அயிர்த்தாள் - 'இவன் யாரோ?' என்று மிகவும் சந்தேகித்தாள்; (எ-று.)

'மிகவும்' என்பதை மூன்றாமடியிலுள்ள 'உடை' என்பதனோடு இயைத்தலும் ஒன்று. 'வில் இலக்கணத்தழும் புடைக் கரங்களால்' என்பது, கரங்கள் உடை வில்தழும்பால் என மொழிமாற்றப்பட்டது. வில்தழும்பு - சீவகசிந்தாமணியில் தடமித்தனென்னும் அரசன் சீவகனது கைகளின் வில்தழும்புகண்டே அவனை விற்றொழில்வல்லவ னென்று நன்குமதித்தமை கூறுமிடத்து 'முன்கைச்சந்துக்கும் முழங்கைக்கும் இடையில் முன்கைச்சந்தைச் சேர்ந்து உத்தமவிலக்கணத்தையுடைய கைவிரல்களைந்துக்குஅருகே யானைத்தோலிற் சுண்ணம்பையுரைத்ததுபோலக் காழ்ப்பேறி வெண்ணிறங்கொண்டு சிறுமீன்வடிவமாய்த் தோன்றுகிற மூன்றுவிரல்நீளமுள்ள சிலைத்தழும்பு' என்றது முதலியன காண்க. லக்ஷணம், அவயவம் - வடசொற்கள்.

இதுமுதற் பதினாறுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய நெடிலடிநான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (௬௩)

[இதுவும், அடுத்தகவியும்-சுபத்திரைக்கும் அருச்சுனனுக்கும் சம்பாஷணை.]

௬௪. மங்கையங்கொருநாளவன்மலரடிவணங்கி
யெங்கும்வண்புனலாடுதற்கேகினீரெனினுந்
தங்குமாநகர்யாதெனத்தபோதனன்றானு
மெங்கண்மாநகரிந்திரப்பிரத்தமென்றிசைத்தான்.

(இ - ள்.) மங்கை - மங்கைப்பருவமுடையளான சுபத்திரை, அங்கு - அவ்விடத்தில், ஒருநாள்—, அவன் மலர் அடி வணங்கி - அம்முனிவனுடைய தாமரைமலர்போன்ற பாதங்களை நமஸ்கரித்து, வண் புனல் ஆடுதற்கு எங்கும் ஏகினீர் எனினும் - சிறந்த புண்ணியதீர்த்தங்களில் நீராடுதற்கு எல்லாவிடங்களிலும் சென்றீராயினும், தங்கும் மா நகர் யாது - தேவரீர் எழுந்தருளியிருக்கும் சிறந்தநகரம் எது? என - என்றுவினவ,—தபோதனன்தானும் - அம்முனிவனும், எங்கள் மா நகர் இந்திரப்பிரத்தம் என்று இசைத்தான் - எமது சிறந்தநகரம் இந்திரப்பிரத்தமென்று விடைகூறினான்; (எ - று.)

மங்கைப்பருவத்திற்கு வயதெல்லை-பன்னிரண்டு பதின்மூன்று பிராயங்கள். ஏகினீர் - உயர்வுப்பன்மை. எங்கள் என்றது, தனித்தன்மைப்பன்மை; உள்ளுறைபொருளில் உடன்பிறந்தவர்நால்வரையும் உளப்படுத்து மென்னலாம். தபோதநன்-வடசொல். தவத்தைத் தனமாக வுடையவன்; அனைவரும் செல்வத்தை விரும்பி ஈட்டிப் பாதுகாத்தல்போலத் தவத்தை விரும்பி யீட்டிப் பாதுகாப்பவன். (௬௪)

௬௫. என்றகாலையிலிந்திரன்மதலையையொழிய
நின்றபேரையநெடுங்கணாள் வினவலுநிருபன்
வென்றிமன்னவர்யாரையும்வினவினைமின்னே
மன்றலந்தொடைவிசயனைமறந்ததென்னென்றான்.

(இ - ள்.) என்ற காலையில் - என்று (முனிவன்) விடைகூறிய பொழுது,—அ நெடுங் கணாள் - நீண்டகண்களையுடையளான அச்சுபத்திரை, இந்திரன் மதலையை ஒழிய நின்ற பேரை வினவலும் - அருச்சுனனைத்தவிர மற்றைத் தருமன்முதலியோரை(க்குறித்து யோகக்ஷேமம்) விசாரித்தவளவிலே,—நிருபன் - அருச்சுனன்,—(அவளை நோக்கி), 'மின்னே - மின்னல் போன்றவளே! வென்றி மன்னவர் யாரையும் வினவினை - வெற்றியையுடைய அரசரெல்லோரையுங்குறித்து வினவினாய்: மன்றல் அம் தொடை விசயனை மறந்தது என் - வாசனையுள்ள அழகிய மலர்மாலையை யுடைய அருச்சுனனை (நீ) மறந்தது யாதுகாரணத்தால்?' என்றான் - என்றுவினவினான்.

மற்றையோரினும் அருச்சுனனுக்கு உயர்வுதோன்ற, 'மன்றலந்தொடை விசயன்' என்றான்; இங்ஙனம் அவனது சிறப்பை அவட்குப் புலப்படுத்தி 'நினது மணமாலையைப் பெறுதற்கு அவனே உரியவன்' என்று குறிப்பித்தவாறும். இந்திரன்மதலை - இந்திரனது குமாரன். 'அந்நெடுங்கணாள்' என்றவிடத்து, 'அம்' எனப் பதம்பிரித்து, அழகிய வெனினுமாம். நிருபன் - அரசன். மின்-உவமையாகுபெயர். அவள் அருச்சுனனொருவனைவிட்டு மற்றையோரையெல்லாங்குறித்து வினவியதன் காரணம், அடுத்தசெய்யுளினால் விளங்கும். மறந்தது - இறந்தகாலத் தொழிற்பெயர். (௬௫)

[இதுவும், அடுத்தகவியும் - தோழிவார்த்தை.]

௬௬. யாழின்மென்மொழியெங்கணாயகியிவளவனுக்
கூழினன்புடைமன்றலுக்குரியளாதலினால்

வாழிவெஞ்சிலைவிசயனைமறைத்தனளென்றுந்
தோழிநின்றவளொருத்திகைதொழுதனள்சொன்னாள்.

(இ - ள்.) நின்றவள் தோழி ஒருத்தி - (அப்பொழுது அங்கு) நின்ற சுபத்திரையின் தோழி ஒருத்தி, கை தொழுதனள் - (துறவியைக்) கை கூப்பிவணங்கி,—'யாழின் மெல் மொழி எங்கள் நாயகி இவள் - வீணையினிசை போல மெல்லிய [இனிய] சொற்களையுடைய எங்கள் தலைவியாகிய இவள், அவனுக்கு - அவ்வருச்சுனனுக்கு, ஊழின் அன்பு உடை மன்றலுக்கு உரியள் ஆதலினால் - முறைப்படியமைந்த அன்புடைய விவாகத்துக்கு உரியவளாதலால், வெம் சிலை விசயனை மறைத்தனள் - கொடியவில்லையுடைய அருச்சுனனைக்குறித்து (வினவாமல்) மறைத்தாள்,' என்று சொன்னாள் - என்று கூறினாள்; (எ - று.)

வாழி - அசை; [நன் - இடை. - உக, உயிர் - கஅ.] இவள் அருச்சுனனை மணஞ்செய்துகொள்ளும் விருப்புடையளாதலால் அக்காதலினாலாகிய நாணம்பற்றி, அவனை வினாவில ளென்றன ளென்பதாம். யாழ் - அதன் ஒலிக்கு முதலாகுபெயர்; "குழலினிது யாழினிது" என்னுமிடத்திற் போல. எங்கள் என்ற தன்மைப்பன்மை - பிறைத்தோழியரையும் உளப்படுத்தியது. நாயகி - வடசொல்; நாயக னென்பதன் பெண்பால். ஊழின் அன்பு - முற்பிறப்பின் வினைப்பயனது தொடர்பினா லமைந்த அன்பு எனினுமாம். ஊழின் உரியள் என்று இயைத்து, ஊழ்வினையினா லுரியவ ளென்றலு மொன்று. தொழுதனள் - முற்றெச்சம். (௬௬)

௬எ. பங்குனன்பெருந்தீர்த்தநீர்படிவதற்காகப்
பொங்குதெண்டிரைப்புவிவலம்போந்தனனென்றே
யங்குநின்றுவந்தவருரைத்தனரவனிப்போ
தெங்குளானெனத்தெரியுமோ வடிகளுக்கென்றாள்.

(இ - ள்.) 'பங்குனன் - அருச்சுனன், பெருந் தீர்த்தம் நீர் படிவதற்கு ஆக - சிறந்த புண்ணியதீர்த்தங்களில் நீராடும்பொருட்டு, பொங்கு தெள் திரை புவி வலம் போந்தனன் - பொங்குகிற தெளிவான அலைகளையுடைய கடலினாற் சூழப்பட்ட பூமியின் பிரதக்ஷிணமாகச் சென்றனன்', என்று—, அங்கு நின்று வந்தவர் உரைத்தனர் - அவ்விந்திரப்பிரத்தநகரத்தினின்று வந்தவர்கள் சொன்னார்கள்: அவன் இப்போது எங்கு உளான் என அடிகளுக்கு தெரியுமோ - அவன் இப்பொழுது எவ்விடத்திலிருக்கிறானென்று சுவாமிகளுக்குத் தெரியுமோ?, என்றாள் - என்று (அத்தோழி துறவியை) வினாவினாள்.

பங்குனன் - பல்குநன் என்ற வடசொல்லின் விகாரம். 'என' என்ற செயவெனெச்சத்துக்கு 'என்பது' எனத் தொழிற்பெயராகப் பொருள்கொண்டு அதனை 'தெரியுமோ' என்ற வினைமுற்றுச்சு எழுவாயாக்கி வாக்கியத்துக்கு முடிபு காண்க. என்றே, ஏ - அசை. தெரியுமோ, ஓ - வினா. (௬எ)

௬அ, ௬௯.—இவ்விரண்டுசெய்யுள்களும், பரீக்ஷைக்குப் பாட மில்லை.

அவைகேட்டவுடனே துறவி, 'அருச்சுனன் சௌக்கியமாய்ப் பலதிசைகளிலுஞ் சென்று தீர்த்தமாடி மங்கையின்பொருட்டு இங்குவந்து நும்மாளிகையிலிருக்கிறான்' என்றுசொன்னான்; அதுகேட்டவளவிற் சுபத்திரை அவனை அருச்சுனனென்றுஅறிந்து மனமுருகி மிக்ககாதற்குறிப்புக்கொண்டனள்.

[அச்சமயத்தில் அருச்சுனன் சுபத்திரையைக் கைபிடித்தல்.]

எ0. உகவைமுத்தமென்பவளமுகிலமுமொளிர
வகவுபச்சிளந்தோகைபோனின்றவவ்வணங்கை
மிகவிருப்பநோய்வளர்தலின்மேலுந்தமோள்விசயன்
றகவுடைத்தனதடக்கையாலவளாக்கரந்தகைந்தான்.

(இ - ள்.) உகவை - மகிழ்ச்சியினால், முத்தம் மெல் பவளமும் - முத்

துக்களையுடைய மென்மையான பவழம்போன்ற சிவந்தவாயும், நீலமும் - நீலோற்பலமலர்போன்ற கண்களும், ஒளிர-விளங்க, அகவு பசு இள தோகை போல் நின்ற - (கார்ப்பருவத்தில்) ஆடுகின்ற பசுநிறமான இளமயில்போல (க்களித்து) நின்ற, அ அணங்கை-அந்தப்பெண்ணை [சுபத்திரையை], விருப்பம் நோய் மிக வளர்தலின் மெலிந்த தோள் விசயன் - ஆசைநோய் மிகுதியாகவளர்ந்ததனால் இளைத்த தோள்களையுடைய அருச்சுனன், தகவு உடை தன தட கையால் - அழகையுடைய தனது நீண்டகையினால், வளை கரம் தகைந்தான் - வளையலை யணிந்த கையைப் பிடித்தான்; (எ - று.)

'முத்தம்' என்றது, பற்களை. பவளம், நீலம் - உவமையாகுபெயர்கள். வாயிற் பல்லினொளி எறிதுவெளித்தோன்றும்படி யுண்டான புன்னகையிலும் பார்வையிலும் காதற்குறிப்பு நன்குவெளிப்பட வென்பது, முதலடியின் கருத்து. உகவை - உகத்தல்; 'வை' விகுதிபெற்ற தொழிற்பெயர். பச்சிள - பசுமையென்றபண்பினடி தன்ஒற்று இரட்டிற்று. தகவு - தகுதி; தொழிற்பெயர்: அ - சாரியை, மற்றவை - பகுதிவிகுதிகள். அணங்கைக் கரந்தகைந்தான் - இரண்டுசெயப்படுபொருள்வந்த வினை. அணங்கைக் கரத்திலே தகைந்தான் என்றும், உருபுமயக்கமாக அணங்கினது கரத்தைத் தகைந்தான் என்றும் கொள்ளலாம். கன்னிகையாதலின், இளமயிலை உவமைகூறினார்.

[அச்செய்தியைத் தோழியர் தேவகிக்குத் தெரிவித்தல்.]

எக. தகைந்தபோதுயிர்ச்சேடியர்தவிர்கெனச்சிலசொற்
பகர்ந்துபோயொருமாதவிப்பந்தர்நற்புகுந்து
புகுந்தநீர்மையைத்தேவகியறியுமாபுகன்றார்
நகைந்தபல்பெருங்கிளைஞரிலார்கொலோவறிந்தார்.

(இ - ள்.) தகைந்த போது - (இவ்வாறு அருச்சுனசன்னியாசி சுபத்திரையைக்) கைபிடித்த பொழுது, உயிர் சேடியர் - (அருகிலிருந்த அவளுடைய) உயிர்போன்ற தோழியர், தவிர்க என சில சொல் பகர்ந்து போய் '(இத்தன்மையை) ஒழிவாயாக' என்று சிலவார்த்தைகளைச் சொல்லி விலகிச்சென்று, ஒரு மாதவி பந்தரில் புகுந்து - (அச்சுபத்திரையுடனே) குருக்கத்திப்பந்தலொன்றிலே பிரவேசித்து, (பின்பு), புகுந்த நீர்மையை தேவகி அறியும் ஆ புகன்றார் - நடந்தசெயலை (அவள்தாயான) தேவகி அறியும்படி சொன்னார்கள்; அகைந்த பல் பெரு கிளைஞரில் ஆர் கொலோ அறிந்தார் - (இங்ஙனம் அச்செய்தியைத் தேவகியொருத்தி அறிந்தனளே யன்றி) நெருங்கின பல பெரியசுற்றத்தாரில் எவர் (அதனை) அறிந்தவர்? [ஒருவருமில்லை யென்றபடி]; (எ - று.)

தவிர்கென - விகாரம். பந்தர் - போலி. ஆ - ஆறு என்பதன் விகாரம். கிளைஞர் - கிளைபோல ஒருவரைத் தழுவியவர்; ஞ் - பெயரிடைநிலை. மாதவி - வடசொல்.

எ0 - ஆம் செய்யுள்முதல் நான்குசெய்யுள்கள் அந்தாதித்தொடையமையப் பாடப்பட்டுள்ளவாறு காண்க. (எக)

[அந்நாளிற் கண்ணன் அனைவரையும் வேறுவியாஜத்தால் வேறிடத்துக்கு அழைத்துக்கொண்டு செல்லுதல்.]

எஉ. அறிவுறுவகையலாயுதன்முதல்வடமதுரை
செறியும்யாதவர்யாரையுந்தன்னுடன்சேர்த்து
மறிகொள்செங்கையன்விழாவயர்வான்பெருந்தீவி
லுறியில்வெண்டயிருண்டவன்கொண்டுசென்றுற்றான்.

(இ - ள்.) அறிவு உறு வகை (இச்செய்தியை) அறியவொண்ணாதபடி, அலாயுதன் முதல் வடமதுரை செறியும் யாதவர் யாரையும் - பலராமன்முதலாக வடமதுரையில் (முன்பு) இருந்தவர்களான யதுகுலத்துவீரர்களெல்

லாரையும், தன்னுடன் சேர்த்து - தன்னோடு கூட்டி, மறி கொள் செம் கையன் விழா அயர்வான் பெருந் தீவில் கொண்டு சென்று உற்றான் - மானையேந்திய சிவந்த கையை யுடையனான சிவபிரானுக்குத் திருவிழாச் செய்யும் பொருட்டு மகாத்வீபமென்ற இடத்துக்கு அழைத்துக்கொண்டுபோய்ச் சேர்ந்தான்: (யாவனெனில்),—உறியில் வெள் தயிர் உண்டவன் - (கோபஸ்திரீகள்) உறியில் வைத்திருந்த வெண்ணிறமான தயிரை இளமையிற் களவாடி அமுதுசெய்தவனான கண்ணபிரான்; (எ - று.)

'வடமதுரை' என்றது, தென்மதுரையினின்று பிரித்துக்காட்டுதற்கு; இனம் விலக்கவந்த அடைமொழி யடுத்த பெயர். த்வாரகையிலுள்ளார் யாவரும் மதுரையினின்று வந்தவராதல், திரௌபதிமாலையிட்டசருக்கத்து ஈங-ஆம் கவியினாலும் விளங்கும்; அதுபற்றியே, மேற் காண்டவதகனச் சருக்கத்திலும் "வடமதுரையினுந் தென்மதுரையினு மதிகுலநிருபர் கன்னியரைக், கடிமணம் புரிந்தோன்" என்பர். மறி-இளமைப்பெயர். அயர்வான்-எச்சம். தீவு - த்வீப மென்ற வடசொல்லின் சிதைவு; கடல்சூழ்ந்த பூமி. மாயவ னென்றதற்கு, 'உறியில் வெண்டயிருண்டவன்' என்றார். உறு - ஈறு கெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். (எஉ)

எங.—இச்செய்யுள், பரிக்ஷைக்குப் பாடமில்லை.

ஏகாந்தமான அன்றைநாளிரவில் அருச்சுனன் இந்திரனையும் சுபத்திரை கண்ணனையும் நினைக்க, இருவரும் அவர்களருகில் வந்து சேர்ந்தனர்.

[தேவேந்திரனைக் கண்ணபிரான் எதிர்கொள்ளுதல்.]

எச. இந்திராணியோடெய்தியவிந்திரன்றன்னை
யிந்திராபதியெதிர்கொளத்துவரைமாமூதூர்ச்
சந்திராதவமண்டபத்திடுபொலந்தவிசில்
வந்திராவணங்கியதிருமகனுடன்மகிழ்ந்தான்.

(இ - ள்.) இந்திராணியோடு எய்திய இந்திரன்தன்னை - இந்திராணியுடனே வந்த இந்திரனை, இந்திராபதி எதிர்கொள - இலக்குமிக்குக்கணவனான கண்ணன் எதிர்கொள்ள, (அவன்), துவரை மா மூதூர் - பெரிய பழமையான அத்துவாரகாபுரியில், சந்திர ஆதவ மண்டபத்து இடு பொலம் தவிசில் வந்து இரா - சந்திரசூரியர்போல விளங்குகிற மண்டபத்திலே யிட்ட பொன்மயமான ஆசனத்தில் வந்து வீற்றிருந்து, வணங்கிய திருமகனுடன் மகிழ்ந்தான்-(தன்னை)வணங்கின (தனது) சிறந்தகுமாரனான அருச்சுனனுடன் கூடி மகிழ்ந்தான்; (எ - று.)

இந்த்ராணீ, இந்த்ரன், இந்திராபதி - வடசொற்கள். இந்திராணி - இந்திரன்மனைவி. இந்த்ரன், இந்திரா என்ற பெயர்கள்-ஐசுவரியமுடையவரென்று பொருள்படும். இங்கு 'இந்திரா' என்றது-திருமகளின் திருவவதாரமான ருக்மிணிப்பிராட்டியின்மேல் நிற்கும். மதுராபுரியி லிருந்த பிராணிகள்யாவும் அங்குப்போலவே கண்ணனருளால் துவாரகாபுரியிற் பழங்குடியாய் இனிது வீற்றிருந்தமை தோன்ற, 'மூதூர்' எனப்பட்டது. சந்த்ராதபர்-தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர்; பன்மைவிகுதிபெற்ற உயர்திணையும்மைத்தொகை; "சிலவிகாரமா முயர்திணை" என்பதனால், ஈறுகெட்டது. ஆதபன்-நன்றாகத் தபிப்பவன்: சூரியன். சந்திராதவ மண்டபம் - உவமைத்தொகை. இனி, சந்திர ஆதவம் மண்டபம் எனப் பதம்பிரித்து, சந்திரனது ஒளிபோல விளங்கும் மண்டப மெனினு மாம்; ஆதவம் - ஒளி; (இரவாதலாற்) சந்திரனது ஒளியான நிலாத் தவழப்பெற்ற மண்டபமு மாம். இரா - இருந்து; செய்யா என்னும்வாய்பாட்டு உடன்பாட்டிறந்தகாலவினையெச்சம். இனி, 'இரா' என்பதற்கு - (அந்த) இரவில் என்றும் பொருள்கொள்ளலாம்; ஏழாம்வேற்றுமைத்தொகை. (எச)

[இந்திரனும் இந்திராணியும் தமது ஆபரணங்களினால் முறையே அருச்சுனனையும் சுபத்திரையையும் அலங்கரித்தல்.]

எரு. பொருவரும்புருகூதனும்புலோமகன்னிகையு
மிருவருந்தமகலன்களாலிவரிருவரையு
மருவரும்படியணிதலினணிகெழுவனப்பா
லொருவரும்பிறரொப்பலரென்னுமாறுயர்ந்தார்.

(இ - ள்.) பொருவு அரும் புருகூதனும் புலோமகன்னிகையும் இருவரும் - ஒப்பற்றவர்களான இந்திரனும் புலோமாவென்பவனது மகளான இந்திராணியும் ஆகிய இரண்டுபேரும், தம கலன்களால் - தங்கள் ஆபரணங்களினால், இவர் இருவரையும் (அருச்சுனனும் சுபத்திரையுமாகிய) இவர்கள் இரண்டுபேரையும், மருவரும்படி அணிதலின் - பொருத்தமாக அலங்கரித்ததனால், (அவ்விருவரும்), அணி கெழு வனப்பால் - தங்கள் இயற்கையழகின் மீது நிறைந்த செயற்கையழகினால், ஒருவரும் பிறர் ஒப்பு அலர் என்னும் ஆறு உயர்ந்தார் - பிறரொருவரும் (தங்கட்கு) உவமையாகாரென்னும்படி சிறப்புற்றார்கள்; (எ - று.)

புருஹூதன் - வடசொல்: புருவென்னும் அசுரனைக் கொன்றவனென்றும், (யாகங்களில்) மிகுதியாக அழைக்கப்படுகிறவனென்றும் பொருள்படும். மருவு என்ற வினைப்பகுதியே வா என்ற துணைவினை சேர்ந்து விகாரப்பட்டு, மருவரு என நின்றது. (எரு)

[கண்ணனது சங்கல்பத்தால் வசிஷ்டன்முதலிய முனிவர்கள் அங்கு வந்துசேர்தல்.]

எசு. பாலருந்ததிநறுநெய்யாய்ப்ப டியிற்கள்ளத்
தாலருந்ததிவிரகனதருளினால்விரைவிற்
சாலருந்ததிதலைவனுந்தலைபெறும்பலநுண்
ணூலருந்தியுறப்புகுந்தாசிகணுவன்றார்.

(இ - ள்.) ஆய்ப்பாடியில்-இடைச்சேரியில், பால்-பாலையும், அருந் ததி-அருமையான தயிரையும், நறு நெய் -நறுமணமுள்ள சிறந்த வெண்ணெயையும் நெய்யையும், கள்ளத்தால் அருந்து-களவினாலெடுத்து உண்ட, அதிவிரகனது-மிக்கதந்திரமுடையவனான கண்ணபிரானது, அருளினால்—, சால் அருந்ததி தலைவனும்- (கற்பினால்) நிறைந்த அருந்ததியின் கணவனான வசிஷ்டனும், தலை பெறும் பல நுண் நூலருந் - தலைமைபெற்ற பல நுட்பமான நூல்களை யுணர்ந்த முனிவர்களும், விரைவில்-விரைவாக, ததி உற புகுந்து-கூட்டமாக வந்து, ஆசிகள் நுவன்றார் - ஆசீர்வாதங்களைச் சொன்னார்கள்.

ததி - வடசொல். ஆய்ப்பாடி - கோகுலமெனப்படுகிற இடம். 'ஆய்' என்பது - 'வேடு' என்பது போல, சாதியை யுணர்த்தும். ஆய்ப்பாடி - இடையரது ஊரென்க. ததி - வரிசை. இச்செய்யுளில் 'திரிபு' என்னுஞ் சொல்லணி யிருத்தல் காண்க. (எசு)

[சுபத்திராகல்யாணம்.]

எஎ. தொடங்கினநாதவெம்முரசுடன்சுரிமுகந்தழங்கச்
சடங்கினாலுயராகுதித்தழலவன்சான்றா
விடங்கினான்மிகுவிசயனக்கன்னியைவேட்டான்
மடங்கினார்சமபதிதொறுமவ்வழிவந்தார்.

(இ - ள்.) நாதம் வெம் முரசுடன் - ஓசையையுடைய விரும்பப்படும் முரசவாத்தியங்களோடு, சுரிமுகம் - சங்கவாத்தியங்கள், தழங்க - ஒலிக்க, சடங்கினால் உயர் ஆகுதி தழலவன் சான்று ஆ - வைதிகச்சடங்கினாற்சிறந்த ஆகுதியை யுடைய அக்கினிதேவன் சாக்ஷியாக, விடங்கினால் மிகு விசயன் அ கன்னியை தொடங்கி வேட்டான் - அழகினால் மிக்க அருச்சுனன்

அச்சுபத்திரையை முயன்று மணஞ்செய்தான்; (பின்பு), அ உழி வந்தார் தம பதிதொறும் மடங்கினார் - அவ்விடத்தில வந்த இந்திரன்முதலியோர் தம்தம் இருப்பிடங்கட்கு மீண்டு சென்றார்கள் ; (எ - று.)

நாதம் - வடசொல. மணமுரசு என்றதற்கு, 'வெம் முரசு' என்றார். சுரி முகம் - சுழிந்த முக முடைய தெனப் பொருள்படும் காரணக்குறி ; வினைத் தொகையன்மொழி. சடங்கினோடுயர் ஆகுதித் தழலவன் - ஓமாக்கினி யென்றபடி. ஆஹுதி - வடசொல்; மந்திரபூர்வமாக அக்கினியில் ஓமஞ்செய்யப்படும் நெய்ம் முதலியன. விடங்கு - ஆண்மையுமாம். 'மடங்கினார்' என்ற சொல்லின் ஆற்றலால், பிரதியாத்தபடி ஆரவாரமின்றி வந்தபடியே மீண்டன ரென்பது விளங்கும். தொடங்கி வேட்டா னென இயையும். தொடங்கி முழங்க என்று இயைத்து, (முழக்குபவர்களால்) தொடங்கப்பட்டு முழங்க எனினுமாம். (எஎ)

[மணவினை முடித்தபின்பு கண்ணன் அருச்சுனனை நகையாடுதல்.]

எஅ. முன்னம்யாவையுமுடித்தருண்மொய்துழாய்முடியோன்
கன்னனாருயிர்கொளவளர்காளையைத்தழீஇக்கொண்
டன்னமென்னடையர்வையர்பொருட்டுநீயின்ன
மென்னவென்னமாதவவுருக்கொள்ளுதியென்றான்.

(இ - ள்.) முன்னம் யாவையும் முடித்தருள் - முன்னின்று (இவ்விவாகத்துக்கு உரியவை) எல்லாவற்றையும் நிறைவேற்றியருளிய, மொய் துழாய் முடியோன் - நெருங்கிய திருத்துழாய்மாலையை யணிந்த திருமுடியை யுடையவனான கண்ணன், கன்னன் ஆர் உயிர் கொள வளர் காளையை தழீஇக் கொண்டு - கர்ணனுடைய அருமையான உயிரைக் கவர வளர்கிற இளவீரனான அருச்சுனனைத் தழுவிக்கொண்டு, "நீ—, அன்னம் மெல் நடை அரிவையர்பொருட்டு - அன்னப்பறவையினது மந்தகதிபோன்ற மென்மையான நடையை யுடைய மகளிரைத் தழுவுதற்காக, இன்னம் என்ன என்ன மா தவம் உரு கொள்ளுதி - இன்னமும் என்னஎன்ன பெரிய தவவேடத்தைக் கொள்வாயோ?" என்றான் - என்று நகையாடிச் சொன்னான்; (எ - று.)

காரியத்தைமுடித்தபின்பு உண்டான களிப்பினாலும், மைத்துனமையினாலும், இங்ஙனம் தகுதியாகப் பரிகசித்தன னென்க. முன்னம் - விரைவாக எனினுமாம். அருச்சுனனது வீரத்தை விளக்குவார், 'கன்னனாருயிர்கொள வளர்காளை' என்றார். காளை - இளவெருது; வீரனுக்கு உவமையாகுபெயர்: நடை வலிமை காம்பீரியங்களில் உவமை. (எஅ)

வேறு.

[கண்ணன்கட்டளையால் சுபத்திரை தேர்செலுத்த அருச்சுனன் துவாரகாபுரியினின்று இந்திரப்பிரத்தநகரஞ் சேர்தல்.]

எகூ. காமற் பயந்தோன் றனதேவலிற் காம பாலன்
வாமப் பதிதன் னினும்வாசவ மாபி ரத்த
நாமப் பதியே திசையாக நடக்க லுற்றான்
றாமக் குழலா டனித்தேர்விடச் சாப வீரன்.

(இ - ள்.) காமன் பயந்தோன் தனது ஏவலின் - மன்மதனைப் பெற்றவனான கண்ணபிரானது கட்டளையினால், சாபம் வீரன்-வில்வீரனான அருச்சுனன், தாமம் குழலாள் தனி தேர் விட - மாலையையணிந்த கூந்தலை யுடையவளான சுபத்திரை ஒப்பற்றதேரைச் செலுத்த, காமபாலன் வாமம் பதி தன்னினும் - பலராமனுடைய அழகிய துவாரகாபுரியினின்றும், மா வாசவ பிரத்தம் நாமம் பதியே திசை ஆக நடக்கல் உற்றான் - பெரிய இந்திரப்பிரத்தமென்னும் பெயரையுடைய நகரமே தான்நோக்கிச்செல்லுந் திசையாகச் செல்பவனானான்; (எ - று.)

காமற் பயந்தோன் - "இயல்பின் விகாரம்". பலராமன் கண்ணனுக்குத் தமையனாதலாலும், கண்ணனை அவன்கீழ் அடங்கியொழுகியதனாலும், துவாரகை 'பலராமனுடைய ஊர்' எனப்பட்டது. காமபாலனென்ற வடமொழிப் பெயர் - காமத்தைக் காப்பவனென்று பொருள்படும்; காமம் - அடியார்களுடைய விருப்பம். இந்திரப்பிரத்தநகரமுள்ள திசையையே நோக்கிச் சென்றானென்க. பதிதன்னின் என்றவிடத்து, ஐந்தனுருபு - நீக்கப்பொருளது. தனித்தேர் - தனித்த தேர் எனினுமாம். ராஜஸ்தர்கள்சிலர் தேர்செலுத்த வல்லராதலை, சம்பராசுரனோடு பொருகையில தசரதசக்கரவர்த்திக்குக் கைகேயி தேர்செலுத்தினளென்ற வரலாற்றினாலும் அறிக. சாபவீரன் - வடமொழித்தொடர். மன்மதன் உருமாபின்மகனாதலும், மன்மதாம்சமான பிரத்யும்நன் கண்ணன் மகனாதலும் பற்றி, கண்ணனுக்கு 'காமற் பயந்தோன்' என ஒருபெயர் கூறினார். ஏவலின், ஐந்தனுருபு - ஏது. வாமம், நாமம், சாபம்-வடசொற்கள். பதியே, ஏ - பிரிநிலை.

இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும பன்னிரண்டுகவிகள்-திரௌபதிமாலையிட்டசருக்கத்து எக - ஆம் கவிபோன்ற கலிநிலைத்துறைகள். ()

அச்செய்தியைக் கண்ணன் பலராமனுக்கு ஒருவாறு தெரிவித்தல்.]

௪௦. வென்றித்துவரைநகர் காவலர்தமை வென்று
மன்றற்குழலினிளையாளை வலிதினெய்திக்
குன்றச்சிறகரிந்தோன்மகன்கொண்டுபோனா
னென்றப்பலற்குக்கடல்வண்ணனியம்பினனே.

(இ - ள்.) 'குன்றம் சிறகர் அரிந்தோன் மகன் - மலைகளின்சிறகுகளைத் துணித்திட்டவனான இந்திரனுடைய குமாரனாகிய அருச்சுனன், வென்றி துவரை நகர் காவலர்தம்மை வென்று - வெற்றியையுடைய துவாரகாபுரியைக் காவல்செய்தவர்களான வீரர்களை(ப் போரில்) சயித்து, மன்றல் குழலின் இளையாளை - நறுமணமுள்ள கூந்தலையுடைய (நமது) தங்கையை, வலிதின் எய்தி கொண்டுபோனான்-பலாற்காரமாக வந்துகொண்டுபோயினான்', என்று —, அப் பலற்கு அந்தப்பலராமனுக்கு, கடல் வண்ணன் இயம்பினன் - கடல் போலுங் கருநிறமுடையனான கண்ணன் செய்தி கூறினான்; (எ - று.)

இங்கு 'மன்றல்' என்றது - உத்தமஸ்திரீலக்ஷணமான கூந்தலின் இயற்கைநறுமணத்தையும், நறுநெய்பூசுதல் நறும்புகையேற்றல் நறுமலர்சூடுதல் என்பவற்றாலாகுஞ் செயற்கைநறுமணத்தையும் உணர்த்தும். இளையாள் - இளமையுடையவள். சிறகர் - சிறகுஎன்ற உயிர்த்தொடர்க்குற்றியலுகரத்துக்கு, அர் - போலி. குன்றம், அம் - சாரியை. முன்னொருகாலத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போல இறகுஉடையனவாயிருந்து அவற்றால் உலகமெங்கும் பறந்து திரிந்து பலவிடங்களின்மேலும் இருந்து அவ்வவ்விடங்களையெல்லாம் ஆங்காங்குள்ள பிராணிகளுடனே சிதைத்து வர, அக்கொடுமையை முனிவர்முதலியோரா லறிந்த திரிலோகாதிபதியான இந்திரன் சினந்துசென்று தன துவச்சிராயுதத்தினால் அவற்றின்சிறகுகளையெல்லாம் அரிந்து தள்ளிவிட்டன னென்பது கதை. பலனென்ற வடமொழிப்பெயர் - பலமுடையவனென்று பொருள்படும்; பலபத்ரன், பலதேவன், பலராமன் என்ற பெயர்களும் இதுபற்றியனவே. பிறரெவராலும் வெல்லுதற்கு முடியாமல் தாம் அனைவரையும் வென்றவர்களான துவாரகைகாவல்வீரர்களையெல்லாம் வெல்லுதற்கு ஏற்ற அருச்சுனனது சிறப்புடைமை தோன்ற 'குன்றச்சிறகர் அரிந்தோன் மகன்' என்றான். அப்பலனென்பதில், அகரச்சுட்டு - பலராமன் சுபத்திரையைத் துரியோதனனுக்கு மணஞ்செய்துகொடுக்குங் கருத்துடையனாயிருந்தமையைக் குறிப்பிக்கும். (௪௦)

[உடனே பலராமன் சேனையுடன் அருச்சுனனைத் தொடர்ந்து பொருதல்.]

அக. சேலாம்பிறப்பிற்றிருமாலிதுசெப்புமுன்னே
காலாந்தகனும்வெருவுந்திறற்காளைதன்னை
நீலாம்பரனும்யதுவீரநிருபர்யாரு
நாலாம்படையோடெதிர்சூழ்ந்தமர்நாடினாரே.

(இ - ள்.) சேல் ஆம் பிறப்பின் திருமால் இது செப்பும் முன்னே - மத்ஸ்யாவதாரஞ்செய்தவனான கண்ணபிரான் இவ்வார்த்தையைச் சொல்லு முன்னே [சொன்னவுடன் விரைவிலே யென்றபடி], நீல அம்பரனும் - நீல வஸ்திரத்தையுடையவனான பலராமனும், யது வீர நிருபர் யாரும் - (மற்றும்) யதுகுலத்துவீரர்களான அரசர்களெல்லோரும், நால் ஆம் படையோடு - நால் வகைப்பட்ட சேனையுடனே, காலஅந்தகனும் வெருவும் திறல் காளைதன்னை - பிரளயகாலத்துயமனும் அஞ்சும்படியான வலிமையையுடைய வீரனான அருச்சுனனை, எதிர் சூழ்ந்து அமர் நாடினார் - எதிர்த்துச் சூழ்ந்து போர் செய்யத் தொடங்கினார்கள்; (எ - று.)

முன்னொருகாலத்திலே பிரமதேவன் கண்துயிலுகையில், சோமகனென்னும் அசுரன் வேதங்களையெல்லாங் கவர்ந்துகொண்டு கடலினுள் மறைந்துசெல்ல, பிரமன் முதலியதேவர்களின் வேண்டுகோளினால் திருமால் ஒரு பெருமீனாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனைத் தேடிப் பிடித்துக்கொன்று, அவன் கவர்ந்துசென்ற வேதங்களை மீட்டுக்கொணர்ந்து, பிரமனுக்குக் கொடுத்தனன் என்பது, மத்ஸ்யாவதாரகதை. முதலவதாரத்தைக் கூறினது, மற்றையவதாரங்களுக்கும் உபலக்ஷணம். தனதுநிலைமைகுலைந்தாயினும் துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ் செய்யுந் திருவருட்சிறப்புடையானென்பது, 'சேலாம்பிறப்பிற் றிருமால்' என்றதனால் விளங்கும்.

காலாந்தகன், நீலாம்பரன் - தீர்க்கசந்திபெற்ற வடசொற்கள். அந்தம் - நாசம்: அதனைச் செய்பவன், அந்தகன். காலாந்தகன் என்பதற்கு - சர்வசங்கரகர்த்தாவான பிரளயகாலருத்திரனென்று பொருள்கொள்வாருமுளர். உடை - உயர்வுசிறப்பு. பலராமன் நீலநிறமுள்ள ஆடையை யுடையவனாதல், திரௌபதிமாலையிட்டசருக்கத்து சO-ஆம் செய்யுளிலுங் கூறப்பட்டது. நாலாம்படை - ரதகஜதுரகபதாதி யென்னுஞ் சதுரங்கசேனை. எத்துணை வீரர்களையும் வெல்லும் ஆற்றலுடையான் அருச்சுனனென்பது, இரண்டாமடியில் விளங்கிற்று. (அக)

[அருச்சுனன் சுபத்திரைக்குத் தேறுதல்கூறி, அனைவரையும் வெல்லுதல்.]

எஉ. அஞ்சேலமரினுமார்தம்மையுமாவிகொள்ளேன்
செஞ்சேலனையவிழியாயெனத்தேற்றியந்த
மஞ்சேயனையதடந்தேரவளூரவந்த
வெஞ்சேனைமுற்றும்புறந்தந்திடவென்றுபோனான்.

(இ - ள்.) 'செம் சேல் அனைய விழியாய் - செம்மையான சேல்மீன் போன்ற கண்களை யுடையவளே! அஞ்சேல் - அஞ்சாதே: அமரில் - போரில், ஆர்தம்மையும் ஆவி கொள்ளேன் - நின்சுற்றத்தாரையும் உயிர்கவரேன்,' என தேற்றி - என்று (சுபத்திரைக்குத்) தேறுதல் கூறி, அந்த மஞ்சே அனைய தட தேர் அவள் ஊர - (விரைவினாலும் பருமையினாலும்) மேகத்தையே போன்ற பெரிய அத்தேரை அச்சுபத்திரையே செலுத்த, வந்த வெம் சேனை முற்றும் புறம்தந்திட வென்று போனான் - (தொடர்ந்தெதிர்த்துப் போர்க்கு) வந்த பயங்கரமான அந்த யாதவசேனைமுழுதும் (தோற்று) முதுகுகொடுக்கும்படி (அதனைச்) சயித்துச் சென்றான், (அருச்சுனன்); (எ - று.)

ஒருவரையுங் கொல்லாமலே அனைவரையும் அஞ்சியோடும்படிசெய்து வென்ற அருமைத்திறமை, இங்கு விளங்கும். தனது கணவன், தனதுபிற

ந்தகத்துச் சுற்றத்தார் என்ற இருதிறத்தாரில் எவர்க்கேனும் தீங்குநேர்ந்திடுமேயென்று இருதலைக்கொள்ளியி னிடைப்பட்ட எறும்புபோல அஞ்சிய தனதுகாதலியினது வருத்தத்தைத் தவிர்த்தற்கு, 'அஞ்சேல்' என அபயங் கூறினான். 'நுமர்தம்மையும் ஆவிகொள்ளேன்' என்ற எச்சவும்மையால், எம்மையும் பாதுகாத்துக்கொள்வே னென்றதைப் புலப்படுத்தினான். இங்ஙனம் யார்க்குஞ் சிறிதும் அபாயமின்றி நாம் கருதியபயனைக் கைகூடச்செய்வே னென்று தனதுஆற்றலை வெளியிட்டவாறும்; அருச்சுனனது பேராற்றலைப் பலவாறு கேள்வியுற்றிருந்தும் பகளிர்க்குஉரிய மேதைமையினாற் சுபத்திரை சமயத்திற் சங்கிக்க, அச்சங்கையை நீக்கும்பொருட்டு, அருச்சுனன் தனது அற்புதசாமர்த்தியத்தை எடுத்துக்காட்டநேர்ந்தது: தன்னுடைய ஆற்றலுணரா ரிடைத் தன்னைப்புகழ்தல் தக்கார்க்குத் தகுதியாதல் அறிக. அஞ்சேல்-எதிர் மறையொருமையேவல்: ஏல் - விகுதி. நுமர்-கிளைப்பெயர்; நீர்-என்ற பகுதி 'நும்' என விகாரப்பட்டது. சுபத்திரை தன்கொண்ட அச்சத்தாற் கண்கள் பிறழ மருண்டுநோக்குதல்பற்றி, அவளை 'செஞ்சேலனைய விழியாய்' என விளித்தான். மஞ்சே, ஏ - பிரிநிலையோடு, உயர்வுசிறப்பு. கண்களில் உத்தமவிலக்கணமான செவ்வரேகைகளின் அமைதியோடு, கலக்கத்தாலாகிய செம்மையும் விளங்க, உபமானமாகிய சேலுக்கு 'செம்மை'என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. மகாவீரனான அருச்சுனனொருவனே யன்றி மற்றெந்த வீரராலும் இங்ஙனம் எளிதில் வெல்லத்தக்கசேனை யன்று என்பது, 'வெஞ் சேனை' என்றதனால் விளங்கும்; பகைவர் கண்டவளவில் அஞ்சும்படி வெவ் விதாகவுள்ள சேனையைத் தன்னைக்கண்டவளவில் அஞ்சும்படி செய்தனன் தனதுதிவ்வியசக்தியினா லென்க. (௮௨)

[தருமன்முதலியோர் எதிர்கொள்ள அருச்சுனன் இந்திரப்பிரத்தஞ்சேர்தல்.]

௮௩. மடைபட்டவாளையகினாறுமருதவேலி
யிடைபட்டதங்கள்வளநாடுசென்றெய்தியாங்குத்
தொடைபட்டதிண்டோளறன்காளைதுணைவரோடு
நடைபட்டுருகியெதிர்கொள்ளநகர்புக்கான்.

(இ - ள்.) மடை பட்ட வாளை - நீர்பாயும்மடையிற் பொருந்திய வாளைமீன்கள், அகில் நாறும் - அகிற்கட்டையின் நறுமணம் வீசப்பெற்ற, மருதம் வேலி இடை - கழனிகளாகிய மருதநிலத்துக்கு இடையிலே, பட்ட - பொருந்திய, தங்கள் வளம் நாடு - வளப்பம்மிக்க தங்கள்நாட்டை, சென்று எய்தி - போய்ச்சேர்ந்து, ஆங்கு - அவ்விடத்தில், தொடை பட்ட திண் தோள் அறன் காளை துணைவரோடு உருகி நடைபட்டு எதிர்கொள்ள - பூமாலைபொருந்திய வலிய தோள்களை யுடைய தருமபுத்திரன் தம்பியர்மூவருடனே அன்பினால் மனமுருகி நடந்துவந்து எதிர்கொள்ள, நகர் புக்கான் - இந்திரப்பிரத்தநகரை யடைந்தான்; (எ - று.)

யாற்றுநீர் மலையினின்று அகிலை அடித்து வருதலால், அந்நீர்பாயும் மடையிலுள்ள வாளை அதன்மணம் நாறு மென்க. மிக்கஅன்பினால், நெடுங் காலம் பிரிந்துவந்த தம்பியைத் தமையனார் எதிர்கொண்டன ரென்க. தீர்த்த யாத்திரையின்பொருட்டு நியமங்கொண்ட பன்னிரண்டுவருஷகாலம் தீர்த்த யாத்திரைசெய்தன னென முதனூல் கூறும். (௮௩)

[கண்ணன், பலராமனுடன்சென்று அருச்சுனனைச் சமாதானப்படுத்தி, அந்தமணமகனுக்கும் மணமகளுக்கும் மணச்சிறப்புக்கள் கொடுத்தல்.]

௮௪. முன்போர்விளைத்தமுசலப்படைமொய்ம்பினானுந்
தன்போலுயர்ந்தோரிலனானதடங்கண்மாலும்
பின்போயினியமொழியாயிரம்பேசிமன்றற்
கன்போடுதவுமுபசாரமனைத்துமீந்தார்.

(இ - ள்.) முன் போர் விளைத்த முசலம் படை மொய்ம்பினும் - தலைமையாய் நின்று (அருச்சுனனுடன்) போர்செய்த உலக்கைப்படையை யுடைய பலராமனும், தன் போல் உயர்ந்தோர் இலன் ஆன தட கண் மாலும் - தன்னைப்போலச் சிறந்தவர் வேறு பெறாதவனான விசாலமான கண்களையுடைய கண்ணபிரானும், பின் போய் - அருச்சுனன்பின்னே சென்று, இனிய மொழி ஆயிரம் பேசி - மிகப்பலவான இன்சொற்களைச் சொல்லி, மன்றற்கு அன்போடு உதவும் உபசாரம் அனைத்தும் ஈந்தார் - விவாகத்துக்கு அன்போடு கொடுக்குந்தன்மையனவான உபசாரப்பொருள்களையெல்லாம் (அவர்கட்குக்) கொடுத்தார்கள்; (எ - று.)

'உபகாரமனைத்துமீந்தார்' என்பது, ஏட்டுப்பிரதியின் பாடம்; அதற்கு, உபகாரம் = உபஹாரம்; காணிக்கை யென்க. மொய்ம்பு - பலம்: அதனை யுடையவன், மொய்ம்பினன்; எனவே, 'பலன்' என்ற வடமொழிப்பெயரின் பர்யாயநாமமாயிற்று: இன் - சாரியை, ஆன் - விகுதி. தன்போலுயர்ந்தோரிலனான மால் - "தனக்குவமை யில்லாதான்" என்றார் திருவள்ளுவரும். ஆயிரம் - பலவென்னுமாத்திரமாய் நின்றது. முசலத்தை ஆயுதமாகவுடைமையால், பலராமனுக்கு 'முசலி' என்று ஒருபெயர் வழங்கும். (...)

[பலராமன் துவாரகைக்கு மீள, கண்ணன் அருச்சுனனுடன் இந்திரப்பிரத்தத்தில் வாழ்தல்.]

அ௫. ஞாலத்தெரிவைகளிகூரநடாத்துசெங்கோற்
றாலத்துவசன்றுவராபதிதன்னில்வைக
நீலக்கடல்களிரண்டாமெனநெஞ்சொடொத்த
சீலத்தவனோடவண்வைகினன்செங்கண்மாலே.

(இ - ள்.) ஞாலம் தெரிவை - பூமிதேவி, களி கூர - களிப்பு மிகும்படி, நடாத்து - நடத்துகிற, செங்கோல் - நீதிதவறாத அரசாட்சியை யுடைய, தாலம் துவசன் - பனைமரத்தின் வடிவமெழுதிய கொடியை யுடையவனான பலராமன், துவராபதிதன்னில் வைக - (மீண்டுசென்று) துவாரகாபுரியில் இருக்க,—செம் கண் மால் - சிவந்ததிருக்கண்களையுடைய கண்ணபிரான், நெஞ்சொடு ஒத்த சீலத்தவனோடு - தனமனத்தோடொத்த ஒழுக்கமுடையவனான அருச்சுனனோடு, நீலம் கடல்கள் இரண்டு ஆம் என - நீலநிறமுள்ள இரண்டுகடல்கள் போலுமென்று (தங்கட்கு உவமை) சொல்லுமாறு, அவண் வைகினன் - அவ்விந்திரப்பிரத்தநகரத்திலே இருந்தான்; (எ - று.)

ஞாலத்தெரிவை களிகூர - பூமியிலுள்ள சகலபிராணிகளும் மிக்க இன்பமடைய என்றபடி; தீவினையில்லாததனாலும், துஷ்டர்கள் தொலைதலாலும், பூமி பாரம் ஒழிந்து மகிழ என்றுங் கொள்க. நடாத்து - நடத்து என்பதன் விகாரம். செங்கோல் - கோணுதலின்றிச் செம்மையாகவுள்ள கோல் போன்றது; உவமையாகுபெயர். தாலத்வஜன் - வடமொழிப்பெயர். கரிய மேனியும், காம்பீரியமும்பற்றி, கடல் உவமையாம். நெஞ்சொடு ஒத்த சீலத்தவன் - மனமொத்த இனிய நண்பன். செங்கண்மால் - உத்தமவிலக்கணமான சிவந்த இரேகைகளையுடைமையாற் செந்தாமரைமலர்போன்ற கண்களையுடையவன். (அரு)

[சுபத்திரையினிடமாக அபிமந்யு பிறத்தல்.]

அ௬. பன்னாளிவரிப்பதிசேர்ந்தபின்பங்கசாத
மின்னாருமார்பற்குயிர்போலும்விசயனென்பா
னன்னாளினன்மைதருமோரையினல்கவஞ்சி
யன்னாளிடத்திலபிமன்னுவவதரித்தான்.

(இ - ள்.) இவர் பல் நாள் இ பதி சேர்ந்த பின் - இந்தக்கிருஷ்ணார்ச்சுனர்கள் பலநாள் இவ்விந்திரப்பிரத்தத்திலே சேர்ந்து இருந்தபின்பு,—

பங்கசாதம் மின் ஆளும் மார்பற்கு உயிர் போலும் விசயன் என்பான் - தாமரைமலரில் வாழ்கிற மின்னல்போன்ற இலக்குமி இடமாகக்கொண்டு வீற்றிருக்கப்பெற்ற திருமார்பை யுடையனான கண்ணனுக்கு உயிர்போன்றவனான அருச்சுனன், நல்க - கொடுக்க, நல் நாளில் - சுபதினத்திலே, நன்மை தரும் ஓரையில் - நன்மைவிளைக்கும் சுபமுகூர்த்தத்திலே, வஞ்சி அன்னாள் இடத்தில் அபிமன்னு அவதரித்தான் - வஞ்சிக்கொடி போன்றவளான சுபத்திரையினிடத்தில் அபிமந்யு என்னுங் குமாரன் தோன்றினான்; (எ - று.)

பங்கஜாதம்-வடசொல்; சேற்றி லுண்டாவது: காரணவிடுகுறி. மின்-உவமையாகுபெயர். 'நல் நாளில் நன்மை தரும் ஓரையில்' என்பதை 'நல்க' என்பதனோடுங் கூட்டுக; சுபதினத்திற் சுபமுகூர்த்தத்திற் கர்ப்பாதானஞ் செய்ய என்க. ஓரை - ஹோரா என்ற வடசொல்லின் விகாரம். அபிமந்யு என்ற வடமொழிப்பெயர்க்கு, பயமில்லாதவனும் கோபமுடையவனு மாயிருப்பவ னென்று முதனூலிற் காரணப்பொருள் கூறப்பட்டிருக்கிறது. 'அவதரித்தான்' என்ற சொல்லின் ஆற்றலால், அக்குமாரனுடைய உயர்வு தோன்றும். (அ௰)

[உ பாண்டவ ருற்பத்தி.]

௪௭. வேதஞ்சிறக்கமனுநீதிவிளங்கவிப்பா
ராதங்கமாறவருமைவரினைவர்மைந்தர்
பூதங்களைந்துங்குணமைந்திற்பொலிந்தவாபோ
லோதங்கியிலுற்பவித்தாள்வயினுற்பவித்தார்.

(இ - ள்.) வேதம் சிறக்க - வேதங்கள் சிறப்படையவும், மனு நீதி விளங்க - மநுதர்மசாஸ்திரத்திற்கூறிய நீதிகள் விளக்கமடையவும், இ பார் ஆதங்கம் ஆற - இந்தப்பூமியினது துன்பம் நீங்கவும், வரும் - பிறந்த, ஐவரின் - பஞ்சபாண்டவர்களினின்று, ஐவர் மைந்தர் - ஐந்துபுத்திரர்கள், பூதங்கள் ஐந்தும் குணம் ஐந்தின் பொலிந்த ஆ போல் - பஞ்சபூதங்களும் பஞ்சதந்மாத்திரைகளிலிருந்து தோன்றிய விதம்போல, ஓது அங்கியில் உற்பவித்தாள்வயின் உற்பவித்தார் - சிறப்பித்துச்சொல்லப்படுகிற யாகாக்கினியினின்று பிறந்த திரௌபதியினிடமாகப் பிறந்தார்கள்; (எ - று.)

தருமன்முதலிய பாண்டவரைவர்க்கும் முறையே பிரதிவிந்தியன், சுதசோமன், சுருதகர்மா, சதாநீகன், சுருதஸேநன் என்ற ஐவர் வருஷத்திற்கு ஒருவராய்ப் பிறந்தனரென்று முதனூலினா லறிக. இவர்கள், உபபாண்டவரென்றும், பஞ்சத்ரௌபதேயரென்றுங் கூறப்படுவர். 'ஐந்துகுணங்கள்' என்றது - சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐம்புலன்களை. இவ்வைந்தும் முறையே ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பூமி என்ற ஐந்துபூதங்கட்கும் உற்பத்தித்தானமாதல், தத்துவநூல்களினால் விளங்கும். இனி, 'பூதங்களைந்திற் குணமைந்தும் பொலிந்த வா போல்' என்ற பாடத்துக்கு - ஐவகைப்பூதங்களினிடத்தே ஐவகைக்குணங்களும் அமைந்து விளங்குதல்போல என்று பொருள் காண்க; அத்தன்மை "ஒலியினை யோங்குவானும் ஊற்றினை வளியும் ஒன்றிப், பொலிதரும் உருவைத் தீயும் புகல்வரு சுவையை நீரும், நிலைபெறு நாற்ற மண்ணும் நீங்கலா வண்மையோடு, குலவு நல்லுரிமையாயகுணமெனப்பொலிந்துதோன்றும்" என்றபாகவதத்தினாலறிக.

நல்லொழுக்கங்களை விலக்கித் தீயொழுக்கங்களை நடத்திய பூமிபாரமான துஷ்டர்களைப் பாண்டவர்கள் தொலைத்தலாற் பூமிமுழுவதும் வேதங்களும் வைதிகவொழுக்கங்களுந் தடையின்றிச் செழிக்க அப்பூமியின் துன்பம் நீங்குதலால், 'வேதஞ்சிறக்க மநுநீதிவிளங்க இப்பார் ஆதங்கமாற வரும் ஐவர்' என்றார். ஆதங்கம் மாற எனப் பதம் பிரித்தும் உரைக்கலாம். 'ஓதங்கி' என்றது, ஓமாக்கினியை. ஓது - மந்திரமோதப்பட்ட எனினுமாம்.

வயின் - வயிறுமாம். மநுநீதி - வடமொழித்தொடர்; மநு - அவ்வரசனாற் செய்யப்பட்ட நூலுக்குக் கருத்தாவாகும்பெயர். வேதம், ஆதங்கம, பூதம், குணம் - வடசொற்கள். ஆ - ஆறு என்பதன் விகாரம். (அள)

[அபிமந்யுவும் உபபாண்டவர்களும் படைக்கலந் தேர்தல்.]

அஅ. அம்மாதுலனும்பயந்தோருமழகின்மிக்க
இம்மாமகாருக்கியற்றும்விதியேய்ந்தபின்னர்த்
தெம்மாறுவின்மைமுதலாயசெயல்கள்யாவுங்
கைம்மாறுகொண்டுநனிகைவருமாறுகண்டார்.

(இ - ள்.) அழகின் மிக்க இ மா மகாருக்கு - அழகிற்சிறந்த இந்தப் பெருமையுடைய (அபிமன்முதலிய) குமாரர்களுக்கு, இயற்றும் விதி ஏய்ந்த பின்னர் - செய்யவேண்டிய (ஜாதகருமம் நாமகரணம் அந்நப்பிராசநம் சௌளம் முதலிய) கடமைகளை(ச் சாஸ்திரவிதிப்படி உரியகாலங்களிற்) செய்து முடித்தபின்பு, அ மாதுலனும் பயந்தோரும் - அந்தமாமனான கண்ணனும் பெற்றதந்தையரான பாண்டவர்களும், தெவ் மாறு வின்மை முதல் ஆய செயல்கள் யாவும் - பகைவர்கள் அழிதற்குக்காரணமான வில்வித்தை முதலான ஆயுதத்தொழில்களெல்லாவற்றையும், கை மாறு கொண்டு நனி கைவரும் ஆறு கண்டார் - கையிற் பிரம்புகொண்டு நன்றாகப்பழகித் தேர்ச்சியடையும்படி செய்தார்கள்; (எ - று.)

மாதுலன் - வடசொல்; மாதாவி னுடன்பிறந்தவன். அபிமனுக்குத் தாயான சுபத்திரையின் தமைய னாதலால், கண்ணன் அபிமனுக்கு மாதுலனாதல் காண்க. பாண்டவகுமாரர்களின் ஒற்றுமை பற்றி, அவர்களிற் சிறந்தவனான அபிமனது மாதுலனை மற்றையோர்க்கும் மாதுல னென்பது தோன்றப் பொதுப்பட 'அம்மாதுலன்' என்றார். மகார்-மக னென்பதன் பன்மை. 'தெம்மாறு வின்மை' என்றவிடத்து 'மாறு' என்ற வினைத்தொகை, காரியப் பொருளதாய்க் காரணப்பொருள்கொண்டது. மிக்கஇளமைக்குஏற்ப விளையாட்டில் ஊக்கஞ்செல்லாதிருத்தல் வேண்டியும், மாமனும் தாதையருமாகிற நெருங்கிய உறவுரிமைகாரணமாகப் பராமுகஞ்செய்யாதிருத்தல்வேண்டியும் அச்சுறுத்தற்குக் கையில் மாறுகொண்டு கற்பித்தன ரென்க. இனி, கைம்மாறுகொண்டு நனி கைவருமாறு -கற்பிப்பவரிடத்தினின்று கற்பவரிடத்தே மாறி நன்றாகத் தேர்ச்சிபெறும்படி யெனினுமாம். (அஅ)

[அவ்வறுவரில் அபிமன் சிறத்தல்.]

அகூ. அரிதிற்பயந்தவறுவோருளுமாண்மைதன்னு
லிருதுக்களின்மேலிளவேனிலின்றோற்றமேய்ப்ப
மருதுக்கிடைபோமதுசூதன்மருகன்வெம்போர்
விருதுக்கொருவனிவனென்னவிளங்கினனே.

(இ - ள்.) இருதுக்களின்மேல இளவேனிலின் தோற்றம் ஏய்ப்ப - ஆறுவகைருதுக்களுள் மேலான வசந்தருதுவினது தோற்றம்போல,—அரிதின் பயந்த அறுவோருளும் - அருமையாகப்பெற்ற அந்த ஆறுபுதல்வருள்ளும், மருதுக்கு இடை போம் மதுசூதன் மருகன் - (இரட்டை) மருதமரத்தினிடையே தவழ்ந்துசென்ற கண்ணனது மருமகனான அபிமன், ஆண்மை தன்னால் - ஆண்மைத்திறத்தினால், வெம் போர் விருதுக்கு இவன் ஒருவன் என்ன விளங்கினன் - கொடியபோர்வெற்றிக்கு இவனே ஒப்பற்றவனென்னும்படி (சிறப்புற்று) விளங்கினான்; (எ - று.)

இருது- ருது என்ற வடசொல்லின் விகாரம்: இரண்டுமாதங்கொண்ட காலம்; அது - இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என ஆறாம்: சித்திரைமுதல் இரண்டிரண்டுமாதம் ஒவ்வோர்இருதுவென்று உணர்க; இவை - வடமொழியில் முறையே வஸந்தம், க்ரீஷ்மம்,

வர்ஷா, சரத், ஹேமந்தம், சிசிரம் எனப்படும். இவற்றில் இளவேனில் தலைமையானது. ஏய்ப்ப - உவமவுருபு. மதுஸூதநன் என்ற வடமொழிப்பெயர் - மதுஎன்றஅசுரனைக் கொன்றவ னென்று பொருள்படும். ஒருவன் இவன் என்ன - இவனையல்லது இல்லையென்னும்படி. மேல் இளவேனிற்பருவவருணனை கூறுகின்றன ராதலால், அதற்குத் தோற்றுவாயாக இங்கு இளவேனிலை உபமானமுகத்தால் எடுத்துக்கூறினார்.

மருதுக்கிடை போன கதை:—கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் துன்பப்படுத்துகின்ற பலதிருவிளையாடல்களைச் செய்யக் கண்டு கோபித்த நந்தகோபர்மனைவியான யசோதை ஒருநாள் கிருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினாற்கட்டி ஓர்உரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலையிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டைமருதமரத்தின்நடுவிலே எழுந்தருளியபொழுது, அவ்வுரல் குறுக்காய்நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்துவிழுந்தவளவில், முன்பு நாரத சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த நளகூபரன் மணிக்கிரீவன் என்னும் குபேரபுத்திரரிருவரும் சாபந்தீர்ந்து சென்றன ரென்பதாம். இந்தக் குபேரபுத்திரர்கள் முன்பு ஒருகாலத்திற் பலதெய்வமகளிருடனே ஆடையில்லாமல் ஒரு நீர்நிலையிலே ஜலக்கிரீடைசெய்துகொண்டிருக்கையில் நாரதமுனிவர் அங்கு எழுந்தருள, அதுகண்டு மங்கையரனைவரும் நாணங்கொண்டு ஆடையெடுத்து உடுத்துநீங்க, இந்தமைந்தர் மாத்திரம் மதுபானமயக்கத்தால் நிர்வாணராகவேயிருக்க, நாரதர் கண்டு கோபங்கொண்டு 'நீங்கள் போயிருக்கிறீர்கள்; மரங்களாவீர்' என்று சபித்து, உடனே அவர்கள் வேண்டியதற்கு இரங்கி 'நெடுங்காலஞ் சென்றபின்பு திருமாலுடைய திருவடியுஞ்சம்பந்தத்தால் இவ்வடிவம் ஒழிந்து முன்னைவடிவம் பெற்று மீள்வீர்' என்று சாபவிடைகூறிப்போயின ரென அறிக. (௪௬)

[ஒருகால இளவேனிற்பருவத்தின் வரவு.]

௪எ. உரனாலழகா லுரையாலுவமையில்லா
நரநாரணர்க்குநலங்கூர் தருநண்புபோல்வான்
அரனார்விழியாலழிந்தங்கமநங்கமான
மரனாருடனண்பிசைந்தன்றுவசந்தகாலம்.

(இ - ள்.) உரனால் - வலிமையினாலும், அழகால் - அழகினாலும், உரையால் - சொல்லினாலும், மற்று உவமை இல்லா - (தமக்குத் தாமேயன்றி) வேறுஉவமை பெறாத, நரநாரணர்க்கு - அருச்சுனனுக்குங் கிருஷ்ணனுக்கும் உள்ள, நலம் கூர்தரு நண்பு - நன்மைமிக்க சிநேகத்தை, போல்வான் - ஒக்கும்பொருட்டு,—வசந்தகாலம் - இளவேனிற்பருவமானது, அரனார் விழியால் அழிந்து அங்கம் அநங்கம் ஆன மரனாருடன் - சிவபிரானுடைய நெற்றிக்கண்ணினால் வெந்து உடம்பு அருவமான மன்மதனுடனே, நண்பு இசைந்து அன்று - கூடிவந்தது, (எ - று.)

மன்மதனது முயற்சியாலாகுந் தொழிலாகிய சிற்றின்பவிளையாட்டுக்கள் வசந்தகாலத்தில மிகுதலால், அவன், அக்காலத்துக்கு நண்பனெனப்படுவன்; மன்மதனுக்கு 'வேனிலான்' என்று ஒருபெயர் வழங்குதலுங் காண்க: "வந்தனன் காலமும் வசந்த மாக்கியே" என மேல் அருச்சுனன் தவநிலைச் சருக்கத்தில் வருதலும் உணர்க. இங்ஙனம் காமோத்தீபகமான வசந்தகாலம் இயல்பாகக் காமனோடு கூடியிருத்தலை, கிருஷ்ணார்ச்சுனர்களுக்கு உள்ள சிநேகத்தை யொக்கும்பொருட்டுக் கூடிற்றென்றது, தற்குறிப்பேற்றவணி.

உரை - புகழுமாம். அரனார், மரனார் - உயர்வுப்பன்மைகள். மெல்லிய மலரம்பாகிய எளியகருவிகொண்டே பிரமன் முதல் எறும்பு ஈறாகவுள்ள எல்லாவுயிர்களையும் வெல்லும்வில்வன்மையுடைமை மன்மதனுக்கு உயர்வும்,

அப்படிப்பட்ட மகாவீரனையும் மிகஎளிதில் வென்றமை சிவபிரானுக்கு உயர்வுமாம். இசைந்தன்று - இசைந்தது: உடன்பாட்டிறந்தகாலவினைமுற்று; இசை - பகுதி, று - ஒன்றன்பால் விகுதி, த் - இடைநிலை, அன் - சாரியை, மற்றவை - சந்தி, விகாரம். (இச்சொல் இசைந்ததன்று என எதிர்மறைப் பொருள்படுமிடத்து, அல் - எதிர்மறைஇடைநிலையாம்.) உரன் - உரமென்பதன் ஈற்றுப்போலி. ஹரன், மாரன் என்ற வடசொற்கள் அரன், மரன் என விகாரப்பட்டன. ஹரன் - சங்காரக்கடவுள். மாரன் - (ஆசைநோயால் அனைவரையும்) மரணவேதனைப் படுத்துபவன். போல்வான்-எச்சம். நரநாரணர் - உயர்திணையும்மைத்தொகை. நண்பு - தொழிற்பெயர்; நள் - பகுதி, பு - விகுதி, ளகரம் ணகரமானது - சந்தி.

முன்னொருகாலத்திற் கைலாசகிரியிற் சிவபிரான் சனகர்முதலிய நால்வர்க்கு யோகநிலையை உணர்த்துதலினிமித்தம் தான் யோகஞ்செய்துகொண்டிருக்கையில், பிரமனேவலால் மன்மதன் மலரம்புகளையெய்து அப்பரமனது யோகத்தைக் கெடுக்கத்தொடங்க, அப்பெருமான் மன்மதனைச் சினந்து நெற்றிக்கண்ணைவிழித்து அதன்நெருப்புக்கு இரையாய் அவனுடம்பு எரிந்து சாம்பலாய்ப் போம்படி செய்தனனென்பது, மூன்றுமடியிற் குறித்த கதை; "அங்கம் வெந் தன்றுதொட் டநங்கனே யாயினன்" என்றார் கம்பரும்.

முன்னொருகாலத்திற் குருசிஷ்யக்கிரமத்தை உலகத்தி லனைவர்க்கும் விளக்கும்பொருட்டு நரனென்னுஞ்சிஷ்யனும் நாராயணனென்னுங்குருவுமாகப் பதரிகாச்சிரமத்தில் தோன்றிச் சீடனுக்குக் குரு தத்துவப்பொருள்களை யுபதேசிக்கின்ற பாவனையாக வீற்றிருக்கிற திருமாலின் இருமூர்த்திகள் தாமே இங்கு முறையே அருச்சுனனுங் கண்ணனு மாக அவதரித்ததனால், 'நரநாரணர்' எனப்பட்டனர். (கூ0)

அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்

முற்றிற்று.

---

# புலவர் புராணம்.

புலம் - தேர்ந்த அறிவு : அல்லது, புலமை - கல்விதேர்ச்சி ; அதாவது- பலவேறுவகைப்பட்ட நூலுணர்ச்சிகளையெல்லாம் ஒருங்கேகொண்டபேரறிவுடைமை: பாண்டித்தியம்; அதனையுடையவர், புலவர்: என்றது, இங்குத் தமிழ்க்கவிஞரைக் குறிக்கும். அவர்களுடைய பழமையான வரலாற்றை யுணர்த்தும் நூல், புலவர்புராண மெனப் பெயரிடப்பட்டது.

இந்நூலாசிரியராகிய **முருகதாசர்**, பாண்டியநாட்டில் திருநெல்வேலியில் சுத்த சைவவேளாள வருணத்தில் தோன்றினவர். இப்பொழுதைக்கு ஆறு வருஷத்துக்குமுன் அறுபதுபிராயம் வாழ்ந்தவர். இவரது மதம், சைவம். ஆயினும், இவர் வைஷ்ணவத்துவேஷமுடையவரல்லர். இவர் சுப்பிரமணியக்கடவுளிடத்து மிக்க பக்தியுடையவராய் அவரது அருள்பெற்றவரென்றும், அதனால் இளமைதொடங்கி விரைவிற் கவிபாடவல்ல ஆசுகவியாயிருந்தனரென்றும், சந்தம்பாடுதலிற் சிறந்தவரென்றும், ஞான பக்தி வைராக்கியங்களை யேற்கொண்டவரென்றும், சரபவித்துவான் வண்ணச்சரபம் திருப்புகழ்ச்சுவாமி தண்டபாணிப்பரதேசி அபர அருணகிரிநாதர் என்ற சிறப்புப்பெயர்களை இவருடைய அன்பர்கள் இவர்க்கு வழங்கிவந்தன ரென்றும் தெரிகிறது. இவர் மிக்கஇளமையிற் செய்த நூல், பன்னிருமாலை. இவர் செய்த பிறநூல்கள் - தில்லைத்திருவாயிரம், திருவரங்கத்திருவாயிரம், தெய்வத்திருவாயிரம், பழனித்திருவாயிரம், ஏழாயிரப்பிரபந்தம், பதிகச்சதகம், சதகப்பதிகம், அருணகிரிநாதர் புராணம், திருவாமாத்தூர்ப் புராணம், திருமகளந்தாதி, ஏகத்தாளிதழக லந்தாதி, திருச்செந்தூர்க்கோவை, திருச்செந்தூர்த்திருப்புகழ், அறுவகையிலக்கணம், ஏழாமிலக்கணம், சந்தஇலக்கணம் முதலியன. பழைய வித்துவான்களிற் சிலருடைய சரித்திரக்குறிப்பை ஒருவாறு அறிதற்கு ஆதாரமாகவுள்ள தமிழ்நாவலர்சரிதை, தனிப்பாடல்திரட்டு, விநோதரசமஞ்சரி, பாவலர்சரித்திரம் முதலிய நூல்கள் இவர்காலத்தில் உள்ளனவாயினும், அவற்றிலுள்ள விஷயங்களுக்கும் இவர் புலவர்புராணத்திற்கூறும் விஷயங்களுக்கும் பல மாறுபாடுகள் காணப்படுதலால், அவற்றை இவர் இந்நூல்செய்தற்கு முற்றும் ஆதாரமாகக் கொண்டன ரென்று சொல்ல இடமில்லை. இப்புராணத்தில் வரும் ஆழ்வார்களுடைய சரித்திரங்களுக்குக் குருபரம்பராப்பிரபாவம் முதலிய வைஷ்ணவநூல்களும், நாயன்மார்களுடைய சரித்திரங்களுக்குப் பெரியபுராணம் முதலிய சைவநூல்களும் பெரும்பாலும் ஆதாரமாம். நூலாராய்ச்சியால் தாம் உணர்ந்தவற்றையும், கர்ணபரம்பரையாகத் தாம் கேட்டறிந்தவற்றையும் ஆதாரமாகக்கொண்டு இவர் இப்புராணம் பாடினர். இந்நூற்பாயிரத்தில்,

"நூற்பெயர்யாதெனில் உண்மைப்புலவர்புராணமதாம்
நுவலுமிடம் திருநெல்லைநகர் நுவலுநிமித்தம்
ஏற்பவருக்குஈவார்தம்பெருநலமுஈயா
ரிடும்மையும்செந்தமிழ்ப்புலவோரொழிற்புகழும்விளக்கல்
நாற்பொருளும் பெறவிரும்பல் ஆதாரம் முன்னோர்
நவில்கதையாராய்ச்சியும் நல்நாமகள்தன் அருளும்
வேற்பிடித்துமலைதொறும் போய்த்திருவருட்பேராடல்
விளக்குமுழுதுணர்புலவன்விரைமலர்த்தாள்களுமே,"

"செஞ்சுவைச்சொல்உணர்ந்துபலகாவியங்கள்
செப்பியவர்தமதுகுலதீபம்போன்று
விஞ்சுபுகழ்ச்சித்திரலமடைந்தோராய
மெய்ப்புலவர்சரிதமென்றும்விளம்பாதன்னோர்

# வில்லிபுத்தூராழ்வார் வரலாறு.*

**வில்லிபுத்தூரா**ரென்பவர், தமிழ்மகாபாரதம்பாடிய ஒரு மகாகவி. இவர் **பிராமணசாதி**யிற்பிறந்தவரென்பது, இந்நூற்சிறப்புப்பாயிரத்தில் "வண்ண நான்கினு முயர்ந்துளோ னொருமுனி வந்தான்" என்றதனால் விளங்கும்.

இவருடைய **மதம் வைஷ்ணவ**மென்பது, சிறப்புப்பாயிரத்தில் "பைந்துழாய்முடிப் பரமனைப் பலகவித்துறையுஞ், சிந்தையான்மொழிந் தன்பர்தந் திருவுளம்பெற்றோன்" என வருதலினாலும், இவர் இப்பாரதத்தின் முதலிலும் இந்நூலின் சருக்கங்களின் ஆதியிலும் ஸ்ரீமகாவிஷ்ணுவின்விஷயமாகவே பலவாறு கடவுள்வாழ்த்துக் கூறியுள்ளதனாலும், "எங்கள் மாதவன்" என்று நூலைத்தொடங்கியிருப்பதனாலும், வில்லிபுத்தூராழ்வாரெனத் திருநாமமுடைமையாலும், தெளிவாகத் தெரியவருகிறது.

இவர் ஒன்பதாம்போர்ச்சருக்கத்துக்காப்புச்செய்யுளில் "ஓராறுபேதசமயங்களுக்கு முருவாகிநின்றவொருவ, னீராறுநாம முரைசெய்து மண்கொடிடுவார்கள்காணு மிமையோர்" எனத் துவாதசோர்த்துவபுண்டரத்தைச்சிறப்பித்துக்கூறியுள்ளதனால், இவர் திருமண்காப்புச்சாத்தும் ஸ்ரீவைஷ்ணவரென விளங்கும். இன்னும் இவர் திருமாலினிடத்துமாத்திரமேயன்றி அவ்வெம்பெருமானடியார்களுட்சிறந்தவரான ஆழ்வார்களிடத்தும் ஈடுபாடுடையவரென்பதை, பதினேழாம்போர்ச்சருக்கத்துக்காப்பில் "கொத்தவிழ்த்தசோலைமன்னு **குருகையாதி** நெஞ்சிலே, வைத்தமுத்திநாதன்" என நம்மாழ்வாரையும், பத்தாம்போர்ச்சருக்கத்துக் காப்பில் "**கலிய**னெங்கள் **மங்கையாதி** கண்டுகொண்ட நாயமே" எனத் திருமங்கையாழ்வாரையும் கூறியுள்ளதனாற் காண்க.

இவர் திருவவதரித்த **ஊர்**, நடுநாட்டிலுள்ள **சனியூ**ரென்பது; (இதனைக் கோயமுத்தூரைச்சார்ந்ததென்று சிலர் கூறுவர்.)

பெண்ணையாறுபாயப்பெற்றதும், திருக்கோவலூர் முதலிய விஷ்ணுஸ்தலங்களையும் திருவெண்ணெய்நல்லூர் முதலிய சிவஸ்தலங்களையு முடையதும், நடுநாடென்று சொல்லப்படுவது மாகிய திருமுனைப்பாடிநாட்டில் **சனியூரிலே** பிராமணசாதியிலே வைஷ்ணவமதத்தில் **வீரராகவாசாரிய**ரென்பவருக்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்த இவ்வில்லிபுத்தூரார், பாலியத்திலேயே நல்லாசிரியரையடுத்துக் கல்விகற்று, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் தம்மையொத்தாரும்மிக்காரும் இல்லையார்படிமிகவல்லவராய், வடமொழியிலும் மிக்கதேர்ச்சிபெற்று, ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகைப்பட்ட கவிகளையும் சிரமமில்லாமல் மிகஎளிதில் அமிழ்தினும் இனியனவாகப்பாடவல்லராய், சேரசோழபாண்டியரென்னுந் தமிழ்நாட்டுமூவேந்தர்களாலும் மிக்க சிறப்புடன் விரும்பியழைக்கப்பட்டு ஆங்காங்குச்சென்று தமதுகல்வித்திறத்தைப்பலவகையாலுங்காட்டி அவர்களைக் களிப்பித்து அவர்கள் அன்போடு அபிமானித்து மிகுதியாக வழங்கிய சிறந்த பல பெரும்பரிசுகளைப் பெற்று, பற்பலகவித்துறைகள்பாடித் திருமாலை இரவும்பகலும் எப்பொழுதுந் துதித்துக்கொண்டு, (வடக்கே திருவேங்கடமும் தெற்கே கன்னியாகுமரியும் கிழக்கிலும் மேற்கிலுங் கடலும் எல்லையாக அமையப்பெற்றுள்ளதும், சோழநாடு பாண்டியநாடு மலைநாடு கொங்குநாடு நடுநாடு தொண்டைநாடு எனப் பலவகையாகப் பகுக்கப்பட்டுள்ளதுமாகிய) தமிழ்நாடு முழுவதிலுந் தமது கல்விப்பெரும்புகழைப் பரவச்செய்துவந்தார். அங்ஙனம் வருகையிலே, முற்கூறிய திருமுனைப்பாடிநாட்டிலே **வக்கபாகை**யென்னும் இராசதானியிலே வீற்றிருந்து செங்கோல்செலுத்தி, தலை இடை

---

* இவ்வரலாறு, இவர்குமாரராகிய **வரந்தருவார் [வரதாசாரியர்]** இருபத்திரண்டு செய்யுட்களாற் செய்துள்ள சிறப்புப்பாயிரத்தைப் பிரதான ஆதாரமாகக்கொண்டும், மற்றுஞ்சில ஆதாரங்களால் வேறு சிலவிஷயங்களைச் சேர்த்தும் ஒருவாறு காட்டப்படுகிறது.

கடையென்னும் மூவகைச் சங்கத்திலே வளர்ந்துவந்த தமிழ் பின்பு பங்கத்தையடையாதபடி நான்காவதொரு சங்கம்போல அதனைப்பாதுகாத்து, அருங்கவிப்புலவர்களை அன்புடன் ஆதரித்து வந்த வள்ளலும், கல்வி அறிவு ஒழுக்கங்களாலும் செல்வம் அதிகாரம் முதலியநலங்களாலும் குறைவின்றி மிகச்சிறப்புற்று விளங்கியவனுமாகிய கொங்கர் குலத்துத் தோன்றிய **வரபதியாட்கொண்டா** னென்கிற அரசன், இவ்வில்லிபுத்தூரராது கல்விகேள்வித்திறமைகளையும் அடக்கம் ஒழுக்கம் அன்பு அருள் வாய்மை முதலிய நற்குணங்களையுங் கேள்வியுற்று அறிந்து 'இக்குணங்களெல்லாம் ஒருவரிடத்திலே ஒருங்கே அமைந்திருப்பது அருமை அருமை!' என்று மிக ஆச்சரியமுற்று இவரைவரவழைத்து அநேகசம்மானங்கள்செய்து தனது ஆஸ்தானபண்டிதராக அமைத்துவைத்து, ஒருநாள் இவரைநோக்கி 'உமக்கும் நீர் எழுந்தருளியுள்ள இந்த எனது சம்ஸ்தானத்துக்கும் உலகமுள்ளவளவும் அழியாப்பெருங்கீர்த்திஉண்டாகி நிலைபெறும்படி, வடமொழியில் ஸ்ரீவேதவியாசமகாமுனிவரால் விரித்துரைக்கப்பட்ட மகாபாரதசரித்திரத்தைச் செந்தமிழில் விருத்தப்பாடல்களினால் ஒருபெருங்காப்பியமாகத் தமிழ்பயில்வோர் அனைவரும் ஓதியுணர்ந்து உய்யுமாறு பாடித்தந்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, இவர் அவ்வேண்டுகோளுக்கு இசைந்து (இதிகாசமிரண்டனுட்பெரியதாகிய) மகாபாரதத்தை மகாகாவியமாகச் சொற்சுவைபொருட்சுவைகள் மிக்குவிளங்கும்படி நல்லநடையிலே பாடியருளினார். இது நிற்க:

இவர் பாரதம்பாடியகாரணம்இன்னும்இரண்டுவகையாகவுங்கூறப்படும். அவற்றுள், முதலாவது வருமாறு:—இந்தவில்லிபுத்தூரார்க்கும் இவர் தம்பியார்க்குந் தாயபாகத்தைப்பற்றி விவாதமுண்டாகி அவ்விஷயத்தை அவர்கள் அரசனிடம் அறிவித்தனர்; அரசன் இவரது கல்வித்திறத்தை முன்னமேகேள்வியுற்று அறிந்துள்ளவனாதலால் 'இவ்வளவுகற்றறிந்தவர்க்கும் உண்மையறிவு உண்டாகவில்லையே' என்றுமிகவும்விசாரமடைந்து 'அவ்வுண்மையறிவை அவர்க்கு உண்டாக்குவதற்கு ஏற்றஉபாயம், (தாயபாகங்காரணமாகத் துரியோதனாதியர்மாறுபட்டு அழிந்ததைக் கூறும்) மகாபாரதநூலில் இவரைப்பழகும்படிசெய்வதே' என்றுநிச்சயித்து 'மகாபாரதத்தை நீர் தமிழிற்பாடவேண்டும்; பாடினபின்புதான் உங்கள் வழக்குத் தீர்க்கப்படும்' என்று கட்டளையிட்டான்; உடனே அவர் அவ்வாறே அப்பாரதத்தைப்பாடி, அந்நூலின்நீதியிற் கருத்தூன்றினவராய், பின்புதாமே தம்தாயபாகத்தில்வெறுப்புற்று, அதனையும் தம் தம்பிக்கே கொடுத்துவிட்டனர் என்று கூறுவர் சிலர்.

வேறுசிலர் கூறுமாறு:—இவ்வில்லிபுத்தூரார் தம்மோடு வாதஞ்செய்து தோற்றவர்களது காதுகளைத் தோண்டியறுக்குந் துறட்டைக் கையிற்கொண்டு சென்று ஆங்காங்குள்ள பலபுலவர்களையுஞ் சயித்துவருகிறபொழுது திருவண்ணாமலைக்குப் போயினர்; அங்குத்தங்கியகல்விமான்கள் இவரைக்கண்டும் இவர்செய்கையைக்கேட்டும் அஞ்சியோடிச்சென்று தமது தலைவரும் திருப்புகழ்பாடியவருமாகிய * **அருணகிரிநாத** ரென்னும் பெரும்புலவர்க்குச் செய்தியை அறிவித்தார்கள்; அப்புலவர்பெருமான் வில்லிபுத்தூரரது செருக்கையடக்கக் கருத்துக்கொண்டு அவரைவருவித்து 'யான் இப்பொழுது நூதனமாகப்பாடப்போகிறதொரு நூலுக்கு,யான்பாடிவரும்பொழுதேகூடப் பொருள் கூறிவருவீராயின், உமது கல்வித்திறம் விளங்கும்' என்று அலட்சியமாகச்சொல்லினர்; சொல்லவே, இவ்வாசிரியர், கடுஞ்சினங்கொண்டு, தம்மையெதிர்க்கிற அவரை வென்று அங்குந் தமது வெற்றிக்கொடியை நாட்டக்கருதி, அக்கொள்கைக்கு உடன்பட்டார்; உடனே அருணகிரிநாதர் ஆசு

* இவர்பிரபுடதேவமகாராசகாலத்திலிருந்தவரென்றும், அவன்காலம் இப்பொழுதைக்குஏறக்குறைய சந௦-வருடங்களுக்கு முன்பென்றுங்கூறுவர்.

கவியாகநூறுபாட்டில்முருகக்கடவுள்விஷயமாக 'கந்தரந்தாதி' என்னும்யமக வந்தாதியைப் பாடிவர, வில்லிபுத்தூராரும் உடனுக்குடனே ஒவ்வொரு செய்யுட்கும்பொருள்கூறிவந்துஇடையில்ஐம்பத்து நான்காம் பாட்டாகிய

* "திதத்தத்தத்தித்தத்திதிதாதைதாததுத்தித்தத்திதா
திதத்தத்தத்தித்ததிதித்தித்ததேதுத்துதித்திதத்தா
திதத்தத்தத்தித்தத்தைதாததீதேதுதைதாதத்து
திதத்தத்தத்தித்தித்திதீதிதிதுதிதீதொத்ததே"

என்னும் ஒருமெய்யால் வந்த செய்யுளுக்குப் பொருள் உரைக்கமாட்டாமற் போனமையால் தோல்வியடைந்து தம்துறட்டை யெறிந்துவிட்டு அவ்வூரினின்றும் புறப்பட்டுப்போவாராயினர்: போம்வழியிற் சிவாலயமொன்று

---

* (இதன்பொருள்.) தித தத்த தித்த - தித தத்த தித்த என்னும் இத் தாளவொத்துக்களை, திதி - (தனது திருநடனத்தாற்) காக்கின்ற, தாதை - தந்தையான பரமசிவனும், தாத - பிரமனும், துத்தி-படப்புள்ளிகளையுடைய, தத்தி - (ஆதிசேஷனென்னும்) பாம்பினது, தா-இடத்தையும், திதம் - நிலைபெற்ற, தத்து - ததும்புகிற, அத்தி - சமுத்திரத்தையும், (சயனமாகக்கொண்ட), ததி திததித்ததே து-தித்திப்புடையதான தயிரையே உண்டகண்ணனும், துதித்த - துதிசெய்யும்படியான, இதத்து - பேரின்ப சொரூபியான, ஆதி - முதல்வனே! தத்தத்து - தந்தங்களையுடைய, அத்தி - ஐராவதயானையால் (வளர்க்கப்பட்ட), தத்தை - கிளிபோன்ற தெய்வயானையம்மைக்கு, தாத - தொண்டனே! தீதே துதை - தீமையே நெருங்கின, தாது - (ஏழு) தாதுக்களையுடையதும், அதத்து - மரணத்தோடும், உதி - பிறப்போடும், தத்து - (அநேக) ஆபத்துக்களோடும், அத்து - இசைந்திருப்பதுமான, அத்தி தித்தி - எலும்புகளை மூடியதொரு பையைப் போன்ற இவ்வுடல், தீ - அக்கினியினால், தீ - எரிக்கப்படுகிற, திதி - தினத்தில், துதி தீ - (உன்னைத்) துதிக்கும்புத்தி, தொத்ததே - (உனக்கே) அடிமையாகவேண்டும்; (என்றவாறு.)

திரிமூர்த்திகளாலுங் கொண்டாடப்படுபவனே! தெய்வயானை கொழுநனே! இவ்வுடம்பழியுங்காலத்து உன்னைத்துதிக்கும் என் அறிவை உன் திருவடிக்கு அடிமையாக்கவேண்டும் என்பதாம். தீ - எழுவாய், தொத்தது - பயனிலை. தித தத்த தித்த இம்மூன்றும் - பிற தாளமானங்களுக்கும் உபலட்சணம். திதி-ஸ்திதி, தாதை-தாத, தாத - தாதா; வடசொல் திரிபுகள். படைத்தற் கடவு ளாகையால் எல்லாப் பிராணிகட்கும் தந்தையாதல்பற்றி, 'தாத' என்று பிரமனைக் குறித்ததாகவுங் கொள்ளலாம். தத்தி - பாயுந்தன்மைய தெனப் பாம்புக்குக் காரணப்பெயர்; தத்துதல் - பாய்தல்: ஊர்தலுமாம்; இ - கர்த்தாப்பொருள்விகுதி: இனி, ஆபத்தை விளைப்பதென்றுமாம்; தத்து-அவமிருத்து, இ-பெயர்விகுதி. தா-இடத்தை யுணர்த்துகையில், உரிச்சொல். திதம் - ஸ்திதம்: வடசொல். தத்து - வினைத்தொகை. அத்தி - அப்தி என்னும் வடசொல்லின் திரிபு. ததி-வடசொல். து-முதனிலைத்தொழிலாகுபெயராகிய காரணக்குறி. துதித்த - ஸ்துதித்த. துதித்திதம் - பெயரெச்சவீறு தொகுத்தல். இதம் - ஹிதம்; வடசொல். தந்தம் - தத்தம் என யமகநோக்கிய வலித்தல். அத்தி - ஹஸ்தீ யென்னும் வடமொழியின் திரிபு. தத்தை - உவமையாகுபெயர்; இன்சொல்லில் உவமம். தாத - தாஸ; வடசொல். அவளிடத்து மிக்க அன்பால், அவளேவியபணிகளைச் செய்தலின், தாசனென்றது. அதம் - ஹதம். உதி - முதனிலைத் தொழிற்பெயர். அத்து - இசைப்பு. அத்தி - அஸ்தி; வடசொல். தீ - அறிவைக் குறிக்கையில், வடசொல். தொத்து - அடிமை. அதனடியாய்பிறந்த குறிப்புமுற்று, தொத்தது. ஏ - பிரிநிலையோடு, தேற்றம்.

இருக்க, அது தம்கண்ணிற்படாதபடி சம்மைச்சுற்றித் திரையிடும்படி வில்லிபுத்தூரார் தமபரிசனங்களையேவிச் செவிநிந்தனைசெய்து, அதுகேட்டு அளவிறந்த கோபங்கொண்ட அருணகிரிநாதாது சாபத்தாற் கண்ணிழந்து, அச்சாபம் நீங்கும்பொருட்டுச் சிவவிஷயமாக ஓர்நூல்செய்யும்படி அவரால் ஆஜ்ஞாபிக்கப்பட்டார்; பட்டும் வீரவைஷ்ணவராதலால் தம்மதாபிமானத்துக்குப் பங்கம் வாராமல சிவஸ்துதி சிற்சிலவிடத்து விரவி வரும்படி இப்பாரததைச் சாபநிவிருத்தியின்பொருட்டுப்பாடிக் கண்பெற்றார் என்பது.

இந்த இரண்டுவகை வரலாறுகளும், இந்நூலின் பாயிரத்தோடு மாறுபடுகின்றதனாலும், இவர்மகனார் கூறிய பாயிரத்தை மறுக்கத்தக்க பிரபல ஆதாரமொன்றும் இவ்வரலாறுகளுக்கு இல்லையாதலாலும், இவை யாவராலுந் தகுதியென்று ஏற்றுக்கொள்ளத்தக்கனவல்லவென்றுதோன்றுகின்றது.

இவர் தம்காலத்திற் கல்விச்செருக் கடைந்திருந்த புலவர்கள் பலரையுந் தமது வித்தியாசாமர்த்தியத்தால வென்று அவ்வெற்றிக்கு அடையாளமாகத் தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் தமதுகையிலே எப்பொழுதும் ஆயுதமாக வைத்துக்கொண்டுள்ள துறட்டுக்கோலால் மாட்டியிழுத்து அறுத்து வந்தன ரென்பது,

"குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னிங்கில்லை
  துரும்பியனாவாக் காதைத் துடைந்து தோண்டி
வெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
  யிரண்டொன்று முடிந்துதலை யிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவி யொட்டக்கூத் தனில்லை
  விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைக ளுண்டு
  தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே"

என வழங்குந் தனிப்பாட்டாலும் அறியப்படும்.

ஒருவன்பாடும் பாட்டில் ஏதாவது குற்றங் கண்டால் கண்டவுடனே அவன் தலையில் நறுக்கென்று குட்டுவது, பிள்ளைப்பாண்டிய னென்னும் அரசனது ஏற்பாடு; அவனிடம் பரிசுபெறவந்த வித்துவான்கள்பலரும் 'குட்டுப்பட்டாலும் மோதிரக்கையாற் படவேண்டும்' என்கிற பழமொழியைப் புதுமொழியாக ஞாபகப்படுத்திக்கொண்டு வந்தவழியே திரும்பிப்போய் மேன்மேற் கல்விகற்க முயல்வது, அவன்காலத்தில் இயல்பா யிருந்ததாம். கவிபாடி வருபவர்களையெல்லாஞ் சயித்துப் பிடித்துச் சிறைச்சாலையிலடைப்பித்து, தேவி கொலுவிருக்கின்ற நவராத்திரிகாலத்தில் சிறைக்கூடத்திலிருந்து வெளிப்படுத்தி அவர்களை இருவர் இருவராகக் குடுமியோடு குடுமிமுடிபோட்டு இறங்கிநிற்கத் தேவிமுன்பாக நிறுத்திப் பிடாரிக்குச் சேவகடா வெட்டுவது போலச் சற்றும் இரக்கமில்லாமல் அவர்கள்தலைகளைப் பதைக்கப்பதைக்க வெட்டிப் பலிசெலுத்துவது, ஒட்டக்கூத்தரென்னும் புலவரது வழக்கமாம். அவைபோலவே இவ்வில்லிபுத்தூராரும் வாதஞ் செய்யும்பொழுது எதிரிதோற்றால் அவன்காதில் துறட்டைமாட்டிப் பிடித்திழுத்துக் காதை ஒட்ட அறுத்து, யானையின் மதக்களிப்பை அங்குசத்தால் அடக்குவதுபோல அவர்களதுகல்விச்செருக்கைத் தமதுதுறட்டிஞலொழிப்பதைத் தமது வழக்கமாக வைத்துக்கொண்டு பிருதுகூறிச்சென்று திக்குவிசயஞ் செய்துவந்தார். இவர்காலத்து அரசர்கள் இவரிடத்தில் மிகவும்பிரீதிவைத்திருந்ததனால், இவர்க்கு இங்ஙனஞ்செய்யஇடங்கொடுத்து வந்தார்கள்.

[கல்வியின் அருமையைத் தெரிவிக்கிற நல்லவழியாகையால் இவர்செய்துவந்த இது பாதகமாகாதென்றும், இவர்க்கு இடங்கொடுத்துவந்த அரசர்களும் கொடுங்கோல்மன்னர்களாகாரென்றும்,இங்ஙனமில்லாவிடின் அக்கா

லத்தும் இக்காலத்திற்போலச் சிற்றறிவுடையோரும் பேரறிவுடையோர் போலவே * பண்டிதர் மகாபண்டிதர் கவி கவிராயர் வித்துவான் வித்வச்சிரோமணி என்பவைமுதலாகக் கண்டதுகண்டபடி பல பட்டப்பெயர்களை எவருங்கொடுக்கவேண்டிய அவசியமில்லாமலே தாங்களே சொந்தத்தில் வைத்துக்கொண்டு தாந்தோன்றிகளாய்த் திரிவார்களென்றும், இப்படிப்பட்ட கெட்ட வழக்கத்தை நிறுத்துதற்கு ஏதுவானதனால் இவர்செய்துவந்தது லோகோபகாரமான காரியமென்பதற்குச் சிறிதுந்தடையில்லையென்றும், இல்லாவிடின் கல்வி அபிவிருத்தியாகாமலென்றும், இக்காலத்தில் வழங்குகிற ராஜபாஷைப்பரீட்சைக்குரியபட்டங்களை அப்பரீட்சைதேறாதபிறர் வைத்துக்கொண்டாற் குற்றமாவதுபோலவே முற்காலத்திலும் தகுதியல்லாதவர் பட்டப்பெயர்களைச் சூடுவது குற்றமாயிருந்ததென்றும், அக்காலத்து அரசர் முதலிய பிரபுக்கள் தகுதியுடைய பண்டிதர்களின் யோக்கியதையைத் தக்கபடியறிந்து அதற்கேற்ப வெகுமானங்கள் செய்துவந்தார்களாகையால் தகுதியல்லாதவர்கள் புலவர்களென்று நடித்தால் அவர்களைச்சிட்சிப்பதற்குவேண்டிய ஏற்பாடுகளுஞ் செய்யப்பட்டிருந்தனவென்றும், இக்காலத்திலோ சம்மானமில்லாமையால் அவமானஞ்செய்வதுமில்லையாயிற்றென்றுங் கூறுவர்.]

இவருடைய **காலம்** இன்னதென்பது, எந்தக்காரணத்தாலும் நன்றாகத் தெரியவில்லை. நவீன நாகரிகமடைந்துள்ள பாஷைகளிற்போல நமது ஸம்ஸ்கிருதம் தமிழ் முதலிய பிராசீநபாஷைகள் பலவற்றிலும் காலக்கணக்கோடு சரித்திரங்களைத் தெளிவாகவும் விரிவாகவும் எழுதிவைக்கிற வழக்கம் அநாதியாக இல்லாமலிருத்தலால், பழைய கவிகள் அரசர்கள் முதலியோரைப்பற்றின காலம்முதலியன தெரிவது அரிதாய்விட்டது. இவருடைய சரித்திரத்தைச் சிறந்த செய்யுள்நடையிலே சுருக்கமாக எழுதிவைத்த இவர் குமாரரும் இவர்காலத்தைக்குறித்து யாதொன்றும் எழுதிவைத்தாரில்லை. இப்பொழுதைக்குச் சற்றேறக்குறைய ஐந்நூறு வருஷத்துக்கு முன் இருந்தவரெனத் தமிழ்ப்பண்டிதர்கள் பலர் கர்ணபரம்பரையாகச் சொல்லிவருவதே ஐதிஹ்யப்பிரமாணத்தால் யாவரும் நம்பவேண்டியதாயிருக்கிறது.

பாயிரத்தில் "நான்காஞ்சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமல் தலைகண்டானே" என்று இவர்காலத்திலிருந்தவரபதியாட்கொண்டானென்னும் அரசனைக் கூறியிருத்தலால், இவர்காலம் கடைச்சங்கத்தார்காலத்துக்குப்பின் என்பதுமாத்திரமே தெளிவாகத் தெரியவருகிறது.

கவிகள்பாடியுள்ள நூற்செய்யுட்களின் நடையால் அந்தந்தக்கவிகளின் காலத்தைக் கண்டுபிடிப்பதொரு வழக்கத்தை முக்கியமாகக்கொண்டு, இவர்பாடியபாரதம் கந்தபுராணத்தின் நடையைப் போன்றுள்ளதென்றும், கந்தபுராணத்தின்காலம் இப்பொழுதைக்கு ஏறக்குறைய ஆயிரத்துநூறுவருடங்களுக்குமுன் என்பது அந்நூற்சிறப்புப்பாயிரத்தாற் புலப்படுதலால் இவர்காலமும் கம்பர்காலம்போலவே ஏறக்குறைய ஆயிரம்வருஷங்களுக்கு முன்பாக இருக்கலாமென்றும் சிலர் ஊகிக்கிறார்கள். நடையொன்றைக்கொண்டே காலத்தை வரையறைசெய்கிற வழியை யாவரும் தடையின்றி ஒருமனமாய் ஏற்றுக்கொள்வது மிகக் கடினம்: ஏனெனில்,—புதியகாலத்த

---

* சிற்றறிவினராய்த் தாமே தக்கபண்டிதரென்று செருக்கியிருந்தபொழுது இப்பட்டப்பெயர்ச்சுமையைத் தலைமேல் ஏறிட்டுக்கொண்டவர், பின்பு அதுதகுதியன்றென்று பிறரால் அறிந்தவுடன் அதனை இறக்கிவிட்டு, வேறு வகையிற் பிறரை மருட்டும்பொருட்டு வெவ்வேறுபெயர்வகைகளைத் தாமே நாடியமைத்துக்கொண்டு வெளிப்படுதலும் உண்டு: அது வியக்கத்தக்கதே. இனி, இராசபாஷைக்குப்போலவேஇப்பாஷைகளுக்குந்தக்கபரீக்ஷைகளேற்பட்டுவிட்டால், இப்படிப்பட்ட வழக்கங்கள் எங்கும் ஒடுபட்டுப்போய்விடும்.

வரும் * பழையநடையைப்போலப் பாடக்கூடும்; பழையகாலத்தவர்கள் பாடினாலும் சிலகாரணங்களினாற் புதியநடையையொத்து இருக்கலாம்: ஒருவர் செய்த பலநூல்களுள் ஒன்றற்கொன்று நடைவேறுபாடு இருத்தலுங் கூடும்; முந்திப்பாடினது ஒருவகையும் பிந்திப்பாடினது ஒருவகையுமாக இருக்கலாம்; இற்றைக்கு நூற்றுப்பத்து வருஷத்துக்குமுன் பாடப்பட்டுள்ள காஞ்சிப்புராணமும் அதனோடுசமகாலத்திற் பாடப்பட்ட தணிகைப்புராணமும், கம்பராமாயணம் முதலிய பழைய பெருங்காப்பியங்களின் நடையைப் போன்றிருக்கவில்லையா? பழைய பக்தர்கள் சிலர் பாடியுள்ள செய்யுட்கள் புதியநடையைப்போன்று மிக எளிதாக இருக்கின்றனவே; புகழேந்திப்புலவர் பாடியுள்ள நூல்களுள் நளவெண்பாவின் நடை எத்துணைச் சிறப்புடையது! அவர்தாமே பெண்களுக்கென்று பாடியனவாக வழங்குகிற அல்லியரசாணிமாலை, பவழக்கொடிமாலை, புலந்தரன்களவுமாலை என்பவற்றின் நடை எவ்வளவு எளிமையுடையது! இப்படிப்பட்ட பலகாரணங்களால் நடையைக்கொண்டே காலத்தை நிச்சயிப்பதற்கு நேர்கிற ஆட்சேபங்களை மறுத்தல் அரிதாதல் நோக்கி யாம் அவ்வழியில் இறங்கவில்லை.

இவர்க்கு வில்லிபுத்தூராரென்றும் வில்லிபுத்தூராழ்வாரென்றும் வழங்கிவருகிற பெயர் யாதுகாரணத்தால் வந்தது? பாண்டியநாட்டில் திருநெல்வேலி சில்லாவில் பிரசித்தமாகவுள்ள விஷ்ணுஸ்தலமான ஸ்ரீவில்லிபுத்தூரில் பிறந்தவரா? அன்றி வளர்ந்தவரா? அல்லாக்கால் வாழ்ந்தவரா? என்னில்,—இக்காரணங்க ளொன்றுமன்று, இவர்க்கு இப்பெயர் வந்தது; பின்னை யென்னையோவெனில்,—வைஷ்ணவசம்பிரதாயத்திற் சிறந்தபக்தர்களென்று சொல்லப்படுகிற ஆழ்வார்கள் பன்னிருவருள் ஒருவரும், பெரியாழ்வாரென்றும் பட்டர்பிரானென்றும் விஷ்ணுசித்தரென்றும் வேறுதிருப்பெயர்களை யுடையவரும், ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதாரஞ்செய்தகாரணத்தால் வில்லிபுத்தூராழ்வா ரென்று வழங்கப்படுபவரு மாகிய பாகவத சிகாமணியினுடைய இத்திருநாமத்தையே தந்தைதாயர்கள் இவர்க்குப் பெயராக இட்டு வழங்கினார்க ளென்று உணர்க; (பரிசுத்திகரமென்கிறகாரணத்தால், கடவுள்பெயரும் அடியார்களின்பெயரும் மனிதர்களுக்கு இட்டு வழங்கப்படும்.) அல்லது, அந்தப் † பெரியாழ்வார் பாலியத்திலே எவரிடத்தும் யாதொருநூலும் படியாதவராயிருந்தும் பின்பு பகவானருளாற் பெரியதிவ்வியப்பிரபந்தம் பாடவல்ல மகாபண்டிதராய்விட்டதுபோல, இவரும் தெய்வகடாக்ஷம்பெற்ற வரகவியென்கிற காரணம்பற்றி, இவர்க்கு வில்லிபுத்தூராழ்வாரென்றுபெயர்வந்த தென்றுங்கொள்ளலாம். [ஆழ்வார் என்பதற்கு-எம்பெருமானுடையதிருக்கலியாணகுணகணங்களாகியபெருங்கடலில்அமிழ்ந்துநெஞ்சுருகிஈடுபடுபவரென்றுபொருள். இப்பெயரால் மற்றுஞ்சிலபக்தர்களைவழங்குவதைப் பரதாழ்வான், சத்துருக்கினாழ்வான், பிரகலாதாழ்வான், கஜேந்திராழ்வான், சுதரிசனாழ்வான், கம்பநாட்டாழ்வார் முதலிய பெயர்களிலுங்காண்க.]

விஷ்ணுவினுடைய அம்சாவதாரமாகிய கிருஷ்ணனுடைய சரித்திரம் மகாபாரதத்தில் இடையிடையே வருகிற தென்ற சிறப்புப்பற்றியே இவ்வாசிரியர் பாண்டவசரித்திரத்தைப் பாடுதற்கு உடன்பட்டுப் பாடினார்; இது

"முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்

---

* காலபேதத்தால் பாஷையின்இயல்புமாறுபடுவது, தமிழுக்குப் பெரும்பாலும் இல்லை; வடமொழிக்கும் இப்படியே.

† இவர்சரித்திரத்தை, '**ஆழ்வார்கள்சரித்திரம்**' என்ற வசன நூலிற் பரக்கக் காணலாம்.

மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கு
மென்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்"

என இவர்தாமே தற்சிறப்புப்பாயிரத்திற் கூறியுள்ளதனாற் பெறப்படும். [வேதவியாசபகவானும் வடமொழிமகாபாரதத்தில் இவ்வாறேகூறியுள்ளார். இனி, இச்செய்யுளின் மூன்றாமடியின் முதலில் 'மன்னுமாதவன்' என்பதை மன்னும் மாதவன் எனப்பிரித்து-நித்தியனாகிய திருமகள் கொழுநனை திருமாலென்றுபொருள்கொள்வதைவிட்டு மன்னும் மாது அவன் என்றாவது மன் உமா தவன் என்றாவது பதம்பிரித்து-ஸ்தாணுவாகிய உமாபதியான சங்கரனெனப் பொருள்கொண்டு, சிவபிரானது சரித்திரம் இந்நூலின் இடையிடையேவழங்குவதென்ற விருப்பத்தால் தாம் இதனைப்பாட இசைந்ததாகக் கூறினா ரென்று உரைப்பாரு முண்டு; அது சரியன்று: ஏனெனில்,—இந்நூலில் ஆதிபருவத்தில் அருச்சுனன்தீர்த்தயாத்திரைச்சருக்கத்திலும், ஆரணிய பருவத்தில் அருச்சுனன் தவநிலைச்சருக்கத்திலும், துரோணபருவத்தில் பதின்மூன்றாம் போர்ச்சருக்கத்திலும் ஆக மூன்றிடத்தில்மாத்திரமேயன்றி நூல்முழுவதும் இடையிடையே (கண்ணனுடைய சரித்திரங் காணப்படுவது போலச்)சிவபிரானுடைய பிரஸ்தாபம் இல்லாமையாலும், வைஷ்ணவராகியஇவர்சிவசரித்திரம்வருவதென்றுபாடினாரென்பதுஉசிதமல்லாமையாலும் எனக்காண்க. இக்காரணங்கள் தக்கனவேயா மென்பது, மதத்துவேஷத்தை யொழித்துப்பார்ப்பவர்க்கு வெள்ளிடைமலைபோலத் தெள்ளிதிற்புலப்படும்.]

அன்றியும், இவர் இந்நூலில் ஒவ்வொருசருக்கத்தின் தொடக்கத்திலும் திருமால்விஷயமாகக் காப்புச்செய்யுள் கூறியுள்ளதனாலும், "மறந்தும் புறந் தொழா" நல்லவைஷ்ணவ ரென்பது நன்குவிளங்கும். [சில சருக்கங்களில் காப்புச்செய்யுள காணப்படவில்லை; அதற்குக்காரணம்-ஆசிரியராற்பாடப் பட்ட செய்யுட்கள் பிற்காலத்தில் ஏடெழுதுவோரால் எழுதாதுவிடப்பட்டு இல்லையாயின வென்றாவது, * தொல்காப்பியம் முதலிய சில நூல்களிற் போலச்சிலசருக்கங்களின்ஆரம்பத்தில் மானசிகமாத்திரமாகக்கடவுள்வணக்கஞ் செய்யப்பட்டுச் செய்யுளுருவமாய் வாசிகமாகக் காப்புச் செய்யப்படவில்லை யென்றாவது கொள்க.]

ஆயின், வைஷ்ணவராகிய இவர் இந்நூலின் முதற்காப்பாக

"நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநாள்
ஏடாகவடமேருவெற்பாகவங்கூரெழுத்தாணிதன்
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ.

முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறந்
திருகாமல்வினைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
பருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரும்
ஒருகோடிபூதேவருங்கைதொழுங்கோவையுறவுன்னுவாம்."

என்ற இரண்டு பாடல்களால் சிவகுமாரராகிய விநாயகரை ஸ்தோத்திரஞ் செய்வானேன்? என்றால்,—தம்மைச்சரணமடைந்தவர்கள்தொடங்குந்தொழில்களுக்கு வருகிற விக்கினங்களைப் போக்குதலாலும் தம்மையடையாமல் அகங்கரித்தவர்கள் ஆரம்பிக்கிற செய்கைகளுக்குப் பல இடையூறுகளை உண்டாக்குதலாலும்'விக்நேச்வரர்' என்று திருநாமம்பெற்றுள்ள ஸ்ரீவிநாயக மூர்த்தி சைவர்களுக்குமாத்திரமேயன்றி எல்லோர்க்கும் வழிபடுகடவுளேயாதலாலும், வேதவியாசர் மகாபாரதத்தை இயற்றிவருகிற பொழுது விநாய

* 'தொல்காப்பியம் முதலியவற்றில் நூற்குப் புறமாகவே மங்கலம் செய்யப்பட்டது' என்பது, தருக்கசங்கிரகவுரை.

கர் அந்நூலை மகாமேருமலையிலே எழுத்தாணிகொண்டு எழுதிவந்ததும் இடையிலே அவ்வெழுதுகருவி ஒடிந்துபோனபொழுது 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்கிறவகையாய் யானைமுகக்கடவுளாகிய தமது தந்தங்களில் ஒன்றைப்பறித்து அதனையே கருவியாகக் கொண்டு எழுதிமுடித்தருளினது மாகிய இந்த முக்கியமானகாரணத்தைக்கொண்டுநோக்குமிடத்து விநாயகர் இந்நூலின் முதலில் வைத்தற்கு ஏற்ற இயைபுடையவ ராதலாலும், வைஷ்ணவர்கள் விநாயகரை விஷ்வக்ஸேநரென்கிற சேனைமுதலியாரது அம்சமென்று கொண்டாடுவது வழக்கமாதலாலும் இவரும் விநாயகரைப்பாடினரென்க.

இவ்வில்லிபுத்தூரார் சிவத்துவேஷம் பாராட்டுகிற வீரவைஷ்ணவரல்லர். அது - அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கத்திலும், அருச்சுனன்தவநிலைச் சருக்கத்திலும், பதின்மூன்றாம்போர்ச் சருக்கத்திலும் சைவசம்பிரதாயத்துக்கு வழுவுறாதபடி சிவனைச் சிறப்பித்தும் இதரதேவர்களைத் தாழ்த்தியுங் கூறினதனால், நன்குபுலப்படுகிறது. அருச்சுனனது கையிலுள்ள காண்டீவ வில்லினது கழுந்தினாற் சிவபிரான் அடிபட்ட செய்தியைச் சொல்லும்பொழுது

"விண்ணிலுறை வானவர்கள் யாரடிபடாதவர் விரிஞ்சனாதியே முதலினோர்*
மண்ணிலுறைமானவர்கள் யாரடிபடாதவர் மனுக்கள்முதலோர்களதகைக்
கண்ணிலுறை நாகர்களில் யாரடிபடாதவர்கள் கட்செவிமகீபன்முதலோர்
எண்ணில் பலயோனியிலும் யாவடிபடாதன விருந்துழியிருந்துழியரோ"

என்பது முதலியவற்றாலும், பதின்மூன்றாம்போர்நாளின் இரவில் சைந்தவனென்கிற சயத்திரதனை அருச்சுனன் அடுத்தநாளில் தவறாமற்கொல்லவேண்டிப் பரமசிவனிடத்துச் சிறந்த சில அஸ்திரசஸ்திரங்களைப் பெறுதற்காகக் கண்ணனுடனே கைலாசத்துக்குச் சென்ற செய்தியைச் சொல்லும்போது

§"புரந்தகைய வெரிபுராரி தன்முனம்
நரனொடு நாரணன் நணுகி நணபினால்
சரணங் கயமுறத் தாழ்ந்து பன்முறை
கரமுற முகிழ்த்திது கழறன் மேயினார்"

என்பது முதலியவற்றாலுந் தெளிவாகத்தெரிகிறது. இன்னும், இவர் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்தில்

†"ஓரேனந்தனைத்தேடவொளித்தருளுமிருபாதத்தொருவனந்தப்
போரேனந்தனைத்தேடிக்கணங்களுடன்புறப்பட்டான்" எனவும்,
"மையரவினொடு புருகூதனிவர்சூழ்தர ப்பச்சைமயில்பாதியுடனே
துய்யவிடை மீதொருசெழுஞ்சடைமரூந்ததுமெழுந்தகையதாகுமனவோ"

எனவுங்கூறியுள்ளவற்றையும் நோக்குக. ‡வியாசர்புராணங்களிலும் ஒவ்வொரு

* விரிஞ்சன்முதலோருததிரூழ்' என்று பலஏடுகளின் பாடம்.

§ இப்பாட்டு, எமக்குக்கிடைத்தஏட்டுப்பிரதிகளுள் எதிலும் இல்லை.

† வில்லிபுத்தூராரை ஆதரித்தஅரசன் சைவமதத்தனாகவிருக்கலாமென்றும், இவர் அவனுக்குமுகோல்லாசமாக ஆலிற்சிலவிடத்துச் சிவபிரானை விசேடித்துக்கூறியிருத்தல் கூடுமென்றும், அங்ஙனங் கூறியவற்றிற்கெல்லாம் வெளிப்படு பொருளொழிய வேறு உள்ளுறைபொருளும் உண்டென்றும் உய்த்துணர்ந்து கூறுதலும் ஒன்று.

‡ இப்படி சிலபிரதியிலுள்ளவளவு சிவஸ்தோத்திரமான பாடல்கள் பலஏட்டுப்பிரதிகளில் இல்லை; இது, யாம் வைஷ்ணவஅபிமானத்தாற் கற்பித்துக்கூறுவதன்று; பழையஏடுகளோடொத்திட்டுப்பார்த்தால்யாவருக்கும் நம்புதலுண்டாம். யாம் அங்ஙனம் பலசுவடிகளோடு சரிபார்த்தே இவ்விஷயத்தைத் துணிந்துவெளியிட்டோம். அப்படிப்பட்ட புத்தகங்களிரண்டு சென்னையிலுள்ள இராசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையிலும் உண்டு.

தேவரை ஒவ்வோரிடத்திற் சந்தர்ப்பத்துக்கேற்பச் சிறப்பித்துக்கூறியிருத்தல் போலவே, இவரும் தமது நூலில் சூரியன் அக்கினிமுதலிய மற்றைத் தேவர்களையும் சமயம்வந்தவிடத்துப் பக்ஷபாத மில்லாமற் சிறப்பித்துக் கூறியுள்ளார். பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "மூவர்தத்தம்வடிவாமுதல்வன்" எனச் சூரியபகவானைச் சிறப்பித்துக்கூறியுள்ளவாறும் பிறவுங் காண்க; [இதற்கு - திரிமூர்த்திகளின் சொரூபமாகவுள்ள தலைவனை சூரியனென்று பொருள்.]

கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய பெருந்தேவனாரென்பவர் மகாபாரதத்தைத் தமிழில் வசனமும்பாடலுமாக விரவிவருகிற 'சம்பு' என்கிற நடையிலே பாடியுள்ளார்; பெரும்பாலும் வெண்பாக்களால் அமைந்ததுபற்றி, அந்நூலுக்குப் **பாரதவெண்பா** வென்று பெயர். அது, இப்பொழுதைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம் வருஷத்துக்கு முந்தியது. * இவ்வில்லிபுத்தூரார் அந்தப் பாரதவெண்பாவின் சொல்லையும் பொருளையும் ஆங்காங்கு வெகுவாகத் தழுவி நாலாயிரத்து முந்நூற்றுச்சில்லறை பாடல்களாற் பாரதத்தைப் பாடியுள்ளார். இவர்பாடியபாரதம் வடமொழி வியாசபாரதத்தின் வழிநூலென்னத் தட்டில்லை.

"மண்ணி லாரண நிகரென வியாதனார் வகுத்த
எண்ணிலா நெடுங்காதையை யானறிந் தியம்பல்"

என்று இவர்தாமே அவையடக்கத்திற் கூறியிருக்கிறார். ஆயினும், இவர் பாடியநூல் ஸம்ஸ்கிருதபாஷையில் அகஸ்தியபட்டரென்பவர் இயற்றியுள்ள **பாலபாரத** மென்னுங் காவியத்தின் பொருளமைதியோடு பலவிடங்களிலொத்திருக்கின்றது; ஒப்பிட்டுப்பார்க்குமிடத்து இந்நூலுக்கும் அந்நூலுக்கும் இடையிடையே பலவேறுபாடுகளும் உள்ளனவாயினும் சிற்சில விடங்களில் இந்நூல் அந்நூலின் மொழிபெயர்ப்பென்றே சொல்லலாம்படி யுள்ளது: (இவ்விஷயம், பதினேழு வருஷங்களின்முன் நாடிக்கண்டு பிடித்துப் பன்னிரண்டு வருஷங்களின் முன் எம்மால் முதலில் வெளியிடப்பட்டது:) இதற்கு அரிதில் தேடியெடாமல் எளிதில் அகப்பட்ட சில உதாரணங்கள் வருமாறு:—நூலின் முதலில் சந்திரனைக்கூறுமிடத்து, பாலபாரதம்- "அத்ரிநேத்ரப்ரபவ:"=வில்லிபுத்தூரார் பாரதம் - "அத்திரிப்பெய ரந்தண னம்பகந்தனில்... ...பிறந் தொளிசிறந்தோன்"; பாலபாரதம் - "நக்ஷத்ரகணஸ்யநாத:"=வில்லிபாரதம் - "பொருந்த வானுறைநாள்களை நாடொறும் புணர்வோன்"; பாலபாரதம் - "ஸம்பாவநீயச் சிரஸாசிவேந"=வில்லிபாரதம் - "திருந்த வானவர்க்கரியவன் செஞ்சடை முடிமே, லிருந்த வானவன்": இங்ஙனம் பலவிடத்து ஒத்துவரும்.

வில்லிபுத்தூரார் தமதுபாரதத்திற் பாடியது, முதற்பத்துப்பருவமே; மற்றையெட்டுப் பருவங்கள் அவராற் பாடப்படவில்லை. அதற்குக் காரணம்: அவற்றைப் பாடுவதற்குமுன் அவர் காலஞ்சென்றிருக்கலாம்; அல்லது, நூல் முழுவதையும் பாடினால் பாண்டவர்கள் கிருஷ்ணபகவான் என்கிற மகாபுருஷர்களது கேட்பவர்க்கு வருத்தத்தையுண்டாக்கத்தக்க மரணசரித்திரத்தைத் தம்வாயாற் சொல்லவேண்டுமே யென்றுகருதி 'பாண்டவர்கள் இராச்சியம் ஆண்டு வாழ்வாராயினர்' என்பதனோடு முடித்து விட்டதாகக் கூறலாம். பாண்டவசரித்திரங் கூறுகிற † பாரதசம்பு முதலிய சில

* அந்நூல் பன்னீராயிரம் பாடல்களையுடையதென்று தொண்டைமண்டலசதகத்திற் கூறியிருப்பினும், அது இப்பொழுது முழுவதும் கிடைப்பதில்லை. உத்தியோகபருவந் தொடங்கித் துரோணபருவம் வரையிலும் எண்ணூறுபாடல்களே கிடைக்கின்றன.

† பாலபாரதத்தில் கதைமுடியக் கூறப்பட்டுள்ளது; (இறுதியிலுள்ள பத்தொன்பதாவது இருபதாவது சருக்கங்களிற் காண்க:) ஆதலால், அது

நூல்களிலும் பின்னிட்டகதை காணப்படவில்லை. [கம்பர் இராமாயணத்தில் உத்தரகாண்டம் பாடாமல் விட்டதற்கும் இப்படிப்பட்ட காரணத்தையே முக்கியமாகக் கொள்ளலாம்; இப்பொழுதும் இராமாயண பாராயணஞ் செய்பவர்கள் உத்தரகாண்டம் படிப்ப திலலையன்றோ ?] அவ்வாறே இவரும் பின்னையசரித்திரத்தைக் கூறாமல் "கனைகடற்பா ரளித்து அவருமந் நகரிலறநெறியேகருதி வாழ்ந்தார்" என மங்களகரமாகவே சரித்திரத்தைப் பாடி முடித்தாரெனக் கொள்வது தகுதியுடையது. இனி, இந்நூலின் பின்னையபருவங்களும் பாடப்பட்டுப் பிற்காலத்திற் கிடைத்தற் கரியவையாயின வென்று கொள்வாரு முளர். * மகாபாரதத்தின் ஆதிபருவத்தை மாத்திரம் விரித்துப் பாடிய தொரு தமிழ்நூலும் உண்டு; அது, மடுவைப்பதியில் வாழ்ந்த திம்மராயனென்பான் அம்பலத்தாடுமையரைக்கொண்டு பாடுவித்தது: அந்நூலை 'ஆதிபருவத்தாதி' என்று வழங்குவர்.

வில்லிபுத்தூரார் பாடியபாரதத்தில் சுருக்கமாகக் கதையைத்தொகுத்துக்கூறும் மூந்நூறுநானூறு பாடல்கள்தவிர மற்றை நாலாயிரஞ் செய்யுட்களை யெடுத்துக்கொண்டு, பிற்காலத்தில் நல்லாப்பிள்ளையென்பவர், புதிதாகத் தாம் பதினோராயிரம் பாடல்பாடி இடையிடையிற் கோத்தும் இறுதியிற் சேர்த்தும் பாரதம் பதினெட்டுப் பருவங்களையும் பூர்த்திசெய்தார்; அது- '**நல்லாப்பிள்ளைபாரதம்**' என வழங்கும்: அந்நூலாசிரியர், இற்றைக்கு நூறு வருஷங்களின்முன்இருந்தவர். இதுதவிர, இற்றைக்கு ௧௫0-வருடங்களின் முன் இருந்த அஷ்டாவதானம் - அரங்கநாதகவிராயர் பாடியபாரதத்தின் பிற்பகுதியும் ஒன்று உளது; அது, ஏறக்குறைய ௨௫00-செய்யுளுடையது.

---

இங்கே எடுத்துக் காட்டத்தக்கதன்று. எமது 1898-99-யப். ஏ. பாடபுத்தகங்களின் அநுபந்தத்தையும், பிழைதிருத்தத்தையும் பார்க்க. ஆகவே, சிலர் 'வடமொழியிற் பாரதகதையைக்கூறும் பாலபாரதம், சம்பூபாரதம் முதலிய நூற்களில் இறுதிக்கதைகள் காணப்படாமை எத்தகையகாரணம் பற்றியோ, அத்தகையகாரணம் பற்றியே இவரது பாரதத்திலும் இறுதிப்பாகம் காணப் படாதிருத்தல்கூடு மெனவுங் கூறுப' என்று உடன்பாடாக எழுதினது மறுக்கத்தக்கது.

* "கலியுகவியாதன்சொல்லக்கணபதியெழுதுபாடல்
பொலிவுறுதமிழிலாறுயிரமெனவிருத்தம்போற்றிச்
சலிவறவில்லிபுத்தூரிறைவனுஞ்சார்வபௌம
னொலிகெழுமறையோர்கோமானுயர்தவருவப்பச்சொன்னான்"

என ஒருசெய்யுள்வில்லிபுத்தூரார்பாரதத்து ஏட்டுப்பிரதியொன்றில்பாயிரத்தோடு காணப்பட்டது. இது பழையபாடலாக இருக்குமாயின், இதிற்கூறிய ஆறாயிரம்பாடல்களில் பத்துப்பருவங்களாகவுள்ளநாலாயிரத்துமுந்நூற்றுச் சில்லறைபோகமற்றவை இவர்பாடிய எட்டுப்பருவங்களெனக்கொள்ளலாம்.

மாவிந்தமென்றும், மகாவிந்தபுராணமென்றும், மகாபெந்தமென்றும், மகாவெந்தமென்றும் பேர்மாறாட்டமாக வழங்கப்படுவ தொரு தமிழ்நூல் உண்டு. அது, சாதாரணசனங்களுக்குக் கதைகூறுங்குழாத்தாற் கொண்டாடப்பட்டுப் பலவிடத்தும் பயில்கிறது. அதன் ஏட்டுப்பிரதி யிரண்டு, இராசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையிலும் உண்டு. அந்நூல், பாரதத்துப் பாண்டவரது மகாபிரஸ்தாந சரித்திரத்தை மாத்திரமே சில கிளைக் கதைகளோடு கூறுவது. ஆதலால், அந்நூலின் பெயர், 'மஹாப்ரஸ்தாநம்' என்ற வடசொல் மகாபிரத்த மெனத் திரிந்து அது பின் கண்டபடி சிதைந்த தென்றே கொள்ளத்தக்கது. அதில், பாரதத்தின் பிந்தின எட்டுப்பருவங்களின் சரித்திரம் முழுவதும் இடையாது. அது - சனமேசயன்கதை, காங்கேயர்மோக்ஷம், கிருஷ்ணதேவன்மோக்ஷம், கலிவருகை, தருமபுத்தி

இப்பாரதத்துக்கும் இதன் முதனூலாகிய வியாசபாரதத்துக்கும் இடையிடையே கதையமைதிகள் சிற்சில வேறுபடுவது "முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, அழியாமரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிப்படி இவ்வாசிரியராற் பிறநூல் மேற்கோள்கொண்டு அமைக்கப்பட்டதாதல் வேண்டுமென அறிக. [கம்பராமாயணத்துக்கும் வால்மீகிராமாயணத்துக்கும் சிலசிலவிடத்து ஒன்றோடொன்று வேறுபாடுகாணப்படுவதற்குங் காரணம் இதுவே.] அன்றி, ஜைமினிபாரதத்தை இவர்முதனூலாகக்கொண்டு மொழிபெயர்த்தாரென்பது முழுவதுஞ் சரியன்று; இவர் தாமே வியாசபாரதத்திலிருந்து எழுதுவதாகக்கூறியுள்ளார்: (ஜைமினிபாரதத்தில் அசுவமேத பருவமொன்று தவிர மற்றையபருவங்க

ராதிகள் தபசுக்கு ஏகுதல் முதலாக, யமன் சோதனை, தனமபுத்திரர் பூந்தேரேறுதல், அடியாரைக்காட்டுதல் இறுதியாகப் பல சிறுபகுப்புக்களாகப் பிரிக்கப்பட்டுள்ள ௧௪௫௫ செய்யுளுடையது. அந்நூலின் நடை, சிறிதுஞ் சிறப்பாகக் கொள்ளத்தக்கதன்று; அந்நடையின் தாழ்வுக்குத் திருஷ்டாந்தமாக அந்நூலின பாடல்கள் சில இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன:—

"கோலமாந்தன்மனோர் கூண்டொடோடகவே, ஞாலமோரரசினை நயந்து நீத்துடன், மாலிடமொழுமற மகாவிந்தக்கதை, வேலவராருளினால் விளம்பு பாடலே." "தேனூறலாசதேங்காய் திரள்பணியாரப்பெட்டி, வானுடாமதிக்குஞ்சேலை வாகுளபதக்கமுத்து, மானனையக்களார்க்கு மணவாளக்கரத்துக்கேற, நாணயமோதிரங்கள் நலமுடனனுப்பினாரே." "தண்ணூறுதன்மாதன்னைத் தாக்குளபட்டங்கட்டிக், கணணிலலாதான் காந்தார்கைதனிற் காட்டிமாயன், எண்ணெணக்குமரர்தன்னை ரட்சியுமென்றதாகப், பண்ணூறு துவாரகைக்குப்பாங்குடன்போவதானார்." "அந்தமாம்பருவதத்திலாயுளாருதிரைமூஞ்சி, வந்ததோரைவர்தன்னில் வடிவுள்ளார் தன்னைப்பார்த்துத், தொந்தமாயோடிவந்து துய்யதோர் விசயனுரைப், பந்தமாயணைத்தவாறே பண்டுபோல்முகமதானாள்." "வழியதுமாளமேனும் மன்னனேதன்மராயா, பழமொழிகதைதானென்று பாங்குடனுரையுமென்ன, மொழிகிறேன் கதைதானென்று முன்பொருநாளில் மன்னன, அழகுடன் தானதர்மம் அளித்தரசாளுநாளில்." "அந்தமாம்வதிட்டர்வந்து அனுமனுஞ் சாம்பவானும், தந்தமாம் விபீடணனும் தாக்கு சுக்கிரீபன்கூடத், தொந்தமாம் பரதசத்ருதுய்ய லட்சுமணனங்கதன், பந்தமாய்க் கொலுசேவிக்கப்பட்டணிமுடிராமர்க்கீந்தார்."

இப்படிப்பட்ட நூலைப்பாடியவர் இன்னாரென்று தெரியவில்லை; சைவசமயத்தவரொருவரென்று மாத்திரம் அந்நூலால்தெரிகிறது. இப்படி மிகவெளிமைப்பட்ட நடையையுடைய மாவிந்தநூலை, வில்லிபுத்தூரார் நடைக்குப் பின்வாங்காமற் சிறப்புப்பாயிரம் உரைத்துள்ள வரந்தருவார் பாடியதென்று ஒருசாரார்கொள்வது, சிறிதுந்தகுதியன்று. அவரது செய்யுள்நடைச்சிறப்பை அவர்பாடிய பாயிரத்தை நோக்கி அறிக, அப்பாயிரச் செய்யுள்களுள் ஒன்று வருமாறு:—

"கரும்புங்கமுகுந்தலைதெரியாக்கழனிச்செந்நெற்களையாகி
யரும்புங்குவளைநறுமலர்த்தேனாறெங்குஞ்சேறாக
விரும்புஞ்சுருதியிசைகேட்டுவேலைக்கழிக்கானலங்கைதை
சுரும்புந்தும்பிகளுமருந்தமாறாதென்றுஞ்சோறிடுமால்."

மேற்கூறிய மாவிந்தத்தின் நடையோடொத்த நடையையுடைய பாரதத்தின் முந்தினபருவங்களும் வேறு காணப்படுகின்றன. ஆதலால், அவற்றையும் மாவிந்தபுராணத்தையும் இயற்றியவர் ஒருவராகவே யிருக்கலாம்.

இனி, வரந்தருவார்பாடிய பாரதத்தின் பிற்பகுதியென்று வேறேயொருநூல் வழங்கப்படுகின்றமையும் உணர்க.

ளெல்லாம் வியாஸசாபத்தால் அக்காலத்தில் தானே அழிந்துவிட்டனவென்பது ஐதிகியம்.

இவர் மகாபாரதமொன்றுதவிர வேறுநூலெதுவும் பாடியிருப்பதாகத் தெரியவரவில்லை.[கந்தரந்தாதியுரைஇவர்செய்ததென்றுகூறுவர்ஒருசாரார்.]

இவர், தமக்குப் பலசெல்வமுங்கொடுத்து ஆதரித்துத் தம்மைக்கொண்டு பாரதத்தைப்பாடும்படி செய்வித்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனை இப்பெருங்காப்பியத்தில் இடையிடையே புகழ்ந்து பேசியிருக்கிறார்:—

"கொடிமதிற் பாகை வேந்தன் கொங்கர்கோன் புரவிக் காலால்
வடதிசை யரசர் தங்கள் மாமணி மகுடம் போல
அடலுடை விசய னெற்றை யம்பினால் மீண்டுஞ் சென்று
படவர வுயர்த்த கோவைப் பண்ணினான் மகுட பங்கம்"

என்னும்பாட்டில், உத்தரகோக்கிரகணகாலத்தில் அருச்சுனன் துரியோதனனை ஒருபாணத்தாற்கிரீடத்தைக்கீழேதள்ளி அவமானப்படுத்தியதற்கு, வரபதியாட்கொண்டான் தானேறிப்போர்க்குச்செல்கிற குதிரையின் முன்கால்களால் வடக்குத்திக்கிலுள்ள அரசர்களைப்பங்கஞ்செய்வதை உவமைகூறினார்.

"கோவல்சூழ் பெண்ணை நாடன் கொங்கர்கோன் பாகை வேந்தன்
பாவலர் மானங் காத்தான் பங்கயச் செங்கை யென்ன
மேவல ரெமரென் றுமல் வெங்களந் தன்னில் நின்ற
காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனக மாரி"

என்கிற செய்யுளில், கர்ணன் யுத்தத்திற்குச் செல்கின்றபொழுது பகைவர் நண்பரென்கிற பேதமில்லாமல் யாவர்க்குந் தானஞ்செய்துவருதற்கு, வரபதியாட்கொண்டான் தானஞ்செய்தலை ஒப்பிட்டார்.

"நாகையாப் புகழான் பெண்ணை நதிவளஞ் சுரக்கு நாடன்
வாகையாற் பொலிதிண் டோளான் மாகதக் கொங்கர் கோமான்
பாகையாட் கொண்டான் செங்கைப் பரிசு பெற்றவர் னெஞ்சென்ன
ஓகையாற் செருக்கி மீண்டா ருதிட்டிரன் சேனை யுள்ளார்"

என்ற கவியில், தருமபுத்திரனது சேனையிலுள்ள வீரர்கள் வெற்றிகொண்டு மகிழ்ச்சியோடு படைவீட்டுக்கு மீளுதற்கு, வரபதியாட்கொண்டானிடம் வெகுமானம்பெற்றவர்கள் திருப்தியோடு திரும்பிவருவதை உவமைகூறினார்.

இப்படி, பாலில்விஷங்கலப்பதுபோலப் பெரிய இதிகாசத்தினிடையிலே ஒருமனிதனைத் துதித்தல் தகுமோ? நர கவனம் நரக வன மன்றோ? என்று ஓர் ஆட்சேபந் தோன்றலாம்: இங்ஙனந்தோத்திரிப்பது தகுதியன்றாயினும், அரசன் தமக்குச்செய்தநன்றியை மறவாமல் உபகாரஸ்மிருதியாகப் பாடினரென்பதுபற்றிப் பலரும் அங்கீகரிப்பார்கள்; அன்றியும், ப்ரஸ்துதமாகிய உபமேயமுகத்தால் அவன்பெயரைப் பிரஸ்தாபிக்காமல் அப்ரஸ்துதமான உபமானமுகத்தாற் புகழ்ந்துகூறியதும் ஒரு சமாதான மாகலாம். இங்ஙனமே தம்மைப்பாதுகாத்த பிரபுக்களைத் தாம்செய்யும்நூல்களில் நன்றியறிவுகாரணமாக எடுத்தேத்துவது, புலவர்களது இயற்கை. கம்பர் தமது இராமாயணத்தில் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பமுதலியாரையும், புகழேந்திப்புலவர் நளவெண்பாவில் முரணைநகர்ச் சந்திரன்சுவர்க்கியையும், மண்டலபுருஷன் சூடாமணிநிகண்டில் கிருஷ்ணதேவராயனையும் சிறப்பித்துக்கூறியவாறு காண்க. இன்னும், இவர், தமதுநூலில், தமிழ்நாட்டரசராகிய சேரசோழபாண்டியர்களைப்பற்றிப் பிரஸ்தாபம்வருகிறபொழுது மிக்க சிறப்பாகக் கூறுவர்:—

"வஞ்சிமதுரைபுகாருடையான்வடமண்டலிகர்திறைவாரியநேரியன்
விஞ்சிமுனைதொறும்வாளசுரேசரைவென்றபொழுதடல்வானவர்கோனருள்,"

"அண்டர்குலபதியாம்விடைவாகனன்அம்பொன்முடிமலர்நாறிடுதாளினன்
எண்டிசையுமனுநீதிசெய்கோலினன் எங்குமொருகுடையாலிடுநீழலன்
மண்டுகிரணசிகாமணிமோலியன் வண்மைதருநகர்தாதகிமாலையன்
மிண்டுமுதுபுலியேறுபதாகையன் வென்றிவளவனையார்நிகர்வீரரே"
என்றவற்றால், சோழராசனுக்கொப்பான வீரர் எவருமில்லை யென்றார்.

"மீனவன் வழுதி மாறன் வெண்மதி மரபில் வந்தோன்
வானவர் முதல்வன் சென்னி வரிவளை யுடைத்து மீண்டோன்"
என்றதனால், பாண்டியன் இந்திரனைக் கிரீடபங்கம்பண்ணின சிறப்பையும்,

"தந்தையை முதுகுகண்டோன் தனயனுக் கிளைக்குமோ தான்"
என்றதனால், பாண்டியன் சிவனைப் பிரம்பால் முதுகிலடித்த வலிமையையும்,

"காலினாற் றுகைத்து வேலைக் கனைகட லேழு முன்னாள்
வேலினாற் சுவற்றுங் கொற்ற வெங்கயல் விலோத வீரன்"
என்றதனால், பாண்டியன் ஒருகாலத்துத் தன்னகர்மேற் பொங்கியெழுந்த கடலின்மீது கோபித்து அதனை வேலினால் வற்றச்செய்து தன்காலில்விழுந்து வணங்கப்பண்ணின மகிமையையும்,

"முழுதுணர்ந்தருள் முனிவரன்புகல் மும்மைவண்டமிழும்
பழுதறும்படி தெளிந்தேறிய பலகையொன் றுடையான்"
என்றதனால், பாண்டியன் தமிழ்ச்சங்கத்தையுடையனான தகைமையையும்,

"கூறியசெஞ்சொலேடுகுறுத்தெதிர்கொண்டவையை யாறுடையவன்"
என்றதனால், பாண்டியநாட்டு வைகைநதி தமிழ்ப்பாடல்களின் அருமையையும் வைதிகமதத்தின் பெருமையையுந் தெரிந்துவெளியிட்ட ஏற்றத்தையுங் கூறியுள்ளார்.

"பராவுபேருடைச் சேரசெம்பியருடன் பாண்டியன் முதலோரும்" எனச் சேரனைச் சிறப்பித்துக்கூறுமிடமுங் காண்க.

"காவிரிபொன்னத்தப்பாக்கருணையான்" என, நளசக்கரவர்த்தியினது கருணைக்கு, தமிழ்நாட்டிற்பிரசித்தியான காவேரிநதியைத் தண்மைக்கும் தவறாமைக்கும உவமையெடுத்துக்கூறினார்.

"தங்கள்மால் வரையில் வைகுந் தமிழ்முனி தன்னைப் போலப்
பொங்குவெண் டரங்க முந்நீர்ப் புணரிக ளேழுஞ் சேர
வெங்கையால் வாருங் கொற்ற வேழமா மேற்கொண்டானே"
என்றதனால், தமிழுக்கு ஆதியிலக்கணநூலாசிரியராகிய அகஸ்தியமகாமுனிவர் கடலைக்குடித்தருளியகதையைக் கொண்டாடினார். இன்னமும் "தங்கள் தமிழ்க்குழலிசையைத் தன்செவிக்கு விடமென்னும்" என்றதனால், வேய்ங்குழலின் இசைப்பாட்டின் இனிமைக்கு, தமிழ்ப்பாஷையை உவமைகூறினார். "தங்கள் மூவகைத்தமிழும் போலச், சிந்தையிற்குளிக்குமாறு சிலீமுகமூன்று விட்டான்" என்றதில், அம்புகள் நன்றாகப் பகைவர்நெஞ்சிற் பதிந்திடுதற்குத் தமிழ்ப்பாஷை கற்றவர்மனத்திற்பதிதலை உவமையாக்கினார்.

இங்ஙனம் தமது தேசாபிமான பாஷாபிமானங்களை வெளிப்படுத்துவது யாவர்க்கும் வழக்கமேயாம்.

இவர் தமதுநூலிற் பெரும்பாலும் வடமொழிகளைத் தனிமொழியாகவும் தொடர்மொழியாகவும் இன்னமொழியின் சம்பந்தமான தென்று எளிதில் தெரியவொண்ணாதபடி திரித்தும் மொழிபெயர்த்தும் உபயோகித்திருத்தலால், வடமொழியிலும் மிகவல்லவரென நன்குவிளங்குகின்றது. தொடர்மொழியாகப் பிரயோகித்திருத்தற்கு உதாரணமாக, "புராதநாகமவேதகீதபுராணரூபம்", "சலதரசஞ்சலசாலம்", "இமநாகபவநன்", "விகங்கராசன்", "மாதவயாதவவாசவகேசவ", "சதுரங்கயாநம்", "பரதநாதவேத பரத்துவாசன்," "கபோலவிகடகடகரிதுரகம்பதாதியிரதம்", "நவரத்நகணகிரணவுடு"

முதலியவற்றையும்; மொழிபெயர்த்தற்கு உதாரணமாக, நீரின்உற்பத்திக்கு இடமானவனென்னும் பொருள் கொண்ட 'க்ருபீடயோநி' என்னும் வடசொல்லை மொழிபெயர்த்து "அம்மனை" [அம்-நீர்; மனை-இடம்: அது, நெருப்பு] என்றும், 'மநோரதம்' என்னும் வடசொல்லை மொழிபெயர்த்து "உள்ளமான தேர்" என்றுங் கூறியது முதலியவற்றையும்; சிதைத்து உபயோகப்படுத்தற்கு உதாரணமாக, 'ஜமதக்நி' என்பதை "இயமதங்கி" என்றும், 'அஸ்திரம்' என்பதை "அச்சிரம்" என்றும் பிரயோகித்தது முதலியவற்றையுங் காண்க. தனிமொழியாக உபயோகித்தற்கு உதாரணம் அளவிறந்தன.

தமிழில் எந்த நூலாசிரியரும் வடமொழிகளை இவரவ்வளவு எடுத்துக்கொள்ளவில்லை. வடசொற்களைத் தமிழ்க்காப்பியத்தில் நுழைக்கிற வழக்கம் இவர்காலந்தொடங்கித்தான் அதிகமாயிருத்தல்வேண்டும். சங்கத்தார்காலத்துப்பழையநூல்களில் அத்தனையாக வடமொழிகள் அகப்படா; சுத்ததமிழ்ப்பதங்களே மிகுதியாயிருக்கும்.

இவரது பாடல்களில் உவமை, உருவகம், எடுத்துக்காட்டுவமை, தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள்வைப்பு, பிறிதுமொழிதல், உயர்வுநவிற்சி முதலிய பொருளணிகள் அமைந்திருப்பது மாத்திரமேயன்றி, மடக்கு (யமகம்), பிராசம் முதலிய சொல்லணிகளும் ஆங்காங்கு அமைந்திருத்தலையும், இவரது செய்யுள்நடை பலவிடத்து முடுகுடையதாதலையும், பலவகைச்சந்தங்களும் சந்தப்போலிகளும் வண்ணங்களும் பொருந்தியிருத்தலையும், காணலாம்.

"பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா தொருவர் பகரொணுதே" என்று சிறப்பித்துக்கூறப்பட்டுள்ள படிக்காசுப்புலவரும், திருப்புகழ்பாடிய அருணகிரிநாதரும் முதலிய சிலர்போலவே இவ்வில்லிபுத்தூராரும் சிறந்தசந்தக்கவியென்று இவர்நூலால் தெரிகிறது.

"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவம்" என்றவாறு, இவருடைய நூலில் ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் சொற்பொருட்கருத்துக்கள் சிற்சில இடத்து எடுத்து ஆளப்பட்டிருத்தல், உய்த்துநோக்குமிடத்து விளங்கும்; தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் "மறஞ்சுவர் மதிளெடுத்து மறுமைக்கே வறுமைபூண்டு, புறஞ்சுவரோட்டைமாடம் புரளும்போது அறியமாட்டீர், அறஞ்சுவராகி நின்ற அரங்கனார்க்கு ஆட்செய்யாதே, புறஞ்சுவர்கோலஞ்செய்து புட்கவ்வக்கிடக்கின்றீரே" என்றாற்போல, இவர் சூதுபோர்ச்சருக்கத்தில் கர்ணனைப்பற்றி "அறஞ்செரிதானம்வண்மை யளவிலாதளித்து நாளும், புறஞ்சுவர்கோலஞ்செய்வான் பூபதிக்குரைக்கலுற்றான்" என்றும், மற்றும் அவ்வாழ்வார் அத்திவ்வியப்பிரபந்தத்தில் "மருவியபெரியகோயில் மதிட்டிருவரங்க மென்னாக், கருவிலேதிருவிலாதீர் காலத்தைக்கழிக்கின்றீரே" என்றதைக் கருதி, இவர் பதினான்காம் போர்ச்சருக்கத்தில் பாகவதர்களைப்பற்றி "கரியவைம்புயலைக் கைதொழுமவரே கருவிலே திருவுடையவரே" என்றுங் கூறினாற்போல்வன காண்க. மற்றும் நம்மாழ்வார் கண்ணனது சௌலப்பியத்தில் ஈடுபட்டு "பத்துடையடியவர்க்கு எளியவன் பிறர்களுக்கு அரிய, வித்தகன் மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறலடிகள், மத்துறுகடைவெண்ணெய்களவினி லுரவிடையாப்புண்டு, எத்திறம்உரவினோ டிணைந்திருந்தேங்கியவெளிவே!" என்று அருளிச்செய்தாற்போல, இவரும் "பூத்தநாபியந்தாமரைப்பூவில் வந்து பல்பூதமுஞ். சேர்த்த நான்முகப் புனிதனு முனிவர் யாவருந் தேவரு, மேத்த நாலுவேதங்களுந் தேட நின்ற தாளெம்பிரான், பார்த்தன் மாமணித்தேர்விடும் பாகனான தெப்ப ண்மையே!" என்று பாடினமையும், பிறவுங் கண்டுகொள்க.

இனி, இப்பொழுதைக்கு ஐந்நூறுவருடங்களின்முன் அறுபதுவருடகாலம் வாழ்ந்திருந்த முருகதாசரென்பவர் இயற்றிய '**புலவர்புராணம்**' என்னும் புதுநூலில் முப்பத்தொரு செய்யுட்களாற் கூறப்பட்டுள்ள வில்லிபுத்தூரார் சரித்திரம், இதுவரையிற்கூறிய வரலாற்றோடு சிற்சிலவேறுபாடுடையது. அதனை அனைவரும் அறிதற்பொருட்டு, அந்நூலிலுள்ளவாறு அச்சரித்திரம் அடியிற் குறிக்கப்படுகிறது:—

பெண்ணைநாட்டில் சனியூரில் பிராமணசாதியில் வைஷ்ணவசமயத்தில் தோன்றிய இரண்டுசகோதரர், கல்வியில் தேர்ந்து திருமாலைத்துதித்து அப்பெருமானருளால் அக்கல்விப்பொருளோடு செல்வப்பொருளும் நிரம்பியவராய் ஒருவரோடொருவர் மிகஅன்புபூண்டு பாண்டியநாட்டிலுள்ள ஸ்ரீவில்லிபுத்தூரையடைந்து அங்குத் தம்தம்மனைவியருடனே ஏககுடும்பமாய் இல்லறவாழ்க்கைநடத்திவந்தார்கள். அவர்களில்மூத்தவர், வில்லிபுத்தூராரென்று சிறப்புப்பெயர் பெற்றார். இங்ஙனமிருக்கையில், கொங்குநாட்டரசனான ஆண்டான்பிள்ளையென்பவன், வடமொழியிலுள்ள மகாபாரதத்தைத்தமிழ்ச் செய்யுள்களாற் செய்விக்கக்கருதி, 'அங்ஙனஞ்செய்யவல்லவர்யார்?' என்று விசாரிக்கையில், வில்லிபுத்தூராரும் அவர்தம்பியாருமே அதற்குத தக்கவரென்றும், அவர்கள் மிக்கசெல்வமுடையோராதலால் அரசரையும் பொருள் செய்யாரென்றும், ஒருவர்க்கொருவர் உற்றதுணைவராகிய அவர்களால் பிறருதவி வேண்டப்படுவதில்லையென்றும் அறிந்து, அவர்கட்குள் ஏதேனும் சிறிதுமாறுபாட்டையுண்டாக்கி அந்தச்சந்தர்ப்பத்தில்தன்கருத்தைமுடித்துக் கொள்ளக் கருதியவனாய், விதவையாகிய ஒரு பார்ப்பனக்கிழவியை அழைத்து வணக்கத்தோடு உபசரித்துச் செய்திகூறி 'அம்மா! நீர்அவர்கள்வீட்டுக்குச்சென்று அவர்கட்குள் கலகத்தை உண்டாக்கவேண்டும்' என்றுகூறி, அவளுக்குவேண்டிய பொருளையுங் கொடுத்து அனுப்பிவிட்டு, பின்பு மதுரைக்குச் சென்று பாண்டியனைக்கண்டு அவனிடத்தில் ஏகாந்தமாக இச்செய்திமுழுவதையுஞ்சொல்லி, அவர்களுடைய வழக்குவந்தால்எவ்விதத்திலும் என்னிடத்தில் அனுப்பவேண்டும்' என்று வேண்டி, 'அங்ஙனமே ஆகுக' என்று அதற்கு இணங்கிய அப்பாண்டியனது அனுமதியைப் பெற்று மீண்டனன். இது நிற்க.

அரசனிட்ட கட்டளைப்படியே அக்கிழவி வில்லிபுத்தூரார்வீட்டுக்குச் சென்று அவர்மனையாளிடத்தும் அவர்தம்பிமனையாளிடத்தும் கலந்து இனிமையாகப்பேசிப்பழகி அவ்விருவரும் தன்னை நல்லவளென்றுநம்புமாறு நடந்துகொண்டே அவர்கட்குள் ஒருத்திமேல் ஒருத்தியிடம் பொல்லாத பல கோட்சொற்களைக் கூறி உட்பகைமையை விளைவித்து அவர்கள் ஒருவரோடொருவர் எதிர்த்துப்பேசிக் கலகஞ்செய்யவும் தம்தம்கணவரைத் தம்தம் வசமாக்கி நடத்தவும் மூட்டிவிட்டாள். அதனால் மாறுபாடுகொண்ட வில்லிபுத்தூராரும் அவர்தம்பியாரும் தமதுபொருளைப் பாகஞ்செய்துதருதலை வேண்டித் தங்கள்நாட்டரசனான பாண்டியனிடம்வர, அவ்வேந்தன், முற்கூறியபடி அவர்களைக் கொங்குநாட்டரசனிடத்தே செலுத்தினன். அவ்வாறே சென்றஅவர்களைக்கண்டு கொங்கராசன் மகிழ்ச்சிகொண்டு அவர்கட்கு மிக்கஉபசாரஞ்செய்துவடமொழிமகாபாரதத்தை இரண்டுபாகமாகப்பிரித்து அவ்விருவரிடங் கொடுத்து 'நீங்கள் இந்நூலைத் தமிழ்ப்பாடலாகச் செய்தபின்னரே நான் உங்கள்செல்வத்தைப் பாகித்துக்கொடுப்பேன்' என்றுகூறினான். அச்சொல்லை அவர்கள் திருமால்கட்டளையாகவே சிரமேற்கொண்டு அங்ஙனமே சிலநாள் அவன்வசத்தில்இருந்து, சொற்சுவையும்பொருளழகும் இசைச்செறிவும் சந்தப்பொலிவும் வண்ணப்பொருத்தமுமுள்ள ஆறாயிரங் கவிகளாற் பாரதத்தைப் பாடிமுடித்திட்டார்கள்.

இப்படி தன்கருத்துமுற்றியதனாற் களிகூர்ந்த கொங்கர்கோமான், தானே ஒருபார்ப்பனக்கிழவியைக்கொண்டு குடும்பக்கலகம்விளைத்த விதத்தை அவர்கட்கு விவரமாகத் தெரியக்கூறி, அவர்கட்குள்ள விரோதத்தைத் தணிவித்து, அவர்களை நோக்கி நீங்கள் என்விருப்பத்தைநிறைவேற்றியதால்,நான் உங்கள்விருப்பத்தை நிறைவேற்றச் சித்தனாயிருக்கின்றேன்; நீங்கள் விரும்புவதைக் கூறுமின்' என்றுகூற,வில்லிபுத்தூரார் 'என்னோடுமாறுபட்டுச்சந்தம் பாடத் தொடங்கி அதில் தவறியவர்களுடைய காதுகளைத் துணிக்குமாறு வாள் கொடுக்கக்கடவாய்' என்று தம்விருப்பத்தை வெளியிட, அரசன் அங்ஙனமே வாள்கொள்ளுமாறு அருள்செய்தான். தமையனாரிடத்து முதிர்ந்த அன்புடைய தம்பியார் 'எனக்கென்று தனியேஉரியது யாதுமில்லை' என்றுகூற, அரசன், தமையனார்க்குஅடங்கிநடக்கிற அவரது மனநிலைமையைக் கண்டு மகிழ்ந்து அவர்க்குப் பலவிருதுகளைக் கொடுத்தான். அவற்றைப் பெற்றுக்கொண்டு அவரிருவரும்தம்மூரைசேர்ந்தனர். முன்புபகைமைமூட்டியமூதாட்டியும் பின்பு அவர்கள்மனைவியர்க்குப் பற்பலதக்கநியாயங்களை யெடுத்துக் கூறித்தனதுசொற்றிறத்தால் அவர்களதுமாற்சரியத்தைத்தீர்த்துஅவர்களைப் பழையபடி கூட்டுறவாக்கி வைத்திட்டனள். 'முன்பு தலைவிரிகோலங்கொண்ட ஒருத்தியால் பாரதப்போர்முடிந்தது; இப்பொழுதுமொட்டைச்சியொருத்தியின் முயற்சியால் பாரதநூல் முடிந்தது' என்று பலர் பேசலுற்றனர்.

வில்லிபுத்தூரார், புலவர்திலகராய், தம்மோடு மாறுபட்டுத்தோற்றபுலவர்களுடைய காதுகளைக்கொய்வதே தொழிலாகக்கொண்டு கவிதாசார்வபௌமரென்று ஒருசிறப்புப்பெயர்பெற்று, புலவர்களுடைய செருக்கையெல்லாம் ஒழித்துவந்தார். அவர்தம்பியாரோ புலமைத்திறம்வாய்ந்திருந்தும் சாந்தகுணத்தையே மேற்கொண்டிருந்தனர். கீழ்க்கூறியவாறு வில்லிபுத்தூரார் பெருமிதங்கொண்டு வாழுநாட்களுள் ஒருநாள் அநந்தனென்னும்பெயருள்ள பெரிய புலவனொருவன், தனதுகவித்திறத்துக்கு மெச்சிப் பற்பலஅரசர்தந்த பரிசுகளைப்பெற்றவனாய் அவரிடத்தில் வந்துசேர்ந்தான். அவர் அவனைப் பலவாறுபரீக்ஷிக்க, அதிலெல்லாம் அவன்தவறாமல்தேறிவந்தமைகண்டு,பின்னர் வில்லிபுத்தூரார், பாடுதற்கு அரியதொரு பெரியசந்தக்குழிப்பைக் கொடுத்து 'இதற்குஏற்ப நீ ஒருசந்தககவிபாடுதி, பார்ப்போம்' என்ன, அங்ஙனமே அந்த அநந்தகவி உடனே ஒருசந்தக்கவிபாட, அதிற்பிழைகண்டு இவர் ஆடம்பரத்தோடு அவனதுகாதையறுக்கப்போகையில், அவன், 'ஐயா! என்பெயர்கொண்ட ஆதிசேஷனுக்கும் செவியில்லை; ஆதலின், நீர்கருதியவாறே செய்ம்மின்' என்று துணிந்துகூற, அதுகேட்ட வில்லிபுத்தூரார் 'இப்பொழுதுநாம்இவன் காதையறுப்பின் இவ்வநந்தன் அவ்வனந்தனோடொப்பாய்விடுவனே'என்பதை உன்னி அவன்செவியையறுக்கத் துணியாராய், அவன்சொன்ன சமயோசிதமான வார்த்தைக்கு உவப்படைந்து, அவனை நோக்கி 'நீசொன்ன இந்தச் சாதுரியமான வார்த்தைக்கு ஒருவெகுமதியாக உனக்குச் செவியைக் கொடுத்தேன், போ' என்று கம்பீரமாகக்கூறி அவனை அனுப்பிவிட்டனர்.

பிறகுவில்லிபுத்தூரார், திருவண்ணாமலைக்குச்சென்று அங்கிருந்த அருணகிரிநாதரென்னும்புலவரோடுநண்புபூண்டு, அவர்பாடியகந்தரந்தாதியென்னும் யமகவந்தாதியிலுள்ள செய்யுள்களுக்கெல்லாம் உரைகூறிவந்து, அவர்பாடிய கந்தர்திருப்புகழுக்குஉடாகத்தாமும் இராமகாதைத்திருப்புகழ்பாடிப் பெருமை பெற்றுத் தம்மூருக்குமீண்டு வாழ்ந்திருந்தனர். நற்குணநற்செய்கைகளுடன் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகுவாராய்ச்சிலகாலங்கழித்தபின் வில்லிபுத்தூரார் முன்னும், அவர்தம்பியார் பின்னுமாகப் பரமபத மடைந்தார்கள்.

ஸ்ரீ

கடவுள் துணை.

# மகாபாரதம்.



பாரதம் என்னுஞ் சொல்லுக்கு - பரதனது வம்சத்தவரைப்பற்றிய நூல் என்று பொருள். இங்குக் குறித்த பரதனென்பவன்-சந்திரவம்சத்தில் துஷ்யந்த மகாராசனுக்குச் சகுந்தலையினிடந்தோன்றிப் பிரசித்திபெற்ற ஓரரசன். [இராமன்தம்பியான பரதனும், பரதகண்டமென்றற்குக் காரணனான சடபரதனும், பரதநாட்டியமென்றற்குக் காரணனான பரதனு மல்லன்.] பரதவம்சத்துத்தோன்றினவர், பாரதர்; அவராவார்-பாண்டவரும், துரியோதனாதியரும்: அவர்களது சரித்திரத்தை உணர்த்தும் நூல், பாரத மெனப்பட்டது. இது-வடமொழித்தத்திதாந்தநாமம். [ஒருவடசொல் சிறிதுமாறித் தன்னோடு இயைபுடையபொருளையாயினும் தன்பொருளையாயினும் உணர்த்துவது, தத்திதாந்தநாமம்.] இனி, வருணாச்சிரமதருமம், ராஜதருமம், மோக்ஷதருமம், நீதி முதலிய சிறந்த உறுதிப்பொருள்களை யெல்லாம் அறிவிப்பதனால் முனிவர்கள் சீர்தூக்கிப்பார்க்குமிடத்து மற்றை யெல்லா நூல்களினும் மிகுந்த பாரம் [அதாவது-மகிமை] உடைமைபற்றி, இந்நூலுக்குப் பாரதமென்னும் பெயர் இடப்பட்டதென்றுங் கொள்ளலாம். முன்னொருகாலத்தில் தேவர்யாவரும் நான்குவேதங்களையும் ஒருதட்டிலும் பாரதத்தை மற்றொருதட்டிலுமாகத் துலாக்கோலில் வைத்துநிறுக்க, வேதமனைத்தையும் வைத்த பக்கத்தினும் இந்நூலை வைத்தபக்கம் வலிதாயிருந்ததெனவ வடநூற்பாரதத்தின் அநுக்ரமணிகை யத்தியாயம் கூறும்.* [இனி, இந்தச்சொல்லை, பார் அதம் என இரண்டு சொல்லாகப்பிரித்து, அதம் என்பதை ஹதம் என்னும் வடமொழிப்பெயரின் திரிபாகக்கொண்டு, பூமியிலுள்ள பல துஷ்ட அசுரர்களுங் கெட்ட அரசர்களும் முதலியோரது நாசத்தைக் கூறுவதொரு நூலென்று பொருள் கூறுவாரு முளர்; அது பொருந்தாது: ஏனெனில்,—பாரதம் என்னும்வடமொழி ஒருமொழியாதலாலும், அதற்கு வடமொழிக்கு ஏற்பப் பொருள் கூறுவது தகுதியே யன்றித் தமிழ்மொழிக்கு ஏற்பப் பொருள்கூறுதல் தகாமையாலு மெனக் காண்க.]

யாவரும் மேற்கொண்டு பூசிக்கத்தக்க மேம்பாட்டை யுடைத்தாயிருத்தல் பற்றி, இந்த இதிகாசத்துக்கு 'மகா' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. அம்மேம்பாடாவது-இருக்குமுதலிய நான்குவேதங்களோடு ஒப்ப ஐந்தாம்வேதமென்று சிறப்பித்துக்கூறப்படும் மகிமை; "பாரத: பஞ்சமோவேத:", "நீடாழியுலகத்து மறைநாலொடைந்தென்று நிலைநிற்கவே, வாடாததவ வாய்மை முனிராசன் மாபாரதம் சொன்னநாள்," "மண்ணிலாரணிகரெனவியாதனார் வகுத்த, எண்ணிலாநெடுங்காதை" என்பன காண்க. அன்றியும், மிகச்சிறந்த பகவத்கீதையைத் தன்னுள் பீஷ்மபர்வத்திலும், ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்தை ஆநுசாஸநிகபருவத்திலும் அடக்கிக்கொண்டிருப்பது, இந்நூலுக்கு, எல்லாநூல்களினுஞ் சிறந்த மேம்பாடாம். மகாபாரதம் என்னும் பண்புத்தொகைநிலைத்தொடர்மொழி - வடமொழிப் புணர்ச்சி யாத

* சிலர் 'முனிவர் ஏனையஇதிகாசபுராணங்களுக்கும் பாரதத்திற்குமுள்ளவேற்றுமையறியக் கருதி அவற்றிற்கு ஒருமணியும் பாரதத்திற்கு ஒருமணியும் தராசில்வைத்துச் சீர்தூக்கி நோக்குங்கால் பாரதமணித்தட்டு பாரமுடைத்தாய்க்கீழ்இறங்கினமையின்' என்றது, வியாசபாரதத்தோடுமுரணும்.

லால், வருமொழி முதல் வலி இயல்பாயிற்று; [நன்னூல்-மெய்யீற்றுப் புணரியல் - ௩௬.] இந்நூலை முதலில் வடமொழியிற் செய்தவர், ஸ்ரீ வேதவியாச மகா முனிவர்; இவரால் வைக்கப்பட்ட 'பாரதம்' என்கிற முதனூலின் பெயரே "முதனூல் கருத்த னளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" என்னுஞ்சூத்திரத்து விதிப்படி வழிநூலாகிய இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. பாரதத்துக்கு 'ஜயம்' என்றும் ஒருசிறப்புப்பெயருண்டு; (நால்வகைப்புருஷார்த்தங்களையும் பெறுதற்குக் காரணமாகும் நூல் ஜய மெனப் பெயர்பெறுமென்பது, வடமொழிநிகண்டு; எல்லாநூல்களினும் மேம்பட்டு அவற்றை வென்றதென்றும், பதினெட்டுப்பகுப்புள்ள தென்றும் இதற்குப் பொருள்கூறலும் உண்டு.

உபதேசபரம்பரையில்வந்த ஒருவருடைய பழையசரித்திர மொன்றைப் பிரதானமாகஎடுத்துப் பலகிளைக்கதைகளோடு புணர்த்துவிரித்துக் கூறும் நூல் இதிகாசமென்றும் [இதிகாசம்-பழையவரலாறு], உலகத்தின் தோற்றம், ஒடுக்கம், முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந்தரம் என்னும் ஐந்து விஷயங்களை விரவிக்கூறும் நூல் - புராண மென்றும் [புராணம் - ஐந்து இலக்கணங்களுடன் பழையவரலாறுகளை யுணர்த்தும் நூல்] வேறுபாடு உணரத்தக்கது. இதிகாசம் - இராமாயணமும், பாரதமும். புராணம்-பிராம்மம் முதலாகப் பதினெட்டுவகைப்படும். இந்த இதிகாசபுராணங்கள்-வேதத்தின்கருத்து இன்னதென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றிவிளக்குதல்பற்றி, வேதத்திற்கு உபப்பிரஹ்மணங்களென்று சொல்லப்படும்; உபப்பிரஹ்மணமென்றால் - வளர்ப்பதென்று பொருளாம். இவற்றுள், புராணங்களினும் இதிகாசம் பிரபலமான பிரமாண மென்றும், அதுபற்றியே இதனை முன்னர்வைத்து 'இதிகாச புராணம்' எனக் கூறுவதென்றும் அறிக.

இந்நூல், பெருங்காப்பியமாம். (பெருங்காப்பியஇலக்கணத்தை இப்புத்தகத்தின் ஈற்றிற் காணலாம்.) இந்நூலிற் பெருங்காப்பியஇலக்கணங்கள் பலவும் வருவதை ஆங்காங்குக் காண்க.

பாரதம்-அந்தர்பாகத்தின்விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால் ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம், பீஷ்மபருவம், துரோணபருவம், கர்ணபருவம், சல்லியபருவம், ஸௌப்திகபருவம், ஸ்திரீபருவம், சாந்திபருவம், ஆநுசாஸநிகபருவம், அசுவமேதபருவம், ஆசிரமவாசபருவம், மௌசலபருவம், மகாபிரஸ்தாநபருவம், ஸ்வர்க்காரோகணபருவம் எனப் பெயர்பெற்ற பதினெட்டுப் பருவங்கள் அடங்கியது. அவற்றுள்,

## முதலாவது
# ஆதி பருவம்.



ஆதிபர்வம் என்ற வடமொழித் தொடர் - முதலாகிய பருவம் என விரியும்; பண்புத்தொகை. இரட்டுறமொழித லென்னும் உத்தியால், இத்தொடர்க்கு - கதாநாயகர்களான பாண்டவர்கள், அவர்கட்குப் பங்காளிகளான துரியோதனாதியர்கள் என்னும் இவர்களது முதல்வரலாற்றைக் கூறுவதாகிய பாகமென்றும், இந்நூலின் பருவம் பதினெட்டனுள் முதலாவது பருவமென்றும் பொருள்கொள்ளலாம். இவர்கள் பிறந்த சந்திரகுலத்தின் சரித்திரமும், இவர்களுடைய பிறப்புவரலாறும், இளம்பருவத்தில் நிகழ்ந்த செய்திகளும் இப்பருவத்திற் கூறப்படுகின்றன. பர்வம் - கணு; கரும்பு மூங்

கில் முதலியவற்றிற்கு ஏகதேசமாகிய [ஏகதேசம் - ஒருபகுதி] கணுப்போல நூலுக்கு ஏகதேசமாகிய உறுப்பை 'பருவம்' என்பது - உவமவாகுபெயர். இத்தொடரில் வருமொழிமுதல்வலி இயல்பானது, வடமொழிப்புணர்ச்சியாதலி னென்க; [நன்-மெய்- ௩௬.] "இணைந்தியல் காலை" என்ற சூத்திரத்து 'ரவ்வழி உவ்வுமாம்' என்றதனால், பர்வம் பருவமென ரகரத்திற்குப்பின் உகரம்வந்தது; இனி, அச்சூத்திரத்து 'மவ்வக்கு உகரமும்' என்றதனால் வகரத்துக்குமுன் உகரமபெற்றதெனக்கூறினும் இழுக்காகாது.

## எட்டாவது
# காண்டவதகனச் சருக்கம்.

தேவேந்திரனுக்குஉரியதாய்ப் பூலோகத்திலுள்ள காண்டவமென்னும் வனத்தைக் கிருஷ்ணார்ச்சுனர்களது அநுமதியின்படி அக்கினிதேவன் எரித்திட்ட செய்தியைக் கூறுகின்ற பாக மென்று பொருள். காண்டவதஹநமென்ற வடமொழித்தொடர் - ஆறும்வேற்றுமைத்தொகை: இங்குத் தொக்குநின்ற ஆறனுருபு, செயப்படுபொருளில் வந்தது. தகனச்சருக்க மென்ற தொடர்-இரண்டனுருபும்பயனுந் தொக்கதொகை. காண்டவதகனத்தினது சம்பந்தமான சருக்க மென்று விரித்தால், ஆறும்வேற்றுமைத்தொகையாம். காண்டவம், தஹநம், ஸர்க்கம் - வடசொற்கள். சருக்கம் - முடிபு அல்லது படைப்பு என்றுபொருள். அது - சங்கேதத்தால், ஒரு பெரிய வகுப்பி னுட்பட்ட சிறியபாகத்தைக் குறிக்கும்.

### கதைத்தொடர்ச்சி.

[பாரதகதை பிரசித்தமானதாதலால், இந்தச்சருக்கத்துக்குமுன்கதைத் தொடர்ச்சி சுருக்கமாகவே எழுதப்படுகிறது.]

சந்திரகுலத்திலே புதன் புரூரவா ஆயு நகுஷன் யயாதி பூரு பரதன் ஹஸ்தி குரு முதலிய பல அரசர்கள் தோன்றியபின் அம்மரபில் உதித்து இப் பரதகண்டத்தில் அஸ்திநபுரியிற் செங்கோல்செலுத்திய சந்தனுவென்னும் அரசனுக்கு முதல்மனைவியாகிய கங்கையின் குமாரன் பீஷ்மனென்பவனும், இரண்டாம்மனைவியாகிய யோஜநகந்தியின் மகன் விசித்திரவீரியனென்பவனும் இருந்தார்கள். [முன்னர்ச் சத்தியவதியென்னும்பெயரோடு இருந்து பராசரமுனிவனோடு சேர்ந்து வியாசமுனிவனைப்பெற்றுப் பின்பு அப்பராசரனருளாற் கன்னிப்பருவமடைந்த கந்தவதியென்னும் மறுபெயருடைய இந்த யோஜநகந்தியினிடம் சந்தநுவுக்குப் பிறந்த முதற்குமாரனை சித்திராங்கதன், அப்பெயருள்ள ஒரு கந்தருவனாற் கொல்லப்பட்டு இளமையில் இறந்தான்.] முன்னைய விரதத்தின்படி வீடுமன் விசித்திரவீரியனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தான்.

விசித்திரவீரியன் மகப்பெறாது இறந்தபின் அவனது பத்தினிகளுள் அம்பிகையினிடத்துத் திருதராஷ்டிரனும், அம்பாலிகையினிடத்துப் பாண்டுவும் சந்ததிவிருத்தியின்பொருட்டுத்தாய்சொற்கடவாத வியாசபகவானது திருவருளாற் பிறந்தனர். அம்பிகையால் ஏவியனுப்பப்பட்ட தாதிப் பெண்ணினிடத்து வியாசனருளால் அவதரித்த விதுரனென்னுங்குமாரனும் இருந்தான். திருதராட்டிரன் பிறவிக்குருடனாதலால், விதுரனை மந்திரியாக வைத்துக்கொண்டு, பாண்டு, திருதராட்டிரனுக்குமுடிசூட்டித் தானே இராசாங்ககாரியம்பார்த்துவந்தான். பாண்டுவுக்கு மனைவியுடன்சேரக்கூடாதென்று சாபம்நேரிட்டதனால், அவனனுமதிப்படி, அவனதுமூத்தமனைவியாகிய குந்தி, தனக்குஇளமையில் துருவாசமுனிவன் உபதேசித்திருந்த மந்திரத்தின் மகிமையால் வந்த யமதருமராசனால் யுதிஷ்டிரனையும், வாயுதேவனால் பீமசேனனையும், தேவேந்திரனால் அருச்சுனனையும் பெற்றாள். [முன்பு

கன்னிப்பருவத்துச் சூரியனாற் குந்தியிடம் பிறந்தவன், கர்ணன்.] அவளுடையசக்களத்தியான மாத்திரி, அவளால் அம்மந்திரம்உபதேசிக்கப்பெற்று, அசுவினீதேவர்களால், நகுலன் சகதேவன் என்னும் இரட்டைப்பிள்ளைகளைப் பெற்றாள். திருதராட்டிரனுக்குத் துரியோதனன் துச்சாதனன்முதலிய நூறு பிள்ளைகளும், துச்சளையென்னும் ஒருபெண்ணும் காந்தாரியினிடம்பிறந்தார்கள். [பஞ்சபாண்டவர்களுள் தருமன் துரியோதனாதியர்நூற்றுவரினும் மூத்தவனென்றும், வீமன்முதலியமற்றைநால்வரும் துரியோதனனுக்கு இளையவரென்றும் அறிக.] பாண்டு, சிலகாலத்துக்குப்பின் இறந்துபோனான். அப்பொழுது மாத்திரி சககமனஞ்செய்தாள். [சககமனம்-உடன்கட்டையேறுதல்.] பின்பு பாண்டவரும் துரியோதனாதியரும் கூடி அத்தினபுரியில் விளையாடுகையில் வீமன் துரியோதனாதியரினும் மிகமேம்பட்டுத் தோன்றினான். அதனால் அவனிடம் அவர்கள் மிக்கபொறாமைகொண்டார்கள்.

அதனாலாகிய அச்சத்தால் துரியோதனன் கர்ணனைத் தனக்குத் துணையாகக் கொண்டான். துரியோதனாதியர் வீமனைக் கொல்லும்படி பலவாறு முயற்சிசெய்தும் அவன் தெய்வசங்கல்பத்தால் இறவாமல் ஒவ்வொருவகையால் தப்பிப்பிழைத்தனன். பின்புவீடுமன் இந்தநூற்றைவருக்கும் கிருபாசாரியனைக்கொண்டும் துரோணாசாரியனைக்கொண்டும் படைக்கலவித்தை பயிற்றுவித்தான். அதில் துரியோதனாதியரினும் பாண்டவர் தேர்ச்சியடைய, அவர்களுள்ளும் அருச்சுனன் அனைவரினும்சிறப்புற்றுவிளங்கினான். அப்பால் அவரவர்திறத்தை அனைவருங்காணுமாறு துரோணன்கட்டளைப்படி வீடுமன் விதுரன்முதலியோர் முன்னிலையிலேஅந்த இராசகுமாரர்கள் செய்த விளையாட்டுப்போரில் அருச்சுனனது திறமை சிறந்துநிற்க, அதனைக்கண்டு யாவரும் கொண்டாடியதற்கு மனம்பொறாது, சபையிலிருந்த கர்ணன் தான் எழுந்து சென்று தனதுதிறத்தை எல்லாரும் அதிசயிக்கும்படி காட்டி அருச்சுனனைப்போருக்குஅழைக்க, அருச்சுனன், 'நீயாஎனக்குஎதிர்!' என்று அலட்சியமாகப் பேசவே, கர்ணன் 'உன்தலையைக் கொய்வேன்' என்று வீரவாதங்கூறினான். அப்பொழுது, பிறப்பறியாத கர்ணனைக்குறித்துக் கிருபாசாரியன் தேர்ப்பாகன்மகனென்று இழித்துக்கூற, துரியோதனன் அதற்குப் பலவாறு மாறுகூறிக் கர்ணனை அங்கதேசத்தரசனாக முடிசூட்டி உயர்த்தினான். பிறகு துரோணன்தன் மாணாக்கர்களாகிய அந்தக்குருகுலகுமாரரனைவரையுநோக்கி 'எனக்கு முன்பு துரோகஞ்செய்தவனான துருபதனைப் போரில்வென்று கட்டிக்கொணர்தலே எனக்கு நீங்கள் கொடுக்கவேண்டிய குருதட்சிணை' என்று கூற, அங்ஙனமே அவர்கள் சேனைகளுடன் பாஞ்சாலதேசத்துக்குச்சென்று முற்றுகைசெய்து விளைத்த பெரும்போரில், துரியோதனாதியர் நூற்றுவரும் துருபதனால் தோல்வியடைந்து தம்மூர்க்கு மீண்டோட, அருச்சுனன் தன் வல்லமையால் துருபதனைவென்று அவனது வில்லின் நாணிக்கயிறுகொண்டே அவனைத் தேர்க்காலிற்கட்டி யகப்படுத்தித் துரோணனெதிரிற் கொணர்ந்து ஒப்பிக்க, துரோணன் அவனைநோக்கிப் பலவாறு பரிகசித்துப் பரிபவப்படுத்தி அவனுடைய இராச்சியத்திற் பாதியைக் கவர்ந்துகொண்டு தனது பெருமிதம்தோன்ற மற்றொருபாதியை அவனுக்கே கொடுத்து அவனைக் கட்டவிழ்த்து உயிரோடுவிட்டிட்டான். இப்படி அவமானமடைந்து மனவருத்தத்தோடு ஊர்சேர்ந்த துருபதன், துரோணன்மீது கொண்ட வைரத்தால் அவனைக் கொல்லுதற்கு ஒரு மகனையும், அருச்சுனனது திறமையைக்கண்டு வியந்ததனால் அவனுக்கு மணஞ்செய்வித்தற்கு ஒருமகளையும் பெறவிரும்பியவனாய், யாசன் உபயாசன் என்னும் முனிவர்களைக்கொண்டு புத்திரகாமயாகஞ் செய்விக்க, அவ்வேள்விப்பயனால் அவ்வோமத்தீயினின்று ஒருகுமாரனும் ஒருகுமாரியும் தோன்றினர். அவர்தாம் திருஷ்டத்யும்நனும், திரௌ

பதியும். இப்பால், வீடுமன், திருதராட்டிரனோடும் விதுரனோடும் ஆலோசித்து, சகலகுணசம்பந்நனான தருமபுத்திரனுக்கு இளவரசுமுடிசூட்டினான். அதுகண்டு அழுக்காறுமிக்க துரியோதனனுடைய கருத்துக்கு இணங்கிய திருதராட்டிரன், புரோசனனென்னும் துர்மந்திரியுடன் சதியாலோசனை செய்து, வாரணாவதமென்னும் நகரத்தில் அரக்குமாளிகையொன்று கட்டிமுடித்துப் பாண்டவர்களை அதில்வசிக்கச்செய்து ஓரிரவில் அம்மாளிகையில் தீப்பற்றவைத்து அவர்களை ஒழித்துவிடுவதென்று நிச்சயித்து, அவ்வமைச்சனைக்கொண்டே அந்நகரத்தை விசேஷமாக அலங்கரிப்பித்து, ஒருநாள் தருமபுத்திரனைநோக்கி 'நீ உனது தம்பியர்நால்வருடன் வாரணாவதத்துச் சென்று தனியேவாழ்வாய்' என்று கட்டளையிட்டு, அப்புரோசனனையே துணையாக்கி அவனோடும் அவனுக்கு அடங்கிய பரிவாரத்தோடும் அனுப்ப, பாண்டவரும் குந்தியும் வாரணாவதத்திற்சென்று, தங்களுக்கென்று புதிதாகச்செய்யப்பட்ட மாளிகையில் வசித்திருந்தனர். அங்ஙனம் வசிக்குநாட்களில் பாண்டவர்கள் அரக்குமாளிகையின் தன்மையையும், புரோசனனது செய்கைகளையும் உற்றுநோக்கிச் சங்கைகொண்டிருக்கையில், விதுரனால் அனுப்பப்பட்ட சிற்பியொருவன் வீமனிடம்வந்து, திருதராட்டிரனது கட்டளையின்படி புரோசனன் வஞ்சனையாக இந்தமாளிகையைக் கட்டும்பொழுது அவனது சூழ்ச்சியை யுணர்ந்த விதுரனுடைய ஏவலால் தான் இம்மாளிகையினுள்ளே ஒருபுறத்தில் நீண்ட சுரங்கவழியொன்றை நெடுந்தூரத்தி லுள்ள ஒருவனத்திற்சென்று சேரும்படி எவரும் அறியாமல் அமைத்துள்ள தந்திரத்தை அந்தரங்கமாகத்தெரிவித்து, அவ்வழிக்குத்துவாரம் ஒருதூணின் கீழ் உள்ளதென்பதையும் குறிப்பாகச் சொல்லிச் செல்ல, பின்பு ஒருநாள் இரவில் வீமன் புரோசனனை அம்மாளிகையிலேயே படுக்கச்சொல்லி அவன் நன்றாகத் தூங்கியபின் அவ்வீட்டில் தானே நெருப்புப்பற்றவைத்துவிட்டுத் தன்னுடன்பிறந்தவர்களையும் தாயாரையும் எடுத்துக்கொண்டு சுரங்கவழியாக ஒருவனத்திற் சேர்ந்தான். துரியோதனன் கட்டளைப்படி பாண்டவர்க்கு விஷங்கலந்த தேனைக்கொடுத்து அவர்களைக்கொல்லவந்த ஐந்துவேடர்களும் அவர்கள் தாயும் அந்நாளில் அவ்வரக்குமாளிகையில் தங்கித் தீப்பட்டு இறந்தன ராதலால், பொழுதுவிடிந்தபின் அங்குவந்து பார்த்த ஊரரெல்லாரும், பாண்டவருந் தாயுமே எரிப்பட்டு இறந்தனரென்று இரங்கினார்கள். அவ்வாறே நாடெங்கும் பிரசித்தியாயிற்று. அதற்காக அவ்வுலகம்முழுவதும் வருத்தமடைய, துரியோதனாதியர் மாத்திரமே மனமகிழ்ச்சிகொண்டனர்.

பாண்டவரும் குந்தியும் வனஞ்சேர்ந்தவுடனே, மனிதர்களைக்கொன்று கொணரும்படி இடிம்பனென்னும் அரக்கனால் அனுப்பப்பட்ட அவன்தங்கையான இடிம்பியென்னும்அரக்கி, அருகில்வீமனைக்கண்டவளவிலே அவன்மீது மோகங்கொண்டு அவனோடு ஆசைவார்த்தை பேசிக்கொண்டிருக்குமளவில், அதுகண்டுகோபித்துவந்தஇடிம்பன்கடுஞ்சொற்கூறிவீமனுடன்வலியப்போர் தொடங்க, வீமன், தனதுவலிமையால் இடிம்பனைக்கொன்று தொலைத்தபின், இடிம்பியின் வேண்டுகோளின்படி தாயுந் தமையனும் இட்ட கட்டளையால் அவளை மணஞ்செய்துகொண்டான். பின்பு சாலிகோத்திரமுனிவனத்தில் வசிக்கையில் அவள்வயிற்றில் கடோற்கசனென்ற புதல்வன் தோன்றினான். ஐவரும் குந்தியும் அவனைத் தாயுடனே இடிம்பவனத்துக்கு அனுப்பிவிட்டு வியாசமுனி வந்து நியமித்தபடி அந்தணவடிவுகொண்டு வேத்திரகீயமென்னும் ஊர்க்கு விருந்தினராய்ச்சென்று அங்கு ஓரந்தணன் மனையி லிருக்குநாட்களில் ஒருநாள், அவ்வீட்டுப் பார்ப்பனி புலம்பலுற்றாள்: அதற்குக்காரணமென்னவென்று குந்திவிசாரிக்க, அவள்சொல்வாள்: இவ்வூர்க்கு அருகிலுள்ள வனத்தில் வசிக்கிற பகனென்னுங் கொடியஅரக்கன் ஒருகாலத்தி

இவ்வூரினுள்வந்து பலரையும் ஒருங்கேகொன்று தின்னத்தொடங்குகையில், இவ்வூரார் அஞ்சி ஆலோசித்து 'நாங்களே நாளுக்கு ஒருவீடாக முறைவட்டம் ஏற்படுத்திக்கொண்டு ஒருவண்டிச்சோற்றையும் ஓர் ஆளையும் உனக்கு உணவாக இட்டுவருகிறோம்; நீ எங்களை ஒருங்கே கொல்லாதே' என்றுகூறி அவனைச் சிறிதுசாந்தப்படுத்தினர்; அதுமுதல் அவ்வாறே நடந்துவருகிறது. இன்றைக்கு என்வீட்டுமுறை; என்மகனையாவது கணவனையாவது இன்று இழப்பதை நோக்கி இரங்குகிறேன்' என்று சொன்ன அவ்வீட்டுக்காரி வார்த்தையைக் கேட்டவுடனே குந்தி 'என்மக்களைவருள் வலியனான இரண்டாமவனை இன்றைப்பலிக்கென்று செலுத்தினால் அவன் அரக்கனைக்கொன்று மீள்வன்' என்றுகூறி அவள்சோகத்தை ஆற்றினாள். அவ்வாறே வண்டிச்சோற்றுடனே வனத்தைநோக்கிப் புறப்பட்ட வீமன் சிறிது தாமதமாகச் சென்று பகனைக்கண்டு உடனே அச்சோறுமுழுதையும் உண்டுவிட, அது கண்டு பெருங்கோபங்கொண்ட பகன் எதிர்த்துப் போர்தொடங்க, வீமன் மற்போர்செய்து பகனைக்கொன்றொழித்து ஊருக்குமீண்டுவர, அனைவரும் அவனைக்கண்டு கொண்டாடினார்கள்.

அரக்குமாளிகையிற் பாண்டவரிறந்தனரென்றுகேள்வியுற்ற துருபதன் திரௌபதிக்குச் சுயம்வரங்கோடிக்க, பலதேசத்துஅரசர்களும் பாஞ்சாலதேசத்துராஜதானியில் வந்துசேர்ந்தனர். அச்செய்தியையறிந்துசெல்லும் வேத்திரகீயப் பார்ப்பாரோடு பாண்டவரைவரும் குந்தியும் சென்று வழியில் வியாசமுனியைக் கண்டு வணங்கி அவனருள்பெற்றுத் துருபதநகரஞ் சார்ந்து ஒரு குயவன்வீட்டிற் குந்தி வசிக்கப் பாண்டவர்கள சுயம்வர சபையைச் சேர்ந்தார்கள். அங்குவந்து வீற்றிருந்த அரசர்களை நோக்கித் திட்டத்துய்மன் 'இவ்வில்லைவளைத்து நாணேற்றிட்டு அம்புதொடுத்து அதனால் இந்த யந்திரசக்கரத்தி லுள்ள குறியை எய்துவீழ்த்தியவனே என்தங்கைக்குக் கணவனாவன்' என்றுகூறினான். அரசர்களனைவரும் அங்ஙனஞ்செய்யமாட்டாமற் போனபின்பு, அந்தணவடிவத்தோடிருந்த அருச்சுனன் திட்டத்துய்மனைநோக்கி 'அரசரன்றி அந்தணரில் யாரேனும் குறியெய்தால் அவனுக்குப் பாஞ்சாலி மாலைசூட்டுவளோ?' என்று வினவியதற்கு, அவன் 'சூட்டுவள்' என்றான். உடனே அருச்சுனன் வில்லையெடுத்துக் குறியையெய்தலும், திரௌபதி அவனுக்கு மாலைசூட்டினாள். அதுகண்டு பொறாமைகொண்ட துரியோதனனது தூண்டுதலால் அரசர்களெல்லோரும் எதிர்த்துப்போர் செய்ய, பாண்டவர் அவர்களைவென்று பாஞ்சாலியோடு குயவன்வீட்டுக்குச் சென்று 'அம்மா! இன்று ஒருநற்பொருள்பெற்றோம்' என்றுசொல்ல, உள்ளிருந்துஅதுகேட்ட குந்தி, அங்கிருந்தபடியே 'அதனை ஐவீரும் உண்மின்' என்றுசொல்லி வெளியேவந்து திரௌபதியைக்கண்டு 'ஆ ஆ! என்னினைந்தேன், என்சொன்னேன், என்செய்தேன்' என்று கலங்கினாள். தருமபுத்திரன் 'தாயே, நினது வாய்மொழி வேதமொழியேயாம்: எங்கள்எண்ணமும் அப்படியே' என்றுசொல்லி, பின்னர்த் துருபதராசன் தங்களைப் பாண்டவர்களென்று அறிந்து வந்து அரண்மனைக்குஅழைத்துப்போய் அருச்சுனனுக்கும் பாஞ்சாலிக்கும் மணஞ்செய்யத்தொடங்கினபோது 'நாங்கள்ஐவரும் இவளை விவாகஞ்செய்துகொள்வோம்' என்றான். அதற்குத் துருபதன் இணங்காதுத் தடுமாற்றமுற்ற சமயத்தில், வியாசமாமுனிவன் எழுந்தருளி, பாஞ்சாலியும் பாண்டவர்களுமாகிய இவர்களுடைய பூர்வஜந்மவிருத்தாந்தத்தை எடுத்துச்சொல்லி விளக்கி 'இவளை இவ்வைவரும் மணப்பது முறை' என்றுசொல்லியருளினன். அதுகேட்டுத் தெளிந்த துருபதன், யுதிஷ்டிரன் முதலான ஐவருக்கும் திரௌபதியை முறையே மணஞ்செய்வித்தான். அச்செய்திகேள்வியுற்றுத் துரியோதனுதியர் படையெடுத்துவந்து பாண்டவ

ரோடு போர்செய்து மீண்டும் அவரால் வெல்லப்பட்டுத் தோற்றோடினர். அதனையறிந்த திருதராஷ்டிரன் தூதுவிடுத்து அழைக்க, பாண்டவர் அஸ்தினாபுரஞ் சேர்ந்தனர்.

திருதராஷ்டிரன் மந்திரிகள் முதலானோரோடு ஆலோசித்துத் தரும புத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தபின்பு, அப்பெரியதந்தையின் கட்டளைப்படி பாண்டவர் காண்டவப்பிரத்தமென்னும் கடுங்காட்டிற்சேர்ந்தனர். அங்குச் சிறந்தநகர்செய்யவிரும்பிக் கண்ணபிரான் இந்திரனோடு விசுவகர்மனை வருவிக்க, அங்ஙனம்வந்த இந்திரனது கட்டளைப்படி அத்தெய்வத்தச்சன் சிறந்ததொருநகரத்தை நிருமிக்க, அதற்குக் கண்ணன் இந்திரன் பெயரால் இந்திரப்பிரத்தமென்று பெயரிட்டுப் பாண்டவரை அதிற் குடியேற்றியருளிச் சென்றனன். பின்பு அங்கெழுந்தருளிய நாரதமாமுனிவன், தன்னையுபசரித்த பாண்டவர்க்கு, திலோத்தமையை ஒருங்கு விரும்பிய சுந்தோபசுந்தர் தம்மிற்பகைமையுற்று ஒருவராலொருவர் அழிந்த வரலாற்றையெடுத்துக்கூறி, 'நீங்களைவரும் திரௌபதியை ஒருங்குகாமுறுதல் தகுதியன்று; முறையே ஒருவருடத்துக்கு ஒருவராகக் கூடிவாழ்தல் தகுதி. அங்ஙனம் ஒருவரோடு சேர்ந்திருக்கும்போது, மற்றைநால்வர் அவளைக்காணின் தீர்த்தயாத்திரைசெய்தல்வேண்டும்' என்று நியமிக்க, அவர்கள் அம்முறைமையை மேற்கொண்டு ஒழுகுவாராயினர்.

இங்ஙனம்நிகழ்கையி லொருநாள் ஓர்அந்தணன் அரண்மனைவாயிலில் வந்து 'எனதுபசுக்களைவேடர்கள்கொள்ளைகொண்டார்கள்' என்றுமுறையிட, அதுகேட்டவுடனே அவர்களைப்பொருதுவென்று நிரைமீட்டுக்கொடுத்தற்பொருட்டு ஆயுதமெடுத்தற்குச்சென்ற அருச்சுனன் அங்குத் தருமனுடன் திரௌபதியைக் கண்டதனால், வேடர்களைவென்று நிரைமீட்டுக்கொடுத்தவுடனே தருமனிடம்விடைபெற்றுத் தீர்த்தயாத்திரைசெல்லலானான். அங்ஙனஞ்சென்று கங்கையில்நீராடுகையிற் கண்டுகாதலித்த உலூபியென்னும் நாககன்னிகையோடு நாகலோகஞ்சேர்ந்து அவளைமணந்து இராவானென்னும்மகனைப் பெற்றபின்பு, அநேகதிவ்வியதலங்களின்வழியாகத் தென்மதுரைசேர்ந்து, சித்திரவாகன பாண்டியன்மகளான சித்திராங்கதையை
விவாகஞ்செய்துகொண்டு, அவளிடம்பிறந்தபப்புருவாகனனென்னுஞ் ச
ரனைப் பாண்டியனதுவேண்டுகோளின்படி அவனது சந்ததிக்காகவ தை
த்துவிட்டு, பின்னும் பூப்பிரதக்ஷிணமுறையால் துவாரகைசேர்ந்து ழு என்
னது தங்கையான சுபத்திரையைத் தந்திரமாக மணஞ்செய் ற குதிரை
கண்ணபிரானுடனே இந்திரப்பிரத்தத்துக்கு வந்துசேர்ந்த பச்சை -
சுபத்திரைவயிற்றில் அபிமந்யுவும், திரௌபதிவயிற்றிற் பஞ்ச - கல். தணி
உபபாண்டவரைவரும் பிறந்தார்கள். அவர்களில் அபிமன் சிறந் சூரியன்
னான். அக்காலத்தில் ஒருகால் வசந்தகாலம் வரலாயிற்று. 'பனிப்பகை

[இவ்வரலாறு, கீழ்க்குருகுலச்சருக்கம், சம்பவச்சருக்கம், வ ண் இருத்
சருக்கம், வேத்திரகீயச்சருக்கம், திரௌபதி மாலையிட்ட சருக்கம், றிணைப்
பிரத்தச்சருக்கம், அருச்சுனன் தீர்த்தயாத்திரைச்சருக்கம் என்ற மைபற்றி.
கங்களிலும் பரக்கக் கூறப்பட்டுள்ளது.] னால்,

இச்சருக்கத்திற் கடவுள்வாழ்த்துச்செய்யுள் காணப்படவில்லை. மானசிகமாத்திரமாகக் கடவுள்வணக்கம் நிகழ்ந்துவிட்டதென்றாவது, கடவுள்வாழ்த்தாக நூலாசிரியராற் பாடப்பட்டதொரு செய்யுள் பிற்காலத்தில் ஏடெழுதுவோரால் எழுதாதுவிடப்பட்டு எஞ்சியதென்றாவது கொள்க. இனி, சூரியன் தக்ஷிணாயனத்தைவிட்டு உத்தராயணத்துக்குவந்தனனென்ற செய்தியைக் கூறும் இச்சருக்கத்துமுதற்செய்யுளையே வஸ்துநிர்த்தேசரூபமான மங்கலமாக ஆசிரியர் கருதினரெனக்கொள்ளினுமாம்.

[சூரியன் தக்ஷிணாயனத்தைவிட்டு உத்தராயணத்தில் வருதல்.]

**கனியாட லனற்கடவுள் யமனிருதி நண்ணுதிசை நாள்க டோறு, முனியாம னடந்திளைத்து முன்னையினும் பரிதாப முதிர்ந்த தென்று, தனியாழித் தனிநெடுந்தேர்த் தனிப்பச்சை நிறப்பரியைச் சயிலராச ன், பனியாலவ் விடாய்தணிப்பான் பனிப்பகைவன் பனிசெய்வோன் பக்கஞ் சேர்ந்தான்.**

(இதன்பொருள்.) பனி பகைவன் - பனிக்குப் பகைவனாகிய சூரியனானவன்,—கனி ஆடல - மிக்ககொடுமையையுடைய, அனல் கடவுள் - அக்கினியும், யமன் - யமனும், நிருதி - நிருருதியும், (என்னும்இவர்கள்), நண்ணு - பொருந்திய, திசை - (தெற்குத்)திக்கில், நாள்கள்தோறும் - தினந்தோறும், முனியாமல் நடந்து - வெறுப்புக்கொள்ளாமல் நடந்ததனால், பரி - (தனது தேர்க்)குதிரை, முன்னையினும் இளைத்து தாபம் முதிர்ந்தது - வெப்பம்அதிகப்பட்டு முன்புஇருந்தநிலையினின்றுமாறிச்சோர்வடைந்துவிட்டது, என்று - என்றுஎண்ணி,—தனி ஆழி தனி நெடு தேர் தனி பச்சை நிறம் பரியை - ஒற்றைச்சக்கரத்தையுடைய ஒப்பற்ற பெரிய தனதுதேரிற் பூட்டிய தனித்த பசுமைநிறத்தையுடைய அக்குதிரையை, சயிலராசன் பனியால் அ விடாய் தணிப்பான் - மலையரசனாகிய இமயமலையி லுள்ள பனியினால் அந்தத்தாபந் தணியச்செய்தற்பொருட்டு, பனி செய்வோன் பக்கம் சேர்ந்தான் - பனியைச் செய்பவனான அவ்விமயமலை யிருக்கிற வடக்குப்பக்கத்தை யடைந்தான்; (என்றவாறு.)

இளவேனிற்பருவமெனப்படுகிற வசந்தகாலம் வரலாயிற்றென்று கீழ்ச்சருக்கத்தின் முடிவிற் கூறினார்; சித்திரைவைகாசிமாதங்களாகிற அவ்வசந்தருதுவின் ஆரம்பமான சித்திரைமாசத்தொடக்கத்தை இங்குக்கூறுகிறார். ஆடிமாசம்முதல் மார்கழிமாசம்வரையில் ஆறுமாசம் தக்ஷிணாயனமும், தைமாசம்முதல ஆனிமாசம்வரையில் ஆறுமாசம உத்தராயணமுமாம். சூரியன் தென்புறமாகஒதுங்கிச் சஞ்சரிக்குங்காலம், தக்ஷிணாயனம்; அவன் வடபுறமாகஒதுங்கிச்சஞ்சரிக்குங் காலம, உத்தராயணம்: அவன் இருபுறமாகவும் இரு ஒதுங்காமல்நடுவிற்சஞ்சரிக்குங்காலம், விஷுவமெனப்படும், 'சுவேதமலைக்கு சூரியோ ...ல் சிருங்கவான் என்கிற பர்வதம் உண்டு; அது, மூன்றுகொடுமுடி செய்ய, பா...யகாரணத்தால் அப்பெயரால்விளங்குகின்றது; அம்முடிகளுள் சென்று '...ன்புறத்திலும், மற்றொன்று வடபுறத்திலும், இன்னொன்று நடுவி ளிருந்து அது ...ன்றன: தென்புறச்சிருங்கத்தில் சூரியன் சஞ்சரிப்பதனால் தக்ஷி என்றுசொல் ... வடபுறச்சிருங்கத்தில் சஞ்சரிப்பதனால் உத்தராயணமும், நடுச் தேன், என் ...ல் வருவதனால் விஷுவமும் உண்டாகின்றன' என்பது, புரா ரன் 'தாயே ...சிமாதத்துக்குஉரிய துலாராசியிற் சூரியன் வருகையிலும்,சித்திரை அப்படியே ...குஉரிய மேஷராசியிற் சூரியன் வருகையிலும விஷுவமென்கிற களென் ...ண்டாகின்றது; அதுதான், ஏற்றத்தாழ்வில்லாத இராப்பகல்களை கும் ...து. சம்வற்சராதியான வசந்தருதுவின் தொடக்கம், இங்குக் கூறப்படுகிறது. தைமாசமுதல் தொடங்கிய உத்தராயணத்தில் தெற்கினின்று ஒதுங்கிவந்த சூரியன் அவ்வுத்தராயணத்தின் மத்தியபாகமாகிய சித்திரைமாசத்தொடக்கத்தில் நடுவில்வந்து அதுமுதல் வடபுறமாகஒதுங்குகின்றனன்; இங்ஙனம் இயல்பாற் சூரியன் தென்திசையினின்று வடதிசையிலொதுங்குதற்குக் கவி தானாக ஒருகாரணத்தைக் கற்பித்துக்கூறியதனால், இச்செய்யுள் ஏதுத் தற்குறிப்பேற்றவணி; வடநூலார் ஹேதூத்ப்ரேக்ஷாலங்காரமென்பர். அகப்பட்டபொருள்களையெல்லாஞ் சுடுமியல்புள்ள கொடியவனான அக்கினி தென்கிழக்குத்திக்குப்பாலகனாகவும், பிராணிகளையெல்

லாம் கண்ணோட்டமின்றிக் கொல்லுகிற கொடியவனான யமன் தெற்குத்திக்குப்பாலகனுகவும், இராக்கதர்குலத்துக்கு ஆதிபுருஷனாதலாற் கொடியவனாகிற நிருருதி தென்மேற்குத்திக்குப்பாலகனாகவும் அமைந்துள்ளதனாற் கொடியதாகிற தென்திசையிற் பலநாள் நடந்ததனால் தனதுதேர்க்குதிரை மிக்கதாபமடைந்து இயல்பாகவுள்ளவலிமை குன்றிச் சோர்ந்துவிட்டது என்று எண்ணிச் சூரியன் இனி அக்குதிரையைப் பனிமலையானஇமயத்தில்உள்ள பனியைக்கொண்டு அத்தாபந்தணிக்கக்கருதி அம்மலையிருக்கிற வடபுறத்தைச் சேரலாயினனென்றார். சூரியனது பகற்சஞ்சாரம் தக்ஷிணாயனத்தில் விரைவாகவும் உத்தராயணத்தில் மந்தமாகவும் இருத்தல், இயல்பு; அது, தக்ஷிணாயனத்தில் பகற்பொழுது குறைவாகவும் உத்தராயணத்தில் பகற்பொழுது மிகுதியாகவும் இருத்தலால் விளங்கும். இங்ஙனம் தக்ஷிணாயனத்திலுள்ள வேகம் பின்பு குறைதல், கொடியவர்கள்பொருந்திய கொடிய தென்திசையிற் பலநாள் வெறுப்பின்றி நடந்ததனால் தனதுகுதிரை தாபமுதிர்ந்து முன்னையினும்இளைத்ததென்று சூரியன் கருதியதற்குக் காரணமென்னலாம். உயர்ந்தசாதிக்குதிரை எவ்வளவுகொடுமையானவழியிலும் விடாமல் ஊக்கங்கொண்டு செல்லுதல் இயல்பு என்பது தோன்ற, 'முனியாமல் நடந்து' என்றார்.

'நனியாடல்' என்ற அடைமொழியை அனற்கடவுள், யமன், நிருதி என்னும் மூவர்க்குங் கூட்டுக. நனி - மிகுதியுணர்த்தும் விசேடித்தஉரிச்சொல். ஆடல் - அடலென்பதன் நீட்டல்விகாரம். அனற்கடவுள் - அக்கினிதேவன். கடவுள்-(இவ்வுலகசம்பந்தத்தைக்) கடந்தவன்; உள் - பெயர்விகுதி: இதனைத் தொழிலாகுபெயரென்றலு முண்டு. நிருருதி, திசா, சைலராஜன், பக்ஷம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன; தற்பவம். யமன், தாபம் - தற்சமவடசொற்கள். நடந்து என்னும் செய்தெனெச்சம், காரணப்பொருளது. 'இளைத்துத் தாபமுதிர்ந்தது' என்பது, 'தாபம்முதிர்ந்து இளைத்தது' என விகுதிபிரித்துக்கூட்டப்பட்டது. முன் என்ற இடைச்சொல், பெயர்த்தன்மைப்பட்டுக் காலவாகுபெயராய் முன்னிருந்தநிலைமையைக்குறித்தது; ஐ - சாரியை: இன் - ஐந்தாம்வேற்றுமையுருபு, நீக்கப்பொருளது; உம் - அசை. சூரியனது தேர் சம்வற்சரரூபமானஒற்றைச்சக்கரத்தையுடையதென்று புராணம் கூறும். சூரியனதுதேர்க்குதிரைகள் ஏழு என்பர், ஒருசாரார்; மற்றொருசாரார், ஏழு [ஸப்த] என்றுபெயர்பெற்ற குதிரை ஒன்றே யென்பர்: இக்கொள்கையே இங்குக் கொள்ளப்பட்டது. பச்சை - ஐவிகுதிபெற்ற பண்புப்பெயர். சைலம் - சிலைமயமானது; சிலை - கல். தணிப்பான் - 'பான்' விகுதி காலங்காட்டும் எதிர்காலவினையெச்சம். சூரியன் பனியையொழிப்பவனாதலால் 'பனிப்பகைவன்' எனப்பட்டான். 'பனிப்பகைவன் பனிசெய்வோன்பக்கஞ் சேர்ந்தான்' என்றதில் தொடைமுரண் இருத்தல் காண்க. சயிலராசன் பனிசெய்வோன் என மலையாகிய அஃறிணைப்பொருளை உயர்திணையாண்பாலாக்கிக்கூறியது, வடமொழிமுறைமைபற்றி. பகைவன், வ் - பெயரிடைநிலை. இரண்டாமடியில் 'பரி' என வந்ததனால், மூன்றாம்அடியில் 'பரியை' என்றது - 'அதனை' எனச் சுட்டுப்பெயர்மாத்திரமாயநின்றது; இனி, பரிதாபமென ஒருசொல்லாகஎடுத்து, மிக்கவெப்பமெனினுமாம்; அப்பொழுது, முதிர்ந்ததென்பதற்கு 'தன்குதிரை' என்ற தோன்றாஎழுவாய் வருவித்தல்வேண்டும். பனிப்பகைவன், என்று, பரியை, விடாய்தணிப்பான், சேர்ந்தான் என இயையும்.

இதுமுதற் பத்தொன்பதாங்கவிவரையில், பெரும்பாலும் முதல்நான்குசீரும் காய்ச்சீர்களும், மற்றைஇரண்டும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (௪)

[வசந்தகால வருணனை.]

**கலக்கமுறவிளவேனிற்கலகமெழுந்திடும்பசுந்தண்காவுதோறுஞ்,**
**)க்கணிநாண்முறுக்குவபோற்றென்றலின்பின்சுழலளிகள்சேரவோ**
**வுலைக்கனலிற்கருங்கொல்லன்சிறுகுறட்டாற்றகடுபுரிந்தொதுக்கி**
**ரன், கொலைக்கணைகள்சமைப்பனபோற் குயிலலகாற்பல்லவங்கள்**
**ருமாலோ.**

(இ - ள்.) கலக்கம் உற - கலக்கம் மிகுதியாகஉண்டாக, இளவேனில் கம் எழுந்திடும்-வசந்தகாலத்துக்குஉரிய போர் மூளுதற்குஇடமான, பசுந் காவு தோறும்-பசுமையான குளிர்ந்த சோலைகளி லெல்லாம்,—சிலைக்கு ரி நாண் முறுக்குவ போல் - (மன்மதனுடைய) வில்லுக்கு அழகிய நாணி முறுக்குதல் போல, சுழல் அளிகள் தென்றலின் பின் சேர ஓட - சுழ தன்மையனவான வண்டுகள் தென்றற்காற்றின் பின்னே ஒருசேர ஓட,— கொல்லன் - கருநிறமுடைய கொல்லனானவன், உலை கனலில் - உலைக் த்துள்ள நெருப்பில், தகடு புரிந்து-தகடுகளைச்செய்து, (அவற்றை), சிறு ட்டால் ஒதுக்கி-சிறிய குறடென்னுங்கருவியினால் ஒதுக்கி, மாரன் கொலை ரகள் சமைப்பன போல் - மன்மதனுக்குஉரிய கொலைத்தொழிலைச்செய் அம்புகளைச் செய்தல் போல, குயில் - குயில்கள், அலகால் - தம்வாயல ல், பல்லவங்கள் கோதும் - தளிர்களைக் கோதாநிற்கும்; (எ - று.)— , ஓ - ஈற்றசைகள்.

மன்மதனது முயற்சியா லாகுந் தொழிலாகிற சிற்றின்பவிளையாட்டுக் வசந்தகாலத்தில் மிகுதலாகல், அப்பருவம், அவனுக்குஉரியகால மெனப்ப அதனால், மன்மதனுக்கு, வேனிலா னென்று ஒரு பெயர் வழங்கும். னங் காமனோடு நண்புகொண்ட வசந்தகாலத்துக்கு உரிய போராவது- காலத்தில் மன்மதன் ஸ்திரீபுருஷர்களைச் சிற்றின்பவசப்படுமாறு தூண் ல். அதற்குஇடமான சோலை யென்றது - மைந்தரும் மகளிருங் காதல் ண்டு கூடிவிளையாடுதற்கு ஏற்ற ரமணீயமான சோலை யென்றவாறும். சோலைகளில் வசந்தகாலத்திலே நறுமணமளாவி உலாவுகிற தென்றலின் னே அதனைநுகர்தற்குச் சுழலுமியல்போடுசெல்லுகிற கருநிறமான டுகளின் ஒழுங்கை, மன்மதனது வில்லின்நாணியாதற்கு முறுக்கியகயிறு ன்ற தென்றார். மன்மதனது கரும்புவில்லுக்கு வண்டொழுங்கு நாணி ரப்படுதலை "ஆலைக் கரும்பு சிலை ஐங்கணை பூ நாண் சுரும்பு" என்ற இர ணச்சுருக்கத்தாலும் அறிக. 'கலக்கம் உற' என்றது - ஸ்திரீபுருஷர்களு ய மனத்திட்பம் நிலைகுலைய என்றபடி. பின்னிரண்டடியில் கருநிறமு ய குயிலுக்கு - கருங்கொல்லனும், அதன் அலகுக்கு - சிறுகுறடும், தளி செம்மைபெற்ற மரச்செறிவுக்கு - உலைக்கனலும், விரிந்த தளிர்க்கு - த தகடும், அலகினால் அதனைச் சுருட்டிக் கோதுதற்கு - குறட்டினால் டை ஒதுக்கி அம்புவடிவாகஅமைத்தலும் உவமை யெனக் காண்க. மையணி. வண்டினொழுங்கும், குயிலும் தளிரும் தம்மைக்காண்பவர்க்கு கை விளைக்குங் காமோத்தீபகப்பொருள்களாதலால், இங்ஙனங் கூற டன. குயில் தளிர்கோதுதல், வசந்தகாலத்துக்குஉரியது.

கலக்கம் - கலங்கு என்ற பகுதியின் தொழிற்பெயர். உற - மிகுதியுணர் ம் உறு என்னும்உரிச்சொல்லின்மேற் பிறந்த செயவெனெச்சம். கலகம், , மாரன், பல்லவம் - வடசொற்கள். எழுந்திடும், இடு - துணைவினை; றமுணர்த்தும் பசுந் தண் கா-பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். ப்படுவது பற்றி, கா என்று பெயர்; உ - சாரியை. அணி நாண் - பண்புத் கை. முறுக்குவ, சமைப்பன என்ற பலவின்பால்வினையாலணையும்

பெயர்கள், அத்தொழில்செய்யும் பொருள்களைக்குறியாமல் தொழிற்பெயர்த் தன்மைப்பட்டு முறுக்குதல்கள், சமைத்தல்கள் என அத்தொழிலையே உணர்த்தின. தென்றல் - தெற்கிலிருந்துவருங் காற்று; தெற்கு என்ற பகுதி, ஈறுகெட்டு றகரம் னகரமாயிற்று: அல் - பெயர் விகுதி, து - சாரியை; உகரம் கெட்டதும், தகரம் றகரமானதும்-சந்தி. மாரன் - மரணவேதனைப் படுத்துபவன். கொலை - ஐவிகுதிபெற்றதொழிற்பெயர். அலகு - பறவைமூக்கு. கோதுதல் - கொந்துதல். கொல்லன் - கருமான்; (இரும்பைக்) கொன்று [நெருப்பிலிட்டுஅடித்து] வேலை செய்பவனென்க. (உ)

௩, ௪, ௫—இச்செய்யுள்கள் பரீக்ஷைக்குப் பாடமில்லை. அவ்விளவேனிற் பருவத்தில் கண்ணபிரானும் அருச்சுனனும் தம்தமக்குஉரிய தேவியருடனே வஸந்தோத்ஸவங்கொண்டாடுதற்பொருட்டு அழகிய பூஞ்சோலையிற் சென்று சேர்ந்தனர்.

[மகளிர் பூக்கொய்தல்.]

**பாராமனகையாமற்பாடாமலாடாமற்பாதஞ்செங்கை**
**சேராமன்முகராகம்வழங்காமலிகழாமற்செவ்வாயூற**
**னேராமனிழல்தனைநிகழ்த்தாமன்மலர்ந்தழகுநிறைந்தநீழ** [ர்.
**லாராமந்தொறுந்தங்களவயவம்போல்வனகொய்தாரணங்குபோல்வா**

(இ - ள்.) அணங்கு போல்வார் - தெய்வமகள் போன்ற மாதர்கள்,— பாராமல் - (தாங்கள்) பாராமலும், நகையாமல் - சிரியாமலும், பாடாமல் - இசைபாடாமலும், ஆடாமல்-நர்த்தனம்ஆடாமலும், பாதம் செம் கை சேராமல் - காலையும் சிவந்தகையையும் சேராமலும், முக ராகம் வழங்காமல் - நட்புச்செய்யாமலும், இகழாமல் - இகழாமலும், செம்வாய் ஊறல் நேராமல் - சிவந்தவாயினால் எச்சிற்படச் சுவையாமலும், நிழல்தனை நிகழ்த்தாமல் - நிழலைச் செய்யாமலு மிருக்கையிலேயே, மலர்ந்து—,அழகு நிறைந்த நீழல் ஆராமம் தொறும் தங்கள் அவயவம் போல்வன - அழகுநிறைந்த நிழலையுடைய சோலைகளிலெல்லாம் தங்களுடைய உறுப்புக்கள்போல உள்ளனவான மலர் அரும்பு தளிர் முதலியவற்றை, கொய்தார் - பறித்தார்கள்; (எ - று.)

உத்தமவிலக்கணமுடைய மகளிர் பார்க்க மாமரமும், அவர்கள் நகைக்க முல்லையும், பாடக் குருக்கத்தியும், ஆடப் புன்னையும், உதைக்க அசோகமும், அணைக்கக் குராவும், நட்புற ஏழிலைம்பாலையும், நிந்திக்கப் பாதிரியும், சுவைக்க மகிழும், நிழல்படச் சண்பகமும் தளிர்த்து அரும்பிப் பூப்பன வென்றல், மரபு. இப்பத்தும், மகளிரால்மலர்மர மெனப்படும். "ஏடவிழ்மகிழ் சுவைக்க வெழிற்பாலை நண்புகூடப், பாடல நிந்திக்கத் தேம்படிமுல்லை நகைக்கப் புன்னை, ஆட நீள்குரா வணைக்க வசோகுதைத்திட வாசந்தி, பாடமாப் பார்க்க வார்சண்பக நிழற்படத் தளிர்க்கும்" என்ற சூடாமணிநிகண்டையுங் காண்க. இங்கு அம்மரங்கள் மகளிர்பார்த்தல்முதலியன செய்யாமலிருக்கையிலேயே இயல்பாய்த் தளிர்த்து அரும்பிப் பூத்துச்செழித்தன, இளவேனிலாதலி னென்க. பாதம்சேராமல் செங்கைசேராமல் எனத் தனித்தனியியைத்து, உதையாமலும் அணையாமலும் எனப் பொருள்கொள்க. முக ராகம் வழங்குதல் - முகமலர்ச்சிகாட்டி அன்புபாராட்டுதல்: எனவே, நண்புசெய்தலாயிற்று; ராகம் - ஆசை. மலர்ந்து போல்வன வென இயையும். தளிர் அரும்பு பூ என்பவை, நிறமும் மென்மையும் அழகும் பற்றி, மகளிருறுப்புக்கு உவமை கூறப்படும். அவ்வுபமானஉபமேயத்தன்மையைமாற்றி 'தங்கள் அவயவம்போல்வன' என்றது, எதிர்நிலையணி; வடநூலார் ப்ரதீபாலங்காரமென்பர்: விபரீதவுவமை யணியெனவும் படும். உபமேயத்திலும் உபமானம் சிறந்திருத்தல்வேண்டு மென்பது அலங்கார

னூலார் துணிபாதலால், அந்தப்படி, உபமேயத்தை உபமானமாகக்கூறுதல் அவ்வுபமேயத்தைச் சிறப்பித்தற்கென்க. எனவே, மாந்தளிர் முல்லையரும்பு முதலியவற்றினும் மகளிர் மேனி பல் முதலியன சிறந்தனவென்ற பொருள் தொனிக்கும். 'தங்கள் அவயவம்போல்வன கொய்தார்' என்ற தொடரின் போக்கினால், ஒப்பற்ற தங்கள் அவயவங்கட்குப் போலியாதல்பற்றிப் பகைத்து அவற்றைப் பறிப்பாராயினரென்ற பொருள் குறிப்பாகத் தோன்றுதல் காண்க. அணங்கு - இங்கே, வனதேவதை; (திருக்குறளில் "அணங்கு கொல்" என்பதற்குப் பரிமேலழகர் 'இப்பொழிற்க ணுறைவாளோர் தெய்வ மகளோ' என்று உரைகூறியதையுங் காண்க.) சோலையிலுறைதலும், திவ்விய சரீரகாந்தியுடைமையும், மலர்முதலியவற்றில் வைத்த ஆசையினால் அவற்றை இமையாதுநோக்குதலும் பற்றி, 'அணங்குபோல்வார்' எனப்பட்டார். இனி, அணங்கு - திருமகளும், தேவலோகத்துமாதும், மோகினியென்னும் பெண்தெய்வமுமாம்.

பாதம், முகராகம், ஆராமம், அவயவம் - வடசொற்கள். ஊறல் - ஊறுவதாகிய நீர்க்குத் தொழிலாகுபெயர். ஊறல் நேர்தல் - ஊறலைத்தருதல். நிழலதனை யென்பதில், 'அது' என்பது - பகுதிப்பொருள் விகுதி. நீழல் - நிழலென்பதன் நீட்டல். போல்வன - பெயர். (௬)

எ, அ — இச்செய்யுள்கள் பரீக்ஷைக்குப் பாடமில்லை.

[இதுமுதல் நான்கு கவிகள் - அருச்சுனனும் அவனது தேவியரும் நீர்விளையாடுதலைக் கூறும்.]

**நங்கையங்கோர்கொடி யனையாள்வதனமதிசலமதியாய்நடுங்குமாறு**
**பங்குனன்றன்றிருச்செங்கைப்பங்கயத்தின்சிவிறியினாற்பரிவுகூரக்**
**குங்குமங்கொள்புனல்விடவுமிமையாமற்புனல்வழியேகூர்ந்தபார்வை**
**செங்கலங்கற்புதுப்புனலுக்கெதிரோடிவிளையாடுஞ்சேல்கள்போலும்.**

(இ - ள்.) அங்கு - அவ்விடத்தில் [அப்பொழுது], கொடி அனையாள் - பூங்கொடிபோன்றவளான, ஓர் நங்கை - ஒரு சிறந்தமகளினது, வதனம் மதி - முகமாகிய சந்திரன், சலம் மதி ஆய் - நீரினுள்ளேதோன்றுஞ் சந்திரபிம்பத்தைப் போன்று, நடுங்கும் ஆறு - மிகஅசையும்படி, பங்குனன் - அருச்சுனன், தன் திரு செம் கை பங்கயத்தின் சிவிறியினால் - தனது அழகிய சிவந்த தாமரைமலர்போன்ற கையிலுள்ள நீர்த்துருத்தியைக்கொண்டு, பரிவு கூர - (அவட்கு) வருத்தம்மிகும்படி, குங்குமம் கொள் புனல் விடவும் - குங்குமத்தைக் கரைத்த நீரை விசையோடுமேல்வீசவும், இமையாமல் - இமைகொட்டாமல், புனல் வழியே கூர்ந்த - நீரினிடையே நுண்ணிதாய்ப்பார்த்த, பார்வை - (அவளுடைய) கண்கள், — செம் கலங்கல் புது புனலுக்கு எதிர் ஓடி விளையாடும் சேல்கள் போலும் - சிவந்த கலக்கமுள்ள புதிய நீர்வெள்ளத்துக்கு எதிரே ஓடிவந்து விளையாடுகிற சேல்மீன்களை ஒக்கும்; (எ - று.)

அருச்சுனன் தனக்குஉரிய மாதர்களுள் ஓர் மெல்லியலாளின் முகத்தின்மேல் நீர்தூவுந்துருத்திகொண்டு விசையாகக் குங்குமம்கலந்தநீரைத் தூவினான்; அங்ஙனம்விசையோடுநீரெறிந்ததைப் பொறுக்கமாட்டாமல் அவள் முகத்தை மிகுதியாகஅசைக்கலானாள்: அச்சமயத்தில், சந்திரமண்டலம் போன்ற அவளுடையமுகமண்டலம் நீரினுள்ளே நடுங்கியது, நீரினுள்ளே காணப்படுகிற சந்திரமண்டலத்தினது பிரதிபிம்பம் அந்நீரின்அசைவினால் அசைந்துதோன்றுவதைப் போன்றது; இங்ஙனம் தனக்கு வருத்தம்மிகுமாறு அருச்சுனன் மேல்மேல்நீர்வீசிக்கொண்டிருக்கவும் அவள் அவன்பக்கலுள்ளஆசையாற கண்கொட்டாமல் அவனைப்பார்த்தபடியே யிருந்தாள்; அவ்வாறு நீரிற்குஎதிராக நுட்பமாய்ப் பார்வையைச்செலுத்துகிற அவளு

டையகண்கள், செங்கலங்கற்புதுவெள்ளத்திற்கு எதிரோடிவிளையாடுஞ்சேல் மீன்கள்போன்றன என்பதாம். **உவமையணி.** குங்குமங்கொள்புனலுக்கு - செங்கலங்கற் புதுப்புனலும், அக்குங்குமப்புனலுக்கு எதிராய்ப்பார்க்கிற கண்களுக்கு - அப்புதுப்புனலுக்கு எதிரோடிவிளையாடுஞ்சேல்களும் உவமையெனக் காண்க.

நங்கை - மகளிரிற்சிறந்தவள் : பெண்பாற் சிறப்புப்பெயர்; இதன் ஆண்பால் - நம்பி: இதில், கை - முறைப்பெயர்விகுதி. சிறிது வருத்தத்தையும் பொறுக்கமாட்டாத மெல்லியளென்றற்கு, 'கொடியனையாள்' என்றார். வதன மதி - உருவகம். சல மதி யாய் - உவமை; இதில், ஆய் - உவமவுருபு. கைப் பங்கயம் - பங்கயம்போன்ற கை யென முன்பின்னாகத்தொக்க உவமத்தொகை : கையாகிய பங்கய மென உருவகமாகக்கொள்ளுதலு மொன்று. இன் - எழனுருபு. சிவிறி - விசிறி யென்பதன் எழுத்துநிலைமாறிய இலக்கணப்போலி; அது, நீரைவிசிறுவதென்று பொருள்படும்: இ - கருத்தாப்பொருள்விகுதி. பார்வை - பார்த்தற்குக்கருவியானது; ஐ - கருவிப்பொருள் விகுதி: வ் - எழுத்துப்பேறு. மதி - மதிக்கப்படுவது, அன்றி, மதுவையுடையது: மது - அமிருதகிரணம். வதநம், ஜலம், பல்குநன், பங்கஜம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. குங்குமம் - தற்சமவடசொல். பங்கஜம் - சேற்றில் முளைப்பது; தாமரைக்குக் காரணவிடுகுறி: அதன்மலர்க்கு முதலாகுபெயர்; பங்கம் - சேறு. அனையாள் என்ற பெயரில், அன் என்ற உவமவிடைச்சொல் - பகுதி, ஐ - சாரியை. பரிவு கூர என்பதற்கு - ஆசை மிக என்று பொருள்கொள்ளினும் அமையும்; அருச்சுனன் தனக்கு அவளிடம் ஆசைமிகுதலால் அவள்மேற் புனல்வீசின னென்றும் தனதுகாதலனான அவன் கைச்சிவிறிகொண்டு வீசிய நீர் தன்உடலிற்பட்டபோது அவள் அவன்கையால்தீண்டினாற்போல இன்பமிக்கன ளென்றுங் கொள்க. விடவும், உம் - இழிவுசிறப்பு.

பல்குநன், பார்த்தன், கிரீடி, சுவேதவாகனன், பீபற்சு, விஜயன், கிருஷ்ணன், சவ்யசாசி, தநஞ்சயன், நரன் என்பன - அருச்சுனனது மறுபெயர்களாம். பங்குனிமாதத்தில் உத்தரபல்குநிநக்ஷத்திரத்திற் பிறந்ததனால், 'பல்குநன்' என்று பெயராயிற்று. (கூ)

**நறைகமழ்தண்டுழாய்மாலைநாரணற்குநண்பானநரனார்செங்கை**
**யுறையுமலர்ச்செந்திருவுமொவ்வாதபொற்புடையாளொருபொற்பாவை**
**நெறிதருபைங்குழலின்மிசைவீசியநீர்பெருக்காற்றினிறைநீர்வற்றி**
**யறல்படுநுண்கருமணலினரித்தொழுகுஞ்சின்னீரோடமைந்ததம்மா.**

(இ - ள்.) நறை கமழ் - வாசனை வீசுகிற, தண் - குளிர்ச்சியான, துழாய் மாலை - திருத்துழாய்மாலையையுடைய, நாரணற்கு - நாராயணனது திருவவதாரமான கண்ணபிரானுக்கு, நண்பு ஆன - சிநேகிதனான, நரனார் - அருச்சுனன், செம் கை - (தனது) சிவந்த கையினால், மலர் உறையும் செம் திருவும் ஒவ்வாத பொற்பு உடையாள - செந்தாமரைமலரில் வாழ்கிற செந்நிறமுள்ள இலக்குமியும் ஒப்பாகாத அழகை யுடையவளாகிய, ஒரு பொன் பாவை - பொன்மயமான பிரதிமையைப் போன்ற ஒரு பெண்ணினது, நெறி தரு பைங் குழலின்மிசை - நெறித்த கருநிறமான கூந்தலின்மேல், வீசிய—, நீர் - நீரானது,—பெருக்கு ஆற்றில் நிறை நீர் வற்றி - வெள்ளப்பெருக்கையுடைய நதியில் நிறைந்த நீர் குறைந்துபோக, அறல் படு நுண் கரு மணலின் அரித்து ஒழுகும் - அறுப்புப் பொருந்திய நுண்ணிய கருமணலில் அரித்துப் பாய்கிற, சில் நீரோடு - சொற்பமான நீரோடு, அமைந்தது - ஒத்தது; (எ - று.)—அம்மா - ஈற்றசை.

**உவமையணி.** நெறித்த கருநிறமான கூந்தலுக்கு - அறல்பட்ட நுண்ணிய கருமணலும், அக்கூந்தலின்மேல் கையால்வீசிய நீர்க்கு - அக்கருமணலில் அரித்தொழுகுஞ் சொற்பநீரும் உவமை யெனக் காண்க. ஜலக்ரீடை செய்தலில் வல்லவ னென்பது தோன்ற, 'நாரணற்குநண்பான நரனார்' என்றும், அப்படிப்பட்டவன் காதலித்து விளையாடுதற்கு ஏற்றமேம்பாடுடையவளென்பது தோன்ற 'செந்திருவுமொவ்வாத பொற்புடையாள் ஒரு பொற்பாவை' என்றுங் கூறினார். பசுமை, கருமை, நீலம் என்ற நிறங்களில் ஒன்றற்கொன்றுள்ள சிறிதுவேறுபாட்டை முக்கியமாகக்கொள்ளாமல் அவற்றை அபேதமாகக்கூறுவது கவிமரபாதலால், கருங்குழல் 'பைங்குழல்' எனப்பட்டது.

திருத்துழாய்மாலை, திருமாலுக்கு உரியது. துளஸீ, மாலா, நாராயணன் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. நண்பு - நட்டல்; தொழிற்பெயர்: நள் - பகுதி, பு - விகுதி, ளகரம் ணகரமானது - சந்திவிகாரம்; இங்கு நண்பனுக்குத் தொழிலாகுபெயர். அடைமொழிகொடாமல் 'மலர்' என்றால், அது, மலர்களிற்சிறந்ததான தாமரையைக் குறிக்கும். திருவும், உம் - உயர்வுசிறப்பு. பொற்பு - பொலிவு உணர்த்தும் உரிச்சொல்; இதனை, பொன் பு எனப் பகுதிவிகுதியாகப்பிரித்து, பொன்னினது தன்மை யென்று காரணப்பொருள் கூறலாம். பொற்பாவைபோல்பவளைப் பொற்பாவை யென்றது, உவமையாகுபெயர். நெரித்தரு என்ற வினைத்தொகையில், தா என்ற துணைவினை - தரு என்று விகாரப்பட்டது. செங்கைவீசிய என இயையும். பெருக்கு - பெருகுவது. வற்றி - வற்ற என்னும் எச்சத்தின்திரிபு. அறல் - அறுதல்: அல்விகுதிபெற்ற தொழிற்பெயர். மணலின், இன் - ஏழனுருபு. சின்னீர் = சில நீர்: சிலவாகிய நீரெனக; அன்றி, சிறியநீரெனினுமாம். பசுமை + குழல் = பைங்குழல்: "ஈறுபோதல்" என்னுஞ் சூத்திர விதி.

முன்னொருகாலத்தில் குருசிஷ்யக்ரமத்தை உலகத்தில் அனைவருக்கும் விளக்கும்பொருட்டு நாராயணனென்னுங் குருவும் நரனென்னுஞ் சிஷ்யனுமாகப் பதரிகாச்சிரமத்தில் தோன்றிச் சீடனுக்குக் குரு தத்துவப்பொருள்களை உபதேசிக்கின்ற தன்மையாய் வீற்றிருக்கிற திருமாலின் இருமூர்த்திகள்தாமே இங்கு முறையே கண்ணனும் அருச்சுனனுமாக அவதரித்ததனால் 'நாரணற்கு நண்பான நரனார்' என்றார். ஆர் என்ற பலர்பால்விகுதி சிறப்பு விளக்கும்; உயர்வுப்பன்மை. (கo)

**விளிந்துமயில்புறங்கொடுக்குமெல்லியலாளொருத்திநெடுவேயும்**
**பாகுஞ், சுளிந்துவருங்கடகளிற்றுச்சுவேதவாகனன்கடகத்தோளின்**
**மீது, தெளிந்தநறுங்கத்தூரிச்சேறுபடுசிவிறியினீர் சிந்துந்தோற்றங்,**
**களிந்தகிரிமிசைக்கடவுட்காளிந்திபரந்ததெனக்கவினுமாதோ.**

(இ - ள்.) மயில் விளிந்து புறம் கொடுக்கும் - மயில் (ஒப்பாகமுன்னிற்கமாட்டாமல்) தோற்று முதுகுகாட்டிச் செல்லும்படியான, மெல் இயலாள் - மென்மையான சாயலை யுடையவளாகிய, ஒருத்தி - ஒரு பெண், நெடு வேயும் பாகும் சுளிந்து வரும் - நீண்டமுட்கோலையும் பாகனையும் (தூரத்திலேகண்டாலும்) கோபித்துவருகிற, கட களிறு - மதங்கொண்ட ஆண்யானைபோன்ற, சுவேதவாகனன் - அருச்சுனனது, கடகம் தோளின்மீது - கடகமென்னும் வளையையணிந்த தோள்களின்மேல், நறு கத்தூரி சேறு படு தெளிந்த நீர் - நறுமணமுள்ள கஸ்தூரிக்குழம்பு கலந்த தெளிவான நீரை, சிவிறியின் சிந்தும் - துருத்தியைக்கொண்டு தூவிய, தோற்றம் - காட்சியானது, — களிந்த கிரி மிசை - களிந்தமென்னும் மலையின்மேல், கடவுள் காளிந்தி பரந்தது என - தெய்வத்தன்மையையுடைய யமுனாநதி பரவியது போல, கவினும் - அழகியதாய் விளங்கும்; (எ - று.) — மாது, ஓ - ஈற்றசைகள்.

**உவமையணி.** கருநிறமுடைய அருச்சுனனது வலியபெரியதோளுக்கு-கருநிறமுடைய வலிய பெரிய களிந்தகிரியும், கஸ்தூரிக்குழம்புகலந்ததனாற் கருநிறமமிக்க தெளிவான நீர்க்கு - கருநிறமுள்ள தெளிந்த யமுனாநதியின் நீர்ப்பெருக்கும் உவமை யெனக் காண்க. மயில் விளிந்து புறங்கொடுக்கும் மெல்லியலாள் - மயிலினது சாயலினும் மிகஅழகியதாய்ச் சிறந்த சாயலை யுடையாள் என்றபடி. மதயானையின் இயல்பை மேற் பதினாறாம் போர்ச்சருக்கத்தில் " தூணும் விலங்கும் முறிப்பது பாகு பார்க்கோல் யாவுந் தூரத்தே, காணினும் நின்று கொதிப்பது தன்னிழல் கண்டு சீறுங் கருத்தது" என வருவதனாலும் உணர்க. எவ்வளவு நீர்மாரிசொரிந்தாலும் புறகிடாமல் மகிழ்ச்சியோடு எதிரேற்றுநிற்கும் ஆற்றலுடையா னென்றற்கு, மதயானைபோன்ற அருச்சுன னென்றார். சுவேதவாகனன் என்றபெயர் - வெண்ணிறமான குதிரைகளை யுடையவ னென்று பொருள்படும். காண்டவதகனஞ்செய்யுமாறு அநுமதிதரும்போது அக்கினிபகவானாற் கொடுக்கப்படும் நான்கு வெள்ளைக் குதிரைகளைப்பூண்ட தேரைப் பெறுதலால், இவனுக்கு இப்பெயர். இக்காரணத்தால் இவன் இப்பெயர்பெறுதல் இதன்பின்நிகழ்வதாயினும், பிற்காலத்தில் ஆலியற்றிய கவி எங்கும் இப்பெயரால் இவனைக் குறிக்கத் தட்டில்லை; இன்னும் இதுபோல்வனவற்றிறகெல்லாம் இவ்வாறே கொள்க. கடகம்-ஒருவகைத் தோள்வளை. காளிந்தி யென்ற பெயர் - களிந்தகிரியினின்று உண்டான தென்று பொருள்படும், தத்திதாந்தநாமம்.

ஒருத்தி யென்ற பெண்பாற்பெயரில், து - சாரியை. வேய் - மூங்கில். பாகு - உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச்சொல்; வேந்து, அரசு, அமைச்சு, தூது என்பனவும் இது. கடம், ச்வேதவாஹநன், கடகம், கஸ்தூரீ, களிந்தகிரி, காளிந்தீ - வடசொற்கள். கடம் என்னும் கன்னத்தின் பெயர், அதிலிருந்து பெருகும் மதநீர்க்கு இடவாகுபெயர். களிறு - யானையின் ஆண்பாற்பெயர்; இதன் பெண்பால்-பிடி. களி - மதக்களிப்பு; அதனையுடையது, களிறு: று-பெயர்விகுதி. தெளிந்த நீரென இயையும். தெளிந்த நறுங் கத்தூரி யென எடுத்து, சிறந்ததாகத்தேர்ந்தெடுத்த நல்லகஸ்தூரி யெனினுமாம். கஸ்தூரியென்னும் ஒருவகைமானினதுபெயர், அதன்வயிற்றினின்று எடுக்கப்படுங் கொழுப்புக்கு முதலாகுபெயராம். சிவிறியின், இன்-ஐந்தனுருபு, கருவிப்பொருளது. தோன்றுவது, தோற்றம். யமுனாநதிக்குத் தெய்வத்தன்மை - தன்னிடத்தில் ஒருகால் நீராடியவரது அருவினையனைத்தையுந் தொலைத்து அவர்களை நற்கதியிற் செலுத்துதலும் கண்ணபிரான் திருவிளையாடல் செய்யப் பெற்ற பாக்கியமுடைமையும். என - உவமையுருபு.

கீழ் இரண்டுகவிகளில், அருச்சுனன் தேவியர்மீது நீர்சிந்தியதை வருணித்தவர், இக்கவியிலும் அடுத்தகவியிலும், தேவியர் அருச்சுனன்மீது நீர்சிந்துவதை வருணிக்கின்றார். (கக)

**பிறையனையதிலகநுதற்பேதையிளம்பிடியொருத்தி பிடித்தசெங்கை, நறைகமழும்பொலஞ்சிவிறிநண்ணியசெஞ்சிந்தூரநாரம்வீச, வறைகழல்வெஞ்சிலைத்தடக்கையருச்சுனன்றன்றிருமுகத்திலானபோது, நிறைமதிமேல்வாளிரவிகரங்கணிரைத்தோடுவபோனிறத்தமாதோ.**

(இ - ள்.) பிறை அனைய - இளஞ்சந்திரன் போன்ற, திலகம் நுதல்-திலகத்தையணிந்த நெற்றியையுடைய, இளம் பிடி - இளமையான பெண்யானை போன்றவளாகிய, பேதை ஒருத்தி - ஒரு பெண், செம் கை பிடித்த - (தனது) சிவந்த கையிற் பிடித்த, பொலம் சிவிறி - அழகிய துருத்தியில், நண்ணிய - பொருந்திய, செம் சிந்தூரம் நறை கமழும் நாரம் - சிவந்த சிந்தூரப்பொடியைக்கரைத்த வாசனை வீசும் நீரை, வீச-சிந்த,—(அந்நீர்ப்பெருக்குக்

கள்),—அறை கழல் வெம் சிலை தட கை அருச்சுனன்தன் திரு முகத்தில் ஆன போது - ஆரவாரிக்கின்ற வீரக்கழலையும் பயங்கரமான வில்லை யேந்திய பெரிய கையையுமுடைய அருச்சுனனது அழகிய முகமண்டலத்தின் மேற் சென்றுபொருந்தியபொழுது, வாள் இரவி கரங்கள் நிறை மதி மேல் நிரைத்து ஓடுவ போல் நிறத்த-ஒளியையுடைய சூரியனது கிரணங்கள் பூர்ண சந்திரன்மேல் வரிசையாக ஓடுவனபோல விளங்கின; (எ - று.)—யாது, ஓ-ஈற்றசைகள்.

**உவமையணி.** அருச்சுனனது முகமண்டலத்துக்கு—சந்திரமண்டலமும், அதன்மேற் சிந்துரங்கலந்தநீர் மேன்மேற் செல்லுதற்கு-சந்திரமண்டலத்தின்மேற் செந்நிறமான சூரியகிரணங்கள் வரிசையாகச்சென்று பாய்தலும் உவமை யெனக் காண்க. சூரியகிரணங்கள் மேன்மேற்பாய்ந்து சந்திரனது ஒளியை நிறைக்கின்றன வென்பது, தாற்கொள்கை. குளிர்ந்தஒளியும், அழகும், வளைந்தவடிவமும் பற்றி, மகளிர்நெற்றிக்குப் பிறை உவமை. நுதற்குத் திலகங் கூறினதற்கு ஏற்ப, பிறைக்குக் களங்கம் கொள்க. திலகம்-நெற்றிப்பொட்டு. பெண்ணுக்குப் பெண்யானை யுவமை, கம்பீரமான நடையின் அழகுக்கு என்க. பேதை - "பேதைமை யென்பது மாதர்க்கு அணிகலம்" என்றபடி மகளிர்க்குச் சிறந்த குணமாகிற பேதைமையை யுடையவள்; அதாவது - பலவும்அறிந்தும் ஒன்றும்அறியாதுபோல் அமைதிகொண்டு நிற்குந்தன்மை யென்பர். பொலஞ் சிவிறி - பொன்னாலாகிய துருத்தியுமாம். பொன்+சிவிறி=பொலஞ்சிவிறி: இப்புணர்ச்சிக்கு விதி, தொல்காப்பியத்தில் உள்ளது. நன்னூலின்படி, பொலம் சிவிறி யெனப் பிரித்து, மகரவீற்றுப்புணர்ச்சியில் அடக்கவேண்டும்.

திலகம், ஸிந்தூரம், நாரம், அர்ஜுநன், முகம், ரவிகரம்-வடசொற்கள். சிந்தூரம் - ஒருவகைச்செந்நிறப்பொடி. அருச்சுனன் என்பதற்கு - வெண்ணிறமுடையவ னென்று பொருள்; இது முதலில், இந்நிறமுடைய கார்த்தவீரியமகாராசனுக்குப் பெயராயிருந்து, பின்பு, அவனைப்போன்ற சௌரிய தைரியங்களை யுடைய இப் பார்த்தனுக்கு இட்டு வழங்கப்பட்டது: இது, உவமவாகுபெயரின்பாற்படும். பார்த்தன் கருநிறமுடையவ னாதலால், அவனுக்கு அருச்சுனனென்பது நிறம்பற்றிவந்த இயற்பெய ரென்றல் பொருந்தாது. இனி, அருச்சுனனென்பதற்குப் பசுமைநிறமுடையவனென்று பொருள் கூறுவாருமுளர். அன்றியும், பார்த்தன் பிறந்தபொழுது வெண்ணிறமுடையனாயிருந்து பின்பு கருநிறமடைந்தானென்று கூறுவது முண்டு. அறை கழல்-வினைத்தொகை. கழல்-வீரர்காலணி. தட, வாள்-உரிச்சொற்கள். போது - மரூஉமொழி. ஓடுவ - அன்சாரியைபெறாதபலவின்பாலெதிர்காலவினையாலணையும்பெயர். நிறத்த - அப்படிப்பட்ட இறந்தகாலவினைமுற்று; நிறத்தல் - ஒளிசெய்தல். பிறப்பது, பிறை யெனக் காரணக்குறி; ஐ-கருத்தாப்பொருள் விகுதி; பிறை என்னும் பகுதியின் ஈற்றுஅகரம் தொக்கது. அருச்சுனன் தன், தன் - சாரியை. (௧௨)

௧௩- ஆம் செய்யுள், பரீக்ஷைக்குப் பாடமில்லை. கிருஷ்ணார்ச்சுனர்கள் தம்தம் தேவியருடனே தம்மாளிகைக்கு மீண்டனர்.

[இதுமுதல் மூன்று கவிகள் - முதுவேனிற்பருவ வருணனை.]

நெடுவேனில்புகுதரமேலிளவேனிலகன்றதற்பினிகரில்கஞ்சப், படுவேய்வெள்வளையமுந்தண்பட்டாலவட்டமுஞ்செம்படீரச்சேறு, முடுவேய்நித்திலத்தொடையுமூடுறுமண்டபத்தடமுமொழுகிநீண்ட, வடுவேய்கண்மடந்தையர்க்குமகிழ்நருக்குமமைந்தனவான் மனைகளெல்லாம். (௧௪)

(இ - ள்.) இளவேனில் அகன்றதன் பின் - இளவேனிற்பருவங் கழிந்ததன்பின்பு, மேல் நெடுவேனில் புகுதர - அதற்கு அடுத்ததான முதுவேனிற் பருவம் வர,—படு ஏய் - நீர்நிலைகளில் உண்டாகிற, கஞ்சம் - தாமரையினது, நிகர் இல் - ஒப்பில்லாத [மிகச்சிறந்த], வெள் வளையமும் - வெண்ணிறமான இளந்தளிர்ச்சுருள்களும், தண் பட்டு ஆலவட்டமும் - குளிர்ச்சியான பட்டினாற்செய்த பெருவிசிறிகளும், செம் படீரம் சேறும் - செஞ்சந்தனக்குழம்பும், உடு ஏய் நித்திலம் தொடையும் - நக்ஷத்திரகணத்தை யொத்த முத்து மாலைகளும், ஊடு உறு மண்டபம் தடமும் - நடுவிற் பொருந்திய மண்டபத்தையுடைய தடாகங்களும்,—ஒழுகி நீண்ட வடு ஏய் கண் மடந்தையர்க்கும் மகிழ்நருக்கும் - நெடுந்தூரமளவும் நீண்ட மாம்பிஞ்சினுட்பிளவை யொத்த கண்களையுடைய மாதர்களுக்கும் அவர்கள் கணவர்களான ஆடவர்களுக்கும், வான் மனைகள் எல்லாம் அமைந்தன - உயர்ந்த வீடுகள்தோறும் (சீதோபசாரத்தின்பொருட்டு) அமைக்கப்பட்டன; (எ - று.)

இளவேனில் - இளமையான வெயில்வெப்பத்தை யுடைய காலம்; நெடு வேனில் - முதிர்ச்சியான வெயில்வெப்பத்தை யுடைய காலம். இவ்விரண்டுதொடரும், பண்புத்தொகை யன்மொழிகள். கிரீஷ்மகாலமென்றும் கோடைக்கால மென்றுங் கூறப்படுகிற முதுவேனிற்கு உரிய மாதங்கள், ஆனியும் ஆடியும். வெப்பமமிக்க அப்பருவம் வந்தவுடனே அதன்தாபத்தைத் தணித்துக் குளிர்ச்சிசெய்தற்பொருட்டுச் சீதளகரமான தாமரையுட்சுருள் முதலியன வீடுகள்தோறுஞ் சித்தஞ்செய்யப்பட்டன வென்பதாம். காலவியல்பை வருணித்ததனால், தன்மைநவிற்சியணி. செல்வச்சிறப்புத்தோன்ற வருணித்ததனால், வீறுகோளணி யெனினும் அமையும். ஆலவட்டம் - ஆலிலைபோன்றவடிவமுள்ள ஒருவகைவிசிறி. மூன்றாமடியிலும் நான்காமடியிலும், ஏய் - உவமவுருபு. ஊடுறு மண்டபத் தடம் - நீராழி மண்டபத்தை நடுவிலேயுடைய தடாகங்கள்; அத்தடாகத்தினிடையிலுள்ள மண்டபத்தில் வசித்தல், வெப்பந்தீர்ந்து தட்பம்பெறுதற்குக் காரணமாம். வடு - மாவடு; இங்கு, அதனுட்பிளவுக்கு ஆகுபெயர்: அது - மகளிர்கண்ணுக்கு வடிவிலுவமம்; "வடுப்பிள வனைய கண்ணாள்" என்றார் சிந்தாமணியாரும். வான் மனை - ஆகாயத்தையளாவிய மாடமாளிகை; சந்திரகாந்தத்தாற்செய்து சந்தனத்தான்மெழுகி இளந்தென்றல் இடையீடின்றி இழுகிவருதற்குரிய உயர்ந்த சாளரங்கள் பல வுடைய சிறந்த மனை யெனினுமாம். இதுவும் தண்மைக்கு உரியதாதலிற் கூறினா ரென்க

புகுதர - புக; இதில், தா - துணைவினை. மேல் இளவேனில் என எடுத்து, மேன்மையான இளவேனி லெனினும் அமையும்; அது, ஆறு இருதுக்களுள்ளுஞ் சிறந்ததாம்: "இருதுக்களின்மே லிளவேனிலின் றோற்ற மேய்ப்ப" என்றார் கீழ்ச்சருக்கத்திலும். இனி, மேலிளவேனில் - மேற்கூறிய இளவேனி லென்றலும் ஒன்று. கஞ்சம், படீரம், உடு, மண்டபம், தடம் - வடசொற்கள். கஞ்சம் - நீரிற் பிறப்பது; காரணவிடுகுறி: கம் - நீர். படு - தடாகம். தண்மைதருவனவற்றிற் சிறந்த தென்பது தோன்ற, கஞ்சவெள்வளையத்துக்கு 'நிகரில்' என்ற அடைமொழி கொடுத்து, அதனை முதலில் வைத்தார். 'படுவேய் வெள்வளையம்' என்றதனால், அப்பொழுதேகொணரப்பட்ட ஈரம்மாறாத புதுவளைய மென்றவாறும். தண்மை, ஆலவட்டத்துக்கு அடைமொழி; பட்டுக்கு அடைமொழியாக்கி, பசும்பட்டு என்பாரு முளர். செம்மை - செவ்வையுமாம். குளிர்ந்தஒளியும் நிறமும் வடிவும் பற்றி, முத்துக்கு நக்ஷத்திரம் உவமம். ஒழுகி நீண்ட - ஒருபொருட்பன்மொழி; மிகநீண்ட என்றபடி: "தண் செவியுறப் போந் தகன்றனவே" என்றபடி காதளவும் நீண்டோடிய கண்க

மென்க. மகிழ்நர் - மனைவியர்மேலன்புகூர்ந்திருப்பவர் ; நர் - பெயரிடைநிலை. அமைந்தனவால் எனவெடுத்து, ஆல் - ஈற்றசை யென்பாருமுளர். (௧௪)

௧௫, ௧௬ - இச்செய்யுள்கள் பலர்க்குப் பாடமில்லை.

[கோடைக்காலத்திற் காற்றில்லாமை.]

கோடைவெயில் சுடச்சுடமெய்ப்கொளுந்தியிறந்தனபோலக் கொண்டல்கோடை, வாடைசிறுதென்றலெனுமாருதங்களெம்மருங்கும் வழக்கின்றி, யாடையில்வெண்சாமரத்திலாலவட்டத்தினிலுயிர்ப்பி லழகார்நெற்றி, யோடைமுகமதகயத்தின்றழைச்செவியிற்பல்லிறகி லொளித்தமாதோ.

(இ - ள்.) கொண்டல் கோடை வாடை சிறுதென்றல் எனும் மாருதங்கள் - கீழ்காற்று மேல்காற்று வடதிசைக்காற்று இளந்தென்றற்காற்று என்கிற நாற்றிசைக்காற்றுக்களும், — கோடை வெயில் சுட சுட மெய் கொளுந்தி இறந்தனபோல - அக்கோடைக்காலத்து வெயில் மிகச்சுடுதலால் உடல்கொளுத்தப்பட்டு ஒடுங்கினபோல, எம் மருங்கும் வழக்கு இன்றி - எந்தப்பக்கத்திலும் இயங்குதலில்லாமல், — ஆடையில் - வஸ்திரத்திலும், வெள் சாமரத்தில் - வெண்ணிறமான சாமரத்திலும், ஆலவட்டத்தினில் - ஆலவட்டத்திலும், உயிர்ப்பில் - சுவாசத்திலும், அழகு ஆர் நெற்றி ஓடை முகம் மத கயத்தின் தழை செவியில் - அழகுமிக்க நெற்றிப்பட்டத்தை யணிந்த முகத்தையுடைய மதயானையின் தழைத்த காதுகளிலும், பல் இறகில் - பலவகைப்பட்ட பறவையிறகுகளிலும், ஒளித்த - ஒளித்தன; (எ-று.) — மாது, ஓ - ஈற்றசைகள்.

மாருதங்கள் இறந்தனபோல வழக்கொழிந்து ஒளித்தன என இயையும். இவற்றில் மறைந்திருந்தே காற்று இயங்கின என்பதாம். ஆடையையும் சாமரத்தையும் ஆலவட்டத்தையும் வீசும்போதும், சுவாசம் விடும்போதும், யானைகள் தமது பெரிய காதுகளை இயல்பாக அசைக்கும்போதும், பறவைகள் பறத்தற்கு இறகுகளைப் பரப்பி அடித்துக்கொள்ளும்போதும் காற்று வெளியெழுதலால், அவற்றில் ஒளித்தன வென்றார். 'கோடை வெயில் சுடச்சுட மெய்கொளுந்தியிறந்தனபோல' என்றது, தற்குறிப்பேற்றவுவமையணி. வெம்மையுடையது, வெயில் எனக் காரணக்குறி. வெம்மை யென்ற பண்புப்பெயரின் ஈறு போய் முன்னின்ற மகரமெய் யகரமெய்யாகத் திரிந்த வெய் - பகுதி: இல் - பெயர்விகுதி. சுடச்சுட - அடுக்கு, மிகுதிபற்றியது. இறந்தன - பெயர். திக்குப்பாலகரெண்மரிற் சிறந்தவனான இந்திரனது ஆட்சிக்கு உரியதும் முதலதான மங்கலத்திசையுமாகிய கிழக்கினின்று வருங் கொண்டலை முதலிலும், அதற்கு எதிரான கோடையை அதன்பின்னும், கிழக்கையடுத்து மங்கலத்திசையாகிற வடக்கினின்று வரும் வாடையை அதன்பின்னும், அதற்கு எதிரான தென்றலை அதன்பின்னுமாக நிறுத்தினரென முறைவைப்புக் காண்க. வாடை யென்பதிற் பகுதியாகிய வடக்கு என்பது, ஈற்றுஉயிர்மெய்யும் ககரவொற்றும் நீங்கினதுமன்றி முதல் நீண்டது. மந்தகதியாக வீசுதல் தென்றலின் இயல்பாதலால், 'சிறுதென்றல்' எனப்பட்டது. மாருதம், சாமரம், மதகஜம் - வடசொற்கள். சாமரம் - சமரமென்னும் ஒருசாதிமானினது வால்மயிரினாலாகியது; தத்திதாந்த நாமம். வழக்கம் - வழங்கு என்ற பகுதியின் தொழிற்பெயர்; அம் - விகுதி, வலித்தல் - விகாரம். ஒளித்த - முற்று. 'பல்இறகு' என்பதற்கு பரிபோன்ற அடியையுடைய மயிர்ப்பீலியினாலாகிய விசிறி யென்பாருமுளர். (௧௭)

[அக்கோடைக்காலத்து நீர்வறட்சி.]

தாழிநறுங்குவளையந்தார்த்தருமன்மகனருட்புனலுந்தாங்கவேலை
ழி நெடும்பெரும்புனலுமுடலிலுறுவெயர்ப்புனலுமற்றியூறிப்

பாழிதொறுமிறைக்கின்றபைம்புனலுமல்லதுவெம்பருவந்தன்றுற்
றூழிபடுகயர்வாயநானிலத்தும்புகலுதற்கோர்புனலுமுண்டோ.

(இ - ள்.) தாழ் - நீர்நிலைகளிலுண்டாகிற, நறு - வாசனைவீசுகிற, குவளை - குவளைமலர்களினாலாகிய, அம் தார் - அழகிய மாலையை யணிந்த, தருமன் மகன் - யமதருமராசனது புத்திரனான யுதிட்டிரனது, அருள் புனலும் - அருளாகிய நீர்ப்பெருக்கும், தரங்கம் வேலை - அலைகளையுடைய கடலினிலுள்ள, ஊழி நெடும் பெரும் புனலும் - யுகாந்தகாலத்திலும் வற்றாது நிற்கும் நீரும், உடலில் ஊறு - உடம்பில் மிகுதியாக உண்டாகிற, வெயர் புனலும் - வியர்வைநீரும், பாழிதொறும் ஊறி ஊறி இறைக்கின்ற - நீரூற்றுக்குழிகளிலெல்லாம் மேன்மேலூறி இறைக்கப்படுகின்ற, பைம் புனலும் - புதிய தண்ணீரும், (என்னும் இவையே), அல்லது - அல்லாமல், வெம் பருவந்தன்னுள் ஊழ் படு கயர் வாய நானிலத்து - வெவ்விய கோடைக்காலத்தால் முதிர்ப்பட்டதும் வெப்பத்தைத் தன்னிடத்திலுடையதுமான பூமியிலுள்ள நால்வகை நிலங்களிலும், புகலுதற்கு ஓர் புனலும் உண்டோ - எடுத்துச்சொல்லுதற்கு வேறொருநீரும் உள்ளதோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

அருள்நீர்போலக் குளிர்ந்து பிறருடைய தாபத்தைத் தணிக்குந்தன்மையதாதலால், அதனை உருவகவகையால் 'அருட்புனல்' என்றார். காப்பியத்தலைவனான தருமபுத்திரனது அருள் மிகச்சிறந்ததலாலும், என்றும் மாறாததாலும், அது இங்கு எடுத்துக்கூறப்பட்டது. அவ்வருட்புனல் முதலிய நால்வகைப்புனலுமேயன்றி உலகத்தில்நால்வகைநிலத்திலும் எங்குமவேறுபுனல் இல்லையென்பதாம். நால்வகைநிலங்கள் - முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன. காடும், காடுசார்ந்தஇடமும்-முல்லை. மலையும், மலைசார்ந்தஇடமும் - குறிஞ்சி. நாடும், நாடுசார்ந்தஇடமும் - மருதம். கடலும், கடல்சார்ந்த இடமும் - நெய்தல். நீரும் நிழலுமில்லாததான பாலைநிலம், பிராணிசஞ்சாரத்துக்கு உரியதன்றாதலால் விலக்கப்பட்டது; அன்றியும், பாலைக்குத் தனியே நிலமில்லை யென்றும், மற்றை நான்குநிலங்களும் தம் இயல்புதிரிந்தவிடத்தே பாலையாமென்றுங் கொள்கை யுண்டு. தாழ்ந்துள்ளது, தாழ் எனக் காரணக்குறி; 'ஆழ்' என்பது போல. தாழ் - பகுதி; தாழ்தல் - ஆழ்தல்: இ - கருத்தாப்பொருள் விகுதி. இனி, தாழ்க் குவளை யென்பதற்கு - சாடியிலுண்டாக்கப்பட்ட குவளை யென்றலும் ஒன்று: "தாழிவாய் மறைக்குந் தண்ணென் தடம்பெருங் குவளைக் கண்ணார்" என்றார் சிந்தாமணியாரும். குவளை - ஒருவகைநீர்ப்பூங்கொடி: அதன் மலர்க்கு முதலாகுபெயர். தருமத்தினின்று தவறினவர்களைத் தண்டித்துத் தருமத்தைப் பாதுகாத்தலால், யமனுக்குத் தருமனென்று பெயர். தருமன், தரங்கம், வேலா, பர்வம் - வடசொற்கள். வேலை யென்ற கரையின் பெயர், கடலுக்கு இலக்கணை. 'அல்லது' என்பது - எதிர்மறைக் குறிப்புவினையெச்சம்; து - விகுதி, அ - சாரியை. வாய - குறிப்புப்பெயரெச்சம். ஓர் புனலும், உம் - இழிவுசிறப்பு. மற்றை உம்மைகள் - எண்ணுப்பொருளன. ஈற்று ஓகாரம் - எதிர்மறை. இறைக்கின்ற - செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினை; இதில், 'படு'விகுதி முதலியன தொக்குநின்றன என்க. 'ஊறி ஊறிப் பாழி தொறும் இறைக்கின்ற பைம்புனல்' என்றதனால், மற்றை நீர்நிலைகளிலெல்லாம் நீர்வறந்தமை பற்றி ஊரிலுள்ளாரால் ஊற்றுத்தோண்டி நீர் கொள்ளப்படுதல் விளங்கும். பைம்புனல் என்பதில், பசுமை - புதுமையின் மேலும், குளிர்ச்சியின்மேலும் நின்றது; பசுமை-குளிர்ச்சியாதல், தண்ணீரை 'பச்சைஜலம்' என்னும் வழக்கினாலும் விளங்கும். 'காணிலத்தும்' என்றும் பாடம். (௩௮)

[கண்ணனும் அருச்சுனனும் ஒருசேரஇருத்தல்.]

**நீகார மழைபொழிய நித்திலவெண் குடைநிழற்ற நீல வாட்கட்,**
**பாகாரு மொழிமடவார் மணிக்கவரி யிருமருங்கும் பயில வீசக், கார்**
**காலம் புகுந்துசெழுங் காளமுகி லிரண்டொருபாற் கலந்த தென்ன,**
**வாகார மழகெறிப்ப விருவருமாங் குடனிருந்தா ராவி போல்வார்.**

(இ - ள்.) நீகாரம் மழை பொழிய - பனிநீர்மழை சொரியவும்,—வெள் நித்திலம் குடை நிழற்ற - வெண்ணிறமான முத்துக்குடை நிழல்செய்யவும்,—நீலம வாள் கண் - கருங்குவளைமலர்போன்ற பிரகாசமான கண்களையும், பாகு ஆரும் மொழி - கருப்பஞ்சாற்றுப்பாகை யொத்த இன்சொல்லையு முடைய, மடவார் - இளமகளிர், மணி கவரி - அழகிய சாமரங்களை, இரு மருங்கும் - இரண்டு பக்கத்திலும், பயில வீச - பொருந்த வீசவும்,—ஆவி போல்வார் இருவரும் - (ஒருவர்க்கொருவர்) உயிர்போன்ற நண்பர்களான கிருஷ்ணார்ச்சுன ரிரண்டுபேரும்,—கார் காலம் புகுந்து செழு காளம் முகில் இரண்டு ஒரு பால் கலந்தது என்ன - கார்காலம் வரச் செழுமையான காள மேகங்க ளிரண்டு ஓரிடத்துக் கலந்தாற் போல, ஆகாரம் அழகு எறிப்ப - உடம்பு அழகை வீச,—ஆங்கு - அவ்விடத்தில் [அவ்விந்திரப்பிரத்தநகரத் திலே ரமணீயமானதோட்டத்தில்], உடன்இருந்தார்-ஒருங்குஇருந்தார்கள்.

ஆவிபோல்வா ரிருவரும், பொழிய, நிழற்ற, வீச, எறிப்ப, ஆங்கு, உட னிருந்தார் என இயையும். நீகாரமழைபொழிதல் முதலிய மூன்றும், அக் கோடைக்காலத்து வெப்பத்தைத் தணிக்கும் சைத்யோபசாரமாக நிகழ்ந் தன வென்க. நீஹாரம் - வடசொல்: பனி யென்று பொருள். 'நீகாரமழை பொழிய' என்றது-பனியின்நீரை மழைபோல மிகுதியாகச்சொரிய வென்ற படி; பனிநீரென்னும் ஒருவகை வாசனைநீரைச் சொரிய வென்றவாறுமாம். பயிலவீசுதல்-வெப்பந்தணித்தற்குவேண்டிய காற்று உண்டாகும்படி இடை விடாது விசையோடுவீசுதல். கார்காலத்து நீர்கொண்ட கருநிறமான மேகம்- கிருஷ்ணார்ச்சுனரது வடிவத்துக்கு நிறத்தில் உவமம். ஆவிபோல்வார் - ஒரு வர்க்கொருவர் இன்றியமையாதவரான பிராணஸிநேகிதர்.

நிழற்ற, நிழல் என்பதன் பிறவினையான நிழற்று - பகுதி; இதில், று - பிறவினைவிகுதியாம். நீல வாட் கண் - நீலநிறமுள்ள வாளாயுதம்போன்ற கண் எனினுமாம்; மகளிர்கண்ணுக்கு வாட்படை யுவமை - கூர்மைக்கும், ஆடவரைவருத்துதற்கு மாம். பாகு - வெல்லம், சர்க்கரை, கற்கண்டு; பாலு மாம். இது - மொழிக்கு, இனிமையில் உவமம். ஆரும் - உவமவுருபு. மட வார் - மடமையையுடையவர்: மடமை - பேதைமை யென்னுங் குணம்: இளமையுமாம். கவரி - சமரீ யென்ற வடசொல்லின் சிதைவு; ஒருசாதிப் பெண்மானின் பெயராகிய இது, அதன்மயிராலாகிய இராசசின்னத்துக்கு இருமடியாகுபெயராம். கார் - கருமை யென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதி நீண்டு இடையுகரமுங் கெட்டது; இது, அந்நிறத்தையுடைய மேகத் துக்குப் பண்பாகுபெயர். காளம் - கருமை. ஆகாரம் - வடமொழித் தற் சமம். ஆங்கு - அங்கு என்பதன் நீட்டல். புகுந்து=புக: எச்சத்திரிபு. 'கார் காலம்' என்பது - ரகரம் இடையிட்டு வந்த ஆசெதுகை. 'கார்க்காலம்' என வலிமிகாதது, வருமொழி வடமொழியாதலி னென்க.

இச்சருக்கத்தில் இதுவரை கிருஷ்ணார்ச்சுனர்களுடைய செய்திகூறும் முகத்தால் ருதுவர்ணனை, பொழில்விளையாட்டு, நீர்விளையாட்டு, பூக்கொய் தல் என்னும் பெருங்காப்பியஇலக்கணங்களைக் கூறினர்; இச்சருக்கத்தில் எடுத்துக்கொண்ட பொருளான காண்டவதகனவரலாறு, இனிக் கூறப்படு கிறது. அதற்குத் தோற்றுவாய் செய்தவாறும், இச்செய்யுள். (கஅ)

வேறு.

[அக்கினிதேவன் அந்தணவடிவுகொண்டு அங்குவருதல்.]

இனியபான்முகந் தொழுக்குமா குதியென விலங்குமுப் புரிநூலு
ந், தனதுவெஞ்சிகைக் கொழுந்தெனப் புறத்தினிற் றாழ்ந்தசெஞ்சடை
க்காடும், புனிதவெண்புகை மருங்குசுற் றியதெனப் புனைந்தவா டையு
மாகி, மனித வேதியர் வடிவுகொண் டவரெதிர் வன்னிவா னவன்வந்
தான்.

(இ-ள்.) வன்னி வானவன்-அக்கினிதேவன்,—இனியபால்முகந்து ஒழுக்கும் ஆகுதி என - இனிமையான பாலை மொண்டெடுத்து ஆகுதியாகச்சொரியுந் தாரை போல, இலங்கும் - விளங்குகிற, முப்புரிநூலும் - பூணூலையும், தனது வெம் சிகை கொழுந்து என - தன்னுடைய உஷ்ணமான சுவாலையின் கொழுந்து போல, புறத்தனில் தாழ்ந்த - பின்புறத்திலே தொங்குகிற, செம் சடை காடும் - செந்நிறமான சடைத்தொகுதியையும், புனிதம் வெள் புகை மருங்கு சுற்றியது என - பரிசுத்தமான வெண்ணிறமுள்ள புகை இடையிற் சுற்றினாற் போல, புனைந்த ஆடையும் - தரித்த வஸ்திரத்தையும், ஆகி-உடையவனாய், மனித வேதியர் வடிவு கொண்டு-மானுடமுனிவர்வடிவங்கொண்டு, அவர் எதிர் வந்தான் - அவ்விருவரது எதிரிலே வந்தான்; (எ - று.)

அக்கினிபகவான் வெண்ணிறமான உபவீதத்தையும் செந்நிறமான சடைக்கற்றையையும் வெண்புகைநிறமான ஆடையையும் தரித்து ஓர்இருடியின் வடிவங்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணார்ச்சுனர்களின் முன்னிலையில் வந்தனனென்பதாம். சந்தர்ப்பத்துக்குஏற்ற உவமையை எடுத்துக்கூறி வருணித்தல் கவிசமத்கார மாதலால், அக்கினிதேவன்தரித்த வெள்ளிய முந்நூலுக்கு - அவ்வக்கினியில் மந்திரபூர்வமாகச்சொரியும் பால்தாரையையும், அவனது முடியிற் சிவந்துவிளங்குகிற சடைக்கு - அவ்வாகுதிசொரிதலால் மேலெழுந்துதோன்றுகிற அக்கினியினது செந்நிறச்சுவாலையின் நுனியையும், அவன் இடையில் உடுத்த ஆடைக்கு - அங்ஙனஞ் சொலித்தெரிகிற அக்கினியின் வெண்புகையையுமே உவமை கூறினார். ஓமதூமம், பரிசுத்திகரமானதால், 'புனிதவெண்புகை' எனப்பட்டது. 'மனித வேதியர்' என்றது, தேவவிருடியினும் வேறுபாடு தோன்ற; இனம்விலக்கவந்த அடைமொழி. வேதியர் - உயர்வுப்பன்மை.

ஆஹுதி, சிகா, ஜடா, புநிதம், வஹ்நி - வடசொற்கள். ஆகுதி - ஓமாக்கினியிற்சொரிவது. 'சடைக்காடு' என்றது, அடர்த்திபற்றி. வேதியர் - வேதம்வல்லவர். வேதத்தை ஓதுதலோடு ஓதுவித்தற்கும் உரியவர் அந்தணரேயாதலால், 'வேதியர்' என்றது - அவர்க்கே சிறப்புப்பெயராம். மனிதர் - மநுஜர் என்ற வடசொல்லின் சிதைவு; அச்சொல் - காசியபமுனிவனது மனைவியருள் மநுஎன்பவளிடம் (ஆதியிற்) பிறந்தவரென்று பொருள்படும். வானவன் - வானத்திற் சஞ்சரிப்பவன்; தேவன். வன்னிவானவன்-வன்னியாகிய வானவன் என இருபெயரொட்டுப்பண்புத்தொகை. ஒழுக்கும்-ஒழுகும் என்பதன் பிறவினை; பகுதி இடையொற்றிரட்டியது. பிறவினைக்குறி.

இதுமுதல் இருபத்தைந்து கவிகள் - பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும், ஈற்றுச்சீர் மாங்காய்ச்சீரும், மற்றைநான்கும் விளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (உ0)

[அவ்வந்தணன் தன்னைஉபசரித்த கிருஷ்ணார்ச்சுனர்களை உணவுவேண்டல்.]

வந்தவந்தணன்வரவுகண்டிருவருமவந்தெதிர்வணங்கித்தஞ்
சிந்தையன்பொடுவேதிகையெனத்திகழ்செம்பொனின்றவிசேற்ற

**வந்தணனுங்குழிந்தபொற்கண்ணினனவிமணங்கமழ்வாய**
**னுந்துவெம்பசிபெரிதுவல்லேயெனக்கோதனமிடுகென்றான்.**

(இ - ள்.) வந்த அந்தணன் வரவு கண்டு-வந்த அம்முனிவனுடைய வரவைப்பார்த்து, இருவரும்-(கிருஷ்ணன் அருச்சுனன் என்னும்) இரண்டுபேரும், எதிர்வந்து வணங்கி-எதிர்கொண்டுவந்து நமஸ்கரித்து, தம்சிந்தை அன்பொடு-தங்கள் மனத்திற்கொண்ட அன்புடனே, வேதிகை என திகழ்செம்பொனின் தவிசு ஏற்ற - வேதிகைபோல விளங்குகிற மாற்றுயர்ந்த பொன்னினாலாகிய ஆசனத்தில் (அவனை) இருத்த,—குழிந்த பொன் கண்ணினன் குழிந்துள்ள பொன்நிறமான கண்களையுடையவனும், அவி மணம் கமழ் வாயன்-அவிர்ப்பாகத்தின் பரிமளம் வீசுகிற வாயை யுடையவனுமான, அந்தணனும் - அந்த முனிவனும், (அவர்களைநோக்கி), 'உந்துவெம்பசிபெரிது-மேன்மேல்வளர்கிற கொடியபசி (எனக்கு) அதிகமாயிருக்கிறது: வல்லே-விரைவாக, எனக்கு ஓதனம்இடுக-எனக்குஉணவுதருவீராக,' என்றான்-என்றுசொல்லவேண்டினான்.

அந்தணன் என்ற பெயர் - அம் தண் அன் என்று பிரிந்து, அழகிய தண்மையை [அதாவது - குளிர்ந்த அருளை] யுடையவனென்று பொருள்படும்; இக்காரணப்பெயர், அருளையுடைய பிறசாதியார்மேற் செல்லாமற் பிராமணரையே குறிப்பது, காரணவிடுகுறி; "அந்தண ரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுக லான்" என்ற திருக்குறளினால், இது முனிவர்க்கே சிறப்பாக வழங்குதலை யறிக. அந்தணாளன் என்ற பெயரும், அம் தண் ஆளன் என்று பிரிந்து, அழகியதண்மையையாள்பவனென்று பொருள்பட்டு, அக்கருத்தையே தரும். அந்தணன் என்பதை - அந்த அணவு அன் என்று பிரித்து, அந்தத்தை அணவுபவன், அதாவது - வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவனென்று பொருளுரைப்பாரும் உளர். வரவு - தொழிற்பெயர். வேதிகை - யாகம் முதலிய வைதிகச்சடங்குகளில் இடும் மேடை: இங்கு, ஓமவேதிகையென்றபடி. அக்கினிதேவனுக்கு ஆசனமாக இடப்பட்ட பொற்பீடத்துக்கு ஓமவேதிகையை உவமைகூறினது, சந்தர்ப்பத்துக்கு ஏற்ற உவமையாம். இவ்வுவமை, அப்பீடத்தின் மேன்மையையும் தூய்மையையும் விளக்கும். 'அந்தணனும்' என்ற இறந்தது தழுவிய எச்சஉம்மை, கதைத்தொடர்ச்சி விளக்கி வந்தது. தனது பெரும்பசி தோன்றக் குழிந்து ஆழ்ந்து நிறம் வேறுபட்ட கண்களை யுடையனாய் வந்தனனாதலால், 'குழிந்த பொற் கண்ணினன்' என்றார். அவி - மந்திரபூர்வமாக ஓமஞ்செய்யப்படும் நெய்முதலிய உணவு. 'அதன்மணங்கமழ்வாயன்' என்றது - அக்கினிதேவனுக்கு உரிய அடைமொழி. எவ்வளவு மிகுதியான உணவு கொடுத்தாலும் அதனை உண்ணத்தக்க திறம் எனக்கு உண்டு என்றும், சாதாரணமாக அந்தணர்க்கு இடுவதுபோன்ற உணவு அன்று எனக்கு இடவேண்டுவது என்றும் 'உந்து வெம்பசி பெரி தெனக்கோதனமிடுக' என்றதனாற் குறிப்பித்தனனென்க; இதுபற்றியே, மேல் 'உண்டற்குரிய போனகமிடுதும் இக்கணத்து' என்று உரைப்பாராயினர். உந்துதல்-தூண்டுதலுமாம்; தள்ளுதலெனினும், செலுத்துதலெனினும் அமையும். "மானங் குலங் கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவமுயர்ச்சி தாளாண்மை—தேனின், கசிவந்தசொல்லியர்மேற் காமுறுதல் பத்தும, பசி வந்திடப் பறந்துபோம்" என்றபடி மானம் முதலியவற்றை நீக்கி இரத்தற்குச் செலுத்துகிற பொறுக்கவொண்ணாத பசி என்க. வல்லே - விரைவுகுறிக்கும் இடைச்சொல். சிந்தா, வேதிகா, ஹவிஸ், ஓதநம் - வடசொற்கள். 'இடுக வென்றான்' என்பது, 'இடுகென்றான்' என வியங்கோளின் ஈற்றுஅகரம் தொக்கது. (உக)

['வேண்டிய உணவை அளிப்போம்' என்று அவ்விருவரும் உறுதிமொழிகூறல்.]

கரியமேனியரிருவருஞ்செய்யபொற்காயமாமுனிபுண்டற்
குரியபோனகமிடுதுமிக்கணத்தெனவுவகையோடுரைசெய்தா
ரரியவாயினும்வழங்குதற்கேற்றனவல்லவாயினுந்தம்மிற்
பெரியவாயினுமதிதிகள்கேட்டனமறுப்பரோபெரியோரே.

(இ-ள்.) (அதுகேட்டு), கரிய மேனியர் இருவரும்-கருநிறமுள்ள வடிவத்தையுடையவர்களான கிருஷ்ணார்ச்சுனர்களிரண்டுபேரும், (அம்முனிவனைநோக்கி), 'செய்ய பொன் காயம் மா முனி - சிவந்த பொன்னிறமான உடம்பையுடைய மகாமுனிவனே! உண்டற்கு உரிய போனகம் - (நீ) உண்ணுதற்கு உரியதாகும் உணவை, இ கணத்து இடுதும் - இந்த க்ஷணத்திலேயே (உனக்குத்) தருவோம்,' என - என்று, உவகையோடு உரைசெய்தார் - மனமகிழ்ச்சியோடு சொன்னார்கள்; அரிய ஆயினும் - பெறுதற்கு அரியனவானாலும், வழங்குதற்கு ஏற்றன அல்ல ஆயினும் - தருதற்கு இயைந்தன வல்ல வானாலும், தம்மின் பெரிய ஆயினும் - (தருகிற) தம்மைக்காட்டிலும் பெரியன வானாலும், அதிதிகள் கேட்டன பெரியோர் மறுப்பரோ - விருந்தினர் வேண்டிய பொருள்களைப் பெரியோர் இல்லையென்று சொல்வரோ? [சொல்லாரென்றபடி]; (எ - று.)— ஏ - ஈற்றசை.

'நீ வேண்டும் உணவை வேண்டியவாறே நினக்கு இப்பொழுதே அளிப்போம்' என்று கிருஷ்ணார்ச்சுனர்கள் உறுதிமொழிகூறினரென்ற சிறப்புப் பொருளை, எப்படிப்பட்ட பொருளேயாயினும் விருந்தினர் கேட்டதைப் பெரியோர் கொடாதுமறாரென்னும் பொதுப்பொருள்கொண்டு விளக்கியதனால், **வேற்றுப்பொருள் வைப்பணி.** விருந்தோம்புவார்க்கு இன்றியமையாதனவான மனமகிழ்ச்சியையும் முகமலர்ச்சியையும் இன்சொல்லையும் உடைமை, 'உவகையோ டுரைசெய்தார்' என்றதனால் விளங்கும். 'உந்து வெப்பசி பெரிது வல்லே எனக்கு ஓதனம் இடுக' என வேண்டியதனால், 'இக்கணத்து இடுதும்' என்றார். 'ஓதனமிடுக' என்றவளவே வேண்டிய அந்தணனுக்கு, 'நீ வேண்டியபடி போனகம் இடுவோம்' என்றதனால், குறிப்பறிந்து ஈதலும் வேண்டுவார் வேண்டிய அளவிலும் மிகுதியாக வழங்குதலுமாகிய உதாரகுணங்கள் கிருஷ்ணார்ச்சுனர்களிடத்தி லிருத்தல் விளங்கும். இருவரும், கரியமேனிய ராதலால் 'க்ருஷ்ணர்' என்று பெயர் பெறுவர்; மேற் பதினாறாம் போர்ச்சருக்கத்தில் "ஓரிருகண்ணர் மார்பில்விடா, வருணமும் பெயரும் பிறிந்திலர் மனனுமொன் றெனவே" என வருதலுங் காண்க.

செய்ய-செம்மையென்னும் பண்பினடியாகப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். காயம், மஹாமுநி, க்ஷணம், அதிதி வடசொற்கள். போனகம்-போஜநமென்ற வடசொல்லின் சிதைவென்பர். முநி - மநநசிலன்: கடவுளையே எப்பொழுதும் தியானஞ்செய்பவன்; திரிகாலஞானியுமாம். இனி, முனி என்பதற்கு - (எல்லாப்பொருளையும்) முனிபவன் [வெறுத்துவிடுபவன்] என்று காரணப்பொருள் கூறலாகாது, வடசொல்திரிபாதலின். இங்கு அண்மை விளியாதலால், முனியென்று இயல்பாய் நின்றது. இடுதும், தும்-தன்மைப் பன்மைவினைமுற்றுவிகுதி; இங்கு எதிர்காலங்காட்டிற்று. உவகை-கைவிகுதி பெற்ற தொழிற்பெயர்; உவ - பகுதி. அரிய, ஏற்றன, அல்ல, பெரிய, கேட்டன - பலவின்பால் வினையாலணையும்பெயர்கள். ஏற்றன, ஏல் - பகுதி. 'ஆயினும்' என்ற உம்மைகள் மூன்றும்-எண்ணுப்பொருளோடு உயர்வுசிறப்புப்பொருளு முடையன. தம்மின், இன் - ஐந்தனுருபு, எல்லைப்பொருளது. ஓ - எதிர்மறை. பெரியோர் அதிதிகள்கேட்ட அரியவழங்குதலை - தான்அரிதிற்பெற்ற அமிழ்தமயமான நெல்லிக்கனியை ஔவைக்குஈந்த அதிகமான்

முதலியோரிடத்தும், வழங்குதற் கேற்றனவல்லனவழங்குதலை - தூர்த்தப்பிராமணவேடங்கொண்டு வந்த சிவபிரானுக்குத் தம்மனைவியை யீந்த இயற்பகை நாயனார் முதலியோரிடத்தும், தம்மிற்பெரிய வழங்குதலை - போர்க்களத்தில் தான்குற்றுயிராய்க்கிடக்கும்போது முனிவடிவங்கொண்டுவந்த கண்ணபிரானுக்குத் தனது புண்ணியங்களை யீந்த கர்ணன் முதலியோரிடத்துங் காண்க: "அன்புடையா, ரென்பு முரியர் பிறர்க்கு" என்றார் திருவள்ளுவநாயனாரும். பெரியோர் - மகான்கள். (௨௨)

**[உடனே அவ்வந்தணன் தான் இன்னானென்று உண்மைதெரிவித்துக் காண்டவவனத்தைத் தனக்கு இரையாக அளிக்குமாறு வேண்டுதல்.]**

***அளித்துமென்றசொற்றன்செவிப்படுதலும்பெற்றனன்போலாகி***
***யொளித்துவந்தனனிருபிறப்பினனலேனுதாசனனென்னாமங்***
***களித்துவண்டிமிர்தொடையலீரெனக்குணுக்காண்டவமெனுங்கானங்***
***குளித்தருந்துதற்கிடங்கொடானவ்வனங்கொண்டல்வாகனன்காவல்.***

இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்; ஒருதொட ரெனப்படும். குளகமாவது - பல பாடல்கள் தொடர்ந்து ஒருவினையைக் கொண்டுமுடிவது; "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்." குளகமல்லாதது, முத்தகமெனப்படும்: அது ஒருசெய்யுள் தனியேநின்றுமுடிவது; "முத்தகச் செய்யுள் தனிநின்று முடியும்".

(இ - ள்.) அளித்தும் என்ற சொல் - 'தருவோம்' என்று (அவர்கள்) சொன்ன வார்த்தை, தன் செவி படுதலும் - தனது காதிற் புக்கவுடனே, (அக்கினிதேவன்), பெற்றனன் போல் ஆகி - (தான்விரும்பிவந்தபொருளைப்) பெற்றவன்போல மகிழ்ச்சிகொண்டு, (அவர்களைநோக்கி), 'வண்டு களித்து இமிர் தொடையலீர் - வண்டுகள் (மிகுதியாகத் தேனை யுண்டதனால்) களித்து ஆரவாரிக்கப்பெற்ற பூமாலையை யுடையவர்களே! ஒளித்து வந்தனன் - (யான் என்வடிவத்தை) மறைத்து வந்தேன்; இருபிறப்பினன் அலேன் - அந்தணன் அல்லேன்; உதாசனன் என் நாமம் - அக்கினி யென்பது எனது பெயர்; எனக்கு உணு - எனக்கு (இப்பொழுது) உணவாகவேண்டியது, காண்டவம் எனும் கானம் - காண்டவமென்னுங் காடாம்; அவனம் - அந்தக் காடு, கொண்டல் வாகனன் காவல் - மேகங்களை வாகனமாகவுடையவனான இந்திரனது பாதுகாப்பி லுள்ளது; குளித்து அருந்துதற்கு இடம் கொடான் - (நான்) பிரவேசித்து உண்ணுதற்கு (அவன்) இடங்கொடுக்கமாட்டான்; (எ - று.)—இக்கவியில் 'ஆகி' என்ற வினையெச்சம், மேல் ௨௫-ஆம் கவியில் 'என்றான்' என்ற முற்றைக் கொள்ளும்.

மேகங்களைத் தான்வேண்டியவாறே செலுத்துந்தன்மையனாதலால் என்மேல் மேகங்களை யேவிமழைபொழிவித்து என்னை அவித்துவிடுவா னென்னுங்கருத்துத்தோன்ற இங்கே இந்திரனை 'கொண்டல்வாகனன்' என்றது, கருத்துடை யடைகோளியணி; (கருத்துடையடைகொளி-ஸாபிப்பிராய விசேஷியம்.) இத்தன்மையை மேல் ௨௫ - ஆம் கவியில் வெளிப்படையாக்கூறுவன். அளித்தும் - தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று. செவிப்படுதல் - கேட்டல். படுதலும் - 'உம்' ஈற்று இறந்தகாலவினையெச்சம்; பிற்பொருளோடு விரைவையுங் குறிக்கும். பெரியோர் சொன்ன சொற்படிநிறைவேற்றுவ ரென்றுந் துணிபினால், அளிப்போமென்று சொன்னவளவிலே பெற்றவன்போலானான். வந்தனன், அன் - தன்மையொருமைவிகுதி. இருபிறப்பினன் - இரண்டுவகைப் பிறப்பை யுடையவன்; தாய்வயிற்றிற்பிறத்தலாகிய இயற்கைச்சன்மத்தோடு பின்பு உபநயநச்சடங்கினால்வருகிற ஞானசன்மமும் ஒருபிறப்பா மென்பது நூற்கொள்கை யாதலால், இருபிறப்பினன்

என்று பெயர்: 'த்விஜன்' என்பது, இப்பொருள்படும் வடசொல். ஹுதாசநன், நாமம், காநநம், வநம், வாஹநம் - வடசொற்கள். ஹுதாசநன் என்ற பெயர் - ஹுத அசந என்று பிரிந்து, (தன்பக்கல்) ஹோமஞ்செய்யப்பட்ட பொருளை உணவாகக்கொள்பவனென்று பொருள்படும். வாகநம் - வகிப்பது; வகித்தல்-சுமத்தல். வண்டுகள்வேண்டியவாறு தேனைநிரம்பஉண்டு மகிழ்தற்கு இடமான மாலையை யுடையீரென்று விளித்தது, என்போல வந்து இரப்பவர்க்கு வேண்டியவாறு உணவளிக்குந் திறமுடையீரென்று குறித்தவாறும். இமிர் தொடை-வினைத்தொகை. தொடை - தொடுக்கப்படுவது; ஐ - செயப்படுபொருள்விகுதி: அதன்மேல், அல் - சாரியை. தொடையலீர் - தொடையலார் என்பதன் ஈற்றயல்திரிந்த விளி. உணா - உணவு என்பதன் விகாரம். காண்டவன் என்பது - இந்திரன்பெயர்களுள் ஒன்றென்று சப்தார்ணவமென்னும் வடமொழிநிகண்டிற் கூறியிருத்தலால், காண்டவவனம் என்பதற்கு-இந்திரனதுகாடு என்று பொருள்கொள்ளலாம்; அது காண்டவமென வழங்கிற்று. கொண்டல்-கொள்ளுதல்; தொழிற்பெயர்: கொள், தல்என்பன-முறையேபகுதி, விகுதிகள்; மற்றவை, சந்தி விகாரம்: நீர்கொண்டமேகத்துக்குத் தொழிலாகுபெயராம். நிஜவடிவத்தோடு வெளிப்படையாகவந்து கேட்டால், இந்திரனுக்குரிய அவ்வனத்தை யெரித்தற்கு அவ்விந்திரன்மகனை அருச்சுனனும் அவ்விந்திரன்தம்பியாகிய உபேந்திரனது திருவவதாரமான கண்ணபிரானும் அநுமதிசெய்யாரென்னுங் கருத்தினால், அக்கினி ஒளித்து வந்து வேண்டினனென்க. 'உதாசனன் என்நாமம்' என்றதனால், எனக்கு உரியதாகஇடப்பட்டவற்றையெல்லாம்மிச்சமில்லாதபடி யுண்ணுந்திறம் எனக்குஉண்டென்று தெரிவித்தவாறும். குளித்து அருந்துதல் - அவ்வனத்தை யுண்ணவேண்டுமென்று யான்நெடுநாளாகக்கொண்டுள்ள ஆசைதீர அதற்குள் நன்குபுகுந்து உண்ணுதல். (உ௩)

[அவ்வனத்தின் தன்மை.]

**மிடைந்தநால்வகைமகீருகங்களுநெடுவெற்பினங்களுந்துன்றி**
**யடைந்ததானவரரக்கர்பேருரகருக்காலயங்களுமாகிக்**
**குடைந்துசோரிகொள்வாளுகிரரிமுதற்கொடுவிலங்கினமிக்குக்**
**கடைந்தகூரெயிற்றாலதக்ககனும்வாழ்கானனமதுகண்டீர்.**

(இ - ள்.) அது - அக் காண்டவமென்பது,—மிடைந்த - நெருங்கிய, நால்வகை மகீருகங்களும் - நான்குவகைப்பட்டவிருட்சவர்க்கங்களும், நெடு வெற்பு இனங்களும்-பெரியமலைக்கூட்டங்களும், துன்றி-நிறைந்து, அடைந்த தானவர் அரக்கர் பேர் உரகருக்கு ஆலயங்களும் ஆகி-தன்னிடத்தில்வந்து சேர்ந்த அசுரர்கள் இராக்கதர்கள் பெரிய நாகர்கள் என்னும் இவர்களுக்கு இருப்பிடங்களும் அமையப்பெற்று, குடைந்து சோரி கொள் வாள் உகிர் அரி முதல் கொடு விலங்கு இனம் மிக்கு - அகழ்ந்து இரத்தத்தைக் கொள்ளுகிற வாட்படைபோலக் கூரிய நகங்களையுடைய சிங்கங்கள் முதலான கொடிய மிருகசாதிகள் மிகுந்து, கடைந்தகூர்எயிறு ஆலம் தக்ககனும் வாழ்-கடைந்தாற்போன்ற கூரிய பற்களில் விஷத்தையுடைய தக்ஷக னென்னும் மகாநாகமும் வசிக்கிற, கானனம்-காடாகும்; கண்டீர்-அறிவீரன்றோ! (எ-று.)

இச்செய்யுளினால், அவ்வனத்தை அதிலுள்ள எல்லாப்பொருள்களோடும் உணவாக அளிக்கவேண்டு மென்று குறிப்பித்தபடியாம்.

கண்டீர் என்ற முன்னிலைப்பன்மை முற்று, இடைச்சொல்தன்மைப் பட்டு, முன்னிலையசையாகியும் தேற்றப்பொருள்தந்தும் நிற்கும். நால்வகை மகீருகங்கள்-மரம், கொடி, செடி, புல் என்பன; வித்து, வேர், கிழங்கு, கொடிகளில்தோன்றுவன என்பாருமுளர்: மற்றுஞ் சிலவகையாகவும் உரைக்க

லாம், மஹீருஹம், தாநவர், ரக்ஷஸ், உரகர், ஆலயம், ஹரி, ஹாலம், தக்ஷகன் - வடசொற்கள். மஹீ-பூமியில், ருஹம்-முளைப்பது. உரகராவார்-படமும்வாலு முடையராய் மனிதவடிவமும் தெய்வப்பிறப்புமானதொரு சர்ப்பசாதியார். தக்ஷகன் - அஷ்டமகாநாகங்களுள் ஒன்று; அவையாவன-அநந்தன், கார்க் கோடகன், குளிகன், சங்கபாலன், தக்ஷகன், பதுமன், மகாபதுமன், வாசுகி என்பன. சொரிவது, சோரி எனக் காரணக்குறி. விலங்கு - குறுக்காக வடி வமமையப் பெற்றது; 'திர்யக்' என்ற வடசொல்லும் இப்பொருள்படும். முத லடியிலுள்ள உம்மைஇரண்டும்-எண்ணுப்பொருளன. இரண்டாமடியிலும், நான்காமடியிலும் உள்ள உம்மைகள் - ஒன்றைஒன்றுநோக்கி முறையே எதி ரதும் இறந்ததும் தழுவிய எச்சப்பொருளனவாம். அவற்றில் 'தக்ககனும்' என்றஉம்மை - எச்சத்தோடு, சிறப்பு. ஆலதக்ககன் - வடமொழிமுடிபு.(உச)

[இந்திரன்செய்யும் இடையூற்றைத் தடுக்க இடையூறு செய்யவேண்டு மென்றல்.]

புகுந்தியான்முகம்வைக்கினேழ்புயலையுமேவியப்புருகூதன்
றொகுந்தராதலமிறுதிபோனெடும்புனல்சொரிந்தவித்திடுமென்னை
முகுந்தனானிரைபுரந்தவாறெனவொருமுனைபடவிலக்கிற்பின்
மிகுந்ததாகமுமெண்ணமுமுடிந்திடும்வேண்டுவதிதுவென்றான்.

(இ - ள்.) யான் புகுந்து முகம் வைக்கின் - நான் பிரவேசித்து(அவ்வ னத்தை உண்ண) வாய்வைத்தால், அப் புருகூதன் - அவ்வனத்தைக்காவல் செய்பவனான இந்திரன், ஏழ் புயலையும் ஏவி - ஏழு மேகங்களையும் அனுப்பி, (அவற்றைக்கொண்டு), தொகும் தராதலம் இறுதி போல் நெடு புனல் சொரி ந்து - நெருங்கிய உலகமுடிவுகாலத்திற் போல மிக்க மழைநீரை (என்மேற்) சொரிந்து, என்னை அவித்திடும் - என்னைத் தணித்துவிடுவான்; முகுந்தன் ஆன் நிரைபுரந்த ஆறு என-கண்ணபிரான் (கோவர்த்தனமென்னும் மலையை யெடுத்துக் குடையாகப்பிடித்து மழையைத்தடுத்துப்) பசுக்கூட்டங்களைப் பாதுகாத்தருளிய விதம்போல, ஒரு முனை பட விலக்கிற்பின் - ஒருமுகமாக (அம்மழையைத்) தடுத்துவிடுவதானால், மிகுந்த தாகமும் எண்ணமும் முடிந் திடும்-அதிகமான (எனது) ஆசையும் கருத்தும் நிறைவேறும்: வேண்டுவது இது-(யான்) வேண்டுவது இதுவே, என்றான்-என்றுசொன்னான், (அக்கினி தேவன்); (எ - று.)

முகுந்தன் ஆன்நிரைபுரந்த கதை:—திருவேங்கடமாலை, கூக-ஆம் செய் யுளிற் காண்க. ஏழ் புயல் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்கி ருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன. உம்மை - முற்றுப்பொ ருளது. ஒருமுனைபட-இடையிற்சிறிதுஞ்சோர்ந்துவிடாமல் ஒரேதுணிவாக என்றபடி. புருஹூதன், தராதலம், முகுந்தன், தாஹம் - வடசொற்கள். புரு ஹூதனென்பது-புரு ஹூதன்என்றுபிரிந்து,(யாகங்களில்)மிகுதியாகஅழை க்கப்படுபவனென்றும், புருவென்னும்அசுரனைக்கொன்றவனென்றும்; முகுந் தனென்பது - மு கு த என்றுபிரிந்து, மு-முத்தியின்பத்தையும், கு - இவ்வு லகவின்பத்தையும், த - (தன்அடியார்க்குத்)தருபவனென்றும் பொருள் படும். தராதலம் - பூமியினது இடம். இறுதி, எண்ணம் என்பவற்றில் - தி, அம்-தொழிற்பெயர் விகுதிகள்; இங்கு அச்சொற்கள் தொழிலாகுபெயர்கள். சொரிந்து - ஏவுதற்கருத்தாவின் வினை; 'சொரிவித்து' எனப் பிறவினைப் பொருளில் வந்த தன்வினையாகக் கொள்ளினுமாம். 'முகுந்தன்' என்றது - இங்கு முன்னிலைப்படர்க்கை. புகுந்தியான் - குற்றியலிகரம். வைக்கின், விலக்கிற்பின் - எதிர்காலவினையெச்சங்கள்; முந்தினதில், கு - சாரியை; பிந்தினதில், இல் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை, ப் - எழுத்துப்பேறு.

விலக்கில் பின் என்று பதம்பிரித்து உரைப்பாருமுளர். புருகூதன் அவித்திடும், தாகமும் எண்ணமும் முடிந்திடும் என்றவற்றில், முறையே செய்யுமென்முற்று ஆண்பாலினும், பலவின்பாலினும் வந்தது; [நன் - வினை-உகூ.] தாகம் என்பது - இங்கு இலக்கணையாய்ப் பசியென்னும் பொருளில் வந்ததெனினுமாம்.

சுவேதகி யென்று பிரசித்தனுய்ச் சிறந்த அரசன் எப்பொழுதும் யாகங்கள்செய்தலிலேயே விருப்பமுடையவனுய் அநேகயாகங்கள்செய்துமுடித்து மேலும்மேலும் இடைவிடாது யாகஞ்செய்யத்தொடங்குகையில், உடனிருந்து யாகத்தை நடத்துபவரான இருத்துவிக்குகள் புகையினுல் மிகக்கலங்கிய கண்களையுடையராய் மிகவருந்தி 'இனி எம்மா லாகாது' என்று அவ்வரசனைக் கைவிட்டனர். அரசன் எவ்வளவுவேண்டியும் கண்கலங்கியஅவர்கள் வாராராகவே, அவர்களநுமதிபெற்று வேறுஇருத்துவிக்குகளை உதவிகொண்டு தொடங்கியவேள்வியை முடித்தனன். பின்பு ஒருகால் அவன் நூறு வருஷகாலஞ்செய்யத்தக்கதொரு பெருயாகத்தைப் புரியவிரும்ப,அவனுக்கு இருத்துவிக்குகளெவருந் துணைவந்திலர். அம்மன்னவன் சாமமுந் தானமுமாகிய உபாயங்களால் மிகமுயன்றுபார்த்தும் துணைவாராத அந்த இருத்துவிக்குகளை நோக்கி 'என்மேல் யாதொருகுற்றமும் இல்லாமலிருக்கையில் என்னை நீங்கள் கைவிடுதல் முறைமையன்றே: நீங்கள் என்னைக் கைவிட்டால் யான் வேள்விசெய்வித்தற்பொருட்டு வேறு இருத்துவிக்குகளைத் துணைக்கொள்வேன்' என்று கோபத்தோடு கூறியதற்கு, அவர்கள் 'வேள்வி செய்வித்துச்செய்வித்து வலியொடுங்கி மிகஇளைத்த எங்களை நீ விட்டிடு; நீ விரைவில் வேள்விசெய்யவேண்டுவையாயின் சிவபிரான்பக்கற் செல்: அப்பெருமான் உன்னை வேட்பிப்பன்' என்றுசொல்லினர். இங்ஙனம் மறுத்துச் சொன்ன சொற் கேட்ட வேந்தன் உடனே கைலாசபருவதத்தையடைந்து கடுந்தவம்புரிய, அதற்கு இரங்கித் தரிசனந்தந்த சங்கரபகவான் 'யாது வரம் வேண்டுதி?' என்ன, அவ்விராஜரிஷி 'என்னை நீ வேட்பித்தருளவேண்டும்' என்றான். அதுகேட்ட ருத்திரமூர்த்தி புன்சிரிப்போடு 'யான் அதற்கு உரியனல்லேன்; நீசெய்த நற்பெருந்தவமும் பழுதுபடலாகாது; நான்சொல்லுகிறபடி செய்வையாயின், பின்பு உன்னை வேட்பிப்பேன்: பன்னிரண்டுவருஷகாலம் இடைவிடாமல் அக்கினியை நெய்த்தாரைகளால் திருப்திசெய்வையாயின், நின்கருத்தை நிறைவேற்றுவேன்' என்றுசொல்ல, சுவேதகிராஜன் அவ்வாறே செய்துமுடித்துப் பன்னிரண்டுவருஷங்கடந்தவுடனே மீண்டுஞ் சிவபெருமானையடைந்து வேள்விசெய்வித்தற்குஅழைக்க, அக்கடவுள் 'அது அந்தணர்தொழில்; ஆதலால், அதனை நான்செய்யமாட்டேன்: எனது அம்சமான துருவாசமகாமுனிவன் உன்னை வேட்பிப்பன்' என்றுசொல்லி அரசனை வேள்விக்குவேண்டிய உபகரணங்கள்சேர்க்கச்சொல்லி, அவற்றை அவன்சேர்த்தவுடனே துருவாசமுனிவனையழைத்து 'இவனை நீ வேட்பிப்பாய்' என்று கட்டளையிட, அவ்வாறே அம்முனிவன் வந்து உதவியதனுல் அப்பெருவேள்வி ஒருகுறைவுமின்றி நிறைவேறிற்று. இங்ஙனம் நெடுநாள் மிக்க நெய்ம்முதலியவற்றை யுண்டதனுல் அக்கினிதேவன் நோயடைந்து ஒளிமழுங்கி வாட்டமுற்று வலியொடுங்கிப் பிரமனையடைந்து 'என்னை நோய்தவிர்த்தருளுக' என்று வேண்ட, படைத்தற்கடவுள் 'பன்னீராண்டு இடைவிடாது நெய்பருகியதனுல் நினக்கு நேர்ந்த வாட்டம் ஒழிந்திடும்; அசுரர்கட்கு இருப்பிடமான காண்டவமென்னும்வனத்தை முன்புஒருகால் தேவர்கள்கட்டளையால் நீ எரித்தனையன்றே? பின்பு அதில் பலவகைப்பிராணிகள் வசித்துவருகின்றன; நீ சென்று அக்காட்டை மீண்டும்எரிப்பையாயின், அப்பிராணிகளின் உடற்கொழுப்பினுல் இருப்தனுகி நோய்நீங்கி முந்

தினிலையையடைவாய்' என்று அருளிச்செய்ய, உடனே தீக்கடவுள் வெகு வேகத்தோடு ஓடி அவ்வனத்தைப் பற்றி யெரிக்கத்தொடங்க, அங்கிருந்த யானைமுதலிய பிராணிகளெல்லாம் மிகமுயன்று துதிக்கைமுதலியவற்றால் விரைவாக நீர்கொணர்ந்து சொரிந்து நெருப்பை நனைத்து அவித்திட்டன. இவ்வாறே ஒருமுறைபோல எழுமுறை முயன்றும் அவ்வனத்தை யெரிக்க மாட்டாமற்போனபின்பு அக்கினிபகவான் மீண்டும் பிரமனையடைந்து செய்திகூற, அப்பிரமன் சிறிதுபொழுது ஆலோசித்து 'நரநாராயணர்களின் அவதாரமான கிருஷ்ணார்ச்சுனர்கள் காண்டவவனத்தினருகில் ஒருங்குகூடியுள்ளார்: நீ சென்று வேண்டி அவர்களுதவியைப் பெற்றால் அவ்வனத்தைத் தவறாமலெரித்திடலாம்' என்றுசொல்ல, அங்ஙனமே அக்கினி அவர்களையடுத்துத் தந்திரமாகத் தன்கருத்தைச் சொல்லிக் காரியத்தை முடித்துக்கொள்வலானான் என்று முதனூலிற் கூறப்பட்ட வரலாறு உணரத்தக்கது. கீழ் உ௪-ஆம் கவியில் 'அவி மணங் கமழ் வாயன்' என்றதும், அவ்வேள்வியில் மிகவும்அதிகமாக உட்கொண்ட ஆகுதியைத் தெரிவிக்கும். அக்கவியில் 'குழிந்த பொற்கண்ணினன்' என்றதும், அக்கினிதேவன்மெலிவடைந்தநிலையைவிளக்குவ தென்னலாம். அச்சமயத்திற் காண்டவவனத்தை இந்திரன் காவல்செய்தற்குக் காரணம், அவனுக்குச் சிறந்தநண்பனான தக்ஷகன் குடும்பத்துடன் அவ்வனத்தில் வசித்தல். (உரு)

['நீ வேண்டியபடி கொள்க' என்று அநுமதிதந்த அருச்சுனனுக்கு அக்கினிதேவன் கண்ணனருளால் வில்முதலியன அளித்தல்.]

**என்றபோதினுன்னிச்சையின்படியுணவீந்தனமிமைப்போழ்திற்**
**சென்றுகொள்கெனத்தனஞ்சயன்கூறலுஞ்சிந்தைகூர்மகிழ்வெய்தி**
**மன்றலந்துழாய்மாயவனருளினால்வடிக்கணைமாளாமற்**
**றுன்றுதூணியுஞ்சாபமுமிரதமுஞ்சுவேதவாசியுமீந்தான்.**

(இ - ள்.) என்றபோதில் - என்று (அக்கினிதேவன்) சொன்னபொழுதில்,—தனஞ்சயன் - அருச்சுனன், 'உன் இச்சையின்படி உணவு ஈந்தனம் - உனது விருப்பத்தின்படி உணவை அளித்தோம்; இமைபோழ்தில் சென்று கொள்க - ஒருமாத்திரைப்பொழுதிலே (நீ) போய் (அவ்வனத்தை)க்கைக்கொள்வாயாக', என கூறலும் - என்றுசொன்னவுடனே,—(அவ்வக்கினிபகவான்), சிந்தை கூர் மகிழ்வு எய்தி - மனத்தில் மிக்க மகிழ்ச்சியையடைந்து,—மன்றல் அம் துழாய் மாயவன் அருளினால் - நறுமணமுள்ள அழகிய திருத்துழாய்மாலையையுடைய கண்ணபிரானது அநுமதியினால்,—வடி கணை மாளாமல் துன்று தூணியும் - கூர்மையான அம்புகள் எடுக்கஎடுக்கக்குறையாமல் நிறைகிற (இரண்டு) அம்பறாத்தூணிகளையும், சாபமும்-வில்லையும், இரதமும் - தேரையும், சுவேத வாசியும் - (நான்கு) வெள்ளைக்குதிரைகளையும், ஈந்தான் - (அருச்சுனனுக்குக்) கொடுத்தருளினான்; (எ - று.)

கண்ணபிரானை உளப்படுத்தி 'ஈந்தனம்' என்றான்; படர்க்கையை உளப்படுத்திய தன்மைப்பன்மை. இமைப் போழ்து - இயல்பில் மனிதர் ஒருகால் கண்ணிமைத்தற்குக் கொள்ளும் பொழுது. கொள்கென - தொகுத்தல். மேல் தருமபுத்திரன் இராசசூயயாகஞ்செய்யவேண்டியபொழுது அருச்சுனன் வடக்கிற் சென்று பலஅரசர்களை வென்று அவர்கள்செல்வத்தைத் திறைகொணர்தலால், அவனுக்கு, தனஞ்சய னென்று ஒருபெயர். இனி, இப்பெயர்க்கு-வெற்றியைச் செல்வமாக உடையவ னென்றும் ஒருபொருள்கொள்ளலாம். மாயவன் - மாயையையுடையவன்; மாயையாவது - பிறர்செய்தற்கரியனவற்றைத்தான்செய்யும் விசித்திரசக்தி; பிரபஞ்சகாரணமான பிரகிருதியுமாம். கணைமாளாமல்துன்று தூணி, அக்ஷய தூணீரமெனப்படும். இங்குக்

குறித்த வில், காண்டீவமென்னும் பெயருள்ளது. சுவேதவாசி - சாதியொருமை; அடுத்தகவியில் 'ஈரிரண்டிவுளி' என வருதல்காண்க. அக்கவியில் 'ஈந்த வானரப்பதாகைநட்டு' எனக்கூறுதலால், குரங்குவடிவமெழுதிய துவசத்தையும் உடன்கொடுத்தனனென்பது விளங்கும். 'ஈந்தனம்' எனத் தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று; காலவழுவமைதி: [நன்-பொது-௩௩.] இச்சா, தநஞ்ஜயன், தூணீ, சாபம், ரதம், ச்வேதவாஜி - வடசொற்கள். கொடுப்பவரது உயர்வுதோன்ற, 'ஈந்தனம்' என்றும், 'ஈந்தான்' என்றுங் கூறினர். வடிக் கணை-வடித்தலையுடைய அம்பு; வடித்தல் - நெருப்பிலிட்டுக் காய்ச்சி யடித்துக்கூராக்குதல். முதலில் இன்னதென்று ஆராயாது 'அளித்தும்' என்று உறுதிகூறினர்; பின்பு இந்திரனாற் காக்கப்படுகிற வனமென்று அறிந்தும் 'உன் இச்சையின்படி உணவீந்தனம்' என்று வாக்குதத்தஞ் செய்தான். இங்ஙனம் சொன்னசொல் தவறாத வாய்மையையும் துணிவையும் நோக்கியதனாலான வியப்பினாலும், இனித் தனதுஎண்ணம் முடிந்ததென்ற நிச்சயத்தினாலும், அக்கினிதேவன் மிகமகிழ்ந்து, வாக்குதத்தஞ்செய்த அருச்சுனனுக்கு வில் முதலியவற்றை அன்போடு தருபவனானான். கூர்-உரிச்சொல். 'உணவியைந்தனம்' என்றும் பாடமுண்டு; உணவு இசைந்தனமென்றும், உண்ண இசைந்தன மென்றும் பொருள்படும். (௨௬)

[அருச்சுனன் போர்க்கோலங்கொண்டு தேரேறுதல்.]

ஈந்தவானரப்பதாகைநட்டீரிரண்டிவுளியுமுடன்பூட்டி
யாய்ந்தவன்றொழிற்பாகனுமருணனிலழகுறும்படி தூண்டக்
காய்ந்தசாயகநாழிகைகட்டியக்காண்டிவங்கரத்தேந்தி
வேய்ந்தமாமணிக்கவசமுமருக்கனிலழகுறமேற்கொண்டான்.

(இ - ள்.) ஆய்ந்த - ஆராய்ந்தறிந்த, வல் தொழில் - (போருக்கு ஏற்ற) வலிய (குதிரைத்) தொழிலையுடைய, பாகனும்-தேர்ப்பாகனும், ஈந்த வானரம் பதாகை நட்டு-(அக்கினிதேவன்) கொடுத்த குரங்குக்கொடியை நாட்டி, ஈர் இரண்டு இவுளியும் உடன் பூட்டி - நான்கு (வெள்ளைக்)குதிரைகளையும் ஒருங்கு(தேரிற்)பூட்டி, அருணனில் அழகு உறும்படி தூண்ட-(சூரியனது தேர்ப்பாகனான) அருணன்போல அழகு மிகும்படி தேர்செலுத்த,—(அருச்சுனனும்), காய்ந்த சாயகம் நாழிகை கட்டி - (பகைவர்களைக்) கொல்லுகிற அம்புகளையுடைய தூணிகளை (இரண்டு தோட்புறத்திலுங்) கட்டிக்கொண்டு, அக் காண்டிவம் கரத்து ஏந்தி - அந்தக் காண்டீவமென்னும் வில்லைக் கையிலெடுத்துக்கொண்டு, வேய்ந்த மா மணி கவசமும் (ஏந்தி) - இழைத்த சிறந்த இரத்தினங்களையுடைய கவசத்தையுந் தரித்துக்கொண்டு, அருக்கனில் அழகு உற மேற்கொண்டான் - சூரியன்போல அழகுமிகும்படி (அத்தேரின் மேல்) ஏறினான்; (எ - று.)

அருச்சுனனுக்கு அமைந்த சிறந்த தேர்ப்பாகனுக்கு - சூரியனது தேர்ப்பாகனாய்ச் சிறந்த அருணனையும், மிக்க ஒளியையுடைய இரத்தின கவசத்தை யணிந்து தேரேறி அம்புதொடுத்துப் போர்செய்து பகையழிக்கும் வீரசிற்சிறந்தவனான அருச்சுனனுக்கு - ஆயிரங் கிரணங்களுடனே எப்பொழுதுந்தேர்மேலேறி யிருந்து ஒளிவீசிச்சென்று இருளழிக்குஞ் சிறந்த தேவனான சூரியனையும் உவமைகூறினர். இதில், அருச்சுனனது தேர் சூரியனது ஒற்றைத் தனியாழித்தேர் போன்ற உறுதியுடையதென்றும், அருச்சுனனது தேர்க்குதிரைகள் சூரியனது தேர்க்குதிரைபோன்ற விசையையும் வலிமையையுமுடையன வென்றும் விளங்கும். அருணனில், அருக்கனில் என்றவற்றில், இல்-ஐந்தனுருபு, ஒப்புப்பொருளது; எல்லைப்பொருளதாக்கொண்டு, அருணனைக்காட்டிலும் சூரியனைக்காட்டிலும் அழகுமிகும்படி யெனினும்

அமையும். அருச்சுனன் வலக்கையினால் மாத்திரமன்றி இடக்கையினாலும் அம்புதொடுக்குந் திறமுடையனாய்ச் சவ்வியசாசியென்று பேர்பெற்றவனாதலால், அதற்கு ஏற்ப இருபுறத்தும் இரண்டு அம்பறாத்தூணிகளைக் கட்டிக் கொண்டனனென்பதுபற்றி, 'நாழிகை' என்ற பால்பகா அஃறிணைப்பெயர்க்கு இங்குப் பன்மையாகப் பொருள் கொள்ளப்பட்டது; கீழ்ச்செய்யுளில் 'தூணி' என்பதற்கு இங்ஙனம் பொருள்கொண்டதன் காரணமும் இதுவே: இரண்டு அக்ஷய தூணீரங்களைத் தந்தனனென்று முதனூலாசிரியர் வெளிப்படையாக் கூறியுள்ளார்.

வாநரம், பதாகா, ஸாயகம், காண்டீவம், கரம், மணி, கவசம், அர்க்கன்-வடசொற்கள். வாநரமென்பது, கொஞ்சங்குறைய மனிதர் போன்றது என்று பொருள்படும். பதாகை-பெருங்கொடி. நட்டு, நடு-பகுதி; ஒற்று இரட்டி இறந்தகாலங்காட்டிற்று: உ-வினையெச்சவிகுதி; பகுதியீற்று உகரம், உயிர்வரக் கெட்டது. ஈர் இரண்டு-பண்புத்தொகை; இரண்டாகிய இரண்டு என விரியும்: இரண்டினாற் பெருக்கிய இரண்டு என்க. இவுளியும், உம்மை-முற்றுப்பொருளது. 'ஆய்ந்த' என்பதற்கு-'அசுவசாஸ்திரத்தை' என்ற செயப்படுபொருள் வருவித்தலும் ஒன்று; நூலறிவோடு அதற்கேற்பத் தொழில்செய்யுந் திறமு மமைந்த பாகனென்க. 'பாகனும்' என்ற உம்மை-எதிரதுதழுவிய எச்சம். 'காய்ந்த' என்பதற்கு-'பகைவர்களை' என்ற ஏற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. நாழிகை-உட்டுளைப்பொருள். 'ஏந்தி' என்பது, 'கவசம்' என்பதனோடுங் கூட்டப்பட்டது. வேய்ந்த-பதித்த. கவசம்-இரும்பு முதலியவற்றால் ஆகிய உடம்பின் மேற்சட்டை. உம்-இறந்தது தழுவிய எச்சம். 'ஈந்த' என்றதை, இவுளி சாயகநாழி காண்டிவம் என்றவற்றோடுங் கூட்டுக. (உஎ)

[அருச்சுனன் வில்நாணியைக் கைவிரலால் தெறித்து ஒலி யெழுப்புதல்.]

நெஞ்சின்மேலிடூக்கமோடணிதிகழ்நெடும்புயம்பூரித்துச்
சிஞ்சினீமுகந்தெறித்தனன்றெறித்தலுந்தெறித்தபேரொலிகானின்
விஞ்சிவாழ்வனசத்துவமடங்கவுள்வெருவுறவுகாந்தத்து
மஞ்சினீடுருமொலியெனப்பரந்ததுவான்முகடுறமன்னோ.

(இ-ள்.) (அருச்சுனன்), நெஞ்சில் மேலிடும் ஊக்கமோடு-மனத்தில் அதிகப்படுகிற உற்சாகத்துடனே, அணி திகழ் நெடு புயம் பூரித்து-அழகு விளங்குகின்ற நெடிய தோள்கள் (அவ்வுற்சாகத்தாற்) பூரிக்கப்பெற்றவனாய், சிஞ்சினீ முகம் தெறித்தனன்-(தான் கைக்கொண்ட வில்லினது) நாணியினிடத்தைக் கைவிரலால் தெறித்தான்: தெறித்தலும்-அங்ஙனம் தெறித்தவுடனே, தெறித்த-(அதனினின்று) வெளிப்பட்ட, பேர் ஒலி-மிக்க ஒலியானது,—கானின் விஞ்சி வாழ்வன சத்துவம் அடங்க உள் வெருவுஉற-அக்காண்டவவனத்தில் மிகுதியாக வாழ்வனவாகிய பிராணிகளெல்லாம் மனமஞ்சும்படி, உக அந்தத்து மஞ்சின் நீடு உரும் ஒலி என-யுகமுடிவு காலத்திற் பெருமழை சொரிகிற மேகத்தினின்று மிகுதியாக உண்டாகிற இடியினது ஓசைபோல, வான் முகடு உற பரந்தது-மேலுள்ள ஆகாயமுகட்டை யளாவப் பரவிற்று; (எ-று.)—மன், ஓ-ஈற்றசைகள்.

புஜம், சிஞ்சிநீமுகம், ஸத்வம், யுகாந்தம்-வடசொற்கள். பூரித்தல்-பருத்தல். வாழ்வன-பெயர். உள்-அகத்துறுப்பாகிய மனம். வெருவுஉற, உறு-துணைவினை. (உஅ)

[அக்கினி வளர்ந்து அவ்வனத்தை யெரிக்கத் தொடங்குதல்.]

ஆழிவாயொருவடவையின்முகத்திடையலதரித்தனனென்ன
ஆழிவாயுலகனைத்தையுமுருக்குமாவடனெழுந்தனனென்ன

வாழிவாழியென்றருச்சுனன்கரத்தையும்வார்சிலையையும்வாழ்த்திப்
பாழிமேனியைவளர்த்தனன்பாவகன்பவனனும்பாங்கானான்.

(இ - ள்.) பாவகன் - அக்கினிதேவன்,—ஆழிவாய் - கடலில், ஒரு வடவையின் முகத்திடை - ஒரு பெண்குதிரையின முகத்தில், அவதரித்தனன் என்ன - பிறந்தவன் போலவும், ஊழிவாய் - ஊழிக்காலத்தில், உலகு அனைத்தையும் முருக்கும் ஆறு - உலகங்களை யெல்லாம் அழிக்கும்படி, உடன்று எழுந்தனன் என்ன - உக்கிரங்கொண்டு எழுந்தவன் போலவும், அருச்சுனன் கரத்தையும் வார் சிலையையும் வாழி வாழி என்று வாழ்த்தி பாழி மேனியை வளர்த்தனன் - அருச்சுனனது கையையும் (அக்கையிலுள்ள) நீண்ட வில்லையும் 'வாழ்க வாழ்க' என்று வாழ்த்திக்கொண்டே வலிமையையுடைய தன் உடம்பை வளரச்செய்தான்; பவனனும் பாங்கு ஆனான் - (அவன் வளர்ந்து தொழில்செய்தற்கு) வாயுவும் உதவியாய் நின்றான்; (எ - று.)

படபாமுகாக்கினி போலவும் ஊழித்தீப்போலவும் அக்கினிதேவன் அப்பொழுது வளர்ந்தெழுந்தனன்: அவனுக்கு அநுகூலமாகக் காற்றும் அமைந்து உதவுவதாயிற்று என்பதாம். கடலிடையிலுள்ளதொரு பெண் குதிரையின் முகத்தில் ஒரு பெருந்தீ அமைந்துள்ளதென்றும், அது கடல் நீரை மழைமுதலியவற்றால் மிகாதபடி உறிஞ்சிநிற்பதென்றும், அத்தீக் கற்பாந்தகாலத்தில் மேலெழுந்து வெளிப்பட்டு உலகங்களை யெரிப்பதென்றும் நூற்கொள்கை. படபா, லோகம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. பாவகன், பவநன் என்ற வடமொழிப்பெயர்கள் - முறையே பரிசுத்தமாகச் செய்பவனென்றும், இடைவிடாது சஞ்சரிப்பவனென்றும் உறுப்புப்பொருள் படும். நெருப்பும் காற்றும் நண்பாதலால், வாயுசகாயனென்றும், அக்கினி சகாயனென்றும் முறையே பெயர்பெறும்.

ஆழிவாய், ஊழிவாய் என்றவற்றில், வாய் - ஏழனுருபு. முகத்திடை, இடை - ஏழனுருபு. ஆழி - ஆழ்ந்துள்ளது; இ - கருத்தாப்பொருள்விகுதி. ஊழி - உலகமுடியுங்காலம்: கல்பாந்தம். அவதரித்தனன், எழுந்தனன் - இறந்தகால வினையாலணையும்பெயர்கள். முருக்கும் - முருங்குமென்பதன் பிறவினை; மெலி வலியாதல், பிறவினைக்குறி. உடன்று, உடல் - பகுதி. வாழி - வாழிய என்னும் வியங்கோளின் விகாரம்; [நன் - உயிர் - கஅ.] வாழிய வென்பதில், வாழ் - பகுதி, இ - சாரியை, ய - வியங்கோள் வினைமுற்றுவிகுதி. அடுக்கு, உவகைபற்றியது. வார் சிலை - வினைத்தொகை. மிகப்பெரியதான காண்டவவனத்துக்கு - மிகப்பரந்த கடலும் உலகமும் உவமையாதல், முன்னிரண்டடிகளில் தொனிக்கும். தனக்கு இடையூறு நேராதபடி காத்துத் தன்கருத்தை நிறைவேற்றுபவை அருச்சுனனது கைகளும் கையிற்கொண்ட வில்லுமே யாதலால், அவற்றை வாழ்த்தினனென்க. ஊழித்தீ உலகத்தை உயிர்களுடனே எரிப்பதுபோல, இப்பொழுது அக்கினி தேவன் காண்டவவனத்தை அதிலுள்ள பிராணிகளுடனே எரிக்கப்புகுதலால், உவமை யேற்கும். (உகூ)

[அக்கினி அவ்வனத்தை வளைத்துக்கொள்ளுதல்.]

மூளமூளவெம்பசியொடுஞ்சினத்தொடுமூடுகின்றெய்துறவோடி
வாளமாகவோர்பவளமால்வரைநெடுவாரியைவளைந்தென்னக்
காளமாமுகிலூர்திகர்த்தனகர்காண்டவந்தனையண்ட
கோளமீதெழவளர்ந்தனன்வரைபடிகொண்டலுங்குடர்தீய.

(இ - ள்.) ஓர் பவளம் மால் வரை - பவழமயமானதொரு பெரிய மலை, நெடு வாரியை வாளம் ஆக வளைந்து என்ன - பெரிய கடலை வட்டமாக வளைந்து சூழ்ந்தாற்போல, (அக்கினியானவன்), மூள மூள வெம் பசி

யொடும் சினத்தொடும் மூகி வெய்து உற ஓடி - கொடிய பசியும் கோபமும் மேன்மேல் அதிகப்பட அவற்றுடனே விரைவாக(க் காண்பார்க்கு) அச்சம் மிகும்படி ஓடி, காளம் மா முகில் ஊர்தி நந்தனம் நிகர் காண்டவம்தனை - கரிய பெரிய மேகங்களை வாகனமாக உடையவனான இந்திரனது நந்தனவனத்தை யொத்த காண்டவவனத்தை, வரை படி கொண்டலும் குடாநீய - (அதிலுள்ள) மலைகளிற் படிந்திருக்கிற மேகங்களும் குடல்கருகும்படி, அண்டகோளம் மீது எழ வளர்ந்தனன் - அண்டகோளத்துக்கும் மேலே உயர்வாக வளர்ந்துகொண்டான்; (எ - று.)

நந்தனம் - சுவர்க்கலோகத்திலுள்ள இந்திரனது பூந்தோட்டம்; இந்திரனது மிக்கபாதுகாவலி விருத்தல் பற்றியும், செழுமைபற்றியும், காண்டவத்துக்கு அதனை உவமைகூறினார். மூளமூள - அடுக்கு, மிகுதிபற்றியது. சினம் மேன்மேல் மூளுதற்குக் காரணம், முன்பு பலமுறை அவ்வனத்தைத் தான் எரிக்கத்தொடங்கியபொழுது அதிலுள்ள பிராணிகள் எதிர்த்து மாறு செய்து தன்னை யடக்கிவிட்டமை. வெய்து - வெவ்வியது; ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர். வெம்மையென்னும் பண்பின் திரிபாகிய வெய் - பகுதி, து - விகுதி. வாளம், வாரி, நந்தநம, அண்டகோளம் - வடசொற்கள். பவளம் - ப்ரவாள மென்ற வடசொல்லின் சிதைவு. மால் - உரிச்சொல். வாரி - நீர்; கடலுக்கு இலக்கணை. வளைந்து - எச்சத்திரிபு. முகிலூர்தி-பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஊர்தி-ஊரப்படுவது; இ - செயப்படுபொருள்விகுதி: த் - எழுத்துப்பேறு; ஊர்தல் - ஏறிநடத்துதல். நந்தந மென்ற பெயர், சந்தோஷப்படுத்துவதென்று பொருள்படும். அண்டகோளம் - உருண்டைவடிவமான அண்டம். கொண்டலும, உம் - உயர்வுசிறப்பு. குடர் - குடலென்பதன் இறுதிப்போலி. கரிய பெரிய காட்டைப் பெரிதாயெழுந்த சிவந்த நெருப்பு வளைதற்கு, கடலைப் பவழமலை வளைதல் உவமைகூறப்பட்டது. (கூ0)

[அவ்வனலினது பலநிறமான புகைகளை இதிலும் அடுத்த கவியிலும் வருணிக்கின்றார்.]

ஆனவாகுலந்தன்னொடுதப்புதற்கணிபடப்பறந்தோங்குந்
தூநிறத்தனகபோதமொத்தனவிடையிடையெழுஞ்சுடர்த்தூமங்
கானமேதியுங்கரடியுமேனமுங்கடகரிக்குலந்தாமும்
வானிலேறுவபோன்றனநிரைநிரைவளர்தருகருந்தூமம்.

(இ - ள்.) இடை இடை எழும் - இடையிடையே மேலெழுகிற, சுடர் தூமம் - சிறிது ஒளியோடுகூடிய புகைகள்,—ஆன ஆகுலம்தன்னொடு - (தீப்பற்றியதனால் தமக்கு) உண்டான வருத்தத்துடனே, தப்புதற்கு - (அதனினின்று) தப்பிப்பிழைத்தற்பொருட்டு, அணி பட பறந்து ஓங்கும் - வரிசையாகப் பறந்துயர்ந்து மேலெழுகிற, தூ நிறத்தன கபோதம் - சுத்தமான நிறத்தை யுடையனவாகிய புறாக்களை, ஒத்தன - போன்றன; நிரை நிரை வளர்தரு - வரிசைவரிசையாக மேலெழுகிற, கருந் தூமம் - கருநிறமான புகைகள்,—வானில் ஏறுவ - (சுற்றிலும் வளைந்துகொண்ட அக்கொடு ப்பினின்று தப்புதற்கு) மேலெழுவனவான, கானம் மேதியும் - காட்டெருமைகளையும், கரடியும்-கரடிகளையும், ஏனமும்-பன்றிகளையும், கடகரிகுலமும்-மதயானைக்கூட்டங்களையும், போன்றன - ஒத்தன; (எ - று.)—தாம்-அசை.

நிறமும் நிரைநிரையாக மேலெழுதலும் பற்றிய உவமை. ஆகுலந்தன்னொடு என்பதில், 'ஓடு' உருபு - அடைமொழிப் பொருளில் வந்தது; ஏதுப் பொருளில் வந்ததெனினும் அமையும். 'ஆன ஆகுலந்தன்னொடு தப்புதற்கு

அணிபட' என்றதை 'வானிலேறுவ' என்பதனோடுங் கூட்டுக. தூநிறத்தன என்பதில், தூய்மை யென்ற பண்புப்பெயர், ஈறுபோய் இடையகரமுங்கெட் டது. நிறத்தன, ஏறுவ - பெயர்கள். ஆகுலம், கபோதம், தூமம், கடகரீ, லம் - வடசொற்கள். தற்குறிப்பேற்றவுவமையணி. (ருக)

ரைத்தடந்தொறுங்கதுவியகடுங்கனன்மண்டலினகல்வானி
ரைத்தெழுந்தசெம்மரகதகனகவாணீலவெண்ணிறத்தூமந்
ரைத்தலத்தினின்றண்டகோளகையுறச்சதமகன்றடஞ்சாப
முரைத்ததன்வளைவறநிமிர்ந்தழகுறவோடுகின்றதுபோலும்.

(இ - ள்.) வரை தடம் தொறும் - மலைகளி னிடந்தோறும், கதுவிய கடுங் கனல் மண்டலின் - பற்றிய கொடிய அக்கினி நெருங்குதலினால், அகல் வானில் நிரைத்து எழுந்த - அகன்ற ஆகாயத்தில் வரிசையாகஎழுந்த, செம் மரகத கனக வாள் நீல வெள் நிறம் தூமம் - செம்மை பசுமை பொன்மை கருமை வெண்மை யென்னும் ஐவகைநிறங்களையுடைய புகையானது,—தட சதமகன் சாபம் - பெரிய இந்திரதனுசு, உரைத்த தன் வளைவு அற நிமிர்ந்து - (பிரசித்தமாகச்) சொல்லப்படுகிற தனது வளைவு நீங்க நிமிர்ந்து, தரைத் தலத்தினின்று அண்டகோளகை உற - பூமியினிடத்தினின்று அண்டகோ ளத்தின் மேன்முகட்டை யளாவ, அழகு உற ஓடுகின்றது - அழகுமிக நீண்டுசெல்வதை, போலும் - ஒக்கும்; (எ - று.)

மலைகளிலுள்ள செந்நிறமணி பச்சையிரத்தினம் பொன் நீலரத்தினம் வெள்ளி முதலிய நிறம்வேறுபட்ட பலவகைப்பொருள்களை நெருப்பு எரிக் கும்போது, அவ்வெரிக்கப்படும்பொருளுக்கேற்பப் புகையின்நிறம் மாறுபடு தல், இயல்பு. இங்ஙனம் மாறிமாறிப் பஞ்சவர்ணங்களையுங் கொண்டு நெடுந் தூரமளவும் மேலெழுந்து செல்லும் புகைக்கு, பலவகைநிறங்களும் விரவப் பெற்றதான இந்திரவில்லை உவமைகூறுவார், புகையின்நேரெழுச்சிக்கு ஒப் பாதற்பொருட்டு, 'வளைவறநிமிர்ந்து தரைத்தலத்தினின்று அண்டகோளகை யுற ஓடுகின்றது போலும்' என்றார். செம் - செம்மையென்னும் பண்பினடி. மரகதம், நீலம் என்ற இரத்தினப்பெயர்களும், கனக மென்ற பொன்னின் பெயரும் - அவற்றின் நிறத்துக்கு இலக்கணை. வாள் - ஒளி; நீலத்துக்கு அடைமொழி.

மரகதம், கநகம், நீலம், தூரா, சதமகன் - வடசொற்கள். தரை - (பொ ருள்களைத்) தரிப்பது. சதமகன் - நூறு (அசுவமேத) யாகஞ்செய்தவன்; சதம் - நூறு, மகம் - யாகம். அகல் வான் - வினைத்தொகை. (ருஉ)

[இதுமுதல் மூன்று கவிகள் - அக்கினிச்சுவாலையின் வருணனை.]

கருதியாயிரகோடிவெம்புயங்கமிக்கானிடையுளவென்று
பரிதிசூழ்வரவெருவுபல்குவடுடைப்பருப்பதங்களின்சாரற்
சுருதிவேள்விநூறுடையவன்சிறகறத்துணித்தவாய்தொறும்பொங்கிக்
குருதிபாய்வனபோன்றனகொளுந்தியகொழுந்தழற்கொழுந்தம்மா.

(இ-ள்.) பரிதி - சூரியன், ஆயிரம் கோடி வெம் புயங்கம் இ கானிடை உள என்று கருதி - ஆயிரகோடி கொடியபாம்புகள் இந்தக்காட்டிலுள்ளன வென்று எண்ணி, சூழ்வர வெருவு - பிரதக்ஷிணமாகச்செல்வதற்கு அஞ்சும் படியான, பல் குவடு உடை பருப்பதங்களின் சாரல் - பல சிகரங்களையு டைய மலைகளின் சாரல்களில், கொளுந்திய - பற்றிய, கொழுந் தழல் கொ ழுந்து - கொழுமையான அக்கினிச்சுவாலைகள்,—சுருதி வேள்வி நூறு உடை யவன் - வேதவிதிப்படிசெய்யப்பட்ட நூறு (அசுவமேத) யாகங்களை யுடை யவனான இந்திரன், சிறகு அற துணித்த - (அம்மலைகளின்) இறகுகள் அறும் படி வெட்டிய, வாய்தொறும் - இடங்களிலெல்லாம், பொங்கி பாய்வன -

மேன்மேற் கிளர்ந்து பாய்வனவான, குருதி - இரத்தப்பெருக்குக்களை, போன்றன - ஒத்தன; (எ - று.)—அம்மா - ஈற்றசை; வியப்பிடைச்சொல்லுமாம்; அவ்வக்கினிச்சுவாலைகளை வியந்தவாறும்.

செந்நிறமும், மேன்மேலெழுச்சியும் பற்றிய உவமை. இராகுகேதுவென்னும் பாம்புகள் தனக்குப் பகையாதல்பற்றி, கொடியபாம்புகட்கெல்லாஞ் சூரியன் அஞ்சினனென்க. நூறுஅசுவமேதயாகங்களைசெய்துஇந்திரபதவிபெறுதல் இயல்பாதலால், 'வேள்விநூறுடையவன்' என்றார்; இதுபற்றியே, சதமகனென்று பெயர். முன்னொருகாலத்தில் மலைகளெல்லாம் பறவைகள் போல இறகுடையனவாயிருந்து அவற்றால் உலகமெல்லாம் பறந்துதிரிந்து பலவிடங்களின்மேலும் உட்கார்ந்து அவ்வவ்விடங்களையெல்லாம் பிராணிகளுடனே அழித்துவர, அதனை முனிவர்முதலியோரா லறிந்த தேவேந்திரன் சினந்துசென்று தனது வச்சிராயுதத்தால் அவற்றின் சிறகுகளை அறுத்துத் தள்ளிவிட்டனனென்பது, இங்கு அறியவேண்டிய கதை. ஆயிரகோடியெனப் பண்புத்தொகையில் வலியியல்பானது, வருமொழி வடசொல்லாதலி னென்க. புஜங்கம், பரிதி, பர்வதம், ச்ருதி - வடசொற்கள். புஜங்கமென்பது - மார்பினாற்செல்வதென்றும, வளைந்துசெல்வதென்றும்; சுருதியென்பது - (எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்யகிரமத்திற் கர்ணபரம்பரையாகவே) கேட்கப்பட்டுவருவ தென்றும் பொருள்படும். ஆயிரகோடி யென்றது, மிகப்பல வென்றபடி. சூழ்வர, வா - துணைவினை. (௩௩)

கோத்திரங்களின்கவானிடைக்கதுமெனக்கொளுந்தியுற்றெரிகின்ற
தீத்திறங்கள்செங்காந்தளுமசோகமுஞ்செங்குறிஞ்சியுஞ்சேரப்
பூத்தவொத்தனவன்றியுங்குலிகநீர்பொழியருவியும்போன்ற
பார்த்தகண்கள்விட்டேகலாவகைநிறம்பரந்ததாதுவும்போன்ற.

(இ - ள்.) கோத்திரங்களின் கவானிடை - மலைகளின் பக்கங்களிலே, கதுமென கொளுந்தி உற்று எரிகின்ற - விரைவாகப் பற்றி மிகுந்து எரிகிற, தீ திறங்கள்-அக்கினிச்சுவாலைகளின் பகுதிகள்,—செம் காந்தளும் அசோகமும் செம் குறிஞ்சியும் சேர பூத்த ஒத்தன - செங்காந்தளும் அசோகமும் செங்குறிஞ்சியும் ஒருங்குபூத்தனவற்றை யொத்தன; அன்றியும் - இதுவல்லாமலும், குலிகம் நீர் பொழி அருவியும் போன்ற-இங்குலிகங்கலந்த நீரைச் சொரிகிற மலையருவியையும் ஒத்தன; பார்த்த கண்கள் விட்டு ஏகலா வகை நிறம் பரந்த தாதுவும் போன்ற - தன்னைப்பார்த்த கண்கள் தன்னைவிட்டு வேறொன்றினிடத்தேசெல்லாதபடிசெந்நிறம்பரந்தகாவிக்கல்லையும்ஒத்தன.

செந்நிறமும், மலையின்மேல்விளங்குதலும் பற்றிய உவமை. கோத்ரம், அசோகம், தாது - வடசொற்கள். கோத்திர மென்பது - பூமியைக் காப்பது என்று பொருள்படும்; கோ-பூமி. கவீநீயென்னும் வடசொல்லின் இரிபாகிய கவான் என்பது, தொடையைக் குறிப்பது; அது, இலக்கணையாய், மலையின் இடைப்பகுதிக்குக் கீழுள்ளதான தாழ்வரையை யுணர்த்தும். கதுமென்-விரைவுக்குறிப்பிடைச்சொல். செங்காந்தள் முதலியமூன்றும், விருக்ஷவர்க்கங்கள். வெண்காந்தளும் வெண்குறிஞ்சியும் உள்ளதனால், செங்காந்தள் செங்குறிஞ்சி யென்பன - பிறிதினியைபுநீக்கியவிசேடணமடுத்தனவாம். அசோகமென்பது(தனதுநிழலையடைந்தவரது)சோகத்தைத்தவிர்ப்பதென்று பொருள்படும். பூத்த-பெயர். போன்ற-முற்று. குலிகம்-இங்குலிகமென்பதன் முதற்குறைவிகாரம்; அது, சாதிலிங்கமெனப்படுஞ் செந்நிறச்சரக்கு. 'பார்த்தகண்கள் விட்டேகலாவகை நிறம்பரந்த' என்றது, மலைத்தாதுவின் அழகையுணர்த்தும்; இதனை, சிந்தாமணியில் "கண்வாளறுக்குங்கமழ்தார்" என்றாற்போலக்கொள்க. 'அன்றியும்'என்பதை இறுதிவாக்கியத்தோடுங்கூட்டுக.

**தளைத்தபாதபத்தலைதொறும்பற்றினசருகுதிர்த்திளவேனிற்
கிளைத்துமீளவும்பொறியளியெழவளர்கிசலயங்களும்போன்ற
திளைத்தவேர்முதற்சினையுறவிரிவனதீபசாலமும்போன்ற
வளைத்தகானிடைமெலமெலவுள்புகுவன்னியின்சிகாவர்க்கம்.**

(இ - ள்.) வளைத்த கானிடை - (தன்னால்) வளைக்கப்பட்ட அக்காட்டிலே, மெல மெல உள் புகு - மெல்லமெல்ல உள்ளேபுகுகிற, வன்னியின் சிகா வர்க்கம் - அக்கினியினது சுவாலையின் பகுதிகள்,—தளைத்த பாதபம் தலைதொறும் பற்றின - (தம்மைப்பார்ப்பவர்களுடைய கண்களையும் மனத்தையும் வேறொன்றிற் செல்லவொட்டாமல் தம்மிடத்திற்) கட்டுகின்ற [மிக அழகிய] மரங்களின் நுனிகளிற் பற்றினவையாய், (அந்நிலையில்), சருகு உதிர்த்து இளவேனில் கிளைத்து மீளவும் பொறி அளி எழ வளர் கிசலயங்களும் போன்ற-(பின்பனிக்காலத்திற்) சருகுகளையுதிர்த்து இளவேனிற்காலத்திலே புள்ளியையுடைய வண்டுகள் மொய்த்தெழும்படி மீண்டுந்தோன்றி வளர்கிற செந்தளிர்களையும் போன்றன; (மற்றும் அவ்வக்கினிச்சுவாலைகள்), திளைத்த வேர் முதல் சினை உற விரிவன - நெருங்கிய வேர்முதற் கிளைவரையிலும் (மரங்களில்) முற்றும்பற்றியெரிபவையாய், (அந்நிலையில்), தீப சாலமும் போன்ற - தீபவிருக்ஷங்களையும் போன்றன; (எ - று.)

நிறமும்வடிவும்பற்றிய உவமை. தீபவிருக்ஷமாவது - இரவில் தீப்பற்றியதுபோல விளங்குவதொருசாதிமரம்; எரிமரமெனவும்படும். இனி, தீப சாலம் என்பதற்கு - விளக்குக்களின் கூட்டமென்றும் கூறலாம். 'தளைத்த பாதபம்' என்பதை, "கண்சிறைப்படு நிழற்காவு" என்றாற்போலக் கொள்க. பாதபம், கிஸலயம், தீபஜாலம், சிகாவர்க்கம் - வடசொற்கள். பாதபமென்பது - அடியினால் நீரைக் குடிப்பதென்று பொருள்படும். சுவாலைகளின்மேலிருந்து அனற்பொறிகளோடு எழுகிற புகைகள், பொறிகளையுடைய வண்டுகள்போலுமென்பார், 'பொறியளியெழவளர் கிசலயம்' என்றார். மெல-தொகுத்தல்; மென்மையென்னும்பண்பினடியாப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். பற்றின, விரிவன - பலவின்பால்வினையெச்சமுற்று. போன்ற - முற்று. உம்மைகள், எச்சப்பொருளன. (கூடு)

[அனற்பொறிகளின் வருணனை.]

**தழைத்தபேரொளித்திவாகரன்கரங்கள்போய்த்தடவியவ்வடவிக்கட்
பிழைத்தகாரிருட்பிழம்பினைவளைந்துடன்பிடித்தெரிப்பனபோலு
முழைத்தவான்புழையொருகரத்திருபணைமும்மதப்பெருநால்வாய்
மழைத்தகுஞ்சரமுகந்தொறும்புக்குடன்மயங்கியபொறிமாலை.**

(இ - ள்.) முழைத்த - மலைக்குகையின்தன்மையைக் கொண்ட, வான் புழை - பெரிய துளையையுடைய, ஒரு கரத்து - ஒரு துதிக்கையையும், இரு பணை - இரண்டு தந்தங்களையும், மும் மதம் - மூன்றுவகை மதஜலத்தையும், பெரு நால் வாய்-பெரிய தொங்குகிற வாயையுமுடைய, மழைத்த குஞ்சரம்-மேகத்தின்தன்மையுள்ள யானைகளின், முகம் தொறும் - முகங்களிலெல்லாம், புக்கு - போய்ச்சேர்ந்து, உடன் மயங்கிய - உடனே அவற்றிற் பற்றியெரிவனவான, பொறி மாலை - தீப்பொறிகளின் வரிசைகளானவை, —அ அடவிக்கண் - அந்தக் காண்டவவனத்திலே, பிழைத்த - (தமக்கு) அஞ்சித் தப்பிச்சென்று ஒளித்துவாழ்ந்த, கார் இருள் பிழம்பினை - கரிய இருட்டொகுதிகளை, போய் தடவி வளைந்து உடன் பிடித்து எரிப்பன - விடாது பின்சென்று தடவிச்சூழ்ந்து உடனேபிடித்து எரிப்பனவான, தழைத்த பேர் ஒளி திவாகரன் கரங்கள் - நிறைந்த சிறந்த ஒளியையுடைய சூரியனது கிரணங்களை, போலும் - ஒக்கும்; (எ - று.)

இருட்பிழம்பு - யானைக்கும், சூரியகிரணம் - அனற்பொறிநிரைக்கும் நிறம்பற்றிய உவமை யெனக் காண்க. பகைவர்க்குஅஞ்சினவர், காட்டிற்பு க்கு ஒளித்த லியல்பாதலால், 'அடவிக்கட்பிழைத்த கார்இருட்பிழம்பு' எனப் பட்டது. கைகளென்றும் ஒருபொருள் தோன்ற 'கரங்கள்' என்றதற்கு ஏற்ப 'தடவி' என்றார்; கண்டுபிடிக்கவொண்ணாமல் ஒளித்த பொருளைத் தேடு வோர் கைகளைநீட்டி அவற்றால் தடவிப்பிடிக்கும் இயல்பு, இங்குக் குறிக்கப் பட்டது. சூரியன் சந்திராக்கினியர்க்குக் கொடுத்துவாங்கும் ஆயிரங்கிரணங் களையுடையவனாதலால், 'தழைத்த பேரொளித் திவாகரன்' எனப்பட்டான். முழைத்த, மழைத்த - முழை, மழை யென்னும் பெயர்களின்மேற் பிறந்த குறிப்புப்பெயரெச்சங்கள்; து - சாரியை. யானைக்கு மேகம்உவமை - கரிய பெரியவடிவுக்கும், பேரொலிசெய்தற்கும், மதமழைசொரிதற்குமென்க. திவா கரன், கரம், அடவீ, மதம், குஞ்சரம், மாலா - வடசொற்கள். திவாகரன் - பகலைச் செய்பவன். குஞ்சரம் - காட்டுப்புதர்களிற் சஞ்சரிப்பது; குஞ்சம் - புதர். பிழம்பு - தொகுதி. மும் மதம் - கர்ணமதம், கபோலமதம், பீஜம தம் என்பன; கன்னமிரண்டுங் குறியொன்றுமாகிய மூன்றிடத்து மதங்க ளென்றலு முண்டு. நால்வாய் - வினைத்தொகை; நான்ற, நால்கிற, நாலும் வாய் என விரியும்: நாலல் - தொங்குதல். மூன்றாமடியில், ஒன்று இரண்டு மூன்று நான்கு என்ற தொகைச்சொற்கள் முறையே அமையவைக்கப்பட் டது, ஓர்அழகாம். இது, ரத்நாவளியலங்காரமெனப்படும்; யாப்பிலக்க ணத்தில் தொடைமுரணின்பாற்படும். அடவிக்கண், கண் - ஏழனுருபு. ()

[அவ்வனத்திலுள்ள பலவகைப்பிராணிகள் பலவாறு எரிபட்டு அழிதலை இதுமுதல் ஏழுகவிகளிற் கூறுகிறார்.]

அரியெனும்பெயர்பொறாமையிற்போல்விரைந்தழற்கொழுந்துளைபற்
கிரிமுழைஞ்சுகடொறும்பதைத்தோடினகேசரிக்குலமெல்லாம் [றக்
விரியுரோமவாலதிகளிற்பற்றலின்விளிவுடைச்சவரங்க
ளெரிகொள்சோகவெங்கனலினானின்றுநின்றிறந்தனசலியாமல்.

(இ - ள்.) அழல் கொழுந்து - அக்கினிச்சுவாலையானது, அரி எனும் பெயர் பொறாமையின் போல் - (தனக்குஉள்ள) அரியென்னும்பெயர் (சிங் கத்துக்கும்) இருத்தலைப் பொறாததனாற் போல, விரைந்து உளைபற்ற - விரைவாக (அச்சிங்கங்களின்) பிடரிமயிரிற் பற்றிக்கொள்ள, (அதனால்), கேசரி குலம் எல்லாம் - சிங்கக்கூட்டங்கள்யாவும், பதைத்து - துடிப்புற்று, கிரி முழைஞ்சுகள் தொறும் ஓடின - மலைக்குகைகளிலெல்லாம் ஓடிச்சென் றன; விளிவு உடை சவரங்கள் (ஒருமயிர்நீத்தாலும்) இறத்தலைஉடைய கவரிமான்கள்,—விரி உரோமம் வாலதிகளின் பற்றலின் - மிக்குவளர் ந்த மயிர்களையுடைய (தங்கள்) வால்களில் (அக்கினிச்சுவாலை) பற்றியதனால், எரி கொள் சோகம் வெம் கனலினால் சலியாமல் நின்று நின்று இறந்தன - (புறத்திற்பற்றிய அக்கனல் தம்மையெரித்தற்குமுன்னமே அகத்திற்பற்றி) எரிதலைக் கொண்ட சோகமாகிய வெவ்விய அக்கினியினாலேயே புடைபெய ராமல் (அவ்வவ்விடங்களில்) நின்று நின்று இறந்தன; (எ - று.)

இயல்பாகச் சிங்கத்தின்மேல் தீப்பற்றியதற்கு, அவ்வக்கினிக்குஉள்ள அரியென்னும்ஒருபெயர் சிங்கத்துக்குமிருத்தலை அவ்வக்கினி பொறாமல் அது காரணமாகக்கோபித்து அச்சிங்கத்தை யெரித்தழிக்கத் தொடங்கினாற்போ லென்று கவிதானாக ஒருகாரணத்தைக் கற்பித்துக்கூறியதனால், தற் குறிப்பேற்றவணி. (இதனை, சித்திராங்கதனென்று பெயரிடப்பட்ட அர சனைச் சித்திராங்கதனென்னும்பெயருள்ள கந்தருவன், எனது பெயரை இவன்கவர்ந்தா னென்று சினந்து இரவில்வந்துகொன்றமைபோலக் கொ

ள்க.) அரியென்னும்பெயர் - அக்கினி, சிங்கம் என்னும் இரண்டையுங் குறிக்கும்போது, ஹரி யென்ற வடசொல்லின் விகாரம்; "சிங்கம் திருமால் திகிரி இரவி, இந்திரன் காற்றே யமனே அங்கி யென்று, அங்கண் வடமொழிச் சிதைவி னரியாகும்" என்ற திவாகரம், இங்கு அறியத்தக்கது. "மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்", "மயிர்தான், பலன்படா மாவிற்குக் கூற்றம்" என்றபடி தன் மயிர்த்திரளில் ஒருமயிர் நீங்கினாலும் அக்குறையைப்பொறுமற் பேரவமானமெனக்கொண்டு பின்பு உயிர்வாழாது உடனே இறந்துபடுதல் கவரியென்னும் மானின்சாதிக்கு இயல்பாதலால, அச்சாதிமான்களின் வால்மயிரில தீப்பற்றியவளவிலே அந்தமான்கள் இறந்தன; அவை, தமவாலிற்பற்றிய புறத்தீ மூறையே யெரிந்துவந்து தம்மை பழித்தலா லிறந்தவையலல; வாலி லொருமயிர் எரிபட்டதனால் தம் அகத்திற்பற்றிய சோகாக்கினி தம்மை யெரித்தலினாலேயே இறந்தன; ஆனது பற்றி, அவை, (உளைமயிரிலதீப்பற்றிய சிங்கங்களபோலத்) தப்பியோடிஉயிர்த்தற்குச் சிறிதும்முயலாமல் வால்மயிரில் தீப்பட்ட அவ்வவ்விடத்திலேயே புடைபெயராது நின்றநின்றநிலையில இறந்துகிடந்தன என்பதாம். இது, தன்மைநவிற்சியணி.

கிரி, கேஸரீ, ரோமம், வாலதீ, சோகம் - வடசொற்கள். சவரம் - சாமரமென்ற வடசொல்லின் விகாரம்; இதன் வெள்ளைமயிர் சாமரமாகவும், கருமயிர் சவரியாகவும் பயன்படுவது. கேசரம் - பிடரிமயிர்; அதனையுடையது, கேசரி யென ஆண்சிங்கத்துக்குக் காரணக்குறி. 'விரி யுரோம வாலதி' என்றதனால் கவரிமான்களின் மயிர்ச்சிறப்பும், 'விளிவுடைச் சவரங்கள்' என்றதனால் அவற்றின் மானச்சிறப்பும் விளங்கும். சோகத்தைக் கனலென்றது, தான்பற்றியஇடத்தைத் தவறுமலெரித்தழித்தலால். பொருமையின், பற்றலின் - இன் - ஐந்தனுருபு, ஏது. முழைஞ்சு=முழஞ்சு: மொழியிடையில் அகரத்துக்கு ஐகாரம் போலி; "அ ஐ முத லிடை யொக்கும் ச ஞ ய முன்" என்றார் நன்னூலார். (௩௭)

எப்புறத்தினும்புகுந்துதீச்சூழ்தலினேகுதற்கிடமின்றித்
தப்புதற்கருத்தழிந்துபேரிரலையோடுழையினந்தடுமாற
மெய்ப்புறத்துவெண்புள்ளிசெம்புள்ளியாய்விடும்படிவிரைந்தோடி
யப்புறத்துவீழ்பொறிகளவ்வவற்றினையலங்கரித்தனவன்றே.

(இ-ள்.) எ புறத்தினும் புகுந்து தீ சூழ்தலின் - எல்லாப்பக்கங்களிலும் புகுந்து அக்கினி சூழ்ந்துகொண்டதனால், ஏகுதற்கு இடம் இன்றி - தப்பியோடிப்போதற்கு வழியில்லாமல், தப்புதல் கருத்து அழிந்து - தப்பியுய்யவேண்டுமென்ற எண்ணம் அழிந்து, பேர் இரலையோடு உழை இனம் தடுமாற - பெரிய ஆண்மான்களுடனே பெண்மான்கூட்டங்களும் நிலைகலங்க, விரைந்து ஓடி அ புறத்து வீழ் பொறிகள் - வேகத்தோடு சென்று அந்த மான்களின் உடம்பின்மேல் விழுகிற தீப்பொறிகளானவை,—மெய் புறத்து வெள் புள்ளி செம் புள்ளி ஆய்விடும்படி அவ் அவற்றினை அலங்கரித்தன - அவற்றினுடம்பின்மேல் (இயல்பாயுள்ள) வெண்ணிறப்புள்ளிகள் செந்நிறப்புள்ளிகளாய் மாறிவிடும்படி அந்தஆண்மான்களையும் பெண்மான்களையும் அலங்காரஞ்செய்தன; (எ-று.)—அன்று, ஏ - ஈற்றசை; அப்பொழுதுஎனினுமாம்.

செந்நிறமானஅனற்பொறிகளால் வெண்ணிறமான மானினுடற்பொறிகள் அந்நிறம்பெற்றன; இது, பிறிதின்குணம்பெறலணி. இரலை யென்பது, மானின் ஆண்பாற்பெயர். 'இரலை' யெனவந்ததனால், 'உழை' யென்பது அதன் பெண்பாலின்மேல் நின்றது. இனி, இரலை உழை யென்பவற்றை

மானின்சாதிபேதமெனக் கொள்ளலும் ஒன்று. ஆய்விடும், விடு - தேற்றமுணர்த்தும். (௫௮)

**காழுடைப்புறக்கழைகளின்றுளைதொறுங்கால்பரந்திசைக்கின்ற**
**வேழிசைக்குளமுருகிமெய்புளகெழவிரைகொளுமசுணங்க**
**டாழழற்சுடர்சுடச்சுடவெடித்தெழுசடுலவோசையின்மாய்ந்த**
**வூழியிற்புயலுருமினன்மடிந்திடுமுரகர்தங்குலம்போன்ற.**

(இ - ள்.) காழ் உடை புறம் - வயிரமுள்ள புறத்தையுடைய, கழைகளின் - மூங்கில்களின், துளைதொறும் - துவாரங்களிலெல்லாம், கால் பரந்து - காற்றுப் பரவுதலால், இசைக்கின்ற - ஒலித்தெழுகிற, ஏழ் இசைக்கு - ஏழுவகைச் சுரங்களையுங் கேட்டு அவற்றிற்கு, உளம் உருகி - மனம் கரைந்து, (அவ்வானந்தத்தால்), மெய் புளகு எழ - உடம்பில் மயிர்ச்சிலிர்ப்பு உண்டாக, இரை கொளும் - உணவை யுட்கொள்ளும் இயல்பையுடைய, அசுணங்கள் - அசுணமென்னும் பறவைகளானவை, தாழ் அழல் சுடர் சுட சுட வெடித்து எழு சடுலம் ஓசையின் மாய்ந்த - மிகுகிற அக்கினிச்சுவாலைகள் மேன்மேற்சுடுதலால் (அம்மூங்கில்கள்) வெடித்ததனால் ஒலித்தெழுகிற பயங்கரமான ஓசையினாலேயே யிறந்தன; (அங்ஙனம் ஒலியின்கடுமை பற்றியே யிறந்த அவை), ஊழியில் புயல் உருமினால் மடிந்திடும் உரகர்தம் குலம் போன்ற - கற்பாந்தகாலத்தில் (வருகிற) மேகங்களின் இடியோசையினால் இறந்திடுகிற நாகசாதியாரின் கூட்டங்களை யொத்தன; (எ - று.)

குழலொலி யாழொலி முதலிய இனிய இசையொலிகளைக் கேட்டவளவில் மகிழ்ந்து களித்தலும், பறையொலி போன்ற கடுமையான ஒலிகளைக் கேட்டவளவிலே பொறாமல் வருந்தியிறத்தலும், அசுணமென்னும் பறவைச்சாதியின் இயல்பு. "யாழ், நிறையடுத்த அசுணநன்மாச்செவிப், பறையடுத்தது போலும்" என்று கம்பரும், "இன்னளிக்குரல் கேட்ட அசுணமா" என்று சிந்தாமணியாரும் கூறுதல் காண்க. இது, இசையறிவிலங்கெனப்படும். காண்டவவனத்திலுள்ள மூங்கிற்காட்டில் உள் துளையுள்ள மூங்கில்களின் மேற் காற்றடிக்கும்போது அக்காற்று அத்துளைகளிற் பரவுதலால் இயல்பாக வுண்டாகிற ஒலி இன்னிசையாயமைய அதனையறிந்து அசுணப்பறவைகள் அம்மூங்கில்களினருகில் வந்துகூடி அவ்வொலியைக்கேட்டு ஆனந்தங்கொண்டிருந்தன; அச்சமயத்தில் அம்மூங்கில்களில் தீப்பற்றியெரித்தலால் அவை வெடிக்கையிற் படபடவென்று உண்டான கடிய ஓசையைக் கேட்டமாத்திரத்திலே அதனாலேயே அப்பறவைகள் இறந்தன: தம்மேல் தீப்பற்றியெரிக்குமளவும் உயிர்வாழ்ந்து பின்பு தீயெரித்தலா லிறந்தனவல்ல; இங்ஙனம் அவை, வேறோரூறும் படாதிருக்கையிலேயே இறந்துபடுதற்கு, கற்பாந்தகாலத்திற் பெருமழை பொழிந்து உலகங்களை யழித்தற்கு வானத்திலெழுகிற மேகங்களின் இடியோசையைக் கேட்டமாத்திரத்திலே கீழுலகில் இருந்தபடியே யிறந்தொழிகிற நாகசாதியாரை உவமைகூறினார். அங்ஙனமழிதல் சர்ப்பசாதியினியல்பாதலை "விரிகிற நாகம் விடருளதேனும், உருமின் கடுஞ்சினஞ் சேணின்று மூட்கும்" என்ற நாலடியாரினாலும் அறிக. காற்றடித்தலா லொலிக்கிற மூங்கில்கள், வடமொழியில் 'கீசகம்' எனப்படும்.

உள்வைரமில்லாமல் மேல்வைர மாத்திரமே யுடைய மூங்கில் முதலிய சில மரச்சாதிகள், புறக்காழனவென்றும் புன்மரமென்றும் பெண்மரமென்றுங் கூறப்படுதலால், 'காழுடைப் புறக் கழைகள்' என்றார்; உள் வயிரமுள்ள மரங்கள், அகக்காழனவென்றும் வன்மரமென்றும் ஆண்மரமென்றுங் கூறப்படும். துளையெனினும், தொளையெனினும் ஒக்கும். பரந்து, வெடித்து என்னும் எச்சங்கள், காரணப்பொருளன. ஏழ் இசை - குரல்,

துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனப்படும். வடநூலார் ஷட்ஜம, ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பர். ஸரிகமபதநி என்பன, ஸப்தஸ்வரத்துக்கு முறையே உரிய எழுத்துக்களாம். புளகம், சபலம்-வடசொற்கள். தீப்பற்றி யெரிதலாலுண்டாகிற ஓசை, சபலவோசை யெனப்படும்; 'சபலவாரவம்' என்றும், 'அனலன் சபலவல்லொலி' என்றும் மேல் வருவன காண்க. சபலம் - ஒருவழிப் படாதது; சடசடவென்று ஒலிப்பதுமாம். ஏழிசைக்கு உளமுருகி இரை கொளும் என்பதற்கு-அவ்வின்னிசைக்கு மனமுருகி அவ்விசையையே உணவாகக்கொண்டு உயிர்வாழ்கிற எனினும் அமையும். இரை - விலங்கினுணவு. 'இறைகொளும்' என்ற பாடத்துக்கு-(அவ்விசைகேட்டதனாலான ஆனந்தத் தாற்பரவசப்பட்டு அங்கு நின்று புடைபெயராது) தங்குதலைக் கொள்ளு மென்று பொருள் காண்க; "சோர்ந்தன மாவும் புள்ளும்", "வான்கட் பறவை மெய்ம்மறந்து சோர" என்பன சிந்தாமணி: இறை - இறுத்தல், தங்குதல்; ஐவிகுதிபெற்ற தொழிற்பெயர். 'வெடித்து' என்ற வினைக்குக் கருத்தா, கழைகள். மாய்ந்த, போன்ற - முற்று. உருமினால், இன் - சாரியை. (ருசு)

அனையபோதிலவ்விபினசாலங்களினார்தருக்களினீண்ட
சினைகடோறும்வாழ்சிகாவலகலாபமேற்செறிதருதீச்சோதி
பனையினீளுடற்பணிகளையலகினாற்பற்றலிற்படர்பந்திப்
புனையுமாமணிநிழல்பரந்தெழுந்தெனப்பொலிந்திலங்கினமாதோ.

(இ - ள்.) அனைய போதில் - (அம்மகாவனத்தைத்) தீப்பற்றி யெரிக்கிற அப்பொழுதில்,—அ விபின சாலங்களின் - அந்தக் காடுகளின் கூட்டங்களில், ஆர் - பொருந்திய, தருக்களின் - மரங்களினுடைய, நீண்ட சினைகள் தோறும் - நீண்ட கிளைகளி லெல்லாம், வாழ் - தங்குகிற, சிகாவலம் - மயில்களின், கலாபம் மேல் - தோகையில், செறிதரு - நன்றாகப் பற்றுகிற, தீ சோதி - அக்கினிச்சுவாலைகளானவை,—பனையின் நீள் உடல் பணிகளை - பனைமரம்போன்ற நீண்ட உடம்பையுடைய பாம்புகளை, அலகினால் பற்றலின்-(அம்மயில்கள்)தம்வாயலகினாற் கௌவுதலினால், புனையும் மா மணி பந்தி படர் நிழல் பரந்து எழுந்து என - அழகிய சிறந்த (அந்நாகங்களினுச்சியிலுள்ள)மாணிக்கத்தினது ஒழுங்காகப்பரவுந்தன்மையுள்ள ஒளி(அம்மயில்களின்தோகைமேற்) பரவிவிளங்கினாற்போல, பொலிந்து இலங்கின - மிகுதியாய் விளங்கின; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசைகள்.

மயில்களால் அலகிற் கௌவப்பட்ட நாகங்களினுடைய மாணிக்கத்தின் சிவந்தஒளி அம்மயில்களின் தோகைமேற் பாய்ந்துவிளங்குதலை, மயிலின் தோகையிற் பற்றிய சிவந்த அக்கினிச்சுவாலையின் விளக்கத்துக்கு உவமை கூறினார். விபிநஜாலம், தரு, சிகாவல கலாபம், பணீ - வடசொற்கள். பந்தி-பங்க்தி என்ற வடசொல்லின் சிதைவு. சிகாவல மென்பதற்கு - சிகையையுடைய தென்று பொருள்; சிகா-உச்சிக்கொண்டை: வலம் என்பது, வடமொழிவிகுதியா லமைந்தது. பணம்-படம்: அதனையுடையது, பணி. பொலிந்து இலங்கு - ஒருபொருட்பன்மொழி. ஆர்தரு - வினைத்தொகை. (சo)

ஆசுகன்றனோடடவியைவளைத்தனனாசுசுக்கணிமேன்மேல்
வீசுகின்றனபுலிங்கசாலமும்புகல்வேறெமக்கிலதென்று
பாசிளங்கிளிபூவைகள்வெருவிமெய்ப்பதைத்துளந்தடுமாறிப்
பேசுகின்றசொற்கேட்டனூடுங்கினபிறபறவைகளெல்லாம்.

(இ - ள்.) 'ஆசுசுக்கணி - அக்கினிதேவன், ஆசுகன்தனோடு - (தனது நண்பனாகிய) வாயுதேவனுடனே, அடவியை வளைத்தனன் - இக்காட்டை எப்புறத்தும் வளைத்துக்கொண்டான்; புலிங்க சாலமும் -அனற்பொறிகளின்

கூட்டமும், மேல் மேல் வீசுகின்றன - மேலும்மேலும் வீசுகின்றன; எமக்கு வேறு புகல் இலது - நமக்கு வேறு புகலிட மில்லை,' என்று—, பாசு இளங் கிளி பூவைகள்-பசுநிறமுள்ள இளமையான கிளிகளும் நாகணவாய்ப்பறவைகளும், வெருவி மெய் பதைத்து உளம் தடுமாறி பேசுகின்ற - அஞ்சி உடல் நடுங்கி மனம்நிலைகலங்கிப் பேசுகிற, சொல் சொல்லை, கேட்டலும்-கேட்டவளவிலே, பிற பறவைகள் எல்லாம் நடுங்கின - மற்றைப்பக்ஷிகள்யாவும் நடுக்கமுற்றன; (எ - று.)

பறவைகளிற் கிளிக்கும் பூவைக்குமே பேசுந்திறமிருத்தலும் மற்றவைகட்கு அத்திறமில்லாமையுந் தோன்ற, இங்ஙனங் கூறினார். மற்றைப்பறவைகள் அவற்றின்பேச்சொலியைச் செவியுற்றவளவே யன்றி அப்பேச்சின் பொருளையுணருந்திற மிலவாயினும், அவை உடல்பதைத்துப் பேசும் குறிப்பினால் அதன்கருத்தையுணர்ந்தன வென்க. 'ஆசுகன்தனோடு அடவியையவனைத் தனன் ஆசுசுக்கணி' யென்றது, நெருப்பு மேன்மேற்பற்றிவளர்தற்கு அனுகூலமாகக் காற்று வீசுகிற தன்மையை எடுத்துக்கூறியது. இங்ஙனம் நம்மையெரித்தழிக்கத் தொடங்கிய அக்கினிக்கு நண்பனான வாயு நாம் இவ்விடத்தைவிட்டு விரைந்துபறந்தோடுதற்கு உதவான்போலு மென்பது, குறிப்பு. ஆசுகன் என்ற வடமொழிப்பெயர் - விரைவாகச்செல்பவ னென்றும்; ஆசுசுக்ஷணி என்ற வடமொழிப்பெயர் - நன்றாகஎரிக்க விரும்புபவனென்றும், விரைவாகஎரிக்கவிரும்புபவ னென்றும் உறுப்புப்பொருள்படும். இப்பெயர்களால் இங்குக்கூறினது, இவ்வகையியல்புள்ள இவ்விருவர்க்கும் நாம் தப்பமுடியாதென்று தெரிவித்தபடியாம். ஸ்புலிங்கஜாலம் - வடமொழித்தொடர். உம் - இறந்ததுதழுவியஎச்சம். புகல் - தப்பிச்சென்று சேர்ந்துஉய்யுமிடம்; அல்விகுதிபெற்ற தொழிலாகுபெயர். 'எமக்கு' என்றது, முன்னிலையையும் படர்க்கையையும் உளப்படுத்திய தன்மைப்பன்மை. பசுமை யென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு 'பாசு' என நின்றது. கிளிபூவைகள் - பன்மைவிகுதிபெற்ற அஃறிணையும்மைத்தொகை. மெய் - மங்கலவழக்கு. பறப்பது, பறவை; ஐ - கருத்தாப்பொருள்விகுதி. (௪௧)

நெஞ்சிலீரமுநீதியுங்குடிபுகாநிருதர்சென்னியில்வன்னி [ல்
குஞ்சிநீடுறவளர்வபோலசைந்துசெங்கொழுந்துவிட்டனமேன்மே
வஞ்சிநேரிடையரக்கியர்நகமுழுமதிசிவப்புறத்தீட்டும்
பஞ்சிபோன்றனவவரவர்பதயுகம்பற்றியசிகைவன்னி.

(இ - ள்.) நெஞ்சில் ஈரமும் நீதியும் குடிபுகா - மனத்தில் அன்பும் நீதியும் வந்து தங்குதலில்லாத, நிருதர்-(அவ்வனத்திலுள்ள கொடிய) அரக்கர்களுடைய, சென்னியில் - தலையிற்பற்றிய, வன்னி - அக்கினிச்சுவாலைகள்,— நீடுற வளர்வ குஞ்சி போல் - நீண்டுவளர்வனவான (அவர்களுடைய) செம்பட்டமயிர்கள் போல, அசைந்து மேல் மேல் செம் கொழுந்து விட்டன - அசைந்து மேலும்மேலும் செந்நிறமானஒளியை வெளிவீசி யெழுந்தன; அவர் அவர் பத யுகம் பற்றிய - அந்தந்த அரக்கியர்களுடைய கால்களிரண்டிலும் பற்றிய, சிகை வன்னி [வன்னிச் சிகை]-அக்கினிச்சுவாலைகள்,—வஞ்சி நேர் இடை அரக்கியர் நகம் முழு மதி சிவப்பு உற தீட்டும் பஞ்சி போன்றன-வஞ்சிக்கொடிபோன்ற மெல்லிய இடையையுடைய அவ்விராக்கதஸ்திரீகள் (தங்கள்) நகங்களாகிற பூர்ணசந்திரர்கள் செந்நிறம்பொருந்தும்படி (அவற்றிற்கு) ஊட்டுகிற செம்பஞ்சுக்குழம்புகளை யொத்தன; (எ - று.)

அவ்வனத்திலுள்ள இரக்கமற்றவர்களும் நீதியற்றவர்களுமான அரக்கர்களுடைய தலையிற் பற்றிய அக்கினிச்சுவாலைகட்கு - அவர்கள்முடியில் இயல்பாகவுள்ள செம்பட்டமயிர்களையும், அவ்விராக்கதமாதர்களுடைய கால்நுனி

களிற் பற்றிய அக்கினிச்சுவாலைகட்கு அவர்கள் தங்கள் வெண்ணிறமான நகம் செந்நிறமடைந்து விளங்கும்படி அலங்காரமாகக் காலிலூட்டுஞ் செம் பஞ்சுக் குழம்புகளையும் உவமைகூறினார். நிறம்பற்றிய உவமை. நக முழு மதி - சந்திரமண்டலம்போன்ற நகங்க ளென்று முன்பின்னாகத்தொக்க உவமத்தொகையாகவுங் கொள்ளலாம். நக முழுமதி சிவப்புறத் தீட்டும் பஞ்சு—"பஞ்சி வான்மதியை யூட்டிய வனைய படருகிர் பங்கயச் செங்கால்" என்றார் கம்பரும். நேர்தல் - மெலிதல்; ஒத்தலுமாம். குஞ்சி - ஆண்மயிர். முன்னே 'அரக்கியர்' எனவந்ததனால், பின்னே 'அவரவர்' என்றது - அவ் வரக்கியரையாம். இனி, அரக்கியர் பதயுகம்பற்றிய வன்னி அவரவர்நகமதி சிவப்புறத்தீட்டும் பஞ்சுபோன்றன வென்று கொண்டுகூட்டிப் பொருள் கொள்ளினுமாம். நிருதர் - நைருத ரென்ற வடசொல்லின் சிதைவு; நிரு ருதியென்னும் திக்குப்பாலகனது மரபில் தோன்றியவ ரென்று பொருள். வளர்வ - பெயர். நகம், பதயுகம், சிகா - வடசொற்கள். இச்செய்யுளில், அரக் கர் முடியையும் அரக்கியர்அடியையும் ஒருங்குபுணர்த்தது, ஒரு சமத்காரம்.

முப்புரங்களைமுக்கணன்முனிந்தநாண்மூவரம்முழுத்தீயிற்
றப்பினாருளர்காண்டவவடவிவாழ்தானவரியாருய்ந்தார்
பைப்புறத்தணிமணியொளிபரந்தெனப்பஃறலைகளிற்பற்றி
வெப்புறுத்தலினுரகருந்தங்கள்வாய்விடங்கள்கொன்றெனவீழ்ந்தார்.

(இ - ள்.) முப் புரங்களை - திரிபுரங்களை, முக் கணன் - சிவபிரான், முனிந்த நாள் - கோபித்துஎரித்த காலத்தில், அ முழு தீயில் தப்பினார்-அந் தப் பெருந்தீயினின்று தப்பிப்பிழைத்தவர், மூவர் உளர்-மூன்று அசுரராயி னும் உண்டு; காண்டவம் அடவி வாழ் தானவர் யார் உய்ந்தார் - இக்காண் டவவனத்தை யெரித்தகாலத்தில் இதில் வாழ்ந்த அசுரரில் தப்பிப்பிழைத்த வர் எவர்? [எவருமில்லை: எல்லாவசுரரும் இறந்துபட்டன ரென்றபடி]; உர கரும்-நாகர்களும்,—பை புறத்து அணி மணி ஒளி பரந்து என-(தமது)படங் களின்மே லுள்ள அழகிய மாணிக்கத்தின் செந்நிறமானஒளி பரவினாற் போல, பல் தலைகளில் பற்றி வெப்பு உறுத்தலின் - (தங்கள்) தலைகள்பல வற்றிலும் நெருப்புப்பற்றிச் சுடுவதனால், தங்கள் வாய் விடங்கள் கொன்று என வீழ்ந்தார் - தங்கள்வாயிலுள்ள விஷங்களே (தங்களைக்) கொன்றாற் போல இறந்து கீழ்விழுந்தார்கள்; (எ - று.)

நிச்சேஷமாக அசுரநாசம் நிகழ்ந்த தன்மையில் திரிபுரதகனத்தினுங் காண்டவதகனத்துக்கு உள்ள மேன்மையை முன்னிரண்டடிகளிலெடுத்துக் காட்டினர்; **வேற்றுமையணி.** திரிபுரதகனவரலாற்றை, திருவேங்கடமாலை எஅ-ஆம்செய்யுளிற் காண்க. திரிபுரவாசிகளான அசுரர்களில் மற்றையோர் போலப் புத்தனதுபோதனையாற் சிவத்துவேஷிகளாகாமற் சிவபக்திமுதிர்ந்த நிலையிலேயே நின்ற சுதருமன், சுசீலன், சுபுத்தி என்ற மூவரும், சிவபிரானது சிரிப்பினின்று தோன்றிய நெருப்புக்கு இலக்காகாமல் தப்பிப்பிழைக்க, அம் மூவர்க்கும் அவர்கள் வேண்டுகோளின்படி சிவபெருமான் தனது திருவா யில் காக்கும் பணிவிடையை யருளின னென்பது, இங்குக் குறித்த கதை. முக் கணன் - சூரியன் வலக்கண்ணும், சந்திரன் இடக்கண்ணும், அக்கினி நெற்றிக்கண்ணு மென முச்சுடர்களையும் மூன்று கண்களாக வுடைய இறை வன். முனிதல் - கோபித்தல்; அதன் காரியமான எரித்தலின்மேல் நின் றது: காரியம் காரணமாகக் கூறப்பட்ட உபசாரவழக்கு. தானவர்+யார்= தானவரியார்: தன் ஒழி மெய்ம்முன் யகரம்வர இகரந்தோன்றிற்று. பல்+ தலை=பஃறலை; "குறில்வழி லளத் தவ் வணையி னாய்த, மாகவும் பெறூஉ

நல்வழியானே" என்பது விதி; இங்கே ஆய்தம், குறுக்கம். பலவாகிய தலையெனப் பண்புத்தொகை. புரம், விஷம் - வடசொற்கள். (௨௩)

[காண்டவவனத்தில் தீப்பற்றிய செய்தியை இந்திரன் உணர்தல்.]

புகைபடப்படக் கரிந்தன பொறியினாற் பொறியெழுந் தனவானின்
மிகைபடைத்தவச் சுரபதி யாயிரம் விழிகளுங் கணப்போதிற்
றகைவறக்கழை முதலிய தருக்களின் சடுலவா ரவமிஞ்சித்
திகையனைத்தினும் பரத்தலிற் செவிகளுஞ் செவிடுபட் டனசேர.

(இ - ள்.) (இங்ஙனந் தீப்பற்றியவளவிலே), கணம் போதில் - ஒரு க்ஷணப்பொழுதிலே, வானில்-மேலுலகத்திலுள்ள, அ சுரபதி - அக்காண்டவவனத்தைக் காவல்செய்பவனான இந்திரனுடைய, மிகை படைத்த ஆயிரம் விழிகளும் - அதிகமாகவுள்ள ஆயிரங்கண்களும், புகை பட பட - (அவ்வக்கினியின்) புகை மேற்சென்று மிகுதியாகப் படுதலால, கரிந்தன - கருகின [பெருங்கோபங்கொண்டன]; பொறியினால் - (அவ்வக்கினியின்) பொறிகள் மேற்சென்று படிதலால், பொறி எழுந்தன - (கோபாக்கினியின்) பொறிகள் கிளம்பப்பெற்றன; கழை முதலிய தருக்களின் - மூங்கில் முதலிய மரங்களில் (நெருப்புப்பற்றி யெரிதலாலுண்டாகிய), சடுலம் ஆரவம் - கடுமையான ஒலி, மிஞ்சி-மிகுந்து, தகைவு அற - தடையில்லாமல, திகை அனைத்திலும் பரத்தலின்-திக்குக்களிலெல்லாம் பரவியதனால், செவிகளும் சேர செவிடுபட்டன - (அவ்விந்திரனுடைய) காதிரண்டும் ஒருசேரச் செவிடாயின.

அத்தீயின் புகையும் பொறிகளும் ஆரவாரமும் மேலெழுந்து இந்திரலோகமளவுஞ் செல்ல, அவற்றை இந்திரன் கண்ணினாலுங் காதினாலும் உணர்ந்தமாத்திரத்திலே, வருந்திக் கண்கள் தீப்பொறியெழப் பெருங்கோபம் கொண்டன னென்பதாம். பொறிமுதலியவற்றின் மிகுதியும் செயலுந் தோன்ற, கவி, சமத்காரமாக, 'புகைபடப்படக் கரிந்தன', 'பொறியினாற் பொறியெழுந்தன,' 'ஆரவம் மிஞ்சித் திகையனைத்தினும்பரத்தலிற் செவிகளுஞ் செவிடுபட்டன சேர' என்றார். கண்ணிரண்டேயன்றிக் காட்சிப்புலனுக்கு வேண்டாதனவான மற்றைக்கண்களெல்லாம் புகைபடுதலாலும் பொறிபடுதலாலும் வருந்துதற்கே வழியாதலால் அநாவசியமென்று அச்சமயத்திற் கருதப்படும்படியிருந்தனவென்பது தோன்ற 'மிகைபடைத்த ஆயிரம் விழிகள்' என்றார். இனி, 'மிகைபடைத்த' என்பதைச் சுரபதிக்கு அடைமொழியாக்கி, மேலுலகத்தில் மேன்மைபெற்ற அத் தேவராசனெனினும் அமையும். 'கணப்போதில்' என்பதை, கரிந்தன பொறியெழுந்தன பரத்தலின் செவிடுபட்டன என்ற நான்கிற்கும் கூட்டுக. ஸுரபதி, ஆரவம - வடசொற்கள். மிஞ்சி - விஞ்சியென்பதன்போலி. ஆயிரம் விழி - மகரவொற்று, குறுக்கம்.

வேறு.

[கிருஷ்ணார்ச்சுனர் காண்டவவனத்தையெரிப்பித்தலை இந்திரன்கண்ணுறல்.]

விரதமேல் கொண்டு செம்பொன்மால் வரையை விரிசுடர் சூழ்
வரு வதுபோ, லிரதமேல் கொண்ட வருசனுஞ் சுதனுமிமைப்பினிற்
பன்முறை தேர்ந்து, சாதமேல் கொண்டு சரிப்பதுந் தனது தாவகம்
பாவகன் புகுந்து, பாதமேல் கொண்டு நடிப்பதுங் கருதிப் பார்த்த
னன் பாகசா தனனே.

(இ - ள்.) விரி சுடர்-பரந்த கிரணங்களையுடைய சூரியன், விரதம் மேல் கொண்டு - தவறுதலியமத்தை மேற்கொண்டு, செம் பொன் மால் வரையை சூழ்வருவது போல் - மாற்றுயர்ந்த பொன்னுயமான பெரிய மகாமேருமலையைப் பிரதக்ஷிணஞ்செய்துவருவதுபோல, இரதம் மேல் கொண்ட அருசனு

ம்சுதனும்-தேரின்மேலேறிய தனது தம்பியான கிருஷ்ணனும் தனதுமகனான அருச்சுனனும், இமைப்பினில் - ஓர்இமைப்பொழுதினுள்ளே, பல் முறை - பலமுறை, தேர்ந்து - ஆராய்ந்து, சரதம் மேல்கொண்டு - (அக்கினிதேவனுக்குத் தாம் துணைசெய்வதாக உறுதிமொழிகூறிய) சத்தியத்தை மேற்கொண்டு, சரிப்பதும் - (அவ்வனத்தைச்) சூழ்ந்துசெல்லுதலையும்,—தனது தாவகம் - தன்னுடைய காட்டில, பாவகன் புகுந்து - அக்கினி பிரவேசித்து, பரதம் மேல் கொண்டு நடிப்பதும் - பரதசாஸ்திரவிதியைத் தவறாமற்கொண்டு கூத்தாடுவதையும்,—பாகசாதனன் கருதி பார்த்தனன் - இந்திரன் கருத்தோடுநோக்கினான்; (எ - று.)—ஏ - ஈற்றசை.

வானத்தையளாவி யுயர்ந்தெழுந்து விளங்குகிற மேருமலை - வானத்தையளாவப் பற்றியெரிகிற காண்டவவனத்துக்கும், அப்பேருமலையை ஆயிரங்கிரணனான சூரியன் தேர்மேற்கொண்டு இடைவிடாது சூழ்வருதல் - அவ்வனத்தை மிக்கவிளக்கமுடைய கிருஷ்ணார்ச்சுனர் தேரிலேறி இடைவிடாது சூழவருதற்கும் உவமை யெனக்காண்க. எப்புறத்திலேனும் எவரேனும் அவ்வக்கினிக்கு இடையூறுசெய்யாதிருத்தற்பொருட்டும், அவ்வனத்திலுள்ள பிராணிகள் தப்பியோடிவெளிச்செல்லாதபடி தவிர்த்தற்கு மாக இருவரும் இங்ஙனம் குறிக்கொண்டு சூழ்வருவாராயினர். (இதனை "முனிவன் வேள்வியை, மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள், கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்" என்றபடி விசுவாமித்திரமுனிவர் வேள்வியை இராமலக்ஷ்மணர் பாதுகாத்தாற்போலக் கொள்க.) விரதமாவது - இன்னவாறுசெய்வேனென்று தனதுஆற்றலுக்கு ஏற்ப வரைந்துகொள்வது. சூரியனுக்கு மேருவலம்வருதல் தவறாவொழுக்கமாதலபோல, இவர்கட்கு இவ்வெரிவலம்வருதல்தவறாவொழுக்கமாயிற்று. அருச்சுனன் போர்க்கோலங்கொண்டு தேரேறினதையே கீழ்க்கூறின ராயினும், கண்ணன் அங்ஙனந்தேரேறினதையும் உபலக்ஷணத்தாற் கொள்க. இங்ஙனந் தனியே கூறாமைகொண்டு, கீழ் உஎ-ம் கவியின் இரண்டாமடிக்கு - கண்ணபிரான் அருச்சுனனுக்குத் தேர்ப்பாகனாயமர்ந்து தேர்செலுத்த வென்று உரைப்பாருமுளர்; அது, முதனூலோடு பொருந்தாது: இருவரும் இரண்டுதேர்லேறி யுத்தசந்நத்தராயிருந்தனரென்றே வியாசபகவான் கூறியுள்ளார்; அன்றியும், கண்ணன் பார்த்தசாரதியாதல், வாசுதேவனைப்படைத்துணையழைத்தபின்னர் மகாபாரதயுத்தத்திலேயே நிகழ்வதென அறிக.

வ்ரதம், அநுஜன், ஸூதன், தாவகம், பரதம், பாகசாஸநன்-வடசொற்கள். அநுஜன் - பின் பிறந்தவன். முன்னொருகாலத்தில் இந்திரன் அசுரர்கள் நலிதலால் வருந்தித் திருமாலைச்சரணமடைந்து 'நீ எப்பொழுதும் என்னுலகத்திலெழுந்தருளியிருந்து என்பகைதவிர்த்து எம்மைப்பாதுகாத்தருளவேண்டும்'என்று வேண்ட, அதற்குஇணங்கிய ஸ்ரீமகாவிஷ்ணு, காசியபமுனிவனது மனைவியான அதிதிதேவியின் வயிற்றில் அவ்விந்திரனுக்குத் தம்பியாய் ஓர் அவதாரமெடுத்து உபேந்திரனெனப் பெயர்கொண்டு தேவலோகத்தில் அவ்விந்திரனருகில் நின்று அவனதுதுயர் தீர்க்கலாயினனென்பதை அறிக. பாக சாஸநன் - பாகனென்னும் அசுரனைக் கொன்றவன்; அவன், விருத்திராசுரனுடன் பிறந்தவன். பாவம், ரஸம், தாளம் இம்மூன்றையுமுடைமைபற்றி, இம்மூன்றுசொற்களின் முதலெழுத்துக் குறிப்பினால், பரதம் என்று நாட்டியத்திற்குப் பெயராயிற் றென்பர். 'பரதமேல்கொண்டு நடிப்பது' என்றது, எழுந்தெழுந்து கிளர்ந்தெரிதலை. விரி சுடர்-வினைத்தொகையன்மொழி யென்றாவது, அடையடுத்த வினையாகுபெய ரென்றாவது கொள்க. இமைப்பு - இமைப்பொழுதுக்குத் தொழிலாகுபெயர்; இதில், பு - தொழிற்பெயர்விகுதி. தாவ மெனினும், தாவகமெனினும் ஒக்கும்; ககரம் -

பகுதிப்பொருளில்வந்த வடமொழிப் பிரத்தியயம். தனதுதம்பியாலும் தனதுமகனாலுமே தனதுவனத்துக்குக் கேடுவிளைதலைக்குறித்து ஆலோசித்துப்பார்த்தன னென்பார், 'கருதிப்பார்த்தனன்' என்றார். சூழ்வருவது, சரிப்பது, நடிப்பது என்ற தொழிற்பெயர்களில், எதிர்கால வடைநிலை - காலமுணர்த்தாது தன்மையையுணர்த்திற்று. சரதம்மேல்கொண்டு என்பதற்கு - விளையாட்டைமேற்கொண்டு என்றலு மொன்று.

இதுமுதல் இச்சருக்கம்முடியுமளவும் முப்பத்திரண்டு கவிகள் - பெரும்பாலும் இரண்டு நான்கு ஏழாஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றைநான்கும் விளசசீர்களுமாகிய கழிநெடிலடிநான்குகொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள்.

[இந்திரன் பார்த்தபோழுது அங்குநிகழ்ந்த நிலை.]

முந்திவார்சிலைக்கைப்பற்குனன்றொடுத்தமுரணுடைமூரிவெங்கணைக
ளுந்திவாளுரகர்சூடிகாமகுடகோடிகளுடைத்தலினுடைந்து
சிந்திமீதெழுந்தமணிகளுமனலின்சிகைகளிற்றெறித்தெழுபொறியு
மிந்திராலயத்துக்கேற்றியதீபமென்னநின்றிலங்கினவெங்கும்.

(இ - ள்.) வார் சிலை கை பற்குனன்-நீண்ட வில்லை யேந்திய கையையுடைய அருச்சுனன், முந்தி தொடுத்த - விரைவாகச் செலுத்திய, முரண் உடை மூரி வெம் கணைகள் - வலிமையையுடைய பெரிய கொடிய அம்புகள், உந்தி - வலிமையோடுசென்று, வாள் உரகர் சூடிகா மகுட கோடிகள் - ஒளியையுடைய நாகர்களின் உச்சிக்கொண்டையையுடைய முடிகளின் நுனிகளை, உடைத்தலின் - உடைத்தலினால், உடைந்து சிந்தி மீது எழுந்த-உடைபட்டுச் சிதறி மேலேயெழுந்த, மணிகளும் - மாணிக்கங்களும், அனலின் சிகைகளின் தெறித்து எழு பொறியும - அக்கினியின் சுவாலைகளினின்று தெறித்து மேலெழுந்த பொறிகளும், இந்திர ஆலயத்துக்கு ஏற்றிய தீபம் என்ன எங்கும் நின்று இலங்கின - அவ்விந்திரனுடைய இருப்பிடத்துக்கு ஏற்றிய விளக்குக்கள்போல (வானத்தில்) எவ்விடங்களிலும் பிரகாசித்து நின்றன ; (எ - று.)

மகாநாகமான தக்ஷகன் அவ்வனத்திலுறைதல்பற்றி அவனிடத்து அன்பினால் அவ்வனத்துக்குக்காவல்பூண்ட இந்திரன் சிந்தையோடுபார்த்தபொழுது, தப்பிவெளியேயோடமுயல்கிற நாகர்களை அருச்சுனன் அம்புகொண்டு ஊறுபடுத்தி அத்தியினுள்ளேயேவிழுத்துதல் இலக்காயிற றென்பது, இப்பாட்டின் உட்கோள். அதனை, வருணனைவகையால் விரித்துக்கூறினர். தற்குறிப்பேற்ற உவமையணி. சூடிகாமகுடகோடி, இந்த்ராலயம் என்பன - வடமொழித்தொடர்கள். மகுடகோடிக ளென்பதற்கு - மிகப்பலவான மகுடங்க ளெனினும் அமையும். சிகைகளின், இன் - ஐந்தனுருபு, நீக்கம். (சகூ)

[இந்திரன் தக்ஷகனைக்குறித்துக் கவலைப்படுதல்.]

தானவர்புரங்கணீறெழமுனிந்ததபனியச்சிலைக்கைவெள்ளூர்தி
யானவனமதுபுரத்தையுஞ்சுடுவானழன்றனன்போலுமென்றஞ்சி
வானவர்நடுங்கவானவர்க்கரசாம்வலாரியுமனனுறத்தளர்ந்து
கானவருடனேதக்ககனென்னுங்கட்செவிகெடுமெனக்கரைந்தான்.

(இ - ள்.) 'தானவர் - அசுரர்களுடைய, புரங்கள் - (முப்) புரங்களும், நீறு எழ - சாம்பலாய்ச்சிதறும்படி, முனிந்த - கோபித்துஎரித்த, தபனியம் சிலை கை-பொன்மயமான மேருமலையாகிய வில்லை யேந்திய கையையுடைய, வெள் ஊர்தி ஆனவன் - வெண்ணிறமான (ரிஷப) வாகனத்தை யுடையவனான, சிவபிரான், நமது புரத்தையும் சுடுவான் அழன்றனன் போலும் - (தேவர்களான) நமது நகரத்தையும் எரிக்கும்படி கோபங்கொண்டனன்

போலும்', என்று - என்று எண்ணி, வானவர் அஞ்சி நடுங்க-மேலுலகத்தார் பயந்து (உள்ளமும் உடலும்) நடுக்கமடைய,—வானவர்க்கு அரசு ஆம் வலாரியும் - அத்தேவர்கட்கு அரசனான இந்திரனும், கானவருடனே தக்கன் என்னும் கட்செவி கெடும் என - 'அக்காட்டிலுள்ளாருடனே (அங்கு வசிப்பவனான) தக்ஷகனென்னும் பாம்பு அழிந்திடுமே!' என்று சிந்தித்து, மனன் உற தளர்ந்து கரைந்தான்-மனம் மிகத்தளர்ந்து உருகினான்; (எ-று.)

சிவபிரான் காலாக்கினி சொரூபியாதலால் அந்நெருப்பைச் சிவசொரூபமாகக் கருதினரென்றும், காண்டவமெரிக்கிறதீயை முன்பு முப்புரமெரித்த சிவபிரானது நகைத்தீப் போன்றதெனக் கருதினரென்றுங் கொள்க. இரட்டுறமொழித லென்னும் உத்தியால், சிலை யென்பதற்கு - மலையென்றும், வில்லென்றும் இருபொருள் ஒருங்குகொள்ளப்பட்டது. வெள் ஊர்தி-பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. சுடுவான் - 'வான்' விகுதிபெற்ற எதிர்காலவினையெச்சம்; அவ்விகுதியே காலங்காட்டும். போலும் என்பது, ஊகித்தற்பொருளில் வந்தது. தபநீயம், பலாரி-வடசொற்கள். தபநீய மென்பது - நெருப்பில்தபிக்கப்பட்டு விளங்குவதென்றும், பலாரி யென்பது-பலனென்னும் அசுரனுக்குப் பகைவனாய் அவனையழித்தவனென்றும் பொருள்படும். மனன் - இறுதிப்போலி. கட்செவி-கண்களையே காதுகளாகவுடையது; பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை: பாம்புக்கு, கண்ணென்னும் பொறியொன்றிலேயே அதன்புலனாகிய காட்சியோடு செவிப்புலனாகிய கேள்வியும் இருத்தலை யறிக. (௬௭)

[இந்திரன் தீயையவிக்கும்படி மேகங்களையேவித் தான் தேவசேனையுடன் போர்க்குப் புறப்படுதல்.]

பரந்தெழுபுகையாற்றத்தமவடிவம்பண்டையிற்பதின்மடங்காகச்
சுரந்திடும்புயல்களனைத்தையுநெடுநீர்சொரிந்தவித்திடுகெனச்சொல்லி
நிரந்தரமருகுவிடாதுதன்னிழல்போனின்றவானவரையுமேவிப்
புரந்தரன்றானுமீரிருமருப்புப்பொருப்பின்வெம்பிடர்மிசைபுகுந்தான்.

(இ - ள்.) புரந்தரன் - இந்திரன்,—பரந்து எழு புகையால் தத்தம வடிவம் பண்டையின் பதின்மடங்கு ஆக சுரந்திடும் புயல்கள் அனைத்தையும் - பரவியெழுகிற அவ்வனற்புகையினால் தங்கள்தங்களுடையஉருவம் முன்னையினும் பத்துமடங்குஅதிகமாக வளர மிகுதியாக நீர்சுரக்கப்பெற்ற மேகங்களெல்லாவற்றையும் நோக்கி, நெடு நீர் சொரிந்து அவித்திடுக என சொல்லி-'(நீங்கள்) மிக்க நீரைச் சொரிந்து (அக்கினியைத்) தணிப்பீர்களாக' என்று கட்டளைகூறி,—நிரந்தரம் அருகு விடாது தன் நிழல் போல் நின்ற வானவரையும் ஏவி - எப்பொழுதும் தன்பக்கத்தை விடாது தனது நிழல்போல் அடுத்துநிற்பவரான தேவர்களையும் (போர்க்குப்புறப்படும்படி) கட்டளையிட்டு,— தானும்—, ஈர் இரு மருப்பு பொருப்பின் வெம் பிடர் மிசை புகுந்தான் - நான்கு தந்தங்களையுடைய மலைபோன்றவடிவமுள்ள (ஐராவத) யானையினது விரும்பத்தக்க [அழகிய] பிடரியின்மேல் ஏறினான்; (எ - று.)

புரந்தரன், சொல்லி, ஏவி, புகுந்தான் என முடிக்க. வானவரையும், தானும் என்ற உம்மைகள் - ஒன்றையொன்றுநோக்கி முறையே எதிரதும், இறந்ததும் தழுவிய எச்சங்கள். அவித்திடுகென - தொகுத்தல். தாம்தாம் என்பதன் விகாரமாகிய தம்தம் என்பது, புணர்ந்து, 'தத்தம்' என வலித்தல் விகாரம்பெற்றது; அ - ஆறனுருபு: சாரியையுமாம். பண்டை - ஐயீற்றுடைக் குற்றுகரம்; பண்டு என்னும் பழமைகுறிக்கும் இடைச்சொல், இங்குப் பெயர்ச்சொற்றன்மைப்பட்டுப் பண்பாகுபெயராய், முன்னிருந்த நிலைமையைக் குறிக்கிறது; இன் - ஐந்தனுருபு, எல்லைப்பொருளது. பதின்மடங்கு

என்ற பண்புத்தொகை நிலைத்தொடரில், இன் - சாரியை. நிரந்தரம், புரந்தரன் - வடசொற்கள். நிரந்தரம் - இடையீடில்லாமல். புரந்தரன் - (பகைவர்களுடைய) பட்டணங்களை யழிப்பவன். பொருப்பு - உவமையாகுபெயர். யானைக்கு மலை யுவமை - அழித்தற்குஅரிய வலிய பெரிய வடிவிற்கும், மதவருவிசொரிதற்கு மென்க. "வெம்மை வேண்டல்" என்ற தொல்காப்பிய வுரியியற்சூத்திரத்தால், வெம்மை-விருப்பமெனப்பட்டது. அக்கினி மிகுதியாகப் புகையையெழுப்ப அப்புகைமிகுதியால் அவ்வக்கினிக்குப்பகையான மேகங்கள் பதின்மடங்குஉடல்பூரித்து மிக்கநீர் சொரிவனவாயின வென்றதில், தற்குறிப்பேற்றவணி யென்னும் விஷமாலங்காரந் தோன்றுதல் காண்க. நிழல் - நீங்காமைக்கு உவமை. இந்திரன் மேகவாகனனாதலால், மேகங்களை யேவலானான். பிடர் - கழுத்தின்மேற்புறம். சுரந்திடும், இடு - தேற்றமுணர்த்தும். அனைத்து என்பதில், அத்தனை யென்பதன் மரூஉவான அனை - பகுதி; எனை, ஏனை யென்பன போல, அனையென்பதும் தனியே ஓர் இடைச்சொல் லெனினுமாம்: து - பெயர்விகுதி. (௪௬)

[இந்திரன்கட்டளைப்படி யெழுந்துபரந்த மேகங்களில் மிகுதியாகத் தோன்றிய மின்னல்களின் வருணனை.]

ஏவகவிருத்தச்செவ்வியின்றனுவுக்கேற்றநாண்முறுக்கிவிட்டென்னச்
சேவகவிமையோரெண்டிசாமுகத்துஞ்செஞ்சுடர்வாள்விதிர்த்தென்ன
பாவகன்பகுவாய்நாவிதிர்த்தென்னப்பரந்தவப்பாவகற்குணவாந் [ப்
தாவகமுழுதும்வளைந்துகொண்டெழுந்தசலதரசஞ்சலசாலம்.

(இ - ள்.) அ பாவகற்கு உணவு ஆம் - அந்த அக்கினிதேவனுக்கு உணவாகிய, தாவகம் முழுதும் - காடு முழுவதையும், வளைந்துகொண்டு - சூழ்ந்துகொண்டு, எழுந்த - மேற்பரவிய, சலதரம் - மேகங்களில் (தோன்றிய), சஞ்சலம் - மின்னல்களின், சாலம் - கூட்டங்களானவை,— ஏ அகம் - அம்பைத் தன்னிடத்தே தொடுத்தற்குஉரிய, விருத்தம் - வட்டமாகிய [நன்குவளைந்த], செவ்வியின் தனுவுக்கு - அழகிய (இந்திர) வில்லுக்கு, ஏற்ற - இயைவதான, நாண் - நாணியை, முறுக்கி விட்டு என்ன - திரித்துவிட்டாற் போலவும்,— சேவகம் இமையோர் - வீரத்தன்மையையுடைய தேவர்கள், எண் திசாமுகத்தும் - எட்டுத்திக்குக்களிலும், செம் சுடர் வாள் விதிர்த்து என்ன - செந்நிறமான ஒளியையுடைய வாளாயுதங்களைச் சுழற்றினாற் போலவும்,—பாவகன்- அக்கினி, பகு வாய் நா - (தனது) திறந்த வாயி லுள்ள நாக்குக்களை, விதிர்த்து என்ன - வெளிச்செலுத்தி யசைத்தாற் போலவும், பரந்த - பரவின.

செந்நிறமாய் அசைந்துவிளங்குதல் பற்றிய உவமை. அக்கினியினது சுவாலைகளேழும் அவனுக்கு நாவெனப்படுதலால், இங்கு 'நா' என்பதற்கு-பால் பகாஅஃறிணையாக, நாக்குக்களெனப் பன்மைப்பொருள்கொள்ளப்பட்டது; 'எழுநா' என்று அவனுக்கு ஒருபெயர். ஏ + அகம்=ஏவகம்: ஓரெழுத்தொருமொழியாகிய பெயர்ச்சொல் ஏகாரத்தின்முன் உயிர்வர வகரவுடம்படுமெய் தோன்றிற்று; [நன் - உயிர் - கஉ.] வ்ருத்தம், தநுஸ், திசாமுகம், ஜலதர சஞ்சலா ஜாலம் - வடசொற்கள். திசாமுகம் - திக்குக்களினிடம். ஜலதரம்- நீரைத்தரிப்பது. சஞ்சலம் - அசையுமியல்புள்ளது; இப்பெயரின் பொருளுக்கு ஏற்பவே, இங்கு உவமைகள் புணர்க்கப்பட்டன. செவ்வி - இகரவீற்றுப்பண்புப்பெயர்; இன்-சாரியை. சேவக மென்பது-வீரமென்னும்பொருளதாதலை "சார்ங்க விற் சேவகன்" என்றவிடத்துங் காண்க. இனி, காவல் செய்தலென்று பொருள்கொண்டு, சேவகவிமையோர் - அஷ்டதிக்பாலகர் எனினுமாம். இமையோர் - கண்ணிமையாதவர்; அல்லது, மூடாதஇமையையுடையவர். பகு வாய்-வினைத்தொகை; பக்க, பகுகிற, பகும் வாய் என விரி

யும். பரந்த - முற்று. முழுது என்பது - எஞ்சாமைப்பொருளதோர் உரிச்சொல். உம்மை - முற்றும்மை. (சக)

[அம்மேகங்களின் இடிமுழக்கத்தின் வருணனை.]

**ஏறியகளிறுபிளிறுநீடொலியுமெடுத்தவிற்றெறித்தநாணொலியுஞ்**
**சூறியவிமையோர்பெருநகையொலியுந்துந்துபிக்குழாமதிரொலியுங்**
**கூறியவனலன்சடுலவல்லொலியுங்குறைபடத்திசைதொறுமிகுந்த**
**வூறியபுவனபவனவேகந்தொடுருமுடைமுகிலின்வாயொலியே.**

(இ - ள்.) ஊறிய புவனம் பவனம் வேகத்தொடு - மிகுதியாக அமைந்த நீரோடும் காற்றின்விசையோடும், உரும் உடை - இடியையு முடைய, முகிலின் வாய் - மேகங்களினிடத்தில் (உண்டாகிய), ஒலி - முழக்கங்களானவை,—ஏறிய களிறு பிளிறு நீடு ஒலியும் - (இந்திரன்) ஏறிவந்த (ஐராவத)யானை கர்ச்சிக்கின்ற பேரொலியும், எடுத்த வில் நாண் தெறித்த ஒலியும்-(அவன்) கையிலேந்திய வில்லின் நாணியை (விரலால்) தெறித்தலினாலாகிய ஓசையும், சூறிய இமையோர் பெரு நகை ஒலியும் - சூழ்ந்த தேவர்களுடைய பெருஞ்சிரிப்பி னொலியும், துந்துபி குழாம் அதிர் ஒலியும்-(தேவர்கள் முழங்குகிற) துந்துபி யென்னும் வாத்தியங்களின்கூட்டம் முழங்குகிற முழக்கமும், கூறிய அனலன் சடுலம் வல் ஒலியும் - கீழ்க்கூறப்பட்ட அக்கினியினுடைய வலியகடுமையான ஓசையும், குறைபட-குறையும்படி, திசை தொறும் மிகுந்த - திக்குக்கள்தோறும் மிகுந்தன; (எ - று.)—ஏ - ஈற்றசை.

எல்லாவோசைகளையும் அடக்கி மேககோஷங்கள் மிக்குத்தோன்றின என்பதாம். சூறுதல் - சுழலுதலாதலை, சுழல்காற்று 'சூறை' எனப்படுமிடத்துங் காண்க. பெருநகை - அட்டகாசம்; இங்குக்கூறிய சிரிப்பு, வீரத்துஎழுந்த வெகுளிநகை. துந்துபி, புவநபவநவேகம் - வடசொற்கள். துந்துபியென்ற பெயர் - துந்துஎன்னும் ஒலியால் நிறைந்து விளங்குவது என்று பொருள்படும். சடுலவோசை, கீழ் ௩௯ - ஆம் கவியினும், சச - ஆம் கவியினுஞ் சொல்லப்பட்டதனால், அதற்கு, 'கூறிய' என்ற அடைமொழி கொடுத்தார். வாயொலி யென்பதில், வாயினின்றெழுகிற ஒலி யென்னும் பொருளுந் தோன்றும். மிகுந்த - முற்று. இச்செய்யுளில், 'ஒலி' என்ற ஒருசொல் ஒரு பொருளிலேயே பலமுறைவந்தது, **சொற்பொருட்பின்வருநிலையணி.** (௫௰)

[அப்பொழுது அக்கினிதேவன்கொண்ட செருக்கு.]

**தூமமுமெமதுபவனனுமெமதுதோழனத்தோயமுமெமதே** **[ன்**
**யாமுமிங்கிவற்றோடொன்றுதலொழிதுமீரிருபொருள்களும்பிறிந்தா**
**மாமுகிலெனும்பேரெங்குளதடர்த்துவாசவனென்செயுமெம்மை**
**யாமுறையறிதுமென்றுகொண்டுறவுமகங்கரித்தனன்வெகுண்டழலோன்.**

(இ - ள்.) அழலோன் - (மேகங்கள் தன்னை யவிக்கவந்ததைக் கண்ட) அக்கினிதேவனானவன்,—'தூமமும் எமது - புகையும் எம்முடையது: பவனனும் எமது தோழன்-வாயுவும் எம்முடைய நண்பன்: அ தோயமும் எமதே-அந்த நீரும் எம்மிடத்தினின்று தோன்றியதே: யாமும் இங்கு இவற்றோடு ஒன்றுதல் ஒழிதும் - நாமும் இப்பொழுது இந்தமூன்று பொருள்களுடனே சேர்தலை நீங்குவோம்: ஈர் இரு பொருள்களும் பிறிந்தால் - இந்த நான்கு பொருள்களும் (தம்மிற் கலவாமற்) பிரிந்துவிட்டால், மா முகில் எனும் பேர் எங்கு உளது - பெரிய மேகமென்னும் பெயர் எவ்விடத்திலுள்ளது? [எங்குமில்லை யென்றபடி]; (அதுஇல்லையாகவே), வாசவன் அடர்த்து எம்மை என் செயும்-இந்திரன் பொருது எம்மை என்செய்ய மாட்டுவன்? ஆம் முறை அறிதும்-(இனி) ஆகும்வகையை அறிவோம்', என்று கொண்டு - என்று எண்ணி,

வெகுண்டு அறவும் அகங்கரித்தனன்-கோபித்து மிகவும் செருக்குப்பாராட்டினான்; (எ-று.)

புகை, நெருப்பு, நீர், காற்று என்னும் நான்கின் கலப்பினா லாகியது மேக மாதலால், அக்கினி இங்ஙனஞ் செருக்கினான். ("தூம ஜ்யோதிஸ் ஸலில மருதாம் ஸந்நிபாதः க்வ மேகः" என்றார் காளிதாஸரும் மேகஸந்தேசத்தில்.) 'சூரியன் தன் உக்கிரமான கிரணங்களினாலே லோகத்திலிருந்து தண்ணீரை ஆகர்ஷித்துச் சந்திரனிடத்திலே பெய்ய, அந்தச்சந்திரனும் வாயுநாடிமயங்களான வழிகளினாலே புகையும் நெருப்பும் காற்றுமான வடிவுள்ள மேகங்களிலே விட, அந்த மேகங்களினின்றும் சலமானது உலகத்திலே விழுகின்றது; அந்த மேகங்களினின்றும் தண்ணீர் நழுவிவிழாமையாலே, அம்மேகங்களுக்கு, அப்பிரங்களென்று பெயர் வந்தது. ஆனாலும், காற்றினால் அம்மேகங்கள் அலைக்கப்பட, காலத்தினாலுண்டான பரிபாகத்தினால் அந்தத்தண்ணீர் நிர்மலமாகி விழுகின்றது' என்பது புராணம். சூரியனது உஷ்ணகிரணத்தா விழுக்கப்பட்ட நீர் நுண்புகையாயெழுந்து வாயுவோடுகலந்து முகில்வடிவாகிற தென்பர். அக்கினியிலிருந்து ஜலம்உண்டாவதால், 'அத்தோயமும் எமதே' என்றான்; வேதமும் இங்ஙனமே கூறும். இங்கு அகரச்சுட்டு, மேகத்தில் நீருக்குஉள்ள தலைமை பற்றியது. இச்செய்யுளிலுள்ள தன்மைப்பன்மைகள், செருக்குப்பற்றிவந்த உயர்வுப் பன்மைகளாம். முதலடியிலுள்ள 'எமது' என்னுஞ் சொல் மூன்றனுள், முன்னதும் பின்னதும் - ஒன்றன்பாற்குறிப்புவினைமுற்று; இடையிலுள்ளது - ஆறாம்வேற்றுமைவிரி. முதலிலுள்ள உம்மைகள் நான்கும் - எச்சப்பொருளன; எண்ணுப்பொருளனவல்ல: முடிக்குஞ்சொல் தனித்தனி வந்ததனால். ஐந்தாவது உம்மை-முற்று. ஆறாவது உம்மை - உயர்வுசிறப்பு. பிரிதலெனினும் பிறிதலெனினும் ஒக்கும்; அவ்வினைக்கு இருவகைவடிவமும் உண்டு. மா முகில்-(உலகமும் அதற்கு உறுதியாகிய அறம்பொருளின்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய) பெருமையையுடைய மேக மெனினும், கரிய மேக மெனினு மாம். செயும் - தொகுத்தல். எம்மையவித்தற்கு இன்றியமையாத துணையாக்கொள்ளப்பட்ட முகில்கள் எம்மாலழிந்தால் இந்திரன் நம்மை வெல்லுமாறு வேறில்லை யென்று கருதிச் செருக்கின னென்பதாம். வாஸவன் - வடசொல்; வசுக்களுக்குத் தலைவன்: அல்லது, வசுவையுடையவன்; வசு - ஐசுவரியம். கொண்டு - உட்கொண்டு. அஹங்கரித்தல் - யான் என்று செருக்குதல். (ருக)

[மேகங்கள் செருக்கி மழைபொழிதல்.]

மூண்டவெங்கனலையுருமின்வெங்கனலான்முருக்கியெங்கால்கை
யானெருக்கி, யாண்டவன்களிற்றின்கரநிகர்தாரையருவியின்கணங்க
ளாலவித்துப், பாண்டவன்பகழிதொடுக்கினுங்கண்ணன்பருப்பதமெ
டுக்கினுமெங்கள், காண்டவம்புரத்துமென்றுகொண்டிழிந்துபொழிந்
தனகணம்படுகனங்கள்.

(இ-ள்.) கணம் படு கனங்கள்-கூட்டமாகக் கூடிய மேகங்களானவை,—'மூண்ட வெம் கனலை - மூண்டெரிகிற வெவ்விய அக்கினியை, உருமின் வெம் கனலால் முருக்கி - (எங்களது) இடியிலுண்டாகும் வெவ்விய அக்கினியால் அழித்து, எம் கால் கையால் நெருக்கி-எங்கள் கால்களாலும் கைகளாலும் அடர்த்து, ஆண்டவன் களிற்றின் கரம் நிகர் தாரை அருவியின் கணங்களால் அவித்து - (எங்கள்) தலைவனான இந்திரனுடைய (ஐராவத) யானையின் துதிக்கையை யொத்த பெருந்தாரையாகிய மழைநீரருவியின் தொகுதிகளால் தணித்து, பாண்டவன் பகழி தொடுக்கினும் கண்ணன்

பருப்பதம் எடுக்கினும் எங்கள் காண்டவும் புரத்தும் - பாண்டுகுமாரனுன அருச்சுனன் அம்புகளைத் தொடுத்துத் தடுத்தாலும் கிருஷ்ணன் (முன்பு கோவர்த்தனமலையை எடுத்தது போல) மலையை யெடுத்து (க்குடையாகப் பிடித்து) த்தடுத்தாலும் (தடுக்கமாட்டாதபடி மூண்டு) எங்களுடைய காண்டவவனத்தைப் பாதுகாப்போம்', என்று கொண்டு - என்று உட்கொண்டு, இழிந்து - செருக்கோடு இறங்கி, பொழிந்தன - மழை பொழிந்தன; (எ - று.)

"உஷ்ணம் உஷ்ணேந சாம்யதி=வெப்பம் வெப்பத்தால் தணிகிறது" என்ற நியாயத்தால், 'மூண்ட வெங்கனலை யுருமின் வெங்கனலான் முருக்கி' எனப்பட்டது. 'கால்கையால்' என்பது - மேல்நோக்கில் தொடர்மொழியாக்க் கால்கைகளால் என்று பொருள்பட்டாலும், உள்நோக்கில் தனிமொழியாகக் காலுதலால் என்று பொருள்படும்; கால்கை - கைவிகுதிபெற்ற தொழிற் பெயர்: பொழிதலென்று பொருள்; அன்றியும், 'மழை காலிறங்குதல்' என் னும வழக்கும் உண்டு; கைக்கும் இங்ஙனமே காண்க. ஆண்டவன் - அடிமை கொண்டவன். தமதுதலைவனுகிய இந்திரனுற் காக்கப்படும் உரிமையைப் பாராட்டி, 'எங்கள் காண்டவம்' என்றது. உருமின், இன் - சாரியை. தாரா, கணம், பாண்டவன், கநம் - வடசொற்கள். பாண்டவன் - தத்திதாந்தநாமம். கண்ணன் - வடமொழிச் சிதைவு. (ரூஉ)

[மேகங்கள் சோரிந்த மழையவ்வளவும் அக்கனலை அவிக்கமாட்டாமை.]

காலைவாயருக்கன்பனிநுகர்ந்தென்னக்கட்டழற்காண்டவமென்
னும், பாலைவாயுள்ளசராசரமனைத்துநுகர்தலிற்பைம்புனல்வேட்டான்,
வேலையேழையுமொண்டேழுமாமுகிலும்விதம்படப்பொழிந்ததாரைக
ளாற், ருலுவேழினையுநனைத்தனனனைத்துந்தணிந்ததோதன்பெருந்தா
கம்.

(இ - ள்.) காலைவாய் அருக்கன் பனி நுகர்ந்து என்ன - உதயகாலத் திற் சூரியன் பனியை முற்றும் விழுங்கினுற் போல, காண்டவம் என்னும் பாலைவாய் உள்ள சர அசரம் அனைத்தும் நுகர்தலின் - காண்டவமென்னுங் கொடியகாட்டி லுள்ள ஜங்கமமுந் தாவரமு மான எல்லாப்பொருள்களையும் ஒருங்குஉண்டதனுல், பைம் புனல் வேட்டான் - (தாகசாந்திசெய்தற்பொரு ட்டுக்) குளிர்ந்த நீரை விரும்பியவனுன, கட்டு அழல் - வலிமையையுடைய அக்கினிதேவனுனவன்,—ஏழு மா முகிலும் வேலை ஏழையும் மொண்டு விதம் பட பொழிந்த தாரைகளால் - ஏழு பெரிய மேகங்களும் கடல்களேழையும் முகந்து பலவகையாகச்சொரிந்த மழைத்தாரைகளினுல், தாலு ஏழினையும் நனைத்தனன் - (தனது) ஏழு நாக்குக்களையும் நனைத்துக்கொண்டான்; நனைத் தும் - (அவ்வாறு) நனைத்தும், தன் பெருந் தாகம் தணிந்ததோ - அவனுடைய அதிகமான தாகம் அடங்கிற்றே? [இல்லை யென்றபடி]; (எ - று.)

மேகங்களெல்லாஞ் சொரிந்த மிக்கமழைநீர்த்தாரைகளால் அக்கினிச் சுவாலைகள் சிறிதுநனைந்தமாத்திரமே யன்றி அதனுல் அக்கினியின் உக்கிரம் சிறிதுந் தணிந்திலது என்பதாம். அதிகதாகங்கொண்டவனுடைய நாவிற் பட்ட நீர் உடனே வறண்டுவிடுதல்போல, அந்நெருப்பின்மேல்விழுந்த நீர்த் தாரைகள் உடனே வறண்டுபோயின வென்க. கட்டு அழல் என்பதற்கு - மிகுதியான வெப்பத்தையுடைய என்று உரைத்து, அதனைக் காண்டவத்துக் கு அடைமொழியாக்கினும் அமையும். மனிதசஞ்சாரமில்லாமையற்றி, 'காண் டவமென்னும் பாலை' எனப்பட்டது. கட்டழற் காண்டவமென்னும் பாலை— "பேய்நகரெனுமாறியாவரும்வழங்காப் பிறங்குவீள்கான்," "காண்டவப்பிரத் தமென்னு மத் தழல்வனம்" என்றார், கீழ் இந்திரப்பிரத்தச்சருக்கத்திலும். சராசரம் - தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். சரம் - சஞ்சரிப்பன;

இயங்குதிணைப்பொருள்; அசரம் - சஞ்சரியாதன, நிலைத்திணைப்பொருள். வேலையேழ்-உவர்நீர், கருப்பஞ்சாறு, கள், நெய், தயிர், பால், நன்னீர் என்னும் இவற்றின் மயமானவை. வேட்டான், மொண்டு-வேள், மொள்-பகுதி. அனைத்து மென்ற உம்மை - சிறப்பு. மற்றைநான்கு உம்மைகளும் - முற்று. விதம், தாஹ, தாஹம் - வடசொற்கள். தாஹம் - நீர்வேட்கை. ஓ - எதிர்மறை. வேட்டான் - வினையாலணையும்பெயர். முகில்கள் ஏழுவிதத்தனவாதலால், அவற்றின்தாரைகட்கு 'விதம்படப் பொழிந்த' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. அருக்கன் பனி நுகர்தல்-முற்றும் எளிதிற் பற்றி யழித்தற்கு உவமை. (௫௧)

[இதுவும் அது.]

எக்கடல்களினுமினிப்பசையிலதென்றேழிருபுவனமுநடுங்கத்,
தொக்கடலுருமோடெழுமெழுகொண்டற் சோனையஞ்சருவையான்முகந்து, மைக்கடல்வெளுக்கக்கறுத்தமெய்ம்மகவான்வழங்கியவாகுதியனைத்து, நெய்க்கடல்சொரிந்ததென்னுமாறருந்திநீடுவான்முகடுறநிமிர்ந்தான்.

(இ - ள்.) மை கடல் வெளுக்க கறுத்த மெய் மகவான் - கரிய கடலும் வெண்ணிறமான தென்னும்படி மிகக்கறுத்த உடம்பையுடைய இந்திரனாகிய யாகஞ்செய்பவன், எழும் எழு கொண்டல் அம சருவையால் - மேலெழுகிற ஏழுவகைமேகங்களாகிய அழகிய சருவையென்னும் ஓமக்கருவியைக் கொண்டு, எ கடல்களினும் இனிபசை இலது என்று ஏழிருபுவனமும் நடுங்க முகந்து-எல்லாக்கடல்களிலும் இனி நீர்ப்பசையுமில்லை யென்று பதினான்கு உலகங்களிலுமுள்ளஉயிர்கள் திடுக்கிடும்படி (அக்கடல்களை) முற்றும்மொண்டு, தொக்க அடல் உருமோடு வழங்கிய-நிறைந்த வலியஇடியோசையுடனே மிகுதியாகச்சொரிந்த, சோனை ஆகுதி அனைத்தும் - விடாப்பெருமழையாகிய ஆகுதிகளையெல்லாம், (அக்கினிதேவன்), நெய் கடல் சொரிந்தது என்னும் ஆறு அருந்தி - நெய்க்கடல் சொரியப்பட்டாற்போல உண்டு, நீடு வான் முகடு உற நிமிர்ந்தான் - பெரிய ஆகாயமுகட்டை யளாவ ஓங்கியெரிந்தான்.

உருவகவணி. மகவார் - ஐசுவரியங்களை யுடையவன்; மகம் - ஐசுவரியம், வார் என்பது - உடைமைப்பொருள்காட்டும் வடமொழிப்பெயர் விகுதியால் வந்தது. மகவான் என்ற சொல், வேள்விசெய்பவனையுங் குறிக்கும். இங்கு 'மகவான்' என்றது - சிலேடையுருவகம்; மகவானாகிய மகவான் என்க. 'தொக்கடலுருமோடு' என்றதற்கு ஏற்ப, உபமேயத்தில் வேதமந்திரகோஷத்தோடு எனக் கொள்க; இது, ஏகதேசஉருவகம். 'பெருநெருப்புக்கு ஈரமில்லை'என்றபடி அம்மழை அந்நெருப்பைச் சிறிதுதணிக்கவும் மாட்டிற்றில்லையென்பது, இப்பாட்டின் தாற்பரியம். இந்திரன் கருநிறமுடையவனாதலால், 'கறுத்த மெய்ம் மகவான்' என்றார்; "வில்லாலொளிர் மேகமெனப் பொலிவான்" என்றார் கம்பரும். கறுப்போடு நோக்க வெளுப்புக்கு எவ்வளவு வேறுபாடு உண்டோ, அவ்வளவுவேறுபாடு இந்திரனது கருநிறத்தோடுநோக்கக் கடலினது கருநிறத்துக்கு உள்ள தென்பது, 'மைக்கடல் வெளுக்கக் கறுத்த மெய்' என்றதன் கருத்து. பிரசித்தமான கடலின்கருமையினும் மிக்க கருமையையுடைய மெய் யென்க.

கடல்களிருத்தலாலுண்டாகும் உபயோகங்கள் இனி யுண்டாகா வென்னுங் கருத்தால், எல்லாவுலகமும் நடுங்கின வென்க. ஏழிரு புவனம் - பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், சனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்னும் மேலேழுலகங்களும்; அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம் என்னும் கீழேழுலகங்

களுமாம். புவனம் - இங்கு இடவாகுபெயர். 'நெய்க்கடல் சொரிந்தது' என்றது, கீழ்ச் சுவேதகிராசன் பன்னிராண்டு இடைவிடாதுபொழிந்த நெய்த்தாரையை நோக்கிய தெனினுமாம். தொக்கடல்-பெயரெச்சவீறு தொகுத்தல். சுருவை - ஓமஞ்செய்யும் நெய்த்துடுப்பு; ஸ்ருவமென்னும் வடசொல்லின் விகாரம்: (நெய்யைச்) சொரியவிடுவ தென்பது இதன் காரணப்பொருள். பசை - ஈரம். கடல்களை நெய்ப்பாத்திரமாகவும், அவற்றில் நிறைந்த நீர்முதலியவற்றை அப்பாத்திரத்தில்நிறைந்த நெய்யாகவும், கடல்களினின்று நீர்முதலியவற்றை யெடுத்துக்கொண்ட மேகத்தை அப்பாத்திரத்தினின்று நெய்யைமுகந்துகொள்ளுஞ் சுருவையென்னுங்கருவியாகவும், மேகம் நெருப்பில் மழைத்தாரைசொரிதலைச் சுருவை நெருப்பில் நெய்த்தாரைசொரிதலாகவும், இந்திரனை ஓமஞ்செய்பவனாகவும் உருவகப்படுத்தினர். மேகம் எதிர்த்து மழைசொரிந்தவளவில் அக்கினி கோபங்கொண்டு மிக்கெரிதல், நெய் சொரிந்தவளவில் நெருப்புமிக்கெரிதலாகக் கொள்ளப்பட்டது. வெண்மை, கருமை யென்னும் பண்பினடிகள், வினைத்தன்மைப்படும்போது வெளு, கறு என விகாரப்படும். (ருச)

[அருச்சுனன் அம்பெய்து மழையைத்தடுத்துச் சரகூடங்கட்டுதல்.]

தொழுதகுவிசயனாறுலுவேழுடையோன் சுடர்முடிநனைந்திடுவதன்மு, னெழுமுகிலினமும்பொழிதருமாரியாவையுமேவினால்விலக்கி, முழுதுலகமுந்தன்னிடத்தடக்கியவான்முகடுற முறைமுறையடுக்கிக், குழுமுவெங்கணையாற்கனற்கடவுளுக்குக் கொற்றவான்கவிகையுங்கொடுத்தான்.

(இ - ள்.) தொழு தகு விசயன் - (யாவராலும்) வணங்கத்தக்க [மிக்க சிறப்பையுடைய] அருச்சுனனானவன், தாலு ஏழு உடையோன் சுடர் முடி நனைந்திடுவதன் முன் - ஏழு நாக்குக்களை யுடையவனான அக்கினியினது ஒளியையுடைய முடி நனைதற்குமுன்னே, எழு முகில் இனமும் பொழிதரு மாரி யாவையும் ஏவினால் விலக்கி - ஏழுவகை முகிற்சாதிகளுஞ் சொரிகிற மழைகளையெல்லாம் (தனது) அம்புகளால் தடுத்து,—முழுது உலகமும் தன் இடத்து அடக்கிய வான் முகடு உற - பூலோகம்முழுவதையுந் தன்கீழ் அடக்கிய ஆகாயத்தினது மேன்முகட்டை யளாவ, குழுமு வெம் கணையால் முறைமுறை அடுக்கி - கூட்டமான கொடிய அம்புகளை ஒழுங்காகஅமையும்படி செலுத்தி, (அந்த அம்புகளின்பரப்பினால்), கனல் கடவுளுக்கு-அக்கினிதேவனுக்கு, வான் கொற்றம் கவிகையும் கொடுத்தான் - பெரிய கொற்றக்குடையையுங் கொடுத்தான்; (எ - று.)

அவ்வக்கினியின்மேல் மழைத்துளி சிறிதும் வீழாதபடி அம்புகளை அடர்த்தியாகத்தொடுத்துச் சரகூடங்கட்டின னென்பதாம். அக்கினிக்கு முடி-சுடர்க்கொழுந்து. 'ஏ' என்ற ஓரெழுத்துப்பெயரின்மேல், இன் - சாரியை; ஆல் - மூன்றனுருபு; வ் - உடம்படுமெய். கவிகை - கவிந்திருப்பதான குடைக்குத் தொழிலாகுபெயர்; இதில், கை - தொழிற்பெயர்விகுதி. 'கவிகையும்' என்ற உம்மை - இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. அதனால் உணவைக்கொடுத்ததுமன்றி யென்ற பொருளுந் தோன்றும். அனற்கடவுள் அனற்கடவுளால் வெல்லப்படா தென்பதை இவ்வம்புக்குடை நன்கு விளக்குதலால், 'கொற்றவான்கவிகை' எனப்பட்டது. (ருரு)

[இதுவும், அடுத்தகவியும்-அந்தச்சரகூடத்தின் வருணனை.]

ஆழ்தருபரவையேழும்வற்றிடுமாறழித்தகாருமிழ்ந்திடுநெடுநீர்
தாழ்தருசரத்தான்வேய்ந்ததற்கிடையோர்தனித்திவலையும்பொசியாமல்

**வீழ்தருமருவிபாவகன்றனக்குவிசயனன்றளித்தபொற்குடைக்குச்**
**சூழ்தரநிரைத்துத்தூக்கியமுத்தின்சுடர்மணித்தொடையல்போன்றனவே.**

(இ - ள்.) ஆழ்தரு பரவை ஏழும் - ஆழமாகவுள்ள ஏழுகடல்களும், வற்றிடும் ஆறு - வற்றிவிடும்படி, அழித்த - (பருகி) ஒழித்த, கார் - மேகங்கள், உமிழ்ந்திடு - சொரிகின்ற, நெடு நீர் - மிக்க நீர், தாழ்தரு சரத்தால் வேய்ந்ததற்கு இடை ஓர் தனி திவலையும் பொசியாமல் - நிலைபெற்ற அம்புகளினால் வேய்ந்த கூடத்திற்கு இடையே ஒருசிறுதுளியும் பொசியமாட்டாமையால், வீழ்தரும் - (அச்சரகூடத்திற்குவெளியிற் சுற்றிலும்) விழுகிற, அருவி - மலையருவிகளானவை,—பாவகன்தனக்கு விசயன் அன்று அளித்த பொன் குடைக்கு - அக்கினிதேவனுக்கு அருச்சுனன் அப்பொழுது கொடுத்த அழகிய அக்குடைக்கு, சூழ்தர நிரைத்து தூக்கிய - சுற்றிலும் வரிசையாகக் கட்டித் தொங்கவிட்ட, முத்தின் சுடர் மணி தொடையல் - முத்துக்களினாலாகிய ஒளியுள்ள அழகிய மாலைகளை, போன்றன - ஒத்தன; (எ - று.)

வடிவும் நிறமும் பற்றிய உவமை. **தன்மைத்தற்குறிப்பேற்ற உவமையணி.** (குடையின்சுற்றிலுந் தொங்குகிற சரங்கள், ஜாலரென்று உலகில் வழங்கப்படும்.) பரவை - பரவியது; பரவு அல்லது பர - பகுதி: ஐ - கருத்தாப்பொருள்விகுதி. 'மேய்ந்ததற்கு' என்றும் பாடமுண்டு. வேய்தலெனினும், மேய்தலெனினும் ஒக்கும். விஜயன் என்ற வடமொழிப்பெயர் - விசேஷமான வெற்றியையுடையவனென்று பொருள்படும்; தன்னைச்சயிப்பவரெவருமில்லாதவனென்று பொருள்கூறலும் உண்டு. பொற் குடை - பொன்னினாலாகிய குடையுமாம். முத்து - முக்தா என்ற வடசொல்லின் சிதைவு: (சிப்பியினின்று) விடுபட்டது என்று பொருள். தொடையல், அல் - சாரியை. தாழ்தல் - நிறைதல். வேய்ந்தது - வினையாலணையும்பெயர்; அதன்மேல், அன் - சாரியை, கு - நான்காம்வேற்றுமையுருபு. 'தாழ்தரு' என்பது, சரத்துக்கு அடைமொழி; 'வேய்ந்தது' என்பதற்கு அடைமொழியாக்கி, கவிந்துதாழ்ந்த எனினும் அமையும். (ருகூ)

**மண்டிமீதெழுந்தவன்னியின்சிகைகளிந்திரன்மதலைவாளிகளாற்**
**கண்டகூடத்திற்கமைத்தசெம்பவளக்காண்டகுதூண்டிரள்காட்ட**
**வண்டகூடத்திற்கிந்திரன்பளிங்காலமைத்தபல்லாயிரகோடி**
**சண்டதூணங்கள்போன்றனபரந்துதனித்தனிமுகில்பொழிதாரை.**

(இ - ள்.) மண்டி மீது எழுந்த வன்னியின் சிகைகள் - நெருங்கி மேலெழுந்த அக்கினிச்சுவாலைகள், இந்திரன் மதலை வாளிகளால் கண்ட கூடத்திற்கு அமைத்த காண்தகு செம் பவளம் தூண் திரள் காட்ட - இந்திரகுமாரனை அருச்சுனன் அம்புகளினாற்செய்த மண்டபத்தின் மேற்பகுதிக்கு ஆதாரமாகக் கீழே அமையவைத்த அழகிய சிவந்த பவளத்தூண்களின் கூட்டங்களை யொத்திருக்க,—முகில் பரந்து தனி தனி பொழி தாரை - மேகங்கள் பரவித் தனித்தனி சொரிகின்ற மழைநீர்த்தாரைகள், அண்ட கூடத்திற்கு இந்திரன் பளிங்கால் அமைத்த பல் ஆயிரம் கோடி சண்ட தூணங்கள் போன்றன - அண்டத்தின் மேல்முகட்டுக்கு (ஆதாரமாக) இந்திரன் படிகக்கல்லினாற்செய்த அநேகஆயிரங்கோடி வலிய தூண்களை யொத்தன; (எ - று.)

இந்திரன்கட்டளையால் மேகங்கள் வந்து மிக்கமழையைச்சொரியவும், அவன்மகனது உதவியினால் அக்கினி இடையூறுசிறிதுமின்றிச் சொலித்தெரிந்த தென்பதாம். நிறமும் வடிவும் பற்றிய உவமை. காண் தகு - பார்க்கத்தக்க. தூண் - ஸ்தூணம் என்ற வடசொல்லின் சிதைவு. பல்லாயிரகோடி

என்றது - மிகப்பல என்றபடி. மழைத்தாரையின் பருமையை விளக்குவார், அதற்குத் தூணை உவமைகூறினார். மேகங்களையேவி மழைபொழிவித்தவன் இந்திரனாதலால், 'இந்திரன் அமைத்த தூணம்' என்றார். சண்டம் - வடசொல். (௫௭)

[தக்ஷகன்மனைவியை அருச்சுனன் அம்பெய்துவீழ்த்துதல்.]

**தக்ககன் றன்னைக்கூயினர்தேடிச்சாயகமண்டபஞ்சுற்றி**
**மிக்கவிண்ணவர்கடிரிதரவவன் றன்மெல்லியன்மகவையும்விழுங்கி**
**யக்கணந்தன்னிலந்தரத்தெழலும்வீழ்த்தினனம்பினாற் றுணித்துச்**
**செக்கனலுருவச்சென்னியையுரகர்கன்னியைத்திருமணஞ்செய்தான்.**

(இ - ள்.) மிக்க விண்ணவர்கள் - மிகுந்த தேவர்கள், தக்ககன் தன்னை கூயினர் தேடி - (தங்கள் அரசனான இந்திரனது நண்பனாகிய) தக்ஷகனென்னும் நாகராசனைக் கூவியழைத்துத் தேடிக்கொண்டு, சாயகம் மண்டபம் சுற்றி திரிதர - (அருச்சுனனமைத்த) சரகூடத்தைச் சூழ்ந்து திரிய,— அவன் தன் மெல்லியல் - அத்தக்ஷகனுடைய மனைவி, மகவையும் விழுங்கி - தனது குட்டியான சிறுநாகத்தையும வாயினுட்கொண்டு, அந்தரத்து எழலும் - (தப்பிப்பிழைத்தற்பொருட்டு) வானத்தின்மீது பரந்தெழுந்த வளவில்,— உரகர் கன்னியை திரு மணம் செய்தான் - நாககன்னிகையை விவாகஞ்செய்துகொண்டுள்ளவனான அருச்சுனன், அ கணந்தன்னில் - அந்தக்ஷணத்திலே, செம் கனல் உருவம் சென்னியை - சிவந்த அக்கினிபோன்ற நிறத்தையுடைய (அந்த நாகமாதின்) தலையை, அம்பினால் துணித்து - (தான்எய்த) பாணத்தினால் துண்டித்து, வீழ்த்தினன் - (அப்பெண்பாம்பைக்) கீழே தள்ளினான்; (எ - று.)

சிலகாலத்துக்குமுன்னே ஒருநாககன்னிகையை விரும்பிமணஞ்செய்துகொண்டவன், அக்காதலியின்வகையில் தொடர்ச்சியுள்ள உறவினனென்று சிறிதுந் தாக்ஷிணியங்கொள்ளாமல், அக்கினிக்குத் தான் உறுதிமொழியளித்ததையே முக்கியமாக்கொண்டு, ஒருநாகமாதை அம்பினால்துணித்து வீழ்த்தினனென அருச்சுனனது நிஷ்பக்ஷபாதமான உறுதிநிலையை விளக்குவார், இங்கு 'உரகர்கன்னியைத் திருமணஞ்செய்தான்' என்றார். உரகர் கன்னி - உலூபி. அவளைத் திருமணஞ்செய்தமை, "ஓடுங்கயல் விழியாரினுலூபிப்பெயரவளோடு, ஆடும்புனலிடைநின்றவ னனுராகமிகுந்தே, நாடும்பிலவழியே யவள்பின்சென்று நலத்தால், நீடுங்கொடி மணமெய்தினன் முகில்போலுநிறத்தான்" எனக் கீழ்ச்சருக்கத்திற் கூறப்பட்டது. கூயினர் - பலர்பால் முற்றெச்சம்; கூ-பகுதி, அர்-விகுதி, இன்-இடைநிலை, ய் - எழுத்துப்பேறு. ஸாயகமண்டபம், அந்தரம் - வடசொற்கள். கன்னி - கந்யா என்ற வடசொல்லின் சிதைவு; கல்யாணமாகாத இளம்பெண்ணை யுணர்த்தும். மெல் இயல் - மென்மையான தன்மையுடையவள்; பண்புத்தொகையன்மொழி. மக - இளமை, உரிச்சொல்; இளங்குழந்தைக்குப் பண்பாகுபெயராம். வீழ்த்தினன்-விழுத்தினன் என்பதன் விகாரம். செங்கனலென்பது, செக்கனலென எதுகைநோக்கி வலித்தல்விகாரமாயிற்று. உருவம் - ரூபம் என்ற வடசொல்லின் விகாரம். அருச்சுனன் அம்பினால்துணித்து வீழ்த்தியபோது அந்நாகமாதின் தலையும் உடலும் வேறாகித் தலை அக்கினிக்குவெளியிலும் உடல் அக்கினிக்கு உள்ளுமாக விழுந்ததனால், தாய் இறக்க, அதன்வாயிலுள்ள மகன்மாத்திரம் வால்துணிப்புண்டவனவோடு பிழைத்தனனென்று அறிக. இனி, செம் கனல் உருவனைப் பதம்பிரித்து 'வீழ்த்தினான்' என்பதனோடு இயைத்து, சிவந்த அக்கினிச்சுவாலையிலே விழும்படி சென்னியைத் தள்ளினானென்பர் ஒருசாரார். (௫௮)

[தக்ஷகன்மகனை இந்திரன் அரிதீற் பாதுகாத்தல்.]

மருவயிற்சதகோடியினிறையைராவதத்தின்மும்மதத்தினா
த்துக், கருவயிற்றெழிலித்தாரையால்வருணக்கடவுடன்கணைகளால
த்துச், செருவயிற்புரளவொதுக்கியத்தோழன்சிறுவனைச்சென்றெடு
த்தணைத்தா, னொருவயிற்பிறந்தோனாதலின்மகவானுடனுடன்றிலனுத
சனனே.

(இ - ள்.) (உடனே), மருவு அயில் சதகோடியின் இறை - பொருந்திய கூர்மையையுடைய வச்சிராயுதத்தையுடைய (தேவ) ராசனான இந்திரனானவன்,—சென்று - (அருகிற்) போய், ஐராவதத்தின் மும் மதத்தினால் நனைத்து - (அந்த நாகமாதின் துணிபட்ட தலையைத் தான்ஏறிய) ஐராவதமென்னும் யானையின் மூன்றுவகைமதநீரினால் நனைத்து, கரு வயிறு எழிலி தாரையால் வருணக் கடவுள்தன் கணைகளால் அவித்து - சூல்கொண்ட வயிற்றையுடைய மேகங்களின் மழைத்தாரைகளாலும் வாருணாஸ்திரங்களினாலும் (அதிற்பற்றிய தீயைத்) தணித்து, செருவயின் புரள ஒதுக்கி - அப்போர்க்களத்தினின்று புரண்டுவிலகும்படி (அத்தலையை) ஒதுக்கி, அத் தோழன் சிறுவனை எடுத்து அணைத்தான் - அதனுள்ளேயிருந்து பிழைத்த தனது நண்பனான தக்ஷகனது குமாரனை எடுத்து அணைத்துக்கொண்டான்; (அங்ஙனம் அருகில்வருகையில் இந்திரனை அக்கினி சுடாதிருந்த காரணம் என்னெனின்—), உதாசனன் - அக்கினிதேவன், மகவானுடன் - இந்திரனுடன், ஒரு வயின் பிறந்தோன் ஆதலின் - ஓரிடத்திற் பிறந்தவனாதலால், உடன்றிலன் - (அவனை) வருத்தினானில்லை; (எ - று.)

அக்கினி, இந்திரனுடன் பிறந்தவனாதலால், அவ்வுடற்பிறப்பாலாகிய அன்புபற்றி அவனையெரித்திலனென்று தற்குறிப்பேற்றவகையால் கவி காரணங்கற்பித்துக்கூறினர். திருமாலினது முகத்தினின்று இந்திரனும் அக்கினியுந் தோன்றினரென்று வேதம்முதலிய நூல்கள் கூறுதலால், இருவரும் உடன்பிறந்தவராவர்; "ஒண்கன லிந்திரன் வாழ்முகப் போதி லுதித்தனரே" என்றார், திருவரங்கத்துமாலையிலும். வயின் என்பதற்கு-வயிறு என்று உரைத்து, தேவர்கட்குத்தாயான அதிதிதேவியின் கருப்பத்தில் இருவரும் பிறந்ததைச் சகோதரரென்றற்குக் காரணமென்பாருமுளர். சதகோடி என்ற வடமொழிப் பெயர் - நூறு [அநேகம்] கூர்நுனிகளை யுடையதென்று பொருள்படும். ஐராவதம் என்ற வடசொல்லுக்கு - நீரையுடைமையால் 'இராவான்' எனப்படுகிற கடலினின்று தோன்றியதென்று காரணப் பொருளுரைப்பர். கரு-கர்ப்பமென்ற வடசொல்லின் சிதைவு. கரு வயிற்று எழிலி - நீர்கொண்ட காளமேகம். எழிலி - எழுச்சியையுடையது; எழில் - 'இல்' விகுதி பெற்ற தொழிற்பெயர்: அதன்மேல், இ - பெயர் விகுதி. வருணக்கடவுளின் கணை-நீர்க்கடவுளாகிய வருணனைத் தெய்வமாகவுடையதும், மிக்கநீரைச்சொரிவதுமான அஸ்திரம். செருவயின், வயின் - ஏழனுருபு. உடன்றிலன் என்ற இறந்தகால எதிர்மறைமுற்றில், உடல் - பகுதி, இல் - எதிர்மறையிடைநிலை. ஒதுக்கி - ஒதுங்கி யென்பதன் பிறவினை. ஐராவதத்தின்மேலேறியுள்ள இந்திரன் அருகிற்சென்றபோது, அந்த யானையின் மதநீர் அந்தப்பாம்புத்தலையின்மேற் சொரிந்ததனால் 'ஐராவதத்தின்மும்மதத்தினால்நனைத்து' என்றார். சரகூடத்திற்கு வெளியிலே அக்கினிச்சுவாலையினருகில்-அத்தலை விழுந்ததென அறிக. (௫௧)

[அதுகண்ட அருச்சுனன் கோபாவேசங்கொண்டு போருதல்.]

அன்னவாயொடுதன்வாலதிதுணியுண்டலமரு மச்சுவசேனன்,
றன்னைவாசவன்போய்விடுகண்டுழியத்தனஞ்சயன் றனதுவெங்கணை

யான், முன்னை வானவரைமுன்னைமுகந்தன்னின்முதுகிடமுதுகிடமுருக்கிப், பின்னைவாரிதங்களேழையும்பொருதுபின்னிடப்பின்னிடப் பிளந்தான்.

(இ-ள்.) அன்னை வாயொடு தன் வாலதி துணியுண்டு அலமரும்-(தனது) தாயின் தலை துணிப்புண்டபோது (அதன்நெஞ்சினுள்ளேயிருந்த) தனது வாலும் அதனோடு துணிக்கப்பட்டுத் துடிக்கின்ற, அச்சுவசேனன்தன்னை - அசுவசேனனென்னும்பெயருள்ள தக்ஷகபுத்திரனை, வாசவன் போய் வீடு கண்டஉழி - இந்திரன் சென்று (இவ்வாறு) விடுவித்தபொழுது, அதனஞ்சயன் - (அதுகண்டு பெருங்கோபங்கொண்ட) அவ்வருச்சுனனவன், தனது வெம் கணையால்-தன்னுடைய கொடியஅம்புகளினால், முன்னை - முதலில், வானவரை - (தன்னையெதிர்த்த) தேவர்களை, முனை முகந்தன்னில் முதுகு இட முதுகு இட முருக்கி - போர்க்களத்தில் மேன்மேற்புறங்கொடுக்கும்படி பொருது, பின்னை - (அதன்) பின்பு, வாரிதங்கள் ஏழையும் - ஏழு மேகங்களையும், பொருது பின்னிட பின்னிட பிளந்தான் - போர்செய்து மேன்மேற்பின்னிடும்படி பிளந்திட்டான்; (எ - று.)

துணியுண்டு என்பதில், உண் - செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் இடைநிலை. அலமரும, அலமா-பகுதி; குறுக்கலும் விரித்தலும்பெற்று, அலமரு என நின்றது. வீடுகாணுதல்-விடுதல்செய்தல்; உயிர்ப்பித்தல்: முதனிலை திரிந்ததொழிற்பெயர். கண்டுழி-கண்டஉழி யென்பதன்தொகுத்தல். முன்னை, பின்னை என்பவற்றில, ஐ - சாரியை. முதுகிட முதுகிட, பின்னிடப் பின்னிட - அடுக்குக்கள், தொடர்ச்சிபற்றியன. வாரிதம் - வடசொல்; நீரைத் தருவதென்று பொருள்படும்; வாரி - நீர். அச்வஸேநன்-வடமொழிப்பெயர்.

[அசுவசேனன் அஸ்திரமாய்க் கர்ணனை யடைதல்.]

தீரமால்பொருதுவீடுகண்டதற்பின்செக்கர்மெய்த்தக்ககன்பயந்த
பாரமாசுணமவ்விசயனுக்கியாவர்பகையெனப்பலரையும்வினவிச்
சூரன்மாமதலைசரணமேயரணநமக்கெனத்தொழுதுபோயெய்தி
வீரமாமுனைவெம்பகழியாகியதெம்மேதினியினும்பெருவார்த்தை.

(இ - ள்.) மால் தீரம் பொருது வீடு கண்டதன்பின்- இந்திரன் தைரியத்தோடு போர்செய்து (அசுவசேனனை) விடுவித்தபின்பு,—செக்கர் மெய் தக்ககன் பயந்த பாரம் மாசுணம் - செந்நிறமான உடம்பையுடையதும் தக்ஷகன்பெற்றதுமான பருத்த அப்பாம்பானது, அ விசயனுக்கு யாவர் பகை என பலரையும் வினவி - (தனது தாயைக் கொன்று தன்னையும் வாலறுத்த) அந்த அருச்சுனனுக்குப் பகையாயுள்ளவர் யாரென்று பலரையும் விசாரித்து, (அவனுக்குப்பகைவன் கர்ணனே யென்று பலருஞ்சொல்லக் கேட்டறிந்து), சூரன் மா மதலை சரணமே நமக்கு அரணம் என போய் தொழுது எய்தி - சூரியனது சிறந்தகுமாரனான அக்கர்ணனுடைய பாதங்களே நமக்குப் புகலிட மென்று எண்ணிச் சென்று வணங்கி (அவனைச்) சரணமடைந்து, வீரம் மா முனை வெம் பகழி ஆகியது - உக்கிரங்கொண்ட சிறந்த நுனியையுடைய கொடிய அம்பாய்அமைந்தது; எ மேதினியினும் பெருவார்த்தை-(இது) எவ்வுலகத்திலும் பிரசித்தமாகச் சொல்லப்படும் விஷயமாம்; (எ-று.)

'மால்' என்பது - இந்திரனுக்கு ஒரு பெயராதலை, "வாசவன் அமரர் கோன் மால் முகிலூர்தி" என்ற திவாகரத்தாலும் அறிக; "மால்விசும்பின், மாலின் புயல்காத்த மால்வண்ணன்" என்றார் பெருந்தேவனாரும். அவ்வனத்தினின்று ஓருயிரையும் பிழைக்கவிடுவதில்லை யென்று அருச்சுனன் செய்கிற முயற்சிக்கு இந்திரன் நெருங்கிவந்து மாறுசெய்ததும், வாருணாஸ்திரம் பிரயோகித்ததுமே, 'பொருது' என்பப்பட்டன. செக்கர் - 'அர்' விகுதி

பெற்ற பண்புப்பெயர், கு - சாரியை. செக்கர்மெய் - செவ்வானம்போன்ற உடம்பு எனினுமாம். பாரம்மாசுணம்-(பழிக்குப்பழிதீர்க்க வேண்டுமென்னும்) பெருமிதகுணத்தை (இளமையிலேயே) கொண்ட பாம்பு எனினுமாம். பாண்டவர்களும் துரியோதனாதியர்களும் துரோணாசாரியரிடத்தில் ஆயுத வித்தை கற்றுத்தேர்ந்தபின்பு தம்தம் திறங்காட்டியபோது அருச்சுனனது பெருந்திறமையைக் கண்டு பொறாமைகொண்ட கர்ணன் தான் இடையில் வலியப்பிரவேசித்துத் தன்திறங் காட்டி அருச்சுனனைப் போருக்கழைத்துச் சொற்போரோடு விற்போருந் தொடங்கி மாறுபட்டு "மூனந்த போரில் முடிதுணித்து உன் முகசரோருகத்தினாற், சினந்தணிந்து அரங்கபூசை செய்வன்" என்று சபதங் கூறியுள்ளானாதலால், அவனே அருச்சுனனுக்குப் பகை யென்பது பிரசித்தம். தீரம், பாரம், சூரன், சரணம், வீரம், மேதினீ, வார்த்தா - வடசொற்கள். பகை - பகைவர்க்குப் பண்பாகு பெயர். சரணமே, ஏ-பிரிநிலை. அரணம்-சரணம் என்ற வடசொல்லின் விகாரம்; சமயம்-அமயம், சந்தி-அந்தி, சமர்-அமர்என்பன போல. அரண் என்ற தமிழ்ப்பெயரின்மேல், அம்-சாரியை யென்பாரு முளர். 'நமக்கு' என்பது-இங்கே, தனித்தன்மைப்பன்மை; இயல்புபற்றியது: ஒவ்வொருவரும் தம்மைப்பற்றித் தாம் நினைக்கும்போது பன்மையாகவே நினைத்தல் பெரும்பாலும் இயல்பாதலை நினைத்துக்காண்க. வீரம் மா முனை என்பதற்கு - பராக்கிரமத்துக்கு இடமான பெரிய போருக்கு உரிய எனினும் அமையும். திருமாலாற் கொல்லப்பட்ட மதுகைடபரென்னும் அசுரர்களுடைய மேதசினால் [உடற்கொழுப்பினால்] நனைந்தமைபற்றி, பூமிக்கு, மேதினீ என்று பெயர். இது, இங்கு, பொதுப்பட, உலகமென்ற மாத்திரமாய் நின்றது; (சில இடங்களிற் சிறப்புப்பெயர் பொதுப்பொருளை யுணர்த்தலும், பொதுப்பெயர் சிறப்புப்பொருளை யுணர்த்தலும், ஒருவகைப் பாஷைநடை.)

"எரி யமுதருந்தக் கானமெரித்தநா ளகன்றுபோன, அரவினை யங்கர் கோமானுசுகமாகக்கொண்டான்" என்று மேல் உத்தியோகபருவத்திலும், "ஒண்கிரிபலமிடைவனம் வெந்திடவோடியந்தரமிசை, புகைகதுவும்படி சீறி வெம்பொறிவிடு புரிதழல் மண்டியநாளி லம்பெனவரும், இகலுடை வெம்பகுவாய்களைந்துடையதொ ரெழில்கொள் புயங்கன்" என்று கர்ணபருவத்திலும் வருதல் காண்க.

கர்ணனை 'சூரியன் மைந்தன்' என்றதன் விவரம்:—குந்திதேவி கன்னிகையாயிருந்தபொழுது துர்வாசமுனிவனிடம் தான் உபதேசம்பெற்ற மந்திரத்தின் சக்தியைப் பரீட்சித்தறியும் பொருட்டுச் சூரியனை நினைத்து அந்த மந்திரத்தை உச்சரிக்க, உடனே அத்தேவன் வந்து அவளிடம் அநுக்கிரகித்த அதனாற் பிறந்த புத்திரன், இவன். பிறந்தபொழுதே குந்தி பழிக்கு அஞ்சி இக்குழந்தையை மிதக்கும் மரப்பெட்டியொன்றில் வைத்துப் பூட்டி நதியில்விட்டிட, அதனைத் திருதராட்டிரனது தேர்ப்பாகனான அதிரதனென்பவன் கண்டு எடுத்துத் திறந்துபார்த்துக் கொண்டுபோய்த் தன்மனைவியாகிய ராதையுந் தானுமாக வசுசேனனென்று பெயரிட்டு வளர்த்தான்; இவனுக்குக் கர்ணனென்ற பெயர் ஆகாயவாணி யிட்டது. இவன், இளமையிற் பரசுராமனை யடுத்து வழிபட்டு அவனருளால் அஸ்திரசஸ்திரங்களை மிகுதியாகப் பயின்று தேர்ச்சிபெற்றுநின்றான்; பின்பு, துரியோதனனுக்குப் பிராணசிநேகிதனாகி அவனருளால் அங்கதேசத்துக்கு அரசனாயினான். (௬௧)

[இந்திரன் அந்தத் தக்ஷகனைக் காணாமல் அருச்சுனன்மீது கோபித்தல்.]

தோழன்மாமகனைக்கண்டபின்றனது தோழனைபொருவயிற்காணான், வேழமாமுகத்திற்கைத்தலம்புடைத்தான்விழிகளாயிரங்களுஞ்

சிவந்தான், யாழமா திரத்தினெதிரொலியெழுமாறெயிற்றிளநிலவெழ
நகைத்தான், றாழமாநிலத்தினின்றமர்விளைக்குந்தன்பெருந்தனயனை
முனிந்தான்.

(இ - ள்.) (இந்திரன்), தோழன் மா மகனை கண்டபின்-(தன துநண்ப
னை) தக்ஷகனுடைய சிறந்த குமாரனாகிய அசுவசேனனைக் கண்டபின்பு,
தனது தோழனை ஒரு வயின் காணான் - தனது நண்பனான அத்தக்ஷகனை
ஓரிடத்துங் காணாதவனாய், (அவ்வருத்தத்தால்), வேழம் மா முகத்தில் கைத்
தலம் புடைத்தான் - (தானேறிய) ஐராவதயானையின் பெரிய மத்தகத்தின்
மேற் கையைப் புடைத்து, விழிகள் ஆயிரங்களும் சிவந்தான்-(கோபத்தால்)
ஆயிரங்கண்களுஞ் சிவக்கப்பெற்றவனாய், மாதிரத்தின் எதிர் ஒலி எழும் ஆறு
எயிறு இள நில எழ நகைத்தான் - திக்குக்களிற் பிரதித்தொனி யுண்டாகும்
படி (தனது) பற்களின் இளநிலாப்போன்ற வெள்ளொளி வெளிவீசச் சிரி
த்து, தாழ மா நிலத்தில் நின்று அமர் விளைக்கும் தன் பெருந் தனயனை
முனிந்தான் - கீழே பெரிய பூமியில் நின்று (அங்குநின்றபடியே) பெரும்
போர்செய்கிற தனதுசிறந்தபுத்திரனான அருச்சுனனைக் கோபித்தான்.

தான்பெற்ற சிறந்த புதல்வன்மீது கோபிக்கும்படி தக்ஷகனிடம் இந்
திரனுக்குஇருந்த நண்பின்சிறப்பு, இதில் விளங்கும். தாழ - கீழாக. தான்
கீழ்நின்றபடியே மேலுள்ளாரைவெல்லுமாறு போர்செய்தலின் அருமை
தோன்ற, 'தாழ மாநிலத்தில் நின்று அமர்விளைக்கும்' என்றார். கையைக்
கீழேபுடைத்தல் - கோபாவேசத்தின் காரியம். கண்சிவத்தல் - கோபக்குறி.
மூன்றாமடியிற்கூறியது - வீரத்தெழுந்த வெகுளிநகை; வீராட்டகாசமெனப்
படும். சிரிக்குங்காலத்துப் பற்களின்வெள்ளொளி சிறிதுவெளித்தோன்று
தல், 'எயிற்றிளநில' எனப்பட்டது. நிலா - சந்திரகிரணம்; அது, குறிய
தன்கீழ்ஆக் குறுகிற்று. எதிரொலி - ஒலியெழுந்தபோது சிலஇடங்களில்
அதிர்ந்துகேட்கிற எதிர்ச்சத்தம். மாதிரம் - மலையும், பூமியுமாம். 'யாழ' என்
பது - அசைநிலை. நிலம் - (சலியாது) நிற்பதெனப் பொருள்படுங் காரணக்
குறி; நில் - பகுதி, அம் - கருத்தாப்பொருள்விகுதி: அசலா, ஸ்திரா
என்ற வடமொழிப்பெயர்கள் இப்பொருள்படுதல் காண்க. அமர் - ஸமர
மென்ற வடசொல்லின் விகாரம். காணான் - எதிர்மறை முற்றெச்சம். புடை
த்தான், சிவந்தான், நகைத்தான் - உடன்பாட்டு முற்றெச்சங்கள். செம்மை
யென்ற பண்பி னடி, வினைத்தன்மைப்படும்போது 'சிவ' என விகாரப்படும்.
ஒலியெழுமாறு நகைத்தான், நிலவெழ நகைத்தான் எனத் தனித்தனி இயை
யும். தாழ முனிந்தான் என இயைத்து, தான்தோல்வியுற்றுத்தாழ்வடையும்
படி தன்னினுஞ்சிறந்த தனது புதல்வனைக் கோபித்தன னென்றலு மொ
ன்று; "பிதுச் சதகுணம் புத்ரஃ" என்றபடி தந்தையினும் பலமடங்கு சிறந்த
மைந்தனென்பார் 'தன் பெருந் தனயன்' என்றார். (கூஉ)

[இந்திரனும் மற்றைத்திக்குப்பாலகர்களும் போர்க்குஎழுதல்.]

மேகசாலங்களிளைத்ததுந்திளைத்துமேலிடுவிண்ணவரணிந்த
யூகசாலங்களுடைந்ததுங்கண்டாலுருத்தெழுந்துள்ளமுழங்கொதித்தா
னேகசாபமுந்தன்னேகசாயகமுமிமைப்பளவையின்விரைந்தெடுத்தான்
பாகசாதனனுமேனையதிசையின்பாலருமப்படுமேல்கொண்டார்.

(இ - ள்.) பாகசாதனனும் - இந்திரனும்,—மேக சாலங்கள் இளைத்த
தும் - (தானேவிய) மேகக்கூட்டங்கள் இளைப்படைந்ததையும், திளைத்து
மேலிடு விண்ணவர் அணிந்த யூகம் சாலங்கள் உடைந்ததும்-இடைவிடாது
நெருங்கிச் சென்றெதிர்த்த தேவர்கள் வகுத்த படைவகுப்பின் கூட்டங்கள்

அணிகுலைந்ததையும், கண்டான் - பார்த்து, உருத்து எழுந்து உள்ளமும் கொதித்தான் - கோபித்துப் பொங்கி மனமும் வெதும்பப்பெற்று, தன் ஏக சாபமும் - ஒப்பற்ற தனதுவில்லையும், தன் ஏக சாயகமும் - ஒப்பற்ற தனது அம்பையும், இமைப்பு அளவையின் விரைந்து எடுத்தான் - கண்ணிமைப்பொழுதினும் விரைவாக எடுத்துக்கொண்டான்; ஏனைய திசையின் பாலரும் - மற்றைத்திக்பாலகர்களும், பகடு மேல்கொண்டார் - (தம் தம்) வாகனங்களில் ஏறிக்கொண்டார்கள்; (எ - று.)

இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசாநன் என்னும் எண்மரும் அஷ்டதிக்பாலகர்; இவர்களைக் கிழக்குமுதலாக முறையே கொள்க. இவர்களில் அக்கினிக்கு ஆட்டுக்கடாவும், யமனுக்கு எருமைக்கடாவும், வருணனுக்கு ஆண்முதலையும், வாயுவுக்கு ஆண்மானும், குபேரனுக்கு ஆண்குதிரையும், ஈசாநனுக்கு எருதும் வாகனங்களாம்; ஆதலால், விலங்கின் ஆண்பெயராகிற 'பகடு' என்ற சொல்லாற் குறித்தார். 'சுருங்கச்சொல்லல்' என்னும் அழகு பொருந்த இங்ஙனம்கூறியதில், உபலக்ஷணவிதியால், நிருருதிக்கு வாகனமாகிய நரனும் அடங்கும். அன்றியும், 'பகடு' என்றது-வாகனமென்ற மாத்திரமாய் நின்றதென்றுங் கொள்ளலாம். மேகஜாலம், வ்யூஹஜாலம், ஏகசாபம், ஏகஸாயகம், பாலர் - வடசொற்கள். பாலர் - காப்பவர். பாகசாதனனும், திசையின்பாலரும் என்ற உம்மைகள் - முறையே எதிரதும் இறந்ததும் தழுவிய எச்சம். ஏகசாபம் - இந்திரவில். ஏகசாயகம் - ஐந்திராஸ்திரம். ஏனைய - இடைச்சொல்லடியாப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம். (சுஙு)

[மற்றுமுள்ள தேவர்களும் வந்துபோருதல்.]

தேவருங்கோடிதேவருக்கொருவர்சிரங்களாய்நின்றமுப்பத்து
மூவருந்தத்தம்வாகமேல்கொண்டுமுந்துறவந்துவந்தணிந்தார்
யாவரும்புவனத்தின்றுகொலுகத்தினிறுதியென்றிரங்கினர்நடுங்க
மேவருமனிதரிருவரோடநேகவிபுதரும்வெகுண்டுபோர்விளைத்தார்.

(இ - ள்.) தேவரும் - (முப்பத்துமுக்கோடி) தேவர்களும், கோடி தேவருக்கு ஒருவர் சிரங்கள் ஆய் நின்ற முப்பத்துமூவரும் - ஒவ்வொருகோடி தேவர்களுக்கு ஒவ்வொருவர் தலைமையாய்நின்ற முப்பத்துமூன்று தேவர்களும், தம் தம் வாகம் மேல்கொண்டு - தங்கள்தங்களுக்கு உரிய வாகனங்களில் ஏறிக்கொண்டு, முந்துற வந்து வந்து அணிந்தார் - முற்பட வந்து வந்து அணிவகுத்தார்கள்; (பின்பு), புவனத்து யாவரும் - உலகங்களிலுள்ள எல்லோரும், உகத்தின் இறுதி இன்றுகொல் என்று இரங்கினர் நடுங்க - கற்பமுடிவுகாலம் இப்பொழுதுதானோ என்று பரிதபித்து அஞ்சும்படி, அநேக விபுதரும் - (இங்ஙனங்கூடிய) தேவர்கள் பலரும், மேவரு மனிதர் இருவரோடு - கூடிநின்ற (கிருஷ்ணார்ச்சுனராகிய) மனிதரிருவருடனே, வெகுண்டு போர் விளைத்தார் - கோபித்துப் போர்செய்தார்கள்; (எ - று.)

முப்பத்துமூவர் - ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், அசுவிநீதேவர் இருவர் என இவர். முப்பத்துமூவரில் ஒருவனை மாத்திரம் விலக்குதலை, மேல் சுசு - ஆஞ் செய்யுளிற் காண்க. ஆகவே, முப்பத்துமூவரென்றது - இயற்கையெண்பற்றிக் கூறியது. இவ்வாறு கூறினாராயினும், ஏற்புழிக்கோடலால், முப்பத்திருவ ரென்றே கொள்ளுதல் சாலும். வாகம், சிரஸ், அநேகவிபுதர் - வடசொற்கள். வாகம் - வகிப்பது. அநேகர் - ஒன்றல்லாதவர். விபுதர் - விசேஷபுத்தியை யுடையவர். யான்முன்னே யான்முன்னே யென்று மிக்க உற்சாகத்தோடு ஒருவரினும்

ஒருவர் முற்பட்டு விரைந்து போர்க்குவருதல் சிறந்தவீரரது இயல்பாத லால் அங்ஙனம்வந்தன ரென்பார், 'முந்துறவந்துவந்து அணிந்தார்' என்றார். இன்று - இந்நாள். கொல் - ஐயம். உகத்தினிறுதி - யுகாந்தம். மேவரு, மேவு என்ற பகுதியும் வா என்ற துணைவினையுஞ் சேர்ந்து விகாரப்பட்ட மேவரு - பகுதி. மேவு அரு எனப்பிரித்து, (போரிற்பகைவர்) நணுகவொண் ணாத எனினும் அமையும். 'மனிதர்' என்றது, அவதாரமுறைபற்றி. முந் துற, உறு - துணைவினை. (கூசு)

[துவாதசாதித்தர் தோற்றேடுதல்.]

பச்சைவாசிகளுஞ்செய்யனவாகப்பாகரும்பதங்களேயன்றித்
தச்சவாளிகளாற்கரங்களுமிழந்தாதனிப்பெருந்திகிரியுந்தகர
வுச்சமாமகத்திற்பண்டொடிந்தொடியாதொழிந்தனபற்களுமொடிய
வச்சமேதுணையாவருக்கனுமொழிந்தவருக்கர்பன்னொருவருமகன்றார்.

(இ - ள்.) பச்சை வாசிகளும் செய்யன ஆக - (தங்கள் தேரிற் பூட் டிய) பச்சைநிறக்குதிரைகளும் (அம்புபட்டு இரத்தங் குழம்பியதனால்) செந் நிறமுடையனவாகவும், பாகரும்-தங்கள் தேர்ப்பாகர்களான அருணர்களும், பதங்களே அன்றி - (இயல்பாகக்) கால்களின்றி யிருத்தல் மாத்திரமேயன்றி, தச்ச வாளிகளால் கரங்களும் இழந்து - தைத்த அம்புகளினால் கைகளையும் இழக்கவும், பெரு தனி திகிரியும் தகர-பெரியஒற்றைச்சக்கரங்களும் உடைய வும், பண்டு உச்சம் மா மகத்தில் ஒடிந்து ஒடியாது ஒழிந்தன பற்களும் ஒடிய - உயர்ந்த பெரிய (தக்ஷமுனிவனது) யாகத்தில் ஒடிந்தவைபோக ஒடி யாது மிச்சப்பட்ட பற்களும் ஒடியவும், அருக்கனும்-(பூஷா என்னுஞ்) சூரிய னும், ஒழிந்த அருக்கர் பன்னொருவரும் - மற்றைச் சூரியர் பதினொருபேரும், அச்சமே துணை ஆ அகன்றார்-பயமே (தமக்குத்)துணையாயமைய ஓடிப்போ னார்கள்; (எ - று.)

துவாதசாதித்தியராவார் - இந்திரன், தாதா, பர்ஜந்யன், த்வஷ்டா, பூஷா, அரியமா, பகன், விவஸ்வான், விஷ்ணு, அம்சுமான், வருணன், மித் ரன் என்னும் பெயரினர். இப்பெயர்கள் சிறிது வேறுபாடாக வழங்கும் வகையும் உண்டு. பன்னிரண்டு மாசங்களில் ஒவ்வொன்றுக்கும் இவர்களி லொவ்வொருவர் உரியவராவர். இவர்களில் பூஷாவென்னுஞ் சூரியன் தக்ஷமுனிவன் செய்த யாகத்தில் வீரபத்ரக்கடவுளாற் பல்லொடிந்தமை பற்றி, அவனைத் தனியே யெடுத்துக்கூறி, மற்றையோரை 'ஒழிந்தபன்னொரு வர்' என்றார். தனது திருமகளாய்த் திருவவதரித்துச் சதியென்றும் தாக்ஷா யணியென்றும் பெயர்பூண்டிருந்த அம்பிகையைப் பரமசிவனுக்குத் திரு மணஞ்செய்து கொடுத்த பிரமபுத்திரனாகிய தக்ஷப்பிரஜாபதி, மாமனாகிய தனக்குத் தக்க மரியாதை செய்தில னென்ற காரணத்தாலும் மற்றுஞ்சில காரணங்களாலும் சிவபிரான்மேற் சினங்கொண்டு அவ்வுமாமகேசுரர்களை வரவழையாது அவிர்ப்பாகமுங்கொடாமல் அவமதித்து மற்றைத்தேவர்முனி வராதியோருடனே பெரியதொரு யாகத்தைச் செய்யாநிற்கையில், தாக்ஷா யணி தனது தாய்தந்தையரையும் தங்கை தமக்கை முதலிய சுற்றத்தாரை யும் ஒருங்கு கண்டு கூடிக் குலாவலா மென்னுங் கொள்கையால் தான் மாத் திரம் அவ்வேள்விக்குச் சென்று அங்கு அம்முனிவன் தன்னை அலட்சியஞ் செய்து தன்பதியையும் பழித்ததனால் அக்கினிப்பிரவேசஞ் செய்து தக்ஷ புத்திரியான உருவத்தை யொழிக்க, அதுகேட்டுச் சுடுசினங்கொண்ட உருத்திரமூர்த்தி தனது சடையைக் கீழேயடித்து அதனினின்று தோன் றிய வீரபத்திரக்கடவுளை நோக்கி 'நீ சென்று தக்கன் வேள்வியை அழித்து

வருக ' என்று கட்டளையிட, அவ்வீரன், அம்பிகையின் அம்சமான காளி யோடும் பலவகைப் பூதகணங்களோடும் புறப்பட்டுப் போய், யாகசாலையில் தீப்பற்றவைத்து, யூபஸ்தம்பத்தை ஒடித்துவிட்டு, அங்கு எதிர்ப்பட்ட தேவேந்திரனை வெள்ளையானையுடனே அள்ளியெடுத்து நிலத்திலரைத்தும், அக்கினியின் கைகளையும் நாக்கையும் அறுத்தும், யமனை என்புந்தசையும் அழியச் சிதைத்தும், நிருருதியின் கைகளைத் தறித்தும், வருணனைக் கடலில் வீசியும், வாயுவை அண்டகோளகை முகட்டி லடித்தும், குபேரனைச் செண் டாடியும், பகனென்னுஞ் சூரியனது கண்களைப் பறித்தும், அரியமாவென் னும் ஆதித்தியனது தோள்களை யறுத்தும், பூஷாவினது பற்களை யுதிர்த் தும், சந்திரனைத் தரையில்தேய்த்தும், வசுக்களையும் மருத்துவரையும் இரத் தஞ் சிந்தப் புடைத்தும், மானுருக்கொண்டு ஓடின யாகபுருஷனது கொம்பு களைப் பிடுங்கியெறிந்தும், பிருகுமுனிவனது நெற்றிமயிரைப் பறித்தும் பங் கஞ்செய்து, தக்ஷமுனிவனையுந் தலைதுணித்து, வேள்வியையழித்து மீண் டனனென்பது, இங்கு அறியவேண்டிய கதை. "சூரியனார் தொண்டை வாயினிற் பற்களை, வாரிநெரித்தவா றுந்தீபற, மயங்கிற்றுவேள்வியென் றுந் தீபற" என்ற திருவாசகமும், "உக்கன பல்லொடு கரங்க ளோடினர், புக்க னர் வானவர் புகாத சூழல்கள், தக்கன் நல்வேள்வியில் தழலு மாறின, முக் கணெண்டோளவன் முனிவுமாறினன்" என்ற கம்பராமாயணமும் இங்குக் காணத்தக்கன. தேவகணங்கள் பலவாறு சிதைந்து பரிபவப்படுகிற விஷ யத்தில் தக்ஷயாகத்தோடு காண்டவதகனத்துக்கு உள்ள ஒப்புமை தோன்ற 'உச்சமாமகத்திற் பண்டொடிந் தொடியா தொழிந்தன பற்களு மொடிய' என்றார். 'அருக்கன்' என்றது - அந்த மாதத்துக்குஉரிய சூரியனையும், 'ஒழி ந்த அருக்கர் பன்னொருவர்' என்றது - மற்றைப் பதினொரு மாதங்கட்கும் உரிய சூரியர்களையு மாமென்று கொள்ளுதலும் ஒன்று.

பச்சைநிறக் குதிரையும், இடைக்குக்கீழ்ப்பட்ட உறுப்பில்லாத அருண னாகிய பாகனும், ஒற்றைத் தனியாழித் தேரும் ஆதித்தனுக்கு உரியனவாத லாற் கூறப்பட்டன. அருக்கன் பாகன் பாதமில்லாததன் வரலாறு :— படைத்தற்றொழிலில் தனக்கு உதவியாம்படி பிரமனாற் படைக்கப்பட்ட உபப்பிரம ரொன்பதின்மரி லொருவனாகிய காசியபமுனிவனது மனை வியர் பலருள் கத்துரு வென்பவள் ஒருநாள் ஆகாயமார்க்கத்தே சென்ற உச்சைச்சிரவமென்னும் இந்திரனது வெள்ளைக்குதிரையைக் கருநிறமு டையதென்று மாறுபாடாகக்கூற, அவள்சக்களத்தியான விநதையென் பாள் அதனை மறுத்து வெண்ணிறமுடையதென்று உள்ளபடிகூறவே, இது காரணமாக இருவர்க்கும் மாறுபாடுஉண்டாகி, 'யாருரை பொய்யாகிறதோ அவள் மற்றவட்கு அடிமையாகக்கடவள்' என்று தம்மிற் சபதம் நியமித்துக் கொள்ள, பின்பு கத்துரு தனதுமக்களாகிய கருநாகங்களால் அவ்வெண்பரியை மறைப்பித்துக்காட்டி வஞ்சனைவழியால் விநதையைத் தனக்குஅடிமையாக்கி 'நீ உன்மகனால் தேவலோகத்திலிருந்து அமிருதங்கொணர்ந்து என்மக்கட்குக் கொடுக்கையில் உனது இவ்வடிமைத்தன்மை யொழியும்' என்று விடைகூற, பிள்ளையில்லாதவளான விநதை பிறகு தன்கணவனருளால் ஆயிரவருஷகால ங்கழித்துப்பலிக்கும்படியான இரண்டுஅண்டங்களைப் பெற்று அடைகாத்து வருகையில், ஐந்நூறுவருஷங்கழிந்தவளவிலே ஒருநாள் பெண்புத்தி பின் புத்தியாதலால் தனது அடிமைத்தன்மையை விரைவிலொழித்தலிலே கருத் துக்கொண்டு ஒருமுட்டையை யெடுத்துஉடைக்க, அதனுள் காலம்நிரம்பா மையால் இடைக்குக்கீழ்ப்பட்ட அவயவங்களில்லாமற் பாதிவடிவமாயிருந்த குமாரனொருவன் தோன்றி அருணனெனப்பெயர்பூண்டு தந்தையருளாற் சூரியனுக்குச் சாரதியாயினனென்பதாம். இவன், கருடனது தமையன்,

தச்ச - தைத்த வென்பதன் போலி. உச்சம், அர்க்கன் - வடசொற்கள், தக்ஷன் பெருமிதங்கொண்டு சிவபிரானையிகழ்ந்து செய்த யாக மென்பது தோன்ற, 'உச்சமாமகம்' எனப்பட்டது. உச்சம் ஆம் மகம் என்றும் பிரித்து உரைக்கலாம். வேறுஎவருந் துணையின்றித் தனித்தனிசிதறியோடின ரென்பார், 'அச்சமே துணையா அகன்றனர்' என்றார். ஏ - பிரிநிலை. தோற்றுப் போர்க்களத்தைவிட்டு ஓடிச்சென்றவிடத்தும் அச்சம் அவர்களைவிட்டிலது என்பது இதனாற் போதரும். இழந்து, ஒடிந்து - இழக்க, ஒடிய என்னும் எச்சங்களின் திரிபுகள். பன்னொருவர் - பதினொருவ ரென்பதன் மரூஉ: இனி, பன்னிரண்டு என்னுமிடத்திற் போல, பத்து என்னும் நிலைமொழி ஈறு கெட்டு அயல் தகரமெய் னகரமெய்யாயிற் றெனினும் அமையும்; இங்ஙனமே 'பன்னொன்கு' என வருதலும் உண்டு: இப்புணர்ச்சிகளை "இரண்டு முன் வரிற் பத்தி னீற்றுயிர்மெய், கரந்திட வொற்று னவ்வாகு மென்ப" என்ற சூத்திரத்தில் உபலக்ஷணத்தால் அடக்கிக்கொள்ளலாம். அச்சம் - அஞ்சு என்ற பகுதியின் தொழிற்பெயர். (கூ0)

(ஏகாதச ருத்திரர் தோற்றோடினமை கூறுஞ் செய்யுள் * இங்கு விடுபட்டிருக்கிறது. முப்பத்துமூவரில் பிரபாசனென்னும் வசுவைமேலே காரணங்காட்டிவிலக்குதல்போல இவர்களை எங்கும்விலக்காமை காண்க.)

[வசுக்களும் அசுவிநீதேவரும் தோற்றோடுதல்.]

எண்ணியவசுக்களெண்மரிற்கங்கையென்னும்யாய்வயிற்றினுற்பவித்த
புண்ணியனொழிந்தோரெழுவருந்தங்கள்புயவலிமையிற்பொருதிடுவார்
நண்ணியவமரின்விசயன்வெங்கணையாலுருப்புஎர்ந்துள்ளமுநடுங்கி
யண்ணியநிலையம்புகுந்தனரென்றுனிற்பரோவாயுள்வேதியரே.

(இ - ள்.) எண்ணிய வசுக்கள் எண்மரில் - எண்ணித்தொகையிடப் பெற்ற வசுக்க ளெட்டுப்பேரில், கங்கை என்னும் யாய் வயிற்றின் உற்பவித்த புண்ணியன் ஒழிந்தோர் எழுவரும் - கங்கையென்னுந் தாயின் வயிற்றில் (வீடுமனாய்த்) தோன்றியுள்ள நல்வினையுடையோனான பிரபாசனென்பவனொழிந்தவரான ஏழுபேரும், — தங்கள் புயம் வலிமையின் பொருதிடுவார் - தங்களுக்கு இயல்பாகவுள்ள தோள்வலிமையினாற் போர்செய்திடுபவர்களாகி, நண்ணிய அமரில்-நேர்ந்த யுத்தத்தில், விசயன் வெம் கணையால் - அருச்ச

* மாறுபட்டழியப்பற்குனன்கணையான்மழுக்களுஞ்சூலமுமுடைய
நீறுபட்டுடலினீற்றுடன்படியநெடுங்கொடியூர்தியேறுகளு
மேறுபட்டழியச்சடையில்வார்நதியிலேகியதூளிவானெறியுஞ்
சேறுபட்டிடமாறோடினார்மீளப்பதினொருதிறலுருத்திரருமே.

என்ற செய்யுள் யாம்கண்ட எட்டுப்பிரதிகளிலெல்லாம் இவ்விடத்திற் காணப்படுகிறது. வலிமையையுடைய ஏகாதசருத்திரர்களும், எதிர்த்துப்போர் செய்தபொழுது, அந்த அருச்சுனனது அம்புகளால் தம்தமது ஆயுதங்களாகிய மழுவும் சூலமும் உடைபடவும், அவை உடைந்து பொடிபட, அப்பொடி தங்களுடம்பில் இயல்பாகப்பூசியுள்ள விபூதியுடனே படியவும், தங்கட்கு உயர்ந்ததுவசமும் வாகனமுமாக வுள்ள எருதுகளும் பின்னப்பட்டு அழியவும், தாங்கள் ஓடிச்செல்லுங் காலத்துத் தங்கள்சடையினின்று வழிகிற கங்கைநதிப்பெருக்கினால் போரில் மேற்கிளம்புகிற புழுதி தேவலோகமௗவும் சேறுபடும்படியும் புறங்கொடுத் தோடினார்கள் என்று பொருள் காண்க. 'நீறுபட்டு உடலினீற்றுடன் படிய' என்றும், 'ஏறுகள் ஏறுபட்டழிய' என்றும், 'தூளிசேறுபட்டிடமாறு' என்றும் கூறினது, சமத்காரம். ஏறு - ரிஷபம்; மற்றோர் 'ஏறு'—படைக்கலத்தழும்பு: வாளேறு, வில்லேறு எனக் காண்க.

ளவாகிய கொடிய அம்புகளினால், நா புலர்ந்து - நா ஈரம்வறளப்பெற்று, உள்ளமும் நடுங்கி - மனமும் நடுங்கி, அண்ணிய நிலயம் புகுந்தனர் - (தாம்) தங்கியுள்ள இடத்துக்குப் போய்ச்சேர்ந்தார்கள், என்றால் - என்றுசொன்னால், ஆயுள்வேதியர் நிற்பரோ - தேவவைத்தியர்களான அசுவினீதேவர்கள் ஓடாதிநிற்கமாட்டுவரோ? [மாட்டார்: ஓடினரென்றபடி]; (எ - று.)

போருக்குஉரிய தேர்குதிரைசாரதிகளோடு எப்பொழுதுங் கூடியுள்ளவர்களான சூரியர்களும் தங்கள்புயவலிமையிற் பொருதிடுவாரான வசுக்களுமே போரில் அருச்சுனன்முன் நிற்கமாட்டாது புறங்கொடுத்துஓடினரென்றால், போர்செய்தலையன்றி வைத்தியஞ்செய்தலையே தம்தொழிலாகவுடையவர்களான அசுவினீதேவர்கள் அருச்சுனன்முன் போருக்குநிற்கமாட்டுவரோ என்பதாம். இங்ஙனம் ஒருபொருளைச்சொல்லி அதுகொண்டு **கைமுதிகநியாய** மென்னும் **தண்டாபூபிகாநியாயத்தால்** மற்றொருபொருளைச் சாதிப்பது, **தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி**; வடநூலார் **காவ்யார்த்தாபத்தியலங்கார** மென்பர். (கைமுதிகநியாயமாவது - "மங்கைமுகந் திங்களையே வாட்டிற்று அறைகுவதென், பங்கயமென்போது படும் பாடு" என்றாற்போல 'சொல்லவேண்டுவதென்ன?' என்னும் வாய்பாடு அமையக் கூறுதல்; இதுவே, தண்டாபூபிகாநியாய மெனப்படுவதும்: தண்டம் அபகரிக்கப்பட்டமை கூறுதலால், அதிற்கட்டிய அப்பம்முதலிய உணவு அபகரிக்கப்பட்டமை தானேவிளங்க வைத்தல் என இதற்குப் பொருள்காண்க. தண்டம்- தடி. அபூபம் - அப்பம் முதலிய பணியாரம்.) தலைமைத்தேவர்களில் ஆதித்தர் பன்னிருவரும் வசுக்களெழுவருமாகிய பத்தொன்பதுபேர் போரிற் பல்முதலியஉறுப்புக்கள்சிதைய அடிபட்டுத் தம்தம்வீடுசேர்ந்தனரென்றால், தேவர்கட்கு வைத்தியஞ்செய்தற்கே யமைந்தவர்களான அசுவினீதேவரிருவர் அவ்வாதித்தர்முதலியோர்க்கு நோய்தீர்க்குமாறு வைத்தியஞ் செய்தற்குச் செல்லக்கடவரே யன்றிப் போரில்நிற்கக்கடவரோ? அல்லர் என்றபொருளும் இதில் தோன்றும். கீழ்ச்செய்யுளோடு இச்செய்யுளும் ஒருதொடராகக் கொள்ளப்பட்டது. ஆயுர்வேதமாவது - வியாதியின் காரணம் குறி முதலியவற்றை யறிந்து மந்திரம் ஔஷதம் முதலியவற்றால் தக்க சிகிச்சை செய்யும்படி ஆயுள் ஆரோக்கியம் முதலியவற்றைச் சொல்லும் வைத்தியநூல். அதில்தேர்ந்தவர், ஆயுள்வேதியர்.

அஷ்டவசுக்களாவார் - ஆபன், துருவன், சோமன், அத்வரன், அநிலன், பிரத்யூஷன், அநலன், பிரபாசன் என்னும் இவர். இவர்களிற் பிரபாசனென்பவன் வீடுபேறுஎய்தப்பிறந்து பூமியில் வசித்தல்பற்றி, அவனொழிந்த எழுவரையுமே கூறினார். அவன் கங்கைவயிற்றிற்பிறந்த விவரம்:—முன்னொருகாலத்தில் தேவர்கள்யாவருங்கூடிய பிரமதேவனதுசபையிற் சென்று கங்காநதியின் பெண்தெய்வம் வணங்கியபொழுது அங்குவந்திருந்த வருணன் அவளழகை உற்றுநோக்கி அவள்மீது காதல் கொண்டான்; கங்கையும், அவன்மீது காதல்கொண்டு எதிர்நோக்கினாள்: அதனையறிந்த நான்முகக்கடவுள், வருணனைப் பூமியில் மானுடப்பிறப்பெடுக்கவும், கங்கையை மானுடமகளாய் அவனைச் சிலகாலம் மணந்திருக்கவுஞ் சபித்திட்டான்; அங்ஙனமே வருணன் குருகுலத்திற் சந்தனுவாய்ப் பிறந்தான்: கங்கையும், ஓர் மனிதமகளாகி 'யான் எந்தெந்தத்தீச்செயல்செய்யினும் மறுக்கலாகாது' என்னும் நியமத்தோடு அவனை மணஞ்செய்துகொண்டாள். இதுநிற்க: பிரபாசனென்னும் வசு, தன்மனைவியின் சொல்லைக் கேட்டு வசிஷ்டனிடமுள்ள காமதேனுவைக் கொள்ளைகொள்ள எண்ணினான்; மற்றை எழுவசுக்களும் அவனுக்கு உதவிசெய்யவே, எண்மரும் இரவிற்சென்று பசுவைக் கவர்ந்தனர்: அதனையறிந்த வசிஷ்டமகாமுனிவன், அஷ்டவசுக்களையும் மானுடசன்மமெடுக்க

வும், அவர்களுள் மனைவிசொற்கேட்ட பிரதானனான பிரபாசனைப் பூமியில் பலநாள்வாழ்ந்து பெண்ணின்பமற்றிருக்கவுஞ் சாபங்கொடுத்தான்; எட்டு வசுக்களும் சந்தனுவுக்குக் கங்கையின்வயிற்றிற் பிறந்தனர்; முதலிற்பிறந்த ஏழுகுழந்தைகளையும் தாய் பிறந்த அப்பொழுதே கங்காநதியில் எடுத்தெறிந்து விட்டாள்; எட்டாவதுபிள்ளை பிறந்தவுடனே தந்தை 'இக்குழந்தையைக் கொல்லலாகாது' என்று மறுக்க, கங்கை முன்சொல்லியிருந்தபடி கணவனை விட்டு நீங்கினள். அவ் வெட்டாவது மகனே, வீடுமன். இங்ஙனம் வசுக்களிலொருவனான வீடுமன் போர்த்தொழிலிற்சிறந்தவனென்பது பிரசித்தமாதலால், அவனினத்தவரான வசுக்களுக்கு 'தங்கள் புயவலிமையிற் பொருதிடுவார்' என்ற அடைமொழி கொடுத்தார். வீடுமன், தனதுதந்தை இரண்டாவது மணஞ்செய்துகொள்ளவிரும்பியதை நிறைவேற்றுதற்கு, சத்தியவதியென்பவளை வளர்த்த தந்தையான செம்படவன் இசைந்துகொடுக்குமாறு, மூத்தமகனுக்குப் பட்டத்துக்குஉரிய தனது இராச்சியத்தையும் மற்றும் எல்லாச்செல்வங்களையும் தனக்குச்சிறியதாயாக வருமவளுக்குப் பிறக்கும் பிள்ளைக்கே கொடுப்பதாகவும் தான்மணஞ்செய்துகொள்வதில்லையென்றும் கேட்போர் அஞ்சும்படியான சபதங்களைச் செய்து, ஒழித்தற்குஅரிய மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை யென்னும் மூவகை ஆசையையும் இளமையிலேயே ஒழித்துநின்ற திரிகரணசுத்தி யுடைய னாதலால், 'புண்ணியன்' எனப்பட்டான்; பரிசுத்த னென்று பொருள். எண்மர் - எட்டு என்ற பகுதி, எண் என விகாரப்பட்டது; ம் - எழுத்துப்பேறு. உற்பவித்த - உத்பவம் என்ற வடமொழிப்பெயரி னடியாப் பிறந்த பெயரெச்சம். புண்யன், நிலயம், ஆயுஸ் - வடசொற்கள். அண்ணிய - அண் என்ற வினைப்பகுதியின் மேற் பிறந்த தெரிநிலைவினையெச்சம்; இன் என்றஇறந்தகாலஇடைநிலை ஈறு தொக்கது; எண்ணிய, நண்ணிய என்பவையும் இவ்வாறே. (உஉ)

[திக்பாலகர்களும் சந்திரனும் போர்செய்யமாட்டாமை.]

**அருணவெங்கனலோன்கனலொடுகலந்தா னாசுகனவற்குநண்பானான், கருணையில்யமனுங்கானிடைமடியுங்கணத்திலேகவலையுற்றனனால், வருணனுங்கடல்கள் வறத்தல்கண்டழிந்தான் மதியொடுவைச்சிரவணனு, மிருணிறவரக்கன்றானுமிங்கிவரோடெங்ஙனம்பொருதுமென்றிளைத்தார்.**

(இ - ள்.) அருணம் வெம் கனலோன் - செந்நிறத்தையுடைய வெவ்விய அக்கினிதேவன், கனலொடு கலந்தான் - (அவ்வனத்தையெரிக்கிற) அக்கினியோடு சேர்ந்தான்: ஆசுகன் - வாயுதேவன், அவற்கு நண்பு ஆனான் - (வனத்தையெரிக்கிற) அந்த அக்கினிக்குத் துணையாய்விட்டான்; கருணை இல் யமனும் - அருளில்லாதவனான யமனும், கானிடை மடியும் கணத்திலே கவலை உற்றனன் - அக்காண்டவவனத்தில் மிகுதியாக அழிகிற சீவராசிகளைக் கவர்தலிலேயே கவலைமிக்கவனானான்; வருணனும் -(நீர்க்கடவுளான) வருணனும், கடல்கள் வறத்தல் கண்டு அழிந்தான் - (எழுவகை மேகங்களும் ஒருங்கு முகந்துகொள்ளுதலாற்) கடல்களெல்லாம் வற்றுதலைக் கண்டு மனமழிந்தான்; மதியொடு - சந்திரனும், வைச்சிரவணனும் - குபேரனும், இருள் நிறம் அரக்கனும் - கரிய நிறத்தையுடைய நிருருதியும், இங்கு இவரோடு எங்ஙனம் பொருதும் என்று இளைத்தார் - இப்பொழுது இந்தக் கிருஷ்ணார்ச்சுனர்களோடு நாம் எவ்வாறு போர்செய்வோமென்று இளைப்படைந்துபோனார்கள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை. தான்-அசை.

கீழ் உச - ஆஞ் செய்யுளில் 'கோடி தேவருக்கு ஒருவர் சிரங்களாய் நின்ற முப்பத்துமூவர்' என்ற கணதேவர் முப்பத்துமூவரும் தோல்வியுற்

ற்றைத ழுந்திணைகவிகளிற்கூறி, கூஙு-ஆஞ் செய்யுளில் 'ஏனையதிசையின்பாலரெனப்பட்ட எழுவருடைய நிலைமையை இச்செய்யுளிற்கூறுகிரு ராதலால், இதில் 'மதியொடு வைச்சிரவணனும்' என்றவிடத்து, 'மதியுமம் மதிமுடித்தவனும்' என்ற பாடமே சிறந்தது; இதுவே யாம்கண்ட ஏட்டுப்பிரதிகளிலெல்லாம் காணப்படுகிறது. அப்பாடம் - குபேரனும் அழகிய சந்திரனைமுடியில் தரித்தவனான ஈசானனும் என்று பொருள்பட்டு, இவ்விடத்துக்குப்பொருந்தும். மதியென்பது - சந்திரனுக்கேயன்றிக் குபேரனுக்கும், ஒருபெயராதலே, மேல் நிரைமீட்சிச் சருக்கத்தில் "குடதிசைமகவான்வாளி குணதிசைவருணன்வாளி, வடதிசைமறலிவாளி தென்றிசைமதியின்வாளி, அடலுறவிமைப்பினேவி" என்றவிடத்துங் காண்க. ஸோமன் என்ற வடசொல் - சந்திரனுக்கேயன்றிக் குபேரனுக்கும் வழங்குகிறது; 'அந்தமானசோத்தரபருவதத்தின்மேல் கிழக்கில் இந்திரனுடைய பட்டணமும், தெற்கில் யமனுடைய பட்டணமும், மேற்கில் வருணனுடைய பட்டணமும், வடக்கில் சோமனுடைய பட்டணமும் விளங்குகின்றன' என விஷ்ணுபுராணத்திற் காண்க; அவ்விடத்தில் சோமனெனப்பட்டவன் குபேரனேயென்பதை "வடதிசைதனதன்மேவி வளர்விபா வரியென்றேதும, நெடுநகர் பொருந்தும்" என்ற பாகவதத்தினால் அறிக. ஸோமன் என்ற வடசொற்போலவே அதன்பரியாயநாமமான மதியென்பதும் இருவர்க்கும் வழங்கப்பட்டதென அறியலாம். எழுவரில் நால்வர் வேறுபட்டுப் போர்செய்ய முனையாமையால், மற்ற மூவரும், 'இனி நாம்மாத்திரம் என்செய்வோம்' என்று இளைத்தனரென்க. இது 'இங்கு' என்பதனால் விளங்கும்; இங்ஙனம் எம்இனத்தவரானநால்வர் வேறுபட்டுச்சென்ற இப்பொழுது என்றபடி. ஈசானனும் குபேரனும் கைலாசமலையாகிய ஓரிடத்திலே தம்மில்நண்புகொண்டு உறைபவராதலாலும், யட்சர்களோடு ஒருசார் இராக்கதர்க்குந் தலைவனும் இராட்சசராசனான இராவணனது தமையனுமாகிய குபேரனோடு இராக்கதகுலத்துக்கு ஆதிபுருஷனான நிருருதிக்கு உள்ள இயைபுபற்றியும், இம்மூவரையும் ஒருசேரக் கூறினரென்றல் அமையும். இத்திக்பாலகர் வரிசையினிடையிலே சந்திரனைப்புகுத்திச் சொல்லுதல் பொருந்தாதாதலால், 'மதியொடு வைச்சிரவணனும்' என்ற பாடம் சிறவாது; சந்திரன் கணதேவர்களி லொருவனல்லனாதலால், அவன் தோற்றல், பொதுப்பட மற்றைத்தேவர்கள் தோற்றதில் அடங்கும். இனி, 'மதியொடு' என்ற பாடத்துக்கே - மதிக்கப்படுபவனான ஈசானனோடு என்று பொருளுரைத்துக் கொள்ளுதலும் ஒன்று.

'அருண வெங் கனலோன்' என்றது, அதிகாரிபுருஷரி லொருவனான அக்கினிதேவனைச் சுட்டியது. அவனும் மற்றைத்திக்பாலகர்களுடனே போர்க்குவந்தனனென்பதை, கீழ் 'ஏனையதிசையின்பாலர்' என்றவிடத்தில் அக்கினிதேவனை விலக்காததனாலும் அறிக. தருமனெனப்படுகிற யமனுக்கு 'கருணையில்' என்ற அடைமொழி கொடுத்தது - தீவினைசெய்தவரைத்தண்டித்தலிற் கண்ணோட்டமும் பக்ஷபாதமு மில்லாதவனென்றபடி. அன்றி, "ஆட்பார்த் துழலும் அருளில்கூற் றுண்மையால், தோட்கோப்புக் காலத்தாற் கொண்டுய்ம்மின் - பீட்பிதுக்கிப், பிள்ளையைத் தாயலறக் கோடலான் மற்றதன், கள்ளங் கடைப்பிடித்தல் நன்று" என்று நாலடியாரிலும், "பெற்றதாய் புரண்டலறப் பிள்ளையுயிர் தான்கொண்டும் பெருகுங் காதல், உற்றழுவப்பாலர்தமை ஈன்றெடுத்து வளர்த்தாரை யுயிரையுண்டும், குற்றமானதும்பெருக்குங் கொடுநமன்" என்று உத்தரராமாயணத்திலுங் கூறியுள்ளபடி பிராணிகளை அவ்வவற்றிற்குரிய ஆயுட்காலம் தவறாதபடி வருத்திக்கொல்லுதலிற் கருணையற்றவனென்றுங் கொள்ளலாம். யமன் என்ற வடமொழிப்பெயர் - (பிராணிகளை) ஒழிப்பவனென்று பொருள்படும். இங்

னம் பிராணிகளைத் தன்வசத்திற் கொண்டுள்ளவனாதலால் "தொல்லுயிர் நாயகன்" எனப்படுகிற யமன் காண்டவவனத்திற் சிதைகிற பிராணிகளை உயிர்தொலைத்தலும் அவ்வவற்றின் வினைகளுக்கு ஏற்ப அவ்வவற்றைப் பரகதிகளிற் செலுத்தலு மாகிய தனது கடமைத் தொழிலிற் கண்வைத்தனனே யன்றிக் கிருஷ்ணார்ச்சுனர்களை யெதிர்த்துப்பொருதலிற் சிறிதுங் கருத்தைச் செலுத்தில னென்க.

வைச்சிரவணன் என்ற பெயர் - விச்ரவஸ் என்னும் முனிவனது மகனென்று பொருள்படும்; வடமொழித் தத்திதாந்தநாமம். பொருதும் - தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று. கணத்திலே என்ற ஏகாரம் - பிரிநிலை. கவலை - ஐவிகுதிபெற்ற தொழிற்பெயர். (௬௭)

[அருச்சுனனது அம்புகளினால் மேகங்கள் சிதறுதல்.]

**சொன்மழைபொழிந்துநாடொறுந்தனதுதோள்வலி துதிக்குநாவலர்க்குப், பொன்மழைபொழியுங் கொங்கர்பூபதிதன் பொற்பதம் பொருந்தலர்போலக், கன்மழைபொழியுங்காளமாமுகிலுங்கடவுளர்த் துரந்தவன்கரத்தில், வின்மழைபொழியக்கற்களுந்துகளாய்மேனியும் வெளிறிமீண்டனவே.**

(இ - ள்.) நாள்தொறும் - தினந்தோறும், சொல் மழை பொழிந்து - சொன்மாரியைச் சொரிந்து, தனது தோள் வலி துதிக்கும் - தன்னுடைய தோள்களின் வலிமையைப் புகழ்கிற, நாவலர்க்கு - புலவர்களுக்கு, பொன் மழை பொழியும் - பொன்மாரியைச் சொரிகின்ற, கொங்கர் பூபதி தன் - கொங்கர்குலத்துத் தோன்றிய வரபதியாட்கொண்டானென்னும் அரசனுடைய, பொன் பதம் - அழகிய பாதங்களை, பொருந்தலர் போல - சரணமடையாத பகைவர்கள் (அவனுக்குப் புறங்கொடுத்தோடுதல்) போல,—கல் மழை பொழியும் காளம் மா முகிலும் - கல்மழையைச் சொரிகிற கரிய பெரிய மேகங்களும், கடவுளர் துரந்தவன் கரத்தில் வில் மழை பொழிய - தேவர்களைத் துரத்தியவனான அருச்சுனன் கையிற்கொண்ட (காண்டீவ) வில்லைக் கொண்டு (அம்பு) மழை சொரிதலால், கற்களும் துகள் ஆய் - (தம்மிடத்து உள்ள) கற்களும் பொடியாகப்பெற்று, மேனியும் வெளிறி - உடம்பும் வெளுத்து, மீண்டன - திரும்பிச்சென்றன; (எ - று.)—ஏ - ஈற்றசை; தேற்றமுமாம்.

**உவமையணி**: சொல்மழை பொழிதல் பலவகையாலும் உதவுகிற குளிர்ந்தமழைத்தாரை பொழிதல்போலப் பலவாறு நற்பொருள்விளக்கும் இனிய சொற்களைத் தட்டுத்தடையின்றி உபயோகித்தல். தோள்வலி - புஜபலம். துதிக்கும் - ஸ்துதி யென்ற வடமொழிப்பெயரின்மேற் பிறந்த பெயரெச்சம். நாவலர் - கவிபாடுதலும் உரைகூறுதலும் பிரசங்கஞ்செய்தலு மாகிய நாவின் வன்மையையுடையவர். பொன்மழைபொழிதல் - "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு, என்னாற்றுங் கொல்லோ வுலகு" என்றபடி மேகம் பிரதியுபகாரத்தைவிரும்பாமல் உலகத்துக்கு மழைபெய்துஉதவுதல் போல, எதிருதவியை யெதிர்பாராமற் புலவர்கட்குப் பொன்னை மிகுதியாகத்தருதல். கொங்கர் - கொங்குநாட்டிலுள்ளார். பூ பதி - வடசொல்; பூமிக்குத் தலைவன். பொருந்தலர் - எதிர்மறை வினையாலணையும் பெயர்; அல் - எதிர்மறை யிடைநிலை. கல்மழை - சிலாவர்ஷம். கடவுளர்த் துரந்தவன் - உயர்திணையில் இரண்டனுருபு தொக்கது; உயர்திணைப்பெயர் முன் வலி மிக்கது: "இயல்பின் விகாரம்." வில்மழை பொழிதல் - அம்புகளை அளவின்றி மேன்மேற் சொரிதல். கடுமையாகப் போர்செய்து வந்த வரபதியாட்கொண்டானது பகைவர்கள் தம்மிடத்து உள்ள ஆயுதம்முதலிய பொருள்கள் உதவாது

ஒழிய அச்சத்தால் உடல்வெளுத்து மீண்டுசெல்லுதல் போல, கன்மழை பொழியுங் காளமேகங்கள் கற்கள் துகளாய்த் தம்மிடத்துஉள்ள நீர் ஒழிந்த தனால் வெண்ணிறம்பெற்று விலகின என்க. உடல் வெளுத்தல் - அச்சக் குறியாதலை "கண்ணிலான்மகன் கடுமையஞ்சியிம், மண்ணி லார் வெளா வடிவ மெய்தினர்" என மேற் சூதுபோர்ச்சருக்கத்திலுங் காண்க. முகி லும் என்ற உம்மை - இறந்தது தழுவிய எச்சத்தோடு, உயர்வுசிறப்பு. கன் மழை பொழியுங் காளமாமுகிலும் இங்ஙனமாயின என்றதனால், மற்றை முகில்கள் ஒருபயனுமின்றி வெளிறி மீண்டமை தானே விளங்கும். கற்க ளும், உம் - எதிரதுதழுவியஎச்சம். மேனியும், உம் - இறந்ததுதழுவியஎச்சம். இந்நூலாசிரியர் வரபதியாட்கொண்டானை இந்நூலின் இடையிடையே புகழ்ந்துபேசுதற்குக் காரணம், நூலாசிரியர்வரலாற்றில் விளக்கப்பட்டது. வித்துவான்களிடத்தில் அவ்வரசனுக்கு இயல்பாகவுள்ள மிக்க அபிமான மும், அவன் அவர்கட்கு மிகுதியாகப் பரிசளிக்கிற உதாரகுணமும், அவன் பல பெரும்பகைவர்களை எளிதில் ஒருங்கு அழிக்கிற பராக்கிரமச் சிறப்பும், இச்செய்யுளில் விளங்கும். பொற் பதம் - பொற்கழலணிந்த பதமுமாம்; பொன் - கருவியாகுபெயர். 'மீண்டதுவே' என ஒருமையாகக் காண்கிற பாடம் தகுதியுடையது; முறையே மணி நீர் பொன் பூ மண் கல் தீ என்ற வற்றைப் பொழிகிற சாவர்த்தம் முதலிய ஏழனுள் காளமுகியென்பதே 'கன்மழைபொழியுங் காளமாமுகில்' என்று இங்குக் குறிக்கப்பட்டதாதலின்.

[அருச்சுனன் இந்திரனையெதிர்த்து உக்கிரமாகப் போர்தொடங்குகையில் ஆகாயவாணி யெழுதல்.]

மாயவன்றனக்குநேயமைத்துனனாமைந்தனத்தந்தையைமதியான்
றூயவெங்கணையாலவனிடித்துவசந்துணித்தமர்தொடங்குமவ்வளவிற்
காயமெங்கணுநின்றொலியெழப்பரந்துகாயமில்கடவுளக்கடவு
ணாயகன்றனக்குப்பரிவுடனவைதீர்நல்லுரைநவின்றதையன்றே.

(இ - ள்.) மாயவன்தனக்கு - கண்ணபிரானுக்கு, நேயம் மைத்துனன் ஆம் - அன்புள்ள மைத்துனனாகிய, மைந்தன் - (இந்திர) குமாரனான அருச்சுனன், அ தந்தையை மதியான் -(தனது) பிதாவாகிய அவ்விந்திரனை லக்ஷ்யஞ்செய்யாதவனாய், தூய வெம் கணையால் - சுத்தமான கொடிய அம் பினால், அவன் இடி துவசம் துணித்து - அவ்விந்திரனுடைய இடியின் வடிவமெழுதிய கொடியைத் துண்டித்து, அமர் தொடங்கும் அ அளவில் - (மேலும்) போர்தொடங்குகிற அச்சமயத்திலே,—காயம் இல் கடவுள் - அசரீரியானது, காயம் எங்கணும் நின்று ஒலி எழ பரந்து - ஆகாயமெங்கும் நின்று ஒலியெழும்படி பரந்து, அ கடவுள் நாயகன்தனக்கு - தேவராசனான அந்தஇந்திரனுக்கு, பரிவுடன் - அன்போடு, நவை தீர் நல் உரை நவின்றது - குற்றம்நீங்கிய நல்ல வார்த்தைகளைச் சொல்லிற்று; (எ - று.)—ஐ - சாரியை. அன்று, ஏ - ஈற்றசைகள்.

மைத்துனன் என்ற சொல், பல உறவுமுறையில் வழங்குகிறது. இங்கு, அத்தையின்மகனை யுணர்த்தும். கண்ணபிரானது தந்தையாகிய வசுதேவரு க்கு உடன்பிறந்தவளான குந்தியின் குமாரனாதலால், அருச்சுனன், 'மாய வன்தனக்கு நேயமைத்துனனாம் மைந்தன்' எனப்பட்டான். உடன்பிறந்த வள்கணவனை மைத்துனனென வழங்குதலும் இங்குப்பொருந்தும்; அருச்சு னன் கண்ணனது தங்கையான சுபத்திரையை மணஞ்செய்துகொண்டவ னாதல் காண்க. தேவராசனான இந்திரனோடு பொருது வெல்லுதற்கு ஏற்ற

துணைவலிமை யுடையவ னென்பது தோன்ற, அருச்சுனனை 'மாயவன் தனக்குநேயமைத்துனனும்மைந்தன்' என்றார். மைந்தன்-வீரனுமாம். தூய-தூய்மையுடைய; கணைக்குத் தூய்மை - பழுதுபடாமை. அவனிடித்துவசம் துணித்து என்பதற்கு - அவ்விந்திரனுக்குக்கொடியாகிற இடியைத் துண்டித்து என்றும் பொருள்கொள்ளலாம். 'காயம்' என்ற சொல் இரண்டனுள், முந்தினது-ஆகாசமென்றவடசொல்லின்திரிபாகிய ஆகாயமென்பதன்முதற்குறை. எங்கண் - எக்கண் என்பதன் மெலித்தல்விகாரம். காயம் இல் கடவுள்-சரீரமில்லாத சொற்றெய்வம். 'காயமெங்கணும் நின்று ஒலியெழப்பரந்து காயமில் கடவுள்' என்றதில், சொல்லினால் முரண்தொடை அமைந்திருத்தல் காண்க. அருச்சுனனோடு பகைமைகொண்டதனால் இந்திரனுக்கு உளதாகும் அவமானத்தைப் போக்கி அமைதியை விளைக்கும் மொழி யாதலால், 'நவைதீர்நல் உரை' எனப்பட்டது. 'நவின்றதை' என்பதை வினைத்திரிசொ லென்றலும் உண்டு; "ஓடியதை யன்றே," "ஏகியதை மாதோ" எனச் சிந்தாமணியிலுங் காண்க. த்வஜம், காயம், நாயகன் - வடசொற்கள். (கூகூ)

[அந்த அசரீரிவார்த்தை.]

தமரினுமினியதக்ககன்முதலேதப்பினன்குருநிலஞ்சார்ந்தான்
குமரனுநும்மாலுய்ந்தனன்றூமக்கொடியனுங்கொண்டலுக்கவியா
னமர்களிலிருவர்நரனுநாரணனுநமக்குறிங்கிவர்சிறிதிளையா
ரமரினையொழிமினமரினையொழிமினமரருமமரர்நாதனுமே.

(இ - ள்.) தமரினும் இனிய தக்ககன் - (உங்கட்குச்) சுற்றத்தாரினும் இனியவனான தக்ஷகன், முதலே குருநிலம் சார்ந்தான் தப்பினன் - முன்னமே குருக்ஷேத்திரத்தையடைந்துள்ளானாதலால் (அக்கினிக்குத்) தப்பிப்பிழைத்தான; குமரனும்-(அவனுடைய) புத்திரனான அசுவசேனனும், நும்மால் உய்ந்தனன் - உங்களால் தப்பிப்பிழைத்திட்டான்; தூமம் கொடியனும் - புகைக்கொடியையுடையவனான அக்கினியும், கொண்டலுக்கு அவியான் - மேகத்துக்குத் தணியமாட்டான்; நரனும் நாரணனும் - அருச்சுனனுங் கிருஷ்ணனு மாகிய இவ்விருவரும், நமர்களில் இருவர் - நம்மவர்களில் [தேவர்களில்] சேர்ந்த இருவரே; இங்கு இவரும் நமக்கு சிறிது இளையார் - இத்தன்மையரான இவர்களும் நமக்குச் சிறிதும் இளைக்கமாட்டார்; (ஆதலால்), அமரரும் அமரர் நாதனும் தேவர்களும் தேவராசனுமான நீங்கள், அமரினை ஒழிமின் அமரினை ஒழிமின் - (இவர்களோடு செய்யும்) போரை ஒழியுங்கள் போரை ஒழியுங்கள்; (எ - று.)

கீழ் (சஎ - ஆம் கவியில்), தக்ககன்கெடுமென்று இந்திரன்கவன்றது, அவன்குருநிலஞ்சேர்ந்ததையறியாமையா லென்று அறிக. அடுக்கு, துணிவுப்பொருளது; விரைவுமாம். 'அமரரும் அமரர்நாதனும்' என்றது, முன்னிலைப்படர்க்கை. ஈற்றடி - இடவழுவமைதி; [நன் - பொது - உகூ.] சந்திரவம்சத்திற் பிரசித்திபெற்ற குருவென்னும் அரசனால் அமைக்கப்பட்ட நாடாதலால், குருகுலமென்றும், குருநாடென்றும், குருக்ஷேத்திரமென்றும் பேர்வழங்கும். இவ்வரசனால் அக்குலம் குருகுலமென்றும், அக்குலத்தவர் கௌரவரென்றும் பெயர் பெறுதலும் அறிக. குமரன் - குமார னென்றதன் குறுக்கல். வீரனுக்குத் துவசம்போல அக்கினிக்குப் புகை அறிகுறியாதலால், அக்கினிக்கு 'தூமக்கொடியன்' என்று பெயர். ஒழிமின் - ஏவற்பன்மை. நீங்கள் இவ்வளவு கோபித்துக் கடும்போர்தொடங்குதற்கு ஏற்ற காரணம் இல்லை யென்றும், உங்கள்முயற்சி சிறிதுபயன்பெற்ற தாதலால் அவ்வளவோடு மகிழ்ந்து விலகுதல் தகுதி யென்றும், இதற்குமேற்செய்யும்

முயற்சிகள் எவ்வாற்ருனும பயன்படா வென்றும் அசரீரிவார்த்தையால் விளங்கும். தமர், நமர் - கிளைப்பெயர்கள் ; தாம், நாம் - பகுதி. 'இங்கவர்' என்றும் பாடம். (எ0)

[அதுகேட்டு இந்திரன் போரொழிதலும், அருச்சுனன் வெற்றிச்சங்கம் முழங்குதலும், கண்ணன் அருச்சுனன்திறத்தை வியத்தலும்.]

என்றுகொண்டுரைத்தமொழிசெவிப்பட்டவெல்லையினிரவிமுன்
னிருள்போற், றுன்றுதன்சேனைச்சுரகணஞ்சூழச்சுரபதிதுறக்கமத
டைந்தான், வென்றுவெங்களங்கண்டருச்சுனன்றனதுவெற்றிகொள்
சங்கமுங்குறித்தா, னன்றுசெந்திருமாலருச்சுனன்பொருதவாண்மை
கண்டதிசயித்தனனே.

(இ - ள்.) என்று கொண்டு உரைத்த மொழி - என்று (அசரீரி) சொன்னவார்த்தை, செவி பட்ட எல்லையின் -காதிற் பட்டவளவிலே,—சுரபதி-தேவராசனான இந்திரன், துன்று தன் சேனை சுர கணம் சூழ - நெருங்கிய தனதுசேனையான தேவர்கள்கூட்டம் தன்னைச்சூழ்ந்துவர, இரவி முன் இருள் போல்-சூரியன்முன்னிலையில் இருளா (ஒழிதல்) போல, துறக்கம் அது அடைந்தான் - (அருச்சுனனெதிரில்நில்லாமல்) தனது சுவர்க்கலோகத்தையடைந்தான்; (பின்பு), அருச்சுனன்—,வென்று - (இவ்வாறு தேவர்களைச்) சயித்து, வெம் களம் கண்டு - கொடிய போர்க்களத்தைப் பார்த்து, தனது வெற்றி கொள் சங்கமும் குறித்தான் - ஜயத்தைக்கொண்ட தன்னுடையசங்கத்தையும் ஊதிமுழக்கினன்; செம் திரு மால் - செந்நிறமுள்ள இலக்குமிக்குக் கணவனான கண்ணபிரான், அன்று அருச்சுனன் பொருத ஆண்மை கண்டு அதிசயித்தனன்-அனறைத்தினத்தில் அருச்சுனன் போர்செய்த ஆண்திறமையைப் பார்த்து ஆச்சரியப்பட்டான்; (எ - று.)

'என்றுகொண்டு' என்பதில், 'கொண்டு' என்பது - அசை; "என்றுகொண்டினைய கூறி" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க. இரவிமுன் இருள் - எதிர்த்துநின்று பொரும்ஆற்றல் சிறிதுமின்றி யோடுதற்கு உவமை. ரவி, ஸேநா, ஸுரகணம், ஸுரபதி, சங்கம் - வடசொற்கள். துறக்கம்-(இவ்வுலகசம்பந்தத்தைத்) துறந்து அடையுமிட மென்று பொருள்படுகிற காரணக்குறி; இனி, ஸ்வர்க்க மென்ற வடமொழி துறக்கமெனச் சிதைந்ததென்பாரு முளர். பகைவரை வென்றொழித்தபின்பு தனது பெருமிதந்தோன்றப் போர்க்களங்கண்டு தனதுவெற்றிக்கு அறிகுறியாகத் தன்சங்கத்தைமுழக்குதல், வீரரியல்பு. ஆண்மை - பௌருஷம், பராக்கிரமம். திருமால் இராமனானபொழுது திருமகள் சீதையாகவும், அப்பெருமான் கண்ணனானபோது அப்பிராட்டி ருக்மிணியாகவும், மற்றும் அப்பரமன் வெவ்வேறுவடிவமாகத் திருவவதரித்தபோது அத்தேவி வெவ்வேறுவடிவமாகவுந் திருவவதரித்தலால், கண்ணனை 'செந்திருமால்' என்றார். (எக)

[தேவர்களும் இந்திரனும் நாரதாதிமுனிவர்களும் அருச்சுனனைப் புகழ்தல்.]

வடமதுரையினுந்தென்மதுரையினுமதிகுலதிருபர்கன்னியரைக்
கடிமணப்புரிந்தோன்வின்மையின்வன்மைகண்ணுறக்கண்டவானவரும்
புடவியிலொருவரொடுமினிப்பூசல்பொரேனெனப்போனவாசவனு
முடிசடைமவுலிநாரதன்முதலாமுனிவருமுடிவறப்புகழ்ந்தார்,

(இ - ள்.) வட மதுரையினும் தென் மதுரையினும் - வடக்கிலுள்ள மதுராபுரியிலும் தெற்கிலுள்ள மதுராபுரியிலும், மதி குலம் நிருபர் கன்னியரை - சந்திரகுலத்து இராசகன்னியரிருவரை, கடி மணம் புரிந்தோன் - சிறப்பாக விவாகஞ்செய்துகொண்டவனான அருச்சுனனுடைய, வின்மையின் வன்மை - விற்றொழிலின் வலிமையை, கண் உற கண்ட - கண்ணெதிரிலே பொருந்தக் கண்ட, வானவரும் - தேவர்களும், புடவியில் ஒருவரொடும் இனி பூசல் பொரேன் என போன வாசவனும்-பூமியில் ஒருவரோடும் இனிப் போர்செய்யமாட்டே னென்று சென்ற இந்திரனும், முடி சடை மவுலி நாரதன் முதல் ஆம் முனிவரும் - முடித்த சடைமுடியையுடைய நாரதன் முதலான இருடிகளும், முடிவு அற புகழ்ந்தார் - (அருச்சுனனை) அளவின்றிப் புகழ்ந்தார்கள்; (எ - று.)

மதிகுலநிருபர் கன்னியர் - வசுதேவர் மகளான சுபத்திரையும், சித்திரவாகனபாண்டியன் மகளான சித்திராங்கதையும். இவர்களை மணம்புரிந்த விவரம், கீழ்ச்சருக்கத்திற் கூறப்பட்டது. முதலில் மதுவென்னும் அசுரன் கைக்கொண்டிருந்தமை பற்றியும், கண்ணுக்கு இனிமையானதுபற்றியும், பின்பு மதுவென்னுஞ் சந்திரகுலத்து அரசனாற் சீர்திருத்தி யாளப்பட்டமைபற்றியும், * வடமதுரைக்கு 'மதுரா' என்று பெயர்; வடசொல்: இது, வடநாட்டில் யமுநாநதிதீரத்தி லுள்ளது. † தென்மதுரைக்கு அப்பெயர் வந்த காரணம் - குலசேகர னென்னும் பாண்டியன் காடுகெடுத்து நகராக்கி அந்நகரத்திற்குச் சாந்திசெய்யக் கருதியபொழுது, சோமசுந்தரக் கடவுள் தனது சடையிலுள்ள சந்திரனிடத்தினின்று அமிருதத்தை உகுக்க, அவ்வமுதம்சென்று அந்நகர்முழுவதும் பரவிச் சாந்திசெய்து மதுரமயமாக்கியதனால் மதுரையெனப் பெயர்பெற்ற தென்பர்; இது, தென்னாட்டில் வையையாற்றங்கரையி லுள்ளது. (நிலவுலகத்தவனான அருச்சுனனோடு பொருது தோற்றதனால், இந்திரன், 'புடவியி லொருவரொடு மினிப் பூசல்பொரேன்' என்று வெறுப்பவனானான். என - என்றெண்ணி, அல்லது என்றுசொல்லி. 'கண்ட' என்பதற்குச் செயப்படுபொருளான 'வன்மை' என்பதையே 'புகழ்ந்தார்' என்பதற்கும் செயப்படுபொருளாகக் கொள்ளினுமாம். 'கண்ணுறக் கண்ட' என்பதை, வானவர் வாசவன் முனிவர் என்ற மூன்றுக்குங் கூட்டுக. கடி - உரிச்சொல்; [நன் - உரி - சுசு.] நிருபர், ஜடா, மௌலி, நாரதன் - வடசொற்கள். நிருபர் - மனிதர்களைக் காப்பவர்; நிரு - மனிதர். நாரதன் என்ற பெயர் - ஆத்துமஞானத்தை யுபதேசிப்பவ னென்றும், மனிதர்களுக்குஉள்ள ஒற்றுமையைக் கெடுப்பவ னென்றும் காரணப்பொருள்படும். நரன் - ஆத்மா, அதற்குஉரிய ஞானம் - நாரம், த - கொடுத்தல். அல்லது, நரர் - மனிதர், அவர்சம்பந்தமான ஒற்றுமை - நாரம், த - கெடுத்தல். முடிசடை - வினைத்தொகை. மவுலி - முதற்போலி. (எஉ)

[ஸ்ரீக்ருஷ்ணார்ச்சுனரது அருளால் மயன் அத்தீயினின்று தப்பி யுய்தல்.]

மாசுணத்தரசன் மந்திரமமைத்தவனத்திடையிருந்தமாமயனை
யாசுசுக்கணிசென்றடர்த்தலும்வெருவியருச்சுனவபயமென்றரற்றத்
தேசுடைத்திகிரிச்செங்கண்மால்கருணைசெய்தனன்றீவினையுறினும்
பேசுதற்கரியபெரியவர்நினைக்கின்யார்கொலோபிழைத்திடாதவரே.

(இ - ள்.) மாசுணத்து அரசன் மந்திரம் அமைத்த வனத்திடை இருந்த மா மயனை - சர்ப்பராசனான தக்ஷகனது அரண்மனை அமைக்கப்பட்

* Muttra. † Madura.

டுள்ள அக்காட்டிலே யிருந்த சிறந்த மயனென்பவனை, ஆசுசுக்கணி சென்அடர்த்தலும் - அக்கினி போய் நெருக்கி வருத்தியவளவிலே, (அந்தமயன் வெருவி - அஞ்சி, அருச்சுனு அபயம் என்று அரற்ற - 'அருச்சுனனே! (நா உனக்கு) அடைக்கலம்' என்றுசொல்லிக் கதற, தேசு உடை திகிரி செ கண் மால் - ஒளியையுடைய சக்கராயுதத்தையேந்திய சிவந்தகண்களையுடை ஞன கண்ணபிரான், கருணை செய்தனன் - (அவன் பிழைக்கும்படி) அருள் செய்தான்; தீ வினை உறினும் - கொடிய துன்பம் நேர்ந்தாலும், பேசுதற்கு அரிய பெரியவர் நினைக்கின் - சொல்லுதற்கு முடியாத பெருந்தன்மையையுடைய மகான்கள் நினைத்தால், பிழைததிடாதவர் - (அத்துன்பத்தினின்று) நீங்கி உய்யாதவர், யார் கொல் ஓ - யார்தான்உண்டு? [எவருமில்லை என்றபடி].

கொடிய தீயி லகப்பட்ட மயன், கண்ணன் திருவுளத்திற் கருணைசெய்ததனால் அழிவடையாது தப்பிப்பிழைத்தனன் என்ற சிறப்புப்பொருளை 'தீவினையுறினும் பேசுதற்கரிய பெரியவர்நினைக்கின் யார்கொலோ பிழைத்திடாதவர்' என்ற பொதுப்பொருள்கொண்டு விளக்கியதனால், **வேற்றுப்பொருள்வைப்பணி.** தக்ஷகனுடைய மாளிகையினின்று மயன்நெருப்புக்குப்பயந்து ஓடினனென்பது விளங்க 'மாசுணத்தரசன்மந்திரமமைத்த வனத்திடையிருந்த மாமயன்' என்றும், அம்மயன் அருச்சுனு அபயமென்று அரற்ற அருச்சுனன் அபயங்கொடுக்க அம்மயனைக் கொல்லும்படி கோபத்தாற் கண் சிவந்து சக்கராயுதத்தையெடுத்த கிருஷ்ணனும் அருச்சுனனபயங்கொடுத்ததைக்கண்டு தானும் அவன்பக்கற் கருணைசெய்தானென்பது விளங்க 'திகிரிச்செங்கண்மால் கருணைசெய்தனன்' என்றுங் கூறினர். நெருப்பின் தொழில் நெருங்கினுலும் என்னும் ஒருபொருள் சமத்காரமாய்த் தோன்றுமாறு 'தீவினை உறினும்' என்றார்; கிருஷ்ணார்ச்சுனர் நோக்கத்தைக்கொண்டு, அக்கினியும் மயனைத் தகித்திலனென முதனூல் கூறும். கொடிய பாவப்பயன் நேர்வதாயிருந்தாலும் என்ற பொருளும், தொனிக்கும். 'அமைத்தவ்வனத்திடை' என்ற பாடத்துக்கு - தக்ஷகனுக்கு அரண்மனை நிருமித்துக்கொடுத்து அக்காட்டிலேயிருந்த என்று பொருள்கொள்க. மயன் - தெய்வத்தச்சரிருவரில் ஒருவன்; மற்றொருவன், விசுவகர்மா. மயன், அசுரசிற்பி யெனப்படுவன். மந்திரம், அபயம் - வடசொற்கள். தேசு, கருணை - தேஜஸ், கருணா என்ற வடசொற்களின் விகாரம். திருமாலுக்கு உரியதான சுதர்சநமென்னுஞ் சக்கராயுதம் கோடிசூரியர் ஒருங்குவிளங்கினாற்போலும் பேரொளியுடைய தாதலால், 'தேசுடைத்திகிரி' எனப்பட்டது. அபயம் - 'பயப்படாதே' என்று சொல்லிக் காக்கப்படும் பொருள். யார்கொலோ - கொல், ஓ என்னும் இரண்டும் - அசை. (எ௩)

எச - ஆம் செய்யுள், பரீட்சைக்குப் பாடமில்லை. அக்கினிபகவான் அருச்சுனனைத் துணைகொண்டு மேகங்களைவென்று அறுபதுயோசனைபரப்புள்ள அக்காண்டவவனத்தை யெரிக்கும்பொழுது, அவ்வக்கினியினின்று தப்பிப்பிழைத்தவர், மயனும் தக்ஷகனுடைய மகனான அசுவசேனனும் மந்தபாலமாமுனிவனது அருளால் தோன்றிய இளமையான சாதகப் பறவைக் குஞ்சுகள் நான்கும் ஆகிய ஆறுபிராணிகளே யன்றி வேறில்லை யென்பதாம். அக்குஞ்சுகள் அக்கினியைப் பிரார்த்தித்ததனாலும், அம்முனிவனது விருப்பத்தைத் தழுவியும், அக்கினி அவற்றை எரியாது விட்டனன். யோசனை - காதம்.

**[அக்கினி திருப்தியடைந்து கிருஷ்ணார்ச்சுனர்களை வாழ்த்திச் செல்லுதல்.]**

***என்பிறபுகல்வதிரேழுபுவனபெரிபிரானருந்தியதென்னக்***
***தன்பசிதணியக்காண்டவவனத்திற்சரா[illegible]ரமுள்ளவையனைத்தும்***

வன்புடனருந்தியுதரமுங்குளிர்ந்தான்வன்னிதன்வடிவமுங்குளிர்ந்தா
னன்புடையிருவர்க்காசியும்புகன்றனசைந்துபோய்த்துறக்கமுமடைந்தான்.

(இ - ள்.) பிற புகல்வது என் - மற்றும் (நாம்) சொல்வது என்ன? ஈரேழு புவனம் எம்பிரான் அருந்தியது என்ன - பதினான்குஉலகங்களை யும் திருமால் (பிரளயகாலத்தில்) விழுங்குதல் போல, வன்னி - அக்கினி தேவன், காண்டவவனத்தில் சர அசரம உள்ளவை அனைத்தும் - அக்காண் டவவனத்திலே ஜங்கமமும் ஸ்தாவரமுமாக வுள்ள பொருள்களை யெல்லாம், தன் பசி தணிய வன்புடன் அருந்தி - தனது பசித்தீத் தணியும்படி வலிமை யுடன் உண்டு, (தன்) உதரமும் குளிர்ந்தான் - தனது வயிறுங் குளிர்ந்தவ னாய், தன் வடிவமும் குளிர்ந்தான்-தனதுஉருவமும் ஆறி, அன்பு உடை இரு வர்க்கு ஆசியும் புகன்றான் - அன்பையுடையவர்களான அந்தக்கிருஷ்ணார்ச் சுன ரிருவர்க்கும் ஆசீர்வாதத்தையுஞ் சொல்லி, அசைந்து போய் - அசைந் தசைந்து சென்று, துறக்கமும் அடைந்தான் - விண்ணுலகத்தையுஞ் சார்ந் தான்; (எ - று.)

பிரமன்முதலான சகலதேவர்களு முட்பட யாவும் அழிந்துபோகின்ற கற்பாந்தகாலத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணு அண்டங்களையெல்லாம் தன்வயிற் றில் வைத்து அடக்கிக்கொண்டு ஏகார்ணவமான மகாப்பிரளயசமுத்திரத் திலே சிறுகுழந்தைவடிவமாய் ஆதிசேஷாம்சமான ஆலிலையின்மீது பள்ளி கொண்டு யோகநித்திரைசெய்கின்றன னென்பது கதை. எம்பிரான் - நமக் கெல்லாந் தலைவன்; 'எம்' என்ற தன்மைப்பன்மை, இங்குஎல்லாவுயிர்களை யும் உட்படுத்தியது. உதரம், ஆசிஸ்-வடசொற்கள். ஆசி-வாழ்த்து. அக்கினி காண்டவவனத்தை முழுதும்உண்டதற்குத் திருமால் உலகத்தையுண்டதே உபமானமாவதன்றி வேறுஉவமையில்லை யென்பது, 'என் பிற புகல்வது' என்றதனால் அமையும். வயிறுநிரம்ப உண்டதனாலும், நோய் நீங்கியதனாலாகிய சுகானுபவத்தாலும், அக்கினி அசைந்துசென்றன னென்க. வன்புடன் அ ருந்தி-முன்பு தன்னால் எளிதில் உண்ண இயலாமையாற் கிருஷ்ணார்ச்சுனர் களுடைய உதவிபற்றி வலியஉண்டு என்க. 'ஈரேழு புவனம்' என்றவிடத்து, முற்றும்மை விகாரத்தால் தொக்கதென்க; "இனைத்தென்றறிபொருள் ... ......வினைப்படுத்துரைப்பின் உம்மைவேண்டும்" ஆதலின். இரண்டாம டியில், உம்மை - முற்று. மற்றை உம்மைகள் நான்கும் - எச்சம். அருந் தியது-இறந்தகாலத்தொழிற்பெயர். 'அன்புடை' என்பதற்கு - தன்பக்கல் அன்புடைய என்றும், ஒருவர்க்கொருவர் அன்புடையஎன்றும், எல்லா வுயிர் களிடத்தும் அன்புடைய என்றும் கருத்தாம். இருவர் - தொகைக்குறிப்பு.

[கிருஷ்ணார்ச்சுனர் இந்திரப்பிரத்தநகரஞ்சார்தல்.]

அமரரைமுதுகுகண்டகாவலருமவரவராண்மைகளுரைசெய்
தமரிலன்றெடுத்தபல்பெருங்கொடியாலலங்கரித்தமைத்ததந்தேர்மேற்
றமருடன்றுணைவர்நால்வருநகரச்சனங்களுமகிழ்ந்தெதிர்கொள்ளத்
தமரமும்முரசுமுழங்கவெண்சங்கந்தழங்கவந்தணிநகர்சார்ந்தார்.

(இ - ள்.) அமரரை முதுகு கண்ட காவலரும்-தேவர்களைப் புறங்கண்ட கிருஷ்ணார்ச்சுனர்களாகிய அரச ரிருவரும், அவர்அவர் ஆண்மைகள் உரை செய்து - (தேவர்களோடு நடத்திய போரில்) தாம்தாம்செய்த ஆண்மைத் தொழில்களைச் சொல்லிக்கொண்டு, அமரில் அன்று எடுத்த பல் பெருங் கொடியால் அலங்கரித்து அமைத்த தம் தேர்மேல் - போரில் அன்றைத்தினத் தில் மேல்உயர்த்திய பலபெரிய கொடிகளினால் அலங்காரஞ்செய்து சித்தஞ்

செய்யப்பட்டுள்ள தங்கள்தோகளனைம்ம லேறினபடியே, தமருடன் துணைவர் நால்வரும் நகரம் சனங்களும் மகிழ்ந்து எதிர்கொள்ள - (தங்கள்) சுற்றத்தார்களுடனே துணைவர்களான தருமன்முதலிய நால்வரும் அந்நகரத்திலுள்ள ஜனங்களும் மகிழ்ந்து வந்து எதிர்கொள்ளவும், தமரம் மும் முரசம் முழங்க-ஒலியையுடைய மூன்றுவகை முரசவாத்தியங்களும் முழங்கவும், வெள்சங்கம் தழங்க - வெண்ணிறமான சங்கவாத்தியங்கள் ஒலிக்கவும், வந்து அணி நகர் சார்ந்தார் - மீண்டுவந்து அழகிய இந்திரப்பிரத்தநகரத்தை யடைந்தார்கள் ; (எ - று.)

முதுகுகாணுதல் - புறங்கொடுத்தோடும்படி செய்தல். பல் பெருங்கொடி - கிருஷ்ணனது கருடக்கொடியும், அருச்சுனனது அநுமக்கொடியும்; ஒன்றல்லாததெல்லாம்பலவாதல்பற்றி, இவ்விரண்டுமே 'பல' எனப்பட்டன. துணைவர் - அருச்சுனனுடன் பிறந்தவர்; கண்ணபிரானுக்கு உற்ற நண்பர். துணைவர், நால்வர் என்ற சொற்களில், வ் - பெயரிடைநிலை. முரசு - முரஜ மென்ற வடசொல்லின் விகாரம். மும்முரசு - வெற்றிமுரசு, மங்கலமுரசு, கொடைமுரசு என்பன. இச்செய்யுளில் முன்னிரண்டடியிலும் பின்னிரண்டடியிலும் தனித்தனி முதலில் இரண்டெழுத்து ஒத்துவந்து பொருள் வேறுபட்டது, யமகமென்னுஞ் சொல்லணி. (எசு)

## காண்டவதகனச் சருக்கம் முற்றிற்று.

---

# ஆதிபருவம்

## முற்றுப்பெற்றது.

---

"இப்பெரும்பருவமுரைத்தவர்படித்தோரெழுதினோரிதன்பொருள்விரித்தோர்
செப்பருமன்பாற்கேட்டுளோரிதன்பேர்செப்பினோர்நிமையிற்றீர்ந்தே
எப்பெருஞ்சிறப்புமைந்தரும்வாழ்வுமிசைத்ததீர்க்காயுவுமுளராய்
ஒப்பருங்கதியுநிலைபெறவிளங்கியும்பரும்புகழவாழ்குவரே"

என்ற நல்லாப்பிள்ளைபாரதச்செய்யுளினால் இப்பருவத்துக்குப்பயனுணர்க.

---

# வில்லிபுத்தூராழ்வார் வரலாறு.

வில்லிபுத்தூராரென்பவர், தமிழில்மகாபாரதம்பாடியஒருமகாகவி. இவர் பிராமணசாதியிற்பிறந்தவரென்பது, இந்நூற்சிறப்புப்பாயிரத்தில் "வண்ண நான்கினு முயர்ந்துளோ னொருமுனி வந்தான்" என்றதனால் விளங்கும்.

இவருடைய மதம் வைஷ்ணவ மென்பது, சிறப்புப்பாயிரத்தில் "பைந் துழாய்முடிப் பரமனைப் பலகவித்துறையுஞ், சிந்தையான்மொழிந் தன்பர் தந்திருவுளம்பெற்றேன்" என வருதலினாலும், இவர் இப்பாரதத்தின் முதலி லும் இந்நூற் சருக்கங்களின் தொடக்கத்திலும் ஸ்ரீமகாவிஷ்ணுவின்விஷய மாகவே பலவாறு கடவுள்வாழ்த்துக் கூறியுள்ளதனாலும், 'எங்கள் மாதவன்" என்று நூலைத் தொடங்கியிருப்பதனாலும், வில்லிபுத்தூராழ்வா ரெனத் திருநாமமுடைமையாலும், தெளிவாகத் தெரியவருகிறது.

இவர் ஒன்பதாம் போர்ச்சருக்கத்துக்காப்புசெய்யுளில் "ஓராறுபேத சமயங்களுக்கு முருவாகிநின்ற வொருவ, னீராறுநாம முரைசெய்து மண் கொ டிவோர்கள்காணு மிமையோர்" எனத் துவாதசோர்த்துவபுண்டரத தைச் சிறப்பித்துக்கூறியுள்ளதனால். இவர் திருமண்காப்புசாதரும்ஸ்ரீவைஷ் ணவரென விளங்கும். இன்னும இவர் திருமாலினிடததுமாத்திரமேயன்றி அப்பெருமானடியார்களுட்சிறநதவரான ஆழ்வார்களிடத்தும் ஈடுபாடுடை யவரென்பதை, பதினேந்தாம்போர்ச்சருக்கததுககாப்பில் "கொந்தவிழ்த்த சோலைமன்னு குருகையாதிநெஞ்சிலே, வைதத முததிநாதன்" என நம்மாழ் வாரையும், பததாம்போர்ச்சருக்கததுக காப்பில் "கலிய னெங்கள் மங்கை யாதி கண்டுகொண்ட நாமமே" எனத் திருமஙகையாழ்வாரையும் கூறியுள் ளதனாற் காண்க.

இவர் திருவவதரிதத ஊர், நடுநாட்டிலுள்ள சனியூ ரென்பது.

பெண்ணையாறுபாயப்பெற்றதும், திருக்கோவலூர் முதலிய விஷ்ணு ஸ்தலங்களையும் திருவெண்ணெய்நல்லூர்முதலிய சிவஸ்தலங்களையு முடை யதும், நடுநாடென்று சொல்லப்படுவது மாகிய திருமுனைப்பாடிநாட்டில் சனியூரிலே பிராமணசாதியிலே வைஷ்ணவமதத்தில் வீரராகவாசாரிய ரென்பவர்க்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்த இவ்வில்லிபுத்தூரார், பா லியத்திலேயே நல்லாசிரியரையடைததுக கல்விகற்று, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் தம்மையொததாரும்மிக்காரும்இல்லையாம்படி மிக வல்லவராய், வடமொழியிலும மிக்கதேர்ச்சி பெற்று, ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகைப்பட்ட கவிகளையும் சிரமமில்லாமல் மிகஎளி தில் அமிழ்தினும்இனியனவாகப் பாடவல்லராய், சேரசோழபாண்டிய ரென்னுந் தமிழ்நாட்டுமூவேந்தர்களாலும் மிகக சிறப்புடன் விரும்பியழைக் கப்பட்டு ஆங்காங்குச்சென்று தமதுகல்விததிறததைப் பலவகையாலுங் காட்டி அவர்களைக் களிப்பித்து அவர்கள் அன்போடு அபிமானித்து மிகுதி யாக வழங்கிய சிறந்த பல பெரும்பரிசுகளைப் பெற்று, பற்பலகவித்துறை களபாடித் திருமாலை இரவும்பகலும் எப்பொழுதுந் துதித்துக்கொண்டு, (வடக்கே திருவேங்கடமும் தெற்கே கன்னியாகுமரியும் கிழக்கிலும் மேற் கிலுங் கடலும் எல்லையாக அமையப்பெற்றுள்ளதும், சோழநாடு பாண்டிய நாடு மலைநாடு கொங்குநாடு நடுநாடு தொண்டைநாடு எனப் பலவகையாகப் பகுக்கப்பட்டுள்ளதுமாகிய) தமிழ்நாடு முழுவதிலுந் தமது கல்விப்பெரும் புகழைப் பரவச்செய்துவந்தார். அங்ஙனம் வருகையிலே, முற்கூறியதிரு முனைப்பாடிநாட்டிலே வக்கபாகை யென்னும் இராசதானியிலே வீற்றி ருந்து செங்கோல்செலுத்தி, தலை இடை கடையென்னும் மூவகைச் சங்

---

* இவ்வரலாறு, இவர்குமாரராகிய வரந்தருவார் [வரதாசாரியர்] இரு பத்திரண்டு செய்யுள்களாற் செய்துள்ள சிறப்புப்பாயிரத்தைப் பிரதான ஆதாரமாகக்கொண்டும், மற்றுஞ்சில ஆதாரங்களால் வேறு சிலவிஷயங் களைச்சேர்த்தும் ஒருவாறு காட்டப்படுகிறது

கத்திலே வளர்ந்துவந்த தமிழ் பின்பு பங்கத்தையடையாதபடி நான்காவதொரு சங்கம்போல அதனைப்பாதுகாத்து, அருங்கவிப்புலவர்களை அன்புடன் ஆதரித்துவந்த வள்ளலும், கல்வி அறிவு ஒழுக்கங்களாலும் செல்வம் அதிகாரம் முதலிய நலங்களாலும் குறைவின்றி மிகச்சிறப்புற்றுவிளங்கியவனுமாகிய கொங்கர்குலத்துத்தோன்றிய வரபதியாட்கொண்டானென்கிற அரசன், இவ்வில்லிபுத்தூராரது கல்விகேள்வித் திறமைகளையும் அடக்கம் ஒழுக்கம் அன்பு அருள் வாய்மை முதலிய நற்குணங்களையுங் கேள்வியுற்று அறிந்து 'இக்குணங்களெல்லாம் ஒருவரிடத்திலே ஒருங்கே அமைந்திருப்பது அருமை அருமை!' என்று மிக ஆச்சரியமுற்று இவரைவரவழைத்து அநேகசம்மானங்கள் செய்து தனது ஆஸ்தாநபண்டிதராக அமைத்துவைத்து, ஒருநாள் இவரைநோக்கி 'உமக்கும் நீர் எழுந்தருளியுள்ள இந்த எனது சம்ஸ்தானத்துக்கும் உலகமுள்ளவளவும் அழியாப்பெருங்கீர்த்தி உண்டாகி நிலைபெறும்படி, வடமொழியில் ஸ்ரீவேதவியாசமகாமுனிவரால் விரித்துரைக்கப்பட்ட மகாபாரதசரித்திரத்தைச் செந்தமிழில் விருத்தப்பாடல்களினால் ஒருபெருங்காப்பியமாகத் தமிழ்பயில்வோர்அனைவரும் ஓதியுணர்ந்துஉய்யுமாறு பாடித்தந்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, இவர் அவ்வேண்டுகோளுக்கு இசைந்து (இதிகாசமிரண்டனுட்பெரியதாகிய) மகாபாரதத்தை மகாகாவியமாகச் சொற்சுவைபொருட்சுவைகள் மிக்குவிளங்கும்படி நல்லநடையிலே பாடியருளினார். இதுநிற்க:

இவர்பாரதம்பாடியகாரணம் இன்னும்இரண்டுவகையாகவுங்கூறப்படும்.

அவற்றுள், முதலாவது வருமாறு:—இந்தவில்லிபுத்தூரார்க்கும் இவர் தம்பியார்க்கும் தாயபாகத்தைப்பற்றி விவாதமுண்டாகி அவ்விஷயத்தை அவர்கள் அரசனிடம் அறிவித்தனர்; அரசன் இவரது கல்வித்திறத்தை முன்னமேகேள்வியுற்று அறிந்துள்ளவனாதலால் 'இவ்வளவு கற்றறிந்தவர்க்கும் உண்மையறிவு உண்டாகவில்லையே' என்றுமிகவும்விசாரமடைந்து 'அவ்வுண்மையறிவை அவர்க்கு உண்டாக்குவதற்கு ஏற்றஉபாயம், (தாயபாககாரணமாகத் துரியோதனாதியர் மாறுபட்டுஅழிந்ததைக் கூறும்) மகாபாரதநூலில் இவரைப்பழகும்படிசெய்வதே' என்றுநிச்சயித்து 'மகாபாரதத்தை நீர் தமிழிற் பாடவேண்டும்; பாடினபின்புதான் உங்கள் வழக்குத் தீர்க்கப்படும்' என்று கட்டளையிட்டான்; உடனே அவர் அவ்வாறே அப்பாரதத்தைப்பாடி அந்நூலின்நீதியிற்கருத்துஊன்றினவராய், பின்பு தாமே தம்தாயபாகத்தில் வெறுப்புற்று, அதனையும் தம் தம்பிக்கே கொடுத்துவிட்டனர் என்று கூறுவர் சிலர்.

வேறுசிலர் கூறுமாறு:—இவ்வில்லிபுத்தூரார் தம்மோடு வாதஞ்செய்து தோற்றவர்களது காதுகளைத் தோண்டியறுக்குந் துறட்டைக் கையிற்கொண்டு சென்று ஆங்காங்குள்ள பலபுலவர்களையுஞ் சயித்துவருகிறபொழுது திருவண்ணாமலைக்குப் போயினர்; அங்குத்தங்கியகல்விமான்கள் இவரைக்கண்டும் இவர்செய்கையைக்கேட்டும் அஞ்சியோடிச்சென்று தமதுதலைவரும் திருப்புகழ்பாடியவருமாகிய * அருணகிரிநாத ரென்னும் பெரும்புலவர்க்குச் செய்தியைஅறிவித்தார்கள்; அப்புலவர்பெருமான் வில்லிபுத்தூராரது செருக்கை யடக்கக் கருத்துக்கொண்டு அவரைவருவித்து 'யான் இப்பொழுது நூதனமாகப்பாடப்போகிறதொருநூலுக்கு, யான்பாடிவரும்பொழுதேகூடப் பொருள்கூறிவருவீராயின், உமதுகல்வித்திறம்விளங்கும்' என்று அலட்சியமாகச்சொல்லினர்; சொல்லவே, இவ்வாசிரியர், கடுஞ்சினங்கொண்டு, தம்மையெதிர்க்கிறஅவரைவென்று அங்குந் தமது வெற்றிக்கொடியை நாட்டக்கருதி, அக்கொள்கைக்கு உடன்பட்டார்; உடனே அருணகிரிநாதர்

* இவர் பிரபுடதேவமகாராஜாகாலத்திலிருந்தவ ரென்றும், அவன்காலம் இப்பொழுதைக்குஏறக்குறைய ச௫0-வருடங்கட்குமுன்பென்றும் கூறுவர்.

ஆசுகவியாகநூறுபாட்டில்முருகக்கடவுள்விஷயமாக 'கந்தரந்தாதி' என்னும் யமகவந்தாதியைப்பாடிவர, வில்லிபுத்தூராரும்உடனுக்குடனேஒவ்வொரு செய்யுட்கும் பொருள்கூறிவந்து இடையில் ஐம்பத்துநான்காம்பாட்டாகிய

* " திதத்தத்தத்தித்தத்திதிதாதைதாதுத்தித்தத்திதா
திதத்தத்தத்தித்ததிதித்தித்ததேதுத்துதித்திதத்தா
திதத்தத்தத்தித்தத்தைதாதநீதேதுதைதாதத்து
திதத்தத்தத்தித்தித்திதீதீதிதிதுதிதீதொத்ததே"

என்னும் ஒருமெய்யால் வந்த செய்யுட்குப் பொருள் உரைக்கமாட்டாமற் போனமையால் தோல்வியடைந்து தம்துறட்டை யெறிந்துவிட்டு அவ்வூரி னின்றும் புறப்பட்டுப் போவாராயினர்: போம்வழியிற் சிவாலயமொன்று

---

* (இதன்பொருள்.) தித தத்த தித்த - திதி தத்த தித்த என்னும் இத் தாளவொத்துக்களை, திதி - (தனது திருநடனத்தாற்) காக்கின்ற, தாதைதந்தையான பரமசிவனும், தாத - பிரமனும், துத்தி - படப்புள்ளிகளையுடைய, தத்தி-(ஆதிசேஷனென்னும்) பாம்பினது, தா-இடத்தையும், திதம்நிலைபெற்ற, தத்து-ததும்புகிற, அத்தி-சமுத்திரத்தையும், (சயனமாகக்கொண்ட), ததி தித்தித்ததே து-தித்திப்புடையதான தயிரையே உண்ட கண்ணனும், துதித்த - துதிசெய்யும்படியான, இதத்து - பேரின்பசொரூபியான, ஆதி - முதல்வனே! தத்தத்து - தந்தங்களையுடைய, அத்தி - ஐராவதயானையால் (வளர்க்கப்பட்ட), தத்தை - கிளிபோன்ற தெய்வயானையம்மைக்கு, தாத - தொண்டனே! தீதே துதை - தீமையே நெருங்கின, தாது - (ஏழு) தாதுக்களையுடையதும், அதத்து - மரணத்தோடும், உதி - பிறப்போடும், தத்து - (அநேக) ஆபத்துக்களோடும், அத்து - இசைந்திருப்பதுமான, அத்தி தித்தி - எலும்புகளை மூடியதொரு பையைப்போன்ற இவ்வுடல், தீஅக்கினியினால், தீ - எரிக்கப்படுகிற,திதி - தினத்தில், துதி தீ - (உன்னைத்) துதிக்கும்புத்தி,தொத்ததே-(உனக்கே)அடிமையாகவேண்டும்;(என்றவாறு.)

திரிமூர்த்திகளாலுங் கொண்டாடப்படுபவனே! தெய்வயானை கொழுநனே! இவ்வுடம்பழியுங்காலத்து உன்னைத்துதிக்கும் என் அறிவை உன் திருவடிக்கு அடிமையாக்கவேண்டும் என்பதாம். தீ-எழுவாய், தொத்ததுபயனிலை. தித தத்த தித்த இம்மூன்றும் - பிற தாளமானங்கட்கும் உபலட்சணம். திதி - ஸ்திதி, தாதை - தாத, தாத - தாதா; வடசொல் திரிபுகள். படைத்தற்கடவுளாகையால் எல்லாப்பிராணிகட்கும் தந்தையாதல்பற்றி, 'தாத' என்று பிரமனைக் குறித்ததாகவுங் கொள்ளலாம். தத்தி - பாயுந்தன்மைய தெனப் பாம்புக்குக் காரணப்பெயர்; தத்துதல் - பாய்தல்: ஊர்தலுமாம்; இ - கர்த்தாப்பொருள்விகுதி: இனி, ஆபத்தை விளைப்பதென்றுமாம்; தத்து-அவமிருத்து, இ-பெயர்விகுதி. தா-இடத்தை யுணர்த்துகையில், உரிச்சொல். திதம் - ஸ்திதம்: வடசொல். தத்து - வினைத்தொகை. அத்தி-அப்தி என்னும் வடசொல்லின் திரிபு. ததி-வடசொல். து - முதனிலைத்தொழிலாகு பெயராகிய காரணக்குறி. துதித்த - ஸ்துதித்த. துதித்திதம் - பெயரெச்ச வீறு தொகுத்தல். இதம் - ஹிதம்; வடசொல். தந்தம் - தத்தம் என யமக நோக்கிய வலித்தல். அத்தி-ஹஸ்தீ யென்னும் வடமொழியின் திரிபு.தத்தைஉவமையாகுபெயர்; இன்சொல்லில் உவமம். தாத - தாஸ; வடசொல். அவளிடத்து மிக்க அன்பினால், அவளேவியபணிகளைச் செய்தலின், தாச னென்றது. அதம் - ஹதம். உதி - முதனிலைத் தொழிற்பெயர். அத்துஇசைப்பு அத்தி-அஸ்தி,வடசொல். தீ - அறிவைக் குறிக்கையில், வடசொல். தொத்து - அடிமை: அதனடியாப்பிறந்த குறிப்புமுற்று, தொத்தது. ஏபிரிநிலையோடு, தேற்றம்.

இருக்க, அது தம்கண்ணிற்படாதபடி தம்மைச்சுற்றித் திரையிடும்படி வில்லிபுத்தூரார் தம்பரிசனங்களையேவிச் சிவநிந்தனைசெய்து, அதுகேட்டு அளவிறந்த கோபங்கொண்ட அருணகிரிநாதரது சாபத்தாற் கண்ணிழந்து, அச்சாபம் நீங்கும்பொருட்டுச் சிவவிஷயமாக ஓர் நூல்செய்யும்படி அவரால் ஆஜ்ஞாபிக்கப்பட்டார்; பட்டும் வீரவைஷ்ணவராதலால் தம் மதாபிமானத்துக்குப் பங்கம் வாராமல் சிவஸ்துதி சிற்சிலவிடத்து விரவிவரும்படி இப்பாரதத்தைச் சாபநிவிருத்தியின்பொருட்டுப் பாடிக் கண்பெற்றார் என்பது.

இந்த இரண்டுவகை வரலாறுகளும், இந்நூலின் பாயிரத்தோடு மாறுபடுகின்றதனாலும், இவர்மகனார்கூறிய பாயிரத்தை மறுக்கத்தக்க பிரபல ஆதாரமொன்றும் இவ்வரலாறுகட்கு இல்லையாதலாலும், இவை யாவராலுந் தகுதியென்று ஏற்றுக்கொள்ளத்தக்கனவல்ல வென்றுதோன்றுகின்றது.

இவர் தம்காலத்திற் கல்விச்செருக் கடைந்திருந்த புலவர்கள் பலரையுந் தமது வித்தியாசாமர்த்தியத்தால் வென்று அவ்வெற்றிக்கு அடையாளமாகத் தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் தமதுகையிலே எப்பொழுதும் ஆயுதமாக வைத்துக்கொண்டுள்ள துறட்டுக்கோலால் மாட்டியிழுத்து அறுத்துவந்தன ரென்பது,

"குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னீங்கில்லை
துறும்பியளவாக் காதைக் குடைந்து தோண்டி
யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டொன்றா முடிந்து தலையிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவி யொட்டக்கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே"

என வழங்குந் தனிப்பாட்டாலும் அறியப்படும்.

ஒருவன்பாடும் பாட்டில் ஏதாவது குற்றங் கண்டால், கண்டவுடனே அவனது தலையில் நறுக்கென்று குட்டுவது, பிள்ளைப்பாண்டிய னென்னும் அரசனது ஏற்பாடு; அவனிடம் பரிசுபெறவந்த வித்துவான்கள் பலரும், 'குட்டுப்பட்டாலும் மோதிரக்கையாற் படவேண்டும்' என்கிற பழமொழியைப் புதுமொழியாக ஞாபகப்படுத்திக்கொண்டு, வந்தவழியே திரும்பிப்போய் மேன்மேற் கல்விகற்க முயல்வது, அவன்காலத்தில் இயல்பா யிருந்ததாம். கவிபாடிவருபவர்களையெல்லாஞ் சயித்துப் பிடித்துச் சிறைச்சாலையிலடைப்பித்து, தேவி கொலுவிருக்கின்ற நவராத்திரிகாலத்திற் சிறைக்கூடத்திலிருந்து வெளிப்படுத்தி அவர்களை இருவர்இருவராகக் குடுமியோடு குடுமி முடிபோட்டு இறங்கிநிற்கத் தேவிமுன்பாக நிறுத்திப் பிடாரிக்குச் சோடுகடா வெட்டுவதுபோலச் சற்றும்இரக்கமில்லாமல் அவர்கள்தலைகளைப் பதைக்கப் பதைக்க வெட்டிப் பலிசெலுத்துவது, ஒட்டக்கூத்தரென்னும் புலவரது வழக்கமாம். அவைபோலவே இவ்வில்லிபுத்தூராரும் வாதஞ்செய்யும்பொழுது எதிரிதோற்றால் அவன்காதில் துறட்டைமாட்டிப் பிடித்திழுத்துக் காதை ஒட்ட அறுத்து, யானையின் மதக்களிப்பை அங்குசத்தால் அடக்குவதுபோல அவர்கள் கல்விச்செருக்கைத் தம்துறட்டினா லொழிப்பதைத் தமது வழக்கமாக வைத்துக்கொண்டு விருதுகூறிச்சென்று திக்குவிசயஞ் செய்துவந்தார். இவர்காலத்து அரசர்கள் இவரிடத்தில் மிகவும்அன்புவைத்திருந்ததனால், இவர் இங்ஙனஞ்செய்யஇடங்கொடுத்துவந்தார்கள்.

[கல்வியின் அருமையைத் தெரிவிக்கிற நல்லவழியாகையால் இவர்செய்துவந்தஇது பாதகமாகா தென்றும், இவர்க்கு இடங்கொடுத்துவந்த அரசர்களும் கொடுங்கோல்மன்னர்களாகாரென்றும், இங்ஙனமில்லாவிடின் அக்கா

லத்தும் இக்காலத்திற்போலச் சிற்றறிவுடையோரும் பேரறிவுடையோர் போலவே * பண்டிதர் மகாபண்டிதர் கவி கவிராயர் வித்துவான் வித்வச்சிரோமணி என்பவைமுதலாகக் கண்டதுகண்டபடி பல பட்டப்பெயர்களை எவருங்கொடுக்கவேண்டிய அவசிய மில்லாமலே தாங்களே சொந்தத்தில் வைத்துக்கொண்டு தாந்தோன்றிகளாய்த் திரிவார்க ளென்றும், இப்படிப் பட்ட கெட்ட வழக்கத்தை நிறுத்துதற்கு ஏதுவானதனால் இவர்செய்துவந்தது லோகோபகாரமான காரிய மென்பதற்குச் சிறிதுந்தடையில்லையென்றும்,இல்லாவிடின் கல்வி அபிவிருத்தியாகாதென்றும்,இக்காலத்தில் வழங்குகிறராஜபாஷைப்பரீட்சைக்குரியபட்டங்களை அப்பரீட்சைதேறாதபிறர்வைத்துக்கொண்டாற் குற்றமாவதுபோலவே முற்காலத்திலும் தகுதியல்லாதவர் பட்டப்பெயர்களைச் சூடுவது குற்றமாயிருந்ததென்றும், அக்காலத்து அரசர் முதலிய பிரபுக்கள் தகுதியுடையபண்டிதர்களின் யோக்கியதையைத் தக்கபடியறிந்துஅதற்கு ஏற்பவெகுமானங்கள்செய்துவந்தார்களாகையால் தகுதியல்லாதவர்கள் புலவர்களென்றுநடித்தால் அவர்களைச்சிட்சிப்பதற்குவேண்டிய ஏற்பாடுகளுஞ் செய்யப்பட்டிருந்தனவென்றும், இக்காலத்திலோ சம்மானமில்லாமையால்அவமானஞ்செய்வதுமில்லையாயிற்றென்றுங் கூறுவர்.]

இவருடைய காலம் இன்னதென்பது, எந்தக்காரணத்தாலும் நன்றாகத் தெரியவில்லை. நவீன நாகரிக மடைந்துள்ள பாஷைகளிற்போல நமது ஸம்ஸ்கிருதம் தமிழ் முதலிய பிராசீநபாஷைகள் பலவற்றிலும் காலக்கணக்கோடு சரித்திரங்களைத் தெளிவாகவும் விரிவாகவும் எழுதிவைக்கிறவழக்கம் அநாதியாக இல்லாமலிருத்தலால், பழைய கவிகள் அரசர்கள் முதலியோரைப் பற்றின காலம்முதலியன தெரிவது அரிதாய்விட்டது. இவருடைய சரித்திரத்தைச் சிறந்த செய்யுள்நடையிலே சுருக்கமாக எழுதிவைத்த இவர் குமாரரும் இவர்காலத்தைக்குறித்து யாதொன்றும்எழுதிவைத்தாரில்லை.இப்பொழுதைக்குச் சற்றேறக்குறைய ஐந்நூறு வருஷத்துக்கு முன் இருந்தவரெனத் தமிழ்ப்பண்டிதர்கள் பலர் கர்ணபரம்பரையாகச் சொல்லிவருவதே ஐதிகப்பிரமாணத்தால் யாவரும் நம்பவேண்டியதாயிருக்கிறது.

பாயிரத்தில் "நான்காஞ்சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமல் தலைகண்டானே" என்று இவர்காலத்திலிருந்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனைக் கூறியிருத்தலால், இவர்காலம் கடைச்சங்கத்தார் காலத்துக்குப்பின் என்பதுமாத்திரமே தெளிவாகத் தெரியவருகிறது.

கவிகள்பாடியுள்ள நூற்செய்யுட்களின் நடையால் அந்தந்தக்கவிகளின் காலத்தைக் கண்டுபிடிப்பதொரு வழக்கத்தை முக்கியமாகக்கொண்டு, இவர்பாடிய பாரதம் கந்தபுராணத்தின்நடையைப் போன்றுள்ளதென்றும், கந்தபுராணத்தின்காலம் இப்பொழுதைக்கு ஏறக்குறைய ஆயிரத்துநூறுவருடங்கட்குமுன் என்பது அந்நூற்சிறப்புப்பாயிரத்தாற் புலப்படுதலால் இவர் காலமும் கம்பர்காலம்போலவே ஏறக்குறைய ஆயிரம்வருஷங்கட்கு முன்பாக இருக்கலாமென்றும் சிலர் ஊகிக்கிறார்கள். நடையொன்றைக்கொண்டே காலத்தைவரையறைசெய்கிற வழியை யாவரும் தடையின்றி ஒருமனமாய் ஏற்றுக்கொள்வது வெகு கடினம்: ஏனெனில்,—புதியகாலத்தவரும்

---

* சிற்றறிவினராய்த் தாமே தக்கபண்டிதரென்று செருக்கியிருந்தபொழுது இப்பட்டப்பெயர்ச்சுமையைத் தலைமேல்ஏறிட்டுக்கொண்டவர், பின்பு அதற்குதகுதியன்றென்று பிறரால் அறிந்தவுடன் அதனை இறக்கிவிட்டு, வேறுவகையிற் பிறரை மருட்டும்பொருட்டு வெவ்வேறுபெயர்வகைகளைத் தாமே நாடியமைத்துக்கொண்டு வெளிப்படுத்தலும் உண்டு: அது, வியக்கத்தக்கதே. இனி, இராசபாஷைக்குப்போலவே இப்பாஷைகட்கும் தக்கபரீக்ஷைகளேற்பட்டுவிட்டால், இப்படிப்பட்ட வழக்கங்கள் எங்கும் ஒடுபட்டுப்போய்விடும்.

* பழையநடையைப்போலப் பாடக்கூடும்; பழையகாலத்தவர்கள் பாடினதும் சிலகாரணங்களினாற் புதியநடையையொத்து இருக்கலாம்: ஒருவர் செய்த பலநூல்களுள் ஒன்றற்குஒன்று நடைவேறுபாடு இருத்தலுங் கூடும்; மூர்த்திப்பாடினது ஒருவகையும் பிந்திப்பாடினது ஒருவகையுமாக இருக்கலாம்; இற்றைக்கு நூற்றுப்பத்து வருஷத்துக்குமுன் பாடப்பட்டுள்ள காஞ்சிப்புராணமும் அதனோடுசமகாலத்திற் பாடப்பட்ட தணிகைப்புராணமும், கம்பராமாயணம் முதலிய பழைய பெருங்காப்பியங்களின் நடையைப் போன்றிருக்கவில்லையா? பழைய பக்தர்கள் சிலர் பாடியுள்ள செய்யுட்கள் புதிய நடையைப்போன்று மிக எளியனவாக இருக்கின்றனவே; புகழேந்திப்புலவர் பாடிய நூல்களுள் நளவெண்பாவின் நடை எத்துணைச் சிறப்புடையது! அவர்தாமே மகளிர்க்கென்று பாடியனவாக வழங்குகிற அல்லியரசாணிமாலை, பவழக்கொடிமாலை, புலந்தரன்களவுமாலை என்பவற்றின் நடை எவ்வளவு எளிமையுடையது! இப்படிப்பட்ட பலகாரணங்களால் நடையைக் கொண்டே காலத்தை நிச்சயிப்பதற்கு நேர்கிற ஆட்சேபங்களை மறுத்தல் அரிதாதல் நோக்கி யாம் அவ்வழியில் இறங்கவில்லை.

இவர்க்கு வில்லிபுத்தூராரென்றும் வில்லிபுத்தூராழ்வாரென்றும் வழங்கிவருகிற பெயர் யாதுகாரணத்தால் வந்தது? பாண்டியநாட்டில் திருநெல்வேலிப்பிராந்தத்திற் பிரசித்தமாகவுள்ள விஷ்ணுஸ்தலமான ஸ்ரீவில்லிபுத்தூரிற் பிறந்தவரா? அன்றி, அங்கு வளர்ந்தவரா? அல்லாக்கால் அவ்விடத்து வாழ்ந்தவரா? என்றால்,—இக்காரணங்க ளொன்றாலு மன்று, இவர்க்கு இப்பெயர் வந்தது; பின்னை யென்னையோவெனில்,—வைஷ்ணவசம்பிரதாயத்திற்சிறந்தபக்தர்களென்றுசொல்லப்படுகிற ஆழ்வார்கள்பன்னிருவருள் ஒருவரும், பெரியாழ்வாரென்றும் பட்டர்பிரானென்றும் விஷ்ணுசித்தரென்றும் வேறுதிருப்பெயர்களை யுடையவரும், ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்ததனால் வில்லிபுத்தூராழ்வா ரென்று வழங்கப்படுபவரு மாகிய பாகவதசிகாமணியினுடைய இத்திருநாமத்தையே தந்தைதாயர்கள் இவர்க்குப் பெயராக இட்டு வழங்கினார்க ளென்று உணர்க; (பரிசுத்திகரமென்கிறகாரணத்தால், கடவுள்பெயரும் அடியார்களின்பெயரும் மனிதர்கட்கு இட்டு வழங்கப்படும்.) அல்லது, அந்த†பெரியாழ்வார் பாலியத்திலே எவரிடத்தும் யாதொருநூலும் படியாதவராயிருந்தும் பின்பு பகவானருளாற் பெரியதிவ்வியப்பிரபந்தம் பாடவல்ல மகாபண்டிதராய்விட்டதுபோல, இவரும் தெய்வகடாக்ஷம்பெற்ற வரகவி யென்கிற காரணம்பற்றி, இவர்க்கு வில்லிபுத்தூராழ்வாரென்று பெயர்வந்ததென்றுங் கொள்ளலாம். [ஆழ்வார்என்பதற்கு-எம்பெருமானுடைய திருக்கலியாணகுணகணங்களாகிய பெருங்கடலில் அமிழ்ந்து நெஞ்சுருகி ஈடுபடுபவரென்றுபொருள். இப்பெயரால் மற்றுஞ்சிலபக்தர்களை வழங்குவதைப்பரதாழ்வான், சத்துருக்கினாழ்வான், பிரகலாதாழ்வான், கஜேந்திராழ்வான், சுதரிசனாழ்வான், கம்பநாட்டாழ்வார் முதலிய பெயர்களிலுங் காண்க.]

விஷ்ணுவினுடைய அம்சாவதாரமாகிய கிருஷ்ணனுடைய சரித்திரம் மகாபாரதத்தில் இடையிடையே வருகிற தென்ற சிறப்புப்பற்றியே இவ்வாசிரியர் பாண்டவசரித்திரத்தைப் பாடுதற்கு உடன்பட்டுப் பாடினார்; இது

"முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்

* காலபேதத்தால் பாஷையின்இயல்புமாறுபடுவது, தமிழுக்குப்பெரும்பாலும் இல்லை; வடமொழிக்கும் இப்படியே.

† இவர்சரித்திரத்தை, 'ஆழ்வார்கள்சரித்திரம்' என்ற வசன நூலிற் பரக்கக் காணலாம்.

மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கு
மென்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்"

என இவர்தாமே தற்சிறப்புப்பாயிரத்திற் கூறியுள்ளதனாற் பெறப்படும். [வேதவியாசபகவானும் வடமொழிமகாபாரதத்தில் இவ்வாறேகூறியுள்ளார். இனி, இச்செய்யுளின் மூன்றாமடியின் முதலில் 'மன்னுமாதவன்' என்பதை மன்னும் மாதவன் எனப்பிரித்து - நித்தியனாகிய திருமகள்கொழுநனை திருமாலென்று பொருள்கொள்வதை விட்டு மன்னும் மாது அவன்என்றாவது மன் உமா தவன் என்றாவது பதம்பிரித்து-ஸ்தாணுவாகியஉமாபதியான சங்கரனெனப் பொருள்கொண்டு, சிவபிரானது சரித்திரம் இந்நூலின் இடையிடையேவழங்குவதென்றவிருப்பத்தால் தாம் இதனைப்பாட இசைந்ததாகக் கூறினா ரென்று உரைப்பாரு முண்டு; அது சரியன்று: ஏனெனில்,—இந்நூலில் ஆதிபருவத்தில்அருச்சுனன்தீர்த்தயாத்திரைச்சருக்கத்திலும், ஆரணியபருவத்தில் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்திலும, துரோணபருவத்தில் பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திலும் ஆக மூன்றிடத்தில்மாத்திரமேயன்றி நூல்முழுவதும் இடையிடையே (கண்ணனுடைய சரித்திரங் காணப்படுவது போலச்) சிவபிரானுடைய பிரஸ்தாபம் இல்லாமையாலும், வைஷ்ணவராகிய இவர் சிவசரித்திரம் வருவதென்றுபாடினாரென்பது உசிதமல்லாமையாலும் எனக் காண்க.இக்காரணங்கள் தக்கனவேயா மென்பது, மதத்வேஷத்தை யொழித்துப்பார்ப்பவர்க்கு வெள்ளிடைமலைபோலத் தெள்ளிதிற் புலப்படும்.]

அன்றியும், இவர் இந்நூலில் ஒவ்வொருசருக்கத்தின்தொடக்கத்திலும் திருமால்விஷயமாகக் காப்புச்செய்யுள் கூறியுள்ளதனாலும், "மறந்தும் புறந் தொழா" நல்லவைஷ்ணவ ரென்பது நன்குவிளங்கும். [சில சருக்கங்களில் காப்புச்செய்யுள் காணப்படவில்லை; அதற்குக்காரணம் - ஆசிரியராற்பாடப்பட்ட செய்யுட்கள் பிற்காலத்தில் ஏடெழுதுவோரால் எழுதாதுவிடப்பட்டு இல்லையாயின வென்றாவது, * தொல்காப்பியம் முதலிய சில நூல்களிற் போலச் சிலசருக்கங்களின்ஆரம்பத்தில் மானசிகமாத்திரமாகக் கடவுள்வணக்கஞ் செய்யப்பட்டுச் செய்யுளுருவமாய் வாசிகமாகக் காப்புச் செய்யப்படவில்லை யென்றாவது கொள்க.]

ஆயின், வைஷ்ணவராகிய இவர் இந்நூலின் முதற்காப்பாக

"நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநாள்
ஏடாகவடமேருவெற்பாகவங்கூரெழுத்தாணிதன்
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ.

முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறந்
திருகாமல்விளைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
புருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரும்
ஒருகோடிபூதேவருங்கைதொழுங்கோவையுறவுன்னுவாம்."

என்ற இரண்டு பாடல்களால் சிவகுமாரராகிய விநாயகரை ஸ்தோத்திரஞ் செய்வானேன்? என்றால்,—தம்மைச்சரணமடைந்தவர்கள் தொடங்குந்தொழில்கட்கு வருகிற விக்கினங்களைப் போக்குதலாலும் தம்மையடையாமல் அகங்கரித்தவர்கள் ஆரம்பிக்கிற செய்கைகட்குப் பல இடையூறுகளை உண்டாக்குதலாலும் 'விக்நேச்வரர்'என்று திருநாமம்பெற்றுள்ள ஸ்ரீவிநாயகமூர்த்தி சைவர்கட்குமாத்திரமேயன்றி எல்லார்க்கும் வழிபடுகடவுளேயாதலாலும், வேதவியாசர் மகாபாரதத்தை இயற்றிவருகிறபொழுது விநாய

* 'தொல்காப்பியம் முதலியவற்றில் நூற்குப் புறமாகவே மங்கலம் செய்யப்பட்டது' என்பது, தருக்கசங்கிரகவுரை.

கர் இந்நூலை மகாமேருமலையிலே எழுத்தாணிகொண்டு எழுதிவந்ததும் இடையிலே அவ்வெழுதுகருவி ஒடிந்துபோனபொழுது 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்'என்கிறவகையாய் யானைமுகக்கடவுளாகிய தமது தந்தங்களில் ஒன்றைப் பறித்து அதனையே கருவியாகக் கொண்டு எழுதிமுடித்தருளினதுமாகிய இந்த முக்கியமானகாரணத்தைக்கொண்டு நோக்குமிடத்து விநாயகர் இந்நூலின் முதலில் வைத்தற்கு ஏற்ற இயைபுடையவ ராதலாலும், வைஷ்ணவர்கள் விநாயகரை விஷ்வக்ஸேநரென்கிற சேனைமுதலியாரது அம்சமென்று கொண்டாடுவது மரபாதலாலும், இவரும் விநாயகரைப் பாடினரென்க.

இவ்வில்லிபுத்தூரார் சிவத்வேஷம்பாராட்டுகிற வீரவைஷ்ணவரல்லர். அது - அருச்சுனன்தீர்த்தயாத்திரைச்சருக்கத்திலும், அருச்சுனன் தவநிலைச்சருக்கத்திலும், பதின்மூன்றும்போர்ச் சருக்கத்திலும் சைவசம்பிரதாயத்துக்கு வழுவுறாதபடி சிவனைச்சிறப்பித்தும் இதரதேவர்களைத்தாழ்த்தியுங் கூறினதனால், நன்குபுலப்படுகிறது. அருச்சுனனது கையிலுள்ள காண்டீவவில்லினது கழுந்தினாற் சிவபிரான் அடிபட்ட செய்தியைச் சொல்லும்பொழுது

"விண்ணிலுறைவானவரில்யாரடிபடாதவர்விரிஞ்சனரியேமுதலினோர்*
மண்ணிலுறைமானவரில்யாரடிபடாதவர்மனுக்கள்முதலோர்களதலக்
கண்ணிலுறைநாகர்களில்யாரடிபடாதவர்கள்கட்செவிமகீபன்முதலோர்
எண்ணில்பலயோனியிலும்யரவடிபடாதனவிருந்துழியிருந்துழியரோ"

என்றது முதலியவற்றாலும், பதின்மூன்றும்போர்நாளின் இரவில் சைந்தவனென்கிறசயத்திரதனை அருச்சுனன் அடுத்தநாளில்தவறாமற்கொல்லவேண்டிப் பரமசிவனிடத்துச் சிறந்த சில அஸ்திரசஸ்திரங்களைப் பெறுதற்காகக் கண்ணனுடனே கைலாசத்துக்குச் சென்ற செய்தியைச் சொல்லும்போது

†"புரநகை யாலெரி புராரி தன்முனம்
நரனொடு நாரணனணுகி நண்பினால்
சரணபங் கயமுறத் தாழ்ந்து பன்முறை
கரமுற முகிழ்த்திது கழறன் மேயினார்"

என்றது முதலியவற்றாலுந் தெளிவாகத்தெரிகிறது. இன்னும், இவர் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்தில்

‡"ஓரேனந்தனைத்தேடவொளித்தருளுமிருபாதத்தொருவனந்தப்
போரேனந்தனைத்தேடிக்கணங்களுடன்புறப்பட்டான்" எனவும்,
"பையரவினுடிபுருகூதனிவர்சூழ்தரப்பச்சைமயில்பாதியுடனே
துய்யவிடைமீதொருசெழுஞ்சுடரெழுந்ததுதொழுந்தகையதாகுமளவோ"

எனவுங் கூறியவற்றையும் நோக்குக.§ வியாசர் புராணங்களில் ஒவ்வொரு

* 'விரிஞ்சன்முதலோருததிரும்'என்று பலஏடுகளின் பாடம்.

† இப்பாட்டு, எமக்குக்கிடைத்தஏட்டுப்பிரதிகளுள் எதிலும் இல்லை.

‡ வில்லிபுத்தூராரைஆதரித்த அரசன் சைவமதத்தனாகவிருக்கலாமென்றும், இவர் அவனுக்கு முகோல்லாசமாக நூலிற் சிலவிடத்துச் சிவபிரானை விசேடித்துக்கூறியிருத்தல் கூடுமென்றும், அங்ஙனங் கூறியவற்றிற்கெல்லாம் வெளிப்படுபொருளொழிய வேறு உள்ளுறைபொருளும் உண்டென்றும் உய்த்துணர்ந்து கூறுதலும் ஒன்று.

§ இப்படி சிலபிரதியிலுள்ளவளவு சிவஸ்தோத்திரமான பாடல்கள் பலஏட்டுப்பிரதிகளில் இல்லை;இது,யாம் வைஷ்ணவஅபிமானத்தாற் கற்பித்துக் கூறுவதன்று;பழையஏடுகளோடொப்பிட்டுப்பார்த்தால் யாவர்க்குமநம்புதலுண்டாம். யாம் அங்ஙனம் பலசுவடிகளோடு சரிபார்த்தே இவ்விஷயத்தைத் துணிந்து வெளியிட்டோம். அப்படிப்பட்ட புத்தகங்க ளிரண்டு, சென்னையிலுள்ள இராசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையிலும் உண்டு.

தேவரையவ்வோரிடத்திற் சந்தர்ப்பத்துக்கேற்பச்சிறப்பித்துக்கூறியிருத்தல் போலவே, இவரும் தமதுநூலில் சூரியன் அக்கினிமுதலிய மற்றைத் தேவர் களையும் சமயம்வந்தவிடத்துப் பக்ஷபாத மில்லாமற் சிறப்பித்துக் கூறியிருக் கிறார். பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "மூவர் தத்தம் வடிவாமுதல்வன்" எனச் சூரியபகவானைச் சிறப்பித்துக்கூறியுள்ளவாறும் பிறவுங் காண்க; [இ தற்கு - திரிமூர்த்திகளின் சொரூபமாகவுள்ள தலைவனான சூரிய னென்று பொருள்.]

கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய **பெருந்தேவனா**ரென்பவர் மகா பாரதத்தைத் தமிழில் வசனமும்பாடலுமாக விரவிவருகிற 'சம்பு' என்கிற நடையிலே பாடியுள்ளார்; பெரும்பாலும்வெண்பாக்களால்அமைந்ததுபற்றி, அந்நூலுக்குப் **பாரதவெண்பா** வென்று பெயர். அது, இப்பொழுதைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம் வருஷத்துக்கு முந்தியது. * இவ்வில்லி புத்தூரார் அந்தப்பாரதவெண்பாவின் சொல்லையும்பொருளையும் ஆங்காங்கு வெகுவாகத் தழுவி நாலாயிரத்துமுந்நூற்றுச்சில்லறை பாடல்களாற் பார தத்தைப் பாடினர். இவர்பாடிய பாரதம் வடமொழி வியாசபாரதத்தின் வழிநூலென்னத் தட்டில்லை.

"மண்ணி லாரண நிகரென வியாதனார் வகுத்த
எண்ணிலா நெடுங்காதையை யானறிந் தியம்பல்"

என்று இவர்தாமே அவையடக்கத்திற் கூறியிருக்கிறார். ஆயினும், இவர் பாடியநூல் ஸம்ஸ்கிருதபாஷையில்அகஸ்தியபட்டரென்பவர்இயற்றியுள்ள **பாலபாரத** மென்னுங் காவியத்தின் பொருளமைதியோடு பலவிடங்களி லொத்திருக்கின்றது; ஒப்பிட்டுப்பார்க்குமிடத்து இந்நூலுக்கும் அந்நூலுக் கும் இடையிடையே பலவேறுபாடுகளும் உள்ளனவாயினும் சிற்சிலவிடங் களில் இந்நூல் அந்நூலின மொழிபெயர்ப்பென்றே சொல்லலாம்படி யுள் ளது; (இவ்விஷயம், பல வருஷங்களின்முன் நாடிக்கண்டுபிடித்து வெளி யிடப்பட்டது:) இதற்கு அரிதில் தேடியெடாமல் எளிதில் அகப்பட்ட சில உதாரணங்கள் வருமாறு:—நூலின் முதலில் சந்திரனைக்கூறுமிடத்து, பால பாரதம்-"அத்ரிநேத்ரப்ரபவஃ"=வில்லிபுத்தூரார் பாரதம் - "அத்திரிப்பெய ரந்தண னம்பகந்தனில்... ..பிறந் தொளிசிறந்தோன்"; பாலபாரதம் - "நக்ஷத்ரகணஸ்யநாதஃ"=வில்லிபாரதம் - "பொருந்த வானுறைநாள்களை நாடொறும் புணர்வோன்"; பாலபாரதம் - "ஸம்பாவநீயச் சிரஸாசிவேந" =வில்லிபாரதம் - "திருந்தவானவர்க்கரியவன்செஞ்சடைமுடிமே லிருந்த வானவன்": இங்ஙனம் பலவிடத்து ஒத்துவரும்.

வில்லிபுத்தூரார் தமதுபாரதத்திற் பாடியது, முதற்பத்துப்பருவமே; மற்றை யெட்டுப் பருவங்கள் அவராற் பாடப்படவில்லை. அதற்குக் கார ணம்: அவற்றைப்பாடுதற்குமுன் அவர் காலஞ்சென்றிருக்கலாம்; அல்லது, நூல் முழுவதையும் பாடினால் பாண்டவர்கள் கிருஷ்ணபகவான் என்கிற மகாபுருஷர்களது கேட்பவர்க்கு வருத்தத்தையுண்டாக்கத்தக்க மரண சரித்திரத்தைத் தம்வாயாற் சொல்லவேண்டுமே யென்றுகருதி 'பாண்டவர் கள் இராச்சியம் ஆண்டு வாழ்வாராயினர்' என்பதனோடு முடித்துவிட்ட தாகக் கூறலாம். பாண்டவசரித்திரங் கூறுகிற † பாரதசம்பு முதலிய சில

---

* அந்நூல் பன்னீராயிரம் பாடல்களை யுடையதென்று தொண்டை மண்டலசதகத்திற் கூறியிருப்பினும், அது இப்பொழுது முழுவதும் கிடைப் பதில்லை. உத்தியோகபருவந் தொடங்கித் துரோணபருவம் வரையிலும் எண்ணூறுபாடல்களே கிடைக்கின்றன.

† பாலபாரதத்தில் கதைமுழுதுங் கூறப்பட்டுள்ளது; (இறுதியிலுள்ள பத்தொன்பதாவது இருபதாவது சருக்கங்களிற் காண்க:) ஆதலால், அது

நூல்களிலும் பின்னிட்டகதை காணப்படவில்லை. [கம்பர் இராமாயணத்தில் உத்தரகாண்டம் பாடாமல் விட்டதற்கும் இப்படிப்பட்ட காரணத்தையே முக்கியமாகக் கொள்ளலாம்; இப்பொழுதும் இராமாயண பாராயணஞ் செய்பவர்கள் உத்தரகாண்டம் படிப்பதில்லையன்றோ?] அவ்வாறே இவரும் பின்னையசரித்திரத்தைக் கூறாமல் "கனைகடற்பா ரளித்து அவரு மங்கரிலறநெறியேகருதி வாழ்ந்தார்" என மங்களகரமாகவே சரித்திரத்தைப்பாடி முடித்தன ரெனச் கொள்வது தகுதியுடையது. இனி,இந்நூலின் பின்னைய பருவங்களும் பாடப்பட்டுப் பிற்காலத்திற் கிடைத்தற் கரியவையாயின வென்று கொள்வாரு முளர். * மகாபாரதத்தின் ஆதிபருவத்தை மாத்திரம் விரித்துப் பாடிய தொரு தமிழ்நூலும் உண்டு; அது, மடுவைப்பதியில் வாழ்ந்த திம்மராயனென்பான் அம்பலத்தாடுமையரைக்கொண்டு பாடுவித்தது: அந்நூலை 'ஆதிபருவத்தாதி' என்று வழங்குவர்.

வில்லிபுத்தூராார்பாடிய பாரதத்தில் சுருக்கமாகக் கதையைத்தொகுத்துக்கூறும் முந்நூறுநானூறு பாடல்கள்தவிர மற்றை நாலாயிரஞ் செய்யுட்களை யெடுத்துக்கொண்டு, பிற்காலத்தில் நல்லாப்பிள்ளையென்பவர், புதிதாகத் தாம் பதினோராயிரம் பாடல்பாடி இடையிடையிற்கோத்தும் இறுதியிற் சேர்த்தும் பாரதம் பதினெட்டுப் பருவங்களையும் பூர்த்திசெய்தார்;அது 'நல்லாப்பிள்ளைபாரதம்' என வழங்கும்: அந்நூலாசிரியர், இற்றைக்கு நூறு வருஷங்களின்முன் இருந்தவர். இதுதவிர, இற்றைக்கு கரு0-வருடங்களின் முன் இருந்த அஷ்டாவதானம் - அரங்கநாதகவிராயர் பாடிய பாரதத்தின் பிற்பகுதியும் ஒன்று உளது; அது, ஏறக்குறைய உரு00 - செய்யுளுடையது.

---

இங்கே எடுத்துக் காட்டத்தக்கதன்று. எமது 1898 - 99-யப். ஏ. பாடபுத்தகங்களின் அநுபந்தத்தையும், பிழைதிருத்தத்தையும் பார்க்க. ஆகவே,சிலர் 'வடமொழியிற் பாரதகதையைக்கூறும் பாலபாரதம், சம்பூபாரதம் முதலிய நூற்களில் இறுதிக்கதைகள் காணப்படாமை எத்தகையகாரணம்பற்றியோ, அத்தகையகாரணம் பற்றியே இவரது பாரதத்திலும் இறுதிப்பாகம் காணப்படாதிருத்தல்கூடு மெனவுங் கூறுப' என்று உடன்பாடாக எழுதினது மறுக்கத்தக்கது.

* "கலியுகவியாதன்சொல்லக்கணபதியெழுதுபாடல்
பொலிவுறுதமிழிலாறுயிரமெனவிருத்தம்போற்றிச்
சலிவறவில்லிபுத்தூரிறைவனுஞ்சார்வபௌம
ஞெலிகெழுமறையோர்கோமானுயர்ந்தவருவப்பச்சொன்னான்"

என ஒருசெய்யுள் வில்லிபுத்தூராார்பாரதத்துஎட்டுப்பிரதியொன்றில்பாயிரத்தோடு காணப்பட்டது. இது பழையபாடலாகஇருக்குமாயின், இதிற்கூறிய ஆறுயிரம்பாடல்களில் பத்துப்பருவங்களாகவுள்ள நாலாயிரத்துமுந்நூற்றுச் சில்லறைபோக மற்றவை இவர்பாடியஎட்டுப்பருவங்களெனக்கொள்ளலாம்.

மாவிந்தமென்றும், மகாவிந்தபுராணமென்றும், மகாபெந்தமென்றும், மகாவெந்தமென்றும் பேர்மாறுட்டமாக வழங்கப்படுவ தொரு தமிழ்நூல் உண்டு. அது, சாதாரணசனங்கட்குக் கதைகூறுங் குழாத்தாற் கொண்டாடப்பட்டுப் பலவிடத்தும் பயில்கிறது. அதன் எட்டுப்பிரதி யிரண்டு, இராசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலையிலும் உண்டு. அந்நூல், பாரதத்துப் பாண்டவரது மகாபிரஸ்தாந சரித்திரத்தை மாத்திரமே சில கிளைக் கதைகளோடு கூறுவது. ஆதலால், அந்நூலின் பெயர், 'மஹாப்ரஸ்தாநம்' என்ற வடசொல் மகாபிரத்த மெனத் திரிந்து அது பின் கண்டபடி சிதைந்த தென்றே கொள்ளத்தக்கது. அதில், பாரதத்தின் பிந்தின எட்டுப்பருவங்களின் சரித்திரம் முழுவதும் கிடையாது. அது - சனமேசயன்கதை, காங்கேயர்மோக்ஷம், கிருஷ்ணதேவன்மோக்ஷம், கலிவருகை, தருமபுத்தி

இப்பாரதத்துக்கும் இதன்முதனூலாகிய வியாசபாரதத்துக்கும் இடையிடையே கதையமைதிகள் சிற்சில வேறுபடுவது "முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப், பின்னோன்வேண்டும் விகற்பங்கூறி, அழியாமரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிப்படி இவ்வாசிரியராற் பிறநூல் மேற்கோள்கொண்டு அமைக்கப்பட்டதாதல் வேண்டுமென அறிக. [கம்பராமாயணத்துக்கும் வால்மீகிராமாயணத்துக்கும் சிலசிலவிடத்து ஒன்றோடொன்று வேறுபாடுகாணப்படுதற்கும் காரணம் இதுவே: அன்றி, ஜைமினிபாரதத்தை முதனூலாகக்கொண்டு இவர்மொழிபெயர்த்தாரென்பதுமுழுவதுஞ் சரியன்று;இவர் தாமே வியாசபாரதத்திலிருந்து எழுதுவதாகக்கூறியுள்ளார். (ஜைமினிபாரதத்தில் அசுவமேதபருவ மொன்று தவிர மற்றையபருவங்களாதிகள் தபசுக்கு ஏகுதல் முதலாக, யமன்சோதனை, தன்மபுத்திரர் பூந்தேரேறுதல், அடியாரைக்காட்டுதல் இறுதியாகப் பல சிறுபகுப்புக்களாகப் பிரிக்கப்பட்டுள்ள கசுருடு - செய்யுளுடையது. அந்நூலின் நடை, சிறிதுஞ் சிறப்பாகக் கொள்ளத்தக்கதன்று; அந்நடையின் தாழ்வுக்குத் திருஷ்டாந்தமாக அந்நூலின் பாடல்கள் சில இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.—

"கோலமாந்தன்மனூர் கூண்டொடேகவே, ஞாலமோராசினை நயந்து நீத்துடன், மாலிடமொழிமற மகாவிந்தக்கதை, வேலவாருளினல் விளம்புபாடலே," "தேனூறலரிசிதேங்காய் திரள்பணியாரப்பெட்டி, வானுடர்மதிக்குஞ்சேலை வாகுளபதக்கமுத்து, மானனமக்களார்க்கு மணவாளக்கரத்துக்கேற்ற, நாணயமோதிரங்கள் நலமுடனனுப்பினாரே," "தண்ணுறுதன்மர் தன்னைத் தாக்குளபட்டங்கட்டிக், கண்ணில்லாதான் காந்தாரிகைதனிற்காட்டிமாயன், எண்ணெணுக் குமரர்தன்னை ரட்சியுமென்றதாகப், பண்ணுறு துவாரகைக்குப்பாங்குடன்போவதானார்," "அந்தமாம்பருவதத்திலாயுளகுகிரைமூஞ்சி, வந்ததோரைவர்தன்னில் வடிவுள்ளார் தன்னைப் பார்த்துத், தொந்தமாயோடிவந்து துய்யதோர் விசயனைப், பந்தமாயணைத்தவாறே பண்டுபோல்முகமதானான்," "வழியதுமாளவேணும் மன்னனேதன்மராயா, பழமொழிகதைதானென்று பாங்குடனுரையுமென்ன, மொழிகிறேன் கதைதானென்று முன்பொருநாளில் மன்னன், அழகுடன்தானதர்மம்அளித்ததாசானநாளில்," "அந்தமாம்வதிட்டர்வந்து அனுமனுஞ் சாம்பவானும், தந்தமாம் விபீடணனும் தாக்குசுக்கிரீபன் கூடத், தொந்தமாம் பரதசத்ரு துய்யலட்சுமணனங்கதன்,பந்தமாய்கொலுசேவிக்கப்பணிமுடிராமர்க்கிந்தார்."

இப்படிப்பட்ட நூலைப் பாடியவர் இன்னாரென்று தெரியவில்லை; சைவசமயத்தவரொருவரென்றுமாத்திரம் அந்நூலால் தெரிகிறது.இப்படிமிகஎளிமைப்பட்ட நடையையுடைய மாவிந்தநூலை, வில்லிபுத்தூரார் நடைக்குப் பின்வாங்காமற் சிறப்புப்பாயிரம் உரைத்துள்ள வரந்தருவார் பாடியதென்று ஒருசாரார்கொள்வது,சிறிதுந் தகுதியன்று. அவரதுசெய்யுள்நடைசசிறப்பை, அவர்பாடிய பாயிரத்தை நோக்கி அறிக; அப்பாயிரச்செய்யுள்களுள் ஒன்று வருமாறு:—

" கரும்புங்கமுகுந்தலைதெரியாக்கழனிசெந்நெற்கனையாகி
யரும்புங்குவளைநறுமலர்த்தேனுருயெங்குஞ்சேருக
விரும்புஞ்சுருதியிசைகேட்டுவேலைக்கழிக்கானலங்கைதை
சுரும்புந்தும்பிகளுமருந்தமாருதென்றுஞ்சோறிடுமோல்."

மேற்கூறிய மாவிந்தத்தின் நடையோடொத்த நடையையுடைய பாரதத்தின் முந்தினபருவங்களும் வேறு காணப்படுகின்றன. ஆதலால்,அவற்றையும் மாவிந்தபுராணத்தையும இயற்றியவர் ஒருவராகவே யிருக்கலாம்.

இனி, வரந்தருவார்பாடியபாரதத்தின் பிற்பகுதியென்று வேறேயொரு நூல் வழங்கப்படுகின்றமையும் உணர்க.

ளெல்லாம் வியாஸசாபத்தால் அக்காலத்தில்தானே அழிந்துவிட்டன வென்பது ஐதிஹ்யம்.

இவர் மகாபாரதமொன்றுதவிர வேறுநூலெதுவும் பாடியிருப்பதாகத் தெரியவரவில்லை. [கந்தரந்தாதியுரை இவர்செய்ததென்றுகூறுவர் ஒருசாரார்.]

இவர், தமக்குப் பலசெல்வமுங்கொடுத்து ஆதரித்துத் தம்மைக்கொண்டு பாரதத்தைப் பாடும்படி செய்வித்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனை இப்பெருங்காப்பியத்தில் இடையிடையே புகழ்ந்துபேசியிருக்கிறார்:—

"சொன்மழை பொழிந்து நாடொறுந் தனது தோள்வலி துதிக்கு நாவலர்க்குப், பொன்மழை பொழியுங் கொங்கபூபதிதன் பொற்பதம் பொருந்தலர் போலக், கன்மழை பொழியுங் காளமாமுகிலுங் கடவுளர்த்துரந்தவன் கரத்தில், வின்மழைபொழியக் கற்களுந் துகளாய் மேனியும் வெளிறி மீண்டனவே"

என்ற பாடலில், அருச்சுனனது பாணங்களினால் மேகங்கள் சின்னபின்னப்பட்டுச் சிதறியொழிந்ததற்கு, வரபதியாட்கொண்டானுடைய முன்னிலையில் அவன்பகைவர்கள் சிதறியோடுதலை ஒப்புமைகூறினர்.

"கொடிமதிற் பாகை வேந்தன் கொங்கர்கோன் புரவிக் காலால்
வடதிசை யரசர் தங்கள் மாமணி மகுடம் போல
அடலுடை விசய னொற்றை யம்பினால் மீண்டுஞ் சென்று
படவர வுயர்த்த கோவைப் பண்ணினான் மகுட பங்கம்"

என்னும் பாட்டில், உத்தரகோக்கிரகணகாலத்தில் அருச்சுனன் துரியோதனனை ஒருபாணத்தாற் கிரீடத்தைக்கீழேதள்ளிஅவமானப்படுத்தியதற்கு, வரபதியாட்கொண்டான் தானெதிர்ப்போர்க்குச்செல்கிற குதிரையின்முன்கால்களால் வடக்குத்திக்கிலுள்ளஅரசர்களைப்பங்கஞ்செய்வதை உவமைகூறினார்.

"கோவல்சூழ் பெண்ணை நாடன் கொங்கர்கோன் பாகை வேந்தன்
பாவலர் மானங் காத்தான் பங்கயச் செங்கை யென்ன
மேவல ரெமரென் னாமல் வெங்களந் தன்னில் நின்ற
காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனக மாரி"

என்கிற செய்யுளில், கர்ணன் யுத்தத்திற்குச் செல்கின்றபொழுது பகைவர் நண்பரென்கிற பேதமில்லாமல் யாவர்க்குந் தானஞ்செய்துவருதற்கு, வரபதியாட்கொண்டான் தானஞ்செய்தலை ஒப்பிட்டார்.

"நாகையாப் புகழான் பெண்ணை நதிவளஞ் சுரக்கு நாடன்
வாகையாற் பொலிதிண் டோளான் மாகதக் கொங்கர் கோமான்
பாகையாட் கொண்டான் செங்கைப் பரிசு பெற்றவர் நெஞ்சென்ன
ஓகையாற் செருக்கி மீண்டா ருதிட்டிரன் சேனை யுள்ளார்"

என்ற கவியில், தருமபுத்திரனது சேனையிலுள்ள வீரர்கள் வெற்றிகொண்டு களிப்போடு படைவீட்டுக்கு மீளுதற்கு, வரபதியாட்கொண்டானிடம் வெகுமானம்பெற்றவர்கள் திருப்தியோடு திரும்பிவருவதை உவமைகூறினார்.

இப்படி, பாலில்விஷங்கலப்பதுபோலப் பெரிய இதிகாசத்தினிடையிலே, ஒருமனிதனைத் துதித்தல், தகுமோ? நர கவனம் நரக வனமன்றோ? என்று ஓர் ஆட்சேபந் தோன்றலாம்: இங்ஙனந்தோத்திரிப்பது தகுதியன்றாயினும், அரசன் தமக்குச்செய்தநன்றியை மறவாமல் உபகாரஸ்மிருதியாகப் பாடினரென்பதுபற்றிப் பலரும் அங்கீகரிப்பார்கள்; அன்றியும், ப்ரஸ்துதமான உபமேய முகத்தால் அவன்பெயரைப் பிரஸ்தாபிக்காமல் அப்ரஸ்துதமான உபமானமுகத்தாற் புகழ்ந்துகூறியதும் ஒருசமாதான மாகலாம். இங்ஙனமே தம்மைப்பாதுகாத்த பிரபுக்களைத் தாம்செய்யும்நூல்களில் நன்றி

யறிவுகாரணமாக எடுத்துஎத்துவது, புலவர்களின்இயற்கை. கம்பர் தமது இராமாயணத்தில் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பமுதலியாரையும், புகழேந்திப்புலவர் நளவெண்பாவில் முரணைநகர்ச் சந்திரன்சுவர்க்கியையும், மண்டலபுருஷன் சூடாமணிநிகண்டில் கிருஷ்ணதேவராயனையும் சிறப்பித்துக்கூறியவாறு காண்க. இன்னும், இவர், தமதுநூலில், தமிழ்நாட்டரசராகிய சேரசோழபாண்டியர்களைப்பற்றிப் பிரஸ்தாபம்வருகிறபொழுது மிக்க சிறப்பாகக் கூறுவர்:—

"வஞ்சிமதுரைபுகாருடையான்வடமண்டலிகர்திறைவாரியநேரியன் [ருள்"
விஞ்சிமுனைதொறும்வாளசுரேசவைவென்றபொழுதடல்வானவர்கோன

"அண்டர்குலபதியாம்விடைவாகனன்அம்பொன்முடிமலர்நாறிடுதாளினன்
எண்டிசையுமனுநீதிசெய்கோலினன் எங்குமொருகுடையாலிடுநீழலன்
மண்டுகிரணசிகாமணிமோலியன் வண்டுமதுநுகர்தாதகிமாலையன்
மிண்டுமுதுபுலியேறுபதாகையன் வென்றிவளவனையார்நிகர்வீரரே"

என்றவற்றால், சோழராசனுக்கு ஒப்பான வீரர் எவரு மில்லை யென்றார்.

"மீனவன் வழுதி மாறன் வெண்மதி மரபில் வந்தோன்
வானவர் முதல்வன் சென்னி வரிவளை யுடைத்து மீண்டோன்"

என்றதனால், பாண்டியன் இந்திரனைக் கிரீடபங்கம்பண்ணின சிறப்பையும்,

"தந்தையை முதுகுகண்டோன் தனயனுக் கிளைக்குமோ தான்"

என்றதனால்,பாண்டியன் சிவனைப் பிரம்பால் முதுகிலடித்த வலிமையையும்,

" காலினாற் றுகைத்து வேலைக் கனைகட லேழு முன்னாள்
வேலினாற் சுவற்றுங் கொற்ற வெங்கயல் விலோத வீரன்"

என்றதனால், பாண்டியன் ஒருகாலத்துத் தன்நகர்மேற் பொங்கியெழுந்த கடலின்மீது கோபித்து அதனைவேலினால் வற்றச்செய்து தன்காலில்விழுந்து வணங்கப்பண்ணின மகிமையையும்,

"முழுதுணர்ந்தருள் முனிவரன்புகல் மும்மைவண்டமிழும்
பழுதறும்படி தெளிஞ ரேறிய பலகையொன் றுடையான்"

என்றதனால், பாண்டியன் தமிழ்ச்சங்கத்தையுடையனான தகைமையையும்,

"கூறியசெஞ்சொலேடுகுறித்ததெதிர்கொண்டவையை,யாறுடையவன்"

என்றதனால், பாண்டியநாட்டு வைகைநதி தமிழ்ப்பாடல்களின் அருமையையும் வைதிகமதத்தின் பெருமையையுந் தெரிந்துவெளியிட்ட எற்றத்தையுங் கூறியுள்ளார்.

"பராவுபேருடைச் சேரசெம்பியருடன் பாண்டியன் முதலோரும்" எனச் சேரனைச் சிறப்பித்துக்கூறு மிடமுங் காண்க.

"காவிரியென்னத்தப்பாக்கருணையான்" என, நளசக்கரவர்த்தியினது கருணைக்கு, தமிழ்நாட்டிற்பிரசித்திபெற்ற காவேரிநதியைத் தண்மைக்கும் தவறாமைக்கும் உவமையெடுத்துக்கூறினார்.

" தங்கள்மால் வரையில் வைகுந் தமிழ்முனி தன்னைப் போலப்
பொங்குவெண் டரங்க முந்நீர்ப் புணரிக ளேழுஞ் சேர
வெங்கையால் வாருங் கொற்ற வேழமா மேற்கொண்டானே"

என்றதனால், தமிழுக்கு ஆதியிலக்கணநூலாசிரியராகிய அகஸ்தியமகாமுனிவர் கடலைக்குடித்தருளியகதையைக் கொண்டாடினார். இன்னமும் "தங்கள் தமிழ்க்குழலிசையைத் தன்செவிக்கு விடமென்னும்" என்றதனால், வேய்ங்குழலின் இசைப்பாட்டின் இனிமைக்கு, தமிழ்ப்பாஷையை உவமைகூறினார். "தங்கள் மூவகைத்தமிழும் போலச், சிந்தையிற்குளிக்குமாறு சிலீமுக

மூன்று விட்டான்" என்றதில், அம்புகள் நன்றாகப் பகைவர்நெஞ்சிற் பதிந்திடுதற்குத் தமிழ்ப்பாஷை கற்றவர்மனத்திற்பதிதலை உவமையாக்கினார்.

இங்ஙனம் தமது தேசாபிமான பாஷாபிமானங்களை வெளிப்படுத்துவது யாவர்க்கும் வழக்கமேயாம்.

இவர் தமதுநூலிற் பெரும்பாலும் வடமொழிகளைத் தனிமொழியாகவும் தொடர்மொழியாகவும் இன்னமொழியின் சம்பந்தமான தென்று எளிதில் தெரியவொண்ணாதபடி திரித்தும் மொழிபெயர்த்தும் உபயோகித்திருத்தலால், வடமொழியிலும் மிகவல்லவரென நன்குவிளங்குகின்றது. தொடர்மொழியாகப் பிரயோகித்திருத்தற்கு உதாரணமாக, "புராதநாகமவேதகீத புராணரூபம்","சலதரசஞ்சலசாலம்","இமநாகபவநன்","விகங்கராசன்", "மாதவயாதவவாசவகேசவ", "சதுரங்கயாநம்", "பரதநாதவேத பரத்துவாசன்", "கபோலவிகடகடகரிதுரகம்பதாதிபிரதம்", "நவரத்நகணகிரணவுடு" முதலியவற்றையும்; மொழிபெயர்த்தற்குஉதாரணமாக, நீரின்உற்பத்திக்குஇடமானவனென்னும் பொருள் கொண்ட 'க்ருபீடயோநி' என்னும் வடசொல்லை மொழிபெயர்த்து "அம்மனை" [அம்-நீர்; மனை-இடம்: அது, நெருப்பு] என்றும், 'மநோரதம்' என்னும் வடசொல்லை மொழிபெயர்த்து "உள்ளமான தேர்" என்றுங் கூறியது முதலியவற்றையும்; சிதைத்து உபயோகப்படுத்தற்கு உதாரணமாக, 'ஜமதக்நி' என்பதை "இயமதங்கி" என்றும், 'அஸ்திரம்' என்பதை "அச்சிரம்" என்றும் பிரயோகித்தது முதலியவற்றையுங் காண்க. தனிமொழியாக உபயோகித்தற்கு உதாரணம் அளவிறந்தன.

தமிழில் எந்த நூலாசிரியரும் வடமொழிகளை இவரவ்வளவு எடுத்துக்கொள்ளவில்லை. வடசொற்களைத் தமிழ்க்காப்பியத்தில் நுழைக்கிற வழக்கம் இவர்காலந்தொடங்கித்தான் அதிகமாயிருத்தல்வேண்டும். சங்கத்தார்காலத்துப்பழையநூல்களில் அத்தனையாக வடமொழிகள் அகப்படா;சுத்ததமிழ்ப் பதங்களே மிகுதியாயிருக்கும்.

இவரது பாடல்களில் உவமை, உருவகம், எடுத்துக்காட்டுவமை, தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள்வைப்பு, பிறிதுமொழிதல், உயர்வுநவிற்சி முதலிய பொருளணிகள் அமைந்திருப்பதுமாத்திரமேயன்றி, மடக்கு (யமகம்), பிராசம் முதலிய சொல்லணிகளும் ஆங்காங்கு அமைந்திருத்தலையும், இவரது செய்யுள்நடை பலவிடத்து முடுகுடையதாதலையும், பலவகைச்சந்தங்களும் சந்தப்போலிகளும் வண்ணங்களும் பொருந்தியிருத்தலையும் காணலாம்.

"பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா தொருவர் பகரொணாதே"என்று சிறப்பித்துக்கூறப்பட்டுள்ள படிக்காசுப்புலவரும், திருப்புகழ்பாடிய அருணகிரிநாதரும் முதலிய சிலர்போலவே இவ்வில்லிபுத்தூராரும் சிறந்தசந்தக்கவியென்று இவர்நூலால் தெரிகிறது.

"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்,பொன்னேபோற் போற்றுவம்" என்றவாறு, இவருடைய நூலில் ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் சொற்பொருட்கருத்துக்கள் சிற்சில இடத்து எடுத்து ஆளப்பட்டிருத்தல், உய்த்துநோக்குமிடத்து விளங்கும்; தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் "மறஞ்சுவர் மதிளெடுத்து மறுமைக்கே வறுமைபூண்டு, புறஞ்சுவரோட்டைமாடம் புரளும்போது அறியமாட்டீர், அறஞ்சுவராகிநின்ற அரங்கனார்க்கு ஆட்செய்யாதே, புறஞ்சுவர்கோலஞ்செய்து புட்கவ்வக் கிடக்கின்றீரே" என்றாற்போல, இவர் சூதுபோர்ச்சருக்கத்தில் கர்ணனைப்பற்றி "அறஞ்செறிதானம்வண்மை யளவிலாதளித்து நாளும், புறஞ்சுவர்கோலஞ்செய்வான் பூபதிக்குரைக்கலுற்றான்" என்றும், மற்றும் அவ்

வாழ்வார் அத்திவ்வியப்பிரபந்தத்தில் "மருவியபெரியகோயில் மதிட்டிருவரங்க மென்னுக், கருவிலேதிருவிலாதீர் காலத்தைக்கழிக்கின்றீரே" என்றதைக் கருதி, இவர் பதினன்காம்போர்ச்சருக்கத்தில் பாகவதர்களைப்பற்றி "கரியபைம்புயலைக் கைதொழுமவரே கருவிலே திருவுடையவரே" என்றுங் கூறினுற்போல்வன காண்க. மற்றும் நம்மாழ்வார் கண்ணனதுசௌலப்பியத்தில் ஈடுபட்டு "பத்துடையடியவர்க்கு எளியவன் பிறர்களுக்கு அரிய, வித்தகன் மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறலடிகள், மத்துறுகடைவெண்ணெய்களவினி லுரவிடையாப்புண்டு, எத்திறம்உரலினே டிணைந்திருந்தேங்கியவெளிவே" என்று அருளிச்செய்தாற்போல,இவரும் "பூத்தநாபியந்தாமரைப்பூவில் வந்து பல்பூதமுஞ், சேர்த்த நான்முகப் புனிதனு முனிவர் யாவருந் தேவரு, மேத்த நாலுவேதங்களுந் தேடநின்ற தா ளெம்பிரான், பார்த்தன் மாமணித்தேர்விடும் பாகனை தெப்பான்மையே" என்று பாடினமையும், பிறவுங் கண்டுகொள்க.

இனி, இப்பொழுதைக்கு ஆறேழு வருடங்களின்முன் அறுபதுவருடகாலம்வாழ்ந்திருந்த முருகதாசரென்பவர் இயற்றிய 'புலவர்புராணம்' என்னும் புதுநூலில் முப்பத்தொரு செய்யுட்களாற் கூறப்பட்டுள்ள வில்லிபுத்தூரார்சரித்திரம், இதுவரையிற்கூறிய வரலாற்றோடு சிற்சில வேறுபாடுடையது. அதனை அனைவரும் அறிதற்பொருட்டு, அந்நூலிலுள்ளவாறு அச்சரித்திரம் அடியிற் குறிக்கப்படுகிறது:—

பெண்ணைநாட்டில் சனியூரில் பிராமணசாதியில் வைஷ்ணவசமயத்தில் தோன்றிய இரண்டுசகோதரர், கல்வியில் தேர்ந்து திருமாலைத்துதித்து அப்பெருமானருளால் அக்கல்விப்பொருளோடு செல்வப்பொருளும் நிரம்பியவராய் ஒருவரோடொருவர் மிகஅன்புபூண்டு பாண்டியநாட்டிலுள்ள ஸ்ரீவில்லிபுத்தூரையடைந்து அங்குத் தம்தம் மனைவியருடனே ஏகசுடும்பமாய் இல்லறவாழ்க்கைநடத்திவந்தார்கள். அவர்களில்மூத்தவர்,வில்லிபுத்தூராரென்று சிறப்புப்பெயர் பெற்ருர். இங்ஙனமிருக்கையில், கொங்குநாட்டரசனை ஆண்டான்பிள்ளையென்பவன்,வடமொழியிலுள்ள மகாபாரதத்தைத் தமிழ்ச்செய்யுள்களாற் செய்விக்கக்கருதி, 'அங்ஙனஞ்செய்யவல்லவர்யார்?' என்று விசாரிக்கையில், வில்லிபுத்தூராரும் அவர்தம்பியாருமே அதற்குத் தக்கவரென்றும், அவர்கள் மிக்கசெல்வமுடையோ ராதலால் அரசரையும் பொருள் செய்யா ரென்றும், ஒருவர்க்கொருவர் உற்றதுணைவராகிய அவர்களால் பிறருதவி வேண்டப்படுவதில்லையென்றும் அறிந்து,அவர்கட்குள் ஏதேனும் சிறிதுமாறுபாட்டையுண்டாக்கி அந்தச்சந்தர்ப்பத்தில் தன்கருத்தைமுடித்துக்கொள்ளக்கருதியவனுய்,விதவையாகிய ஒருபார்ப்பனக்கிழவியை அழைத்து வணக்கத்தோடு உபசரித்துச் செய்திகூறி 'அம்மா! நீர் அவர்கள்வீட்டுக்குசசென்று அவர்கட்குள் கலகத்தை உண்டாக்கவேண்டும்' என்றுகூறி அவளுக்கு வேண்டியபொருளையுங்கொடுத்து அனுப்பிவிட்டு,பின்பு மதுரைக்குச் சென்று பாண்டியனைக்கண்டு அவனிடம் ஏகாந்தத்தில் இச்செய்திமுழுவதையுஞ்சொல்லி,'அவர்களுடையவழக்கு வந்தால் எவ்விதத்திலும்என்னிடத்தில் அனுப்பவேண்டும்' என்றுவேண்டி, 'அங்ஙனமே ஆகுக' என்று அதற்கு இணங்கிய அப்பாண்டியனது அநுமதியைப் பெற்று மீண்டனன்.இதுநிற்க.

அரசனிட்ட கட்டளைப்படியே அக்கிழவி வில்லிபுத்தூரார்வீட்டுக்குச் சென்று அவர்மனையாளிடத்தும் அவர்தம்பிமனையாளிடத்தும் கலந்து இனிமையாகப்பேசிப்பழகி அவ்விருவரும் தன்னை நல்லவளென்றுநம்புமாறு நடந்துகொண்டே அவர்கட்குள் ஒருத்திமேல் ஒருத்தியிடம் பொல்லாத பல கோட்சொற்களைக் கூறி உட்பகைமையை விளைவித்து அவர்கள் ஒருவரோடொருவர் எதிர்த்துப்பேசிக் கலகஞ்செய்யவும் தம்தம்கணவரைத் தம்தம்

வசமாக்கி நடத்தவும் மூட்டிவிட்டாள். அதனால் மாறுபாடுகொண்ட வில்
புத்தூராரும் அவர்தம்பியாரும் தமதுபொருளைப் பாகஞ்செய்துதருத
வேண்டித் தங்கள்நாட்டரசனான பாண்டியனிடம் வர, அவ்வேந்தன், மு
கூறியபடி அவர்களைக் கொங்குநாட்டரசனிடத்தே செலுத்தினன். அவ்
றேசென்றஅவர்களைக் கண்டு கொங்கராசன் மகிழ்ச்சிகொண்டு அவர்கட்
மிக்கஉபசாரஞ்செய்து வடமொழிமகாபாரதத்தைஇரண்டுபாகமாகப்பிரித்
அவ்விருவரிடங் கொடுத்து 'நீங்கள் இந்நூலைத் தமிழ்ப்பாடலாகச் செய்
பின்னரே நான் உங்கள்செல்வத்தைப் பாகித்துக் கொடுப்பேன்' என்றுகூ
னான். அச்சொல்லை அவர்கள் திருமால்கட்டளையாகவே சிரமேற்கொண்
அங்ஙனமே சிலநாள் அவன்வசத்தில்இருந்து,சொற்சுவையும்பொருளழகு
ஓசைச்செறிவும் சந்தப்பொலிவும் வண்ணப்பொருத்தமு முள்ள ஆறாயிர
கவிகளாற் பாரதத்தைப் பாடிமுடித்திட்டார்கள்.

இப்படி தன்கருத்துமுற்றியதனாற் களிகூர்ந்த கொங்கர்கோமான், த
னே ஒருபார்ப்பனக்கிழவியைக்கொண்டு குடும்பக்கலகம்விளைத்த விதத்தை
அவர்கட்கு விவரமாகத் தெரியக்கூறி, அவர்கட்குள்ள விரோதத்தைத் தணி
வித்து, அவர்களைநோக்கி'நீங்கள்என்விருப்பத்தைநிறைவேற்றியதால்,நான்
உங்கள்விருப்பத்தை நிறைவேற்றச் சித்தனாயிருக்கிறேன்; நீங்கள் விரும்ப
வதைக்கூறுமின்' என்றுகூற,வில்லிபுத்தூரார், ,என்னோடுமாறுபட்டுச்சந்தப்
பாடத் தொடங்கி அதில் தவறியவர்களுடைய காதுகளைத் துணிக்குமாறு
வாள் கொடுக்கக்கடவாய்' என்று தம்விருப்பத்தை வெளியிட, அரசன் அங்
ஙனமே வாள்கொள்ளுமாறு அருள்செய்தான். தமையனாரிடத்து முதிர்ந்த
அன்பையுடையதம்பியார் 'எனக்கென்று தனியேஉரியதுயாதுமில்லை'என்று
கூற, அரசன், தமையனார்க்கு அடங்கிநடக்கிற அவரது மனநிலைமையைக்
கண்டுமகிழ்ந்து அவர்க்குப் பலவிருதுகளைக் கொடுத்தான். அவற்றைப்பெற்
றுக்கொண்டு அவரிருவரும் தம்மூர்சேர்ந்தனர். முன்புபகைமைமூட்டிய
மூதாட்டியும் பின்பு அவர்கள்மனைவியர்க்குப் பற்பலதக்கநியாயங்களை யெடு
த்துக்கூறித் தனதுசொற்றிறத்தால் அவர்களது மாற்சரியத்தைத் தீர்த்து
அவர்களைப் பழையபடி கூட்டுறவாக்கிவைத்திட்டனள். முன்பு தலைவிரி
கோலங்கொண்ட ஒருத்தியால் முடிந்த மகாபாரதத்தைக்குறித்து இப்பொ
ழுது 'மொட்டைச்சியொருத்தியால் முடிந்தது' என்று பலர் பேசலுற்றனர்

வில்லிபுத்தூரார், புலவர்திலகராய், தம்மோடுமாறுபட்டுத்தோற்ற புல
வர்களுடைய காதுகளைக் கொய்வதே தொழிலாகக்கொண்டு கவிதாசார்வ
பௌமரென்று ஒருசிறப்புப்பெயர்பெற்று, புலவர்களுடையசெருக்கையெல்
லாம் ஒழித்துவந்தார். அவர்தம்பியாரோ புலமைத்திறம் வாய்ந்திருந்தும் சா
ந்தகுணத்தையேமேற்கொண்டிருந்தனர். கீழ்க்கூறியவாறு வில்லிபுத்தூரா
பெருமிதங்கொண்டுவாழுநாட்களுள் ஒருநாள் அநந்தனென்னும்பெயருள்ள
பெரிய புலவனொருவன்,தனதுகவித்திறத்துக்கு மெச்சிப் பற்பலஅரசர்தந்த
பரிசுகளைப்பெற்றவனாய் அவரிடத்தில் வந்துசேர்ந்தான். அவர் அவனைப்பல
வாறுபரீக்ஷித்து,அதிலெல்லாம்அவன் தவறாதுதேறிவந்தமைகண்டு,பின்னர்ப்
பாடுதற்குஅரியதொரு பெரிய சந்தக்குழிப்பைக் கொடுத்து 'இதற்குஏற்ப
ஒருசந்தக்கவி பாடுதி, பார்ப்போம்' என்ன, அங்ஙனமே அந்த அநந்தகவி
உடனே ஒருசந்தக்கவிபாட, அதிற்பிழைகண்டு இவர் ஆடம்பரத்தோடு அவ
னதுகாதையறுக்கப்போகையில், அவன், 'ஐயா! என்பெயர்கொண்ட ஆதி
சேஷனுக்குச் செவியில்லை; நீவிர் இதனை ஆராய்ந்து செய்ம்மின்' என்று
துணிந்துகூற,அதுகேட்ட வில்லிபுத்தூரார் 'இப்பொழுது நாம்இவன்காதை
யறுப்பின் இவ்வநந்தன் அவ்வநந்தனோடு ஒப்பாய்விடுவனே' என்பதை
உன்னி அவன்செவியையறுக்கத்துணியாராய், அவன்சொன்ன சமயோசித

மான வார்த்தைக்கு உவப்படைந்து, அவனைநோக்கி 'நீசொன்ன இந்தச் சாதுரியமான வார்த்தைக்கு ஒருவெகுமதியாக உனக்குச் செவியைக்கொடுத்தேன், போ' என்று கம்பீரமாகக்கூறி அவனை அனுப்பிவிட்டனர்.

பிறகு வில்லிபுத்தூரார், திருவண்ணாமலைக்குச்சென்று, அங்கிருந்தஅருணகிரிநாதரென்னும் புலவரோடு நண்புபூண்டு, அவர்பாடியகந்தரந்தாதியென்னும் யமகவந்தாதியிலுள்ளசெய்யுள்கட்கு உடனுக்குடனே உரைகூறிவந்து, அவர்பாடியகந்தர்திருப்புகழுக்குஈடாகத் தாமும் இராமகாதைத்திருப்புகழ் பாடிப் பெருமைபெற்றுத் தம்ஊர்க்குமீண்டு அடக்கத்தோடு வாழ்ந்திருந்தனர். நற்குணநற்செய்கைகளுடன் திருமாலடிக்கேதொண்டுபூண்டொழுகுவாராய்ச் சிலகாலங்கழித்தபின் வில்லிபுத்தூரார் முன்னும், அவர்தம்பியார் பின்னுமாக இருவரும் பரமபத மடைந்தார்கள்.

அடியில்வருகிறபுலவர்புராணச்செய்யுள்கள் வில்லிபுத்தூரரரதுசிறப்பையும், அவர்பாடிய பாரதத்தின் நடைச்சிறப்பையும் நன்குவிளக்குதல் காண்க.

"காவியப் புலமை வாய்ந்தோர் கணக்கில் பற்பல ரானும்
தாவில்சீர் வில்லிபுத்தூர்த் தமிழ்ப்புலவரை யொவ்வாரே
தேவினத் தெதுவானாலுந் தேசிகன் றனக் கொப்பாமோ
ஆவியை யுடலி னுள்ள வவயவத் திரள் போலாவே.

இருந்ததற் கொருபாட் டப்பா லெழுந்ததற் கொருபாட் டோதிப்
பெருந்தொகைப் படுத்துவாரைப் பேதையர் வியந்து கொள்வார்
மருந்துறழ் கவியொன் றூற் பல் வான்பொரு டெளிவாச் சொல்லுந்
திருந்தியற் பாரதச்சீர் தெரிபவர் சிலர்தா மன்றே.

தொடைச்சிறை வோசை மோனைச் சோர்வுறச் சொல்லும் பெட்பாற்
கடைப்படு புலவர் தங்கள் காவியப் பகுதி யெல்லாம்
மடைத்தலைக் குருகை வாளை மருட்டுசீர் வில்லிபுத்தூ
ருடைப்பெரும் புலவர் பாடற் கொப்பெனச் செப்பொணாதே.

ஆமையுந் தவளை யாதி யனவுமே யனைய வாகிப்
போமையக் காவியங்கள் புவியினி லனந்த முள்ள
தீமைதீர் மகவான் விண்ணிற் செலுத்தும்வெண் பரிபோற் செல்லும்
பாமையலறக் கொள்கின்ற பாரத முதற் சின்னாலே.

திண்ணமுந் தெளிவு மோசைச் செறிவு மார்தரு பாச்சீலம்
வண்ணவாய்ப் புலவ ரோர்வார் மற்றைய ரறியமாட்டார்,"

காளி காட்டேரி யாதிகளை யுபாசித் தானாலுந்
தேளினிற் றுயர்செய்வாரைச் செகம் பெரும்புலவ ரென்னும்
வாளினுற் புலவர் பல்லோர் வார்செவி யரிந்து வாழ்ந்த
ஆளிநேர் பனவன் மாட்சி யறிந்தவர் சிலர்தா மம்மா.

வரைதொறு நடஞ்செய்வானை வழிபடு மருணைநாதன்
கரையில் சித்திரமாச் சொல்லுங் கந்தனந்தாதிப் பாடற்
குரையுட னவன்சொன் மாட்சி யொண்டமிழ்ப்புலவ ரோர்வார்
திரையுறு கரிய சிந்தைச் சிறியவர் தேற் டாரே."



ஸ்ரீ

கடவுள்துணை.

# மகாபாரதம்.

பாரதம் என்னுஞ் சொல்லுக்கு - பரதனது வம்சத்தவரைப்பற்றிய நூல் என்று பொருள். இங்குக் குறித்த பரதனென்பவன்-சந்திரவம்சத்தில் துஷ்யந்தமகாராசனுக்குச் சகுந்தலையினிடந்தோன்றிப் பிரசித்திபெற்றவோரரசன். [இராமன்தம்பியான பரதனும், பரதகண்டமென்றதற்குக் காரணனான சடபரதனும்,பரதநாட்டியமென்றதற்குக் காரணனான பரதனு மல்லன்.] பரதவம்சத்துத்தோன்றினவர், பாரதர்; அவராவார்-பாண்டவரும், துரியோதனாதியரும்: அவர்களது சரித்திரத்தை உணர்த்தும் நூல், பாரத மெனப்பட்டது. இது - வடமொழித் தத்திதாந்தநாமம். [ஒருவடசொல் சிறிதுமாறித் தன்னோடு இயைபுடையபொருளையாயினும் தன்பொருளையாயினும் உணர்த்துவது, தத்திதாந்தநாமம்.] இனி, வருணாச்சிரமதருமம், ராஜதருமம், மோக்ஷதருமம், நீதி முதலிய சிறந்த உறுதிப்பொருள்களையெல்லாம் அறிவிப்பதனால் முனிவர்கள் சீர்தூக்கிப்பார்க்குமிடத்து மற்றை யெல்லா நூல்களினும் மிக்கபாரம் [அதாவது-மகிமை] உடைமைபற்றி, இந்நூலுக்குப் பாரதமென்னும் பெயர் இடப்பட்டதென்றுங் கொள்ளலாம். முன்னொருகாலத்தில் தேவர்யாவரும் நான்குவேதங்களையும் ஒருதட்டிலும் பாரதத்தை மற்றொருதட்டிலுமாகத் துலாக்கோலில் வைத்துநிறுக்க, வேதமனைத்தையும் வைத்த பக்கத்தினும் இந்நூலை வைத்த பக்கம் வலிதாயிருந்ததென வடநூற்பாரதத்தின் அநுக்ரமணிகை யத்தியாயம் கூறும்.* [இனி, இந்தச்சொல்லை, பார் அதம் என இரண்டுசொல்லாகப்பிரித்து, அதம் என்பதை ஹதம் என்னும் வடமொழிப்பெயரின் திரிபாகக் கொண்டு, பூமியிலுள்ள பல துஷ்ட அசுரர்களும் கெட்ட அரசர்களும் முதலியோரது நாசத்தைக் கூறுவதொரு நூலென்று பொருள் கூறுவாரு முளர்; அது பொருந்தாது: ஏனெனில்,—பாரதம் என்னும்வடமொழி ஒருமொழியாதலாலும், அதற்கு வடமொழிக்கு ஏற்பப் பொருள் கூறுவது தகுதியேயன்றித் தமிழ்மொழிக்கு ஏற்பப் பொருள்கூறுதல் தகாமையாலு மெனக் காண்க.]

யாவரும் மேற்கொண்டு பூசிக்கத்தக்க மேம்பாட்டை யுடைத்தாயிருத்தல்பற்றி, இந்த இதிகாசத்துக்கு 'மகா'என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. அம்மேம்பாடாவது-இருக்குமுதலிய நான்குவேதங்களோடு ஒப்ப ஐந்தாம்வேதமென்று சிறப்பித்துக்கூறப்படும் மகிமை;"பாரதஃ பஞ்சமோவேதஃ", "நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே, வாடாததவவாய்மைமுனிராசன் மாபாரதம்சொன்னநாள்," "மண்ணிலாரணங்களென வியாதனார் வகுத்த, எண்ணிலாநெடுங்காதை," "சதுர்வேதங்கள், பாரதந் தன்னோடைந்தாம்படியினாற் பகர்ந்தமூர்த்தி"என்பன காண்க.அன்றியும், மிகச்சிறந்த பகவத்கீதையைத் தன்னுள் பீஷ்மபர்வத்திலும்,ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்தை ஆநுசாஸநிகபருவத்திலும் அடக்கிக்கொண்டிருப்பது, இந்நூலுக்கு, எல்லாநூல்களினுஞ் சிறந்த மேம்பாடாம். மகாபாரதம் என்னும் பண்புத்தொகைநிலைத்தொடர்மொழி-வடமொழிப் புணர்ச்சி யாத

---

* சிலர் 'முனிவர் ஏனையஇதிகாசபுராணங்களுக்கும்பாரதத்திற்குமுள்ளவேற்றுமையறியக்கருதி அவற்றிற்கு ஒருமணியும் பாரதத்திற்கு ஒருமணியும் தராசில்வைத்துச் சீர்தூக்கி நோக்குங்கால் பாரதமணித்தட்டு பாரமுடைத்தாய்க் கீழ்இறங்கினமையின்' என்றது, வியாசபாரதத்தோடுமுரணும்.

லால், வருமொழி முதல் வலி இயல்பாயிற்று; [நன்னூல் - மெய்யீற்றுப் புணரியல் - ருசு.] இந்நூலை முதலில் வடமொழியிற் செய்தவர், ஸ்ரீ வேதவியாச மகாமுனிவர்; இவரால் வைக்கப்பட்ட 'பாரதம்' என்கிற முதனூலின் பெயரே "முதனூல்கருத்த னளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும்பெயரே" என்னுஞ்சூத்திரத்து விதிப்படி வழிநூலாகிய இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. பாரதத்துக்கு 'ஜயம்' என்றும் ஒருசிறப்புப்பெயருண்டு; (நால்வகைப்புருஷார்த்தங்களையும் பெறுதற்குக்காரணமாகும் நூல் ஜயமெனப் பெயர்பெறுமென்பது, வடமொழிநிகண்டு; எல்லா நூல்களினும் மேம்பட்டு அவற்றைவென்றதென்றும், பதினெட்டுப்பகுப்புள்ள தென்றும் இதற்குப்பொருள்கூறலும்உண்டு.)

உபதேசபரம்பரையில்வந்த ஒருவருடைய பழையசரித்திர மொன்றைப் பிரதானமாகஎடுத்துப் பலகிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக் கூறும் நூல் இதிகாசமென்றும் [இதிகாசம் - பழையவரலாறு], உலகத்தின் தோற்றம், ஒடுக்கம், முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந்தரம் என்னும் ஐந்து விஷயங்களை விரவிக்கூறும் நூல் புராண மென்றும் [புராணம் - ஐந்து இலக்கணங்களுடன் பழையவரலாறுகளை யுணர்த்தும் நூல்] வேறுபாடு உணரத்தக்கது. இதிகாசம் - இராமாயணமும், பாரதமும்; புராணம்-பிராம்மம் முதலாகப் பதினெட்டுவகைப்படும். இந்த இதிகாசபுராணங்கள் - வேதத்தின் கருத்துஇன்னதென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றி விளக்குதல்பற்றி, வேதத்திற்கு உபப்ருமஹணங்களென்று சொல்லப்படும்; உபப்ருமஹணமென்றால் - வளர்ப்பதென்று பொருளாம். இவற்றுள், புராணங்களினும் இதிகாசம் பிரபலமான பிரமாண மென்றும், அதுபற்றியே இதனை முன்னர்வைத்து 'இதிகாசபுராணம்' எனக் கூறுவதென்றும் அறிக.

இந்நூல், பெருங்காப்பியமாம். (பெருங்காப்பியஇலக்கணத்தை இப்புத்தகத்தில் தனியே காணலாம்.) இந்நூலிற் பெருங்காப்பிய இலக்கணங்கள் பலவும் வருவதை ஆங்காங்குக் காண்க.

பாரதம்-அந்தந்தப்பாகத்தின்விஷயத்தைக்குறிக்குஞ்சொற்களால்ஆதி பருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம், பீஷ்மபருவம், துரோணபருவம், கர்ணபருவம், சல்லியபருவம், ஸௌப்திக பருவம், ஸ்திரீபருவம், சாந்திபருவம், ஆநுசாஸநிகபருவம், அசுவமேதபருவம், ஆசிரமவாசபருவம், மௌசலபருவம், மகாபிரஸ்தாநபருவம், ஸ்வர்க்காரோகணபருவம் எனப் பெயர்பெற்ற பதினெட்டுப் பருவங்கள் அடங்கியது. அவற்றுள்,

## இரண்டாவது

# சபாபருவம்.

ஸபாபர்வம் என்ற வடமொழித்தொடர், திரிந்தது; [நன்-பத-உ0,உஉ.] சபையினது சம்பந்தமான பருவ மென்று, ஆறும்வேற்றுமைத்தொகையாகக் கொள்க; விஷயமாகவுடைமை, வேற்றுமைப்பொருளாகிய சம்பந்தம்: ஆகவே, சபையின்விஷயமான பருவ மென்பது கருத்து. இனி, இரண்டாம் வேற்றுமை யுருபும்பயனுமுடன்றொக்கதொகையாக, சபையைப் பற்றிய பருவ மெனினும் அமையும். காண்டவவனத்திலெரிபடாதுய்ந்த மயனென்பவனாற் பாண்டவர்க்காக இந்திரப்பிரத்தநகரத்திலமைக்கப்பட்ட சபாமண்டபத்திலும், அத்தினபுரத்தில் துரியோதனனியற் சிற்பிகளைக்கொண்டு இயற்றிய சபாமண்டபத்திலும் நிகழ்ந்த செயல்களைக் கூறும் பாக மென்று பொருள். அவற்றில் முறையே நிகழ்ந்த செயல்கள் - பாண்டவர்களது இராஜசூயயாகமும், சகுனி தருமபுத்திரனுடன் சூதுபொருதலும். ஆனதுபற்றி,

இப்பருவம் - இராயசூயச்சருக்கமும், சூதுபோர்ச்சருக்கமு மாக இரண்டு உட்பிரிவை யுடையது. பர்வம் - கணு; கரும்பு மூங்கில் முதலியவற்றிற்கு ஏகதேசமாகிய [ஏகதேசம் - ஒருபகுதி] கணுப் போல நூலுக்கு ஏகதேசமாகிய உறுப்பை 'பருவம்' என்பது - உவமவாகுபெயர். சபாபருவ மென்ற தொடரில் வருமொழிமுதல்வலிஇயல்பானது, வடமொழிப்புணர்ச்சியாதலி னென்க; [நன் - மெய்-௩௬.] "இணைந்தியல் காலை" என்ற சூத்திரத்து'ரவ் வழி உவ்வுமாம்' என்றதனால், பர்வம் பருவமென ரகரத்திற்குப்பின் உகரம் வந்தது; இனி, அச்சூத்திரத்து'மவ்வுக்கு உகரமும்'என்றதனால் வகரத்துக்கு முன் உகரம்பெற்றதெனக் கூறினும் இழுக்காகாது.

முதலாவது

## இராயசூயச் சருக்கம்.

பாண்டுமகாராஜா பித்ருலோகத்திலிருந்து நாரதமகாரிஷிமூலமாகச சொல்லியனுப்பியபடி தருமபுத்திரன் இராஜசூயயாகத்தைச செய்துமுடித்த செய்தியைக் கூறுகின்ற பாக மென்பது பொருள். ராஜஸூய மென்ற வட மொழிப்பெயர், இராயசூய மென விகாரப்பட்டது; [நன்-பத-உ0, உக.] ராஜசூயமென்ற யாகப்பெயரின் காரணம்:—அரசனால் சோமலதையைப் பிழிந்து செய்யப்படுவதென்றும்,ராஜாஎன்னும்பெயருள்ள சோமலதை நொருக்கப்படுகிறதென்றும் வடநூல்களிற காண்க.இது - எல்லாஅரசர்களையும் வென்று அவர்களிடங்கொண்ட பொருளைச் செலவிட்டுச்செய்வதொரு பெரு வேள்வி. இராயசூயச்சருக்க மென்ற தொடர் - இரண்டனுருபும்பயனும் தொக்கதொகை. இராயசூயத்தினது சம்பந்தமான சருக்க மென்று விரித்தால்,ஆறும்வேற்றுமைத்தொகையாம். ஸர்க்கம் - வடசொல். சருக்கம்-முடிபு அல்லது படைப்பு என்று பொருள். அது - சங்கேதத்தால், ஒரு பெரிய வகுப்பி னுட்பட்ட சிறியபாகத்தைக் குறிக்கும்.

### கதைத்தொடர்ச்சி.

[பாரதகதை பிரசித்தமான தாதலால், இந்தச்சருக்கத்துக்கு முன் கதைத்தொடர்சசி சருக்கமாகவே எழுதப்படுகிறது.]

சந்திரகுலத்திலே புதன் புரூரவா ஆயு நகுஷன் யயாதி பூரு துஷ்யந் தன் பரதன் ஹஸ்தி குரு முதலிய பலஅரசர்கள் தோன்றியபின் அம்மரபில் உதித்து இப்பரதகண்டத்தில் அஸ்திநபுரியிற் செங்கோல்செலுத்திய சந்தனு வென்னும் அரசனுக்கு முதல்மனைவியாகியகங்கையின்குமாரன்பீஷ்மனென் பவனும், இரண்டாம்மனைவியாகிய யோஜநகந்தியின்மகன் விசித்திரவீரிய னென்பவனும் இருந்தார்கள். [முன்னர்ச சத்தியவதியென்னும்பெயரோடு இருந்து பராசரமுனிவனோடு சேர்ந்து வியாசமுனிவனைப்பெற்றுப் பின்பு அப்பராசரனருளாற் கன்னிப்பருவமடைந்த கந்தவதியென்னும் மறுபெய ருடைய இந்த யோஜநகந்தியினிடம் சந்தநுவுக்குப்பிறந்த முதற்குமாரனான சித்திராங்கதன், அப்பெயருள்ள ஒருகந்தருவனாற் கொல்லப்பட்டு இளமை யில் இறந்தான்.] முன்னைய விரதத்தின்படி வீடுமன் விசித்திரவீரியனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தான்.

விசித்திரவீரியன் மகப்பெறாது இறந்ததன்பின் அவனது பத்தினிக ளான அம்பிகையினிடத்துத் திருதராஷ்டிரனும், அம்பாலிகையினிடத்துப் பாண்டுவும் சந்ததிவிருத்தியின்பொருட்டுத் தாய்சொற்கடவாதவியாசபகவா னது திருவருளாற் பிறந்தனர். அம்பிகையால் ஏவியனுப்பப்பட்ட தாதிப் பெண்ணினிடத்து வியாசனருளால் அவதரித்த விதுரனென்னுங்குமாரனும் இருந்தான். திருதராட்டிரன் பிறவிக்குருடனாதலால், விதுரனை மந்திரியாக வைத்துக்கொண்டு, பாண்டு, திருதராட்டிரனுக்குமுடிசூட்டித் தானே இரா சாங்ககாரியம் பார்த்துவந்தான். பாண்டுவுக்கு மனைவியுடன்சேரக்கூடா தென்று சாபமேற்பட்டதனால், அவனனுமதிப்படி, அவனது மூத்தமனைவி

யாகிய குந்தி,தனக்கு இளமையில் துருவாசமுனிவன் உபதேசித்திருந்த மந்திரத்தின் மகிமையால் வந்த யமதருமராசனால் யுதிஷ்டிரனையும், வாயுதேவனால் பீமசேனனையும், தேவேந்திரனால் அருச்சுனனையும் பெற்றாள்.[முன்பு கன்னிப்பருவத்துச் சூரியனாற் குந்தியிடம் பிறந்தவன், கர்ணன்.] அவளுடையசக்களத்தியான மாத்திரி, அவளால் அம்மந்திரம்உபதேசிக்கப்பெற்று, அசுவினிதேவர்களால், நகுலன் சகதேவன் என்னும்இரட்டைப்பிள்ளைகளைப் பெற்றாள்.திருதராட்டிரனுக்குத் துரியோதனன் துச்சாதனன்முதலிய நூறு பிள்ளைகளும்,துச்சளையென்னும் ஒருபெண்ணும் காந்தாரியினிடம்பிறந்தார்கள். [பஞ்சபாண்டவர்களுள் தருமன் துரியோதனாதியர்நூற்றுவரினும் மூத்தவனென்றும், வீமன்முதலியமற்றைநால்வரும் துரியோதனனுக்கு இளையவரென்றும் அறிக ] பாண்டு, சிலகாலத்துக்குப்பின் இறந்துபோனான். அப்பொழுது மாத்திரி சககமனஞ்செய்தாள். [சககமனம் - உடன்கட்டையேறுதல்.] பின்பு பாண்டவரும் துரியோதனாதியரும் கூடி அத்தினாபுரியில் விளையாடுகையில் வீமன் துரியோதனாதியரினும் மிகமேம்பட்டுத் தோன்றினான். அதனால் அவனிடம் அவர்கள் மிக்கபொறாமைகொண்டார்கள்.

அதனாலாகிய அச்சத்தால் துரியோதனன் கர்ணனைத் தனக்குத்துணையாகக் கொண்டான். துரியோதனாதியர் வீமனைக் கொல்லும்படி பலவாறு முயற்சிசெய்தும் அவன் தெய்வசங்கல்பத்தால் இறவாமல் ஒவ்வொருவகையால் தப்பிப்பிழைத்தனன். பின்பு வீடுமன் இந்தநூற்றைவர்க்கும் கிருபாசாரியனைக்கொண்டும் துரோணாசாரியனைக்கொண்டும் படைக்கலவித்தை பயிற்றுவித்தான். அதில் துரியோதனாதியரினும் பாண்டவர் தேர்ச்சியடைய, அவர்களுள்ளும் அருச்சுனன் அனைவரினும்சிறப்புற்றுவிளங்கினான்.அப்பால் அவரவர்திறத்தை அனைவரும்காணுமாறு துரோணன்கட்டளைப்படி வீடுமன் விதுரன்முதலியோர்முன்னிலையிலே அந்த இராசகுமாரர்கள் செய்த விளையாட்டுப்போரில் அருச்சுனனது திறமை சிறந்துநிற்க, அதனைக்கண்டு யாவரும் கொண்டாடியதற்கு மனம்பொறானாய், சபையிலிருந்த கர்ணன் தான் எழுந்துசென்று தனது திறத்தை எல்லாரும் அதிசயிக்கும்படிகாட்டி அருச்சுனனைப் போர்க்குஅழைக்க,அருச்சுனன்,'நீயாஎனக்குஎதிர்!'என்று அலட்சியமாகப்பேசவே, கர்ணன் 'உன்தலையைக் கொய்வேன்' என்று வீரவாதங்கூறினான். அப்பொழுது,பிறப்பறியாத கர்ணனைக்குறித்துக் கிருபாசாரியன் தேர்ப்பாகன்மகனென்று இழித்துக்கூற, துரியோதனன் அதற்குப் பலவாறு மாறுகூறிக் கர்ணனை அங்கதேசத்தரசனாகமுடிசூட்டி உயர்த்தினான். பிறகு துரோணன் தன் மாணாக்கர்களாகியஅந்தக்குருகுலகுமாரனைவரையும்நோக்கி 'எனக்கு முன்பு துரோகஞ்செய்தவனான துருபதனைப் போரில்வென்று கட்டிக்கொணர்தலே எனக்கு நீங்கள் கொடுக்கவேண்டிய குருதட்சிணை'என்று கூற, அங்ஙனமே அவர்கள் சேனைகளுடன் பாஞ்சாலதேசத்துக்குசென்று முற்றுகைசெய்து விளைத்த பெரும்போரில், துரியோதனாதியர் நூற்றுவரும் துருபதனால் தோல்வியடைந்து தம்மூர்க்கு மீண்டோட, அருச்சுனன் தன் வல்லமையால் துருபதனைவென்று அவனது வில்லின் நாணிக்கயிறுகொண்டே அவனைத் தேர்க்காலிற்கட்டியகப்படுத்தித் துரோணனெதிரிற்கொணர்ந்து ஒப்பிக்க, துரோணன் அவனைநோக்கிப் பலவாறு பரிகசித்துப் பரிபவப்படுத்தி அவனுடைய இராச்சியத்திற் பாதியைக் கவர்ந்துகொண்டு தனது பெருமிதம்தோன்ற மற்றொருபாதியை அவனுக்கேகொடுத்து அவனைக் கட்டவிழ்த்து உயிரோடுவிட்டிட்டான். இப்படி அவமானமடைந்து மனவருத்தத்தோடு ஊர்சேர்ந்த துருபதன், துரோணன்மீது கொண்ட வைரத்தால் அவனைக் கொல்லுதற்கு ஒருமகனையும், அருச்சுனனது திறமையைக் கண்டு வியந்ததனால் அவனுக்கு மணஞ்செய்வித்தற்கு ஒருமகளையும் பெறவிரும்பியவனாய், யாசன் உபயாசன் என்னும் முனிவர்களைக்கொண்டு புத்திரகாமயா

கஞ் செய்விக்க, அவ்வேள்விப்பயனால் அவ்வோமத்தீயினின்று ஒருகுமாரனும் ஒருகுமாரியும் தோன்றினர்; அவர்களே திருஷ்டத்யும்நனும், திரௌபதியும். இப்பால், வீடுமன், திருதராட்டிரனோடும் விதுரனோடும் ஆலோசித்து, சகலகுணசம்பந்நனான தருமபுத்திரனுக்கு இளவரசுமுடிசூட்டினான். அதுகண்டு அழுக்காறுமிக்க துரியோதனனுடைய கருத்துக்கு இணங்கிய திருதராட்டிரன், புரோசனனென்னுந் துர்மந்திரியுடன் சதியாலோசனை செய்து, வாரணாவதமென்னும் நகரத்தில் அரக்குமாளிகையொன்று கட்டிமுடித்துப் பாண்டவர்களை அதில்வசிக்கச்செய்து ஓரிரவில் அம்மாளிகையில் தீப்பற்றவைத்து அவர்களை ஒழித்துவிடுவதென்று நிச்சயித்து, அவ்வமைச்சனைக்கொண்டே அந்நகரத்தை விசேஷமாக அலங்கரிப்பித்து, ஒருநாள் தருமபுத்திரனைநோக்கி ‘நீ உனது தம்பியர்நால்வருடன் வாரணாவதத்துச் சென்று தனியேவாழ்வாய்’ என்று கட்டளையிட்டு, அப்புரோசனனையே துணையாக்கி அவனோடும் அவனுக்கு அடங்கிய பரிவாரத்தோடும் அனுப்ப, பாண்டவரும் குந்தியும் வாரணாவதத்திற்சென்று, தங்கட்கென்று புதிதாகச்செய்யப்பட்ட மாளிகையில் வசித்திருந்தனர். அங்ஙனம் வசிக்குநாட்களில் பாண்டவர்கள் அரக்குமாளிகையின் தன்மையையும், புரோசனனது செய்கைகளையும் உற்றுநோக்கிச் சங்கைகொண்டிருக்கையில், விதுரனால் அனுப்பப்பட்ட சிற்பியொருவன் வீமனிடம்வந்து, திருதராட்டிரனது கட்டளையின்படி புரோசனன் வஞ்சனையாக இந்தமாளிகையைக் கட்டும்பொழுது அவனது சூழ்ச்சியை யுணர்ந்த விதுரனுடைய ஏவலால் தான் இம்மாளிகையினுள்ளே ஒருபுறத்தில் நீண்ட சுரங்கவழியொன்றை நெடுந்தூரத்திலுள்ள ஒருவனத்திற் சென்று சேரும்படி எவரும்அறியாமல் அமைத்துள்ள தந்திரத்தை அந்தரங்கமாகத்தெரிவித்து, அவ்வழிக்குத்துவாரம் ஒருதூணின் கீழ் உள்ளதென்பதையும் குறிப்பாகச் சொல்லிச் செல்ல, பின்பு ஒருநாள் இரவில் வீமன் புரோசனனை அம்மாளிகையிலேயே படுக்கச்சொல்லி அவன் நன்றாகத் தூங்கியபின் அவ்வீட்டில் தானே நெருப்புப்பற்றவைத்துவிட்டுத் தன்னுடன்பிறந்தவர்களையும் தாயாரையும் எடுத்துக்கொண்டுசுரங்கவழியாக ஒருவனத்திற் சேர்ந்தான். துரியோதனன்கட்டளைப்படி பாண்டவர்க்கு விஷங்கலந்ததேனைக்கொடுத்து அவர்களைக்கொல்லவந்த ஐந்துவேடர்களும் அவர்கள்தாயும் அந்நாளில் அவ்வரக்குமாளிகையில் தங்கித் தீப்பட்டு இறந்தனராதலால், பொழுதுவிடிந்தபின் அங்குவந்து பார்த்த ஊராரெல்லாரும், பாண்டவருந் தாயுமே எரிப்பட்டு இறந்தனரென்று இரங்கினார்கள். அவ்வாறே நாடெங்கும் பிரசித்தியாயிற்று. அதற்காக அவ்வுலகம்முழுவதும் வருத்தமடைய, துரியோதனாதியர் மாத்திரமே மனமகிழ்ச்சிகொண்டனர்.

பாண்டவரும் குந்தியும் வனஞ்சேர்ந்தவுடனே, மனிதர்களைக்கொன்று கொணரும்படி இடிம்பனென்னும்அரக்கனால் அனுப்பப்பட்ட அவன்தங்கையான இடிம்பியென்னும்அரக்கி, அருகில்வீமனைக்கண்டவளவிலே அவன்மீது மோகங்கொண்டு அவனோடு ஆசைவார்த்தை பேசிக்கொண்டிருக்குமளவில், அதுகண்டுகோபித்துவந்தஇடிம்பன்கடுஞ்சொற்கூறிவீமனுடன்வலியப்போர்தொடங்க, வீமன், தனதுவலிமையால் இடிம்பனைக்கொன்றுதொலைத்தபின், இடிம்பியின்வேண்டுகோளின்படி தாயுந் தமையனும் இட்ட கட்டளையால் அவளை மணஞ்செய்துகொண்டான், பின்பு சாலிகோத்திரமுனிவனத்தில் வசிக்கையில் அவள்வயிற்றில் கடோற்கசனென்ற புதல்வன் தோன்றினான். ஐவரும் குந்தியும் அவனைத் தாயுடனே இடிம்பவனத்துக்கு அனுப்பிவிட்டு வியாசமுனி வந்து நியமித்தபடி அந்தணவடிவுகொண்டு வேத்திரகீயமென்னும் ஊர்க்கு விருந்தினராய்ச் சென்று அங்கு ஓரந்தணன்மனையி லிருக்குநாட்களில் ஒருநாள், அவ்வீட்டுப் பார்ப்பனி புலம்பலுற்றாள்: அதற்குக் காரணமென்னவென்றுகுந்திவிசாரிக்க, அவள்சொல்வாள்: ‘இவ்வூர்க்குஅருகி

லுள்ள வனத்தில் வசிக்கிற பகனென்னும் கொடியஅரக்கன் ஒருகாலத்தில் இவ்வூரினுள்வந்து பலரையும் ஒருங்கேகொன்று தின்னத்தொடங்குகையில், இவ்வூரார் அஞ்சி ஆலோசித்து 'நாங்களே நாளுக்கு ஒருவீடாக முறைவட்டம் ஏற்படுத்திக்கொண்டு ஒருவண்டிச்சோற்றையும் ஓர் ஆளையும் உனக்கு உணவாக இட்டுவருகிறோம்; நீ எங்களை ஒருங்கே கொல்லாதே' என்றுகூறி அவனைச் சிறிதுசாந்தப்படுத்தினர்; அதுமுதல் அவ்வாறே நடந்துவருகிறது. இன்றைக்கு என்வீட்டுமுறை; என்மகனையாவது கணவனையாவது இன்று இழப்பதை நோக்கி இரங்குகிறேன்'என்றுசொன்ன அவ்வீட்டுக்காரிவார்த்தையைக் கேட்டவுடனே குந்தி 'என்மக்களைவருள் வலியனான இரண்டாமவனை இன்றைப்பலிக்கென்று செலுத்தினால் அவன் அரக்கனைக்கொன்று மீள்வன்' என்றுகூறி அவள்சோகத்தை ஆற்றினாள். அவ்வாறே வண்டிச் சோற்றுடனே வனத்தைநோக்கிப் புறப்பட்ட வீமன் சிறிது தாமதமாகச் சென்று பகனைக்கண்டு உடனே அச்சோறுமுழுதையும் உண்டுவிட, அது கண்டு பெருங்கோபங்கொண்ட பகன் எதிர்த்துப் போர்தொடங்க, வீமன் மற்போர்செய்து பகனைக்கொன்றொழித்து ஊர்க்குமீண்டுவர, அனைவரும் அவனைக்கண்டு கொண்டாடினார்கள்.

அரக்குமாளிகையிற் பாண்டவரிறந்தனரென்றுகேள்வியுற்ற துருபதன் திரௌபதிக்குச் சுயம்வரங்கோடிக்க,பலதேசத்து அரசர்களும் பாஞ்சாலதேசத்துராஜதானியில் வந்துசேர்ந்தனர். அச்செய்தியையறிந்துசெல்லும் வேத்திரகீயப் பார்ப்பாரோடு பாண்டவரைவரும் குந்தியும் சென்று வழியில் வியாசமுனியைக் கண்டு வணங்கி அவனருள்பெற்றுத் துருபதநகரஞ் சார்ந்து ஒரு குயவன்வீட்டிற் குந்தி வசிக்கப் பாண்டவர்கள் சுயம்வர சபையைச் சேர்ந்தார்கள். அங்குவந்து வீற்றிருந்த அரசர்களை நோக்கித் திட்டத்துய்மன் 'இவ்வில்லைவளைத்து நாணேறிட்டு அம்புதொடுத்து அதனால் இந்த யந்திரசக்கரத்தி லுள்ள குறியை எய்துவீழ்த்தியவனே என்தங்கைக்குக் கணவனாவன்' என்றுகூறினான். அரசர்களனைவரும் அங்ஙனஞ்செய்யமாட்டாமற் போனபின்பு, அந்தணவடிவத்தோடிருந்த அருச்சுனன் திட்டத்துய்மனைநோக்கி'அரசரன்றி அந்தணரில் யாரேனும் குறியெய்தால் அவனுக்குப் பாஞ்சாலி மாலைசூட்டுவளோ?' என்றுவினவியதற்கு,அவன் 'சூட்டுவள்' என்றான். உடனே அருச்சுனன் வில்லையெடுத்துக் குறியையெய்தலும், திரௌபதி அவனுக்கு மாலைசூட்டினாள். அதுகண்டு பொறாமைகொண்ட துரியோதனனது தூண்டுதலால் அரசர்களெல்லாரும் எதிர்த்துப்போர்செய்ய, பாண்டவர் அவர்களைவென்று பாஞ்சாலியோடு குயவன்வீட்டுக்குச் சென்று 'அம்மா! இன்று ஒருநற்பொருள்பெற்றோம்' என்றுசொல்ல, உள்ளிருந்துஅதுகேட்ட குந்தி,அங்கிருந்தபடியே 'அதனை ஐவீரும் உண்மின்' என்றுசொல்லி வெளியேவந்து திரௌபதியைக்கண்டு 'ஆ ஆ! என்னினைந்தேன், என்சொன்னேன்,என்செய்தேன்!' என்று கலங்கினள். தருமபுத்திரன் 'தாயே! நினது வாய்மொழி வேதமொழியேயாம்: எங்கள்எண்ணமும் அப்படியே' என்றுசொல்லி,பின்னர்த் துருபதராசன் தங்களைப் பாண்டவர்களென்று அறிந்து வந்து அரண்மனைக்குஅழைத்துப்போய் அருச்சுனனுக்கும் பாஞ்சாலிக்கும் மணஞ்செய்யத்தொடங்கினபோது 'நாங்கள்ஐவரும் இவளை விவாகஞ்செய்துகொள்வோம்' என்றான். அதற்குத் துருபதன் இணங்கானாய்த் தடுமாற்றமுற்ற சமயத்தில், வியாசமாமுனிவன் எழுந்தருளி, பாஞ்சாலியும் பாண்டவர்களு மாகிய இவர்களுடைய பூர்வஜந்மவிருத்தாந்தத்தை எடுத்துச்சொல்லி விளக்கி 'இவளை இவ்வைவரும் மணப்பது முறை' என்றுசொல்லியருளினன். அதுகேட்டுத் தெளிந்த துருபதன், யுதிஷ்டிரன் முதலான ஐவர்க்கும் திரௌபதியை முறையே மணஞ்செய்வித்தான். அச்செய்திகேள்வியுற்றுத் துரியோதனாதியர் படையெடுத்துவந்து பாண்டவ

ரோடு போர்செய்து மீண்டும் அவரால் வெல்லப்பட்டுத் தோற்றோடினர். அதனையறிந்த திருதராஷ்டிரன் தூதுவிடுத்துஅழைக்க, பாண்டவர் அஸ்தி புரஞ் சேர்ந்தனர்.

திருதராஷ்டிரன் மந்திரிகள்முதலானாரோடு ஆலோசித்துத் தரும புத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தபின்பு, அப்பெரியதந்தையின் கட்டளைப்படி பாண்டவர் காண்டவப்பிரத்தமென்னுங்கடுங்காட்டிற்சேர்ந்த னர். அங்குச் சிறந்தநகர்செய்யவிரும்பிக் கண்ணபிரான் இந்திரனோடு விசுவ கர்மனை வருவிக்க, அங்ஙனம்வந்த இந்திரனது கட்டளைப்படி அத்தெய் வத்தச்சன் சிறந்ததொருநகரத்தை நிருமிக்க,அதற்குக் கண்ணன் இந்திரன் பெயரால் இந்திரப்பிரத்தமென்று பெயரிட்டுப் பாண்டவரை அதிற் குடியே ற்றியருளிச் சென்றனன். பின்புஅங்கெழுந்தருளியநாரதமாமுனிவன், தன் னையுபசரித்த பாண்டவர்க்கு, திலோத்தமையை ஒருங்கு விரும்பிய சுந்தோ பசுந்தர் தம்மிற்பகைமையுற்று ஒருவராலொருவர் அழிந்த வரலாற்றை யெடு த்துக்கூறி, 'நீங்களைவரும் திரௌபதியை ஒருங்குகாமுறுதல் தகுதியன்று; முறையே ஒருவருடத்துக்கு ஒருவராகக் கூடிவாழ்தல் தகுதி. அங்ஙனம் ஒருவரோடு சேர்ந்திருக்கும்போது, மற்றைநால்வர் அவளைக்காணின் தீர்த்த யாத்திரைசெய்தல்வேண்டும்' என்று நியமிக்க, அவர்கள் அம்முறைமையை மேற்கொண்டு ஒழுகுவாராயினர்.

இங்ஙனம் நிகழ்கையி லொருநாள் ஓர்அந்தணன் அரண்மனைவாயிலில் வந்து'எனதுபசுக்களைவேடர்கள்கொள்ளைகொண்டார்கள்'என்றுமுறையிட, அதுகேட்டவுடன் அவர்களைப் பொருதுவென்று நிரைமீட்டுக்கொடுத்தற் பொருட்டு ஆயுதமெடுத்தற்குச்சென்ற அருச்சுனன் அங்குத் தருமனுடன் திரௌபதியைக் கண்டதனால், வேடர்களைவென்று நிரைமீட்டுக்கொடுத்த வுடனே தருமனிடம்விடைபெற்றுத் தீர்த்தயாத்திரைசெல்லலானான். அங்ங னஞ்சென்று கங்கையில்நீராடுகையிற் கண்டுகாதலித்த உலூபியென்னும் நாககன்னிகையோடு நாகலோகஞ்சேர்ந்து அவளை மணந்து இராவானென் னும்மகனைப் பெற்றபின்பு, அநேகதிவ்யதலங்களின்வழியாகத் தென்மது ரைசேர்ந்து, சித்திரவாகனபாண்டியன்மகளான சித்திராங்கதையை விவா கஞ்செய்துகொண்டு, அவளிடம்பிறந்த பப்புருவாகனனென்னுங் குமா ரனைப் பாண்டியனதுவேண்டுகோளின்படி அவனதுசந்ததிக்காகவேகொடுத் துவிட்டு, பின்னும் பூப்பிரதக்ஷிணமுறையால் துவாரகைசேர்ந்து, கண்ண னது தங்கையான சுபத்திரையைத் தந்திரமாக மணஞ்செய்துகொண்டு கண்ணபிரானுடனே இந்திரப்பிரத்தத்துக்கு வந்துசேர்ந்தனன். பின்பு சுபத்திரைவயிற்றில் அபிமந்யுவும், திரௌபதிவயிற்றிற் பஞ்சபாண்டவர்க்கு உபபாண்டவரைவரும் பிறந்தார்கள்.அவர்களில் அபிமன்சிறந்துவிளங்கினான்.

இந்திரப்பிரத்தநகரத்தைச்சார்ந்ததொரு பூஞ்சோலையிற் கிருஷ்ண னும் அருச்சுனனும் உல்லாசமாக வசித்திருக்கையில் ஒருநாள், அக்கினிபக வான் அந்தணவடிவங்கொண்டு வந்து 'எனக்கு மிகப்பசிக்கின்றது: உணவி டுக' என்று வேண்ட, அவ்விருவரும் 'நீ வேண்டியபடி உணவிடுவோம்'என்று வாக்குதத்தஞ்செய்ய, உடனே தீக்கடவுள் நிஜரூபங்கொண்டு 'இந்திரனது காவற்காடாய் யாவர்க்கும் அழிக்கவொண்ணாதபடி நிலவுலகத்திலிருக்கிற காண்டவவனத்தை அதிலுள்ள சராசரங்களுடனே எனக்கு விருந்திட வேண்டும்' என்ன, அவர்கள் இசைந்து 'நீ இதனைப் புசி' என்றவுடனே,அக் கினிதேவன் அருச்சுனனுக்கு நான்குவெள்ளைக்குதிரைகள்பூட்டிய தேரை யும், குரங்குவடிவமெழுதிய துவசத்தையும், காண்டீவமென்னும் வில்லையும், இரண்டு அக்ஷயதூணீரங்களையுங் கொடுத்துக் காண்டவவனத்திற்பற்றியெரி கையில்,அவ்வனத்தினின்றுஓடுகிற பிராணிகளையெல்லாம் அருச்சுனன் அம் பெய்துகொன்று அத்தழலில் விழுத்திவந்தனன். காண்டவவனந் தீப்பற்றி

யெரிகிறசெய்தியையுணர்ந்த தேவேந்திரன் அத்தீயையவிக்கும்படிபலமேகங்களை யேவ, அம்மேகங்கள் வந்துபொழிந்த சோனைமாரியி லொருதுளியும் தீயின்மேல் விழுந்திடாதவண்ணம் அருச்சுனன் சரகூடங்கட்டித் தடுத்து விட்டான். பின்பு இந்திரன் தேவசேனையுடனேவந்து அருச்சுனனோடுபோர் செய்ய, அருச்சுனன் அனைவரையும்வென்று இந்திரனோடுபோர்தொடங்குமளவில், ஆகாயவாணிசொன்னதனால் இந்திரன் போரைநிறுத்திச் சென்றனன். அக்கினி அவ்வனம்முழுவதையும்எரித்துத் திருப்தியடைந்து கிருஷ்ணார்ச்சுனர்களை வாழ்த்திச்செல்ல, அவ்விருவரும் இந்திரப்பிரத்தநகரஞ்சேர்ந்தனர். அக்காண்டவத்தில் எரியால்இறவாது தப்பியுய்ந்தவர் தக்ஷகன்மகனான அசுவசேனனும், மந்தபாலமுனிவனருளால் தோன்றிய நான்கு பறவைக் குஞ்சுகளும், கண்ணபிரானருள்பெற்ற மயனுமே யன்றி வேறில்லை.

[இவ்வரலாறு, கீழ் ஆதிபருவத்திற் பரக்கக் கூறப்பட்டுள்ளது.]

[தெய்வவணக்கம்: கிருஷ்ணஸ்துதி.]

௧. பாண்டவர்கள் புரிந்ததவப் பயனாகியவதரித்துப் பகைத்தா மேன்மேன், மூண்டவினை முழுவதுவு முனைதோறு முரண்முருக்கி முகில்பு காமற், காண்டவமுங் கனல்வயிற்றுக் கனறணிய நுகருவித்துக் காக்கு மாறே, பூண்டருளெம் பெருமானைப் போற்றுவா ரெழு பிறப்பு மாற்று வாரே.

இது - காப்புச்செய்யுள். இதனால், தாம் பாடத்தொடங்கிய சருக்கம் இடையூறில்லாமல் இனிதுமுடியும்பொருட்டு உயர்ந்தோர்வழக்கத்தின்படியே கவி கடவுள்வணக்கம் கூறுகிறார். கடவுள்வணக்கம் இரண்டுவகைப்படும்; வழிபடுகடவுள்வணக்க மென்றும், ஏற்புடைக்கடவுள்வணக்கமென்றும். வழிபடுகடவுள்வணக்கமாவது - தாம்தாம் குலதெய்வமாகக்கொண்டு ஆராதிக்கிற கடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம்-வைஷ்ணவசமயத்தார் விஷ்ணுவையும், சைவமதத்தவர் சிவனையும், ஜைநர் ஜிநனையும், பௌத்தர் புத்தனையும் வணங்குதல் போல்வன. ஏற்புடைக்கடவுள்வணக்கமாவது - தாம் தாம் செய்யத்தொடங்கிய காரியத்துக்குத் தகுதியுடைய கடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம்-இராமாயணங்கூறுபவர் இராமனையும், பாகவதஞ் சொல்பவர் கண்ணனையும், கந்தபுராணமுரைப்பவர் சுப்பிரமணியமூர்த்தியையும் வணங்குதல்போல்வன. ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இவ்வாழ்த்து, தமக்குவழிபடுகடவுளும் தாம்செய்யத்தொடங்கிய இதிகாசத்துக்குஏற்புடைக்கடவுளுமாகியதிருமாலைப்பற்றியதென அறிக. திருமாலின்திருவவதாரமாகிய கண்ணபிரான் இந்நூலுக்கு ஏற்புடைக்கடவுளென்பது, இந்நூலாசிரியர் தற்சிறப்புப்பாயிரத்தில் "முன்னுமாமறை முனிவருந் தேவரும் பிறரும், பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன், மன்னுமாதவன் சரிதமு மிடையிடை வழங்கு, மென்னுமாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்" எனக்கூறியதனாற் பெறப்படும். இத்தன்மை, வியாசபாரதத்தின் அநுக்கிரமணிகையத்தியாயத்திலும் நன்குவிளங்கும்.

ஆயின், இந்நூலின்தொடக்கத்திற் கடவுள்வணக்கங்கூறியது போதாதோ? சருக்கந்தோறும் பெரும்பாலும் தனியே கடவுள்வணக்கங் கூறுவானேனெனின்;—நூல்ஒன்றேயாயினும் சருக்கங்கள் பொருளால்வேறுபடுதலாலும், நூலின்முதலிடைகடைகளிற் கடவுள்வாழ்த்துக்கூறுதல் மிகவும் மங்கலமாதலாலும், கல்விக்குப்பயன் கடவுளை வணங்குதலே யாதலாலும், இவ்வாறுகூறின ரென்க. *

* 'அஃதேல், ஒருநூற்கு எடுத்துக்கோடற்கண்ணே வணக்கஞ்சொல்லுதலன்றி அதிகாரந்தோறுஞ் சொல்லியது என்னையோ வெனின்;—நூல்

(இதன்பொருள்.) பாண்டவர்கள் புரிந்த தவம் பயன் ஆகி அவதரித்து- பாண்டுமகாராசனது குமாரர்களான ஐவரும் (முற்பிறப்பிற்) செய்த தவத்தினது பயனேயாகி யுதித்து,—பகைத்து மேல் மேல் மூண்ட வினை முழுவதுவும் - (அப்பஞ்சபாண்டவர்கட்குப் பங்காளிகளான துரியோதனுதியர்கள்) பகைமைகொண்டு மேல்மேலும்முயன்றுசெய்த வஞ்சகச்செயல்முழுவதையும், முனைதோறும் முரண் முருக்கி - (அந்தந்தச்செயல்செய்யும்) இடந்தோறும் வலியழியச்செய்து,—முகில் புகாமல் - (மழைபெய்துதணிக்கவந்த) மேகங்கள்அணுகாதபடி (அம்புதொடுத்து விலக்கி), காண்டவமும் - காண்டவ வனத்தையும், கனல் வயிறு கனல் தணிய நுகருவித்து - அக்கினிதேவனுடைய வயிற்றிலுள்ள பசித்தீ அடங்கும்படி அவனுண்ணச்செய்து, காக்கும் ஆறே பூண்டருள்-(எல்லாவுயிர்களையும்) காக்கும்வகையையே மேற்கொண்டருளிய, எம்பெருமானை - எமதுதலைவனான கண்ணபிரானை, போற்றுவார்- துதிப்பவர்கள்,—எழு பிறப்பும் மாற்றுவார் - ஏழுவகைப்பட்ட பிறப்புக்களையும் நீக்குபவராவர்; (என்றவாறு.)—ஈற்றுஏகாரம் - தேற்றம்.

"வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்" என்றபடி வேண்டியபயன்களை வேண்டியவாறே பெறுவிக்கின்ற தவம்போல, கண்ணபிரான் பாண்டவர்கட்கு வேண்டியபயன்களை வேண்டியவாறே பெறலாம்படி அருள்செய்ததனால், 'பாண்டவர்கள்புரிந்ததவப்பயனாகிஅவதரித்து' என்றார். 'தவப்பயன்போன்றுஅவதரித்து' என்னாது 'தவப்பயனாகிஅவதரித்து' என்று ஒற்றுமைப்படுத்திஉரைத்ததன்நயம் உணரற்பாலது. "பொங்கழற்சிந்தைச் சுயோதனன் கங்கைப்புனல்விளையாட்டிடைப் புதைத்த, வெங்கழுமுனையில் விழாமலோரளியாய் வீமனுக்காருயிரளித்தாய்" என்னும்படி ஒருநாள் துரியோதனன் கங்காநதியின்ஸ்நாநகட்டத்தில் இரும்பினாலும் செம்மரத்தினாலும் கூரியகழுக்களை நீரின்மேல் தோன்றாதபடி உள்நாட்டச்செய்து வீமனை 'நீரில்விளையாடலாம் வா' என்றுசொல்லி வஞ்சனையாக அழைத்துப் போய், 'இங்கிருந்து நீ நீரிற் குதிக்கிறையா, பார்ப்போம்' என்ன, அங்ஙனமே வீமன் குதித்தற்குச் சித்தனாய் நின்றபொழுது, கண்ணன் கருவண்டினுருவங்கொண்டு கழுமுனைதோறும் இருக்க, வீமன் அதனைநோக்கி 'இது என்ன? நீரோட்டத்தில் வண்டுகள்உட்கார்ந்திருக்கின்றனவே' என்று உற்றுப்பார்க்கும்போது, அங்கெல்லாம் உசிகள் நாட்டியிருக்கக்கண்டு தன்சங்கேதத்தின்படி அவைநாட்டியிராதஇடம்பார்த்துக் குதித்துக் கரையேறி மீண்டனனென்பது முதலாகப் பற்பலசமயங்களிற் பற்பலவாறு துரியோதனாதியர்கள் பாண்டவர்களை யழித்தற்குச் செய்த வஞ்சனைகட்கெல்லாம் மாறாகக் கண்ணபிரான் ஒவ்வோருபாயஞ்செய்து பாண்டவர்களைப் பாதுகாத்தமைபற்றி, 'பகைத்துமேல்மேல் மூண்ட வினைமுழுவதுவும் முனைதோறும் முரண்முருக்கி' என்றார். இத்தொடரில், அவர்கள் பகைமைகொண்டு மேன்மேற்கோபித்துச்செய்த போர்த்தொழில்களெல்லாவற்றையும் யுத்தகளந்தோறும் வலிமையழித்து என்ற பொருளும் தோன்றும். காண்டவதகனகாலத்தில் இந்திரனேவலாற் பெருமழைபொழிந்துஅத்தீயையழிக்கவந்த மேகங்களையெல்லாம் அருச்சுனன் அம்புமழைபொழிந்து துரத்தியோட்டினமையை, கீழ்க் காண்டவதகனச்சருக்கத்தில் "கன்மழை

ஒன்றேயெனினும் அதிகாரங்கள் பொருளான் வேறுபடுதலானும், முன்னையொருநூலார் ஒரோவதிகாரத்தை ஒருநூலாக்கிப் பாயிரம் முழுதும்பகர்தலானும், "ஆதியு மந்தமு நடுவு மங்கலம், ஓதிய முறைமையி னுரைப்ப ராயிடின், ஏதமி லிருநிலக் கிழத்தி யின்புற, நீதியம் பனுவல்கள் நிலவுமென்பவே" என்பவாதலானும், 'கற்றதனாற்பயன், குற்றமற்று முற்றமுணர்ந்த ஒற்றைநற்றவன் பொற்றுணையினைமலர் போற்றல்' என்பதனையும், 'கொன்றுமனக் கொளக்' என்பது, நன்னூலின் பழையவுரை.

பொழியுங் காளமாமுகிலுங் கடவுளர்த்தூரந்தவன் கரத்தில், வின்மழைபொழியக் கற்களுந் துகளாய் மேனியும் வெளிறி மீண்டனவே" என்றதனுலுணர்க; அதனோடு, அம்மேகங்கள்பொழிந்த மழைநீரில் ஒருதுளியும் தீயின்மேல் விழாதபடி அவன் அம்புகளை அடர்த்தியாகத்தொடுத்துச் சரகூடங்கட்டித்தடுத்தமையும், 'முகில்புகாமல்' என்ற தொடரில் அமையும். தான் சார்ந்தஇடத்தை மிகவருத்துதலாலும், அகப்படும் பொருள்களையெல்லாம் ஜீர்ணிக்கச்செய்யும்ஆற்றலுடைமையாலும், பசி 'வயிற்றுக்கனல்' எனப்பட்டது; வடநூலாரும் 'ஜாடராக்நி' என்பர்: (ஜடரம் - வயிறு.) அருச்சுனன் காண்டவதகனஞ்செய்வித்தது கண்ணபிரானது அநுமதிகொண்டே யாதலால், அதனைக் கண்ணன்மேலேற்றிக் கூறினர். படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களில் திருமால் தனக்குச்சிறப்பாகக் கொண்ட தொழில் காத்தலாதலால், 'காகுமாறே பூண்டருள்' எனப்பட்டது. 'எம்' என்ற தன்மைப்பன்மை, எல்லாவுயிர்களையும் உளப்படுத்தியது. எழுபிறப்பு - மனிதர், தேவர், மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. எழுவகைப்பட்ட பிறப்புக்களையும் மாற்றுவா ரென்றது, எம்பெருமானருளாற் கருமமனைத்தும்ஒழிய முத்திபெறுவ ரென்றபடி.

பாண்டவர்-பாண்டுபுத்திரர்; வடமொழித்தத்திதாந்தநாமம்; கள்-விகுதி மேல்விகுதி. தபஸ், பலம் என்ற வடசொற்கள்-தவம்,பயம் என விகாரப்பட்டன. பயம்-பயன்என ஈற்றுப்போலி. மூண்ட, மூள் - பகுதி. முழுவதுவும்-குற்றியலுகரம் சிறுபான்மை உயிர்வரக் கெடாமற் பொதுவிதியால் வகரவுடம்படுமெய்பெற்றது. முழுவதுவும், மூனைதோறும், எழுபிறப்பும் என்ற உம்மைகள் - முற்றுப்பொருளன. காண்டவமும் என்ற உம்மை - இறந்தது தழுவியஎச்சம். முருக்கி - முருங்கி யென்பதன் பிறவினை; மெலி வலியானது, பிறவினைக்குறி. வயிறு+கனல்=வயிற்றுக்கனல்: உயிர்த்தொடர்க்குற்றியலுகரம் வேற்றுமையில் நகரவொற்று இரட்டிற்று. நுகருவித்து, உ - சாரியை. காக்குமாறே என்ற ஏகாரம் - பிரிநிலை. பெருமான் - பெருமையையுடையவன்; மான் - பெயர்விகுதி. எழுபிறப்பு - பண்புத்தொகை; வினைத்தொகையாகக்கொண்டு, (வினைத்தொடர்பினால்) மேன்மேல்வருகிற பிறப்பு எனினுமாம்.

இங்ஙனம் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனசீலனை எம்பெருமான் விஷயமாக வணக்கம் கூறியதனால், கவி தாம் தொடங்கிய காரியம் இடையூறின்றி இனிதுமுடியு மென்பது கருத்து.

இப்பாட்டு-மொழிமாற்று முதலியன இன்மையால், யாற்றுநீர்ப்பொருள்கோள்.

இதுமுதற் பதினேழு கவிகள் - பெரும்பாலும் முதல்நான்குசீரும் காய்ச்சீர்களும், மற்றையிரண்டும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (க)

[பாண்டவர்கள்முன்னிலையில் மயன் வந்து ஒன்றுசொல்லத்தொடங்குதல்.]

உ. வியனும்பர்பலகணமுஞ்சுரபதியுஞ்சென்றெழில்கொள்விசும்பின்மேவ, நயனங்கண்முதலானவைம்புலனுமனமும்போனகரி யெய்திப், பயன்மிஞ்சுதொழிலினராய்ப்பாண்டவருந்திருமாலும்பயிலும்வேலை, மயனென்பான்வாய்புதைத்துவளப்படவந்தொருமாற்றம்விளம்பினனே.

(இ - ள்.) வியன் உம்பர் பல கணமும் - மேலான பலவகைப்பட்ட தேவர்களின் கூட்டமும், சுர பதியும் - அத்தேவர்கட்கெல்லாம் அரசனை இந்திரனும், சென்று - (அருச்சுனனோடு போர்செய்தலையொழிந்து) போய், எழில் கொள் விசும்பின் மேவ - அழகுகொண்ட சுவர்க்கலோகத்திற் சேர,—

பாண்டவரும் - பஞ்சபாண்டவர்களும், திருமாலும் - ஸ்ரீமகாவிஷ்ணுவின் அவதாரமான கண்ணபிரானும், நகரி எய்தி - இந்திரப்பிரத்தநகரத்தைச் சேர்ந்து, பயன் மிஞ்சு தொழிலினர் ஆய்-நற்பயன்கள்மிக்க நற்செயல்களை யுடையவர்களாய், நயனங்கள் முதல் ஆன ஐம்புலனும் மனமும் போல் பயி லும் வேலை - கண்கள்முதலிய பஞ்சஇந்திரியங்களும் (இவற்றைப் புலன்க ளிற்செலுத்துகின்ற) மனமும்போல ஒற்றுமைகொண்டு கூடியிருக்குங்கால த்தில்,—மயன்என்பான் - மயனென்கிற அசுரத்தச்சன், வந்து - (அவர்கள் முன்னிலையில்) வந்து, வாய் புதைத்து - (கையினால்) வாயை மூடி நின்று, வனம் பட ஒரு மாற்றம் விளம்பினன்-சிறப்பாக ஒருவார்த்தையைச் சொல் லலானான்; (எ - று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க. ஏகாரம்- ஈற்றசை.

'வியனும்பர்பலகணமுஞ் சுரபதியுஞ் சென் றெழில்கொள்விசும்பின் மேவ' என்றது, கீழ்ச்சருக்கத்தில், "துன்றுதன்சேனைச்சுரகணஞ்சூழச் சுர பதி துறக்கம தடைந்தான்" என்றதன் அநுவாதம்; தொடர்ச்சி தோன்றக் கூறியது. ஐம்பொறிகளையும் உரிய புலன்களிற் செலுத்தி ஒற்றுமைப்பட்டு நிற்கும் மனம்போலப் பஞ்சபாண்டவர்களையும் உரியதொழில்களிற் பிரவே சிக்கும்படி கண்ணபிரான் பிரேரேபித்து அவர்களைக்கொண்டுதொழில்செய் விக்கின்ற தலைமையும் ஒற்றுமையும் தோன்ற,'ஐம்புலனும்மனமும்போல்பா ண்டவரும் திருமாலும் பயிலும்வேலை'என்றார். ஓர்உடலுயிர்க்கே இன்றியமை யாதனவான ஆறுகரணங்களையும் இவ்வறுவர்க்கும் உவமைகூறியது, இவ் வறுவரும் ஒருவர்போல் ஒற்றுமைப்படநின்றன ரென்பதை விளக்கும். எல் லாப்பிராணிகளினுள்ளும் அந்தர்யாமியாய்நின்று தொழில்செய்கிற திருமா லுக்கு-அகத்துறுப்பாகிய மனத்தையும், அக்கண்ணபிரான்வழியே யொழுகு கின்றவரும் ஒருவர்க்கொருவர் மாறுபடாதவர்களுமான பஞ்சபாண்டவர்க ளுக்கு-புறத்துறுப்பாகிய பஞ்சேந்திரியங்களையும் உவமைகூறியமை ஏற்கும். இரண்டாம் அடியில் 'ஐம்புலனும்மனமும்'என உபமானங்களை நிறுத்தின முறைமைக்கு ஏற்ப, மூன்றாமடியில் 'பாண்டவரும் திருமாலும்'என உபமே யங்களை நிறுத்தியது, முறைநிரல்நிறைப்பொருள்கோள்;[நன்-பொது-கூ௩.] பொறியை'புலன்'என்றது,உபசாரவழக்கு."கண்ணிற் சிறந்த உறுப்பில்லை", "ஸர்வேந்த்ரியாணாம் நயநம் ப்ரதாநம்"என்றபடி,கண் எல்லாவுறுப்புக்களி னுள்ளும் சிறத்தலால், அதனைத் தலைமையாகவைத்து'நயனங்கள்முதலான ஐம்புலன்'என்றார்; என்றது,பஞ்சபாண்டவர்களுள் மூத்தவனும் சிறந்தவனு மான தருமபுத்திரனுக்கு ஐம்பொறிகளுட்சிறந்த கண்ணை உவமைகூறியவா றும்: அன்றி, மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளுள் மூன்றாவதாய்ச் சிறப்புப்பெறுகிற கண்ணை யுதிஷ்டிரன் வீமசேனன் அருச் சுனன் நகுலன் சகதேவன்என்ற பஞ்சபாண்டவருள் மூன்றாமவனாய்ச் சிறக் கிற அருச்சுனனுக்கு உவமை கூறியதாகவுங் கொள்ளலாம்.

அவர்கள்முயன்றுசெய்யுந்தொழில்கள்யாவும், வீண்படாது பயன்பெறு தல்பற்றி, 'பயன்மிஞ்சுதொழிலினராய்' என்றார். திருமால்-திருமகள்கொ ழுநனான விஷ்ணு எனினுமாம். திருமால் இராமனானபொழுது திருமகள் சீதையாகவும்,அப்பெருமான் கண்ணனானபோது அப்பிராட்டி ருக்மிணியா கவும், மற்றும் அப்பரமன் வெவ்வேறுவடிவமாகத் திருவவதரித்தசமயத்தில் அத்தேவி வெவ்வேறுவடிவமாகவும் திருவவதரித்தலால், இங்கு 'திரு' என் றது-ருக்மிணிப்பிராட்டியின்மேல் நிற்கும். மால்-பெருமை மாயை அன்பு இவற்றையுடையவன். மயன் - தெய்வத்தச்சரிருவரில் ஒருவன்; -மற்றொரு வன் விசுவகர்மா. மயன் - அசுரசிற்பி யெனப்படுவன். வாய்புதைத்தல்-விந யக்குறி. தான்பெற்றஉயிருதவிக்கு எதிருதவிசெய்து சிறப்புப்பெறுமாறு, பாண்டவர்கட்குச் சிறந்ததொரு மண்டபத்தைத் தான் நிருமித்துக்கொடுப்

பதாகப் பேசுகின்றன ளாதலால், 'வளம்பட ஒருமாற்றம் விளம்பினான்' என்றார்.

வியன் - உரிச்சொல்; வியல் என்ற உரிச்சொல் ஈறுதிரிந்த தென்றலு மொன்று. உம்பர் என்ற மேலிடத்தின்பெயர்-அங்குவசிக்கிற தேவர்கட்கு இடவாகுபெயர். விசும்பு என்ற ஆகாயத்தின்பெயரும் - அங்குள்ள சுவர்க்க லோகத்திற்கு இடவாகுபெயரே. கணம், ஸுரபதி, நயநம், மாநஸ் - வட சொற்கள். திருப்பாற்கடல்கடைந்தகாலத்து அதனினின்றுதோன்றிய வாருணியென்னும் சுரையை [மதுவை]ப் பானஞ்செய்தமைபற்றி, தேவர்கட்கு சுரர்' என்று பெயர்; சுரை - கள். திக்பாலகர் ருத்ரர் ஆதித்தர் மருத்துவர் வசுக்கள் முதலிய கணதேவர்களும், வித்தியாதரர் கந்தருவர் கின்னரர் முதலிய தேவகணங்களும் 'உம்பர்பலகணம்' என்றதில் அடங்குதல் காண்க. எழில் - உயர்ச்சியுமாம்; 'இல்'விகுதிபெற்ற தொழிற்பெயர்: எழுச்சி யென்ற படி. நகரீ, வேலா என்ற வடசொற்கள் - நகரி, வேலை என ஈயீறுஇகரமும் ஆவீறுஐயு மாயின. புலன்-ஈற்றுப்போலி. மிஞ்சு - விஞ்சு என்பதன் மரூஉ; விஞ்சு' என்றும் பாட முண்டு. என்பான் - எனப்படுபவன்; செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை: அகரச்சாரியையும் படுவிகுதியும் தொக்கன என்னலாம். இங்கு 'என்பான்'என்பதை முதல்வேற்றுமைச்சொல்லுருபாகவுங் கொள்ளலாம். (உ)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்: மயன்சொன்ன வார்த்தை.]

௩. உம்மாலின்றருவினையேனுயிர்பிழைத்தேனீர்தந்தவுயிர்க்கு மீண்டோர்,கைம்மாறுவேறில்லைக்குருகுலம்போலெக்குலமுங்காக்கு கிற்பீர், தெம்மாறவுலகாளுஞ்செங்கோன்மைக்குருபதிக்குச்சிற்பம் வல்லோர, ம்மாவென்றதிசயிப்பவரியமணிமண்டபமொன்றமைக்கின் றேனே.

(இ - ள்.) குரு குலம் போல் எக்குலமும் காக்குகிற்பீர்-(நீங்கள்பிறந்த) குருஎன்னும்அரசனது குலத்தின் ஒழுக்கத்தைப் பாதுகாப்பதுபோலவே மற்றுஎல்லாக்குலத்தாரது ஒழுக்கத்தையும் பாதுகாத்துநடக்கின்றவர்களே! அரு வினையேன்-(தீர்த்தற்கு)அரிய தீவினையையுடையேனான நான்.இன்று-இன்றைத்தினத்தில், உம்மால் உயிர்பிழைத்தேன் - உங்கள்கருணையால் இறவாமல் உயிர்கொண்டுஉய்ந்தேன்; நீர் தந்த உயிர்க்கு மீண்டு ஓர் கைம்மாறு வேறு இல்லை - நீங்கள் எனக்குஉயிர்தந்தருளியமையாகிய உபகாரத்திற்கு ஈடாகப் பின்பு நான்செய்யத்தக்கதொரு பிரதியுபகாரம் வேறெதுவுமில்லை; தெவ் மாற - பகைவர்கள் இலராக, உலகு ஆளும் - பூலோகத்தை அரசாளுகிற, செங்கோன்மை - நீதிதவறாத அரசாட்சிமுறைமையையுடைய, குருபதிக்கு - குருகுலத்தார்க்குத்தலைவனான யுதிட்டிரராசனுக்காக, சிற்பம் வல்லோர் அம்மா என்று அதிசயிப்ப - சிற்பசாஸ்திரங்களில்தேர்ந்த தபதிகள் அம்மா! என்றுசொல்லி ஆச்சரியமடையும்படி,அரிய மணி மண்டபம் ஒன்று அமைக்கின்றேன் - அருமையான இரத்தினகசிதமாகிய மண்டபமொன்றைச் செய்துதருகிறேன்; (எ-று.)—ஏ - ஈற்றசை; தேற்றமுமாம்.

'குருகுலம்போல் எக்குலமும் காக்குகிற்பீர்' என்றது, பாண்டவரை நோக்கிய விளி;இத்தொடரை "தன்னுயிராமென வுலகிற் றங்கிய, மன்னுயி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்" என்றாற் போலக் கொள்க. கண்ண பிரான் குருகுலத்திற்பிறந்தவர்களான பாண்டவர்கட்குச் சகாயனாய்நின்று அக்குலத்தின் ஒழுக்கத்தையும் மற்றும்உலகத்தாரது நல்லொழுக்கங்களையும் ஓம்புதலால், இவ்விளி கண்ணபிரானுக்கும் ஏற்கும். காண்டவவனம்முழுவதும் தீப்பட்டெரிகையிற் கொடியதீயிலகப்பட்ட மயன் தக்ஷகனதுமாளிகையினின்று ஓடி 'அருச்சுனா அபயம்' என்று அபயம்வேண்டிஅரற்ற, அருச்சு

னன் அ[illegible]யங்கொடுக்க, அம்மயனைக்கொல்லும்படி கோபத்தாற்கண்சிவந்து சக்கராயுதத்தையெடுத்த கிருஷ்ணனும் அருச்சுனன் அபயங்கொடுத்ததைக் கண்டு தானும் அவன்பக்கல் கருணைசெய்ய, கிருஷ்ணார்ச்சுனரது நோக்கத்தைக் கண்டு அக்கினியும் மயனைத்தகித்திலனாமைபற்றி, 'உம்மால் இன்று அருவினையேன் உயிர்பிழைத்தேன்' என்றான்; அவ்வரலாற்றை, கீழ்ச்சருக்கத்தில் "மாசுணத்தரசன் மந்திரமமைத்த வனத்திடை யிருந்த மாமயனை, ஆசுசுக்கனி சென் றடர்த்தலும் வெருவி யருச்சுன னுவபயமென் றரற்றத், தேசுடைத் திகிரிச் செங்கண்மால் கருணைசெய்தனன் தீவினையுறினும், பேசுதற்கரிய பெரியவர் நினைக்கின் யார்கொலோ பிழைத்திடாதவரே" என்றதனா லுணர்க. கிருஷ்ணார்ச்சுனர்செய்த உதவியை, ஐம்புலனும் மனமும் போ லுள்ள ஒற்றுமைநயம்பற்றிப் பிறர்மேலும் ஏற்றி, 'உம்மால்உயிர்பிழைத்தேன்' என்றும்; தீயினாற் பெரியதோர்ஆபத்தை யுற்றன னாதலால், அதனை அடைதற்குஏற்ற பிராரப்தகருமத்தை யுடையே னென்பான், 'அருவினையேன்' என்றும்; அந்தஆபத்காலத்தில் அவர்கள் உயிர்காத்து உதவாவிடின் உயிரிழத்தல் தப்பாதென்பது தோன்ற, 'நீர்தந்தஉயிர்க்கு' என்றும்; உயிர்க்குச்சமானமான அரியபொருள் உலகத்தில் வேறெதுவு மில்லையாதல்பற்றி, 'உயிர்க்கு மீண்டோர் கைம்மாறு வேறில்லை' என்றும்; அங்ஙனம் செய்யாமற்செய்தஉதவியும் காலத்தினாற்செய்தஉதவியும் பயன்தூக்காதுசெய்தஉதவியு மானதற்கு ஏற்றதொரு கைம்மாறு இல்லையாயினும், எனது செய்ந்நன்றியறிவுகாரணமாக என்னாலியன்றதைக் கடமையாகச்செய்வேனென்பான், 'அரியமணிமண்டபமொன்று அமைக்கின்றேன்' என்றுங் கூறினான்.

உயர்குலத்திற்பிறந்து வீரத்திலும் நீதியிலும் சிறந்த அரசனென்பது 'தெம்மாற உலகாளுஞ் செங்கோன்மைக்குருபதி' என்ற தொடரினாற் போதரும். தருமபுத்திரனுக்கு 'அஜாதசத்ரு' என்று வடமொழியில் ஒருபெயருள்ளதனால், அப்பெயரின் பொருளமைய 'தெம்மாறவுலகாளுங்குருபதி' என்றார்; (அப்பெயரின் பொருள், பகைவர்களுண்டாகப்பெறாதவ னென்பது.) யான் அமைத்துத்தருவது எளிதென்று கருதி வேண்டாவென்று மறாமற் சிறப்பாக ஏற்றுக்கொள்ளத்தகு மென்பான், 'சிற்பம்வல்லோர் அம்மாவென்றுஅதிசயிப்ப அரியமணிமண்டபமொன்றுஅமைக்கின்றேன்'என்றான். செம்கோல் - கோணலில்லாதகோல்: அதுபோலப் பக்ஷபாதமாக ஒருபக்கத்திற்கோணுதலின்றி நேர்மையுடைய அரசாட்சிக்கு வழங்கும்; உவமையாகுபெயர்: அரசாட்சியை வடநூலாரும் 'தண்டம்' என்பர்; மை - பகுதிப்பொருள்விகுதி. தெவ் - பகைமையுணர்த்தும் உரிச்சொல்; "தெவ்வுப் பகையாகும்" என்பது தொல்காப்பியத்து உரிச்சொல்லியற் சூத்திரம். இப்பெயருரிச்சொல் - பண்பாகுபெயராய், பகைவரை யுணர்த்தும். தெவ் + மாற = தெம்மாற: "தெவ்வென்மொழியே தொழிற்பெயரற்றே,மவ்வரின் வஃகான் மவ்வுமாகும்" என்னுஞ் சூத்திரவிதி.

இன்று - இகரச்சுட்டடியாப்பிறந்து காலப்பொருளுணர்த்தும் இடைச்சொல். ஓர்கைம்மாறு - ஒன்றாகிய கைம்மாறு எனப் பண்புத்தொகை; வினைத்தொகையாகக்கொண்டு, ஆராய்ந்துகருதப்படுகிற எதிருதவியென்று கொள்ளினுமாம்: ஓர்தல் - ஆய்ந்துதெளிதல். குருகுலம்,குருபதி - வடமொழித்தொடர்கள்; நிலைமொழி உயர்திணைப்பெய ராதலால், அதன்முன் வருமொழிமுதல்வலி இயல்பாயிற்று. குருஎன்பவன் - சந்திரகுலத்துப்பிரசித்திபெற்ற ஓரரசன்; அவனால் அக்குலம் குருகுலமென்றும், அந்நாடு குருக்ஷேத்திரமென்றும், அக்குலத்தவர் கௌரவரென்றும் பெயர்பெறுதல் காண்க. காக்குகிற்பீர் - காக்குகிற்பார் என்பதன் ஈற்றுயல் திரிந்த விளி; இச்சொல்லில், கு - சாரியை, கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை, ப் - எதிர்கால இடைநிலை. லோகம், சில்பம் என்ற வடமொழிகள் - உலகு, சிற்பம் என [illegible].

பட்டன. மணிமண்டபம் - வடமொழித்தொடர். அம்மா - வியப்புக்குறிப் பிடைச்சொல். (ங)

ச. மேனாளிவ்வுலகாண்டவிடபருவனசுரகுலவேந்தர்வேந்தன்
றானாண்மையுடன்பொருதரியலரைத்திறைகொணர்ந்ததாராபந்தி
போனாளுமொளிவீசும்பலமணிகள்விந்துவெனும்பொய்கைதன்னி
லானாமற்கிடப்பனவுண்டவையிதற்கேயுபகரணமாகுமென்றான்.

(இ - ள்.) மேல் நாள் - முன்ஒருகாலத்தில், இ உலகு ஆண்ட - இந்த நிலவுலகத்தை அரசாண்ட, அசுரகுலம் வேந்தர் வேந்தன் - அசுரர்குலத்துத்தோன்றிய அரசர்கட்குஅரசனான, விடபருவன்-வ்ருஷபர்வா என்னும் பெயருள்ளஅசுரசிரேஷ்டன், தான்—, ஆண்மையுடன்பொருது-பராக்கிரமத்துடனே போர்செய்து, தரியலரை திறை கொணர்ந்த-பகைவர்களைவென்று அவர்களிடத்தினின்று அரசிறையாகப்பெற்றுக்கொண்டுவந்த, தாராபந்தி போல் நாளும் ஒளி வீசும்-நக்ஷத்திரவரிசைகள்போல எப்பொழுதும் ஒளியைவீசுகிற, பல மணிகள் - பலவகையிரத்தினங்கள், விந்து எனும் பொய்கைதன்னில் ஆனாமல் கிடப்பன - பிந்துஎன்னும்பெயருள்ள சரசில் நீங்காதவையாய்க் கிடப்பவை, உண்டு—; அவை - அந்தஇரத்தினங்கள், இதற்கே உபகரணம் ஆகும் - இந்தமண்டபமமைத்தற்கே உரிய சாதனமாகும், என்றான் - என்று (மயன்) கூறினான்; (எ - று.)

வ்ருஷபர்வா, அஸுரகுலம், தாராபங்க்தி, மணி, பிந்து, உபகரணம் - வடசொற்கள். அசுர ரென்ற சொல் - சுரரெனப்படுகிற தேவர்கட்கு எதிரானவ ரென்றும், (பாற்கடலினின்றுதோன்றிய வாருணியென்னுஞ்) சுரையைப் பானஞ்செய்யாதவ ரென்றும், பகைவருயிரைக் கவர்பவ ரென்றும் காரணப்பொருள்படும்; (அசு - உயிர்.) வேந்தர்வேந்தன் - ராஜராஜன். ஆண்மை - ஆண்தன்மை. பௌருஷம். ஆண்மையுடன் என்றவிடத்து, உடனிகழ்ச்சிப்பொருளில்வரும் 'உடன்'என்ற மூன்றாம்வேற்றுமைச்சொல்லுருபு - அடைமொழிப்பொருளில் வந்தது; ஆண்மையுடையவனாய் என்றபடி. ஆண்மையினால் என்று பொருள்கொண்டு, 'உடன்' என்ற மூன்றனுருபு கருவிப்பொருளில்வந்த தெனினுமாம். பொருது, பொரு - பகுதி. தரியலர் - (ஆக்கத்தைப்) பொறாதவர்: எனவே, பகைவராயிற்று; எதிர்மறைவினையாலணையும்பெயர்; தரி - பகுதி, அல் - எதிர்மறையிடைநிலை, அர் - விகுதி. 'தரியலரை'என்றவிடத்து இரண்டனுருபு - தரியலரினின்று என்று ஐந்தனுருபின்பொருள்படுதலால், உருபுமயக்கம். திறையாவது - வென்ற அரசர்க்குக் கீழமைந்த அரசர் கொடுக்கும் பொருள்; வென்றவரசர் தோற்றவரசர்களிடத்தினின்று வலியக்கவர்வனவும், திறை யெனப்படும். கொணர்ந்த, கொணா - பகுதி; அது, குறுக்கலும் விரித்தலு மாகிய விகாரங்களைப் பெற்று, கொணர்எனநின்றது. கொணர்ந்தமணிகள், வீசும்மணிகள் என்று தனித்தனி இயையும். பலநிறமாய்விளங்கும் பலசாதிமணிகட்கு, பலநிறமாய் விளங்கும் பலவகை நக்ஷத்திரங்களின் நிரையை உவமைகூறினார். நாளும் என்றவிடத்து, உம்மை - தொறுப்பொருளது. விந்து வெனும் பொய்கை - பிந்துஸரஸ்; இது - கைலாசகிரியின் வடக்கில் மைநாகபர்வதத்தைச்சார்ந்த இரணியசிருங்க மென்னுங் குன்றி லுள்ளது. பொய்கை - மானிடராக்காத நீர்நிலை. தன் - சாரியை. கிடப்பன - பெயர். நாளும்ஒளிவீசும் - பகலிலும் இரவிலும் வேறுபாடின்றிப் பிரகாசிக்குமென்றபடி. 'புதுமணிகள்' என்றும் பாட முண்டு. (ச)

[மீகப்பலவலாளர்கள் இரத்தினங்களை யெடுத்துக்கொண்டுவருதல்.]

ரு. என்பதின்மூன்முப்பதின்மேலிரட்டிகொ ணாமியவெடுக்தயாரம்
வன்புடனேதரித்துவரைபசைந்தா ஆமைசயா,தவிரத்தோனா

ரன்புமிகும்விழிக்கருணையறன்புதல்வனேவலினலசுரத்தச்சன் [தார்.
றன்பணியீதெனப்பணிப்பவொருநொடியிற்கொடுவந்தார்தளர்விலா

(இ-ள்.) என்பதன்முன் - என்று (மயன்) சொன்னதற்குமுன்னே [சொன்னவுடனே யென்றபடி],—அன்பு மிகும் விழி கருணை அறன்புதல்வன் ஏவலினல் - அன்புநிறைந்த கண்ணருளேயுடைய தருமபுத்திரனது ஆஜ்ஞையைக்கொண்டு,—அசுரத்தச்சன் தன் பணி ஈது என பணிப்ப - அசுரசிற்பியானமயன் தனதுகாரியம் இதுவென்று கட்டளையிட,—வரை அசைந்தாலும் அசையாத வயிரம் தோளார் - மலைநெகிழ்ந்தாலும் நெகிழாத மிக்கஉறுதியுள்ள தோள்களேயுடையவர்களும், தளர்வு இலாதார் - (தொழில்செய்தலில்) தளர்ச்சியில்லாதவர்களுமான, முப்பதின்மேல் இரட்டிகொள் நூறுஆயிரவர் - அறுபதுலக்ஷம்பேர், எடுத்த பாரம் வன்புடனே தரித்து - தாம்தாம் எடுத்த (நவரத்தினங்களாகிய) பெரும்பாரச்சுமைகளே வலிமையோடு தாங்கி, ஒரு நொடியில் கொடு வந்தார் - ஒருமாத்திரைப்பொழுதிலே கொண்டுவந்துசேர்த்தார்கள்; (எ-று.)

'என்பதன்முன் அறன்புதல்வனேவலினல்' என்று காரியத்தை முன்னும் காரணத்தைப் பின்னும் நிகழ்ந்தனவாகக் கூறியது, மிகையுயர்வுநவிற்சியணி; இது, காரியவிரைவைச் சொல்வது. முப்பதின்மேலிரட்டி-முப்பதை இரண்டினற்பெருக்கிய தொகை. எனவே, அறுபதாயிற்று. முப்பதுக்குமேல் இரண்டுகூடிய தென்று கொண்டால், முப்பத்திரண்டு என்ருகும். இரண்டு என்ற மென்ருெடர் வன்ருெடராய் இகரச்சாரியைபெற்று 'இரட்டி' என நின்றது. பாரம், கருணை, தக்ஷன் - வடசொற்கள். வரைஎன்ற கணுவின்பெயர், அதனையுடைய மூங்கில் விளையும் மலைக்கு இருமடியாகுபெயர். பிறர்மேற் கண்சென்றவிடத்து அருள்நிகழ்வதனலும், மனத்துநிகழுங் கருணையின் குறிப்புக் கண்ணின்உவந்தநோக்கத்திற் புலனதலாலும், 'விழிக்கருணை' எனப்பட்டது. நொடி - இயல்பில் ஒருமுறை கைநொடித்தற்கு வேண்டும் பொழுது. கொடு-கொண்டு என்பதன் விகாரம். ஈது - இது என்பதன் சுட்டு நீண்டது. 'எடுத்தபாரம் வன்புடனே தரித்து' என்றது, அவர்களெடுத்த இரத்தினபாரத்தின் மிகுதியை யுணர்த்தும். (௫)

[மயன் மண்டபங்கட்டத்தொடங்குதல்.]

௬. மீதடுக்கிப் பசும்பொன்னற்சுவர்செய்து மரகதத்தூண்வீதிபோக்கி, யோதிடத்திற்சுருங்காமற்செழுந்துகிருத்திரம்பரப்பியுலகோரேழு, மாதிடத்தான்வைகுதற்குவாய்க்குமதோவிது வென்னவரம்பில்கேள்விச், சோதிடத்தோர்நாளுரைப்பச்சுதன்மையினுமுறுதன்மைபெறத்தொடங்கினனே.

(இ-ள்.) வரம்பு இல் கேள்வி-எல்லையில்லாத நூற்கேள்வியையுடைய, சோதிடத்தோர் - ஜ்யோதிஷநூல்வல்லவர், நாள் உரைப்ப - சுபதினத்தை நிச்சயித்துச் சொல்ல, (அந்நாளிற் சுபமுகூர்த்தத்திலே),—மீது அடுக்கி பசும்பொன்னல் சுவர் செய்து - பசியபொன்னினலாகிய கற்களை ஒன்றன்மேலொன்ருக அடுக்கி அப்பொன்னினலேயே சுவர்களை யெழுப்பி, மரகதம் தூண் வீதி போக்கி-மரகதமென்னும் பச்சையிரத்தினத்தாலாகிய தூண்களை ஒழுங்குபட நிறுத்தி, ஓது இடத்தில் சுருங்காமல் - (சிற்பநூல்) கூறிய இடத்தினளவிற் சுருங்காதவண்ணமாய், செழுந் துகிர் உத்திரம் பரப்பி - செழிப்பான பவழத்தினலாகிய உத்திரத்துண்டுகளை மேலே பரப்பி, உலகு ஓர் ஏழும் மாது இடத்தான் வைகுதற்கு வாய்க்குமதோ இது என்ன - (இம்மண்டபம்) அழகியபெண்ணன் அம்பிகையைத் தனது இடப்பக்கத்திலுடையவனகிய சிவபிரான் வீற்றிருத்தற்குத் தக்கவாறு அமைக்கப்படுகிறதோ வென்று ஏழுலகத்துச்சனங்களும் வியந்துகூறும்

படி, சுதன்மையினும் முதன்மை பெற - சுதர்மையென்கிற தேவேந்திரசபா மண்டபத்தினும் சிறப்புப்பெறுமாறு, தொடங்கினன் - (ஒருசபாமண்டபத்தைச்) செய்யத்தொடங்கினன், (மயன்); (எ - று.)

மரகதம் - எழுத்துநிலைமாறுதலாய், மாதகம் எனவும் வழங்கும்; வடசொல். ஸ்தூணா, வீதீ, ஜ்யோதிஷம், ஸுதர்மா என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. ஜ்யோதிஷம் - சூரியன்முதலிய சுடர்களின் சஞ்சாரத்தைக்கொண்டு பயனுரைக்கும் நூல். ஸுதர்மா என்ற தேவசபையின்பெயர்-நல்ல தருமங்கள் தன்னிடத்து நிகழப்பெறுவ தென்று பொருள்படும். உத்திரம்= உத்தரம். உலகுஒரேழ் என்றது - மேலேழுலகங்களெனக் கொண்டு, அவற்றில் முதலதான பூலோகமென்றதில் அதன்கீழுள்ளஎழுலகங்களும் அடங்குமென்பர். அன்றி, இரட்டுறமொழித லென்னும் உத்தியால், மேலுலகங்களேழும் கீழுலகங்களேழு மென இருவகையையும் ஒருங்குகொள்ளினும் அமையும். மேலேழுலகங்களாவன:— பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் மகர்லோகம் ஜநலோகம் தபோலோகம் சத்தியலோகம் என்பன. கீழேழுலகங்களாவன:—அதலம் விதலம் சுதலம் தராதலம் ரசாதலம மகாதலம் பாதாளம் என்பன. ஜம்பூ பிலக்ஷம் குசம் கிரௌஞ்சம் சாகம் சால்மலி புஷ்கரம் என்ற எழுதீவுகளாகவுள்ள பூமிமுழுவதும் என்றலுமொன்று; இவ்வுரைக்கு 'உலகு'என்றது, உலகத்தின்ஒருபகுதியையுணர்த்தியதெனக் கொள்ளவேண்டும்: "மாயோன்மேய காடுறை யுலகமும்"என்ற தொல்காப்பியத்தில் 'உலகம்'என்பதுபோல. இங்கு 'உலகு'என்றது - உலகத்துவாழுஞ்சனங்களை யுணர்த்திற்று. உலகோரேழும் என்ன என்று இயையும். 'உலகமேழும்'என்றும் பாடமுண்டு. மாது - விரும்பப்படும் அழகுடைய பெண். உலகுஒரேழும் மாதிடத்தான்வைகுதற்கு வாய்க்குமதோ இது என்ன - சிவபிரான்வீற்றிருத்தற்கு இதுகிடைக்குமோவென்று உலகத்தாரனைவரும் விரும்பும்படி யென்று உரைப்பாரு முளர். மா திடத்தான் என்று பதம்பிரித்து, மிக்கஉறுதியையுடையவனான நமதுஅரசன் வீற்றிருத்தற்கு வாய்ப்பதோ இது வென்று நிலவுலகத்துச்சனங்களெல்லாம் கொண்டாட என்று உரைத்தலுமாம்; இவ்வுரையில்,த்ருடம்என்ற வடசொல் திட மென்று விகாரப்பட்ட தென்க: அது-நெஞ்சுறுதி,சொல்லுறுதி,உடல்வலிமை. ஒழுக்கநிலைகுலையாமை என்பவற்றைக் குறிக்கும். கேள்வியாவது - கேட்கப்படும்நூற்பொருள்களைக் கற்றறிந்தார்கூறக் கேட்டல்; 'வி' விகுதிபெற்ற தொழிற்பெயர். கற்றவழி அதனாலானஅறிவை வலியுறுத்தலும் கல்லாதவழியும் அவ்வறிவை உண்டாக்குதலுமாகிய சிறப்பையுடைமையால்,கேள்வி முக்கியமாக எடுத்துக்கூறப்பட்டது; "கற்றிலனாயினுங் கேட்க வஃதொருவற், கொற்கத்தி னூற்றாந் துணை"என்ற திருக்குறளினாலும் கேள்வியின் பயனை யுணர்க. முதன்மை - தலைமை. வாய்க்குமதோஎன்பதில்,'அது'என்பது - அசை.

மாதுஇடத்தான் - அம்பிகைக்குத் தனதுதிருமேனியில் இடப்பகுதியைக்கொடுத்து அப்பகுதி பெண்வடிவமும் வலப்பகுதி தனதுஆண்வடிவமுமாகக் கலந்துநின்று அர்த்தநாரீசுவரமூர்த்தியாகிய சிவபிரான். மாதிடத்தானென்பதிற் போந்த கதை:—முன்னொருகாலத்திற் கைலாசகிரியிலே சிவபிரானும் உமாதேவியும் ஏகாஸநத்தில் நெருக்கமாக வீற்றிருந்தபொழுது, பிருங்கியென்னும் மகாமுனி பரமசிவனைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்ய விரும்பி ஒருவண்டுவடிவமெடுத்து அவ்வாசனத்தை இடையிலே துளைத்துக்கொண்டு அதன்வழியாய் நுழைந்துசென்று அம்பிகையைவிட்டுச் சிவபிரானைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்ய, அதுகண்ட பார்வதிதேவி தன்பதியை நோக்கி 'முனிவன் என்னைப்பிரதக்ஷிணஞ்செய்யாமைக்கு ஏதுஎன்ன?' என்றுவினவ, ருத்திரமூர்த்தி 'இம்மைமறுமைகளில் இஷ்டசித்திபெறவிரும்பு

5

பவர் உன்னையும் முத்திபெறவிரும்புபவர் என்னையும் வழிபடுவர்: இது நூற்றுணிபு'என்றுசொல்ல், அதுகேட்ட தேவி 'இறைவன்வடிவத்தைப் பிரிந்து தனியேயிருந்ததனாலன்றோ எனக்கு இவ்விழிவு நேர்ந்தது' என்றுஇரங்கி, தான் சிவபிரானைவிட்டுப்பிரியாதிருக்குமாறுகருதி, புண்ணியக்ஷேத்திரமான கேதாரத்திற் சென்று தவம்புரிந்து வரம்பெற்று அப்பிரானதுவடிவத்திலே வாமபாகத்தைத் தனக்குஇடமாக அடைந்து அவ்வடிவிலேயே தான் ஒற்றுமைப்பட்டுநின்றனளென்பதாம். (௬)

[மயன், மண்டபம்கட்டிமுடித்து, வீமனுக்குக் கதாயுதத்தையும், அருச்சுனனுக்குச் சங்கத்தையும் கொடுத்தல்.]

௭. மனத்தாலுந்திருத்தகுநூல்வரம்பாலுமுரம்பயிறோள்வலியினாலும், மினத்தாலுந்தெரிந்துதனதெண்ணியவெண்ணினுக்கேற்பவெண்ணில்கோடி, தினத்தாலுஞ்செயற்கரியசெழுமணிமண்டபமீரேழ்திங்கட்செய்தான், றனத்தான்மிஞ்சியதருமன்றம்பியர்க்குத்தண்டுடன்வெண்சங்குமீந்தான்.

(இ - ள்.) (மயன்),—மனத்தாலும் - தனதுமனத்தின் கற்பனாசக்தியினாலும், திரு தகு நூல் வரம்பாலும் - மேன்மையமைந்த சிற்பசாஸ்திரபிரமாணத்தைக்கொண்டும், உரம் பயில் தோள் வலியினாலும் - திண்மைமிகுந்த தனதுகைகளின் திறமையினாலும்,இனத்தாலும் - தனதுபரிவாரமாகவுள்ள சிற்பிவர்க்கத்தாரைக்கொண்டும், தெரிந்து தனது எண்ணிய எண்ணினுக்கு ஏற்ப - ஆலோசித்துத் தான்நிச்சயித்த மனோநிச்சயத்திற்குஇயைய, எண் இல் கோடி தினத்தாலும் செயற்கு அரிய செழு மணி மண்டபம் ஈர் ஏழ் திங்கள் செய்தான் - அளவிறந்த கோடிக்கணக்கான நாள்களிலும்(பிறரால்) செய்துமுடித்தற்கு அருமையான சிறந்தஇரத்தினமண்டபத்தைப் பதினான்குமாதத்திற் செய்து முடித்தான்; (அதுவன்றி), தனத்தால் மிஞ்சிய தருமன் தம்பியர்க்கு - செல்வத்தால்மிக்க தருமபுத்திரனுடைய தம்பியராகிய வீமசேனனுக்கும் அருச்சுனனுக்கும், தண்டுடன் வெள் சங்கும் ஈந்தான்- கதாயுதத்தையும் வெண்ணிறமான சங்கையும் முறையே கொடுத்தான்.

சத்துருகாதினியென்னும் பெயருள்ள உக்கிரமான பெரிய வலிய கதாயுதமும், தனதுஒலியினாற் பிராணிகளை நடுங்கச்செய்வதும் தேவதத்தமென்னும் பெயருள்ளதும் வருணனுடையது மான பெரிய சிறந்த சங்கமும் விருஷபருவா என்ற அசுரராசனால் பகைவர்களைப் போரிலழித்தபின்பு பிந்துசரசில் வைக்கப்பட்டன வென்றும்,அவற்றை மயன் அங்குள்ளஇரத்தினப்பொதியை யெடுத்துக்கொண்டுவந்தபோது உடன்எடுத்துக்கொண்டுவந்து வீமார்ச்சுனர்க்குக் கொடுத்தனனென்றும் வியாசபாரதத்தினாலறிக.தோள் - கை; "தோளாற்றோர் தெய்வந் துணையாய்த் துயர்தீர்த்தவாறும்" என்ற சிந்தாமணியிற்போல. தினத்தால்என்றவிடத்து, 'ஆல்' என்ற மூன்றனுருபு - ஏழனுருபின்பொருளில் வந்தது, உருபுமயக்கம்; "காலத்தினாற் செய்தநன்றி" என்ற திருக்குறளிற்போல. தினத்தாலும் - தினஞ்சென்றாலும் என்றபடி. ஈரேழ் - பண்புத்தொகை. திங்கள் என்ற சந்திரனதுபெயர், இலக்கணையாய், மாசத்தைக் குறித்தது; அமாவாசைக்குஅமாவாசை ஒருமாசமெனக்கொண்டு சந்திரசம்பந்தத்தால் மாசத்தை வரையறுத்தல், சாந்திரமாநபக்ஷீதி. மிஞ்சிய - விஞ்சிய என்பதன் மரூஉ. தருமத்தினின்று தவறினவர்கட்குத் தக்கதண்டனைசெய்து தருமத்தைக் காத்தலால், யமனுக்கு 'தருமன்' என்று பெயர். 'தந்தையே மைந்தனாகிறான்' என்னும் நூல்வழக்குப்பற்றி, தருமபுத்திரனை 'தருமன்' என்றது. நாமைகதேசோமக்ரஹணத்தால்[ஒருபெயரின்ஒருபகுப்பைக்கொண்டு அப்பெயர்முழுவதையுங் குறிப்பதொரு வழக்கினால்] தருமபுத்திரனென்ற பெயரைத் தருமனென்று குறித்ததாக

வுங் கொள்ளலாம். நிகமம், நகம், தர்மன், தண்டம், சங்கம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. 'தான்மரபாலும்' என்றும், 'விஞ்சிய' என்றும், 'சஙகு மீங்தே' என்றும் பாட முண்டு. கோடி - நூறுலக்ஷம். (எ)

[தருமபுத்திரன் அந்தமண்டபத்திற் பிரவேசஞ்செய்தல்.]

அ. அத்தபதிதன்குறிப்பாலமைத்தபெருமண்டபத்தினளவுநீளம், வித்தரமோடுயர்ச்சியெனுங்வனப்பனைத்துங்கண்டோர்கள்வியந்துகூறக், கொத்தலர்தார்மணிமுரசக்கொடியுயர்த்தோன்கனற்பிறந்தகொடியுந்தானும், மெத்தமருமனமகிழக்குடிபுகுந்தானிறைஞ்சலருக்கிடியேறன்னான்.

(இ - ள்.) அ தபதி -(மயனென்கிற) அந்தஅசுரசிற்பி, தன் குறிப்பால்-தனது மனச்சங்கற்பத்தினால், அமைத்த - நிருமித்த, பெரு மண்டபத்தின்-பெரிய அந்தமண்டபத்தினது, நீளம் வித்தரமோடு உயர்ச்சி எனும் அளவு வனப்பு அனைத்தும் - நீளமும் அகலமும் உயரமும் என்று சொல்லப்படுகிற அளவுகளின் வரையறையும் அழகும் ஆகிய எல்லாவற்றையும், கண்டோர்கள் வியந்து கூற-பார்த்தவர்களெல்லாரும்அதிசயித்துச்சொல்ல,—இறைஞ்சலருக்கு இடி ஏறு அன்னான் - பகைவர்கட்குப் பேரிடிபோன்றவனை, கொத்து அலர் தார் மணி முரசம் கொடி உயர்த்தோன் - பூங்கொத்துமலரப்பெற்ற மாலையைத் தரித்தவனும் அழகியமுரசவாத்தியத்தின் வடிவத்தையெழுதிய துவசத்தை உயரநிறுத்தியவனுமாகிய தருமபுத்திரன், கனல் பிறந்த கொடியும் தானும் - யாகாக்கினியில்தோன்றிய பூங்கொடிபோன்ற திரௌபதியும் தானுமாக,எ தமரும் மனம் மகிழ குடிபுகுந்தான் - எல்லாச் சுற்றத்தார்களும் மனமகிழ (அம்மண்டபத்திற்) பிரவேசஞ்செய்தான்;(எ-று.)

ஸ்தபதி, விஸ்தாரம், முரஜம் - வடசொற்கள். அம்மண்டபத்தின் நீளம் அகலம் உயரம் என்ற அளவுகளின்அமைப்பும் விசித்திரவேலைப்பாடும் காண்பவரெல்லாம் ஆச்சரியப்பட்டுப் புகழ்ந்துபேசும்படி யிருந்தன வென்க. நீளம், உயர்ச்சி - தொழிற்பெயர்கள்; அம்,சி-முறையே விகுதிகள். அனைத்து என்பதிற் பகுதியான அனைஎன்பது - அத்தனை யென்பதன் மரூஉ. தருமன் தனதுவெற்றிக்கு அறிகுறியாக முரசவடிவத்தைக் கொடியிற்கொண்டன னென்க. 'உயர்த்தோன்' என்ற சொல்-உயரநாட்டியவனென்ற பொருளோடு, மற்றையெல்லாவரசர்களுடைய கொடிகளினுஞ் சிறக்கும்படி நிலைநிறுத்தினவ னென்ற பொருளையுங் காட்டும். 'கொடி' என்ற சொல் இரண்டனுள், முன்னது - துகிற்கொடியின்மேலும், பின்னது - பூங்கொடியின்மேலும் நின்றன. கொடி - பூங்கொடிபோன்ற பெண்ணுக்கு உவமையாகுபெயர்; மெல்லியதாய் ஒல்கிஒசியும் வடிவில் உவமம். 'முரசக்கொடியுயர்த்தோன் கனற்பிறந்தகொடியுந் தானுங் குடிபுகுந்தான்'-ஆண்பாலும் பெண்பாலுங் கலந்து சிறப்பினால் ஆண்பால்முடிபைப் பெற்றன; "தாமரைப்பொன்னுந்தானுமொர்தேர்மிசைப்போயினான்"என்றவிடத்திற்போல; பால்வழுவமைதி: பெண்ணினும் ஆண் உயர்ந்தமை, இங்கே சிறப்பு: [நன்-பொது - உஎ.] 'எத்தமரும்' என்றது, வீமன்முதலிய நான்கு தம்பியாதியோரை. தமர்-தம்மவர்: இளப்பெயர்; தாம் - பகுதி, அது முதல்குறுகிற்று, அர்-விகுதி. இறைஞ்சலர்-வணங்காதவர்; எனவே, பகைவராயிற்று: எதிர்மறைவினையாலணையும்பெயர்; இறைஞ்சு-பகுதி, அல்-எதிர்மறையிடைநிலை. ஏறு - ஆண்மைப்பெயர்; பெரியதையும் சிறந்ததையும் 'ஏறு'என்றல், மரபு. அன்னான் என்ற குறிப்புவினையாலணையும்பெயரில், அன்என்ற உவமவிடைச்சொல் - பகுதி. இறைஞ்சலருக்கிடியேறன்னான்-பகைவர்கட்கு அச்சத்தையும் அழிவையும் விளைப்பவ னென்றபடி.பகைவர்களாகிய சர்ப்பங்கட்கு இடியேறுபோன்றவனென ஏகதேசவுருவகமாக உரைப்பாரு முளர்;நாகங்கட்கு

இடி அச்சந் தந்து அழிவுசெய்வதாதலை "விரிகிறநாகம் விடருளதேனும், உருமின்கடுஞ்சினம் சேணின்று மூட்டும்" என்ற நாலடியாரினாலும் அறிக.

அக்கிவேசமுனிவரிடத்தில் துரோணாசாரியருடன் வில்வித்தையைக் கற்றுவந்தபொழுது, 'எனக்கு இராச்சியங் கிடைத்தபின்னர்ப் பாதி உமக்குப் பங்கிட்டுக்கொடுப்பேன்' என்று அவர்க்கு வாக்குதத்தஞ் செய்திருந்த பாஞ்சாலராசனாகிய துருபதன், பின்பு ஒருகாலத்தில் அவர் தம்குழந்தைக்குப் பாலுக்காகப் பசுவேண்டுமென்று சென்று கேட்டபொழுது முகமறியாதவன்போல 'நீ யார்?' என்றுவினவிச் சிலபரிகாசவார்த்தைகளைச் சொல்லிச் சபையிற் பங்கப்படுத்த, அப்பொழுது அவர் 'என்மாணாக்கனாகிய ராசகுமாரனொருவனைக்கொண்டு உன்னை வென்று கட்டிக்கொணரச்செய்து உன் அரசையுங் கைக்கொள்வேன்' என்று சபதஞ்செய்துவந்து, பின்பு அங்ஙனமே அருச்சுனனைக்கொண்டு பங்கப்படுத்தி அப்பிரதிஜ்ஞையை நிறைவேற்றிவிட, யாகசேனன் துரோணர்மீது மிகக்கறுக்கொண்டு அவரைக் கொல்லும்பொருட்டு ஒருபுத்திரனையும் அருச்சுனனது பலபராக்கிரமங்களைக்கண்டு மகிழ்ந்ததனால் அவனுக்கு மணஞ்செய்துகொடுக்கும்பொருட்டு ஒருபுத்திரியையும் பெறவிரும்பிப் புத்திரகாமயாகஞ் செய்விக்க, அவ்வோமத்தீயினின்று திட்டத்துய்மனும் திரௌபதியும் தோன்றினராதலின், திரௌபதி 'கனற்பிறந்தகொடி' எனப்பட்டாள். (அ)

[அங்கு நாரதமாமுனிவன் வருதல்.]

௯. தம்பியர்களுநால்வருடன்றண்டுழாய்முடியோனுந்தானுமேனை, யம்புவிமன்னருமுனிவரனைவருஞ்சூழ்தரவிருந்த வமயந்தன்னிற், றும்புருநாரதரென்னுமிருவரினுநாரதனுந்தோன்றத்தோன்றப், பைம்பொன்மலர்தூயெதிர்போய்ப்பணிந்திறைஞ்சியென்செய்தான்பாண்டு மைந்தன்.

(இ - ள்.) பாண்டு மைந்தன் - பாண்டுமகாராசனது மூத்தகுமாரனான தருமபுத்திரன், தம்பியர்கள் நால்வருடன் - (வீமன் அருச்சுனன் நகுலன் சகதேவன் என்னும்) தனது தம்பிமார் நான்குபேருடனே, தண் துழாய் முடியோனும் - குளிர்ச்சியான திருத்துழாய்மாலையையணிந்த திருமுடியையுடையவனான கண்ணபிரானும், தானும் - தானுமாக, ஏனை அம் புவி மன்னரும் முனிவர் அனைவரும் சூழ்தர இருந்த - அழகியநிலவுலகத்தையாளுகிற மற்றை(ப் பற்பலதேசத்து) அரசர்களும் முனிவர்களும் ஆகிய எல்லாரும் தன்னைச்சூழ்ந்திருக்க(த் தான் அவர்கட்கெல்லாம் நடுவில் அச்சபாமண்டபத்திலே) வீற்றிருந்த, அமயம்தன்னில் - சமயத்திலே,—தும்புரு நாரதர் என்னும் இருவரினும் நாரதன் ஆம் தோன்றல் தோன்ற - (சங்கீதஸாஹித்யங்களிற் பேர்பெற்றவர்களான) தும்புரு நாரதன் என்ற தேவவிருடியரிருவருள்ளும் நாரதனாகிய பெருமையிற்சிறந்தமுனிவன் அங்குஎழுந்தருள, (அத் தருமபுத்திரன் தான்), எதிர் போய் பணிந்து இறைஞ்சி பைம் பொன் மலர் தூய் என் செய்தான் - எதிர்கொண்டுசென்று வரவேற்று நமஸ்கரித்துத் துதித்துப் பசியபொன்மயமான மலர்களை யிட்டு அருச்சித்து (மற்றும்) எவ்வளவுஉபசாரஞ்செய்தான்! [மிக்கஉபசாரங்களைச் செய்தனனென்றபடி]; (எ - று.)—அவற்றை, அடுத்தகவியிற் காண்க.

தம்பி—தாம் - பகுதி, பி - முறைப்பெயர்விகுதி: தமக்குமுன்பு பிறந்தவனென்றபொருளில் 'தம்முன்' என்று வழங்குதல்போலத் தமக்குப்பின்பு பிறந்தவனென்றபொருளைத் தரக்கூடிய 'தம்பின்' என்ற பெயர் தம்பியெனச் சிதைந்துவழங்கிய தென்பர் ஒருசாரார்; இதன்மேல், அர் - பலர்பால்விகுதி, கள் - விகுதிமேல்விகுதி. நால்வர்-நான்கு என்ற பகுதி ஈறுகெட்டு னகரம் லகரமாயிற்று; வ் - பெயரிடைநிலை.

துளஸீ, ஸமயம்என்ற வடசொற்கள்-துழாய்,அமயம்என்று விகாரப்பட்டன. ஏனை - இடைச்சொல். புவி - வடசொல்; இது - அந்தப்பாஷையில் ஏழாம்வேற்றுமைவிரியாயினும் தமிழில் பெயர்மாத்திரமாய் வழங்கும். சூழ்தர - சூழ; தா - துணைவினை. தும்புருநாரதர் - பன்மைவிகுதிபெற்ற உயர்திணையும்மைத்தொகை. நாரதன் என்ற வடமொழிப்பெயர் - ஆத்மஞானத்தை உபதேசிப்பவ னென்றும், மனிதர்கட்கு உள்ள ஒற்றுமையை(த் தான் செய்யுங்கலகத்தினால்) கெடுப்பவ னென்றும் காரணப்பொருள்படும். நரன்-ஆத்மா; அதற்குஉரிய ஞானம் - நாரம்: த - கொடுத்தல். அன்றி, நரர் - மனிதர்;அவர்சமூகம் அல்லது அவர்சம்பந்தமான ஒற்றுமை - நாரம்: த - கெடுத்தல். தோன்றல் - அனைவரினுஞ்சிறந்துதோன்றுபவன்; அல் - கருத்தாப்பொருள்விகுதி: இதனைத் தொழிலாகுபெய ரென்பாரு முளர்; இது - உயர்திணையாண்பாற்சிறப்புப்பெயராய்வழங்கும்.பசுமை+பொன்=பைம்பொன்; "ஈறுபோதல்" என்னுஞ் சூத்திரவிதி. தூய், தூ - பகுதி; இதுவே, உகரம் பெற்று 'தூவு' என்று வழங்குவது: ய் - இறந்தகாலவினையெச்சவிகுதி. மைந்து - இளமை; அதனையுடையவன், மைந்தன். தும்புருநாரத ரென்னு மிருவரும் இசைக்கிழமையுடைய தேவவிருடிக ளாதலாலும், அவ்விருவருள்ளும் நாரதன் பிரசித்திபெற்றுச் சிறத்தலாலும், 'தும்புருநாரத ரென்னுமிருவரினும் நாரதனும் தோன்றல்' என்றார்; தோன்றல் - பெரியவன். பொன்மலர் - ஸ்வர்ணபுஷ்பம்; பொன்போ லருமையான மலர் எனினுமாம். 'அமயர்தன்னில்' என்றவிடத்து 'அவையர்தன்னில்' என்றும் பாட முண்டு; சபையி லென்பது பொருள். இரண்டுபாடத்திலும், தன் - சாரியை. பிந்தின பாடத்துக்கு 'அம்' என்பதும் சாரியையாம். முடி - மயிர்முடி. (௯)

[தருமபுத்திரன் நாரதமாமுனிவனுக்குச் செய்யும் உபசாரம்.]

௧0. ஏற்றினனாசனத்திற்றனித்தனியேயுபசாரம்யாவுந்தந்து,
மாற்றினன்வழியிளைப்புமலரயன்போலிருந்தோனை மகிழ்ச்சிகூர்ந்து,
போற்றினனீவரயான்புரிதவம்யாதெனப் புகழ்ந்தான்பொதியிற்றென்
றற்,காற்றினலரும்புநறுஞ்சூதம்போற்புளகரும்புங்காயத்தானே.

(இ - ள்.) பொதியில் - பொதியமலையிலிருந்துவருகிற, தென்றல் காற்றினால் - தென்றற்காற்றினாலே, அரும்பும் - தளிர்த்துப்பூக்கின்ற, நறுஞ் சூதம் போல் - வாசனைவீசுகிற மாமரம்போல,புளகு அரும்பும்-(நாரதமுனிவரது வரவுபற்றிய மகிழ்ச்சியினால்)மயிர்ச்சிலிர்ப்பு உண்டாகப்பெற்ற, காயத்தான்-உடம்பையுடையவனாகிய தருமபுத்திரன்,—மலர் அயன்போல் இருந்தோனை - (திருமாலின் திருநாபித்) தாமரைமலரில் தோன்றிய பிரமன்போலச் சிறப்புற்றிருந்தவனான நாரதமகாமுனிவனை, ஆசனத்தில் ஏற்றினன்-(சிறந்ததோர்)ஆசனத்திலே இருத்தி,உபசாரம் யாவும் தனித்தனியே தந்து-(அருக்கியம் பாத்தியம் முதலிய)உபசாரங்களையெல்லாம் தனித்தனி [விடாமல் ஒன்றன்பின்ஒன்றாக] சமர்ப்பித்து, வழி இளைப்பு மாற்றினன் - (அம்முனிவனது) வழிவரவினாலாகிய தளர்ச்சியைத் தீர்த்து, மகிழ்ச்சி கூர்ந்து போற்றினன் - ஆனந்தம்மேலிட்டுத் துதித்து, நீ வர யான் புரி தவம் யாது என புகழ்ந்தான் - 'நீ இங்குஎழுந்தருளுதற்கு யான் செய்துவைத்த தவம் யாதோ!' என்று புகழ்ந்து உபசாரவார்த்தை கூறினான்; (எ - று.)

தவிசு அளித்தல் [ஆஸநம்], கையில்நீர்தரல் [அர்க்யம்], கால்கழுவநீர்தரல் [பாத்யம்], முக்குடிநீர்தரல்[ஆசமநீயம்], நீராட்டல் [ஸ்நாநம்], ஆடைசாத்தல் [வஸ்த்ரம்], முப்புரிநூல்தரல் [உபவீதம்], தேய்வைபூசல் [கந்தம்], மலர்சாத்தல் [புஷ்பம்], மஞ்சளரிசிதூவல் [அக்ஷதை], நறும்புகைகாட்டல் [தூபம்], விளக்கிடல் [தீபம்], கருப்பூரமேற்றல் [கர்ப்பூரம்], அமுதமேற்தல் [போஜநம்], அடைக்காய்தரல் [தாம்பூலம்],மந்திரமலரான்அருச்சித்தல் [மந்த்ரபுஷ்பம்] என்ற பதினாறும், ஷோடசோபசார மெனப்படும்.

ஆலவாகம், உபசாரம், அஜன், தபஸ், சூதம், புளகம், காயம் - வடசொற்கள். யா - அஃறிணைப்பன்மைவினாப்பெயர்; இதில் 'வை' என்ற பலவின்பாலவிகுதி புணர்ந்துகெட்டது: உம்மை - முற்றுப்பொருளது. "பூவிற்குத் தாமரையே" என்றபடி எல்லாமலர்களினும் தாமரை சிறத்தலால், அது, அடைமொழிகொடாமல் வாளா 'மலர்' எனப்பட்டது. அஜன்—அ - திருமாலினிடத்தினின்று, ஜன் - தோன்றினவன். 'தந்தையே மைந்தனுகிறான்' என்னும் நூல்வழக்குக்கு ஏற்ப, பிரமனதுமனத்தினின்று தோன்றிய குமாரனை நாரதனுக்கு அப்பிரமனை உவமைகூறியது, ஏற்கும்; தத்துவஞானத்திலும் தவப்பெருமையிலும் பிரமன்போலச்சிறந்தவன் நாரதனென்க. கூர்ந்து, மிகுதிப்பொருளதாகிய கூர் என்ற உரிச்சொல் - பகுதி. முனிவன்வரவினாலாகிய மகிழ்ச்சியால் தருமனுடல் மயிர்சிலிர்த்ததற்கு, தென்றற்காற்றின் வரவினால் மாமரம் தளிர்த்தல் உவமைகூறப்பட்டது; "நல்லோர்வரவால் நகைமுகங்கொண் டின்புறீஇ, அல்லோர்வரவா லழுங்குவார் -வல்லோர், திருந்துதளிர்காட்டித் தென்றல்வரத் தேமா, வருந்துஞ் சுழல்கால் வர" என்ற செய்யுள் இங்கு நினைக்கத்தக்கது. தென்றல் - தென்திசைக்காற்று; தெற்கிலிருந்து வருவது எனப் பொருள்படும். இதிற் பகுதியாகிய தெற்கு என்பது,ஈறுகெட்டு றகரம் னகரமாகத்திரிந்தது; து - சாரியை; அல் - பெயர்விகுதி; சாரியையின்உகரங்கெட்டுத் தகரம்றகரமானது-சந்தி. தென்றற்காற்றைத் தெற்கிற் பாண்டிநாட்டிலுள்ள பொதியமலையிலிருந்து வருவதாகக் கூறுதல்,கவிமரபு.பொது+இல்=பொதுவில்: என்பது, பொதியில்என உகரம் திரிந்து இகரமாய் யகரஉடம்படுமெய் பெற்று முடிந்தது;மரூஉமுடிபு.

[தருமபுத்திரன் நாரதனைநோக்கிக்கூறிய உபசாரமொழி.]

௯௯. யான்புரிந்தவமுலகில்யார்புரிந்தாரவனிபரிலிசையின்வீணைத்
தேன்புரிந்ததெள்ளமுதாலமுதுண்டோர்செவியிரதந்தெவிட்டுவிப்பாய்
மான்புரிந்ததிருக்கரத்துமதியிருந்தநதிவேணிமங்கைபாகன் [தாய்
முன்புரிந்ததிருக்கூத்துக்கிசையமகிழ்ந்திசைபாடுந்தத்வஞானி.

(இ - ள்.) வீணை இசையின் - யாழிசையாகிய, தேன் புரிந்த தெள் அமுதால் - தேனோடுகலந்த தெளிவான அமிருதத்தினால், அமுது உண்டோர் செவி இரதம் தெவிட்டுவிப்பாய் - (திருப்பாற்கடலினின்று தோன்றிய)அமிருதத்தைப் பானஞ்செய்தவர்களான தேவர்களுடைய காதுகளில் அந்தஅமிருதத்தினும்மிக்கசுவையை மிகநிறைக்கின்ற சங்கீதபண்டிதனே! மான் புரிந்த திரு கரத்து - மான் தங்கிய அழகிய கையையும், மதி இருந்த நதி வேணி - சந்திரன் தங்கியதும் கங்காநதியைத்தரித்ததுமான சடையையுமுடைய, மங்கை பாகன் - என்றும்மாறாதஇளமையையுடையவளான அம்பிகையை (வாம)பாகத்திற்கொண்டவனாகிய சிவபெருமான், தாள் புரிந்த- தான் செய்தருளுகிற, திருக் கூத்துக்கு - திருநடனத்துக்கு, இசைய - இணங்க, மகிழ்ந்து இசை பாடும் - ஆனந்தங்கொண்டு தேவகானம் பாடுகிற, தத்வ ஞானி - தத்துவஞானத்தை யுடையவனே! (இப்படிப்பட்டமகாமுனிவனை நீ என்பக்கல் எழுந்தருளப்பெற்றேனாதலால்), யான் புரிந்த தவம் உலகில் அவனிபரில்-யார் புரிந்தார்-யான்செய்தவவ்வளவுபெருந்தவத்தை உலகமுழுவதிலுமுள்ள அரசர்களில் வேறு யாவர் செய்துள்ளார்? [ஒருவரும் செய்திலர் என்றபடி]; (எ - று.)—தான் - அசை.

கீழ்க்கவியில் 'நீ வர யான்புரிதவம் யாது'என்று சுருங்கச்சொல்லிய தன் விவரணம், இது; கீழ்த்தொகுத்துச்சுட்டியதனை இங்கு வகுத்துக்காட்டலாக விளக்கிய தாதலால், இது, கூறியதுகூறலென்னுங் குற்றத்தின்பாற் படாது; (இச்செய்யுள், சிலஏட்டுப்பிரதிகளி லில்லை.)

'யாழ் புரிந்தார்' என்ற வினை, எதிர்மறைகுறித்தது. அவநிபரென்றவட மொழிப்பெயர் - பூமியைக் காப்பவரென்று பொருள்படும்; அவநி - பூமி. இசையின்,இன் - சாரியை. வீணை, அம்ருதம், ரஸம், கரம், நதீ, வேணீ, தத்வ ஜ்ஞாநீ - வடசொற்கள். மிக்கஇனிமையைக் குறித்தற்கு, 'தேனோடு கலந்த தெளிந்தஅமிருதம்' என்றார். இனி, வீணை - யாழினது, தேன்-தேன் போன்ற நரம்பினின்று, புரிந்த - எழுந்த, இசையின் - கீதமாகிய, தென் அமுதால் - சுத்தமான அமிருதத்தினால் என்றும் உரைகொள்ளலாம்; இவ்வுரையில், 'தேன்' என்றது - தேனொழுக்குப்போன்ற வடிவையும் இனிமையையு முடைய யாழ்நரம்பிற்கு உவமையாகுபெயர்: யாழ்நரம்புக்குத் தேனொழுக்கு உவமையாதலை "பசும்பொன்யாழ்நரம்பு தேனார்த் தெனத் தீண்டி" என்ற சிந்தாமணியினாலும் உணர்க. அம்ருதம் என்ற சொல் - மரணத்தைத் தவிர்ப்பது [சாவாமருந்து]என்று பொருள்படும். தெவிட்டுதல் - தேக்கிடுதல்.

மான்புரிந்த திருக்கரம் - இடத்திருக்கை. சிவபிரான் மானேந்திய கதை:—ஒருகாலத்திற் சிவபிரான் தன்னை மதியாத தாருகவனத்துமுனிவர்களுடைய கருவத்தைப் பங்கஞ்செய்யவும் அவர்களின்மனைவியர்களது கற்புநிலையைப் பரிசோதிக்கவும் கருதித் தான் ஒருவிடவடிவங்கொண்டு அவரில்லந்தோறுஞ்சென்று பிக்ஷாடனஞ்செய்து, தன்னைநோக்கிக் காதல்கொண்ட அம்முனிபத்தினியரது கற்புநிலையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறாமற் கோபம்மூண்ட அம்முனிவர்கள் அபிசாரயாகமொன்று செய்து, அவ்வோமத்தீயினின்று எழுந்த நாகங்கள் பூதங்கள் மான் புலி முயலகன் வெண்டலை முதலியவற்றைச் சிவனைக்கொன்றுவரும்படி ஏவ, சிவபெருமான், தன்மேற் சீறிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும், பூதங்களைத் தனதுகணங்களாகவுங் கொண்டு மானைக் கையிலேந்தி, புலியைத் தோலையுரித்து உடுத்து, முயலகனை முதுகிற் காலாலூன்றி, வெண்டலையைக் கையாற்பற்றிச் சிரமேலணிந்து, இங்ஙனமே அவற்றையெல்லாம் பயனிலவாகச் செய்துவிட்டன னென்பதாம்.

'மதியிருந்தவேணி' என்றதன் விவரம்:—தக்ஷமுனிவனது புத்திரிகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழுநக்ஷத்திரங்களையும் மணஞ்செய்துகொண்ட சந்திரன் பக்ஷபாதமாக அம்மகளிருள் உரோகிணியென்பவளிடத்தில் மிகவும் மோகங்கொண்டு எப்பொழுதும் அவளுடனே கூடிவாழ்ந்து மற்றைமனைவியரை உபேக்ஷைசெய்ய, அப்புதல்வியரின் வருத்தத்தை நோக்கின தக்ஷமுனிவன் சந்திரனைக் கோபித்து 'க்ஷயமடைவாயாக' என்று சபிக்க, அச்சாபத்தாற் சந்திரன் பதினைந்துகலைகளுங் குறைந்து மற்றைக் கலையொன்றையும் இழப்பதற்குமுன்னம் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் அருள்கூர்ந்து அவ்வொற்றைக்கலையைத் தன்தலையிலணிந்து மீண்டும் கலைகள் வளர்ந்துவரும்படி அநுக்கிரகித்தன னென்பதாம். இவ்வரலாற்றினால், சிவபிரான் தன்னைச்சரணமடைந்தவர்களின்குறையைத் தீர்த்தருளுந்தன்மைய னென்பது விளங்கும்.

'நதிவேணி' என்றதற், பொதிந்த வரலாறு:— திருமால் உலகமளந்த காலத்தில் மேலே சத்தியலோகத்திற் சென்ற அப்பிரானது திருவடியைப் பிரமன் தன்கைக்கமண்டலதீர்த்தத்தாற் கழுவிவிளக்க, அந்த ஸ்ரீபாத தீர்த்தமாகப்பெருகித் தேவலோகத்திலிருந்த ஆகாசகங்காநதியை, சூரியகுலத்துப்பகீரதசக்கரவர்த்தி, கபிலமுனிவனது கண்ணின் கோபத்தீக்கு இலக்காய் உடலெரிந்து சாம்பலாகி நற்கதியிழந்த தனதுமூதாதையரான சகரபுத்திரர் அறுபதினாயிரவரை நற்கதிபெறுவிக்கும்பொருட்டு நெடுங்காலந்தவஞ்செய்து மேலுலகத்திலிருந்து கீழுலகத்திற்குக் கொணர்கையில், அவனதுவேண்டுகோளினாற் சிவபிரான் அந்நதியைச் சடைமுடியில்ஏற்றுச்

சிறிதுசிறிதாகப் பூமியில் விட்டருளின னென்பதாம். இதற்குச் சைவபுராணங்களில் வேறுவரலாறுங் கூறப்படும்; அது வருமாறு:— ஒருகாலத்தில் திருக்கைலாசத்திலேஉத்தியானவனத்தில் உமாதேவி உருத்திரமூர்த்தியின் பின்னேவந்து பேசாமல் விளையாட்டாக அப்பெருமானுடையஇரண்டுதிருக் கண்களையும் தனது இரண்டுதிருக்கைகளினால் ஒருகணப்பொழுது மறைக்க, அம்மாத்திரத்திலே சந்திரசூரியராதியரனைவருடையஒளிகளும் ஒழிந்து எங்கும் இருள்மூடி யுகங்கள் பலகழிந்து மன்னுயிர்கள் மிகவருந்த, அவ்வருத்தத்தை யொழிக்கும்பொருட்டுச் சிவபிரான் சிறிது நெற்றிக்கண்ணைத் திறந்துநோக்க, பார்வதி அதனைக்கண்டு அஞ்சி உடனே கண்களை மூடின கைகளிரண்டையும் வாங்கிவிட்டு, அப்பொழுது தன்கைவிரல்கள்பத்திலுந்தோன்றிய வியர்வைநீரைக் கீழேஉகுக்க, அவ்வியர்வைகள் பத்தும் பத்துக்கங்காநதிகளாய் எங்கும்பரவி உலகத்தையொழிக்கலுற, அதுகண்டு அஞ்சிவந்து சரணமடைந்த தேவர்களின்வேண்டுகோளினாற் சிவபெருமான் அவற்றைத் தனதுசடையில் தரித்தருளி ஒடுக்கின னென்பதாம்.

சிவபிரானது சடைமுடி, 'கபர்த்தம்' என்று பெயர்பெறும். மங்கைபாகன் - சத்தியைவிட்டுப்பிரியாத சிவன். மதி என்ற பெயர் - (யாவராலும்) நன்குமதித்துக் கொண்டாடப்படுவ தென்று காரணப்பொருள்படும். 'தத்வ' என்ற வடசொல் விகாரப்படாமல்நின்றது, செய்யுளோசையின்பொருட்டு; 'தத்துவ'என்ற பாடத்திற்கு ஓசைமிகுதல் காண்க. தத்வஞானம் - மெய்யுணர்வு; அதாவது - பிறப்புவீடுகளையும் அவற்றின்காரணங்களையும் விபரீதஐயங்களாலன்றி உண்மையால் உணர்தல். நாரதனது வீணை, 'மகதி'என்று பெயர்பெறும். நாரதன் சிவசந்நிதானத்தில் இன்னிசைபாடி மகிழ்வித்தலை "நெற்றித்தனிக்க ணெருப்பைக் குளிர்விக்குங், கொற்றத்தனியாழ்க் குலமுனிவன்"என்றதனாலும் அறிக. 'இசையின்வீணைத் தேன்புரிந்து தெள்ளமுதால் அமுதுண்டோர்செவியிரதம் தெவிட்டுவிப்பாய்' என்ற சொற்போக்கில், நாரதனது திவ்யகானாமிருதம் தேவாமிருதத்தினும் இனிதென்பது தோன்றுதல் காண்க. 'செவியுதரந்தெவிட்டுவிப்பாய்'என்றும் பாடமுண்டு.

[நாரதமுனிவன் அச்சபாமண்டபத்தைக் கொண்டாடுதல்.]

௬௨. எனத்தருமன்மகன்கூறவிளையோர்கடனித்தனிநின்றிறைஞ்சநீல
கனத்தனையதிருமேனிக்கண்ணனுந்தன்மனங்களிப்பக்கண்ணினோக்க
மனத்தினழுக்கணுகாதமா தவத்தோனுதிட்டிரற்கிம்மாடகூடந்
தனத்தின்மிகுகுபேரனெழிலளகையினுமிலதென்றுசாற்றினானே.

(இ - ள்.) என - என்று, தருமன் மகன் - தருமபுத்திரன், கூற-(நாரதமுனிவனுக்கு உபசாரவார்த்தை) சொல்ல,—இளையோர்கள் - (அவனது) தம்பியரான வீமன்முதலிய நால்வரும், தனித்தனி நின்று இறைஞ்ச-தனித்தனியே அருகில் வந்துநின்று (அம்முனிவனை) நமஸ்கரிக்க,—நீல கனத்து அனைய திருமேனி கண்ணனும் - நீலமேகத்தைப்போன்ற திருமேனிநிறத்தையுடைய கிருஷ்ணனும், தன் மனம் களிப்ப கண்ணின் நோக்க-தனதுமனமகளிக்கக் கண்களால் விருப்பத்தோடு அம்முனிவனை நோக்க,—மனத்தின் அழுக்கு அணுகாத மா தவத்தோன் - சிந்தையிற் களங்கமென்பது சிறிதுஞ் சாரப்பெறாத பெருந்தவமுடையவனான அந்தநாரதமாமுனிவன், உதிட்டிரற்கு- தருமபுத்திரனைநோக்கி, இ மாட கூடம் தனத்தின் மிகு குபேரன் எழில் அளகையினும் இலது என்று சாற்றினான் - 'இத்தன்மையதான சபாமண்டபம் செல்வத்தின்மிக்க குபேரனுடையநகரமான அழகியஅளகாபுரியிலும் இல்லை' என்றுசொன்னான்; (எ-று.)

திரிலோகசஞ்சாரியான நாரதமுனிவன் 'தனபதியான குபேரனுடைய நகரத்திலும் இத்தன்மையது இல்லை' என்று சொன்னதனால், பிறவிடங்க

ளிலில்லை யென்பது தானே அமையும். நீலநாகம் - வடமொழித்தொடர்: நீர்கொண்ட காளமேகம். கண்ணன் - க்ருஷ்ணன் என்ற வடசொல்லின் சிதைவு; அப்பெயர் - கருநிறமுடையவ னென்றும், மற்றும் பலவாறும் பொருள்படும். கண்ணபிரான் திருமாலின் திருவவதாரமூர்த்தி யாதலால், அப்பெருமான் திருவுள்ளவுகப்போடு அன்புகாட்டிக் குளிரக் கடாக்ஷித்தலே முனிவனுக்குத் தக்க உபசாரமாகும். கண்ணின், இன் - ஐந்தனுருபு: ஏதுப்பொருளது. மனத்தின், அளகையின்—இன் - ஏழனுருபு. மனத்தி லழுக்கணுகாத-மனத்தில் தீயசிந்தனை சிறிதுமில்லாத என்றபடி. மாதவத்தோன்-மஹாதபஸ்வீ. யுதிஷ்டிரன் என்ற வடசொல்-உதிட்டிரனென்று விகாரப்பட்டது; அப்பெயர் - யுதி ஸ்திரன் என்று பிரிந்து, போரிற் பின்வாங்காமல் உறுதியாய் நிலைநிற்பவ னென்று பொருள்படும். மாடகூடம் - சிகரத்தையுடைய மாளிகை. நரம், குபேரன், அளகா - வடசொற்கள். குபேரன் என்ற பெயர்-குற்சிதமான [விகாரப்பட்ட]உடம்பையுடையவ னென்று பொருள்படும்; பேரம் - உடம்பு: இவன் இமயகிரிச்சாரலில் தவஞ்செய்துகொண்டிருக்கையில் அங்கு எழுந்தருளிய சிவபிரானது பக்கத்துநின்ற உமாதேவியின்மேல் இடக்கண்ணைச் செலுத்தி அவ்வபசாரத்தினால் அந்தக்கண் பசந்துஒளிமழுங்கப்பெற்று ஏகாக்ஷிபிங்கள னென்னும் ஒருபெயரையும் அடைந்தன னென்பதை யறிக. அளகையினும், உம்-உயர்வுசிறப்பு. 'நோக்கி' என்ற பாடத்துக்கு - கண்ணபிரான் நாரதன்வரவுபற்றித் திருவுள்ளமுவந்திருக்க அம்முனிவன் அம்மண்டபத்தைத் தன்கண்களாற் பார்த்து என்று பொருள்கொள்க. 'அளகையினுமினிது' என்ற பாடம் - அளகாபுரியினும் இனிமையானது என்று பொருள்படும். (கஉ)

[பாண்டுமகாராசன் உன்னை இராயசூயயாகஞ்செய்யச் சொல்லினனென்று நாரதன் யுதிஷ்டிரனிடம் தெரிவித்தல்.]

[illegible]ண்மிசைநால்விரனி[illegible]ற்குமணிமகுடத்தணியரங்கின் மண்ணு
[illegible]மிசைவாணரு நெருங்கவிராயவருமறைச்சடங்கினிராய
சூயம், [illegible] [illegible]ணிநிகரென்கான்முளையைப்புரிவியெனக்கால
னூரிற், பண்ட[illegible] [illegible]ணையின்கிழவன்பாண்டுமொழிந்தனனெனவும்
பகர்வுற்றானே.

(இ - ள்.) மண்மிசை - பூமியின்மேல்[நிலவுலகத்தார்யாவர்க்கும் என்றபடி], நால் விரல் நிற்கும் - (இந்தமண்டபத்தை ஒன்றாகவைத்துக் கையின் கடைவிரலை மடக்கிஎண்ணினால் அங்ஙனம் எண்ணியவிரலுக்குப்பின் இதனோடு ஒக்கவைத்துஎண்ணுதற்கு வேறொருமண்டபம் இல்லாமையால் மற்றை) நான்கு விரல்களும் (மடக்கப்படாமல்) நின்றிடும்படியான, மணி மகுடத்து அணி அரங்கில் - இரத்தினகசிதமான சிகரத்தையுடைய அழகிய சபாமண்டபத்திலே, மண் உளோரும் விண்மிசை வாணரும் நெருங்க - பூலோகத்திலுள்ளவர்களான மனிதர்களும் மேலுலகத்தில் வாழ்பவர்களான தேவர்களும் (மிகுதியாக வந்து திரண்டு) நெருங்க, விராய அரு மறை சடங்கின் இராயசூயம் - பொருந்திய அருமையான வேதவிதிப்படி செய்யப்படுகிற வைதிகச்செயல்களையுடைய ராஜசூயமென்னும் பெரிய யாகத்தை, கண்மிசை மா மணி நிகர் என் கான்முளையை புரிவி-கண்ணிலுள்ள சிறந்த கருமணிபோன்ற [அருமையான]எனதுபுத்திரனாகிய யுதிஷ்டிரனைச் செய்விப்பாய், என - என்று, காலன் ஊரில் - யமலோகத்திலே, பாண்டு மொழிந்தனன் - (உன் தந்தையான) பாண்டுமகாராசன் (அங்குச்சென்ற என்னுடன்) சொன்னான், எனவும் - என்றும், பண் மிசை வீணையின் கிழவன் பகர்வுற்றான் - இசையில்மேம்பட்ட வீணையின் உரிமையையுடையவனான நாரதமாமுனிவன் (தருமபுத்திரனை நோக்கிச்) சொன்னான்; (எ - று.)

தென்திசையிலுள்ளதும், பிதிருதேவதைகள் வசிக்குமிடமும், தெற்குத் திக்குப்பாலகனும் பிதிருபதியுமான யமனால் ஆளப்படுவதுமாகிய பிதிருலோகமென்ற பரலோகம், இங்கு 'காலனூர்' எனப்பட்டது; இது-மறுமையுலகங்களி லொன்று. யான் பிதிருலோகத்திற்குச் சென்றிருந்தபொழுது, அங்கு வசிக்கிற உனது தந்தையான பாண்டுமகாராஜன், என்னைநோக்கி 'பூலோகத்துக்குச் செல்லும் நீ அங்கு என் அருமைமகனான யுதிஷ்டிரனைக் கண்டு அவனைச் சிறந்தபெருவேள்வியாகிய இராசசூயயாகஞ் செய்யச் சொல்வாயாக' என்றுசொன்னான் என நாரதமாமுனிவன் யுதிஷ்டிரராசனை நோக்கிச் செய்திகூறின னென்பதாம்.

பெருவிரல், சுட்டுவிரல், நடுவிரல், பவித்திரவிரல், கடைவிரல் என்ற கைவிரல்களினுட் கடைவிரலை முதலாகவைத்து மடக்கி ஒன்றுமுதலாக எண்ணித்தொகையிடுதல், மரபு: உலகத்திலுள்ள சிறந்தசபாமண்டபங்களை யெண்ணித் தொகையிடக்கருதி இந்தசபாமண்டபம் ஒன்றென்று முதலிற் கடைவிரலை மடக்கியெண்ணினபின்பு இதனோடு ஒப்பவைத்து மற்றை விரல்களையும் மடக்கியெண்ணுதற்கு ஏற்ற சபாமண்டபம் வேறுஇல்லாமையால் மற்றைநான்குவிரல்களும் மடக்கப்படாமலே நின்றுவிடும்படியான ஒப்பற்ற சிறப்பையுடைய மண்டப மென்பது, 'மண்மிசை நால்விரல்நிற்கும் அரங்கு' என்றதன் கருத்து; மேல் விராடபருவத்தில் "அதிரதர்தம்மை யெண்ணி லணிவிரல் முடக்கவொட்டா, முதிர்சிலைமுனி" என்றும், கன்னபருவத்தில் "மற்றை யணிவிரன்முடக்க வினையிலாத மத்திரபூபன்" என்றும் வருவனவற்றோடு இதனை ஒப்பிடுக: "முன்பு கவிகளையெண்ணுகிற சந்தர்ப்பத்திலே கடைவிரல் காளிதாசனையேற்றுக்கொண்டது;இப்பொழுதும் அவனுக்குச் சமானனான கவி இல்லாமையாலே, அநாமிகையென்கிற இரண்டாவதுவிரல் பொருளுள்ளதாயிற்று [தானஎற்கும் பெயர்ப்பொருளொன்றையும் பெற்றிலது]" என்று வடநூலிற்கூறிய வருணனையும் இங்கு [illegible] தக்கது. இனி, 'மண்மிசை நால்விரல் நிற்கும்' என்பதற்கு - பூமியின் [illegible] விரலுயரத்தின்மேலே நிற்கிற என்றுஉரைத்தல் சிறவாமை காண்க.

மகுடம், காலன் - வடசொற்கள். ரங்கம், ஷடங்கம் என்ற வடசொற்கள் - அரங்கு, சடங்கு என்று விகாரப்பட்டன. சடங்கு - வேதத்தின் ஆறு அங்கங்களாகிய சிக்ஷைமுதலிய நூல்களின் கருத்தின்படி செய்யப்படுவதென்று காரணப்பொருள்படும்; ஷட் - ஆறு, அங்கம் - உறுப்பு. 'விண்' என்ற ஆகாயத்தின்பெயர் - அங்குள்ள தேவலோகத்திற்கு இடவாகுபெயர். வாணர் - வாழ்நர் என்பதன் மரூஉ; வாழ்நாள் = வாணாள் என்பதுபோல. விராய என்ற பெயரெச்சத்தில், விராவுஎன்ற பகுதி விகாரப்பட்டது; ய் - இறந்தகாலஇடைநிலை.(சிலசாதியார்க்கும் பெண்பாலார்க்கும் ஓதுவிக்கவும் ஓதவும் கேட்கவும் ஆகாதென்று) மறுக்கப்படுதலாலும், மறைந்தபொருளையுடைமையாலும், வேதத்துக்கு 'மறை'என்று பெயர். சடங்கின், இன் - சாரியை. காண்பது கண்எனக் காரணக்குறி; மிசை - ஏழனுருபு. மகனுக்கு, கண்ணின்கருமணி - இன்றியமையாதவுறுப்பாதலினும்,அருமைபாராட்டப்படுதலினும் உவமம்; "கண்மணிப்பாவையன்ன, பெண்"என்றார் சிந்தாமணியாரும். கான்முளை—கால் - சந்ததியில், முளை - தோன்றினவன்: சந்ததிவிருத்திக்குக் காரணமானவ னென்றுமாம். புரிவி, வி-பிறவினைவிகுதி: இப்பிறவினைப்பகுதியே, ஓசைவேறுபாட்டால் ஏவலொருமையாய் நின்றது; "செய்யென்வினைவழி விப்பி தனிவரிற், செய்வியென்னேவல்"என்றார் நன்னூலார். என் கான்முளையை இராயசூயம் புரிவி - இரண்டு செயப்படுபொருள்வந்த வினை: என்மகனைக்கொண்டு இராசசூயயாகஞ்செய்விப்பாயென்றபடி, என்மகன்இராசசூயஞ்செய்யுமாறு நீசெய்வா யென்றவாறு கருத்து. காலன்-(பிராணிகளின்)ஆயுளைக் கணக்கிடுபவன். மண்மிசைவினை - இசைக்

கருவிகளிற்சிறந்ததான வீணையென்றபடி: வீணையின் கிழவன்-வீணைகானத்திற் சிறந்தவன். கிழவன் - உரிமையென்னும்பொருளதான கிழமையென்ற பண்பினடியாப் பிறந்த பெயர்; இதன் பெண்பால் - கிழத்தி: (பிராயம் முதிர்ந்தவனென்ற பொருளில், கிழம் - பகுதியும், கிழவியென்பது - பெண்பாலுமாம்.) பகர்வுற்றான்=பகர்வுஉற்றான்: சொல்லுதலைப் பொருந்தினன்; எனவே, சொல்லுனென்றபடி: ஒருசொல்தன்மைப்பட்ட பகர்வுறு-பகுதி; அது இடையே றகரவொற்றுஇரட்டி இறந்தகாலங் காட்டிற்று. 'எனவும்' என்ற உம்மை - கீழ்ச்செய்யுளை நோக்கி, இறந்ததுதழுவிய எச்சம். (கரு)

[இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: நாரதன் சென்றபின்பு, கண்ணன், சராசந்தனைக் கொல்லவேண்டுமென்றல்.]

கச. தந்தைமொழிதனயருக்குச்சாற்றிமுனியகன்றதற்பின்றம்பியான
விந்திரனுந்தன்மனத்திலெண்ணமுமீண்டாகுமெனவெண்ணிக்கூறு
மந்தநரமேதமகமியற்றுதற்கென்றவனிபரையடையவாரிப்
பந்தமுறுபெருஞ்சிறையிற்படைகெழுவேற்சராசந்தன்படுத்தினனே.

(இ - ள்.) முனி - நாரதமுனிவன், தந்தை மொழி-பிதாவாகிய பாண்டு சொல்லியனுப்பின வார்த்தையை, தனயருக்கு சாற்றி - புத்திரர்களான பாண்டவர்கட்கு இவ்வாறு சொல்லி, அகன்றதன்பின்-சென்றதன்பின்பு,- தம்பி ஆன இந்திரனும் - உபேந்திரனாகிய ஸ்ரீகிருஷ்ணனும், தன் மனத்தில் எண்ணமும் ஈண்டு ஆகும் என எண்ணி - தனது மனத்தில் வெகுகாலமாயிருந்த நினைவான ஜராஸந்தவதமும் இச்சந்தர்ப்பத்தில் நிறைவேறுமென்று நினைத்து ஆலோசித்து, கூறும் - (தருமபுத்திரனை நோக்கிப் பின்வருமாறு) சொல்வான்:—படை கெழு வேல் சராசந்தன் - சேனைகள் நிறையப்பெற்றவனும் வேல்முதலியஆயுதங்களின்தொழிலில் தேர்ந்தவனுமான ஜராஸந்தனென்ற அரசன், அந்த நரமேத மகம் இயற்றுதற்கு என்று - பிரசித்தமான நரமேதமென்னும் யாகத்தைத் தான் செய்தற்பொருட்டாக, அவனிபரை அடைய வாரி - அரசர்களை ஒருங்கேபிடித்துத் திரட்டிக்கொண்டு போய், பந்தம் உறு பெருஞ் சிறையில் படுத்தினன் - விலங்கின்தளைபொருந்திய பெரியசிறைச்சாலையிற் சேர்த்துவைத்தான்; (எ - று.)

திருமாலின் திருநாமங்களி லொன்றான'உபேந்திரன்' என்பது-இந்திரனுக்குத் தம்பியாய்ச் சேர்ந்தவனென்று பொருள்படும்; அப்பெயரின்பொருளையே இங்கு 'தம்பியான இந்திரன்' என்று குறித்தார்: இந்திரனுக்குத் தம்பியானவ னென்றபடி; முன்னொருகாலத்தில் இந்திரன் அசுரர்கள் நலிதலால் வருந்தித் தேவர்களுடனே திருமாலைச் சரணமடைந்து 'நீ எப்பொழுதும் என்னுலகத்தில் எழுந்தருளியிருந்து என்பகை தவிர்த்து எம்மைப் பாதுகாத்தருளவேண்டும்' என்று வேண்ட, அதற்கு இணங்கிய ஸ்ரீமகாவிஷ்ணு, காசியபமுனிவனது மனைவியாகிய அதிதிதேவியின் வயிற்றில் அவ்விந்திரனுக்குத் தம்பியாய் ஓர்அவதாரமெடுத்துத்தோன்றி உபேந்திரனெனப்பெயர்கொண்டு தேவலோகத்தில் அவ்விந்திரனருகிலேநின்று அவனது துயரத்தைத் தீர்க்கலாயின னென்பதை யறிக. இங்கு 'தம்பியான இந்திரன்' என்றது, அத்திருமாலின் அவதாரவிசேஷமான கண்ணபிரான்மேல் நின்றது.

மகததேசத்துஅரசனும் தேவர்கட்குப் பகைவனு மாகிய பிருகத்ரதனென்பவன் மைந்தனில்லாக்குறையால் வனத்திற்சென்று சண்டகௌசிகமகாமுனிவனை வணங்கி வரம்வேண்ட, அவன் தனதுவாஸஸ்தானமாகஇருக்கும் மாமரத்தின் கனியொன்றைக் கொடுக்க, அதனை அவ்வரசன் காசிதேசத்தரசன்பெண்களாகிய தன்மனைவியரிருவர்க்கும் பகிர்ந்துகொடுத்தான். அதனால், அவ்விருவரிடத்தும் பாதிபாதியாகக் குழந்தை பிறந்தது. அவற்றை

அவன் ஊர்ப்புறத்தி லெறிந்துவிடும்படி கட்டளையிட, அங்ஙனம் எறியப் பட்ட அப்பிண்டுகளை அந்தக்கிராமதேவதையாகிய ஜரையென்பவள் இரவில் ஊர்வலம்வருகையிற் கண்டு எடுத்துப் பொருத்திப் பிழைப்பித்து, தன்னாற் பொருத்தப்பட்ட காரணத்தால் ஜராசந்தனென்று பெயரிட்டு வளர்க்கும்படி அக்குழந்தையைத் தந்தையினிடம் கொடுத்துப் போயினள். அங்ஙனம் வளர்ந்து அந்நாட்டில் கிரிவிரசமென்னும்நகரத்தில் அரசாண்டு செருக்குக் கொண்டு பற்பலஅரசர்களைப் போரிற் கொன்று அநேகஅரசர்களை வென்று சிறையில் வைத்திருந்த சராசந்தன், அஸ்தி பிராஸ்தி என்னும் தனது பெண்களிருவரைக் கண்ணனதுமாமனுகுங் கம்சனுக்கு மணஞ்செய்வித்திருந்தான். பின்பு கண்ணன் கம்சனைக்கொன்றதுகாரணமாகச் சராசந்தன் வெகுகோபங்கொண்டு கிருஷ்ணனை வம்சத்தோடு கொல்லவேண்டுமென்று அநேகம்பெருஞ்சேனையோடு எதிர்த்துவந்து கண்ணன்எழுந்தருளியிருந்த மதுராபுரியை வளைத்துப் பெரும்போர்செய்து பலராமகிருஷ்ணர்களாலும் யாதவசேனையாலும் தானும் தன்சேனையும் வெல்லப்பட்டவனாய் ஓடிப்போயினன். இங்ஙனம் பதினெட்டுமுறை மீண்டும் வருவது பொருவதுதோற்பதுவெதாய்ப் பங்கப்பட்டபின்பு கோபாவேசமுற்றுப் பலமான பெருஞ்சேனையைத் திரட்டிக்கொண்டு ஒருகால் மதுரையை நோக்கிப் போர்க்கு வந்தான். அச்சமயத்திலேயே, யவனதேசாதிபதியான காலயவனன் பலபராக்கிரமங்களாற் செருக்குக்கொண்டு கிருஷ்ணபலராமர்களையே தான் எதிர்த்தற்கு ஏற்ற பலவான்களென நாரதமுனிவரால் அறிந்து சேனையைச் சித்தஞ்செய்துகொண்டு போரின்பொருட்டு மதுரைக்கு வந்தனன். அப்பொழுது கண்ணன் ஏககாலத்தில் இருதிறத்தாரோடு பெரும்போர்செய்தால் யாதவசேனைக்கு நாசமுண்டாகக்கூடுமென்று நினைத்துச் சமுத்திரராசனைப் பன்னிரண்டு யோசனைதூரம் இடம்விடும்படி கேட்டு மேல்கடலிடையே பகைவர்உட்புகவொண்ணுதபடி மிகவும்பாதுகாப்புடையதான துவாரகாநகரத்தை நிருமித்து மதுரையிலிருந்த சனங்களையெல்லாம் அந்நகரத்திற் கொண்டுசேர்த்துத் தானும் தனியே ஆயுதமுமில்லாமல் மதுரையினின்று விரைவாக வெளிப்புறப்பட்டுத் துவாரகை சேர்ந்து அதுமுதல் அங்கேயே எழுந்தருளியிருந்தனன். தான் அவதாரவிசேஷத்தில் அடைந்திருக்கும் மனிதத்தன்மையை அநுசரித்து, காலத்துக்குஏற்ற கோலமாய், கண்ணன் இங்ஙனஞ் செய்தது, பின்பு சராசந்தன் வீமனால் மரணமடையவேண்டிய ஊழ்வினையின் உண்மையை நோக்கியேயாயினும், இராசதருமத்தைப்பார்க்குமிடத்து, பகைக்குப்பயந்து பங்கப்பட்டதாகவே முடிதலால், சராசந்தனுக்கு அஞ்சிக் கண்ணன் மதுரையைவிட்டுத் துவாரகைக்கு ஓடினனென்று ஓர் அபவாதம் பரவியது. இவ்வாறு தனக்குப்பழம்பகைவனுயுள்ள சராசந்தனை வீமனைக்கொண்டுகொல்வித்தற்கு இதுதக்க சமயமாகுமென்று கண்ணபிரான் கருதி அதற்கேற்றபடி ஆலோசித்துப் பேசுந்திறம், 'தன்மனத்திலெண்ணமு மீண்டாகு மெனவெண்ணிக் கூறும்' என்று விளக்கப்பட்டது. இனி, இத்தொடர்க்கு - தனதுமனத்திலுள்ள கருத்தும் இவ்வாறே யாகும் [ராஜசூயயாகஞ்செய்யவேண்டுமென்பதே யாகும்] என்று கண்ணன் ஆலோசித்துச்சொல்வானெனப் பொருளுரைத்தல், சிறப்பன்று.

நரமேதமகமென்பது - பலமனிதர்களைக்கொன்று செய்வதொரு யாகம்; "போரதாகியபூமிசாலையின் வேலைசூழ்தரு பூமியின், பாரமானசுயோதனாதியரென்னு நூறுபசுப் படுத்து, ஈரமானதயாமனத்தொ டிராயசூயமகஞ்செயும், வீரமாமுனிதன்னையுங் களவேள்வியும் புரிவிப்பனே" என்றவிடத்துப்போல, பலமனிதர்களைக் கொல்லவேண்டுமென்னுங்கருத்தே நரமேதமென்னும் அரியபெரியயாகத்தைச் செய்யவேண்டுமென்னுங் கருத்தாக உரு

வகஞ்செய்யப்பட்டதென்று கொள்ளினுமாம்: இக்கருத்தினால், சராசந்தன், பலஅரசர்களை வலியஎதிர்த்துப்பொருது வென்று உயிரோடுபிடித்துக்கொணர்ந்து விலங்கிட்டுச் சிறைச்சாலையிலடைத்துத் தொகுத்துவைத்திருந்தனனென்க. இத்தன்மைய கொடுஞ்செயல் புரிந்துள்ள சராசந்தனொருவனைக் கொன்றுவென்று அவன்பொருள்களைக்கவர்ந்துவந்தால், அநேகஅரசர்களை வென்று திறைகொணர்ந்ததாகவும், தீயவனொருவனைக் கொன்று நல்லவர்பலரைக்காத்துத்துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனதருமத்தை யநுஷ்டித்ததாகவும் முடிதலால், அவனைக்கொல்லவேண்டுமென்பது கருத்து. பந்தம் - கட்டு. பந்தம்உறு-கபாடபந்தனம் முதலிய பாதுகாவலமைந்த எனினுமாம்.

தந்தை—தாம்-பகுதி,அது,முதல் குறுகிற்று;ஐ-முறைப்பெயர் விகுதி. இதற்கு, தந்தவனென்று காரணப்பொருள் கூறுவாருமுளர். தநயர், முநி, இந்த்ரன், நரமேதமகம், பந்தம், ஜராஸந்தன் - வடசொற்கள். முநி - மௌநசீலன்: கடவுளையே எப்பொழுதும் தியானஞ்செய்பவன்; திரிகாலஞானியுமாம். இனி, முனிஎன்பதற்கு - எல்லாப்பொருளையும் முனிபவன் [வெறுத்துவிடுபவன்] என்று காரணப்பொருள் கூறலாகாது: வடசொல்திரிபாதலின். இந்த்ரன் - பரமைசுவரியமுடையவன். 'தனயருக்குச் சாற்றி' என்றவிடத்து நான்கனுருபின்பொருள் கோடற்பொருளி லடங்கும். உம்மை இரண்டும்-இறந்ததுதழுவியஎச்சம்.ஈண்டு-இண்டுஎன்பதன்சுட்டு நீண்டது. தம்பியான இந்திரன் கூறும் - செய்யுமென்முற்று ஆண்பாலுக்கு வந்தது; [நன்-வினை - உக.] அந்த - அகரச்சுட்டின் மரூஉ; அச்சுட்டு, பிரசித்தியைக் காட்டிற்று. படை-(பகைவரைப்) படுப்பது [அழிப்பது]: படு-பகுதி,ஐ-கருத்தாப்பொருள்விகுதி.வெல்வதுவேல்எனக்காரணக்குறி;இது-மற்றையாயுதங்கட்கும் உபலக்ஷணம்; அழித்தற்றொழிற்கடவுளான சிவபிரானுக்கும் பிராணிப்பவனான யமனுக்கும் முத்தலைவேல் ஆயுதமாதலாலும், [illegible]ளை ய ழித்தற்கென்று அவதரித்த அறுமுகக்கடவுட்கு வேல் [illegible], பகையழித்தற்கு வேல் சிறந்ததென்ற கருத்தினால், அத[illegible]னைப் பிரதா[illegible]னமாக்கவைத்துப் பெரும்பான்மை கூறுதல், கவிகளியல்பு. 'தன்[illegible]ரிதயத்தெண்ணம்' என்றும் பாடமுண்டு.'தம்பியான இந்திரன்'என்பதற்கு-யுதிட்டிரனதுதம்பியான இந்திரகுமாரனாகிய அருச்சுனனென்று உரைத்தல், முதனூலுக்குப் பொருந்தாது. (௧௪)

௧௫. சதகோடிதனக்கொளித்துத்தடங்கடலிற்புகுங்கிரிபோற்றளர்ச்சிகூர்ந்து,சதகோடிமுடிவேந்தர்தங்களுயிர்கொண்டொளித்தார்
சமருக்காற்றார், சதகோடிசுரும்பரற்றுந்தாராயச்சராசந்தன்றன்னையி
ன்னே,சதகோடியிபமதுகைச்சதாகதிசேய்தனையொழியச்சாதிப்பார்யார்.

(இ - ள்.) சதகோடி சுரும்பு அரற்றும் தாராய் - நூறுகோடிக்கணக்கான வண்டுகள் ஆரவாரித்தற்கிடமான மலர்மாலையை யணிந்த தருமபுத்திரனே!—சதகோடிதனக்கு ஒளித்து தட கடலில் புகும் கிரி போல் - (தேவேந்திரனுடைய) வச்சிராயுதத்திற்கு அஞ்சி யொளித்துப் பெரிய கடலிற்புக்கு மறைந்த(மைநாகம் முதலிய)மலைகள்போல, சதகோடி முடி வேந்தர்-நூறுகோடிக்கணக்காகிய கிரீடாதிபதிகளான அரசர்கள், சமருக்கு ஆற்றார்-(சராசந்தனுடைய)போர்க்கு முன்நிற்கமாட்டாதவர்களாய், தளர்ச்சி கூர்ந்து - மனத்தளர்வும் உடற்றளர்வும் மிக்கு,தங்கள் உயிர்கொண்டு ஒளித்தார்-தம்தம்முடையஉயிர் அரிதில்தப்பிஉய்யக்கொண்டு ஓடிஒளித்துவிட்டார்கள்; அ சராசந்தன்தன்னை - அத்தன்மையனான சராசந்தனை, இன்னே - இப்பொழுது,சதகோடி இபம் மதுகை சதாகதிசேய்தனைஒழிய சாதிப்பார்யார்-நூறுகோடியானைவலிமையையுடைய வாயுவின்குமாரனான வீமசேனனைத் தவிரக் கொல்லவல்லவர் எவர் இருக்கின்றனர்? [எவருமில்லை யென்றபடி].

ஆறு கூர்நுனியை யுடைய தாதலால், வச்சிராயுதத்திற்கு 'சதகோடி' என்று பெயர்; பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை: அன்மொழித்தொடர். மற்றுமுன்றடிகளிலுள்ள 'சதகோடி' என்ற சொல்லின்பொருள் தொகை யென்றமைத்திரத்தை புணர்த்தின. முன்னொருகாலத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போல இறகுடையனவாயிருந்து அவற்றால் உலகமெங்கும் பறந்துதிரிந்து பலவிடங்களின்மேலும்இருந்து அவ்வவ்விடங்களையெல்லாம் பிராணிகளுடனே அழித்துவர, அதனை முனிவர்முதலியோ ரால்றிந்த திரிலோகாதிபதியான தேவேந்திரன் சினந்துசென்று தனதுவச்சிராயுதத்தால் அவற்றின் சிறகுகளை யறுத்துத்தள்ளிவருகையில், வாயுவின் உதவியைக்கொண்டு மைநாகம்முதலிய சிலமலைகள் விரைந்து ஓடிக் கடலினுட்புக்கொளித்துத் தப்பின என்பது வரலாறு. இங்கு, வச்சிராயுதம் மிக்க வலிமையையுடைய சராசந்தனுக்கும், மலைகள் - அவனுக்குஅஞ்சிய வலிய பெரியஅரசர்கட்கும் உவமை.

தட - பெருமையுணர்த்தும் உரிச்சொல்; "தடவும் கயவும் நளியும் பெருமை" என்பது, தொல்காப்பியத்துஉரிச்சொல்லியற்சூத்திரம். தட+ கடல்=தடங்கடல்; பொதுவிதிப்படி உயிர்முன் வலிமிகாது, இனமெலிமிக்கது, உரிச்சொற்புணர்ச்சியாதலால்: "இடையுரிவடசொலி னியம்பியகொளாதவும்" என்றார் நன்னூலார். கடல்என்ற சொல்லை, கள் தல் என்று பகுதிவிகுதிகளாகப்பிரித்து, (சகரசக்கரவர்த்திபுத்திரர்களால்) தோண்டப் படுதலுடைய தென்று காரணப்பொருளுரைப்பர்; கட்டல் - தோண்டுதல்: தொகுத்தல்விகாரப்பட்டுக் கட லென நின்றதென்றும், தொழிலாகுபெய ரென்றுங் கொள்க.

கிரி, இபம், ஸதாகதி - வடசொற்கள்.ஸதாகதி - எப்பொழுதும் சஞ்சாரத்தையுடையவன். சமர் - ஸமரம்என்ற வடசொல்லின் விகாரம்; அமர்என்றும், சமம் என்றும் விகாரப்பட்டும் வழங்கும். மயிர்முடியை பற்றி, சிரசுக்கு 'முடி' என்று பெயர்; அது-அத்தலையில் [illegible] இடவாகுபெயராம். அடையாளப்பூமாலை, அலங்காரத்தி[illegible]ம் மலர் மாலை, வெற்றிமலர்மாலை என்னும்மூன்றும், 'தார்' என்ற சொல்லில் அடங்கும். தாராய் - தாரான்என்றபெயரின்ஈறுதிரிந்த விளி. சதகோடிசுரும்பு - இருமொழி வடமொழி யாதலால் அதன்முன் வலிஇயல்பாயிற்று. இன்னே - நிகழ்காலங் குறிப்பதோ ரிடைச்சொல்.

'சதகோடிபிமதுகை' என்பது - சதாகதிசேய்க்கு அடைமொழி: இளமையில் ஒருகால் துரியோதனனுரியர் வீமனுக்கு விருந்துசெய்விக்கிறவியாஜமாகச் சமையற்காரரைக்கொண்டு அவனுக்கு மிக்கவிஷங்கலந்த உணவைக் கொடுத்து உண்பித்து,அதனால் மயங்கியிருக்கிறசமயத்தில் அவனைக் கயிற்றினாற்கட்டிக் கங்கைநீரிலேபோகட்டுவிட, அதில்வீழ்ந்து பாதாளஞ்சேர்ந்த அவ்வீமனை அங்குள்ள சிறுநாகங்கள் கடிக்க, முந்தினவிஷம் இவ்விஷத்தால் நீங்கினவளவிலே, கயிற்றுக்கட்டையும் மெய்வலிமையால் துணித்திட்ட அவனுக்கு, வாசுகி, வாயுகுமாரனென்றஅபிமானத்தோடு தக்கஉபசாரங்கள்செய்து ஆங்குள்ளஅமிருதகலசங்களிற் சிலவற்றை உண்பிக்க, இயல்பிற் பதினாயிரம்யானைபலங்கொண்டவனான வீமசேனன் அவ்வமிருதத்தை யுண்டு மிகவும்அதிகமானபலத்தைப்பெற்றுமீண்டனன் என்பது, ஈண்டு ஆதி பருவத்தில் வந்த வரலாறு; ஆனதுபற்றி 'சதகோடிபிமதுகைச் சதாகதிசேய்' என்றார். இத்தொடரில், "பிதுச்சதகுணம் புத்ரஃ" என்றபடி தந்தையாகியவாயுவினும் மிக்கவலிமையையுடையவன் [illegible]

செம்மையென்றபண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு முன்நின்ற மகரமெய் யகரமாத்திரிந்து, 'சேய்' என நின்றது; இச்சிறத்தின்பெயர், செச்சிற

முடைய முருகக்கடவுளுக்கு முதலிற் பண்பாகுபெயராய், பின்பு, அது, குமாரனென்னும்வடசொற்போல, அம்முருகக்கடவுள்போன்ற பலயாக் கிரமங்களிற்சிறந்த மைந்தனுக்கு உவமையாகுபெயராய்வழங்குதலால், இருமடியாகுபெயர். சாதித்தல் - வெல்லுதலுமாம்.சததகோடி என்ற ஒருசொல் ஒருபொருளிலேயே பலமுறை வந்தது, சொற்பொருட்பின்வருநிலை யென்னும் அணி; அடிதோறும் பொருள் வேறுபாடு இல்லாமையால் யமகமென்னுஞ் சொல்லணி யாகாது. (சுஙு)

கக. ஆரமணங்கமழசலமநேகமுளவாறுனுமலையின்கூல
வாரிதியைமதிப்பதற்குவல்லதுமந்தரமன்றிமற்றுமுண்டோ
போர்விசயமவனுடன்முன்பொருதோரில்யார்பெற்றார்போதுமிப்போ
தாரணமாமுனிவரராயெனப்புகன்றானறன்மகனுமஃதேயென்றான்.

(இ - ள்.) ஆரம் மணம் கமழ் அசலம் அநேகம் உள ஆனாலும் - சந்தன மரங்களின் நறுமணம் வீசப்பெற்ற மலைகள்பல (உலகத்தில்) உள்ளனவாயினும், அலையின் கூலம் வாரிதியை மதிப்பதற்கு வல்லது - அலைகள்மோதுங் கரையையுடைய (பாற்)கடலைக் கடையவல்லது, மந்தரம் அன்றி மற்றும் உண்டோ - மந்தரமலையொன்றேயன்றி வேறுமலையும் உள்ளதோ? [இல்லையேயென்றபடி];அவனுடன் முன் போர் பொருதோரில் விசயம் யார் பெற்றார் - அச்சராசந்தனோடு முன்பு போர்செய்தவர்களில் வெற்றியை யாவர் பெற்றுளார்? [எவரும்பெற்றில ரென்றபடி]; இ போது - இப்பொழுது, ஆரணம் மா முனிவரர் ஆய் போதும் - வேதம்வல்ல சிறந்த பிராமணசிரேஷ்டர்களின் வேடங்கொண்டவர்களாய் (நாங்கள் அவனிடத்து)ச் செல்வோம், என புகன்றான் - என்று (கண்ணபிரான்) கூறியருளினான்: அறன் மகனும் - தருமபுத்திரனும், அஃதே என்றான் - 'அவ்வாறேயாகுக' என்றுசொன்னான்; (எ - று.)

[illegible]ங்கொண்டுசெல்லுதற்குக் காரணம் - மேல் கஉ - ஆம்கவியில் விளங்கும். இச்செய்யுளின் முதலிரண்டடியிற்கூறிய உபமானவாக்கியம் இதனோடொருதொடராய்நின்ற கீழ்ச்செய்யுளில்வந்த உபமேயவாக்கியத்தோடு பிம்பப்பிரதிபிம்பபாவம்பெற்று நின்றதனால், எடுத்துக்காட்டுவமையணி. சந்தனமரம் மலைச்சாரில் வளர்வதாதலால், 'ஆரமணங்கமழ் அசலம்' என்று விசேடித்துக்கூறப்பட்டது.

முன்னொருகாலத்தில் இவ்வண்டகோளத்துக்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துச்சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி அவளால் ஒருபூமாலைபிரசாதிக்கப்பெற்ற ஒருவித்தியாதரமகள் மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கைவீணையில்தரித்துக்கொண்டு பிரமலோகவழியாய் மீண்டுவருகையில் துருவாசமகாமுனி எதிர்ப்பட்டு அவளைவணங்கித்துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்குஅளித்திட்டாள்; அதன்பெருமையையுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட முனிவன் ஆனந்தத்தோடு தேவலோகத்துக்குவரும்போது, வெகுஉல்லாசமாகஐராவதயானையின்மேற் பவனிவந்துகொண்டிருந்த இந்திரனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை அங்குசத்தால்வாங்கி அவ்யானையின்பிடரியின்மேல் வைத்தவளவில், அம்மதக்களிறு அதனைத் துதிக்கையாற்பிடித்துஇழுத்துக் கீழெறிந்து காலால்சிதைத்துத்துவைத்தது; அதுகண்டு முனிவரன் கடுங்கோபங்கொண்டு 'இங்ஙனஞ்செல்வச்செருக்குற்ற நினது எல்லாஐசுவரியங்களும் கடலில் ஒளித்துவிடக்கடவன' என்று சாபங்கொடுக்க, உடனே தேவர்செல்வமியாவும் ஒழிந்தன; ஒழியவே, அசுரர் வந்துபொருது அமரரைவெல்லலாயினர்: பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச்சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக்கட்டளையிட்டபடி அசுரர்களையுந்துணைகொண்டு மந்தரமலையை

மத்தாகநாட்டி வாசுகியென்னும்பாம்பைக் கடைகயிறாகப் பூட்டிப்பாற்கடல் கடைந்து, அதனினின்றுவெளியெழுந்தஅமிருதத்தையும் எல்லாச் செல்வங் களையும்பெற்று வாழ்ந்தனன் என்பது, இரண்டாமடியிற் குறித்தவரலாறு.

'போதும்' என்ற தன்மைப்பன்மை - வீமார்ச்சுனர்களை உளப்படுத்தியது; இதில், 'தும்' என்ற விகுதி - எதிர்காலங்காட்டிற்று: "நாம் போதுமென்று னளன்" என்றவிடத்துப்போல; 'இப்போது போதும்' என்றது- விரைவுபற்றிவந்த காலவழுவமைதி. ஹாரம், அசலம், அநேகம், கூலம், வாரிதி, விஜயம், ஆரணம், மஹா, முநிவரர் - வடசொற்கள். அசலம் - சலியாதது. ஏகம் - ஒன்று: அதுவல்லாதது, அநேகம்; ந+ஏகம்=அநேகம்: வடமொழிச்சந்தி. வாரிதி - நீர்தங்குமிடம். விஜயம் - விசேஷஜயம். ஆர மணம் கமழ் என்றுபிரித்து, நிரம்ப(க் கோட்டுப்பூமுதலியவற்றின்)மணம் வீசப்பெற்ற எனினுமாம். அறன்என்பதை, அஃறிணைப்பெயரின்மகரனகரப்போலியென்றுவது, 'அன்' விகுதிபெற்ற உயர்திணைப்பெயரென்றுவது கொள்க. 'அஃதே' என்றது, அங்கீகாரவார்த்தை. அலையின்கூலம் - அலைகளின்வரிசையையுடைய எனினுமாம். பாற்கடலைக்கடைதற்கு மந்தரகிரியே வல்லதாதல்போல, சராசந்தனைக்கொல்லுதற்கு வீமனே ஏற்றவனென்க. 'இவனுடன்' என்ற பாடத்துக்கு, இவ்வீமனுடன் என்க.

"அந்தணர்படிவந்தாங்கி யாடம ரிரந்துபெற்று, வெந்திறல்விளையும் வெம்போர் வீமனே விளைப்பினல்லால், மைந்துவீற்றிருந்ததிண்டோண் மகதர்கோன்கடலந்தானை, சிந்திடப்பொருதுவெல்லுந் திறத்தினர் யாவரென்றான்" என்றார் பாகவதத்திலும். (கசு)

[கண்ணனும் வீமார்ச்சுனரும் புறப்பட்டுச் சராசந்தனரண்மனைசேர்தல்.]

கஎ. அரிவிரசுந் துழாய்மகுடத் தரியுமிரண் டரிகளரு ளாண்மை யோரு, மெரிவிரசு நெடுங்கான மிருதினத்தில் விரைந்தேகி யெண்ணில் காவற், கிரிவிரச நகரெய்திக் கிரித்தடந்தோள் மகதேசனிருங் கோயிற், கரிவிரசுங் கோபுரப்பொற் றிருவாயில் புகுந்துரைத்தார் காவ லோர்க்கே.

(இ - ள்.) அரி விரசும் துழாய் மகுடத்து அரியும் - வண்டுகள் நெருங்கி மொய்க்கப்பெற்ற திருத்துழாய்மாலையைத்தரித்த முடியையுடைய திருமாலின் அவதாரமான கண்ணபிரானும், இரண்டு அரிகள் அருள் ஆண்மையோரும் - அரியென்னும்பெயருள்ள வாயுவும் இந்திரனுமாகிய இருவரும் பெற்ற பராக்கிரமசாலிகளான வீமார்ச்சுனர்களும், (ஆகிய மூவரும்),—எரி விரசும் நெடுங் கானம் இரு தினத்தில் விரைந்து ஏகி - தீப்பொருந்திய பெரியகாட்டுவழியிலே இரண்டுநாளில் விரைவாகச்சென்று, எண் இல் காவல் கிரிவிரசம் நகர் எய்தி - அளவிறந்த பாதுகாவலையுடைய கிரிவிரசமென்னும்நகரத்தை யடைந்து, கிரி தட தோள் மகத ஈசன் இருங் கோயில் - மலைகள் போன்ற பெரியதோள்களையுடைய மகததேசத்துஅரசனான அச்சராசந்தன் வாழ்கிற அரண்மனையினது, கரி விரசும் கோபுரம் பொன் திரு வாயில் - யானைகள் நெருங்கிநிற்கப்பெற்றதும் கோபுரத்தையுடையது மாகிய பொன்மயமான அழகியவாயிலில், புகுந்து - சேர்ந்து, காவலோர்க்கு உரைத்தார் - அவ்வாயில்காவல்செய்யுஞ்சேவகர்க்கு(த் தம்வரவை)ச் சொல்பவரானார்கள்.

அரிஎன்பது-திருமால் வாயு இந்திரன் என்ற பொருள்களில் ஹரி என்ற வடசொல்லின்விகாரம்;"சிங்கம் திருமால் கிகிரி இரவி,இந்திரன் காற்றே யமனே அக்கி யென்று, அங்கண்வடமொழிச்சிதைவி னரியாகும்" என்ற திவாகரத்தைக் காண்க. திருமாலையுணர்த்தும்போது (அடியார்களுடையதுன்பத்தை) அழிப்பவனென்றும்,வாயுவையுணர்த்தும்போது (எதிர்ப்பட்டபொருள்களைக்)கவர்ந்துசெல்பவனென்றும்,இந்திரனையுணர்த்தும்போது (பகை

வர்களை) அழிப்பவனென்றும், காரணப்பொருள்காண்க. துளஸீ, காநநம், நிநம், கிரிவ்ரஜம், கரீ என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. மகுடம், மகதேசன், கோபுரம் - வடசொற்கள். வெப்பம்பொருந்தின தென்பதும், காட்டுத்தீஎரியப்பெற்றதென்பதும், பாலைவனத்தையுடையதென்பதும், 'எரிவிரசும்' என்றஅடைமொழியினாற் புலனும். நீரரண் நிலவரண் மலையரண் காட்டரண் என்ற நால்வகை அரண்களுள் மலையரணாக இயல்பிலமைந்த ஐந்து மலைகளின்தொகுதியையுடைய நகராதலால், கிரிவ்ரஜ மென்று பெயராயிற்று; "வசு கிரிவிரசம் வாழ்ந்தார்" என்ற கம்பராமாயணத்தையும், "இத்தலம் வசுவின்தேயம் அஞ்சுவெற்பிடையிற்றேன்றும்" என்ற கூர்மபுராணத்தையும், இங்கு 'எண்ணில்காவல்' என்ற அடைமொழி கொடுத்ததையுங் காண்க. 'எண்ணில் காவல்' என்பது - பிறரால் எண்ணுதற்கும் இயலாத பாதுகாப்பு என்றும் பொருள்படும். மகதேசன், மகத+ஈசன்: குணசந்தி. கோயில்=கோவில்: இலக்கணப்போலி; அரசனது இட மென வேற்றுமைத் தொகையாகவாவது, தலைமையாகியஇடம் எனப் பண்புத்தொகையாகவாவது கொள்க. வாயில்=இல்வாய்: இதுவும் இலக்கணப்போலி; வீட்டின் முன்னிட மென்க; முன்பின்னாக மாறிற்று. கரம் - கை: இங்கே, துதிக்கை; அதனையுடையது கரீ எனக் காரணக்குறி. கருநிறத்தையுடையது கரி யென்று தமிழ்வழியாற் காரணப்பொருள் கூறலாகாது; வடமொழித்திரி பாதலின்.

"தண்டுறைக் கங்கைபூத்த தாமரைத் தாளினானும், திண்டிறற் காற்றின்சேயும் செருமலி வரிவிற்செங்கை, யண்டர்கோன் மகனு மற்றாங் கந்தணர் படிவந்தாங்கி, மண்டுபோர்முற்றலாகா மதிட்கிரிவிரசம் புக்கார்" என்றார் பாகவதத்திலும். (௧௭)

## வேறு.

[அந்தணவடிவங்கொண்டுசென்ற மூவரையும் சராசந்தன் யாவரென்று வினவுதல்.]

௧௮. வந்தனர் முனிவர் மூவரென் றுரையின் மன்னவற் கென வவ ருரைப்பத், தந்திடு மெனலும் புகுந்துநீ டம்பொற் றவிசிருந் தாசியுஞ் சாற்றக், கந்தடர் குவவுத் தோளில்விற் குறியுங் காட்சியுங் கருத்துற நோக்கி, யந்தண ரலலீர் யாவர்நீ ரென்றா னவ்வுரைக் கமலனு முரைப்பான்.

(இ - ள்.) மூவர் முனிவர் வந்தனர் என்று மன்னவற்கு உரையின் என - 'மூன்றுஅந்தணர்கள் வந்துள்ளா ரென்று (நீங்கள் சென்று உங்கள்) அரசனுக்குச் சொல்லுங்கள்' என்று (வாயில்காவலரைநோக்கிக் கண்ணன் முதலிய மூவரும்) சொல்ல,—அவர் உரைப்ப - அவ்வாயில்காவலாளர் (அங்ஙனமே அரண்மனையினுட்சென்று சராசந்தமகாராசனுக்குச் செய்தி)சொல்ல,—தந்திடும் எனலும் - (அதுகேட்டஅவ்வரசன் 'வந்தஅந்தணர்களை) உள்ளேஅழைத்துக்கொண்டுவாருங்கள்' என்று அநுமதிசெய்தவுடனே,—(வாயிலோரால் அழைக்கப்பட்டு), புகுந்து-(மூவரும்) உள்ளேசென்று, நீடு அம் பொன் தவிசு இருந்து - (சராசந்தனாற் காட்டப்பட்ட) பெரிய அழகிய பொன்மயமான பீடத்தில் வீற்றிருந்து, ஆசியும் சாற்ற - (அவ்வரசனுக்கு) வாழ்த்தும் கூற,—(அப்பொழுது அவ்வரசன்), கந்து அடர் குவவு தோளில் வில் குறியும் காட்சியும் கருத்து உற நோக்கி - தூணையொத்த திரட்சியையுடைய (அம்மூவரது)தோள்களி லுள்ள வில்லின்தழும்பையும் (அவர்களுடைய) தோற்றத்தையும் தனதுவிவேகத்தினால் நன்றாகஉற்றுநோக்கி, நீர் அந்தணர் அல்லீர் யாவர் என்றான் - 'நீங்கள் பிராமணர்களல்லீர் மற்றை

யாவர்?" என்று வினவினன்; அ உரைக்கு அமலனும் உரைப்பான் - (அந்தண ணம் அவன்வினவிய) அந்தவார்த்தைக்குக் கண்ணனும் விடைசொல்லுவான்; (எ - று.)—அதனை, அடுத்தகவியிற் காண்க.

உரைமின், தந்திடும் - ஏவற்பன்மைமுற்றுக்கள்; முறையே மின், உம் என்பன - விகுதிகள். மன் - பெருமை: அதனை யுடையவன், மன்னவன்; அ - சாரியை. தந்திடும்என்பதில், இடுஎன்பது-துணிவுணர்த்தும். ஆசி, அமலன் - வடசொற்கள். அமலன் - குற்றமற்றவன். கந்து - ஸ்கந்தம்என்றவடசொல்லின்விகாரம். அடர்-உவமவுருபு.இனி,கந்து அடர் என்பதற்கு-தூணை முறிக்கவல்ல என்று உரைப்பாருமுளர். குவவு - உரிச்சொல். காட்சி - காணப்படுவது: 'சி' விகுதிபெற்ற தொழிலாகுபெயர். இனி, 'காட்சியும்' என்பதற்கு-பார்வைக்குறிப்பையும் என்று உரைத்தலு மொன்று; "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும் கண்ணின்,வகைமை யுணர்வார்ப் பெறின்" என்பது காண்க. கருதுவது,கருத்து. அந்தணர் என்ற பெயர்-அம் தண் அர் என்று பிரிந்து, அழகிய தண்மையை [குளிர்ச்சியான அருளை] யுடையவரென்றும்;அந்த அணவு அர்என்றுபிரிந்து,வேதாந்தத்தையேபொருளென்று மேற்கொண்டு பார்ப்பவ ரென்றும் காரணப்பொருள்படும்: இது பிறசாதியார்க்கு வழங்காமல், பிராமணர்க்கே பெயராகவழங்குவது, காரணவிடு குறிப்பெயராம். 'நீர் யாவர்' என்றது - முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி; 'நீர் யாவிர்' என்றிருப்பின், வழாநிலையாம்.

"சொல்லினுஞ்சொல்லலாகாச்சுடர்விடுதோற்றத்தானும், நல்லெழிற் றடக்கைவல்லினண்பொருதழும்பினானும், மெல்லிணர்விரியன்மாலைவேந்தரென்றறிந்தான்வீங்கு, மல்லனீர்மகதங்காக்குமாலைவெண்குடையான் மன்னே" என்றார் பாகவதத்திலும்.

இதுமுதற் பதினொருகவிகள் - பெரும்பாலும் இரண்டு நான்கு ஏழாஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (கஅ)

[தாங்கள் இன்னா ரென்பதையும், அந்தணராய் வந்ததன் காரணத்தையும் கண்ணன் சராசந்தனுக்குச் சொல்லுதல்.]

கக. யான்விதுகுலத்தில்யாதவனிவரோகுருகுலத்தலைவனுக் கிளையோர், மான்மதமலர்த்தார்மன்னகேளொருவன்வாயுவின்மதலை மற்றொருவன்,வான்மதிலுடுத்தபொன்னகர்க்கிறைவன்மதலைநின்வள நகர்காண்பான், கான்மதக்களிற்றாய்முனிவராய்வந்தோங்காவலர்க் கனுகொணாமையினால்.

(இ - ள்.) மான்மதம் மலர் தார் மன்ன - கஸ்தூரியின்வாசனைவீசும் பூமாலையைத்தரித்த அரசனே! கால் மதம் களிற்றாய்-வழிகிற மதசலத்தை யுடைய யானைச்சேனையை யுடையவனே! கேள் - (யான்சொல்வதைக்) கேட்பாய்:—யான்—,விது குலத்தில் யாதவன் - சந்திரகுலத்தில் யதுவம்சத்திற் பிறந்தவனான கிருஷ்ணன்: இவரோ - இவ்விருவருமோ,குருகுலம் தலைவனுக்கு இளையோர் - (சந்திரவம்சத்தில்) குருவென்னும்அரசனதுகுலத்துக்குத் தலைவனான யுதிஷ்டிரனுக்குத் தம்பியர்: ஒருவன் - (இவர்களில்) ஒருத்தன், வாயுவின் மதலை - வாயுதேவனதுகுமாரனான வீமசேனன்: மற்று ஒருவன்—,வான் மதில் உடுத்த பொன்நகர்க்கு இறைவன் மதலை - பெரியமதிலினாற்சூழப்பட்டபொன்மயமானநகரமாகியஅமராவதிநகரத்திற்கு அரசனான தேவேந்திரனது குமாரனாகிய அருச்சுனன்: (ஆகிய நாங்கள்மூன்றுபேரும்), நின் வளம் நகர் காண்பான் - உனது வளப்பம்மிக்கநகரத்தைப் பார்க்கும்பொருட்டு, காவலர்க்கு அனுகொணாமையினால், முனிவர் ஆய் வந்தோம் - அரசர்கள் உனதுநகரத்தினுட்புகஇயலாதாதலால் பிராமணவேடங்கொண்

டவர்களாய் வந்தோம்; (எ-று.) — 'என்றுகொண்டு உண்மை யாதவன் உரைப்ப' என்று அடுத்தகவியோடு ஒருதொடராய் இயையும்.

சராசந்தன் நெடுநாளாகச்சேர்த்துவைத்திருக்கிற மிகப்பெரியசேனையி லுள்ள அளவிறந்தசிறந்தபெரும்போர்வீரர்களோடெல்லாம் போர்செய்து அவர்களனைவரையுங்கொலைத்துப் பின்பு அவனையெதிர்த்துக்கொல்வதென் றால் அதிககாலதாமதமாகு மாதலால் அங்ஙனமாகாமல் அவனை நேரிலணு கித் துவந்துவயுத்தத்திலே வதைத்திடவேண்டு மென்னும் நோக்கத்தினால் அந்தணவடிவங்கொண்டுசென்றன ரென்று வடநூலிற் கூறிய கருத்தும்'கா வலர்க் கணுகொணாமையினால்' என்றதில் உள்ளுறைபொருளாக அமைதல் காண்க; நினதுகாவல்வீரர்க்குமுன்பு (மன்னவர்)நெருங்குத லரிதாதலா லென்க. இப்பொருளையும் உட்கொண்டு மேல் 'என்றுகொண் டுண்மையா தவ னுரைப்ப' என்றன ரென்னலாம். அரசர்கள் அவனநுமதிபெற்றன்றி அவனகரினுட்செல்ல இயலாதென்றும்,அவ்வரையறை முனிவர்கட்குஇல்லை யென்றும் உணர்க.

விதுகுலம் - வடமொழித்தொடர். 'யது' என்பவன் - சந்திரகுலத்துப் பிரசித்திபெற்ற ஓர்அரசன்; யயாதியின் குமாரன்; குருகுலத்துப்பூர்விகரா சர்களிற் பிரதானனான பூருவின் உடன்பிறந்தவன். யாதவன் - யதுவினது மரபிற் பிறந்த மகன்:வடமொழித்தத்திதாந்தநாமம். இவரோ, ஓ-தெரிநிலை. தலைவனுக்கு இளையோர் - நான்கனுருபு, முறைப்பொருளது. இளையோர்- இளமையென்ற பண்புப்பகுதி ஈறுபோய் இடைஅகரம் ஐயாயிற்று. மான் மதம் - கஸ்தூரியென்னும் ஒருசாதிமானினது மதம்; வடமொழியில் 'ம்ருக மதம்' எனப்படும்.இது-தார்க்கும்,மன்னனுக்கும் அடைமொழியாகத் தகும். 'மான்மதமலர்த்தார் மன்ன'—மேல் சக - ஆஞ் செய்யுளில்"நானங்கமழுஞ் செங்கழுநீர் நறுந்தார் வேந்தர்" என வருவதுங் காண்க. இறைவன்-இறை மையென்னும்பண்பினடியாப்பிறந்த பெயர்; இறைமை தலைமை: வ்-பெயரி டைநிலை. காண்பான்-'பான்' விகுதிபெற்ற எதிர்காலவினையெச்சம்; விகு தியே காலங்காட்டும். கான் மதம் - வினைத்தொகை. கான் - காட்டில்வாழ் கிற என்றுஉரைத்து, களிற்றுக்கு அடைமொழியாக்குதலும் ஒன்று. களிறு- யானையின்ஆண்மைப்பெயர்;(பெண்மைப்பெயர், பிடி:) களி - மதக்களிப்பு; அதனையுடையது களிறு எனக் காரணக்குறி: று - பெயர்விகுதி;ஒன்றன்பா ல்விகுதி யன்று: பால்பகாஅஃறிணைப்பெய ராதலால். யானைச்சேனையைக் கூறினது, குதிரை தேர் காலாள் என்னும் மற்றைச்சேனைகட்கும் உபலக்ஷ ணம். மதத்தினாற்கதஞ்சிறந்து தானும்போர்செய்வதான யானை,நால்வகைச் சேனையுட் சிறத்தலால் தலைமையாக் கூறப்பட்டது. இனி, களிற்றாய் - மிக்ககளிப்பையும் அடங்காச்செருக்கையும் அதிபலத்தையும் தீராக்கோபத் தையும்உடைமையிற் களிறுபோன்றவனே யெனினுமாம். காவலர்-கா வலர்: காத்தலில்வல்லவர்; அல்லது, காவல் அர் - காத்தலையுடையவர். அணுகொ ணாமை - அணுகவொண்ணாமை யென்பதன் மரூஉ. கான்மதம் - மணத்தை யுடைய மதநீர் எனினுமாம்.

"மலர்ந்தபூங்கோதைமாதர்வாளரியொழுகுகண்போ,லுலம்பொருதிணி தோண்மன்ன ருரங்கிழித் துதிரமூழ்கி, யலங்குநெட்டிலைவேல்வீம னவ னியன்பார்த்த னம்பொ,னிலங்குபூண்மார்வ கண்ணன் யா மெனக் கூறினா னல்" என்றார் பாகவதத்திலும். (கக)

[இதுமுதல் மூன்றுகவிகள் - வீமனைச் சராசந்தன் வலியப் போர்க்குஅழைத்தல்.]

உ0. என்றுகொண்டுண்மையாதவ னுரைப்பவிருபுயவலியினெண் டிசையுஞ், சென்றுகொண்டடர்த்துத்தெவ்வர்தம்முயிருந்திறைகளு

முறைமுறைகவர்ந்து, வென்றுகொண்டணிந்தவாகையோன்றினவு
மிக்கனவெமதிணைமேருக், குன்றுகொண்டமைந்ததோள்களெம்முட
னீர் குறித்தமர்புரியுமென்றுரையா.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்; ஒருதொட ரெனப்படும். குளக மாவது - பலபாடல்கள் தொடர்ந்து ஒருவினையைக் கொண்டு முடிவது; "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்." குளகமல்லாதது, முத்தக மெனப்படும்:அது,ஒருசெய்யுள் தனியேநின்று முடிவது;"முத்தகச்செய்யுள் தனிநின்று முடியும்."

(இ - ள்.) என்று கொண்டு உண்மை யாதவன் உரைப்ப - என்று உண் மையானசெய்தியைக் கண்ணன் சொல்ல,—எண் திசையும் சென்று கொண் டு - எட்டுத்திக்குக்களிலும் அடிக்கடிபோய்க்கொண்டு, இரு புயம் வலியின் அடர்த்து - இரண்டுதோள்களின்வலிமையினால் (அரசர்களை) நெருக்கிப் பொருது, தெவ்வர்தம் உயிரும் திறைகளும் முறை முறை கவர்ந்து - அப் பகையரசர்களுடைய உயிரையும் திறைகளையும் பலமுறை வாரி, வென்று கொண்டு அணிந்த வாகையோன் - வெற்றிகொண்டு (அதற்குஅடையாள மாகத்) தரித்த வாகைப்பூமாலையையுடையவனான சராசந்தன்,—'எமது-எம் முடைய, இணை மேரு குன்றுகொண்டு அமைந்த தோள்கள் - இரண்டுமகா மேருமலைகளாலாகியவைபோன்ற புயங்கள், தினவு மிக்கன - (பலநாளா கத் தக்கபோர்பெறாமையாற்) போர்த்தினவு மிகுந்தன; எம்முடன் நீர் குறித்து அமர் புரியும் - (அத்தினவுநீங்கும்பொருட்டு) எம்முடன் நீங்கள் விரும்பிப் போர்செய்யுங்கள்', என்று உரையா - என்றுசொல்லி, (எ - று.) —'என' என்று அடுத்தகவியோடு தொடரும்.

'என்றுகொண்டு' என்றவிடத்து,'கொண்டு' என்பது - அசை; "என்று கொண் டினைய கூறி" என்ற கம்பராமாயணத்திற்போல: இதனை "இளந்த வல்ல வேறுபிற தோன்றினும், இளந்தவற்றியலா னுணர்ந்தனர் கொளலே" என்றதொல்காப்பியத்துஇடைச்சொல்லியற்புறநடைச்சூத்திரத்தாலமைக்க. இனி, என்று உண்மைகொண்டு யாதவன் உரைப்ப என மொழிமாற்றி, கொண்டு - மேற்கொண்டு எனினுமாம். எமது, எம்முடன் என்றவை - செ ருக்குப்பற்றிவந்த உயர்வுப்பன்மை. 'இணைமேருக்குன்றுகொண்டமைந்த தோள்கள்' என்றது, இல்பொருளுவமை. தோள்கள் தினவுமிக்கன—"எய் யென வெழுபகை யெங்குமின்மையால், மொய்பொரு தினவுறு முழவுத் தோளினன்" என்ற கம்பராமாயணமுங் காண்க. வாகையென்னும் ஒரு வகை மரத்தின்பெயர் - இங்கு, இலக்கணையால், அம்மரத்தின்மலர்களாலா கிய மாலையைக் குறித்தது; இருமடியாகுபெயர். "வெட்சி நிரைகவர்தல் மீட் டல் கரந்தையாம், வட்கார்மேற்செல்வது வஞ்சியாம்-உட்கா,தெதிரூன்றல் காஞ்சி எயில்காத்தல் நொச்சி. அதுவளைத்தலாகு முழிஞை - அதிரப், பொ ருவது தும்பையாம் போர்க்களத்துமிக்கோர், செருவென்றது வாகையாம்" என்ற திவாகரத்தினால்,இன்னஇன்னபூமாலை இன்னஇன்னசமயத்து வீரர் கள் தரித்தற்குஉரிய தென்பதை அறிக. முறைமுறை - அடுக்கு, பன்மை குறிக்கும். தெவ்-பகைமை: அதனையுடையவர், தெவ்வர். எண்திசை-கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகி ழக்கு என்பன. புஜம், திசா என்ற வடசொற்கள் விகாரப்பட்டன.உரையா- செய்யா என்னும்வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம்; இதில் 'ஆ' என்ற விகுதியே இறந்தகாலங் காட்டும். மேருகிரி-பூமியின்நடுவிலுள்ள பொன்மயமானதொரு பெரியமலை; ஆயுதங்களால் அழிக்கமுடியாதவலிமை யிலும், பருமையிலும், இது தோள்கட்கு உவமைகூறப்படும். (உ0)

உக. நீயெனிலாண்டோரொன்பதிற்றிரட்டிநெடுஞ்சிறைக்கலுழன்முன்னெறிக்கொ, ளீயெனவோடிமதுரைவிட்டாழியெயிற்றுவாரகைப்பதிபுகுந்தாய், நோயெனவசுரர்க்குடைந்துபொற்காவினுழைதருநூறுமாமகத்தோன், சேயெனினிளையன்வீமனைவிசும்பிற்சேர்த்துவனெனவிழிசிவவா.

(இ-ள்.) (மற்றும் சராசந்தன் கண்ணனைநோக்கி),— 'நீ எனில்-நீயோ என்றால், ஆண்டு ஓர் ஒன்பதிற்று இரட்டி - பதினெட்டுவருஷகாலமாக, நெடுஞ் சிறை கலுழன்முன் நெறிக்கொள் ஈ என மதுரை விட்டு ஓடி ஆழி எயில் துவாரகை பதி புகுந்தாய் - பெரிய இறகுகளையுடைய கருடனுக்கு எதிர்ப்பட்ட ஈயென்னுஞ் சிறுபறவைபோல (எனக்கு அஞ்சி உனது இராசதானியான) மதுராபுரியைவிட்டு ஓடிப்போய் மேல்கடலில் நிருமிக்கப்பட்ட மதில்சூழ்ந்த துவாரகாபுரியினுட் சென்று ஒளித்துள்ளாய்; நோய் என அசுரர்க்கு உடைந்து பொன் காவில் நுழைதரு நூறு மா மகத்தோன் சேய் எனின்-நோய்க்கு (அஞ்சுவது) போல அசுரர்கட்குஅஞ்சித் தோற்றுப் புறங்கொடுத்தோடிப் பொன்மயமான கற்பகச்சோலையிற் பதுங்கியுள்ள தேவேந்திரனது குமாரனான அருச்சுனனோ வென்றால், இளையன் - (உங்கள் மூவரிற்) சிறுவனாயிருக்கிறான்; (ஆகவே), வீமனை விசும்பில் சேர்த்துவன்-வீமசேனனையே(எதிர்த்துப் பொருது) விண்ணுலகத்திற் சேர்ப்பேன்',என-என்று வீரவாதங்கூறி, விழி சிவவா - (கோபத்தினால்) கண்கள் சிவக்கப்பெற்று, (எ - று.)— 'அழைத்து' என அடுத்தகவியோடு தொடரும்.

'நெடுஞ்சிறைக்கலுழன்முன் நெறிக்கொளீயென வோடி' என்றது-தனதுபெருமையும் எதிரியினதுசிறுமையுந் தோன்றச் செருக்குப்பற்றி உவமைகூறியதாம்; "ஈயாடுவதோ கருடற்கெதிரே" என்றார் பிறரும். கருடன் பக்ஷிராஜனாதலால், சிறப்புக்கு அவனை யெடுத்துக்கூறினான். ஆண்டோர்ஒன்பதிற்று இரட்டி-பதினெட்டுவருஷத்திற்குமுன்பு என்றபடி. இனி,இதற்கு-பதினெட்டுமுறை யென்று உரைப்பாருமுளர்.'மதுரைவிட்டுத் துவாரகைப்பதிபுகுந்தாய்'—— "தார்வண்டிமிரத் தேனொழுகுந் தடந்தோள்வீரன் சராசந்தன், போர்வெஞ்சரத்தால் யாவரையும் புறங்கண்டன்றிப் போகாதான்,சீர்வண்மதுராபுரிவிடுத்துத் துவாபதியிற் சென்றொதுங்கக்,கார்வண்ணனையு நெடுங்காலம் வென்றா னிவன்கா ணென்றாரே" என்று கீழ்த்திரௌபதிமாலையிட்டசருக்கத்திலும், "சண்டமுகிலுருமனைய சராசந்தன்றனக்கஞ்சி,வண்டுவரையரணாக வடமதுரைகைவிட்ட, திண்டிறன்மாதவன்" என்று மேல்கிருட்டிணன்றூதுசருக்கத்திலும் வருதல் காண்க; இச்சருக்கத்தின் கஉ - ஆஞ் செய்யுளும் நோக்கத்தக்கது. மதுஎன்னும் அசுரனால் முதலில் அமைக்கப்பட்ட நகர மாதலாலும், பின்பு மதுஎன்னும் சந்திரகுலத்து அரசனாற் சீர்திருத்தி ஆளப்பட்டதனாலும், கண்ணுக்கு இனிதாயிருத்தலாலும், 'மதுரா' என்று பெயர். இங்குக் குறித்தது, வடமதுரை: யமுனாநதிதீரத்தி லுள்ளது.

கருடன், மதுரா, த்வாரகா என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. ஒன்பது+இரட்டி=ஒன்பதிற்றிரட்டி: இற்றுச்சாரியை, பண்புத்தொகையில் வந்தது; [நன்-உயிர்-சஎ.] கடல் தானே இயற்கையரணாக அமையப்பெற்ற நகர மென்பது, 'ஆழியெயிற் றுவாரகைப்பதி' என்ற தொடரினாற் போதரும்; 'எழிற்றுவாரகை' என்ற பாடத்திற்கு, எழில் - அழகையுடைய என்க. ஆழ்ந்துள்ளது, ஆழி: இ - கருத்தாப்பொருள்விகுதி. பொன்னுலகமாகிய தேவலோகத்திலே உள்ளவை யாவும் பொன்மயமாதலால்,'பொற்கா' எனப்பட்டது. கா—பரதுகாக்கப்படுவது என்று காரணப்பொருள்பெறும்பெயர். நுழைதரு;'தா' என்ற துணைவினை குறுக்கலும் விரித்தலும் பெற்றது. சிறந்த.

அசுவமேதயாகம்நூறு செய்தவன் தேவேந்திரபதவி பெறுதலால், இந்திர னுக்கு 'நூறுமாமகத்தோன்' என்று ஒருபெயர்; இவனுக்கு வடமொழியில் 'சதமகः'என்று ஒருபெயர் வழங்குதலையுங் காண்க. அஞ்சினவரோடு பொரு தல் அறமன்றாதலாலும், "மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியான்" என்றபடி தனக்குநிகரல்லாத இளையாரோடு போர்செய்யின் பலபராக்கிரமங்கட்குச் சிறப்பில்லை யாதலாலும், கண்ணனையும் அருச்சுன னையும் விலக்கினன்; "கேட்டலு முறுவல்கோட்டிக் கிளர்ந்தெழுபெரும் போ ரஞ்சி,ஆட்டுவெண் டாக்கவேலை யகத்தடைந்தனை நீ யந்தண்,எட்டிண ரலங்கற் பார்த்த னிளையனு லெதிர்ந்து வெம்போர், வாட்டிறல்வீம னுற்ற வல்லனென் றியம்பினனே" என்றார் பாகவதத்திலும். பீமன் என்ற வட சொல், வீமன்என்று விகாரப்பட்டது; அப்பெயர்-(பகைவர்க்குப்) பயங்கர னென்று காரணப்பொருள்படும். போரிற் புறங்கொடாது இறந்தவரது உயிர் வீரசுவர்க்கம்புகுமென்பது நூல்துணி பாதலால், 'விசும்பிற்சேர்த்து வன்' என்றான். 'விசும்பு'என்ற வானத்தின்பெயர்-அங்குள்ள மேலுலகத்தி ற்கு இடவாகுபெயர். சேர்த்துவன், 'அன்'விகுதி - தன்மையொருமைக்கு வந்தது. 'சிவவா'என்பதும் உடன்பாட்டெச்சமே. அசுரர்க்குஅஞ்சி மரச் செறிவில் ஒதுங்கியிருக்கிறவனுடைய பிள்ளை யென்று அருச்சுனனை இழித் துக்கூறினன்;மேல் ௩௧- ஆங்கவியிற்கூறுகிறபடி தான் அசுராம்சமாதலால். 'கலுழன்முன்னேறி, யேயென வோடி' என்று பாடமோதி, கருடன்மேல் ஏறிக்கொண்டு (காண்பவர்யாவரும்) 'ஏ' என்றுநகைத்துப் பரிகாசம்பண் ண ஓடிப்போய் என்று உரைப்பாரு முளர்; 'ஏயென' என்பது, விரைவுக் குறிப்புமாம். 'துவாரகைப்பதிபுகுந்தாய்' என்றவிடத்து, 'துவராபதிபுகுந் தாய்' என்றும் பாடமுண்டு.மிகவருத்தி அழிவுசெய்தலால்,அசுரர்க்கு நோய் உவமைகூறப்பட்டது. 'விசும்பிற் செலுத்துவெனென' என்பதும் பாடம்.

௨௨. மந்திரச்சுற்றத்தவர்களையழைத்துமதலையைமகிதலந்தன க்கோ, ரிந்திரனெனவேமணிமுடிபுனைந்தன்றியாவருந்தேவரும்வி யப்ப, மந்தரகிரியும்விந்தமூந்தம்மின்மலைவபோன்மல்லமர்மலைவான், சந்தணிதடந்தோள்கொட்டியார்த்தெழுந்தான் றழலுமிழ்விழிச்சரா சந்தன்.

(இ - ள்.) மந்திரச் சுற்றத்தவர்களை அழைத்து - (இராஜாங்ககாரியத் திலே தனக்கு) உற்றஉறவினரான மந்திரிகளை வரவழைத்து, (அவர்களு டன் ஆலோசித்து அவர்களநுமதிபெற்று அவர்களை உடன்வைத்துக்கொண் டே), அன்று - அன்றைத்தினமே [அப்பொழுதே], யாவரும் தேவரும் வியப்ப-எல்லாமனிதர்களும் தேவர்களும் (கண்டு) அதிசயிக்கும்படி [வெகு சிறப்பாக], மதலையை மகிதலம்தனக்கு ஓர் இந்திரன் எனவே மணி முடி புனைந்து - தனதுமகனான சகதேவனென்பவனைப் பூலோகத்துக்கு ஓர்இந் திரனென்னும்படி இரத்தினகிரீடஞ்சூட்டிப் பட்டாபிஷேகஞ்செய்துவைத் து;—மந்தரகிரியும் விந்தமும் தம்மில் மலைவ போல் மல் அமர் மலைவான்- மந்தரமலையும் விந்தியமலையும் தமக்குள் [ஒன்றோடொன்று] போர்செய் வனபோல(த் தானும் வீமனும்) மற்போர்செய்யும்பொருட்டு, சந்து அணி தட தோள் கொட்டி ஆர்த்து எழுந்தான் - சந்தனம்பூசிய பெரிய தனது தோள்களைக் கைகளால் தட்டி ஆரவாரஞ்செய்துகொண்டு எழுந்தான்;(யாவ னெனில்),— தழல் உமிழ் விழி சராசந்தன் - (கோபாவேசத்தினால்) - அக்கி னியைச் சொரிகின்ற கண்களையுடைய சராசந்தன்; (எ- று.)

- கீழ் ௨௦ - ஆஞ் செய்யுளில் 'வாகையோன்' என்றதை இச்செய்யுளில் வந்த 'சராசந்தன்' என்ற பெயர்க்கு விசேஷணமாகவைத்துக் குளகச்செய் யுள்களுக்கு முடிவு காண்க. மந்திரிகள் ஐம்பெருங்குழுவிற் சேர்ந்தவராத

லால், 'மந்திரச்சுற்றத்தவர்' எனப்பட்டனர்; உரியசமயங்களில் அரசனைச் சூழ்ந்திருந்து ஆலோசனைசொல்பவராய் அரசனது சுகதுக்கங்களைத் தமது சுகதுக்கங்களாகக்கருதுபவ ரென்றபடி. மந்த்ரம்-ஆலோசனை: வடசொல். போரில் வெற்றிதோல்விகள் ஒருதலையல்லவாதலால், யாக்கைநிலையாமையைக் குறித்து,போர்க்குச்செல்லுகையிற் புதல்வர்க்கு முடிசூட்டிவைத்துச் செல்லுதல், அரசரினியல்பு; அது, அரசன் போரிலிருக்கையில் இராஜாங்க காரியங்களைப் பார்த்தற்கும் ஏற்கும். 'யாவரும் தேவரும் வியப்ப' என்பதை 'மலைவான்' என்பதனோடு கூட்டினும் அமையும். வலியபெரியஉடம்பையுடைய வீமசராசந்தர்க்கு மந்தரகிரியும் விந்தியகிரியும் உவமைகூறப்பட்டன. பாற்கடலைக்கடைந்த பெருமையுடைமையால் மந்தரத்தையும், முன்னொருகாலத்தில் நாரதமாமுனிவனால்தூண்டப்பெற்று மகாமேருகிரியோடு மாறுபட்டு மிகப்பெரிதாய்வளரத்தொடங்கிச சூரியசந்திராதியரதுசஞ்சாரத்தைத்தடுக்குமாறுஓங்கிஉயர்ந்ததனால் விந்தத்தையும் எடுத்துக்கூறினர்; கீழ் கசுஆஞ் செய்யுளில் மந்தரம் வீமனுக்கு உவமைகூறப்பட்டவாறும் காண்க. மஹீதலம், விந்த்யம், சந்தநம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. அன்று+யாவர்=அன்றியாவர்: குற்றியலிகரம். மலைவ -'அன்' சாரியை பெறாத பலவின்பாற்பெயர். மல் அமர் - ஆயுதமின்றி உடல்வலிமைகொண்டு செய்யும்போர்.மலைவான்-'வான்'விகுதி எதிர்காலங்காட்டும் வினையெச்சம்.

[இதுவும், அடுத்தகவியும் - குளகம்: இருவரும் பிரயாசைப்பட்டு மற்போர்புரிதல்.]

உரு. யாளிவெம்பதாகைவீமனுமவனும்யாளியும்யாளியுமெனவே, தாளினுஞ்சமரமண்டலங்களினுந்தாழ்விரற்றடக்கைமுட்டியினுந், தோளினுஞ்சென்னித்தலத்தினுமற்போர்சொன்னபோர்விதமெலாந்தொடங்கி, நாளினுந்திங்களொன்றினிற்பாதிநள்ளிரவினுஞ் சமர்நடத்தி.

(இ - ள்.) யாளி வெம் பதாகை வீமனும் - சிங்கத்தின்வடிவமெழுதிய (பகைவர்க்குப்) பயங்கரமான துவசத்தை யுடைய வீமசேனனும், அவனும் - அச்சராசந்தனும், (ஆகிய இருவரும்),— யாளியும் யாளியும் எனவே - இரண்டுசிங்கங்கள் ஒன்றோடொன்று போர்செய்தல்போலவே,— தாளினும் - கால்களினாலும், சமரம் மண்டலங்களினும் - மற்போர்க்குஉரிய மண்டலவகைகளினாலும்,தாழ் விரல் தட கை முட்டியினும் - கவிந்தவிரல்களமைந்த பெரியகைகளின் முஷ்டிகளாலும், தோளினும் - தோள்களினாலும், சென்னி தலத்தினும் - தலையினாலும், மல் போர் சொன்ன போர் விதம் எலாம் தொடங்கி - (யுத்தசாஸ்திரங்களில்) மற்போர்க்குச்சொன்ன யுத்தவகைகளெல்லாவற்றாலும் (முறையே மற்போர்செய்யத்) தொடங்கி, திங்கள் ஒன்றினில் பாதி நாளினும் - ஒருமாதத்திற்பாதியாகிய நாள்களிலெல்லாம், நள் இரவினும் சமர் நடத்தி - நடுஇராத்திரியுமுட்பட (விடாமற்) போரை நடத்தி, (எ-று.)—'உழந்து தளர்ந்தார்' என அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும்.

பகலும்இரவும் ஒழியாது பதினைந்துநாள் போர்செய்து என்பது ஈற்றடியின்பொருள். சராசந்தவதம் இரவில்நிகழ்ந்ததென்று முதனூலால் விளங்கும். தனதுபலபராக்கிரமங்கட்கும் போரில் எளிதிற் பகைவெல்லுந்திறத்துக்கும் அறிகுறியாக, வீமன்,சிங்கவடிவத்தைக் கொடியிற்கொண்டனன் போலும். பதாகை - ஆவீறுஜயான வடசொல்; இதற்கு 'பெருங்கொடி' என்று பொருளுரைத்திருக்கின்றனர், ஆசிரியர் நச்சினார்க்கினியர். யாளி-யானையைக் கொல்லவல்லதும் சிங்கம்போல்வதும் துதிக்கையுடையதுமாகிய தொரு யாளியானையென்னும் மிருகவிசேஷமுமாம். எனஉவமவுருபு. வலசாரி இடசாரி மண்டலம் பவுரி என்ற கதிவிசேடங்கள், இங்கு 'சமர

மண்டலங்கள் எனப்பட்டன, முஷ்டி, தலம், விதம்-வடசொற்கள். முட்டி-கைப்பிடி: கைவிரல்களையும் மடக்கிச்செறியவைப்பது. சென்னித்தலத்தி னின்றும் வெளிவிட்டு நின்றுமென்க. பாதி-பகுதியென்பதன் மரூஉ. 'யாளிவெம் பகைமை வீரனு மிவனும்' என்றும், 'மற்றுஞ்சொன்ன போர்விதமெலாம்' என்றும் பாடமுண்டு. எல்லாம் என்பது, 'எலாம்' எனத் தொக்கது. (௨௫)

௨௬. பூதலநடுங்கவெழுகிரிநடுங்கப்போதகத்தொடுதிசைநடுங்க
மீதலநடுங்கக்கண்டகண்டவர்தமெய்களுமெய்யுறநடுங்கப்
பாதலநடுங்கவிருவர்மாமனமும்பறையறைந்தயர்வுடனடுங்கச்
சாதலைழிந்தவிடரெலாமுழந்துதங்களிற்றனித்தனிதளர்ந்தார்.

(இ-ள்.) (தாங்கள் கொடும்போர்செய்யுந்திறத்தினால்), பூதலம் நடுங்க-பூமி அதிரவும், எழு கிரி நடுங்க - எழுகுலபருவதங்கள் சலிக்கவும், போதகத்தொடு திசை நடுங்க-அஷ்டதிக்கஜங்களுடனேஎட்டுத்திக்குக்களுங்கம்பிக்கவும், மீ தலம் நடுங்க-மேலுள்ளதானவிண்ணுலகம் அதிர்ந்தசையவும்,கண்ட கண்டவர்தம் மெய்களும் மெய் உற நடுங்க-(அப்போரை) நோக்கின நோக்கின சனங்களுடைய உடம்புகளும் மனமுமுட்பட (அச்சத்தால்)நடுங்கவும், பாதலம் நடுங்க - கீழுலகமும் கம்பமடையவும், இருவர் மா மனமும் பறை அறைந்து அயர்வுடன் நடுங்க - தம்இருவருடைய நெஞ்சமும் பறைகொட்டினாற்போல மிகத்துடித்துச் சோர்வோடு பதறவும், சாதல் ஒழிந்த இடர் எலாம் அங்கு உழந்து - இறத்தலொன்றுநீங்கலான துன்பங்களையெல்லாம் அந்தமற்போரிலே பட்டு, தங்களில் தனித்தனி தளர்ந்தார் - தங்களுள்ளே தனித்தனியே [இருவரும்] களைப்புற்றார்கள்; (எ-று.)

பூதலம் - பூமியாகியஇடம் என்று இருபெயரொட்டுப்பண்புத்தொகை யென்றாவது, பூமியினதுஇடம் என்று ஒற்றுமைக்கிழமைப்பொருளில்வந்த ஆறும்வேற்றுமைத்தொகையென்றாவது கொள்ளத்தக்கது. எழுகிரி - கைலாசம், இமயம், மந்தரம், விந்தியம், நிஷதம், ஏமகூடம், நீலகிரி என்பன; இவை-ஸப்தகுலபர்வத மெனப்படும்: கந்தமாதனமுங கூட்டி, அஷ்டகுல பர்வதமென்றலுமுண்டு. ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம் என்கிற எட்டியானைகளும், முறையே கிழக்குமுதலியஎட்டுத்திக்குக்களிலும் கீழ்நின்று பூமியைத்தாங்குதலால் 'அஷ்டதிக்கஜம்' எனப்படும். பத்துப்பிராயத்துயானைக்குட்டிக்கு 'போதம்' என்று வடமொழியிற் பெயர்: அது 'க'ப்ரத்யயம்பெற்று 'போதகம்' என நின்றது; இங்கு யானையென்றமாத்திரையாயிற்று. 'கண்டகண்டவர்' என்ற அடுக்கு - எஞ்சாமையை விளக்கும். நிலையில்லாமையாற் பொய்யாகியஉடலை 'மெய்' என்றல், மங்கலவழக்கு. அந்தக்கரணமாய்ச் சிறந்த உறுப்பாகிற மனமும், தலைமைதோன்ற இலக்கணையால் 'மெய்' எனப்பட்டது. 'மெய்களும் மெய்யுறநடுங்க' என்பதற்கு - உடம்புகளும் உண்மையாக நடுக்கமடைய என்று உரைத்தலு மொன்று. 'மனமும் பறையறைந்து'— "நெஞ்சுபறைகொட்ட" என்றார் பிறரும். 'அங்கு' என்பது - அசையுமாம். 'சாதலொழிந்தஇடரெலாம்' எனவே, சாதற்குஅண்ணியதான [அதாவது மரணாந்தமான] அவஸ்தைகளெல்லாம் என்றபடி. 'இருவர்மாமனமும்பறையறைந்து அயர்வுடன் நடுங்க' என்பதற்கு-(அருகில்நிற்கிற கண்ணன் அருச்சுனன் என்கிற) இரண்டுபேருடைய சிறந்தமனமும் (இப்போர் வீமசராசந்தர்களில் யார்க்கு அநுகூலமாய் முடியுமோ வென்று) தமொற்றுமுற்றுப் பதைபதைத்து அயர்ச்சியடையவென்று உரைப்பாரு முளர்; 'இருவர்' என்றது, தொகைக்குறிப்பு.

"கண்ணழல்பொழியவூழிக்காற்றெனக்கூடுஞான்றியாவு, மூண்ணிய வெழுந்தபேழ்வாயுருகெழுகூற்றமென்ன, மண்ணகமதிரநின்றமால்வரை

துளங்கமற்றை, விண்ணகம்பணிப்பவர்த்துவெஞ்சமம்விளைத்திட்டாரே" என்பது பாகவதம். (௨௪)

[இருவரும் மூர்ச்சையடைந்தபின்பு வீமன் தெளிதல்.]

௨௫. கொல்லவெண்ணிரண்டுமிருவருமொருவரொருவரைக் கொல்லொணாமையினான், மல்லமர்வலியுமிருபுயவலியுமிழந்துமாமகி தலத்துறலுங், கல்லடர்செய்பொன்வரையின்முக்குவடுகாலுடன்ப றித்தகால்கண்டு, நல்லதன்மைந்தற்குணர்வுமீண்டெய்தநலத்துட னல்கியதன்றே.

(இ-ள்.) கொல்ல என்று எண்ணும் இருவரும் - (ஒருவரையொருவர்) கொல்லவேண்டுமென்று நினைக்கின்ற (வீமன் சராசந்தன் என்ற) இரண்டு பேரும், ஒருவர் ஒருவரை கொல் ஒணாமையினால் - ஒருவர் மற்றொருவரைக் கொல்லமுடியாமையால்,மல் அமர் வலியும் இரு புயம் வலியும் இழந்து-மற்போர்த்திறமும் இரண்டுதோள்களின் வலிமையும் தொலையப்பெற்று, மா மகிதலத்து உறலும் - பெரியபூமியில் மூர்ச்சித்து விழுந்துகிடந்தாராக,— கல் அடர் செம் பொன் வரையின் முக் குவடு காலுடன் பறித்த கால் - கற்கள் நிறைந்த சிவந்த பொன்மயமான மேருகிரியினது மூன்றுசிகரங்களை அடியோடுபிடுங்கிய வாயுவானது, கண்டு - (தனதுமகன் மூர்ச்சையடைந்ததைப்) பார்த்து, நல்ல தன் மைந்தற்கு உணர்வு மீண்டு எய்த நலத்துடன் நல்கியது - தனது சத்புத்திரனான அவ்வீமனுக்கு உணர்ச்சி மீளவும் உண்டாம்படி இனிமையாய் உதவிற்று; (எ - று.)—அன்று, ஏ - ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்.

'இருவரும் மூர்ச்சையடைதலும், இனியகாற்றுவீச, வீமனுக்கு மூர்ச்சைதெளிந்தது' என்ற கருத்தை, தற்குறிப்பேற்றவகையால், 'வாயுதேவன் தன்மகன்மூர்ச்சையடைந்ததைப்பார்த்து அவனுக்கு மீளவும்ப்ரஜ்ஞைவந்து தெளிவுண்டாகுமாறுஅன்போடு வந்துஉதவினன்'என்றார்.தீயோர்க்கும் நல்லோர்க்கும் கலகம்நிகழ்கையில் நல்லோர்க்கு உதவுதல் நல்லவரானதேவர்களின் இயல்பாதலால், வாயுதேவன் தேவாம்சமான வீமனுக்கு உதவினனென்பதும் பட, 'நல்ல தன்மைந்தற்கு நலத்துடன் நல்கியது' என்றாரென்றுங் கொள்ளலாம். கண்ணன்சொற்படி வீமன் தனதுதந்தையான வாயுவை மனத்திற்கொண்டு அவனதுதெய்விகவலிமையைப் பெற்றுச் சராசந்தனை வதைத்தனனென்று முதனூல் கூறும். தேவர்களை இருதிணையாலுங் கூறலாமாதலால், இங்கு 'கால் நல்கியது' என்று அஃறிணையாக் கூறப்பட்டது. 'கொல்ல' என்றது - அகரவிகுதிபெற்ற வியங்கோள்; இங்கு, கொல்வேனாக என்று விரியும்: எதிர்காலச் செயவெனெச்சமாக் கொள்ளினும் இழுக்காது. கொல்லொணாமை - கொல்லவொன்றாமை யென்பதன் மரூஉ: ஒன்றாமை - எதிர்மறைத்தொழிற்பெயர்.

பொன்வரையின் முக்குவடு பறித்த கதை :—முன்னொருகாலத்தில் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார்பலசாலி யென்று விவாதம் உண்டாக, அதனைப் பரீக்ஷித்தறியும்பொருட்டு வாயுதேவன் மேருமலையின் சிகரத்தைப் பெயர்த்துத் தள்ளுவதென்றும்,ஆதிசேஷன் அது பெயரவொட்டாமற் காத்துக்கொள்வதென்றும் கோட்பாடு உண்டாகி, அங்ஙனமே இருவரும் தேவர்கள் முதலியோர்களுடைய முன்னிலையிலே தம்தம் வலிமையைக் காட்டத் தொடங்கியபொழுது, ஆதிசேஷன் தனது ஆயிரம் படங்களாலும் மேருமலையின் ஆயிரஞ்சிகரங்களையும் கவித்துக்கொண்டு பெயரவொட்டாமல் வெகுநேரங் காக்க, பின்பு வாயுதேவன் தன்வலிமையால் அம்மலைச்சிகரங்களில் மூன்றைப் பெயர்த்துக்கொண்டுபோய்த் தென்கடலில் தள்ளிவிட்டனன் என்பதாம். (௨௫)

[வீமன் சராசந்தனுடலைக் கிழித்தெறிதல்.]

௨௧. மீளவுமிருக துவசனுற்றெழுந்துவிதலையின்விழுந்தமேவ லனைத், தாளொடுதாள்கள்வலியுறத்தன்பொற்றடக்கையான்முடக்க றப்பிடித்து,வாளுகிர்வாளாற்கனகனைப்பிளந்தவண்டுழாய்மணங்கமழ் மௌலிக், கோளரியெனவேபிளந்தெறிந்தண்டகோளமும்பிளக்க நின்றார்த்தான்.

(இ-ள்.) மிருக துவசன் - சிங்கக்கொடியுடையவனான வீமன், எழுந்து —, மீளவும் உற்று - மீண்டும்நெருங்கி, விதலையின் விழுந்த மேவலனை - நடுக்கத்தோடு தரையில்விழுந்துகிடக்கிற பகைவனான சராசந்தனை, தாளொடு தாள்கள் வலி உற - (அவனுடைய) ஒருகாலின்மீது (தன்னுடைய இரண்டு) கால்களும் வலிமையாகஊன்ற, தன் பொன் தட கையால் முடக்கு அற பிடித்து - தனதுஅழகியபெரியகையினால் மடங்காதபடி (மற்றொருகாலைப்) பிடித்து, வாள் உகிர் வாளால் கனகனை பிளந்த வண் துழாய் மணம் கமழ் மௌலி கோள் அரி எனவே - பிரகாசமுள்ள வாளாயுதம்போற் கூரிய கைந்நகங்களினால் இரணியனைப் பிளந்துஅழித்த வளப்பமுள்ள திருத்துழாயின் வாசனைவீசுக் திருமுடியையுடைய வலியநரசிங்கமூர்த்திபோலவே, பிளந்து - (அச்சராசந்தனுடம்பை) இருகூறுகக்கிழித்து, எறிந்து - (அவ்வுடற்கூறுகளை) வீசியெறிந்து, நின்று - (தனதுவெற்றிதோன்றப் போர்க்களத்தில்) நிலைநின்று, அண்டகோளமும் பிளக்க ஆர்த்தான் - (பெருமுழக்கத்தினாலாகிய அதிர்ச்சியால்) உலகவுருண்டையும் பிளவுபடும்படி ஆரவாரஞ்செய்தான்; (எ-று.)

மீளவும்உற்றுஎழுந்து - மீண்டும்உணர்ச்சியுற்று எழுந்து எனினுமாம். ம்ருகத்வஜன் - வடமொழிப்பெயர். மிருக மென்ற விலங்கின் பொதுப்பெயர், தலைமைபற்றி, மிருகராசனான சிங்கத்தை யுணர்த்திற்று. மேவலன் - விரும்பாதவன், சேராதவன்; எனவே, பகைவனாயிற்று: எதிர்மறைவினையாலணையும்பெயர்; மேவு - பகுதி, அன் - விகுதி, அல் - எதிர்மறையிடைநிலை. முடக்கு - மடங்குதல்; முடங்கு என்ற முதனிலைதிரிந்ததொழிற்பெயர். வாள் - ஒளியையுணர்த்துகையில், உரிச்சொல்; "வாள் ஒளியாகும்" என்பது, தொல்காப்பியத்து உரிச்சொல்லியற்சூத்திரம். சிங்கம் நகாயுதமெனப்படுதற்கு ஏற்ப, 'உகிர்வாளால்'எனப்பட்டது. பொன்னிறமுள்ளவனாதல்பற்றி வந்த 'ஹிரண்யன்'என்ற பெயர்க்குப் பரியாயநாமமாக, 'கனகன்' என்றார்; கநகம்,ஹிரண்யம் என்ற வடசொற்கள்-பொன்னின்பெயர்களாம். மிருகதுவசன், எழுந்து உற்று, மேவலனை வலியுறப் பிடித்து, கனகனைப் பிளந்தகோளரியெனவே பிளந்து, எறிந்து, நின்று, பிளக்கஆர்த்தான் என முடிபு காண்க. அண்டகோளமும்பிளக்க எறிந்து என்று இயைத்து உரைப்பாருமுளர்.

"விண்ணொன்றுவிலங்கலன்னவீங்கெழிற்றோளாங்கொன்று, கண்ணொன்று புருவமொன்று கருங்கழற்காலொன்றாக, மண்ணொன்றுமணிப்பூண் மார்வமகதனைப்பிளந்துமாய்த்தான், பண்ணொன்றுபாடல்வண்டுபயின்ற தார்ப்பவனன்றோன்றல்" என்பது பாகவதம்.

கனகனைப்பிளந்தகதை:—தனித்தனி தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும் ஆயுதங்களாலும் பகலிலும் இரவிலும் பூமியிலும் வானத்திலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மரணமில்லாதபடி வரம் பெற்றவனும், இரணியாக்கனது உடன்பிறந்தவனுமான இரணியன் தேவர் முதலிய யாவர்க்கும் கொடுமையியற்றித் தன்னையே கடவுளாக அனைவரும் வணங்கும்படி செய்துவருகையில், அவனது மகனான பிரகலாதாழ்வான், இளமைதொடங்கி மகாவிஷ்ணுபக்தனாய், தந்தையின்கட்டளைப்படி முதலில் அவன்பெயர்சொல்லிக்கல்விகற்காமல், நாராயணநாமஞ் சொல்லிவரவே,

கடுங்கோபங்கொண்ட இரணியன் பிரகலாதனைத் தன்வழிப்படுத்துதற்குப் பலவாறுமுயன்றபின்,அங்ஙனம்வழிப்படாதஅவனைக் கொல்லுதற்கு என்ன உபாயஞ்செய்தும் அவன் பகவானருளால் இறந்திலனாக, ஒருநாள் சாயங்காலத்தில் தந்தை மைந்தனை நோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்கு உளன்? காட்டு' என்ன, அப்பிள்ளை "சாணினுமுளன் ஓர்தன்மை யணுவினைச் சதகூறிட்ட, கோணினுமுளன் மாமேருக்குன்றினு முளன் இந்நின்ற, தூணினு முளன் நீசொன்ன சொல்லினு முளன்" என்றுசொல்ல, உடனே இரணியன் 'இங்கு உளனோ?'என்றுசொல்லி எதிரிலிருந்த தூணைப் புடைக்க, அதனினின்று திருமால் மனிதரூபமும் சிங்கவடிவமுங் கலந்த நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி இரணியனைப் பிடித்து வாயிற்படியில் தன் மடிமீது வைத்துக்கொண்டு தனதுதிருக்கைந்நகங்களால் அவன்மார்பைப் பிளந்து அழித்திட்டுப் பிரகலாதனுக்கு அருள்செய்தனன் என்பதாம். (உசு)

[மீண்டும் உடலொன்றிச் சராசந்தன் போர்தொடங்க, வீமன் அவனுடலை மீளவும்பிளத்தல்.]

உள. பிளந்தெறிபிளவுமீளவும்பொருந்திப்பிளிறுமாமதகரிநிகர்ப்பக்
கிளர்ந்துவெஞ்சமரந்தொடங்கலுந்தனதுகேதனக்கேசரியனையான்
வளர்ந்ததிண்புயத்தின்வலியினுன்முன்னைமல்லமரெழுமடங்காக
வுளைந்திடமலைந்துவீழுமாறுதைத்தானோரிரண்டானதாலுடலம்.

(இ - ள்.) பிளந்து எறி பிளவு - (இங்ஙனம் வீமனாற்) கிழித்து எறியப்பட்ட (சராசந்தனது) உடற்கூறுகள், மீளவும் பொருந்தி-மீண்டும் ஒன்று சேர்ந்து,பிளிறு மா மதகரி நிகர்ப்ப கிளர்ந்து-கர்ச்சிக்கின்ற பெரியமதயானை போல உற்சாகங்கொண்டு எழுந்து, வெம் சமரம் தொடங்கலும் - கொடிய போரைத் தொடங்குதலும்,—தனது கேதனம் கேசரி அனையான் - தனது கொடியில்வடிவுகாணப்படுகிற சிங்கத்தைப் போன்றவனான வீமசேனன்,— வளர்ந்த திண் புயத்தின் வலியினுல் - யுத்தாவேசத்தினாற் பூரித்தெழுந்த தனதுகைகளின் வலிமையைக்கொண்டு, முன்னை மல் அமர் எழு மடங்கு ஆக உளைந்திட மலைந்து - முன்புசெய்த மற்போரினும் எழுமடங்குமிகுதியாகச் (சராசந்தன்) தளர்ச்சியடையுமாறு (மற்போர்) பொருது, வீழும் ஆறு உதைத்தான் - அவன் தரையில் வீழ்ந்திடுமாறு காலினாலுதைத்தான்; உடலம் ஓர் இரண்டு ஆனது-(அவ்வுதையினால்)சராசந்தனுடம்பு (மீளவும்) இருபிளவாயிற்று; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

'பிளவு' என்ற தொழிற்பெயர், பிளக்கப்பட்ட கூறுகளுக்குத் தொழிலாகுபெயராம். மதகரி - வடமொழித்தொடராதலின், வருமொழிமுதல்வலி இயல்பு. கேதநம், கேஸரீ - வடசொற்கள். கேஸரம் - பிடரிமயிர்; அதனையுடையது கேஸரீ என ஆண்சிங்கத்திற்குக் காரணக்குறி. தனதுநிறத்துக்கு ஏற்ற கொடியுடையா னென்பார், 'தனதுகேதனக்கேசரியனையான்' என்றார். முன்னை, ஐ - சாரியை. உடலம், அம் - சாரியை.இங்குநிகழும் வெற்றி தோல்விகட்கு ஏற்ப,வீமனுக்குச் சிங்கத்தையும்,சராசந்தனுக்கு யானையையும் உவமைகூறினர். சிங்கம் யானையைப் பிளந்திடுமாறுபோல, வீமன் சராசந்தனைக் கிழித்தன னென்க. (உஎ)

[அவ்வுடற்பிளவுகளை மாறிடும்படி கண்ணன் குறிப்பிக்க, வீமன் அங்ஙனமே செய்தல்.]

உஅ. சிறியக் குரிசில் கிண்டபே ருடலைச் செங்கனிதாள் செவ்வைபி னிடாமன், மாறிபிட் டிடுகென் றுருயிர்த் துணையாய் வந்தமாமரகத வடிவோன்,கூறியிட் டிடாமற் குறிப்பினு லுரைப்பக் குறிப்பையக் குறிப்பினுற் குறித்து, வேறிடப் புலியின் மிசையிடறித் தனனுல் வீமன்வல் லபத்தையார் வியப்பார்.

(இ-ள்.) அ குரிசில் சீறி கீண்ட பேர் உடலை-பெருமையிற்சிறந்தவனான அவ்வீமசேனன் கோபித்துக்கிழித்தெறிந்த பெரியவுடற்பிளவுகளை, சென்னி தாள் செவ்வையின் இடாமல் மாறி இட்டிடுகெ என்று - தலையொடு தலையும் காலொடு காலுமாக நேரேஇடாமல் (தலையொடுகாலும் காலொடுதலையுமாக) மாறிப்போகட்டிடுவாயாக என்று, ஆர் உயிர் துணை ஆய் வந்த மா மரகத வடிவோன்-(பாண்டவர்க்கு)அருமையானபிராணசகாயனாய்உடன் வந்த சிறந்த மரகதமென்னும் பசுமையிரத்தினம்போன்ற திருமேனிநிறமுடையவனான கண்ணபிரான், கூறியிட்டிடாமல் குறிப்பினால் உரைப்ப - வாய்மொழியாற்கூறாமற் குறிப்பினாலுணர்த்த, (வீமசேனன்), குறிப்பை அ குறிப்பினால் குறித்து-அங்ஙனங்குறிப்பித்தவிஷயத்தை அக்கண்ணன்குறிப்பித்தவகையினால் உணர்ந்துகொண்டு, வேறு இட புவியின்மிசை எறிந்தனன் - (தலையும் காலும்) மாறுபட (அவ்வுடற்கூறுகளைப்) பூமியின்மேல் இட்டான்; வீமன் வல்லபத்தை யார் வியப்பார் - (உடல்வலிமைகொண்டுபொருததேயன்றிக் குறிப்புணர்ந்து இங்ஙனம்எற்றபடிசெய்த) வீமசேனனுடைய திறமையைக் கொண்டாடிக்கூறவல்லவரெவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ-று.)—ஆல் - ஈற்றசை; ஆதலால் என்பதன் விகாரமெனினுமாம்.

வீமனதுவல்லமை யாவராலும் வியந்துபேசமுடியாதபடி மிகவிஞ்சியுள்ள தென்பதாம். கண்ணன் ஒருகோரையை யெடுத்து வீமன்காண இருகூறாக்கிழித்து அவ்விருபாதியையும் அடிநுனிமாறி இட்டுக் குறிப்பிக்க, அக்கருத்தைஅச்செயலினால்வீமன்குறிப்பாகவுணர்ந்துசராசந்தனுடற்கூறுகளை அங்ஙனம் தலையும் காலும் மாறுபடும்படி இட, அவை முன்போல ஒருங்குகூடி எழமாட்டாதொழிந்தன வென்க. 'குறிப்பினாலுரைப்ப' என்றவிடத்து, பேசாதது பேசுவதுபோலச் சொல்லப்பட்டது; "நாற்றமுரைக்கு மலருண்மை" என்றாற்போல: வழுவமைதி; உரைப்ப=உணர்த்த. குரிசில்-ஆண்பாற்சிறப்புப்பெயர். பெருமை+உடல்=பேருடல்; அருமை+உயிர்=ஆருயிர்: "ஈறுபோதல்" என்னுஞ் சூத்திர விதி. செவ்வை - 'ஐ'விகுதிபெற்ற பண்புப்பெயர். இட்டிடுகெ+என்று=இட்டிடுகென்று: வியங்கோளின்ஈற்று அகரம், தொகுத்தல்விகாரப்பட்டது. இட்டிடுகெ என்பதில் 'இடு' என்பதும், கூறியிட்டிடாமல் என்பதில் 'இட்டிடு' என்பதும் - துணிவுணர்த்துந் துணைவினையாய் நின்றன. உயிர்த்துணை - உயிரோடொத்த துணைவன்: உயிரைப் பாதுகாக்குந்துணைவன். கருமை நீலம் பசுமை என்ற நிறங்களில் ஒன்றற்கு ஒன்றுஉள்ள சிறிதுவேறுபாட்டைப் பெரிதாகக்கருதாது அபேதமாகஉரைத்தல் கவிசமய மாதலால், கிருஷ்ணனை, 'மரகதவடிவோன்' என்றார்; "பசைமாமலைபோல்மேனி .. அச்சுதா" எனப் பெரியாரும் பணித்தார். (உஅ)

வேறு.

[சராசந்தனிறந்தமை கண்டு வியந்த அருச்சுனன் கண்ணனைநோக்கி ஒன்று சொல்லத்தொடங்குதல்.]

உகூ. சந்தச் சிகரச் சந்தணியுந் தடந்தோ ளாண்மைச் சராசந்தன், முந்தப் பொருத மல்லமரின் முரணோ டழிந்து முடிந்ததற்பின், இந்தப் புதுமை தனைவியவா வேத்தா விறைஞ்சா யதுகுலபா, மைந்தற் கென்றுவா சகமுரைத்தான் மணித்தார்ப் புயவாசவன்மைந்தன்.

(இ - ள்.) சந்தம் - அழகிய, சிகரம் - மலைச்சிகரம்போன்ற, சந்து அணியும் தட தோள் - சந்தனத்தேய்வைபூசிய பெரியதோள்களின், ஆண்மை - வலிமையையுடைய, சராசந்தன்—, முந்த பொருத மல் அமரில் - முற்பட்டுச்செய்த மற்போரில், முரணோடு அழிந்து முடிந்ததன் பின் - வலிமையும் தானும் அழிந்து ஒழிந்ததன்பின்பு,—மணி தார் புயம் வாசவன் மைந்தன் - அழகிய மாலையையணிந்த தோள்களையுடைய தேவேந்திரனதுகுமாரனான அருச்சுனன்,—இந்த புதுமைதனை வியவா - இந்தஅற்புதச்செயலைக்குறித்து

ஆச்சரியங்கொண்டு,எத்தா இறைஞ்சா-(கண்ணபிரானைத்) துதித்துவணங்கி, யதுகுலம் மா மைந்தற்கு ஒரு வாசகம் உரைப்பான் - யதுவென்னும்அரச னதுகுலத்தில் தோன்றிய சிறந்தகுமாரனை அக்கண்ணனைநோக்கி ஒரு வார்த்தை சொல்பவனானன்; (எ - று)—அதனை, அடுத்தகவியிற் காண்க.

'இந்தப்புதுமை' என்றது - சராசந்தனுடம்பு அடிமுதல்முடிவரையும் இருகூறாகப் பிளவுபட்டபின்பு மீளவும்பொருந்தி உயிர்பெற்றெழுந்ததும், பின்பு மாறிஇட்டவளவிலே பொருந்தாது மாய்ந்தமையுமாகிய அதிசயச செய்கையை. 'சந்தச்சிகரச்சந்தணியும்'என்பதற்கு - அழகியமலையில்தோன் றுகிற சந்தனத்தின்குழம்பை யணியு மென்றும், 'தடந்தோளாண்மை' என் பதற்கு - பெரியதோள்களையும் பௌருஷத்தையு முடைய வென்றும், 'சரா சந்தன் முரணேடுஅழிந்து முடிந்ததற்பின்' என்பதற்கு - மீளமீளப்பிழைத் தெழும்வலிமையும் அழிந்து சராசந்தன் இறந்ததன்பின்பு என்றும் உரைப் பாரு முளர். வியவா, எத்தா, இறைஞ்சா என்பன-உடன்பாட்டெச்சம். எத் தா, இறைஞ்சா என்பவற்றிற்கு 'கண்ணனை' என்ற செயப்படுபொருள் வரு விக்க. யதுகுலம்ஆம் மைந்தற்கு என்று பிரித்து, யதுகுலத்தில் தோன்றிய வீரனுக்கு என்று உரைத்தலும் ஒன்று. சிகரம், வாசகம், வாஸவன் - வட சொற்கள். வாஸவன் என்ற பெயர் - அஷ்டவசுக்களுக்குத்தலைவ னென்றும், ஐசுவரியமுடையவ னென்றும் பொருள்படும்;வசுஎன்றது-தேவர்களிலொரு பகுப்பினர்க்கும், செல்வத்திற்கும் பெயராம். 'முரணேடுஅழிந்து' என்பது- தலைகால்களை மாறிஇட்டமாறுபாட்டினால் அழிந்து என்றும் பொருள்படும்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடி லடி நான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (உக)

[அருச்சுனன் வினவ, கண்ணன்,சராசந்தன்வரலாறுகூறத்தொடங்குதல்.]

௩௦. இன்றாரமரினிவன்கையாலிறந்தோனுடலமொன்றியது
மொன்றாதிரண்டுபட்டதும்யாமுணரும்படிநீயுரைத்தருள்வாய்
குன்றாலன்றுமழைதடுத்தகொற்றக்கவிகைக்கோபாலா
வென்றானென்றபொழுதவனுமிறந்தோன்சரிதமினிதுரைப்பான்.

(இ - ள்.) 'அன்று-அந்நாளில் [முன்னொருகாலத்தி லென்றபடி], குன் றால்-கோவர்த்தனமென்னும் மலையைக்கொண்டு,மழை தடுத்த- மழையைத் தடுத்திட்ட, கொற்றம் கவிகை - கொற்றக்குடையையுடைய, கோபா லா - கோபாலனே!—ஆர் அமரின் - (செய்தற்கு) அரிய போரில், இன்று - இன்றைத்தினத்தில், இவன் கையால் இறந்தோன்-இவ்வீமசேனனுடைய கையினால் இறந்தவனான சராசந்தனது, உடலம் - உடம்பின் கூறுகள், ஒன் றியதும் -(முதலில்) ஒன்றுசேர்ந்துஉயிர்த்தெழுந்ததன் காரணத்தையும், ஒன்றாது இரண்டு பட்டதும்-(பின்பு)ஒன்றுபடாமல்(தனித்தனியே கிடந்து) அழிந்ததன்காரணத்தையும்,யாம் உணரும்படி நீ உரைத்தருள்வாய்-நாங்கள் அறியும்படி நீ சொல்லியருள்வாய்,' என்றான் - என்று (அருச்சுனன் கண் ணனை)வேண்டினான்: என்ற பொழுது-என்றுவேண்டியபொழுது, அவனும்- அக்கண்ணபிரானும், இறந்தோன் சரிதம் இனிது உரைப்பான் - இறந்திட் டவனான சராசந்தனுடைய வரலாற்றை நன்குவிளங்கச் சொல்பவனானான்; (எ - று.)—அதனை, அடுத்த ஆறுகவிகளிற் காண்க.

'யாம்' என்ற தன்மைப்பன்மை - வீமனை உளப்படுத்தியது; மேல் ௩௰- ஆம் செய்யுளில், "அதுகேட்டுளமகிழ்ந்தார் சரர்கோமகனும் தம்பியனு மே" என்பதும் காண்க. இதனாலும், 'இவன்' என்று அண்மைச்சுட்டினாற் குறித்ததனாலும், சராசந்தனை முடித்தபின்பு வீமன் இந்திரப்பிரஸ்தநகரஞ் சார்ந்திருந்தனனென்று அறிக. அன்று-முன்னொருகாலத்தி லென்றபடி. "கோவர்த்

கல்மழையும் கொற்றக்குடையே" என்றபடி, இந்திரன்பெய்வித்த "மழை யைத் தடுத்தற்பொருட்டே கண்ணன் குடையாகவெடுத்துப்பிடித்த கோவர்த் தனமென்னும்மலை அம்மழையைச் சிறிதும்கீழ்விழவொட்டாதபடி முற்றும் தடுத்து மேகங்களின் முயற்சியைப் பழுதுபடுத்தி இந்திரனையும்வெல்லுதற் குக் காரணமானதும்; அப்பொழுது கண்ணன் பசுக்களைச் சிறிதும்வருந்தா தபடி குறிக்கொண்டு பாதுகாத்ததுபற்றி இந்திரனால் 'கோவிந்தன்' என்ற திருநாமஞ்சூட்டிப் பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்றுக்கோலோகத்துக்கோக் களுக்கு அதிபதியாகிக் கோபாலனாய் விளங்கியதும், அக்கோவிந்தபட்டா பிஷேகத்திற்குஏற்ற கொற்றக்குடையையுடைமையுந் தோன்ற, 'குன்றால ன்று மழைதடுத்த கொற்றக்கவிகைக் கோபாலா' என்றுவிளித்தான். கொ ற்றக்கவிகை - வெற்றியைத்தருகிற குடை: வெற்றிக்கு அடையாளமான குடை யெனினுமாம். கொற்றம் - (பகைவரைக்) கொன்றுஅடைவது என வெற்றிக்குக் காரணக்குறி; கொல் - பகுதி, அம்-பெயர்விகுதி,து-சாரியை, மற்றவை - சந்தி.கவிகை-கவிந்திருப்பதான குடைக்குத் தொழிலாகுபெயர்; இதில், கை - தொழிற்பெயர்விகுதி. கோபாலன், சரிதம் - வடசொற்கள். கோபாலன் - பசுக்களைக் காப்பவன்; கோ - பசு. 'அவனும்' என்ற உம்மை- கதைத்தொடர்ச்சிபற்றியது; இறந்ததுதழுவியஎச்சத்தின்பாற்படும்.

குன்றால்மழைதடுத்தகதை:—திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாரும் கூடி மழையின்பொருட்டாக இந்திரனை ஆராதித்தற்கென்று வழக்கப்படி சமைத்த சோற்றைக் கண்ணபிரான் ஒருகால் அவனுக்கு இடாதபடி விலக் கிக்கோவர்த்தனமலைக்கு இடச்சொல்லித் தானே ஒருதேவதாரூபங்கொண்டு அமுதுசெய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பலமேகங்களை யேவி, கண்ணன்விரும்பிமேய்க்கிற கன்றுகட்கும் பசுக்கட் கும் கண்ணனுக்குஇஷ்டரான இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்குதரும் படி கல்மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தனமென்னும் மலையையெடுத்துக் குடையாகப்பிடித்துமழையைத் தடுத்து எல்லாவுயிர்களையும் இடையூறுசிறிது மின்றிக் காத்தருளின னென்பதாம். (௩௰)

[இதுமுதல் ஆறுகவிகள்-கண்ணன் சராசந்தனது வரலாற்றைக் கூறுதல்.]

௩௧. வானோர்பகைவர்களிலொருவன்மகதகுலத்துமாரதப்பே
ரானோன்வயிற்றிலவதரித்தானவன்காணிந்தவடல்வேந்தன்
மீனோதஞ்சூழ்மேதினியின்வேந்தர்குலத்தைவேரோடுந்
தானோராழிதனிநடத்தித்தடிந்தானணிந்தசமர்தோறும்.

(இ - ள்.) வானோர் பகைவர்களில் ஒருவன்-தேவர்கட்கு ஜன்மசத்ருக் களான அசுரர்களில் ஒருத்தன், மகதகுலத்து மாரதன்பேர்ஆனோன் வயிற் றில் அவதரித்தான் - மகததேசத்து அரசர்குலத்தில் தோன்றிய பிருகத்ரத னென்னும் பெயருள்ள அரசனது வயிற்றினின்று பிறந்தான்; அவன் காண் இந்த அடல் வேந்தன்-அவனே வலிமையையுடைய இச்சராசந்தன்;(இவன்), மீன உததி சூழ் மேதினியின் - மீன்களையுடைய கடலினாற் சூழப்பட்ட பூலோகத்தில், தான் ஓர் ஆழி தனி நடத்தி - தான் (தனது) ஒப்பற்ற ஆஜ் ஞாசக்கரத்தைப் பொதுவறநடத்தி, அணிந்த சமர்தோறும்-அணிவகுத்துச் செய்த போர்களிலெல்லாம், வேந்தர் குலத்தை வேரோடும் தடிந்தான் - ராஜவம்சத்தை வேரோடு துணித்திட்டான்; (எ - று.)

சந்திரகுலத்துப்பூருவம்சத்தில் குருவென்னும் அரசனது புத்திரர் மூவ ரில் சுதநுவென்பவனது மரபில் தோன்றிய உபரிசரவசுவின் குமாரன் இந்த ப்ருகத்ரதன் என்று அறிக. இச்சத்தியரசர்கள் மகததேசத்தை யாண்டு மாகதரென்றுபெயர்பெற்றதனால், இவர்கள்மரபு 'மகதகுலம்' எனப்

பட்டது. அசுரர்கட்கு 'தேவசத்ருக்கள்'என்று ஒருபெயர் உள்ளதனால், அவர்களை 'வானோர்பகைவர்கள்'என்றார். 'ப்ருகத்ரதன்'என்றபெயரின்பரியாயநாமமாக, 'மாரதன்'எனப்பட்டது; ப்ருஹத்ரதன், மஹாரதன் என்ற வடமொழிப்பெயர்களிரண்டும்-பெருந்தேருடையவனென்றுஒருபொருள்படுதல் காண்க. சராசந்தன் அசுராம்சமாய்ப்பிறந்தவனென்பது, முதல்வாக்கியத்தின்கருத்து. இனி, முதல்வாக்கியத்திற்கு - தேவர்கட்குப் பகையரசர்களாயினோர்களில் மகதகுலத்து ப்ருகத்ரதனென்னும்அரசனிடத்துஒருகுமாரனுதித்தா னென்று பொருளுரைப்பாருமுளர். கருப்பம் கணவன்வயிற்றில் இரண்டுமாதம்தங்கிப் பின்பு மனைவியின்வயிற்றிற்சேர்கிற தென்னும் நூல்வழக்குப்பற்றியும், ஒருவனதுமனைவியின்வயிற்றில் தோன்றியவரை அவனதுவயிற்றில்தோன்றியவ ரென்னும் உலகவழக்குப்பற்றியும், பிருகத்ரதனுடையமனைவியரிருவர்வயிற்றினின்றுபிறந்தவனை 'மாரதப்பேரானென்வயிற்றிலவதரித்தான்'என்றார்: கீழ்வாரணாவதச்சருக்கத்தில் வீமசேனனை "பெற்றம்பெற்றவன்"என்றதும், "தக்கனணிவயிற்றுதித்தா ரைம்பதின்மர்"என்ற கம்பராமாயணமுங் காண்க; இது - ஒருவகைஉபசாரவழக்கு. பகைவர் - பகைமையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர்; வ் - பெயரிடைநிலை. மகதகுலம் - வடமொழித்தொடர். மாரதன் + பேர் = மாரதப்பேர்: "இலவிகாரமா முயர்திணை." 'வயிற்றில்' என்றவிடத்து 'இல்'என்பதை நீக்கப்பொருளில்வந்த ஐந்தனுருபாகக் கொள்க. காண் - தேற்றம்.

மீனோததீ - வடமொழித்தொடர்: மீந+உததீ; குணசந்தி. உததீ - நீர்தங்குமிடம்; உதம்=உதகம் - ஜலம். மேதிநீ - வடசொல்; பூர்வத்தில் திருமாலினாற் கால்கொண்டு துகைத்துக்கொல்லப்பட்ட மதுகைடப ரென்னும் அசுரர்களது மேதசினால் நனைந்தமைபற்றி, பூமிக்கு 'மேதிநீ' என்று பெயராயிற்று; மேதஸ் - உடற்கொழுப்பு. 'மேதினியின்' என்பதை 'வேந்தர்குலத்தை' என்பதனோடும், 'ஆழிநடத்தி' என்பதனோடும் கூட்டுக. 'வேரோடும்' என்றது - புத்திரபௌத்திராதி சந்ததியோடு மென்றபடி. ஆஜ்ஞையைச் சக்கரமென்றல், கவிமரபு. ஓராழி - ஏகசக்கரம். ஓராழி தனிநடத்துபவன், ஏகசக்கராதிபதி யெனப்படுவன். (௩௧)

௩௨. எண்ணற்கரியமுடிவேந்தரெண்ணாயிரவர்பசுவாக
மண்ணித்தனையுந்தன்குடைக்கீழ்வைக்கும்படிமாமகம்புரிவான்
கண்ணிச்சிறையினிடைவைத்தான்கண்ணாயிரத்தோன்முதலாக
விண்ணிற்பயிலுந்தேவர்களுமிவன்பேர்சொல்லவெருவுவரால்.

(இ-ள்.) (இச்சராசந்தன்),மண் இத்தனையும் தன் குடைக்கீழ் வைக்கும்படி - பூலோகம்முழுவதையும் தனதுஅரசாட்சியின்கீழ்வைத்து நடத்தும்படி, எண்ணற்கு அரிய முடி வேந்தர் எண்ஆயிரவர் பசு ஆக மா மகம் புரிவான் கண்ணி - மதித்தற்குஅருமையான கிரீடத்தைத் தரித்த அரசர்கள் எண்ணாயிரம்பேரே யாகபசுக்களாக (அவர்களைக்கொன்று) பெரிய நரமேதயாகஞ் செய்யக்கருதி, சிறையினிடை வைத்தான்- (மிகப்பல அரசர்களைப் போரில்வென்று உயிரோடுபிடித்துத் தனது) சிறைச்சாலையில் (அடைத்து) வைத்திட்டான்; கண் ஆயிரத்தோன் முதல் ஆக விண்ணில் பயிலும் தேவர்களும் - (உடம்புமுழுவதுமாக) ஆயிரங்கண்களைப் பெற்றுள்ளவனான இந்திரன் முதலாக மேலுலகிற்சஞ்சரிக்குந் தேவர்களும், இவன் பேர் சொல்ல வெருவுவர் - இச்சராசந்தனுடைய பெயரைச் சொல்ல அஞ்சுவார்கள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இவன்பெயரைத் தம்வாயினாற்சொல்லுதற்கும் அஞ்சுவார்கள் எனவே, இவனை எதிர்த்துநின்றுபோர்செய்தற்கு அஞ்சுவார்க ளென்பது கூறாமலே அமையும், சொல்லஎன்றவிடத்து, இழிவுசிறப்புஉம்மை விகாரத்தால்

தொக்கது. இவன்பெயரைப் பிறர்சொல்லத் தாம் அதுகேட்டவளவிலே அஞ்சவார்க ளென்றுங் கருத்துக்கொள்ளலாம். புத்திசக்திகளிற் சிறந்தவர்களாய் மேலுலகத்திலுள்ள தேவர்களும் தம்அரசனுட்பட இங்ஙனம் அஞ்சுவார்க ளெனவே, அவ்வறிவாற்றல்களிற்குறைபாடுடையரான இந்நிலவுலகத்துமனிதர்களும் அரசர்களும் இவன்பக்கல் மிகஅஞ்சுதல் சொல்லவேண்டாதாயிற்று. தேவர்களும், உம் - உயர்வுசிறப்பு. மண்இத்தனையும் - பூலோகமென்றுள்ளது எவ்வளவோ அவ்வளவையு மென்றபடி; உம்மை - முற்றுப்பொருளது. ஆளுகையைக் குடை யென்றல், கவிசமயம். 'தன்குடைக்கீழ் வைகும்படி' என்ற பாடத்திற்கு-நிலவுலகம்முழுவதும் தனதுஅரசாட்சியின் கீழ்த் தங்கும்படி யென்பது பொருள். 'புரிவான்' என்பதை, 'வான்' விகுதி பெற்ற எதிர்காலவினையெச்சமென்றுவது, அவ்விகுதிபெற்ற தொழிற்பெயரின் இரண்டாம்வேற்றுமைத்தொகையென்றுவது கொள்க. புரிவான் கண்ணி - புரியக்கண்ணி: அல்லது, புரிதலைக்கண்ணி. கண்ணி, கண்-பகுதி: இது - வடமொழிவினையடி. 'எண்ணற்கு அரிய' என்பது - முடிக்கு அடைமொழி; எண்ணித்தொகையிடுதற்குஇயலாத என்றுஉரைத்து, வேந்தர்க்கு அடைமொழியாக்குதல், பொருந்தாது; மேல் 'எண்ணுயிரவர்' என்ற தொகைப்பெயர் வருதலால். (௩௨)

௩௩. இவனைப்பயந்தோன்மகவொன்றுமின்றிச்சண்டகௌசிகப்பேர்த்
தவனைப்பணிந்துவரம்வேண்டத்தவனுந்தான்வாழ்தடஞ்சூதத்
தவனிக்கரியதீங்கனியொன்றளித்தானளித்தவக்கனியை
நவநித்திலவாணகையிருவரில்வாழ்பவர்க்குநல்கினனால்.

(இ - ள்.) இவனை பயந்தோன் - இச்சராசந்தனைப் பெற்ற தந்தையான பிருகத்ரதன், மகவு ஒன்றும் இன்றி - (ஆதியில்) ஒருபிள்ளையு மில்லாமையால், சண்டகௌசிகன் பேர் தவனை பணிந்து வரம் வேண்ட-சண்டகௌசிகனென்னும் பெயரையுடைய முனிவனை நமஸ்கரித்து(ப் புத்திரபாக்கியத்தைக்குறித்து) வரங்கேட்க,—தவனும் - அம்முனிவனும், தான் வாழ் தட சூதத்து அவனிக்கு அரிய தீம் கனி ஒன்று அளித்தான் - தான்வசித்தற்கு இடமான பெரியமாமரத்தினின்று (தன்மடியில்) விழுந்ததும் மண்ணுலகிற் கிடைத்தற்கரியதுமான இனியஒருபழத்தை (அந்தப் பிருகத்ரதமகாராசனுக்கு)க் கொடுத்தான்; அளித்த அ கனியை - (அம்முனிவனால்)கொடுத்தருளப்பட்ட அந்தமாம்பழத்தை,(அவ்வரசன்), நவம் நித்திலம் வாள் நகை இருவர் இல் வாழ்பவர்க்கும் நல்கினன் - புதியமுத்துப்போன்ற ஒளியுள்ள பற்களையுடைய தன்மனைவியரிருவர்க்கும் (உரியதாகக்) கொடுத்தான்; (எ-று.)

மகவு - இளமைப்பெயர். தவன் - தவமுடையவன். 'தவன்' என்ற சொல் இரண்டனுள், பின்னது - சுட்டுமாத்திரையாய் நின்றது. தான் வாழ் சூதம் - தான் எந்தமாமரத்தினடியில்வீற்றிருந்தனனோ அந்தமாமரம் என்றபடி. தீம்+கனி=தீங்கனி; தீம்-இனிமை. கொடியகனியென்றபொருளில், 'தீக்கனி' என்று வரும்; அப்பொழுது, தீமை+கனி என்றுபிரிக்க. தீஞ்சொல் தீச்சொல், தீந்தேன் தீத்தேன், தீம்பால் தீப்பால் என்பவற்றையும் இங்ஙனமே கொள்க. தீம்என்பதனடியாப்பிறந்த பெயரெச்சம்,-'தீவிய'என்றும், 'தீமை'என்பதனடியாப்பிறந்த பெயரெச்சம்-'தீய'என்றும் நிற்கிற வேறுபாடும் காண்க. சூதம், நவம் - வடசொற்கள். மகப்பேறளிக்குஞ்சிறப்பும் சுவைமிகுதியுந் தோன்ற 'அவனிக்குஅரிய தீங்கனி' எனப்பட்டது. 'அவனிக்கு' என்பதில் நான்கனுருபு ஏழனுருபின்பொருளில் வந்தது, உருபுமயக்கம். வெள்ளொளியிலும்,அழகியவடிவிலும்,முத்து-பற்களுக்குஉவமை. நாட்பட்ட பழைய முத்து வெள்ளொளிமழுங்கிப் பழுப்புபடைந்திருக்குமாகலின் அவை இப்பற்களுக்கு உவமையாகாவென்பது தோன்ற, 'நவநித்திலவாணகை'என்

ருர். இல்வாழ்பவர்-வீட்டிலிருந்துகொண்டு சம்சாரகாரியங்களைப் பார்ப்பவர்; கணவன் கிருகஸ்தாச்சிரமதருமத்தை நடத்துதற்குத் துணையாயிருப்பவர். பிருகத்ரதன் காசிராசனது இரட்டைப்பெண்களை மணஞ்செய்து கொண்டபொழுது அவ்விருவரிடத்தும் தான் சிறிதும் பக்ஷபாதமின்றிச் சமமாக நடப்பதாய் வாக்குதத்தஞ்செய்திருந்தன னாதலால், அவ்வுறுதிமொழி தவறாமல் தனக்குவரமாக்கிடைத்த ஒருகனியை இருவர்க்குமாகக் கொடுத்தனனென்க. ஆல் - ஈற்றசை. (கங)

கச. காசித்தலைவன்கன்னியர்தங்கண்போல்வடுமுற்றியகனியை
யாசிற்பிளந்துதங்கொழுநனருளாலமுதொத் தினிதருந்த
மாசற்றிலங்குமகவிருவர் வயிறும்பகிர்ந்துவளர்ந்ததற்பின்
பாசத்துடனேயோரொருவர் பயந்தார்வடிவிற்பப்பாதி.

(இ-ள்.) காசி தலைவன் கன்னியர்-காசிராசனதுபெண்களான அம்மாதரிருவரும், தம் கண்போல் வடு முற்றிய கனியை - தங்கள்கண்கள்போன்ற இளமாம்பிஞ்சுமுதிர்ந்ததான அந்தப்பழத்தை, தம் கொழுநன் அருளால் ஆசின் பிளந்து அமுது ஒத்து இனிது அருந்த-தங்கள்கணவனது கட்டளையின்படி விரைவாக (இருகூறாகப்)பிளந்து தேவாமிருதத்தை(உண்பது)போன்று இனிமையாகப் புசித்தனராக,—மாசு அற்று இலங்கும் மகவு - குற்றமின்றிவிளங்கும் ஒருகுழந்தை, இருவர்வயிறும் பகிர்ந்து வளர்ந்ததன் பின் - அவ்விரண்டுமாதர்களுடைய கருப்பத்திலும் பாதிபாதியாய் நன்குவளர்ந்தன்பின்பு,— பாசத்துடனே - அன்போடு, ஓரொருவர் - அவர்களில் ஒவ்வொருவரும், வடிவில் பப்பாதி பயந்தார் - (ஒருபுதல்வனுடைய)வடிவத்தின் பாதிபாதி அங்கத்தை ஈன்றனர்; (எ - று.)

கண்போல் வடுமுற்றிய கனி - கண்ணைப்போல வடுவாயிருந்து பின்பு முற்றிப்பழுத்த மாங்கனி: மாம்பிஞ்சின் உட்பிளவு - மகளிர்கண்ணுக்கு, வடிவில் உவமை; "வடுப்பிளவனைய கண்ணாள்" என்றார் சீவகசிந்தாமணியிலும். ஆசு - வடசொல்; இன்-சாரியை. அமுது - அம்ருதம் என்ற வடசொல்லின் விகாரம்; மாசுஅற்று இலங்கும் மகவு - ஊமை முடம் குருடு செவிடு முதலிய உடற்குறையில்லாத குழந்தை யென்றபடி. வயின் - வயிறு. வளர்ந்ததற்பின்-கருமுதிர்ந்தபின்பு. கர்ப்போற்பத்திக்குமூலமான மாம்பழத்தை இருகூறாகப்பகிர்ந்து ஒவ்வொருவர் ஒவ்வொருபாதியை உண்டன ராதலால், அக்காரணத்திற்குஏற்பக் காரியமும் பரிணமிக்க, ஒருகுழந்தையின் வலப்பாதி ஒருத்தியின்கருப்பத்தினின்றும் அதன்இடப்பாதி மற்றொருத்தியின் கருப்பத்தினின்றுமாக வெளிவந்தன வென்க. பிரசவிக்கிறகாலத்தில் தாயர்க்கு மகவைக்கண்டுகளிக்கும்ஆதரம் உண்டாகின்ற இயற்கைபற்றி, 'பாசத்துடனே பயந்தார்' என்றார். பாதி+பாதி=பப்பாதி: மரூஉமுடிபு; நன்னூலில் "ஒன்பதொழித்த வெண்ணெண்பது மிரட்டின்" என்ற சூத்திரத்து 'நெறி' என்ற மிகையினால் இப்புணர்ச்சியை அமைத்துக்கொள்ளுதலும் ஒன்று. 'வடுப்போலுங்கண்' என்று பிரசித்தமாக உவமைசொல்லும்மரபுக்கு மாறாக 'கண்போல்வடு'என்று உபமானஉபமேயங்களை மாற்றிச்சொன்னது, எதிர்நிலையணி. கன்னி - கந்யாஎன்றவடசொல்லின் விகாரம்; இளம்பெண் என்று பொருள். பாசம் - வடசொல். கயிறு; அதுபோலப் பந்தப்படுத்துதலால், இலக்கணையாக, அன்புக்கு வழங்கும். ஆசின் பிளந்து - அதன்பயன் பழுதுபடுமாறு பிளந்து எனினும் அமையும்; ஆசு - குற்றம். (கச)

கரு. ஒருவனிருவருதரத்துமுடனுற்பவித்தவுற்பாதம்
வெருவியடக்குதலைவேந்தன் வியனாநகரின்புறக்கிடப்
புரிசைவாயிற்கண்டெடுத்தப்புசிப்பாளெடுத்துப்பொருந்தினளாற்
றருமமுணராமனத்தியொருத்திசைவாபரக்கசரையென்பாள்.

(இ - ள்.) ஒருவன் இருவர் உதரத்தும் உடன் உற்பவித்த உற்பாதம் வெருவி - ஒருபுதல்வனே (பாதிபாதியாய்) இரண்டுமனைவியர்வயிற்றினின்றும் ஒரேசமயத்திற்பிறந்ததை ஓர்உற்பாதமாகக்கருதி அந்தத்தீக்குறிக்கு அஞ்சி, மகதகுல வேந்தன் வியல் மா நகரின் புறத்து எறிய - மகதகுலத்து அரசனான அப்பிருகத்ரதன்(அவ்வுடற்கூறுகளை) விசாலமான சிறந்த தனது கிரிவிரசநகரத்தின் வாயிற்புறத்திலே எறிவித்துவிட, புரிசை வாயில் - அம் மதில்வாயிற்புறத்திலே, அவற்றை - அவ்வுடற்கூறுகளை, கண்டு - பார்த்து, புசிப்பாள் - உண்ணவந்தவளான, தருமம் உணரா மனத்தி சரை என்பாள் ஒரு நசை வாய் அரக்கி - தருமமென்பதுஇன்னதென்று அறிதலுமில்லாத கொடுமனத்தையுடையவளும் ஜரையென்னும் பெயருள்ளவளும் புலாலுண்ணும்வாயுடையவளுமான ஒரு ராக்ஷசி, எடுத்து பொருத்தினள் - (அவ்வுடற்பாதிகளை) எடுத்துப் பொருத்திப்பார்த்தாள்; (எ-று.)—ஆல் - ஈற்றசை: செய்யுளினிறுதியில் நிற்பதேயன்றிச் செய்யுளடியின் இறுதியில் நிற்பதும் பயனிலையினிறுதியில்நிற்பதுமான இடைச்சொல்லும் பொருள்தாராதாயின் ஈற்றசையெனவேபடும்.

உதரம், உத்பாதம், தர்மம், ஜரா - வடசொற்கள். அரக்கி-ரக்ஷஸ்என்ற வடசொல்லின் விகாரமான அரக்கன்என்பதன் பெண்பால். உற்பாதம்-பின்வருந்தீமைக்கு அறிகுறியாக முன்புதோன்றும் துர்நிமித்தம். நசை=நசை: எழுத்துநிலைமாறுதல், இலக்கணப்போலி. வியல்-உரிச்சொல்; "வியலென் கிளவி அகலப்பொருட்டே" என்பது, தொல்காப்பியத்து உரிச்சொல்லியற் சூத்திரம். எறிய=எறிவிக்க; ஏவுதற்கருத்தாவின் வினை. தவப்பெருமையையுடையமுனிவ னருளிய மாங்கனியைப் புசித்ததனால் இருமனைவியரும் கருப்பமாயினராதலின் இருகுழந்தைகள் பிறக்குமென்று மகிழ்ச்சிகொண்டிருந்த பிருகத்ரதன் அவ்விருவரும் பிரசவித்தவுடனே மகவின் முகங்காணுமாசையாற் சென்றுபார்க்கும்போது ஒருமகவே இருபாதியாய்ப் பிறந்திருக்கக்கண்டு துன்பங்கொண்டு இது ஏதோ உற்பாதமாயிருக்கிறதென்று அஞ்சி அவ்வுடற்பாதியிரண்டையும் ஊர்ப்புறத்தே எறிந்துவிடும்படி கட்டளையிட, அங்ஙனமே தாதியர் அவற்றையெடுத்துக்கொண்டுபோய் அந்நகர் மதில்வாயிலின்புறத்தே எறிந்துவிட்டனர். தசையுண்ணுமியல்புடைய அரக்கியான ஜராதேவி அந்நகரின் அதிதேவதையான தனது வழக்கத்தின்படி இரவில் ஊர்வலம்வருகையில் அம்மாநுடமகவின் இருகூறுகளையும் கண்டு புசிக்கும்படிஎடுக்கையில் ஒவ்வொன்றும் சரிபாதியாயிருக்கிற அதிசயத்தை நோக்கி ஊழ்வினை தூண்ட அவ்விருபாதியையும் நேருக்குநேராகவைத்துப் பொருத்திப்பார்த்தனள். அப்போது அவ்விருபாதியும் ஒன்றி ஒருவடிவாய் அமைந்து உயிர்பெற்றது என விவரங் காண்க. 'அவற்றை' என்பது-கண்டு, புசிப்பாள், எடுத்து, பொருத்தினள் என்ற அனைத்துக்கும் செயப்படுபொருளாம். ஊனைத்தின்று ஊனைப்பெருக்கும் ஒருபாவி என்பார், 'தருமமுணரா மனத்தி யொருநசைவாயரக்கி' என்றார். தருமமென்று ஒன்று உள்ளதென்றுஅறியாதவளெனவே, அவ்வறத்தை யநுட்டித்தறியாதவளென்பது சொல்லவேண்டாதாயிற்று. பொருத்தினள், பொருந்து என்பதன் பிறவினையான பொருத்து - பகுதி. (௮௯)

௯௰. தன்னாலொன்றுபடுதலுமத்தனயன் றன்னைச்சராசந்த
னென்னுவழைத்தியெனமகதத்திறைவற்களித்தங்கேகினளா
முதலப்பெயர்படைத்தனதனுவிவ்வாறுனதென்னச்
சொன்னனதுகேட்டுளமகிழ்ந்தார்சுரர்கோமகனுந்துணைவருமே.

(இ - ள்.) (அந்த ஜராதேவி), தன்னால் ஒன்று படுதலும் - (அவ்வுடற்பாதியிரண்டும்) தன்னாலே சந்தித்து ஒருவடிவாகவே, அதனையன்றன்னை-

அந்தப்புதல்வனை, மகதத்து இறைவற்கு அளித்து - மகததேசாதிபதியான பிருகத்ரதனுக்குக் கொடுத்து, சராசந்தன் என்று அழைத்தி என - '(இக்குழந்தையை) ஜராஸந்தனென்று பெயரிட்டு அழைக்கக்கடவாய்' என்று சொல்லி, அங்கு ஏகினள் - அவ்விடத்தினின்று சென்றாள்; அ நாள் முதல் அ பெயர் படைத்தான் - அன்றுமுதலாக (அப்புதல்வன்) ஜராஸந்தனென்னும்பெயரைப் பெற்றான்; அதனால் - இவனது உற்பத்திவரலாறு இங்ஙனமாதலால், இ ஆறு ஆனது - இப்படியாயிற்று, என - என்று, சொன்னான்-(கண்ணன்) கூறினான்; அது கேட்டு - அவ்வரலாற்றைக் கேட்டு, சுரர் கோமகனும் துணைவனும் - தேவராசனான இந்திரனது குமாரனாகிய அருச்சுனனும் அவனதுஉடன்பிறந்தவனான வீமனும், உளம் மகிழ்ந்தார்-(அதிசயித்து) மனம்மகிழ்ந்தார்கள்; (எ - று.)—ஏ, ஆல் - ஈற்றசைகள்.

அருளறங்களைநோக்காது புலாலுண்ணுமியல்பினால் அவ்வுடற்பிளவுகளைப் புசித்தற்குஎடுத்த ஜராதேவி அப்பிளவுகளைத் தன்கையாற்பொருத்தியவுடனே ஒன்றிஉயிர்த்தெழுந்தஅக்குழந்தையைக் கொன்றுதின்னமனங்கொள்ளாது கருணைகூர்ந்து அம்மகவை மகவில்லாக்குறையால்மனம்வருந்துகிற அந்நகரத்தரசனிடங் கொண்டுபோய்க்கொடுத்து நிகழ்ந்தவரலாற்றைக் கூற, அவன் அக்குழவியை மகிழ்ச்சியோடுஏற்று அன்புடன்வளர்த்திட்டனனென்க. ஜராஸந்தன் - வடமொழிப்பெயர்; ஜரையென்பவளாற் பொருத்தப்பட்டவன். தநயன் - வடசொல். படுதலும் - 'உம்' ஈற்று இறந்தகாலவினையெச்சம்; து, அல் - சாரியைகள். அழைத்தி - ஏவலொருமைமுற்று; இ - விகுதி: த் - எழுத்துப்பேறு; து - சாரியை, உகரங்கெட்டதெனினும் அமையும். 'அதனால் இவ்வாறுஆனது' என்றதன் தாற்பரியம் - முன் இருபாதியாயிருந்தவை ஒன்றாகத் தெய்விகமாய் நேருக்குநேராகவைத்துப் பொருத்தப்பட்ட உடம்பாதலாற் போரிலும் பிரிந்து நேருக்குநேராயிருந்தவளவிற் பொருந்திற்று என்றும், தலைகால்மாறிஇடவே பொருந்திப்பயன்படுதற்கு வகையின்றிப் பொருந்தாது இறந்தது என்றுங் காண்க. உளம் - அகத்துஉறுப்பு: அந்தக்கரணம். துணைவன், வ் - பெயரிடைநிலை. (௩௯)

[கண்ணன்முதலிய மூவரும் இந்திரப்பிரத்தநகரத்திற்கு மீளுதல்.]

௯௭. வினைமுற்றியபின்மூவருநல்வினையேபுரிவோர்மன்னவரை,
யினைதற்சிறைவிட்டிகன்மல்லா லிறந்தோன்மகனை யெழின்மகுடம்,
புனைவித்தந்நகரீசன் பொற்றாள்வணங்கவவனேறுந், துணைபொற்ற
டந்தேரூர்ந்தறத்தின்சுதன்வந்தெதிர்கொண்டிடமீண்டார்.

(இ - ள்.) வினை முற்றிய பின் - (இவ்வாறு) போர்த்தொழில் முடிந்தபின்பு, மூவரும் - (கண்ணன் வீமன் அருச்சுனன் என்ற) மூன்றுபேரும், நல் வினையே புரிவோர் - தருமகாரியங்களையே செய்பவர்களாய், மன்னவரை இனைதல் சிறை விட்டு - (சராசந்தனாற்சிறைவைக்கப்பட்ட) அரசர்களை வருந்துதற்கிடமான சிறைச்சாலையினின்று விடுத்து, இகல் மல்லால் இறந்தோன் மகனை எழில் மகுடம் புனைவித்து-வலியமற்போரினால் இறந்தவனான சராசந்தனது புத்திரனாகிய சகதேவனை அழகியமுடி சூட்டுவித்து, அந்நகரீசன் பொன் தாள் வணங்க - அக்கிரிவிரசநகரத்திற்குஅரசனாய்அமைந்த அச்சகதேவன் (திறையுடன்வந்து) அழகிய (தங்கள்) பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்க(ப் பெற்று),அவன் ஏறும் துணை பொன் தட தேர் ஊர்ந்து - அச்சராசந்தன்ஏறிவந்த விரைந்துசெல்லும் பொன்மயமான பெரிய தேரில் தாங்கள் ஏறி அதனைச்செலுத்திக்கொண்டு, அறத்தின் சுதன் வந்து எதிர்கொண்டிட மீண்டார் -(தாங்கள்வெற்றியோடுவருதலைக் கேள்வியுற்ற)தருமபுத்திரன் (மகிழ்ச்சியினால்) வந்து எதிர்கொள்ள மீண்டு இந்திரப்பிரத்தநகரஞ் சேர்ந்தார்கள்; (எ - று.)

கண்ணபிரான் வீமார்ச்சுனரைத் தேரிலேற்றித் தான் தேரூர்ந்தனனென்று முதனூல் கூறும். அச்சராசந்தனது தேரின்சிறப்பும் முதனூலிற் பரக்கக் கூறப்பட்டுள்ளது; அது, இந்திரனிடமிருந்து பிருகத்ரதனது தந்தையான உபரிசரவசு பெற்றது. உருத்திரமூர்த்திக்குப்பலியிடுமாறு சிறைவைக்கப்பட்ட அரசர்களை அப்பிராணாபாயத்தினின்றுநீக்கிச் சிறைவிடுவித்தலும், வம்சபரம்பரையாக ஒருநகரத்தைஅரசாண்டுவருகிற ஓரரசன் கொடியவனாயிருப்பது கருதி அவனைக்கொன்றாலும் அவ்வரசாட்சியைச் சாதுவான அவன் மகனுக்கு அளித்தலும் பெரும்புண்ணியமாதலால், 'நல்வினையே புரிவோர் மன்னவரை யினைதற்சிறைவிட்டு இகல்மல்லாலிறந்தோன்மகனை எழில்மகுடம்புனைவித்து' என்றார். கீழ் ௨௨ ஆம் கவியிற் கூறியபடி சராசந்தன் தன் மகனுக்கு இராச்சியபட்டாபிஷேகஞ்செய்வித்திருக்கவும்,மீண்டும் இவர்கள் அவனுக்கு முடிசூட்டுதல் எற்றுக்கு எனின், — அரசர்களின் இராச்சியம் முதலியசெல்வம்யாவும் அவர்களைவென்றவர்க்கு உரியனவாய்விடுகிற முறைமைப்படி சராசந்தனைக்கொன்ற தமக்கு உரியனவாய்விட்ட அவனது அரசாட்சியை மீண்டும் அவன்மகனுக்கே தாம் அருளினாற்கொடுத்தல் விளங்க, அங்ஙனம்மகுடம்புனைவித்தன ரென்க. பொன்தாள் - பொன்னாலாகியவீரக்கழலையணிந்த பாதம் எனினுமாம்; இவ்வுரைக்கு, பொன்-கருவியாகுபெயர். ஸூதன் - வடசொல். நல்வினையே, ஏ-தேற்றம். 'புரிவோர்' என்பதை முற்றெச்சமாகக்கொள்ளாது பெயராகக் கொள்ளினுமாம். நகரீசன்-வடமொழித்தொடர்: தீர்க்கசந்திபெற்றது; நகர்ஈசன் எனப்பிரித்தலுமொன்று. 'நகரிசனம்பொற்றாள்வணங்க' என்று பாடமோதி அந்தப்பட்டணத்திலுள்ள சனங்களெல்லாரும் தம்பாதத்திலே வணங்க வென்று உரைப்பாருமுளர்; இப்பாடம், முதனூலுக்கும் ஏற்கும்.

மன்னவரைச் சிறைவிட்டு இறந்தோன்மகனை மகுடம்புனைவித்து:— "வரையிற்பணைத்ததிணிதடந்தோண் மகதனிடு வெஞ்சிறைக்கிடந்த, பரிதிவடிவாளரசரிருபதினாயிரத்தெண்ணூற்றுவரை, அருளின்விடுத்தான் முருகொழுகுமந்தண்மலர்க்கோட்டைந்தருவும், குருதிகுமிழியெழ வேழக்கோடும்பிடுங்குநெடியோனே," "ஆண்டகடற்பாரரசாட்சியடையக் கடைக்கணருள்பொழிந்து, மாண்டபெரும்போர்ச்சராசந்தன்மைந்தற் கலங்கன்முடிகவித்தான், நீண்டகனகவரைபொருத நெடும்பொற்றடந்தோட்கனகனுரங், கீண்டுபொருதகரும்புள்வாய் கிழித்துத் தளிர்க்கைசிவந்தோனே" என்ற பாகவதச்செய்யுள்களையுங் காண்க. (௩௭)

[இனித் திக்குவிசயஞ் செய்தலைப்பற்றிய ஆலோசனை.]

௩௮. கருதற்கரியநிதியனைத்துங்கவர்ந்தோர்காட்டக்கண்டுவந்த
முரசக்கொடியோன்முன்வேதமொழிந்தோன்முதலாமுனிவரரு
மரசக்குழாமுமீண்டியபேரவையிற்கடவுளரசின்ற
வரிசிற்கு மண்மாதிரங்கள்வெல்வானேனுமவகையுரைத்தான்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) கருதற்கு அரிய நிதி அனைத்தும் - (சராசந்தனிடமிருந்து கொணர்ந்த) நினைத்தற்கும் முடியாத [அளவிறந்த] செல்வம் அவ்வளவையும், கவர்ந்தோர் காட்ட - (அங்கிருந்து) கவர்ந்துகொண்டுவந்தவர்களான வீமன்முதலிய மூவரும் (இன்னதின்னதென்று) காண்பிக்க, கண்டு உவந்த - (அவற்றைப்)பார்த்து மகிழ்ந்த, முரசம் கொடியோன் முன் - முரசவாத்தியத்தின்வடிவமெழுதிய கொடியையுடையவனான தருமபுத்திரனது முன்னிலையில், வேதம் மொழிந்தோன் முதல் ஆம் முனிவரரும் அரசர் குழாமும் ஈண்டிய பேர் அவையில் - வேதங்களை (நான்குகூறாகவகுத்துத் தன்மாணாக்கர்கட்கு)க்கூறியருளிய வியாசபகவான்முதலான ருஷிசிரேஷ்டர்களும்

அரசர்களுடையகூட்டமும் நெருங்கிய பெரியசபையிலே, கடவுள் அரசு ஈன்ற வரி வில் குமரன் - தேவராசனானஇந்திரன்பெற்ற கட்டமைந்த வில்லின் தொழிலிற் சிறந்தகுமாரனான அருச்சுனன், மாதிரங்கள் வெல்வான் ஏகும் வகை - திக்குக்களைச்சயிப்பதற்குச் செல்லும்வகையை, உரைத்தான்- (பின்வருமாறு) கூறினான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

'கருதற்குஅரிய' என்றதும், 'அனைத்தும்' என்றதும் - அச்செல்வத்தின் வரம்புகடந்தமிகுதியை விளக்கும். முன் - இடமுன். திருமாலினது திருவவதாரமூர்த்தியாகிய வியாசமாமுனிவன் தத்துவஞானம்முதலியவற்றில் அனைவரினுஞ் சிறந்தலால், அவனைத் தலைமையாகவைத்துக் கூறினார். கலியுகத்தில் மனிதர்கட்கு ஆயுள் அறிவு ஆற்றல் முதலியன குறைதலைநோக்கி, அவர்கட்கு உபயோகமாம்படி, அருள்கொண்டு நடந்த துவாபரயுகத்தின்அந்தத்திலே, பராசரமுனிவனதுகுமாரன், பலவாறுசிதறிக்கிடந்த வேதத்தை, இருக்கு யசுஸ் சாமம் அதர்வணம் என நான்காகப்பிரித்துச் சுருக்கி வகுத்து, அவற்றை முறையே பைலன் வைசம்பாயநன் ஜைமினி ஸுமந்து என்ற நான்குமுனிவர்கட்குஉபதேசித்துஅவர்களைக்கொண்டு உலகத்திற்பரவச்செய்து,வேதவியாச னென்னும் பெயரைப் பெற்றனனாதலால், அந்தமகாமுனிவனை 'வேதம்மொழிந்தோன்' என்றார். ராஜ குலம் என்ற வடசொற்கள் - அரச குழாம் என்று சிதைந்துவழங்கின. அவை-ஸபாஎன்ற வடசொல்லின் திரிபு.இவ்வுலகசம்பந்தத்தைக்கடந்துநிற்றல்பற்றி,தேவர்க்கு 'கடவுள்' என்று பெயர்; கட-பகுதி, உள்-கருத்தாப்பொருள்விகுதி. ஈன்ற, ஈன் - பகுதி. குமரன் - குமாரன்என்ற வடசொல்லின்குறுக்கல்;அப்பெயர்-கு மாரன் என்றுபிரிந்து,(கு - குற்சிதம், மாரன் - மன்மதன்)மன்மதனையும் குற்சிதரூபமுடையவனென்னும்படியான கட்டழகுடையவனென்று காரணப்பொருள்படும்; இது, முதலில் முருகக்கடவுளின்பெயராயிருந்து,பின்பு, அவன்போல அழகிலும் ஆற்றலிலுஞ் சிறந்த மகனுக்கு இலக்கணையாய் வழங்குகிறது. மாதிரங்கள் வெல்வான் ஏகும் வகை - ஒவ்வொருதிக்கிலுமுள்ள அரசர்களைச் சயித்தற்பொருட்டுப் போர்க்குச்செல்லும்விதம். வெல்வான் - எச்சம், அரசர்+குழாம் - அரசக்குழாம்: "சிலவிகாரமாமுயர்திணை." (நூஅ)

[இன்னஇன்னதிசைக்கு இன்னரின்னர் போர்க்குச்செல்வதென்று வரையறுத்தல்.]

௺௯. சுருதிப்படியேவரராயசூயப்பெயர்மாமகந்தொடங்கக்
கருதிக்குணபாலெம்முன்னும்வடபால்யானுங்கார்றிசைக்கு
நிருதித்திசைக்குநடுவெம்பியிவனுஞ்சிலைவேள்நிரைமணித்தேர்
வருதிக்கினிலிவ்விளையோனுமலைவாளெழுகவருகவென்.

(இ - ள்.) சுருதிப் படியே - வேதவிதிப்படியே, வர ராயசூயம் பெயர் மா மகம் தொடங்க - சிறந்த ராஜசூயமென்னும்பெயருள்ள பெரிய யாகத்தை ஆரம்பிப்பதற்கு, கருதி - ஆலோசித்து,—குண பால் எம் முன்னும் - கிழக்குத்திக்கில் எமதுதமையனான வீமனும், வட பால் யானும் - வடக்குத்திக்கில் நானும், கால் திசைக்கும் நிருதி திசைக்கும் நடு எம்பி இவனும் - வாயுவின்திக்கான வடமேற்குக்கும் நிருருதியின்திக்கானதென்மேற்குக்கும் நடுவிலுள்ளதாகிய மேற்குத்திக்கில் எமதுதம்பியான இந்நகுலனும், சிலை வேள் நிரை மணி தேர் வரு திக்கினில் இ இளையோனும் - வில்வன்மையில் தேர்ந்த மன்மதனது ஒழுங்குபட்ட அழகியதேராகிய தென்றற்காற்று தோன்றிவருதற்குஇடமான தெற்குத்திக்கில் நம்எல்லார்க்கும்இளையவனான இச்சகதேவனுமாக, மலைவான் எழுக வருக - போர்செய்தற்பொருட்டு எழுந்துசெல்வோமாக, என்று - என்று, (எ - று.)—'அருச்சுனன் திக்குவிசயஞ்செய்யச்செல்லும்வகையைச் சொன்னான்' என்று, முந்தின செய்யுளோடு

இயைத்து முடிக்க. இங்ஙனமன்றி, அடுத்தசெய்யுளில் வரும் 'எழுந்தார்' என்னும் முற்றோடு கூட்டி முடிப்பாருமுளர்.

"சுருதி" என்ற வடசொல் - எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்யக்கிரமத்திலே கர்ணபரம்பரையாகக் கேள்வியில்வழங்கிய தென்று காரணப்பொருள்படும். குணக்கு+பால்=குணபால், வடக்கு+பால்=வடபால்: "திசையொடு திசையும்" என்னுஞ் சூத்திரவிதி. முன்புபிறந்தவனை'முன்' என்றது, காலவாகுபெயர். எம்பி—பி - முறைப்பெயர்விகுதி எம்முன், எம்பி என்றவற்றில், 'எம்' என்றது - இயல்புபற்றிய தனித்தன்மைப்பன்மை. 'யான்' என்பதனோடு இவற்றைநோக்க ஒருமைப்பன்மைமயக்க மென்னும் வழுவமைதியின்பாற்படும். நிருதி நிருருதிஎன்ற வடசொல்லின் விகாரம். மெல்லிய கரும்பாகிய வில்லைக்கொண்டே பிரமன்முதல் எறும்பீறாகவுள்ள எல்லாவுயிர்களையும் பொருதெளிதில்வென்று தன்வசப்படுத்தும் வில்வன்மையுடைமை தோன்ற, 'சிலைவேள்' என்றார். வேள்-(ஆண்பாற்கும் பெண்பாற்கும் பரஸ்பரம்) விருப்பத்தை விளைக்குந் தேவன்; அல்லது, (அழகை ரசத்துக்கு) விரும்பப்படுங் கட்டழகுடையவன். "ஆலைக்கரும்பு சிலை ஐந் கணை ...ாண் சுரும்பு, மாலைக்கிளி புரவி மாருதம் தேர்" என்றபடி காமோத்தீபனமானதென்றற்காற்றை மன்மதனேறிவருந் தேரென்று கூறுதல் மரபாதலா 'வேள்நிரைமணித்தேர்' என்றார்; மேல் அருச்சுனன்தவநிலைசருக்கத்தில் "தெந்தமிழ்வரைதருதேரன்"என்பதுங் காண்க; "வடக்கோடு தேர்" என்றார் பிறரும். 'அத்தேர்வரு திக்கு' எனவே, தெற்கு என்றதாயிற்று; 'தேர்' என்றதற்கு ஏற்ப, 'வரிசையானமணிகள் கட்டிய' என்றபொருளும் பொருந்த,'நிரைமணி' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டதென்னலாம். கிழக்கும் வடக்கும் மங்கலத்திசை யாதலால் அவை முறையே முன்னும், அவற்றிற்கு மாறான மற்றவை முறையே பின்னுமாக வைத்துக் கூறப்பட்டன. எழுக-முற்றெச்சம். இராயசூயயாகஞ்செய்து ஸம்ராட்என்னும் பெரும்பெயர் பெறுதற்கு எல்லாவரசரையும்வென்றுகீழ்ப்படுத்துதல் இன்றியமையாதாதலால், 'ராயசூயப்பெயர்மாமகந் தொடங்கக்கருதி மலைவானெழுக வருக'எனப்பட்டது. மேற்றிசையென்றபொருளை 'காற்றிசைக்கும் நிருதித்திசைக்கும் நடு' என்றது, பிறிதினவிற்சியணி; தென்றிசையை 'சிலைவேணிரைமணித்தேர் வரு திக்கு' என்றதும் அது. (௩௯)

[வீமன்முதலிய நால்வரும் திக்குவிசயத்துக்குப் புறப்படுதல்.]

௪0. என்னுஞ்சேனையுடன்விரைவினெழுந்தாரிவரிருவோரும்
மின்னுங்கடவுளாலயமுமுதலாவுள்ளமேலுலகு
மன்னும்புயங்கதலமுதலமற்றெவ்வுலகுமாதிரமுந்
தான்னென்றிட்டவைந்துவகைப்பெரும்பேரியத்தின்றுவனியினால்.

(இ - ள்.) (உடனே), இவர் ஈர்இருவோரும்-கீழ்க்கூறிய தருமன்தம்பியர் நான்குபேரும், எண்ணும் சேனையுடன் - (யாவராலும்) நன்குமதிக்கத்தக்க[சிறந்த] சேனைகளுடனே,விரைவின்எழுந்தார்-விரைவாக (போர்க்கு) ப்புறப்பட்டார்கள்; ஐந்து வகை பெரும் பேர் இயத்தின் துவனியினால்-(அப்பொழுது அச்சேனைகளில் முழக்கப்பட்ட) ஐந்துவகைப்பெயரையுடைய பெரியவாத்தியங்களின் முழக்கத்தினால்,—மின்னும் கடவுள் ஆலயமும் முதல் ஆ உள்ள மேல் உலகும்-அந்தரமும்தேவர்கட்குஇருப்பிடமானசுவர்க்கமும் முதலாகவுள்ள மேலுலகங்களும், மன்னும்-இந்தப்பூலோகமும், புயங்கதலம் முதல்-ஆம் மற்று எ உலகும் - நாகலோகம்முதலான மற்றைக்கீழுலகங்களேழும், மாதிரமும்-(சுற்றிலுமுள்ள எட்டுத்)திக்குக்களும், தான்னென்றிட்ட - திமிலென்றன;(எ-று.)

ஈரிருவோர் - பண்புத்தொகை. இருவர்என்பது, இருவோர் எனச் சிறுபான்மை ஈற்றயல்அகரம் ஓகாரமாயிற்று. ஆலயம், புஜங்கதலம்-வடசொற்கள். புஜங்கமென்ற பாம்பின்பெயர்-புஜம் கம் என்றுபிரிந்து, மார்பினால் செல்வதென்றும், வக்ரகதியாக [வளைந்து வளைந்து] செல்வதென்றும் காரணப்பொருள்படும். துண்ணெனல் - அச்சக்குறிப்பு. துண்ணென்றிட்ட-பலவின்பாலிறந்தகாலமுற்று. ஐந்துவகைஇசைக்கருவி - தோற்கருவி, தொளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்பன; [கஞ்சம்=காம்ஸ்யம்: வெண்கலம். மிடறு-கண்டம், சாரீரம்.] துவனி-த்வநி என்றவடசொல்லின் விகாரம். 'விண்ணும் .......துண்ணென்றிட்ட' என்றது, பலவகை யுத்தவாத்தியங்களின் மிக்ககோஷத்தினால் அவ்வவ்வுலகங்கள் அதிர்ந்தனவென்ற பொருளோடு, அவ்வவ்விடங்களிலுள்ளசேதனப்பொருள்களனைத்தும் அஞ்சிநடுங்குதலையும் அசேதனப்பொருள்களனைத்தும் அதிர்ச்சியையும் அடைந்தன வென்ற கருத்தையும் குறிக்கும். (௪0)

[நால்வரையும் திக்குவிசயத்திற்கு அனுப்பினபின்பு கண்ணன் துவாரகைசேர்தல்.]

௪௧. நானங் கமழுஞ் செங்கழுநீர் நறுந்தார் வேந்தர் நால்வரையு
மானம் பெறுதிண் சேனையுடன் வளர்மா திரத்து வகுத்தேவி
மீனங் கமட மேனநர வரியாய் நரராய் மெய்ஞ்ஞான
வானந் தமுமா கியநாத னன்றே துவரா பதியடைந்தான்.

(இ - ள்.) மீனம் - மற்சியாவதாரமும், கமடம் - கூர்மாவதாரமும், ஏனம் - வராகாவதாரமும், நர அரி - நரசிங்காவதாரமும், ஆய் - ஆகி, நரர் ஆய் - (வாமநன் பரசுராமன் தசரதராமன் பலராமன் கிருஷ்ணன் என்ற) மநுஷ்யாவதாரங்களு மாகி, மெய் ஞானம் ஆனந்தமும் ஆகிய - ஸச்சிதாநந்த ஸ்வரூபியு மாகிய, நாதன் - (எல்லாப்பொருள்கட்குந்) தலைவனான திருமால் [கண்ணபிரான்],— நானம் கமழும் - கஸ்தூரியின் பரிமளம் வீசுகிற, செங்கழுநீர் நறுந் தார் - செங்கழுநீர்மலர்களினாலாகிய சுகந்தமாலையைத் தரித்த, வேந்தர் நால்வரையும்-(வீம அருச்சுன நகுல சகதேவரென்னும்) அரசர்கள் நான்குபேரையும், மானம் பெறு திண் சேனையுடன் - மானத்தையே (முக்கியமாகப்) பெற்ற வலிய சேனைகளுடனே, வளர் மாதிரத்து வகுத்து ஏவி - நீண்டுவளர்ந்த [பெரிய] (நான்கு) திசைகட்கும் (ஒவ்வொருதிசைக்கு ஒவ்வொருவராகப்) பகுதிப்படுத்தி அனுப்பிவிட்டு, அன்றே துவராபதி அடைந்தான் - அன்றைக்கே (தனது) துவாரகாபுரியைச் சேர்ந்தான்; (எ - று.)

துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்தற்பொருட்டுத் திருமால் கருமசம்பந்தத்தினாலன்றித் தனது இச்சாமாத்திரத்தாற் கொண்டருள்கிற தசாவதாரங்களுள் இனிநிகழ்வதான கல்கியவதாரம் நீங்கலாக இதுவரைநடந்த மற்றை ஒன்பதுஅவதாரங்களும், 'மீனம் கமடம் ஏனம் நரஅரியாய் நரராய்' என்று குறிக்கப்பட்டன. ஐந்துஅவதாரங்களை 'நரர்'என்ற ஒருசொல்லில் அடக்கினார்; நரர் - மனிதர். நரவரி - மனிதவடிவங்கலந்த சிங்கவடிவம்; "நரங்கலந்த சிங்கமாய்" என்றார் பெரியாரும்.

௧. மீனம்:—முன்னொருகாலத்திற் பிரமதேவன் கண்துயில்கையில், சோமகனென்னும்அசுரன் வேதங்களையெல்லாங் கவர்ந்துகொண்டு கடலினுள்மறைந்துசெல்ல, பிரமன்முதலியதேவர்களின்வேண்டுகோளினால் திருமால் ஒருபெருமீனாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு, அவ்வசுரனைத் தேடிப்பிடித்துக் கொன்று அவன்கவர்ந்துசென்ற வேதங்களை மீட்டுக்கொணர்ந்து, அன்னப்பறவைவடிவங்கொண்டு அவற்றைப் பிரமனுக்கு உபதேசித்தருளினன்.

உ. கூர்மம்:—திருப்பாற்கடல் கடைந்தபொழுது, மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளேசென்று அழுந்திவிடாதபடி, திருமால் மகாகூர்மரூபத்தைத் தரித்து அதற்குஆதாரமாக எழுந்தருளியிருந்தான்.

௩. வராகம்:—இரணியனது உடன்பிறந்தவனான இரணியாக்ஷனென்னுங்கொடியஅசுரராசன் தன்வலிமையினாற் பூமியைப்பாயாகச்சுருட்டியெடுத்துக்கொண்டு கடலில்மூழ்கிச்சென்றபோது, தேவர்முனிவர்முதலியோரதுவேண்டுகோளினால் திருமால் மகாவராகரூபமாத்திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக் கண்டு பொருது கொன்று, பாதாளலோகத்தைச் சார்ந்திருந்த பூமியை அங்குநின்று கோட்டினாற் குத்தியெடுத்துக் கொண்டுவந்து பழையபடி விரித்தருளினன்.

௪. நரஸிம்ம:—கீழ், ௨௬-ஆம் செய்யுளுரையிற் காண்க.

௫. வாமநன்:—மகாபலியென்னும் அசுரராசன் தன்வல்லமையால் இந்திரன்முதலிய யாவரையும் வென்று மூன்றுஉலகங்களையுந் தன்வசப்படுத்தி அரசாண்டு செருக்குக்கொண்டிருந்தபொழுது, அரசிழந்த தேவர்கள் திருமாலைச் சரணமடைந்து வேண்ட, அப்பெருமான்.குள்ளவடிவான வாமநாவதாரங் கொண்டு, அந்தப்பலியினிடஞ்சென்று, தன்காலடியால் மூவடிமண் வேண்டி, அதுகொடுத்தற்கு அவன் இசைந்தவுடனே, திரிவிக்கிரமனாக ஆகாயத்தை அளாவிவளர்ந்து. ஓரடியாற் பூலோகத்தையும், மற்றோரடியால் மேலுலகத்தையும் அளந்து. மூன்றாமடிக்காக அவன்முடியிற் கால்வைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்தி அடக்கினன்.

௬. பரசுராமன்:—உலகத்திலே எவரும் அழிப்பவரில்லாமையாற் கொழுத்துத்திரிந்து கொடுமையியற்றிவந்த க்ஷத்திரியவம்சங்கள்பலவற்றை நாசஞ்செய்யும்பொருட்டு, நாராயணமூர்த்தி.ஜமதக்நிமுனிவனதுமனைவியான ரேணுகையினிடம் ராமனாய்த் திருவவதரித்து, பரசுவென்னுங்கோடாலிப் படையையே ஆயுதமாகக்கொண்டு, தனதுதந்தையின் ஓமதேனுவைக் கவர்ந்து அவனைக்கொன்றிட்டதுகாரணமாகக் கார்த்தவீரியார்ச்சுனனையும் அவனதுகுமாரர்களையும் கொன்று அழித்து, அதனாலேயே க்ஷத்திரியவம்சம் முழுவதன்மேலும் கோபாவேசங்கொண்டு, உலகத்திலுள்ள அரசர்கள்பலரையும் இருபத்தொருதலைமுறை பொருது ஒழித்திட்டான்.

எ. தசரதராமன்:—ஒருகாலத்தில் தேவர்களெல்லாரும் இராவணன் முதலியராக்ஷசர்களின்உபத்திரவம்பொறுக்கமாட்டாமல் ஸ்ரீமகாவிஷ்ணுவைச் சரணமடைந்துவேண்ட, அப்பிரான், தசரதசக்கரவர்த்திகுமாரனாக ஸ்ரீராமனாய்த் திருவவதரித்து, அரக்கர்களனைவரையும் அழித்து நல்லோரைக் காத்தருளினன்.

அ, கூ. பலராம கிருஷ்ணர்:—துஷ்டஅசுரர்கள் பலரும் கெட்ட அரசர்கள்பலரும் ஒருங்கேகூடி வசிப்பதனா லுண்டான பூமிபாரத்தை நிவிருத்தி செய்யும்பொருட்டு அப்பூமிதேவியின் பிரார்த்தனையின்படி தேவர்கள்வேண்டியதனால், திருமால் வசுதேவகுமாரராய்ப் பலராமகிருஷ்ணர்களாகத் திருவவதரித்தான்.

இந்தஒன்பதுஅவதாரங்களுள் பரசுராமபலராமஅவதாரங்கள் ஆவேசாவதாரமென்றும், மற்றவை அம்சாவதாரமென்றும்,அவற்றுள்ளும் ஸ்ரீராமகிருஷ்ணாவதாரங்கள் பூர்ணாவதாரங்களென்றும், அவற்றிலும் கிருஷ்ணாவதாரம் சம்பூர்ணமென்றும் கூறப்படும். திருமாலுக்கு மற்றும் பற்பலஅவதாரங்கள் நூல்களிற்கூறப்பட்டிருப்பினும், இவை முக்கியாவதாரங்களாமென்று உணர்க. திர்யக்ஜாதியிற்சேர்ந்த நான்குஅவதாரங்களை ஒன்றாகவும், மநுஷ்யஜாதியிற் சேர்ந்த ஐந்துஅவதாரங்களை ஒன்றாகவும் பிரித்தெடுத்துக் கூறினர். 'ஆய்' என்ற சொல்லின் ஆற்றல், அந்தந்தவடிவமாகப் பிறந்தபொழுது தனது தெய்வத்தன்மை மேலிடாமல் அவ்வவ்வடிவிற்கு உரிய உரு

வம் குணம் செயல்களையே மேற்கொண்டிருந்தன னென்றதை யுணர்த்து மென்பது சம்பிரதாயம்.

மாநம், மீநம், கமடம், நரஹரி, நரர், ஜ்ஞாநம், ஆநந்தம், நாதன் - வட சொற்கள். துவராபதி - த்வாரவதீ என்ற வடசொல்லின் சிதைவு. மானமாவது - எப்பொழுதும் தமதுநிலைமையினின்று தாழாமையும், விதிவசத்தால் தாழ்வுவந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். உயிரைநீத்தாவது மானத்தைப் பாதுகாக்குங்கருத்துச் சேனைவீரர்க்கு முக்கிய மாதலால், 'மானம்பெறு திண்சேனை' என்றார். இனி, மானம் - பெருமையும், வலிமையுமாம். மெய்-உண்மை. ஞானம் - அறிவு. அன்றே, ஏ-தேற்றம்.

'நரராய்' என்பதற்கு - எல்லா ஆத்மாக்களிலும் உட்புக்கவனாய் என்று உரைத்தலும் ஒன்று. செங்கழுநீர் - செங்குவளை; நீர்ப்பூக்களி லொன்று. உரியசமயங்களில் அவ்வச்சமயோசிதமாகப் பற்பலஅவதாரங்கொண்டும் எம்பெருமானது உண்மையறிவானந்தங்கட்கும் பரத்வத்துக்கும் ஒருகுறைவுமில்லையென்பது விளங்க, 'மீனங் கமட மேன நரவரியாய் நரராய்' என்ற தன்பின் 'மெய்ஞ்ஞானவானந்தமுமாகிய நாதன்' என்றார். 'நானங்கமழுஞ் செங்கழுநீர் நறுந்தார்வேந்தர்'—கீழ் கக-ஆஞ் செய்யுளில் "மான்மதமலர்த் தார்மன்ன" என வந்ததுங் காண்க. (சக)

வேறு.

[இதுமுதல் மூன்றுகவிகள் - வீமசேனன் கிழக்குத்திக்குவிசயஞ் செய்ததைக் கூறும்.]

சஉ. வான்மருச்சுதனு மீரிரண்டுகடல் வயவரூதினியின் வர்க்கமு, நான்மருப்பொருகை மும்மதத்துவய நாக மேவிவளர் திசையின்வாழ், கோன்மதிக்கநெடு வங்க மூந்திகழ்க லிங்க முந் தெறுகு லிங்கமுந், தான்மலைத்துமுனை முரண்மி குத்துவரு தரியலாரைமுனை தள்ளியே.

இதுமுதல் நான்கு கவிகள் - குளகம்

(இ - ள்.) வான் மருத் சுதனும் - பெருமையையுடைய வாயுதேவனது குமாரனான வீமனும், ஈர்இரண்டு கடல் வய வரூதினியின் வர்க்கமும்-(அவனுடன்புறப்பட்ட) நான்குசமுத்திரங்கள்போன்ற வலிய (நான்கு)சேனைவகைகளும்,—நால் மருப்பு ஒரு கை மும் மதத்து வய நாகம் மேவி வளர் திசையின் வாழ் கோன் மதிக்க - நான்குதந்தங்களையும் ஒருதுதிக்கையையும் மூன்றுமதங்களையுமுடைய வலிய (ஐராவத)யானை பொருந்திவளர்கிற (கிழக்குத்) திக்கில்வசிக்கின்ற (அத்திக்குப்)பாலகனான இந்திரனும் நன்கு மதிக்கும்படி,—நெடுவங்கமும் திகழ்கலிங்கமும் தெறு குலிங்கமும் மலைத்து-பெரியவங்கதேசத்தரசரையும் விளங்குகிறகலிங்கதேசத்தரசரையும் பகையழிக்கவல்லவரானகுலிங்கதேசத்தரசரையும் எதிர்த்துப்பொருது, முனை முரண் மிகுத்து வரு தரியலாரை முனை தள்ளி - போர்முனைகிற வலிமையை மிகுதியாகக்காட்டி எதிர்த்துவந்த அப்பகையரசர்களை அப்போர்முனைகளிற் கொன்றுவீழ்த்தி, (எ-று.)—'தடிந்து' என அடுத்தகவியோடுதொடரும்.

மருத்ஸுதன்என்றவடமொழித்தொடர், மருச்சுதனென்று விகாரப்பட்டது. வான்மருத் - வானத்திற்சஞ்சரிக்கிறவாயு எனினுமாம். ஈரிரண்டு கடல் - கீழ்கடல் தென்கடல் மேல்கடல் வடகடல் என்ற நாற்றிசைக்கடல்கள். யானை தேர் குதிரை காலாள் என்ற நால்வகைச்சேனைகட்கு நான்கு கடல்கள் உவமைகூறப்பட்டன. 'ஈரிரண்டு' என்பதை வரூதினியோடுங் கூட்டுக. அளவிறந்தபரப்பும், அணியணியாகவருதலும், பேராரவாரமும், அச்சந்தருதலும்பற்றி, சேனைக்குக் கடல் உவமை. வரூதிநீ, வர்க்கம், மதம், நாகம் - வடசொற்கள். நகம் - மலை; அதில் வாழ்வது, நாகம். ஐராவதம்

தனதுதுதிக்கையின் இருபுறத்தும் இரட்டைத்தந்தமுடைய தாதலால், 'நான்மருப்பு நாகம்' எனப்பட்டது; "புரந்தரன்தானு மீரிருமருப்புப்பொருப்பின் வெம்பிடர்மிசை புகுந்தான்" என்றார் கீழ்க் காண்டவதகனச்சருக்கத்திலும். மும்மதம் - கன்னமிரண்டு, குறியொன்று ஆகிய மூன்றிடத்தினின்றும் பெருகும் மதம். கர்ணமதம், கபோலமதம், பீஜமதம் என மூன்றென்பாருமுளர். வய - உரிச்சொல்; "வய வலியாகும்" என்பது தொல்காப்பியத்து உரிச்சொல்லியற்சூத்திரம். 'நான்மருப்புநாகம் மேவிவளர்திசை' எனவே, கிழக்குத்திசை யென்றதாயிற்று; "நாகாதிபன்வீடு மும்மதநாறுந் திசை" என்றார் கீழ் அருச்சுனன்தீர்த்தயாத்திரைச்சருக்கத்தும். அஷ்டதிக்கஜங்களுள் ஐராவதம், கிழக்குத்திசையானை. அஷ்டதிக்பாலகருள் இந்திரன், கிழக்குத்திக்குப்பாலகன். கோன், ன் - சாரியை; [நன் - உருபு - சு.] 'கோனும்' என்ற உயர்வுசிறப்புஉம்மை, தொகுத்தல்விகாரப்பட்டது. உம்மைகளைந்தும் - எண்ணுப்பொருளன. வளர்திசை, திகழ்கலிங்கம், தெறுகுலிங்கம், முனைமுரண், வருதரியலார் - வினைத்தொகைகள். வங்கம், கலிங்கம், குலிங்கம் என்ற தேசப்பெயர்கள் - இடவாகுபெயராய், அந்தந்தநாட்டின்அரசரை யுணர்த்தின. 'வா' என்ற பகுதி, குறுக்கலும் விரித்தலு மாகிய விகாரங்களைப் பெற்று, 'வரு'என நின்றது. தரியலார் - (ஆக்கத்தைப்) பொறாதவர்: எனவே, பகைவராவர்; எதிர்மறைவினையாலணையும் பெயர்; தரி - பகுதி, ஆர் - விகுதி, அல் - எதிர்மறையிடைநிலை. முனை - போர்க்களம். மலைத்து, தள்ளி என்ற வினைகளுக்கும், அடுத்தஇரண்டுசெய்யுள்களில்வருகிற தொடர்ச்சிவினைகளுக்கும், 'மருச்சுதன்,' 'வருதினியின்வர்க்கம்' என்ற இரண்டும் வினைமுதலாம். கிழக்குத்திசையென்றபொருளை, 'நான்மருப்பொருகைமும்மதத்துவயநாக மேவிவளர்திசை' என்று வேறுவகையாக்கூறினது, பிறிதினவிற்சியணி. தான் - அசை.

இதுமுதல் இருபத்துநான்குகவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ்சீர்கள் மாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறுஞ்சீர்கள் கூவிளங்காய்ச்சீர்களும், ஏழாவது விளச்சீரு மாகிய கழிநெடிலடிநான்குகொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (சஉ)

சங. மற்றுமற்றுமவண்மருவுபாடைகளின்மன்குலத்தொடுதடிந்துமே
லுற்றவுற்றவரையானம்யாவையுமொடிந்திடிந்துபொடியுண்ணவே
யிற்றவிற்றபலதலைகளாலலையெறிந்துமோதிவருகுருதியான்
முற்றமுற்றவரையினமும்வார்குருதிநதியுமாயெழமுருக்கியே.

(இ - ள்.) அவண் மருவு - அக்கிழக்குத்திசையிற் பொருந்திய, மற்றும் மற்றும் பாடைகளின் மன் - வேறுவேறு பாஷைகள் வழங்கும் நாடுகளின் அரசர்களை, குலத்தொடு தடிந்து-வம்சத்தோடு நாசஞ்செய்து,—மேல் உற்ற உற்றவரை - மற்றும் வந்துவந்து எதிர்த்த வீரர்களை, யானம் யாவையும் ஒடிந்து இடிந்து பொடியுண்ண - (அவரவர்களுடைய தேர்முதலிய)வாகனங்களெல்லாம் முறிந்துநொறுங்கிப் பொடியாய்விடவும், இற்றஇற்ற பல தலைகளால் - மேன்மேல்அறுபட்ட பலதலைகளினாலும், அலை எறிந்து மோதி வரு குருதியால்-அலைகளைவீசியடித்தோடிவருகிற இரத்தத்தினாலும், முற்ற முற்ற வரை இனமும் வார் குருதி நதியும் ஆய் எழ - அவ்விடங்கள் முழுவதிலும் மலைக்கூட்டமும் நீண்ட இரத்தநதியுமாய்த் தோன்றவும், முருக்கி-அழித்து (எ-று.)—'குவித்து'என அடுத்தகவியோடு தொடரும். ஏகாரங்கள்-ஈற்றசை.

"சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளுக் குடகம், கொங்கணம் கன்னடம் கொல்லம் தெலுங்கம் கலிங்கம் வங்கம், கங்கம் மகதம் கடாரம் கடம்கடுங்குசலம், தங்கும்புகழ்த்தமிழ்சூழ்பதினேழ்புவிதா மிவையே" என்று பதினெட்டுத்தேசபாஷைகளுள், கீழ்க்கூவியிற்கூறிய வங்கமும் கலிங்கமும் நீங்கலாக மற்றவற்றில், கிழக்குத்திக்கில்வழங்கும் பாஷைகள், 'மற்றும்ம

றும் அவண்மருவுபாடைகள்' எனப்பட்டன. பாடை - பாஷா என்ற வட சொல்லின் விகாரம். இங்கு 'பாடைகள்' என்றது-தானியாகுபெயராய், பாஷைகள்வழங்குந் தேசங்களை யுணர்த்திற்று; அந்தந்தப்பாஷைகளின் அரசரெனவே, அவைவழங்கும்நாடுகளின் அரசரென்பது தானே அமையு மென்றுங் கொள்க. அவண் - அவ்விடத்தில்: அண் - இடப்பொருள்காட்டும்விகுதி; இவண், எவண், உவண் என்பவற்றிலும் இது. மன் - பெருமை: பண்பாகுபெயராய், அதனையுடைய மன்னரைக் குறித்தது. யாநம்-வடசொல்; ஊர்தி: தேர்யானைகுதிரைகள். தலைகளின்குவியலால் மலைக்கூட்டமும் இரத்தப்பெருக்கினால் இரத்தநதியுமாய்எழ என்று முறையே சென்றுஇயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். முருக்கி, முருங்கியென்பதன் பிறவினையான முருக்கு - பகுதி. அடுக்குக்கள்-மிகுதிபற்றியன. உற்றஉற்றவரையானம்யாவையும் பொடியுண்ணும்படியும் வரையினமும் குருதிநதியுமாய் எழும்படியும் முருக்கியென்க. உண்ண, எழ என்பவற்றில் உம்மைதொக்கது, வினைச்செவ்வெண். (௪௩)

௪௪. அந்தவந்தவவனிபரெலாமபயமபயமென்றடிவணங்கவே
வந்தவந்தநிதியாவையுஞ்சிகரவடமகீதரமெனக்குவித்
தெந்தவெந்தநரபாலர்பாரினிகரென்னவென்னவவரிறையெனத்
தந்ததந்தவிததந்திமீதுகொடுதங்கண்மாநகரிசாரவே.

(இ - ள்.) அந்த அந்த அவனிபர் எலாம் - (போரில் இறந்தவரொழியச் சேடித்துநின்ற) அந்தந்த அரசர்களெல்லாரும், அபயம் அபயம் என்று அடி வணங்கவே - அபயம் அபய மென்றுசொல்லி [அபயம்வேண்டி] (வீமசேனனுடைய) பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கவே,(பின்பு வீமனும் அவனுடையசேனைகளும்), வந்த வந்த நிதி யாவையும் - (ஆங்காங்குக்) கிடைத்த கிடைத்த செல்வங்களையெல்லாம், சிகரம் வட மகீதரம் என குவித்து-(ஆயிரம்) சிகரங்களையுடைய வடக்கிலுள்ள(பொன்மயமான) மகாமேருமலையைப் போலக்குவியல்செய்து,—பாரில் எந்த எந்த நரபாலர் நிகர் என்ன என்ன-'பூமியில் எந்தஎந்தஅரசர்தாம் (இவ்வீமனுக்கு) ஒப்பாவர்?' என்று(கண்டவர்) அனைவரும் சொல்லும்படி, அவர் இறை என தந்த தந்த வித தந்தி மீது கொடு - அவ்வரசர்கள் திறையாக மிகுதியாக்கொடுத்த பலவகைப்பட்ட யானைகளின்மேல் (அச்செல்வக்குவியல்களையெல்லாம்)ஏற்றிக்கொண்டு,தங்கள் மா நகரி சார - தங்களுடைய பெரிய இந்திரப்பிரத்தநகரத்தையடைய, (எ-று.)—'விசையன் எகினன்' என அடுத்தகவியோடு தொடர்ந்துமுடியும்.

'அபயம்' என்பதற்கு - எங்களை அஞ்சாதேயென்று பாதுகாக்கத்தக்கவன் நீ என்றுவது, அஞ்சாதேயென்று உன்னாற்பாதுகாக்கத்தக்கவர் நாங்கள் என்றுவது பொருள்கொள்க. ந+பயம்=அபயம்: வடமொழிச்சந்தி. 'அபயம்அபயம்' என்ற அடுக்கு, அச்சம்பற்றினது. நிதி, சிகரம், மஹீதரம், நரபாலர், விததந்தி - வடசொற்கள். சிகரம் - மலையுச்சி: கொடுமுடி. மகீதரம் - (மேலும்கீழும்இருந்து) பூமியைத் தாங்குவது; மகீ - பூமி. நரபாலர்-மனிதர்களைக்காப்பவர். 'பார்' என்பதற்கு - பருமையையுடையதென்றும், பார்க்கப்படுவதென்றும் காரணப்பொருள் காண்க.'எந்தஎந்தநரபாலர்நிகர்' என்ற வினா, எவ்வரசரும்நிகராகார் என்ற எதிர்மறைப்பொருளைக் காட்டும். தந்தீ - தந்தத்தையுடையது. கொடு=கொண்டு: தொகுத்தல், யானைகளின் வகைகள் - நதிசரம், வநசரம், கிரிசரம்என்பன; இவை-முறையே நதிச்சார்பிலும் வனச்சார்பிலும் மலைச்சார்பிலும் தோன்றிச் சஞ்சரிப்பன: பத்திரம் மந்திரம் மிருகம் என்கிற யானைவகைகளும் உண்டு.இறை-இறுக்கப்படுவது; இறு-பகுதி: இறுத்தல் - செலுத்துதல்; ஐ - செயப்படுபொருள்விகுதி. (௪௪)

[இதுமுதல் ஐந்து கவிகள் - அருச்சுனன் வடக்குத்திக்கு விசயஞ்செய்தலைக் கூறும்.]

சுஓ. விசையவெம்பகழிவிசையன்வெவ்விசையொடி ருநிதிக்கிழ வன்மேவிவாழ்,திசையடைந்துகதிரிரவியென்னும்வகைசீறிமாறுபொ ருதெவ்வரா,நிசையழிந்துவெளியாகநால்வகைநெருங்குசேனையொடு நிலனுநின், றசையவன்பினுடனேகினனெழுபராகமெண்டிசையடை க்கவே.

(இ - ள்.) விசையம் வெம் பகழி - வெற்றியைத்தருகிற கொடியஅம்பு களையுடைய, விசையன் - அருச்சுனன்,—வெம் விசையொடு - கடுமையான வேகத்துடனே, இரு நிதி கிழவன் மேவி வாழ் திசை அடைந்து - பெரிய நிதிகட்குத்தலைவனான குபேரன் பொருந்திவசிக்கிற திசையாகிய வடக்குத் திசையைச்சார்ந்து, கதிர் இரவி என்னும் வகை சீறி - கிரணங்களையுடைய சூரியனென்று (தன்னைச்) சொல்லும்படி உக்கிரங்கொண்டு, மாறு பொரு தெவ்வர் ஆம் நிசை அழிந்து வெளி ஆக - மாறாகவந்துபோர்செய்கிற பகை வர்களாகிய இருள்அறத்தொலைந்து வெட்டவெளியாகுமாறு, நால்வகை நெ ருங்கு சேனையொடு - செறிந்த சதுரங்கசேனையுடனே, நிலனும் நின்று அசைய - (சலியாதுநிற்பதனால்) நிலமென்றுபெயர்பெற்றதான பூமியும் (பாரமிகுதியைப்பொறுக்கமாட்டாமல்) நெடும்பொழுது அசையவும், எழு பராகம் எண் திசை அடைக்க - (சேனைகள்செல்லுதலால்) மேலெழுந்த பூதாளி எட்டுத்திக்குக்களையும் மறைக்கவும், வன்பினுடன் ஏகினன்-வலிமை யோடு (போர்க்குச்) சென்றான்; (எ-று.)

விஜயம்,விஜயன் என்ற வடசொற்கள்-தமிழில் விசயம், விசயன் என்று விகாரப்படும்; அவை - முறையே எதுகையையும், பிராசத்தையும் நோக்கி, இங்கு 'விசையம்,' 'விசையன்'என இடைப்போலிபெற்றன:[நன்-எழுத்து-சுஅ.] பல்குநன், பார்த்தன், கிரீடி, சுவேதவாகநன், பீபற்சு, விசயன், கிருஷ்ணன், சவ்வியசாசி, தநஞ்சயன், நரன் என்பன - அருச்சுனனது மறுபெயர்களாம். விஜயன் என்ற பெயர்-விசேஷமானவெற்றியையுடையவ னென்றுபொருள்படும்; இதற்கு-தன்னைச்சயிப்பவரெவருமில்லாதவனென்று பொருள்கூறுதலும் உண்டு. மகாபதுமம், பதுமம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்ற ஒன்பதுநிதிகளுக்கும் குபேரன் தலை வனாய் நவநிதிநாயக னென்று ஒருபெயர்பெறுதலால், 'இருநிதிக்கிழவன்' என்பதற்கு-மிக்கநிதிகட்குஉரியவ னென்று பொருள்கொள்ளுதலே சிறப்பு; இரு - பெருமையென்னும்பொருளதான இருமையென்ற பண்பின்அடி: இரண்டென்பதன்விகாரமெனக்கொண்டு, சஙகநிதி பதுமநிதி யெனனும் இரண்டுவகைநிதி யென்று உரைத்தல், சிறப்பன்று. குபேரன வடக்குத்திக் குப்பாலகனாய் அத்திசையிற் கைலாசகிரிச்சார்பிலே அளகாபுரியில் வாழ்தல் பற்றி, அத்திசை 'நிதிக்கிழவன் மேவிவாழ் திசை' எனப்பட்டது. மேவி - விரும்பி எனினுமாம். பராக்கிரமத்தினாலாகிற திவ்வியதேஜஸோடு கூடிய அருச்சுனனை ஆயிரங்கிரணங்களோடுவிளங்குகின்ற சூரியனாகவும், அருச்சு னனால் எளிதிலழிக்கப்படுகிற பகைவர்களைச் சூரியனால் எளிதிலொழிக்கப் படுகிற இருளாகவும் உருவகஞ்செய்தார்.

கதிர், ரவி, நிசா, ஸேநா, பராகம் - வடசொற்கள். நிசா-இராத்திரி;இவ் விருட்பொழுதின்பெயர், இங்கு ஆகுபெயராய், அக்காலத்தில் மிகுதியாத் தோன்றுகிற இருளை உணர்த்திற்று; இது - காலவாகுபெயர்: 'கார்' என் பதுபோல. முச்சுடர்களுள் மற்றையிருசுடர்களாகிய சந்திராக்கினியர்போ லப் பதினாறுகிரணங்களையுடையனாய் சூரியன் அவர்கட்குக் கொடுத் [illegible]கிற ஆயிரங்கிரணங்களையுடையனாதலால், 'கதிரிரவி' என்று விசே

டித்துக்கூறப்பட்டனன். நிலம் - பூமியின்பெயர்களில் ஒன்றான 'அசலா' என்ற வடசொல்லின் பொருள்கொண்ட தமிழ்ப்பெயர்; நில் - பகுதி, அம் - கருத்தாப்பொருள்விகுதி. அது நிலன்என இறுதிப்போலிபெற்றது: [நன் - எழுத்து - ௬எ.] நிலன் அசைதல் - பூகம்பம். எழு பராகம் - வினைத்தொகை. பராகம் - புழுதி. 'எழுபராகம் எண்டிசையடைக்க' என்றவிடத்துச் சொல்நிலையால் முரண்தோடை தோன்றுதல் காண்க; "மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். வடதிசையிலுள்ள மிகப்பலராகிய வலிய சிறந்த அரசர்களையெல்லாம் வெல்லுதற்குஏற்றவன் அருச்சுனனே யென்பார், இங்கு அவனை 'விஜயன்' என்ற பெயரினாற் குறித்தார். இவன் தான்செல்கிற வடதிசையில் தன்னால் வெல்லப்படுகிற அரசர்களிடமிருந்து மிக்கசெல்வத்தைக் கொணர்ந்து அதனால் தநஞ்சயனென்று பெயர்பெறுவதுபற்றி, அதற்குஏற்றதிசை யென்பதற்கு 'நிதிக்கிழவன்மேவிவாழ்திசை' எனப்பட்ட தென்க. (௬௩)

௬௪ பாரதப்பெயர்கொள்வருடமாதிபலபாரினுள்ளநரபாலரைப்
பேரறக்குலமும்வேரறப்பொருதுபிஞ்ஞகன்கிரியுமிமயமுஞ்
சேரமொத்தியவணுள்ளகந்தருவர்கின்னரேசர்பலதிறையிடப்
போரடர்த்துகமுடிந்தகாலெழுபுணரியென்னநனிபொங்கியே.

இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்.

(இ - ள்.) (அருச்சுனன்),—பாரதம் பெயர் கொள் வருடம் ஆதி பல பாரின் உள்ள நரபாலரை - பாரதமென்னும் பெயரைக்கொண்ட வர்ஷம் [பாரதவர்ஷம்]முதலிய பலஇடங்களிலு முள்ள அரசர்களை, பேர் அற குலமும் வேர் அற பொருது - (அவரவர்களுடைய)பெயரும் வழங்காதொழியவும் வம்சமும் வேரோடுநாசமாகவும் போர்செய்து தொலைப்பவனாய்,— பிஞ்ஞகன் கிரியும் இமயமும் சேர மொத்தி - சிவபிரான்வீற்றிருக்கின்ற மலையாகிய கைலாசத்தையும் இமயகிரியையும் ஒருங்கே அடர்த்து, அவண் உள்ள கந்தருவர் கின்னர ஈசர் பல திறை இட போர் அடர்த்து - அவ்விடங்களிலுள்ள கந்தருவராஜர்களும் கின்னரராஜர்களும் பலவகைத்திறைப் பொருள்களைக் கொணர்ந்துகொடுக்கும்படி (அவர்களைப்) போர்முனையில் நெருக்கி,—உகம் முடிந்த காலை எழு புணரி என்ன நனி பொங்கி-யுகாந்த காலத்திற் பொங்கியெழுகிற கடல்போல மிகவும்உக்கிரங்கொண்டு,(எ-று.) —'அணுகி' என அடுத்த கவியோடு தொடரும்.

தென்கடலுக்கு வடக்காகவும் இமயமலைக்குத் தெற்காகவும் இருக்கின்ற பூமியானது நாபிமகாராசனது பௌத்திரனும் ருஷபமகாராசனது புத்திரனுமான பரதனால் ஆளப்பட்டதனால், பாரதவர்ஷமென்று பெயர்பெற்றது: வடமொழித்தத்திதாந்தநாமம். அப்பாரதவருஷத்தில் பாண்டவரது இந்திரப்பிரத்தநகரத்துக்கு வடக்குப்பாகம், இங்கு 'பாரதப்பெயர்கொள் வருடம்' என்று குறிக்கப்பட்டது. ஒன்பதுவர்ஷங்களுள் இப்பாரதவருஷத்துக்கு வடக்கேயிருக்கின்ற கிம்புருஷவர்ஷம்,ஹரிவர்ஷம், இளாவிருதவர்ஷம், கேதுமாலவர்ஷம்,ரம்பகவர்ஷம்,இரண்மயவர்ஷம்,குருவர்ஷம்,பத்ராசுவவர்ஷம் என்ற எட்டையும் அடக்கி'பாரதப்பெயர்கொள்வருடமாதிபல பார்' என்றார்; (கிம்புருஷவர்ஷம் முதலியன, நாபிமகாராசனது உடன்பிறந்தவர்களான கிம்புருஷன் முதலிய எண்மர்க்கும் தனித்தனி தந்தையாற் பகுத்துக்கொடுக்கப்பட்டமை பற்றி வந்த பெயராம்.) இந்தஒன்பதுவருஷமுமே, ஜம்பூத்வீபத்தின் பிரிவுகள். இவற்றில், பாரதவர்ஷம் - கர்மபூமி; மற்றையெட்டும் - போகபூமி. 'பார்' என்ற பூமியின்பெயர், இங்கு இலக்கணையாய், அதன் ஒருபகுப்பை யுணர்த்திற்று; "மாயோன்மேய காடுறையுலகம்" என்ற தொல்காப்பியத்தில் 'உலகம்' என்றதுபோல: இஃது உபலக்ஷணம்.

மயில்தோகையைக் குறிக்கின்ற பிஞ்சம் என்ற வடசொல், தமிழில்

பிஞ்ஞகமென்று விகாரப்பட்டுவழங்கும்; மயிற்பீலியினாலாகிய தலைக்கோலத்தையுடைமையால், சிவபிரானுக்கு, பிஞ்ஞகனென்று பெயர். கந்தருவர், கின்னரர் - பதினெட்டுத் தேவகணங்களிற் சேர்ந்தவர். கின்னரர்-குதிரைமுகமும் மனிதவடிவமுமுடையவராய்க் கின்னரமென்னும் வாத்தியத்தைக் கைக்கொண்டு இசைபாடித்திரிபவர். கிந்நரேசர்-குணசந்திபெற்ற வடமொழித்தொடர். போர்-பொருதல்: பொருஎன்ற முதனிலைதிரிந்த தொழிற்பெயர். பிரமனது தினத்தின்முடிவும் அவனதுஆயுளின்முடிவும் ஆகிய கல்பாந்தகாலங்கள், இங்கு 'உகமுடிந்தகாலை' எனப்பட்டன: அக்காலங்களிற் கடல்பொங்கி உலகத்தையழித்தல், மரபு; அவை - முறையே நைமித்திகப்பிரளயமென்றும், பிராகிருதப்பிரளயமென்றும் பெயர்பெறும்: யுகம் காலம் என்ற வடசொற்கள்-உகம் காலை என்று விகாரப்பட்டன. புணரி - (நதிகள் தன்னிடம்வந்து) புணரப்பெறுவது; புணர் - பகுதி: புணர்தல் - கலத்தல்; இ - பெயர்விகுதி: (நதிகளை மனைவியராகவும் கடலைக் கணவனாகவுங் கொண்டு அதனை நதிபதியென்று வழங்குதல் உணரத்தக்கது.) நனி - மிகுதியை யுணர்த்தும் உரிச்சொல். எழுபுணரி-வினைத்தொகை: பண்புத்தொகையாக்கொள்ளின், எழுகடல்களென்று பொருளாம். வருடம் - வடமொழித் திரிபு; வாசஞ்செய்யுமிடம். ஆதியென்பது - வடசொல்லாதலால், 'ஆதிபல' என அதன்முன் வலிஇயல்பாயிற்று. குலமும், உம் - இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. 'கந்தருவகின்னரேசர்' என்ற பாடத்திற்கு, ஈசர்என்பது கந்தருவ என்பதனோடுந் தொடரும்; கந்தர்வேசர், கிந்நரேசர் என்க. (சசு)

சஎ. விந்தமால்வரையுமேமகூடமுடனிடதநாமநெடுவெற்புமா
மந்தராசலம்விசாலமாலியமணித்தடஞ்சிகரமலையுடன்
கெந்தமாதனமுநீலசைலமுமெனப்புகன்றபலகிரியில்வா
ழந்தராதிபர்நடுங்கமேருகிரியப்புறத்துநனியணுகியே.

(இ - ள்.) மால் விந்தம் வரையும் - பெரிய விந்தியகிரியும், ஏமகூடமுடன் நிடதம் நாமம் நெடு வெற்பும்-ஏமகூடம் நிஷதம் என்னும் பெயருள்ள பெரியபர்வதங்களும்,மா மந்தர அசலம்-பெரியமந்தரகிரியும், விசாலம் மணி தடம் சிகரம் மாலியம் மலையுடன்-பரந்த அழகிய பெரியசிகரங்களையுடைய மாலியவான் என்னும் மலையும், கெந்தமாதனமும்-கந்தமாதநபருவதமும்,நீலசைலமும்-நீலகிரியும்,என புகன்ற-என்றுசொல்லப்பட்ட, பல கிரியில் - பல மலைகளிலும், வாழ்-வசிக்கின்ற, அந்தர அதிபர்-ஆகாசஸஞ்சாரிகளான வித்தியாதரயக்ஷகந்தர்வகின்னரராசர் முதலியோர், நடுங்க - (அச்சத்தால் உள்ளமும் உடலமும்) நடுங்கும்படி, மேரு கிரி அப்புறத்தும் நனி அணுகி - மகாமேருமலைக்குஅப்பாலும் மிகுதியாக [நெடுந்தூரம்] சென்று, (எ - று.)— 'அடக்கி' என்று அடுத்தகவியோடு தொடரும்.

இச்செய்யுளின் முதல்மூன்றுஅடிகளிற்குறிக்கப்பட்ட ஏழுமலைகளையும் ஸப்தகுலகிரியென்பர் ஒருசாரார். ஏழுத்வீபங்களுள் மற்றவற்றிற்குநடுவிலுள்ளதான ஜம்பூத்வீபத்தின்நடுவிலே 'மேரு' என்கிற சுவர்ணபர்வதம் விளங்குகிறது; ஜம்பூத்வீபத்தின்பகுப்பான ஒன்பதுவர்ஷங்களுள் இளாவிருதவர்ஷம் மேருவைச்சுற்றிலுமுள்ளபூமியாம்; அதனையடுத்து,முறையேவடக்கில்ரம்யகம் இரண்மயம் குரு என்ற வர்ஷங்களும், முறையே தெற்கில் ஹரி கிம்புருஷம் பாரதம் என்ற வர்ஷங்களும்இருக்கின்றன:பாரதவர்ஷம் எப்படி தெற்கின் கடைசியோ அப்படியே குருவர்ஷம் வடக்கின்கடைசி; மேருவிற்குக் கிழக்கில் பத்ராசுவவர்ஷமும், மேற்கில் கேதுமாலவர்ஷமும் உள்ளன. பாரதவர்ஷத்தின் வடதிசையெல்லைமலை இமயமாதல்போல, கிம்புருஷவர்ஷத்தின் வடதிசையெல்லைமலை ஏமகூடமும், ஹரிவர்ஷத்தின்வடதிசையெல்லைமலை நிஷதமுமாம்; ஆகவே,கிம்புருஷவர்ஷத்திற்கு ஏமகூடவர்ஷமென்றும்,ஹரிவர்ஷத்திற்கு நிஷதவர்ஷ மென்றும் பெயருண்டு. நீலசைலம் - ரம்யக

வர்ஷத்தின்தென் திசையெல்லைமலை. மேருவையடுத்து இளாவிருதவர்ஷத்தி லுள்ள நான்குமலைகளுள் கிழக்குமலை மந்தரமும், மேற்குமலை கந்தமாதநமு மாம். மால்யவானென்றமலையும் மேருவின்கிழக்கி லுள்ளது. விந்தியமலை பாரதவர்ஷத்தின் இடையிலுள்ளதென்பது, வெளிப்படை. விந்தியகிரி இந் திரப்பிரத்தத்துக்குத் தெற்கிலுள்ளதாயினும் குலகிரிகளிற்சேர்ந்ததாதலால் இங்குக் கூறப்பட்டது.

விந்த்யம், ஹேமகூடம், நிஷதம், மால்யவாந், கந்தமாதநம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. நாமம், மந்தராசலம், விசாலம், நீலசைலம், அந்தராதிபர், மேருகிரி - வடசொற்கள். மந்தராசலம், அந்தராதிபர் - தீர்க்க சந்தி. அந்தராதிபர் என்பதை, அம் தரா அதிபர் என்று பிரித்து, அழகிய பூமிக்குத் தலைவரென்று உரைப்பாருமுளர். மணித்தடஞ் சிகரம் - இரத்தி னங்களையுடைய பெரியசிகரம் எனினுமாம். சைலம்-சிலாமயமானது; சிலா-கல். விந்த்யம் - (சூரியசஞ்சாரத்தைத்) தகைந்தது; (அகத்தியமுனிவரால்) அடக்கப்பட்டது. ஹேமகூடம் - பொன்மயமானசிகரமுள்ளது. நிஷதம் - (தேவர்கள்) தங்கப்பெற்றது. மால்யவாந் - மாலையின்வடிவமுள்ளது. கந்த மாதநம் - மலர்மணத்தினால் மகிழ்விப்பது. நீலம் - நீலநிறமானது. (எஎ)

௭௮. அத்திசைக்கணரசானவுத்தரகுருக்கண்மேன்மையையடக்கிமே
லெத்திசைக்குமிவனன்றிவீரரிலரென்றுதேவருமியம்பவே
மெத்திசைப்பனிநிலாவெழச்சமரவிசயகம்பமுநிறுத்தினான்
முத்திசைக்குமதிவெண்குடைக்கடவுண்முதல்வனானவரிபுதல்வனே.

(இ - ள்.) அ திசைக்கண் அரசு ஆன - அந்தவடதிசையெல்லையில்வாழ் கிற அரசர்களாகிய, உத்தரகுருக்கள் - உத்தரகுருக்களென்பவர்களுடைய, மேன்மையை-பெருமிதத்தை, அடக்கி—, —மேல் - பின்பு, எ திசைக்கும் இவன் அன்றி வீரர் இலர் என்று தேவரும் இயம்ப - 'எந்தத்திசையிலும் இவனன்றி வேறு சிறந்தவீர ரில்லை' என்று தேவர்களும் (தன்னை) வியந்து கூற, மெத்து இசை பனி நிலா எழ - மிக்க கீர்த்தியாகிய குளிர்ந்தசந்திர காந்தி எழுந்துபரவ, சமரம் விசயம் கம்பமும் நிறுத்தினான் - போர்வெற்றி யைக்குறிக்கின்ற தூணையும்(அவ்வுத்தரகுருபூமியில்) நாட்டினான்: (யாவனெ னில்),—மதி - சந்திரமண்டலம்போன்ற, முத்து இசைக்கும் வெள் குடை - முத்துக்களினாலமைக்கப்பட்ட வெண்கொற்றக்குடையையுடைய, கடவுள் முதல்வன் ஆன அரி புதல்வன் - தேவராசனான இந்திரனது குமாரனாகிய அருச்சுனன்; (எ - று.)

ஜம்பூத்வீபத்தின்வடகோடியான குருவர்ஷத்தில் வசிக்கிற அரசர்கள், 'உத்தரகுருக்கள்' எனப்பட்டனர்; உத்தரம் - வடக்கு: இவர்கள், ஜம்பூ த்வீபத்தின்அதிபதியான ஆக்நீத்திரராசனது புதல்வரொன்பதின்மரிற் குருவென்னும்அரசனது குலத்தவர். பாரதவர்ஷத்தில் சந்திரவம்சத்துக் குருவென்னும்அரசனது சந்ததியார்களான பாண்டவதுரியோதநாதியரும் குருக்களெனப்படுதலால், இத்தக்ஷிணகுருக்களினும் வேறுபாடு விளங்க 'உத்தரகுருக்கள்' என்றாரெனவுங்கொள்ளலாம்.மேன்மை-மேம்பாடெனலும், பராக்கிரமம், வெற்றி, களிப்பு, செருக்கு. திசைக்கும் - உருபுமயக்கம். மெத்துஇசை - வினைத்தொகை; மெத்துஎன்ற வினைப்பகுதியின் அடியாய் மெத்திய,மெத்த என்பவைமுதலாக வினைவிகற்பங்கள் வழங்குதல் காண்க. முத்துக்குடைக்கு, பூர்ணசந்திரன் - வட்டவடிவிலும் வெண்மையான குளிர்ந்தஒளியிலும் உவமம். அரசு - உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச் சொல். முத்து இசைக்குங் குடை யென்று இயையும். முத்து-முக்தா என்ற வடசொல்லின் விகாரம்; (சிப்பியினால்) விடப்பட்டதென்பது அதன் கார ணப்பொருள். எத்திசைக்கும்,உம்-முற்றுப்பொருளது. தேவரும், உம்-உயர்வு சிறப்பு. விஜயகம்பமும் நிறுத்தினான், உம் - இறந்ததுதழீஇயஎச்சம். கீர்த்

நிலை வெண்ணிறமுடைய தென்றல் கவிமரபாதலால் 'இமைப்பணிமலா வெழு' எனப்பட்டது. ஜம்பூத்வீபத்தில் இந்தப்பாரதவருஷத்திலே தமது குருநாட்டுக்கு வடக்கிலுள்ள நாடுகளின் அரசர்களையும், இப்பாரதவருஷத்திற்கு வடக்கிலுள்ள மற்றை எட்டுவர்ஷங்களின் அரசர்களையும், ஸப்தகுல பருவதங்களிலுள்ளாரையும் வென்றனன் அருச்சுனன் என்றபடி. விஜய கம்பம் - ஜயஸ்தம்பம். (௪௮)

௪௯. கரிகள்கோடியிரதங்கள்கோடிபவனத்திலுங்கடுகுகவனவெம்
பரிகள்கோடிநவகோடிமாமணிகள்பல்வகைப்படுபசும்பொனின்
கிரிகள்கோடியெனவேகவர்ந்தெழுகிரிப்புறந்தெறுகிரீடிவந்
தரிகள்கோடிகிளர்சோலைசூழ்தமதுசெல்வமாநகரியணுகினன்.

(இ - ள்.) எழு கிரி புறம் தெறு கிரீடி-ஸப்தகுலபர்வதங்களினிடத்தை யடர்த்து வெற்றிகொண்ட அருச்சுனன்,— கரிகள் கோடி - (அவ்வவ்வரசர்களுடைய) கோடிக்கணக்கான யானைகளையும், இரதங்கள் கோடி-கோடிக்கணக்கான தேர்களையும்,பவனத்திலும் கடுகு கவனம் வெம் பரிகள் கோடி- காற்றினும்விரைந்துசெல்லும் நடைவேகத்தையுடைய கோடிக்கணக்கான குதிரைகளையும், நவ கோடி மா மணிகள் - கோடிக்கணக்கான சிறந்த ஒன்பதுவகை யிரத்தினங்களையும், பல் வகை படு பசும் பொனின் கிரிகள் கோடி என - கோடிக்கணக்கான மலைகள்போன்ற பலவகைப்பட்ட பசும் பொன்னின் குவியல்களையும், கவர்ந்து - கவர்ந்துகொண்டு, வந்து - மீண்டு வந்து, அரிகள் கோடி கிளர் சோலை சூழ் தமது செல்வம் மா நகரி அணுகினன்-கோடிக்கணக்கானவண்டுகள் மொய்த்தெழுதற்கிடமான சோலைகள் சூழ்ந்த தமதுசெல்வம்நிறைந்தபெரியஇந்திரப்பிரத்தநகரத்தைச்சேர்ந்தான்.

கோடி - நூறுலக்ஷம்; இங்கு, மிகப்பல வென்றமாத்திரமாய் நின்றது. நவமணி - கோமேதகம், நீலம், பவழம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன. ஆடகம், கிளிச்சிறை, ஜாதரூபம், ஜாம்பூநதம் என்ற பொன்னின் நால்வகையும் அடங்க, 'பல்வகைப்படு பசும்பொன்' எனப்பட்டது. கிரி-மலைபோன்ற பெருந்திரளுக்கு உவமவாகு பெயர். "என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி, நின்றும் பிரிந்து எண்பொருள்தொறும் நேரும்"என்றபடி,'பசும்பொனின் கிரிகள்கோடியென'என்று இறுதியில் நின்ற 'என' என்ற எண்ணிடைச்சொல், நின்றவிடத்துப்பிரிந்து, 'கரிகள்கோடியென,' 'இரதங்கள்கோடியென','பரிகள்கோடியென,' 'நவகோடிமாமணிகளென' என்று பிறவிடத்துஞ் சென்று பொருந்தும். இனி,'பொனின்கிரிகள்கோடியென' என்பதற்கு - பொன்மயமான கோடி மலைகள்போல என்று உரைப்பாரு முளர்.ஏ - அசை. 'எழுகிரிப்புறந்தெறு' என்ற விவரம்,கீழ் ௬௭ - ஆஞ் செய்யுளிற் கூறப்பட்டது.

கிரீடி - வடசொல்: கிரீடமுடையவன்; மேல் வனவாசகாலத்திற் சிவபிரானிடம் பாசுபதாஸ்திரம்பெற்றபின்பு மேலுலகத்திற்குச்சென்று தேவேந்திரனாற் சுவர்க்கலோகத்தில் இளவரசுமுடிசூட்டப்பெறுதல்பற்றி வந்தது, இப்பெயர்: "மகவான்தந்த மாமணிமகுடந் தாங்கி, எத்திசைபுகுந்த போதும் இரவிமீதெழுந்ததேய்க்கும், அத்திறலதனாற் கிரீடியாக்கின ரகிலத்துள்ளோர்"என்ற நல்லாப்பிள்ளைபாரதங் காண்க; இக்காரணத்தால் இவன் இப்பெயர்பெறுதல் இதன்பின் நிகழ்வதாயினும்,பிற்காலத்தில் நூலியற்றிய கவி முன்பும் இப்பெயரால் இவனைக்குறிக்கத் தட்டில்லை: இன்னும் இது போல்வனவற்றிற்கெல்லாம் இவ்வாறே கொள்க. செல்வமாநகரி—"மரகதங் கோமேதம் துகிர் தரளம் வைரம் வைதூரிய நீலம்,எரிமணி புட்பராகமென் றிவற்றினது ஆகர மிந்தமாநகர்"என்றும், "இமையவர்பதியிலுள்ளன யாவும் இங்குள இங்குமற்றுள்ள, அமைவுறுபொருள்க ளங்கில வெனுமா றமைத்தனன் தொல்பதி" என்றும் கீழ் இந்திரப்பிரத்தச்சருக்கத்திற் கூறியமை

காண்க. 'தமது' என்ற பன்மை-மற்றைஉடன்பிறந்தவரை உளப்படுத்தியது. எழுகிரி - பண்புத்தொகை. ரதம், பவநம், கமநம் - வடசொற்கள். பரி - (எறு பவனைப்) பரிப்பது; பரித்தல் - சுமத்தல். யானைகள் முதலியன, ஆங்காங் குத் திறைகொண்டவை. (௪௯)

[இதுமுதல்நான்குகவிகள்-நகுலன் மேற்றிசைத்திக்குவிசயஞ்செய்ததலைக்கூறும்.]

௫0. வடாது சென்ற வரிசிலை மகிபனினு மெழுமடங்குமிகுவலியுடன்
குடாது சென்றிளையவீர மாநகுலனகுலனென்று குலைகுலையவே
யடாதமன்னரையடர்த்தடுத்தவரையஞ்சலென்றமருடற்றினு
னிடாதவன்றனமெனக்கரந்தனர்களேனைமன்னவர்கள் யாருமே.

(இ - ள்.) வடாது சென்ற வரி சிலை மகிபனினும் - (திக்குவிசயத்தின் பொருட்டு) வடபுலத்திற்சென்ற கட்டமைந்த வில்லையுடைய அருச்சுன னது வலிமையைக்காட்டிலும், எழு மடங்கு மிகு வலியுடன் - எழுமடங்கு மிகுதியான (சேனைமுதலிய) வலிமையுடனே, இளைய வீரன் மா நகுலன் - (அவ்வருச்சுனனுக்கு) அடுத்ததம்பியும் வீரனுமான சிறந்த நகுலனென்பவன், குடாது சென்று - மேல்புலத்துச் சென்று, நகுலன் என்று குலைகுலைய - (தன்னைக்கண்டவர்கள்) நகுலனிவன் நகுலனிவன் என்று சொல்லி நடுநடுங்க, அடுத்தவரை அஞ்சல் என்று - தன்னிடம்வந்துசரண்புகுந்த அரசர்களை 'அஞ்சவேண்டா' என்றுசொல்லி அபயமளித்து, அடாத மன்னரை அடர்த்து அமர் உடற்றினன் - தன்னிடம்வந்து பணியாத அரசர்களை நெருக்கிப் போரில் வருத்தினான்; (அப்போரின்கடுமையைக் கண்டவளவிலே), ஏனை மன்ன வர்கள் யாரும் - (அவனால்எதிர்க்கப்படாத) மற்றையரசர்களெல்லோரும், இடாதவன் தனம் என கரந்தனர்கள் - (இரப்பவர்க்குக்) கொடாதவனுடைய செல்வம் (தொலைதல்)போல ஓடியொளித்தார்கள்; (எ-று.)

வடக்கிலுள்ளது - வடாது: குடக்கிலுள்ளது - குடாது; மரூஉமொழி. குலைகுலைய - இரட்டைக்கிளவி. அஞ்சல் - எதிர்மறைவியங்கோள். உடற்றி னன், உடல்என்பதன் பிறவினையான உடற்று - பகுதி. இடாதவன்தனம் தொலைதலை "ஈயார்தேட்டைத் தீயார்கொள்வர்," "உடாஅது முண்ணாதும் தம்முடம்புசெற்றும், கொடாஅத நல்லறமுஞ் செய்யார் - கொடாஅது,வைத் தீட்டினா ரிழப்பர் வான்றோய்மலைநாட,உய்த்தீட்டுந் தேனீக் கரி" என்பவை முதலியவற்றா லறிக. ஏனை - இடைச்சொல். நகுலனென்று என்பதற்கு - ருத்திரமூர்த்தி யென்றெண்ணி யென உரைப்பாரு முளர். (௫0)

௫க. மாளவத்தினொடுகர்ப்படம்பொரவகுத்தெதிர்த்ததிரிகர்த்தமுந்
தாளவன்புடையிருட்பிழம்பெழவருக்கனிற்பெரிதுசுடரெழத்
தாளவண்கதியுடைத்துரங்கரதகசபதாதியொடுதகுசின
மூளவந்தெதிர்மலைந்தமன்னவரைமுதுகுகண்டமர்முருக்கியே.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) மாளவத்தினொடு கர்ப்படம் - மாளவதேசத்திலும் கர்ப்பட தேசத்திலும், பொர வகுத்து எதிர்த்த திரிகர்த்தமும் - போர்செய்தற்கு (ச் சேனைகளை)அணிவகுத்து எதிர்த்த திரிகர்த்ததேசத்திலும், தாள் வன்பு உடை இருள் பிழம்பு எழ - தூளியினாலாகிய வலிமையையுடைய இருளின் திரள் மேலெழவும், அருக்கனில் பெரிது சுடர் எழ -(தரித்தஆபரணமும் எந் திரஆயுதமும் முதலியவற்றினால்)சூரியனைக்காட்டிலும் மிகுதியாகப் பிரகாச முண்டாகவும், தாளம் வண் கதி உடை துரங்க ரத கச பதாதியொடு தகு சினம் மூள வந்து எதிர் மலைந்த மன்னவரை - தாளவொத்துக்குஇயைய அடிவைத்துநடக்கிறசிறந்தநடையையுடையகுதிரைதேர்யானைகாலாள் என் னுஞ் சதுரங்கசேனையோடு தக்ககோபம்மேன்மேலுண்டாக எதிரில்வந்து போர்செய்த அரசர்களை, அமர் முருக்கி முதுகு கண்டு - போரில் வலியழித்

தும் புறங்கொடுத்தோடச்செய்து, (எ-று.)—'காரி'என் அசைகளும்போல தொடரும்.

"தாளவன்புடையிருட்பிழம்பெழ அருக்கனிற் பெரிதுசுடரெழ—மேல் அணிவகுப்புச்சருக்கத்தில்" "படைவெயிலெறிக்க வணிமுடியுடன் மணிப்பணி கள்பலவெயிலெறிக்க வுடனே, யிடையிடையெடுத்தகொடி நிரையிருளெறி க்க வெழுதுக ளிருளெறிக்க" என்பது காண்க. குதிரை, நால்வகைப்படை யுள் தான் ஓர்அங்கமாகநிற்றலேயன்றி, மற்றோர் அங்கமாகிய தேரை நட த்துதற்கு இன்றியமையாத தன்மையையும் உடைமையால்,அதனை முதலில் வைத்து 'துரங்கரதகசபதாதி' என்றார்.தாளவண்கதியுடைத் துரங்கம்-ஆட் டக்குதிரை; "கூத்தினர்செயலெனக் குலாவும் வாம்பரி" என்றார் பிறரும். அர்க்கன், தாளம், கதி, துரங்க ரத கஜ பதாதி - வடசொற்கள். துரங்கம்- விரைந்து செல்வது. அருக்கனில், இல் - ஐந்தனுருபு,எல்லைப்பொருளது. ()

ருஉ. கூற்றிசைக்குமெனவுடன்வருங்கடியகொடியசேனையொடு குமரனுங்,காற்றிசைக்குமெனவருணனுந்தனிகருக்குலைந்துளம்வெரு க்கொளத், தோற்றிசைக்கும்வசைகொண்டுமற்றவர்கள்சொரிதரு ந் திறைகள்வாரியம்,மேற்றிசைக்குமொருமேருவுண்டெனவுயர்த்தினு னிகரில்வீரனே.

(இ-ள்.) நிகர் இல் வீரன் - ஒப்பற்ற வீரனான, குமரனும் - இளமக னான நகுலனும்,—கூற்று இசைக்கும் என உடன் வரும் கடிய கொடிய சே னையொடு-யமனையொக்குமென்று சொல்லும்படி விரைந்துவருகிற வலிய கொடிய சேனைகளுடனே, காற்று இசைக்கும் என-சண்டமாருதம்போலு மென்னும்படி,வருணனும் தனி கரு குலைந்து உளம் வெருக் கொள - (அந்த மேற்குத்திக்கின்பாலகனான) வருணனும் ஆதாரமற்றுக் குடல்குழம்பி மனம் அச்சங்கொள்ளும்படி, (அத்திக்கினெல்லையிற் சென்று, அவர்கள் தோற்று இசைக்கும் வசை கொண்டு சொரிதரும் திறைகள் வாரி - அம்மேற்றிசை யரசர்கள் தோல்வியடைந்து (உலகத்தவரால்) சொல்லப்படும் பழிப்பைப் பெற்றுக் கொணர்ந்துசொரிந்த திறைப்பொன்களை ஒருங்குதொகுத்து, அ மேல் திசைக்கும் ஒரு மேரு உண்டு என உயர்த்தினன் - (வடதிசையி லன்றி) அந்தமேற்குத்திக்கிலும் ஒருமேருகிரி உண்டென்றுசொல்லும்படி உயர்த்தினன்; (எ - று.)—மற்று - அசை.

சேனைக்கு, யமன் - தவறாது பிராணிகளையழிக்குங் கொடுமையில் உவ மம். கூற்று - பிராணிகளின் உடலையும் உயிரையும் வெவ்வேறாகப்பிரித்துச் கூறுபடுத்துந் தேவன். முதலிரண்டடிகளில், 'இசைக்கும்' என்பது - உவம வுருபாய்நின்றது. உடன் என்ற இடைச்சொல் - விரைவை யுணர்த்திற்று; தன்னுடன் என்றும் பொருள்கொள்ளலாம். குமரன் - அழகிலும் பலபராக் கிரமங்களிலும் முருகக்கடவுள்போன்ற ஆண்மகன்;உம்மை-எச்சம். காற்று- விரைவிலும், வலிமையிலும் உவமம். வருணனும், உம்-உயர்வுசிறப்பு. வெரு- வெருவு என்ற முதனிலைத்தொழிற்பெயரின் விகாரம். சொரிதரும், தா- துணைவினை. மேற்றிசைக்கும், உம்-இறந்ததுதழுவியஎச்சம். 'வசைகொண்டு அவர்கள் சொரிதருந் திறைகள்'என்றது,வசையைப்பெற்று அதற்குஈடாகச் சொரிந்த பொருள்களென்ற சமத்காரக்கருத்து அமையக் கூறப்பட்டுள்ள தனால், பரிவர்த்தநாலங்காரம்; தமிழில் மாற்றுநிலையணி எனப்படும்: இது, உயர்ந்தபொருளைக்கொடுத்து இழிந்தபொருளை வாங்கியதாகச் சொல்லி யது. திறைப்பொருட்டொகுதியின்மிகுதியும் ஒளியுந் தோன்ற, அதற்கு பொன்மலையான மகாமேருகிரியை உவமைகூறினார். பிரசித்தமான மேரு மலை வடதிசையி லுள்ள தாதலால், 'மேற்றிசைக்குமொருமேருவுண்டென' என்று இல்பொருளுவமையாக வருத்துக்கூறப்பட்ட தென்க. (ருஉ)

ருங. அளவிலாததிறையோடுமத்திசையுதித்ததோரிரவியாமெனத்
துளபமாலைகமழ்மௌலிநாதனுறைதுவரையெய்தியுயர்சுருதியின்
கிளவியான்முனிவர்தொழுபதந்தொழுதுகேசரித்துவசவீரனுக்
கிளவன்மீளவுமரிப்பிரத்தநகரெய்திமன்னனையிறைஞ்சினான்.

(இ - ள்.) கேசரி துவசம் வீரனுக்கு இளவல் - சிங்கத்தின்வடிவமெழுதிய கொடியையுடைய வீரனான வீமனுக்குத் தம்பியாகிய நகுலன்,—அளவு இலாத திறையோடும் - (இங்ஙனம் ஆங்காங்குக்கைக்கொண்ட) அளவிறந்த திறைப்பொருள்களுடனே,—அ திசை உதித்தது ஓர் இரவி ஆம் என துளபம் மாலை கமழ் மௌலி நாதன் உறை துவரை எய்தி - அந்த மேற்குத்திக்கில் உதயஞ்செய்ததொரு சூரியனேயென்று (அனைவருஞ்) சொல்லும்படி திருத்துழாய்மாலை நறுமணம்வீசும் முடியையுடைய ஜகந்நாதனான கண்ணபிரான் எழுந்தருளியிருக்கிற துவாரகாபுரியை யடைந்து, உயர் சுருதியின் கிளவியான் முனிவர் தொழு பதம் தொழுது - சிறந்தவேதவாக்கியங்களைக் கொண்டு (துதித்து) முனிவர்கள் வணங்குகிற (அப்பெருமானுடைய) திருவடிகளை(த் தான்) நமஸ்கரித்து, மீளவும் அரிப்பிரத்தம் நகர் எய்தி - பின்பு மீண்டு (தமது) இந்திரப்பிரத்தநகரத்தை யடைந்து, மன்னனை இறைஞ்சினான் - தருமராசனை வணங்கினான்; (எ - று.)

மேல்திசையில் துவாரகாபுரியில் வீற்றிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனுக்கு, மேற்கில் உதித்ததொரு சூரியனை உவமைகூறினார்; இல்பொருளுவமை. அபௌருஷேயமாய் [செய்யாமொழியாய்] நித்தியமாயுள்ள வேதம், சிறந்த பிரமாண மாதலால், 'உயர்சுருதி' எனப்பட்டது. நகுலனதுபலபராக்கிரமங்களைக் குறிப்பித்தற்கு, வீமனதுதம்பி யென்றார். 'தருமன்' என்ற யமனதுபெயர் இலக்கணையாய் அவன்மகனான யுதிட்டிரனை யுணர்த்துதல் போல, 'கேசரி' என்னும் வாநரவீரனது பெயர் இலக்கணையாய் அவன்மகனான அநுமானை யுணர்த்திய தெனக் கொண்டால், 'கேசரித்துவசவீரனுக்கு இளவல்' என்றது - அநுமக்கொடியையுடைய வீரனான அருச்சுனனுக்குத் தம்பி யென்று பொருள்படும். இளவல் - இளையவன்; இளமையென்ற பண்பினடியாப் பிறந்த பெயர்: அல் - பெயர்விகுதி. இந்திரப்பிரத்தமென்பதன் பரியாயமாக, அரிப்பிரத்த மெனப்பட்டது; ஹரி - இந்திரன். கண்ணனது கட்டளைப்படி இந்திரன் விசுவகர்மனைக்கொண்டு நிருமித்தநகர மாதலால், அதற்கு, இந்திரப்பிரஸ்த மென்று கண்ணனாற் பெயரிடப்பட்டது; ஏவுதற் கருத்தாவின்சம்பந்தத்தோடு வந்த பெயர்: ப்ரஸ்தம் - தங்குமிடம். தேவர்களை இருதிணையாகவுங் கூறலா மாதலால், 'உதித்ததோரிரவி'என்று அஃறிணையாக் கூறப்பட்டது; 'உதித்ததேரிரவி' என்றும் பாட முண்டு: தேரிரவி - சிறந்தஒற்றைத்தனியாழித்தேரை யுடைய சூரியன். துளஸீ, த்வாரகா, த்வஜம் என்ற வடசொற்கள் - துளபம், துவரை, துவசம் என்று விகாரப்பட்டன. ()

[இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - சகதேவன் தெற்குத்திக்குவிசயஞ் செய்தலைக் கூறும்.]

ருச. குன்றிசைத்தகசரததுரங்கமபதாதிசூழவிறைகொள்ளவு
நின்றிசைத்துவருபலபணைக்குலமிரைக்கவுங்கொடிநிரைக்கவுந்
துன்றிசைப்பனிநிலாவெழக்கவிகையெண்ணிலாதனதுலங்கவுந்
தென்றிசைப்படர்தன்மேவினன்குலநிருபனுக்கிளையசெம்மலே.

(இ - ள்.) நகுலநிருபனுக்கு இளைய செம்மல் - நகுலராசனுக்கு இளையவனும் வீரனுமான சகதேவன்,—குன்று இசைத்த கச ரத துரங்கம பதாதி சூழ இறை கொள்ளவும் - மலைபோன்ற யானை தேர் குதிரை காலாள் என்னும் சதுரங்கசேனைகள் தன்னைச்சூழ்ந்திலும் இருத்தல்செய்யவும், நின்று இசைத்து வரு பல பணை குலம் இரைக்கவும் - இடைவிடாது முழக்கப்பட்டு

வருகிற பலவகைவாத்தியங்களின் கூட்டம் ஆரவாரிக்கவும், கொடி நிரைக்கவும் - துவசங்கள் வரிசையாய் அமையவும், துன்று இசை பனி நிலா எழ கவிகை எண் இலாதன துலங்கவும் - அடர்ந்துபொருந்துதலையுடைய குளிர்ந்த சந்திரகாந்திபோன்ற வெள்ளொளி யெழுமாறு அளவற்றனவான வெண்கொற்றக்குடைகள் விளங்கவும், தென் திசை படர்தல் மேயினன் - தெற்குத்திக்கிற் செல்லுதலைப் பொருந்தினன்; (எ - று.)

இசைத்த - உவமவுருபு. யானை தேர்களுக்கு, மலை - பெருவடிவிலும், வலிமையிலும் உவமை. கஜ ரத துரங்கம பதாதி - வடமொழித்தொடர். "படைதனக்கு யானை வனப்பாகும்", "யானையுடைய படை காண்டல் மிக வினிதே" என்றபடி யானைச்சேனை சிறத்தலால், அது முதலாகவைத்துக் கூறப்பட்டது. துரங்கமம் - விரைந்துசெல்வது. பலவகைப்பணைக்குலம் - கொட்டுவனவும் ஊதுவனவு மாகிய தோற்கருவி தொளைக்கருவி முதலியன. மூன்றுமடியில், 'இசை'என்றது - முதனிலைத்தொழிற்பெயர்: இரண்டாம் வேற்றுமைத்தொகை. 'துன்றிசைப்பனிநிலாவெழ' என்பதற்கு-மிக்க கீர்த்தியாகிய குளிர்ந்த சந்திரகாந்தி எழுந்துபரவ வென்று உரைத்தலும் ஒன்று; கீழ் ௪௮-ஆம் கவியில் "மெத்திசைப்பனிநிலாவெழ" என்றமை காண்க.நகுலநிருபன்-இருபெயரொட்டுப்பண்புத்தொகை.நிருபன்-வடசொல்; மனிதரைக் காப்பவன்: நிரு-மனிதர். செம்மல்-பெருமையிற்சிறந்தவன்: ஆண்பாற்சிறப்புப்பெயர்; செம்மையையுடையவனென்று காரணப்பொருள் காணலாம்: அல்-பெயர்விகுதி.நகுலன்போலவே எளிதிற் பகைவென்றுவரத்தக்கவ னென்பதைக் குறிப்பித்தற்கு, 'நகுலநிருபனுக்கிளையசெம்மல்' என்றார். இறை - இறுத்தல், தங்குதல்: தொழிற்பெயர்; இறு - பகுதி, ஐ-விகுதி. இலாதன - பெயர். படர்தல்மேயினன்-படர்ந்தான் என்றபடி. மேயினன்-மேவு என்பதன் விகாரமான மே - பகுதி, ஆன் - விகுதி;இன்-இறந்தகாலவிடைநிலையெனின்,ய்-எழுத்துப்பேறு:'ய்'இடைநிலையெனின், இன்-சாரியை,

௫௩ அத்திசைக்கணிருகடலினுக்குநடுவானமண்டலமனைத்தினு
மத்திகைப்புரவிமண்டலேசரும்வயங்குமாமகுடமகிபரும்
புத்திகைக்கவமர்பொருதழிந்துதிறைபொழியவாரிவளர்புயகிரிப்
பித்திகைத்தொடையனீலனென்னுநரபதிபெரும்பதிபுகுந்தபின்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) (சகதேவன்),—அ திசைக்கண் - அந்தத்தெற்குத்திக்கிலே, இரு கடலினுக்கும் நடு ஆன மண்டலம் அனைத்தினும் - கீழ்கடல் மேல்கடல் என்ற இரண்டிற்கும் இடைப்பட்ட தேசங்களிலெல்லாம் (சென்று), மத்திகை புரவி மண்டல ஈசரும் - சம்மட்டியென்னுங் கயிற்றுக்கருவி கொண்டுசெலுத்தப்படுங் குதிரைச்சேனையையுடைய மண்டலாதிபதிகளும், வயங்கு மா மகுடம் மகிபரும் - விளங்குகிற சிறந்த மகுடவர்த்தனமன்னவர்களும், புத்தி கைக்க - மனம்வெறுக்கும்படி, அமர் பொருது-போர்செய்து, அழிந்து திறை பொழிய வாரி - (அவர்கள் அப்போரில்)தோற்றுத் திறைப்பொருள்களை மிகுதியாகச்சொரிய வாரிக்கொண்டு, வளர் புய கிரி பித்திகை தொடையல் நீலன் என்னும் நரபதி பெரும் பதி புகுந்த பின் - பூரித்து வளர்ந்த மலைகள்போன்ற தோள்களிற் கருமுகைப்பூமாலையை யணிந்த நீலனென்னும்அரசனுடைய (மாகிஷ்மதியென்னும்) பெரியநகரத்திற் பிரவேசித்தபின்பு, (எ - று.)—'கண்டு' என அடுத்தகவியோடு தொடரும்.

திகையெனினும், திசையெனினும் ஒக்கும். கண் - ஏழனுருபு. 'மண்டலேசர்' என்றவிடத்து, 'மண்டலீகர்' என்றும் பாட முண்டு; அவர் நாற்பது கிராமம் ஆள்பவர். மகுடவர்த்தனர் - ஒருகோடிகிராமம் ஆள்பவர். மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற நான்குஅந்தக்கரணங்களுள் மனம் 'புத்தி' எனப்பட்டது;இலக்கணை. "கருமுகையும் சுவர்த்தலமும் பித்திகை" என்ற

பிங்கலந்தையினால், பித்திகையென்பதன் பொருளை யுணர்க; சிறுசண்பகம் அல்லது இருவாட்சி யென்பர். தொடை-தொடுக்கப்படுவது; தொடு-பகுதி, ஐ - செயப்படுபொருள்விகுதி; இதன்மேல், அல்-சாரியை. மத்திகை - குதிரைச்சம்மட்டி;குதிரையோட்டுங்கருவியி னென்று. "இவன் தன்பகைவர் யாவரையும் இமையோராக்கு மெழினீலன்" என்று கீழ்த் திரௌபதிமாலையிட்டசருக்கத்தில் நீலன் சிறப்பித்துக்கூறப்பட்டிருத்த லுணர்க. நரபதி - வடசொல்: மனிதர்க்குத் தலைவன்; நரர் - மனிதர். (௬௫)

௫௬. அந்தமாநகரிகாவலானசுடரங்கிசீறியெதிர் பொங்கிமேல்
வந்தவீரன்மிகுசேனையாவையுமயங்கவெம்புகையியங்கவே
கந்துசீறுகளியானைமன்னனதுகண்டுவெங்கனலவிப்பதோ
ரிந்துமாமுகசரங்களேழுநெடுநாவினனழியவேவினான்.

(இ - ள்.) அந்த மா நகரி காவல் ஆன - அந்தப் பெரிய மாகிஷ்மதிபட்டணத்துக்குப் பாதுகாப்பாயிருந்த, சுடர் அங்கி - ஒளியையுடைய அக்கினிதேவன், சீறி-கோபித்து, எதிர் மேல் பொங்கி-எதிராக மேலே ஜ்வலித்து எழுந்து, வந்த வீரன் மிகு சேனை யாவையும் மயங்க வெம் புகை இயங்கவே-(அந்நகரத்திற்) பிரவேசித்த வீரனான சகதேவனுடைய மிக்கசேனைகளெல்லாம் மயங்கித் திகைக்கும்படி கொடியபுகையோடு பரவவே,—கந்து சீறு களி யானை மன்னன்-கட்டுத்தறியை முறிக்கின்ற மதக்களிப்புள்ள யானைச்சேனையையுடைய சகதேவன், —அது கண்டு - அதனைப் பார்த்து,—வெம் கனல் அவிப்பது ஓர் இந்து மா முக சரங்கள் - வெவ்விய அந்த அக்கினியை யடக்கவல்ல ஒப்பற்ற சிறந்த அர்த்தசந்திரபாணங்களை, ஏழு நெடு நாவினன் அழிய எவினான் - நீண்ட ஏழுநாக்குக்களையுடையவனான அக்கினிதேவன் புறங்கொடுக்கும்படி பிரயோகித்தான்; (எ-று.)

அக்நி, ஸ்கந்தம் என்ற வடசொற்கள் - அங்கி, கந்து எனச் சிதைந்தன. அக்கினியின் சுவாலைகளேழும் அவனுக்கு நாஎனப்படுதலால், 'ஏழுநெடுநாவினன்'என்றார்; "ஏழுநாவெச்சில், மெச்சி நாணும் விண்ணோர் மிசைகுவர்"என்ற பழம்பாட்டையும், கீழ்க் காண்டவதகனச்சருக்கத்தில், "தாலுவேழினையும் நனைத்தனன்" என்றதையுங் காண்க. இந்துமுகசரம் - பிறைச்சந்திரன்போல வளைவான நுனியையுடைய அம்பு. கனலவிப்பதற்கு ஏற்ப இந்துமாமுகசரங்க ளென்றன ரென்னலாம்; சந்திரன்போல அக்கினியின் வெப்பத்தைத் தணிக்குந் தன்மையுள்ள அம்புக ளென்க. சந்திராஸ்திரம் - சந்திரனைத்தெய்வமாகவுடைய அம்பு என்றுவது, சந்திரன்போலக் குளிர்ச்சியைச் செய்யும் வாருணாஸ்திரமென்றுவது கொள்க. இந்து முகம் சரம் - வடசொற்கள். கட்டுத்தறியைமுறித்தல் மதயானையினியல்பு; "தூணும் விலங்கும் முறிப்பது" என்பர் மேல் பதினான்காம்போர்ச்சருக்கத்திலும். மேல்வந்த வீரன் என்று எடுத்தும்,வந்தவீரன்மேல் என்று மாற்றியும் உரைப்பினுமாம். இச்செய்யுளில், 'அங்கிசீறியெதிர்பொங்கிமேல்,' 'மயங்கவெம்புகையியங்கவே,' 'நாவினனழியவேவினான்'என்றவிடங்களில், வந்தவெழுத்தே மீண்டும்வந்தது, பிராசமென்னும் சொல்லணி;முன்னும்பின்னு முள்ள செய்யுள்களிலும் இது கண்டுகொள்க. 'வீரன்விடுசேனை'என்றும் பாட முண்டு. களியானைமன்னன் - மதயானைபோன்ற சகதேவன் எனினுமாம். (௬௬)

௫௭. அஞ்சியந்தவழலோனுமப்பொழுதொரந்தணாளன்வடிவாகியே
வஞ்சியந்தொடையன்மன்னன்முன்புவரவந்தமாமுனியைமன்னனீ
யெஞ்சிநின்றுசுடுகின்றகாரணமிதென்னையென்னலுமியம்பினான்
மஞ்சிவர்ந்தபுகைவானவன்றனதுவாசவுநீலன்வழிபாடுமே.

(இ - ள்.) அப்பொழுது—, அந்த அழலோனும்-அந்தஅக்கினிதேவனும், அஞ்சி - அச்சங்கொண்டு, ஓர் அந்தணாளன் வடிவு ஆகியே - ஒருபிராமண

ருபமாய், வஞ்சி அம் தொடையல் மன்னன் முன்பு வர - அழகிய வஞ்சிப் பூமாலையைத்தரித்த (சகதேவ)ராசனது எதிரிலே வர,—மன்னன்-(அச்சக தேவ)ராசன், வந்த மா முனியை - அங்ஙனம்வந்த சிறந்த அந்தஅந்தணனை நோக்கி, நீ எஞ்சி நின்று சுடுகின்ற காரணம் இது என்னை என்னலும் - 'நீ (பற்றற அழிந்திடாமற்) சேடித்துநின்று(இவ்வாறு என்சேனைகளைச்) சுடுகின்றதற்குக்காரணம் யாது?' என்று வினவியவுடனே,—மஞ்சு இவர்ந்த புகை வாணவன் - மேகத்தையளாவியெழுகிற புகையையுடைய அக்கினிதேவன், தனது வரவும்-தான் இந்நகரத்திற்குவந்த வரலாற்றையும், நீலன் வழிபாடும்-நீலராசன் தன்னை யுபசரித்து வேண்டி வரம்பெற்றதையும், இயம்பினன் - சொன்னான்; (எ - று.)

ஒன்றுஎன்பதன்விகாரமான 'ஒவ்' என்பது, உகரம்பெறுமலும் முதல் நீளாமலும் நின்றது. அந்தணாளன்—அம் - அழகிய, தண் - தண்மையை [அதாவது-குளிர்ச்சியான அருளை], ஆளன் - கொள்பவன். வஞ்சிஎன்ற கொடியின்பெயர், அதன்மலர்க்கு முதலாகுபெயராம். வஞ்சிப்பூமாலை, பகைவர் மேலெதிர்த்துப் போர்செய்யச்செல்வார்க்கு உரியது.வஞ்சியந்தொடையல் என்பதில், அம் - சாரியையுமாம். அந்தமாமுனி என்றும் எடுக்கலாம். இவர்தல் - எழுதல், ஏறுதல். என்னை, ஐ - சாரியை. வழிபாடு - வழிபடுஎன்ற முதனிலைதிரிந்த தொழிற்பெயர். 'தனதுவரமும்' என்றும் பாடமுண்டு.

சகதேவன் நீலராசனது மாகிஷ்மதிநகரத்திற்பிரவேசித்துப் போர்தொடங்கினபோது, அவ்வரசனுக்குத்துணைவனான அக்கினிதேவன் பலவடிவங்கொண்டு சகதேவனதுசேனைகளைக்கொளுத்தியழிக்க, சகதேவன் ஒன்றுஞ் செய்யமாட்டாது திகைத்துநின்று உடனே அக்கினிபகவானைப் பலவாறு துதித்துப்பிரார்த்தித்துப் பிராயோபவேசமாகத் தருப்பசயனத்திற்படுத்து வரங்கிடக்க, அக்கினிதேவன் அச்சரணாகதிக்குக் கட்டுப்பட்டு அவனெதிரில் வந்து தணிந்தவார்த்தைகள் கூறிச் சகதேவனை வரவுவிசாரிக்க, அவனும் மகிழ்ச்சிகொண்டெழுந்து தான்வந்தகாரணத்தைத் தெரிவித்தவுடன், அக்கினி மறைந்தவளவிலே, அந்தீக்கடவுளின்கட்டளையால் நீலராசன் சகதேவனையெதிர்கொண்டுபசரித்துத் திறைகொடுத்தனனென முதனூல் கூறுகின்றது. அக்கினிதேவன் நீலராசனது குமாரியினிடம் மிக்ககாதல் கொண்டு அவளைப் பலவாறுஅநுசரித்து விடாதுதொடர்தலை யுணர்ந்த அந்நீலராசன் அக்கன்னிகையை அந்தணவடிவங்கொண்ட அக்கினிதேவனுக்கு அளிக்க,அவளை மணஞ்செய்துகொண்ட அனற்கடவுள்,அவ்வரசனது வேண்டுகோளின்படி அங்குஇருந்து அந்நகரத்தைவெல்லவருபவர்களையெரித்துவருகின்றனனென்ற வரலாற்றுவிவரத்தையும் முதனூலிற்காணலாம்.

௫௪ நீலனிட்டதிறையானகோலமணி நீலமாதிநவநிதியமுஞ்
சாலமிக்கதபனியமும்வௌவியுயர்சாரல்விந்தசயிலப்புறக்
கேலகெட்டடவிமுறியமோதிவெளியாகவேழ்கடலையுங்கடைக்
காலமுற்றியெழுகாலெனும்படிகலக்கினனெழுகலிங்கமும்.

(இ - ள்.) (பின்பு சகதேவன்),—நீலன் இட்ட திறை ஆன - நீலராசன் கொணர்ந்துகொடுத்த திறைப்பொருளாகிய, கோலம் நீலம் மணி ஆதி நவநிதியமும் - அழகிய நீலரத்தினம்முதலிய நவரத்தினங்களாகிய திரவியங்களின் திரளையும், சால மிக்க தபனியமும் - மிகவும்அதிகமான பொன்னையும், வௌவி - கவர்ந்துகொண்டு,—உயர் சாரல் விந்த சயிலம் புறத்து - உயர்ந்த விந்தியமலையினது சாரலருகே யுள்ள,ஏலம் கெடு அடவி-ஏலக்கொடிகளையுடைய பெரியகாடு,வெளி ஆக-வெற்றிடமாம்படி, முறிய மோதி-முறிய அடித்து,ஏழ் கடலையும் கடைக் காலம் முற்றி எழு கால் எனும்படி-கல்பாந்தகாலத்தில் முதிர்ந்தெழுகிற பிரசண்டமாருதம் ஏழுசமுத்திரங்களையும் (கலக்

ங்க வீசியடித்தல்) போல, எழு கலிங்கமும் கலக்கினன் - ஏழுவகைக்கலிங்க தேசங்களையும் பொருது கலங்கவடித்தான்; (எ - று.)

கலிங்கமென்று பெயர்கொண்டதேசம் ஒன்றல்லவென்றும், அவற்றில் ஒன்று ஏழுபகுப்புடைய தென்றும் உணர்க. நிதி - வடசொல்; அம்-சாரியை. 'நவரத்நமும்' என்றும் பாடமுண்டு. தபநீயம் என்ற வடசொல்-(நெருப்பில்) தபிக்கப்பட்டு விளங்குவ தென்று காரணப்பொருள் பெறும்; இது தமிழில் 'தமனியம்'என்று விகாரப்பட்டு வழங்குதலும் உண்டு. வெளவி, வௌ-பகுதி. சயிலம் - முதற்போலி. அடவி-வடமொழி ஈயீறு இகரமாயிற்று. 'எனும்படி' என்பது - உவமவுருபு. எழுகலிங்கம் - பண்புத்தொகை. உம் - முற்றும்பொருளது. ஏழ்கடல் - உவர்நீர், கருப்பஞ்சாறு, கள், நெய், தயிர், பால், நன்னீர் இவற்றின்மயமானவை. ஏலம்-வாசனைப்பண்டங்களி லொன்று. பிரளயகாலத்திற் பெருங்காற்று எழுந்து வீசியடித்துக் கடல்களையலைக்கு மென்பது, புராணபிரசித்தம். நெடுமை+அடவி=நெட்டடவி: பண்புப்பெயர் ஈறுபோய்த் தன்னொற்று இரட்டிற்று. சால - சால்என்ற உரிச்சொல்லடியாப் பிறந்த செயவெனெச்சம். (௧௮)

௫௯. சென்னிநாடுகுடகொங்கநாடுதிறைகொண்டுதென்னனுறை செந்தமிழ்க், கன்னிநாடுறவுடன்புகுந்துமணிநித்திலக்குவைகள்கைக் கொளா, மன்னிநாடுகடல்கொண்டகைம்முனிவன்வைகுமாமலயநண் ணினான், மின்னிநாடுறவிளங்குவெஞ்சமரவீரவாகைபெறுவேலினான்.

(இ - ள்.) நாடுற மின்னி விளங்கு-(தூரத்திலுள்ளவர்களும்) உற்றுநோக்குமாறு மின்னிப்பிரகாசிக்கிற, வெம் சமரம் வீரம் வாகை பெறு வேலினான் - கொடியபோரில் வெற்றிக்கு அறிகுறியாகிற வாகைப்பூமாலையைப் பெறுகிற வேலாயுதத்தையுடையவனான சகதேவன்,—சென்னிநாடு-சோழராசனதுநாட்டிலும், குட கொங்க நாடு - (அதற்கு) மேற்கி லுள்ளதான கொங்கநாட்டிலும், திறை கொண்டு - (அவ்வவ்வரசரிடம்) திறைபெற்றுக் கொண்டு,—தென்னன் உறை செம் தமிழ் கன்னி நாடு உறவுடன் புகுந்து-பாண்டியராசன்வசிக்கிற சுத்தமான தமிழ்வழங்கும் பாண்டிவளநாட்டிலே உறவுமுறைபாராட்டிக்கொண்டு பிரவேசித்து, மணி நித்திலம் குவைகள் கைக்கொளா - (அவ்வரசனால் திறைகொடுக்கப்பட்ட) அழகிய முத்துக்களின் திரள்களைப் பெற்றுக்கொண்டு,—நாடு கடல் கொண்ட கை முனிவன் மன்னி வைகும் மா மலயம் நண்ணினான் - (விருத்திராசுரன்)விரும்பிப்புக்க இடமானகடலைக் கையிற்கொண்டுஆசமநஞ்செய்த அகத்தியமகாமுனிவன் நிலைத்துவீற்றிருக்கப்பெற்றசிறப்பையுடைய பொதியமலையைச்சேர்ந்தான்.

சென்னி - தலை; சோழராசனுக்கு 'சென்னி' என்பது, தலைமையற்றி வந்தபெய ரெனப்படும். தென்னன் - பாரதகண்டத்தில் எல்லாநாடுகளுக்கும்தெற்காகிய நாட்டை யாள்பவன்; தென்னாடு - பாண்டியநாடு.தமிழுக்கு ஆதியிலக்கணநூல்செய்த அகத்தியமகாமுனிவனும், வமிசபாம்பரையாகத் தமிழ்ப்பாஷையைப்பரிபாலனஞ்செய்துவந்த பாண்டியராசர்களும், தமிழை வளர்த்த சங்கப்புலவர்களும் வாழ்கிற இட மாதலால், பாண்டியநாடு 'செந்தமிழ்நாடு' எனப்பட்டது. அதற்கு 'கன்னிநாடு' என்று பெயர்வந்ததன் காரணம் - கன்னியாகுமரியெனப்படும் நதியை யுடைமை. அன்றி, மலயத்துவசபாண்டியனதுமகளாய்ப்பிறந்தவளும் உமாதேவியின் அவதாரமுமாகிய தடாதகையென்றுபெயர்பெற்ற மீனாக்ஷியம்மையென்ற கன்னிகையினால் ஆளப்பட்டமை யென்றுங் கூறுவர்.

'த்ராவிடம் என்னும் வடமொழி, தமிழ்எனச் சிதைந்ததென்றது; இனி, 'தமி' என்னும் வினைப்பகுதியடியாகப்பிறந்தது, வினைமுதற்பொருளுணர்த்தும் விகுதி குன்றி, ழகரவொற்றுஎழுத்துப்பேறு பெற்று, தனக்குஇணையில்

லாதபிர்ஸை யெனப் பொருள்தருவது என்பாரும்; இனிமையுணர்த்தும் தமிழ்என்னுஞ்சொல் எல்லாப்பாஷைகளினும்இனியதாகிய இப்பாஷைக்குப் பண்பாகுபெயராய்வழங்கிற்று என்பாரும்; மற்றைப்பலபாஷைகளிலில்லாமல் தன்னிடத்தில்மாத்திரமேதனியாகவுள்ள ழகரமென்னும்எழுத்தையுடைய தென அன்மொழித்தொகைக்காரணக்குறி என்பாரு முளர்.

சகதேவன் தன் தமையன்மாருளொருவனான அருச்சுனனது மனைவியரில் ஒருத்தியாகிய சித்திராங்கதையும், அவள்மகனான பப்புருவாகனனும், அவன்தந்தையாதலின்அருச்சுனனுக்குமாமனான சித்திரவாகன பாண்டியனும் வசிக்கிற இடமாகிய பாண்டியநாட்டிராசதானியான மதுரைக்கு அந்தஉறவுமுறைக்குஉரிய இயல்போடு புக்கன னென்பார், 'உறவுடன்புகுந்து' என்றார். "பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்து"என்றபடி பாண்டியநாட்டைச்சார்ந்த கடலில் முத்து மிகுதியாக உண்டாகுதலால், அங்கு முத்துத்திறைகள் அளிக்கப்பட்டன. கைக்கொளா - உடன்பாட்டெச்சம். 'குடகொங்கநாடு' என்பதனைக் குடநாடு கொங்கநாடு என்று இரண்டாகக்கொள்வாருமுளர். 'வைகுமால்வரையினண்ணினன்'என்பதும் பாடம். நாகேடல் - வினைத்தொகை. மணிநித்திலம் - நவரத்தினங்களிலொன்றாகிய முத்து எனினுமாம்.

அகத்தியர் கடல்குடித்த கதை:—இந்திரன்முதலிய தேவர்கள்,தம்பகைவனான விருத்திராசுரன் மற்றும் பல அசுரர்களுடனே கடலி லொளித்துக்கொண்டபோது, அகத்தியமகாமுனிவரைச் சரணமடைந்து பிரார்த்திக்க, அவர், அக்கடலின்நீரைத் தமதுஒருகையால் முற்றும்முகந்து பருகியருளி, உடனே ஒளித்திருந்த அவ்வசுரனை இந்திரன் கொன்றபின்பு, அவர்கள் வேண்டுகோளின்படி மீண்டும் அக்கடலை உமிழ்ந்தன ரென்பது. (௫௯)

௬0. செகத்தியங்குதனியாழியைவரினுமிளையகாளையொடுசேனையந்
நகத்தியைந்தபொழுதவனிபவ்வமுறநவ்வெனத்தலைநடுங்கவே
மிகத்தியங்கிநெடுமேருவெற்பின்மிசைமேவுவானவர்கண்மீளவு
மகத்தியன்றனைவடக்கிருத்தும்வகையுன்னினார்கள்சமமாகவே.

(இ - ள்.) செகத்து இயங்கு - பூலோகம்முழுவதிலும் தடையின்றிச்செல்லுகிற, தனி ஆழி - (ஒப்புயர்வற்ற தனித்த ஆஜ்ஞையாகிய) ஏகசக்கரத்தையுடைய, ஐவரினும் - பஞ்சபாண்டவர்களுள்ளும், இளைய - இளையவனான, காளையொடு -வீரனாகிய சகதேவனோடு (சென்ற), சேனை - (மிகப்பெரிய) சேனைகள், அ நகத்து இயைந்த பொழுது - அந்தமலயபர்வதத்தில் ஒருங்கு சேர்ந்தபோது,(அதனால் ஒருபுறத்தே மிக்க அதிகபாரத்தைப் பொறுக்கமாட்டாமல்),அவனி - பூமி, பவ்வம் உறு நவ் என தலைநடுங்கவே - கடலிற்பொருந்திய தோணிபோல அசைவடைந்து தென்புறஞ்சாயவே,—நெடு மேரு வெற்பின்மிசை மேவு வானவர்கள்-(பூமியின் மத்தியிலுள்ள) மகாமேருகிரியின்மீதுவசிக்கிற தேவர்கள், மிக இயங்கி-(இதற்கு என்செய்வதென்று) மிகவும் கலங்கி, சமம் ஆக - (பூமி) சமமாதற்பொருட்டு, மீளவும் அகத்தியன்தனை வடக்கு இருத்தும் வகை உன்னினார்கள்-மீண்டும் அகத்தியமுனிவனை வடதிசையி லிருக்க வைக்குமாறு கருதினார்கள்; (எ - று.)

முன்னொரு காலத்தில் சகலதேவர்களும் முனிவர்களும் மேருகிரியிலே ஒருங்குகூடியதனால், அவ்வடபுறம் தாழ்ந்து தென்புறம் உயரவே, அதனைக்கண்டுகலங்கியஅனைவரும் மிக்கமகிமையுடையவரான அகத்தியமுனிவரைத் தென் திசைக்குச் செல்லும்படி வேண்ட, அவ்வாறே அம்முனிவர் தெற்கில் வந்து பொதியமலையிற்சேரவே, இருதிசையும் ஒப்ப நிலைபரம்பெற்றுப் பூமி சமநிலையுற்றது என்ற வரலாறுபற்றி, 'மீளவு மகத்தியன்தனை வடக்கிருத்தும்வகை யுன்னினார்கள் சமமாகவே' எனப்பட்டது.

ஜகத் என்ற வடசொல், விகாரப்பட்டது. ஆழி-வட்டவடிவமுடையது. ஐவர் - தொகைக்குறிப்பு. காளை - இளவெருது; அதுபோன்ற திண்ணிய வீரனுக்கு உவமையாகுபெயர்: நடை வலிமை காம்பீரியங்களால் உவமம். நகம் - வடசொல்; சலியாதது. அவநி - வடசொல்; (அரசர்களாற்)பாதுகாக்கப்படுவதென்று காரணப்பொருள்படும். பவ்வம்=பௌவம்: மூத்தபோலி; [நன்-எழுத்து-௭௦.]நௌ'என்ற வடசொல்,நவ் என விகாரப்பட்டது. தலை நடுங்க என்பதில், தலை என்பது-தமிழ்உபசர்க்கம்; (பெயர்க்கும் வினைக்கும் முன் அடையாய்நின்று பொருள்தராதும் அப்பெயர்வினைப்பொருளை வேறுபடுத்தியும் வரும் இடைச்சொல், வடமொழியில் உபஸர்க்க மெனப்படும்: கைகூடல், தலைப்பிரிதல், மேற்கொள்ளல், பரிமாறல் என்றவற்றில் கை, தலை, மேல், பரி என்பன-தமிழுபசர்க்கமாம்.) அகஸ்த்யன் - வடமொழிப்பெயர்; (விந்திய)கிரியை அடக்கியவ னென்று காரணப்பொருள் பெறும்; அகம் மலை: சலியாதது.'பவ்வமுறுநாளென' என்ற பாடத்திற்கு-கடல் மேற்கொள்ளுங் கற்பாந்தகாலத்திற்போலப் பூமி கம்பமடைய வென்பது பொருளாம். இங்கு'ஆக'என்பது - காரியப்பொருட்செயவெனெச்சம்; எதிர்காலம். இச்செய்யுள், சகதேவனுடன்சென்ற சேனைமிகுதியை அதிசயோக்திவகையால் வருணித்தது. (௬௦)

௬௧. கன்னிலங்கொலென்னவலியமெய்பெறுகடோற்கசன்றனையழைத்துநீ, தென்னிலங்கைதிறைகொண்டுமீள்கவெனவிளையதாதையுரைசெய்யவே, மின்னிலங்கணிவெயிற்றரக்கர்குலவீரனாகியவிபீடணன், றன்னிலங்கொதிகொளப்புகுந்தொருசழக்கறச்சமருழக்கினான்.

(இ - ள்.) (அங்கு இருந்தபடியே), கல் நிலங் கொல் என வலிய மெய் பெறு கடோற்கசன்தனை அழைத்து - கருங்கற்பாறைமயமான தலமோ வென்றுசொல்லும்படி வலிமையையுடைய தேகத்தைப் பெற்ற கடோற்கசனை வரவழைத்து, இளைய தாதை-(அவனது) சிறியதந்தையான சகதேவன், நீ தென் இலங்கை திறை கொண்டு மீள்க என உரை செய்யவே-'நீ தெற்கிலுள்ள இலங்காபுரியிற் சென்று திறைவாங்கிவருவாயாக' என்று சொல்லவே, (அக்குமாரன்), மின் இலங்கு அணி எயிறு அரக்கர் குலம் வீரன் ஆகிய விபீடணன் தன் நிலம் கொதி கொள புகுந்து - மின்னல்போல விளங்குகிற வரிசையான பற்களையுடைய இராக்கதவம்சத்துவீரனாகிய விபீஷணனது ஆட்சியிலுள்ளஇடமாகிற அவ்விலங்காபுரியில் (அங்குள்ளார் மனங்)கொதித்தலைக்கொள்ளும்படி பிரவேசித்து, ஒரு சழக்கு அற சமர் உழக்கினான் - தடுமாற்றஞ்சிறிதுமில்லாமற் போர்செய்தான்; (எ - று.)

கடோற்கசன் - வீமனுக்கு இடிம்பனதுதங்கையானஇடிம்பியென்னும் அரக்கியினிடம் பிறந்த மகன்; இவனது பிறப்புவரலாறு, கதைத்தொடர்ச்சியிற் கூறப்பட்டது. இவன் பின்பு தனதுதாதையானவீமனையும் மற்றைஅவனுடன்பிறந்தவர்களையும் விட்டுப்பிரிந்துசெல்லுகையில், அன்போடுவணங்கி அவர்கள் தன்னைவேண்டியகாலத்து நினைக்கும்படியாகவும், அங்ஙனம் நினைத்தமாத்திரத்திலே தான்வந்துஉதவுவதாகவும் வாக்குதத்தஞ்செய்துபோயினனாதலின், அங்ஙனமே இப்பொழுது சகதேவன் நினைத்தவளவில் வந்தன னென்று அறிக; கீழ் வேத்திரகீயச்சருக்கத்தில், "நிறையுடைத்தந்தையர் நீர் நினைத்தபோது, உறைவிடத்தெய்தியாங் குரைத்தசெய்குவேன், இறைவ ரிப்பணிவிடை தருகென்றேகினான்,பிறையெயிற்றியாயொடும்பெற்றபிள்ளையே"என்றது நோக்கத்தக்கது. கடம் - குடம்; உத்கசம் - மயிரில்லாதது: இவனுடைய குடம்போன்ற தலை மயிரின்றியிருந்ததனால், கடோத்கச னென்று இவனுக்குப் பெயரிடப்பட்டதென்று வடநூல் கூறும்; குணசந்திபெற்ற பெயர்; இனி, இப்பெயர்க்கு-கடம் - குடம்போன்ற, உத்கசன் - மிக்கமயிர்முடியுடையவன் என்று பொருள்கொள்வர் ஒருசாரார்.

'கொல்'என்ற இடைச்சொல், வினாப்பொருளில் வந்தது. ராக்ஷசரிடந் திறைவாங்குதற்கு அரக்கிபெற்றபிள்ளையை யனுப்புதல் தகுதியென்ற கருத்தினால், கடோத்கசனை வரவழைத்துச் செய்திகூறியனுப்பினான். லங்கா என்ற வடசொல், இலங்கை யென்று விகாரப்பட்டது; கடல்சூழ்ந்த தீவு. அது தென்கடலிடையே யுள்ளதனால் 'தென்இலங்கை'எனப்பட்டது. இது ராக்ஷசராஜதானியென்பது பிரசித்தம். அரக்கர் - ரக்ஷஸ் என்ற வடசொல்லின்சிதைவு. விபீஷணன் என்றவடமொழிப்பெயர்-பயங்கரனல்லாதவ னென்றும், (பகைவர்க்கு) மிகவும்பயங்கர னென்றும் காரணப்பொருள்பெறும். இராவணனது தம்பியும் அவனுக்குப்பின்பு ராக்ஷசராசனுமாகிய இவன் எழு சிரஞ்சீவியருள் ஒருவ னென்று அறிக. (மற்றையோர் - அசுவத்தாமா, பலி சக்கரவர்த்தி, வியாசன், அநுமான், கிருபாசாரியன், பரசுராமன்.) 'குதிகொள்'என்றபாடத்திற்கு - விபீஷணனதுராச்சியம் அதிர்ச்சியடைய என்றும், 'சழக்குற' என்ற பாடத்திற்கு - அச்சமுண்டாக என்றும் பொருளாம். கொதி - முதனிலைத்தொழிற்பெயர். கொளா=கொள்ள: தொகுத்தல். (சுக)

௬௨. யாரையோவுரைசெய்நீயெனத்திறனிசாசராதிபனியம்பலும்
பாரையேழினையுமுழுதுடைக்குருகுலத்துமேன்மைபெறுபாண்டுவின்
பேரன்யான்விறலிடிம்பன்மாமருகனெனவரக்கர்பெருமான்மனத்
தூருமாதரவினோடழைத்தவனையுவகையோடுமிகவுறவுறா.

இது முதல் நான்கு கவிகள் - குளகம்.

(இ - ள்.) திறல் நிசாசர அதிபன் - வலிமையையுடைய இராக்கதராசனான விபீஷணன், (கடோத்கசனை நோக்கி), நீ யாரையோ உரைசெய் என இயம்பலும்-'நீ யார்? சொல்' என்று வினவுதலும்,—(கடோத்கசன்), 'யான்—, பாரை எழினையும் முழுது உடை குருகுலத்து மேன்மை பெறு பாண்டுவின் பேரன் - எழுதீவுகளாகவுள்ள பூமிமுழுவதையுந் தனதுஅரசாட்சியிலுடையவனும் குருவென்னும்அரசனதுகுலத்தில் மேன்மைபெற்றவனுமான பாண்டுமகாராசனது பௌத்திரன்: விறல் இடிம்பன் மா மருகன்- வலிமையையுடைய்இடிம்பனென்னும் அரக்கர்தலைவனது சிறந்தமருமகன்', என - என்றுவிடைசொல்ல,—(அதுகேட்டவுடன்), அரக்கர் பெருமான்- இராக்கதராசனான அவ்விபீஷணன், மனத்து ஊரும் ஆதரவினோடு - தன் மனத்திலுண்டாகிமிகுகிற அன்புடனே, அவனை அழைத்து - அக்கடோற்கசனை வரவழைத்து,உவகையோடு மிக உறவுஉறா-மகிழ்ச்சியோடுமிகவும்உறவுபாராட்டி(உபசரித்து),(எ-று.)—'என' என்றுஅடுத்தகவியோடுதொடரும்.

"வேறு இல்லை உண்டு யார் வேண்டும் படும் தகும், வினைபெயரெச்சம் வியங்கோள் பத்தும், திணைபா லிட மெலாஞ் செல்லு மென்ப" என்றபடி இங்கு 'யார்'என்பது,முன்னிலையொருமையில் வந்தது; ஐ,ஓ என்ற இரண்டும் - அசை; வாக்கியாலங்காரமென்னலாம். நிசாசராதிபன் - தீர்க்கசந்தி பெற்றவடமொழித்தொடர். நிசாசரர் - இரவில் (வலிமைகொண்டு) சஞ்சரிப்பவர். 'முழுது' என்பது - உரிச்சொல்; "முழுதென்கிளவி எஞ்சாப்பொருட்டே" என்பது தொல்காப்பியத்துஉரிச்சொல்லியற்சூத்திரம். பௌத்ரன்என்ற வடமொழி, பேரன்எனச் சிதைந்ததென்பர்; அன்றி, ஒருவனது பெயரை அவனதுபௌத்திரனுக்குஇடுதல் பெரும்பான்மை மரபாதலால், அப்பிதாமகனதுபெயரைப்பெறுபவ னென்றுகாரணப்பொருள் கூறினுமாம். இடிம்பன் மகாபலசாலியென்று பிரசித்திபெற்றவனாதலால்,'விறலிடிம்பன்' எனப்பட்டான்; ஹிடிம்பன் - வடசொல். மருகன் - உடன்பிறந்தவளது மகன். பெருமான் - பெருமையையுடையவன்; மான் - பெயர்விகுதி. ஆதரவு - ஆதரம் என்ற வடசொல்லின் விகாரம். உறா - உடன்பாட்டெச்சம். விபீஷணன், கடோற்கசனிடத்து, தனதுஅரக்கர்குலத்தவ னென்ற ஒற்றுமைபற்றி அன்புடன் உறவுகொண்டாடின னென்க. 'நிசாசராதிபன்'

என்று முன்வந்ததனால், பின்வந்த 'அரக்கர்பெருமான்' என்றது - சுட்டின் தன்மையதாய் நின்றது. 'யாரையா' என்ற பாடத்திற்கு, 'ஐயா' என்று விளித்ததாகக் கொள்க. (௬௨)

௬௩. நீயிலங்கையிடைவந்ததென்கொலெனநீதியாலுயருதிட்டிரன்
ராயசூயமெனுநாமமாமகமியற்றுவான்விறலொடெண்ணினு
னேயமானவிளையோர்களுநால்வருநெடுந்திசாமுகமடங்கவென்
றேயமாநிதிதிரட்டலுற்றனர்களியானுநின்னகரிலெய்தினேன்.

(இ - ள்.) நீ இலங்கையிடை வந்தது என் கொல் என - 'நீ இவ்விலங்காபுரியில்வந்ததன்காரணம்யாதோ?'என்று(விபீஷணன்)வினவ,—(அதற்கு விடையாகக் கடோற்கசன்),—'நீதியால் உயர் உதிட்டிரன் - நீதியினாற் சிறந்த தருமபுத்திரன், ராயசூயம் எனும் நாமம் மா மகம் இயற்றுவான் - ராஜசூயமென்னும்பெயருடைய மகாயாகத்தை(த் தான்) செய்யுமாறு, விறலொடு எண்ணினான் - உறுதியாக மனச்சங்கற்பஞ் செய்துகொண்டான்: (அதன்பொருட்டு), நேயம் ஆன இளையோர்கள் நால்வரும் - (அவன்பக்கல்) அன்பையுடைய அவனதுதம்பியர் நான்குபேரும், நெடுந் திசாமுகம் அடங்க வென்று எய மா நிதி திரட்டல்உற்றனர்கள் - நீண்டதிக்குக்களினிடங்களிலெல்லாம் (சென்று அவ்வவ்வரசர்களைச்)சயித்து (ஆங்காங்கு)ப்பொருந்திய மிக்கதிரவியங்களைச் சேர்ப்பவரானார்கள்; (அதற்காகவே), யானும் நின்நகரிஎய்தினேன்-நானும் உனதுஇவ்விலங்காபுரிக்குவந்தேன்; (எ - று.) —இச்செய்யுளில் 'என' என்றது, அடுத்தசெய்யுளில் வரும் 'புகல' என்ற வினையெச்சத்தைக் கொள்ளும்.

என் - வினாவினைக்குறிப்புமுற்று. கொல் - அசை.'ராயசூயம்'என வடமொழி முதலில் இகரம்பெறாது நின்றது; சிந்தாமணியில் "ராசமாபுரி," "ரவிகுலதிலகன்" என்பனபோல. இயற்றுவான்-எச்சம். எய என்ற இறந்தகாலப்பெயரெச்சத்தில், எய் - பகுதி, அ - விகுதி, ய் - இடைநிலை; தனிக்குறிலைச்சாராத பகுதியீற்று யகரம் யகரம்வரக் கெட்டது:இது, "யரழமுன்னர்" என்ற நன்னூற்சூத்திரத்து 'மேல்' என்ற மிகையினால் அமையும். உற்றனர்கள்+யானும்=உற்றனர்களியானும்: "தன்னொழி மெய்ம்முன் யவ்வரினிகரம், துன்னு மென்று துணிநரு முளரே" என்பது காண்க. (௬௩)

௬௪. அற்பனைத்துலகுமெண்ணவேயறனளித்தமன்னனழல்வேள்வியின்
கற்பனைக்குதவிதருகெனப்பழையகால்விழுத்தநெடுவேலைவீழ்
வெற்பனைப்புகலவந்தவீடணனளித்தநீடுயர்வியன்றலைப்
பொற்பனைத்தருவொரேழுமேழுமுடனேகவர்ந்துகழல்போற்றியே.

(இ - ள்.) அன்பு அனைத்து உலகும் எண்ணவே - (உனது) அன்பை உலகத்தவரனைவருங் கொண்டாட, அறன் அளித்த மன்னன் அழல் வேள்வியின்கற்பனைக்கு உதவிதருக-யமதர்மராஜன்பெற்றபுத்திரனான யுதிஷ்டிர ராஜன் அக்கினியினிடத்துச்செய்வதாகிய (இராசசூய)யாகத்தின் நியமத்துக்கு உரிய பொருளுதவியைத் தருவாயாக',என-என்று,பழைய கால் விழுத்த நெடு வேலை வீழ் வெற்பனை புகல-முன்னொருகாலத்தில் வீசியடித்தகாற்று (பிடுங்கி) எறியப் பெரியகடலில் வீழ்ந்திட்ட(மகாமேருகிரியின்சிகரமாகிய திரிகூடமென்னும்) மலைக்கு உரியவனான விபீஷணனை நோக்கி(க் கடோற்கசன்) சொல்ல,—(அதுகேட்டவுடன்), அந்த வீடணன் அளித்த - அவ்விபீஷணராஜன் (திறையாகக்) கொடுத்த, நீடு உயர் வியன் தலை பொன் பனை தரு ஓர் எழும் எழும் - மிகவுயர்ந்த விசாலமான தலையையுடைய பொன்மயமான பதினான்கு பனைமரங்களையும், உடனே கவர்ந்து - உடனே(கடோற்கசன்) பெற்றுக்கொண்டு, கழல் போற்றி - (அவ்விபீஷணனுடைய) பாதங்களை வணங்கி, (எ - று.)—'மீளவந்து'என அடுத்தகவியோடு தொடரும்.

இப்பனைமரங்கள் யாகத்தில் தோரணக்கம்பமாகநாட்டுதற்குஉரியன வாமென்பதை முதனூல்கொண்டு அறிக. பொன்பனை - அழகியபனை எனினுமாம். ஸ்ரீராமபக்தனும் மகாசாத்துவிகனுமான விபீஷணன்பக்கல் தான் ஒருகாரியநிமித்தம் எதிர்த்து அபசாரப்பட்ட குற்றந் தீர்தற்பொருட்டு, கடோற்கசன், முடியில் அவன்பாதங்களை வணங்கினன். ஆதிசேஷனை வென்று வாயுவினால் வலியக்கவர்ந்துகொண்டுவந்து தென்கடலிலிடப்பட்ட மேருசிகரமான திரிகூடமலையின்மீது அமைக்கப்பெற்ற இலங்காபுரியின் அரசனென்பார், 'பழையகால்விழுத்த நெடுவேலைவீழ் வெற்பன்'என்றார். 'வெற்பன்'என்பது, குறிஞ்சிநிலத்தலைவன்பெயராய் வழங்கும். அன்பு+ அனைத்து = அற்பனைத்து: மென்றொடர் வேற்றுமையில் வன்றொடராயிற்று; [நன்-உயிர் - ௩௪.] தருகென - தொகுத்தல். பழைய - பழமையென்றபண்புப்பெயர் ஈறுபோய் இடைஅகரம் ஐயாயிற்று. விழுத்த - செயவெனெச்சம்; விழுஎன்பதன்பிறவினையான விழுத்து - பகுதி: இதில், து - பிறவினை விகுதியாம். வேலை, வீடணன் - வடமொழிச்சிதைவு. தரு - வடமொழித்தற்சமம். 'அறனளித்தமன்னன்'என்றது, தருமத்தைப்பாதுகாக்கின்ற அரசன் என்றவாறுமாம். லோகமென்றவடசொல்லின்விகாரமான 'உலகு' என்றது, இங்கு, சனங்களை யுணர்த்திற்று. உதவி - 'இ'விகுதிபெற்ற தொழிற்பெயர்.

௩௫. மீள வந்திளைய தாதைபாதமுடி மீது வைத்தொளிவிளங்குபொற்
பாளையம்பனைகள் பற்பராகமுதலான பன்மணிபரப்பினா
னாளிரண்டிலிமையோரொடொத்தபெருஞானபண்டிதனுநல்லறன்
காளைபைங்கழல்வணங்கினன்றமதுபதிபுகுந்துநனிகடுகியே.

(இ - ள்.) (பின்பு கடோத்கசன்), நாள் இரண்டில் மீள வந்து-இரண்டு நாள்களில் (இலங்கையினின்று) திரும்பிவந்து, இளைய தாதை பாதம் முடி மீது வைத்து - தனதுசிறியதந்தையான சகதேவனுடைய பாதங்களைத் தன்சிரத்தின்மேல்வைத்து வணங்கி, ஒளி விளங்கு பொன் பாளை அம் பனைகள் - ஒளிவீசுகிற பொன்மயமானபாளைகளையுடைய அழகிய அப்பனைமரங்களையும், பற்பராகம் முதல் ஆன பல் மணி - (மற்றும் இலங்கையினின்று கொணர்ந்த) பத்மராகம் முதலான பலரத்தினங்களையும், பரப்பினான்- (சகதேவனது முன்னிலையில்) மிகுதியாகவைத்துக் காட்டினான்; (அதன் பின்பு), இமையோரொடு ஒத்த பெரு ஞான பண்டிதனும் - தேவர்க்குச்சமமான சிறந்ததத்துவஞானத்தையுடைய பண்டிதனான சகதேவனும், நனி கடுகி தமது பதி புகுந்து - மிகவிரைந்து தமதுஇந்திரப்பிரத்தநகரத்தைச் சேர்ந்து, நல் அறன் காளை பைங் கழல் வணங்கினன் - நல்லதருமபுத்திரனுடைய பசும்பொற்கழலணிந்தபாதத்தை வணங்கினான்; (எ - று.)

பாதம் முடிமீதுவைத்து - பாதமீதுமுடிவைத்து என்று மாற்றியுரைக்கலாம். பத்மராகம் என்ற வடமொழி, பற்பராகம்என்று விகாரப்பட்டது. செந்தாமரைமலர்போலச் செந்நிறமுடைய ஒருவகையிரத்தினம். 'நாளிரண்டில்' என்பதை பிந்தினவாக்கியத்தோடு கூட்டுதலும் ஒன்று. இமையோர் - கண் இமையாதவர்: எதிர்மறைத்தெரிநிலைவினையாலணையும்பெயர்; எதிர்மறைஆகாரம் புணர்ந்துகெட்டது:விகுதிமுதல்ஆகாரம் ஓகாரமாயிற்று; இமையில் மூடாமையாகிய விசேஷமுடையவர் என்று கொண்டால், உடன்பாட்டுக் குறிப்புவினையாலணையும்பெயராம். மனிதரினுந் தேவர் அறிவிற் சிறந்தலால், அவரைச் சகதேவனுக்கு உவமையாக்கினார். இனி, 'இமையோர்'என்றது, பரமபதத்துநித்தியசூரிகளை யென்றுங் கொள்ளலாம். சகதேவன், தத்துவஞானத்திலும் சோதிடவுணர்ச்சியிலுந் தேர்ந்தவனாதலால், '[illegible]ஞானபண்டிதன்' எனப்பட்டான். அவன் அங்ஙனந் தேர்ந்தவனாதல், [illegible] மேல் இருட்டினன்றுதுர்க்குக்கந்திலும், முகூர்த்தங்கேள்விக்

சருக்கத்திலும், பிறவிடங்களிலும் விளங்கும். தருமபுத்திரனது சற்குண பூர்த்தி விளங்க, 'நல்லறன்காளை'என்றார். பைங்கழல் - பண்புத்தொகை யன்மொழி. பசும்பொற்கழ லென்பார், 'பைங்கழல்'என்றார். 'காளைதன்கழல்'என்பதும் பாடம். இக்கவியில் 'பற்பராகமுதலான பன்மணி பரப்பினுன்'என்றதுகொண்டு, மேற்கவியில் பொற்பணிகளோடு பலஇரத்தினங்களையும் விபீஷணன் கொடுத்தன னென்று உணர்க; இது-வந்ததுகொண்டு வாராததுணர்த்தலென்னும்உத்தியின்பாற்படும். அங்ஙனங்கொடுத்தமையை முதனூலிற் பரக்கக்காண்க. தாதை-'தாத' என்ற வடசொல்லின் விகாரம். ஜநார்த்தன் - வடமொழித்தொடர். (௬௫)

வேறு.

[தம்பியர்நால்வருங்கொணர்ந்த திறைப்பொருள்களைத் தருமன்காணுதல்.]

௬௬. ஆல்வரும் புரவித் திண்டே ரறன்மக னநுச ரான
நால்வருஞ் சென்று திக்கோர் நாலிரண் டினுந்தன் செய்ய
கோல்வரும்படியே யாக்கிக் கொணர்ந்தன திறைகள் கண்டான்
மேல்வரு மிராய சூய வேள்விநாம் விளம்பக் கேண்மோ.

(இ - ள்.) ஆல் வரும் - ஆட்டமாடிக்கொண்டு வருகிற, புரவி- குதிரைகளையும், திண் தேர்-வலியதேர்களையுமுடைய, அறன் மகன் - தருமபுத்திரன்,— அநுசர் ஆன நால்வரும் - தனதுதம்பியரான வீமன்முதலிய நான்குபேரும், சென்று - போய், திக்கு ஓர் நால் இரண்டினும் - எட்டுத்திசைகளிலும், தன் செய்ய கோல் வரும்படியே ஆக்கி - தனதுசெங்கோல் செல்லும்படிசெய்து, கொணர்ந்தன (அந்தந்தத்தேசத்தவரிடமிருந்து) கொண்டுவந்தனவான, திறைகள்-திறைப்பொருள்களையெல்லாம், கண்டான் -(மகிழ்ச்சியோடு) பார்த்தான்; மேல் வரும் இராயசூயவேள்வி நாம் விளம்பகேண்மோ - இனிநிகழும்ராஜசூயயாகத்தைப்பற்றி நாம் சொல்லக் கேட்பாயாக.

பாரதசரித்திரம் ஜநமேஜயமகாராஜனுக்கு வைசம்பாயநமுனிவர் கூறியதாக முதனூலிற் கூறியுள்ளதனால், இங்கு 'கேள்' என்ற ஏவலொருமை அவ்வரசனைக் குறித்தது. 'நாம்'என்ற தனித்தன்மைப்பன்மை, பெளராணிகர்க்கு உரியது. மோ - முன்னிலையசை. ஆல் வரும் புரவி - நாட்டியக்குதிரை; குதிரையின்நடைவிகற்பங்களுள் ஆட்டமும் ஒன்றாம்: ஆலல்-ஆடுதல்; ஆல்வரும் என்பதில் 'வா' என்பதன் விகாரமான 'வரு' என்பதைத் துணைவினையென்றுங் கொள்ளலாம். 'ஆல்வரும்புரவித்திண்டேர்' என்பதற்கு-கனைத்து ஒலிக்கின்ற குதிரைகள் பூட்டிய வலியதேரையுடைய என்று உரைத்தலு மொன்று;ஆலல் - ஒலித்தல். அநுஜர் - வடசொல்; பின்புபிறந்தவர். செய்ய என்ற குறிப்புப்பெயரெச்சத்தில், செம்மை என்ற பண்புப்பகுதி, ஈறுபோய் முன்நின்றமகரமெய் யகரமாத்திரிந்து, 'செய்'என நின்றது. நீதிதவறாது அரசனாற்செய்யப்படும் முறைமை, ஒருபுறம்கோணாது செவ்வியகோல் போலுதலால், 'செய்யகோல்' எனப்பட்டது; உவமையாகுபெயர்; வடநூலாரும் 'தண்டம்' என்றார். நாலிரண்டு - பண்புத்தொகை.

இதுமுதற் பன்னிரண்டுகவிகள்-பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும்,மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடிநான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள்; இவற்றில், மூன்று ஆறாஞ்சீர்கள் தேமாச்சீர்களாகவே நிற்கும். (௬௬)

[இதுவும், அடுத்தகவியும்-குளகம்: கண்ணன்முதலியோரையழைத்துத் தருமபுத்திரன் ஆணையிடுதல்.]

௬௭. இரணியனிரணியாக்கனென்றதானவரைவென்றுங்
காரணியிலங்கைமூதூரரக்கரையருகேனும்

மரணமுற்றிடமுன்சீறிமாமனைமலைந்துமற்றை
முரணியபகையுந்தீர்ப்பான்மூர்த்தியாய்ப்பிறந்தவேனா.

கூஅ. விரைவினிற்கொணருமாறுவீணைநாரதனைப்போக்கித்
தரணிபர்க்கெல்லாமோலைதனித்தனிதூதிற்போக்கி
வரனுடைச்சுருதிநான்கும்வகுத்தவனாதியான
விருபிறப்பாளர்யார்க்குமுலூகனையேவினானே.

(இ - ள்.) இரணியன் இரணியாக்கன் என்ற தானவரை ஆங்கு வென்று - ஹிரண்யன் ஹிரண்யாக்ஷன் என்னும்பெயருள்ள அசுரர்களை அக்காலத்திற் சயித்து, அரணிய இலங்கை முது ஊர் அரக்கனை - அரண்களையுடைய இலங்கையென்னும் பழமையான நகரிலிருந்த இராக்கதராசனை இராவணனை, அநுசனோடு மரணம் உற்றிட - அவன் தம்பியான கும்பகர்ணனுடனே மரணமடையும்படி, முன் சீறி - முற்காலத்திற் கோபித்து(ப்பொருது),—மாமனை மலைந்து மற்றை முரணிய பகையும் தீர்ப்பான் மூர்த்தி ஆய் பிறந்த உளோனை - மாதுலனான கம்சனைப் பொருதுகொன்று மாறுபட்ட மற்றொருபகைவனான சிசுபாலனையுந் தொலைத்தற்குத் திருமாலின் அவதாரமாய்த் தோன்றியுள்ளவனாகிய கண்ணபிரானை, விரைவினில் கொணரும் ஆறு - சீக்கிரம் அழைத்துவரும்படி, வீணை நாரதனை போக்கி - வீணைகானத்திற்சிறந்தவனான நாரதமகாமுனிவனை யனுப்பி,—தரணிபர்க்கு எல்லாம் ஓலை தனித்தனி தூதின் போக்கி - மற்றையரசர்யாவர்க்கும் வேறுவேறாகத் தூதர்கள்மூலமாகத் திருமுகம் அனுப்பி,—வரன் உடை சுருதி நான்கும் வகுத்தவன் ஆதி ஆன இருபிறப்பாளர் யார்க்கும் உலூகனை ஏவினான்- மேன்மையையுடைய வேதங்கள்நான்கையும் வகுத்தருளியவனான வியாஸமுனிவன் முதலாகிய முனிவர்களெல்லார்க்கும் உலூகனென்றபுரோகிதனை (அழைப்பவனாக) அனுப்பினான், (தருமபுத்திரன்); (எ - று.)

கஎ. இக்கவியிற் குறித்ததன்விவரம், மேல் கசங - ஆங் கவி முதலிய ஏழுகவிகளில் நன்குவிளங்கும். ஹிரண்யன்-பொன்நிறமானவன். ஹிரண்ய அக்ஷன் - பொன்நிறமான கண்களையுடையவன். இரணியனை நரசிங்காவதாரத்திலும், இரணியாக்கனை வராகாவதாரத்திலும், இராவணகும்பகர்ணர்களை ஸ்ரீராமாவதாரத்திலும் அழித்த வரலாறு, முன்கூறப்பட்டது. மாமன்-தாயுடன்பிறந்தவன். கம்ஸன் - கண்ணனதுதாயான தேவகிக்குத் தமையனாதலால், கண்ணனுக்கு மாமனாவன். தன்னைக்கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் யசோதையினிடம் ஒளித்துவளர்தல்முதலிய வரலாறுகளை நாரதர் சொல்லக்கேட்டுக் கம்சன் அதிககோபங்கொண்டு கிருஷ்ணனைக்கொல்ல நிச்சயித்து, வில்விழாவென்கிறவியாஜம்வைத்துக் கண்ணனை மதுரைக்குவரவழைத்துப் பலவகையில்வதைக்க வழிதேடுகையில், கம்சசபையிலேகிருஷ்ணபகவான் வேகமாகஎழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின்மேலேறி அவனதுகிரீடம் கழன்று கீழேவிழும்படி அவனைத் தலைமயிர்பிடித்துத் தரையில்தள்ளி அவன்மேல் தான் விழுந்து அவனைக் கொன்றிட்டனனென்பதை யுணர்க. தானவர் - வடசொல்; (காசியபமுனிவரதுமனைவியருள்) தநுஎன்பவளது சந்ததியார்:வடமொழித்தத்திதாந்தநாமம். தானவர், தைத்யர் என்பன அசுரர்களின்பரியாயநாமமாக வழங்குதலால், இங்கு, தைத்தியரை'தானவர்'என்றார். இரணியனும் இரணியாக்கனும் காசியபமுனிவரதுமனைவியருள் திதியென்பவளிடத்திற்பிறந்தவ ரென்று புராணம் கூறும். இலங்கை, கடத்தற்கு அரிய தாய்ச் சுற்றிலுமுள்ளகடலாகிய இயற்கைசீரரண்முதலிய பாதுகாப்புக்களையுடைமையால், 'அரணியவிலங்கை'எனப்பட்டது. அரணிய-குறிப்புப்பெயரெச்சம்; இ - சாரியை. இலங்கை ஆதியில் தேவசிற்பியான விசுவகர்மாவினால் இந்திரனுக்காக நிருமிக்கப்பட்டுப் பின்பு மாலியவான்முதலிய பூர்வீக

ராக்ஷசர்க்கும், அதன்பிறகு குபேரனுக்கும், அப்பால் இராவணனுக்கும் இராசதானியாயினமை தோன்ற, 'மூதூர்' என்றார். முதுமை + ஊர் = மூதூர்; பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டது. மரணம், மூர்த்தி - வடசொற்கள். மூர்த்தி - பெரியவன். மூரணிய - இறந்தகாலப்பெயரெச்சம்: இன்என்ற இடைநிலை ஈறுதொக்கது. பகை - பகைவனுக்குப் பண்பாகுபெயர். தீர்ப்பான் - எச்சம். 'ஆங்கு' என்பது - அசையுமாம். உளோன் - உள்ளோன்.

கூஅ. தரணிபர்-பூமியைக்காப்பவர்; வடசொல்: தரணி - பூமி; (எல்லாப் பொருளையும்) தரிப்பது. தாதின், இன் - ஐந்தனுருபு, ஏது. அது - உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச்சொல். வரன் - வரம்என்பதன் இறுதிப்போலி. இருபிறப்பாளர்-இரண்டுவகைப்பிறப்பையுடையவர்; தாய்வயிற்றிற் பிறத்தலாகிய இயற்கைச்சன்மத்தோடு பின்பு உபநயனச்சடங்கினால்வருகிற ஞானசன்மமும் ஒருபிறப்பா மென்பது நூற்கொள்கை யாதலால், 'இருபிறப்பாளர்'என்று பெயர்; 'த்விஜர்' என்பது, இப்பொருள்படும் வடசொல்.

[அரசர்கள் முனிவர்கள் முதலிய பலரும் வந்துசேர்தல்.]

கூகூ. தானவர்தச்சன்வந்துசமைத்ததோர்சிற்பந்தன்னை
வானவர்தச்சன்கண்டுமகிழுமண்டபத்தின்வேந்த
ரானவரெவருமீண்டியந்தணரெவருமீண்டி
மானவரெவருமீண்டிவரம்பறநெருங்கினாரே.

(இ - ள்.) தானவர் தச்சன் வந்து சமைத்தது ஓர் சிற்பம்தன்னை-அசுரசிற்பியான மயன் வந்துநிருமித்த ஒப்பற்ற சிற்பவேலைத்திறத்தை, வானவர் தச்சன் கண்டு மகிழும் - தேவசிற்பியான விசுவகர்மா பார்த்து மகிழும்படியான, மண்டபத்தின் - அச்சபாமண்டபத்திலே,—வேந்தர்ஆனவர் எவரும் ஈண்டி - அரசர்களெல்லாரும் வந்துசேர்ந்தும், அந்தணர் எவரும் ஈண்டி - முனிவர்களெல்லாரும் வந்துசேர்ந்தும், மானவர் எவரும் ஈண்டி - (மற்றை) மனிதர்களெல்லாரும் வந்துசேர்ந்தும், வரம்பு அற நெருங்கினார் - எல்லையின்றி நெருக்கமுற்றார்கள்; (எ - று.)

காண்டவவனத்தில் தன்னை உயிர்காத்த உதவியை உட்கொண்டு மயன் தானே வலியவந்து அரியபெரிய மண்டபத்தை யமைத்தனனாதலால், 'வந்து சமைத்ததோர் சிற்பம்'என்றார். மகிழும்மண்டபம்-மகிழ்தற்குக்காரணமான மண்டபம்: பெயரெச்சம், காரியப்பொருளது; "நோய்தீரும் மருந்து," "நின்முகங்காணும் அவா" என்றவிடங்களிற் போல. மானவர் - வடசொல்;(காசியபமுனிவரது மனைவியருள்) மநுஎன்பவளது மரபினர்: தத்திதாந்தநாமம். வேந்தரானவர்என்பதில், ஆனவர் என்பது-முதல்வேற்றுமைச்சொல்லுருபு.

[பாண்டவர் அனைவரையும் வரவுஏற்றுக் கண்ணனை எதிர்கொள்ளச் செல்லுதல்.]

௭0. வரவரவந்தவந்தமுனிவரைவணங்கியாசி
திரமுறப்பெற்றுவேந்தர்சிறப்பெலாந்திருக்கணோக்கி
நரபதிதானுமற்றைநால்வருநீலமேனி
யிரவியையனையான்றன்னையுவகையோடெதிர்கொண்டானே.

(இ - ள்.) நரபதி - தருமராசன்,—தானும் மற்றை நால்வரும் - தானும் தனது தம்பியர் நான்குபேருமாக,— வர வர - (முனிவர்கள்முதலியோர்) வருந்தோறும், வந்த வந்த முனிவரை வணங்கி-வந்தவந்த முனிவர்களை நமஸ்கரித்து, ஆசி திரம் உற பெற்று-(அம்முனிவர்கள்கூறிய) ஆசீர்வாதங்களை (த்தமக்கு) உறுதியாக ஏற்றுக்கொண்டு, வேந்தர் சிறப்பு எலாம் திரு கண் நோக்கி - அரசர்கள் கொணர்ந்துகொடுத்த வரிசைப்பொருள்களையெல்லாம் தங்கள் திருக்கண்களாற் பார்த்து (அங்கீகரித்து),—நீலம் மேனி இரவியை அனையான் தன்னை உவகையோடு எதிர்கொண்டான் - நீலநிறமுள்ள திரு

மேனியையுடைய சூரியனைப்போன்று விளங்குபவனான கண்ணபிரானை மகிழ்ச்சியோடு எதிர்கொள்ளலானான்; (எ - று.)—அதன்விவரத்தை, அடுத்த செய்யுளிற் காண்க.

அரவு - அடுக்கு, தொறுப்பொருளது. அந்தஅந்தஎன்றும் பதம்பிரிக்கலாம். திரம்-ஸ்திரம் என்ற வடசொல்லின் விகாரம். அரசர்கள்முன்புதிறை கொடுத்ததுமன்றி இப்பொழுதும்பற்பலகாணிக்கைகள்கொணர்ந்துகொடுத்தனரென்று அறிக. கண்ணன் நீலநிறமுள்ள திருமேனியையும் திவ்வியதேஜஸையும் உடைமையால், 'நீலமேனியிரவியையனையான்' என்றார்; இதனை இல்பொருளுவமை யென்னலாம். 'வேந்தர்சிறப்பெலாம் திருக்கணோக்கி' என்பதற்கு - அரசர்வருகிற சம்பிரமத்தையெல்லாம் கண்குளிரப்பார்த்து என்று உரைப்பாரு முளர். எதிர்கொள்ளுதல் - எதிர்சென்று வரவேற்றல். நரபதி தானும் நால்வரும எதிர்கொண்டான் - ஆண்பாலும் பலர்பாலும் கலந்து, சிறப்பினால், 'எதிர்கொண்டான்' என்ற ஆண்பால்முடிபைப் பெற்றது; பால்வழுவமைதி: [நன் - பொது - உஎ.] (எ0)

[ஸ்ரீ கிருஷ்ணபலராமர்களை யெதிர்கொள்ளுதல்.]

எக. கரகதக்களிறுபோலுங் கனிட்டரீரிருவரோடுந்
துரகதத்தடந்தேர்விட்டுத் துழாய்மணங்கமழும்பொற்றோண்
மரகதக்கிரியன்னானை வணங்கினன் றழுவிவெள்ளைத்
திருநிறத்தவன்றன்செம்பொற் றிருப்பதமிறைஞ்சினானே.

(இ - ள்.) (கண்ணனை எதிர்கொள்ளுதற்குத் தம்பியரோடும் பரிவாரங்களோடும் தேரேறி நகர்ப்புறத்துச்சென்ற தருமபுத்திரன் கண்ணனைக்கண்டவுடனே), கரம் கதம் களிறு போலும் கனிட்டர் ஈரிருவரோடும் - துதிக்கையையும் கோபத்தையுமுடைய ஆண்யானைபோன்ற தன் தம்பியர் நால்வரோடும், துரகதம் தட தேர் விட்டு குதிரைகள்பூண்ட பெரியதேரை விட்டு இறங்கி, துழாய் மணம் கமழும் பொன் தோள் மரகதம் கிரி அன்னானை வணங்கினன் தழுவி - திருத்துழாயின்பரிமளம் வீசுகிற அழகிய தோள்களையுடைய மரகதமலைபோன்றவனான கண்ணனை வணங்கிஅளவளாவி, வெள்ளை திரு நிறத்தவன் தன் செம்பொன் திரு பதம் இறைஞ்சினான்-வெண்மையான திருமேனிநிறத்தை யுடையவனாகிய பலராமனுடைய செம்பொற்கழலையணிந்த திருவடிகளை வணங்கினான்; (எ - று)

"யானை, அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" என்றபடி மறைத்தற்கு உரிய காலத்திலே மறைத்துவைத்து வெளிப்படுத்தற்கு உரிய காலத்திலே வெளிப்படுத்துந் தீராக்கோபமுடைமையால், 'கதக்களிறு' எனப்பட்டது. "பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்து, உள்வேர்ப்ப ரொள்ளியவர்" என்றதனால், அத்தகையகோபம் உபமேயமாகிய அரசர்க்கும் ஏற்கும்; "திருகுவெஞ்சினக்களிறனைய சீற்றத்தான்" என்றார் பிறரும். இனி, கரகதம் என்பதை வடமொழித்தொடராகக் கொண்டு, துதிக்கையை யடைந்ததாகிய வென்று உரைப்பாரு முளர். கநிஷ்டர், துரகதம் - வடசொற்கள். கநிஷ்டர்-இளையவர்; (இதன் எதிர்மொழி-ஜ்யேஷ்டர்: மூத்தவர்.) துரகதம் என்பது விரைந்துசெல்வது என்று பொருள்படும். பலராமன் - கண்ணனது தமையன்; திருமாலின் எட்டாம் அவதாரம்: இவனிடத்து ஆதிசேஷனது அம்சமும் கலந்திருந்தது; வசுதேவனுடைய பத்தினிகளுள் தேவகியின் கருப்பத்தில் ஆறுமாசமும், பின்பு ரோகிணியின் கருப்பத்தில் ஆறுமாசமும் இருந்து பிறந்தவன் இவன்; 'தேர்விட்டு' என்பதற்கு [illegible]செலுத்திச் சென்று என்றுரைப்பர் ஒருசாரார். வெள்ளை - [illegible] பண்புப்பெயர். பொன் - பொற்கழலுக்குக் கருவியாகுபெயர். [illegible] இறைஞ்சினான்' என்ற முற்றுக்கும், மேலே [illegible] நரபதி' என்றதே எழுவாயெனக் கொள்ளலாம். வணங்கினன்-முற்றெச்சம். (எக)

[கண்ணன் பாண்டவர்களுடன் வீதியிற்செல்ல மாதர்கள் தம்தம்மனையி னுள்ளிருந்து வாயிலில்வந்து கண்டு அன்புகொண்டு தொழுதலை இதுமுதற் பன்னிரண்டுகவிகளிற் கூறுகின்றார்.]

எ௨. இருபுடைமருங்குந்திக்கோரெட்டையும்வென்றோர்போத
நிருபதிதேரிற்போதநேமியான்களிற்றிற்போதச்
சுரர்பெருந்தச்சன்செய்ததொன்னகர்வீதிபுக்கார்
வருதிருப்பவனிகேட்டார்வளநகர்மாதரெல்லாம்.

(இ - ள்.) திக்கு ஓர் எட்டையும் வென்றோர் - எட்டுத்திக்குக்களிலு முள்ள அரசரனைவரையும் சயித்தவர்களான வீமன்முதலிய தம்பியர்நால் வரும், இரு புடை மருங்கும் போத - இரண்டுபக்கங்களிலும் செல்லவும், நிருபதி-(தருமராசன், தேரில் போத - (நடுவிலே)தேரின்மீது செல்லவும், நேமியான்-சக்கராயுதமுடையவனான கண்ணன், களிற்றில் போத - யானை மீது (ஏறி முன்னே) செல்லவும், சுரர் பெருந் தச்சன் செய்த தொல் நகர் வீதி புக்கார்-பெருமையையுடைய தேவசிற்பியான விசுவகர்மாவினாற் செய் யப்பட்ட பழமையான இந்திரப்பிரத்தநகரத்து வீதியிற் சென்றார்கள்; வரு திரு பவனி - (இங்ஙனம் இவர்கள்) சிறப்பாகப் பவனிவருகிற செய்தி யை, வளம் நகர் மாதர் எல்லாம் - செல்வம்நிறைந்த அந்நகரத்தில் வசிக் கிற மகளிரனைவரும், கேட்டார் - கேள்வியுற்றார்கள்; (எ - று.)

பவனிவருதல் - திருவீதியுத்ஸவங்கொண்டருளுதல்; உலாப்போத லென்றும், ஊர்வலம்வருதலென்றும், ஊர்கோலமென்றும் கூறப்படும். ந்ரு பதி - வடசொல்; ந்ரு - மனிதர்கட்கு, பதி - தலைவன். 'மாதர் எல்லாம்' என்றது, பேதைமுதலிய எழுபருவத்துமகளிரையும்; மேல் எஎ-ஆஞ் செய் யுளில் "எழுவகைப்பருவமாதர்" என்பது காண்க. மருங்கு - எழனுருபு.

எ௩. ஈரடிகளினுஞ்செம்பஞ்செழுதுவாரெழுதுமுன்ன
ரோரடியெழுதிமின்போலொல்கிவந்திறைஞ்சுவாரு
மாரமுதனையகண்ணினஞ்சனமெழுதுகின்ற
சீரியகோலுங்கையுந்திருத்தகத்தோன்றுவாரும்.

இதுமுதல் ஐந்துகவிகள் - குளகம்.

(இ - ள்.) ஈர் அடிகளினும் செம் பஞ்சு எழுதுவார் - (தமது) இரண்டு பாதங்களிலும் செம்பஞ்சுக்குழம்பூட்டத்தொடங்கினவர்களாகி, ஓர் அடி எழுதி - ஒருபாதத்துக்கு (அச்செம்பஞ்சின்சாரத்தை)ப் பூசி, எழுதும் முன் னர் - (மற்றொருபாதத்திற்கு அதனை)எழுதுதற்கு முன்னே, மின் போல் ஒல்கி வந்து இறைஞ்சுவாரும் - (கண்ணன்பவனிவருகிறசெய்திகேள்வியுற்ற தனால் ஆதரத்தோடு) மின்னற்கொடிபோல நுடங்கி (வாயிலில்) வந்து (அப் பெருமானைக்கண்டு) வணங்குபவர்களும்,—ஆர் அமுது அனைய கண்ணின் அஞ்சனம் எழுதுகின்ற சீரிய கோலும் கையும் - அருமையானஅமிருதத் தைப்போன்ற தங்கள் கண்களிலே மைதீட்டிக்கொண்டிருக்கிற கருவியா கிய சிறந்த துகிலிகைக்கோலுங் கையுமாக [இரண்டுகண்களிலும் மையி ட்டுமுடியாதநிலையிலே], திரு தக தோன்றுவாரும் - அழகுஅமைய (வாயி லில்வந்து) வெளிப்படுபவர்களும்,—(எ - று.)

அவரவர் தம்தம்மாளிகையினுள்ளேயிருந்து பலவகையலங்காரஞ்செய் துகொண்டிருக்கையில் உலாச்செய்தி கேள்வியுற்றவுடன் நின்றநிலையிலே விரைந்து அவ்வலங்காரம்நிறைவுறுமலே வாயிலில்வந்து அப்பவனிக்கோ லங் காண்பாராயின ரென்க. மின்ன னுவமை - மெல்லியதாய் ஒல்கியொசி யும் வடிவின் விளக்கத்துக்கு. கண்ணின்கருவிழிச்சுற்றுப்புறத்திலுள்ள வெ ண்ணிறத்தையும், அக்கண்ணழகு காண்பவர்க்கு மகிழ்ச்சிவிளைத்தலையும் பற்றி, 'அமுதனைய கண்' என்றார். ஆரமுது - பண்புத்தொகை; வினைத்

தொகையாய், உண்ணப்படும் அமுது என்றும் பொருள்படும். அஞ்சநம் - வடசொல். திருத் தக என்பதற்கு - திருமகளோடொப்ப வென்று உரைத்தலு மொன்று. 'ஓடிவந்திறைஞ்சுவாரும்' என்பதும் பாடம். அமுது - அம்ருதம் என்ற வடசொல்லின் விகாரம்; அது, மரணத்தைத்தவிர்ப்பது[சாவா மருந்து] என்று காரணப்பொருள்பெறும். (எ௩)

எ௪. விரிதுகில்வேறுடாமல்விரைகமழ்தூநீராடிச்
சுரிகுழன்மேகமாரிதுளித்திடவெதிர்கொள்வாருங்
கரதலமலரிற்சங்குங்கலாபமுஞ்சிலம்புமார்ப்பத்
தெருவெலாந்தாமேயாகிச்சீறடிசிவப்பிப்பாரும்.

(இ - ள்.) விரை கமழ் தூ நீர் ஆடி - வாசனைவீசுகிற சுத்தமானஜலத்திலே ஸ்நாநஞ்செய்து, விரி துகில் வேறு உடாமல் - (ஈரவஸ்திரத்தை மாற்றிப்) பெரியவேறுவஸ்திரத்தை உடுத்துக்கொள்ளாமலே [நனைந்தஆடையுடனே], சுரி குழல் மேகம் மாரி துளித்திட - நுனிசுருண்ட தம்கூந்தலாகிய மேகம் நீர்த்துளியைச் சிந்த, எதிர்கொள்வாரும் - (கண்ணனை) எதிர்கொண்டுசெல்பவர்களும்,—கரதலம் மலரில் சங்கும் - தாமரைமலர்போன்ற தம் கைகளி லணிந்த சங்குவளையல்களும், கலாபமும் - இடையணியும், சிலம்பும் - காற்சிலம்புகளும், ஆர்ப்ப - ஒலிப்ப, தெரு எலாம் தாமே ஆகி சிறு அடி சிவப்பிப்பாரும் - வீதியெங்கும் தாமேபரந்துசென்று தமதுசிறியபாதங்களைக் கன்றிச்சிவக்கச்செய்பவர்களும்,—(எ - று.)

'விரிதுகில்வேறுடாமல்' என்றதனால், நீராடியதற்குப் பின்பு உடுக்கும் பெரியதுகில்போலன்றி நீராடும்போது சிறியஆடை உடுத்திருந்தன ரென்பது தோன்றும். விரிதுகில் - மடிப்பாயிருந்துவிரிக்கப்படும் ஆடை யென்றும், உலரும்படி வெயில்காற்றுக்களில் விரிக்கப்பட்டிருந்த துகி லென்றும் கொள்ளலாம். ஸ்நாநஜலம் பலவகைப்பரிமளத்திரவியங்களாற் சுகந்தமூட்டப்பட்டிருந்த தென்பார், 'விரைகமழ்தூநீர்' என்றார்; இது, அந்நகரத்தவரது செல்வவளத்தை விளக்கும். தூய்மை+நீர்=தூநீர்; பண்புப்பெயர் ஈறுபோய் இடையகரமுங் கெட்டது. சுரிகுழல்மேகமாரிதுளித்திட-காளமேகம் மழைபொழிவதுபோலக் கரியகூந்தல் நீர்த்துளிசொரிய வென்க; உருவகவணி. இங்ஙனம் மகளிர் விரைந்துவெளிப்பட்டது, தம்மனைக்குஅணித்தானவீதி கடந்து போய்விடுதற்குமுன்பு கண்ணனைக் காணவேண்டுமென்னும் வேட்கையினால்; அதுதோன்ற, 'எதிர்கொள்வார்'என்றார்.

கரதல மலர் - முன்பின்னாகத்தொக்க உவமத்தொகை. சங்கு - அதனாலாகிய வளைக்குக் கருவியாகுபெயர். சங்கம் - வடசொல். கலாபம் - இடையணிகளில் ஒருவகை: இருபத்தைந்து கோவையுள்ளது; "எண்கோவை மேகலை காஞ்சி யொருகோவை, பண்கொள் கலாபம் இருபத்தைந்து—கண்கொள், பருமம் பதினன்கு முப்பத்திரண்டு,விரிசிகை யென்றுணரற்பாற்று" என்றது காண்க. 'பண்கொள்கலாபமிருபத்தொன்று' என்றும், 'பண்கொள்கலாபம் பதினாறு' என்றும் பாடமோதி, கலாபம் - இருபத்தொருகோவையிடையணி யென்றும், பதினறுகோவையிடையணி யென்றும் கொள்ளுதலு முண்டு. சிலம்பு - நூபுரமென்னுங் காலணி; சிலம்புவதுபற்றிவந்த காரணக்குறி: சிலம்புதல் - ஒலித்தல், "நுதலடிநுசுப்பென மூவழிச் சிறுமை" என்றபடி மகளிர்க்குப் பாதம் சிறுத்திருத்தல் உத்தமவிலக்கணமாதலால், 'சீறடி' எனப்பட்டது. சிறுமை+அடி=சீறடி; பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டது. காதலால் விரைந்தோடிவந்ததனால், சீறடி சிவந்தன. மாளிகையினுள்ளிருந்து வீதிவரையில் வருமளவிலே சிவந்தன வென்றதனால், அவ்வடிகளின் மிக்கமென்மை தோன்றும். (எ௪)

எ௫. வார்குழைப்பதுமராகமணிவிளக்கேற்றுவாரு
நேரிழைமருங்குல்வாட்டுநிறைகுடம்பூரிப்பாரும

காரிளங்கமுகும்பச்சைக்கதலியுநிரைத்துத்தோளாந்
தோரணநாற்றுவாருந்தூமலர்சிந்துவாரும்.

(இ - ள்.) வார் குழை - (தாம்அணிந்த)பெரிய குழையென்னுங் காதணியிலுள்ள, பற்பராக மணி - பதுமராகரத்தினத்தால், விளக்கு ஏற்றுவாரும் - திருவிளக்குஏற்றுபவர்களும்,—நேர் இழை - மெல்லியநூல்போன்ற, மருங்குல் - (தமது)இடையை, வாட்டும் - (பாரத்தால்) வருந்தச்செய்கிற, நிறை குடம் - (தங்கள் தனங்களாகிய) பூர்ணகும்பங்களை, பூரிப்பாரும் - (வேட்கையால் மற்றும்) பூரிக்கச்செய்பவர்களும்,—கார் இளங் கமுகும் - பசுமையான (தம்கழுத்தாகிய) இளங்கமுகையும், பச்சை கதலியும் - (தம்தொடைகளாகிய) பச்சைவாழைமரங்களையும், நிரைத்து - வரிசைப்படநிறுத்தி, தோள் ஆம் தோரணம் நாற்றுவாரும் - தம்தோள்களாகியபூமாலைத்தோரணங்களைத் தொங்கவிடுபவர்களும்,—தூ மலர் சிந்துவாரும் - (ஓடிவரும்போது தங்கள்கூந்தலிற்சூடியிருந்த) நல்லமலர்களைச் சொரிபவர்களும்,—

அரசர்முதலிய பெருமையிற்சிறந்தோர் வீதியில்வருகையில் மங்களகரமாகவும் அலங்காரமாகவும் தீபமேற்றிப் பூர்ணகும்பம்பூரித்துவைத்துக் கமுகும் கதலியும் நிரைத்துத் தோரணம்நாற்றி மலர்சிந்துதல் சனங்களின் இயல்பாதலால், அவ்வுபசாரங்களை இம்மகளிர் தமது குழையென்னுங் காதணியி லுள்ள பதுமராகரத்தினத்தின் ஒளியைக்கொண்டும், தமது தனம் கழுத்து தொடை தோள் என்னும் அவயவங்களைக்கொண்டும், கூந்தலிற்சூடிய மலர்களைக்கொண்டும் விரைவில்அமைத்தன ரென வருணித்தார்; உருவகவிசேடம். வரையும் செய்ப்பும் பற்றி, கமுகு, கழுத்திற்கு உவமைகூறப்படும்.தொடைக்குவாழையுவமை,திரண்டுஉருண்ட வடிவில்.மென்மையும் அழகும் வடிவும் பற்றி,கைகள் பூமாலைக ளெனப்பட்டன;"எரியவிழ் காந்தண்மென்பூத் தலைதொடுத் திசையவைத்துத், திரள்பெறச் சுருக்குஞ் செச்சைமாலையோ" என்றார் பிறரும். இனி, 'நாட்டுவாரும்' என்று பாடங்கொண்டு, தோள்களாகிய தோரணக்கம்பங்களை அமைப்பவ ரென்றது மொன்று. தோளுக்கு இளமூங்கிலை உவமைகூறுதலுண் டாதலால், அது, தோரணக்கம்ப மெனப்பட்டதுபோலும். க்ரமுகம், கதலீ என்றவடசொற்கள் விகாரப்பட்டன. (௭௫)

௭௬. மாதர்களெவர்க்குமுன்போய்வணங்குதற்குன்னிச்சிந்தை
யாதரவுடனேவந்துமாவணமணுகுறாமற்
சூதடர்கொங்கைபொற்றோள்சுரிகுழல்சுமக்கலாற்றுப்
பேதுறுமருங்குலோடும்பித்துறுபிடியன்னாரும்.

(இ - ள்.) மாதர்கள் எவர்க்கும் முன் போய் வணங்குதற்கு உன்னி - (மற்றை) மகளிர்யாவர்க்கும் முன்னே (தாம்)சென்று (கண்ணபிரானைத்) தரிசிக்கநினைத்து, சிந்தை ஆதரவுடனே வந்தும் - மனத்திற்கொண்ட ஆசையுடனே ஓடிவரத்தொடங்கியும், சூது அடர் கொங்கை பொன் தோள் சுரி குழல் சுமக்கல் ஆற்று பேதுறு மருங்குலோடும் - (வடிவிற்) சூதாட்டக்கருவிபோன்ற தனங்களும் அழகியதோள்களும் சுரித்தகூந்தலும் என்னும் இவற்றின்பாரத்தைத் தாங்கமாட்டாமல் வருந்துகிற இடையுடனே, ஆவணம் அணுகுறாமல் - அவ்வாறு[தாம்முன்புகருதியபடி] முன்செல்லமாட்டாமல், பித்து உறு - (மோகத்தால்) மதிமயக்கங்கொண்ட, பிடி அன்னாரும் - பெண்யானைபோன்றவர்களும் (ஆக), (எ - று.)

சிலமகளிர் தாம்எல்லாமாதர்க்கும் முந்திப்போய் வணங்கநினைத்து ஆசையுடன் ஓடிவரமுயன்றும் தங்கள் தனபாரத்தையும்பூரித்தஅடர்தோள்களையும் கூந்தற்பாரத்தையும் பொறுக்கமாட்டாமல் மெல்லிடைவருந்துதலினாலே விரைந்துசெல்லமாட்டாதவர்களாய், கருதியவிருப்பங் கை

கூடாமையால் மோகப்பித்தம் விஞ்சின ரென்க. நடைமெதுப்பட்டமை தோன்ற, 'பிடியன்னார்' என்றார். பிடி - யானையின் பெண்மைப்பெயர். சூது என்ற ஆட்டத்தின் பெயர், இங்கு, அவ்வாட்டத்தில் கிறுத்தப்படுகிற காய்க்கு ஆகுபெயர். அடர் - உவமவுருபு; இனி, சூது அடர் - சூதாட்டக் கருவியை (த் தனக்குஒப்பாகாதென்று) வென்ற எனினுமாம். சூது - தாமரையரும்புமாம். அ + வணம் = ஆவணம்; அகரச்சுட்டு நீண்டது. வணம் = வண்ணம்; தொகுத்தல். ஆதரம் என்ற வடசொல் விகாரப்பட்டது. (எசு)

எஎ. இவ்வகை குழுக்கொண் டாங்க ணெழுவகைப் பருவ மாதர்
செவ்வியு மழகுந் தேசுஞ் செய்யபூந் திருவோ டொப்பார்
மெய்வழி நின்ற போக மேகமே யனையான் றன்னை
மைவழி கண்ணி னோக்கி மனனுற வணங்கி னாரே.

(இ - ள்.) செவ்வியும் - (இயற்கை) அழகிலும், அழகும் - (ஆடையாபரணங்களாலாகிய செயற்கை) அழகிலும், தேசும் - ஒளியிலும், செய்ய பூ திருவோடு ஒப்பார் - செந்தாமரைமலரில்வாழ்கிற திருமகளோடு ஒப்பவர்களான, எழு வகை பருவம் மாதர் - எழுவகைப்பருவத்து மகளிரும்,—இவ்வகை - இவ்வாறு, ஆங்கண் - அவ்விடத்தில் [இந்திரப்பிரத்தநகரத்து வீதிகளில்],குழுக் கொண்டு - (வந்து) கூட்டமாகக்கூடி,—மெய் வழி நின்ற போகம் மேகமே அனையான் தன்னை - போகஸ்வரூபியும் மேகம்போன்றவனுமான கண்ணபிரானை, மை வழி கண்ணின் நோக்கி - தீட்டியஅஞ்சனம் வழிகிற (தம்)கண்களாற் பார்த்து, மனன் உற வணங்கினர் - மனப்பூர்வமாக [ஆழ்ந்தஅன்புடன்] தொழுதார்கள்; (எ - று.)

(எங) இறைஞ்சுவாரும் தோன்றுவாரும் (எச) எதிர்கொள்வாரும் அடிசிவப்பிப்பாரும் (எரு) ஏற்றுவாரும் பூரிப்பாரும் நாற்றுவாரும் சிந்துவாரும் (எசு) பிடியன்னருமாகத் (எஎ) திருவோடொப்பார் எழுவகைப் பருவமாதர் இவ்வகை ஆங்கண் குழுக்கொண்டு அனையான் தன்னை நோக்கி வணங்கினர் எனக் குளகச்செய்யுள்கட்கு முடிபுகாண்க. எழுவகைப்பருவமாதர் - பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்பவர்: இவர்க்கு முறையே வயதெல்லை - ஐந்துமுதல் ஏழளவும் பேதை; எட்டுமுதற் பதினொன்றளவும் பெதும்பை; பன்னிரண்டுமுதற் பதின்மூன்றளவும் மங்கை; பதினான்குமுதற் பத்தொன்பதளவும் மடந்தை; இருபதுமுதல் இருபத்தைந்தளவும் அரிவை; இருபத்தாறுமுதல் முப்பத்தொன்றளவும் தெரிவை; முப்பத்திரண்டுமுதல் நாற்பதளவும் பேரிளம்பெண் எனக் காண்க. (இப்பிராயஎல்லை சிறிதுவேறுபடக்கூறுதலுமுண்டு.) கீழ் 'இறைஞ்சுவார்' முதல் 'பிடியன்னார்' ஈறாகக் கூறப்பட்டவர்களை ஏற்றபடி பேதையர்முதற் பேரிளம்பெண்களீறாக அமைத்துக்கொள்க. இச்செய்யுளின் இரண்டாமடி எழுவகைப்பருவமாதர்க்கும் உவமைகூறியதாதலால், 'செவ்வி' என்பதற்குப் பருவமெனப் பொருள்கூறலாகாது.

ஐம்பொறிகளாலும் நுகரப்படும் இன்பந்தானே ஒருபுருஷவடிவங் கொண்டாற் போன்றவ னென்பது, 'மெய்வழிநின்றபோகமனையான்'என்பதன் கருத்து. மேகமேயனையா னென்றது - நீலநிறமுடையதாய்க் குளிர்ந்து காண்பவர்க்குத் தாபந்தீர்க்கிற வடிவத்திலும், கைம்மாறுகருதாது கருணைமழைபொழிதலிலும் காளமேகம் போன்றவ னென்றபடி. இனி, மூன்றுமடிக்கு, மெய்ப்பரிசவின்பமாகிய மழையைப் பொழிகிறதொரு மேகம் போன்றவனை யென்றலு மொன்று.கட்டழகுடைய கண்ணபிரானைக் கண்டு களிக்கையில் அரும்புகிற ஆனந்தக்கண்ணீராற் கரைந்து மையொழுகுதல் தோன்ற,'மைவழிகண்ணின்நோக்கி' எனப்பட்டது. தேஜஸ் என்ற வடசொல் தேசனச் சிதைந்தது. ஆங்கண் - அக்கண் என்பது மெலித்

தலும் நீட்டலும் பெற்றது. திருவோரொடொப்பார், மூன்றனுருபு ஒப்புப்பொருளில் வந்தது. போகம், மேகம் - வடசொற்கள். (எஎ)

வேறு.

எ௮. மாடம் பயிலு மணித்தோ ரணவீதி
நீடஞ் சனக்க ணெருங்கித் தடுமாற
வாடம் பரக்கொண்ட லன்னானை யாபாத
சூடங் கருதித் தொழுதார் சிலமாதர்.

(இ - ள்.) மாடம் பயிலும் - மாளிகைகள் இடைவிடாதுபொருந்தப்பெற்ற, மணி தோரணம் வீதி - அழகிய தோரணங்கட்டியலங்கரிக்கப்பட்டுள்ள வீதியிலே,—சில மாதர்-சிலமகளிர்,—அஞ்சனம் நீடு கண் நெருங்கி தடுமாற - மையிட்டிய நீண்ட தமதுகண்கள் நெருக்கமுற்று(க் கண்ணபிரானது அவயவங்கள்பலவற்றிலும் அங்குமிங்குமாகப் பரந்துசெல்லுதலால்) தடுமாற்றமடைய,——ஆடம்பரம் கொண்டல் அன்னானை-(மழைபொழிதற்பொருட்டு) ஆடம்பரஞ்செய்துவருகிற நீர்கொண்ட காளமேகத்தைப் போன்றவனான அக்கண்ணபிரானை, ஆபாத சூடம்-திருவடிமுதல் திருமுடியளவாக, கருதி - மனத்தில்ஊன்றவைத்து, தொழுதார் - வணங்கினார்கள்.

மகளிர்பலர் தம்தம் இருகண்களாலுங் காணுதற்குத் தம்மில்நெருங்கியபோது அவர்கள்கண்களும் நெருக்கமுற்றன. கண்ணபிரானது சகலஅவயவங்களின்அழகையும் சிறிதுபொழுதினுள்ளே கண்டு களிக்கவேண்டுமென்னுங் கருத்தினாற் பரபரப்புக்கொண்டு பலவிடத்தும் பார்வைசெலுத்துதல்பற்றி, 'கண்தடுமாற' என்றார். ஆடம்பரம் - இடி, மின்னல் முதலியன. கொண்டல் - தொழிலாகுபெயர்; கொள் - பகுதி, தல் - விகுதி, மற்றவை - சந்திவிகாரம். ஆபாதசூடம்-வடமொழித்தொடர். மனிதர்களைப்பற்றிக் கூறும்போது கேசாதிபாதமென்றும், தேவர்களைப்பற்றிக் கூறும்போது பாதாதிகேச மென்றும் கூறுதல், மரபு; கண்ணபிரான் திருமாலின் திருவவதாரமாதலால், இங்கு 'ஆபாதசூடம்'என்றார்: கம்பராமாயணத்தில் இராமனது பிரஸ்தாபத்தில் "அடிமுதல் முடியின்காறும்" என்றதுங் காண்க.

இதுமுதல் ஆறுகவிகள் - மாச்சீரும் காய்ச்சீரும் விளச்சீருமாய் விரவி வந்த நாற்சீரடி நான்கு கொண்ட தரவுகொச்சகக்கலிப்பாக்கள். (எ௮)

எ௯. கங்கைதருபொற்கழலான்மணிமார்பிற்
கொங்கைமுகுளங்குழையும்படியாகச்
சங்கையறமெய்தழுவுதற்குத்தம்மினுந்தஞ்
செங்கைமலர்பதறச்சென்றார்சிலமாதர்.

(இ - ள்.) சில மாதர் - மற்றுஞ் சிலமகளிர்,—கங்கை தரு பொன் கழலான் - கங்காநதியைப் பெற்ற அழகிய திருவடியையுடைய திருமாலின் திருவவதாரமான கண்ணபிரானது, மணி மார்பில் - அழகிய திருமார்பிலே, கொங்கை முகுளம் குழையும்படி ஆக - தங்கள்தனங்களாகிய அரும்புகள் அழுந்திநெரியும்படியாக, சங்கை அற மெய் தழுவுதற்கு - கூச்சமில்லாமல் அவனது திருமேனியை ஆலிங்கனஞ்செய்வதற்கு [இறுகஅணைத்தற்கு], தம்மினும் தம் செம் கை மலர் பதற - தங்கள்மனம் விரைதலைக்காட்டிலும் மிகுதியாகத் தங்கள் சிவந்ததாமரைமலர்போன்ற கைகள் விரைவுகொள்ள, சென்றார் - ஓடிவந்தார்கள்; (எ - று.)

திருமால் உலகமளந்தகாலத்து மேலே சத்தியலோகத்திற் சென்ற அப்பெருமானது திருவடியைப் பிரமன் தன்கைக்கமண்டலநீர்த்தத்தாற் கழுவிவிளக்க அந்த ஸ்ரீபாததீர்த்தமே கங்காநதியாகப் பெருகியதனால், 'கங்கைதரு பொற்கழலான்' என்றார்; தருதல் - தோன்றுவித்தல்: மேலும் "கங்கைமாநதி கால்வழி கருணையங்கடலே" என்பர். முகுளம், சங்கா -

வடசொற்கள். முகுளம் - தாமரையரும் பென்றுவது, கோங்கரும் பென்றுவது கொள்க. சங்கையற - எவரேனும் கண்டு பழிப்பரோ வென்ற எண்ணமில்லாமல் எனினுமாம். 'பதறநின்றார் சிலமாதர்' என்றும் பாடமுண்டு. (எகூ)

அ0. வண்டுமலர்கரும்பாம்வண்ணப்படையானைக்
கண்டனையகண்ணிறைந்தகாயாமலர்வண்ணன்
செண்டுதரித்தோன்றிருப்பவளத்தாரமுத
முண்டுமனத்தினலுய்ந்தார்சிலமாதர்.

(இ - ள்.) சில மாதர்—,—வண்டு மலர் கரும்பு ஆம் - வண்டுகளும் மலர்களும் கரும்பும் ஆகிய, வண்ணம் படையானை - சிறந்தஆயுதங்களையுடையமன்மதனை, கண்டு அனைய - கண்டாற்போன்றவனும், கண்நிறைந்த - காண்பவர்கண்களுக்கு (யாதொருகுறைவுமில்லாமல்) நிறைந்துதோன்றுகின்றவனும், காயா மலர் வண்ணன் - காயாம்பூப்போன்ற நீலநிறத்தையுடையவனும், செண்டு தரித்தோன் - (அலங்காரமாகவும் விலாசமாகவும் திருக்கையிற்) பூஞ்செண்டைக் கொண்டுள்ளவனுமான கண்ணபிரானது, திரு பவளத்து - அழகிய பவழம்போன்ற சிவந்த அதரத்தினது, ஆர் அமுதம் - கிடைத்தற்கரிய அமிருதம்போன்ற திவ்வியரசத்தை, மனத்தினல் உண்டு - தம்மனத்திற்கொண்ட பாவனையினாற் பருகி, (அதனல்), உய்ந்தார் - (வேட்கைமிகுதியால்உயிர்நீங்காது) பிழைத்தனர்; (எ - று.)

மன்மதனுக்கு வண்டினொழுங்கு வில்லின்நாணியும், தாமரைமுதலிய ஐவகைமலர்கள் பஞ்சபாணங்களும், கரும்பு வில்லு மாகுதலை, "ஆலைக் கரும்பு சிலை ஐங்கணை பூ நாண் சுரும்பு" என்பதனலும் அறிக. படை - படைக்கலம். ஸர்வாங்கசுந்தரனான கண்ணனது திருமேனியின் கட்டழகு அவனதுகுமாரனான மன்மதனது உடம்பினழகு போலுதலால், 'படையானைக்கண்டனைய' என்றார். மன்மதன் சிவபிரானல் உடலெரிக்கப்பட்டு அநங்கனுதற்குமுன்பு உடம்போடுகூடியிருக்கையில் அவனுடம்பைக் கண்டாற் போன்ற என்றுங் கொள்க. கண்டு - எச்சத்திரிபு. சாமுத்திரிகலக்ஷணம்முதலியவற்றிற் குறைவின்றிக் காண்பவர்க்கெல்லாம் மிக்கதிருப்தியுண்டாக்குகின்றவ னென்பது, 'கண்ணிறைந்த' என்றதனாற் பெறப்படும். கள் நிறைந்த என்று பதம்பிரித்து, தேன்நிறைந்த என்று உரைத்து, காயாமலர்க்கு அடைமொழியாக்குதலு மொன்று. வர்ணம், ப்ரவாளம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. திருப்பவளம்-வாயிதழுக்கும், ஆரமுதம்-அதன் இனியரசத்துக்கும் உவமையாகுபெயர்கள். 'திருப்பவளத்தாறமுதம்' என்றும் பாடமுண்டு. ஆரமுதம் - நிறைந்தஅமிருதமுமாம். திருப்பவளத்து ஆரமுதம் உண்ணுதல் - அதரபானம். மனத்தினல்உண்டு-அதனைத் தாம் பருகுவதுபோல மனத்தினாற் பாவித்து. மரணாந்தமான வேட்கைமிகுதி யுண்டானபோது இந்தப்பாவனை ஒருவாறு அத்துயர்தணித்து உயிரை உடலில் நிலைநிறுத்திய தென்க. (அ0)

அக. வஞ்சம்பயில்சகடவாளசுரன்மாளவிறற்
கஞ்சன்படவுதைத்தகாலானைக்கண்டுருகி
யஞ்சம்புமெய்யுருவவைம்புலனுஞ்சோகமுற
நெஞ்சந்தடுமாறநின்றார்சிலமாதர்.

(இ - ள்.) சில மாதர்—,—வஞ்சம் பயில் வாள் சகட அசுரன் மாள - வஞ்சனைசெய்தலில் தேர்ந்த வாள்போலக்கொடிய சகடாசுரன் அழியவும், விறல் கஞ்சன் பட - பலபராக்கிரமங்களையுடைய கம்சன் இறக்கவும், உதைத்த—, காலானை - திருவடிகளையுடையவனான கண்ணபிரானை, கண்டு - பார்த்து, உருகி - மனமுருகி,—அஞ்சு அம்பு மெய் உருவ - மன்மதபாணங்கள் தம்முடம்பில் தைத்து ஊடுருவிச்செல்லவும், ஐம் புலனும் சோகம்

உற - (அதனால் தங்கள்)பஞ்சேந்திரியங்களும் வருத்தமடையவும், நெஞ்சம் தமோற - மனம் சஞ்சலப்படவும், நின்றார் - செயலொழிந்து நின்றார்கள்.

சகடுதைத்த கதை:—வசுதேவகுமாரனாய்த் தேவகிவயிற்றினின்று வடமதுரையில் அவதரித்த கண்ணன் உடனே திருவாய்ப்பாடிசேர்ந்து அங்கு நந்தகோபகுமாரனாய் யசோதைவளர்க்க வளர்ந்தருளும்போது, நந்தகோபகிருகத்தில் ஒருவண்டியின் கீழ்ப்புறத்திலே தொட்டிலிற் பள்ளிகொண்டிருந்த ஸ்ரீகிருஷ்ணன், ஒருகால் அச்சகடத்திற் கம்சனாலேவப்பட்ட அசுரனொருவன் வந்து ஆவேசித்துத் தன்மேலே விழுந்து தன்னைக்கொல்ல முயன்றதை யறிந்து, பாலுக்குஅழுகிறபாவனையிலே தன்சிறியதிருவடிகளை மேலேதூக்கி உதைத்தருள, அவ்வுதை பட்டமாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அவ்வசுரனுள்பட அழிந்தது என்பதாம்.

கம்சனைவதைத்தகதை, கீழ்சுஎ-ஆஞ் செய்யுளுரையிற் கூறப்பட்டது.

மன்மதனம்பு ஐந்து - தாமரைமலர், மாமலர், அசோகமலர், முல்லைமலர், நீலோற்பலமலர் என்பன. இவற்றின் தொழில்-முறையே உன்மத்தம், மதநம், சம்மோகம் சந்தாபம், வசீகரணம் என்பன. இவை செய்யும் அவத்தைகள் - சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்பன. அவையாவன - சுப்பிரயோகம் - சொல்லும், நினைவும்; விப்பிரயோகம் - வெய்துயிர்த்திரங்கல்; சோகம் - வெதுப்பும், துய்ப்பனதெவிட்டலும்; மோகம் - அழுங்கலும், மொழிபலபிதற்றலும்; மரணம் - அயர்ச்சியும், மயக்கமும். இங்கு 'அஞ்சம்பு' என்றது, ஐந்து என்னுந் தொகையிற் பொருள்சிறவாது மன்மதபாணமென்ற மாத்திரமாய் நின்றது; மேல் அசு-ஆஞ் செய்யுளில் "மன்மதபாணநான்கின்" என்பது காண்க. இனி, அஞ்சு அம்பு - அஞ்சத்தக்க (மன்மத)பாண மென்றலு மொன்று; வினைத்தொகை. அஞ்சு = ஐந்து: போலி. மாள பட என்பவையும், உருவ உற தமோற என்பவையும் - வினைச்செவ்வெண். கஞ்சன் - வடசொற்சிதைவு. வஞ்சம், சோகம் - வடசொற்கள். ஐம்புலனும், உம்மை - இனைத்தென்றறிபொருளில் வந்த முற்றும்மை. (அக)

௮௨. தங்கள்குலமுன்றிற்றலையாயமும்மதத்து
வெங்கண்மதமாமிசைவருவோன்மெய்நோக்கி
யங்கண்மிளிரவரும்புருவவின்முரியத்
திங்களுதல்வேர்வோடநின்றார்சிலமாதர்.

(இ - ள்.) சில மாதர்—,—தங்கள் குலம் முன்றில் - தங்களுடைய மாளிகைவாயிலிலே, தலை ஆய மும் மதத்து வெங்கண் மதம் மாமிசை வருவோன் - தலைமைபெற்றதும் மூன்றுவகைமதஜலங்களையும் கொடுமையையும் களிப்பையுமுடையதுமான யானையின்மேல் வருகின்றவனாகிய கண்ணபிரானது, மெய் - திருமேனியை, நோக்கி - பார்த்து,—அம் கண் மிளிர - (தமது)அழகியகண்கள் சஞ்சலமடையவும், அரும் புருவம் வில் முரிய - அருமையான புருவங்களாகிய விற்கள் நெறித்து நெற்றியிலேறி வளையவும், திங்கள் நுதல் வேர்வு ஓட - பிறைச்சந்திரன்போன்ற நெற்றியில் வேர்வைநீர் வழியவும், நின்றார் - (வேட்கைநோய்விஞ்சி)நின்றார்கள்; (எ - று.)

கண்மிளிர்தல் முதலியன, உவகைச்சுவையின் மெய்ப்பாடு. குலம்-கிருகம். முன்றில் - இல்முன் என்பது முன்பின்னாக மாறி விகாரப்பட்டது; இலக்கணப்போலி: வீட்டின் முன்னிட மென்பது பொருள். தலையாய மாஎன இயையும்; பட்டத்துயானையாகிய அரசயானை யென்றபடி. வெங்கண்-அஞ்சாமை, அஞ்சுவிக்குந் தன்மை: பயங்கரமான கண்களுமாம். மதமா - வலியயானை யெனினுமாம்; "மதவே மடனும் வலியு மாகும்" என்ற தொல்காப்பியத்தால், மதவென்பது - வலிமையுணர்த்துவதோர் உரிச்சொல்லாத

லறிக. மூன்றிற்றலை யென்று கூட்டி, தலையென்பதை ஏழனுருபாகக்கொண்டு மூன்றிலில் என்று உரைத்து, ஆய மும்மதத்து - உண்டாகிய மூவகைமதங்களையுமுடைய என்றலு மொன்று. அம் கண் மிளிர என்பதற்கு - நீர் கண்களில் ததும்பிவிளங்க என்று உரைத்தலுமாம். புருவத்துக்கு வில் - வளைந்த வடிவிலும், நெற்றிக்குப் பிறைச்சந்திரன் - வளைவான வடிவிலும் ஒளியிலும் உவமம். (அ௨)

அ௩. கால முகிலுமலர்க் காயாவு மன்னதிருக்
கோல முடையோன் குலவுமணிப் பூண்மார்பின்
மாலை நறுந்துளப மன்றலுக்கு வாணயன
நீலவரி வண்டாகி நின்றார் சிலமாதர்.

(இ - ள்.) சில மாதர்—,—காலம் முகிலும் - கார்காலத்து மேகத்தையும், மலர் காயாவும் - காயாம்பூவையும், அன்ன - போன்ற [நீலநிறமான], திரு கோலம் உடையோன்-திருமேனியையுடையவனான கண்ணபிரானது, குலவு மணி பூண் மார்பின் - விளங்குகிற இரத்தினாபரணங்களைத் தரித்த மார்பி லணிந்த, மாலை நறுந் துளபம் - நல்லதிருத்துழாய்மாலையினது, மன்றலுக்கு - வாசனைக்கு [அழகுக்கு], வாள் நயனம் வரி நீலம் வண்டு ஆகி - வாட்படைபோன்ற தங்கள்கண்கள் உடற்கோடுகளையுடைய நீலநிறமுள்ள வண்டுக ளாகப்பெற்று, நின்றார்—; (எ - று.)

வண்டுகள் நறுமணத்தைவிரும்பி மாலையைநாடி மொய்த்தல்போல, தம் கண்கள் கண்ணபிரான்சாத்திய திவ்வியபரிமளம்வீசுகிற திருத்துழாய்மாலையின் அழகிலே ஈடுபட்டு அதிற்பதிய என்பது, கருத்து. துளபமன்றலுக்கு என்பதை மன்றல்துளபத்துக்கு என மாறுதல் நலம். 'ஆகநின்றார்' என்பதும் பாடம். துளஸீ, நயநம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. மகளிர்கண்ணுக்கு வண்டு - கருநிறத்திலும், வடிவிலும், பரபரப்பிலும் உவமம். (அ௩)

வேறு.

[கண்ணன் பாண்டவர்களுடன் குந்தியின்மாளிகை சேர்தல்.]

அ௪. மங்கையர் பலரு மிங்ஙன் மன்மத பாண நான்கி
னிங்கித வின்ப மெய்தி யின்னுயி ரோடு நிற்பப்
பங்குற வந்த வந்தப் பாண்டவ ரைவ ரோடுங்
கொங்கவிழ் துளபத் தாரான் குந்திவாழ் கோயில் புக்கான்.

(இ - ள்.) மங்கையர் பலரும் - பலமகளிரும், இங்ஙன் - இவ்வாறு, மன்மத பாணம் நான்கின் - மன்மதனதுபாணங்கள் நான்கினால், இன்பம் இங்கிதம் எய்தி - உவகைச்சுவைக்குஉரிய மெய்ப்பாடுகளை யடைந்து, இன் உயிரோடு நிற்ப-(உணர்வுமுதலியவற்றையிழந்து) இனியஉயிர்மாத்திரத்தோடு கூடிநிற்க,—கொங்கு அவிழ் துளபம் தாரான் - வாசனைவீசுகிற திருத்துழாய்மாலையையுடையவனான கண்ணபிரான், பங்கு உற வந்த அந்த பாண்டவர் ஐவரோடும் - (தனது)அருகாக வந்த அந்தப் பஞ்சபாண்டவர்களுடனே, குந்தி வாழ் கோயில் புக்கான்-(அவ்விந்திரப்பிரஸ்தநகரத்திலே) குந்திதேவி வசிக்கிற மாளிகைக்குப் போய்ச்சேர்ந்தான் ; (எ - று.)

கீழ் "அஞ்சம்பு மெய்யுருவ" என்றுசொல்லி, இங்கு 'மன்மதபாணநான்கின்' என்றது, மன்மதபாணம் ஐந்தில் ஈற்றதான நீலோற்பலமலரையொழித்தற்கு; "நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ, அனைத்துணவு நீக்கும் அசோகு - வனத்திலுறு, முல்லை கிடைகாட்டும் மாதே முழுநீலம், கொல்லும் மதனம்பின் குணம்" என்று கூறப்பட்ட மன்மதன்கணைச்செயல்களில் நீலத்தினது காரியமான மரணமொன்று தவிர மற்றையம்புகளின் செயல்கள் யாவும் கண்ணனைக்கண்ட மகளிர்பக்கல் நிகழ்ந்தன வென்பார், 'மங்கையர்பலரு மிங்ஙன் மன்மதபாணநான்கி னிங்கிதவின்ப

மெய்தி யின்னுயிரோடு நிற்ப' என்றார். இன்பவிங்கிதம் என்றது,சிருங்கார ரசத்தால் உள்ளத்துநிகழுங் குறிப்புக்கு ஏற்ப உடம்பிலுளவாகும் கண்ணீ ரரும்பல் மெய்ம்மயிர்சிலிர்த்தல் நுதல்வியர்த்தல் புருவம்நெறித்தல்முதலிய மெய்ப்பாடுகளை. 'மங்கையர்பலரும்......நிற்ப' என்றது,கீழ்ப் பன்னிரண்டு கவிகளில் விரித்துக்கூறியவற்றைத் தொகுத்துச்சுட்டியது; அநுவாதம். உலாவென்னும் பிரபந்தத்திற்கு அங்கமாகக் கூறிய விதிகளைத் தழுவி இங் ஙனம் பவனிக்காதலை விரித்துரைத்தார்.

பங்கு உற - இரண்டுபக்கங்களிலும் பின்புறத்திலும் பொருந்த. கோ யில்-கோஇல்; சிறந்தவீடு: யகரவுடம்படுமெய் பெற்றது.இலக்கணப்போலி. நிற்பப் புக்கான்என இயையும். மந்மதபாணம்.இங்கிதம்-வடசொற்கள். மந் மதன் என்றபெயர் - (ஆசைநோயால்)பிராணிகளின் அறிவைக் கலக்குபவ னென்று பொருள்படும். 'குந்தியாழ் கோயில்' என்றது, அரண்மனையில் இராசஸ்திரீகள்வசிக்கிறஇடமான அந்தப்புரத்தை. 'மங்கையர்' என்றது, இங்குப் பருவப்பெயராகாமல் மகளிரென்றமாத்திரமாய்நின்றது; சிறப்புப் பெயர் பொதுப்பொருளின்மேலது. இங்ஙன்-இங்ஙனமென்பதன்விகாரம். இன்னுயிர் - இனிமை யென்ற பண்புப்பெயர் ஈறுபோய் இடைஇகரமுங் கெட்டது.

இதுமுதல் எட்டுக் கவிகள் - ௬௬-ஆங் கவிபோன்ற அறுசீர்க்கழிநெடி லடியாசிரியவிருத்தங்கள். (௮௪)

**[கண்ணன் குந்தியை வணங்குதலும், அவனைத் திரௌபதிமுதலியோர் வணங்குதலும்.]**

௮௫. கொற்றவரைவர்தம்மைக்குருகுலம்விளங்குமாறு
பெற்றவள்பாதம்போற்றிப்பிறப்பிறப்பறுக்கவல்லோன்
மற்றவள்வாழ்த்தவாழ்த்தமனமகிழ்ந்தழலின்வந்த
பொற்றொடிபணிவுமேனைப்பூவையர்பணிவுங்கொண்டான்.

(இ - ள்.) பிறப்பு இறப்பு அறுக்க வல்லோன் - (தன்னைவணங்கின வர்களுடைய) சனனமரணங்களை நீக்கி (அவர்கட்கு) முத்தியளிக்கவல்லவ னான கண்ணபிரான்,—குரு குலம் விளங்கும் ஆறு கொற்றவர் ஐவர்தம்மை பெற்றவள் பாதம் போற்றி - குருவென்னும்அரசனது வம்சம் பெருமை யடையும்படி வெற்றியையுடையபஞ்சபாண்டவர்களைப்பெற்றவளானகுந்தி தேவியினது பாதங்களை நமஸ்கரித்து, அவள் வாழ்த்த வாழ்த்த மனம் மகிழ்ந்து - அக்குந்திதேவி பலவாறுவாழ்த்த (அவ்வாழ்த்துக்களை யேற்று) மனம்மகிழ்ந்து, மற்று - பின்பு, அழலின் வந்த பொன்தொடி பணிவும் ஏனை பூவையர் பணிவும் கொண்டான் - (துருபதன்செய்வித்த புத்திரகாம யாகத்து)ஓமாக்கினியினின்று உதித்த பொன்னாலாகிய தொடியென்னுங் கைவளையையுடையவளான திரௌபதியினது வணக்கத்தையும் (சுபத்திரை முதலிய) மற்றைமகளிரது வணக்கத்தையும் பெற்று வாழ்த்துக்கூறி யருளினன்; (எ - று.)

மற்று - வினைமாற்றுமாம். ஐவர் - தொகைக்குறிப்பு. குருகுலம் விளங் குமாறு - குருவம்சம் சந்ததியறாது தொடர்ச்சியுற்று நீடித்துவாழும்படி யெனினுமாம். பஞ்சபாண்டவர்களில் நகுலசகதேவர்கள் மாத்திரிவயிற்றிற் பிறந்தவ ராயினும், குந்தியை 'ஐவர்தம்மைப்பெற்றவள்' என்றது, துர்வாச மகாமுனிவனை வழிபட்டு மந்திரோபதேசம்பெற்ற குந்தி மாத்திரிக்கு அம் மந்திரத்தைச் சொல்லிக்கொடுக்க அதன்பலத்தினாலேயே அவ்விருவரும் பிறந்தனராதலாலும், மாத்திரி பாண்டுவோடு சககமனஞ்செய்து இறந்து விட இளமைதொடங்கி நகுலசகதேவர்களையும் குந்தியே வளர்த்தனளாத லாலு மெனக் காண்க; "அந்தணன் முன்தரு மந்திரமைந்தினி லறுவரை

யும் சேட்டுக், குந்தி பயந்தனன்" என்பர் மேற் கிருட்டிணன்றூதுசருக்க, திறும். பொற்முடி - மூன்றனுருபும் பயனுந் தொக்க தொகைப் புறத்து பிறந்த அன்மொழித்தொகை. ஏனை - இடைச்சொல். பூவை - நாகணவாய்ப் பறவை; கிளியுமாம். அது கொஞ்சிப்பேசுவதுபோல இனிமையாகப்பே பவர், பூவையர். கண்ணன் தான் தேவாதிதேவனுன திருமாலி னம்சாவதா மாயினும், மாநுடபாவனையை மேற்கொண்டுள்ளதனல், தனக்கு அத்தை முறையான குந்தியின் பாதங்களில் வணங்கினன். 'பிறப்பிறப்பறுக்கவல் லோன் ஐவர்தம்மைப்பெற்றவள்பாதம் போற்றி அவள் வாழ்த்த வாழ்த்த மனமகிழ்ந்து' என்றதில், எம்பெருமானது பரத்வத்தோடு சௌலப்யமும் வெளியாம். 'அழலின்வந்தபொற்முடி' என்றது, கருப்பத்திற்பிறவாதவ ளெனத் திரௌபதியினது உற்பத்திச்சிறப்பை யுணர்த்தும்.அழலின், இன்- ஐந்தனுருபு, நீக்கம். முத்திபெற்றவர் கருமந் தொலைந்ததனல் மீளவும் பிற த்தலில்லை யாதலால், 'பிறப்பிறப்பறுக்கவல்லோன்' என்றார். ஒருமகளை வணங்கிப் பலமகளிரது வணக்கத்தைக் கொண்டா னென்றதில், பரிவர்த்த காலங்கார மென்னும் மாற்றுநிலையணி தொனித்தல் காண்க. கொற்றவ ரைவர்தம்மைப் பெற்றவள் - வீரமாதா என்றபடி. (அ௫)

[பாண்டவர் கண்ணனோடு அளவளாவுதல்.]

அ௬. அரசவைக்கணிசெய்சிங்கவாசனத்திருத்திவெற்றி
முரசுடைத்துவசவேந்தன்முகமலர்ந்திருந்தகாலை
விரைசெயப்புரவித்திண்டேர்வீமனைமுதலோரெங்கு
முரைசெலக்கவர்ந்தசெல்வங்காட்டிநின்றுரைசெய்தாரே.

(இ-ள்.)(பின்பு),வெற்றி முரசு உடை துவசம் வேந்தன்-சயத்துக்கு அறிகுறியாகிற முரசவாத்தியத்தின் வடிவத்தையுடைய கொடியையுடைய தருமராசன், அரசு அவைக்கு அணி செய் சிங்கஆசனத்து இருத்தி - இராசசபைக்கு அலங்காரத்தைச்செய்வதொரு திவ்யசிங்காசனத்திலே(கண்ணபிரானை) எழுந்தருளப்பண்ணி, முகம் மலர்ந்து இருந்த காலை - (கண்ணபிரானது வரவினு லாகிய மகிழ்ச்சியினுல்) முகமலர்ச்சியுற்றிருந்த சமயத்தில்,—விரை செயம் புரவி திண் தேர் வீமனை முதலோர் - வேகமாய்ச் செல்வனவும் வெற்றியைத்தருதற்கு ஏற்றனவு மாகிய குதிரைகள் பூட்டிய வலியதேர்களையுடைய வீமசேனனை முதலாகவுடையவர்களான (தருமன் தம்பியர்) நால்வரும், எங்கும் உரை செல கவர்ந்த செல்வம் காட்டி நின்று உரைசெய்தார் - எல்லாத்திக்குக்களிலும் (தங்கள்) ஆஜ்ஞை தடையின்றிச் செல்ல (ஆங்காங்கு அரசர்களைவென்று இராசசூயயாகத்தின்பொருட்டுத் தாம்) கவர்ந்துகொண்டுவந்த பொருள்களையெல்லாம் (அக்கண்ணபிரானுக்குக்) காண்பித்து (அருகில்) நின்று (அவை இன்னவை இன்னவை யென்ற விவரத்தையும் தமதுபோர்வரலாற்றையும்) கூறினார்கள்; (எ - று.)

ராஜஸபா, ஸிம்ஹம், ஆஸநம்,முரஜம், த்வஜம்,ஜயம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. அரசவை - பலஅரசர்கள்சூழ அரசன் அரசுவீற்றிருக்கு மிடம். சிங்கவாசனம்-சிங்கத்தின் வடிவு தோன்றச் சித்திரவேலைசெய்யப்பட்ட பீடம். ஷோடசோபசாரங்களுள் தவிசளித்தல் கூறினது, மற்ற வற்றிற்கும் உபலக்ஷணம். "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்தது காட்டும் முகம்" என்றபடி .அகத்துமகிழ்ச்சிக்குஏற்ப முகம்மலர்ந்திருந் தென்க. விருந்தோம்புவார்க்கு இன்றியமையாதனவான இன்முகம் இன்சொல் உபசரித்தல் என்ற மூன்றனுள் முதலதான முகமலர்ச்சியைக் கூறினது, பிறவற்றிற்கும் உபலக்ஷணமாம். சயப்புரவி - உத்தமவிலக்கணமமைந்த குதிரை; போர்த்தொழிற்கேற்ற குதிரையுமாம். உரை-கட்டளைச் சொல்லுமாகும். உரை செல - எல்லாவிடத்தும் புகழ் பரவ எனினுமாம். செல=செல்ல: தொகுத்தல். செல்வம் - பொன் மணி யானை தேர் குதிரை

முதலாக முன்புகூறியன. வீமனைமுதலோர் என்பதில், ஐ - சாரியையெனினுமாம். வெற்றிமுரசுடைத்துவசம் - தனதுவெற்றியை விளக்குகிற முரசக்கொடி யென்றுங் கொள்க. (அகு)

[சராசந்தன்மகனான சகதேவன் முதலியோர் அவ்வேள்விக்கு வருதல்.]

அஎ. முன்னரமேதஞ்செய்வான்முடிச்சராசந்தனென்னுங்
கின்னரர்பாடுஞ்சீரான்கிளப்பருஞ்சிறையில்வைத்த
வந்நரபதிகளோடுமவன்மகன்மாகதேச
னெந்நரபதிகளுக்குமிரவியேயென்னவந்தான்

(இ - ள்.) முடி - கிரீடாதிபதியான, சராசந்தன் என்னும் - ஜராஸந்தனென்னும் பெயருள்ள, கின்னரர் பாடும் சீரான் - (பதினெட்டுத் தேவகணங்களில் ஒருசாரரான) கின்னரர்கள் பாடும் புகழையுடையவனாகிய அரசன். முன் - முன்பு, நரமேதம் செய்வான் - நரமேதயாகஞ்செய்தற்பொருட்டு, கிளப்பு அருசிறையில் வைத்த - சொல்லுதற்கு அரிய [மிகக்கொடிய] சிறைச்சாலையிலே வைக்கப்பெற்றவர்களான, அ நரபதிகளோடும் - அந்த [கீழ்க்கூறிய] அரசர்களுடனே, அவன் மகன் மாகதேசன் - அச்சராசந்தனதுபுத்திரனும் மகததேசத்தார்க்குஅரசனுமான சகதேவன், எ நரபதிகளுக்கும் இரவியே என்ன வந்தான் - எல்லாவரசர்கட்கும் சூரியனென்று சொல்லுமாறு (சிறந்ததோற்றமுடையவனாய்) வந்துசேர்ந்தான்; (எ - று.)

'நரமேதம்' என்றது, சிவபிரானதுமுன்னிலையிற் சராசந்தன் பலஅரசர்களைப் பலிகொடுக்க உத்தேசித்ததை. நூறுஅரசர்களைப் பசுக்களாக நிறுத்திக் கொன்று பலிசெலுத்தக்கருதிச் சராசந்தன் அரசர்களைவென்று உயிரோடு கவர்ந்து சிறைச்சாலையிலிட்டுத் தொகுத்துவருகையில் எண்பத்தாறுபேர்சேர்ந்தனராக மற்றும்பதினல்வரைசசேர்த்தற்குமுயன்றுவருமளவிலே கண்ணன் வீமனைக்கொண்டு சராசந்தனைக்கொன்று அவ்வரசர்களைச் சிறைவிடுவித்தன னென்க. அவ்வரசர்களை 'அந்நரபதிகள்' என்று சுட்டினது, கீழ் கச - ஆஞ் செய்யுளிலும், ௩௭ - ஆஞ் செய்யுளிலும் கூறிப்போந்தன ராதலால். அவ்வரசர்களைக் கண்ணன் சிறைவிடுவித்தபோது, அவர்கள் மிக்க மகிழ்ச்சியோடு அப்பெருமானை வணங்கிப் பலவாறு துதித்து 'இனி எங்கட்கு நியமநம் யாது? கூறியருள்க' என்ன, பகவான் 'இனி நீவிர் நும்நும் நாடுகளை அரசாளுதலும், யுதிட்டிரன் செய்யும் இராயசூயயாகத்துக்கு வந்துஉதவுதலும் செய்வீராக' என்று நியமித்து விடையளிக்க, அவர்கள் மீண்டன ராதலால், அங்ஙனமே வேள்விக்கு வந்தன ரென்க. சராசந்தனது மிக்கபுகழ் இம்மண்ணுலகிலேயன்றி விண்ணுலகிலும் பரவியதென்பது, 'கின்னரர்பாடுஞ்சீரான்' என்றதனால் விளங்கும். கிளப்புஅருஞ் சிறை - மீட்டற்குஅரிய சிறையுமாம். ஜராசந்தகுமரன், கண்ணன் வீமன் அருச்சுனன் என்பவர்களது அருளைப் பெற்று அரசனாய்ச் சிறத்தல் தோன்ற, 'எந்நரபதிகளுக்கு மிரவியேயென்ன வந்தான்' என்றார். ரவி ... சொல். ஏ - உயர்வுசிறப்பு. செய்வான - எச்சம். (அஎ)

[வீமன்முதலிய பூருகுலத்துவேந்தரனைவரும் வேள்விக்கு வருதல்.]

அஅ. அரும்பனைக்கொடியோனுதியரவுயர்த்தவனீறாகும்
பொரும்படைச்சேனைவெள்ளப்பூருவின்குலத்துளோர்கள்
கரும்பனைத்தடக்கைவெங்கட்கரிமுதற்சேனையோடு
மிரும்பினைக்குழைக்குநெஞ்சர்யாவருமீண்டிமொய்த்தார்.

(இ - ள்.) அரும் பனை கொடியோன் ஆதி - அருமையான பனைமரத்தின்வடிவமெழுதிய துவசத்தையுடைய வீமன் முதல், அரவு உயர்த்தவன் ஈறு ஆகும் - பாம்புக்கொடியை உயரநாட்டியவனான துரியோதனன் ஈறாக உள்ள, இரும்பினை குழைக்கும் நெஞ்சர் - இரும்பையும் நெகிழ்ச்செய்பவர்

தென்னும்படியான நெஞ்சுறுதியையுடையவர்களாகிய, பொரும் படை சேனை வெள்ளம் பூருவின் குலத்து உளோர்கள் யாவரும் - போர்செய்கிற படைக்கலங்களையும் சேனாசமூகத்தையுமுடைய பூருவென்னும் அரசனது மரபில் தோன்றிய அரசர்களெல்லாரும், கரும் பனை தட கை வெம்கண் கரி முதல் சேனையோடும் - கருநிறமான பனைமரம்போன்ற பெரிய துதிக்கையையும் கொடுந்தன்மையையுமுடைய யானை முதலிய சதுரங்கசேனைகளுடனே, ஈண்டி மொய்த்தார் - (இந்திரப்பிரத்தநகரத்தில்) வந்து நிறைந்தார்கள்; (எ - று.)

பீஷ்மன் - பூருகுலத்திற் சந்தநுமகாராசனுக்கு மூத்தமனைவியான கங்காதேவியினிடம் பிறந்தவன்; திருதராட்டிரன் பாண்டு இவர்கட்குத் தந்தையான விசித்திரவீரியனுக்குத் தமையனாதலால், இவன், கௌரவ பாண்டவர்கட்குப் பெரியபாட்டனாவன். துரியோதனன் தனது கொடுமைக்கும் நன்றியறிவின்மைக்கும் எப்பொழுதும் வக்கிரகதியிற் செல்லுந் தன்மைக்கும் நாவிரண்டுடைமைக்கும் அடையாளமாகப் பாம்பைக் கொடியிற் கொண்டனன்போலும். வெள்ளம்-ஓர் பெருந்தொகை. பூரு - யயாதியின் குமாரன், யதுவினுடன்பிறந்தவன். இவன் குருகுலத்துப் பூர்விகராசர்களிற் பிரதானனாதலால், வீடுமன்முதலியோரை 'பூருவின்குலத்துளோர்கள்' என்றார். யானைத்துதிக்கைக்குப் பனைமரம் - கருநிறத்திலும், பெருவடிவிலும் உவமம். இவர்களுடைய நெஞ்சின் மிக்க வன்மையோடு ஒப்புநோக்குமிடத்துக் கடினமான இரும்பும் குழைவுறுநெகிழ்ச்சிப்பொருளென்று சொல்லத்தக்கதாகு மென்பார், 'இரும்பினைக்குழைக்கு நெஞ்சர்' என்றார்; இரும்பினும் வலிய நெஞ்சரென்பது கருத்து. ('பனைக்கொடியோன்' என்ற பெயர் பலராமனுக்கு வழங்குமிடமு முண்டு.) (௮௮)

[இந்திரப்பிரத்தநகரத்தில் எல்லாச்செல்வமும் நிறைதல்.]

௮௯. இந்திரபுரிக்குமிந்தவிந்திரபுரிக்குந்தேவ
ரந்தரமறிவுறாமலதிசயித்துவகைகூரச்
செந்திருமடந்தைக்குள்ளசெல்வங்களனைத்துஞ்சேர
வந்ததுபோலும்வேள்விமாநகர்த்தோற்றமம்மா.

(இ - ள்.) வேள்வி மா நகர் தோற்றம் - இராஜசூயயாகஞ் செய்யுமிடமாயமைந்த பெரிய அந்நகரத்தின் காட்சிப் பொலிவானது,— தேவர் - தேவர்கள், இந்திர புரிக்கும் - அந்தத் தேவேந்திரனது நகரியான (தமது) அமராவதிக்கும், இந்த இந்திரபுரிக்கும் - இந்த இந்திரப்பிரஸ்தநகரத்துக்கும், அந்தரம் அறிவுறாமல் - வேறுபாடுஅறியஇயலாமல், அதிசயித்து உவகை கூர - ஆச்சரியமடைந்து மகிழ்ச்சி மிகுமாறு, செம் திருமடந்தைக்கு உள்ள செல்வங்கள் அனைத்தும் சேர வந்தது போலும் - செந்நிறமுடைய ஸ்ரீமகாலக்ஷ்மிக்கு உரியனவாயுள்ள செல்வங்களெல்லாம் அங்கு ஒருசேர வந்து நிறைந்த தன்மையைப் போலும்; அம்மா - ஆச்சரியம்! (எ - று.)

விண்ணுலகத்திலுள்ள இந்திரபுரியான அமராவதிக்கும் மண்ணுலகத்திலுள்ள இந்திரபுரியான இந்திரப்பிரஸ்தத்துக்கும் வேறுபாடறியவொண்ணாதபடியும், விண்ணுலகத்திற்போல மண்ணுலகத்திற் செல்வம் நிறைந்த புதுமையை நோக்கித் தேவர்கள் வியந்து மகிழும்படியும், பொன் மணி நெல் வாகனம் அடிமை முதலிய ஐசுவரியங்களெல்லாம் அப்பொழுது அவ்விந்திரப்பிரத்தநகரத்தில் நிறைந்தன வென்பதாம். அம்மா - அதிசயப்பொருள்தரும் இடைச்சொல்; அச்செல்வநிறைவுகுறித்து அதிசயித்து 'அம்மா' என்றார். இராஜசூயயாகத்தின்பொருட்டுப் பலதேசத்தரசர்களையும் வென்று கவர்ந்துவந்த பலவகைப்பொருள்களின் திரளும், யாகத்தின்பொருட்டுச் செய்த அலங்காரப்பொலிவும் அமைந்ததனால், இங்ஙனம் வருணிக்கப்பட்டது; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இந்த்ரபுரீ, அந்தரம்-வடசொற்கள். ()

[அந்தணர்அநேகர் வேதபாராயணத்தோடு யாகசாலை சேர்தல்.]

௯0. தோரணவீதிதோறுந் தூரியமுழக்கந்தன்னி
னாரணமுழக்கமிஞ்சவந்தணராகியுள்ளோர்
காரணமுணர்ந்தோர்வேள்விக்கனன்முகமாகத்தேவர்
பாரணம்பண்ணவிட்டபைம்பொன்வேதிகையிற்சேர்ந்தார்.

(இ - ள்.) காரணம் உணர்ந்தோர் - (சகலசராசரங்களுக்கும்) காரணமான ஆதிமூலப்பொருளி னியல்பை யறிந்தவர்களாகிய [ப்ரஹ்மஜ்ஞாநிகளாகிய], அந்தணர் ஆகி உள்ளோர்-பிராமணர்கள்,—தோரண வீதிதோறும்-தோரணங்கள்நாட்டியலங்கரிக்கப்பட்டுள்ள (இந்திரப்பிரத்தநகரத்து) வீதிகளில், தூரியம் முழக்கந்தன்னின் ஆரணம் முழக்கம் மிஞ்ச - மங்கல வாத்தியகோஷத்தைக்காட்டிலும் தாம்வேதபாராயணஞ்செய்யும்ஒலி அதிகப்பட, வேள்வி கனல் முகம் ஆக தேவர் பாரணம்பண்ண இட்ட பைம்பொன் வேதிகையில் சேர்ந்தார் - யாகாக்கினிமுகமாகத் தேவர்கள் தமக்கு உரியஉணவான ஹவிஸைப் பெற்றுநுகரும்படி அமைக்கப்பட்ட பசும்பொன்மயமான யாகவேதிகையி னருகிற் சென்று சேர்ந்தார்கள்; (எ - று.)

வேதிகை-யாகசாலையில் அமைக்கப்படுகிற மேடை. தேவர்களின்பொருட்டு அக்கினியில் அவிசொரிய அதனை அக்கினி ஏற்று அந்தந்தத்தேவர்க்குச் சேர்த்தல்பற்றி, தேவர்கள் அக்கினியைமுகமாகவுடையவ ரென்று வேதத்திற் கூறப்படுதலால்,'வேள்விக்கனன்முகமாகத்தேவர் பாரணம்பண்ணவிட்ட வேதிகை' எனப்பட்டது. தோரணம், வீதீ, தூர்யம், ஆரணம், காரணம், முகம், பாரணம், வேதிகா-வடசொற்கள். மிஞ்ச=விஞ்ச; மரூஉ.

[இதுமுதல் மூன்றுகவிகள் - யாகசாலை வருணனை.]

௯௧. சுடுமனற் கலுழ னாகச் சுருதியின் படியே கோட்டி
நடுவுறத் திசைக ணான்கு நான்குவெள் ளேறு கோட்டி
வடுவறச் சமைத்த சாலை மண்டபந் தன்னை நோக்கிற்
கடவுளர்க் கமைத்த யாக தலமெனக் கவினிற் றம்மா.

(இ - ள்.) சுருதியின் படியே - வேதவிதிப்படியே, சுடும் அனல் - சுடுகிற அக்கினிக்கு உரிய இடமான ஓமகுண்டத்தை, நடு உற கலுழன் ஆக கோட்டி-நடுவிலே கருடாகாரமாகச் செய்து, திசைகள் நான்கும்-(அதன்) நான்குபக்கங்களிலும், நான்கு வெள்ஏறு கோட்டி - நான்கு விருஷபேஷ்டகைகளை வைத்து, வடு அற சமைத்த - குற்றமில்லாதபடி அமைக்கப்பட்ட, சாலை மண்டபந்தன்னை - யாகசாலைமண்டபத்தை, நோக்கின்-பார்க்குமிடத்து,(அது), கடவுளர்க்கு அமைத்த யாகதலம் என கவினிற்று - (இந்திரன் முதலிய) தேவர்கள் யாகஞ்செய்தற்பொருட்டு அமைத்த யாகசாலைபோலச் சிறந்துவிளங்கிற்று; அம்மா - ஆச்சரியம்! (எ - று.)

அக்கினிக்குஆதாரமான வேதியை, சிறகுகளையும் புச்சத்தையும் பரப்பிக்கொண்டு கீழ்நோக்காகக் கிழக்குமுகமாயுள்ள கருடப்பறவையின் வடிவமாகக் கட்டியமைத்தல், கருடசயநமெனப்படும்; அது, முதலடியிற் கூறப்பட்டது. 'வ்ருஷப' என்ற சொல்லை யுட்கொண்ட மந்திரத்தைச் சொல்லி அந்தக்கருடவடிவின் நான்குபுறத்திலும் அமைக்கப்படுகிற நான்கு செங்கற்கள், 'வ்ருஷபேஷ்டகா' எனப் பெயர்பெறும்; அவற்றை இரண்டாமடியிற் குறித்தார். வெண்மை-ஏற்றுக்கு அடைமொழி. அனல் - தானியாகுபெயர். 'சுடுமணற்கலுழனாக' என்ற பாடத்துக்கு—சுடுமணல்-சுடப்பட்டமண்ணாகிய செங்கலினா லென்க. மனிதர் யாகஞ்செய்தற்குஅமைத்த சாலைக்கு, தேவர் யாகஞ்செய்தற்கு அமைத்த சாலையை உவமைகூறினர், சிறப்புப்பற்றி. கலுழன் - க்ருட னென்ற வடசொல்லின் சிதைவு. கவினிற்று-கவின் என்ற பகுதியடியாய்ப் பிறந்த ஒன்றன்பாலிறந்தகாலமுற்று. (௯௧)

திருந்தமெய்ஞ் ஞானமுந் தெளிந்த தெய்வத
வருந்தவ முனிவர்பே ரவையின் மேன்மையாற்
பெருந்தகை நாபியம் பெருமன் வாழ்வுபோன்
றிருந்தது குருபதி யாக சாலையே.

(இ - ள்.) மெய் ஞானமும் திருந்த தெளிந்த - (வேதத்திற் கருமகாண்டத்திற் கூறிய சடங்குகளில்மாத்திர மன்றி அதன் பிரமகாண்டத்தின் பயனா)தத்துவஞானத்திலும் நன்றாகத் தேர்ந்துள்ள, தெய்வதம் அருந் தவம் முனிவர் - தெய்வத்தன்மையுள்ளவர்களும் (பிறர்செய்தற்கு)அரிய தவத்தைச் செய்தவர்களுமான முனிவர்கள் கூடிய,பேர் அவையின் - பெரியசபையின், மேன்மையால் - சிறப்பினால், — குருபதி யாகசாலை - குருகுலத்தலைவனான தருமராசனது யாகசாலையானது, — பெருந்தகை நாபி அம் பெருமன் வாழ்வு போன்று இருந்தது - பெருமைக்குணமுள்ளவனான திருமாலினது திருநாபியில் தோன்றிய அழகிய சிறந்த தலைவனான பிரமன் வாழுமிடமாகிய சத்தியலோகம் போன்றிருந்தது; (எ - று.)

பிரமலோகமாகிய சத்தியலோகம் தத்துவஞானத்திற் சிறந்த பலபெரியோர்கள் கூடிவாழ்கிற பேரவையுடையதாய் மேம்படுதலால், அதனை,மெய்யுணர்வுடைய பல சிறந்த முனிவர்கள் கூடிய சபையையுடையதான யுதிட்டிரனதுயாகசாலைக்கு உவமைகூறினர். மெய்ஞ்ஞானமும், உம் - இறந்தது தழுவியஎச்சம்; உயர்வுசிறப்புமாம். ஜ்ஞாநம், தைவதம், தபஸ், ஸபா, நாபீ, குருபதி,யாகசாலா-வடசொற்கள். 'நாபியம்பெருமன்' என்றவிடத்து,அம்-சாரியையுமாம். மன் - மன்னன். பெருந்தகை-பண்புத்தொகையன்மொழி. வாழ்வு-வாழுமிடத்துக்கு ஆகுபெயர். பூதேவராதலால், 'தெய்வத முனிவர்' எனப்பட்டனர்; முனிவர்க்குத் தெய்வத்தன்மை - சாபாநுக்கிரகசக்தி. அவை யாராலும்நன்குமதிக்கப்படுதல் முதலியன.

இதுமுதல் எட்டுக் கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீரொன்று மாசநம், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (கஉ)

கங. யாதவகுலத்தினுக்கிறைவனாகிய
மாதவனிணையடிவணங்கிமற்றுள
பூதலத்தரசெலாம்பொருந்துபொற்பினு
லோதநீர்வண்ணன்வாழுலகுபோன்றதே.

(இ - ள்.) யாதவ குலத்தினுக்கு இறைவன் ஆகிய - யதுவென்னும் அரசனது சம்பந்தமான குலத்துக்குத் தலைவனாகிய, மாதவன் - கண்ணபிரானது, இணை அடி - உபயபாதங்களை, வணங்கி - நமஸ்கரித்து, மற்று உள பூதலத்து அரசு எலாம் பொருந்து பொற்பினால் - பூமியிலுள்ள மற்றையரசர்களெல்லாருஞ் சேர்ந்திருக்கிறசிறப்பையுடைமையால், —(அவ்யாகசாலையானது),— ஓதம் நீர் வண்ணன் வாழ் உலகு போன்றது - கடல்போன்ற கரியதிருநிறத்தை யுடையவனான திருமால் வீற்றிருக்கின்ற உலகத்தை [ஸ்ரீவைகுண்டலோகத்தை]ப் போன்றிருந்தது; (எ - று.)

திருமாலினவதாரமான கண்ணனை வணங்கிப் பலஅரசர்களும் தங்கப்பெற்ற யாகசாலைக்கு, அத்திருமாலைவணங்கி அனைவரும் வாழுமிடமான விஷ்ணுலோகத்தை உவமைகூறினர். மாதவன்-வடசொல்; இத்திருநாமம்- திருமகள்கொழுநனென்றும், மதுவென்னுஞ் சந்திரகுலத்தரசனது மரபில் தோன்றியவனென்றும் பொருள்படும். கண்ணன் யதுகுலத்தரசர்க ளுள் ஒருவனாதலால், மற்றையரசர்களை 'மற்றுளபூதலத்தரசெலாம்' என்றார். அரசு - உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச்சொல். (கங)

[அப்பொழுது வியாசமுனிவன் அங்குவந்து பாண்டவர்க்குச் சிலகூறத் தொடங்குதல்.]

கச. விதியினுமுயர்ந்ததொல்வியாதன்மேதினி
பதிகளாகியதிறற்பாண்டுமைந்தரை
மதியினிலொருபுடைவருகென்றன்பினாற்
றிதியுறச்சின்மொழிசெவியிற்செப்பினான்.

(இ - ள்.) விதியினும் உயர்ந்த - (அறிவொழுக்கங்களிற்) பிரமனைக் காட்டிலுஞ் சிறந்தவனான, தொல் வியாதன் - பழமையான வியாசமாமுனிவன்,—மேதினி பதிகள் ஆகிய - பூமிக்குத் தலைவர்களான, திறல் பாண்டு மைந்தரை - வலிமையையுடைய பாண்டுவின் குமாரர்களை [பஞ்சபாண்டவர்களை], மதியினில் ஒரு புடை வருக என்று - விருப்பத்தோடு ஒருதனியிடத்தில் வருவீராக என்றுசொல்லி, (ஏகாந்தமான ஓரிடத்திற்கு அழைத்துக்கொண்டுபோய்), அன்பினால் - அன்போடு, சில் மொழி - சிலவார்த்தைகளை, செவியில் திதி உற - (அவர்களுடைய) காதுகளில் நிலைபெறும்படி, செப்பினான் - சொல்லலானான்; (எ-று.)—அவ்வார்த்தைகளை, அடுத்த மூன்று கவிகளிற் காண்க.

வியாசன் திருமாலின் அவதாரமாதலால், அவனுக்கு 'விதியினும் உயர்ந்த' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது; ("வேதாவுமொவ்வா வியாதன்", "சுருதியாவும், விரைமலர்விதியின்மிஞ்சவிதித்தருள் வியாதனென்பான்" என்றார் கீழ் ஆதிபருவத்தும்.) 'தொல்' என்ற அடைமொழி, அவன் பாண்டவர்கட்குப் பாட்டனாவனென்ற உறவுமுறைமையை விளக்கும். விதி-வடசொல்: (எல்லாவற்றையும்) படைக்கிற கடவுள். உம் - உயர்வுசிறப்பு. 'விதியினுமுயர்ந்தசொல்வியாதன்' என்ற பாடத்திற்கு - கடவுளின்கட்டளையைக்காட்டிலும் மேம்பட்ட சொற்களையுடைய வியாசனென்னலாம். 'வ்யாஸன்' என்ற வடமொழிப்பெயர், (வேதங்களை) வகுத்தவனென்பதுபற்றி வந்தது. பூமியை யாள்கிற அரசர்களைப் பூமியாகியபெண்ணின் கணவரென்று கூறுதல் தோன்ற, 'மேதினிபதிகள்' என்றார். வருகென்று - தொகுத்தல். திதி - ஸ்திதி என்ற வடசொல்லின் விகாரம்.()

[இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: வியாசமுனிவன்வார்த்தை.]

கரு. இங்கிதத்திந்திரரென்பர்யாவருஞ்
சங்கரன்விதியினாற்றரணிபாலராய்
வெங்கனற்றோன்றியமின்னையைவரு
மங்கலம்புவிமகள்வழக்கினெய்தினீர்.

(இ - ள்.) யாவரும் - (முற்பிறப்பின்வரலாற்றையுணரவல்லவர்) எல்லாரும், இங்கிதத்து - குறிப்பினால் (உணர்ந்து), இந்திரர் என்பர் - (உங்களை) முன்பு இந்திரராயிருந்தவர்களென்று சொல்வார்கள்; ஐவரும் - நீங்களைந்துபேரும், சங்கரன் விதியினால் - சிவபிரானுடைய கட்டளையினால், தரணிபாலர் ஆய் - அரசர்களாகி, வெம் கனல் தோன்றிய மின்னை - வெவ்விய யாகாக்கினியினின்று உதித்த மின்னல்போன்ற பெண்ணான திரௌபதியை, புவிமகள் வழக்கின் மங்கலம் எய்தினீர் - பூமியை ஒருங்கு அரசாளும்வழக்கம்போல் ஒத்து விவாகஞ்செய்துகொண்டீர்கள்; (எ - று.)

சங்கரன் என்ற வடசொல் - (அடியார்க்கு) இன்பத்தைச் செய்கிறவனென்றும் (சம் - சுகம்), தரணிபாலர் என்ற வடசொல் - பூமியைப் பாதுகாப்பவரென்றும் பொருள்படும். மின் - மின்னல்போல விளங்கும் மெல்லியவடிவமுடைய பெண்ணிற்கு உவமையாகுபெயர். ஐவரும் எய்தினீர் - முன்னிலையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி; 'ஐவிர்' என்றிருப்பின், வழாநிலையாம். இங்கிதத்துமங்கலமெய்தினீர் என்றுகூட்டி, இன்பமாக

மணஞ்செய்துகொண்டீரென உரைப்பினுமாம். இங்கு இதத்து என்று பிரித்து, இவ்வுலகத்திலே இனிமையாக என்றும் பொருள்கொள்ளலாம். பூமியாகியபெண்ணுக்கு ஐவரும் ஒருங்கு தலைவராகி ஆளுதலை, திரௌபதியை ஐவரும் ஒருங்குமணஞ்செய்துகொண்டதற்கு உவமையாக அமைத்து, 'மின்னை ஐவரும் புவிமகள்வழக்கின் மங்கலமெய்தினீர்' என்றார்.

இங்குக்குறிப்பிட்ட செய்தியின் விவரம்:—முற்காலத்தில் நாளாயனியென்ற ஒருத்தி மௌத்கல்யனென்பவனை மணஞ்செய்துகொள்ள, அவன் அவளதுகற்பின்உறுதியையும் அன்பின்நிலையையும் சோதிக்கக்கருதிமிகுந்த குஷ்டநோயும் அதனாற்சிதைந்தவடிவமும்மிக்ககிழத்தனமும் எப்பொழுதும் பெருங்கோபமும் உடம்பில்துர்க்கந்தமு முடையவனாகத் தன்னைக்காட்டிப் பலவாறுகொடுமைசெய்யவும்அவள்அவன்பக்கல் அன்புசிறிதுங்குறையாமற் பலவகையுபசாரங்களையும் வழுவாது நன்மனத்தோடு புரிந்து முறைப்படி அவனுண்டமிகுந்தஎச்சிலைத் தானுண்டு வாழ்ந்திருக்கையில் ஒருநாள் அவனுண்டமிச்சிலில் அவனுடையகைவிரலொன்றுஅற்றுவிழுந்துகிடக்கக் கண்டும் கிஞ்சித்தும்அருவருப்புக்கொள்ளாமல் அதனையெடுத்துவைத்துவிட்டு அவ்வுணவை அன்போடுஉண்ண, அங்ஙனம் அவள் நிலைகுலையாதுவழிபட்டு வந்ததை அவன் பார்த்து மிகுந்ததிருப்திகொண்டு தனதுநோய்வடிவத்தையொழித்துத் தவமகிமையாற் காமனினுஞ் சிறந்த கட்டழகுடைய வடிவங்கொண்டு மிக்கஅன்போடு அவளைக்கொண்டாடி 'நினக்கு வேண்டும் வரம் வேண்டுவாய்'என்றுசொல்லலும்,அவள் வேறொருவரத்தையும் வேண்டாமல் 'உன் அன்பு எப்பொழுதும் என்பக்கல் நீங்காதாகுக' என்றுவேண்ட, அங்ஙனமே அவன் உடன்பட்டு ஐந்துவடிவங்கொண்டு இவளையனுபவிக்க, இவ்விருவரும் நெடுங்காலம் நீங்காமற் பெரும்போகம்நுகர்ந்தபின் நாளாயனி விதிவசத்தால் இறக்கும்போது 'அடுத்தபிறப்பிலும் ஒருபெண்ணாய்ப்பிறந்து இக்கணவனையே கூடுவேன்' என்றுகருதி இறந்து அவ்வாறே மறுபிறப்பில் இந்திரசேனையென்னும்பெயருடையவளாய் அவனைச்சேர்தற்கு வந்தபொழுது அவன் முத்திபெறுதற்பொருட்டுப் பெருந்தவஞ்செய்யுங் கருத்துடையவனாய் அவளுக்குஇடங்கொடாது நீங்கிச்செல்லவே, அப்பொழுது இவள் அவனை 'யான் இனி என்செய்வது?' என்றுவினவி அவன்கட்டளையிட்டபடி அர்த்தநாரீசுவரமூர்த்தியை நோக்கித் தவஞ்செய்ய, அத்தவத்துக்குஉவந்த அக்கடவுள் தனக்குஉரிய ஐந்துதிருமுகங்களையுடைய வடிவத்தோடு பிரதியக்ஷமாகையில் இவள் 'எனக்குஏற்றகணவனைத் தருக' என்று அன்பினால் ஐந்துதரம் அடுக்கிச்சொல்லிவேண்ட,அந்தஐந்துமுகக்கடவுளும்'அப்படியேயாகுக' என்று ஐந்துமுறைகூறி அவள் ஐந்துகொழுநரைப் பெறும்படி அநுக்கிரகிக்க, அதற்கு அவள் மகிழாமல் தக்கஒருநாயகனைத் தரும்படி பிரார்த்தித்ததற்கு, பரமசிவன் 'நீ ஐந்துதரம் வேண்டியபடி நாம் உனக்கு ஐந்துதரம் அருளியது தவறாது; ஆனால், அவ்வரத்தை இப்பிறப்பிலன்றி மறுபிறப்பிலனுபவிக்கும்படி அருள்செய்கிறோம்' என்று அநுக்கிரகித்து அவளைக் கங்காநதியில் மூழ்கிவரும்படியும் அங்ஙனம்முழுகிவரும்பொழுது எதிரில்தோன்றும் புருஷனைத் தன்னிடம்அழைத்துவரும்படியும் கூறிஅனுப்ப, அவ்வாறேசென்ற அவள் அப்பொழுதே ஒருபதியைப் பெறாது மறுபிறப்பில் ஐந்துபதிகளைப் பெறவேண்டுமே யென்று கொண்ட சோகத்தோடு கங்கையில்முழுகியெழுகையில் அவளுடையவிழிகளினின்று பெருகிய கண்ணீர் கங்கையில் விழுந்து பொற்றாமரைமலரான அற்புதச்செயலை அங்கு வந்த தேவேந்திரன் பார்த்து அதிசயித்து 'இது என்ன?' என்றுவினவிக்கொண்டு அவளைச் சமீபிக்க, அங்ஙனம்வினவியவனை அவள் தன்னுடன் வந்துசெய்தியறிந்துகொள்ளும்படி சொல்லியழைக்க, அவ்வாறே அந்த இந்திரன் அவளைத் தொடர்ந்துசெல்லுகையில் அங்கு மனைவியுடன் சூதாடிக்கொண்டிருந்த சிவபிரானைக் கண்டு மதியாது அலட்சியஞ்செய்து செருக்

இப்பேச, உருத்திரமூர்த்தி கோபங்கொண்டு அவனதுசெருக்கையடக்கிப் பிலத்தினுள்ளே செலுத்தி, இங்ஙனமே முன்பு செருக்குற்றுப் பின்பு தன்னால் அடக்கப்பட்டு அப்பிலத்தில் அடைத்துவைக்கப்பெற்றுள்ள நான்கு இந்திரர்களையும் அவனுக்குக்காட்டி, 'நீங்களைவரும் பூலோகத்தில் மநுஷ்ய ராஜராய்ப் பிறந்து, ராஜகன்னிகையாக மறுபிறப்பெடுக்கும் இவளொருத்தியை மணம்புரிந்துகொண்டு துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ் செய்து குற்றந்தீர்ந்து மீண்டும் விண்ணுலகடைவீர்' என்று ஆஜ்ஞைசெய்ய, அங்ஙனமே புதியஇந்திரன் அருச்சுனனாகவும், பழையஇந்திரர்நால்வரும் மற்றைஅவனுடன்பிறந்தவராகவும் தேவகுமாரராய்க் குந்தி மாத்திரி தேவியரிடம் பிறந்து, அவ்விந்திரசேனையின் அவதாரமான திரௌபதியை ஒருங்கு விவாகஞ்செய்துவாழ்ந்தனர் என்பதாம்.

இவ்வரலாறு, கீழ்த்திரௌபதிமாலையிட்டசருக்கத்திற் பரக்கக்கூறப்பட்டது. (அங்கு "வன்பாதலத்தில்வருநால்வரும் வானின்வந்த,புன்பாகசாதனனுந் தன்னடிபோற்றிநிற்ப, அன்பான் மகிழ்நரிவட் கைவரு மாதிரென்று, மென்பாவைபங்கன் விதிக்கப் புவிமீது வந்தார்," "இம்மாதுதொல்லையருமாதவத்தெல்லைகண்ட, அம்மா திவள்காதல ரைவரு மாக" என்றவை இங்குக் காணத்தக்கவை. மேல் ஆரணியபருவத்திலும் "முந்தை முப்புரம்பொடிபடுத்தமூர்த்திதன், சிந்தையாலைவரிந்திரரைச் சென்மென, வந்தனர் நிலமகள்வருத்தமாற்றுவான்" என்பர்.)முந்திய இந்திரர்நால்வர்-விசுவபுக், பூததாமா, சிபி, சாந்தி என்பவர். பிந்திய இந்திரன்பெயர் - தேஜஸ்வீ என்பது. (கூரு)

கூசு. ஓரொருதலைவராயோரோராண்டுளங்
கூருவகையினொடுங்கொழுநராயினீ
ராரழற்பிறந்தமானறத்தின்மைந்தற்குப்
பேரழல்வளர்த்திடும்பெற்றிபெற்றனள்.

(இ - ள்.) ஓர் ஓர் ஆண்டு - ஒவ்வொருவருடம், ஓர் ஒரு தலைவர் ஆய் - (நீங்கள்) ஒவ்வோர்அரசராக, உளம் கூர் உவகையினொடும் கொழுநர் ஆயினீர் - மனத்தில்நிறைந்தமகிழ்ச்சியுடன் (இத்திரௌபதிக்குக்) கணவராயிருந்தீர்கள்; ஆர் அழல் பிறந்த மான் - அரிய யாகாக்கினியினின்றுதோன்றிய இத்திரௌபதியானவள், (இப்பொழுது), அறத்தின் மைந்தற்கு - (உங்களில்மூத்தவனான) தருமபுத்திரனுக்கு, பேர் அழல் வளர்த்திடும் பெற்றி - பெருமையுள்ள யாகாக்கினியை (உடனிருந்து) வளர்க்கும் பெருமையை, பெற்றனள் - பெற்றாள்; (எ - று.)

இத்துணைநாளாய்த் திரௌபதி பஞ்சபாண்டவரில் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொருவருடமாக முறையே மனைவியாயொழுகினளாயினும், இப்பொழுது அவள் பாண்டவர்களில் மூத்தவனான தருமபுத்திரனுடன் வீற்றிருந்து வேள்வியை நடத்தும் யாகபத்தினியாயினளென்பதாம். 'உளம்கூர்உவகையினொடும்' என்றது - ஐந்துகணவர்கள் ஒருமனைவியை மனவேறுபாடின்றி ஒருமனமாக அன்புகொண்டுநடத்திய அருமையை எடுத்துக்காட்டியவாறும். பின்னிரண்டடியில், அழலிற்பிறந்தவள் அழலைவளர்க்குந் தகுதியைப் பெற்றனளென ஒருநயந்தோன்றுதலுங் காண்க. அழல்வளர்த்திடும்பெற்றியாற் பேர்பெற்றனளென்றுகொண்டு, யாகபத்தினியென்று பெயருடையளாயினளென்றலுமொன்று. முன்னிரண்டடியிற்குறித்தவிஷயம், முன்கதைத்தொடர்ச்சியில் விளக்கப்பட்டது. கூர் - உரிச்சொல். உவகை-'கை' விகுதிபெற்றதொழிற்பெயர். மான் - கண்பார்வையழகில் மான்போன்ற பெண்ணுக்கு உவமையாகுபெயர். (கூசு)

கூஎ. மைந்தர்நீர்நால்வருமகஞ்செய்வேந்தனே
தந்தையுந்தாயுமித்தருமவல்லியே

இந்தவான்பிறப்பினுக்கிறறைநாண்முதற்
குந்தியும்பாண்டுவுமென்றுகொண்மினே.

(இ - ள்.) இந்த வான் பிறப்பினுக்கு - இந்தப் பெரிய ஜன்மத்தில் இற்றை நாள் முதல் - இன்றைத்தினம்முதலாக, நீர் நால்வரும் மைந்தர் (வீமன்முதலிய தம்பியரான) நீங்கள் நான்குபேரும் புத்திரர்களும், மகம் செய் வேந்தனே தந்தையும் - யாகத்தைச்செய்கிற மூத்தவனான தருமராச னே பிதாவும், இ தருமவல்லியே தாயும் - தருமபுத்திரனுக்கு யாகபத்தினி யாகிய இத்திரௌபதியே மாதாவுமாக இருக்கக்கடவீர்கள்: குந்தியும் பாண் டுவும் என்று கொண்மின் - (இனி நீங்கள் திரௌபதியையும் தருமபுத்திர னையும் முறையே உங்கள் மாதாபிதாக்களான) குந்திதேவியும் பாண்டுமகா ராசனு மென்றே கொள்ளக்கடவீர்கள்; (எ - று.)

"ஜ்யேஷ்டப்ராதா பித்ருஸம:" என்றபடி தமையன் தந்தையோடொப் பவனுதல் காண்க; அங்ஙனமாகவே, தமையன்மனைவி தாயும், தம்பியர் புத் திரரு மாவர்: இராமாயணத்தில் சுமித்திரை இலக்குமணனுக்கு "இராம னைத் தசரதனாகவும் ஜாநகியை நானாகவும் அறி" என்று அறிவுணர்த்தியத னோடு இதனை ஒப்பிடுக. இம்முறைமையை முன்னிரண்டடியாற் கூறியபின் பும் 'குந்தியும் பாண்டுவு மென்று கொண்மின்' என்றது, வற்புறுத்துதற் கு; ஆதலால், கூறியதுகூறலென்னுங் குற்றத்தின்பாற் படாது. இரண்டா மடியில் 'தந்தையுந் தாயும்' என நிறுத்திய முறைமையோடு நான்காமடி யில் 'குந்தியும் பாண்டுவும்' என நிறுத்திய முறைமை மாறுபடுதல், எதிர் நிரனிறைப்பொருள்கோள். 'மைந்தர்' என்பதை வீமன்முதலிய நால்வரை யும் நோக்கிய அண்மைவிளியெனக் கொண்டு உரைத்தலு மொன்று. மகஞ் செய்வேந்தன் - யஜமாநன். தருமவல்லி - தருமமயமான ஒருபூங்கொடி போன்ற பெண்; 'அறக்கொடி' என்பது, இதற்குஏற்ற தென்மொழித்தொ டர். கல்பகவிருக்ஷத்திற்குக் காமவல்லிபோலத் தருமராசனுக்குத் தரும வல்லி யென்க. மகம், தர்மவல்லீ - வடசொற்கள். இன்று + நாள் = இற்றை நாள்; மென்றொடர் வன்றொடராய் ஐகாரச்சாரியை பெற்றது; [நன்-உயிர்- ௩௪, ௩௫.] (௩௭)

[இதுவும், அடுத்த கவியும்-திரௌபதிக்கும் தருமபுத்திரனுக்கும் வேள்விக் கோலஞ்செய்தல்.]

௩௮ கனல்வருமின்னையுங்கணவன்றன்னையு
முனிவரன்மொழிந்திடமுகூர்த்தமானபின்
புனைமுடிதிருக்குழற்புழுகுநானமு
மினிமையிற்சாத்தினரெண்ணின்மாதரே.

(இ - ள்.) முனிவரன் மொழிந்திட - ருஷிசிரேஷ்டனான வியாசமா முனிவன் (இவ்வாறு) சொல்ல, (அப்பால்), முகூர்த்தம் ஆன பின் - (யாகா ரம்பத்துக்குஉரிய) சுபமுகூர்த்தம் தொடங்கினவுடனே, எண் இல் மாதர் - அளவற்ற [மிகப்பலரான] மகளிர், கனல் வரு மின்னையும் கணவன் தன்னை யும் - யாகாக்கினியி லுதித்த பெண்ணான திரௌபதிக்கும் அவள்கணவ னான தருமபுத்திரனுக்கும், புனை முடி திரு குழல் - கிரீடந்தரிக்கிற சிரசி லும் அழகியகூந்தலிலும், புழுகும் நானமும் இனிமையின் சாத்தினர் - கஸ் தூரிப்புழுகென்னும் மயிர்ச்சசாந்தையும் ஸ்நானத்திற்குஉரிய வாசனைத்தை லத்தையும் பிரியமாக இட்டார்கள்; (எ - று.)

மங்கலஸ்நானஞ்செய்வித்தற்பொருட்டு இவை சாத்தினர். 'மின்னை யும் கணவன்தன்னையும்' என்றவிடத்து இரண்டனுருபுகள் நான்கனுரு பின்பொருளில் வந்தது, உருபுமயக்கம். 'மின்னையுங் கணவன்தன்னையும்' என்ற முறைமைக்கு 'புனைமுடி திருக்குழல்' என்ற முறைமை மாறுபடுதல்,

எதிர்நிரனிறைப்பொருள்கோள்; மின்னுக்குக் குழலிலும் கணவனுக்கு முடியிலு மென மாற்றிப் பொருள்காண்க. முனிவரன் மொழிந்திட - வியாசமாமுனிவன் கட்டளைகூற, சாத்தினார் என்று இயைத்துப் பொருள்கொள்ளுதலுமாம். முகூர்த்தம் - வடசொல்; இரண்டுநாழிகைப்பொழுது. 'திருக்குழல்' என்பதற்கு - ஸ்ரீதேவியென்னுந் தலைக்கோலத்தை யணிந்த கூந்தலென்று உரைப்பாருமுளர். (கூஅ)

கூகூ. கதியொடு பிறைதவழ் கடுக்கைக் காட்டுநன்
னதிதரு புனல்கொடு நான மாட்டினார்
விதிமுறை யறிந்தவர் வேள்விக் கேற்பன
பதியுட னணிந்தனர் பாவை தன்னையே.

(இ - ள்.) கதியொடு - (அங்குவந்துசேர்ந்ததனால்) புகலிடம்பெற்றதாகிய, பிறை - பிறைச்சந்திரன், தவழ் - மந்தகதியாக ஊரப்பெற்ற, கடுக்கைகாடு-கொன்றைப்பூமாலையைத்தரித்த(சிவபிரானது)சடைக்காட்டினின்றுஇழிந்த, நல் நதி - சிறந்தநதியான கங்கையினின்று, தரு - கொணர்ந்த, புனல் கொடு - தீர்த்தத்தைக்கொண்டு, நானம் ஆட்டினார் - (திரௌபதிக்கும் தருமபுத்திரனுக்கும்) மங்களஸ்நானஞ் செய்வித்தார்கள்; விதி முறை அறிந்தவர் - (யாகங்களுக்குஏற்ற) சாஸ்திரவிதிகளை வழுவாதுஅறிந்தவர்கள், பதியுடன் பாவைதன்னையும் - அக்கணவனையும் மனைவியையும், வேள்விக்கு ஏற்பன அணிந்தனர் - யாகச்சடங்குக்குஏற்ற ஆடையாபரணங்களால் அலங்கரித்தார்கள்; (எ - று.)

தக்ஷமுனிவனது சாபத்தினாலாகிய ரோகத்திற்கு அஞ்சிச் சரணம்புக்க சந்திரன் அச்சமின்றித்தங்குங் காட்டா ணென்ற ஒருகருத்து அமைய,'கதியொடுபிறைதவழ்கடுக்கைக்காடு' என்றார்; எனவே, சிவபிரானதுஜடாடவியாயிற்று. 'கடுக்கை' என்ற கொன்றைமரத்தின்பெயர், அதன்மலர்களாலாகிய மாலைக்கு இருமடியாகுபெயர். காடு - காடுபோலடர்ந்த சடைக்கற்றைக்கு உவமையாகுபெயர். காட்டுநதி - காட்டாறு. கங்காநதியென்றபொருளை 'கதியொடுபிறைதவழ்கடுக்கைக்காட்டுநன்னதி'என்று சுற்றுவழியாற்சொன்னது - பிறிதினவிற்சியணி. நன்னதி - தன்னில்நீராடியவரது தீவினையனைத்தையுந் தீர்த்து அவர்களைப் பரிசுத்தராக்கும் புண்ணியதீர்த்தமென்க. கொடு - தொகுத்தல். நானம் - ஸ்நாநம் என்ற வடசொல்லின் விகாரம். பதி - வடசொல். பாவை - சித்திரப்பிரதிமை; அதுபோ லழகிய பெண்ணுக்கு உவமையாகுபெயர்; தருபுனல் - வினைத்தொகை; தாஎன்ற பகுதி விகாரப்பட்டது. ஏற்பன-பெயர்: மூன்றும்வேற்றுமைத்தொகை. ()

வேறு.

[இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்; தருமபுத்திரன், தம்பியர்முதலியோர் அந்தயாகத்திற் செய்யவேண்டுந் தொழில்களை நியமித்தல்.]

க00. மாலைமுன் வணங்கிக் கங்கை மைந்தனை வணங்கி யாக
சாலையை நோக்கும் வேந்தன் றம்பியை நோக்கி மூந்நீர்
வேலையின் மணலிற் சாலு மிகுசன மருந்தத் தேவ
ராலயத் தமுத மன்ன வடிசினீ யளித்தி யென்றான்.

(இ - ள்.) மாலை - திருமாலின்திருவவதாரமான கண்ணபிரானை, முன் வணங்கி - முதலில் நமஸ்கரித்து, (அதன்பின்பு), கங்கை மைந்தனை வணங்கி - கங்கையின்மகனான பீஷ்மனை நமஸ்கரித்து, யாகசாலையை நோக்கும் - (யாகஞ்செய்தலைக்குறித்து)யாகசாலையை நோக்கிச்செல்லுகிற, வேந்தன் - தருமராசன்,—தம்பியை நோக்கி-தனது அடுத்ததம்பியான வீமசேனனைப் பார்த்து,—'மூந்நீர் வேலையின் மணலின் சாலும் மிகு சனம் அருந்த - மூன்றுநீர்மையையுடைய கடலின் மணல்களைக்காட்டிலும் மிக்கபெருந்தொகை

யாக வந்துகூடியுள்ள சனங்கள் உண்ணும்படி, தேவர் ஆலயத்து அமுதம் அன்ன அடிசில் - தேவர்களுடைய மாளிகைகளிற் பொருந்திய அமிருதத்தைப்போன்ற [மிகஇனிய] உணவை, நீ அளித்தி - நீ கொடுக்கக்கடவாய்', என்றான் - என்று கட்டளையிட்டான்; (எ - று.)

யஜ்ஞமூர்த்தி, யஜ்ஞபதி, யஜ்ஞாங்கன், யஜ்ஞவாஹநன், யஜ்ஞஸாதநன் என்பவை முதலாகப் பலவாற்றால் தான் கூறப்படும்படி யாகத்துக்குப் பலவகையாலும் உரிமைபூண்ட முழுமுதற்கடவுளான திருமாலின் திருவவதாரமூர்த்தி யாதலால், கண்ணபிரான் முதலில் வணங்கப்பட்டனன். அதன்பின்பு வீடுமனை வணங்கினது, அவன் பெரியபாட்டனாதலால்.

வீடுமனை 'கங்கைமைந்தன்' என்றதன்விவரம்:—முன்னொருகாலத்தில் தேவர்கள் யாவருங் கூடிய பிரமதேவனதுசபையிற் சென்று கங்காநதியின்பெண்தெய்வம் வணங்கியபொழுது, அங்குவந்திருந்த வருணன், அவளழகை உற்றுநோக்கிக் காதல்கொண்டான்; கங்கையும், அவன்மீது காதல்கொண்டு எதிர்நோக்கினாள்; அதனையறிந்த நான்முகக்கடவுள், வருணனைப் பூமியில் மானுடப்பிறப்பெடுக்கவும், கங்கையை மானுடமகளாய் அவனைச் சிலநாள் மணந்திருக்கவும் சபித்திட்டான்; அங்ஙனமே வருணன் குருகுலத்திற் சந்தனுவாய்ப் பிறந்தான்; கங்கையும் ஓர்மனிதமகளாகி 'யான் எந்தெந்தத்தீசசெயல்செய்யினும் மறுக்கலாகாது' என்னுங் கோட்பாட்டினோடு அவனை மணஞ்செய்துகொண்டாள். இது நிற்க: பிரபாசனென்னும் வசு, தன்மனைவியின்சொல்லைக் கேட்டு, வசிட்டனிடமுள்ளகாமதேனுவைக் கொள்ளைகொள்ள எண்ணினான்; மற்றையேழுவசுக்களும் அவனுக்குஉதவிசெய்யவே, எண்மரும் இரவிற்சென்று பசுவைக் கவர்ந்தனர்; அதனையறிந்த வசிஷ்டமகாமுனிவன், அஷ்டவசுக்களையும் மானுடசன்மமெடுக்கவும், அவர்களுள் மனைவிசொற்கேட்ட பிரதானனான பிரபாசனைப் பூமியிற் பலநாள் வாழ்ந்து பெண்ணின்பமற்றிருக்கவும் சாபங்கொடுத்தான்: அட்டவசுக்களும் சந்தனுவுக்குக் கங்கையின்வயிற்றிற் பிறந்தனர். முதலிற்பிறந்த எழுகுழந்தைகளையும் தாய் பிறந்தஅப்பொழுதே கங்காநதியில் எடுத்தெறிந்துவிட்டாள். எட்டாவதுபிள்ளை பிறந்தவுடனே தந்தை 'இக்குழந்தையைக் கொல்லலாகாது' என்று மறுக்க, கங்கை கணவனை விட்டுநீங்கினள். அவ்வெட்டாவதுமகனே இவ்வீடுமன்.

தம்பியர்நால்வரில் மற்றைமூவர்க்கும் செய்தொழில்கள் அடுத்தகவியில் நியமிக்கப்படுதலால், இங்கு 'தம்பி' என்றது, வீமனைக் குறித்தது. சாலும், மிகு - ஒருபொருட்பன்மொழி. தேவராலயத்து அமுதம் - தேவாமிருதம். 'வேலையின்மணலிற்சாலுமிகுசனம்' என்றது, உயர்வுநவிற்சியணி.

முந்நீர் - ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் [மழைநீர்] என்னும் மூன்று வகைநீரையுடைய தெனப் பண்புத்தொகையன்மொழியாகிய காரணப்பெயரென்பது, பழையகொள்கை; இதனை மறுத்து, 'முந்நீர் - கடல்; ஆகுபெயர். ஆற்றுநீர், ஊற்றுநீர், மேல்நீர் என இவையென்பார்க்கு, அற்றன்று; ஆற்றுநீர் மேல்நீராகலானும், இவ்விரண்டுமில்வழி ஊற்றுநீரும் இன்றாமாதலானும், இவற்றை முந்நீரென்றல் பொருந்தியதன்று. முதியநீரெனின், "நெடுங்கடலுந் தன்னீர்மைகுன்றும் தடிந்தெழிலி,தானல்காதாகிவிடின்" என்றதனால், அதுவும் மேல்நீரின்றி அமையாமையின், ஆகாது; ஆனால், முந்நீர்க்குப் பொருள் யாதோவெனின்,—முச்செய்கையையுடையநீர் முந்நீரென்பது: முச்செய்கையாவது - மண்ணைப்படைத்தலும், மண்ணையழித்தலும், மண்ணைக்காத்தலுமாம்'என்பர் அடியார்க்குநல்லார்: நச்சினார்க்கினியர்கருத்தும் இதுவே; "நீரினின்று நிலம்பிறந்தது" என வேதமோதுதலாற் படைத்தலும், நீரின்றி உலகம் பிழையாதாதலாற் காத்தலும், இறுதியில் நீரினால் மூடப்பட்டு உலகம் அழிதலால் அழித்தலும் ஆக முத்தொழில்

களும் கடலுக்கு உரியனவாம். இப்பொருளில், நீர்மை யென்ற பண்புப் பெயர் ஈறுபோய் 'நீர்' என நின்றதென்க. இனி, 'முன்னீர்' என்றலு மொன்று; பழையநீ ரென்க : "ஆதியிற் கடவுள் நீரையே படைத்தார்" என்று புராணம் கூறும்.

இதுமுதல் எட்டுக் கவிகள் - இச்சருக்கத்தின் கூக - ஆம் கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (௪00)

௪0௧. நாவியின்மதமுஞ்சாந்துநறும்பனிநீருந்தாரும்
வாவியிற்காவிலுள்ளமலர்களுமற்றும்யாவு
மேவியவரிவில்லாண்மைவிசயனைநல்குகென்றான்
றூவிலைபளிதமேனைத்துணைவரைவழங்கச்சொன்னான்.

(இ - ள்.) மேவிய - பொருந்திய, வரி வில் ஆண்மை - கட்டமைந்த வில்லைக்கொண்டு செய்யும் போர்த்திறத்தையுடைய, விசயனை - அருச்சுனனை நோக்கி, 'நாவியின் மதமும் - கஸ்தூரிப்புழுகையும், சாந்தும் - சந்தனத்தையும், நறும் பனிநீரும் - வாசனையையுடைய பனிநீரையும், தாரும் - பூமாலைகளையும், வாவியில் காவில் உள்ள மலர்களும் - தடாகங்களிலும் சோலைகளிலு முள்ள (நீர்ப்பூவும் கோட்டுப்பூவும் கொடிப்பூவும் நிலப்பூவு மாகிய) மலர்களையும், மற்றும் யாவும் - மற்றும் முடிக்கப்படுவனவும் பூசப் படுவனவுமான பொருள்களெல்லாவற்றையும், நல்குக - (வந்தசனங்கட் கெல்லாம்) கொடுக்கக்கடவாய்',என்றான் - என்றுகட்டளைகூறினான் ; ஏனை துணைவரை - மற்றை உடன்பிறந்தவரான நகுலசகதேவர்களை நோக்கி,— தூ இலை - சுத்தமான வெற்றிலையையும், பளிதம் - பச்சைக்கர்ப்பூரத்தை யும், வழங்க - (வந்தசனங்கட்கெல்லாம்) கொடுக்கும்படி, சொன்னான் - கட்டளைகூறினான், (தருமபுத்திரன்); (எ - று.)

கஸ்தூரி யென்பது ஒருவகைமானின்வயிற்றினின்று எடுக்கப்படுவதாதலின் மிருகநாபி யென்றும் மிருகமதமென்றும் வடமொழியிற் பெயர்பெறுதலால், அது, தமிழில் 'நாவியின்மதம்' எனப்பட்டது. நாபி, மதம், சந்தநம், வாபீ - வடசொற்கள். நாவி - கஸ்தூரிமிருகம் எனக் கொள்ளுதலு மொன்று. பனிநீர் - குளிர்ச்சியான ஒருவகைவாசனைநீர் ;பனி - குளிர்ச்சி. யா - அஃறிணைப்பன்மைவினாப்பெயர்; இதில் 'வை' விகுதிபுணர்ந்துகெட்டது. இங்கு வினா - எஞ்சாமைகுறித்தது; உம்மை - முற்றும்மை. ஆண்மை- பௌருஷம்,வீரம். 'வரிவில்லாண்மைமேவியவிசயனை' என மொழிமாற்றி யுரைப்பினுமாம். நல்குகென்றான் - தொகுத்தல். வெற்றிலையைக் கூறினது - பாக்குச்சுண்ணம்புகட்கும், பச்சைக்கர்ப்பூரத்தைக் கூறினது - லவங்கம் ஏலக்காய் சாதிக்காய் முதலிய மற்றைமுகவாசப்பண்டங்கட்கும் உபலக்ஷணம். துணைவர் - உடன்பிறந்தவர்; இரட்டையருமாம். "தூவிலை பழுக்காய்" என்ற பாடத்துக்கு, பழுக்காய் - பாக்கு என்க. (௪0௧)

௪0௨. தானமுந்தியாகந்தானுந்தபனன்மாமதலையான
மானவன்கொடுக்கவென்றான்வரம்பிலாநிதிகள்யாவுங்
கானலங்கடல்சூழ்வையங்காவலன்காவலென்று
னேனையோர்பலரும்வேந்தனேவலின்முறைநின்றாரே.

(இ - ள்.) 'தானமும் தியாகம் தானும் - தானத்தையுந் தியாகத்தையும், தபனன் மா மதலை ஆன மானவன் கொடுக்க - சூரியனது சிறந்த குமாரனான பெருமையையுடைய கர்ணன் கொடுக்கக்கடவன்,' என்றான்- என்றுநியமித்தான் ; 'வரம்பு இலா நிதிகள் யாவும் - எல்லையில்லாத செல்வங்களெல்லாம், கானல் அம் கடல் சூழ் வையம் காவலன் காவல் - கழிகளின்தொடர்பையுடைய அழகிய கடலினாற் சூழப்பட்டுள்ள பூமியை அரசாள்பவனான துரியோதனனது பாதுகாவலின்கீழ் இருக்கக்கடவன,' என்

ரூன் - என்றும் நியமித்தான், (தருமபுத்திரன்); இளையோர் பலரும் - மற்றும்பலபேரும், வேந்தன் ஏவலின் முறை நின்றார் - அத்தருமராசனது கட்டளையின் ஒழுங்கிலே நின்று தம்தம் தொழிலை நடத்துவாராயினர்.

தானம் - சற்பாத்திரங்களிலே கொடுத்தல் என்றும், தியாகம் - வரையறையின்றிப் பலர்க்குங் கொடுத்தல் என்றும் வேற்றுமையுணர்க; முன்னது புண்ணியக்கொடையென்றும், பின்னது புகழ்க்கொடையென்றும் கூறப்படும். லோபம்சிறிதுமின்றி வேண்டுவோர்க்கு வேண்டுவனகொடுக்கும் வண்மையிற் கர்ணன் சிறந்தவனாதலால், தானமும் தியாகமும் அவன்வசத்தில் ஒப்பிக்கப்பட்டன. துரியோதனன், ராஜராஜனாய்க் கையிலே தநரேகையுடையனாதலால், தநாத்தியக்ஷனாதற்கு உரியன். மானம் - பெருமை: அதனையுடையவன் - மானவன். 'மாநவன்' என்ற வடசொல் திரிந்ததெனக் கொண்டால், மநுவின்மரபிற் பிறந்தவன் [மனிதன்] என்று ஆகும். 'கானலங்கடல்' என்றவிடத்து, அம் - சாரியையுமாம். தாநம், த்யாகம், தபநன், நிதி - வடசொற்கள். (௧0௨)

[தருமபுத்திரனும் திரௌபதியும் யாகவேதிகையில் வீற்றிருத்தல்.]

௧0௩. தழல்வளரோமகுண்டத்தலத்தினில்வலத்திலாதித்
தழல்வருபாவைவைகத்தருமன்மாமதலையாங்கட்
டழல்புரைவேதவாணர்தாளிணைவணங்கித்தானுந்
தழலெனவிருந்தானெல்லாவினைகளுந்தகனஞ்செய்வான்.

(இ - ள்.) தழல் வளர் ஓமகுண்டம் தலத்தினில் - அக்கினி சொலித்து ஓங்கியெரியுமிடமான ஓமகுண்டத்துக்குச் சமீபத்திலே, ஆதி தழல் வரு பாவை வலத்தில் வைக - முன்பு ஓமாக்கினியினின்று தோன்றிய பெண்ணான திரௌபதி தனதுவலப்பக்கத்திலே இருக்க, எல்லா வினைகளும் தகனம் செய்வான் தருமன் மா மதலை - சகலபாவங்களையும் எரிப்பவனான சிறந்த தருமபுத்திரன், ஆங்கண் - அவ்விடத்து, தழல் புரை வேதவாணர் தாள் இணை வணங்கி - அக்கினிக்குச்சமானமான [ஸ்வயம்பரிசுத்தர்களான] வேதம்வல்ல முனிவர்களுடைய உபயபாதத்தை நமஸ்கரித்து, தானும் தழல் என இருந்தான் - தானும் ஓர் அக்கினிபோல (ச் சுத்தனாய்) வீற்றிருந்து விளங்கினான்; (எ - று.)

தலத்தினில் இருந்தான் என இயையும். 'தழலென இருந்தான்'என்று உவமை கூறுதற்கு 'எல்லாவினைகளுந் தகனஞ்செய்வான்' என்ற அடைமொழி சாதனமாதலால், கருத்துடையடைமொழியணி. அக்கினி, மற்றொன்றின்உதவியினாலன்றித் தானாகவே இயல்பிலேயே பரிசுத்தமாய் அத்தூய்மை வேறொன்றன்சம்பந்தத்தாற் கெடாதாகத் தன்னைச்சார்ந்த பொருள்களையெல்லாம் தான் பரிசுத்தமாகச்செய்யுஞ் சிறப்புடைமையால், முனிவர்க்கும் தருமபுத்திரனுக்கும் உவமைகூறப்பட்டது; அக்கினிக்கு 'சுசி' என வடமொழியில் ஒருபெயரிருத்தல் இங்குக் கருதத்தக்கது. காருகபத்தியம், ஆகவநீயம், தக்ஷிணாக்நி என மூவகைப்படுகிற வைதிகாக்கினி பொருந்திய ஓமகுண்டங்கட்கு அருகில் அந்தயாகவேதிகையிலே நான்காவதோர் அக்கினிபோல இருந்தா னென்க. 'தழல்புனைவேதவாணர்' என்ற பாடத்துக்கு, ஓமாக்கினியை வளர்த்தற்கு உதவியாகிற ப்ரஹ்மா அத்வர்யு உத்காதா ஹோதாமுதலிய வைதிகப்பிராமணர்களுடைய இணையடிகளை வணங்கி யென்க. வேதவாணர்-வேதங்களை ஓதியும் ஓதுவித்தும் வேதவிதிப்படி சடங்குகள் செய்வித்தும் வாழ்பவர். செய்வான் என்பதை எச்சமாகக்கொண்டு, எல்லாவினைகளையும் எரித்தற்பொருட்டுத் தழல்போல இருந்தா னென்றலுமொன்று. 'தானும்' என்ற உம்மை - இறந்ததுதழுவியஎச்சம். தழல் என்ற சொல் ஒருபொருளிலேயே பலமுறை வந்தது, சொற்பொருட்பின்வருநிலை

யணி; வெவ்வேறு பொருளில் வாராததனால், யமகமென்னுஞ் சொல்லணி யாகாது. கணவனது வலப்பக்கத்தில் மனைவி வீற்றிருத்தல் மரபாதலால், 'பாவைவலத்திவ்வைக' என்றார். தழலில்வந்தபாவை தழல்வளர்குண்டத் தலத்தினில் வைக என ஒருநயந் தோன்றுதல் காண்க. (க0ரு)

[தருமபுத்திரன் மான்தோல் முதலியன தரித்தல்.]

க0ச. கடகரியுரிவைபோர்த்தகண்ணுதற்கடவுண்மாறி
யிடம்வலமாகப்பாகத்திறைவியோடிருந்தவாபோ [லிக்
லுடல்கலையுறுப்புத்தோலினொளித்திடப்போர்த்துவேள்
கடனினுக்குரியவெல்லாங்கவினுறச்சாத்தினானே.

(இ - ள்.) கட கரி உரிவை போர்த்த கண் நுதல் கடவுள் - மதயானையின்தோலை மேலேபோர்த்துக்கொண்டுள்ள நெற்றிக்கண்ணையுடைய சிவபிரான், பாகத்து இறைவியோடு - தனதுவாமபாகத்திலுள்ள பார்வதிதேவியோடு, இடம் வலம் ஆக மாறி இருந்த ஆ போல் - (அத்தேவிக்குஉரிய) இடப்பக்கம் வலப்பக்கமாக மாற வீற்றிருந்தவிதம்போல, (தருமபுத்திரன் தன்மனைவியான திரௌபதியை வலப்பக்கத்திலே கொண்டு தான்வீற்றிருந்து), கலை உறுப்பு தோலின் உடல் ஒளித்திட போர்த்து - கலைமானினதுமுழுத்தோலினால் தன்உடம்புமறையும்படி போர்த்துக்கொண்டு, வேள்வி கடனினுக்கு உரிய எல்லாம் கவின் உற சாத்தினான் - மற்றும் யாகமுறைமைக்கு ஏற்றவற்றையெல்லாம் அழகாகத்தரித்துக்கொண்டான்;(எ-று.)

திரௌபதி வலப்பக்கததிலே வீற்றிருக்கத் தருமபுததிரன் மான்தோலை உடல்மறையப்போர்த்துக்கொண்டு இருந்ததற்கு, யானைத்தோலைப் போர்த்துக்கொண்டுள்ள சிவபிரான் தனது இடப்பக்கத்திலுள்ள அம்பிகையை வலப்பக்கத்தி லிருத்தி வீற்றிருந்தாற்போல வென உவமைகூறினர்.

யானைத்தோல்போர்த்த கதை :—அருந்தவமியற்றிப் பெருவரம்பெற்ற கஜாசுரனென்பவன் தேவர் முனிவர் முதலியோரை இடைவிடாதுவருத்தித்துரத்த அஞ்சியோடின அவர்களது பிரார்த்தனையாற் பரமசிவன் தன்னையெதிர்த்துப் போர்செய்யவந்த அவ்வசுரனைக் காலாலுதைத்துத்தள்ளிக் கொன்றுதோலையுரித்துப்போர்த்தருளின தென்றாயினும்; தாருவனமுனிவரேவிய யானையினுட் சென்று உருத்திரமூர்த்தி உடலைப்பிளந்து அதனுரிவையைப் போர்த்துக்கொண்ட தென்றாயினுங் கொள்க.

கடம் - யானைக்கன்னம்: அதனினின்று வழியும் மதநீர்க்கு இடவாகுபெயர். கடகரி - வடமொழித்தொடராதலின், வலிஇயல்பு. உரிவை - உரிக்கப்பட்டது; உரி - பகுதி ; ஐ - செயப்படுபொருள்விகுதி, வ்-எழுத்துப்பேறு. உறுப்புத்தோல்-கால் வால் செவி முதலிய அங்கங்களி லொன்றுந் தவிராதபடி எடுத்த முழுத்தோல். (க0ச)

[தருமபுத்திரன் யாகச்சடங்கிலேயே கருத்துவைத்தல்.]

க0ரு. பொங்குறுமோமச்செந்தீப்புகையினைப்போர்த்ததென்னப்
பைங்கடல்பருகுமேகம்பரிதியைமறைத்ததென்ன
வங்குறுப்புடனேவெங்கோட்டரிணத்தொக்கருணமேனி
யெங்கணும்புதைப்பவேள்வித்தொழிலிலேயிதயம்வைத்தான்.

(இ - ள்.) பொங்குறும் ஓமம் செம் தீ புகையினை போர்த்தது என்ன - ஜ்வலித்துஎழுந்துவளர்ந்துஎரிகிற செந்நிறமான ஓமாக்கினி புகையைத் தன் மேலே மிகுதியாகக்கொண்டிருந்தது என்று உவமை கூறும்படியாகவும், பைங் கடல் பருகு மேகம் பரிதியை மறைத்தது என்ன - கருநிறமான கடலின்நீரைக் குடித்தெழுந்த காளமேகம் சூரியனைமறைத்தது என்று உவமை கூறும்படியாகவும், உறுப்புடனே வெம் கோடு அரிணம் தொக்கு அருணம் மேனி எங்கணும் புதைப்ப - (கால் வால் முதலிய எல்லா) உறுப்புக்களோடு

கொடியகொம்புகளையுமுடைய மான்தோலானது செந்நிறமானதனதுஉட ம்பு முழுவதையும் மறைக்க(ப் போர்த்துக்கொண்டு தருமபுத்திரன் வீற்றி ருந்து), அங்கு - அவ்விடத்தில் [அல்லது அப்பொழுது], வேள்வி தொழிலி லே இதயம் வைத்தான் - யாககாரியத்திலேயே மனத்தைச்செலுத்தினன்.

கீழ்க்கவியிலே செந்நிறமுடைய சிவபிரானும், இக்கவியிலே செந்நிற முடைய அக்கினியும் சூரியனும், செந்நிறமுடைய தருமபுத்திரனுக்கு உவ மைகூறப்பட்டனர். கருநிறம்மிக்க கிருஷ்ணஸாரமென்னும் கலைமானின் தோலுக்கு, கருநிறமுடைய யானைத்தோலும் புகையும் மேகமும் ஏற்றஉவ மையாதல் காண்க. 'பைங்கடல் பருகுமேகம்' என்றது - நீர்கொண்டகாள மேகம் என்றற்கு; பசுமை கருமை நீலம் என்ற நிறங்களை அபேதமாக்கூறு தல் கவிசமய மாதலால், கருங்கடல் 'பைங்கடல்'எனப்பட்டது. இனி, பசு மை - குளிர்ச்சியுமாம். அங்கு என்பதை அசையாகவுங் கொள்ளலாம். ஹரி ணம், த்வக் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. அருணம் - தற்சமவட சொல். தொழிலிலே என்ற ஏகாரம் - பிரிநிலை; மற்றைசெயல்களிற் சிறி துங் கருத்தைச் செலுத்தாது வேள்விச்செயலிலேயே கருத்தை முற்றும் ஊன்றவைத்தா னென்க. தருமபுத்திரனுடைய செந்நிறமேனியிலே க்ஷத்தி ரியதேஜஸ் மிக்குவிளங்குதலால், அதற்கு உபமானமாதற்கு அக்கினியை 'பொங்குறுமோமச்செந்தீ' என்று விசேடித்துக் கூறவேண்டிற்று. (க0௫)

[தருமபுத்திரன் ஓமஞ்செய்தல்.]

க0௬. தருமன்மாமதலையந்தச்சடங்குசொற்படியேதொட்டுப்
புரிவுடைத்திசைகணான்கும்புற்களாற்காவல்செய்து
விரிசுடர்த்தீகண்மூன்றும்விண்ணவர்முகங்களாகச்
சுருவையான்முகந்தநெய்யைச்சுருதியாலோமஞ்செய்தான்.

(இ-ள்.) தருமன் மா மதலை - யமதர்மராஜனது சிறந்த குமாரனை யுதிட்டிரன்,—அந்த சடங்கு- அந்தராஜசூயயாககாரியத்தை,சொல் படியே- வேதசாஸ்திரவிதிப்படியே, தொட்டு - தொடங்கி,—புரிவு உடை திசைகள் நான்கும் - (ஒன்றோடொன்று) தொடர்ச்சியுள்ள நான்குதிக்குக்களிலும், புற்களால் காவல் செய்து - தருப்பைப்புற்களைக்கொண்டு பாதுகாப்பு அமைத்து,—விரி சுடர் தீகள் மூன்றும்-பரவுகிற ஜ்வாலைகளையுடைய மூன் றுவகைஅக்கினிகளும், விண்ணவர் முகங்கள் ஆக - தேவர்கட்கு முகங்க ளாய்அமைய, (அங்ஙனம் பாவித்து அவற்றில்), சுருவையால் முகந்த நெய் யை சுருதியால் ஓமம் செய்தான் -சுருவையென்னுந்துடுப்புக்கொண்டு மொ ண்டெடுத்த நெய்யை வேதமந்திரோச்சாரணத்தோடு ஓமம்பண்ணினன்.

வேதிகையில் அக்கினியைப் பிரதிஷ்டித்தபின்பு அதிற்செய்யுஞ்சடங் கின்பயனை அசுரர்கள் கவராதபடி அதற்குப்பாதுகாவலாகத் தருப்பைகளை நான்குவிளிம்பிலுஞ் சூழவைத்தல் இரண்டாமடியிற் குறிக்கப்பட்டது; அது பரிஸ்தரணமெனப்படும்.தேவர்களையுத்தேசித்து நெருப்பில் மந்திரபூர் வமாக ஆகுதிசெய்யப்படுகிற ஹவிஸை அந்தஅக்கினிதேவன் பெற்று உண் டமாத்திரத்தால் தேவர்கள் தாம்உண்டவாறுபோலத் திருப்திப்படுதல்பற் றித்'தேவர்கள்அக்கினியைமுகமாகவுடையவர்'என்றுவேதத்திற்கூறப்பட்டி ருத்தல் இங்கு அறியத்தக்கது. சுருவை - ஓமாக்கினியில் நெய்யைமொண்டு சொரியும் அத்திமரத்தாற்செய்த அகப்பை: நெய்த்துடுப்பு; ஸ்ருவம் என்ற வடசொல்லின் விகாரம். புல் என்ற பொதுப்பெயர், இங்குச் சிறப்பாய்த் தருப்பையைக் குறித்தது. (க0௬)

[தருமபுத்திரன் ஏழுநாள் ஓமஞ்செய்தல்.]

க0௭. முழுதுணர் வரம்பில் கேள்வி முனிவரர் குழாமு மென்று
மழிவிலா மலரோ னாதி யமரர்தங் குழாமுஞ் சூழ

வெழுசுடர் முத்தீப் பொங்க வெழுபக லோமஞ் செய்தான்
பழுதறு பாண்டு செய்த மாதவம் பலித்த தொப்பான்.

(இ - ள்.) பழுது அறு பாண்டு செய்த மா தவம் பலித்தது ஒப்பான்-குற்றமற்ற பாண்டுமகாராசன் இயற்றிய பெருந்தவம் பயன்பட்டதுபோன்றவனான தருமபுத்திரன்,—முழுது உணர் வரம்பு இல் கேள்வி முனிவரர் குழாமும் - முழுவதுமறிந்த எல்லையில்லாத நூற்கேள்விகளையுடைய ரிஷிச்சிரேஷ்டர்களின்கூட்டமும், என்றும் அழிவு இலா மலரோன் ஆதி அமரர் தம் குழாமும் - எப்பொழுதும் அழிதலில்லாத பிரமன்முதலிய தேவர்களுடைய கூட்டமும், சூழ - தனதுசுற்றிலுமிருக்க, எழு சுடர் மு தீ பொங்க-எழுந்தெரிகிற ஜ்வாலைகளையுடைய மூன்றுவகைஅக்கினியும் திருப்தியுற்று விளங்குமாறு, எழு பகல் ஓமஞ்செய்தான் - ஏழுநாள் ஓமம்பண்ணினான்.

முழுதுஉணர்,வரம்பில்கேள்வி என்ற இரண்டும் - முனிவரர்க்கு அடைமொழி. முழுதுணர்தல் - தேயமிடையிட்டவற்றையும் காலமிடையிட்டவற்றையும் அறிதல். வரம்பில்கேள்விகளை முழுதுணர்ந்தமுனிவர ரெனமொழிமாற்றி உரைப்பினுமாம். கேள்வியாவது - கேட்டற்குஉரிய நூற்பொருள்களைக் கற்றறிந்தவர்கூறக் கேட்டல். இது, கற்றவர்க்கு அதனாலான அறிவை வலியுறுத்துவதும், கல்லாதவர்க்குக் கல்வியறிவையுண்டாக்குவதுமாய்ச் சிறத்தலால், எடுத்துக்கூறப்பட்டது. இனி, கேள்வி - நல்லாசிரியர்பக்கல் ஞானோபதேசம்பெறுதல் எனினுமாம். வரம்புஇல்கேள்வி - அனந்தமான சுருதிகளுமாம். முழுது - எஞ்சாமைப்பொருள்குறிப்பதோர் உரிச்சொல்; "முழுதென்கிளவி எஞ்சாப்பொருட்டே" என்பது தொல்காப்பியம். முநிவரர் - வடமொழித்தொடர். குழாம் - குலம் என்ற வடசொல்லின் சிதைவுபோலும். என்றும் - கற்பாந்தகாலமளவு மென்றபடி. மலரோன் - திருமாலின் திருநாபித்தாமரைமலரில் தோன்றினவன். அமரர் என்றவடசொல்-(அமிருதமுண்டதனால்) மரணமில்லாதவர் என்று காரணப்பொருள்பெறும். எழுசுடர் - வினைத்தொகை; பண்புத்தொகையாக்கொண்டு, ஏழு சுவாலைகளெனினுமாம். பகல் - தினத்துக்கு இலக்கணை. பழுதறுஎன்றது - பாண்டுவுக்கும், தவத்துக்கும் அடைமொழியாகத்தக்கது. தந்தை தான்செய்த பெருந்தவத்தின்பயனாகவன்றி இவ்வகைச்சிறப்புடைமைந்தனைப் பெறுதல்கூடாதாதலின், 'பழுதறுபாண்டுசெய்தமாதவம்பலித்ததொப்பான்' என்றார்.

வேறு.

[தருமபுத்திரன் யாகமுடிவில் தானமும் தியாகமும் செய்தல்.]

௬௦௩. இம்முறை யிராய சூயமா மகத்துக் கெழுதொணா நான்மறை யுரைத்த, வம்முறை யிமையோ ரானவர்க் கெல்லா மரும்பெற லவியுண வருளி, மும்முறை வலம்வந் திருவருஞ் சுவாகை முதல்வனை முடியுற வணங்கித், தெம்முறை யரச ரிடுதிறை யனைத்துந் தானமுந் தியாகமுஞ் செய்தான்.

(இ - ள்.) இ முறை இராயசூய மா மகத்துக்கு எழுது ஒணா நால் மறை உரைத்த அ முறை - இவ்வகையாக ராஜசூயமென்னுஞ் சிறந்தயாகத்துக்கு எழுதாக்கிளவியான நால்வகைவேதங்களிற் கூறிய அந்தவிதிப்படி, (தருமபுத்திரன்),இமையோர்ஆனவர்க்கு எல்லாம்-தேவர்களெல்வார்க்கும்,அரும்பெறல் அவி உணவு அருளி-பெறுதற்குஅரிய ஹவிஸாகியஉணவைக் கொடுத்து, இருவரும் - தானும் தன்மனைவியு மாகிய இரண்டுபேருமாக, சுவாகை முதல்வனை மும் முறை வலம் வந்து முடி உற வணங்கி - சுவாகாதேவியின் கணவனான அக்கினிதேவனை மூன்றுதரம் பிரதக்ஷிணஞ்செய்து (தமது)சிரசு(நிலத்திலே) படும்படி நமஸ்கரித்து,—தெவ் முறை அரசர் இடு திறை அனைத்தும் தானமும் தியாகமும் செய்தான்-பகைமைமுறைமையிலே நின்

நஅரசர்கள் (தன் தம்பியானவீமன்முதலியோர்க்குத் தோற்றுக்)கொடுத்த பொருள்களையெல்லாம் தானமாகவும் தியாகமாகவும் (அந்தணர்க்கும் பிறர்க்கும்) வழங்கினன்; (எ - று.)

எழுதஒண்ணு-எழுதுதற்குஒன்ருத. எழுது - முதனிலைத்தொழிற்பெயர்: நான்காம்வேற்றுமைத்தொகை. ஒண்ணு-மரூஉமொழி. 'அரும்பெறல்' என்பதை 'அருங்கேடன்' என்றாற்போலக் கொள்க. 'அரும்பெறலவியுணவு' என்றது, அந்தயாகத்தின் தூய்மையைக் கருதி. சுவாகை - ஸ்வாஹா என்ற வடசொல்லின் விகாரம்; இவள் - தக்ஷமுனிவனுடைய பெண்களில் ஒருத்தி. தெம்முறையரசரிடுதிறை - வீமன்முதலிய தம்பியர்நால்வரும் திக்குவிசயஞ்செய்து ஈட்டிய பொருள். இடுதிறை - வினைத்தொகை. முதலடியில் 'எம்முறை' என்ற பாடத்துக்கு, வேதங்கள் ராஜசூயயாகத்துக்கு எந்த முறைமையாகச்சொல்லியுள்ளனவோ அந்தமுறைப்படியென்க; அப்பொருளுக்கு, 'உரைத்த' என்றது - பலவின்பால்முற்று. ராஜஸூயமஹாமகம் என்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டது. இராயசூயம் ஆம் மகத்துக்கு என்றும் பதம்பிரிக்கலாம்.

இதுமுதல் ஆறுகவிகள் - இச்சருக்கத்தின் கஅ - ஆங் கவிபோன்ற எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (கOஅ)

[தருமபுத்திரன் அவபிருதஸ்நானஞ்செய்தல்.]

கOகூ. எழுநாளிவ்வாறிமையவரெவர்க்குமிமகிரிதனிலயன்வேட்ட, வூழிமாமகம்போலியற்றியெண்டிசையினுயர்புனல்யாவையுஞ் சொரிய, வாழிவாய்முகிலுமின்னுமேயென்னவரும்புனலாடியபின்னர், வாழிபாடினர்கணாரதன்முதலோர்மங்கலம்பாடினர்புலவோர்.

(இ - ள்.) இ ஆறு - இப்படி, எழுநாள் - ஏழுதினங்களில், இமையவர் எவர்க்கும் - தேவர்களெல்லார்க்கும் (திருப்திகரமாக), இமகிரிதனில் அயன் வேட்ட ஊழி மா மகம் போல் இயற்றி - (ஆதிகாலத்தில்) இமயமலையிலே பிரமன்செய்த முறைமைதவருத பெரியயாகத்தைப்போல(வெகுசிறப்பாகத் தருமபுத்திரன் இராசசூயயாகத்தை)ச் செய்து,(அதன்முடிவில்), எண் திசையின் உயர் புனல் யாவையும் சொரிய - எட்டுத்திக்குக்களினின்றுங்கொணர்ந்த சிறந்தபுண்ணியதீர்த்தங்களையெல்லாம் (பெரியோர்) சொரிய, ஆழி வாய் முகிலும் மின்னுமே என்ன அரும் புனல் ஆடிய பின்னர் - கடலில் மேகமும் மின்னலும்(படிந்தாற்)போல (த் தருமபுத்திரனும் திரௌபதியும்) பெறுதற்குஅருமையான அப்புண்ணியதீர்த்தங்களினால் நீராடியபின்பு, நாரதன் முதலோர் வாழி பாடினர்கள் - நாரதன் முதலிய முனிவர்கள் ஆசீர்வாதகீதங்களைப் பாடினர்கள்; புலவோர் மங்கலம் பாடினர் - வித்துவான்கள் மங்கலவாழ்த்துக்கவிகளைப் பாடினர்கள்; (எ - று.)

பூர்வத்திற் பிரமதேவன் திருமாலினருளைப்பெறவேண்டி அப்பரமனைக் குறித்து இமயமலையிலே தேவர்களுடனிருந்து அசுவமேதயாகத்தை மிக்க சிறப்பாகச் செய்துமுடித்தன னென்பது உணர்க. மிகச்சிறந்த அந்தயாகத்தை இங்குத் தருமபுத்திரன்செய்த இராஜசூயயாகத்துக்கு உவமைகூறினர். இமையவரெவர்க்கும் இயற்றி என இயையும்; இமையவரெவர்க்கும் வேட்ட என்று இயைத்து, தேவர்களெல்லார்க்கும் (க்ஷேமகரமாம்படி) பிரமன் செய்த யாக மெனினுமாம். யாகத்தின் முடிவில் அதன் பூர்த்திக்கு அறிகுறியாகச் செய்கிற மங்களஸ்நானம், 'அவபிருதம்' எனப்படும். கடல் - புண்ணியதீர்த்தப்பெருக்குக்கும், மேகம் - தருமபுத்திரனுக்கும், அதனிடத் தோன்ற மின்னல் - அவனையடுத்துள்ள திரௌபதிக்கும் உவமை. இமையவர் - கண்இமையாதவர்; எதிர்மறைஆகாரம் புணர்ந்துகெட்டது: அல்லது, இமையில் விசேஷமுடையவர் [அதாவது - மூடாதஇமையையுடைய

வர்] என்றுமாம். இப்பொருளில், உடன்பாட்டுக்குறிப்புவினையாலணையும் பெயர். இனி, இமையமலையில் வாழ்பவர் என்றுங் கொள்ளலாம். ஹிமகிரி-வடமொழித்தொடர்: பனிமலை. வேட்ட, வேள் - பகுதி. ஊழி - முறைமை. உயர்புனல் - வினைத்தொகை. ஆழிவாய், வாய் - ஏழனுருபு. பின்னர், அர்-சாரியை. "வாழிய வென்பதன் ஈற்றினுயிர்மெய், ஏகலுமுரித்து" என்றதனால், 'வாழிய' என்ற வியங்கோள் 'வாழி' என்று விகாரப்பட்டது; இது, ஆகுபெயராய், வாழ்க என்று பாடும் வாழ்த்துப்பாடலின்மேல் நின்றது. புலவர்என்பது, 'புலவோர்' என(ச் சிறுபான்மை) ஈற்றயல்அகரம் ஓகாரமாயிற்று. (௯௦௯)

[பின்பு தருமபுத்திரன் வீடுமனை ஒன்றுகேட்கத் தொடங்கல்.]

௧௧௦. பெயர்பெறுமுனிவரெவர்க்குமெண்ணிரண்டாம்பேருபசாரமும்வழங்கி, யுயர்வறவுயர்ந்தவேள்வியினுயர்ந்தோனுயர்குலப்பாவையுந்தானு,மயர்வறுஞானவடிவமாய்நின்றமாயனைமனனுறவணங்கி, யயர்வறுகங்கைமகன்பதம்பணிவுற்றறன்மகன்வினவினனம்மா.

(இ - ள்.) பெயர் பெறு முனிவர் எவர்க்கும் - கீர்த்தியினால் பிரசித்தி பெற்ற (அங்குவந்துள்ள) இருடிகளெல்லார்க்கும், எண் இரண்டு ஆம் பேர் உபசாரமும் வழங்கி - பதினாறுவகையான சிறந்தஉபசாரங்களையுஞ்செய்து, உயர்வு அற உயர்ந்த வேள்வியின் உயர்ந்தோன் - தனக்குமேம்பட்டதொன்று இல்லாதபடி(தானே எல்லாவற்றினும் மிகச்)சிறந்த யாகத்தைச் செய்துமுடித்ததனால் மேன்மைபெற்றவனான, அறன் மகன் - தருமபுத்திரன், உயர் குலம் பாவையும் தானும் - சிறந்தகுலத்தில் தோன்றின அழகிய பெண்ணான திரௌபதியும் தானுமாக, மயர்வு அறு ஞானம் வடிவம் ஆய் நின்ற மாயனை மனன் உற வணங்கி - மயக்கமில்லாத தத்துவஞானத்தின் சொரூபமாய்நின்ற கண்ணபிரானை மனப்பூர்வமாக நமஸ்கரித்து, அயர்வு அறு கங்கைமகன் பதம் பணிவுஉற்று - (எதிலும்) சோர்வுஇல்லாத வீடுமனுடைய பாதங்களை நமஸ்கரித்து, வினவினன் - (ஒன்று) வினவலானான்; (எ - று.)—அவ்வினாவை, அடுத்தசெய்யுளின் முதலிரண்டடிகளிற் காண்க. அம்மா - ஈற்றசை.

வேள்வியின்உயர்ந்தோன்-ராஜசூயயாகத்தை முடித்து 'ஸம்ராட்'என்னும் பெயர்பெற்று மேம்பட்டவனென்றபடி. 'உயர்குலம்' என்றது, இங்குச் சோமககுலத்தை. உயர்வு, மயர்வு, அயர்வு - தொழிற்பெயர்கள். மயர்வாவது - ஒன்றை மற்றொன்றாக மாறுபட உணரும் விபரீதஞானம். மாயன் - மாயையையுடையவன்; மாயை - செயற்குஅரியன செய்துமுடிக்கும் திவ்வியசக்தி: பிரபஞ்சகாரணமான பிரகிருதியுமாம்: ஆச்சர்யகரமான குணங்களும் செயல்களுமெனவுமாம். தான் பிறர்க்கு மாயைசெய்யினும் அம்மாயைக்குத் தான்உட்படாதவனென்பார், 'மயர்வறுஞானவடிவமாய் நின்ற மாயன்' என்றார். சமயோசிதமானஆலோசனையைத் துணிந்து கூறுதலில் தவறாதவனென்ற கருத்து அமைய, கங்கைமகனுக்கு 'அயர்வறு'என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. மனன்உற-மனத்தில் அன்பு பொருந்த. (௧௧௦)

[அக்கிரபூசைக்கு உரியவர் யாரென்று தருமன் வீடுமனை வினவுதல்.]

௧௧௧. பரிதியுமதியும்வன்னியுமுதலாம்பல்வகைக்குலத்துமுற்பவித்த, நரபதிகுழாத்தில்யாவரேபெறுவார்கவினுமுற்பூசைமற்றென்னக், கருதியவசக்கவெண்மரிலொருவன்கங்கையின்திருமகன்றெய்வக், கருதிமாமகனுஞ்செய்புனிதனைநோக்கிக்கொண்மனிவரரையுநோக்கி

[illegible] - குளகம.

(இ - ள்.) 'பரிதியும் - சூரியனும், மதியும் - சந்திரனும், வன்னியும் - அக்கினியும், முதல் ஆம் - முதலியோரை ஆதிபுருஷராக உடையனவான, பல் வகை குலத்தும்-பலவகை ராஜவம்சங்களிலும்,உற்பவித்த-தோன்றின, நரபதி குழாத்தில்-அரசர்களுடைய கூட்டத்தில், நவிலும் முன் பூசை பெறுவார் - சிறப்பித்துச்சொல்லப்படுகிற முதற்பூசையைப் பெறுதற்குஉரியவர், யாவரே - யார்தாம்?' என்ன - என்று (தருமபுத்திரன் வீமனை) வினவ,— கருதிய வசுக்கள் எண்மரில் ஒருவன் - நன்குமதிக்கப்படுகிற அஷ்டவசுக்களில் ஒருவனும், கங்கையின் திரு மகன் - கங்காதேவியின் சிறந்த குமாரனுமான வீமன்,தெய்வம் சுருதி மா மகம் செய் புனிதனை நோக்கி - தெய்வத்தன்மைபொருந்திய வேதங்களிற் கூறிய விதிப்படி சிறந்த இராஜசூய யாகத்தைத் தலைமையாகஇருந்துநடத்திய பரிசுத்தமூர்த்தியான வியாசமாமுனிவனைப் பார்த்து,தொல் முனிவரரையும் நோக்கி-பழமையான[பெரிய] மற்றை ரிஷிச்சிரேஷ்டர்களையும் பார்த்து, (எ-று.)—'உரைமின் என்றலும்' என அடுத்தகவியோடு தொடரும். மற்று-அசை.

வஹ்நி,பூஜா,புநீதன் - வடசொற்கள். கருதியவசுக்கள் - முன்னேகுறிக்கப்பட்ட வசுக்க ளென்றும், வசிட்டனது காமதேனுவைக் கவரக்கருதிய வசுக்க ளென்றுங் கொள்ளலாம். வசுக்களெண்மரில் ஒருவன் - பிரபாசனென்னும் வசுவின் பிறப்பானவன். செய்புனிதன் - செய்வித்த புனிதன்: தன்வினை பிறவினைப்பொருளது. வியாசன், வேள்வி செய்விப்பவர்களுள் தலைமைபெற்ற பிரஹ்மஸ்தானத்தில் வீற்றிருந்து அந்தயாகத்தைக் குறைவற நடப்பித்தன னாதலால், 'தெய்வச்சுருதிமாமகஞ்செய்புனிதன்' எனப்பட்டான். 'தெய்வச்சுருதிமாமகம்செய்புனிதனைநோக்கி' என்பதற்கு-தருமபுத்திரனைப் பார்த்து என்று உரைத்தல் பொருந்தாமை காண்க. (கக)

[வீமன் முனிவர்களை வினவ, வ்யாசன் கண்ணனுக்குக் கொடுக்க வென்றல்.]

கக௨. ஆர்கொலோவக்ரபூசனைக்குரியாரரசரிலந்தணீருரைமின்,
பாரெலாந்தத்தங்குடைநிழற் புரக்கும்பார்த்திவர்யாரையுமுணர்வீ
ர்,தாருலாமார்பீரென்றலுமவியா தன்றருமன்மாமதலையைநோக்கிக்,
காரின்மாமேனிக்கரியசெந்திகிரிக்கண்ணனுக்குதவெனக்கதித்தான்.

(இ - ள்.) 'தார் உலாம் மார்பீர் அந்தணீர் - தாமரைப்பூமாலை அசைகின்ற மார்பையுடையவர்களான முனிவர்களே! பார் எலாம் தம் தம் குடை நிழல் புரக்கும் பார்த்திவர் யாரையும் உணர்வீர் - பூமிமுழுவதையும் தம்தம் ஆளுகையின்கீழ் வைத்து ஆளுகிற அரசர்களெல்லாரையும் பற்றி நீங்கள் அறிவீர்கள்; அரசரில் அக்ரபூசனைக்கு உரியார் ஆர்கொலோ உரைமின் - (இங்கு வந்துள்ள) அரசர்களுள் முதற்பூஜை செய்யப்பெறுதற்கு உரியவர் யாரோ? சொல்லுங்கள்,' என்றலும் - என்றுவினவியவுடனே,—வியாதன் - வியாசமாமுனிவன், தருமன் மா மதலையை நோக்கி-பெருமையுள்ள தருமபுத்திரனைப் பார்த்து, காரின் மா மேனி கரிய செம் திகிரி கண்ணனுக்கு உதவு என கதித்தான் -'காளமேகம்போன்ற கரியதிருமேனியையும் பெரிய செந்நிறமுள்ள சக்கராயுதத்தையுமுடைய கிருஷ்ணபகவானுக்கு (முதற்பூஜை) செய்யக்கடவாய்' என்று சொல்லியருளினான்; (எ-று.)

ஆர்-மரூஉமொழி. கொல், ஓ-அசை. 'அக்ரபூசனை' என்பதில் 'அக்ர' என்பது-"இணைந்தியல்காலை யரலக்கு இகரமும்" என்றபடி தமிழில் அக்கிர என இகரம்பெறாது வடசொல்லாகவே நின்றது, செய்யுளோசையின்பொருட்டு. அந்தணீர், மார்பீர் - ஈற்றயல்திரிந்த விளி. உரைமின் - ஏவற்பன்மை. தத்தம் - தம்தம் என்பதன் விகாரமான் தந்தம்என்பதன் வலித்தல். ஆளுகையைக் குடைநிழ லென்றல் மரபு. பார்த்திவர் என்ற வடசொல் - பிருதிவிக்குத் தலைவரென்று பொருள்படும்; தத்திதாந்தநாமம்.

பிருதிவி - பூமி. மாலையையுணர்த்துகிற 'தார்' என்ற பொதுப்பெயர், இங்குச் சிறப்பாய்த் தாமரைப்பூமாலையைக் குறித்தது. அந்தணர்க்குத் தாமரைப் பூமாலை உரியதாதலை "பைங்கமலத்தண்டெரியற்பட்டர்பிரான்" என்ற பெரியாரருளிச்செயலினாலும் அறிக. இனி, தார் - தாமரைமணிமாலையும், துளசிமணிமாலையுமாம். உலாம் - உலாவும் என்ற செய்யுமெனெச்சத்து ஈற்றுஉயிர்மெய் சென்றது. 'கரிய' என்பதில், கருமை - பெருமைமேல் நின்றது. 'காரின்கரியமாமேனி' என மாற்றி இயைத்து உரைப்பினுமாம். கரியசெந்திகிரி என்றவிடத்து, முரண்தொடை காண்க. 'காரின்மாமேனி கரிய' என்ற பாடம், மேகம்போலஅழகியமேனி கருமையாயிருக்கப்பெற்ற என்றுபொருள்படும். கதித்தான்-வடமொழித்தாதுவினடியாப்பிறந்தமுற்று.

[அதற்கு அனைவரும் உடன்பட, சிசுபாலன் மாறுபடுதல்.]

௧௧௯. என்றபோ தந்த வேந்தவை யிருந்தோர் யாவரு மிருந்துழி யிருந்து, நன்றுநான் மறையோர் சிகாமணி யுரைத்த நவிரறு நல்லுரை யென்றார், சென்றபோர் தோறும் வென்றியே புனையுஞ் சேதிப பதிசிசு பாலன், கன்றினா னிதயங் கருகினான் வதனங் கனலெனச் சிவந்தனன் கண்ணும்.

(இ - ள்.) என்ற போது - என்று (வியாசமாமுனிவன்) சொன்ன சமயத்தில், அந்த வேந்து அவை இருந்தோர் யாவரும் - அந்தராஜசபையிலிருந்தவர்களெல்லாரும், இருந்த உழி இருந்து - தாம்தாம்இருந்தஇடத்திலேயே இருந்து, நால்மறையோர் சிகாமணி உரைத்த நவிர் அறு நல் உரை நன்று என்றார் - 'நான்குவேதங்களையு முணர்ந்த முனிவர்களெல்லாரும் தலைமேற்கொள்ளும் இரத்தினம்போலச் சிறந்த வியாசமாமுனிவன் சொன்ன குற்றமற்றசிறந்தவார்த்தை நன்றாயுள்ளது' என்றுசொல்லிக் கொண்டாடி அதற்குஉடன்பட்டார்கள்; சென்ற போர் தோறும் வென்றியே புனையும் சேதிபபதி சிசுபாலன் - சென்றசென்ற போர்கள்பலவற்றில் வெற்றியையே பெறுகிற சேதிதேசத்தையாளுமரசனான சிசுபாலன்மாத்திரம், இதயம் கன்றினான் - மனம்வெதும்பி, வதனம் கருகினான் - முகம்கறுத்து, கண்ணும்கனல்என சிவந்தனன் - கண்களும்நெருப்புப்போலச்சிவக்கப்பெற்றான்.

சிசுபாலன் - வசுதேவனதுஉடன்பிறந்தவளும் அதனாற் கண்ணனுக்கு அத்தையும் சேதிதேசத்துஅரசனாகிய தமகோஷனுக்குப் பத்தினியுமான சுருதசிரவையென்பவளுடைய மகன். இவன் பிறந்தபொழுது மூன்றுகண்களையும் நான்குகைகளையு முடையனாய்க் கழுதைக்குரலாற் புலம்பி ஆரவாரித்தான்; அதனையுணர்ந்த தாய்தந்தையர் முதலிய சுற்றத்தாரனைவரும் இதுஎன்னென்றுஅஞ்சிக் கலங்கி இவனைக் கைவிடுவதாகக் கருதுகையில், ஆகாயவாணி, இவன்தந்தையை நோக்கி, 'அரசே! இப்புதல்வன் மேம்பாடுடையவன், மகாபலசாலி: இவன்பக்கல் அஞ்சவேண்டா; இவனை நன்றாகக் காப்பாற்றுக: இவனை நீ கொல்லாதே. இவன் இப்பொழுது இறக்கற்பாலனல்லன்; இவனைக் கொல்பவன் பிறந்துள்ளான்: சக்கராயுதத்தினால் இவனைக் கொல்வன்' என்றது; அந்தஅசரீரிவார்த்தையைக் கேட்டு இவன்தாய் குழந்தையிடத்து அன்பினால் வருந்தி அந்தச்சொல்லின்தெய்வத்தையே தொழுது 'இவனைக் கொல்பவன் யார்?' என்று வினவியதற்கு, அந்தத்தெய்விகவாக்கு'யார் இவனை மடியில்வைத்துக்கொள்ளுகையில்,இவனது கைகளிரண்டும் நெற்றிக்கண்ணும் மறைகின்றனவோ, அவனால் இவனுக்கு மரணம்' என்று கூறிற்று; அவ்வாறே பலரும் எடுத்துக்கொள்ள மறைபடாத கைகளும் கண்ணும், கண்ணபிரான் வந்து எடுத்தவளவிலே மறைபட்டன: அதனால், இவனைக் கொல்பவன் கண்ணனே யென்று அறிந்த இவன்தாய் 'யாதுசெய்யினும் என்மகனைக் கொல்லலாகாது' என்று

கண்ணனை வேண்ட, அந்தஅத்தையின்கன்மொழிக்கு ஒருசார்இணங்கிய கண்ணன் 'இவன் எனக்கு நூறுபிழைசெய்யுமளவும் இவன்பிழையை நான் பொறுப்பேன்' என்று கூறியருளினன். பின்பு சிசுபாலன், தனக்குக் கண்ணன் சத்துருவென்பதை இளமையிலேயே அறிந்து அதனாலும் முந்தின சன்மங்களின்தொடர்ச்சியினாலும் வளர்ந்த மிக்கபகைமையைப் பாராட்டி எப்பொழுதும் அப்பெருமானுடைய திவ்வியகுணங்களையும் திவ்வியச்செயல்களையும் நிந்திப்பதே தொழிலாக விருந்தான். இவனுக்கு மணஞ்செய்து கொடுப்பதென்று நிச்சயிக்கப்பட்டிருந்த ருக்மிணியைக் கண்ணன் வலியக் கவர்ந்து மணஞ்செய்துகொண்டது முதல் இவன் அப்பெருமானிடத்து அளவிறந்த வைரங் கொண்டனன் என அறிக.

இதயங்கன்றுதல் - பொறாமையின்செயல். முகங்கறுத்தது, தனக்கு அவமானமென நினைத்ததனால். கண்சிவத்தல் - கோபக்குறி. 'கருகினன் வதனம் சிவந்தனன் கண்ணும்' என்றவிடத்து முரண்தொடை காண்க. 'யாவரும்இருந்துழியிருந்துநன்றென்றார்' என்றதனால், சிசுபாலன்மாறுபட்டுக் கோபத்தா லெழுந்தன னென்பது தோன்றும். 'வேத்தவை' என்றபாடத்துக்கு மன்னொடர்வேற்றுமையில்லன்றொடராயிற்றென்றும், 'சேதியம்பதி' என்ற பாடத்துக்கு அம் - சாரியை யென்றுங் கொள்க. வேந்து - உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச்சொல். இருந்துழி - தொகுத்தல். நன்று - தகுதியுடையது என்றபடி; இது, அங்கீகாரவார்த்தை. சிகாமணி, சேதிபபதி - வடமொழித்தொடர்கள். இதயம் - ஹ்ருதயம் என்ற வடசொல் சிதைந்தது. வென்றியே புனையும் - வெற்றிக்கு அறிகுறியான வாகைப்பூமாலையையே தரிக்கும் என்னவுமாம். இவ்வுரைக்கு 'வென்றி' என்பது - வெற்றிமாலைக்கு ஆகுபெயர். 'சென்றபோர்தோறும் வென்றியேபுனையும்' என்ற அடைமொழி, சிசுபாலனது பலபராக்கிரமத்தின்சிறப்பை யுணர்த்தும். இனிநிகழும்போரில் இவன் வென்றிபுனையாது அழிவுபெறுதல்பற்றி, 'சென்றபோர் தோறும்' என வேண்டிற்று. சிசுபாலன் இதயம் கன்றினன் வதனம் கருகினன் கண்சிவந்தான் என்பன - "உயர்திணைதொடர்ந்தபொருள்முதல் ஆறும், அதனொடுசார்த்தின் அத்திணை முடிபின" என்றபடி அஃறிணைச்சினை உயர்திணைமுதலின்வினையைக் கொண்டுமுடிந்த திணைவழுவமைதி. வதனம் - வடசொல். போது - மரூஉமொழி. வென்றி - தொழிற்பெயர்; வெல் - பகுதி, றி - விகுதி, மற்றது - சந்திவிகாரம். (ககந)

வேறு.

[இதுமுதற் பதின்மூன்று கவிகள் - சிசுபாலன் கண்ணனைக்குறித்துப் பலவாறு நிந்தித்தல்.]

ககச. பூபாலரவையத்து முற்பூசை பெறுவார்புறங்கானில்வாழ்
கோபாலரோவென்று ருத்தங்க திர்த்துக்கொ தித்தோதினு
காபாலி முனியாத வெங்காம னிகரான கவினெய்தியேழ் [ன்
தீபால டங்காத புகழ்வீர கயமன்ன சிசுபாலனே.

(இ - ள்.) காபாலி முனியாத - சிவபிரானாற்கோபித்து எரிக்கப்படாத, வெம் காமன் - (அனைவராலும்) விரும்பப்படுகிற [கட்டழகுடைய] மன்மதனுக்கு, நிகர் ஆன - சமானமான, கவின் - அழகை, எய்தி - பெற்று, ஏழ்தீபால் அடங்காத புகழ் - ஏழுதீவுகளிலும் அடங்கமாட்டாத கீர்த்தியையுடையனை, வீர கயம் அன்ன சிசுபாலன் - வலிமையிற்சிறந்த யானையைப் போன்ற சிசுபாலனென்னும் அரசன், - 'பூபாலர் அவையத்து முன்பூசை பெறுவார் - பூமியையாளுகிற அரசர்கள் கூடிய சபையில் அக்கிரபூஜையுபசாரத்தைப் பெறுதற்குத் தகுதியுடையவர், புறம் கானில் வாழ் கோபாலரோ - (நகரத்துக்குப்) புறம்பான வனத்திலே வசிக்கிற பசுமேய்க்குமியல்புடைய

இடையர்களோ!' என்று—,உருத்து அங்கு அதிர்த்து கொதித்து ஓதினன்- கோபித்து அப்பொழுது இரைச்சலிட்டு மனம்புழுங்கிக் கூறினன்;(எ-று.) இது,தொகுத்துச்சுட்டல்; அடுத்த பதினொருகவிகள்,வகுத்துக்காட்டல்.

கண்ணன் க்ஷத்திரியசாதியில்உயர்ந்த சந்திரகுலத்திலே வசுதேவகுமாரனாய்த் தேவகிவயிற்றிற் பிறந்திருந்தும், தாழ்ந்த இடையர்சாதியில் நந்தகோபன்மனையில் அவன்மகனாக யசோதை வளர்க்க வளர்ந்தது மாத்திரத்தைக்கொண்டு, அவனைச் சிசுபாலன் இடையனென இகழ்ந்தான்;வடமதுரையில் வசுதேவனும் தேவகியும் கம்சனாற் சிறையிலிருத்தப்பட்டுத் தளைபூண்டிருக்கையில், திருமால் தேவகியினிடம் எட்டாவதுகருப்பத்திற் கண்ணனா யவதரிக்க, அக்குழந்தையைக் கம்சன் முன்னையகோட்பாட்டின்படி கொன்றுவிடுவனே யென்கிற அச்சத்தால் தாய்தந்தையர் அத்தெய்வக்குழவியின் அநுமதிபெற்று அந்தச்சிசுவை அதுபிறந்த நடுராத்திரியிலேயே கோகுலத்திலே இடையர்தலைவனான நந்தகோபனது கிருகத்திலே இரகசியமாகக் கொண்டுசேர்த்துவிட்டு, அங்கு அப்பொழுது யசோதைக்கு மாயையின் அம்சமாய்ப்பிறந்திருந்ததொரு பெண்குழந்தையை எடுத்துக்கொண்டு வந்துவிட, அதுமுதற் கம்சனைக் கொல்லுகிறவரையில் இளம்பருவத்திலெல்லாம் கண்ணன் அந்தஆய்ப்பாடியிலேயே வளர்ந்தன னென்பது வரலாறு. இங்ஙனமே இச்சிசுபாலன்போன்ற துஷ்டனான துரியோதனனும் "அமர்கருதுவோ, ரேவலின்கண்வருதூதனா மிடையன்", "புன்பிறப்புடைய பொதுவர்தங்களோடு புறவிலானிரைபுரந்திடும், உன்பிறப்பு", "அறத்தினாலடல் மறத்தின்நீர்மையினை யற்பராயரறிகிற்பரோ"என இகழ்தல் காண்க.

பூபாலர், கோபாலர் - வடமொழிப்பெயர்கள். ஓகாரம் - எதிர்மறைப் பொருளையும் இகழ்ச்சியையும் உட்கொண்ட வினா. அவையத்து, அத்து - சாரியை. புறங்கான் - நாட்டுப்புறமாகிய வன மென்றபடி. அங்கு வாழ்பவர் நாகரிகமில்லாதவ ரென்று இகழுங் குறிப்பினால், 'புறங்கானில்வாழ்கோபாலர்' என்றான். நாடும் நாடுசார்ந்தஇடமு மாகிய மருதநிலத்துக்குக் காடும் காடுசார்ந்த இடமுமான முல்லைநிலம் புறம்பாதலும், இடையர் அந்நிலத்துக்குஉரிய மனிதராதலும் கருதத்தக்கன. (முல்லைநிலத்துக்கு 'புறவம்' என்ற பெயர், நகர்ப்புறமாதல்பற்றி வந்ததுபோலும்.)அங்கு - அவ்விடத்து எனினுமாம்; அசையென்றலு மொன்று. அதிர்த்து ஓதுதல் - பெருங்குரலாக அதட்டிப்பேசுதல். கான்-கானநம் என்ற வடசொல்லின் விகாரம்.

கபாலீ என்ற வடசொல் காபாலி என விகாரப்பட்டது. பிரமகபாலத்தைக் கையிற்கொண்டமைபற்றி, சிவபிரானுக்கு 'கபாலீ' என்று ஒருபெயராயிற்று. முன்னொருகாலத்திற் கைலாசகிரியிலே பரமசிவன், ஸநகர்முதலிய நால்வர்க்கு யோகநிலைமையை யுணர்த்துதலினிமித்தம் தான் யோகஞ்செய்துகொண்டிருக்கையில், பிரமனேவலால் மலரம்புகளையெய்து தனது தவத்தைக் கெடுக்கலுற்ற மன்மதனைச் சினந்து நெற்றிக்கண்ணைவிழித்து அதன்நெருப்புக்கு இரையாய் உடலெரிந்து சாம்பலாய்ப்போம்படி செய்தன னென்பது கதை. இங்ஙனம் அங்கத்தையிழந்து அநங்கனான ஒரு மன்மதனது வடிவத்தைப்போன்ற மிக்கஅழகுடைய வடிவத்தைப் பெற்று என இல்பொருளுவமை கூறுவார், 'காபாலிமுனியாத வெங்காம னிகரான கவினெய்தி' என்றார். இப்பொழுதுஉள்ள மன்மதன் இவனதுவடிவழகுக்கு உவமையாதற்கு ஏலாதென்பது தோன்றும். சிவபிரானெரிக்கப்படுதற்கு முன்பு இருந்த மன்மதனது சுந்தரமூர்த்தியைக் கருதிக் கூறினாரு மாம். இதனை, கீழ் அ௦-ஆம் கவியின் முன்னிரண்டடியோடு ஒப்பிடுக. ஆகவே, கண்ணன்போலவே சிசுபாலனும் கட்டழகுடையா னென்பது போதரும்.

'வெம்மை' என்ற சொல்-பண்புப்பெயராய் வெப்பத்தை யுணர்த்துதலேயன்றி உரிச்சொல்லாய் விருப்பத்தையு முணர்த்துதலை "வெம்மை

வேண்டல்" என்ற தொல்காப்பியத்தா லுணர்க. காமன் என்ற வடமொழிப்பெயர் - காமத்தை விளைக்குந் தேவனென்றும், அனைவராலுங் காமிக்கப்படுகிறவ னென்றும் பொருள்படும். த்வீபம் என்ற வடசொல், தீ என்று விகாரப்பட்டது; பால் - ஏழனுருபு. ஏழ் தீபால் அடங்காத புகழ் - ஏழுதீவுகளாகவுள்ள பூலோகமுழுவதிலுமேயன்றி வேறுலகங்களிலும் பரவிய பெருங்கீர்த்தி. வீரகஜம் - வடமொழித்தொடர். வீரம் - வலிமை, ஆற்றல். மதத்தால் மயங்கிக்கோபிக்கிற யானைபோலச் செருக்கினால் மயங்கிக் கோபாவேசங்கொண்ட சிசுபால னென்றற்கு,'வீரகயமன்ன சிசுபாலன்' என்றார். "யானை, அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" என்றபடி யானை தனக்கு வேண்டிய கவளமுதலியனகொடுத்துப் பலவாற்றாலும் உதவுகிற பாகனையே பேதைமையாற் கோபித்து எதிர்த்தல்போல, இவன் தனதுவிகாரவடிவத்தைப் போக்கியருளிய கண்ணபிரானையே அறிவின்மையாற் பகைத்தலால் உவமை ஏற்கும்.

இதுவும், அடுத்த கவியும் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று தேமாங்கனிச்சீரும், மற்றைநான்கும் மாங்காய்ச்சீர்களு மாகிய நெடிலடிநான்கு கொண்ட கலிநிலைத்துறைகள்.

அடியில்வருகிற செய்யுளொன்று சிலஏட்டுப்பிரதிகளில் இச்செய்யுளுக்குமுன் காணப்படுகிறது :—" கொச்சையிடையர்மகளிருக்குங்கூத்துக்குனித்தநவநீதப், பிச்சைநுகருமிவனெமக்குமுன்னேபூசைபெறுவானுஞ்,சச்சைமறையின்முறையென்னுந்தருமன்புரிந்தமகமென்னுஞ், செச்சைவடிவேன்முடியரசர்செங்கோலென்னுந்திருவென்னும்." (கக௪)

கக௫. சூரன்குலத்தோர் குபேரன்குலத்தோர்சுடர்ப்பாவகப்
பேரன்குலத்தோர்கண் முதலோரிருந்தார்கள் பெயர்பெற்றபேர்
வீரங்கொலோவாகு சாரங்கொலோசெல்வ மிச்சங்கொலோ
பூரம்புராசிப்புவிக்கென்று முதுவோர்கள் பொதுவோர்கொலோ.

(இ - ள்.) சூரன் குலத்தோர் - சூரியவம்சத்தவர்களும், குபேரன் குலத்தோர் - சந்திரவம்சத்தவர்களும், சுடர் பாவகன் பேரன் குலத்தோர்கள் - ஒளியையுடைய பாவகனென்று ஒரு பெயரையுடையவனான அக்கினியின் வம்சத்தவர்களும், முதலோர் - முதலியவர்களாகிய, பெயர் பெற்ற பேர் - பிரசித்திபெற்ற அரசர்கள்,இருந்தார்கள் - (பலர் இங்கு) வந்திருந்தார்கள்; (அங்ஙனமிருக்கவும்), வீரம் கொல் ஓ - பராக்கிரமமிகுதிபற்றியோ, வாகு சாரம் கொல் ஓ - தோள்வலிமைமிகுதிபற்றியோ, செல்வம் மிச்சம் கொல் ஓ - பொருள்மிகுதிபற்றியோ, (இடையர்களிலொருவனான கிருஷ்ணனுக்கு அக்கிரபூசையளிப்பது! அன்றியும்), பூர் அம்பு ராசி புவிக்கு என்றும் முதுவோர்கள் பொதுவோர் கொல் ஓ - (நீர்)நிறைந்த கடல்சூழ்ந்த பூலோகத்தில் எக்காலத்தும் பெரியமனிதர்கள் இடையர்கள்தாமோ? (எ - று.)

ஸோமன், இந்துஎன்ற வடமொழிகளும், மதிஎன்ற தென்மொழியும் சந்திரனுக்கேயன்றிக் குபேரனுக்கும் பரியாயநாமமாக வழங்குதல்பற்றி, சந்திரன்குலத்தோரை 'குபேரன்குலத்தோர்' என்றார். சந்திரனை 'குபேரன்' என்ற சொல்லாற் குறித்தது, லக்ஷிதலக்ஷணை யென்க. (குபேரன் - ஸோமன், இந்து, மதி. ஸோமன், இந்து, மதி = சந்திரன்.) ஸோமனென்பது-குபேரனுக்கு வழங்குதலை"அந்தமானஸோத்தரபருவதத்தின்மேல்,கிழக்கில் இந்திரனுடைய பட்டணமும், தெற்கில் யமனுடைய பட்டணமும், மேற்கில் வருணனுடைய பட்டணமும், வடக்கில் ஸோமனுடைய பட்டணமும் விளங்குகின்றன" என விஷ்ணுபுராணத்திற் காண்க. அவ்விடத்தில் ஸோமனெனப்பட்டவன் குபேரனே யென்பது, "வடதிசைதனதன்மேவி யமர்ச்சிவாவரியென்றோதும், சொல்தகர் பொருத்தும்" என்ற பாகவதத்தினும் விளங்கும். ஜ்யோதிஷசாஸ்திரத்தில் திதியோகினியைக்குறிக்கிற

"சதமகேந்துஹூதாசநரக்ஷஸாம்" என்ற சுலோகத்தில் 'இந்து' என்றது, குபேரனைக் குறித்தல் காண்க. கீழ்க் காண்டவதகனச்சருக்கத்தில் "மதியு மம்மதிமுடித்தவனும்" என்றவிடத்தும், மேல் நிரைமீட்சிச்சருக்கத்தில் "குடதிசைமகவான்வாளி குணதிசைவருணன்வாளி, வடதிசைமறலிவாளி தென்திசைமதியின்வாளி, அடலுறவிமைப்பினேவி" என்றவிடத்தும் 'மதி' என்பது, குபேரனுக்கு வழங்கப்பட்டுள்ளது. இவ்வகைவழக்குப்பற்றி, பிற்காலத்து நிகண்டில் "கலையின னுடுவின்வேந்தன் கலாநிதியொடு குபேரன்" எனச் சந்திரன்பெயர்களிற் குபேர னென்பதைச் சேர்த்தும், "புருடவாகனனே சோமன் புட்பகவிமானமுள்ளோன்" எனக் குபேரன்பெயர்களிற் சோமனென்பதைச் சேர்த்தும் கூறினர். 'குபேரன்' என்ற வடசொல் குற்சிதமான உடம்பையுடையவனென்று காரணப்பொருள்படுதலால், அப்பெயர், க்ஷயரோகத்தால் உடல்குன்றுபவனான சந்திரனுக்கும் காரணவகையால் ஏற்கு மென்பதையு முணர்க.

ஸூரன், பாவகன், பாஹுஸாரம், அம்புராசி - வடசொற்கள். பாவகன் - பரிசுத்தமாகச்செய்பவன். அம்புராசி-நீரின்தொகுதி. பூர்ணமென்ற பொருள்குறிக்கும் பூர மென்ற வடசொல், 'அம்' கெட்டு 'பூர்' என நின்றது; நகரம்=நகர்என்பதுபோல. முச்சுடர்களிற் சூரியன் ஆயிரங்கிரணங்களையும், சந்திரன் பதினாறுகலைகளையும், அக்கினி ஏழுஜ்வாலைகளையும் உடைய ராதலின், அச்சிறப்புமுறைபற்றி, சூரியசந்திரஅக்கினியரென்ற முறைபட நிறுத்தினான்; கீழ் "பரிதியு மதியும் வன்னியும்" என்றவிடத்தும் இம்முறைமை காண்க. பாவகன்+பேரன்=பாவகப்பேரன்: "சிலவிகாரமா முயர்திணை."

'பேரன்குலத்தோரிருந்தீர்கண்முடிமன்னர்பெயர்பெற்றபேர்' என்ற பாடத்துக்கு, முச்சுடர்களின்குலத்து முடிமன்னவராய்ப் பெயர்பெற்ற நீங்களெல்லாம் இருந்தீர்களே என்று எல்லாஅரசர்களையும் முன்னிலைப்படுத்தி யுரைத்ததாகக் கொள்க. 'இருந்தீர்கள் முடிமன்னர்பெயர்பெற்ற பேர்' என்றது, கிருஷ்ணன் முடிபெறாதவ னென்னுங் குறிப்பை யுட்கொண்டது; அதுபற்றிய வரலாறு:—சந்திரகுலத்தில் நகுஷனதுகுமாரனான யயாதி சுக்கிரசாபத்தாற் கிழத்தனமடைந்து தனது மூத்தகுமாரனான யதுவையும் அடுத்தகுமாரர்களான துர்வசு துர்க்கியு அநு என்பவர்களையும் தனித்தனி 'உன்இளமையைக் கொடுத்து என்முதுமையைக் கைக்கொள்' என்று வேண்டி, அவர்கள் அதற்கு உடன்படாதொழிந்தபின்பு, கடைசிக்குமாரனானபூருவைவேண்ட, அவன் அதற்குஇணங்கி மூப்பைப்பெற்றுக்கொண்டு யௌவனத்தைக் கொடுத்ததனால், அரசன் மகிழ்ந்து தன்கருத்துக்கு இசையாத யதுமுதலிய மூத்தமக்கள்நால்வர்க்கும் முடிசூடிஅரசாளுஞ்சிறப்பு இல்லையாகச்செய்து சிற்றரசராக்கி இளையமகனான பூருவைச் சகல பூமண்டலத்துக்கும் அதிபதியாக நிறுத்தி முடிசூட்டிப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்திட்டான்; அக்குமாரர்களுள் மூத்தவனாய்த் தனக்குரிய அரசாட்சியைத் தந்தையின்சாபத்தா லிழந்த யதுவின் குலத்திற் பிறந்தவன் கிருஷ்ணன். ஆகவே, முடிதரித்துஅரசாளுஞ்சிறப்புக் கண்ணன்குலத்தார்க்கு இல்லையென்க. இந்தஇழிவைக் கருதித் துரியோதனன் கண்ணனை நோக்கி "சலத்தினால்வினையயற்றுவார் முடிதரித்தகாவலரொ டொப்பரோ" என இகழ்வதுங் காண்க.

மிச்சம் - மிஞ்சுதல், அதிகப்படுதல்: மிகுதி யென்றபடி; மிச்சமென்பதை, வீரம் வாருசாரம் என்றவற்றோடுங் கூட்டுக. வீரம் புஜபலம் செல்வம் முதலிய வற்றிலும் கண்ணன் சிறந்தவனல்ல னென்பது, மூன்றுமடியின் உட்கோள். முதுவர், பொதுவர் என்ற பெயர்கள்-முதுவோர் பொதுவோர் எனச் செய்யுளின்மை ரகரவீற்றயல் அகரம் ஓகார மாயிற்று. முதுவர்-

முதுமை யென்ற பண்பினடியாப் பிறந்த பெயர். காடும் காடுசேர்ந்தஇடமு மாகிய முல்லைநிலம், நாடும் நாடுசேர்ந்த இடமுமாகிய மருதநிலத்துக்கும் மலையும் மலைசார்ந்தஇடமுமாகிய குறிஞ்சிநிலத்துக்கும் இடையிலுள்ளதனால்,அந்நடுநிலமான முல்லைநிலத்தில் வாழ்கிறசாதியார்க்கு இடையரென்றும் பொதுவரென்றும் பெயர்களாயின; இடை, பொது, நடு என்பவை - ஒருபொருளன. சுவாயம்புவமனுவின்குலத்தார் முதலானவர்களை 'முதலோர்' என்று குறித்தான். பெயர் - புகழ்; கீர்த்தியினால் எங்கும் பேர்பிரசித்தமாதல்: இச்செய்யுளில் 'சூரன்குலத்தோர் குபேரன்குலத்தோர்,' 'வீரங்கொலோ வாகுசாரங்கொலோ,' 'முதுவோர்கள் பொதுவோர்கொலோ' என்றஇடங்களில் பிராச மென்னுஞ் சொல்லணி காண்க. (௧௧௫)

வேறு.

௧௧௬. பராசர முனிவன் மதலையாம் படியே பகர்ந்தனை பழுதிலா மாற்ற, மிராசமண் டலத்தின் மரபினால் வலியா லேற்றமுந் தோற்றமு முடையோன், சுராசுரர் வியக்குங் கஞ்சனை மலைவான் சூரன்மா மகன்வயிற் றுதித்தான், றராதல மிசையே பிறந்திவன் கற்ற தெத்தனை யிந்திர சாலம்.

(இ - ள்.) பராசரமுனிவன் மதலை - பராசரமுனிவனது குமாரனே! (நீ), ஆம் படியே - தகுதியானவிதமாகவே, பழுது இலா மாற்றம் - குற்றமற்ற வார்த்தையை,பகர்ந்தனை - சொன்னாய்! இராச மண்டலத்தில் - அரசர்களுடைய கூட்டத்தில், மரபினால் வலியால் ஏற்றமும் தோற்றமும் உடையோன் - குலத்தினாலும் வலிமையினாலும் மேன்மையையும் கீர்த்தியையுமுடையவன், சுர அசுரர் வியக்கும் கஞ்சனை மலைவான் சூரன் மா மகன் வயிறு உதித்தான் - தேவர்களும் அசுரர்களும் (ஒருங்கிராக) அதிசயித்துப் பேசப்பெற்றவனை கம்சராசனைக் கொல்லும்பொருட்டுச்சூரனென்பவனது மூத்தமகனான வசுதேவனது வயிற்றிற் பிறந்தவனாகிய கிருஷ்ணனேயாம்; இவன்—, தராதலம்மிசையே பிறந்து - பூமியிலே பிறந்து, கற்றது - தெரிந்துசெய்தது, எத்தனை இந்திரசாலம்-எவ்வளவு பெருமாயையுண்டு! (எ - று.) —அம்மாயையின்வகைகளை, அடுத்தகவிமுதலாகக் காண்க.

'பராசரமுனிவன்மதலை' என்றது - அண்மைவிளி; ஆதலின், இயல்பாய் நின்றது: "அண்மையின் இயல்பும் ஈறழிவும்" என்றார் நன்னூலார். 'ஆம்படியே பழுதிலாமாற்றம் பகர்ந்தனை' என்றது, 'கல்லைக்கடிக்க நன்றாய்ச்சமைத்தாய்' என்றாற்போன்ற பிறகுறிப்புவகையால், நீசொன்ன வார்த்தை சிறிதுந்தகுதியுடையதன்றென்று இகழ்ந்தவாறும். இனி, முதலடிக்கு நீ பராசரமுனிவனதுமகனானதற்கு ஏற்பவே இங்ஙனங் கூறினாய் என்று பதவுரைகூறி,நீஓடம்விடும்வலைச்சியினிடமாய்ப் பராசரமுனிவனுக்கு மகனாய்ப்பிறந்ததற்கு உரிய அறிவுகொண்டே இப்படிப்பட்டவார்த்தையைப் பெரியராஜசபையிலேசொன்னாய் என்று சிசுபாலன் வியாசமகாரிஷியைப் பார்த்துக் கோபித்துப்பரிகாசம்பண்ணி நிந்தித்தனனென்று கொள்ளுதலுமொன்று; இது, கருத்துடையடைகோளியணி. பராசரமுனிவன் ஒருநாள் யமுனாநதிகடத்தற்பொருட்டுத் தோணியேறிச்செல்லுகிறபோது, அத்தோணியைச் செலுத்திநின்றவளும் செம்படவன்வளர்த்தமகளுமான மத்ஸ்யகந்தியென்னும் அழகியகன்னிகையினிடம் காதல்கொண்டு, தனதுமந்திரபலத்தால் அவளது உடம்பின் புலால்நாற்றத்தைப் போக்கி யோஜனகந்தியென்று பெயர்பெறுமாறு அவட்கு நறுமணத்தை யுண்டாக்கி அந்நதியினிடையே ஒருத்வீபத்தில் அவளைமணந்து அவளிடமாக ஒருமகனைப் பெற, அக்குமாரனே கிருஷ்ணத்வைபாயனனென்னும் வியாசமுனிவன் என வரலாறு உணர்க. இழிந்தஜாதிப் பெண்ணினிடம் பிறந்ததற்கு உரிய அறிவுக்கு

ஏற்ப இவ்வாறுதகுதியில்லாத வார்த்தையைச் சொன்னாய் என்றான். இவ்வகையாகத் துரியோதனன் விதுரனை இகழ்வதனோடு இதனை ஒப்பிடுக. பழுதில் ஆம் மாற்றம் என்று எடுத்து, குற்றத்தின்பாற்பட்ட வார்த்தை யெனினும் பொருந்தும்.

ஏற்றம் - மற்றையோரினும் மேம்படுதல். தோற்றம் - நெடுந்தூரத்திலுள்ளாராலும் அறியப்படும்படி சிறந்துதோன்றுதல். சிசுபாலனும் கம்சன் போலவே அசுராம்சமுடைய னாதலாலும், இவ்விருவரும் துருவாசமுனிவனது சாபத்தைப் பெற்ற ஜயவிஜயர்களின் பிறப்பாதலாலும், தனக்குஇனமான கம்சனைச் சிசுபாலன் 'சுராசுரர்வியக்குங் கஞ்சன்'என்று கொண்டாடினான். மலைவான் - எச்சம். சூரன் - சந்திரவம்சத்தில் யதுகுலத்தில் தேவகர்ப்ப னென்பவனது மகன்; அவனுக்கு மாரிஷையென்ற மனைவியினிடம் வசுதேவன் முதலிய பத்துப்பிள்ளைகளும், பிருதைமுதலிய ஐந்துபெண்களும் பிறந்தார்கள். இவர்களில் வசுதேவன் மூத்தவனாதலால், 'சூரன்மாமகன்' எனப்பட்டான். இச்சூரனதுமரபிற் பிறந்தமைபற்றிக் கண்ணனுக்குச் சௌரி யென ஒருதிருநாமம் வழங்கும்.'சூரன்மாமகன்வயிற்றுதித்தான்' என்பதை, கீழ் ௩௯ - ஆஞ் செய்யுளில் "மாரதப்போரானோன் வயிற்றி லவதரித்தான்" என்றாற்போலக் கொள்க. 'தராதலமிசையேபிறந்து இவன் கற்றது' என்றது - இவன்பிறந்ததுமுதலாகவே எவரும் கற்பிப்பாரின்றித் தானே பெருமாயைகளை அறிந்தன னென்றபடி. இந்த்ரஜாலம் - வடமொழித்தொடர்: சிறந்தபெருமாயை. உதித்தான் - பெயர். தராதலம் - பூமியின் இடம்; வடமொழித்தொடர். சுர + அசுரர் = சுராசுரர்: தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். மகாபுருஷனைக்கொல்லப்பிறந்த மாயவனென்பது, பின்னிரண்டடியிற்கூறிய இகழ்ச்சி. 'சுராதிபர்மறையால் வேலைமண்புரப்பான்சூரன்மாமகன்வயிற்றுதித்தோன்,சராசரம்வியக்கப்பிறந்தவன்கற்றது' என்றும் பாடம் காணப்படுகின்றது.

இதுமுதல் ஐந்துகவிகள்-இச்சருக்கத்தின் பதினெட்டாங்கவிபோன்ற எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (௧௧௬)

௧௧௭. சொற்றவாநன்றுசுகன்திருத்தாதைசூதிகைத்தோன்றியபொழுதே, பெற்றதாய்தானும்பிதாவுமுன்வணங்கப்பேசலாவுரையெலாம்பேசிக்,கற்றமாயையினாற்கன்னியங்கிருப்பக்காரிருட்காளிந்திநீந்தி,யற்றைநாளண்டரானவர்க்கெல்லாமரசனுக்கருமகவானான்.

(இ - ள்.) சுகன் திரு தாதை - சுகமுனிவனது சிறந்த தந்தையே! சொற்ற ஆ நன்று - நீசொன்னவிதம் நன்றாயிருந்தது! (நீசொன்ன கிருஷ்ணன்), சூதிகை தோன்றிய பொழுதே - பிரஸவகிருகத்திற் பிறந்தபொழுதே, பெற்ற தாய்தானும் பிதாவும் முன் வணங்க - தன்னைப்பெற்றதாயான தேவகியும் தந்தையான வசுதேவனும் எதிரில் தன்னைவணங்கிநிற்க, (அவ்வணக்கத்தையேற்றுக்கொண்டு), பேசலா உரை எலாம் பேசி - சொல்லவொண்ணாத பேச்சுக்களையெல்லாம் பேசி,—கற்ற மாயையினால்- (தான்பிறத்தற்கு முன்னமே) தெரிந்துசெய்த மாயையினால், கன்னி அங்கு இருப்ப - பிறந்த பெண்குழந்தை அவ்விடத்திலே [திருவாய்ப்பாடியில் நந்தகோபகிருகத்திலே] இருக்க, அற்றை நாள் - அன்றைத்தினமே [அப்பொழுதே], கார் இருள் - கரியஇருட்பொழுதில், காளிந்தி நீந்தி - யமுனாநதியைக் கடந்து, அண்டர்ஆனவர்க்கு எல்லாம் அரசனுக்கு அரு மகவு ஆனான்-இடையர்கட்கெல்லாம் தலைவனான நந்தகோபனுக்கு அருமைப்புதல்வனாய்விட்டான்.

வடமதுரையில் தேவகனுடைய குமாரியான தேவகியை வசுதேவன் விவாகஞ்செய்துகொண்டபோது அவளுக்கு உடன்பிறந்தமுறையாகிற கம்சன் கல்யாணரதத்தில்அந்தமணமக்களையேற்றித் தான்அத்தரதத்தைநடத்தினான் ; அப்போது ஆகாயவாணி கம்சனை விளித்து 'அடாமூடா! நீ எவளை

அவன்புருஷனோடு தேரிலேற்றி வெகுபிரியமாய்நடத்துகின்றாயோ, அவளுடைய எட்டாம்பிள்ளை உன்னுயிரைப் போக்கும்' என்று சொல்லிற்று. அது கேட்டவுடனே கம்சன் கத்தியைக்கையிலேந்தி உடன்பிறந்தாளைத்துணிதக் கத் துணிந்தான். அச்சமயத்தில் வசுதேவன் 'நீ இவளைக் கொல்லவேண்டாம்; இவள்வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளையெல்லாம் உனக்குத் தந்திடுவேன்: நீ அவர்களை இஷ்டப்படி செய்துகொள்' என்றுசொல்ல, அதற்குக் கம்சன் உடன்பட்டுத் தேவகியைக் கொல்லாதுவிட்டான். காலநேமியென்னும் அசுரனது பிறப்பான அந்தக்கம்சன்முதலிய கொடியஅரசர்கள்பலரும், துஷ்டர்களானஅசுரர்கள்பலரும் பூமியில் ஒருங்குமிக்கதனாலாகிய அதிக பாரத்தைப்பொறுக்கமாட்டாத பூமிதேவியின்வேண்டுகோளுக்கு இரங்கிய பிரமன்முதலிய தேவர்களின் பிரார்த்தனையினால் திருமால் தான் தேவகியின் எட்டாவது கருப்பத்தில் அவதரித்துக் கம்சனையும் மற்றைக்கொடியோரையும் அழித்துப் பூமிபாரத்தை நிவிருத்திசெய்வதாக வாக்குதத்தஞ் செய்தனன். அச்செய்தியை நாரதமுனிவன் வந்து சொல்ல அறிந்த கம்சன் மிக்ககோபங்கொண்டு தேவகியையும் வசுதேவனையும் தளையிட்டுச் சிறைவைத்திட்டான். பின்பு திருமால் சகலலோகங்களையும் மோகிப்பிக்கிற யோகநித்திரையென்கிற தனதுமாயையை நோக்கி, 'நீ பாதாளத்திலிருக்கிற இரணியகசிபுவின் குமாரர் அறுவரையும் முறையே தேவகியின் கருப்பத்திற் சேர்; அவ்வறுவரும் கம்சனாற் சங்கரிக்கப்பட்டவுடனே, எனதுஅம்சமாயிருக்கிற ஆதிசேஷன் தேவகியின் ஏழாவதுகருப்பத்திற் சனிப்பான்: வசுதேவனுடைய பத்தினி ரோகிணியென்பவளொருத்தி நந்தகோபனுடைய கோகுலத்திலே யிருக்கின்றாளன்றோ; அவளுடையவயிற்றிலிருக்கும் வாயுரூபமான ஏழுமாதத்துக்கருப்பத்தைக் கலைததுவிட்டு, தேவகியின்வயிற்றிலிருக்கும் சேஷாம்சமான ஏழுமாதத்துக்கருப்பத்தைக் கொண்டுபோய் ரோகிணிகர்ப்பத்திற் சேர்த்துவிடு; பின்பு நீயும் நந்தகோபனுடைய பத்தினியானயசோதையின்வயிற்றில் ஒருபெண்குழந்தையாகப் பிறப்பாய்' என்று கட்டளையிட்டருளினான். அங்ஙனமே அந்த மாயாதேவி செய்தசூழ்ச்சியினாற் பிறந்த ஆறுகுழந்தைகளையும் வசுதேவன் முன்பு தான் கம்சனுக்கு வாக்குதத்தஞ்செய்தபடி அவனிடம் கொடுக்க, அவன் அவற்றைக் கொன்றுவிட்டான். அப்பால் ஏழாவதுகருப்பம் கலைந்துவிட்டபின்பு விஷ்ணு சகலலோகசம்ரக்ஷணார்த்தமாய்த் தேவகியின்கருப்பத்தி லெழுந்தருளி மழைக்காலத்தில் ஆவணிமாதத்தில் கிருஷ்ணபக்ஷத்து அஷ்டமியின் இரவிலே கிருஷ்ணனாய்த் திருவவதரித்தனன். யோகநித்திரையும், ஸ்வாமி நியமனப்படி யசோதையின்கருப்பத்திற்பிரவேசித்துக் கிருஷ்ணனவதரித்த தினத்திலேயே பிறந்தாள். நான்குதிருத்தோள்களுடன் அவதரித்த ஸ்ரீகிருஷ்ணனை வசுதேவனும் தேவகியும் சேவித்துப் பலவாறுதுதித்து, கம்சனிடம் தமக்குள்ள அசசத்தால் "திருவாழி திருச்சங்கு முதலான திவ்வியலக்ஷணங்களோடும் நான்குகைகளோடுங் கூடின இந்தத்திவ்வியரூபத்தை மறைத்துக்கொள்ளவேணும்" என்று பிரார்த்திக்க, கண்ணன் அந்தஸ்வரூபத்தைவிட்டுச சாதாரணபாலகரூப னாகி 'என்னை யெடுதது்க்கொண்டுபோய்க் கோகுலத்தி லுள்ள நந்தகோபகிருகத்தில் யசோதையின் படுக்கையில் விட்டு அங்குஉள்ள பெண்குழந்தையை எடுத்துக்கொண்டுவந்து கம்சனிடத்திற் கொடுக்கக்' என்று உபாயஞ்சொல்ல அங்ஙனமே வசுதேவன் உடனே அந்தக்கிருஷ்ணனாகிய குழந்தையை யெடுத்துக்கொண்டு வெளியில்வந்தான். காவலாள்களெல்லாரும் யோகநித்திரையினால் மதிமயங்கிச் சும்மா இருந்தார்கள். அப்படியே அந்தமதுராபுரியின் வாசற்காப்பவர்களும் மயங்கியிருந்தார்கள். வசுதேவர் குழந்தையை யெடுத்துக்கொண்டுபோகையில் [illegible]டாயிருந்த மழையைத் திருவனந்தாழ்வான் தன்திருமுடிகளால் தடுத்

துக்கொண்டே கூட எழுந்தருளினன். அப்போது, சுழிந்தோடாநின்ற ஆழமான தண்ணீருள்ள யமுனாநதியும், சுவாமியை எழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோகிற வசுதேவருக்கு முழங்காலளவாயிருந்தது. அக்காலத்தில் நந்தகோபனுடைய பத்தினியான யசோதையும் யோகநித்திரையின் அம்சமான ஒருகன்னிகையைப் பெற்றும் அவ்யோகநித்திரையினல் மயக்கமுற்றுப் பிறந்ததின்னதென் றறியாமலிருந்தாள். அங்கிருந்தவர்களும் அப்படியே மயங்கியிருந்தார்கள். ஆனதுபற்றி, வசுதேவர் தடையின்றி அங்குச்சென்று இப்பிள்ளைக்குழந்தையை யசோதையின் படுக்கையில் விட்டு அப்பெண்குழந்தையை எடுத்துக்கொண்டு தம்மிடம் வந்துசேர்ந்தார். பின்பு யசோதை மாயாமோகந்தெளிந்து கிருஷ்ணனாகிய குழந்தையைப் பார்த்து, தனக்கு மகன்பிறந்தானென்று மகிழ்ந்தாள். மதுரையில் வசுதேவர் அப்பெண்குழந்தையைத் தேவகியின்படுக்கையில் விட்டவுடனே அது கத்த, அவ்வொலி கேட்டுக் காவலாட்களெல்லாம் ஓடிப்போய்த் தேவகிக்குக் குழந்தைபிறந்ததென்று கம்சனுக்கு அறிவித்தார்கள். உடனே கம்சனும் ஓடிவந்து அக்குழந்தையைத் தூக்கியெறிந்து கொல்லமுயல்கையில், அது எழும்பி வானத்தில் நின்று 'உன்னைக்கொல்லப் பிறந்தவன் ஒளித்துவளர்கிறான்' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டது. பின்பு கிருஷ்ணன் நந்தகோபன் மகனாகவே திருவாய்ப்பாடியில் யசோதை வளர்க்க வளரலானன் என்பது, இங்குஅறிய வேண்டிய கதை.

சொற்ற என்ற தெரிநிலைப் பெயரெச்சத்தில், ற் - இறந்தகாலவிடைநிலை. ஆ - ஆறு என்பதன் விகாரம். 'நன்று' என்றது, பரிகாசமாகச் சொன்னது; இகழ்ச்சிக்குறிப்பாகிய எதிர்மறையிலக்கணை. சுகன்திருத்தாதை - அண்மைவிளி. சுகன்திருத்தாதையாகிய நீ சொன்னது நன்று என முன்னிலைக்குப் படர்க்கைவந்த இடவழுவமைதியாகவுங் கொள்ளலாம். 'சுகன் திருத்தாதை' என்றது, நீ வைராக்கியமுடைய முற்றத்துறந்த முனிவனல்லையென்ற இகழ்ச்சிக்குறிப்பு; ஒருபிள்ளையை உற்பத்திசெய்தவனென்றவாறு. அன்றியும், சுகமுனிவன் பிறந்தபொழுதே பற்றுக்களனைத்தும் ஒழிந்து பரம்பொருளைநோக்கித் தனியே சென்றதைக் கண்டு, அவனது தந்தையான வியாசன், மகனதுபிரிவைப் பொறுக்கமாட்டாமற் பின்தொடர்ந்து சென்று அன்போடு 'மைந்தா' என்று அழைத்தவளவில், அக்குமாரன் ஒன்றும்பேசாதே செல்ல, வனத்திலுள்ள மரம்முதலியனவெல்லாம் 'ஏன்' என்று விடைதந்தன என்ற வரலாறும் உணர்க. ஆகவே, நீ புத்திரவாற்சலியத்தால் அவன்பின்சென்று அவனோடு பேசத்தொடங்கியதுபோல, பௌத்திரர்களாகிய பாண்டவர்கள்பக்கல் அன்பினல் இங்குவந்து அவர்கட்கே அநுகூலனை கிருஷ்ணனைக் கொண்டாடினைபோலும் என்ற குறிப்புந்தோன்றும். "நீடியாதியினுடு நேரிழை யரம்பைமாதர், வீடறிசுகனைக் கண்டு மென்றுகில்வனைர்திலாராய், நாடிநான்மறைகள்சொற்ற நற்றவவியாதனைக் கண்டு, ஓடினர் கரைசென்றுற்றார் உடுத்தனர் நாணித்தானே," 'வரம்பிலாமறையை நான்காய்வகுத்தவன் வனப்புவாய்ந்த, அரம்பையர்தம்மை நோக்கி அரைக்கொரு துகிலிலாதான், நிரம்பியஅறிவன் சென்று நீங்கிய பின்னர் யாழின், நரம்பைவெல்சொல்லீர் சொன்மின் நற்றுகிலுடுத்ததென்றான்," "ஏடலர்கூந்தன்மாதரிவைத்தவம்முனியைநோக்கி, ஆடவரிவர்கள்மற்றையரிவையரிவர்களென்ன, நாடுதல்நினக்குண்டந்நற்றவன்தனக்குஅதில்லை, பீடுசால்முனிவனென்றே பேசின ரகன்றுபோனார்," "இவ்வண்ணமறிவுதானேயிவன்கியசுகன்" என்ற வரலாற்றை யுட்கொண்டு 'சுகன்திருத்தாதை' எனக் குறிப்பாய் இகழ்ந்தானுமாம்.

லஜ்ஜா, மாயா, கந்யா, காளிந்தீ என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. சூதிகை யென்ற பிரஸவத்தின் பெயர்-தாதியாகுபெயராய், பிரசவிக்

கிறஇடத்தைக் குறித்தது. சூதிகை - இங்குச் சூதிகாகிருகம். காளிந்தி-களிந்த மென்னும் மலையினின்று தோன்றுதல்பற்றிய பெயர்; தத்திதாந்த நாமம்: "களிந்தவெற்பளித்தமங்கை" என்றார் கீழ் ஆதிபருவத்திலும். பிதா - தற்சமவடசொல். இருள் - இருட்பொழுதுக்கு ஆகுபெயர். முன் - இடமுன். முன்வணங்க - விரைந்துவணங்க எனினுமாம். 'பேசலாவுரை' என்றது - தன்க்குப்பிரதியாக வேறொருகுழந்தையைக் களவாடி எடுத்து வந்து மாறுபாடாகக் கம்சனிடம் கொல்லக்கொடுக்கும்படி யோசித்த வஞ்சகவார்த்தை யென்றபடி; பிறர்க்குச்சொல்லலாகாத இரகசியவார்த்தைக ளென்றும், குழந்தைப்பருவத்தில் மற்றையோர் பேசமாட்டாத பேச்சுக்க ளென்றும் கருத்துப்படும். 'அண்டரானவர்க்கு' என்றதில், 'ஆனவர்' என்பது-பகுதிப்பொருள்விகுதி. தெய்வமெனப்படுகிற தாய்தந்தையரைத் தான் வணங்குதற்கு மாறாக அவர்கள் தன்னைவணங்கும்படிசெய்து பார்த்த விபரீதவொழுக்கமுடையா னென்றும், பிறந்தவுடனே தந்தைக்கு வஞ்சகங்கற்பித்த மகாவஞ்சக னென்றும், ஒருவன்மகனாய்ப் பிறந்து மற்றொருவனுக்கு மகனென்று வளர்ந்த குலக்கேட னென்றும் இகழ்ந்தான். ()

கக௫. ஈன்றதாய்வடிவங்கொண்டுள முருகியிணைமுலைத்தடத் தணைத்தமுதம், போன்றபால்கொடுப்பப்பொழிமுலைப்பாலோபூதனையுயிர்கொலோநுகர்ந்தான், சான்றபேருரலாலுறிதொறுமெட்டாத்தயிருடனறுநெய்பாலருந்தி, யான்றதாய்கண்டுவடத்தினிற்பிணிப்பவணியுரலுடனிருந்தழுதான்.

(இ-ள்.) ஈன்ற தாய் வடிவம் கொண்டு-(பூதனையென்றஅசுரஸ்திரீ) குழந்தையைப் பெற்றுவளர்க்கின்ற தாயினுருவமாகி, உளம் உருகி-(தன்குழந்தையின்பக்கல்தாய்மனமுருகுகின்றவாறுபோலத் தான்) மனம் உருகுகிறதாகப் பாவனைகாட்டி, இணை முலை தடத்து அணைத்து-தனது இரண்டு கொங்கைகளினிடத்தும் (கிருஷ்ணனாகிய குழந்தையை எடுத்து) அணைத்துக்கொண்டு, அமுதம் போன்ற பால் கொடுப்ப-தேவாமிருதத்துக்குச்சமமான [மிக இனிய] தன்முலைப்பாலையூட்ட, பொழி முலைப் பாலோ பூதனை உயிர்கொலோ நுகர்ந்தான்-(இந்தக்கிருஷ்ணன் அவளுடைய) கொங்கைசுரந்தபாலையோ அன்றி அவளுடையஉயிரையோ குடித்திட்டான்; (மற்றும் இவன்), சான்ற பேர் உரலால்-மிக்கபெரிய உரலினுதவியைக்கொண்டு, உறிதொறும் எட்டா தயிருடன் நறு நெய் பால் அருந்தி - (ஆய்ச்சியர்) உறிகள்தோறும் எட்டாதபடி உயரவைத்துள்ள தயிரையும் நறுமணம்வீசுகிற நெய்யையும் பாலையும் (எட்டியெடுத்து) உண்டு, ஆன்ற தாய் கண்டு வடத்தினில் பிணிப்ப - சிறந்த தாயான யசோதை (அச்செய்தியை) நோக்கிக் கயிற்றினாலே (தன்னை உரலோடு) கட்டிவைக்க, அணி உரலுடன் இருந்து அழுதான் - அழகியஅந்த உரலோடு இருந்துபுலம்பினான்; (எ - று.)

தன்னைக்கொல்லப்பிறந்தவன் ஒளித்துவளர்கிறா னென்பதையுணர்ந்த கம்சன் மிக்கஅச்சங்கொண்டவனாய்ப் பிரலம்பன், கேசி, தேனுகன், பூதனை, அரிஷ்டன் முதலான அசுரர்களை யழைத்து, 'உன்னைக்கொல்பவன் பிறந்திருக்கிறான்' என்று தேவகியயிற்றிற்பிறந்த பெண் சொல்லிற்றுதலால் இவ்வுலகத்தில் விசேஷமான பலம் சாமர்த்தியம் அழகு முதலியவை எந்தெந்தக்குழந்தையினிடத்திற் காணப்படுமோ அந்தந்தச் சிறந்த ஆண்குழந்தைகளைத் தேடி எப்படியாவது கொன்றுவிடவேண்டு மென்று கட்டளையிட்டான்; உடனே அவர்களெல்லாரும் அங்ஙனமே முயல்வாராயினர். அவர்களிலொருத்தியான பூதனையென்னும் ராக்ஷசி மாயையால் நல்ல பெண்ணுருவத்தோடு இரவில் அங்கங்கே சென்று சிறுகுழந்தைகளுக்குத் தாய்முலைகொடுப்பதுபோலத் தான் தனதுநஞ்சுதீற்றியமுலையைக் கொடுத்துக் குழந்தைகளைக் கொன்றுகொண்டே கோகுலத்திலும் வந்து தாங்கிக்

கொண்டிருந்த கண்ணனாகிய யசோதையின்குழந்தையையு மெடுத்து முலை கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அப்பேய்மகளின்முலைகளைக் கைகளாலிறுகப்பிடித்து அவளுயிரோடேஉறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக்கதறிவிழும்படி செய்தது என்பது, முதலிரண்டடியிற் குறித்த கதை. 'பொழிமுலைப்பாலோ பூதனையுயிர்கொலோ நுகர்ந்தான்' என்றது-அவளது முலைப்பாலைமாத்திரம் உறிஞ்சினானில்லை, அவளுயிரையுமுட்பட உறிஞ்சியொழித்தான் என்றபடி; அவள்முலைப்பாலையுண்ட குழந்தைகள் உடனே ரக்தமாம்சமெல்லாம் உலரப்பெற்று மரணமடைய, இவன் அவளை நரம்புகளின்கட்டெல்லாம் நீங்கித் தன்இயல்பானபெருங்குரல்கொண்டு கதறிப் பயங்கரமானரூபத்தோடு தரையில் வீழ்ந்து இறக்கும்படி செய்தனன். 'பாலோ' என்ற ஓகாரம் - ஒழியிசை. 'உயிர்கொலோ' என்ற ஓகாரம் - தெரிநிலை. கொல் - அசை. பெற்றதாய்வடிவுகொண்டு உளமுருகி மார்போடணைத்து மிகஇனியபால்கொடுத்தவளை அப்பாலைமாத்திரம் உண்ணாது உயிரையும்உண்டு ஒழித்தது தகுதியோ எனச் சிசுபாலன் கண்ணனை இகழ்ந்தவாறும்; இரக்கமின்றி இளமையிலேயே பெண்கொலைசெய்தவ னென்க. ஒருவனைக்கொன்றவனை 'அவனதுஉயிரை யுண்டான்' என்றல், மரபு.

"பொத்தவுரலைக்கவிழ்த்ததன்மேலேறித், தித்தித்தபாலுந்தடாவினில் வெண்ணெயும், மெத்தத்திருவயிறாரவிழுங்கிய, அத்தன்," "தாளுரன்மேல் வைத்துவெண்ணெய், தாங்குறியெட்டக்கரத்தார்," "தந்தமுறியிலவர்வைத்ததயிர்பால்வெண்ணெயெட்டாமற், குந்தியுரலின்மிசையேறி" என்றபடி கண்ணன் இளம்பருவத்தில் தயிர்பால்வெண்ணெய் முதலியவற்றைக் களவு செய்து உண்ணுதலை யறிந்த ஆய்ச்சியர் 'அவற்றை இவனுக்குஎட்டாதபடி வைக்கக்கடவோம்' என்று உறிகளின்மேலே உயரச்சேமித்துவைக்க, கண்ணன் உரலையுருட்டிக்கொண்டுபோய் உறியின்கீழிட்டு அதன்மேலேறி நின்று எட்டித் தயிர்முதலியவற்றை உண்டன னென்பது, மூன்றாமடியிற் குறிக்கப்பட்டது. எட்டா - ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெச்சம்; உடன்பாட்டுஇறந்தகாலவினையெச்சமாக்கொண்டு, 'எட்டி' என்று பொருள்கொள்ளினுமாம். நறுநெய் - பண்புத்தொகை.

கண்ணன் குழந்தையாயிருந்தகாலத்தில் திருவாய்ப்பாடியில் ஆயர் மனைகளிற் சென்று அவர்களுடைய பால் தயிர் வெண்ணெய் முதலியவற்றைக் களவுசெய்துஉண்டு துன்பப்படுத்துகின்ற பலவிளையாட்டுக்களைச்செய்தலை ஆய்ச்சியர்சொல்ல அறிந்து கோபித்த யசோதை அக்குற்றத்துக்கு ஒருதண்டனையாகக் கிருஷ்ணனை வயிற்றிற்கயிற்றினாற்கட்டி உரலோடு பிணித்துவிட, அதிற்கட்டுண்டபடியே அழுதன னென்பது, ஈற்றடியிற் குறிக்கப்பட்ட விஷயம்.உரலினுதவிகொண்டெட்டி வெண்ணெய்முதலியன களவாடினவனை அவ்வுரலுடனேகட்டிவைத்திட்டாள். ஆன்றதாய் - குழந்தையினிடத்துஅன்புசெய்தலிற்சிறந்த தாய்; தன்குழந்தைசெய்யுங்குற்றங்களைக் கண்டு குணமாகக்கொண்டு மகிழு மியல்புடையா ளென்க. அப்படிப்பட்டவளும் வெறுத்து நன்றாகத்தண்டிக்கும்படி வஞ்சனை களவுமுதலிய பலபொல்லாங்குகளை இடைவிடாது செய்தவனெனச் சிசுபாலன் கண்ணனை இகழ்ந்தவாறு. ஆன்ற, சால் என்பதன் மரூஉவான ஆல் - பகுதி. 'அணியுரலுடன்' என்றதை மத்திமதீபமாக, முன்னின்ற 'பிணிப்ப' என்றதனோடும், பின்னிற்கும் 'இருந்து' என்பதனோடுங் கூட்டுக. (கசஅ)

கசகூ. பாடினான்மறுகுபெருநகைவிளைப்பப்பாவையர்மனை தொறும்வெண்ணெய்க், காடினனவர்கண்முகந்தொறுமெச்சிலாக்கினன்கன்றுமுன்னோடே, வோடினானுவின்பேரிளங்கன்றையுயிருடனொருதனிவிளவிற், சாடினனரவின்முழுதுகையும்புள்ளின்றுவேவாடலையும்பிளந்தான்.

(இ - ள்.) பெரு நகை விளைப்ப - (காண்பவர்க்கு) மிக்கநகைப்பை யுண்டாக்கும்படி, மறுகு பாடினான் - (கண்ணன் கோகுலத்து)வீதிகளிற் பாட்டுப்பாடிக்கொண்டு திரிந்தான்: பாவையர் மனைதோறும் - இளமையான அழகியஇடைச்சாதிப்பெண்களுடைய வீடுகள்தோறும், வெண்ணெய்க்கு ஆடினான் - அவர்கள்வெண்ணெய்கொடுக்கப்பெற்று அதற்காகமகிழ்ந்து கூத்தாடியுண்டான்; அவர்கள் முகம் தொறும் எச்சில் ஆக்கினான் - அந்தக்கோபகன்னிகைகளுடைய முகங்கள்தோறும் எச்சில்செய்தான்; அகன்று முன் ஓட - (அந்தக்கோபஸ்திரீகள் தன்னைவிட்டு) விலகி முன்னே ஓடிச்செல்ல, ஓடினான் - (தான் அவர்களைப்பின்தொடர்ந்து)ஓடிச்சென்றான்; ஆவின் பேர் இளங் கன்றை - பசுவினது பெரிய இளங்கன்றொன்றை, உயிருடன் - உயிரோடு, ஒரு தனி விளவில் சாடினான் - ஒப்பற்றதொரு விளாமரத்தின்மேல் வீசியெறிந்தான்; அரவின் முதுகையும் - ஒருபாம்பின் முதுகையும், புள்ளின் தாலுவோடு அலகையும் - ஒருபறவையின் வாயோடு மூக்கையும், பிளந்தான் - பிளந்திட்டான்; (எ - று.)

திருவாய்ப்பாடியில் ஆயரும் ஆய்ச்சியரும் கண்டுகளிக்கும்படி கண்ணன் இளமையிற் பலவாறு வேய்ங்குழலூதியிசைத்தல், வாயினால் இன்னிசைபாடுதல், கூத்தாடுதல் முதலிய விநோதங்களைச் செய்து மகிழ்ந்தனனென்பது பிரசித்தம். (கம்சனது சூழ்ச்சியினால் வந்த குவலயாபீடமென்னும்யானையின் கொம்பை யொடித்தற்குக் கண்ணன் நின்றாடிய கூத்து அல்லியக்கூத்தெனப் பெயர்பெறு மென்றும், அக்கண்ணன் கம்சனாகிய அசுரனை வெல்லுதற்கு மல்லனாய்ச் சென்று அறைகூவியெழுந்து அவன் மீது தாவி அவனைப்பிடித்து உயிர்போகநெரித்துத்தொலைத்தபோது ஆடிய கூத்து மற்கூத்தெனப் பெயர்பெறு மென்றும், கண்ணன் தனதுபேரனை அநிருத்தனை வாணாசுரன் சிறைவைத்தமைபற்றி அவனையெதிர்த்தற்குச்சென்றபோது அவனுடைய நகரவீதியிற் சென்று பஞ்சலோகங்களாலும் மண்ணாலுமான குடங்கொண்டு ஆடிய கூத்து குடக்கூத்தெனப் பெயர்பெறு மென்றும் சிலப்பதிகாரத்தாலும் அதன் அடியார்க்குநல்லாருரையாலுந் தெரிகிறது.) பாவையர் - சித்திரப்பிரதிமைபோலழகிய மகளிர். 'அவர்கள்முகந்தொறும் எச்சிலாக்கினான்' என்றது, அவர்களை முத்தமிட்டதும் அதரபானஞ்செய்ததும்பற்றி. கண்ணன் ஆய்ச்சியர்வீடுகளில் தான் வெண்ணெய் களவாடிக் கைவிரலால்தொட்டு எச்சில்செய்து உண்கிறபோது அவ்வீட்டுஇளம்பெண்கள் பார்த்துக்கொண்டேவந்துவிட்டால் அவர்கள்முகத்தைத் தனதுஎச்சிற்கையால் தொட்டுக் கைவெண்ணெயைத் தடவியும், அவர்கள்முகத்தில் தன்வாய்வெண்ணெயை யுமிழ்ந்தும் அவர்கள்தாம் வெண்ணெய்களவாடியுண்டன ரென்று கண்டவர்கருதுமாறு செய்து சிரிக்கிற வழக்கமும் உண் டென்க. 'ஆக்கினான் கன்றுமுன்னோட ஓடினான்' என்ற பாடத்துக்கு, கன்றுகள் முன்னேஓடிச்செல்ல அவற்றைத் துரத்தி மேய்த்துக்கொண்டு பின்னேசென்றன னென்று பொருள் காண்க; பிராயமுதிர்ந்தஇடையர்கள் பசுக்களைமேய்க்க, சிறுபிள்ளையான கண்ணன் இடைச்சாதிப்பிள்ளைகளுடனே சேர்ந்து கன்றுகளை மேய்த்தன னென்க.

கம்சனாலேவப்பட்ட அசுரர்களிற் கபித்தாசுரன் விளாமரத்தின்வடிவமாய், கண்ணன் தன்கீழ்வரும்பொழுது மேல்விழுந்துகொல்வதாக எண்ணிவந்திருக்க, அதனையறிந்து, கிருஷ்ணபகவான் அவ்வாறே தன்னைமுட்டிக்கொல்லும்பொருட்டுக் கன்றின்வடிவங்கொண்டுவந்த வத்ஸாசுரனைப் பின்னிரண்டுகால்களையும் பிடித்துஎடுத்துச்சுழற்றி விளாமரத்தின்மேல் எறிய, இருவரும் சிதைந்து தமதுஅசுரவடிவத்துடனேவிழுந்து இறந்தன ரென்பது. [illegible] பூதனைக்கும் பகாசுரனுக்கும் தம்பியான அகாசுரன் [illegible] [illegible] வினையாடும்வழியிற் பெரியமலைப்பாம்பின்வடிவமாய் வாய்[illegible]த்துக்

கிடக்க,இடைப்பிள்ளைகள் மலைக்குகையென்றுகருதிப் பசுக்களோடும் கன்றுகளோடும் அதனுள்ளேபுகுந்துசெல்ல, கண்ணபிரான் தானும் ஒன்றுங் கூறுமல் உடன்சென்று அங்குப்பெரியவடிவமெடுத்து அப்பாம்பினுடலைக் கீண்டெழுந்து அதனையழித்து ஆயர்களையும் ஆக்களையும் அளித்தருளினனென்பதும்; பகனென்னும் அசுரன் கொக்குவடிவங்கொண்டு கண்ணபிரானைக்கொல்வதாக நெருங்கிவர, அப்பொழுது கண்ணன் அப்பறவையின் வாயலகுகளை இருகையாலும் பிடித்துக்கிழித்து அதனையழித்தன னென்பதும், பின்னிரண்டடிகளில் அறியவேண்டிய கதைகள். "கன்றெனுமசுரனுற் கனியுகுத்ததும், வன்திறற்புள்ளின்வெவ்வாய்கிழித்ததும், சென்றிடுநீணெறிச்செழும்பொற்குன்றையும், வென்றுயர் பாந்தளின் மிடறுகீண்டதும்" என்ற பாகவதத்தையுங் காண்க. அரவின்முதுகைப்பிளந்ததற்குக் காளியமர்த்தனகதையைக் கொள்ளுதல் பொருந்தாது. கன்று - பசுமுதலியவற்றின் இளமைப்பெயர்; "யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையு, மானோ டைந்துங் கன்றெனற் குரிய" என்பது தொல்காப்பியம். தாலு - வடசொல்.

முன்னிரண்டடி-தகுதியல்லாதவழிகளால் விளையாடுகிறவ னென்றும், பின்னிரண்டடி-பலபிராணிகளை இம்சித்தவனென்றும்சிசுபாலன்கண்ணனை இகழ்ந்தவாறும். 'பாவையர்பெருநகைவிளைப்ப' என்றதை 'மறுகுபாடினன்', 'மனைதொறும்வெண்ணெய்க்கு ஆடினன்' என்ற இரண்டோடுங் கூட்டலாம். பெருநகைவிளைத்தல் - மிகநகைத்துப் பரிகாசம்பண்ணுதல். வெண்ணெய்க்குஆடுதல் - வெண்ணெய்தரச்சொல்லிக் கூத்தாடுதலுமாம்.

கஉ0. பின்னிய குஞ்சிக் கோவலர் பயந்த பேதையர் பலரையுங் களிந்த, கன்னியின் மருங்கு மோரையின் மருங்குங் கலையெலா நாணிடக் கவர்ந்தே,முன்னிய வின்பச் செருக்கிலே மயக்கி மூரிவிற் காமனு மானு, னன்னிய னல்லன் மற்றிவன் பெருமை யரசரி லாரறி யாதார்.

(இ - ள்.) பின்னிய குஞ்சி கோவலர் பயந்த - பின்னப்பட்ட குடுமியையுடைய இடையர்கள் பெற்ற, பேதையர் பலரையும் - இளம்பெண்கள் பலபேரையும், களிந்தகன்னியின் மருங்கும் - யமுனையாற்றினிடத்தும், ஓரையின் மருங்கும் - மற்றும் அவர்கள்விளையாடுமிடத்திலும், நாணிட கலை எலாம் கவர்ந்து - (அவர்கள்)வெள்கும்படி (அவர்களுடைய)ஆடைகளையெல்லாம் அபகரித்து, முன்னிய இன்பம் செருக்கிலே மயக்கி - தான்விரும்பிய சிற்றின்பக்களிப்பிலே (அவர்களை) மயங்கச்செய்து, மூரி வில் காமனும் ஆனான் - (அவர்கட்கு) வலியவில்லையுடைய மன்மதனு மாயினன்; அன்னியன் அல்லன் - (அவர்கள்பக்கல் இவ்வாறு தூர்த்தனுயொழுகுதற்கு இவன்) அயலானல்லன் [அவ்விடைச்சாதியாரிலொருவனுக அவர்களுடைய முழுநம்பிக்கைக்குஇடமாகி வளர்ந்தவனே]; மற்று இவன் பெருமை அரசரில் ஆர் அறியாதார் - மற்றும் இக்கிருஷ்ணனுடைய மேன்மைகளை அரசர்களில் அறியாதவர் எவர்? [எவருமில்லை: அனைவரும் நன்கு அறிவரென்றபடி]; (எ - று.)

திருவாய்ப்பாடியிலுள்ள கோபஸ்திரீகள், கண்ணபிரானிடங்கொண்ட வேட்கைமிகுதியால், அவன் தம்மிடம் காதல்விஞ்சுமாறு நோன்புநோற்று, அந்நோன்பின்முடிவில் யமுனாநதியிலே நீராட, அப்பொழுது அவர்கள் கரையில் அவிழ்த்துவைத்துவிட்டுப்போன ஆடைகளையெல்லாம் கண்ணன் வந்து எடுத்துக்கொண்டு அருகிலுள்ள மரத்தின்மே லேறியிருந்து சிறிது பொழுது அவர்களை அலைக்கழித்து, பின்பு அவர்கள் கைகூப்பிவணங்கி மிகவும்பிரார்த்தித்ததனால் அவர்கட்கு அத்துகில்களை அளித்தருளின னென்

பது, முதலிரண்டடிகளில் அறியவேண்டிய வரலாறு; "வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு, விண்டோய்மரத்தான்" என்றார் பெரியாழ்வாரும். மற்றும் அவ்வாழ்வார் "ஆற்றிலிருந்துவிளையாடுவோங்களைச், சேற்றுலெறிந்துவளை துகில்கைக்கொண்டு, காற்றிற்கடியனாயோடிஅகம்புக்கு, மாற்றமுந்தாரான்" என்று அருளிச்செய்தபடி யமுனையாற்றில் நீராடிக்கொண்டிருந்த ஆயர்மங்கையர் கரையிற்களைந்துவைத்த ஆடைகளைக் கண்ணன் வாரியெடுத்துக்கொண்டு தன்அகத்திலேசென்றுபுக்கசெய்தியும் உண்டு.

சரத்காலத்திலே வானம்நிர்மலமாயிருப்பதையும்,இரவில் நிலாஎறிப்பதையும், பூந்தடாகங்களையும், பூஞ்சோலைகளையும் கண்ணன் கண்டு களித்து, முன்பு தான்வரமளித்திருந்தபடி கோபஸ்திரீகளோடு சேர்ந்து கிரீடிக்கக்கருதி, தமையனில்லாமல் தான்ஒன்றியாக வனத்திற் போய்,பெண்கள் மனத்தை யிழுக்கத்தக்கதும் இன்னபடியென்றுசொல்லக்கூடாமல் இனியதுமான தொனியுள்ளதாக வேணுகானஞ்செய்தருளினான்; அந்த வேய்ங்குழலிசையைக் கேட்டு ஆய்ச்சியரெல்லாம் பரவசராய்த் தம்தம்மாளிகைகளைவிட்டுப் பரபரப்புடனே கண்ணனிருக்குமிடத்துக்கு வந்து சேர்ந்து பலவாறு பெருங்காதல்பூண்டுநிற்க, கண்ணபிரான் அக்கோபகன்னிகைகளாற் சூழப்பட்டு அவ்விரவை ராஸக்கிரீடையென்கிறஉத்ஸவத்திலே செலுத்தினான்; அப்பெண்கள், தம்சுற்றத்தவரால் தடுக்கப்பட்டாலும் அவர்களை லக்ஷ்யஞ்செய்யாமல் இரவுதோறும் இங்ஙனங் கண்ணனைச் சேர்ந்து, விட்டுப்பிரிய மனமில்லாமல் மிக்கஆனந்தத்தை அனுபவித்துவந்தார்கள் என்பது, மூன்றாமடியில் அறியவேண்டிய விஷயம். (தருமத்தைஸ்தாபிக்க அவதரித்த எம்பெருமான் தருமவிரோதமாக இங்ஙனஞ்செய்வது ஒக்குமோ? அக்கன்னிகைகளுக்கும் இதனால் பாதகமுண்டாகாதோ?எனின்:—அப்பெருமான் தன்னைசசேர்ந்தவர்களுடைய சகலபாவங்களையும் போக்கடிக்கும்படியான பரிசுத்தியுடையவனாதலாலும், வேதாந்தநிர்ணயத்தின்படி அன்புசெலுத்தவேண்டுமிடத்திலேயே அக்கன்னியர் அன்புசெலுத்தினார்களாகையாலும், அவர்கட்குச் சகலபாவநிவிருத்தியேயல்லது பாவமுண்டாவதில்லை. எம்பெருமானுக்கோ, ஜீவாத்மாவுக்கு உண்டாவதுபோலே பாபபந்தம் உண்டாகாது; ஏனெனில்:—பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்கிற பஞ்சபூதங்கள் எப்படி எல்லாப்பிராணிகளிலும் வியாபித்திருக்குமோ, அப்படியே, ஸ்வாமி அந்தப்பெண்களினிடத்தும் அவர்களுடைய கணவர்களிடத்தும் மற்றுமுள்ள ஆத்மகோடிகளிலும் வியாபித்திருக்கும்பரமாத்மாவாகையாலே, அவனுக்குப் புதிதாக ஒருசம்பந்தம் வந்ததில்லை யென்க. இன்னும் பலவகையாகவும் ஏற்ற சமாதானம் ஆன்றோராற் கூறப்பட்டு வழங்கும்.) குஞ்சி - ஆடவர்மயிர்முடி. (குஞ்சி குடுமி சிகை பங்கி முதலிய சில - ஆடவர்தலைமயிர்க்கும்,ஐம்பால் ஓதி கூந்தல் கோதை முதலிய சில - மகளிர்தலைமயிர்க்கும் உரியனவாக வழங்கும்; பிறபலவற்றை இருபாலார் தலைமயிர்க்கும் பொதுப்படவழங்குவர்.) பிராயம்முதிர்ந்தபின்பும் குடுமிமயிரைப்பின்னிக்கொண்டிருத்தல்,இடையரியல்பு. கோவலர்-கோபாலர் என்ற வடசொல்லின் விகாரம்; பசுக்களைக்காப்பவரென்பது பொருள். கோவலர் எனப்பிரித்து, பசுக்களைக் காக்கவல்லவரென்றலுமொன்று; இப்பொருளில், வலர்=வல்லர் : தமிழ்ச்சொல். பேதையர் - கபடமில்லாத கன்னிகைகளென்றபடி. களிந்தகன்னி - களிந்தமென்னும் மலையினிடத்தினின்று உதித்துவருகிற பெண்பாலாகிய நதி. மருங்கு - இடம், பக்கம்; வழுவுருபுமாம். துறை - மகளிர்விளையாடுமிடம்; மகளிர்கூட்டமுமாம் 'துறையின்மருங்கு' என்றது - 'மயக்கி' என்பதனோடும், 'களிந்தகன்னியின் மருங்கு' என்றது-'நாணிடக்கலையெலாங்கவர்ந்து' என்பதனோடும், 'புன்னையும்' என்றது - இவ்விரண்டனோடும் தொடர்தற்கு உரியவை. [illegible]

நாண்: இது - இனைவினை. 'கவர்ந்தே' என்ற ஏகாரம் - இழிவைக் காட்டும். மன்மதனது கருப்புவில்தானே அவன் எல்லாவுயிர்களையும் வெல்லுதற்குக் கருவியாதலால், 'மூரிவில்' எனப்பட்டது. 'காமனுமானான்' என்றது - தன்கட்டழகினாலும் குணஞ்செயல்களினாலும் அம்மகளிரைத் தன் பக்கல் மோகமடையும்படிசெய்து அவர்களோடு கூடினா னென்றபடி. உம்மை - கீழ்க்கூறிய கலைகவர்தல், மயக்குதல் என்ற செயல்களை நோக்குதலால், இறந்ததுதழுவியஎச்சப்பொருளது. 'அந்யன்' என்ற வடசொல், விகாரப்பட்டது; 'அன்னியனல்லன்' என்பதற்கு - (நம்மால் உள்ளவாறு அறியலாகாதபடி) அயலானல்லன் என்றும் கருத்துக்கூறலாம். 'பெருமை' என்றது, இங்குக் குறிப்பினாற் சிறுமையையுணர்த்திற்று. 'அரசரில்ஆர் அறியாதார்' என்றது - அரசரனைவரும் கிருஷ்ணனுடையஅக்கிரமங்களை அறிந்திருந்தும் அவனை அக்கிரபூசைக்குஉரியவனென்று உடன்பட்டது பெருந்தவறென்று சபையார்க்குக் குறைகூறியவாறாம். இச்செய்யுள் - ஜாரசோரசிகாமணி யென்று சிசுபாலன் கண்ணனைப் பழித்தபடியாம். (௧௨0)

வேறு.

௧௨௧. அண்டர்க் கெல்லா மரசான வாகண் டலனுக் கண்டரினி, துண்டற் கமைத்த பாலடிசி லுண்டா னொருநா ளொருதானே, கொண்டற் கன்மா ரியைமுன்னங் கோவர்த் தனமே குடையாகச், சண்ட ப்ரசண்ட வேகமுடன் றடுத்தா னேறு படுத்தானே.

(இ - ள்.) அண்டர்க்கு எல்லாம் அரசு ஆன ஆகண்டலனுக்கு - தேவர்கட்கெல்லாம் அரசனான இந்திரனுக்கு, இனிது உண்டற்கு - இனிமையாகப் புசித்தற்குஉபயோகமாக, அண்டர் அமைத்த - இடையர்கள் சமைத்துச்சித்தப்படுத்திய, பால் அடிசில் - பால்போல்வெண்ணிறமான சோற்றை, ஒரு நாள் ஒரு தானே உண்டான் - ஒருநாள் (கிருஷ்ணன் அவ்விந்திரனுக்குஇன்றித்) தானே தனியாகப்புசித்திட்டான்; (மற்றும்), கொண்டல் கல் மாரியை - (இந்திரனதுகட்டளையால்) நீர்கொண்டகாளமேகங்கள் பொழிந்த கல்மழையை, முன்னம்-முன்பு, கோவர்த்தனமே குடை ஆக - கோவர்த்தனமலையையே குடையாகக்கொண்டு, சண்ட ப்ரசண்ட வேகமுடன் - மிகவும்அதிகமான விரைவுடனே, தடுத்தான் - தடுத்திட்டான்; (அன்றியும்), ஏறு படுத்தான் - எருதை யழித்தான்; (எ - று.)

இடையர்கள் தங்களுக்கு ஜீவநாதாரமான பசுக்களுக்கு வேண்டிய புல்லையும் தண்ணீரையும் உண்டாக்குகிற மேகங்களுக்கு இந்திரன் தலைவனாதலால் அவனுக்குத் திருப்தியையுண்டாக்கி அவனதுபிரீதியினால் மேகங்கள் மழைபொழியத் தாங்களும் பசுக்களும் க்ஷேமமடைதலை வேண்டி வருஷத்துக்குஒருமுறை சரத்காலத்தில் இந்திரனுக்குப் பொங்கலிடுகிறவழக்கத்தைக் கொண்டிருந்தனர். அங்ஙனம் ஒருவருஷத்தில் திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்களெல்லாரும் கூடி இந்திராராதனைபண்ணுதற்காக வீடுகள்தோறும் வரியிட்டுச்சமைத்துச் சோறுமுதலியஉணவுகளைப் பெருந்திரளாகவும் மிகஇனிதாகவும் சித்தப்படுத்தியபோது, இந்திரனைச் செருக்கடக்கக் கருதிய கிருஷ்ணன் அவ்விடையர்களை நோக்கி 'பசுக்களுக்கும் நமக்கும் பலவகைவளங்களைத் தந்து உதவி நம்மைப்பாதுகாக்கிற இந்தக்கோவர்த்தனகிரியை ஆராதிப்பதே நமக்குத் தகுதி: நமக்கு இந்திரனாலும் மற்றவர்களாலும் ஆவதென்ன?' என்று சிலசொல்லிப் போதித்து அவர்கள் மனத்தைமாற்றி அவர்களோடு தானும் இருந்து இந்திரபூஜைக்குப்பிரதியாகப் பர்வதபூசையைச் செய்வித்தான்; வழக்கமாக இந்திரன் பூசையை ஏற்றுக்கொள்ளுகிறவகையிலும் இக்கோவர்த்தனபர்வதபூசையில் விசேஷம் காட்டி இடையர்களைமகிழ்விக்கக்கருதிக் கண்ணன் அவர்கள் பர்வதபூசை

செய்துவரும்போது தான் ஒருதேவதாரூபமாய் அந்தக் கோவர்த்தனகிரியின்சிகரத்தின்மேல் வீற்றிருந்து 'நான்தான் இந்தப்பர்வததேவதை' என்று சொல்லி, அக்கோபாலர்கள்இட்ட அந்தப்பலிகளையெல்லாம் அமுதுசெய்தருளியதுமன்றி, அம்மலைத்தெய்வத்தைத் தரிசித்து வணங்கிப்பிரார்த்தித்த ஆயர்கட்கெல்லாம் வேண்டியவரங்களையுந் தந்தனன். இங்ஙனம் பூசையை இழந்ததனாற் கோபமுற்ற இந்திரன் பசுக்களுக்கும் கன்றுகளுக்கும் இடையர்க்கும் இடைச்சியர்க்கும் அழிவுசெய்யும்படி மேகக்கூட்டத்தைஏவிஇடைவிடாதபெருங்காற்றுமழையைப்பொழிவித்தபோது, கண்ணன்கோவர்த்தனமலையையெடுத்துக்குடையாகப்பிடித்து மழையைத்தடுத்துக் கன்றுகாலிகளையும் இடையர்களையும் காத்தருள, இங்ஙனம் ஏழுநாள்கழிந்தபின்பு இந்திரன் கருவபங்கப்பட்டு மேகங்களையகற்றிவிட்டு வானத்தினின்று இழிந்துவந்து கண்ணனைப் பலவாறுதுதித்து, அப்பெருமானுக்குக் கோவிந்தனென்கிற திருநாமத்தைச்சாத்திக்கோக்களுக்குஇந்திரனாகப்பட்டாபிஷேகஞ்செய்து சென்றனன் என்பது, இங்கு அறியவேண்டிய கதை. கள்ளங்கபடமற்ற சாதுசனங்களான இடையர்க்கெல்லாம் துர்ப்போதனைசெய்து தேவேந்திரனைவஞ்சித்து அவனுணவைக்கவர்ந்து உண்டு தன்இனத்தவரான இடையர்களையும் ஏமாற்றிப் பின்பு அதனாலானதீங்கை யொழித்தற்குத் தானே சிரமப்பட்டுக் கல்லைச் சுமந்தன னெனப் பழித்தவாறு.

'இந்திரன் கல்மழைபொழிந்ததனால் அதனைக் கல்மலைகொண்டே தடுத்திட்டனன், அவன் நீர்மழைபொழிந்திருந்தால் அதனை நீர்கொண்டே தடுத்திருப்பன், அகடிதகடநாசாமர்த்தியமுடைய எம்பெருமான் என்பதும்; 'அஃறிணையாகிய மலை, தனக்குச்செய்த பூஜையை ஏற்றுக்கொள்ளுந்தரமிலது' என்ற குறைதீரவும், தேவதாந்தரங்களை யுத்தேசித்துச்செய்யும் பூசைகளை அந்தந்தத்தேவதைகளுக்கு அந்தர்யாமியாய்நின்று ஏற்றுக்கொண்டு வரமளிப்பவன் தேவாதிதேவனான தானே யென்பது தோன்றவும், கோவர்த்தனமலைக்குஇட்ட உணவுகளைக் கண்ணன் தான் ஒருதெய்வவுருக்கொண்டு உண்டருளின னென்பதும்; 'கோவர்த்தனமலைக்குப் பூசைசெய்தோம்: அதனால் உடனே பெருந்தீங்குவிளைவதாயிற்று; அதனைக் கண்ணன் முயன்றுதடுத்து நம்மைக் காத்தருளினன்' என்று இடையர்கள் உட்கொண்டு அம்மலையைக்குறித்துக் குற்றங்குறைகூறாதிருக்குமாறு அந்தமலையைக்கொண்டே பாதுகாத்தன னென்பதும் கருதத்தக்க பொருள்கள். 'திருவாய்ப்பாடியில் பொதுவானோர் வர்ஷார்த்தமாக இந்திரனுக்குக் கொடுபோயிடுகிற சோற்றைக் கண்டு, 'நாம்பிறந்துவளர்கிற ஊரிலே சிலர் ஒன்றைத் தேவதாந்தரத்துக்கு ஆக்குகையாவதென்?" என்று அதுவும் பொறுக்க மாட்டாதே 'மலையின்முன்னே கொடுபோய்க் குவியுங்கோள்' என்றுசொல்லித் தான்மலையாயிருந்து ஜீவிக்குமவன்' என்ற ஆன்றோருரைநடையையுங் காண்க.

"அண்டரே பகைவர் வானோர் ஆயரென் றருகு முப்பேர்" என்பது நிகண்டாதலால், 'அண்டர்' என்பது - முதலில் தேவரென்ற பொருளிலும், பின்பு இடையரென்ற பொருளிலும் வந்தது. ஆகண்டலன் என்ற வடமொழிப்பெயர் - (பகைவர்களை) நன்றாகக்கண்டிப்பவனென்று காரணப்பொருள்பெறும். பால்அடிசில் - உவமைத்தொகை. ஒருதானே, கோவர்த்தனமே என்றஏகாரங்கள் - பிரிநிலையோடு சிறப்பு. கல்மாரி - ஆலாங்கட்டிமழை. முன்னம், அம் - சாரியை. கோவர்த்தநமென்றது - (எப்பொழுதும் மாறாத புல்லையுந் தண்ணீரையு முடையதாதலாற்) பசுக்களை விருத்தியடையச்செய்வது என்பதுபற்றிவந்த பெயர். மழை ஒருதுளியேனும் ஆயர்மேலும் ஆக்களின்மேலும் விழாதபடி கண்ணனெடுத்த அம்மலை கவிந்துநின்றதனால், குடையாயிற்று. சண்டப்ரசண்டவேகமுடன்-மிக்க கொ

டியபெருங்காற்றின் மகாவேகத்தோடுகூடின, கொண்டல்களின் கல்மாரியை என்று இயைத்து உரைப்பினுமாம். சண்டப்ரசண்டவேகம்-வடமொழித்தொடர்.

**ஏறுபடுத்த விவரம்:**—கண்ணன் நப்பின்னையென்பவளை மணஞ்செய்துகொள்ளுதற்காக, அவள்தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி, யாவர்க்கும்அடங்காத அசுராவிஷ்டமான ஏழுஎருதுகளையும் ஏழுதிருவுருக்கொண்டு சென்று வலியடக்கித் தழுவின னென்பதாம். கண்ணனைக்கொல்லும்படி கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களில் அரிஷ்டனென்பவன் எருதுவடிவங்கொண்டு பசுக்களையெல்லாம் முட்டி இடைச்சேரியைப் பயப்படுத்திக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனது திருவயிற்றின்மேற் கண்வைத்துக் கொம்புகளைநீட்டிப் பாய்ந்துவர, கண்ணபிரான் அவனைக் கொம்புகளிற் பிடித்து அசையவொட்டாமற்செய்து தன்காலினால் அவன்வயிற்றில் ஓரிடியிடித்து அவன் கழுத்தைப் பிடித்துக் கசக்கி அவனுடையகொம்புகளில் ஒன்றைப்பறித்து அதனாலேயே அவனை அடித்துக் கொன்று விழுத்தின னென்ற கதையையுங் கொள்ளலாம். எருதையழித்தலாகிய பெரும்பாதகத்தைச் செய்தவனெனப் பழித்தவாறு.

'தடுத்தானீறுபடுத்தானே' என்றும் பாடமுண்டு; அதற்கு - ஈறுபடுத்தான் என்றுவது நீறுபடுத்தான் என்றுவது எடுத்து, மேகங்களைச் சிதறடித்து அழிவுசெய்தா னென்று பொருள்கொள்வர். 'தடுத்தானேறுபடுத்தானே' என்றவிடத்துப் பிராசமென்னுஞ் சொல்லணி காண்க.

இதுமுதல் மூன்று கவிகள் - இச்சருக்கத்தின் உகூ-ஆம் கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (கஉக)

கஉஉ. பம்பிப்பரந்தபுன்மேயும்பசுவின்கன்றுங்கோபாலர்
தம்புத்திரருமம்புயத்தோன்றன்மாயையினுலொளித்திடுநா
ளெம்புத்திரருமெங்கோவினிளங்கன்றினமுமெனத்தெளிய
வம்பிற்புரிந்தமாயையிவனல்லாலியாவர்வல்லாரே.

(இ-ள்.) பம்பி பரந்த புல் மேயும் பசுவின் கன்றும் - நெருங்கிப்பரந்த புற்களை மேய்ந்துஉட்கொள்ளுகிற பசுக்களின்கன்றுகளும், கோபாலர்தம் புத்திரரும் - இடையர்களுடைய பிள்ளைகளும், அம்புயத்தோன்தன் மாயையினால் ஒளித்திடு நாள் - பிரமன்செய்த மாயையினால் மறைந்திட்டபோது, எம் புத்திரரும் எம் கோவின் இளங் கன்று இனமும் என தெளிய வம்பின் புரிந்த - 'எங்கள்பிள்ளைகளும் எங்கள்பசுக்களின் இளங்கன்றுகளுமே' என்று (இடையர்கள்) ஐயமறக் கருதுமாறு (கிருஷ்ணன் தானே அத்தனைகன்றுகளும் இடைப்பிள்ளைகளுமாக வடிவுகொண்டு) புதுக்காகச்செய்த, மாயை - மாயையை, இவன் அல்லால் வல்லார் யாவர் - இந்தக்கிருஷ்ணனேயன்றி அறிந்துசெய்யவல்லவர் வேறுயாவர் உளர்? [எவருமில்லை யென்றபடி].

கண்ணன் இளமைப்பருவத்தில் ஆயர்சிறுவர்களுடனே ஆன்கன்றுகளை மேய்த்துவரும் நாட்களில் ஒருநாள், பிரமன் அப்பெருமானது திருவிளையாட்டைக் காணவேண்டுமென்று கருதிக் கன்றுகளையும் சிறார்களையும் தன்மாயையினால்வானத்தேமறைத்துவைக்க,கிருஷ்ணன்,அதனையுணர்ந்து, வண்ணமும் வனப்பும் தோற்றமும் வடிவும் தொழிலும் குணமும் பூணும் துகிலும் தாரும் குழலும் முதலிய அனைத்திலும் சிறிதும்வேற்றுமையில்லாதபடி தானே அச்சிறாரும் கன்றுகளுமாக வடிவெடுத்து அந்தந்தமனைக்குப் போய்வந்துகொண்டிருக்க, இங்ஙனமே ஓராண்டுசெல்ல, நான்முகன் இதுகண்டு நாணமுற்றுச் சிறுவர்களையும் கன்றுகளையுங் கொண்டுவந்து சமர்ப்பித்து வணங்கித் தன் பிழையைப் பொறுத்தருளும்படி கண்ணபிரானைப் பிரார்த்தித்தன னென்பது, இங்குக் குறித்த வரலாறு.

இச்செய்யுள் - எவ்வகைமாயைக்கும் மேம்பட்ட பெருமாயை செய்ய வல்லா னென்று இழித்துரைத்தபடியாம்.

புத்த்ரர் என்ற வடசொல் - புத் த்ரர் என்றுபிரிந்து, (தமதுதந்தைதாயரைப்) புத் என்ற நரகத்திற் சேரவொட்டாது அதனினின்று பாதுகாப்பவரெனக் காரணப்பொருள் பெறும். அம்புயத்தோன் - (திருமாலின்திருநாபித்) தாமரைமலரில் தோன்றினவன். அம்புஜம் - வடசொல்: நீரில்தோன்றுவது; தாமரைக்குக் காரணவிடுகுறி. இதன்மலர்க்கு முதலாகுபெயர். கோ - பக: வடசொல். வம்பிற் புரிந்த மாயை - பிரமன்செய்தமாயைக்குப் பிரதியாகச் செய்த மாயை. 'பம்பிப்பசுந்தண்புன்மேயும்' என்றும் பாடமுண்டு. அல்லால்+யாவர் = அல்லாலியாவர்: தன்ஒழிமெய்ம்முன் யகரம் வர இகரந் தோன்றிற்று; [நன் - மெய் - ரு.] (கஉஉ)

கஉங. அதிரப் பொரும்போ ரஞ்சினனோ வஞ்சா மைகொ லோ தெரியாது, மதுரைப் பதியுந் தன்கிளையும் வாழ்வுந் துறந்து வாரிதிவா,யெதிரொப் பிலாத துவாரகையென் றியற்பேர் படைத்த மாநகரின், முதிரப் பொரும்போர்த் தம்முனுட னிருந்தான் பன்னாண் முரணறுத்தே.

(இ - ள்.) அதிர பொரும் போர் அஞ்சினனோ - (கிருஷ்ணன் தான் ஜராசந்தனோடும் காலயவனனோடும்) ஆரவாரமுண்டாம்படி (ஒருங்கு)போர் செய்தற்கு அச்சங்கொண்டவனாதல்பற்றியோ, அஞ்சாமை கொலோ - அங்ஙனம் போர்செய்தற்குத் தான் அச்சங்கொள்ளாமையினாலேயோ, தெரியாது - (இன்னபடியென்று) தெரிந்திலது; மதுரை பதியும் தன் கிளையும் வாழ்வும் துறந்து - மதுராபுரியையும் (அதில்) தனது உறவினரோடுகூடி வாழ்தலையும் விட்டிட்டு, வாரிதிவாய் - (மேற்குக்)கடலிலே, எதிர் ஒப்பு இலாத துவாரகை என்று இயல் பேர் படைத்த மா நகரில் - தனக்குச்சரியான உவமையைப் பெறாததும் துவாரகையென்று இயற்பெயர் பெற்றதுமான பெரியநகரத்தில் (புகுந்து அதில்), முதிர பொரும் போர் தம்முனுடன் - மிகுதியாகச்செய்யும் போரில்வல்ல தனதுதமையனான பலராமனுடனே, பல் நாள் - அநேகநாள், முரண் அறுத்து இருந்தான் - பகைமையின்றி வீற்றிருந்தான்; (எ - று.)

இதிற்குறித்த விஷயம் முன்பு எழுதப்பட்டது. தனது சொந்தவூரை விட்டு வேற்றூர்க்குச் செல்லுதல், பகைக்குஅஞ்சாமையினாலன்று, அஞ்சுதலினாலேயாம் என்பது, முதலடியின் போக்கு. பகைக்குஅஞ்சி ஊரைவிட்டு ஓடிக் கடலிடையொளித்தவ னென்று இகழ்ந்தவாறும். நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என்ற நால்வகையரண்களுட் கடலாகிய இயற்கை நீரரணைப் பெற்றுள்ளதனாற் பகைவர்வந்துபுகவொண்ணாதபடி பாதுகாப்பமைந்த நகரத்தி லென்பான், 'வாரிதிவாய்நகரில்' என்றான். 'அதிரப்பொரும்போரஞ்சினனோ அஞ்சாமைகொலோதெரியாது' என்றதன்பின், 'முதிரப்பொரும்போர்த் தம்முனுடன் முரணறுத்து இருந்தான்' என்றது, இகழ்ச்சி. தம்முன் - தமக்குமுன்புபிறந்தவன்; முன் - காலவாகுபெயர். இயற்பேர் - சுபாவமான பெயர்: இயற்கைப் பெயர். முரணறுத்துஇருந்தான் என்பதற்கு - போர்செய்தலையொழித்திருந்தா னென்றும் பொருள் கொள்ளலாம். 'இருந்தானொருநாள் முரணறுத்தே' என்றும் பாடமுண்டு.

வேறு.

கஉச. கஞ்சனொடு மாமனொடு காளையமர் செய்தான்
வஞ்சனை யி னுலமரு மெத்தனைய லைந்தான்
றஞ்சமென வேமருவு தம்மினொரு தானே
மிஞ்சிவிர னாரிய மேதினிபு ரந்தான்.

(இ - ள்.) காளை - இளமெருதுபோலக் கொழுத்தவனான கிருஷ்ணன், கஞ்சன் எனும் மாமனொடு - தனது மாதுலனான கம்ஸனுடனே, அமர் செய்தான் - போர்செய்து அவனைக் கொன்றிட்டான்; (மற்றும்), வஞ்சனையினால் அமரும் எத்தனை மலைந்தான் - தந்திரவகைகளால் எத்தனையோ யுத்தங்களையுஞ் செய்துமுடித்தான்; தஞ்சம் எனவே மருவு தமரில் - தன்னையே ஆதாரமாகக்கொண்டு சார்ந்துள்ள சுற்றத்தார்களில், ஒரு தானே மிஞ்சி - தானொருவன்மாத்திரமே மேம்பட்டு, விரகால் உரிய மேதினி புரந்தான் - தந்திரமாகத் தனக்குரியதாக்கிக்கொண்ட இராசசியத்தை ஆள்பவனானான்; (எ - று.)

நெருங்கிய சுற்றத்தார்க்கும் பிறர்க்கும் ஒப்ப அன்பின்றி வஞ்சனையால் தீங்குஇழைத்தவனென்று பழித்தபடியாம். முதலடியிற் குறித்த வரலாறு, கீழ் ௬௭-ஆங் கவியி னுரையில் விவரிக்கப்பட்டது. காளை - உவமையாகுபெயர்; காளையமர்செய்தான் என்பதற்கு - காளைப்பருவத்திலேபோர் செய்தா னென்று உரைப்பினுமாம்; அது - பதினாறுபிராயத்துக்குட்பட்ட கட்டிளமைப்பருவம். கம்ஸனைக்கொன்றதன்பின்பு கிருஷ்ணன் பலராமனுடன் சாந்தீபினி யென்ற அந்தணர்பக்கல் வேதசாஸ்திரங்களை யோதினபின்பு, அக்குருவுக்குத் தக்ஷிணைகொடுத்தற்பொருட்டு, அவனதுவிருப்பத்தின்படி, சங்கினுருவந்தரித்துக்கடலில்வாழ்ந்த பஞ்சஜநனென்ற அசுரனைக் கடலிற்புகுந்து பொருதுகொன்று, முன்பு அவனாற் கவர்ந்துகொண்டுபோகப்பட்ட குருபுத்திரனை மீட்டுக்கொடுத்தமை, பதினெட்டுமுறை ஜராசந்தனைப்பொருதுவென்றமை, காலயவனனென்ற மிலேச்சராஜனைத் தந்திரத்தால் அழியச்செய்தமை, ருக்மியைப்பங்கப்படுத்தியமை முதலிய பலவற்றை உள்ளத்திற்கொண்டு 'வஞ்சனையினால்அமருமெத்தனை மலைந்தான்' என்றான். 'தஞ்சமெனவேமருவுதமர்' என்றது, யதுகுலத்தரசர்களை. தஞ்சம் - பற்றுக்கோடு, ஆதரவு, ரக்ஷகம்.

இக்கவி - ஈற்றுச்சீரொன்று தேமாச்சீரும், மற்றைமூன்றும் விளங்காய்ச்சீர்களுமாகிய அளவடிநான்குகொண்ட கலிவிருத்தம். (௧௨௪)

வேறு.

௧௨௫. அன்னையுந் தாதை தானு மருஞ்சிறை யகத்து வைக
முன்னிரு மூவர் முன்னோர் தங்களை முருக்கு வித்தான்
பின்னொரு தமையன் றன்னைப் பெற்றதா யிருவ ரென்றென்
றிங்கிலஞ் சொல்ல வைத்தா னிவனைவே றியாவ ரொப்பார்.

(இ - ள்.) அன்னையும் - (தனது) தாயும், தாதைதானும் - (தனது) தந்தையும், அருஞ் சிறையகத்து வைக - (தனக்காக) மீளுதற்குஅரிய சிறைச்சாலையிலே இருக்க, முன் இரு மூவர் முன்னோர்தங்களை முருக்குவித்தான் - முன்னேபிறந்த தனது தமையன்மார் ஆறுபேரையும் கொல்வித்தான்; பின் ஒரு தமையன்தன்னை - (அவ்வறுவர்க்கும்) பின்பிறந்த ஒருதமையனை, பெற்ற தாய் இருவர் என்று என்று இ நிலம் சொல்ல வைத்தான் - 'பெற்ற தாயர் (இவனுக்கு) இரண்டுபேர்' என்று இந்நிலவுலகத்தார் பலமுறைசொல்லும்படி செய்தான்; இவனை ஒப்பார் வேறு யாவர் - (இத்தன்மையனான கிருஷ்ணனுக்கு அவனே ஒப்பாவ னன்றி) இவனை ஒப்பவர் வேறுயாவருளர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

தாய்தந்தையர்க்கும் தமையன்மார்க்கும் பெருந்தீங்குவிளைத்த கொடிய னென்று நிந்தித்தவாறும். தேவகியின் எட்டாவதுபிள்ளை கம்ஸனைக்கொல்லு மென்று அசரீரிவாக்குச் சொன்னதும், திருமகள் தேவகியின் எட்டாவதுகர்ப்பத்தில் தான் அவதரித்துக் கம்ஸனைக் கொல்லுதற்குத் தேவர்கட்கு வாக்குதத்தஞ்செய்தருளிய செய்தியை, [illegible] வசுதேவதம்பதி, கம்

சன் மிக்கோப மடைந்து,தேவகியையும் வசுதேவரையும் சிறைச்சாலையில் தனியிட்டுவைத்தமைகொண்டு, தாய்தந்தையர் சிறையிலிருத்தற்குக் கண்ணன் காரணமாக உரைக்கப்பட்டனன். 'முன்னிருமூவர்முன்னோர்தங்களை முருக்குவித்தான்' என்று சொன்னது,கம்சனாற்கொல்லப்பட்ட தேவகியின் புத்திரரறுவரும் திருமாலின்கட்டளைப்படி மாயையினால் தேவகியின் கருப்பத்திற் சேர்க்கப்பட்ட இரணியகசிபுகுமாரராதலால். தன்னைக் கம்சன் கொல்லாதபடி பாதுகாத்துக்கொண்ட தந்திரம்வல்லவனான கிருஷ்ணன் தனக்குமுன்பிறந்தவராறுவரை அங்ஙனமே கம்சன்கொல்லாதபடி காத்தற்கு யாதோருபாயமுஞ் செய்யாதுவிட்டமையே,அவன் அத்தமையன்மாரைக் கொல்வித்ததாகக் குற்றஞ் சாற்றப்பட்டது. அவ்வறுவர்பெயர்:— கீர்த்திமான், சுஷேணன், உதாயு, பத்திரசேனன், ருசுதாசன், பத்திரதேவன் என்பன; (இவை, அவர்கட்கு முற்பிறப்பி லிருந்த பெயர்.) பின்பு தேவகியின் ஏழாவதுகருப்பத்தைத் திருமாலின்நியமனப்படி மாயையானது ஏழாவதுமாதத்தொடக்கத்திலே நடுராத்திரியில் தேவகியின்வயிற்றினின்று பெயர்த்து ரோகிணியின்கருப்பத்திற் சேர்த்துவிட, அங்குநின்று அவதரித்த பலராமனுக்கு, தேவகி ரோகிணி என்ற இருவரும் தாயராதல் காண்க. "ஒருதாயுதரத்திலோரறுதிங்களுறைந்தபின்னை, ஒருதாய்வயிற்றில்வந்துற்ற தெம்மாய முரைத்தருளே" என்றது இங்கு நோக்கத்தக்கது.

தமையனான பலராமனுக்குத் தாயிருவராக அமைத்தற்குக் காரணம், தம்பியாகிய கிருஷ்ணன் திருமாலாகிய தனது நிஜரூபத்திலிருந்து மாயைக்கு இட்ட கட்டளையேயாதல் கொண்டு, அச்செயலைச் சிசுபாலன் கிருஷ்ணன்மே லேற்றிக் கூறினன். முருக்கு - முருங்கு என்பதன் பிறவினை; மெலி வலியாதல், பிறவினைக்குறி. நிலம் - இடவாகுபெயர். 'பெற்றதாயிருவர்' என்றது, ஒருமைப்பன்மைமயக்கம். 'என்றென்று' என்ற அடுக்கு-வியப்பினாற் பலகாற்கூறுதலை விளக்கும். வேறியாவர் - குற்றியலிகரம்.

இதுவும், அடுத்த கவியும் - சுசு - ஆங் கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (கஉ௫)

கஉசு. என்றுகொண் டெண்ணி நாவுக் கிசைந்தன வுரைக ளெல்லா
மொன்றினொன் றுச்ச மாக வுயர்ச்சியுந் தாழ்வுந் தோன்றக்
கன்றிய மனத்தி னோடுங் கட்டுரை செய்தான் மன்றற்
றென்றலஞ் சோலை சூழுஞ் சேதிநா டுடைய கோவே.

(இ - ள்.) என்று கொண்டு - என்று இவ்வாறாக, எண்ணி - (கிருஷ்ணனுடைய செய்திகளையும் குணஞ்செயல்களையும்)குறித்து, நாவுக்கு இசைந்தன உரைகள் எல்லாம் - வாயில்வந்த வார்த்தைகளையெல்லாம், ஒன்றின் ஒன்று உச்சம் ஆக - ஒன்றுக்குமேல் ஒன்றாக, உயர்ச்சியும் தாழ்வும் தோன்ற - உயர்வும் இழிவும் புலப்பட, கன்றிய மனத்தினோடும் கட்டுரை செய்தான் - கோபதாபங்கொண்ட மனத்துடனே தொடுத்துரைத்தான்: (யாவனெனில்:—) மன்றல் தென்றல் அம் சோலை சூழும் சேதி நாடு உடைய கோ - நறுமணமுள்ள தென்றற்காற்று வீசுகிற அழகிய சோலைகள் சூழ்ந்த சேதிதேசத்தை (த் தனதுஆளுகையின்கீழ்) உடைய அரசனான சிசுபாலன்.

'என்றுகொண்டு' என்பதில், கொண்டு - அசை; இது - தொல்காப்பியத்து "கிளந்தவல்லவேறுபிறதோன்றினுங், கிளந்தவற்றியலா னுணர்ந்தனர் கொளலே" என்ற இடைச்சொல்லியற்புறனடைச்சூத்திரத்தாற் கொளப்படும்: "என்றுகொண்டினையகூறி" என்ற கம்பராமாயணமுங் காண்க. உச்சம் - வடசொல். சிசுபாலன் கூறிய தூஷணைச்சொற்களினுள்ளே புகழ்ச்சிப்பொருளும் வெளிப்படையாகவேனும் குறிப்பாகவேனும் தோன்றுதலைப்பற்றி, 'உயர்ச்சியும் தாழ்வும் தோன்ற' எனப்பட்டது. அங்ஙனம் இரு

வகைக்கருத்தாகிகழ்தல், கீழ்ச்சென்ற பத்துக்கவிகளையும் உய்த்துநோக்குமிடத்துத் தானேவிளங்கும். மாயவனுனகண்ணனது திருவிளையாடல்களில் ஈடுபடாதவர்க்கு அவை குற்றமாகவும், ஈடுபடுபவர்க்கு அவைதாமே குணமாகவுந் தோன்றுமென்க. உண்மையிலுயர்ந்தகுணஞ்செயல்களையும் இழிந்தனவாகக்கொண்டு கூறினன் சிசுபாலனென்பது போதரும். சிசுபாலன் வாக்கியங்களில் கண்ணனைப் புகழ்ந்தவைபோல மேல்நோக்கில் தோன்றுகின்றவை சிலவும் அவன்கருத்தால் வஞ்சப்புகழ்ச்சியணிவகைகொண்டு கிருஷ்ணனைப் புகழ்கிறதுபோலப் பழித்தவையேயா மென்க. தென்றல் பொதியமலையிலிருந்து சந்தனமரத்தின்வாசனையோடு வீசுதலால், 'மன்றல் தென்றல்' எனப்பட்டது. மன்றலைச் சோலைக்கும்அடைமொழியாக்கலாம்.

வேறு.

[இவ்வகையாகச் சிசுபாலன் சொன்ன அளவிறந்தநிந்தனைச்சொற்களைக் கேட்ட கண்ணன் அவனோடுபோர்செய்தற்பொருட்டுத் தேரி லேறுதல்.]

கஉஎ. திண்ணியநெஞ் சினனான சிசுபாலன் றன்னெஞ்சிற் றீங்கு தோன்ற, வெண்ணியமன் பேரவையி னியம்பியபுன் சொற்களெல்லா மெண்ணி யெண்ணிப், புண்ணியர்வந் தினிதிறைஞ்சும் பூங்கழலோன் வேறொன்றும் புகலா னாகிப், பண்ணியதன் புரவிநெடும் பருமணித்தேர் மேற்கொண்டான் பரிதி போல்வான்.

(இ - ள்.) திண்ணிய நெஞ்சினன் ஆன சிசுபாலன் - கடுமையுள்ள மனமுடையவனான சிசுபாலன், தன் நெஞ்சில் தீங்கு தோன்ற - தனது மனத்திலுள்ளகெட்டஎண்ணம் வெளியாம்படி, எண்ணிய மன் பேர் அவையின் இயம்பிய - (அனைவராலும்) நன்குமதிக்கப்பட்ட நிலைபெற்ற பெரிய அச்சபையிற் கூறின, புல் சொற்கள் எல்லாம் - தூஷணைச்சொற்களெல்லாவற்றையும், புண்ணியர் வந்து இனிது இறைஞ்சும் பூ கழலோன் - நல்வினையையுடையவர்கள் வந்துஅடுத்து இனிமையாக [அன்போடு] வணங்குகிற தாமரைமலர்போன்ற திருவடிகளையுடையவனான கண்ணபிரான், எண்ணி - கணக்கிட்டு, எண்ணி - ஆலோசித்து, வேறு ஒன்றும் புகலான் ஆகி - (அந்நிந்தனைச்சொற்களுக்கு) மாறாக ஒருவார்த்தையையுஞ் சொல்லாதவனாய், பரிதி போல்வான் - சூரியனைப்போன்று, பண்ணிய புரவி நெடும் பரு மணி தன் தேர் மேற்கொண்டான்-அலங்கரிக்கப்பட்டகுதிரைகள்பூட்டிய பெரிய பருத்தமணிகள்கட்டிய தனது தேரின்மேல் ஏறினான்; (எ-று.)

சிசுபாலன் நூறுபிழைசெய்யுமளவும் பொறுத்தருள்வதாக அவனது தாயான தனதுஅத்தைக்குத் தான் முன்பு வாக்குதத்தஞ்செய்திருந்ததற்கு ஏற்பக் கண்ணபிரான் அவனதுதூஷணைவாக்கியங்களாகிறசொற்பிழைகளை எண்ணித் தொகையிட்டுக்கொண்டேவந்து அவை நூற்றுக்குமேற்பட்ட பின்பு பொறுக்கமாட்டாதவனாய் அவனையழிக்கக்கருதிப்போர்க்குஎழுந்தனனென்பார், 'புன்சொற்களெல்லாம் எண்ணியெண்ணி வேறொன்றும் புகலானாகித் தேர்மேற்கொண்டான்' என்றார். இவ்வாறு கண்ணபிரான் சிசுபாலனது நூறுபிழைகளைப் பொறுத்தருளியதுபற்றியே "பிழைநூறும் சான்றோர் பொறுப்பர்" என்ற நீதிவாக்கியம் வழங்கலாயிற் றென்க. "க்ரியாகேவலமுத்தரம்" என்றபடி வாயினலொன்றுஞ்சொல்லாமற் காரியத்திலே வல்லமைகாட்டுதல் பெரியோரியல் பாதலால், கண்ணன்வேறொன்றும் புகலானாகித் தேர்மேற்கொண்டான். திண்ணியநெஞ்சு - பெரியோரிடத்து மதிப்பும் பயபக்திவிசுவாசங்களும் இல்லாத கடினசித்தம். பிறந்தபொழுதே தொடங்கிக் கண்ணனிடத்துப் பகைமைபூண்டவனும் முன்னைப் பிறப்புக்களிலும் பகைவனுதலால் [illegible] வான சிசுபாலன் சொன்ன சொல் ஒவ்வொன்றிலும் [illegible] கிருஷ்ணனிடமும் புலனுதலால், 'திண்ணியநெஞ்சினனான சிசுபாலன்

தன்னெஞ்சில் தீங்கு தோன்ற இயம்பிய புன்சொற்கள்' எனப்பட்டன. மன்அவை - வினைத்தொகை. மன் பேர்அவை - அரசர்கள்கூடிய பெரியசபை எனினுமாம். புண்ணியர் - எம்பெருமானைச்சரணமடைந்து உய்தற்குஏற்ற நல்வினையுடையோர். புரவிபண்ணுதல்-குதிரைக்குச் சேணம்முதலியன இடுதல். மணி-அடிக்கும்மணி. பருமணித்தேர்-நல்லிலக்கணமுழுதமைந்த விலையுயர்ந்த மூழுரத்தினங்கள் பதிக்கப்பெற்ற தேர் எனினுமாம். சூரியன் இருளையழித்து உலகத்துஒளிசெய்தற்குச் சிறந்ததொருதேரின் மீது உதித்தல்போல, 'அச்யுதபானு' எனப்படுகிற கிருஷ்ணன் கொடிய பகைவனைத் தொலைத்து உலகத்துக்குநன்மைசெய்தற்பொருட்டுச் சிறந்ததொரு தேரிலேறினு னென்பது, 'தேர்மேற்கொண்டான் பரிதிபோல்வான்' என்றதன் கருத்து. 'திண்புரவி' என்றும் பாடமுண்டு.

இதுமுதல் நான்குகவிகள் - இச்சருக்கத்தின் முதற்கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (௧௨௭)

[கண்ணன் சிசுபாலனைப் போர்க்குஅழைத்தல்.]

௧௨௮. எந்நாட்டிலவனிபருமீண்டியவித்தொல்லவையினிசைத்தசேதி, நன்னாட்டுக்கதிபதியாநரபாலநின்மாற்றநன்றுநன்று,கன்னாட்டும்படியாகவிருவோரும்பொருதறிதுங்கடிதேகென்று, தன்னாட்டமிகச்சிவந்தான்கரியவடிவினிற்புனைந்ததண்டுழாயோன்.

(இ - ள்.) 'சேதி நல் நாட்டுக்கு அதிபதி ஆம் நரபால - நல்லசேதிதேசத்துக்குத்தலைவனான மனிதராஜனே! எ நாட்டில் அவனிபரும் ஈண்டிய - எந்தத்தேயத்துஅரசர்களும் கூடிய, இ தொல்அவையின் - இந்தப்பெரியசபையிலே, இசைத்த - சொன்ன, நின் மாற்றம் - உனதுவார்த்தை, நன்று நன்று - மிக அழகியதாயிருந்தது; கல் நாட்டும் படி ஆக - சிலாஸ்தாபனஞ்செய்யும்படி, இருவோரும் பொருது அறிதும் - நாமிருவரும் (போர்செய்து நமக்குள் இருக்கிற உயர்வுதாழ்வு) அறிவோம்; கடிது ஏகு - விரைவிற் புறப்பட்டு வா,' என்று - என்று(சிசுபாலனைநோக்கிச்)சொல்லி (அவனைஅறைகூவி), தன் நாட்டம் மிக சிவந்தான் - (கோபத்தினால்) தனதுகண்கள் மிகச்செந்நிறமடையப்பெற்றான் :(யாவனெனில்:—)கரிய வடிவினில் புனைந்த தண் துழாயோன் - கருநிறமான (தனது)திருமேனியில் தரித்த குளிர்ச்சியான திருத்துழாய்மாலையையுடையவனாகிய கண்ணபிரான்; (எ - று.)

எந்நாட்டிலவனிபரும் - எல்லாநாட்டுஅரசர்களு மென்றபடி. தொன்மை - முதுமை: சபையாரது அறிவொழுக்கங்களின்முதிர்ச்சியைச் சபையின்மேலேற்றி, 'தொல்அவை' என்றார். 'சேதிநன்னாட்டுக்கு அதிபதியாம் நரபால' என்று சிசுபாலனைக் கண்ணன் விளித்தது, 'நீ நிலவுலகத்தில் ஒருதேசத்துக்குஅதிபதியான மனிதராசன், நானோ மூவுலகத்துக்கும் அதிபதியான தேவராசன்' என்று காட்டுதற்கு: 'நன்று' என்றது, எதிர்மறையிலக்கணை; சிறிதும்நன்றன்று என்றபடி. 'நன்றுநன்று' என்ற அடுக்கு - வெகுளிபற்றியது.

சிறந்தஒருவீரன் போரிற் புறங்கொடாதுநின்று பகைவராலிறந்தால் அவனதுபெயரையும் பெருமையையும் எழுதிக் கல்லுருத்தாபித்தல் மரபாதலால், 'கல்நாட்டும்படியாகப் பொருது' எனப்பட்டது. இது - புறப்பொருளிலக்கணத்தில் 'நடுகல்' எனப்படும். இந்நூற்சிறப்புப்பாயிரத்தில் "கல்நாட்டியமர்பொருது" என்பதும் இது. "பலர் என்னை முன்நின்று கல்நின்றவர்" என்ற திருக்குறளையுங் காண்க. "கன்னின்றான் எந்தை" என்றார் பிறரும். 'நாட்டும்படியாக' என்றதில், 'ஆக' என்பது - அசை. அறிதும் - முன்னிலையைஉளப்படுத்திய தன்மைப்பன்மை. 'இருவோரும் அறிதும்' என்றது - தன்மையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி; 'இருவோரும்' என்றிருப்பின், வழாநிலையாம். நாட்டம்-நாடுதற்கருவி; நாடுதல்-

பார்த்தல்: நாடு - பகுதி, அம் - கருவிப்பொருள்விகுதி; டகரவொற்று - விரித்தல்விகாரம். 'காட்டம் சிவந்தான்' என்றும், 'கரியவடிவினில்' என்றும் ஓரடியில் வந்தது, முரண்தொடையாம். (கஉஅ)

[சிசுபாலனும் தேரிலேற, இருவரும் போர்தொடங்குதல்.]

கஉகூ. சேதிகுலநரபதியுஞ்செருப்புரிதற்கஞ்சுவனோதேரிலானுன், மோதிவலம்புரியூதமுகிலினங்கண்முழங்குவபோன்முரசமார்ப்ப, வேதியரோடவையிருந்தவேந்தரெல்லாமதிசயிப்பவிமானந்தோறுஞ், சோதிமுடியமரர்வரநகர்ப்புறத்திலமர்புரியத்தொடங்கினரே.

(இ - ள்.) சேதி குலம் நரபதியும் - சேதிநாட்டரசர்குலத்தில்தோன்றிய அரசனான சிசுபாலனும், செரு புரிதற்கு அஞ்சுவனோ - போர்செய்தற்குப்பயப்படுவனோ? [பயப்படான்என்றபடி]; (ஆகவே), தேரில் ஆனுன் - (உடனே அவனும்) தேரில்ஏறினன்; (பின்பு இருவரும்), மோதி வலம்புரி ஊத - ஒன்றற்கொன்றுஎதிராக வலம்புரிச்சங்குகள் முழங்கவும், முகில் இனங்கள் முழங்குவ போல் முரசம் ஆர்ப்ப - மேகக்கூட்டங்கள் இடிமுழக்கஞ்செய்வனபோலப் போர்ப்பறைகள் ஆரவாரஞ்செய்யவும், வேதியரோடு அவை இருந்த வேந்தர் எல்லாம் அதிசயிப்ப - முனிவர்களும் அவர்களோடு சபையில்வீற்றிருந்த அரசர்களும் ஆகிய அனைவரும் ஆச்சரியமடையவும், சோதி முடி அமரர் விமானம் தோறும் வர - ஒளியுள்ள கிரீடந்தரித்த தேவர்கள் விமானங்களிலேறி(ப் போர்காணுதற்கு வானத்திலே)வரவும், நகர் புறத்தில் அமர் புரிய தொடங்கினர் - அந்தஇந்திரப்பிரத்தநகரத்திற்கு வெளியிடத்திலே (ஒருவரோடொருவர்)போர்செய்யத் தொடங்கினார்கள்.

'சேதிகுலம்' என்ற சொற்றொடர் - இலக்கணையாய்ச் சேதிநாட்டரசர்குல மென்ற பொருளோடு, வினைத்தொகையாய்(ப் பகைவர்களை)ச்சேதிக்கின்ற [துணிக்கிற] குலமென்றும் ஒருபொருள்படுதலால், அப்படிப்பட்ட குலத்தில் தோன்றிய அரசனும் போர்செய்ய அஞ்சுவனோ என்றார். சேதிநாட்டரசர் யாரோடும் போர்செய்தற்கு அஞ்சாத நெஞ்சுறுதிபடைத்தவ ரென்பதும் உணர்க. உம்மை - இறந்ததுதழுவியஎச்சத்தோடு சிறப்பும் பொருளது. ஓ - எதிர்மறை. ஊத, ஆர்ப்ப, அதிசயிப்ப, வர - வினைச்செவ்வெண். முழங்குவ-பெயர்.விமானம்-வடசொல்; தேவரூர்தி.சோதிஎன்பதை முடிக்கும் அமரர்க்கும் கூட்டலாம்.நகரத்துச் சனங்களுக்கு யாதொருதீங்கும் உண்டாகாமைப்பொருட்டு நகர்ப்புறத்தில் அமர்செய்யலாயினரென்க.

[சேனைகளோடும் சுற்றத்தாரோடும் கூடிய கண்ணனும் சிசுபாலனும் போர்செய்தல்.]

கங0. ஆதிவருகதிப்பரியுமணிவயிரத்திண்டேருமனிலமென்ன, மோதிவருகடகளிறுங்காலாளும்பொறாதுரகர்முடிகள்சோர, யாதவனுநரபதியுமிருங்கிளையும்பெருங்கிளையோடெதிரிலாத, சேதிகுலநரபதியுஞ்செய்தவமர்சுராசுரரிற்செய்தாருண்டோ.

(இ - ள்.) ஆதி வரு கதி பரியும் - மண்டலமாயோடிவருகிற நடையில் வல்ல குதிரைகளும், அணி வயிரம் திண் தேரும் - அழகிய மரவைரத்தாலாகிய வலிய தேர்களும், அனிலம் என்ன மோதி வரு கட களிறும் - காற்றுப்போல (மிக்கவிசையும் மிக்கவலிமையுங் கொண்டு) தாக்கிவருகிற மதயானைகளும், காலாளும் - பதாதிகளும், (ஆகிய சதுரங்கசேனைகளின்மிகுதியாலாகிய அதிகபாரத்தை), பொறாது - தாங்கமாட்டாமல், உரகர் முடிகள் சோர - (கீழிருந்து பூமியைத்தாங்குகிற) நாகஜாதியார்தலைகள் சாய, யாதவன் ஆம் நரபதியும் இருங் கிளையும் - யதுகுலத்தில்தோன்றிய இறைவனாகிய அரசனும் அவனுடன்நின்ற அவனது மிக்ககற்றத்தவர்களும், பெருங் கிளையோடு எதிர் இலாத சேதிகுல நரபதியும் - மிக்கசுற்றத்தவருடன்கூடிநின்ற ஒப்பற்ற சேதிநாட்டரசர்குலத்தவனான சிசுபாலனும், செய்த - (ஒரு

வரோடொருவர்)செய்த, அமர் - யுத்தம்போன்ற யுத்தத்தை, சுர அசுரரில் செய்தார். உண்டோ - தேவாசுரர்களிலுஞ் செய்தவ ருண்டோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

தேவாசுரயுத்தத்திலுங் கொடியயுத்தத்தைச் செய்யலாயின ரென்பதாம். வேள்விக்குவரும்போதே இருவரும் தம்தம்சேனைகளுடன் வந்திருந்தன ரென்றும், அவரவரது அன்புடைசுற்றத்தார் அவரவர்க்குப் போர்த்துணையாயின ரென்றும் அறிக. குதிரை, சேனையின்நால்வகை அங்கத்தில் தான் ஒன்றாகவிருத்தலேயன்றி, மற்றோரங்கமாகிய தேர்செல்லுதற்குத் தான்சாதனமு மாதலால், முதலில் நிறுத்தப்பட்டது. குதிரையினுதவிகொண்டு இயங்குவதாதல், அதனையடுத்துத் தேரைநிறுத்தியதன் காரணம். ஆதி - மண்டலமாயோடல்; இது குதிரையின்கதிவகைகளி லொன்று; வலசாரி, இடசாரி முதலிய கதிவிகற்பங்கட்கும் இது உபலக்ஷணம். வயிரத்தேர் - வச்சிரரத்தினம்பதித்த தேருமாம் அகிலம் - வடசொல். காலாள் - யானை தேர் குதிரை யென்னும் வாகனமின்றிக் கால்களினால் நடந்துசெல்லும் வீரர். உரகர் என்ற வடசொல் - (கால்களில்லாமையால்) மார்பினாலூர்ந்துசெல்பவ ரென்று காரணப்பொருள்படும்; உரஸ் - மார்பு. இங்கு, உரகர் - சர்ப்பராஜனான ஆதிசேஷனும், வாசுகிமுதலிய அஷ்டமகா நாகங்களும்; வாசுகிமுதலியோர் கிழக்குமுதல் எண்திசையிலும் இருந்து பூமியைத்தாங்க, ஆதிசேஷன் நடுவில்நின்று பூமியைத் தாங்குகின்றனன். யாதவன் - வடமொழித்தத்திதாந்தநாமம். கிளை - மரத்தைக்கிளைபோல்ஒருவரைத்தழுவிநிற்கும் உறவினர்க்கு உவமையாகுபெயர். (க௫0)

வேறு.

[இதுமுதல் நான்குகவிகள் - இருதிறத்துச்சேனைகளும் போர்செய்தலை யுணர்த்தும்.]

க௫க. யானை மேல்வரு நிருப ருந்திறல் யானை மேல்வரு நிருபருஞ்
சோனை மாமுகி லேழு மேநிக ரென்ன வம்புதொ டுத்தலிற்
றானை யாறுநி றைந்து பல்லணி யாகி மிஞ்சிய சதுர்விதச்
சேனை யாவையு மெய்சி வந்தன சிந்தை மாமலர் கருகவே.

(இ - ள்.) யானைமேல் வரு நிருபரும் - (கிருஷ்ணன்பக்கத்தவராய்) யானைமேலேறிவந்த அரசர்களும், திறல் யானைமேல் வரு நிருபரும் - (சிசுபாலன்பக்கத்தவராய்) வலிய யானைமேலேறிவந்த அரசர்களும்,சோனை மா முகில் ஏழுமே நிகர் என்ன - விடாப்பெருமழைபொழியும் பெரிய ஏழுமேகங்களுமே(தங்கட்குச்)சமானமென்றுசொல்லும்படி,அம்பு தொடுத்தலின்-(இடைவிடாது) அம்புமழை சொரிந்ததனால், தானை ஆறும் நிறைந்து பல் அணி ஆகி மிஞ்சிய சதுர்விதம் சேனை யாவையும் - அறுவகைப்படைகளும் நிரம்பிப் பற்பலஅணிவகுப்புக்களாய் மிகுந்திருக்கிற நால்வகைச்சேனைகளிலுள்ள பிராணிகளும், (புண்பட்டு), சிந்தை மா மலர் கருக மெய் சிவந்தன- (தம்மது) மேலான இதயகமலம் வாடிக் கருக இரத்தப்பெருக்கினால் உடல் சிவக்கப்பெற்றன; (எ - று.)

ந்ருபர் - வடசொல்: மனிதரைக்காப்பவ ரென்று பொருள்படும்; ந்ரு - மனிதர். முகில்ஏழ் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புஷ்கலாவர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன. தானைஆறு - மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்பன. 'சிந்தைகருகமெய்சிவந்தன'-முரண்தொடை. உம்மை ஐந்தனுள், முதலிரண்டும் - எண்ணுப்பொருளன; மற்றை மூன்றும் - முற்றும்மை. ஏகாரம் [illegible], முன்னது - பிரிநிலையோடு தேற்றம்; பின்னது - [illegible] அரசர்கள் மேகம்போல அம்புமழைசொரிந்ததனாற் படைகள் [illegible] என ஒருபொருள்தொனித்தலுங் காண்க. "பூவிற்குத் [illegible]

யே" என்றபடி எல்லாமலர்களிலுந்தாமரைசிறத்தலால், அடைமொழிகொடாதவாளா 'மலர்' எனப்பட்டது; மாமலரெனவேதாமரையென்றவாறுமாம்.

இதுமுதல் ஆறுகவிகள்-பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (கருக)

கரு௨. ஓரிரண்டுவருதினிக்குளுமுயர்தடங்கிரியொப்பவே
யீரிரண்டுவிதத்தினுமியம்பலுற்றனவெண்ணில்பஃ
றேரிரண்டணியுருளிளோடுருள்சென்றுமுட்டினதீயிடிக்
காரிரண்டெதிர்மலையுமாறெனவண்டபித்திகலங்கவே.

(இ-ள்.) ஓர் இரண்டு வருதினிக்குளும் - (கிருஷ்ணன் சிசுபாலன் என்னும்) இருதிறத்தார்சேனைகளிலும், உயர் தட கிரி ஒப்ப-உயர்ந்தபெரிய மலைகளுக்கு ஒப்பாக, ஈர் இரண்டு விதத்தினும் இயம்பல் உற்றன-நான்குவகையினாற் பெயர்குறித்துச்சொல்லப்படுவனவான, எண் இல் பல் தேர்-அளவிறந்த பலதேர்களின், இரண்டு அணி உருளினோடு உருள் - அழகிய இரண்டு முன்சக்கரங்களோடு முன்சக்கரங்கள்,— தீ இடி கார் இரண்டு எதிர் மலையும் ஆறு என - நெருப்புமயமான இடியையுடைய இரண்டுமேகங்கள் (ஒன்றோடொன்று) எதிர்த்துப்போர்செய்யும் விதம்போல, அண்டபித்தி கலங்க சென்று முட்டின -(அதிர்ச்சியினால்)அண்டகோளத்தின் சுவர் நிலைகலங்கும்படி எதிரோடித்தாக்கின; (எ-று.)

தம்மேலேறிய அதிரதர் மகாரதர் ஸமரதர் அர்த்தரதர் என்ற நால்வகை வீரர்களின் தகுதிக்கேற்பத்தேர்கள் நால்வகையாகப் பகுத்துக்கூறப்படுதலால், 'ஈரிரண்டுவிதத்தினு மியம்பலுற்றன தேர்' என்றார்; "ஈரிரு தேரினர்" என்பர் பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்தும். பல்+தேர்=பஃறேர்: நிலைமொழியீற்று லகரம் தகரம்வர ஆய்தமாத் திரிதற்கு "குறில்வழி லளத் தவ்வணையி னாய்த,மாகவும்பெறூஉ மல்வழியானே" என்பதும், லகரத்தின்முன் வருமொழிமுதல்தகரம் றகரமாத்திரிதற்கு "னலமுன் றனவும் ணளமுன் டணவும், ஆகுந் தநக்க ளாயுங்காலே" என்பதும் விதியாம். 'எண்ணிலாத் தேர்' என்றும் பாட முண்டு. வருதினீ, அண்டபித்தி - வடசொற்கள். 'அண்டபித்தி கலங்க முட்டின' என்பது-உயர்வுநவிற்சியணி. 'தடங்கிரியொப்ப' என்றும், 'தீயிடிக்காரிரண் டெதிர்மலையுமா றென' என்றும் ஒப்புமை கூறியது, உவமையணி. இரண்டும் சேர்ந்துவந்தது, சேர்வையணியாம். காரிரண்டு எதிர்மலைதல், இல்பொருளுவமை. (கரு௨)

கருரு. சிங்கமொன்றுடனொன்றுசீறுசெருக்கெனும்படிசேனைவாய்
வங்கர்கொங்கணர்துளுவராரியர்மகதரொட்டியர்மாளவர்
கங்கர்கொங்கர்தெலுங்கர்சீனர்கலிங்கர்சிங்களர்கௌசல
ரங்கர்சோனகரானவீரரதிர்ந்துதங்களினமர்செய்தார்.

(இ-ள்.) சேனைவாய்- இருதிறத்துச்சேனைகளிலுமுள்ள, வங்கர் கொங்கணர் துளுவர் ஆரியர் மகதர் ஒட்டியர் மாளவர் கங்கர் கொங்கர் தெலுங்கர் சீனர் கலிங்கர் சிங்களர் கௌசலர் அங்கர் சோனகர் ஆன வீரர் - வங்கம்முதற் சோனகமீறாகச் சொல்லப்பட்ட பதினாறுதேசத்தவர்களானவீரர்களும்,—சிங்கம் ஒன்றுடன் ஒன்று சீறு செருக்கு எனும்படி - சிங்கங்கள் ஒன்றோடொன்று சீறிக் களித்துப் போர்செய்யுந்திறத்தை உவமைகூறும்படி, அதிர்ந்து தங்களின் அமர் செய்தார் - ஆரவாரித்துத் தங்களுக்குள்ளே [ஒருவரோடொருவர்] போர்செய்தார்கள்; (எ-று.)

உவமையணி. வங்கம்முதலியன-ஐம்பத்தாறுதேசங்களிற் சேர்ந்தவை. இவற்றிற் பெரும்பாலன, பதினெட்டுப்பாஷைகள் வழங்குந் தேசங்களாகவுங் குறிக்கப்பட்டுள்ளன. துளுவம் - பஞ்சதிராவிடதேசங்களில் ஒன்று; மற்றவை - தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம். ஆரியர் - விந்தியமலைக்

கும் இமயமலைக்கும் இடையிலே கிழக்கும்மேற்குங் கடலெல்லையாகவுள்ள ஆர்யாவர்த்த மெனப்படுகிற புண்ணியபூமியில் வாழ்பவர். ஒட்டியம் - ஓட்ர தேசம். ஸ்ரீசைலம், பீமேச்வரம், ஸ்ரீகாளஹஸ்தி என்ற மூன்று சிவலிங்க ஸ்தானங்களை யுடைய தேசம், அக்காரணத்தால், த்ரிலிங்கதேச மெனப் பெயர்பெறும்; அது, தெலுங்க மென விகாரப்பட்டது. இதுவே, தெலுங்குபாஷைக்குஉரிய நாடு. சிங்களம் - ஸிம்ஹளம் என்ற வடசொல்லின் சிதைவு; அது இலங்கைத்தீவு; ஈழநாடு. கோஸலர் - கோஸலதேசத்தார்; வடமொழித்தத்திதாந்தநாமம். அங்கம் - சிவபிரானது நெற்றிக்கண்ணின் நெருப்பினா லெரிக்கப்பட்ட மன்மதனது அங்கம் விழுந்தஇடமாதல்பற்றி வந்த பெயர். அதிர்ந்து - கர்ச்சித்துச சிங்கநாதஞ்செய்து. சிங்கம் - ஸிம்ஹம் என்ற வடசொல் சிதைந்தது; (யானைமுதலியமிருகங்களையெல்லாம்) ஹிம்ஸிக்கவல்லதாதலால் ஹிம்ஸ மென வரவேண்டிய பெயர்,எழுத்துநிலை மாறி, ஸிம்ஹம் என வழங்கப்பட்ட தென்க. சேனைவாய்,வாய் - ஏழனுருபு. பற்பலபாஷைகள் பேசும் பலவேறுதேசத்துச்சனங்கள் போர்வீரர்களாய்ச் சேனைகளில் வந்து அமர்தல், இயல்பு; அன்றியும், அவ்விராயசூயயாகத்துக்குவந்த பற்பலதேசத்துஅரசர்களின் சேனைகளி லுள்ள அவ்வத்தேசத்து வீரர்கள் இவ்விருவர்க்கும் சகாயமாய் இருதிறத்துச்சேனைகளிலும் புக்கு நின்று போர்செய்ய லாயின ரென்க. (௧௩௩)

[வாத்தியகோஷம்.]

௧௩௪. வெருவரும்படிகம்புகொம்புவிதங்கொண்மாமுரசாதியா
விருவர்தம்படைகளினுமூழியெழுந்தகாலெனவதிர்தலான்
மருவியெண்டிசைமுகமுநிற்பனமத்தவாரணகன்னமுந்
திருவிரும்புபுயத்துவானவர்செவிகளுஞ்செவிடானவே.

(இ - ள்.) இருவர்தம் படைகளினும்- (கிருஷ்ணனும் சிசுபாலனு மாகிய) இருவர்களுடைய சேனைகளிலும், கம்பு கொம்பு விதம் கொள் மா முரசு ஆதி ஆ - சங்குகளும் ஊதுகொம்புகளும் பலவகைகொண்டபெரியமுரசங்களும் முதலாக (ப் போர்க்குஉரிய வாத்தியங்கள்), வெருவருமபடி - (கேட்பவர்க்கு) அச்சமுண்டாம்படி, ஊழி எழுந்த கால் என அதிர்தலால் - கற்பாந்தகாலத்தில் எழுந்துவீசுகிற காற்றுப்போல ஆரவாரித்தலால்,—எண் திசை முகமும் மருவி நிற்பன மத்த வாரண கன்னமும் - எட்டுத்திக்குக்களினிடத்தும் பொருந்திநிற்பனவான மதயானைகளின் காதுகளும், திரு விரும்பு புயத்து வானவர் செவிகளும் - வீரலக்ஷ்மி விரும்பிவசிக்குந் தோள்களையுடைய மேலுலகவாசிகளான தேவர்களின் காதுகளும், செவிடு ஆன - செவிடாய்விட்டன; (எ - று.)

**உயர்வுநவிற்சியணி.** வாத்தியகோஷம் எட்டுத்திசைகளின்எல்லையிலும் மேலெல்லையிலுஞ் சென்று மிகஅதிர்ந்து நன்குதாக்கித் திக்கஜங்களையும் தேவர்களையும் செவிடாக்கிவிட்டது என அம்முழக்கத்தின்மிகுதியை வருணித்தவாறும். வெருவரும்படி-வெருவுஎன்றவினைப்பகுதியும் வாஎன்றதுணைவினையும் சேர்ந்துவிகாரப்பட்டு,'வெருவர்'என நின்றது. கம்பு,விதம், மத்தவாரணகர்ணம் - வடசொற்கள். முரசு - பேரிகை. 'ஊழியெறிந்தகால்' என்றும் பாடமுண்டு. 'கம்பு கொம்பு விதங்கள்' என்றபாடத்துக்கு-சங்குகளின்வகைளும் ஊதுகொம்புகளின்வகைகளும் என்று பொருள்காண்க.

[சுற்றத்தார்கள் போர்செய்ய, கிருஷ்ணனும் சிசுபாலனும் பொருதல்.]

௧௩௫. புடைபடக்கிளையாகிவந்தெதிர்பூதுரந்தரர்யாவருந்
தொடைபடப்பரிவுறுமனத்தொடுதொந்தயுத்தமுடற்றினர்
குடையெடுத்தனரிருவரும்பெறுகொடியெடுத்தனர்கொற்ற
படையெடுத்தனர்மாமறைப்பசுபாலனுஞ்சிசுபாலனும். [வெம

(இ - ள்.) புடை பட - பக்கங்களிலே பொருந்த, ...

(இருவர்க்கும்) சுற்றமாய்வந்து, எதிர்-எதிர்த்த, பூ துரந்தரர் யாவரும் - பூமியையாளுகிற பாரத்தைவகிப்பவரான அரசர்களெல்லாரும், தொடைபட - தொடர்ச்சியாக, பரிவு உறு மனத்தொடு - (தம்தம்தலைவரிடம்) பற்றுமிக்க மனத்துடனே, தொந்தயுத்தம் உடற்றினர் - இவ்விருவராக ஒருவரோடொருவர் போர்செய்து பகையழித்தார்கள்; (அங்ஙனமாக), குடை எடுத்தனர் - ஒற்றைவெண்கொற்றக்குடையை உயரத்தரித்துள்ளவர்களும், பெறு கொடி எடுத்தனர் - (வெற்றிக்கு அறிகுறியாகப்)பெற்ற துவசத்தை உயரநாட்டியுள்ளவர்களுமான, மா மறை பசுபாலனும் சிசுபாலனும் இருவரும்-மகிமையுள்ள வேதங்கட்குத்தலைவனான கோபாலனாகிய ஸ்ரீகிருஷ்ணனும் சிசுபாலனும் ஆகியஇருவர்களும், கொற்றம் வெம் படை எடுத்தனர் - வெற்றியையுடைய கொடியஆயுதங்களை(ப் போர்செய்தற்பொருட்டு)க் கைகளி லெடுத்துக் கொண்டார்கள்; (எ - று.)

'புடைபட' என்பதற்கு - பெருந்தொகுதியாக என்றும், 'தொடைபட' என்பதற்கு - அம்புகள் (எதிரிகளின்மீது)பட என்றும், 'பரிவுறுமனத்தொடு' என்பதற்கு - (தாம்மகாவீரராதலாற்போரில்) ஆசைமிக்கமனத்தோடென்றும் பொருள்கொள்ளலாம். பரிவு - கவலையுமாம். இளை - படைத்துணை. பூதுரந்தரர், த்வந்த்வயுத்தம், பசுபாலன், சிசுபாலன் - வடசொற்கள். மாமறைப்பசுபாலன் - சிறந்தபிரமாணமான வேதங்களை வெளியிட்டவனும் அவ்வேதங்களினாற் கொண்டாடப்படுபவனுமான கோவிந்தன். 'பசுபாலன்' என்ற பெயர் - பசுக்களைக்காப்பவ னென்றும் உயிர்களைக்காப்பவ னென்றும் பொருள்படும். 'பசுபாலனும் சிசுபாலனும்' என்றவிடத்துப் பிராசமென்னுஞ் சொல்லணி காண்க. (௧௩௪)

[இருவருஞ்செய்த போர்த்திறம்.]

௧௩௫. வேலி னால்வடி வாளி னால்வரி வில்லி னாலுரை பெற்றவெங்
கோலி னாலிரு வருமு னைந்திரு குன்ற மொத்தன தேரினார்
மாலி னால்வரு மத்த யானைகண் மலைவ தொத்தும திர்த்தபோர்
நூலி னால்வழு வறம லைந்தனர் நுண்மை யாவினு நுண்ணியார்.

(இ - ள்.) நுண்மை யாவினும் நுண்ணியார் இருவரும் - நுண்ணிய பொருள்களெல்லாவற்றினும் நுண்ணிய தமதுஅறிவுநுட்பத்தை யுடையவர்களான கண்ணனும் சிசுபாலனு மாகிய இருவரும்,—இரு குன்றம் ஒத்தன தேரினார் - இரண்டுமலைகளைப்போன்றனவானதேர்களின்மே லிருந்தவர்களாய்,—வேலினால் - வேலாயுதத்தைக்கொண்டும், வடி வாளினால் - கூரிய வாளாயுதத்தைக்கொண்டும், வரி வில்லினால் உரை பெற்ற வெம் கோலினால்- கட்டமைந்த வில்லினா லெய்யப்படுகிற புகழ்பெற்ற கொடிய அம்புகளைக் கொண்டும், மாலினால் வரு மத்த யானைகள் மலைவது ஒத்து - மயக்கத்துடனேவருகிற மதங்கொண்ட யானைகளிரண்டு தம்மிற் போர்செய்வதுபோன்று, மதித்த போர் நூலினால் வழு அற - நன்குமதிக்கப்பட்ட யுத்தசாஸ்திர முறைமைப்படி தவறாமல், முனைந்து மலைந்தனர் - ஊக்கங்கொண்டு போர் செய்தார்கள்; (எ - று.)

நுண்மையாவினும் நுண்ணியார் - நுண்ணியபொருளனைத்தையும் நுட்பமாகஉணரும் அதிசூக்ஷ்மபுத்தியுடையோர். நுண்மை - பண்பாகுபெயராய், நுண்ணியபொருளின்மேல் நின்றது. 'நுண்ணியார்' என்றவிடத்து, அறிவினது நுண்மை அதனையுடையார்மே லேற்றிக் கூறப்பட்டது. வடிவாள் - வடிக்கப்பட்ட வாள்; வடித்தல் - நெருப்பிற்காய்ச்சியடித்துக் கூராக்குதல். தேர்த்தெடுக்கப்பட்ட வாள் எனினுமாம். தேர்க்குக் குன்றம் - வலிமை பருமை உயர்வுகளில் உவமம். தேரினார் - குறிப்புமுற்றெச்சம். 'குன்றமொத்துயர் தேரினார்' என்பதும் பாடம். 'மாலினால்' என்றதில், 'ஆல்' என்ற

மூன்றனுருபு ஒலிவருபிற்குரிய அடைமொழிப்பொருளில் வந்தது. உரை பெற்ற இறந்த தென்று கொண்டாடப்பெற்ற. (கஅ)

வேறு.

[இருவரும் சலம்நரம சமமாகப் போருதபின்பு,கண்ணன் சிசுபாலன்மேல் தனதுசக்கராயுதத்தைப் பிரயோகித்தல்.]

கஅஎ. வெஞ்சின முடுக வொருவருக் கொருவர் வெல்லலுந் தோற்றலு மின்றி, வஞ்சின முரைசெய் துள்ளமு மெய்யும் வாகு பூ தரங்களும் பூரித், தெஞ்சினர் தமைப்போ லிளைத்தபி னினிவா னேற்றுதல் கடனெனக் கருதிக், கஞ்சனை முனிந்தோ னிவன்மு டித் தலைமேற் கதிர்மணித் திகிரியே வினனே.

(இ - ள்.) வெம் சினம் முடுக - கடுங்கோபம் மேல்மேல் மூள, ஒருவருக்கு ஒருவர் வெல்லலும் தோற்றலும் இன்றி - ஒருவரை மற்றொருவர் வெல்லுதலும் ஒருவர்க்குமற்றொருவர்தோல்வியடைதலும் இல்லாமல், வஞ்சினம் உரைசெய்து - (ஒருவரையொருவர்கொல்வதாகச்) சபதவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு, உள்ளமும்மெய்யும் வாகு பூதரங்களும் பூரித்து - மனமும் உடம்பும் மலைகள்போன்றதோள்களும் (வீராவேசத்தால்) பூரிப்படையப்பெற்று, (இருவரும் சிலநேரம் பொருது), எஞ்சினர்தமை போல் இளைத்த பின் - வலியொடுங்கினவரைப்போலக் களைப்புற்றபின்பு,—கஞ்சனை முனிந்தோன் - கம்சனைக் கோபித்துக்கொன்றவனான கண்ணபிரான், இனி வான் ஏற்றுதல் கடன் என கருதி - 'இனி (இவனை) மேலுலகத்துக்குஅனுப்புதல் முறைமையாம்' என்று நினைத்து, இவன் முடி தலைமேல் - இந்தச்சிசுபாலனுடைய கிரீடந்தரித்த சிரசின்மேல், கதிர் மணி திகிரி ஏவினன் - பிரகாசமுள்ள அழகிய சக்கராயுதத்தைப் பிரயோகித்தான்; (எ-று.)

வஞ்சினம் - வீரவாதம். உள்ளம்பூரித்தல் - யுத்தத்தில் உற்சாகத்தால் மனம் கொதித்துப்பொங்குதல்: உடம்பும் தோள்களும் பூரித்தல் - அந்தப் போர்மகிழ்ச்சியாற் புடைபருத்தல். பாஹுபூதரம் - வடமொழித்தொடர்: முன்பின்னாகத்தொக்க உவமைத்தொகை. 'எஞ்சினர்தமைப்போல்' என்பதற்கு-இறந்தவரைப்போல வென்று உரைப்பாரு முளர். கம்சனும் சிசுபாலனும் துர்வாசமுனிசாபமுற்ற ஜயவிஜயரின் பிறப்பாய் ஓரினத்தவராதலால், அவர்கட்கு முன்புவாக்களித்தபடி கம்சனைக்கொன்றகண்ணன் தானே இப்பொழுது சிசுபாலனையுங் கொல்லப் படைக்கல மெறிந்தனன் என்பது, ஈற்றடியின் கருத்து. திருமாலுக்குச் சக்கரம்முதலியன ஆயுதவகையில்மாத்திரமன்றி ஆபரணவகையிலும் அமைதல் தோன்ற, 'மணித் திகிரி' எனப்பட்டது. சாபநிவிருத்திபெறுதற்குஉரியகாலம் குறுகியிட்டதனால், 'இனிவானேற்றுதல்கடன்' என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றினன். பூதரம் - மலை: (மேலுங்கீழும்இருந்து) பூமியைத் தாங்குவது. வான் - இங்கே பரமபதம்.

இதுமுதல் இச்சருக்கம்முடியுமளவும் பதினேழுகவிகள் - இச்சருக்கத்தின்பதினெட்டாங்கவிபோன்றஎழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள்.

[சக்கரம் சிசுபாலனைத் தலைதுணித்தல்.]

கஅஅ. ஏவியதிகிரிவீரரைத்துறக்கமேறவிட்டிடுமிரவியைப்போன், மேவியபகையாமைத்துனன்முடியைவிளங்குகோளகையுறவீழ்இ, பூவிகளனைத்துங்கறைத்தொளிசிறந்தவச்சுதனகைகொள்பாற்கடலிற் றீவியவமுதமமரருக்களித்தோன் திருக்கரஞ்சென்றுசேர்ந்ததுவே.

(இ - ள்.) ஏவிய திகிரி - (அங்ஙனம் கண்ணன்) செலுத்திய சக்கராயுதமானது,—வீரரை துறக்கம் ஏற விட்டிடும் இரவியை போல் - (பின்வாங்கா [illegible]) வீரரை மேலுள்ளதான வீரசுவர்க்கத்திற்குச் செல்லும்

படி வழிவிடுகிற சூரியமண்டலத்தைப்போல(ப் பிரகாசித்துக்கொண்டு) சென்று, மேவிய பகை ஆம் மைத்துனன் முடியை விளங்கு கோளகை உற வீசி - நெருங்கியபகைவனுன மைத்துனமுறைமையுடைய சிசுபாலனது தலையை(த் துணித்துவிளங்குகிற) அண்டகோளத்தின்முகட்டைப் பொருந் தும்படி வீசியெறிந்துவிட்டு,—ஆவிகள் அனைத்தும் நிறைந்து - உயிர்களி லெல்லாம் வியாபித்து, ஒளி சிறந்த - ஒளிமிக்குவிளங்குகிற, அச்சுதன்-அச் யுதனென்னுந்திருநாமமுடையவனும், அலை கொள் பாற்கடலில் தீவிய அமுதம் அமரருக்கு அளித்தோன் - அலைகளைக்கொண்ட திருப்பாற்கட லில் தோன்றிய இனிமையான அமிருதத்தைத் தேவர்கட்குக் கொடுத்தரு ளியவனுமான அக்கண்ணபிரானது, திரு கரம்- சிறந்த வலத்திருக்கையில், சென்று சேர்ந்தது - போய்ச் சேர்ந்துவிட்டது; (எ - று.)

வீரசுவர்க்கஞ்செல்வார் இடையிலுள்ள சூரியமண்டலத்தைப் பிளந்து கொண்டு அதன்வழியாய் மேற்செல்லவேண்டுதலால்,'வீரரைத் துறக்கமேற விட்டிடுமிரவி'எனப்பட்டது. மைத்துனன்-இங்கேஅத்தைமகன். அச்யுதன் என்ற வடமொழிப்பெயர் - அழிவில்லாதவ னென்றும், சரணமடைந்த வர்களைக் கைவிடாதவ னென்றும் பொருள்படும். தீவிய - இனிமையுணர் த்தும் தீம் என்ற பண்பினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; 'திவ்ய' என்ற வடமொழி 'தீவிய' என்று விகாரப்பட்டதெனக் கொள்ளுதலு மொ ன்று. ஒளி மிகுதியினாலும், வட்டவடிவினாலுமே யன்றி, வீரனை சிசுபால னது உயிரைப் பரமபதமேறச்செலுத்துதலினாலும், சக்கரத்துக்கு வீரருயி ரைத் துறக்கமேறவிட்டிடும் இரவி உவமையாகும். சேர்ந்ததுவே - சிறுபா ன்மை குற்றியலுகரம் உயிர்வரக் கெடாது பொதுவிதியால் வகரவுடம்படு மெய் பெற்றது. தேவர்கள்பக்கல் பக்ஷபாதமுடையவனாதலால் அசுராம்ச முள்ள சிசுபாலனை அழித்தன னென்பது,ஈற்றடியில் தொனிக்கும். (கஙஅ)

[சிசுபாலனுயிர் கண்ணபிரானதுதிருவடியிற் சேர்தல்.]

கஙகூ. சேதிமன்னவன்றன்முடியினைநெடியோன்றிகிரிசென் றரிந்திடவொருபொற், சோதிமற்றவன்றனுடலினின்றெழுந்துசுட ரையும்பிளந்துபோய்மீண்டு,மாதிரமனைத்துமொளியுறவிளக்கிமண் ணளந்தருள்பதமடைய, வேதியர்முதலோர்யாவரும்வேள்விப்பே ரவைவேந்தருங்கண்டார்.

(இ - ள்.) சேதி மன்னவன்தன் முடியினை - சேதிதேசத்தரசனான சிசுபாலனது தலையை, நெடியோன் திகிரி சென்று அரிந்திட - கண்ணபி ரானது சக்கராயுதம் போய் அறுத்தவுடன், ஒரு பொன் சோதி - பொன் மயமான ஓர்ஒளியானது, அவன்தன் உடலினின்று எழுந்து - அச்சிசுபால னது உடம்பினின்று எழுந்து, சுடரையும் பிளந்து போய் - சூரியமண்டலத் தையும் பிளந்துகொண்டு ஊடுருவிச்சென்று, மீண்டு - திரும்பி, மாதிரம் அனைத்தும் ஒளி உற விளக்கி - திக்குக்களையெல்லாம் சோதிமயமாகப் பிர காசிப்பித்துக்கொண்டு, மண் அளந்தருள் பதம் அடைய - (முன்புதிரிவிக் கிரமாவதாரகாலத்தில்) உலகத்தையளந்தருளிய கண்ணபிரானது திருவடி யிற் சேர, (அங்ஙனம் அவ்வுயிர் பரமாத்மாவினிடம்சாயுச்சியமடைந்ததை), பேர் வேள்வி அவை வேந்தரும் வேதியர் முதலோர் யாவரும் கண்டார் - பெரியஅர்தயாகசபையிற் கூடியிருந்த அரசர்களும் அந்தணர்கள்முதலான வர்களெல்லாரும் பார்த்தார்கள்; (எ - று.)—மற்று - அசை.

எம்பெருமானது திருவடியே வீடாயிருக்கு மென்ற கோட்பாடு இங்கு விளங்குகின்றது. "தேரார்நிறைகதிரோன்மண்டலத்தைக் கீண்டுபுக்கு," "வெங்கதிர்ப்பரிதிவட்டத்தூடு போய்", "இருளகற்று மெறிகதிரோன்மண் டலத்தூடேற்றிவைத்து" என்ற அருளிச்செயல்களாலும், பரமபதஞ்சேர் வார் சூரியமண்டலத்தினூடே போத லுணர்க. சுடர் - ஒளி; முச்சுடரில்

[illegible]ராகிய மற்றைப்பிருசுடர்க்கும் ஒளியைக்கொடுத்து வாங்கும் [illegible]ங்களையுடைய சிறப்புப்பற்றி சூரியன் 'சுடர்' எனப்பட்டான். [illegible]விசக்கரவர்த்தியைச் செருக்கடக்குமாறு திருமால் உலகளந்தது, [illegible]ழ்துவருந்திய தேவர்களைப் பாதுகாத்தருளுதற்பொருட்டாதலா [illegible]ம், உலகமளக்துகொள்ளுகிறவியாஜத்தால் எம்பெருமான் எல்லாப்பிரா [illegible]ிகளின்முடியிலும் தனது அடியைவைத்து அனைத்துயிரையும் ஆட்கொண் டருளியதனாலும், 'மன்னளர்தருன்பதம்' எனப்பட்டது. அன்றியும், உயர்ந் தவர்செயல்களைக் குறிக்கும் வினைச்சொற்களோடெல்லாம் 'அருள்' என்பது துணைவினையாய்நின்று மேன்மைப்பொருள்குறிக்கும்; படைத்தருள், காத்த ருள், அழித்தருள்முதலியன காண்க. நெடியோன்-மகாவிஷ்ணு. (கருக)

[அதுகண்ட அனைவரும் கொண்டாடி மகிழ்தல்.]

கசு0. ஈதொருபுதுமையிருந்தவாவென்பாரிந்திரசாலமோவெ ன்பார், மாதொருபாகனல்லதிக்கண்ணன்மதிகுலத்தவனலனென் பார், கோதொருவடிவாம்புன்மொழிகிளைஞர்கூறினும்பொறுப்ப ரோவென்பார், காதொருகுழையோனிளவலைத்தேர்மேற்கண்டுதங் கண்ணிணைகளிப்பார்.

(இ - ள்.) (அதுகண்ட அரசர்முதலியோ ரெல்லாரும்), ஈது ஒரு புதுமை இருந்த ஆ என்பார் - (இவனுடம்பினின்று ஒருசோதிதோன்றியெழு ந்து கண்ணனது பாதத்திற்சேர்ந்த) இஃது ஓர் அதிசயம் இருந்தவிதம் (என்னே!) என்று கொண்டாடிச சொல்பவர்களும், இந்திரசாலமோ என் பார் - (இது மெய்த்தோற்றமன்றிப் பொய்த்தோற்றமாகிய) இந்திரஜால வித்தையோ என்று சொல்பவர்களும், இ கண்ணன் மாது ஒரு பாகன் அல் லது மதி குலத்தவன் அலன் என்பார் - இந்தக்கிருஷ்ணன் அர்த்தநாரீசுவர மூர்த்தியான சிவபிரானேயல்லாமற் (சாதாரணமனிதனான) சந்திரகுலத் தரசனொருவ னல்லன் என்று சொல்பவர்களும், கோது ஒரு வடிவு ஆம் புல் மொழி கிளைஞர் கூறினும் பொறுப்பரோ என்பார் - குற்றந்தானே ஒரு வடிவமெடுத்தாற்போன்ற நிந்தனைச்சொல்லை நெருங்கியஉறவினரே கூறி னாலும் கேட்பவர் பொறுப்பரோ? [பொறார்] என்று சொல்பவர்களும், கா து ஒரு குழையோன் இளவலை தேர்மேல் கண்டு தம் கண் இணை களிப் பார் - ஒருகாதிலே குண்டலத்தைத் தரித்தவனான பலராமனது தம்பியா கிய கண்ணபிரானைத்தேரின்மீதிருக்கத்தரிசித்து(க் கண்படைத்தபயன்பெ ற்றேமென்று) தங்கள்கண்களிரண்டுங் களிக்கப்பெறுபவர்களுமானார்கள்.

மாது ஒருபாகன் - அம்பிகையைவாமபாகத்திலுடையவன். கோதொ ருவடிவாம் புன்மொழி - குற்றத்தின்ஒருவடிவமான வசைமொழி யெனினு மாம். காதொருகுழையோன் - ஒருகாதிலே குண்டலத்தையும் மற்றொரு காதிலே குழையையும் அணிந்தவன். இளவல் - இளமையையுடையவன்; அல் - பெயர்விகுதி. காதொருகுழையோனிளவலைத் தேர்மேற்கண்டு - கண்ணன் வெற்றிபெற்றுவிளங்கியகாட்சியைச் சேவித்து. இக்கண்ணன் பக்கல் மனிதபாவனையையொழித்துத் தேவபாவனையையே கொள்ளவே ண்டு மென்பது, இரண்டாமடியின் உட்கோள். நெருங்கியஉறவினன் செ ய்த பிழையைப் பொறுத்திலனென்ற குற்றம் இதனாற் கண்ணனுக்கு வரா தென்பது, மூன்றாமடியின் தாற்பரியம். ஆ -ஆறு என்பதன் விகாரம்; இச் சொல் இங்ஙனம் விகாரப்பட்டுவரும்போது பலவிடங்களில் 'என்னே' என்பது தொக்குநிற்றலை நூல்களிற் காணலாம். (கசு0)

[[illegible]ம் கேட்ப வியாசமாமுனிவன் சிசுபாலனது பழையவரலாற்றை யெடுத்துக் கூறத்தொடங்குதல்.]

[illegible]க. அதிசயித்திவ்வாறிருந்துழியிருந்தோரனைவருமாழியா [illegible]க். கதிசெயத்தருமன்சுதன்முதலெவருந்தொழுதெதிர்

வந்துவந்திறைஞ்ச, விதியெனப்பொருதவெங்களத்திடையவ்வியா தமாமுனியெடுத்துரைப்ப, மதியுடைக்கடவுள்வீடுமன்முதலாமன் னவர்யாவருங்கேட்டார்.

(இ - ள்.) இ ஆறு அதிசயித்து இருந்த உழி - இப்படிஆச்சரியமடைந் திருந்தபோது, இருந்தோர் அனைவரும் ஆழியான்தன்னை துதி செய - அங் கிருந்த அரசர் அந்தணர் முதலியோரெல்லாரும் கண்ணபிரானைத் தோத்தி ரஞ்செய்ய, தருமன் சுதன் முதல் எவரும் எதிர் வந்து வந்து தொழுது இறைஞ்ச - தருமபுத்திரன் முதலான பாண்டவர்களெல்லாரும் கண்ணபி ரானெதிரில் வந்துவந்து கைகூப்பிவணங்க,—விதி என பொருத வெம் களத்திடை - ஊழ்வினைப்பயனென்னும்படி போர்செய்த கொடிய அந்த யுத்தகளத்திலே, அ வியாத மா முனி எடுத்து உரைப்ப - அந்த வேதவியாச மகாமுனிவன் (கண்ணனைப் பலவாறுநிந்தித்துஅழிந்த சிசுபாலனது உடலி னின்று ஒருசோதி எழுந்து கண்ணனது திருவடியிற்சேர்ந்ததற்குக் காரண மான வரலாற்றை) எடுத்துச்சொல்ல, மதி உடை கடவுள் வீடுமன் முதல் ஆம் மன்னவர் யாவரும் கேட்டார் - சிறந்தஅறிவையுடைய தெய்வத்தன் மையுள்ள பீஷ்மன்முதலான அரசர்களெல்லாரும் (அதனைக்) கேட்பவரா னார்கள்; (எ - று.)—அவ்வரலாற்றை, அடுத்த ஏழுகவிகளிற் காண்க.

இருந்துழி - தொகுத்தல். ஆழியான் - கடல்போலும் கருநிறமுடைய வன்; அல்லது, சக்கராயுதத்தையுடையவன் : அன்றி, கடலிற்பள்ளிகொள் பவன. முன்செய்தவினை தவறாதுபலிப்பதுபோலச் சிசுபாலனைத் தவறாது கொல்லும்படி போர்செய்த இட மென்பார், 'விதியெனப்பொருத களம்' என்றார். சிசுபாலன் இறத்தற்கேற்ற ஊழ்வினையே இங்ஙனம் போராய்வி ளைந்த தென்னும்படி பெரும்போர்செய்த கள மெனினு மாம். பொருத களம்-பெயரெச்சம் இடப்பெயர்கொண்டது. அவ்வியாதமாமுனி - கண்ண னுக்கு அக்ரபூஜைசெய்யும்படி முன்புசொன்ன வியாசமுனிவன் என்ற படி; அகரச்சுட்டு, பிரசித்தியையுங் காட்டும். அஷ்டவசுக்களில் ஒருவனது அம்சமாதல் தோன்ற, 'கடவுள்வீடுமன்' எனப்பட்டான்.

பீஷ்மன் என்ற வடசொல், வீடுமனென விகாரப்பட்டது; அச் சொல்லுக்கு - பயங்கரனானவ னென்பது உற்பத்தியருத்தம்; பயங்கரமான விரதமுடையவ னென்பது கருத்து. இவன் தனதுதந்தைக்கு யோஜநகந்தி யை இரண்டாவதுமணஞ்செய்வித்தற்கு அவளைவளர்த்ததந்தையான செம் படவன் இசைதற்பொருட்டு, தான் மணஞ்செய்துகொள்வதில்லை யென் றும் மூத்தவனாய்ப் பட்டத்துக்குஉரிய தனது இராச்சியத்தையும் மற்றை எல்லாச்செல்வங்களையும்தனக்குச்சிறியதாயாகவருமவளுக்குப்பிறக்கும் பிள் ளைக்கே கொடுப்பதாகவும், இங்ஙனம் ஒழித்தற்கரிய மண்ணாசை பெண்ணா சை பொன்னாசை யென்னும் மூவகையாசையையும் இளமையிலேயே ஒழித் துக் கேட்போர்அஞ்சும்படியான சபதத்தைச் செய்ததனால், இவனுக்கு இப் பெயர்; தேவர்கள்முன்னிலையில் இந்தவிரதத்தை மேற்கொண்டதனால், தேவவிரத னென்றும் இவனுக்குப் பெயருண்டு. (௧௪௧)

[இதுமுதல் ஏழுகவிகள் - ஒருதொடர்; வியாசமாமுனிவன் கூறிய பழையவரலாறு.]

௧௪௨. ஐவகைவடிவாயெங்குமாய்நின்றவச்சுதனமலனனந்த ன், செய்யொளிதிகழும்பங்கயக்கண்ணன்றிருமகள்கொழுநனைக்கா ணத், துய்யசெய்தவத்துத்துருவாசமுனிவன்சேறலுஞ்சுடர்கொள் வைகுண்ட, மெய்யுறுகோயிற்றுவாரபாலகரவ்வேதபண்டிதன்றனை விலக்க.

(இ - ள்.) ஐவகை வடிவு ஆய் - ஐந்துவகைவடிவமுடையவனாய், எங் கும் ஆய் நின்ற - எல்லாவிடத்தும் வியாபித்துநின்ற, அச்சுதன் - அச்யுத

னென்னுந்திருநாமமுடையவனும்,அமலன் - குற்றமில்லாதவனும், ஆனந்தன் - பேரானந்தத்தையுடையவனும், செய் ஒளி திகழும் பங்கயம் கண்ணன் - செந்நிறவொளிவிளங்குந் தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடையவனும்,திருமகள் கொழுநனை - இலக்குமியின்கணவனும் ஆகிய ஸ்ரீமந்நாராயணனை, காண - தரிசிப்பதற்காக, துய்ய செய் தவத்து துருவாசமுனிவன் சேறலும்- பரிசுத்தமான செய்நதவத்தையுடைய துர்வாசமகாமுனிவன் (ஸ்ரீவைகுண்டத்துக்குச்) செல்லும்போது, சுடர் கொள் வைகுண்டம் கோயில் மெய் உறு துவாரபாலகர்- பேரொளியைக்கொண்ட அந்தஸ்ரீவைகுண்டலோகத்தி லுள்ள கோயிலின்வாயில்காவலாளரான உண்மைக்குணம்பொருந்திய ஜயவிஜயர்கள்,அ வேதபண்டிதன்தனை விலக்க-வேதங்களில்தேர்ந்தவனான அத்துருவாசமுனிவனைத் (திருக்கோயிலினுட்புகவொட்டாது) தடைசெய்ய, (எ - று.)—'விலங்கிய இருவர்தம்மையும் அந்தமுனிவரன் சபித்தான்' எனஅடுத்தசெய்யுளோடு குளகமாகத் தொடரும்.

'ஐவகைவடிவு' என்றது - பரத்வம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சை என்ற திருமாலின் ஐவகைநிலைகளை. இவற்றில், பரத்வமாவது - பரமபதத்திலெழுந்தருளியிருக்கும் நிலை. வியூகமாவது - வாசுதேவ சங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாகிய நான்குரூபத்துடன் திருப்பாற்கடலிலெழுந்தருளியிருக்கும் நிலை.விபவம் - ராமகிருஷ்ணாதிஅவதாரங்கள்.அந்தர்யாமித்வம்-சராசரப்பொருள்களெல்லாவற்றினுள்ளும் எள்ளினுள்எண்ணெய்போல மறைந்துவசித்தல் : அடியார்களின்மனத்தில் வீற்றிருத்தலும் இதில் அடங்கும். அர்ச்சை - விக்கிரகரூபங்களில் ஆவிர்ப்பவித்தல்.("வலனேங்கு பரமபதமாமணிமண்டபத்திலமர், நலனேங்குபரம்பொருளாய் நான்குவியூகமுமாளுய்,உபயகிரிப்புயராமனெடு கண்ணன் முதலான, விபவவுருவமுமெடுத்து வீறுமுயிர்தொறுங்குடிகொ,ளந்தரியாமியுமானதமையாமே எளிதாக, இந்தநெடுவேங்கடத்தி லெல்லோருந் தொழநின்றோய்," "வடிவைந்தின் வாழுமிடம், வைகுந்தம் பாற்கடல் மாநீரயோத்தி வண்பூந்துவரை, வைகுந்த மன்பர்மனம் சீரரங்கம் வடமலையே" என்பவை இங்குநோக்கத்தக்கன.)

செய்யொளிதிகழும் பஙகயம் - செந்தாமரை. பஙகயக்கண்ணன் - புண்டரீகாக்ஷன். சேறலும் - 'உம்' விகுதிபெற்ற இறந்தகாலவினையெச்சம்; செல் என்ற பகுதி முதல் நீண்டது; து, அல் - சாரியைகள்; மற்றவை - சந்தி. "மதியாதவன்கதிர்மின்மினிபோலொளிர்வைகுந்தம்" என்றபடி பரமபதம் மிக்கசோதிமயமாய் விளஙகுதலால்,'சுடர்கொள்வைகுண்டம்'எனப்பட்டது. த்வாரபாலகர், வேதபண்டிதன் - வடசொற்கள். செய்தவத்துத்துருவாசமுனிவன்-தவஞ்செய்த துருவாசமுனிவன் என்க. (கசஉ)

கசங.விலங்கியவிருவர்தம்மையுமந்தவெஞ்சினமுனிவரன்வெகுண்டு,துலங்கியகோயிற்றுவாரம்விட்டவனிதோன்றுமின்போயெனச்சபித்தா,னலங்கலந்துளவமௌலியானதுகேட்டந்தணன்றனையெதிர்கொண்டு, கலங்கியதுவாரபாலர்நின்சாபங்கடப்பதெக்காலமோவென்றான்.

(இ - ள்.) விலஙகிய இருவர்தம்மையும் - (அங்ஙனந்)தடுத்த அவ்வாயில்காவலாளரிருவரையும்,அந்த வெம் சினம் முனிவரன்-கடுங்கோபமுள்ள ரிஷிச்சிரேஷ்டனான அந்தத்துருவாசமாமுனிவன், வெகுண்டு - கோபித்து, துலங்கிய கோயில் துவாரம் விட்டு போய் அவனி தோன்றுமின் என சபித்தான் - 'விளங்குகிற இத்திருக்கோயில்வாயிலை விட்டுப்போய் (நீங்கள்) பூமியிற் பிறக்கக்கடவீர்'என்று சாபமிட்டான்; அலங்கல் அம் துளவம் மௌலியான் - மாலையாகத்தொடுத்த அழகியதிருத்துழாயைச் சூடிய திருமுடியையுடையவனான திருமால், அது கேட்டு - அச்சாபவார்த்தையைச் செவியுற்று, அந்தணன்தனை எதிர்கொண்டு - அம்முனிவனை எதிரில்வந்து

வரவேற்று உபசரித்து, கலங்கிய துவாரபாலர் நின் சாபம் கடப்பது எக் காலமோ என்றான்-'(உனதுசாபத்தாற்) கலங்கிய இவ்வாயில்காவலர்உனது சாபம்நிவிருத்தியாகப்பெறுவது எந்தக்காலத்திலோ?' என்று வினவினான்.

'விலங்கிய' என்பதைப் பிறவினைப்பொருளில்வந்த தன்வினை யென்றுவது, விலக்கிய என்ற பிறவினை எதுகைநயம்நோக்கி விலங்கியஎனமெலித்தல்விகாரமடைந்த தென்றுவது கொள்க. "சாபத்தாலும் சாபமொழிதன்ளுல்வளருந்தவத்தாலும், கோபத்தாலும் பேர்படைத்த கொடியமுனிவன் துருவாசன்" என்னும்படி துருவாசமுனிவன் மிக்க முன்கோபியாதலால், 'வெஞ்சினமுனிவரன்'எனப்பட்டான்;"சுலபகோபரான மஹர்ஷி"என்றான் இவனைக் காளிதாஸனும். "குணமென்னுங் குன்றேறிநின்றார் வெகுளி, கணமே" ஆதலால் அக்கோபம் விரைவில்தணிந்து அருளு மியல்புமுடையனென்பார், 'அந்தணன்' என்றார்; "அந்தணரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்கும், செந்தண்மைபூண்டொழுகலான்" என்ற திருக்குறள் இங்குக் காணத்தக்கது. 'அந்தணுளனை யெதிர்கொண்டு' என்ற பாடத்துக்கும், அந்தணுளனை யென்பதற்கு - அழகியதண்மையைஆளுபவனை எனப் பொருள் காண்க. 'அம்துளவம்அலங்கல்மௌலியான்' என மொழிமாற்றி, அழகிய திருத்துழாய்மாலையையணிந்த முடியையுடையா னென்றல், நேர். தன்னை வைகுண்டத்துக்குப்போகவொட்டாதபடி கோயில்வாயிலில்நின்று கதிவிலக்கினவர்களைக் கோபித்து அவ்வுலகத்தில் அவ்விடத்தையும் அதிகாரபதவியையும் இழந்து கீழுள்ள பூலோகத்தில் ஜனனகதியிற்சேர்க என்று சபித்தான். தவத்திற்சிறந்து ஆற்றலாற்பெரியரான முனிவர் சபித்தசாபம் அவர்கள்தாமே நிவிருத்திசெய்தாலன்றி முழுமுதற்கடவுளாலும் நீக்கவொண்ணு தென்பது இங்கு விளங்கும். (கசஙு)

கசச. என்றலுமுனிவன்பரிந்திவரெழுகாலின்புறுமன்பராய் வருத, லன்றிமும்மடங்குபகைவராய்வருதலல்லதிங்குன்பதமணுகார், மன்றலந்துளபமாலையாயென்னமலர்மகண்மகிழ்நனுமவரைக், கன்றியமறையோன் சாபநீர்கடக்குங்கருத்துமற்றியாதுகொலென்றான்.

(இ - ள்.) என்றலும் - என்று (திருமால்) வினவியவுடனே, முனிவன் - துருவாசன், பரிந்து - (திருமாலின்கோயில்வாயில்காவலாளரைத் தான் சபித்தமைக்கு) இரங்கி, 'மன்றல் அம் துளபம் மாலையாய் - நறுமணமுள்ள அழகிய திருத்துழாய்மாலையையுடையவனே! இவர் - இத்துவாரபாலகர், இன்பு உறும் அன்பர் ஆய் எழு கால் வருதல் - (தேவரீர்பக்கல்) மகிழ்ச்சி மிக்கஅன்பையுடைய பக்தர்களாய் ஏழுபிறப்புப்பிறத்தல், அன்றி - அல்லாமல், பகைவர் ஆய் மும் மடங்கு வருதல் - (தேவரீர்க்கு) விரோதிகளாய் மூன்றுமுறைபிறத்தல், அல்லது - என்ற இவ்விரண்டிலொன்றிலன்றி, இங்கு உன் பதம் அணுகார் - இவ்விடத்தில் தேவரீருடைய திருவடியைச் சாரார்,' என்ன - என்று (சாபநிவிருத்தியை வகுத்துக்)கூற,—மலர்மகள் மகிழ்நனும் - செந்தாமரைமலரில்வாழுந் திருமகளின் கணவனான அத்திருமாலும், அவரை - அவ்வாயிலோரை நோக்கி, கன்றிய மறையோன் சாபம் நீர் கடக்கும் கருத்து யாது கொல் என்றான் - 'கோபித்தமுனிவன் (உங்களைச்சபித்த)சாபத்தை நீங்கள் நிவிருத்திசெய்துகொள்ளும்ஆலோசனை (இவ்விரண்டில்)எது?'என்றுவினவினான்;(எ-று.)—மற்று-அசை;வினைமாற்றுமாம்.

'பரிந்து' என்றது, அவன்கொண்ட கழிவிரக்கத்தைக் காட்டிற்று. 'அன்றி' என்றது - விகற்பப்பொருளில் வந்தது. 'துளவமோலியாய்' என்றும் பாடமுண்டு. மலர்மகள்மகிழ்நன் - மலர்மகளோடு கூடி மகிழ்பவன். மகிழ்நன் என்ற பெயரில், மகிழ் - பகுதி; ந் - பெயரிடைநிலை. எழுமுறை அன்பராய்ப் பிறந்து சாபந்தொலையக் கருதுகின்றீரோ? மும்முறை பகை

வராய்ப்பிறந்து சாபத்தொலையைக் கருதுகின்றீரோ? இவ்விருவகையில் நுமது விருப்பம் யாது? என்று வினவினன். 'கருத்துமக்கியாதுகொல்' என்றும் பாடமுண்டு. 'முனிவன்பரிந்து' என்றவிடத்து 'முனியுக்தொழுது' என்றும், 'மும்மடங்குபகைவராய்' என்றவிடத்து 'மும்மடங்குன்பகைவராய்' என்றும் சிலபிரதிகளிற் காணப்படுகின்றன. (கசச)

கசரு. மற்றவரிறைவன்மலரடிவணங்கிவான்பிறப்பேழுறமாட் டேம்,முற்றுமுப்பவமுமுனக்குவெம்பகையாயுற்பவித்துன்பதமுறு வேம்,வெற்றிகொண்முதிர்போர் நேமியாயென்றார்விமலனுங்கொடி யவெஞ்சாப, மற்றிடும்வகையவ்வரமவர்க்களித்தானசுரராயவரும் வந்துதித்தார்.

(இ - ள்.) மற்று - பின்பு, அவர் - அத்துவாரபாலகர், இறைவன் மலர் அடி வணங்கி - திருமாலினது தாமரைமலர்போன்ற திருவடிகளை நமஸ் கரித்து, 'வெற்றி கொள் முதிர் போர் நேமியாய் - ஜயங்கொள்ளும் பெரும் போரைச் செய்கின்ற சக்கராயுதத்தை யுடையவனே! வான் பிறப்பு ஏழ் உற மாட்டேம் - அதிகமான ஏழுபிறப்புக்களை (நாங்கள்) விரும்பமாட் டோம்; முப் பவமும் உற்று உனக்கு வெம் பகை ஆய் உற்பவித்து உன் பதம் உறுவேம் - (குறைவான) மூன்றுபிறப்புக்களையே ஏற்றுக்கொண்டு உனக் குக் கொடியபகைவராய்த் தோன்றி(ப் பின்பு) உனதுதிருவடியைச் சேர் வோம்,' என்றார் - என்று (தமதுகருத்தை) விண்ணப்பஞ்செய்தார்கள்; (அதுகேட்டு), விமலனும் - குற்றமற்றவனான திருமாலும், கொடிய வெம் சாபம் அற்றிடும் வகை அ வரம் அவர்க்கு அளித்தான் - அவ்வாறே(மும் முறைபகைவராய்ப்பிறந்து) மிகக்கொடிய அச்சாபந் தீரும்படி அவர்கட்கு வரங்கொடுத்தருளினன்; அவரும் அசுரர் ஆய் வந்து உதித்தார் - (அங்ஙன மே) அவர்களும் (முதலில்) அசுரர்களாய்(ப் பூமியில்) வந்துபிறந்தார்கள்.

அன்பராய்ப்பிறப்பதானல் ஏழுபிறப்பு எடுக்கவேண்டியதனுலும், அன் பராய்ப்பிறந்தால் விரைவில்அழிவுநேராதாதலின் காலம்நீட்டிக்கு மாதலா லும், அவர்கள் அன்பராய்ப்பிறத்தற்கு உடன்பட்டிலர். மும்முறை பகை வராய்ப்பிறந்து அப்பிறப்புத்தோறும் விரைவில் அத்திருமால்கையாலழிந்து வீடுபெறலா மென்பது அவர்க ளுட்கோள். இறைவன் - தலைவன்; இப்பெயர் க்கு - (எப்பொருளிலும் அந்தர்யாமியாய்த்) தங்குகிறவ னென்றும் பொ ருள்கூறலாம்: இறுத்தல் - தங்குதல். வான்பிறப்பு - சிறந்தபிறப்பு எனினு மாம்; அப்பிறப்புக்குச் சிறப்பு - திருமாலுக்கு அன்பராதல். முற்றுமுப்பவம் என்று எடுத்துரைத்தல், மோனைத்தொடைக்கு முரணும். பவம்-வடசொல். விமலன் என்ற வடமொழித்திருநாமம் - தான் இயல்பிலே கருமத்தொடர் பில்லாதவன் என்ற பொருளோடு, தனக்குச்சரீரமாகிய ஜீவாத்மாக்களின் கருமமும் தன்னிடம்தொடரப்பெறாதவ னென்னும் பொருளையுங் கொண் டது. 'வான்பிறப்பு' என்றவிடத்து, 'வன்பிறப்பு' என்று சிலபிரதிகளிற் காணப்படுகிறது. கொடிய வெம் - ஒருபொருட்பன்மொழி. (கசரு)

கசசு. இரணியனிரணியாக்கனென்றுரைக்குமியற்பெயரிருவ ருமெய்தி, முரணியகொடுமைபுரிந்துமூவுலகுமொய்ம்புடன்கவர்ந் திடுநாளி,னரணியினமல்போனரவரியுருவாயச்சுதன்றாணிலங்குரி த்துத், தரணியினுகிராற்பிளந்துமுன்னுகத்திற்றன்பகைசெகுத்த னன்பின்னும்.

(இ - ள்.) இருவரும் - அந்தத்துவாரபாலகரிரண்டுபேரும், முன் உகத் தில் - முதல்யுகமானகிருதயுகத்திலே, இரணியன் இரணியாக்கன் என்று உரைக்கும் இயல் பெயர் எய்தி - இரணியனென்றும் இரணியாக்ஷனென் றும் சொல்லப்படுகிற இயற்பெயரைப்பெற்று, முரணிய கொடுமை புரிந்து -

புடன் கவர்ந்திடு நாளில் - மூன்று உலகங்களையும் வலியத்தம்வசப்படுத்தி யிருந்தகாலத்தில், அச்சுதன் - திருமால், அரணியின் அழல்போல் - தீக்கடைகோலினின்று தீ (எழுவது) போல, நர அரி உரு ஆய் தூணில் அங்குரித்து - நரசிங்கரூபமாய்த் தூணிலிருந்து அவதரித்து, தன் பகை - தன்னிடத்துப்பகைமைபாராட்டிய இரணியனை, தரணியின் உகிரால் பிளந்து - சூரியன்போல விளங்குகிற தன்கைந்நகத்தினால் (மார்பைப்) பிளந்து, செகுத்தனன் - அழித்தருளினான்; பின்னும் - பின்பும் [திரேதாயுகத்திலும்], (எ - று.)—'அரக்கர்குலத்துக்கதிபதியாகி ஆண்டுபோய் மீண்டு மங்குரித்து' என அடுத்தகவியோடு குளகமாகத் தொடரும்.

நரசிங்கமூர்த்தியாய் இரணியனைக்கொன்றதை எடுத்துக்கூறினது, வராகமூர்த்தியாய் இரணியாக்ஷனைக்கொன்றதற்கும் உபலக்ஷணம். அரணி-கடைந்துதீயையுண்டாக்குதற்குஇடமானமரத்துண்டு; அதில்வேறொருமரத்துண்டுகொண்டு கடைந்தவிடத்து நெருப்புஉண்டாகிற இயல்பு. யாகத்துக்குரிய அந்த வைதிகஅக்கினியை இங்கு உவமைகூறியது, உலகத்துப்பிராணிகள்போல ஒருதாயின்கர்ப்பத்திலேசிலகாலமிருந்துபிறவாமல் விரைவாகத் தூணினின்று உதித்துவிளங்கியதையும் தூய்மையையும் காட்டுதற்கு. தரணி என்றவடசொல் - சூரியனதுபரியாயநாமங்களி லொன்று; (இருளைக்) கடத்தற்குக்கருவியானவ னென்றுவது, (வானத்தைக்) கடக்கின்றவ னென்றுவது இதற்குக் காரணப்பொருள் காண்க. இனி, 'தரணியின்உகிராற்பிளந்து' என்பதற்கு - பூமியிலே நகத்தினாற்பிளந்து என்று உரைத்தல் பொருந்தாது; "மண்ணிற்சாகிலன் வானிலுஞ்சாகிலன் வரத்தால்" என்றபடி, அவன் பூமியிலிறவாதவரம்பெற்றவனாதலால். தரணியிற்கொடுமைபுரிந்து என்று இயைத்துப் பொருள்கொள்ளினுமாம். மூவுலகு - சுவர்க்கம், பூமி, பாதாளம். அங்குரித்து - அங்குரமென்ற வடமொழிப்பெயரினடியாப்பிறந்த வினையெச்சம்; அங்குரம் - முளை. உகம் - வடசொற்சிதைவு. 'நரவரி' என்றவிடத்து 'ஆளரி' என்றும் பாட முண்டு; பொருள் அதுவே. (௧௪௪)

௧௪௫. அரக்கர்தங்குலத்துக்கதிபதியாகியாண்டுபோய்மீண்டுமங்குரித்துத், தருக்குடனவர்களிருவருமுறையாற்றம்பியுந்தமையனுமானார், சிரக்குவையுடனேபுயவரைநிரையுஞ்சிந்தவச்சிந்துவினிடையே, சரக்குவைசொரிந்தானமலனவ்வுகத்துத்தசரதன்றன்வயிற்றுதித்தே.

(இ - ள்.) மீண்டும் - மீளவும், அவர்கள் இருவரும் - அத்துவாரபாலகரிரண்டுபேரும், ஆண்டு - அவ்விடத்து [நிலவுலகத்தில்], போய் அங்குரித்து - சென்று பிறந்து, அரக்கர்தம் குலத்துக்கு தருக்குடன் அதிபதி ஆகி - இராக்கதர்களுடைய கூட்டத்துக்குப் பெருமிதத்தோடு தலைவர்களாய், முறையால் தம்பியும் தமையனும் ஆனார் - உறவுமுறைமையினால் தம்பியான கும்பகர்ணனும் தமையனான இராவணனு மானார்கள்; அமலன் - பரிசுத்தமூர்த்தியான திருமால், அ உகத்து - அந்தத்திரேதாயுகத்திலே, தசரதன் தன் வயிறு உதித்து - தசரதசக்கரவர்த்தியின் வயிற்றில் தோன்றி [ஸ்ரீராமாவதாரஞ்செய்து], அ சிந்துவின் இடையே - கடலினிடையேயுள்ளதான அவ்விலங்காபுரியிலே, சிரம் குவையுடனே புயம் வரை நிரையும் சிந்த - (அவ்விராவணகும்பகர்ணர்களுடைய) தலைகளின்குவியலுடனே மலைபோன்ற தோள்களின்வரிசையும் அற்று விழும்படி, சரம் குவை சொரிந்தான் - அம்புக்கூட்டங்களை மிகுதியாகப் பிரயோகித்தான்; (எ - று.)

இருவரும் அதிபதியாகி-பன்மையொருமைமயக்கம். தருக்கு-செருக்கு, அகங்காரம், களிப்பு. இராவணன் பத்துத்தலையும் இருபதுதோளு முடையவனாதலால், 'சிரக்குவையுடனே புயவரைநிரையும்' எனப்பட்டது. சிந்து - வடசொல். தசரதன்என்ற வடமொழிப்பெயர் - பத்துத்திக்கிலுஞ்

செல்லுமிடத்தே தேருடையவ னென்று பொருள்படும்; தச - பத்து, ரதம் - தேர். சிந்துவினிடையே சிந்த - கடலிலே சிதறிவிழ எனினுமா (கசஎ)

௧௪௮. இந்நல்லுகத்திலிறைவனுக்கன்னோரிருவருங்கிளைஞ ராயெய்தி, வந்தனர்வஞ்சக்கஞ்சமாமனுமிம்மைத்துனன்றானுமாய் மன்னோ, சிந்தையிலுணர்வீரென்றுகொண்டுரைத்தான்சித்தசித்து ணர்ந்தருண்முனியு, மந்தமன்னவையினிருந்துளோரெல்லாமமல னைத்துதித்ததிசயித்தார்.

(இ - ள்.) அன்னோர் இருவரும் - அந்தத்துவாரபாலக ரிரண்டுபேரும், இந்த நல் உகத்தில் - இந்த நல்ல(துவாபர)யுகத்திலே, வஞ்சம் கஞ்சன் மாமனும் இ மைத்துனன்தானும் ஆய் - வஞ்சனையையுடைய மாமனாகிய கம்சனும் அத்தைமகனான இந்தச்சிசுபாலனு மாக, இறைவனுக்கு கிளைஞர் ஆய் எய்தி வந்தனர் - திருமாலாகிய கண்ணபிரானுக்கு உறவினராய்வந்து பிறந்தார்கள்; சிந்தையில் உணர்வீர் - (இச்செய்தியை) மனங்கொண்டு அறிவீர்களாக, என்று—, சித்து அசித்து உணர்ந்தருள் முனியும் - சித்தும் அசித்துமாகிய தத்துவப்பொருளின் இயல்பை அறிந்தருளிய வியாசமாமுனிவனும், கொண்டு உரைத்தான் - எடுத்துச்சொல்லியருளினன்; (அது கேட்டு), அந்த மன் அவையின் இருந்துளோர் எல்லாம் - அந்தப்பெரிய சபையிற் கூடியிருந்தவர்களெல்லாரும், அமலனை துதித்து அதிசயித்தார் - ஆச்சரியமடைந்து கண்ணபிரானைத் துதித்தார்கள்; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை. 'கொண்டு' என்பதையும் அசையென்னலாம்.

முத்திபெறவிரும்புபவர் அறியவேண்டிய தத்துவங்கள் மூன்று; அவை யாவன—சித், அசித், ஈச்வரன். சித் - உணர்வுடையது: ஜீவாத்மா. அசித்- உணர்வில்லாதது: ஜடம். ஈச்வரன் - முழுமுதற்கடவுளான பரமாத்மா. இம்மூன்றையும் தத்வத்ரய மென்பர். இவற்றில் சித்தையும் அசித்தையும் உணர்ந்தமை கூறியது, ஈசுவரனை யுணர்ந்தமைக்கும் உபலக்ஷணம். இந்நூலாசிரியர் மேல் நம்மாழ்வாரை "சித்தசித்தொடீசனென்று செப்புகின்ற மூவகைத், தத்துவத்தின் முடிவுகண்ட சதுர்மறைப்புரோகிதன்" என்றும், துரியோதனனை "சித்தசித்துணர்விலாதான்" என்றுங் கூறுதல் காண்க. ஸ்ரீவைஷ்ணவவிசிஷ்டாத்வைதசித்தாந்தத்துக்குஉரியஇம்மூன்றுதத்துவங்களின்தன்மையைத் தத்வத்ரயம்,விஷ்ணுபுராணம் முதலிய நூல்களிற்காண்க.

கிருதயுகமும் திரேதாயுகமும் இவர்கட்குச் சாபவிமோசனத்துக்கு உரிய காலமாகாது சாபானுபவத்துக்கே யுரிய காலமாய்க் கழிய, இந்தத் துவாபரயுகமே சாபந்தீர்ந்து முன்னையபதவியையடைதற்குஉரிய கால மாகுதலால், 'இந்த நல்உகம்' எனப்பட்டது. மன்அவை - ராஜசபையுமாம். துதித்து அதிசயித்தார்-அதிசயித்துத் துதித்தார் என மொழிமாற்றி விகுதி பிரித்துக்கூட்டுக. (கசஅ)

[பலரும் கண்ணனைத் தியானித்துத் துதித்து வணங்குதல்.]

௧௪௯. வீடுமன்விதுரன்றுரோணனேமுதலாம்விரகிலாவுணர்வுடைவேந்தர், நாடினர்மனத்திற்புளகமுற்றுடலநயனநீர்மல்கநாக்குழறிப், பாடினர்புகழ்ந்துபரவினர்பரவிப்பைந்துழாய்கமழ்மலர்ப்பாதஞ்,சூடினர்சுருதிக்கெட்டொணுதொளிருஞ்சுடர்மணித்துய்யசோதியையே.

(இ - ள்.) வீடுமன் விதுரன் துரோணனே முதல் ஆம்-பீஷ்மனும்விதுரனும் துரோணனும் முதலான, விரகு இலா உணர்வு உடை வேந்தர்-கபடமில்லாத அறிவையுடையஅரசர்கள்,— சுருதிக்கு எட்டு ஒணுது ஒளிரும் சுடர் மணி துய்ய சோதியை - வேதங்களுக்குஎட்டமுடியாதபடி (அப்பாற்பட்டு) விளங்குகிற பிரகாசத்தையுடைய நீலநிறமுள்ள பரிசுத்தமான ஒளிவடிவமா

கிய கண்ணபிரானை, மனத்தில் நாடினர் - மனத்திற்கொண்டு தியானித்து, உடலம் புளகம் உற்று - (ஆனந்தாதிசயத்தால்) உடம்பு மயிர்ச்சிலிர்ப்படையப்பெற்று, நயனம் நீர் மல்க - கண்களில் ஆனந்தக்கண்ணீர்பெருக, நா குழறி - நாக்குக் குளறப்பெற்று, பாடினர் - பாடினார்கள்; புகழ்ந்து பரவினர் - கொண்டாடித் துதித்தார்கள்; பரவி - அங்ஙனம் துதித்து, பைந் துழாய் கமழ் மலர் பாதம் சூடினர் - பசுமையான திருத்துழாய் மணம் வீசப்பெற்ற தாமரைமலர்போன்ற (அக்கண்ணனது) திருவடிகளைத் தமதுசிரத்தின்மேற் கொண்டு வணங்கினார்கள்; (எ - று.)

விதுரன் - பாண்டவர்க்கும் துரியோதனனியர்க்கும் சிறியதந்தை; விசித்திரவீரியராசனது மனைவியரி லொருத்தியான அம்பிகையினு லேவியனுப்பப்பட்ட தாதியினிடத்து வியாசமுனிவனருளாற் பிறந்தவன்: யமதருமராசனது அம்சமானவன்.

துரோணன் - பரத்வாஜமுனிவனது குமாரன்; கிருபாசாரியனுடன் பிறந்தவளான கிருபியின் கணவன்: அசுவத்தாமனது தந்தை; துரியோதனுதியர்க்கும் பாண்டவர்க்கும் அஸ்திரசஸ்திரங்களைக் கற்பித்த ஆசிரியன். வைதிகவிரதாநுட்டானஞ்செய்துகொண்டிருக்கையில் தேவர்களாலேவியனுப்பப்பட்ட மேனகையின் கட்டழகைக் கண்டு காதல்கொண்ட பரத்துவாசமுனிவனது விருப்பத்தால் ஒருதுரோணகும்பத்திற் பிறந்தமைபற்றி, இவனுக்குத் துரோண னென்று பெயர்: துரோணகும்பம் - பதக்களவு கொண்ட பாத்திரம்; [துரோணம் - பதக்கு, இரண்டுமரக்கால்.] இவன் பிராமணசாதியிற் பிறந்தவனுயினும், குருகுலத்து ராஜகுமாரர்களுக்குப் படைக்கலப்பயிற்சிகற்பிக்குந்தொழிலை மேற்கொண்டதுமுதல் வீடுமன்சொன்னபடி குடை கொடி முதலிய ராஜசின்னங்கள் பலவற்றையும் ஏற்று க்ஷத்திரியன்போன்று ஒழுகியதனால், இவனையுஞ்சேர்த்து 'வீடுமன்விதுரன்துரோணனே முதலாம் வேந்தர்' என்றார்; அதனை "முனிநீஜயா இதற்குமுன்னம் இன்றுமுதலா, இனிஇவ்வுலகுக்கு அரசாய் எம்மிலொருவனுகிக், குனியில் வலியாலமருஙகோடியென்று கொடுத்தான், பனிவெண்குடையும் கிருபர்க்குரியவரிசைபலவும்" என வாரணுவதச்சருக்கத்திற் கூறியதனு லுணர்க.

மயிர்சசிலிர்ப்பும், கண்ணீர்பெருகுதலும், நாக்குழறுதலும் - பேரானந்தத்தின் மெய்ப்பாடுகள். புளகம், நயநம் - வடசொற்கள். துழாய் - அடியார்கள்இட்டு அருச்சித்தது. 'சூடினர்' என்ற வினையின் ஆற்றலால், எம்பெருமானது திருவடித்தாமரைமலர் அடியார்களின்முடிக்கு அலங்காரமென்க. விரகிலாஉணர்வு - விபரீதஞானமில்லாத உண்மையறிவு. மணி - நீலரத்தினமுமாம். (கசக)

[தருமபுத்திரன் அனைவர்க்கும் பூஜோபசாரங்களைச் செய்தல்.]

களுO. அப்பொழுதமலனருஞ்சினமொழிந்தாங்கருளுடையறத்தின்மைந்தனைப்பார்த், திப்பொழுதரசரானவர்க்கெல்லாமிருஞ் சிறப்புதவுகென்றிசைப்ப, முப்பொழுதுணருமுனிவரன்பணியான் முறைமுறைபூசனைபுரிந்தான், மைப்பொழுதொளிகூர்வெண்ணிலவுமிழுமதிகுலத்துதித்தருண்மன்னன்.

(இ - ள்.) அ பொழுது - (அனைவரும் துதித்துவணங்கிய) அப்பொழுது, அமலன் - கண்ணபிரான், அருஞ் சினம் ஒழிந்து - (பிறர் அணுகுதற்கு) அரிய கோபந் தணியப்பெற்று, ஆங்கு - அவ்விடத்தில் [அருகிலுள்ள], அருள் உடை அறத்தின் மைந்தனை பார்த்து - (எல்லாவுயிர்களிடத்தும்) கருணையையுடைய தருமபுத்திரனை நோக்கி, இ பொழுது அரசர் ஆனவர்க்கு எல்லாம் இருஞ் சிறப்பு உதவுக என்று இசைப்ப - 'இப்பொழுது நீ அரசரானவர்க்கும் சிறந்தஉபசாரங்களைச் செய்வாயாக' என்று கட்டளையிட, மை பொழுது ஒளி கூர் வெள் நிலவு உமிழும் மதி குலத்து உதித்த

ருள் மன்னன் - இருளுக்குஉரிய இராக்காலத்திலே பிரகாசம்மிக்க வெண்ணிறமான நிலாவை வீசுகிற சந்திரனது வம்சத்தில் தோன்றிய தர்மராஜன்,—முப்பொழுது உணரும் முனிவரன் பணியால் - மூன்றுகாலத்துவரலாறுகளையும்அறிந்த இருடிச்சிரேஷ்டனான வியாசமாமுனிவனது கட்டளையினால், முறை முறை பூசனை புரிந்தான் - முறைமைதவறாது (அரசர்கட்கெல்லாம்) பூஜோபசாரங்களைச் செய்தான்; (எ - று.)

வியாசமுனிவன் சொல்லியருளியவாறு முதலிற் கண்ணபிரானுக்கும், பிறகு மற்றையோர்க்கு மாக அவரவர்தகுதிக்குஉரிய முறைமைப்படி சிறப்புச்செய்தன னென்க. கோபத்தின்பின்னுகச்சிறிதுபொழுதுநிற்பது, சினம்; (இச்சொற்கு இப்பொருள் நச்சினார்க்கினியருரையிற் கண்டது.) சிசுபாலன்மீது கோபங்கொண்ட கண்ணபிரான் அக்கோபத்தின்காரியமாகிய சிசுபாலவதத்தை நடத்திமுடித்தபின்பும் சிறிதுநேரம் கோபந்தணியாதுநிற்க, கோபத்தின்தொடர்ச்சியாகியஅச்சினம் அனைவரும் வணங்கித்துதித்ததனால் தணிந்த தென்க; (நரசிங்கமூர்த்திக்கு இரணியன்மேலெழுந்தகோபம் அவனைக்கொன்றபின்பும் தணியாததாக அதுகண்ட பிரமன்முதலியோர் துதித்துவணங்க அச்சிங்கப்பிரான் சினந்தணிந்தமை, இங்கு ஒப்புநோக்கத்தக்கது;அது "என்றுங்கியம்பியிமையாதவெண்கணனும்,வன்றூண்மழுவோனும் யாரும் வணங்கினராய், நின்று நிருமருங்கு நேமிப்பெருமானும், ஒன்றாத சீற்றத்தை யுள்ளேயொடுக்கினான்" எனக் கம்பர்கூறியதனாலும் விளங்கும்.) உதவுகென்று - தொகுத்தல். முப்பொழுது - இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்; இது - இங்குக் காலவாகுபெயராய், அக்காலங்களில் நிகழ்ந்தவையும் நிகழ்கின்றவையும் நிகழ்பவையுமான செய்திகளைக் குறித்தது. ஈற்றடி, எங்கும்விளங்கும்புகழோடு இயல்பிலே தண்ணளியையுமுடையவன் தருமபுத்திரன் என்ற குறிப்பு. தேவர்களை இருதிணையாலுங் கூறலாமாதலால், தருமனெனப்படுகிற யமன் இங்கு 'அறம்' என அஃறிணைவாய்பாட்டுச்சொல்லாற் கூறப்பட்டான். ஆங்கு-அசையுமாம். கூர்-உரிச்சொல்.

[முனிவர்களும் கண்ணனும் தம்தம்இடஞ்சேர்தல்.]

௧௫௧. அருமறைமுறையாலரசனைமுனிவரனைவருமாசிசொற்றருளித், தருநிரைபயிலுந்தத்தமவிபினஞ்சார்ந்தனர்தகவுடன்மீளக், கருமுகிலனையமேனியங்கருணைக்கண்ணனுங்கிளையுடன்றுவரைத், திருநகரடைந்தான்சென்றுவன்றிறல்கூர்சேதிபப்பெரும்பகை செகுத்தே.

(இ - ள்.) முனிவர் அனைவரும் - இருடிகளெல்லாரும், அரசனை - தருமராசனை, அரு மறை முறையால் ஆசி சொற்று அருளி - அருமையான வேதங்களின் விதிப்படி ஆசீர்வாதஞ்சொல்லி அநுக்கிரகித்து, தகவுடன் - தகுதியானஉபசாரம்பெற்றவர்களாய், தரு நிரை பயிலும் தம்தம விபினம் மீள சார்ந்தனர் - மரங்களின்தொகுதிபொருந்திய தாம்தாம்வசிக்குந் தபோவனத்துக்கு மீண்டுசென்றார்கள்; கரு முகில் அனைய மேனி அம் கருணை கண்ணனும் - காளமேகம்போன்ற திருமேனிநிறத்தையும் அழகிய திருவருளொழுகுங் கண்களையு முடையவனான ஸ்ரீகிருஷ்ணனும், வல் திறல் கூர் சேதிபன் பெரும் பகை செகுத்து - வலிய பலபராக்கிரமம்மிக்க சேதிதேசத்தரசனான சிசுபாலனாகிய பெரியபகைவனை யொழித்தவனாய், கிளையுடன் சென்று துவரை திருநகர் அடைந்தான் - தமதுசுற்றத்தாருடனே புறப்பட்டுத் துவாரகாபுரியென்கிற தனது சிறந்தநகரத்தைச் சேர்ந்தான்.

கண்ணனது திருவவதாரத்தின் முக்கியமானபயன்களி லொன்றும், கண்ணன் தருமனது இராசசூயயாகத்துக்குவரப்புறப்பட்டபோது கொண்ட உத்தேசமும் சிசுபாலவத மாதலால், அக்காரியத்தைச் செய்துமுடித்து வெற்றிதோன்றமீண்டெழுந்தருளினனென்பது விளங்க, 'சேதிபப்பெரும்

பகை செகுத்துச்சென்று திருநகரடைந்தான்' என்றார். மறைமுறையால் ஆசிசொற்றருளி - வேதமந்திரங்களைக்கொண்டு ஆசீர்வாதஞ்சொல்லியருளி எனினுமாம். சொற்றுஎன்ற தெரிநிலைவினையெச்சத்தில், ற் - இறந்தகால இடைநிலை. தத்தம - தம்தம்முடைய: இதில், அ - ஆறனுருபுஎன்றாவது, சாரியையென்றாவது கொள்க. விபிநம் - வடசொல். 'அம்கருணைக்கண்ணன்' என்பதற்கு - அழகியதிருவருளையுடைய கிருஷ்ண னென்றும் பொருள் கொள்ளலாம். முந்தினபொருளில், கண்ணனது கண்ணோட்டமுடைமை அவனதுகண்களின்பார்வையிலே வெளியாகின்ற தென்பது கருத்து. துவரை - வடசொற்சிதைவு. கிளையுடன் - பலராமன்முதலியோருடன். (கருக)

[துரியோதனன்முதலியோர் தம்தம்நகர்க்கு மீளுதல்.]

கருஉ. அராவவெங்கொடியோனாதியாவுள்ளவரசருந்தந்நகரடைந்தார், விராடனும்யாகசேனனுமுதலாம்வேந்தருந்தம்பதிபுகுந்தார், சராசனத்தடக்கைச்சல்லியன்முதலோர்கிளையுடன்றம்புரஞ்சார்ந்தார்,பராவருமுதன்மைப்பாண்டவர்கடற்பார்பண்புறத்திருத்தியாண்டிருந்தார்.

(இ - ள்.) அராவம் வெம் கொடியோன் ஆதி ஆ உள்ள அரசரும்- பாம்பின்வடிவமெழுதிய பயங்கரமான துவசத்தையுடைய துரியோதனன்முதலாக அங்குவந்துள்ள குருகுலத்து அரசர்களும், தம் நகர் அடைந்தார் - தங்களுடைய அஸ்திநபுரிக்குப் போய்ச்சேரலானார்கள்; விராடனும் யாகசேனனும் முதல் ஆம் வேந்தரும் - (மத்ஸ்யதேசத்துஅரசனான) விராடனும் (பாஞ்சாலதேசத்துஅரசனான) யாகசேனனும் முதலான அரசர்களும், தம் பதி புகுந்தார் - தம்தம்நகரத்துக்குப் போய்ச் சேரலானார்கள்; சராசனம் தட கை சல்லியன் முதலோர்- வில்லையேந்திய பெரியகையையுடைய (மத்திரதேசத்தரசனான) சல்லியன்முதலிய அரசர்களும், கிளையுடன் - சுற்றத்தாருடனே, தம் புரம் சார்ந்தார்- தங்கள்நகரத்துக்குப் போய்ச்சேரலானார்கள்; (இங்ஙனம் வந்தவரனைவரும் மீள), பராவு அரு முதன்மை பாண்டவர் - துதித்தற்குஅரிய தலைமையையுடைய பாண்டவர்கள், கடல் பார் பண்பு உற திருத்தி ஆண்டு இருந்தார்-கடல்சூழ்ந்த நிலவுலகத்தை நன்மையமையும்படி சீர்திருத்தஞ்செய்து அவ்விடத்திலே [இந்திரப்பிரத்தநகரத்திலே] அரசாண்டுகொண்டிருந்தார்கள்; (எ - று.)

இரட்டுறமொழிதலென்னும்உத்தியால், 'ஆண்டு' என்பதற்கு - அவ்விடத்தில் என்றும், அரசாட்சிசெய்து என்றும் இருபொருள் கொள்ளப்பட்டன. தம்நகர்அடைந்தார், தம்பதிபுகுந்தார், தம்புரம்சார்ந்தார் என்ற வெவ்வேறு சொற்றொடர்கள் ஒருபொருளனவாய்வந்தது, பொருட்பின்வருநிலையணி. 'அரா'என்ற குறியதன்கீழ் ஆ, குறுகாது 'அம்' சாரியைபெற்று, 'அராவம்' என்று நின்றது. அராவக்கொடியோன் என்ற தொடர் - பாம்புபோலக்கொடியவ னென்றும் பொருள்படும். யாகசேநன்என்பது, துருபதனது மற்றொருபெயர்; இவன் திரௌபதியின்தந்தை. சல்யன் - (பகைவர்க்கு) அம்புநுனிபோல் (வருத்தஞ்செய்) பவன்; சல்யம் - அம்புமுனை. இவன்,பாண்டுமகாராசனது இரண்டாம்மனைவியான மாத்திரியின் உடன்பிறந்தவனாதலால், நகுலசகதேவர்க்கு மாமனாவன். சராஸநம் என்ற வடசொல் - சர அஸநம் என்றுபிரிந்து, அம்புகளைத்தள்ளுவது என்றும்; சர ஆஸனம் என்றுபிரிந்து, அம்புகளை(த் தொடுத்தற்காக) வைத்தற்குஇடமாவது என்றும் காரணப்பொருள்படும். பண்பாவது-எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்துஒழுகுதல்; "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்" என்றார் கலித்தொகையிலும். 'கிளையுடன் தம்புரஞ்சார்ந்தார்' என்றவிடத்து 'தமருடன் தம்புரஞ்சார்ந்தார்' என்று சிலபிரதிகளிற் பாடங் காணப்படுகிறது.

[தருமபுத்திரனது கொடைச்சிறப்பு.]

கடுகை. முன்குலத் தவர்க்கு முனிகுலத் தவர்க்கு மும்மதக் கைம்முகக் களிற்று,மன்குலத் தவர்க்கும் வான்குலத் தவர்க்கும் வரம்பிலா வகைக்கலை தெரியு, நன்குலத் தவர்க்கும் பொருளெலா நல்கி நாடொறும் புகழ்மிக வளர்வான்,றன்குலக் கதிர்போற் றேய்ந்தொளி சிறந்தான் றண்ணளித் தருமரா சனுமே.

(இ - ள்.) தண் அளி தருமராசனும் - குளிர்ச்சியான கருணையையுடைய தருமபுத்திரனும்,—முன் குலத்தவர்க்கும் - (நால்வகைவருணத்துள்ளும்) முதல்வருணத்தவரான அந்தணர்களுக்கும், முனி குலத்தவர்க்கும் - (அவர்களுள்ளுஞ் சிறந்தவர்களான) முனிவர்களது பகுப்பினர்க்கும், மும் மதம் கை முகம் களிறு மன் குலத்தவர்க்கும் - மூன்றுவகைமதஜலத்தையும் துதிக்கையுள்ளமுகத்தையு முடைய யானைசசேனையை யுடையவர்களான ராசகுலத்தார்க்கும், வான் குலத்தவர்க்கும் - தேவசாதியார்க்கும், வரம்பு இலா வகை கலை தெரியும் நல் குலத்தவர்க்கும் - அளவற்ற பலவகைச்சாஸ்திரங்களை ஓதியுணர்ந்த சிறந்த புலவர்வகுப்பினர்க்கும், நாள் தொறும் - தினந்தோறும், புகழ் மிக வளர்வான் பொருள் எலாம் நல்கி - கீர்த்திமிகவும்விருத்தியாம்படி(பொன் ஆடை அணிகலம் முதலிய) பொருள்களையெல்லாம் கொடுத்து, தன் குலம் கதிர்போல் தேய்ந்து ஒளி சிறந்தான் - தான்பிறந்தகுலத்துக்கு ஆதிபுருஷனான சந்திரன்போலச் சுருங்கி ஒளிமிகுந்தான்; (எ - று.)

"அருந்தவானவர்க்கு ஆரமுது அன்புடன்அளிப்போன்" என்றபடி சந்திரன் தன்கலைகளாகிய அமிருதகிரணங்களைத் தேவர்கட்கு உண்ணக்கொடுத்துத்தான்கலைகுறைந்தும்சிறப்புமிகுதல்போல, தருமராசன் தனது பொருள்களையெல்லாம் பூதேவராகியஅந்தணர்முதலியோர்க்குக் கொடுத்துச் செல்வங்குறைந்தும் தேஜசினாலும் புகழினாலும் மிக்கனன் என்பதாம். ஒளி - காந்தியும், புகழும். இனி, சந்திரன்போலத் தேய்ந்தும் (அச்சந்திரனினும்மேலாக) ஒளிசிறந்தா னென்று பதவுரைகூறி, சந்திரன் கலைகுறைந்து வடிவுதேய்ந்தகாலத்தில் ஒளிகுறைவதுண்டு: அங்ஙனமின்றித் தருமபுத்திரன் பொருளெலாம்நல்கியதனாற் செல்வம்தேய்ந்தும் ஒளிகுறையாது அக்கொடையினாலாகும் மகிழ்ச்சிபற்றி மிகவிளங்கினா னென்று கருத்துக்கொள்ளுதலு மொன்று. சந்திரன் கலைதேய்ந்தகாலத்தும் ஒளிசெய்துசிறத்தல்போலத் தருமராசனும் பொருள் தேய்ந்தும் ஒளியுற்றுவிளங்கின னென்றுங் கொள்க. சந்திரன் முதலிற் கலைகுறைந்தனனாயினும் உடனேகலைவளரப்பெறுதல்போலத் தருமனும் முதலிற்கொடையினாற் செல்வந்தேய்ந்தனனாயினும் பின்பு விரைவிற் செல்வம் வளரப்பெற்றன னென்ற கருத்தும் அமையும். கொடுக்கக்கொடுக்கப் புண்ணியத்தாற் செல்வம் பெருகுத லியல்பு. 'தன்குலக்கதிர்போ லேந்தொளிசிறந்தான்' என்று பாடமோதுவாருமுளர்; ஏந்துஒளி - சிறந்தஒளி. ஒருகுலத்தவனுக்கு அக்குலத்துமுதல்வனை உவமைகூறுதல் ஏற்கும்.

அளியாவது - அன்புகாரணத்தால்தோன்றும் அருள். தீவினைக்குஏற்ற தண்டனைசெய்து தருமத்தைக் காத்தலால்,யமனுக்குத் தர்மராஜ னென்று வடமொழியில் ஒருபெயர்; தந்தையேமைந்தனாகிறா னென்னும் வழக்குப்பற்றி, தருமராசன்புத்திரனை 'தருமராசன்' என்றார். இவனும் தருமத்தவறு [illegible]ப்பவனாதலால், இவனையே தர்மராச னென்று குறித்தலும் தகும். [illegible]ரையில வாதலாலும், அதன்பகுப்புக்கள்பலவாதலாலும், 'வரம்பிலா [illegible]கலை' எனப்பட்டது. 'புகழுடன் வளர்வான்' என்பதும் பாடம். ([illegible])

இராயசூயச்சருக்கம்.

---

ஸ்ரீ

# மகாபாரதம்.

இரண்டாவது

## சபாபருவம்.

இரண்டாவது

## சூதுபோர்ச்சருக்கம்.

---

ஞா[redacted]யபரம்பரவமிழ்தமாய்நவிரறுமயக்காகி
வா டன்வாயுவாய்த்தேயுவாய்வனமுமாய்மண்ணாகித்
தானமாமறைமுறைமையிற்பற்பலசராசரங்களுமாகி
யேனமாயிவையனைத்தையுமருப்பினாலேந்தினானெனையாண்டோன். ()

வேறு.

தாமரையனையசெங்கட்டரணிபனிராயசூய
மாமகமுற்றித்தங்கண்மாநகர்புகுந்தபின்னர்
நாமருபனுவன்மாலைநாகவேறுயர்த்தசெல்வக்
கோமகனிளைஞரோடுங்குறித்ததுகூறலுற்றாம். (உ)

கணைவருவரிவில்வாழ்க்கைக்கடுங்கனலனையதோற்றத்
துணைவருந்தானுங்கங்காசுதனுமற்றெவருஞ்சூழ
வினைவருமரசரில்லாவிகலரியேறுபோல்வான்
கிணைவருமோதைசூழுதூர்க்கிளர்நெடும்புரிசைபுக்கான்.

சென்றழியெவருந்தத்தஞ்செழுமனையெய்திவாசந்
துன்றியவமளிகங்குற்றுயில்புரிந்தெழுந்தபின்னை
நின்றவெம்பரிதித்தோற்றந்தொழுதுதந்நியமமுற்றி
வன்றிறலரசன்கோயின்மன்னவைவந்துசேர்ந்தார்.

இறைஞ்சியவேந்தர்க்கெல்லாமிருப்பளித்தெதிர்ந்தவேந்தர்
நிறைஞ்செறிகுருநிவேலானினைவினோடிருந்தபோதி
லறைஞ்செறிதானம்வண்மையளவிலாதளித்துநாளும்
புறஞ்சுவர்கோலஞ்செய்வான்பூபதிக்குரைக்கலுற்றான்.

தாதவிழ்குவளைமாலைத்தருமன்மாமதலைபெற்ற
மேதகுவேள்விச்செல்வம்வேந்தரில்யாவர்பெற்றா
ரேதளவவன்றன்வாழ்க்கையாரினியெதிருண்டென்று
பாதகனினைவைத்தானும்பகர்ந்தனன்பரிவுகூர. ([illegible]

விதரணவிநோதன்சொன்னவார்த்தையும்வேந்தர்வேந்த
னிதயமுமொன்றாய்நின்றவியற்கையைச்சகுனிகண்டு
புதைநகமடங்கலானும்புறஞ்செலாதொடுங்குமானும்
மதகரிவிடுமோவென்றான்வசையிசையாகக்கொள்வான்.

சொல்லிடைநஞ்சுகக்குந்துன்மதியுடையதம்பி
வில்லிடைநின்றதம்முன்வெம்மனங்களிக்கச்சொன்னா
னல்லிடைநிறைந்ததேனுமமுதவெண்கிரணத்திங்க
ளெல்லிடையிரவிமுன்னரெவ்வுழிநிகர்க்குமென்றே. (௮)

தமையனுந்தம்பிசொன்னதன்மையையுணர்ந்துநீதி
யமைதருதந்தைகேட்பவவன்பெருந்தாதைகேட்பக்
கமைபெறுவிதுரன்கேட்பக்கார்முகக்கன்னன்கேட்ப
விமையவன்றுரோணன்கேட்பயாவருங்கேட்பச்சொல்வான். (௯)

இந்திரன்முதலாவுள்ளவிமையவர்சிறப்புச்செய்யச்
சுந்தரப்பொற்றோள்வேந்தர்தொழில்புரிந்தேவல்செய்ய
மந்திரமுனிவர்வேள்விமறைநெறிமுறையிற்செய்யத்
தந்திரவெள்ளச்சேனைத்தருமனேதலைவனானான். (௧௦)

இனியவன்சின்னாட்செல்லினெம்மனோர்வாழ்வுங்கொள்ளுந்
துணைவரும்புரவித்திண்டேர்த்துணைவருஞ்சூரரானோர்
முனைவருகூர்முள்வேலுமுனையிலேகளையினல்லா
னனிவரவயிர்த்தபோதுகவியமுமடியுமன்றே. (௧௧)

போதறவிளைந்துமற்றப்புரவலன்செல்வம்யாவும்
பேதுறக்கவர்ந்திலேனேற்பின்னையார்முடிக்கவல்லார்
மோதுறப்பொருதேயாதன்மொழியொடுவஞ்சமொன்று
[illegible]ப்புரிந்தேயாதல்கொள்வதேசிந்தையென்றான். (௧௨)

என்னனுமுரியதம்பியெழுவதேகருமமின்றே
செங்கெலின்வாளைபாயுஞ்செல்வநாடுடையகோமா
னென்னலங்கெய்தவிமனைகைத்ததுநேயமான
கன்னலின்மொழியாண்மூரல்விளைத்ததுங்கண்டிலீரோ. (கங)

எத்தனைதரணிவேந்தர்யாகநல்விழாவில்வந்தா
ரத்தனைபேரில்யாமுமொருவராயடங்கிநின்றேங்
கொத்தனையுகளுநன்னீர்க்குருகுலக்கோமானந்த
மூத்தனையன்றிப்பின்னையாரையேமுதன்மைசெய்தான். (கச)

நந்தகோமகனுக்கெல்லாநல்கியமுதன்மைகண்டு
வந்தகோவெள்ளஞ்சேரவாய்திறவாமனிற்ப
வெந்தகோவிவனுக்கிந்தமுதன்மையென்றெதிர்ந்துமாற்றந்
தந்தகோமடியுமாறுசமரமும்விளைப்பித்திட்டான். (கரு)

தன்புயவலியுநான்குதம்பியர்வலியுமாயன்
வன்புயவலியுங்கொண்டேமண்ணெலாங்கவரவெண்ணி
யின்புயச்சிகரிமன்னர்யாரையுந்தன்கீழாக்கி
மின்புயலனையான்மேன்மைவிளைக்கவேவேள்விசெய்தான். (கசு)

எல்லியல்பரிதியன்னயதுகுலமன்னன்றானுஞ்
சல்லியமிகுபோர்செய்யச்சல்லியன்றன்மேற்சென்றான்
சொல்லியகருமம்வாய்ப்பச்சூழ்வலைப்படுத்திக்கொண்ட
வல்லியமென்னச்சூழ்ந்துமலைவதேகருமமென்றான். (கஎ)

வேந்தனுமொருப்பட்டந்தவெண்ணெய்வாய்க்கள்வன்மீளப்
போந்திவர்தமக்குமின்றுபொருதுணையாகமாட்டான்
சாந்தணிகுவவுத்தோளான்சல்லியன்வலியனிப்போ
தாந்தகவெண்ணில்வல்லேயைவரையடர்க்கலாமே. (கஅ)

வஞ்சனைகொண்டேயாதல்வாரணமணித்தேர்வாசி
நஞ்சனையவராலாதனையேயழித்தல்வேண்டுங்
கஞ்சனைமலையவெண்ணிக்கரியபேய்முலைப்பாலுண்ட
செஞ்சினனெய்தாமுன்னேர்விரைந்தெழுகவென்றான். (ககூ)

வெஞ்சிலைகுனித்தோரம்பியான்விடின்வெகுண்டவேந்த
ரெஞ்சினின்புகுவரல்லால்யாவரேயெதிர்க்கவல்லார்
வஞ்சனைகொண்டுவெல்லமதிப்பதுவாளால்வெல்ல
வஞ்சினமாயினன்றேயென்றனனங்கர்கோமான். (௨0)

யாவருமொழிந்தவார்த்தையின்புறக்கேட்டுப்பின்னுந்
தாவருபுரவித்திண்டேர்த்தானையான்சகுனிசொல்வான்
மேவருகன்னனன்றிவின்னுளோரெதிர்ந்தபோதுங்
கோவருமுன்றிலானைக்கொடுஞ்சமர்வெல்லலாமோ. (௨௧)

இடிம்பனைப்பகனைவைவேலிகற்சராசந்தன்றன்னை
கெடும்பணைப்புயத்தால்வென்றநிகரிலாவீமனிற்கக்
கடும்படைப்பெருமையால்வென்காணலாமென்பராயிற்
றொடும்படைத்தடக்கைவீரர்க்குத்தரஞ்சொல்லலாமோ. (௨௨)

துப்புறழமுதச்செவ்வாய்த்திரௌபதிதுணைத்தோள்வேட்டுக்
கைப்படுசிலையினோடுங்காவலர்கலங்கிவீழ
மெய்ப்படுமுனியாய்வந்துவிசயன்வில்லிறுத்தபோது
மிப்பொழுதிருந்தவீரர்யாவருமிருந்திலேமோ. (௨௩)

இப்பிறப்பொழியவின்னுமேழெழுபிறப்பினாலு
மெய்ப்பிறப்பற்றநீதித்தருமனைவெல்லமாட்டோ
மொப்பறப்பணைத்ததோளாயுபாயமெங்கேனுமொன்றாற்
றப்பறச்சூதுகொண்டுசதிப்பதேகருமமென்றான். (௨௪)

தன்பெருமாமன்சொல்லத்தரணிபன்றம்பிதானும்
வன்பெருஞ்சேனைகொண்டுமலைவதற்கவர்களஞ்சா
ரின்பெருநேயமிக்கவிவன்மொழிப்படியேமாயப்
புன்பெருஞ்சூதுகொண்டுபொருவதேபுந்தியென்றான். (௨௫)

கோமகனெஞ்சநாவுங்குளிர்ந்துபேருவகைகூர்ந்து
மாமனைத்தவிசின்கண்ணேவருதியென்றிருத்திக்கொண்டு
பாமருபனுவன்மாலைப்பாண்டவர்தம்மைமின்னைக்
காமருசூதால்வெல்லுங்கருத்தெனக்குரைத்தியென்றான். (௨௬)

மன்னநின்செல்வக்கோயின்மண்டபமொன்றுதேவர்
பொன்னுலகினுக்குமில்லையென்பதோர்பொற்பிற்றாகப்
பன்னூற்சிற்பக்குன்றுப்பஃறெழில்வினைஞர்தம்மா
னன்னிலவிரிவுண்டாகநாளையேயியற்றுவிப்பாய். (உஎ)

மண்டபங்காணவெம்முன்வருகவென்றழைத்துவந்தாற்
கண்டுகண்களித்துமற்றக்காவலரிருந்தபோதிற்
புண்டரவிசாலநெற்றிப்புரவலபொழுதுபோக
வண்டரும்விரும்பும்வன்சூதாடுதும்வருகவென்பேம். (உஅ)

அதிர்முரசுயர்த்தகோவுமையெனத்துணியும்பின்னை
மதிமருளியற்கைத்தாகுமாயவெஞ்சூதுதன்னால்
விதியெனப்பொருதுவாழ்வுமேதகுமரசுந்தங்கள்
பதிமுதற்பலவுந்தோற்கும்படிசெகுத்திடுவலென்றான். (உகூ)

இன்னதேகருமமென்றென்றினைஞரும்விழைந்துசொன்னா
ரன்னதேகருமமாகவவர்வழியொழுகுநீரான்
றன்னதேயாகுமிந்தத்தலமெனுங்கருத்தான்மாமன்
சொன்னதேதுணிந்துமார்புந்தோள்களும்பூரித்திட்டான். (௩0)

வில்லினாலுயர்ந்தவென்றிவிதுரனைநோக்கிக்கொற்ற
மல்லினாலுயர்ந்தபொற்றோள்வலம்புரிமாலைவேந்தன்
வல்லினாலுபாயஞ்செய்யமாதுலனுரைத்ததெல்லாஞ்
சொல்லினனவனுங்கேட்டுச்சொல்லெதிர்சொல்லலுற்றான். (௩க)

வையமுமரசும்வாழ்வும்வாங்குகைகருத்தேயாயிற்
பொய்படர்சூதுகொண்டுபுன்மையிற்கவரவேண்டா
மையனின்றந்தையோலையைவருக்கெழுதிவிட்டான்
மெய்யுறமறுத்துச்சொல்லார்வேண்டினதருவரன்றே. (௩உ)

தந்தைதன்னேவலாலேதருமனுந்தம்பிமாரு
மிந்தமண்ணுடல்கைவிட்டெரிகெழுகானஞ்சேர்வர்
முந்துறநுமதேயாகுமுழுதும்வாழ்வெழுதுஞ்செம்பும்
பைந்தொடையரசர்கேட்டாற்பரவுமும்பழியுமாகா. (௩௩)

நீதினல்வரித்துநெஞ்சந்தீயவராடுமாயச்
சூதினால்வென்றுகொள்கைதோற்றமும்புகழுமன்று
போதினான்முகனுமாலும்புரிசடையவனுங்கேள்வி
யாதிநான்மறையுமுள்ளளவுமிவ்வசையறாதே. (௩௪)

என்றவனுரைப்பக்கேட்டேயெரியெழுமனத்தனாகி
யொன்றியகேண்மைத்தந்தைக்கொருபுடைவாரமுண்டோ
வன்றிறன்மைந்தர்வாழ்வுவாங்கியின்றெமக்குத்தந்தாற்
புன்றொழில்வசையேயன்றிப்புகழ்கொலோபுகல்வதம்மா. (௩௫)

நினக்கிதுதொழிலாலென்றுநேயமுமவர்கண்மேலே
யெனக்குயிர்த்தந்தைநீயென்றியானுனைமகிழ்ந்துகாண்ப
னுனக்குமுன்கிளைக்குநாளுமுண்டியும்வாழ்வுமிங்கே
மனக்கருத்தங்கேயென்றான்மாசுணத்துவசன்மாதோ. (௩௬)

மைந்தனங்குரைத்தமாற்றமனத்தினையீரப்பின்னும்
வெந்திறல்விதுரனாற்றுவிளம்புவனென்பமாதோ
புந்தியின்மறுவிலாதோய்புதல்வரிலொருசாரன்பு
தந்தையர்க்கில்லையென்றோயானுமத்தந்தையன்றோ. (௩௭)

நீங்களுமவருநேயநெறிமுறைதவறாதென்றும்
வாங்குநீருததியாடைமண்ணின்மேல்வாழ்தலுற்றாற்
பாங்கலாவரசரெல்லாம்பணிந்துறும்வாயினிற்ப
ரோங்கியபுகழும்வாழ்வுமொருப்படவளருமன்றே. (௩௮)

உங்களினவருநீருமுளம்பிரிந்தெதிர்த்தீரானாற்
றங்களினெதிர்ந்தாரம்மாகுருகுலத்தலைவரென்னாப்
பொங்களிகிழுங்கஞ்சப்புரவலனொழிவுகண்ட
திங்களினுயர்ச்சிபோலத்தெவ்வருந்திகழ்வரன்றே. (௩௯)

ஆதலானுறுதிசொன்னேனுமுறைதெரிந்துகோடி
பேதிலார்போலயானுமினியுனக்கியாதுஞ்சொல்லேன்
றீதலாதுணைராவஞ்சச்சிந்தையார்பரிந்துகூறுங்
கோதலாதுனக்கிங்கேலாதெனச்சிலகூறினானே. (௪௰)

நிறுத்தறம்வளர்ப்போனெஞ்சினீதியுங்குரவரேவன்
மறுத்தெதிருரைக்குமென்பால்வடுவுநீவரைந்துகண்டாய்
செறுத்தவராவிகொள்வாயடியனேன்செய்ததெல்லாம்
பொறுத்தருளென்னக்கையாற்போற்றினன்முறுவல்செய்தான். (சக)

செழுந்திருவிரும்புமார்பன்செப்பியகொடுமைகேட்டு
விழுந்திரண்மாலைத்திண்டோள்விதுரனும்வெருண்டுமுன்னித்
தொழுந்தகைமௌலிவேந்தன்சூழ்ச்சியிற்கிசைவுறாம
லெழுந்துதன்கோயில்புக்கானிகலரியேறுபோல்வான். (சஉ)

புரிவிலாமொழிவிதுரன்போகலும்புரிவிலொன்றுஞ்
சரிவிலாவஞ்சமாயச்சகுனியுந்தம்பிமாரும்
விரிவிலாமனத்தோடெண்ணும்விசாரமேவிசாரமாக
வரிவிலான்விரைவினீண்டோர்மண்டபஞ்சமைக்கவென்றான். (சங)

பெருந்தகையேவன்மாற்றம்பிற்படமுற்பட்டோடி
யிருந்ததொல்வேந்தர்தத்தமிருக்கையினியன்றவெல்லா
மருந்திறன்மள்ளராலுமணிமணித்தேரினாலும்
பொருந்தவேகொணர்வித்தாங்கட்பொற்சுவரியற்றினாரே. (சச)

சங்கையில்சிற்பநுண்ணூற்றபதியர்தகவுகூரச்
செங்கையினமைத்தகோலச்சித்திரத்தூணநாட்டி
யங்கையிலருணரத்நத்தணிகொளுத்திரமுமேற்றிக்
கங்கையினுயர்ந்தமுத்தின்கற்றையான்முற்றும்வேய்ந்தார். (சரு)

ஓவியஞ்சிறக்கத்தீட்டியொண்கொடிநிரைத்துச்செஞ்சொற்
காவியமாக்கட்கெல்லாங்கருத்துறுகவினிற்றாகி
வாவியபுரவித்திண்டேர்மன்னவனினைவுக்கேற்ப
வேவியவினைஞர்தம்மாலியல்புறச்சமைந்ததன்றே. (சசு)

மன்னவைக்கானபைம்பொன்மண்டபஞ்சமைந்ததென்று
தன்னவைக்குரியோர்சொல்லச்சகுனியுந்தானுநோக்கிச்
சொன்னவைக்கேற்றதென்றுதொழுதகுதாதைதன்பான்
மின்னவைத்தொளிரும்வேலான்மேவினன்விளம்பலுற்றான். (சஎ)

அரும்பெறலையகேட்டியடியனேன்கருத்துமுற்றக்
கரும்புயறவழுஞ்சென்னிக்கதிர்மணிக்கூடமொன்று
பெரும்புகழ்நகரினீண்டுச்சமைத்தனன்பெருமைகாண
வரும்படிதூதொன்றேவுன்மைந்தரைவிரைவினென்றான். (சஅ)

மகன்மொழிநயந்துகேட்டுவாழ்வுறுதந்தைதானு
மிகநயந்துருகிநல்லவிரகினால்வெல்லலுற்றீ
ரகநெடும்போர்செய்தானுமைவரையடர்க்கொணாது
சகுனியையன்றிவேறோர்தரவல்லார்தரணியென்றான். (சகூ)

விழியிலாவென்றிவேந்தன்விதுரனையழைத்துநீபோய்
மொழியிலாருலகின்மற்றுன்மொழியினைமறுக்கவல்லார்
பழியிலாவிசைகொணீதிப்பாண்டவர்வந்துன்மைந்தர்
வழியிலாயொழுகும்வண்ணமருட்டிநீகொணர்தியென்றான். (௫0)

தம்பியர்விழைவாற்கூடஞ்சமைத்தபேரழகுகாண
விம்பர்வந்தெதையுமெய்தியேகுகவிரைவினென்னப்
பைம்பொனிறோலைமீதுபண்புறவெழுதியின்னே
யெம்பியுமேகுகென்றானவனவனும்போனான். (௫க)

காரெனக்களிறுசுற்றக்காற்றெனப்புரவியீண்டத்
தேரினுக்கொருவன்றன்னைச்சிலம்பெனத்தேர்கள்சூழ
வீரரிற்பலரும்போற்றவிதுரனுமிரண்டுநாளாற்
பாரினுக்குயிரோபோலும்பாண்டவர்நகரிசேர்ந்தான். (௫உ)

வேறு.

புரியுமொண்கதிர்களினுறுபொலிவினாற்பொன்னுலகாமென்ன
வரியபைம்பொனின்பணிகளினிறைந்தசீரளகையாநகரென்னத்
தெரியுமன்புடனறங்குடியிருப்பதோர்தெய்வவான்பதியென்ன
விரியும்வெண்கொடிப்புரிசைசூழ்வளநகர்விழிகளித்திடக்கண்டான்.

ஊடெலாநறும்பொய்கைநீள்வாவியினுடம்பெலாமலர்பூவின்
றோடெலாமெழுசுரும்பினமதுகரச்சொல்லெலாஞ்செழுங்கீதம்
பாடெலாமிளஞ்சோலைமென்பொங்கரின்பணையெலாங்குயிலோசை
நாடெலாநெடும்புனல்வயல்கழனியினடுவெலாம்விளைசெந்நெல். ([illegible])

* * * * (௫௫)

ஆனகம்பலமுழங்கவந்தெதிர்பணிந்தாதுலர்க்கமுதன்ன
போனகம்பரிந்திடுநெடுஞ்சாலையேபுகுந்தமாமறுகெல்லாம்
வானகந்தனையமையுமென்றும்பருமண்ணின்மேல்வரவெண்ணா
ஞானகஞ்சுகனகரியையெங்ஙனேநாம்வியப்பதுமன்றே. (௫௬)

வந்தனன்சிலைவிதுரனென்றோடிமுன்வந்தவருரையாமுன்
றந்தைதன்றனிவரவறிந்திளைஞருந்தருமனுமெதிர்கொண்டார் [ண்டே
சிந்தையன்புடன்றொழுதெழமைந்தரைச்செங்கையாற்றழீஇக்கொ
யந்தணம்புலிகண்டபைங்கடலெனவவனுமெய்குளிர்ந்திட்டான். (௫௭)

கொண்டுதந்தையைத்தாழும்வண்கொடிமதிற்கோபுரநெடுவீதி
யண்டராலயமெனத்தகுகோயில்சென்றடைந்தபினடல்வேந்தர்
வண்டுதாமரைமலரெனச்சுழலுமாமலரடிபணிந்தேத்தக்
கண்டுவாழ்வுடனவர்க்கருள்புரிந்துதன்கருத்தினால்விடையீந்தான். ( )

தானுமைந்தரோரைவருமொருபுடைதனித்திருந்துழிவண்டு
தேனுகர்ந்திசைமுரல்பசுந்தொடையலான்றிருத்தகமொழிகின்றான்
கோனுவன்றுதன்றிருமுகமெழுதிநீகொணர்கமைந்தரையென்ன
யானும்வந்தனனேவலாலழைத்ததற்கேதுவுமுளதன்றே. (௫௯)

நீபுரிந்தநல்வேள்வியின்கடன்கழித்தியாவருநெடுமாடக்
கோபுரந்திகழ்மூதெயில்வளநகர்க்கோயில்புக்கனமாக
நூபுரந்திகழிணையடியரம்பையர்நோக்கருங்கவின்கொண்ட
மாபுரந்தரனிவனெனவிருந்தனன்வலம்புரிமலர்த்தாரான். (௬0)

தம்பிமாரொடுந்தகையிலாத்துன்மதிச்சகுனிதன்னொடுமெண்ணிக்
கும்பமாமணிநெடுமுடிநிரைத்தவண்கூடமொன்றமைக்கென்ன
வம்புராசிசூழ்மண்டலத்தரசெலாமடங்குபேரவைத்தாக
வும்பராலயசிகரெனச்சமைத்தனரொட்பநூலுணர்வுற்றார். (௬௧)

பெற்றதந்தையோடுள்ளுறமுணர்வெலாம்பேசிமண்டபந்தன்னிற்
ாற்றவன்குடிபுகும்பொழுதன்னையுங்கூட்டிமன்னவைமுன்னர்
மாதுலனெஞ்சமோவஞ்சமோமாயமோவகுத்தாங்குக்
தினுடன்பொருநினைவினன்கருத்தினித்தெரியாதே. (௬௨)

திருதராட்டிரன்றிருமுகமிதுவெனச்சென்றிறைஞ்சினன்வாங்கி
விரதமாக்கமென்றறிந்தறம்பேணுவான்வினைஞர்கைக்கொடுத்திட்டா
னிரதமாற்றமங்கெழுதியபடியினாலியம்பலுமதுகேட்டு
வரதனாற்பணிப்புறுதொழில்யாவர்நாமறுக்கவென்றுரைசெய்தான். ()

மூத்ததாதைதன்னோலையுமிளையவன்மொழியுமொத்தமைநோக்கி
வார்த்தைவேறுமற்றொன்றையுமுரைத்திலன்மனுநெறிவழுவாதோன்
சேத்நாகவெங்கொடியவன்கொடியவன்சிந்தையினிலைதோன்றக்
கோத்தகோவைநன்றாயினுந்தகுவதோகுருகுலந்தனக்கென்றான். ()

அடியுமாண்மையும்வலிமையுஞ்சேனையுமழகும்வென்றியுந்தத்தங்
குடியுமானமுஞ்செல்வமும்பெருமையுங்குலமுமின்பமுந்தேசும்
படியுமாமறையொழுக்கமும்புகழுமுன்பயின்றகல்வியுஞ்சேர
மடியுமான்மதியுணர்ந்தவர்சூதின்மேல்வைப்பரோமனம்வையார். ()

குழகராயிளமடந்தையர்க்குருகுவோர்குறிப்பிலாமையினாலும்
பழகுவார்மிகச்சிந்தைநோய்தாங்களேபடுக்குமாறுணராம
லழகுபேரறிவாகவேகொண்டவரறத்தொழில்புரியாமற்
கழகமாடவும்பெறுவரோவிதனினுங்கள்ளுணவினிதன்றே. (௬௬)

மேதகத்தெரிஞானநூற்புலவரும்வேத்துநூலறிந்தோரும்
பாதகத்திலொன்றென்னவேமுன்னமேபலபடப்பழித்திட்டார்
தீதகப்படுபுன்றொழிலினைஞரிற்சிந்தனைசிறிதின்றித்
தோதகத்துடனென்னையோசகுனிதன்சூதினுக்கெதிரென்றான். ()

தன்கருத்தினினிகழ்ந்தவாறிம்முறைதருமன்மைந்தனுங்கூறி
யென்கருத்தினாற்பெறுவதென்விதியினையாவரேயெதிர்வெல்வார்
மன்கருத்தையுமவன்றிருவுளநிகர்மகன்கருத்தையுநோக்கி
நின்கருத்தைநீயுரையெனவிதுரனுநிகழ்ந்தனவுரைக்கின்றான். (௬௮)

இங்குநீயெனக்கியம்பியயாவையும்யானுமன்னவர்கேட்ப
வங்குநீர்மையின்மொழிந்தனனென்மொழியார்கொலோமதிக்கிற்
பொங்குநீருடைப்பூதலத்தலைவகேள்புனைக்கின்னிதயத்துத்
தங்குநீர்மையிற்புரிகெனப்புதல்வனைத்தந்தையுந்தகச்சொன்[illegible])

அன்றுதாம்புணர்ந்துறைபினிற்கழுகிரைத்தரியவஞ்சனைசெய்தான்
குன்றுபோலுயர்வாழ்மனைக்கொடுந்தழல்கொளுத்திவன்கொலைசூழ்ந்
வென்றுசூதினில்யாவையுங்கவரவேவிரகினாலழைத்திட்டா [தான்
னென்றுதானமக்கன்புடைத்துணைவனாயிருந்ததவ்விகலோனே. (எ௰)

முளையிலேயுயிர்கொல்வதோர்கடுவிடமூற்றிவன்காழேறி
விளையிலேதுசெய்யாதுமற்றவருடன்விழையுநண்பினிவேண்டாம்
வளையிலேதமேபுரிந்துமேன்மலைந்திடும்வன்படைகொடுமோதிக்
களையிலேநமக்கிருப்புளதென்றனன்காற்றருள்கூற்றன்னான். (எக)

தேறலார்தமைத்தேறலுந்தேறினர்த்தேறலாமையுமென்று
மாறலாருடன்மலைதலுமாறுடன்மருவிவாழ்தலுமுன்னே
யாறலாதனவரசருக்கென்றுகொண்டரசநீதியிற்சொன்னார்
கூறலாதனசொல்வதென்செல்வதென்கொடியவனருகென்றான். (எஉ)

விசையனிவ்வகைமொழிந்ததுமுந்துறுவீமன்மாற்றமுங்கேட்டே
யிசைபெறும்பெயர்நகுலனுந்தம்பியுமேகுதறகாதென்றார், வசையறு
ம்புகழ்த்துணைவரின்றுரைத்ததேவார்த்தையாயினும்பெற்ற, வசைவி
லன்புடைத்தந்தைசொன்மறுப்பதோவென்றனனறஞ்செய்வான். ( )

ஆவியார்நிலைபெறுபவர்நீதிகூரரியவான்புகழன்றிப்
பாவியானதங்கணுகுருதொழியினும்பலித்திடுநினைவின்றி
மேவியாளுடையையன்வந்திருக்கவும்வேறிவண்டெழுமன்றற்
காவியார்தொடைக்காவலனேவனுமறுப்பதுகடனன்றே. (எச)

நாளையேகுதுமெந்தைவாழ்த்திருநகர்க்கெனத்தருமன்றன்
காளையேவலின்முரசறைந்தெங்கணுங்காவலர்குழூஉக்கொண்டார்
வேளையேறியவரும்படைத்தலைவருமேல்வரும்புனலூடு
வாளையேறுதண்பழனநாட்டெறிபடைமன்னரும்வந்துற்றார். (எரு)

[redacted] துரங்கமமணிநெடுந்தேர்மதவாரணம்வயவீரர்
[redacted]ரங்கமுந்தந்திரத்தலைவருந்தரணிமன்னருஞ்சூழ
[redacted]ங்கவின்கெழுபெருஞ்சேனைசூழ்வேந்தன்மாநகருற்ற
[redacted]ரங்கமுகெளிர்தனபஃறலைபொறுமையினிருநான்கும். (எசு)

ஐந்துபூதமேநிகரெனப்புலன்களோரைந்துமேயெதிரென்ன
வைந்துகாவுமேபொருவெனப்பணிமுடியைந்துமேநேரென்ன
வைந்துவாளியேயுறழ்வெனவேள்வியோரைந்துமேயொப்பென்ன
வைந்துவாசமேதரமெனவைவருமைந்துதேர்மேல்கொண்டார். (எஎ)

விழியினெஞ்சின்வாளெருப்பினீடுததியின்விதிபடைப்பினிற்றோன்றி
பொழியும்வெண்கதிரைவகைமதியுமப்பொழுதுதித்தனவென்ன [ப்
மொழியுமைந்துபொற்றனிக்குடைநிழற்றினமுழுமதிவடிவின்க
ணிழியும்வெண்சுடர்க்கற்றையிற்சாமரமிரட்டினவிருபாலும். (எஅ)

மைத்திறத்தினின்றதிர்வனமுதிர்வனவரைத்திறத்தினுமோங்கு
மெய்த்திறத்தனவெழுதிறத்தினுமிகவிடுவனமததாரை
யெத்திறத்தினும்பொருதொழில்புரிவனவேழுறுப்புறத்தாழ்ந்த
முத்திறத்தனவெண்ணலப்பிறப்பினமுரிவெங்களியானை. (எகூ)

வன்றபோதனரினுமிகுபொறையனவலனுயர்வனவெண்கோ
வென்றபோதகத்தானையின்பெருமையையெங்ஙனம்புகல்கிற்பா
நின்றபோதுடன்முகிலிடைமறைந்ததுநிரைநிரைநெறிப்பட்டுச்
சென்றபோதுவெம்படைக்கடற்செய்ததோர்சேதுபந்தனம்போலும்.

சுற்றுநீளமுமுயரமுநிகர்ப்பனசுழியின்மிக்கனதீமை
யற்றுமேதகுநிறத்தனகவினுடையவயவத்தனவாகி
யெற்றுமாமணிமுரசமுஞ்சங்கமுமெனுங்குரன்மிகுத்திப்பார்
முற்றுமாதிரத்தளவுமைங்கதியினுன்முடிப்பனவிமைப்போதில். (அக)

ஆளிநெஞ்சமும்வார்த்தையுஞ்செங்கையுமாசனத்தொடுதாளுங்
கோளிலின்புறக்குறிப்பனவெவற்றினுங்குறைகளற்றனவாகி
யாளிகுஞ்சரம்வானரமுதலியவியக்கினால்விசும்பெங்குந்
தூளிகொண்டிடமிடைந்துவந்தனநெடுந்துரகதம்பலகோடி. (அஉ)

வடிவுடைச்சிலதுரகதமரகதவண்ணமிக்கனவாகிப்
படியினிற்சிறிதமைவுறமிதித்திலபவனவெங்கதிபோல
முடிவிலிப்படிமிசைவரக்கருதியேமுனிவானுயிர்க்கெல்லா
மடிபடைத்ததுபடைத்ததிங்கிவற்றினுக்கவயவங்குறையாமல்.

நீடுமால்வரையடங்கலுநிலைபெறகிற்குமால்வரைமண்மே
லோடுமால்வரையிவையெனத்தனித்தனியூர்ந்ததேர்பலகோடி
நாடுமால்வரைகடல்வணமெனுநிலனுமேமொன்றாகக்
கூடுமால்வரையில்லெனப்பரந்தனர்கொடியவெம்படைவீரர். (அச)

அதிர்முழக்கினகருமுகிலேழுடையண்டர்கோனகல்வானுக்
கெதிர்முழக்கெனமுழங்கினதனித்தனியின்னியமிடந்தோறு
முதிர்முழக்கிபமவற்றினுமும்மடிமுழங்கினவவைதாமும்
பிதிர்முழக்கெனமுழங்கினவலம்புரியுரகரிற்பிழைத்தோர்யார். (அரு)

எடுத்தநீள்கொடியாடைவானகல்வெளியெங்கணுநெருங்கிக்கீழ்ப்
படுத்தவானமேவானமாய்மறைந்ததுமீதுறப்பகிரண்ட
மடுத்தபூநதிவானதிக்கிலதெனவன்புடனுபகாரங் [யம்
கொடுத்தமீனெனக்கால்பொரப்பரந்துபோய்க்குளித்தனகுளிர்தோ

அழுந்தமேவிடுசேனையான்மிகவுநொந்தமராருக்குரைசெய்யச்
செழுந்தராதலமடந்தைபொன்னுலகிடைசெல்லுகின்றதுபோன்மே
லெழுந்ததூளிகளிடைவிடாதெங்கணுமெழுந்தெழுந்தெதிரோடி
விழுந்ததூளிபுந்தடுத்தனநிலனுறவிசும்புறும்படிநின்றே. (அஎ)

முன்னர்மாருதமதலையுஞ்சேனையுமுடுகிவன்பொடுபோதப்
பின்னர்வாசவன்மதலையுந்தானையும்பெருந்தகவுடன்போத
வந்நராதிபரிருவருமிருபுறத்தரும்படையுடன்செல்ல
மன்னராதிபன்றாரகாகணத்திடைமதியெனப்புறப்பட்டான். (அஅ)

அங்கண்மாநிலத்தரசர்தம்மகளிர்பேராரும்பிடிமிசைபோதச்
செங்கண்மாமயில்யாகபத்தினியும்வண்சிவிகையின்மிசைபோத
வெங்கண்மாமணிமுரசுயர்த்தருளியமெய்தவாமொழிவேந்தன்
றங்கண்மாநகர்கடந்துவண்சாயையுந்தபனனுமெனச்சென்றான். ()

வேறு.

ஏவினபல்லியமிடத்திலேவரத்
தாவினகுக்கிலுந்தருமன்றன்னெதிர்
வாவினநெடுங்கலைவரதனூல்வலோ
ரோவினருரைக்கவுமுணர்கலாமையால். (கூ0)

மடர்க்கைதபாளகமுமார்ந்தார்மாலையு
முடைக்துகுகடகரிமதமுமுன்னியே
தடந்தொறுமுரலளிதமரினண்புறத்
தொடர்ந்துடன்வரவரச்சோலையெய்தினர். (கக)

சம்பகம்பாடலந்தமாலநாண்மலர்
வம்பெழுமிலைச்சுவார்வாவியாடுவார்
செம்பலவாமிரங்கதலித்தீங்கனி
யும்பரினமிழ்தெனவுடனருந்துவார். (கஉ)

பச்சிளங்கமுகின்மென்பாளைசூடுவா
ரச்செழுங்காய்கனிகவர்ந்தருந்துவார்
கொச்சையங்கடைசியர்குழுமிவாழ்த்தவே
வச்சிரம்போல்பவர்மருதநீங்கினர். (கங)

தடாநிறைவெண்ணெயுந்தயிருங்கொண்டெதி
ரடாமுடைநாறுதோளாயர்கைதொழப்
படாமுதன்முல்லையின்பரிமளங்கொளாக்
கடாமலையவர்தண்கானமெய்தினர். (கச)

தேனினஞ்செறிதருதெரியல்வேலினான்
றானிரங்கருண்மிகுதருமனாதலாற்
கானிலங்குறைதருகலைகளோடிள
மானினம்பேர்கலாமருங்குவைகுமால். (கரு)

செருவிளங்காளையர்சேனையின்றிறம்
வெருவிளம்பொதுவியர்விழைந்துகாண்பபோன்
மருவிளங்கிதழிநீள்வனமுமாமலர்க்
கருவிளங்கண்கொடுகலந்துகண்டவே. (கசு)

புழைநெடுந்தடக்கைவெம்போதகங்களை
மழைமுகிலெனக்களிமயில்களாடின
தழலெழுகானகந்தண்ணெனும்படி
செழுமதவருவியின்றிவலைவீசவே. [redacted]

வனநெறிகடந்துபோய்மன்னவர்க்கெலாந்
தினகரனெனத்தகுசெய்யகோலின
னினமுகிறவழ்தலினிரங்குபேரிசைத்
தனிதவண்கிரிநெடுஞ்சாரலெய்தினான். (௯௮)

குன்றுறைகடகரிக்குழாங்கள்சேனையி
னொன்றியகளிறுகண்டுட்கியோடின
துன்றியபுறவிபச்சுவடுகண்டுடன்
சென்றிலவெகுண்டிவன்சேனையானையே. (௯௯)

வாளியின்வரும்பரிமாவின்வண்குரத்
தூளிகள்விசும்புறத்துன்றியோங்கலா
லாளிகள்சிகரமென்றதிர்ந்துபாய்வன
மீளியர்வேலின்வாய்வீழ்ந்துமாய்ந்தவே. (௧00)

* * * (௧0௧)

வரைநிலங்கழிந்தெறிமகரவாரித்
திரைநிலம்புகுந்தனன்சேனைசூழ்வரப்
புரைநிலங்கடந்தறம்புரியுநீர்மையா
னுரைநிலங்கடந்தசீருரைகொள்பேரினான். (௧0௨)

ஒளிநலந்திகழ்வளையுறங்குநன்னிழற்
களிநறுஞ்சுரும்பிமிர்கண்டல்வேலிசூழ்
புளினமுங்கானலும்பொற்பநோக்கினா
னளினமும்புறந்தருநயனவேந்தனே. (௧0௩)

பெருங்கடமலைக்குலம்பெயர்த்தும்வந்தன
மருங்கடர்பேரலைவகுக்கவேயென
விருங்கடகளிறுதேரெண்ணில்சேனைகண்
டருங்கடல்வாய்திறந்தலறியார்த்ததே. (௧0௪)

நன்னெடுந்துறையெலாநாளிகேரமோ
டின்னெடும்பனங்கனியெடுத்தருந்தினார்
புன்னையின்புதுமலர்புனைந்துகைதையின்
மென்னிழல்வைகினார்விசயவீரரே. (௧0௫)

நாகலம்புனல்கெழுநாடுங்கானமு
மேனலம்புனக்கிரியிடமுமெய்தலங்
கானமுமிவ்வகைகடந்துகாவலன்
றாகலந்திகழ்பதிதோன்றவெய்தினர். (௧0௬)

அத்தினாபுரிதனக்கருகுவால்வளை
முத்தினநிலவெழமுகைக்குந்தாமரைத்
தொத்தினபொய்கையுஞ்சுரும்பருமலர்க்
கொத்தினசோலையுங்குறுகிவைகினர். (௧0௭)

மொட்டினபருமணிமுடிகொடேர்ப்பரி
வெட்டினபரிகளும்வெம்மையாறின
மட்டினபரிமளமரங்கள்யாவையுங்
கட்டினகழைபொருகவளயானையே. (௧0௮)

தரித்தனர்வீரருந்தத்தமாதருஞ்
சரித்தனசும்மைகடங்குபண்டியும்
பரித்தனநன்னிறப்படங்குவீடுகள்
விரித்தனரிடந்தொறும்வேந்தரெய்தினர். (௧0௯)

கைவருதண்டுடைக்காளைவெஞ்சிலை
தைவருசெங்கையான்றுரைவெம்பரி
மெய்வருகுமரன்வேல்விடலைவேந்தனோ
டைவருமமர்ந்தனராண்மையேறனர். (௧௧0)

மறத்திருந்தானையான்வஞ்சமெண்ணினா
னறத்திருந்திலனெனவஞ்சியந்தவூர்
புறத்திருந்ததுவெனப்புனிதன்பாசறை
நிறத்திருந்ததுபிறநிகர்ப்பவில்லையே. (௧௧௧)

மீண்டவர்வரிசிலைவிதுரனேவலாற்
பாண்டவர்வரவுமுன்பணிந்துகூறவே
மாண்டவர்குறிப்புறுமாயவஞ்சகம்
பூண்டவர்களித்துமெய்ப்புளகமேறினர். ([redacted])

தேசறையிடங்களுந்தேங்கொள்கானமு
மூசறைமதுகரமோய்த்தசோலையும்
வீசறல்வனநதிவிதமுமேல்கொளப்
பாசறையிருந்தவாபகரலாகுமோ. (ககங)

விருந்துறுசேனைவெவ்வீரரின்னமு
தருந்தினர்மெய்குளிர்ந்தசைவுதீர்தலும்
வருந்தினரிவர்துயில்வதியவேண்டுமென்
றிருந்தபனனுமிவர்க்கிரவுநல்கினான். (ககச)

மண்வளர்பெரும்புகழ்மன்னரைவரும்
பண்வளர்நல்லிசைப்பலமகிபருங்
கண்வளர்பாளையங்காணவெண்ணியே
விண்வளர்குபேரனும்விழைந்துதோன்றினான். (ககரு)

* * * (ககசு)

கானிடைசிலசிலகடிகொடேனுமிழ்
தூனிறமுல்லைகண்மலர்ந்துதோன்றுமால்
வானிடைமுறைமுறைவளருமாமதி
மேனியினமிழ்துமிழ்விந்துவென்னவே. (ககஎ)

பொருவில்வெண்டுகில்கொடுபொதிந்ததென்னவே
பரிநெடுங்தேர்மிசைப்பானிலாவெழக்
கிரணவெண்படைக்கெதிர்கெடாமணின்றபே
ரிருளெனவிளங்கினயானைவெள்ளமே. (ககஅ)

பரியனகந்துகம்பரிந்துமாமதக்
கரிசிலபாகையுங்கைகடந்தன
வரிவையர்பலர்துயிலனந்தலோடுதஞ்
சுரிகுழன்மேகலைசோரவோடினார். (ககசு)

நீடுறுதருக்களினிரைத்தமாவதன்
கோடிறவெறிந்துகைக்கொள்ளுமோதையான்
மாடுறுபொங்கர்வாய்வதிந்தபுள்வெரீஇப்
பேடொடுசேவன்மெய்பிரிந்துகேடுமால். (கஉ0)

ஊதையின் மானசையுறப்பொருவட
மோதுறுமுனையுடன்முடுகுவேட்டமாய்த்
தீதறுபரிசிலசெல்வன்பாசறை
மாதிரமுறப்பலவாளிபோதுமால். (கஉக)

*   *   * (கஉஉ)

பஞ்சவர்வாழ்வுறுபதம்பொருமையின்
வஞ்சகமியற்றுவான்மனங்கொலென்னவே
மிஞ்சியகுளிர்மதிமேற்பொருதிகற்
செஞ்சுடரவன்குணதிசையிற்றோன்றினன். (கஉங)

வேறு.

துயிலுணர்ந்துபைந்தொடையன்மார்பினன்
வெயிலெழுந்துதன்விரதமுற்றபின்
பயில்பெருஞ்சனம்பாசறைப்படுத்
தெயில்வளைந்தமாநகரியெய்தினன். (கஉச)

இருமருங்கினுமிளைஞர்காவருந்
தருமவல்லியுந்தானுமாகவே
யருமடங்கலேறனையவாண்மையான்
குரவனின்புறுங்கோயினண்ணினன். (கஉரு)

சிந்தையன்புறச்செல்வவாயிலோர்
வந்தமைந்தர்தம்வரவுகூறவே
முந்தையேவலான்மொழியவுள்புகுந்
தந்தமீனிசேவடிவணங்கினர். (கஉசா)

தம்பிமைந்தரைத்தழுவிநும்மையின்
றெம்பிகாணநல்வினையியன்றிலா
னும்பிமாரொடுமொத்துவாழ்கநீர்
நம்பியென்றுதன்னயம்விளம்பினன். (கஉஎ)

பாவைதன்செழும்பணிவுகூறநு
மேவிவாழ்கெனமெய்களிக்கவே
தேவிதன்னுழைச்செல்கவென்றுகொண்
டேவிமைந்தரோடிவைவிளம்பினன். (கஉஅ)

கருமநீதிசேர்கல்விமந்திரம்
பெருமையாண்மைதாள்பீடுநீடுபேர்
தருமம்யாவுநின்றன்மையாதலா
லருமையின்றியேயரசுசெல்லுமே. (௧௨௯)

இகலெறிந்துநீராயசூயமா
மகமுழந்ததும்வண்மைசெய்ததுந்
திகையடங்கலுந்திறைகொணர்ந்ததுந்
தொகுதிகொண்டநின்றுணைவர்கூறினார். (௧௩௦)

எண்டிசாமுகத்தெல்லையெங்கணுங்
கொண்டதாகுமுன்குருகுலத்துளோர்
துண்டியாமனுந்துணைவர்தம்மொடும்
பண்டுபோலமண்பரவவைகுவீர். (௧௩௧)

சேணிருந்துநுஞ்சீர்செவிப்படுத்
தியாணரான்புகூரினிமையன்றியே
பூணலம்பெறும்பொற்பொடுங்களைக்
காணுமாறுசெங்கண்படைத்திலேன். (௧௩௨)

நேயமுண்டுபோனெஞ்சொடின்னசொற்
றாயமைந்தரைச்சொல்லிநீவிர்போ
யாயையும்பணிந்தெந்தைதாண்மலர்ச்
சேயபங்கயஞ்சேர்மினென்னவே. (௧௩௩)

இருந்தமைந்தருமேவலோடுசென்
றருந்ததிக்குநேரன்னைதன்னையும்
பரிந்திறைஞ்சினார்பயிலவாழ்த்தினா
டிருந்துபூணினாள்சிறுவர்தம்மையே. (௧௩௪)

முந்தவந்துதாண்முளரிகைதொழு
மந்தண்வல்லியுமைவர்மைந்தரும்
வந்துவிற்றதுமகிழ்வொடுன்னினான்
குந்திசெய்தவங்கூறுமென்னவே. (௧௩௫)

வேயைவென்றதோண்மின்னையங்குழைத்
தியாயையும்பணிந்தெழில்கொடோனினர்
போயகண்டமும்போற்றுகங்கையாள்
சேயையன்புடன்சென்றிறைஞ்சினர். (க௩௬)

வேந்தழைத்ததுப்விதுரனேவலிற்
போந்தழைத்ததும்புகலவந்ததுந்
தாந்தழைக்கவேதந்தைதந்தைமுன்
றேந்தழைத்ததார்ச்செல்வர்கூறினர். (க௩௭)

புள்ளலங்கலார்புரிவுரைத்திடக்
கொள்ளைவன்றிறற்குருகுலேசனுங்
கள்ளவஞ்சர்வெங்கருவிசெய்யினு
முள்ளதுண்டெனவுண்மைகூறினன். (க௩௮)

தாதைதாதையைத்தாமகன்றுபின்
கோதைவெஞ்சிலைக்குருவைமைந்தனைக்
கீதநான்மறைக்கிருபனைச்செழும்
பாதநஞ்செய்தார்பரிவொடேகியே. (க௩௯)

சதுரமாமறைத்தலைவர்தங்களா
லெதிர்மொழிந்தபேராசியெய்தியே
மதுரமன்றனுண்மாலைமன்னரும்
விதுரன்மந்திரமீளமன்னினர். (க௪0)

தமதின்மெய்யுறத்தம்மதாகவே
யமிழ்தருந்தியங்கவரிருந்தபின்
றிமிரநாசனன்செய்யமேனியன்
கமலநாயகன்கடலின்மூழ்கினன். (க௪க)

தினகரன்கரந்திகழ்கமண்டலம்
பனிகொள்செக்கர்தம்படமதாகவே
பிணியவந்தனைக்கெறியும்வேலைசேர்
புனிதரொத்ததப்புன்கண்மாலையே. (க௪௨)

காய்ந்தமெய்ச்செழுங்கதிரவன்கர
மேய்ந்தவப்பதத்தெழிலெறித்தலா
லாய்ந்துபத்திகொண்டடர்பசும்பொனால்
வேய்ந்ததொக்குமால்வேந்தன்மாடமே. (கசங)

மன்குலத்துளோர்வஞ்சகஞ்செயா
ரென்குலத்துளோரென்கொலீதெனத்
தன்குலத்துளோர்தமைவிலக்கவோ
நன்குலத்துளோனுதயநண்ணினான். (கசச)

குருகுலாதிபன்கொடியநெஞ்சமே
யிருணிறைந்ததென்றியாம்வெறுக்கவோ
மரபிலாதியாமதியுமெண்ணினுட்
கரியனென்னுமாகாணலானதே. (கசரு)

உண்ணிலாவுபேரொளிமழுங்கிநீள்
வெண்ணிலாவினால்வெளுத்தவெங்கணுங்
கண்ணிலான்மகன்கடுமையஞ்சியிம்
மண்ணிலார்வெளாவடிவமெய்தினார். (கசசு)

விந்தைவாழ்வுகூர்விறன்மிகுத்ததோண்
முந்தையோதைமாமுரசுயர்த்தவன்
சிந்தைகாமுறத்தெரிவைவந்திளந்
தந்தைகோயிலிற்றுனுநண்ணினாள். (கசஎ)

மங்குல்சுற்றுமாமண்டபத்திடைக்
கங்குலிற்றடங்கண்டுயின்றபின்
பொங்குலைப்படும்பொற்றசும்பெனச்
செங்குலக்கதிர்த்திகிரிதோன்றவே. (கசஅ)

பாயன்மன்னுகண்படையுணர்ந்துளந்
தூயவன்பொலஞ்சுடர்பணிந்தபின்
சாயையன்னதன்றம்பிமாரொடுஞ்
சேயமென்னவேதிகழவையினான். (கசகூ)

முனிவரர்க்கெலாமுதன்மையாகவே
தனதனிற்பெருந்தானமுய்த்திடும்
பனுவல்வித்தகப்பாவலர்க்கெலாங்
கனமெனத்தருங்கனகமாரியே. (கரு௦)

கண்டுகண்டுதன்கழல்வணங்குமா
மண்டலேசருமாலைமன்னருங்
கொண்டுவாழ்வுறக்குரகதங்குடை
தண்டுசாமரந்தந்திறல்குமே. (கருக)

* * * (கருஉ)

வேறு.

தானுமாமனுங்குறித்ததம்பிமாருமங்கர்தங்
கோனுமாசிறந்ததந்தைகொடுமரக்கைவிதுரனும்
வானுலாவுபுகழ்படைத்தமைந்தனுந்துரோணனு
மேனையோரும்வந்துகூடியினிதிருந்தவெல்லையே. (கருஙா)

மண்டபத்தினழகுகாணமன்னரைவர்தம்மைநீ
கொண்டிமைப்பின்வருகவென்றுகொற்றவன்பணிக்கவே
வண்டுசுற்றுமாலைமார்பன்வண்பிராதிகாமிவா
னண்டர்கற்பமெனவிருந்தவரசர்தம்மையணுகினன். (கருச)

சென்றியாகபதிகழற்றிருப்பதம்பணிந்துநீ
ணின்றுவாய்புதைத்தறங்கணிலைபெறுஞ்சொனீதியாய்
வென்றிவீரன்மண்டபத்தின்விரிவுகாணவேண்டுநீ
யென்றுகூறியேவினனிங்கென்னையென்றியம்பினன். (கருரு)

ராயசூயபன்னிதன்னையெந்தையில்லில்யாவொடும்
போயிருந்துவருகவென்றுபுரையிலாமனத்தினன்
சீயமன்னதுணைவரோடுசென்றுபுக்குநன்றியில்
பேயிருந்ததெனவிருந்தபீடிலானையெய்தினன். (கருசா)

மன்னிருந்தபேரவைக்கண்வந்துமுந்தைவரிசையான்
முன்னிருந்ததாதைவம்சமுதல்வன்ஞானவிதுரனென்
றின்னிருந்தவர்தாளிறைஞ்சிமுன்னகிட்டதோர்
மின்னிருந்தவாசனத்தின்மீதிருந்துவினவினன். (கருஎ)

இந்தமண்டபஞ்சமைந்தவினிமைதன்னையென்சொல்வேன்
முந்தைமண்டபங்களுக்குமுதன்மையானதேவரு
ரந்தமண்டபத்துமில்லையதனையன்றிமண்ணின்மே
லெந்தமண்டபத்துமில்லையிதனினுள்ளவெழிலரோ. (கருஅ)

எனவியந்துதருமராசனினிதியம்பயாளிவெஞ்
சினவிலங்கலென்னுமாறுசேரவந்தவிளைஞரு
மனுவிளங்குமுறைமையான்வணங்கிமன்னர்மன்னன்முன்
றனதனங்கிருப்பதன்னதவிசின்மீதுவைகினார். (கருகூ)

புரைகொள்பாவமேநிறைந்துபுண்ணியங்குறைந்துநீ
ணரகினூழிகாலம்வாழ்திநாகர்வாழ்வினுள்ளதுந்
தரணிமீதுபெறுகவென்றுதந்ததொக்கும்வானுளோ
ரரவவேறுயர்த்தவீரனன்றிருந்தபெருமையே. (கசுO)

மாயமொன்றுமெண்ணலாமனத்தின்மிக்கமாமனு
நீயுமின்றுசூதுகொண்டுநிகழ்விலாசமயர்விரோ
வாயவென்றியையனில்லிலமுதமன்னபோனகம்
போயருந்துமளவுமிங்கிருந்துபோதுபோகவே. (கசுக)

மீதெடுத்தவஞ்சராகிவெகுளிசெய்தல்பிறர்பெருங்
கோதெடுத்துரைத்தனண்புகொண்டயிர்த்தல்கொடியவெஞ்
சூதெடுத்துவிழைதலுற்றசூள்பிழைத்தலின்னவே
தீதெடுத்தநூலின்முன்புதீயவென்றுசெப்பினார். (கசுஉ)

வாதுகொண்டுகாதல்கூருமாமனோடுவஞ்சனைச்
சூதுகொண்டுபொருதழிந்துதோல்வியெய்தவேண்டுமோ
தாதுகொண்டுதேனிரங்குதாமமார்பநெஞ்சினீ
ரேதுகொண்டததுநமக்களிப்பனிம்பரென்னவே. (கசுங)

ஒப்பிலாதவேள்விமன்னனுரையுணர்ந்துசகுனியுந்
தப்பிலாதகவறுருண்டதாயமெங்குமொக்குமால்
வைப்பிலாண்மையன்றிவேறுவஞ்சமில்லையுண்டெனச்
செப்பிலார்கொலிவ்விளையாடலாகவென்றுசெப்புவார். (கசுச)

வேணுமாகில்வேணுமன்றிவிரகெனக்கழன்றுதா
னுணுமாகில்விடுதிபோகடக்கவென்றுநவிலுவீர்
பூணுமாகிலினிலைமையோடுபொருதுமற்றிருந்தநீர்
காணுமாறுநாணுமின்றுகற்றவாறியற்றலாம். (கசுரு)

நீடுகின்றதருமநீதிநிருபகேள்விழைந்துநா
மாடுகின்றசூதில்வெற்றியழிவுநம்மிலொக்குமால்
வாடுகின்றமிடியர்போலவஞ்சமென்றுரைத்துநீ
யோடுகின்றதொட்டுகின்றவொண்பொருட்குலோபியோ.(கசுசு)

யானெறிந்தகவறுவெல்லினிசைவெனக்கிழத்திநீ
தானெறிந்தகவறுவெல்லினதினிரட்டிதருகுவன்
றேனெறிந்துதேனுகர்ந்துதேனெடுக்குமாலையோ
யானெறிந்தகொலைஞர்போலவஞ்சல்வருதியாடவே. (கசுஎ)

என்றுமாமனுற்றுரைப்பவிவைதமக்கவ்வவையில்வே
றொன்றுமாறுரைத்திடாதுதிட்டிரன்னிருக்கவும்
வென்றுமாறடர்க்கும்வாகைவிசயனும்வெகுண்டுளங்
கன்றுமாறுரைத்தனன்கொல்கன்னனென்னுமன்னனே.(கசுஅ)

போதுபோகுமாறிருந்துபொருதும்வருதியென்னவுஞ்
சூதுபோருமஞ்சியேதொலைந்துளந்துளங்குவாய்
மோதுபோரிலெங்ஙனுய்தியிளைஞரோடுமுடுகுதேர்
மீதுபோயுன்னகரிதன்னின்விரைவினெய்துகென்னவே.(கசுகூ)

இல்லெடுத்துவிரகினோடுமெய்மையழித்துமாயைகூர்
வல்லெடுத்துவருதலான்மறுத்தனன்மகிபனுஞ்
சொல்லெடுத்துவைதவாய்துணிப்பனென்றுகன்னன்மேல்
வில்லெடுத்தனன்பொறுமல்வீரவாளிவிசயனே. (கஎ0)

வதிலாரினெம்பிநீயிருக்கவென்றிருத்திமுன்
காதிலாரென்னுடன்முனைந்துகண்விழிக்கவல்லயே
ரோதிலாண்மைகுன்றுமென்றருத்தெழுந்துமாயனின்
சூதிலாடல்புரிதுமென்றுதருமனுக்கொடன்றினான். (கஎக)

நின்னைவெல்லினொட்டம்யாவுநீகொடுக்கநீயிவன்
றன்னைவெல்லின்யான்விரைந்துதருவனென்றுதருமனைப்
பின்னைவெல்லொணாதெனப்பிணிப்புடன்மருட்டினான்
மின்னைவெல்லும்வெய்யசோதிவேலிராசராசனே. (கஎஉ)

அவிர்பசும்பொன்மீளியாளியாசனத்திழிந்துபூந்
தவிசிலொன்றிடப்புகுந்துதருமன்வைகமாமனு
நவிரறுந்திசைப்புறத்துநன்னிலங்குறித்துநீள்
புவிபெறுங்கருத்தினோடிருந்தனன்பொருந்தவே. (கஎங)

கவளயானைபணையில்யாளிகால்வகுத்தபலகையிற்
பவளமானநீலமானகருவிமுன்பரப்பினார்
தவளமானகவறுகைதரித்துமெய்தரித்ததார்
துவளமானநிருபர்தம்மிலாடவேதொடங்கினார். (கஎச)

ஈரம்வைத்தசிந்தைமன்னனிசைவெனக்கழுத்தின்மூத்
தாரம்வைத்துநீயுமாறழைக்கவென்னமாமன்மேல்
வாரம்வைத்தநெஞ்சினானும்வருகவென்றுமாமணிச்
சாரம்வைத்தவலயமொன்றுதானுமுன்னர்வைக்கவே. (கஎரு)

இருவருங்கவற்றினாலெறிந்தபோதெறிந்தவா
றொருவருங்குறிக்கலாவுபாயமாயிருத்தலான்
மருவரும்புயத்தலங்கண்மாமன்வெல்லமன்னருள்
வெருவருங்களிற்றினானுமேல்விருப்பமிஞ்சினான். (கஎசா)

வைத்தவாரமவனெடுக்கமாயவன்கொடுத்தநன்
மெய்த்தவாததேர்குறித்துமீளவும்பரப்பினான்
மொய்த்தவாசமாலைமார்பின்முடிமகீபன்மகிழ்தரப்
பொய்த்தவாடல்வல்லமீளிபொருதுவென்றிபுனையவே. (கஎஎ)

தேர்கொடுத்தபின்னுமாறுசெப்பியுள்ளதேர்மதக்
கார்கொடுத்துமெண்ணிலாதகவனமாக்கொடுத்துமய்
பார்கொடுத்துமாசுகூர்பதங்கொடுத்துமுரியதம்
ஊர்கொடுத்துமதனினுள்ளமொழிவுறுமலோடவே. (கஎஅ)

வெங்கிராதவனமெனித்தவிசயனுக்குவிஞ்ஞையை
னங்கிராமகிழ்ந்தளித்தவாடன்மாவுமளவின்
பொங்கிராமணஞ்சிறந்தபோகமாதர்பலருமன்
றிங்கிராசநீசனுற்றவிசைவினலளிக்கவே. (கஎகூ)

யாவையுங்கொடுத்திருப்பவினைஞரோடுமெய்த்தவக்
கோவையுங்குறிக்கவென்றுசுருகுலேசன்மொழியவே
யீவையுங்குறித்துவெற்றியெய்தவெய்தவிவர்கடம்
வீவையுங்குறித்துவென்றிமேன்மையான்விளம்புவான். (கஅ0)

உன்னையுங்குறித்தவன்புரைத்ததம்பிமாரினந்
தன்னையுங்குறித்திசைந்துதருகவந்துபொருகெனப்
பின்னையுங்குறிப்புறாதுபொருதுகைபிழைக்கமே
லென்னையுங்குறிப்பெனாமுன்விரகினாலியம்பினான். (கஅக)

மெய்வருந்திறத்தினும்மைவெல்லுமாறுவேறலா
லைவருந்திருந்தவெங்களடிமையின்னராயினீர்
மைவருந்தடங்கண்வேள்விமாதுதன்னையொட்டிநீ
கைவருங்கவற்றினின்னமெறிகவென்றுகழறினான். (கஅஉ)

அன்னபோதிலருள்விதுரனந்தனைப்புகன்றெழா
மின்னபோதமன்றிவேறுநிருபர்தாமினைப்பரோ
வின்னபோதுமோகமக்கியற்கையன்றிதென்றுநீ
சொன்னபோதுசேயமைந்தர்சொன்னசொன்மறுப்பரோ. ()

திருகுநெஞ்சின்வஞ்சராகியினைஞர்தீமைசெய்தகா
லுருகுகின்றதாதைநீயுடன்படுத்திருப்பதோ
மிருகமன்றுபறவையன்றிரக்கமின்றிமேவுநின்
னருகுவந்தணைந்ததெங்களறிவிலாமையாகுமே. (கஅச)

பின்பிறந்ததம்பிமைந்தர்பீடழிந்திரங்கவே
முன்பிறந்ததலைமையன்மைந்தர்மொய்ம்பினாலடர்ப்பரோ
வன்பிறந்ததேனுநீதியழியநீடழிந்தினு
[illegible]மே. (கஅ௫)

மருமமிஞ்சவிவனைவென்றவஞ்சமன்றிமற்றிவன்
றருமவஞ்சிதனைமிசைக்குபொருதுமென்கைதருமமோ
கருமமன்றுனக்குராசகாலம்வந்ததாகலிற்
பெருமதஞ்சமின்றிநெஞ்சுபேருமென்றுபேசினான். (கஅசு)

விதுரனென்றுநீதிகூறவிழியிலாமையன்றியே
வெதிரொனுங்கொலென்னுமாறுவிழியிலானும்வைகினான்
சதிர்புரிந்தசகுனிசொல்லையெதிர்புரிந்துதருமனு
மதிரவஞ்சமுதிரவந்தவருளிலானொடாடினான். (கஅஎ)

காயமுற்றும்வஞ்சமேகலந்ததன்னகள்வன்மே
னேயமுற்றுநின்றுதானுமிகர்பிடித்ததென்னவே
மாயமுற்றகவறுமந்தமாமன்வல்லபத்திலே
தாயமுற்றிடங்கொடாதுதருமனைச்சதித்ததே. (கஅஅ)

இன்னதாயம்வேண்டுமென்றெறிந்தபோதுமற்றவன்
சொன்னதாயமேபுரண்டுசோர்விலாமல்வருதலிற்
றன்னதாயவரசுவாழ்வுதரணிமுன்னனல்கினு
னன்னதாயபோதுநெஞ்சசைந்திலானசஞ்சலன். (கஅகூ)

வேறு.

முரசணையுயர்த்தகோமான்மொழிந்தனமுழுதுந்தோற்றுப்
பரவுவதொன்றுமில்லாப்பான்மையோடிருந்தகாலை
விரைசெறியலங்கல்சோரமெய்குலைந்துள்ளம்வெம்பி
யரசவையிருந்தோர்தம்மிலருளினாலழிந்துநொந்தார். (ககூ0)

குருமரபுடையவேந்தன்கொடியனேகொடியனென்பார்
மருமகனுயிருக்கிந்தமாமனேமறலியென்பார்
தருமனித்தனைநாட்செய்ததருமமும்பொய்யோவென்பா
ருருமினுங்கொடியவீமனுருத்தினியெழுமோவென்பார். (ககூக)

பார்த்தனேறுயர்த்தவேந்தன்பார்த்திலனறவுமென்பார்
மாய்ந்தவேயறமுந்தேசுமனுநெறிவழக்குமென்பார்
பூந்தழற்பிறந்தபாவைபுண்ணியம்பொய்படுதென்பார்
சேர்ந்தனனிருகண்பார்க்கிதென்கொல்பாவமேயென்பார். (ககூஉ)

பழியுடைத்தந்தையொன்றும்பகர்கலாதிருக்குமென்பார்
விழியுடையவரையன்றேமேன்மையோர்வெறுப்பதென்பா
ரழியுமேயிவனுன்மைந்தரும்பெருஞ்செல்வமென்பார்
வழிவழியாகநிற்கும்வசையிவன்புரிந்ததென்பார். (௧௬௩)

இன்னனதரணிவேந்தரிருந்துழியிருந்துகூற
மன்னனுந்தம்பிதானுமாமனுமாறுவண்மைக்
கன்னனுந்தம்பினெண்ணிக்கங்கைமாமகனைநோக்கிப்
பன்னகதுவசன்கேட்டோர்பலருமெய்பனிக்கச்சொல்வான். (௧௬௪)

தண்ணியதருமன்செய்தபாவமோசகுனிசெய்த
புண்ணியநெறியோவந்தப்பொதுமகள்யாகசாலை
நண்ணியதவறேமற்றைநால்வருந்தகைமைகூர
வெண்ணியமதியோவெண்ணினிங்ஙனம்விளைந்ததென்றான். (௧௬௫)

தகாமொழிதலைவன்கூறத்தவத்தினாலுயர்ந்தகோவு
நகாமரபியற்கையன்றுநம்பினும்புன்மைகூறன்
மிகாதினிநிகழ்ந்தசெற்றம்விடுகெனச்செவியிற்சற்றும்
புகாதுளம்வெகுளிகூரப்புரிந்தனன்போதமில்லான். (௧௬௬)

இரங்கிநின்றுருகுநெஞ்சினிளையதன்பிதாவைநோக்கி
யரங்கடிசமரவேலானழல்பொழியுருமிற்சொல்வா
னுரங்குடியிருந்ததோளானுரிமையினெமக்குத்தோற்ற
துரங்கமுங்களிறுந்தேருந்துறைதுறைகவரச்சொற்றி. (௧௬௭)

தொல்லைமாநகருநாடுந்தோரணநாட்டச்சொற்றி
யெல்லையினிதிகளெல்லாமிம்பரேயெடுக்கச்சொற்றி
நல்லெழின்மடவார்தம்மைநம்பதியெய்தச்சொற்றி
சொல்லியவிளைஞர்தாமுந்தொண்டினராகச்சொற்றி. (௧௬௮)

இவர்தமக்குரியளாகியாகபத்தினியுமான
துவரிதழ்த்தவளமூரற்சுரிகுழறன்னையின்னே
யுவரலைப்புணரியாடையுலகுடைவேந்தர்காணக்
[illegible]வர்தரப்புகறியென்றான்கண்ணருள்சிறிதுமில்லான். (௧௬௯)

அறந்தருமைந்தன்றன்னையறனலாதியற்றிநம்பி
திறந்தருசெல்வம்யாவுந்தீமையிற்கவர்தலுற்றாய்
மறந்தருவலியுமன்றுமணந்தருவாழ்வுமன்று
நிறந்தருபுகழுமன்றுநெறிதருமதியுமன்றே. (உ00)

திருத்தகமொழிந்தவெல்லாஞ்செய்தனையெனினுஞ்செவ்வி
மருத்தருதெரியன்மாலைமாசிலாமன்னர்முன்ன
ருருத்தருகற்பினாளையுரையலாதுரைக்குமாற்றங்
கருத்தினினினையல்கண்டாய்கடவுளர்கற்பம்வாழ்வாய். (உ0க)

விண்ணிலங்கருகித்தோன்றுமேதகுவடமீனன்றி
மண்ணிலங்குவமைசொல்லமடந்தையர்யாருமில்லாப்
பண்ணலங்கடந்தமென்சொற்பாவையைப்பழிக்கநீயின்
றெண்ணின்முன்கேட்டவார்த்தைக்கேற்றதன்றெண்ணமென்றான். ()

கேட்டசொல்வினவுநாககேதனன்கேட்பமீண்டும்
வாட்டமிலன்பினோடுமனங்கனிந்துருகிவீழ
நாட்டமுநன்னீர்மல்கநாவமிழ்தூறப்பின்னுங்
கோட்டமில்சிந்தையானுங்குரிசிலுக்குரைக்கலுற்றான். (உ0ங)

தானவராகியும்மைத்தனித்தனியிறந்தோர்யாரு
மானவராகியிம்மைவந்தனரிப்பரென்றே
தானவர்பொறைபொறாமற்றாதலமென்னுஞ்செங்கண்
மானவராகவேதமலர்முனிதனக்குச்சொன்னாள். (உ0ச)

நான்முகன்றானுமேனைநாகருநாகர்கோனும்
பான்முகந்தெறியும்வேலைப்பாம்பணைப்பள்ளிகொள்ளுந்
தேன்முகங்களிக்கும்பச்சைச்செவ்விவண்டுளபமாலை
மான்முகங்கண்டுகூறவந்தவாமாலுங்கேட்டான். (உ0ரு)

மின்னிடைவிளங்குமேகமேனியானவனிமானை
நின்னிடைவந்துதோன்றுதிருபரானவரையெல்லா
முன்னிடைகடையொன்றின்றிமுற்றும்வெம்முரண்கொள்காலன்
றன்னிடைவிடுதுமென்றுசாற்றிவேதனைர்வுதீர்த்தான். (உ0சு)

அந்தவன்றிகிரியானுகம்பிலோராசனாகி
வந்தவதரித்தானென்றுமண்ணெலாம்வார்த்தையான
தெந்தவல்வினையாலெவ்வாறெய்துமென்றிதற்கேசால
சொர்ந்துகண்டுயில்பெறாதேநோதகப்புரிந்தேன்மன்னா. (௨௦௭)

ஒருதிறத்தவனிமுற்றுமொருமையாற்புரக்குநீவி
ரிருதிறத்தவருநும்மிலிகலுறுமனத்திரானால்
வருதிறத்தானைவேந்தர்வகைபடக்குழூஉக்கொண்டோடிப்
பொருதிறப்பதற்கேசற்றும்புரிவிலீர்புரிகின்றீரே. (௨௦௮)

என்றவனுரைப்பத்தானுமெறிந்துகைநகைகொண்டாடி
யன்றவனிதயம்வெம்பவவமதிபலவுங்கூறி
நின்றவனொருவன்றன்னைநீநனிவிரைவினோடிச்
சென்றவணிருந்தகோலத்தெரிவையைக்கொணர்தியென்றான். (௨௦௯)

பெருந்தகையேவலோடும்பிராதிகாமியுமங்கேகி
வருந்தியமனத்தனாகிமாசறுமரபின்வல்லி
யிருந்துழியெய்துறுமலிடைவழிநின்றுமீள
விரைந்தனனோடிவந்துவேந்தனுக்கேற்பச்சொன்னான். (௨௧௦)

வேறு.

என்னைத்தோற்றுமனுநெறிகூரிசையோன்றன்னைத்தோற்றனனோ
தன்னைத்தோற்றுத்தனதுமனத்தளர்வாலென்னைத்தோற்றனனோ
முன்னைத்தோற்றுத்தோற்றபொருண்முற்றுங்கவருமுறையன்றிப்
பின்னைத்தோற்றபொருள்கவரப்பெறுமோநினைக்கப்பெறாதென்றாள்.

செல்வப்பாவைதிருவுள்ளமிதுவென்றந்தத்தேர்ப்பாகன்
சொல்லப்பாவிதரியாமற்றுச்சாதனனைமுகநோக்கி
யல்லற்பான்மைபெற்றழிந்தவைவர்க்கொருத்தியாகியவம்
மல்லற்பானல்விழியாளைமன்பேரவையினழையென்றான். (௨௧௨)

கோன்றாள்வெங்கட்கடகளிற்றுநுழைவேலரசனுவறனுமே
யான்றார்கேட்கிற்செவிபுதைக்குமழல்கால்வெஞ்சொலறனில்லான்
றேன்றாகுயனைத்துணைவனைப்போற்றுனைக்கண்டிலிற்சூழ்ந்திருந்த
வின்றாளில்லத்திருந்தாளையிகலோடெய்தியினையழைப்பான். (௨௧௩)

தானேசூதுபொருதழிந்துதலைவன்றனக்குன்பதியான
கோனேசொல்லியானைவயுமுன்கொடுத்தான்கொடுத்தபின்னிசைவு
யானேயென்றும்விமன்முதலினையோரென்றுமென்வேள்வி
மானேயென்றுங்குறித்திழந்தான்வழக்கால்வென்றேம்வருவாயே. ()

பொன்னைச்சிரிக்கும்பூங்கோயில்புனல்வாவியிலென்றெங்கள்குல
மன்னைச்சிரித்தசெங்கனிவாய்மாருதிரங்கியழுதாற்ற
மின்னைச்சிரிக்குநுண்ணிடையாய்வேந்தர்க்கெதிருன்மெய்க்கணவன்
றன்னைச்சிரிக்கவிருக்கின்றசளநீகாணிற்றரியாயே. (உகரு)

தலத்துக்கிசையாதைவரையுந்தழுவித்தழுவித்தனித்தனியே
நலத்துப்பொய்யேமெய்போலநடிக்குஞ்செவ்விநலனுடையாய்
குலத்துப்பிறந்தாயாமாகிற்கூசாதென்பின்போதுகெனப்
பெலத்திற்செங்கைமலர்தீண்டிப்பிடித்தான்சூழ்ச்சிமுடித்தானே. ()

சிலைவாயங்கையவன்றீண்டச்செல்லாளாகியல்லலுழந்
துலைவாயழல்போனெடிதுயிராவுள்ளந்தளராவுடனடுங்காக்
கொலைவாயெயினர்கொல்லுநிலங்குறித்துச்செறித்தகொடியநெடு
வலைவாயொருதானகப்பட்டமான்போன்மாமிமருங்குற்றாள். (உகஎ)

பூவார்குழலிதளர்வொடுதன்புறஞ்சேர்பொழுதுஞ்சிறிதிரங்கா
ணீவாவென்றேயருகிருத்திநெடுங்கண்பொழியுநீர்துடையாண்
மேவாரல்லர்தமரழைத்தான்மேலுன்கருத்துவிளம்பிவரப்
பாவாயஞ்சாதேகென்றாள்பலபாதகரைப்பயந்தாளே. (உகஅ)

தண்டார்விடலைதூயுரைப்பத்தாய்முன்னனுகித்தாமரைக்கைச்
செண்டாலவள்பைங்குழல்பற்றித்தீண்டானுகிச்செல்கின்றான்
வண்டார்குழலுமுடன்குலையமானங்குலையமனங்குலையக்
கொண்டாரிருப்பசென்றுநெறிக்கொண்டாளந்தோகொடியாளே. ()

சூழுங்கனல்வாயுருமன்றித்துளிவாய்முகிலுமகிநலத்து
வீழுங்கொல்லோவெம்பாதம்விரவிற்றென்றேவெருஉக்கொள்ளாத்
தாழும்பெரியகரியகுழறூரோடலைபத்தழீஇக்கொண்டு
வாழுஞ்சுரும்புசுழன்றரற்றமண்மேலிழுத்துவருகின்றான். (உ௩௦)

தழலோவென்னுங்கற்புடையதனிநாயகிதன்றாமகனுங்
குழலோவுரகக்கொடியோர்தன்குலமோகுலைந்ததிவணென்பார்
நிழலோபுவிக்குநெருப்பன்றோநெறியொன்றில்லாநீடுபொலங்
கழலோன்மதிவெண்குடையென்பார்கையாற்கண்டகண்புடைப்பார்.

காட்டுந்திறல்வெஞ்சிலைவிசயன்கையால்வகிர்ந்துகடிகொண்மலர்
சூட்டும்பனிச்சையிவண்புழுதித்துகளேறியதென்றழுதுநைவார்
மீட்டுந்தடாமலேகென்றுவிட்டாண்மைந்தரிட்டவினை
கேட்டுங்கொடியள்காந்தாரிகிளையோடின்றேகெடுமென்பார். (௨௨௨)

இரும்போநெஞ்சிம்மாமனிதற்கிசைந்தானுக்கவிருந்தென்பார்
பெரும்போரரசர்பெண்ணுடனேபிறந்துஞ்சீறப்பெறாரென்பார் [பா
பொரும்போர்வீமன்பொறுத்தாலும்பொற்றேர்விசயன்பொறானென்
ரரும்போரரசர்தகாதென்றால்வருமோவிந்தவழியென்பார். (௨௨௩)

என்னேகுடியிற்பிறந்தாருக்கிருப்பன்றிவ்வூரினியென்பார்
முன்னேயோடிமுறையிட்டான்முனியுங்கொல்லோவெமையென்பார்
பின்னேயிரங்கியழுதழுதுபேதுற்றின்னல்பெரிதுழப்பா
ரன்னேதுன்பங்களைந்தின்பமாவாயென்றேயருள்புரிவார். (௨௨௪)

பறைவன்களிற்றுப்பலபுரவிப்பைம்பொற்றடந்தேர்ப்பாஞ்சாலர்க்
கிறைவன்பாவையாங்காணவிவையோபடுவதென்றுரைப்பார்
பொறைவன்சிந்தைத்தருமனுக்குப்பொய்ச்சூதறிந்தும்பொரவென்ன
குறைவந்ததுதன்விதிவசியாற்குறைந்தான்யாவுங்கொடுத்தென்பார்.()

நெடுமாநகரிற்சனமனைத்துநேயம்பெறக்கண்டிவைகூற
வடுமாமரபிற்குறத்தேடுமன்பேரவையின்முன்புக்காள்
கொடுமாமலர்க்கண்புனல்சோரக்குலைந்தேகிடந்தகுழல்சோரத்
தடுமாறுள்ளந்தனிசோரத்தலைநாளளித்தழல்போல்வாள். (௨௨௬)

நாணேமுதலாநாற்குணனுநண்ணுங்கற்புநயந்தணிந்த
பூணேயனையாளழுதாற்றிப்புன்பேரவையிற்புகுஞ்சோகங்
காணேமென்றுநிலநோக்கிக்கதிர்வேனிருபரிருந்திரங்கக்
[illegible]னேர்பாடாயிருந்தான்குருடென்றுரைக்குங்கொடியோனே.

மேகங்குருதிபொழிந்தகல்வான்மீனும்பகலேமிகவிளங்கிப்
பூகம்பமுமுற்றுற்பாதம்போதியாவும்புரிந்தனவா
னாகம்புனைபொற்றுவசனுடனவிலாகின்றகால்வருமே
சோகம்பிறவாதிருந்தார்மற்றெழுந்தார்யாருஞ்சோகித்தார். (௨௨௮)

வீமன்கதைமேற்கைவைக்கவிசயன்சிலைமேல்விழிவைக்கத்
தாயம்புனைதோளிளையோருந்தத்தங்கருத்திற்சினமூட்டத்
தூமம்படுசெந்தழலவியச்சோனைமேகஞ்சொரிவதுபோ
னாமந்தருமனெனத்தக்கோனிளையோராறகிலுற்றான். (௨௨௯)

தேம்போதனைத்துமெய்சாயுஞ்சிலபோதலருஞ்சிலபோது
வேம்போதங்குவாழ்வவெல்லாம்வெங்கானுடனேவேவாவோ
வாம்போதாகுமதுவன்றியாயபொருள்களம்முறையே [றான்
போம்போதனைத்தும்போமுன்னம்பொறுத்தீரின்னம்பொறுமென்

வாருங்கண்ணீர்.........வரைமேலருவியெனவீழத்
தாருங்குழலும்பின்னுடனே தலஞ்சேர்கொண்டலெனவீழக்
கூருந்துயரினுடன்வீழ்ந்துகோகோவென்றுகோச்சபையிற்
சோருங்கொடியைமுகநோக்கித்துச்சாதனன்மெய்சுடச்சொன்னான்.

மன்வந்திருந்தசங்கத்துன்மாபணிருந்தானைவருமுன்
முன்வந்திருந்தார்முன்கொண்டமுறையான்முயங்குமுடிவேந்தர்
மின்வந்தனையநுண்ணிடையாய்விழிநீர்சொரிந்துமெலியவுனக்
கென்வந்ததுகொல்பொதுமகளிர்க்கரிதோவிழிநீரொழிகென்றான். ()

பொல்லாவசையேபுகழ்பூணும்புல்லன்புகலவிதற்கொன்றுஞ்
சொல்லாதிருந்தபேரவையைத்தொழுதாளழுதாள்சோர்வுற்றாள்
மல்லார்திண்டோண்மாமாவோமந்தாகினியாண்மதலாயோ
வெல்லாநெறியுமுணர்ந்தவருக்கிதுவோமண்ணிலியல்பென்றாள். ()

இன்னற்படுஞ்சொற்பாஞ்சாலியிரக்கந்தனைக்கண்டிடக்[illegible]
மன்னற்கிளையோய்தவமுரைத்தல்வழக்கோ[illegible]
[illegible]
முன்னர்ப்புகலுங்குருகுலத்தோமுத[illegible] ()

மன்றேற்றனன்வெஞ்சூதாகில்வழக்காற்கொண்மின்மன்னவையின்
முன்றேற்றனனோவென்னையுந்தான்முன்னேயிசைந்ததனைத்தோற்ற
பின்றேற்றனனோகரியாகப்பெரியோருண்மைபேசுகென
மின்றேற்றனையநுண்ணிடையாள்விழிநீர்வெள்ளமிசைவீழ்ந்தாள். ()

மையோடரிக்கண்மழைபொழியவாடுங்கொடியின்மொழிக்காகார் [டு
வெய்யோனெண்ணந்தனக்காகார்விறல்வேல்வேந்தர்வெரூஉக்கொண்
பொய்யோவன்றுமெய்யாகப்புனையோவியம்போலிருந்தாரை
யையோவந்தக்கொடுமையையாமுரைக்கும்பொழுதைக்கதிபாவம். ()

அல்லார்கூந்தல்விரித்தமயிலனையாளரற்றவதற்கொன்றுஞ்
சொல்லாதூமர்கணம்போலத்தொல்போர்வேந்தர்சூழ்ந்திருப்ப
மல்லார்தடந்தோள்விகருணனும்வாய்மைக்கடவுள்வாள்வேந்தீர்
பொல்லாநெறியிலனைவீரும்போகாவண்ணம்புகலீரே. (உ௩௭)

முறையோவென்றென்றவனிதலமுழுதுமுடையான்முடித்தேவி
யிறையோடழிந்துவினவுநீர்நினைவுற்றிருந்தீர்நினைவற்றே
விறையோன்முனியுமெனநினைந்தோவிருந்தானுறுதியெடுத்தியம்பல்
குறையோகண்கண்டதுநாளுங்குலத்துப்பிறந்தோர்கூறுரோ. (உ௩௮)

தன்னேரில்லாநெறித்தருமன்றனவென்றுரைக்கத்தக்கவெல்லா
முன்னேதோற்றுத்தங்களையுமுறையேதோற்றுமுடிவுற்றான்
சொன்னேருரைக்குத்தான்பிறர்க்குத்தொண்டாய்விட்டுச்சுரிகுழலைப்
பின்னேதோற்கவுரிமையினாற்பெறுமோவென்றுபேசீரோ. (உ௩௯)

என்னுமன்னர்முகநோக்கியெல்லாரிதயங்களுமகிழச்
சொன்னனெவருந்தக்கோனென்றவனுக்கொருபேர்சூட்டியபி
னன்னுமனத்தோடழன்மூளநயனஞ்சிவக்கநஞ்சின்வடி
வன்னனிளவன்முகநோக்கியருக்கன்குமரனறைகின்றான். (உ௪0)

வேறு.

இருக்கின்றதரணிபரினின்னறிவாலுயர்ந்தனையோவிராசநீதி, கு
ருக்கொண்டுமுதிர்ந்தனையோ நினையொழிந்தால்வழக்கொருவர்குறிப்
பாரற்றே, மருக்கொண்டதொடைமுடியாய்மொழிகெனநின்னுடன்
கேட்பவர்தாருண்டோ, வுரைக்கும்போதெவருடனுமுணர்ந்தன்றே
வுரைப்பதெனவுருத்தான்மன்னே. (உ௪௧)

தான்படைத்தபொருளனைத்துந் தம்பியர்களுடன்றோற்றுத்தனை யுந்தோற்றான், மீன்படைத்தமதிமுகத்தாளிவன்படைத்ததனமன்றி வேறேகொல்லோ, வான்படைத்தநெடும்புரிசைமாநகருந்தனதில்லும் வழங்குமாயின், யான்படைத்தமொழியன்றேயெங்கணுமில்லெனப் பட்டாளில்லாளன்றே. (உசஉ)

மைக்கோதில்கலையுடையன்மதியுடையன்பொறையுடையன்வரி சையாகத், தக்கோனென்றரசரெல்லாமுரைத்தபெய ரிவன்றனக்கே தக்கதம்மா, மிக்கோர்மற்றுங்களைப்போல்வேறுண்டோ மகிதலத்து வேந்தராகித், தொக்கோர்யானுவன்றமொழிக்கெதிர்மொழியுண்டாமா கிற்சொல்லுவீரே. (உசங)

என்னவெருண்டிடுகின்றவெல்லைதனிலெழுவுறழ்தோளிராசராச ன், றன்னனையகொடுங்கோபத்தம்பியையின்றம்பிதனைத்தக்கோனெ ன்ற, மன்னவையினெதிரேயிம்மானமிலாவைவரையும் வழக்குவார்த் தை, சொன்னகிளிமொழியினையுந்துகிலுரிதியெனவுருமிற்சொன்னான் மன்னே. (உசச)

இத்தகவின்மொழிசெவியினெரிவாளியெனமூழ்கவிருந்தவேந்தர், தத்தமனமடிந்துருகத்தருமன்முகமதிநோக்கித்தம்பிநோக்கி, வித்தக வெங்கதைநோக்கவிறல்வீமன் விசயனுந்தன்வில்லைநோக்க, வொத்த மனனுடையிளையோருருப்பமடக்கினனுண்மைக்குறுதிபோல்வான்.

தருகதுகிலெனவெழுந்துதங்களைவன்பொடுதுச்சாதனன்சொலாமுன்
வருகவெனவரைமார்பின்வாங்காதவுத்தரியம்வாங்கியிந்தா
ரருகணுகிமடவரலைபஞ்சாமற்றுகிலுரிவானடர்ந்தபோதி
லிருகைசுறுமலர்குவியவெம்பெருமானிணையடிக்கேயிதயம்வைத்தாள்.

ஆருகியிருதடங்கணஞ்சனவெம்புனல்சோரவளகஞ்சோர
வேறான துகிறகைந்தகைசோரமெய்சோரவேறோர்சொல்லுங்
கூறாமற்கோவிந்தாகோவிந்தாவென்றரற்றிக்குளிர்ந்துகாவி
லூறாதவமிழ்தூறவுடல்புளகித்துள்ளமெலாமுருகினாளே. (உசஎ)

அருமறைசொல்லியநாமமாயிரமுமுரைத்தழைக்கவமரர்போற் றுந், திருமலர்ச்செஞ்சீறடியோன்றிருச்செவியிலவண்மொழிசென்றி சைத்தகாலை, மருமலர்மென்குழன்மானின்மனாடுங்காவலைமனத்தே வந்துதோன்றிக், கரியமுகிலனையானும்பிறரெவர்க்குந்தெரியாமற்கரு ணைசெய்தான். (உசஅ)

பாஞ்சாலிக்காசவையிற்பழுதுரைத்தோனுடலென்னுபடையம மேழி, போஞ்சாலினிணஞ்சொரியத்துணைவரொடுகுலமாளப்பொரு வேன்யானே, தீஞ்சாலிவிளைபழனத்திருநாட்டீர்கேண்மினெனச்செந் தீமூள, வேஞ்சாலினறுநெய்போல்வெஞ்சினத்தான்வஞ்சினமும்விள ம்புவானே. (௨௫௬)

வண்டாருங்குழல்பிடித்துத்துகிலுரிந்தோனுடற்குருதிவாரியள்ளி, யுண்டாகங்குளிர்வதன்முன்னிக்கரத்தாற்புனலுண்ணேனொருகாலென் கைத், தண்டால்வெம்புனலெற்றிமீதெழுந்துவிழுந்திவலைதண்ணீராகக், கொண்டாவிபுரந்திடுவனிதுவிரதமெனக்கெனவுங்கூறினனே. (௨௫௭)

பகலவன்றன்மதலையுயிர்பனைப்புலத்துக்கவர்வனெனப்பார்த்தன் சொன்னா, னகுலனுமற்றென்கரத்தாற்சௌபலநாயகனுயிர்க்குநாச மென்றான், சகுனிதனையிமைப்பொழுதிற்சாதேவன்றுணித்திடுவேன் சமரிலென்றா, னிகனிருபரிவர்மொழிகேட்டெளிதோவிக்கொடும்பழி யென்றேங்கினரே. (௨௫௮)

மேகங்கள்வழங்காமல்விண்ணதிர்ந்திட்டோர்கோளும்வெயிலைச்சூழ்ந்து பூகம்பம்பிறந்துடுவுமரும்பகலேவிழுந்துடனேபொய்கைவாடி யாகஞ்செய்நெடுஞ்சாலையின்பாலுஞ்செந்நீராயிருந்தவேந்த ராகங்களொளிமழுங்கிற்றவிதாவென்றணங்கனையாளழுதபோதே. ()

உற்பாதம்பெரிதெனநெஞ்சுகுவாருமென்னாமிவ்வூரென்றஞ்சி, நிற்பாரும்போம்வழிமேனினைவாரும்பலராகிநிகழ்ந்தகாலைக், கற்பான் மிக்குயர்வேள்விக்கடன்சுமந்தமடமயிலைக்கண்ணிலாதோன்,பொற்பா தம்பணிந்தேத்தியபராதம்புரிந்தவெல்லாம்பொறுத்தியென்றான். ()

உத்தமமாங்குலபயிலேயென்சிறுவரறியாமலுனக்குநேரே,மைத் துனராமுறையாலிவ்வழக்கலாதனசெய்தார்மதியிலாமலெத்தனைதாழ் விவர்புரிந்தாரென்றாலுமவையொன்றுமெண்ணாதின்னே,பித்தர்மொழி யெனக்கருதிமறந்தருளென்றொருகோடிபிதற்றினனே. (௨௬௧)

மைவரையுந்தடங்கண்ணாண்மனச்சோகப்பலமுகத்தான்மாற்றி யைந்த, ரைவரையுந்தனித்தனியேமுகங்கொண்டுகொடுங்கோபமகற்றி நீங்கள், மெய்வரையும்பொருபுயத்தீர் வற்போரிலெழுந்தவெவிலழுந் தேருங், கைவரையும்பரிமாவுஞ்செல்வமும்பாவையுமீண்டுங்கைக்கொ ள்வீரே. (௨௬௨)

கோமன்றிலருந்ததியைக்கொண்டினிநீர்நில்லாமற்குறுகவூரே, போமென்றுவரவழைத்துத்தழீஇக்கொண்டென்கண்மலரேபோல்வானெம்பி, யாமென்றுமவனென்றுபிரண்டில்லைவிளையாட்டென்றிருந்தேமிவ்வா, றுமென்பதெனக்கொருவருரைத்திலரால் யாமுமுதலறிந்திலேமே. (௨௬௩)

என்மைந்தரிவர்நீங்களவன்மைந்தரெனநினையேனிவரேயெம்பி, தன்மைந்தருங்களையேயென்மைந்தரெனவளர்த்தேன் சம்புநாட்டு, மன்மைந்தருங்களைப்போல்வேறுபடாதித்தனைநாள்வளர்ந்தாருண்டோ, வின்மைந்தர்நடக்கவெனவிடைகொடுத்தான் விரகினுக்கோர்வீடுபோல்வான். (௨௬௪)

படைகொடுத்தானிவனிழந்தபார்கொடுத்தானரசாளப்பண்டுபோல்வெண், குடைகொடுத்தான் குருகுலத்தே குலங்கொடுத்தானைவருக்குங்குலத்தேகொண்ட, தடைகொடுத்தானகப்பட்டுந்தலையழிக்கநினையாமற்றனையம்ம, விடைகொடுத்தா னினிவிடுமோ வயப்புலியைவாலுருவிவிடுகின்றீரே. (௨௬௫)

வேறு.

யாதொருகருமமேனுமெண்ணியேதுணிகவென்றுங்
காதலிற்றுணிந்துசெய்தாலெண்ணுதல்கடனன்றென்று
மோதுநூற்புலவர்சொன்னூருபக்குளவுணர்வற்றன்றே
பேதுறவடர்த்தும்பின்னையுருகிநீர்பிழைசெய்தீரே. (௨௬௬)

தீயினாற்சுட்டசெம்புண்ணாறுமத்தீயிற்றீய
வாயினாற்சுட்டமாற்றமாறுமோவடுவேயன்றோ
பேயினாற்புடையுண்டாரோமறப்பரோபெரியோரென்றான்
வீயினாற்றொடுத்ததண்டார்வேந்தர்க்குவேந்தன்மாமன். (௨௬௭)

சகுனிசொன்மருகன்கேட்டுத்தம்பியுமங்கர்கோவு
முகமுகநோக்கியெண்ணியெம்பிநீமொழிகவென்றான்
றுகிலினையுரிந்தவன்கைச்சூதனுந்தருமராசன்
மகனுடன்வெகுளிதோன்றவழக்குறமொழிதலுற்றான். (௨௬௮)

சரதமென்றுண்மையாகச்சபையினீயிசைந்துதோற்ற
விரதமுங்களிறுமாவும்யாவையுமீண்டுந்தாரோஞ்
...மென்கொடியுநீருந்தொண்டொழிந்துரியிராமின்
விரதமுன்னறத்துக்கென்றும்பொய்கொலோமெய்யேயன்றோ. ()

தந்தைதனருளாற்பெற்றீருரிமையுந்தம்பிமாரும்
பைந்தொடிதானுநீயும்பதிபெயர்ந்துயர்ந்தவேயின்
வெந்தழலனையகானின்வெளிப்படாதுறைமினின்றே
யிந்தமாதரணிகைவிட்டேகுமினெழுமினென்றான். (உ௭0)

என்றலுந்தந்தைமைந்தனியம்பியவாய்மைகேட்டு
நின்றவாநில்லாவஞ்சநெஞ்சினனாகிமீண்டும்
வென்றிகொளரசனோடும்வெஞ்சிலைவிதுரனோடு
மொன்றியவமைச்சரோடுமுறுவனவுசாவலுற்றான். (உ௭௧)

மேல்வருகருமமெண்ணாவெகுளியாண்மிக்கவீரர்
நால்வருமெம்மனோர்கணவின்றனசிறிதுங்கேளார்
செல்வரும்பழனநாடசெயலறிந்தெண்ணிவேத
நூல்வருமுறைசொல்லென்றானோன்சிலைநூலின்மிக்கோன். (உ௭௨)

வின்மகனுரைக்கவேனையமைச்சரும்விதுரன்றானு
மன்முறைதவறினின்றேவசையும்வந்திசையுமென்றார்
கன்மனநெடுங்குன்றன்னான்கருதியக்கணத்தேமீளத்
தன்மனையாவர்நெஞ்சுஞ்சருகெனத்தழைக்கச்சொன்னான். (உ௭௩)

உன்னுணர்வுனக்கேயுள்ளதுன்பெருந்துணைவரான
கொன்னுனைவேலோர்வென்றுகொண்டனகொடுத்தலொல்லார்
பின்னுறவுரிமையாவும்பெறுதிநின்பெருமைக்கேற்ப
முன்னுளோர்பலருஞ்செய்தமுறைமையேமுன்னுகென்றான். (உ௭௪)

அரசன்மற்றுரைத்தமாற்றமந்தணனுணர்ந்துசெல்வ
முரசதிரயோத்திமூதூர்முன்னவன்கதையுங்கூறி
யுரைசெய்தபடியேயுங்களுலகினையிழந்துசின்னாள்
வரைசெறிகானில்வைகிவருவதேவழக்குமென்றான். (உ௭௫)

அரிவையோடகன்றநீவிரைவருமடவியெய்திச்
சுரர்தினமீராறங்கட்டுன்னுதிர்மன்னுநாட்டி
னொருவருமறியாவண்ணமொருதினமுறைதிருங்கள்
பெருவிறலரசும்வாழ்வும்பின்னுறப்பெறுதிரென்றான். (உ௭௬)

மறைந்துறைநாளினும்மைமற்றுளோரீண்டுளாரென்
றறிந்திடின்மீண்டுமிவ்வாறரணியமடைதிரென்றான்
பிறந்தவிம்மாற்றங்கேட்டுப்பிதாமகன்முதலாயுள்ளோர்
சிறந்ததொன்றிதனினில்லையிசைந்ததேசெய்ம்மினென்றார். (உ௭௭)

சரிகுழலலையநின்றதுரௌபதிசுருதிமுன்றால்
வரபதிமொழிந்தமாற்றங்கேட்டலும்வணங்கியைவ
ரரசருமெனதுமைந்தரைவருமியானுமீண்டு
முரிமையினெய்தவெஞ்சூதாடுதலுறுதியென்றாள். (உஎஅ)

தையலங்குரைத்தமாற்றந்தருமனுங்கேட்டுநாங்கள்
கையறுதொண்டராகிக்கான்புகல்வழக்குமன்று
லையுறுதொருகாலின்னமாடுதுமருஞ்சூதென்றான்
மெய்யுறவிருந்தவேந்தர்மீளவுங்காணலுற்றார். (உஎகூ)

சத்தியவிரதன்றானுந்தன்பெருந்தேவிசொல்லப்
பத்தியால்வணங்கியாயன்பன்னிருநாமமேத்தி
யொத்தவெண்கவறுவாங்கர்சகுனியாதொட்டமென்றான்
புத்தியாலவனும்யான்செய்புண்ணியமனைத்துமென்றான். (உஅ௦)

உருட்டியகவறுநேமியுடையவனருளினாலே
மருட்டியசகுனியெண்ணின்வழிப்படாதுருண்டகாலை
யிருட்டியவிழியான்மைந்தனிதயமுமிருண்டுசோரத்
தெருட்டியவுணர்வின்மிக்கோன்செப்பியயாவும்வென்றான். (உஅக)

வென்றுதன்னிளைஞரோடுமேதகுபுதல்வரோடு
மன்றலந்தெரிவையோடுமற்றுளோர்தங்களோடு
மன்றுதன்குரவர்பொற்றாளன்புடன்வணங்கிக்கானஞ்
சென்றனனென்பமன்னேசெழுநிலமுடையகோமான். (உஅஉ)

ஒழிவுசெய்கருணைநால்வருள்ளமுமொழியவேனை
வழுவறுமன்னருள்ளமம்மரோடயர்ந்துவிம்மக்
குழவிபானுகர்தலின்றிக்கொற்றமாநகரிமாக்க
டழலெனவுயிர்த்துமாழ்கித்தனித்தனிபுலம்பலுற்றார். (உஅங)

காட்டிடையெல்லைபொற்றாணறுமலர்சிவக்கவேகிக்
காட்டிடைபுகுந்தபோதுங்கலக்கமற்றுவகைகூர்ந்தான்
கூட்டிடையின்பதுன்பக்கொழும்பயன்றுய்த்துமாறி
வீட்டிடைபுகுதும்போதுமெய்ம்மகிழ்விபுதர்போல்வான். (உஅச)

சூதுபோர்ச்சருக்கம் முற்றிற்று.

---

சபாபருவம் முற்றுப்பெற்றது.

## வில்லிபுத்தூராழ்வார் வரலாறு. *

வில்லிபுத்தூராரென்பவர், தமிழில்மகாபாரதம்பாடியவொருமகாகவி. இவர் பிராமணசாதியிற்பிறந்தவரென்பது, இந்நூற்சிறப்புப்பாயிரத்தில் "வண்ண நான்கினு முயர்ந்துளோ னொருமுனி வந்தான்" என்றதனால் விளங்கும்.

இவருடைய மதம் வைஷ்ணவமென்பது, சிறப்புப்பாயிரத்தில் "பைந் துழாய்முடிப் பரமனைப் பலகவித்துறையுஞ், சிந்தையான்மொழிந் தன்பர் தந்திருவுளம்பெற்றோன்" என வருதலினாலும், இவர் இப்பாரதத்தின் முதலிலும் இந்நூற்சருக்கங்களின் தொடக்கத்திலும் ஸ்ரீமகாவிஷ்ணுவின்விஷயமாகவே பலவாறு கடவுள்வாழ்த்துக்கூறியுள்ளதனாலும், "எங்கள்மாதவன்" என்று நூலைத் தொடங்கியிருப்பதனாலும், வில்லிபுத்தூராழ்வா ரெனத் திருநாமமுடைமையாலும், தெளிவாகத் தெரியவருகின்றது.

இவர் ஒன்பதாம்போர்ச்சருக்கத்துக் காப்புச்செய்யுளில் "ஓராறுபேத சமயங்களுக்கு முருவாகிநின்ற வொருவ, னீராறுநாம முறைசெய்து மண் கொ டிடுவார்கள்காணு மிமையோர்" எனத் துவாதசோர்த்துவபுண்டரத்தைச்சிறப்பித்துக்கூறியுள்ளதனால், இவர் திருமண்காப்புச்சாத்தும்ஸ்ரீவைஷ்ணவரென விளங்கும். இன்னும், இவர் திருமாலினிடத்துமாத்திரமேயன்றி அப்பெருமானடியார்களுட்சிறந்தவரான ஆழ்வார்களிடத்தும் ஈடுபாடுடையவரென்பதை, பதினைந்தாம்போர்ச்சருக்கத்துக்காப்பில் "கொத்தவிழ்த்த சோலைமன்னு குருகையாதிநெஞ்சிலே, வைத்தமுத்திநாதன்" என நம்மாழ்வாரையும், பத்தாம்போர்ச்சருக்கத்துக் காப்பில் "கலிய னெங்கள் மங்கையாதி கண்டுகொண்ட நாமமே" எனத் திருமங்கையாழ்வாரையுங் கூறியுள்ளதனாற் காண்க.

இவர் திருவவதரித்த ஊர், நடுநாட்டிலுள்ள சனியூ ரென்பது.

நடுநாடென்று சொல்லப்படுகிற திருமுனைப்பாடிநாட்டிற் சனியூரிலே பிராமணசாதியிலே வைஷ்ணவமதத்தில் வீரராகவாசாரியரென்பவர்க்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்த இவ்வில்லிபுத்தூரார், இளமையிலேயே நல்லாசிரியரையடுத்துக் கல்விகற்று, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் மிகவல்லவராய், வடமொழியிலும் மிக்கதேர்ச்சி பெற்று, ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகைக் கவிகளையும் மிகஎளிதில் அமிழ்தினும்இனியனவாகப் பாடவல்லராய், சேரசோழபாண்டியரென்னுந் தமிழ்நாட்டுமூவேந்தர்களாலும் மிக்க சிறப்புடன் விரும்பியழைக்கப்பட்டு ஆங்காங்குச்சென்று தமதுகல்வித்திறத்தைப் பலவகையாலுங்காட்டி அவர்களைக் களிப்பித்து, அவர்கள் அன்போடு அபிமானித்து மிகுதியாகவழங்கிய சிறந்த பல பெரும்பரிசுகளைப் பெற்று, பற்பலகவித்துறைகள்பாடித் திருமாலை இரவும்பகலும் எப்பொழுதுந் துதித்துக்கொண்டு, தமிழ்நாடு முழுவதிலும் தமது கல்விப்பெரும்புகழைப் பரவச்செய்துவந்தார். அங்ஙனம் வருகையில், முற்கூறிய திருமுனைப்பாடிநாட்டிலே வக்கபாகையென்னும் இராசதானியில் வீற்றிருந்து செங்கோல்செலுத்தி, தலை இடை கடையென்னும் மூவகைச் சங்கத்திலே வளர்ந்துவந்த தமிழ் பின்பு பங்கத்தையடையாதபடி நான்காவதொரு சங்கம்போல அதனைப்பாதுகாத்து, அருங்கவிப்புலவர்களை அன்புடன் ஆதரித்துவந்த வள்ளலும், கல்வி அறிவு ஒழுக்கங்களாலும் செல்வம் அதிகாரம் முதலிய நலங்களாலுங் குறைவின்றி மிகச் சிறப்புற்றுவிளங்கியவனுமாகிய கொங்கர்குலத்துத்தோன்றிய வரபதியாட் கொண்டா னென்கிற அரசன், இவ்வில்லிபுத்தூராரது கல்வி கேள்வித் திறமைகளையும் அடக்கம் ஒழுக்கம் அன்பு அருள் வாய்மை முதலிய நற்குணங்களையுங் கேள்வியுற்று அறிந்து 'இக்குணங்களெல்லாம் ஒருவரிடத்திலே

---

* இவ்வரலாறு, இவர்குமாரராகிய வரந்தருவார்[வரதாசாரியர்] இருபத்திரண்டு செய்யுள்களாற் செய்துள்ள சிறப்புப்பாயிரத்தைப் பிரதான ஆதாரமாகக் கொண்டும், மற்றுஞ்சில ஆதாரங்களால் வேறு சில விஷயங்களைச் சேர்த்தும் ஒருவாறு காட்டப்படுகிறது.

ஒருங்கு அமைந்திருப்பது அருமை அருமை!' என்று மிக ஆச்சரியமுற்று இவரை வரவழைத்து அநேக சன்மானங்கள் செய்து தனது ஆஸ்தானபண்டிதராக அமைத்துவைத்து, ஒருநாள் இவரை நோக்கி 'உமக்கும் நீர் எழுந்தருளியுள்ள இந்த எனது சம்ஸ்தானத்துக்கும் உலகமுள்ளவளவும் அழியாப்பெருங்கீர்த்தி உண்டாகி நிலைபெறும்படி, வடமொழியில் ஸ்ரீவேதவியாசமகாமுனிவரால் விரித்துரைக்கப்பட்ட மகாபாரதசரித்திரத்தைத் தமிழ்பயில்வோரனைவரும் ஓதியுணர்ந்து உய்யுமாறு செந்தமிழில் விருத்தப்பாடல்களினால் ஒருபெருங்காப்பியமாகப் பாடித்தந்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, இவர் அவ்வேண்டுகோளுக்கு இசைந்து (இதிகாசமிரண்டனுட்பெரியதாகிய) மகாபாரதத்தை மகாகாவியமாகச் சொற்சுவைபொருட்சுவைகள் மிக்கு விளங்கும்படி நல்லநடையிலே பாடியருளினார். இதுநிற்க:

இவர்பாரதம்பாடியகாரணம், இன்னும்இரண்டுவகையாகவுங் கூறப்படும்.

அவற்றுள், முதலாவது வருமாறு:—இந்தவில்லிபுத்தூரார்க்கும் இவர் தம்பியார்க்கும் தாயபாகத்தைப்பற்றி விவாதமுண்டாக, அவ்விஷயத்தை அவர்கள் அரசனிடம்அறிவித்தனர்; அரசன் இவரதுகல்விதிறத்தை முன்னமே கேள்வியுற்று அறிந்துள்ளவனாதலால் 'இவ்வளவு கற்றறிந்தவர்க்கும் உண்மையறிவு உண்டாகவில்லையே!' என்று மிகவும்விசாரமடைந்து 'அவ்வுண்மையறிவை இவர்க்கு உண்டாக்குவதற்கு ஏற்றஉபாயம், (தாயபாகங்காரணமாகத் துரியோதனாதியர் மாறுபட்டுஅழிந்ததைக் கூறும்)மகாபாரதநூலில் இவரைப் பழகும்படி செய்வதே' என்று நிச்சயித்து 'மகாபாரதத்தை நீர் தமிழிற் பாடவேண்டும்; பாடினபின்புதான் உங்கள் வழக்குத் தீர்க்கப்படும்' என்று கட்டளையிட்டான்; உடனே இவர் அவ்வாறே அப்பாரதத்தைப்பாடி அந்நூலின் நீதியிற்கருத்தூன்றியவராய்,பின்பு தாமே தம்தாயபாகத்தில் வெறுப்புற்று, அதனையும் தம்பிக்கே கொடுத்துவிட்டனரெனக் கூறுவர் சிலர்.

வேறுசிலர் கூறுமாறு:—இவ்வில்லிபுத்தூரார் தம்மோடுவாதஞ்செய்து தோற்றவர்களது காதுகளைத் தோண்டியறுக்குந் துறட்டைக் கையிற்கொண்டு சென்று ஆங்காங்குஉள்ள பலபுலவர்களையுஞ் சயித்துவருகிறபொழுது திருவண்ணாமலைக்குப் போயினர்; அங்குத்தங்கிய கல்விமான்கள் இவரைக்கண்டும் இவர்செய்கையைக்கேட்டும் அஞ்சியோடிச்சென்று தமது தலைவரும் திருப்புகழ்பாடியவருமாகிய *அருணகிரிநாதரென்னும் பெரும்புலவர்க்குச் செய்தியை அறிவித்தார்கள்; அப்புலவர்பெருமான் வில்லிபுத்தூரரது செருக்கை யடக்கக் கருத்துக்கொண்டு அவரைவருவித்து 'யான் இப்பொழுது நூதனமாகப்பாடுகின்றதொரு நூலுக்கு யான் பாடிவரும்பொழுதே பொருள்கூறிவருவீராயின், உமதுகல்வித்திறம் விளங்கும்' என்று அலட்சியமாகச் சொல்லினர்; சொல்லவே, இவ்வாசிரியர், கடுஞ்சினங்கொண்டு,தம்மையெதிர்க்கிறஅவரைவென்று அங்குந் தமது வெற்றிக்கொடியை நாட்டக்கருதி, அக்கொள்கைக்கு உடன்பட்டார்; உடனே அருணகிரிநாதர் ஆசுகவியாக நூறுபாட்டில் முருகக்கடவுள்விஷயமாக 'கந்தரந்தாதி' என்னும் யமகவந்தாதியைப் பாடத்தொடங்கிப் பாடிவர, வில்லிபுத்தூராரும் உடனுக்குடனே ஒவ்வொரு செய்யுட்கும் பொருள்கூறிவந்து இடையில் ஐம்பத்துநான்காம் பாட்டாகிய

"திதத்தத்தத்தித்தத்திதிதாதைதாததுத்தித்தத்திதா
திதத்தத்தத்தித்ததிதித்தித்ததேதுத்துதித்திதத்தா
திதத்தத்தத்தித்தத்தைதாததிதேதுதைதாததத்து
திதத்தத்தத்தித்தித்திதீதிதிதுதிதீதொத்ததே"

* இவர் பிரபுடதேவமகாராஜாகாலத்திலிருந்தவரென்றும், அவன்காலம் இப்பொழுதைக்குஏறக்குறைய ௪௱-வருடங்கட்குமுன்பென்றும் கூறுவர்.

என்னும்ஒருமெய்யால்வந்தசெய்யுட்குப்பொருளுரைக்கமாட்டாமற்போனமையால் தோல்வியடைந்து தம்துறட்டையெறிந்துவிட்டு அவ்வூரினின்றும் புறப்பட்டுப்போவாராயினர்: போம்வழியிற் சிவாலயமொன்று இருக்க, அது தம்கண்ணிற்படாதபடி தம்மைச்சுற்றித் திரையிடும்படி வில்லிபுத்தூரார் தம் பரிசனங்களையேவிச் சிவநிந்தனைசெய்து, அதுகேட்டு அளவிறந்த கோபங்கொண்ட அருணகிரிநாதரது சாபத்தாற் கண்ணிழந்து, அச்சாபநீங்குதற் பொருட்டுச் சிவவிஷயமாக ஒருநூல் செய்யும்படி அவரால் ஆஜ்ஞாபிக்கப்பட்டார்; பட்டும் வீரவைஷ்ணவராதலால் தம் மதாபிமானத்துக்குப் பங்கம் வாராமல் சிவஸ்துதி சிற்சிலவிடத்து விரவிவரும்படி இப்பாரதத்தைச் சாபநிவிருத்தியின்பொருட்டுப் பாடிக் கண்பெற்றார் என்பது.

இந்த இரண்டுவகை வரலாறுகளும், இந்நூலின் பாயிரத்தோடு மாறுபடுகின்றதனாலும், இவர்மகனார்கூறிய பாயிரத்தை மறுக்கத்தக்க பிரபல ஆதாரமொன்றும் இவ்வரலாறுகட்குஇல்லையாதலாலும், இவை யாவராலுந் தகுதியென ஏற்றுக்கொள்ளத்தக்கனவல்ல வென்று தோன்றுகின்றது.

இவர், தம்காலத்திற் கல்விச்செருக்கடைந்திருந்த புலவர்கள் பலரையும் தமது வித்தியாசாமர்த்தியத்தால் வென்று, அவ்வெற்றிக்கு அடையாளமாக, தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் தமதுகையிலே எப்பொழுதும் ஆயுதமாகவைத்துக்கொண்டுள்ள துறட்டுக்கோலால் மாட்டியிழுத்து அறுத்துவந்தன ரென்பது,

“குட்டுதற்கோ பிள்ளைப்பாண்டிய னிங்கில்லை
துரும்பியளவாக் காதைக் குடைந்து தோண்டி
வெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டொன்ற முடிந்து தலையிறங்கப்போட்டு
வெட்டுதற்கோ கவி யொட்டக்கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே”

என வழங்குந் தனிப்பாடலினால் அறியப்படும்.

ஒருவன்பாடும் பாட்டில் ஏதாவது குற்றங் கண்டால், கண்டவுடனே அவனது தலையில் நறுக்கென்று குட்டுவது, பிள்ளைப்பாண்டிய னென்னும் அரசனது செய்கை; அவனிடம் பரிசுபெறவந்த வித்துவான்கள் பலரும், ‘குட்டுப்பட்டாலும்மோதிரக்கையாற்படவேண்டும்’என்கிறபழமொழியைப் புதுமொழியாக ஞாபகப்படுத்திக்கொண்டு, வந்தவழியே திரும்பிப்போய் மேன்மேற் கல்விகற்க முயல்வது, அவன்காலத்தில் இயல்பா யிருந்ததாம். கவிபாடிவருபவர்களையெல்லாம் சயித்துப் பிடித்துச் சிறைச்சாலையிலடைப்பித்து, தேவி கொலுவிருக்கின்ற நவராத்திரிகாலத்திற் சிறைக்கூடத்திலிருந்து வெளிப்படுத்தி அவர்களை இருவரிருவராகக் குடுமியோடு குடுமி முடிபோட்டு இறங்கிற்கத் தேவிமுன்பாக நிறுத்திப் பிடாரிக்குச் சேவுகடா வெட்டுவதுபோலச் சற்றும்இரக்கமில்லாமல் அவர்கள்தலைகளைப் பதைக்கப்பதைக்க வெட்டிப் பலிசெலுத்துவது ஒட்டக்கூத்தரென்னும் புலவரது வழக்கமாம். அவைபோலவே, இவ்வில்லிபுத்தூராரும், வாதஞ்செய்யும்பொழுது எதிரி தோற்றால் அவன்காதில் துறட்டைமாட்டிப் பிடித்திழுத்துக் காதை ஒட்ட அறுத்து, யானையின் மதக்களிப்பை அங்குசத்தால் அடக்குவதுபோல அவர்கள்கல்விச்செருக்கைத் தம்துறட்டினா லொழிப்பதைத் தமது வழக்கமாக வைத்துக்கொண்டு விருதுகூறிச்சென்று திக்குவிசயஞ் செய்துவந்தார். இவர்காலத்து அரசர்கள் இவரிடத்தில் மிகவும்அன்புவைத்திருந்ததனால், இவர்இன்னனஞ்செய்ய இடங்கொடுத்துவந்தார்கள்.

# வில்லிபுத்தூராழ்வார் வரலாறு.

இவருடைய காலம் இப்பொழுதைக்குச் சற்றேறக்குறைய ஐந்நூறு வருஷத்துக்கு முன் என்பர்.

பாயிரத்தில் "நான்காஞ்சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமல் நிலைகண்டானே" என்று இவர்காலத்திலிருந்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனைக் கூறியிருத்தலால், இவர்காலம் கடைச்சங்கத்தார் காலத்துக்குப்பின் என்பது மாத்திரமே தெளிவாகத் தெரியவருகிறது.

இவர்க்கு வில்லிபுத்தூராரென்றும் வில்லிபுத்தூராழ்வாரென்றும் வழங்கிவருகிற பெயர் யாதுகாரணத்தால் வந்தது? பாண்டியநாட்டில் திருநெல்வேலிப்பிராந்தத்திற் பிரசித்தமாகவுள்ள விஷ்ணுஸ்தலமான ஸ்ரீவில்லிபுத்தூரிற் பிறந்தவரா? அன்றி, அங்கு வளர்ந்தவரா? அல்லாக்கால், அவ்விடத்து வாழ்ந்தவரா? என்றால்,—இக்காரணங்களொன்றுமன்று, இவர்க்கு இப்பெயர் வந்தது; பின்னை யென்னையோ வெனில்,—வைஷ்ணவசம்பிரதாயத்திற்சிறந்தபக்தர்களென்றுசொல்லப்படுகிற ஆழ்வார்கள்பன்னிருவருள் ஒருவரும், பெரியாழ்வாரென்றும் பட்டர்பிரானென்றும் விஷ்ணுசித்தரென்றும் வேறுதிருப்பெயர்களை யுடையவரும், ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்ததனால் வில்லிபுத்தூராழ்வா ரென்று வழங்கப்படுபவரு மாகிய பாகவதசிகாமணியினுடைய இத்திருநாமத்தையே தந்தைதாயர்கள் இவர்க்குப் பெயராக இட்டு வழங்கினர்க ளென்று உணர்க; (பரிசுத்திகரமென்கிறகாரணத்தால், கடவுள்பெயரும் அடியார்களின் பெயரும் மனிதர்கட்கு இட்டு வழங்கப்படும்.) இவருடைய தந்தைதாயர் பெரியாழ்வார்பக்கல் மிக்கபக்தியுடையராய் அவர்க்குவழிபாடுசெய்ய, அவ்வாழ்வாரருளால் இம்மகன் பிறக்க, இக்குமாரனுக்கு அவ்வாழ்வார்பெயரையிட்டன ரென்னலாம். அல்லது, அந்தப் பெரியாழ்வார் பாலியத்திலே எவரிடத்தும் யாதொருநூலும் படியாதவராயிருந்தும் பின்பு பகவானருளாற் பெரியதிவ்வியப்பிரபந்தம் பாடவல்ல மகாபண்டிதராய்விட்டதுபோல, இவரும் தெய்வகடாக்ஷம்பெற்ற வரகவியென்கிற காரணம்பற்றி, இவர்க்கு வில்லிபுத்தூராழ்வாரென்றுபெயர்வந்ததென்றுங் கொள்ளலாம். [ஆழ்வார்என்பதற்கு-எம்பெருமானுடைய திருக்கலியாணகுணகணங்களாகிய பெருங்கடலில் அமிழ்ந்து நெஞ்சுருகிஈடுபடுபவ ரென்று பொருள். இப்பெயரால் மற்றுஞ்சிலபக்தர்களை வழங்குவதைப் பரதாழ்வான், சத்துருக்கனாழ்வான், பிரகலாதாழ்வான், கஜேந்திராழ்வான், சுதரிசனாழ்வான், கம்பநாட்டாழ்வார் முதலிய பெயர்களிலுங் காண்க.]

விஷ்ணுவின் அம்சாவதாரமாகிய கிருஷ்ணனுடைய சரித்திரம் மகாபாரதத்தில் இடையிடையே வருகிறதென்ற சிறப்புப்பற்றியே இவ்வாசிரியர் பாண்டவசரித்திரத்தைப் பாடுதற்கு உடன்பட்டுப் பாடினர்; இது,

"முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கு
மென்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்"

என இவர்தாமே தற்சிறப்புப்பாயிரத்திற் கூறியுள்ளதனாற் பெறப்படும். [வேதவியாசபகவானும் வடமொழிமகாபாரதத்தில்இவ்வாறேகூறியிருக்கின்றனர். இனி, இச்செய்யுளின்மூன்றாமடியின்முதலில் 'மன்னுமாதவன்' என்பதை மன்னும் மாதவன் எனப்பிரித்து-நித்தியனாகியதிருமகள்கொழுநனை திருமா லென்று பொருள்கொள்வதை விட்டு, மன்னும் மாது அவன் என்றாவது மன் உமா தவன் என்றாவது பதம்பிரித்து - ஸ்தாணுவாகிய உமாபதியான சங்கர னெனப் பொருள்கொண்டு,சிவபிரானது சரித்திரம் இந்நூலின் இடையிடையேவழங்குவதென்றவிருப்பத்தால் தாம்இந்நூலைப்பாடஇசைந்ததாகக் கூறினா ரென்று உரைப்பாரு முண்டு; அது சரியன்று; என்னெனில்,— இந்நூலில் ஆதிபருவத்தில் அருச்சுனன்தீர்த்தயாத்திரைச் சருக்கத்திலும்,

ஆரணியபருவத்தில் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்திலும், துரோணபருவத்தில் பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திலும் ஆக மூன்றிடத்தில் மாத்திரமேயன்றி நூல்முழுவதும் இடையிடையே (கண்ணனுடைய சரித்திரங் காணப்படுவது போலச்) சிவபிரானுடைய பிரஸ்தாபம் இல்லாமையாலும், வைஷ்ணவராகிய இவர் சிவசரித்திரம் வருவதென்று பாடினாரென்பது உசிதமல்லாமையாலும் எனக் காண்க.]

அன்றியும், இவர் இந்நூலில் ஒவ்வொருசருக்கத்தின்தொடக்கத்திலும் திருமால்விஷயமாகக் காப்புச்செய்யுள் கூறியுள்ளதனாலும், "மறந்தும்புறந்தொழா"நல்லவைஷ்ணவரென்பது நன்குவிளங்கும். [சிலசருக்கங்களிலே காப்புச்செய்யுள் காணப்படவில்லை; அதற்குக்காரணம் - ஆசிரியராற்பாடப்பட்ட செய்யுட்கள் பிற்காலத்தில் ஏடெழுதுவோரால் எழுதாதுவிடப்பட்டு இல்லையாயின வென்றாவது, * தொல்காப்பியம் முதலிய சில நூல்களிற் போலச் சிலசருக்கங்களின் ஆரம்பத்தில் மாநசிகமாத்திரமாகக் கடவுள் வணக்கஞ் செய்யப்பட்டுச் செய்யுளுருவமாய் வாசிகமாகக் காப்புச் செய்யப் படவில்லை யென்றாவது கொள்க.]

ஆயின், வைஷ்ணவராகிய இவர் இந்நூலின் முதற்காப்பாக

"நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநாள்
ஏடாகவடமேருவெற்பாகவங்கூரெழுத்தாணிதன்
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ.

முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறத்
திருகாமல்விளைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
புருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரும்
ஒருகோடிபூதேவருங்கைதொழுங்கோவையுறவுன்னுவாம்"

என்ற இரண்டு பாடல்களால் சிவகுமாரராகிய விநாயகரை ஸ்தோத்திரஞ் செய்வானேன்? என்றால்,—தம்மைச்சரணமடைந்தவர்கள் தொடங்குந்தொழில்கட்கு வருகிற விக்கினங்களைப் போக்குதலாலும் தம்மையடையாமல் அகங்கரித்தவர்கள் ஆரம்பிக்கிற செய்கைகட்குப் பல இடையூறுகளை உண்டாக்குதலாலும் 'விக்நேச்வரர்' என்று திருநாமம்பெற்றுள்ள ஸ்ரீவிநாயகமூர்த்தி சைவர்கட்குமாத்திரமேயன்றிச் சிறுபான்மை பிறர்க்கும் ஒருசார் வழிபடுகடவுளாதலாலும், வேதவியாசர் மகாபாரதத்தை இயற்றிவருகிறபொழுது விநாயகர் அந்நூலை மகாமேருமலையிலே எழுத்தாணிகொண்டு எழுதிவந்ததும் இடையிலே அவ்வெழுதுகருவி ஒடிந்துபோனபொழுது 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்றவகையாய் யானைமுகக்கடவுளாகிய தமது தந்தங்களில் ஒன்றைப் பறித்து அதனையே கருவியாகக் கொண்டு எழுதிமுடித்தருளியதுமாகிய இந்த முக்கியமான காரணத்தைக்கொண்டு நோக்குமிடத்து விநாயகர் இந்நூலின்முதலில்வைத்தற்குஏற்றஇயைபுடையவராதலாலும், வைஷ்ணவர்கள் விநாயகரை விஷ்வக்ஸேநரென்கிற சேனைமுதலியாரது அம்சமென்று கொண்டாடுவது மரபாதலாலும், இவரும் விநாயகரைப் பாடினரென்க.

இவ்வில்லிபுத்தூரார் சிவத்வேஷம்பாராட்டுகிறவீரவைஷ்ணவரல்லர். அது - அருச்சுனன்தீர்த்தயாத்திரைச்சருக்கத்திலும், அருச்சுனன்தவநிலைச்சருக்கத்திலும், பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திலும் சைவசம்பிரதாயத்துக்கு வழுவுறாதபடி சிவபிரானைச் சிறப்பித்தும் இதரதேவர்களைத்தாழ்த்தியுங் கூறியதனால், நன்குபுலனாகின்றது.

---

* 'தொல்காப்பியம் முதலியவற்றில் நூற்குப் புறமாகவே மங்கலம் செய்யப்பட்டது' என்பது, தருக்கசங்கிரகவுரை.

வியாசர் புராணங்களில் ஒவ்வொருதேவரை ஒவ்வோரிடத்திற் சந்தர்ப்பத்துக்கேற்பச் சிறப்பித்துக்கூறியிருத்தல்போலவே, இவரும் தமது நூலில் சூரியன் அக்கினி முதலிய மற்றைத்தேவர்களையும் சமயம்வந்தவிடத்துப் பக்ஷபாதமில்லாமற் சிறப்பித்துக்கூறியிருக்கின்றார். பதினேழாம்போர்ச் சருக்கத்தில் "மூவர் தத்தம்வடிவாமுதல்வன்" எனச் சூரியபகவானைச் சிறப்பித்துக்கூறியுள்ளவாறும், பிறவுங் காண்க; [இதற்கு - திரிமூர்த்திகளின் சொரூபமாகவுள்ள தலைவனான சூரிய னென்று பொருள்.]

கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய பெருந்தேவனாரென்பவர், மகாபாரதத்தைத் தமிழில் வசனமும்பாடலுமாக விரவிவருகிற 'சம்பு' என்கிற நடையிலே பாடியிருக்கின்றனர்; பெரும்பாலும் வெண்பாக்களால் அமைந்ததுபற்றி, அந்நூலுக்குப் பாரதவெண்பா வென்று பெயர். அது, இப்பொழுதைக்கு ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறு வருஷத்துக்கு முந்தியது. * இவ்வில்லிபுத்தூரார் அந்தப்பாரதவெண்பாவின் சொல்லையும் பொருளையும் ஆங்காங்கு வெகுவாகத் தழுவி நாலாயிரத்துமுந்நூற்றுச்சொச்சம்பாடல்களாற் பாரதத்தைப்பாடினர். இவர்பாடிய பாரதம் வடமொழி வியாசபாரதத்தின் வழிநூலென்னத் தட்டில்லை.

"மண்ணி லாரண நிகரென வியாதனார் வகுத்த
எண்ணிலா நெடுங்காதையை யானறிந் தியம்பல்"

என்று இவர்தாமே அவையடக்கத்திற் கூறியிருக்கின்றார். ஆயினும், இவர்பாடிய நூல் ஸம்ஸ்கிருதபாஷையில் அகஸ்தியபட்டரென்பவர்இயற்றியுள்ள பாலபாரதமென்னுங் காவியத்தின் பொருளமைதியோடு பலவிடங்களிலொத்திருக்கின்றது; ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, இந்நூலுக்கும் அந்நூலுக்கும் இடையிடையே பலவேறுபாடுகளும் உள்ளனவாயினும், சிற்சிலவிடங்களில் இந்நூல் அந்நூலின் மொழிபெயர்ப்பென்றே சொல்ல லாம் படியுள்ளது.

வில்லிபுத்தூரார் தமதுபாரதத்திற் பாடியது, முதற்பத்துப்பருவமே; மற்றை யெட்டுப் பருவங்கள் அவராற் பாடப்படவில்லை. அதற்குக் காரணம்: அவற்றைப்பாடுதற்குமுன் அவர் காலஞ்சென்றிருக்கலாம்; அல்லது, நூல் முழுவதையும் பாடினால், பாண்டவர்கள் கிருஷ்ணபகவான் என்கிற மகாபுருஷர்களது கேட்பவர்க்குவருத்தத்தையுண்டாக்கத்தக்க மரணசரித்திரத்தைத் தம்வாயாற் சொல்லவேண்டுமே யென்று கருதி, 'பாண்டவர்கள் இராச்சியம் ஆண்டு வாழ்வாராயினர்' என்பதனோடு முடித்துவிட்டதாகக் கூறலாம். பாண்டவசரித்திரங் கூறுகிற பாரதசம்பு முதலிய சில நூல்களிலும் பின்னிட்டகதை காணப்படவில்லை. [கம்பர் இராமாயணத்தில் உத்தரகாண்டம் பாடாமல் விட்டதற்கும் இப்படிப்பட்ட காரணத்தையே முக்கியமாகக் கொள்ளலாம்; இப்பொழுதும் இராமாயணபாராயணஞ் செய்பவர்கள் உத்தரகாண்டம் படிப்பதில்லையன்றோ?] அவ்வாறே இவரும் பின்னையசரித்திரத்தைக் கூறாமல் "தனைகடற்பா ரளித்து அவரு மங்கரி லறநெறியேகருதி வாழ்ந்தார்" என மங்களகரமாகச் சரித்திரத்தைப் பாடி முடித்தனரெனக் கொள்வது தகுதியுடையது. இனி, இந்நூலின் பின்னைய பருவங்களும் பாடப்பட்டுப் பிற்காலத்திற் கிடைத்தற்கு அரியவையாயின

---

* அந்நூல் பன்னீராயிரம் பாடல்களை யுடையதென்று தொண்டைமண்டலசதகத்திற் கூறியிருப்பினும், அது இப்பொழுது முழுவதும் கிடைப்பதில்லை. உத்தியோகபருவந் தொடங்கித் துரோணபருவம் வரையிலும் எண்ணூறுபாடல்களே கிடைக்கின்றன.

வென்று சொல்வாருமுளர்.* வில்லிபுத்தூரார்பாடிய பாரதத்திலே சுருக்கமாகக் கதையைத் தொகுத்துக்கூறும் மூந்நூறு நானூறு பாடல்கள் தவிர மற்றை நாலாயிரஞ்செய்யுட்களை யெடுத்துக்கொண்டு, பிற்காலத்தில் நல்லாப்பிள்ளையென்பவர், புதிதாகத் தாம் பதினோராயிரம் பாடல்பாடி இடையிடையிற்கோத்தும் இறுதியிற் சேர்த்தும் பாரதம் பதினெட்டுப் பருவங்களையும் பூர்த்திசெய்தார்; அது 'நல்லாப்பிள்ளைபாரதம்' என வழங்கும்: அந்நூலாசிரியர், இற்றைக்கு நூறுவருஷங்களின்முன் இருந்தவர். இதுதவிர, இற்றைக்கு ௪௫0 - வருடங்களின்முன் இருந்த அஷ்டாவதானம் - அரங்கநாதகவிராயர் பாடிய பாரதத்தின் பிற்பகுதியும் ஒன்று உளது; அது, ஏறக்குறைய ௨௫00 - செய்யுளுடையது.

இப்பாரதத்துக்கும் இதன்முதனூலாகிய வியாசபாரதத்துக்கும் இடையிடையே கதையமைதிகள் சிற்சில வேறுபடுவது "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்,பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி, அழியா மரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிப்படி இவ்வாசிரியராற் பிறநூல் மேற்கோள்கொண்டு அமைக்கப்பட்டதாதல் வேண்டுமெனவறிக.

இவர் மகாபாரதமொன்றுதவிர வேறுநூலெதுவும் பாடியிருப்பதாகத் தெரியவரவில்லை.

இவர், தமக்குப்பலசெல்வமுங்கொடுத்துஆதரித்துத் தம்மைக்கொண்டு பாரதத்தைப் பாடும்படி செய்வித்த வரபதியாட்கொண்டானென்னும்அரசனை இப்பெருங்காப்பியத்தில் இடையிடையே புகழ்ந்துபேசியிருக்கிறார்.

இப்படி, பாலில்விஷங்கலப்பதுபோலப் பெரிய இதிகாசத்தினிடையிலே ஒருமனிதனைத் துதித்தல் தகுமோ? நரஸ்துதி நரகவனமன்றோ? என்று ஓர் ஆட்சேபந் தோன்றலாம்: இங்ஙனந்தோத்திரிப்பது தகுதியன்றாயினும், அரசன் தமக்குச்செய்த நன்றியை மறவாமல் உபகாரஸ்மிருதியாகப் பாடினரென்பதுபற்றிப் பலரும் அங்கீகரிப்பார்கள்; அன்றியும், ப்ரஸ்துதமான உபமேயமுகத்தால் அவன்பெயரைப் பிரஸ்தாபிக்காமல் அப்ரஸ்துதமான உபமானமுகத்தாற் புகழ்ந்து கூறியதும் ஒருசமாதானமாகலாம். இங்ஙனமே தம்மைப்பாதுகாத்த பிரபுக்களைத் தாம்செய்யும்நூல்களில் நன்றியறிவுகாரணமாக எடுத்தெடுத்துவது,புலவர்களின்இயற்கை. கம்பர் இராமாயணத்தில் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளலையும், புகழேந்திப்புலவர் நளவெண்பாவில்முரணைநகர்ச்சந்திரன்சுவர்க்கியையும், மண்டலபுருஷன்சூடாமணிநிகண்டில்கிருஷ்ணதேவராயனையும்சிறப்பித்துக்கூறியவாறு காண்க. இன்னும், இவர், தமதுநூலில். தமிழ்நாட்டரசராகிய சேரசோழபாண்டியர்களைப்பற்றிப் பிரஸ்தாபம்வருகிறபொழுது மிக்கசிறப்பாகக்கூறுவர்.

"காவிரியென்னத்தப்பாக்கருணையான்" என, நளசக்கரவர்த்தியினது கருணைக்கு, தமிழ்நாட்டிற் பிரசித்திபெற்ற காவேரிநதியைத் தண்மைக்கும் தவறாமைக்கும் உவமையெடுத்துக்கூறினார்.

"தங்கள்மால் வரையில் வைகுந் தமிழ்முனிதன்னைப் போலப்
பொங்குவெண்டரங்க முந்நீர்ப் புணரிக ளேழுஞ் சேர
வெங்கையால் வாருங் கொற்ற வேழமா மேற்கொண்டானே"

---

* "கலியுகவியாதன் சொல்லக்கணபதியெழுதுபாடல்
பொலிவுறுதமிழிலாறாயிரமெனவிருத்தம்போற்றிச்
சலிவறவில்லிபுத்தூரிறைவனுஞ்சார்வபௌம
னெலிகெழுமறையோர்கோமானுயர்ந்தவருவப்பச்சொன்னான்"

என ஒருசெய்யுள் வில்லிபுத்தூரார்பாரதத்து ஏட்டுப்பிரதியொன்றிற் பாயிரத்துடனே காணப்படுகின்றது. இதுபழையபாடலாகஇருக்குமாயின், இதிற்கூறியஆறாயிரம்பாடல்களிற்பத்துப்பருவங்களானநாலாயிரத்துமுந்நூற்றுச்சொச்சம்போகமற்றவை இவர்பாடியஏட்டுப்பருவங்களெனக்கொள்ளலாம்.

என்றதனால்,தமிழுக்கு ஆதியிலக்கணநூலாசிரியராகிய அகஸ்தியமகாமுனிவர் கடலைக்குடித்தருளிய கதையைக் கொண்டாடினர். இன்னமும் "தங்கள் தமிழ்க்குழலிசையைத் தன்செவிக்கு விடமென்னும்" என்றதனால், வேய்ங்குழலின் இசைப்பாட்டின் இனிமைக்கு, தமிழ்ப்பாஷையை உவமைகூறினர். "தங்கள் மூவகைத்தமிழும் போலச், சிந்தையிற்குளிக்குமாறு சிலீமுகமூன்று விட்டான்" என்றதில், அம்புகள் கன்றாகப் பகைவர்நெஞ்சிற் பதிந்திடுதற்குத் தமிழ்ப்பாஷை கற்றவர்மனத்திற்பதிதலை உவமையாக்கினர்.

இங்ஙனம் தமது தேசாபிமான பாஷாபிமானங்களை வெளிப்படுத்துவது பலர்க்கும் வழக்கமேயாம்.

இவர் தமதுநூலிற் பெரும்பாலும் வடமொழிகளைத் தனிமொழியாகவும் தொடர்மொழியாகவும் இன்னமொழியின் சம்பந்தமானதென்று எளிதில் தெரியவொண்ணாதபடி திரித்தும் மொழிபெயர்த்தும் உபயோகித்திருத்தலால், வடமொழியிலும் மிகவல்லவரென நன்குவிளங்குகின்றது

தமிழில் எந்த நூலாசிரியரும் வடமொழிகளை இவரவ்வளவு எடுத்துக் கொள்ளவில்லை. வடசொற்களைத் தமிழ்க்காப்பியத்தில்நுழைக்கிற வழக்கம் இவர்காலத்தொடங்கித்தான் அதிகமாயிருத்தல்வேண்டும். சங்கத்தார்காலத்துப் பழையநூல்களில் அத்தனையாக வடமொழிகள் அகப்படா; சுத்த தமிழ்ப்பதங்களே மிகுதியாயிருக்கும்.

இவரது பாடல்களில் உவமை, உருவகம், எடுத்துக்காட்டுவமை, தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள்வைப்பு, பிறிதுமொழிதல், உயர்வுநவிற்சி முதலிய பொருளணிகள் அமைந்திருப்பதுமாத்திரமே யன்றி, மடக்கு (யமகம்), பிராசம் முதலிய சொல்லணிகளும் ஆங்காங்கு அமைந்திருத்தலையும், இவரதுசெய்யுள்நடை பலவிடத்தும்டுகுடையதாதலையும், பலவகைச்சந்தங்கள் சந்தப்போலிகள் வண்ணங்கள் பொருந்தியிருத்தலையும் காணலாம்.

"பண்பாகப்பகர்சந்தம் படிக்காசலா லொருவர்பகரொணுதே" என்று சிறப்பித்துக்கூறப்பட்டுள்ள படிக்காசுப்புலவரும், திருப்புகழ்பாடியஅருணகிரிநாதரும் முதலிய சிலர்போலவே இவ்வில்லிபுத்தூராரும் சிறந்த சந்தக்கவி யென்று இவர்நூலால் தெரிகிறது.

சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்குஇனிமை, நன்மொழிபுணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல் முதலிய நூலழகுகளெல்லாம் இவர்நூலில் நன்குஅமைந்திருத்தல், இப்பாரதத்தைப் பார்க்கப் பார்க்கச் செவ்விதிற் புலனாம்.

'குன்றக்கூறல்' முதலிய குற்றங்களிலொன்றும் இந்நூலிலில்லையென்று பொதுப்படக் கூறலாம்; அன்றியும், பலநூல்களிற் காணக்கூடிய 'சென்று தேய்ந்திறுதல்' என்னுங் குற்றம் இந்நூலிலில்லை யென்பது, இந்நூலை ஆதியோடந்தமாக நோக்குவார்க்குத் தானேதெரியும். யுத்தவருணனை, எல்லா நூல்களினும் இந்நூலிற் சிறத்தல் காண்க.

"முன்னோர்மொழிபொருளேயன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவம்" என்றவாறு, இவருடைய நூலில் ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் 'சொற்பொருட்கருத்துக்கள் சிற்சிலஇடத்து எடுத்து ஆளப்பட்டிருத்தல், உய்த்துநோக்குமிடத்து விளங்கும்.

---

இனி, இப்பொழுதைக்கு எட்டுவருடங்களின் முன்பு இருந்த முருகதாசரென்பவர் இயற்றிய 'புலவர்புராணம்' என்னும் புதுநூலிற் கூறப்பட்டுள்ள வில்லிபுத்தூரார்சரித்திரம், இதுவரையிற்கூறிய வரலாற்றோடு சிற்சிலவேறுபாடுடையது; அதனை அனைவரும் அறிதற்பொருட்டு, அந்நூலிலுள்ளவாறு அச்சரித்திரம் அடியிற் குறிக்கப்படுகிறது:—

பெண்ணைநாட்டில் சனியூரில் பிராமணசாதியில் வைஷ்ணவசமயத்தில் தோன்றிய இரண்டுசகோதரர், கல்வியில்தேர்ந்து திருமாலைத்துதித்து அப்பெருமானருளால அக்கல்விப்பொருளோடு செல்வப்பொருளும் நிரம்பியவராய் ஒருவரோடொருவர்மிகஅன்புபூண்டு பாண்டியநாட்டிலுள்ளஸ்ரீவில்லிபுத்தூரையடைந்து அங்குத் தம்தம் மனைவியருடனே ஏககுடும்பமாய் இல்லறவாழ்க்கை நடத்திவந்தார்கள் அவர்களில் மூத்தவர், வில்லிபுத்தூராரென்று சிறப்புப்பெயர் பெற்றார். இங்ஙனமிருக்கையில், கொங்குநாட்டரசனான ஆண்டான்பிள்ளையென்பவன், வடமொழியிலுள்ள மகாபாரதத்தைத் தமிழ்சசெய்யுள்களாற் செய்விககக்கருதி, 'அங்ஙனஞ்செய்யவல்லவர் யார்?' என்று விசாரிக்கையில், வில்லிபுததூராரும் அவர்தம்பியாருமே அதற்குத் தக்கவரென்றும், அவர்கள் மிக்கசெலவமுடையோராதலால் அரசரையும் பொருள்செய்யாரென்றும், ஒருவர்க்கொருவர் உற்ற துணைவராகிய அவர்களாற் பிறருதவி வேண்டப்படுவதில்லையென்றும் அறிந்து, அவர்கட்குள் ஏதேனும் சிறிதுமாறுபாட்டையுண்டாக்கி அந்தசசந்தர்ப்பத்தில் தன் கருத்தை முடித்துக்கொள்ளக்கருதியவனாய், விதவையாகிய ஒருபார்ப்பனக்கிழவியை அழைத்து வணக்கததோடு உபசரித்துச செய்திகூறி 'அம்மா! நீர் அவர்கள்வீட்டுக்குச் சென்று அவர்கட்குள் கலகத்தைஉண்டாக்கவேண்டும்' என்று கூறி அவளுக்கு வேண்டியபொருளையுங் கொடுத்து அனுப்பிவிட்டு, பின்பு மதுரைககுசசென்று பாண்டியனைக்கண்டு அவனிடம் ஏகாந்தத்தில் இசசெய்திமுழுவதையுஞ்சொல்லி, 'அவர்களுடையவழக்கு வந்தால் எவ்விதத்திலும் என்னிடததில் அனுப்பவேண்டும்' என்று வேண்டி, 'அங்ஙனமேஆகுக' என்று அதற்கு இணங்கிய அப்பாண்டியனது அநுமதியைப் பெற்று மீண்டனன். இதுநிற்க:

அரசனிட்ட கட்டளைப்படியே அக்கிழவி வில்லிபுத்தூரார்வீட்டுக்குச சென்று அவர்மனையாளிடத்தும் அவர்தம்பிமனையாளிடத்தும் கலந்து இனிமையாகப்பேசிப்பழகி அவ்விருவரும் தன்னை நல்லவளென்று நம்புமாறு நடந்துகொண்டே அவர்கட்குள் ஒருத்திமேல் ஒருத்தியிடம் பொல்லாதபல கோட்சொற்களைக் கூறி உட்பகைமையைவிளைவித்து அவர்கள் ஒருவரோடொருவர் எதிர்த்துப்பேசிக் கலகஞ்செய்யவும் தம்தம்கணவரைத் தம்தம் வசமாக்கி நடத்தவும் மூட்டிவிட்டாள். அதனால் மாறுபாடுகொண்ட வில்லிபுத்தூராரும் அவர்தம்பியாரும் தமதுபொருளைப் பாகஞ்செய்துதருதலை வேண்டித் தங்கள்நாட்டரசனான பாண்டியனிடம் வர, அவ்வேந்தன், முன் கூறியபடி அவர்களைக் கொங்குநாட்டரசனிடத்தே செலுத்தினன். அவ்வாறேசென்ற அவர்களைக் கண்டு கொஙகராசன் மகிழ்ச்சிகொண்டு அவர்கட்கு மிக்கஉபசாரஞ்செய்து வடமொழிமகாபாரதத்தை இரண்டுபேர்கமாப்பிரித்து அவ்விருவரிடமுங் கொடுத்து 'நீங்கள் இந்நூலைத் தமிழ்ப்பாடலாகச்செய்த பின்னரே நான் உங்கள்செல்வத்தைப் பாகித்துக்கொடுப்பேன்' என்று கூறினான். அச்சொல்லை அவர்கள் திருமால்கட்டளையாகவே சிரமேற்கொண்டு அங்ஙனமே சிலநாள் அவன்வசத்திலிருந்து, சொற்சுவையும்பொருளழகும் இசைச்செறிவும் சந்தப்பொலிவும் வண்ணப்பொருத்தமு முள்ள ஆறுயிரங்கவிகளாற் பாரதத்தைப் பாடி முடித்திட்டார்கள்.

இப்படி தன்கருத்து முற்றியதனாற் களிகூர்ந்த கொங்கர்கோமான் தானே ஒருபார்ப்பனக்கிழவியைக்கொண்டு குடும்பக்கலகம்விளைத்தவிதத்தை

அவர்கட்கு விவரமாகத்தெரியக்கூறி, அவர்கட்குஉண்டான விரோதத்தைத் தணிவித்து, அவர்களைநோக்கி 'நீங்கள்என்விருப்பத்தைநிறைவேற்றியதால், நான் உங்கள்விருப்பத்தை நிறைவேற்றச் சித்தனாயிருக்கிறேன்; நீங்கள்விரும்புவதைக்கூறுமின்' என்றுகூற, வில்லிபுத்தூரார், 'என்னோடுமாறுபட்டுச் சந்தம்பாடத்தொடங்கி அதில் தவறியவர்களுடைய காதுகளைத் துணிக்குமாறுநான் கொடுக்கக்கடவாய்' என்று தம்விருப்பத்தை வெளியிட, அரசன் அங்ஙனமே வான்கொள்ளுமாறு அருள்செய்தான். தமையனாரிடத்து முதிர்ந்த அன்பையுடைய தம்பியார் 'எனக்கென்று தனியே உரியது யாதுமில்லை' என்று கூற, அரசன், தமையனார்க்கு அடங்கிநடக்கிற அவரது மனநிலைமையைக் கண்டு மகிழ்ந்து அவர்க்குப்பலவிருதுகளைக்கொடுத்தான். அவற்றைப் பெற்றுக்கொண்டு அவரிருவரும் தம்மூர்சேர்ந்தனர். முன்பு பகைமூட்டிய மூதாட்டியும் பின்பு அவர்கள்மனைவியர்க்குப் பற்பலநியாயங்களை யெடுத்துக்கூறித் தனது சொற்றிறத்தால் அவர்களது மாற்சரியத்தைத் தீர்த்து அவர்களைப் பழையபடி கூட்டுறவாக்கிவைத்திட்டனள். முன்பு தலைவிரிகோலங்கொண்ட ஒருத்தியால் முடிந்த மகாபாரதத்தைக்குறித்து இப்பொழுது 'மொட்டைச்சியொருத்தியால் முடிந்தது' என்று பலர்பேசலுற்றனர்.

வில்லிபுத்தூரார், புலவர்திலகராய், தம்மோடுமாறுபட்டுத்தோற்ற புலவர்களுடைய காதுகளைக் கொய்வதே தொழிலாகக்கொண்டு கவிதார்க்கிக சார்வபௌமரென்றுஒருசிறப்புப்பெயர்பெற்று, புலவர்களதுசெருக்கையெல்லாம் ஒழித்துவந்தார். அவர்தம்பியாரோ, புலமைத்திறம் வாய்ந்திருந்தும் சாந்தகுணத்தையே மேற்கொண்டிருந்தனர்.

கீழ்க்கூறியவாறு வில்லிபுத்தூரார் பெருமிதங்கொண்டுவாழுநாட்களுள் ஒருநாள், அந்தகனென்னும்பெயருள்ள பெரிய புலவனொருவன், தனது கவித்திறத்துக்குமெச்சிப் பற்பலஅரசர்தந்த பரிசுகளைப் பெற்றவனாய் அவரிடத்தில் வந்துசேர்ந்தான். அவர் அவனைப் பலவாறு பரீக்ஷித்து, அதிலெல்லாம் அவன் தவறாதுதேறிவந்தமை கண்டு, பின்னர், பாடுதற்குஅரியதொரு பெரிய சந்தக்குழிப்பைக் கொடுத்து 'இதற்குஏற்ப நீ ஒருசந்தக்கவி பாடுதி, பார்ப்போம்' என்ன, அங்ஙனமே அந்தஅந்தககவி உடனே ஒருசந்தக்கவி பாட, அதிற்பிழைகண்டு இவர் ஆடம்பரத்தோடு அவனது காதை யறுக்கப் போனகையில், அவன், 'ஐயா! என்பெயர்கொண்டகட்செவியாகிய ஆதிசேஷனுக்குச் செவியுறுப்பில்லை; நீவிர் இதனை ஆராய்ந்து செய்ம்மின்' என்று துணிந்துகூற, அதுகேட்டவில்லிபுத்தூரார் 'இப்பொழுது நாம்இவன்காதையறுப்பின் இவ்வந்தகன் அவ்வந்தகனோடு ஒப்பாய்விடுவனே!' என்பதை உன்னி அவன்செவியை யறுக்கத்துணியாராய், அவன்சொன்ன சமயோசிதமான வார்த்தைக்கு உவப்படைந்து, 'நீசொன்ன இந்தச்சாதுரியமானவார்த்தைக்கு ஒருவெகுமதியாக உனக்குச் செவியைக் கொடுத்தேன், போ' என்று கம்பீரமாகக்கூறி அவனை அனுப்பிவிட்டனர்.

பிறகு வில்லிபுத்தூரார், அருணகிரிநாதரென்னும் புலவரது பெருமையைக் கேள்வியுற்றுப் பொறாமைகொண்டு திருவண்ணாமலைக்குச் சென்று அவருடன் மாறுபட்டு, அவர்பாடுங் கந்தரந்தாதிச்செய்யுள்கட்கு உடனுக்குடனே உரைகூறிவருபவராய் இடையிலேதோற்றுச் செருக்கொழிந்து வாட்படையையிழந்து அருணகிரிநாதரோடுநண்புபூண்டு, அவர்பாடியகந்தர் திருப்புகழுக்கு ஈடாகத் தாமும் இராமகாதைத்திருப்புகழ் பாடிப் பெருமைபெற்றுத் தம்மூர்க்கு மீண்டு அடக்கத்தோடு வாழ்ந்திருந்தனர்.

நற்குண நற்செய்கைகளுடன் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகுபவராய்ச் சிலகாலங்கழித்தபின் வில்லிபுத்தூரார் [illegible] முன்னும், அவர்தம்பியார் [illegible] இருவரும் பரமபதமடைந்தார்கள்.

ஸ்ரீ

# மகாபாரதம்.

பாரதம் என்னுஞ் சொல்லுக்கு - பரதனது வம்சத்தவரைப்பற்றிய நூல் என்று பொருள். இங்குக் குறித்த பரதனென்பவன்-சந்திரவம்சத்தில் துஷ்யந்தமகாராசனுக்குச் சகுந்தலையினிடந்தோன்றிப் பிரசித்திபெற்ற ஓர் அரசன் [இராமன் தம்பியான பரதனும், பரதகண்ட மென்றற்குக் காரணனான ஜடபரதனும், பரதநாட்டியமென்றற்குக்காரணனான பரதனு மல்லன்.] பரதவம்சத்துத்தோன்றியவர், பாரதர்; அவராவார்-பாண்டவரும், துரியோதனாதியரும்: அவர்களது சரித்திரத்தை உணர்த்தும் நூல், பாரத மெனப்பட்டது. இது - வடமொழித் தத்திதாந்தநாமம்; [ஒருவடசொல் சிறிதுமாறித் தன்னோடு இயைபுடையபொருளையாயினும் தன்பொருளையாயினும் உணர்த்துவது, தத்திதாந்தநாமம்.] இனி, வருணாசிரமதருமம், ராஜதருமம், மோக்ஷதருமம், நீதி முதலிய சிறந்த உறுதிப்பொருள்களையெல்லாம் அறிவிப்பதனால் முனிவர்கள் சீர்தூக்கிப்பார்க்குமிடத்து மற்றையெல்லா நூல்களினும் மிக்கபாரம் [அதாவது-மகிமை] உடைமைபற்றி, இந்நூலுக்குப் பாரதமென்னும் பெயர் இடப்பட்டதென்றுங் கொள்ளலாம். முன்னொருகாலத்தில் தேவர்யாவரும் நான்குவேதங்களையும் ஒருதட்டிலும் பாரதத்தை மற்றொருதட்டிலுமாகத் துலாக்கோலில் வைத்து நிறுக்க, வேதமனைத்தையும்வைத்த பக்கத்தினும் இந்நூலை வைத்த பக்கம் வலிதாயிருந்ததென வடநூற்பாரதத்தின் அநுக்ரமணிகை யத்தியாயம் கூறும். (இனி, இந்தச்சொல்லை, பார் அதம் என இரண்டுசொல்லாகப்பிரித்து, அதம் என்பதை ஹதம் என்னும் வடமொழிப்பெயரின் திரிபாகக் கொண்டு, பூமியிலுள்ள பல துஷ்ட அசுரர்களும் கெட்ட அரசர்களும் முதலியோரது நாசத்தைக் கூறுவதொரு நூலென்று பொருள்கூறுவாரு முளர்; அது பொருந்தாது: ஏனெனில்,— பாரதம்என்னும் வடமொழி ஒருமொழியாதலாலும், அதற்கு வடமொழிக்கு ஏற்பப்பொருள்கூறுவது தகுதியே யன்றித் தமிழ்மொழிக்குஏற்பப் பொருள் கூறுதல் தகாமையாலு மெனக் காண்க.)

யாவரும் மேற்கொண்டு பூசிக்கத்தக்க மேம்பாட்டை யுடைத்தாயிருத்தல்பற்றி, இந்த இதிகாசத்துக்கு 'மகா' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. அந்தமேம்பாடாவது - இருக்குமுதலிய நான்குவேதங்களோடு ஒப்ப ஐந்தாம்வேதமென்று சிறப்பித்துக்கூறப்படும் மகிமை; "பாரதம்பஞ்சமோவேத:", "நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்று நிலைநிற்கவே, வாடாததவவாய்மை முனிராசன் மாபாரதஞ் சொன்னநாள்" என்பன காண்க அன்றியும், மிகச்சிறந்ததான ஸ்ரீபகவத்கீதையைத் தன்னுள் பீஷ்மபர்வத்திலும், ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்தை ஆநுசாஸநிகபர்வத்திலும் அடக்கிக்கொண்டிருப்பது, இந்நூலுக்கு, எல்லாநூல்களினுஞ் சிறந்த மேம்பாடாம். மகாபாரதம் என்னும் பண்புத்தொகைநிலைத்தொடர்மொழி - வடமொழிப்புணர்ச்சி யாதலால், வருமொழிமுதல்வலி இயல்பாயிற்று; [நன்-மெய்-௩௧.]

இந்நூலை முதலில் வடமொழியிற் செய்தவர், ஸ்ரீவேதவியாசமகாமுனிவர்; (இவர் - இக்கதாநாயகர்க்குப் பாட்டனாராவர்.) இவரால் வைக்கப்பட்ட 'பாரதம்' என்கிற முதனூலின் பெயரே "முதனூல் கருத்தன் அளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" என்னுஞ் சூத்திரத்து விதிப்படி வழிநூலாகிய இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. பாரதத்துக்கு 'ஜயம்' என்னும் ஒரு சிறப்புப்பெயருண்டு: (நால்வகைப்புருஷார்த்தங்களையும்பெறுதற்குக்காரண

மாகும் நூல் ஜயமெனப் பெயர்பெறு மென்பது, வடமொழிநிகண்டு; எல்லா நூல்களினும் மேம்பட்டு அவற்றைவென்றதென்றும், பதினெட்டுப்பகுப் புள்ளதென்றும் இதற்குப் பொருள்கூறலும் உண்டு )

இதிகாசம் புராணம் என்ற பகுப்பு இரண்டனுள், மகாபாரதம் இதிகாசத்தின்பாற் படும்: இராமாயணமும் அப்படியே. உபதேசபரம்பரையில் வந்த ஒருவருடைய பழையசரித்திரத்தைப் பிரதானமாக எடுத்துப் பல கிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக்கூறும் நூல் - இதிகாச மென்றும், உலகத்தின் தோற்றம், ஒடுக்கம். முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந்தரம் என்னும் ஐந்துவிஷயங்களை விரவிக்கூறும் நூல் - புராண மென்றும் வேறுபாடு உணரத்தக்கது [இதிகாசம் பழைய ஒரு வரலாற்றை விரித்துக்கூறும் நூல். புராணம் - மேற்குறித்த ஐந்து இலக்கணங்களும் அமையப் பழைய பல வரலாறுகளை யுணர்த்தும் நூல்.] புராணம் - பிராம்மம் முதலாகப் பதினெட்டுவகைப்படும் இந்த இதிகாச புராணங்கள், வேதத்தின்கருத்து இன்னதென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றிவிளக்குதல்பற்றி, வேதத்துக்கு உபப்ரும்ஹணங்க ளென்று சொல்லப்படும்; உபப்ரும்ஹண மென்றால், வளர்ப்பதென்று பொருளாம். இவற்றுள் புராணங்களினும் இதிகாசம் பிரபலமான பிரமாண மென்றும், அதுபற்றியே "இதிகாசபுராணம்" என இதனை முன்னர்வைத்துக் கூறுவ தென்றும் கொள்வர்.

இந்நூல், பெருங்காப்பியமாம். (பெருங்காப்பியத்தின் இலக்கணத்தை, இப்புத்தகத்தில் அணியிலக்கணசுருக்கத்தின்பின் தனியே காணலாம்.) இந்நூலிற் பெருங்காப்பியஇலக்கணங்கள்பலவும்வருவதை ஆங்காங்குக் காண்க.

பாரதம் அந்தந்தப்பாகத்தின் விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால் ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோக பருவம், பீஷ்மபருவம், துரோணபருவம், கர்ணபருவம், சல்லியபருவம், ஸௌப்திகபருவம், ஸ்திரீபருவம், சாந்திபருவம், ஆநுசாஸநிகபருவம்,அசுவமேதபருவம், ஆசிரமவாசபருவம், மௌசலபருவம், மகாபிரஸ்தாநபருவம், ஸ்வர்க்காரோகணபருவம் எனப் பெயர்பெற்ற பதினெட்டுப்பருவங்கள் அடங்கியது. அவற்றுள்.

இரண்டாவது

# சபா பருவம்.

ஸபாபர்வம் என்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டது; [நன் - பத- ௨0, ௯௨,] சபையினது சம்பந்தமான பருவ மென்று, ஆறும்வேற்றுமைத் தொகையாகக் கொள்க. விஷயமாகவுடைமை, வேற்றுமைப்பொருளாகிய சம்பந்தம். ஆகவே, சபையின்விஷயமான பருவ மென்பது கருத்து. இனி, இரண்டாம்வேற்றுமையுருபும் பயனு முடன்தொக்க தொகையாக, சபையைப்பற்றிய பருவ மெனினும் அமையும். காண்டவவனத்திலெரிபடாது உய்ந்த மயனென்பவனாற் பாண்டவர்க்காக இந்திரப்பிரத்தநகரத்திலமைக்கப்பட்ட சபாமண்டபத்திலும், அத்திநபுரத்தில் துரியோதனனேவியர் சிற்பிகளைக்கொண்டு இயற்றிய சபாமண்டபத்திலும் நிகழ்ந்த செயல்களைக் கூறும் பாக மென்று பொருள். அவற்றில் முறையே நிகழ்ந்த செயல்கள் - பாண்டவர்களது இராஜசூயயாகமும், சகுனி தருமபுத்திரனுடன் சூதுபொருதலும், ஆனதுபற்றி, இப்பருவம் - இராயசூயச்சருக்கமும், சூதுபோர்ச்சருக்கமு மாக இரண்டு உட்பிரிவை யுடையது. பர்வம்-கணு: கரும்பு மூங்கில் முதலியவற்றிற்கு ஏகதேசமாகிய [ஏகதேசம்-ஒருபகுதி]கணுப் போல நூலுக்கு ஏகதேசமாகிய உறுப்பைப் பருவமென்பது - உவமவாகுபெயர்.

சபாபருவமென்ற தொடரில் வருமொழிமுதல்வலிஇயல்பானது, வடமொழிப்புணர்ச்சியாதலி னென்க; [நன் - மெய் - ௩௬.] "இணைந்தியல்காலை" [நன் - பத - ௨௨] என்ற சூத்திர விதியால், பர்வம் - பருவம் என வகரத்திற்குமுன் உகரம் வந்தது.

## இரண்டாவது
# சூதுபோர்ச் சருக்கம்.

துரியோதனனது தூண்டுதலாற் சகுனியுடன் தருமபுத்திரன் ஆடிய சூதாட்டத்தைக் கூறும் பாக மென்று பொருள். படைகளைக்கொண்டுசெய்யும் போரில் வெற்றிதோல்விகளால் இராச்சியத்தைப் பெறுதலும் இழத்தலும் நிகழ்தல்போல, காய்களைக்கொண்டுசெய்யும் இச்சூதாட்டத்திலும் ஜயாபஜயங்காரணமாகப் பொருள்களைப் பெறுதலும் இழத்தலும் நேர்வதனால், சூதாட்டத்தைப் போராக உருவகப்படுத்தி 'சூதுபோர்' என்றார். சூது போர் - சூதாகிய போர் என இருபெயரொட்டுப்பண்புத்தொகை; "வன்றொடரல்லனமுன் மிகா அல்வழி" என்றபடி, ஒற்றுஇடையேமிகாத நெடிற்றொடர்முன் அல்வழியில் வலி இயல்பாயிற்று. பொருவது - போர் எனக் காரணக்குறி. போர்ச் சருக்கம் - போரைக்கூறுஞ் சருக்க மென இரண்டனுருபும் பொருளுந் தொக்க தொகை; போரினது சம்பந்தமான சருக்கம் என விரித்தால், ஆறும்வேற்றுமைத்தொகையாம்: "ய ர ழ முன்னர்க் கசதப" என்ற சூத்திரத்தின்படி, ரகரத்தின்முன் வேற்றுமையில் வலி மிக்கது. சருக்கம் - ஸர்க்கம் என்ற வடசொல்லின் விகாரம்; முடிபு அல்லது படைப்பு என்ற பொருள்: அது-சங்கேதத்தால், ஒருபெரியவகுப்பினுட்பட்ட சிறியபாகத்தைக் குறிக்கும்.

## கதைத்தொடர்ச்சி.

[பாரதகதை,பிரசித்தமானதாதலால்,இந்தப்பருவத்துக்கு முன்கதைத்தொடர்ச்சி சுருக்கமாகவே எழுதப்படுகிறது.]

சந்திரகுலத்திலே புதன் புரூரவா ஆயு நகுஷன் யயாதி பூரு துஷ்யந்தன் பரதன் ஹஸ்தி குரு முதலிய பலஅரசர்கள் தோன்றியபின் அம்மரபில் உதித்து இப்பரதகண்டத்திலே அஸ்திநபுரியிற் செங்கோல்செலுத்திய சந்தனு வென்னும் அரசனுக்கு முதல்மனைவியாகிய கங்கையின் குமாரன் பீஷ்மனென்பவனும், இரண்டாம்மனைவியாகிய யோஜநகந்தியின் மகன் விசித்திரவீரிய னென்பவனும் இருந்தார்கள். (முன்பு சத்தியவதியென்னும் பெயரோடு இருந்து பராசரமுனிவனுடன் சேர்ந்து வியாசமுனிவனைப் பெற்றுப் பின்பு அப்பராசரனருளாற் கன்னிப்பருவமடைந்த கந்தவதியென்னும் மறுபெயரையுடைய இந்த யோஜநகந்தியினிடம் சந்தனுவுக்குப் பிறந்த முதற்குமாரனான சித்திராங்கதன், அப்பெயருள்ள ஒருகந்தருவனாற் கொல்லப்பட்டு இளமையில் இறந்தான்.) முன்னைய விரதத்தின்படி வீடுமன் விசித்திரவீரியனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வித்தான். விசித்திரவீரியன் மகப்பெறாது இறந்ததன்பின் அவனுடையபத்தினிகளுள் அம்பிகையினிடத்துத் திருதராஷ்டிரனும்,அம்பாலிகையினிடத்துப் பாண்டுவும்,சந்ததிவிருத்தியின்பொருட்டுத் தாய்சொற்கடவாத வியாசபகவானது திருவருளாற் பிறந்தனர். அம்பிகையாலேவியனுப்பப்பட்ட தாதிப்பெண்ணினிடத்து வியாசனருளாற் பிறந்த விதுரனென்னுங் குமாரனும் இருந்தான்.

திருதராட்டிரன் பிறவிக்குருடனாதலால்,பாண்டு, திருதராட்டிரனுக்கு முடிசூட்டி,விதுரனை மந்திரியாகவைத்துக்கொண்டு,தானே இராஜாங்ககாரியம் பார்த்துவந்தான். பாண்டுவுக்கு மனைவியுடன் சேரக்கூடாதென்ற சாபம்நேரிட்டதனால்,அவனனுமதிப்படி,அவனது மூத்தமனைவியாகிய குந்தி, தனக்குஇளமையில் துருவாசமுனிவனுபதேசித்திருந்த மந்திரத்தின் மகிமை

[illegible] யமதருமராசனுல் யுதிஷ்டிரனையும், வாயுதேவனுல் பீமசேனனை யும், தேவேந்திரனுல் அருச்சுனனையும் பெற்ருள். (முன்பு கன்னிப்பருவத் தச் சூரியனுற் குந்தியினிடம்பிறந்தவன், கர்ணன்.) குந்தியின்சக்களத்தியான மாத்திரி, அவளால் அம்மந்திரம் உபதேசிக்கப்பெற்று, அசுவினீதேவர்களால், நகுலன் சகதேவன் என்னும் இரட்டைப்பிள்ளைகளைப் பெற்ருள். திருத ராட்டிரனுக்குத் துரியோதனன் துசசாசனன் முதலிய நூறுபிள்ளைகளும், துச்சளை யென்னும் ஒருபெண்ணும் காந்தாரியினிடம் பிறந்தார்கள். (பஞ்ச பாண்டவர்களுள், தருமபுத்திரன் துரியோதனுதியர் நூற்றுவரினும் மூததவ னென்றும், வீமன் முதலிய மற்றைநால்வரும் துரியோதனனுக்கு இளையவ ரென்றும் அறிக.) பாண்டு சிலகாலததுக்குப்பின் இறந்துபோனுன். அப்பொ ழுது மாதரிரி சககமனஞ்செய்தாள்; (ஸஹகமநம் - உடன்கட்டையேறுதல்.)

பின்பு பாண்டவரும் துரியோதனுதியரும் கூடி அத்தினுபுரியில் விளையாடுகையில், வீமன் துரியோதனுதியரினும் மிகமேம்பட்டுத் தோன் றினுன். அதனுல், அவனிடம் அவர்கள் மிக்கபொருமைகொண்டார்கள். அதனுலாகிய அசசத்தால், துரியோதனன் கர்ணனைத் தனக்குததுணையா கக் கொண்டான். பிறகு வீடுமன் இந்தநூற்றைவாக்கும் கிருபாசாரிய னைக்கொண்டும், துரோணுசாரியனைக்கொண்டும் படைக்கலவித்தைபயிற்று விக்க, அதில் துரியோதனுதியரினும் பாண்டவர் மிகத் தேர்ச்சியடைந் தனர். அப்பால் வீடுமன், திருதராட்டிரனேடும் விதுரனேடும் ஆலோசித் து, சகலகுணசம்பந்நனுன தருமபுத்திரனுக்கு இளவரசுமுடிசூட்டினுன். அதுகண்டு அழுக்காறுமிக்க துரியோதனனது கருததுக்கு இணங்கிய திருத ராட்டிரன் புரோசனனென்னுந் துர்மந்திரியுடன் சதியாலோசனை செய்து பாண்டவர்களை வாரணுவதநகரததுக்குச செலுததி அஙகு அரக்குமாளிகை யில் வசிக்கச்செய்து இரவில்தீவைததுஎரிததுவிடுவதென்று செய்த தந்திரத் தைப் பாண்டவர்கள் சிறியதந்தையாகிய விதுர னேவிய சிற்பியால் அறிந்து தப்பிப் பிராமணவேடம்பூண்டு திரிந்து, திரௌபதியின் சுயம்வரததுக்குச் சென்று, அங்குக்கட்டியிருந்த யந்திரததை அறுதது அருச்சுனன் திரௌ பதியைக் கொண்டுவர, தாயார்சொற்படி அந்தஒருததியை ஐவரும் மணஞ் செய்துகொண்டு திருதராஷ்டிரனுல அழைககப்பட்டு அஸ்திநபுரத்துக்கு வந்தார்கள். திருதராட்டிரன் மந்திரிகள்முதலானுரோடு ஆலோசித்துத் தருமபுத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்விததபின்பு, அப்பெரியதந்தை யின் கட்டளைப்படி பாண்டவர் காண்டவப்பிரததமென்னுங கடுங்காட்டிற் சேர்ந்து, அஙகுக் கண்ணபிரானது கருததின்படி தெய்வத்தச்சனுன விசுவ கருமன் நிருமித்த இந்திரப்பிரததமென்னும் நகரததில் இருந்து அரசாள, துரியோதனுதியர் அஸ்திநபுரியில் இருந்து அரசாள்வாராயினர்.

பிறகு தருமபுத்திரன் தனது தம்பிமார்நால்வரைக்கொண்டு திக்கு விஜயஞ்செய்து ராஜசூயயாகம்முடித்து வெகுமகிமையுடன் விளங்கினுன்.

இனி, சூதுபோர்ச்சருக்கத்தின் சுருக்கம்:—அதுகண்டு பொருமை கொண்டு துரியோதனன் யுதிட்டிரனைத் தந்திரமாகத் தன்னிடம் அழைப் பித்துத் தன்மாமனுன சகுனியைக்கொண்டு அவனுடன் சூதாடுவித்து அவனது செல்வம்முழுவதையும் பறித்துக்கொண்டு, அவனையும் அவனது தம்பிமாரையும் அவர்களது மனைவியான பாஞ்சாலியையும் அடிமையாக்கி, அவளைத் தீண்டக்கூடாத காலத்தில் துச்சாதனனைக்கொண்டு சபையிற் [illegible]ராமாகக் கொணர்ந்து துகிலுரியச்செய்தான். அப்பொழுது, ஸ்ரீகிரு [illegible]க்கிரகத்தால் அவள் மேன்மேல் ஆடைவளரப்பெற்று மானங்காத் [illegible]ண்டாள். பின்பு அவளது கற்பின்பெருமைக்கு அஞ்சித் திருதராட் [illegible] அடிமைத்தன்மையினின்று [illegible] செல்வத்தையும் [illegible] [illegible] துரியோதனுதியர் [illegible] [illegible]

ர்துகொண்டு, மறுசூதாடி அடிமைநீங்கிய அவர்களைப் பன்னிரண்டுவருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஜ்ஞாதவாசமும் [அஜ்ஞாதவாசமாவது - ஒருவரும் தம்மை இன்னாரென்று அறியவொண்ணாதபடி நாட்டில் மறைந்து வசித்தல்] செய்துவந்தால் அரசுபெறுமாறு நியமஞ்செய்து அனுப்பினார்கள் என்பது.

[கடவுள்வணக்கம்: விஷ்ணுஸ்துதி.]

இது - காப்புச்செய்யுள்; இதனால், தாம் எடுத்துக்கொண்ட சருக்கம் இடையூறில்லாமல் இனிதுமுடிதற்பொருட்டு உயர்ந்தோர் வழக்கத்தின்படியே கவி கடவுள்வாழ்த்துக் கூறுகிறார். கடவுள்வணக்கம், இரண்டுவகைப்படும்; வழிபடுகடவுள்வணக்க மெனவும், ஏற்புடைக்கடவுள்வணக்க மெனவும். வழிபடுகடவுள்வணக்கமாவது - தாம்தாம் குலதெய்வமாகக்கொண்டு ஆராதிக்கிற கடவுளை வணங்குதல். ஏற்புடைக்கடவுள்வணக்கமாவது-தாம் தாம் செய்யஎடுத்துக்கொண்ட காரியத்துக்குத் தகுதியை யுடைய கடவுளை வணங்குதல். ஆகவே, ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தவரான இந்நூலாசிரியர் திருமாலைக்குறித்துக் கூறிய இவ்வாழ்த்து - வழிபடுகடவுள்வணக்கமாம். மற்றும், இதனை ஏற்புடைக்கடவுள்வணக்கமாகவுங் கொள்ள இடமுண்டு. எங்ஙனமெனின்,—கண்ணபிரான் இந்நூலுக்குஏற்புடைக்கடவுளென்பது, இந்நூலாசிரியர் தற்சிறப்புப்பாயிரத்தில் "முன்னுமாமறைமுனிவருந் தேவரும் பிறரும், பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன், மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கு, மென்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்" என்றதனாற் பெறப்படும். இச்செய்யுள் ஸ்ரீவராகமூர்த்தியைப்பற்றிய தாயினும், இருவரும் ஸ்ரீமகாவிஷ்ணுவின் திருவவதாரமே யாதலால், ஏற்புடைக்கடவுள்வாழ்த்தென்னத் தட்டில்லை.

க.—(இதன்பொருள்.) ஞானம் ஆகிய பரம்பரம் அமிழ்தம் ஆய் - ஜ்ஞானமென்றுசொல்லப்படுகிற மிகச்சிறந்தஅமிருதத்தின் சொரூபியாகியும், நவிர் அறு மயக்கு ஆகி - குற்றமற்றஅஜ்ஞானமாகியும், வானம்ஆய்-ஆகாயத்தின் வடிவமாகியும், உடன் வாயு ஆய் - அவ்வாறுவானமாயிருப்பதோடு வாயுவின் வடிவமாகியும், தேயு ஆய் - அக்கினியின் வடிவமாகியும், வனமும் ஆய்-ஜலத்தின்வடிவமாகியும், மண் ஆகி - பிருதிவியின் வடிவமாகியும், தானம் ஆம் மறை முறைமையின் பல் பல சரஅசரங்களும் ஆகி - (கடவுளான தனக்கு) இருப்பிடமாகவுள்ள வேதங்களிற் கூறிய முறைமைப்படியே பலவகைப்பட்ட ஜங்கமம் தாவரம் என்றஇவற்றின்வடிவமாகியும் நின்று,—ஏனம் ஆய்- மகாவராகாவதாரஞ்செய்து, இவை அனைத்தையும் - கீழ்க்கூறிய இந்தஎல்லாப்பொருள்களையும், மருப்பினால் - (தனது) கோரதந்தத்தினால், எந்தினன் - (பிரளயவெள்ளத்திலிருந்து) குத்தியெடுத்தவனாகிய திருமால், எனை ஆண்டோன் - என்னைஅடிமைகொண்டவனாவன்; (என்றவாறு.)

ஸர்வஜ்ஞனாயும் ஸர்வவியாபியும் ஸர்வரக்ஷகனுமாய் என்னைஆட்கொண்ட திருமாலே நான்வணங்குந்தெய்வமென்பது கருத்து. வாழ்த்து, தெய்வவணக்கம் தலைமைப்பொருளுரைத்தல் என்னும் மங்கலங்கள் மூன்றனுள் இது தெய்வவணக்கத்தின்பாற்படு மென அறிக. மிகவும் இனியதாயிருத்தலால், ஞானத்தை அமிருதமாகக் கூறினார். பரம்பரம் - உயர்ந்தவற்றினும் உயர்ந்தது; மிகவும்உயர்ந்த தென்றபடி. மயக்கு = மாயை; அஜ்ஞானம்: பசையற்ற சம்சாரத்திற் பசையுள்ளதெனக் கருதக் [illegible]போல்வன. இம்மாயை போக்குதற்குஅரியதாயினும் கடவுளையே சரணமாக அடைந்தாரைத் தானே விட்டுநீங்குமென்னுங் கட்டுக்கு அடங்கிநிற்றலால், அது 'நவிரறு மயக்கு' என விசேஷித்துச்சொல்லப்பட்டது. [illegible] மாயை கடத்தற்குஅரியது; யார் என்னையே சரணமாகப் பற்றினார்களோ, அவர்களே இம்மாயையைக் கடப்பார்" என்று கீதையிற் கண்ணபிரானுங் கூறி[illegible]

யது; இங்குக் கருதத்தக்கது.) கடவுளை ஒன்றற்கொன்றுமாறான ஞானஅஜ்ஞானங்களின் வடிவமாயிருக்கின்றனனெனக் கூறியது, இவற்றிற்கு அக்கடவுளை நியாமகனாயிருத்தலாலென்க. பிறந்தபோது ஜாயமானகடாக்ஷம்பெற்ற ஸாத்விகப்ரக்ருதிகட்கு ஞானத்தையும், தாமஸப்ரக்ருதிகட்கு அஜ்ஞானத்தையும் திருமால் தந்தருள்வனென அறிக. உற்பத்திக்கிரமத்திலே ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து நிலமும் பிறந்ததென வேதமோதுதலால், அக்காரணகாரியமுறைப்படியே 'வானமாயுடன்வாயுவாய்த் தேயுவாய் வனமுமாய் மண்ணாகி' என அடுக்கினர். இடையிரண்டடி, எம்பெருமான் எல்லாப்பொருள்களின் சொரூபமானவனென்பதை விளக்கும்; "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத," 'நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச், சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாய் அயனானாய்" என்றார் ஆழ்வாரும். வேதங்களில் பகவானது சொரூபம வருணிக்கப்படுதல்பற்றி, அது அவனுக்கு இருப்பிடமெனக் கொள்ளப்படுமாதலால், 'தானமாமறை' என்றார். தானம்=ஸ்தாநம். இனி, தானம் ஆம் மறை - கொடுத்தலைச்சிறப்பித்துக்கூறுகிற வேதம்எனக் கூறுவாருமுளர். வராகாவதாரகதையை, அழகரந்தாதியுரையின் ௨௬ - ஆம் பக்கத்திற் காண்க. திருமால் ஏனமாய் மருப்பில்ஏந்தியதனால், சராசரங்களுக்கு ஆபத்துக்காலத்துஉதவுந்தன்மையனாதல் வெளியாம். மா மறை என்றும் பிரிக்கலாம்.

இனி, மாயையென்றும் அவ்யக்தமென்றும் மறுபெயர்களையுடைய பிரகிருதியென்னுந் தத்துவமும் பகவானது சொரூபமேயென்பதுபற்றி, 'நவிராறுமயக்காகி'என்றதாகவுங்கொள்ளலாம். நவிர் = நவை. 'நவிலறுமயக்காகி' என்ற பாடத்துக்கு - சொல்லுதற்குஅரியதான மாயையின் சொரூபியாய் என்று பொருளாம். 'ஞானமாகியபரம்பரவமிழ்தமாய்' என்பதற்கு - குருசிஷ்யபரம்பரைக்கிரமத்திலே பெறப்பட்டுவருகிற தத்துவஞானாமிருதமாய் என்று உரைத்தலுந் தகும்.

ஜ்ஞாநம், பரம்பரம், அம்ருதம், வாயு, தேஜஸ், வநம், ஸ்தாநம், சராசரம் - வடசொற்கள். அம்ருதம் - சாவாமருந்து. சர + அசரம் = சராசரம்: தீர்க்கசந்திபெற்ற வடசொற்றொடர்; சரம் - இயங்குதிணைப்பொருள், ஜங்கமம்: அசரம் - நிலைத்திணைப்பொருள், ஸ்தாவரம். மயக்கு-முதனிலைதிரிந்த தொழிற்பெயர். எனை - என்னை; தொகுத்தல்.

இக்கவி - முதற்சீர் மாச்சீரும், ஈற்றுச்சீர் மாங்காய்ச்சீரும், மற்றைய நாற்சீர்களும் விளச்சீர்களுமாய் வந்த கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தம். (௧)

[கவிக்கூற்று.]

௨.—(இ - ள்.) தாமரை அனைய - செந்தாமரைமலர்போன்ற, செம்கண் - சிவந்தகண்களையுடைய, தரணிபன் - யுதிஷ்டிரமகாராஜன் (செய்த), இராயசூயம் மா மகம் - ராஜசூயமென்றுபெயர்கொண்ட பெரியயாகத்தை, முற்றி - நிறைவேற்றி, தங்கள் மா நகர் புகுந்த பின்னர் - (துரியோதனன் முதலியோர்) தம்தமது பெரியநகரத்தைச் சேர்ந்தபின்பு,—நா மரு (கவிகளின்) நாக்கிற் பொருந்திய, பனுவல் மாலை - பிரபந்தங்களாகிய மாலையைச் சூடியவனும், நாகம் ஏறு உயர்த்த - பெரிய பாம்புக்கொடியை உயரவெடுத்துள்ளவனும், செல்வம் கோ மகன் - செல்வத்திற்குஉரிய திருதராஷ்டிரமகாராஜனது புதல்வனுமாகிய துரியோதனன், இளைஞரோடும் [illegible] - (தன்னுடைய) தம்பிமார்களோடு ஆலோசித்து நடத்திய [illegible], கூறல்உற்றாம் - சொல்லத்தொடங்கினோம்; (எ - று.)

[illegible], கவி தாம் இச்சருக்கத்திற் சொல்லப்போகிற விஷயத்தை இங்ஙனம் [illegible] தொகுத்துரைத்தார்; இது - தோற்றுவாய்ச்சுட்டல் என்றும்

உத்தி. கண்கள்சிவந்திருத்தல், உத்தமபுருஷலக்ஷணம். செவ்வரிபரந்திருத்தலால், கண்களுக்குச் செந்தாமரைமலர் உவமை. தரணிபன்-பூமியைக் காப்பவன்; வடசொல். ராஜஸூயம் என்ற வடசொல், இராயசூயம்என விகாரப்பட்டது; [நன் - பத - உ0, உக.] ராஜசூயமென்ற யாகப்பெயரின் காரணம்:—அரசனால் சோமலதையைப்பிழிந்து செய்யப்படுவதென்றும், ராஜா என்னும்பெயருள்ள சோமலதை நொருக்கப்படுகிறதென்றும் வடநூல்களிற் காண்க. இது - எல்லா அரசர்களையும் வென்று அவர்களிடங்கொண்ட பொருளைச் செலவிட்டுச் செய்வதொரு பெருவேள்வி; யுதிஷ்டிரராஜன் தனதுதந்தையாகிய பாண்டுமகாராஜா பித்ருலோகத்திலிருந்து நாரதமகாரிஷிமூலமாகச் சொல்லியனுப்பியபடி இப்பெருவேள்வியைச் செய்துமுடித்தனனென அறிக. 'தங்கள்மாநகர்புகுந்தபின்னர்' என்றது, கவி தாம் கூறப்போகிற வரலாற்றின் தொடக்கத்திற்கு எல்லைகூறியவாறு; அநுவாதமன்று. துரியோதனனிடத்துச் சம்மானம் பெறுதற்காகக் கவிகள் பலவகைத்தோத்திரப்பிரபந்தங்களை அவன்மீதுபாடுவரென்க; அவ்வாறுபாடப்பட்ட செய்யுட்கோவைகள் அன்போடு சூட்டப்படுகிற மாலைபோலிருத்தலால், 'பனுவன்மாலை' எனப்பட்டன. ஏறு - ஆண்மைப்பெயர்; சிறந்ததையும் பெரியதையும் ஏறென்றல், மரபு. ஏறுகிய நாகம் எனக் கூட்டுக. உயர்த்த மகன் என இயையும். திருதராஷ்டிரன் மூத்தவனாதலால் அரசிற்குஉரியவனென்ற காரணம்பற்றி, 'செல்வக்கோ' எனப்பட்டான்; இனி, செல்வம்என்பதை மகனுக்கு அடைமொழியாக்கி,செல்வச்சிறப்புள்ள ராஜகுமாரன் எனினுமாம். "வரம்பிலாநிதிகள்யாவும், கானலங்கடல்சூழ்வையங்காவலன்காவலென்றான்" என்று கீழ் இராயசூயச்சருக்கத்துக்கூறியவாறு தருமபுத்திரனதுகட்டளைப்படி ராஜசூயயாகத்தில் தநாத்யக்ஷனாயிருந்ததனாலும், துரியோதனனை 'செல்வக்கோமகன்'எனத்தகும்; அச்சமயத்தில் தருமனது செல்வப்பெருக்கு முழுவதையும் நன்றாகக்கண்டு பொறாமைகொண்டவனென்க. அன்றியும், துரியோதனன் ராஜராஜனும் கையில் தநரேகையுடையவனுமாதல் காண்க.

தாமரை யனைய செங் கண் தரணிபன் - செந்தாமரைக்கண்ணனும் [புண்டரீகாக்ஷனும்] (கொடியவர்பலர்ஒருங்குநிறைந்ததனாலாகிய பூமிபாரத்தைத் தீர்த்துப்) பூமிதேவியைக்காப்பாற்றுவதற்காகத் திருவவதாரஞ்செய்தவனுமான கண்ணபிரான், இராயசூயமாமகம் முற்றி - (தருமபுத்திரனது) சிறந்த ராஜசூயயாகத்தை நிறைவேற்றி,தங்கள் மா நகர் புகுந்தபின்னர் - தங்கட்குஉரிய சிறந்தநகரமாகிய துவாரகாபுரிக்குச் சென்றபின்பு, துரியோதனன் தனதுதம்பிமாரோடும் ஆலோசித்துச்செய்த காரியத்தை இனிச் சொல்லத்தொடங்கினோம் என்றும் இச்செய்யுளுக்குப் பொருளுரைக்கலாம். கண்ணன் பாண்டவர்க்குஉதவியாக அவர்களுடையஇந்திரப்பிரத்தநகரத்தி லில்லாதசமயம் பார்த்துத் துரியோதனாதியர் சூழ்ச்சிசெய்யலாயினரென்பது போதரும். மேல் ௧எ, ௧அ, ௧௯ - ஆஞ் செய்யுள்களையுங் காண்க. முன்னிரண்டடி - கீழ் இராயசூயச்சருக்கத்து ௧௫௧ - ஆஞ்செய்யுளில் "கருமுகிலனையமேனியங்கருணைக்கண்ணனும் கிளையுடன் துவரைத், திருநகரடைந்தான் சென்றுவன்றிறல்கூர்சேதிபப்பெரும்பகைசெகுத்தே" என்றதன் அநுவாதமாம். தருமபுத்திரனது ராஜசூயயாகம் இனிதுநிறைவேறுதற்குக் கண்ணன் பலபடியாலும் உதவியமை பிரசித்தம்.

தாமரஸம்,மஹா,மகம்,நகரம்அல்லது நகரீ,மாலா என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. நாகம் என்ற வடசொல்-நகத்தில் [மரத்தில் அல்லது மலையில்] வாழ்வது என்ற பொருள்பெறும். யாகத்திற்குவந்த துரியோதனன்முதலியோர், தருமபுத்திரனது விருப்பத்தின்படி அவ்யாகத்திற்குவேண்டிய பல தொழில்களைப் புரிந்தார்களாதலால், '[illegible]' எனப் [illegible]

சொல்லப்பட்டது; தன்வினையாகக் கொண்டால், யாகமானது நிறைவேற எனப்பொருள்படுமாறு 'முற்றி' என்பதை எச்சத்திரிபாகக் கொள்ளவேண்டும். நாகவேறுஎன்பது-இங்கே, அதன்வடிவத்தை யெழுதிய துவசத்துக்குத் தானியாகுபெயர். தனதுகொடுமைக்கு அடையாளமாகத் துரியோதனன் பாம்பைத் தனதுகொடியிற் கொண்டனன்; அது-அவனது நன்றியறிவின்மைக்கும், எப்பொழுதும் வக்கிரகதியிற் செல்லுந்தன்மைக்கும், நாவிரண்டுடைமைக்கும் அறிகுறியாகின்றது. இளைஞர்,ஞ்-பெயரிடைநிலை. குறித்தது-பெயர்; இங்கு,இச்சொல்-குறித்துச்செய்த செயலுக்கு இலக்கணை. கூறலுற்றும்-கவிகளுக்குஉரிய இயற்கைததனித்தன்மைப்பன்மை. உற்றும்-உறுஎன்னும்பகுதியினடியாப்பிறந்த இறந்தகாலத் தன்மைப்பன்மை வினைமுற்று; பகுதிஒற்றிரட்டிக் காலங் காட்டிற்று.

இதுமுதல் ஐம்பத்தொருகவிகள் - பெரும்பாலும் ஒன்று நான்காஞ்சீர்கள் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடிநான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். இவற்றில் மூன்றுஆறுஞ்சீர்கள் தேமாச்சீர்களாகவே நிற்கும். (உ)

[துரியோதனன் தம்பியரோடும் மற்றுமுள்ளாரோடும் தனது அத்தினபுரியிற் சேர்தல்.]

ந.—(இ-ள்.) இணை வரும் அரசர் இல்லா-(தனக்கு)ஒப்பாகஅமைகிற அரசரொருவரையும் பெறாத[எல்லாஅரசர்களைக்காட்டிலும் உயர்ந்த],இகல் அரி ஏறு போல்வான் - வலிமையுள்ள ஆண்சிங்கத்தை யொத்தவனாகிய துரியோதனன்,— கணை வரும் - அம்புகள் (தம்மிடத்தினின்றும்) வெளிவரப்பெற்ற, வரி வில் - கட்டமைந்த விற்களினாற் செய்யும் போர்த்தொழிலாகிய, வாழ்க்கை - வாழ்க்கையையும், கடுங் கனல் அனைய தோற்றம் - கொடிய நெருப்புப் போன்ற [உக்கிரமான]தோற்றத்தையுமுடைய, துணை வரும் - (தனது) தம்பிமார்களும், தானும் - தானுமாக,— கங்காசுதனும் - கங்கையின் புத்திரனான வீடுமனும், மற்று எவரும் - மற்றுமுள்ள(கர்ணன் முதலிய)வர்களும், சூழ - (தன்னைச்) சூழ்ந்துவர,—கிணை வரும் ஓதை - மருதப்பறையினின்று எழுகின்ற ஓசையையுடைய,முது ஊர் - பழமையான அத்தினபுரியினது, கிளர் நெடு புரிசை - விளங்குகிற நீண்ட மதிலின்உட்பக்கத்தில், புக்கான் - சென்றுசேர்ந்தான்; (எ - று.)

இச்செய்யுள் - "அராவவெங்கொடியோனுதியாவுள்ள வரசருந் தந்நகரடைந்தார்" என்று கீழ்ச்சருக்கத்தில்வந்துள்ளதன் அநுவாதம்; தொடர்ச்சிதோன்றக் கூறியது:கூறியதுகூறலன்று. அரியேறுபோல்வான்,துணை வரும், தானுமாக, சூழப் புக்கான் என இயையும். வாழ்க்கை - மகிழ்ச்சியாகச் செய்யுந்தொழில். தோற்றம்-உருவததின்காட்சி. எப்பொழுதும்மாறாத சினத்தை யுடையரா யிருத்தலால், துரியோதனனது துணைவர்க்கு 'கடுங்கனலனையதோற்றம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. அரியேறு போல்வான் - தன்னையெதிர்த்த அரசர்களாகிய யானைகளை அழிக்கவல்ல சிங்கம்போன்றவனென்க. தனது திறத்தினால் மிருகராஜனாகிய சிங்கம் போலத் தனது திறத்தினால் ராஜராஜனாயுள்ளவனென்றவாறுமாம். கிணை-மருதநிலப்பறை. 'புரிசை'என்றமதிலின்பெயர்,இங்கு அரண்மனைக்கு இலக்கணையென்னலாம்.

கனல்-கனல்வது என நெருப்பிற்குக் காரணக்குறி. அனைய-குறிப்புப் பெயரெச்சம்; அன்-இடைச்சொற்பகுதி. துணைவர், வ்-பெயரிடைநிலை. எவரும், உம்மை-முற்று. மற்றை உம்மைகள் - எண்ணும்பொருளன. துணை வரும் தானும் புக்கான் - சிறப்பினால் ஒருமைமுடிபைக் கொண்ட பால்வழுவமைதி. [நன் - பொது - உஎ.] கங்காஸுதன் - வடசொற்றொடர்.

வீடுமனை 'கங்காசுதன்' என்றதன் விவரம்:—முன்னொருகாலத்தில் தேவர்கள் யாவருங் கூடிய பிரமதேவனது சபையிற் சென்று கங்காநதியின் பெண்தெய்வம் வணங்கியபொழுது, அங்குவந்திருந்த வருணன், அவளழகை உற்றுநோக்கிக் காதல்கொண்டான்; கங்கையும், அவன்மீது காதல்கொண்டு எதிர்நோக்கினள்; அதனையறிந்த நான்முகக்கடவுள், வருணனைப் பூமியில் மானுடப்பிறப் பெடுக்கவும், கங்கையை மானுடமகளாய் அவனைச் சிலநாள் மணந்திருக்கவும் சபித்திட்டான்; அங்ஙனமே வருணன் குருகுலத்திற் சந்தனுவாய்ப் பிறந்தான்; கங்கையும் ஓர்மனிதமகளாகி 'யான் எங்தெந்தத் தீச்செயல் செய்யினும் மறுக்க லாகாது' என்னுங் கோட்பாட்டினோடு அவனை மணஞ்செய்துகொண்டாள். இது நிற்க: பிரபாசனென்னும் வசு, தன்மனைவியின்சொல்லைக் கேட்டு, வசிட்டனிடமுள்ள காமதேனுவைக் கொள்ளைகொள்ள எண்ணினன்; மற்றையேழுவசுக்களும் அவனுக்கு உதவி செய்யவே, எண்மரும் இரவிற்சென்று பசுவைக் கவர்ந்தனர்; அதனையறிந்த வசிஷ்டமகாமுனிவன், அஷ்டவசுக்களையும் மானுடசன்ம மெடுக்கவும், அவர்களுள் மனைவிசொற்கேட்ட பிரதானனான பிரபாசனைப் பூமியிற் பல நாள்வாழ்ந்து பெண்ணின்பமற்றிருக்கவும் சாபங்கொடுத்தான்: எட்டுவசுக்களும் சந்தனுவுக்குக் கங்கையின்வயிற்றிற் பிறந்தனர். முதலிற்பிறந்த ஏழு குழந்தைகளையும் பிறந்தஅப்பொழுதே தாய் கங்காநதியில் எடுத்தெறிந்து விட்டாள். எட்டாவதுபிள்ளை பிறந்தவுடனே தந்தை 'இக்குழந்தையைக் கொல்லலாகாது' என்று மறுக்க, கங்கை கணவனை விட்டு நீங்கினள். அவ் வெட்டாவதுமகனே இவ்வீடுமன். (ரு)

[மறுநாள் துரியோதனனது சபையில் யாவரும் வந்துசேர்தல்.]

இ-ள்.—(இ - ள்.) எவரும் - (துரியோதனனுடன்வந்த) அரசர்களெல்லாரும்,—சென்றஉழி - (அவ்வத்தினபுரியைப்) போய்ச் சேர்ந்தபின்பு, தம் தம் செழு மனை எய்தி - தங்கள்தங்களுடைய வளமுள்ள வீடுகளை யடைந்து,—வாசம் துன்றிய - வாசனைமிக்குள்ள, அமளி - மலர்ப்படுக்கையில், கங்குல் - இரவிலே, துயில் புரிந்து - தூங்குவதைச் செய்து, எழுந்த பின்னை - கண்விழித்து எழுந்தபிறகு,—நின்ற வெம் பரிதி தோற்றம் தொழுது- (கீழ்த்திசையிற்) பொருந்திய வெப்பமுள்ள சூரியனுடைய உதயத்தை [உதயஞ்செய்த சூரியனை] வணங்கி, தம் நியமம் முற்றி - தாங்கள் (காலையிற்) செய்யவேண்டிய கடமைகளையெல்லாஞ் செய்துமுடித்து,—வல் திறல் அரசன் கோயில் - மிக்கவலிமையுள்ள துரியோதனராஜனது அரண்மனையிலுள்ள, மன் அவை - ராஜசபையை, வந்து சேர்ந்தார் - வந்து அடைந்தார்கள்; (எ - று.)

ராஜசூயயாகம் முடிந்ததும் இந்திரப்பிரத்தத்திலிருந்து துரியோதனனோடுவந்த அரசர்களெல்லாரும், அத்தினபுரியையடைந்து தம்தம்மாளிகையிற்சென்று இரவில்துயின்று,மறுநாட்காலையில் துயிலுணர்ந்து காலைக்கடன்முடித்து மீண்டு ராஜசபையைச்சேர்ந்தன ரென்றவாறு. எவரும் எய்தித் துயில்புரிந்து எழுந்தபின்னை தொழுது முற்றி வந்துசேர்ந்தார்என இயையும். சூரியோதயகாலத்தில்தவறாமற்செய்யவேண்டியசந்தியாவந்தனம், உபஸ்தானம்,சூரியநமஸ்காரம்முதலிய வைதிகநித்தியகர்மானுஷ்டானங்களை அவ்வரசர்கள் செய்துமுடித்தமை, மூன்றாமடியினால் விளக்கப்பட்டது.

சென்றுழி-பெயரெச்சத்தின் அகரவீறு தொகுத்தல். துன்றிய,துன்று- பகுதி. பின்னை, ஐ-சாரியை. தோற்றம், தோன்று-முதனிலை. நியமம்-தற்சம வடசொல். வன்றிறல்-ஒருபொருட்பன்மொழி; மிக்கதிற மென்க:"ஒருபொருட்பன்மொழி சிறப்பினின் வழா" என்பது; நன்னூல். கோ+இல்=கோவில் என வரற்பாலது கோயிலென வந்தது, இலக்கணப்போலி; கோயில்- அரண்மனை: ராஜகிருகம். மன்-பெருமை; அதனையுடையவனுக்கு,பண்பாகு

பெயர். அவை - ஸபா என்ற வடசொல்லின் விகாரம். தத்தம் - தாம்தாம் என்பதன் விகாரமாகிய தத்தம் என்பதன் வலித்தல். (௪)

[துரியோதனன் மன்னவர்கட்கு ஆசனமளித்துக் கவலையுடன்இருக்க, கர்ணன் ஒன்றுசொல்லத்தொடங்குதல்.]

(இ - ள்.) எதிர்ந்த வேந்தர் - (தன்னை) எதிர்த்த அரசர்களது, உறம் - மார்பில், செறி - நிறைந்துள்ள, குருதி - இரத்தம் தோயப்பெற்ற, வேலான் - வேலாயுதத்தையுடையவனான துரியோதனன்,—இறைஞ்சியவேந்தர்க்கு எல்லாம் - (அவ்விராஜசபையில் அப்பொழுது வந்து தன்னை)வணங்கிய அரசர்களெல்லார்க்கும், இருப்பு அளித்து - இருக்குமாறு ஆசனங்கொடுத்து, நினைவினோடு இருந்த போதில் - மனதிற் சிந்தையோடு இருந்த சமயத்தில்,—அறம் செறி தானம் - தருமமார்க்கம் நிரம்பிய தானத்தையும், வண்மை - தியாகத்தையும், நாளும் - தினந்தோறும், அளவு இலாது அளித்து - எல்லையில்லாமற் கொடுத்து, புறம் சுவர் கோலம் செய்வான் - சுவரினது வெளிப்புறத்தை அலங்காரஞ்செய்பவனாகிய கர்ணன், பூபதிக்கு - அத்துரியோதனமகாராஜனுக்கு, உரைக்கல் உற்றான் - (ஒன்று) சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதனை, அடுத்தகவியிற் காண்க.

'உறஞ்செறி' என்பதை வேலுக்கு அடைமொழியாக்கி, மார்பிற்புகுகின்ற வேலையுடையவனெனக் கூறலுமாம். இனி, முன்னிரண்டடியை யாற்றுநீர்ப்பொருள்கோளாகக்கொண்டு, தன்னைவணங்கிய அரசர்கட்கெல்லாம் (பூமியில்) இருக்குமாறு இராசசியங்கொடுத்து, எதிர்த்தவர்களுடையமார்பிற் சென்றுதைத்த இரத்தந்தோய்ந்த வேலாயுதத்தை யுடையவனென்று இறைஞ்சினார்க்கு இருப்பளித்தலும் இறைஞ்சாதுஎதிர்ந்தாரை மார்புபிளத்தலும் ஆகிய நன்மை தீமை இரண்டையும் வேலே செய்கின்றதெனக் கூறினும் பொருந்தும். ஒருபொருட்பன்மொழியாகக் கொள்ளக்கூடிய தானம் வண்மை என்ற இரண்டையும் ஒருங்கே கூறியதனால், தக்கவர்க்கு அளிப்பது தானமெனவும், இன்னாரினையாரெனப் பாராது யாவர்க்கும் கொடுப்பது வண்மை யெனவும் சிறிதுபொருள்வேறுபாடு கொள்க.

புகழ்பெற வேண்டுமென்ற விருப்பத்தினாற் கர்ணன் டம்பத்துக்காக ஈகைத்தன்மையை மேற்கொண்டுள்ளானாதலால், அவனை 'புறஞ்சுவர் கோலஞ்செய்வான்' என்றார்; கர்ணன் உடம்பிற்குப்புகழைத்தருவதாகிய ஈகைக்குணத்தை மேற்கொண்டு உயிர்க்குஉறுதியைத்தருகிற மனத்தூய்மை முதலிய நற்குணங்களைமேற்கொள்ளாதிருப்பதற்கு, சுவரினுட்புறம் பழுதுபட்டிருக்க வெளிப்புறத்தைச் சித்திரிப்பது ஏற்றஉவமையாதல் காண்க: இவ்வாறுஉபமானமுகத்தால் உபமேயத்தைப்பெறவைப்பது, பிறிதுமொழிதலணியாம்; இது, ஒட்டணியெனவும் பெயர்பெறும். "முன்னோர் மொழி பொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவம்" என்றவாறு ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் சொற்பொருட் கருத்துக்களைத் தமதுநூலிற்சிற் சிலவிடத்து எடுத்தாள்வது இவ்வாசிரியரதுவழக்கமாதலால், "மறஞ்சுவர்மதிளெடுத்து மறுமைக்கேவெறுமைபூண்டு, புறஞ்சுவரோட்டைமாடம் புரளும்போதறியமாட்டீர், அறஞ்சுவராகிநின்றஅரங்கனார்க்காட்செய்யாதே, புறஞ்சுவர் கோலஞ்செய்து புட்கவ்வக் கிடக்கின்றீரே" என்ற தொண்டரடிப்பொடியாழ்வாரது திருமாலைச்செய்யுளின் சொற்கருத்துக்களை அடியொற்றி, 'புறஞ்சுவர்கோலஞ்செய்வான்' என்றார்.

இருப்பு - இருத்தல்; 'பு' விகுதிபெற்ற தொழிற்பெயர்; ஆகுபெயராய், இருக்கும் ஆசனத்தைக் குறித்தது. புறஞ்சுவர் - சுவர்ப்புறம் என்பது - முன் பின்னாகத்தொக்க ஆறாம்வேற்றுமைத்தொகை; இலக்கணப்போலி. [illegible] [illegible] "[illegible]." பூபதி - பூமிக்கு அரசன்; [illegible] வடமொழித்தொடர். (௫)

[கர்ணன்வார்த்தை.]

சு.—(இ - ள்.) 'தாது அவிழ் - மகரந்தப்பொடிகளோடு மலரப்பெற்ற, குவளை மாலை - குவளைமலர்மாலையைத் தரித்த, தருமன் மா மதலை - தருமபுத்திரன், பெற்ற - அடைந்த, மேதகு வேள்வி செல்வம் - மேன்மையான இராசசூயயாகத்தைச் செய்துமுடித்தலாகிய சிறப்பை, வேந்தரில் யாவர் பெற்ருர் - அரசர்களுள் எவர்தாம் பெற்றவர்? [எவருமில்லை என்றபடி]; அவன்தன் வாழ்க்கை அளவு எது - அத்தருமபுத்திரனது செல்வ வாழ்க்கைக்கு அளவுதான் உண்டோ? யார் இனி எதிர் உண்டு - இனி எவர்தாம் (அத்தருமபுத்திரனுக்கு) எதிராகவுள்ளவர்?' என்று—, பரிவு கூர - (துரியோதனனிடத்து) அன்புமிகுதலினால், பாதகம் நினைவை - பாவத்துக்குக்காரணமான (தனது) எண்ணத்தை, தானும் - (கர்ணன்)தானும், பகர்ந்தனன் - சொன்னன்; (எ - று.)

தாது - தேனுமாம். தருமத்தினின்று தவறியவர்க்குத் தக்கதண்டனைசெய்து தருமத்தைக் காத்தலால், யமனுக்கு வடமொழியில் தர்மனென்று பெயர். கொடியவர்க்குஏற்ற தண்டனை செய்து நல்லவர்களை நன்குபாதுகாக்கிற நடுவுநிலைமையில் "பிதுஸ் ஸுதகுணம் புத்ர:" என்றபடி தந்தையாகிய யமனினும் மைந்தனாகிய யுதிட்டிரன் மிகப்பலமடங்கு மேம்பட்டவனென்ற சிறப்புத் தோன்ற, 'தருமன்மாமதலை' என்றார். பாண்டவர்க்குக் குவளைப்பூமாலைஉரியதாதலால், 'தாதவிழ்குவளைமாலை' எனத் தருமனுக்கு அடைமொழி கொடுக்கப்பட்டது. முன்னாளில் இராசசூயயாகஞ் செய்துமுடித்த அரசர்கள் பலருளராயினும், மயனால்கட்டியமைக்கப்பட்ட மண்டபச்சிறப்பும், வீமன்முதலிய தம்பியர் திக்விஜயஞ்செய்து கொணர்ந்த திறைப்பொருட்சிறப்பும், வியாசன் கண்ணன் முதலியோர் உடனிருந்து யாதோரிடையூறுமின்றி வேள்வியை இனிதுமுடித்த மேன்மையும் முதலியனவாகப் பலவகைமேம்பாடுகள் தருமபுத்திரன்செய்த யாகத்தில் மிக்கிருந்தனவாதலால், அதுகண்டு பொறாமைகொண்ட கர்ணன் அவ்வாறே பொறாமைகொண்டிருந்த துரியோதனனை நோக்கி இவ்வாறுகூறினனென்க. அறநெறியிற் சிறிதும்தவறாதுநடக்குந் தருமபுத்திரனைப் பலவகையாலும் வருத்துதற்குக் காரணமாதலால், அவன்நினைவு 'பாதகநினைவு' எனப்பட்டது.

இச்செய்யுளிலுள்ள வினக்கள், எதிர்மறைகுறித்துநின்றன. 'உண்டு' என்ற உடன்பாட்டுக்குறிப்புமுற்று இருதிணை யைம்பால் மூவிடங்கட்கும் பொதுவாதலால், இங்கே 'யார்' என்னும் உயர்திணைப்பலர்பாலெழுவாய்க்குப் பயனிலையாய் நின்றது. தானும், உம்மை - கதைத்தொடர்ச்சிநோக்கி இறந்ததுதழுவியஎச்சப்பொருளது; சிந்தையோடிருந்ததுரியோதனனுக்குக் கர்ணன்தானும் பாதகநினைவைப் பகர்ந்தனனென்க: இனிச் சகுனிமுதலியோர் கூறுவதையுந் தழுவிநிற்றலால், எதிரதுதழுவியதுமாம். 'பரிவுகூர' என்பதற்கு-(தன்மனத்து) வருத்தம்மிக என்றும், (துரியோதனன்மனத்து) வருத்தம்மிகஎன்றும் பொருள்கூறவும் இடமுண்டு. கூர - மிகுதியுணர்த்துங் கூர்என்னும் உரிச்சொலடியாப்பிறந்த செயவெனெச்சம். (சு)

[சகுனிவார்த்தை.]

எ.—(இ - ள்.) வசை இசை ஆக கொள்வான் - (பிறர்கூறும்) வசைமொழிகளையே (தனக்குப்) பெரும்புகழாகக் கருதுபவனாகிய, சகுனி— விதாணம் விளைத்தன் சொன்ன வார்த்தையும் - ஈகையையே பொழுதுபோக்காவுடையவனான கர்ணன் சொல்லிய வார்த்தையும், வேந்தர் வேந்தன் இதயமும் - ராஜராஜனாகிய துரியோதனனது மனக்கருத்தும், ஒன்று ஆய் நின்ற இயற்கையை -(மாறுபாடின்றி) ஒரேவிதமாய் ஒற்றுமைப்பட்டிருந்த தன்மையை, கண்டு - பார்த்து, [illegible]

(யானைமுதலியவிலங்குகளைக் கொல்லுதற்பொருட்டு) வெளியிட்டாமல் உள்ளேயே சுருக்கிக்கொண்டுள்ள நகங்களையுடைய ஆண்சிங்கமானது,நாளும்-எப்பொழுதும், புறம் செலாது ஒடுங்கும் ஆனல் - வெளியேசெல்லாமல் (மலைக்குகைகளிற்) பதுங்கிக்கிடந்தால், மதம் கரி விடுமோ - (அதன்முன் அஞ்சியழிதற்குஉரிய) மதங்கொண்டுள்ள ஆண்யானை அதனை எதிர்க்கா தொழியுமோ? [எதிர்க்குமன்றோ? என்றபடி]', என்றான் - என்று கூறினான்; (எ - று.)

என்றது, தக்க சாதனங்களைப் பெற்றிருத்தலால் தருமபுத்திரனை வலியழித்து இருந்தவிடந்தெரியாது அடக்கவல்ல நீ இவ்வாறு அடங்கியிருந்தால் தருமபுத்திரன் உன்னுடைய தகுதி தெரியாது உன்னினும் மேம்படுகின்றானென்னும் பொருள்பட நிற்றலால், பின்னிரண்டடி - பிறிதுமொழிதலணியாம். தனதுநகங்களை உள்வாங்கவும் வெளியிடவும் வல்ல தாகையால், சிங்கம் 'புதைநகமடங்கல்' எனப்பட்டது: இனி, 'புதை நகம்' என்பதற்கு - (யானை முதலிய விலங்குகளின் உடம்பிற் சென்று) அழுந்துகின்ற நகம் எனினுமாம். சகுனி தன்மருமகனை துரியோதனனை மனத்தளர்வின்றி உத்ஸாஹமடைவிக்கவும், வீரத்தால் வெல்லமுடியாத தருமனைத் தான்செய்யுஞ் சூதுவழியாற் கெடுக்குமாறு துரியோதனனைத் தன்வழியே இசைவிக்கவுங் கருதி, தருமனை யானையென்று தாழ்த்தியும், துரியோதனனைச் சிங்கமென்று சிறப்பித்தும் இங்ஙனம் முகமன்கூறினனென்க. துரியோதனனுக்கு 'ராஜராஜன்' என்று ஒருபெய ருள்ளதனுல், இங்கே 'வேந்தர்வேந்தன்' என்றார். சகுனி-காந்தாரதேசத்துஅரசன்; சுபலனென்னும்அரசனது புத்திரன்; திருதராட்டிரனதுமனைவியாகிய காந்தாரியுடன்பிறந்தவன்: ஆதலால்,துரியோதனுதியர்க்குமாமன்; சூதாடுதலில் மிகவல்லவன். பழிக்குச்சிறிதும்அஞ்சாது பிறர் கூறும்பழிமொழியையே தனக்குப்பெரும்புகழாகப்பாவித்து அவ்வசைமிகுமாறு தீவழியிலேயேநடப்பவனென்பார்,சகுனிக்கு'வசையிசையாகக்கொள்வான்'என்றுஒருபெயர்கூறினர்; ஒற்றுமைப்பட்டுவாழவேண்டியதுரியோதனுதியரையும் பாண்டவரையும் அங்ஙனம் வாழவொட்டாது பேதப்படுத்தி அத்தீச்செயல்காரணமாகச் சகுனி மேம்படக்கருதுகின்றமை காண்க.

விதரணவிநோதன் - வடசொல்தொடர். கர்ணன் இடையெழுவள்ளல்களில் ஒருவனாதலால், இவனுக்கு இப்பெயர்கூறினர்; (மற்றையோர் - அக்குரூரன், அந்திமான், அரிச்சந்திரன், சந்திமான்,சிசுபாலன், தந்தவக்கிரன் என்பர்.) வார்த்தை - வார்த்தா, இதயம் - ஹ்ருதயம், நகம் - நகம்: வடசொற்கள். மடங்கல் - (பிடரிமயிர்) மடங்கப்பெற்றதென ஆண்சிங்கத்திற்குக் காரணக்குறி. கரீ - கரத்தையுடையது எனக் காரணப்பொருள் படும் வடசொல்; கரம் - கை: இங்கே, துதிக்கை. ஈற்றடியில், வசை இசை என மாறுபட்ட சொற்கள் வந்தது, முரண்தொடை. (எ)

[துச்சாசனன்வார்த்தை.]

அ.—(இ - ள்.) சொல் இடை நஞ்சு கக்கும் துன்மதி உடைய தம்பி சொல்லுஞ்சொற்களிலே விஷஞ்சொரியும்படியான [மிகக்கொடியசொற்களையுடைய] தீயஅறிவுள்ள தம்பியாகிய துச்சாசனன்,—வில் இடை நின்று-(துரியோதனனுக்குஎதிரில்)விற்கிடைதூரத்தில் நின்றுகொண்டு,'அல்லிடை நிறைந்தும்-இராக்காலத்தில் ஒளிமிக்குவிளங்குவதாயினும்,வெள் அமுதம் கிரணம் திங்கள் - வெண்மையாகிய அம்ருதமயமான ஒளியையுடைய சந்திரன், எல்லிடை - பகற்காலத்தில், இரவிமுன்னர்-சூரியனதுஎதிரில், [illegible] -எவ்வாறு ஒத்திருக்கும்'? என்று—, தம்முன் வெம் மனம் [illegible] தமையனாகிய துரியோதனனது கொடிய மனம் மகிழ்ச்சியடையுமாறு, சொன்னான்; (எ - று,)—எ - ற்றவை.

இராக்காலத்திலே நட்சத்திரக்கூட்டங்களினிடையிற் சந்திரன் ஒளி மிக்குத்தோன்றினாலும் பகற்காலத்திற் சூரியனொருவனுக்குமுன்னே ஒளி மழுங்குதல்போல, தருமபுத்திரன் பலசிற்றரசர்களிடையில் மிக்கமேம்பாடு பெற்றுவிளங்கினாலும் ராஜராஜனான துரியோதனனாகிய உனக்குமுன்னே சிறிதும் மேன்மைபெற்று விளங்கானென்பது, பின்னிரண்டடிகளின்கருத்து; உபமானமே உபமேயக்கருத்தைவிளக்கிநிற்றலால்,பிறிதுமொழிதலணி. நாம் அடங்கியிருக்கிற இச்சமயத்தில் தருமபுத்திரன் சிறப்புற்று விளங்கினாலும்,நாம் வெம்மையோடெழுமிடத்து அவன் அடங்கியேவிடுவனென்ற குறிப்பு, இது.'சொல்லிடைநஞ்சுகக்குந் துன்மதியுடைய'என்ற அடைமொழியினால், 'தம்பி' என்றது - எல்லாத்தம்பிமார்களினும் மிக்க கொடுமையையுடையவனான துச்சாதனனைக் குறித்தது:ஆகவே,துரியோதனன்,கர்ணன், சகுனி, துச்சாசனன் என்ற துஷ்டசதுஷ்டர்கள் கீழ் ௫ - ஆஞ் செய்யுள் தொடங்கி முறையே கூறப்பட்டுள்ளவாறு காண்க. வில்இடை - ஒருவில் கிடத்தற்குஉரிய இடம்; அது, நான்குமுழதூரமுள்ளது: "கரமோர்நான்கு தங்குதல் தநுவென்றாகும் [தநு=வில்]" என்பது காண்க. சந்திரன் அம்ருத கிரணனாதலால், "அமுதவெண்கிரணத்திங்கள்"எனப்பட்டான்.

துன்மதி = துர்மதி, அமுதம் = அம்ருதம், இரவி = ரவி; வடசொற்கள், கிரணம் - தற்சமவடசொல். தம்பி, தாம் - பகுதி, பி - முறைப்பெயர்விகுதி. தம்முன் - தமக்கு முன்பிறந்தவன்; தமையன்: 'முன்'-காலவாகுபெயர்.(அ)

[துரியோதனன் பேசத்தொடங்குதல்.]

௯.—(இ - ள்.) தமையனும் - (அத்துச்சாசனனுக்கு) அண்ணனாகிய துரியோதனனும், தம்பி சொன்ன தன்மையை உணர்ந்து - தனதுதம்பியாகிய துச்சாசனன் சொன்ன வகையை அறிந்து,—நீதி அமைதரு தந்தை கேட்ப - நியாயமார்க்கம்பொருந்தப்பெற்ற (தனது) பெற்றதந்தையான திருதராஷ்டிரன் கேட்கவும், அவன் பெருந் தாதை கேட்ப - அத்திருதராட்டிரனது பெரியதந்தையாகிய வீடுமன் கேட்கவும்,—கமை பெறு விதுரன் கேட்ப - பொறுமையைக் கொண்டுள்ள விதுரன் கேட்கவும், கார்முகம் கன்னன் கேட்ப - விற்போரில்வல்ல கர்ணன் கேட்கவும், இமையவன் துரோணன் கேட்ப - (பூமியில்) தேவன்போலவிளங்குகின்றவனான துரோணாசாரியன் கேட்கவும், யாவரும் கேட்ப-மற்றும் அங்குவந்துள்ளவர்களெல்லாரும் கேட்கவும், சொல்வான் - கூறுபவனானான்; (எ - று.)— அதனை, அடுத்த மூன்றுகவிகளிற் காண்க.

இயற்கையில் திருதராட்டிரன் தன்தம்பிமக்களான பாண்டவரிடத்தும் அன்புகொண்டு நடந்துவந்தானாதலால், அவனை 'நீதியமைதரு தந்தை' என்றார்; அன்றி, ராஜநீதியில் தவறாது நடத்தலால் இவ்வாறுகூறினாரென்றலுமொன்று. இனி, நீதி அமைதரு - நியாயம் அடங்கிவிடப்பெற்ற [நீதியொழிந்த]என்றலுமொன்று. அத்திருதராட்டிரனது தந்தையாகிய விசித்திரவீரியனுக்குமூத்தவனாதலால்,வீடுமன் அவனுக்குப்பெரியதந்தையாவன்.

விதுரன் - அம்பிகையாலேவியனுப்பப்பட்ட தாதிப்பெண்ணினிடத்து வியாசனுக்குப் பிறந்தவன்: விற்போர்த்திறத்தில்மற்றையாவரினும் மிகவல்லவன்: "ஞானகஞ்சுகவிதுரன்"என்றுசிறப்பித்துக்கூறும்படி தத்துவஞ்ஞானம் அமையப்பெற்றவன்: இவனை யமதருமராஜனது அம்சமென்றும், பரமபாகவதர்களில் ஒருவனென்றும் நூல்கள் கூறும்.

கன்னன்-கர்ணன் என்ற வடசொல்லின் விகாரம்; இப்பெயர், கர்ண குண்டலங்களோடு பிறந்தமைபற்றியது; காதின்வழியே பிறந்ததனால் வந்த பெய ரென்றும் கூறுவர்; கர்ணம் - காது. பாண்டவர்கள்தாயான குந்திதேவி கன்னிகையாயிருந்தபொழுது தனக்குத் துருவாசமுனிவ ருபதேசித்த மந்திரத்தைப் பரீட்சித்தறிதற்பொருட்டுச் சூரியனை நினைத்து அம்

மந்திரத்தை உச்சரிக்க, உடனே அத்தேவன் வந்து அவளுக்கு அநுக்கிரகித் ததனால், அவளிடம் பிறந்த புத்திரன் இவன்; இவனைப் பிறந்தபொழுதே குந்தி பழிக்குஅஞ்சி மிதக்கும் மரப்பெட்டியொன்றில் வைத்துப் பூட்டிக் கங்கையாற்றில்விட்டிட, அதனைத் திருதராட்டிரனதுதேர்ப்பாகனான அதி ரதனென்பவன் கண்டு எடுத்துத் திறந்து பார்த்துக் கொண்டுபோய்த் தன் மனைவியான ராதையுந் தானுமாக வசுசேன னென்று பெயரிட்டுவளர்த் தான். இவனுக்குக் கர்ண னென்ற பெயர், ஆகாசவாணி யிட்டது. பின்பு இவன் துரியோதனனுக்குப் பிராணசிநேகிதனாகி அவனருளால் அங்கதேச த்துக்கு அரசனாயினன்.

துரோணன் - துரோணகும்பத்தினின்று தோன்றியவன்; பரத்துவாச முனிவனது குமாரன்: கிருபாசாரியனுடன்பிறந்தவளான கிருபியின் கண வன்: அசுவத்தாமனது தந்தை; சகலசாஸ்திரங்களையும் தன்பிதாவினிடங்கற் றுப் படைத்தொழிலைப் பரசுராமனிடத்துஎழுநாளிற்பயின்றவன்:துரியோத னுதியர்க்கும் பாண்டவர்க்கும் அஸ்திரசஸ்திரங்களைக் கற்பித்த ஆசிரியன். இமையவன் - இமையில் மூடாமையாகிய விசேஷம் பெற்றவன்; அன்றி, இமயமலையில்வாழ்பவன் என, தேவசாதியானுக்குக் காரணக்குறி. இங்கு, துரோணனை 'இமையவன்'என்றது, பூமியில்தேவர்போலவிளங்குகிற கார ணம்பற்றிப் பூசுரரென்று வழங்கப்படுகிறஅந்தணரது சாதியிற் பிறந்தவனாத லால் 'கேட்ப'என்றசொல் ஒருபொருளிலேயே பலமுறைவந்தது - சொற் பொருட்பின்வருநிலையணி. 'யாவரும்' என்றது - கிருபனையும், அசுவத்தாமா வையும், மற்றும்அங்குவந்துள்ள அரசர்களையுங் குறிக்கும்.

தந்தை—தாம் - பகுதி, தை - முறைப்பெயர்விகுதி. தாதை, கமை - தாத, க்ஷமா என்ற வடசொற்களின் விகாரம். கார்முகம் - போர்த்தொழிற் குச்சிறந்தது என்று பொருள்படும்வடமொழித்தத்திதாந்தநாமம். கர்ணனது வில், 'காலப்ருஷ்டம்' என்று பெயர்பெறும். (௯)

[இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: துரியோதனன்வார்த்தை.]

௧௦.—(இ - ள்.) இந்திரன் முதல்ஆ உள்ள இமையவர் சிறப்பு செய்ய- இந்திரன்முதலான தேவர்கள் (தன்னைப்) பெருமைப்படுத்தவும், சுந்தரம் பொன் தோள் வேந்தர் ஏவல் தொழில் புரிந்து செய்ய - அழகிய பொன் னுபரணங்களைத் தரித்த தோள்களையுடைய (நிலவுலகத்து) அரசர்கள் (தான்) ஏவிய தொழில்களை விரும்பிச்செய்யவும், மந்திரம் முனிவர் வேள் வி மறை நெறி முறையின் செய்ய - வேதமந்திரங்களில்வல்ல முனி வர்கள் ராஜசூயயாகத்தை வேதத்திற்கூறியவிதிப்படியே தவறில்லாமற்செய் யவும், (இவ்வாறு), தந்திரம் வெள்ளம் சேனை தருமனே - கூட்டமான வெள்ளமென்னும் பெருந்தொகையுள்ள சேனைகளையுடைய தருமபுத்திர னே, தலைவன் ஆனான் - சிறப்புப்பெற்றுவிளங்கினான்; (எ - று.)

விண்ணுலகத்தாரான தேவர்களும் மண்ணுலகத்தாரான அரசர்களும் இரண்டிடத்திலுமிருப்பவரான முனிவர்களும் தருமபுத்திரனதுகருத்தின் படியே ராஜசூயயாகத்தை யாதொருகுறைவுமநேராதபடி இனிதுமுடித்த தனால், அத்தருமபுத்திரன் மண்ணிலும் விண்ணிலும் புகழ்படைத்து 'ஸம் ராட்' என்னும் பட்டம்பெற்று மேன்மையுற்று விளங்கினா னென்றவாறும்.

"இமையவர்சிறப்புச்செய்ய' என்றது, யாககாலத்தில் தேவர்கள் அவ் வப்பொழுது தம்தமக்கு உரிய அவிர்ப்பாகங்களைப் பெற்றுப் பெருமைப்படு த்தியதைக் குறிக்கும். அரசர்கள் ராஜசூயயாகத்தில் ஏவிய தொழில் செய்த [illegible] "தானமும் [illegible] யாகத்தரும் [illegible] [illegible] [illegible] [illegible] 'முனிவர்' [illegible]

நாரதர்முதலிய தேவவிருடிகளையும், வியாசன்முதலிய இவ்வுலகத்து இருடி யரையும் குறிக்கும். 'தந்திரவெள்ளசேனை' என்பதற்கு-போர்நூல்நெறி யுள்ள வெள்ளக்கணக்கான சேனை யென்றும்,வெள்ளக்கணக்கான காலாட் படைகளும் [தந்திரம் - காலாள்] மற்றைச்சேனைகளும் என்றும் பொருள் கூறுவாருமுளர். வெள்ளம்-ஓர்பெருந்தொகை; மிகப்பல அக்ஷௌஹிணி கொ ண்டது. (யானையொன்றும்,தேரொன்றும், குதிரைமூன்றும்,காலாளைந்தும் கொண்டது-பத்தி யெனப்படும்; அப்பத்தி மூன்றுபங்குகொண்டது-சேனா முகம்; சேனாமுகம்மூன்று - குல்மம்; குல்மம் மூன்று-கணம்; கணம் மூன்று- வாகினி; வாகினிமூன்று - பிரதனை; பிரதனை மூன்று - சமூ; சமூ மூன்று - அநீகினி; அநீகினி பத்து-அக்ஷௌஹிணி; அக்ஷௌஹிணி எட்டுப்பங்குகொண் டது-ஏகம்;ஏகம் எட்டு - கோடி, கோடியெட்டு-சங்கம்; சங்கம் எட்டு - விந் தம்; விந்தம்எட்டு-குமுதம; குமுதம்எட்டு-பதுமம்; பதுமம்எட்டு-நாடு; நாடு எட்டு - சமுத்திரம்; அந்தச்சமுத்திரம எட்டுப்பங்குகொண்டது - வெள்ளம் எனக் காண்க.) 'தந்தையே மைந்தனாகப் பிறக்கின்றான்' என்னும் நூல் வழக்குப்பற்றி, தருமபுத்திரனைத் தரும னென்றே கூறினார்.

இந்த்ரன், ஸுந்தரம், மந்த்ரம், முநி, தந்த்ரம், ஸேநா, தர்மன் - வட சொற்கள் இந்திர னென்ற சொல் - பரமைசுவரியமுடையவ னென்றும், மந்திரம் என்ற சொல் - தன்னைக் கருதி ஜபிப்பவர்களைக் காப்பதென்றும், முநி என்ற சொல் - மநநசீலன் [மநநம் - கடவுளைத்தியானித்தல்] என் றும் பொருள்படும். பொன் - அதனாலாகியஆபரணத்துக்குக் கருவியாகு பெயர்.இனி.'சுந்தரப்பொன் தோள் வேந்தர்'என்பதற்கு-அழகியவீரலக்ஷ்மி பொருந்தப்பெற்ற தோள்களையுடைய அரசர்களெனினுமாம். தருமனே, ஏகாரம் - பிரிநிலையோடு தேற்றம். (௧௦)

௧௧.—(இ - ள்.) துனை வரும் புரவி திண் தேர் துணைவரும் சூரர் ஆனார் - வேகமாகச்செல்லுகிற குதிரைகள்பூட்டிய வலியதேரையுடைய (அவனது) தம்பிமார்களும் பராக்கிரமசாலிக ளாய்விட்டார்கள்; அவன் - அத்தருமன்,—இனி சில நாள் செல்லின் - இன்னும் சிலநாள் சென்றால், எம்மனோர் வாழ்வும் கொள்ளும் - எமது செல்வவாழ்க்கையையும் பறித்துக் கொள்வான்; கூர் முனை வரு முள் வேலை - கூர்நுனிபொருந்திய முட்களை யுடைய வேலமரத்தை, முளையிலே களையின் அல்லால் - சிறுசெடியாயிருக் கையிலே பிடுங்கியெறிந்துவிட்டா லல்லாமல், நனி வர வயிர்த்த போது - (நாட்சென்று) மிகுதியாக வயிரங்கொண்டபோது, (அம்மரத்தைக்களைய நினைத்து வெட்டத்தொடங்கினால்), நவியமும் மடியும்அன்றே - கோடாலிப் படையும் கூர்மழுங்கி வாய்மடிந்துவிடுமன்றோ;(எ - று.)—அன்றே - தேற்றம்; ஈற்றசையுமாம்.

தருமபுத்திரனும் தலைவனாய்த் தம்பியரும் சூரராய்வருதலால்,இப்பொ ழுதே நாம் அவர்களைவலியடக்கமுயன்றால் முடியுமேயன்றி,இன்னும்நாட் செல்லவிட்டால் அப்பாண்டவர்கள் மேலும் வலிமைமிக்கு நம்மையே யழிப்ப ரென்றவாறு; "எதிர்த்தபகையைஇளைதாயபோழ்தே,களைந்துகளை யின் முதிராது" என்பது, பழமொழி. முட்செடியை முதிரவொட்டாமல் முளையாயிருக்கும்போதே களைதல் எளிது; வயிரமேறி முதிர்ந்தாலோ வெட்டுதற்குரிய கருவியையே அது கெடுத்துவிடும்; அதுபோலவே, பகை தோன்றினால் அதனை முதிரவொட்டாமல் தோன்றியபொழுதே களைதல் வேண்டும்; முதிரவிட்டால் பிறகு அது வலிப்பட்டுத் தன்னையேவருத்தும் என்பது, பின்னிரண்டடியின் கருத்து; பிறிதுமொழிதலணி. "இளைதாக முண்மரங்கொல்க களையுநர், கைகொல்லுங் காழ்த்தவிடத்து" என்றார் திருவள்ளுவரும்.

[illegible] "பலவென்ன [illegible] எம்மை [illegible]

ஒப்பில்போலி: "செய்போல்வதூஉம்" என்னுமிடத்திற் போல. வாழ்வு வாழ்க்கைக்குக் காரணமான செல்வம் முதலியவற்றிற்கு ஆகுபெயர்; உம் தாங்கள்பெருமைப்படுவதேபோடு என்ற பொருளைத் தருவதால், இறந்தது தழுவியஎச்சம். துணைவரும், இதிலுள்ள உம்மையும் இறந்ததுதழுவியதே. வயிர்த்தல் - வயிரமேறுதல். நவியமும், உம்மை - உயர்வுசிறப்பு (௧௧)

௧௨.—(இ - ள்.) அ புரவலன் செல்வம் யாவும் - அந்தத் தருமபுத்திரனது செல்வங்களெல்லாவற்றையும், போது உற - மேன்மைப்படத்தொடங்கிய இக்காலத்திலேயே, விரைந்து - விரைவுகொண்டு, பேது உற - (அவன்) திகைப்படையும்படி, கவர்ந்திலேன் எல் - (யான்) கைப்பற்றாது விடுவேனாயின், பின்னை - (நாட்சென்று அவன் வலியடைந்த) பிறகு, முடிக்க வல்லார் - (அத்தருமபுத்திரனை) வலியடக்கவல்லவர், யார் - எவர்தாம்? [ஒருவராலும் தருமபுத்திரனை வலியடக்குதல் முடியாது என்றபடி]; (ஆகையால்,இப்பொழுதே), மோது அற பொருது ஆதல்- தாக்கிப்போர்செய்தாவது, மொழி ஒணா வஞ்சம் ஒன்று தீது உற புரிந்து ஆதல் - சொல்லவொண்ணாத [மிக்கொடிய இரகசியமான] ஒருவஞ்சனையை (அத்தருமபுத்திரனுக்கு)த்தீமையிரும்படி செய்தாவது, கொள்வதே - (அவன்செல்வத்தைக்) கவர்ந்துகொள்வதே, சிந்தை - (இப்போது யான் எண்ணுகிற) எண்ணம், என்றான் - என்றுகூறினான், (துரியோதனன்); (எ - று.)

இப்போதே தருமபுத்திரனை அடக்காது விட்டிட்டால், பின்பு அவன் வலியுற்று நம்மைவருத்துகையில், அப்போது அவனுக்கு மாறுசெய்வது ஒருவராலும் முடியாதாதலால், இப்பொழுதே எந்தவகையினாலாவது அத்தருமபுத்திரனை அடக்கவேண்டு மென்று துரியோதனன் தன்மனக் கருத்தை வெளியிட்டன னென்க. 'போதுஉற' என்றது - "காலம்பெற" என்றாற்போல நின்றது.

நான்காமடியில், 'உற' என்பது - மிகுதியுணர்த்தும் 'உறு'என்னும் உரிச்சொல்லடியாப் பிறந்த செயவெனெச்சம். மற்று - அசை. புரவலன் - புரத்தலில் வல்லவன்; புரத்தல் - காத்தல். எல்-என்னில்என்பதன் மரூஉ. ஆதல் - விகற்பப்பொருளில்வந்த இடைச்சொல். ஒணா - ஒன்றா; மரூஉ. வஞ்சம் ஒன்று தீது என்று எடுத்து, வஞ்சனைபொருந்திய பொல்லாங்கு எனப் பொருள் ஓதுவாரும் உளர். ஏகாரம்மூன்றனுள், ஈற்றது - தேற்றம்; மற்றவை - இசைநிறை. (௧௨)

[இதுமுதல் ஐந்துகவிகள்-ஒருதொடர்; துச்சாதனன்வார்த்தை.]

௧௩.—(இ - ள்.) என்னலும் - என்று (துரியோதனன்) சொன்னவளவிலே,—உரிய தம்பி - அவனது கருத்துக்கு இணங்கிய தம்பியாகிய துச்சாசனன்,—இன்றே எழுவதே கருமம் - இப்பொழுதே (அத்தருமனை வலியடக்குதற்காக)முயல்வதே செய்யத்தக்கதொழிலாம்; செந்நெலின் வாளை பாயும் செல்வம் நாடு உடைய கோமான் - செந்நெற்பயிர்களிலே வாளைமீன்கள் பாய்ந்துசெல்லப்பெற்றதும் செல்வம்நிரம்பியதுமான குருநாட்டைத் தனதாகவுடைய துரியோதனராசன், நென்னல் அங்கு எய்த - நேற்று [சிலநாள் முன்னே என்றபடி] அவ்விந்திரப்பிரத்தநகரத்து மண்டபத்திற் சென்றுசேர்கையில், வீமன் நகைத்ததும் - (அவனைப் பார்த்து) வீமசேனன் பரிகசித்துச்சிரித்ததையும், நேயம் ஆன கன்னல் இன் மொழியாள் மூரல் விளைத்ததும் - (அவ்வீமனிடத்து) அன்புள்ள கருப்பஞ்சாறு போன்ற இன்சொல்லையுடையவளான திரௌபதி சிரித்ததையும், கண்டிலீரோ - (நீங்கள்) உணர்ந்திலீரோ? (எ - று.)

[illegible] அடர்திறத்து மனத்தில்மாறுபாடுகொண்ட துரியோதனன் தருமபுத்திரனது இராஜசூயயாகத்திற்காக இந்திரப்பிரத்தநகரத்துக்குச் சென்றபோது அங்கு மாயையில்வல்ல மயனென்கிற அசுரசிற்பியால் [illegible]

மாக அமைக்கப்பட்ட சபாமண்டபத்திற்கு ஏகுகையில், அங்கே தாமரைத் தடாகம்போலப் பளிங்கினால்தொழில்செய்யப்பட்டிருந்த ஓரிடத்தை உண்மையான தாமரைத்தடாகமென்று கருதித் தனது ஆடை நனையாதிருக்க வேண்டுமென்ற எண்ணத்தினால் தனதுதுகிலைத் தூக்கிக்கொண்டு சென்றும், பின்பு உண்மையான தாமரைத்தடாகத்தைப் பளிங்கினாலமைந்த வெற்றிட மென்று பிரமித்துச்சென்று அத்தடாகத்துநீரில் விழுந்து துகில்நனையப்பெற்றும், வழியில்லாவிடத்தில் வழியுள்ளதாகஎண்ணி முட்டியும், வழியுள்ளவிடத்தில் வழியில்லையென்று தடுமாறியும், இவ்வாறு பலபடியாகமயங்கி வருந்தித் திகைத்தனனாக, வீமசேனனும் திரௌபதியும் மற்றும் உள்ளவர்களும் பார்த்துச் சிரித்தன ரென்பது, வரலாறு; "பொன்னைச்சிரிக்கும் பூங்கோயில் புனல்வாவியி லன் றெங்கள்குல, மன்னைச்சிரித்த செங்கனிவாய் . . . . மின்னைச்சிரிக்குநுண்ணிடையாய்" என்று துச்சாதனன் திரௌபதியைநோக்கிக் கூறுமாறுங் காண்க. ("துளங்குவெள்ளிடை துளும்புதண் புனலெனத்தோன்ற, விளங்குதண்புனல் வெள்ளிடைப்பரப்பெனக்காட்டும், வளங்கொண்மண்டப மயனினிதிழைத்தது வயங்கு, பளிங்கிற்செய்தது பன்மணிகுயின்ற தொன் றுளதால்," "இன்னதன்மைய விலங்கொளிமண்டபநவெண், மன்னும்வாளரிசுமந்ததோர் மணியணைபொலியப், பின்னல் வெண்டிரைப் பெருநிலவேந்தர்வந்திறைஞ்ச, மின்னுநக்கவேன் மன்னவன் வீற்றிருந்தனனால்", "அச்சணங்குவேலிளையரு மரும்பவிழ்துளவப், பச்சைமேகமும் பாங்குற விருந்த பார்த்திவனை, நச்சராவலனுயரிய நனைகவுட் பருஉத்தாட், கச்சைமால்களிற்றரசனுங்காணிய வெழுந்தான்," "சூழ்ந்த பேரொளிதுளும்பியநிலனைநீரென்றுத், தாழ்ந்தவந்துகிலிடைவயிற்றழீஇயினன் பளிங்கு, போழ்ந்தியற்றியநிலனெனப்பூம்புனலிடைப்போய், வீழ்ந்தனன் பெருவேத்தவைமுகிழ்நகைவிளைப்ப," "நகைமுகிழ்த்திடனைமுகிழ்த்திட லென நகுமென், முகைதொடுத்ததார்மன்னவன்மொழிந்தனனாக, விகல்விளைத்திடுகொரியவனின்னருட்கண்ணால், மிகநகைத்தெனவிடுநகைபுரிந்தனன்வீமன்," "சுரும்புசூழ்தொடைத்திருவதன்வரத்தினாற்றோன்று, கரும்பினன்னசொற்களிக்கயலன்னவாட்கருங்கட், ... ......... கோதையு மிகுளையர்குழாமும், அரும்புவாணிலவணிநகைமுகிழ்த்தனரன்றே," "விளைநகைத்திறங்காண்டலும் விளைநருப்பருகிக், களியளிக்குலமாற்றுதார்க்காவலற்காணான், நளியழற்சினநச்சராவுயர்த்தவனுனு, புளைவயப்பரிதேர்கடிதோட்டினனெழுந்தான்" என்ற செய்யுள்கள், இங்கு நோக்கத்தக்கன.)

துச்சாதனனை 'உரியதம்பி' என்றது - துரியோதனனது தீயகருத்துக்குச் சிறிதும் மாறுபாடின்றி இணங்கிநடக்குந் தன்மையனாதலா லென்க. செந்நெல் - நீர்நிலையில்விளையுமியல்பினதான ஒருவகைச் சிறந்த நெல். வாளை - மிக்கநீர்நிலையில்வசிக்கும் மீன். இரண்டாமடி - நாட்டின் நீர்வளமிகுதியை விளக்கும்.

வீமன் = பீமன்; வீமசேனனை 'வீமன்' என்றது - முதற்குறிப்பின்பாற்படும்; வடநூலார் 'நாமைகதேசே நாமக்ரஹணம் [ஒருபெயரின்ஒருபகுதியால் அப்பெயர்முழுவதையும் குறிப்பது]' என்பர். நென்னல்-நெருநல்என்பதன் மரூஉ. கருப்பஞ்சாறு, மிக்க இனிமையில்உவமம். மூரல் - புன்சிரிப்பு; இங்கு, எள்ளல்பற்றியது. 'கண்டிலீரோ' என்றது - சபையிலிருந்தவர்களை நோக்கிக் கூறியது. எழுவது - போர்க்குப்புறப்படுதல்: படையெழுச்சி. இச்செய்யுளில் 'என்னலும்,' 'உரியதம்பி' என்றவை - மேல் சுஎ - ஆஞ் செய்யுளில் வருகிற 'என்றான்' என்னும் முற்றைக் கொள்ளும். (சுரு)

சுசு.—(இ - ள்.) யாகம் நல் விழாவில் - இராசசூயயாகமென்ற சிறந்த திருவிழாவிலே, எத்தனை தரணிவேந்தர் வந்தார் - எவ்வளவு அரசர்கள் வந்தார்களோ, அத்தனை பேரில் - அவ்வளவுஅரசர்களுள்ளும், யாரும் ஒரு

[illegible] அடங்கி நின்றேம் - யாமும் (சிறிதும்மேன்மையின்றி) [illegible] [illegible]டந்தோம்; கோத்து அனை உகளும் நல் நீர் குருநிலம் கோ [illegible] - தொகுதியான அனையென்னுஞ்சாதிமீன்கள் புரளப்பெற்ற மிக்க [illegible]யுடைய குருநாட்டுக்குத் தலைவனாகிய தருமபுத்திரன், அந்த முத்தனை அன்றி-அந்தக்கண்ணனையேயல்லாமல், பின்னை யாரையே முதன்மைசெய் தான்-வேறு எவரைத்தான் முற்பூசைபெறுமாறு முதல்வனாக்கினான்? (எ-று.)

செல்வத்திலும் வலிமையிலும் மிகச்சிறந்த நாம் யாகத்திற்குச்சென் றிருக்கையில் நம்மைச்சிறிதும் லக்ஷ்யஞ்செய்யாது உபேட்சித்துவிட்டதோடு, 'தங்களினும்மிக்கவர்வேறுஇல்லை' என்று செருக்குக்கொண்டு தமக்குநெரு ங்கிய உறவினனாய்த் தம்மைச்சேர்ந்தவனான கண்ணனுக்கு அக்கிரதாம்பூல மும் கொடுத்தா னென்று, அத்தருமபுத்திரன்மீது, செல்வச்செருக்குக் கொண்டதாகத் துச்சாதனன் குற்றங்கூறியவாறு. தருமபுத்திரன் எம்மை விசேஷமாகப் பாராட்டாமல் உபேக்ஷித்தனனென்பான், 'அத்தனைபேரில் யாமும் ஒருவராய் அடங்கிநின்றேம்' என்றான்.

'எத்தனை', 'அத்தனை' என்றது-வடமொழிநடை. விழா-மஹோத்ஸவம், மங்கலச்சடங்கு. யாம் - அரசர் யாவரையும் தங்களுடன்சென்றவர்களை யும் உளப்படுத்திய தன்மைப்பன்மை. யாமும்,உம் - உயர்வுசிறப்பு யாமும் ஒருவராய் - தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி; 'யாமும்ஒருவே மாய்' என்றிருப்பின், வழாநிலையாம். அனை - மீனின் சாதிபேதங்களில் ஒன்று; இது, மற்றைமீனினங்கட்கும் உபலக்ஷணம். முத்தன் = முக்தன்: மோக்ஷலோகத்திற்கு உரியவன். (சஎ)

கஅ.—(இ - ள்.) நந்தன் கோ மகனுக்கு - நந்தகோபனதுபுதல்வனான கிருஷ்ணனுக்கு, நல்கிய - (தருமன்)செய்த, முதன்மை எல்லாம்-பலவகைச் சிறப்புக்களையும், வந்த கோ வெள்ளம் - (ராஜஸூயயாகத்தின்பொருட்டு) வந்திருந்த அரசர்களின்கூட்டம், கண்டு - பார்த்து, சேர வாய் திறவா மல் நிற்ப-ஒருசேர வாய்திறந்து பேசாம லிருக்கையில்,—'இவனுக்கு இந்த முதன்மை - இவனுக்கு இவ்வாறு அக்கிரபூசைசெய்வது, எந்தகுல - எதற் காகவோ?' என்று—, எதிர்ந்து - (கண்ணனோடு)மாறுபட்டு, மாற்றம் தந்த- (அவனை இகழ்ந்து) பேசிய, கோ - அரசனாகிய சிசுபாலன், மடியும் ஆறு - இறக்கும்படியாக, சமரமும் விளைப்பித்திட்டான் -(கிருஷ்ணனைக்கொண்டு) போரையும் (இத்தருமன்) உண்டாக்கினான் ; (எ - று.)

வந்த கோ வெள்ளம் கண்டு நிற்ப எதிர்ந்து தந்த கோ என இயையும். இதனால், தருமன் யாவரையும் அவமதித்துஒழுகுவதோடு, வலியவரையும் உபாயத்தால் வெல்லுந் தன்மையுடையானென அவனது தந்திரத்தைக் கூறிய வாறு. தருமபுத்திரன் இராஜஸூயயாகத்தில்வியாசமுனிவரதுமொழிப்படியே கிருஷ்ணனுக்கு அக்கிரபூசைபுரிந்தனனாக,கண்ணனிடத்துப் பழம்பகைமை கொண்டிருந்த சிசுபாலன்பலவாறு அக்கிருஷ்ணனைநிந்திக்கத்தொடங்கவே, 'இவன் நூறுபிழை செய்யுமளவும் பொறுப்பேன்' என்று அவனது தாயான தனதுஅத்தைக்குத் தான் முன்பு வாக்குதத்தஞ்செய்திருந்ததற்கு ஏற்ப அக்கண்ணபிரான் அச்சிசுபாலனது தூஷணவாக்கியங்களாகிய சொற்பிழை களை எண்ணித் தொகையிட்டுக்கொண்டேவந்து, அவை நூற்றுக்குமேற் பட்டபின்பு பொறுக்கமாட்டாதவனாய் அவனையழிக்கக்கருதி அவனோடு பொருது தனதுசக்கராயுதத்தால் அவனதுதலையைத்துணித்துக் கொன் றனனென்ன வரலாறு அறிக. [விவரம், அநுசாஸநிகபருவம் [illegible] காண்க.]

[illegible] கோ - [illegible] பெயருள்ளதிலவன. [illegible] [illegible] இக்கண்ணனுக்கு அக்கிரபூசை [illegible] [illegible] [illegible]

என்று குறித்தார்; கண்ணன், க்ஷத்திரியசாதியில் உயர்ந்தகுலத்திலே வசுதேவகுமாரனாய்த் தேவகிவயிற்றிற் பிறந்திருந்தும், தாழ்ந்த இடையர் சாதியில் நந்தகோபன்மனையில் அவன்மகனாக யசோதைவளர்க்க வளர்ந்ததுமாத்திரங்கொண்டு,'நந்தகோமகன்'எனப்பட்டான். நந்தகோபனென்பது-'நந்தகோ'எனக் கடைகுறைந்துநின்றதென்னவுமாம்; [நந்தகோபன்-நந்தனென்ற இடையன்.] 'எந்தகோ' என்பது - தெலுங்கிலிருந்து வந்து வழங்கிய திசைச்சொல்; [எந்துகு = எதற்காக:] இனி, 'எந்த கோ இவனுக்கு இந்த முதன்மை-எந்த மேம்பாட்டினாலே இவனுக்கு இந்த முதன்மை?' என்று உரைப்பாருமுளர். யாகத்திற்கு அதிபதியாயிருந்த தருமபுத்திரன் தான்அக்கிரபூசைசெய்தது காரணமாக இருவர்க்கும் நேர்ந்த போரைத் தடுக்காமையினாலே அவனுக்கு அப்போர் உடன்பாடானதே யென்றுகொண்டு அவன்மேலேற்றி, 'சமரம் விளைப்பித்திட்டான்' என்றான்.

நந்தன் + கோ = நந்தகோ; "சிலவிகாரமா முயர்திணை." சமரம் = ஸமரம். வடசொல. (கரு)

கசு.—(இ - ள்.) தன் புயம் வலியும்-தனது தோள்களின்பலத்தையும், நான்கு தம்பியர் வலியும் - (வீமன் அருச்சுனன் நகுலன் சகதேவன் என்ற தனது)தம்பிமார்நால்வருடைய வலிமையையும், மாயன் வல் புயம் வலியும்-மாயையில்வல்லவனான கிருஷ்ணனது வலிய தோள்வீரத்தையும்,கொண்டு-(தனக்குத்துணையாக) வைத்துக்கொண்டு, மண் எலாம் - இந்நிலவுலகமுழுவதையும், கவர எண்ணி - தன்னுடையதாக்கிக்கொள்ள நினைத்து,—இன் புயம் சிகரி மன்னர் யாரையும் தன்கீழ் ஆக்கி-அழகிய மலைபோன்றதோள்களையுடைய எல்லாஅரசர்களையும் (தனதுதம்பிகளைக்கொண்டு திக்விஜயஞ்செய்து) தனக்குக்கீழ்ப்படுத்தி,—மின் புயல் அனையான் மேன்மை விளைக்கவே - மின்னலோடுகூடிய மேகத்தை யொத்தவனான கண்ணனுக்கு மேன்மையை உண்டாக்குவதற்காகவே, வேள்வி செய்தான் - ராஜசூயமென்ற யாகத்தைச் செய்தனன், (தருமபுத்திரன்); (எ - று.)

பராக்கிரமமுள்ள தருமபுத்திரன் தம்பியர்களின்துணையைப் பெற்றுக் கிருஷ்ணசகாயத்தைமுக்கியமாகக்கொண்டு நிலவுலகமுழுவதையும் தனது ஆட்சியின்கீழ் நிறுத்தவேண்டு மென்ற எண்ணத்தை யுடையவனாதலால், அக்கிருஷ்ணனுக்குத் தன்னிடத்து அன்புமிகுமாறு அவனைப்பெருமைப்படுத்துவதற்கு யாகத்தை ஒருவியாஜமாகக் கொண்டனனே யன்றி வேறன்றென்று, துச்சாதனன் தருமன்யாகஞ்செய்ததற்குக் காரணங் கற்பித்துக் கூறினனென்க. திருமகளுடன்கூடியிருக்குந்திருமாலின் அவதாரமான கண்ணபிரானுக்கு, மின்னலோடுகூடிய மேகம் உவமை; சக்கராயுதத்தோடுகூடிய கண்ணபிரானுக்கு உவமையெனினும் அமையும். சிகரி - மலை; வடசொல்: சிகரங்களை யுடையதென உறுப்புப்பொருள்படும். ([illegible])

கஎ.—(இ - ள்.) எல் இயல் பரிதி அன்ன - பகற்காலத்திற் சஞ்சரிக்கின்ற சூரியனை யொத்த, யதுகுலம் மன்னன் தானும்-யதுவம்சத்திற்பிறந்தவனான அக்கிருஷ்ணனும்,—சல்லியம் மிகு போர் செய்ய - உபத்திரவம் மிக்க போரைச் செய்யுமாறு, சல்லியன்தனமேல் சென்றான் - சல்லியன் மேற் படையெடுத்துச்சென்றிருக்கிறான்; சூழ் வலை படுத்திக்கொண்டது இட்டவலையில் அகப்படும்படி செய்யப்பட்ட,வல்லியம் அன்ன-புலியென்று (ஒப்புமை)சொல்லும்படி,—சொல்லிய கருமம் வாய்ப்ப சூழ்ந்து-(நாம் இப்பொழுது சபையில்ஆலோசித்துப்)பேசிய காரியம் நிறைவேறுமாறு (அத்தருமபுத்திரனை நமதுசேனைகளால்)முற்றுகைசெய்து, மலைவதே - போர்புரிந்து வெல்வதே,கருமம்-(நாம் இப்பொழுது செய்யவேண்டிய)காரியம்,என்றான், என் [illegible] (எ - று.)—'என்றான்' என்பது [illegible] வந்த 'தம்பி' [துச்சாதனன்] என்பது - [illegible]

வேத்திடத்திற் பகைமேற்சென்றுள்ள கண்ணன் தருமனுக்குச் சிறிதும் உதவாததல்லாமற்றி அவனைவென்றுவலியடக்குவதற்கு இதுவேதக்கசமயமாதலால், இப்பொழுதே தருமன்மேற் செல்லவேண்டுமென்று துச்சாதனன் கூறினனென்க.

யது-சந்திரகுலத்திற் பிரசித்திபெற்ற ஓரரசன்; யயாதியின்குமாரன்: அவன்குலத்திற்பிறந்தவர், 'யாதவர்' எனப்படுவர். சல்லியன் - அம்புமுனை போலப் பகைவர்களை வருத்துபவனென்று காரணப்பொருள்படும்.

வலையில் அகப்பட்ட புலி - சேனையின்இடையில்அகப்பட்ட தருமபுத்திரனுக்கு உவமை. சல்யம்-அம்புமுனை; உபத்திரவத்திற்கு இலக்கணை; வடசொல். கலக்க மெனினுமாம். பரிதி, யதுகுலம், கர்மம்-வடசொற்கள். (௧௭)

[இதுவும், அடுத்தகவியும்-ஒருதொடர்; துரியோதனன் துச்சாதனன்வார்த்தைக்கு உடன்பட்டுக்கூறல்.]

௧௮.—(இ - ள்.) வேந்தனும் - துரியோதனராசனும்,—ஒருப்பட்டு - (அந்தத்துச்சாதனன்வார்த்தைக்கு) உடன்பட்டு,— 'அந்த வெண்ணெய் வாய் கள்வன் - வெண்ணெயைக் களவுசெய்துஉண்ட வாயையுடையவனாகிய அக்கண்ணன், மீள போந்து - மீண்டுவந்து, இன்று - இப்பொழுது, இவர்தமக்கும் - இப்பாண்டவர்க்கும், பொரு துணை ஆகமாட்டான்-போர் செய்வதற்குஉரிய துணைவனாக நிற்கமாட்டான்; (ஏனெனில்),— சாந்து அணி குவவு தோளான் சல்லியன் - சந்தனமணிந்த திரண்ட தோள்களையுடையவனாகிய சல்லியன், வலியன் - மிக்கபலமுள்ளவன் [தன்மீதுபடையெடுத்துவந்தகண்ணனை எளிதில்விடமாட்டான்என்றபடி];இப்போது ஆம் தகவு எண்ணில்-இப்பொழுதே(அவர்களைவெல்லுமாறு)செய்யக்கூடியதகுதியான உபாயத்தை ஆலோசித்துச்செய்தால், வல்லே - விரைவிலே, ஐவரை - பஞ்சபாண்டவர்களையும், அடர்க்கல் ஆம் ஏ - வலியடக்குவது மிக எளிதே', (என்றுசொல்லி),— (எ - று.)

கண்ணன் இளம்பிராயத்தில் திருவாய்ப்பாடியிலே ஆயர்மனைகளிற் சென்று அவர்களுடைய பால் தயிர் வெண்ணெய் முதலியவற்றைக் களவு செய்துஉண்டனனென்பது, பிரசித்தம். இவர்தமக்கும், உம்மை - இசைநிறை; இறந்ததுதழுவிய எச்சமாக்கியும் உரைக்கலாம். குவவு - திரட்சி. 'வெண்ணெய்வாய்க்கள்வன் பொருதுணையாகமாட்டான்' என்றதை, 'சல்லியன்வலியன்' என்னும் வாக்கியம் சமர்த்தித்துநின்றது, தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம்; வடநூலார்'காவ்யலிங்காலங்காரம்' என்பர். இதன் இலக்கணம் - சமர்த்திக்கவேண்டிய பொருளைப் பின்வரும் பதமாவது வாக்கியமாவது சாதித்துநிற்றல். வல் - விரைவுகுறிக்கும் இடைச்சொல். ஐவர் - பாண்டவர்க்குத் தொகைக்குறிப்பு; அச்சொல்லின் ஈற்றில், இனைத்தென்றறிபொருளில்வரும் முற்றும்மை தொக்கது. (௧௮)

௧௯.—(இ - ள்.) (பின்பு ராஜசபையிலுள்ளாரைவிளித்து),—'வஞ்சனை கொண்டே ஆதல் - வஞ்சனைவழியினாலாவது, வாரணம் மணி தேர் வாசிகளும் அனையவரால் ஆதல் - யானைகளும் மணிகள்கட்டிய தேர்களும் குதிரைகளும் விஷத்தையொத்தவர்களான [கொடிய] காலாட்களும் ஆகிய சதுரங்கசேனைகளைக்கொண்டாவது, நாளையே அழித்தல் வேண்டும் - நாளைக்கே [மிகவிரைவிலேயே] பாண்டவர்களை அழித்தல் அவசியமாய்ச்செய்யவேண்டிய காரியமாம்; கஞ்சனை மலைய எண்ணி - கம்ஸனைக் கொல்லக் கருதிக்கொண்டிருந்து, கரிய பேய் முலை பால் உண்ட - கருநிறமுள்ள பூதனையென்னும் பேய்மகளது முலைப்பாலைக் குடித்த, நெஞ்சினன் - கண் [illegible]யுடையவனாகிய கண்ணன், எய்தா முன்னம்-மீண்டுவந்துசேர்தற்கு முன்னே, நீர் விரைந்து எழுமின் - நீங்கள் யாவரும் விரைவாகப் புறப்படுங்கள் [illegible] என்று கட்டளையுங் கூறினன்; (எ - று.)

வஞ்சனைவழியினாலாவது,போர்புரிந்தாவது,கண்ணன்மீண்டுவருதற்கு முன்னமே பாண்டவர்களை வெல்லச் செல்லவேண்டு மெனக் கட்டளை கூறியவாறு; கண்ணன் மீண்டுவந்துவிட்டாற் பாண்டவர்களை வெல்வது அரிதுஎன்பது,குறிப்பெச்சம்.[கஞ்சனைக்கொன்ற கதை,அழகர்அந்தாதியுரை-உக - ஆம் பக்கத்திற் காண்க.] வஞ்சநா, வாரணம், வாஜி, கம்ஸன்-வட சொற்கள். 'ஆவது' என்பதுபோல 'ஆதல்' என்பதும் - விகற்பப்பொருள் தருவதோர் இடைச்சொல்லாம்.

பேய்முலைப்பாலுண்ட கதை:—தன்னைக்கொல்லப்பிறந்தவன் ஒளித்து வளர்கின்றானென்பதை யுணர்ந்த கம்சன் மிக்க அச்சங் கொண்டவனாய், பிரலம்பன் கேசி தேனுகன் பூதனை அரிஷ்டன் முதலான அசுரர்களை யழைத்து 'உன்னைக் கொல்பவன் பிறந்திருக்கிறான்' என்று தேவகியின்வயிற்றிற் பிறந்த பெண் சொல்லிற்றாதலால், இவ்வுலகத்தில் விசேஷமான பலம் சாமர்த்தியம் அழகு முதலியவை எக்கெந்தக்குழந்தையினிடத்திற் காணப் படுமோ அந்தந்தச் சிறந்த ஆண்குழந்தைகளைத் தேடி எப்படியாவது கொன்றுவிடவேண்டு மென்று கட்டளையிட்டான். உடனே அவர்களெல்லாரும் அங்ஙனமே முயல்வாராயினர். அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷசி மாயையால் நல்ல பெண்ணுருவங்கொண்டு இரவில் அங்கங்கே சென்று சிறுகுழந்தைகட்குத் தாய் பால்கொடுப்பதுபோலத் தான் தனது நஞ்சுதீற்றியமுலையைக் கொடுத்துக் குழந்தைகளைக் கொன்றுகொண்டே கோகுலத்திலும்வந்து.தூங்கிக்கொண்டிருந்த கண்ணனாகிய யசோதையின் குழந்தையையும் எடுத்து முலைகொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அப்பேய்மகளின்உயிரோடு உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக்கதறி விழும்படிசெய்தது என்பதாம். (கக)

[கர்ணன் 'போர்புரியும்வல்லமையிருக்க, வஞ்சனைவழி தகாது' என்றல்.]

உ0.—(இ - ள்.) அங்கர் கோமான் - அங்கதேசத்திலுள்ளார்க்கு அரசனாகிய கர்ணன்,—(துரியோதனனை நோக்கி),— 'யான்—, வெம் சிலை குனித்து-கொடிய வில்லை வளைத்து, ஓர் அம்பு விடின்-ஓர்அம்பைப் பிரயோகித்தால், வெகுண்ட வேந்தர் - சினங்கொண்டெதிரிட்ட பகையரசர்கள், எஞ்சி விண் புகுவர் அல்லால் - இறந்து வீரசுவர்க்கத்திற் புகுவார்களேயல்லாமல், எதிர்க்க வல்லார் யாவரே - (என்னை) எதிர்த்துப்போர்செய்து வெல்லவல்லவர் யாவர்தாம்? [எவருமிலரன்றே!] வாளால் வெல்ல அஞ்சினம் ஆயின் அன்றே - வாள்முதலிய படைக்கலங்களைக்கொண்டு (போர் செய்து)வெல்வதற்குப் பயப்பட்டா லல்லவோ, வஞ்சனைகொண்டு வெல்ல மதிப்பது-வஞ்சனைவழியாற் (பாண்டவர்களைச்)சயிக்கநினைக்கவேண்டுவது,' என்றனன் - என்றுகூறினான்; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் துரியோதனன் 'வஞ்சனைவழியினாலோ அல்லது போரினாலோ எவ்வழியினாலாவது பாண்டவர்களை வெல்லவேண்டும்'என்று கூறியதற்கு, கர்ணன், தன்னை மகாவீரனாகக் கருதிப் பெருமிதம்பாராட்டுபவனாதலால்,'வஞ்சனைவழியால் வெல்லக்கருதுவது அஞ்சுபவர்களின் செயலன்றோ! மகாவீரனாகிய யான் இருக்கையில்,போர்வழியே சிறந்தது'என்று தனது வீரச்செருக்கினாற் கூறினன். போரில் இறந்தவர்கள் வீரசுவர்க்க மடைவரென்பது, நூல்துணிபு. சிவபிரானது நெற்றிக்கண்ணின் நெருப்பிற்கு இரையாகிய மன்மதனதுஅங்கம் விழுந்த இட மாதலால், அவ்விடம் அங்கதேசமெனப்பெயர்பெற்றது;"வாரணத்துரிவையான் மதனனைச் சின வுநாள், ஈரமற்றங்கமிங்குகுதலா லிவணெலாம்,......அங்கநாடு" என்றது காண்க.

அம்பியூகன்; குற்றியலிகரம். அஞ்சுதல்-உயிரொடுங்குதல். வஞ்சனைகொண்டு,கொண்டு-மூன்றாம்வேற்றுமைச்சொல்லுருபு. வாள்-மற்றை ஆயுதங்கட்

[illegible]; இனி, [illegible] செப்புப்பெயர் பொருப்பொரு [illegible] [illegible]. (உ௦)

[இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்;
சகுனி, 'சூதினாலேயே வெல்லவேண்டும்' என்றல்.]

உக.—(இ - ள்.) யாவரும் மொழிந்த வார்த்தை - (இவ்வாறு) எல்லாரும் கூறிய சொற்களை, இன்பு உற கேட்டு - இனிமையாகக் கேட்டிருந்து, பின்னும் - மறுபடியும், தாவரு புரவி திண் தேர் தானையான்-தாவிச்செல்லுந்தன்மையுள்ளகுதிரைகள்பூட்டிய வலியதேர்ச்சேனையையுடைய வனாகிய,சகுனி—, சொல்வான்—:— மேவரு கன்னன் அன்றி - (போர் வெல்ல) விரும்புகிற இந்தக் கர்ணனே யல்லாமல், விண் உளோர் - தேவர்கள்,எதிர்ந்த போதும்-எதிர்த்துப்போர்செய்தாலும்,கோ வரு முன்றிலானை - (தன்னைக்காணுதற்கு வருகிற) அரசர்கள் நெருங்குகின்ற வாயிலையுடையவனாகிய தருமபுத்திரனை,கொடுஞ் சமர் வெல்லல் ஆமோ - கொடிய போரில் வெல்லுதல் கூடுமோ? [கூடாதன்றோ என்றபடி]; (எ - று.)

'யாவரும்' என்றது, கீழ்ச் சபையிற் பேசிய துரியோதனன்முதலியோரை. 'போர்புரியவேண்டும்' என்று துச்சாதனனும் கர்ணனும் கூறிய வார்த்தைகள் தனக்கு உடன்பாடல்லாதனவாயிருக்கவும், சகுனி இன்புறக்கேட்டது, அவர்கள்கருத்தும் பாண்டவர்களை வென்றுஅடக்குந்தன்மையில் தன் கருத்துக்குஇணங்கியிருந்ததனா லென்க. 'தாவரும்புரவித்திண்டேர்த்தானையான்' எனச் சகுனிக்கு அடைமொழிகொடுத்துக்கூறியது, தான் மற்றை யோர்போலவே போர்செய்யுங்கருவியைக் குறைவின்றிப் பெற்றிருந்தும் 'பாண்டவர்களிடத்து வஞ்சனையேயன்றி வீரம் சிறிதுஞ் செல்லாது' என்பதைஅறிந்துகொண்டு கூறினனென்பதைக் குறிப்பிக்கும்.'தேர்'என்றது-மற்றைமூன்றுஅங்கங்கட்கும் உபலக்ஷணம். 'கோவருமுன்றிலான்' என்றது - அரசர்கள்பலரையும் வென்று தன்கீழ்ப்படுத்தியுள்ளவனென வீரச்சிறப்பை விளக்கும். மேவரு கன்னன் - அன்புகொண்டுள்ள கர்ணன் எனினுமாம்.

'பின்னும்' என்றது, கீழ் எ - ஆம் கவியை நோக்கிய இறந்ததுதழுவிய எச்சவும்மை. தாவரு - தாவிவருஎன்பதன் தொகுத்தல். மேவரு என்பதில், மேவு என்ற வினைப்பகுதியும் வா என்ற துணைவினையும் சேர்ந்து ஒருசொல் தன்மையுற்ற மேவா - பகுதி. போதும்,உம்மை-உயர்வுசிறப்பு. இல் + முன் = முன்றில்: சொல்நிலைமாறிய இலக்கணப்போலி. சமர்-ஸமரம் என்றவடசொல்லின் விகாரம். (உக)

உஉ.—(இ - ள்.) இடிம்பனை-இடிம்பனென்னும் அரக்கனையும்,பகனை-பகாசுரனையும், வை வேல் இகல் சராசந்தன்தன்னை - கூர்மையான வேலாயுதத்தையுடைய (பகையழிக்கும்) வலிமையுள்ள சராசந்தனையும், நெடும் பணை புயத்தால் வென்று - நீண்ட பருத்துள்ள (தனது) தோள்வலிமையினால்(போர்செய்து கொன்று)வெற்றிபெற்ற, நிகர் இலா வீமன் - ஒப்பில்லாத (வீரனாகிய) வீமசேனன், நிற்க - (தருமபுத்திரனுக்குச்) சகாயமாக இருக்கும்போது, கடும் படை பெருமையால் வெல் காணல் ஆம் என்பது ஆயின் - 'கொடிய படைகளின் வலிமையைக்கொண்டு (தருமபுத்திரனைப்) புறங்கொடுத்தோடும்படிசெய்தல் கூடும்' என்று சொன்னால், (அவ்வாறு [illegible]) [illegible] தொடும் தட கை வீரர்க்கு-ஆயுதமேந்தியபெரியகைகளையுடைய [illegible], உத்தரம் சொல்லல் ஆமோ-(எம்மால்)மறுமொழி சொல்லக்கூடுமோ? (எ - று.)—அவ்வார்த்தை சிறிதும் தகுதியன்று [illegible] [illegible] கூறவும் ஒண்ணாது [illegible].

[illegible] இடிம்பனைக்கொன்ற வரலாறு—வீமன் அரக்கு [illegible] [illegible] பிராமணர்களையும் [illegible]
[illegible]

கொணரும்படி இடிம்பனென்னும் அரக்கனால் அனுப்பப்பட்ட அவன் தங்கையான இடிம்பியென்னும் அரக்கி அருகில்வந்து வீமனைக்கண்டவளவிலே, அவன்மீது மோகங்கொண்டு அவனோடு ஆசைவார்த்தை பேசிக்கொண்டிருக்க, அதுகண்டு கோபித்து வந்த இடிம்பன் கடுஞ்சொற்கூறி வீமனுடன் வலியப்போர்தொடங்க, வீமன், தனதுவலிமையால் இடிம்பனைக்கொன்று தொலைத்தன னென்பது.

பகனைக் கொன்ற கதை:—வியாசமுனிவர் நியமித்தபடியே பாண்டவர்கள் அந்தணவடிவுகொண்டு வேத்திரகீயமென்னுமூர்க்கு விருந்தினராய்ச் சென்று அங்கு ஓரந்தணன்மனையிலிருக்கும் நாட்களில் ஒருநாள் அவ்வீட்டுப்பார்ப்பனி புலம்பலுற்றாள்: அதற்குக்காரணமென்னவென்று குந்தி விசாரிக்க, அவள் சொல்வாள்:—'இவ்வூர்க்குஅருகிலுள்ள வனத்தில் வசிக்கிற பகனென்னுங் கொடிய அரக்கன் ஒருகாலத்தில் இவ்வூரினுள்வந்து பலரையும் ஒருங்கேகொன்று தின்னத்தொடங்குகையில் இவ்வூரார் அஞ்சி ஆலோசித்து 'நாங்களே நாளுக்குஒருவீடாக முறைவட்டம் ஏற்படுத்திக்கொண்டு ஒருவண்டிச்சோற்றையும் ஓர்ஆளையும் உனக்கு உணவாக இட்டுவருகிறோம்; நீ எங்களை ஒருங்கே கொல்லாதே' என்று கூறி, அவனைச் சிறிதுசாந்தப்படுத்தினர்; அதுமுதல் அவ்வாறேநடந்துவருகிறது; இன்றைக்கு என்வீட்டுமுறை; என்மகனையாவது கணவனையாவது இன்று இழப்பதைநோக்கி இரங்குகிறேன்' என்று சொன்ன அவ்வீட்டுக்காரிவார்த்தையைக் கேட்டவுடனே, குந்தி 'என்மக்களைவருள் வலியனான இரண்டாமவனை இன்றைப் பலிக்கென்று செலுத்தினால் அவன் அரக்கனைக்கொன்று மீள்வன்' என்று கூறி அவள்சோகத்தைஆற்றினாள்; அவ்வாறே வண்டிச்சோற்றுடனே வனத்தைநோக்கிப்புறப்பட்ட வீமன் சிறிதுதாமதமாகச்சென்று பகனைக்கண்டு உடனே அச்சோறுமுழுவதையும் உண்டுவிட, அதுகண்டு பெருங்கோபங்கொண்ட பகன் எதிர்த்துப்போர்தொடங்க, வீமன் மற்போர்செய்து பகனைக்கொன்றொழித்து ஊர்க்கு மீண்டுவந்தன னென்பது.

மகததேசத்தரசனும் தேவர்கட்குப் பகைவனுமாகிய பிருகத்ரதனென்பவன் மைந்தனில்லாக்குறையால் வனத்திற்சென்று சண்டகௌசிகமகாமுனிவனை வணங்கி வரம்வேண்ட, அவன் தனதுவாசஸ்தானமாகவிருக்கும் மாமரத்தின் கனியொன்றைக் கொடுக்க, அதனை அவ்வரசன் காசிதேசத்தரசன்பெண்களாகிய தன்மனைவியரிருவர்க்கும் பகிர்ந்துகொடுத்தான்; அதனால், அவ்விருவரிடத்தும் பாதிபாதியாகக் குழந்தை பிறந்தது. அவற்றை அவன் ஊர்ப்புறத்தி லெறிந்துவிடும்படி கட்டளையிட,அங்ஙனம்எறியப்பட்ட அப்பிளவுகளை அந்தக்கிராமதேவதையாகிய ஜரையென்பவள் இரவில்ஊர்வலம்வருகையிற் கண்டு எடுத்துப் பொருத்திப் பிழைப்பித்து, தன்னாற் பொருத்தப்பட்ட காரணத்தால் 'ஜராஸந்தன்' என்று பெயரிட்டு வளர்க்கும்படி அக்குழந்தையைத் தந்தையினிடங்கொடுத்துப் போயினள். அங்ஙனம் வளர்ந்த ஜராசந்தன் அந்நாட்டில் கிரிவ்ரஜமென்னும் நகரத்தில் அரசாண்டு செருக்குக்கொண்டு பற்பல அரசர்களைப் போரிற் கொன்று அனேக அரசர்களை வென்று சிறையில் வைத்திருந்தான். தருமபுத்திரர் ராஜசூயயாகஞ் செய்யத்தொடங்கியபோது வீமனைக்கொண்டு சராசந்தனைக்கொல்லக்கருதிக் கண்ணன் வீமனுடனும் அருச்சுனனுடனும் அந்தணவடிவங்கொண்டு கிரிவிரசநகரஞ்சேர்ந்து சராசந்தனைக்கிட்ட, அவன் இவர்களை யாவரென்று வினவுகையில், தாங்கள் இன்னாரென்பதையும் அந்தணராய்வந்தகாரணத்தையும் கண்ணன் சராசந்தனுக்குஎடுத்துக்கூற, அது கேட்டுச் சராசந்தன் கண்ணனையும் அருச்சுனனையும் விட்டு வீமனை வலியப் போர்க்கு அழைக்க,அவ்விருவரும் வெகுநேரம் மற்போர்புரிகையில் வீமன் சராசந்தனைக் கிழித்தெறிய, அவ்வுடற்பிளவுகள் மீண்டும் ஒன்றுசேர்ந்து

சொல்லியபோது; மீண்டும் அவனை வீமன் கிழித்துச் சல்லியன்குறிப்பித்த படியே அவ்விட்டற்பிளவுகளை மாறி இட்டுக் கொன்றனனென்பது, சராசந்தனைக்கொன்ற சரித்திரம்.

[illegible] - கூர்மையுணர்த்தும்உரிச்சொல். மூன்றாம்அடியில், படையென்பது-இரட்டுறமொழிதலால், சேனையையும் ஆயுததத்தையுங் குறிக்கும். (உஉ)

உரை.—(இ - ள்.) துப்பு உறழ் அமுதம் செம் வாய் திரௌபதி - பவழத்தையொத்ததும் அமுதம்போலினியதுமாகிய சிவந்த வாயையுடைய திரௌபதியினது, துணை தோள்-இரண்டுதோள்களையும், வேட்டு-(தழுவ) விரும்பி, காவலர்-அரசர்கள், கை படு சிலையினோடும்-கையிற்பிடித்த வில்லுடனே, கலங்கி வீழ - (யந்திரத்தை யறுத்துவீழ்த்தமுடியாமல்) மனங்கலங்கிக்கிடக்கையில்,—விசயன் - அருச்சுனன், மெய் படு முனி ஆய் வந்து - உண்மையான பிராமணவேடத்தோடு வந்து, வில் இறுத்த போதும் - வில்வளைத்து (அம்பெய்து இலக்கை)அறுத்துத்தள்ளிய காலத்திலும், இ பொழுது இருந்த வீரர் யாவரும் - இப்பொழுது இங்கே கூட்டங்கூடியுள்ள வீரராகிய நாமெல்லோரும், இருந்திலேமோ - (இலக்கைவீழ்த்தமுடியாத அரசர்களுள் ஒருவராக) இருந்தோமன்றோ! (எ - று.)

வலிமையிலும் கொடுமையிலும் மிக்கவர்களான இடிம்பன் முதலியோரை வென்றவீமனும்,திரௌபதிகலியாணகாலத்திலே பிறரால்வீழ்த்தமுடியாதமத்ஸ்யயந்திரத்தை எளிதில்வீழ்த்தியவனான அருச்சுனனும் துணையாயிருப்பதால் தருமனைவெல்லுதல் முடியா தென்பது,சகுனியின்கருத்து. இவ்விரண்டு செய்யுள்களாலும், தனித்தனியே வீம அருச்சுனரது சிறப்பையெடுத்துக்கூறி, கர்ணனாலும் தருமனைவெல்லமுடியா தென்று எடுத்துக்காட்டினனென்க.

பாண்டவர்கள் பிராமணவடிவங்கொண்டு வேத்திரகீயத்தில்வாழ்கையில் திரௌபதியின் சுயம்வரத்தைக் கேள்விப்பட்டுச் சென்ற அவ்வூர்அந்தணரோடு தாமும் சென்று பாஞ்சாலராஜதானியிற் சுயம்வரசபையைச்சேர்ந்திருக்க,திட்டத்துய்மனென்பவன் 'இவ்வில்லைவளைத்து நாணேறிட்டு அம்புதொடுத்து அதனால் இந்தயந்திரசக்கரத்திலுள்ள குறியை எய்துவீழ்த்துபவனே என்தங்கைக்குக் கணவனாவன்' என்று சொல்ல, அரசர்களனைவரும் அங்ஙனமே முயன்று செய்யமாட்டாமற் போயினபின்பு, அந்தணவடிவத்தோடிருந்த அருச்சுனன் திட்டத்துய்மனைநோக்கி 'அரசரன்றி அந்தணரில் யாரேனுங் குறியெய்தால் அவனுக்குப் பாஞ்சாலி மாலைசூட்டுவளோ?' என்று வினவியதற்கு, அவன் 'சூட்டுவள்' என்றனனாக, உடனே அருச்சுனன்வில்லையெடுத்து இலக்கையெய்தலும்,திரௌபதி அவ்வருச்சுனனுக்கு மாலைசூட்ட, அதுகண்டு பொறாமைகொண்ட துரியோதனனாதியர்கண்டதனால் அரசர்களெல்லாரும் எதிர்த்துப் போர்செய்ய, அருச்சுனன் அவர்களனைவரையும் வென்றனனென்ற வரலாறு, இங்கு அறியத்தக்கது. பார்ப்பவர்கள் 'இவன் முனிவனே' என்று நம்பும்படியாக இருந்ததென்பார் 'மெய்ப்படுமுனி' என்றார். இனி, வாய்மைபேசுதல் பொருந்திய முனி எனினுமாம்.

[illegible] திரௌபதி - த்ருபதனது மகளெனப் பொருள்படும் வடமொழித்தத்திதாந்தநாமம்: துருபதன் - பாஞ்சாலதேசத்தரசன். துணைத்தோள் - ஒன்றோடொன்று ஒத்த தோளுமாம்.

[illegible] விசயன் - விஜயன் என்னும் வடமொழியின் திரிபு; இதற்கு விசேஷமான வெற்றியை யுடையவ னென்று பொருள். இராசசூயயாகத்திற்காக [illegible] சென்று பலஅரசர்களை வென்றது முதலிய வெற்றியால், இவ [illegible] அமைந்தது. இனி, விஜயன் - தன்னைச் [illegible] [illegible] பொருளையுடைய [illegible] பெற்றியபடையா [illegible]

யினுத் புரசி வென்னோச், செயித்தவரிலாதபண்பால் விசயனுசாமஞ்செய் தார்'' என்றுர், நல்லாப்பிள்ளைபாரதத்தும். போதும், உம்மை - எதிரது தழுவியது. யாவரும் இருந்திலேம் - தன்மையிற்படர்க்கைவந்த இடவழு வமைதி. இருந்திலேம் - எதிர்மறை யிறந்தகாலத் தன்மைப்பன்மை வினை முற்று. ஓகாரம் - வினுவகையால், எதிர்மறைகுறித்தது. வேட்டு, வேள் - பகுதி.

உ௪.—(இ - ள்.) இ பிறப்பு ஒழிய - இந்தப்பிறப்பில் வெல்லமுடியா தென்ற மாத்திரமே யல்லாமல், இன்னும் எழ் எழு பிறப்பினுலும் - இன்னும் ஏழேழு (பிறப்புக்கள் பிறந்தால் அப்) பிறவிகளிலும், மெய்ப்பு இறப்பு அற்ற நீதி தருமனை - மெய்பேசுதலினின்று சிறிதுந்தவறுதலில்லாத நியாய வழியில்நடக்கின்ற தருமபுத்திரனை, வெல்லமாட்டோம் - வெல்லும்வல்லமை யுடையோ மல்லோம் [நம்மால் வெல்லமுடியா தென்றபடி]; ஒப்பு அற பணைத்த தோளாய் - (தமக்குச்) சமானமில்லாதபடி பருத்திருக்கின்ற தோள் களையுடையவனுன தூரியோதனனே! எங்கு எனும் ஒன்று உபாயத்தினுல் - ஏதேனும்ஒருபாயஞ்செய்து அதனுல், (அத்தருமனை), தப்புஅற - தப்பவொட் டாதபடி, சூது கொண்டு சதிப்பதே - சூதாட்டத்தைக்கொண்டு அழிப்பதே, கருமம் - (இப்பொழுது) செய்யவேண்டுவ காரியம், என்றுன் - என்றுகூறி முடித்தான், (சகுனி); (எ - று.)

தருமபுத்திரன் தெய்வவலிமையுடையனுதலால் அவனைப் போரில்வெல் லுதல் அருமையானது; அவன் எப்பொழுதும் நியாயத்திற்குக்கட்டுப்பட்டு நேர்மையான வழியிலேயே நடப்பவ னுதலால், அவனுக்குத்தெரியாத சூது வழியைக்கொண்டே அவனைச்சயிக்கவேண்டுமெனச்சகுனிகூறினனென்க. எழ்எழு - உம்மைத்தொகையானுல் பதினுன்கும், பண்புத்தொகையானுல் நாற்பத்தொன்பதுமாம். 'ஏழேழுபிறப்பினுலும்' என்றது - பலபிறப்புக்கள் எடுத்தாலும்என்றபடி; இனி, (வினைப்பயன்தொடர்கிற) எழுமையினையுடைய எழுவகைப்பிறப்புக்களிலும் எனினுமாம். எழுபிறப்பாவன - தேவர், மனிதர், நீர்வாழ்வன, ஊர்வன, பறவை, விலங்கு, தாவரம் என்பவை. எழுபிறப்பு - பண் புத்தொகை. வினைத்தொகையாக்கி, எழுவகையாகத் தோன்றும்பிறப்புஎன் றும் பொருள்கூறலாம்.

இப்பிறப்பொழியஇன்னும் ஏழேழுபிறப்பினுலும் - உலகவழக்குநவிற்சி யணி. மெய்ப்பு - மெய்என்ற வினைததன்மையடைந்தபகுதியி னடியாகப் பிறந்த தொழிற்பெயர். இறப்பு - கடத்தல். 'மெய்ப்பிறப்புற்ற' என்றுபாடம் - மெய்யையேபேசுகின்ற பிறப்பை யடைந்துள்ள என்று பொருள்படும்; 'சத் தியவிரதன்' என்பது, தருமபுத்திரனுக்கு ஒருபெயர். இரண்டாமடியில், மெ ய்ம்மையே வெற்றிக்குக் காரண மென்பது தொனிக்குமாறு அறிக. (௨௪)

[துச்சாதனன் சகுனியின்வார்த்தைக்கு உடன்பட்டுக் கூறல்.]

உரு.—(இ - ள்.) தன் பெரு மாமன் சொல்ல - தனது சிறந்தமாமனு கிய சகுனி இவ்வாறுசொல்ல,—(கேட்டு),—தாணியன் தம்பிதானும் - துரி யோதனராஜனது தம்பியாகிய துச்சாதனனும்,—'அவர்கள் - அப்பாண்டவர் கள், வல் பெருஞ் சேனைகொண்டு மலைவதற்கு - வலிமையுள்ள சேனைகளைக் கொண்டு போர்புரிதற்கு, அஞ்சார் - சிறிதும் பயப்படமாட்டார்கள்; (ஆகை யால்), இன் பெரு நேயம் மிக்க இவன் மொழிபடியே - (நம்பிடத்து) இனி மையான மிக்கஅன்புகொண்டுள்ள இந்தநல்லம்மானது வார்த்தையின்படி யே, மாயம் புல்பெருஞ்சூதுகொண்டு பொருவதே - வஞ்சனையுள்ள இழிவான பெரிய சூதாட்டத்தினுற் சயிப்பதே, யுக்தி - (இப்பொழுதுசெய்யவேண்டிய) தகுதியான காரியம்,' என்றுன் - என்றுகூறினுன்; (எ - று.)

இப்பொழுதே படையெடுத்துச்சென்று தருமனை வெல்லவேண்டு மென்று முன்பு கூறிய துச்சாதனன் சகுனியின்வார்த்தையைக் கேட்ட பின்பு 'தருமனைப் போரினுல்வெல்ல [illegible]' என்றுரைத்ததுசொல்லி

[illegible] தைக்குஇணங்கிச் சூதாடிவதே எளிதில் வெல்வத்தற்கு [illegible] கூறின னென்க. பகைவருடைய செல்வத்தை எளிதிற் [illegible] சிறந்தஉபாயமா யிருத்தலால், 'பெருஞ்சூது' என்றான். 'புல்' [illegible] இடைமொழி, சூதின் இழிவை விளக்கும். புந்தி - புத்தி என்பதன் மெலித்தல். (உ௫)

[பாண்டவரைச் சூதில்வெல்லும் வகையைக்குறித்துத் துரியோதனன் சகுனியை வினவுதல்.]

உ௬.—(இ - ள்.) கோ மகன் - திருதராஷ்டிரராஜனது புதல்வனாகிய துரியோதனன்,—நெஞ்சும் நாவும் குளிர்ந்து - (தனது) மனமும் நாக்கும் குளிரப்பெற்று, பேர் உவகை கூர்ந்து - மிகவும்சந்தோஷம் அதிகரிக்கப் பெற்று,—மாமனை - (தனது) மாமனாகிய அசசகுனியை (நோக்கி), 'தவிசின்கண்ணே வருதி - இந்தஆசனத்திலே வருவாயாக,' என்று - என்றுசொல்லி, இருத்திக்கொண்டு - (தனதுஆசனத்தில் தன்னுடன் ஒருசேர) இருக்கவைத்துக்கொண்டு,—'பா மரு பனுவல் மாலை பாண்டவர்தம்மை - (பாவலர்கள்பாடிய) பாட்டுக்களின் வடிவமாக அமைந்துள்ள பிரபந்தங்களாகிய மாலைகளைச் சூடிய பாண்டவர்களை, நின் கை காமரு சூதால் வெல்லும் - உனதுகையாலாடுகின்ற அழகியசூதாட்டத்தினாற் சயித்தற்குஉரிய, கருத்து - ஆலோசனையை, எனக்கு உரைத்தி - எனக்குச் சொல்வாய்,' என்றான் என்றுகூறிவேண்டினான்; (எ - று.)

'பாண்டவர்களை வெல்வது எவ்வாறு?' என்று பெருங்கவலைகொண்டிருந்த துரியோதனன், சூதாட்டத்தினாற் பாண்டவர்களை வென்றுவிடலாமென்ற சகுனியின்வார்த்தையைக் கேட்டவுடனே வெல்லும்வழி யேற்பட்டதனால் ஒருவாறுதேறி, தனக்குஅவனிடம்உண்டான மகிழ்ச்சி தோன்ற அவனைத் தனதுஆசனத்தில் இருக்கவைத்துக்கொண்டு, 'நாம் எளிதில் வெல்லுதற்கு உரிய சூதை யாடும்படி பாண்டவர்களைத் தூண்டும் உபாயம் யாது?' என்று ஆலோசித்துக்கூறுமாறு அசசகுனியையே வேண்டினனென்க. தான் ராஜசூயயாகத்திற்குச்சென்றபோது அங்குத் தருமபுத்திரனது செல்வச்சிறப்பைக் கண்டதனாலும், வீமன்முதலியோர் தன்னைப்பரிகசித்ததனாலும், அதுமுதற்பொறாமையும் கோபமுங்கொண்டு நெஞ்சுலர்ந்து நாக்குவறள வருந்துகின்ற துரியோதனன், சகுனியின்வார்த்தைகேட்டபின்பு, இனி, அப்பாண்டவர்களை வெல்லலாமென்ற எண்ணத்தினால் அக்கவலை [illegible]றிதுமாற, நெஞ்சும்நாவுங் குளிரப்பெற்றனனென்க. நீயேசூதாடவேண்டுமென்பான் 'நின்கைச்சூது' என்றும், சூதாட்டமே தனதுவெற்றிக்குக்காரணமாகுமென்றுநினைத்து 'காமருசூது' என்றும் கூறினான்.

கோமகன் - கோவினது மகனென்றால் ஆறும்வேற்றுமைத்தொகையும் கோவாகியமகனென்றால் இருபெயரொட்டுப்பண்புத்தொகையுமாம். குளிர்ந்து' என்றசினைவினை, 'என்றான்' என்னும் முதலின்வினையைக் கொண்டுமுடிந்தது; [நன் - வினை - உ௬.] காமர் - அழகு; உ - சாரியை; இனி, காமமருவுஎன்பதன் விகார மெனினுமாம். (உ௬)

[இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்; சகுனி தருமபுத்திரனைச் சூதாடுவிக்குமுபாயங் கூறுதல்.]

உ௭.—(இ - ள்.) மன்ன - (குருநாட்டுக்கு) அரசனே! (நீ),—நின் செல்வம் கோயில் - (உனது) செல்வச்சிறப்பையுடைய அரண்மனையில்,—தேவர் பிரான் உலகினுக்கும் இல்லை என்பது ஓர் பொற்பிற்று ஆக - தேவர்களுடைய சுவர்க்கலோகத்திலும் (இதனையொத்த மண்டபம்) இல்லையென்று [illegible]) சொல்லும்படியான ஒப்பற்ற அழகை யுடையதாகுமாறு, [illegible] - ஒருமண்டபத்தை,—சிற்பம் பன்னும் நூல் குன்றாமல்

தொழில் வினைஞர்தம்மால் - சிற்பத்தொழிலைக் கூறுஞ் சாஸ்திரங்களின் முறைமைக்குச் சிறிதும்மாறுபடாத பலவகைவேலைத்திறத்தில் வல்லவர்களான தொழிலாளிகளைக்கொண்டு, நல் நிலம் விரிவு உண்டாக சாலவே இயற்றுவிப்பாய் - மிக்க இடத்தின்பரப்பு அமையும்படி [மிகப்பெரிதாக] விரைவிற் செய்விப்பாய்; (எ - று.)

'தேவர்' என்பதை முதல்வேற்றுமையாகக்கொண்டு 'என்பது' என்றதனோடு இயைத்து, தேவர்களும் இம்மண்டபத்தைக் கண்டு நமதுசுவர்க்கலோகத்திலும் இதைப்போன்றமண்டபம் இல்லை யென்றுகூறும்படியாக என்று உரைகூறுவாருமுளர். நூல்பன்னு சிற்பம் என்றுகூட்டி யுரைப்பினுமாம். சில்பம் - வேலைத்திறம். தேவலோகத்திலுள்ள யாவும் பொன்னாயிருக்குமென்பது நூல்துணி பாதலால், அவ்வுலகம் 'பொன்னுலகு' எனப்படும். பொன்னுலகினுக்கு - உருபுமயக்கம். உம்மை - உயர்வுசிறப்பு. பொற்பிற்று - பொற்பு என்னும் பகுதியினடியாகப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். பல + தொழில்=பஃறொழில்; பலவென்பது பிறவாஅகரமேக, பின்புதனிக்குறிலின்பின் நின்ற நிலைமொழியீற்று லகரம் அல்வழியில் தகரம்வர ஆய்தமாகத் திரிந்தது; [நன் - உயிர் - ௨௦, மெய் - ௨௫.] இது ஆய்தக்குறுக்கம்; [நன் - எழுத்து - ௬௨.] மாத்திரை - கால்; [நன் - எழுத்து - ௬௪.] வினைஞர், ஞ் - பெயரிடைநிலை. நாளை - எதிர்காலக்குறிப்பதோரிடைச்சொல்; ஏ - பிரிநிலை. (௨௭)

௨௮.—(இ - ள்.) (மண்டபம்கட்டியபின்பு), 'மண்டபம் காண - (யான் புதிதாகக்கட்டுவித்த) மண்டபத்தைக் காணுமாறு, எம் முன் - எமது தமையனான தருமபுத்திரன், வருக - வரவேண்டும்,' என்று - என்றுசொல்லி, அழைத்து வந்தால் - (தூதர்கள்மூலமாக நீ அவனை இவ்வூர்க்கு) அழைத்துக் கொண்டுவந்தால்,—அ காவலர் - (அவ்வாறே மண்டபத்தைக்காணவேண்டுமென்று வரும்) அந்தப் பாண்டவர்கள், கண்டு கண் களித்து இருந்தபோதில் - அம்மண்டபத்தைத் தமதுகண்ணாரக் கண்டு மகிழ்ந்திருக்குஞ் சமயததில்,—'புண்டரம் விசாலம் நெற்றி புரவல - புண்டரமணிந்த விசாலமான நெற்றியையுடைய அரசனே! அண்டரும் விரும்பும் வல் சூது-தேவர்களும் (ஆடுதற்கு) விரும்புகிற வலிய சூதாட்டத்தை, பொழுது போக ஆடுதும் - பொழுதுபோக்காக ஆடுவோம்; வருக - (நீ) வருவாயாக,' என்பேம்- என்று (தருமனை நோக்கிச்) சொல்வோம்; (எ - று.)—மற்று - அசை.

பாண்டவர்களுள் மூத்தவனாய்ப் பிரதானனாயிருத்தல்பற்றி, 'எம்முன் வருக' என்று அழைக்கவேண்டுவ தாயிற்று; அவ்வொருவனை அழைக்கவே, அவன்தம்பியரான மற்றைநால்வரையும் அழைத்தலும் அடங்கும். 'எம்முன்' என்ற சொல் - மற்றவர்களையுங் குறிப்பது, உபலக்ஷணத்தின்பாற்படும். [உபலக்ஷணமாவது - ஒருசொல் தன் இனத்தையுங் காட்டுவது.] பாண்டவரைவரையும் 'காவலர்' என்றது, அரசகுலத்திற் பிறந்தவனென்க. மிக்கஅழகுடைய பொருளைக் கண்களாற்காணும்போது அக்கனங்காணுதல்பற்றி மனத்தில் நிகழும் மிக்கமகிழ்ச்சியை உபசாரவழக்காக அக்கண்களின்மே லேற்றி, 'கண்டு கண்களித்து' என்றார். புண்டரம்-புண்ட்ரம்என்ற வடசொல்லின் விகாரம்; நெற்றியில் குறுக்காகவேனும் நேராகவேனும் இடுங் குறி: குறுக்காக இடுங் குறி - திர்யக்புண்ட்ரம் எனவும், நேராகஇடுங் குறி - ஊர்த்துவபுண்ட்ரம் எனவும் சொல்லப்படும். மேல் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்தில், வியாசமாமுனிவனை "புண்டரநுதலினான்" என்பதுங் காண்க. இனி, புண்டரம் - இரேகை என்றுகொண்டு, உத்தமவிலக்கணமாகிய நல்வரைகளையுடைய பரந்த நெற்றி என்றும் உரைகூறலாம். புரவலன்-புரத்தலில் வல்லவன்; புரத்தல் - காத்தல். ஒவ்வொருவரும் தாம் செய்யுந் தொழிலைப் பாராட்டிக்கூறுதல் இயல்பாது

ளின் கருத்தின்படியே நடக்கின்றவ னென இகழ்ந்தவாறு. நீரான்-நீர்மை யென்றபண்புப்பெயரின்விகாரமான நீர் - பகுதி. துரியோதனன் 'இனிச் சூதாடி அவர்களது இராசசியத்தைக் கவர்வது திண்ணம்' என்று துணிந்துகொண்டு, பெற்றவன்போலவே மகிழ்ந்து பூரித்தன னென்க. ஏகாரங்கள்-பிரிநிலைப்பொருளன. நீரான் மார்புந் தோள்களும் பூரித்திட்டான் - உயர்திணைதொடர்ந்த சினைப்பெயர்கள் உயர்திணைமுடிபையேகொண்ட திணைவழுவமைதி; [நன் - பொது - உசு.] பூரிதல் - பருத்தல். (௩௦)

[துரியோதனன் சகுனியினுபாயத்தைச்சொல்ல, விதுரன் மாறுகூறத்தொடங்குதல்.]

௩௧.—(இ - ள்.) கொற்றம்-வெற்றியையுடையவையும், மல்லினால் உயர்ந்த - மற்போரினால் மேன்மைபெற்று விளங்குகின்றவையு மாகிய, பொன் தோள் - அழகிய தோள்களில், வலம்புரி மாலை - நஞ்சாவட்டைப்பூமாலையை யணிந்த, வேந்தன் - துரியோதனராஜன்,—வில்லினால் உயர்ந்த வென்றி விதுரனை - வில்வித்தையால் மேம்பாடடைந்தவனும் வெற்றியையுடையவனுமாகிய விதுரனை, நோக்கி - பார்த்து,—வல்லினால் உபாயம் செய்ய - சூதாட்டத்தினால்(தருமபுத்திரனது இராசசியத்தைத்)தந்திரமாகக் கவரும்படி, மாதுலன் உரைத்தது எல்லாம் - தன்மாமனாகிய சகுனி சொன்னதுமுழுவதையும், சொல்லினான்—; அவனும் - அவ்விதுரனும், கேட்டு—, சொல் எதிர் சொல்லல் உற்றான்-(அத்துரியோதனனது)வார்த்தைக்கு எதிர்மொழி கூறத்தொடங்கினான்; (எ - று.)—அதனை, அடுத்த மூன்றுகவிகளிற் காண்க.

"வெற்றிவிதுரன்கைவில்லிருக்க மேதினியில், மற்றவனை வெற்றிகொள்ளுமாறுண்டோ" என்னும்படி விதுரன் வில்தொழிலில் மிகத்தேர்ந்தவனாதலால், 'வில்லினாலுயர்ந்த வென்றி விதுரன்' என்றார்; "வில்விதுரன்" என்று பலவிடங்களிலும் பயிலும். அரசர்கட்குஉரிய போர்த்தொழிலைக் கைவிட்டு இழிதொழிலாகிய மாயச்சூதில் மனம்வைத்த துரியோதனனை 'கொற்ற மல்லினாலுயர்ந்த பொற்றோள் வேந்தன்'என்றது - பிறகுறிப்பின் பாற்பட்ட இகழ்ச்சி யென்னலாம். வலம்புரி - வலப்பக்கமான முறுக்கையுடைய இதழ்களையுடையது என நஞ்சாவட்டைக்குக் காரணக்குறி. நஞ்சாவட்டை, துரியோதனனுக்கு அடையாளப்பூமாலையாம். வல்-சூதாடு கருவி; அதனாலாகிய ஆட்டத்துக்கு ஆகுபெயர். மாதுலன் - தாயினுடன் பிறந்தவ னெனப்பொருள்படும் வடசொல். உரைத்ததெல்லாம்-ஒருமைப்பன்மைமயக்கம். 'சொல்லெதிர்சொல்லலுற்றான்' என்ற தொடர், இரட்டுறமொழிதலென்னும் உத்தியால்,சொல்லுக்கு மாறாக உத்தரஞ்சொல்லினானெனவும்பொருள்படும். எதிர்சொல்லுதல்-மறுமொழிகூறுதல்:[மறுமொழி-விடை, மாறானமொழி.] (௩௧)

[இதுமுதல் ஐந்துகவிகள்-ஒருதொடர்:
மூன்றுகவிகள்-விதுரன்வார்த்தை.]

௩௨.—(இ - ள்.) ஐய - ஐயனே! வையமும் - பூமியையும், அரசும் - அரசாட்சியையும், வாழ்வும் - செல்வவாழ்க்கையையும், வாங்குகை - (தரும புத்திரனிடத்திலிருந்து) கவர்ந்துகொள்வது, கருத்து ஆயின் - (உனது) எண்ணமானால், பொய் அடர் சூதுகொண்டு - பொய்ம்மைமிக்க சூதாட்டத்தினால், புன்மையின் கவர வேண்டாம் - தாழ்ந்தவழியாற் கவர்ந்துகொள்ள வேண்டா; (மற்றுக் கவர்தற்குத்தக்க உபாயம் எதுவென்றால்,—) [illegible] தைத - [illegible] திருதராட்டிரன், ஐவருக்கு [illegible] விட்டான் (வையமும் அரசும் வாழ்வும் [illegible]) [illegible]

வேண்டின தருவர் - (நீ) விரும்பியவையெல்லாவற்றையும் தந்திடுவோர்கள்; (எ - று.)— அன்றே - ஈற்றசை; தேற்றமுமாம்: அப்பொழுதே யென்றுங் கூறலாம்.

"சூது......வெம். பொய்யினுக்கருந்துணை புன்மைக்குஈன்றதாய்" என்பவாதலால், 'பொய்யடர்சூது' எனப்பட்டது. புன்மையின் கவர்தல் - வழியல்லாத பழிவழியாற் பெறுதல். மைந்தன்முறையாகின்ற துரியோதனனை விதுரன் 'ஐய' என்று விளித்தது, அன்புபற்றிய மரபுவழுவமைதி. வேண்டின - பலவின்பாற்பெயர். (௩௨)

௩௩.—(இ - ள்.) தந்தைதன் ஏவலாலே-(தமக்குப்) பெரியதந்தையாகிய திருதராட்டிரனது கட்டளையினால், தருமனும் தம்பிமாரும்—, இந்த மண் ஆடல் கைவிட்டு - இப்பூமியையரசாளுதலை விட்டிட்டு, எரி கெழு கானம் சேர்வர்-தீநிரம்பிய காட்டைச் சேர்வர்; வாழ்வு முழுதும் முந்துற நுமதே ஆகும் - (அப்பாண்டவர்களது) வாழ்க்கைகளெல்லாம் விரைவாக உங்களுடையதேயாகிவிடும்; எழுதும்-(ஆதலால், சூதைவிட்டுத் தந்தையைக்கொண்டு ஓலை) எழுதுவியுங்கள்; செம் பூ பைந் தொடை அரசர் கேட்டால்-(நீங்கள் அவ்வாறு எழுதுவித்து இராசியங்கொள்வதை) அழகிய பூக்களினால் தொடுக்கப்பட்ட புதிய மாலைகளை யணிந்த அரசர்கள் கேட்பாராயின், பாவமும் பழியும் ஆகா - பாவமும்பழியும் நேருமென்று கொள்ளப்படமாட்டா.

இராமபிரான்போலவே பாண்டவர்களும் தங்கட்குஉரியபொருளை யிழந்தாயினும் பித்ருவாக்யபரிபாலனஞ்செய்யுந் தன்மையுடையாரென்பது, முன்னிரண்டடியால் விளங்கிற்று. இங்ஙனங்கூறியதனால், தருமபுத்திரனுக்குஎழுதவேண்டியதிருமுகத்தில் பாண்டவர்கள் நாட்டைவிடுதலும்காட்டுக்குச்செல்லுதலும்குறிக்கவேண்டியவிஷயங்களெனக் குறிப்பித்தபடியாம். தருமபுத்திரன் மூத்தவனும் இயற்கையிற் பலநற்குணங்களையுடையவனுமாயிருத்தல்பற்றி, இராச்சியத்தைக்கொடுத்துவிட்டு அந்நாட்டிலேயேயிருந்தால் ஒருகால் ஜனங்கள் அத்தருமன்மீதுஅன்புகொண்டு அவனையே அரசனாகப் பாராட்டக்கூடு மாதலால், அதற்குச் சிறிதும் இடமில்லாதபடி நாட்டைத்துறந்து காட்டுக்குச் செல்லுதல் அவசியம்வேண்டுவ தாயிற்று. 'முழுதும்' என்பதற்கு - உங்கள்நாட்டோடு பாண்டவர்நாடுஞ்சேர்ந்து எல்லாம் என்றும் பொருள்கூறலாம். எழுதும் - எழுதுஎன்னும் பகுதியினடியாப் பிறந்த ஏவற்பன்மைவினைமுற்று. இனி, எழுதும்பைந்தொடை செம்பூந்தொடைஎனத் தனித்தனியியைத்து, எழுதும்-சித்திரவேலைசெய்யப்பட்ட, பைந்தொடை - பசும்பொன்னாற் செய்த ஆரங்களையும், செம் பூந் தொடை - அழகியமலர்களினால் தொடுக்கப்பட்ட மாலைகளையும், அணிந்த அரசரெனவும்; கவிகளால்எழுதப்படுகிற அழகிய மலர்மாலைபோலச் சிறந்த பாமாலையையுடைய அரசரெனவும் பொருள்கூறினும் பொருந்தும். சூதாடிக் கவர்தலினும் தந்தையின்ஓலைமூலமாகக்கவர்வது, குற்றமற்றவழி யென்பது, விதுரனது கருத்து.

ஆடல்—ஆள் - பகுதி, தல் - தொழிற்பெயர்விகுதி. கைவிட்டு, கை - தமிழுபசருக்கம். கானம் - கானகம் என்ற வடசொல்லின் சிதைவு. நுமது என்னும் ஒன்றன்பாற்பெயரில், நீர்என்பதன்திரிபாகிய 'நும்' - பகுதி. முழுது - எஞ்சாமைப்பொருள்பட வருவதோர் உரிச்சொல்; "முழுதென்கிளவி எஞ்சாப்பொருட்டே" என்பது, தொல்காப்பியம். பசுமை+தொடை=பைந்தொடை; ஈறுபோய் இடைநின்றஉயிர்மெய்யுங்கெட்டு முதலிலிருந்த அகரம் ஐகாரமாகி இனமெலி மிக்கது; [நன் - பத - ௬.] 'ஆகா' என்பதை'ஆகாது'என்பதன் விகாரமாகக் கொண்டு உரைகூறலுமாம். (௩௩)

௩௪.—(இ - ள்.) நெஞ்சம் தீயவர் - மனத்திற்குற்றமுள்ளவர்களாகிய நோர், தீதினால் - (தம்முடைய) இயற்கைத்தீயகுணத்தால், வரித்து -

விரும்பி, ஆடும் - ஆடுகின்ற, மாயம் சூதினால் - வஞ்சனையையுடைய சூதாட்டத்தினால், வென்று - (நீங்கள் பாண்டவர்களைச்) சயித்து, கொள்கை - (அவர்களது இராச்சியத்தைப்) பறித்துக்கொள்வது, தோற்றமும் புகழும் அன்று - பெருமைக்கும் புகழ்க்கும் காரணமாகாது; (அன்றியும்),—போதில் நான்முகனும் - தாமரைமலரில்வசிக்கின்ற பிரமனும, மாலும் - திருமாலும, புரி சடையவனும் - திரித்துவிட்ட சடையையுடையவனான சிவபிரானும், கேள்வி ஆதி நால் மறையும் - (எழுதாக்கிளவியாய்) உபதேசக்கிரமத்திலேவருகின்ற பழமையாகிய நான்குவேதங்களும், உள்ள அளவும் - இருக்கிறவரையிலும், இ வசை அருதே - (சூதாட்டத்தினாற்கவர்ந்தா ரென்கிற) இந்தப்பழி (உங்கட்கு) நீங்கவேமாட்டாது; (எ - று.)— ஈற்றுஏகாரம் - தேற்றம்.

ஒருநாளும்அழியாது எந்நாளும் பழி நிலைதநிருக்கு மென்பதற்கு 'திரிமூர்த்திகளும் வேதங்களும் உள்ளவளவும்' என்றான். நீதினால் வரித்து-கொடியவஞ்சனையினாற் கட்டுப்படுத்தி என்றலுமாம். மோசக்கருத்தினால் (பாண்டவர்களை) வரவழைத்து எனினுமாம். பிரமன்திருமாலின் நாபீகமலத்தில் தோன்றியவனும் நான்குதிசையையும்நோக்கிய நான்குமுகங்களையு முடையவனு மாதலால், 'போதினான்முகன்' எனப்பட்டான். மால் - (அடியார்கள் பக்கல்)அன்பு, (திருமகளிடதநுக்)காதல் இவற்றை யுடையவன். புரிசடைகட்டுதற்குஉரிய சடையுமாம். சிவபிரானது சடைமுடி, கபர்த்தமென்று பெயர்பெறும். ஆக்கல் அளிததல் அழித்தல் என்னும் முத்தொழிலின் முறைபற்றி, 'நான்முகனும் மாலும் சடையவனும்' என்று அடுக்கினார். ஸ்வரங்களையே பிரதானமாகக்கொண்டுள்ள வேதங்கள் எழுதிப்படிக்கமுடியாமல் குருசிஷ்யக்ரமத்திற் கேட்டோதியே யறியப்படுகின்ற முதனூ லாதலால், 'கேள்வியாதிநான்மறை' என்றார். ஆதி நான் மறை-லௌகிகசப்தங்கட்கெல்லாம் முதற்காரணமான வேதங்கள் எனினுமாம். நான்மறை - ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்பன; தைத்திரியம், பௌடியம், தலவகாரம், ஸாமம் என்றலு மொன்று. கேள்வி, கேள் - பகுதி, வி - விகுதி. வசை என்பதன் எதிர்மொழி - இசை. (ரு௭)

[இதுவும், அடுத்தகவியும் - கோபங்கொண்ட துரியோதனன் வார்த்தை.]

ரு௮.—(இ - ள்.) என்று - இவ்வாறாக, அவன் உரைப்ப - அவ்விதுரன் சொல்ல, கேட்டு—, (துரியோதனன்),—எரி எழு மனத்தன் ஆகி - (அவ்விதுரனது சொற்களாற்) கோபாக்கினி பற்றியெரிகிற மனமுடையவனாய், (அவ்விதுரனைநோக்கி), 'ஒன்றிய கேண்மை தந்தைக்கு - (இருதிறத்தாரிடத்திலும்)ஒத்த உறவுரிமையையுடைய தந்தையாகிய திருதராட்டிரனுக்கு, ஒருபுடை வாரம் உண்டோ - (எங்களிருதிறத்தாருள்) ஒருபக்கத்தில் பக்ஷபாதமாக அன்பு கொள்ளத்தக்கதோ? இன்று - இப்பொழுது, வல் திறல் மைந்தர் வாழ்வு -, மிக்கவலிமையையுடைய மைந்தர்களாகிய பாண்டவர்களுடைய செல்வத்தை, வாங்கி - (ஓலையெழுதிக்) கவர்ந்து, எமக்கு தந்தால் - எங்கட்குக் கொடுத்தால், புகல்வது - (அப்பொழுது யாவராலும்) சொல்லப்படுவது, புல் தொழில் வசையே அன்றி - இவ்விழிதொழிலினால்சேர்ந்த பழிப்பேயல்லாமல், புகழ்கொலோ - கீர்த்தியாமோ? (எ - று.)— அம்மா - அசைநிலை: பட்சபாதஞ்செய்தலின் கொடுமையைக்குறித்து வியந்தவாறுமாம்.

பாண்டவரை வருவித்துச் சூதாடிவென்று அவ்வழியில் அவர்களரசை [illegible] எமக்குஉரியதாக்குதல் பழிப்பில்லாத நேர்வழியாகுமே புன்றி; எங்க[illegible] [illegible]

தைப் பறித்துக்கொள்ளுதல் 'திருதராட்டிரன் பட்சபாதமாக ஒருதிறத்துப் புதல்வரிடத்தினின்று இராச்சியத்தைக் கவர்ந்து மற்றொருதிறத்துப்புதல்வர்க்குக்கொடுத்தான்' என்று உலகத்தார்கூறும் பெரும்பழிக்குக் காரணமாயிற்குமாதலால் அவ்வழி சிறிதுந்தகாதெனத் துரியோதனன் விதுரன் மொழியைமறுத்து இகழ்ந்து கூறியவாறு திருதராட்டிரன்,தன்மக்களாகிய துரியோதனுதியரிடத்துப்போலவே,மிக்கஇளமையிலேயேதமதுதந்தையை யிழந்தவர்களாகிய தன்தம்பிமக்களான பாண்டவரிடத்தும் ஒத்தஅன்பினனாதலால்,'ஒன்றிய கேண்மைத் தந்தை' எனப்பட்டான். துரியோதனுதியர் பாண்டவர்என்ற இருதிறத்தாரையும் ஒருநிகராகக்கருதாது ஒருதிறத்தாருடையஅரசவாழ்க்கையைப் பறித்து மற்றொருதிறத்தார்க்குக் கொடுத்தல் ஒருபுடைவாரமாதல் காண்க. ஒருபுடைவாரம் - பக்ஷபாதம்.

எரி - கோபத்திற்கு இலக்கணை. வல்,திறல் - ஒருபொருட்பன்மொழி. வாழ்வு-காரியவாகுபெயர். 'எமக்கு'—தம்பியரையுங்கூட்டிய உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. புகழ்கொல்லு.கொல் வினைப்பொருளையுணர்த்தியதனால், ஓகாரம் - அசைநிலை. (௩௫)

௩௬.—(இ - ள்.) நினக்கு - உனக்கு, இது - இவ்வாறு பக்ஷபாதமாகச் சொல்வதே, தொழில் - தொழிலாகும்; என்றும் - எப்பொழுதும்,நேயமும்-அன்பும், அவர்கள்மேலே-அப்பாண்டவர்களிடத்திலேயேயாகும்; யான்—, 'நீ எனக்கு உயிர் தந்தை என்று - 'நீ எனக்கு உயிர்க்கொப்பானதந்தையாவாய்' என்றுநினைதது,—உனை - உன்னை, மகிழ்ந்து காண்பன் - மகிழ்ச்சி பாராட்டி (அன்போடு) நோக்குவேன்; (இவ்வாறு நான் நின்னிடத்து அன்பு கொண்டிருக்கவும்),—உனக்கும்—, உன் கிளைக்கும் - உன்னுடைய சுற்றத்தார்கட்கும், நாளும்-நாள்தோறும்,உண்டியும் - உணவும், வாழ்வும்-இனிதாக வாழ்தலும், இங்கே-இவ்விடத்திலே: மனம் கருத்து - மனத்திற்கொள்ளும் (அன்பான)எண்ணமோ, அங்கே - அப்பாண்டவர்களிடத்திலேயாகும்,என்றான்-என்று கூறினன்:(யாவனெனில்,—)மாசுணம் துவசன்-பாம்புக்கொடியையுடையவனாகிய துரியோதனன்; (எ - று.)—ஆல் - அசை; தேற்றமுமாம். மாது, ஓ - ஈற்றசைகள்.

நீ எங்களிடத்திலே உணவும் வாழ்க்கையும் பெற்றிருந்தும், எங்கட்கு அநுகூலமாகப்பேசாமல் எங்களைப்பழித்தும் எதிரிகளான பாண்டவர்களைப் புகழ்ந்தும் நாங்கள் தொடங்கிய காரியத்தை நிறைவேறவொட்டாது தடைசெய்து உண்டவீட்டுக்கு இரண்டகம்நினைத்துப் பேசுவது எமக்குத் தந்தையாகிய உனக்குச் சிறிதுந் தகுதியன்று எனத் துரியோதனன் விதுரனைப் பழித்துக்கூறியவாறு விதுரன் இராச்சியத்தைச் சூதாட்டத்தினுற் கைப்பற்றலாகாதென்று தடுத்துக்கூறியதோடு நில்லாமல் இராச்சியத்தை வேறுவகையாகக் கைக்கொள்ளுமாறு உபாயங்கூறியிருக்கவும் துரியோதனன் அவனை இவ்வாறு பழித்துக்கூறியது,தான் செய்யத்தொடங்கிய காரியத்தை மேன்மேலும்உத்ஸாஹத்தோடுசெய்துமுடிக்கவொட்டாதபடிதடுத்தற்கு விதுரன் ஒருவியாஜமாகக் கூறியதேயன்றித் தன்னிடத்து உள்ளுர அன்பினுற்கூறியதன் றென்று அதனைக் கருதியதனு லென்க. இங்குத் துரியோதனனை 'மாசுணத்துவசன்' என்றது - பாம்புக்குஉதவும் பால் விஷமேயாவதுபோலத் துரியோதனனுக்குவிதுரன்செய்தஉபதேசம் நல்லறிவுஉண்டாதற்குக்காரணமாகாமல் கோபத்தினுல்தீயறிவுஉண்டாதற்கே காரணமாயிற்று என்ற பொருளைத் தொனிப்பிக்கும்.

என்றும், நாளும்—உம்மைகள்-முற்றுப்பொருளன. நேயமும், உம்மை-எச்சப்பொருளது. மற்றவை - எண்ணுப்பொருளன. மரத்தைக்கிளைகள் போல ஒருவரைத் தழுவிநிற்றலால், உறவினர்க்கு 'கிளை' என்றது-உவமையாகுபெயர். உண்டி - உண்ணப்படுவது; உண் - பகுதி; டு - சாரியை, இ - செயப்படுபொருள்விகுதி. (௩௬)

[இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்; விதுரன் சினந்தோடு துரியோதனனுக்கு நல்லறிவுகூறுதல்.]

௩எ.—(இ - ள்.) அங்கு - அப்பொழுது, மைந்தன் - (தனக்கு) மைந்தன்முறையாகின்ற துரியோதனன், உரைத்த-சொல்லிய, மாற்றம்-மாறான வார்த்தை, மனத்தினை ஈர - (தன்) மனத்தை வருத்த,—வெம் திறல் விதுரன் - மிக்கவலிமையுள்ளவனாகிய விதுரன், உற்று - மனம்பொருந்தி, பின்னும் விளம்புவன் - மற்றும் கூறுவானாயினான்:—புந்தியில் மறு இலாதோய்-மனத்திற் குற்றமற்றவனான துரியோதனனே! (நீ),—'தந்தையர்க்கு - தமப்பன்முறையில் விருப்பவர்க்கு, புதல்வரில் - (இருதிறத்துப்)புதல்வர்களுள், ஒருசார் - ஒருதிறத்தாரிடத்து, அன்பு -, இல்லை—,' என்றாய் - என்று சொன்னாய்; யானும் - நானும், அ தந்தை அன்றோ - அவ்வாறே (நும்இருதிறத்தார்க்கும்) தந்தைமுறையாகுபவனன்றோ! (எ - று.)

நீ "தந்தைக்குஒருபுடைவாரமுண்டோ" என்று கூறியது எனக்கும் ஒக்கு மாதலால், யானும் பக்ஷபாதமாகக் கூறமாட்டேனென்று கொள்ள வேண்டியதாயிருக்க, என்னைமாத்திரம் 'நேயமும் அவர்கள்மேலே; மனக்கருத்துஅங்கே' என இவ்வாறு பழித்துக்கூறுவது, உனதுவார்த்தைக்கே முன்னும் பின்னும் மாறுகின்றது என விதுரன் துரியோதனனுக்குஎடுத்துக்காட்டியபடி. இதனால், விதுரன் தான் பக்ஷபாதமாகக்கூற வகையில்லையெனச் சாதித்தவாறு காண்க. தன்மனம்வருந்துமாறு துரியோதனன் பலபடிசொல்லவும் அதனைப்பொறுத்து அத்துரியோதனனுக்கு மீளவும் நன்மைஉபதேசிக்கத்தொடங்கிய விதுரனது மனவுறுதியுடைமையைப் பாராட்டிக்கூறுவார், 'வெந்திறல்விதுரன்' என்றார்.

ஈர்தல்-அறுத்தல், பிளத்தல்;இலக்கணையால் வருத்துதலைக் குறித்தது. அன்றி, மனமாகிய மரத்தைக் கொடுஞ்சொற்களாகிய வாள் அறுக்கஎன்று கொண்டால், ஏகதேசவுருவகமாம். என்ப-ஈற்றசை; சீவகசிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியர் இவ்வாறே கூறியுள்ளார். விதுரன் துரியோதனனை 'புந்தியில்மறுவிலாதோய்' என விளித்தது, தந்தைமுறையாகின்ற தன்னைப் பழித்துக்கூறியதையும் மாறுபடக்கூறியதையும் பற்றிய இகழ்ச்சிக்குறிப்பு: இது, எதிர்மறைஇலக்கணையெனவும், பிறகுறிப்புஎனவும் சொல்லப்படும். உனக்கு இவ்வகைத்தீக்குணம் சகவாசதோஷத்தால் வந்தது என்பது தோன்ற, 'புந்தியின்மறுவிலாதோய்' என விளித்ததுமாம். என்றாய்+யானும் = என்றாயானும்; "யாழுமுன்னர்"என்ற சூத்திரத்து'மேல்'என்ற மிகையால், தனிக்குறிலைச் சாராத யகரம், அல்வழியில் யகரம்வரக் கெட்டது. (௩எ)

௩அ.—(இ - ள்.) நீங்களும்—,அவரும் - அப்பாண்டவர்களும், என்றும் நேயம் நெறி முறை தவறாது - எப்பொழுதும் அன்பிற்குஉரிய வழியின் முறைமையில் தவறாமல் [மிக்கஅன்புகொண்டு], வாங்கு நீர் உததி ஆடை மண்ணின்மேல் வாழ்தல் உற்றால் - வளைவான [சூழ்ந்துள்ள] நீர்நிறைந்த சமுத்திரத்தை ஆடையாகக் கொண்டுள்ள இந்நிலவுலகத்தில் (ஒருமித்து) வாழ்ந்தால்,—பாங்கு அலா அரசர் எல்லாம்-(நும்மோடு) இணக்கங் கொண்டிராத [நும்மிடத்துப் பகைமைகொண்டுள்ள] அரசர்களெல்லாரும், பணிந்து - வணங்கி, நும் வாயில் நிற்பர் - உங்களுடைய (அருளைப்பெறுதற்காகத்) தலைவாசலிலே காத்துக்கொண்டிருப்பார்கள்; (உங்கட்கு),—ஓங்கிய - மிகவும் அதிகமான, புகழும் - கீர்த்தியும், வாழ்வும் - செல்வவாழ்க்கையும், ஒருப்பட - ஒருசேர, வளரும் - விருத்தியடையும்; (எ - று.)—அன்றே-ஈற்றசை; தேற்றமுமாம்.

இச்செய்யுள், ஒற்றுமையுடன்வாழ்தலா லுண்டாகும் நன்மையை எடுத்துக்காட்டியதாம். 'எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்' என்பது, பழமொழி. உற்றால் நிற்ப ரென இயையும்.

[illegible]வடசொல் - நீர் தங்குமிடம் எனக் காரணப்பொருள்படும். அது - 'நீர்' என முன்வந்ததனால், இங்குக் காரணக்கருதாது பெயர்மாத்திரமாய் நின்றது; "அடியளந்தான் தாஅயதெல்லாம்" என்றவிடத்துப் போல. பூமியைச்சூழ்ந்துள்ள கடலை, நிலமகளுடுத்த ஆடையாக உருவகப் படுத்திக் கூறுதல், கவிசமயம். பாங்கு - நண்புரிமை. இல்வாய்-வாயில் என இலக்கணப்போலி. 'நீங்கள்'—[நன்-உருபு-அ: உரையைக் காண்க.] (௩.அ)

௩௯.—'பொங்களிநிகழும்' என மூலத்தைத் திருத்திப்படிக்க.

(இ - ள்.) அவரும் - அப்பாண்டவர்களும், நீரும் - நீங்களும், உளம் பிரிந்து - மனம்வேறுபட்டு, உங்களின் எதிர்ந்தீர் ஆனால் - (குருகுலத்தவர்களாகிய) உங்களுள்ளே போர்புரிந்தீர்களானால்,—தெவ்வரும் - (உங்களுடைய) பகைவர்களும்,—'குருகுலம் தலைவர் - குருகுலத்தில்தோன்றிய அரசர்களாகிய பாண்டவர்களும் துரியோதனாதியர்களும், தங்களின் எதிர்ந்தார் - தங்களுக்குள்ளே மாறுபாடுகொண்டு போர்புரியலானார்கள்: அம்மா - ஆச்சரியம்!' என்று - என்றுசொல்லி,—பொங்கு அளி நிகழும் - களிப்புக்கொள்ளுகின்ற வண்டுகள் மொய்த்தற்கு இடமான, கஞ்சம் - தாமரைமலர்க்கு, புரவலன் - தலைவனாகிய சூரியனது, ஒழிவு - நீக்கத்தை, கண்ட—, திங்களின் - சந்திரனது, உயர்ச்சி போல - சிறந்த தோற்றம் போல, திகழ்வர் - விளங்குவார்கள்; (எ - று.)—அம்மாஎன்பது, மிக்க மனவொற்றுமையுடன் வாழவேண்டிய குருகுலவேந்தர் ஒற்றுமைகெட்டு மனம்மாறுபட்டுப் போர்க்கும் எழுந்த அதிசயத்தைப்பற்றிய வியப்பிடைச்சொல். அன்றே - தேற்றம்; ஈற்றசையுமாம்.

சூரியனுக்குமுன்னே ஒளிமழுங்கிக்கிடந்த சந்திரன் அச்சூரியன்மறைந்தசமயத்தில் மிக்கஒளியுடன் விளங்கித்தோன்றுமாறுபோல, குருகுலத்தவராகிய நீங்கள் மிக்கமனவொற்றுமையுடனிருந்தகாலத்து வலியடங்கிஒடுங்கிக்கிடந்த பகையரசர்கள் நீங்கள் ஒற்றுமையின்றிமாறுபாடுகொண்டு போர்புரிந்தால் 'இனி ஒற்றுமையிழந்த குருகுலத்தவரை எளிதில் வெல்லலாம்' என்ற கருத்தாற் செருக்குக்கொண்டு தலையெடுப்பர் என்று, ஒற்றுமையின்மையால் விளையுங் கேட்டை விளக்கியவாறு; உவமையணி.

கஞ்சம் = கஞ்ஜம்: நீரில் தோன்றுவது எனக் காரணப்பொருள்படும் வடசொல். கணவனைக் கண்டபோது முகமலர்ந்தும் பிரிந்தசமயத்தில் மனம்வருந்தியும் நிற்கும் பதிவிரதையான மனைவியைப் போல, சூரியனைக் காணுங் காலைவேளையில் மலர்ந்தும் சூரியன் காணப்படாமல்நிற்கும் இரவிலே குவிந்தும் நிற்பதால், தாமரைக்குச் சூரியனைத் தலைவனாகக் கூறுதல் கவிமரபு. தெவ் - பகைமை; அதனையுடையவர் - தெவ்வர். (௩௯)

௪0.—(இ - ள்.) ஆதலால் - ஒற்றுமையால் நன்மையும் ஒற்றுமையில்லாமையால் தீமையும் உண்டாவதால், (உனக்கு), உறுதி - நன்மையைத்தரத்தக்க செயலை, சொன்னேன்—; ஆம் முறை தெரிந்துகோடி - தகுதியான நல்லவழியைத் தெரிந்துகொள்வாயாக; இனி - இனிமேல், யானும்—, ஏதிலார் போல - யாதொரு சம்பந்தமுமில்லாதவர்கள் போலவே, உனக்கு—, யாதும் - ஒன்றையும், சொல்லேன்—; உனக்கு—, இங்கு - இப்பொழுது, தீது அலாது உணரா வஞ்சம் சிர்தையார் பரிந்து கூறும் சோறு அலாது - தீமையையேயன்றி (நன்மையைச் சிறிதும்) அறியாத வஞ்சனையுள்ள மனத்தையுடையாராகிய தீயோர் (உன்னிடத்து) அன்புகொண்டு கூறுகின்ற பயனில்லாதசொல் (உடன்பாடாகுமே) அல்லாமல், ஏலாது - (யான்கூறும் நன்மொழி உனக்கு) உடன்பாடாகத் தோன்றாது, என-என்று. சில - சிலவார்த்தைகளை, கூறினன் - (விதுரன்) [illegible]; (எ - று.)

[illegible]தீமைகளையாராய்ந்து கூறிய எனதாண்மொழிகளைக்கேட்டு [illegible]ல்வழியில் நடந்தால் உனக்கு நன்மையுண்டாகும் [illegible]

வுறுதிமொழியைக்கேளாது அவமதித்து நடந்தாயானும், பயனில்லாத அற்பமாகுசொல் உன்மனத்திற்கு ஏற்குமே யன்றிப் பயனுள்ளசொல் ஏலா தென்றகாரணத்தால், உறவுமுறையில்லாத சொதமலரைப்போல உபே கைகொண் டிருப்பேனே யன்றி இனி ஒன்றுங் கூறேன் என்று தனது மனக்கருத்தை விதுரன் வெளியிட்டன னென்க. இனி, ஏதிலார்போல என்பதற்கு—கெடுமதிகூறும் பகைவரைப்போல என்று பொருளுரைத்து, உனக்குத் தீயோர்கூறுங் கெடுமதி நன்மொழியாயும் யான்கூறும் உறுதி மொழி தீமொழியாயும் இருப்பதனால், யானும் நீ மனமுவந்து ஏற்றுக்கொள் ளுதற்குஉரிய கெடுமதியை யுரைப்பேனானால் பகைவரோடொத்தவனாவே னாதலால் அது கூறே னென்று விதுரன் சொல்லின னெனினும் அமை யும். “மன்னவர்செவியழன் மடுத்ததாமென, நன்னெறிதருவதோர் நடுவுநீதி யைச், சொன்னவரமைச்சர்கள் துணைவர் மேலையோர், ஒன்னலர் விழைத் தவா றுரைக்கின்றார்களே” என்ற கந்தபுராணம், இப்பொருளில் மேற்கோ ளாகத்தக்கது. கோது - அசாரம். ஆம் - ஆகும்என்னும் செய்யுமெனெச் சத்து ஈற்றுஉயிர்மெய் சென்றது. தெரிந்துகோடி என்னும் ஏவலொருமை முற்றில், தெரிந்துகொள் - பகுதி, இ - விகுதி, த் - எழுத்துப்பேறு, பகுதி முதல்நீண்டது - விகாரம், மற்றவை-சந்தி. உனக்கியாதும்-குற்றியலிகரம்.

[துரியோதனன் விதுரனைநோக்கிக்கூறிய நிஷ்டுரவார்த்தை.]

௬௧.—(இ - ள்.) செறுத்தவர் ஆவி கொள்வாய் - பகைமைகொண்ட வர்களின் உயிரைக் கவரும் வல்லமையுடைய விதுரனே! அறம் நிறுத்து வளர்ப்போன் நெஞ்சில் நீதியும் - தருமத்தை நிலைநிறுத்தி மேன்மேல்வள ரச்செய்பவனான தருமபுத்திரனுடைய மனத்தில் நீதியமைந்திருப்பதையும், குரவர் ஏவல் மறுத்து எதிர் உரைக்கும் என்பால் வடுவும் - பெரியோர்க ளுடைய கட்டளைப்பேச்சை மறுத்து எதிர்மொழி சொல்லுகின்ற என்னி டத்துக் குற்றம்நிறைந்திருப்பதையும், நீ—, வரைந்து கண்டாய் - வரையறு த்து அறிந்தாய்; அடியனேன் செய்தது எல்லாம் - (உனது) அடியனா கிய நான் செய்த பிழைகளெல்லாவற்றையும், பொறுத்தருள் - பொறுத் தருள்வாயாக', என்ன - என்றுசொல்லி, கையால் போற்றினன்-கைகூப்பி வணங்கி, முறுவல் செய்தான் - (பரிகாசக்குறிப்புத்தோன்றச்) சிரித்தான், (துரியோதனன்); (எ - று.)

இவ்வாறு துரியோதனன் விதுரனை மேம்படுத்திச் சொல்லி வணங்கி யது, பழித்தற்பொருளை விளக்கும். ஆகவே, இச்செய்யுள்-வஞ்சப்புகழ்ச்சி யணியின்பாற்படும். முறுவல் - சிரிப்பு; “எள்ள லிளமை பேதைமை மட னென்,றுள்ளப்பட்ட நகை நான்கென்ப”என்று தொல்காப்பியத்திற்கூறிய நகைவகை நான்கனுள், இது, எள்ளலாம்.(எள்ளல்-இகழ்ச்சி.)“ஓலைஐவருக்கு எழுதிவிட்டால், மெய்யுற மறுத்துச்சொல்லார்” என்றும் “தீதலா துணரார் வஞ்சச்சிந்தையார் பரிந்துகூறுங் கோதலா துனக்கிங்குஏலாது” என்றும் விதுரன் கூறியதனால், ‘நிறுத்தறம்வளர்ப்போன்நெஞ்சில் நீதியும் என்பால் வடுவும் வரைந்து கண்டாய்’ என்றான்.

கொள்வாய் என்பதில், வகரவிடைநிலை - காலங்காட்டாது, தன்மை யைவிளக்கும். செய்ததுஎல்லாம்-ஒருமைப்பன்மை மயக்கம். அடியனேன்- அடியன்என்னும் ஆண்பாற்பெயரின்மேல், ஏன்-தன்மையொருமைவிகுதி; அன் - சாரியை யெனினுமாம். நிறுத்து - சீர்தூக்கி, வரையறுத்து என்றலு மாம். வடு - மாறாத பெருங்குற்றத்துக்கு இலக்கணை. (௬௧)

[விதுரன் விலகிப்போதல்.]

௬௨.—(இ - ள்.) இகல் அரி ஏறு போல்வான் - வலிமையுள்ள ஆண் சிங்கத்தை யொத்தவனாகிய, [illegible] விதுரனும் - [illegible] தோளைப்பெற்ற [illegible] விது

னும்,—செழுந் திரு விரும்பும் மார்பன் செப்பிய கொடுமை கேட்டு - சிறந்த வீரலக்ஷ்மிவிரும்பிவசித்தற்குஇடமான மார்பையுடைய துரியோதனன்சொன்ன கொடுமையானவார்த்தைகளைக் கேட்டு,வெகுண்டு-கோபங்கொண்டு, முன்னி - சிறிதுஆலோசித்து,—தொழும் தகை மௌலி வேந்தன் சூழ்ச்சியிற்கு இசைவுஉறுமல்-(பலரால்) வணங்கப்படுகின்றமேம்பாட்டையுடையவனும் கிரீடத்தைத்தரித்தவனுமான துரியோதனராஜனது ஆலோசனைக்கு உடன்படாமலே, எழுந்து - எழுந்திருந்து, தன் கோயில் புக்கான் - தனது சிறந்தஇருகதக்குச சென்றுசேர்ந்தான்; (எ - று.)

துரியோதனன் மகாவீரனுதலால்'செழுந்திருவிரும்புமார்பன்' எனப்பட்டான்: உலகத்தில் அரசராய்த்தோன்றுகிறவர் யாவரும் காத்தற்றொழிற்கடவுளான திருமாலின் அம்சமாவரென்ற நூல்துணிபுபற்றி,ராஜராஜனுன துரியோதனனை'செழுந்திருவிரும்புமார்பன்'என்றதாகவுங் கொள்ளலாம். கொடுமை - மொழிகட்குப் பண்பாகுபெயர். முன்னி - முன்னென்றவினைப் பகுதியினடியாகப் பிறந்த இறந்தகாலவினையெச்சம். 'இகலரியேறுபோல்வான்' என்ற தொடர், கீழ் ௬-ஆஞ் செய்யுளில் துரியோதனனைக் குறித்து நின்றது. தொழும் தகை மௌலி வேந்தன்-(தன்னைக்)கைகூப்பிவணங்கிய தன்மையையுடைய வணங்காமுடிமன்னனுன துரியோதனனது எனினுமாம். சூழ்ச்சியிற்கு—இன் - சாரியை. (௬௨)

[துரியோதனன் மண்டபங்கட்டச் சொல்லுதல்.]

௬௩.—(இ - ள்.) புரிவு இலா மொழி விதுரன் போகலும் - (தனக்கு) விருப்பமில்லாத சொற்களைக் கூறிய விதுரன் அவ்விடத்தைவிட்டுச்சென்றவுடனே,—புரிவில் ஒன்றும் சரிவு இலா வஞ்சம் மாயம் சகுனியும்-(தனது) செய்தொழிலிற் சிறிதும் பின்வாங்குதலில்லாத மிக்கவஞ்சனையையுடைய சகுனியும், தம்பிமாரும் - (துச்சாதனன்முதலிய தனது) தம்பியரும், விரிவு இலா மனததோடு எண்ணும் - விசாலமின்றிச்சுருங்கிய மனத்தினுல் எண்ணுகின்ற, விசாரமே - ஆலோசனையே, விசாரம் ஆக - (அக்காலத்துக்குத் தக்க)ஆலோசனையாக முடிய, வரி விலான் - கட்டமைந்த வில்லையுடையவனுகிய துரியோதனன், 'ஈண்டு - இவ்விடத்தில், விரைவின் - விரைவிலே, ஓர் மண்டபம் சமைக்க-ஒருமண்டபததைக் கட்டியமைப்பீராக,' என்றான்-என்று (அசசபையில்வந்திருந்தஅரசர்கட்குக்) கட்டளையிட்டான்; (எ-று.)

புரிவுஇலாமொழி விதுரன் - மாறுபாடில்லாமல் [நேராகச]சொன்ன சொற்களையுடைய விதுரன் எனவும், புரிவில் ஒன்றும் சரிவுஇலா - (துரியோதனனிடத்துக் கொண்ட) அன்பிற் சிறிதுந்தளர்தலில்லாத எனவுங் கொள்ளலாம். விதுரன் - நீட்டல்விகாரம். வஞ்சம் மாயம் - ஒருபொருட்பன்மொழி. விரிவிலா மனம் - வருங்காரியங்களைக் காரணகாரியத் தொடர்ச்சியாக ஆராயுந்திறமில்லாத மனம். விசாரம் - வடசொல்; ஆலோசனையென்றுபொருள். ஈண்ட ஓர் மண்டபம் என்று பிரித்துப் பொருள்கூறலுமாம்; ஈண்ட + ஓர்=ஈண்டோர்: பெயரெச்சத்தின் அகரவீறு தொகுத்தல். ()

[இதுவும், அடுத்தகவியும் - மண்டபங்கட்டியதைக் கூறும்.]

௬௪.—(இ - ள்.) இருந்த தொல் வேந்தர் - (அச்சபையில்) வந்திருந்த கொட்பழையபட்புரிமையையுடைய அரசர்கள், பெருந்தகை ஏவல் மாற்றம் பிற்பட முற்பட்டு ஓடி-பெருமைக்குணமுடையவனுன துரியோதனனது கட்டளைச்சொல் பின்னிடும்படி விரைந்துசென்று, தம்தம் இருக்கையின் இயன்ற எல்லாம் - தஙகள்தங்கள் இருப்பிடங்களிற் பொருந்திய எல்லாப் பேருருள்களையும், அருந் திறல் மள்ளராலும்-மிக்கவலிமையமைந்த வேலையாட்களைக்கொண்டும், அணி மணி தேரினுலும் - அழகிய மணிகள் கட்டிய தேர்களில் ஏற்றியும், பொருந்தவே கொணர்வித்து - தகுதியாகக் கொண்டு

சேர்த்து,—ஆங்கண் - அவ்விடத்தில் [அல்லது அப்பொழுது],பொன் சுவர் இயற்றினார் - பொன்னினாற் சுவரை யெழுப்பினார்கள்; (எ - று.)

முதலடியில், துரியோதனன்வார்த்தையாகிய காரணத்தைப் பின்னும் அதன்காரியமாகிய அரசர்கள்செல்லுதலை முன்னும் நிகழ்ந்தனவாக விரைவு தோன்றக் கூறியது, முறையிலுயர்வுநவிற்சியணி. வேந்தர் பொற்சுவரியற்றினார் - ஏவுதற்கருத்தாவின் வினை; சிற்பிகளைக்கொண்டு இயற்றின ரென்க. பெருந்தகை - ராஜராஜனென்றவாறு;பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. பிற்படமுற்பட்டு-தோடைமுரண். இருக்கை-இருப்பிடத்திற்குத் தொழிலாகுபெயர். இயன்ற - பலவின்பால் வினையாலணையும் பெயராகவேனும் பெயரெச்சமாகவேனும் கொள்ளத்தக்கது. ஆங்கண்- அக்கண் என்பது நீட்டலும் மெலித்தலும்பெற்றது. மள்ளர் - பலசாலிகள்.

௪௫.—(இ - ள்.) சங்கை இல் சிற்பம் நுண் நூல் தபதியர் - சந்தேகமில்லாமல் நுட்பமானசிற்பசாஸ்திரத்தில் தேர்ந்தவர்களாகிய சிற்பிகள்,— தகவு கூர - அழகு மிகும்படி [மிகத்தகுதியாக], செம் கையின் அமைத்த - செவ்விய [பழகித்தேர்ந்த] (தமது) கைகளினாற் செய்த, கோலம் சித்திரம் தூணம் - அழகிய சித்திரவேலைத்திறமமைந்த தூண்களை, நாட்டி - நிறுத்தி, அங்கு ஐயில்[அயில்] அருணம் ரதநத்து அணி கொள் உத்திரமும் ஏற்றி - அவ்விடத்து அழகிய சிவந்த ரத்நங்கள் பதிக்கப்பெற்ற அழகுகொண்ட உத்திரங்களையும் ஏற்றி, கங்கையின் உயர்ந்த முத்தின் கற்றையால்-கங்கையில்தோன்றிய சிறந்தமுத்துக்களின் தொகுதியினால், முற்றும் வேய்ந்தார்-(மேலிடம்)முழுவதையும் மூடினார்கள்; (எ - று.)

இவ்வாறு செல்வமிகுதி தோன்றக் கூறுதல், வீறுகோளணி யெனப்படும். இச்செய்யுளில், முதலெழுத்துநீங்க இரண்டுமுதலிய சிலஎழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறுபட்டுவந்தது - திரிபுஎன்னுஞ் சொல்லணி. சங்கையில், சிற்பநுண்ணூல் என்றஇரண்டும் - தபதியர்க்கு அடைமொழி. அயில்=ஐயில்; அழகு என்றுபொருள்: திரிபுநோக்கி அகரத்துக்கு ஐகாரம் போலியாய் வந்தது. அம் கையில் என்று பிரித்து, அழகிய கைகளினால் என்றுகொண்டால், திரிபுஎன்னும்அணிக்கு இடமின்மை யறிக. ஶங்கா, ஶில்பம், ஸ்தபதி, சித்ரம், ஸ்தூணா, அருணரத்நம், கங்கா, முக்தா - வடசொற்கள். முக்தா - (இப்பியினின்று) விடுபட்டதெனப்பொருள்படுங் காரணக்குறி. (௪௫)

[அந்த மண்டபத்தின் சிறப்பு.]

௪௬.—(இ - ள்.) (அம்மண்டபமானது),—ஓவியம் சிறக்க தீட்டி - சித்திரங்களை(ச் சுவர்களிற்) சிறப்பாக எழுதப்பெற்று, ஒள் கொடி நிரைத்து - விளங்குகிற கொடிச்சீலைகளை (மேலே) வரிசையாகக் கட்டப்பெற்று, செம் சொல் காவியம் மாக்கட்கு எல்லாம் கருத்து உறு கவினிற்று ஆகி - இனிய சொற்களினாற் காவியஞ்செய்யவல்ல புலவர்கட்கெல்லாம் (வருணிக்குமாறு) மனஞ்சென்றுபதியும்படியான அழகையுடையதாய்,—வாவிய புரவி திண் தேர் மன்னவன் நினைவுக்கு ஏற்ப - தாவிச்செல்லுங் குதிரைகள்பூட்டிய வலியதேர்களையுடைய துரியோதனராஜனது எண்ணத்திற்குத் தகுதியாக, ஏவிய வினைஞர் தம்மால் - கட்டளையிடப்பட்ட சிற்பவேலைக்காரர்களால், இயல்பு உற சமைந்தது - தகுதியாகக் கட்டப்பெற்று நிறைவேறிற்று; (எ-று.)—அன்றே - ஈற்றசை.

செஞ் சொல் - அரியபொருளை எளிதில் உள்ளபடி நன்குகாட்டவல்ல செவ்வியையுடைய சொல்; தொனிப்பொருளையுடைய சொல்லுமாம். காவியம் - கவியினாற்செய்யப்படும் நூல் எனப் பொருள்படும் வடமொழித்தத்திதாந்தநாமம். கவினிற்று - 'கவின்' என்னும்பகுதியினடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்; று - விகுதி, இன் - சாரியை. காவிய

[illegible]வர்கள் இம்மண்டபத்தின்சிறப்பைப் பார்த்து[illegible] [illegible] கருத்துஅன்றி மிகவும் வியித்து வருணித்துப் [illegible] [illegible] பலவகைச்சிறப்புக்களையும் பெற்றுள்ளது அந்த [illegible] [illegible]மண்டபம் என்பது, இரண்டாமடியின் விவரம். (சசு)

[துரியோதனன் மண்டபத்தின்சிறப்பைநோக்கியபின்பு
திருதராட்டிரனிடஞ் சில கூறத்தொடங்குதல்.]

சஎ.—(இ - ள்.) 'மன் அவைக்கு ஆன பைம் பொன் மண்டபம் சமைந்தது - அரசர்களதுசபைக்குத்தகுந்த பசும்பொன்மயமான மண்டபம் கட்டப்பட்டுச்சித்தமாயிற்று,' என்று—, தன் அவைக்கு உரியோர் சொல்ல - தனதுசபைக்கு உரியவர்கள் தெரிவிக்க,— மின்னை வைத்து ஒளிரும் வேலான் - மின்னலையொத்துவிளங்குகின்ற வேலாயுதத்தை யுடையவனாகிய துரியோதனன்,—சகுனியும் தானும் நோக்கி - சகுனியும் தானுமாக (அம்மண்டபத்தினழகைப்) பார்த்து, சொன்னவைக்கு ஏற்றது என்று - '(நாம் ஆலோசித்துச) சொன்னவற்றிற்குத் தக்கபடி அமைந்துள்ளது' என்று வியந்துகூறி, தொழுதகு தாதைதன்பால் - தன்னால் வணங்கத்தக்க தனது தந்தையான திருதராட்டிரனிடத்து, மேவினன் - சென்றுசேர்ந்தவனாய், விளம்பல் உற்றான் - கூறத்தொடங்கினான்; (எ - று)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

மன் அவை ராஜ ஸபை. 'தன்அவைக்குஉரியோர் - என்றது, கீழ் சச - ஆஞ் செய்யுளில் "இருந்த தொல் வேந்தர்" என்றபடி, அவன்சபையிலே யிருந்தவர்களும் அவனாற்கட்டளையிடப்பெற்றவர்களு மான அரசர்களை. 'வைத்து' என்றது, உவமவாசகமாய்நின்றது. 'சொல் நவைக்கு ஏற்றது' என்றெடுத்து, (தன்வருணனையைச் சரிவர எடுத்துக்கூறுவதற்கு உரிய) சொல்லில்லாமற் பழுதுபடசெய்வது அம்மண்டபம் என்றும் உரை கூறலாம். நவை - குற்றம். மேவினன் - முற்றெச்சம். (சஎ)

[பாண்டவரை வருவிக்கத் தூதரையனுப்பவேண்டு மென்று
துரியோதனன் திருதராட்டிரனுக்குக் கூறுதல்.]

சஅ.—(இ-ள்.) 'பெறல் அரும் ஐய-பெறுதற்குஅரிய தந்தையே! கேட்டி- (யான்சொல்வதைக்)கேட்பாயாக:—அடியனேன் கருத்து முற்ற - எனது எண்ணம் நிறைவேறும்படி, கரும் புயல் தவழும் சென்னி கதிர் மணி கூடம் ஒன்று - கருமையாகிய மேகங்கள் தவழப்பெற்ற சிகரத்தையுடைய ஒளி பொருந்திய இரத்தினமயமான ஒருமண்டபத்தை, பெரும் புகழ் நகரின் நண்ணு சமைத்தனன் - மிக்ககீர்த்தியையுடைய இந்நகரத்தில் இப்பொழுது (யான் புதிதாகக்) கட்டிமுடித்தேன்; உன் மைந்தரை பெருமைகாண வரும்படி விரைவின் தூது ஒன்று ஏவு-(அம்மண்டபத்தின்) சிறப்புக்களைக் காணுதற்கு உனது (தம்பியின்) புதல்வர்களாகிய பாண்டவர்கள் (இவ்விடத்துக்கு) வரும்படி விரைவிலே (அவர்கட்கு) ஒருதூதனை அனுப்புவாயாக,' என்றான் - என்று கூறினான், (துரியோதனன்); (எ - று.)

துரியோதனன் தனது துராலோசனைக்குத் துணைபுரியுமாறு வேண்டுகின்றானாதலால், தனது தந்தையை 'அரும்பெறலைய' என்று புனைந்து விளித்தான். 'அடியனேன்கருத்து' என்றது - மண்டபவியாஜமாகப் பாண்டவர்களை வருவித்துச் சகுனியைக்கொண்டு சூதாடுவித்து அவர்களது பொருள்களையெல்லாம் கவரவேண்டுமென்பது. மேகத்திற்கும் மண்டபத்தின் சிகரத்திற்கும் சம்பந்த மில்லாதிருக்கவும் 'கரும்புயல்தவழுஞ்சென்னி' [illegible] சம்பந்தமுள்ளதாகக் கற்பித்துக்கூறியது - தொடர்புயர்வுநவிற்சியணியாம்; இது, அம்மண்டபத்தினது மிக்கவுயர்வை விளக்கும். கரும்புயல்-[illegible] [illegible]ம், அது-உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைக்[illegible] [illegible] [illegible]: இருபுமயக்கம். [illegible] [illegible]

எழுந்தப்பெயது. 'உன்மைந்தர்' - நீ கூறிய கட்டளைப்படியே நடக்குந்தன்மைத்தாகும் மைந்த ரென்ற குறிப்பு. ஆனதுபற்றியே, தான் அறுவெவாமல் 'நீ அறுவு' என்றான். வெல்லவேண்டுமென்று மனம்பதறுதலால், 'விரைவின் அறுவு' என்று அண்டினுன். (சஅ)

[அதற்குத் திருதராட்டிரன் மகிழ்ந்து கூறுதல்.]

சகூ.—(இ - ள்.) வாழ்வு உறு தந்தைதானும்-செல்வவாழ்க்கைபொருந்திய தந்தையாகிய திருதராட்டிரனும், மகன் மொழி நயந்து கேட்டு - (தனது) குமாரனாகிய துரியோதனனது வார்த்தைகளை விரும்பிக்கேட்டு, மிக நயந்து உருகி - மிகவும்மகிழ்ந்து மனமுருகி, (அத்துரியோதனனை நோக்கி), 'நல்ல விரகினால் வெல்லல் உற்றீர் - தகுதியான உபாயத்தினால் (பாண்டவர்களை) சயிக்கத்தொடங்கினீர்கள்; அகம் நெடும் போர் செய்தாலும் - துன்பத்திற்குஇடமான பெரியபோரைச் செய்தாலும், ஐவரை அடர்க்க ஒணுது - (அவர்கள் மிக்கவலிமையுடையவாக ளாதலால்) அப்பாண்டவர்களைவரையும் வென்றுஅடக்க(உங்களால்)முடியாது;(இவ்வாறானபின்பு), தரணி - பூமியை, சகுனியை அன்றி வேறு ஆர் தர வல்லார் - சகுனியையேயல்லாமல் வேறுயாவர்தாம் (உங்கட்குத்) தரவல்லவர்?' என்றான் என்றுகூறினுன்; (எ - று.)

என்றது-பாண்டவர்கள் வலிய ராதலால், சகுனியைக்கொண்டு சூது வழியாக வென்றுவிடுதலே தகுதி யென்றவாறு. கம - சுகம்; அதற்கு மாறானது - அகம், துன்பம்; வடசொல். 'அகநெடும்போர்' என்ற பாடத்திற்கு, அகன்ற நீண்ட போ ரென்று பொருளாம். விரகு - தந்த்ரம். அடர்க்கொணுது - அகரவீறு தொகுத்தல். ஒணுது - ஒன்றுது என்பதன் மரூஉ. (சகூ)

[திருதராட்டிரன் விதுரனைத் தூதுசெல்லுமாறு கட்டளையிடுதல்.]

ருo.—(இ - ள்.) விழி இலா வென்றி வேந்தன்-கண்ணில்லாத வெற்றியையுடைய திருதராட்டிரன்,—விதுரனை அழைத்து—. 'நீ பேசிய மொழியில் - நீ (தூது)சென்று சொன்னால், உலகில் உன் மொழியினை மறுக்க வல்லார் ஆர்-இவ்வுலகத்தில் உனதுவார்த்தையைத் தடுத்து மாறுகூறவல்லவர் யாவருளர்? [ஒருவருமில்லை;] (ஆகையால், பாண்டவர்களும் கேட்டு அதன்படியே நடப்பார்கள்); பழி இலா இசை கொள் நீதி பாண்டவர் - பழிப்பிலலாத கீர்த்தியைக் கொண்டவர்களும் நீதிநெறிதவறாதவர்களுமான பாண்டவர்கள், வந்து - இங்குவந்து, உன் மைந்தர்வழியில் ஆய் ஒழுகும் வண்ணம் - உனதுமக்களாகிய துரியோதனுதியர் விரும்பியுள்ள வழியில் நடந்திடுமாறு, மருட்டி-(உனதுசொல்திறத்தால் அவர்களை)மருளச்செய்து இசைவித்து, நீ கொணர்தி - நீ இங்கே அழைத்துவருவாயாக,' என்றான்—(எ-று.)

அக்கிரமவழியிற் செல்லுந் தனதுமைந்தர்க்கு உடன்தையாய் நற்புத்தி சிறிதுமின்றித் தம்பிமைந்தரைக்கெடுக்கக் கூறப் புகுந்தா னாதலின், இங்கு அத்திருதராட்டிரனை ஊனக்கண்ணேஞானக்கண்ணுமில்லாதவனென்பார், 'விழியிலாவேந்தன்' என்றார். இங்கு, 'விழியிலா' என்ற அடைமொழி இவ்வாறு ஒருகருத்தை உட்கொண்டிருப்பது,கருத்துடையஅடைமொழியணியின் பாற்படும். இரண்டாமடி - விதுரனது சொல்வன்மையை விளக்கும். மற்று - அசை. விதுரனுக்குத் துரியோதனுதியரிடத்து அன்புஉண்டாகுமாறு 'உன் மைந்தர்' எனத் தொடர்புபடுத்திக் கூறினுன். மருட்டி, மருள் என்பதன் பிறவினையான மருட்டு - பகுதி. மருட்டுதல் - மயக்குதல். (ருo)

[விதுரன் திருதராட்டிரனதுஇலைகொண்டு தூதுசெல்லுதல்.]

ருக.—(இ - ள்.) '(தருமபுத்திரனே!), (நீ),— தம்பியர் - உனதுதம்பியராகிய துரியோதனுதியர், விழைவால் - விருப்பத்துடனே, சமைத்த-கட்டிமுடித்த, கூடம் - மண்டபத்தினது, பேர் அழகு - மிக்கஅழகை, காண

சாலும்படி, விரைவின் - விரைவாக, இம்பர் வந்து - இக்ககரத்திற்கு வந்து, எமையும் எய்தி - என்னையும் வந்துபார்த்து, ஏகுக - செல்லக்கடவாய், என்ன - என்று, பைம்பொனின் ஓலைமீது பண்புஉற எழுதி - பசும்பொன் ஆற்செய்த ஓலையில் அழகாக எழுதுவித்து, (அவ்வோலையைக்கொடுத்து), எம்பியும் இன்னே ஏகுக என்றான் - 'எனதுதம்பியாகிய நீ இப்பொழுதே (தருமனிடத்துச்) செல்லக்கடவாய்' என்று கட்டளையிட்டான்; ஏவலின் - அக்கட்டளையினால், அவனும் - அவ்விதுரனும், போனான் - (தருமபுத்திரனது நகரமாகிய இந்திரப்பிரத்தநகரத்தைநோக்கிச்) செல்வானாயினான்; (எ - று.)

விரும்பிக்காணத்தக்க பேரழகுடைய தென்பான் 'சமைத்தபேரழகு காண' என்றும், மண்டபங்காணுதற்கு வராவிடினும் தன்னைப்பார்க்கவாவது தவறாதுவரவேண்டு மென்பான் 'எமையும்எய்தி' என்றும் எழுதினான். எழுதி - இங்கு, ஏவுதற்கருத்தாவின் வினை. இம்பர் - இவ்விடம். எமையும், உம்மை-இறந்ததுதழுவியஎச்சவும்மை. இன்னே, விரைவுகுறிக்கும் இடைச்சொல். எம்பி - முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. உம்மை - இசைநிறை. எய்துதல்-சந்தித்தல். எமை=எம்மை: தனித்தன்மைப்பன்மை.

[விதுரன் இந்திரப்பிரத்தநகரஞ் சேர்தல்.]

௫௨.—(இ - ள்.) தேரினுக்கு ஒருவன்-தேர்வீரரிற்சிறந்தவனான, விதுரனும்—,—தன்னை—, கார் என களிறு சுற்ற-மேகங்கள்போல யானைகள் சூழ்ந்துவரவும்,காற்று என புரவி ஈண்ட - காற்றுப்போலக் குதிரைகள் நெருங்கிவரவும், சிலம்பு என தேர்கள் சூழ-மலைகள்போலத் தேர்கள் சுற்றிவரவும், வீரரில் பலரும் போற்ற - காலாள்வீரர்களிற் பலபேர் புகழ்ச்சிகூறிவரவும், (இவ்வாறு), இரண்டு நாளால் - இரண்டுதினத்தில்,பாரினுக்கு உயிரே போலும் பாண்டவர்நகரி-உலகத்துக்கு உயிரைப்போன்றவர்களான பாண்டவர்கள் வசிக்கின்ற இந்திரப்பிரத்தநகரத்தை, சேர்ந்தான்—; (எ - று.)

கருநிறத்திலும் மதமழைசொரிதலிலும் முழக்கத்திலும் யானைக்குக் கார்மேகமும், விரைந்துசெல்லுதலிற் குதிரைக்குக் காற்றும், வலிமையிலும் பெருந்தோற்றமுடைமையிலும் தேர்க்கு மலையும் உவமை யெனக் காண்க; உவமையணி. தேரினுக்கு ஒருவன்-தேர்வீரர்களுட்சிறந்த அதிரதவீர னென்றபடி. ஒருவன் - ஒப்பற்றவன், அதவிதீயன், ஏகவீரன். நாளால் உருபு மயக்கம். 'பாரினுக்குஉயிரேபோலும் பாண்டவர்' என்றது - உலகத்துமக்கள்யாவரும் இப்பாண்டவர்களை நற்குணச்சிறப்பினால் தம்தம் உயிர்போலவே நன்குமதித்துப் பாராட்டின ரென்றவாறும். இந்தஅடைமொழியை நகரிக்குஇயைத்தால், உடம்பினுள் உயிர் சிறந்ததாவதுபோல, இவ்வுலகத்துள் இந்திரப்பிரத்தநகரம் சிறந்தது என்று கருத்துப்படும். உயிரே, ஏ - தேற்றத்தோடு உயர்வுசிறப்பு. (௫௨)

[விதுரன் இந்திரப்பிரத்தநகரத்தைப் பார்த்தல்.]

௫௩.—(இ - ள்.) புரியும் ஒள் கதிர் - வீசுகின்ற பிரகாசமான ஒளியும், கவின் - அழகும், உறு - நிறைந்த, பொலிவினால் - சிறந்த தோற்றத்தையுடைமையால், பொன் உலகு ஆம் என்ன - பொன்மயமான சுவர்க்கலோகம்போலவும்,—அரிய பைம் பொன் இன் பணிகளின்-அருமையான பசும்பொன்னினாலாகிய இனிய வேலைத்திறங்களையுடைமையால், நிறைந்த சீர் அளகை மா நகர் என்ன - நிரம்பிய செல்வவளத்தையுடைய சிறந்த அளகாபுரிபோலவும்,—(தருமம் சிறிதும் தவறாதபடி கருணைக்கடலான தருமபுத்திரன் அரசுவீற்றிருக்கப்பெற்றதனால்), தெரியும் அன்புடன் அறம் குடியிருப்பது ஓர் தெய்வம் வான் பதி என்ன - விளக்கமாகத்தெரிகின்ற [மிகுதியான] அன்பினுடனே தருமதேவதை நிலையாகத்தங்கிவசித்திருக்கப்பெற்றதொரு தெய்வத்தன்மையுள்ள சிறந்த நகரம்போலவும், (இருக்கிற), [illegible] கொடி புரிசை சூழ் வளம் நகர் - பரந்த [illegible]

துவசங்கள் நாட்டப்பெற்ற மதில்கள் சூழ்ந்ததும் எல்லாவளங்களையுமுடையதுமான இந்திரப்பிரத்தநகரத்தை, விழி களித்திட கண்டான் - (பார்க்கின்ற) தன்கண்கள் களிப்படையுமாறு (விதுரன்) பார்த்திட்டான்;(எ-று.)

இதில் ஓர்உபமேயத்துக்குப் பலஉபமானங்கள் காட்டியது, பலபொருளுவமையணி. புரியும் ஒண் கதிர் - மதில் கோபுரம் மாட மாளிகை முதலியவற்றி லமைந்த பொன் மணிகளி னுடையவை; ("மரகதங் கோமேதகந் துகிர் தரளம் வைரம் வைடூரிய நீலம், எரிமணிபுட்பராக மென்றிவற்றிற் காகர மிந்தமாநக ரென், றரிமுத லிமையோரனைவரும் புகழ்தா ராடகப் பொருப்பினையழித்துத், தரணியினகரோன் றமைத்தவா வென்று தபதியர் யாவரும் வியந்தார்"என்றும், "அரவின்வெஞ்சுடிகைகொண்ட வவிர்மணிச் சோதிமேன்மேல், விரவிவந்தெறித்து" என்றும், "ஈட்டியமணியும்பொன்னு மெழில்பெறப் புடைகடோறும், பூட்டியசிகரிசாலப் புரிசையின்புதுமை" என்றும்கீழ் ஆதிபருவத்திலே இந்திரப்பிரத்தச்சருக்கத்தில் வந்தமை காண்க.) புரிதல் - செய்தல். புரியும் - விரும்பப்படுகிற எனினுமாம். ஒண் கதிர் - பண்புத்தொகை. கதிர்கவின் - உம்மைத்தொகை. உறுபொலிவு - வினைத்தொகைநிலைத்தொடர்; உரிச்சொல்தொட ரெனினுமாம். பொலிவு-பொற்பு. பொன்னுலகு - தேவராசனான இந்திரனுடையது. ஆம் - அசை. என்ன - உவமவுருபு.

அரியபைம்பொன்-மாற்றும் விலையும் உயர்ந்த பொன். அளகாபுரி-தனாதிபதியான குபேரனுடையது; கைலாசகிரியிலுள்ளது. நவநிதிகளையுமுடையதாதலின், 'நிலைநிறைந்தசீரளகைமாநகர்'எனப்பட்டது. சீர்-ஸ்ரீ:என்னும்வடசொல்லின் சிதைவெனப்படும்; இசசொல்லுக்கு-அழகு என்றும், புகழ் என்றும் பொருள்கொள்ளினுமாம். அளகை - ஆகுபெயரான வடசொல். 'பைம்பொனின்மணிகளின்' என்ற பாடத்துக்கு - பசும்பொன்னினாலும் இரத்தினங்களினாலும் என்று பொருள்காண்க.

"அருளென்னும் அன்பீன்குழவி" என்றபடி அருட்குக்காரணமாகிற அன்பு, "அன்பிலாரெல்லாந் தமக்குரிய ரன்புடையா, ரென்புமுரியர் பிறர்க்கு," "என்பிலதனை வெயில்போலக் காயுமே, அன்பிலதனை யறம்"என்றவாறு அறத்துக்கு இன்றியமையாத தாதலால், 'அன்புடன் அறங்குடியிருப்பது' எனப்பட்டது. தருமபுத்திரன் அரசாளுதலால் எல்லாத்தருமங்களுங் குறைவறநடக்கப்பெற்ற நகர மென்பதுபற்றி, தருமதேவதை குடியிருக்கிற திவ்வியநகரம் இதற்கு உவமைகூறப்பட்டது; கீழ் இந்திரப்பிரத்தச்சருக்கத்தில் "அருளுடையறத்தின்வாழ்வா மந்நகர்" என்றது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர், புன்கணீர் பூசல்தரும்" என்றபடி, அன்பு என்பது பிரதியக்ஷப்பிரமாணத்துக்குப் புலப்படாவிடினும் அதனையுடையவரிடத்து உண்டாகிற கண்ணீர்பெருகுதல்முதலிய மெய்ப்பாடுகளைக்கொண்டு அநுமானப்பிரமாணத்தால் அறியத்தக்க தாகுதலால், அதற்கு 'தெரியும்' என்ற அடைமொழி கொடுத்தார். (தொல்காப்பியவுரையில் நச்சினார்க்கினியர் 'அன்பு என்பது - அருட்குமுதலாகி மனத்தில்நிகழும் நேயம்; அஃது உடையார்க்குப் பிறர்கண் துன்பங்கண்டவழிக் கண்ணீர்விழு மாகலின், அவ்வருளானே அன்புடைமை விளங்குமென்பது: இவையெல்லாம், தத்தம்மனத்தின் நிகழ்ச்சியை வெளிப்படுப்பன வாகலின், மெய்ப்பா டெனப்பட்டன' என்றும், இறையனாரகப் பொருளுரையில் நக்கீரர் 'குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும்போல இதுகாண் அன் பென்று தந்துகாட்ட லாகாது; அன்புடையாரான குணங் கண்டவிடத்து, இவையுண்மையான் இங்கு அன்புஉண் டென்று அநுமித்துக்கொள்ளற்பாற்று' என்றுங் கூறினர்.) வான்பதி-விண்ணுலகத்திலுள்ள நகரமெல்லாம்.

விரியும் வெண்கொடி - "அடுக்குறநிலஞ்செய்மாடத் தணியுறுபெரும் பதாகை, மிடுக்கின லனிலனேற்றி விசையுட னெடுத்துமோத" என்றபடி காற்றடிக்கும்போது அசைந்து நீண்டு பரவிவிளங்கும் கொடிச்சீலை. வெண்ணிறமான கொடி - நீதிதவறாத களங்கமற்ற அரசாட்சிக்கும் கீர்த்திக்கும் அறிகுறி. 'விழிகளித்திடக்கண்டான்' என்றது - மனத்தின் தொழிலைக் கண்ணின்மேலேற்றிக் கூறிய உபசாரவழக்கு. துஷ்டர்களான துரியோதனாதியரது தூண்டுதலின்படி திருதராட்டிரனேவிய கட்டளையைச் சிரமேற்கொண்டு தொன்றுதொட்ட இராசதானியான சிறந்த அத்தினபுரியை விட்டுக் காண்டவப்பிரத்தமென்னுங் கடுங்காட்டிற் சேர்ந்த தனது அருமைத்தமையன்மக்களாகிய பாண்டவர்க்குப் பகவானருளால் அங்கு இவ்வகையான அற்புததிவ்வியநகரம் அமைந்த திறத்தைக் குறித்து விதுரன் அந்நகர்ச்சிறப்பைக் காணுந்தோறும் மனத்தில் மேன்மேற்கொள்ளும் ஆனந்தத்தின்மிகுதிவிளங்க, 'வளநகர் விழிகளித்திடக்கண்டான்' என்றனரென்க.

இதுமுதல் நான்கு கவிகளில் இந்திரப்பிரத்த நகரவருணனை கூறுகின்றார்.

இதுமுதல் முப்பத்தேழுகவிகள் - இச்சருக்கத்தின் முதற்கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (௯௩)

[இதுமுதல் மூன்றுகவிகள் - இந்திரப்பிரத்தநகர்வளங் கூறும்.]

௯௪.—(இ - ள்.) ஊடு எலாம் - (அந்நகரத்தின்) உள்ளிடங்களிலெல்லாம், நறும் பொய்கை - நறுமணமுள்ள [நன்னீரையுடைய] குளங்களும்,— நீள் வாவியின் உடம்பு எலாம் - பெரிய அக்குளங்களின் இடம்முழுவதிலும், மலர் - (தாமரை அல்லி ஆம்பல் குவளை நெய்தல் முதலிய) நீர்ப்பூக்களும்,—பூவின் தோடு எலாம் - அம்மலர்களின் இதழ்களிலெல்லாம், மூசு சுரும்பு இனம் - மேலெழுந்து மொய்க்கின்ற வண்டுகளின் கூட்டங்களும்,—மதுகரம் சொல் எலாம் - அவ்வண்டுகளின் வாயொலிகளிலெல்லாம், செழுங் கீதம் சிறப்பான இசைப்பாட்டுக்களும்;—பாடு எலாம் - (அக்குளங்களின்) பக்கங்களிலெல்லாம், இளஞ் சோலை - இளமரச்சோலைகளும்,—மெல் பொதும்பரின் பணை எலாம் - மென்மையான அசசோலைகளிலுள்ள மரக்கிளைகளிலெல்லாம், குயில் ஓசை - குயில்களின்குரலும்;—நாடு எலாம் - (அவ்விந்திரப்பிரத்தநகரத்தையுடைய) நாடு முழுவதிலும், நெடும் புனல் வயல் - மிகுதியான நீர்பாயப்பெற்ற கழனிகளும்,—கழனியின் நடு எலாம் - அக்கழனிகளின் நடுவிடம்முழுவதிலும், விளை செந்நெல் - விளைகின்ற செந்நெற்பயிர்களும், (உள்ளன); (எ - று.)

வினைமுற்று வருவித்துமுடிக்கப்பட்டது. இனி, 'பொய்கை' முதலியவற்றை இரண்டாம்வேற்றுமைத்தொகையாகக்கொண்டு, (அந்நகரின்) நடுவிடம் முதலியவற்றிற் பொய்கைமுதலியவற்றை விதுரன் விழிகளித்திடக்கண்டான் என முன்செய்யுளிலிருந்து வினைகூட்டி முடிப்பினுமாம்; அடுத்த இரண்டுசெய்யுள்களிலும் இங்ஙனங் காண்க: அங்ஙனங்கொள்ளுமிடத்து, 'கீதம்,' 'ஓசை' இவற்றிற்கு ஏற்ப, அவற்றைக் கேட்டானென்ற கருத்து அமைக்கப்படும். இச்செய்யுளில் முன்னிரண்டடிகளிலும் மூன்றாமடியிலும் நான்காமடியிலும் தனித்தனி பொருள்கட்குத் தொடர்ச்சியமையக் கூறியது, ஒற்றைமணிமாலையணி யென்னும் ஏகாவளியலங்காரமாம்; அடுத்தசெய்யுளிலும் இதுகாண்க. பின்பின்னாகவருவனவற்றிற்கு முன்முன்னைவைதவற்றை விசேஷணங்களாகவேனும் விசேஷ்யங்களாகவேனுஞ் சொல்லுதல்; இதன் இலக்கணம்.

எல்லாம்என்பது, எலாம்எனத் தொக்கது. நீர்த்தத்தின் இனிமையையும் அதிலுள்ளநீர்ப்பூக்களின் சுகந்தத்தையுங் கருதி,'நறும்பொய்கை'எனப்

பட்டது. இனி, நறுமை - நன்மையுமாம். 'பொய்கை' என்ற சொல்லுக்கு 'மானிடராக்காத நீர்நிலை' என்று பொருளுரைத்தனர் சீவகசிந்தாமணி யுரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர்: அஃது இவ்விடத்துக்கும்பொருந்தும்; இந்தஇந்திரப்பிரத்தநகரம் மனிதசிற்பிகளாற் கைத்தொழிலாச்செய்யப்பட் டதன்றித் தேவசிற்பியான விசுவகர்மாவினால் மானஸநிர்மாணமாக நினைத்த மாத்திரத்தில் நிருமிக்கப்பட்டதாதலால்: அதனை, கீழ் இந்திரப்பிரத்தச் சருக்கத்து "திரங்குடிபுகுந்தகல்விச்சிறப்பவித்தகன் தன்னெஞ்சாற், கரங்குடி புகாமற் செய்த கடிநகர்' என்றதனால் அறிக. வாவியின் 'உடம்பு' என் றது, அதன் இடத்தை; உடம்பு - உருவம். சுரும்பு இனம் - வண்டுவகைக ளென்றலு மாம்; சுரும்பு, வண்டு, தேன், மிஞிறு என்ற சாதிபேதங்களெல் லாம் அடங்கும்: பொன்வண்டு, பொறிவண்டு, கருவண்டு, தேன்வண்டு என் றுங் கூறுவர். மதுகரம் என்ற வடசொல் - தேனையீட்டுவது என்று காரணப் பொருள்படும். 'சொல்' என்றது - இங்கு, குரலென்றமாத்திரமாய் நின்றது. செழுங்கீதம் - ஸ்வரபுஷ்டியுள்ள இனிய இசை. மரங்களின் இளமையை அவற்றின்தொகுதியாகிய சோலையின்மே லேற்றி, 'இளஞ்சோலை' என்றார். மென்மை - இங்கு, கண்ணுக்கு இனிமை. பொங்கர் என்ற சொல் - (உயர்ந்து) விளங்குவது என்று காரணப்பொருள்பெறும்; அர் - பெயர்விகுதி. விளைதல் - செழித்துவளர்தல், தானியம் முதிர்தல். செந்நெல் - நீரில்விளைவ தொருசிறந்ததானியம். அதன்விளைவுகூறவே, கழனிகளில் நிறைந்த நீர் வளச்சிறப்புக் கூறியவாறும். (௫௪)

* ௫௫ - ஆம் செய்யுள்.

அருகெலாமணிமண்டப மவிரொளியரங்கெலாஞ்சிலம்போசை
குருகெலாம்வளர்பழன மப்புள்ளெலாங்கூடலின்புறவூடன்
முருகெலாங்கமழ்துறையெலாந்தரளம்வெண்முத்தெலாநிலாவெள்
பருகலாம்புனனதியெலா நீரெலாம்பங்கயப்பசுங்கானம். [ளம்

(இ - ள்.) அருகுஎலாம் - (அந்நகரத்தில் ஒன்றுக்கொன்று) சமீபமாக வுள்ள இடங்கள்தோறும், அணி மண்டபம் - அழகிய மண்டபங்களும்,— அவிர் ஒளி அரங்கு எலாம் - விளங்குகிற ஒளியையுடைய (அம்மண்டபங்க ளிலுள்ள) கூத்தாடுமிடங்களி லெல்லாம், சிலம்பு ஓசை - (நர்த்தனஞ்செய் கின்ற மகளிரது) காற்சிலம்புகளின் ஓசையும்;—பழனம் எலாம் - கழனிக ளிலெல்லாம், வளர் குருகு - செழுமையாய்வளர்கின்ற நீர்வாழ்பறவைக ளும்,—அ புள் எலாம் - அந்தப்பறவைகளி னிடங்களி லெல்லாம், கூடல் இன்பு உற ஊடல் - (ஆணும்பெண்ணும் ஒன்றோடொன்று) சேர்தலும் அப் புணர்ச்சியின்பம்மிகுமாறு அவை தம்முட் சிறுகோபங்கொள்ளுதலும்;— முருகு எலாம் கமழ் துறை எலாம் - பலவகைநறுமணங்களும் மணக்கப் பெற்ற நீர்த்துறைகளிலெல்லாம், தரளம் - முத்துக்களும்,—வெள் முத்து எலாம் - வெண்ணிறமான அம்முத்துக்களி லெல்லாம், நிலா வெள்ளம் - சந்திரகாந்திபோன்ற குளிர்ச்சியான வெள்ளொளியின் தொகுதியும்;—நதி எலாம் - (அந்நகரத்தைச்சார்ந்துபெருகுகிற) யாறுமுழுவதிலும், பருகல் ஆம் புனல் - குடிப்பதற்குஏற்ற நன்னீரும்,—நீர்எலாம் - அந்நீரிலெங்கும், பங்கயம் பசுங் கானம் - பசுமைநிறமான தாமரைக்கொடிகளின் தொகுதி யும், (உள்ளன); (எ - று.)

முடிபும், அணியும் - மேற்கூறியன. மணிமண்டபம் என்று எடுத்து, இரத்தினங்கள் பதித்துச்செய்யப்பட்ட மண்டப மெனினுமாம். அரங்கு - ரங்கம் என்னும் வடசொல்லின் விகாரம். சிலம்பு - ஒருவகைக்காலணி. தரளம் - வடசொல். இங்கு, முத்து - சங்கினின்று தோன்றுபவை. பருக லாம்புனல் "உணற்கினியவின்னீர்," 'நதியெலாம்' என்றவிடத்து 'எல்

* இச்செய்யுள் விலக்குதற்குரியது.

லாம்' என்றது - பொருட்பன்மைகுறியாமல், ஒருபொருளின் பலஇடக் குறித்தது. பங்கஜம் - வடசொல்: சேற்றில்முளைப்ப தென்ற பொருள் படும்; பங்கம் - சேறு: தாமரைக்குக் காரணவிடுகுறி. கானம்-கானம் என்ற வடசொல்லின் விகாரம்;காடு:இங்கு,தொகுதியென்றமாத்திரமாய் நின்றது. 'பருகெலாம்புனல்' என்றபாடத்துக்கு, எலாம்பருகு புனல்-அனைத்து உயிர் களும் உண்ணுதற்கு ஏற்ற நீர் நிரம்பியுள்ளன என்று பொருளாம். 'குருகெ லாம் வளர்பழனம்' என்றவிடத்து,"ஏற்றபொருளுக்குஇயையும்மொழிகளை, மாற்றிஓரடியுள்வழங்"கியது,மொழிமாற்றுப்பொருள்கோள்.குருகு-அன்னப் பறவையுமாம்; "நீரொழியப்பாலுண்குருகிற் றெரிந்து" என்ற நாலடியாரிற் போல. பழனம் - மருதநிலம், வயல். ஊடலாவது - ஆண்பாலும் பெண் பாலும் இணங்கிநின்ற நிலையில் அவ்வின்பத்தை மிகுவித்தற்பொருட்டுப் பரஸ்பரம் கோபித்தல்; இது, பிரணயகலக மெனப்படும். "ஊடுதல் காமத் திற்கின்ப மதற்கின்பங், கூடி முயங்கப்பெறின்" என்பவாதலால், 'கூட லின்புறவூடல்' எனப்பட்டது. (௩௩)

௩௪.—(இ - ள்.) புகுந்த மா மறுகு எல்லாம் - (அந்நகரினுள்ளே விது ரன்)பிரவேசித்துச்செல்கின்ற பெரியஇராஜவீதிகளிலெல்லாம்,—பல ஆன கம் முழங்க - அநேகதுந்துபிவாத்தியங்கள் மிகஒலிக்க, எதிர் வந்து பணி ந்து - (விருந்தினரை)எதிர்கொண்டுவந்து வரவேற்று வணங்கி,ஆதுலர்க்கு- வறியவரான அவ்விருந்தாளிகளுக்கு, அமுது அன்ன போனகம் - தேவா மிருதம்போன்ற [மிகஇனிய] உணவை, பரிந்து இடும் - (அவரவர்) அன்பு கொண்டு அளிக்கப்பெற்ற, நெடுஞ் சாலையே - பெரிய அன்னசாலைகளே, (உள்ளன); உம்பரும் - தேவர்களும், யானகந்தனை அமையும் என்று - (தங் கட்குஉறைவிடமான) சுவர்க்கலோகத்தை (இதில் நாம்உறைந்திருந்தது) போது மென்று வெறுத்து, மண்ணின்மேல் வர எண்ணும் - இந்நிலவுலகத் தினிடத்து (இந்நகரத்துக்குத் தாம்) வந்திடுமாறு கருதுதற்குக் காரண மான, ஞானகஞ்சுகன் நகரியை - ஞானத்தையே (தனக்குக்) கவசமாகக் கொண்டுள்ளவனாகிய தருமபுத்திரனது இந்திரப்பிரத்தநகரத்தை, நாம் வியப்பது - நாம் கொண்டாடிக்கூறுவது, எங்ஙனே - எவ்வாறு! [இயலாது என்றபடி]; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை.

ஆநகம் - வடசொல். வெற்றிமுரசு,மங்கலமுரசு, கொடைமுரசு என்ற மூன்றுவகையில் இங்குக்குறித்தது, கொடைமுரசு. ஆதுரர் - வடசொல். அன்புடைமை விருந்தோம்புவார்க்கு இன்றியமையாததாதலால், 'பரிந்து இடும்' எனப்பட்டது. மறுகு - நெடுந்தெரு. தேவலோகத்துஇராசதானி யான அமராவதிநகரத்தினும் செல்வவளமும் இன்பச்சிறப்பும் அழகும் மிக் கது இந்தஇந்திரப்பிரத்தநகரமென்பது, பின்னிரண்டடியில் நன்குவிளங் கிற்று; "என்பதியழகுகுலைந்ததென்றெண்ணி யிந்திரன் வெறுக்க.......... புரையறுபுந்தியாற் புவிமேல், நன்பதியிதுவொன் றியற்றினன்," "இமைய வர்பதியிலுள்ளனயாவுமிங்குள விங்குமற்றுள்ள, அமைவுறுபொருள்களங்கில வெனுமாறமைத்த வான்றொல்பதியழகைச், சமைவுறவிரித்துப்புகழ்வதற் குன்னிற் சதுர்முகத்தவனு மெய்தளரும்,நமர்களால் நவிலமுடியுமோ முடி யாது" என்றார் கீழ் இந்திரப்பிரத்தச்சருக்கத்தும். உம்பர் என்ற மேலிடத் தின்பெயர் - இடவாகுபெயராய்,அங்குஉள்ள தேவர்களைக் குறித்தது. எண் ணும் நகரி - பெயரெச்சம், காரியப்பொருளது. கஞ்சுகம் - மெய்ப்பை, சட் டை. ஞானகஞ்சுகன் - 'தருமமேஜயம்' என்றாற்போன்ற நல்லுணர்வைத் தனக்குப்பாதுகாவலாகக் கொண்டுள்ளவன்; தத்துவஞானத்தாற் போர்க் [illegible] அதாவது - மெய்யுணர்வுநிரம்பியவன் என்றலும் ஒன்று. [illegible] என்பதன் விகாரம். [illegible] அசை. 'நாம்'என்றது-இங்கு, [illegible] இயற்கைத்தனித்தன்மைப்பன்மை. 'புகுந்தமாமறுகு'

எல்லாம்' என்பதற்கு - யார் எந்தத்தெருவிற்சென்றால் அத்தெருவிலெல்லாம் என உரைப்பினும் அமையும். ([illegible])

[பாண்டவர் விதுரனையெதிர்கொள்ள, அவன்அவர்களைத்தழுவி மகிழ்தல்.]

ருஎ.—(இ - ள்.) சிலை விதுரன் வந்தனன் என்று - வில்வித்தையில் மிகவல்லவனான விதுரன் (இந்நகரத்துக்கு) வந்தான் என்று, ஓடி முன்வந்தவர் உரையாமுன் - ஓடிவிரைந்துவந்த தூதர்கள் செய்திகூறுதற்கு முன்னே [செய்திகூறியவுடனே விரைவாக என்றபடி], தருமனும் இளைஞரும் - தருமபுத்திரனும் அவனது தம்பியரான வீமன் முதலியோர்களும், தந்தைதன் தனி வரவு அறிந்து - தங்கள்சிறியதந்தையான அவ்விதுரனது ஒப்பற்ற வருகையை யுணர்ந்து, எதிர்கொண்டார் - எதிர்சென்றுவரவேற்று, சிந்தை அன்புடன் தொழ தொழ - மனத்தில் நிறைந்த அன்புடனே (அவனை) அனைவரும் நமஸ்கரிக்க,—அவனும் - அவ்விதுரனும், மைந்தரை - தனது தமையன்மக்களான அந்தப்பஞ்சபாண்டவர்களை, செம் கையால் தழீஇக்கொண்டு - (தனது) சிவந்தகைகளினால் அணைத்துக்கொண்டு, அம் தண் அம்புலி கண்ட பைங் கடல் என மெய் குளிர்ந்திட்டான் - அழகிய குளிர்ந்த சந்திரனைக் கண்ட பசுமையான கடல் (மகிழ்ந்துபொங்குமாறு) போல மகிழ்ந்து உடம்புபூரித்தான்; (எ - று.)

'ஓடிமுன்வந்தவர் உரையாதமுன்னே வரவறிந்து எதிர்கொண்டார்' என்று, காரணத்திற்குமுன்னே காரியம்நிகழ்ந்ததாகக் கூறியது, மிகையுயர்வுநவிற்சியணி யெனப்படும்; அத்யந்தாதிசயோக்தியலங்காரம். காரியத்தை முன்னும் காரணத்தைப் பின்னும் நிகழ்வனவாகச் சொல்லுதல், இவ்வணியின் இலக்கணம். காரணகாரியங்களின் முன்பின்நிகழ்தலாகிய முறையில் இங்ஙனம் முறைபிறழ்வை ஆரோபித்தல், காரியவிரைவைச் சொல்வதாகும். பாண்டவர்க்கு விதுரனிடத்துஉள்ள பித்ருபக்தியும், விதுரனுக்கு அவர்களிடத்து உள்ள புத்ரவாத்ஸல்யமும் விளங்க, சிறியதந்தையென்றும் தமையன்மைந்தரென்றுங் கூறாது 'தந்தை', 'மைந்தர்' என்றே கூறினர். 'தனிவரவு' என்பதற்கு - தனித்துவருதலென்று பொருள்கூறுதல் அவ்வளவாசிறவாது; கீழ் (ருஉ - ஆஞ் செய்யுளில்) "காரெனக்களிறு சுற்றக் காரெனப்புரவியீண்டத, தேரினுக்கொருவன்றன்னைச் சிலம்பெனத்தேர்கள்சூழ. வீரரிற்பலரும்போற்ற விதுரனும் . . . . பாண்டவர் நகரிசேர்ந்தான்" என்றமை காண்க. இனி, துரியோதனனுதியருடனன்றித் தனித்துவந்தமை யென்று கருத்துக்கொள்ளுதலு மொன்று. உண்மையாக அகத்தில்நிகழாதிருக்கையிற் புறத்தேகாட்டப்படும் பொய்யன்பன்றி மனப்பூர்வமாகநிகழ்ந்த அன்பு என்பார், 'சிந்தையன்பு' என்றார். 'தொழத்தொழ' என்ற அடுக்கு - தொழுபவரதுபன்மைபற்றி வந்தது. 'தழுவி' என்றசொல், 'தழீஇ' என விகாரப்பட்டுஅளபெடுத்தது; சொல்லிசையளபெடை. சந்திரனைக்கண்டவளவிலே கடல்பொங்கும் இயல்பு பிரசித்தம்; "தண்மென் கதிர்வரவாற் பொங்குங் கடல்." திருப்பாற்கடல்கடைந்தகாலத்து அதனினின்று சந்திரன் தோன்றியதனாலும், நாள்தோறும் சந்திரோதயமாகின்றமை கடலினின்றுதோன்றுவதுபோலக் காணப்படுதலாலும், கடலுக்கும் சந்திரனுக்கும் பிதாபுத்ரசம்பந்தம் கூறப்படும்; உபமானத்திலுள்ள அத்தன்மை இங்கு உபமேயத்துக்கு ஏற்குமாறு காண்க; மைந்தரைக் கண்டு தந்தை மகிழ்தல், உபமேயம். ஆகவே, 'மெய்குளிர்ந்திட்டான்' என்பதற்கு - உடம்பின் அந்தக்கரணமாய்ச் சிறந்தவுறுப்பாகிற மனம் களித்தான் என்றவளவோடு நில்லாது, அம்மகிழ்ச்சிமிகுதியால் உடல்பூரித்தான் என்கிறவளவாகக் கருத்து நிகழும். பசுமை கருமை நீலம் என்கிற நிறங்களுக்கு ஒன்றோடொன்றுள்ள சிறுவேறுபாட்டைப் பெரிதாகப்பாராட்டாது, அபேதமாகக்கூறும் கவிசமயம்பற்றி, 'பைங்கடல்' எனப்பட்டது. ([illegible])

[பாண்டவர் விதுரனைத் தமதுஅரண்மனையிற் கொண்டு சென்று உபசரித்தல்.]

ரு௮.—(இ - ள்.) தாமும் அப்பாண்டவர்கள் தாமும், தந்தையை கொண்டு - விதுரனை அழைத்துக்கொண்டு, வள் கொடி மதில் கோபுரம் நெடு வீதி அண்டர் ஆலயம் எனத்தகு கோயில் சென்று அடைந்தபின் பெரிய துவசங்கள்நாட்டப்பெற்ற மதில்களையும் கோபுரங்களையும் பெரிய வீதிகளையுமுடையதேவலோகமென்று(ஒப்புமையாற்)சொல்லத்தக்க தமது அரண்மனைக்குப் போய்ச்சேர்ந்தபின்பு, அடல் வேந்தர் - வலிமையை யுடைய அப்பாண்டவராசர்கள், வண்டு தாமரைமலர் என சுழலும் மா மலர் அடி பணிந்து ஏத்த - வண்டுகள் தாமரையலரென்றுஎண்ணி நெருங்கிவந்து சுழன்றுமொய்க்கும்படியான (விதுரனது) திருவடித்தாமரைகளை வணங்கி உபசரிக்க,—கண்டு-(விதுரன் அதனை) நோக்கி, அவர்க்கு வாழ்வுடன் அருள் புரிந்து-அம்மைந்தர்கட்கு ஆசீர்வாதத்தோடுஅநுக்கிரகஞ்செய்து,தன் கருத்தினால் விடை ஈந்தான் - தனது மனப்பூர்வமான அன்பினால் (அவர்களையும் உட்காருமாறு) அநுமதிதந்தான்; (எ - று.)

இனி, இச்செய்யுளுக்கு - பாண்டவர்கள் விதுரனைத் தங்கள்அரண்மனைக்கு அழைத்துக்கொண்டுபோய்ச சேர்ந்தபின்பு (விதுரனுடன்வந்தவர்களும் அவ்விந்திரப்பிரத்தநகரத்துராஜசபையிலிருந்தவர்களு மாகிய) வலிமையையுடையபலஅரசர்கள் விதுரனைத்திருவடிதொழுது துதிக்க(விதுரன்) அவர்கட்கெல்லாம் ஆசீர்வாதஅநுக்கிரகஞ்செய்து (பாண்டவர்களும் தானுமாகத் தனியேயிருந்து பேசவேண்டுமென்று) தான்கருதியதனால் (அவர்கட்கு) விடைகொடுத்து அவர்களை அனுப்பினான் என்று உரைத்தலும் பொருந்தும்; அடுத்தசெய்யுளில்"தானும் மைந்தரோரைவரு மொருபுடைதனித்திருந்துழி மொழிகின்றான்" என்பது காண்க. தாமும்-அம்மைந்தர்தாமும் என்றபடி. 'தாமும்' என்ற இறந்தது தழுவிய எச்சவும்மை, கதைத்தொடர்ச்சிபற்றியது. ஆலயம் - இருப்பிடம்: வடசொல். 'வண்டுதாமரைமலரெனச்சுழலும்அடி' என்றவிடத்து மயக்கவணிகாண்க; ஒப்புமைபற்றி ஒருபொருளை மற்றொருபொருளாக மாறுபடஅறிந்தமை கூறுதல், இதன் இலக்கணம். பாதத்துக்கும் தாமரைமலர்க்கும் செம்மை மென்மை அழகுகளில் ஒப்புமை. மீண்டும் 'மாமலர்' என்றது, அடிக்குச் சாதியடையாய் நிற்கும். வாழ்வு - வாழ்த்து. வாழ்வுடன் அருள்புரிந்து - வாழ்வுஉண்டாகுமாறு அநுக்கிரகஞ்செய்து என்றுமாம். 'வண்கொடி' என்றது - மதில் கோபுரம் வீதி அண்டராலயம் கோயில் என்றவற்றிற்கெல்லாம் அடைமொழியாகத்தக்கது. (ருஅ)

[இதுமுதல் நான்குகவிகள் - விதுரன் பாண்டவரிடத்துத் தான்வந்த காரியங்கூறுதல்.]

இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்.

ருகூ.—(இ - ள்.) வண்டு தேன் நுகர்ந்து இசை முரல் பசுந் தொடையலான் - வண்டுகள் (பூக்களிலுள்ள) தேனைக் குடித்து(க் களித்து) இசைபாடுதற்குஇடமான பசிய [புதிய] மலர்மாலையைத் தரித்துள்ளவனாகிய விதுரன், தானும் மைந்தர் ஓர் ஐவரும் ஒரு புடை தனித்து இருந்த உழி தானும் தன்மக்களாகிய பஞ்சபாண்டவர்களுமாக ஓரிடத்திலே (வேறியாவருமுடனின்றித்) தனிப்பட வீற்றிருக்கையில், இரு தக மொழிகின்றான் அழகிதாகச் சொல்கின்றான்:—'கோன் - திருதராஷ்டிரமகாராசன், நுவன்று தன்திருமுகம் எழுதி - (பத்திரிகையிலெழுதவேண்டிய செய்தியைத் தான்) சொல்லித் தனதாகப்பத்திரிகையெழுதுவித்து, (என்னிடங்கொடுத்து), மைந்தரை நீ கொணர்க என்ன - 'பிள்ளைகளை [பாண்டவர்களை] அழைத்துக்கொண்டுவருவாயாக' என்று (எனக்குக்) கட்டளையிட, ஏவலால் - அத்

தமையனுர்கட்டளையால், யானும் வந்தனன் - நானும் (உங்களை அழைத்தற்கு) வந்தேன்; அழைத்ததற்கு ஏதுவும் உளது - (அவன் இப்பொழுது உங்களை) அழைத்ததற்குக் காரணமும் உண்டு; (எ-று.)—அக்காரணம், அடுத்தமூன்றுகவிகளில் விளங்கும். அன்றே - ஈற்றசை; தேற்றமெனினுமாம்.

இருந்துழி = இருந்தஉழி: பெயரெச்சவீறு தொகுத்தல். தொடுக்கப்படுவது தொடையெனக் காரணக்குறி; ஐ - செயப்படுபொருள்விகுதி: அதன்மேல்,அல் - சாரியை. திரு தக - அழகுஅமைய: சிறந்தகருத்துப்பொருந்த, கம்பீரமாக எனினுமாம். கோன், ன் - சாரியை; [நன் - உருபு - ௬.] கோ - அரசன். இப்பொதுப்பெயர், இங்கே சந்தருப்பத்தினுற் சிறப்பாய்த் திருதராட்டிரனை யுணர்த்திற்று. நுவன்று, நுவல் - பகுதி. பத்திரிகையை 'திருமுகம்' என்றல் மரபு; வடமொழியிலும் 'ஸ்ரீமுகம்' எனப்படும்: சிறந்தவாயினுற்சொல்லப்படுஞ் சொற்களடங்கிய தென்றவாறு. (௫௯)

௬௦.—(இ - ள்.) நீ புரிந்த நல் வேள்வியின் கடன் கழித்து - நீ செய்த சிறந்த (ராஜசூய) யாகத்திற்கு உரிய முறைமையாகிய சடங்குகள் நிறைவேறியபின்பு,—யாவரும்-நாங்களெல்லாரும்,—நெடு மாடம் கோபுரம் திகழ்- உயர்ந்த உபரிகைவீடுகளும் கோபுரங்களும் விளங்கப்பெற்றதும், முது எயில் - பழமையான [தொன்றுதொட்டுஅழியாதுள்ள] மதில்கள் சூழ்ந்ததும், வளம் - செல்வவளம் நிறைந்ததுமான, நகர் - (அத்தினு)புரியினது, கோயில் - அரண்மனையை, புக்கனம் ஆக - சென்றுசேர்ந்தோமாக,—வலம்புரி மலர் தாரான் - நந்தியாவர்த்தமலர்மாலையைத்தரித்தவனுன துரியோதனன்,— 'நூபுரம் திகழ் இணை அடி - சிலம்பென்னும் அணி விளங்கப்பெற்ற இரண்டுகால்களையுடைய, அரம்பையர் - தேவமாதர்களாலும், நோக்கு அரு - பார்த்து அநுபவித்து எல்லைகாணமுடியாத, கவின் - பேரழகை, கொண்ட - தன்னிடத்துஉடைய, மா புரந்தரன் - சிறந்த இந்திரன், இவன்—,' என - என்று (காண்பவர்) வருணித்துக்கூறும்படி, இருந்தனன் - (சபையில்) வீற்றிருந்தான்; (எ - று.)

கழித்து = கழிய எனக்கொண்டு, எச்சத்திரிபு என்றலுமாம். கழித்தீ யாவரும்-குற்றியலிகரம். மாடம் - மண்டபமுமாம். கோபுரம், நூபுரம்,புரந்தரன் - வடசொற்கள். யாவரும் புக்கனமாக - தன்மையிற்படர்க்கைவந்த இடவழுவமைதி; [நன் - பொது - உ௯.] 'நூபுரம் திகழ் இணையடி' என்பதற்கு - நூபுரத்தினுல் விளங்குகிற பாதமென்று பொருள்கொள்ளுதலினும், நூபுரம்விளங்குதற்குக்காரணமான பாதமென்று கொள்வது, அக்காலின் இயற்கையழகை விளக்குவதாய்ச் சிறக்கும். 'இணையடி' என்றவிடத்து 'இணை' என்பது அடிக்கு வெறும்இயற்கையடைமொழியெனக் கொள்ளுதலினும், (தமக்குவேறுஒப்புமையில்லாமையால்) தம்மில்ஒன்றற்குஒன்றுநிகரான பாதமென்று கொள்வது விசேடமாம். அரம்பை - ரம்பாஎன்ற வடசொல்லின்விகாரம். இது தேவலோகத்து அப்ஸரஸ்ஸ்திரீகளிற் சிறந்தஒருத்தியின்பெயராதலால்,அம்மாதர்கள் 'அரம்பையர்' எனப்படுவர்; அரம்பைமுதலியோர் அல்லது அரம்பைபோல்வார் என்று பொருள் காண்க. இப்பொழுதுஉள்ள இந்திரன் தேவமாதர்களால் நோக்கி எல்லைகாணப்படும் அழகுடையான்; அங்ஙன மன்றி, அவர்களாற்பார்த்துமுடியாத பேரழகுடையானொரு மகேந்திரனிவனென்று ஒப்புமைவிசேடித்துச்சொல்லும்படி மிக்கசிறப்பாக அரசுவீற்றிருந்தனன் துரியோதனன், அவனது அழகையும் அரசுவீற்றிருத்தற்சிறப்பையும் வருணித்தவாறும். இனி, அரம்பையர் நோக்கு அருங் கவின் கொண்ட - அரம்பையர்களாற் காதலித்துப் பார்க்கப்படுதற் கருமையான [பிறர்க்கில்லாத] அழகைக்கொண்ட, சிறந்த இந்திரனென்றலும் அமையும். 'நோக்குறும்' என்ற பாடத்துக்கு, உறு - [illegible] புரந்தரன்—[அழகர் - ௬௫ - ஆம் பக்கம் பார்க்க.] (௬௦)

[illegible].—(இ - ள்.) (அங்ஙனம் சபையில் வீற்றிருந்த துரியோதனன்), [illegible] - (தனது) தம்பியர்களுடனும், தகை இலா துன்மதி சகுனிதன்னொடும் - பெருந்தன்மையில்லாத துர்ப்புத்தியையுடைய சகுனியுடனும், எண்ணி - ஆலோசித்து, கும்பம் மா மணி நெடு முடி நிரைத்த வன் கூடம் ஒன்று அமைக்க என்ன - '(மேலே) கலசம்வைக்கப்பெற்றவையும் சிறந்த இரத்தினங்கள் பதித்தவையுமான உயர்ந்த சிகரங்கள் வரிசையாய் அமைக்கப்பெற்ற அழகிய ஒருமண்டபத்தைச் செய்வீராக' என்று (சிற்பிகளுக்குக்) கட்டளையிட,—ஒட்பம் நூல் உணர்வுற்றுர் - சிறந்த (சிற்ப) [illegible] திரத்தையறிந்தவர்களான ஸ்தபதிகள்,—அம்புராசி சூழ் மண்தலத்து [illegible] எலாம் அடங்கு பேர் அவைத்து ஆக - நீர்த்தொகுதியாகிய கடலினால் [illegible] பட்ட நிலவுலகத்திலேயுள்ள அரசர்களனைவரும் அடங்கத்தக்க பெரிய ச[illegible]வையுடையதாக, உம்பர் ஆலயம் நிகர் என சமைத்தனர் - தேவலோக[illegible] (இதற்கு) உவமையென்று கூறும்படி (ஒருசபாமண்டபத்தைக்) கட்டிச் சித்தஞ்செய்தார்கள்; (எ - று.)

கும்பம், அம்புராசி, ஆலயம் - வடசொற்கள். அமைக்கென்ன - வியங்கோளீறுதொகுத்தல். மண்டலம் என்று எடுத்து, பூமண்டலம் என்றுங் கொள்ளலாம்; வடசொல்: வட்டமானஇடம். அரசு - உயர்திணைப்பொருள் தரும் அஃறிணைச்சொல். 'எல்லாம்' என்பது, இருதிணைக்கும் பொது. எலாம் - தொகுத்தல். அவைத்து - ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும் பெயர். ஆலயம் - வசிக்கிறஇடம். இங்கு 'உம்பராலயம்' என்றது - சுவர்க்கலோகத்துத் தேவசபையாகிய சுதர்மையை யாகலாம். 'உம்பராலயம் நிகர்என' என்பதற்கு - தேவலோகத்துக்கு (இம்மண்டபம்) உவமையாமென்று சொல்லும்படி யென்றும் பொருள்கொள்ளலாம்; உபமேயத்தினும் உபமானம் சிறந்ததா யிருத்தல் வேண்டு மென்பது, அலங்காரநூலார் துணிபு. ஒட்பம் - ஒளி: பண்புப்பெயர்; ஒள்-பகுதி,பம் - விகுதி: 'மை'விகுதி பெறுகையில், ஒண்மையெனநிற்கும். இங்கு 'ஒட்பநூல்' என்றது - சிறப்பாய், சில்பசாஸ்திரத்தைக் குறித்தது. நூல்உணர்வு உற்றார் - அந்நூலையறிதல்பொருந்தியவ ரென்க. மூன்றுமடி - அச்சபாமண்டபத்தின் பரப்பை விளக்கிற்று. (கக)

கஉ.—(இ - ள்.) கொற்றவன் - வெற்றியையுடையவனான துரியோதனன், பெற்ற தந்தையோடு உள் உறும் உணர்வு எலாம் பேசி - தன்னைப் பெற்றதந்தையான திருதராட்டிரனுடனே (தன்) மனத்திற் பொருந்திய எண்ணங்களையெல்லாஞ் சொல்லி ஆலோசித்து, மண்டபந்தன்னில் குடிபுகும் பொழுது - அம்மண்டபத்திற் பிரவேசஞ்செய்யும்பொழுது, மற்ற மாதுலன் - பங்காளிகளும் பகையாளிகளுமான அத்துரியோதனனுக்கு மாமனான சகுனி, உன்னையும் கூட்டி - உன்னையும் அங்குவருவித்து, மன் அவை முன்னர் - (அங்குக்கூடுகிற) ராஜசபையின்முன்னிலையிலே, நெஞ்சமோ வஞ்சமோ மாயமோ வகுத்து-தான்மனத்திற்கருதிய ஆலோசனையையோ வஞ்சனையையோ மாயையோ செய்து,ஆங்கு - அவ்விடத்தில் [அச்சமயத்தில்], கற்ற சூது நின்னுடன் பொரு நினைவினன் - தான்பயின்ற தேர்ந்த சூதாட்டத்தை உன்னுடன் ஆடவேண்டுமென்னும் ஆலோசனையுடையனா யிருக்கிறான்; இனி கருத்து தெரியாதே - இனி [இவ்வளவுசொன்னபின்பு] (அவர்களுடைய) எண்ணம் (உனக்குத்) தெரியாதன்றோ; (எ - று.)

[illegible] 'தெரியாதே' என்பதில், ஏகாரம் - வினாவையவல் எதிர்மறைப் பொருள் [illegible]; ஆகவே, இரண்டெதிர்மறை [illegible] [illegible] தெரிந்தேயா மென்ற [illegible]. [illegible] [illegible] சொல்லையெல்லாம் [illegible] [illegible] இவ்வளவு [illegible]

உனது)கருத்து(எனக்குத்)தெரியாது என்று உரைப்பினும் அமையும். இனி அவர்கள்கருத்து எனக்குத்தெரியாது என்று உரைப்பின், விதுரன் பொய் கூறியவ னுவன்; இவ்வளவுகூறிவிட்டபின்பு 'அவர்கள்கருத்து எனக்குத் தெரியாது' என்றல் சந்தர்ப்பமு மன்று. கொற்றவன் - ராஜராஜனென்ற படி. முன் - இடமுன்; அர் - சாரியை. நெஞ்சம் - தானியாகுபெயராய், மனத்திற்கருதியசூழ்ச்சியைக் குறித்தது; என்றது - தந்திர மென்றவாறு. இதனினுங் கொடியது, வஞ்சம். அதனினுங் கொடியது, மாயம். மாயம் - மாயா என்ற வடசொல் விகாரப்பட்டது; இது, மந்திரபலத்தாற் செய்யப் படுவது. (௬௨)

[விதுரன்கொடுத்த திருமுகத்தைத் தருமன் வாங்கிச் செய்தியுணர்தல்.]

௬௩.—(இ - ள்.) திருதராட்டிரன் திருமுகம் இது என - திருதராஷ்டிரனளித்த பத்திரிகை யிது வென்றுசொல்லி (விதுரன்) கொடுக்க,—விரதம் ஆக்கம் என்று அறிந்து அறம் பேணுவான் - (வாய்மை அருளுடைமை முதலிய) விரதங்களைத் தவறாது அனுட்டித்தலே (இம்மைமறுமைகளில்) நன்மைவிளைப்பது என்று (தனது உண்மையுணர்வினால்) உணர்ந்து தருமத்தை மிக்கவிருப்பத்தோடு குறிக்கொண்டு காத்து ஒழுகுபவனான தருமபுத்திரன்,—சென்று இறைஞ்சினன் வாங்கி - அருகிற்சென்று வணங்கி (இருகையாலும்) வாங்கி, வினைஞர் கை கொடுத்திட்டான் -(தன்னிடம்)தொழில்செய்பவர்கையிற் கொடுத்தான்; (அதனை வாங்கிக்கொண்ட அவ்வேலையாளர்), அங்கு எழுதிய படியினால் இரதம் மாற்றம் இயம்பலும் - அப்பத்திரிகையில் எழுதியுள்ளபடி இனிமையான வார்த்தையை வாசித்தளவில்,—(தருமபுத்திரன்), அது கேட்டு—, வாதனால் பணிப்பு உறு தொழில் மறுக்க நாம் யாவர் என்று உரை செய்தான் - 'கடவுளாற்கட்டளையிடப்பட்ட செயலை நிகழவொட்டாதபடி தடுத்தற்கு நாம் யார்?' என்று(தனதுமெய்யுணர்வுக்கு ஏற்ற வார்த்தையைக்) கூறினான்; (எ - று.)

("ஒன்றைநினைப்பி னதுவொழிந்திட் டொன்றாகும், அன்றி யதுவரினும் வந்தெய்தும் - ஒன்றை, நினையாதமுன் வந்துநிற்பினும் நிற்கும், எனையாளு மீசன்செயல்" என்றபடி) தெய்வசங்கற்பத்தால் நன்மையோ தீமையோ எதுவிளைவதானாலும் அதனை மறுக்க நம்மாலாமோ வென்று ஆஸ்திகர் தலையெடுத்தவார்த்தையைக் கூறினன், யுதிஷ்டிர னென்க.

திருதராஷ்ட்ரன் என்ற வடமொழிப்பெயர் - தரிக்கப்பட்டஇராச்சியத்தையுடையவ னென்று பொருள்படும்: அரசாள்பவ னென்று கருத்து; விசித்திரவீரியனது புதல்வருள் மூத்தவனாய் அரசக்குஉரியவ னாதல் பற்றி, இவனுக்கு இப்பெயர் ஏற்கும். சிறப்புடையனவான அருளுடைமையும், வாய்மையும், இங்கு 'விரதம்' என்று குறிக்கப்பட்டன. 'தருமமேஜயம்', 'சத்தியமேஜயம்' என்று கருதி அருளுடையனாய் வாய்மைதவறாது அறத்தை அனுட்டிப்பவ னாதலால், 'விரத மாக்கமென்று அறிந்து அறம்பேணுவான்' எனப்பட்டான். இனி, விரதமென்ற வடசொல்லுக்கு - நீக்கமென்று ஒருபொருளிருத்தல்கொண்டு, இத்தொடர்க்கு - செல்வம்நீங்குந் தன்மையதென்று (செல்வநிலையாமையை)அறிந்து (அவ்வாறு மேற்கொள்ளாது வைராக்கியத்தையே மேற்கொண்டு) தருமத்தைப் பரிபாலிப்பவ னென்றலு மொன்று. வினைஞர் - தொழிலாளர்: இது இங்கே, சந்தர்ப்பத்தினால், [illegible] [illegible] தொழிலாளர்மேல் நின்றது. இரதம் - ரஸம் என்ற வடசொல் [illegible] [illegible] என்ற வடசொல்லுக்கு - [illegible] [illegible] [illegible] என்பது பொருள். பணிப்பு உறும் - [illegible] [illegible] [illegible] [illegible] - எதிர்மறுத்தல். [illegible] - [illegible] [illegible] [illegible] இனி, [illegible] [illegible] [illegible] [illegible] [illegible]

சாட்டிரனது கட்டளைப்படியன்றித் தமக்குள்ள ஒருசுதந்திரமில்லையென்னுங் கருத்தால் 'வரதனுறபணிப்புறதொழில் யாவர்ளாம்மறுக்க' என்று யுதிஷ்டிரன் கூறினனென்க. (கூங)

[தருமன் துரியோதனனது சூழ்ச்சியைப் பழித்தல்.]

கூசு.—(இ - ள்.) மனு நெறி வழுவாதோன் - மநுதருமசாஸ்திரமுறைமை (சிறிதும்) தவறாதவனான தருமபுத்திரன்,—மூத்த தாதைதன் ஓலையும் இளையவன் மொழியும் ஒத்தமை நோக்கி - (தனது) பெரியதந்தையான திருதராஷ்டிர னனுப்பிய பத்திரிகையும் சிறியதந்தையான விதுரன் சொன்ன வார்த்தையும் (தம்மில்) ஒத்திருந்ததன்மையை யுணர்ந்து,— வார்த்தை வேறு மற்று ஒன்றையும் உரைத்திலன்-(நியாயத்துக்கு) மாறான வார்த்தைவேறொன்றையுஞ் சொல்லாதவனாய்,—'சேதத நாகம் வெம் கொடியவன் -(கோபத்தாற் கண்)சிவந்த சர்ப்பத்தின் வடிவமெழுதிய பயங்கரமான துவசத்தையுடையவனாகிய துரியோதனன், கொடிய வல் சிந்தையின் நிலை தோன்ற - (தனது) மிகக்கொடியமனத்தின் இயல்பு விளங்குமாறு [தனது கஞ்சிந்தைக்கு ஏற்ப என்றபடி], கோத்த - தொடர்ச்சியாக ஆலோசித்த, கோவை - ஆலோசனைத்தொடர், நன்று ஆயினும் - (அவனுக்கு) நல்லதாயிருந்தாலும், குருகுலம்தனக்கு தகுவதோ - (நாம்பிறந்த) குருகுலத்தின் பெருமைக்குத் தகுமோ? என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

வஞ்சனையாக வருவித்துச் சூதாடிப் பொருள்கவருங்கருத்து துஷ்டரது துராலோசனைக்கு ஏற்றதாயினுங் குடிப்பழியன்றோ வென்றன னென்க. குருகுலம் - சந்திரவம்சத்திற்பிரசித்திபெற்ற குருவென்னும்அரசனது மரபு; வடமொழித்தொடர். 'வேறுமற்றொன்றையும்' என்றவிடத்து 'மற்று' என்பதை அசையென்னலுமாம். உரைத்திலன் - எதிர்மறையிறந்தகால முற்றெச்சம். மனுநெறி - மநுவென்னும் அரச னியற்றிய தருமசாஸ்திரத்திற் கூறிய நீதி. சேதத, செம்மையென்றபண்பினடிவிகாரப்பட்டு வினைத்தன்மையடைந்த 'சே' - பகுதி. ஓ - எதிர்மறை. 'கொடியவன்கொடியவன் சிந்தை' என்றவிடத்து 'மடக்கு' என்னுஞ் சொல்லணி காண்க.

இச்செய்யுளில் 'மனுநெறிவழுவாதோன்' என்ற விசேஷ்யம் - எப்பொழுதும்தகுதியில்சொற்சொல்லாது தக்கமொழியேபேசத்தக்கவ னென்ற கருத்தையும், 'நாகவெங்கொடியவன்' என்ற விசேஷ்யம் - தான் தனது கொடியில் விஷப்பாம்பை அறிகுறியாகக்கொண்டமைக்குஏற்பத் தீக்குணத் தீச்செயல்களையுடையனாய் நல்லோர்க்குப்பொல்லாங்குவிளைப்பவ னென்ற கருத்தையும் உட்கொண்டிருத்தலால், கருத்துடையடைகொளியணி. கோபங்கொண்டு கஞ்சொற்கூறத்தக்க சமயத்திலும் அங்ஙனம்ஒன்றுங்கூறினானில்லை யென்பார், 'வார்த்தைவேறுமற்றொன்றையு முரைத்திலன்' என்றன ரென்க. கொடிய, வல் - ஒருபொருட்பன்மொழி. (கூச)

[இதுமுதல் மூன்றுகவிகள் - தருமன்வார்த்தை: சூதாடுதலின் குற்றம்.]

கூரு.—(இ - ள்.) அடியும் - தலைமையும், ஆண்மையும் - பராக்கிரமமும், வலிமையும் - பலமும், சேனையும்—, அழகும்—, வென்றியும்-ஜயமும், தத்தம் குடியும் - தம்தமது குடிப்பிறப்பின்மேன்மையும், மானமும்—,செல்வமும்—, பெருமையும்—, குலமும் - வம்சமும், இன்பமும்—, தேசும் - ஒளியும், படியும் - நற்குணமும், மா மறை ஒழுக்கமும் - சிறந்த வேதங்களிற்கூறிய விதிமுறைப்படியொழுகும் ஸதாசாரமும், புகழும் - கீர்த்தியும், முன் பயின்ற கல்வியும் - முன்னமேதொடங்கி நெடுநாள்பழகித்தேர்ந்த வித்தையும், (ஆகிய இவையெல்லாம்),—சேர மடியும்-(சூதாடுவோர்க்கு) ஒருசேர அழியும்; ஆல் - ஆதலால், மதி உணர்ந்தவர் - அறிவினால்(அறியவேண்டியதை) அறிந்தவர்கள், சூதின்மேல் மனம் வைப்பரோ - சூதினிடத்து மனத்தைச் செலுத்துவார்களோ? வையார் - செலுத்தார்; (எ - று.)

"பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங், கழகத்துக் காலை புகின்", "உடைசெல்வ மூ ணொளி கல்வி யென் றைந்தும், அடையாவா மாயங்கொ ளின்" என்ற திருக்குறட்பாக்களும், "உருவழிக்கு முண்மையுயர்வழிக்கும் வண்மைத், திருவழிக்கு மானஞ்சிதைக்கும்-மருவு,மொருவரோடன்பழிக்கு மொன்றல்ல சூது,பொருவரோ தக்கோர் புரிந்து" என்ற நளவெண்பாவும் இங்கு நோக்கத்தக்கவை.

அடி - முதன்மை: அனைவரும் அக்கிரபூஜைசெய்யும்படியான சிறப்பு. இனி, 'அடி' என்பதற்கு - (மேற்சொல்லப்படும் ஆண்மை முதலியவற்றிற் கெல்லாம்) மூலகாரணமான நல்வினை யென்றலும் ஒன்று. ஆண்மை-ஆண் தகைமை: ஆடவர்க்கு உரிய திறம்; பௌருஷம், வீரம்: ஆண் மை எனப் பிரியும். ஆள் மை எனப்பிரித்து, ஆளுதல்தன்மை யெனக்கொண்டால்,அர சாளுந்திற மென்று பொருள்படும். குடி - இடவாகுபெயராய், நாடுமாம்; "படைகுடிகூழமைச்சுநட்பரணாறு, முடையா னரசருளேறு" என்ற திருக் குறளின் உரையிற் பரிமேலழகர் 'ஈண்டுக் குடி யென்றது, அதனையுடைய நாட்டினை' என்றமை காண்க.) மானமாவது - எப்பொழுதும் தம்நிலையில் தாழாமையும், ஊழ்வினையால் தாழ்வுவந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். பெருமை - செயற்கரியனசெய்தல் முதலிய பெரியாரதுதன்மை. குலம் - தான்பிறந்தகுலத்தின் சிறப்புமாம். திருக்குறளில் "நின்ற, ஒளியோடொழு கப்படும்" என்றவிடத்து 'ஒளி - உறங்காநிற்கவும் தாம் உலகங்காக்கின்ற அவர் கடவுட்டன்மை' என்றும், "ஒளி யொருவற்குள்ளவெறுக்கை" என்ற விடத்து 'ஒளி - தான்உளனாயகாலத்து மிக்குத்தோன்றுத லுடைமை'என் றும் பரிமேலழகர் உரைத்தவை, இங்கு 'தேசு' என்றவிடத்து அறியத்தக் கன; "உறங்குமாயினு மன்னவன் றன்னொளி, கறங்குதெண்டிரை வைய கங் காக்குமால்" என்பது சீவகசிந்தாமணி. தேசு - தேஜஸ் என்ற வட சொல்லின் சிதைவு. தேசு - தேககாந்தியுமாம்.

படி - பண்பு; நிலைமையும், வடிவின்தோற்றமுமாம். இனி, 'படியும்' என்பதை எதிர்காலப்பெயரெச்சமாக் கொண்டு, ஒழுக்கத்துக்கு அடை மொழியாக்கி, படிந்த[அமைந்த] வைதிகாசார மெனினும் அமையும். 'முன் பயின்றகல்விமடியும்' என்றதனால், இனிக்கல்வியுண்டாகாதென்பது போத ரும்; மேற்காட்டிய "உடைசெல்வம்"என்ற தொடக்கத்துக் குறளின் உரை யிற் பரிமேலழகர் 'காலமும் கருத்தும் பெறுமையின், இவை யுளவாகா வென்பதாம்' என்றார். 'முன்பயின்ற' என்ற அடைமொழியைப் பிறவற் றிற்கும் ஏற்றபெற்றி கூட்டலாம்; மேற்காட்டிய "பழகிய செல்வமும்" என்ற தொடக்கத்துக் குறளின் உரையில் 'பழகிய என்பது, பண்புடனும் இயையும்: தான்செய்துகொள்ளும் அறம்முதலியவே யன்றி,முன்னோரைத் தொடங்கிவருகின்ற செல்வமும் முன்செய்தநல்வினையின்பயனாய பண்பும் இலவா மென்பதாம்' என்றார் பரிமேலழகர்.

சூது சிறுமைபலசெய்து அவற்றான் இருமையுங்கெடுத்தல் கூறப் பட்டது.

ஆல் - ஆதலால் என்பதன் விகாரம். ஸேநா, மாநம், மதி - வடசொற் கள். சூதின்மேல், மேல் - ஏழனுருபு. 'மனம்' என்றது - மத்திமதீபமாய், முன்நின்ற 'வைப்பரோ' என்றதனோடும், பின்நிற்கும் 'வையார்' என்பத னோடும் இயையும். வற்புறுத்துதற்பொருட்டு 'வைப்பரோ மனம் வையார்' என வினாவும் விடையு மாகிய இரண்டுவாய்பாட்டாலுங் கூறினார்; "முனி வர்சொற் பொய்க்குமோ பொய்யாதே," "கீழ்மக்கட், குண்டோ வுணர்ச்சி மற்றில்லாகும்" என்பனவும் இவ்வாறே. (௩௯)

௪௦.—(இ-ள்.) குழகர் ஆய் இள மடந்தையர்க்கு உருகுவோர்-யௌவன பருவமுடையராயிருந்து இளமையையுடைய மகளிர்க்காக மனமுருகுகிற

வர்கள் [காமுகர்],—குறிப்பு இலாமையின் - ஆலோசனையில்லாமையினால், [illegible] தாங்களே படுக்கும் ஆறு உணராமல் - மனக்கவலையில் தாமே (தம்மை) அகப்படுத்திக்கொள்ளுகிற வகையைத் தெரிந்துகொள்ள மாட்டாமல், நாளும் மிக பழகுவார் - எந்நாளிலும் (சூதாட்டத்தில்) மிகுதியாகப் பழகுவார்கள்; பேர் அறிவே அழகு ஆக கொண்டவர் - சிறந்தஅறிவையே (தமக்கு) அழகாகக்கொண்ட பெரியோர்களோவென்றால்,—அறம் தொழில் புரியாமல் - தருமகாரியங்களைச் செய்யாமல், கழகம் ஆடவும் பெறுவரோ - சூதாடுவார்களோ? [சூதாடவேமாட்டார்கள் என்றபடி]; இதனினும் - இந்தச்சூதாட்டத்தினும், கள் உணல் - கட்குடிப்பது, இனிது அன்றே - இனியதன்றோ; (எ - று.)—அன்றே - தேற்றம்.

அறிவில்லாத கீழ்மக்கள், சூதாட்டத்தினால் தங்களுக்குத் தாங்களே துன்பமூட்டிக்கொள்ளுதலை அறியுந்திற மில்லாமல், ஆடுங்காலத்திலுண்டாகும் அற்பமான மனமகிழ்ச்சியையே மிகப்பெரியபுருஷார்த்தமாகப்பாராட்டி, சிற்றின்பத்திலழுந்துதல்போலவே இசசூதாட்டத்திலும் மிகப்பழகுவார்கள்; அறிவுடையவர்களோ, சூதாட்டத்தினால்விளையுந் தீங்கைத் தமது பேரறிவினால் நன்குஉணர்ந்து, அசசூதாட்டத்தை மிகவெறுத்து, தருமகாரியங்களையே மேற்கொண் டொழுகுவர் என்றவாறு. "காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல், ஈதன்மறுத்த லிவைகண்டாய் - போதிற், சினையாமைவைகுந் திருநாடா செம்மை, நினையாமைபூண்டார்நெறி" என்றபடி, கண்டமகளிரிடத்தெல்லாங்காதல்கொள்ளுதலும் சூதாடுதலும் கட்குடித்தலும் அறம்பொருளின்பஙகட்குஇடையீடாகி ஆக்கஞ்சிதைத்து அழிவுதலைத்தருவனவாய்ப் பகைப்பாற்பட்டுச் குற்றமென்னும் இனத்தனவாதலால், இங்கு எடுத்துக்கூறப்பட்டன. திருவள்ளுவர்குறளில் 'பெண்வழிச்சேறல்,' 'வரைவின்மகளிர்,' 'கள்ளுண்ணாமை,' 'சூது' என்ற அதிகாரங்களை ஒன்றன்பின்ஒன்றாக நிறுத்தியதும், அவற்றுள் வரைவின்மகளிரென்னும் அதிகாரத்தின்இறுதியில் "இருமனப்பெண்டிருங் கள்ளுங் கவறுந், திருநீக்கப்பட்டார்தொடர்பு" என்றதும், அக்குறளி னுரையிற் பரிமேலழகர் 'ஒத்தகுற்றததவாகலின், கள்ளும் சூதும் உடன்கூறப்பட்டன. வடநூலாரும், இக்கருத்தான், விதனமென உடன்கூறினர்' என்றதும், இங்கு உணரத்தக்கவை. சூதாடுதலைக் கட்குடித்தலினும் கொடியதாகக் கூறியது, கள்ளுண்ணுதலில் உண்டாகும் பொல்லாங்குகள் குடிப்பவரளவிலேயே யடங்கிநிற்றலும், சூதாடுதலில்விளையும் பொல்லாங்குகள் தம்மையேயன்றிப் பிறரையுஞ் சார்தலும், பொய்ம்முதலிய பெரும்பாவங்கட்கு இடமாயிருத்தலும் பற்றி யென்க; அன்றியும், மதுபானம் போர்க்குஎழுவதுமுதலிய சிலகாலங்களில் நன்மைபயத்தலையும், சூதாடுதல் எக்காலத்திலும் நன்மைபயவாமையையும் நோக்குக. இங்கு, சூதாட்டத்தின்பொல்லாங்கினாற் கட்குடித்தலை இனியதாகக் கூறியது - அகமலர்ச்சியணி; இதனை, வடநூலார் உல்லாஸாலங்கார மென்பர்: ஒன்றன் குணத்தையாவது குற்றத்தையாவது கொண்டு மற்றொன்றற்கு அவை உள்ளனவாகச் சொல்லுதல், இவ்வணியின்இலக்கணம்; இங்கு, சூதாட்டத்தின் குற்றத்தினாற் கள்ளுண்ணல் குணமாகச் சொல்லப்பட்டவாறு காண்க. "கல்வியழகேயழகு," "கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால், மற்றோரணிகலம்வேண்டாவாம்" என்றாற்போல, 'அழகு பேரறிவாகவே கொண்டவர்' என்றார்.

குழகு - மகளிர்மனத்தைக் கவருங் கட்டழகு: அதனையுடையவர் - குழகர். மடந்தையர் - மடந்தைப்பருவமுடையவர்; அப்பருவத்துக்கு வயதெல்லை - பதின்மூன்றுமுதற் பத்தொன்பதுவரையிலும். உம்மைமூன்றனுள், முதலது - முற்றும்மை; மற்றவை - இழிவுசிறப்பு. முன்னிரண்டெகாரமும் - பிரிநிலைப்பொருளன. ஓகாரம் - எதிர்மறை. மிகப் பழகுவார் எனவே [illegible] சிந்தைநோய் படுக்குமாறு என இயைப்பினுமாம். [illegible]

கஎ.—(இ - ள்.) மேதக தெரி ஞானம் நூல் புலவரும் - மேன்மையாக [மிகுதியாக] அறிந்த தத்துவநூலுணர்ச்சியையுடைய வித்துவான்களும், வேந்து நூல் அறிந்தோரும் - அரசநீதியைக்கூறுகின்ற சாஸ்திரங்களைக் கற்றுவல்லவர்களும்,—(சூதாடுதலை), பாதகத்தில் ஒன்று என்னவே - பெரும்பாவத்தொழில்களுள் ஒன்றென்றே, முன்னமே பலபட பழித்திட்டார் - முற்காலத்திலேயே பலவகையாக நிந்தித்துவிலக்கியுள்ளார்கள்; (அவ்வாறு சூதாடுதலைவிலக்கியிருக்கவும்), தீது அகப்படு புல் தொழில் இளைஞரின் - குற்றத்திற்குஉள்ளாகிற இழிதொழில்களையுடைய சிறுவர்கள்போல, சிறிது சிந்தனை இன்றி - சிறிதேனும் ஆலோசனையில்லாமல், சோதகத்துடன் - வஞ்சனைக்கருத்தோடு, சகுனி—, தன் சூதினுக்கு என்னையோ எதிர் என்றான் - தான் ஆடுகின்ற சூதாட்டத்துக்கு என்னைத்தானா எதிரில்நின்றுஆடுபவனென்று கொண்டான்? (எ - று.)

தான் வஞ்சனைக்கருத்துடன் ஆடுகின்ற சூதாட்டத்துக்குச் சிறிதும் வஞ்சகக்குணமில்லாத என்னை எதிராகக்கொள்வது சகுனிக்குச் சிஞ்சித்துந் தக்கதன் றென்பது, தருமபுத்திரன்கருத்து. சூதாடல் பெரும்பாவமென்பது வைதிகநூலார்க்கும் லௌகிகநூலார்க்கும் ஒத்தகொள்கையா மென்பது, முன்னிரண்டடியின் தாற்பரியம். பெருந்தன்மை சிறிதுமில்லாமல் வஞ்சனைக்கருத்தோடு சூதாடஎண்ணிய சகுனிக்குப் புன்றொழிலிளைஞர் உவமையாக்கப்பட்டனர். 'என்றான்' என்பதற்குத் துரியோதனனென்பதைத் தோன்றாவெழுவாயாக்கொண்டு, சகுனிதன் - சகுனியினுடைய, சூதினுக்குத் துரியோதனன் என்னைத்தானா ஈடாக்கினானென்றும் உரைகூறலாம். ஞானநூல் - தத்துவஞானத்தையுணர்த்தும்வேதாந்தசாஸ்திரம்: கடவுளைத்தியானஞ்செய்து பயனுளதாகக்கழிக்கவேண்டிய பொழுதைச் சூதுசதுரங்கமாடி வீணேபோக்குதல் தகுதியன் றென்பது, வேதாந்திகளின்கொள்கை.

மேதக - மேன்மை தகு என்ற இரண்டுசொற்கள் மருவி ஒருசொல் தன்மைப்பட்டுநின்ற 'மேதகு' என்னும் பகுதியினடியாப் பிறந்த செயவெனெச்சம். வேந்து + நூல் = வேததுநூல்; வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று: [நன் - உயிர் - ௩௪.] வேத்துநூல் - அரசநீதிகூறும் காமந்தகம் சுக்ரநீதி முதலாயின. இரண்டாமடியிலுள்ள ஏகாரமிரண்டனுள், முன்னது - பிரிநிலை; பின்னது - தெளிவு. இளைஞரின், இன் - ஐந்தனுருபு, ஒப்பு. என்னையோஎன்றது, சூதுபெருங்குற்றமென்று அறிந்த என்னை எதிராகக்கொள்வது தகுதியன்று என்னும் பொருளைத் தந்துநிற்றலால், ஓகாரம் - ஒழியிசைப்பொருளது. (கஎ)

['நின்கருத்தைக்கூறு' என்று விதுரனைத் தருமன் வினவல்.]

கஅ.—(இ - ள்.) தருமன் மைந்தனும் - தருமபுத்திரனும், இ முறை - இவ்விதமாக, தன் கருத்தினில் நிகழ்ந்தஆறு கூறி - தனது மனத்திலே தோன்றியபடியே (தன்னுடையஅபிப்பிராயத்தைச்) சொல்லி,—'என் கருத்தினால் பெறுவது என் - என்னுடையஎண்ணத்தினால் யாது நடக்கும்? [ஒன்றும் நடவாது]; விதியினை யாவரே எதிர் வெல்வார் - ஊழ்வினையை எதிர்த்துச் சயிப்பவர் யாவருளர்? [ஒருவராலும் விதியை வெல்லமுடியாது, எல்லாம் விதியின்படியே நடக்கு மென்றபடி]; மன் கருத்தையும் - திருதராஷ்டிர மகாராசனது எண்ணத்தையும், அவன் திருஉளம் நிகர் மகன் கருத்தையும் - அவனது மனக்கருத்துக்கு ஒத்துநடக்கிற அவன்மகனான துரியோதனனது எண்ணத்தையும், நோக்கி - ஆராய்ந்துபார்த்து, நின் கருத்தை நீ உரை - (இப்பொழுது நாங்கள்செய்யத்தக்கது இன்னது என்பதைப்பற்றிய) உனது அபிப்பிராயத்தை நீ எடுத்துக்கூறுவாயாக,' என - என்றுகேட்க,—விதுரனும்—, நிகழ்ந்தன - (அத்தினாபுரியில்) முன்புநடந்தவாலாறுகளை, உரைக்கின்றான் - சொல்வானாயினான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

இளமையிலே குந்திக்குத் துருவாசமுனிவ னுபதேசித்திருந்த மந்திரத்தின் மகிமையால் எதிர்வந்த யமதருமராசனது அருளாற் பிறந்தவனாதலால், யுதிஷ்டிரன் 'தருமன்மைந்தன்' எனப்பட்டான். 'தன்கருத்தின்படி ஒன்றும் நடவாது' என்ற சிறப்புப்பொருளை, பின்வரும் 'விதியினை யாவரே எதிர்வெல்வார்' என்ற பொதுப்பொருள் சாதித்துநிற்றலால், இரண்டாமடி வேற்றுப்பொருள்வைப்பணி. 'நிகழ்ந்தன' என்பதற்கு, (தன்கருத்தில்) தோன்றியவற்றை என்று உரைகூறுதல் சிறப்பின்மையை, அடுத்தசெய்யுளை நோக்கி யுணர்க. 'எதிர்வெல்வார்' என்பதில், எதிரென்றபகுதியே வினையெச்சப்பொருள்பட்டுநின்றது; "வரிப்புனைபந்து" என்னுமிடத்திற் போல.

[விதுரனது உத்தரம்.]

௯௯.—(இ - ள்.) 'இங்கு - இவ்விடத்தில், நீ—, எனக்கு - என்னிடத்தில், இயம்பிய - சொல்லிய, யாவையும் - எல்லாவற்றையும், யானும்—, அங்கு - அவ்விடத்தில், அன்னவர் கேட்ப - அந்தத் துரியோதனன்முதலியோர் கேட்கும்படி, நீர்மையின் மொழிந்தனன் - தக்கவகையாகச் சொன்னேன்; என் மொழி யார்கொலோ மதிக்கிற்பார் - (அங்கே) என்வார்த்தையை எவர்தாம் நன்குமதித்துக்கேட்டவர்? [எல்லோரும் அலக்ஷியஞ் செய்துவிட்டார்களென்றபடி]; பொங்கும் நீர் உடை பூதலம் தலைவ - பொங்குமியல்புள்ள கடலை ஆடையாகக்கொண்ட பூமிக்குத் தலைவனே! கேள் - கேட்பாயாக: புனைந்த நின் இதயத்து தங்கும் நீர்மையின் புரிக - (கல்வி கேள்விகளினாற்) சிறப்படைந்துள்ள உனது மனத்தில் தோன்றும் விதமாகவே செய்வாயாக,' என - என்று, புதல்வனை - மைந்தன்முறையாகின்ற தருமபுத்திரனைநோக்கி, தந்தையும் - (சிறிய) தகப்பன்முறையான விதுரனும், தக சொன்னான் - தகுதியாகக் கூறினான்; (எ - று.)

'நின்கருத்தை நீ உரை' என்று கீழ்த் தருமன் வினவியதற்கு, விதுரன் தன்எண்ணத்தை உள்ளபடிகூறாமல் முன்பு அத்தினாபுரியில் நிகழ்ந்த செய்தியை எடுத்துச்சொல்லி ஒருவாறு தன்கருத்தைக் குறிப்பித்து 'உன்விருப்பத்தின்படியே செய்' எனக் கூறிமுடித்தது - 'ஐவரை அழைத்துவரும்படி தூதுவந்த தான் அதற்குமாறாகத் தன்கருத்தை நேரேசொல்வது, தன்னைத் தூதனுப்பிய திருதராஷ்டிரனுக்குத் தான் வஞ்சனை செய்ததாய் முடியும்' என்று கருதியதனா லென்க; இவ்வாறு தூதலட்சணத்திற்கு மாறுபடாமற் கூறினமையைப் பாராட்டி 'தந்தையுந் தகச்சொன்னான்' என்றார். தான் கூறிய உறுதிமொழியை மதியாது அலட்சியஞ் செய்தமையைக் குறித்து 'யார்கொலோமதிக்கிற்பார்' என விதுரன் குறைகூறினனென்க: இவ்வாறு விதுரன்கூறியது, 'தருமனும் தன்மொழிப்படியேநடப்பனோ? நடவானோ?' என்ற ஐயக்கருத்தையுந் தொனிப்பிக்கு மென்னலாம். விதுரன் தருமபுத்திரனிடத்து நன்குமதிப்புடையனாதலின், 'புனைந்தநின்னிதயம்' என்றான்; அன்றி, துரியோதனாதியர்தாம் கேளாவிட்டாலும் நீயாவது கேட்டு அதன்படி நடக்கவேண்டுமென்று கூறுவான், யுதிஷ்டிரனை மேம்படுத்தி 'புனைந்தநின்னிதயம்' எனக் கூறினனுமாம். இனி, 'புதைந்துநின்னிதயத்துத், தங்குநீர்மையில்' என்றும் பாடமுண்டு.

'இங்கு' என்றது, இந்திரப்பிரத்தத்தை. 'அங்கு' என்றது, அத்தினாபுரியை. இங்கு - இப்பொழுது எனினுமாம். 'இயம்பிய' என்பதை, இறந்தகாலப்பெயரெச்சமாகவாயினும் இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும்பெயராகவாயினுங் கொள்க. யானும் மன்னவர் கேட்ப என்று பிரித்தும் உரைக்கலாம். நீர்மையின்மொழிதல் - இனிதுகூறுதல்; நீர்மை - நீரின்தன்மை, இனிமை. மொழிந்தனன் - தன்மையொருமைமுற்று. யார்கொலோ, கொல் - அசை, ஓ - இரக்கம். 'மதிக்கிற்பார்' - இயல்பினாவ் இறந்தகாலம் எதிர்காலமாகச்சொல்லப்பட்ட காலவழுவமைதி: இச்சொல்லில், கில் - ஆற்ற

லுணர்த்தும் இடைநிலை. 'பொங்குநீர்' எனவே, கடலாயிற்று. உடுக்கப்படு வது உடை என ஆடைக்குக் காரணக்குறி; ஐ-செயப்படுபொருள்விகுதி. ஹ்ருதயம் - வடசொல். புரிகென - விகாரம். (௬௧)

[வீமசேனன் வார்த்தை.]

இதுவும், அடுத்த கவியும்-ஒருதொடர்; ஒருங்கு உரைக்கப்படுகின்றன.

௭௦, ௭௧.—(இ - ள்.) (௭௦) '(துரியோதனன்),—அன்று-(நாம்சிறுவரா யிருந்த)அக்காலத்தில், தாழ் புனல் துறையினில்-ஆழமான(கங்கையின்)நீர்த் துறையிலே, கழு நிரைத்து - கழுக்களை வரிசையாகநிறுத்தி, (என்னைக் கொல்லுமாறு),அரிய வஞ்சனை செய்தான் - (பிறராற் செய்வதற்கு)அருமை யான வஞ்சகத்தைச் செய்தான்; (பின்னையும்), குன்று போல் உயர் வாழ் மனை கொடும் தழல் கொளுத்தி வல் கொலை சூழ்ந்தான் - மலைபோலஉயர் ந்துள்ளதாகிய(நாம்) வாழ்ந்தமாளிகையிற் கொடியநெருப்பிட்டுக்கொளுத்தி நம்மைக்கொல்லுமாறு வலிய கொலைத்தொழிலை ஆலோசித்தான்; (இப் பொழுதும்), சூதினில் வென்று யாவையும் கவரவே விரகினால் அழைத்திட் டான் - சூதாட்டத்தில்(நம்மைச்)சயித்து (அவ்வழியாக) நமதுபொருள்முழு வதையும் கவரும்பொருட்டாகவே (புதுமண்டபத்தைக்காணவேண்டுமென் கிற வியாஜத்தினால்) தந்திரமாக அழைத்திருக்கிறான்; அ இகலோன் - (எப் பொழுதும்நம்மிடத்துப்)பகைபாராட்டுகின்றவனான அத்துரியோதனன்,நம க்கு அன்பு உடை துணைவன் ஆய் இருந்தது-நம்மிடத்து அன்புள்ள சகோ தரனாய் வாழ்ந்தது, என்றுதான் - எக்காலத்தில்தான்? [ஒருபோதுமில்லை யென்றபடி]; (௭௧) முளையிலே உயிர் கொல்வது ஓர் கடு விடம் - முளைக் கும்பருவத்திலேயே உயிரைவதைப்பதாகிய ஒரு கொடிய நச்சுமரம், முற்றி வல் காழ் ஏறி விளையில் - முதிர்ந்து மிகவும்வயிரமேறி வளர்ந்துவிட்டால், ஏது செய்யாது - எந்தக் கேட்டைத்தான் செய்யமாட்டாது? (அதுபோல வே கொடியதுரியோதனனும் பலவகையாகத் துன்பஞ்செய்வான்; ஆத லால்), அவருடன் விழையும் நண்பு இனி வேண்டாம் - அவருடன்விரும் பிக்கொள்ளுஞ்சினேகம் நமக்கு இனிமேல் வேண்டுவதன்று; வளையில் - (நாம் அத்துரியோதனனுக்கு)அடங்கிப் பணிவாகநடந்துகொண்டால்,(அத் துரியோதனன்), ஏதமே புரிந்து - (நமக்குத்) துன்பத்தையேசெய்து, மேல் மலைந்திடும்-(அவ்வளவோடுநில்லாது)மேலும் போர்செய்தும் வருத்துவான்; (ஆதலின் அவனோடு நட்புப்பாராட்டாமல்), வல் படைகொடு மோதி களை யிலே - கொடிய ஆயுதங்களினாற் போர்செய்து (அப்பகையை) ஒழித்தால் மாத்திரமே, நமக்கு இருப்பு உளது - நாம் உயிரோடு வாழ்தல்கூடும்,' என் றனன் - என்று கூறினான்: (யாவனெனில்),—காற்று அருள் கூற்று அன் னான்-வாயுதேவன்பெற்ற (பகைவர்க்கு)யமன்போன்றவனாகிய வீமசேனன்.

முதலில் என்னைக்கொல்லுமாறு ஆற்றிலே கழுநாட்டியும், பிறகு நம் மெல்லாரையுங்கொல்லுமாறுநாம்வாழ்ந்தமனையில்தீயிடச்சூழ்ச்சிசெய்தும், இப்போதும் நமது செல்வவாழ்க்கைமுழுவதையும் பறிக்கும்வகையாக மண் டபமென்றவியாஜம்வைத்துஅழைத்தும்,இவ்வாறு நம்முடைய கேட்டிற்கே மேன்மேற் பலபடியாகத் துரியோதனன் முயல்கின்றனனாதலால், அவ னுக்கு நாம் இப்பொழுது சிறிதும் இடங்கொடாமல் அவனைக் கொன்றால் தான் நாம் உயிர்தப்பிப்பிழைக்கலாமென வீமன் தனது கருத்தை வெளி யிட்டான்:இதனால், துரியோதனனிஷ்டப்படி மண்டபத்தைக்காணச் செல் லுதல் தக்கதன்றென வீமன் மறுத்தவாறு.

(௭௦) துரியோதனன் கழுநிரைத்து வஞ்சனைசெய்த கதை:—ஒருநாள் துரியோதனன் கங்கைத்துறையில் இரும்பினாலும் செம்மரத்தாலும் கூரிய கழுக்களை நீரின்மேல்தோன்றாதபடி உள்நாட்டச்செய்து,வீமனை'நீரில்விளை யாடலாம் வா'என்று வஞ்சனையாக அழைத்துப்போய் 'இங்கிருந்து நீ நீரிற்

குதிக்கின்றனையா பார்ப்போம்?' என்ன, அப்பொழுது கண்ணன் கருவண்டினுருவங்கொண்டு கழுமுனைதோறும் உட்கார்ந்திருக்க, வீமன் அதனை நோக்கி 'இதுஎன்ன நீரோட்டத்தில் வண்டுகள்உட்கார்ந்திருக்கின்றனவே!' என்றுஉற்றுப்பார்க்கும்போது அவற்றின்கீழ் வசிகள் நாட்டியிருக்கக் கண்டு தன்சங்கேதப்படி அவைநாட்டியிராதஇடம்பார்த்துக்குதித்துக் கரையேறி மீண்டன னென்பதாம்.

இரண்டாமடியிற் குறித்த கதை:—அத்தினாபுரியிலே தருமபுத்திரனுக்கு இளவரசுமுடிசூட்டியமைகண்டு அழுக்காறுகொண்ட துரியோதனனுடைய கருத்துக்கு இணங்கிய திருதராட்டிரன், புரோசனனென்னுந் துர்மந்திரியுடன் சதியாலோசனைசெய்து வாரணாவதமென்னும் நகரத்தில் அரக்குமாளிகையொன்று கட்டிமுடித்துப் பாண்டவர்களை அதில்வசிக்கச்செய்து ஓரிரவில் அம்மாளிகையில் தீப்பற்றவைத்து அவர்களை ஒழித்துவிடுவதென்று நிச்சயித்து, அவ்வமைச்சனைக்கொண்டே அந்நகரத்தை விசேஷமாக அலங்கரிப்பித்து, ஒருநாள் தருமபுத்திரனைநோக்கி 'நீ உனது தம்பியர் நால்வருடன் வாரணாவதத்துச்சென்று தனியேவாழ்வாய்' என்று கட்டளையிட்டு, அப்புரோசனனையே துணையாக்கி அவனோடும் அவனுக்கு அடங்கிய பரிவாரத்தோடும் அனுப்ப, பாண்டவரும் குந்தியும் வாரணாவதத்திற்சென்று தங்கட்கென்று புதிதாகச்செய்யப்பட்ட மாளிகையில் வசித்திருந்தனர்; அங்ஙனம் வசிக்குநாட்களிலே பாண்டவர்கள் அரக்குமாளிகையின் தன்மையையும், புரோசனனதுசெய்கைகளையும் உற்றுநோக்கிச் சங்கைகொண்டிருக்கையில், விதுரனாலனுப்பப்பட்ட சிற்பியொருவன் வீமனிடம்வந்து, திருதராட்டிரனது கட்டளையின்படி புரோசனன் வஞ்சனையாக இந்தமாளிகையைக் கட்டும்பொழுது அவனது சூழ்ச்சியை யுணர்ந்த விதுரனுடைய ஏவலால் தான் இம்மாளிகையினுள்ளே ஒருபுறத்தில் நீண்ட சுரங்கவழியொன்றை நெடுந்தூரத்திலுள்ள ஒருவனத்திற் சென்று சேரும்படி எவருமறியாமல் அமைத்துள்ள தந்திரத்தை அந்தரங்கமாகத்தெரிவித்து, அவ்வழிக்குத் துவாரம் ஒருதூணின்கீழ் உள்ளதென்பதையுங் குறிப்பாகச் சொல்லிச் செல்ல, பின்பு ஒருநாளிரவில் வீமன் புரோசனனை அம்மாளிகையிலேயே படுக்கச்சொல்லி அவன் நன்றாகத்தூங்கியபின் அவ்வீட்டில் தானே நெருப்புப்பற்ற வைத்துவிட்டுத் தன்னுடன்பிறந்தவர்களையும் தாயாரையும் எடுத்துக்கொண்டு சுரங்கவழியாக ஒருவனத்திற் சேர்ந்தான். துரியோதனன் கட்டளைப்படி பாண்டவர்க்கு விஷங்கலந்ததேனைக் கொடுத்து அவர்களைக் கொல்லவந்த ஐந்துவேடர்களும் அவர்கள்தாயும் அந்நாளில் அவ்வரக்குமாளிகையில் தங்கித் தீப்பட்டு இறந்தன ராதலால், பொழுதுவிடிந்தபின்பு அங்குவந்துபார்த்த ஊரரெல்லாரும், பாண்டவரும் குந்தியுமே எரிப்பட்டு இறந்தன ரென்று இரங்கினார்கள். அவ்வாறே நாடெங்கும் பிரசித்தியாயிற்று. அதற்காக உலகம்முழுவதும் வருத்தமடைய, துரியோதனாதியர் மாத்திரமே மனமகிழ்ச்சிகொண்டனர் என்பதாம்.

ஏகாரம் இரண்டனுள், முன்னது - தேற்றம்; பின்னது - ஈற்றசை. கொளுத்தி—கொளுந்துஎன்பதன் பிறவினையான கொளுத்து - பகுதி.

(௭௧) இளமைப்பருவத்திலேயே நம்மைக்கொல்லமுயன்ற துரியோதனன் படைவலியும் துணைவலியும் மிக்குக் காளைப்பருவமடைந்து அரசனாயிருக்கிற இப்போது மற்று எந்தக்கேட்டைத்தான் செய்யானென்ற உபமேயப்பொருளைத் தருதலால், 'முளையிலே உயிர்கொல்வதோர் கடுவிடம் முற்றி வன்காழேறி, விளையிலேதுசெய்யாது' என்பது - பிறிதுமொழிதலணி; இத்தொடர்மொழியை, கீழ்வந்த பதினோராஞ்செய்யுளின் பின்னிரண்டடிகளோடு ஒப்பிடுக. இத்தொடர் 'அவருடன்வினையுமன்பு இனி வேண்டாம்' என்பதைச் சாதித்துநிற்பது - தொடர்நிலைச்செய்யுட்குறியணி.

இவ்விரண்டணியும் அரிசியும் எள்ளும்போல வேறுபாடுதோன்றச் சேர்ந்து வந்தது - சேர்வையணியாம்.

மற்று-அசைநிலை; வினைமாற்றுமாம். 'மூற்றிவன் காழேறி' எனவருதலால், 'விடம்' என்பதற்கு - நச்சுமரமெனப் பொருள் கொள்ளப்பட்டது; இது ஆகுபெயரின்பாற்படும். 'காற்றருள் கூற்றன்னான்' - பிராஸம். நினைத்தபடியே பின்னிடாமற்போர்செய்து கொன்றுவெல்லுந் திறமுடையானென்பது தோன்ற, வீமனை 'கூற்றன்னான்' என்றார்; பண்புந்தொழிலும்பற்றிய உவமை. அந்த யமன் சூரியன்பெற்றபுதல்வன், இந்த வீமனாகிய யமனோ வாயு பெற்ற புதல்வன்: இந்த வேறுபாடே யன்றி, பலபராக்கிரமங்களில் இவ்விருவர்க்கும் ஏற்றதாழ்வில்லை யென்பது, "காற்றருள்கூற்றன்னான்" என்பதனாற் போதரும்; மேலும், "மருத்துதவுகூற்று," "சுரர்க்கிடமுதவுகோத்திரவெழிற்குவடொடித்தவனுதவு கூற்றம்" என்பர். 'இருப்பு' என்பதற்கு-குடியிருத்தலெனவும், உரியபொருளெனவும் உரைகூறுவாருமுளர். (௬௧)

[அருச்சுனன் வார்த்தை.]

௭௨.—(இ - ள்.) (பின்பு அருச்சுனன் தருமபுத்திரனைநோக்கி), 'தேறலார்தமை தேறலும் - தெளியப்படாதவர்களை நம்புதலும், தேறினர் தேறலாமையும் - தெளியப்பட்டவர்களை(ப் பின்பு) நம்பாதிருத்தலும், என்றும் மாறு அலாருடன் மலைதலும் - ஒருநாளும் (தம்மோடு) பகைக்குந்தன்மையில்லாத நண்பரைப் பகைவரென்றுகொண்டு அவரோடு பொருதலும், மாறுடன் மருவி வாழ்தலும் - பகைவருடனே நட்புக்கொண்டு கலந்து வாழ்தலும், (ஆகிய இச்செயல்கள்), அரசருக்கு ஆறு அலாதன-அரசர்கட்கு முறைமையல்லாத காரியங்களாம்,' என்றுகொண்டு - என்று, முன்னே - முற்காலத்திலேயே, அரசநீதியில் சொன்னார் - அரசர்கட்குஉரிய நீதிநூல்களில் (ஆன்றோர்) கூறியுள்ளார்; கூறலாதன - (அரசர்கட்குஉரியன என்று) சொல்லாமல் விலக்கியுள்ளவற்றை, சொல்வது-(அரசநீதியைநன்குஉணர்ந்த நீ இப்பொழுது செய்யவேண்டியகாரியமாக)எடுத்துச்சொல்வது, என்-யாது காரணம்பற்றி? கொடியவன் அருகு செல்வது என் - (நம்மிடத்துக்)கொடும் பகைமைகொண்டுள்ளவனாகிய துரியோதனனை (உரியநண்பனாகக்கருதி நாம்) அவனருகிற் செல்வது எதற்காக?' என்றான் - என்றுகூறினான்; (எ - று.)—இச்செய்யுள் அருச்சுனனதுவார்த்தையென்பதை அடுத்தசெய்யுளினாலறிக.

அரசன் ஒருவனைப் பலவகையாலும் சோதித்து 'தக்கவன்' என்று துணிந்தபின்பே அவனைத் தன்னிடத்து வினைசெய்பவனாகக் கொள்ள வேண்டும்; அவ்வாறு ஆராய்ந்து தெளியப்படாத ஒருவனை வினைசெய்பவனாகக்கொண்டாலோ, அவ்வினைகெடத் தான்கெடுவதோடு தன்குலத்துப் பிறந்தாரும் பகைவர்கைப்பட்டுக் கீழாய்விடுவர்: அவ்வாறே சோதித்து அறிந்துதெளிந்தவனிடத்துத் தொழிலைவைத்துப் பின்பு ஒருதவறுங் காணாதிருக்கையில் ஐயுற்றால் அதனை அவன் அறிந்து 'இனி இத்தொழில் நமக்கு நிலையாது' என்று எண்ணித் தான்கொண்டதொழிலை நெகிழ்த்திவிடப் பகைவரால் எளிதிற் பிரிக்கப்பட்டு விலகிச்செல்வன்: ஆகவே, தேறலார் தமைத் தேறலும், தேறினர்தமைத் தேறாமையுங் கூடாவென்க; "தேரான் பிறனைத் தெளிந்தான்வழிமுறை, தீராவிடும்பை தரும்," "தேரான்தெளிவுந் தெளிந்தான்கணையுறவும், தீராவிடும்பை தரும்" என்ற திருக்குறட்பாக்களினால் முதலடியின்கருத்து விளங்கும். இனி, தேறலார்தமை தேறலும்-நம்புதற்குத்தகுதியல்லாத அயோக்கியர்களை நம்புதலும், தேறினர் தேறலாமையும் - (பிறர்பலரும்) யோக்கியரென்றுகொண்டவர்களைத் தான் நம்பாதொழிதலும் என்று உரைப்பாருமுளர். 'மாறுடன் மருவிவாழ்தல்' என்பதே இங்குச் சந்தர்ப்பத்துக்கு ஏற்றதாயினும், அதன் இனமாக மற்றவற்றையும் உடன்கூட்டியுரைத்தார். "நட்புப்பிரித்தல் பகைநட்ட லொற்

நிகழ்தல், பக்கத்தார்யாரையுமையுறுதல்-தக்கார், செம்மொழிசோறலிருவைப் பிறிதாதல், கெடுவதுகாட்டுங்குறி" என்ற நீதிநெறிவிளக்கச்செய்யுள், இங்கு அறியத்தக்கது.

தேறலார் - எதிர்மறைவினையாலணையும்பெயர்; அல் - எதிர்மறையிடைநிலை. தேறினர்த்தேறலாமை - உயர்திணையிடத்து இரண்டனுருபுதொக்கது; அதன்முன் வலிமிக்கது, "இயல்பின்விகாரம்." தேறலாமை - 'தேறு' என்னும்பகுதியின் எதிர்மறைத்தொழிற்பெயர்: 'அல்' 'ஆ' என்ற இரண்டனுள் ஒன்றைச் சாரியையாகவும், மற்றொன்றை எதிர்மறையிடைநிலையாகவுங் கொள்க. மாறு - பகைவர்க்குப் பண்பாகுபெயர். என்றுகொண்டு, கொண்டு - அசை. கூறு - முதனிலைத்தொழிற்பெயர். கூறலாதன என்பதை, 'கூறலாகாதன' என்பதன் தொகுத்தலாகக் கொள்ளலுமாம். 'கூறலாதன' என்றது-'வரதனுற்பணிப்புறுதொழில் மறுக்க நாம் யாவர்' எனவும், 'சூதாட்டம் அறிவுடையோர்செய்கையன்று, பாதகத்தில் ஒன்று' எனவும், 'விதியினை யாவரே எதிர்வெல்வார்' எனவும் துரியோதனன்பக்கல்செல்ல வேண்டுவது அவசியமென்பது தோன்றத் தருமன்கூறியவற்றை. (எ௨)

[நகுலசகதேவர்களும் வீமார்ச்சுனர்களின் விருப்பத்தின்படியே சொல்லத் தருமன் தன்கருத்தை வெளியிடுதல்.]

எ௩.—(இ - ள்.) இ வகை விசையன் மொழிந்ததும்-இவ்வாறு அருச்சுனன் கூறியதையும், முந்துறு வீமன் மாற்றமும் - முன்னதாகப்பேசிய வீமசேனனுடைய வார்த்தையையும், கேட்டு—,—இசை பெறும் பெயர் புகழ்பெற்ற பெயரை யுடையவர்களாகிய, நகுலனும்—, தம்பியும்-(அவனது) தம்பியாகிய சகதேவனும், ஏகுதல் தகாது என்றார் - '(அத்தினபுரிக்குத் துரியோதனனது விருப்பதின்படியே) போவது தகுதியன்று' என்றே கூறினார்கள்; அறம்செய்வான் - (அவற்றைக்கேட்ட) தருமத்தையேசெய்பவனாகிய யுதிஷ்டிரன், 'வசை அறும் புகழ் துணைவர் இன்று உரைத்ததே வார்த்தை ஆயினும் - குற்றமற்ற புகழையுடைய தம்பிமார்கள்நால்வரும் இப்பொழுதுசொன்னதே (ஏற்ற) வார்த்தையாகக் கொள்ளத்தக்கதாயிருந்தாலும், பெற்ற அசைவு இல் அன்பு உடை தந்தை சொல் மறுப்பதோ-தான்கொண்ட (நம்மிடத்துக்) குறைதலில்லாத [உறுதியான] அன்பையுடைய பெரியதந்தையாகிய திருதராட்டிரனது கட்டளைச்சொல்லை மறுப்பது தகுதியோ?' என்றனன் - என்றுகூறினான்; (எ - று.)

'முந்துறு வீமன்' என்பதற்கு - (பேசுதலிலே) முற்பட்ட வீமனென்றும், (அடுத்துப்பேசிய அருச்சுனன் முதலிய மூவர்க்கும்) முன்பிறந்த வீமனென்றும்பொருள்கொள்ளலாம். 'உரைத்ததே வார்த்தை' என்னுமிடத்தில், உரைத்தது வார்த்தையென்பது இயல்பிலே அமைந்திருக்கவும் புதிதாக விதித்தது, 'மிகவும்பயனுடையதாம்' என்ற கருத்தை விளக்குவதால், விதிபணியாம். ஆயினும், உம்மை - சிறப்பு; மற்றவை - எண்ணுப்பொருளன. ()

[தருமன் அத்தினபுரத்துக்குச் செல்லவேண்டு மென்ன, சேனைத் தலைவரும் அரசரும் வந்துகூடுதல்.]

எ௪, எ௫.—இவ்விரண்டுகவியும் - குளகம்; (குளகமாவது - பலபாடல் கள்தொடர்ந்து ஒருவினையைக் கொண்டுமுடிவது; "குளகம் பலபாட் டொருவினைகொள்ளும்." குளகமல்லாதது, முத்தக மெனப்படும்; அது, ஒருசெய்யுள் தனியேநின்று முடிவது; "முத்தகச்செய்யுள் தனிநின்றுமுடியும்.") இவ்விரண்டுசெய்யுட்கும் ஒருங்கு பொருளுரைக்கப்படுகின்றது.

(இ - ள்.) (எ௪) (பின்னும் தருமபுத்திரன்),—'நீதி [illegible] அரியவான்புகழ் [illegible] - நியாயவழியாற் பெறுகின்ற அருமையான சிறந்த கீர்த்தியையே [illegible], ஆவி நிலை பெறுபவர் - உயிரை நிலையாயிருக்கப் பெறுபவர்,

யநர் - எய்ர் [illegible]
(நாம்) அவ்வத்தினபுரத்திற்குச் செல்லாதிருந்தாலும், பாவியனது [illegible] யினால்) சேரக்கூடியது, தீவினை இன்றி - (நமது) எண்ணப்படி [illegible] [நமக்குத் தெரியாமலே], பலித்திடும் - சேர்ந்தேதீரும்; ஆன் உடை ஐவர் மேவி வந்து இருக்கவும் - (நம்மை)அடிமையாகவுடைய சிறியதந்தையாகிய விதுரன் (அத்தினபுரிக்கு நம்மை அழைத்துச்செல்லுமாறு) விரும்பிவந்திருக்கையிலும்,—வேரி வண்டு எழு மன்றல் காவி ஆர் தொடை காவலன் - தேனையுண்ணுகின்ற வண்டுகள்(தன்னிடத்துப்)பறந்துவருதற்குக்காரணமான நறுமணமுள்ள குவளைமலர் நிரம்பியிருக்கப்பெற்ற மாலையை யணிந்த திருதராஷ்டிரமஹாராஜனது, ஏவல் - கட்டளையை, நாம் - (மாறுகூறாமல் அடங்கிநடக்கவேண்டிய)நாம், மறுப்பது - உடன்படாமல் மறுத்துச்சொல்வது, கடன் அன்று - முறைமையன்று; (ஆதலால்), (எகு) எந்தை வாழ் அத்தினநகர்க்கு-எமதுதந்தை [திருதராஷ்டிரன்] வசிக்கின்ற அத்தினபுரத்திற்கு, நாளை ஏகுதும்-நாளைக்குச் செல்வோம்,' என-என்று (தன்கருத்தை)வெளியிட்டு(ப் பின்பு காவலாளர்க்குக்)கட்டளையிட, தருமன்தன் காளை ஏவலின் - அந்தத் தருமபுத்திரனது கட்டளையினால், காவலர் - காவற்காரர்கள், முரசு அறைந்து எங்கணும் குழூஉக்கொண்டார் - எல்லாவிடங்களிலும் கூட்டமாகக்கூடிப் பறையறைந்துதெரிவித்தார்கள்; வேலை ஏறிய அரும் படைத் தலைவரும் - பலகாலமாகப் பழகிய [மிக்க அநுபவமுடைய] அருமையாகிய சேனைத்தலைவர்களும், மேல் வரும் புனலூடு வாளை ஏறு தண் பழனம் நாடு எறி படை மன்னரும்-மிக்குப்பெருகுகின்ற நீர்வெள்ளத்தினிடத்தே வாளைமீன்கள் எதிராகச்செல்லுகின்ற குளிர்ந்த வயல்களையுடைய அயல்நாடுகளிலுள்ளவர்களான (பகைவர்மேல்) வீசியெறிதற்குஉரிய ஆயுதங்களை யேந்திய அரசர்களும், வந்து உற்றார் - வந்துகூடினார்கள்; (எ - று.)

(எச) நம்மை வருமாறு கட்டளையிட்டவனோ, நமது பெரியதகப்பன்; நம்மை அழைத்துச்செல்ல வந்தவனோ, சிறியதகப்பன்; இவ்வாறு ஒவ்வொன்றே நாம்செல்லுதற்குத் தக்ககாரணமாயிருக்க, இவ்விரண்டும் ஒருங்கேசேர்ந்தபோதும் நாம் போகாமலிருப்பது பழிக்கே காரணமாம்; 'அவ்வத்தினபுரிக்குச் செல்வது, தீங்குக்குக்காரணம்' என்போமானால், ஊழின்வலியால் நேரக்கூடியவை நாம் அங்குச செல்லாமற்போனாலும் பலித்தேதீரும்; ஆகையால், 'பெரியோர்கள்கட்டளையை மறுத்தார்கள்' என்ற பழிக்கு உள்ளாகாமல் இப்பொழுது செல்வதே தகுதி யெனத் தருமன் தன்கருத்தை வெளியிட்டனனென்க "ஒன்றா வுலகத் துயர்ந்தபுகழல்லாற்,பொன்றாது நிற்பதொன்றில்" என்றபடி பூதவுடம்பு அழியப் புகழுடம்பு அழியாது நிலைநிற்றலால், 'வான்புகழன்றி ஆவி யார் நிலைபெறுபவர்' என்றான்; புகழ் நிலைபெறுதலாவது - தான் இறந்தபின்பும் தன்பெயர் அழியாது நிலைநிற்றல். பாவி - வடசொல். பாவியானது பலித்திடும் - "வருகுவது தானே வரும்." 'வேரிவண்டு எழு மன்றல் காவி ஆர் தொடை' என்பதற்கு - தேன்வண்டுகள் நறுமணம்மேலெழப்பெற்ற குவளைமலர்களிலே ஆரவாரித்தற்கு இடமான மாலை யெனினுமாம்.

(எகு) ஏகுதும் - தன்மைப்பன்மை யெதிர்காலவினைமுற்று; தும்-காலங்காட்டுந் தன்மைப்பன்மைவிகுதி. அத்தினநகர் - ஹஸ்திநபுரீ; 'ஹஸ்தி' என்ற அரசனால் அமைக்கப்பட்ட நகரமென்றாவது, யானைகளை மிகுதியாகவுடைய நகரமென்றாவது பொருள்படும். 'எந்தைவாழ் அத்தினநகர்' என்றதினால், நாம் பெரியோர்களுடைய [illegible] தந்தையைப்பார்த்தாவது செல்லவேண்டுமென்ற பொருள் தொனிக்கும்; "[illegible] ப்பார்த்தோ, பானையைப்பார்த்தோ" என்பது, பழமொழி. [illegible]

வரைக் காவல்செய்துகொண்டு உரியகாலத்திற் பறையறைந்து திரியும் தலையாளரைக் குறிக்கும்; 'மன்னரும்வந்தாற்றூர்' என நான்காமடியில் வருதலால், 'காவலர்' என்றதற்கு-காவலாளரென்று பொருள்கொள்ளப்பட்டது: இனி, 'காவலர்' என்றது, உள்ளூரிலிருக்கும் அரசசாதியரைக் குறிக்குமென்றலுமொன்று. முரசறைந்து எங்கணும காவலர் குழூஉக்கொண்டார் - காவலர் எங்கணும் குழூஉக்கொண்டு முரசறைந்தார என விகுதி பிரித்துக்கூட்டுக. வேளை ஏறிய என்பதற்கு - மன்மதனைககாட்டிலும் அழகு மிக்க என்றும் உரைக்கலாம். வாளை - மீன்வகையி லொன்று. புதுவருவாய் நன்னீரை யெதிர்கொள்ளுதல், மீனின் இயல்பு. (எரு)

[திரண்ட சேனைகளின் வருணனை.]

எசு.—(இ - ள்.) மா துரங்கமம் - பெரிய குதிரைகளும், மணி நெடுந் தேர் - மணிகள்கட்டிய பெரிய தேர்களும், மதம் வாரணம்-மதங்கொண்ட யானைகளும், வய வீரர் - வலிமையையுடைய காலாள்வீரர்களும், (ஆகிய), சாதுரங்கமும் - சதுரங்கசேனைகளும், தந்திரம் தலைவரும் - சேனைத்தலைவர்களும், தாணி மன்னரும் - பூமியைக் காக்கின்ற அரசர்களும்,—மீது உரம் கவின் கெழு - மேலான பலமும் அழகும நிறைந்த, பெருஞ் சேனை-மிக்கசேனைகள், சூழ்-சூழப்பெற்ற, வேந்தன்-யுதிஷ்டிரராஜனது, மா நகர்-பெரிய இந்திரப்பிரததநகரததில், சூழ உற்ற போது - சுற்றிலும் [எல்லாப் பக்கங்களிலும்] வந்து நிறைந்தபோது, இருநான்கு உரகம் - (பூமியைத தாங்குகின்ற) அஷ்டமகாநாகஙகளும், பொறுமையின் - (அப்பாரததைச) சுமக்கமாட்டாமையினல், பல தலையும் நெளிந்தன - (தமது) பலதலைகளும நெளியப்பெற்றன; (எ - று.)

அஷ்டமஹாநாகஙகள் தலைநெளிந்தன வெனக்கூறியது, அதிசயோக்தியலங்காரம்; இது, சேனைததொகுதியின் மிகுதியை விளக்கும். அஷ்டமஹாநாகஙகளாவன - வாசுகி, அநந்தன், தக்ஷகன், சஙகபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்பன; இவை, முறையே கிழக்கு முதலிய எட்டுத்திக்குக்களிலும கீழ்இருந்து பூமியைத தாஙகுவன. இனி, மா - குதிரையும், துரஙகமம் மணி நெடுந் தேர் - குதிரைகள்கட்டிய அழகிய பெரியதேர்களும் என்றும் பொருள்கூறலாம். துரஙகமம் - விரைந்துசெல்வது எனக் குதிரைக்குக் காரணககுறி. தந்திரம்-சேனை. சாதுரஙகம், உரஙகம்-சதுரங்கம், உரகம்என்பவற்றின்விகாரஙகள்: உரகம்-(கால்களில்லாமையால்)மார்பினல் ஊர்ந்துசெல்வது எனப் பாம்பிற்குக் காரணக்குறி. பல + தலை=பஃறலை: பலஎன்பது பிறிதுவா அகரங்கெட, தனிக்குறிலைச் சேர்ந்த லகரம் அவ்வழியில் தகரம்வா ஆய்தமாத திரிந்தது; [நன் - உயிர் - ௨0: மெய் - ௨௩;] இது, ஆய்தக்குறுக்கம்: [நன் - எழுதது - ௬௨.] மாத்திரை, கால்; [நன் - எழுத்து - ௬௪] 'உரங்கமு நெளிந்தன பஃறலை'—உரகம் பஃறலையும் நெளிந்தன என உம்மைபிரிததுக்கூட்டுக. இனி, உரஙகமும்-ஆதிசேஷனும்,இருநான்கும் - மற்றைஅஷ்டநாகஙகளும் எனினும் பொருந்தும்; ஆதிசேஷன், நடுவிலேஇருந்து பூமியைத் தாஙகுவன்.

துரங்கமம், மணி, மதவாரணம், வீரர், சதுரஙகம், தந்த்ரம், தாணி, சேனா, நகரீ அல்லது நகரம், உரகம் - வடசொற்கள். (எசு)

[பாண்டவரைவரும் ஐந்துதேரின்மேல் ஏறுதல்.]

எஎ.—(இ - ள்.) ஐந்து பூதமே நிகர் என-பஞ்சபூதங்களும் ஒப்பென்று சொல்லும்படியும், புலன்கள் ஓர்ஐந்துமே எதிர் என்ன - ஐம்புலன்களும் ஒப்பென்று சொல்லும்படியும், ஐந்து காவுமே பொருவு என-(தேவலோகத்திய) பஞ்சதருக்களும் ஒப்பென்று சொல்லும்படியும், பணி முடி ஐந்துமே நேர் என்ன - நாகத்தினது ஐந்து தலைகளும் ஒப்பென்று சொல்லும்படியும், [illegible] ஏவிய உறழ்வு என - (மன்மதனது) பஞ்சபாணங்களும் ஒப்

பென்று சொல்லும்படியும், வேள்வி ஓர் ஐந்துமே ஒப்பு என்ன - பஞ்ச மஹாயஜ்ஞங்களும் ஒப்பென்றுசொல்லும்படியும்,ஐந்து வாசமே தாம் என்ன - ஐந்துமுகவாசப்பொருள்களும் ஒப்பென்றுசொல்லும்படியும், ஐவரும் - பஞ்ச பாண்டவர்களும், ஐந்து தேர் மேற்கொண்டார் - ஐந்துதேர்களின்மீது ஏறிக்கொண்டார்கள்; (எ - று.)

உலகத்துக்கு இன்றியமையாதிருத்தலாற் பஞ்சபூதங்களையும், மெய் வாய்கண்மூக்குச்செவியென்ற பஞ்சேந்திரியங்கட்கும்உரிய விஷயமாயிருத்தலால் ஐம்புலன்களையும்,வேண்டியவற்றை வேண்டியபடியே கொடுக்கின்றமையாற் பஞ்சதேவதருக்களையும், "ஐயர்க்குமோருயிரே" ஆதலால்நாகத்தின் ஐந்துதலைகளையும், கட்டழகுடைமை மகளிர்க்கன்றி ஆடவர்க்கும் அவாவையுண்டாக்குதலால் மன்மதனதுபஞ்சபாணங்களையும்,தேவர்முதலியோர்க்குத் திருப்திசெய்வித்தலாற் பஞ்சமஹாயஜ்ஞங்களையும், மிக்ககளிப்பைத்தருதலால் முகவாசப்பொருள்களைந்தையும் பஞ்சபாண்டவர்க்கு உவமைகூறினரென்க; பலபடப்புனைந்தஉவமையணி. பேராற்றலுடைமைபற்றிப் பஞ்சமகாபூதங்களையும், இன்றியமையாச்சிறப்புப்பற்றி ஐம்புலன்களையும், தவறாதுவெல்லும்வல்லமைபற்றி ஐந்துவாளிகளையும், வைதிகர்களால் மேற்கொள்ளப்படுஞ்சிறப்புப்பற்றி ஐந்துவேள்விகளையும், அனைவராலும் விரும்பப்படுந்தகுதிபற்றி ஐந்துவாசங்களையும் பஞ்சபாண்டவர்க்கு உவமை கூறியதாகவுங் கொள்ளலாம் 'பணிமுடியைந்துமே நேரென்ன'—"பைவருந்தலைகளைந்துபடைத்த பன்னகமே போல, வைவரும் . ... ..... ..,உய்வருஞ்சமரிலாவியொருவர்போயொருவருய்யார்" என மேற் கிருட்டிணன் தூதுசருக்கத்தில் வருவதுங் காண்க. 'ஐந்து' என்ற சொல் பன்முறை அடுக்கிவந்தது - சொற்பொருட்பின்வருநிலையணியும், ஒப்புமை குறிக்கும் வெவ்வேறு பலசொற்கள் வந்தது - பொருட்பின்வருநிலையணியுமாம்.

ஐந்துபூதம் - நிலம், நீர், தீ, காற்று, வானம் என்பன. புலன்கள் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என ஐந்து. தேவதருக்கள் - மந்தாரம், பாரிஜாதம், ஸந்தாநம், கற்பகம், அரிசந்தனம் என்பவை. பஞ்சபாணம் - தாமரைமலர், மாமலர், அசோகமலர், முல்லைமலர், கருங்குவளைமலர் என இவை. பஞ்சமஹாயாகங்கள் - பிரமயஜ்ஞம், தேவயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், மநுஷ்யயஜ்ஞம், பூதயஜ்ஞம் என்ற ஐம்பெருவேள்விகள்; (வேதமோதுதல் - பிரமயஜ்ஞம்; ஓமம்வளர்த்தல் - தேவயஜ்ஞம்; தர்ப்பணஞ்செய்தல் - பித்ருயஜ்ஞம்; விருந்தோம்புதல் - மநுஷ்யயஜ்ஞம், பலியீதல் - பூதயஜ்ஞம்.) முகவாசங்களைந்தாவன - தக்கோலம், இலவங்கம், ஏலம், கற்பூரம், சாதிக்காய் என்பனவாம்.

கா - சோலை; இங்கு, மரத்துக்கு இலக்கணை. (எஎ)

[பாண்டவர்களது குடைகள் சாமரங்களின் வருணனை.]

எஅ.—(இ - ள்.) 'விழியின் - (அத்திரிமுனிவரது)கண்ணிலும், நெஞ்சின் - (திருமாலினது) மனத்திலும், வால் நெருப்பின் - பரிசுத்தமான அக்கினியிலும், நீடு உததியின் - பெரிய திருப்பாற்கடலிலும், விதி படைப்பினில் - பிரமதேவனது சிருஷ்டியிலும், (ஆக ஐந்திடங்களிலும்), தோன்றி - பிறந்து, வெள் கதிர் பொழியும் - வெண்மையாகிய கிரணவொளியை வீசுகிற, ஐவகை மதியும் - ஐந்து சந்திரர்களும், அப் பொழுது உதித்தன என்ன - (பாண்டவர்கள் அத்தினபுரத்திற்குப் புறப்படும்) அச்சமயத்தில் (ஒருங்கே) உதயமாயின' என்று சொல்லும்படி, மொழியும் ஐந்து பொன் தனி குடை நிழற்றின - சிறப்பித்துக்கூறப்படுகின்ற அழகிய ஒப்பற்ற ஐந்து குடைகள் (பாண்டவரைவர்க்கும்) நிழலைச்செய்தன; இரு பாலும் - (அப் பாண்டவர்களது) இரண்டுபக்கங்களிலும்,—மும்மதி வடிவின்கண் இழியும் வெள் சுடர் கற்றையின் - அந்தப்பூர்ணசந்திரபிம்பத்தினின்று பெருகுகிற

[illegible]ய கிரணத்தொகுதி போல, சாமரம் இரட்டின - சாமரங்கள் வீசப்பெற்றன; (எ - று.)

[illegible] வரும் ஐந்துதேரின்மேலேறிச்செல்லுகையில் ஒருங்கே அவர்கள்மீது பிடிக்கப்பட்ட ஐந்துவெண்கொற்றக்குடைகட்கு ஒரேகாலத்தில் தோன்றிவிளங்குகின்ற ஐந்துசந்திரர்களையும், அக்குடைகளின் இரு பக்கங்களிலும் வீசப்படுகின்றவெண்சாமரங்கட்குஅச்சந்திரனிடத்தினின்று இழியும் கிரணத்தொகுதியையும் ஒப்பா மெனக் குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி.

தேவர்களை இருதிணையாலுங் கூறலா மாதலால், 'ஐவகைமதியம் உதித்தன' என அஃறிணையாற் கூறினர். அத்திரி - பிரமதேவனது மானஸபுத்திரர்; நவப்பிரமர்களி லொருவர்: (மற்றையோர் - பிருகு, புலஸ்தியர், கிரது, அங்கிரசு, மரீசி, தக்ஷர், வசிஷ்டர், நாரதர்.)

அத்திரிமுனிவரது விழியினின்று சந்திரன்தோன்றிய வரலாறு:—உபப்பிரமாரகிய அத்திரிமுனிவர் இந்திரியநிக்கிரகஞ்செய்து மூவாயிரம்வருடந் தவம்புரிகையில் தேஜோரூபியாகிய அவரதுகண்களிலிருந்து பத்துத்திக்குகளிலும் பேரொளிவீசிக்கொண்டு நீர்பெருகவே, அந்தக்கருப்பத்தைத் திக்தேவிகள்பதின்மரும் வகிக்கத்தொடங்கிப் பின்பு தவகளாற் பொறுக்க முடியாமற் சந்திரரூபமான அந்தக்கருப்பத்தோடு பூமியில்விழ, அப்பால் நான்முகக்கடவுள் அந்தச்சந்திரனை வேதமயமான தேரின்மீது ஏற்ற ஸப்தரிஷிகள்முதலானவர்கள் வேதவாக்கியங்களைக்கொண்டு துதித்ததனால், அச்சந்திரன் மிக்கஒளிபெற்று உலகத்துக்குப் பேரொளியைத்தருபவனாயினனென்பதாம். சந்திரன் திருமாலின் மனத்திலிருந்து தோன்றினனெனபது, வேதத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது; ("திண்சுடராழியரங்கேசர் திக்குத் திருச்செவியின், மண்கழலிற் சதயலோகஞ்சிரத்தின் மருத்துயிரில், தண் கதிருள்ளத்தில் வானுந்தியிற் செந்தரணிகணணில், ஒண் கனலிந்திரன்வாழ் முகப்போதிலுதித்தனவே" என்ற திருவரங்கத்துமாலையையுங் காண்க.) பாற்கடல்கடைந்தபோது அதனினின்று சந்திரன் தோன்றியமை, பிரசித்தம். சந்திரன் அத்திரிமுனிவரது விழியிலும் திருமாலின் மனத்திலும் நெருப்புமுகத்திலும் திருப்பாற்கடலிலும்தோன்றியமையை, கீழ் ஆதிபருவத்திலும் "அத்திரிப்பெயரந்தணனம்பகந்தனிலுஞ், சித்திரக்கனன்முகத்தினும்பிறந்தொளிசிறந்தோன்," "எங்கண்மாதவனிதயமாமலர்வருமுதயத், திங்கள்," "அம்புராசியி னூராமுதுடனவதரித்தோன்" எனக் கூறியுள்ளார்.

சந்திரன் பிரமசிருஷ்டிக்கு உட்பட்டவனாதலால், 'விதிபடைப்பினிற்றோன்றி'என்றார். இங்குக்கூறிய ஐவகைப்பிறப்பிடங்களுள் நெருப்பினின்று தோன்றிய வரலாறு வந்தவிடத்துக் கண்டுகொள்க. இனி,வான்நெருப்பின் - ஆகாயத்திலிருக்குஞ் சூரியனிடத்தினின்று என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று; சந்திரன் கிருஷ்ணபக்ஷத்தில் நாடோறும் ஒவ்வொருகலையாகக் குறைந்து கடைசியாக ஒற்றைக்கலையாய்நின்று அமாவாசையன்று சூரியனைச்சேர்ந்து பின்பு அவனிடத்தினின்று வெளிப்படுவதாலும், அன்றியும் சூரியனிடத்திலிருந்தே ஒளியைப்பெறுவதாலும், இவ்வாறு கூறப்பட்டது என்க; (சூரியனுக்கு 'சித்ரபாநு' என ஒருபெயருள்ளதனால், "சித்திரக்கனல் முகத்து" என்றதற்கும் - விசித்திரமான சோதியையுடைய சூரியனிடத்தினின்று எனப் பொருள்காணலாம்.) (எஅ)

இதுமுதல் ஆறுகவிகளால், சதுரங்கசேனைகளை வருணிக்கின்றார்.

[இதுவும், அடுத்த கவியும் - யானைகளின் வருணனை.]

[illegible]—(இ - ள்.) மூரி வெம் களி யானை - வலிய கொடும் மதக்களிப்பை [illegible] —மை நிறத்தின் [illegible] அரிவன - மேகங்களின் [illegible] [illegible] வும், [illegible] வரா நிறத்திலும் [illegible]

மெய் - திறத்தன - மிகப்பெரியமலையனை மலைக்கூட்டங்களைப்போல் மிகவும் உயர்ந்துவளர்ந்த உடம்பின் தோற்றத்தை யுடையனவும், எழு திறத்தினும் மதம் தாரை மிக விடுவன - எழுவகையுறுப்புக்களாலும் மதநீர்ப்பெருக்கை மிகச்சொரிவனவும், எ திறத்தினும் பொரு தொழில் புரிவன-எல்லாவுறுப்புக்களாலும் போர்த்தொழிலைச் செய்வனவும், எழு உறுப்பு உற தாழ்ந்த - எழுஅவயவங்கள் நன்றாகத்தாழ்ந்து நிலத்திற்படியப்பெற்றனவும், முத் திறத்தன எண் நலம் பிறப்பின - மூவகையான நன்குமதிக்கத்தக்க நல்ல பிறப்பையுடையனவுமாயிருந்தன; (எ - று.)

யானைக்கு, மேகம்-கருநிறத்திலும், கர்ஜ்ஜித்தலிலும், தாரைபொழிதலிலும் உவமை. மததாரைகள் விடும் எழுறுப்பாவன - கன்னமிரண்டும், கண்ணிரண்டும், துதிக்கைத்துளையிரண்டும், கோசமொன்று மாம். எத்திறத்தினும் பொருதொழில் புரிதலாவது-கால்களினால் மிதித்தும், துதிக்கையினால் அறைந்தும் பற்றியும்இழுத்தும், தந்தங்களினாற் குத்தியும், மத்தகத்தால் முட்டியும், வாலால் வீசியடித்தும் போர்செய்தல்; "கோளுகைம்முதலாவொன்பதுறுப்பினுங் கோறல்வல்ல, நீடுயர்மா" என்பர், மேற் பதினாறும் போர்ச்சருக்கத்திலும். எழுறப்புஉறத்தாழ்தல் - கால்நான்கும், வாலொன்றும், கையொன்றும், கோசமொன்றும் நிலத்திற்படியுமாறு தாழ்ந்திருத்தல். அரசயானையின்இலக்கணத்தில் "காலொருநான்குந் தனிக்கையுங் கோசமும், வாலுறுப்போ டேழு மாநிலந்தோய்ந்து" என்றும், "காலினு நான்றவொருதனிக்கையினும், வாலினு மருப்பினுங் கோறல்வல்லதாய்" என்றும் வருதல் காண்க. வரைத்திறத்தினும் முதிர்வன - மலைவகைகளினும்வலிமை மிக்கன; ஒங்கும் மெய்த்திறத்தன - உயர்ந்த உடம்பின்தோற்றத்தையுடையன என்றும் பொருள்கொள்ளலாம். எழுமுழம்உயர்ந்திருத்தல், உத்தம கஜலக்ஷணம்.

முத்திறத்தன யானை-கிரிசரம், நதிசரம்,வனசரம் என்பன: "கிரிசரம் வனசரம் நதிசரமென்றிவை, நிலைபெறுநிலமென நிறத்திசினோரே" என்ற பன்னிருபாட்டியலாலும்,"கிரிசரம்வனசரம்நதிசரமெத்துப்,பெறுமே யானை பிறந்தநிலப்பெயர்"என்ற பிங்கலந்தைதிவாகரங்களினாலும், இலக்கணவிளக்கவுரையாலும் அறிக; இவற்றுள், கிரிசரம் மலையிற் பிறந்தது; நதிசரம்-யாற்றுச்சார்பிற் பிறந்தது; வனசரம்-காட்டிற் பிறந்தது. இனி,வேறும் யானையின் மூன்றுவகை-பத்ரம், மந்த்ரம், ம்ருகம் என்பன: இவற்றின் இலக்கணம்வருமாறு.— தேனின்நிறம்போன்ற நிறமுள்ள தந்தமும் மிக்கவலிமையும் ஒத்த அவயவமும் வட்டமான வடிவமும் அழகியமுகமும் அவயவச்சிறப்பு முடையது, பத்ரம்; பருத்தவயிறும் சிங்கநோக்கும் பருத்ததோலுள்ள கழுத்தும் துதிக்கைகளும் நடுத்தரமான அவயவமும் நீண்டஉடம்பும் உடையது, மந்த்ரம்; பருத்ததல்லாதகழுத்து மருப்புக் காது துதிக்கைகளும் பருத்த கண்களும் குறுகிய உதடுகுறிகளும் குறியவுடம்பும் உடையது, ம்ருகம். பத்ரத்துக்கு உயரம் ஏழுமுழமும், நீளம் எட்டுமுழமும், வயிற்றின் சுற்றளவு பத்துமுழமுமாம்; மந்த்ரத்துக்கு இவ்வளவினும் ஒவ்வொருமுழம் குறைவும், ம்ருகத்திற்கு அதனளவினும்ஒவ்வொருமுழம் குறைவுமாகும். பத்ரத்துக்கும் மந்த்ரத்துக்கும் நீளம் ஓரளவுஎன்பதும் உண்டு. பத்ரத்தின் மதநீர் பசுமையாகவும், மந்த்ரத்தின்மதநீர் மஞ்சள்நிறமாகவும்,ம்ருகத்தின்மதநீர் கருமையாகவுமிருக்கும். இனி, களிற்றியானை பிடியானை குட்டியானை யென்றும், மூன்றுவகை மதத்தையுடைய யானை யென்றும் யானையின் முத்திறத்தைக் கூறுதல் தகுதியன்று. 'முத்திறத்தனவெண்ணலப்பிறப்பின' என்ற பாடத்துக்கு - மூவகையாகவெண்ணப்படுகிற நிலங்களிற் பிறத்தலையுடையன என்று பொருள். மததாரை - வடசொற்றொடர். (எக)

[illegible]—(இ - ள்.) [illegible] பொருளினும் [illegible] பொறையன - முதிர்ந்த [illegible]

பொறுமையுடையனவும், வலன் உயர்வன - வெற்றியினால் மேம்பட்டனவு மாகிய, எண் கோ என்ற போதகம் தானையின் - மதிக்கப்படுகின்ற மலை யென்று சொல்லத்தக்க யானைசசேனைகளினுடைய, பெருமையை—, எங் ஙனம் புகல்கிற்பாம்-(யாம்) எவ்வாறு வருணித்துச்சொல்லவல்லோம்? நின்ற போது - (இவ்யானைகள் எழுந்து) நிற்குஞ் சமயத்தில், உடல் முகிலிடை மறைந்தது - (அவற்றின்) உடம்பு மேகமண்டலத்தினிடையிலே மறையுந் தன்மையுள்ளது; நிரை நிரை நெறிப்பட்டு சென்ற போது - வரிசைவரிசை யாக ஒழுங்குபட்டுச்செல்லுஞ் சமயத்தில்,(அவ்யானை வரிசையின்தோற்றம்), வெம் படை கடல் செய்தது ஓர் சேதுபந்தனம்போலும்-கொடிய சேனாசமு த்திரத்திற் கட்டியதாகிய ஓர் அணைக்கட்டை யொத்திருக்கும்; (எ - று.)

பிறர்செய்த தீங்குக்கு அப்பொழுதே மாறுசெய்ய வல்லமைபெற்றிருந் தும் அவ்வாறுசெய்யாமல் அப்பொழுது பொறுத்துக்கொள்ளும் யானையின் பொறுமைக்கு, முனிவர்களின் பொறுமையை உவமைகூறினார். துறவறத் தார்க்குஉரிய விரதங்களுள் வெகுளாமை ஒன்றாத லுணர்க. நாட்டுமானி யர் செல்வத்தைப் பேணிக்காப்பதுபோல முனிவர்கள் தவத்தைச் செல்வ மாகப்பாவித்துப் பேராதரத்தோடு பாதுகாத்தலால், அவர்கட்கு 'தபோத நர்' என்று ஒருபெயர். 'எண் கோ என்ற'என்பதற்கு-அஷ்டகுலபர்வதங்க ளென்றுசொல்லத்தக்க என்றும், அஷ்டதிக்கஜங்களென்று சொல்லத்தக்க என்றும், வெண் கோ என்ற என்று எடுத்து ஐராவதம் என்று சொல்லத் தக்க என்றும் பொருள் கூறலாம். கோ - மலை; யானைக்கு இலக்கணை. 'வெ ன்ற' என்று பிரித்து உரைப்பது, மோனைதொடைக்குசிறவாது. போத கம் - பத்துவருஷத்துயானைக்கன்று. போதகத்து ஆனை என்றுபிரித்தால், போதகமாகியயானையென்க. புகல்கிற்பாம் - கவிகளுக்குஉரிய இயற்கைத் தனித்தன்மைப்பன்மை; 'கில்' - ஆற்றலுணர்த்தும் இடைநிலை. யானைஎழு ந்துநின்றசமயத்தில் அவற்றின்உடல் மேகமண்டலத்தேமறையுமெனத் தொடர்புயர்வுநவிற்சியணிபடக்கூறினார்;இதனால்,யானையின்மிக்கஉயர்ச்சி விளங்கும். உடல் மறைந்தது - சாதியொருமை. (சாதியொருமையாவது - ஒருசொல் ஒருமையீறுதோன்றநின்றும், தோன்றாதுநின்றும் பன்மைப் பொருள்உணர்த்துவது; இதனை, வடநூலார் 'ஜாத்யேகவசநம்' என்பர்.) மற்றை மூவகைச்சேனைகளும் கடல்போலப்பரந்திருக்க அவற்றின்நடுவே வரிசையாய் ஒழுங்குபட்டுள்ள யானைகளுக்குக் கடலினிடையிற் கட்டப் பட்ட சேது உவமையாமென்க. "யானைமேலிளம்பிடியின்மேனிரைத் திடை யுறுதுபோ மெறிகடற்கிணை, சேனைமாகடற்கபயனம்முறைச் சேதுபந்த னஞ்செய்கதொக்கவே" என்ற கலிங்கத்துப்பரணிச்செய்யுள், இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. தண்டகாரணியத்திற் சீதையை யெடுத்துக்கொண்டு போன இராவணன் இலங்கையில் அவளைச் சிறைவைத்திருத்தலைத் தூது சென்றுமீண்டஅநுமானால்அறிந்த இராமபிரான் அவ்விராவணனையழித்தற் காக இலங்கைசேர்தற்பொருட்டு இடையிலுள்ள தென்கடலைக் கடக்க வேண்டியசமயத்தில், அப்பெருமானுடையஅநுமதியால் வானரங்கள் மலை களையெடுத்துக்கொண்டுவந்துபோகட்டுக் கடலினிடையே அணைகட்டின என்ற வரலாறு பிரசித்தம். வலன் - பலமுமாம்; வடசொல்திரிபு. இறுதி வாக்கியம் - உவமையணி. தபோதநர், போதகம், ஸேதுபந்தநம் - வட சொற்கள். (௮௦)

[இதுமுதல் மூன்றுகவிகள் - குதிரைகளின் வருணனை.]

அக.—(இ - ள்.) (அச்சேனையிலுள்ள குதிரைகள்),—சுற்றும் நீளமும் உயரமும் கிளர்ப்பன - சுற்றளவும் நீளமும் உயரமும் (இலக்கணத்திற்கு) ஒத்தனவும், கழியின் மிக்கன - கழியினால் மேம்பட்டனவும் [மேம்பட்ட கதியையுடையனவும்], நிலை அற்ற மேதகு சித்தன - குற்றங்களொழி

ந்து மேன்மையான நல்லநிறத்தையுடையனவும், கவின் உடை அவயவத்தன ஆகி - அழகையுடைய உறுப்புக்களை யுடையனவுமாக இருந்து, எற்று மா மணி முரசமும் சங்கமும் எனும் குரல் மிகுத்து - அடிக்கப்படுகிற பெரிய அழகிய முரசவாத்தியமும் சங்கும் ஒப்பாகச்சொல்லத்தக்க குரலோசை மிக்கனவாய்,—இ பார் முற்றும் - இவ்வுலகமுழுவதையும், மாதிரத்து அளவும் - திக்குக்களின் எல்லையையும், ஐந் கதியினால் - (தமது) ஐவகைநடைவிகற்பங்களினால், இமை போதில்-ஒருநிமிஷத்திற்குள், முடிப்பன - சுற்றிவருந் தன்மையையுடையன; (எ - று.)

உத்தமமான குதிரைகட்கு உயரத்தினளவு - நூற்றெட்டுவிரற்கிடையும்,நீளத்தினளவு - நூற்றுத்தொண்ணூற்றிரண்டுவிரற்கிடையும், வயிற்றின் சுற்றளவு - நூற்றுப்பதினொரு விரற்கிடையுமாம்; இது, வடநூலுட் கண்டது: இனி, உயரம் நூறுவிரற்கிடையென்று கூறுதலு முண்டு. மிக்கசுழிகள்- முகம் தலை நாசி மார்பு என்ற இவ்வுறுப்புக்களிற் பொருந்திய இரட்டைச் சுழிகளும், நடுநெற்றி பின்புறம் இவற்றிற் பொருந்திய ஒற்றைச் சுழிகளுமாகிய 'த்ருவம்' என்னும் பெயருடைய பத்துச்சுழிகளோடு, கழுத்தில் வலமாகச்சுழிந்திருக்குந் தேவமணியும்: இவை, குதிரையின் நல்லிலக்கணமாதலை, ''அணிகிளர்கழுத்தில் வலஞ்சுழிந்திருந்தா லறிந்தவ ரதனையே தெய்வ, மணியென விசைப்பர் முகந் தலை நாசி மார்ப மிந்நான்கு மிவ்விரண்டு, பணிதருசுழியு நுதனடுப் பின்னைப்பக்கமு மொவ்வொருசுழியுந், துணிதரவிருப்ப திலக்கணமுளது'' என்பதனாலும் அறிக. நிமையற்ற மேதகுநிறத்தன - புலி கரடி கழுதை செந்நாய் பூனை நரி காகம் புகை என்னும்இவற்றைப் போன்ற நிறமுடையன வன்றி, சந்திரன் பால் மாதுளம் போது செம்பஞ்சி வண்டு முகில் கோரோசனை பொன் முதலியவற்றைப் போன்ற நிறமுடையவை.

குதிரைகளின் ஐங்கதிகள் - ''விக்கிதம் வற்கிதம் வெல்லுமுபகண்டம், மத்திமம் சாரியோ டைந்து'' என்றுசொல்லப்பட்ட இவை: இவ்வாறன்றி, ஆஸ்கந்திதம் தோரிதகம் ரேசிதம் வல்கிதம் ப்லுதம் எனவும்படும். (இவற்றுள், நிச்சலமாக அதிவேகமும் அதிமந்தமு மாகாமற் சமமான கதி - ஆஸ்கந்திதம்; அதைக்காட்டிலும் அதிகமாய்ச் சதுரமான கதி - தோரிதகம்; தாளகதியுடன் வட்டமிட்ட கதி - ரேசிதம்; வேகத்தினாலே முன்னங்காலைத் தூக்கிவரும் நடை - வல்கிதம்; அவ்வளவு வேகமாகவும் சமமாகவும் போகுகை - ப்லுதம்:) இனி, ஸிம்ஹகதி மயூரகதி வாநரகதி வியாக்கிரகதி குஞ்சரகதி என்றலும், பிறவாறு கூறுதலு முண்டு. இமைப்போது இயல்பாக ஒருகால் கண்இமைத்தற்கு வேண்டும் பொழுது. (அக)

அஉ.—(இ-ள்.) பலகோடி நெடுந்துரகதம்-பலகோடிக்கணக்கான பெரியகுதிரைகள்,—ஆளின் - தம்மீதுஏறிநடத்துபவரது, நெஞ்சமும்-எண்ணத்தையும், வார்த்தையும் - சொற்களையும், செம் கையும் - சிவந்த கைகளினாற் செய்யுங் குறிப்பையும், ஆசனத்தொடு - (தம்மீதுஏறி)வீற்றிருத்தலினுண்டாகுஞ் சைகையையும், தாளும் - கால்களினாற் செய்யுங் குறிப்பையும், கோளில் இன்புஉற குறிப்பன - (தம்முடைய) அறிவைக் கண்டு (நடத்துபவர்) சந்தோஷப்படும்படி தெரிந்துகொள்வனவும், எவற்றினும் குறைகள் அற்றன ஆகி - (குதிரைகட்குக் கூறியுள்ள குணம் செயல் குறி என்கிற)எல்லாவகையிலுங் குறைபாடில்லாதனவுமாய்,—யாளி குஞ்சரம் வானரம் முதலிய இயக்கினால் - சிங்கம் யானை குரங்கு முதலியவற்றின் நடைபோன்ற நடையினாலே, விசும்பு எங்கும் தூளி கொண்டிட - ஆகாயமுழுவதும் புழுதி எழுந்து பரவும்படி, மிடைந்து வந்தன - நெருங்கிச்சென்றன; (எ - று.)

தம்மைநடத்துபவரது மனக்கருத்துமுதலியவற்றையெல்லாம் உணர்ந்து அவர்க்கு மகிழ்ச்சியுண்டாகுமாறு நடக்குந்தன்மையன எனக் குதிரை-

[illegible] பழக்கத்தையும் பாராட்டிக்கூறினர்; "[illegible] [illegible] கைகுழை யுர கினை வறியு முணர்வின" என்பர் மேற்பதிலு [illegible]க்கருக்கத்துடம்.

வார்த்தை - சொல்லாகுபெயர். கை, ஆசனம், தாள் - அவற்றிலுள்ள டர்க்குஞ் சைகைகட்குக் காரணவாகுபெயர். கோள் - முதனிலைதிரிந்தொழிற்பெயர். யாளி - சிங்கம். 'முதலிய' என்றதனால், மயூரகதி வியாக்கிரகதி என்ற இரண்டையுங் கொள்க. இயக்கு - 'இயங்கு' என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர்: இயங்குதல் - செல்லுதல். வார்த்தா, ஆஸநம், வாகரம், தூளி, துரகதம், கோடி - வடசொற்கள் குஞ்சரம் - காட்டுப்புதர்களில் மகிழ்ந்துசஞ்சரிப்பது என்றும், துதிக்கையையுடையது என்றும் உறுப்புப் பொருள்படும் வடசொல்; (குஞ்சம் - காட்டுப்புதரும், துதிக்கையும்.) (அஉ)

அங.—(இ - ள்.) வடிவு உடை சில குரகதம் - அழகிய உருவத்தை யுடைய சிலகுதிரைகள்,—மரகதம் வண்ணம் மிக்கன ஆகி - மரகதரத்தினம் போன்ற பசுநிறம் மிகுந்தனவாய்,—பவனம் வெம்கதி போல -வாயுவினது மிக்கவேகம்போல, படியினில் சிறிது அமைவுற மிதித்தில - பூமியிற் சிறிதேனும் கால்பொருந்த மிதித்துச்சென்றனவில்லை; முனிவரன் - பிரமதேவன்,உயிர்க்கு எல்லாம் - எல்லாப்பிராணிகட்கும், அடி படைத்தது - கால்களைச் சிருட்டித்தது. முடிவு இல் இ படிமிசை வர கருதியே - அழிதலில்லாத இந்தப்பூமியின்மேல் (அவ்வுயிர்கள்) நடந்துசெல்வதை நினைத்தேயாம்; இங்கு இவற்றினுக்கு படைத்தது - இச்சேனையிலுள்ள இக்குதிரைகளுக்கு (க் கால்களை) சிருட்டித்ததோ, (பூமியின்மேல் நடந்துசெல்வதற்காகவன்று): அவயவம் குறையாமல் - உறுப்புக்கள் குறைபாடில்லாமல் அழகாயிருத்தற்பொருட்டே; (எ று)

உலகத்திற் சாதாரணமாய்ப் பிராணிகட்கெல்லாம் பிரமதேவன் கால்களைப்படைப்பது, பூமியில் நடந்துசெல்லுதற்காகவேயாம்; தருமபுத்திரனது சேனையிலுள்ள குதிரைகட்குக் கால்கள்படைத்ததோ, அவயவக்குறைவில்லாது அழகாகஇருத்தற்பொருட் டன்றி அவ்வடிகளால்நடத்தற்காகவன்று என வருணித்தவாறு: இதனால்,இக்குதிரைகள் கால்கள்தரையிற்படுதல்தெரியாதபடி மிக்கவேகத்துடன் செல்வன என்றபடியாம். குதிரைக்குக்கால்கள் நடத்தற்பொருட்டே அமைந்திருக்கவும் அவ்வுண்மையை விலக்கி,அங்கவீனப்படாமைப்பொருட்டுப் படைக்கப்பட்டன வென வேறொருதன்மையை ஏற்றிக்கூறியதனால், இது - ஒன்றில் ஒருதன்மையைநீக்கி மற்றொருதன்மையை ஏற்றிக்கூறும் அபநுதியணியாம்; இது, ஒழிப்பணி யெனவும்படும்.

குரகதம் - குளம்புகளினால் நடந்துசெல்வது எனக் குதிரைக்குக் காரணக்குறி. மரகதம்-பச்சைரத்தினம். 'சிறிதும்' என்ற இழிவுசிறப்பும்மை, விகாரத்தால் தொக்கது. பிரளயகாலந்தோறும் அழிந்து படைப்புக்காலந்தோறும் தோன்றி இவ்வாறு யாற்றுநீர்வெள்ளம்போன்று நித்தியமாயிருத்தலால், 'முடிவில் இப் படி' என்றார். அன்றி, நெடுங்காலம் அழியாதிருத்தலால், உபசாரம்பற்றி இவ்வாறு கூறினாரெனினுமாம். இனி, முடிவு இல்- முடிவுஇல்லாத [எல்லைகாணவொண்ணாத ,மிகப்பெரிய] இப் படி என்றும் உரைகூறலாம். பின்வரும் 'படைத்தது' என்பதற்கும், முன்வந்த 'அடி' என்றதே - செயப்படுபொருள். குரகதம், மரகதம், வர்ணம், பவநம், கதி, முனிவரன், அவயவம் - வடசொற்கள். முநிவரன் - முனிவர்தலைவன். (அங)

[தேர்பதாதிகளின் வருணனை.]

அச.—(இ - ள்.) 'நிமேம் மால் [illegible] [illegible] - ([illegible]) [illegible] பெரிய மலைகளெல்லாம், [illegible] மால் [illegible] ([illegible] [illegible] பெரியமலைகளெல்லாம் ([illegible]) [illegible]

களோ, மண்மேல் ஓடும் மால் வரை - பூமியின்மீது ஓடுகின்ற பெரிய மலைக ளாகும்,' என - என்று (கண்டோர்) சொல்லும்படி, தனி தனி ஊர்ந்த தேர் - தனித்தனியே விரைந்துசெல்லுகின்ற தேர்கள், பல கோடி - பலகோடிக் கணக்கினவாம்; 'நாடு - நாடும் [மருதநிலமும்], மால் வரை - பெரிய மலை யும் [குறிஞ்சிநிலமும்], கடல் - கடலும் [நெய்தனிலமும்], வனம் - காடும் [முல்லைநிலமும்], எனும் - என்று சொல்லப்படுகின்ற, நிலன் நாலுமே - நான்குவகைநிலங்களும், (இக்காலாட்படைத்தொகுதியால்), ஒன்று ஆக கூடும் - (இனி)ஒன்றுசேர்ந்துவிடும்: ஆல் - ஆதலால், வரை இல் - (நான்கு நிலமென்று சொல்வதற்கு உரிய)எல்லை அழிந்துவிடும்,' என - என்றுசொல் லும்படி, (ஒருபெருங்கூட்டமாக), கொடிய வெம் படை வீரர் - மிகக்கொடிய ஆயுதங்களையேந்திய காலாள்வீரர்கள், பரந்தனர் - (எங்கும்) பரவினார்கள்.

தேர்கள் மலைபோலுள்ளன என்ற கருத்தை, 'நிற்கும் மலைகள் அவை, இவைகளோ ஓடும் மலைகள்' எனக்கூறினர். இவ்வாறு உபமானமாகிய மலை யினும் உபமேயமாகிய தேர்க்குச் செல்லுதலாகியசிறப்புஉள்ளதாகக் கூறித் தேரினை மலையாகக் கொண்டுகூறியிருத்தலால், முன்னிரண்டடி - சிறப்புரு வகவணியாம். 'இவை' என்பது, தேர்களைச் சுட்டிநின்றது. கோடி - மிகப்பல என்பதற்கு ஒன்று காட்டியவாறு.

மருதம் முதலாக நிலங்கள் நால்வகையினவா யிருந்தாலும் காலாட் படைகள் பெருங்கூட்டமாகத்திரண்டு எங்கும் ஒருசேர வியாபித்துச் செல் லுதலால், அந்நிலங்களின் வேற்றுமை யுணரமுடியாதவாறு எல்லாம்ஒன்று போலவேதோன்றின வெனப் பதாதிச்சேனைகளின்மிகுதியைப் பின்னி ரண்டடிகளினால் விளக்கினர்; உயர்வுநவிற்சியணி. கொடிய வெம் - ஒரு பொருட்பன்மொழி. ஐவகைநிலங்களுட் பிராணிசஞ்சாரமில்லாத பாலைநில த்தை விலக்கி, 'நிலம் நான்கு' என்றார்; நால்வகைநிலங்களும் தம்தம்தன் மைதிரிந்து பாலையாகின்றனவே யன்றி இயற்கையிற் பாலையெனத் தனியே யொரு நில மில்லை யென்ற கொள்கையும் உண்டு. நாடு வரை கடல் வனம் என்ற பெயர்ச்செவ்வெண், 'நால்' என்னுந் தொகை பெற்றது: நான்குஎன் னும் எண்ணுப்பெயர், ஈறுகெட்டு, னகரம் லகரமாயிற்று; இதிலுள்ள உம் மை - முற்றுப்பொருளது. (அச)

[வாத்தியகோஷவருணனை.]

அரு. —(இ - ள்.) அதிர் முழக்கின கரு முகில் ஏழ் உடை - பேரொலி யையுடைய இடிமுழக்கத்தைச் செய்கின்ற கருநிறமான எழுமேகங்களை யுடையதாகிய, அண்டர் கோன் அகல் வானுக்கு - தேவர்கட்கெல்லாந் தலைவ னாகிய இந்திரனது அகன்றவானத்தை, எதிர் முழக்கு என - எதிர்க்கின்றஒலி யென்னும்படி, (மேககர்ச்சனையினும் மிக்கனவாக), இன் இயம் இடந்தோறும் தனித் தனி முழங்கின - இனிய வாத்தியங்கள் (சேனைகளின்) இடங்களி லெல்லாம் வெவ்வேறாகப் பேரொலி செய்தன; மூதிர் முழக்கு இபம் - மிக்க பிளிறுதலையுடைய யானைகள், அவற்றினும் - அவ்வாத்தியகோஷங்களைப் பார்க்கிலும், மும் மடி முழங்கின - மூன்றுபங்கு அதிகமாக ஒலித்தன; அவைதாமும் பிதிர் முழக்கு என - அந்தயானையின்பிளிறுதலும் சிற்றொலி யென்னும்படி, வலம்புரி முழங்கின - வலம்புரிச்சங்குகள் ஒலிசெய்தன; (இவ்வாறு பேரொலி யுண்டானதனால்), உரகரில் பிழைத்தோர் யார் - நாகலோகத்தாரில் உயிர்தப்பிப்பிழைத்தவர் யாவருளர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

வாத்தியகோஷத்தை வருணிக்கத்தொடங்கியவர், ஒலியொற்றுமை பற்றி யானைகளின்பிளிறலையும் உடன்கூறினார். முகில்முழக்கத்தினும் மிகுதியாக வாத்தியங்களும், அவற்றினும் அதிகமாக யானைகளும், அவ ற்றினும் மிகஅதிகமாக வலம்புரிச்சங்குகளும் முழங்கின என வாத்திய

கோஷங்களின்மிகுதியை வருணித்தார்; மேன்மேலுயர்ச்சியணி; இதனை, வடநூலார், ஸாராலங்காரம் என்பர்; ஒன்றினும் ஒன்று சிறந்த பலவற்றைச் சேர்த்துக்கூறுதல், இவ்வணியின் இலக்கணம். 'அதிர்முழக்கின' என்பதற்கு - (கேட்பவர்கள்) அஞ்சிநடுங்கத்தக்க முழக்கத்தை யுடையன வான என்றும், 'கரு முகில்' என்பதற்கு - கருக்கொண்ட காளமேக மென்றும், 'வானுக்கு எதிர் முழக்கு என' என்பதற்கு - சுவர்க்கலோகத்துவாத்தியவொலிக்குப் பிரதித்தொனி யென்று சொல்லும்படி யென்றும் பொருள்கூறலாம். முகில்எழ் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன. பிதிர் என்பது - துகள்; அது, இங்கே சிறுமைக்கு ஆயிற்று. வலம்புரி - வலப்பக்கமாக உட்சுழிந்திருக்குஞ் சங்கு; இடம்புரிச்சங்கம் ஆயிரம் சூழப்பெற்றது, இது. இடியோசைக்கு அஞ்சுதல் சர்ப்பசாதியாரின் இயல் பாதலால், அவ்விடியோசையினும் பலமடங்குமிக்க இவ்வாச்சியகோஷத்தைக் கேட்டு அந்நாகசாதியார் உயிரொடுங்குதல் திண்ண மென்பார், 'உரகரிற்பிழைத்தோர் யார்' என்றார். 'வலம்புரி' எனத் தனியே யெடுத்துக்கூறியதனால், 'இயம்'என்றது - அவையொழிந்த மற்றவற்றை யென்க. இயம், உரகர்-வடசொற்கள். 'முழக்கு', 'முழங்கின' என்ற சொற்கள் ஒருபொருளிலேயே பலமுறை வந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி. (அ௫)

[கொடிச்சீலைகளின் வருணனை.]

அசு.—(இ - ள்.) எடுத்த நீள் கொடி ஆடை - (அச்சேனையில்) உயர எடுக்கப்பட்ட நீண்ட கொடிச்சீலைகள்,—வான் அகல் வெளி எங்கணும் நெருங்கி மீது உற - ஆகாயத்தின் பரந்தவெளியிடமுழுவதிலும் நெருக்கமாய் மேலேபொருந்த, கீழ் படுத்த வானமே வானம் ஆய் - அவற்றிற்குக் கீழே பொருந்திய ஆகாயமாத்திரமே (பூமியிலுள்ளார்க்கு) ஆகாயமாகத்தோன்ற, பகிரண்டம் மறைந்தது - (அக்கொடிச்சீலைகளின்)மேற்புறத்திற்பொருந்திய ஆகாயம் (இவ்வுலகத்தார்க்குத் தெரியாது) மறைந்துவிட்டது; (இவ்வாறு வானத்தில் நெருங்கிய கொடிச்சீலைகள்),— 'அடுத்த பூ நதி - (மீன்)பொருந்தியுள்ள இவ்வுலகத்துக் கங்காநதியானது, வான் நதிக்கு இலது என - ஆகாசகங்காநதிக்கு (த தன்னிடத்திலிருப்பது போல மீன்) இல்லை யென்றுகருதி, அன்புடன் உபகாரம் கொடுத்த மீன்- அன்புடனே உபஹாரமாக அனுப்பிய மீன்களாகும்,' என - என்று சொல்லும்படி, கால் பொர பரந்து போய் - காற்றுவீசுதலினால் (அக்கொடிகள் ஆகாயத்திற்) பரவிச்சென்று, குளிர் தோயம் - (அவ்வாகாசகங்காநதியினது) குளிர்ந்த நீரில், குளித்தன - படிந்தன; (எ - று.)

வானம் - வெற்றிடம். கொடிச்சீலைகள் ஆகாயத்திற் காற்றினாற் பரவி நெருங்கிப் பந்தரிட்டாற்போலாக,அக்கொடிச்சீலைகட்கு மேற்புறத்திலுள்ள ஆகாயம் நிலவுலகத்தார்க்குப் புலப்படாது கீழ்ப்புறத்திலுள்ள ஆகாயம் மாத்திரமே புலப்படுவதாயிற்று என்பது, முன்னிரண்டடியின்கருத்து; இவ்வருணனை, கொடிகளின்மிகுதியை விளக்குந் தொடர்புயர்வுநவிற்சியணியாம். பின்னிரண்டடிகளில், வானத்தில் ஆகாசகங்காநதியளவுஞ் சென்று காற்றினால் மோதப்பட்டு அசையுங் கொடிச்சீலைகளை, மீன்களைமிகுதியாகவுடைய பூலோகத்துக்கங்காநதியானது அம்மீன்களையுடையதல்லாதஆகாசகங்காநதிக்கு உபஹாரமாகஅனுப்பிய மீன்கள்போலு மெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி.

உபஹாரம் என்றவடமொழி-பெரியோர்க்குக்கொடுக்குங் காணிக்கைப் பொருள் என்று பொருள்படும். இனி, உபகாரம் என்றவடமொழியாகவே கொண்டு, உபகாரங்கொடுத்த - உதவியாகக்கொடுத்த என்று உரைப்பினுமாம். கொடியாடை-த்வஜபடம். மீன் - சாதியொருமை;ஆதலால், 'இலது'

என்ற ஒருமைமுற்றைக் கொண்டது. பஃறிரண்டம், பூநதி, நதி, நீரம், தோயம் - வடசொற்கள். அடுத்த பூநதி-இந்நகரத்தையடுத்துப் பூமியிலுள்ள நதி யெனினுமாம். (அசு)

[தூளிகளின் வருணனை.]

அஎ.—(இ - ள்.) செழுந் தராதலம் மடந்தை - செழிப்புள்ள பூமிதேவி யானவள், அழுந்த மேல் இடு சேனையால் மிகவும் நொந்து-தான் அழுந்தும் படி மிகுதியாகத் தன்மீதுபொருந்திய சேனைத்தொகுதியினால் (பாரம்பொறுக்கமாட்டாமல்) மிகவும்வருந்தி, அமரருக்கு உரைசெய்ய-(மேலுலகத்திலுள்ள) தேவர்கட்கு(த்தன்வருத்தத்தை)க் கூறிமுறையிடுதற்காக, பொன் உலகிடை செல்லுகின்றது போல் - பொன்மயமானதேவலோகத்துக்குப் போகின்ற தன்மைபோல, மேல் எழுந்த - மேலே கிளம்பிய, தூளிகள் - புழுதிகள்,—எங்கணும் இடைவிடாது எழுந்து எழுந்து எதிர் ஓடி - எல்லாவிடங்களிலும் இடைவிடாமல் மிகுதியாக எழுந்து மேலேஎதிர்முகமாகச்சென்று, விசும்பு உறும்படி நின்று-ஆகாயத்திற்பொருந்தும்படி நின்றுகொண்டு, நிலன் உற விழுந்த தூளியும் தடுத்தன - (அத்தூளிகட்குமுன்னமே ஆகாயத்திற் சென்று மீண்டு)தரையிற்பொருந்தும்படி விழுகிற தூளியையும் (விழவொட்டாமல்) தடுத்தன; (எ - று.)

சேனைகள் மிக்குச்செல்லுதலினால் மேலே புழுதிகள் மிகுதியாகஎழுந்ததை, பூமிதேவி மிக்கபாரம்பொறுக்கமாட்டாது தன்குறையைமுறையிடுமாறு மேலுலகத்திற்குச்செல்வதாகக் குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்ற வணி. மேன்மேலும்மிகுதியாகப் புழுதிகள் எழுந்து மேற்சென்றுகொண்டேயிருத்தலினால், புழுதிகள் மீண்டு விழுவதற்கு இடமில்லாமற் போயிற்றென்க; இதனால், சேனையின்மிகுதி தொனிக்கும். பூமிதேவி மிக்கபாரத்தினால் வருந்தும்போது தன்குறையைத் தேவர்களிடத்துச்சென்றுமுறையிடுதலைப் புராணங்களிற் காணலாம். (அஎ)

[சேனைகளுடன் தம்பியர்நால்வரும் நான்குபக்கத்திலும் வரத் தருமபுத்திரன் புறப்படுதல்.]

அஅ.—(இ - ள்.) மாருதன் மதலையும் - வாயுகுமாரனான வீமசேனனும், சேனையும் - (அவனது) சேனைகளும், முடுகி - விரைந்து, முன்னர் - முன்னே [முன்னணியாக], வன்பொடு போத - வலிமையுடன் செல்லவும்,—வாசவன் மதலையும் - இந்திரகுமாரனான அருச்சுனனும், தானையும் - (அவனது) சேனைகளும், பின்னர் - பின்னே [பின்னணியாக], பெருந் தகவுடன் போத - பெருந்தன்மையுடன் [கம்பீரமாகச்] செல்லவும்,—அ நராதிபர் இருவரும் - (நகுல சகதேவர் என்கிற) அந்தஅரசர்களிருவரும், அரும் படையுடன் - (தமது) அருமையான சேனைகளோடு, இரு புறத்து செல்ல- இரண்டுபக்கங்களிலும்[புறவணியாகச்] செல்லவும்,—(அவர்கட்குநடுவே),— மன்னர் ஆதிபன் - அரசர்கட்கெல்லாந் தலைவனான தருமபுத்திரன், தாரகா கணத்திடை மதி என - நட்சத்திரக்கூட்டத்தின்நடுவில்(விளங்குஞ்) சந்திரன்போல, புறப்பட்டான்—; (எ - று.)

தருமபுத்திரன் யாவரினும் பிரதானனாய்ச் சிறத்தலால் அவனுக்குச் சந்திரனையும், மற்றையோர்க்கு நட்சத்திரங்களையும் உவமைகூறினார்; தம்பியர்நால்வரையும் பெரியதாரகைகளாகவும், சேனைகளைச் சிறியதாரகைகளாகவும் கருதுக. மாருதன் + மதலை = மாருதமதலை; "சிலவிகாரமா முயர்திணை." முன்னர், பின்னர் என்னும் இடைச்சொற்கள், இங்கு, காலப்பொருளைக்காட்டாமல், இடப்பொருளைக் காட்டின; அர் - சாரியை. வாஸவன்-வஸுக்களுக்குத் தலைவன்; வஸு - செல்வமும், அஷ்டவசுக்களும். போத, போ - பகுதி, து - சாரியை, அ - வினையெச்சவிகுதி. அம் நராதிபர் என்று பிரித்து-அழகியஅரசர்களெனவும் பொருள்கொள்ளலாம். நர + அதிபன் =

க்ரர்திபன்; தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். நான்காம்அடியில், ஆதிபன்-அதிபன்என்பதன் நீட்டல்:இனி, மன் நராதிபன் என்றுகொண்டு, பெருமைபெற்ற அரச னென்றலு மொன்று. தாரகாகணம் - வடமொழித் தொடர். (அஅ)

[ராஜஸ்திரீகளும் திரௌபதியும் உடன்செல்லுதல்.]

அகூ.—(இ - ள்.) அம் கண் மா நிலத்து அரசர்தம் மகளிர் - அழகிய இடமகன்ற பெரிய நிலவுலகத்தி லுள்ள ராஜஸ்திரீகள், பேர் அரும் பிடி மிசை போத - பெரிய அருமையான பெண்யானைகளின்மேலேறி உடன் வருமாறு, செம் கண் மா மயில் யாகபத்தினியும் - செவ்வரிபரந்த கண்களையுடையவளும் அழகியமயில்போன்ற சாயலையுடையவளும் யாகத்திற்கு உரிய பட்டமஹிஷியுமாகிய திரௌபதியும்,வள் சிவிகையின்மிசை போத-சிறந்ததண்டிகையின்மீது ஏறிஉடன்செல்ல,—வெம்கண் மா மணி முரசு உயர்த்தருளிய - (பகைவர்க்குக்)கொடிய கண்களையுடைய பெரிய அழகியமுரசத்தின்வடிவமெழுதியகொடியை உயரநாட்டியவனாகிய,மெய்தவாமொழி வேந்தன்-உண்மைதவறாத சொற்களைச் சொல்பவனாகிய யுதிஷ்டிரராஜன்,—தங்கள் மா நகர் கடந்து - தங்களது (இந்திரப்பிரத்த)நகரத்தை விட்டு, வள் சாயையும் தபனனும் என - அழகிய சாயாதேவியும் சூரியனும்போல,சென்றான்—; (எ - று.)

அரசர்களையெல்லாம் வென்று பிரதாபத்தினால் விளங்குந் தருமபுத்திரனுக்குச் சூரியனையும், அத்தருமனைப்பின்பற்றிச்செல்லும் அவனது மனைவியாகிய திரௌபதிக்கு அச்சூரியனைவிடாதுதொடர்ந்துகொண்டேசெல்லும் சாயாதேவியையும் உவமைகூறினார்; கீழ்ச்செய்யுளில் தருமபுத்திரனுக்குச் சந்திரனை உவமைகூறியவர் இச்செய்யுளிற் சூரியனையும் உவமைகூறியது, "அரசன் தண்ணளியுடையனாய்த்தன்னாட்டுக்குடிகளைமகிழ்வித்தலில் அமுதகிரணங்களினால் உலகத்தாரை மகிழ்விக்குஞ் சந்திரனையும், பிரதாபமுடையவனாய்த் தீயோரைக்கடிந்து தருமத்தைநிலைநிறுத்துதலில் இருளையொழித்து விளக்கத்தையுண்டாக்கி விளங்குஞ் சூரியனையும் ஒத்திருத்தல்வேண்டும்" என்பது அரசநீதி யாதலா லென்க. 'அரசர்தம்மகளிர்' என்றது,தருமபுத்திரனுடன் வந்த அரசர்களது மனைவியரை. மகளிர் பெண்யானைமேலும் சிவிகையிலும் ஏறிச்செல்லுதல்,மரபு. 'பத்நீ'என்ற வடசொல், வைதிககாரியங்களில்தன துகணவனுடனிருந்து உதவுபவளென்று பொருள்படும்; தருமபுத்திரன்இராசசூயயாகஞ் செய்தபோது அதற்குத் துணையாயிருந்ததனால், திரௌபதியை 'யாகபத்தினி' என்றார்.

பிடி-பெண்யானை; "பிடியென்பெண்பெயர் யானைமேற்றே" என்பது, தொல்காப்பியம்; ஆண்யானை 'களிறு' எனப்படும். சிவிகை - சிபிகா என்ற வடசொல்லின் சிதைவு. முரசத்திற்கு 'கண்' என்றது, அடிக்குமிடத்தை. 'தவா' என்னும் ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெச்சத்தில், 'தபு' என்பதன் மரூஉவாகிய தவு - பகுதி. அங்கண் - அக்கண்என்பதன் மெலித்தல். சூரியனுக்குச் சாயை,ஸம்ஜ்ஞை என இருவர் மனைவியர். தபநன் - (தனது ஆயிரங்கிரணங்களாலும்) தபிப்பவன்[காய்பவன்] எனப் பொருள்படும் வடசொல்.

[தருமபுத்திரனுக்கு நேர்ந்த அபசகுனங்கள்.]

௯0.—(இ - ள்.) தருமன் தன் எதிர் - தருமபுத்திரனது எதிரில், பல்லியும் - கௌளிகளும். எவின - (துர்நிமித்தமாகஒலித்துச் செல்லவேண்டாவென்பதைக்) குறிப்பால் தெரிவித்தன; குக்கிலும் - செம்போத்துக்களும், இடத்திலே வர தாவின - (வலப்பக்கத்திலிருந்து) இடப்பக்கத்திலே தாவிச்சென்றன; நெடுங் கலை - பெரிய கலைமான்கள், வாவின - தாவிச்சென்று எதிரிட்டன; வரதம் நூல் வலோர் - நன்மையைத்தரக் கூடிய சகுன நூல்களில் வல்ல நிமித்திகர்கள், உரைக்கவும் - (இவ்வாறுசேரி

ட்டநிமித்தங்களின்தன்மையைத்தாம்) எடுத்துச்சொல்லிக்கொண்டிருக்கையிலும், உணர்கலாமையால் - (தருமபுத்திரன் அவற்றை) அறிந்துகடவாமையினால், ஓவினர் - (அறிவுகூறுதலை) ஒழிந்தார்கள்; (எ - று.)

தருமபுத்திரன் தீச்சகுனங்களின்தன்மையைத் தான் அறிந்தவனாயிருந்தும் நிமித்திகர்கள் அப்பொழுதுநேர்ந்ததுர்நிமித்தங்களையெடுத்துக்கூறவும் அறியாதவன்போன்று சென்றது, தனதுபெரியதந்தையின்சொல்லை மறுக்கலாகாதென்னுங்கடப்பாட்டினாலென்க. தீப்பயன்விளைத்தற்குஉரியஇடத்திலிருந்து பல்லிகள் கொட்டியதையே, பல்லிகள்எவினவாகக் குறித்தார். பல்லியும், குக்கிலும் — உம்மைகள் - முறையே எதிரதும் இறந்ததுந் தழுவியன. பின்னர்நேரக்கூடியநன்மைதீமைகளைச்சகுனங்களின்மூலமாக முன்னமே அறிந்துகொள்ளுதற்குக் கருவியாயிருத்தலால், அச்சாஸ்திரத்தை 'வரத நூல்' என்றார்; இனி, 'மாகநூல்வலோர்' என்ற பாடத்திற்கு-ஆகாயத்திற் கிடக்கும் கிரகங்களின் சஞ்சாரங்களைப்பற்றிக் கூறும் நூலாகிய சோதிடத்தில் வல்லவர்கள் என்பது, பொருள். ஓவினர், ஒருவுஎன்பதன் மரூஉவாகிய ஓவு - பகுதி. உரைக்கவும், உம்மை - உயர்வுசிறப்பு.

இதுமுதல் முப்பத்துநான்குகவிகள்-பெரும்பாலும்மூன்றாஞ்சீரொன்றுமாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௧௦)

[யாவரும் ஒருசோலையிற் சேர்தல்.]

௧௧. —(இ - ள்.) தடம்தொறும் - (வழியிலுள்ள) தடாகங்கள்தோறும், முரல் - (மலர்களில்மொய்த்து) ரீங்காரஞ்செய்கிற, அளி-வண்டுகள், — மடந்தையர் அளகமும் - மகளிரது கூந்தலையும், மாந்தர் மாலையும் - ஆடவர்கள் அணிந்துள்ள மலர்மாலைகளையும், கரி கடம் உடைந்து உகு மதமும் - யானைகளின் கன்னங்களிலிருந்து வெளிப்பட்டு மிக்குச்சொரிகிற மதநீரையும், உன்னி - (தாங்கள் சென்றடைய) நினைத்து, தமரின் நண்புஉற தொடர்ந்து உடன் வர வர - சுற்றத்தார்போல நட்புமிகுதியாகஉண்டாகப் பின்தொடர்ந்துநெருங்கிவர, — (சென்று), — சோலை எய்தினர் - (பாண்டவர்கள் தங்கள்சேனையோடு வழியிலிருந்ததொரு)சோலையிற் சென்றுசேர்ந்தார்கள்.

மலர்களிற்போலவே மகளிரதுகூந்தலிலும் யானைகளின்மதநீரிலும் நறுமணமிகுதியால் வண்டுகள் மொய்க்குமென்க. பழகியமணத்தைவிட்டுப் புதுமணத்தை விரும்பித்தொடர்தல், வண்டுகட்கு இயற்கை. 'மடந்தையர்' என்றது, பருவப்பெயராகாமல் மகளிரென்ற மாத்திரமாய் நின்றது. அளகம் - முன்னெற்றிமயிரைக்குறிக்கிற இவ்வடமொழிச்சிறப்புப்பெயர், கூந்தலெனப் பொதுப்பொருளையுணர்த்திற்று. 'மடந்தையர்' எனமுன்வந்ததனால், 'மாந்தர்' என்னும் பொதுப்பெயர் - பெண்பாலையொழித்து ஆண்பாலைக் குறித்தது; ஒன்றொழிபொதுச்சொல். கடகரீ - வடசொற்றொடர். மாலா, மதம், அளி - வடசொற்கள். தமர் - தம்மைச்சேர்ந்தவர்: தாம் - பகுதி; இன் - ஐந்தனுருபு, ஒப்பு. வரவர, அடுக்கு - மிகுதிப்பொருளது. (௧௧)

[இதுவும், அடுத்தகவியும் - சேனையிலுள்ளார் சோலையில் நீர்விளையாட்டு முதலியன நிகழ்த்தியபின் பாண்டவர்கள் சேனையோடு மருதநிலங்கடந்தமையைக் கூறும்.]

இவ்விரண்டும் - ஒருதொடர்; ஒருங்கு உரைக்கப்படுகின்றன.

௧௨, ௧௩. —(இ-ள்.) (அச்சேனையிலுள்ளவர்கள்), — (௧௨.) சம்பகம்-சண்பகமரங்களும், பாடலம் - பாதிரிமரங்களும், தமாலம் - பச்சிலைமரங்களும், ஆகிய இவற்றினுடைய, நாள் மலர் - அன்றுமலர்ந்த [புதிய] மலர்களை (ப்பறித்து,) வம்புஎழ மிலைச்சுவார் - வாசனைவீசமாறு சூடிக்கொள்வார்கள்; வாவி ஆடுவார் - (அங்குஉள்ள) குளங்களில் நீராடுவார்கள்; செம் பலவு - செவ்

விய பலாமரங்களும், ஆம்ரம் - மாமரங்களும், கதலி - வாழைமரங்களும் ஆகிய இவற்றினது, தீம் கனி - இனிய பழங்களை, உம்பரின் அமிழ்து என-தேவாமிருதத்தைப்போல, உடன் அருந்துவார்-பலர்கூடி யுண்பார்கள்; (கஈ) பசு இளங் கமுகின் மெல் பாளை சூடுவார் - பசிய இளமையாகிய பாக்குமரங்களின் மெல்லிய பாளைகளைக் கொய்து அணிந்துகொள்வார்கள்; அ செழும் காய் கனி கவர்ந்து அருந்துவார் - அந்தப்பாக்குமரங்களின் செழுமையான காய்களையும் பழங்களையும் பறித்து உண்பார்கள்; (இவ்வாறு தம்சேனையிலுள்ளார் மகிழ்ந்துவர), வச்சிரம் போல்பவர் - வச்சிரரத்தினம் போலச் சிறந்தவர்களான பாண்டவர்கள், கொச்சை அம் கடைசியர் குழுமி வாழ்த்த-சிரம்பாச் சொற்களையுடைய அழகிய மருதநிலத்துமகளிர் கூட்டமாகூடி வாழ்த்துக்கூற,மருதம்நீங்கினர் மருதநிலத்தைக் கடந்துசென்றார்கள்.

(கஉ) 'சம்பகம் .. ..... .. ..மிலைச்சுவார்' என்பது - பூக்கொய்தலையும், 'வாவியாடுவார்' என்பது - புனல்விளையாட்டையும், பின்னிரண்டடிகள் - உண்டாட்டையுங் கூறுவனவாம்; மேல்வருவனவற்றையும்இவ்வாறேஆராய்ந்துகொள்க: பூக்கொய்தல் முதலியன கூறுதல், பெருங்காப்பியத்தினிலக்கணமாம். பலாப்பழம், மாம்பழம், வாழைப்பழம் என்ற இவற்றை, 'முக்கனி' என்று கூறுதல், மரபு. பலவு - 'பலா' என்னுங் குறியதன் கீழ் ஆக்குறுகி உகரமேற்றது. தீங்கனி - உரிச்சொற்றொடர்; தீம் கனி எனப் பிரியும்: (இதன்எதிர்மொழி-தீக்கனி: பண்புத்தொகை: தீமையாகிய கனி என விரியும்.) உம்பர் என்ற மேலிடத்தின்பெயர் - அதிலுள்ளவர்களைக் குறித்தலால், இடவாகுபெயராம். உடனருந்துவார்என்பதற்கு - தமதுமனைவிமார்களோடுஇருந்து உண்பார்கள் எனவும் பொருள்கூறலாம்.சம்பகம்,பாடலம், தமாலம், வாபீ, ஆம்ரம், கதலீ, அம்ருதம் - வடசொற்கள். இச்செய்யுளிற் கூறிய சம்பகம் முதலியனவும், அடுத்தசெய்யுளிற்கூறும் கமுகுமுதலியனவும்-மருதநிலத்துக்கருப்பொருள்கள்.(மருதம்-நாடும் நாடுசார்ந்தஇடமும்.)

(கஈ) பசுமை+இள=பச்சிள;'பசுமை' என்பது, ஈறுபோய்த்தன்னொற்றிரட்டிற்று. கமுகு-க்ரமுகம் என்னும்வடசொல்லின் விகாரம்.கடைசியர்-மருதநிலத்துமகளிர்: (ஆடவர்,'கடையர்'எனப்படுவர்.)வச்சிரரத்தினத்தைப் பாண்டவர்கட்கு உயர்வுத்தன்மையில் உவமையாகக் கொள்ளுதலன்றி, உடல்வலிமைக்கும் உவமையாகக் கொள்ளலாம். (கஈ)

[பாண்டவர்கள் முல்லைநிலத்திற் சார்தல்.]

கச.—(இ - ள்.) கடாம் மலை வயவர் - மதநீரொழுகப்பெற்ற யானைச்சேனையையுடைய பாண்டவர்கள்,— முடை நாறு தோள் ஆயர்-முடைநாற்றம்வீசுகிற தோள்களையுடைய இடையர்கள், தடா நிறை வெண்ணெயும் தயிரும் கொண்டு - மிடாக்களில் நிறைந்த வெண்ணெயையும் தயிரையும் (உபஹாரமாக) எடுத்துக்கொண்டு, எதிர் அடா - எதிர்கொண்டுவந்து, கைதொழ - (தம்மைக்)கைகூப்பி வணங்க,—படா முதல் முல்லையின் பரிமளம் கொளா-அழியாத முதன்மைபெற்ற முல்லைமலர்களின் நறுமணத்தை நுகர்ந்துகொண்டு, தண் கானம் எய்தினர் - குளிர்ச்சியான முல்லைநிலத்தைச் சேர்ந்தார்கள்; (எ - று.)

அரசர்கள் வருகையில் ஆங்காங்குள்ளார் தமக்குஉரிய பொருள்களைக் காணிக்கையாகக்கொண்டு எதிர்கொள்ளுதல் மரபாதலால், இடையர்கள் வெண்ணெய்முதலிய முல்லைநிலத்துக்கருப்பொருள்களைக் கொணர்ந்து எதிர்கொண்டன ரென்க. (இவ்வாறே, காளிதாஸமகாகவியும் இடையர் வெண்ணெயைக் காணிக்கையாகக்கொண்டு திலீபராசனை எதிர்கொண்டதாக ரகுவம்சத்திற் கூறியுள்ளார்.) தடா - பெருமிடா. அடா,கொளா-'செய்யா'என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகால வினையெச்சம். முடை - பால் வெண்ணெய் இவற்றில் அளைவதால் சேர்வது. ஆய் - சாதிப்

பெயர். இந்நிலத்திற்கு முல்லைக்கொடி சிறந்துநிற்றலால், 'படாமுதல் முல்லை' என்றார். முல்லை - அதன் மலர்க்கு முதலாகுபெயர். முல்லைநிலம்-காடும், காடுசார்ந்த இடமும். படா - ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெச்சம். கடாம் - கடம்என்பதன் நீட்டல்; 'கடம்'என்னுங் கன்னத்தின்பெயர், அதனினின்று பெருகும் மதநீர்க்கு இடவாகுபெயர். 'கடாமலை' எனவே, யானையாயிற்று; அடையடுத்த உவமவாகுபெயர். வய - வலி; அதனையுடையவர் - வயவர். பரிமளம், கானநம் - வடசொற்கள். 'கடாமலையைவர்' என்றும் பாடமுண்டு. (கச)

[இதுமுதல் மூன்றுகவிகள்-முல்லைநிலத்துநிகழ்ச்சியைக் கூறும்.]

**கரு.**—(இ - ள்.) தேன் இனம் செறிதரு தெரியல் வேலினன் - வண்டுகளின்கூட்டம் நெருங்கிமொய்க்கப்பெற்ற மலர்மாலையை யணிந்தவனும் வேலாயுதத்தை யுடையவனுமாகிய யுதிஷ்டிரராஜன், தான்—, இரங்கு அருள் மிகு தருமன் ஆதலால் -(உயிர்களிடத்து)இரங்குகின்றகருணைமிக்க தருமமுடையவனாதலால்,—கானில் அங்கு உறைதரு கலைகளோடு-அங்குக் காட்டில்வசிக்கிற ஆண்மான்களுடனே, இள மான் இனம் - இளமையான பெண்மான்களின்கூட்டம், பேர்கலா-(அஞ்சித் தாம்இருந்தஇடம்விட்டுப்) பெயர்ந்து அப்பாற்செல்லாமல், மருங்கு வைகும்-(அத்தருமனது)சமீபத்திலேயே நிற்கும்; (எ - று.)—ஆல் - அசை.

யமதருமராசனது புதல்வனாதல்பற்றி யுதிஷ்டிரனுக்கு வழங்கும் 'தருமன்' என்ற பெயர்க்கு, 'தருமமுள்ளவன்' என வேறொருகாரணப்பொருள் கற்பித்துக்கூறியது - பிரிநிலைநவிற்சியணியின்பாற்படும். 'தருமபுத்திரனும் அவன்வழிப்பட்டுநடக்குஞ் சேனைகளும் பிராணிகளைக்கொல்லாத நல்லியல்புடைமையை மிருகங்களும் அறிந்தன' என்று தருமபுத்திரனதுஅருட்சிறப்பை விளக்கினார்: (ரகுவம்சத்தில், காளிதாஸமஹாகவியும், 'திலீபனது தேரைப்பார்த்துக்கொண்டே மான்கள் வழியின்அருகிலேயே நின்றன' எனக் கூறியமைகாண்க.)எளிதில்மருளுந்தன்மையனவாதல்பற்றி மான்களைஎடுத்துக்கூறினார். தெரியல்-விளங்குதல்; விளங்குகின்ற மாலைக்குத் தொழிலாகுபெயர்.வெல்வது வேல் எனக் காரணக்குறி: இங்கு 'வேல்'என்றது-மற்றை ஆயுதங்கட்கும் உபலக்ஷணம். சிவபெருமானுக்கும், யமனுக்கும், முருகக்கடவுட்கும் வேல் ஆயுத மாதலால், அது, கவிகளாற் சிறப்பாக எடுத்துஉரைக்கப்படும். கலை - ஆண்மான். பேர்கலா - ஈறுகெட்ட. எதிர்மறை வினையெச்சம்; முற்றெச்சமெனினும் இழுக்காது. (கரு)

**கசா.**—(இ - ள்.) செரு இளங் காளையர் - போரிற்சிறந்த இளவெருதுபோன்ற பாண்டவர்களது, சேனையின் திறம் - சேனையின்வகையை, வெருவு இளம் பொதுவியர் விழைந்து காண்ப போல் - அஞ்சுந்தன்மையுள்ள இளமையையுடைய இடைச்சியர்கள் விரும்பிக்காண்பதுபோல,—மரு விளங்கு இதழ் நீள் வனமும்-வாசனையோடுகூடி விளங்குகின்ற கொன்றைமரங்கள் (நிறைந்த)பெரிய காடுகளும் [முல்லைநிலமும்], கருவிளை மா மலர் கண்கொடு-காக்கணஞ்செடியினது பெரிய மலர்களாகிய கண்களைக்கொண்டு, கலந்து கண்ட - பொருந்திப்பார்த்தன; (எ - று.)

பாண்டவர்கள் சேனையுடன்சென்ற முல்லைநிலத்திலே காக்கணம்பூ மலர்ந்துள்ளதை,கொன்றைமரங்கள்அடர்ந்தஅந்தமுல்லைநிலம் தனது கண்களால் அச்சேனையின்திறத்தை நோக்குவதாகக் குறித்தார்;தற்குறிப்பேற்றவணி. இவ்வணி 'கருவிளமாமலர்க்கண்'என்ற உருவகவணியை அங்கமாகக்கொண்டுவந்தது. முன்னிரண்டடி-உவமையணி. இனி, 'இதழிநீள்வனம்' என்பதைக் கொன்றைமரக்காடு என்றேகொண்டு,'அந்நிலத்திலுள்ள இடைச்சியர்கள் அச்சத்தால் மரங்களில் மறைந்து நின்று சேனையின்திறத்தைக் காண்பதுபோல, கொன்றைமரங்களும் கருவிளஞ்செடியோடு சேர்ந்து

னின்று அக்கருவிளமலராகிய கண்களினுல் நோக்கின' என்று கருத்துக் கூறுவாருமுளர்; அக்கருத்தில் உபமானஉபமேயங்கள் நன்கு இயையாமை யை உய்த்துணர்க. கருவிளமலர் கண்களுக்கு உவமையாதலை "புல்லிய கொம்புதானேர்கருவிளைபூததுதேபோ,லொல்கியோர்கொம்புபற்றி யொரு கணுல் நோக்கிநின்றுள்" என்னுஞ் சிந்தாமணியாலும் அறிக.

காளையர் - உவமைபற்றிவந்த பெயர்; இது ஆகுபெயரன்று: 'அர்' என்ற பலர்பால்விகுதியைப் பெற்றுவந்ததனுல். காடும் காடுசார்ந்த இடமு மாகிய முல்லைநிலம், நாடும் நாடுசார்ந்த இடமுமாகிய மருதநிலத்திற்கும் மலையும் மலைசார்ந்தஇடமுமாகியகுறிஞ்சிநிலத்திற்கும்இடையிலுள்ளதனுல், அந்நடுநிலமான முல்லைநிலத்தில் வாழ்கிற சாதியார்க்கு, 'இடையர்' என் றும், 'பொதுவர்' என்றும் பெயர்களாயின; இடை, பொது என்பவை - ஒருபொருளன. பொதுவியர் - பெண்பன்மை. மகளிர்க்கு உரிய நாற் குணங்களுள் அச்சமும் ஒன்றுதலால், 'வெருவிளம்பொதுவியர்' என்றுர். காண்ப-பலர்பால் எதிர்காலவினைமுற்று: காண்பர் என்று பொருள்: இனி, 'காண்பது'என்பதன் தொகுத்த லெனக் கொள்ளினுமாம். கொன்றை, கருவிளை - முல்லைநிலத்துக்கருப்பொருள்கள். கருவிளை + கண் = கருவிளங் கண்; வேற்றுமையில் ஐகெட்டு அம்முச்சாரியையெபற்றது; [நன்-உயிர்-கூஉ.] கண்ட - பலவின்பால்முற்று ; 'கண்டதே' என்பதும் பாடம். ஈற்றடி - முற்றுமோனை. (கசு)

கஎ.—(இ - ள்.) தழல் எழு கானகம் தண்ணெனும்படி - நெருப்புப் பற்றியெரிகிற அந்தக்காடும் குளிரும்படி, செழு மதம் அருவியின் திவலை வீச - செழுமையாகிய [மிக்க] மதநீர்ப்பெருக்கின் துளிகளைச் சொரிதலி னுல்,— புழை நெடு நட கை வெம் போதகங்களை - துளைபொருந்திய நீண்ட பெரிய துதிக்கையையுடைய கொடிய யானைகளை, மழை முகில் என - மழைபெய்யும் காளமேகமென்று கருதி, களி மயில்கள் - களிப்பை யுடைய மயில்கள், ஆடின - கூத்தாடின; (எ - று.)—ஏ - ஈற்றசை.

மேகத்தைக்கண்டு களிக்குமியல்புடைய மயில்கள், மதநீரை மழை யென்றும் அந்நீரைச்சொரியுங் கரிய யானைகளை மழைபொழியும் மேக மென்றுங் கருதிக் கூத்தாடின வென்க; மயக்கவணி: இதனை, வடநூலார் ப்ராந்திமதலங்காரமென்பர். மயில்-முல்லைநிலத்திற்கு உரிய பறவை.(கஎ)

[தருமன் சேனையுடன் குறிஞ்சிநிலஞ் சேர்தல்.]

கஅ.—(இ - ள்.) மன்னவர்க்கு எலாம் தினகரன் என தகு செய்ய கோலினன் - அரசர்களெல்லாருள்ளும் (விளக்கத்தாற்) சூரியனென்று சொல்லத்தக்கவனும் செங்கோலுடையவனுமாகிய தருமபுத்திரன்,—வனம் நெறி கடந்துபோய்-(இவ்வாறு)முல்லைநிலத்தின்வழியைக்கடந்துசென்று,— இனம் முகில் தவழ்தலின் - கூட்டமானமேகங்கள் (தன்மீது)படிந்துசெல்லு தலினுல், இரங்கு பேர் இசை தனிதம் - ஒலிக்கின்ற பேரிடிமுழக்கத்தை யுடைய, வன் கிரி - பெரிய மலையினது, நெடுஞ் சாரல் - விசாலமான தாழ் வரையை, எய்தினுன் - போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

இதனுல், பாண்டவர்கள் மலையும் மலைசார்ந்தஇடமுமாகிய குறிஞ்சி நிலத்தை யடைந்தமையைக் கூறினுர். மன்னவர்க்கெலாந் தினகரன் = ராஜமார்த்தண்டன் ; கிரகங்களுட் சூரியன் ஒளியினுல் மிக்குவிளங்குதல் போல, அரசர்களுள் தருமபுத்திரன் பெரும்புகழுடன் விளங்குவ னென்க. தினகரனென்றவடசொல் - (தனதுசேர்க்கையாற்)பகலையுண்டாக்குபவ னென்று பொருள்படும். தனிதம்-ஸ்தநிதம்: வடசொல்; மேக கர்ச்சனை. சாரல்- சார்ந்த இடத்திற்குத் தொழிலாகுபெயர். (கஅ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - குறிஞ்சிநிலத்துநிகழ்ச்சியைக் கூறும்.]

கக.—(இ - ள்.) குன்று உறை - மலைகளிலே வசிக்கின்ற, கட கரி குழாங்கள்-மதயானைகளின்கூட்டங்கள், சேனையின் ஒன்றிய களிறு தன்டு-

(தருமபுத்திரனது)சேனையிலே திரளாகப்பொருந்தியயானைகளைப் பார்த்து, உட்கி - அச்சங்கொண்டு, ஓடின—; இவன் சேனை யானை - இத்தருமபுத்திரனதுசேனையிலே யுள்ள யானைகள், தூன்றிய புறம் இபம் சுவடு கண்டு - நெருங்கிய வேற்றுயானைகளின் அடிச்சுவடுகளைப் பார்த்து, வெருண்டு - கோபங்கொண்டு, உடன் சென்றில - (சேனைகளோடு) தொடர்ந்துசெல்லாது தனிப்பட்டன; (எ - று.)

நாட்டியானைகளும் காட்டியானைகளும் ஒன்றையொன்றுகண்டபொழுது பகைக்குந்தன்மை, இயல்பு: ஆதலால், நாட்டியானைகள் கூட்டமாக வரக் கண்டு காட்டியானைகள் ஓடுதலும், அக்காட்டியானைகளின் அடிவைப்புக்களைக்கண்டு நாட்டியானைகள் வெருண்டு சேனையோடுசெல்லாமையும் நிகழ்ந்தனவென்க. மலையானைகள் அஞ்சியோடின வென்றதனால், தருமன் சேனையானைகள் அக்காட்டியானைகளினும் வலியன வென்பது போதரும். 'புறவு இபம்' என்று பிரித்து, குறிஞ்சிநிலத்துயானைகள் என்று பொருள்கூறினும் பொருந்தும். இனி, ஒருசாரார் இச்செய்யுட்கு வேறுவகையாகக் கருத்து வருணிக்குமாறு:-'குன்றுறைகடகரிக்கூட்டங்கள் தருமனதுயானைகளைக் கண்டு வெருவியோடிவிட்டன; அந்தயானைகளினுடைய அடிகளழுந்திய சுவடுகள் புறங்காட்டிய சுவடுகளாயிருந்தமையால், அஞ்சி முதுகிட்ட அவைகளைத் தொடர்ந்துபின்போதல் வீரமன்றெனக் கருதித் தருமனதுயானைகள் போகாது நின்றுவிட்டன ; இதனால், வெருவிப்புறங்கொடுத்த வேந்தரைத் தருமன்முதலாயினோர் தொடரா ரென்பது நன்கு வலியுறுத்தப்பட்டு, அன்னோர்வீரத்தையும் மென்மையையும் விளக்கு மென்பது. யானை - குறிஞ்சிநிலக்கருப்பொருள். இபம்-வடசொல். சென்றில-எதிர்மறையிறந்தகாலப்பலவின்பால்வினைமுற்று. (கூகூ)

௬00.—(இ - ள்.) வாளியின் வரும் - அம்புபோல விசையாய்வருகின்ற, பரிமாவின்-குதிரைகளினது, வள் குரம் - அழகிய குளம்புகளினால் எழுப்பப்படுகிற, தூளிகள் -புழுதிகள், விசும்பு உற துன்றி ஓங்கலால் - ஆகாயத்திற்பொருந்த நெருங்கியெழுவதனால்,—ஆளிகள் - (மலையில்வசிக்கின்ற) சிங்கங்கள், சிகரம் என்று-(திரண்டெழுந்த அத்தூளிகளைத் தாங்கள் பாய்ந்துசெல்வதற்குஉரிய) மலைசிகர மென்று எண்ணி, அதிர்ந்து பாய்வன-கர்ச்சித்துக்கொண்டு பாய்வனவாய், மீளியர் வேலின்வாய் வீழ்ந்து மாய்ந்த-(அத்தூளிகளால் மறைக்கப்பட்டுநின்ற) சேனைவீரர்கள்கையிலேந்திய வேலாயுதத்தின் முனையில் விழுந்து(தாமே)இறந்தொழிந்தன; (எ-று.)—இதனால், ஆராய்ச்சியின்றி மனம்போனபடி தொழில்செய்பவர் கேடுறுவரென்பது, தோன்றும்.

குதிரைகள் மிக்கவிரைவுடன் நேராய்ச்செல்வதற்கு,அம்பு உவமையாம். பரிமா - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஆளி - யாளியென்பதன் மரூஉ. இதற்குச் சிங்கமென்று பொருள்கொள்வதன்றி,யானையைக்கொல்லவல்லதும் துதிக்கையையுடையதுமாகிய ஓர்மிருகவிசேட மெனக் கூறுவது முண்டு. யாளி - குறிஞ்சிநிலக்கருப்பொருள்களி லொன்று. குரம், தூளி, சிகரம் - வடசொற்கள். பாய்வன - முற்றெச்சம். மீளி - ஆண்பாற்சிறப்புப் பெயர். மாய்ந்த - 'அன்'சாரியை பெறாத பலவின்பால்வினைமுற்று. குதிரைகளின் காற்குளம்பினால் உயரவெழுந்த தூளிகளை யாளிகள் மலைச்சிகரமென்று மயங்கினவெனக் கூறியது - மயக்கவணி. அச்சேனைவீரர்களேந்திய வேற்படைகள் சிங்கத்தை எளிதில்மாய்க்குமாறு மிக்ககூர்மையுடையன வென்பது, ஈற்றடியில் விளங்கிற்று. (௬00)

௬0க - ஆஞ் செய்யுள்.

காார்தவழ்கொடுமுடிக்கானமால்வரை
வார்தவழ்முலையரமாதரார்செவி

* இச்செய்யுள், விலக்குதற்கு உரியது.

தார்தவழ்தடம்புயத்தரணிமன்னவர்
தேர்தவழோதையிற்செவிடுபட்டவால்.

(இ - ள்.) கார் தவழ் கொடுமுடி - மேகங்கள் தவழ்ந்துசெல்லப்பெற்ற சிகரங்களையுடைய, கானம் மால் வரை - காடுகள்சூழ்ந்த பெரிய மலைகளிலே வசிக்கின்ற, வார் தவழ் முலை அரமாதரார் - கச்சையணிந்த தனங்களையுடைய அரமகளிரது, செவி - காதுகள்,—தார் தவழ் தட புயம்-மாலைகள் அசையப்பெற்ற பெரியதோள்களையுடைய, தரணிமன்னவர் - நிலவுலகத்து அரசர்களது, தேர் - தேர்கள், தவழ் - விரைந்துசெல்லுதலினா லுண்டான, ஓதையின் - பேராரவாரத்தினால், செவிடுபட்ட - செவிடுகளாயின; (எ-று.) —ஆல் - ஈற்றசை.

ஐவரும் பிறருமாகிய அரசர்களது தேர்கள் ஓடும்போது தோன்றிய பேரோசையினால், மலையரமகளிரது செவிகள் செவிடாயினவென்க; தொடர்புயர்வுநவிற்சியணி; இதனால், தேரொலியின மிகுதி கூறியவாறு. மிக்க பேரோசையினாற் காதுகள் செவிடுபடுதல், இயல்பு. அரமாதர் - அமரமாதர் அல்லது அரம்பைமாதர் என்பதன் விகாரம்; வரையரமகளிர்: மலையில்வசிக்குந் தெய்வப்பெண்கள். (௧0௧)

[தருமபுத்திரன் சேனையுடன் நெய்தனிலத்தைச் சேர்தல்.]

௧0௨.—(இ - ள்.) புரை நிலம் கடந்து - குற்றத்திற்கு(த் தான்) இடமாவதை நீங்கி [குற்றமற்றவனாய்], அறம் புரியும - தருமத்தையே செய்கின்ற, நீர்மையான் - தன்மையையுடையவனும், உரை நிலம் கடந்த சீர் உரை கொள் பேரினான் - வாக்கின்எல்லைக்கு அடங்காத [வாயினால் அளவிட்டுச் சொல்லமுடியாத] சிறந்த புகழ்மொழியைக் கொண்ட பெரும்பேரையுடையவனுமாகிய தருமபுத்திரன்,—சேனை சூழ்வர - சதுரங்கசேனைகளும் (தன்னைச்) சூழ்ந்துவர, வரை நிலம் கழிந்து - குறிஞ்சிநிலத்தை விட்டுநீங்கி, எறி திரை மகரம் வாரிதி நிலம் - மோதுகின்ற அலைகளையும் சுறாமீன்களையுமுடைய கடலைச சார்ந்ததான (நெய்தல்)நிலத்தில், புகுந்தனன் - பிரவேசித்தான்; (எ - று.)

வாரிதி - நீர்தங்குமிடமெனக் கடலுக்குக் காரணக்குறி; வடசொல். சுறாமீன்கள், கடலிலேயே வாழ்வன; 'மகராலயம்' எனக் கடலுக்கு ஒரு பெயரிருத்தலுங் காண்க. கடலும், கடல்சார்ந்தஇடமும் - நெய்தல். (௧0௨)

[தருமன் நெய்தனிலச்சிறப்பை நோக்குதல்.]

௧0௩.—(இ - ள்.) நளினமும் புறந்தரும் நயனம் வேந்தன் - செந்தாமரைமலரும் (அழகிற்குத்தோற்றுப்) பின்னிடும்படியான [தாமரையினும் மிக அழகிய] கண்களையுடைய யுதிஷ்டிரராசன்,—ஒளி நலம் திகழ் வளை உறங்கும் நல் நிழல் - மிக்கவொளிவிளங்குகின்ற சங்குகள் தூங்கப்பெற்ற நல்ல நிழலையுடையனவும், களி சுரும்பு இமிர் - (தேனுண்டதனாற்)களித்தலையுடைய வண்டுகள் ரீங்காரஞ்செய்து மொய்க்கப்பெற்றனவுமாகிய, நறுங் கண்டல் - வாசனையையுடைய தாழைமரங்கள், வேலி சூழ்வேலிபோற் சூழப்பெற்ற,புளினமும்-மணற்குன்றுகளையும்,கானலும்-கடற்கரைச்சோலைகளையும், பொற்ப நோக்கினான் - இனிமையாகப்பார்த்தான்.

சங்கு, தாழை, மணற்குன்று, கானல் - இவை, நெய்தனிலத்திற்குரியன. வளை - உட்சுழித்திருப்பது எனச் சங்குக்குக் காரணக்குறி. புளினம், நளினம், நயனம் - வடசொற்கள். நளினமும், உம் - உயர்வுசிறப்பு. கண்களுக்குச் செந்தாமரைமலருவமை, செம்மை மென்மை யழகுகளில். (௧0௩)

[கடலோசையின் வருணனை.]

[illegible]—(இ - ள்.) அரும் கடல் - (அளவிடுதற்கு) அருமையான சமுத்திரம்,—இருங் கடம் களிறு தேர் [illegible] சேனை [illegible] பெரிய

மதயானைகளையும் தேர்களையுமுடைய கணக்கில்லாத (தருமபுத்திரனது) சேனையைப் பார்த்து,—'மருங்கு அடர் பேர் அணை வருக்க - தன்னிடத்தே நெருங்கிய பெரிய சேதுவைக் கட்டுவதற்காக, பெருங் கடம் மலை குலம் பெயர்த்தும் வந்தன - பெருங்காடுகளையுடைய மலைகளின்கூட்டம் மீண்டும்வந்துள்ளன,' என்று - என்று கருதி, வாய்திறந்து அலறி ஆர்த்தது - வாய்விட்டுக் கதறிப் பேரொலிசெய்தது; (எ - று.)

தருமபுத்திரனதுசேனையிலுள்ள யானைகளையும் தேர்களையுங் கண்டு, கடல்,மீண்டும் தன்னைத்தூர்த்து அணைகட்டுதற்கு மலைகள் வந்தனவெனக் கருதிக் கதறியழுததென்க. கடல் இயல்பாகப் பேரொலிசெய்வதை, தன்மீது அணைகட்டுவதாக வெண்ணிக் கதறியதெனக் கூறியது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி; இவ்வணி, களிறுகளையும் தேர்களையும் மலைகளென்று கருதியதாகிய மயக்கவணியை அங்கமாகக்கொண்டு வந்தது. பெருந்தோற்றத்தினால் யானைகட்கும் தேர்கட்கும் மலை உவமையாம். இராமபிரான் முன்னொரிற் சேனைகளைக்கொண்டு கடலிற் சேதுபந்தனஞ் செய்ததை நினைத்து, 'பெயர்த்தும்' என்றார். முதலடியில், கடம் - காடு. இரண்டாமடியில், ஏகாரம் - தேற்றம்; நான்காமடியில், ஏகாரம் - ஈற்றசை. என்று - 'செய்யா'என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம். (கoச)

[அந்தச் சேனுவீரர்கள் உண்டாடுதல் முதலியன.]

கoரு.—(இ - ள்.) விலாசம் வீரர் - உத்ஸாஹமாயிருக்குந்தன்மையுள்ள சேனுவீரர்கள்,—நல் நெடுந் துறை எலாம் - (அந்நெய்தனிலத்திலுள்ள)நல்ல பெரியநீர்த்துறைகளிலெல்லாம்,நாளிகேரமோடு-(மிகுதியாகவிருக்கின்ற) தேங்காய்களையும், இன் நெடும் பனங்கனி - இனிய பெரிய பனம்பழங்களையும், எடுத்து—, அருந்தினார் - புசித்தார்கள்; புன்னையின் புது மலர் புனைந்து - புன்னைமரத்தினது புதிய[அன்றுமலர்ந்த] பூக்களை(க்கொய்து) சூடி, கைதையின் மெல் நிழல் வைகினார் - தாழைமரங்களின் இனியநிழலிலே தங்கி இளைப்பாறினார்கள்; (எ - று.)

'அருந்தினார்' என்றதனால் உண்டாட்டும், 'மலர்புனைந்து' என்றதனாற் பூக்கொய்தலும் கூறப்பட்டன. நீரும் மணலும் நிறைந்துள்ள இடங்களில் தெங்கு செழித்துவளருந் தன்மையது. தெங்கு, பனை, புன்னை, தாழை - நெய்தனிலக்கருப்பொருள்கள். நாளிகேரம் என்ற தற்சமவடசொல்,அப்பாஷையில் மரத்தையேயன்றிஅம்மரத்தின்காய்களையுங்குறிக்குமாதலால், இங்கு ஆகுபெயரன்று;இயற்பெயரேயாம். பனை + கனி = பனங்கனி: வேற்றுமையில் ஈற்றுஐகெட்டு அம்முச்சாரியை பெற்றது; [நன் - உயிர் - ூஉ.] விலாஸவீரர் - வடசொற்றொடர். (கoரு)

[பாண்டவர்கள் அத்தினாபுரியை நெருங்குதல்.]

கoசு.—(இ - ள்.) (பாண்டவர்கள்),—நா நலம் புனல் செழு நாடும் - நாவுக்கு இனிமையான நீர் நிறைந்த மருதநிலத்தையும்,கானமும் - முல்லைநிலத்தையும், அம் ஏனல் புனம் கிரி இடமும் - அழகிய தினைக்கொல்லைகளையுடைய குறிஞ்சிநிலத்தையும், அம் கானல் நெய்தலும் - அழகிய கடற்கரைச்சோலைகளையுடைய நெய்தனிலத்தையும், இ வகை கடந்து - இவ்வாறே தாண்டிச்சென்று,—காவலன் தூ நலம் திகழ் பதி தோன்ற - துரியோதனராசனது பரிசுத்தமாகிய அழகுமிக்க அத்தினாபுரி எதிரிற்காணப்பட, எய்தினார் - அருகிற் சேர்ந்தார்கள்; (எ - று.)

கீழ்ப் பலசெய்யுள்களில் வகுத்துக்கூறியதை, இச்செய்யுளில் முதல் மூன்றடிகளால் தொகுத்துக்கூறினார். "தண்ணார்துறைவன்" என்னுமிடத்திற்போல, 'ஏனலம்புனம்,' 'நெய்தலங்கானல்' என்னுமிடங்களில், அம்-சாரியை பெறினுமாம். ஏனல்-குறிஞ்சிநிலக்கருப்பொருள். கிரியிடம்-மலைசார்ந்த இடம்; எனவே, குறிஞ்சியாயிற்று. கிரி - வடசொல். (கoசு)

[பாண்டவர்கள் அந்நகரத்தின் புறச்சோலையில் தங்குதல்.]

௧௦௭.—(இ - ள்.) (பாண்டவர்கள்),—அத்தினபுரிதனக்கு அருகு - அத்தினபுரிக்குச்சமீபத்தில்,—வால் வளை முத்து இனம் நிலவு எழ - வெண்மையான சங்குகள் ஈன்ற முத்துக்கூட்டங்களினால் நிலாவொளி யுண்டாக, (அதனால்), முகைக்கும் - (பகலிலுங்) குவியுந்தன்மையுள்ள, தாமரை தொத்தின - தாமரைமலர்களின்கூட்டங்களையுடைய, பொய்கையும்-தடாகத்தையும்,—சுரும்பு அரு மலர் கொத்தின சோலையும் - வண்டுகள் நீங்காத பூங்கொத்துக்களையுடைய சோலையையும், குறுகி - கிட்டி, வைகினர் - தங்கினார்கள்; (எ - று.)

பாண்டவர்கள் தாமரைத்தடாகங்களையுடையபுறநகர்ச்சோலையில் தங்கினரென்றவாறு. முத்துக்களின் ஒளியைநிலவொளியாகக்கருதிப் பகற்காலத்திலுமுட்படத் தாமரைமலர் குவிந்துநிற்குமெனக் கூறியது-மயக்கவணியாம். தாமரைமலர் சூரியனைக் கண்டால் மலருமெனவும், இரவில் சந்திரனைக் கண்டாற் குவியுமெனவுங் கூறுதல், கவிசமயம். மலர்ந்தபின்னும் கூம்புதல், நீர்ப்பூக்களின் இயல்பு. இங்கு, முத்துக்கள்-சங்கினின்று உண்டானவை: "தந்தி வராகமருப் பிப்பி பூகந் தழைகதலி, நந்து சலஞ்சல மீன்றலை கொக்குநளின மின்னார், கந்தரஞ் சாலி கழை கன்ன லாவின்பல் கட்செவி கா, ரிந்து வுடும்பு கரா முத்தமீனு மிருபதுமே" என்பதனால், முத்துப் பிறக்குமிடங்க ளின்னவை யென அறிக. தொத்தின, கொத்தின - குறிப்புப்பெயரெச்சங்கள். அரு - ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெச்சம். (௧௦௭)

[குதிரைகள் இளைப்பாறுதலும், யானைகள் கட்டப்படுதலும்.]

௧௦௮.—(இ - ள்.) மொட்டின - மொட்டென்னும் உறுப்பையுடையனவாய், பரு மணி முடி கொள் - பருத்தமணிகளிழைத்துச்செய்யப்பட்ட சிகரத்தைக்கொண்டுள்ள, தேர் - தேர்களிற்கட்டிய, பரி-குதிரைகளும், வெட்டின பரிகளும் - (தேரிலே கட்டப்படாமல்) வேறாகவந்த (ஏறு) குதிரைகளும், வெம்மை ஆறின - (நடந்துவந்ததனா லுண்டான) வெப்பம் [இளைப்புத்] தீர்ந்தன; கழை பொரு - மூங்கிலினாலாகிய குத்துக்கோலைச் சிறுந்தன்மையனவான, கவளம் யானை - கவளத்தையுண்ணும்யானைகள்,—மட்டின பரிமளம் மரங்கள் யாவையும் - தேனையுடையனவாகிய நறுமணமுள்ள மரங்களிலெல்லாம். கட்டின - கட்டப்பட்டன; (எ - று.)

மொட்டு - தாமரைமலரின்வடிவமாகச்செய்து தேரின்முன்னிடத்து வைக்கப்படுவதோ ருறுப்பு; இதனைக் கொடிஞ்சியென்று கூறுதலு முண்டு. முடி - (தேரின்) தலையிடம். இனி, 'தேர்ப்பரிவெட்டின பரிகளும் வெம்மையாறின' என்பதற்கு—தேர் - தேரினின்று, பரி - குதிரைகள், வெட்டின - அவிழ்க்கப்பட்டன; பரிகளும் - (தேரினின்று அவிழ்க்கப்பட்டனவும் தனியே மனிதர்கள் ஏறிச்செலுத்தினவுமான) குதிரைகளெல்லாம், வெம்மையாறின என்றும் பதவுரைகூறலாம். மட்டு-தேன். தேவதாரு சந்தனம் முதலிய நறுமணமுள்ள மரங்களில் யானைகளைக் கட்டுதல் மரபாதலால், 'பரிமளமரங்கள்யாவையும்கட்டின . .. ...யானை' என்றார்; "தேவதாரத்தும் சந்தினும் பூட்டின சிலமா" என்றார் பிறரும். கட்டின - செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை; செயப்படுபொருளைச் செய்ததுபோலக் கூறியது. கழைபொரு யானை—"பரிக்கோல் யாவுந் தூரத்தே, காணினுநின்றுகொதிப்பது" என்பர் மேலும். கவளம்-கபளம்; யானையுணவு: வடசொல்.

[யாவரும் இளைப்பாறுதல்.]

௧௦௯.—(இ - ள்.) வீரரும் - சேனாவீரர்களும், தம் தம் மாதரும் - அவரவர்களுடைய மனைவியர்களும், தரித்தனர் - இளைப்பாறினார்கள்; சுமைகள் தங்கு பண்டியும் - பாரங்களையேற்றியுள்ள பண்டிகளும், சரித்தன-சாய்த்து விடப்பட்டன; வேந்தர் - அரசர்கள்,—இடந்தொறும் - (அச்சோலையின்)

பலவிடங்களிலும், நல் நிறம் பரித்தன படங்கு வீடுகள் விரித்தனர் - அழகியநிறங்களைப் பெற்றுள்ளனவான கூடாரமாகிய வீடுகளைப் பரப்பியமைத்துக்கொண்டவர்களாய், எய்தினர் - (அவற்றிற்) சேர்ந்துதங்கினார்கள்.

பண்டிகள்சரித்தல்-இழுக்கும்பிராணிகளையவிழ்த்து நுகம் தரையிற்படும்படி பண்டிகளைச்சாய்த்துவிடுதல்; இனி, சரித்தன - சுமைகளை யிறக்கப்பெற்றனஎனவுங் கூறலாம். சும்மை=சுமை:விரித்தல். அரசர்கள்வேற்றுநாட்டுக்குச்செல்லும்பொழுது ஆங்காங்குத் தங்கிவசிக்கும்படி வஸ்திரங்களினால் மாளிகைகள்போல அறைகள்முதலியன அமைத்துக் கூடாரங் கட்டிக்கொள்ளும் மரபு, பின்னிரண்டடிகளிற் கூறப்பட்டது. வேந்தர் வீடுகள் விரித்தனர் - எழுதற்கருத்தாவின்வினை. விரித்தனர் - முற்றெச்சம். (௧௦௯)

[பாண்டவரைவருந் இளைப்பாறுதல்.]

௧௧௦.—(இ - ள்.) கை வரு தண்டு உடை காளை - கையிற்பிடித்த கதாயுதத்தையுடைய இளவெருதுபோன்றவனாகிய வீமனும்,வெம் சிலை தைவரு செம்கையான்-கொடியவில்லைப்பிடித்த சிவந்தகையையுடையவனான அருச்சுனனும்,தாரை வெம் பரி மெய் வரு குமரன்-ஐவகைநடைகளையுடைய வேகமுள்ளகுதிரையைநடத்துவதில் உண்மையான அறிவுபொருந்திய இளவீரனாகிய நகுலனும், வேல் விடலை- வேலாயுதத்தைத்தாங்கிய சகதேவனும்,வேந்தனொடு-யுதிஷ்டிரராஜனும்,(ஆகிய),ஆண்மைஏறுஅனார் ஐவரும்-வீரத்தன்மையில் ஆண்சிங்கத்தையொத்தவர்களாகிய பாண்டவரைவரும், அமர்ந்தனர்-(அங்குத்)தங்கியிருந்தார்கள்; (எ - று.)

வீமன் கதாயுத்தத்திலும்,அருச்சுனன் விற்போரிலும்,நகுலன் குதிரைத்தொழிலிலும்,சகதேவன் வேற்போரிலும்வல்லவராதலால், அவ்வவர்கட்கு ஏற்குமாறு அடைமொழிகொடுத்துக்கூறினார். வீமசேனனது கதாயுதம் சத்துருகாதினி யென்றும், அருச்சுனனது வில் காண்டீவ மென்றும் பெயர் பெறும். கைவரு - மிகப்பழகிய் எனினுமாம். தண்டு - தண்டம் என்ற வடசொல்லின் விகாரம். தைவருதல்-தடவுதல்; தைவா-பகுதி. குமரன்-குமாரனென்ற வடசொல்லின் குறுக்கல்: மன்மதனையும் குற்சிதரூபமுடையவனென்னும்படி மிக்கஅட்டழகுள்ளவ னென்று பொருள்படும்; முருகக்கடவுளைக்குறிக்கும் இப்பெயர், அவனைப்போன்ற வீரனுக்கு உவமையாகுபெயராய் வழங்கும். விடலை - ஆண்பாற்சிறப்புப்பெயர். (௧௧௦)

[பாசறை வருணனை.]

௧௧௧.—(இ - ள்.) 'மறத்து இருந் தானையான் - (தன்னிடத்து மிகுதியாக) அதருமத்தைக்கொண்ட பெரியசேனையையுடையவனாகிய துரியோதனன், வஞ்சம் எண்ணினான் - (நியாயவழியிற் செல்லும் பாண்டவர்களை) மோசஞ்செய்ய எண்ணினவனாகி, அறத்து இருந்திலன் - தருமவழியில் (மனம்பொருந்தி) நடக்கவில்லை', என - என்று, அஞ்சி - (அவனது அருகிற் செல்வதற்குப்) பயந்து, அந்த ஊர் - புறப்பட்டுஅங்குவந்த இந்திரப்பிரத்த நகரமானது,புறத்து இருந்தது - (அத்துரியோதனனது நகரத்திற்கு)வெளியிடத்தில் தங்கிவிட்டது, என - என்று சொல்லும்படி, புனிதன் பாசறை - பரிசுத்தனாகிய தருமபுத்திரனது படைவீடு, நிறத்து இருந்தது - மேன்மையுடன் விளங்கியிருந்தது; (இவ்வாறுவருணித்துச்சொல்வதன்றி), பிற நிகர்ப்ப இல்லை-வேறே ஈடாகச்சொல்லும்படி ஒப்பானபொருள் எவையுமில்லை.

இந்திரப்பிரத்த நகரத்தை ஆண்டுகொண்டிருந்த யுதிஷ்டிரராஜன் தன் சேனையோடும் புறப்பட்டுவந்து அத்தினாபுரத்திற்கு வெளியிலுள்ள சோலையிற் பாசறையமைத்துத் தங்கியிருந்த தோற்றத்தை, புறப்பட்டு வந்த இந்திரப்பிரத்தநகரம் வஞ்சனைக்கருத்தும் அக்கிரமச்செய்கையுமுடையவனான துரியோதனனது நகரத்தினுட் செல்ல விருப்பங்கொள்ளாமல் வெளியிலேயே தங்கியதென வருணித்தார்; தன்மைத்தற்குறிப்

பேற்றவனி. அப்பாசறையிலிருந்தவர்கள் யாவரும் [illegible]தவர்களாதலினால், அப்பாசறை, இந்திரப்பிரத்த[illegible] சொல்லப்பட்டதென்க. இனி, துரியோதனனது அக்கிரமச்செய்[illegible] அஞ்சி, அவனது ஆளுகைக்கு உள்ளில்லாத அத்திநபுரமே வெளியில்[illegible]விட்டதென இச்செய்யுளில் வருணித்ததாகப் பொருள்கூறுவாருமுளர். 'அந்நூர்ப்புறத்திருந்தது' என்ற பாடத்திற்கு, அஞ்சி யென்று பிரித்து, அதற்குத் தருமதேவதையெனப் பொருள்கொண்டு, அறநெறியினின்று வழுவாத தருமபுத்திரன் பாசறையில் தங்கியிருந்ததை, துரியோதனனைக் கொடுங்கோலுடையனெனக்கொண்டு அவனதுநகரத்திற்கு வெளியிலேயே தருமதேவதை தங்கிவிட்டதுபோலுமென வருணித்ததாகக் கொள்ளலுமாம்.

மறம் - அறமென்பதன் எதிர்மொழி. (செய்யத்தகாதது இது வென நூல்களினால்) மறுக்கப்பட்டதெனப் பொருள்படும். அறம - (செய்யவேண்டியது இது வென நூல்களினால) வரையறுக்கப்பட்டதெனப் பொருள்படும். பாசறை - சேனையுடன்சென்றோர் உறையுமிடம். நிகர்ப்ப - பலவின்பாற் பெயர். (௧௧௧)

[பாண்டவர்வரவுகேட்டுத் துரியோதனாதியர் மகிழ்தல்.]

௧௧௨.—(இ - ள்.) மீண்டவர்-திரும்பிய தூதர்கள்,—வரி சிலை விதுரன் ஏவலால்-கட்டமைந்த வில்லையுடைய விதுரனது கட்டளையினால், பாண்டவர் வரவு - பாண்டவர்கள் (புறநகர்ச்சோலையில்) வந்துள்ளதை, முன் பணிந்து கூற - (திருதராஷ்டிரனுக்கு) எதிரில் (வந்து) வணங்கிச்சொல்ல,—(அதுகேட்டு), மாண்டவர் குறிப்புறா மாயம் வஞ்சகம் பூண்டவர் - மாட்சிமைப்பட்ட பெரியோர்கள் (தமது மனத்தினால்) நினைக்கவும்மாட்டாத மாயமான வஞ்சகச்செயலை மேற்கொண்டவர்களாகிய துரியோதனாதியர், களித்து - மகிழ்ச்சிகொண்டு, மெய் புளகம் எறினர் - உடம்பில் மயிர்ச்சிலிர்ப்பு மிகப்பெற்றார்கள்; (எ - று.)

தருமபுத்திரன் முதலியோர் வந்த செய்தியைக் கேள்வியுற்றுத் துரியோதனாதியர் 'இனிச் சூதாடி அவரை எளிதில் வென்றுவிடலாம்' என்ற கருத்தினால் மிக்கமகிழ்ச்சிகொண்டு மயிர்சிலிர்க்கப்பெற்றனரென்க. பாண்டவர் - பாண்டுவின் மக்கள்; வடமொழித் தத்திதாந்தநாமம். (பாண்டு - வெண்ணிறமுடையானென்பதுபற்றிவந்த பெயர்.) மாண்டவர் - மாட்சிமைப்பட்டவர்; மாண் - பகுதி: (இச்சொல் இறந்தவரென்று பொருள்படும்போது, மாள் - பகுதியாம்) புளகம-மயிர்ச்சிலிர்ப்பு: வடசொல். இத்தூதர்கள், பாண்டவர்செய்தியை யுணர்ந்துவருமாறு துரியோதனாதியரால் அனுப்பப்பட்டுச் சென்றவராதலால், இங்கு 'மீண்டவர்' எனப்பட்டனர். (௧௧௨)

[பாசறையின் சிறப்பு.]

௧௧௩.—'மொய்த்தசோலையும்' என மூலத்தைத் திருத்திப் படிக்க.

(இ - ள்.) தேசு அறை இடங்களும் - ஒளிவீசுகின்ற பளிக்கறையினிடங்களும், தேன் கொள் கானமும்-தேனை மிகுதியாகக்கொண்ட காட்டினிடங்களும், மூசு அறை மதுகரம் மொய்த்த சோலையும் - நெருங்கிய ஆரவாரிக்கிற வண்டுகள் மொய்க்கப்பெற்ற பூஞ்சோலைகளும், வீசு அறல் வனம் [illegible]விதமும் - அலைவீசுகின்ற நீரையுடைய காட்டாறுகளின் வகைகளும், [illegible] கொள - தன்னிடத்துப் பொருந்தும்படி, பாசறை இருந்த ஆ(று) - (தருமபுத்திரனது) அந்தப்படைவீடு இருந்த தன்மை, பகரல் ஆகுமோ - (என்னால் வருணித்துச்) சொல்லுந் தன்மையுடையதோ? [சொல்லுந்தரத்ததன்று என்றபடி]; (எ - று.)

[illegible]கூட்டத்து. அழகியசம்பூஞ்சோலையுங் காட்டாறும்பொருந்தி[illegible] பளிக்கறைகளையுடைய [illegible]களையமைக்கக்கொண்டு

பாண்டவர்கள் உல்லாசமாகத் தங்கியிருந்தன ரென்க. 'தேக்அறை' என்றமையால், பளிக்கறை யென்று சொள்ளப்பட்டது; அன்றி, மணி பொன் முதலியன நிறைந்திருந்தமைபற்றி, 'தேசறை' என்றுருமாம். தேசு-தேஜஸ் என்ற வடசொல்லின் சிதைவு. தேன் + கொள்; தேக்கொள்: தேன் மொழி வலிவர ஈறுபோய் இனமெலிமிக்கது. அறல் - நீர்: கருமணலுமாம். ஆ - விகாரம். ஓகாரம் - எதிர்மறை. (கக௩)

[சூரியாஸ்தமனம்.]

கக௪.—(இ - ள்.) விருந்து உறு சேனை வெவ் வீரர் - புதிதாக அங்கு வந்துதங்கிய கொடிய சேனைவீரர்கள், இன் அமுது அருந்தினர் - இனிய அமிருதம்போன்ற உணவை யுண்டு,மெய் குளிர்ந்து-உடம்புகுளிரப்பெற்று, அசைவு தீர்தலும் - அயர்சசிநீங்கியவளவில்,—இருந் தபனனும் - பெருமை யுள்ள சூரியனும், 'இவர் வருந்தினர் - இசசேனைவீரர் (வழிநடந்து) இளைப் படைந்தார்கள்: (ஆதலால்), துயில் வதிய வேண்டும் - (இவ்விளைப்புத்தீர) நித்திரைசெய்யவேண்டும்.' என்று - என்று கருதி,இவர்க்கு-இச்சேனைவீரர் கட்கு,இரவு நல்கினன்-(தான் அஸ்தமித்தலினால்) இராப்பொழுதை உண் டாக்கினன்; (எ - று.)

சூரியன் இயல்பிலே அத்தமிக்க இரவுதோன்றியதை, சேனைவீரர் களின் இளைப்பைக் கண்டு அவர்கள் நித்திரைசெய்து இளைப்புத்தீர்த்துக் கொள்ளுதற்பொருட்டு அத்தமித்து இரவை யுண்டாக்கியதாகக் காரணங் கற்பித்துக்கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம். 'இவர்க்கு இரவுநல் கினன்' என்ற தொடர், இப்பாண்டவர்கட்கு இரத்தற்குஉரியவறுமையைக் கொடுத்தா னென்று ஒருபொருள்பட்டு அமங்கலமாகி இனிப் பாண்டவர் இராச்சியம்முதலிய செல்வங்களையெல்லாம் இழந்து வறுமைப்படுவதைக் குறிப்பிக்கு மென்னலாம் விருந்து - புதுமை அமுது - அமிருதம்போ லினியஉணவுக்கு உவமையாகுபெயர். அருந்துதல் - உண்பன தின்பன நக்குவன பருகுவன என்றவற்றின் பொதுவினை. (கக௪)

[சந்திரோதயம்.]

கக௫.—(இ - ள்.) மண் வளர் பெரும் புகழ் மன்னர் ஐவரும் - பூமியிற் பரந்த பெருங்கீர்த்தியையுடைய அரசர்களாகிய பாண்டவரைவரும், பண் வளர் நல் இசை பல மகீபரும் - இசைப்பாட்டிற் பாடப்பட்டு மிகுகின்ற நல்ல கீர்த்தியையுடைய (மற்றும் அப்பாண்டவர்களுடன் வந்த) பலஅரசர் களும், கண் வளர் - தூங்குவதற்கு இடமான, பாளையம் - படைவீட்டை, காண-பார்த்தற்கு, எண்ணி—,—விண் வளர் குபேரனும்-ஆகாயத்திற் கலை வளர்கின்ற சந்திரனும், விழைந்து தோன்றினன் - விரும்பி உதயமாயி னன்; (எ - று.)

சந்திரன் இயல்பிலுதித்ததை, பாண்டவர்களும் மற்றையரசர்களும் நித்திரைசெய்கின்ற படைவீட்டின் சிறப்பைக் காணக்கருதி உதித்ததாகக் காரணங் கற்பித்துக்கூறியதனால், இதுவும்-ஏதுத்தற்குறிப்பேற்றவணியே. புகழைக்குறித்துப் புலவர்பாடிய கவிகளை யாழிலமைத்துப் பண்ணுக்கு இயையப் பாடுதல் மரபாதலால், 'பண்வளர் நல்லிசை' என்று விசேடித் துக்கூறினார். மஹீபர் - பூமியைக்காப்பவர். வடசொல்: மஹீ - பூமி. பாளை யம், பாசறை, படைவீடு, பாடிவீடு என்பன - ஒருபொருளன; சேனைதங்கு மிட மென்பது, பொருள்.

ஸோமன், இந்து என்ற வடமொழிகளும்,மதி என்ற தென்மொழியும் சந்திரனுக்கேயன்றிக் குபேரனுக்கும் பரியாயநாமமாக வழங்குதல்பற்றி, சந்திரனை 'குபேரன்' என்றார். சந்திரனை 'குபேரன்' என்ற சொல்லாற் குறித்தது, [illegible] யென்க. (குபேரன் - ஸோமன், இந்து, மதி. ஸோமன், இந்து, மதி - சந்திரன்.) ஸோமனென்பது குபேரனுக்கு வழ

க்குதலே, "அத்தமாநசோத்தரபருவதத்தின்மேல். கிழக்கில் இந்திரனுடைய பட்டணமும், தெற்கில் யமனுடைய பட்டணமும், மேற்கில் வருணனுடைய பட்டணமும், வடக்கில் ஸோமனுடைய பட்டணமும் விளங்குகின் றன" என விஷ்ணுபுராணத்திற் காண்க. அவ்விடத்தில் ஸோமனெ னப்பட்டவன் குபேரனே யென்பது, "வடதிசை தனதன்மேவிவாழ் விபாவரி யென்றேதும், நெடுநகர் பொருந்தும்" என்ற பாகவதத்தி னால் விளங்கும். ஜ்யோதிஷசாஸ்திரத்தில் திதியோகினியைக்குறிக்கிற "சதமகேந்துவருணதாசநரக்ஷஸாம்" என்ற சுலோகத்தில் 'இந்து' என்றது, குபேரனைக் குறிக்கின்றது. கீழ்க் காண்டவதகனச்சருக்கத்தில் "மதியு மம்மதிமுடித்தவனும்" என்றவிடத்தும், மேல் நிரைமீட்சிச்சருக்கத்தில் "குடதிசைமகவான்வாளி குணதிசைவருணன்வாளி, வடதிசைமறலிவாளி தென்திசைமதியின்வாளி, அடலுறவிமைப்பினேவி" என்றவிடத்தும் 'மதி' என்பது குபேரனுக்கு வழங்கப்பட்டுள்ளது. இவ்வகைவழக்குப்பற்றி, பிற் காலத்து நிகண்டில் "கலையின னுடுவின்வேந்தன் கலாநிதியொடு குபே ரன்" எனச் சந்திரன்பெயர்களிற் குபேர னென்பதைச் சேர்த்தும், "புருட வாகனனே சோமன் புட்பகவிமானமுள்ளோன்" எனக் குபேரன்பெ யர்களிற் சோமனென்பதைச் சேர்த்தும் கூறினர். 'குபேரன்' என்ற வட சொல் - குற்சிதமான உடம்பையுடையவ னென்று காரணப்பொருள்படுத லால், அப்பெயர், க்ஷயரோகத்தால் உடல்குன்றுபவனான சந்திரனுக்கும் காரணவகையால் ஏற்கு மென்பதையு முணர்க. சந்திரன்குலத்தோரை "குபேரன்குலத்தோர்" என்றார் கீழ் இராயசூயச்சருக்கத்தும். (கக௬)

* கக௭ - ஆம் செய்யுள்.

[இதுமுதல் மூன்றுகவிகள்-நிலாத்தோற்றத்தின் வருணனை.]

மருண்மிகுசுரும்பினமணந்தசோலையி
னிருள்களினிடையிடையெறித்தவெண்ணிலா
வருளுடைமைந்தர்தோளணைந்தமங்கையர்
புரிகுழனெகிழ்ந்தவெண்போதுபோலுமே.

(இ - ள்.) மருள் மிகு சுரும்பு இனம் மணந்த சோலையின் - (மதுவுண் டதனால்) மயக்கம்மிகுந்த வண்டுகளின்கூட்டம் மொய்க்கப்பெற்ற அந்தச் சோலையிலே, இருள்களின் இடை இடை எறித்த - (மரங்களினது) நிழல்களி னிடையிடையே தண்டுதண்டாகக்காணப்படுகின்ற, வெள் நிலா - வெண் மையாகிய நிலாவொளியானது —அருள் உடை மைந்தர் தோள் அணைந்த- (தம்மிடத்துக்) காதலையுடைய ஆடவர்களது தோள்களைத் தழுவிய, மங் கையர் - இளமகளிரது, புரி குழல் - சுருண்டகூந்தலினின்று, நெகிழ்ந்த - சரிந்துகாணப்படுகின்ற, வெள் போது - வெண்மையான மலர்களை, போ லும் - ஒத்திருக்கும்; (எ - று.)

சோலையிலுள்ள மரங்களின்கீழே கருநிறமாகக்காணப்படும் நிழல்களி னிடையிடையே தோன்றுகின்ற நிலா, கணவரோடுபுணர்ந்த மகளிரது அவிழ்ந்தகூந்தலி னிடையிடையே நெகிழ்ந்துதோன்றுகின்ற மல்லிகைமுத லிய வெண்மலர்களை யொக்கு மென வருணித்தார்; உவமையணி. மரங் களின் இருண்ட நிழற்கு மகளிர்கருங்கூந்தலும், வெண்ணிலாவுக்கு வெண் மலர்களும் உவமையாம். இரண்டாமடியில், இருள் நிலா என மாறுபட்ட சொற்கள் வந்தது, முரண்தொடை. (கக௭)

கக௮.—(இ - ள்.) கானிடை - அச்சோலையினிடத்திலே,— கடி தொள் தேன் உமிழ் அ நிறம் சிலசில முல்லைகள்-வாசனையைக்கொண்ட தேனைக்

* இச்செய்யுள், விலக்குதற்கு உரியது.

கக்குகின்ற வெண்ணிறமான சிற்சில முல்லைமலர்கள்,— வானிடை முறை முறை வளரும் மா மதி மேனியின் உமிழ் அமிழ்து விந்து என்ன-ஆகாயத்திலே (சுக்கிலபக்ஷத்தில் நாடோறும்)ஒவ்வொருகலையாக வளருந்தன்மையுள்ள சிறந்தசந்திரனது உடம்பிலிருந்து சொரிந்த அமிருதத்தின் துளிகள் போல, மலர்ந்து தோன்றும் - மலர்ந்துகாணப்படும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

சோலையிலுள்ள முல்லைக்கொடிகளில் நிலவெறித்தபோது அலர்ந்து காணப்படும் வெண்மலர்களை,அமுதகிரணனான சந்திரனிடத்தினின்று சிந்திக் காணப்படுகிற அமுதத்துளிகளாகக் குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்ற வணி.அமுது வெண்ணிறமுடைய தாதலை,"அமுதினின்விளர்த்து"என்பதனாலும் அறிக. கடி-உரிச்சொல்:இங்கு,வாசனையென்னும் பொருளில்வந்தது. 'தூநிறம்'என்றது,வெண்ணிறத்தை. சுக்கிலபக்ஷமாகிய வளர்பிறையிற் சந்திரன் நாடோறும் ஒவ்வொருகலையாக வளர்தலால், 'முறைமுறை வளரு மா மதி' என்றார். அமிழ்து, விந்து - அம்ருதம், பிந்து என்ற வடசொற்களின் விகாரம். ஈற்றடியில், மேனியின் - உடம்பிலுள்ள, அமிழ்து - அமிருதத்திலிருந்து, உமிழ் - பெருகுகிற, விந்து என்ன - துளிபோல எனப் பதவுரை கூறுதலுமாம். (ககஎ)

ககஅ.—(இ - ள்.) பரி நெடுந் தேர் -(பாண்டவர்சேனையிலுள்ள) குதிரைகள்பூட்டிய பெரிய தேர்கள், மிசை பால் நிலா எழ - தம்மீது வெண்ணிறமான நிலாப் படிந்துதோன்றுவதனால், பொருவு இல் வெள் துகில் கொடு பொதிந்தது என்ன - ஒப்பில்லாத வெண்ணிறமாகிய வஸ்திரங்களினால் மூடப்பட்டனபோலவும்,—யானை வெள்ளம் - (அந்நிலவிலும் கருநிறமாகவேதோன்றும்) யானைகளின் கூட்டம், கிரணம் வெள் படைக்கு எதிர்-(சந்திரனது) கிரணங்களாகிய வெண்ணிறமுள்ள ஆயுதங்கட்கு எதிரில், கெடாமல் நின்ற - அழியாது நிலைநின்ற, பேர் இருள் என - பெரிய இருள் போலவும், விளங்கின—; (எ - று.)—படை - சேனையுமாம்.

தேர்களின்மீது முழுவதும் வெண்ணிலாப் படிந்து தோன்றுவதை அத்தேர்கள் வெண்ணிறத்துகிலுறையினால் மூடப்பட்டனவாகவும், நிலாவிலும் கருநிறமாகத்தோன்றும் யானைகளைச் சந்திரகிரணங்கட்கு எதிரிலே சிதையாதுநின்ற இருட்கூட்டமாகவும் குறித்தார்: இவையும் - தன்மைத்தற்குறிப்பேற்றவணிகளே. பகையொழிக்கும் படைபோலச் சந்திரகிரணங்கள் இருளையொழித்தற்குக் கருவியாயிருத்தலால், அக்கிரணங்களைப் படையெனக் கொண்டார்: ஆயினும்,இங்கு,இருளையொழித்தற்றொழில் நிகழ்வதற்குப் படைகள் உபகாரப்படாமையிருத்தலால், 'கிரணவெண்படை'என்றது-திரிபணியாம்: (உருவகவணியன்று; உருவகவணியில் உபமேயம் உபமானமாந்தன்மையையடைந்து பின்வருந்தொழிற்குஉபகாரப்பட்டுநிற்கும்: "வீமனாகிய மந்தரம் சேனைக்கடலைக் கலக்கியது" என்றவிடத்து வீமனென்ற உபமேயம் மந்தரமென்ற உபமானத்தன்மையைப் பெற்றுக் கடலைக் கலக்குதலாகிய பின்வருந்தொழிற்கு உபகாரப்பட்டுநிற்றல் காண்க.)பின்னிரண்டடிகளை இல்பொருளுவமையணி யெனினும் இழுக்காது.

கொடு=கொண்டு: தொகுத்தல். 'தேர்' என்பது சாதியொருமையாதலால், 'பொதிந்தது' என்னும் ஒருமைமுடிபைக் கொண்டது. என்ன, என - தற்குறிப்பேற்றவுருபுகள். (ககஅ)

[மதயானைகளின் செயல்.]

ககசு.—(இ - ள்.) மா மதம் கரி சில - (அச்சேனையிலுள்ள) மிக்கமதத்தையுடைய சிலயானைகள், பரியன கந்துகம் பரிந்து - பெரியவையாகிய கட்டுத்தறிகளை முறித்துக்கொண்டு, பாகையும் கைகடந்தன - பாகர்களுக்கும் அடங்காது மீறியோடின; (அதனால்), அரிவையர் புலர்-(உடன்சென்று அங்குத் தங்கியிருந்த) பலமகளிர், துயில் அனந்தலோடு - உறக்கமயக்கத்து

டனே, தம் சுரி குழல் மேகலை சோர - தமது சுருண்ட கூந்தலும் மேகலையென்ற ஆபரணமும் சரிந்துவிழும்படி, ஓடினர் - (அச்சங்கொண்டு)ஓடலானார்கள்; (எ - று.)

கட்டுத்தறியை முறித்தலும், பாகர்கட்குஅடங்காது மீறிநடத்தலும், மதயானைகளின் இயற்கை; "தாணும்விலங்குமுறிப்பது பாகுபரிக்கோல்யாவுந் தூரத்தே,காணினு நின்றுகொதிப்பது"என்பர்மேற்பதினாறாம்போர்ச்சருக்கத்தும். பரியன - பருமையென்றபண்பினடியாப்பிறந்த பலவின்பாற்குறிப்புவினையாலணையும்பெயர். கந்துகம்-ஸ்கந்தம் என்ற வடசொல்லின் விகாரமென்க. பாகு - உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச்சொல்; உம் - உயர்வுசிறப்பு. அரிவையர்என்றசிறப்புப்பெயர், இங்கு,மகளிரென்றமாத்திரமாய்நின்றது: அப்பருவத்துக்கு வயதெல்லை-இருபதுமுதல் இருபத்தைந்தளவும். அனந்தல் - குறைத்தூக்கம். சுரி குழல் - நுனிசுருண்ட கூந்தல். மேகலை - மேகலா என்றவடசொல்லின் விகாரம்: மாதரிடையில் அணிந்துகொள்ளும் எழுகோவையணி; (இங்ஙனமாதலை, "எண்கோவை காஞ்சியெழுகோவை மேகலை, பண்கொள்கலாபம்பதினாறு-கண்கொள், பருமம் பதினெட்டு முப்பத்திரண்டு, விரிசிகை யென் றுணரற்பாற்று" என்பதனாலுணர்க;) எண்கோவை யென்றலு முண்டு. (கககூ)

[இதுவும்அது.]

கஉ0.—(இ - ள்.) நீடுறு தருக்களில் நிரைத்த மா - பெரிய மரங்களில் வரிசையாகக்கட்டப்பட்ட யானைகள்,—அதன் கோடு இற எறிந்து - (தம்மைக்கட்டப்பெற்ற) அந்தந்த மரத்தின் கிளைகளை ஒடியும்படி முறித்து, கை கொள்ளும்-துதிக்கையிற்கொள்ளுதலா லுண்டாகிற, ஓதையால் - ஓசையினால்,— மாடு உறு பொங்கர்வாய் வதிந்த புள்- அருகிற்பொருந்திய சோலைகளில் தங்கியுள்ள பறவைகள்,—வெரீஇ - அஞ்சி, பேடொடு சேவல் மெய் பிரிந்து - (ஒன்றாய்க்கூடியிருந்த) பெண்பறவைகளோடு ஆண்பறவைகளும் (தம்மிற்)பிரிந்துபோய், நேடும் - (பிறகு ஒன்றையொன்று)தேடும்; (எ று.)— ஆல் - ஈற்றசை.

ஆணும்பெண்ணுமாய்க் கூடியிருந்த பறவைகள், அச்சேனையானைகள் மரங்களை முறித்த ஓசையைக் கேட்டுத் தனித்தனிபறந்துபிரிந்து பிறகு ஒன்றையொன்று தேடுவனவாயின வென்க. ஒலியைக்கேட்டு அஞ்சிப் பறத்தல், பறவைகளின் இயல்பு. வெரீஇ=வெருவி: சொல்விகாரப்பட்டுஅளபெடுத்ததனால், சொல்லிசையளபெடை. பேடு,சேவல் என்பன - முறையே பறவைகளின் பெண்மை ஆண்மைப் பெயர்களாம். (கஉ0)

[குதிரைகளின் செயல்.]

கஉக.—(இ-ள்.) தீது அறு சில பரி - (அச்சேனையிலுள்ள) குற்றமற்ற சிலகுதிரைகள்,— ஊதையின் மரன் அசையுற - பெருங்காற்றினால் மரங்கள்அசைய, பொரா-(அந்த விசையைப்)பொறாமல்,—வடம் மோதுறு முளையுடன் - கயிறுகொண்டு கட்டப்பட்ட முளைத்தறிகளுடனே, முடுகு வேட்டம் ஆய் - விரைவான ஓட்டங்கொண்டு, செல்வன் பாசறை மாதிரம் உற - செல்வச்சிறப்புடையவனாகிய தருமபுத்திரனது படைவீட்டின் பக்கங்களிற் பொருந்தும்படி, பல வாளி போதும் - பலதரம் வட்டமாகச் சுழன்று செல்லலாயின; (எ - று.)—ஆல் - அசை.

பெருங்காற்றினால் மரங்கள் அசைய வெருண்டு குதிரைகள் முளையோடு பிடுங்கிக்கொண்டு ஓடலாயின வென்க. மரன்-மரம்: ஈற்றுப்போலி. பொரா - ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம்; பொருதனவாய் என்று பொருள்கொண்டால், எதிர்மறைப் பலவின்பால் முற்றெச்சமாம். வாளி - [illegible]மாயோடும் ஓட்டம்: [illegible] யென்பீடும். வேட்டம் - [illegible] இங்கு, ஓட்டத்திற்கு [illegible] ([illegible])

* கஉஉ - ஆஞ் செய்யுள்.

[வீரர்களின் செயல்.]

ஆடுவர்சிலர்சிலரைவர்வான்புகழ்
பாடுவர்சிலர்சிலர்பாயலின்புறக்
கூடுவர்சிலர்சிலர்கோதைமாதரோ
டூடுவர்சிலர்சிலரோகைவீரரே.

(இ - ள்.) ஓகை வீரர் - (அப்பாசறையில் தங்கியுள்ள) மகிழ்ச்சியை யுடையவர்களாகிய வீரர்களில், சிலர் சிலர் - சிற்சிலபேர், ஆடுவர் - (மகிழ்ச்சியினாற்) கூத்தாடுவார்கள்; சிலர் சிலர் - மற்றுஞ் சிலர், ஐவர் வான் புகழ் பாடுவர் - பஞ்சபாண்டவரது சிறந்தகீர்த்திப்பாக்களையெடுத்துப்பாடு வார்கள்; சிலர் சிலர்-வேறுசிலர், பாயல் இன்புஉற கூடுவர் - படுக்கையிலே இன்பமுண்டாம்படி (தம்தமக்குஉரிய மகளிரோடு) கூடுவார்கள்; சிலர் சிலர் - பின்னுஞ் சிலர், கோதை மாதரோடு ஊடுவர் - மாலையணிந்த மனைவியரோடு பிணங்குவார்கள்; (எ - று.)

புகழ் - அதனையுணர்த்தும் பாடலுக்கு ஆகுபெயர். சிலர்சிலர், அடுக்கு- அசைநிலை. "மாதர் காதல்" என்ற தொல்காப்பிய வுரியியற் சூத்திரத்தின் படி விருப்பத்தையுணர்த்தும் 'மாதர்'என்னும் உரிசசொல், அதற்குஇடமா கிய மகளிரை யுணர்த்திற்று. ஓகை - உவகை யென்பதன் மரூஉ. 'கோதை மாதரோடு' என்றது-மதிமதீபமாய், முந்தினவாக்கியத்தோடும் இயையும்.

[சூரியோதயம்.]

கஉங.—(இ - ள்.) பஞ்சவர் வாழ்வுறு பதம் பொறாமையின்-பாண்டவ ரைவரும் வாழ்கிற நிலைமைக்கு மனம்பொறாததனால், வஞ்சகம் இயற்று வான் - (அப்பாண்டவர்கட்குத)தீமையையியற்றத்துணிந்தவனாகிய துரியோ தனனது, மனம் என்ன - மனம்போல,—மிஞ்சிய குளிர் மதிமேல் பொ ருது - மிக்ககுளிர்ச்சியையுடைய சந்திரன்மீது பொறாமைகொண்டு, இகல்- (அவனிடத்து)மாறுபாடுகொண்ட, செம் சுடரவன் - செந்நிறமான கிரணங் களையுடையவனாகிய சூரியன், குணதிசையில் தோன்றினான் - கிழக்குத்திக் கில் உதயமாயினான்; (எ - று.)

சூரியன் இயல்பிலேயுதித்ததை, சந்திரன்மீது பகைமைகொண்டு உதித்ததாகக் குறித்தார்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. தருமபுத்திரன் மிக்க சிறப்புற்றுவாழ்தலைப்பொறாது வஞ்சனையாக அவனதுசெல்வசசிறப்புக்களை யெல்லாங் கவர்ந்து அவனதுஉயர்ச்சியை அறக்கெடுக்க விரும்பி முயலுந் துரியோதனனது மனம், சந்திரனைப் பிரகாசிக்கவொட்டாமல் மழுங்கசசெ ய்து உதயமாகின்ற சூரியனுக்கு ஏற்ற உவமையாம். பதம் = பதவி. கொல் - அசை. ஏ - இசைநிறை. மிஞ்சிய-விஞ்சியவென்பதன்மரூஉ. குணக்கு + திசை = குணதிசை: திசைப்பெயர், ஈற்றுஉயிர்மெய்யுங் ககரவொற்றுங் கெட்டது.()

[பாண்டவர்கள் அத்தினபுரியிற் சேர்தல்.]

கஉச.—(இ - ள்.) பைந் தொடையல் மார்பினான் - பசுமையான (குவ ளை மலர்)மாலையைத்தரித்த மார்பையுடையவனாகிய தருமபுத்திரன்,—துயில் உணர்ந்து - தூக்கம்விட்டெழுந்திருந்து,—வெயில் எழுந்து - சூரியன் உதய மாக, தன் விரதம் உற்றபின் - தனது விரதானுட்டானங்களைச் செய்துமுடி த்தபின்பு,—பயில் பெருஞ் சனம் பாசறை படுத்து - (தன்னுடன்) வந்த மிக்கஜனக்கூட்டத்தை அந்தப்பாசறையிலேயேஇருக்கவிட்டு, எயில் வளைந்த மா நகரி எய்தினான் - மதில்சூழ்ந்த பெரிய அத்தினபுரியைச் சென்றுசேர் ந்தான்; (எ - று.)

* இச்செய்யுள், விலக்குதற்கு உரியது.

'தொடையல்மார்பினன்' என்றது - மற்றைப்பாண்டவர்நால்வர்க்கும் திரௌபதிக்கும், 'சனம்' என்றது - பதாதியரொழிந்த மற்றை மூவகைச் சேனைகட்கும் உபலட்சணம். சேனைகளைப் பாண்டவர்கள் உடன் அழைத்துக்கொண்டு செல்லாதது, அவ்வளவுபெருஞ்சேனைகட்கு அத்தினபுரியில் தங்கஇடம்போதாதாதலாலும், அச்சேனைகளினால் நகரத்திற்கு உபத்திரவமுண்டாகு மென்னுங் கருத்தினாலு மென்க. எழுந்து = எழ: எச்சத்திரிபு. இங்கு 'விரதம்' என்றது, காலைக்கடனை.

இதுமுதல் இருபத்தொன்பது கவிகள்-ஒன்று மூன்றுஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றையிரண்டும் விளச்சீர்களுமாகி வந்த அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (கஉச)

[பாண்டவர்கள் திருதராட்டிரனது அரண்மனையிற் சேர்தல்.]

கஉரு.—(இ - ள்.) மடங்கல் ஏறு அனைய அரு ஆண்மையான் - ஆண்சிங்கம்போன்ற அருமையான பராக்கிரமத்தையுடையவனாகிய தருமபுத்திரன்,—இரு மருங்கினும்-(தனது) இரண்டுபக்கத்திலும், இளைஞர் நால்வரும்-(தனது) தம்பியர் நான்குபேரும் (உடன்வர), (அவர்கட்குநடுவே), தருமவல்லியும் தானும் ஆக-பூங்கொடிபோன்ற(தனது)தருமபத்தினியாகிய திரௌபதியும் தானுமாக, குரவன் இன்புஉறும் கோயில் நண்ணினன்-தனதுபெரிய தந்தையாகிய திருதராட்டிரன் இனிதுவாழ்கின்ற அரண்மனையைச் சென்று சேர்ந்தான்; (எ - று.)

கணவன் செய்யுந் தருமகாரியங்கட்கு உடனிருந்து உதவுதல் காரணமாக மனைவிக்குத் தருமபத்தினியெனப் பெயருள்ளதனால், யுதிஷ்டிரனது மனைவியாகிய திரௌபதியை 'தருமவல்லி' என்றார். தருமவல்லிஎன்பது - அடையடுத்த உவமவாகுபெயர். வல்லீ - பூங்கொடி: வடசொல். கணவன் தருமதரு, மனைவி அத்தருவைக் கொள்கொம்பாகக் கொண்ட தருமவல்லி என நயங் காண்க; கற்பகதரு, காமவல்லி என்றாற்போல. தருமவல்லியும் தானும் நண்ணினன் - ஆண்பாலும் பெண்பாலுங் கலந்து சிறப்பினால் 'நண்ணினன்' என்னும் ஆண்பால்முடிபைப் பெற்ற பால்வழுவமைதி; பெண்ணினும் ஆண் உயர்ந்தமை, இங்கே சிறப்பு; [நன் - பொது - உ எ.] ஆண்மை - பௌருஷம். 'குரவः' என்ற வடமொழிப்பன்மைப்பெயர் தமிழில் 'குரவர்'எனத் திரிந்துவருதற்கு ஏற்ப, ஒருமையில் 'குரவன்' எனக் கொள்வர். (கஉரு)

[பாண்டவர்கள் திருதராட்டிரனை வணங்குதல்.]

கஉசு.—(இ-ள்.) செல்வம் வாயிலோர்-செல்வச்சிறப்புடைய அவனரண்மனைவாயிலிலுள்ள காவலாளர்கள், சிந்தை அன்புஉற வந்த மைந்தர்தம்வரவு கூற - (தமது)மனத்திலே (பெரியதந்தையாகிய திருதராட்டிரனைக் காண வேண்டுமென்ற)ஆவல் மிகுதியாகப்பொருந்த (அங்கு) வந்துசேர்ந்த (தம்பியின்)குமாரர்களாகிய பாண்டவரது வருகையை(அத்திருதராட்டிரனுக்கு)ச் சொல்ல, (உடனே), மூர்த்தை ஏவலால் - அப்பெரியதந்தை கட்டளையிட்டபடியே, மொழிய-(அக்காவலாளர் மீண்டுவந்து உள்ளேவரலாமென்ற செய்தியைச்) சொல்ல,—(பாண்டவர்கள்),—உள் புகுந்து—, அந்த மீளி சே அடி வணங்கினர் - அரசனான அந்தத் திருதராட்டிரனது சிவந்த பாதங்களை வணங்கினார்கள்; (எ - று.)

வாயில் - இல்வாய் என்பது முன்பின்னாகத் தொக்குவந்த ஆறும்வேற்றுமைத்தொகை; இலக்கணப்போலி. வாயிலோர் (தமது) சிந்தையன்புறக் கூற என இயைத்துப் பொருளுரைத்தல் அத்துணைச்சிறப்பினதன்று; (திருதராட்டிரனது) சிந்தையிலே அன்பு உறுமாறு கூறி என்றலுமொன்று. மீளி - ஆண்பாற்சிறப்புப்பெயர்; இச்சொல்லுக்கு - திண்ணியனென்ற

பொருளும் உண்டு; "காசலம் பதினாயிரம் பெறுவலிக் காயமொன்றி னிற் பொற்றோ, னிராசகுஞ்சரம் பிறந்திடும் விழிப்புலனில்லைமற்றதற் கென்றான்" என்றும், "வலியுடை விழியின்மைந்தன்" என்றும் கீழ்ச் சம்ப வச்சருக்கத்திற் கூறியபடி திருதராஷ்டிரன் பதினாயிரம் யானைபலங்கொ ண்டவ னாதலால், மீளி யெனத்தகுவன். 'மூத்தை ஏவலால்மொழிய' - பெரியதந்தை கட்டளையிட எனினுமாம். (கஉசு)

[திருதராட்டிரன் அன்புதோன்றச் சிலகூறுதல்.]

கஉஎ.--(இ - ள்.) (திருதராட்டிரன்),—தம்பி மைந்தரை தழுவி-(தனது) தம்பியாகிய பாண்டுவின் மக்களை [பாண்டவர்களை]க் கட்டியணை த்து, 'இன்று-(நீவிர் பராக்கிரமத்தோடு சிறப்பாகவிளங்கும்)இக்காலத்தில், எம்பி - எனது தம்பியாகிய பாண்டு, நும்மை - (மக்களாகிய)உங்களை,காண-கண்டுமகிழ்தற்கு, நல்வினை இயன்றிலான் - புண்ணியம் அமையாதவனாயி னான்; (அதுநிற்க:)— நீர்-நீங்களைவரும், நம்பி - விசுவாசம்வைத்து, உம்பிமா ரோடும்-உங்கள்தம்பிமார்களாகிய துரியோதனாதியருடனே, ஒத்து வாழ்க-மனமொன்றுபட்டு வாழ்வீர்களாக', என்று -, தன் நயம் - தனக்கு நன் மைதருவனவான தந்திரமொழிகளை, விளம்பினான் - சொன்னான்; (எ - று.)

இராசசூயயாகஞ்செய்து பலவகைச் சிறப்புக்களையும் பெற்றிருக்கும் இந்நிலையிலே புத்திரரான பாண்டவர்களைக் கண்டு களிக்குமாறு பாக்கி யஞ்செய்யாமல் தன்தம்பியாகிய பாண்டு இளமையிலேஇறந்தபோனதைக் குறித்து இரங்கிக்கூறுவான், 'நும்மை இன்று எம்பி காண நல்வினையியன் றிலான்' என்றான். வீமன்முதலிய நால்வரும் துரியோதனனுக்கு இளைய ராயிருக்கவும், இங்கே துரியோதனாதியரைத் திருதராட்டிரன் 'உம்பிமார்' என்றது, யாவரினும் பெரியவனான தருமபுத்திரனையே பிரதானமாக்கிக் கூறுவதனா லென்க. பாண்டவர்களும் துரியோதனாதியரும் ஒத்துவாழ் வது, தனது மக்களாகிய நூற்றுவர் க்ஷேமமாயிருப்பதற்குக் காரணமாய்த் தனக்குநன்மையாகுதல்பற்றி,அவ்வார்த்தை,'தன்நயம்'எனப்பட்டது. துரி யோதனாதியர் தீங்குசெய்யினும் அதனை நீங்கள் பாராட்டி வேறுபடாது அவ ர்களிடத்தில் மனவொற்றுமையுடனே யிருக்கவேண்டு மென்ற தனதுஉட் கோளைத் திருதராட்டிரன் பின்னிரண்டடிகளினால் வெளியிட்டான். எம்பி, உம்பி - என்தம்பி, உன்தம்பி என்பவற்றின் மரூஉ. நல்வினை=ஸுக்ருதம்.()

[திரௌபதி திருதராட்டிரனை வணங்குதலும், அவன் அவளை ஆசீர்வதித்துக் காந்தாரியினிடம் அனுப்புதலும்.]

கஉஅ.—(இ - ள்.) பாவை - சித்திரப்பிரதிமைபோன்ற அழகிய திரௌ பதியானவள், தன் செழும் பணிவு - தனது மிக்கவணக்கத்தை, கூறலும் - (திருதராட்டிரனுக்குச்)சொன்னவளவில்,—(அவன் அத்திரௌபதியைக்குறி த்து), மெய் களிக்க மேவி வாழ்க என - 'சரீரத்தில்ஆரோக்கியமுண்டாக (வெகுகாலம்) பொருந்திவாழ்வாயாக' என்றுவாழ்த்தி, (பின்பு), தேவிதன் னுழை செல்க என்றுகொண்டு ஏவி - 'பட்டமகிஷியாகிய காந்தாரியினிடத் திற் போயிருப்பாயாக' என்றுகட்டளையிட்டு, (திரௌபதியை அனுப்பிவிட் டு),—மைந்தரோடு-(தனதுதம்பியின்)மக்களாகியஅப்பாண்டவர்களுடனே, இவை விளம்பினான் - இவ்வார்த்தைகளைக் கூறுபவனானான்; (எ - று.)— அவற்றை, அடுத்த ஐந்துகவிகளிற் காண்க.

திருதராட்டிரன் பிறவிக்குருட னாதலால், திரௌபதி தான் வணங்கு வதைக் கூறவேண்டுவதாயிற் றென்க. இனி, பாவைதன் - திரௌபதி யினது, செழும் பணிவு - மிக்கவணக்கத்தை, கூறலும் - (அருகுள்ளோர் திருதராட்டிரனுக்கு) எடுத்துக்கூறலும் எனப் பதவுரைகூறினும் பொருந் தும். பாவை - உவமையாகுபெயர். வாழ்கென - வியங்கோளின் அகரவீறு

தொகுத்தல் என்றுகொண்டு, கொண்டு-அசை. மெய்களிக்க விளம்பினன் என இயைத்துப் பொருள்கொள்ளினுமாம். (கஉஅ)

[இதுமுதல் ஐந்துகவிகள் - திருதராட்டிரன் கூறிய முகமன்.]

இதுமுதல் ஆறுகவிகள் - ஒருதொடர்.

கஉகூ.—(இ - ள்.) தருமம் - செய்தொழில்திறமும், நீதி - நியாயமும், சேர் கல்வி - மிக்க கல்வியறிவும், மந்திரம் - ஆலோசனைத்திறமும், பெருமை - பெருந்தன்மையும், ஆண்மை - பராக்கிரமமும், தான் - முயற்சியும், பீடு நீடு பேர் - கௌரவம்மிக்க புகழும், தருமம் - தருமமும், யாவும் - ஆகிய இவையெல்லாம், நின் தன்மை ஆதலால் - (உனது) இயற்கைக்குணங்களாதலினால்,—அரசு - (உனது) அரசாட்சி, அருமை இன்றியே - கஷ்டமில்லாமலே, செல்லும் - (குறைவின்றி இனிதாக) நடக்கும்; (எ - று.)—ஈற்று ஏகாரம் - தேற்றம்.

நீதி சேர் கல்வி என்றுஎடுத்து - அரசநீதியைப்பற்றித் தெரிவிக்கின்ற கல்வியென்று பொருள்கூறினுமாம். 'நீதிசேர்கல்வி' என்ற பாடம் - நீதியும் சிறந்தகல்வியும் என்று பொருள்படும். தருமம்-மறுமைக்குச் சாதனமாய் இப்பிறப்பிற்செய்யும் நற்றொழில். அரசு செல்லுமே - அரசு இனிதாகச்செல்லுகின்றதன்றோ? என வினாவாகப் பொருள்கூறினும் பொருந்தும். (கஉகூ)

கஙo.—(இ - ள்.) நீ—, இகல் எறிந்து - (தம்பிமார்களைக்கொண்டு திக்விஜயஞ்செய்யத்தொடங்கிப்)பகைவர்களை அழித்துச்சயித்து,திசை அடங்கலும் திறை கொணர்ந்ததும் - எல்லாத்திக்குக்களிலுமிருந்து திறைப்பொருள்களைக்கொண்டுவந்ததையும், (பின்பு), ராயசூயம் மா மகம் உழந்ததும் - ராஜஸூயமென்கிறபெரியயாகத்தைச் சிரமப்பட்டுச்செய்ததையும்,வண்மை செய்ததும் (அந்தயாகத்தில்) தியாகஞ் செய்ததையும், (ஆகிய உனதுசிறப்புக்களையெல்லாம்), தொகுதி கொண்ட நின் துணைவர் - மிக்ககூட்டமான உனது தம்பிமார்கள், கூறினர் - (எனக்குச்) சொல்லியுள்ளார்; (எ - று.)

இகல் - பகைமை; அதனையுடைய பகைவர்க்குப் பண்பாகுபெயர். திசை-அதிலுள்ளார்க்கு, இடவாகுபெயர். 'பாடத்தின்முறைமையினும் பொருண்முறைமை சிறந்தது' என்னும் மீமாஞ்சகர்கொள்கைபற்றி, 'இகலெறிந்து திசையடங்கலுந் திறைகொணர்ந்ததும்' என்றுகூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. துரியோதனுதியர் நூற்றுவ ராதலால்,'தொகுதிகொண்ட நின் துணைவர்' என்றான். 'இகலெறிந்துநீயிராயசூயமா'என்ற பாடம்,மோனைத்தொடைக்குச் சிறக்கும். (கஙo)

கஙக.—(இ - ள்.) எண் திசாமுகத்து எல்லை எங்கணும் - எட்டுத்திக்குக்களையுடைய (நிலவுலகத்து) எல்லைமுழுவதும், முன் குருகுலத்து உளோர் - பழமையாய்வருகின்ற குருகுலத்தைச் சேர்ந்த அரசர்கள், கொண்டது ஆகும் - கைப்பற்றிஅரசாண்டதாகும்; (அதுபோலவே),— துண்டியாமல் - (அவ்விராச்சியத்தை உங்களதுஎன்றும் துரியோதனுதியரதுஎன்றும்) வேறுபாடுகாட்டாமல், நும் துணைவர்தம்மொடும் - உங்களதுஉடன்பிறந்தோராகிய துரியோதனுதியரோடும், பண்டுபோல - முன்போலவே, மண் பரவ - இந்நிலவுலகத்திலுள்ளார் புகழும்படி, வைகுவீர்-(நீங்கள்) ஒற்றுமைப்பட்டு வாழ்வீர்களாக; (எ - று.)

பாரம்பரையாகவருகிற குருகுலத்தாரது ஏகசக்ராதிபத்தியத்தைக் கெடுத்துவிடாமல் ஒற்றுமைப்பட்டு ஆளவேண்டுமெனத் திருதராஷ்டிரன் கூறினனென்க. பண்டு - பழமைகுறிக்கும் இடைச்சொல். மண்-இடவாகுபெயர். இனி, இச்செய்யுட்கு-'நீங்கள் துரியோதனுதியரோடு மனவொற்றுமையுடன் பிரியாமல் வாழ்வீர்களாக; அங்ஙனம் வாழ்ந்தால், இவ்வுலகமுழுவதும் பழமையாகிய குருகுலத்து அரசர்களாகிய உங்களாற் கைப்பற்றப்படுவதாகும்' என்னுங் கருத்துப்படப் பொருள்கூறினும் பொருந்தும்.

கஙஉ.—(இ - ள்.) சேண் இருந்து - தூரத்தேயிருந்து, நும் சீர் செவிப் படுத்து - உங்கள் சிறப்புக்களைக் கேள்வியுற்று, யானோர் அன்பு கூர் இனி மை அன்றி - புதிய [அவ்வப்பொழுதுஉண்டாகின்ற] அன்பின்மிகுதியினால் (தோன்றும்) மகிழ்ச்சியை(க் கொள்வதே) யல்லாமல்,—பூண் நலம் பெறும் பொற்பொடு-ஆபரணங்களினால் இனிதாகப்பொருந்திய செயற்கையழகுட னே கூடிய, உங்களை—, காணும் ஆறு - பிரதியட்சமாய்க் கண்டு களிக்கும் படி, செம் கண் படைத்திலேன் - நல்ல[பார்க்குந்தன்மையுள்ள]கண்களைப் பெற்றேனில்லை; (எ - று.)

உங்கள்சிறப்புக்களைப் பிறர்சொல்லச் செவியினாற்கேட்டறிந்து மகிழ் கின்றேனேயல்லாமற் கண்ணினால்நேரிற்காணும் பாக்கியம் பெற்றிலேனே யென்று,இரக்கந்தோன்றுமாறு, அப்பாண்டவரைத தன்வசப்படுத்திவஞ்சித் தற்காக, அன்புடையான்போலத் திருதராஷ்டிரன் பசப்புமொழிகூறின னென்க: இத்தன்மை, அடுத்தசெய்யுளினால் நன்குவிளங்கும். படுத்து + யானோர் = படுத்தியானோர்; குற்றியலிகரம். யானோர் - புதுமையுணர்த்தும் உரிச் சொல் மூன்றுமடிக்கு, பூண் - மேற்கொண்ட, நலம் - நற்குணத்தையும், பெறும் - (இயற்கையாகப்) பெற்றுள்ள, பொற்பொடு - அழகையும்அடைந் துள்ள எனப் பதவுரை கூறினுமாம். 'பூணலம்பெறும்' என்ற அடைமொழி செயற்கையழகையும், 'பொற்பொடு' என்ற அடைமொழி இயற்கையழகை யுங் குறிக்கு மெனக் கொள்ளுதல், நேர். (கஙஉ)

கஙங.—(இ - ள்.)நேயம் உண்டுபோல் - (பாண்டவரிடத்துத் தனக்கு) அன்பு உள்ளதுபோல, நெஞ்சொடு - வஞ்சனைக்கருத்துடனே, இன்ன சொல்-இவ்வார்த்தைகளை, தூய மைந்தரை சொல்லி-பரிசுத்தர்களாகிய அப் பாண்டவர்களைக்குறித்துக்கூறி,—'நீவிர்-நீங்கள்,போய்-(இங்குநின்றுஞ்)செ ன்று,யாயையும் பணிந்து - (உங்கட்குத்) தாய்முறையாகிற காந்தாரியையும் வணங்கி, எந்தை சேய பங்கயம் மலர் தாள் சேர்மின் - எனக்குப்பெரியதந் தையாகிய வீடுமனது செந்தாமரைமலர்போன்ற பாதங்களைச் சேர்ந்துவணங் குங்கள்',என்ன - என்று (திருதராட்டிரன்) கட்டளையிட, (எ - று.)—'செ ன்று பரிந்திறைஞ்சினர்' என்று அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும்.

நெஞ்சொடு நேயம் உண்டுபோல் என்று இயைத்து, மனத்தில் அன்பு இருப்பதுபோல(ப் பாவனைசெய்து) என்றும் கூறலாம்: இப்பொருளில், நெஞ்சொடு - உருபுமயக்கம். யாயையும், உம்மை - இறந்ததுதழுவியது. சேய - 'செம்மை' என்னும் பண்புப்பெயரினடியாப் பிறந்த குறிப்புப்பெய ரெச்சம்: செம்மையென்பது ஈறுபோய் ஆதிநீண்டு மூன்னின்ற மகரமெய் யகரமாத் திரிந்தது. போய் + யாய் = போயாய்: தனிக்குறிலைச்சாராத யக ரம், யகரம்வரக்கெட்டது; ["யரழமுன்னர்" என்ற சூத்திரத்தின் 'மேல்' என்ற மிகையைக் காண்க.] (கஙங)

[பாண்டவர்கள் காந்தாரியை வணங்குதலும், அவள் வாழ்த்துதலும்.]

கஙச.—(இ - ள்.) இருந்த மைந்தரும் - (திருதராட்டிரனெதிரில்) இருந்த பாண்டவர்களும், ஏவலோடு சென்று- (அத்திருதராட்டிரனது)கட் டளைப்படியே போய், அருந்ததிக்கு நேர் அன்னைதன்னையும் - அருந்ததி யையொத்த [சிறந்தபதிவிரதையாகிய] (தமக்குத்)தாய்முறையாகிற காந்தா ரியையும், பரிந்து இறைஞ்சினர்-அன்புகொண்டு வணங்கினார்கள்; திருந்து பூணினாள் - தொழில்திருந்திய ஆபரணங்களையுடையவளாகிய அந்தக்காந் தாரியும், சிறுவர்தம்மை - மக்கள்முறையான அப்பாண்டவர்களை,பயில வா ழ்த்தினாள் - நன்றாக ஆசிர்வதித்தாள்; (எ - று.)

அருந்ததி - வடசொல்; இவள் - வசிஷ்டமுனிவரது பத்தினி: பதிவிர தாதருமத்திற் சிறந்தவள், கற்புடைமாதர்க்கு உவமை கூறப்படுவள்; எவ ரேனும் இவட்குச் சிறப்பு, [illegible]

திரவிலையிலும் கணவனைவிட்டுப்பிரியாதுஉடனிருத்தல். "மதியளித்தசெதால் குலத்தவன் விழியிலாமகனெனத் தமர்சொல்ல, விதியளித்ததென் றுள மகிழ்ந்தனன் வடமீனெனத்தகுங் கற்பாள்," "இமைத்தகண்ணிணை மலர்க் கினிநோக்கிலேன் யாரொருவரையென்று, சமைத்தபட்டமொன்றினிற் பொதிபெதும்பை" என்ற சம்பவச்சருக்கச்செய்யுள்கள் இங்குக் காணத் தக்கன. திருந்துபூண் - வேலைத்திறமமைந்த ஆபரணம். 'இருந்த மைந்தரும் மேவ லோடுசென்று' என விரித்தல்விகாரங்கொண்ட பாடம், ஓசை நயஞ் சிறக்கும். (௩௫௪)

[குந்தியின் பாக்கியத்தைக் காந்தாரி கருதுதல்.]

௩௫௫.—(இ - ள்.) முந்த வந்து - (தனக்கு)எதிரில் வந்து, தாள் முளரி-(தனது) தாமரைமலர்போன்ற பாதங்களை, கைதொழும் - கைகூப்பிவணங்கிய, அம் தண் வல்லியும் - அழகிய குளிர்ந்த பூங்கொடிபோன்ற திரௌபதியும், ஐவர் மைந்தரும் - பஞ்சபாண்டவர்களும், வந்து நிற்றலும் - (ஒருங்கே) வந்து நின்றவளவில்,—(காந்தாரி),—குந்தி செய் தவம் கூரும் என்ன மகிழ்வொடு உன்னினாள் - 'குந்தி (முற்பிறப்பிற்) செய்த நல்வினை மிக்கதாகும்' என மகிழ்ச்சியோடு கருதினாள்; (எ - று.)

தன்மக்களாகிய துரியோதனாதியரினும் பாண்டவர்கள் மிகச்சிறந்து விளங்குதலால், தனதுதவத்தினும் குந்தியின்தவம் மிக்கதெனக் காந்தாரி மதித்தனளென்க; இது, அழுக்காறு. தாண்முளரி - முன்பின்னாகத்தொக்க உவமைத்தொகை. முளரி-முட்களுள்ள அரையை யுடையதெனத் தாமரைக் குக் காரணக்குறி; (அரி=அரை - தண்டின் சுற்றுப்புறம்.) (௩௫௫)

[பாண்டவர்கள் வீடுமனை வணங்குதல்.]

௩௫௬.—(இ - ள்.) எழில் கொள் தோளினார் - அழகைக்கொண்ட தோள்களையுடையவர்களான பாண்டவர்கள்,—வேயை வென்ற தோள் மின்னை-மூங்கிலைச்சயித்த [மூங்கிலினும்அழகிய]தோள்களையுடையவளான மின்னல்போன்ற திரௌபதியை, அங்கு வைத்து - அந்தக்காந்தாரியினகத்தில் இருக்கும்படிவிட்டிட்டு,யாயையும் பணித்து-தாயாகியஅக்காந்தாரியை வணங்கி விடையையும்பெற்று,— அகண்டமும் போய் போற்று கங்கையாள் சேயை-எல்லாவுலகத்தாரும்சென்றுவணங்கித்துதிக்கின்ற கங்காதேவியின் குமாரனை வீடுமனை,அன்புடன் சென்று இறைஞ்சினார்-அன்போடு போய் வணங்கினார்கள்; (எ - று.)

பசுமையிலும் செய்ப்பிலும் திரண்டுருண்டுநீண்டவடிவத்திலும் இளமூங்கில் - திரௌபதியின்தோள்கட்கும்; விளக்கத்திலும் ஒல்கியொசிதலிலும் மின்னல்-அவளதுமேனிக்கும் உவமையாம். யாயையும்பணித்துஎன்பதற்கு-தமதுபெற்றதாயாகிய குந்தியையும் வணங்கி(விடைபெற்று)என்பாரு முளர். அகண்டம்-வடசொல். சேய்-செந்நிறம்பற்றிவந்தபெயர்; செம்மையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு முன்னின்ற மகரம் யகரமாத் திரிந்து 'சேய்' என நின்று, அந்நிறமுடைய முருகக்கடவுளுக்குப் பண்பாகுபெயராயிற்று. செய்யவனென்பது,சேய் என மருவிய தென்றலு மொன்று.முருகக்கடவுளைக் குறிக்கும் இப்பெயர், உவமையாகுபெயராய் அக்கடவுள்போன்ற வீரம் அழகு முதலிய குணங்களையுடைய ஏனையோர்க்கும் வழங்கும்; 'குமாரன்' என்ற வடசொற் போல. மின் - உவமவாகுபெயர். (௩௫௬)

[பாண்டவர்கள் தாம்வந்தகாரணத்தை வீடுமனிடஞ் சொல்லுதல்.]

௩௫௭.—(இ - ள்.) தேன் தழைத்த தார் செல்வர் - தேன்மிக்குப்பொருந்திய மலர்மாலையையணிந்த செல்வச்சிறப்பையுடையவர்களாகிய பாண்டவர்கள்,— வேந்து அழைத்ததும் - திருதராட்டிரமகாராசன் (தன்னிடத்திற்கு வரும்பொருட்டுத் தங்கட்குத்) திருமுகம்விடுத்ததையும், எம

லின் விதுரன் போந்து அழைத்ததும் - (அத்திருதராட்டிரனது) கட்டளையினால் விதுரன் (இந்திரப்பிரத்தத்திற்கு)வந்து (திருமுகங்கொணர்ந்து கொடுத்துத் தங்களை நேரில்) அழைத்ததையும், புகல வந்ததும்-(அங்ஙனம் விதுரன்) சொல்ல (த் தாங்கள்) வந்ததையும், தாம்—,தந்தைதந்தைமுன்-பாட்டனாகிய வீடுமனிடத்தில், தழைக்க கூறினர் - விவரமாகச்சொன்னார்கள்; (எ - று.)

இலக்கணையால்,முதலிலுள்ள'அழைத்ததும்'என்பது,திருமுகம்விடுத்ததை யுணர்த்திற்று. தந்தைதந்தை-தந்தைக்குத்தந்தை; பிதாமஹன். (௧௬எ)

[அதற்கு வீடுமன் கூறுதல்.]

௧௬அ.—(இ - ள்.) புள் அலங்கலார் - வண்டுகள் மொய்க்கும் மலர்மாலையை யணிந்த பாண்டவர்கள், புரிவு உரைத்திட - (தாங்கள்வந்த) செய்தியைச் சொல்ல,— (அதைக்கேட்டு), கொள்ளை வல் திறல் குருகுலேசனும் - மிகவும்வலிய சாமர்த்தியத்தையுடைய குருகுலத்தாரில் தலைவனான வீடுமனும், 'கள்ளம் வஞ்சர் - திருட்டுத்தனமாகத் தீங்குசெய்யுங் கருத்துடையவர்கள், வெம் கருவி செய்யினும் - (தீமைநேரும்படி)கொடியஉபாயங்களைச் செய்தாலும், உள்ளது உண்டு - விதியினால் அனுபவிக்கவேண்டிய நன்மை வந்தேதீரும்', என - என்று, உண்மை கூறினன் - தத்துவத்தையெடுத்துரைத்தான்; (எ - று.)

'வெங்கருவிசெய்யினும்' என வந்ததனால், 'உள்ளது' என்பதற்குத் தீமையெனப் பொருள்கொள்ளாமல் வரக்கூடியநன்மையென்றே பொருள் கொள்ளப்பட்டது. பாண்டவர்கள் இராசசியம்முதலியவற்றை யிழந்து மிகவருந்தும்படி துரியோதனாதியர்கள் பலவகையாக முயற்சிசெய்தும் முடிவிலே பாண்டவர்களே துரியோதனாதியர்களை வென்று அரசுபெற்று இனிதுவாழ்வா ரென்பது, வீடுமனுட்கோள்: அவ்வாறே மேல்நிகழ்தல் காண்க. பின்னிரண்டடியிற்கூறிய பொதுப்பொருள்'துரியோதனாதியர்என்ன தீங்குசெய்தாலும் நமக்கு ஒன்றும் குறைவு வாராது' என்னுஞ் சிறப்புப் பொருளைத் தெரிவித்தது, பிறிதுமொழிதலணியாம். 'புள்' என்ற பொதுப்பெயர்,சிறப்பாய் வண்டை யுணர்த்திற்று;இது,ஒருவகை இலக்கணை. அலங்கல் - தொங்கியசைவது என மாலைக்குக் காரணக்குறி. புரிவு - அன்போடு, உரைத்தலும் - (தமதுசெய்தியைத்) தெரிவித்தவுடனே எனக் கூறலுமாம். குருகுல + ஈஶன் = குருகுலேஶன்: குணசந்திபெற்ற வடமொழித்தொடர்; 'அ ஆ முன் இ ஈ வரின் அவ்விரண்டுங்கெட ஏர் ஏகாரந் தோன்றும்.'(௧௬அ)

[பாண்டவர்கள் துரோணன்முதலியோரை வணங்குதல்.]

௧௬௯.—(இ - ள்.) தாம் - அப்பாண்டவர்கள்,—தாதைதாதையை அகன்று - பாட்டனாகிய வீடுமனை விட்டுப்பிரிந்து,—பரிவொடு ஏகி-அன்போடு சென்று, பின் - பின்பு, கோதை வெம் சிலை குருவை - மாலையையணிந்த கொடியவில்லையுடையஆசிரியனாகிய துரோணனையும்,மைந்தனை-(அவனது) குமாரனாகிய அசுவத்தாமனையும், வேதம் நால் மறை கிருபனை - ஸ்வரங்களையுடைய நான்குவேதங்களிலும் வல்லவனான கிருபாசாரியனையும், செழும் பாதம் செய்தார் - சிறப்பாக [மனப்பூர்வமாக] வணக்கஞ்செய்தார்கள்.

'கோதை'என்பதைச் சிலைக்கேனும் குருவுக்கேனும் அடைமொழியாக் கொள்ளலாம். குரு - அஜ்ஞானமாகிய இருளைப் போக்குபவ னென்று பொருள்படும் வடசொல்: (கு - இருள், ரு - ஒழிப்பவன்.) கிருபன் - கௌதமமுனிவனது பௌத்திரன்;சரத்வானென்ற முனிவனது குமாரன்; துரோணன்மனைவியான கிருபிக்கு உடன்பிறந்தவன்; துரியோதனாதியர்க்கும் பாண்டவர்க்கும் முதல்வில்லாசிரியன்:காணகத்திற்பிறந்தஇவனை அங்கு வேட்டையாடவந்த சந்தநுமகாராசன் கண்டு கிருபையினால் எடுத்துவளர்

த்தமைபற்றி, இவனுக்கு இப்பெயர் வந்தது. பாதகம் - பதகம் என்ற வட சொல்லின் நீட்டல்; கீழ்வீழ்ந்துவணங்குத லென்பது பொருள். இனி, செழு-செழுமையாகிய [அழகிய], பாதம் - பாதங்களில், நம்-வணக்கத்தை, செய்தார் எனப் பதவுரை கூறினுமாம். (கங.க)

[துரோணன்முதலிய அந்தணரிடத்து ஆசிபெற்றுப் பாண்டவர்கள் விதுரன்மாளிகை சேர்தல்.]

கச௦.—(இ - ள்.) மதுரம் மன்றல் நாள் மாலை மன்னரும் - இனிய வாசனையுள்ள அன்றுமலர்ந்த[புதிய] மலர்மாலையைத் தரித்த அரசர்களாகிய பாண்டவர்களும்,—மா சதுரம் மறை தலைவர்தங்களால் எதிர் மொழிந்த பேர் ஆசி எய்தி - சிறந்த நான்குவேதங்கட்கும் உரியவரான [பிராமணராகிய] துரோணன்முதலியோரால் எதிரிற்கூறப்பட்ட சிறந்த ஆசீர்வாதங்களைப் பெற்று, மீள - பின்பு, விதுரன் மந்திரம் மன்னினர் - விதுரனது மாளிகையிற் சென்றுசேர்ந்தார்கள்; (எ - று.)

சதுரம் - வடசொற்றிரிபு. இனி, சதுரம் மாமறை யென்பதற்கு - சதுரப்பாட்டையுடைய பெரியவேதம் என்றும் பொருள்கொள்ளலாம். 'மறைத்தலைவர்' என்றது - கீழ்ச்செய்யுளில் வந்த துரோணன் அசுவத்தாமன் கிருபன் என்ற மூவரையுங் குறிக்கும். எதிர்மொழிந்த பேர் ஆசி - (பாண்டவர்வணங்கும்போது அவர்கட்கு)எதிரிலேகூறிய வாழ்த்து என்றும், (அவர்களதுவணக்கத்திற்கு) ஈடாகச் செய்த வாழ்த்து என்றும் இருவகையாகப் பொருள்படும். மதுரம் - தேனுமாம். மூன்றாமடி - முற்றுமோனை. மந்திரம் வடசொல். (கச௦)

[பாண்டவர் விதுரன்மாளிகையிற் புசித்திருக்க, சூரியன் அஸ்தமித்துத் தருணத்தையடைதல்.]

கசுக.—(இ - ள்.) அவர் - அப்பாண்டவர்கள், தமதின் - தம்முடைய கிருகம்போலவே (விதுரனதுகிருகத்தைப் பாவித்து), தம்மது அமிழ்து ஆகவே மெய் உற அருந்தி - (விதுரனுடைய அன்னமாயிருந்தாலும் வேறுபாடுகருதாமல்) தம்முடைய அன்னமாகவே மனப்பூர்வமாகப் பாவித்து (அவ்விதுரனிட்ட அன்னத்தை)உண்டு, அங்கு இருந்த பின்-அவ்விதுரனது மாளிகையில் தங்கியிருந்தவளவில்,—திமிரம் நாசனன்-இருளையொழிப்பவனும்,செய்ய மேனியன்-சிவந்த உருவத்தையுடையவனும், கமலம் நாயகன்-தாமரைக்குத்தலைவனுமாகிய சூரியன், கடலில் மூழ்கினான் - மேல்கடலில் முழுகுபவனானான் [அஸ்தமிப்பவனானானென்றபடி]; (எ - று.)

விதுரன் துரியோதனனிடத்திலேயேபழகுபவனாயிருந்தும் நன்னெறியிற்செல்வதுகாரணமாகப் பாண்டவரிடத்தில் ஆதிதொடங்கியே மிக்க அன்புடையனாய் அரக்குமாளிகையினின்றுதப்புவித்தல் முதலிய பேருபகாரங்களை அப்பாண்டவர்க்குச் செய்துவந்தனனாதலால், அவர்கள் அவ்விதுரனிடத்து அன்புகூர்ந்து அவன்வீட்டிற் சிறிதும் வேறுபாடு கருதாது உணவுண்டு மகிழ்ந்திருந்தன ரென்பது, முன்னிரண்டடியில் விளக்கப்பட்டது.

தமதின்—தமது - 'தாம்'என்பதனடியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும்பெயர்; இன் - ஐந்தாம்வேற்றுமையுருபு, ஒப்புப்பொருளது. திமிரநாசனன், கமலநாயகன் - வடசொற்றொடர்கள். சூரியனைக் காண்கிறபகற்பொழுதிலேஅலர்ந்தும் காணாதஇராப்பொழுதிலே குவிந்தும் நிற்றலால், தாமரைக்குச் சூரியனைத் தலைவனாகக் கூறுதல், கவிசமயம். பார்ப்பதற்குக் கடலில்மூழ்குவதுபோலத் தோற்றுதலால், சூரியன்அஸ்தமித்தலை, கடலின்மூழ்குதலாகக் கூறினர். (கசுக)

[மாலைப்பொழுதின் வருணனை.]

கசுஉ.—(இ - ள்.) அ புன்கண் மாலை - அந்தக்காலத்திற்றோன்றிய [illegible] இடத்தையுடைய [சந்தோஷம்மாத்திரமே யிருக்கக்கூடிய]

மாலைப்பொழுதானது,—தினகரன் கரம் திகழ் கமண்டலம்(ஆக) - சூரியன் (தமது)கையில் விளங்குகிற ஜலபாத்திரமாகவும், பனி கொள் செக்கர் தம் படமது ஆக-குளிர்ச்சியைக்கொண்ட செவ்வானம் தமது (அரையிற்கட்டிய) காஷாயவஸ்திரமாகவும் காணப்பட,—இனிய வந்தனைக்கு - நன்மையாகிய சந்தியாவந்தனஞ் செய்தற்பொருட்டு, எறியும் வேலை சேர்-(அலை)வீசுகின்ற மேல்சமுத்திரத்தைச் சேர்ந்த, புனிதர் - பரிசுத்தராகிய துறவறத்தோரை. ஒத்தது—; (எ - று.)

மேற்குத்திசையிற்சென்று சூரியன் அஸ்தமிக்குஞ்சமயத்திலே செவ்வானம் மிக்குப்பரவ மாலைப்பொழுது தோன்றுவதை, காவிவஸ்திரமுடுத்த துறவறமுடையோர் கமண்டலத்தையேந்திக்கொண்டு சந்தியாவந்தனஞ் செய்தற்பொருட்டு மேல்கடற்கரைக்குச் செல்வதாகக் குறித்தார்; உருவகவணியை அங்கமாக்கொண்டு வந்த தன்மைத்தற்குறிப்பேற்றவணி. துறவிகள் காஷாயமுடுத்தவராய்க் கையிற்கமண்டலமேந்திச் சந்தியாவந்தனஞ் செய்யுமாறு நீர்நிலையைநோக்கிச்செல்லுதல்,இயல்பு.சூரியன் அஸ்தமிக்குஞ் சமயத்தில் வெப்பம்மாறிக் குளிர்தொடங்கு மாதலால், அப்பொழுது தோன்றுஞ் செவ்வானம், 'பனிகொள்செக்கர்'எனப்பட்டது.படமது, அது-பகுதிப்பொருள்விகுதி. 'சந்தியாவந்தனஞ் செய்யாதுவிட்டால், பெரும்பாவம் விளையும்' என்பது தருமசாஸ்திரங்களின் கொள்கை யாதலால், அவ்வாறு பாவம் உண்டாகாது செய்யப்படுஞ் சந்தியாவந்தனத்தை, 'இனிய வந்தனை' என்றார். 'புன்கண் மாலை' என்பதற்கு - (காமுகர்க்கு) வருத்தத்தைச் செய்யும் மாலைப்பொழுது எனப் பொருள்கூறுவாரு முளர். திநகரன், கரம், கமண்டலூ, படம், வந்தநா, வேலா - வடசொற்கள். (௧௬௨)

[செவ்வானத்தில் விதுரனது மாளிகையின் தோற்றம்.]

௧௬௩.—(இ - ள்.) வேந்தன் மாடம் - அந்தவிதுரனது மாளிகை,—காய்ந்த - (பகற்பொழுதில்) உஷ்ணமாக ஒளிவீசின, மெய் - உருவத்தையுடைய, செழுங் கதிரவன்-செழித்த சூரியனது,கரம்-கிரணங்கள், ஏய்ந்த-பொருந்திய, அ பதத்து-அந்தச்செவ்வானத்தினின்று, எழில் எறித்தலால் - அழகியசெவ்வொளி வீசுதலினால்,—ஆய்ந்து - ஆராய்ந்து, பத்திகொண்டு - வரிசைவரிசையாக,அடர் பசும் பொனால் வேய்ந்தது-நெருங்கிய பசும்பொற்றகட்டினால் வேயப்பட்டதை, ஒக்கும்—; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

அஸ்தமநசமயத்திலே சூரியகிரணம் வானத்தில்தங்கியுள்ள மேகங்களிற் பட்டுச் செவ்வான முண்டாக அந்தச் சிவந்தஒளி விதுரனதுமாளிகையின்மேற்புறத்திற்பட்டு விளங்குதல், செம்பொற்றகட்டினால் வரிசையாக அம்மாளிகை வேயப்பட்ட தென்னும்படி யிருந்த தென வருணித்தவாறு; இதுவும் - தன்மைத்தற்குறிப்பேற்றவணியே. சூரியன் ஆயிரங்கிரணங்களையுடையவ னாதலால், அவனை 'செழுங்கதிரவன்' என்றார். பதம் - ஸ்தாநம்; பத்தி - வரிசை; வடசொற்கள். விசித்திரவீரியமகாராசனது பத்தினிகளுள் அம்பிகையினால் தனக்குஈடாக அனுப்பப்பட்ட தாதிப்பெண்ணினிடத்திலே சந்தநுமகாராசனதுபத்தினியான சத்தியவதியின் கட்டளைக்கு உட்பட்ட வியாசமுனிவனது அருளினாற் பிறந்தவனான விதுரன், திருதராஷ்டிரனுக்கும் பாண்டுவுக்கும் தம்பியாக அச்சத்தியவதியினால் ராஜகுலத்திலே வைத்துவளர்க்கப்பட்டு அரசர்க்குஉரிய மேன்மைகளையெல்லாம் அடைந்தன னாதலால், 'வேந்தன்' எனப்பட்டான். இனி, வேந்தன்மாடம் - தருமராசன்வீற்றிருந்த (விதுர) கிருக மெனினுமாம். (௧௬௩)

[சந்திரோதயம்.]

௧௬௪.—(இ - ள்.) 'மன் குலத்து உளோர் வஞ்சகம் செயார் - அரசவம்சத்திற் பிறந்தவர்கள் (ஒருபோதும்) வஞ்சனைத்தொழிலைச் செய்யமாட்டார்கள்; என் குலத்து உளோர் ஈது என்கொல் - எனதுவம்சத்திற் பிறந்

தவர்களான துரியோதனுதியர் மாத்திரம் இவ்வாறு வஞ்சனைத்தொழில் செய்யத்தொடங்கியது என்ன விபரீதமோ?' என-என்றெண்ணி,தன் குலத்துஉளோர்தமை விலக்கவோ-தனது குலத்தவர்களான அத்துரியோதனுதியரை (அவ்வஞ்சனைத்தொழில் செய்யவொட்டாது) விலக்குதற்காகவோ, நல் குலத்து உளோன் உதயம் நண்ணினன் - சிறந்த அந்தக் (குரு)குலத்துக்கு முதல்வனான சந்திரன் உதயமானன்; (எ - று.)

சந்திரன் குளிர்ந்தகிரணத்தோடு அப்பொழுது உதயமானதை, தன் குலத்தவரான துரியோதனுதியர் பாண்டவரிடத்துப்பொறாமையினுல் அவர்கட்குத்தீங்குசெய்யுமாறு மிக்கஉக்கிரங்கொண்டதைத் தணித்தற்கென்று உதித்ததாகக் காரணங் கற்பித்து வருணித்தார்;ஏதுத்தற்குறிப்பேற்றவணி. வினுப்பொருளதாகிய ஓகாரம் - தற்குறிப்பேற்றவுருபாய் நின்றது. தமது குலத்திற் பிறந்த சிறுவர்கள் மிக்கஉக்கிரமாக மாறுபாடுகொண்டால், அப்பொழுது அக்குலத்துப்பெரியோர் இடைநின்று அவ்வுக்கிரத்தைத் தணிக்கும் இயல்பு, இங்குக் கருதத்தக்கது. அரசகுலத்திற் பிறந்தவர்கட்கு வெளிப்படையாக வீரங்காட்டிப் பொருதுவெல்லுதல் முறைமையே யன்றிச் சூதுவழியாகவெல்லுதல் அவ்வரசகுலத்தார்கட்கு முறைமையன் றென்பது, 'மன்குலத்துளோர் வஞ்சகஞ்செயார்' என்பதன் கருத்து. என்கொல்— 'என்'என்பதே வினுப்பொருளைத் தருதலால்,கொல்-அசைநிலை. ஈது-சுட்டு நீண்டது. உதயம் - உதயகிரி: கிழக்கிற் சூரியசந்திரர் தோன்றுவதை உதயகிரியில் தோன்றுவதாகக் கூறுதல், கவிசமயம். (கசச)

[இதுவும், அடுத்தகவியும்-சந்திரனது வருணனையையும், துரியோதனனது கொடுமையையும் கூறும்.]

கசரு.—(இ - ள்.) எண்ணின்-ஆலோசிக்குமிடத்து,—மரபில் ஆதி ஆம் மதியும் - (குரு)வம்சத்திற்கு மூலபுருஷனுகிய சந்திரனும், உள் கரியன் என்னும் ஆ - '(தனது)உள்ளிடத்திலே [நடுவிடத்திற்] களங்கமுடையவன்' என்று சொல்லும்படியாக, காணல் ஆனதே-பிரதியட்சமாகக் காணும்படியிருந்ததே; (ஆகவே), 'குருகுலாதிபன் கொடிய நெஞ்சமே - (அந்தச்சந்திரவம்சத்தில் தோன்றிய) குருகுலத்தரசனன துரியோதனனது கொடுமையுள்ள மனம்மாத்திரமே, இருள் நிறைந்தது-இருட்டு [குற்றம்] நிறைந்துள்ளது',என்று—, யாம் வெறுக்கவோ-நாம் வெறுக்கக்கடவோமோ? [வெறுப்பது தகுதியன்று என்றபடி]; (எ - று.)

இது கவிக்கூற்று. குலத்துமூலபுருஷனுகிய சந்திரன் உட்கறுப்புடையனுயிருத்தலால்,அவ்வம்சத்தில் தோன்றிய துரியோதனனுக்கும் இருள்மனமுண்டாயிற் றென்றார்; 'உள்கரியன்'என்ற தொடர் - சிலேடைவகையால் நடுவிடத்திற் களங்கமுடையவ னென்று பொருள்படுதலோடு, மனத்திற் குற்றமுடையவ னென்றும் பொருள்படும்: ஆகவே,இது சிலேடையணியை அங்கமாகக்கொண்டுவந்த ஏதுவணியாம். 'நெஞ்சம் இருள்நிறைந்தது,' 'உட்கரியன்' என்ற தொடர்களை, திருக்குறளில் "அகங்குன்றிமூக்கிற்கரியார்" என்றாற்போலக் கொள்க. குருகுலாதிபன் - தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். நெஞ்சமே, ஏகாரம் - பிரிநிலை. வெறுக்க - வியங்கோள் வினைமுற்று:ஓகாரம்-எதிர்மறை.என்று+யாம்=என்றியாம்:குற்றியலிகரம். ஈற்றுஏகாரம் - தேற்றம். (கசரு)

கசசு.—(இ - ள்.) (சந்திரன்), உள் நிலாவு பேர் ஒளி மழுங்கி-தனது நடுவிற் பொருந்திய பேரொளி (களங்கத்தினுற்) குறையப்பெற்று, நீள் வெள் நிலாவினுல் எங்கணும் வெளுத்த - நீண்ட வெண்மையாகிய தனது காந்தியினுல் (தனது) உடம்புமுழுவதும் வெண்ணிறமாய்க்காணப்பட்டது [உடம்புமுழுவதும் வெண்ணிறவொளியைப் பெற்றிருந்தது என்றபடி]; கண் இலான் மகன் கடுமை அஞ்சி - பிறவிக்குருடனான திருதராட்

டிரனது மகனாகிய துரியோதனனது கொடுஞ்செய்கைக்குப் பயந்து, இம்மண்ணில் - இவ்வுலகத்தில், ஆர் வெளா வடிவம் எய்தினர் - எவர்தாம் வெளுக்காத உருவத்தைப் பெற்றவர்? [எல்லாரும் வெளுத்துத்தோன்றினார்கள்]; (எ - று.)

இதுவும்,கவிக்கூற்று. இயற்கையிலே சந்திரன் வெண்ணிறமுடையனாயிருத்தற்கு, துரியோதனன்கொடுமைக்குஅஞ்சியதால்வெளுத்ததாகக் காரணம் புனைந்துகூறினார்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. முன்னிரண்டடிகளைப் பின்னிரண்டடிகள் சாதித்தலிற்பது-வேற்றுப்பொருள்வைப்பணி: இன்ன அணியெனத் துணிந்துகூற முடியாமல் இவ்விரண்டணிகளும் ஒருங்கே நின்று ஐயமூட்டுதலால், இச்செய்யுள் - ஐயக்கலவையணியின்பாற்படும்: இவ்வாறுவருவதனை, வடநூலார் 'ஸந்தேஹஸங்கரம்'என்பர். அச்சத்தினால் உடம்புவெளுத்தல்.இயற்கை.வெளுத்த-வெளுத்தது: தொகுத்தல். 'வெளுத்தெங்கணும்' என்பதும் பாடம். வெளா - ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெச்சம். முந்தினசெய்யுளின் தொடர்ச்சியினால், இச்செய்யுளின் முன்னிரண்டடிக்கு 'சந்திரன்'என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. இனி, இச்செய்யுளின் முன்னிரண்டடிகட்கு—'நீள் வெள் நிலாவினால் - நீண்ட வெண்மையாகிய நிலாவினாலே, உள் நிலாவு பேர் ஒளி மழுங்கி - இந்நகரத்தினுள்ளே விளங்குகின்ற பேரொளி குறைந்து, எங்கணும் வெளுத்த - எல்லாவிடங்களும் வெண்ணிறமாகத்தோன்றின' என்று பொருள்கூறி. 'சந்திரனதுநிலாவினால் அனைத்தும்வெளுத்தன; அவ்வாறே சந்திரனது வம்சத்தவனான துரியோதனனால் அவனைச்சார்ந்த யாவரும் அறிவு வெளுத்தார்கள் [நல்லறிவிழந்தார்கள்]' என எடுத்துக்காட்டுவமையணி படக்கருத்து விரித்துரைப்பர் ஒருசாரார். (கசசு)

[திரௌபதியும் விதுரனதுமாளிகையை வந்தடைதல்.]

௬௬எ.—(இ - ள்.) விந்தை வாழ்வு கூர் விறல் மிகுத்த தோள்-வீரலக்ஷ்மி வசிக்கப்பெற்ற வலிமையைமிகுதியாகக்கொண்டுள்ள தோள்களையுடையவனும், முந்தை ஓதை மா முரசு உயர்த்தவன் - முதன்மையான [கம்பீரமான] ஓசையையுடைய பெரியமுரசவாத்தியத்தின்உருவத்தையெழுதியகொடியை உயரநாட்டியவனுமான தருமபுத்திரனது, சிந்தை-மனம், காமுற-விருப்பங்கொள்ள,(அவ்விருப்பத்தின்படியே), தெரிவைதானும்-திரௌபதியும், இளந்தந்தைகோயிலில் - (அத்தருமனுக்குச்)சிற்றப்பனான விதுரனது அரண்மனையில், வந்து நண்ணினாள் - வந்துசேர்ந்தாள்; (எ - று.)

வீரலக்ஷ்மிக்கு விந்தியமலை உறைவிட மாதலால், அவளுக்கு 'விந்தை' என்று ஒரு பெயர்; வடமொழியில் 'விந்த்யவாஸிநீ' என வழங்குதலுங் காண்க. விந்தை=துர்க்கை. முந்தையோதை - முரசுக்கு அடைமொழி. முந்தை, ஐ - சாரியை. தானும், உம்மை - இறந்ததுதழுவியது. (கசஎ)

[சூரியோதயவருணனை.]

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

௬௬அ.—(இ - ள்.)(பாண்டவர்களும் திரௌபதியும்),—மங்குல் சுற்றும் மா மண்டபத்திடை-மேகங்கள் வந்து சூழப்பெற்ற [மிகவுயர்ந்த](விதுரன் மாளிகையிலுள்ளதொரு) பெரிய மண்டபத்திலே, கங்குலில் - அவ்விராப்பொழுதில், தட கண் துயின்ற பின் - பெரியகண்களைமூடிக்கொண்டு நித்திரைசெய்தபின்பு,—பொங்கு உலை படும் பொன் தசும்பு என - எரிகின்ற உலைக்களத்திற் பொருந்தியதொரு பொற்குடம் போல, செம் குலம் கதிர் திகிரி தோன்ற-சிவந்த தொகுதியாகிய கிரணங்களையுடைய சூரியன் உதயமாக, (எ - று.)—'தூயவன் கண்படையுணர்ந்து' என, அடுத்தகவியோடு தொடரும்.

கிரி - சக்கரம்: அதுபோல வட்டவடிவமுடைய சூரியனுக்கு, உவமை யாகுபெயர். சூரியனுக்குப் பொற்குடமும், அவனைச்சுற்றி விளங்கும் கிரணங் கட்கு அப்பொற்குடத்தின் சுற்றுப்பக்கமெல்லாம் எரியும் உலைக்கனலும் ஒப்பா மென அறிக; தற்குறிப்பேற்றவணி. மண்டபம் மேகமண்டலத்தினும் உயர்ந்திருத்தலால், மேகங்கள் சூழ்ந்துசெலலவேண்டியதாயிற்று; மகுல் சுற்றுமாமண்டபம்-தொடர்புயர்வுநவிற்சியணி: மேகத்திற்கும் மண்டபத்திற் கும் தொடர்பு இல்லாதிருக்கவும் சம்பந்தங் கற்பித்துக்கூறியமை காண்க.

[தருமபுத்திரன் தம்பியருடன் காலைக்கடன்கழித்து இனிதிருத்தல்.]

௧௪௯.—(இ - ள்.) உளம் தூயவன் - பரிசுத்தமான மனத்தையுடைய வனுகிய தருமபுத்திரன்,—பாயல் மன்னு கண்படை உணர்ந்து-படுக்கையிற் பொருந்திய நித்திரை தெளிந்து எழுந்து, பொலம் சுடர் பணிந்த பின் - அழகிய கிரணங்களை யுடையவனை சூரியனை நமஸ்கரித்தபின்பு [காலைக் கடன்கழித்தபின்பு],—சாயை அன்ன தன் தம்பிமாரொடும் - (விடாதுதொட ர்கின்ற) நிழலை யொத்த (வீமன்முதலிய) தம்பிமார் நாலவருடனும், சீயம் என்ன - சிங்கம்போல, திகழ வைகினன் - (தனது) பெருமிதந்தோன்ற (விதானமாளிகையில்) தங்கியிருந்தான்; (எ - று.)

கண்படை - கண்படுதல்: தூங்குதல்; கண்படு - பகுதி, ஐ - தொழிற் பெயர்விகுதி. பொலஞ் சுடர் - பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொ ழித்தொகை: அடையடுத்த ஆகுபெயருமாம். விடாதுதொடர்தலில் வீமன் முதலியோர்க்குச் சாயை உவமை. சாயை - சாயா என்ற வடசொல் ஆவீறு ஐயாயிற்று. சீயம் - ஸிம்ஹம் என்ற வடசொல்லின் சிதைவு. (௧௪௯)

[தருமபுத்திரனது கொடைச்சிறப்பு.]

௧௫௦.—(இ-ள்.) (அப்பொழுது தருமபுத்திரன்),—முனிவரர்க்குஎலாம்- சிறந்தபிராமணர்கட்கெல்லாம், முதன்மை ஆக - மிகவுஞ் சிறப்பாக, தன தனின்-குபேரனைப்போல, பெருந் தானம் உய்த்திடும் - மிக்க தானங்களைச் செய்வானுயினன்; (அன்றியும்), பனுவல் வித்தகம் பாவலர்க்கு எலாம்-நூல் களில் தேர்ந்தஅறிவையுடைய கவிபாடுதலில்வல்ல புலவர்கட்கெல்லாம், கனகம்மாரி - பொன்மழையை, கனம் என தரும்-மேகம்போலப் பொழிவா னுமாயினன்; (எ - று.)

செல்வமிகுதிபற்றிக் குபேரனும், கைம்மாறுகருதாது கொடுத்தல்பற்றி மேகமும் தருமபுத்திரனுக்கு உவமை. குபேரன் ஈகைக்குணமுடையா னென்பதை, அவனுக்குவழங்கும் 'தநதன் [பொருளைக் கொடுப்பவன்]' என்ற அவன்பெயரே வற்புறுத்தும்; ("தநதேந ஸமஸ் த்யாகே," "த்யா கேச தநதோயதா" என்றார் ஸ்ரீவால்மீகிபகவானும்.) 'கநம்' என்ற வட மொழிப்பொதுப்பெயர் - சிறப்பாக இங்கே பொன்மழைபொழியுந் தன் மையதான 'புட்கலாவர்த்தம்' என்ற மேகத்தைக் குறிக்கு மென்னலாம். உய்த்திடும், தரும் - செய்யுமென்முற்றுக்கள் ஆண்பாலுக்கு வந்தன; [நன்- வினை - உ௧.] (௧௫௦)

[இதுவும் அது.]

௧௫௧.—(இ - ள்.) (பின்னும் அத்தருமபுத்திரன்),—கண்டு கண்டு தன் கழல் வணங்கும் - (ஆதரத்தோடு) பலமுறைகண்டு தனதுபாதங்களை வண ங்குகிற, மா மண்டலீசரும் - பெரிய மண்டலாதிபதிகளும், மாலை மன்ன ரும் - மலர்மாலையணிந்த குறுநிலமன்னர்களும், கொண்டு வாழ்வுஉற-பெற் றுவாழும்படி, (அவர்கட்கு), குரகதம் - குதிரைகளையும், குடை - குடைகளை யும், தண்டு - பல்லக்குகளையும், சாமரம் - சாமரங்களையும், தந்தி - யானை களையும், நல்கும் - கொடுப்பானுயினன்; (எ - று.)

மண்டலேசர் - குணசந்திபெற்ற வடமொழித்தொடர்: இவர்-கற்பதுரிராமத்தை யாள்பவர். தண்டு - த்வஜதண்டமும்,கதாயுதமுமாம். சாமரம்- சமரமென்னும் மானின் வால்மயிரினுற் செய்யப்பட்டதோர் இராசசின்னம். தந்தி - தந்தத்தையுடையது; வடமொழித்தத்திதாந்தநாமம். (௧௫௧)

* ௧௫௨ - ஆஞ் செய்யுள்.

[கவிக்கூற்று.]

பூந்தண்மாமலர்ப்பூவைகொங்கைதோ
யேந்துதோளினனிவணிருந்துழிப்
பாந்தளங்கொடிப்பார்மகிபனைச்
சேர்ந்தமன்னர்தஞ்செயலவிளம்புவாம்.

(இ - ள்.) பூ தண் மா மலர் பூவை கொங்கை தோய் - அழகிய குளிர்ந்த சிறந்த தாமரைமலரில் வசிக்கின்ற இலக்குமி போன்ற திரௌபதியினது தனங்கள் அழுந்தப்பெற்ற, ஏந்து தோளினன் - உயர்ந்த தோள்களையுடையவனான தருமபுத்திரன், இவண் இருந்துழி - இவ்வாறு[விதுரன் மாளிகையில்] வீற்றிருந்தபோது, பாந்தள் கொடி பார் மகிபனை சேர்ந்த மன்னர்தம் செயல் - பாம்புக்கொடியையுடைய நிலவுலகத்தரசனான துரியோதனனைச் சேர்ந்த அரசர்கள் செய்த செய்கையை, விளம்புவாம் - இனிஎடுத்துச்சொல்வோம்; (எ - று.)

பூவை - நாகணவாய்ப்பறவை. 'மலர்ப் பூவை' என்ற தொடர் - அடையடுத்த உவமவாகுபெயராய்த் திருமகளைக் குறித்து, பின்பு அவள்போன்ற திரௌபதியைக் குறித்தலால், இருமடியாகுபெயர். 'நிலவுலகத்தையாளும் மன்னவர் திருமாலின் அம்சமுள்ளவர்', என்ற நூற்கொள்கைக்கு ஏற்ப, 'பூ தோளினன்' என்பதற்கு - இலக்குமியின் தனங்கள்தோயப் பெற்ற தோள்களையுடைய தருமபுத்திரன் என்றே பொருள்கூறினு மாம்: இனி,வீரலக்ஷ்மி பொருந்தப்பெற்ற தோள்களையுடைய தருமபுத்திர னெனினும் இழுக்காது. 'பாந்தளங்கொடி'—அம் - சாரியை; "செய்தலம்பறை" என்றவிடத்துப்போல. 'பார்மகிபன்' என்றவிடத்து, முன் 'பார்' என வந்ததனால், மகிபனென்றது - அரசனென்றமாத்திரமாய் நின்றது: "அடியளந்தான்றாஅயது" என்றாற் போல. விளம்புவாம் - கவிகளுக்குஉரிய இயற்கைத்தனித்தன்மைப்பன்மை. இவண்-இவ்விடத்தில்;இவ்வண்ணம்.(௧௫௨)

[துரியோதனனது சபாமண்டபத்தில் எல்லாரும் திரளுதல்.]

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

௧௫௩.—(இ-ள்.) தானும்-துரியோதனன்தானும், மாமனும்-(அவனது) மாமனாகிய சகுனியும், குறித்த தம்பிமாரும்-(துச்சாதனன்முதலாகக்)கூறப்பட்ட தம்பியர் தொண்ணூற்றென்பதின்மரும், அங்கர்தம் கோனும் - அங்கதேசத்தார்க்குஅரசனாகிய கர்ணனும், மாசுஇல் தந்தை - குற்றமற்ற தந்தையாகிய திருதராட்டிரனும், தந்தை - (அத்திருதராட்டிரனுக்குத்) தந்தைமுறையாகின்ற வீடுமனும்,கோமேரம்கை விதுரனும் - வில்தொழிலில்தேர்ந்த கையையுடைய விதுரனும், துரோணனும்—வான் உலாவு புகழ் படைத்த மைந்தனும்-தேவலோகத்தளவும்பரவிய கீர்த்தியைப் பெற்றவனும்(அத்துரோணனது) புதல்வனுமாகிய அசுவத்தாமனும்,ஏனையோரும் - (கிருபன் முதலிய) மற்றையோரும், வந்து—, கூடி-ஒன்றுசேர்ந்து,—இனிது இருந்த எல்லை - இன்பமாக வீற்றிருந்தபொழுதில்,— (எ - று.)— 'சொற்றவன் பணிக்க அனுகினன்' என, அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும்.

---

* இச்செய்யுள், விலக்குதற்குஉரியது.

ஆசுஇல்தந்தை யென்றும் பிரிக்கலாம்;பொருள் இதுவே. கொடுமரம்-வளைவான மரமென, வில்லுக்கு ஒருபெயர். துரோணன் - பரத்வாஜமுனிவரது குமாரன்: கிருபாசாரியருடன் பிறந்தவளான கிருபியின் கணவன்; அசுவத்தாமனது தந்தை; சகலசாஸ்திரங்களையும் தன் பிதாவினிடங் கற்றுப் படைத்தொழிலைப் பரசுராமரிடத்து எழுநாளிற் பயின்றவன்: துரியோதனாதியர்க்கும் பாண்டவர்க்கும் அஸ்திரசஸ்திரங்களைக் கற்பித்த ஆசிரியன். வைதிகவிரதாநுஷ்டானஞ் செய்துகொண்டிருக்கையில் தேவர்களாலேவியனுப்பப்பட்ட மேநகையின் கட்டழகைக் கண்டு காதல்கொண்ட பரத்வாஜமுனிவனது விருப்பத்தால் ஒரு துரோணகும்பத்திற் பிறந்தமைபற்றி, இவனுக்குத் துரோண னென்று பெயர். (துரோணகும்பம் - பதக்களவு கொண்ட பாத்திரம்.) [துரோணம் - பதக்கு, இரண்டுமரக்கால்.]

இதுமுதல் முப்பத்தேழுகவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று விளச்சீரும், மற்றையாறும் மாச்சீர்களுமாக வந்த கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள்; இனி, ஈற்றுச்சீரொன்று விளச்சீரும், மற்றைமூன்றும் காய்ச்சீருமாக வந்த அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்களாகக் கொள்ளினும் இழுக்காது. (௪௫௩)

[துரியோதனனதுகட்டளைப்படியே பிராதிகாமி பாண்டவரையழைக்கச் செல்லுதல்.]

௪௫௪.—(இ - ள்.) 'மண்டபத்தின் அழகு காண - (புதிதாகக்கட்டிய) மண்டபத்தினது அழகியகாட்சியைக் காணுமாறு, மன்னர் ஐவர்தம்மை - அரசர்களான பாண்டவரைவரையும், நீ—, கொண்டு இமைப்பின் வருக - அழைத்துக்கொண்டு கணப்பொழுதில் வருவாயாக', என்று—, கொற்றவன் பணிக்க - துரியோதனராசன் (பிராதிகாமிக்குக்) கட்டளையிட,— வண்டு சுற்று மாலை மார்பன் வள் பிராதிகாமி-வண்டுகள் சூழ்ந்துமொய்க்கப்பெற்ற மலர்மாலையை யணிந்த மார்பையுடையவனாகிய சிறந்த அந்தப்பிராதிகாமியும், வான் அண்டர் கற்பம் என இருந்த அரசர்தம்மை-வானுலகத்திலுள்ள தேவர்களது ஐந்துகற்பகவிருட்சம்போல (விதுரனது மாளிகையிலே ஈகைக்குணத்தோடு) வீற்றிருந்த பாண்டவர்களை, அணுகினான் - நெருங்கிச்சேர்ந்தான்; (எ - று.)

கீழ் எஎ - ஆஞ் செய்யுளிலும் பாண்டவர்கட்குக் கற்பகவிருட்சத்தை உவமைகூறினர். ஐந்துதேவதருக்களுள் ஒன்றன்பெயராகிய 'கல்பம்' என்பது, இங்கே பொதுவாய்த் தேவதருக்களைந்தையும் குறிக்கும். இமைப்பு - இயல்பாக மனிதர் ஒருகால் கண்ணிமைத்தற்கு வேண்டுங் காலம்; இது, 'மாத்திரை' எனவும் படும். பிராதிகாமி - துரியோதனனது சாரதி. (௪௫௪)

[பிராதிகாமி தருமனுக்குத் துரியோதனனதுகட்டளையைத் தெரிவித்தல்.]

௪௫௫.—(இ - ள்.) (பிராதிகாமியானவன்),—சென்று - (பாண்டவர்களிருந்தஇடத்திற்குப்) போய், யாகபதி கழல் திருப்பதம் பணிந்து - ராஜசூயயாகஞ்செய்த அரசனாகிய தருமபுத்திரனது வீரக்கழலையணிந்த சிறந்த பாதங்களை வணங்கி, நீள் நின்று - தூரத்தில்நின்று, வாய் புதைத்து-(கையினாலே தனது) வாயை மறைத்துக்கொண்டு, (தருமபுத்திரனை நோக்கி), 'அறங்கள் நிலைபெறும் சொல் நீதியாய் - தருமங்கள்நிலைபெறுதற்கேற்ற சொற்களையும் நீதியையு முடைய அரசனே! வென்றி வீரன் - வெற்றியையுடைய வீரனாகிய துரியோதனராஜன், மண்டபத்தின் விரிவு நீ காணவேண்டும் என்றுகூறி-'(தான்கட்டிய புது)மண்டபத்தினதுபரப்பினழகை நீ பார்க்கவேண்டும்' என்றுசொல்லி, (உன்னை அழைத்துவருமாறு), இங்கு என்னை ஏவினான் - இவ்விடத்திற்கு என்னைஅனுப்பினான்,' என்று இயம்பினான் - என்று (தான்வந்தகாரணத்தை) விண்ணப்பஞ்செய்தான்; (எ - று.)

கழல் - வீரர்கள் தமது வீரத்திற்கு அறிகுறியாகக் காலில் அணிவதோர் ஆபரணம். பெரியோரிடம் தூரநின்று வாய்பொத்திக்கொண்டு பேசுதல், விநயக்குறிப்பு. (௩௫௫)

[தருமபுத்திரன் திரௌபதியைக் காந்தாரியினிடம் அனுப்பிவிட்டுத் தான் துரியோதனனது சபையைச் சேர்தல்.]

௩௫௬.—(இ - ள்.) (அதுகேட்டு),-புரைஇலா மனத்தினன்-குற்றமற்ற மனத்தை யுடையவனாகிய தருமபுத்திரன்,-ராயசூய பன்னிதன்னை-(தான்) செய்தராஜசூயயாகத்திற்பத்தினியாயிருந்த திரௌபதியைநோக்கி,'எந்தை இல்லில்-எனது தகப்பனாகிய திருதராட்டிரனது அரண்மனையில், யாயொடும்-தாயாகிய காந்தாரியினிடத்தில்,போய்இருந்து வருக—,'என்று-என்று கட்டளையிட்டு, சீயம் அன்ன துணைவரோடு - சிங்கத்தையொத்த [வீரத் தன்மையிற்சிறந்த] தம்பிமார்களுடனே, சென்று புக்கு-(துரியோதனனது சபையிற்) சென்றுபுகுந்து, நன்றி இல் பேய் இருந்தது என இருந்த பீடு இலானை - நன்மைசிறிதுமில்லாத பேய்இருந்தாற்போன்று இருந்த பெருந் தன்மையில்லாதவனாகிய துரியோதனனை,எய்தினன்-அடைந்தான்; (எ - று.)

ராஜஸூயபத்நீ - வடசொற்றொடர்: வடமொழி முதலில் இகரம் பெற்றுநின்றது; சிந்தாமணியில் "ராசமாபுரி," "ரவிகுலதிலகன்" என்றவைபோல. 'யாயொடும்'-மூன்றனுருபு ஏழனுருபிற்குஉரிய இடப்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். அறிவின்றிப் பிறர்க்குத்தீமைசெய்யத் துணிந்ததனால்,துரியோதனனுக்குப் பேயை உவமைகூறினர். ராயசூயபன்னிதன்னை,சென்றுபுக்குநன்றியில். இருந்தெனவிருந்த-பிராஸமெனனுஞ் சொல்லணி. தருமனைக் கூறியது, தம்பியர்நால்வர்க்கும் உபலக்ஷணம்: மேல்வருமிடங்களிலும் தக்கபடி இவ்வாறுகொள்க. (௩௫௬)

[தருமன் திருதராட்டிரன்முதலியோரை வணங்கி ஆசனத்தில் வீற்றிருத்தல்.]

௩௫௭.—(இ - ள்.) (தருமபுத்திரன்),—மன் இருந்த பேர் அவைக்கண் வந்து - துரியோதனராசனிருந்த பெரியசபையினிடத்தில் வந்துசேர்ந்து, முந்தை வரிசையால்-பழமையான முறைமைப்படியே,—முன் இருந்த-பிரதானமாக வீற்றிருந்த, தாதை - பெரியதகப்பனாகிய திருதராட்டிரனும், வம்சம் முதல்வன்-(தான்பிறந்த)குலத்திற் பெரியோனாகிய வீடுமனும்,ஞானம் விதுரன் - அறிவிற்சிறந்த விதுரனும். என்று இன்ன இருந்த தலைவர் - என்று இவ்வகையாக அச்சபையிலிருந்த பெரியோர்களது, தாள் - பாதங்களை, இறைஞ்சி - வணங்கி. முன்னர் இட்டது ஓர் மின் இருந்த ஆசனத்தின்மீது-முன்னேபோகட்டிருந்ததாகிய ஒளிவிளங்குகின்ற ஒரு ஆசனத்தின்மேல், இருந்து-வீற்றிருந்து, வினவினன்-வியந்து சொல்வானாயினன்; (எ - று.)— அதனை, அடுத்த கவியிற் காண்க.

பெரியோர்களைக் கண்டால் வணங்குதல் தொன்றுதொட்டுவரும் மரபாதலால், அவ்வாறே, தருமபுத்திரனும், திருதராட்டிரன்முதலிய பெரியோரை வணங்கின னென்க. 'இன்னிருந்த'—பெயரெச்சத்தின் அகர வீறு - தொகுத்தல். இன்னதலைவர் இருந்ததலைவர் எனத் தனித்தனி இயையும். இனி, இன் இருந்த - இனிமையாக வீற்றிருந்த எனினுமாம்; இனிமையென்ற பண்புப்பெயர் ஈறுபோய் இடைஇகரமுங்கெட்டு 'இன்' என நின்ற தென்க: "இன்னிசை" என்றவிடத்துப் போல. 'வினைப்பகுதி வேண்டிய பொருளை விளக்கும்' என்பது இலக்கணநூலாரதுகொள்கையாதலால், வினவுதல்என்பது - இங்கு வியந்துகூறுதலென்னும்பொருளைத் தந்தது. (௩௫௭)

[துரியோதனன்கட்டிவைத்தமண்டபத்தைத் தருமன் வியந்துகூறுதல்.]

இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்.

௩௫௮.—(இ - ள்.) இந்த மண்டபம் சமைந்த இனிமைதன்னை என் சொல்வேன்-இந்தமண்டபங் கட்டப்பட்ட அழகை [அழகாகஅமைந்துள்ளதை]க்குறித்து எவ்வாறு புகழ்வேன் (யான்)? இதனின் உள்ள எழில் - இம்மண்டபத்திலுள்ள அழகு,— முந்தை மண்டபங்களுக்கும் முதன்மை ஆன - பழைய எல்லாச் சபாமண்டபங்களுள்ளுஞ் சிறந்ததான, தேவர் ஊர் அந்தமண்டபத்தும்-தேவலோகத்திலுள்ள அந்தச்(சுதன்மையென்னுஞ்) சபாமண்டபத்திலும், இல்லை—; அதனை அன்றி - அந்தத்தேவலோகத்து மண்டபத்தையே யல்லாமல், மண்ணின்மேல் எந்த மண்டபத்தும் - இப் பூவுலகத்திலுள்ள எந்தமண்டபங்களிலும், இல்லை—; (எ - று.)—அரோ - ஈற்றசை.

தேவலோகத்துச்சுதன்மையினும், இவ்வுலகத்து எல்லாமண்டபங்களினும் இம்மண்டபமே சிறந்ததென, துரியோதனன் நூதனமாகக்கட்டிய சபையைத் தருமன் வியந்தனனென்க. இனிமை - கண்ணுக்குஇனிமை: அதாவது - அழகு. தேவலோகத்துச் சுதன்மை தோன்றியபின்பே மற்றையிடங்களிற் சபாமண்டபங்கள் தோன்றின வென்பான், அதற்கு 'முந்தைமண்டபங்களுக்குமுதன்மையான' என அடைமொழி கொடுத்தன னென்னலுமாம். அந்த - உலகறிசுட்டு. முதலடியிற்கூறிய விஷயத்தை மற்றை மூன்றடிகளுஞ் சாதித்துநிற்றலால், தொடர்நிலைச்செய்யுட்குறியணி. (௩௫௮)

[தம்பியர்நால்வரும் அங்கு வீற்றிருத்தல்.]

௩௫௯.—(இ - ள்.) என என்று, தருமராசன் - தருமபுத்திரன், வியந்து இனிது இயம்ப - (அம்மண்டபத்தைக்குறித்து) வியந்து இனிமையாகக்கூறுகையில்.—யாளி வெம் சினம் விலங்கல் என்னும் ஆறு - யாளியென்னுங் கொடுங்கோபத்தையுடையமிருகத்தை உவமைசொல்லும்படி, சேர வந்த - தருமபுத்திரனோடுவந்த, இளைஞரும்-(அத்தருமனது) தம்பிமாராகிய வீமன் முதலிய நால்வரும்,மனு விளங்கு முறைமையால் வணங்கி-மநுதருமசாஸ்திரத்திற் கூறியுள்ள முறைமைப்படியே (அச்சபையில்வீற்றிருந்த திருதராட்டிரன்முதலிய பெரியோரை) வணங்கி, மன்னர் மன்னன் முன் - அரசர்க்கரசனான துரியோதனனது எதிரில், தனதன் இருப்பது அன்ன தவிசின் மீது - குபேரன்வீற்றிருக்கின்ற ஆசனத்தை யொத்த ஆசனங்களின்மேல், வைகினர் - வீற்றிருந்தார்கள்; (எ - று.)

அங்கு-அசை; குபேரனுக்குஉரிய அளகாபுரியில் என்னவுமாம். யாளி- கோபத்திலும், பராக்கிரமத்திலும், பெருமிதத்திலும்,வீமன்முதலியோர்க்கு உவமை. விலங்கல் - குறுக்காகஉடம்புஅமையப்பெற்றது எனக் காரணப் பெயர்: 'திர்யக்' என்னும் வடமொழியின் பொருள்கொண்டது. மனு - மநு வென்பவனாற்செய்யப்பட்ட நூலுக்குக் கருத்தாவாகுபெயர். இருப்பது - ஒன்றன்பால் வினையாலணையும்பெயர்; இரண்டாம்வேற்றுமைத்தொகை. தருமராசன் - யமன்: இங்கு, தந்தையின்பெயர் மைந்தனுக்கு வழங்கியது; மைந்தனுக்கும் அப்பெயர் ஏற்கும். (௩௫௯)

[துரியோதனன் அச்சபையில் வீற்றிருந்த சிறப்பு.]

௩௬0.—(இ-ள்.) அரவம் ஏறு உயர்த்த வீரன் அன்று இருந்த பெருமை- சிறந்தஅரவக்கொடியை உயரவெடுத்த வீரனாகிய துரியோதனன் அப்பொழுது (அச்சபையில்) வீற்றிருந்த சிறப்பு,—(உன்னிடத்தில்), புரை கொள் பாவமே நிறைந்து - குற்றத்தைக்கொண்ட தீவினையே மேலிட, புண்ணியம் குறைந்து - நல்வினை குறைந்துவிட்டதனால், நீள் நரகின் ஊழி காலம் வாழ்தி - (துன்பம்) மிகுந்துள்ள நரகத்தில் (நீ)நெடுங்காலம்வசித்துத் துன்ப

மடையப்போகிறாய்; (ஆதலால், சிறிதுகாலமாவது), நாகர் வாழ்வின் உள்ள தும் தரணிமீது பெறுக - தேவலோகத்திலுள்ள இன்பத்தையும் இப்பூமி யிலேயே பெற்றுவாழ்வாயாக,' என்று—, வான் உளோர் - தேவர்கள், தந் தது - (தங்களது உலகத்தி லுள்ள சிறப்பைத் துரியோதனனுக்குக்)கொடுத் ததை, ஒக்கும்—; (எ - று.)

தேவர்கள் இனித் துரியோதனன் அடையப்போகின்ற கொடுநரகத்தி ற்கு மனமிரங்கிச் சிறிதுகாலமாவது தேவலோகத்துச்சுகத்தை இப்பூமியி லேயே அடைவானாக வென்று அவனுக்கு அவ்வின்பத்தை அருளோடுகொடு த்தாற்போலு மென, இயற்கையில் துரியோதனன் மிக்கமேன்மையோடு வீற்றிருந்த சிறப்பை வருணித்தவாறு; தற்குறிப்பேற்றவணி: இதனால், துரி யோதனனது அப்போதையசிறப்பு, தேவலோகசிறப்பை யொத்திருந்த தென்க. 'ஒக்கும்' என்பது - தற்குறிப்பேற்றவுருபாய் வந்தது.

பாவமேசிறைந்து புண்ணியங்குறைந்து என மாறுபட்டசொற்கள் வந்தது - தொடைமுரண். கம் - சுகம்: அதற்குஎதிர் - அகம், துக்கம்: அதில் லாதது - நாகம்: அதில்வாழ்பவர் - நாகர் எனத் தேவர்க்குக் காரணக்குறி. நரகு - நரகம்என்ற வடசொல்லின் விகாரம். வாழ்தி-முன்னிலையொருமை யெதிர்காலமுற்று: இ - காலங்காட்டும்விகுதி, த் - எழுத்துப்பேறு. தந்தது- பெயர். (௧௬௦)

[துரியோதனன் தருமனைச் சூதாடத் தூண்டுதல்.]

௧௬௧.—(இ - ள்.) (துரியோதனன் தருமனை நோக்கி),—'ஆய வென்றி ஐயன் இல்லில் - பொருந்திய வெற்றியையுடைய (நமது) தந்தையின் மாளி கையில்,போய்—, அமுதம் அன்ன போனகம் அருந்தும் அளவும் - தேவா மிருதத்தையொத்த இனியவுணவை உண்ணப்போகிற வரையிலும், இங்கு இருந்து - இச்சபையில் இருந்து, போது போக - காலம் இனிதுகழியு மாறு,—மாயம் ஒன்றும் எண்ணலா மனத்தின் மிக்க மாமனும் - வஞ்சனை சிறிதும்எண்ணாத மனத்தையுடைமையால் மேம்பட்டவனும் (எனது) மாம னுமாகிய சகுனியும், நீயும்—, இன்று - இப்பொழுது, சூது கொண்டு இகழ் விலாசம் அயர்விரோ - சூதாடுகருவியைக்கொண்டு செய்கிற விளையாட்டை [சூதாட்டத்தை]ஆடுகிறீர்களா?" (எ-று.)—'என்று வினவினன்' என எழுவா யோடு வினையும் வருவித்துமுடிக்க.

இச்செய்யுள் தருமனைநோக்கித் துரியோதனன் கூறிய வார்த்தை யென்பது, மேல் ௧௬௩ - ஆஞ் செய்யுளில் தருமன் "தாதுகொண்டு தேனி ரங்கு தாமமார்ப" என்று விளிப்பதனாற் புலனாம். துரியோதனன், சகுனி யைக்கொண்டு தருமனை வஞ்சிக்கவேண்டு மென்று கருதுகின்றானாதலால், அச்சகுனியின்மேல் தருமன் சிறிதுஞ் சந்தேகங்கொள்ளாதிருக்கவேண்டு மென்று அவனை 'மாயமொன்றுமெண்ணலாமனத்தின்மிக்கமாமன்' எனப் புனைந்துகூறினன். விலாசம்=விலாஸம்: விநோதமென்பது பொருள்; வட சொல். அயர்விர் - 'அயர்'என்னும் பகுதியி னடியாப் பிறந்த முன்னிலைப் பன்மை யெதிர்காலவினைமுற்று. ஓகாரம் - வினா. (௧௬௧)

[இவ்விரண்டுகவிகளும்-ஒருதொடர்; தருமன் சூதாட உடன்படாமை.]

௧௬௨, ௧௬௩.—(இ - ள்.) (அதுகேட்டுத் தருமபுத்திரன்), (௧௬௩)'தாது கொண்டு தேன் இரங்கு தாமம் மார்ப-மகரந்தப்பொடிகளைப்பூசிக்கொண்டு வண்டுகள் ஒலிக்கின்ற (நந்தியாவட்டப்) பூமாலையை யணிந்த மார்பை யுடைய துரியோதனனே!—(௧௬௨)மீது எடுத்த வஞ்சர் ஆகி வெகுளி செய் தல் - அதிகமாகப்பொருந்திய வஞ்சனையை யுடையவர்களாய்க் கோபங் கொள்ளுதலும், பிறர் பெரும் கோது எடுத்து உரைத்தல் - பிறரது பெருங்குற்றங்களை எடுத்துத் தூற்றுதலும், நண்பு கொண்டு அயிர்த்தல் -

(ஒருவனை முதலில்)நட்புக்கொண்டு பிறகு சந்தேகித்தலும், கொடிய வெம் சூது எடுத்து விழைதல் - மிகக்கொடிய சூதாடுதலை மேலாகக்கொண்டு விரும்புதலும், உற்ற சூள் பிழைத்தல் - சொன்ன உறுதிமொழி தவறுதலும், இன்ன - (ஆகிய) இச்செயல்களை, முன்பு - முற்காலத்திலேயே, நீதி எடுத்த நூலில் - பாவங்களை யெடுத்துக்கூறுகிற தருமசாஸ்திரங்களில், தீய என்றுசெப்பினர்-தீமையானவையென்று சொன்னார்கள்,(பெரியோர்);(அவ்வாறுகூறியிருக்கவும்), (கசுரு) காதல் கூரும் மாமனோடு - (உன்னிடத்தில்) அன்புமிக்க மாமனான சகுனியுடனே, வஞ்சனை சூதுகொண்டு வாதுகொண்டு பொருது - வஞ்சனைக்கிடமான சூதாட்டத்தினால் (நான்)மாறுபட்டுப் போர்செய்து, அழிந்து - (பொருள்களையெல்லாம்)இழந்து, தோல்வி எய்த வேண்டுமோ-தோல்வியையடையவேண்டுமென்பது உனதுகருத்தோ? நீர் - நீங்கள், நெஞ்சில்-உங்கள்மனத்தில், எது கொண்டது-எப்பொருளைப் பெற வேண்டுமென்றுகருதுகின்றீர்களோ. அது-அப்பொருளை,நுமக்கு-உங்கட்கு, இம்பர் - இப்பொழுதே [இவ்விடத்திலேயே], அளிப்பன் - கொடுப்பேன்,' என்ன - என்றுகூற, (எ - று.)—'மன்னனுரை யுணர்ந்து' என அடுத்தகவியோடு குளகமாகத் தொடரும்.

(கசுஉ சூதாட்டத்தைத் தீதென்று இகழ்ந்துசொல்லத்தொடங்கிய தருமபுத்திரன் அதற்குஇனமாயுள்ள மற்றைச்சிலகுற்றமானசெயல்களையும் உடன்கூறினான்; இது - ஒப்புமைக்கூட்டவணி: வடநூலார் துல்யயோகிதாலங்கார மென்பர்: வர்ணியங்களோடு அவர்ணியங்களையுஞ் சேர்த்து ஒரே பொதுத்தன்மைகொடுத்துக் கூறுதல், இவ்வணியினிலக்கணம்; (வர்ணியம்- அவசியமாய்க் கூறவேண்டியது; அவர்ணியம் - அவசியமாய்க்கூறவேண்டாதது.) இச்செய்யுளில் 'தீய' என்ற பொதுத்தன்மை 'சூதெடுத்துவிழைதல்' என்ற வர்ணியத்தோடும், 'வஞ்சராகிவெகுளிசெய்தல்' முதலிய அவர்ணியங்களோடும் இயைதல் காண்க: இது, பழிப்பொப்புமைக்கூட்டம். கொடிய, வெம் - ஒருபொருட்பன்மொழி. சூள் - சபதம். இன்ன - பலவின்பாற்பெயர்: எ - இசைநிறை.

(கசுரு) வாது - வாதம். மோதுபோரில் வீரவாதம் நிகழ்வதுபோலச் சூதுபோரிற் பொய்ம்மையினால் வாக்குவாதம் நிகழு மெனக. சகுனி வஞ்சனைக்கிடமான சூதாட்டத்தில் மிகவும்வல்லவனாதல்பற்றி அவனோடு சூதாடினால் மனஸ்தாபத்தோடு நிச்சயமாயிழக்கவேண்டிவரும் பொருள்களை அவ்வாறுசூதாடித் தீயவழியால்இழவாமல் வேண்டுமென்றுகேட்டபொருள்களை மனப்பூர்வமாகக்கொடுத்து இழத்தலே நன்று என்று, தருமன் தனக்குச் சூதாடுங்கருத்தில்லாமையை நன்குவெளியிட்டனனெனக. தன்னை எவ்வாற்றாலாயினும் பொருளையிழந்து கெடுமாறு செய்வதே துரியோதனனுடைய கருத் தென்பதை, 'நெஞ்சில் நீர் எதுகொண்டது' என்ற வினாவினால் விளக்கினான். கீழ்த் தன்னைநோக்கிச் சூதாடுமாறு தூண்டியவன் துரியோதனனே யாதலால் தருமன் முதன்முதல் அவனைவிளிப்பான் 'தாமமார்ப' என்று ஒருமையாகவும். சகுனிமுதலியமற்றையோர்க்கும் தன்னைப்பொருளிழப்பிக்கவேணுமென்றகருத்துஉள்ளதென்பதை அறிந்தவனாதலின் அவர்களையுங்கூட்டி 'நீர்,' 'நுமக்கு' எனப் பன்மையாகவுங் கூறினான். 'வாதுகொண்டு காதல்கூரும் மாமனோடு' என்பதற்கு-(என்மீது மனத்தில்)விரோதங்கொண்டு (வெளிக்கு) அன்புமிக்குள்ளான்போலநடிக்கிற சகுனியுடனே என்றும் பொருளுரைக்கலாம். 'காதல்கூரும் மாமனோடு வாதுகொண்டு பொருது' என்ற தொடரில், நெருங்கின உறவினர்களிடத்தில் மனவொற்றுமைப்பட்டு நண்புகொண்டிருத்தல் தகுதியே யன்றி ஒற்றுமைகெட்டு மாறுபட்டுச் சூதாடுதல் தகுதியன்று என்ற கருத்தும் தோன்றும். 'கூரும்' கூர்என்ற உரிச்சொற்பகுதியி னடியாப் பிறந்த பெயரெச்சம். அளிப்பன் தன்மையொருமைவினைமுற்று; அன் - விகுதி. (கசுஎ)

[இதுமுதல் நான்கு கவிகள் - சகுனியின்வார்த்தை.]

இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்.

கசுச.—(இ - ள்.) ஒப்புஇலாத வேள்விமன்னன் உரை உணர்ந்து-(தனக்கு)ஒப்பாக(ஒருவரையும்)பெறாத இராசசூயயாகஞ்செய்துமுடித்தவனான தருமபுத்திரனது வார்த்தையைக் கேட்டறிந்து,—சகுனியும்—,(சபையோரைநோக்கிக்கூறுவான்:-)தப்புஇலாத கவறு உருண்ட தாயம்-தவறுகட்குச் சிறிதுமஇடமில்லாத சூதுகருவி உருண்டதனால் வருந் தாயம், எங்கும் ஒக்கும்-இருதிறத்தார்க்குமஒததே; வைப்பில் - (காய்களை) வைப்பதில், ஆண்மை அன்றி - அறிவின் திறமுண்டல்லாமல்,(சூதாட்டத்திலே),வேறு வஞ்சம் இல்லை-மாறுபாடான கபடம் சிறிதும் இல்லையே! (அப்படியிருக்க), உண்டு என செபபில்-(சூதாட்டத்தில் வஞ்சனை)உண்டு என்று (தருமபுத்திரன்)கூறினால், இவனை ஆட வருக என்று ஆர் செப்புவார் - இவனைநோக்கி 'சூதாட வா' என்று எவர்தாம் அழைப்பவர்? [ஒருவரும் அழைத்தேயிருக்கமாட்டார்]; (எ - று.)—இரண்டாமடியினீற்றில், ஆல் - அசை

இதுவும், அடுதத கவியும் - சகுனி தருமனைப் படர்க்கையாக்கொண்டு சபையோரை முன்னிலைப்படுத்திக் கூறியன

'சூது வஞ்சனைக்கு இடமானது' என்று கூறிய தருமபுத்திரனுடைய மனக்கருத்தைமாற்றும்பொருட்டுச சகுனி'நான்ஆடும்போதுவிழும்பந்தயங்கள் எவ்வாறு கொள்ளப்படுமோ, அவ்வாறுதான் தருமன் ஆடும்போதும் விழும் பந்தயங்கள் கொள்ளப்படும்; ஆகையால், பாச்சிகைகளின் மூலமாய் விழும் பந்தயஙகட்கு ஏற்பக் காய்களைத் தக்கபடி அறைகளில் அடைக்குந் திறத்தினாலேயே வெற்றியையடையவேண்டிய இச்சூதாட்டத்தில் யாவரும் பார்கக ஆடும்போது வஞ்சகஞ்செய்ய வழியேது? இப்படி வஞ்சகமில்லாத இவ்வாட்டத்தில் தனக்குவிருப்பமில்லாதகாரணத்தால் இதுவஞ்சனையுளதென்று போக்குசசொன்னால, இவனை வலிவிற்சூதாடஇழுப்பார் ஒருவருமில்லை' என்று, வஞ்சனைக்கருத்துச சிறிதும்இல்லாதவன்போல வெகுதந்திரமாகக் கூறினனென்க கவறு - சூதாடுகருவி; பாசசிகை. தாயம் - பாசசிகையையுருட்டும்போது விழும பந்தயஙகள். உருண்ட - காரணப்பொருட்பெயரெசசம் வைப்பு தொழிற்பெயர். ஆர்கொல், கொல் - அசை. "கல்வி தறுக ணிசைமை கொடையெனச், சொல்லப்பட்ட பெருமித நான்கே" என்பவாதலால், அறிவின்திறம் 'ஆண்மை' எனபபட்டது. (கசுச)

கசுரு.—(இ-ள்.) வேணும்ஆகில் வேணும்-(சூதாடுவதில் இவனுக்கு)விருப்பமுணடானால்(எனக்கும்)விருப்பமுண்டு;அன்றி-விருப்பமில்லாமல்,விரகு என கழன்று தான் நாணும் ஆகில் -(இது வஞ்சனையுளதென்று ஒதுங்கித் தான் (சூதாடப்) பின்வாஙகுவானானால், விடுதியே நடக்க என்றுநவிலுவீர் - '(நினது) இருப்பிடத்திற்குச செலவாயாக' என்று (தருமபுத்திரனைநோக்கிச) சொல்லுஙகள்; பூணும் ஆகில் - (அவன்) சம்மதிதது ஆடுவானானால், நானும்— இனிமையோடு பொருது - இனிமையாக விளையாடி,இருந்த நீர் காணும் ஆறு - இங்கிருக்கிற நீஙகளெல்லாரும் காணும்படி, இன்று - இப்பொழுது, கற்ற ஆறு - (எனக்கு உள்ள)சாமர்த்தியத்திற்குஏற்ப, இயற்றல் ஆம் - (சூதாட்டத்தை)நடததலாம்; (எ று.)—மற்று - அசை.

வேணும் - வேண்டும்என்பதன் மரூஉ இது, இருதிணையைம்பால்மூவிடஙகட்கும்பொதுவான ஒருவகைவியங்கோள்வினைமுற்று. விடுதி - சில நாள் தஙகும்இடம். நாணுதல்-மனத்திற்கூசசஙகொள்ளுதல்; எனவே, பின்வாங்குத லாயிற்று. மற்று - பிறிதென்னும்பொருளது. நானும், உம்மை - இறந்ததுதழுவியஎச்சம். (கசுரு)

கசுசு.—(இ - ள்.) (தருமனைமுன்னிலையாக்கிச் சகுனி பின்னுங்கூறுவான் :—) நீதி நீடுகின்ற தரும நிருப - நீதிமிக்க தருமராஜனே! கேள் -

(நான் சொல்வதைச் சிறிது) கேட்பாயாக:—நாம் விழைந்து ஆடுகின்ற சூதில் - நாம் விரும்பி ஆடப்போகின்ற சூதாட்டத்தில், வெற்றி அழிவு - வெற்றியும் தோல்வியும், நம்மில் ஒக்கும் - நம்மிருவர்க்கும் சமமானவையே யாம்; நீ—, வஞ்சம் என்று உரைத்து - (சூதாட்டம்) வஞ்சகத்தையுடைய தென்றுசொல்லி, வாடுகின்ற மிடியர் போல ஓடுகின்றது - வருந்துகின்ற வறுமையுடையதரித்திரர்போலஅஞ்சியோடுவதற்குக் காரணம், ஒட்டுகின்ற ஒள் பொருட்கு உலோபியோ - பந்தயம்வைத்தற்குஉரிய சிறந்தபொருளு க்கு உலோபியாயிருப்பதோ? (எ-று.,—இரண்டாமடியினீற்றில், ஆல்-அசை.

இதுவும், அடுத்தகவியும்-சகுனி தருமனைமுன்னிலைப்படுத்திக்கூறியன.

'சூதாடுகையில் வெற்றிதோல்விகள் ஒருதலையன் றாதலால், நம்மிருவருள் அவை யார்க்கேனும் உண்டாகலாம்: ஆகையால், நான் வஞ்சனைவழியால் உன்பொருளைக் கவர்வதற்குச் சிறிதும்வழியில்லையே! அப்படியிருக்க, பந்தயம்வைக்கப் பொருளில்லாத வறியவன்போல நீ பின்வாங்கிச்செல்வானேன்? நீ உலோபியா?'என்று, தருமனுக்குச் சூதாட்டத்தில் ஆவேச முண்டாகுமாறு சகுனி மேன்மேலுங் கூறுவானாயினன். வெற்றியழிவு - ஜயாபஜயம். மிடி - வறுமை; அதனையுடையவர் - மிடியர். ஒட்டுதல்-பந்தயம்வைத்தல். லோபீ-வடசொல்; செல்வத்தை இறுகப்பிடிக்குந் தன்மையுள்ளவன். இனி, உலோபி - லோபஞ்செய்து எனினுமாம். 'வாடுகின்ற' என்பது - மிடியர்க்கு அடைமொழி. (கசுசு)

கசுஎ.—(இ - ள்.) தேன் எறிந்து தேன் நுகர்ந்து தேன் எடுக்கும் மாலையோய் - வண்டுகள் மோதித் தேனைக்குடித்து(க் கூட்டிற்கொண்டு சேர்த்தற்காக)த் தேனையெடுத்துக்கொண்டு போகப்பெற்ற மலர்மாலையை யணிந்த தருமராசனே!—யான் எறிந்த கவறு வெல்லின் - நான் உருட்டியாடிய கவற்றிற் சயித்தால். இசைவு எனக்கு இழத்தி - (நீ) பந்தயமாக உடன்பட்டுவைத்த பொருளை (எனக்கு)த்தோற்பாய்; நீதான்எறிந்த கவறு வெல்லின் - நீ உருட்டியாடிய கவற்றிற் சயித்தால், அதின் இரட்டி தருகுவன் - நீ பந்தயமாகவைத்த பொருளினும் இருமடங்கான பொருளை (உனக்கு)க் கொடுப்பேன்; ஆன் எறிந்த கொலைஞர் போல-பசுவைக்கொன்ற கொலைப் பாதகரைப் போல, அஞ்சல் - அஞ்சவேண்டா; ஆட வருதி - சூதாடுதற்கு (உடன்பட்டு) வருவாயாக; (எ - று.)

தான் தோற்றால் இழக்கவேண்டிய பொருள் சிறிதும், வென்றாற் பெறவேண்டியபொருள் பெரிது மானால் தருமன் இதன்பொருட்டுச் சூதாட விரும்பி வரக்கூடுமென்று சகுனி இவ்வாறு மோசஞ்செய்ய ஆசைகாட்டினனென்க. சகுனி, சூதாட்டத்திற் குற்றமில்லையென்று தருமனுக்கு விளக்கி அவனைவருமாறு வற்புறுத்தற்பொருட்டு, 'ஆனெறிந்த கொலைஞர்போல அஞ்சுவானேன்' என, பின்வாங்குவதை நிஷ்டூரமாகக்கூறினன். ஆனெறிந்தகொலை - கோஹத்தி எனப்படும்: அவர்கட்குப் பெரும்பாதகமும் கடுந்தண்டனையும் தருமசாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருத்தல் காண்க. தருமனஞ்சுதற்கு மிடியரஞ்சுதலையும் ஆனெறிந்தகொலைஞரஞ்சுதலையும் ஒப்புமைகூறினால் அவ்வளவில் தருமன் அச்சமொழிவனென்பது, சகுனியின் உட்கோள். மாலைமலர்களிலுள்ள தேனின்மிகுதி, மூன்றுமடியில் நன்கு விளங்கிற்று.

இசைவு - தொழிலாகுபெயர். இழத்தி, வருதி - முன்னிலையொருமை வினைமுற்றுக்கள். இரட்டி-இரண்டு என்பது மென்றொடர் வன்றொடராகி இகரவிகுதிபெற்ற பெயர். 'தருகுவன்' என்ற தன்மையொருமைவினைமுற்றில், கு - வேண்டாவழிச்சாரியை. 'தேன்' என்ற சொல் பலமுறைவந்தது-சொற்பின்வருநிலையணி. மூன்றுமடியில், பொருளினுல்வந்த மூரண்தொடை

காண்க. ஆன், ன் - சாரியை. கொலைஞர், ஞ் - பெயரிடைநிலை. அஞ்சல் - எதிர்மறையேவலொருமைமுற்று. (௪௪௭)

[அருச்சுனனும் மனம்வருந்தும்படி தருமனைநோக்கிக் கர்ணன் சில கூறத்தொடங்குதல்.]

௪௪அ.—(இ - ள்.) என்று - இவ்வாறாக, மாமன் - (துரியோதனனது) மாமனாகிய சகுனி, உற்று உரைப்ப - (தருமனும் துரியோதனனும் பேசுகையில் நடுவே) வந்துசொல்ல, இவைதமக்கு - இவ்வார்த்தைகட்கெல்லாம், அ அவையில் - அந்தச் சபையிலே, உதிட்டிரன் - தருமபுத்திரன், மாறு வேறு ஒன்றும் உரைத்திடாது - மாறாக வேறொரு வார்த்தையையுங் கூறாமல், இருக்கவும் - சும்மா இருந்துவிடவும், - கன்னன் என்னும் மன்னன் - கர்ணனென்னும் அரசன், வென்று மாறு அடர்க்கும் வாகை விசயனும் வெகுண்டு உளம் கன்றும் ஆறு - வெற்றிகொண்டு பகைவர்களை வலியடக்குகிற வெற்றிமாலையணிந்த அருச்சுனனும் கோபங்கொண்டு மனம்வெதும்பும்படி, உரைத்தனன் - (சில கொடுஞ்சொற்கள்) கூறுவானாயினன்; (எ-று.)— அவற்றை, அடுத்த கவியிற் காண்க.

இருக்கவும் உரைத்தனன் என இயையும். உதிட்டிரன் = யுதிஷ்டிரன்: யுதி + ஸ்திரன் எனப்பிரியும்; போரிற் பின்வாங்காது உறுதியாய்நிற்பவன் எனக் காரணப்பொருள்படும். யுதிட்டிரனிருக்கவும்,னகரமெய்-விரித்தல். மாறு-மாறான சொற்களுக்கும்,மாற்றார்க்கும் பண்பாகுபெயர். வாகையென்னும் மரத்தின்பெயர்.அதன் மலரினலமைக்கப்பட்டமாலைக்கு இருமடியாகுபெயர்: இது,போரில் வெற்றிகொண்டவர் அணிவது. விசயனும், உம்மை-இறந்ததுதழுவியது;"மோதுபோரிலெங்ஙனுய்தி யிளைஞரோடு முடுகுதேர், மீதுபோ யுன்னகரிதன்னின் விரைவினெய்துக" என்ற அடுத்தசெய்யுளில் வருகின்ற கர்ணன்வார்த்தை தருமபுத்திரனுக்கேயன்றி அருச்சுனனுக்கும் மனவருத்தத்தையுண்டாக்கக்கூடியதாதல் காண்க. கொல் - அசை; (பகைவரைக்) கொல்கின்ற என வினைத்தொகையாய், கர்ணனுக்குஅடைமொழியாகவுமாம். 'சொல்'என்பதும் பாடம். கன்னனென்னுமன்னன்-பிராசம்.

[கர்ணன்வார்த்தை.]

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

௪௪௯.—(இ - ள்.) (கர்ணன் தருமபுத்திரனைநோக்கி),— 'போது போகும் ஆறு இருந்து பொருதும் வருதி என்னவும் - 'பொழுது (இனிது) கழியும்படி இருந்து சூதாடுவோம் வருவாயாக' என்று (துரியோதனன் உன்னை) அழைக்கவும், (நீ), சூது போரும் அஞ்சியே உளம் தொலைந்து துளங்குவாய் - சூதாடுதற்கும் அஞ்சி மனம்வருந்தி நடுங்குகின்றாய்: (இப்படி சூதுபோர்க்கே மனம்வருந்திநடுங்குகின்ற நீ), மோது போரில் எங்ஙன் உய்தி - (ஆயுதங்களால்) தாக்கிச்செய்யப்படுகின்ற போரிலே எவ்வாறு பிழைப்பாய்? (இவ்வாறு ஒருவகைப்போர்க்கும் தகுதியற்ற நீ), இளைஞரோடும் - (உனக்கு ஏற்ற) தம்பிமார்களோடும், முடுகு தேர்மீது போய் - விரைந்துசெல்லுகின்ற தேரின்மீது ஏறிப் போய், உன் நகரிதன்னின் - உனது(இந்திரப்பிரத்த)நகரத்தில், விரைவின் எய்துக - விரைவிலே சேர்வாயாக', என்ன - என்றுகூற,—(எ - று.)—'விசயன் வில்லெடுத்தனன்'என, அடுத்த கவியோடு தொடர்ந்துமுடியும்.

பிராணாபாயத்திற்குச் சிறிதும் இடமில்லாத செல்வக்கேட்டிற்குமாத்திரம் இடமான இவ்விளையாட்டுச்சூதுக்கே அஞ்சிப்பின்வாங்குகிற நீ செல்வக்கேட்டோடு பிராணாபாயத்திற்குங் காரணமான மோதுபோரைத் தைரியத்தோடு செய்யத் திறமற்றவனென்பது திண்ணம்; இவ்வாறு நீ க்ஷத்திரிய தருமமாகிய இருவகைப்போரிலும் பின்வாங்குவதனால் இவ்வரசமண்டலத்

திலில்லாது உனக்குஏற்ற தம்பிமாரோடு ஊரிற்புக்கொளித்துக்கொண்டிருத்தலே நினக்குத் தகுதியென ரோஷமுண்டாகுமாறு தருமனைநோக்கிக் கர்ணன் கூறினனென்க. சூதுபோரும், உம்மை - இழிவுசிறப்பு. எங்ஙன் = எங்ஙனம்: கடைக்குறை. 'துளங்குவாய்' என்பதை விளியாகவும், முன்னிலையொருமைவினையாலணையும்பெயராகவுங் கொள்ளலாம். (கசுகூ)

[அருச்சுனன் கர்ணன்மீது வெகுண்டு கூறுதல்.]

களO.—(இ - ள்.) வாளி வீரம் விசயன் - அம்புசெலுத்தி வீரங்காட்டுகின்ற அருச்சுனனானவன்,—(கர்ணனைநோக்கி), 'விரகினோடும் - (எங்களை) ஏமாற்றும்உபாயத்துடனே, இல் எடுத்து - புதிதாக மண்டபங்கட்டி, எமை அழைத்து - (மண்டபங்காணவேண்டுமென்ற வியாஜத்தினால்) எங்களை வரவழைத்து, மாயை கூர் வல் எடுத்து வருதலால் - மிக்கமோசத்திற்கு இடமான சூதாடுகருவியை (ஆடுமாறு) எடுத்துக்கொண்டுவருதலினால், மகீபனும் மறுத்தனன் - (எனதுதமையனான) யுதிஷ்டிரராஜனும் (வேண்டாவென்று) தடுத்துக்கூறினான்; (இதனால், அத்தருமன் போர்க்கு அஞ்சியவனாவது எப்படி?) சொல் எடுத்து வைத வாய் துணிப்பன் - தகாதசொற்கொண்டு (க்ஷத்திரியதருமத்திற் சிறிதும்பின்வாங்காதவனான எனதுதமையனைப்) பழித்த (உனது) நாவைத் துணித்துவிடுவேன்', என்று--, பொறாமல் - மனம்பொறாமல் [உக்கிரத்துடனே], கன்னன்மேல் வில் எடுத்தனன - கர்ணன்மேல் (அம்புதொடுக்குமாறு) வில்லைக் கையிலேந்தினான்; (எ - று.)

'சொல் எடுத்து வைத வாய் துணிப்பன்' என்பதற்கு - தருமபுத்திரனது பேச்சையெடுத்துக்கொண்டு வைத நாவைத் துணிப்பேன் என்றும் கூறலாம். வாய் - நாவுக்கு இலக்கணை. (களO)

[தருமன் அருச்சுனனையடக்கிச் சூதாட உடன்படுதல்.]

களக.—(அப்பொழுது), தருமனும்-தருமபுத்திரனும்,—(அருச்சுனனை நோக்கி), 'எம்பி - எனதுதம்பியே! நீ—, ஏதிலாரின் - யாதொருசம்பந்தமுமில்லாத அயலார் போல, இருக்க சும்மாஇருப்பாயாக,' என்று - (என்று சொல்லி, முன் இருத்தி - தன்எதிரில் (அவனை) அடங்கியிருக்கச்செய்து,—(பிறகு),'காதில் - (நான்) போர்புரியேனானால், என்னுடன் முனைந்து கண்விழிக்க வல்ல பேர் ஆர் - என்னோடு எதிர்த்துநின்று அஞ்சாமற்போர்புரிய வல்லமையுள்ள வீரர் யாவருளர்? (ஆயினும்), ஓதில் - (எம்மைக் குறித்து யாமே) புகழ்ந்துகூறினால், ஆண்மை குன்றும் - வீரத்தன்மை குறைந்துபோகும்; (ஆகையால், ஒன்றும் கூறவேண்டியதில்லை),' என்று- என்றுஞ்சொல்லி,(அப்பால்). உருத்து எழுந்து - ரோஷங்கொண்டெழுந்து, (சகுனியைநோக்கி),—'நின் மாயம் சூதில் - உனது வஞ்சகத்தன்மையுள்ள சூதாட்டத்தை, ஆடல் புரிதும் - ஆடுவோம்.' என்று - என்றுகூறி,தொடங்கினான் - (சூதாடத்)தொடங்கிவிட்டான்; (எ - று )

தருமன் 'யான் போர்த்திறமையில்லாமற் சும்மாவிருக்கிறேனென்று நினையாதே; யான் போர்புரியத்தொடங்கினால் எனக்குமுன் அஞ்சாது எதிர்நின்றுபொருபவர் ஒருவருமில்லை: ஆயினும், நமதுபௌருஷத்தை நாமே சிறப்பித்துக்கொள்வது இழிவாகுமென்றுநினைத்தே நான் அமைந்திருக்கிறேன்: ஆதலால். நீயும் இவ்வாறு அமைந்திருப்பதே தகுதி' எனக்கூறி அருச்சுனனை அடங்கியிருக்கச்செய்து, பின்னும் தமக்கும் துரியோதனாதியர்க்கும் வாக்குவாதம் நிகழாதவாறு சூதுபோரையே தொடங்கிவிட்டனனென்பதாம். 'காதிலா ரென்னுடன்முனைந்துகண்விழிக்கவல்லபே, ரோதிலாண்மைகுன்றும்' என்று தருமன் கூறியதை, கீழ்க் கர்ணன்கூறிய சூதுபோர் மோதுபோர் என்ற இரண்டையும் பற்றிய வீரவாதமாகக் கொண்டுங் கூறலாம். "தன்னைவியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர், நன்னீர்

சொரிந்து வளர்த்தற்றால்-தன்னை, வியவாமை யன்றே வியப்பாவது" என்ப வாதலால், 'ஒதிலாண்மைகுன்றும்' எனப்பட்டது.

எம்பி - என் தம்பியென்பதன் மரூஉ; அண்மைவிளியாதலின், இயல்பாயிற்று. இருக்க வியங்கோள்வினைமுற்று. காதில் - 'காது' என்னும்வினைப்பகுதியினடியாகப்பிறந்த எதிர்காலவினையெச்சம். கண்ணிமைத்தல் அச்சக்குறி யாதலால், கண்விழித்தலென்பது - இலக்கணையால், அதற்குமாறாக அச்சமின்மையைக் குறிக்கும். ஆடல் - 'ஆடு' என்ற முதனிலையின் தொழிற்பெயர். புரிதும் - சகுனியையுளப்படுத்திய தன்மைப்பன்மை; தும் - தன்மைப்பன்மைவினைமுற்றுவிகுதி: இங்கு, எதிர்காலங்காட்டியது. 'சூதில்' என்றது - உருபுமயக்கம். முன் - காலமுன்னுமாம். (௧௭௧)

[துரியோதனன் சகுனிக்காகத் தான் பந்தயம்வைக்க உடன்படுதல்.]

௧௭௨.- (இ - ள்.) மின்னை வெல்லும் சோதி வெய்ய வேல் இராசராசன் - மின்னலைச்சயித்துவிளங்குகிற ஒளியையுடைய கொடிய வேலாயுதத்தைக்கொண்டுள்ள அரசர்க்கரசனான துரியோதனன்,—(தருமபுத்திரனை நோக்கி),—'நின்னை வெல்லின் -(இந்தச்சகுனி) உன்னைச் சயித்தால், ஒட்டம் யாவும் - பந்தயங்களெல்லாவற்றையும், நீ கொடுக்க-நீ (எனக்குத்)தரக்கடவை; நீ —, இவன் தன்னைவெல்லின் -இந்தச்சகுனியைச் சயித்தால், (அப்பொழுது), யான் விரைந்து தருவன் - யானே விரைந்து (எனதுபொருள்களை உனக்குக்) கொடுக்கக்கடவேன்,' என்று - என்று (பந்தயம்வைப்பதில்) நியமஞ்செய்து,—பின்னை தருமனை வெல்ல ஒணாது என - '(ஆனால்) இனித் தருமபுத்திரனைச்(சூதாட்டத்திற்) சயிக்கமுடியாது' என்றுசொல்லி, பிணிப்புடன் மருட்டினான் - (சூதாடும்படி தருமனுக்கு மனத்தில்) உறுதியான எண்ணம் உண்டாகுமாறு மதிமயங்கும்படியானசொற்களையுங் கூறினான்.

தருமன் சூதாடுகையில் அவனுக்குஎதிராகத் தன்பொருட்டுச் சகுனி சூதாடுவனென்பது, துரியோதனனது தாற்பரியத்தின் கருத்து. 'தருமனைப் பின்னைவெல்லொணாது' என்று சூதாட்டத்தில் தருமபுத்திரனுக்கு மிக்க திறமுள்ளதாகத் துரியோதனன் புகழ்ந்துகூறியது, அத்தருமன் சூதாடுதலில் மிக்கஉற்சாகங்கொண்டு பின்வாங்காமல் மேல்விழுந்து சூதாடுதற்கு வருமாறு அவனைத் தூண்டுதற்பொருட்டென்க. 'பின்னை' என்பதை 'என' என்பதனோடு இயைத்து, பின்பு 'தருமபுத்திரனைச் சூதாட்டத்திற் சயிக்கமுடியாது' என்றுசொல்லி யெனவும் பொருள்கொள்ளலாம். தருமனைமுன்னிலையாக்கிச் சிலகூறியவன் பின்பு உடனே அவனைப் படர்க்கையாக்கி இது கூறினான்.

ஒட்டம் - பந்தயமாகவைக்கப்படும் பொருள்; அம்-செயப்படுபொருள் விகுதி. கொடுக்க - வியங்கோள்வினைமுற்று. இவன் தன்னை, தன்-சாரியை. தருவன் - தன்மையொருமைவினைமுற்று. வெல்லொணாது-வெல்லவொன்றாதுஎன்பதன் மரூஉ. வெய்ய-'வெம்மை' என்ற பண்புப்பகுதியின் குறிப்புப்பெயரெச்சம். 'வேல்' என்பது, உபலட்சணத்தால், பலவகைஆயுதங்களையுங் குறிக்கும். ராஜராஜன்என்பது - துரியோதனனுக்கு ஒருபெயர். (௧௭௨)

[தருமனும் சகுனியும் சூதாடுதற்பொருட்டு ஆசனத்தி லிருத்தல்.]

௧௭௩.—(இ - ள்.) தருமன்—, அவிர் பசும்பொன் மீளி யாளி ஆசனத்து இழிந்து - விளங்குகின்ற பசும்பொன்மயமான வலியசிங்கந்தாங்குவதாகச் செய்யப்பட்ட சிங்காதனத்தினின்றும் இறங்கி, பூந் தவிசில் ஒன்றிட புகுந்து வைக - அழகியதோர்ஆசனத்திற் பொருந்தித்தங்கியிருக்க,— மாமனும் - (துரியோதனனது) மாமனாகிய சகுனியும்,—நீள் புவி பெறும் கருத்தினோடு -(தருமபுத்திரனது)பெரியஇராச்சியத்தை அடையவேண்டுமென்ற எண்ணத்துடன், நல் நிலம் குறித்து - வெற்றித்தானத்தை ஆராய்ந்தறிந்து,

கவிர் அறும் திசைப்புறத்து - குற்றமற்ற அத்திக்கின்பக்கமாக, பொருந்த இருந்தனன்—; (எ - று.)

தருமபுத்திரன் சூதாமொறு தான்முன்னிருந்த மிக்கஉயரமான சிங்காதனத்தினின்றும் இறங்கி ஓராசனத்தில் முதலில்தங்கியிருக்க,சகுனி தருமபுத்திரனது இராச்சியத்தைக் கவரவேண்டுமென்ற எண்ணத்தினால் தருமன் தோல்வியடையும்படி தான் ஜயஸ்தாநத்தை அறிந்து அத்திசைப்புறமாகத் தங்கியிருந்தனனென்றவாறு. வாதிப்பிரதிவாதிகளாக இருவர் மாறுபட்டுத்தொழில்செய்யும்பொழுது தாம்இருவரும்இருக்கும்நிலவெல்லையைச் சதுரமாகவும், அச்சதுக்கத்தில் மேஷம்முதலிய பன்னிரண்டு ராசிகளும் முறையேஇருப்பனவாகவும் கொண்டு, எதிரியுள்ள இடத்திற்குத் தானுள்ள இடம் ௪, எ, ௯, ௧௧ - இத்தானங்களுள் ஒன்றாய்அமையுமாறு இருந்து தொழில்செய்தால் வெற்றியுண்டாகு மென்பது முதலாகச் சோதிடநூல்களிற் கூறப்பட்டுள்ளது. (௧௭௩)

[தருமபுத்திரனும் சகுனியும் சூதாடத்தொடங்குதல்.]

௧௭௪.—(இ - ள்.) மானம் நிருபர் - பெருமையையுடைய (தருமன் சகுனி என்ற) அரசிருவரும்,—கவளம் யானை பணையில் - கவளத்தையுண்ணுகின்ற யானையின் தந்தத்தாற் செய்யப்பட்டதும், யாளி கால் வகுத்த - சிங்கத்தின்உருவந்தோன்றச்சித்திரித்த கால்களையுடையது மாகிய, பலகையில்-(காய்களை நிறுத்துமாறு அறைகள்அமைந்துள்ள) பலகையின்மேல், பவளம் ஆன நீலம் ஆன கருவி - பவளநிறமாயும் நீலநிறமாயும் இருக்கிற காய்களை, முன் பரப்பினர் - முன்னே பரப்பிவைத்தவர்களாய்,—தவளம் ஆன கவறு கை தரித்து-வெண்ணிறமான பாச்சிகைகளைக் கையிற்கொண்டு,மெய் தரித்த தார் துவள - (தமது) உடம்பி லணிந்துள்ள மாலைகள் புரண்டசைய, தம்மில் ஆடவே தொடங்கினர் - தங்களில் ஆடத்தொடங்கினார்கள்.

சிங்கந்தாங்கிய கால்கள் அமைந்ததாய் யானைத்தந்தங்கொண்டுசெய்யப்பட்ட அறைகீறிய சூதுபலகையின்மேல் ஒருபக்கத்திற் செந்நிறமான காய்களையும் மற்றொருபக்கத்தில் நீலநிறமான காய்களையும் பரப்பித் தருமனும் சகுனியும் வெண்ணிறப்பாச்சிகைகொண்டு உருட்டி ஆடத்தொடங்கின ரென்க: தன்மைநவிற்சியணி. ஆடுகையில் மாலையசைதல், இயல்பு. 'யானைப்பணை' என்பது, ஓசைநயம்நோக்கி, 'யானைபணை' என நின்றது. கருவி - காய்கள். கவறு - பாச்சிகை. பவளம் - ப்ரவாளம் என்ற வடசொல்லின் விகாரம். பவளமான நீலமான கருவி யென்பதற்கு - பவழத்தாற்செய்யப்பட்டவையும் நீலரத்தினத்தாற் செய்யப்பட்டவையுமான காய்க ளெனினும் அமையும். (௧௭௪)

[இதுமுதல் ஐந்துகவிகள் - தருமன் பலபொருள்களையுந் சூதாடியிழந்தமையைக் கூறும்.]

௧௭௫.—(இ - ள்.) ஈரம் வைத்த சிந்தை மன்னன் - அருள்கொண்ட மனத்தையுடையவனான யுதிஷ்டிரராசன, கழுத்தின் முத்து ஆரம் இசைவு என வைத்து - (தான்) கழுத்திலணிந்திருந்த முத்துமாலையைப் பந்தயமாக வைத்து, (துரியோதனனைநோக்கி), நீயும் மாறு அழைக்க என்ன - 'நீயும் இதற்குஎதிரான பந்தயத்தை வருவித்துவைப்பாயாக' என்றுசொல்ல,—மாமன்மேல் வாரம் வைத்த நெஞ்சினானும் - மாமனாகிய சகுனியினிடத்து அன்புகொண்ட மனத்தையுடையவனாகிய துரியோதனனும், சாரம் மாமணி வைத்த வலயம் ஒன்று வருக என்று - சிறந்த பெரிய இரத்தினமிழைத்துச்செய்யப்பட்ட ஒருதோள்வளையை 'கொண்டுவா'என்று ஒருவனை ஏவி (வரவழைத்து), தானும்—, முன்னர் வைக்க - (தருமபுத்திரனுக்கு) எதிரே (பந்தயமாக) வைக்க, (எ - று.)—'மாமன்வெல்ல' என, அடுத்தசெய்யுளோடு குளகமாகத் தொடரும்.

இசைவு - மனமிசைந்துவைத்த பந்தயத்துக்கு ஆகுபெயர். ஸாரம் - வடசொல்; சிறந்ததென்பது பொருள். வலயம் - பாஹுவலயம். (கஎஇ)

கஎங.—(இ - ள்.) இருவரும் - (தருமன் சகுனி என்ற) இருவரும், கவற்றினால் எறிந்த போது - பாச்சிகையை யுருட்டியாடுகையில்,—மரு வரும் அலங்கல் புயத்து மாமன்-வாசனைவீசுகின்ற மலர்மாலையையணிந்த தோள்களையுடைய சகுனி,எறிந்த ஆறு-(பாச்சிகையை) உருட்டியாடிய வகை, ஒருவரும் குறிக்கலா உபாயம் ஆய் இருத்தலால் - எவரும்தெரிந்துகொள்ள முடியாத தந்திரமாயிருந்ததனால், வெல்ல - (அத்தருமபுத்திரனைச்) சயித்துவிட,—மன்னர் உள் வெருவரும் களிற்றினனும்-பகையரசர்கள் மனத்தில் அஞ்சுதற்குக் காரணமான யானைச்சேனையையுடையவனான தருமபுத்திரனும், மேல் விருப்பம் மிஞ்சினன்-மேன்மேலும் சூதாடுதலில்ஆசைமிக்கவனானான்; (எ - று.)

முதலில்தோற்றவர்கள் அடுத்தஆட்டங்களில் வெல்வோமென்று எண்ணுதலும், முதலில்வென்றவர்கள் இனிப் பின்னும் வெல்லலாமென்று கருதுதலும்,சூதுமுதலியஆட்டங்களில் இயல்பு.இரண்டாமடி,சகுனியின்சூதாடுதற்றிறமையை விளக்கும். உள் - உள்ளிடம்; அகத்துறுப்பு: அந்தக்கரணம். மன் அருள் வெருவரும் களிற்றினனும் என்றுகொண்டு, மிக்க அருளையும் (பகைவர்)அஞ்சுகின்ற யானைச்சேனையையுமுடைய தருமனென்றும் உரைக்கலாம். (கஎங)

இதுமுதல் நான்குகவிகள் - குளகம்.

கஎஎ.—(இ - ள்.) வைத்த ஆரம் அவன் எடுக்க - (தருமபுத்திரன் பந்தயமாக) வைத்த முக்தாஹாரத்தை அந்தச்சகுனியானவன் வென்றுகைப்பற்றிக்கொள்ள,—(தருமபுத்திரன்), மாயவன் கொடுத்த நல் மெய்த்த வாதம் தேர் குறித்து - ஸ்ரீக்ருஷ்ணபகவான் (தமக்குக்)கொடுத்திருந்த சிறந்த உருவங்கொண்ட காற்றுப்போன்ற தேரைப் பந்தயமாகவைத்து, மீளவும் பரப்பினன் - பின்பும் ஆடுமாறு (காய்களைப்) பரப்பிவைத்தான்; பொய்த்த ஆடல் வல்ல மீளி - வஞ்சனைக்குஇடமான சூதாட்டத்தில் மிக்கதேர்ச்சியுள்ள வீரனாகிய சகுனி,மொய்த்த வாசம் மாலை மார்பின் முடி மகீபன் மகிழ்தர - (வண்டுகள்)மொய்க்கப்பெற்ற வாசனையையுடைய(நஞ்சாவட்டைப்பூ) மாலையையணிந்த மார்பையுடையவனும் கிரீடாதிபதியுமான துரியோதனராஜன் மனங்களிக்கும்படி,பொருது வென்றி புனைய - சூதாடிவெற்றியையடைய [தேரைக் கைப்பற்ற], (எ - று.)—'மாறுசெப்பி' என அடுத்தகவியோடு தொடரும்.

திரௌபதியைப்பாண்டவர்கள்மணஞ்செய்துகொண்டபின்னர்க் கண்ணன் அவர்கட்குத் தேர்முதலியவற்றை வெகுமானமாக அனுப்பினனென வியாசபாரதம் கூறும். அர்ச்சுனன் சுபத்திரையை மணந்துகொண்டபொழுது ஸ்த்ரீதனமாகத் தேர்முதலியவற்றைக் கொடுத்ததாகவும் அப்பாரதத்திற் கூறப்பட்டுள்ளது. தேர் மிகவிரைந்துசெல்லுந்தன்மையதாதலால், அதற்குக் கட்புலனாகும்வடிவத்தைக்கொண்ட காற்றை உவமைகூறினர்; இல்பொருளுவமை. வாதம் - வடசொல். நிலைமொழி வடமொழியாதலின், 'வாததேர்' என வருமொழிமுதல் வலி இயல்பாயிற்று; "இடை யுரி வடசொலி னியம்பிய கொளாதவும்,......நெறியே." இனி, மெய் தவாத தேர் எனப்பிரித்து, உருக்குலைதலில்லாத தேர் என்றும் பொருள்கூறலாம். (கஎஎ)

கஎஅ.—(இ - ள்.) (தருமபுத்திரன்),தேர் கொடுத்த பின்னும் - அந்த இரதத்தைத் தோற்றபின்பும்,மாறு செப்பி - வெவ்வேறுபந்தயஞ் சொல்லி, உள்ள - மற்றும் தன்னிடத்திலுள்ள, தேர் - தேர்களையும், மதம் கார் - மதநீர்சொரிகிற மேகம்போன்ற யானைகளையும், கொடுத்தும் - தோற்றுஇழ

ந்தும்,எண்இலாதகவனம்மா கொடுத்தும்-கணக்கில்லாதனவான வேகத்தையுடைய குதிரைகளைத் தோற்றும், அ பார் கொடுத்தும்-(தனக்குத்தாயபாகமாகக் கிடைத்த) அந்தத்தேசத்தைத் தோற்றிழந்தும், அரசு கூர் பதம் கொடுத்தும் - (தான்) அரசாளுகிற அரசவுரிமையைத் தோற்றிழந்தும், தம் உரிய ஊர் கொடுத்தும் - உரிமையுள்ள தமது இந்திரப்பிரத்தநகரத்தைத் தோற்றிழந்தும், அதனின் உள்ளம் ஒழிவுறுமல் ஓட - அந்தச்சூதாட்டத்தில் (தனது) மனம் ஆசைவிடாமல் தொடர, (எ - று.)—'அளிக்க' என அடுத்த கவியோடு தொடரும்.

மதக்கார் - அடையடுத்த உவமையாகுபெயர். கவனம் - கமநம்: வடசொல். 'மா' என்ற பொதுப்பெயர் - 'கவனம' என்ற அடைமொழியால், சிறப்பாகக் குதிரையை யுணர்த்திற்று. உள்ளம் - நினைத்தற்குக்கருவியானது என மனத்திற்குக் காரணக்குறி; அம் - கருவிப்பொருள்விகுதி: (உள்ளுதல் - நினைத்தல்.) இனி, அகத்துறப்பு என்றவாறுமாம். (கஎஅ)

கஎகூ —(இ - ள்.) (பின்னும்),வெம் கிராத வனம் எரித்த விசயனுக்கு-கொடிய வேடர்கள் சஞ்சரித்தற்கு உரிய காண்டவவனத்தை அக்கினிபகவானைக்கொண்டெரிந்தழியச்செய்த அருச்சுனனுக்கு, விஞ்சையன்-(சித்திரரதனென்னும்) வித்தியாதரராசன், அங்கு இரா மகிழ்ந்து அளித்த - அங்கே [கங்கைக்கரையிலே] (திரௌபதீசுயம்வரத்துக்காகப் பாண்டவர் சென்றபோது)இராப்பொழுதில் மகிழ்ச்சிகொண்டுகொடுத்த,ஆடல்மாவும்-வலிமையுள்ள(ஐந்நூறு)குதிரைகளையும்,—பொஙகு இரா மணம் சிறந்த நீள் அளகம் போகமாதர் பலரும் - மிக்கஇருள்போற்கருநிறமான வாசனைசிறந்த நீண்ட கூந்தலையுடைய இன்பத்திற்குஉரிய பலமகளிரையும்.— இங்கு மன்று - இந்தச்சபையிலே. இரா - இருந்துகொண்டு, நரேசன் - யுதிஷ்டிரராசன், உற்ற இசைவினல் அளிக்க - மக்க மனப்பூர்த்தியோடு பந்தயமாகவைத்து இழந்துவிட, (எ - று.)— 'குருகுலேசன் மொழிய' என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும. 'இங்கு' - அசையுமாம்; இப்பொழுது எனினுமாம்.

கிராதவனமென்றது, வேடர்முதலிய துஷ்டர்கள் மிகுதியாக வசித்திருந்த காண்டவவனத்தை. அருச்சுனன் அக்கினியைக்கொண்டு காண்டவவனத்தை யெரித்த கதை.—இந்திரப்பிரத்தநகரத்தைச்சார்ந்தவொரு பூஞ்சோலையிற் கிருஷ்ணர்ச்சுனர்கள் உல்லாசமாகவசித்திருக்கையில் ஒருநாள், அக்கினிபகவான் அந்தணவடிவங்கொண்டுவந்து 'எனக்கு மிகப்பசிக்கின்றது: உணவிடுக' என்றுவேண்ட. அவ்விருவரும் 'நீ வேண்டியபடி உணவிடுவோம்' என்று வாக்குத்தத்தஞ்செய்ய, உடனே தீக்கடவுள் நிஜரூபங்கொண்டு 'இந்திரனதுகாவற்காடாய் எவர்க்கும் அழிக்கவொண்ணாதபடி நிலவுலகத்திலிருக்கிற காண்டவவனத்தை அதிலுள்ளசராசரங்களுடனே எனக்கு விருந்திடவேண்டும்' என்ன, அவர்கள் அங்கேபுக்குஒதுங்கியிருக்கின்ற அசுரர்கள்முதலிய துஷ்டர்களை யழித்தருளவேண்டுமென்னும்நோக்கத்தால் இசைந்து 'நீ இதனைப் புசி' என்றவுடனே, அக்கினிதேவன் அருச்சுனனுக்கு நான்குவெள்ளைக்குதிரைகள்பூட்டிய தேரையும், வானரத்துவசத்தையும், காண்டீவவில்லையும், இரண்டுஅக்ஷய தூணீரங்களையும் கொடுத்துக் காண்டவவனத்திற் பற்றியெரிகையில், அவ்வனத்தினின்றுதப்பியோடுகிற பிராணிகளை அருச்சுனன் அம்பெய்துகொன்று அத்தழலில் விழுத்திவர, காண்டவவனம் தீப்பற்றியெரிகிற செய்தியை யுணர்ந்த தேவேந்திரன் அத்தீயையவிக்கும்படி பலமேகங்களை யேவ, அம்மேகங்கள் வந்துபொழிந்த சோனைமாரியில் ஒருதுளியும் தீயின்மேல்விழுந்திடாவண்ணம் அருச்சுனன் சரக்கூடங்கட்டித்தடுத்துவிட, இந்திரன் பின்னும் தேவசேனையுடனே வந்துபோர்செய்யவும் அருச்சுனன் அவர்களையும்வெல்லவே, அக்கினிபகவான் அவ்வனமுழுவதையும் எரித்துத் திருப்தியடைந்து கிருஷ்ணர்ச்சுனர்களை வாழ்த்திச் சென்றனனென்பதாம்.

விஞ்சையன் விசயனுக்கு ஆடன்மாவளித்த கதை:—பாண்டவர்கள் வேத்திரகீயத்தில் வசிக்கிறபோது திரௌபதியின் சுயம்வரத்தைக் கேள்வியுற்று அங்குநின்றும் பிரயாணப்பட்டுச்செல்லுகையில் அர்த்தராத்திரியிலே கங்கையைச்சார்ந்து அதன் துறையிலிறங்குமளவில், அங்குப் பலமகளிருடனே ஜலக்கிரீடைசெய்துகொண்டிருந்த சித்திரரதனென்னும்மறுபெயரையுடைய அங்காரபர்ணனென்னும் வித்தியாதரராசன், இவர்கள்வருகைதான்ஏகாந்தமாகச்செய்துகொண்டிருக்கிற புனல்விளையாட்டுக்குத் தடையாதலைநோக்கிச் சினங்கொண்டவனாய்,இவர்களை'இங்கு வரலாகாது'என்று தடுத்து வீரவாதங்கூறி மாயப்போர்தொடங்க, அப்போரில் முன்னின்ற அருச்சுனன் ஆக்நேயாஸ்திரத்தால் அவன்மாயைகளை ஒழித்ததோடு அவனதுதேரையும் கரியாக்கி அவனது அம்புகளையும் உடல்வலிமையையும் ஒடுக்கச்செய்து அவனைத் தலைமயிர்பற்றியிழுத்துவந்து தருமபுத்திரனதுபாதத்திற்போகட, கருணைக்கடலான தருமபுத்திரன் அவன் மனைவியானகும்பீநசியின்வேண்டுகோளின்படி அருள்கொண்டு அவனைவிடுக்க, அவன் இவர்களைப் பாண்டவரென்றுஅறிந்தவனாய்த்தன்பிழையைப்பொறுக்கும்படிவேண்டிச் சரணமடைந்து அபயமளிக்கப்பெற்றபின்பு நண்புபூண்டு அருச்சுனனிடத்திலிருந்து ஆக்நேயாஸ்திரத்தை உபதேசம்பெற்று அதற்குஈடாகத் தானறிந்தமாயவித்தையை அருச்சுனனுக்குக் கற்றுக்கொடுத்ததுமன்றி ஒவ்வொருவர்க்கு நூறுநூறுகுதிரையாக உத்தமவிலக்கணமுடைய சிறந்த ஐந்நூறுகுதிரைகளைப் பெற்றுக்கொள்ளும்படி வேண்ட, 'வேண்டும்பொழுது பெற்றுக்கொள்ளுகிறோம்; உனக்கு மங்களமுண்டாகுக' என்று சொல்லி அருச்சுனன் அக்குதிரைகளை அச்சித்திரரதனிடத்திலேயே விட்டிருந்தனனென்பதாம். இவ்விஞ்சையன்பெயரை 'சித்திராங்கதன்' எனக் கொள்ளுதல் தகுதியன்று; திரௌபதிமாலையிட்டசருக்கத்தில், அவனை 'சித்திரத்தேரோன்' என்றதையும்,வடநூல்களையும் உற்றுநோக்குக. அவ்வாறு அவ்வித்தியாதரனிடத்திலிருந்த குதிரைகளை இப்பொழுது தருமன் பந்தயமாக வைத்தனனென அறிக.

கிராதவநம், நரேசன் - வடசொற்றொடர்கள். விஞ்சையன் - மாவிகாஞ்சனம்முதலிய மாயவித்தைகளை யுடையவன். ஆடல்-அடல்என்பதன் நீட்டல். இனி,ஆடல்மா-கூத்தாடிக்கொண்டுசெல்லுந்தன்மையுள்ள குதிரையெனினுமாம்; அன்றியும், உத்தமவிலக்கணமுடைய சிறந்த குதிரை, 'ஆடன்மா'எனப்படும். மா - பல்பொருளொருசொல்லான பெயர். மூன்றாமடியில்'இரா' என்றது, இருளுக்கு இலக்கணை. நான்காமடியில், 'இரா'-செய்யாஎன்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம். மூன்றாமடியினிறுதில், அன்று என்றுஎடுத்து, அப்பொழுது எனினுமாம். விஞ்சை - வித்யா என்ற வடசொல்லின் சிதைவு. (கஎக)

[தங்களையே பந்தயப்பொருளாகக்கொண்டு ஆடுமாறு தருமனைக்கேட்கும்படி துரியோதனன் சகுனியைத் தூண்டுதல்.]

கஅ௦.—(இ - ள்.) யாவையும் கொடுத்து இருப்ப - (இவ்வாறு தருமபுத்திரன் தனது) எல்லாப்பொருள்களையும் தோற்றிருக்கையில், 'இளைஞரோடும் - தம்பிமார்நால்வருடனே, மெய் தவம் கோவையும் - சத்தியவிரதத்தையுடைய தருமராசனாகிய தன்னையும், குறிக்க - பந்தயமாகவைக்கும்படி சொல்வாயாக', என்று—, குருகுலஈசன் - குருகுலத்திற்பிறந்த தலைவனாகிய துரியோதனன், மொழிய - (சகுனியினிடத்திற்) சொல்ல,—வென்றி மேன்மையான் - வெற்றியினால்மேம்பட்டவனாகிய அச்சகுனி, இவர்கள்தம் வீவையும் குறித்து - இப்பாண்டவர்களது நாசத்தையும் உத்தேசித்து,ஈவையும் குறித்து வெற்றி எய்த எய்த - (துரியோதனன்குறித்த) இப்பந்தயப்பொருள்களையுங்குறித்து மேன்மேல்வெற்றிபெறுமாறு,விளம்புவான் -(தரும

புத்திரனைநோக்கிச்) சொல்வானாயினன்; (எ - று.)—அதனை, அடுத்த கவியின் முன்னிரண்டடிகளிற் காண்க.

சகுனி தருமபுத்திரனது பொருள்களையெல்லாம் வென்றதும், துரியோதனன், 'இனிச் சூதாட்டத்தை நிறுத்திவிடக்கூடும்' என்ற எண்ணத்தினால் அவ்வாறு நிறுத்திவிடாதிருக்கும்படி 'பாண்டவர்களாகிய தங்களையே பந்தயப்பொருளாக வைக்குமாறு கேட்பாய்' எனச் சகுனிக்குக் குறிப்பாகக்கூறினனென்க. எய்த்த அகோவையும் என்றுபிரித்து-சூதாடித்தோற்ற அந்தத்தருமராசனையும் என்றும் உரைக்கலாம். ஈவை - இவையென்பதன் நீட்டல்; (இதன் ஒருமையாகிய 'இது' என்பது 'ஈது' எனச் சுட்டுநீண்டு வருதல் கருதத்தக்கது) பாண்டவர்களைப் பந்தயப்பொருள்களாகக் கொண்டதனால், 'ஈவை' என அஃறிணையாக்கூறினர். எய்தஎய்த - அடுக்கு, மிகுதிப்பொருளது. பாண்டவர்களது பொருள்களையேயன்றி அவர்களின் நாசத்தையும் எனப் பொருள்படுதலால், 'வீவையும்' என்ற உம்மை - இறந்ததுதழுவியஎச்சப்பொருளது. வீவு - தொழிற்பெயர்; வீ-பகுதி,வு-தொழிற்பெயர்விகுதி. (கஅ0)

[தருமன் தங்களையே பந்தயப்பொருளாகக்கொண்டு தோற்க, சகுனி மீண்டுங் கூறுதல்.]

கஅக.—(இ - ள்.) (சகுனி தருமனைநோக்கி), 'உன்னை குறித்தும் - உன்னையே பந்தயப்பொருளாகவைத்தும், வன்பு உரைத்த தம்பிமார் இனந்தன்னை குறித்தும்-சாமர்த்தியம்பேசின தம்பிமார்கூட்டத்தையும் [நான்கு தம்பிமார்களையும்] பந்தயப்பொருளாகவைத்தும், இசைந்து தருக - மனமொப்பி நியமனஞ்செய்வாயாக; வந்து பொருக - வந்துசூதாடுவாயாக', என - என்று (துரியோதனனது எண்ணத்தின்படியே) சொல்ல.—பின்னையும் - (பலபொருள்களையுந்தோற்ற)பின்பும், (தருமராசன்), குறிப்பு உறுது-சிறிதும்ஆலோசனையில்லாமல், பொருது-(தங்களையே பந்தயப்பொருளாகக் கொண்டு சகுனியுடனே) சூதாடி, கைபிழைக்க - (தங்களையும்) தோற்க,—மேல் - அதன்பின்பு, (சகுனி), முன் - (தருமராசனுக்கு) எதிரில், உம் குறிப்பு என்னை என - 'உமதுஎண்ணம் இனி என்ன?' என்று (இகழ்ச்சி தோன்றக்) கூறி, விரகினால் இயம்பினன் - தந்திரமாக (மற்றும்) சொல்வானாயினன்; (எ - று.)—அதனை, அடுத்தகவியிற் காண்க.

'எல்லாப்பொருள்களையும் தோற்றுவிட்டதோடு உங்களையும் தோற்றுவிட்டதால்,இனி ஆடும்பொருள்ஒன்றுமில்லையே!' என்று இகழ்ச்சிதோன்றுமாறு கூறி,மற்றும், ரோஷத்துடன் திரௌபதியையும் பந்தயம்வைக்குமாறு கூறுகின்றானாதலால், 'விரகினாலியம்பினன்' என்றார். மேல் உம் குறிப்பு என்னை எனாமுன் விரகினால் இயம்பினன் என்பதற்கு - 'இனி உமது கருத்து என்ன?' என்று (தருமன்) கேளாதமுன்னமே [கேட்காதிருக்கையிலேயே] (சகுனி) வஞ்சனையினால் (வலியச்)சொல்பவனானான் என உரைப்பினும் அமையும்; மேல் உம்குறிப்பு என்னை - இன்னமும் உங்கள்உத்தேசமென்ன? என்றபடி. பல சமயங்களில் வீமன்முதலியோர் தமதுசாமர்த்தியங்களை வீரவாதமாக எடுத்துக்கூறுந்தன்மையராதலால், அவர்கள் 'வன்புரைத்ததம்பிமார்' எனப்பட்டார்; என்றது, "நுணலுந் தன்வாயாற்கெடும்" என்றபடி தங்கள்செருக்குமொழியாலே இவ்வாறு அவர்கள் அழிந்தனரென்ற குறிப்பு. 'கைபிழைக்க' என்பதில், கை - தமிழுபசர்க்கம்; கைத்திறமையாலாடும் ஆட்டத்தில் அத்திறமின்றித்தோற்க என்றவாறுமாம். பொருகென - தொகுத்தல். (கஅக)

[திரௌபதியைப் பந்தயம்வைக்கும்படி சகுனி கூறுதல்.]

கஅஉ.—(இ - ள்.) (பின்னும் சகுனி தருமபுத்திரனைநோக்கி), 'மெய் வருபு திறத்தின் தும்மை - உண்மையிலே பழுதுந்தன்மையுள்ள உங்களை,

வெல்லும் ஆறு - வெல்லவேண்டியபடியாக[முறைமையாகவே], வேறலால்-(நாங்கள்) சயித்துவிட்டதனால், ஐவரும் - நீங்கள்ஐந்துபேரும், திருந்த எங்கள் அடிமையின்னர் ஆயினீர் - நன்றாக எங்களுக்கு அடிமைகளாய்விட்டீர்கள்; மை வரும் தட கண் வேள்வி மாது தன்னை ஒட்டி - மைதீட்டிய பெரிய கண்களையுடைய யாகபத்தினியாகிய திரௌபதியைப் பந்தயமாக வைத்து, நீ—, கைவரும் கவற்றின் இன்னம் எறிக - நன்றாகக்கைதேர்ந்த பாச்சிகையினால் இன்னமும் ஆடுவாயாக,' என்று கழறினன் - என்றுகூறினான்; (எ - று.)

கீழ்ப்பாண்டவர் தங்களையேவைத்துச் சூதாடுமாறு தூண்டியதுபோலவே, மிச்சமாய்நின்ற திரௌபதியையும் வைத்துச் சூதாடுமாறு சகுனி தருமனைத் தூண்டினனென்க. இச்செய்யுள் சகுனியின்வார்த்தையென்பதை, மேல் கஅஎ-ஆஞ் செய்யுளில்''சகுனிசொல்லை''என வருவதனாலு முணர்க. சூதாடுதற்குப் பந்தயப்பொருள்வைக்குமாறு சகுனியேகேட்பதாக வியாசபாரதத்திலும் வருகின்றது: இதுபற்றியே,கீழ் கஅ0 - ஆஞ் செய்யுளில். துரியோதனன் தானே கேளாமல் பாண்டவர்கள் தங்களையே பணையமாக வைக்குமாறு தருமனைக்கேட்கச் சகுனிக்குக்குறிப்பித்ததாகக் கூறியுள்ளார். இச்சூதுபோர்வென்றியை வென்றியன்றென மறுக்கமாட்டீரென்றற்கு, 'மெய்வருந்திறத்தினும்மை வெல்லுமாறுவேறலால்' என்றான். மெய் வரும் திறத்தின் என்பதற்கு - உண்மையானவழியிலேயே [சிறிதும் வஞ்சனையில்லாமலே] என்றும் கூறலாம்; அப்பொழுது, 'வேறலால்' என்பதனோடு இயையும். இகழ்ச்சிதோன்றவும், ரோஷமுண்டாகுமாறும், ஆசைதூண்டமுகஸ்துதியாகவும், 'கைவருங் கவற்றி னின்னமெறிக' என்றான். கழறுதல் - வன்மையாகக்கூறுதல். வேறல் - தொழிற்பெயர்; வெல் - பகுதி, தல் - விகுதி, பகுதிமுதல்நீண்டது - விகாரம், தகரம்றகரமானவிடத்து லகரம் கெட்டது - சந்தி. ஐவரும் ஆயினீர - முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி; 'ஐவிரும்' என்றிருப்பின், வழாநிலையாம்.\ அடிமையின்னர் - அடிமையினர்: னகரமெய் - விரித்தல்விகாரம்; இன்-சாரியை. (கஅஉ)

[இதுமுதல் நான்குகவிகள் - குளகம்; அதுகேட்டு விதுரன் மனம் பொறாமல் திருதராட்டிரனிடத்துச் சிலகூறுதல்.]

கஅங.—(இ - ள்.) அன்ன போதில் - (அவ்வாறுசகுனிகூறிய)அச்சமயத்தில், அருள் விதுரன் - அருளையுடையவனாகிய விதுரன்,—அந்தனை புகன்று எழா - குருடனான திருதராஷ்டிரனைப் பழிக்கும்படி எழுந்து, (அவனை நோக்கி),—நின் அபோதம் அன்றி - உனது அறிவின்மையால் (இவ்வாறான முறைகேடு நடக்கின்றதே) அல்லாமல், வேறு நிருபர் - (அறிவுள்ள) மற்றையரசர்கள், நினைப்பரோ - (இவ்வாறான அக்கிரமச்செயலை) நினைத்தலேனுஞ் செய்வார்களோ? [இவ்வாறானசெயலை நினைக்கவும்மாட்டார்கள் என்றபடி]; இன்ன நமக்கு போதுமோ - இத்தன்மையான செயல்கள்(குருகுலத்தாரான) நமக்கு அடுக்குமோ? இது இயற்கை அன்று என்று - 'இது (நமக்குச்) சிறிதும் தக்கதன்று' என்று, நீ சொன்ன போது - நீ (உன் மக்கட்கு)அறிவுகூறினால் அப்பொழுது,நேயம் மைந்தர்-(உன்னிடத்து)அன்புள்ள உனதுமக்கள் [துரியோதனாதியர்],சொன்ன சொல் மறுப்பரோ-(நீ) சொன்ன சொல்லைத் தடுத்து மாறுசெய்வார்களோ? (எ-று.)—தாம்-அசை.

இச்செய்யுளிலுள்ள 'விதுரன்'என்ற எழுவாய், மேல் கஅகூ-ஆஞ்செய்யுளில்வரும் 'பேசினன்' என்ற முற்றைக் கொண்டு முடியும். இதுவரையில் மனம்பொறுத்திருந்த விதுரன், மகாபதிவிரதையும் பாண்டவர்கட்கேயுரிய பத்தினியும் பட்டமகிஷியாய் அந்தப்புரத்திலேயிருக்குந்தன்மையளுமான திரௌபதியையும் பந்தயம்வைக்குமாறு சொன்ன சொல் தன்மனத்தை வருத்தவே, கோபமாக இவ்வாறு கூறத்தொடங்குவானாயினன். இவ்வளவு

அக்கிரமச்செயல்கள் நடக்கவும் திருதராட்டிரன் மாறுகூறாமல் வாளா விருந்தனனாதலால், தருமன்சூதாடுதற்கு முதற்காரணமான அத்திருதராட்டிரனையே விதுரன் பழித்துக்கூறத் தொடங்கினனென அறிக. இப்பொழுது விதுரன் பாண்டவர்க்குநேர்ந்த துன்பத்திற்கு மனமிரங்கிக் கூறுகின்றனனாதலால், அவனை 'அருள்விதுரன்' என்றார்.

அந்தன் - வடசொல். புகன்று — புகல: எச்சத்திரிபு. எழா - 'செய்யா' என்னும்வாய்பாட்டு உடன்பாட்டுஇறந்தகாலவினையெச்சம். ந + போதம் = அபோதம்: வடசொல். இன்ன - பலவின்பாற் குறிப்புவினையாலணையும் பெயர். விதுரன் - நீட்டல்விகாரம். (கஅங)

கஅச.—(இ - ள்.) இளைஞர் - (உனது)மைந்தர்கள், திருகும் நெஞ்சின் வஞ்சர் ஆகி-மாறுபாடுகொண்டமனத்திலே வஞ்சனைக்கருத்தையுடையவர்களாய், தீமை செய்த கால்-(பாண்டவர்கட்குப்)பொல்லாங்கு செய்தபொழுதில், உருகுகின்ற தாதை நீ - (அப்பாண்டவரிடத்து உண்மையன்புமிக்கு) உருகுபவன்போலப் பாவனைகாட்டுகிற பெரியதந்தையாகிய நீ, உடன்படுத்து இருப்பதோ - (அப்பொல்லாங்குக்குச்) சம்மதித்திருப்பது தகுதியோ? மிருகம் அன்று - (நீ) மிருகமுமல்லை; பறவை அன்று-பறவையுமல்லை; இரக்கம் இன்றி மேவும் நின் அருகு வந்து அணைந்தது - (மனிதனாயிருந்தும்) இரக்கமில்லாமலிருக்கிற உனது சமீபத்தில்(நாங்கள்)வந்துசேர்ந்திருப்பதற்குக் காரணம், எங்கள் அறிவு இலாமை ஆகுமே - எங்களது புத்தியில்லாமையேயாம் [உன்மீது குற்றஞ்சொல்வதிற் பயனில்லை யென்றபடி]; (எ - று.)

நீ இருதிறத்துப்புதல்வரிடத்திலும் பட்சபாதமில்லாமல் ஒருநிகராக இருந்து நியாயப்படி செல்லவேண்டியிருக்க, அவ்வாறுநடவாமல், பகுத்தறிவில்லாத மிருகபட்சிகள்போலச் சிறிதும்விவேகமின்றி இரக்கங்கொள்ளாதிருப்பதனால், நாங்கள் உன்னைச் சேர்ந்திருப்பது எங்களது அறிவீனமேயாகும் என்று தம்மைப்பழித்துக்கூறும்முகத்தால் விதுரன் திருதராட்டிரனைப் பழித்தனனென்க: இச்செய்யுளினீற்றடி - ஒருவரது நிந்தையால் மற்றொருவரது நிந்தையை வெளிப்படுத்துகிற வஞ்சப்பழிப்பணியின்பாற்படும். மிருகம்அன்று பறவைஅன்று என்பதற்கு - (இவ்வாறு இரக்கங்கொள்ளாமலிருப்பது) மிருகங்களினியற்கையுமன்று, பட்சிகளினியற்கையுமன்று [மிருகபக்ஷிகளும் இரக்கங்கொள்ளுகின்றன] எனப் பொருள்கூறுவாருமுளர். செய்தகால் - பெயரெச்சத்தொடர்; ஆதலின், வலி இயல்பு. பறப்பது, பறவை; ஐ - வினைமுதற்பொருள்விகுதி. ஓகாரம்-எதிர்மறை. மிருகம் - வடசொல். 'எங்கள்' என்ற தன்மைப்பன்மை, வீடுமன்முதலிய நல்லோர் பலரை உளப்படுத்தியது. (கஅச)

கஅரு.—(இ - ள்.) பின் பிறந்த தம்பி மைந்தர் பீடு அழிந்து இரங்க - பின்னேபிறந்ததம்பியினது புதல்வர்கள் [பாண்டவர்கள்] (முழுவதுந்தோற்றதனால்) பெருமைகெட்டுவருந்தும்படி, முன் பிறந்த தமையன் மைந்தர் மொய்ம்பினால் அடர்ப்பரோ - முன்னேபிறந்த தமையனதுபுதல்வர்கள் [துரியோதனாதியர்] (வஞ்சகத்தினால்) வலியத் துன்பஞ்செய்துவருத்துவார்களோ?[இவ்வாறுவருத்துவது முன்புஎங்குங்கண்டதில்லையென்றபடி]; அன்பு இறந்தது எனும்-(உனது தம்பியின்குமாரர்களிடத்து உனக்கு) அன்பு நீங்கிற்றாயினும், நீதி அழிய - நியாயம் தவறும்படி, நீ நடத்தினால் - (நியாயவழியில் நடக்கவேண்டிய) நீயே (இவ்வாறு முறைகேடாக) நடத்தினால், மண்ணில் - இவ்வுலகத்தில், இன்னும் எண் இல் காலம் - இனிமேல் அளவில்லாத பலகாலங்களிலே, என் பிறந்து முடியும் - (இன்னும்) என்னென்னதீங்குகள்தாம் உண்டாகுமோ! (எ - று.)

பாண்டவரிடத்து அன்புகொண்டு இப்பொழுதுநேரும் அக்கிரமச்செயலை விலக்கவேண்டுமென்று(கீழ்க்கவியில்)திருதராட்டிரனுக்குக்கூறிய

விதுரன், இச்செய்யுளால், அவர்களிடத்து அன்பில்லாவிடினும் நீதிமுறையையாவது பார்க்கவேண்டுமெனக் கூறுகின்றனனென அறிக. நீதிமுறை தவறாது நடக்கவேண்டிய உன்னாலேயே இவ்வளவுகாலத்திற்குள்ளாகவே இவ்வகைப்பெருந்தீங்குகள் உண்டாகுமானால், பலகற்பகாலங்கழியவேண்டிய இவ்வுலகத்தில் இனி என்னதீங்குதான் உண்டாகமாட்டாது! எனத் திருதராஷ்டிரனது கொடுமையை அவனுக்கு எடுத்துக்காட்டியவாறு. தருமம் இரண்டுகால்களையூன்றிநிற்கிற இந்தத்துவாபரயுகத்திலேயே நீ இவ்வாறு நீதியழியநடத்தினால் இனிவருங்கலிகாலத்தில் என்னதான் நிகழுமோ வென்றவாறுமாம். இனி, ஈற்றடிக்கு-இவ்வாறு நீ நடத்துவதனால் உலகமழியுமளவும் உனக்கு அழியாத மிக்கஅபகீர்த்தி உண்டாகி நிலைநிற்குமெனக் கருத்துக்கூறலுமாம். 'பின்பிறந்த', 'முன்பிறந்த' என்பவை - இயற்கையடைமொழிகள்; இனம்விலக்கவந்தனவல்ல. (கஅ௫)

கஅ௬.— (இ - ள்.) பெரும - பெருமையுடையவனே! மருமம் மிஞ்ச - நெஞ்சிலே (பகைமை) அதிகப்பட, இவனை வென்ற வஞ்சம் அன்றி - இந்தருமபுத்திரனைச் சயித்த மோசத்தோடு நில்லாமல், இவன் தருவஞ்சிதனை இயைந்து பொருதும் என்கை - இவனது தருமபத்தினியையும் (பந்தயமாக)உடன்பட்டு 'சூதாடுவோம்' என்றுசொல்லுதல், தருமமோ - நீதியாகுமோ? கருமம் அன்று - (இது) செய்யத்தக்க காரியமன்று; உனக்கு நாசகாலம் வந்தது ஆகலின் - உனக்குக் கேடுகாலம் கிட்டிவிட்டதனால், தஞ்சம் இன்றி நெஞ்சு பேரும் - பெருந்தன்மை யில்லாமல் (உனது)மனம் மாறுபடுகின்றது, என்று—, பேசினான் - பேசிமுடித்தான்; (எ - று.)

துரியோதனனதியர்செய்வனவெல்லாம் திருதராஷ்டிரனது உடன்பாடு பெற்றே யாதலால்,விதுரன் திருதராஷ்டிரனையே அக்கிரமஞ்செய்பவனாக இங்குக் கூறுகின்றான். "முற்பகல்கண்டான்பிறன்கேடு தன்கேடு,பிற்பகற் கண்டுவிடும்" என்றபடி திருதராஷ்டிரனைச்சார்ந்தவர்கள் பாண்டவர்கட்குச் செய்யுந் தீமைகளெல்லாம் உடனே செய்பவர்கட்கே தீமையாய்முடியும் என்பது, விதுரனது உட்கோள். "விதியேமதியாய்விடும்," "கேடுவரும் பின்னே மதிகெட்டுவரும்முன்னே", "விநாஶகாலே விபரீதபுத்தி:" என்பன - இச்செய்யுளின் பின்னிரண்டடிகளுக்கு மேற்கோளாகத்தக்கவை. மர்மம்-உயிர்நிலை; வடசொல்: இது-இங்கு.மனமென்ற பொருளில் வந்தது. இனி, மருமம்மிஞ்ச என்பதற்கு - மிக்கஇரகசியமாக எனினுமாம். மற்று - அசை. வஞ்சி-ஒருகொடி; இதனை மாதர்கட்கு உவமைகூறுதல், மரபு: மெல்லிதாய்துவள்கிறதுசியும் வடிவில் உவமம். இங்கு வஞ்சி - உவமையாகுபெயர். பொருதும்-தன்மைப்பன்மைமுற்று. நாஶகாலம்-வடசொற்றொடர். (கஅ௬)

[சகுனியின்விருப்பத்தின்படியே தருமன் சூதாடுதல்.]

கஅஎ.—(இ - ள்.) விதுரன்—,நொந்து - மனம்வருந்தி,நீதி கூற-(இவ்வாறு) நீதிமொழிகளை யெடுத்துச் சொல்லவும்,—விழி இலானும் - பிறவிக்குருடனான திருதராஷ்டிரனும்,'விழி இலாமை அன்றியே-கண்ணில்லாமையேயன்றி, வெதிர் எனும்கொல் - செவிடும் ஆவனோ!' என்னும்ஆறு - என்று (தன்னைச்) சொல்லும்படி, வைகினான் - (ஒன்றும்பேசாது) இருந்துவிட்டான்; (இங்ஙனமிருக்கையில்),—சதிர் புரிந்த சகுனி சொல்லை-சாதுரியமாகச் சூதாடிவந்த சகுனியினது வார்த்தையை, தருமனும்—, எதிர் புரிந்து - எதிரிலே உடன்பட்டு,—அதிர வஞ்சம் முதிர வந்த - (கண்டவரெல்லாரும்) நடுங்கும்படி (தன்னிடத்தில்) வஞ்சனை அதிகப்பட வந்தவனாகிய, அருள் இலானொடு - இரக்கமில்லாதவனான அச்சகுனியோடு,ஆடினான் - (மீண்டும்) சூதாடினான்; (எ - று.)

விதுரன் இடித்துக்கட்டுரைகூறவும் திருதராஷ்டிரன் சிறிதும் செவிகொடாதிருந்ததனால், கண்ணில்லாமையோடு செவியுமில்லாதவனென

வருணித்துக்கூறுமா றிருந்தது அவன்நிலைமை யென்பது,முன்னிரண்டடி யின் கருத்து. வெதிர் - பதிரன் என்ற வடசொல்லின் விகாரம்; பதிரன், பெதிரன், வெதிரன், வெதிர் எனக் காண்க: வெதிரனது தன்மை, வெதிரெனப்பட்டது. அன்றியும், உறுப்புக்குறையுற்றோரை அஃறிணையாற்கூறலு முண்டு. 'வெதிரனுங்கொல்' என்ற பாடம் சிறக்கும்; வெதிரன் - செவிடன்: உம்மை - இறந்ததுதழுவியஎச்சம். 'பெதிரனுங்கொ லென்னுமாறு பெரியதாதை மைந்தன்' என்று பாடமோதுவாரு முளர்; பொருள், வெளிப்படை. சதிர் புரிந்த - சதுரப்பாடாகப் பேசிய எனினுமாம். அருளிலான் - இரக்கமற்ற பெரும்பாவி யென்றபடி. (கஅஎ)

[அவ்வாட்டத்திலும் தருமன் தோற்றல்.]

கஅஅ.—(இ - ள்.) மாயம் உற்ற கவறும் - மாயத்தன்மைபொருந்திய பாச்சிகையும், தானும் நிகர் பிடித்தது என்ன - தானும் தனக்குச்சமானமான துணைவனைத் தேடிப்பிடித்த தென்னும்படி, காயம் முற்றும் வஞ்சமே கலந்தது அன்ன கள்வன்மேல் நேயம் உற்று நின்று - (தனது) உடம்புமுழுதும் வஞ்சகமே நிறைந்திருந்தாற் போன்ற கள்ளத்தன்மையுடையோனாகிய சகுனியினிடத்தில் அன்புநிறைந்துநின்று,—அந்த மாமன் வல்லபத்திலே - அந்தச்சகுனிமாமனது சாமர்த்தியத்தால், தாயம் உற்று - நல்லபந்தயம் அமையுமாறு உருண்டு, தருமனை இடம் கொடாது சதித்தது - தருமபுத்திரன்வெல்லும்படி சிறிதும்இடங்கொடாமல் அத்தருமனை முற்றிலும்மோசஞ்செய்து கெடுத்துவிட்டது; (எ - று.)

சகுனிசொற்படியே தருமபுத்திரன் திரௌபதியைப் பந்தயம்வைத்துத் தோற்றா னென்பது,கருத்து. இச்செய்தியை வெளிப்படையாகக் கூறுதற்கு வாய்கூசிக் கவி இவ்வாறு சூதின்மேலேற்றி மறைபொருளாகக்கூறிப் பெறவைத்தன ரென அறிக. சொல்லவேண்டிய விஷயத்தை நேரேசொல்லாது இவ்வாறு சுற்றுவழியாற் கூறிப் பெறவைப்பது, பிறிதினவிற்சியணியின்பாற்படும். பாண்டவர்களை எவ்வழியினால் வெல்லலாமென்று ஆராய்ந்து விரும்பிச சகுனிமேற்கொண்ட சூதானது, தானும்'எவரைச்சேர்ந்திருந்தாற் பிறர்க்குப் பெருந்தீங்குகளைச் சிறிதுந்தடையின்றிச் செய்து மகிழ்ச்சிகொண்டாடலாம்?'என்று வெகுகாலம்தேர்ந்து அச்சகுனியையே தனக்குத்தக்கதுணைவனென்று நிச்சயித்து அவனோடு உரிமைகொண்டதென்னுமாறிருந்ததென்பது, 'தானும்நிகர்பிடித்த தென்ன' என்பதன் கருத்து. தானும் என்ற உம்மை - சகுனி தனக்குத்தக்கதென்று நாடித் தன்னைமேற்கொண்டாற்போலவே யென்ற பொருளைத் தந்ததனால், இறந்ததுதழுவிய எச்சமாம். காயமுற்றும் வஞ்சமே கலந்தன்ன கள்வன்—"துர்ச்சனருக்கு அங்கமுழுதும் விடமேயாம்." (கஅஅ)

[தருமபுத்திரன் எல்லாப்பொருளையும் இழந்தபின்பும் சிறிதுங்கலங்காமை.]

கஅகூ.—(இ - ள்.) மற்றவன் - பாண்டவர்க்கு எதிரியாகிய சகுனி, இன்ன தாயம் வேண்டும் என்று எறிந்த போது - '(இப்பொழுது) இந்தப் பந்தயம் விழவேண்டும்' என்று (பாசசிகையை) உருட்டியாடியபோது, சொன்ன தாயமே புரண்டு சோர்வு இலாமல் வருதலின் - (அச்சகுனி) கருதிக்கூறிய பந்தயமாகவே உருண்டு தவறாமல் விழுந்ததனால், தரணி மன்னன் - இவ்வுலகத்துக்குஅரசனாகிய தருமபுத்திரன், தன்னது ஆய அரசு வாழ்வு நல்கினன் - தனக்குஉரிமையுள்ள அரசாட்சியையும் செல்வவாழ்க்கையையும்(கீழ்க்கூறியவந்தபடியே தோற்று)இழந்துவிட்டான்;அன்னது ஆய போதும் - (எல்லாவற்றையும்இழந்த) அந்நிலைமை (தனக்கு) நேர்ந்த அக்காலத்திலும், அசஞ்சலன்-உறுதியான மனமுடையவனாகிய தருமபுத்திரன், நெஞ்சு அசைந்திலான் - சிறிதும் மனங்கலங்காதிருந்தான்; (எ - று.)

இதனால், எல்லாம் வினைப்பயனென்றே கருதிச் சுகதுக்கங்களை ஒருநிகராகப் பாவிப்பவன் தருமபுத்திரனென்பதும் போதரும்; ("விலங்கிவில் லுமிழும்பூணன் விழுச்சிறைப்பட்டபோழ்தும், அலங்கலந்தாரினான் வந்தருஞ்சிறைவிடுத்தபோழ்தும்,புலம்பலுமகிழ்வுநெஞ்சிற்பொலிதலு மின்றிப் பொன்னார், தலங்கலந்துயர்ந்ததோளா னூழ்வினையென்றுவிட்டான்" என்ற சிந்தாமணிச் செய்யுளோடும், "வேரிக்கமழ்தாரரசன் விடுகென்றபோழ்தும், தாரித்தலாகாவகையாற் கொலைசூழ்ந்தபின்னும், பூரித்தல்வாடலியற்றாற்பொலிவின்றி நின்றான், பாரித்ததெல்லாம்வினையின்பயனென்னவல்லான்" என்ற குண்டலகேசிச்செய்யுளோடும் இச்செய்யுளை ஒருசார் ஒப்பிடுக.) கீழ்ப் பொதுவாகத் தருமபுத்திரன் தோற்றானென்று கூறிவந்து, அதன்காரணத்தை இச்செய்யுளில் விவரித்தார். அசஞ்சலன் - வடசொல். (கஅகூ)

[தருமன் முழுவதுந்தோற்றதைக் கண்டு சபையிலுள்ளோர் வருந்துதல்.]

ககூ0.—(இ - ள்.) முரசினை உயர்த்த கோமான்-முரசக்கொடியை உயரவெடுத்தவனான தருமபுத்திரன், மொழிந்தன முழுதும் தோற்று - (பந்தயமாக) எடுத்துக்கூறிய எல்லாப்பொருள்களையும் (சூதில்) இழந்து, பரவுவது ஒன்றும் இல்லா பான்மையோடு இருந்த காலை - (மறுபடியும்) பந்தயமாகக் குறித்தற்கு உரிய பொருள் ஒன்றுமில்லாத தன்மையோடு இருந்த சமயத்திலே,—அரசு அவை இருந்தோர்-அவ்விராஜசபையில் வந்திருந்தவர்கள்,—தம்மில் - தங்களுக்குள், அருளினால் - (தருமபுத்திரன்மீதுள்ள) இரக்கத்தினால், விரை செறி அலங்கல் சோர - (தாம்அணிந்துள்ள) வாசனைநெருங்கிய மாலைகள் தளர்ந்துவிழும்படி, மெய் குலைந்து-உடல்நடுங்கி,உள்ளம் வெம்பி-மனம்தவித்து, அழிந்து நொந்தார் - மிகவும் வருந்தினார்கள்; (எ - று.)

மெய்குலைதலும், மனம்வெம்புதலும் - சோகக்குறிகள். பரவுதல் - சொல்லுதல். இரண்டாம்அடி - பந்தயம்வைத்தற்குஏதேனுமிருந்தால் தருமன் இன்னுஞ் சூதாடுவனென்பது தோன்ற நின்றது; கீழ்ச்செய்யுளின்ஈற்றடியும் இக்கருத்தை விளக்குவதென்னலாம்.

இதுமுதல் இருபத்தொருகவிகள் - இச்சருக்கத்தின் இரண்டாங்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (ககூ0)

[இதுமுதல் மூன்றுகவிகள் - சபையிலுள்ளவர்கள் இரங்கிக்கூறுவன.]

ககூக.—(இ - ள்.) (சபையிலிருந்த அரசர்களிற் சிலர்),—'குரு மரபு உடைய வேந்தன் - குருவம்சத்திற் பிறந்த துரியோதனராசன். ஓ கொடியன் கொடியன் - மிகவும் கொடியவன்! கொடியவன்!!' என்பார் - என்று சொல்வார்கள்; (சிலர்), மருமகன் உயிருக்கு இந்த மாமன் மறலியோ - 'மருமகனாகிய துரியோதனனது உயிர்க்கு இந்தச்சகுனி யமன்தானோ!' என்பார்—; (சிலர்), தருமன் இத்தனை நாள் செய்த தருமமும் பொய்யோ - 'தருமபுத்திரன் இவ்வளவுகாலமாகச்செய்துவந்த தருமமெல்லாம் பொய்த்துவிடுமோ!' என்பார்—; (சிலர்), உருமினும் கொடிய வீமன் உருத்து இனி எழுமோ - 'இடியைப்பார்க்கிலுங் கொடுமையுடையவனாகிய வீமசேனன் கோபங்கொண்டு இனி(ப் போர்க்குப்)புறப்படுவான் போலும்,'என்பார்—.

'குருமரபுடையவேந்தன்' என்றதனால், தூய்மையான அக்குலத்திற் பிறந்தவரொருவரும் இவ்வாறு கொடுமையுடனிருத்தற்குக் காரணமில்லையே யென்று குறித்தவாறும். 'ஓ கொடியன்' என்னுமிடத்தில், ஓகாரம் - கொடுமையின்மிகுதியைவிளக்குதலால்,இழிவுசிறப்பு.'கொடியன்கொடியன்' என்ற அடுக்கு - இழிப்புப்பற்றியது. மருமகன் - உடன்பிறந்தவள்மகன். சகுனி இவ்வாறு மாயச்சூதாடித் தருமனைத் தோற்கச்செய்தது துரியோதனனது நாசத்துக்குக் காரணமாகுமென்றுகருதி,'மருமகனுயிருக்கு இந்த மாமன் மறலியோ' என்றார்கள். மறல் = மறம்; கொடுமை: அதனையுடை

யவ னென யமனுக்குக் காரணக்குறி. ஓகாரம் - தற்குறிப்பேற்றவுருபு. காலக்கொடுமையினால் இப்பொழுது தருமபுத்திரனது தருமம் பொய்த்தது போலத் தோன்றினும், விரைவில் தவறாதுபலிக்கு மென்பது, மூன்றாமடியின் கருத்து. உம்மை - உயர்வுசிறப்பு. ஓகாரம் - எதிர்மறையோடு இரக்கப்பொருளது. இனி, தருமனுக்கு ஒரு நற்பயனும் விளையாது பழுதுபட்டதனால் அத்தருமன்செய்தனவாகக் கூறிய தருமங்களும் பொய்தானோ; உண்மையாகச்செய்திருந்தால் பயனளித்தலில்தவறமாட்டாவன்றோ! எனக் கருத்துக்கூறுவாரு முளர். பொய்யோ - (இங்ஙனம்நன்மைவிளையாதுதீமை விளைத்துப்) பொய்யாகக்கடவதோ? எனினுமாம்; அங்ஙனமாகக்கடவதன்றே யென்றவாறு. இதுவரையில் தருமனுடையசொற்குக் கட்டுப்பட்டு அடங்கியிருந்த வீமன் இப்பேரவமானத்திற்குச் சிறிதும்மனம்பொறாது சினங்கொண்டு போர்க்கு எழக்கூடு மென்பது, நான்காமடியின் கருத்து. பலகூறி வருந்துகிற அரசர்கட்கு ஈற்றடி ஒருசமாதானமாகு மென்க: இவ்வாறே அடுத்த செய்யுளிலுங் காண்க. வீமன் எழும் - செய்யுமென்முற்று, ஆண்பாலுக்கு வந்தது; [நன் - வினை - உக.] எழுமோ, ஓகாரம் - ஊகித்தற்பொருளது. (௧௯௧)

௧௯௨.—(இ - ள்.) (சிலர்),—'பாந்தள் ஏறு உயர்த்த வேந்தன் - சிறந்த பாம்பின்வடிவமெழுதிய கொடியை உயரவெடுத்தவனாகிய துரியோதனன், உறவும் பார்த்திலன்-(பாண்டவர்கட்கும் தனக்கும் உள்ள) உறவுமுறையையும் சிறிதும் எண்ணினானில்லை,' என்பார்—; (சிலர்), அறமும் தேசும் மனுநெறி வழக்கும் மாய்ந்த - 'தருமமும் நன்குமதிப்பும் மநுதர்மசாஸ்திரத்திற் கூறிய நெறிப்படியே நடத்தலும் (தருமனுக்குப்) பயன்தாராதொழிந்தன,' என்பார்—; (அவற்றைக்கேட்ட சிலர்), 'பூ தழல் பிறந்த பாவை புண்ணியம் பொய்யாது-அழகிய யாகாக்கினியிற் பிறந்தவளாகிய சித்திரப்பிரதிமை போன்ற (அழகையுடைய) திரௌபதியினது பதிவிரதாதருமம் தவறாது [எதிரிகளை அழித்தேவிடும்],' என்பார்—; (சிலர்), 'தேவர்கோன் மதலை - தேவேந்திரனதுகுமாரனாகிய அருச்சுனன், இரு கண் சேந்தனன்-(கோபத்தால் தனது) இரண்டுகண்களும் சிவக்கப்பெற்றான்: பாரீர் - (இதனைப்) பாருங்கள்,' என்பார்—; (எ - று.)

துரியோதனன் தனதுமாமனாகியசகுனியைக்கொண்டு மாயச்சூதினால் தன்தமையனான தருமபுத்திரனது பொருள்களெல்லாவற்றையுங் கவர்ந்துகொண்டதுமன்றி, அப்பாண்டவர்களை மனைவியுடனே தனக்கு அடிமையாகவுஞ் செய்தனனாதலால், 'பாந்தளேறுயர்த்தவீரன்பார்த்திலன் உறவும்' என்றார். இனி, இரண்டாமடிக்கு-அறமும் தேசும் மனுநெறிவழக்குமுடைய பாண்டவர்கட்கு இவ்வாறு பெருந்தீங்கு சம்பவித்ததனால், இனி உலகத்தில் அறம்முதலிய நற்பொருள்கள் நிலைநில்லாது அழிந்தேவிடு மெனக் கருத்துக் கூறலுமாம்; அறம்முதலியன துரியோதனனிடத்துச் சிறிதும் இல்லையாயின வென்றுங் கருத்துக்கொள்ளலாம்.

திரௌபதியை 'பூந்தழற்பிறந்தபாவை' என்றதன் விவரம்:—குருகுலகுமாரர்கட்கு வில்லாசிரியனாகிய துரோணன் தன்மாணாக்கனான அருச்சுனனைக்கொண்டு பாஞ்சாலதேசத்தரசனான துருபதனைப் பேரவமானப்படுத்த, அதனால் துரோணன்மீது மிக்கவைரங்கொண்ட அத்துருபதன் அவனைக் கொல்லுதற்கு ஒருமகனையும், அருச்சுனனது திறமையைக் கண்டு வியந்ததனால் அவனுக்குமணஞ்செய்வித்தற்கு ஒருமகளையும் பெற விரும்பியவனாய், யாசன் உபயாசன் என்னும் முனிவர்களைக்கொண்டு புத்திரகாமயாகஞ் செய்விக்க, அவ்வேள்விப்பயனால் அவ்வோமத்தீயினின்று ஒருகுமாரனும் ஒருகுமாரியும் தோன்றினர்; அக்குமாரியே 'திரௌபதி' எனப்படுவள். 'பூந்தழற்பிறந்தபாவை' என்றது - கருப்பத்திற் பிறவாதவளெனத் திரௌ

பதியினது உற்பத்திச்சிறப்பை யுணர்த்தும். யாகாக்கினியாதலின், 'பூக் தழல்' என்றார்.

பார்த்திலன் - எதிர்மறையிறந்தகாலமுற்று. மாய்ந்த - 'அன்' சாரியைபெறாத பலவின்பால்வினைமுற்று. மநு - அவனாற்செய்யப்பட்ட நூலுக்குக் கருத்தாவாகுபெயர்: மநுதர்மசாஸ்திரம். தேவர்கோன் இருகண் சேந்தனன்—"உயர்திணைதொடர்ந்த பொருண்முதலாறும், அதனொடுசார்த்தி னத்திணைமுடிபின" என்பது,விதி.சேந்தனன்-சிவந்தனனென்பதன்மரூஉ.

கககூ.—(இ - ள்.) (சிலர்),—'பழி உடை தந்தை ஒன்றும் பகர்கலாது இருக்கும் - 'பழியையுடைய தந்தையாகிய திருதராட்டிரன் (இவ்வாறு முறைகேடுநிகழவும் தனதுமகனாகிய துரியோதனனைத் தடுத்து) ஒன்றும் பேசாமல் இருக்கிறான் (இது என்னகொடுமை!),' என்பார்—; (அதுகேட்ட சிலர்), விழி உடையவரை அன்றோ மேன்மையோர் வெறுப்பது - 'கண்களையுடையவர்களையல்லவோ மேன்மக்கள் வெறுத்துக்கூறுவது [கண்ணில்லாக்குருடன்மீது குறைகூறுவதிற் பயனில்லையே]', என்பார்—; (சிலர்), 'இவனால் - (இக்கொடுமைக்கு இயைந்துநின்ற) இத்திருதராட்டிரனால், மைந்தர் அரும் பெருஞ் செல்வம் - (இவனது) மக்களான துரியோதனாதியரது (பெறுதற்கு) அரிய பெருஞ்செல்வம், அழியுமே - அழிந்தேவிடும்,' என்பார்—; (சிலர்), 'இவன் புரிந்தது - இந்தத்திருதராஷ்டிரன் செய்தது, வழி வழி ஆக நிற்கும் வசை - தலைமுறைதலைமுறையாக[என்றும்அழியாது] தொடர்ந்து நிலைநிற்கும் அபகீர்த்தியாகும்,' என்பார்—; (எ - று.)

இவை, தனதுமக்கள்செய்தமுறைகேட்டைத் தடுக்காதுநின்ற திருதராஷ்டிரன்மேல் அவையிலுள்ளோர் குற்றங்கூறியவாறும். 'விழியுடையவர்' என்றது,ஊனக்கண்ணோடு ஞானக்கண்ணையும் பெற்றிருப்பவரென்ற பொருளைக் காட்டுமென்னலாம். மேன்மையோர் வெறுப்பது - தொழிற்பெயர் வினைமுற்றுத்தன்மையையடைந்து பயனிலையாய்வந்தது; இதனை 'பாவேப்ர யோகம்' என்பர் வடநூலார். அழியுமே,ஏகாரம்-தேற்றம்; இனி,கெட்டுவிடுமே! எனில், இரக்கப்பொருளது. இவன்புரிந்ததாகிய வசை வழிவழியாக நிற்கும் என இயைத்துப் பொருள்கூறினுமாம்; இவன் (இங்ஙனம்) புரிந்ததனால் வசை வழிவழியாகநிற்கும் என்றலும் ஏற்கும். (ககூ)

[துரியோதனன் வீடுமனைநோக்கிக் கூறத்தொடங்குதல்.]

ககூச.—(இ - ள்.) இன்னன - இவைபோன்ற பலவார்த்தைகளை, தரணி வேந்தர் - (அச்சபையில்வந்திருந்த)நிலவுலகத்தையாளும் அரசர்கள், இருந்த உழி இருந்து கூற - தாம் தாம் இருந்தவிடங்களில் இருந்தபடியே சொல்லிக்கொண்டிருக்க,— மன்னனும் - துரியோதனராசனும், தம்பிதானும் - அவன்தம்பியான துச்சாதனனும், மாமனும் - (அவர்கட்கு) மாமனாகிய சகுனியும்,மாறு வண்மை கன்னனும்-நீங்காதஈகைத்தன்மையையுடைய கர்ணனும், (ஆகிய துஷ்டசதுஷ்டர்கள் ஒருங்குகூடி), தம்மின் எண்ணி - தமக்குள் ஆலோசித்து,—(பிறகு), பன்னகதுவசன் - (அவர்களுள் ஒருவனாகிய)பாம்புக்கொடியையுடையவனான துரியோதனன்,—கேட்டோர் பலரும் மெய் பனிக்க - கேட்டவர்களெல்லாரும் உடம்புநடுங்கும்படி, கங்கை மாமகனை நோக்கி-கங்கையின்குமாரனாகிய வீடுமனைப் பார்த்து, சொல்வான்- (சிலவார்த்தை)கூறுவானாயினன்;(எ-று.)—அவற்றை,அடுத்தகவியிற்காண்க.

இங்ஙனம் அந்தந்தஅரசர்கள் தாம்தாம்இருந்தஇடத்தி லிருந்தபடி தமக்குட் சொல்லிக்கொண்டிருந்தார்களே யன்றி எவரும் எழுந்து துரியோதனனுக்குமாறாக ஒன்றுஞ்செய்யமாட்டிற்றில ரென்பது, முதலடியில் விளங்கிற்று. 'எண்ணி' என்னும் வினையெச்சம் துரியோதனன்முதலிய நால்வரது வினையாயினும்,அவர்களுள்ஒருவனான துரியோதனனது வினையாகிய 'சொல்வான்' என்பதைக் கொண்டுமுடிந்தது;இவ்வகைமுடிபை இலக்கியங்

களிற்காணலாம்: அன்றி, எண்ணி - எண்ண என எச்சத்திரிபுமாம். பங்க கம் என்றவடசொல், பத் ந கம் என்று பிரிந்து - கால்களினால் நடவாதது [மார்பினால் ஊர்ந்துசெல்வது] என்றும், பங்கம் கம் என்று பிரிந்து - வளை ந்துசெல்வது என்றும் காரணப்பொருள்படும். (௧௧௪)

[துரியோதனனது செருக்குமொழி.]

௧௧௫.—(இ - ள்.) 'எண்ணின்-ஆலோசிக்குமிடத்து;—தண்ணிய தரு மன் செய்த பாவமோ - மிக்கஎளிமையையுடைய தருமபுத்திரன் (முற்பிற ப்பிற்செய்த) தீவினையோ! (அன்றி), சகுனி செய்த புண்ணியம் நெறியோ - சகுனி (பூர்வஜந்மத்திற்)செய்த நல்வினைப்பயன்தானோ! (அல்லது), அந்த பொதுமகள் யாகசாலை நண்ணிய தவறோ-(ஐவர்க்கும்)பொதுவான மனைவி யாகிய அந்தத்திரௌபதி (தருமபத்தினியாக) யாகசாலையிற் சென்றிரு ந்த குற்றந்தானோ! (அல்லாமல்), மற்றை நால்வரும் தகைமை கூர எண்ணிய மதியோ - (தருமனொழிந்த வீமன்முதலிய) மற்றைத் தம்பியர் நால்வரும் பெருமிதம் மிகுதியாகத்தோன்ற(த் தங்களை)மதித்த எண்ணந்தானோ! இங் ஙனம் விளைந்தது - இவ்வாறு (முற்றுந்தோற்கும்படி) பலித்துவிட்டது!' என்றான் - என்று (துரியோதனன் தனதுவெற்றிதோன்றச் செருக்குக்கொ ண்டு) கூறினான்; (எ - று.)

ஓகாரங்கள் - விகற்பப்பொருளன. தண்ணிய தருமன் - தண்மையை [குளிர்ந்தஅருளை]யுடைய தருமன் எனினுமாம். தருமபுத்திரன்செய்த ராஜ சூயயாகத்திற்குத் தான் சென்றபோது, மயனாற்சமைக்கப்பட்ட பளிக்கு மண்டபத்தில் தடுமாறிய தன்னை, திரௌபதியும் வீமன்முதலிய நால்வரும் சிரித்துப்பரிகசித்தது தன்மனத்தி லுறுத்த, துரியோதனன் அதுகாரணமாக வே இப்படிசூதாடிவெல்லுமாறு ஆலோசித்தனனாதலால், திரௌபதியையும் வீமன்முதலிய நால்வரையும் இவ்வாறு இகழ்ந்துகூறின னென்க. திரௌ பதி பாண்டவரைவர்க்கும் உரிய மனைவியா யிருப்பதுகொண்டு, அவளை, வேசையென்று பொருள்படுகின்ற 'பொதுமகள்' என்ற பெயரினால் இழித் துக்கூறினான். (௧௧௫)

[வீடுமன் நீதிகூற, கேளாமல் துரியோதனன் கோபம்மிகுதல்.]

௧௧௬.—(இ - ள்.) தலைவன் - துரியோதனராசன், தகா மொழி கூற - (இவ்வாறு)தகாதவார்த்தைகளை யெடுத்துச்சொல்ல, தவத்தினால் உயர் ந்த கோவும் - தவத்தினாற்சிறந்த வீடுமனும், 'நகா - பரிகசித்துச்சிரித்து, நம்மில் நாம் புன்மை கூறல் - நமக்குள் நாமே (ஒருத்தர்மேல் ஒருத்தர்) இழிவாகச்சொல்வது, மரபு இயற்கை அன்று - (நமது)குலத்திற்குத் தகுதி யன்று; நிகழ்ந்த செற்றம் இனி மிகாது விடுக - இப்பொழுதுஉண்டான கோ பத்தை இனி மேலும்வளராதபடி விட்டிடுவாயாக', என - என்று (நன்மதி) சொல்லவும்,—போதம் இல்லான் - அறிவில்லாதவனாகிய துரியோதனன், செவியில் சற்றும் புகாது - (அவ்வார்த்தைகள் தனது) காதுகளிற் சிறிதும் நுழையாமல், உளம் வெகுளி கூர புரிந்தனன் - மனத்திற் கோபத்தை மிகுதியாகக்கொண்டான்; (எ - று.)

பாண்டவர்களும் நமதுகுலத்தைச்சேர்ந்தவராதலின், அவர்களை இழித் துக்கூறுதல் தகுதியன்றென்பது, இரண்டாமடியின் கருத்து. வீடுமனை 'தவத்தினாலுயர்ந்தகோ' என்றது, இளமையிலேயே தான் 'மணந்துகொள் வதில்லை' என்றும், 'முடிசூடுவதில்லை' என்றும் பிரதிஜ்ஞைசெய்து ஒழித்தற் கரியமண்ணாசைபெண்ணாசைகளை யொழித்துத் தனதுஆயுளளவும் பிரமசரி யத்தையே மேற்கொண்டிருப்பதனாலென்க. நகா கூறல் என இயையும்; நகா என என்றஇயைத்துப் பொருள்கூறலுமொன்று. மூத்தோர்கூறிய சொல்லுக்குச் செவிகொடாததனால், துரியோதனனை 'போதமில்லான்' என்றார். (௧௧௬)

[இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்; துரியோதனன் விதுரனை நோக்கிக் கூறுவன.]

௧௬௭.—(இ-ள்.)(பிறகு),—அரம் கடி சமரம் வேலான் அரத்தினால் அராவிக் கூர்செய்யப்பட்ட போர்க்குஉரிய வேலாயுதத்தையுடையவனாகிய துரியோதனன்,—இரங்கி நின்று உருகும் நெஞ்சின் தன் இளையபிதாவை நோக்கி - (கீழ்நடந்த செயலுக்காக) இரக்கங்கொண்டு உருகுகின்ற மனத்தையுடையவனாகிய தனதுசிறியதந்தையை [விதுரனை]ப் பார்த்து,— அழல் பொழி உருமின் சொல்வான் - நெருப்பைக்கக்குகின்ற இடிபோல (மிகக்கொடுமையாக)ச் சிலவார்த்தை கூறுவானாயினான்:—உரம் குடி இருந்த தோளான் - வலிமைபொருந்திய தோள்களையுடையவனாகிய தருமபுத்திரன், உரிமையின் எமக்கு தோற்ற-(சூதாடி)முறைமையாகவே எமக்குத் தோற்றுவிட்ட, துரங்கமும் - குதிரைகளையும், களிறும்-யானைகளையும், தேரும்-தேர்களையும், துறை துறை - அந்தந்த இடங்களிலிருந்து, கவர - கவர்ந்துகொண்டுவரும்படி, சொற்றி - (நமது ஏவலாளர்க்குக்) கட்டளைகூறுவாய்.

அரம் கடி வேல்—"அரந்துடைத்த வைவேல்" என்றார் சிந்தாமணியாரும். மிக்ககொடுமையுடைமையால், துரியோதனன்வார்த்தைக்கு இடி உவமைகூறப்பட்டது. உருமின்—இன் - ஐந்தனுருபு: ஒப்பு. 'உரிமையின் எமக்குத் தோற்ற' என்பதற்கு - எமக்கு உரியவையாகும்படி தோற்ற என்றும் பொருள்கொள்ளலாம். 'துரங்கமும் களிறும் தேரும்' என்றது - உபலக்ஷணத்தாற் காலாட்படையையுங்குறிக்கும். சொற்றி-ஏவலொருமைவினைமுற்று; சொல் - பகுதி, ற் - எழுத்துப்பேறு, இ-விகுதி: பகுதியீற்று லகரம் றகரமானது - சந்தி. (௧௬௭)

௧௬௮.—(இ - ள்.) தொல்லை மா நகரும் நாடும் - (நமது) பழமையாகிய பெரிய நகரங்களிலும் நாடுகளிலும், தோரணம் நாட்ட - தோரணங்கட்டி யலங்கரிக்கும்படி, சொற்றி—; எல்லை இல் நிதிகள் எல்லாம்-(பாண்டவர்களுடைய) அளவில்லாத எல்லாச்செல்வங்களையும், இம்பரே - இவ்வத்தினபுரிக்கே [இப்பொழுதே], எடுக்க - எடுத்துவரும்படி, சொற்றி—; நல் எழில் மடவார் தம்மை - (தருமன் பந்தயமாகக்குறித்து இழந்த) நல்லஅழகையுடைய மகளிர்களையெல்லாம், நம் பதி எய்த - நமது அத்தினபுரியில் வந்துசேருமாறு, சொற்றி—; சொல்லிய இளைஞர் தாமும் - (தருமன் பந்தயமாகக்குறித்துக்) கூறிய (வீமன்முதலிய அவனது) தம்பிமார்நால்வரையும், தொண்டினர் ஆக - (நமக்கு) அடிமைகளாகுமாறு, சொற்றி—; (எ - று.)

நாடுநகரங்களைத் தோரணங்கட்டி யலங்கரிக்கச்சொன்னது, தான் பெற்ற வெற்றியைக் கொண்டாடுதற்பொருட்டென்க. இம்பர் - இரட்டுறமொழிதல். துரியோதனன், தனக்குமூத்தோனாகிய தருமனை அடிமையாக்கச்சொல்வதற்கு வாய்கூசி, இளைஞராகிய வீமன்முதலியோரையே தொண்டினராக்கச் சொல்லினன்; அன்றியும், துரியோதனன் தான் ராஜசூயயாகத்திற்குச்செல்லுகையிற் பளிக்குமண்டபத்தில் இடறிவிழுந்தபோது தன்னைப் பரிகசித்த வீமன்முதலிய நால்வரிடத்தே மிக்ககறுக்கொண்டுள்ளானென்பதையும் அறிக. இனி, இளமையையுடையவீரரென்று பாண்டவரைவரையுமே குறித்ததாகக் கொள்ளலுமாம். தொல்லை - பண்புப்பெயர்; ஐ - விகுதி. தோரணம், நிதி-வடசொற்கள். (௧௬௮)

௧௬௯.—(இ - ள்.) இவர்தமக்கு உரியள் ஆகி - இப்பாண்டவரைவர்க்கும் உரிய மனைவியாகி, யாகபத்தினியும் ஆன - ராஜசூயயாகத்திற்குஉரிய பத்தினியாகவும் அமைந்த, துவர் இதழ் தவளம் மூரல் சுரி குழல்தன்னை - பவழம்போலச் சிவந்த அதரத்தையும் வெண்மையாகிய பற்களையும் நுனிசுருண்ட கூந்தலையுமுடைய திரௌபதியை, அலை உவர் புணரி ஆடை உலகு உடை வேந்தர் காண - அலைகளையுடைய உவர்க்கடலை ஆடையாகக் கொ

ண்ட இந்நிலவுலகத்தின் அரசர்கள் காணுமாறு, இன்னே - இப்பொழுதே, கவர்தர - வலியப்பிடித்துஇழுத்துக்கொண்டுவரும்படி, புகறி - கட்டளை கூறுவாய், என்றான் —: (யாவனெனில்,—)கண் அருள் சிறிதும் இல்லான் கண்ணோட்டஞ் சிறிதுமில்லாதவனாகிய துரியோதனன்; (எ - று.)

ஐவர்க்கும் பொதுமகளாயுள்ளவள் யாகபத்தினியாகக்கொள்ளுதற்குச் சிறிதுந்தக்கவளல்ல ளென்பான், அத்திரௌபதிக்கு 'இவர்தமக்குரியளாகி யாகபத்தினியுமான' என அடைமொழி கொடுத்துக் கூறினான். துவரிதழ்த்தவளமூரற்சுரிகுழல் - அன்மொழித்தொகைப் பன்மொழித்தொடர். துவர் - பவழமும், செந்நிறமும். துவரிதழ்த்தவளமூரல் - முரண்தொடை. புணரி - (நதிகளோடு) புணர்வது எனக் கடலுக்குக் காரணக்குறி. உவர்ப்புணரி - லவணஸமுத்ரம். புகறி, புகல - பகுதி. "கண்ணுக்கணிகலம் கண்ணோட்டம்," "கண்ணுக்குப்புனைமணிப்பூண்கண்ணோட்டமென்பதெல்லாங் கருணையன்றோ" ஆதலால், தாக்ஷிண்யத்தை 'கண்ணருள்' என்றார். (கசுகூ)

[இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: விதுரன் மறுத்துக்கூறியன ]

உ00.—(இ - ள்.) (அதுகேட்டு விதுரன் துரியோதனனைநோக்கிக்கூறுவான்):—'நம்பி - சிறந்தவனே! அறம் தரு மைந்தன் தன்னை - அறக்கடவுள் பெற்ற புதல்வனாகிய தருமபுத்திரனை, அறன் அலாது இயற்றி - தருமவிரோதமாகிய சூதாடுதலைப் புரியும்படிசெய்து, திறம் தரு செல்வம் யாவும் தீமையின் கவர்தல் உற்றாய் - (அவனது) பலவகைப்பட்ட செல்வங்களையும் தீயவழியாற் கவரத்தொடங்கினாய்; (இவ்வாறு நீ தொடங்கியது), மறம் தரு வலியும் அன்று - வீரத்தைத்தருகிற சாமர்த்தியமு மன்று [இது சுத்தவீரர்க்குச் சிறிதுந் தகாது என்றபடி]; மணம் தரு வாழ்வும் அன்று - மங்கலகரமான வாழ்க்கையு மன்று; நிறம் தரு புகழும் அன்று - பெருமையைத் தருகிற புகழு மன்று; நெறி தரு மதியும் அன்று - தருமசாஸ்திரங்களிற் கூறிய புத்தியு மன்று; (எ - று.)—ஈற்றுஏகாரம் - தேற்றம்.

'நீ மாயச்சூதாட்டத்தில் வென்றதையே மிகவும்பாராட்டுகிறாய்; இது, வீரத்திற்கும் புகழுக்கும் நீதிநெறிக்கும் முற்றும்மாறுபட்டதாய்நினது நாசத்திற்கே காரணமாயுள்ளது' என்றுகூறி, விதுரன் துரியோதனனுக்கு அவனதுசெயல்தகாதென்ன எடுத்துக்காட்டினனென்க. அறம்-அறக்கடவுட்கு ஆகுபெயர்;யமனுக்கு'தர்மராஜன்'என்றுஒருபெயரிருத்தலுங்காண்க. நம்பி-ஆண்பாற்சிறப்புப்பெயர்; அண்மைவிளியாதலின், இயல்பு. துரியோதனனை இச்சொல்லால் விளித்தது, மூர்க்கனாகிய அவனைத் தன்வசப்படுத்தும்பொருட்டாகும்: அடுத்த செய்யுளில் "கடவுளர்கற்பம்வாழ்வாய்" என்று வாழ்த்துவதும் இதுபற்றியே. துரியோதனனது செயல்மிக்ககொடுமையமைந்ததென்பதற்கு, 'அறனலாதியற்றி' என்றதனோடு அமையாமல், 'தீமையிற்கவர்தலுற்றாய்' என்றுங் கூறினான். திறம் தரு-மேன்மை யமைந்த என்றலுமாம்.

உ0க.—(இ - ள்.) திரு தக - (உனக்குச்) சிறப்புஉண்டாம்படி, மொழிந்த எல்லாம் - (நீ எனக்குக் கட்டளையாகக்)கூறியவற்றையெல்லாம், செய்தனை எனினும்-செய்துமுடித்தாயானாலும்,-செவ்வி மரு தரு தெரியல் மாலை மாசு இலா மன்னர் முன்னர்-அழகையுடைய நறுமணம்வீசுகிற விளங்குகின்ற மாலையையணிந்த குற்றமற்றஅரசர்கட்கு எதிரில், உரு தரு கற்பினாளை-அழகிய உருவத்தையும்சிறந்தபதிவிரதாதருமத்தையுமுடையவளான திரௌபதியைக்குறித்து, உரை அலாது உரைக்கும் மாற்றம்-சொல்லத்தகாதசொற்களைச் சொல்லுதலைமாத்திரம், கருத்தினில் நினையல் - மனத்தில் எண்ணாதிருப்பாயாக; (அவ்வாறு இருப்பாயாயின்), கடவுளர் கற்பம் வாழ்வாய் - தேவர் [illegible]வும் அழியாது [நீடுழிகாலம்] வாழ்ந்திருப்பாய்; (எ - று.)—[illegible] - முன்னிலையசை; தேற்றமுமாம்.

தருமபுத்திரனது எல்லாப்பொருள்களையும் நீ கைப்பற்றினாலும், மகா பதிவிரதையாகிய திரௌபதியைக்குறித்து இழிசொற்கள்கூறுதலைமாத்திரம் தவிர்ந்திரு; இதனால், உனக்கு மிக்கக்ஷேமமுண்டாகும் என்று விதுரன் துரியோதனனுக்கு அறிவுகூறினனென்க. திருத் தக - உனக்குச் செல்வம் மிகும்படி யெனினுமாம். 'மொழிந்தவெல்லாம்' என்றது, கீழ் ககள - ஆங் கவிமுதல் மூன்றுகவிகளில் துரியோதனன் கூறியவற்றைக் குறிக்கும். 'செய்தனையெனினும்' என்பதிலுள்ள உம்மை - அவ்வாறுசெய்தலும் தகாததேயென்ற பொருளைக் காட்டும். உருத் தகு கற்பினாள் - (கண்டவர்) அஞ்சத்தக்க [மிக்க] கற்பை யுடையவளான திரௌபதி யெனக் கூறினுமாம். கற்பாவது - கணவனைத்தெய்வமாகமதித்து அவனைவழிபட்டுநடக்குந் தன்மை: கன்னிகையாயிருக்கும்போது தாய்தந்தைமுதலியோராலும் விவாகமானபின்னர்க் கணவன்முதலியோராலும் கற்பிக்கப்படுவதாதலின்,இது இப்பெயர தாயிற்று. நினையல் - 'அல்' ஈற்று எதிர்மறை யொருமையேவல். கல்பம்-வடசொல்: பெருங்காலவெல்லை. தேவர்கள் அமரராதலின்,அவர்களது ஆயுள் நெடுமைக்குஎடுத்துக்கூறப்பட்டது. தெரியல் - தொழிலாகுபெயர்.

உ0உ.—(இ - ள்.) விண்ணில் அருகி தோன்றும் மே தகு வடமீன் அன்றி - வானத்தில் வடக்குத்திக்கில் அருமையாகக்காணப்படுகின்ற மேன்மை பொருந்திய அருந்ததிநக்ஷத்திர மல்லாமல், மண்ணில் உவமை சொல்ல மடந்தையர் யாரும் இல்லா - நிலவுலகத்தில் ஒப்பாகஎடுத்துக் கூறுதற்கு மகளிரொருவரையும் கிடைக்கப்பெறாத [எல்லாமகளிரினுஞ்சிறந்த],பண் நலம் கடந்த மெல் சொல் பாவையை - இராகத்தின்இனிமையை வென்றமென்மையானசொற்களையுடைய சித்திரப்பாவைபோன்றவளாகிய திரௌபதியை,நீ பழிக்க-நீ வசைகூறுவதை, இன்று எண்ணின்-இப்போது ஆலோசித்தால், உன் எண்ணம் - உனது எண்ணமானது, முன் கேட்ட வார்த்தைக்கு ஏற்றது - (நான்) முன்பு கேள்விப்பட்டுள்ள விஷயத்திற்கு ஒத்துள்ளது, என்றான் - என்றுகூறினான்,(விதுரன்); (எ - று.)

'அங்கு' என்பது இரண்டும் - அசை. பலஆடவரைமணஞ்செய்தவிடத்தும் திரௌபதியின்கற்பிற்கு ஒருகுறைவில்லை யென்பது விளங்க, அவளுக்கு அருந்ததியை உவமைகூறினான். அருந்ததிநட்சத்திரம் வடக்கில் விளங்குதலால்,'வடமீன்'எனப்பட்டது; அதனை, இங்ஙனம்அறிக:—வடக்கில் ஸப்தருஷிமண்டல மென்ற நட்சத்திரக்கூட்டமொன்று இருக்கின்றது; அதில் நான்குநட்சத்திரங்கள் நீண்டசதுரமாய்ப் பெட்டிப்பண்டிபோலிருக்கின்றன; அவற்றின்முன்புறத்துஅடியில் நடுவேளந்த ஏர்க்கால்போல மூன்றுநட்சத்திரங்கள் உள்ளன; இவற்றில் நடுநட்சத்திரம், வசிஷ்டநட்சத்திரம்; அதனடியிற் கிட்டினதாய் நுட்பநோக்கினாற்காணத்தக்கதொருநட்சத்திர முண்டு: அதுதான், அருந்ததிநட்சத்திரம். இந்நட்சத்திரம் மிகநுண்ணிதாய்க்காணப்படுதல்மாத்திரமேயன்றி மரணகாலங்கிட்டியவர்கட்குக் கட்புலனாகாதிருத்தலாலும், அதற்கு 'அருகித்தோன்றும்' என்ற அடைமொழிகொடுக்கப்பட்டது: இதனை "உலக்குநாளணித்தாயினர்க்கொளிக்கு மீனாக்கும்" என்பதனாலும் அறிக. மின்னுவது மீன் எனக் காரணப் பெயர். பண் நலங்கள் தந்த என்று பிரித்தும் உரைக்கலாம். உவமை, வார்த்தை - உபமா, வார்த்தா என்ற வடசொற்களின் திரிபு. (உ0உ)

[துரியோதனன்கேட்டுக்கொண்டபடி விதுரன் அவனுக்கு ஒரு விஷயத்தைக் கூறத்தொடங்குதல்.]

உ0௩.—(இ - ள்.) கேட்ட சொல் வினவும்-'(முன்பு நீ) கேட்டவார்த்தை (யாது?') என்று வினவின, நாககேதனன் - அரவக்கொடியோனாகிய துரியோதனன், மீண்டும் கேட்ப - மறுபடியும் கேட்டறியும்படி,—கோட்டம்இல் சிந்தையானும்-கோணுதலில்லாத மனத்தையுடையவனாகிய விதுர

ணும்,—மனம் கனிந்து உருகி வீழ-(தனது)நெஞ்சு நெகிழ்ந்து உருகிக்கரையவும், நாட்டமும் நல் நீர் மல்க-கண்களும் மிகுதியாக நீரைச் சொரியவும், நா அமிழ்து ஊற-நாக்கில் இனியநீர் சுரக்கவும்,—குரிசிலுக்கு-அத்துரியோதனராஜனுக்கு, வாட்டம் இல் அன்பினோடு - குறைதலில்லாத [நிறைந்த] அன்புடனே, பின்னும் உரைக்கலுற்றான் - பின்னும் சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதன் விவரத்தை, அடுத்த நான்குகவிகளிற் காண்க.

நாககேதனன் கேட்ப, கோட்டமில்சிந்தையான், வீழ மல்க ஊற, குரிசிலுக்கு அன்பினோடு உரைக்கலுற்றான் என இயையும். துரியோதனன் திரௌபதியைப்பழித்துச் சபையிற்கொணரும்படி கூறியது தனதுகருத்துக்குமாறாதலாற் கோபங்கொள்ளவேண்டியவனாயிருந்தும்,விதுரன் அவ்வாறு கோபங்கொள்ளாது 'இத்தீச்செயலினால் இத்துரியோதனனுக்குத் தீங்கு நேரிடுமே!' என்று இரக்கங்கொண்டு கூறலாயின னென்க. மனங்கனிந்து உருகிவீழ்தலும், நாட்டம்நீர்மல்குதலும் - இரக்கக்குறி. நா அமிழ்தூறியது,சொல்லப்போகிற விஷயத்தி லுள்ள ஊற்றமிகுதியா லென்க. பாண்டவர் துரியோதனாதியர் என்னும் இருதிறத்தாரிடத்திலும் ஒருநிகரான அன்பையுடையனாய்ப் பக்ஷபாதமில்லாதவனாதலின்,விதுரனை'கோட்டமில் சிந்தையான்' என்றார். நாட்டம் - நாடுதற்கருவி: எனவே, கண்ணாயிற்று; அம் - கருவிப்பொருள்விகுதி. குரிசில் - ஆண்பாற்சிறப்புப்பெயர். (௨௦௩)

[இதுமுதல் ஐந்துகவிகள் - விதுரன் வார்த்தை.]

௨௦௪.—(இ - ள்.) 'உம்மை - முற்பிறப்பில், தானவர் ஆகி - அசுரர்களாகப்பிறந்து, தனி தனி இறந்தோர் யாரும் - (திருமாலாற்கொல்லப்பட்டுத்)தனித்தனியே இறந்தவர்களனைவரும்,இம்மை - இப்பிறப்பில்,மானவர் ஆகி - மனிதர்களாய்ப்பிறந்து, இம்பர்-இவ்வுலகத்தில், வந்தனர்-வந்து நிறைந்தார்கள்,' என்று—,—தராதலம் என்னும் செம் கண் மான் - பூமிதேவியென்கிற செவ்வரிபரந்தகண்களையுடைய மான்போன்ற தெய்வமகள், தான் அவர் பொறை பொறாமல் - தான் அவர்களாலுண்டானபாரத்தைச் சுமக்கமாட்டாமல், அவராகம் வேதம் மலர் முனிதனக்கு - ஆசையற்றவனும் வேதத்தையோதுபவனு மாகிய தாமரைமலரில்தோன்றிய பிரமதேவனிடத்தில், சொன்னாள் - முறையிட்டாள்; (எ - று.)

"பூமிதேவி மிகுந்தபாரத்தினால் துன்பமுற்று மகாமேருபர்வதத்திலிருக்கின்ற தேவசபையிற்சேர்ந்து பிரமதேவன்முதலான தேவர்கட்கெல்லாம் வந்தனஞ்செய்து,'ஓதேவர்களே!முன்பு மகாசமர்த்தரான ஸ்ரீவிஷ்ணுவினாலே சங்கரிக்கப்பட்ட காலநேமிமுதலிய பலஅசுரர்களும் இப்பொழுது பூலோகத்தில் ராஜவம்சங்களிலேபிறந்து இரவும்பகலும் பிரஜைகளைத் துன்பப்படுத்திக்கொண்டு கொடுமைசெய்து திரிகிறார்கள்: அவர்களை நான் எண்ணச் சத்தியற்றிருக்கின்றேன். பலபராக்கிரமங்களுடையவர்களாயும் மிக்கசெருக்குடையவர்களாயு மிருக்கிற அசுரேந்திரருடைய திரளான சேனைகள் என்மே லிருப்பதனாலே நான் வெகுவானபாரத்தைச் சுமக்கும் வருத்தமுடையளாய் என்னையுஞ் சுமக்கச் சத்தியற்றவளா யிருக்கின்றேன். இந்தச சங்கதியை உங்களுக்கு விண்ணப்பஞ்செய்தேன்: ஆதலால், நீங்கள் என்மேல் அன்புகூர்ந்து நான் மெலிவடைந்துபாதாளஞ்சேராதபடி என் சுமையை இறக்கியருளவேண்டும்' என்று விஜ்ஞாபனஞ்செய்தாள்" என இச்செய்யுட்கு விவரங் காண்க. தேவசபையிலே பூமிதேவி பொதுவாக எல்லாத்தேவர்களையும்நோக்கிக்கூறியிருக்கவும், தலைமைபற்றி'மலர்முனிதனக்குச்சொன்னாள்' என்று இந்நூலாசிரியர் கூறினார்; ஆயினும், எல்லாத்தேவர்களையும் நோக்கிப் பூமிதேவி கூறினா ளென்பதே இவ்வாசிரியர்கருத்தென்பது, "நான்முகன்றானு மேனைநாகரு நாகர்கோனும்" என வரும் அடுத்த கவியினால் விளங்கும். அசுரர்களில் இன்னார் இன்னஅரசராகப் பிறந்தன

றென்ற விவரம், வியாஸபாரதத்தில் அம்சாவதரணபர்வத்திற் பரக்கக்கூறப்பட்டிருக்கின்றது.

தாநவர், மாநவர் - (முறையே காசியபமுனிவரது மனைவியராகிய)தநு, மநு என்பவர்களது சந்ததியார் எனப் பொருள்படும் வடமொழித்தத்திதாந்தநாமம். அவராகம் - வடசொல்: ஆசையின்மையென்று பொருள். நவராகம் என்றுஎடுத்து,புதுமையான செந்நிறத்தையுடைய வென்றுஉரைத்து, மலர்க்குஅடைமொழியாக்கினுமாம். பொறை - பொறுக்கப்படுவது; சுமை: 'ஐ'-செயப்படுபொருள்விகுதி. திருமாலின்நாபீகமலத்தில்தோன்றித் தனது நான்குமுகங்களினாலும் நான்குவேதங்களையும் எப்பொழுதும் பாராயணஞ் செய்துகொண்டிருப்பவனாதலால், பிரமதேவனை 'வேதமலர்முனி'என்றார்.

உ0ரு.—(இ - ள்.) நான்முகன்தானும் - நான்குமுகங்களையுடையவனான பிரமதேவனும், நாகர் கோனும் - தேவேந்திரனும், எனை நாகரும் - மற்றைத்தேவர்களும்,—பால் முகந்து எறியும் வேலை பாம்புஅணை பள்ளி கொள்ளும் - (அலைகள்) பாலையெடுத்துஎறிகின்ற பாற்கடலில் ஆதிசேஷ சயனத்திலே சயனித்து யோகநித்திரைசெய்கிறவனும், தேன் முகம் களிக்கும் பச்சை செவ்வி வள் துளபம் மாலை - வண்டுகள் (தேனுண்டு) வாயினால் மகிழ்ந்துரீங்காரஞ்செய்வதற்கு இடமான பசுநிறமுள்ள அழகிய சிறந்த துளசிமாலையை யணிந்தவனுமான, மால் - திருமாலை, முகம் கண்டு -(தங்களுடைய)எதிரிலே தரிசிக்கப்பெற்று, வந்த ஆ(று) - (தாங்கள்)வந்த வரலாற்றை, கூற-எடுத்துச்சொல்ல, மாலும்-அத்திருமாலும், கேட்டான்—; (எ-று.)

"அப்போது சதுர்முகன் தேவர்களைநோக்கி, 'ஓ தேவதைகளே! பூமிதேவி சொன்னதெல்லாம் சத்தியந்தான். வாருங்கள்: திருப்பாற்கடற்கரைக்குப்போவோம். அங்கேபோய் ஸ்ரீயபதிக்குத்தண்டன்சமர்ப்பித்து இவையெல்லாம் விண்ணப்பஞ்செய்வோம். அப்படி நாம் செய்தால் ஸர்வஸ்வரூபியான அவ்வெம்பெருமான் பூமியின்நிமித்தம் அவதாரஞ்செய்து தருமத்தை நிலைநாட்டியருளுவன்' என்று இப்படிசொல்லி, அத்தேவர்களையுங் கூட்டிக்கொண்டு திருப்பாற்கடலுக்குச் சென்று யோகநிஷ்டையிலுள்ள மனசோடு ஸ்ரீகருடத்வசனைத் தோத்திரஞ்செய்ய, ஸ்ரீயபதி பிரமன்செய்த ஸ்தோத்ரத்தைத் திருவுள்ளம்பற்றி உகப்போடு விசுவரூபங்காட்டி'ஓநான்முகனே!நீ தேவதைகளோடுகூட என்னிடத்தில்எதைப்பெறக்கருதிவந்தனையோ,அதைச்சொல்லக்கடவாய்; அது கையிற் கிடைத்ததாகவே நினை' என்று அருளிச்செய்ய, பிரமதேவன் அப்போது மீண்டுந்துதித்துப் பூமிதேவியின்குறையை எடுத்துக் கூறினார்" என இச்செய்யுட்கு விவரங் காண்க.

துளபம் - துளஸீ என்ற வடசொல்லின் சிதைவு. (உ0ரு)

உ0சு.—(இ - ள்.) மின் இடை விளங்கும் மேகம் மேனியான் - மின்னல் தன்னிடத்தே விளங்கப்பெற்ற காளமேகம் போன்ற திருமேனியையுடையவனான அத்திருமால்,—அவனிமானை - பூமிதேவியைநோக்கி,—'நின்னிடை வந்து தோன்றும் நிருபரானவரை எல்லாம்-உன்னிடத்துவந்துபிறந்துள்ள (துஷ்ட)அரசர்களையெல்லாம், முன் இடை கடை ஒன்று இன்றி-முதல் இடை கடை என்ற மூன்றுதலைமுறையிலும் ஒன்றுமில்லாமலே,முற்றும் - முழுவதும் [எல்லாரையும் ஸமூலமாக], வெம் முரண் கொள் காலன் தன்னிடை விடுதும் - கொடிய மாறுபாடுகொண்ட யமனிடத்தில் அனுப்பிவிடுவோம் [ஸம்ஹரிப்போம்],' என்று சாற்றி - என்று சொல்லித் தேற்றி, தளர்வு தீர்த்தான்-(அப்பூமிதேவியின்)வருத்தத்தைப் போக்கினான்;(எ-று.)

பிரமதேவன்விண்ணப்பித்ததனாற் பூமிதேவியின்குறையை யறிந்த திருமால், தானே பூமியில் வசுதேவனதுமனைவியாகிய தேவகியின் கருப்பத்தில் தோன்றித் துஷ்டநிக்ரகஞ்செய்து பாரத்தைப்போக்குவதாக வாக்களித்து அப்பூமிதேவியின்குறையைப் போக்கின னென்றவாறு. ஸ்ரீமகாலக்ஷ்மியை

மார்பிற்கொண்ட கருநிறமுள்ள திருமாலுக்கு, மின்னலைத் தன்னிடத்தே கொண்ட காளமேகம் - உவமை. இனி, மின் - மின்னல்போன்ற பேரொளியையுடைய பீதாம்பரம், இடை விளங்கும் - (தனது) இடையிலே விளங்கப்பெற்ற, மேகமேனியான் எனக் கூறுவர் ஒருசாரார். 'மின்னிடை' என்பதை உவமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை யெனக்கொண்டு, மின்னல்போன்ற இடையையுடையவளான திருமகள் (மார்பிலே) விளங்கப்பெற்ற மேகமேனியனான திருமால் எனினுமாம். அவநி - வடசொல்: (அரசர்களாற்) பாதுகாத்தற்கு உரியது என உறுப்புப்பொருள் காண்க. மருண்டபார்வையில், மான், மகளிர்க்கு உவமை கூறப்படும். மான் - இங்கு, உவமவாகுபெயர். காலன் - பிராணிகளின் ஆயுட்காலத்தைக் கணக்கிடுபவ னென்ன யமனுக்குக் காரணக்குறி. விடுதும்-'தும்' விகுதி எதிர்காலங்காட்டும் தனித்தன்மைப்பன்மைவினைமுற்று. கடை-பின். முன்னிடை கடை யொன் றின்றி - முன்னும் நடுவும் பின்னு மாகிய சந்ததிகளி லொன்றுமில்லாமல் 'சாற்றியத்தளர்வுதீர்த்தான்' என்பதும் பாடம். (உ0௬)

உ0௭.—(இ - ள்.) 'அந்த வல் திகிரியானும் - அவ்வாறு அருளிச்செய்த வலிய சக்கராயுதத்தையுடையவனான திருமாலும், நம்மில் ஓர் அரசன் ஆகி வந்து அவதரித்தான் - நமக்குள்ளே ஓரரசனாக வந்து பிறந்திருக்கின்றான்,' என்று—, மண் எலாம் வார்த்தை ஆன ஆறு - உலகமுழுவதும் வதந்தி உண்டாயிருக்கின்றது; எந்த வல் வினையால் எ ஆறு எய்தும் - எந்தக்கொடிய தீச்செயலினால் என்னதீங்கு நேரிடுமோ? என்ற இதற்கே - என்ற இதுபற்றியே, சால நொந்து - மிகவும் மனம்நொந்து, கண் துயில் பெறாது - கண்ணுறங்குவதுயின்றி, நோதக புரிந்தேன் - வருந்திக்கொண்டிருக்கிறேன்; (எ - று.)—மன், ஓ - ஈற்றசைகள்.

'துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்தற்பொருட்டே தேவகியின் வயிற்றிற் கண்ணனாய்த் திருவவதரித்த திருமால் இவ்வாறு பல முறைகேடுகளைப் புரியும் உன்னை அழிப்பது திண்ணம்; இதுபற்றியே, யான் அல்லும்பகலும் கவல்கின்றேன்' என்ற விஷயத்தை விதுரன் சிறிதுமறைபொருளாகக் கூறினனென்க. திருமாலின்திகிரி, சுதரிசந மெனப் பெயர்பெறும். இங்கு 'திகிரியான்' என்றது - தவறாது கொடியவர்களை யழிப்பா னென்ற கருத்தை யுட்கொண் டிருத்தலால், கருத்துடையடைகோளியணியாம்; இதனை வடநூலார் பரிகராங்குராலங்கார மென்பர். கடவுட்டன்மையை யுடைய திருமால் மனிதனாகப் பிறந்தா னாதலால், 'அவதரித்தான்' என்றார். அவதாரமென்பது-உயர்ந்தநிலையிலிருப்பவன் தனதுசங்கற்பத்தால் தாழ்ந்த நிலைக்கு வருதலைக் குறிக்கும். என்றிதற்கே - தொகுத்தல். (உ0௭)

உ0அ.—(இ - ள்.) சற்றும் புரிவு இலீர் - சிறிதும்ஆலோசனையில்லாதவர்களே!—அவனி முற்றும் - பூமிமுழுவதையும், ஒரு திறத்து உரிமையால் புரக்கும் - ஒரேபகுதியாக ஒற்றுமையால் அரசாளுதற்குஉரிய, நீவிர் இரு திறத்தவரும் - நீங்கள் இரண்டுதிறத்தாரும், நும்மில் இகல் உறு மனத்திர் ஆனால் - உங்களுக்குள்ளே பகைமைகொண்ட மனமுடையவர்களானால், வரு திறம் தானை வேந்தர் - (உங்களிருதிறத்தார்க்கும் துணையாக) வருகின்ற நால்வகைப்பட்டசேனையையுடைய அரசர்கள், வகை பட குழூஉக்கொண்டு-அணியணியாகக்கூட்டங்கொண்டு, ஓடி பொருது இறப்பதற்கே-விரைந்து போர்செய்து மடிவதற்காகவே, புரிகின்றீர் - முயல்கின்றவர்களே யாவீர்கள்; (எ - று.)

நீங்கள் இருதிறத்தாரும் ஒற்றுமைப்பட்டுவாழாமல் மனம்வேறுபட்டுப் பகைமைகொள்வது, உங்களுடையகேட்டோடு நில்லாமல் உங்களுக்கு நண்பர்களாய்உதவுகின்ற உலகத்தரசர்பலருடைய கேட்டிற்கும் காரணமாம்; இவ்வாறு சற்றும் ஆராய்ச்சியில்லாமற் செய்வது சிறிதுந்தகுதியன்று என்று

கருத்து. யானை தன் தலைமீது தானே மண்ணைப் போகட்டுக்கொள்வது போலத் தாமே தங்களுடையகேட்டிற்கு முயலுதலால், 'சற்றும்புரிவிலீர்' என விளித்தான். இனி, முன்னிலைப்பன்மை யெதிர்மறைமுற்றெச்சமாக் கொண்டு, சிறிதும் அன்பற்றவர்களாய் எனினுமாம். மனத்திர் - முன்னிலைப்பன்மைக்குறிப்பு வினையாலணையும்பெயர். குழூஉ-இயற்கையளபெடை.

[துரியோதனன் விதுரனைப் பரிகசித்துத் திரௌபதியைக்கொணரும்படி பிராதிகாமிக்குக் கட்டளையிடுதல்.]

உ0கூ.—(இ - ள்.)என்று அவன் உரைப்ப-இவ்வாறு அவ்விதுரன் கூற, தானும்-துரியோதனனும், கை எறிந்து நகை கொண்டாடி - கைகொட்டிப் பரிகசித்துச் சிரித்து, அன்று அவன் இதயம் வெம்ப அவமதி பலவும் கூறி - அப்பொழுது அவ்விதுரனது மனம் கொதிக்கும்படி அவமதிப்பான வார்த்தைகள் பலவற்றையும் எடுத்துச்சொல்லி,—நின்றவன் ஒருவன் தன்னை - அங்குநின்ற ஒருத்தனை நோக்கி, 'நீ—, நனி விரைவின் ஓடி சென்று - மிகவும் விரைந்தோடிப்போய், அவண் இருந்த கோலம் தெரிவையை - அங்கே [காந்தாரியின்வீட்டில்] இருக்கிற அழகிய திரௌபதியை, கொணர்தி - கொண்டுவருவாய்,' என்றான் - என்று கட்டளையிட்டான்; (எ - று.)

'ஒருவன்' என்றது, தேர்ச்சாரதியாகிய பிராதிகாமியை: விதுரன்வார்த்தைகளை அஸம்பாவிதமான கட்டுக்கதை யெனக்கொண்டு துரியோதனன் கைகொட்டிச்சிரித்துப் பரிகசித்தன னென்க. (உ0கூ)

[பிராதிகாமி திரௌபதியினிடஞ் செல்லாமலே மீண்டு துரியோதனனிடத்துக்கூறத்தொடங்குதல்.]

உக0.—(இ - ள்.) பெருந் தகை ஏவலோடும்-பெருந்தன்மையையுடையனான துரியோதனனது கட்டளையினால், பிராதிகாமியும்—, அங்கு ஏகி - (திரௌபதியிருக்கிற)அவ்விடத்திற்குப் போகத்தொடங்கி, வருந்திய மனத்தன் ஆகி - (திரௌபதியைப்பற்றிய அந்தத் துரியோதனன்கட்டளைக்கு) வருந்திய மனமுடையவனாய், மாசு அறு மரபின் வல்லி இருந்த உழி எய்தாமல் - குற்றமற்ற நல்லகுலத்திற் பிறந்த பூங்கொடிபோன்றவளான திரௌபதி இருந்த இடத்திற் செல்லாமல், இடை வழி நின்று - நடுவழியிற் சற்றுநேரம் நின்று, மீள விரைந்தனன் ஓடி வந்து-திரும்பவும் விரைந்தோடி வந்து, வேந்தனுக்கு ஏற்ப சொன்னான் - துரியோதனராசனுக்கு 'இவன் சொல்வது உண்மையே' என்ற எண்ண முண்டாகும்படி கூறுவானாயினான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

துரியோதனனை 'பெருந்தகை' என்றது, இகழ்ச்சி; பெருமையாகிய தகுதியையுடையவ னென, இச்சொல் - அன்மொழித்தொகை. பிராதிகாமியானவன் துரியோதனன்கருத்தின்படி அக்கிரமஞ்செய்தற்கு அஞ்சித் திரௌபதியினிடஞ் செல்லாமலே திரும்பித் தனது ஆலோசனையினாற் கற்பனைசெய்து கேட்டோர்நம்புமாறு சிலவார்த்தை கூறலாயின னென்க. பிராதிகாமி இடைவழியிற் சற்றுநேரம் நின்றது, திரௌபதியினிடம் போய் வருவதற்குஉரிய காலங் கழிவதற்பொருட்டு. 'ஏவலோடும்' என்றவிடத்து, 'ஓடு' உருபு - தனக்குஉரிய உடனிகழ்ச்சிப்பொருளதாகாமல் 'ஆல்' என்பதற்குஉரிய கருவிப்பொருளில் வந்தது. (உக0)

[பிராதிகாமியின் வார்த்தை.]

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

உகக.—(இ - ள்.) 'மனு நெறி கூர் இசையோன் - மநுதர்மசாஸ்திரத்திற் கூறியபடி ஒழுகுவதனால் மிக்ககீர்த்தியையுடையவனான தருமபுத்திரன், என்னை தோற்று - (முன்னே சூதில்)என்னை(ப் பந்தயமாகவைத்து)த் தோற்றிழந்து, தன்னை தோற்றனனோ - (பிறகு)தன்னை(ப் பந்தயமாக்கி)த்

தோற்றிழந்தானோ? (அன்றி), தன்னை தோற்று - (முதலிலே)தன்னைத்தோற்றுவிட்டு, (பிறகு), தனது மனம் தளர்வால் என்னை தோற்றனனோ - தனக்குநேர்ந்த மனவருத்தத்தினால் என்னை(ப் பந்தயமாக்கி)த் தோற்றிழந்தானோ? முன்னை தோற்று தோற்றபொருள் முற்றும் கவரும் முறை அன்றி, முதலில் (சூதாட்டத்தில்) தோல்வியடைந்து இழந்த பொருள்களையெல்லாம் (வென்றவர்கள்) கவர்ந்துகொள்ளும் முறைமை யல்லாமல் [கவர்ந்து கொள்ளுதல் முறையே யன்றி],பின்னை தோற்ற பொருள் கவர பெறுமோ- (தன்னைத்தோற்றுவிட்ட) பின்பு (பந்தயமாகவைத்து) இழந்த பொருளைக் கவர்தல் கூடுமோ? நினைக்க பெருது - (அப்பொருளைக்கைப்பற்ற வேண்டு மென்று) எண்ணுதலும் தகுதியன்றே!'என்றாள் - என்று (திரௌபதி) கூறினாள்; (எ - று.)

தருமபுத்திரன் சூதாடித் தன்னைத்தோற்றபின்பு திரௌபதியைத் தோற்ற செய்தியை அருகிலிருந்துகண்ட பிராதிகாமி,'தருமபுத்திரன் தன்னைத்தோற்ற பிறகு இழந்த திரௌபதியைத் துரியோதனன் கவர்தல் நியாயமன்று' என்று அறிந்தவனாதலால், 'தருமபுத்திரன் தன்னைத்தோற்பதற்கு முன்னே பந்தயம்வைத்து இழந்த பொருள்களைத் துரியோதனன் கவர்தல் முறைமையாகுமே யன்றி, தன்னைத்தோற்றபிறகு தன்னுரிமையையிழந்த தருமபுத்திரன் என்னைத்தோற்றிருந்தால் என்னைவைத்தாடுதற்கே அத்தருமபுத்திரனுக்கு உரிமையில்லாமையால் அவ்வாறு பந்தயமாகவைத்து ஆடின ஆட்டமே செல்லாது; அப்பொழுது, என்னைத் துரியோதனன் கவர்ந்துசெல்லுதற்கும் நியாயமில்லை: ஆகையால், தருமன் தன்னைத்தோற்று என்னைததோற்றானோ? அன்றி, என்னைத்தோற்றுத் தன்னைத்தோற்றானோ? என்ற விஷயம் முதன்முதல் தெரியவேண்டும்' எனத் திரௌபதி வினவியதாகக் கற்பித்துக்கூறினனென்க. இவ்வாறு தான் கூறினால் துரியோதனன் தான்செய்வது முறைமையன்றென்றுஉணர்ந்து பின்வாங்கித் திரௌபதியை ராஜசபையில்அழைததது மானபங்கஞ்செய்யாது விட்டிடக்கூடு மென்பது, பிராதிகாமியின் உட்கோள்.

இதுமுதல் முப்பது கவிகள் - மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களும்,மற்றைநான்கும் மாச்சீர்களுமாகி வந்த கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (உகக)

[அதுகேட்ட துரியோதனன் திரௌபதியைக் கொணரும்படி துச்சாதனனுக்குக் கட்டளையிடுதல்.]

உகஉ.—(இ - ள்.) செல்வம் பாவை திருவுள்ளம் இது என்று - 'சிறப்புப்பொருந்திய சித்திரப்பாவைபோலழகிய திரௌபதியின் மனக்கருத்து இதுவாகும்' என்று, அந்த தேர்ப்பாகன் சொல்ல - (பிராதிகாமியென்னும்) அத்தேர்ப்பாகன் (தன்கற்பனையைத் திரௌபதியின்வார்த்தையாகக்) கூற, —(அதுகேட்டு),பாவி-கொடும்பாதகனான துரியோதனன், தரியாமல்-மனம் பொறாமல், துச்சாதனனை முகம் நோக்கி-துச்சாதனனது முகத்தைப் பார்த்து, 'அல்லல் பான்மை பெற்று-துன்பப்படும் விதியை யடைந்து, அழிந்த-அழிவடைந்த, ஐவர்க்கு - பாண்டவரைவர்க்கும் (பொதுவாக). ஒருத்தி ஆகிய - தானொருத்தியே மனைவியாயிருக்கின்ற, அ மல்லல் பானல் விழியாளை - வளமுள்ள கருங்குவளைமலர்போன்ற கண்களையுடையவளாகிய அத்திரௌபதியை, மன் பேர் அவையின் அழை - அரசர்கள்நிறைந்துள்ள (இந்தப்) பெரிய சபையில் (இப்பொழுது) அழைத்துவா,' என்றான்-என்று கட்டளையிட்டான்; (எ - று.)

துர்ம்மாஸநன் -கொடியகட்டளையையுடையா னெனப் பொருள்படும் வடசொல். துச்சாதனனை முகம் நோக்கி—துச்சாதனனை முகத்தைப் பார்த்து என இரண்டுசெயப்படுபொருள்வந்த செய்வினை: இதனை வடநூலார்,

த்விகர்மகர்த்தரிப்ரயோக மென்பர்: இனி, துச்சாதனனை முகத்தின்கண் நோக்கி யென்றுவது, (உருபுமயக்கமாகத்) துச்சாதனனது முகத்தை நோக்கி யென்றுவது கொள்வது, தமிழ்நடை; "முதலை ஐ யுறிற் சினையைக் கண்ணுறும், அதுமுதற்காயின் சினைக்குஐயாகும்." பான்மை - விதி. ஐவர்க்கும் பொதுவான மனைவியாயிருக்கிற அவள் பலபேர்கூடிய ராஜசபையில் நாணமின்றி வருதற்குஉரியவளே யென்பான், 'ஐவர்க்கு ஒருத்தியாகிய அம் மல்லற்பானல்விழியாளை மன்பேரவையின் அழை' என்றான். மல்லல் - வளப்பமுணர்த்தும் உரிச்சொல்; "மல்லல் வளனே" என்பது, தொல்காப்பியம். பானல் - நீலோற்பலம்: அதன் மலர்க்கு முதலாகுபெயர். செல்வப் பாவை - செல்வத்திற் பிறந்து செல்வத்தில் வளர்ந்து செல்வத்தில் வாழ்க்கைப்பட்ட அருமையான பெண் என்றவாறுமாம். (௨௬௨)

[துச்சாதனன் திரௌபதியிருந்தஇடத்தையடைந்து அணுகிக் கூறத்தொடங்குதல்.]

௨௬௩.—(இ - ள்.) நோன் தாள் வெம் கண் கடம் களிறு நுழை வேல் அரசன்-வலிய கால்களையும் கொடுமையையும் மதநீர்ப்பெருக்கையுமுடைய யானைகளினுடம்பில் தைத்துச்செல்லுந் தன்மையுள்ள வேலாயுதத்தை யேந்தியவனாகிய துரியோதனன், ஆன்றோர் கேட்கின் செவி புதைக்கும் அழல் கால் வெம் சொல் - பெரியோர் கேட்டாற் காதுகளைப்பொத்திக் கொள்ளுதற்குக் காரணமானதும் நெருப்பைக் கக்குவதுபோன்றது மான கொடிய கட்டளைச்சொல்லை, நுவறலுமே-சொன்னவுடனே,—அறன் இல்லான் - தருமநெறிசிறிதுமில்லாதவனாகிய துச்சாதனன்,—தோன்றா நயனம் துணைவனை போல்-தெரியாத கண்களையுடைய [குருடனான] (தனது) கணவனாகிய திருதராட்டிரனைப் போலவே, துணை கண் துகிலின் சூழ்ந்து இருந்த - தனது இரண்டுகண்களையும் வஸ்திரத்தினாற் சுற்றிக்கட்டிக்கொண்டு தானும் குருட்டுத்தன்மையை அடைந்திருக்கின்ற, ஈன்றாள் - (தனது) பெற்றதாயாகிய காந்தாரியினது, இல்லத்து - அந்தப்புரத்திலே, இருந்தாளை - இருந்தவளாகிய திரௌபதியை, இகலோடு எய்தி - மனக்கறுவுடனே சென்றுகிட்டி, இவை சொல்வான் - இவ்வார்த்தைகளைக் கூறுவானாயினான்; (எ - று.)—அவற்றை, அடுத்த மூன்றுகவிகளிற் காண்க.

இனி, முதலிரண்டடிகளில், அரசன் நுவறலும் வெஞ்சொல்லையுடைய அறனில்லான் என்று நேராகவேகூட்டிப் பொருள் கொள்ளலுமாம். திருதராட்டிரனுக்கு மணஞ்செய்வித்தற்பொருட்டுப் பீஷ்மன் இட்ட கட்டளையினால் தூதர் காந்தாரதேசத்துஅரசனான சுபலனிடத்திற் சென்று அவன்மகளாகிய காந்தாரியைத் திருதராட்டிரனுக்குத்தரும்படி மணம்பேச,அச்சுபலனும் திருதராட்டிரன் கண்ணில்லாதவனாயினும் அவனதுநற்குடிப்பிறப்பையும் புகழையும் நல்லொழுக்கத்தையும் ஆராய்ந்து மணம்நேர, காந்தாரி தனதுசுற்றத்தார்மூலமாகத் தனது தாய்தந்தையர் திருதராஷ்டிரனுக்குத் தன்னை அளிக்க நிச்சயித்திருப்பதையும் அவன் கண்ணில்லாதவ னென்பதையும் கேட்டறிந்து, விதியினாற் கிடைத்த அக்கணவன்திறத்தில் மனமுவந்தவளாய்,பதிவிரதாதருமத்தைமேற்கொண்டு,கட்புலனால்வருமின்பத்தைத் தன்கணவன்போலவே தானும் அனுபவியாதிருத்தல்வேண்டி வஸ்திரத்தைப் பலமடிப்பாகமடித்து அதனால் தன்கண்களை மறைத்துக் கட்டிக்கொண்டு கண்பார்வையிலளாயின ளென்பது, வரலாறு; "நதியளித்தவனே வலிற் றூதர்போய் நயந் துடன் காந்தார, பதியளித்த மெய்க்கன்னியைத் தருகபூபதிக் கென மணநேர்ந்தார், மதியளித்த தொல்குலத்தவன் விழியிலாமகனெனத் தமர்சொல்ல, விதியளித்ததென்றுளமகிழ்ந்தனள் வடமீனெனத்தகுங் கற்பாள்", "இமைத்தகண்ணிணைமலர்ந் தினிநோக்கிலேன் யானொருவரை யென்று, சமைத்தபட்டமொன் றினிற்பொதி பெதும்பை" என்கிற சம்பவச்சருக்கத்துச்செய்யுள்கள், இங்குக் காணத்தக்கன.

வெம் கண் - பயங்கரமான கண்களெனினுமாம். நுவறலும்—நுவல் - பகுதி, து, அல் - சாரியைகள், உம் - வினையெச்சவிகுதி. மற்றவை - சந்தி. 'களிற்றுறழை வேல்'என வேலின் மிக்ககூர்மையை விளக்கியவாறும். இல லத்து, அத்து - சாரியை. ஈற்றடி - முற்றுமோனை. (உகந)

[இதுமுதல் மூன்றுகவிகள் - துச்சாதனன்வார்த்தை.]

உகச.—(இ - ள்.) உன் பதி ஆன கோனே - உனது கணவனாகிய தருமபுத்திரனே, தானே சூது பொருது அழிந்து - தானாகவே சூதாடித் தோற்று, தலைவன்தனக்கு - அரசனாகிய துரியோதனனுக்கு, சொல்லி யாவையும் முன் கொடுத்தான் - பந்தயமாகக்குறிப்பிட்டு எல்லாப்பொருள் களையும் முதலிற் கொடுத்துவிட்டான்; கொடுத்த பின் - (அவ்வாறு எல்லாப் பொருள்களையும் தோற்றுக்) கொடுத்தபின்பு, இசைவு - தான்மனமொப் பிய பந்தயப்பொருள், யானே என்றும்—, வீமன் முதல் இளையோர் என் றும் - வீமன்முதலியதம்பிமார்நால்வருமென்றும்,என் வேள்வி மானே என் றும்-என தூயாகபத்தினியாகியதிரௌபதியேயென்றும்,குறித்து-குறிப்பிட்டு வைத்து, இழந்தான் - (எல்லாரையும்) இழந்துவிட்டான்; வழக்கால் வென் றோம் - முறைமையாகவே (நாங்கள் சூதாட்டத்திற்) சயித்துவிட்டோம்; (ஆதலால்), வருவாய் - (எங்கட்கு அடிமைப்பட்ட நீ எமதுவிருப்பத்தின் படி ராஜசபைக்கு) வரக்கடவாய்; (எ - று.)

'தானாகவேசூதாடி எல்லாப்பொருள்களையும் இழந்து பின்னர்த் தரும புத்திரன் பிராயத்தில்மூத்தவனான தன்னை முதலிலும்,பிறகு வயசின்கிரமப் படியே வீமன்முதலிய தம்பிமாரையும், அதன்பின்பு யாவரினும் இளையவ ளான உன்னையும் பந்தயமாகவைத்து முறைப்படியாகவே தோற்றனனாத லால்,உன்பர்த்தாக்களான பாண்டவர்கள்போலவே நீயும் எங்கட்குஅடிமை யாகியேவிட்டாய்; ஆதலால், எங்களுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து வர வேண்டியதே'எனத் துச்சாதனன் திரௌபதிகூறியதாகப்பிராதிகாமிகூறிய ஆட்சேபத்திற்குப் போலிச்சமாதானங்கூறித் திரௌபதியைத் தன்னுடன் ராஜசபைக்கு வருமாறு அழைத்தனனென்க. முதலில் தன்னையும், பின்பு வீமன்முதலிய தம்பியரையும், அதன்பிறகு திரௌபதியையும் என்ற இம் முறையில் தருமன் தோற்றானென்பதைக் கீழ் கஅக-ஆஞ்செய்யுள்முதலிய வற்றால் அறிக. தம்பியரை முதலில் வைத்திழந்த பின்பே தருமன் தன்னை யும் திரௌபதியையும் பந்தயம்வைத்திழந்ததாக முதனூலாகிய வியாசபார தத்திற் கூறியிருக்கவும் இவ்வாசிரியர் இவ்வாறுகூறுவது, "முன்னோர்நூலின் முடிபொருங்கொத்துப், பின்னோன்வேண்டும் விகற்பங்கூறி, அழியாமாபி னது வழிநூலாகும்"என்ற வழிநூலிலக்கணம்பற்றி யென்க: இவ்வாறு முன் னும் பின்னும் முதனூற்கு வேறுபட்டு வருமிடந்தோறும் இவ்விதி கொள்க.

தானே, ஏகாரம் - பிரிநிலை: பிறர் தூண்டுதலில்லாம லென்றபடி. மற் றையஏகாரங்கட்கும் ஏற்றபெற்றி கண்டுகொள்க. வென்றோம்-உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. (உகச)

உகரு.—(இ - ள்.) மின்னை சிரிக்கும் நுண் இடையாய் - மின்னலைப் பரிகசிக்கின்ற நுண்ணிய இடையையுடையவளே!—பொன்னை சிரிக்கும் பூ கோயில் - பொன்னின்நிறத்தைச் சிரிக்கின்ற[பொன்னைக்காட்டிலும் மிக்க பேரொளியைக்கொண்ட] அழகிய (இந்திரப்பிரத்தத்துச்) சபாமண்டபத் தில், (பளிங்கினால் தொழில்செய்யப்பட்ட ஓரிடத்தைத் தடாகமெனப் பிரமித்துத் துரியோதனன் தனதுதுகிலைத் தூக்கிக்கொண்டு சென்ற போது), புனல் வாவி இல் என்று - 'நீரையுடைய வாவியானது (இங்கு) இல்லையே!' என்றுசொல்லி, எங்கள் குலம் மன்னை சிரித்த - எங்கள் குலத் திற்பிறந்த அரசனான துரியோதனனைச் சிரித்துஇகழ்ந்த,செம் கனி வாய் - கோவைப்பழம்போலச் சிவந்த உனது வாயே, மாறாது இரங்கி அழுது

அரற்ற - (இப்பொழுது) ஓயாமல் வருந்திக் கதறியழும்படி, வேந்தர்க்கு எதிர் - பலஅரசர்கள்முன்னிலையில், உன் மெய் கணவன்தன்னை சிரிக்க இருக்கின்ற - உனக்குஉரிய கணவனுகிய தருமபுத்திரனை (நாங்கள்) சிரித்து இகழும்படி யிருக்கின்ற, சளம் - (அவனது)இழிந்தநிலைமையை,நீ காணின் - நீ பார்த்தால், தரியாயே - பொறுக்கமாட்டாயோ! (எ - று.)

இந்திரப்பிரத்தத்தில் எங்கள்தலைவனுன துரியோதனனைச் சிரித்த உன்னுடைய வாயானது இப்போது உனது தலைவனைக் கண்டு அழுது அரற்றுமாறு நாங்கள் அவனைப் பரிகசித்துச்சிரித்தால் நீ மனம்பொறுக்க மாட்டாயோ? அப்பொழுது செய்த வினையின் விளைவை இப்பொழுது நீ அவசியம் அநுபவித்தே தீரவேண்டும் என்பது கருத்து. திரௌபதியின் செங்கனிவாயில் முதலிற் சிரிப்பும் பின்பு அழுகையும் கூறியிருப்பது, ஒன்றிற் பல நிகழ்வனவாகக் கூறும் முறையிற்பட்டர்ச்சியணியாம்; வடநூலார் பர்யாயாலங்காரம் என்பர். முதலடியிலும் மூன்ருமடியிலும் 'சிரிக்கும்'என்பது - உவமவாசகமாய் நின்றது. திரௌபதி துரியோதனனைச் சிரித்த வரலாறு,கீழ் கஙு-ஆங்கவியின் உரையில் விரித்துக்கூறப்பட்டது. இல் - இல்லை என்ற எதிர்மறைக்குறிப்புவினைமுற்றின் விகாரம். சலம் - வடசொல்: வஞ்சனையென்று பொருள்; இங்கு, வஞ்சனையால்நேர்ந்த இழிந்தநிலைமைக்கு. இலக்கணை: மாறுபாடு எனினுமாம். தரியாயே-'தரியாய்' என்ற எதிர்மறை முற்ருேடு எதிர்மறைப்பொருளதான ஏகாரமுஞ்சேர்ந்து தரித்தேதீரவேண்டுமென்ற ஒருடன்பாட்டுப்பொருளை வற்புறுத்திற்று. (உகரு)

உகசு.—(இ - ள்.) தலத்துக்கு இயையாது-உலகவழக்கத்திற்கு மாருக, ஐவரையும் தனி தனியே தழுவி தழுவி - பாண்டவரைவரையும் ஒவ்வொருவராக ஆலிங்கனஞ்செய்துகொண்டு, பொய் நலத்து மெய் போல நடிக்கும் - பொய்ம்மையாகிய அன்பை மெய்யன்புபோலக் காட்டுகிற, செவ்வி நலன் உடையாய் - மிக்கஅழகையுடையவளே! (இவ்வாறுநடிப்பதனுல், நீ), குலம் துப்பு இறந்தாய் ஆம் - நல்லகுலத்திற்குஉரிய ஒழுக்கம் தவறினவளாயினுய்; ஆகில் - ஆகவே, கூசாது - பின்வாங்காமல், என் பின் போதுக-என்பின்னேவரக்கடவாய், என-என்று சொல்லி, (துச்சாதனன்), பெலத்தின்-பலாத்காரமாக, செம் கை மலர் தீண்டி பிடித்தான் - (திரௌபதியினது) செந்தாமரைமலர்போன்ற கையைத் தொட்டுப் பிடித்திழுக்கலானுன்; (அதனுல்), சூழ்ச்சி முடித்தானே-(தாங்கள்)எண்ணிய ஆலோசனையை முடித்தவனுயினுன் ; (எ - று.)

ஒருத்தியே ஐவரை ஒருசேர மணம்புணர்தல் உலகவழக்கத்திற்கு மாருன தென்பான் 'தலத்துக்குஇயையாது' என்றும், 'எனக்கு உன்னிடத்தில்தான் மிக்கஅன்பு, எனக்கு உன்னிடத்தில்தான் மிக்கஅன்பு' என்று ஒவ்வொருவரிடத்தும் ரஹஸ்யத்திற் கூறி மயக்கும் இயல்புடைய பொதுமகளென்பான் 'ஐவரையும் தழுவித்தழுவித் தனித்தனியே நலத்துப்பொய்யே மெய்போல நடிக்கும்' என்றும், அதற்கேற்ற அழகுடையாளென்பான் 'செவ்விநலனுடையாய்' என்றும் கூறினுன். செவ்வி நலன் - ஒருபொருட்பன்மொழி. ஒருத்தியே ஐவரையும் மணம்புணர்ந்து பதிவிரதாதருமங் குலைந்து நாணமற்றிருக்கிற நீ என்பின்னேவருதற்குப் பின்வாங்கக் காரணமில்லையே யென்பது, 'குலத்துப்புஇறந்தாய்ஆம், ஆகிற் கூசாது என்பின் போதுக' என்பதன் கருத்து; இனி, 'குலத்து பிறந்தாயாம் ஆகில்' என்று பிரித்து - நல்லகுலத்திற்பிறந்தவளாயிருந்தால் என்று கூறுவது, 'என்பின் போதுக' என்பதனேடு முரணுமாறு அறிக: இகழ்ச்சிக்குறிப்பாய் அங்ஙனங்கூறின னென்றலு மொன்று. 'சூழ்ச்சி' என்றது, முதலில் துஷ்டசதுஷ்டர்கள் ஒருங்கேகூடிச் செய்த சதியாலோசனையை. பாண்டவர்கட்குப் பேரவமானஞ்செய்தலே துரியோதனுதியாரது சூழ்ச்சியின் முடிவாத

வின், அதற்குக் கடையெல்லையாக அவர்கள்மனைவியைச் சபையிலிழுத்துக்கொண்டுவரவே சூழ்ச்சிமுடிந்ததா மென்க. 'சூழ்ச்சிமுடித்தான்' என்பது-வினையாலணையும்பெயராய்த் துச்சாதனனைக் குறிக்கு மென்றலுமாம். பிடித்தான் சூழ்ச்சிமுடித்தான் - பிராஸம். பெலம் = பலம்: வடசொல். இயையாது - பொருந்தாமல். 'குலத்துப்பிறந்தாயாம்' என்றவிடத்தில், 'ஆம்' என்பது - தேற்றமுணர்த்தும்; அன்றி, செய்யுமென்முற்று முன்னிலைக்குச்செல்லாமை யுணர்க. (உகசு)

[துச்சாதனனாற் கைபிடித்துஇழுக்கப்பட்ட திரௌபதி காந்தாரியினருகிற் சார்தல்.]

உகஎ.—(இ - ள்.) சிலை வாய் அம் கை அவன் தீண்ட - விற்பொருந்திய அழகிய கையையுடையவனான அத்துச்சாதனன் (தனது கையைப்பற்றி) இழுக்கவும்,—(திரௌபதியானவள்),— செல்லாள் ஆகி - (அவன்பின்னே) போகாதவளாய், அல்லல் உழந்து - துன்பத்தால் வருந்தி, உலைவாய் அழல் போல் நெடிது உயிரா - (கொல்லனது) உலைக்களத்துநெருப்புப்போல (உஷ்ணமாக)ப் பெருமூச்சுவிட்டு, உள்ளம் தளரா - மனஞ்சோர்ந்து, உடல் நடுங்கா - உடம்புநடுங்கி,— கொலை வாய் எயினர் கொல்லும் நிலம் குறித்து செறித்த கொடிய நெடு வலைவாய் ஒரு தான் அகப்பட்ட மான் போல் - கொல்லுதலைத் தமதுசாதித்தொழிலாகக்கொண்ட வேடர்கள் (மிருகங்களை அகப்படுத்திக்) கொல்லுதற்கு வாய்ப்பான இடத்தை ஆராய்ந்தறிந்து (அங்குக்) கட்டிய கொடுமையான நெடிய வலையிலே தனியே அகப்பட்டுக்கொண்ட மான்போல, (துச்சாதனன்கையில் அகப்பட்டவளாய்), மாமி மருங்கு உற்றாள் - (தனக்கு) மாமியார்முறைமையான காந்தாரியின் பக்கத்திற் சென்று சேர்ந்தாள்; (எ - று.)

வேடருடைய வலையிற் சிக்கிய மான் வெருண்டு தப்பும்வழியின்றிப் பதைபதைப்பதுபோல, துச்சாதனன்கையிற்சிக்கிய திரௌபதியும் தப்பியோடும்வகையின்றி மனம்மறுகி மிகவருந்திஉழன்று பின்னர்க் காந்தாரியைச் சார்ந்தன ளென்றவாறு; உவமையணி. அங்கை - அகம் கை என்று பிரிந்து, உள்ளங்கை யென்றும் பொருள்படும்; "அகமுனர்ச் செவி கை வரின் இடையன கெடும்" என்பது, நன்னூல். உயிரா, தளரா, நடுங்கா - 'செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சங்கள். எயினர் - குறிஞ்சிநிலமாக்கள்; (அந்நிலத்துமகளிர், 'எயிற்றியர்' எனப்படுவர்.) 'சிலைவாயணங்கை' என்ற பாடத்துக்கு, வில்லிலக்கெய்தலால் மணம் வாய்ந்த திரௌபதியை யென்பது பொருள். (உகஎ)

[துச்சாதனன்பின்னேபோமாறு காந்தாரி திரௌபதிக்குக் கூறுதல்.]

உகஅ.—(இ - ள்.) பூ வார் குழலி - மலர்களையணிந்த நீண்ட கூந்தலையுடையவளாகிய திரௌபதி, தளர்வொடு - வருத்தத்துடனே, தன் புறம் சேர் பொழுதும் - தன்புறத்தில் வந்து சார்ந்தபொழுதிலும், சிறிது இரங்காள் - சிறிதும் மனமிரங்காதவளாகியும், நீ வா என்றே அருகு இருத்தி நெடுங் கண் பொழியும் நீர் துடையாள் - 'நீ (இங்கே) வருவாயாக' என்று (அன்புகொண்டழைத்துத் திரௌபதியைத்) தன்னருகிலிருக்கச் செய்து (அவளது) நீண்டகண்களிலிருந்து சொரிகிற சோகபாஷ்பத்தைத் துடைத்துத் தேற்றாதவளாகியுமிருந்துகொண்டு, 'பாவாய் - திரௌபதியே! மேவார் அல்லர் - (உன்னை அழைப்பவர்) பகைவரல்லர்: தமர் - சுற்றத்தவரேயாவர்; அழைத்தால் - (இவ்வாறு சுற்றத்தவர்) அழைக்கும்போது, மேல் உன் கருத்து விளம்பி வர அஞ்சாது ஏகு - இனிமேல் உனது எண்ணத்தைச் சொல்லி வருமாறு சிறிதும்அச்சங்கொள்ளாது செல்வாயாக', என்றான் - என்றுகூறினாள்: (யாவளெனில்),—பல பாதகரை பயந்தாள் - பல [நூறு] பெரும்பாவிகளைப் பெற்றவளாகிய காந்தாரி; (எ - று.)

துச்சாதனன் வலியப் பிடித்திழுத்தபோதே அவனைத் தடுத்துத் திரௌபதியைப் பாதுகாத்தற்கு உரிய முறையில் நிற்பவளான காந்தாரி அப்போது அவ்வாறு செய்யாதிருந்ததுமன்றி, அவள் தன்னிடம்வந்தபிறகும் அன்புகாட்டி அவளைத்தேற்றாமல் விட்டிட்டதோடு, 'அவன்பின்னே போ' என்றுஞ் சொன்ன கொடுமையை நினைத்து, அக்காந்தாரியை 'பலபாதகரைப் பயந்தாள்' என்றார்; மக்கட்கு ஏற்ற தாய் என்க. பலபுதல்வரைப் பெற்றோர்க்கு இரக்கமென்பது இயல்பாயிருக்கவும், நூறுபிள்ளைகளைப்பெற்ற இவட்கு இவ்வாறுகொடுமையமைந்திருப்பதற்குக் காரணம் ஸத்புத்ரரைப்பெறாமற் பலகொடும்பாவிகளைப் பெற்றதேயா மென்றவாறு: இத்தொடர் இவ்வாறு கருத்தை உட்கொண்டிருப்பதனால், கருத்துடையடைகோளியணியின்பாற்படும். காந்தாரி தான் மிக்கபதிவிரதையாயிருந்தும் தனதுமருமகளாகிய திரௌபதியினிடத்து இரக்கங்கொள்ளாமலும் அவளதுகண்ணீரைத்துடையாமலுமிருந்து 'தமரழைத்தால் உன்கருத்தை விளம்பியவா எது' என்றுகூறி அறத்திற்குமாறாகநடந்தது, அவள் தன்மக்களிடத்துக்கொண்ட மிக்க அன்பினா லென்க. பூ ஆர் குழலி என்று பிரித்து-பூக்களை மிகுதியாகஅணிந்துள்ள கூந்தலை யுடையவ ளென்றும் பொருள்கொள்ளலாம். பொழுதும், உம்மை - இழிவுசிறப்பு. 'சிறிதும்' என்ற இழிவுசிறப்பும்மை, விகாரத்தால் தொக்கது. மேவார்-சேராதவர்; எனவே, பகைவராயிற்று:எதிர்மறைப் பலர்பால் வினையாலணையும்பெயர். (௨௧௮)

[துச்சாதனன் திரௌபதியை இழுத்துக்கொண்டு போதல்.]

௨௧௯.—(இ - ள்.) தாய் உரைப்ப - (தனது) தாயாகிய காந்தாரி(அவ்வாறு) சொல்லிவிடவே,—தண் தார் விடலை - குளிர்ந்த மாலையை யணிந்த துச்சாதனன், தாய் - தாவிச்சென்று, முன் அணுகி - (திரௌபதியினது) எதிரிற் போய், தாமரை கை செண்டால் - தாமரைமலர்போன்ற (தனது) கையாகிய செண்டினாலே, அவள் பைங் குழல் பற்றி - அந்தத்திரௌபதியினது கரியகூந்தலைப் பிடித்துக்கொண்டு, நீண்டான் ஆகி செல்கின்றான் - (அவளுடம்பைத்) தொடாதவனாகவே போகின்றவனானான்; (அப்பொழுது), கொடியாள் - பூங்கொடிபோன்றவளான திரௌபதி, வண்டு ஆர் குழல் உடன் குலையவும்-வண்டுகள்மொய்க்கப்பெற்ற தனதுகூந்தல் ஒருசேர அவிழ்ந்து புரளவும், மானம் குலைய - (தனது) மானம் அழிந்திடவும், மனம் குலைய - மனமும் நிலைகலங்கவும், கொண்டார் இருப்பர் என்று-(தன்னை) மணந்துகொண்ட கணவர்கள் (அச்சபையில்) இருப்பார்கள்' என்று எண்ணி, நெறி கொண்டாள் - (அத்துச்சாதனன் செல்கின்ற) வழியே (தானும்) செல்லலானாள்; அந்தோ - ஐயோ! (எ - று.)—'அந்தோ' என்பது, இரக்கக் குறிப்பிடைச்சொல்; கவி இரங்கிக்கூறியது.

காந்தாரி தனக்கு அநுகூலமாகச் சொல்லவே, துச்சாதனன் தனது தாயின்புறத்திலொதுங்கியிருந்த திரௌபதியி னருகிற்போய்த் தனதுகைகளினால் அவள்கூந்தலைப்பற்றியிழுத்துக்கொண்டு செல்ல, அத்திரௌபதியும், தனதுகணவர்கள் அச்சபையிலிருப்பதனால் அவர்கள் தன்னைக் காக்கக்கூடு மென்று ஓரெண்ணங்கொண்டு அத்துச்சாதனனுடன் சென்றனளென்பதாம். விடலை - ஆண்மகன், இளமகன், திண்ணியன்; ஆண்பாற் சிறப்புப்பெயர். 'தாய்' என்ற சொல் இரண்டனுள், பின்னது - இறந்தகால வினையெச்சம்; 'இனி, 'தாய்முன்னணுகி' என்பதற்கு - தனது தாயாகிய காந்தாரியினெதிரிற் கிட்டி எனப் பொருள்கொண்டால், பின்வரும் 'அவள்' என்பது - திரௌபதியைக் குறித்தற்கு இயையாமை காண்க. துச்சாதனன் தனதுகையைப் பூஞ்செண்டினுருவமமையுமாறு குவித்துத் திரௌபதியின்குழலைப் பற்றின னென்க. பசுமை கருமை நீலம் ஆகிய இந்நிறங்களை அபேதமாகக்கூறுவது கவிசமய மாதலால், கரியகுழலை 'பைங்குழல்

என்றார். 'பைங்குழல்பற்றத் தீண்டாளாகிச் செல்கின்றாள்' என்ற பாடம் - 'தனதுகூந்தலைப்பற்றியிழுத்துக்கொண்டுசெல்ல(த் திரௌபதி தான் தீட்டுடைமையால்) தீண்டக்கூடாதவளாயிருந்தும் [ரஜஸ்வலையாயிருந்தும்] (அத்துச்சாதனனுடன்) செல்பவளாய்' என்று பொருள்படும். 'கொடியாள்' என்பதற்கு - கொடுமைக்கு இலக்கானவ ளென்றும்பொருள்கொள்ளலாம். 'குழலும்' என்ற உம்மையைப் பிரித்து'குலைய' என்பதனோடு கூட்டுக. முன்னணுகி என்று பிரித்தும் உரைக்கலாம். (உ௧௯)

[இதுவும் அது.]

உ௨0.—(இ - ள்.) 'சூழும் கனல் வாய் உரும் அன்றி - பரவுந்தன்மையுள்ள நெருப்புப் பொருந்திய இடி வீழ்வதே யல்லாமல், துளி வாய் முகிலும் மகிதலத்து வீழும்கொல்ஓ - மழைத்துளிகள் பொருந்திய மேகமும் பூமியில் விழக்கடவதோ! உற்பாதம்விரவிற்று- துர்நிமித்தம் உண்டாயிற்று,' என்று—, வெரூஉக் கொள்ள - (கண்டவர் யாவரும்) அச்சங்கொள்ளும்படி, தாழும் பெரிய கரிய குழல் தாரோடு அலைய - நீண்டுதொங்குகின்ற பெரிய கருநிறமுடைய (திரௌபதியின்) கூந்தல் மாலையுடனே அவிழ்ந்து கீழ்விழுந்து புரளவும்,—தழீஇக்கொண்டு வாழும் சுரும்பு சுழன்று அரற்ற - (அக்கூந்தலிலணிந்துள்ள மாலையைச்) சார்ந்து வாழ்கிற வண்டுகள் சுழன்றுகொண்டு ஒலிக்கவும், மண்மேல் இழுத்து வருகின்றான் - நிலத்திலே (அத்திரௌபதியை) இழுத்துக்கொண்டு வருவானாயினான், (துச்சாதனன்); (எ - று.)

துச்சாதனன் திரௌபதியைக் கூந்தல்பற்றி யிழுத்துச்சென்றபோது அக்கூந்தல் கீழ்விழுந்து புரண்ட தன்மை மேகம் கீழ்விழுந்து புரள்வதாகிய உற்பாதமாகக் கருதுமா றிருந்த தெனக் குறித்தார். வானத்துமேகங்களினின்று நிலத்தில் இடிவீழ்வது, இயற்கையே; மேகம்வீழ்வதோ உற்பாதமாகக் கொள்ளப்படும். உற்பாதமாவன -உலகத்திற்குப் பின்வருந்தீங்கைத் தமதுநிகழ்ச்சியால் முன்னமே விளக்குவனவான மேகம்வீழ்தல்,தூமகேதுவென்னும் வால்நட்சத்திரம் தோன்றுதல், வானத்தினின்று கொள்ளிக்கட்டைவீழ்தல், இரத்தமழைபொழிதல் போல்வன. பூமாலையுடனேகூடிய கருங்கூந்தல் குலைந்துவிழுந்ததை மின்னலோடுகூடிய மேகம் விழுந்த தென மயங்கியதாகக் கூறியதனால், இச்செய்யுளின் முதல்மூன்றடிகள் - மயக்கவணியாம். பூமாலைக்கு மின்னலும், கருங்கூந்தலுக்குக் கார்மேகமும் உவமையெனக் காண்க; "தாருங் குழலும் மின்னுடனே தலஞ்சேர்கொண்ட லென வீழ" என்பர் மேலும்.

மஹீதலம், உத்பாதம் - வடசொற்கள். மகிதலம் - பூமியினது இடம் என உடைமையும் உடையதும் வேறாகாத ஒற்றுமைக்கிழமைப்பொருள் பட விரியும் ஆறனுருபுத்தொகை. வீழுங்கொல்லோ, கொல் - அசை; ஓ - இரக்கம். வெரூஉக்கொள்ள, தழீஇக்கொண்டு - வெருவுகொள்ள, தழுவிக்கொண்டு; சொல் விகாரப்பட்டு அளபெடுத்ததனால், சொல்லிசையளபெடைகள். (உ௨0)

[இதுமுதல் ஐந்துகவிகள் - திரௌபதியின்நிலையைக்கண்ட அந்நகரத்துச் சனங்கள் வருந்துதலைக் கூறும்.]

உ௨௧.—(இ - ள்.) (சிலர்), 'தழலோ என்னும் கற்பு உடைய-நெருப்புத்தானோ வென்றுசொல்லத்தக்க [மிகப்பரிசுத்தமான] பதிவிரதாதருமத்தையுடைய, தனி நாயகிதன் - (வேறுதுணையின்றித்) தனிப்பட்டவளாகிய (பாண்டவர்களின்)மனைவியான திரௌபதியினது, தாமம் நறுங் குழலோ-மலர்மாலையைச்சூடிய நறுமணம்வீசுகின்ற கூந்தல்தானோ (குலைந்தது!) உரகம் கொடிவேந்தன்குலமோ இவண் குலைந்தது-பாம்புக்கொடியையுடையவனாகிய துரியோதனராசனது வம்சமன்றோ இப்பொழுது குலைந்துவிட்டது!' என்பார் - என்றுசொல்வார்; (சிலர்), 'நெறி ஒன்று இல்லா நீடு பொ

லம் கழலோன்-சிறிதும்நன்னெறியிற்செல்லுதலில்லாத நீண்ட பொன்னாற் செய்த வீரக்கழலை யணிந்தவனாகிய துரியோதனனது, மதி வெள் குடை - பூர்ணசந்திரன்போன்ற வெண்கொற்றக்குடையானது,புவிக்கு - பூமியிலுள்ளார்க்கு, நிழலோ - நிழலைத்தருவதாகுமோ? நெருப்பு அன்றோ-நெருப்பாய் வாட்டுகின்றதன்றோ?' என்பார்—;(சிலர்),கண்ட கண் கையால் புடைப்பார்-(திரௌபதிக்குநேர்ந்த அந்தக்கொடுமையைக்) கண்ட (தங்கள்) கண்களைக் கைகளினால் மோதிக்கொள்வார்கள்;(எ - று.)

மிக்கதூய்மையினாலும், நினைத்தமாத்திரத்தில் எரித்தழிக்குந் திறத்தினாலும், மாதர்களின்கற்பிற்கு அக்கினியை உவமைகூறுதல், மரபு. தனி நாயகி என்பது - ஒப்பற்ற தலைவி யென்றும் பொருள்படும். திரௌபதி இப்பொழுது கூந்தலைவிரித்தது, துரியோதனாதியர்கள் விரைவில் வேரோடழிதற்குக் காரணமா மென்பது, முதலிரண்டடிகளின் கருத்து. நீதிநெறிதவறாத அரசாட்சியைக் குடை யென்றல், மரபு. குடைக்குச் சந்திரனுவமை, வட்டவடிவத்தோடு வெண்ணிறமாய் விளங்குதற்கு. குடை - அதுபோலத் தாபந்தணிக்கிற அதிகாரத்திற்கு உவமையாகுபெயர். உலகுக்கு இனிய நிழலைத் தந்து தாபத்தைத்தணிக்கவேண்டிய துரியோதனனதுவெண் கொற்றக்குடை அவ்வாறின்றி அதற்குமாறாகக் கொடுமையை விளைத்துத் தபிப்பதனால், 'நிழலோ புவிக்கு நெருப்பன்றோ ......கழலோன்மதிவெண் குடை' என்றார். இப்படிப்பட்ட மகாசோகத்துக்குக் காரணமான செயலைத் தங்கள்கண்களாற் பார்க்கநேர்ந்த கொடுமைபற்றி, 'இவ்வருத்தத்தை ஏன் கண்டீர்கள்?' என்று தண்டித்தல்போல,அக்கண்களைத் தமதுகைகளால் மோதுவாராயினரென்க. கூந்தலின்குலைவை மறுத்து வேந்தன்குலம் குலைந்ததாகக் கூறியது, அபநுதியலங்காரம். 'புவிக்கு' என்பது - முன்னுள்ள 'நிழலோ' என்றதனோடும், பின்னுள்ள 'நெருப்பன்றோ' என்பதனோடும் சென்றியைவது - இடைநிலைத்தீவகம்; வடநூலார், மத்யமதீபம் என்பர்.

தழலோ, ஓகாரம் - சிறப்பு. குழலோ, நிழலோ—ஓகாரங்கள் - எதிர்மறைப்பொருளன. குலமோ, ஓகாரம் - தெரிநிலை. நெருப்பன்றோ—இதில் அன்று ஓ என்ற இரண்டெதிர்மறைகள் ஒருங்குசேர்ந்து ஓர்உடன்பாட்டுப் பொருளை வற்புறுத்தித் தேற்றக்கருத்தை விளக்கும். குலம் குலைந்தது - தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாச் சொல்லப்பட்ட காலவழுவமைதி.

உஉஉ.—(இ - ள்.) (சிலர்), 'திறல் காட்டும் வெம் சிலை விசயன்-தனது பராக்கிரமத்தை (ப் பலசமயங்களிற்)காட்டியுள்ள கொடிய வில்லை யேந்திய வனான அருச்சுனன், கையால் வகிர்ந்து கடி கொள் மலர் சூட்டும்-(தனது) கையினாற் கோதி நறுமணமுள்ள மலர்மாலையைச் சூட்டப்பெற்ற, பனிச்சை - (திரௌபதியினது) கூந்தல், இவண் புழுதி தோய்கள் எறியது - இப்பொழுது மண்புழுதி படியப்பெற்றதே!' என்று அழுது நைவார்-என்று சொல்லிப் புலம்பி வருந்துவார்கள்; (சிலர்), 'காந்தாரி—, மைந்தர் இட்ட வினை கேட்டும் - (தனது) புதல்வர் செய்த தீச்செய்கையைக் கேட்டிருந்தும், மீட்டும் - பின்பும், தடாமல்-(துச்சாதனன்கொடுமையைத்)தடுக்காமல், ஏகு என்று விட்டாள்-(திரௌபதியைநோக்கி) 'நீ போ' என்றுசொல்லி அனுப்பிவிட்டாள்; கொடியள் - (ஆதலாற்) கொடியவள்; இனியோடு இன்றே கெடும்-(இவ்வாறு பெருந்தீங்கைச் செய்ததனால் இவள்) சுற்றத்தாரோடும் இப்பொழுதே அழிந்துவிடுவாள்,' என்பார்—;(எ - று.)

துரோணாசாரியர்க்குக் குருதட்சிணை செலுத்துதற்பொருட்டுத் துருபதன்விஷயத்திலும், சித்திரரதனென்ற வித்தியாதரவேந்தன் திறத்திலும், திரௌபதியின்சுயம்வரகாலத்திலும்,காண்டவமென்னும் வனத்தை எரிக்குமாறு அக்கினிதேவனுக்கு அளிக்கையில் வந்தெதிர்த்த தேவர்திறத்திலும்,

தருமபுத்திரன் ராஜசூயயாகஞ் செய்தற்பொருட்டுத் திறைப்பொருள்கொ ணருமாறு திக்விஜயஞ்செய்தபோதும். மற்றும் பலஇடங்களிலும் அருச்சு னன் விற்றிறமையைக் காட்டியது காண்க. இவ்வாறு மகாவீரனான அருச் சுனன் கோதிமுடித்த கூந்தற்கும் புழுதிபடியுமாறு நேர்ந்த விபரீதத்தை நினைந்து அழுது நையாராயினர். இங்ஙனம் திரௌபதியின் துன்பத்திற் குக் காரணமாயிருந்த துரியோதனாதியர்கள் அருச்சுனனது வில்வீரத்தி னால் விரைவில் வழிவுறுவரென்பது,'காட்டுந்திறல்வெஞ்சிலை' என்ற அடை மொழியினாற் குறிப்பிக்கப்பட்டவாறு. 'அருச்சுனனாற்கோதிமுடிக்கப்பட்ட திரௌபதியின்கூந்தலில் இப்பொழுது புழுதி படிந்துள்ளது' என ஒரு பொருளிற் பலதன்மைநிகழ்ந்தனவாகக் கூறியது - முறையிற்படர்ச்சியணி யின்பாற்படும். தன்மைந்தர்செய்தகொடுமையை அறிந்திருந்தும் திரௌ பதியைச் சபைக்குப் போகுமாறு கூறிய காந்தாரி அக்கொடுமைக்கு உடன் பட்டவளேயாவளாதலால்'கொடியள்'என்றும், 'அளவுகடந்துசெய்த புண் ணியபாவங்கள் மறுபிறப்பிலன்றி இப்பிறப்பிலேயே பயனை விளைக்கும்'என் பது நூல்துணிபாதலால் அளவுகடந்துசெய்த பொல்லாங்குடைமைபற்றி அதன்பயனாக 'காந்தாரி கிளையோடு இன்றேகெடும்' என்றும் கூறினர். "வீரர் கற்பின் மின்னனையாளை விறன்மைந்த, ரேறு மன்றி லேற்றவு மாமன் றென்னுதா, ளூறு வன்பிற் கண்ணறைமன்னனொருதேவி, யாறு வெள்ளத்துன்புற வன்றேயடியிட்டாள்" என மேல் நான்காம்போர்ச்சருக் கத்தில் வருவது, இங்கு நோக்கத்தக்கது.

கடி - உரிச்சொல். பனிச்சை-மகளிர்கூந்தலின் வகை ஐந்திலொன்று: கூந்தலின்வகை ஐந்தாவன - மயிரைஉச்சியில்முடித்தலாகிய முடியும், சுரு ட்டிமுடித்தலாகிய குழலும், மயிரைமுடிந்துவிடுதலாகிய தொங்கலும், பின் னிவிடுதலாகிய பனிச்சையும், பின்னேசெருகுதலாகிய சுருளுமாம். பனிச் சை - இங்குச் சிறப்புப்பொருளைத் தாராமல், பொதுவாகக் கூந்தலென்ற மாத்திரமாய் நின்றது. புழுதித் துகள் - ஒருபொருட்பன்மொழி. தடாமல்- 'தடு' என்ற பகுதியின் எதிர்மறைவினையெச்சம். கிளை - மரத்தைக் கிளை போல உரிய காலங்களில் தழுவுஞ் சுற்றத்தார்; உவமையாகுபெயர். இன் றே, ஏகாரம் - தேற்றத்தோடு விரைவு. கெடும் - செய்யுமென்முற்று,பெண் பாலுக்கு வந்தது. காந்தாரீ-வடசொல்: காந்தாரதேசத்தரசன்மகள்; தத்தி தாந்தநாமம். (௨௨௨)

௨௨௩.--(இ - ள்.) (சிலர்), 'இ மாமன் - (திரௌபதியினது) மாமனா ராகிய இந்தத்திருதராஷ்டிரன், ஒக்க இருந்து - உடனிருந்து, இதற்கு- (துரியோதனாதியர்செய்த) இத்துராலோசனைக்கெல்லாம், இசைந்தான் - உடன்பட்டான்: (ஆதலால்), நெஞ்சு இரும்போ-(இவனது) மனம் இரும்பு தானோ?' என்பார்—; (சிலர்), 'பெரும் போர்அரசர்-மிக்கபோர்த்திறத்தை யுடைய அரசர்கள்; பெண்ணுடனே பிறந்தும் - பெண்களுடனே பிறந்த வர்களாயிருந்தும், சிற பெறுர் - (இக்கொடுமையைச்செய்யுந் துரியோத னாதியர்திறத்திற்) சிறிதுஞ்சினங்காட்டாதிருக்கின்றார்களே!' என்பார்—; (சிலர்), 'போர் பொரும் வீமன் பொறுத்தாலும் - போர்செய்யும்வலிமை யுள்ள வீமசேனன் (மாறுசெய்யாது ஒருகால்)பொறுத்துக்கொண்டிருந்தா னாலும், பொன் தேர் விசயன் பொறுன்-அழகிய தேரினையுடைய அருச் சுனன் சிறிதும் பொறுக்கமாட்டான்', என்பார்—; (சிலர்), 'அரும் போர் அரசர் தகாது என்றால் - அருமையான போர்த்திறத்தையுடைய(இச்சபை யிலுள்ள) அரசர்கள் '(இவ்வாறு சூதாடுதல்) தக்கதன்று' என்று மறுத்துக் கூறியிருந்தால்,இந்த அழிவு வருமோ-இந்தக்கேடுநேரிடுமோ?'என்பார்—.

'மாமன்' என்றது - திரௌபதிக்குமாமனார்முறையான திருதராஷ்டி ரனை; திரௌபதியைப்பற்றி வருந்துவோரது வார்த்தை யாதலின், இவ்வாறு

கொள்வதே சிறப்பு: துரியோதனனது மாமனாகிய சகுனியென்று கொள்வதற்கு இத்துணை இயைபின்மை யறிக. திருதராஷ்டிரன் இளமையிலேயே தந்தையையிழந்த பாண்டவர்கள்திறத்திற் பேரன்புகொண்டு பாதுகாத்து வந்து அவர்களை மிக்கசிறப்பினராகுமாறு செய்திருந்தும், இப்போது ஒருபால் அன்புமிகுதிக் குணக்கேடரானதனது மைந்தர்க்குவசப்பட்டு அவர்களது துராலோசனைக்கெல்லாம் தான் உடன்தையாய்நின்று தருமாத்துமாக்களான அப்பாண்டவர்களைச் சூதாடுமாறுபுரிந்து அதனோடுநில்லாமல் மருமகளான திரௌபதியைத் தனதுமக்கள் பேரவமானஞ்செய்வதை அறிந்தபிறகும் அதனைத்தடுக்காமல் அதற்கும்உடன்பட்டுநின்றதனால், அவனதுமனத்தை 'இரும்போ' எனப் பழித்துக்கூறினார். இ மா மனிதற்கு என்றுபிரித்துப் பொருள்கொள்ளுதலு மொன்று.

'ஆணோடு பெண்ணோடு பிறக்கவில்லையா?' என்பது - உலகவழக்கு. தான் தனியே ஒருத்தனாகப் பிறந்தவன் பிறரது கஷ்டநிஷ்டூரங்களையறிதல் அருமை; பலருடன்பிறந்தவர்களோ தம்மோடு குடல்துவக்குடைய உடன்பிறந்தார்க்கு வருத்தம் நேர்ந்தபொழுது அது தமதுமனத்திற் பதிய வருந்துவார்களாதலால், அத்தகையார் பிறர்க்குத்துன்பம்நேர்ந்தவிடத்தும் அப்பிறரது கஷ்டநிஷ்டூரங்களையும் உணர்தற்கு வல்லவராவர். அத்தன்மையர்பலர் கூடியிருக்கும் இச்சபையிலே இயல்பிற்சுதந்தரமற்றுத் தனக்கு நேரும்துன்பத்தை நீக்கிக்கொள்ளும் வல்லமையில்லாத பெண்ணாய்ப் பிறந்துள்ள திரௌபதியை ஒருமூடன் இவ்வாறுவருத்துகையில் மாறாகச்சிறித்தமதுபலத்தால் இவ்வக்கிரமத்தைத் தவிர்க்கவேண்டியிருக்க, இவர்கள் ஒன்றுஞ்செய்யாதுஅடங்கி வாளாவிருக்கின்றார்களே! இதென்ன விபரீதம்! என்பது, இரண்டாமடியின்கருத்து. திரௌபதி பெண்ணாதலால், ஆணோடு பிறந்தா ரென்பதைத் தவிர்த்து 'பெண்ணுடனே பிறந்தார்' என்று கூறினார்கள்; இது - உலகவழக்குநவிற்சியணி. 'பெரும்போரரசர்' என்றது, மாறுசெய்யவல்லவர் என்ற கருத்தை யுட்கொண்டது; கருத்துடையடைமொழியணி. இனி, இரண்டாமடிக்கு - பெரியபோர்த்தொழிற்கு உரிய துரியோதனுதியர் தாங்களும் ஒருபெண்ணுடன் பிறந்தவர்களாயிருந்தும் ஒருபெண்ணை [திரௌபதியை]இவ்வாறுகோபித்துவருத்துதற்குத் தகாதவராவ ரென்பார் என்று பொருள்கூறுதலும் ஒன்று; துரியோதனாதியர் நூற்றுவரோடு துச்சளையென்ற ஒருத்தி பிறந்தன ளாதலால், அவர்கள் பெண்ணுடனேபிறந்தவராவர். இப்பொருளில் துரியோதனாதியரை 'பெரும்போரரசர்' என்றது, தமக்குச் சரியான ஆடவரிடத்தில் வீரங்காட்டிப் போர் செய்யாமல் அபலையான ஒருபெண்திறத்திற் பகைமைபாராட்டிக் கொடுமைசெய்கின்றார்களே! இவர்களதுவீரம் எற்றுக்கு? என்ற பழிப்பை விளக்கும். பிறந்தும், உம்மை - சிறப்பு.

பாண்டவரைவருள் தேகபலத்தில் வீமசேனனும் விற்போர்த்திறத்தில் அருச்சுனனும் சிறந்தவர்களாதலால், இவ்விருவருள் ஒருத்தராவது மனம் பொறாது புழுங்கிச் சீறி உக்கிரங்கொண்டு பகையழிக்கக்கூடு மென்று,சிலர் தமதுமனத்திற் சிறிதுதேறியவாறு. 'வீமன்பொறுத்தாலும்' என்றவிடத்து, உம்மை - அவன் சிறிதும்பொறுக்கமாட்டா னென்பதை விளக்கும். காண்டவதகனகாலத்தில் அக்கினிதேவன் கொடுத்த வாநரத்துவஜமமைந்து வெண்குதிரைகள்பூட்டிய தேரையுடையவனாதலால், அருச்சுனனை 'பொற்றேர்விசயன்' என்றார்; இத்தொடரில், காண்டவவனத்தை இனிதாகப் புசிக்குமாறு அக்கினிதேவனுக்கு அளித்தபோது தேவர்களையெல்லாம் புறங்கண்டு ஓடச்செய்த அருச்சுனனுக்கு நராதமமான துரியோதனாதியரை யழித்தல் ஒருபெரிதன்று என்ற கருத்துத் தொனிக்கும். சபையிலுள்ள அரசர்களெல்லாரும் துரியோதனனுக்கு உடந்தையாயிராமல் ஒன்றுசேர்ந்து ஆதியிலேயே 'இவ்வாறு அக்கிரமச்செயலைச் செய்தல் தகாது' என்று

ஏககண்டமாகச் சூதாடுதலையே தடுத்திருந்தால், தனிப்பட்ட துரியோதனனால் இத்தகையகொடுஞ்செயல் நேர்ந்திராதென்பது, ஈற்றடியின்கருத்து; இனி, போர்செய்யும் பாண்டவர்கள் சூதாடுதல் எமக்குத்தகாதென்று மறுத்திருந்தால், இத்தகைய அழிவு நேருமோ? என்று கருத்துப்படப் பொருள் கூறுவாருமுளர். (உஉ௩)

உஉ௪.—(இ - ள்.) (சிலர்), 'என்னே - இது என்னவிபரீதம்! குடியில் பிறந்தாருக்கு - நல்லகுடியிற்பிறந்துள்ளவர்கட்கு, இனி - இனிமேல், இவ்வூர் இருப்பு அன்று - இந்த அத்தினபுரம் வசித்தற்குத் தக்க இடமன்று,' என்பார்—; (சிலர்), 'ஓடி - விரைந்துசென்று, முன்னே முறையிட்டால் - (யாம் துச்சாதனனது) எதிரில் ('திரௌபதியை நீ இவ்வாறுகசச்செய்வது தகுதியன்று' என்று) முறையிடுவோமாயின், எமை முனியும்கொல்லோ - (அத்துச்சாதனன்) எங்களைக் கோபித்துக்கொள்வானோ?' என்பார்—; (சிலர்), பின்னே இரங்கி அழுது அழுது பேதுற்று இன்னல் பெரிது உழப்பார்-திரௌபதியின்பின்னேசென்று இரக்கங்கொண்டு கதறியழுது மனங்கலங்கி மிகவுந் துன்பப்படுவார்கள்; (சிலர்), 'அன்னே - தாயே! துன்பம் களைந்து இன்பம்ஆவாய் - (விரைவில்) இத்துன்பம்ஒழிந்து இன்பமனுபவிப்பாய்,' என்று—, அருள் புரிவார் - கருணைகொண்டு கூறுவார்கள்; (எ - று.)

"கொடுங்கோன்மன்னர்வாழுநாட்டிற்,கடும்புலிவாழுங் காடு நன்றே" என்பவாதலால், கொடுங்கோல்மன்னனான துரியோதனனது அத்தினபுரியில் வாழ்ந்தால் குலமகளிரைப்பிறர்தீண்டுதல் முதலிய பலவகைமுறைக்கேடுகள் நிகழக்கூடு மென்று அஞ்சி, அவ்வூரார்,'குடியிற்பிறந்தார்க்குஇருப்பன்று இவ்வூர் இனி' என்பாராயினர். என்னே-இரக்கக்குறிப்பு. காந்தாரியினந்தப்புரத்திலிருந்து துரியோதனன் புதிதாகக்கட்டிய மண்டபத்திற்குத் துச்சாதனன் அத்துரியோதனனதுகட்டளைப்படியே திரௌபதியை இழுத்துக்கொண்டுசெல்லும்போதுகண்ட ஜநங்களின்செய்தி கூறுவன இப்பாடல்களெல்லா மென அறிக. அப்பொழுது திரௌபதிக்குநேர்ந்த துன்பங்கள் யாவும் இன்பமாய்ப் பரிணமிக்கவேண்டு மென்று தமது வேண்டுகையைச் சனங்கள் ஈற்றடியால் தெரிவித்தனர். அன்னே-அன்னையென்பதன் ஈறுதிரிந்த விளி. முன்னே - (துரியோதனனது) எதிரிலே யென்றலுமாம்.

உஉ௫.—(இ - ள்.) (சிலர்), 'பறை வல் களிறு - பிளிறுகின்ற வலிய யானைகளையும், பல புரவி - பலகுதிரைகளையும், பைம் பொன் தட தேர் - பசிய பொன்மயமான பெரிய தேர்களையு முடையவனான, பாஞ்சாலர்க்கு இறைவன்-பாஞ்சாலதேசத்தார்க்குஅரசனாகிய துருபதனுடைய, பாவை - அழகிய மகளாகிய திரௌபதி, யாம் காண-நாங்கள் கண்ணாற்காணும்படி, இவையோ படுவது-இத்துன்பங்கள்படுதலாகுமோ? [படுதல் தகா தென்றபடி],' என்றுஉரைப்பார்—;(சிலர்)'பொறைவள் சிந்தை தருமனுக்கு-பொறுமையையும் உதாரஎண்ணத்தையு முடைய தருமபுத்திரனுக்கு,— 'சூது - சூதானது, பொய் - பொய்க்கு இடமானது,' (என்று),அறிந்தும் - தெரிந்திருந்தும், பொர - (அப்பொய்ச்சூதை) ஆடும்படி, என்ன குறை வந்தது-(புத்திக்குக் குறைவு நேரிட்டதே! இது) எவ்வளவு குறைவாய்விட்டது! [மிகவும் அறிவுகுறைந்துவிட்டது என்றபடி]; தன் விதி வலியால்-தன்னுடைய ஊழ்வினையின் வலிமையால், யாவும்கொடுத்து -(தனது) எல்லாப்பொருள்களையும் (சூதில்) தோற்றிழந்து, குறைந்தான் - மிக்கதாழ்வை அடைந்துவிட்டான்,' என்பார்—;(எ - று.)

களிறு, புரவி, தேர் என்பன - காலாட்படைக்கும் உபலக்ஷணம். சதுரங்கசேனைகளையுமுடைய பாஞ்சாலதேசத்தரசனது புத்திரி இத்துன்பங்களைப் படத்தக்கவளல்லள் என்ற இவ்வாக்கியத்தில்,ராஜபுத்திரியாயிருத்தலும் பெருந்துன்பத்தை யனுபவித்தலு மென்ற தகாதவற்றிற்குச் சேர்க்

கையைக் கூறுத லாகிற தகுதியின்மையணி தோன்றும்: இது, வடமொழியில், விஷமாலங்கார மெனப்படும். பறை வன் களிறு என்பதற்கு - பறைகளை (முதுகிலேற்றப்பட்ட) வலிய யானைகள் என்று கூறுவாரு முளர். இவையோ, ஓகாரம் - இரக்கம். எல்லாநீதிகளையுமுணர்ந்த தருமபுத்திரன் 'சூதாடுதல் தவறு' என்பதை உணர்ந்திருந்தும் சூதாட இசைந்தது ஊழ்வினைப்பயனே யென்பது, பின்னிரண்டடியின் கருத்து. குறை - மதிக்குறை, அறிவுகேடு. தருமனுக்கு என்ன குறைவந்தது என இயையும். (உஉரு)

[திரௌபதி ராஜசபையைச்சேர்தல்.]

உஉசா.—(இ - ள்.) நெடு மா நகரில்-மிகப்பெரிய அத்தினபுரியி லுள்ள, சனம் அனைத்தும்-மனிதர்களெல்லாரும், கண்டு - (திரௌபதியின் நிலைமையைப்) பார்த்து, நேயம் பெற இவை கூற - (அவளிடத்து) அன்புமிகுவதனால் இவ்வாறான வார்த்தைகளைச் சொல்ல,—தலைநாள் அளித்த தழல் போல்வாள் - முற்காலத்தில் (தன்னைப்)பெற்ற யாகாக்கினியைப்போல்பவளாகிய திரௌபதி,—மா மலர் கண் கொடு புனல் சோர - பெரிய தாமரைமலர் போன்ற (தனது) கண்களிலே பொருந்தி நீர்பெருகவும், குலைந்தே கிடந்த குழல் சோர - (துச்சாதனன் பிடித்திழுக்கையில்) அவிழ்ந்துவிட்ட கூந்தல் விழுந்துபுரளவும், தடுமாறு உள்ளம் தனி சோர - கலக்கங்கொண்ட மனம் தனியே [துணையின்றிச்] சோர்வடையவும்,—மா மரபிற்கு வடு உற தேடும் மன் பேர் அவையின் முன் - (தனது) பெரியவம்சத்திற்கு வசைமொழியை மிகுதியாகஉண்டாக்குகிற துரியோதனராஜனது பெரியசபைக்குமுன்னாக, புக்காள் - போய்ச்சேர்ந்தாள்; (எ - று.)—கொடு = கொண்டு.

மகாபதிவிரதையாகிய திரௌபதியைத் தீண்டக்கூடாதகாலத்தில் அநியாயமாய்ப் பலர்முன்னிலையில் மானபங்கமுண்டாகுமாறு சபைக்குப்பிடித்திழுத்துக்கொண்டுவரும்படி கட்டளையிட்டனனாதலால், துரியோதனனை 'வடு மாமரபிற்கு உறத் தேடும் மன்' என்றார்; மகாபாதகனைப் பெறுவது, குலத்திற்கே வசைக்கிடனா மென்க. வடு - புண்பட்டதனாலான தழும்பு; இங்கு, நெடுநாள் நிற்கும் பழிக்கு இலக்கணை. 'இவை' என்றது - கீழ் ஐந்து கவிகளிற் கூறியவற்றைக் குறிக்கும். கொடும்புன லெனப் பண்புத்தொகையாக இயைத்து, (நூற்றுவருடைய குடியைக் கெடுத்தற்குக் காரணமாகுமாறு) கொடிய சோகபாஷ்பம் என்றும் பொருள்கூறலாம்: எளியாரைக் காரணமின்றி வலியார் வருத்த அவ்வெளியார் அதற்குமாறுசெய்ய வலியற்றவராய் அழுத கண்ணீர், முறைமைதவறிய அவ்வலியாரை வருத்துமென்க; "ஏழையழுதகண்ணீர் கூரிய வாளொக்கும்," "துணையிலர்....., மாற்றத்தாற்செற்றாரென வலியார் - ஆட்டியக்கால், ஆற்றாதவரழுதகண்ணீரவை யவர்க்குக், கூற்றமாய்வீழ்ந்துவிடும்," "மனுநெறிமுறையின்வழக்கிழந்தவர்தாம், மனமுற மறுகிநின்றழுத கண்ணீர், முறையுறத் தேவர் மூவர் காக்கினும், வழிவழியீர்வதோர் வாளாகும்மே," "அல்லற்பட்டாற்றாதழுத கண்ணீரன்றே, செல்வத்தைத் தேய்க்கும் படை"என்பன இங்குக் காணத்தக்கவை. 'சோர' என்ற சொல் ஒருபொருளிலேயே பலமுறை வந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி. திரௌபதியினது அதிபரிசுத்தமான பதிவிரதாதருமத்திற்கு யாகாக்கினியை உவமையாகக்கூறினார்; முன்னும் பின்னும் இவ்வாறே கூறுவர். காரியமாகியதிரௌபதிக்கு உற்பத்திகாரணமான தழலை உவமைகூறியது, ஏற்கும். மலர் - கருங்குவளையுமாம். (உஉசா)

[அச்சமயத்தில் எல்லாவரசரும் இரங்கித் தலைகவிழ, திருதராட்டிரன் ஸஹஜமாகவிருத்தல்.]

உஉஎ.—(இ - ள்.) '(மகளிர்க்குஉரிய), நாணே முதல் ஆம் நால் குணனும் - நாணமுதலாகிய நான்குகுணங்களையும், நண்ணும் கற்பும் - உறுதியாகப் பொருந்திய கற்புநிலையையும், நயந்து அணிந்த - விரும்பி (ஆபர

ணங்களைப்போல) மேற்கொண்ட, பூணே அனையாள் - (உலகத்திற்கே) ஆபரணம்போலச்சிறந்தவளாகிய திரௌபதி, அழுது அரற்றி - கதறியழுது கொண்டு, புல் பேர் அவையில் புகும் - இழிவான அந்தப்பெரியராஜசபையிலே பிரவேசிக்கும்போது உண்டான, சோகம் - வருத்தத்தை, காணேம்- (கண்ணினால்) காணமாட்டோம்,' என்று - என்றுசொல்லி, கதிர் வேல் நிருபர் - ஒளியையுடைய வேற்படையையேந்திய அரசர்கள், நிலம் நோக்கி இருந்து இரங்க - (தலைகவிழ்ந்து) பூமியைப்பார்த்துக்கொண்டே யிருந்து வருந்த,—குருடு என்று உரைக்கும் கொடியோன் - குருடனென்றுசொல்லப்படுகின்ற கொடும்பாவியான திருதராட்டிரன், கோணே நேர்பாடு ஆய் இருந்தான் - கோணலையே நேராகக்கருதிச் சும்மா இருந்தான்; (எ - று.)

நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என மகளிர்க்குணம் நான்காம்; அவற்றுள், நாணமாவது - செய்யத்தகாதவற்றில் உள்ள மொடுங்குதல்; மடமாவது - எல்லாம் அறிந்தும் ஒன்றும் அறியாதுபோ லிருத்தல்: கொளுத்தக் கொண்டு கொண்டதுவிடாமை யெனவும் படும்; அச்சமாவது - புதியதைக் கண்டவிடத்து அஞ்சுதல்; பயிர்ப்பாவது - தன்கணவனல்லாத ஆடவரது ஆடைமுதலியன தன்மேற்பட்டால் அருவருத்தல். உலகத்துமகளிர்க்கெல்லாம் ஆபரணம்போலச் சிறந்துநிற்றலால், திரௌபதி, 'பூணேயனையாள்' எனப்பட்டாள். துஷ்டசதுஷ்டர்கூடியிருத்தலாலும், இவ்வாறு முறைகேடானசெய்கையைத் தமதுபெருவலியால் நிகழவொட்டாது தடுக்காத அரசர்கள்பலரும் நிறைந்திருத்தலாலும், அச்சபை 'புன்பேரவை' எனப்பட்டது. திரௌபதி மிக்கஅலங்கோலமாகப் பெருந்துக்கத்துடன் வருங் காட்சியைப் பார்த்துச் சகிக்கமுடியாதிருத்தலால், அவையிலுள்ள நிருபர் அவளைக் காணாது தலைகவிழ்ந்து நிலநோக்குவாராயினர். தனதுபுதல்வன் செய்த பொல்லாங்குகளெல்லாம் மிகச்சரியானவையென்று அவற்றைஅங்கீகரித்து நிற்றலால், திருதராட்டிரனை 'கோணேநேர்பாடாயிருந்தான்' என்றும், 'குருடென்றுரைக்குங்கொடியோன்' என்றும் இழித்துக்கூறினார். குருடு - இழிப்பினால் உயர்திணையை அஃறிணையாகக்கூறிய திணைவழுவமைதி. 'மற்றையரசர்கள் நேர்மையை வளைவாகக்கொண்டனர் [நேராயிருப்பதைவிட்டுத் தலைகுனிந்தனர்]; திருதராட்டிரனோ கோணலை நேராகக்கொண்டான் [முறைகேடானதை நியாயமென எண்ணியிருந்தான்]' எனச் சொற்போக்கில் ஒருநயந் தொனித்தல் காண்க. (உஉஎ)

[துஷ்டசதுஷ்டர்கள்தவிர யாவரும் சோகித்தல்.]

உஉஅ.—(இ - ள்.) மேகம் குருதி பொழிந்து - மேகங்கள் இரத்தமழையைப்பெய்தும், அகல் வான் மீனும் பகலே மிக விளங்கி-பரந்த ஆகாயத்திலே நட்சத்திரங்களும் பகற்காலத்திலேயே மிகுதியாகப்பிரகாசித்தும், பூகம்பமும் உற்று-பூமிநடுங்குதலுண்டாகியும், (இவ்வாறு), உற்பாதம் யாவும்-பலவகைஉற்பாதங்களும், போது - அப்பொழுது, புரிந்தன - நிகழ்ந்தன; நாகம் புனை பொன் துவசனுடன் நவிலாநின்ற நால்வரும் - பாம்பினுருவத்தையெழுதிய அழகிய துவசத்தையுடையவனான துரியோதனனோடு சேர்த்துக் கூறப்படுகிற (துச்சாதனன் கர்ணன் சகுனி ஆகிய) நான்குபேரும், சோகம் பிறவாது இருந்தார்-சிறிதும் துக்கங்கொள்ளாதிருந்தார்கள்; மற்று ஒழிந்தார் யாரும் - இவர்களையொழிந்த (அச்சபையிலிருந்த) மற்றையோர்யாவரும், சோகித்தார் - துக்கங்கொண்டுவருந்தினார்கள்; (எ - று.)— இரண்டாமடியினீற்றில், ஆல் - ஈற்றசை.

மேகங்கள் இரத்தமழை பொழிதலும், இரவில்விளங்கவேண்டிய நட்சத்திரங்கள் பகலிலே விளங்குதலும், பூகம்பமுண்டாதலும் முதலியன- இனி விரைவில் நேரக்கூடிய பெரும்பொல்லாங்குகளை முன்னரே அறிவிக்குந் தீநிமித்தங்களாம். துரியோதனனுடன்சேர்த்து நால்வர் என்

பது, 'நாகம்புனைபொற்றுவசனுடன் நவிலாநின்ற நால்வரும்' என்பதன் கருத்து. போதியாவும் - குற்றியலிகரம். நால்வருமே, ஏகாரம் - பிரிநிலை. மற்றொழிந்தார், மற்று - அசை. மேகம், பூகம்பம், உத்பாதம், நாகம், த்வஜம், ரோகம்-வடசொற்கள். 'பகலேவிளங்கி' என வந்ததனால், 'உற்பாதம் போதியாவும் புரிந்தன' என்பதற்கு - (இவ்வாறு) நிமித்தங்கள் பகற்காலமெல்லாம் நிகழ்ந்தன வென்னலாகாது. (௨௨அ)

[வீமன்முதலிய தம்பிமார் மிக்கசினங்கொள்ள, தருமபுத்திரன் அவர்களைச் சாந்தப்படுத்தத் தொடங்குதல்.]

௨௨௯.—(திரௌபதியைத் துச்சாதனன் அலங்கோலமாக இழுத்து வருவதைக் கண்டபோது),—வீமன் - வீமசேனன்,கதைமேல் கை வைக்க-(தனது சத்துருகாதினியென்னும்) கதாயுதத்தின்மேற் கையைவைக்கவும்,—விசயன் - அருச்சுனன், சிலைமேல் விழி வைக்க - (தனது காண்டீவமென்னும்)வில்லின்மேல் நோக்கம்வைக்கவும்,—தாமம் புனை தோள் இளையோரும் - மலர்மாலையணிந்த தோள்களையுடைய மற்றைத்தம்பியராகிய நகுலசகதேவர்களிருவரும், தம் தம் கருத்தில் சினம் மூட்ட - தம்தமது மனத்திலே கோபத்தை மிகுதியாகக்கொள்ளவும்,—தூமம் படு செம் தழல் அவிய சோனை மேகம் சொரிவது போல் - புகையமைந்த சிவந்த அக்கினி தணியுமாறு விடாப்பெருமழையை மேகங்கள் பொழிவதுபோல, நாமம் தருமன் என தக்கோன்-தருமனென்று பெயர்கூறத்தக்க தகுதியை யுடையவனாகிய (அவர்களதுமூத்தோனான) யுதிஷ்டிரன், இளையோர் ஆற - அந்தத் (தனது) தம்பியர்நால்வரும்(மனத்திற்)சினந்தணியும்படி,நவில் உற்றான்-சொல்லத்தொடங்கினான்; (எ-று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

வீமன் கதைமேற் கைவைத்ததும்,விசயன் சிலைமேற் கண்வைத்ததும்-திரௌபதிக்குப் பெருந்தீங்கிழைத்த பகைவரை அவற்றால் தாம் போர் செய்து அழிப்போ மென்று குறிப்பித்தவாறும். வீமன்முதலிய மற்றைநால்வரைப்போலவே தானும் சினங்கொள்ளவேண்டிய இச்சமயத்திலும் தருமபுத்திரன் தான்பொறுத்ததோடு நில்லாமல், மற்றையோரையும் பொறுப்பித்து இவ்வாறுதருமகுணத்தை மேற்கொண்டிருத்தலால், 'நாமம்தருமனெனத்தக்கோன்'என்றார்; இதுவும், கீழ் கூறி - ஆஞ் செய்யுளிற் கூறியதுபோன்ற பிரிநிலைநவிற்சியணியாம். தம்பிமாரது சினத்தீயை அருண்மாரியாகிய தருமனது சாந்தமொழிகள் தணித்து அடக்கு மென்க: உவமையணி. சோனை - விடாப்பெருமழை. பீமன், கதா, விஜயன், தாமம்,தூமம்,நாமம், தர்மன் - வடசொற்கள். (௨௨௯)

[தருமபுத்திரன் தனது தம்பிமாரைச் சாந்தப்படுத்துதல்.]

௨௩௦.—(இ - ள்.) (தருமன் தனது தம்பியரை நோக்கி),—'தேன் போது அனைத்தும்-தேன்பொருந்திய (மற்றை) மலர்களெல்லாம், மெய்சாயும்-வாடிக்கிடக்கின்ற, சில போது-சிலசமயங்களிலே, சிலபோது-சிலசாதி மலர்கள்,அலரும்-மலர்வனவாயிருக்கும்;[அதுபோலவே நாமெல்லாம் வருந்தும் இச்சமயத்தில் துரியோதனனுதியர்கள் மகிழ்கின்றார்கள்]; (ஆயினும்),—ஆம்போது ஆகும்-நல்வினைபலிக்கும்பொழுது (பொருள்கள் தாமே) வந்து சேரும்;வெம் கான் வேம்போது-கொடியகாடு தீப்பற்றியெரியும்பொழுது, அங்கு வாழ்வ எல்லாம்-அவ்வனத்தில் வாழ்கின்ற பிராணிகளெல்லாம், உடனே வேவாவோ-அக்காட்டோடு ஒருசேரஅழிந்துவிடுமன்றோ!அமுறையே-அதுபோலவே, அது அன்றி-உண்டாகும்போது உண்டாவதல்லாமல், ஆய பொருள்கள்போம்போது-அங்ஙனம்உண்டாகிய பொருள்கள்(தீவினைப்பயனால்)அழியவேண்டியகாலத்தில், அனைத்தும் போம் எல்லாம் போய்விடும்; (ஆகையால்),முன்னம் பொறுத்தீர்-முன்பு பலசமயங்களிற் பொறுத்திருந்தீர்கள்; இன்னம் பொறும்-இன்னும் சிறிதுகாலம்[நமக்குநல்லகாலம்வரும் வரையில்]பொறுத்திருங்கள்,' என்றான்-என்றுகூறித் தேற்றினான்; (எ-று.)

நாமும் நமக்காக உலகத்தார்பலரும் வருந்துகிற இச்சமயத்தில் பகைவர்களாகிய துரியோதனாதியர் முகமலர்ந்து மனங்களிப்பது இயல்பேயென்ற கருத்தை விளக்குதலால், முதலடி-பிறிதுமொழிதலணியாம். பின்மூன்றடிகள்-உவமையணி. ஆகூழினால் வளருந்தன்மையுடைய பொருள்களெல்லாம்போகூழ்வருங்காலத்தில் இருந்தவிடந்தெரியாது அழிந்தொழிந்துவிடுதல்திண்ணமே; ஆகவே, துரியோதனாதியர் இப்பொழுது நல்லகாலமிருந்து மேன்மேல்வளர்வாரானாலும் விரைவிலேயே போங்காலம் நேர்ந்து பொன்றிவிடுவார்கள்: அங்ஙனம் அவர்கட்கு அழிவுகாலம்நேர்கிறவரையில் நாம் பொறுத்திருக்கவேண்டு மென்றவாறும். "நல்லாள்,உடன்படில் தானேபெருகும் கெடும்பொழுதிற், கண்டனவுங் காணக் கெடும்", "ஆம்பொருள்களாகு மது யார்க்குமழிக்கொண்ணு,போம்பொருள்கள் போகுமது பொறியின்வகைவண்ணம்" என்றவை, இங்கு நோக்கத்தக்கன. இனி, இரண்டாமடியிற்கூறியஉபமானத்தால், யான் துன்பமனுபவிக்கின்றபோது என்னைச் சேர்ந்தவர்களாகியநீங்களும் துன்பமனுபவிக்கின்றீர் என உபமேயம்அமைத்து, அதனையும் பிறிதுமொழிதலணி யென்பாரு முளர். கங்கையிற் கழுமரநாட்டியும் விஷமூட்டியும் வீமனைக்கொல்லத் துணிந்தகாலத்திலும், அரக்குமாளிகையிலிட்டுப் பாண்டவர்களையெல்லாம் கொல்லத் துணிந்தகாலத்திலும், மற்றும்பலசமயங்களிலும் பொறுத்தார்களாதலால் 'முன்னம் பொறுத்தீர்' என்றும், "காலங்கருதியிருப்பர் கலங்காது, ஞாலங்கருதுபவர்" என்றபடி தாம்வெல்லுதற்கு ஏற்ற காலம் வாய்க்குமளவும் அதனை எதிர்பார்த்துப் பொறுத்திருக்கவேண்டு மென்பது அரசநீதியாதலால், 'இன்னம்பொறும்' என்றும் தருமன் கூறினான். 'பொறுத்தீர் - பொறுத்திருந்தவர்களே! என விளியாகக்கொள்ளுதலும் ஒன்று.

போது - மலரும்பருவத்துஅரும்பு. தேன் + போது=தேம்போது; தேன்மொழி, வலிவர ஈறுபோய் இனமெலி மிக்கது: [நன் - மெய் - கக.]வேவா-'வே'என்ற வினைப்பகுதியினடியாப் பிறந்த எதிர்மறைப்பலவின்பால்வினைமுற்று. வேவாவோ-இரண்டெதிர்மறைகள் ஒருங்குசேர்ந்துஒருடன்பாட்டுப் பொருளை வற்புறுத்தின. ஆம்,போம் -செய்யுமென்னும்வாய்பாட்டுச்சொற்கள் ஈற்றுஉயிர்மெய் சென்றன; [நன் - வினை - உஉ.] மெய்சாயும்,அலரும்: முன்னம், இன்னம் என மாறுபட்டசொற்கள் வந்தவை-தொடைமுரண். ()

[திரௌபதியின் சோகமிகுதி.]

உஙக.—(இ - ள்.) வாரும் கண் நீர் - வழிகிற கண்ணீரானது, வளர் கொங்கை வரைமேல் - மேன்மேல்வளர்கின்ற தனங்களாகிய மலையின் மீது, அருவி என - நீரருவிபோல, வீழ - பெருகவும்,—தாரும் குழலும் - (சூடிய) மலர்மாலையும் கூந்தலும், மின்னுடனே தலம் சேர் கொண்டல் என வீழ - மின்னலோடு தரையிற்படிகின்ற மேகம்போலக் கீழேவிழவும்,—கோ சபையில்-ராஜசபையில், கூரும் துயரினுடன் வீழ்ந்து - மிகுகின்ற துன்பத்துடனே பூமியில் விழுந்து புரண்டு, கோ கோ என்று சோரும் - கோவென்று கதறியழுது வருந்துகிற, கொடியை - பூங்கொடி போன்றவளான திரௌபதியினது, முகன்-முகத்தை, நோக்கி-பார்த்து,—துச்சாதனன்—, மெய் சுட - (அவளது) உடம்பு கொதிக்குமாறு, சொன்னான் - (மிக்ககொடுமையாகக்)கூறுபவனானான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

முதலடி-உருவகத்தை அங்கமாகக் கொண்ட உவமையணியும், இரண்டாமடி - இல்பொருளுவமையணியுமாம். திரௌபதியின் கொங்கைகட்கு வரையும், அவற்றின்மேல்வழியுங் கண்ணீர்ப்பெருக்குக்கு மலைமீதுபெருகும் நீரருவியும், கூந்தலுக்கு மேகமும், அக்கூந்தலிற் சூடியுள்ள மலர்மாலைக்கு மேகத்தில்தோன்றிய மின்னலும் உவமைகளா மெனக் காண்க. தார் -

மின், குழல் - மேகம் என முறையே சென்றுஇயைதலால், இரண்டாமடி-முறைநிரனிறைப்பொருள்கோள்; இதனை,அலங்காரநூலார், முறைநிரனிறை யணி யென்பர். கோகோவென்று - இரக்கவொலிக்குறிப்பிடைச்சொல். மனம்வெதும்பும்போது உடம்பும் வெதும்பு மாதலால், 'மெய்சுட' என்றார்.

[துச்சாதனன் கூறிய கடுமொழி.]

உ௯உ.—(இ - ள்.) (அப்பொழுது துச்சாதனன் திரௌபதியைநோக்கி),—'மின் வந்து அனைய நுண் இடையாய்-மின்னல்வந்து பொருந்தினாற் போன்ற நுண்ணிய இடையையுடையவளே! மன் வந்து இருந்த சங்கத்து-(பலஅரசர்கள்) வந்துகூடியுள்ள இச்சபையில், உன் மாமன் இருந்தான்-உனதுமாமனாகிய திருதராட்டிரன் இருக்கின்றான்; (அன்றியும்), முன் கொண்ட முறையால் முயங்கும் முடி வேந்தர் ஐவரும்-முன்னே (உன்னை) விவாகஞ்செய்துகொண்டமுறைப்படியே (உன்னைத்)தழுவுகிற கிரீடாதிபதிகளான பாண்டவரைவரும், உன்முன் வந்து இருந்தார் - உன்னெதிரில்வந்திருக்கின்றார்கள்; (இவ்வாறு உன்னைச் சேர்ந்தவர்கள் அருகிலிருக்கையில்), விழி நீர் சொரிந்து மெலிய உனக்கு என் வந்தது கொல்-கண்ணீர்சொரிந்து அழும்படி உனக்கு (இப்பொழுது) என்னகதியின்மை நேரிட்டதோ? [ஒன்றும் நேரவில்லையாதலால் அழக் காரணமில்லையே!]பொதுமகளிர்க்கு - (பல ஆடவரும் இன்பநுகருமாறு) பொதுவாயிருக்கிற வேசையர்க்கு, விழிநீர் - (நினைத்தபோதே) கண்ணீர்பெருக்குதல், அரிதோ - அருமையானதோ? எளிது - எளிமையானதே,' என்றான்—; (எ - று.)

திரௌபதி காரணமின்றி அழுகின்றாளென்னுஞ் சிறப்புப்பொருளை, 'பொதுமகளிர்க்கு விழி நீர் அரிதோ எளிது' என்று ஈற்றடியிற்கூறிய பொதுப்பொருள் சமர்த்தித்துநிற்றலால், இச்செய்யுள்-வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற்படும். இங்கு உனக்கு ஏதாவதுஆபத்துநேர்ந்தால் உன்னைஅவ்வாபத்தினின்றும் பாதுகாப்பதற்கு உனதுமாமனும் உனதுகணவர்களும் இருக்கையில், நீ புலம்பி வீணே பாசாங்குசெய்யவேண்டா வெனத் துச்சாதனன் கடுமையாகக்கூறினனென்க. 'உன்மாமன்' என்றது, விதுரனை யென்றலுமாம். வற்புறுத்ததற்கு, 'அரிதோ? எளிது' என வினாவும் விடையுமாகிய இரண்டுவாய்பாட்டாலுங் கூறினான்; இதனை, "வைப்பரோ மனம் வையார்" எனக் கீழ்வந்ததனோடு ஒப்பிடுக. பாண்டவரைவரும் திரௌபதிக்கு ஓரோராண்டு ஓரொருதலைவராய்க் கொழுநராயினமையால், 'முறையால் முயங்கு முடிவேந்தரைவரும்' என்றான். சங்கம் - ஸங்கம் என்ற வடசொல்லின் திரிபு. மாமன் இருந்தான், ஐவரும் வந்திருந்தார்-இயல்பினால் நிகழ்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி. (உ௯உ)

[அதுகேட்டுத் திரௌபதி முறையிடுதல்.]

உ௯௩.—(இ - ள்.)பொல்லா வசையே புகழ் பூண் ஆ-பொல்லாத[மிகக் கொடிய] பழிப்பையே (தனக்குப்) புகழும் ஆபரணமுமாகக்கொண்டு, புல்லன் - அற்பனான துச்சாதனன், புகல - (இவ்வாறு கடுமையாகச்) சொல்ல,—இதற்கு ஒன்றும் சொல்லாது இருந்த பேர் அவையை - இந்த(த்துச்சாதனனது)வசைமொழியைக்குறித்து ஒன்றும்பேசாதிருந்த பெருஞ்சபையோரைநோக்கி,(திரௌபதி),அழுதாள்-புலம்பி,சோர்வுற்றாள்-ஏக்கமுற்றவளாய்நின்று, தொழுதாள் - கைகூப்பிவணங்கிக்கொண்டு,— 'மல் ஆர் திண் தோள் மாமாவோ - மற்போர்க்குஇயைந்த வலிய தோள்களையுடைய மாமனே! மந்தாகினியாள்மதலாயோ-கங்காதேவியின் புத்திரனே! எல்லாம்நெறியும் உணர்ந்தவருக்கு - நீதிநெறிகளெல்லாவற்றையுங் கற்றுத்தேர்ந்தவர்களாகிய உங்கட்கு, இது—,மண்ணில்-இந்நிலவுலகத்தில், இயல்போ - இயற்கையான நற்குணமாகுமோ?' என்றாள் - என்றுகூறினாள்; (எ - று.)

'இது' என்றது, தருமபுத்திரன் தன்னைத்தோற்றபின்பு பந்தயமாகவைத்ததனால் முறைமையாகச்சயிக்கப்படாத என்னைத் தீண்டக்கூடாதகாலத்திற்பலர்கூடியசபையிலே துச்சாதனன் வசைமொழிகூறிஇழுத்துக்கொண்டுவருகையிலும்ஒன்றும்பேசாதுமௌனமாயிருத்தலைக் குறிக்கும். கல்விஒழுக்கம் முதலிய புகழ்க்குக் காரணமானமேன்மைகளைச் சிறிதும்பெறாது இழிகுணத்தையே பாராட்டி மிகக் கொண்டனனாதலால், 'பொல்லாவசையே புகழ்புலன்' என்றார்; "இசையினும் பெருக நன்றெனத் தனதியற்கையால் மிகவளர்த்திடும், வசை" என்பது, இங்கு ஒப்புநோக்கத்தக்கது. வசையே, ஏகாரம் - பிரிநிலையோடு தேற்றம். இனி, 'புகழ்புலன் புல்லன் - கீர்த்தியை மேற்கொள்ளாத அற்பனாகிய துச்சாதனன் பொல்லா வசையே புகல - பொல்லாத நிந்தைமொழிகளையே எடுத்துக்கூற' என்றும் பதவுரை கூறலாம். தொழுதாள், அழுதாள், சோர்வுற்றாள் - முற்றெச்சங்கள். 'மாமன்' என்றது - திருதராஷ்டிரனையாவது, விதுரனையாவது குறிக்கும். மாமாவோ - விளியுருபாக ஈறுகெட்டு அயல்நீண்டு, புலம்பலில் ஓகாரம் மிக்குவந்தது; இதனை, "அண்ணாவோ அண்ணாவோ" என்ற கம்பராமாயணத்தோடு ஒப்பிடுக: "புலம்பின் ஓவுமாகும்" என்பது, நன்னூல். திருமாலின் திருவடித்தீர்த்தமானது வானத்திற்பாய்கையில் மந்தாகினி யென்றும், பூமியிற்பாய்கையில் கங்கையென்றும், பாதலத்திற்பாய்கையில் போகவதியென்றும் பெயர்பெறும்; "அரங்கருலகளந்த, பாதத்து நீர் விண் படி பில மூன்றிலும் பால்புரைவெண், சீதத்தரங்கமந்தாகினியாகிச் செழுங்கங்கையாய், மேதக்கபோகவதியாகி நாளும்விழுகின்றதே" என்றது காண்க. மதலாயோ - மதலையென்பது விளியில் ஈற்றுஐகாரம் 'ஆய்' எனத் திரிந்து, புலம்பலில் ஓகாரம்பெற்று வந்தது. 'மந்தாகினியாண்மதலாயோ' என்றது, வீடுமனை. உணர்ந்தவருக்கு - முன்னிலைப்படர்க்கை. ()

## [வீடுமன் கூறுதல்.]

உ௩௪.—(இ - ள்.) முன்னர் புகலும் குருகுலத்தோர் முதல் ஆம் வாய்மை மொழியோன் - சிறப்பாகப்பேசப்படுகிற குருகுலத்தோருட் பெரியவனும் சத்தியமான பேச்சையுடையவனு மாகிய வீடுமன், இன்னல் படும் சொல் பாஞ்சாலி இரக்கந்தனை கண்டு - துன்பத்தைத்தெரிவிக்கின்ற சொற்களையுடைய திரௌபதியினது புலம்புதலைக் கண்டு, இரக்கம் உறா - இரக்கங்கொண்டு,—(துச்சாதனனைநோக்கி),—'மன்னற்கு இளையோய் - துரியோதனராசனுக்குத் தம்பியே! வடமீன் அனையாளை தவறு உரைத்தல் - நக்ஷத்திரரூபமாய் வடக்குத்திக்கிலுள்ள அருந்ததியை யொத்த பதிவிரதையாகிய திரௌபதியைக்குறித்து ('பொதுமகள்' என்று) இழிவாகச்சொல்வது, வழக்கோ - நீதிமுறைமையாகுமோ?" என்ன கழறி - என்றுசொல்லி,— (திரௌபதியைநோக்கி), 'நீ உரைத்த எல்லாம் - நீ முன்னே கூறிய செய்திகளையெல்லாம், அரசற்கு இயம்பு - (இப்பொழுது) திருதராஷ்டிர மகாராசன்முன்னிலையிற் சொல்வாய்', என்றான்—; (எ - று.)

இதனால், வீடுமன் துச்சாதனனது தீச்செய்கையைத் தவிரக் கூறி, திரௌபதிக்குத் தேறுதலாகுமாறு அரசனிடத்துக் குறைதெரிவித்துக்கொள்ளச்சொல்லின னென்க.

பீஷ்மன் 'உரைத்தவெல்லாம்' என்று குறித்தது, கீழ் உ௧௧-ஆஞ் செய்யுளில் திரௌபதிவார்த்தையாகப் பிராதிகாமி கூறியவற்றை. பாஞ்சாலி - பாஞ்சாலதேசத்தரசனான துருபதனது மகள் எனப் பொருள்படுந் தத்திதாந்தநாமம். இரக்கமுறா என்றான் என இயையும்; இனி, இரக்கமுறா மன்னற்கிளையோய் என இயைத்து, சற்றும் மனமிரங்காத துச்சாதனனே! என்றும் பொருள்கூறலாம். உரைத்த-பலவின்பாற்பெயர். திருதராட்டிரன் அரசனாய்ப் பெரியோனாதலால், அவனிடத்திற்கூறுமாறு வீடுமன்திரௌபதிக்

குச் சொல்லின னென்க. வீடுமன் வயோவ்ருத்தனும் சீலவ்ருத்தனு மாவ னென்பது, ஈற்றடியினால் விளக்கப்பட்டது. 'தருமபுத்திரனே திரௌபதி யின் ஆக்ஷேபத்திற்குச் சமாதானஞ்சொல்லத்தக்கவன்' என்று வீடுமன் கூறிய தாகவியாசபாரதத்திற் கூறியதற்கு ஏற்ப, 'மன்னற்கு இயம்பு' என்பதற்கு- யுதிஷ்டிரராஜனிடத்திற் சொல் எனப் பொருள்கூறுதல் சிறக்கும். (உ௩௪)

[திரௌபதி சபையாரைநோக்கி நீதிகூறுமாறு வேண்டுதல்.]

உ௩௫.—(இ - ள்.) மின் தோற்று அனைய நுண் இடையாள் - மின்ன லும் தோற்றுவிட்டாற்போன்றிருக்கிற [மின்னலினுஞ் சிறந்த] நுண்ணிய இடையையுடையவளான திரௌபதி,—'மன் வெம் சூது வழக்கால் தோற்ற னன் ஆகில் - தருமராசன் கொடியசூதாட்டத்தில் (என்னை) முறைமைப் படியே (பந்தயம்வைத்துத்) தோல்வியடைந்திருந்தால், கொண்மின் - (உமதுவிருப்பத்தின்படியே என்னையும் அடிமை)கொள்ளுங்கள்; மன் அவை யில் - ராஜசபையிலே, தான் - அந்தத்தருமபுத்திரன், என்னையும் முன் தோ ற்றனனோ - (மற்றைப்பொருள்களோடு) என்னையும் (தன்னைத்தோற்பதற்கு) முன்னமே தோற்றுவிட்டானோ? (அன்றி), முன்னே தனை இசைந்து தோற்ற பின் - முதலில் தன்னைப் பந்தயமாகக் குறிப்பிட்டுத் தோற்ற பின்பு, தோற்றனனோ - (என்னைத்) தோற்றுவிட்டானோ? பெரியோர் கரி ஆக உண்மை பேசுக - (இங்குஉள்ள) பெரியோர்கள் (இவ்விஷயத்தில்) சாக்ஷியாக உண்மைசொல்லுக,' என - என்று கூறி, விழி நீர் வெள்ளம் மிசை வீழ்ந்தாள் - தனதுகண்ணீர்ப்பெருக்கின்மேல் விழுந்து வருந்தினாள்.

கீழ்ப் பிராதிகாமி திரௌபதியின்பேச்சாகக் கற்பித்துக்கூறியது சரி யாகுமாறு திரௌபதியும் சபையோரைநோக்கி 'பெரியோர்களே! தருமபுத் திரன் தன்னைத் தோற்றபின்பு என்னைத்தோற்றானோ? என்னைத் தோற்ற பின்பு தன்னைத் தோற்றானோ? இவ்விஷயத்தைப்பற்றி நீங்கள் உண்மைகூறு ங்கள்; தருமபுத்திரன் முறைமைப்படி தன்னைத்தோற்பதற்குமுன்னமே என் னைத் தோற்றிருப்பின் என்னை அடிமையாக்கொள்வதில் எனக்கு ஆட்சேப மில்லை; தருமபுத்திரன் தன்னைத்தோற்றபிறகு ஐவர்க்கும் பொதுவாகிய என்னைத் தோற்றிருப்பின், அடிமையாகிய தான் என்னைப் பந்தயம்வைத்து இழப்பதற்கு உரிமையில்லான்; அப்போது என்னைஅடிமையாக்கச் சிறிதும் முறைமையில்லை' எனத் தன்கருத்தை வெளியிட்டன ளென்க. முன்பு தன்னைத் தோற்றுப் பிறர்க்கு அடிமையாய்விட்டவனுக்கு மண் பெண் பொன் முதலியவற்றின் உரிமையில்லை யென்னுங் கோட்பாட்டினால் இங் ஙனங் கூறின ளென்க. 'கொண்மின்' என்றது, துரியோதனாதியரைநோக் கியது. 'மன் வெம் சூது தோற்றனன் ஆகில் வழக்கால் கொண்மின்' என்ப தற்கு-தருமராசன் கொடியசூதாட்டத்தில் தோல்வியடைந்திருந்தால் (அவ னது பொருள்களை) நியாயப்படி (நீங்கள்) கைக்கொள்ளுங்கள் என்று பொ துப்படவுரைத்ததாகப் பொருள்கூறலுமாம்.

தோற்று - 'தோல்' என்ற பகுதியின் இறந்தகாலவினையெச்சம்; எச்சத் திரிபாக, தோற்றுலெனப் பொருள்தந்தது; இனி, தோற்றதனைய என்ப தன்தொகுத்தலெனவும், 'தோன்று' என்ற முதனிலை திரிந்த தொழிற்பெய ராக்கொண்டு மின்னல்தோன்றுதலை யொத்துத் தோன்றுகின்ற எனவும் பொருள்கொள்ளலாம். (உ௩௫)

[சபையோர் மௌனமாயிருத்தலைக்குறித்துக் கவி இரங்கிக்கூறுதல்.]

உ௩௬.—(இ - ள்.) விறல் வேல் வேந்தர் - (அந்தச்சபையிலுள்ள) பராக் கிரமசாலிகளானவேலாயுதத்தையேந்திய அரசர்கள்,—வெரூஉக்கொண்டு- (துரியோதனனிடத்து) அச்சங்கொண்டிருப்பதனால், மையோடு அரி கண் மழை பொழிய வாடும் கொடியின் மொழிக்கு ஆகார் - மையையும் செவ்வரி யையுமுடைய கண்களிலிருந்து மழைபோல நீர்பெருக வாடுகின்றவளா

கிய பூங்கொடிபோன்ற திரௌபதியினது வினமொழிக்கு(ச் சரியான படி) விடைகூறத் திறமற்றவர்களாயும்,— (நடந்தஉண்மை வேறுவகையாயிருப்பதனால்), வெய்யோன் எண்ணம்தனக்கு ஆகார் - கொடியோனாகிய துரியோதனனது எண்ணத்திற்கு உடன்பட்டுக்கூறாதவர்களாயும், —பொய்யோ அன்று மெய் ஆக புனை ஓவியம் போல் இருந்தார் - பொய்யேயன்று உண்மையாகவே அழகாகஎழுதியசித்திரப்பாவைபோல(ச் சிறிது அசைதலுமின்றி) இருந்தார்கள்; ஐயோ—! அந்த கொடுமையை யாம் உரைக்கும் பொழுதைக்கு அதிபாவம் - அந்தக் கொடுமையைக்குறித்து நாம் எடுத்தச்சொன்னாலும் அப்பொழுது (நமக்குப்) பெரும்பாவம் உண்டாகும்!

கொடும்பாவியாதலால், துரியோதனனை 'வெய்யோன்' என்றே கூறினார். சபையிலிருந்த அரசர்களெல்லாரும் துரியோதனனிடத்து அச்சத்தால் முறைப்படி திரௌபதிக்குச்சார்பாகப் பேசுவதற்கு அஞ்சியும், மனச்சாட்சிக்குமாறாயிருத்தலால் துரியோதனனுக்குச் சார்பாகப் பேசுவதற்குப் பின்வாங்கியும், ஒருவழியிலுந் துணியாமல், எழுதுசித்திரம்போலத் திகைப்புற்றிருந்தார்க ளென்க. ஒருபெண் துணையின்றித் தனியே நின்று பலர் கூடியராஜசபையில் நீதிகூறுமாறு குறையிரந்துவேண்டி அழுதுபுலம்புகையிலும் துரியோதனனுக்குஅஞ்சி நடுவுநிலைமைகுன்றி நீதியெடுத்துக்கூறாது மௌனமாயிருந்தது பெரும்பாதக மென்பதை,ஈற்றடியினால் விளக்கினார். ஒருவனதுபாவச்செயலைப் பிறன் எடுத்துரைத்தால், அவ்வாறு உரைப்போனையும் அப்பாவத்திற் பாதிப்பங்குசேரு மென்பது, தருமசாஸ்திரக்கொள்கை. 'விறல்வேல் வேந்தர்' என்றது - தாங்கள் ஆயுதங்களையேந்திய வீரராயிருந்தும் துரியோதனனுக்குஅஞ்சித் தக்கசமயத்தில் நியாயமெடுத்துக் கூறாமல் வாளாவிருந்தமை பற்றிய இகழ்ச்சிக்குறிப்பு.

பொய்யோ, ஓகாரம் - தெரிநிலை. இருந்தாரை, பொழுதைக்கு என்பவற்றில், ஐகாரம்-சாரியை. பொழுதைக்கு=பொழுதில்;உருபுமயக்கம். இனி, இருந்தாரை அந்தக்கொடுமையை உரைக்கும்பொழுதில் என இரண்டு செயப்படுபொருள்வந்த செய்வினையாக [த்விகர்மகர்த்தரிப்ரயோகமாக] க் கொள்ளினும் இழுக்காது: இவ்வாறுகூறும்பொழுது விறல்வேந்தராகிய இருந்தாரை என்க; இருந்தவரதுகொடுமையை யென்பது கருத்து. இருந்தார் ஐயையோ! என்று எடுத்து உரைப்பினுமாம். மை ஓடு அரி கண் என்று எடுத்து, மையையும் படர்ந்தசெவ்வரியையுமுடைய கண்க ளென்று பதவுரைகூறினுமாம். ஓடுஅரி—"செவ்வரியோடி" என்றது காண்க. (உகூ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - விகர்ணன் சபையாரைநோக்கிக் கூறுவன.]

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

உகூஎ.—(இ - ள்.) அல் ஆர் கூந்தல் விரித்த மயில் அனையாள்-இருளையொத்த[கருநிறமான]கூந்தலை விரித்துக்கொண்டுள்ளவளும் மயில்போன்ற சாயலையுடையவளுமான திரௌபதி, அரற்ற-இவ்வாறுமுறையிட்டுக்கதறிப் புலம்பவும், அதற்கு ஒன்றும் சொல்லாது - அத்திரௌபதியின் வினவுக்கு (த் தக்கதென்றாவது தகாததென்றாவது)ஒன்றும் மறுமொழிகூறாமல், ஊமர் கணம் போல - ஊமைகளின்கூட்டம்போல,தொல் போர் வேந்தர் சூழ்ந்து இருப்ப - பழமையானகுலத்தில்தோன்றிய போர்செய்தற்குஉரிய அரசர்கள் சூழ்ந்திருக்க,—மல் ஆர் தட தோள் விகருணன் ஆம் வாய்மை கடவுள் - மற்போர்செய்தற்குஉரிய பெரியதோள்களையுடையவனும் சத்தியத்தையேபேசுந் தெய்வத்தன்மையுடையவனு மான விகர்ணனென்பவன்,—(அச்சபையாரைநோக்கி), 'வாள் வேந்தீர் - வாட்படையையுடைய அரசர்களே! அனைவீரும்-நீங்களெல்லீரும்,பொல்லா நெறியில் போகா வண்ணம்-பொல்லாத [மிகத் தீயதாகிய] நரகநெறியிற் செல்லாதிருத்தற்பொருட்டு, புகலீர் - நீதியையே கூறுங்கள்; (எ - று.)

நீதியை யெடுத்துக் கூறுதொழிவீராயின் உங்கட்கு நரகம் நேர்வது திண்ணமென்று கூறியவாறும். விகருணன் - விகர்ண னென்ற வடசொல்லின் விகாரம்; இவன் - துரியோதனனது தம்பியரில் ஒருவன். இராவணன் தம்பியருள் விபீஷணன்போல, துரியோதனன் தம்பிமாருள் இவன் நீதிகளை நன்குஉணர்ந்து நடுவுநிலையோடு நியாயவழியையேபேசுகின்ற நற்குணமுடையவன். இவனது சத்தியகுணத்தை நன்குமதித்து 'விகருணனும் வாய்மைக்கடவுள்' என்றார். விகருணன் 'வாள்வேந்தீர்' என்று அரசரைச் சிறப்பித்துவிளித்தது, 'நீங்கள் துரியோதனனுக்கு அஞ்சி நடுவுநிலைமை குன்றி மௌனமாயிராநீர்கள்' என்று குறிப்பித்தவாறும். அனைவீரும்-முன்னிலைப்பன்மைப்பெயர்; உமமை - முற்றுப்பொருளது. (படர்க்கையில்'அனைவரும்' என்றும், தன்மையில் 'அனைவேமும்' என்றும் வரும்.) புகலீர்-உடன்பாட்டு ஏவற்பன்மைவினைமுற்று. இச்செய்யுளிலுள்ள 'வாய்மைக்கடவுள்' என்றது, மேல் உச0-ஆங் கவியிலுள்ள 'சொன்னான்'என்பதைப் பயனிலையாக் கொண்டு முடியும். (உங௭)

உங அ.—(இ - ள்.) அவனி தலம் முழுதும் உடையான் முடி தேவி- இந்நிலவுலகம்முழுவதற்கும் உரியவனான தருமபுத்திரனது பட்டமகிஷியாகிய திரௌபதி, முறையோ என்று என்று - '(என்னை அடிமையெனக்கொண்டு இவ்வாறு சபையி விழுத்துவருவது) முறைமையாகுமோ?'என்று பலதரஞ்சொல்லி, நிறையோடு அழிந்து வினவவும்-(தன்மனத்தை நல்வழியில்) நிறுத்தின கற்புநிலைமையோடு மனம்வருந்தி நியாயம்விசாரிக்கவும்,நீர் நினைவுஉற்று இருந்தீர் நீங்கள் (விடைகூறுவதற்குச்)சங்கைகொண்டிருக்கின்றீர்கள்; (இவ்வாறு நீதிகூறாமலிருத்தற்குக் காரணம்), நினைவு அற்றோ-ஞாபகமில்லாமையினாலோ? (அன்றி), இறையோன் முனியும் என நினைந்தோ - (நியாயம் திரௌபதிக்கே அநுகூலமாயிருத்தல்பற்றி அவளுக்கு அநுகூலமாகக்கூறினால்) துரியோதனராசன் கோபங்கொள்வன் என்று அஞ்சித்தானோ? இருந்தால் உறுதி எடுத்து இயம்பல் குறையோ - நியாயமிருந்தால் உள்ளநியாயத்தை எடுத்துக்கூறுதல் குற்றமாகுமோ? குலத்து பிறந்தோர் கண் கண்டது நாளும் கூறாரோ - நல்லகுலத்திற்பிறந்தவர்கள்(தாம்) பிரதியக்ஷமாய்க்கண்டதை எப்பொழுதும் கூறாதவிடுவர்களோ? (எ - று.)

என்றது - நற்குலத்திற்பிறந்தவரான அச்சபையிலிருந்தஅரசர்களை, துரியோதனனுக்குஅஞ்சி மௌனமாயிராது நீதிகூறவேண்டுவது அவசியமென வற்புறுத்தியவாறு. பாண்டவர் துரியோதனாதியர் ஆகிய நூற்றைவருள்ளும் தருமன் வயதில் மூத்தவனாதலாலும், திக்குவிசயஞ்செய்து ராஜசூயயாகம்முடித்து 'ஸம்ராட்' என்னும் பட்டப்பெயரைச் சூடியவனாதலாலும், 'அவனிதலமுழுதுமுடையான்' எனப்பட்டான். நிறை - மகளிர் மனத்தைக் கற்புவழியில் நிறுத்துந் தன்மை. 'நினைவற்றிருந்தீர் நிறைவற்றோ' என்பதும் பாடம். (உங அ)

உங கூ.—(இ - ள்.) தன் நேர் இல்லா நெறி தருமன் - தனக்கு ஒப்பாக ஒருவரையும்பெறாதவனும் நல்லொழுக்கத்தையுடையவனுமான தருமபுத்திரன், தன என்று உரைக்க தக்க எல்லாம் முன்னே தோற்று - தன்னுடையனவென்று சொல்லத்தக்க எல்லாப்பொருள்களையும் முதலில் தோற்றிழந்து, தங்களையும் முறையே தோற்று - தங்களைவரையும் முறையே பந்தயமாகவைத்துத்தோற்று, முடிவு உற்றான் - (தனது நல்லுணர்வு) ஒழியப்பெற்றான்; தான் பிறர்க்கு தொண்டு ஆய் விட்டு - (தருமன்) தான் (இவ்வாறு எல்லாவற்றையும்தோற்றுப்) பிறர்க்கு அடிமையாய்விட்டு, பின்னை - பிறகு, நேர் சொல் உரைக்கு - எதிரில் நின்று (சகுனி) கூறிய வார்த்தைக்குஇசைந்து, சுரி குழலை - நுனிசுருண்ட கூந்தலையுடைய திரௌபதியை, தோற்க - (பந்தயமாகவைத்துத்) தோற்பதற்கு, உரிமையினால் பெறு

மோ - நீதிப்படி உரிமையைப் பெறுவனோ? என்று - என்பதாக, பேசீரோ-(நீங்கள்) நியாயமெடுத்துக்கூறமாட்டீர்களோ? (எ - று.)—இதனால், ஆராய்ந்து முறைமைப்படிபார்த்தால் திரௌபதி வெல்லப்பட்டவளாகா ளென்று சபையிலிருந்த அரசர்க்கு விகர்ணன் தன்கருத்தை எடுத்துக்காட்டியவாறும்.

"விகர்ணன் சபையிலிருந்த அரசர்களை விளித்து 'நீங்கள் திரௌபதியின்முறையீட்டிற்கு ஆராய்ந்து மறுமொழிசொல்லுங்கள்' என்று பலமுறை கூறவும் அரசர்கள் வாளாவிருக்க, பிறகு அவ்விகர்ணன் மீண்டும் 'நீங்கள் நீதிகூறினாலுஞ் சரி, கூறாதிருந்தாலுஞ் சரி; என்மனத்தில் தோன்றும் நியாயத்தை யான் கூறுவேன்:—வஞ்சகர்களால்தூண்டப்பட்டுச் சூதாட்டத்தில் விருப்பங்கொண்டு அறநெறியைக் கடந்த தருமன் கடைசியாகத் தன்னைத்தோற்றபிறகு சகுனியின்தூண்டுதலால் பாண்டவரைவர்க்குமுரியளான திரௌபதியைப் பந்தயம்வைத்திழந்தா னென்ற இவையெல்லாவற்றையும் ஆராய்ந்துபார்க்கும்பொழுது திரௌபதி வெல்லப்படாதவ ளென்றே எனக்குத்தோற்றுகிறது' என்று நீதிகூறினான்" என்று வியாசபாரதம் சொல்லுகின்றது. 'தன்னேரில்லா நெறித் தருமன்' என்றது, அறநெறியை நன்குணர்ந்தவனான இத்தருமனுக்கும் திரௌபதியைப் பந்தயம்வைக்கத் தனக்கு உரிமையில்லை யென்னும் உணர்ச்சி நீடிப்பினால் இல்லாமற்போயிற்றே யென்ற இரக்கத்தைக் குறிப்பிக்கும். 'நேர் சொல் உரை' என்றது - "மைவருந்தடங்கண்வேள்வி மாதுதன்னை யொட்டிநீ, கைவருங்கவற்றி னின்னமெறிக" என்று கீழ் ௧௮௨ - ஆஞ் செய்யுளிற் சகுனியின்வார்த்தையாக வந்ததைச் சுட்டும். ஆகவே, திரௌபதியைப்பந்தயம்வைத்தது சகுனியின் தூண்டுதலினாலன்றி ஸ்வபுத்தியினாலன் றென்றதாம். இங்ஙனம் தன்னைத் தோற்றபிறகு தன்மனைவியைப் பந்தயம்வைத்ததற்குத் தருமனுக்குஉரிமையில்லை யாகவே, அத்திரௌபதியைத் துரியோதனன் கைக்கொள்ளவும் முறையில்லை யென்க.

இனி, 'முடிவுற்றான்' என்பதற்கு-(எல்லாவற்றையும்தோற்று வேறே பந்தயம்வைத்தற்குப்)பொருளொன்றுமில்லாதவனாயினா னென்றும், சூதாடுதல் முடியப்பெற்றானென்றும், சொல் நேர்உரைக்கு தான் பிறர்க்கு தொண்டு ஆய் என்றுஇயைத்து - (தான்) சொல்லிய சத்தியமானவார்த்தைக்குக் கட்டுப்பட்டுத் தான் பிறர்க்குத்தொண்டனாய் என்றும், உரைக்கு என்பதை 'கு'விகுதி பெற்ற தன்மையொருமையெதிர்காலவினைமுற்றாகக் கொண்டு, சொல் நேர் உரைக்கு - (யான்) நேரானவார்த்தை சொல்வேன் என்றும் உரைப்பாரு முளர். தன - 'தான்' என்ற பகுதியின் பலவின்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர். சுரிகுழல் - சுரிந்த குழலையுடையா ளென வினைத்தொகையன்மொழி. தருமன் பெறுமோ என இயையும்; பெறும் - செய்யுமென்முற்று, ஆண்பாலுக்கு வந்தது.

'சொன்னேருரைக்கிற் றான்பிறர்க்குத்தொண்டாய்விட்டுஞ் சுரிகுழலைப், பின்னேதோற்கவுரிமையினாற்பெறுமோ வொன்றும்பேசீரோ' என்றும் பாட முண்டு. (௨௩௧)

[அவ்வாறு நீதியெடுத்துக்கூறிய விகர்ணனைக் கர்ணன் சினந்துகூறத் தொடங்குதல்.]

௨௩௦.—(இ - ள்.) என்னா - என்று, மன்னர் முகம் நோக்கி - அரசர்களதுமுகத்தைப்பார்த்து,எல்லார் இதயங்களும் மகிழ-(அச்சபையிலிருந்த) எல்லாருடைய மனமும் மகிழும்படி, சொன்னான் - (நீதி) எடுத்துக்கூறினான்; (அப்பொழுது),எவரும் - அதுகேட்ட எல்லாரும், தக்கோன் என்று அவனுக்கு ஒரு பேர் சூட்டிய பின் - 'யோக்கியன்'என்று அவ்விகர்ணனுக்கு ஒருசிறப்புப்பெயரைக்கூறியபிறகு,—அருக்கன்குமரன் - சூரியகுமாரனான

ணன்,—நல் நா மனத்தோடு அழல் மூள - (தனது) அழகிய நாக்கிலும் னத்திலும் கோபாக்கினி மிகுதியாகவுண்டாகவும், நயனம் சிவக்க-கண்கள் வப்பேறவும்,—நஞ்சின் வடிவு அன்னான் இளவல் முகம் நோக்கி - விஷ ம ஒருவடிவு எடுத்தாற்போன்றவனான [மிகக்கொடிய] துரியோதனனது ம்பியாகிய விகர்ணனது முகத்தைப் பார்த்து, அறைகின்றான் - கூறுபவ னான்; (எ - று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

'எல்லார்' என்றதும், 'எவரும்' என்றதும் - துஷ்டசதுஷ்டரொழிந்த ற்றவர்களையே குறிக்கும்; இங்ஙனமே மற்றும்வருவனவற்றிற்குங் கொள்க. ராஜராஜனும் தனதுதமையனுமான துரியோதனனுக்கே மாறாகப் பிறரெ வரும்அஞ்சிஎடுத்துக்கூறாத நீதியை நடுவுநிலைமைகுன்றாமற் சிறிதும்பின் வாங்காது அத்துரியோதனனதுமுன்னிலையிலேயே எடுத்துக்கூறிய பெ ருந்தகைமைபற்றி, விகர்ணனுக்கு எல்லாரும் ஒரேமனமாய் 'தக்கோன்' என்று ஒரு பெரும்பெயர் சூட்டினரென்க: இதனால், அவ்விகர்ணன் வார்த்தைக்கு அச்சபையாரியாவரும் உடன்பட்டன ரென்பது, போதரும். தனதுஉயிர்நண்பனான துரியோதனனது கருத்துக்கு விகர்ணன்பேச்சு மாறாயிருந்ததனால், கர்ணன், பரிந்துரைப்பானாயினன். மூன்றாமடி - கர்ண னது கோபமிகுதியை விளக்கும். துரியோதனனுக்கு நஞ்சு - மிக்ககொடு மையில் உவமம்; நிறம்பற்றிய உவமையெனக் கொள்ளலுமொன்று. 'சொன் னான்' என்பதற்கு - கீழ் உஙஎ - ஆங் கவியில்வந்த 'விகருணனும் வாய்மைக் கடவுள்' என்றது, எழுவாயாம். என்னா - 'செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டெச்சம். என்னச் சொன்னான் என இயையும். முகம், ஹ்ருத யம், மநஸ், நயநம், அர்க்கன், குமாரன் - வடசொற்கள். நாமனம்-உம்மைத் தொகை. மனத்தோடு - உருபுமயக்கம். 'நஞ்சின்வடிவன்னான்' என்றதை அருக்கன்குமரனுக்கு அடைமொழியாக்குதலு மொன்று. 'சூட்டினர்பின்' என்பதும் பாடம். (உசுO)

[இதுவும், அடுத்தகவியும் - கர்ணன் விகர்ணனைநோக்கிக் கூறியன.]

உசுக.—(இ - ள்.) (கர்ணன் விகர்ணனைநோக்கி),—'இருக்கின்ற தர ணிபரின் - (இச்சபையில்) இருக்கின்ற அரசர்களெல்லாரைக்காட்டிலும், இன் அறிவால் உயர்ந்தனையோ-(நீ)நல்லறிவினாற்சிறப்புற்றிருக்கின்றாயோ? இராசநீதி குரு கொண்டு முதிர்ந்தனையோ - அரசநீதியிற் பெருமைபெற்று விளங்குகின்றாயோ? நினை ஒழிந்தால் வழக்கு குறிப்பார் ஒருவர் அற்றோ- நின்னைவிட்டால் இந்தநீதியை யெடுத்துப்பேசுபவர் வேறொருவருமில்லை யென்று நினைத்துக் கூறுகின்றாயோ? மரு கொண்ட தொடை முடியாய் மொழிக என நின்னுடன் கேட்கவந்தார் உண்டோ-'நறுமணம்மிக்க மாலை யைத் தரித்த முடியையுடைய அரசனே! நீதிமொழியை யெடுத்துக்கூறுவா யாக' என்று உன்னிடத்திற் கேட்கவந்தார் யாரேனு முளரோ? உரைக்கும் போது எவருடனும் உணர்ந்தன்றோ உரைப்பது - ஒன்றுகூறத்தொடங்கும் போது பலருடனும் ஆலோசித்தன்றோ உரைக்கவேண்டுவது?' என-என்று, உருத்தான் - கோபித்துக்கூறினான்; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை.

எல்லாவரசரினும் அறிவிற்குறைந்த சிறுவனும் இராசநீதி முற்றுமுண ராதவனுமிருக்கிற நீ உன்னைத் தனியே ஒருவருங்கேளாதிருக்கையில்'நாம் நீதிகூறாவிடின் வேறொருவரும் நீதிகூறுபவரில்லை' என்று தன்னைத் தானே நன்குமதித்து வேறொருவருடனும் சிறிதுங்கலந்து ஆலோசியாமல்நீதிகூறத் துணிந்தது ஸாஹஸத்தொழிலாமெனக் கர்ணன் விகர்ணனைக் கடுமையாக மறுத்துக்கூறினனென்க. ஓகாரங்கள் - எதிர்மறைப்பொருளன. குரு என்ற வடசொல் - இங்கு, மிகுதி யென்றபொருளைத் தரும்; பண்பியின் பெயர் பண்புக்கு வந்த இலக்கணை. நின்அறிவால் என்று பிரித்து உரைத் தல், மோனைத்தொடைக்குச் சிறவாது. 'மருக்கொண்டதொடைமுடியாய்'

என்பதை, முதலில் எடுத்துக்கூறலுமாம். நின்னுடன் = நின்னிடத்தில்: வேற்றுமைமயக்கம். மொழிகென - தொகுத்தல். 'உரைக்கும்போ தெவ்வுரையுமுணர்ந்தன்றே' என்றும் பாடமுண்டு.

இதுமுதல் இருபத்தைந்து கவிகள் - பெரும்பாலும் முதல்நான்குசீர்கள் காய்ச்சீர்களும், மற்றையிரண்டும் மாச்சீர்களு மாகி வந்த கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (உசக)

உசஉ.—(இ - ள்.) (பின்னும் கர்ணன் விகர்ணனைநோக்கி,—) '(தருமபுத்திரன்), தான் படைத்த பொருள் அனைத்தும் - தான் அடைந்துள்ள பொருள்களையெல்லாம், தம்பியர்களுடன் தோற்று - தம்பிமார்களோடுந் தோற்று. தனையும் தோற்றால் - தன்னையுந் தோற்றுவிட்டா னென்றால், மீன் படைத்த மதி முகத்தாள் - இரண்டுமீன்கள்பொருந்தியதொரு சந்திரனைப் போன்ற முகத்தையுடையவளாகிய திரௌபதி, இவன்படைத்த தனம் அன்றி வேறேகொல் ஓ - இத்தருமன்அடைந்துள்ளபொருள்களிற்சேர்ந்தவளாவளேயன்றி வேறாகத் தனிப்பட்டவளாவளோ? (அன்றியும்), வான் படைத்த நெடும் புரிசை மா நகரும் தனது இல்லும் வழங்கும் ஆயின் - ஆகாயத்தையளாவியுள்ள நீண்ட மதில்கள் சூழ்ந்த பெரிய இந்திரப்பிரத்தநகரத்தையும் தனது இல்லையும் கொடுத்துவிட்டதாக(அத்தருமன்) கூறினனாயின், (மனைவியும் அடங்கிவிட்டவ ளாவளன்றே!) எங்கணும் - எல்லாநூல்களிலும், இல்லாள் இல் எனப்பட்டாள் அன்றே - மனைவி 'இல்' என்ற பெயரினாற் கூறப்பட்டுள்ளாளல்லளோ? (இது), யான் படைத்த மொழி அன்றே - யான் புதிதாகஉண்டாக்கிக்கூறிய மொழி யல்லவே! (என்று மறுத்துக் கூறினான்); (எ - று.)

'தருமபுத்திரன் தன்னைத்தோற்றபின்பு திரௌபதியைப் பந்தயம் வைத்தற்கு உரிமையில்லா னென்பது யாவர்க்கும் அங்கீகாரமாயினுமாகுக; தருமன் எப்பொழுது எல்லாப்பொருள்களையும் பந்தயம்வைத்துத்தோற்றே னென்றானோ, அப்பொழுதே அப்பந்தயப்பொருளில் தருமனதுசொத்தாகிய திரௌபதியும் அடங்குவள்; அன்றியும், எனதுநகரத்தையும் இல்லையும் பந்தயம்வைத்தே னென்று தருமன் கூறியபோதும், நகரமென்ற மாத்திரத்திலேயே அதற்குட்பட்டுள்ள வீடும் அடங்கு மாதலின், தனியேகூறப்பட்ட 'இல்' என்னும் மொழி அவன்மனைவியாகிய திரௌபதியையே குறிக்கு மென்பதிற் சிறிதுந் தடையில்லையே! 'இல்' என்னுஞ்சொல் மனைவியைக்குறிக்குமென்பது, யான்கட்டிக்கூறியதன்று: இம்மொழிஇப்பொருளில் வருவது, யாவர்க்கும் ஒப்பமுடிந்ததே: ஆதலின், திரௌபதி வெல்லப்படாதவ ளென்று நீ கூறியது, சிறிதும் பொருத்தமின்றாம்' எனச் சிலபோலிநியாயங்களினாற் கர்ணன் விகர்ணனை மருட்டின னென்க.

'இல்' என்பது வீட்டையேயன்றி மனைவியையுங் குறிப்பதாதலை, "இல்லவ ளாரின்மை பன்னி குடும்பினி யில்லே யில்லாள்", "புகழ்புரிந்தில்லிலோர்க்கு" என்பன முதலியவற்றால் அறிக. (வடமொழியில் 'க்ருஹம்' என்பது - வீட்டையும் மனைவியையுங் குறித்தல், இங்கே கருதத்தக்கது.) எதிரெதிராக ஆடும்போது பந்தயமாக இருவரும் மனமொப்பிய பொருள்களே வெல்லப்பட்டனவாகவும் தோற்கப்பட்டனவாகவும் கொள்ளத்தக்கனவாதலால், அவ்வாறு தருமன் சகுனி என்ற இருவரில் ஒருவருடையமனத்தாலும் முன்னர் எண்ணப்படாமலேயிருந்து தருமனுக்கு உரிமையில்லாத காலத்தில் இருவரும் திரௌபதியைப் பந்தயமாக மனமொப்பியிருக்கவும், 'தருமன் தன்னைத் தோற்குமுன்னமே திரௌபதியை இழந்தவனாவன்' என்று கர்ணன் சாதிப்பது போலிச்சாதனையே யென்பதை நுண்ணிதின் ஆய்ந்தறிக. மீன்படைத்தமதிமுகத்தாள் - இல்பொருளுவமை. உருவத்திலும் பிறழ்ச்சியிலும் கண்ணுக்கு மீனும், வட்டவடிவத்திலும் ஒளியிலும்

கண்டோரை மகிழ்வித்தலிலும் முகத்திற்குச் சந்திரனும் உவமை. நான்கடியிலும் 'படைத்த' என்ற சொல் வெவ்வேறுபொருளில் வந்தது, சொற்பின் வருநிலையணி. தோற்றான் என்று எடுத்தும் உரைக்கலாம். 'தம்பியர்களுடனேயத்தருமன்றோற்றான்' என்றும் பாடமுண்டு. (உசஉ)

[கர்ணன் சபையாரைநோக்கிக் கூறியது]

உசங.—(இ - ள்.) ('இந்த விகர்ணன்),— மை கோது இல் கலை உடையன்-குற்றமற்றஅசாரமில்லாத[சாரமான]சாஸ்திரங்களையுணர்ந்தவன்; மதி உடையன்-சூட்சுமமான புத்தியையுடையவன்; பொறை உடையன்-பொறுமையை யுடையவன்; அரசர் எல்லாம் - (இச்சபையிலுள்ள) எல்லாவரசர்களும், வரிசை ஆக - சிறப்பாக, தக்கோன் என்று உரைத்த பெயர் - 'இவன் தகுதியுடையோன்' என்று கூறிய சிறப்புப்பெயர்,இவன் தனக்கே தக்கது- இந்தவிகர்ணனுக்கே தகும்! அம்மா - ஆச்சரியம்! மகிதலத்து வேந்தர் ஆகி தொக்கோர் - இந்நிலவுலகத்தில் அரசர்களாகி நிறைந்தோர்களில், உங்களை போல் மிக்கோர் வேறு உண்டோ - உங்களைப்போலப்பெருமைபெற்றவர் வேறு யாரேனு முளரோ? (நீங்கள்), யான் நுவன்ற மொழிக்கு எதிர் மொழி உண்டு ஆம் ஆகில் சொல்லுவீர் - நான் கூறினவார்த்தைக்கு மாறாக நீதிவார்த்தை யுண்டானல் எடுத்துக்கூறுங்கள்,' (என்று கர்ணன் சபையாரைநோக்கிக் கூறினன்;) (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்: இங்கு, தகுதியற்ற விகர்ணனுக்கு 'தக்கோன்' என்ற பெயரைச் சூட்டிய அரசர்களது அறிவீனத்தை நோக்கி இழித்தற்குறிப்பாகவந்த தென்க. மற்று - அசை.

'கலையுடையன்' முதலியன - பிறகுறிப்பினால், எதிர்மறைப்பொருளை விளக்கும். இனி, 'கலையுடையன், மதியுடையன்,பொறையுடையன்;(ஆதலினால்,) தக்கோன்' என்று அரசரெல்லாம் வரிசையாக உரைத்த பெயர் என்றும் பொருள்கொள்ளலாம். தகுதியற்றவனுக்கு இவ்வாறு 'தக்கோன்' என்று பெரும்பட்டப்பெயரைச் சூட்டிய சபையார்களை இழித்துக் கூறுவான், 'மிக்கோர் மற்றுங்களைப்போல் வேறுண்டோ? மகிதலத்து வேந்தராகித்தொக்கோர்' என்றான்; இதுவும், எதிர்மறையிலக்கணையின்பாற்படும் பிறகுறிப்பே. தான்கூறியதே தேர்ந்த நீதி யென்று தூரபிமானங்கொண்டவனாதலால், இதற்கு மாறுகூறுதல் ஒருவர்க்கும் இயலா தென்ற கருத்துப்பட,'எதிர்மொழியுண்டாமாகிற்சொல்லுவீர்'என்றான். மைஇல்,கோது இல் என இயையும். 'தொக்கோர்' என்பதை இயல்பாகிய அண்மைவிளியாகவுங் கொள்ளலாம். (உசங)

[பாண்டவர் திரௌபதி என்ற இவர்களது துகிலை உரியுமாறு துரியோதனன் துச்சாதனனுக்குக் கட்டளையிடுதல்.]

உசச.—(இ - ள்.) என்ன - இவ்வாறுகூறி, வெகுண்டிடுகின்ற எல்லைதனில் - (கர்ணன்) சினங்கொண்ட இச்சமயத்தில்,—எழு உறழ் தோள் இராசராசன் - தூண்களையொத்த தோள்களையுடைய அரசர்க்கரசனான துரியோதனன்,— தன் அனைய கொடுங் கோபம் தம்பியை - தன்னைப் போலவே கொடுமையான கோபத்தையுடைய தம்பியாகிய துச்சாதனனைப்பார்த்து,—'இன்று - இப்பொழுது, உம்பிதனை தக்கோன் என்ற மன் அவையின் எதிரே - உனது தம்பியாகிய விகர்ணனை யோக்கியனென்று கூறிய இந்த ராஜசபையின் முன்பாகவே, மானம் இலா இ ஐவரையும் - மானங்கெட்டவர்களான இந்தப்பாண்டவரைவரையும், வழக்கு வார்த்தை சொன்ன கிளிமொழியினையும் - வியவகாரம்பேசின கிளிபோன்றவார்த்தையுடையவளாகிய திரௌபதியையும், துகில் உரிதி - வஸ்திரங்களை உரிந்துவிடுவாயாக,' என - என்று, உருமின் சொன்னான் - இடியோசைபோல (க் கொடுமையாக)க் கட்டளையிட்டான்; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை.

துரியோதனன் பாண்டவர்கட்குச் செய்யவேண்டுமென்று நினைக்கும் பொல்லாங்குகட்கெல்லாம் உடன்பட்டு அவ்வாறே தன்னுலியன்றமட்டுஞ் செய்து தீர்க்க முயல்பவனாதலால், துச்சாதனனை 'தன்னனைய கொடுங் கோபத்தம்பி' என்றார். துரியோதனன் தன்னெண்ணத்திற்கு மாறாகக் கூறிய விகருணனை 'தம்பி'என்று பொதுவாகக்கூறுதற்கும் விருப்பமில்லாதவனாய் 'உம்பி'என்றானென்னலாம். அரசர்கள் அநியாயங்கூறினமையால், அவர்கட்கும் ஒருமானபங்கமுண்டாம்படி அவர்கள்விருப்பத்திற்குமாறாக அவ்வரசர்களதுமுன்பாகவே தருமபுத்திரன்முதலியோரது ஆடையைஉரியுமாறு துரியோதனன் கூறினான். 'வழக்குவார்த்தைசொன்ன இன்மொழி' என்றதனால், அவன் கொடுவழக்குஉரைத்ததற்கு இதுவே பயனென்றவாறும். கர்ணகடூரமாயிருத்தலாலும், அச்சந்தருதலாலும், பேரொலிபடுதலாலும், துரியோதனன்கட்டளைக்கு இடி உவமை. ஐவரையும் இனிமொழியினையும், துகிலை உரிதி - இரண்டுசெயப்படுபொருள்வந்த செய்வினை. இனிமொழி - உவமைத்தொகையன்மொழி. உறழ் - உவமவுருபு.

இனி, என்று கூறிக் கர்ணன் தான் கோபங்கொண்ட சமயத்தில் (அக்கோபந்தணியுமாறு) துரியோதனனது தம்பியாகிய துச்சாதனனைப் பார்த்து இவ்வாறு கட்டளையிட்டதாகப் பொருள்கூறலுமாம்; துகிலுரியுமாறு கர்ணனே துச்சாதனனுக்குக் கட்டளையிட்டதாக வியாசபாரதம் கூறுதலால், இப்பொருள் சாலும். (உ௪௪)

[அதுகேட்ட வீமனும் அருச்சுனனும் சினங்கொள்ள, தருமன் அவர்களைத் தணித்தல்.]

உ௪௫.—(இ - ள்.) இ தகவு இல் மொழி - தகுதியற்ற இந்தக்கட்டளை வார்த்தை, எரி வாளி என செவியில் மூழ்க - நெருப்புப்பற்றியெரிகின்ற அம்புபோலத் தங்கள் காதுகளில் நுழைந்து வருத்த,—இருந்த வேந்தர் - அங்கிருந்த அரசர்கள், தம் தம் மனம் மடிந்து உருக - தம்தமது மனம் தளர்ந்து உருகும்போது,—தருமன் முகம் மதி நோக்கி - தருமபுத்திரனது மதிபோன்ற முகத்தைப் பார்த்தும், தம்மில் நோக்கி - தாம் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டும், விறல் வீமன் - பராக்கிரமசாலியான வீமசேனன், வித்தகம் வெம் கதை நோக்க-(தான்) மிகத்தேர்ந்ததாகிய கொடிய (சத்துருகாதினியென்னுந் தனது)கதாயுதத்தை நோக்கவும்,—விசயனும்- அருச்சுனனும், தன் வில்லை நோக்க - (காண்டீவமென்னுந்) தனதுவில்லை நோக்கவும்,—(அக்குறிப்பைக் கண்டு),— உண்மைக்கு உறுதி போல்வான்- சத்தியத்திற்கு ஆதாரம்போல்பவனான தருமபுத்திரன்,ஒத்த மனன் உடை இளையோர் உருப்பம் அடக்கினன் - தன்னோடு மாறுபடாத மனமுடையவர்களான தனதுதம்பிகளதுகோபத்தை(க் குறிப்பால்)தணித்தான்; (எ-று.)

எரிவாளி - ஆக்கிநேயாஸ்திர மெனினுமாம். தத்தம் - தந்தம்என்பதன் எதுகைநோக்கிய வலித்தல். முகமதி-முன்பின்னாகத்தொக்க உவமைத்தொகை. தருமனதுகருத்தை அறியும்படி அவனது முகத்தையும், 'நாம் என்னசெய்யத்தக்கது? இப்பொழுது பகையைச் சங்கரித்துவிடுவோமா?' என்று ஆலோசிக்குமாறு தம்மில் ஒருவர் மற்றொருவரையும் வீமார்ச்சுனர் நோக்குவாராயினரென்க. ஒத்தமனமுடையோர் உருப்ப மடக்கினன் என்று பிரித்து - ஒத்தகருத்துடையவர்களான நகுலசகதேவர்கள் கோபிக்கவும் (அத்தம்பியர்நால்வரையும்) கோபந்தணியுமாறு சாந்தப்படுத்தினானெனக் கூறலுமொன்று. மதி - சந்திரன். 'இளையோருருப்பவடக்கினன்' என்பதும் பாடம். (உ௪௫)

[பாண்டவர்கள் தமதுஉத்தரீயங்களைத் தாமே கொடுக்க, துச்சாதனன் திரௌபதியைத் துகிலுரிய நெருங்குதல்.]

உ௪௬.—(இ - ள்.) துச்சாதனன்—, (துரியோதனனதுகட்டளைப்படி

யே), எழுந்து - எழுந்துவந்து, துகில் தருக என தங்களை வன்பொடு சொலாமுன் - 'வஸ்திரத்தைத்தாருங்கள்' என்று தங்களைநோக்கிக் கடுமையாகக் கூறுதற்குமுன்னமே,—(பாண்டவர்கள்), வருக என - (அவனை) வாவென்று அழைத்து, வரை மார்பின் வாங்காத உத்தரியம் வாங்கி ஈந்தார் - மலையையொத்த தமது மார்பிலிருந்து முன்னொருநாளும் எடுத்திராத உத்தரீயங்களைக் களைந்துகொடுத்தார்கள்;(உடனே துச்சாதனன்),—மடவரலை அருகு அணுகி - திரௌபதியைச சமீபித்து, அஞ்சாமல் - சிறிதுங்கூச்சங்கொள்ளாமல், துகில் உரிவான் அடர்ந்த போதில் - (அவளது) ஆடையைக் கவரும்படி நெருங்கியபோதில்,—(அவள்), இரு கை நறு மலர் குவிய - நறுமணமிக்க தாமரைமலர்போன்ற (தனது) இரண்டுகைகளும் குவிந்து அஞ்சலிசெய்து நிற்க, எம் பெருமான் இணை அடிக்கே இதயம வைத்தாள் - எம்பெருமானது இரண்டு திருவடிகளிலே தனதுமனத்தைச்செலுத்தித் தியானித்தாள்; (எ - று.)

துச்சாதனன் தமதுஆடையைக் கவரவருவதைக் கண்ட பாண்டவர்கள் அவன்வந்து வலியக்களைவதற்குமுன்னமே கௌரவமாகத் தாமே கொடுத்துவிடுவது நல மெனக் கருதித் தாமே தமது உத்தரீயங்களைக் களைந்துகொடுத்தன ரென்க. உத்தரீயம் - வடசொல்: மேலாடையென்று பொருள்படும்; (அரையாடை, அந்தரீய மெனப்படும்.) மார்பிற்கு மலையுவமை- தோற்றத்திலும்,பிறராற் சலிப்படையாத வீரத்திலும், பெரும்பரப்பிலுமாம். இனி, வரைமார்பு - உத்தமரேகைகளையுடைய மார்புமாம்; "வரையகல்மார்பிடைவரையுமூன்றுள" என்றதுங காண்க. 'வாங்காதஉத்தரியம் வாங்கி' என்ற தொடர், இதுவரையில் ஒருநாளும் களைந்திராத உத்தரீயத்தை இப்பொழுது களையும்படி யாயிற்றே! என்ற இரக்கத்தைக் குறிப்பிக்கும். வாங்காத உத்தரியம் வாங்கி - தொடைமுரண்.

துச்சாதனன் தனதுதுகிலையுரியத்தொடங்கியபோது, தன்னைப்பாதுகாக்கவேண்டிய கணவர் ஒருவர்க்கு ஐவராயிருந்தும் மாற்றார்க்குஅடிமைப்பட்டுப் பாரதந்திரராய்த் தன்திறததில் துணைபுரிய வலியற்று வாளாகிடப்பதைக்கண்டு, திரௌபதி, கூப்பியகையளாய், ஸ்ரீய:பதியும் அபாரகருணாநிதியும் ஆச்ரிதவத்ஸலனும் அகதிகட்குஅருள்புரிபவனும் ஆபத்பந்துவுமான ஸ்ரீக்ருஷ்ணனது திருவடித்தாமரைகளிடத்துத் தன்கருத்தைச்செலுத்தித் துதிப்பவளாயின ளென்பது, பின்னிரண்டடியின் கருத்து. 'இருகை நறுமலர் குவிய' என்பதற்கு - நறுமணமுள்ள தாமரைமலர்போன்ற இரண்டுகைகளும் (ஆடைகுலையாதபடி இறுக்கிப்பிடித்தற்பொருட்டுக்) குவிய வென்று உரைததலு மொன்று; அடுத்தசெய்யுளில் "வேறுன துகி றகைந்த கை" என வருதல் காண்க. 'இருகைநறுமலர் தகைய' என்று பாட மோதுவாரு முளர். மடவரல் - மடமையினதுவருதலையுடையவள்; வேற்றுமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. உரிவான் - வானீற்று எதிர்காலவினையெச்சம். இணையடி - உபயபாதம். அடிக்கு - வேற்றுமைமயக்கம். (உ௪௪)

[திரௌபதி எம்பெருமானையே ரக்ஷகனாகக்கொண்டு முறையிடுதல்.]

உ௪௫.—(இ - ள்.) (திரௌபதியானவள்),—இரு தட கண் அஞ்சனம் வெம் புனல் ஆறு ஆகி சோர-(தனது)பெரியஇரண்டுகண்களிலிருந்து (கரைந்துவிழுகிற) மையுடனே உஷ்ணமான சோகபாஷ்பம் ஆறாய்ப்பெருகவும், அளகம் சோர - கூந்தல் அவிழ்ந்துபுரளவும், வேறு ஆன துகில் தகைந்த கை சோர - (துச்சாதனன் வலியஇழுத்ததனால்) அவிழ்ந்துகுலைகிற வஸ்திரத்தைப் பிடித்திருந்த கை நெகிழ்ந்திடவும், மெய் சோர - உடம்புதளர்ச்சியடையவும்,—வேறு ஓர் சொல்லும் கூறுமல்—, கோவிந்தா கோவிந்தா என்று அரற்றி - 'கோவிந்தா!' என்று பலதரம் கதறிக்கூறி முறையிட்டு,(அத

ணுல்), குளிர்ந்து - உடம்புகுளிர்ந்து, நாவில் ஊறாத அமிழ்து ஊற - நாக்கில் இதற்குமுன்சுரந்திராத அமிருதரஸம் சுரக்க,உடல் புளகித்து-(தனது) உடம்பில் மயிர்சிலிர்க்கப்பெற்று,உள்ளம் எலாம் உருகினள்-மனம்முழுதும் கரைந்துருகினள்; (எ - று.)

கீழ்ச்செய்யுளின் பின்னிரண்டடிகளினுல் தொகுத்துச்சுட்டியதை, இக்கவியினுல் வகுத்துக்காட்டுகின்ருர் துச்சாதனன் துகிலுரியத்தொடங்கியபோது திரௌபதியானவள் தனக்குநேரும் மானபங்கத்தைச் சிந்தித்து மையைக்கரைத்துக்கொண்டு கண்ணீர் ஆருய்ப்பெருகவும், துச்சாதனன் பிடித்திழுத்துவந்தபோது அவிழ்ந்த கூந்தல் அவ்வாறே விரிந்துபுரளவும், அவன்வலியஅவிழ்த்தஆடையைத் தன்ஞலானவரையுந் தகைந்து பார்த்தும் முடியாமல் தளர்ந்து அச்செயலொழிந்து தலைமேற்கைகுவியவும், தன் வசந்தப்பிப் பரவசமாய், தத்துவஞானமுதிக்கப்பெற்றவளாதலின் பார்த்தாக்களாவது பிறதெய்வங்களாவது உதவுவார்க ளென்ற கருத்தை விட்டு 'பெரிய ஆபத்காலத்தில் உதவுபவன் திருமாலே' என்று துணிந்து அப்பெருமானதுதிருநாமத்தையே பலதரங்கூவி விளித்து,அவ்வாறு நாமத்தை உச்சரிக்கும்போது மெய்ப்பாட்டினுல் உடம்புகுளிரப்பெற்று நாவில் அமிர்தூற, பக்தியின்மேலீட்டினுல் உடல்புளகமுற, மனம் நெக்குருகுவாளாயின ளென்றவாறு. 'மகத்தான ஆபத்து நேருங்காலத்தில் பகவானுகிய திருமால் தியானிக்கத்தகுந்தவ னென்று வசிஷ்டமுனிவர் கூறியுள்ளதை நினைத்துத் திருமாலைக்குறித்துத் திரௌபதி முறையிடுபவளானுள்' என்று வியாசபாரதம் கூறும்.

எம்பெருமானுக்குப் பலதிருநாமங்களிருக்கவும் கோவிந்த னென்ற இப்பெயரால் விளித்தது, இந்திரன் விடாப்பெருமழையைப்பொழிவித்த போது தம்மாலும் தம்மைப்பாதுகாத்தற்குஉரியஇடையராலும் காக்கமுடியாமல்தவித்துஅலைகிறநிலையிலே பசுக்களையெல்லாம்யாதொருகுறைவுமின்றிக் கோவர்த்தனமலையைக்கொண்டு உனதுபேரருளினுற் காப்பாற்றியது போலவே, என்னுலும் என்னைப்பாதுகாக்கவேண்டிய பர்த்தாக்களாலும் பாதுகாக்கமுடியாமல் தவித்து அநந்யகதியாய் உன்னையே சரணமாகநம்பியிருக்கிற என்னை நீ பேரருள்கொண்டு காக்கவேண்டு மென்ற குறிப்பு. ("இனி அரைகுலையத் தலைகுலைய அலமாக்கும்படியாக முடிசூடின பேரைச் சொல்லிக் கூப்பிடுகிருள்; கோவிந்த - தன்ஆஸ்ரிதரை நோவுபடவிட்டிருக்குமவனையோ நான் ஆஸ்ரயித்தது?' 'கோவிந்த - நீ கோவிந்தாபிஷேகம் பண்ணிக் கோப்தாவாயிருக்க, ஒருவர்கூறை எழுவருடுக்கும்படியிருப்பதென்?' 'கோவிந்த - நீ ஆஸ்ரித ரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்க "க்ருஷ்ணாஸ்ரயா" என்றிருக்கிற என்னை க்ருபைபண்ணுதொழிவதென்?' 'கோவிந்த - நாராயணனென்று உன்சிறுபேரையோ நான்சொல்லிற்று? ..உன்னிலும் அதிசமான உன்பேரையன்றோ நான்சொல்லிற்று!' 'கோவிந்த - என்னுடைய ரட்சணத்துக்கு மலையெடுக்கவேணுமோ? கண்ணுலே நோக்கஅமையாதோ?"என்ற வியாக்கியான வாக்கியங்கள்,இங்கு நோக்கத்தக்கன ) கோவிந்தன்—கோ - பசுக்களை,விந்தன் - காப்பாற்றினவன் என்று பொருள்.

திருமாலின் திருநாமத்தை உச்சரித்ததனுல், இதற்குமுன் கண்டிராத இனிய ரஸம் நாவிற்சுரப்பதாயிற்று: இதனை, "குருகூர்நம்பியென்னக்கால், அண்ணிக்கு மமுதூறு மென்னுவுக்கே," "சிந்திக்கத்தித்திக்கும்" என்ருற்போலக் கொள்க. ஊறாதஅமிழ்தூற - தொடைமுரண். 'உள்ளம்எலாம்'என்றது, "வெயிலெல்லாம்" என்றதுபோல வந்த ஒருமைப்பன்மைமயக்கம்; இனி, மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்று உள்ளுறுப்புநான்காதல்பற்றி வந்த பன்மையாகவுமாம். திரௌபதி உள்ளம் உருகினள்—"உயர்திணை

தொடர்ந்த பொருண்முதலாறும், அதனொடுசார்த்தி னத்தினைமுடிபின" என்பது விதி. (௨௪௭)

[கிருஷ்ணபகவான் திரௌபதிக்கு அருள்புரிதல்.]

௨௪௮.—(இ - ள்.) அமரர் - தேவர்கள், அரு மறை சொல்லிய நாமம் ஆயிரமும் - அரிய வேதங்களிற் கூறியுள்ள (தனது) ஆயிரந்திருநாமங்களைக் கொண்டும், உரை தழைக்க போற்றும் - தங்களுயார்த்தைகள் செழிக்கும்படி எடுத்துத்துதிக்கப்பெற்றவனான, திரு மலர் செம் சிறு அடியோன் - அழகிய தாமரைமலர்போன்ற சிவந்த சிறிய திருவடிகளையுடையவனான கண்ணபிரானது, திரு செவியில் - அழகிய காதுகளில், இவள் மொழி சென்று இசைத்த காலை - இந்தத்திரௌபதியினது ('கோவிந்தா!' என்று கதறிக்கூறிய) மொழி வந்துகேட்டபொழுதில்,—கரிய முகில் அனையானும் - காளமேகத்தையொத்தவனான அக்கண்ணபிரானும்,—மரு மலர் மெல் குழல் மானின் - நறுமணம்வீசுகின்ற மலர்மாலையை யணிந்த மெல்லிய கூந்தலையுடைய மான்போன்றவளான திரௌபதியினது, மனம்—, நடுங்காவகை - கலங்காதபடி, மனத்தே வந்து தோன்றி - (அவளது) மனத்தி லெழுந்தருளிக் காட்சிதந்து, பிறர் எவர்க்கும் தெரியாமல்—, கருணை செய்தான் - (மானங்குலையாதபடி ஆடைவளருமாறு) அநுக்கிரகித்தான்; (எ - று.)

பரம்பொருளான திருமாலின் அவதாரமாகிய கண்ணபிரான் எங்குமுள னாதலால், திரௌபதி இரங்கித் தன்னையழைத்தபொழுது அதனைச் செவியேற்றுத் துவாரகையிலிருந்தபடியே அவளதுமனத்தில் வந்து எழுந்தருளி அருள்புரிந்தன னென்க; இதனை, முதலையின்வாய்ப்பட்ட கஜேந்திராழ்வான் ஆதிமூலமே யென்று கூவியழைத்தபொழுது திருமால் பரமபதத்திலிருந்துகொண்டே கருடாரூடனாயும் எழுந்தருளிக் காட்சிதந்து அக்கஜேந்திராழ்வானுக்கு அநுக்கிரகித்ததுபோலக் கொள்க. அருமறை சொல்லிய நாமமாயிரம் - வேதப்ரதிபாதயமான ஸஹஸ்ரநாமங்கள். மனத்தே வந்துதோன்றுதல் - எம்பெருமான் மாநஸஜ்ஞாநத்துக்குப் பிரதியக்ஷமாதல், ஞானக்கண்ணுக்குப் புலனாதல். இச்செய்யுளினால், அடியவர்க்கெளியவனாயிருத்தலாகிற பகவானது சௌலப்பியம் விளங்குதல் காண்க. இனி, முதலடியில் - (திரௌபதி) ஆயிரநாமங்களையும் உரைத்து அழைக்க என்று பொருள்கொள்ளுதல், "வேறோர்சொல்லுங்கூறாமற் கோவிந்தா கோவிந்தா வென்றரற்றி" என்றதனோடு மாறுபடும். அன்றி, 'வேறோர்சொல்லுங் கூறாமல்' என்றதற்கு - எம்பெருமானது திருநாமங்களை யன்றி வேறொரு சொல்லையுஞ் சொல்லாமல் என்று பொதுப்படப்பொருள்கொண்டால், அங்ஙனம்உரைக்கலாம். 'அமரர்' என்றது, பரமபதத்தில் வாழும் நித்யசூரிகளை. சிறுமை + அடி = சீறடி: பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டது; கால் சிறுத்திருத்தல், உத்தமலட்சணம். 'சீரடியோன்' என்றும் பாடமுண்டு. மான் - உவமவாகுபெயர். (௨௪௮)

[திரௌபதிக்கு ஆடை சுரக்க, துச்சாதனன் கைசலித்தல்.]

௨௪௯.—(இ - ள்.) உணர்வு இலான் உரிந்திடவும் - அறிவுகேடனான துச்சாதனன் விடாமல்அவிழ்த்துக்கொண்டிருக்கவும் [களையக்களைய], உடுத்த துகில் - (அத்திரௌபதி) தரித்திருந்த ஆடையானது, மாளாமல் - முடிவுபெறாமல்,—ஒன்றுக்கு ஒன்று ஆங்கு அடுத்த நிறம் பல்பல பெற்று - ஒன்றற்கொன்றுவெவ்வேறாகப் பொருந்திய பலபலநிறங்களைப் பெற்று, ஆயிரம் ஆயிரம் கோடி ஆடை ஆக - மிகப்பலஆயிரக்கணக்கான நூதனவஸ்திரமாக வளரும்படி, கொடுத்தருள - (எம்பெருமான்) அநுக்கிரகிக்க,—உரிந்தன பட்டு - (துச்சாதனனால்) அவிழ்க்கப்பட்ட பட்டாடைகள், இருந்த தனி பெருங் கூடம் கொள்ளாது - (அரசர்கள்) இருந்த ஒப்பற்ற பெரிய சபாமண்டபமும் இடங்கொள்ளாமையால், பல்பல வீரர் ஓடி எடுத்தனர் - மிகப்

பலவீரர்கள் (அவ்வாடைகளை) விரைந்தெடுத்துக்கொண்டிருந்தார்கள்; உரிந்தோனும்-(அவ்வாடையைக்) களைகின்ற துச்சாதனனும், இரு கை சலித்து இளைத்து நின்றான் - தனது இருகைகளும் ஓய்ந்து இளைப்படைந்து நின்றிட்டான்; (எ - று.)

ஸ்ரீகிருஷ்ணபகவானது திருவருளினாலே திரௌபதிக்கு மானபங்கமுண்டாகாது பலநிறமான ஆடைகள் மேன்மேல்வளர, முடிவில் துச்சாதனன் சலித்து நின்றனனென்க; துச்சாதனன் ஓய்ந்தனனேயன்றி ஆடை சுரத்தல் ஓய்ந்தில தென்றவாறு. இவ்வாறு பலநிறமான ஆடைகள் மேன்மேற்சுரக்கின்ற இப்புதுமையைத் தெய்வானுக்கிரகத்தால் நிகழ்ந்ததென வுணர்ந்து துகிலுரிதலை விட்டிடாமல் தன்னுவளவுமுறையிலும் மேன்மேலுங் களைந்தனனாதலின், துச்சாதனனை 'உணர்விலான்' என்றார். கோடியாடை - புதுவஸ்திரம். (௨௪௯)

[வீடுமன்முதலியோர் திரௌபதியை நன்குமதித்தலும், வானவர் பூமழைபொழிதலும்.]

௨௫0.—(இ - ள்.) கங்கைமகன் முதலான காவலர்-கங்கையின்குமாரனான வீடுமன் முதலிய அரசர்கள்,—மெய் உற நடுங்கி - உடம்பு மிகவும்நடுங்கி, கண் நீர் சோர -(தமது) கண்களினின்று நீர் பெருக, செம் கை மலர் குவித்து-செந்தாமரைமலர்போன்ற தமதுகைகளைக் கூப்பி,—'இவளே கற்பினுக்கும் மரபினுக்கும் தெய்வம் - 'இந்தத்திரௌபதியே கற்புநிலைக்கும் குலத்திற்கும் தெய்வம்போல்வாள்', என்றார் - என்று (அவளை) நன்குமதித்துக்கூறினார்கள்; அம் கண் அகல் வானோரும் - அழகிய இடத்தையுடைய விசாலமான வானுலகத்தி லுள்ளவர்களாகிய தேவர்களும்,—ஆனகமும் - துந்துபிவாத்தியமும், வலம்புரியும் - வலம்புரிச்சங்குகளும், அதிர - ஆரவாரிக்க, தங்கள் பைம் கனக தருவின் மலர் மழை பொழிந்து - தங்களது பசிய பொன்மயமான கற்பகமரங்களின் மலர்களை மழைபோலச்சொரிந்து, கருணையினால் பரிவு கூர்ந்தார்-கருணையோடு அன்புமிகுந்தார்கள்;(எ - று.)

திரௌபதியைச் சாதாரணமானவளென்று எண்ணியிருந்த வீடுமன் முதலியோர், இப்பொழுது கண்கூடாக நிகழ்ந்த புதுமையைக் கண்டு, அவளதுமகிமையையுணர்ந்து, அத்திரௌபதியைத் தெய்வமாகவே கருதிக் கைகுவித்தனர். அவர்கள் மெய்ந்நடுங்கினது, திரௌபதி கேட்ட வினாக்களுக்குத் தாங்கள் தகுதியான விடைகூறாமல் மௌனமாயிருந்த குற்றத்தைப் பற்றிய அநுதாபத்தினாலென்க. தனது கற்புநிலையால் தானே மானங்காத்துக்கொண்டதனால் திரௌபதியை 'கற்பினுக்குத்தெய்வம்' என்றும், துச்சாதனன்செய்த தீச்செயலால் தனதுகுலத்திற்கு வசைமொழி சிறிதும் நிகழாது புகழை மிகுவித்துநிற்றலால் 'மரபினுக்குத் தெய்வம்' என்றுங் கூறினார்; "தற்காத்துத் தற்கொண்டாற்பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்ற திருக்குறள், இங்குக் கருதத்தக்கது. பதிவிரதாதருமத்தின்சிறப்பைக் கண்ட கொண்டாட்டத்தினால், வானவர்கள் தமது உலகத்து வாச்சியங்களை முழக்கிப் பூமழைபொழிவாராயினர். அங்கண் - அப்பொழுது எனினுமாம். வானோரும், உம்மை - உயர்வுசிறப்போடு இறந்ததுதழுவியது. ஆநகம் - தேவதுந்துபி. தேவலோகத்திலுள்ளவை யாவும் பொன்மயமானவை யென்பது நூல்துணிபாதலால், 'கனகதரு' எனப்பட்டது. கநகதரு - வடசொற்றொடர். மலர்மழை - புஷ்பவர்ஷம். (௨௫0)

[திரௌபதியின் வருத்தத்தைநோக்கி வீமசேனன் ஆயுதமெடுத்தல்.]

௨௫௧.—(இ - ள்.) கொடும் புலிவாய் அகப்பட்ட மான் பிணை போல் - கொடிய புலியினிடத்து அகப்பட்டுக்கொண்ட பெண்மான் போல, (மிக அஞ்சி), அழுது அழுது அரற்றுகின்ற-மிகுதியாகப்புலம்பிக் கதறிக்கொண்டிருக்கிற, எழுது அரிய படம் பாவை-இளமையையுடையவளான எழுதுதற்கு

அரிய [மிகவும்அழகிய] சித்திரப்பிரதிமைபோன்ற திரௌபதி, தங்கள் முகங்களை நோக்கி இரங்கி வீழ்ந்த பொழுது - (பர்த்தாக்களாகிய) தங்களுடைய முகங்களைப் பார்த்துக்கொண்டே வருந்திக் கீழ்விழுந்தசமயத்தில், (அதுநோக்கி),—பழுது படா அடல் ஆண்மை பவனகுமரன் - (ஒருபொழுதும்) தோல்வியடையாத பலபராக்கிரமங்களையுடைய வாயுகுமாரனான வீமசேனன்,(கோபத்தினால்),மனம் புகை மூள - மனத்திற் புகையெழவும், பூ தட கண் அனல் மூள - தாமரைமலர்போன்ற (தனது)பெரியகண்களில் தீப்பொறி யுண்டாகவும்,—போரில் மூள - யுத்தஞ் செய்யுமாறு, படைமேல் தட கை வைத்தான் - (தனது)கதாயுதத்தின்மேல் (தனது) பெரிய கைகளை வைத்திட்டான்; (எ - று.)

துச்சாதனனுக்குப் புலியும், திரௌபதிக்குப் பிணைமானும் உவமை. தங்கள்முகங்களைநோக்கியது, இச்சமயத்திலாவது நீங்கள் பகைவர்களையழிக்க முயலவேண்டாவோ? என்ற குறிப்பு. வீமசேனன் திரௌபதியின் பெருவருத்தத்தைக் கண்டு மிக்கசினங்கொண்டு மனம்புகைந்து கண்களில் தீப்பொறிபறக்கப் போர்செய்யக்கருதித் தனதுகதாயுதத்திற் கை வைத்தனனென்க. பவநகுமாரன் - வடமொழித்தொடர். 'மூள' என்னுஞ் செயவெனெச்சம் மூன்றனுள்—முன்னைய இரண்டும் - உடனிகழ்ச்சிப்பொருளனவாய் நிகழ்காலத்தையும், ஈற்றது - காரியப்பொருளதாய் எதிர்காலத்தையுங் குறிக்கும். 'மூள' என்ற சொல் ஓர் அர்த்தத்திலேயே பலமுறை வந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி. (உ௫௧)

[வீமசேனன் மிக்கசினத்தால் துரியோதனாதியரைப் போர்க்கு அழைத்தல்.]

உ௫உ.—(இ - ள்.) (வீமன் துரியோதனாதியரை நோக்கி),—'அருள் ஆரும் தருமபதி - கருணைநிறைந்த தருமராஜன்,ஆகாது என்று எமை பலகால் அடக்க - '(கோபித்தல்)தகாது' என்றுசொல்லி எங்களைப் பலமுறை அடக்கியதனால்,—யாமும்-நாங்களும்,—வெம் பரிதி இருளால் வடிவு ஒளிப்பது போல் - உஷ்ணகிரணனான சூரியன் இராப்பொழுதில் தனதுவடிவம் மறைவதுபோல [எமதுவலிமை வெளிக்குத்தோன்றாது அடங்கி], அமர் புரியாது இருக்கின்றேம் - (உங்களுடன்) போர்புரிந்து உங்களை பழியாமல் வாளாஇருக்கின்றோம்; (இவ்வாறன்றி), மருளால் மெய் மயங்கி - அறியாமையினால் உண்மையை மாறாகமயங்கி, ஒரு வலி உடையோர்தமை போல மதித்து - (உங்களை)ஒப்பற்றவீரமுடையவராகக் கருதி, நீங்கள் பொருள் ஆக இருந்தனமோ - உங்களை ஒருபொருளாகக்கொண்டு போர்செய்யாதிருந்தோமோ? நூற்றுவரும் எதிர் வருக பொருக - நீங்கள் நூறுபேரும் (இப்போது எனது)எதிரில் வந்து போர்செய்வீர்களாக,' என்றான்—;(எ-று.)—இரண்டாமடியில், ஆல் - ஈற்றசை.

நாங்கள் போர்புரிந்து உங்களை இதுவரையிலும் அழியாதிருந்தது, தருமபுத்திரனது கட்டளைக்குக் கட்டுப்பட்டே யல்லாமல் உங்களை வலிமையுடையோ ரென்று பிரமித்து உங்களை ஒருபொருளாக வெண்ணி அஞ்சி யன்று; இப்பொழுது அவ்விஷயம் தெற்றெனை விளங்குமாறு நீங்கள் நூற்றுவரும் ஒருங்குசேர்ந்து என்னொருவன்முன்னே போர்க்கு வாருங்கள் என வீமன் துரியோதனாதியரை அறைகூவின னென்க. இராப்பொழுதென்றகாரணத்தாற் சூரியன் தான்மறைந்துவிடுவதுபோல, எங்கள்தமையனான தருமபுத்திரனது கட்டளை யென்ற காரணத்தினால் நாங்கள் எங்களது பராக்கிரமத்தை வெளிக்காட்டாது அடங்கியிருக்கின்றோ மென்பது,இரண்டாமடியின் கருத்து. இயற்கையில் ஆயிரங்கிரணங்களையுடையனாய்ப் பேரொளியையுடைய சூரியனும் கடவுள்கட்டளைக்குக் கட்டுப்பட்டு இராப்பொழுதில் தான்மறைந்துவிடுவதுபோல, இயற்கையிற்பராக்கிரமசாலி

களாய் மகாவீரரான நாங்களும் மூத்தோர்சொற்குக்கீழ்ப்படியவேண்டுமென்ற தருமசாஸ்திரத்தின்கட்டளைக்குக் கட்டுப்பட்டு அடங்கியிருக்கின்றோ மென்பது. உவமையாற் பெறப்படும். தருமனது கட்டளைக்கு இருளும், சூரியனதுஒளிக்குத் தங்களதுபராக்கிரமமும் உவமை. இனி,சூரியன் இயற்கையால் அஸ்தமித்துமறைவது இருளினால்மறைவதாக மேல்நோக்கில் தோன்றுவதுபோல, நாங்கள் தருமனதுகட்டளைக்குக் கீழ்ப்படிந்து அடங்கியிருப்பது நுமதுவீரதிறக்குப்பின்வாங்கிஅடங்கியிருப்பதுபோலத் தோன்றும்; ஆயினும், சூரியன் தனதுஆயிரங்கிரணங்களோடு உதயமாகுங்காலத்தில் மிக்குப்பரவியிருக்கும் இருள் இருந்தஇடமுந் தெரியாது அழிந்தொழிவதுபோல, நாங்களும் உக்கிரங்கொண்டு எங்கள்பராக்கிரமத்துடன் போர்க்குஎழுந்தால் பெருவீரர்களென அகங்காரங்கொண்டுள்ள தொகுதியான நீங்களும் எங்கள்முன்னிலையில் இருந்த இடமுந்தெரியாது அழிந்தொழிவீர்க ளெனக் கருத்துக்கூறினுமாம்; இவ்வுரையில்,இருளுக்குத் துரியோதனுதியரும்.சூரியனுக்குப் பாண்டவர்களும்உவமையாவர். உவமையணி.மருள்-ஒன்றை மற்றொன்றாகநினைக்கும் விபரீதஞானம்; திரிபுணர்ச்சி.

'உடையோர்தமைப்போல'—போல-ஒப்பில்போலி; உவமைப்பொருள் தராத போலென்னுஞ்சொல்: இதனை, "செய்போல்வதூஉம்" என்றாற்போலக் கொள்க; "ஒப்பில்போலியு மப்பொருட்டாகும்" என்பது, தொல்காப்பியம். நூற்றுவர் - தொகைக்குறிப்பு; இகரு, முன்னிலைப்படர்க்கை: உம்மை - முற்றுப்பொருளது. வருக எதிர்பொருக - பிராஸம். (உ௰உ)

[திரௌபதியைத் தன்மடிமீது இருத்துமாறு துரியோதனன் துச்சாதனனுக்குக் கட்டளையிடுதல்.]

உ௬௩.—(இ - ள்.) தந்தை விழி இருள் போல் தகும் மனத்தோனும் - தகப்பனாகிய திருதராட்டிரன் கண்குருடாயிருப்பதுபோல அஜ்ஞான இருளைக்கொண்ட மனத்தையுடையனாகிய துரியோதனனும்,— துச்சாதனனை நோக்கி—, 'கொந்து அளகம் மலர் சொரிய - தொகுதியான கூந்தல் (அவிழ்ந்துகுலைதலினால் அதில் அணிந்த) மலர்கள்கீழேசிந்த, கூப்பிடுவாள் - கதறியழுபவளாகிய திரௌபதியினது, கொடுங் கற்பும் - மிகஉக்கிரமான பதிவிரதாதருமத்தையும், கூறை மாளா மந்திரமும் - (அவளது)ஆடை அவிழ்க்கஅவிழ்க்கக் குறைவுபடாமல் மேன்மேல்வளர்கிற இரகசியத்தையும், அடல் வீமன் மானம் இலாது உரைக்கின்ற வலியும் - வலிமையையுடைய வீமசேனன் மானமில்லாமற்கூறுகின்ற மிடுக்கையும், காண - (பின்னும்)காணும்படி,—பைந் தொடியை கொணர்ந்து இனி என் மடியின்மிசை இருத்துக - 'பைம்பொன்னாற்செய்த வளையல்களையணிந்தவளான திரௌபதியை இழுத்துக்கொண்டுவந்து இப்பொழுது எனதுதொடைமேல் இருக்கச்செய்வாய்', என பணித்திட்டான் - என்று கட்டளையிட்டான்; (எ - று.)

திரௌபதியின்கற்புநிலையைப் பின்னும் பரிசோதிக்கக் கருதியும், ஆடையுரிந்தகாலத்து அதனை மேன்மேலும் சுரக்கச்செய்ததுபோல இப்பொழுது நான்செய்யும் இதற்கு அத்திரௌபதி என்னபரிகாரஞ் செய்வாளெனக் காண நினைத்தும், இப்பொழுது இவ்வகையாக வீரவாதம்பேசும் வீமன் நான்இவ்வாறுசெய்தால்என்னசெய்வானெனக் காணவெண்ணியும், துரியோதனன் திரௌபதியைத் தன்துடைமீது இருத்துமாறு துச்சாதனனுக்குக் கட்டளையிட்டனனென்க. தன்மானத்தைத் தான்காக்குமாறு தெய்வானுக்கிரகம்பெறக் காரணமா யிருத்தலால், திரௌபதியின்கற்பு 'கொடுங்கற்பு'எனப்பட்டது. "குலமகட்குத்தெய்வங்கொழுநனே"ஆதலால்,"தெய்வந்தொழாஅள்கொழுநற்றொழு"வதுகற்புடைமகட்குக்கடமையாயிருக்க, இவள் அங்ஙனம் தனதுதுயர்தீர்த்தற்பொருட்டுத் தன்கணவர்களைக்கூப்பிடாது பிறனொருவனை [கோவிந்தனை]க் கூப்பிடுகின்றாள், இது

என்ன கற்புடைமை! என்று ஏசுவான், 'கொடுங்கற்பு' என்றுமாம். அடிமைப்பட்டதனாலும், மனைவிக்குநேர்ந்த அவமானத்தைத் தீர்க்கமுடியாமல் வாளாவிருந்ததனாலும், அப்பொழுதுவீமன்கூறுகின்ற வார்த்தையை மானமிலாதுரைக்கின்றதாகக் கொண்டான். மேன்மேல் தெய்வானுக்கிரகத்தால்ஆடைவளர்ந்தமை யொன்றைக்கொண்டே திரௌபதியினது மேன்மைகளையெல்லாம் அறிந்து அவள்திறத்தில் யாதொருதீமையையுஞ் செய்யவேண்டாதிருக்க, அவ்வாறிராமல் மேன்மேல் தீங்கையே புரிகின்றானாதலால், துரியோதனன் தானும் தந்தைபோலவே குருடனுவன்; அவன் ஊனக்கண்குருடன், இவன் ஞானக்கண்குருடன் என்றபடி. இருத்துமெனா - தொகுத்தல். (உருரு)

[திரௌபதி துரியோதனனுக்குச் சாபமிடுதல்.]

உருசு.—(இ - ள்.) என்ற பொழுது - என்று (துரியோதனன் துச்சாதனனுக்குக்) கட்டளையிட்டவளவில்,—அருந்ததிக்கும் எய்தாத கற்பு உடையாள் - அருந்ததியென்பவட்கும் வாய்க்காத மிக்க கற்பையுடையவளும், தெய்வம் அன்னாள் - தெய்வத்தை யொத்தவளுமாகிய திரௌபதி,—இடி ஏறு உண்ட வல் தலை வெம் பணி போல நடுநடுங்கி - பேரிடியைக் கேட்கப்பெற்ற வலியதலையையுடைய கொடிய சர்ப்பம்போலப் பதைபதைத்து, மாயனையும் மறவாள் ஆகி-ஸ்ரீகிருஷ்ணபகவானையும் மறவாமல் மனத்திற்கொண்டு தியானிப்பவளாய்,—'புல் தொழிலோன் - இழிதொழிலுடையவனாகிய துரியோதனன், யான் இருக்க - நான்இருக்குமாறு, காட்டிய - சுட்டிக்காட்டின, தன் தொடை வழியே - தனதுதொடைவழியாகவே, புள் வாய் குதத-வாயலகினாற் பறவைகள் குத்துமாறு,ஆர் உயிர் சென்றிடுக-அருமையான உயிர் ஒழிவானாக,' என்று—, எவரும் வெருவுற சபித்தாள்-கேட்பவர்களெல்லாரும் அஞ்சும்படி சபித்திட்டாள்; (எ - று.)

ஐவரைக் கணவராகப் பெற்றும் கற்புநிலைமைக்குக் குறைவுவாராமற் சமயத்தில் மானபங்கம்நேராது காத்துக்கொண்ட சிறப்பினையுடையளாதலால், திரௌபதியை 'அருந்ததிக்குமெய்தாத கற்புடையாள்' என்றார்; நஹிநிந்தாந்யாயத்தால் [நஹிநிந்தாந்யாயமாவது - ஒருபொருளைத் தாழ்த்திக்கூறுமிடத்து அப்பொருளின்தாழ்ச்சியில் தாற்பரியமாகாமல் அவ்விடத்துக்குமுக்கியமான பொருளின் மேன்மையைக் கூறுதலிலே கருத்துண்டாதல்], அருந்ததியின்குறைவைக் காட்டாமல், இத்தொடர்மொழி, திரௌபதியின்மேன்மையைமாத்திரம் உணர்த்தும். ஆடைவளரப்பெற்ற தெய்விகத்தன்மையுடைமையால், 'தெய்வமன்னாள்' என்றார்; திரௌபதியை இங்கு இவ்வாறு மேம்படுத்திக்கூறியது, இவள் இப்பொழுது துரியோதனனுக்கு இடுஞ் சாபம் தவறாது பலிக்கு மென்றற்கு. இடியேறு - பேரிடி. இடியொலியைக்கேட்டமாத்திரத்தில் அஞ்சிநடுங்குதல்,பாம்புகளின்இயற்கை; இதனை, "விரிசிறநாகம் விடருளதேனு, முருமின்கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" என்பதனாலும் அறிக. இடியோசைகேட்டமாத்திரத்தில் நாகங்கள் அஞ்சியொடுங்குதல்போல, திரௌபதியும் துரியோதனனது கர்ணகடூரமான கொடுஞ்சொற்களைக் கேட்டமாத்திரத்தில் அஞ்சிநடுங்கின ளென்க. கிருஷ்ணானுக்கிரகத்தினாலேயே தன்மானத்தைக்காத்துக்கொண்டாளாதலின், கிருஷ்ணசகாயமிருந்தால் தனதுதொழில் இனிதுமுற்றுப்பெறு மெனக் கருதி, சாபமிடும்போதும் கிருஷ்ணனை மறவாது தியானித்தன ளென்க. மாயன்-எவராலும் அறியவொண்ணாத மாயைகளையுடையவன்:மாயையாவது - கூடாதனவையுங் கூட்டுவிக்குந் திறம் [அகடிதகடநாஸாமர்த்யம்]. பலர்கூடியசபையிற் சிறிதும்நாணமின்றிப் பிறர்மனைவியான அபலையினிடத்துத் தன்வீரத்தைக் காட்டத்தொடங்கினனாதலால்,துரியோதனனை,'புன்தொழிலோன்' என இகழ்ந்து கூறினார். துரியோதனன் தனது துகிலை

யொருக்கிடத்துடையைக்காட்டி அதில்இருக்குமாறு குறிப்பாலுணர்த்த, திரௌபதி சபித்தனள்என முதனூல் கூறும். சென்றிடுக - வியங்கோள், வைதற்பொருளின்கண் வந்தது. (உருச)

[திரௌபதியின் சபதம்.]

உருரு.—(இ - ள்.) (பின்னும் திரௌபதி), 'அரசு அவையில் - ராஜ சபையிலே, எனை எற்றி - என்னைக் கொண்டுவந்து,—விரை செய் அளி இனம் படி தார் வேந்தர் எதிர் - நறுமணம்வீசப்பெற்றதும் வண்டுகளின் கூட்டம்மொய்க்கப்பெற்றதுமான மலர்மாலையை யணிந்த அரசர்கட்கு எதிரிலே,—அஞ்சாமல் - சிறிதுங்கூச்சங்கொள்ளாமல், அளகம் தீண்டி-(எனது) தலைமயிரைப் பிடித்திழுத்தும், துகில் தீண்டி - (எனது) ஆடையைத் தொட்டுஅவிழ்த்தும், (இந்தஅக்கிரமத்தோடுநில்லாமல்), தகாதனவே விளம்புவோரை-சொல்லத்தகாத கொடுஞ்சொற்களையுங் கூறுகின்றவர்களான துரியோதனாதியரை, பொரு சமரில் முடி துணித்து - தாக்கிச்செய்யும்போரிலே தலைகளை யறுத்து,புலால் நாறு வெம் குருதி பொழிய-தீநாற்றம் வீசப்பெற்ற கொடியஇரத்தம் பெருகிக்கொண்டிருக்க, வெற்றி முரசு அறையும் - ஜய பேரிகையை முழக்குகிற, பொழுது - அக்காலத்தில், அல்லால் - முடிப்பேனே யல்லாமல், விரித்த குழல் இனி எடுத்து முடியேன் - அவிழ்க்கப்பட்டு விரிந்துள்ள (எனது) கூந்தலை அதற்குமுன்பு எடுத்துமுடிக்கமாட்டேன்', என்றாள் - என்று பிரதிஜ்ஞைசெய்தாள்; (எ - று.)

அளகந்தீண்டுதலும் துகில்தீண்டுதலும் - துச்சாதனனுக்குமாத்திரமும், தகாதனவிளம்புதல் - துரியோதனன் முதலிய பலர்க்கும் உரிய வினையாம். துரியோதனாதியர் உயிரொழிந்து அவர்கள்மனைவியர் கூந்தலைவிரிக்கிற வரையில் யான் இவ்வாறே தலைவிரிகோலமாயிருப்பேனென்பது, திரௌபதியின் சபதமாம். வெற்றிமுரசு - முரசின்வகை மூன்றனுள் ஒன்று; (மற்றவை - கொடைமுரசும், மங்கலமுரசும்.) செய்யுளாதலின், 'துகில்தீண்டி யளகந்தீண்டி' என முறைபிறழக்கூறினார். (உருரு)

[இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்; வீமசேனனது சபதம்.]

உருசு.—(இ - ள்.) செம் தீ மூள வெம் சாலின் நறு நெய் போல் வெம் சினத்தான் - செந்நிறமானநெருப்பு மூண்டு எரிவதனாற் கொதிப்படைந்த கடாரத்திற் காய்கிற நறுமணமுள்ள நெய்போல வெவ்வியகோபத்தை யுடையவனான வீமசேனன்,—(சபையிலுள்ள அரசர்களை நோக்கி),—'தீம் சாலி விளை பழனம் திரு நாட்டீர் - இனிய செந்நெற்பயிர்கள் விளைகின்ற வயல்கள்சூழ்ந்த அழகியநாடுகளையுடைய அரசர்களே! கேண்மின் - (யான் சொல்வதைக்) கேட்பீராக', என - என்றுகூறி, வஞ்சினமும் விளம்புவான் - சபதவார்த்தைகளைக் கூறுபவனானான்:—பாஞ்சாலிக்கு - திரௌபதியின்திறத்தில், அரசுஅவையில் - ராஜசபையில், பழுது உரைத்தோன்-தீமொழிகளைக்கூறியவனான துரியோதனனது, உடல்-உடம்பிலே, எனது படை ஆம் மேழி போம் சாலின் - எனது ஆயுதமாகிய கலப்பை பிளந்துசெல்கின்ற வழியினின்று, நிணம் சொரிய - கொழுப்புக்கள் வெளிப்படும்படி, துணைவரொடு-(அவனது) தம்பிமாருடனே, குலம் மாள - (திருதராஷ்டிரனது) வம்சம் அடியோடுஅழியுமாறு, யானே பொருவேன் - நானொருவனே போர்செய்வேன்; (எ - று.)

துரியோதனாதியர் நூற்றுவரையும் தானொருவனே கொல்வதாக வீமசேனன் சபதஞ்செய்தனனென்க. துரியோதனனது உடம்பாகிய வயலில் தனது கதாயுதமாகிய கலப்பையைக்கொண்டு தொழில்செய்து, அவ்வாயுதத்தாற்புண்பட்டஇடமாகிய உழுபடைச்சாலினின்று நிணமாகிய கலங்கனீரைப் பெருகச்செய்வே னென்றன னென்க. மேழியும் சாலுங் கூறினதற்குஏற்ப, மற்றவற்றை உருவகப்படுத்திக்கூறாமையால், இது-ஏகதேசவுருவகவணியாம். பாஞ்சாலி - பாஞ்சாலதேசத்தரசனது மகள்எனப்

பொருள்படும் வடமொழித்தத்திதாந்தநாமம். இரண்டாமடியில்,சால்-கலப்பைஉழுதுசெல்லும்வழியும். நான்காமடியில், பெருந்தாழியுமாம். யானே, ஏகாரம் - பிரிநிலை. வீமனதுகோபத்திற்குக் கொதிக்கும்நெய் உவமை. சினத்தான் - குறிப்புவினையாலணையும்பெயர்: சினத்தினால் என மூன்றாம் வேற்றுமையாகக்கொண்டால், 'வீமசேனன்' என்ற எழுவாய் வருவிக்க. சினத்தையுடையனாய் என முற்றெச்சமாகக்கொள்ளுதலுமொன்று.(௨௫௬)

௨௫௭.—(இ-ள்.)(அன்றியும்),—வண்டு ஆரும் குழல் பிடித்து-வண்டுகள் மொய்க்கப்பெற்ற(திரௌபதியினது) கூந்தலைப்பிடித்திழுத்துவந்து, துகில் உரிந்தோன்-(அவளது)ஆடையையவிழ்த்தவனாகிய துச்சாதனனது, உடல்-உடம்பினின்று பெருகுகிற, குருதி வாரி - இரத்தநீர்ப்பெருக்கை, அள்ளி உண்டு-(கையினால்) அள்ளியெடுத்துக் குடித்து, ஆகம் குளிர்வதன் முன் - (எனது) உடம்பு குளிர்ச்சியடைவதற்கு முன்னம் [எனதுகோபந் தணிவதற்குமுன்னே என்றபடி]. இ கரத்தால் புனல் உண்ணேன்-இந்த(எனது) கைகளால் நீரைப்பருகேன்; ஒரு கால் - ஒருவேளை [தாகம்எடுத்து அவசியமாக நீர்பருகநேர்ந்தபொழுது], என் கை தண்டால் - எனதுகையிலேந்தியுள்ள கதாயுதத்தினால், வெம் புனல் எற்றி - விருப்பத்திற்கிடமான நீரை மோதி,(அப்பொழுது),மீது எழுந்து விழும்-மேலெழுந்து தெறித்துவிழுகிற, திவலை-நீர்த்துளிகளை. தண் நீர் ஆக கொண்டு -(குடித்தற்குஉரிய)குளிர்ந்த நீராகக்கொண்டு பருகி, ஆவி புரந்திடுவென் - (எனது) உயிரைக் காத்துக் கொள்வேன்; எனக்கு இது விரதம் - எனக்கு இதுவே செய்தொழில், எனவும் கூறினான் - என்றும் சபதஞ்செய்தான்; (எ - று.)

துரியோதனனைப்போலவே துச்சாதனனும் திரௌபதிவிஷயத்திற் பெருந்தீங்குகளை நேரே செய்தனனாதலால். அத்துச்சாதனனைக்குறித்தும் வீமன் கடுங்கோபங்கொண்டு தனியே இவ்வாறு சபதஞ்செய்தனனென்க. துச்சாதனனைக்கொன்று அவனுடம்பினிரத்தத்தைக் குடிப்பதற்குமுன்னம் கதையாற்புடைத்து அங்குத் தெறித்த நீரைப் பிராணாதாரமாகப் பருகுவதன்றிக் கையால் நீரையெடுத்துப் பருகுவதில்லை யென்று வீமன் சபதஞ் செய்தவாறு.வாரிஎன்பதை வினையெச்சமாக்கொண்டு பொருள்கூறினுமாம்.

[அருச்சுனன் நகுலன் சகதேவன் இவர்களின் சபதம்.]

௨௫௮.—(இ - ள்.) பார்த்தன் - அருச்சுனன், 'பகை புலத்து - பகைவர்கள் நெருங்கியுள்ள போர்க்களத்தில். பகலவன்தன் மதலை உயிர் - சூரியனது மகனாகிய கர்ணனது உயிரை, கவர்வன் - கவர்வேன்', என சொன்னான்-என்று சபதங்கூறினான்; நகுலனும்—.'என் கரத்தால் - எனது கையினால்,சௌபலன் நாயகன் உயிர்க்கு நாசம்-சுபலனதுபேரனாகிய[சகுனியின் மகனாகிய] உலூகனென்பவனது உயிர்க்கு நாசமுண்டாகக்கடவது'. என்றான்—; சாதேவன்—,'சமரில்-போர்க்களத்தில், சகுனிதனை இமை பொழுதில் துணித்திடுவேன்-சகுனியை ஒருமாத்திரைப்பொழுதில் தலைதுணித்துக்கொல்வேன்',என்றான்—; (அப்பொழுது).இகல் நிருபர்-(சபையிலிருந்த) பராக்கிரமசாலிகளான அரசர்கள்,இவர் மொழி கேட்டு-இவர்களதுசபதவார்த்தையைக்கேட்டு,'இகொடும் பழி எளிதோ-'துரியோதனனதியர்செய்த கொடுமையான நிந்தனைச்செயல் அற்பமானதோ? [அன்று; மிகப்பெரிதாகும்: ஆகையால், வீமன்முதலியோர் இவ்வாறுசபதஞ்செய்தது தகுதியே]', என்று-என்றுசொல்லி, ஏங்கினார் - ஏக்கங்கொண்டுவருந்தினார்கள்; (எ-று.)

துரியோதனன் துஷ்டகாரியஞ்செய்தற்குப் பெருந்துணையாய்நின்றதனால் 'கர்ணனைப் போரிற்கொல்வேன்' என்று அருச்சுனனும், தமக்கு நேர்ந்த இவ்வளவுபெருந்தீங்குக்கும் பிரதானனாய்நிற்றலால் 'சகுனியைக் கொல்வேன்' என்று சகதேவனும், மற்றெல்லாரிடத்தினுங்காட்டில்மாயசூதாடிவென்றஇச்சகுனியினிடத்திலேயே மிக்ககறுவுள்ளதனால் அச்சகுனியைக்கொல்வதோடுநில்லாமல் அவன்வம்சத்தையேகருவறுக்குமாறு' அவன்

புதல்வனைக் கொல்வேன்' என்று நகுலனும் சபதமொழி கூறினரென்க. சகதேவன் சகுனியைக்கொல்லுமாறு சபதங்கூறியபின்னரே நகுலன் இவ்வாறு சபதஞ்செய்ததாக முதனூலிற்கூறியிருப்பது, இங்குக்கருதத்தக்கது. 'துரியோதனாதியரது தீச்செயல்கள் மிகவுங்கொடியன வாகையால், மகாசாதுக்களும் மிக்கபொறுமையுள்ளவர்களுமான பாண்டவர்களும் மனம்பொறாது சபதமொழிகள் கூறவேண்டுவதாயிற்று; துரியோதனாதியர்கள் இவ்வளவுமுறைகேடான பெருந்தீங்குகளைச்செய்து தமக்கேநாசத்தைத்தேடிக்கொண்டார்களே! அந்தோ!!' என்று அச்சபதமொழியைக்கேட்ட அரசர்கள் இரங்கிக்கூறினரென்க.

பகலவன்-பகலைச்செய்பவனெனக் காரணப்பொருள்படும்; இது, 'திநகரன்' என்ற வடமொழியின் பொருளது. பார்த்தன்-பிருதையின் மகன்; தத்திதாந்தநாமம்: (பிருதை - குந்தி.) இது, அருச்சுனனுக்குப் பெரும்பாலுஞ் சிறப்பாய் வழங்கும்; காரணவிடுகுறி: தாய்க்கு இளையமகனிடத்தில் அன்புமிகுதி என்ற பொதுநியாயம், இதற்குக் காரணமாகலாம். 'ஸௌபலன்' என்ற வடமொழித்தத்திதாந்தநாமம் சுபலனதுபுதல்வனென்று பொருள்படுவதுபோலவே சுபலனதுபேரனென்று பொருள்படுவதற்கும் உரிய தாதலாலும், சகுனியைக்கொல்வேனென சகதேவன் சபதஞ்செய்ததாக வந்துள்ளதனாலும், சகுனியின்புதல்வனான உலூகனென்பவனைக் கொல்வேனென்று நகுலன் சபதஞ்செய்ததாக முதனூலிற் கூறியுள்ளதனாலும், இச்சொல்லுக்கு இவ்வாறு பொருளுரைக்கப்பட்டது. இனி, சௌபலநாயகனுயிர்க்கு - ஸௌபலனாகிய தலைவனது [சகுனியினது] உயிர்போன்ற புதல்வனுக்கு என்றும் உரைக்கலாம்: அன்றி, இதற்கு-சகுனியின்தந்தைக்கு எனப்பொருளுரைத்தல் சிறவாது. மற்று - அசை. (உ௫அ)

[திரௌபதி புலம்பியபோது நிகழ்ந்த உற்பாதங்கள்.]

உ௫௯.—(இ - ள்.) அணங்கு அனையாள் - தெய்வப்பெண்போன்றவளான திரௌபதியானவள், அவிதா என்று அழுத போது-'அவிதா' என்று கதறியழுத சமயத்தில்.— உடனே-ஒருசேர,—(அதன்பயனாக), மேகங்கள் வழங்காமல் விண் அதிர்ந்திட்டு - மேகங்கள் (வானத்திற்) சஞ்சரியாமலிருக்கையிலேயே வானம் இடித்தும், ஊர்கோள் வெயிலை சூழ்ந்தும் - பரிவேடம் சூரியனைச் சுற்றித் தோன்றியும் [ஊர்கோள் சூரியனைச்சுற்றி மண்டலமிட்டும்], பூகம்பம் பிறந்து-பூமி நடுங்குதலுண்டாகியும், உடு அரும் பகலே விழுந்தும் - நக்ஷத்திரங்கள் கடும்பகற்பொழுதிலேயே உதிர்ந்தும், பொய்கை வாடி - குளங்கள் நீர்வற்றியும், யாகம் செய் நெடுஞ் சாலையின் பாலும் செந்நீர் ஆய் - யாகங்களைச் செய்கின்ற பெரிய (யாக)சாலையினது பக்கங்களிலெல்லாம் சிவந்த இரத்தமாயும், (இவ்வாறு உற்பாதங்கள்தோன்றவே), இருந்த வேந்தர் - (அவற்றையெல்லாம்) பார்த்துக்கொண்டிருந்த (சபையிலுள்ள) அரசர்களுடைய, ஆகங்கள் - உடம்புகள், ஒளி மழுங்கிற்று - ஒளி குறையப்பெற்றன; (எ - று.)

வானத்தில் மேகங்கள் தோன்றாதிருக்கையிலேயே இடிமுழக்கந்தோன்றுதலும், சூரியமண்டலமிடுதலும், பூகம்பமுண்டாதலும், பகற்பொழுதில் நக்ஷத்திரம் விழுதலும், காரணமின்றிப் பொய்கை நீர்வற்றுதலும், யாகசாலையினிடங்களிலெல்லாம் இரத்தம்நிறைதலும், உற்பாதங்களாம்; இவ்வாறு ஒன்றன்மேலொன்றாகப் பலவுற்பாதங்கள் ஒருங்கே தோன்றுவதைக் காணவே, சபையிலுள்ள அரசர்கள் மனத்திற்பேரச்சங்கொண்டு தேககாந்தி குறைந்தனரென்றவாறு. ஊர்கோள் - சூரியனிடத்திலேனும் சந்திரனிடத்திலேனும் சுற்றி மண்டலமாகத் தோன்றும் இரேகை; இது, பரிவேஷமெனப்படும். சந்திரனிடத்துஉண்டாகும் ஊர்கோள் நன்மையைத் தருவதெனவும், சூரியனிடத்துஉண்டாகும் ஊர்கோள் தீமையைத் தெரிவிக்கின்ற உற்பாதமாமெனவும் நூல்கள் கூறும். வெயில்-வெம்மையை

யுடைய ஒளி: சூரியனது ஒளியைக்குறிக்கும் இசைசொல், ஆகுபெயராற் சூரியனை யுணர்த்திற்று. பொய்கை வாடி என்பதற்கு - நீர்நிலைகளிலுள்ள பூங்கொடிகள் மலர்களெல்லாம் வாடியும் என்றும் உரைக்கலாம்: இப்பொருளில், பொய்கையென்பது - அதிலுள்ளவற்றிற்கு இடவாகுபெயர். பாலும் செந்நீர்ஆய் - (ஓமத்திரவியமாகிய)பாலும் இரத்தமாய் என்றுமாம்.

செம்மை + நீர் = செந்நீர் ஆகங்கள் ஒளிமழுங்கிற்று - ஒருமைப்பன்மை மயக்கம்; ஆகங்களினது ஒளி மழுங்கிற்று எனினும் அமையும். அவிதா - அவித என்பதன் நீட்டல்; பிராகிருதபாஷையிலுள்ள 'அவிஹ' என்ற இரக்கக்குறிப்பிடைச்சொல் வடமொழிச்சாயையில் 'அவித' என்று திரிந்து வருகின்றது; இச்சொல், காளிதாசமஹாகவியினது நாடகங்களிற் பயில்கின்றது:ஐயோ என்று பொருள்படும் ஓர் முறைப்பாடாகும், இது. பெருந்தேவனார்பாரதத்தில் "அங்கர்கோன் வாய்த லவிதாவெனவிட்டான்," "வாயிலவிதாவிட்ட மாமறையோனை" என்றனவும், அதன்வசனத்தில் 'பிராமணனும் கன்னன்தன்கோயில்வாயிற்சென்று அவிதாவெனக் கூறி' என்றது காண்க. ஆய் = ஆக: எச்சத்திரிபு. 'இருந்த' என்பதைப் பலவின்பால் முற்றாகக்கொண்டு, இங்ஙனம் அபசகுனங்கள்நிகழ்ந்தன வென்று உரைத்தலுமாம். மேகம், பூகம்பம், உடு, யாகம், ஜ்வாலா - வடசொற்கள். (௨௫௯)

[திருதராஷ்டிரன் திரௌபதியைப் பொறுக்குமாறு வேண்டுதல்.]

௨௬௦.—(இ - ள்.) பலர் - (அங்குள்ள அரசர்கள்) பலரும், உற்பாதம் பெரிது என நெஞ்சு உகுவாரும் - '(கேடுவிளைதலைக் குறிப்பிக்கிற)தீநிமித்தங்கள் மிகப்பல' என்று மனமுருகுபவர்களும், இ ஊர் என் ஆம் என்று அஞ்சி நிற்பாரும் - 'இனி இந்த அத்தினபுரம் யாதாய்முடியுமோ?' என்று அச்சங்கொண்டுநிற்பவர்களும், மேல் போம் வழி நினைவாரும் ஆகி - இனி நடக்கக்கூடியதைச் சிந்திப்பவர்களுமாய், நிகழ்ந்த - இருந்த, காலை - சமயத்தில்,—கண் இலாதோன் - கண்ணில்லாத[குருடனாகிய] திருதராட்டிரன், கற்பால் மிக்கு உயர் வேள்வி கடன் சுமந்த மட மயிலை பதிவிரதாதருமத்தால் மிகச் சிறந்தவளும் இராசசூயயாகத்திற்கு உரிய யாகபத்தினியாயிருந்தவளு மாகிய இளமையானமயில்போன்ற சாயலையுடைய திரௌபதியினது, பொன் பாதம் - அழகிய பாதங்களை, பணிந்து ஏத்தி - வணங்கித் துதித்து, புரிந்த அபராதம் எல்லாம் பொறுத்தி என்றான் - '(என் மக்கள் உன்திறத்திற்)செய்த குற்றங்களையெல்லாம் பொறுத்தருள்வாயாக' என்று வேண்டினான்; (எ - று.)

அரசர்கள்பலரும் பலவுற்பாதங்களைக் கண்டதனால் மனம்நடுங்கி 'இவ்வூர்க்கு என்னகேடு வருமோ?' என்று கூறுபவர்களும். 'இனி யாது நிகழும்?' என ஆராய்பவருமா யிருக்கும்பொழுது, விதுரன்மொழியாலும் காந்தாரியின்பேச்சாலும் பலவகையுற்பாதங்கள் நிகழ்ந்தசெய்தியை யுணர்ந்த திருதராட்டிரன் திரௌபதியை நல்வார்த்தைசொல்லிச் சினந்தணியுமாறு வேண்டுகின்றனனென, முதனூலையொட்டிக் கருத்து விரித்துரைக்க. 'மேல் போம் வழி நினைவாரும்' என்றது, இவ்வாறு உற்பாதங்கள் பல தோன்றியதனால்,திரௌபதிகாரணமாகப் பாண்டவர்க்கும் துரியோதனாதியர்க்கும் பெரும்போர் நிகழ அதன்மூலமாக உலகத்துப் பலஅரசர்களும் மடியவேண்டிவரு மென இங்ஙனமாகக் கருதின ரென்ற பொருளைத் தெரிவிக்கும்; இனி, தாம் இக்குநேரக்கூடியஆபத்துக்கு இலக்காகாமல் தப்பி வெளிச்செல்லுமாறு கருத்துக்கொள்வாரும் என்று பொருளுரைப்பாருமுளர். வேதத்தில் அதிகாரமுள்ள முதல்மூன்றுவருணத்தவர்கட்கு ஏற்பட்டிருக்கும் கடன்கள் மூன்றில் யாகமும் ஒன்றாதலால்,'வேள்விக்கடன்'என்றார்;('வேள்வியால்தேவர்கடனையும்,புதல்வரைப்பெறுதலால் பிதிரர்கடனையும், வேதமோதுதலால் இருடியர்கடனையும் ஒழிக்கின்றான்' என்ற வேதநூற்பொருள் இங்கு அறியத்தக்கது.) தருமபுத்திரன் இராசசூயயாகஞ்

செய்தபோது திரௌபதிதான் யாகபததனியாயிருந்து உதவினளாதலால், அவள், 'வேள்விக்கடன் கூடிநந்த மடமயில்' எனப்பட்டாள். திரௌபதிக்கு மாமனாகிய திருதராஷ்டிரன் அவளைவணங்கியதாகக் கூறியது பொருத்தமின்று மாதலால். 'பொற்பாதம்பணிந்தேத்தி' என்பதற்கு - நல்வார்த்தை சொல்லிசமாதானப்படுத்தி யென்று கருத்துக்கொள்ளுதலே சாலும்;இது மே, முதனூலுக்கும ஒத்ததாம். இனி, கற்பால்மிக்கவளாதலாலும்,யாகபத தினியாயிருந்தமேன்மையை யுடையவளாதலாலும்,தான்செய்வது இன்னதெனத் தெரியாது திகைத்தன னாதலாலும், திருதராஷ்டிரன் திரௌபதியைப்பணிந்தேத்தினனென்றே கொள்ளுதலு மொன்று. உத்பாதம்,பாதம். அபராதம் - வடசொற்கள். (உசுO)

[இதுவும் அது.]

உசுக.—(இ - ள்) (பின்னும் திருதராஷ்டிரன் திரௌபதியைநோக்கி), 'உத்தமம் ஆம் குலம் மயிலே - சிறந்ததாகிய குலத்திற்பிறந்தவளான மயில்போன்றவளே! என் சிறுவர் எனது புதல்வரான துரியோதனாதியர், மைத்துனா ஆம் முறையால் - மைத்துனரென்கிற உறவுமுறையைக்கொண்டு, அறியாமல (தாம்செய்வன இன்னவை யென்று) தெரியாமல், இவழக்கு அலாதன - முறைகேடான இத்தீச்செயல்களை, உனக்கு நேரே செய்தார் — ; மதி இலாமல் இவர் எத்தனை தாழ்வு புரிந்தார் என்றாலும் - அறிவில்லாமையால் இத்துரியோதனாதியர் எவ்வளவு [மிகுதியாக]அபராதங்களைச் செய்தாரானாலும், அவை ஒன்றும் எண்ணாது அவற்றில்ஒன்றையும் மனத்திற்கொள்ளாமல், பித்தர் மொழி என கருதி - பைத்தியம்பிடித்தவர் கூறிய சொல்லாகும் என்று நினைத்து, இன்னே மறந்தருள் - இப்பொழுதே(நீ)மறந்துவிடுவாயாக', என்று-என இவ்வாறு, ஒரு கோடி பிதற்றினன்-மிகப்பலவாக வாய்வந்தபடியெல்லாங் கூறினான்; (எ - று.)

மைத்துனா - கணவனுடன்பிறந்தவரும். மனைவியினுடன்பிறந்தவரும், அத்தைமக்களு மாவர்; இங்கே. கணவனுடன்பிறந்தவர். மைத்துனமுறைமையாற் பரிகசிக்கப்படுபவர் ஆடவர்களே யாதல் உலகவழக்கா யிருக்கவும், அதற்குமாறாகப் பெண்ணைப் பரிகசித்த துரியோதனாதியரது குற்றத்தைத் தணிக்கவேண்டுகிற திருதராஷ்டிரன் திரௌபதியின்மனம் மயங்குமாறு மைத்துனமுறைமையாற் பரிகாசஞ்செய்ததாகப் போலிசசமாதானங் கூறினனென்க அறிக. பித்து - பைத்தியம்; அதனையுடையவர், பித்தர்: உன்மத்தரென்றபடி. ஒருகோடி-மிகப்பலவெண்ணிற்கு ஒன்றுகாட்டியவாறு. திருதராஷ்டிரன் இதுவரையிலும் நன்மொழியொன்றுங் கூறாதிருந்துவிட்டு இப்போது கூறுவனவெல்லாம் பயனில்லாத வெற்றுமொழியாகுதலால், 'பிதற்றினன்' என்றார். (உசுக)

[சூதில்தோற்றபொருள்களை மீண்டும்பெறுமாறு பாண்டவர்க்குத் திருதராட்டிரன் அநுமதிதருதல்.]

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

உசுஉ.—(இ - ள்.) (திருதராஷ்டிரன்),—மை வரையும் தட கண்ணாள் மனம் சோகம-மையெழுதப்பெற்ற பெரிய கண்களையுடையவளான திரௌபதியினது மனவருத்தத்தை,பலமுகத்தால்மாற்றி-பலவகைகளால்தணித்து, மைந்தர் ஐவரையும் - தம்பியின்குமாரரான பஞ்சபாண்டவர்களையும், தனிதனியே முகம்கொண்டு - தனித்தனியேநல்வார்த்தைசொல்லி,கொடுங் கோபம் அகற்றி - (அவர்கள்கொண்ட)மிக்ககோபத்தைத் தணித்து, (அவர்களை நோக்கிக் கூறுவான்):—மெய் வரையும் பொரு புயத்தீர் - உண்மையாக மலைகளையும் பொருதுவெல்லுகின்ற [மலைகளைக்காட்டிலும் திண்ணியவான] தோள்களையுடையவர்களே! நீங்கள்—, வல் போரில் இழந்த - சூதுபோரில் தோற்றிழந்த, வியல் நிலமும் - பெரியஇராசசியத்தையும், தேரும் - தேர்களையும், கை வரையும் - துதிக்கையையுடைய மலை போன்ற

யானைகளையும், பரிமாவும் - குதிரைகளையும், செல்வமும் - பொருள்களையும், யாவையும்-மற்றுமுள்ள எல்லாவற்றையும்,மீண்டும் கைக்கொள்வீர் - திரும்பவும் (எனதுஅநுமதியின்படியே) கைப்பற்றிக்கொள்ளுங்கள்; (எ - று.)

திரௌபதி வருத்தம்பொறாமல் அழுகின்றதனால், இட்ட மை கரைந்தழிழுவதுபற்றி, 'மைவரையுந் தடங்கண்ணாள்' என்றாருமாம்; (வரைதல்-நீக்குதல்.) முகங்கொள்ளுதல் - பராமுகமாயிராதவாறு நல்வார்த்தைசொல்லித் தன்திறத்தில் இனியமுகத்துடன் இருக்கும்படி செய்துகொள்ளுதல். உற்பாதங்கள்தோன்றியதை விதுரன் காந்தாரி இவர்கள்முகத்தால் அறிந்த திருதராஷ்டிரன் அஞ்சித் திரௌபதியைப் பலவகையாகத்தேற்றி, அவளைத் தன்னிடத்து வரங்கேட்குமாறு வேண்ட, திரௌபதியும் அதற்குஇணங்கி, தருமபுத்திரனும் அவனுக்குத் தன்னிடத்துப்பிறந்த மகனான ப்ரதிவிந்த்யனும் அடிமையும்அடிமைப்புதல்வனுமாகாதவாறு ஒருவரமும், மற்றைப்பாண்டவர்கள் அடிமையினின்று நீங்குமாறு மற்றொருவரமும் என க்ஷத்ரியஸ்திரீ கேட்பதற்குஉரிய இரண்டுவரங்களையுங் கேட்டுக்கொள்ள, அவ்வாறே கொடுத்தபின்பு, சூதாட்டத்தில் அப்பாண்டவர்கள் இழந்த இராச்சியம்முதலிய பலவகைச் சிறப்புக்களையும் திருதராஷ்டிரன் அளித்துப் பாண்டவர்களைச் சமாதானப்படுத்தி விடைகொடுத்து ஊர்க்கு அனுப்பினனென்ன முதனூல் கூறும். மெய் வரையும் என்பதற்கு - சத்தியத்திற்கு எல்லையாயிருக்கின்ற எனப் பொருள்கூறின், 'வரையும்' என்ற பெயரெச்சம் - புயத்தைத்தொடாது, புயத்தையுடையவர்க்கு அடைமொழியாகும்; இவ்வாறுபொருள்கூறினால், இச்செய்யுள் திரிபு என்னுஞ் சொல்லணிகொண்டதாம். (உசூஉ)

[திருதராஷ்டிரன் பாண்டவர்க்கு முகமன்கூறுதல்.]

உசூ௩.—(இ - ள்.) 'நீர் - நீங்கள், கோ மன்றில் - ராஜசபையிலிருக்கின்ற, அருந்ததியை - (கற்பினால்)அருந்ததியையொத்தவளான திரௌபதியை, கொண்டு - உடன்அழைத்துக்கொண்டு, நில்லாமல் - இங்கேயிராமல், இனி - இப்பொழுதே, ஊரே குறுக போம்-உமதுஊரைஅடையுமாறு விரைந்துசெல்லுங்கள்', என்று - என்று (பாண்டவர்க்குக்) கட்டளையிட்டு, வர அழைத்து-(அப்பாண்டவர்களைத் தனதுஅருகில்)வருமாறுகூப்பிட்டு, தழீஇக்கொண்டு-(அவர்களைக்) கட்டியணைத்துக்கொண்டு, (பின்னும் கூறுவான்:) — எம்பி - எனதுதம்பியாகிய பாண்டு,என் கண்மலரே போல்வான் - எனக்குக் கண்ணையேயொத்திருந்தான்; யாம் என்றும் அவன் என்றும் இரண்டு இல்லை - யான் வேறு என்றும் (தம்பியாகிய) அப்பாண்டு வேறு என்றும் (யான்) நினைத்ததில்லை; (நான் உங்களையும் அவ்வாறே எனதுபுத்திரர்போலவே கருதியிருக்கின்றேன்; ஆயினும் நீங்கள் சூதாடும்பொழுது), விளையாட்டு என்று இருந்தேம் - விளையாட்டாக ஆடுகின்றீர்களென்றே எண்ணியிருந்தேன்; இ ஆறு ஆம் என்பது எனக்கு ஒருவர் உரைத்திலர் - இவ்வாறு பெருந்தீங்குநேரிடுமென்பதைப்பற்றி ஒருவரும் எனக்கு அறிவித்தாரில்லை; யாமும் முதல் அறிந்திலேம் - நானும் முன்னம் தெரிந்துகொண்டிலேன்; (எ - று.)—அறிந்தால் தடுத்திருப்பே னென்பது, குறிப்பெச்சம்.

பாண்டுவும் நானும் சிறிதும்வேற்றுமையில்லாதிருந்தோம்; அவ்வாறே நும்மிடத்தும் எனதுமைந்தரிடத்திற்கொள்ளும்போன்பைக் கொண்டிருக்கின்றேன்; ஆகையால்,உமக்குத் துன்பத்தையுண்டாக்கவேண்டுமென்பது எனக்கு விருப்பமன்று. எனதுமைந்தரும் நீவிரும் விநோதமாகச் சூதாடுகின்றீரென்று கருதியதனால்,நீங்கள்சூதாடுவதை நான் விலக்கவில்லை. இவ்வாறு பெரும்பொல்லாங்குக்குக் காரணமாம்படி சூதாடுகின்றீரென்பது எனக்குத்தெரிந்திருந்தால்,நான் உங்களை ஆடவொட்டாது முன்னமேதடுத்திருப்பேன். போனது போகட்டும். நுமதுமனைவியை அழைத்துக்கொண்டு இப்பொழுதே நும்மூர்க்குச்செல்லுங்கள் எனத் திருதராட்டிரன் பாண்டவரைத் தேற்றி விடைகொடுப்பானாயின னென்க. இப்பொழுது நீவிர் இங்கு

இருப்பீராயின் துரியோதனாதியர் உமதுபொருளை மீண்டுங் கவரமுயல்வ ரென்று குறிப்பிப்பான், 'இனி நில்லாமற் குறுக ஆரேபோம்' என்றான். கோமன்றில் நில்லாமல் போம் என இயைத்து உரைப்பினுமாம்.

அருந்ததி - உவமையாகுபெயர். போம் - செய்யுமென்னும்வாய்பாட்டு முன்னிலையேவற்பன்மைவினைமுற்று, ஈற்றுயிர்மெய்சென்றது. தழுவியென் பது'தழீஇ'எனச் சொல்விகாரப்பட்டு அளபெடுத்ததனால், சொல்லிசையள பெடை. திருதராஷ்டிரன் தன துகண்களைப்பற்றியே கூறுவதனாலும், அவ னதுகண் குருட்டுக்கண் ணாதலாலும், 'கண்மலர்' என்பது-உவமைகருதிய தன்று; உலகவியற்கைபற்றிக் கூறிய தென்க. ஊரே,ஏகாரம்-பிரிநிலை. இல ரால், ஆல் - ஈற்றசை. அறிந்திலேம் - தன்மைப்பன்மையெதிர்மறையிறந்த காலவினைமுற்று; ஏசாரம் - இரக்கம். 'யாம்'என்ற எழுவாயிரண்டும்-தனித் தன்மைப்பன்மை. (௨௬௩)

[இதுவும் அது.]

௨௬௪.—(இ - ள்.) 'இவர் என் மைந்தர்-இத்துரியோதனாதியர் எனது புதல்வர்கள்: நீங்கள் அவன் மைந்தர் - (பாண்டவராகிய)நீங்கள் அப்பாண்டு வினது புதல்வர்கள்,' என - என்று, நினையேன் - (வேறுபாடுதோன்ற நான்)நினையாமல், இவரே எம்பிதன் மைந்தர் - இத்துரியோதனாதியரையே எனது தம்பியின் புதல்வர்(என்றுஎண்ணியும்),உங்களையே என் மைந்தர் என - உங்களையே எனதுமைந்தர் என்று எண்ணியும், வளர்த்தேன் - (நான் இதுவரையில் உங்களை) வளர்த்துவந்தேன்; சம்புநாடு மன் மைந்தர் - இந்த ஜம்பூத்வீபத்தில் தோன்றிய ராஜகுமாரர்களில், உங்களை போல் - உங்களைப் போல, இத்தனை நாள் வேறுபடாது வளர்ந்தார் - இவ்வளவுகாலம் மனம் மாறுபடாமல் வளர்ந்தவர்கள், உண்டோ - எவரேனும் இருக்கின்றார்களோ? வில் மைந்தர் - வில்லில்வல்ல (எனது) புதல்வர்களாகிய நீங்கள், நடக்க - (நுமது இந்திரப்பிரத்தநகரத்துக்குச)செல்வீர்களாக', என-என்றுசொல்லி, விடை கொடுத்தான் - (பாண்டவர்கட்கு)விடைகொடுத்தனுப்பினான்: (யாவ னெனில்),—விரகினுக்கு ஓர் வீடு போல்வான்-தந்திரங்கட்கெல்லாம் இருப் பிடம்போன்றவனான திருதராஷ்டிரமகாராஜன்; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் தான் தனது தம்பியினிடத்தில்ஒற்றுமையாயிருந்ததை க்கூறிய திருதராஷ்டிரன்,இச்செய்யுளின்முதலிரண்டடிகளால், தன்தம்பி மைந்தரான பாண்டவரிடத்துத் தன்மைந்தரிடத்தினும் தான் மிக்க அன்பு கொண்டிருப்பதையெடுத்துக்கூறுகின்றான்.பாண்டவர் மிகவும்பரிபவப்பட் டமையாற் சினங்கொண்டு ஒருகால் தன்மைந்தரை அடர்க்கக்கூடுமென்று அஞ்சிய திருதராட்டிரன், அப்பாண்டவர் சினந்தணிந்து மகிழ்ந்து அடங்கி யிருக்குமாறு,'சம்புநாட்டு மன்மைந்த ருங்களைப்போல் வேறுபடா தித்தனை நாள் வளர்ந்தாருண்டோ?' எனப் புனைந்துகூறினான்; இனிமேலும் நீங்கள் முன்போலவே வேறுபடாதிருக்கவேண்டு மென்பது, குறிப்பு. இந்தப் பூமி யின் மத்தியி லுள்ள மகாமேருமலையை யடுத்துத் தெற்கிலுள்ள கந்தமாதன கிரியின்மேற் பதினோராயிரம்யோசனையளவுள்ளதாய்ப் பிரகாசிக்கிறதொரு நாவல்மரம் இருக்கின்றது; அதனையுடைமைபற்றி, இந்தப் பூமிக்கு ஜம்பூ த்வீபம்என்கிறபெயர் உண்டாயிற்று என்று புராணங்கூறும்; ஜம்பூ - நாவல்: அதனை இங்கு 'சம்புநாடு' என்றார். தனதுமைந்தர்திறத்தில் மிக்கஅன்பு கொண்டு அவர்கட்குப் பாண்டவர் யாதொருதீங்குஞ் செய்யாதிருக்குமாறு ஆலோசித்து;பாண்டவரிடத்து அன்புள்ளவன்போல நடித்தும்,அவர்களைச் சிறப்பித்தும் இங்ஙனம் பலபடியாகக்கூறுகின்று னாதலால், திருதராஷ் டிரனை 'விரகினுக் கோர் வீடுபோல்வான்' என்றார். வின்மைந்தர் - முன் னிலைப்படர்க்கை; அண்மைவிளியில்வந்த இயல்பு எனக்கொண்டு 'மைந் தீர்' எனப் பொருள்கொள்ளவுமாம். (௨௬௪)

[இது முதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: பாண்டவர்கள் தமது இராச்சியத்தைப்பெற்றுச் செல்வதைக் கண்ட சகுனியின் துர்ப்போதனை.]

உசுரு.—(இ - ள்.) இவன் - இத்திருதராஷ்டிரன்,— இழந்த - (தருமபுத்திரன்) சூதாடித்தோற்ற, படை - சேனைகளையெல்லாம், கொடுத்தான் - (அத்தருமபுத்திரனுக்கு மீண்டும்) கொடுத்தான்; பார் கொடுத்தான்-இராச்சியத்தையும் கொடுத்தான்;பண்டு போல் அரசு ஆள-முன்போலவே இராச்சியத்தையாளுமாறு, வெள் குடை கொடுத்தான்-வெண்கொற்றக்குடையையும் கொடுத்திட்டான்; ஐவருக்கும் - பஞ்சபாண்டவர்கட்கும், குருகுலத்தே குலம் கொடுத்தான்-குருகுலத்திற்பிறந்தவரென நற்குடிப்பிறப்பையும் ஒத்துக்கொண்டான் ; குலத்தே கொண்ட - குருகுலத்தாரிடத்தில் நேர்ந்த, தடை - (அடிமைத்தன்மையாற்) கீழ்மையுண்டானதை, கொடுத்தான் - போக்கினன்; அகப்பட்டும் - (பாண்டவர்கள் நமது கையிற்) சிக்கியிருக்கவும், தலை யழிக்க நினையாமல் - (அவர்களை)அடியோடுகெடுப்பதற்கு வேண்டிய ஆலோசனைகளைச் செய்யாமல், தானே - தானாகவே [அவர்கள் கேளாதிருக்கும்பொழுதே வலிவிலே], விடை கொடுத்தான் - விடைகொடுத்து அனுப்பியும்விட்டான்; அம்ம—! வய புலியை வால் உருவி விடுகின்றீரே-வலிமைபொருந்திய புலிகளை வால்தடவிவிடுகின்றீர்களே; இனி விடுமோ-இனி (அப்புலிகள் நும்மீதுகறுக்கொண்டு உம்மைக் கொல்லாமல்) சும்மாவிடுமோ? (எ-று.)—அம்ம-வியப்பிடைச்சொல்; பாண்டவர்கள் நமது கையில் அகப்பட்டதனால் அவர்களை முற்றவும்அழிக்கவேண்டியிருக்க, அவ்வாறு செய்யாமல் அவர்கட்குவேண்டியவற்றையெல்லாம் அளித்த அறிவீனத்தைப் பற்றி வியந்தவாறு. ஈற்றுஏகாரம் - இரக்கம்.

திருதராஷ்டிரன் பாண்டவர்கள்சூதாடித்தோற்ற நால்வகைப்பட்ட சேனைகளையும் இராச்சியத்தையுங் கொடுத்ததோடு துரியோதனாதியர்கள் கவர்ந்த அரசசின்னங்களையெல்லாம் மீட்டும்பெறுமாறும் அவர்கட்கு அளித்தானதலின் 'பண்டுபோல் வெண்குடைகொடுத்தான்'என்றும், பாண்டவர்கள் யமதருமராஜன்முதலியவர்கட்குப்பிறந்தார்களாகவும் திருதராஷ்டிரன் 'எம்பிமைந்தர்' என்பதுபோலச் சிலகூறினனாதலால்'குலங்கொடுத்தான்' என்றும்,குருகுலத்துஅரசர்களென்றபேர் நீங்குமாறு அடிமைகளாய்விட்ட பாண்டவர்களை அவ்வடிமைத்தன்மையினின்று நீக்கினனாதலால் 'ஐவருக்குங் குலத்தேகொண்ட தடைகொடுத்தான்'என்றும் சகுனிகூறினனென்க. 'இழந்த'என்ற பெயரெச்சம்-'படை', 'பார்', 'வெண்குடை'என்பவற்றோடு இயையும்.'குடை'என்பது-அரசசின்னங்கட்கெல்லாம்உபலட்சணம்.பாண்டவர்களைப் பலவகையாலுந் தாழ்வுபடுத்தி மீண்டும் அவர்களை உயர்ந்தநிலையில்வைக்கின்றீர்களாதலால், இனி அவர்கள் உங்களைத் தவறாதுகொல்வரென்ற கருத்தைத் தெரிவித்தவால், 'வயப்புலியை வாலுருவிவிடுகின்றீர், இனி விடுமோ' என்ற வாக்கியம் - பிறிதுமொழிதலணியாம். கொடுத்தவன் திருதராஷ்டிரனொருவனே யாதலால்'கொடுத்தான்'என ஒருமையாகவும், துரியோதனாதியர் அருகிலிருந்தும் அவ்வாறுகொடுக்கவொட்டாதுஅவனைத் தடுக்காமலிருந்ததுமாத்திரத்தைக்கொண்டு அவ்வாறு அவன்கொடுத்தது உங்கட்கும் உடன்பாடேயாயிருந்ததன்றோ? என்பான் 'விடுகின்றீர்' எனப் பன்மையாகவுங் கூறினன். (உகூ௫)

உகூசு.—(இ - ள்.) 'யாது ஒரு கருமம் எனும் - (ஒருவர் செய்வது)எந்தக்காரியமாயிருந்தாலும், எண்ணியே-(செய்வதற்குமுன்பு) ஆராய்ந்துபார்த்தே, துணிக-(தம்மனத்திற்குஒத்ததாயின் அந்தக்காரியத்தைத்) துணிந்து செய்க,' என்றும்—, 'காதலில் - தம்மனப்போக்கின்படியே [ஆராயாமல்], துணிந்து செய்தால்-துணிவுகொண்டு (ஒருகாரியத்தைச்) செய்தால், (பிறகு), எண்ணுதல் - (அதைப்பற்றிச்) சிந்தித்தல், கடன் அன்று - முறைமையன்று,' என்றும்—,நூல் ஓது புலவர் சொன்னார் - சாஸ்திரங்களைக் கற்

றறிந்த பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்; உமக்கு உள உணர்வு-உங்களுக்குள்ள அறிவானது, அற்று அன்றே-அப்படிப்பட்டதன்று [அந்தச்சாஸ்திரமுறைக்குஒத்திருக்கவில்லையே!]நீர் பேதுஉற அடர்த்தும் நீங்கள(பாண்டவர்கட்குப்) பெருந்தன்பமுண்டாகுமாறு (அவர்களைச்) சயித்திருந்தும், பின்னை - மறுபடியும். உருகி - மனமிரங்கி, பிழை செய்தீரே-தவறான காரியத்தைச் செய்துவிட்டீர்களே ! (எ - று.)—ஈற்றுஏகாரம் - இரக்கம்.

ஒருகாரியத்தைச் செய்துவிட்டபின்பு ஆராய்தற்கு இடமில்லையாதலால், ஒவ்வொருகாரியத்தையும் செய்வதற்குமுன்னமே ஆராய்ந்துபார்க்கவேண்டும்; இவ்வாறிருக்கவும். நீங்கள் மிகவும்வருந்திப் பேராலோசனைசெய்து அரிதிற் சூதுவழிகொண்டு சயித்துப் பின்பு பாண்டவர்களிடத்திற் பேரருள்கொண்டு சிறிதும்ஆலோசனையின்றி அவர்களை அடிமைத்திறத்தினின்றுநீக்கி அவர்கட்கு அரசாட்சியையும் அளித்துவிட்டீர்களே! முன்னம் உங்களால் மிகவும் அவமதிக்கப்பட்ட அப்பாண்டவர்கள் நீவிர்செய்த அபகாரங்களையெல்லாம் மறவாதுமனத்திற்கொண்டுஇனிஉங்கட்குப் பெருங்கேடு புரிவார்க ளென்பதைக் குறித்து நீங்கள் சிறிதும் ஆலோசனை கொள்ளவில்லையே! இனி, யாது செய்யத்தக்கது? எனச் சகுனி அநுதாபத் தாற்கூறுகின்றன னென்க. "எண்ணித்துணிக கருமந் துணிந்தபின். எண்ணுவ மென்ப திழுக்கு" என்ற திருக்குறள், இங்குஉணரத்தக்கது. 'பாண்டவர்களை முன்னமே அடர்க்காதிருந்திருக்கவேண்டும்; அடர்த்தபின்பு அன்பு கொண்டு உருகாதிருக்கவேண்டும்; அடர்த்துப் பின்புஉருகுதல் ஒருவாற்றானும் தக்கதன்று' என்பது -'பேதுறவடர்த்தும் பின்னை யுருகி நீர் பிழைசெய்தீர்' என்பதன் கருத்து. உமக்கு உள உணர்வு அற்றுஅன்றே என்பதற்கு - உமக்குள்ள உணர்வு கெட்டதல்லவோ எனவும் பொருள்கொள்ளலாம்; முன்னையபொருளில், அற்றுஎன்பது-'து' என்னுஞ்சுட்டிடைச்சொற்பகுதியினடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்; இப்பொருளில், 'அறு' என்னும் வினைப்பகுதியினடியாப்பிறந்த இறந்தகாலவினையெச்சம்.

இதுமுதல் இச்சருக்கம்முடியுமளவும் ௧௯ கவிகள் - இச்சருக்கத்தின் உ - ஆங் கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (௨௬௬)

௨௬௭.—(இ - ள்) 'தீயினால் சுட்ட செம் புண் ஆறும் - நெருப்பினாற் சுட்டதனாலாகிய செந்நிறமான புண்ணானது ஆறிப்போய் வடுத் தீர்ந்துவிடும்; அ தீயின் தீய வாயினால் சுட்ட மாற்றம் மாறுமோ - அத்தீயைக்காட்டிலுங்கொடிய வாயினாற் சுடுவதபோன்ற கொடுஞ்சொற்கள் மறைந்துவிடுமோ? வடுவே அன்றோ-ஒருபொழுதும் மறையாத வடுவாகவே யிருக்குமன்றோ? பேயினால் புடையுண்டாரோ-(நீங்கள்செய்த தவறுகளையெல்லாம் மறப்பதற்குப் பாண்டவர்கள்) பேயினாற் புடைக்கப்பட்டுத் தம்வசமிழந்திருப்பவர்களோ? பெரியோர் மறப்பரோ - (நீங்கள் செய்த பெரும்பிழைகளைப்) பெருமைபெற்ற பாண்டவர்கள் மறந்துவிடுவார்களோ?' என்றான் - என்று கூறினான்: (யாவனெனில்),—வீயினால் தொடுத்த தண் தார்-(நந்தியாவர்த்த) மலர்களால் தொடுக்கப்பட்ட குளிர்ந்த மாலையையணிந்த,வேந்தர்க்கு வேந்தன்-ராஜராஜனான துரியோதனனது,மாமன் - மாமனாகிய சகுனி; (எ -று.)

'நீங்கள் பாண்டவர்கள்திறத்திற் கூறிய தீச்சொல்லோ மிகவுங்கொடியது; ஒருநாளும் மறக்கற்பாலதன்று: இத்தகைய கொடுஞ்சொல்லை மனத்திற்கொள்ளாது மறக்கவேண்டுமென்றால், தம்வயந்தப்பிய பேயர்க்கன்றி நல்லறிவுடையார்க்கு இயலாது; பாண்டவர்கள் பெருந்தன்மையராதலால், மனத்திற்கொள்ளாரென்று நினைத்தற்கும் வழியில்லை; "சிறியோர் பெரும் பிழைசெய்தன ராயின்.பெரியோர்அப்பிழைபொறுத்தலும்அரிதே" அன்றே! ஆகவே, இப்பொழுது நீங்களே உங்கட்குக் கேட்டினைத் தேடிக்கொண்டவர்களாய்விட்டீர்களே!' என.இரக்கந்தோன்றுமாறு சகுனிகூறினனென்க. "தீயினாற்சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே, நாவினாற்சுட்ட வடு" என்ற திருக்

குறள் இங்குஉணரத்தக்கது. தீயினுற் சுட்டசெம்புண்ணுகிற உபமானத்தி னும் வாயினுற்சுட்ட மாற்றமாகிற உபமேயத்துக்கு ஆறுமலவடுவாயிருத்த லாகிற சிறப்பைக் கூறியிருத்தலால், முன்னிரண்டடி - வேற்றுமையணி; வடநூலார், வ்யதிரேகாலங்கார மென்பர். 'வீ' என்ற மலர்ப்பொதுப்பெ யர் - இங்கே சிறப்பாய், நஞ்சாவட்டை மலரை யுணர்த்திற்று. மாற்றம் ஆறுமோ என்றும் பிரிக்கலாம். (உகஎ)

[அதுகேட்ட துரியோதனனது கட்டளைப்படி துச்சாதனன் தருமனைநோக்கிக் கூறத்தொடங்குதல்.]

உகஅ.—(இ - ள்.) சகுனி சொல் - (இவ்வாறுசொன்ன) சகுனியின் வார்த்தையை, மருகன்-(அவனது)மருமகனுகிய துரியோதனன்,கேட்டு—, தம்பியும் அங்கர்கோவும் முகம் முகம் நோக்கி - தம்பியாகிய துசசாதனனும் அங்கதேசத்தார்க்குஅரசனுன கர்ணனும் என்ற இவர்களது முகத்தைத் தனி த்தனி உற்றுப்பார்த்து, எண்ணி - ஆலோசித்து, (பின்பு துச்சாதனனை நோக்கி), 'எம்பி - எனதுதம்பியே! [துச்சாதனனே!] நீ—, மொழிக - (சூதில்இழந்த இராசசியம்முதலியவற்றைக் காரணமின்றிப் பெற்றுச்செல் வது தகுதியன்று'எனத் தருமபுத்திரனிடத்துச் சொல்வாயாக,' என்றான்- என்று கட்டளையிட்டான்; துகிலினை உரிந்த வல் கை சூரனும் - (திரௌ பதியினது) வஸ்திரத்தை அவிழ்த்த வலிய கையையுடைய சூரனுகிய துச்சா தனனும், தருமராசன் மகனுடன் யமதருமராசனது புதல்வனுகிய யுதி ஷ்டிரனிடத்தில், வெகுளி தோன்ற - (தனக்கு அவன்மீது உள்ள) கோபம் வெளிப்படும்படி [உக்கிரமாக], வழக்கு உற - வியவகாரந் தோன்றுமாறு, மொழிதல்உற்றான் - சொல்லத்தொடங்கினுன்; (எ - று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

துச்சாதனன்கை அபலையான திரௌபதியின் ஆடையையுரிந்ததனுல் அதனை 'வன்கை' எனப் பழித்தும், இவ்வாறான கொடுஞ்செயலில் மிக்க வல்லமையுள்ளவனென்பார் அவனை 'வீரன்' என்று வஞ்சப்புகழ்ச்சியாற் கூறியும் இவ்வாறு அத்துச்சாதனனது கொடுமையை விளக்கினுர். வெகுளி தோன்ற - (தருமபுத்திரனுக்குக்) கோபமுண்டாகுமாறு என்றும் உரைக்க லாம். வழக்காவது-ஒருபொருளை எனதெனதென்றிருப்பார் அப்பொருள் விஷயமாகக் கூறுவது: திருதராஷ்டிரனது அநுமதிப்படியே தருமபுத் திரன மீண்டும் பெற்ற இராச்சியத்தைக்குறித்து 'சூதாடித்தோற்றதை நீங்கள் எவ்வாறு பெறலாம்?' என இவ்வாருகத் துச்சாதனன் கூறுகின்று ஞதலின், 'வழக்குறச் சொன்னுன்' என்றார். (உகஅ)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்: துச்சாதனன்வார்த்தை.]

உகக.—(இ - ள்.) (துச்சாதனன் தருமபுத்திரனை நோக்கி),—உன் அறத்துக்கு விரதம் என்றும் பொய்கொல் - நீ மேற்கொண்டுள்ள தருமத் துக்கு ஏற்றவிரதமாயிருப்பது பொய்தானே? மெய்யே அன்றோ - உண்மை யேயல்லவோ ? சரதம் என்று - (நான் தோற்றது) நிச்சயமென்றுசொல்லி, நீ—, இசைந்து - மனமொப்பி, சபையில் உண்மை ஆக தோற்ற - (பலபேர் கூடிய)சபையில் முறைப்படியே(சூதாடித்)தோற்ற, இரதமும்-தேர்களையும், களிறும் - யானைகளையும், மாவும் - குதிரைகளையும்,யாவையும் - மற்றும் எல் லாவற்றையும்,மீண்டும்-மறுபடியும்,தாரோம்-கொடுக்கமாட்டோம்; (மேவண் டுமானுல்),சுரதம் மெல் கொடியும்-போகத்திற்குஉரிய மெல்லியகொடிபோ ன்றவளான திரௌபதியும், நீரும் - நீங்கள்ஐவரும், தொண்டு ஒழிந்து-அடி மைத்தன்மையினின்றும் நீங்கி, உரியீர் ஆமின்-சுதந்தரமுடையவராகுங்கள்.

நீ பொய்பேசுவதையே விரதமெனக் கொண்டிருந்தால், தோற்றிழந்த இராச்சியத்தைப் பறித்துக்கொண்டுவிடலாம்; எப்பொழுதும் மெய்யேபேசு கின்ற சத்தியவிரதனு யிருப்பதனுல், பலருங்கூடியசபையில் முறைப்படி சூதாடித்தோற்ற இராச்சியத்தைக் கைப்பற்றுதற்கு வகையில்லையே! அன்

றியும்,இராச்சியத்தைச் சூதாடிச் சயித்தவர்கள் நாங்களே யாதலால், இந்த இராச்சியத்தை நாங்கள் உடன்பட்டுக் கொடுத்தால்மாத்திரம் உங்களுடையதாகுமே யன்றி எமதுதந்தைகொடுக்க நீங்கள் பெற்றுக்கொள்ளுதற்கு நுமக்கு உரிமையில்லை; இராச்சியத்தைப்பெறுவதிலுள்ள பேராசையாற் பெற்றுக்கொள்வோ மென்றாலும், நாங்கள் கொடுக்கமாட்டோம்; இப்பொழுது வேண்டுமானால் எமதுதந்தைக்காக உங்களை அடிமைத்தன்மையினின்றுமாத்திரம் நீக்கி உரிமைபெற்றவர்களாகச் செய்கிறோமென்று துசசாதனன் கூறியதாக விரித்துப் பொருள்காண்க. தருமபுத்திரனுக்கு 'சத்தியவிரதன்' என்று ஒருபெயரிருத்தல், இங்கு அறியத்தக்கது. 'நான் தோற்கவில்லை'என்று சொல்ல வழியில்லையென்பான்,'உண்மையாகச் சபையில்தோற்ற' என்றான். ஸூரகம் - வடசொல். போகமாதென்றுபழிப்பான், 'சூதமென்கொடி' என்றான். தருமபுத்திரனொருவனே தோற்றுஇழந்தவனாதலால் 'நீ' என்று ஒருமையாகவும், உரிமையைப்பெறுதல் ஐவருமாதலால் 'நீர்' என்று பன்மையாகவுங் கூறினான். (உகூக)

உஎ0.—(இ - ள்.) உரிமையும் - (அடிமைத்தன்மையினின்றுநீங்கிச்) சுதந்திரமாயிருத்தலையும், தந்தைதன் அருளால் பெற்றீர்-(எமது) பிதா(நும்மிடத்துக்) கொண்ட தயையினால் (நீங்கள்) அடைந்தீர்கள்; (ஆகையால்), தம்பிமாரும்-(உனது)தம்பியராகிய (வீமன்முதலிய) நால்வரும், பைந்தொடிதானும் - பசும்பொன்னாற்செய்த வளையலை யணிந்தவளான திரௌபதியும், நீயும்—, பதி பெயர்ந்து - இவ்வூரைவிட்டுச்சென்று,உயர்ந்த வேயின் வெம்தழல் அனைய கானின் - ஓங்கிவளர்ந்த மூங்கிலையுடையதும் கொடியதீப்போலும் வெம்மைமிக்குள்ளதுமாகிய காட்டிலே,வெளிப்படாது உறைமின்-மறைந்து வசியுங்கள்; இந்த மா தாணி கைவிட்டு - இந்தப் பெரிய பூமியை அரசாளுதலை விட்டு, இன்றே எழுமின் - இப்பொழுதே புறப்பட்டு, ஏகுமின் - வெளிச்செல்லுங்கள், என்றான் - என்று (பாண்டவர்களைநோக்கித் துச்சாதனன்) கூறினான்; (எ - று.)

'நீங்கள் அடிமையாயிருந்தால் இங்கேயேயிருந்து எமக்குப் பணிவிடை செய்யவேண்டும்; எமதுதந்தையின்கிருபையினால் அவ்வடிமைத்தன்மையினின்று நீங்கிவிட்டபடியால், இனி நீங்கள் எங்களிராச்சியத்தில் நில்லாது காட்டிற்குப்போய் வசியுங்கள்: இந்த எமது இராசசியத்தில் நீங்கள் இருப்பதுங் கூடாது'என்று துச்சாதனன் தமது ஆலோசனைப்படியே கூறினனென்க. 'பாண்டவர்கள் காட்டிற் பெருந்துன்பத்திற்கு இலக்காக வேண்டும்' என்று தாம் கொண்ட கொடியவிருப்பத்திலுள்ள ஊற்றமிகுதியால், துச்சாதனன் 'எழுமின் ஏகுமின்' என்பதற்குமுன் 'கானின் உறைமின்'என்றான். எழுமின் ஏகுமின் - எழுந்துஏகுமின்; முற்று எச்சமாயிற்று: "வினைமுற்றே வினையெச்சமாகலும்" என்பது, விதி. பசுமை+தொடி=பைந்தொடி: பண்புப்பெயர் ஈறுபோய்,அடிஅகரம் ஐயாகி,முன்நின்ற உயிர்மெய்கெட்டு,இனமெலி மிக்கது: [நன் - பத - கூ.] தொடியையணிந்தவளுக்கு, பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. 'உரிமையும்' என்ற உம்மை - இழிவுசிறப்பு. (உஎ0)

[அச்சொல்லைக்கேட்டுத் திருதராட்டிரன் ஆலோசித்தல்.]

உஎக.—(இ - ள்.) என்றலும் - என்று (துச்சாதனன்) கூறியவுடனே,—தந்தை - (அவனது) தகப்பனாகிய திருதராட்டிரன், மைந்தன் இயம்பிய வாய்மை கேட்டு - தனது குமாரனாகிய அத்துச்சாதனன் கூறிய வார்த்தையைக்கேட்டு, நின்ற ஆ(று)நில்லா வஞ்சம் நெஞ்சினன் ஆகி - நின்றபடியாக (ஒருநிலையில்) நிற்காமல் மாறுபடுகின்ற வஞ்சனையுள்ள மனத்தையுடையவனாய், மீண்டும் - மறுபடியும், வென்றி கொள் அரசனோடும் - வெற்றிபொருந்திய அரசகுலத்தவனான வீமனுடனும், வெம் சிலை விதுரனோடும் - கொடிய வில்வித்தையிற் சிறந்தவனான விதுரனுடனும்,ஒன்றிய அமை

ச்சரோடும் - (மற்றும் அங்குப்) பொருந்திய மந்திரிமார்களோடும், உறுவன - அப்போது செய்யத்தகுவன வற்றை. உசாவல் உற்றான் - விசாரிப்பவனானான்.

சகுனியின் துராலோசனையால் துரியோதனனேவிய மொழிப்படியே துசசாதனன் தருமனை வெருட்டிக் கூறியதைக் கேட்டபொழுது, திருதராட்டிரன் பாண்டவர்கட்கு இராசசியத்தை மீட்டுங் கொடுத்தலில் விருப்பமில்லாதவனாகி, அப்பொழுதைக்குஏற்ப ஆலோசனைகூறுமாறு வீடுமன்முதலியோரை வினவினனென்க. முதலில் துரியோதனனுதியரது துராலோசனைக்கு உட்பட்டுப் புதுமண்டபங்காணவேண்டுமென்ற ஒருவியாஜத்தாற் பாண்டவரைவரவழைத்து அவர்கள்சூதாடித்தோற்கத் திரௌபதியைத் தம்புதல்வர் பரிபவிக்கும்வரையிலும் சம்மதித்திருந்தும், பின்பு வெருவி மனம்மாறுபட்டுப் பாண்டவர்திறத்தில் அன்புகொண்டு அவர்கட்கு உரிமையையும் அளித்ததோடு அரசாட்சியையுங் கொடுத்தும், பிறகு துச்சாதனன்வார்த்தையைக் கேட்டு மீண்டும் மனநிலைமாறி வஞ்சகத்தன்மைமேலிட்டுப் பாண்டவரிடத்தினின்று தான்கொடுத்தஇராசசியத்தை எவ்வாறு மீட்டுமொருங்கிவிடலாமென்று இப்பொழுது ஆலோசித்தும் நிற்கின்றனனாதலால், திருதராஷ்டிரனை 'நின்றவாநில்லாவஞ்சநெஞ்சினன்' என்றார். 'நின்றவாநில்லாநெஞ்சு' - அஸ்திரசித்தம்; "நின்றவாநில்லாநெஞ்சினை" என்றதொடர், பெரிய திருமொழியிலும் வந்துள்ளது. 'வென்றிகொள்ளரசன்' என்பது - துரியோதனனைக் குறிப்பதாகக் கொள்ளுதல் சிறப்பன்று. (உஎக)

[துரோணனது மறுமொழி.]

உஎஉ.—(இ-ள்.) நோன் சிலை நூலில் மிக்கோன் - வலிய வில்லின் வித்தையிற் சிறந்தவனாகிய துரோணன்.—(திருதராஷ்டிரனைநோக்கி), 'சேல் வரும் பழனம் நாட - கயல்மீன்கள் மிகுதியாகச்சஞ்சரிக்கப்பெற்ற [நீர்வளத்தையுடைய] கழனிகளைக் கொண்ட குருநாட்டிற்குஉரிய தலைவனே! மேல் வரு கருமம் எண்ணு - இனிமேல் வரக்கூடிய காரியத்தை ஆராய்ந்தறிதலில்லாத. வெகுளியால் மிக்க - மிக்ககோபத்தையுடைய, வீரர் நால்வரும் - (சகுனி கர்ணன் துரியோதனன் துச்சாதனன் என்ற) நான்குவீரர்களும், எம் அனோர்கள் நவின்றன - எங்களைப்போன்றவர்கள் சொல்வனவற்றை, சிறிதும் கேளார்; (ஆதலால்), (நீயே), செயல் எண்ணி அறிந்து - செய்யவேண்டியதை (இன்னதென) ஆராய்ந்தறிந்து, வேதம் நூல் வரும் முறை - வேதங்களிலும் (அவற்றின்வழியாகச்செய்யப்பட்ட நீதி)நூல்களிலுங் கூறியுள்ள முறைப்படியே, சொல் - சொல்வாயாக', என்றான்.—.

சகுனிமுதலியோர் எங்களுடையசொற்களை மதியாது இகழ்வராதலால் நாங்கள் இப்பொழுது சொல்லுதிற் பயனில்லை; ஆகையால், அவர்களது நன்மையையே கருதும் நீயே சாஸ்திரமுறைமைவழுவாது கூறினையானால், அது எங்கட்கும் உடன்பாடேயாம்; அவர்களும் மறுக்காது அங்ஙனமே ஒழுகுவர்; ஆகவே, இப்பொழுது நீயே ஆலோசித்துக்கூறுவது தக்கது எனத் துரோணன் மறுமொழி கூறியவாறு. சகுனிமுதலிய நால்வரும் பாண்டவரிடத்துப் பெருஞ்சினங்கொண்டு அவர்கட்குத் தீமைபுரிதற்பொருட்டுஒன்றுசேர்ந்து ஒருநன்மையான அபிப்பிராயத்தை முடிவிற்கொள்வாராதலாலும், அதுபற்றியே 'துஷ்டசதுஷ்டர்' என்றும்பெயர்பெறுவராதலாலும். 'வெகுளியான்மிக்க வீரர்நால்வரும்' என்றார்; ஆகவே, 'நால்வர்' என்றது - இங்குத் தொகைக்குறிப்பு. நவின்றன - பெயர். 'சேல்வரும் பழனம்' எனவே, நீர்வளப்பங்கூறியவாறும். வேதநூல் - வேதசாஸ்திரம் எனக்கூறலுமாம். (உஎஉ.)

[விதுரனும் மற்றைஅமைச்சர்களும் துரோணன்மொழிக்கு இணங்க, திருதராஷ்டிரன் கூறத்தொடங்குதல்.]

உஎங.—(இ - ள்.) வில் மகன் உரைக்க - வில்வித்தையிற்சிறந்தவனான துரோணன் இவ்வாறுகூற,— (அப்போது), ஏனை அமைச்சரும் - மற்றைமந்திரிகளும், விதுரன்தானும் - விதுரனும், (திருதராஷ்டிரனை நோக்கி), 'மன்

முறை தவறின் - (நீ ஆராய்ந்துசொல்லுகையில்) அரசமுறைமை தவறிக் கூறுவாயாயின், இன்றே - இப்பொழுதே, வசையும் - பழிப்பும், வந்து இசையும் - வந்துசேரும்', என்றார்—; மனம் கல் நெடுங் குன்று அன்னான் - (தனது)மனம் கல்மயமான நீண்ட மலை போன்று வலிமையாயிருக்கப்பெற்றவனான திருதராஷ்டிரன்,—அ கணத்தே - அந்தக்ஷணத்திலேயே,கருதி- ஆராய்ந்துபார்த்து,—மீள-மறுபடியும், யாவர்நெஞ்சும் சருகுஎன - எல்லாருடையமனமும் சருகுபோலவாடவும்,தழைக்க-(தன்மனம்) கிளர்ச்சியடையவும், தன்மனை - யுதிஷ்டிரனைநோக்கி, சொன்னான் - சொல்பவனானான்; (எ - று.)—அதனை, அடுத்தகவியிற் காண்க.

விதுரனும் மற்றுமுள்ள அமைச்சர்களும் துரோணனதுசொல்லை அநுசரித்துத் தாமும் 'நீதான் இப்பொழுது ஆராய்ந்து ஆலோசனைசொல்லத்தக்கவன்; எங்களுடையபேச்சை நால்வரும் அங்கீகரிக்கமாட்டார்கள்;ஆனால், நீ சொல்லுகிற மொழி அரசநீதிக்குச் சிறிதும் மாறுபடாதிருக்குமாறு ஆராய்ந்துசொல்' என்றுகூற, திருதராஷ்டிரன் தன்மனம்போனபடி சிறிதும்நியாயத்திற்குக்கட்டுப்படாமற் கூறத்தொடங்கினனென்றவாறு. தான் பெற்றபுதல்வரைக்காட்டிலும் பேரன்புடன் வளர்த்த பஞ்சபாண்டவர்விஷயத்தில் இப்போது சிறிதுங்கருணையில்லாது நிர்த்தாட்சிணியமாகக் கூறுகின்றானாதலால், அவனை 'மனம் கற்குன்றன்னான்' என்றார். தன்மன் - தர்மன்: தர்மபுத்திரன். (௨எ௩)

[திருதராஷ்டிரன் தருமபுத்திரனுக்குஇட்ட கட்டளை.]

௨எ௪.—(இ - ள்.) (திருதராஷ்டிரன் தருமபுத்திரனைநோக்கி), 'உன் உணர்வு உனக்கே உள்ளது - உன்னுடைய நல்லுணர்வு உன்னொருவனுக்கே உள்ளதாகும்; உன் பெருந் துணைவர் ஆன கொல் நுனை வேலோர் - உனது பெரியசகோதரர்களும் (பகைவரைக்) கொல்லவல்ல கூர்மையான வேலாயுதத்தையுடையவர்களுமாகிய துரியோதனாதியர், வென்று கொண்டன - (தாம் சூதாடிச்) சயித்துக்கொண்ட பொருள்களை, கொடுத்தல் - கொடுப்பதற்கு, ஒல்லார் - உடன்படார்; (ஆதலால்),நின் பெருமைக்கு ஏற்ப-உனது கௌரவத்திற்குத் தக்கபடியாக, முன் உளோர் பலரும் செய்த முறைமையே முன்னுக-பூர்விகர்பலருஞ்செய்த முறைப்படியே (செய்யுமாறு) எண்ணுவாயாக; பின்உற உரிமை யாவும் பெறுதி - பிறகு உனக்குஉரிய இராச்சியம் முதலிய பொருள்களையெல்லாம் பெறுவாயாக,'என்றான்-என்றுகூறினான்.

நீயே உண்மையறிவுமுதிர்ந்துள்ளவனாதலால், பெரியோர்மொழிப்படியே நடப்பாய்; எனதுமைந்தரோ துன்மார்க்கர்; எனதுமொழிப்படி இராச்சியத்தை மீளக்கொடுத்தற்கும் சம்மதிக்கின்றிலர்: ஆதலால், நீ இப்பொழுது சிறிதுகாலம் காட்டில்வசித்து மீண்டு உனக்குஉரியபொருள்களையெல்லாம் பெறலாமெனத் திருதராஷ்டிரன் கூறினனென்க. உன்னுணர்வு உனக்கே உள்ளது - உன்னைப்போன்ற விவேகிகள் இவ்வுலகத்துப் பிறரில்லையென்றவாறு. இனி, உன்உணர்வு என்பதை வினைத்தொகையாகக் கொண்டு, உன்னுகின்றஉணர்வுஎனப் பொருள்கூறி, பந்தயம்வைத்துத் தோற்ற பொருள்கள் உனக்குஉரியனவாகாமையை நீயே நன்கறியுந் திறமுடையையாதலால். அவற்றைவென்றவர்[துரியோதனாதியர்]மீளக்கொடாமையைக் குற்றமென்றுகொள்ளாதிருக்கவேண்டுமெனக் கூறியதாகக் கருத்து விரித்துரைத்தலு மொன்று. இப்பொழுது இராச்சியமெல்லாம் என்வயத்தனவன்றித் துரியோதனாதியர்வயத்திலிருப்பதால் அவர்கள் உடன்பட்டுக்கொடுத்தால்தான் நீங்கள் பெற்றுக்கொள்ளலாமே யல்லாமல் அவர்கள் மீளக்கொடுத்தற்கு உடன்படாதிருக்கையில் யான் என்செய்யலாமென்பான் 'வென்றுகொண்டன கொடுத்தலொல்லார்' என்றும், உனது இராச்சியத்தை அன்னியர்கள் கவர்ந்துகொள்ளாது உனதுதம்பியரே ஆள்கின்றனராதலால் நீ வருந்துதற்கு நிமித்தமில்லையென்பான் 'உன்பெருந்

துணைவர்' என்றும், நீ வனவாசஞ்செய்யென்று நேரேகூறுதற்குப் பின்வா ங்கி மறைபொருளாக 'நின்பெருமைக்கு ஏற்ப முன்னுளோர்பலருஞ் செய்த முறைமையே முன்னுக' என்றுங் கூறினான். 'நீ காடு செல்' என்றுகூற வேண்டியிருக்க அவ்வாறு கூறாது 'நின் முன்னுக' எனக்கூறியது - பிறி தினவிசியணி: வடநூலார் பர்யாயோக்தாலங்காரமென்பர். உனக்கே, முறைமையே—ஏகாரங்கள் - பிரிநிலை. 'முன்னுளோர் பலர்' என்றது - இரா மன் நளன் அரிச்சந்திரன் முதலியோரை. முன்னுகென்றான்-தொகுத்தல்.

[திருதராஷ்டிரனதுகருத்தைத் துரோணன் தருமனுக்கு விரித்துக்கூறுதல்.]

௭௫. —(இ - ள்.) அந்தணன் - பிராமணவருணத்தவனாகிய துரோ ணன்,—அரசன் உரைத்த மாற்றம் உணர்ந்து - திருதராஷ்டிரமகாராசன் கூறிய வார்த்தையின் பொருளை யறிந்து, (பின்பு தருமபுத்திரனை நோக்கி), முரசு அதிர் செல்வம் அயோத்தி முதுஊர் முன்னவன் கதையும் கூறி-முரச வாத்தியமொலிக்கப்பெற்ற செல்வச்சிறப்புள்ள அயோத்தியென்கிற பழமை யானஊரில் திருவவதரித்த முதல்வனை [திருமாலின் அவதாரமாகிய] இராம பிரானது கதையையும் எடுத்துச்சொல்லி, 'உரைசெய்த படியே (உனது பெரியதந்தை) கூறிய மொழிப்படியே, சில் நாள் - கொஞ்சகாலம், உங்கள் உலகினை இழந்து-உங்களது இராச்சியத்தை விட்டிட்டு, வரை செறி கானில் வைகி - மலைகள்நெருங்கிய காடுகளில் தங்கியிருந்து, வருவதே - மீண்டுந் திரும்பிவருவதே, வழக்கும் - (இப்பொழுது செய்யவேண்டிய) முறைமையு மாகும்', என்றான் - என்றுகூறினான்; (எ - று.)—மற்று - அசை.

'அயோத்தியில் தசரதகுமாரனாய்த்திருவவதரித்த இராமபிரான் தனது தந்தையின் சொற்படியே தான் ஆளுதற்குஉரிய இராச்சியத்தைத் தனது பெரியதம்பியாகிய பரதனுக்குக் கொடுத்துவிட்டு மற்றொருதம்பியாகிய இலக்குமணனுடனும் தனதுமனைவியாகியசீதையுடனும் பதினான்குவருடம் வனவாசஞ்செய்து மீண்டுவந்து அரசுபுரிந்தனன்' என்ற கதையைத் துரோ ணன் கூறி 'நீயும் அவ்வாறே உனதுதந்தையின்சொற்படியே உன்பெருந் துணைவராகிய துரியோதனனாதியர்க்கு உனது இராச்சியத்தைக் கொடுத்து விட்டு உனதுதம்பியரோடும் மனைவியோடும் காட்டிற் சிலவருஷங்கள்தங்கி யிருந்து பின்னர் மீண்டுவந்து இராச்சியத்தை அரசாளலாம்' எனத் தரும னுக்குத் திருதராஷ்டிரனது சொல்லை விளங்கவுரைத்தனனென்க. 'முன் னுளோர்பலருஞ்செய்த முறைமையே முன்னுக' என்று திருதராஷ்டிரன் கூறினனாதலால், அதன்பொருள் விளங்குமாறு இராமபிரானதுசரித்திரத் தைத் துரோணன் எடுத்துக்காட்டினான்.

திரௌபதிக்குத் திருதராஷ்டிரன்கொடுத்த இரண்டுவரங்களால் தமது அடிமைத்தன்மையினின்று நீங்கிச் சூதிலிழந்த இராச்சியத்தையும் பெற்ற பாண்டவர்கள் தமதுஇந்திரப்பிரஸ்தநகரத்தைநோக்கிச்செல்வதைக் கண்டு துச்சாதனன் மனம்பொறாமல் துரியோதனனிடத்து முறையிடவே, பின்பு துஷ்டசதுஷ்டர்கள் ஒருங்குசேர்ந்து திருதராஷ்டிரனிடத்தைச் சார, அவர்களுள் துரியோதனன் பலவாறு அத்தந்தையினிடத்துக்குறைகூறி முடி வில்அவனுற்பிராதிகாமியைக்கொண்டு பாண்டவர்களைமீண்டுஞ்சூதாடுமாறு அழைப்பிக்க, அப்பொழுது தருமபுத்திரன் சகுனியின்மாயையை யறிந்திரு ந்தும் அதற்குஉடன்பட்டு 'இராமபிரான் பொன்மயமான மான் அஸம்பாவித மென்பதை யுணர்ந்திருந்தும் அப்பொன்மானைப் பிடிக்க விரும்பினா னன்றோ! ஆகையால், விதி வலிது' என்றுகூறித் தம்பியரோடு திரும்பிவர, சகுனி 'இச்சூதாட்டத்தில் தோற்றவர் தமது இராச்சியத்தை விட்டு மான் றோல்தரித்துக்கொண்டு பன்னிரண்டுவருஷம் வனவாசமும், ஒருவருஷம் ஸ்வஜநங்களால் அறியப்படாமலிருத்தலாகிற அஜ்ஞாதவாசமுஞ் செய்ய வேண்டும்; இவ்வாறு அஜ்ஞாதவாசஞ் செய்யும்போது அறியப்பட்டால், மீண்டும் பன்னிரண்டுவருஷம் வனவாசஞ்செய்யவேண்டியதே: இவ்வாறு

வசித்துப் பதின்மூன்றுவருஷங் கழித்து வந்தால், இராச்சியத்தைப் பெறலாம்' என்ற ஏற்பாட்டுடன் சூதாடச்சொல்ல, பீஷ்மன் துரோணன் முதலியோர் பலரும் தடுக்கவும் கேளாமல் தருமன் அந்நிபந்தனைத்திற்கு உடன்பட்டுச் சூதாடித் தோற்க, பின்பு பாண்டவர்களெல்லாரும் பலவாறாகப் பிரதிஜ்ஞைசெய்து திருதராட்டிரன்முதலியோரிடத்து விடைபெற்றுக் காடுசென்றனரென இவ்விடத்து முதனூல் கூறும். (௨௭௫)

[இதுவும் அது.]

௨௭௬.—(இ - ள்.) நீவிர் ஐவரும் - நீங்கள் ஐந்துபேரும், அரிவையோடு - திரௌபதியுடனேகூட, அகன்று - (நாட்டை) விட்டுப் புறப்பட்டு, அடவி எய்தி - காட்டைச்சேர்ந்து, - அங்கண் - அவ்விடத்தில், சுரர் தினம் ஈராறு - தேவர்களுடைய பன்னிரண்டுநாள் [பன்னிரண்டுவருஷகாலம்], துன்னுதிர் - வசிப்பீர்களாக; (பின்பு), மன்னும் நாட்டின் - (பலவகைவளங்களும்) பொருந்திய நாட்டிலே. ஒருவரும் அறியா வண்ணம் - ஒருத்தர்க்கும் தெரியாதபடி, ஒரு தினம் - ஒருநாள் [ஒருவருஷகாலம்], உறைதிர் - வசிப்பீர்களாக; பின்உற - (இவ்வாறு பதின்மூன்றுவருஷமும்) கழித்த பிறகு, உங்கள் - உங்களுடைய, பெரு விறல் அரசும் - மிக்கபராக்கிரமத்துடனாளப்படுகிறஇராச்சியத்தையும், வாழ்வும் - செல்வவாழ்க்கையையும், பெறுதிர் - பெற்றுக்கொள்வீர்களாக, என்றான் - என்றுவிவரித்துக் கூறினான், (துரோணன்).

துரோணன், கீழ்ச்செய்யுளில் 'உங்களுலகினையிழந்து சின்னாள் வரை செறிகானில்வைகிவருவதே வழக்கு' எனக் கூறியதை இச்செய்யுளால் விரித்துக் கூறுகின்றான். தலைகூறும்பொழுது 'பன்னிரண்டுவருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஜ்ஞாதவாசமுஞ் செய்துவந்தால், பிறகு இராச்சியத்தையும் செல்வத்தையும் பெறலாம்' என்றுகூறினால், கேட்பதற்கு அஞ்சத்தக்கதாகவிருக்குமென்றுகருதி, அங்ஙனங்கூறாமல் 'இப்பொழுது நீங்கள் வனவாசஞ்செய்யவேண்டியது தேவமானத்தாற் பன்னிரண்டுதினமும், அஜ்ஞாதவாசஞ்செய்யவேண்டியது தேவமானத்தால் ஒருதினமுமே: நெடுங்காலமல்ல' எனப் பாண்டவர்கட்குத் தேறுதலுண்டாகுமாறு திருதராஷ்டிரன் கருத்தின்படியே கூறினனென்க. மனிதர்க்கு ஒருவருஷம் தேவர்கட்கு ஒருதினமாமென்பது, நூற்றுணிபு. அரிவை - பெண்; இங்கே, திரௌபதி.

நீவிர்ஐவரும் - முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி: 'நீவிரைவிரும்' என்றிருப்பின், வழாநிலையாம். துன்னுதிர், உறைதிர், பெறுதிர் - ஏவற்பன்மைமுற்றுக்கள். அடவீ, ஸுரர், திநம் - வடசொற்கள். (௨௭௬)

[வீடுமன்முதலியோர் அவ்வார்த்தைக்கு உடன்பட்டுக் கூறுதல்.]

௨௭௭.—(இ - ள்.) (பின்னும்), 'மறைந்து உறை நாளின் - (நீங்கள்) மறைந்துவசிக்கிற [அஜ்ஞாதவாச] காலத்தில், நும்மை - உங்களை, மற்றுஉளோர் - பிறர், ஈண்டு உளார் என்று அறிந்திடின் - இங்கேயிருக்கின்றார்களென்று (நிச்சயமாக) அறிந்துவிட்டால், மீண்டும் - மறுபடியும், இ ஆறு அரணியம் அடைதிர் - இந்தப்பிரகாரமே காட்டுக்குப் போகக்கடவீர்கள்,' என்றான் - என்றுங்கூறினான் (துரோணன்); பிறந்த - (துரோணனது வாயினின்று) வந்த, இ மாற்றம் - இந்தவார்த்தையை, பிதாமகன் முதல் ஆய் உள்ளோர் கேட்டு - (பாண்டவர்கட்குப்) பெரியபாட்டனான பீஷ்மன் முதலியோர் கேட்டுணர்ந்து, 'இதனின் சிறந்தது ஒன்று இல்லை - இவ்வாறுசெய்வதனினும் சிறந்தசெயலொன்றுமில்லை: இசைந்ததே செய்ம்மின் - (திருதராஷ்டிரன்) உடன்பட்ட இதையே செய்யுங்கள்,' என்றார் - என்று (பாண்டவர்கட்குக்) கூறினார்கள்.

கீழ்ச்செய்யுளில் 'ஒருவருமறியாவண்ணம் ஒருதினமுறைதிர்' என்று கூறிய அஜ்ஞாதவாசத்தின் தன்மையை இச்செய்யுளின்முதலிரண்டடிகளினால் துரோணன் விவரித்துக்கூறினான்; அஜ்ஞாதவாசத்திலே பிறர் 'இவர்கள் பாண்டவர்' என்று உங்களை அறிந்துவிடுவாராயின், அப்பொழுது நீங்கள் மீண்டும் முன்போலவே பன்னிரண்டுவருஷம் வனவாசமும், ஒருவருஷம்

அஜ்ஞாதவாசமுஞ் செய்யவேண்டுமென நிபந்தனை கூறியவாறு. கீழ்த் துரியோதனன் தருமபுத்திரனைவென்றபோது இராச்சியத்தைவிட்டிட்டுக் காட்டுக்கே சென்றுவிடவேண்டுமென்று கூறியதனினும், பன்னிரண்டுவருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஜ்ஞாதவாசமுஞ் செய்தால் மீண்டும் இராச்சியத்தைப்பெறலாமென்ற இது பாண்டவர்களின் நன்மையையுத்தேசித்துக் கூறியதாயிருத்தலால், 'சிறந்ததொன்றிதனினில்லை' எனப் பீஷ்மன்முதலியோர் கொண்டாடிக்கூறுவாராயின ரென்க. இசைந்ததே செய்ம்மின் என்பதற்கு—'இசைந்ததே - (இது) பொருத்தமுடையதே; செய்ம்மின்-(இவ்வாறே நீங்கள்) செய்யுங்கள்' என்றும், 'இசைந்து - (நீங்கள்) மனமொப்பி, அதே - (துரோணன் கூறிய) அதனையே, செய்ம்மின்' என்றும் பொருள் கூறலாம். நாளின் உம்மை என்றும் பிரிக்கலாம். (௨௭௭)

[அடிமைத்தன்மையினின்று நீங்துமாறு சூதாடவேண்டுமென்று திரௌபதி கூறுதல்.]

௨௭௮.—(இ - ள்.) சுரி குழல் அலைய நின்ற தரௌபதி-(முனி)சுருண்ட கூந்தல் அவிழ்ந்தலைந்துகொண்டிருக்க (அங்கே நின்ற திரௌபதி,—சுருதி முந்நூல் வரம் பதி மொழிந்த மாற்றம் கேட்டலும்-வேதத்திற்குஉரியவனும் பூணூலையணிந்தவனும் சிறந்த(அந்தண)குலத்தில் தோன்றிய தலைவனுமான துரோணாசாரியன் கூறிய வார்த்தையைக் கேட்டவுடனே,வணங்கி—;'ஐவர் அரசரும் - (எனது கணவர்களாகிய) அரசகுலத்துத்தோன்றிய பாண்டவரைவரும், எனது மைந்தர் ஐவரும் - எனதுபுதல்வர்கள் ஐந்துபேரும், யானும் - நானும், இன்று - இப்பொழுது, உரிமை எய்த - (அடிமைநீங்கிச்) சுவாதந்திரியத்தைப் பெறுமாறு, மீண்டும் - மறுபடியும்,வெம் சூது ஆடுதல்-கொடியசூதை யாடுவது, உறுதி-நன்மையைத் தரக்கூடியதாம்',என்றாள்—.

திருதராஷ்டிரன்சொற்படி இராச்சியத்தை மீளக்கொடுத்தற்கு இசையாத துரியோதனாதியர் 'பாண்டவர்களை அடிமைத்தன்மையினின்று நீக்குவதற்கும் உடன்படாதவரேயாவ ராதலால், அடிமையாகிய பாண்டவர்கள் தமதுதலைவரிடத்திற் பணிவிடைசெய்வதே முறைமையாகு மாதலாலும், திருதராஷ்டிரராசனது கட்டளைப்படியே அடிமையாகிய பாண்டவர்கள் வனத்திற்குச் சென்றாலும் குறித்தகாலங்கழித்து மீண்டுவந்தபோது 'அடிமையாகிய உங்கட்குச் செல்வத்தில் உரிமையில்லை; உங்கட்குத் தலைவர்களானஎங்களிடத்து அடிமை செய்துகொண் டிருப்பதே உங்கள்கடமையாகுமன்றி நீங்கள் இராச்சியம்முதலிய செல்வவாழ்க்கைகளைப் பெற விரதில்லை; நாங்கள் சம்மதித்து உங்களை அடிமைத்தன்மையினின்றும் விடுவிக்கவில்லையே!' எனத் துரியோதனாதியர் கூறுவார்களாதலாலும், திரௌபதி தங்களை அடிமைத்தன்மையினின்று நீக்குமாறு சூதாடவேண்டுமெனக் கூறின ளென்க. யுதிஷ்டிரனுக்கு ப்ரதிவிந்த்யனென்பவனும், வீமசேனனுக்கு ஸுதஸோமனென்பவனும், அருச்சுனனுக்கு ஶ்ருதகீர்த்தியென்பவனும், நகுலனுக்கு ஶதாநீகனென்பவனும்,சகதேவனுக்கு ஶ்ருதஸேநனென்பவனு மெனத் திரௌபதியினிடத்தில் ஐவர்க்கும் ஐந்துமக்கள் தோன்றினரென அறிக; இவர்கள், உபபாண்டவரெனப்படுவர். 'எனதுமைந்தரைவர்' என்றது,மற்றும் சுபத்திரைமுதலியோரிடத்துப் பிறந்திருந்த அபிமந்யு முதலியவரையும் உபலட்சணத்தாற் குறிக்கு மென்னலாம். மூன்றிழைசேர்த்து ஓரிழையானது மூன்றுகொண்டது ஒருவடமாக, அங்ஙனம் மூன்றுவடங் கொண்டு ஒரு பூணூல் செய்யப்படுவதனால், அது 'முந்நூல்' என்றும், 'முப்புரிநூல்' என்றும் சொல்லப்படும். ஶ்ருதி, வரபதி - வடசொற்கள். (௨௭௮)

[திரௌபதியினது வார்த்தையின்படி தருமன் மறுசூதாட, சபையிலிருந்த மன்னவர் காணுதல்.]

௨௭௯.—(இ - ள்.) தருமனும் - தருமபுத்திரனும், அங்கு - அப்பொழுது,தையல் உரைத்த மாற்றம் கேட்டு - திரௌபதிகூறிய வார்த்தையைக்

கேட்டு,—'நாங்கள்—, கைஅறு தொண்டர் ஆகி கான் புகல் - சுவாதந்திரிய மற்ற அடிமைகளா யிருந்துகொண்டு காட்டிற்குச்செல்லுதல், வழக்கும் அன்று - முறைமையுமன்று; ஆல் - ஆதலால், ஐயுறாது - மனங்கலங்காது, இன்னம் - இன்னமும், ஒருகால் - ஒருதரம், அருஞ் சூது - (வெல்லுவதற்கு அரிய) சூதை, ஆடுதும் - ஆடுவோம்', என்றான் - என்றுகூறிச் சூதாடத் தொடங்கினான்; (அப்பொழுது), மெய் உற இருந்த வேந்தர் - சாக்ஷியாக விருந்த அரசர்கள்,மீளவும் - மறுபடியும், காணல் உற்றார் - (அச்சூதாட்டத்தைப்) பார்க்கலானார்கள்; (எ - று.)

'நாங்கள்மீண்டுவந்தபிறகு இராசசியத்தைக்கொடுப்பதற்குத்துரியோதனாதியர்கள் ஏதாவதுபோக்குச்சொல்லக்கூடு மென்பதுமாத்திரமன்று;அடிமைகள் தலைவரதுவிருப்பின்படி ஊழியஞ்செய்துகொண்டிருக்கவேண்டுமேயன்றி, சுவதந்திரமுள்ளவர்போலத் தங்கள்மனத்திற்குவிருப்பமானதொரு காட்டிற்குச்செல்லுதல் நீதிமுறைமைக்குந் தக்கதன்றாம்; ஆதலால், சூதாடி எமது அடிமைத்தன்மையைப் போக்கிக்கொள்வதே, இப்பொழுது நாங்கள் செய்யவேண்டிய காரியம்' என்று சொல்லித் தருமன் மீண்டுஞ் சூதாடத் தொடங்க, முன்புசூதாடும்போது சபையிலிருந்துகண்ட அரசர்களெல்லாரும் மீண்டும் சாட்சியாகப் பார்க்கலானார்களென்பதாம். கான் - கானகம்என்ற வடசொல்லின் விகாரம். ஐயுறாது-ஐயமுறாது என்பதன் தொகுத்தல்.(உஎக)

[தருமபுத்திரன் திரௌபதியின்மொழிப்படியே திருமாலின்திருநாமங்களைச் சொல்லுதலும், தன்புண்ணியங்களைப் பந்தயம்வைத்தலும்.]

உஅ0.—(இ - ள்.) தன் பெருந் தேவி சொல்ல - தனது சிறந்த பட்டமகிஷியாகிய திரௌபதி ('சூதாடும்போது திருமாலின் துவாதசநாமங்களைச் சொல்லி யேத்தி ஆடவேண்டும்' என்று தருமனுக்குச்) சொல்ல, (அவ்வாறே),—சத்தியவிரதன் தானும் - உண்மைபேசுதலையே விரதமாகக் கொண்டவனான தருமபுத்திரனும்,—பத்தியால் வணங்கி - பக்தியோடு(திருமாலைக்குறித்து)நமஸ்கரித்து, மாயன் பன்னிருநாமம் ஏத்தி-திருமாலினது துவாதசநாமங்களையும் எடுத்துத்துதித்து, ஒத்த வெள் கவறு வாங்க - (ஒன்றற்கொன்று) சமமான வெண்ணிறமுள்ள பாசிகைகளை (ஆடுமாறு தன் கையில்) எடுக்க,— (அப்பொழுது),— சகுனி—, ஒட்டம் யாது என்றான் - ('இந்தஆட்டத்தில் நீ வைக்கும்)பந்தயம் என்ன?" என்று வினவினான்; அவனும் - அத்தருமபுத்திரனும், புத்தியால் - ஆலோசனையோடு, யான் செய் புண்ணியம் அனைத்தும் - ('இப்பொழுது யான் வைக்கும் பந்தயமாவது) நான் (இதுவரையிலுஞ்) செய்துள்ள எல்லாப்புண்ணியங்களுமே', என்றான் - என்று கூறினான்; (எ - று.)

'யான் சயித்தால் நாங்கள் அடிமையினின்று நீங்கினவர்களாவோம்; நீ சயித்தால், துரியோதனன் எனதுபுண்ணியமெல்லாவற்றையும் பெறக்கடவன்'என்று தருமன் பந்தயம் வைத்தனனென்க. வெற்றிபெறவிரும்புபவர் கடவுளை முன்னிட்டுக்கொண்டே காரியத்தைத் தொடங்கவேண்டுமென்பது, இச்செய்யுளின் முன்னிரண்டடிகளிற் போதரும். திரௌபதியின் சொற்படியே சூதாடத்தொடங்கியபோது சகுனி பந்தயமென்னவெனக் கேட்டதற்கு, உடனே தருமன் தனது ஆலோசனைத்திறத்தால் விடை கூறினனென்பார், 'புத்தியால்' என்றார். திருமாலின் பன்னிருநாமங்களாவன - கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுஸூதனன், த்ரிவிக்ரமன், வாமநன், ஸ்ரீதரன், ஹ்ருஷீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்பன. ஸத்யவ்ரதன், தேவீ, பக்தி, நாமம், ஸகுநி, புத்தீ, புண்யம் - வடசொற்கள். பத்து + இரண்டு=பன்னிரண்டு; [நன் - உயிர் - சஅ.] பன்னிரண்டு + நாமம் = பன்னிருநாமம்; [நன் - உயிர் - ருக.] (உஅ0)

[தருமபுத்திரன் வெல்லுதல்.]

உஅக.—(இ - ள்.) உருட்டிய - (தருமபுத்திரன்)உருட்டியாடிய, கவறு-

பாச்சிகையானது, நேமி உடையவன் அருளினாலே - (சுதரிசனமென்னும்) சக்கரத்தை ஆயுதமாகக்கொண்டுள்ள திருமாலினது திருவருளினால், மருட்டிய சகுனி எண்ணின் வழிப் படாது - மாயஞ்செய்த சகுனியினது இஷ்டப்படி உருண்டுவிழாமல், உருண்ட காலை - (தருமனது விருப்பத்தின்படியே) உருண்டுவிழுந்த சமயத்தில்,— தெருட்டிய உணர்வின் மிக்கோன் - தெளிந்த அறிவு மிக்குள்ளவனாகிய தருமபுத்திரன்,— இருட்டிய விழியான் மைந்தன் இதயமும் இருண்டு சோர - இருளின் தன்மையையடைந்துள்ள கண்களையுடையவனான [குருடனான] திருதராஷ்டிரனது புதல்வனாகிய துரியோதனனது மனமும் மயங்கித் தளரும்படி, செப்பிய யாவும் வென்றான் - பந்தயமாகக்குறிக்கப்பட்ட எல்லாவற்றையுஞ் சயித்தான்; (எ - று.)

கடவுளருளை முன்னிட்டுக்கொண்டு ஒருகாரியஞ் செய்பவர் வெற்றி பெறுவரென்பது, இதனாற் பெறப்படும். பஞ்சபாண்டவரும் திரௌபதியும் புதல்வரைவரும் முதலியவர்களுடைய அடிமை எதிரிகள்வைத்த பந்தயப் பொருளாகவும், தனதுபுண்ணியம் தனதுபந்தயப்பொருளாகவுங் கொண்டு தருமன் சூதாடித் திருமாலருளால் வென்றனனென்பதாம்.

காலை - காலமென்பதன் விகாரம். தெருட்டிய = தெருண்ட: தன்வினைப்பொருளில் வந்த பிறவினை; இனி, திரௌபதியினால் தெளிவிக்கப்பட்ட எனப் பிறவினை யாகக் கூறலுமாம். (உஅக)

[தர்மிமார்முதலியவருடன் தருமபுத்திரன் திருதராட்டிரன்முதலியோரிடத்து விடைபெற்றுக் காட்டிற்குச் செல்லுதல்.]

உஅஉ.—(இ - ள்.) செழு நிலம் உடைய கோமான் - பலவளங்களும்நிறைந்த பூமிக்குத் தலைவனான யுதிஷ்டிரராஜன், வென்று - (அந்தமறுசூதில் தான்) சயித்து, தன் இளைஞரோடும் - தனது தம்பியராகிய (வீமன்முதலிய) நால்வருடனும், மேதகு புதல்வரோடும் - மேன்மையை யடைந்துள்ள புத்திரர்களுடனும், மன்றல் அம் தெரிவையோடும் - (தம்மால்) மணஞ்செய்துகொள்ளப்பட்ட அழகிய திரௌபதியுடனும், மற்று உளோர்தங்களோடும் - மற்றும் தன்னைச்சேர்ந்த பரிவாரங்களுடனும்,—அன்று அப்பொழுது,— தன் குரவர் பொன் தாள் அன்புடன் வணங்கி - (திருதராஷ்டிரன்முதலியவர்களான) தனதுபெரியோரது அழகியதிருவடிகளை அன்போடு நமஸ்கரித்து, கானம் சென்றனன் - காட்டுக்குச் சென்றான்; (எ - று.)

தருமபுத்திரன், வனவாசஞ்செய்யுமாறு கருதி, திருதராட்டிரன் வீடுமன் விதுரன் துரோணன் அசுவத்தாமன் கிருபன் முதலிய பெரியோரிடத்து விடைபெற்று, விதுரனது விருப்பத்தின்படியே தாயான குந்திதேவியை அவ்விதுரன்மாளிகையிலேயே விட்டிட்டு, தானும் தனது தம்பியர் நால்வரும், தமது மனைவியான திரௌபதியும், தமது புரோகிதராகிய தௌமியமுனிவருமாகக் காட்டுக்குச் சென்றனனென்ற வரலாற்றை முதனூலால் அறிக. திரௌபதியின் வேண்டுகோளின்படி தருமன் ஆடிய மறுசூதால் திரௌபதியின்புதல்வர்கள் தாஸபுத்திரர் [அடிமைகளின்பிள்ளைகள்] என்றுபிறர்எடுத்துச்சொல்லக்கூடிய சிறுமொழியினின்றும்நீங்கி மேன்மைப்பட்டார்களாதலால், அவரை 'மேதகுபுதல்வர்' என்று சொன்னலாம். என்ப, மன், ஓ - ஈற்றசைகள். (உஅஉ)

[அப்பொழுது துஷ்டசதுஷ்டர்கள் தவிர, மற்றையாவரும் வருந்துதல்.]

உஅங.—(இ - ள்.) கருணை ஒழிவு செய் நால்வர் உள்ளமும் ஒழிய - கருணையை நீங்கியுள்ள துஷ்டசதுஷ்டர்களது மனமும் தவிர, வழு அறு ஏனை மன்னர் உள்ளம் மம்மரோடு அயர்ந்து விம்ம - குற்றமற்ற மற்றையரசர்களது மனம் மயக்கங்கொண்டு தளர்ந்து புலம்பவும்,—குழவி பால் நுகர்தல் இன்றி - குழந்தைகளும் பாலுண்ணுது தவிர்ந்திருக்கவும்,—கொற்றம் மா நகரி மாக்கள் - வெற்றிபொருந்திய பெரிய அவ்வத்தினபுரியிலுள்ள ஜனங்கள், தழல் என உயிர்த்து மாழ்கி - நெருப்புப்போல (உஷ்ணமாக)ப்

பெருமூச்செறிந்து வருந்தி, தனி தனி புலம்பல் உற்றார் - தனித்தனியே புலம்புவாராயினர்; (எ - று.)

அறிவுநிரம்பாதகுழந்தைகளும்வருத்தமிகுதியாற்பாலுண்ணாதிருந்தன எனவே,மற்றையோரதுவருத்தம் சொல்லாமலேயமையுமென்பது கருத்து. இதனை, "பான்மறந்தன பசுங்குழவி" என்பதனோடு ஒப்பிடுக. தமதுநகரத்து அரசன் வெற்றிபெற்றிருக்கவும் அந்நகரத்துச்சனங்கள் அவனது கொடுங்கோன்மையால் அவனிடத்து வெறுப்புற்றிருந்தன ரென்பது தோன்ற, 'கொற்றமாநகரியாக்கள் தழலெனவுயிர்த்துமாழ்கி' என்றார். (௨௮௩)

[தருமபுத்திரனது நிலைத்தின் சிறப்பு.]

௨௮௪.—(இ - ள்.) கூட்டிடை - இந்தவுடம்பில், இன்பம் துன்பம் தொழும் பயன் துய்த்து - மிக்கஇன்பத்தின்பயனையும் துன்பத்தின்பயனையும் அநுபவித்து மாறி-(கருமவசப்பட்டிருக்கும்அந்நிலைமையினின்று)நீங்கி, வீட்டிடை புகுதும் போது - முத்தியுலகத்திற் சென்றுசேரும்பருவத்தை யடைந்துள்ள, மெய் மகிழ் - உண்மையாகமகிழ்கின்ற, விபுதர் - முக்தர்களை,போல்வான் - ஒப்பவனான தருமபுத்திரன்,—நாட்டிடை எல்லை - நாட்டினிடத்திலுள்ள எல்லைமுழுதும். நறு மலர் பொன் தாள் - வாசனையுள்ள தாமரைமலர்போன்ற(தனது)அழகிய பாதங்கள்,சிவக்க-(அடிவைத்துஊன்றுதலாற்) செந்நிறமடைய, ஏகி - நடந்துசென்று, காட்டிடை புகுந்த போதும் - காட்டிற்குச் சென்றபொழுதும், கலக்கம் அற்று - மனத்திற் கலக்கமொழிந்து. உவகை கூர்ந்தான் சந்தோஷம்மிககவனானான்; (எ - று.)

மோக்ஷத்தைப்பெறும் பக்குவநிலையை யடைந்த பெரியோர் தமக்குப் பரகதி எப்பொழுதுகிடைக்குமென்று எதிர்பார்த்துக்கொண்டு உடலைத் தியானித்தலால் எப்பொழுதும் பரிபூர்ணாநந்தயராய் இவ்வுலகத்துஇன்ப துன்பங்களை ஒருபொருட்டாக மனத்திற் கொள்ளாமலிருப்பதுபோல, தருமபுத்திரனும் இவ்வுலகஇன்பதுன்பங்களை ஒருபொருட்டாக நினையாதிருந்ததனால்,அவனை,'கூட்டிடை இன்பதுன்பக்கொழும்பயன்றுய்த்துமாறி, வீட்டிடைப் புகுதும்போது மெய்ம்மகிழ் விபுதர் போல்வான்' என்றார்: தருமபுத்திரன் இன்பதுன்பங்களை ஒரு நிகராக மதிப்பவனென்க. இவ்வாறு இருப்பவர், 'ஜீவந்முக்தர்' எனப்படுவர்; "அரசனோடிருந்துலகவரசாட்சிபுரிந்திடினு மங்கையேற்றுத, தெருவுதோறலைந்திரந்துதின்றிடினு மிளம்பருவத்தெரிவைமாரைப், பிரியாமலிருந்திடினும் பிரிந்துதவம்புரிந்திடினும் பேசிறதெல்லாம், விரிசீவன்முத்தருக்கு கிகுடம்பாடேயன்றி யொன்றும்விரோதமில்லை" என்பதனால் அவர்களின்தன்மை இன்னதென்பதை யுணர்க. யானைமுதலியவாகனங்களின்மீது ஊர்ந்துசெல்லுந்தருமபுத்திரன் இப்பொழுது கால்களால நடந்துசென்றானென்பதாம். இதற்குமுன் இவ்வாறு நடந்துசெல்லும்பயிற்சியில்லாமையால், பாதங்கள் செந்நிறமடைந்தன."குடம்பைதனித்தொழியப்புட்பறந்தற்றே,யுடம்போடுயிரிடைநட்பு," "சேக்கைமரனொழியச் சேணீங்குபுட்போல,யாக்கைதமர்க்குஒழிய" என்றபடி, பறவைகள் சிலகாலம் தங்குவதற்கு ஏற்ற கூடுபோல, இவ்வுடம்பு; உயிர் சிலகாலம் கூடியிருத்தற்கு இடமாய்நிற்றலால், 'கூடு' என்றே குறிக்கப்பட்டது; "கூடுவிட்டு இங்கு ஆவிதான்போயினபின்பு" என்றார் ஔவையாரும். இச்செய்யுள்,"இப்பொழுதெம்மனோராலியம்புதற்கெளிதேயாருஞ், செப்பருங்குணத்திராமன் றிருமுகச்செவ்விநோக்கி, லொப்பதேமுன்புபின் பவ்வாசகமுணரக்கேட்ட. வப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா" என்ற கம்பராமாயணத்தோடு ஒருபுடையொத்ததாம். (௨௮௪)

சூதுபோர்ச்சருக்கம் முற்றிற்று.

---

சபாபருவம் முற்றுப்பெற்றது.

---

# வில்லிபுத்தூராழ்வார் வரலாறு. *

வில்லிபுத்தூராரென்பவர், தமிழில்மகாபாரதம்பாடியஒருமகாகவி. இவர் பிராமணசாதியிற்பிறந்தவரென்பது, இந்நூற்சிறப்புப்பாயிரத்தில் "வண்ண நான்கினு முயர்ந்துளோ னொருமுனி வந்தான்" என்றதனால் விளங்கும்.

இவருடைய மதம் வைஷ்ணவ மென்பது, சிறப்புப்பாயிரத்தில் "பைந் துழாய்முடிப் பரமனைப் பலகவித்துறையுஞ், சிந்தையான்மொழிந் தன்பர் தந்திருவுளம்பெற்றோன்" என வருதலினாலும், இவர் இப்பாரதத்தின்முதலி லும் இந்நூற்சருக்கங்களின் தொடக்கத்திலும் ஸ்ரீமகாவிஷ்ணுவின்விஷய மாகவே பலவாறு கடவுள்வாழ்த்துக் கூறியுள்ளதனாலும், "எங்கள்மாதவன்" என்று நூலைத் தொடங்கியிருப்பதனாலும், வில்லிபுத்தூராழ்வா ரென்று திருநாமமுடைமையாலும், தெளிவாகத் தெரியவருகின்றது.

இவர் ஒன்பதாம்போர்ச்சருக்கத்துக் காப்புச்செய்யுளில் "ஓராறுபேத சமயங்களுக்கு முருவாகிநின்ற வொருவ, னீராறுநாம முறைசெய்து மண் கொ டிவோர்கள்காணு மிமையோர்" என்று துவாதசோர்த்துவபுண்ட்ரத் தைச் சிறப்பித்துக்கூறியிருத்தலால், இவர் திருமண்காப்புச்சாத்தும் ஸ்ரீவை ஷ்ணவரென விளங்கும். இன்னும், இவர் திருமாலினிடத்துமாத்திரமே யன்றி அப்பெருமானடியார்களுட்சிறந்தவரான ஆழ்வார்களிடத்தும் ஈடு பாடுடையவ ரென்பதை, பதினேந்தாம்போர்ச்சருக்கத்துக்காப்பில் "கொத தவிழ்த்தசோலைமன்னு குருகையாதிநெஞ்சிலே, வைத்த முத்திநாதன்" என் று நம்மாழ்வாரையும், பத்தாம்போர்ச்சருக்கத்துக் காப்பில் "கலிய னெங் கள் மங்கையாளி கண்டுகொண்ட நாமமே" என்று திருமங்கையாழ்வாரை யுங் கூறியுள்ளதனாற் காண்க.

இவர் திருவவதரித்த ஊர், நடுநாட்டிலுள்ள சனியூ ரென்பது.

நடுநாடென்று சொல்லப்படுகிற திருமுனைப்பாடிநாட்டிற் சனியூரிலே பிராமணசாதியிலே வைஷ்ணவமதத்தில் வீரராகவாசாரியரென்பவர்க்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்த இவ்வில்லிபுத்தூரார், இளமையிலேயே நல்லாசிரியரையடுத்துக் கல்விகற்று, இயல் இசை நாடகம் என்னும் முத் தமிழிலும் மிகவல்லவ ராய், வடமொழியிலும் மிக்கதேர்ச்சி பெற்று, ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகைக்கவிகளையும் மிகஎளிதில் அமிழ்தினும்இனியனவாகப் பாடவல்லராய், சேரசோழபாண்டிய ரென்னுந் தமிழ்நாட்டுமூவேந்தர்களாலும் மிக்க சிறப்புடன் விரும்பியழைக்கப்பட்டு ஆங்காங்குச்சென்று தமதுகல்வித்திறத்தைப் பலவகையாலுங்காட்டி அவர் களைக் களிப்பித்து, அவர்கள் அன்போடு அபிமானித்து மிகுதியாகவழங்கிய சிறந்த பல பெரும்பரிசுகளைப் பெற்று, பற்பலகவித்துறைகள்பாடித் திரு மாலை இரவும்பகலும் எப்பொழுதுந் துதித்துக்கொண்டு, தமிழ்நாடு முழு வதிலும் தமது கல்விப்பெரும்புகழைப் பரவச்செய்துவந்தார். அங்ஙனம் வருகையில், முற்கூறிய திருமுனைப்பாடிநாட்டிலே வக்கபாகையென்னும் இராசதானியில் வீற்றிருந்து செங்கோல்செலுத்தி, தலை இடை கடை யென்னும் மூவகைச் சங்கத்திலே வளர்ந்துவந்த தமிழ் பின்பு பங்கத்தை யடையாதபடி நான்காவதொரு சங்கம் போல அதனைப்பாதுகாத்து, அருங் கவிப்புலவர்களை அன்புடன் ஆதரித்துவந்த வள்ளலும், கல்வி அறிவு ஒழுக் கங்களாலும் செல்வம் அதிகாரம் முதலிய நலங்களாலுங் குறைவின்றி மிகச் சிறப்புற்றுவிளங்கியவனுமாகிய கொங்கர்குலத்துத் தோன்றிய வரபதியாட் கொண்டா னென்கிற அரசன், இவ்வில்லிபுத்தூராரது கல்வி கேள்வித் திற மைகளையும் அடக்கம் ஒழுக்கம் அன்பு அருள் வாய்மை முதலிய நற்குணங் களையுங் கேள்வியுற்று அறிந்து 'இக்குணங்களெல்லாம் ஒருவரிடத்திலே

* இவ்வரலாறு, இவர்குமாரராகிய வரந்தருவார் [வரதாசாரியர்] இரு பத்திரண்டுசெய்யுள்களாற் செய்துள்ள சிறப்புப்பாயிரத்தைப் பிரதான ஆதாரமாகக் கொண்டும், மற்றுஞ்சில ஆதாரங்களால் வேறு சில விஷயங் களைச் சேர்த்தும் ஒருவாறு கூறப்படுகின்றது.

ஒருங்குஅமைந்திருப்பது அருமைஅருமை!' என்று மிகஆச்சரியமுற்று இவரை வரவழைத்து அநேக சன்மானங்கள் செய்து தனது ஆஸ்தானபண்டிதராக அமைத்துவைத்து, ஒருநாள் இவரைநோக்கி 'உமக்கும் நீர்எழுந்தருளியிருக்கின்ற இந்தஎனது சமஸ்தானத்திற்கும் உலகமுள்ளவளவும் அழியாப்பெருங்கீர்த்திஉண்டாகி நிலைபெறும்படி, வடமொழியில் ஸ்ரீவேதவியாசமகாமுனிவரால் விரித்துரைக்கப்பட்ட மகாபாரதசரித்திரத்தைத் தமிழ்பயில்வோரனைவரும் ஓதியுணர்ந்து உய்யுமாறு செந்தமிழில் விருத்தப்பாடல்களினால் ஒருபெருங்காப்பியமாகப் பாடித்தந்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, இவர் அவ்வேண்டுகோளுக்கு இசைந்து (இதிகாசமிரண்டனுட் பெரியதாகிய)மகாபாரதத்தை மகாகாவியமாகச் சொற்சுவைபொருட்சுவைகள் மிக்கு விளங்கும்படி நல்லநடையிலே பாடியருளினார். இதுநிற்க:

இவர்பாரதம்பாடியகாரணம், இன்னும்இரண்டுவகையாகவுங் கூறப்படும்.

அவற்றுள், முதலாவது வருமாறு:—இந்தவில்லிபுத்தூரார்க்கும் இவர் தம்பியார்க்கும் தாயபாகத்தைப்பற்றி விவாதமுண்டாக, அவ்விஷயத்தை அவர்கள் அரசனிடம்அறிவித்தனர்; அரசன் இவரதுகல்வித்திறத்தை முன்னமே கேள்வியுற்று அறிந்துள்ளவனாதலால் 'இவ்வளவு கற்றறிந்தவர்க்கும் உண்மையறிவு உண்டாகவில்லையே!' என்று மிகவும்விசாரமடைந்து 'அவ்வுண்மையறிவை இவர்க்கு உண்டாக்குவதற்கு ஏற்றஉபாயம், (தாயபாகங் காரணமாகத் துரியோதனாதியர் மாறுபட்டு அழிந்த செய்தியைக் கூறும்) மகாபாரதநூலில் இவரைப் பழகும்படி செய்வதே'என்று நிச்சயித்து 'மகாபாரதத்தை நீர் தமிழிற் பாடவேண்டும்: பாடியபின்புதான் உங்கள் வழக்குத் தீர்க்கப்படும்' என்று கட்டளையிட்டான்; உடனே இவர் அவ்வாறே அப்பாரதத்தைப்பாடி அந்நூலின் நீதியிற்கருத்துஊன்றியவராய், பின்பு தாமே தம் தாயபாகத்தில் வெறுப்புற்று, அதனையும் தம்பிக்கே கொடுத்துவிட்டனரென்று கூறுவர் சிலர்.

வேறுசிலர் கூறுமாறு:—இவ்வில்லிபுத்தூரார் தம்மோடு வாதஞ்செய்து தோற்றவர்களது காதுகளைத் தோண்டியறுப்பதோர் ஆயுதத்தைக் கையிற்கொண்டு சென்று ஆங்காங்குஉள்ள பலபுலவர்களையுஞ் சயித்துவருகிறபொழுது திருவண்ணாமலைக்குப் போயினர்; அங்குத்தங்கிய கல்விமான்கள் இவரைக்கண்டும் இவர்செய்கையைக்கேட்டும் அஞ்சியோடிச் சென்று தமது தலைவரும் திருப்புகழ்பாடியவருமாகிய *அருணகிரிநாதரென்னும் பெரும்புலவர்க்குச் செய்தியை அறிவித்தார்கள்; அப்புலவர்பெருமான் வில்லிபுத்தூரரது செருக்கை யடக்கக் கருத்துக்கொண்டு அவரைவருவித்து 'யான் இப்பொழுது நூதனமாகப்பாடுகின்றதொரு நூலுக்கு யான்பாடிவரும்பொழுதே பொருள்கூறிவருவீராயின், உமதுகல்வித்திறம் விளங்கும்'என்று அலக்ஷ்யமாகச் சொல்லினர்; சொல்லவே, இவ்வாசிரியர், கடுஞ் சினங்கொண்டு,தம்மையெதிர்க்கிறஅவரைவென்று அங்கும் தமது வெற்றிக்கொடியை நாட்டக்கருதி, அக்கொள்கைக்கு உடன்பட்டார்; உடனே அருணகிரிநாதர் ஆசுகவியாக நூறுபாட்டில் முருகக்கடவுள்விஷயமாக'கந்தரந்தாதி' என்னும் யமகவந்தாதியைப் பாடத்தொடங்கிப் பாடிவர, வில்லிபுத்தூராரும் உடனுக்குடனே ஒவ்வொரு செய்யுட்கும் பொருள்கூறிவந்து இடையில் ஐம்பத்துநான்காம் பாட்டாகிய

"திதத்தத்தத்தித்தத்திதிதாதைதாததுத்தித்தத்திதா
திதத்தத்தத்தித்ததிதித்தித்ததேதுத்துதித்திதத்தா
திதத்தத்தத்தித்தத்தைதாததிதேதுதைதாதத்து
திதத்தத்தத்தித்தித்திதிதிதிதுதிதிதொத்ததே"

* இவர் பிரபுடதேவமகாராஜாகாலத்திலிருந்தவர்; அவன்காலம் இப்பொழுதைக்கு ஏறக்குறைய [illegible]௦ - வருட[illegible]கு முன்பு.

என்னும்ஒருசெய்யுள்வந்தசெய்யுட்குப் பொருளுரைக்கமாட்டாமற்போன மையால் தோல்வியடைந்து தமதுஆயுதத்தை யெறிந்துவிட்டு அவ்வூரினின்றும் புறப்பட்டுப்போவாராயினர்: போம்வழியிற் சிவாலயமொன்று இருக்க, அது தம்கண்ணிற்படாதபடி தம்மைச்சுற்றித்திரையிடும்படி வில்லிபுத்தூரார் தம்பரிசனங்களையேவிச் சிலகிரந்தனைசெய்து, அதுகேட்டு அளவிறந்த கோபங்கொண்ட அருணகிரிநாதரது சாபத்தாற் கண்ணிழந்து, அச்சாபநீங்குதற்பொருட்டுச் சிவவிஷயமாக ஒருநூல் செய்யும்படி அவரால் ஆஜ்ஞாபிக்கப்பட்டார்; பட்டும் வீரவைஷ்ணவராதலால் தம் மதாபிமானத்துக்குப் பங்கம்வராமல் சிவஸ்துதி சிற்சிலஇடத்து விரவிவரும்படி இப்பாரதத்தைச் சாபநிவிருத்தியின்பொருட்டுப் பாடிக் கண்பெற்றார் என்பது.

இந்த இரண்டுவகை வரலாறுகளும், இந்நூலின் பாயிரத்தோடு மாறுபடுகின்றதனாலும், இவர்மகனார்கூறிய பாயிரத்தை மறுக்கத்தக்க பிரபல ஆதாரமொன்றும் இவ்வரலாறுகட்குஇல்லை யாதலாலும்,இவை யாவராலுந் தகுதியென ஏற்றுக்கொள்ளத்தக்கனவல்ல வென்று தோன்றுகின்றது.

இவர், தம்காலத்திற் கல்விச்செருக்கடைந்திருந்த புலவர்கள் பலரையும் தமது வித்தியாசாமர்த்தியத்தால் வென்று, அவ்வெற்றிக்கு அடையாளமாக, தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் தமதுகையிலே எப்பொழுதும்வைத்துக்கொண்டுள்ளதோர் ஆயுதத்தால் அறுத்துவந்தன ரென்பது,

“ குட்டுதற்கோ பிள்ளைப்பாண்டிய னிங்கில்லை
துறும்பியளவாக் காதைக் துடைந்து தோண்டி
யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டொன்று முடிந்து தலையிறங்கப்போட்டு
வெட்டுதற்கோ கவி யொட்டக்கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே”

என வழங்குந் தனிப்பாடலினால் அறியப்படும்.

ஒருவன்பாடும் பாட்டில் ஏதாவது குற்றங் கண்டால், கண்டவுடனே அவனது தலையில் நறுக்கென்று குட்டுவது, பிள்ளைப்பாண்டியனென்னும் அரசனது செய்கை; அவனிடம் பரிசுபெறவந்த வித்துவான்கள் பலரும், ‘குட்டுப்பட்டாலும் மோதிரக்கையாற்படவேண்டும்’ என்கிறபழமொழியைப் புதுமொழியாக ஞாபகப்படுத்திக்கொண்டு, வந்தவழியே திரும்பிப்போய் மேன்மேற் கல்விகற்க முயல்வது, அவன்காலத்தில் இயல்பாயிருந்ததாம். கவிபாடிவருபவர்களையெல்லாம் சயித்துப் பிடித்துச் சிறைச்சாலையிலடைப்பித்து, தேவி கொலுவிருக்கின்ற நவராத்திரிகாலத்திற் சிறைக்கூடத்திலிருந்து வெளிப்படுத்தி அவர்களை இருவரிருவராகக் குடுமியோடு குடுமி முடிபோட்டு இறங்கிநிற்கத் தேவிமுன்பாக நிறுத்திப் பிடாரிக்குச் சேவகடா வெட்டுவதுபோலச் சற்றும்இரக்கமில்லாமல் அவர்கள்தலைகளைப் பதைக்கப் பதைக்க வெட்டிப் பலிசெலுத்துவது, ஒட்டக்கூத்தனென்னும் புலவரது வழக்கமாம். அவைபோலவே, இவ்வில்லிபுத்தூராரும், வாதஞ்செய்யும்பொழுது எதிரி தோற்றால் அவன்காதில் துறட்டைமாட்டிப் பிடித்திழுத்துக் காதை ஒட்டஅறுத்து,யானையின் மதக்களிப்பை அங்குசத்தால் அடக்குவதுபோல அவர்கள்கல்விச்செருக்கைத் தமது படைக்கலத்தினாலொழிப்பதைத்தமது வழக்கமாக வைத்துக்கொண்டு விருதுகூறிச்சென்று திக்குவிசயஞ்செய்துவந்தார். இவர்காலத்து அரசர்கள் இவரிடத்தில் மிகவும்அன்புவைத்திருந்ததனால், இவர்இங்ஙனஞ்செய்ய இடங்கொடுத்துவந்தார்கள்.

இவருடைய காலம் இப்பொழுதைக்குச் சற்றேறக்குறைய ஐந்நூறு வருஷத்துக்கு முன்பு எனப்படும்.

பாயிரத்தில் "நான்காஞ்சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமல் தலைகண்டானே" என்று இவர்காலத்திலிருந்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனைக் கூறியிருத்தலால், இவர்காலம் கடைச்சங்கத்தார் காலத்துக்குப்பின் என்பது மாத்திரமே தெளிவாகத் தெரியவருகின்றது.

இவர்க்கு வில்லிபுத்தூராரென்றும் வில்லிபுத்தூராழ்வாரென்றும் வழங்கிவருகின்ற பெயர் யாதுகாரணத்தால் வந்தது? பாண்டியநாட்டில் திருநெல்வேலிப்பிராந்தத்திற் பிரசித்தமாகவுள்ள விஷ்ணுஸ்தலமான ஸ்ரீவில்லிபுத்தூரிற் பிறந்தவரா? அன்றி, அங்கு வளர்ந்தவரா? அல்லாக்கால்,அவ்விடத்துவாழ்ந்தவரா? என்றால்,—இக்காரணங்களொன்றுலு மன்று, இவர்க்கு இப்பெயர் வந்தது; பின்னை யென்னையோவெனில்,—வைஷ்ணவசம்பிரதாயத்திற் சிறந்தபக்தர்களென்று சொல்லப்படுகிற ஆழ்வார்கள்பன்னிருவருள் ஒருவரும், பெரியாழ்வாரென்றும் பட்டர்பிரானென்றும் விஷ்ணுசித்தரென்றும் வேறுதிருப்பெயர்களை யுடையவரும், ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்ததனால் வில்லிபுத்தூராழ்வா ரென்று வழங்கப்படுபவரு மாகிய பாகவதசிகாமணியினுடைய இத்திருநாமத்தையே தந்தைதாயர்கள் இவர்க்குப் பெயராகஇட்டு வழங்கினார்க ளென்று உணர்க; (பரிசுத்திகரமென்கிறகாரணத்தால், கடவுள்பெயரும் அடியார்களின்பெயரும் மனிதர்க்கு இட்டு வழங்கப்படும்.) இவருடைய தந்தைதாயர் பெரியாழ்வார்பக்கல் மிக்கபக்தியுடையராய் அவர்க்குவழிபாடுசெய்ய, அவ்வாழ்வாரருளால் இம்மகன் பிறக்க,இக்குமாரனுக்கு அவ்வாழ்வார்பெயரையிட்டன ரென்னலாம். அல்லது,அந்தப் பெரியாழ்வார் இளமையிலே எவரிடத்தும் யாதொருநூலும் படியாதவராயிருந்தும் பின்பு பகவானருளாற் பெரியதிவ்வியப்பிரபந்தம் பாடவல்ல மகாபண்டிதராய்விட்டதுபோல, இவரும் தெய்வகடாக்ஷம்பெற்ற வரகவி யென்கிற காரணம்பற்றி, இவர்க்கு வில்லிபுத்தூராழ்வாரென்றுபெயர்வந்த தென்றுங் கொள்ளலாம். (ஆழ்வாரென்பதற்கு-எம்பெருமானுடைய திருக்கலியாணகுணகணங்களாகிய பெருங்கடலில் அமிழ்ந்து நெஞ்சுருகி ஈடுபடுபவ ரென்று பொருள். இப்பெயரால் மற்றுஞ்சிலபக்தர்களை வழங்குவதைப் பரதாழ்வான், சத்துருக்கனாழ்வான், பிரகலாதாழ்வான்,கஜேந்திராழ்வான், சுதரிசனாழ்வான், கம்பநாட்டாழ்வார் முதலிய பெயர்களிலுங் காண்க.)

விஷ்ணுவின் அம்சாவதாரமாகிய கிருஷ்ணனுடைய சரித்திரம் மகாபாரதத்தில் இடையிடையே வருகின்றதென்ற சிறப்புப்பற்றியே இவ்வாசிரியர் பாண்டவசரித்திரத்தைப் பாடுதற்கு உடன்பட்டுப் பாடினார்; இது,

" முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கு
மென்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்"

என்று இவர்தாமே தற்சிறப்புப்பாயிரத்திற் கூறியிருத்தலாற் பெறப்படும். (வேதவியாசபகவானும் வடமொழிமகாபாரதத்தில்இவ்வாறேகூறியிருக்கின்றார். இனி, இச்செய்யுளின்மூன்றாமடியின்முதலில் 'மன்னுமாதவன்' என்பதை மன்னும் மாதவன் எனப்பிரித்து-நித்தியனாகியதிருமகள்கொழுநனை திருமா லென்று பொருள்கொள்வதை விட்டு, மன்னும் மாது அவன் என்றாவது மன் உமா தவன் என்றாவது பதம்பிரித்து - ஸ்தாணுவாகிய உமாபதியானசங்கர னெனப் பொருள்கொண்டு,சிவபிரான துசரித்திரம் இந்நூலின் இடையிடையேவழங்குவதென்றவிருப்பத்தால் தாம்இதனைப்பாடஇசைந்ததாகக் கூறினா ரென்று உரைப்பாரு முண்டு; அது சரியன்று: ஏனெனில்,— இந்நூலில் ஆதிபருவத்தில் அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கத்திலும்,

ஆரணியபருவத்தில் அருச்சுனன் தவநிலைச் சருக்கத்திலும், துரோணபருவத்திற் பதின்மூன்றாம்போர்ச் சருக்கத்திலும் ஆக இவ்வாறு சிற்சிலஇடத்தில்மாத்திரமே யன்றி நூல்முழுவதும் இடையிடையே கண்ணனுடைய சரித்திரங்காணப்படுவதுபோலச் சிவபிரானுடையபிரஸ்தாபம் இல்லாமையாலும், வைஷ்ணவராகிய இவர் சிவசரித்திரம் வருவ தென்று பாடினாரென்பது உசிதமல்லாமையாலும் எனக் காண்க.)

அன்றியும், இவர் இந்நூலில் ஒவ்வொருசருக்கத்தின் தொடக்கத்திலும் திருமால்விஷயமாகக் காப்புசெய்யுள் கூறியிருத்தலாலும், ''மறந்தும்புறந்தொழா''நல்லவைஷ்ணவ ரென்பது நன்குவிளங்கும். (சிலசருக்கங்களிலே காப்புச்செய்யுள் காணப்படவில்லை; அதற்குக்காரணம் - ஆசிரியாரற்பாடப்பட்ட செய்யுட்கள் பிற்காலத்தில் ஏடெழுதுவோரால் எழுதாதுவிடப்பட்டு இல்லையாயின வென்றாவது, * தொல்காப்பியம் முதலிய சில நூல்களிற் போலச் சிலசருக்கங்களின் தொடக்கத்தில் மானசிகமாத்திரமாகக் கடவுள் வணக்கஞ் செய்யப்பட்டுச் செய்யுளுருவமாய் வாசிகமாகக் காப்புச்செய்யப்படவில்லை யென்றாவது கொள்க.)

ஆயின், வைஷ்ணவராகிய இவர் இந்நூலில் முதற்காப்பாக

''நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநாள்
ஏடாகவடமேருவெற்பாகவங்கூரெழுத்தாணிதன்
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ.
†முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறந்
திருகாமல்வினைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
புருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரும்
ஒருகோடிபூதேவருங்கைதொழுங்கோவையுறவுன்னுவாம்''

என்ற இரண்டுபாடல்களால் சிவகுமாரராகிய விநாயகரை ஸ்தோத்திரஞ் செய்வானேன்? என்றால்,—தம்மைச் சரணமடைந்தவர்கள் தொடங்குந்தொழில்கட்கு வருகிற விக்கினங்களைப் போக்குதலாலும் தம்மையடையாமல் அகங்கரித்தவர்கள் ஆரம்பிக்கிற செய்கைகட்குப் பலஇடையூறுகளை உண்டாக்குதலாலும் 'விக்நேஸ்வரர்' என்று திருநாமம்பெற்றுள்ள ஸ்ரீவிநாயகமூர்த்தி சைவர்கட்குமாத்திரமேயன்றிச் சிறுபான்மை பிறர்க்கும் ஒருசார் வழிபடுகடவு ளாதலாலும், வேதவியாசர் மகாபாரதத்தை இயற்றியருகின்ற பொழுது விநாயகர் அந்நூலை மகாமேருமலையிலே எழுத்தாணிகொண்டு எழுதிவந்ததும் இடையிலே அவ்வெழுதுகருவி ஒடிந்துபோன பொழுது 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்'என்ற வகையாய் யானைமுகக்கடவுளாகிய தமது தந்தங்களில் ஒன்றைப் பறித்து அதனையே கருவியாகக் கொண்டு எழுதி முடித்தருளியது மாகிய இந்த முக்கியமான காரணத்தைக்கொண்டு நோக்குமிடத்து விநாயகர் இந்நூலின்முதலில்வைத்தற்குஏற்ற இயைபுடையவ ராதலாலும், வைஷ்ணவர்கள் விநாயகரை விஷ்வக்ஸேந ரென்கிற சேனைமுதலியாரது அம்சமென்று கொண்டாடுவது மர பாதலாலும், இவரும் விநாயகரைப் பாடின ரென்க.

இவ்வில்லிபுத்தூரார் சிவத்வேஷம்பாராட்டுகிற வீரவைஷ்ணவ ரல்லர்; அது-அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கத்திலும், அருச்சுனன் தவநிலைச் சருக்கத்திலும், பதின்மூன்றாம்போர்ச் சருக்கத்திலும் சைவசம்பிரதாயத்துக்கு ஒழுவுறுதபடி சிவபிரானைச் சிறப்பித்தும் இதரதேவர்களைத்தாழ்த்தியுங் கூறியதனால், நன்கு புலனாகின்றது.

---

* 'தொல்காப்பியம் முதலியவற்றில் நூற்குப் புறமாகவே மங்கலம் செய்யப்பட்டது' என்பது, தருக்கசங்கிரகவுரை.

† இச்செய்யுள் சிலபிரதிகளி லில்லை.

வியாசர் புராணங்களில் ஒவ்வொருதேவரை ஒவ்வோரிடத்திற் சந்தர்ப்பத்துக்கேற்பச் சிறப்பித்துக்கூறியிருத்தல்போலவே, இவரும் தமது நூலில் சூரியன் அக்கினி முதலிய மற்றைத்தேவர்களையும் சமயம்வந்தவிடத்துப் பக்ஷபாதமில்லாமற் சிறப்பித்துக்கூறியிருக்கின்றார். பதினேழாம் போர்ச்சருக்கத்தில் "மூவர்தத்தம்வடிவாமுதல்வன்" என்று சூரியபகவானைச் சிறப்பித்துக்கூறியிருத்தலும், பிறவுங் காண்க; (இதற்கு - திரிமூர்த்திகளின் சொரூபமாகவுள்ள தலைவனான சூரிய னென்று பொருள்.)

கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய பெருந்தேவனாரென்பவர், மகாபாரதத்தைத் தமிழில் வசனமும்பாடலுமாக விரவிவருகிற 'சம்பு' என்கிற நடையிலே பாடியிருக்கின்றனர்; பெரும்பாலும் வெண்பாக்களால் அமைந்ததுபற்றி, அந்நூலுக்குப் பாரதவெண்பா வென்று பெயர். அது, இப்பொழுதைக்கு ஏறக்குறையஆயிரத்தெண்ணூறுவருஷத்துக்கு முந்தியது.* இவ்வில்லிபுத்தூரார் அந்தப்பாரதவெண்பாவின் சொல்லையும் பொருளையும் ஆங்காங்கு வெகுவாகத் தழுவி நாலாயிரத்து முந்நூற்றுச சொச்சம்பாடல்களாற் பாரதத்தைப் பாடினர். இவர்பாடியபாரதம் வடமொழி வியாசபாரதத்தின் வழிநூ லென்னத் தட்டில்லை.

"மண்ணி லாரண நிகரென வியாதனார் வகுத்த
எண்ணிலா நெடுங்காதையை யானறிந் தியம்பல்"

என்று இவர்தாமே அவையடக்கத்திற் கூறியிருக்கின்றார். ஆயினும், இவர் பாடிய நூல் ஸம்ஸ்கிருதபாஷையில் அகஸ்தியபட்டரென்பவர் இயற்றியுள்ள பாலபாரத மென்னுங் காவியத்தின் பொருளமைதியோடு பலஇடங்களிலொத்திருக்கின்றது; ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து,இந்நூலுக்கும் அந்நூலுக்கும் இடையிடையே பலவேறுபாடுகளும் உள்ளனவாயினும், சிற்சிலஇடங்களில் இந்நூல் அந்நூலின்மொழிபெயர்ப் பென்றே சொல்லலாம்படி யிருக்கின்றது.

வில்லிபுத்தூரார் தமதுபாரதத்திற் பாடியது, முதற்பத்துப்பருவமே; மற்றை யெட்டுப் பருவங்கள் அவராற் பாடப்படவில்லை. அதற்குக் காரணம்:—அவற்றைப்பாடுதற்குமுன் அவர் காலஞ்சென்றிருக்கலாம்; அல்லது, நூல் முழுவதையும் பாடினால், பாண்டவர்கள் கிருஷ்ணபகவான் என்கிற மகாபுருஷர்களது கேட்பவர்க்குவருத்தத்தையுண்டாக்கத்தக்கமரணசரித்திரத்தைத் தம்வாயாற் சொல்லவேண்டுமே யென்று கருதி, 'பாண்டவர்கள் இராச்சியம் ஆண்டு வாழ்வா ராயினர்' என்பதனோடு முடித்துவிட்டனரெனக் கூறலாம். பாண்டவசரித்திரங் கூறுகின்ற பாரதசம்பு முதலிய சில நூல்களிலும் பின்னிட்டகதை காணப்படவில்லை. (கம்பர் இராமாயணத்தில் உத்தரகாண்டம் பாடாமல் விட்டதற்கும் இப்படிப்பட்ட காரணத்தையே முக்கியமாகக் கொள்ளலாம்; இப்பொழுதும் இராமாயண பாராயணஞ்செய்பவர்கள் உத்தரகாண்டம் படிப்பதில்லையன்றோ?) அவ்வாறே இவரும் பின்னையசரித்திரத்தைக் கூறாமல் "கனைகடற்பா ரளித்து அவரு மந்நகரிலறநெறியேகருதிவாழ்ந்தார்" என்று மங்களகரமாகச் சரித்திரத்தைப் பாடிமுடித்தன ரெனக் கொள்வது தகுதியுடையது. இனி,இந்நூலின் பின்னையபருவங்களும்பாடப்பட்டுப் பிற்காலத்திற்கிடைத்தற்குஅரியவையாயின

* அந்நூல் பன்னீராயிரம்பாடல்களை யுடைய தென்று தொண்டைமண்டலசதகத்திற் கூறியிருப்பினும், அது இப்பொழுது முழுவதும் கிடைப்பதில்லை. உத்தியோகபருவத் தொடங்கித் துரோணபருவம் வரையிலும் எண்ணூறுபாடல்களே கிடைக்கின்றன.

வென்று கொள்வாருமுளர்.* வில்லிபுத்தூரார்பாடிய பாரதத்திலே சுருக்கமாகக் கதையைத் தொகுத்துக்கூறும் முந்நூறு நானூறு பாடல்கள் தவிர மற்றை நாலாயிரஞ்செய்யுட்களை யெடுத்துக்கொண்டு, பிற்காலத்தில் நல்லாப்பிள்ளையென்பவர், புதிதாகத் தாம் பதினோராயிரப்பாடல்பாடி இடையிடையிற்கோத்தும் இறுதியிற் சேர்த்தும் பாரதம் பதினெட்டுப் பருவங்களையும் பூர்த்திசெய்தார்; அது 'நல்லாப்பிள்ளைபாரதம்' என வழங்கும்: அந்நூலாசிரியர், இற்றைக்கு நூறுவருஷங்களின்முன் இருந்தவர். இது தவிர, இற்றைக்கு ௧௫0 - வருடங்களின்முன் இருந்த அஷ்டாவதானம் - அரங்கநாதகவிராயர் பாடிய பாரதத்தின் பிற்பகுதியும் ஒன்று உளது; அது, ஏறக்குறைய ௨௫00 - செய்யுளுடையது.

இப்பாரதத்துக்கும் இதன்முதனூலாகியவியாசபாரதத்துக்கும் இடையிடையே கதையமைதிகள் சிற்சில வேறுபடுவது "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப், பின்னோன் வேண்டும்விகற்பங்கூறி, அழியாமரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிப்படி இவ்வாசிரியராற் பிறநூல் மேற்கோள்கொண்டு அமைக்கப்பட்டதாதல் வேண்டு மென அறிக.

வில்லிபுத்தூரார் மகாபாரதமொன்றுதவிர வேறுநூலெதுவும் பாடியிருப்பதாகத் தெரியவரவில்லை.

இவர், தமக்குப்பலசெல்வமுங்கொடுத்து ஆதரித்துத் தம்மைக்கொண்டு பாரதத்தைப் பாடும்படி செய்வித்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனை இப்பெருங்காப்பியத்தில் இடையிடையேபுகழ்ந்துபேசியிருக்கின்றார்.

இப்படி, பாலில்விஷங்கலப்பதுபோலப் பெரிய இதிகாசத்தினிடையிலே ஒருமனிதனைத் துதித்தல் தகுமோ? நரகவனம் நரக வன மன்றோ? என்று ஓர்ஆக்ஷேபந் தோன்றலாம்; இங்ஙனந்தோத்திரிப்பது தகுதியன்றாயினும், அரசன் தமக்குச்செய்த நன்றியை மறவாமல் உபகாரஸ்மிருதியாகப்பாடின ரென்பதுபற்றிப் பலரும் அங்கீகரிப்பார்கள்; அன்றியும், ப்ரஸ்துதமான உபமேயமுகத்தால் அவன்பெயரைப் பிரஸ்தாபிக்காமல் அப்ரஸ்துதமான உபமானமுகத்தாற் புகழ்ந்துகூறியதும் ஒருசமாதான மாகலாம். இங்ஙனமே தம்மைப்பாதுகாத்தபிரபுக்களைத்தாம்செய்யும்நூல்களில்நன்றியறிவுகாரணமாக எடுத்துஏத்துவது,புலவர்களின் இயற்கை.(கம்பர் இராமாயணத்தில் திருவெண்ணெய்நல்லூர்ச சடையப்பவள்ளலையும், புகழேந்திப் புலவர் நளவெண்பாவில் முரணைநகர்ச்சந்திரன்சுவர்க்கியையும்,மண்டலபுருஷன் சூடாமணிநிகண்டிற் கிருஷ்ணதேவராயனையும் சிறப்பித்துக்கூறியமை காண்க.) இன்னும்,இவர், தமதுநூலில்,தமிழ்நாட்டரசராகிய சேரசோழபாண்டியர்களைப்பற்றிப்பிரஸ்தாபம்வருகின்றபொழுதுமிக்கசிறப்பாக்கூறுவர்.

"காவிரியென்னத்தப்பாக்கருணையான்" என, நளசக்கரவர்த்தியினது கருணைக்கு, தமிழ்நாட்டிற் பிரசித்திபெற்ற காவேரிநதியைத் தண்மைக்கும் தவறாமைக்கும் உவமையெடுத்துக்கூறினார்.

"தங்கள்மால் வரையில் வைகுந் தமிழ்முனிதன்னைப் போலப்
பொங்குவெண்டரங்க முந்நீர்ப் புணரிக ளேழுஞ் சேர
வெங்கையால் வாருங் கொற்ற வேழமா மேற்கொண்டானே"

---

* "கலியுகவியாதன்சொல்லக்கணபதியெழுதுபாடல்
பொலிவுறுதமிழிலாறாயிரமெனவிருத்தம்போற்றிச்
சலிவறவில்லிபுத்தூரிறைவனுஞ்சார்வபௌம
னொலிகெழுமறையோர்கோமானுயர்ந்தவருவப்பச்சொன்னான்"

என ஒருசெய்யுள் வில்லிபுத்தூரார்பாரதத்துஏட்டுப்பிரதிகள்சிலவற்றிற் பாயிரத்துடனேகாணப்படுகின்றது இதுபழையபாடலாகஇருக்குமாயின் இதிற்கூறியஆறாயிரம்பாடல்களிற் பத்துப்பருவங்களான நாலாயிரத்துமுந்நூற்றுச்சொச்சம்போக மற்றவை இவர்பாடிய எட்டுப்பருவங்க ளென்னலாம்.

என்றதனால், தமிழுக்கு ஆதியிலக்கணநூலாசிரியராகிய அகஸ்திய மகா முனிவர் கடலைக்குடித்தருளிய கதையைக் கொண்டாடினர். இன்னமும் "தங்கள் தமிழ்க்குழலிசையைத் தன்செவிக்குவிடமென்னும்" என்றதனால், வேய்ங்குழலின் இசைப்பாட்டின் இனிமைக்கு, தமிழ்ப்பாஷையை உவமை கூறினர். "தங்கள் மூவகைத்தமிழும் போலச், சிந்தையிற்குளிக்குமாறு சிலீமுகமூன்று விட்டான்" என்றதில், அம்புகள் நன்றாகப் பகைவர்நெஞ்சிற் பதிந்திடுதற்குத் தமிழ்ப்பாஷை கற்றவர்மனத்திற் பதிதலை உவமையாக்கினர்.

இங்ஙனம் தமது தேசாபிமான பாஷாபிமானங்களை வெளிப்படுத்துவது பலர்க்கும் வழக்கமேயாம்.

இவர் தமதுநூலிற் பெரும்பாலும் வடமொழிகளைத் தனிமொழியாகவும் தொடர்மொழியாகவும் இன்னமொழியின் சம்பந்தமானதென்று எளிதில்தெரியவொண்ணாதபடி திரித்தும் மொழிபெயர்த்தும் உபயோகித்திருத்தலால், வடமொழியிலும் மிகவல்லவரென நன்குவிளங்குகின்றது.

தமிழில் எந்த நூலாசிரியரும் வடமொழிகளை இவரவ்வளவு எடுத்துக் கொள்ளவில்லை. வடசொற்களைத் தமிழ்க்காப்பியத்தில்நுழைக்கிற வழக்கம் இவர்காலந்தொடங்கித்தான் அதிகமாயிருத்தல்வேண்டும். சங்கத்தார்காலத்துப் பழையநூல்களில் அத்தனையாக வடமொழிகள் அகப்படா; சுத்த தமிழ்ப்பதங்களே மிகுதியாயிருக்கும்.

இவரது பாடல்களில் உவமை, உருவகம், எடுத்துக்காட்டுவமை, தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள்வைப்பு, பிறிதுமொழிதல், உயர்வுநவிற்சி முதலிய பொருளணிகள் அமைந்திருப்பதுமாத்திரமேயன்றி, மடக்கு (யமகம்), பிராசம் முதலிய சொல்லணிகளும் ஆங்காங்கு அமைந்திருத்தலையும், இவரது செய்யுள்நடை பலவிடத்து முடுகுடையதாதலையும், பலவகைச்சந்தங்கள் சந்தப்போலிகள் வண்ணங்கள் பொருந்தியிருத்தலையும் காணலாம்.

"பண்பாகப்பகர்சந்தம் படிக்காசலா லொருவர்பகரொணாதே" என்று சிறப்பித்துக்கூறப்பட்டுள்ள படிக்காசுப்புலவரும், திருப்புகழ்பாடியஅருணகிரிநாதரும் முதலிய சிலர் போலவே இவ்வில்லிபுத்தூராரும் சிறந்த சந்தக்கவி யென்று இவர்நூலால் தெரிகின்றது.

சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்கு இனிமை, நன்மொழிபுணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல் முதலிய நூலழகுகளெல்லாம் இவர்நூலில் நன்குஅமைந்திருத்தல், இப்பாரதத்தைப் பார்க்கப் பார்க்கச் செவ்விதிற் புலனாம்.

'குன்றக்கூறல்' முதலிய குற்றங்களி லொன்றும் இந்நூலிலில்லை யென்று பொதுப்படக் கூறலாம்; அன்றியும், பலநூல்களிற் காணக்கூடிய 'சென்று தேய்ந்திறுதல்' என்னுங் குற்றம் இந்நூலிலில்லை யென்பது, இந்நூலை ஆதியோடந்தமாக நோக்குவார்க்குத் தாமே தெரியும்.

யுத்தவருணனை, எல்லாநூல்களினும் இந்நூலிற் சிறத்தல் காண்க.

"முன்னோர்மொழிபொருளேயன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவம்" என்றவாறு, இவருடைய நூலில் ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் சொற்பொருட்கருத்துக்கள் சிற்சிலஇடத்து எடுத்து ஆளப்பட்டிருத்தல், உய்த்துநோக்குமிடத்து விளங்கும்.

---

இனி, இப்பொழுதைக்குஒன்பதுவருடங்களின் முன்பு இருந்த முருகதாசரென்பவர் இயற்றிய 'புலவர்புராணம்' என்னும் புதுநூலிற் கூறப்பட்டுள்ள வில்லிபுத்தூரார்சரித்திரம், இதுவரையிற் கூறிய வரலாற்றோடு சிற்சிலவேறுபாடுடையது; அதனை அனைவரும் அறிதற்பொருட்டு அந்நூலிலுள்ளவாறு அச்சரித்திரம் அடியிற் குறிக்கப்படுகின்றது:---

பெண்ணைநாட்டில் சனியூரில் பிராமணசாதியில் வைஷ்ணவசமயத்தில் தோன்றிய இரண்டுசகோதரர், கல்வியில்தேர்ந்து திருமாலைத்துதித்து அப்பெருமானருளால் அக்கல்விப்பொருளோடு செல்வப்பொருளும் நிரம்பியவராய் ஒருவரோடொருவர்மிகஅன்புபூண்டு பாண்டியநாட்டிலுள்ளஸ்ரீவில்லிபுத்தூரை யடைந்து அங்குத் தம்தம் மனைவியருடனே ஏககுடும்பமாய் இல்லறவாழ்க்கை நடத்திவந்தார்கள். அவர்களில் மூத்தவர், வில்லிபுத்தூரரென்று சிறப்புப்பெயர் பெற்றார். இங்ஙனமிருக்கையில், கொங்குநாட்டரசனான ஆண்டான்பிள்ளையென்பவன், வடமொழியிலுள்ள மகாபாரதத்தைத் தமிழ்ச்செய்யுள்களாற் செய்விக்கக்கருதி, 'அங்ஙனஞ்செய்யவல்லவர் யார்?' என்று விசாரிக்கையில், வில்லிபுத்தூராரும் அவர்தம்பியாருமே அதற்குத் தக்கவரென்றும், அவர்கள் மிக்கசெல்வமுடையவராதலால் அரசரையும் பொருள்செய்யாரென்றும், ஒருவர்க்கொருவர் உற்ற துணைவராகிய அவர்களாற் பிறருதவி வேண்டப்படுவதில்லையென்றும் அறிந்து, அவர்கட்குள் ஏதேனும் சிறிதுமாறுபாட்டையுண்டாக்கி அந்தச்சந்தர்ப்பத்தில் தன் கருத்தை முடித்துக்கொள்ளக்கருதியவனாய், விதவையாகிய ஒருபார்ப்பனக்கிழவியை அழைத்து வணக்கத்தோடு உபசரித்துச் செய்திகூறி 'அம்மா! நீர் அவர்கள்வீட்டுக்குச்சென்று அவர்கட்குள் கலகத்தை உண்டாக்கவேண்டும்' என்றுகூறி அவளுக்கு வேண்டியபொருளையுங் கொடுத்து அனுப்பிவிட்டு, பின்பு மதுரைக்குச்சென்று பாண்டியனைக்கண்டு அவனிடம் ஏகாந்தத்தில் இச்செய்திமுழுவதையுஞ் சொல்லி, 'அவர்களுடைய வழக்கு வந்தால் எவ்விதத்திலும் என்னிடத்தில் அனுப்பவேண்டும்' என்று வேண்டி, 'அங்ஙனமே ஆகுக' என்று அதற்கு இணங்கிய அப்பாண்டியனது அநுமதியைப்பெற்று மீண்டனன். இதுநிற்க:

அரசனிட்ட கட்டளைப்படியே அக்கிழவி வில்லிபுத்தூரார்வீட்டுக்குச் சென்று அவர்மனையாளிடத்தும் அவர்தம்பிமனையாளிடத்தும் கலந்து இனிமையாகப்பேசிப்பழகி அவ்விருவரும் தன்னை நல்லவளென்று நம்புமாறு நடந்துகொண்டே அவர்கட்குள் ஒருத்திமேல் ஒருத்தியிடம் பொல்லாதபல கோட்சொற்களைக் கூறி உட்பகைமையைவிளைத்து அவர்கள் ஒருவரோடொருவர் எதிர்த்துப்பேசிக் கலகஞ்செய்யவும் தம்தம்கணவரைத் தம்தம் வசமாக்கி நடத்தவும் மூட்டிவிட்டாள். அதனால் மாறுபாடுகொண்ட வில்லிபுத்தூராரும் அவர்தம்பியாரும் தமதுபொருளைப் பாகஞ்செய்துதருதலை வேண்டித் தங்கள்நாட்டரசனான பாண்டியனிடம் வர, அவ்வேந்தன், முற்கூறியபடி அவர்களைக் கொங்குநாட்டரசனிடத்தே செலுத்தினன். அவ்வாறேசென்ற அவர்களைக் கண்டு கொங்கராசன் மகிழ்ச்சிகொண்டு அவர்கட்கு மிக்கஉபசாரஞ்செய்து வடமொழிமகாபாரதத்தை இரண்டுபாகமாப்பிரித்து அவ்விருவரிடமுங் கொடுத்து 'நீங்கள் இந்நூலைத் தமிழ்ப்பாடலாகச் செய்தபின்னரே நான் உங்கள்செல்வத்தைப் பாகித்துக்கொடுப்பேன்' என்று கூறினான். அச்சொல்லை அவர்கள் திருமால்கட்டளையாகவே சிரமேற்கொண்டு அங்ஙனமே சிலநாள் அவன்வசத்தில்இருந்து, சொற்சுவையும் பொருளழகும் ஓசைச்செறிவும் சந்தப்பொலிவும் வண்ணப்பொருத்தமு முள்ள ஆறாயிரங்கவிகளாற் பாரதத்தைப் பாடி முடித்திட்டார்கள்.

இப்படி தன்கருத்து முற்றியதனாற் களிகூர்ந்த கொங்கர்கோமான், தானே ஒருபார்ப்பனக்கிழவியைக்கொண்டு குடும்பக்கலகம் விளைத்த விதத்தை அவர்கட்கு விவரமாகத் தெரியக்கூறி, அவர்கட்குஉண்டான விரோதத்

தைத் தணிவித்து, அவர்களைநோக்கி 'நீங்கள் என்விருப்பத்தை நிறைவேற்றியதால், நான் உங்கள்விருப்பத்தைநிறைவேற்றச் சித்தனாயிருக்கின்றேன்; நீங்கள் விரும்புவதைக் கூறுமின்' என்றுகூற, வில்லிபுத்தூரார், 'என்னோடு மாறுபட்டுச் சந்தம்பாடத்தொடங்கி அதில் தவறியவர்களுடைய காதுகளைத் துணிக்குமாறு வாள் கொடுக்கக்கடவாய்' என்று தம்விருப்பத்தை வெளியிட, அரசன் அங்ஙனமே வாள்கொள்ளுமாறு அருள்செய்தான். தமையனாரிடத்து முதிர்ந்த அன்பையுடைய தம்பியார் 'எனக்கென்று தனியே உரியது யாதுமில்லை' என்று கூற, அரசன் தமையனார்க்குஅடங்கி நடக்கின்ற அவரது மனநிலையைக் கண்டு மகிழ்ந்து அவர்க்குப்பலவிருதுகளைக் கொடுத்தான். அவற்றைப் பெற்றுக்கொண்டு அவரிருவரும் தம் ஊர்சேர்ந்தனர். முன்பு பகைமூட்டிய மூதாட்டியும் பின்பு அவர்கள்மனைவியர்க்குப் பற்பலநியாயங்களை யெடுத்துக்கூறித் தனது சொற்றிறத்தால் அவர்களது மாற்சரியதத்தைத் தீர்த்து அவர்களைப் பழையபடி கூட்டுறவாக்கி வைத்திட்டனள். முன்பு தலைவிரிகோலங்கொண்ட ஒருத்தியால் முடிந்த மகாபாரதத்தைக்குறித்து இப்பொழுது 'மொட்டைச்சியொருத்தியால் முடிந்தது' என்று பலர் பேசலுற்றனர்.

வில்லிபுத்தூரார், புலவர்திலகராய், நம்மோடுமாறுபட்டுத்தோற்ற புலவர்களுடைய காதுகளைக் கொய்வதே தொழிலாகக்கொண்டு கவிசார்வபௌமரென்று சிறப்புப்பெயர் பெற்று, புலவர்களது செருக்கையெல்லாம் ஒழித்துவந்தார். அவர்தம்பியாரோ, புலமைத்திறம் வாய்ந்திருந்தும் சாந்த குணத்தையே மேற்கொண்டிருந்தனர்.

கீழ்க்கூறியவாறு வில்லிபுத்தூரார் பெருமிதங்கொண்டுவாழுநாட்களுள் ஒருநாள், அநந்தனென்னும்பெயருள்ள பெரிய புலவனொருவன், தனது கவித்திறத்துக்குமெச்சிப் பற்பலஅரசர்தந்த பரிசுகளைப் பெற்றவனாய் அவரிடத்தில் வந்துசேர்ந்தான். அவர் அவனைப் பலவாறு பரீக்ஷித்து, அதிலெல்லாம் அவன் தவறாதுதேறிவந்தமை கண்டு, பின்னர், பாடுதற்குஅரியதொரு பெரிய சந்தக்குழிப்பைக் கொடுத்து 'இதற்குஏற்ப நீ ஒருசந்தக்கவி பாடுதி, பார்ப்போம்' என்ன, அங்ஙனமே அந்த அநந்தகவி உடனே ஒருசந்தக்கவி பாட, அதிற்பிழைகண்டு இவர் ஆடம்பரத்தோடு அவனது காதை யறுக்கப் போகையில், அவன், 'ஐயா! என்பெயர்கொண்ட கட்செவியாகிய ஆதிசேஷனுக்குச் செவியுறுப்பில்லை; நீவிர் இதனை ஆராய்ந்து செய்ம்மின்' என்று துணிந்துகூற, அதுகேட்டவில்லிபுத்தூரார் 'இப்பொழுது நாம்இவன்காதை யறுப்பின் இவ்வநந்தன் அவ்வநந்தனோடு ஒப்பாய்விடுவனே!' என்பதை உன்னி அவன்செவியை யறுக்கத்துணியாராய், அவன்சொன்ன சமயோசிதமான வார்த்தைக்கு உவப்படைந்து, 'நீசொன்ன இந்தச்சாதுரியமானவார்த்தைக்கு ஒருவெகுமதியாக உனக்குச் செவியைக்கொடுத்தேன், போ' என்று கம்பீரமாகக்கூறி அவனை அனுப்பிவிட்டனர்.

பிறகு வில்லிபுத்தூரார், அருணகிரிநாதரென்னும் புலவரது பெருமையைக் கேள்வியுற்றுப் பொறாமைகொண்டு வெகுசம்பிரமத்துடனே திருவண்ணாமலைக்குச் சென்று அவருடன் மாறுபட்டு, அந்நாட்டரசன்முன்னிலையிலே அருணகிரிநாதர்பாடுங் கந்தரந்தாதிச்செய்யுள்கட்கு உடனுக்குடனே உரைகூறிவருபவராய் இடையிலேதோற்றுச் செருக்கொழிந்து வாட்படையையிழந்து அருணகிரிநாதரோடு நண்புபூண்டு, அவர்பாடிய கந்தர்திருப்புகழுக்கு ஈடாகத் தாமும் இராமகாதைக்திருப்புகழ்பாடிப் பெருமைபெற்றுத் தம்ஊர்க்கு மீண்டு அடக்கத்தோடு வாழ்ந்திருந்தனர்.

நற்குண நற்செய்கைகளுடன் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகுபவராய்ச் சிலகாலங்கழித்தபின் வில்லிபுத்தூரார் முன்னும், அவர் தம்பியார் பின்னுமாக இருவரும் பரமபதமடைந்தார்கள்.

---

ஸ்ரீ

# மகாபாரதம்.

பாரதம் என்னுஞ் சொல்லுக்கு - பரதனது வம்சத்தவரைப்பற்றிய நூல் என்று பொருள். இங்குக் குறித்த பரதனென்பவன்-சந்திரவம்சத்தில் துஷ்யந்தமகாராசனுக்குச் சகுந்தலையினிடந்தோன்றிப் பிரசித்திபெற்ற ஓர் அரசன். [இராமன் தம்பியான பரதனும்,பரதகண்ட மென்றற்குக் காரணனான ஜடபரதனும்,பரதநாட்டியமென்றற்குக்காரணனான பரதனு மல்லன்.]பரத வம்சத்துத்தோன்றியவர்,பாரதர்;அவராவார்-பாண்டவரும், துரியோதனாதியரும்: அவர்களது சரித்திரத்தை உணர்த்தும் நூல்,பாரத மெனப்பட்டது. இது - வடமொழித் தத்திதாந்தநாமம்; [ஒருவடசொல் சிறிதுமாறித் தன்னோடு இயைபுடையபொருளையாயினும் தன்பொருளையாயினும் உணர்த்துவது, தத்திதாந்தநாமம்.] இனி, வருணாசிரமதருமம், ராஜதருமம், மோக்ஷதருமம், நீதி முதலிய சிறந்த உறுதிப்பொருள்களையெல்லாம் அறிவிப்பதனால் முனிவர்கள் சீர்தூக்கிப்பார்க்குமிடத்து மற்றையெல்லாநூல்களினும் மிக்கபாரம் [அதாவது-மகிமை] உடைமைபற்றி, இந்நூலுக்குப் பாரதமென்னும் பெயர் இடப்பட்டதென்றுங் கொள்ளலாம். முன்னொருகாலத்தில் தேவர்யாவரும் நான்குவேதங்களையும் ஒருதட்டிலும் பாரதத்தை மற்றொரு தட்டிலுமாகத் துலாக்கோலில் வைத்து நிறுக்க, வேதமனைத்தையும்வைத்த பக்கத்தினும் இந்நூலை வைத்த பக்கம்வலிதாயிருந்ததென்று வடநூற்பாரதத்தின் அநுக்ரமணிகை யத்தியாயம் கூறும். (இனி, இந்தச்சொல்லை, பார் அதம் என இரண்டுசொல்லாகப்பிரித்து, அதம் என்பதை ஹதம் என்னும் வடமொழிப்பெயரின் திரிபாகக் கொண்டு, பூமியிலுள்ள பல துஷ்ட அசுரர்களும் கெட்ட அரசர்களும் முதலியோரது நாசத்தைக் கூறுவதொரு நூலென்று பொருள்கூறுவாரு முளர்; அது பொருந்தாது: ஏனெனில்,— பாரதமென்னும் வடமொழி ஒருமொழியாதலாலும், அதற்கு வடமொழிக்கு ஏற்பப்பொருள்கூறுவது தகுதியே யன்றித் தமிழ்மொழிக்குஏற்பப்பொருள் கூறுதல் தகாமையாலு மெனக் காண்க.

யாவரும் மேற்கொண்டு பூசிக்கத்தக்க மேம்பாட்டை யுடைத்தாயிருத்தல்பற்றி, இந்த இதிகாசத்துக்கு 'மகா' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. அந்தமேம்பாடாவது - இருக்குமுதலிய நான்குவேதங்களோடு ஒப்ப ஐந்தாம்வேதமென்று சிறப்பித்துக்கூறப்படும் மகிமை; "பாரத:பஞ்சமோவேத:", "நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்று நிலைநிற்கவே, வாடாததவவாய்மை முனிராசன் மாபாரதஞ் சொன்னநாள்" என்பன காண்க. அன்றியும்,மிகச்சிறந்ததான ஸ்ரீபகவத்கீதையைத் தன்னுள் பீஷ்மபர்வத்திலும், ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்தை ஆநுசாஸநிகபர்வத்திலும் அடக்கிக்கொண்டிருப்பது, இந்நூலுக்கு, எல்லாநூல்களினுஞ் சிறந்த மேம்பாடாம். மகாபாரதம் என்னும் பண்புத்தொகைநிலைத்தொடர் மொழி - வடமொழிப்புணர்ச்சி யாதலால், வருமொழிமுதல்வலி இயல்பாயிற்று; [நன்னூல் - மெய்யீற்றுப்புணரியல் - ௩௬.]

இந்நூலை முதலில் வடமொழியிற் செய்தவர்,ஸ்ரீவேதவியாசமகாமுனிவர்; (இவர் - இக்கதாநாயகர்க்குப் பாட்டனாராவர்.) இவரால்வைக்கப்பட்ட 'பாரதம்'என்கிற முதனூலின் பெயரே "முதனூல் கருத்தன் அளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" என்னுஞ் சூத்திரத்து விதிப்படி வழிநூலாகிய

இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. பாரதத்துக்கு 'ஜயம்' என்றும் ஒரு சிறப்புப்பெயருண்டு; (நால்வகைப்புருஷார்த்தங்களையும்பெறுதற்குக்காரணமாகும் நூல் ஜயமெனப் பெயர்பெறு மென்பது,வடமொழிநிகண்டு;எல்லா நூல்களினும் மேம்பட்டு அவற்றைவென்ற தென்றும், பதினெட்டுப்பகுப் புள்ளதென்றும் இதற்குப் பொருள்கூறலும் உண்டு.)

இதிகாசம் புராணம் என்ற பகுப்பு இரண்டனுள்,மகாபாரதம் இதிகாசத்தின்பாற் படும்: இராமாயணமும் அப்படியே. உபதேசபரம்பரையில் வந்த ஒருவருடைய பழையசரித்திரத்தைப் பிரதானமாக எடுத்துப் பல கிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக்கூறும் நூல் - இதிகாச மென்றும், உலகத்தின் தோற்றம், ஒடுக்கம், முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந்தரம் என்னும் ஐந்துவிஷயங்களை விரவிக்கூறும் நூல் - புராண மென்றும் வேறுபாடு உணரத்தக்கது. [இதிகாசம் பழைய ஒரு வரலாற்றை விரித்துக்கூறும் நூல். புராணம் - மேற்குறித்த ஐந்து இலக்கணங்களும் அமையப் பழைய பல வரலாறுகளை யுணர்த்தும் நூல்.] புராணம் - பிராம்மம் முதலாகப் பதினெட்டுவகைப்படும். இந்த இதிகாச புராணங்கள், வேதத்தின்கருத்து இன்னதென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றிவிளக்குதல்பற்றி, வேதத்துக்கு உபப்ரும்ஹணங்க ளென்று சொல்லப்படும்; உபப்ரும்ஹண மென்றால், வளர்ப்பதென்று பொருளாம். இவற்றுள் புராணங்களினும் இதிகாசம் பிரபலமான பிரமாண மென்றும், அது பற்றியே "இதிகாசபுராணம்" என இதனை முன்னர்வைத்துக் கூறுவதென்றும் கொள்வர்.

இந்நூல்,பெருங்காப்பியமாம். (பெருங்காப்பியத்தின் இலக்கணத்தை, இப்புத்தகத்தில் அணியிலக்கணச் சுருக்கத்தின்பின் தனியே காணலாம்.) இந்நூலிற் பெருங்காப்பிய இலக்கணங்கள் பலவும் வருவதை ஆங்காங்குக் காண்க.

பாரதம் அந்தந்தப்பாகத்தின் விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால் ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம், பீஷ்மபருவம், துரோணபருவம், கர்ணபருவம், சல்லியபருவம், ஸௌப்திகபருவம், ஸ்திரீபருவம், சாந்திபருவம், ஆநுசாஸநிகபருவம்,அசுவமேதபருவம், ஆசிரமவாசபருவம், மௌசலபருவம், மகாபிரஸ்தாநபருவம், ஸ்வர்க்காரோகணபருவம் எனப் பெயர்பெற்ற பதினெட்டுப்பருவங்கள் அடங்கியது. அவற்றுள்,

நான்காவது

# விராட பருவம்.

விராடபர்வம் என்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டது. விராடனது சம்பந்தமான பருவ மென்று ஆறும்வேற்றுமைத்தொகையாகக்கொள்க. விராடராஜனது நாடாகிய மச்சதேசத்தின் இராஜதானியிலே விராடராஜனைச்சார்ந்து பாண்டவர்கள் அஜ்ஞாதவாசஞ்செய்தவரலாற்றைக் கூறுகின்ற பாகம் இது. பர்வம் - கணு: கரும்பு மூங்கில் முதலியவற்றிற்கு ஏகதேசமாகிய [ஏகதேசம் - ஒருபகுதி] கணுப் போல நூலுக்கு ஏகதேசமாகிய உறுப்பைப் பருவமென்பது, உவமவாகுபெயர். "இணைந்தியல்காலை" [நன் - பத - உஉ] என்ற சூத்திர விதியால், பர்வம் - பருவம் என வகரத்திற்குமுன் உகரம் வந்தது.

இப்பருவம் - நாடுகரந்துறை சருக்கம், மற்போர்ச்சருக்கம், கீசகன் வதைச்சருக்கம்,நிரைமீட்சிச்சருக்கம்,வெளிப்பாட்டுச்சருக்கம் என்ற ஐந்து சருக்கங்கள் அடங்கியது. அவற்றில்,

நான்காவது

# நிரைமீட்சிச் சருக்கம்.

இத்தொடர்மொழி - நிரையினது மீட்சியைக் குறித்த சருக்கம் என விரியும்; இதில், முன்னது - ஆறும்வேற்றுமைத்தொகையும், பின்னது - இரண்டாம்வேற்றுமை யுருபும்பயனும் உடன்தொக்கதொகையுமாம். நிரை - பசுக்கூட்டம். மீட்சி - மீளுதல்: தொழிற்பெயர்; மீள் - பகுதி: சி - விகுதி. சருக்கம்-ஸர்க்கம் என்ற வடசொல்லின் விகாரம்: முடிபு அல்லது படைப்பு என்று பொருள்; அது சங்கேதத்தால், பெரிய வகுப்பி னுட்பட்ட சிறிய பாகத்தைக் குறிக்கும். எனவே,பாண்டவர்கள்தாங்கள் மச்சதேசத்துஇராசதானியில் விராடராஜனை யடுத்து அஜ்ஞாதவாசஞ் செய்கின்றபொழுது துரியோதனாதியர் கவர்ந்துகொண்டுபோன விராடராஜனதுபசுக்கூட்டங்களை அவர்களைவென்று திருப்பிக்கொண்டு வந்த வரலாற்றைக் கூறுங் கூறு பா டென்பது பொருள்.

இது, புறத்திணை ஏழனுள் வெட்சித்திணையின்பாற் படும். அஃதாவது - இருபெருவேந்தர் பொருவதுகருதியக்கால் ஒருவர் ஒருவர்நாட்டுவாழும் ஆவும் அந்தணரும் முதலியன தீங்குசெயத்தகாத சாதிக ளாதலின், அவற்றை அங்குநின்றும் அகற்றல்வேண்டிப் போதருகவெனப் புகன்று, அங்ஙனம்போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினால் தாமேகைக்கொண்டு போந்து மீளாமற் பாதுகாத்தலும், அந்நிரையை வேந்தர் சென்று பொருது மீட்டுக்கொண்டுவந்து பாதுகாத்தலுமாம். இது, ஆசிரியர் தொல்காப்பியனார் கொள்கை. வேறுசிலர்கொள்கைப்படி, நிரைகவர்தல் வெட்சித்திணையெனவும், நிரைமீட்டல் கரந்தைத்திணையெனவும்படும். நிரைகவர்பவர்க்கு வெட்சிமலர்மாலை சூடுதலும், நிரைமீட்பவர்க்குக் கரந்தைமலர்மாலை சூடுதலும் உரியன.

## கதைத்தொடர்ச்சி.

[பாரதகதை, பிரசித்தமானதாதலால், இந்தச்சருக்கத்துக்கு முன் கதைத்தொடர்ச்சி சுருக்கமாகவே எழுதப்படுகின்றது.]

சந்திரகுலத்திலே புதன் புரூரவா ஆயு நகுஷன் யயாதி பூரு துஷ்யந்தன் பரதன் ஹஸ்தி குரு முதலிய பலஅரசர்கள் தோன்றியபின் அம்மரபில் உதித்து இப்பரதகண்டத்திலே அஸ்திநபுரியிற் செங்கோல்செலுத்திய சந்தனு வென்னும் அரசனுக்கு முதல்மனைவியாகிய கங்கையின் குமாரன் பீஷ்ம னென்பவனும், இரண்டாம்மனைவியாகிய யோஜநகந்தியின் மகன் விசித்திரவீரிய னென்பவனும் இருந்தார்கள். (முன்பு சத்தியவதியென்னும் பெயரோடு இருந்து பராசரமுனிவனுடன் சேர்ந்து வியாசமுனிவனைப் பெற்றுப் பின்பு அப்பராசரனருளாற் கன்னிப்பருவமடைந்த சந்தவதியென்னும் மறுபெயரையுடைய இந்த யோஜநகந்தியினிடம் சந்தனுவுக்குப் பிறந்த முதற்குமாரனான சித்திராங்கதன், அப்பெயருள்ள ஒருகந்தருவனாற் கொல்லப்பட்டு இளமையில் இறந்தான்.) முன்னைய விரதத்தின்படி வீடுமன் விசித்திரவீரியனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வித்தான். விசித்திரவீரியன் மகப்பெறாது இறந்தபின் அவனுடைய பத்தினிகளுள் அம்பிகையினிடத்துத் திருதராஷ்டிரனும், அம்பாலிகையினிடத்துப் பாண்டுவும், சந்ததிவிருத்தியின்பொருட்டுத் தாய்சொற்கடவாத வியாசபகவானது திருவருளாற் பிறந்தனர். அம்பிகையாலேவியனுப்பப்பட்ட தாதிப்பெண்ணினிடத்து வியாசனருளாற் பிறந்த விதுர னென்னுங் குமாரனும் இருந்தான்.

திருதராட்டிரன் பிறவிக்குருட னாதலால்,பாண்டு திருதராட்டிரனுக்கு முடிசூட்டி, விதுரனை மந்திரியாகவைத்துக்கொண்டு, தானே இராசாங்க

காரியம்பார்த்துவந்தான். பாண்டுவுக்கு மனைவியுடன் சேரக்கூடாதென்று சாபம் நேரிட்டதனால், அவனனுமதிப்படி, அவனது மூத்தமனைவியாகிய குந்தி, தனக்கு இளமையில்துருவாசமுனிவனுபதேசித்திருந்த மந்திரத்தின் மகிமையால் வந்த யமதருமராசனால் யுதிஷ்டிரனையும், வாயுதேவனால் பீமசேனனையும், தேவேந்திரனால் அருச்சுனனையும் பெற்றாள். (முன்பு கன்னிப்பருவத்துச் சூரியனாற் குந்தியினிடம்பிறந்தவன், கர்ணன்.) குந்தியின் சக்களத்தியான மாத்திரி, அவளால் அம்மந்திரம் உபதேசிக்கப்பெற்று, அசுவினீதேவர்களால், நகுலன் சகதேவன் என்னும் இரட்டைப்பிள்ளைகளைப் பெற்றாள். திருதராட்டிரனுக்குத் துரியோதனன் துச்சாசனன் முதலிய நூறுபிள்ளைகளும், துச்சளை யென்னும் ஒருபெண்ணும் காந்தாரியினிடம் பிறந்தார்கள். (பஞ்சபாண்டவர்களுள், தருமபுத்திரன் துரியோதனாதியர் நூற்றுவரினும் மூத்தவனென்றும், வீமன் முதலிய மற்றைநால்வரும் துரியோதனனுக்கு இளையவரென்றும் அறிக.) பாண்டு சிலகாலத்திற்குப்பின் இறந்துபோனான். அப்பொழுது மாத்திரி சககமநஞ்செய்தாள்; [ஸஹகமநம் - உடன்கட்டையேறுதல்.]

பின்பு பாண்டவரும் துரியோதனாதியரும் கூடி அத்தினாபுரியில் விளையாடுகையில், வீமன் துரியோதனாதியரினும் மிகமேம்பட்டுத்தோன்றினான். அதனால், அவனிடம் அவர்கள் மிக்கபொறாமைகொண்டார்கள். அதனாலாகிய அச்சத்தால், துரியோதனன் கர்ணனைத் தனக்குத்துணையாகக்கொண்டான். பிறகு வீடுமன் இந்தநூற்றைவர்க்கும் கிருபாசாரியனைக்கொண்டும், துரோணாசாரியனைக்கொண்டும் படைக்கலவித்தைபயிற்றுவிக்க, அதில் துரியோதனாதியரினும் பாண்டவர் மிக்க தேர்ச்சி யடைந்தனர். அப்பால் வீடுமன், திருதராட்டிரனோடும் விதுரனோடும் ஆலோசித்து, சகலகுணசம்பந்நனை தருமபுத்திரனுக்கு இளவரசுமுடிசூட்டினான். அதுகண்டு அழுக்காறுமிக்க துரியோதனனது கருத்துக்கு இணங்கிய திருதராட்டிரன் புரோசனனென்னுந் துர்மந்திரியுடன் சதியாலோசனை செய்து பாண்டவர்களை வாரணாவதநகரத்துக்குச் செலுத்தி அங்கு அரக்குமாளிகையில் வசிக்கச்செய்து இரவில்தீவைத்து எரித்துவிடுவதென்று செய்த தந்திரத்தைப் பாண்டவர் சிறியதந்தையாகிய விதுர னேவிய சிறபியால் அறிந்து தப்பிப் பிராமணவேடம்பூண்டு திரிந்து, திரௌபதியின் சுயம்வரத்துக்குச் சென்று, அங்குக் கட்டியிருந்த யந்திரத்தை அறுத்து அருச்சுனன் திரௌபதியைக் கொண்டுவர, தாயார்சொற்படி அந்த ஒருத்தியை ஐவரும் மணஞ்செய்துகொண்டு திருதராஷ்டிரனால் அழைக்கப்பட்டு அஸ்திநபுரத்துக்கு வந்தார்கள். திருதராட்டிரன் மந்திரிகள்முதலானாரோடு ஆலோசித்துத் தருமபுத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தபின்பு, அப்பெரியதந்தையின் கட்டளைப்படி பாண்டவர் காண்டவப்பிரத்தமென்னுங் கடுங்காட்டிற் சேர்ந்து, அங்குக் கண்ணபிரானது கருத்தின்படி தெய்வத்தச்சனான விசுவகருமன் நிருமித்த இந்திரப்பிரத்தமென்னும் நகரத்தில் இருந்து அரசாள, துரியோதனாதியர் அஸ்திநபுரியில் இருந்து அரசாள்வாராயினர்.

பிறகு தருமபுத்திரன் தனது தம்பிமார்நால்வரைக்கொண்டு திக்குவிஜயஞ்செய்து ராஜசூயயாகம் முடித்து வெகுமகிமையுடன் விளங்கினான். அதுகண்டு பொறாமைகொண்டு துரியோதனன் யுதிட்டிரனைத் தந்திரமாகத் தன்னிடம் அழைப்பித்துத் தன்மாமனான சகுனியைக்கொண்டு அவனுடன் சூதாடுவித்து அவனது செல்வம் முழுவதையும் பறித்துக்கொண்டு, அவனையும் அவனது தம்பிமாரையும் அவர்களது மனைவியான பாஞ்சாலியையும் அடிமையாக்கி, அவளைத் தீண்டக்கூடாத காலத்தில் துச்சாதனனைக்கொண்டு சபையிற் பலாத்காரமாகக் கொணர்ந்து துகிலுரியச்செய்தான்: அப்பொழுது, ஸ்ரீகிருஷ்ணனநுக்கிரகத்தால் அவள் மேல்மேல் ஆடை

வளரப்பெற்று மானங்காத்துக்கொண்டாள். பின்பு அவளது கற்பின்பெருமைக்கு அஞ்சித் திருதராட்டிரன் அவர்களை அடிமைத்தன்மையினின்று நீக்கிச் செல்வத்தையுங் கொடுத்தனுப்ப, துரியோதனனாதியர் அதனைமறுத்து அவற்றையெல்லாம் கவர்ந்துகொண்டு, மறுசூதாடி அடிமைநீங்கிய அவர்களைப் பன்னிரண்டுவருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஜ்ஞாதவாசமும் [அஜ்ஞாதவாசமாவது-ஒருவரும் தம்மை இன்னாரென்று அறியவொண்ணாதபடி நாட்டில் மறைந்து வசித்தல்] செய்துவந்தால் அரசுபெறுமாறு நியமஞ்செய்து அனுப்பினார்கள்.

அங்ஙனமே பாண்டவர்கள் திரௌபதியுடனே சென்று பன்னிரண்டு வருஷம் காமியவனம் முதலிய இடங்களில் வசித்து, பின்பு, தருமபுத்திரன் கங்கபட்டனென்னும் சந்நியாசியாகவும், வீமசேனன் பலாயனனென்னும் சமையற்காரனாகவும், அருச்சுனன் பரதநாட்டியம்பயிற்றுவிக்கும் பிருகந்நளையென்னும் பேடியாகவும், நகுலன் தாமக்கிரந்தியென்னும் குதிரைக்காரனாகவும், சகதேவன் தந்திரிபாலனென்னும் இடையனாகவும், திரௌபதி விரதசாரணியென்னும் வண்ணமகளாகவும் மாறுவேடம்பூண்டு விராடநகரத்தில் அஜ்ஞாதவாசஞ்செய்துகொண்டிருந்தனர். அப்பொழுது விராடன்மைத்துனனும் சேனைத்தலைவனுமாகிய கீசகன் பாஞ்சாலியைக் கண்டு மோகங்கொண்டு பலாத்காரஞ்செய்ய, அதனையறிந்த வீமசேனன் நடுராத்திரியில் அக்கீசகனை அவன்தம்பிமார் நூற்றுவருடனே வதைசெய்தான் என்பது.

இனி, இந்நிரைமீட்சிச்சருக்கத்தின் கதைச்சுருக்கம்:—அந்தப் பதின்மூன்றாவது வருடத்தினிறுதியில, துரியோதனன், பாண்டவர்கள் விராடநகரத்தில் இருக்கலாமென ஒருவாறு ஊகித்துஉணர்ந்து, அவர்களைக் கண்டுபிடிக்கும்படி படையெடுத்துச் சென்று, அந்நாட்டை இருபுறத்தும் வளைத்துப் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துசெல்ல, அருச்சுனனொழிந்த நால்வரும் விராடனுடன் சென்று தென்புறத்தில் திரிகர்த்தரையும், விராடகுமாரனை உத்தரனுக்குத் தேரூர்ந்துசென்ற பேடிவடிவான அருச்சுனன் வடபுறத்தில் துரியோதனனாதியரையும் போரில்வென்று, முன்னைய நியதிப்படி பதின்மூன்றுவருடமும் கழிந்துவிட்டதனால், அப்பொழுது பாண்டவர்களும் திரௌபதியும் நிஜரூபங்கொள்வாராயினர் என்பதாம்.

[கடவுள்வணக்கம்: விஷ்ணுஸ்துதி.]

தொழுவார்தம் வினைதீர முற்கோல மாயவேலை சூழ்பாரெயிற்
றுழுவானை நன்னும மொன்றாயி னுங்கற்றோ ருருவோதினார்
வழுவாத சுரராக நரராக புள்ளாக மாவாகபுன்
புழுவாக வொன்றிற்பி றந்தாலு நரகிற்பு கார்காணுமே.

இது - காப்புச்செய்யுள்; இதனால், தாம் எடுத்துக்கொண்ட சருக்கம் இடையூறில்லாமல் இனிதுமுடிதற்பொருட்டு உயர்ந்தோர்வழக்கத்தின்படியே கவி கடவுள்வாழ்த்துக் கூறுகின்றார். கடவுள்வணக்கம், இரண்டுவகைப்படும்; வழிபடுகடவுள்வணக்க மெனவும், ஏற்புடைக்கடவுள்வணக்க மெனவும். வழிபடுகடவுள்வணக்கமாவது - தாம்தாம் குலதெய்வமாகக்கொண்டு ஆராதிக்கின்றகடவுளைவணங்குதல் ஏற்புடைக்கடவுள்வணக்கமாவது-தாம்தாம் செய்யஎடுத்துக்கொண்ட காரியத்துக்குத் தகுதியை யுடைய கடவுளை வணங்குதல். ஆகவே, ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தவரான இந்நூலாசிரியர் திருமாலைக்குறித்துக் கூறிய இவ்வாழ்த்து - வழிபடுகடவுள்வணக்கமாம். மற்றும், இதனை ஏற்புடைக்கடவுள்வணக்கமாகவுங் கொள்ள இடமுண்டு; எங்ஙனமெனின்,—கண்ணபிரான் இந்நூலுக்குஏற்புடைக்கடவுளென்பது,

இந்நூலாசிரியர் தற்சிறப்புப்பாயிரத்தில் "மூன்னுமாமறைமுனிவருந் தேவரும் பிறரும், பன்னுமாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன், மன்னுமாதவன் சரிதமுமிடையிடை வழங்கு,மென்னுமாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்" என்றதனாற் பெறப்படும். இச்செய்யுள் வராகமூர்த்தியைப் பற்றிய தாயினும், இருவரும் ஸ்ரீமகாவிஷ்ணுவின் திருவவதாரமேயாதலால், ஏற்புடைக்கடவுள்வாழ்த்தென்னத் தட்டில்லை.

(இதன்பொருள்.) தொழுவார்தம் - தன்னை வணங்கிப் பிரார்த்தித்த தேவர் முனிவர் முதலியோரது, வினை - தீவினை, தீர - நீங்கும்படி, முன்-முற்காலத்தில், கோலம் ஆய் - வராகாவதாரமாய், வேலை சூழ் பார் - கடல் சூழ்ந்த நிலவுலகத்தை, எயிறு உழுவானை - கோட்டாற் குத்தியெடுத்த திருமாலினது, நல் நாமம் - நல்ல (ஆயிரத்தெட்டுத்) திருநாமங்களுள், ஒன்று ஆயினும் - ஒருதிருநாமத்தையாவது, கற்று - (தாம்) அறிந்து, ஒர் உரு-ஒருமுறை, ஓதினோர் - சொன்னவர்,— வழுவாத - (தம்தம்ஊழ்வினையைத்) தவறாத, சுரர் ஆக - தேவர்களாகவாயினும், நரர் ஆக - மனிதர்களாகவாயினும், புள் ஆக - பறவைகளாகவாயினும், மா ஆக - விலங்குகளாகவாயினும், புல் புழு ஆக -(எல்லாப்பிறவிகளுள்ளும்) புல்லிய [இழிபிறப்பான] புழுக்களாகவாயினும், ஒன்றில்-யாதாயினும் ஒருபிறப்பில்,பிறந்தாலும்-தோன்றினாலும், நரகில் - நரகலோகத்தில், புகார் - சென்றுசேரமாட்டார்; (என்றவாறு.)— ஏகாரம் - ஈற்றசை.

முன் ஒருகாலத்திற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன இரணியாக்ஷனென்னும் அசுரராசனைத் திருமால் தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளின்படி வராகரூபமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற் குத்தி யெடுத்துக்கொண்டு வந்து விரித்தருளின வரலாற்றை உட்கொண்டு, 'தொழுவார்தம்வினைதீர முற்கோலமாய் வேலைசூழ்பாரெயிற் றுழுவான்' என்றார். வினை - இங்கே, பிரளயாபத்து நேர்தற்கு ஏற்ற தீவினை.

தொழுவார், எழுவான் என்பன-இயல்பினால் இறந்தகாலம் எதிர்காலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதிகள்; வகரஇடைநிலை-காலமுணர்த்தாது தன்மையுணர்த்திற் றெனினும் அமையும். தம் - சாரியை. 'தீர' என்னுஞ் செயவெனெச்சம் - காரியப் பொருள தாதலால், இங்கு எதிர்காலத்தில் வந்தது; இது, 'ஆய்'என்னும் வினைகொண்டுமுடியும். கோலம், வேலா, நாமம், ஸுரர், நரர் - வடசொற்கள். பார் - பருமையையுடையது என்றுவது, பார்க்கப்படுவது என்றுவது காரணப்பொருள் கொள்ளத்தக்கது. எயிறு - இங்கே, வக்கிரதந்தம். உழுவானை = உழுவானது: இரண்டனுருபு, ஆறனுருபின்பொருளில்வந்தது; உருபுமயக்கம்: [நன்-பெயர் - கூO.] 'ஆக' என்ற வினையெச்சம் - இடைச்சொல்தன்மைப்பட்டு, விகற்பப்பொருளில் வந்தது; ஆனதுபற்றியே, "இயல்பினும் விதியினும்" என்ற பொதுவிதிப்படி 'நராகப்புள்ளாக,' 'மாவாகப்புன்'என அதன்முன் வலிமிகாது "இடையுரிவடசொலின்" என்ற சூத்திரப்படி இயல்பாயிற்று. புன் - பண்படியின் லகரம் னகரமாயிற்று.

நாமத்துக்கு நன்மை - தன்னை ஒருகால் ஓதியவர்க்கும் உயர்பதம் அளித்தல். ஒன்றாயினும், உம்மை - இழிவுசிறப்பு. கற்று, கல்-முதனிலை. ஒன்று என்பதன் விகாரமான 'ஓர்' என்பது - ஒரு என உகரம்பெறுமலும், ஓர் என முதல்நீளாமலும் நின்றது. வழுவாத என்பதனைச் சுரர்முதலியஎல்லாப் பிறவிகளோடுங் கூட்டுக. ஸுரரென்னும் வடசொல்லுக்கு-திருப்பாற்கடல் கடைந்த காலத்து அதனினின்றுஉண்டான சுரையை [வாருணியென்னும் மதுவை] உண்டவ ரென்பது பொருள். ஆக என்னுஞ் சொல் ஐந்தும், எண்

னும்பொருளில்வந்த இடைச்சொற்கள். தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்னும் பிறப்பேழனுள் முதலைந்தனையுங் கூறி, மற்றையவற்றை உபலக்ஷணத்தாற்பெறவைத்தார்; [உபலக்ஷணமாவது - ஒருமொழி, ஒழிந்த தன் இனங்களையுங் குறிப்பது.] எலும்பில்லாத உடம்பினதாதலால், 'புன்புழு' எனப்பட்டது; "எழுவகைத் தோற்றத் தின்னுப் பிறப்பி, னென்பொழி யாக்கை" என்றார் பிறரும். 'பிறந்தாலும்' என்ற எதிர்மறையும்மை, அவர்கட்குப் பிறப்பின்மையை விளக்கின்றது. நரகு - வடமொழிவிகாரம். புகார் - எதிர்மறைப்பலர்பாற்படர்க்கைமுற்று. காணும் - தேற்றப்பொருளதாய்வந்த முன்னிலை யிடைச்சொல்; இனி, நீங்கள் அறியுங்கள் என உலகத்தாரைநோக்கிக் கூறியதுமாம்.

இதுமுதற் பதினைந்துகவிகள் - பெரும்பாலும் முதல் நான்குசீரும் மாங்காய்ச்சீர்களும், ஈற்றுச்சீரொன்றுமாங்கனிச்சீருமாகிய நெடிலடிநான்கு கொண்ட கலிநிலைத்துறைகள்.　　　(௧)

[கவிக்கூற்று: துரியோதனன்நிரைகவர்ந்தசெய்தியைக்கூறுவேனென்றல்.]

மூதாரழற்பாலைவனமுந்தடஞ்சாரன்முதுகுன்றமுஞ்
சூதாடியழிவுற்றடைந்தோர்கள்சரிதங்கள்சொன்னோமினிப்
பாதாரவிந்தத்துமருவார்விழக்கண்டுபாராளும்வெங்
கோதார்மனத்தோன்விராடன்றனிரைகொண்டகோள்கூறுவாம்.

(இ - ள்.) சூது ஆடி - (துரியோதனன் மாமனானசகுனியுடனே) சூதாட்டமாடி, அழிவு உற்று - (அவ்வாட்டத்தில்) தோல்வியடைந்து, (அதனால்), மூது ஆர் அழல் பாலை வனமும் - பழமையாக [இயற்கையாகவே] மிக்க வெப்பமுள்ள பாலைநிலங்களையுடைய காடுகளையும், தட சாரல் முது குன்றமும் - பெரிய சாரல்களையுடைய பழமையான மலைகளையும், அடைந்தோர்கள் - அடைந்துவசித்த பாண்டவர்களுடைய, சரிதங்கள் - அஜ்ஞாதவாச காலத்து நடந்த வரலாறுகள் சிலவற்றை, சொன்னோம் - (யாம் கீழ்க்) கூறினோம்; இனி - இனிமேல், பாத அரவிந்தத்து - (தனது) தாமரைமலர்போலும் பாதங்களிலே, மருவார் - பகைவர்கள், விழ - சரணமாக வந்து விழுந்து தண்டனிட, கண்டு - (அவர்களைக் கடைக்கண்ணால்) நோக்கிக்கொண்டு, பார் ஆளும் - பூமியை அரசாளுகின்ற, வெம் கோது ஆர் மனத்தோன் - கொடிய குற்றங்கள் நிரம்பிய மனத்தையுடையவனான துரியோதனன். விராடன்தன் - விராடராஜனது, நிரை - பசுக்களை, கொண்ட - கவர்ந்துகொண்டு போன, கோள் - வரலாற்றை, கூறுவாம் - இனிச்சொல்வோம்; (எ - று.)

சூரிய அக்கினிகளின் சேர்க்கையா லல்லாமல் இயல்பிலேயே வெப்பமமைந்த தென்பார் 'மூதாரழற் பாலைவனம்' என்றும், மலைகளெல்லாம் படைப்புக்காலத்தே படைக்கப்பட்டனவாதலால் 'முதுகுன்றம்' என்றும் கூறினர். பகைவர்கள் இவனது கடைக்கண்பார்வையையே பெரும்பேறாகக் கருதிக் காலில் விழுகின்றன ரென்பதும், இவன் அவர்களது அடிவீழ்ச்சியைக் கடாக்ஷவீக்ஷணமாத்திரத்தாலே உகக்கின்றானென்பதும் விளங்க, 'பாதாரவிந்தத்து மருவார்விழக் கண்டு' என்றார்; இதனால், அடங்காதவர்களை யெல்லாம் அடக்குந் திறமையுடையவ னென்பதும், வணங்காமுடி மன்ன னென்பதுந் தொனிக்கின்றன. இனி, விழக் கண்டு - விழும்படி செய்து என்றவாறுமாம். கோது - கொடுங்கோன்மை, பிறராக்கம்பொறாமை, செய்ந்நன்றியறிவின்மை, பொய்ம்மை முதலியன.

முதுமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டது. ஆரழல் - வினைத்தொகை; பண்புத்தொகையாய், (பொறுத்தற்கு) அரிய வெப்பமுமாம். பாலை - நீரும் நிழலும் இல்லாத சுரமும், சுரஞ்சார்ந்தஇட

மும். தட+சாரல்=தடஞ்சாரல்; அகரவீற்று உரிச்சொல், வலிவர இன மெல்லெழுத்து மிக்கு முடிந்தது: [நன் - மெய்யீறு - ௩௬.] தட - பெருமை யுணர்த்தும் உரிச்சொல்; "தடவும் கயவும் நளியும் பெருமை" என்பது தொல்காப்பியம். சாரல்-மலைப்பக்கம்; மலையைச்சார்ந்துள்ளதாகிய பக்கத் துக்குத் தொழிலாகுபெயர். குன்றம், அம் - சாரியை. அழிவுற்று - இராச் சியம்முதலிய செல்வமனைத்தையும் இழந்து.'உற்று'என்ற வினையெச்சத்தில், 'உறு' என்ற குறிலிணைப்பகுதி இடையே தன்ஒற்றுஇரட்டி இறந்தகாலங் காட்டியது. அடைந்தோர் - ரகரவீற்றுவினையாலணையும்பெயரின் ஈற்றயல் ஆ ஓவாயிற்று; [நன் - பொது - ௨.] கள் - விகுதிமேல்விகுதி. சரிதங்கள் - மற்போர், கீசகன்வதை முதலியன. சொன்னேம்-தனித்தன்மைப்பன்மை; கவிமரபுபற்றி வந்தது; 'இன்' இடைநிலை, முதல்குறைந்தது. இம்முற்றும், கூறுவாம் என்பதும், 'யாம்' என்னும்பெயர் தொக்குநின்றதனோடு முடியும்; தோன்றா எழுவாயுமாம். பாதாரவிந்த மென்னும் முன்பின்னாகத்தொக்கு வந்த உவமத்தொகை - வடநூன்முடிபு, தீர்க்கசந்தி. அடிக்குச் செந்தாமரை மலருவமை - செம்மையும், மென்மையும், அழகுங் கருதி. மருவார் - (தன் னோடு) கூடாதவர்; எனவே, பகைவர்: எதிர்மறைப்பலர்பால் வினையாலணை யும்பெயர்; எதிர்மறை ஆகாரம் புணர்ந்துகெட்டது: ஆ - எதிர்மறையிடை நிலை யென்றால், ர் - விகுதியாம்; மருவு-பகுதி. மனம் - மநஸ் என்னும் வட சொல்லின் விகாரம். கோள்-கொள்கை; முதனிலை திரிந்த தொழிற்பெயர். வநம், சரிதம் - வடசொற்கள்.

'பாதாரவிந்தத்தின்மருவார்விழக்கொண்டு' என்றும் பாடமுண்டு. (௨)

[பாண்டவர்களைக் கண்டுபிடிக்கும்படி துரியோதனன் அனுப்பிய தூதர் மீண்டுவருதல்.]

ஈராறுமொன்றுஞ்சுரர்க்குள்ளநாள்சென்றவினிநம்முடன்
பாராளவருமுன்னரடலைவருறைநாடுபார்மின்களென்
றோராயிரங்கோடியொற்றாள்விடுத்தானவ்வொற்றாள்களும்
வாராழிசூழெல்லையுறவோடிவிரைவின்கண்வந்தார்களே.

(இ - ள்.) (அப்பொழுது துரியோதனன்),—'ஈர்ஆறும் ஒன்றும் சுரர்க்கு உள்ள நாள் - தேவமானத்தாற் பதின்மூன்று தினங்கள் [பதின்மூன்று வருஷங்கள்], சென்ற-(பெரும்பாலும்) கழிந்தன; (ஆகையால்), இனி-இனி மேல், அடல் ஐவர் - வலிமையையுடைய பஞ்சபாண்டவர்கள், நம்முடன் - நம்மோடு ஒப்பாக, பார் ஆள வரும் முன்னர் பூமியை ஆளுதற்கு வரும் முன்னமே, உறை நாடு-(அவர்கள் உருத்தெரியாமல் மறைந்து) வசிக்கின்ற தேசத்தை, பார்மின்கள்-(இன்னதென்று தேடிக்) கண்டறியுங்கள்,'என்று என்றுசொல்லி, ஓர் ஆயிரம் கோடி ஒற்று ஆள் - ஓர்ஆயிரகோடி வேவுகாரர் களை, விடுத்தான் - (தேசங்கள்தோறும்)அனுப்பினான்; அ ஒற்று ஆள்களும்- அவ்வொற்றர்களும், வார் ஆழி சூழ் எல்லை உற ஓடி - நீண்ட கடல்சூழ்ந்த நிலவுலகமுழுவதும் ஓடிச்சென்று (தேடி), (அவர்களிருக்குமிடம் அறிந்து கொள்ளாமலே), விரைவின்கண் - சீக்கிரமாக, வந்தார்கள்—; (எ - று.)

இன்னும்உள்ள சிலநாள்களுங் கழிந்தால் அஜ்ஞாதவாசமும் முடிந்து மீண்டும் உலகாள வருவார்கள்; அச்சிலநாள்களுங் கழிவதற்கு முன்னமே அவர்களை இன்னவிடத்து இன்னாரென்று கண்டுபிடிக்கவேண்டும்: அங்ஙன ங் கண்டுபிடித்தால் முன்னையேற்பாட்டின்படி மீண்டும் அவர்களைக் காட் டுக்கே துரத்திவிடலாம் என்கிற கெடுநினைவால், இவ்வாறு கூறினான்; இதனை "அரிவையோ டகன்று நீவி ரைவரு மடவி யெய்திச், சுரர்தின மீரா றக்கட் டின்னுயிர் மன்னு நாட்டி, னொருவரு மறியா வண்ண மொரு தின முறைதி ரென்கள், பெருவிறலரசும் வாழ்வும் பின்னுறப் பெறுதி ரென்

றான்," "மறைந்துறை நாளி னும்மை மற்றுளோ ரீண்ணோரென், றறிந்திடி ன்மீண்டு மிவ்வா றாணிய மடைதி ரென்றான்"என்றுகீழ்ச்சூதுபோர்ச்சருக் கத்திற் கூறியவாற்றால் அறிக. இத்தகைய கெடுநினைவுகள் பற்றியே, கீழ் 'வெங்கோதார் மனத்தோன்' என்றது. இங்ஙனம் வஞ்சனையால் வெல்ல லாமே யன்றி வீரத்தால் வெல்லுதல் அரிதென்னும்நோக்கத்தால், 'அடலை வர்'என்றான். அடல்-தேகபலம், புத்திபலம் இவற்றுடனே தெய்வபலமும். மனிதர்க்கு ஒருவருடம் தேவர்க்கு ஒருநாளாதலால், 'சுரர்க்குஉள்ள நாள்' எனப்பட்டது. முன்பு துரியோதனதியர் தவணைகூறும்பொழுது, பதின் மூன்றுவருடமென்றுசொன்னாற் கேட்பதற்குப்பயங்கரமாயிருக்கு மென்று கருதி அங்ஙனங்கூறாமல், அதனைமறைத்து மேல்நோக்கில் எளிதென்று தோன்றுமாறு 'தேவமானத்தாற் பதின்மூன்றுநாள்'என்று சுருக்கமாக்கூறி யமைபற்றி, இங்கும் அங்ஙனமேகூறப்பட்டது; பாண்டவர்கள் தேவாம்சமா தல்பற்றியும், அவர்கட்கு அங்ஙனம் வரையறைகூறுதல் சாலும். 'ஈராறும் ஒன்றும் சுரர்க்குள்ள நாள் சென்ற' என்றது - வனவாசஞ்செய்யவேண்டிய பன்னிரண்டாண்டுகளும். அஜ்ஞாதவாசஞ்செய்யவேண்டிய ஓராண்டிற் பலநாள்களுங் கழிந்தன வென்றபடி. வனவாச அஜ்ஞாதவாச காலங்கள் 'ஈராறும் ஒன்றும்' எனப் பகுத்துக்கூறப்பட்டன. கடத்தற்குஅருமையில் அப்பன்னிரண்டுநாளுக்கு ஈடாகும் இவ்வொருநாளேயென்பது போதருத லுங் காண்க.

ஈராறு - பண்புத்தொகை. நாள் - பால்பகா அஃறிணைப்பெயர்; இங் குப் பன்மைவினைகொண்டது. சென்ற - அன்சாரியைபெறாதுவந்த அகர வீற்றுப் பலவின்பால்முற்று; 'நம்முடன்' என்ற தனித்தன்மைப்பன்மை, செருக்குப்பற்றி ந்த உயர்வாம். முன்னர், அர்-சாரியை. ஐவர்-தொகைக் குறிப்பு. பார்மின் - ஏவற்பன்மைமுற்று; கள் - விகுதிமேல்விகுதி. கோடி- நூறுலக்ஷம். 'ஓராயிரங்கோடி' என்றது - மிகப்பலவாய எண்ணிற்கு ஒன்று காட்டியவாறு. ஒற்றாள்-தேயமெங்குஞ் சென்றுகண்டு ஆங்காங்குநிகழ்ந்தன வெல்லாம் ஒற்றியுணர்ந்துவருகின்ற ஆள்; வினைத்தொகை: ஒற்றாகிய ஆள் எனக்கொண்டால், இருபெயரொட்டுப் பண்புத்தொகையாம்; ஒற்று - ஒற் றன்; உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச்சொல். ஆள்களும்-இறந்தது தழுவியஎச்சம்; கதைத்தொடர்ச்சியை விளக்குவது. ஆழி - ஆழ்ந்திருப்பது; இ-வினைமுதற்பொருள்விகுதி. இனி, ஒன்றுமென்பதனை எண்ணுகக் கொ ள்ளாது பெயரெச்சமாக் கொண்டு, 'தேவர்க்குப்பொருந்திய நாட்கள் பன் னிரண்டுங் கழிந்தன; இனி, ஒருநாளைக்குள்ளே கரந்துஉறைபவரைக் கண் டறிமின்' என்றுமாம். விரைவின்கண், கண்-ஏழனுருபு, இன் - சாரியை. 'அறவோடி' என்றும் பாடம். (௫)

காடென்றுமலையென்றுநதியென்றுகடலென்றுகடலாடைசூழ்
நாடென்றுநகரென்றுநாடாததிசையில்லைநாடோறும்யாந்
தோடென்றுதாதென்றுதெரியாதுமதுமாரிசொரிமாலையாய்
நீடென்றுவலமேவுமவனிக்குளவரில்லைநினபாதமே.

(இ - ள்.) (ஓடிவந்த ஒற்றர்கள் துரியோதனனைநோக்கி),'தோடு என்று தாது என்று தெரியாது - பூவிதழிதுவென்றும் பூந்தாதிதுவென்றும் பகுத் தறியவொண்ணாதபடி, மது மாரி சொரி - தேன்மழையை மிகுதியாகப் பொழிகின்ற, மாலையாய் - (நந்தியாவட்டமலர்)மாலையையுடையவனே!— காடு என்று - காடுகளும், மலை என்று - மலைகளும், நதி என்று - ஆறுகளும், கடல் என்று - கடல்களும், கடல் ஆடை சூழ் நாடு என்று-கடலாகிய சேலை யினாற் சூழப்பட்ட தேசங்களும், நகர் என்று - பட்டணங்களும் ஆகிய இவ் விடங்களில் [பூமிமுழுவதும்], யாம் நாள்தோறும் நாடாத திசை இல்லை -

நாங்கள் தினந்தோறுந் தேடிப்பாராத இடம் (சிறிதும்) இல்லை [முழுவதுந் தேடிவந்தோம்]; நீடு என்று வலம் மேவும் அவனிக்குள் - நீண்ட சூரியன் சுற்றிவருகின்ற பூமியிலே, அவர் இல்லை - அப்பாண்டவர்கள் (எங்கும்) இல்லை; நின பாதமே - உன் திருவடிகளாணை,' (என்று கூறினர்); (எ - று.)

'சூரியனொளி செல்லுமிடமெல்லாஞ் சுற்றித்தேடினோம், இல்லை' என்றார். தம் வார்த்தை வாய்மையேயென்றற்கு, 'நின்பாதமே சாக்ஷி' என்றார்; இவ்வாறு சேவகர்கள் எசமானனிடத்துக் கூறுவது இயல்பு. 'ஆணை' என்பது, வருவித்துஉரைக்கப்பட்டது. 'நின்னாணை' என்ற பொருளில் 'நின் திருவடியாணை' என்றது, தமது பணிவு தோன்ற அரசனை உயர்த்திக்கூறும் உபசாரமொழி. "அனைவோர்க்குந் தெய்வம், இலைமுகப்பைம்பூணிறை" ஆதலாலும், ஐம்பெருங்குரவருள் அரசன் ஒருவனாதலாலும், இஃது ஏற்கும். 'நின்னாணையே' என்று பாடமோதுவாருமுளர். அழிவின்றி நெடுங்காலம் இருத்தலாலும், நெடுந்தூரஞ்சென்றுவிளங்கும் ஆயிரங்கிரணங்களை யுடைமையாலும், உலகமுழுவதும் ஒளிர்வதாலும், 'நீடென்று' எனப்பட்டது. நீடு அவனி யெனவும் இயைக்கலாம்.

முதலிரண்டடிகளிலுள்ள 'என்று' என்னுஞ் சொல்லெல்லாம் - எண்ணிடைச்சொல். பூமியைச் சூழ்ந்துள்ள கடலைப் பூமிதேவியுடுக்கும்ஆடையென்றல், கவிசமயம். நகர் - நகரம் அல்லது நகரீ என்பதன் விகாரம். திஶா என்னும் வடமொழி, ஆவீறு ஐயாயிற்று. இல்லை - ஐம்பால்மூவிடத்துக்கும் பொதுவாகிய குறிப்புமுற்று; வேறு, உண்டு என்பனவும் இவ்வாறே. தாது - மகரந்தப்பொடி, பூந்துகள். மாலையாய், ஈறுதிரிதல் - விளியுருபு. என்று - காரணப்பெயர்; (இயற்கையிலேயே)ஒளியையுடையது: எல்-ஒளி, பகுதி; று-விகுதி; லகரம் னகரமானது-சந்தி. வலமேவுதல் - பிரதக்ஷிணமாகச் சுற்றிவருதல். நதீ, அவநி-வடசொற்கள். அவநி என்ற பெயர்-பாதுகாக்கப்படுவதென்று காரணப்பொருள்பெறும். நின, அ - ஆறனுருபு. ஈற்று எகாரம் தேற்றம். (௪)

[பாண்டவர்வசிக்கிறநாடு இன்னவிதமாயிருக்கு மென்று வீடுமன் கூறுதல்.]

முன்னொற்றையிருசங்கமுடனூதவெதிர்சென்றுமுனைவெல்லுமா
மன்னொற்றரிதுகூறமந்தாகினீமைந்தன்மகன்மைந்தனுக்
குன்னொற்றருணர்தற்குவருமோவறன்காளையுறைநாடுகார்
மின்னொற்றுமழையுண்டுவிளைவுண்டெனத்தேடும்விரகோதினான்.

(இ - ள்.) முன் - முன்னே, ஒற்றை - ஊதுகொம்புகளும், இரு சங்கம் - (வலம்புரி இடம்புரி என்னும்) இருவகைச் சங்குகளும், உடன் ஊத - ஒருசேர ஊதாநிற்க, எதிர் சென்று (பகைவர்களை) எதிர்த்துப்போய், முனை வெல்லும் - போரிற் சயிக்கின்ற, மா மன் - பெரியஅரசனான துரியோதனனது, ஒற்றர் - வேவுகாரர்கள், இது கூற - (என்று) இவ்வார்த்தையைச் சொல்ல,—மந்தாகினீ மைந்தன் - கங்கையினது புத்திரராகிய பீஷ்மர்,— மகன் மைந்தனுக்கு - (தமது) பௌத்திரனாகிய துரியோதனனுக்கு,— 'அறன் காளை உறை நாடு - தருமபுத்திரன் (மறைந்து) வசிக்கின்ற தேசம், உன் ஒற்றர் உணர்தற்கு வருமோ - உனது ஒற்றர்கள் அறியக்கூடுமோ? (அது), மின் ஒற்றும் கார் மழை உண்டு - மின்னல்கள்பொருந்திய மேகங்கள் பெய்கின்ற (மிக்க)மழை யுள்ளதாகும்; விளைவு உண்டு - (நல்ல) விளைவுள்ளதாகும்,' என - என்று, தேடும் விரகு - (பாண்டவர்களிருக்கின்றஇடத்தைத்) தேடிக்கண்டறியத்தக்க உபாயத்தை, ஓதினான் - சொன்னார்; (எ - று.)

பிரமனது சாபத்தாற் குருகுலத்திலே சந்தனுமகாராஜாவாய்ப்பிறந்தவருணனுக்கு முதல்மனைவியான கங்கையினிடத்து வசிஷ்டமுனிவர்சாபத்

தால் அஷ்டவசுக்களுட் பிரபாஸனென்னும்வஸு பீஷ்மனாகத்தோன்றியதனால், 'மந்தாகினீமைந்தன்' எனப்பட்டான். அதன் விவரம்:—முன் ஒருகால் தேவர்கள்யாவருங் கூடிய பிரமதேவனது சபையிற் சென்று கங்காநதியின் பெண்தெய்வம் வணங்கியபொழுது, அங்குவந்திருந்த வருணன், அவளழகை உற்றுநோக்கிக் காதல்கொண்டான்; கங்கையும், அவன்மீதுகாதல்கொண்டு எதிர்நோக்கினாள்; அதனையறிந்த நான்முகக்கடவுள், வருணனைப் பூமியில் மானுடப்பிறப்பெடுக்கவும், கங்கையை மானுடமகளாய் அவனைச் சிலநாள் மணந்திருக்கவும் சபித்திட்டான்; அங்ஙனமே வருணன் குருகுலத்திற் சந்தனுவாய்ப் பிறந்தான்: கங்கையும் ஒரு மனிதமகளாகி 'யான் எந்தெந்தத் தீச்செயல்செய்யினும் மறுக்கலாகாது' என்னும் நிபந்தனையோடு அவனை மணஞ்செய்துகொண்டாள். இது நிற்க: பிரபாசனென்னும்வசு, தன்மனைவியின்சொல்லைக் கேட்டு, வசிட்டமுனிவனிடமுள்ள காமதேனுவைக் கொள்ளைகொள்ள எண்ணினான்; மற்றையேழுவசுக்களும் அவனுக்கு உதவிசெய்யவே, எண்மரும் இரவிற் சென்று பசுவைக் கவர்ந்தனர்; அதனையுணர்ந்த வசிட்டமகாமுனிவன் அஷ்டவசுக்களையும் மானுடசன்மமெடுக்கவும், அவர்களுள் மனைவிசொற்கேட்ட பிரதானனான பிரபாசனைப் பூமியிற் பலநாள் வாழ்ந்து பெண்ணின்பமற்றிருக்கவும் சாபங்கொடுத்தான்: எட்டுவசுக்களும் சந்தனுவுக்குக் கங்கையின்வயிற்றிற் பிறந்தனர். முதலிற்பிறந்த எழுகுழந்தைகளையும், பிறந்தஅப்பொழுதே தாய் கங்காநதியில் எடுத்தெறிந்துவிட்டாள்; எட்டாவதுபிள்ளை பிறந்தவுடனே தந்தை 'அக்குழந்தையைக்கொல்லலாகாது' என்று மறுக்க, கங்கை கணவனை விட்டு நீங்கினாள். அவ்வெட்டாவது மகனே இவ்வீடுமன் என அறிக. திருதராட்டிரன் பாண்டு இவர்கட்குத் தந்தையான விசித்திரவீரியனுக்குத் தமையனாதலால், இவன் கௌரவபாண்டவர்க்குப்பெரியபாட்டனாவன். அன்பினாலும் உறவுரிமையாலும் உள்ள ஒற்றுமை நயம் தோன்ற, தம்பியின்மகன்மைந்தனை 'மகன்மைந்தன்' என்றே கூறினார்.

திருமாலின் திருவடித்தீர்த்தமானது, வானத்திற்பாய்கையில் 'மந்தாகினி' என்றும், பூமியிற்பாய்கையில் 'கங்கை' என்றும், பாதாளத்திற்பாய்கையில் 'போகவதி' என்றும் பெயர்பெறும்; "அரங்கருலகளந்த, பாதத்து நீர் விண் படி பில மூன்றிலும் பால்புரைவெண், சீதத் தரங்க மந்தாகினியாகிச் செழுங்கங்கையாய், மேதக்க போகவதியாகி நாளும் விழுகின்றதே" என்றது காண்க.

முன் - இடமுன். ஒற்றை-துளைக்கருவியாகிய ஒருவாத்தியம். இருசங்கம்-இரட்டை (வலம்புரி)ச்சங்கங்களென்றுமாம்; இரண்டுபக்கத்திலும் இரண்டுசங்கமென்க. மங்கலச்சங்கு வெற்றிச்சங்கு என்ற இருவகைச்சங்குகளென்றலும் அமையும். போரைக்குறிக்கின்ற சங்கமும் வெற்றியைக்குறிக்கின்றசங்கமும் ஆகிய இரண்டும் விரைந்தூதவென்று உரைப்பாருமுளர்; பகைவரைப் போரில் விரைவாக வெல்லுதல் தோன்றும். இனி, ஒற்றையிருசங்கம் - வெற்றிச்சங்கு மங்கலச்சங்கு கொடைச்சங்கு என்ற மூன்றுவகைச்சங்குகள் என்று உரைப்பர் ஒருசாரார். எதிர்த்து என்பது, விகுதிமுதலியன கெட்டு 'எதிர்' என நின்றது; "வரிப்புனை பந்து" என்பதில் 'வரிந்து' என்பதுபோல. 'முன்சென்று' என்பதும் பாடம். மா - மஹா என்னும் வடசொல்லின் விகாரம். ராஜராஜனாதலால், 'மா மன்' என்றார். மன்-பெருமை; மன்னனுக்குப் பண்பாகுபெயர். தருமபுத்திரன் அறநெறி சிறிதுந் தவறாதவனாதலால், அவன் உறையும் நாட்டில் மழையும் விளைவும் உண்டென்றார்; தருமமுடையோர் தங்குமிடத்து மழைவளஞ் செழிப்பது, இயல்பு: "நல்லாரொருவருளரே லவர்பொருட்டா, லெல்லார்க்கும் பெய்யு மழை", "மழையுந், தவமிலா ரில்வழி யில்லை", "நிலத்தியல்பு, வான

முரைத்துவிடும்" என்பன காண்க. நீர்வளம் நிலவளத்துக்குக் காரணமாத லால், அம்முறையே 'மழையுண்டு விளைவுண்டு' எனப்பட்டது. விளைவு - நெல்முதலிய தானியங்கள் விளைதல். 'அறன்களையுறைநாடு உன்னொற்றரு ணர்தற்கு வருமோ' என்றதில், நீ அறஞ்சிறிதுமில்லாதவனென்ற குறிப்புத் தொனிக்கும். 'அறம்' என்ற அஃறிணைப்பெயர் இறுதிப்போலிபெற்றதென் பதனினும், 'அன்' விகுதி பெற்று உயர்திணைப்பெயராயிற்றென்றல், இவ் விடத்திற்கு ஏற்கும். தருமத்தினின்று தவறியவர்க்குத் தான் நடுவுநிலைமை சிறிதுந்தவறாமல் தக்கதண்டனைசெய்து தருமத்தைக் காத்தலால், யமனு க்கு 'தருமன்' என்று பெயர்; அப்பெயர்ப்பொருளையே 'அறன்' என்று குறித்தார். இனி, மந்தாகினிமைந்தன்மகன் வீடுமனது மகனை திருத ராட்டிரன் தன்மைந்தனுக்கு ஓதினன் என்று உரைத்து, திருதராட்டிரன் துரியோதனனுக்குச் சொன்னது இவ்வுபாய மென்பாரு முளர்.

மைந்தன்-மைந்தினையுடையவன்; மைந்து - வலிமை, இளமை, அழகு. மகன்-திருதராட்டிரன். உணர்தற்கு-குவ்வீற்று எதிர்காலவினையெச்சம்; து, அல் இரண்டும்-சாரியை. ஓகாரம் - எதிர்மறை. காளைபோன்றவனைக் காளை யென்றது, உவமவாகுபெயர். காளை - இளவெருது; இது - சம்பிரமான தோற்றத்துக்கும், நடைக்கும், வலிமைக்கும் உவமை. கருமையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் ஈற்றயலுகரமுங்கெட்டு ஆதிநீண்டு 'கார்' என நின்றது; இங்கிறப்பெயர், அதனையுடைய மேகத்துக்குப் பண்பாகுபெயர். 'தேமேவிரகு' என்றவிடத்து மகரவொற்று - வகரத்திற்குமுன் வந்ததனால், மகரக்குறுக்கமாம்; மாத்திரை - கால். முங்கம், மந்தாகினீ - வடசொற்கள். மைந்தனுக்கு ஓதினனென இயையும்; நான்கனுருபு, கொடைப்பொருளின் பாற்படும். (௯)

[ஓர் ஒற்றன் விராடநகரத்துநிலைமையை யெடுத்துக்கூறுதல்.]

ஒற்றுளிலொருவன்பணிந்தென்றுமெவ்வாழ்வுமுண்டாகியே
விற்றானைவெம்போர்விராடன்றன்வளநாடுமேம்பட்டதாழ்
மற்றாழ்புயக்கீசகன்றானுமொருவண்ணமகள்காரணத்
திற்றானெனுஞ்சொல்லுமுண்டென்றுநிருபற்கெடுத்தோதினான்.

(இ - ள்.) (அப்பொழுது),—ஒற்று ஆளில் ஒருவன்-(தேடிவந்த) ஒற்றர் களுள் ஒருவன்,—பணிந்து - வணங்கி,—'வில் தானை - வில்லையுடையசேனை யையும், வெம் போர் - (பகைவர்க்குக்) கொடிய போரையுமுடைய, விரா டன்தன் - விராடராஜனது, வளம் நாடு-வளப்பம்பொருந்திய மச்சதேச மொன்றே, என்றும்-எந்தநாளைக்காட்டிலும், எ வாழ்வும் உண்டுஆகி-எல்லா வாழ்வுகளும் உள்ளதாய், மேம்பட்டது - (மற்றையெல்லாநாடுகளினும் இப் பொழுது) மேன்மைப்பட்டிருக்கின்றது; மல் - மற்போரில்வல்ல, தாழ் - (முழங்காலளவும்)நீண்டுதொங்குகின்ற, புயம் - கைகளையுடைய, கீசகனும்- கீசகனென்பவனும், ஒரு வண்ணம்மகள் காரணத்து - அலங்காரஞ்செய் கின்ற ஒரு (பணிப்) பெண்ணை விரும்பிய காரணத்தால், இற்றான் - இறந் தான், எனும் சொல்லும் - என்கிற பெருவார்த்தையும், உண்டு - உளது', என்று—, நிருபற்கு - துரியோதனராஜனுக்கு, எடுத்து ஓதினான்-எடுத்துச் சொன்னான்; (எ - று.)

கீசகன் - விராடன் மனைவியாகிய சுதேஷ்ணையின் உடன்பிறந்தவன். தான்-அசை. உம்மை உயர்வுசிறப்பு; அது, வீமசேனனைப்போன்றபெருவீ ரனாலன்றிப் பிறரால் கொல்லமுடியாத அக்கீசகனது பலவாயிரம்யானைபலங் கொண்ட வலிமையின் உயர்வைத் தெரிவித்து நின்றது. வண்ணமகள் - ஒப் பனைசெய்பவள். ஒருவண்ணமகள்காரணத்துக் கீசகன் இற்றா னென்ற

செய்தியை எடுத்துக்கூறியது, அங்கு வீமன் இருத்தல்கூடு மென்று குறிப்பித்தவாறும்.

எவ்வாழ்வும், எகரவினு-எஞ்சாமைப்பொருளை யுணர்த்திற்று. வாழ்வுகள் - ராஜாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை என்னும் அஷ்டைசுவரியங்கள். உம்மை - முற்றுப்பொருளது. பிரிநிலை ஏகாரம், பிரித்துக் கூட்டப்பட்டது. வில்-வேல் வாள் முதலிய மற்றை ஆயுதங்கட்கும் உபலக்ஷணம். வளம் - நிலவளம் ஜலவளம் முதலியன. ஆல் - ஈற்றசை. தாழ்புயம் - ஆஜாநுபாகு; கைகள் முழங்காலளவும் நீண்டிருத்தல், உத்தமவிலக்கணம். புயம் - புஜம்; ஜகரம்-மொழியிடையில் யகரமாயிற்று. போர் - பொரு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். இற்றுன் - இறு என்னுங் குறிலிணைப்பகுதி ஒற்றிரட்டி இறந்தகாலங் காட்டிற்று. சொல்லும், உம்மை-இறந்ததுதழுவிய எச்சம். ந்ருபன்-மனிதர்களைக் காப்பவன்; வடசொல்: ந்ரு - மனிதர். 'வண்ணமகள்காதலால்' என்றும் பாடமுண்டு. எனும்=என்னும்: தொகுத்தல். (௬)

[விராடநகரத்து நிரைகவரவேண்டு மென்று கர்ணன் கூறுதல்.]

வண்டார்விராடன்றன்வளநாடுதண்டான்மலைந்தேதொறுக்
கொண்டாலவன்சூழலிற்சூழும்வினயங்குறிப்போரிருப்
புண்டாகினிரைமீளுமின்றாகின்மீளாதென்னுட்கோளிதென்
றெண்டாழுமிதயத்துநிருபற்குரைத்தானிரவிமைந்தனே.

(இ - ள்.) (அதுகேட்டு),—இரவி மைந்தன் - சூரியபுத்திரனாகிய கர்ணன்,—வண் தார் விராடன் தன் - வளமான (செங்கழுநீர்)மாலையையுடைய விராடராசனது, வளம் நாடு - வளப்பம்பொருந்திய நாட்டை, தண்டால் - (நமது) சேனைகளைக்கொண்டு, மலைந்து - போர்செய்துவளைத்து, தொறு - (அவனது) பசுக்கூட்டங்களை, கொண்டால் - (நாம்) கவர்ந்து ஓட்டிக்கொண்டுவந்தால், அவன் சூழலில் - அவனதுநாட்டில், சூழும் வினயம் குறிப்போர் இருப்பு உண்டுஆகில் - பொருந்திய வணக்கத்தைக் காட்டுகின்றவர்களான பாண்டவர்கள் அங்கு இருத்தல் உள்ளதாகுமானால், நிரை மீளும் - (நாம்கவர்ந்த) பசுக்கூட்டம் மீட்கப்படும்; இன்று ஆகில் - (அவர்களிருப்பு) இல்லையானால், மீளாது -(அது) மீட்கப்படாது; என் உள்கோள் இது-என் மனத்திற்பொருந்திய எண்ணம் இதுவாகும்,' என்று—, தாழும் எண் இதயத்து நிருபற்கு உரைத்தான்- இழிந்த எண்ணங்களுள்ள மனத்தையுடைய துரியோதனராஜனுக்குச் சொன்னான்; (எ - று.)

மகாபலசாலியாய்ச் சேனைத்தலைவனாயிருந்த கீசகனும் தம்பிமாரோடு இறந்துபோனதனால், அங்குப் பாண்டவர்களிருந்தாலொழிய நிரை மீளாதென்று, பாண்டவர்கள் அங்குஇருத்தலையும் இராமையையுங் கண்டுபிடித்தற்கு உபாயங் கூறினான்.

தார்க்கு வண்மை - மிக்க வாசனை வீசுதலும்,தேன்மழைபொழிதலும். வண்டு ஆர் எனப் பிரித்து, நாட்டோடு இயைத்து, (நீர்வளத்தால்) சங்குகள் நிரம்பிய நாடென்று மாம். தண்டு - தண்டமென்னும் வடசொல்லின் விகாரம்; ஆயுதமுமாம். சூழல்-இடம். 'சூழும் வினயங் குறிப்போர்' - ஆராய்ந்து செய்யுந் தந்திரத்தைக் கருதியுள்ளவரெனினும் அமையும். சூழும் வில் நயம் குறிப்போர் எனப் பிரித்து - வளைந்த வில்லின் வித்தையில் வல்லவர் என்றுமாம். 'வினயம்'என்றும், 'சூழவிநயங்குறிப்போர்'என்றும் பாடம். இன்று-எதிர்மறைக் குறிப்புவினைமுற்று. இதயம்-ஹ்ருதயமென்னும்வடமொழியின் சிதைவு. எண்தாழும் இதயம்-ஆலோசனையில் அழுந்திக்கிடக்கின்ற மனமுமாம். உட்கோள் - உள்ளக்கருத்து; உள் - அகத்தில், கோள் - கொள்ளப்

பட்டது. கோள்-செயப்படுபொருள்விகுதிபுணர்ந்துகெட்டு 'கொள்' என்ற பகுதிமுதல்நீண்ட பெயர். இரவி-ரவி; ரகரத்திற்கு இகரம் மொழிமுதலாகி முன்வந்தது. (எ)

[தக்ஷிணகோக்கிரகணம் (தெற்குப்பக்கத்து நிரைகோடல்.)]

தக்கோர்தகுஞ்சொற்கள்கேளாததுரியோதனன்சொல்லினான்
மிக்கோர்மிலைச்சுஞ்செழுந்தாமவிறல்வெட்சிமிலைதோளினான்
திக்கோதையெழவிம்மமுரசங்களரசானதிரிகத்தர்கோ
னக்குரோணிபடையோடுபோயானடித்தானவன்சார்பிலே.

(இ - ள்.) தக்கோர் தகும் சொற்கள் கேளாத - பெரியோர்களது தக்க நல்வார்த்தைகளைக் கேட்டு அவற்றின்படிநடத்தலில்லாத, துரியோதனன் —,சொல்லினான் - கட்டளையிட்டான்;(அதனால்)—. அரசு ஆன திரிகத்தர் கோன் -(பலஅரசர்கட்குத்)தலைவனான திரிகர்த்தராஜன்,—மிக்கோர் மிலைச்சும் - மேலான போர்வீரர் அணிகின்ற, செழு - செழுமையான, விறல் - வலிமையைக் குறிக்கின்ற, வெட்சி தாமம் - வெட்சிப்பூமாலையை. மிலை - தரித்த, தோளினான் - தோள்களையுடையவனாய்,—திக்கு ஓதை எழ - திக்குகளிலெல்லாம் எதிரொலி உண்டாம்படி, முரசங்கள் விம்ம - பேரிகை வாத்தியங்கள் முழங்க, அக்குரோணி படையோடு - ஓர் அக்ஷௌஹிணி சேனையுடனே, அவன் சார்பிலே - அவ்விராடனது நாட்டினிடத்தே, (தெற்குப்பக்கத்தே), போய்—, ஆன் அடித்தான் - பசுக்கூட்டங்களைக் கவர்ந்தோட்டினான்; (எ - று.)

தக்கோர் - தகுதியுடையவர். துர்யோதநன் - வடசொல்; (பகைவர்க்குக்) கொடிய போரையுடையவன். துரியோதனன் சொல்லினான் - துரியோதனனது கட்டளைச் சொல்லினா லென்றுமாம். மிலைச்சும், மிலைச்சு - பகுதி. தாமம் - வடசொல். வெட்சியென்னும் மரத்தின்பெயர்.அதன் மலர்க்கு முதலாகுபெயராம். வெட்சி - பகைநிரைகவரச்செல்லும்வீரர் அணியும் மாலை. தோளினான்-குறிப்புமுற்றெச்சம். முரஜம்-வடசொல்.கோன்,ஆன்— னகரமெய்-சாரியை. அரசு - அரசனது தன்மை; அது - உபசாரவழக்கால், அவன்மேல் நின்றது; வேந்து, அமைச்சு என்பனவும் இது. இவற்றை உயர்திணைப்பொருளில்வந்த அஃறிணைச்சொல் லென்றலு முண்டு. திரிகர்த்தர் கோன்-த்ரிகர்த்தசேசத்தார்க்குஅரசன். இமயமலைக்கும் விந்தியமலைக்கும் இடையி லுள்ளதான ஆர்யாவர்த்தமென்னும் புண்யபூமிக்கு வடமேற்றிசையிலுள்ளது இத்தேய மென்பர். அக்குரோணி-வடமொழிச்சிதைவு; அது - தேர் இருபத்தோராயிரத் தெண்ணூற்றெழுபது, யானை இருபத்தோராயிரத்தெண்ணூற்றெழுபது, குதிரை அறுபத்தையாயிரத்தறுநூற்றுப்பத்து, காலாள் லக்ஷத்தொன்பதினாயிரத்து முந்நூற்றைம்பது; ஆக-இரண்டுலக்ஷத்துப்பதினெண்ணாயிரத்தெழுநூறு கொண்டது. படை - பகைவரைப் படுப்பது; படு - பகுதி: படுத்தல் - அழித்தல்; ஐ - கருவிப்பொருள்விகுதி. விம்ம, விம்மு - பகுதி. (அ)

[பகைவர் நிரைகவர்ந்ததை நிரைகாவலர் விராடனுக்குக் கூறுதல்.]

கரைகாணவரிதானகடலொத்தவெஞ்சேனைகைசூழவுந்
தரைகாவல்பெறுதோளினுண்மைப்பெருங்கேளிர்தற்சூழவும்
விரைகாலுமலரோடையெனுமாநிருக்கும்விராடற்குநன்
னிரைகாவனின்றோர்பணிந்தோதினார்தெவ்வர்நிரைகொண்டதே.

(இ - ள்.) (உடனே),—நல் நிரை காவல் நின்றோர் - நல்ல பசுக்கூட்டங்களுக்குக் காவலாகநின்ற இடையர்கள்,—கரை காண அரிது ஆன - கரையைக்காணுவதற்கு அரியதாகிய, கடல் - கடலை, ஒத்த - போன்ற,

வெம் சேனை - கொடிய சேனை, கை சூழவும் - (தன்) பக்கங்களிற் சூழ்ந்து நிற்கவும், தரை காவல் பெறு - பூமியைக் காக்குந்தொழிலைப் பெற்ற, தோளின் ஆண்மை - புஜபலத்தாலாகிய வீரத்தன்மையையுடைய, பெருங் கேளிர் - சிறந்தஉறவினர்களும் சிநேகிதர்களும், தன் சூழவும்-தன்னைச்சூழ்ந்திருக்கவும், விரை காலும் மலர் ஓடை எனும் ஆறு-வாசனைவீசுகின்ற மலர்களையுடைய நீரோடையென்று உவமைகூறும்படி, இருக்கும் - (தெளிவுங் குளிர்ச்சியுமுடையவனாய்) அரசுவீற்றிருக்கின்ற, விராடற்கு - விராடராஜனுக்கு,—தெவ்வர் - பகைவர்கள் [திரிகர்த்தன்முதலியோர்],நிரை கொண்டது - பசுக்களைக் கவர்ந்துசென்றசெய்தியை, பணிந்து ஓதினார்-வணங்கிச் சொன்னார்கள்; (எ - று.)

குறைகூறுங் குடிகள்பால் முகமலர்ச்சியையும் தண்ணளியையும் மாறுமலுடையவனென்பது, 'விரைகாலுமலரோடையெனுமா றிருக்கும் விராடன்' என்பதன் கருத்து. உவமையணி. 'மலரோடை' என்ற உவமையால், அவனது சேனையும் கேளிரும் அவனைப்பிரியாதுநின்று வரும்இன்பதுன்பங்களை அவனோடொக்க அனுபவிக்கும் பேரன்புடையவரென்பதும் தோன்றும்; "அக்குளத்திற், கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே, ஒட்டியுலர்வா ருறவு" என்பது காண்க. மலரோடை, அகத்திற் சிறிதுங் கலக்கமில்லாமைக்கும் ஒப்புமையாம் 'இரட்டுறமொழிதல்' என்ற உத்தியால், 'கேளிர்' என்ற சொல்லுக்கு - உறவினரும் நண்பருமென இருபொருள் ஒருங்குகொள்ளப்பட்டது.

சேனைக்குக் கடலுவமை - மிக்கபரப்புக்கும், ஆரவாரத்துக்கும், அச்சந் தருதற்கும்:அணியணியாக வருதற்கு மென்க. கை-பக்கம்; இனி, உபசர்க்கமாகவுங் கொள்ளலாம். தரை-தரா என்ற வடசொல்லின் விகாரம்; (பொருள்களைத்) தரிப்பதென்று பொருள்பெறும் ஆண்மை-ஆண்தன்மை; மை - தன்மைப்பொருள்விகுதி. கேளிர்-ஒருவர்க்கொருவர் க்ஷேமங்களைக் கேட்டு மகிழ்பவர்; கேள் - பகுதி, இர் - பலர்பால்விகுதி: (மகளிர், பெண்டிர் என்பவற்றிலும் இது.) இதனை,கேண்மையென்ற பண்பினடியாப் பிறந்ததென்னலாம். கேளிர்க்குப் பெருமை-அன்புரிமையிற் சிறத்தல். தமது புயவலியாலும் மனவலியாலும் பகைவரை வென்று அரசாள்பவரென்பது விளங்க, 'தரைகாவல்பெறு தோளினாண்மைப் பெருங்கேளிர்' என்றார். ஓடை - நீரோடுமிடம். தெவ்வர்-பகைமையையுடையவர்; தெவ்-பகைமை யுணர்த்தும் உரிச்சொல்: "தெவ்வுப் பகையாகும்"என்பது, தொல்காப்பியம். கொண்டது - இறந்தகாலத்தொழிற்பெயர். ஸேநா - வடசொல். (௧)

[அதுகேட்ட விராடன் சேனையைப் போர்க்குச் சித்தப்படுத்துதல்.]

செருமிக்கபடையோடுசதியாகமதியாதுதிரிகத்தர்கோ
னிருமிக்கவொட்டாதவென்பூமிதனில்வந்துநிரைகொள்வதே
பருமிக்கமதயானைதேர்வாசியாளினபண்செய்யுமென்
றுருமிக்கமுகில்போலுரைத்தானொரக்குரோணியுளதானையான்.

இதுமுதற் பதினொன்கவிகளால், தக்ஷிணநிரைமீட்சி கூறுகின்றார்.

(இ - ள்.) (அதுகேட்டு),—ஓர் அக்குரோணி உள தானையான் - ஓர் அக்ஷௌஹிணியென்னுந் தொகையுள்ள சேனையை யுடையவனான விராடராஜன்,—(தன்சேனைத்தலைவர்களைநோக்கி), 'திரிகத்தர் கோன் - திரிகர்த்த ராசன், மதியாது - (நம்மிடத்துச் சிறிதும்)மதிப்புக்கொள்ளாமல் [மிகவும் அலக்ஷ்யமாய்], செரு மிக்க படையோடு - போர்த்தொழிலில் மிக்க (தனது) சேனையுடனே, நிருமிக்க ஒட்டாத என் பூமிதனில் - (வேறுயாவரும்) நியமிக்கவொண்ணாத (காவலையுடைய) எனது நாட்டில், சதிஆக -

வஞ்சனையாக, வந்து—, நிரை கொள்வதே - பசுக்களைக் கவர்ந்துகொண்டு போவதா! (அந்நிரையை மீட்குமாறு நீங்கள்), பரு மிக்க மதம் யானை - பருத்துள்ளவையும் மிக்க மதத்தையுடையவையு மான யானைகளும், தேர் - தேர்களும், வாசி - குதிரைகளும், ஆள் - காலாள்களும், இன்ன - என்னும் இச்சதுரங்கசேனைகளையும், பண் செய்யும் - அணிவகுத்துப் போர்க்குச் சித்தஞ்செய்யுங்கள்,' என்று—, உரும் மிக்க முகில் போல் - இடிமிகுந்த மேகம்போல, உரைத்தான் - சொன்னான்; (எ - று.)

தான் அறியாதபடி வந்து பசுக்களைக்கவர்ந்தமையால், 'சதியாக என் பூமிதனில்வந்துநிரைகொள்வதே'என்றான். வீராவேசங்கொண்டமைபற்றி, உருமிக்கமுகில்போல உரத்தகுரலாற்கூறின னென்னலாம். இனி, நிருமிக்க வொட்டாத பூமி-(எவராலும் இங்ஙனம் பிற இடங்களில்) உண்டாக்கமுடியாத (வளங்களையுடைய) கா டென்றுமாம்.

ஏகாரம்-வினவகையால்அலக்ஷியத்தைக்குறிக்கின்றது. பருமிக்க-பருமை மிகுந்தவென்றுமாம்; இனி, பருமமென்னும் பெயர்ச்சொல்லடியாப் பிறந்த வியங்கோள்வினைமுற்றாக் கொண்டு, மதயானைகளை அலங்கரிக்க வென்றலுமாம்; பருமம் - யானைமேற்றவிசு: பருமித்தல் - தவிசிட்டுஅலங்கரித்தல். பூமி, வாஜி - வடசொற்கள். இன்ன - இகரச்சுட்டடியாப்பிறந்த பலவின்பாற் பெயர்; ன் - சாரியை, மற்றொரு ன் - சந்தி, அ - விகுதி. பண்செய்யும் - உம்மீற்று ஏவற்பன்மை முற்று. பண்செய்தல் - அலங்காரஞ்செய்தலுமாம். 'ஆள்' என்ற சொல் உயர்திணையாயினும், யானை தேர் வாசி என்ற மூன்று அஃறிணைச்சொற்களோடு சேர்த்து நிறுத்தப்பட்டதனால், மிகுதிபற்றி 'இன்ன' என்ற அஃறிணைமுடிபைக் கொண்டது; திணைவழுவமைதி: [நன் - பொது - ௨௭.] இனி, 'ஆள்' என்றது - காலாட்சேனையையுணர்த்துவ தெனக்கொண்டு அதனை அஃறிணையின்பாற்படுத்துதலு மொன்று. கம்பீரமான குரலுக்கு இடி உவமை. உள - குறிப்புப்பெயரெச்சம். (௪0)

[விராடன் தன்சேனையுடனே திரிகர்த்தன்சேனையை நெருங்குதல்.]

ஒண்டூளிவானம்புதைக்கப்பல்லியசாலமொலிபட்டிடத்
திண்டூசிபணியாகநிரைகொண்டவெஞ்சேனைசென்றெய்தினான்
தெண்டூரும்வயறோறும்வளைநித்திலஞ்சிந்திநிலவூரவே
வண்டூரமலருந்தடம்பொய்கைசூழ்மச்சவளநாடனே.

(இ - ள்.) தெண்டு ஊரும் வயல் தோறும் - (நீர்வளத்தால்) நண்டுகள் ஊர்ந்துசெல்லப்பெற்ற கழனிகளிலெல்லாம், வளை - சங்குகள், நித்திலம் சிந்தி - முத்துக்களைப்பெற, (அச்சங்குகளாலும் முத்துக்களாலும்), நிலவு ஊரவே - சந்திரகாந்திபோன்ற வெள்ளொளி பரவவே, (அதனால்), வண்டு ஊர - வண்டுகள் வந்து மொய்க்கும்படி, மலரும் - அரும்புகள் மலரப்பெற்ற, தட பொய்கை - பெரியதடாகங்கள், சூழ் - சூழ்ந்த, மச்சம் வளம் நாடன் - வளமுள்ள மச்சமென்னும் நாட்டையுடையவனான விராடராஜன்,—ஒள் தூளி வானம் புதைக்க - (சேனைகள்செல்வதனால் எழுப்பப்பட்ட)ஒள்ளிய [மிகுதியான] புழுதி ஆகாயத்தை மறைக்கவும், பல் இயம் சாலம் ஒலிபட்டிட - பலவகை வாத்தியங்களின் கூட்டம் ஒலிசெய்யவும், திண் தூசி அணி ஆக - வலிய சேனை அணிவகுக்கப்பட்டு முறையேமுன்செல்லவும்,சென்று-போய், நிரை கொண்ட வெம் சேனை எய்தினான் - பசுக்களைக்கொண்டுபோன கொடிய திரிகர்த்தன்சேனையைச் சந்தித்தான்; (எ - று.)

கொட்டுவனவும் ஊதுவனவுமாகிய தோற்கருவி துளைக்கருவி நரப்புக் கருவி கஞ்சக்கருவி யென்பன வெல்லாம் அடங்க, 'பல்லியசாலம்'என்றார். தூசி - முந்துற்றுப் பொரு படை, முன்னணிச்சேனை. வயல்களிற் சங்கு

களும் முத்துக்களும் வீசுகின்ற வெண்மையான காந்தியை நிலவென்று மயங்கி ஆம்பல் முதலிய சில நீர்ப்பூக்கள் மலருமென மயக்கவணியாகக் கருத்துக்கொள்க. சங்கு முதலியவற்றினின்று முத்துப்பிறக்குமென்பதை, "தந்தி வராக மருப் பிப்பி பூகந் தழைகதலி, நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளின மின்னார், கந்தரஞ் சாலி கழை கன்ன லாவின்பல் கட்செவி கா, ரிந்து வுடும்பு கரா முத்தமீனு மிருபதுமே" என்பதனாலும் அறிக. நில வளத்துக்குக் காரணமான நீர்வளமிகுதியால் எங்கும் பலவகை மீன்கள் மலிந்திருத்தல்பற்றி, மத்ஸ்யதேச மென்று அந்நாட்டுக்குப் பெயர்வந்தது போலும்; "தண்மசநாடுசூழ்நாடன்" என்றார் பெருந்தேவனாரும். இங்கும் பின்னிரண்டடியில் நீர்வளச்சிறப்பே கூறப்பட்டது.

எய்தினன், எய்து - முதனிலை. நண்டு என்பதன் போலியாகிய ஞெண்டென்பது, இங்கு மோனைப்பொருத்தம்நோக்கி ஞெண்டெனத் திரிந்து நின்றது. நிலாஎன்னுங் குறியதன்கீழ் ஆக் குறுகிற்று. ஊரஎன்னுஞ் செயவெனெச்சங்கள் - முறையேகாரண காரியப் பொருளன வாதலால், இறந்தகாலமும் எதிர்காலமுமாம். பொய்கை - மானிடராக்காத நீர்நிலை, ஸரஸ். மசசம் - மத்ஸ்ய மென்னும் வடசொல்லின் சிதைவு. சிந்தி=சிந்த: எச்சத் திரிபு. மலரும் பொய்கை-பெயரெச்சம், இடப்பெயர்கொண்டது. வளை - வலம்புரியாகவாயினும் இடம்புரியாகவாயினும் உள்ளே வளைவுபெற்றுள்ளதென ஏதுப்பெயர். புதைக்க, ஒலிபட்டிட,அணியாக - வினைச்செவ்வெண். தூளீ, ஜாலம் - வடசொற்கள். 'வண்டே' என்றும் பாடமுண்டு. (கக)

[அருச்சுனனொழிந்த பாண்டவர்நால்வரும் விராடனுடன்செல்லுதலும், திரிகர்த்தன்சேனை புறங்கொடுத்தலும்.]

உட்பேடியாய்வைகும்விற்காளையல்லாதவொருநால்வரு
நட்பேறுபூபாலனுடனேகினார்போர்நலங்காணவே
கொட்பேறிநிரைகொண்டவெஞ்சேனையுஞ்செல்கொடுஞ்சேனையும்
பெட்பேறியமர்செய்யமுன்னிட்டகுருசேனைபின்னிட்டதே.

(இ - ள்.) (அப்பொழுது),—பேடி ஆய்-(ப்ருஹந்நளையென்னும்) நபும்ஸகவடிவமாய்,உள் - உள்ளே [உத்தரையினது கன்னிமாடத்தில்]. வைகும்-தங்கியிருக்கிற, வில் காளை அல்லாத - விற்போரில்வல்ல அருச்சுனனொழிந்த, ஒரு நால்வரும் (மற்றை யுதிட்டிரன் பீமன் நகுலன் சகதேவன் என்னும்) நான்குபேரும், போர் நலம் காண - யுத்தத்தின் சிறப்பைப் பார்ப்பதற்காக, நட்பு ஏறு பூபாலனுடன்-(தம்மிடத்துச்) சினேகம் மிகுந்த விராடராசனுடனே, ஏகினா - சென்றார்கள்; (பின்பு),—கொட்பு ஏறி-வளைத்துக்கொண்டு, நிரை கொண்ட - பசுக்களைக் கவர்ந்த, வெம் சேனையும் - கொடிய திரிகர்த்தசேனையும், செல் கொடுஞ் சேனையும் - (அதனை அழித்து நிரைமீட்கச்) சென்ற பயங்கரமான விராடசேனையும், பெட்பு ஏறி - (தாம் தாம் வெற்றிபெறவேண்டுமென்னும்) விருப்பம் மிகுந்து, அமர் செய்ய - (ஒன்றோடொன்று) போர்செய்யாநிற்க, -- (அப்போரில்),— முன்னிட்ட குருசேனை - முன்னேவந்த கௌரவசேனை, பின்னிட்டது - முதுகுகாட்டி ஓடியது [தோற்றது]; (எ - று.)

உள்வைகும் என இயையும். பேடி - பெண்ணுறுப்பு மிக்கு ஆணுறுப்புக்குறைந்த நபும்ஸகம்;ஆணுறுப்புமிக்குப் பெண்ணுறுப்புக்குறைந்த நபும்சகம், அலி யெனப்படும்: 'பேடு' என்பது, 'நபும்ஸகம்' என்ற வடசொற்போல இவ்விருவகைக்கும் பொதுப்பெய ரென்று அறிக. அல்லாத - எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம்; ஆகாரம் - சாரியை: எதிர்மறை யிடைநிலையன்று; பகுதியே எதிர்மறைப்பொருள்குறித்துநிற்றலால். ஒரு - ஒப்பற்ற

வென்றுமாம். சால்வர் - தொகைக்குறிப்பு; இப்பெயரில், வ் - எழுத்துப்பேறு. கோட்பு - வலிவு, பெட்பு - விருப்பம். கொட்புஎறி - மாறுபாடு மிக்கு எனினுமாம். நட்பு, கொட்பு, பெட்பு - தொழிற்பெயர்கள்; நள், கொள், பெள் - பகுதி, பு - விகுதி. பூபாலன் - பூமியைக் காப்பவன்; வடசொல். நலம் - பண்புப்பெயர். பெட்பேறுதல் - நான் முன்னே நான் முன்னேயென்று போர்விருப்பங்கொண்டு புறப்படுதல்; "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்" என்றார் பிறரும். அமர் - ஸமரமென்னும் வடமொழியின் சிதைவு. முன்னிடுதல் - எதிர்த்துநிற்றலும், சிறப்புப் பெற்றிருத்தலுமாம். குருஎன்பவன், சந்திரவம்சத்துப் பேர்பெற்ற ஓர் அரசன்; இவனால் அக்குலம் குருகுலமென்றும், அந்நாடு குருக்ஷேத்திரமென்றும், அச்சந்ததியார் கௌரவரென்றும் பெயர்பெற்றவாறு காண்க. இங்கு, அவன்வம்சத்துத் தோன்றிய துரியோதனுடைய சேனை 'குருசேனை' எனப்பட்டது. குருஸேநா - வடமொழித்தொடர். பின்னிடுதல் - முதுகுகாட்டி யோடுதல். 'முன்னிட்ட குருசேனை பின்னிட்டது' என்ற தொடரில், தொடைமுரண் காண்க. (கஉ)

[திரிகர்த்தராசன் விராடராசன்மேல் அம்புமழைபொழிதல்.]

மெய்க்கொண்டபுண்ணோடுதன்சேனைநில்லாமல்வென்னிட்டபின்
கைக்கொண்டநிரையைக்கடத்திப்பொலம்பொற்கழற்காலினான்
செய்க்கொண்டகழுநீரலங்கற்கரந்தைத்திருத்தாமன்மேன்
மைக்கொண்டலெனவில்வளைத்தாறுபத்தம்புமழைசிந்தினான்.

(இ - ள்.) பொலம் பொன் கழல் காலினான் - அழகிய பொன்மயமான வீரக்கழலைத் தரித்த காலையுடையவனான திரிகர்த்தன்,—தன் சேனை—, மெய் கொண்ட புண்ணோடு - உடம்புமுழுவதும் ஆயுதம்பட்ட விரணத்துடனே, நில்லாமல் - எதிர்நிற்கமாட்டாமல், வென் இட்டபின் - முதுகுகொடுத் தோடியபின்பு,—கைக்கொண்ட நிரையை - (தான்) கவர்ந்துகொண்ட பசுக்கூட்டத்தை, கடத்தி - (அப்பால்) செல்லவிட்டு,—மை கொண்டல் என - கரியமேகம்போல, வில் வளைத்து - வில்லை வளைத்து நாணேற்றி,—செய் கொண்ட கழுநீர் அலங்கல் - வயல்களிலே தோன்றிய செங்கழுநீர் மலர்களாலாகியமாலையையும், திரு கரந்தை தாமன்மேல் - அழகிய கரந்தைப் பூமாலையையுமுடையவனான விராடன்மேல், ஆறு பத்து அம்பு - அறுபது பாணங்களை, மழை சிந்தினான் - மழைபோலப் பொழிந்தான்; (எ - று.)

அம்புதொடுத்தற்கு மழைபொழிதலும், வில்லுக்கு இந்திரதனுசும், திரிகர்த்தனுக்கு மேகமும் உவமையெனக் காண்க; உவமையணி. செங்கழுநீர் மாலை - விராடனுக்கு உரிய அடையாளப்பூமாலை. கரந்தை - ஓர்செடி; இப்பூமாலை, பகைவர் கவர்ந்து ஓட்டிய நிரையை மீட்பவர் தரிப்பது. நிலையில்லாமையாற் பொய்யாகிய உடம்பை 'மெய்' என்பது, மங்கல வழக்கு. புண்ணோடு - மூன்றனுருபு, வென்னிடுதற்கு விசேஷணமாதலால், அடைமொழிப்பொருள்; புண்ணுடையதாய் என்றபடி. பொன் + பொன் = பொலம்பொன்; இப் புணர்ச்சி "பொன்னென் கிளவி யீறுகெட முறையின், முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ், செய்யுண் மருங்கிற் றொடரிய லான" என்னுந் தொல்காப்பியச் சூத்திரவிதியால் அமைந்தது. கழல் - வீரர் தமது வீரத்துக்கு அறிகுறியாகக் காலில்அணிவதோர் ஆபரணம். பொன் - அழகாதல் "பொன்னென்ப லவப் பீரும்பு பூமகள் வியர்ழ நாற்பேர்" என்னும் நிகண்டினால் அறிக. அலங்கல் - தொங்கியசைவது; தொழிலாகுபெயர்: அல் - கர்த்தாப்பொருள்விகுதியெனினும் இழுக்காது. மைக்கொண்டல் - கானமேகம். கொண்டல் - நீர்கொண்டமேகம்; தொழிலாகுபெயர்; கொள் - பகுதி, தல் - விகுதி, ள்கர தகரங்கள் ண்கர டகரங்களா

னது - சந்தி விகாரம். என - உவமவுருபு. ஆறுபத்து - பண்புத்தொகை. கடத்தி, கடத்து - பகுதி; அது - கட என்பதன் பிறவினையாம்: அதில், து - பிறவினைவிகுதி. கடத்திச் சிந்தினன் எனஇயையும். வயலை 'செய்' என்பது, பன்றிநாட்டுக் கொடுந்தமிழிலிருந்து செந்தமிழில் வந்து வழங்கலான திசைச்சொல்; 'நன்செய்', 'புன்செய்' என வழக்கிலுங் காண்க. கழனிகளிற் செங்கழுநீர் மலர்கின்றதென நீர்வளச்சிறப்புக் கூறியவாறும். 'வெர்கிட்டயின்' என்று சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. அம்பு மழை - பாணவருஷம். (கரு)

[விராடன் திரிகர்த்தனைத் தேர்முதலியனஅழித்தல்.]

மாமச்சவுடல்புன்புலான்மாறிவண்காவிமணநாறுமக்
கோமச்சவளநாடனுங்கொற்றவரிவிற்குனித்தைந்துசெந்
தாமச்சரங்கொண்டுதேர்பாகுகொடிவாசிதனுவுந்துணித்
தாமச்சமுறமற்றவன்கோலமார்பத்துமம்பேவினான்.

(இ - ள்.) மா மச்சம் உடல் - பெரிய மீன்களின் உடம்பு, புல் புலால் மாறி - (இயல்பிலே அமைந்த) இழிவான புலால்நாற்றம் நீங்கி, வள் காவி மணம் நாறும் - வளப்பமுள்ள நீலோற்பலமலர்களின் சேர்க்கையால் அவ்வாசனை வீசப்பெற்ற, அ கோ மச்சம் வளம் நாடனும் - அந்தச்சிறந்தவளம் மிக்க மச்சதேசத்தின் அரசனாகிய விராடனும்,—கொற்றம் வரி வில் குனித்து - வெற்றியைத் தரவல்ல கட்டமைந்த வில்லை வளைத்து, செம் தாமம் ஐந்து சரம் கொண்டு - சிவந்த ஒளியையுடைய ஐந்துஅம்புகளை எய்து அவற்றால்,தேர் பாகு கொடி வாசி தனுவும் துணித்து-(திரிகர்த்தராஜனுடைய) தேர் சாரதி துவசம் தேர்க்குதிரைகள் வில் என்னும் ஐந்தையும் துண்டுபடுத்தி,—மற்று - பின்னும், ஆம் அச்சம் உற-மிக்க பயம் உண்டாம்படி, அவன் கோலம் மார்பத்தும் - அவனது அழகிய மார்பிலும்,அம்பு ஏவினான்-வேறு பாணங்களைப் பிரயோகித்தான்; (எ - று.)

நீலோற்பலமலர்கள் நிறைந்த வயல்களி லுலாவுகின்ற மீன்கள் அம்மலர்களின்சேர்க்கையால் தமதுபுலால்நாற்றம்நீங்கி'பூவோடு கூடி நாரும் மணம் பெற்றது' என்றாற்போல அம்மலர்களின் மணம் நாறுமென்றது, பிறிதின் குணம்பெறலணி;வடநூலார் தத்குணாலங்கார மென்பர்;ஒருபொருள் தன் குணத்தையிழந்து பிறிதொன் றன்குணத்தைப்பெற்றதாகக் கூறுதல்,இதன் இலக்கணம். மச்சம் புலால்மாறிக் காவிமணநாறு மென்றது, கருங்குவளை மலரின் சிறப்புமிகுதி கூறியவாறும். கோ-தலைமை,மேன்மை. கொற்றம்-(பகைவரைக்) கொன்று பெறுவது என வெற்றிக்குக் காரணக்குறி; கொல் - பகுதி, அம் - விகுதி, து - சாரியை, மற்றதை - சந்தி. பகைவரது இரத்தந் தோய்ந்து சிவந்திருத்தலால், 'செந்தாமச்சரம்' எனப்பட்டது; இனி,தாமச்சரம் - வரிசையாய் ஒருதொடையிலே எய்த சரங்க ளென்றுமாம். கொண்டு - மூன்றாம்வேற்றுமைச்சொல்லுருபு. பாகு - தேர் யானை குதிரைகளைச் செலுத்துந் தொழில்; இது, பாகனுக்கு இங்கு ஆகுபெயர். தனு-தநுஸ் என்னும் வடமொழியின் விகாரம். உம்மை - எச்சவும்மை; பெயர்ச்செவ்வெண்ணின் ஈற்றில் வந்தது: [நன் - இடை-அ.] அச்சம்-தொழிற் பெயர்; அஞ்சு - பகுதி, அம் - விகுதி, வலித்தல் - விகாரம். மற்று-இடைச் சொல்; இங்கே பின்பென்னும் பொருளது. மார்பத்து, அத்து - சாரியை. உம்மைகள் - இறந்ததுதழுவியஎச்சம். (கசு)

[திரிகர்த்தன் விராடனைத் தேரிற் கட்டுதல்.]

தனைத்தேரழித்தோனை நிரைகொண்டு போகின்ற தனுவீரனுந்
துனைத்தேரும்வேறொன் றுமேல்கொண்டுநாலைந் துதொடையேவியே

வினைத்தேரும் வயமாவும் வெம்பாகும் விழவெய்து வின்னாணினன்
முனைத்தேர்மு கத்திற்பி ணித்தான வன்சேனை முகமாறவே.

(இ - ள்.) நிரை கொண்டு போகின்ற - பசுக்களைக் கவர்ந்துகொண்டு போகின்ற, தனு வீரனும் - விற்போரில்வல்ல வீரனாகிய திரிகர்த்தனும்,— துனை வேறு ஒன்று தேரும் மேல்கொண்டு - விரைந்துசெல்லுதலையுடைய வேறொருதேரில் ஏறிக்கொண்டு,—(விராடனது),வினைதேரும்-போர்த்தொழிலுக்கு உரிய இரதமும், (அத்தேரிற்பூட்டிய), வயம் மாவும் - வெற்றியையுடைய குதிரைகளும், வெம் பாகும் - கொடிய [வல்லமையுள்ள]சாரதியும், விழ - கீழே விழுந்து அழியும்படி,நாலைந்து தொடை ஏவி எய்து - இருபது அம்புகளை வில்லில்தொடுத்துப் பிரயோகித்து, தனை தேர் அழிதந்தோனை - (கீழ்த்) தன்னைத் தேரழியும்படிசெய்தவனான அவ்விராடராசனை, அவன் சேனை முகம்மாற-அவனதுசேனை முகம்திரும்பும்படி [முதுகுகாட்டும்படி], வில் நாணினால் - வில்லினது நாணியினால், முனை தேர் முகத்தில் - போர்க்களத்தில் (தனது) தேரின் முன்னிடத்தில் [தேர்க்காலில்], பிணித்தான் - கட்டினான்; (எ - று.)

'தனை' என்பதில் ஐயுருபு உருபுமயக்கமாக, தனதுதேரை அழித்தோனெனினுமாம். தன் தேரை யழித்தோனை என உருபுபிரித்துக்கூட்டுதலுமாம். 'தனிவீரன்' என்னும் பாடத்துக்கு - ஒப்பில்லாத வீர னென்க. துனை - முதனிலைத்தொழிற்பெயர். நாலைந்து - பண்புத்தொகை. நாலைந்து தொடை - சிலதொடை யென்னலுமாம். தொடை - தொடுக்கப்படுவது; ஐ - செயப்படுபொருள்விகுதி. வினைத் தேர் - சித்திரவேலைத்திறமமைந்த தேருமாம். முகம் மாற - முகம் ஒளியிழக்க வென்றலுமாம். (கரு)

வேறு.

[கங்கபட்டனது தூண்டுதலாற் பலாயனன் போர்க்குஎழுதல்.]

திண்டி றற்சிலை விராடனைத் தேரொடும் பிணித்துக்
கொண்டு போதலுங் குருகுலக் கோமக முனிவன்
கண்டு தன்றிருத் தம்பியைக் கடைக்கணித் தருள
மண்டு தீயென வெழுந்தனன் மடைத்தொழில் வல்லான்.

(இ - ள்.) (இவ்வாறு திரிகர்த்தராஜன்), திண் திறல் சிலை - மிக்க வலிமையுள்ள வில்லையுடைய, விராடனை —, தேரொடும் பிணித்து - (தன்) தேருடன் சேர்த்துக்கட்டி, கொண்டுபோதலும் - கொண்டுபோகவளவில்,— குரு குலம் கோமகன் முனிவன்-(கங்கபட்டனென்னும் பெயரோடு) முனிவேடங்கொண்டுகரந்துறைகின்ற குருகுலத்தில்தோன்றியசிறந்தஅரசனான யுதிஷ்டிரன், கண்டு - (அதனைப்) பார்த்து, தன் திரு தம்பியை - தனது சிறந்த தம்பியாகிய (பலாயனனென்னும்பெயர்பூண்ட) பீமசேனனை, கடைக்கணித்தருள - அருளோடு கடைக்கண்ணாற் பார்த்து (விராடனை விடுவிக்கவேண்டு மென்று) குறிப்பிக்க,—மடை தொழில் வல்லான்-உணவு சமைத்தற்றொழிலில் வல்லவனான அப்பலாயனன், மண்டு தீ என - மூண்டெரிகின்ற நெருப்புப்போல, எழுந்தனன் - (போர்செய்தற்குக்) கோதித்தெழுந்தான்; (எ - று.)

இதனால், பாண்டவரது நன்றியறிவுடைமையும், தமையனார்கட்டளையை எதிர்பார்த்து அதனைக் கடவாதுநிற்கும் அத்தம்பியாரது தன்மையும் நன்குவிளங்கும்.

திண்திறல் - ஒருபொருட்பன்மொழி. போதலும் - 'உம்'ஈற்று இறந்தகாலவினையெச்சம், பிற்பொருளோடு விரைவையுங் குறித்துநின்றது: து

அல் இரண்டும் - சாரியை. கோமகன் + முனிவன்=கோமகமுனிவன்; உயர் திணைப்பெயரீறு விகாரமாயிற்று: [நன் - உயிரீறு - க.] திரு-ஸ்ரீ லக்ஷ்மியு மாம். தம்பி, தாம் - பகுதி, பி - முறைப்பெயர்விகுதி; பகுதி முதல்குறுகி யது, விகாரம். கடைக்கணித்து - பெயர்ச்சொல்லடியாகப் பிறந்த தெரி நிலைவினையெச்சம். கடைக்கண் - கண்ணின் கடை; பின்முன்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை: இலக்கணப்போலி யென்பர். 'அருள்' என்ற துணைவினை, வினைமுதலின் உயர்வை விளக்கும். மடை - உணவு; உண்ணப் படுவது என்ற பொருளில், மடு - பகுதி, ஐ-செயப்படுபொருள்விகுதி. மடுத் தல்-வாயினுளுட்கொள்ளுதல். மடைத்தொழில் - உணவுக்குஉரிய தொழில்; எனவே, சமையலாயிற்று. கோமகமுனிவன் - ராஜரிஷி யென்றவாறுமாம்.

இதுமுதல் ஐம்பத்துமூன்று கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஈற் றுச்சீரும் மாச்சீர்களும், நடுச்சீர்மூன்றும் விளச்சீர்களு மாகிய நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (கசு)

[பலாயனன் பொருது திரிகர்த்தனைப் பற்றுதல்.]

உகத்தினீறுதோறோதையோடோதையாந்தாதை
நகத்தினுயர்நகங்களைநருக்குமாபோலத்
திகத்தபூபதிதேரினைவேறொருதேராற்
றகர்த்துவில்லொடுமகப்படுத்தினனவன்றனையும்.

(இ - ள்.) (எழுந்த பலாயனன்),—தாதை ஆம் ஊதை - (தனது) தந் தையாகிய வாயு, உகத்தின் ஈறு தோறு - யுகமுடிவு [கற்பாந்தகாலந்] தோ றும், ஓதையோடு - பேரொலியுடனே, நகத்தினால் - (பெரிய) மலைகளால், உயர் நகங்களை - உயர்ந்த மலைகளை, நருக்கும் ஆ போல-நொருக்கும் விதம் போல,—திகத்த பூபதி - திரிகர்த்ததேசத்தரசனது, தேரினை—,வேறு ஒரு தேரால்—, தகர்த்து - நொருக்கி, அவன்தனையும் - அத்திரிகர்த்தனையும், வில்லொடும் - வில்லுடனே, அகப்படுத்தினன்-அகப்படச்செய்தான் [வில் லுங்கையுமாய்த் திரிகர்த்தனைப் பிடித்துக்கொண்டா னென்றபடி];(எ - று.)

வீமனுக்கு வாயுவும், தேர்க்கு மலையும் உவமை. தந்தையே மைந்தனு கின்றா னென்னும் வேதவழக்குப்பற்றியும், வீமனுக்கு வாயுவை உவமை கூறுதல் ஏற்கும்; "தந்தையரொப்பர்மக்கள்"என்றார் தொல்காப்பியனாரும். கற்பாந்தகாலத்திற் பெருங்காற்று எழுந்து வீசி உலகங்களை அழிக்குமென்க.

யுகம், தாத என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. உகத்தினீறு-யுகா ந்தம். ஆம்-ஆகுமென்னுஞ்செய்யுமெனெச்சத்து ஈற்றுயிர்மெய் சென்றது. உயர் நகம் - வினைத்தொகை. நகம் - வடமொழிப்பெயர்; ஸஞ்சரித்தலில் லாதது என்று காரணப்பொருள்பெறும். ஆ - ஆறு என்பதன் விகாரம். பூபதி - பூமிக்குத்தலைவன்; வடமொழிப்பெயர். 'ஈறுதோறு'எனவும், 'ஓதை யோ டோதையாந் தாதை' எனவும் வந்த எழுத்தே மீண்டும் வந்தது, பிராஸ மென்னுஞ் சொல்லணி. அகப்படுத்துதல் - தன்வசப்படுத்துதல். (கஎ)

[பலாயனன் விராடனை மீட்டு அவனது தேர்க்காலில் திரிகர்த்தனைக் கட்டுதல்.]

வீரியந்தனக்கொருவனும்விராடனையொருபொற்
றேரிலேறுகென்றேற்றியத்தேரினிற்றிகத்தன்
சோரிபாய்தடந்தோள்களைவடத்தினாற்றுவக்கி
மூரியேறெனமீண்டனன்முறிந்ததச்சேனை.

(இ - ள்.) (இவ்வாறு அகப்படுத்தி),—வீரியந்தனக்கு ஒருவன் ஆம் விரா டனை - வீரத்தன்மையில் ஒப்பில்லாதவனாகிய விராடராஜனை, ஒரு பொன்

தேரில் ஏறுக என்று-'பொன்மயமானவேறொருதேரிலேஏறுவாயாக'வென்று சொல்லி, ஏற்றி - (கட்டவிழ்த்து) ஏறவிட்டு,—அ தேரினில் - அந்தத்தேரி லே, திகத்தன் - திரிகர்த்தராஜனது, சோரி பாய் தட தோள்களை - இரத் தம்பெருகுகின்ற பெரிய புஜங்களை, வடத்தினால் துவக்கி - (விராடனைக் கட்டிய) கயிற்றினாலேயே கட்டிவிட்டு,—மூரி ஏறு என-வலிமையுள்ள விரு ஷபம்போல [கம்பீரமாக], மீண்டனன் - (பலாயனன்) திரும்பிவந்தான்; (இதுசெய்யவே),—அ சேனை-அந்தத்திரிகர்த்தசேனை, முறிந்தது-அழிந்து போயிற்று; (எ - று.)

ஒருவன் - அத்விதீயன். 'பாய' என்ற எச்சம் 'பாய்' என்று விகாரப் பட்டதெனக்கொண்டு, தோள்களைச் சோரிபாய வடத்தினால் இறுகக் கட்டி யென்றலு மொன்று. மூரி-பெருமையுமாம். துவக்கி, துவக்கு-பகுதி. வீரியர்தனக்கு-உருபுமயக்கம். பொன்தேர் அழகிய தேருமாம். ஏறுக+என் று=ஏறுகென்று: வியங்கோளீற்றுஅகரம் தொகுத்தல்விகாரமடைந்தது. ஏறு - ஆண்பாற்பெயர்; இங்கே, பசுவின்ஆண். ("பன்றி புல்வா யுலழியே கவரி, யென்றிவை நான்கும் ஏறெனற் குரிய"). "எருமையு மரையும் பெற் றமு மன்ன" என்பதனால், ஏறென்றார்: இனி, ஆண்சிங்கமுமாம். (௧அ)

[விராடன் பலாயனனுக்கு நன்றியறிவுகூறல்.]

பொருமுகத்தினிற்பகைவனைப்புயமுறப்பிணித்து
வெருமுகத்தினில்வீடுகொள்வீமனைவிராடன்
செருமுகத்தினிலெனக்குநீசெய்தபேருதவிக்
கொருமுகத்தினுமில்லைகைம்மாறெனவுரைத்தான்.

(இ - ள்.) (இவ்வாறு), பொரு முகத்தினில் - போர்செய்கின்ற களத் திலே, பகைவனை - பகைவனாகிய திரிகர்த்தனை, புயம் உற பிணித்து-தோள் களை அழுந்தக் கட்டிவிட்டு, வெரு முகத்தினில் - (யாவரும்) அஞ்சத்தக்க தோற்றத்துடனே, வீடு கொள் - திரும்பிவருகின்ற, வீமனை-வீமசேனனை நோக்கி, விராடன்—, 'செரு முகத்தினில் - யுத்தகளத்தில், எனக்கு நீ செ ய்த—, பேர் உதவிக்கு - இந்தமகோபகாரத்திற்கு, கைம்மாறு - (யான்செய் யும்) பிரதியுபகாரம், ஒரு முகத்தினும் - ஒருவகையிலும், இல்லை—,'என உரைத்தான் - என்று சொன்னான்; (எ - று.)

நான் எந்த உபகாரஞ் செய்தபோதிலும் நீ செய்த பெரிய உபகாரத் துக்கு ஈடாகா தென்றபடி. காலத்திற் செய்த நன்றி ஞாலத்தினும் மிகப் பெரிய தாதலால், 'ஒருமுகத்தினு மில்லை கைம்மாறு' என்றான். வெரு முகத்தினில் - அஞ்சத்தக்கஇடத்தில் என்றலு மொன்று. வெரு - வெருவு என்பதன் விகாரம். பகைவன் என்ற பெயரில், வ்-பெயரிடைநிலை. வீடு - விடு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். வீடுகொள்-தன்னைவிடுவித்த என்றுமாம்; (பகைவரைக்)கொல்லுகின்ற என்று உரைப்பாருமுளர். வீமன்- பீமன் என்ற வடமொழியின் திரிபு; பகைவர்க்குப் பயங்கரனா யிருப்பவ னென்பது பொருள். உதவி - தொழிற்பெயர்; இ - விகுதி. (௧௯)

[நாமக்கீர்த்தி திரிகர்த்தசேனைத்தேர்களைக் கவர்தலும், தந்திரீபாலன் நிரைமீட்டலும்.]

சேவலானெனத்தெயித்தியனனையவத்திகத்தர்
காவலானையக்கான்மகன்பிணித்தமைகண்டு
மாவலான்வயமாப்பதினாயிரம்வாரக்
கோவலானவன்கொண்டகோமீளவுங்கொண்டான்.

(இ - ள்.) (அப்பொழுது),—அ கால் மகன்-வாயுபுத்திரனான அவ்வீம சேனன், சேவலான் என-கோழிக்கொடியையுடையவனான முருகக்கடவுள்

போல, தெயித்தியன் அனைய அ திகத்தர் காவலானை - அசுரனைப்போன்ற அந்தத் திரிகர்த்ததேசத்தார்க்கரசனை, பிணித்தமை - கட்டியதை, கண்டு—, மா வலான் - குதிரைசெலுத்துந்தொழிலில் வல்லவனாகிய (தாமக்கிரந்தி யென்னும்பெயர்பூண்ட) நகுலன், வய மா பதினாயிரம் வார - (திரிகர்த்த சேனையிலுள்ள) வலிய பதினாயிரங்குதிரைகளைக் கவர்ந்துகொள்ள,—சேவலான் - பசுக்களைப்பாதுகாக்குந்தொழிலில் வல்லவனாகிய (தந்திரிபாலனென்னும்பெயர்கொண்ட)சகதேவன்,அவன் கொண்ட கோ-திரிகர்த்தன் கொண்டுபோன பசுக்களை, மீளவும் கொண்டான் - திருப்பி (ஊருக்கு) ஓட்டினான்; (எ - று.)

இது, இப்படலத்துக்கு உயிர்நிலைச்செய்யுள்; நிரைமீட்டல் கூறுகின்றமையின்.

உரிமைபற்றி, மாவலான் மாவாரக் கோவலான் கோக்கொண்டா னென்க. பலபராக்கிரமங்களிலும் அழகியவடிவிலும் தேவாம்சமாதலிலும் எளிதிற்பகையழித்தலிலும் வீமனுக்கு முருகக்கடவுளும், அவனால்எளிதில்அழிக்கப்படுதலிலும் நல்லோர்க்குப் பகையாய்க் கொடுந்தொழில்செய்தலிலும் திரிகர்த்தனுக்கு அசுரனும் உவமையாம்; உவமையணி. சேவல் - ஆண்பாற்பெயர்; "சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும், மாயிருந் தூவி மயிலலங்கடையே" என்பதனால், ஆண்கோழி சேவ லெனப்பட்டது; இனி, சேவலான் - மயில்வாகனமுடையவ னென்றுமாம். ஆசிரியர் தொல்காப்பியனார் "மாயிருந்தூவி மயி லலங்கடையே" என்றாராயினும், உரைகாரர் 'செவ்வேளூர்ந்த மயிற்காயின் அதுவும் சேவலும்படு மென்பது' என்றமை காண்க. முருகக்கடவுளால் வேல்கொண்டு பிளக்கப்பட்ட சூரபதுமனது உடம்பின் கூறுஇரண்டும் மயில்வடிவமும் கோழிவடிவமும் பெற்று அக்கடவுளருளால் அப்பிரானுக்கு வாகனமும் கொடியுமாய் அமைந்தன வென்று அறிக. இனி, சே வலான் எனப்பிரித்து, ருஷபத்தை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்தல்வல்ல பரமசிவன்போல வென்றலுமாம். தயித்தியன்-தைத்தியன்; முதற்போலி. தைத்யன் என்ற வடசொல்-(காசியபமுனிவர்மனைவிகளில்ஒருத்தியாகிய)திதி யென்பவளது மகனென்று பொருள்படும்;தத்திதாந்தநாமம். 'தெயித்தியன்' என முதலில் எகரம்பெற்றது, மோனைநயத்தின்பொருட்டு. அனைய - அன்என்னும் உவமவுருபிடைச் சொல் லடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். காவலான்-காவல்ஆன்: காத்தற்றொழிலுடையவன்; அன்றி, கா வலான் - காத்தலில் வல்லவன். பிணித்தமை - இறந்தகாலத்தொழிற்பெயர் பதினாயிரம் - பண்புத்தொகை. இன் - சாரியை. கோ - வடசொல். கோவலான் - கோபால னென்பதன் விகாரமாகவுமாம். வய - வலிமையுணர்த்தும் உரிச்சொல்; "வய வலியாகும்" என்பது தொல்காப்பியத்து உரிச்சொல்லியற் சூத்திரம். 'பதினாயிரமவெளவ' என்றும் பாடமுண்டு.

பாண்டவர்நால்வர் விராடனுக்கு உதவியமை கூறியதாயிற்று.　　(௨0)

[சூரியாஸ்தமன வருணனை.]

துன்னலன்றனைத்தோளுறத்துவக்கிமுன்றந்த
பன்னுநான்மடைப்பலாயனற்கண்டுபாவித்தாங்
கன்னகாலையிலருக்கனைத்தேரொடுமனைத்து
மன்னுதன்றிசைவன்சிறைப்படுத்தினன்வருணன்.

(இ - ள்.) அன்ன காலையில் - அப்பொழுது, துன்னலன்தனை - பகைவனாகிய திரிகர்த்தனை, தோள் உற துவக்கி - தோள்களை அழுந்தக் கட்டி, முன் தந்த - எதிரிலே கொணர்ந்து கொடுத்த, பன்னும் - சிறப்பித்துச்

சொல்லப்படுகின்ற, நூல் மடை பலாயனன் - பாகசாஸ்திரத்தையுணர்ந்து அதன்முறைப்படி சமைத்தலையுடைய பலாயனனென்னும் வீமனை, கண்டு-பார்த்து, வருணன்—, ஆங்கு பாவித்து - அவ்வாறே (தானுஞ்செய்வதாகப்) பாவனைசெய்து, அருக்கனை - சூரியனை, தேரொடும் அணைத்து-தேருடனே சேர்த்துக்கொண்டுபோய், மன்னு தன் திசை - நிலைபெற்ற தனது [மேற்குத்] திக்கில், வல் சிறை படுத்தினன் - வலிய காவலிலே அகப்படுத்தினான்.

மேற்கிற் சூரியன் இயல்பாக அஸ்தமித்து மண்டலத்தோடு மறைந்து போனதை வீமன்போல வருணன் தேரோடு சிறைப்படுத்தியதாகக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. வடநூலார் உத்ப்ரேக்ஷாலங்கார மென்பர். பாவித்து ஆங்கு - தானும் தன்னை அவ்வீமனாக எண்ணிக்கொண்டு தொழில்செய்தாற் போல வென்றலும் அமையும். புகழ்விளக்குஞ் சிறந்த தொருசெயலை ஒருவர்செய்யக் கண்டவிடத்து, அங்ஙனந் தாமுஞ்செய்து சிறப்புறவேண்டு மென்னுங் கருத்தும் அதற்கேற்றமுயற்சியும் பிறர்க்கும் உண்டாகுதல், உலகவியல்பு. வீமன் திரிகர்த்தனைக்கட்டியது சூரியாஸ்தமனத்திற்குச் சிறிதுமுன் பென்பது போதரும்.

தன்னலன் - தன்னோடு சேராதவன்; எதிர்மறைவினையாலணையும் பெயர்: தன் - பகுதி, அல் - எதிர்மறையிடைநிலை. பலாயனற் கண்டு - ஐயுருபு உயர்திணையிடத்துத் தொக்கது: அங்ஙனந் தொக்கவிடத்து உயர்திணைப்பெயரீறுதிரிந்தது; "இயல்பின்விகாரம்;" [நன்-உருபு-கசு.] பொருள் புலப்படுத்துதற்பொருட்டு, உயர்திணைப்பெயரீறு இயல்பாகாமல் இங்ஙனந் திரியு மென்க. ஆங்கு - சுட்டுநீண்டது. காலம் - காலை என ஈறுதிரிந்தது. அர்க்கன் - வடசொல். வருணன் மேற்குத்திக்குப்பாலகனாதலால், 'தன் திசை' எனப்பட்டது. (உக)

[கங்கபட்டன்சொன்னபடி விராடன் திரிகர்த்தனை விட்டிடுதல்.]

கங்கனென்று தன்னருகிருந்தருளியகடவுட்
டுங்கமாமுனிசொற்படிதோள்வடநெகிழ்த்துச்
சிங்கமன்னவத்திகத்தனைச்செல்கெனவிடுத்தா
னங்கமாமதிலயோத்திமன்றேருமொன்றளித்தே.

(இ - ள்.) அங்கம் மா மதில் அயோத்தி மன் - உறுப்புக்களமைந்த பெரிய மதிலையுடைய அயோத்திநகரத்தின் அரசனாகிய விராடன்,—கங்கன் என்று - கங்கபட்டனென்று பெயர்கொண்டு, தன் அருகு இருந்தருளிய - தன்பக்கத்தில்எழுந்தருளியிருக்கின்ற, கடவுள் - தெய்வத்தன்மையையுடைய, துங்கம் மா முனி - உயர்ச்சிவாய்ந்த மகாமுனிவராகிய தருமபுத்திரரது, சொல்படி - சொல்லின்படி, சிங்கம் அன்ன அ திகத்தனை - சிங்கம்போன்ற அந்தத் திரிகர்த்தராஜனை, தோள் வடம் நெகிழ்த்து - தோள்களைக்கட்டிய கயிற்றை அவிழ்த்து, தேரும் ஒன்று அளித்து - ஒருதேரையுங்கொடுத்தருளி, செல்க என - '(உயிரோடு) போவாயாக' என்றுசொல்லி, விடுத்தான் - விட்டிட்டான்; (எ - று.)

விராடன் சூரியகுலத்துத்தோன்றியவனாதலாலும், ஸ்ரீராமபிரான் முதல்நாட்போரிலே போர்க்களத்துத் தன்சேனைமுழுவதும் அழியத் தனியனாய் அகப்பட்ட இராவணனது நிலைமையை நோக்கி மேலும்போர்செய்யாமல் 'இன்றுபோய் நாளை நின்சேனையோடு வா' என்று கூறிவிட்டமை போல இவனும் திரிகர்த்தனைத் தேருமொன்றளித்துச்செல்கவெனவிடுத்தமையாலும், 'அயோத்திமன்' எனப்பட்டான். மேற் பதினாறும்போர்ச்சருக்கத்தில் "அன்றுபோர்புரிசேனையின்பதியான வீரனை நீ, இன்றுபோ யினி நாளைவா வென வினிதியம்பினனால், வென்றிகூர்வரிவின்மையா லடல்

வெவ்வரக்கரை முன், கொன்ற காளையை யொத்த பேரிசை கொண்ட வாண்மையினன்" என்பது, இங்கு ஒப்புநோக்கத்தக்கது. பகைவர்பக்கலிலும் அறநெறிதவறாத தருமபுத்திரனது கருணையும், விராடன் முனிவர் சொல்லைக்கேட்டு அதன்படியொழுகும் நற்குண முடையவனென்பதும், கங்கபட்டனிடம் விராடனுக்குஉள்ள நன்குமதிப்பும் இங்கு வெளியாம். இனி, அயோத்தி - விராடநகரத்துக்குக் காரணப்பெயரெனவுங் கொள்ளலாம். திரிகர்த்தனை இங்ஙனம் விடுத்தது, தழிஞ்சியென்னும் புறப்பொருள் துறை; அது, வலியிழந்தவர்மேற் போர்க்குச்செல்லாமல் அவர்க்குஉதவி செய்து தழுவுவது.

முநி என்ற வடசொல்லுக்கு - (கடவுளை எப்பொழுதும்) தியானஞ் செய்பவன் அல்லது திரிகாலஞானமுடையவன் என்று பொருள்; இனி, (எல்லாப்பற்றுக்களையும்) முனிந்தவன் [வெறுத்துவிட்டவன்] ஆதலால் முனி என்று தமிழ்வகையாற் காரணப்பொருள்கூறலாகாது: வடசொல் திரிபாதலால். துங்கம், அங்கம் - வடசொற்கள். சிங்கம்-ஸிம்ஹமென்னும் வடமொழியின் சிதைவு; (யானைமுதலிய பெரியவிலங்குகளையும்)ஹிம்ஸிக்க வல்லதென்று காரணப்பொருள் பெறும். மிருகேந்திரனாகிய சிங்கம் - வீரனுக்கு.நடை வலிமை நோக்குத் தைரிய காம்பீரியங்களாலும்,எளிதிற்பகையழிக்குந்திறத்தினாலும், தலைமையினாலும் உவமை. இங்கே 'சிங்கமன்ன திகத்தன்' என்றது, இகழ்ச்சி: எதிர்மறையிலக்கணை. அன்றி,தோல்வியுற்ற அவனை 'சிஙகமன்னவன்' என்றது, அவனைவென்றவனான வீமனது பல பராக்கிரமங்களின் மிக்க சிறப்புத் தானேவிளங்கக் கூறியதுமாம். அங்கம் - ஞாஞ்சில், பதணம், யந்திரம் முதலிய மதிலுறுப்புக்கள். அயோத்தி-அயோத்யா என்னும் வடமொழியின் சிதைவு;பகைவரால் யுத்தஞ்செய்துவெல்லக் கூடாததென்பது பொருள்: மதில் அகழி ஆயுதம் சேனை முதலியவற்றால் மிக்ககாவலுடையதென்பது கருத்து; இதனால், அந்நகரத்துஅரசர்களது பிறரால்வெல்லலாகாவீரமும் தொனிக்கும். செல்கென - வியங்கோளீறு தொகுத்தல். உம் - இறந்ததுதழுவியஎச்சம். (உஉ)

[அன்றையிராத்திரி விராடன் அங்கேயே இருத்தல்.]

போரணிப்படையொடுமவன்போனபின்றனது
தேரணிப்பெருஞ்சேனையைரவிகுலதிலகன்
பேரணிப்படவகுத்துமற்றியாரினும்பெரியோ
னீரணிப்படைவருமெனக்கங்குலங்கிருந்தான்.

(இ-ள்.) அவன் - அத்திரிகர்த்தன்,போர் அணி படையொடும்-போர்க்களத்துக்கு அலங்காரமான சேனையுடனே, போனபின் - போய்விட்ட பின்பு,ரவி குல திலகன் - சூரியகுலத்துக்குத் திலகம்போன்றவனாகிய விராடன்,—'மற்று யாரினும் பெரியோன் - மற்றை யெல்லாரினும் பெரியவனாகிய துரியோதனனது, ஈர் அணி படை - இரண்டாவது [வேறொரு] சீர் பெற்ற சேனை, வரும் - இங்குவருதல்கூடும்,' என - என்றுஎண்ணி,— தனது - தன்னுடைய, தேர் அணி பெருஞ் சேனையை - தேர்முதலியவற்றையுடைய அழகிய பெரிய சேனையை, பேர் அணி பட வகுத்து - பெரிய ஒழுங்காக வகைப்படுத்தி, கங்குல் - இராமுழுதும்,அங்கு - அங்கேயே[தெற்குப்பக்கத்தில்], இருந்தான் - தங்கியிருந்தான்; (எ - று.)

தோல்வியுற்ற சேனையை இங்கே 'போரணிப்படை' என்றது, இகழ்ச்சி; வீரமின்மை விளக்கிற்று. திலகம் - நெற்றிப்பொட்டு; அது நெற்றிக்கு அழகுசெய்வதுபோல, தான் பிறந்த சூரியகுலத்துக்குச் சிறப்புண்டாக்குபவனென்க. அணிப்பட வகுத்தல்-வியூகமாக அமைத்தல். மற்றியார் - குற்றிய

விகரம். யாரினும் பெரியோன் - எல்லாவரசர்களினும் மேலான துரியோதனன்; ராஜராஜ னாதலால், இங்ஙனங் கூறப்பட்டான். இனி, 'மற்றியாரினும் பெரியோன்' என்ற தொடர் - ரவிகுலதிலகனுக்கு விசேஷணமாகவுமாம். மற்று - இனியென்றுமாம்; அசையுமாம். ஈரணிப்படை, ஈர்-வினைத்தொகையாய், (பகைவரைப்) பிளக்கவல்ல சேனையுமாம்; ஈர்தல் - அரிதல், அறுத்தல், பிளத்தல். 'போரணிப்படை' என்ற தொடர் - போர்செய்தலைத் தனக்கு அலங்காரமாகக்கொண்ட சேனை யென்றும், போர்செய்தற்பொருட்டு (முன்பு) அணிவகுத்துநின்ற சேனை யென்றும் பொருள்படும். தேர் - மற்றைச்சேநாங்கங்கட்கும் உபலக்ஷணம். இனி, 'தேர்' என்பதை வினைத்தொகையாகக்கொண்டு, போரில்தேர்ந்த என்றும், (அறிவுடையோரால்) அறியப்படுகின்ற என்றும் பொருள்கூறவும் அமையும். சேனைக்கு அழகு - அலங்கரிக்கப்பட்டதேர்யானைகுதிரைகாலாள்களுடனும் குடைகொடிசாமரங்களுடனும் பலவகைவாத்தியங்களுடனு மிருத்தலும், போர்க்குப் பின்வாங்காமையு மாம். 'ஈரணிப்படை' என்பதற்கு - கொடிப்படை பேரணி என இருவகைப்பட்ட அணிவகுப்பையுடைய சேனை யென்று உரைப்பாருமுளர்; முதற்பொருளிற்போலவே, இப்பொருளிலும் 'ஈரணி'-பண்புத்தொகை. 'யாரினும்' என்றஇடத்து, இன் - ஐந்தனுருபு, எல்லைப்பொருளது.

தமிழிலே மொழிக்குமுதலில்வாராததான ரகரத்தை முதலிலுடைய வடசொல்லைத் தமிழில்எடுத்து ஆளும்பொழுது "ரவ்விற்கு அம்முதலாம்முக்குறிலும், .. .. ...மொழிமுதலாகி முன்வருமே" என்றபடி அகரஇகரஉகரங்களுள்ஏற்றதொன்றை முதலிற்சேர்த்து உபயோகிக்கின்ற வழக்குப்பற்றி 'இரவிகுலதிலகன்' என்றல் தகுதியாயினும், சிறுபான்மை வடசொற்களை அங்ஙனமேபிரயோகித்தலும் இயல்பாதலால் 'ரவிகுலதிலகன்' என்றேகூறினர்; "வந்தகுலத்திடைவந்த ரகுவென்பான்" என்று கம்பர்கூறியதுங் காண்க. (பிரயோகவிவேகநூலார் 'தண்டியாசிரியரும் சிந்தாமணியாரும் வடமொழியிற்பிறந்தவண்ணமே "யுக்தமுமயுக்தமும்", "ராசமாபுரி," "ரவிகுலதிலகன்" என முறையேகூறுதல் காண்க' என்றும், 'நாலடியாரும் தண்டியாசிரியரும் சிந்தாமணியாரும் வடமொழியிற்பிறந்தவண்ணம் முறையே "யோசனையோர் கேட்பர்", "யுக்தமு மயுக்தமும்". "ரவிகுலதிலகன்" எனத் தற்சமமாகக்கூறினாற்போல, யாமும். உருவபேதமென்னுமலே ரூபபேதமென்றும்' என்றுங் கூறியவை நோக்கத்தக்கன.) (௨௩)

[இதுவும், அடுத்தகவியும் - உத்தரகோக்கிரகணம் (வடபுறத்துநிரை கவர்தல்.)]

கெட்டவெம்படைகெட்டமைசுயோதனன்கேளா
முட்டவெண்டிசாமுகங்களும்பேரிகைமுழங்கத்
தொட்டபைங்கடற்சூரியன்றோன்றுமுன்றோன்றி
வட்டமாமதில்விராடனூர்வடாதுறவளைந்தான்.

(இ - ள்.) (பின்பு),—சுயோதனன் - துரியோதனன்,—கெட்ட வெம்படை - மிகவுங் கொடிய அத்திரிகர்த்தசேனை,கெட்டமை - அழிந்துதோல்வியுற்று வந்தசெய்தியை, கேளா - கேள்வியுற்று,—எண் திசாமுகங்களும் முட்ட-எட்டுத்திக்குக்களி னெல்லைகளிலும் ஒலிசென்றுதாக்கும்படி, பேரிகை முழங்க - போர்முரசங்கள் ஆரவாரிக்க,—தொட்ட பைங் கடல்-(சகரசக்கரவர்த்தியின்புதல்வர்) தோண்டிய பசிய கீழ்கடலிலே, சூரியன்—, தோன்று முன்-உதிப்பதற்கு முன்னே [பின்னிரவிலே], தோன்றி - புறப்பட்டுவந்து,—வட்டம் மா மதில் - வளைவான பெரியமதிலையுடைய, விராடன் ஊர்-விராடனது நகரத்தை, வடாது - வடக்குப்பக்கத்தில், உற வளைந்தான்-(சேனையுடனே) நன்கு சூழ்ந்துகொண்டான்; (எ - று.)

'தோட்டகடல்' என்றதன் விவரம்:—சூரியகுலத்துச் சகரமகாராசன் அசுவமேதயாகஞ் செய்கின்றபொழுது பூமிப்பிரதக்ஷிணத்தின்பொருட்டுச் செலுத்திய குதிரையை, பொறாமைகொண்ட தேவேந்திரன் மாயையால் ஒளித்துக்கொண்டுசென்று, பாதாளலோகத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த கபிலமுனிவர்பின்னே கட்டிவைக்க, அவ்வேள்விக்குதிரையை நாடிச் சென்ற சகரபுத்திரர் அறுபதினாயிரம்பேர் பூமிமுழுவதிலுந்தேடிக்காணாது பாதாளத்திற்குப் போகும்பொருட்டுப் பெருவழியாகப் பரதகண்டத்தில் வடகிழக்குப்பக்கத்தில் தோண்டிச்சென்ற பெரும்பள்ளம், பின்பு கங்கை முதலியவற்றின் நீரினால் நிறைந்து ஸாகரமென்னும் பெயர்பெற்றுக் கடலோடுகூடித் தானும் கடலின்பாற்பட்டது என்பதாம். ("நூறுயோசனை யகலமுமாழ முநடங்கக், கூறுசெய்தன ரென்பரால் வடகுணதிசையின்", "சகரர்தொட்டலாற் சாகரமெனப்பெயர்தழைப்ப, மகரவாரிதி சிறந்தது" என்பன, கம்பராமாயணம்.)

கெட்ட வெம் - ஒருபொருட்பன்மொழி. கெட்டமை - இறந்தகாலத் தொழிற்பெயர். ஸுயோதநன்-வடசொல்: நல்ல [தனக்குவெற்றியைத்தருகின்ற] யுத்தஞ்செய்தலை யுடையவன் என்று பொருள்பெறும். கேளா-செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகால வினையெச்சம்; இதில் 'ஆ' என்ற வினையெச்சவிகுதியே இறந்தகாலங்காட்டும். எட்டுத்திசை - கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு என்பன. உம்மை - இனைத்தென்று அறிபொருளில் வந்த முற்றும்மை. பேரிகை - துந்துபி. தொட்ட, தொடு - பகுதி. பைங் கடல் - பசுமையின் ஈறுபோய், நடுநின்ற உயிர்மெய்யும் கெட்டு, வருமெழுத்துக்கு இனவெழுத்து மிக்கு, முதல்அகரம் ஐகாரமாயிற்று; [நன் - பதவியல் - ௬] பசுமை, கருமை, நீலம் இவற்றில் ஒன்றற்குஒன்றுஉள்ள சிறுவேறுபாட்டைப் பெரிதெனக்கொள்ளாமல் அபேதமாக்கூறுதல் கவிசமயமாதலால், கருங்கடலை 'பைங்கடல்' என்றார்; இனி, பசுமை - குளிர்ச்சியுமாம். திமுகம், பேரிகா, ஸுர்யன் - வடசொற்கள். வட்டம் - வ்ருத்தமென்னும் வடமொழியின் சிதைவு. வடக்குள்ளது - வடாது: மரூஉமொழி. வளைதல் - முற்றுகை செய்தல். 'வடதிசைவளைந்தான்' என்றும் பாடமுண்டு. வடடம் ஆம் மதில் என்றுபிரித்து உரைத்தலுமாம். (௨௪)

வளையநாடெலாமன்னவன்வரூதினிபரப்பி  
விளையுநன்பெருவிளைவெலாம்வெங்கனல்கொளுத்தி  
யளையுமாமணியானிரைகவர்தலுமாய  
ருளையவோடிவந்தூர்புகுந்துத்தரற்குரைப்பார்.

(இ - ள்.) மன்னவன் - துரியோதனன்,—நாடு எலாம் வளைய - மச்சதேசம் முழுவதுஞ் சூழும்படி, வரூதினி பரப்பி - (தன்) சேனையைப் பரவச்செய்து,—விளையும் நல் பெரு விளைவு எலாம் - விளைகின்ற நல்ல பெரிய நெற்பயிர்முதலிய விளைச்சல்களையெல்லாம், வெம் கனல் கொளுத்தி-வெவ்விய நெருப்பினாற் சுட்டெரித்து,—அளையும் மா மணி - அசைந்தொலிக்கின்ற பெரிய மணிகளையுடைய, ஆன் நிரை - பசுக்கூட்டத்தை, கவர்தலும்-கொள்ளைகொண்டு சென்றவளவில்,—ஆயர் - (அப்பசுக்களைக்காத்துநின்ற) இடையர்கள், உளைய-வருத்தமுண்டாக, ஓடி வந்து—, ஊர் புகுந்து-விராடநகரத்தினுட்சேர்ந்து, உத்தரற்கு - உத்தரகுமாரனுக்கு, உரைப்பார்-செய்தி சொல்லுபவரானார்கள்; (எ - று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் கூறுகின்றார்.

'எல்லாம்' என்னும் பெயர்-'நாடெலாம்' என்பதில் "மேனியெல்லாம் பசலையாயிற்று" என்பதிற்போல ஒருபொருளின் பலஇடங் குறித்தும்,

'விளைவெலாம்'என்பதிற் பொருளின்பன்மை குறித்தும் நின்றது; இதனை, எஞ்சாவுமைப் பொருளதாய் வருவதோர் உரிச்சொல் லென்பாரு முளர். விளைவு-தொழிலாகுபெயர். மணி-பசுக்களுக்கு அலங்காரமாகக் கட்டுவது. உத்தரன் - விராடனது இளையமகன்; (மூத்தமகன்பெயர், சுவேதன்.) வரூதினீ - வடசொல். ஆனிரை - ஒன்றன்கூட்டத்தற்கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத்தொகை. ஆ - பசு: அதனைப் பரிபாலிப்பவர், ஆயர். ய் - எழுத்துப்பேறு. உத்தரற்கு உரைப்பார் - நான்கனுருபு, கொடைப்பொருளது. கொளுத்தி-கொளுந்தி யென்பதன் பிறவினை; மெலி வலியாதல், பிறவினைக்குறி. கொளுந்துதல் - நெருப்புப்பற்றுதல்; கொளுத்துதல் - நெருப்புப்பற்றவைத்தல். பரப்பி யென்பதிற் பகுதியான பரப்புஎன்பதை,பரஎன்பதன் பிறவினை யென்றாவது, பரம்பு என்பதன் பிறவினை யென்றாவது கொள்ளலாம்; முன்னதில், பு - பிறவினைவிகுதி: பின்னதில், மெலி வலியாதல் - பிறவினைக்குறி. (௨௫)

[இதுவும், அடுத்தகவியும் - இடையர் உத்தரனுக்குச் செய்திகூறல்.]

குடநிறைப்பனகுவிமுலைக்கோநிரைமீட்பான்
றிடனுடைப்புயமன்னவன்றென்றிசைச்சென்றான்
வடதிசைப்புலமுழுவதுமாசுணக்கொடியோ
னடல்வயப்படையாழியிற்பரந்ததையன்றே.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) திடன் உடை புயம் மன்னவன் - வலிமையுள்ள தோள்களையுடைய (நமது) அரசன் [விராடன்], குடம் நிறைப்பன குவி முலை கோநிரை - (இடையர்கள் பால்கறக்கப் பிடிக்கின்ற)குடங்களை நிரப்புவனவாகிய குவிந்த முலைகளையுடைய பசுக்களின் கூட்டங்களை, மீட்பான் - (பகைவரினின்று) மீட்டுக்கொண்டுவருதற்பொருட்டு, தென் திசை சென்றான் - தெற்குப்பக்கத்திலுக்குப் போனான்; (இப்படிப்பட்ட சமயத்தில்), மாசுணம் கொடியோன் - சர்ப்பத்தின்வடிவமெழுதிய கொடியையுடையவனான துரியோதனனது, அடல் வயம் படை - வலிமையையும் வெற்றியையுமுடைய சேனை, வட திசை புலம் முழுவதும் - (ஊர்க்கு) வடக்குப்பக்கத்தினிடம் முழுவதும், ஆழியின் - கடல்போல, பரந்ததை-பரவிற்று; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

ஒவ்வொருமுலையும் குடங்குடமாகப் பால்சொரியு மென, பசுக்களின் சுரப்புமிகுதி கூறியவாறு; "தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலைபற்றி, வாங்கக் குடநிறைக்கும் வள்ளற் பெரும்பசுக்கள்" என்றார் பெரியாரும். மீட்பான் - பிறவினை எதிர்காலவினையெச்சம்; மீள் - பகுதி; பான் - விகுதி; அதுவே எதிர்காலங்காட்டும். (தன்வினையில் 'வான்'விகுதி சேர்ந்து 'மீள்வான்' என வரும்.) திடன் - த்ருடமென்ற வடசொல்லின் விகாரமாகிய திடமென்பதன் ஈற்றுப்போலி. உடையவென்னுங்குறிப்புப்பெயரெச்சத்து அகரவீறு தொகுத்தல். 'மாசுணக்கொடியோன்' என்றது - அவன்கொடியே அவனது கொடுமையையும், எப்பொழுதும் வக்கிரகதியிற்செல்லுமியல்பையும், நன்றியறிவின்மையையும், நாவிரண்டுடைமையையுங் குறிப்பிக்குமென்றற்குப் போலும். பாம்புபோலக்கொடியவ னென்ற பொருளும் தோன்ற, 'மாசுணக்கொடியோன்'என்றார். முந்தினபொருளில் 'கொடியோன்' என்ற பெயர் - கொடி யென்ற பெயரின்மேற் பிறந்தது; பிந்தினபொருளில், கொடுமை யென்ற பண்பினடியாய் பிறந்ததாம். விராடனோடு தனக்குப் பகைமைக்காரண மொன்று மில்லாதிருக்கையில் அவனது பசுக்களைக் கவர்தலே யன்றி, அவனது நாட்டு விளைவையெல்லாம் வெங்கனல்கொளுத்துதலுஞ்செய்த கொடுமைபற்றி, 'மாசுணக்கொடியோன்' என்றல் தகும்.

அடல் வயப் படை - கொல்லுதல்தொழிலில் வலிமையமைந்த சேனை யெனினுமாம். நிறைப்பன - பலவின்பால் வினையாலணையும்பெயர்; அன் - சாரியை. தெற்கு + திசை = தென்திசை, வடக்கு + திசை = வடதிசை: "திசையொடு திசையும்" என்னுஞ் சூத்திரவிதி. "முழுதென்கிளவி யெஞ்சாப்பொருட்டே" என்ற தொல்காப்பியத்தின்படி, 'முழுது' என்பது - எஞ்சாமைப் பொருளுணர்த்துவதோ ருரிச்சொல்லாம். அது, 'முழுவது' என விரித்தல் விகாரமாயிற்று. ஆழியின், இன் - ஐந்தனுருபு, ஒப்புப்பொருளது. பரந்தை - வினைத்திரிசொல்; ஐ - சாரியையுமாம். (௨௬)

நாட்டிலுள்ளனபலன்களுங்கவர்ந்தனநறுந்தண்
காட்டிலுள்ளனசுரபியின்கணங்களுங்கவர்ந்தார்
கூட்டிலுள்ளுறைகலுழனின்குஞ்சுபோலினிநீ
வீட்டிலுள்ளுறைகின்றதென்வேந்தன்மாமதலாய்.

(இ - ள்.) வேந்தன் மா மதலாய்-விராடராஜனது சிறந்த குமாரனே! —(துரியோதனாதியர்), நாட்டில் உள்ளன - (நமது) தேசத்திலுள்ளவையாகிய, பலன்களும் - தானியம் முதலிய விளைபயன்களையும், கவர்ந்தனர் - கொள்ளைகொண்டார்கள்; நறுந் தண் காட்டில் உள்ளன -(நாட்டையடுத்த) நல்ல [செழித்த] குளிர்ச்சியான காட்டில் உள்ளவையாகிய, சுரபியின் கணங்களும் - பசுக்களின் கூட்டங்களையும், கவர்ந்தார் - கொள்ளைகொண்டார்கள்; இனி - இங்ஙனங் கொண்டுபோனபின்பும், நீ—, கூட்டில் உள் உறை கலுழனின் குஞ்சுபோல் - கூட்டினுள்ளே அடைந்து [வெளிப்பட்டுத் தன்பகையாகிய பாம்புகளை வெல்லாமற்] கிடக்கின்ற கருடப்பறவையின் குஞ்சு போல, வீட்டில் உள் உறைகின்றது - வீட்டிற்குள்ளேயே வாசஞ் செய்துகொண்டிருக்கின்றது, என் - என்னே? (எ - று.)

பறவைக்கரசனாகிய கருடன் பாம்புகளை அழிக்குமாறுபோல ராஜகுமாரனாகிய நீயும் வெளிப்பட்டு வந்து பாம்புக்கொடியோனாதியரை அழிக்கவேண்டாவோ வென்றார். மேல் 'மாசுணக்கொடியோன்' என்று பகைவனைக் குறித்து இங்கு 'கலுழனின்குஞ்சுபோல்' என்று உத்தரனுக்கு உவமைகூறியது. உன் தந்தையைப்போலவே உன்னையுங் கண்டமாத்திரத்திலே அப்பகைவர் ஒடுங்கியொழிவ ரென்று குறிப்பித்து உத்தரனைஉத்ஸாஹப்படுத்துதற்பொருட் டென்க.

பலன் - பலம் என்னும் வடமொழியின் போலி. காடும், காடுசார்ந்த இடமும் - முல்லைநிலம். சுரபியின் கணம், இன் - சாரியை; இனி, இனிய சுரபிக்கண மென்றுமாம்: 'கலுழனின்குஞ்சு' என்பதற்கும் இங்ஙனங்கொள்ளலாம். கலுழன் - கருடனென்ற வடசொல்லின் விகாரம். குஞ்சு-இளமைப்பெயர்; என் - எவனென்னும் அஃறிணையிருபாற்பொதுவினைக் குறிப்புமுற்றின் விகாரம். மதலாய்-மதலையென்பதன் விளி; ஈறுதிரிந்தது, விளியுருபு. பலன்களும், கணங்களும் என்ற உம்மைகள்-முறையே எதிரதுதழுவியஎச்சமும்,இறந்ததுதழுவியஎச்சமுமாம்;எண்ணும்மைகளாக்கொள்ளலாகாது: வெவ்வேறுவாக்கியங்களில் வந்ததனால். உவமையணி. ஸுரபீ, கணம் - வடசொற்கள். வீட்டில் உள் - அரண்மனையில் உள்ளிடமாகிய (மகளிர்வசிக்கின்ற) அந்தப்புரத்திலே யென்றபடி. இனி, பின்னிரண்டடிகளில், 'கூட்டினுள்,' 'வீட்டினுள்' என்றும் பாடம் காணப்படுகின்றது. நறுமை - நறுமணம்வீசுதலுமாம். உள்ளன - உண்மையென்னும் பண்பி னடியாப் பிறந்த பலவின்பாற்பெயர்; அன் - சாரியை. நறுந் தண் காடு - பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். நீர்வளநிலவளப்பமுள்ள கா டென்பார், 'நறுந் தண் காடு' என்றார். 'பலன்களுங் கவர்ந்தனர்' என்றவிடத்து

'கவர்ந்தனர்' என்றது, 'உயிர்கவர்ந்தனர்' என்றவிடத்துப் போல ஒழித்தன ரென்றவாறும். உறைகின்றது - நிகழ்காலத்தொழிற்பெயர். (உஎ)

[சுதேஷ்ணை மகளிரை நகர்ப்புறங் காவல்செய்யச் சொல்லுதல்.]

என்றபோதிலப்புதல்வனைப்பரிவுடனீன்று
ணின்றமங்கையர்தங்களைநிரைநிரைநோக்கிச்
சென்றகாவலன்வருந்துணைசெங்கையிற்படைகொண்
டொன்றவேகிநம்மெயிற்புறங்காமினென்றுரைத்தாள்.

(இ - ள்.) என்ற போதில் - என்று (இடையர்) சொன்னபொழுது,— அ புதல்வனை பரிவுடன் ஈன்றுள் - அவ்வுத்தரகுமாரனை அன்போடு பெற்று வளர்த்த (விராடன்மனைவியாகிய) சுதேஷ்ணையானவள்,— நிரை நிரை நின்ற மங்கையர்தங்களை நோக்கி - வரிசைவரிசையாகத் (தனதுஅருகில்) நின்ற பரிசனப்பெண்களைப்பார்த்து,'சென்ற காவலன் வரும் துணை-(நிரை மீட்டற்குத் தெற்குப்பக்கம்) போன (நமது) அரசன் திரும்பி வந்துசேருமளவும், (நீங்கள்). செம் கையில் படை கொண்டு - சிவந்த கைகளிலே ஆயுதங்களை ஏந்திக்கொண்டு, ஒன்ற - ஒருசேர, ஏகி - போய். நம் எயில் புறம் காமின் - நமது (நகரத்து) மதிலைச் சுற்றிலும்இருந்து பாதுகாவல்செய்யுங்கள்', என்று—, உரைத்தாள் - கட்டளையிட்டாள்; (எ - று.)

"பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்." "நுண்ணறிவுடையோர் நூலொடுபழகினும்,பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே"என்றபடி மகளிர்க்குஇயல்பாயுள்ள மடமைக்குணம் இங்குச் சுதேஷ்ணையினிடம் விளங்குதல் காண்க. தந்தைக்கு மூத்தமகனிடத்தும் தாய்க்குஇளையமகனிடத்தும் அன்புமுதிர்ந்திருப்பது இயல்பாதல்தோன்ற, 'அப்புதல்வனைப் பரிவுட னீன்றுள்' என்றார்.

போது - பொழுது என்பதன் மரூஉ. ஈன்றுள் - இறந்தகாலவினையாலணையும்பெயர்; ஈன் - பகுதி. தங்கள் சாரியை. காமின்-ஏவற்பன்மை முற்று. 'மங்கையர்' என்ற பெயர் - இங்கே பருவப்பெயராகாமல், மகளிரென்றமாத்திரமாய்நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை - பன்னிரண்டு முதற் பதின்மூன் றளவுமாம். நிரைநிரை-அடுக்கு, பன்மைகுறிப்பது. இனி, நிரை நிரை நோக்கி - முறையாகப் பார்த்து என்றலு மொன்று. கை சிவந்திருத்தல், உத்தமவிலக்கணம்; சுதேஷ்ணையின் மெய்க்காவலாகப் படைக்கலம்பிடித்தலாற் சிவந்த கை யெனினுமாம். ஒன்ற ஏகுதல் - கூட்டமாகச் செல்லுதல். ஏகி, ஏகு - பகுதி. படை - (பகைவரைப்) படுக்குங் கருவி;படு-பகுதி: படுத்தல் - அழித்தல்; ஐ - கருவிப்பொருள்விகுதி. (உஅ)

[உத்தரன், யான்சென்றுபோருது பகைவரைவெல்வே னென்றல்.]

உரைத்தவன்னையைக்கதுமெனவுத்தரன்வணங்கி
நரைத்தவோதிநின்றகுமொழிநன்றெனநகையா
வரைத்தவாரமுமாரமுமாரமுமணிந்தென்
வரைத்தடம்புயம்வளர்த்ததுமகளிர்போர்பொரவோ.

இதுவும். அடுத்தகவியும் - குளகம்; ஒருதொட ரெனப்படும். குளகமாவது - பலபாடல்கள் தொடர்ந்து ஒருவினையைக்கொண்டுமுடிவது; "குளகம் பலபாட் டொருவினைகொள்ளும்." குளகமல்லாதது, முத்தகமெனப்படும்; அது - ஒரு செய்யுள் தனியேநின்று முடிவது: "முத்தகச்செய்யுள் தனிநின்று முடியும்."

(இ - ள்.)உரைத்தஅன்னையை-(இவ்வாறுமகளிரைநோக்கிச்)சொன்ன (தனது) தாயை, உத்தரன்—, கதுமென வணங்கி-விரைவாக நமஸ்கரித்து,

'நரைத்த ஓதி-வெளுத்திருக்கின்ற கூந்தலையுடையவளே! நின் தகு மொழி நன்று - நீ இப்பொழுது சொல்லிய தகுதியுள்ள வார்த்தை நன்றாயிருக்கின்றது!' என-என்றுசொல்லி, நகையா-பரிகாசமாகச்சிரித்து, 'அரைத்த ஆரமும் - அரைத்தசந்தனக்குழம்பையும், ஆரமும்-இரத்தினமாலைகளையும், ஆரமும் பூமாலைகளையும், அணிந்து—, என் வரை தட புயம் வளர்த்தது-என்னுடைய மலைபோன்ற[வலிய]பெரியதோள்களைவளர்த்தது, மகளிர் போர்பொரவோ- (பகைவரோடியான்போர்செய்யாமற்) பெண்பாலார்(சென்று) யுத்தஞ் செய்தற்காகவோ? (எ - று.)—இச்செய்யுளில் 'நகையா' என்ற எச்சம், அடுத்த செய்யுளில் 'என்றான்' என்ற முற்றைக் கொள்ளும்.

யான், எனது வளர்ந்தவரைத்தடந்தோள்களாற்பொரவேண்டாவோ? பொருது வெற்றி பெறவேண்டாவோ? என்றான்.

கதுமென - எனவெச்சம்; இது, விரைவுப்பொருளைத் தருவதோர் இடைச்சொல். நரைத்தல் - முதுமைப்பருவத்தால் மயிர்வெளுத்தல். ஓதி- பெண்மயிர்; இங்கு அதனையுடையவளுக்குச் சினையாகுபெயர். நரைத்த ஓதி - அடையடுத்த ஆகுபெயரென்க. இத்தொடரை அன்மொழித்தொகையாகக்கொள்ள இயலாது; "ஐந்தொகைமொழிமேற் பிறதொக லன்மொழி" என்றபடி ஏதேனுமொருதொகையின்மேற்பிறத்தல் அன்மொழித் தொகைக்கு இலக்கண மாதலாலும், இத்தொடர் அங்ஙனம் யாதொரு தொகைநிலைத்தொடரு மாகாது தெரிநிலைப்பெயரெச்சத் தொகைநிலைத் தொட ராதலாலு மென்க. இந்நுட்பம், மாணுக்கர் ஊன்றியுணரற்பாலது. 'நரைத்தஓதி'என்ற பெயர்-இங்கு அண்மைவிளி யாதலின், இயல்பாயிற்று. 'தகுமொழி' என்றது - இது, வீரபத்தினியும் வீரமாதாவுமாகிய உனக்கும் உன்வயசுக்குந் தகுதியான வார்த்தையன் றென்றபடி; 'கல்லைக்கடிக்க நன்றாய்ச்சமைத்தாய்' என்றாற்போல எதிர்மறைஇலக்கணையாகிய பிறகுறிப்பு; இனி, நின் தகு மொழி - நினதுபெண்தன்மைக்குத் தக்க மொழி யென்று மாம். அன்றி, "மூத்தோர்சொல்வார்த்தை யமிர்தம்" என்ற நீதியை மேற் கொண்டு 'தகுமொழி' என்று தாய்சொல்லை மேல்நோக்கிற் கொண்டாடிய வாறுமாம். 'திருமொழி' என்றும் பாடமுண்டு; திரு - மேன்மைகுறிக்கும் அடைமொழி. அணிந்து - 'தரித்து' என்றாற்போலப் பொதுவினையாய் நின்றது. நகையா - உடன்பாட்டெச்சம்; இறந்தகாலம். நன்று - பண்படியாய் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று; இது, இங்கே இகழ்ச்சிக்குறிப்பு; நன்றன் றென்றபடி. இங்குக் கூறிய நகை, இகழ்ச்சி பொருளாக வீரத் தெழுந்த வெகுளிநகை.

ஆரம் - ஹாரமென்னும் வடமொழியின் விகாரம், "ஆரமே பதக்க முத்த மாத்தி சந்தனமே மாலை" என்ற நிகண்டு இங்கு நோக்கத்தக்கது. மூன்றாம் அடி, முற்றுமோனை. ஓ - வினாவகையால் எதிர்மறை. வரையென்னும் கணுவின்பெயர் - அதனையுடைய மூங்கிலுக்குச் சினையாகுபெயராய் அது பின்பு அம்மூங்கிலையுடைய மலைக்குத் தானியாகுபெயராதலால், இருமடியாகுபெயர். என் புயம் எனஇயையும். தோளுக்கு மலை யுவமை-பகைவர்படைக்கலங்களால் ஊறுடையாத திண்மைக்கும், பருத்தோங்கிய வடிவிற்கு மென்க. மகளிர், இர் - பலர்பால்விகுதி. (௨௬)

கனைகடற்படையுடனிரைக்கணங்கவர்ந்தவரை
முனைபடப்பொருதிமைக்குமுன்முதுகுகண்டிடுவேன்
வினைமுகத்தினையறிந்துதேர்விசையுடன்விடவென்
னினைவொடொப்பதோர்சாரதிநேர்ந்திலனென்றான்.

(இ - ள்.) கனை கடல் படையுடன் - ஆரவாரஞ்செய்கின்ற கடல் போன்ற சேனையோடு (வந்து), நிரை கணம் கவர்ந்தவரை - (நமது) பசுக்

கூட்டங்களைக் கொள்ளைகொண்ட துரியோதனாதியரை, முனை - போர்க்களத்தில், பட - அழியும்படி, பொருது - (யான் ஒருவனே போய்) போர் செய்து, இமைக்கும் முன் - ஒருமுறைகண்ணிமைக்கும்பொழுதைக்கு முன்னமே [மிகவிரைவில்], முதுகு கண்டிடுவேன் - முதுகுபார்த்துவிட்டுவருவேன்; (ஆனால்),—வினை முகத்தினை அறிந்து-போர்த்தொழிலின் தன்மையைத் தெரிந்து, (அதற்கு ஏற்ப), தேர் - தேரை, விசையுடன் விட - வேகமாக நடத்துதற்கு, என் நினைவொடு ஒப்பது ஓர் சாரதி - என்மனத்தோடொத்த தன்மையையுடைய ஒரு பாகன், நேர்ந்திலன் - (இப்பொழுது எவனும் எனக்குக்) கிடைத்தானில்லை,' என்றான்-என்றுசொன்னான்;(எ-று.)—அப்படிப்பட்டசாரதிமாத்திரங்கிடைப்பனாயின், உடனேபொருது வெல்வேனென்றபடி.

இங்கே 'நிரை' என்றது, பசுஎன்றமாத்திரமாய் நின்றது; பின்னே 'கணம்' என வருதலால். படையுடன் பட வென்றுங் கூட்டலாம். இமைத்தல் - கண்களின் இமைகளிரண்டையுந் தன் குறிப்பாலன்றி இயல்பாக ஒருகால் மூடித்திறத்தல். முதுகுகண்டிடுதல் - புறங்கொடுத்தோடச் செய்தல்; இடு - துணிவுப்பொருளுணர்த்துந் துணைவினை. 'விரகுடன் விட' என்னும் பாடம். நேர்ந்திலன் - எதிர்மறையாண்பாலிறந்தகால முற்று; தன்மையொருமை முற்றாய், சாரதியைப்பெற்றிலே னென்றலு மொன்று. பொருது என்ற எச்சத்தில், பொரு - பகுதி. ஒப்பது - எதிர்காலத்தொழிற்பெயர்; இரண்டாம்வேற்றுமை யுருபும்பயனுமுடன்தொக்கதொகை. ஒன்றன்பால்வினையாலணையும்பெய ரெனக்கொண்டு சாரதிக்கு அடைமொழியாக்கலாகாது; திணைவழுவாகு மாதலால். இனி, 'நினைவொடொப்பவோர் சாரதி' என்று பாடமோதுவாரு முளர். கடற்படை - உவமத்தொகை. (௩௦)

[பிருகந்நளை தேர்செலுத்தவல்ல ளென்று விரதசாரணி கூறுதல்.]

உத்தரன்புகலுறுதிகேட்டொப்பனைக்குரியாள்
கொத்தரம்பொருகூரயிற்குமரனைக்குறுகி
வித்தரம்பெறுதேர்விடும்விசயனுக்கிவளென்
றத்தரம்பெறுபேடியைக்காட்டினளன்றே.

(இ - ள்.) உத்தரன் புகல் உறுதி கேட்டு - (இவ்வாறு) உத்தரகுமாரன் சொன்ன உறுதிமொழியைக் கேட்டு,—ஒப்பனைக்கு உரியாள் - (சுதேட்டிணைக்குப் பலவகை) அலங்காரமுஞ் செய்தற்கு உரியவளாகிய (விரதசாரணியென்னும் பெயர்பூண்ட) திரௌபதி,—கொத்து அரம் பொரு கூர் அயில் குமரனை - திரண்ட அரமென்கிற வாள்விசேடத்தால் அராவப்பட்ட கூர்மையுள்ள வேலாயுதத்தையுடைய உத்தரகுமாரனை, குறுகி - சமீபித்து,—'இவள்—, விசயனுக்கு - அருச்சுனனுக்கு, வித்தரம் பெறு தேர் விடும் - பரப்பமைந்த தேரைச் செலுத்துவாள்', என்று-என்றுசொல்லி,— அத்தரம் பெறு பேடியை - அப்படிப்பட்ட வல்லமையைப்பெற்ற பிருகந்நளையை, காட்டினள் - காண்பித்தாள்; (எ - று.)—அன்றே - ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்.

உரியாள், கேட்டு, குறுகி, என்று, காட்டினள் என இயையும். புகலுறுதி-இறந்தகாலவினைத்தொகை. உறுதி-உறுதியைவெளியிடுகின்ற மொழிக்குக் காரியவாகுபெயர். ஒப்பனைக்குஉரியாள் - வண்ணமகள். கொத்தரம் பொருகூரயில்—"வாளரந்துடைத்த வைவேல்" என்றார் சிந்தாமணியாரும். குமரன்-குமாரன்என்பதன் விகாரம்;மன்மதனையுங் குற்சிதரூபமுடையவனாக்கவல்ல கட்டழகுடையவ னென்பது பொருள்: கு-குற்சிதம்,மாரன்-மன்மதன்;முருகக்கடவுளின் பெயராகிய இது, அழகுமுதலியவற்றில் அக்கடவுள் போலச் சிறந்த மைந்தனுக்கு வழங்கும்; உவமையாகுபெயர்: 'சேய்'என்னுஞ்

தமிழ்மொழி போல. இவள் தேர்விடும் - செய்யுமென்முற்று, பெண்பாலு க்கு வந்தது; [நன் - வினை - உ௯](சொற்களின் விரிவை'விஸ்தரம்'என்றும், மற்ற இடம்முதலியவற்றின் விரிவை 'விஸ்தாரம்' என்றும் வேறுபடுத்துக் கூறுவர் வடநூலார்; அங்ஙனம் நுண்ணிதாகநோக்குமிடத்து,இங்கே) தேர் க்குஅடைமொழியாகிய 'வித்தரம்பெற' என்பதி லுள்ள 'வித்தரம்' என்பது இடப்பரப்பையுணர்த்துவ தாதலால், இதனை 'விஸ்தாரம்'என்ற வடசொல் லின் விகாரமெனவேண்டும்.(இச்சிறுவேறுபாடு,தமிழில் அத்துணையாக நோ க்கப்படுவதில்லை) பெண்ணுறுப்புமிக்கிருத்தலால், 'இவள்' எனப் பெண்பா லாற் கூறினர்; "பெண்மைவிட் டாணவாவுவ பேடாண்பால், ஆண்மைவிட் டல்லதவாவுவ பெண்பால்,இருமையு மஃறிணையன்னவுமாகும்"என்றநன் னூற்சூத்திரங் காண்க: "ஏயே யிவளொருத்தி பேடியோ" என்றார் சிந்தா மணியாரும்; "பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ" என்பது, நாலடியார்: 'பேடி - பெண்ணியல்புமிக்கு ஆணியல்புமுடையவள்' என்பது, திருக்குறள் பரிமேலழகருரை.

பற்குனன், பார்த்தன், கிரீடி, சுவேதவாகனன், பீபற்சு, விஜயன், கிருஷ்ணன், சவ்வியசாசி, தநஞ்ஜயன், (பாகசாஸநி, நரன், ஜிஷ்ணு) என் பன அருச்சுனனது மறுபெயர்களாம்.

விசயன் - விஜயன் என்னும் வடமொழியின் திரிபு; இதற்கு - விசேஷ மான வெற்றியை யுடையவ னென்று பொருள். இராஜசூயயாகத்திற்காக வடக்கிற்சென்று பலஅரசர்களை வென்றதனாலும், காண்டவதகநகாலத்துத் தேவர்களைச் சயித்ததனாலும், பாசுபதம்பெறுங்காலத்துப் பரமசிவனை யெ திர்த்து விற்சமுந்தால் முடியிலடித்ததனாலும், பின்பு இந்திராதிதேவர்க்கும் வெல்லமுடியாத நிவாதகவசர்காலகேயர்களை வதைத்ததனாலும், மற்றும்பல வெற்றிகளாலும், இவனுக்கு இப்பெயர் அமைந்தது. இனி, விஜயன் - தன் னைச்சயிப்பாரெவருமில்லாதவ னென்றும் பொருள்கொள்வர். முன்னைய பொருளில் வி - விசேஷமும், பின்னையபொருளில் வி - எதிர்மறைகுறிப் பதுமாம். இங்கு 'விசயன்'என்ற பெயராற் குறித்தது, எப்பொழுதும் வெ ற்றியையேபெறுபவனென அவனுக்குத் தேர்செலுத்தி யுதவியவ ளாதலால் இவள் உடன்செல்லுதல் வெற்றியைவிளைக்கு மென்று குறிப்பித்தற்கு. காட்டு - காண் என்றதன் பிறவினை; டு - விகுதி. தரம் - தகுதி. (௬௧)

இச்செய்யுளின்பின்

" என்றபோதவன்பயந்தவட்கியம்பியதுரைப்ப
நின்றபேடியைநிரைவளைதழுவிநீநேரில்
வென்றுபோர்முனையரசரைவிடலைவெய்திண்டேந்
தன்றுதாரிணுயெனவியந்தின்னவைசொன்னுள்"

என்று ஒருகவி கூறுவாரு முளர்; அது, பயிலவழங்காது.

[பிருகந்நளை தேர்செலுத்த, உத்தரன் போர்க்குச் செல்லுதல்.]

நாடிவாசியினல்லனநான்கவைபூட்டித்
தேடியாயுதஞ்சிலைமுதற்றெரிந்தவைகொண்டு
கோடிகோடிபைங்கோதையர்குழீஇயினர்வாழ்த்தப்
பேடிதேர்விடச்சென்றனன்சுதேட்டிணைபிள்ளை.

இதுமுதல் உத்தரநிரைமீட்சி கூறுகின்றார்.

(இ - ள்.) பேடி - பிருகந்நளை, வாசியில் - குதிரைகளுள்ளே, நல் லன நான்கு அவை - நல்லிலக்கணமமைந்தனவாகிய நான்கு குதிரைகளை, நாடி - தேடி அறிந்து, பூட்டி - நுகத்தடியிற் சேர்த்துக்கட்டி, தேர் விட -

தேரைச்செலுத்த,—சுதேட்டிணை பிள்ளை-சுதேஷ்ணையினது புத்திரனாகிய உத்தரனானவன்,—சிலை முதல் - வில் முதலியனவாகிய, ஆயுதம் அவை - ஆயுதங்களை, தேடி தெரிந்து - ஆராய்ந்து அறிந்து, கொண்டு - (நல்லனவாக)எடுத்துக்கொண்டு,—கோடி கோடி பைங் கோதையர் - பசுமையான [கரிய] கூந்தலையுடைய அநேககோடி மகளிர், குழீஇயினர் வாழ்த்த - திரண்டு வாழ்த்துக்கூற,—சென்றனன் - (போர்க்குப்) புறப்பட்டுப் போனான்.

'நான்கவை' 'ஆயுதமவை' என்றவற்றில், 'அவை' - பகுதிப்பொருள் விகுதி. பைங்கோதை - குளிர்ச்சியான கூந்தலும்,பசிய மாலையு மாகவுமாம். 'கூந்தலுக்குப் பசுமையாவது - எண்ணெயிட்டு வாரி மயிர்ச்சார்ந்துதடவப்பெற்று அழகுகுறையாமை' என்பர் ஒருசாரார். 'தேர்ந்தனகொண்டு' என்றும் பாடமுண்டு. வாழ்த்துதல் - பல்லாண்டுபாடுதல். சுதேட்டிணைபிள்ளை - "ஆவி யர முன் வன்மைமிகா"என்றபடி உயர்திணைப்பெயரீற்று உயிரின் முன் வல்லெழுத்து இயல்பாயிற்று. பிள்ளை - இளமைப்பெயர். 'தேடியாயுதஞ்சிலைமுதல் தெரிந்தவைகொண்டு' என்றதையும் பேடியின் செயலாக உரைக்கலாம். நல்லன - பலவின்பாற்பெயர். குழீஇயினர் - முற்றெச்சம். குழுவினரென்பது, சொல் விகாரப்பட்டு அளபெடுத்தது; சொல்லிசையளபெடை. சுதேட்டிணை - ஸுதேஷ்ணு என்ற வடசொல்லின் விகாரம். ஆயுதம் - வடசொல். 'சுதக்கணை' என்பதும் பாடம். (௩௨)

[உத்தரன் தனது நகரத்து வடபுறஞ் சேர்தல்.]

விலங்கன்மாமதில்களும்புறவீதியுங்கடந்தாங்
கிலங்குநேமியொன்றுடையதேரென்னலாந்தேர்மேற்
றுலங்குபேரொளியருக்கனிலுருத்தெழுதோற்றத்
தலங்கலுத்தரனுத்தரதிசையைவந்தடைந்தான்.

(இ - ள்.) துலங்கு பேர் ஒளி அருக்கனில் - விளங்குகின்ற மிக்க ஒளியையுடைய சூரியன்போல, உருத்து எழு - மிக்கு விளங்குகின்ற, தோற்றத்து - காட்சியையும்,அலங்கல் - (நிரைமீட்டற்குரிய கரந்தைப்பூ)மாலையையுமுடைய, உத்தரன்—,—இலங்கும் நேமி ஒன்று உடைய தேர் என்னல் ஆம் - விளங்குகின்ற ஒற்றைச்சக்கரத்தையுடைய (சூரியனது) இரதமென்று (ஒப்புமைபற்றிச்) சொல்லத்தக்க, தேர்மேல் - சிறந்ததொரு தேரிலே (ஏறி),—விலங்கல் மா மதில்களும் - மலைபோலுயர்ந்த பெரிய மதில்களையும், புறம் வீதியும் - (நகரத்தின்) வெளிவீதிகளையும், கடந்து - தாண்டி,உத்தரதிசையை-(அந்நகரத்தின்) வடக்குப்பக்கத்தை, வந்து அடைந்தான்—; (எ - று.)—ஆங்கு - அசை.

சூரியனது தேர் - மிகவிரைந்து செல்லுதற்கு உவமை;"ஒற்றைத்தனியாழிதேரென்ன வோடுவதோர், கொற்றநெடுந்தேர்" என்றார் பிறரும். ஆயிரங்கிரணமுடையவ னாதலால், 'துலங்குபேரொளியருக்கன்' எனப்பட்டான். 'உருக்கெழு தோற்றத்து'என்ற பாடத்துக்கு - தன்வடிவு விளங்குகின்ற தோன்றற்பாட்டையுடைய வென்க. 'விலங்கல்' என்ற பெயர்க்கு - (கண்டோரால்) விலகப்படுவது என்று காரணப்பொருள் கூறலாம்; அல் - செயப்படுபொருள்விகுதி. (ஊர்க்குஒருபுறமாக) விலகியிருப்பது என்று காரணப்பொருள் கொண்டால், அல்-கருத்தாப்பொருள் விகுதியாம்; திருக்குறளில், "வாய்ந்த மலை" என்ற இடத்தில் பரிமேலழகர் இடையதன்றி ஒருபுடையதாதலை மலைக்கு வாய்ப்பென்றமை காண்க. இனி, (சஞ்சாரத்துக்குத்) தடையாய்க் குறுக்கிட்டிருப்ப தென்றும், (நெடுந்தூரத்திலுள்ளாருங் காணும்படி உயர்ந்து) விளங்கு மென்றும் பொருள்கொள்ளலாம். மதிலுக்கு மலை - உயர்விலும் எளிதில் அழிக்கப்படாத வலிமையிலும், அரணாய்ப்

பாதுகாத்தலிலும் உவமை. 'விலங்கல்போலுயர்மதில்களும் வீதியும்' என்றும் பாடமுண்டு.

வீதீ, நேமி, அர்க்கன், உத்தரதிஸா - வடசொற்கள். சூரியனது தேர் ஸம்வத்ஸரரூபமான ஒற்றைச்சக்கரத்தை யுடையதென்று புராணங்கூறும்; "கொற்றவெய்யோ னோராழித்தேர்" என்றார் பிறரும். அருக்கனில், இல்-ஐந்தனுருபு, ஒப்புப்பொருளது. 'அருக்கனினுருத்தெழு' என்பதும் பாடம். தோற்றம், தோன்று-பகுதி, அம் - தொழிற்பெயர்விகுதி, மெலி வலியானது-சந்தி. 'உத்தர னுத்தரதிசையை வந்தடைந்தான்' என்ற இடத்திற் சொற்சமத்காரங் காண்க; உத்தரதிசையையடைதற்குஉரியவ னுத்தர னென்பது போதரும். அருக்கனில் உத்தரன் உத்தரதிசையை வந்தடைந்தான் என்று இயைத்து, இலங்குநேமியொன்றுடையதேரிலேறித் துலங்குபேரொளியருக்கன் (உத்தராயணத்தில்) வடபுறஞ்செல்லுதல்போல உத்தரன் தேர்மேல் உத்தரதிசையை வந்தடைந்தானென்று கருத்துக்காணலாம்; "வெய்யோன் சென்றனன் வடபால்மன்னோ," "பனிப்பகைவன் பனிசெய்வோன் பக்கஞ்சேர்ந்தான்" என்பன காண்க. (நுரு)

[உத்தரன் துரியோதனனது சேனையைக் காணுதல்.]

விண்கொளாமதிமேன்மைகொண்மீனினமென்ன
மண்கொளாவிறன்மன்னுடைவரம்பில்வான்படையை
யெண்கொளாமனத்திராகவன்றிருக்குலத்திளைஞன்
கண்கொளாவகைபுகுந்துதன்கண்ணுறக்கண்டான்.

(இ - ள்.) எண் கொளா மனத்து-(சேனையின்தன்மை இன்னதென்று) ஓர்எண்ணத்தைக் கொள்ளாத மனத்தையுடைய, இராகவன் திரு குலத்து இளைஞன் - ஸ்ரீராமபிரான்திருவவதரித்த சிறந்த சூரியகுலத்துத் தோன்றிய சிறுவனான உத்தரகுமாரன்,—கண் கொளா வகை புகுந்து - (காண்பவர்)கண்களுக்கு எட்டாதபடி [மிகவிரைந்து] சென்று,—(அங்கே),—விண் கொளா மதி - ஆகாயத்தில் தோன்றாத [பூமியில் தோன்றியதொரு] சந்திரனையும், மேன்மை கொள் மீன் இனம் என்ன - (அச்சந்திரனைச்சூழ்ந்த) மேன்மைபெற்ற நட்சத்திரக்கூட்டங்களையும் போல, மண் கொளா விறல் மன் - பூமிமுழுவதிலும் அடங்காத வீரத்தன்மையையுடைய துரியோதனராஜனையும், உடை வரம்பு இல் வான் படையை - அவனைச் சூழ்ந்துள்ள அளவில்லாத பெரிய சேனையையும், தன் கண் உற கண்டான் - தன்கண்களுக்கெதிரிற் பார்த்தான்; (எ - று.)

'விண்கொளா' என்னும் அடைமொழியை மீனினத்தோடுங் கூட்டுக. விண்கொள்ளாத மதியும், மீனினமும் இல்பொருளுவமை. மதி-கலைநிறைந்த பூர்ணசந்திரன்; நன்குமதிக்கப்படுவதென்று காரணப்பொருள்பெறும். மீன் - மின்னுவது; வினைமுதற்பொருள்விகுதி புணர்ந்து கெட்டுப் பகுதி முதல்நீண்டுநின்ற காரணப் பொதுப்பெயர்: இதற்கு வானமாகிய கரிய பெரிய கடலுக்கு மீன்போல்வதென்று காரணப்பொருள் கூறுதலுமொன்று. என்ன - உவமவுருபு.

மதி - துரியோதனனுக்கும், மீனினம்-படைத்தொகுதிக்கும் உவமை. இனி, 'மண்கொளாவிறன்மன்' என்பதற்கு - மண்ணுலகத்துள்ளாரில் எவரும் அடையாத வலிமையைத் தான்உடைய மன்னனென்றும், மனிதர்யாவரும் மனத்திற்கொண்டுமெகிழாத வெற்றியையுடையவனென்றும்பொருள்கொள்ளலாம். பதினாயிரம்யானைபலங் கொண்டவனாதலால், 'மண்கொளா விறல்மன்' என்றார். 'மண்கொளாவிறல்' என்றது - அதிசயோக்திவகையால் துரியோதனனது வீரத்தைச் சிறப்பித்தது. இனி, 'மண்கொளா'

என்றதைப் படைக்கு அடைமொழியாக்குதலுமாம்; பூமிமுழுவதிலும் அடங்காத சேனை யென்க. தேவாசுரயுத்தம் இராமராவணயுத்தம் போன்ற யுத்தங்களைச் சித்திரத்திலே கண்டு, 'சேனை இங்ஙனமே யிருக்கும்: அதனைத்தான் மிகஎளிதில் அழித்துவிடலாம்' என்று கருதிப் போர்க்குவந்தவனாதலால், உத்தரன் 'எண்கொளாமனத்து இளைஞன்' எனப்பட்டான். 'எண்கொளாவிய விராகவன்' என்ற பாடத்துக்கு - கணக்கிலடங்காத திருக்கல்யாணகுணங்களையுடைய இராமபிரா னென்க. முதலடியில் 'விண்கொளாதகோணுள்விறன்மீனினமென்ன' என்று பாடமோதுவாரு முளர்.

இளைஞன் - இளமை யென்ற பண்புப்பெயர், ஈறுபோய் இடைஅகரம் ஐயாயிற்று; ஞகரமெய் - பெயரிடைநிலை. கண்ணுற - பிரதியக்ஷமாக. கண்கொளாவகை கண்டா னென இயைத்து, கண்களின் பார்வைசெல்லுமளவுக்கு மேலுஞ் சேனை பரந்து கிடத்தலால், கண்களுக்கு எட்டாதபடியாற் கண்டா னென்றுமாம். நான் கடியிலும், 'கொளா' என்பது - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்; கொள்ளா என்றதன் தொகுத்தல்.

ராகவன் என்ற பெயர்க்கு - ரகுமகாராஜனதுவம்சத்தில் அவதரித்தவ னென்பது பொருள்: வடமொழித் தத்திதாந்தநாமம். சூரியகுலத்தவனாகிய இவ்வரசன் - இராமன்தந்தையான தசரதனுக்கு மூதாதை; இவன், திக்குவிசயஞ்செய்து எல்லாத்தேயங்களையும் வென்று 'விசுவஜித்'என்னும் வேள்வியை இயற்றி அதில் தன்செல்வமுழுவதையும் வழங்கிவிட்டு வெறுங்கையனாயிருக்கையில், கௌத்ஸனென்னும் பிராமணன் வந்து தன்குருவாகிய வரதந்துமகாமுனிவனுக்குத் தான் குருதக்ஷிணை கொடுத்தற்பொருட்டு மிக்கபொருள்வேண்டு மென்று யாசிக்க, அப்பொழுது குபேரனிடத்திலிருந்து வேண்டும்பொருள் தானேவரப்பெற்று அந்தக்கௌத்ஸனுக்குக் கொடுத்தான்: இப்படி இவன் மிக்க வீரமுங் கொடையு முடையவனாய்ப் பிரசித்திபெற்றவனாதலால், இவன்மரபிற்பிறந்தவனென்று இராமபிரானைக் குறித்தார்; இவன்பெயரால் இக்குலம் ரகுகுலமென்று வழங்கப்படுவதைக் கொண்டும், காளிதாசமகாகவி வடமொழியில் இவன்பெயரால் 'ரகுவம்ஸம்' என ஒருகாவியஞ் செய்திருத்தலைக்கொண்டும், இவ்வரசனது பெருமையை நன்கு உணரலாம். (௩௪)

[அதுகண்டமாத்திரத்தில் உத்தரன் நடுநடுங்குதல்.]

கைந்நடுங்கவுங்கானடுங்கவுங்கருத்தழிந்து
மெய்ந்நடுங்கவுநாப்புலர்ந்துயிர்ப்புமேல்விஞ்சிச்
சொன்னடுங்கவுஞ்சுடர்முடிநடுங்கவுஞ்சோர்ந்தான்
மைந்நெடுங்களிற்றுரனுடைவிராடர்கோன்மைந்தன்.

(இ - ள்.) மை நெடுங் களிறு-கரிய பெரிய ஆண்யானைபோன்ற, உரன் உடை - வலிமையையுடைய, விராடர் கோன் விராடதேசத்தார்க்கரசனது, மைந்தன்-குமாரனாகியஉத்தரன்,—(அப்படையைக்கண்டமாத்திரத்தில்அச்சமிகுதியால்), கருத்து அழிந்து - மனங்கலங்கி, நா புலர்ந்து - நாக்கு வறண்டு, உயிர்ப்பு மேல் விஞ்சி-பெருமூச்சு மேன்மேலும் அதிகமாகப்பெற்று, கை நடுங்கவும்-கைகள் நடுக்கமடையவும், கால் நடுங்கவும்-கால்கள் நடுக்கமடையவும், மெய் நடுங்கவும் - உடம்பு நடுக்கமடையவும், சொல் நடுங்கவும் - வார்த்தை தடுமாறவும், சுடர் முடி நடுங்கவும் - ஒளியையுடைய கிரீடம் நடுங்கவும், சோர்ந்தான்-தளர்ந்தான் [உணர்வழியலானான்; மூர்ச்சிக்கலானான் என்றபடி]; (எ - று.)

முடி-முடியிற் கவிக்கப்படுவது; இடவாகுபெயராகிய காரணச்சிறப்புப்பெயர். களிறு - ஆண்பாற்பெயர்; இது யானைக்குஉரியதாதலை, "வேழக்குரித்தே விதந்துகளிறென்றல்" என்ற தொல்காப்பியத்தால் அறிக. களி-

மதக்களிப்பு: அதனையுடையது களிறு எனக் காரணப்பெயர்; இதில், று - பெயர்விகுதி: ஒன்றன்பால்விகுதியன்று: பால்பகாஅஃறிணைப்பெயராதலால். (யானையின் பெண்மைப்பெயர் - பிடி.) 'கருத்தழிந்து' என்றதை மெய்ந்நடுங்குதற்கும், 'நாப்புலர்ந்து உயிர்ப்புமேல்விஞ்சி' என்றவற்றைச் சொல்நடுங்குதற்குங் காரணமாக்கி யுரைப்பாரு முளர். களிறு-யானைச்சேனையுடைய என்றலு மொன்று. உரன் - உரமென்பதன் ஈற்றுப்போலி. 'உரன்' என்றதில், தேகபலம் மனோபலம் ஆயுதபலம் சேநாபலம் முதலிய பலவகைவலிமைகளும் அடங்கும்.

(இரண்டாமடியில், யகரவொற்றுஇடைவந்த ஆசெதுகை காண்க. பொதுநகரத்துக்கும் சிறப்புனகரத்துக்கும் வரிவடிவில் மிக்க வேறுபாடு இருப்பினும், ஒலிவடிவில் மிக்கவேறுபாடு இல்லாமைபற்றி, மூன்றுமடியில் னகரம் எதுகையாய் நின்றது.)

இச்செய்யுள், அச்சச்சுவைக்கு உதாரணமாம். (௩௫)

[பிருகந்நளை உத்தரனுக்குத் தேறுதல்கூறல்.]

அஞ்சலஞ்சனீபகைவரையாருயிரடுத
றுஞ்சலென்றிவையிரண்டலாற்றுணிவுவேறுண்டோ
வெஞ்சமந்தனில்வந்துபுண்படாதினிமீண்டால்
வஞ்சநெஞ்சுடைவஞ்சியரென்சொலார்மறவோய்.

இதுமுதல்மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (அப்பொழுது உத்தரனை நோக்கிப் பேடி),—'மறவோய்-வலிமையை யுடையவனே! நீ—, அஞ்சல் அஞ்சல்-பயப்படாதே பயப்படாதே; பகைவரை ஆர் உயிர் அடுதல் - பகைவர்களை அரியஉயிரழியச்செய்தலும் [கொல்லுதலும்], துஞ்சல்-தாம் இறத்தலும், என்ற இவை இரண்டு அலால்-என்ற இவ்விரண்டு தொழில்களுள் ஒன்றல்லாமல், வேறு துணிவு உண்டோ - (போர்க்கு வந்தவர்கட்கு) வேறொரு உறுதி உள்ளதோ? [இல்லை]; வெம் சமந்தனில் வந்து - கொடிய போர்க்களத்திற் புகுந்து, புண் படாது-விரணப்படாமல், இனி—, மீண்டால் - திரும்பி வாளாசென்றால், வஞ்சம் நெஞ்சுஉடைவஞ்சியர்-வஞ்சனையுள்ளமனத்தையுடைய வஞ்சிக்கொடிபோல மெல்லியலாரான மாதர்கள்,என்சொலார்-என்சொல்லிஇகழமாட்டார்கள்?

கீழ் இவன் மகளிர்முன்னிலையில் வீரவாதங்கூறி வந்ததனால், 'வஞ்சியரென்சொலார்'என்றாள். வஞ்சியரென்பது-அபலைகளான அவர்களது வலியின்மை குறித்துநின்றது. மகளிரும் பரிகசிப்பரெனவே,ஆண்மக்கள்பரிகசிப்பரென்பதுகூறாதேஅமையும். வெல்லும்ஆற்றல்இலையேனும்முகத்திலும் மார்பிலும் விழுப்புண்பட்டாயினும் மீண்டால் ஊறஞ்சாமை விளங்குமென்றற்கு,'புண்படாது மீண்டாலென்சொலார்'எனப்பட்டது.'என்சொல்வார்' என்றும் பாடமுண்டு. "ஓதலுமொன்றுவுளமொன்றுச்செய்கையொன்றுப், பேதைநிலைமைபிடித்துப்பெரும்பவஞ்செய்,மாதர்"என்றபடி மகளிர் மனம் வேறுபடுமியல்பின ராதலால், அவர்க்கு 'வஞ்சநெஞ்சுடை' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது; அறியவொண்ணாதஆழமுடைமைபற்றியு மாகலாம். "ஆழாழியென்ன வளவுபடா வஞ்சநெஞ்சப், பாழான மாதர்" என்றார் பின்னோரும். 'வஞ்சியர்' என்ற சொல்-வஞ்சமுடையராதல்பற்றி அவர்க்கு 'வஞ்சியர்' என்றபெயர் அமைந்ததுபோலு மென்ற கருத்துத் தொனிக்க நிற்கும். 'வஞ்ச நெஞ்சிய ரென்சொலார் வெஞ்சிலைமறவோய்'என்று சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. 'மறவோய்'என்று விளித்தது, உத்ஸாஹமுண்டாக்குதற்பொருட்டு.

அஞ்சல்-எதிர்மறை யேவலொருமைமுற்று; வியங்கோளாகவுங்கொள்ளலாம்: தேற்றத்தில் அடுக்கிற்று. இறத்தலை 'துஞ்சல்' என்றது, மங்கல

வழக்கு; மீளவும்எழுந்திராத பெருந்தூக்க மென்க. என்றிவை-பெயரெச்ச வீறு தொகுத்தல்; (இனி, என்று இவையெனக் கொண்டு, 'என்று'என்னும் எண்ணிடைச்சொல் - அடுதலென்று, துஞ்சலென்று என நின்றவிடத்துப் பிரிந்து பிறவழியுஞ் சென்று பொருந்தித் தொகைபெற்று வந்ததென்றலு மாம்.) அலால் - எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம். ஓ-எதிர்மறை. சமம்- ஸமர மென்னும் வடமொழியின் விகாரம். 'உயிரடுதல்' என்பது,ஒருசொல் தன்மைப்பட்டு'பகைவரை'என்ற இரண்டாம்வேற்றுமைக்கு முடிக்குஞ்சொ ல்லாய்நின்றது; இனி, பகைவரது என உருபுமயக்கமாக்குதலு மொன்று. 'மறவன்' என்ற பெயரின் னகர வீற்றயலகரம் ஓகாரமாய் 'மறவோன்' என்று ஆகி, அது 'மறவோய்' என ஈறுதிரிந்து விளியாயிற் றென்க. "ஒரு சார் னவ்வீற் றுயர்திணைப்பெயர்க்கண்"என்ற விளியுருபுசூத்திரத்து"இறுதி யவ்வாதல், அதனோடயல்திரிந்து ஏயுறல்" என்பதனால், மறவனென்ற பெயர் னகரமெய் யகரமெய்யாகி ஈற்றயல்திரிந்த தென்றலு மொன்று. ஆருயிர் - பண்புத்தொகை; அருமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் முதல்நீண்டு இடைஉகாரமுங் கெட்டு 'ஆர்'என நின்றது; நிறைந்தஎன்ற பொருளில் 'ஆர்'-வினைத்தொகையாம். (௩௬)

நிலையுமுட்டியுநிலைபெறநின்றுநேர்படத்திண்
சிலைவளைத்துவெஞ்சிலீமுகஞ்சிற்சிலதொடுத்து
மலையிலக்கெனயாரையுமலைந்திடுமலைந்தா
லலைகடற்புவியரசரிலாரெதிர்நிற்பார்.

(இ - ள்.) (நீ),—நிலையும் - (போரில்) நிற்கும் நிலைமையும், முட்டியும் - கையில் ஆயுதங்களைப் பிடிக்குந் தன்மையும், நிலை பெற - உறுதியாயிருக் கும்படி, நின்று - (தைரியத்தோடு) நின்று,—திண் சிலை-வலிய வில்லை, நேர் பட - செவ்வையாக, வளைத்து - வணக்கி நாணேற்றி, சில் சில வெம் சிலீ முகம் தொடுத்து - சிலசில கொடிய அம்புகளை எய்து,—மலை இலக்குஎன- மலை ஒப்பென்னும்படி [சிறிதுஞ் சலியாமல்], யாரையும்-எவரையும், மலைந் திடு - எதிர்த்துப் போர்செய்; மலைந்தால் - (இவ்வாறு) பொருதால், அலை கடல் புவி அரசரில் - அலைகின்ற கடலாற் சூழப்பட்ட பூமியிலுள்ள அர சர்களுள், எதிர் நிற்பார் - (உன்) எதிரில் நிற்க வல்லவர், ஆர் - யாவருளர்? [ஒருவருமில்லை யென்றபடி]; (எ - று.)—எல்லாரும் புறங்கொடுத்துப் போய் விடுவ ரென்பதாம்.

நிலை-போரில் வில்வளைத்து அம்பினை எய்வார்க்கு உரிய நிலை; அது - பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரதியாலீடம் என நான்குவகைப்படும்: இவற்றுள் ஒருகால் நிலை நின்று ஒருகாலை முடக்கல், பைசாசநிலை: இரு காலும் பக்கல்வளைய மண்டலித்தல், மண்டலநிலை; வலக்கால் மண்டலித்து இடக்கால் முந்துறல், ஆலீடநிலை; வலக்கால் முந்துற்று இடக்கால் மண்ட லித்தல், பிரதியாலீடநிலை. முட்டி - கைப்பிடி: முஷ்டியென்னும் வடமொ ழியின் திரிபு. நேர்படத் தொடுத்து என்று இயைத்து, பகைவர்க்கு எதிராக அம்புதொடுத்து என்றலும் அமையும். 'மலையிலக்கென' என்றதற்கு - மலை யே (எமது அம்புக்கு ஏற்ற) குறியாவது என்றுஎண்ணி யெனவும் உரைக்க லாம். இக்கருத்து, செருக்கினாலாவது. இனி,எய்வதற்கு மலையை யிலக்காக் குவதுபோல வென்று உரைப்பாரு முளர். 'நின்று நீ நெடுங்காற் சிலைவளை த்து' என்றும் பாட முளது.

சிலீமுகம் - கூர்மையை முகத்திலுடைய தென்று அம்புக்குக்காரணப் பெயர்; வடசொல். உம்மை - முற்று; உயர்வுசிறப்புமாம். அலைகடல் - வினை த்தொகை; அலைகளையுடைய கட லென்னும் பொருளில், அலைக்கடலென

வலிமிகும். யாரென்னும் வினைப்பெயரின் மரூஉவாகிய ஆரென்பது,இங்கே இன்மைகுறித்துநின்றது. இலக்கு - லக்ஷ்யம்; வடசொல். (௯௭)

[பிருகந்நளைதேற்றவும் உத்தரன்தேறாமை.]

தூண்டுமாவிவைசொரிமதக்களிறிவைதுரங்கம்
பூண்டதேரிவைபதாதிமற்றிவையெனப்புகல
வீண்டுநின்றவையாவையுமியாவெனத்தெரியா
மீண்டுபோவதேயுறுதியென்றனனிகல்வீரன்.

(இ - ள்.) தூண்டும் மா இவை - செலுத்தப்படுகின்ற குதிரைகள் இவை, சொரி மதம் களிறு இவை - பொழிகின்ற மதசலத்தையுடைய யானைகள் இவை, துரங்கம் பூண்ட தேர் இவை - குதிரைகள்பூட்டிய தேர்கள்இவை, பதாதி இவை - காலாட்சேனைகள்இவை, என - என்று, புகல (பேடி சதுரங்கசேனையைக்காட்டி எடுத்துச்)சொல்ல,—இகல் வீரன் வலிய வீரத்தன்மையையுடையவனான உத்தரன், 'ஈண்டு நின்றவை யாவையும் - இங்குப்பொருந்தியவை யெல்லாவற்றையும், யா என - எவை [இன்னவை] யென்று,தெரியா - தெரிந்துகொள்ளாமல், மீண்டு போவதே-திரும்பிச் சென்றுவிடுவதே, உறுதி - துணிவான காரியம்,' என்றனன் - என்று சொன்னான்; (எ - று.)

இவன் படையின் தன்மை கண்டறியானென்று,பேடி,குதிரை முதலியன இவையிவை யெனச் சொல்லிக்காட்டினள். இறந்துபோதலேயன்றி மீண்டுபோவது அரிதென்பான்,'யாவெனத்தெரியா மீண்டுபோவதேயுறுதி' என்றான். 'இகல் வீரன்' என்றது, இகழ்ச்சி.

துரங்கம் - விரைவாய்ச் செல்வது என்று பொருள்படும் வடசொல். 'பதாதி'என்ற வடசொல்லுக்கு - வாகனமேறாமற் கால்களினாலே நடந்து செல்பவனென்பது பொருள். மற்று - அசை; இங்கு 'பதாதி' என்றது - காலாள்களின்கூட்டத்தை யுணர்த்தி அஃறிணையின்பாற் பட்டதனால், 'பதாதி யிவை' எனப்பட்டது; இனி, இதனை, உயர்திணைப்பொருளுணர்த்தும் அஃறிணைச்சொ லென்றலு மொன்று. இகல் - போருமாம். தெரியா - ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம். போவதே, ஏ - பிரிநிலை. 'ஈண்டிநின்றவை' என்ற பாடத்துக்கு - நெருங்கிநின்றவை யென்று பொருள். 'தெரியா' என்றது, 'போவது' என்பதனோடு முடியும். 'என்றனன்'என்பதனோடு இயைத்து, இவையெல்லாவற்றையும் (அருச்சுனன் எடுத்துச்சொல்லவும் உத்தரன அச்சமிகுதியால்) இன்னவையென்றுகண்டுஉணராமல் 'நாம் திரும்பி நமதுஊர்க்குப்போய்விடுவதே நலம்' என்றுகூறினனென உரைப்பர் ஒருசாரார். யாவையுமியா - தன்னொழி மெய்ம்முன் யகரம் வர இகரந் தோன்றிற்று; [நன் - மெய் - ௩.] யா - அஃறிணைப்பன்மை வினைப்பெயர்; இதில். பலவின்பால்விகுதி புணர்ந்துகெட்ட தெனப்படும். (௯௮)

[பிருகந்நளை உத்தரனுக்குச் சைத்யோபசாரஞ்செய்து, 'யான் போருது பகைவெல்வேன்' என்றல்.]

வெயர்த்தமேனியைநறும்பனிநீரினால்விளக்கி
யயர்த்துநீமுதுகிடாதொழியிமைப்பொழுதையா
வுயர்த்தபல்கொடிப்பகைஞரைத்தனித்தனியோட்டிப்
பெயர்த்துநல்குவேனிரையுமென்றுரைத்தனள்பேடி.

(இ - ள்.) (பின்பு), பேடி—, வெயர்த்த மேனியை - வேர்வையடைந்த (உத்தரனது) உடம்பை, நறும் பனி நீரினால் விளக்கி - வாசனைவீசுகின்ற பனிநீரைத் தெளித்து அதுகொண்டு துடைத்தும் (அயர்ச்சியைப் போக்கித்

தேற்றி, (அவனை நோக்கி), 'ஐயா - தலைவனே! நீ—, இமை பொழுது - ஒரு க்ஷணகாலம், அயர்த்து முதுகுஇடாது ஒழி - தளர்ந்து முதுகுகொடுத்து ஓடாமலிரு; (நான்), உயர்த்த பல் கொடி பகைஞரை - உயரவெடுத்த பல வகைத் துவசங்களையுடைய பகைவர்களை, தனி தனி ஓட்டி - தனித்தனியாக ஓடும்படிசெய்து, நிரையும் - பசுக்களையும், பெயர்த்து நல்குவேன் - (அவர்களிடத்தினின்று) மீட்டுக்கொடுப்பேன்,' என்று உரைத்தனன் - என்று சொன்னான்; (எ - று.)

பீஷ்மர்க்குப் பனைக்கொடியும், துரோணர்க்கு வேதக்கொடியும், அசுவத்தாமனுக்கு அன்னக்கொடியும், கர்ணனுக்குக் கச்சைக்கொடியும், துரியோதனனுக்குப் பாம்புக்கொடியும் முதலாக அனைத்தும் அடங்க, 'பல்கொடி' என்றான். வெயர்த்தல் - புழுங்குதல்; இது - இங்கே, அச்சத்தின் மெய்ப்பாடு. பனிநீர் - ஒருவகை வாசனைநீர். ஐயா - ஐயனென்பதன் விளி. 'ஆர்ய' என்னும் வடமொழி, பிராகிருதபாஷையில், 'அய்ய' என்று ஆகி, தமிழில் 'ஐய' என நின்றது. 'தனித்தனி ஓட்டி' என்றது - இருவர் ஒரு வழிச் செல்லாதவாறு சிதறடித்த தென்றபடி. 'அயர்த்தநீ' என்று பாடமோதி, சோர்வடைந்தநீ யென்று உரைப்பாருமுளர். இமைப்பொழுது - கண்ணிமைப்பொழுது; இமைத்தற்குவேண்டும் பொழுதென்க: இமை - முதனிலைத்தொழிற்பெயர்; நான்கனுருபும்பயனும் தொக்கதொகை. பகைஞர் - ஞ் - பெயரிடைநிலை. 'முதுகிடாதொழி' என்ற ஏவலொருமையில், 'ஒழி' என்றது - துணிவை யுணர்த்திற்று. (௬௧)

[உத்தரன் குதித்தோட, பிருகந்நளை அவனைப்பிடித்துவந்து தேர்க்காலிற்கட்டுதல்.]

கொடித்தடந்தனித்தேரினின்றுகைத்துமுன்குதியா
வடித்தலம்பிடரடித்திடவோடனுமவனைத்
தொடித்தடம்புயமிரண்டையுந்தொடர்ந்துபோய்த்துவக்கிப்
பிடித்துவந்தொருநொடியினிற்றேருடன்பிணித்தான்.

(இ - ள்.) (அதுகேட்டும் உத்தரன்), கொடி தட தனி தேரினின்று - துவசத்தையுடைய பெரிய ஒன்றுகிய [ஒப்பற்ற] தேரினின்று, உகைத்து - எழும்பி, முன் குதியா - முன்னே குதித்து, அடி தலம் பிடர் அடித்திட ஓடலும் - பாதங்கள் பின்புறத்திலே அடிக்கும்படி (அதிவேகமாக) ஓடிப்போனவளவில்,—(அருச்சுனன்), ஒரு நொடியினில் - ஒரு கணப்பொழுதிலே, அவனை - அவ்வுத்தரனை, தொடர்ந்து போய் - பின்தொடர்ந்து ஓடிச்சென்று, தொடி தட புயம் இரண்டையும் - தொடியென்னும் வளையணிந்த (அவனது) பெரிய தோள்களிரண்டையும், துவக்கி - கட்டி, பிடித்து வந்து - பிடித்துக்கொண்டு வந்து, தேருடன் பிணித்தான் - தேரோடுகட்டினான்.

(௬௧) "தேர்விடும்விசயனுக்கிவள்" என்றும், (௬௬) "உரைத்தனள் பேடி" என்றும் பேடிவடிவிற்கு ஏற்பப் பெண்பாலாற் கூறிவந்தவர், இனி ஆண்மைகாட்டத்தொடங்கியதனால், ஆண்பாலாற் கூறலாயினர்.

'துனைந்துபோய்' என்ற பாடத்துக்கு - விரைந்துசென்று என்பது பொருள். உகைத்தல் - அழுத்தியெழுதல். 'அடித்தலம் பிடரடித்திட' என்றது - அவன் ஓடின ஓட்டத்தின் வேகமிகுதி கூறியவாறு; தன்மைநவிற்சியணி. தொடியை இக்காலத்தார் தோடா வென்பர். நொடி - இயல்பாகக் கைவிரல்களை ஒருமுறைநொடித்தற்குக் கொள்ளும் பொழுது. தேரினின்று, நின்று - நீக்கப்பொருளில் வந்த ஐந்தாம்வேற்றுமைச்சொல்லுருபு; இன் - சாரியை. குதியா - உடன்பாட்டெச்சம். (௬௦)

[பிருகந்நளை தேர்செலுத்தி, முன்பு தாம் வைத்த வில்லையும் அம்பையும் எடுத்து வருதல்.]

பிணித்ததேரினைப்பெற்றமும்பிற்படக்கடாவித்
திணித்தரும்பெரும்பொதும்பரிற்சேர்த்தியசிலையுந்
துணித்துமேவலர்முடியுகுசோரிதோய்தொடையுங்
கணித்தவெல்லையிற்கொண்டுமீண்டமர்க்களங்கலந்தான்.

(இ - ள்.) (அருச்சுனன்), பிணித்த தேரினை - (அவ்வாறு உத்தரனைச்) சேர்த்துக் கட்டிய ரதத்தை, பெற்றமும் பின்பட - காற்றும்பின்னிடும்படி, கடாவி - செலுத்தி-சென்று,—அரும் பெரும் பொதும்பரில் - பிறர் அறிதற்கு அரிய பெரிய மரப்பொந்தில், திணித்து சேர்த்திய - (முன்பு) கட்டி மறைத்து வைத்துள்ள, சிலையும் - (தனது) வில்லையும், மேவலர் முடி துணித்து-பகைவர்களது தலைகளை அறுத்து,உகு சோரி தோய்-(அவற்றினின்று) பெருகுகின்ற இரத்தந் தோயப்பெற்ற, தொடையும் - அம்புகளையும், கணித்த எல்லையின் கொண்டு-நினைத்தமாத்திரத்தில் எடுத்துக்கொண்டு,மீண்டு-திரும்பிவந்து,அமர் களம் கலந்தான்-யுத்தஞ்செய்யுமிடத்தைச் சேர்ந்தான்.

பெற்றம் - காற்றுதலை,கீழ் வாரணவதச்சருக்கத்து "பின்னரு மொரு பகற் பெற்றம் பெறறவன்" என்றவிடத்துங் காண்க. வேகத்திற் சிறந்த வாயுவும் பின்னேயாக அதனினும் விரைவாக ஓட்டி யென்றபடி. உம்மை - உயர்வுசிறப்பு. பொதும்பர் - பொதும்பு என்னும் மென்றொடர்க்குற்றியலு கரத்திற்கு அர் - போலி. அரும் பெரும் பொதும்பர் - செல்லுதற்கரிய பெரிய மயானவனத்தி லென்றுமாம்.

'பொதும்பரிற் சேர்த்திய சிலையும் தொடையும்' என்றது-கீழ்ப் பாண்டவர்கள் அஜ்ஞாதவாசஞ்செய்யச் செல்லும்பொழுது விராடநகர்ப்புறத்து நன்காட்டிற் காளிகோயிலுக்கெதிரிற் பெரியதொரு வன்னிமரத்தின் பொந்திலே தம்தம் ஆயுதங்களையும் கவசங்களையும் பிறவற்றையும் ஒளித்துவைத்து வேறெவரும்அறியாதபடி மந்திரமோதிக் காப்பிட்டுவந்தமையின். (கீழ் நாடுகரந்துறைசருக்கத்தில் "விராடன்மாநகரியெல்லைபுக்கொருபால் மயானபூமியினிடைவிரவா," "யாமளமறையால்யாவரும்பணிவா ளொழுவகைத் தாயரிலொருத்தி, சாமளவடிவோடந்நகர்வாழ்வாள் சங்குதண்டங்கையிற் றரிப்பாள், கோமளவல்லிக்கொடிநிகர்காளி கோயிலின் முன்ன ரோர்வன்னி,நாமளவிடுதற்கரியபல்கிளையானலம்பெறுபாதவநண்ணு," "தத்தம படையுங் கவசமு மனைத்துந் தனித்தனி யைவருந் தரித்த, மைத்திறலுடைய யாவு மத்தருவின்கோடரத்தொளித் தொருவிரகால்,வைத்தனராகி யாவரு முணராவகை யருமறைகளும்பயிற்றி, முத்தலைவடிவேற்காளியை வணங்கி முன்னினுர் புரிதொழில்முற்றும்" என்றவை, இங்கு நோக்கத்தக்கன.) மேவலர் - விரும்பிச் சேராதவர்; எதிர்மறைவினையாலணையும்பெயர்: மேவு - பகுதி, அல் - எதிர்மறையிடைநிலை. தொடுக்கப்படுவது தொடை யெனக் காரணக்குறி;ஐ-செயப்படுபொருள்விகுதி. கணித்த எல்லை-கணப்பொழுதுமாம். 'கணித்தஎல்லையின்' என்பதற்கு - (முன்பு அஜ்ஞாதவாசத்துக்குக்) குறித்தகாலத்தின்முடிவி லென்று உரைப்பாரு முளர். 'கணித்தவேலையில்' என்பதும் பாடம். கடாவி, கடாவு - பகுதி. திணி தரும் என்றெடுத்து,வலியமைந்த என்றுஉரைப்பர் ஒருசாரார். முடி-மயிர்முடியப்படுவதென்ற காரணம்பற்றிவந்த பெயர். மீண்டு, மீள் - பகுதி. (௪௧)

[உத்தரனுக்கும் பிருகந்நளைக்குஞ் சம்பாஷணை.]

எரிப்புறத்தருத்தருபடையர்வெனவினவக்
கிரிப்புறப்பெருங்காலுறைகிரீடியவென்னத்

தெரிப்புறப்புகலெவ்வயிற்சேர்ந்தனனவனென்
றரிப்புறத்தடங்கண்ணியைக்கேட்டனனவனும்.

(இ - ள்.) 'எரி புறம் தரு தரு படை - நெருப்பைத் தன்னிடத்தே யுடைய வன்னிமரம் தந்த ஆயுதங்கள், யா - எவருடையவை?' என வினவ - என்று (உத்தரன்) கேட்க,—'கிரி புறம் பெருங் கான் உறை கிரீடிய-மலைகளிலும் அவற்றின்புறத்திலுள்ள பெரிய காடுகளிலும் வாசஞ்செய்த அருச்சுனனுடையவை', என்ன - என்று (உருக்கரந்த அருச்சுனன்) சொல்ல,—'அவன் எ வயின் சேர்ந்தனன் - அவ்வருச்சுனன் எந்தஇடத்திற் சென்று சேர்ந்தான்? தெரிப்பு உற புகல் - தெரியும்படி சொல்,' என்று—, அவனும்-அவ்வுத்தரனும், அரி புறம் தட கண்ணியை - (சிவந்த) ரேகைகளைத் தம்மிடத்தேயுடைய பெரிய கண்களையுடையளான பேடியை, கேட்டனன் - வினவினன்; (எ - று.)

வன்னிமரத்தைக் கடைந்தால் நெருப்புத் தோன்றுமாதலால், அது 'எரிப்புறத்தரு' எனப்பட்டது. எரியைப் புறப்படவிடுந் தருவென்றுங் கொள்ளலாம். புறம் - (நகரத்துக்குப்) புறத்தில் [புறங்காட்டிலேயுள்ள], எரித் தரு - வன்னிமரம், தரு - கொடுத்த என்று பதவுரைகூறலுமாம்; நெருப்புக்கு 'வன்னி' என்று ஒருபெயரிருத்தல்பற்றி, வன்னிமரம் 'எரித்தரு' எனப்பட்டதென்க: 'எரி' என்ற சொல் - தனது பரியாயநாமமாகிய வன்னியென்றசொல்லைக் குறிப்பிட, அது, தன்பொருள்களிலொன்றான ஒருவகைமரத்தை யுணர்த்திற்று; இது, லக்ஷிதலக்ஷணை: (கம்பராமாயணத்தில் கேகயராஜவம்சத்தை "மயின்முறைக்குலம்" [மயில்=கேகயம். கேகயம்=கேகயநாடு] என்றதும், திருச்சந்தவிருத்தத்தில் பக்தியை "எட்டிரண்டு" [எட்டிரண்டு=பத்து. பத்து=பத்தி, பக்தி] என்றதும், சிவகசிந்தாமணியில் புத்திசேனனை "திங்கள்விரவியபெயரினன்" [திங்கள்=மதி. மதி=புத்தி] என்றதும் இத்தன்மையனவே.)

தரு - வடசொல். தரு படை - வினைத்தொகை; கான் - கானனமென்னும் வடசொல்லின் சிதைவு. கிரீடிய - குறிப்புமுற்று.

கிரீடீ - கிரீட முடையவன்; வடசொல்: அது ஈயீறு இகரமாய்க் கிரீடியென நின்றது. பாசுபதாஸ்திரம் பெற்றபின்பு நிவாதகவசகாலகேயவதத்திற்காகத் தேவேந்திரன் அருச்சுனனைத் தன்னுலகத்துக்கு அழைத்துக்கொண்டு போனபொழுது அவருக்குத் தன் ஆசனத்தில் அருத்தாசனங்கொடுத்து அதில் வீற்றிருக்கவைத்து, முன்பு பிரமன் தனக்குத்தந்தருளிய இரத்தின கிரீடத்தைச் சூட்டிட. அம்முடியணியை உரியதாகப் பெற்றனனாதலால்,அருச்சுனனுக்குக் கிரீடி யென்று பெயர்.

பெண்தன்மை மிக்கிருத்தலால், 'அரிப்புறத்தடங்கண்ணி' என்றார்; கண்ணி யென்ற பெயரில், இ - பெண்பால்விகுதி. புகல் - வினைப்பகுதி தானே ஓசைவேறுபாட்டால் ஏவலொருமைக்கு வழங்கும்; இதில்,ஏவலொருமை ஆய் விகுதி புணர்ந்துகெட்ட தென்பாருமுளர். தெரிப்பு-'பு'விகுதி பெற்ற தொழிற்பெயர். 'அவனும்' என்பதற்கு - பிருகந்நளையாகிய அவ்வருச்சுனனும் என்று உரைத்து, அதனை மேல் ௪௪ - ஆஞ் செய்யுளில் வரும் 'எனவிடுத்தான்' என்பதற்கு எழுவாயாக்குதலு மொன்று. (௪௨)

[பிருகந்நளை அருச்சுனன்செய்தி கூறல்.]

கிரிடியெங்குளனென்றெனைக்கேட்டநீகேண்மோ
விருடியாகிநின்றுதையோடாதனத்திருக்கும்
புருடனிப்பதிபுகுந்தநாள்வந்துடன்புகுந்தோ
ரிரீடமானதன்விதியினாற்பேடியுமானான்.

இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (அருச்சுனன் உத்தரனை நோக்கி),—'கிரிடி எங்கு உளன் என்று எனை கேட்ட - அருச்சுனன் எங்கே யிருக்கின்றானென்று என்னை வினவிய, நீ—, கேண்மோ - கேட்பாயாக; இருடி ஆகி - முனிவடிவமாய், நின் தாதையோடு ஆசனத்து இருக்கும் - உன்தந்தையுடனே பீடத்தில் எழுந்தருளியிருக்கின்ற, புருடன் - சிறந்தபுருஷனான கங்கபட்டனென்பவன், இ பதி புகுந்த நாள் - இந்நகரக்கு வந்துசேர்ந்த நாளில், (அக்கிரீடி); உடன் வந்து புகுந்து - கூடவந்து சேர்ந்து, அரிடம் ஆன தன் ஓர் விதியினால் - தீமையாகிய தனது ஊழ்வினையொன்றினால், பேடியும் ஆனான் - பேடியுருவமாகவு மாயினான்; (எ - று.)

கேண்மோ, மோ-முன்னிலையசை. கிரிடி, இருடி, ஆதனம், புருடன், அரிடம், விதி என்பன - முறையே கிரீடீ, ருஷி,ஆஸநம், புருஷன், அரிஷ்டம், விதி என்னும் வடமொழிகளின் விகாரம். விதியாவது - இருவினைப் பயன் செய்தஉயிரையே சென்றடைதற்குஏதுவாகிய நியதி. 'ஓர் அரிடமான தன்விதியினால்' என்றது - வனவாசகாலத்தில் அருச்சுனன் தான் பரமசிவனிடத்துப் பாசுபதம்பெற்றபின்பு ஆங்கு வந்து அழைத்துப்போன தந்தையாகிய இந்திரனுடனே தேவலோகஞ் சென்றபொழுது அங்குத் தன்னைக் காமித்துத் தன்பக்கல் இரவில் வந்துசேர்ந்த ஊர்வசியென்னும் தெய்வமகளைத் தாயென்று கொண்டு தாள்களில் விழுந்து வணங்கியவளவில், அவள் மிகவும் மனம்வருந்திக் கோபித்து 'பேடியாவாய்' என்று சாபங்கொடுத்து, பின்னர், அதனை அறிந்த இந்திராதிதேவர்களின் வேண்டுகோளினால் தான் வேண்டும்நாளில் அப்பேடிவடிவம் ஓராண்டு வரும்படி வரமாக மாற்றினமையைக் கருதி.

எனை = என்னை: தொகுத்தல்விகாரம். 'பேடியும்' என்ற உம்மை-இறந்ததுதழுவிய எச்சத்தோடு இழிவுசிறப்பு. 'தாதையோராசனத்திருக்கும் புருடன்' என்று பாடமோதி,விராடராசன்வீற்றிருக்கின்றஆசனத்தில் அவனுடன்வீற்றிருக்கின்ற ஆண்மகனென்று உரைப்பாருமுளர். 'இப்பதி' என்றது, மச்சநாட்டிராசதானியான விராடநகரத்தை. (௬௩)

[பிருகந்நளை உத்தரனைத் தேற்றிக் கட்டவிழ்த்துவிடுதல்.]

யாண்டுசென்றிலதின்னமுமீரிருகடிகை
வேண்டுமாலினியீண்டையவ்விசயனுந்தோன்று
மீண்டுபோகலைவிடுவிடுவிரைபரித்தடந்தேர்
தூண்டுநீயெனத்தோளிலத்துவக்கையும்விடுத்தான்.

(இ - ள்.) யாண்டு சென்றிலது - (அஜ்ஞாதவாசத்துக்குரியமித்த) ஒருவருஷகாலம் (இன்னும் முடியக்) கழிந்ததில்லை; இன்னமும்—, ஈர் இரு கடிகை வேண்டும் - நான்கு நாழிகைப்பொழுது கழியவேண்டும்; இனி - (அந்நான்கு நாழிகைக்குப்) பின்பு, ஈண்டை-இவ்விடத்தில், அ விசயனும்-அந்த அருச்சுனனும், தோன்றும் - வெளிப்பட்டுத்தோன்றுவான்; நீ—, மீண்டு போகலை - திரும்பி ஓடிப்போவதை, விடு விடு - விட்டுவிடு; விரை பரி தட தேர் - வேகமாயோடுகின்ற குதிரைகளைப் பூட்டிய தேரை, தூண்டு - செலுத்து,' என-என்று சொல்லி, தோளில் அ துவக்கையும்-தோள்களைத் தேரோடு அணைத்துக் கட்டிய அக்கட்டையும், விடுத்தான் - அவிழ்த்துவிட்டான்; (எ - று.)—ஆல் - அசை.

சென்றிலது - ஒன்றன்பா லெதிர்மறை யிறந்தகாலமுற்று; செல் - பகுதி, ற் - இறந்தகாலஇடைநிலை, இல்-எதிர்மறையிடைநிலை, அ-சாரியை, து - விகுதி, லகரம் னகரமானது - சந்தி. ஈரிரு-பண்புத்தொகை; இரண்டாகியஇரண்டெனவே, நான்காயிற்று. கடிகை - கடிகா என்னும் வட

மொழியின்திரிபு; அறுபது விநாடி:இருபத்துநான்குநிமிஷநேரம். ஈண்டை-இடப்பொருளுணர நின்ற 'ஈண்டு'என்னும் சுட்டு நீண்ட மென்றொடர்க் குற்றியலுகரவீற்று இடைச்சொல், ஐகாரச்சாரியையைபெற்றது. விடு விடு - அடுக்கு, துணிவுப்பொருளது. போகலை என்பதை-ஏவலொருமை யெதிர் மறை முற்றாகவும், விடு விடு என்பதை - விரைவுக்குறிப்பிடைச்சொல்லாக வுங் கொண்டு, 'திரும்பிப் போகாதே; விடுவிடென்று [மிகவும்விரைவாகத்] தேரைஓட்டு' என்றலுமாம். துவக்கு-முதனிலைத்தொழிற்பெயர். 'இன்னம்' என்பது, ஓர் இடைச்சொல். 'வேண்டும்' என்பது, ஒருவகைவியங்கோள் வினைமுற்று; உம் - விகுதி. போகல்—போ - பகுதி, அல் - தொழிற்பெயர் விகுதி, கு - சாரியை; போகு - பகுதியென்பாரு முளர். பரி - (தேரையும் வீரனையும்) பரிப்பது என்பதுபற்றி வந்த காரணக்குறி; (பரித்தல் - மேற் கொண்டுதரித்தல்:) 'வாஹம்' என்ற வடமொழிப்பெயரின் பொருள் கண்டு தெளிக. உம்மைகள்மூன்றும் - இறந்தது தழுவியஎச்சம். 'துவக்கினை விடுத் தான்' என்றும் பாட முண்டு. (௪௪)

[உத்தரன் தேறுதல்கொண்டு தேர்செலுத்துதல்.]

அறிந்துதாள்விழுந்தெழுந்துபின்னாங்கவனருளாற்
செறிந்தமால்பெறுஞ்சிறப்பையச்சிறுவனும்பெற்றுப்
பிறிந்தபற்பலபேரணிநால்வகைப்படையு
முறிந்துபோகவத்தேர்விடுதொழிலினின்மூண்டான்.

(இ - ள்.) அ சிறுவனும் - அந்த உத்தரகுமாரனும், அறிந்து-(அப்பேடியாகிய அருச்சுனன் சொன்னவற்றை யெல்லாந்)தெரிந்துகொண்டு,ஆங்கு-அப்பொழுது, தாள் விழுந்து-(அவனுடைய)பாதங்களில் வீழ்ந்து வணங்கி, எழுந்து - எழுந்திருந்து, பின்-பின்பு, அவன் அருளால்-அவ்வருச்சுனனது கட்டளையால், செறிந்த மால் பெறும் சிறப்பை - (அருள்) பொருந்திய திருமால் [ஸ்ரீகிருஷ்ணன்] அடையப்போகின்ற பெருமையை [அருச்சுனனுக்குச் சாரத்தியஞ்செய்யுந் தொழிலை], பெற்று - தான் அடைந்து,—பிறிந்த-வகுக்கப்பட்ட, பல் பல பேர் அணி - பலபல பெரிய வரிசைகளையுடைய, நால் வகை படையும்-(ரத கஜ துரக பதாதி என்னும்) நான்குவகைப்பட்ட (துரியோதனாதியர்) சேனைகளும், முறிந்து போக - அழிந்தோடும்படி, அ தேர் விடு தொழிலினில் - அந்தத் தேரை யோட்டுஞ் செய்கையில், மூண்டான் - முயன்றான்; (எ - று.)

தேவாதிதேவனாகிய தனது பெருமையெல்லாம் அழிய மாறிப் பார்த்தனுக்குச் சாரத்தியஞ் செய்து அடியவர்க் கெளியனாயிருக்குந் தன்மையை வெளியிடுதலால், 'செறிந்த மால் பெறுஞ் சிறப்பு'என்றார். அத்தன்மையை மேல் எட்டாம்போர்ச்சருக்கத்துக் கடவுள்வாழ்த்தில் "பூத்த நாபியந்தாமரைப் பூவில் வந்து பல்பூதமுஞ், சேர்த்தநான்முகப்புனிதனு முனிவர்யாவருந்தேவரு,மேத்த நாலுவேதங்களுந் தேடநின்றதா ளெம்பிரான், பார்த்தன்மாமணித்தேர் விடும் பாகனான தெப்பான்மையே" என்று பாராட்டிக் கூறுவர். "பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய வித்தகன்" என்று பரத்வத்தினும் மூர்த்திப்பாராட்டுமாறு ஸௌலப்யம் தலைமைபெறுதலால், 'மால்பெறுஞ்சிறப்பு' எனப்பட்டது. மேற் பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "உளப்பொலிவுடனே விசயனுக்கருளா லுருளுடைக்கொடிகொள் தேரூர்ந்தாய்" என்று தருமபுத்திரன் எடுத்தேத்துமாறுங் காண்க. அன்றியுஞ்,சிறந்தவீரனுக்குப் பெரும்போரிற் சாரதியாதலும் ஒருசிறப்பாம்; மேற் பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "புகழேபூண்டு, வேந்தரா யமர்க்களத்தி லதிரதித்த வீரரானவர்க் கிதுதான்மேம்பாடன்றோ, மாத்தராயெக்கலையும் வல்லார்க்கன்றி வாசிநெடுந்தேரூரவருமோ" என்பது காண்க. இத்திறம்

இனித் துரியோதனனும் அருச்சுனனும் ஒருங்குவந்து கண்ணபிரானைத் தம்தமக்குப் படைத்துணையாகுமாறு வேண்டும்பொழுது அருச்சுனன் பிரார்த்திக்கின்றபடி மகாபாரதயுத்தத்தில் நிகழ்வதனால், 'பெறும்' என்று எதிர்காலப்பெயரெச்சத்தாற் குறிக்கப்பட்டது. காண்டவதகனகாலத்துத் தேவர்களோடு நேர்ந்த போரிற் கண்ணன் அருச்சுனனுக்குத்தேர்செலுத்தி யிருத்தலையுங் கொண்டால் 'பெறும்' என்பதில் விகுதி எதிர்காலமுணர்த் தாது தன்மைமாத்திரமேகுறித்த தென வேண்டும். இனி, 'பெருஞ்சிறப்பு' என்று பாடமோதுவாருமுள, மால் பெரு - மிகப்பெரிய என ஒருபொருட் பன்மொழி யென்பாரு முளர்.

'சிறுவனும்' என்ற உம்மை - இறந்ததுதழுவிய எச்சத்தோடு இழிவு சிறப்பு; அகரச்சுட்டு, அஞ்சியோடியதைக் குறிக்கும். 'அறிந்து'என்பதற்கு-(இப்பேடி அருச்சுனனே யென்று) உணர்ந்து என்றுஉரைப்பர் ஒருசாரார். அருள் - அருளோடு இடுங் கட்டளைக்கு இலக்கணை; காரணவாகுபெயர். பற்பல பேரணி பிறிந்த என்று மொழிமாற்றி-பலபல பேரணிகளாகப் பிரி ந்த வென்றலு மொன்று. படையும், உம் - இனைத்தென்று அறிபொருளில் வந்த முற்றும்மை. தேர்விடுதொழில்-ஸாரத்யம். பிரி,முரி என்பனபோலப் பிறி, முறி என்னும் வினைகளும் உள்ளனவாம்; அன்றி, எதுகைநோக்கி ரகரந் திரிந்து நின்றன வெனினும் ஒக்கும். (௪௫)

[துரோணனாதியர் பேடியைக்குறித்துச் சங்கித்தல்.]

ஓடினானுமித்தேர்விரைந்தூர்பவனம்மா
பேடிநாமுதலையுறும்பெருந்தகையென்று
நாடினார்பலர்நந்தியாவத்தநாண்மாலை
சூடினானெடுஞ்சேனையிற்றுரோணனேமுதலோர்.

(இ - ள்.)நாள் நந்தியாவத்தம் மாலை சூடினான் - அன்றைக்கு மலர்ந்த [புதிய] நந்தியாவட்டப்பூமாலையைச் சூடிக்கொண்டிருக்கின்றவனான துரி யோதனனது, நெடுஞ் சேனையில்-பெரிய சேனையிலே, துரோணனே முத லோர் பலர்-துரோணாசாரியன்முதலிய (அறிவிற்சிறந்த) பல வீரர்கள், 'ஓடினானும்-(முன்னே தேரேறிப்போர்செய்ய வந்து)அஞ்சியோடிய குமாரனும், இ தேர் விரைந்து ஊர்பவன் - (பேடியின்செயலால்தேறி) இந்தத் தேரை விரைவாய்ச் செலுத்துஞ் சாரதியானான்; அம்மா - ஆச்சரியம்! பேடி—, நாம் முதல் ஐயுறும் பெருந் தகை - நாம் முதலிற்சந்தேகிக்கத்தக்க பெரு மைக்குணங்களையுடைய அருச்சுனனாம்,' என்று—, நாடினார் - ஆலோசிப் பவரானார்கள்; (எ - று.)

ஓடினானும், உம்மை - இழிவுசிறப்பு. அம்மா - வியப்பிடைச்சொல். ஐயுறு - ஐயமுறு என்பதன் விகாரம்;காமுறு,ஏமுறு என்பனபோல. ஐயம்-பலதலையாய அறிவு. பெருந் தகை - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை: தகை - தகுதி, சற்குணம்; இது - தொழிலடியாப் பிறந்ததாயினும், பொருளாற் பண்புப்பெயர். நந்த்யாவர்த்தம் - ஒரு பூஞ் செடி; இவ்வடசொல்-ஆனந்தத்தை விளைப்பதென்று காரணப்பொருள் பெ றும். இதனை, இக்காலத்து நஞ்சாவட்டை யென்பர்: இம்மாலை, துரியோ தனனுக்கு உரிய அடையாளப்பூமாலையாம்.

துரோணன்-பரத்வாஜமுனிவனதுகுமாரன்; கிருபாசாரியனுடன்பிறந் தவளான கிருபியின் கணவன்; அசுவத்தாமனது தந்தை; ஸகலசாஸ்திரங் களையும் தன் பிதாவினிடம் கற்று, படைத்தொழிலைப் பரசுராமனிடத்து ஏழுநாளிற் பயின்றவன்; துரியோதனாதியர் நூற்றுவர்க்கும் பாண்டவ ரைவர்க்கும்அஸ்திரசஸ்திரங்களைக்கற்பித்தஆசிரியன்:(முதலிற்சிறிதுகாலம் கிருபனும், பின்பு பிரதானமாகத் துரோணனும் கௌரவபாண்டவர்க்கு

வில்வித்தை பயிற்றிவைத்தன ரென்று அறிக.) வைதிகவிரதாநுட்டானஞ் செய்துகொண் டிருக்கையில் தேவர்களா லேவியனுப்பப்பட்ட மேனகையின் கட்டழகைக் கண்டு காதல்கொண்ட பரத்வாஜமுனிவனது விருப்பத்தால் ஒரு துரோணகும்பத்திற் பிறந்தமைபற்றி, இவனுக்குத் துரோணனென்று பெயர். த்ரோணகும்பம் - பதக்களவுகொண்ட பாத்திரம்; துரோணம்-பதக்கு, இரண்குறுணி. இனி, துரோணமென்று வில்லுக்குப் பெயரிருத்தலால், துரோணனென்பது - வில்வன்மைபற்றி வந்த பெயருமாம். இவன், அங்கிவேசமுனிவன்பக்கலிலும் படைகள்தேர்ந்தான். ஏ - உயர்வு சிறப்பு. குடிஞன் - பெயர். (௭௬)

[பிருகந்நளை கையில்வில்லேந்தி உத்தரனை அஞ்சாது தேர்செலுத்தச் சொல்லுதல்.]

பேடியென்றுதன்பெண்மையையாண்மையாற்பிறர்கொண்
டாடவந்தவெஞ்சாபமுந்தொடிக்கையிலாக்கிக்
கோடியம்புகளோரொருதொடையினிற்கோத்து
வீடுவிப்பனீயஞ்சிடாவிடுகதேரென்றான்.

(இ - ள்.) (அப்பொழுது அருச்சுனன்), பிறர் - அயலார் [பகைவர்], பேடி என்று - தன்னைப் பேடியென்று (முதலில்) எண்ணி, (உடனே), தன் பெண்மையை - தனது மிக்கிருக்கும் பெண்தன்மையை, ஆண்மையால் கொண்டாட - ஆண்தன்மையாக மெச்சும்படி, அந்த வெம் சாபமும் - அந்தக் கொடிய வில்லையும், தொடி கையில் ஆக்கி - வளையலணிந்த தன்கையில் ஏந்திக்கொண்டு,—(உத்தரனை நோக்கி), 'கோடி அம்புகள் - அநேகம் பாணங்களை, ஓர் ஒரு தொடையினில் - தொடுக்கும்முறை யொவ்வொன்றிலும், கோத்து - தொடுத்து,வீடுவிப்பன் - (பகைவர்களைக்) கொன்று (பசுக்களை) மீட்பேன்; நீ—, அஞ்சிடா - அச்சங்கொள்ளாமல், தேர் விடுக - தேரைச்செலுத்துவாயாக,' என்றான் - என்று தைரியங் கூறினான்; (எ - று.)

வன்னிமரத்தினின்று எடுத்துவந்தமை கீழ்க்கூறியதனால், 'அந்த வெஞ் சாபம்'என்றார். சாபம் வடசொல். வில்லேந்துதல் ஆடவரியல் பாதலால், 'பெண்மையை ஆண்மையாற் பிறர்கொண்டாடச்சாபங்கையிலாக்கி' எனப்பட்டது. 'பேடியென்ற' என்றும் பாடமுண்டு. காண்டவதகனகாலத்தில் அருச்சுனனுக்கு அக்கினிபகவான்கொடுத்த வில், 'காண்டீவம்' என்னும் பெயரினது. தன் பேடித்தன்மையைப் பிறர் ஆண்மையாற்கொண்டாடும்படி முன்னே ஊர்வசியாற்கொடுக்கப்பட்டு வந்தடைந்த கொடிய சாபத்தையுந் தொடியணிந்தகைம்மாத்திரத்தில் [கைவசத்தில்] ஆக்கி யென்ற பொருளும்தோன்றும்;ஶாபம்-வெகுண்டுகூறியமொழி. சாபம்-இவ்விருபொருளுமுடையதாதலை, "சாபமே சபித்தல் வில்லாம்" என்னும்நிகண்டினாலும் அறிக. 'வீடுவிப்பன்' என்பதற்கு - இரட்டுறமொழித லென்ற உத்தியால், உயிர்விடுவிப்பே னென்றும், நிரைவிடுவிப்பேனென்றும் இருபொருள் ஒருங்குகொள்ளப்பட்டது. வீடுவிப்பன் - அன்விகுதிபெற்ற தன்மையொருமை முற்று; விடுவிப்பனென்பது முதல்நீண்டு வந்தது: வீடுவிப்பல் என அல்லீறாகவும் பிரிக்கலாம். அந்த-அகரச்சுட்டின் மரூஉ. 'பேடியன்று தன்பெண்மையை யாண்மையாப் பிறர்' என்று பாடமோதுவாருமுளர். (௭௭)

[பிருகந்நளை அம்பெய்து பலஅரசரை அழித்தல்.]

என்றபோதிவன்றேரினை யிமைப்பினிற்செலுத்தச்
சென்றபோர்முனைச்சிலைவிடுசிலீமுகங்களினாற்
கொன்றபோர்மன்னரெ்ணிலர்குருகுலத்தவராய்
நின்றபோர்முடிமன்னருஞ்சுளித்துளநெளித்தார்.

(இ - ள்.) என்ற போது - என்று (அருச்சுனன்) சொன்னபொழுதில், இவன் - உத்தரன், தேரினை - தேரை, இமைப்பினில் - ஒருமாத்திரைப் பொழுதினுள்ளே, செலுத்த - (மிகவிரைவாக) ஓட்ட, போர் முனை-போர்க்களத்தில், சென்று-போய், சிலை விடு - (அருச்சுனன்)வில்லிற்கோத்துஎய்த, சிலீமுகங்களினால்-அம்புகளினால்,கொன்ற-கொல்லப்பட்ட,போர் மன்னர்-போரிற்சிறந்த அரசர்கள், ஈறு இலர் - எல்லையில்லாதவர்கள் [மிகப்பலர்]; (அதுநோக்கி),—குருகுலத்தவர் ஆய் நின்ற - குருகுலத்தில்தோன்றியவர்களாய்ப் (போர்முகத்தில்)நின்ற, போர் முடி மன்னரும் - போர்த்தொழில் வல்ல கிரீடாதிபதிகளான(பீஷ்மன் விதுரன் துரியோதனன் முதலிய) அரசர்களும், சுளித்து - கோபித்து, உளம் நெளித்தார் - மனம்பதைத்தார்கள்.

மன்னரும். உம் - உயர்வுசிறப்பு. மன்னர் உளம்நெளித்தார் - உயர்திணையோடு சார்ந்த அஃறிணைச்சினைப்பெயர் அவ்வுயர்திணை முடிபையே பெற்ற திணைவழுவமைதி; [நன் - பொது - உசு.]இமைப்பினிற் கொன்ற என்று இயைத்தலுமாம். இமைப்பு - இமைப்பொழுதுக்குத் தொழிலாகு பெயர்; இதில், பு - தொழிற்பெயர்விகுதி. சுளித்து-முகஞ்சுளித்து எனினுமாம். கொன்ற=கொல்லப்பட்ட; செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினை. (சஅ)

[விதுரன் ஆலோசித்தல்.]

அன்றுபோலலனருச்சுனனம்பிகாபதிபாற்
றுன்றுபோர்புரிதவத்தினாற்சுடுகணைபலபெற்
றன்றுபோரினாலவுணரையமரருக்காக
வென்றுபோனகநுகர்ந்துபொற்றருமலர்வேய்ந்தான்.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அருச்சுனன்—, அன்று போல் அலன் -(இப்பொழுது) முன்னிருந்தவன்போ லல்லன்; அம்பிகாபதிபால் - பார்வதிகொழுநனான பரமசிவனிடத்தில், துன்று போர் புரி - நெருங்கிய போரைச் செய்து, தவத்தினால் - (அவனைநோக்கிச்செய்த) தவத்தால், சுடு பல கணை பெற்று - (பகைவரை) அழிக்கவல்ல பல ஆயுதங்களைப் பெற்று, அன்று - அப்பொழுதே, அமரருக்கு ஆக -(இந்திரன் முதலிய) தேவர்களின்பொருட்டாக, அவுணரை - (அவர்களால் வெல்லக்கூடாத நிவாதகவசர் காலகேயர் என்னும்) அசுரர்களை, போரினால் வென்று - போர்செய்து ஜயித்து, போனகம் நுகர்ந்து - (இந்திரனுடனே ஒக்கஇருந்து தேவர்கள்தந்த) உணவை யுண்டு, பொன் தரு மலர் வேய்ந்தான் - பொன்மயமான கற்பகவிருக்ஷங்களின் மலர்களை (அத்தேவர்கள்) சூட்டப்பெற்றான்; (எ - று.)

இச்செய்யுள் - விதுரனது உட்கோள்; [மனத்திற்கருதிய கருத்து.] இனி, இதனைக் கவிக்கூற் றென்பாரு முளர். புரிந்து,பெற்று, வென்று,நுகர்ந்து, வேய்ந்தான் என இயையும். 'போரினிலவுணரை' என்றும், 'வென்று பொன்னகரமர்ந்து' என்றும் பாடமோதுவர்.

பாண்டவர்கள் வனவாசஞ்சென்றபொழுது அவர்களில் அருச்சுனன் வியாசபகவானது கட்டளையின்படி அம்முனிவனிடம் மந்திரோபதேசம் பெற்றுக் கைலாசகிரிக்குச் சென்று தவம்புரிகையில் அவனையழிக்குமாறு துரியோதனனாலேவப்பட்ட மூகாசுரன் பன்றிவடிவங்கொண்டு அருச்சுனன்மீதுபாய்ந்து அவனைக்கொல்வதாகவந்தவளவில்,சிவபெருமான் வேடவடிவங்கொண்டு அங்குவந்து அப்பன்றியின்மீது ஓர்அம்பையெய்ய, அது பிளக்குமுன்னே அருச்சுனன் அம்பொன்றையெய்து வராகத்தை வீழ்த்த, அதுகாரணமாக அவ்விருவர்க்கும்உண்டான போரில்,பரமசிவன் எதிரியின்

வில்நாணியை அறுக்க, அருச்சுனன் அவ்விற்கழுந்தாற் கடவுளின்முடியில் அடித்தனன். பிறகு சிவபெருமான் தனது நிஜரூபத்துடனே அருச்சுனனுக்குத் தரிசனந்தந்து வில் பாசுபதாஸ்திரம் அம்பறாத்தூணி முதலியவற்றைக் கொடுத்தருளினன். பின்பு அருச்சுனன் அங்குவந்து தன்னை அழைத்துச்சென்ற தந்தையான இந்திரனுடனே தேவலோகஞ்சேர்ந்து, அங்குத் தேவர்கள்வேண்டியபடி, அவர்கட்குப்பகைவராய்ப் பலநாளாகப் பெருந்துன்பமியற்றிவந்த கடலிடையிலுள்ளதோயமாபுரத்தில் வசிப்பவர்களான நிவாதகவசரென்னும்அசுரர் மூன்றுகோடிபேரையும், அந்தரத்திலுள்ள இரணியபுரத்தில் வசிப்பவர்களான காலகேயரென்னும்அசுரர்அறுபதினாயிரவரையும் ஆங்காங்குச்சென்று போர்செய்து அழித்திட்டனன் என்பது, இங்குஅறியவேண்டிய வரலாறு. ஆரணியபருவத்து நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்கத்தில் "செவ்வியதாதைதானுஞ் சேணதித்தூநீராட்டி, வில்விரவாதவாசத்தாமமும் விழைந்துசூட்டி," "ஏடவிழலங்கலானோராசனத்திருத்தி யென்றூந், தேடேற்கரியதூயவமுது செம்பொற்கலத்திற்,கூடவுண்டமரர்க்கெல்லாங்குரிசிலாஞ்சிறப்புச்செய்தான்" என்றவையுங் காண்க.

அன்றுபோல்அலன் - சூதாடிச் செல்வமிழந்துசென்ற அந்நாளிலிருந்ததுபோலல்லனென்றபடி. 'புரி'-புரிந்து; விகுதிமுதலியனகெட்டுப் பகுதிமாத்திரமாய் நின்ற இறந்தகால வினையெச்சம; "வரிப்புனை பந்து"என்றவிடத்து 'வரி' என்றது போல. இனி, போர்புரி தவம்-போர்செய்து இயற்றிய தவமெனினுமாம்; அருச்சுனன் தவத்திலிருக்கும்போதே சிவவேடனோடு போர்செய்தனனாதலால். 'ஆக' என்றது - நான்காம்வேற்றுமைச்சொல்லுருபு. அம்பிகாபதி - வடமொழித்தொடர். தவம் - தபஸ் என்னும் வடமொழியின் விகாரம்: தவமாவது - மனம் பொறிகளின்வழியே போகாமல் நிற்றற்பொருட்டு விரதங்களால உணவுசுருக்கலும் கோடைக்காலத்தில் வெயில்நிலை நிற்றலும் மாரிக்காலத்தும் பனிக்காலத்தும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றால் தன் உயிர்க்கு வருந்துன்பங்களைப் பொறுத்துப், பிற உயிர்களை ஓம்புதல். இனி, தவத்தினால் அம்பிகாபதிபால் துன்றுபோர்புரி சுடுகணைபல பெற்று என்றும் இயைக்கலாம்; மிக்கபோரைச்செய்தற்குஉரிய கொடிய ஆயுதங்களென்க. கணை - இங்கே, ஆயுதமென்னும் மாத்திரமாய் நின்றது; அவை - பாசுபதம், வில், அம்பறாத்தூணி முதலியன. அஸ்திரசஸ்திரங்களைப் பெற்றபொழுதேபயன்கொள்ளுதல் அருமை யாதலால்,'அன்று'என்றார்;(இதனை, சீவகசிந்தாமணியில் "நெஞ்சம் புணையாக் கலைமாக்கடல்நீந்தி யாங்கே, வஞ்சம்மறவர்நிரை வள்ளல் விடுத்தவாறும்" என்றஇடதது 'ஆங்கே' என்றதுபோலக் கொள்க.) 'அன்று' என்றது - அகரச்சுட்டடியாப்பிறந்து காலமுணர்த்தும் இடைச்சொல். இனி, அன்றுபோரினால் - கோபித்துச்செய்த போரினால் என்றலுமாம்; அன்றுபோர் - வினைத்தொகை: அன்று - வினைப்பகுதி; அன்றுதல் - கோபித்தல். அமரர்என்னும் வடசொல்லுக்கு (அமிருதபானஞ் செய்ததனால்) மரணமில்லாதவ ரென்பது பொருள். போனகம் - போஜநம். பொன்தரு, ஐந்து; ஸந்தாநம், மந்தாரம், பாரிஜாதம், கல்பகம், அரிசந்தநம் என்பன. (௫௧)

[விதுரன் ஓர்உபாயங் கூறுதல்.]

தன்னிலத்தினிற்குறமுயறந்தியின்வலிதென்
றிந்நிலத்தினிற்பழமொழியறிதிநீயிறைவ
வெந்நிலத்தினுமுனக்கெளிதாயினுமிவர்நந்
நன்னிலத்தினில்வரவமர்தொடங்குதனன்றால்.

(இ-ள்.) (என்று எண்ணித் துரியோதனனை நோக்கி),—'இறைவ அரசனே! 'தன் நிலத்தினில் - தானிருக்குமிடத்திலுள்ள, குறு முயல் சிறிய முயற்குட்டி, தந்தியின் வலிது - (தன்னிடம் விட்டுப் பெயர்ந்துவந்த பெரிய) யானையைக்காட்டிலும் வலிமையையுடையது,' என்று—, இ நிலத்தினில் - இவ்வுலகத்துச்சொல்லப்படுகின்ற, பழமொழி - முதுமொழியை, நீ—, அறிதி - அறிவாய்; (ஆகையால்), எ நிலத்தினும் - (தன்நிலம் அயல் நிலம் என்னும்) எந்த இடங்களிலும், உனக்கு—,எளிது ஆயினும் - (போர் செய்வது) எளிதாயிருந்தாலும், இவர் நம் நல் நிலத்தினில் வர - இவர்கள் நமது நல்ல இடத்தில் வந்தபின்பு, அமர் தொடங்குதல் - (நாம்)போரைத் தொடங்குதல், நன்று - நல்லது'; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

பழமொழி - பழமையாகிய மொழி யென விரியும்; பண்புத்தொகை; உலகநடையை ஒட்டி உயர்ந்தோரால் உண்டாக்கப்பட்டு வழங்குகின்ற கட்டுரை வாக்கியம். 'தன்நிலமானல் முயலும் யானையைவெல்லும்' என்றல், உலகவழக்கு. இது, இவர் வலியிலராயினும் நீ மிக்கவலியுடையையாயினும இவர்நிலத்தி லிருந்து நீ போர்செய்தால் தோல்வியையடைவா யென்னும் பொருள் தோன்றக் கூறியது. ஒருகாட்டில்வசித்திருந்த பல முயல்களி லொன்று வேற்றுவனத்திலிருந்துவந்த சதுரதந்தனென்ற அரசயானையை ஒருதந்திரஞ்செய்து கூட்டத்தோடுதுரத்திவிட்ட தென்ற வரலாற்றைப் பஞ்சதந்திரத்திற் காணலாம். "நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி னீங்கி னதனைப் பிற", "கடலோடா கால்வல்நெடுந்தேர் கடலோடும், நாவாயு மோடா நிலத்து", "சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த, ருறைநிலத்தோ டொட்ட லரிது," "காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா, வேலாண் முகத்த களிறு" என்பர், இடனறிதலில் திருவள்ளுவரும். இதனால்,எளியவரும் தம்தம் நிலத்து வலிய ரென்பது கூறப்பட்டது. துரியோதனனுக்கு ஊக்கங் குறையாதிருத்தற் பொருட்டும், அவனுக்குக் கோபமுண்டாகாமலிருப்பதைக்கருதியும், 'எந்நிலத்திலு முனக்குஎளிது' என்றான்.

தந்தீ-வடசொல்:தந்தங்களையுடையது. இன்-ஐந்தனுருபு,எல்லைப்பொருள்.வலிது-வன்மையென்னும்பண்பினடியாகப்பிறந்தகுறிப்புமுற்று; இ-சாரியை. அறிதி-முன்னிலையொருமைமுற்று; இகரவிகுதியே எதிர்காலங்காட்டும்:"மின்னேவல் வியங்கோளிம்மாரெதிர்வும்"எனரூர் நன்னூலார்.நிலம்-(சலியாது) நிற்பது என்ற பொருள்பற்றி வந்த காரணக்குறி; நில் - பகுதி, அம் - கருத்தாப்பொருள்விகுதி: (பூமியின் பெயர்களி லொன்ருன 'அசலா' என்ற வடசொல்லும் இப்பொருளதாதல் காண்க.) இறைவன் - தலைமையுணர்த்தும் 'இறைமை' என்ற பண்பி னடியாகப் பிறந்த பெயர்: வ் - பெயரிடைநிலை; ஈறுகெட்டது, விளியுருபு. நிலத்தின், இன் - ஏழனுருபு; உம்மை - முற்று. ஆயினும், உம் - உயர்வுசிறப்பு. குறுமுயல் பண்புத்தொகை. இச்செய்யுளிற் சிறப்புனகரமும் பொதுநகரமும் விரவி எதுகைத்தொடையமைந்தமை காண்க. நம் நல் நிலம் - நமக்கு நன்மையைத்தர வாய்ந்த இடம். 'நன்று' - நன்மையைத்தருவது: வெற்றிதரு மென்றபடி. (௬௦)

[அதனை வீமனும் துரோணனும் அங்கீகரிக்க,துரியோதனன்கோபித்தல்.]

என்றுகூறினன்விதுரனுமேனையங்கருகு
நின்றவீடுமன் றுரோண னுநினைவிதுவென்ரு
ரன்றுநாகவெங்கொடியவன்கொடியநெஞ்சழன்றான்
குன்றமாயினுநீறெழுமருகுறக்குறுகின்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) என்று—, விதுரனும்—, கூறினன் - சொன்னான்; ஏனை மற்றும், ஆங்கு - அவ்விடத்தில், அருகு நின்ற - சமீபத்திலிருந்த, வீடுமன் துரோணனும் - பீஷ்மனும் துரோணாசாரியனும், இது நினைவு என்றார் 'இது (இச்சமயத்துக்குஏற்ற) எண்ணமே' என்று சொன்னார்கள்; (அது கேட்டு), அன்று - அப்பொழுது, நாகம் வெம் கொடியவன் - கொடிய பாம்புக்கொடியை யுடையவனான துரியோதனன், கொடிய நெஞ்சு அழன்றான் - கொடுந்தன்மையையுடைய மனம் கொதித்தான்; (அப்பொழுது கர்ணன்), 'அருகு உற - சமீபத்தில். குறுகின் - (நாம்) நெருங்கிப் போர் செய்தால், குன்றம் ஆயினும் நீறு எழும்-மலையேயானாலும் பொடியாய்விடு மன்றோ; (எ - று.)

'குன்றமாயினும்' என்னும் நான்காம்அடி முதல் மேலைப்பாட்டின் முடிவளவும் - ஒருதொடர்.

'நினைவிதுவென்றார்' என்பதற்கு - (எங்களுடைய) எண்ணமும் இதுவே யென்றனரென்றும் பொருள்கொள்ளலாம். தனது எண்ணத்திற்கு மாறாகப் பகைவர்சிறப்பை எடுத்துக்கூறியமை குறித்து, துரியோதனன் கோபித்து நெஞ்சழன்றான். குன்றமாயினும், உம்மை-உயர்வுசிறப்பு; அது, மலையினது பெருமை வலிமை அசைக்கலாகாத நிலைமைகளை விளக்கிநின்றது. போர்செய்து நெருக்கினால் எத்துணைவல்லோரும் அழிவரென்றபடி.

விதுரன்-விசித்திரவீரியனது மனைவியரிலொருத்தியான அம்பிகையினாலேவியனுப்பப்பட்ட தாதிப்பெண்ணினிடத்து வியாஸமுனிவரருளாற் பிறந்தவன்; திருதராட்டிரனுக்கும் பாண்டுவுக்கும் தம்பிமுறை யாகின்றவனாதலால், துரியோதனாதியர்க்கும் பாண்டவர்க்கும் சிற்றப்பன்: விற்போர்த்திறத்தில் மற்றையாவரினும் வல்லவன்; தத்துவஞானமமைந்தவன். இவனை யமதர்மராஜனது அம்சமென்றும், பரமபாகவதர்களிலொருவனென்றும் நூல்கள் கூறும். வீடுமன் - பீஷ்மன் என்ற வடசொல்லின் சிதைவு; பயங்கரனானவனென்பதுபொருள்: அச்சந்தருகின்ற விரதமுடையவனென்பது கருத்து; இவன், தன்தந்தைக்கு யோஜநகந்தியை இரண்டாவதுமணஞ்செய்வித்தற்கு அவளைவளர்த்ததந்தையான செம்படவன் இசைதற்பொருட்டு, தான் விவாகஞ்செய்துகொள்வதில்லை யென்றும், மூத்தமகனாதலாற் பட்டத்திற்குஉரிய தனது இராசியத்தையும் மற்றையெல்லாச்செல்வங்களையும் தனக்குச்சிறியதாயாக வருமவளுக்குப் பிறக்கும் பிள்ளைக்கே கொடுப்பதாகவும், இங்ஙனம் ஒழித்தற்குஅரிய மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்னும் மூவகையாசைகளையும் இளமையிலேயே யொழித்துக் கேட்போர்அஞ்சும்படியானசபதத்தைச் செய்ததனால், இவனுக்குஇப்பெயர். தேவர்கள்முன்னிலையில் இந்தவிரதத்தை ஏற்படுத்திக்கொண்டதனால், தேவவிரதனென்றும் இவனுக்குப் பெயருண்டு.

'விதுரனும்'என்ற உம்மை-எதிரதுதழுவியஎச்சம். 'வீடுமன் துரோணனும்'என்ற உம்மை - செவ்வெண்ணின்ஈற்றில்வந்த இறந்ததுதழுவியஎச்சம். அன்று - சிறுகின்ற எனினுமாம் நாகம் என்ற வடசொல் - நகத்தில் வாழ்வது என்று பொருள்படும்; நகம் - இடம்விட்டுப்பெயராதது: மலையும், மரமும். கொடியவன் நெஞ்சு அழன்றான் - இணையுவமைநி. அழன்றான், அழல் - பகுதி. ஏனை - இடைச்சொல். 'கொடியவன் கொடிய' என்றவிடத்து மடக்கு என்னுஞ் சொல்லணி காண்க. (௪௪)

[கர்ணன் அலக்ஷியமாகக்கூறுதல்.]

தேருமங்கொருதேர் தனித்தேரின்மேனின்று
வீரவெஞ்சிலைவளைத்தகைவிரனும்பேடி

யாருநெஞ்சழிந்தஞ்சுவதென்கொலென்றிசைத்தான்
சூரன்மாமகனாகியசூரரிற்சூரன்.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்தில் [எதிர்ப்பக்கத்தில்], தேரும்—, ஒரு தேர் - ஒற்றைத்தேராகும்; தனி தேரின்மேல் நின்று - அந்த ஒருதேரின் மேற் பொருந்தி, வீரர் வெம் சிலை வளைத்த கை - வீரர்களுக்குரிய கொடிய வில்லை வளைத்துப்பிடித்த கையையுடைய, வீரனும்-வீரனொருவனும், பேடி - ஆண்மையில்லாத பேடியாம்; (இங்ஙனமாகவும்), யாரும் - பேர்பெற்ற நிகைளெல்லாரும், நெஞ்சு அழிந்து - மனந்தளர்ந்து, அஞ்சுவது - பயப்படுவது, என் - என்னகாரணத்தால்?' என்று—, சூரன் மா மகன் ஆகிய-சூரியனது சிறந்த குமாரனாகிய, சூரரில் சூரன் - வீரர்களிற் சிறந்த வீரனாகிய கர்ணன், இசைத்தான் - சொன்னான்; (எ - று.)

'சூரன்' என்கிற சொல் இரண்டும்-முறையே ஸூரன், ஶூரன் என்ற வடமொழிகளின் திரிபு. மேற் பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "பயந்த காதற் சூரனை யனைய சூரா" என்னுமிடத்துங் காண்க. "ஒன்று தேரினொலொருவன் கூற்றமே, யென்று கூறினு மொருவனென்செயு,மின்று கோடு நா மெழுகென் றேகினார்" என்ற சீவகசிந்தாமணி, இங்கு ஒப்புநோக்கத் தக்கது. ஆடவர்க்குரிய விற்றொழிலை மேற்கொண்டதனால் 'வீரனும் பேடி' எனப் பேடியை ஆண்பாலாகக் கூறினான். விதுரன் முதலானோர் அஞ்சுவதை இழித்தற்பொருட்டு, பேடியை 'வீரன்'என்றானுமாம். 'யாரும்'என்ற உம்மை, அவர்களது போர்க்கஞ்சாமை குறித்து நின்றது; முற்றுப்பொருளோடு உயர்வு சிறப்பு. கொல் - அசைநிலை. 'தேரும்,' 'வீரனும்' என்ற உம்மைகள் - ஒன்றையொன்றுநோக்கி முறையே எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சமாம். 'யாரும்' என்றது - இங்கு முன்னிலைப்படர்க்கை. சந்தியவனது வீரத்தை வில்லின்மேலேற்றி 'வீரச்சிலை' என்றதாகவுங் கொள்ளலாம்; 'சினவாள்' என்றாற்போல. (௬௨)

[துரியோதனனது கட்டளை.]

கொண்டகோநிரைகோவலர்கொண்டுமுன்போகத்
தண்டுநிற்கெனத்தம்பியரனைவருந்தானுந்
திண்டிறற்பெரும்பேடியைத்தேர்மிசைக்கண்டு
மிண்டுவீரெனக்கூறியேசுயோதனன்மீண்டான்.

(இ - ள்.) (அதுகேட்டு), சுயோதனன் - துரியோதனன், 'கொண்ட கோ நிரை - கவர்ந்துகொண்டுவந்த பசுக்கூட்டங்களை, கோவலர் - (நமது) இடையர்கள், கொண்டு-ஓட்டிக்கொண்டு, முன் போக - முன்னேபோகா நிற்க, தண்டு - (நம்) சேனையானது, நிற்க - (அவ்விடையர்க்குத்) துணைநிற்பதாக,' என - என்று கட்டளையிட்டு, தம்பியர் அனைவரும் தானும் - தம்பிமாரெல்லாருந் தானுமாக, திண் திறல் பெரும் பேடியை-மிக்க வலிமையையுடைய பெரிய பேடியை, தேர்மிசை கண்டு - தேரின்மேற் பார்த்து, மிண்டுவீர் என கூறி-நெருக்கிப்போர்செய்வீரென்று (தம்பியர்முதலியோரை நோக்கிச்) சொல்லி, மீண்டான் - திரும்பினான்; (எ - று.)

'போக' என்னுஞ் செயவெனெச்சம் - உடனிகழ்ச்சிப்பொருளதாய்த் தனக்குரிய நிகழ்காலத்தில் வந்து, 'நிற்க' என்னும் வினை கொண்டது. 'போகதண்டுநிற்க' என்ற வலிமிகாத பாடமாயின், போக - வியங்கோள் முற்று. 'நிற்கவென'என்பது 'நிற்கென'என்று வியங்கோளீற்று அகரம் தொகுத்தல்விகாரமாயிற்று. (௬௩)

[அருச்சுனன் வடபுறத்து நிரைமீட்டல்.]

மானமாமுடிமன்னரைவிலங்கிவல்விரைந்து
நீகோநிரைக்குலங்கொண்டுபோகுங்கோநிரைதுரந்து

போனபேடிவெம்பூசலும்பொழுதுறப்பொருது
தூநிறத்திளங்கன்றுடைத்தொறுக்களுமீட்டான்.

(இ - ள்.) (பின்பு),—போன பேடி - (போர்க்குச்) சென்றபேடியாகிய அருச்சுனன்,—மானம் மா முடி மன்னரை - மானமுள்ளவர்களும் பெரிய கிரீடந்தரித்தவர்களுமான பகையரசர்களை, விலங்கி - விட்டு விலகி,—வல் விரைந்து - மிகவும் வேகமாய், குலம் கோ நிரை கொண்டு போம் - சிறந்த பசுக்கூட்டங்களைக் கவர்ந்து போகின்ற, கோ நிரை - ராஜபரிவாரத்தை, தாக்கி - தாக்கிக்கொண்டுபோய்,—வெம் பூசலும்-கொடிய போரையும், பொழுது உற - காலதாமதமாகும்படி, பொருது - செய்து,—தூ நிறத்து - பரிசுத்தமான தன்மையுள்ள, இளங் கன்று உடை தொறுக்களும் - கன்றுகளையுடைய பசுக்கூட்டங்களையும், மீட்டான்-திருப்பிக் கொண்டுவந்தான்.

கீழ் ௨0-ஆஞ்செய்யுள்போலவே, இச்செய்யுளும - இச்சருக்கத்துக்கு உயிர்நிலைச்செய்யுளாம்; உத்தரகிரைமீட்சி கூறினமையின்.

பொழுது உற - அஜ்ஞாதவாசவருஷங்கழித்தற்குக்குறைவாய்நின்ற நான்கு நாழிகைப் பொழுது கழியு மளவும்; தான் வெளிப்படுதற்குரிய காலம் வருமளவு மென்பதாம். அறிவுசிறந்தபோரரசர்களின் முன்னிலையில் தான் நின்றால் தன்னை இன்னனென்று அவர்கள் ஒருகால் ஊகித்தறிந்துவிடக்கூடும்: அங்ஙனம்அறிந்துவிட்டால் அஜ்ஞாதவாசம்பூர்த்தியாகாது அறக்கெட்டுவிடுமே யென்பது கருதி, அவர்களெதிரில்நில்லாது அவர்களை விட்டுவிலகி, நிரைகவர்ந்துசெல்கின்ற இடையர்முதலிய ஸாமாந்யஜனங்களைத் தொடர்ந்து சென்று பொருது பொழுதுகழிக்கலாயினனருச்சுன னென்க. வலிய பெரிய அரசர்களுட னன்றி இராஜபரிவாரங்களுடன் போர்செய்ய அருச்சுனனுக்கு அத்துணைப்பொழுது வேண்டாவாயினும், இவ்வகைக்கருத்தினால் மெதுவாய்ப்போர்செய்து பொழுதுபோக்கினன். இனி, பொழுதுஉற - பொழுதுவிடியுமளவு மென்றலு மொன்று. 'மானமாமுடி மன்னர்' என்றது - "மயிர்நீப்பின் வாழாக் கவரிமாவன்னா, ருயிர்நீப்பர் மானம் வரின்" என்றபடி தம்தலையைக் கொடுத்தாயினும் மானத்தைக் காக்கவல்ல வீரரென்றவாறுமாம். மானமாவது - எப்பொழுதும் தம் நிலையினின்று தாழாமையும், ஊழ்வினையால் தாழ்வு வந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். மாநம் - வடசொல். இனி, மானம்-செருக்கும், தமது அரசனிடத்து அபிமானமும், பெருமையும், வலிமையுமாம். மா - முடிக்கேனும், முடியரசர்க்கேனும் அடைமொழியாகத் தக்கது. வல் விரைந்து-ஒருபொருட்பன்மொழி. வல் - விரைவுப்பொருளுணர்த்தும் இடைச்சொல். கோ - பசுவும் அரசனு மாதலை "மலை வேல் மன்னவன், விழி பசு கோ வென வேண்டினர் புலவர்" என்னுந் திவாகரத்தாலும் அறிக. முந்தின பொருளில் வடசொல்லும், பிந்தின பொருளில் தமிழ்மொழியுமாம். குலம்-சிறப்பென்னும் பொருள தாதலை 'குலபர்வதம்' என்ற இடத்துங் காண்க.

'தூநிறத்து' என்றது - இளங்கன்றுடைத்தொறுக்களுக்கு அடைமொழி. பசுக்கள் ஆதியில் திருப்பாற்கடலினின்று தோன்றியமை, யாகம்முதலிய வைதிகச்சடங்குகளுக்குவேண்டியபால்முதலியவற்றைப்பசுக்கள்உதவுதல், பசுக்களின் உறுப்புக்களில் தேவர்களனைவர்களும் முனிவர்களுடையஅம்சங்களும், புண்ணியதீர்த்தங்களின் பகுதிகளும் அமைந்திருத்தல், பசுக்கள் தரும் பஞ்சகவ்வியங்கள் அனைவர்க்கும் பரிசுத்திகரமாதல், பசுக்களைப் பரிசித்தல் பிரதக்ஷிணம்புரிதல் பாதுகாத்தல் பிறர்க்குக்கொடுத்தல்செய்பவர்க்குத் தீவினைதீர்ந்து நல்வினையுண்டாதல் முதலிய சிறப்புக்கள்பற்றி, பசுக்கூட்டத்துக்கு 'தூநிறத்து' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. தூ - தூய்மை யென்னும் பண்புப்பெயரின் விகாரம்; ஈறுபோய் முன்னின்றமெய் புள்ளிகெட்டது. இனி, தூநிறத்து - வெள்ளைநிறமுடைய எனினுமாம்; பசுக்

களுக்கு வெண்ணிறமுடைமை விசேஷம்: தூ - வெண்மை. குலம்-கூட்டம் என்றுகொண்டு, ஒன்றன்கூட்டம் பலவினீட்டம் என்ற இருவகையைக் கருதி, கோநிரைக்குலம் என்றன ரென்றலு மொன்று; ஒவ்வொருவகையி லும் பல பசுக்க ளென்றவாறும். 'நிரை' என்ற பலபொருளொருசொல், - முன் பசுக்கூட்டத்தையும், பின் படைவகுப்பையுங் குறித்தது. மீட்டான்: பிறவினைமுற்று; தன்வினையில் 'மீண்டான்' என்று நிற்கும்: இரண்டிலும், மீள் - பகுதி; அது - தன்வினை பிறவினை யிரண்டுக்கும் பொது: ளகரம்டகர மாதல், பிறவினைக்குறி. இரண்டாமடியில் 'கோநிரை' என்ற தொடர் வெவ் வேறுபொருளில்வந்தது, யமகமென்னுஞ் சொல்லணி. 'வல்விரைந்து'என் றதை 'கொண்டுபோம்' என்பதனோடும், 'தூர்ந்து' என்பதனோடு கூட்ட லாம். 'போன' என்ற பெயரெச்சத்தில், 'இன்' என்ற இறந்தகாலஇடை நிலை முதல்தொக்கது. தூர்ந்து, தூர் - பகுதி. கன்று - இளமைப்பெயர்; "யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையு, மானோ டைந்துங் கன்றெ னற் குரிய" என்ற தொல்காப்பியங் காண்க. (௫௪)

[துரியோதனனைச்சார்ந்தஇடையரது ஒடுக்கமும், உத்தரனைச்சார்ந்த இடையரது மகிழ்ச்சியும்.]

முந்தவான்றொறுமீட்டலுமுற்கவர்பொதுவர்
வெந்தநெய்யெனவாரவமடங்கினர்மிகவு
மந்தநெய்யினிற்பாற்றுளியுகுத்தெனவார்த்தார்
வந்தமச்சர்கோமகனொடும்வந்தகோபாலர்.

(இ - ள்.) முந்த - முன்னே, ஆன் தொறு - பசுக்கூட்டத்தை, மீட்ட லும் - (பேடி) மீட்டுக்கொண்டுவந்த அளவில்,—(அதனால்),—முன் கவர் பொதுவர் - முன்பு (பசுக்களைக்) கவர்ந்துகொண்டுபோன (துரியோதன னோடுவந்த) இடையர்கள்,—வெந்த நெய் என - நன்றாய்க் காய்ந்த நெய் (ஓசையடங்குதல்)போல, மிகவும் ஆரவம் அடங்கினர் - முற்றும் ஆரவார மடங்கினார்கள்; வந்த மச்சர் கோ மகனொடும் வந்த கோபாலர்-(நிரைமீட்க) வந்த உத்தரகுமாரனோடு வந்த இடையர்கள்,—அந்த நெய்யினில்-அவ்வாறு நன்றாகக் காய்ந்த நெய்யில், பால் துளி உகுத்து என - பாலின் துளியைத் தெறித்தால்(மிக்கஓசை எழுமாறு)போல,(மிகவும்) ஆர்த்தார்-(மகிழ்ச்சியால்) மிகவும் ஆரவாரித்தார்கள்; (எ - று.)

முந்த - முற்பட: அரசர்களை வெல்லுதற்கு முன்னமே. வான் தொறு என எடுத்து - சிறந்த [மிக்க] பசுக்கூட்ட மெனினுமாம். 'முன்' என்னும் இடைச்சொல், இங்குக் காலங் குறித்தது. பொதுவர் - நாடும்நாடுசார்ந்த இடமுமாகிய மருதநிலத்துக்கும் மலையும்மலைசார்ந்தஇடமுமாகிய குறிஞ்சி நிலத்துக்கும் நடுவிடமான காடும்காடுசார்ந்தஇடமுமாகியமுல்லைநிலத்தில் உள்ளவர்; 'இடையர்'என்பதற்குங் காரணம் இதுவே. (பொதுவனென்பதன் பெண்பன்மை, பொதுவியர்.) ஆரவம் - வடசொல்; இங்கே, கொண்டாட் டத்தாலுண்டாகும் பேரொலி. 'மிகவும்'என்றது-மத்திமதீபமாய், முன்நின் ற'அடங்கினர்'என்றதனோடும், பின்நிற்கும்'ஆர்த்தார்'என்பதனோடுங்கூட் டப்பட்டது. 'உகுத்தென'என்பதை-உகுத்தாலெனவெனவினையெச்சவிகா ரமாகவாயினும், உகுத்ததெனவெனத் தொழிற்பெயர் விகாரமாகவாயினுங் கொள்க. மச்சர்கோ மகன் - மச்சநாட்டிலுள்ளார்க்கு அரசனாகிய விராட னது குமாரன். வெந்த, வே-பகுதி; முதல்குறுகியது-விகாரம். கோபாலர்- பசுக்களைக் காப்பவர்; வடசொல்.

'நிரை' என்றதுபோலவே, 'தொறு' என்றதும் - பசுக்கூட்டத்தையும் கூட்டத்தையுங் குறிக்கும். வெந்த நெய் - நன்றாகக்காய்ச்சப்பட்ட வெண் ணெய்; காய்ச்சுகையில் வெண்ணெயின் நீர்ப்பசையற்ற நெய். அந்த நெய்-

கொதிப்புத்தணியாத நெய். தொழில்பற்றி வந்த உவமையணி. பால்துளி புகுத்தல், நீர்ப்பசையற்றதும் அருமையும் உணர்தற்கென்க. வெந்த நெய் யென ஆரவமடங்கின ரெனவும், அந்நெய்யினிற் பாற்றுளியுகுத்தென ஆர்த்தா ரெனவுங் கூறியன - இடத்துக்கும் சாதிக்கும் ஏற்ற உவமைகள்; இங்ஙனங் கூறுவது, மகாகவிகளது இயல்பு: சிந்தாமணியிலும் கோவிந்தை யாரிலம்பகத்தில் "ஆய்த்தியர்நலக் காசெல்துணைஞன்," "ஆயர் மத்தெறி தயிரினுயினர்," "மத்தம் புல்லிய கயிற்றின் மற்றவ, ரத்தலைவிடி னித்தலை விடார்," "வெண்ணெய்போன்றாறினியன் மேம்பால்போல் தீஞ்சொல்ல, ளுண்ண வுருக்கிய வாநெய்போன் மேனியள்," "ஊழிதோறுவுந்தோழும் போன்றுடன் மூக்க" என ஆங்காங்குக் கூறியிருத்தல் காண்க. (௩௫)

[பசுக்கள் மீண்டோடிவருதல்.]

பாலெடுத்தபொற்குடநிகர்மடியினபருவச்
சூலெடுத்தநல்வயிற்றினமழவிடைதொடர்வ
கோலெடுத்திளங்கோவலர்கூவினர்துரப்ப
வாலெடுத்தனதுள்ளிமீண்டோடினவனமே.

(இ - ள்.) பால் எடுத்த பொன் குடம் நிகர் மடியின - பாலை நிரம்பக் கொண்ட பொன்மயமான குடத்தைப் போன்ற மடியையுடையவைகளும், பருவம் சூல் எடுத்த நல் வயிற்றின-பருவமுதிர்ந்த கருப்பத்தைக்கொண்ட அழகிய வயிற்றையுடையவைகளும், மழ விடை தொடர்வ - இளமையான எருதுகளாற் காதலோடுபின்தொடரப்படுவனவும் ஆகிய பசுக்கள்,—இளங் கோவலர் - (உத்தரகுமாரனோடு வந்த) இளையஇடையர்கள்[இடைப்பிள்ளை கள்], கோல் எடுத்து - (கையிற்) கோலை ஓச்சி, கூவினர் துரப்ப - கூவி ஓட்ட, வால் எடுத்தன - வாலைத் தூக்கிக்கொண்டவைகளாய், துள்ளி—, மீண்டு - திரும்பி, வனம் - (தாம்வழக்கமாகமேயும் விராடனகர்ப்புறத்துக்) காட்டிற்கு, ஓடின—; (எ - று.)

'பாலெடுத்தபொற்குடநிகர்மடியின' என்றது, பாற்பசுக்களை. 'பருவச் சூலெடுத்தநல்வயிற்றின' என்றது, சினைமுதிர்ந்த பசுக்களை. 'மழவிடை தொடர்வ' என்றது, சினைகொள்ளற்பாலன வான பசுக்களை. கீழ் (௨௬) "குடநிறைப்பன குவிமுலைக் கோநிரை" என்றதனோடு இங்கு "பாலெடுத்த பொற்குடநிகர் மடியின" என்றதற்கு உள்ள ஒற்றுமை வேற்றுமை நயங்களை யுணர்க. பசுவின் மடிக்குப் பொற்குடம் - நிறத்தி னும், வடிவினும் உவமை. மடி - முலைமேற்றிரள். பருவச்சூல் - ஈனுங் காலம்வாய்த்த சினை; பூர்ணகர்ப்பம். பருவம் - காலம். பர்வம்-வடசொல். க்ஷேமமாகக் கன்று போடும் வயிறென்றற்கு, நல்வயிறென்றருமாம். வாலெடுத்துத் துள்ளிக் குதித்தோடுதல் - கொண்டாட்டமிகுதிபற்றி; இது பசுக்களின் இயல்பு: இதனால், பசுக்களினது அறிவுடைமைவிளங்குகின்றது. இச்செய்யுள்-பசுக்களின் சாதித்தன்மையை வருணித்ததனால், தன்மைநவி ற்சியணி; இதனை வடநூலார் ஸ்வபாவோக்தி யலங்காரம் என்பர்.

மழ-இளமையுணர்த்தும்உரிச்சொல்; "மழவுங்குழவும்இளமைப்பொருள" என்பது தொல்காப்பியம். மழவிடை - இளவெருது, காளை. மடியின, வயிற் றின, தொடர்வ - பலவின்பாற்பெயர்கள்; முன்னிரண்டும் - குறிப்பு: இன் - சாரியை; பின்னது - தெரிநிலை; வ் - எதிர்காலவிடைநிலை. பசுக்களெனச் சொல்வருவித்து உரைத்தலு மாம்: ("மாமனு மருகனும் போலு மன் பின, காமனுஞ் சாமனும் போலுங் காட்சிய, பூமனு மரிசிப்புல் லார்ந்த மேட்டின, தாமினமமைந்ததந் தொழிலின் மிக்கவே" என்னுஞ் சிந்தா மணிச்செய்யுளிற் போல.) விடை-வ்ருஷமென்னும் வடமொழியின்சிதைவு. கோல் - பசுக்களை ஓட்டுங் கோல். கோவலர் - பசுக்களின்தொழிலில்வல்ல

வர்; கோபாலர் என்ற வடமொழியின் சிதை வென்றலுமாம். கூவினர், எடுத்தன - முற்றெச்சங்கள். துரப்ப - காரணப்பொருளில் வந்த செயவெனெச்சம். வனம்=முல்லைநிலம். (௫௯)

[சாபம்நீங்க, அருச்சுனன் தனது தேரினைப் பெறுதல்.]

கடிகைநாலுடன்சென்றபின்கடைசிவந்தகன்ற
நெடியகண்ணியன்றிட்டவெஞ்சாபமுநீங்கக்
கொடியின்மீதெழுமனுமனைக்குறிக்கவக்கொடியு
முடிகொடன்றனியிரதமுமுன்வரக்கண்டான்.

(இ - ள்.) (அருச்சுனன்),—கடிகை நால் உடன் சென்ற பின் - (அஜ்ஞாதவாசவருஷத்தின் கடைசி)நான்குநாழிகைப்பொழுதுங் கழிந்தபின்பு,—கடை சிவந்து அகன்ற நெடிய கண்ணி - கடைப்பக்கஞ் செந்நிறமாய்ப் பரந்து நீண்ட கண்களையுடையளான ஊர்வசி, அன்று - அந்நாளில் [முன்பு தான் தேவலோகத்துச் சென்றிருந்தபொழுது], இட்ட - (தனக்குக்) கொடுத்த, வெம் சாபமும் - கொடிய (பேடிவடிவம் பெறுகிற) சாபமும், நீங்க - நீங்கியவளவில்,—கொடியின் மீது எழும் - (தனது) துவசத்தின்மேல் எழுந்தருள்கிற, அனுமனை - அநுமானை, குறிக்க - தியானிக்க,—(அதனால் அப்பொழுதே), அ கொடியும் - அவ்வநுமத்துவசமும், முடி கொள் தன் தனி இரதமும் - சிகரத்தைக்கொண்ட தனது ஒப்பில்லாத தேரும், முன் வர - (தனது) எதிரில் வர, கண்டான் - பார்த்தான்; (எ - று.)

முன்வரக்கண்டான் - எதிரில்வரப்பெற்றானென்றபடி. குறித்தல் - மனத்தில்நினைத்தல். 'நாலுடன்' என்றதில்,உடனென்னும் இடைச்சொல்- முற்றுப்பொருளது; நான்கும் என்றபடி. 'கடிகைநாலவண்சென்றபின்' என்ற பாடத்துக்கு, அவண் - அவ்வாறாக என்க: அவ்வண்ணமென்பதன் விகாரம்: ராஜபரிவாரங்களைத் துரத்திப் பொருது நிரைமீட்டதிலென்றபடி. இனி, 'உடன்சென்றபின்' எனபதற்கு - 'விரைந்துகழிந்தபின்' என்று பதப்பொருள்கூறி, 'அவை கழியவேண்டியஇயல்பின்படி கழிந்தனவாயினும், அங்குள்ளார்யாவர்க்கும் சிந்தனை போர்முயற்சியிலிருந்ததாதலால் அந்நாழிகைகள் விரைந்துகழிந்தனபோலத் தோன்றினமைபற்றி அங்ஙனங்கூறப்பட்டது' என்று விசேடவுரை கூறுவாருமுளர். கடைசிவந்து - நல்லிலக்கணமாகிய சில சிவந்தரேகைகளைக் கடையிடத்தேபெற்று. அகன்ற - அகலமான: அகல் - பகுதி. ரதம் - வடசொல். சென்றபின் - 'பின்' விகுதிபெற்ற இறந்தகால வினையெச்சம். முன் - இடமுன்.

குரங்குக்கொடியும், நான்கு வெள்ளைக்குதிரைகள் பூட்டிய தேரும், காண்டீவமென்னும் வில்லும், அக்ஷயதூணீரமும் - காண்டவதகனகாலத்து அக்கினிதேவனால் அருச்சுனனுக்கு அளிக்கப்பட்டவை. பின்பு வீமசேனன் புஷ்பயாத்திரையாக அளகாபுரிக்குச் சென்றபொழுது இடைவழியிற்கதலிவனத்திலே தவஞ்செய்துகொண்டிருந்தவனும் வாயுகுமாரனாதலால் தனக்குத் தமையனுமான அநுமானைக் கண்டு வணங்கி வேண்டிப் போர்க்களத்தில் அருச்சுனனது தேர்த்துவசத்தில் வந்து நின்று மகிழ்ந்து கூத்தாடும்படி வரம் பெற்றதனால், 'கொடியின்மீதெழு மனுமன்' என்றார். (ஆரணியபருவத்துப் புட்பயாத்திரைச்சருக்கத்தில் "நெடியகானகநீங்கி யா நெறியினேரலரைக், கடியவெஞ்செருப்புரி பெருங்குருதிவெங்களத்தி, லடிகளாங்கெழுந்தருளிவன் றருச்சுனன்றடந்தேர்க், கொடியின்மீது நின்றுவந்துகூத்தாடிடென்றான்", "நீட்டுமவ்வரமவனுக்குநேர்ந்தன னுமான்" என்றவை இங்கு நோக்கத்தக்கன.) அநுமன் - ஹநுமாந் என்ற வடசொல்லின் விகாரம். (குழந்தைப்பருவத்திலே இளஞ்சூரியனைக் கனிந்தபழமென்றுகருதிப் பிடிக்கப்பாய்ந்தபொழுது அதனையறிந்து சினந்த இந்திரனால் வச்சிரா

யுதக்கொண்டு அடிக்கப்பட்டுச் சிதைந்த) கன்னமுடையனாதலால், இப் பெயர்வாய்த்தது; கன்னத்தில் விசேஷமுடையவ னென்க: ஹநு-கன்னம், மாந் - வடமொழிப்பெயர்விகுதி. கேஸரியென்னும் வாநரராஜனது மனைவி யான அஞ்சநாதேவியினிடத்தில் வாயுபகவானது அநுக்கிரகத்தால் தோன் றியவனிவன்; இவனிடத்து ருத்திராம்சமும் உண்டு. (கூஎ)

[உத்தரன் ஸாரதியும் அருச்சுனன் ரதியுமாய்ப் போர்க்குநிலைநிற்றல்.]

உரியதேரினைமீதுகொண்டுத்தரன்செலுத்தக்
கரியமேனியன்செய்யதாமரைத்தடங்கண்ணன்
புரியவாங்கியசிலையினனின்றனன்பொலம்பொற்
கிரியின்மீதெழுமரகதகிரியெனக்கிளர்ந்தே.

(இ - ள்.) கரிய மேனியன் - கறுத்த உடம்பினிறத்தை யுடையவனும், செய்ய தாமரை தட கண்ணன் - செந்தாமரைமலர்போன்ற பெரிய கண் களையுடையவனுமாகிய அருச்சுனன்,—உரிய தேரினை மீதுகொண்டு-தனக் குரிய தேரின்மேல் ஏறிக்கொண்டு,—உத்தரன் செலுத்த - (அத்தேரை) உத்தரன் நடத்தாநிற்க,—பொலம் பொன் கிரியின்மீது எழும் - அழகிய பொன்மயமானதொரு மலையின்மேல் விளங்குகின்ற, மரகதம் கிரி என் - பச்சையிரத்தினமயமானதொரு மலைபோல, கிளர்ந்து - விளங்கி,—புரிய வாங்கிய சிலையினன் - நன்றாகவளைத்துநாணேற்றிய வில்லையுடையவனாய், நின்றனன் - (கம்பீரமாக)நின்றான்; (எ - று.)

'மீதுகொண்டு' என்றது, ஒருசொல்தன்மைப்பட்டு, ஏறியென்ற மாத் திரமாகி 'தேரினை' என்றதற்கு முடிக்குஞ்சொல்லாயிற்று. செய்ய - செம் மையென்னும் பண்பினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; பண்புப்பெ யர் ஈறுபோய் முன்நின்ற மகரமெய் யகரமாத் திரிந்தது. மலர்ச்சியும் குளிர்ச்சியும் சிவப்பும் கண்டோரை மகிழ்வித்தலும் அழகும் பற்றி, கண் களுக்குச் செந்தாமரைமலர் உவமை. தாமரை - தாமரஸ மென்னும் வட மொழியின் சிதைவு. புரிய-போர்புரிய வென்றுமாம். பொன்மயமான தேர் க்குப் பொன்மலையும், அதன்மேலுள்ள கருநிறமுடைய அருச்சுனனுக்கு மரகதமலையும் உவமை. மரகதம் - மரதகம்; எழுத்துநிலைமாறுதல், இலக் கணப்போலி. நின்றனன் - போர்க்குச் சித்தனாய் அம்புதொடுத் தெய்யும் நிலைமையில் நின்றா னென்க. இரண்டாமடியில். 'கரிய,' 'செய்ய'என மாறு பட்டசொற்கள் வந்தது, தொடைமுரண். மரகதகிரி-வடமொழித்தொடர்; ஆதலின், வலி இயல்பு. (கூஅ)

[அருச்சுனன் பேடிவடிவொழிந்து நிஜரூபத்தோடு வெளிப்படுதல்.]

படுங்குறும்பனிபுதைத்தலிற்பரிதிதன்னுருவ
மொடுங்குமாறெனவொளித்ததன்பேடுருவொழித்து
நெடுங்கொடுங்கணைநிருபன்வெஞ்சேனையின்வேந்தர்
நடுங்குமாறுமுன்றோன்றினனரனெனுநாமன்.

(இ - ள்.) நரன் எனும் நாமன் - நரனென்ற பெயரையுடையவனான அருச்சுனன்,—படும் குறும் பனி புதைத்தலின் - விரைவில்அழியும்படியான அற்பமாகிய பனி மூடுதலினாலே, பரிதிதன் உருவம் - சூரியனது மண்ட லம், ஒடுங்கும் ஆறு என - மறையும்விதம்போல, ஒளித்த-தான் உருமறைந் திருப்பதற்குக் காரணமான, தன் பேடு உரு - தனது நபும்ஸகரூபத்தை, ஒழித்து - நீக்கி,—நெடுங் கொடுங் கணை நிருபன் - நீண்ட கொடிய அம்பு களையுடைய துரியோதனராசனது, வெம் சேனையின் - கொடிய சேனையி லுள்ள, வேந்தர் - அரசர்கள், நடுங்கும் ஆறு - அஞ்சி நடுங்கும்படி, முன் தோன்றினன் - (அவ்வரசர்களுக்கு) எதிரில் வந்து நின்றான்; (எ - று.)

நான்குநாழிகைப் பொழுது கழிக்கவேண்டி மானமாமுடிமன்னரை விலகிப்போன அருச்சுனன், அக்காலங்கழிந்துவிட்டதனால் நிஜரூபத்தோடு அவ்வரசர்கள்முன்னிலையில் வந்து நின்றனனென்க. முன் - இடமுன். புதைத்தலின், இன் - ஐந்தனுருபு, ஏது. படும் - (தனக்குரியபருவத்தில்) உண்டாகின்ற என்றலுமாம். இனி, 'படும்'என்றது - துளிக்கு மெனவும் பொருள்படும்; "படுமழை"என்றஇடத்துப் போல.

"பெண்மைவிட் டாணவாவுவ பே டாண்பால்"என்று நன்னூலார் சூத்திரித்ததுகொண்டு, 'பேடு'என்ற சொல் - ஆணவாய்ப் பெண்ணிழந்த அலியும் பெண்ணவா யாணிழந்த பேடியுமாகிய நபும்ஸகவகையிரண்டுக்கும் பொதுவா மென்று உணர்க. (இனி, 'பேடு - பெண்ணவா யாணிழந்தது' என்பர் ஒருசாரார்; அது பொருந்தாது: தொல்காப்பியத்துச் சொல்லதிகாரத்தில் "பெண்மைசுட்டிய வுயர்திணைமருங்கின், ஆண்மைதிரிந்த பெயர்நிலைக்கிளவியும்" என்றவிடத்துச் சேனாவரையர் 'பெண்மைசுட்டியவெனவே, பெண்மைசுட்டாப் பேடென்பதும் ஒழிக்கப்பட்டதாம்' என்றமை காண்க. கந்தபுராணத்தில் "பெண்ணோ வலிதானோ பேடோ வெனவுரைப்பார்"என்றவிடத்து 'பேடி'என்றசொல்'பேடு'எனச் செய்யுள்விகாரப்பட்டதெனக்கொள்ளவேண்டும். இங்கும் அங்ஙனங்கொள்ளுதலு மாம்.) பேடு+உரு=பேட்டுரு: நெடிற்றொடர், வேற்றுமையில் டகரவொற்றுஇரட்டியது; [நன் - உயிர் - ௬௩.] முன்னிரண்டடியில் உவமையணி காண்க.

குறும்பனி - பின்பனியுமாம். சூரியமண்டலம்-அருச்சுனனுக்கும், குறும்பனி - பேட்டுருவிற்கும் உவமை. உரு - ரூபமென்னும் வடமொழியின் சிதைவு. கணைக்குக்கொடுமை-கூரியதாய்ப் பகைவர்களைக்கொல்லுந் திறம். ந்ருபன் - வடசொல்: மனிதரைக் காப்பவன்; ந்ரு-மனிதர். பரிதி, நாமம் - வடசொற்கள். சேனையின், இன் - ஏழனுருபு.

முன்னொருகாலத்திலே குருசிஷ்யக்கிரமத்தை உலகத்தில் அனைவர்க்கும்விளக்குதற்பொருட்டு நரனென்ற சிஷ்யனும் நாராயணனென்ற குருவுமாகப் பதரிகாச்சிரமத்தில் தோன்றிச் சீடனுக்குக் குரு தத்துவப்பொருள்களை உபதேசிப்பதாக வீற்றிருக்கின்ற திருமாலின் இருமூர்த்திகள்தாமே இங்கு முறையே அருச்சுனனும் கண்ணனுமாக அவதரித்ததனால், அருச்சுனனுக்கு நரனென்று ஒருபெயராயிற்று. இங்கும் இனிஅருச்சுனனைச்சிஷ்யனுக்கிக் கண்ணன் குருவாய்நின்று கீதையுபதேசித்துத் தத்துவம் விளக்கியருள்வது காண்க.(அச்சந்தர்ப்பத்திற் கண்ணபிரான் தானே அருச்சுனனை நோக்கி "உன்னை யான் பிரிவதில்லை யொருமுறை பிரிந்து மேனாள், நன்னிலா வெறிக்கும் பூணாய் நரனு நாரணனு மானோம்", "பின்னொருபிறப்பின் யாமே யிராமலக்குமப்பேர்பெற்றோம், இந்நெடும்பிறப்பில் நீயும்யானுமாயீண்டுநின்றோம்"என்று அருளிச்செய்வதை, மேல்வீட்டுமபருவத்து முதற்போர்ச்சருக்கத்திற் காணலாம்;"உரனுடைவருதேரோன்றினி லுற்றோ ரிருவரையும், நரநாரணரிவரென்பர்கள் ஞானத்தினுயர்ந்தோர்" என்று மேற்பதினான்காம்போர்ச்சருக்கத்தில் துரோணன்வார்த்தை."நவையினற்றவம் புரிதரு நரனெனுநாமன், புவிவழுத்துசீரருச்சுனனெனப்புகுந்துதித்தான், எவரும்போற்றுநாராயணனெனும் பெயருறவோன்,கவின்விளங்கியகண்ணனென்றுதித்தனன்மாதோ" என்பது, பாகவதம்.)

'நெடுங் கொடுங் கணையிருளென நிருபன்வெஞ்சேனை, நடுங்குமாறு' என்று சிலபிரதிகளிற் பாடமுளது. (௩௧)

[அருச்சுனனது துவசத்தில் அனுமன் கூத்தாடுதல்.]

செருச்செய்வான்வருசேனைவெண்டிரையையுங்கடப்பான்
பருச்சிலம்பினின்றுகைதருபாவனைபோல

வுருச்செழுஞ்சுடரெறிப்பநின்றுலாவினனுண்மைக்
கருச்சுனன்றடந்தேர்க்கொடியாடையிலனுமன்.

(இ - ள்.) அனுமன் - அநுமான்,—அருச்சுனன் தட தேர் கொடி ஆடையில் - அருச்சுனனுடைய பெரிய தேரினது கொடிச்சீலையில், உண்மைக்கு நின்று - பிரதியக்ஷமாகப் பொருந்தி,—(முன்பு மகேந்திரமலையின்மேலேறி இலங்கைக்குச் செல்லக் கடலைத் தாண்டியமைபோலவே), செரு செய்வான் வரு சேனை வெள் திரையையும் - போர்செய்தற்கு எதிர்த்துவருகின்ற பகைவர்சேனையாகிய வெண்ணிறமான அலைகளையுடைய கடலையும், கடப்பான் - தாண்டுதற்பொருட்டு, பரு சிலம்பின் நின்று - பருத்தவொரு மலைமேல்நின்றும், உகைதரு - உகைந்து எழுகின்ற, பாவனை போல - தோற்றம்போல,—உரு செழுஞ் சுடர் எறிப்ப - (தனது) உருவம் மிக்கவொளியை வீசும்படி, உலாவினன் - உலாவி விளங்கினான்; (எ - று.)

'உலாவினன்' - அக்கொடிச்சீலை காற்றில் அசைகின்றபோது அதிலுள்ள வாநரவடிவம் அசைய, அவ்வடிவத்தில் ஆவேசித்துநின்ற அநுமான் கூத்தாடினனென்க. உண்மைக்குஉலாவினன் என்று இயைத்து, முன்பு வீமனுக்குத் தான் வரங்கொடுத்த வாய்மை தவறாதபடி உலாவினனென்றலு மொன்று. கடலுவமையால் சேனையின்பரப்பும், மலையுவமையால் தேரின் பெருமை வலிமைகளும் விளங்கின.

அருச்சுனன் - அர்ஜுந னென்ற வடசொல்லின் விகாரம்; வெண்ணிறமுடையவ னென்பது, இதன்பொருள். இது முதலில், இந்நிறமுடைய கார்த்தவீரியமகாராஜனுக்குப் பெயராயிருந்து, பின்பு, அவனைப்போன்ற சௌர்யதைரியங்களையுடைய இப்பார்த்தனுக்கு இட்டுவழங்கப்பட்டது; இது - உவமவாகுபெயரின்பாற்படும் பார்த்தன் கருநிறமுடையவனாதலால், அவனுக்கு அருச்சுனனென்பது நிறம்பற்றிவந்த பெயரென்றல் பொருந்தாது. இனி, "குருச்சுடர்மணிசெய்பச்சைக்கொழுந்துடற்பொலிவுநோக்கி, யருச்சனனென்ப ரீதென்னரும்பெயர்வந்தபான்மை" என்னும் நல்லாப்பிள்ளைபாரதச்செய்யுளைக்கொண்டு, அருச்சுனனென்பது பசுமைநிறம்பற்றிவந்த பெயரென்றலு மொன்று. அன்றியும், பார்த்தன் முதலில் [பிறந்தபொழுது] வெண்ணிறமுடையனாயிருந்து பிறகு கருநிறமடைந்தானென்று கூறுதலு முண்டு.

செய்வான், கடப்பான் - எதிர்கால வினையெச்சங்கள்: வான், பான் - காலங்காட்டும் விகுதிகள். வெண்டிரை - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; அடையடுத்த சினையாகுபெயரெனினும் இழுக்காது. வெண்குடை, வெண்சாமரை, வெண்புரவி முதலியன சேனையில் நெருங்கியிருத்தல் பற்றி, 'சேனை வெண்டிரை' என்றனரென்னலாம். திரைவது திரை யெனக் காரணக்குறி: வினைமுதற்பொருளுணர்த்தும் விகுதி புணர்ந்துகெட்ட பெயர்; காய், தளிர், பூ, கனி, நுரை, அலை என்பனவும் இவ்வாறே: திரைதல் - சுருங்கிமடிதல். உம்மை - இராமாயணகதையைச் சுட்டுதலால், இறந்ததுதழுவியஎச்சப்பொருளது; அக்கதை வருமாறு:—சீதையைத் தேடுதற்பொருட்டு இராமபிரானால் தென்திசைகுறித்து அனுப்பப்பட்ட அங்கதன்முதலிய வாநரவீரர்கள் அச்சீதாபிராட்டி தென்கடலிடையேயுள்ள இலங்கைத்தீவிலிருக்கின்றனளென்று சம்பாதிசொல்லால் அறிந்தபின்னர் நூறுயோசனைதூரமுள்ள அக்கடலைக் கடக்கும்ஆற்றலிலராய் வருந்துகையில், ஜாம்பவானால் தூண்டப்பட்ட அநுமான் மகேந்திரகிரியின்மேலேறிப் பெருவடிவங்கொண்டு தாவி அக்கடலை எளிதிற்கடந்து இலங்கைசேர்ந்தன னென்பதாம். பருச் சிலம்பு - பண்புத்தொகை. சிலம்பினின்று, நின்று - ஐந்தாம்வேற்றுமைச்சொல்லுருபு, நீக்கப்

பொருளது; சிலம்பில் ஏறிநின்று அதிலிருந்து எழுந்ததாவுகிற என்றலும் அமையும். பாவனை - பாவித்தல்; பாவநா - வடசொல். தற்குறிப்பேற்ற வணி. உ-கைதரு, தா - துணைவினை.

இச்சருக்கத்தின் கூகு - ஆஞ் செய்யுள் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. மேல் ஐந்தாம்போர்ச்சருக்கத்தில் "அரக்கர்க்குமுதல்வானளித்தோருமெம ரின்று மவர்போலுமைத், துரக்கைக்குநின்றே னெனத் தெவ்வர்தம்மோடு சொல்லிற் றெனக், குரக்குக்கொடித்தேரின்மிசையோடிவிசையோடுகூத் தாடவே" என்பதுங் காண்க. (கo)

[அருச்சுனனது வின்னாணொலியாற் பகைவர் அஞ்சுதல்.]

மருமிகுந்தொடைத்தடம்புயமகபதிமதலை
பெருமிதம்படவளைத்தவிற்பிறங்குநாணொலியாற்
செருமியெங்கணுங்கரிபரிதேர்மிசைநின்றோ
ருருமின்வெங்குரல்கேட்டகோளுரகமொடொத்தார்.

(இ - ள்.) மரு மிகும் தொடை - நறுமணம்மிக்க (போர்க்குரிய தும்பைப்பூ)மாலையைத் தரித்த, தட புயம் - பெரிய தோள்களையுடைய, மக பதி மதலை - தேவேந்திரகுமாரனாகியஅருச்சுனன், பெருமிதம் பட-(தனது) வீரத்தன்மை தோன்றும்படி, வளைத்த - வணக்கிய, வில் - வில்லில்ஏற்றிய, பிறங்கும் நாண் - விளங்குகின்ற நாணியைக் கைவிரலால் தெறித்ததனாலுண்டான, ஒலியால்-ஓசையால்,—எங்கணும் - எல்லாவிடத்தும்[அவனைச் சுற்றிலும்], செருமி - நெருக்கி, கரி பரி தேர் மிசை நின்றோர் - யானை குதிரை இரதங்களின்மேல் ஏறிநின்றவர்களான வீரர்கள்,—உருமின் வெம் குரல் கேட்ட - இடியினது கொடியஓசையைச் செவியுற்ற, கோள் உரகமொடு - வலிமையையுடைய சர்ப்பங்களோடு, ஒத்தார் - ஒத்தவரானார்கள்.

மக பதி - வடமொழிப்பெயர். யாகங்களுக்குத் தலைவன்; நூறு அசுவமேதயாகஞ் செய்து தேவேந்திரபதவி பெறுதலால், இப்பெயர் வந்த தென்க. பெரு மிதம் - எல்லாரோடும் ஒப்ப நில்லாது பேரெல்லையாக நிற்றல்; எனவே, வீரமாயிற்று. பெருமிதம்பட-கம்பீரமாகவென்க. செருமி,செருமு-பகுதி. கரீ-வடசொல்; அது ஈயீறுஇகரமாயிற்று: இதன்உறுப்புப்பொருள், கரமுடையது; கரம்-கை: இங்குத் துதிக்கை. இனி, கருநிறமுடையது கரி யென்று தமிழ்வகையாற் காரணப்பொருள்கூறலாகாது, வடமொழித்திரிபாதலால். உரகம் - (கால்களில்லாமல்) மார்பினால் ஊர்வது; வடசொல்: உரம் - மார்பு. கோள் - உயிரைக் கொள்ளுந் தன்மையாகவுமாம். நின்றோரென்னுஞ் சொல்லில், காலாள்களும் அடங்குவர். இடியொலி கேட்டமாத்திரத்திற் பாம்புகள் அஞ்சி அழிவதுபோல, அருச்சுனனது வின்னாணொலியைக்கேட்டவளவிற் பகைவர் அஞ்சினரென்றபடி; இடியோசைக்குஅஞ்சிப் பாம்புகள் ஒடுங்குதல் இயல்பு; "விரிநிற நாகம் விடருள தேனு, முருமின் கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" என்ற நாலடியாரையுங் காண்க. 'உரகர்' என்னும்பாடத்துக்கு - படமும் வாலு முடையாராய் மனிதவடிவமுந் தெய்வப்பிறப்புமாகிப் பாதாளலோகத்துள்ள சர்ப்பசாதியா ரென்க. எங்கண் - எக்கண் என்பதன் மெலித்தல்; 'எங்கு'என்றதன்மேல் 'அண்'என்ற இடப்பொருள்விகுதி சேர்ந்த தென்றலு மொன்று. செருமி நின்றோரென இயையும். உரும்-பெயர்;இன்-சாரியை: ஆறும்வேற்றுமைத்தொகை. 'உரகமொடொத்தார்'என்றஇடத்து,மூன்றனுருபு-ஒப்புப்பொருளில்வந்தது. "வெட்சிநிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்,வட்கார்மேற்செல்வது வஞ்சியாம்— உட்கா, தெதிரூன்றல் காஞ்சி யெயில்காத்தல் நொச்சி, யதுவளைத்த லாகு முழிஞை - யதிரப், பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர், செருவென்றது வாகையாம்" என்றதனால், 'வீரர்கள் இன்னின்னசமயத்

தில் இன்னின்னமலர்மாலை யணியக்கடவ ரென்பதை யறிக. இங்கு 'மருமிகுத் தொடை' என்றது-தேவலோகத்துக் கற்பகவிருக்ஷங்களின் திவ்விய புஷ்பங்களா லாகிய மாலையுமாம். (சுசு)

[பலவகையொலிகேட்டு அஞ்சி உத்தரன் மூர்ச்சித்தல்.]

குறித்தசங்கொலிசிங்கநாதத்தொலிகுனிவிற்
செறித்தநாணொலிசெவிபடச்சிந்தனைகலங்கிப்
பொறித்தபாவையினுத்தரன்பொறிமயக்குற்று
மறித்தும்வீழ்ந்தனன்மாவிடுதொழிலையுமறந்தே.

(இ - ள்.) குறித்த சங்கு ஒலி - (அருச்சுனன்) ஊதித்தொனிசெய்த (தேவதத்தமென்னுஞ்) சங்கத்தின் நாதமும், சிங்கநாதத்து ஒலி - (அவன்) ஸிம்ஹநாதஞ்செய்த ஓசையும், குனி வில் செறித்த நாண் ஒலி - (அவன்) வளைத்த வில்லில் உறுதியாகப்பூட்டிய நாணியின் ஓசையும், செவி பட - (தன்) காதுகளிற் பட்ட [கேட்ட] மாத்திரத்தில், உத்தரன்—, சிந்தனை கலங்கி - மனம்கலங்கி, பொறி மயக்கு உற்று - அறிவுமயக்கமடைந்து, மா விடு தொழிலையும் மறந்து - குதிரை யோட்டுஞ் செயலையும் மறந்துவிட்டு, பொறித்த பாவையின் - சித்திரத்திலெழுதியபிரதிமைபோல(ச்செயலற்று), மறித்தும் - மறுபடியும், வீழ்ந்தனன் - (தேரில்) விழுந்தான் [மூர்ச்சித்தான் என்பதாம்]; (எ - று.)

சங்கு - ஶங்க மென்ற வடசொல்லின் விகாரம். இங்குச் சங்கு கூறியதனால், கீழ் அருச்சுனன் வன்னிமரத்தினின்றும் வில்லையும் அம்பையும் எடுத்து வந்த பொழுது தேவதத்த மென்னுந் தனது சங்கையும் உடனெடுத்து வந்தன னென்க; அன்றி,அநுமானைத்தியானித்தமாத்திரத்திலே தன்முன் வந்து சேரப்பெற்ற திவ்வியரதத்துடனே இதுவும் வந்துசேர்ந்ததுமாம். (தனது ஒலியினாற் பிராணிகளை நடுங்கச்செய்வதும் தேவதத்தமென்னும் பெயருள்ளதும் வருணனுடையதுமான பெரியசிறந்ததொரு திவ்வியசங்கமும், பகைவரைத்தவறாதுகொல்லுந் திறமுடைமையாற் சத்துருகாதினி யென்றுபெயர்பெற்ற உக்கிரமான வலிய பெரிய கதாயுதமும், விருஷபர்வாஎன்றஅசுரராஜனாற் போரிற்பகையழித்தபின்பு பிந்துசரஸில் வைக்கப்பட்டனவாக, காண்டவதகனகாலத்திற் கிருஷ்ணார்ச்சுனர்களால் அக்கொடுந்தீயினின்று உயிர்பிழைப்பிக்கப்பெற்ற மயனென்றஅசுரசிற்பி பாண்டவர்கட்குப் பிரதியுபகாரஞ்செய்யும் நோக்கத்தால் அவற்றை எடுத்துவந்து முறையே அருச்சுனனுக்கும் வீமனுக்கும் கொடுத்தன னென்று அறிக.)

குனி வில் - பிறவினைவினைத்தொகை. செவி பட - காதுகளில் ஒலியத்தாக்க என்றவாறுமாம். 'செவிப்பட'என்பதும் பாடம். சிந்தா - வடசொல். மனமும் புத்தியும் அந்தக்கரணங்களில் வெவ்வேறாதலால், 'சிந்தனைகலங்கி' என்றும், 'பொறிமயக்குற்று' என்றும் தனித்தனி கூறினர். ஸிம்ஹநாதம் - வடமொழித்தொடர்; வீராவேசத்தாற் சிங்கத்தின் கர்ச்சனைபோல ஆரவாரிப்பது. பாவையின், ஐந்தனுருபு - ஒப்புப்பொருளது 'தெறித்த நாணொலி' என்றும் பாடம். பாவை - செயலற்றிருக்கையால், உத்தரனுக்குத் தொழிலுவமம். மயக்கு - மயங்கு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். பொறிமயக்குற்று - பஞ்சேந்திரியங்களும் தம்தம்உணர்ச்சி ஒழிந்து என்றுமாம். மயக்குற்று என்பதில், ஒருசொல்தன்மைப்பட்ட மயக்குறு - பகுதி; அது இடையே தன்ஒற்றுஇரட்டி இறந்தகாலங்காட்டியது. 'மறித்தும்'என்றது, கீழ் முப்பத்தைந்தாங்கவியில் 'சோர்ந்தான்'என வந்ததை நோக்கி. உம்மை-இறந்ததுதழுவிய எச்சப்பொருளது; முன்பு பகைவர் சேனையைக்கண்டு மூர்ச்சித்தமைபோல, இப்பொழுது அருச்சுனனதுநாதக்

தனைக்கேட்டு மூர்ச்சித்தன னென்க. 'தொழிலையும்' என்ற உம்மையும் - முன் போர்த்தொழிலைமறந்ததல்லாமல் இப்பொழுது தேர்த்தொழிலையும் மறந்தா னென்னுங் கருத்தைத் தருதலால், இறந்ததுதழுவிய எச்சப்பொருளதே; அதனோடு இழிவுசிறப்புமாம். (சு௪)

[மீண்டும் அருச்சுனன் உத்தரனைத் தேற்றித் துரியோதனன்மீது தேர்செலுத்தச் சொல்லுதல்.]

தாழ்ந்தவாடையினுயர்கொடித்தண்டுடைத்தேர்மேல்
வீழ்ந்தபாகனை மீளவும்விரகுறத்தேற்றிச்
சூழ்ந்ததன்பெருந்துணைவனைச்சூதினாற்றுரந்து
வாழ்ந்தமன்னன்மேலேவினான்வரிசிலைவல்லான்.

(இ - ள்.) தாழ்ந்த ஆடையின்-தொங்கிய சீலையையுடைய,உயர் கொடி தண்டு உடை - உயர்ந்த [மேலான] துவசதண்டத்தை யுடைய, தேர்மேல்-தேரில், வீழ்ந்த-மூர்ச்சித்துவிழுந்த, பாகனை-சாரதியானஉத்தரகுமாரனை, வரி சிலை வல்லான் - கட்டமைந்த வில்லின்தொழிலில் வல்லவனாகிய அருச்சுனன், மீளவும் - மறுபடியும், விரகு உற - பக்குவமாக, தேற்றி - மயக்கந்தெளியச்செய்து,—சூழ்ந்த - தான் வஞ்சனையான ஆலோசனைசெய்து வரவழைத்த,தன் பெருந் துணைவனை - தனது பெரிய தமையனாகிய தருமபுத்திரனை, சூதினால் துரந்து - சூதாட்டத்தினால் ஜயித்து இராச்சியத்தினின்று துரத்திவிட்டு, வாழ்ந்த - அவனது செல்வவாழ்க்கையைத் தான் அடைந்த, மன்னன்மேல் - துரியோதனராசன்மேலே, ஏவினான்-(தேரைச் செலுத்தும்படி உத்தரனை) ஏவினான்; (எ - று.)

இனி, தாழ்ந்தஆடையின்தேற்றி என்று எடுத்து - தனது தாழ்ந்த ஆடையினாலே (விசிறிப்) பாகனைத் தேற்றி என்றுமாம். 'தாழ்ந்தவாடையினுயர்கொடித்தண்டு'—தாழ்வு, உயர்வு - தொடைமுரண். உயர் கொடி - வினைத்தொகை; உயர்வாகிய கொடி எனப் பண்புத்தொகையன்று: விரிக்குமிடத்து உயர்ந்த உயர்கின்ற உயரும் என்று காலந்தோன்ற நிற்றலாலும், 'உயர்' என்றது வினைப்பகுதி யாதலாலு மென்க. கொடித்தண்டு - கொடி கட்டுகின்ற மரக்கொம்பு; 'மீளவும்' என்றது - கீழ் முப்பத்தொன்பதாங் கவியில் "வெயர்த்த மேனியை நறும்பனி நீரினால் விளக்கி" என்றதனை நோக்கிற்று. விரகு உற - அறிவுண்டாக என்றுங் கொள்ளலாம். விரகு - உபாயங்களினால், உற தேற்றி-நன்றாகதெளிவித்தென்றலுமாம். சூழ்ந்த-தனது சூழ்ச்சிக்கு உள்ளாகப்பெற்ற என்றபடி; தம்பியர்நால்வராற் சூழப்பட்ட என்றும், கொடியவிதியினாற் சூழப்பட்ட என்றுங் கொள்ளலாம். 'துணைவரை' என்ற பாடம் - பாண்டவரைவரையுங் குறிக்கும். 'சூழ்ந்து' என்பதும் பாடம். பெருந்துணைவன் - ஜ்யேஷ்டப்ராதா. 'சூதினால் துரந்து வாழ்ந்த மன்னன்' என்பது, போரினால் வென்று வாழ வலிமையில்லாதவனெனக் குறிப்பித்தற்கு. (சுரு)

[அங்ஙனமே உத்தரகுமாரன் நன்கு தேர்செலுத்துதல்.]

மச்சநாடன்மாமதலையுமன்னவன்மொழியா
லச்சமற்றிருந்துளவுகோலருணனிற்கொள்ள
வுச்சவானிடைப்பகலவனூர்ந்ததேர்பூண்ட
பச்சைவாசியினோடினசுவேதவெம்பரிமா.

(இ - ள்.) (அவ்வாறே), மச்சநாடன் மா மதலையும் - மச்சதேசத்தரசனாகிய விராடனது சிறந்த குமாரனான உத்தரனும்,மன்னவன் மொழியால்-அருச்சுனனது வார்த்தையால், அச்சம் அற்று இருந்து - பயமில்லாதவனாகி [தேறி] (எழுந்து தேரின்முன்னிலையில்) இருந்து, அருணனின் - (சூரியன் சாரதியாகிய) அருணன்போல, உளவு கோல் கொள்ள - குதிரைதூண்டு

கோலைக் கையிற்கொண்டு சாரத்தியஞ் செய்ய,—சுவேதம் வெம் பரி மா - வெண்ணிறமான வேகமுள்ள (அருச்சுனன்தேரிற்பூட்டிய) நான்குகுதிரைகளும்,—உச்சம் வானிடை-உயர்ந்த ஆகாயமார்க்கத்தில்,பகலவன் ஊர்ந்த-சூரியன் ஏறிச்செல்லுகின்ற,தேர் - தேரில், பூண்ட-பூட்டப்பட்டுள்ள, பச்சைவாசியின்-பசுமைநிறமுடையகுதிரைபோல,ஓடின-மிகவிரைந்துசென்றன.

அருச்சுனனைப் பகையிருளொழிக்குஞ்சூரியனென்பார், அவனது தேர்க்குச் சூரியன்தேரையும், குதிரைகட்குச் சூரியன்குதிரையையும், பாகனுக்குச் சூரியசாரதியையும் உவமைகூறினர்; இத்தன்மையை முன்னும்பின்னும் காணலாம். உவமையணி. 'பச்சைவாசியி னோடின சுவேதவெம்பரி மா' என்றவிடத்து முரண்தொடை காண்க. 'மதலையம்மன்னவன் மொழியால்' என்றும் பாடமுளது. ஶ்வேதம் - வடசொல். உளவுகோல் - கசைக்கோல்; குதிரைச்சம்மட்டியென்பர்: குதிரைகளையடித்தோட்டுஞ் சவுக்கு. பகலவன் - தனதுசேர்க்கையாற் பகலைச் செய்பவன்; ஒளியுடையவனென்றுமாம். இந்நான்குவெள்ளைக்குதிரைகள், காண்டவதகனகாலத்து அக்கினிதேவனால் அருச்சுனனுக்கு அளிக்கப்பட்டவை; இவற்றை யுடைமையால், அருச்சுனனுக்குச் சுவேதவாகனனென்று ஒருபெயர். குதிரைக்கு வெம்மை-மிக்க விரைவு. பரி மா - பரியாகிய மா [விலங்கு] என இருபெயரொட்டுப் பண்புத்தொகை. (சுச)

[துரியோதனனது தேர்க்கொடியை அருச்சுனனது தேர்க்கொடி சென்று நெருங்குதல்.]

உரவினால்வடமேருவைக்கொடுமுடியொடித்து
விரவியென்பெருந்தாதைநின்றாதையைவென்றான்
பரிவினின்னையான்வெல்வனென்றவனிபன்பதாகை
யரவைமற்றிவன்பதாகையிலனுமன்வந்தடுத்தான்.

(இ - ள்.) 'என் பெருந் தாதை - எனது பெருமைபொருந்திய தந்தையான வாயுபகவான், விரவி - பகைமைகொண்டு, உரவினால்-(தன்) வலிமையால், வட மேருவை - வடக்கிலுள்ள மகாமேருமலையை, கொடுமுடி ஒடித்து - மூன்றுசிகரங்களை முறித்துத் தள்ளி, நின் தாதையை - உனது தந்தையான ஆதிசேஷனை, வென்றான் - (முன்பு) ஜயித்தான்; (அவ்வாறே), யான் - நானும், நின்னை - உன்னை,பரிவின் - துன்பப்படும்படி, வெல்வன்-ஜயிப்பேன்,' என்று-என்றுசொல்லி, அவனிபன் பதாகை அரவை-துரியோதனராசனது கொடியிலுள்ள பாம்பை,இவன் பதாகையில் அனுமன்-அருச்சுனனது கொடியிலுள்ள அநுமான்,வந்து அடுத்தான்-வந்துநெருங்கினான்.

அருச்சுனன்தேர் துரியோதனனதுதேரை வந்துநெருங்கும்பொழுது அவனுமக்கொடி இவனரவக்கொடியை நெருங்கிற்றென்க. பாம்பைப் பிடித்து விடாதபடிஉறுதியாகக்கொண்டு வருத்தி யழித்தல்,குரங்கினியல்பு. உரவுஎனினும், உரமெனினும் ஒக்கும். மேரு - பொன்மலை. பூலோகத்தின் பகுப்புக்களாகிய ஏழுத்வீபங்களுள் நடுவிலுள்ளதான ஜம்பூத்வீபத்தின் நடுவிலே யிருக்கின்றது. மேரு எவ்விடத்தி லுள்ளதென்றால், நமக்கு வடதிசையிலுள்ள தென வேண்டுதலின், அதனை வடமேருவென விளங்கக் கூறினர்; "வடவேங்கடம்" என்றாற்போல. மேருவைக் கொடுமுடி யொடித்தது - இரண்டுசெயப்படுபொருள்கள் வந்த வினை; உருபுமயக்கமாய் - மேருவினது கொடுமுடியை யென்றும், மேருவின்கண் கொடுமுடியை யென்றுங் கொள்ளலாம். 'கொடுமுடியொடித்து' என்றது, ஒருசொல்தன்மைப்பட்டு, 'மேருவை' என்ற செயப்படுபொருளுக்கு முடிக்குஞ்சொல்லாயிற்றெனக் கொள்ளினும் அமையும். விரவுதல் - கைகலத்தல்; எதிர்த்துப்பொருதல்; ஒன்றுங்கலந்துநிற்றலுமாம். 'நின்தாதையை' என்றது, சர்ப்பங்களுக்கெல்லாம் ஆதிசேஷன் தலைவனாதல்பற்றி.

மேருவைக் கோடுமுடியோடித்த கதை:—முன்னொருகாலத்தில் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார் பலசாலி யென்று விவாதமுண்டாக, அதனைப் பரீக்ஷித்தறிதற்பொருட்டு வாயுதேவன் மேருமலையின் சிகரத்தைப் பெயர்த்துத் தள்ளுவதென்றும் ஆதிசேஷன் அதுபெயரவொட்டாமற் காத்துக்கொள்வதென்றும் கோட்பாடுண்டாகி, அங்ஙனமே இருவரும் தேவர்முதலியோரது முன்னிலையில் தம்தம் வலிமையைக் காட்டத்தொடங்கிய பொழுது, ஆதிசேஷன் தனது பெரிய உடம்பினால் மேருவை வளைந்து தனது ஆயிரந்தலைகளாலும் மேருமலையின் ஆயிரஞ்சிகரங்களையும் கவிந்துகொண்டு பெயரவொட்டாமல் வெகுநேரம் காக்க, பின்பு வாயுதேவன் தன் வலிமையால் அம்மலைச்சிகரங்களில் மூன்றைப் பெயர்த்துக்கொண்டுபோய்த் தென்திசையில் தள்ளிவிட்டன னென்பதாம்.

பரிவு இல் நின்னை என்றஎடுத்து, (நல்லோர்பக்கல்) அன்பில்லாத உன்னை யென்றலுமாம்; ஸாதுக்களை நலிபவனான துரியோதனனுக்குக் கொடியாய் அமைந்தமைபற்றியும் இங்ஙனங் கூறத்தகும். 'பரிவு' என்ற ஒருசொல்தானே துன்பத்தையும் அன்பையும் உணர்த்துதலை, "பரிவென்ப துன்ப மின்பம் பகருமன்பிற்கு மப்பேர்" என்ற சூடாமணிநிகண்டினாலும் அறிக. அரவை - அரா என்ற குறியதன்கீழ்ஆகாரம் குறுகி ஐயுருபையேற்றது. அவநிபன் - வடமொழிப்பெயர்: அரசன்; பூமியைக் காப்பவன். பதாகை - பெருங்கொடி; ஆவீறு ஐயான வடசொல். வெல்வன் - 'அன்'விகுதி தன்மைக்கு வந்தது. மற்று - அசை.

அருச்சுனன்தேர்க்கொடியிலுள்ள அனுமன் துரியோதனன்தேர்க்கொடியிலெழுதப்பட்டுள்ளபாம்பைநோக்கி 'என் தந்தை உன் தலைவனை முன்னமே வென்றுள்ளான்: அவ்வாறே இப்பொழுது யான் உன்னைவெல்வேன்' என்று கறுக்கொண்டு வீரவாதங்கூறிப் போர்க்குநெருங்குகின்றவாறு போல நெருங்கின னென்றார்; தற்குறிப்பேற்றவணி. (சுஇ)

[அருச்சுனன் போருது பலவீரரை யழித்தல்.]

வட்டமாகவில்வளைத்தெதிர்மண்டலநிலையாய்த்
தொட்டவாளியானடிமுதன்முடியுறத்துணிப்புண்
டிட்டமாமணிக்கவசமும்பிளந்தெதிருள்ளார்
பட்டொழிந்தனரொழிந்தவர்யாவர்புண்படாதார்.

(இ - ள்.) (அப்பொழுது அருச்சுனன்), எதிர் - (பகைவர்க்கு) எதிரில், மண்டலம் நிலை ஆய் - (விற்றொடுத்து அம்பினையெய்வார்க்குஉரிய)மண்டலமென்னும் நிலையில் நின்று, வட்டம் ஆக - வட்டவடிவாக, வில் வளைத்து - வில்லை வணக்கி, தொட்ட - பிரயோகித்த, வாளியான் - அம்புகளினால், அடி முதல் முடி உற - கால்முதல் தலைவரையிலும், துணிப்புண்டு - அறுக்கப்பட்டவர்களாகியும்,—இட்ட மா மணி கவசமும் - (உடம்பின்மேற் பாதுகாப்பாக) அணிந்த பெரிய ரத்தினங்களிழைத்துச்செய்யப்பட்ட கவசமும், பிளந்து - பிளக்கப்பட்டவர்களாகியும்,—எதிர் உள்ளார் - எதிரிலுள்ள பகைவீரர்கள், பட்டு ஒழிந்தனர் - இறந்துபோனார்கள்; ஒழிந்தவர் - (அவ்வாறு) இறவாமல் நின்றவர்களுள், புண் படாதார் யாவர் - விரணமடையாதவர் எவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

அருச்சுனனெய்தஅம்புகளினால், பகைவீரர்களிற் பெரும்பாலார் ___ லுறுப்புக்கள் துணிபடக் கவசம்பிளவுபட இறந்தொழிந்தனர்; இறவாமல் எஞ்சிநின்ற வீரர்களிற் புண்படாதவ ரெவருமில்லை யென்பதாம்.

இரண்டுகால்களையும் மண்டலாகாரமாக வைத்துக்கொண்டு நிற்கின்ற நிலை, மண்டலநிலை யெனப்படும்; "இருகால் மண்டலித் திறதல் மண்

டலவில" என்பது பிங்கலந்தை. பிளந்து - செயப்பாட்டுவினைப்பொருளது: செய்வினையாகவுங் கொள்ளலாம்; இச்சொல் - தன்வினை பிறவினைகளுக்கும் செயப்படுபொருள்குன்றியவினை குன்றாவினைகளுக்கும் பொதுவென்பதை யுணர்க. எதிருன்னார் அடிமுதல்முடியுறத் துணிப்புண்டு கவசம்பிளர்ந்து பட்டொழிந்தனர் - சினைவினை, அச்சினைக்குரிய முதலின் வினையோடு முடிந்தது; "சினைவினை சினையொடும் முதலொடுஞ் செறியும்" என்றார் நன்னூலார்: இனி, 'பிளந்து' என்றதைப் பிளக்க வெனச்செயவெனெச்சமாகத் திரித்தலுமாம். கவசம்பிளந்தபின் உடம்பில்அம்புருவுதல் எளிதாதலால், பட்டொழிதலுக்குக் கவசம்பிளத்தல் காரணமாம். 'துணிப்புண்டு' என்றதில், உண் என்ற துணைவினை - செயப்பாட்டுவினைப்பொருளை யுணர்த்தும். 'வாளியான்' என்றதை 'பிளந்து' என்பதனோடுங் கூட்டுக. தொட்ட, தொடு - பகுதி. 'எதிர்த்துள்ளார்' என்றும் பாடமுண்டு. 'பட்டொழிந்தனர்' என்றதில், ஒழி என்ற துணைவினை - துணிவுணர்த்திற்று. (௯௯)

[அருச்சுனன் துரியோதனனது குதிரைபாகர்களை யழித்து அவனைப் பரிகசித்தல்.]

வேகவற்றியநதியனவிதநடைப்புரவி
பாகவற்றினைத்தலையறமலைந்துபாழ்படுத்தி
மாகவற்றினிற்பொய்த்தசூதாடியவஞ்ச
நாகவற்றியபுன்மொழிநிருபனைநகைத்தான்.

(இ - ள்.) (அருச்சுனன்),—வற்றிய நதி அன வேகம் - நீர்ப்பெருக்குக் குறைந்த ஆறு (தணிந்து ஓடுவது) போன்ற [மந்தமான] வேகமுள்ள, நடை விதம் - கதியின் தன்மையை யுடைய, புரவி - குதிரைகளும், பாகு - சாரதியும், அவற்றினை - ஆகிய அவைகளை, தலை அற - தலை துணிபடும்படி, மலைந்து - போர்செய்து, பாழ் படுத்தி - அழியச்செய்து,—மா கவற்றினில் - பெரிய சூதாடுகருவியால், பொய்த்த சூது ஆடிய - பொய்க்குஇடமானசூதாட்டத்தை (த்தன் மாமனைக்கொண்டு) ஆடி(த் தருமபுத்திரனை)வென்ற, வஞ்சம் - வஞ்சனையையுடையவனும், நா கவற்றிய புல் மொழி - நாவினால் (அவர்கட்கு) மனவருத்தமுண்டாம்படிகூறிய இழிசொற்களையுடையவனுமான, நிருபனை - அத்துரியோதனராசனைநோக்கி, நகைத்தான் - சிரித்தான்; (எ - று.)

வற்றுதல் - இங்கு, நீர்வடிதல். அருச்சுனன் செய்யும் போர்த்திறத்துக்கு அஞ்சித் துரியோதனன்குதிரைகள் வலிகுறைந்து நடைதளர்ந்ததனால், அவற்றுக்கு வற்றிய நதி உவமை கூறப்பட்டது. இனி, முதலடிக்கு-(தன்னிடத்து நடப்பவாதஅடி) சம்படி நீர்வற்றியநதியைப் போலப் பொலிவிழந்தவையும் (இயல்பிற்) பலவகைநடைகளையுடையவையுமான குதிரைகளெனினும் அமையும்; சூரியகிரணத்தால் நீர்முழுவதும்வற்றிப்போன நதி பொலிவழிந்து பலர்க்கும் பயன்படாதவாறுபோல அருச்சுனனம்புகளால் வலிமைமுழுவதும்ஒடுங்கிப் பொலிவிழந்து பயன்படாதனவான குதிரைகளென்க. வேக - (வெயில்) காய்தலால் எனினுமாம். அன - 'அன்ன' என்றதன் தொகுத்தல். பாழ்படுத்தி நகைத்தா னென இயையும். 'சூதாடிய', 'புன்மொழி' என்ற இரண்டும், நிருபனுக்கு அடைமொழி. 'நதியென' என்னும் பாடத்துக்கு - நடப்பவாடிசம்படி நீர்ப்பெருக்குஅற்றுப்போன நதியைப் போலத் தேர்க்குதிரைகளையும் பாகனையும் பாழாக்கியென்று பொருளாம்.

பெரும்போர்செய்து அடையவேண்டிய வெற்றியை எளிதில் அடையச் செய்தலால், 'மா கவறு' எனப்பட்டது; இகழ்ச்சியுமாம். கவற்றிய-கவலைப் படுத்திய; கவற்று - பகுதி; இது, கவலென்பதன் பிறவினை: அதில், று - விகுதி. புன்மொழி - திரௌபதியைக் கொணர்ந்து துகிலுரியச் சொன்

னது முதலியன; "தன்னியதருமன்செய்தபாவமோ சகுனிசெய்த புன் னியமெறியோ வந்தப்பொருமகன்யாககலை, தன்னியதவிரு முற்றைநாளு வருர்தகைகளமைட, வெள்ளியமதியோ, வெள்ளினின்வளம்விளர்த்த தெ ன்றுன்" இங்ஙனம்பலவுசூதுபோர்ச்சருக்கத்தில் ஆங்காங்குக்காண்க, இங்கு, நகை - இகழ்ச்சிகாரணமாகப் பிறந்தது. 'பாகு' என்பது-பொருளால்உயர் திணையாயினும்,சொல்லால் அஃறிணை யாதலால், புரவியோடுசேர்த்து 'அவ ற்றினை' என்று அஃறிணையாற் சுட்டப்பட்டது. 'அவற்றினை' - சுட்டடிப் பலவின்பாற்பெயராகிய 'அவ்' என்றதன் இரண்டாம்வேற்றுமை; அற்று - சாரியை: "வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே" என்றார் நன்னூலார்; 'இன்' என்பதும் சாரியை. தலை - தலைமையான உறுப்பு என்பதுபற்றிய காரணக் குறி; வடநூலாரும் சிரசை 'உத்தமாங்கம்' என்பர். பொய்த்தசூது—"பொ ருள்கெடுத்துப் பொய்மேற்கொளீஇ யருள்கெடுத், தல்லலுழப்பிக்குஞ் சூது," "உண்மையுயர்வழிக்கும் . சூது" என்றார் பிறரும். விதம் - வட சொல். கவற்றினில் - கவறு என்றதன் ஐந்தாம்வேற்றுமைவிரி; இல்-ஐந்த னுருபு, இன் - சாரியை. இச்செய்யுளில் அடிதோறும் முதலெழுத்துமாத் திரம் வேறுபட்டுநிற்க, அடுத்தசிலஎழுத்துக்கள்ஒன்றிநின்று பொருள்வேறு பட்டது, திரிபு என்னுஞ் சொல்லணி. நடை - நட என்ற பகுதியின் தொ ழிற்பெயர்;ஐ-விகுதி: பகுதியீற்றுஅகரம் தொகுத்தல். (கஎ)

[தப்பியோடத்தொடங்கிய துரியோதனனை அருச்சுனன் மறித்துச் சில கூறத்தொடங்குதல்.]

பாகும் வாசியு மமைந்ததொர் தேர்மிசைப் பாய்ந்து
மாகு சூழவுந் தப்பிய வரிநிற மாபோ
லேகு கின்றபே ரிராசரா சனையெதிர் தகைந்து
கோகு தட்டிடு தனஞ்சய னிவையிவை கூறும்.

(இ - ள்.) மாகு சூழவும்-வலையானது (தன்னைச)சூழ்ந்துகொள்ளவும், தப்பிய - (அதினின்று) தப்பியோடிய, வரி நிறம் மா போல் - (உடம்பிற்) கோடுகளையும் (பலவகை)நிறங்களையு முடைய புலிபோல, (எந்தப்பக்கத் திலுந் தன்னைப் போகவொட்டாமல் அருச்சுனன் வளைந்துகொள்ளவும்), பாகும் வாசியும் அமைந்தது ஓர் தேர்மிசை பாய்ந்து ஏகுகின்ற - சாரதியும் குதிரைகளும் நன்றாய்ப்பொருந்தப்பெற்றதாகிய வேறொரு தேரின்மேற் குதித்தேறித் தப்பியோடுகின்ற, பேர் இராச ராசனை - பெரிய அரசர்கட்கு அரசனாகிய துரியோதனனை, எதிர் தகைந்து - (அங்ஙனந் தப்பிச் செல்ல வொட்டாமல்) எதிரே தடுத்து, கோகு தட்டிடு - தோள்களைக் கொட்டி யாரவாரஞ்செய்கின்ற, தனஞ்சயன் - அருச்சுனன், இவை இவை - இந்த இந்த வார்த்தைகளை, கூறும் - சொல்வான்; (எ - று.)—அவற்றை, அடுத்த ஐந்து கவிகளிற் காண்க.

உவமையணி: தன்காடு புறங்காடு என்னும் வேற்றுமையின்றி எங்கும் ஒருங்கிராகக் கொடுமைசெய்து திரியும் புலியை உவமைகூறியதனால், துரி யோதனன் வேற்றரசர்க்குப்போலவே தனது தாயாதிகளான பாண்டவர்க் குந் தீங்குபுரியு மியல்பின னென்பதும், அவன் மச்சதேசத்தைத் தனது தேசம்போலவேகொண்டு அங்குத் தன்னிச்சைப்படி தீங்குபுரியத்தொடங் கின னென்பதும் தோன்றவைத்தார். சூழவும்,உம்மை-உயர்வுசிறப்பு. தனஞ் ஜயன்-வடசொல்; தருமபுத்திரன் இராஜசூயயாகஞ் செய்யமுயன்றபொழு தில், அருச்சுனன் வடக்கிற்சென்று பலஅரசர்களைச் சயித்து அவர்கள்செல் வத்தைத்திறைகொணர்ந்ததனால், அவனுக்கு 'தனஞ்சயன்'என்று ஒரு பெய ராயிற்று;இனி,இப்பெயர்க்கு-வெற்றியைச் செல்வமாகவுடையவ னென்றும்

பொருள்கொள்ளலாம்: இப்பெயர், அவனதுபலபராக்கிரமங்களைவிளக்கும். 'ராஜராஜன்' என்பது, துரியோதனனுக்கு ஒருபெயர்; வடசொல். இங்கே 'பேரிராசராசன்' என்றது, இகழ்ச்சி. தோள்தட்டுதல்-வீரக்குறிப்பு. இவை யிணை—அசேக்கு, பன்மைப்பொருளது. வரிசிறமா—புலிக்கு 'சித்ரகாயம்' என்று ஒருபெயர் வடமொழியில் வழங்குவது காண்க. (கஅ)

வேறு.

[இதுமுதல் ஐந்துகவிகள்-அருச்சுனன் துரியோதனனை இகழ்ந்துகூறியன.]

கார்முகங் கைத்தலத் திருப்பக் கைம்மிகு
போர்முகந் தன்னினீ புறந்தர தேகினு
லூர்முகக் களிற்றின்மே லு லாவும் வீதியின்
வார்முகக் கனதன மாத ரென்சொல்வார்.

(இ - ள்.) கார்முகம் - வில், கைத்தலத்து - (உன்)கையிலே, இருப்ப- நுணிபடாதிருக்கவும், நீ—. கை மிகு போர்முகந்தன்னில் - கைகலத்தற்கு [பொருதற்கு] இடமான யுத்தகளத்தில், புறம் தந்து ஏகினுல் - முதுகு காட்டி யோடினுல்,—ஊர் முகம் - ஊர்கோலமாக, களிற்றின்மேல்-யானை மேலேறி, உலாவும் - (நீ)பவனிவருகின்ற, வீதியின் - தெருக்களிலே, வார் முகம் கன தனம் மாதர் - கச்சை மேலேதரித்த பருத்த கொங்கைகளை யுடைய மகளிர், என் சொல்வார் - என்ன சொல்வார்கள்! (எ - று.)

நீ ஊர்க்குச்சென்று யானைமேல் வீதிகளிற் பவனிபோகும்பொழுது கோலங்காண வருகின்ற மகளிர் உன் வீரமின்மையைப் பற்றி என்ன நிந்தனை சொல்வ ரென்பதாம். உனது ஆண்மை மகளிரும்இகழும்படியான தே யென்று இகழ்ந்தபடி. 'என்சொலார்' என்றும் பாடமுண்டு. ஆகவே, புறந்தர்தேகாமல் நின்று போர்செய்வாயாக என்பது, குறிப்பெச்சம். ஆயுதமின்றிப் போர்செய்தல் அரியதாதலாற் கைவில்லும் அற்றுஓடினுல் அவ்வளவாக் குற்றமில்லை யென்பான், 'கார்முகங் கைத்தலத் திருப்பப் புறந்தர்தேகினுல்'என்றான். ஊர்முகம் உலாவுதல் - ஊர்வலமாகச் செல்லு தல். இனி, ஊர்முகமென்பதனை வீதியோடு இயைத்து - ஊரிலுள்ள வீதி யென்றும், களிற்றோடு இயைத்து - பொருந்தியமுகபடாத்தையுடைய களி றென்றுமாம். எதிர்செலுத்தப்படுந் தன்மையையுடைய என்றலுமொன்று. கைம்மிகு - கைத்திறம்மிக்க எனினுமாம். இச்செய்யுளை, கீழ்ப்போந்த ௩௪- ஆஞ் செய்யுளின் பின்னிரண்டடிகளோடு ஒப்பிடுக. போரிற் புறங்காட்டு தல், தோல்விக்குறி.

கார்முகம் - வடசொல்; (போர்த்)தொழிலிற் சிறந்ததென்று காரணப் பொருள்பெறும்: கர்மம் - தொழில். 'இருப்ப' என்ற செயவெனெச்சம் - நிகழ்காலம்; ப் - எழுத்துப்பேறு. தனம் - ஸ்தநமென்னும் வடமொழியின் விகாரம். "மாதர்காதல்"என்ற தொல்காப்பியத்தின்படிகாதலையுணர்த்தும் 'மாதர்' என்ற உரிச்சொல் - பண்பாகுபெயராய், விரும்பப்படுகின்ற அழ கையுடைய மகளிரைக் குறித்தது.

இதுமுதற் பதினேழு கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும்,மற்றை மூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (கக)

இருபுறஞ்சாமரமிரட்டத்திங்கள்போ
லொருகுடைநிழற்றவிவ்வுலகநின்னதா
மருவலர்கைதொழுவாமுன்றநீ
பொருமுனைகாண்டலும்போதல்போதுமோ.

(இ - ள்.) இரு புறம் - இரண்டு பக்கங்களிலும், சாமரம் இரட்ட - சாமரங்கள் வீசவும், திங்கள் போல் - பூரணசந்திரன்போல, ஒரு குடை-ஒப்பற்ற வெண்கொற்றக்குடை, நிழற்ற - நிழலைச் செய்யவும், இ உலகம் - இந்த நிலவுலகமுழுவதும், நின்னது ஆ - உன்வசத்ததாக, மருவலர் கை தொழ - பகைவர்கள் கைகூப்பிவணங்கும்படி, வாழுகின்ற - அரசாண்டு வீற்றிருக்கின்ற, நீ—, பொரு முனை காண்டலும் - போர்செய்யுமிடத்தைப் பார்த்தமாத்திரத்திலே, போதல் - புறங்கொடுத்தோடுதல், போதுமோ தகுமோ? (எ - று.)

'பொருமுனை காண்டலும் போதல் போதுமோ' என்றது - சிறிதுநேரம் போர்செய்தாயினும் போகலாகாதோ? போர்க்களத்தைக் கண்டமாத்திரத்தில் இவ்வாறுமீண்டுபோவது, அரசர்க்கரசும் பகைவர்களையெல்லாம் வெல்லும் வல்லமையுடையவனுமாகிய உனக்குப் பேரவமானந் தருவதொன்றன்றோ என்றபடி. சாமரம்-சமர மென்னும் மானினது வாலின் வெண்மயிரினாற் செய்யப்பட்டதோர்இராஜசிந்நம்;வடமொழித் தத்திதாந்தநாமம். இரட்ட, நிழற்ற - வினைச்செவ்வெண். குடைக்குத் திங்கள் - வெண்மையாலும், வட்டவடிவாலும், தண்ணொளி பரப்புதலாலும் உவமை. ஒரு குடை - ஏகச்சத்ரம். உலகம் - லோகமென்னும் வடமொழியின் விகாரம்; இது, சேனாவரையர் கொள்கை: இதனை மறுத்துத் தமிழ்மொழியேயா மென்பர் நச்சினார்க்கினியர். நின்னது-நீ என்னும் முன்னிலை முதனிலையடியாய்ப் பிறந்து 'து' விகுதியும் அகரச்சாரியையும் பெற்ற ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். ஆ - ஆக வென்பதன் விகாரம். ஓகாரம் - எதிர்மறை. மருவலர் - சேராதவர்: எனவே, பகைவராயிற்று; எதிர்மறை வினையாலணையும்பெயர்: மருவு-பகுதி,அல்-எதிர்மறையிடைநிலை. காண்டலும்—து, அல்-சாரியைகள்; உம்-இறந்தகாலவினையெச்சவிகுதி. (௭0)

உன்பெருந்துணைவரோடுன்னையோர்கணத்
தென்பெருங்கணைகளுக்கிரைகளாக்குவேன்
வன்பெருங்கொடிமிசைமடங்கலேற்றினான்
றன்பெருவஞ்சினந்தப்புமேகொலாம்.

(இ - ள்.) உன் பெருந் துணைவரோடு உன்னை - உன்னுடைய பெரிய தம்பிமார்களையும் உன்னையும், ஓர் கணத்து - ஒருக்ஷணகாலத்திற்குள், என் பெருங் கணைகளுக்கு - எனது பெரிய அம்புகளுக்கு, இரைகள் ஆக்குவேன் - உணவாகச் செய்துவிடுவேன்; (அங்ஙனஞ் செய்வேனாயின்), வல் பெருங் கொடிமிசை மடங்கல் ஏற்றினான்தன் - வலிய பெரிய கொடியில் ஆண்சிங்கத்தினது வடிவத்தையுடையனான வீமசேனனது, பெரு வஞ்சினம் - பெரிய சபதம், தப்புமே கொல் ஆம் - தவறிப்போகுமே! (எ - று.)

'ஆதலால், அதுசெய்திலேன்' என்றது, குறிப்பெச்சம். உன்னை இப்பொழுது யான் கொல்லாமல் விடுதற்குக் காரணம், வீமன் சபதந் தப்பினவனாவனே யென்கின்ற எண்ணமொன்றே யன்றி வேறன்று என்றான். 'பெருந் துணைவர்' என்றது - தொண்ணூற்றொன்பதின்ம ரென எண்ணிற் பெரிய தம்பிய ரென்றற்கு. ஒரு சிங்கம் பலயானைகளை மிகஎளிதில் அழிக்கவல்லதாதல்போல வீமனொருவனே துரியோதனனுடியரையெல்லாம் அலக்ஷியமாய் அழிக்கவல்லவ னென்பது போதரும். 'ஏற்றினான்தன்' என்றஇடத்தில், 'தன்' என்பது - சாரியை; ஆறனுருபென்பாரு முளர். துரியோதனன் சகுனியைக்கொண்டு தருமபுத்திரனைச் சூதில்வென்று பாண்டவரை அடிமைப்படுத்தியபின்பு இரௌபதியைத் துச்சாதனனைக்கொண்டு மயிர்பிடித்திழுத்துச் சபையிற் கொணர்ந்து துகிலுரி

ந்திம் என்கடிப்பின்மே இட்டா னென்றுசொல்லியும் பங்கப்படுத்தியபொழுது, அந்தவண்டு பொருது வீமசேனன் 'துரியோதனனுயிர் நூற்றுவரையும் நானே கொல்வேன்' என்று பிரதிஜ்ஞைசெய்துள்ளா னாதலால், இப்பொழுது அருச்சுனன், தான் துரியோதனனையக் கொன்றிட்டால் அவ்வீமன் சபதத் தவறுமே யென்பது கருதி, கொல்லாமல் வலியழிந்தோடும்படி செய்கின்றனன் னென்க; (மேல் பதினான்காம்போர்ச்சருக்கத்தில் "மாறுபட்டிவ்வின் பின்றுயிர்கவர்ந்துவிடின் மாமருத்தின் மகன்வஞ்சினமழிந்துவிடும், வேறுபட்டுவெருவும்படியெறிந்தமரினோடுவிப்பது பெருந்தகைமை யென்று கொடு, நூறுபட்டமகவின்றலைவனெஞ்சமிக நோதகக் கடிதெறிந்தன னிந்தனவில், நீறுபட்டதுபெருங்கவசம் வந்தவழிநேர்படத்திருகினன் சமரினின்றிவனே" என வருவதுங் காண்க.) ஏகாரம் - தேற்றத்தோடு இரக்கப் பொருளது. கொல், ஆம் - அசைகள்.

கணம் - க்ஷணம் என்னும் வடமொழியின் விகாரம். கணைக்குப் பெருமை - கூர்மைமிகுதியும், குறிதப்பாமையும். பெருங் கணைகள் - பாசுபதம் முதலியன. 'உன்னை என் கணைகளுக்கு இரைகளாக்குவேன்' என்றது - அம்புகளை எய்து உன்னை அழித்துவிடுவே னென்றபடி; உண்ணுதது உண்பது போலச் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி: "உண்டற்குரிய வல்லாப்பொருளை, உண்டனபோலக் கூறலு மரபே" என்பது, தொல்காப்பியம்; [நன் - பொது - இ௮.] கொல்வேனென்பதை வேறொருவகையாற் சொன்னதனால்; இது - பரியாயமொழியணி; பிறிதினவிற்சியணியெனவும், பரியாயவணியெனவும் படும்: "கருதியதிலைவா தப்பொருள்தோன்றப், பிறிதொன்றுரைப்பது பரியாயம்மே" என்ற தண்டியலங்காரத்தால், இதன் இலக்கணமுணர்க. கொடிக்குப் பெருமை - உயர்வு. ஏறு - ஆண்மைப்பெயர்; இனி, கொடிமேல் மடங்கலின் வடிவத்தை ஏற்றினவ னென்றுங் கொள்ளலாம். 'ஏற்றினன்' என்பது - முந்தினபொருளில், 'ஏறு' என்ற பெயரின்மேற் பிறந்த குறிப்புவினையாலணையும்பெயர். இன் - சாரியை; பிந்தினபொருளில், 'ஏற்று' என்ற பிறவினைப்பகுதியின்மேற் பிறந்த தெரிநிலைவினையாலணையும்பெயர்: இன் - இறந்தகாலவிடைநிலை. 'கொடிமிசைமடங்கலேற்றினன்' என்ற தொடரால், வீமன் தனதுதிறத்துக்கேற்ற கொடியுடையானென்பது போதரும். கொடிமிசை, மிசை - ஏழனுருபு. மடங்கல் - (பிடரிமயிர்) மடங்குதலையுடையது என ஆண்சிங்கத்துக்குக் காரணக்குறி; தொழிலாகுபெயர்: சிங்கத்தின்பெயர்களிலொன்றாகிய 'கேஸரீ' என்ற வடசொல்லும் பிடரிமயிர்களையுடையதென்று பொருள்படுதலுணர்க. 'மடங்கலேறனன்' என்னும் பாடத்துக்கு - தனது துவசத்தின்மேலுள்ள சிங்கவேற்றை யொத்தவ னென்று பொருள்; தனது பெருவீரத்துக்கு அறிகுறியாகச் சிங்கத்தைக் கொடியாக் கொண்டவ னென்க: இதற்தொடரைச் சபாபருவத்தில் "தனதுகேதனக்கேசரியனையான்" என்றதனோடு ஒப்பிடுக. (எக)

எங்களைக்கானில்விரட்டிவியேகவெண்
டிங்களைப்போனெடுந்திகிரியோச்சினீர்
சங்கண்பயில்வளநாடன்றண்டினு
துங்களைக்கள்ப்பலியூட்டுநாளையே.

(இ - ள்.) (நீங்கள்),—எங்களை கானில் விட்டு - எங்களைக்காட்டிற்குப் போகும்படி அனுப்பிவிட்டு, இரவி ஏக வெண் திங்களை போல் - சூரியன் மறைந்துபோக (அந்திச்சமயத்திலே) வெண்ணிறமான சந்திரன் ஒளிவீசி விளங்குவதுபோல, நெடுந் திகிரி ஓச்சினீர் - பெரிய ஆஜ்ஞாசக்கரத்தை (பூமிமுழுவதுஞ்) செலுத்தி வாழ்ந்து விளங்கினீர்கள்; உங்களை - (இவ்வாறு அரசாண்டிருந்த) உங்களை, நாளையே - நாளைக்கே [வெகுவிரைவிலே யென்

படி], சங்கு அளை பயில் வளம் நாடன் - சங்குகள் சேற்றில்வூர்கின்ற நீர்
வளப்பத்தையுடைய குருநாட்டுக்குஉரியவனாகிய வீமன், தண்டினால்-(தனது
சத்துருநாதினியென்னும்) கதாயுதத்தால், களம் பலி ஊட்டும் - போர்க்
களத்திற்கொன்று பலியிடுவான்; (எ - று.)

நாங்கள் இந்திரப்பிரஸ்தநகரத்தில்வசித்திருந்தவரையிலும் நீங்கள் பெ
ருஞ்சிறப்படைந்திலீ ரென்பான், 'எங்களைக்கானில்விட்டுஇரவியேகவெண்
டிங்களைப்போல் செடுந்திகிரியோச்சினீர்' என்றான்; சூரியன்முன்னே சந்
திரனொளி விளங்காதவாறுபோல வெளிப்பட்டுவந்த எங்கள்முன்னே இனி
உங்களரசு செல்லா தென்றற்கு இங்ஙனங்கூறினனுமாம். உவமையணி.
இரவி ஏகுதல் - சூரியன் அஸ்தமித்தல். ஆஜ்ஞையைச் சக்கரமென்றும்
குடையென்றும் கோலென்றும் கூறுதல், மரபு. சங்குகள் தங்குதல், நீர்வள
மிகுதியால். அளை - குழைசேறு; வளையுமாம். இனி, அளையென்பதை அளை
ந்து என்னும்வினையெச்சத்தின்விகாரமாகக்கொண்டு, சங்குகள் அளைந்துபயி
லுகின்ற வென்றலுமாம்; "வரிப்புனை பந்து" என்றாற்போல: 'சங்களைப்
பயில் வளநாடன்' என்பதும் பாடம். இங்கு, வீமனை 'வளநாடன்' என்றது,
பகைவரைவெல்பவர்க்கு அவர்நாடுஉரியதாகின்றஇயல்புபற்றி. இன்றைக்கு
யான் உயிரோடுவிட நீங்கள் உய்ந்துஓடிப்போனாலும் நாளைக்குவீமன்கதை
க்குத தப்பிப்போகமுடியா தென்பதாம. இங்கு 'நாளை' என்றது, இனி வி
ரைவி லென்றமாத்திரமாய்நின்றது; நாலடியாரில் "நாளைத், தழீஇ இந்தழீஇ இந்
தண்ணம் படும்" என்றவிடத்திற்போல. எ - தேற்றம். களப்பலியூட்டும் -
துணித்துப் போர்க்களத்தெய்வத்துக்கும்பேய்களுக்கும் உணவாக இடுவன்.

ஊட்டும், ஊட்டும்-பகுதி; அது - உண்என்பதன் பிறவினை: அதில், டு -
பிறவினைவிகுதி, பகுதி முதல்நீண்டது - விகாரம். (எஉ)

[கோல்லத்தகாதவ ரிவ ரென்பது.]

இரவலரிளையவரேத்துநாவலர்
விரவியதூதுவர்விருத்தர்வேதிய
ரரிவையர்வெஞ்சமரஞ்சுவோர்பெருங்
குரவரென்றிவர்களைக்கோறல்பாவமே.

(இ - ள்.) இரவலர் - யாசகர்களும், இளையவர் - இளம் பிள்ளைகளும்,
ஏத்தும் நாவலர் (அரசரைப்) புகழ்கின்ற ஸ்துதிபாடகர்களும், விரவிய
தூதுவர் - (வேற்றரசரிடமிருந்து) தம்மிடத்துவந்த தூதர்களும், விருத்தர்-
முதியவர்களும், வேதியர் - பிராமணர்களும், அரிவையர் - மகளிரும், வெஞ்
சமர் அஞ்சுவோர் - கொடிய போரில் அஞ்சியோடுபவர்களும், பெருங் குர
வர் - பெரிய ஐங்குரவர்களும், என்ற இவர்களை—, கோறல்-கொல்லுதல்,
பாவம் - தீவினையாம்; (எ - று.)

'போரில் முன்னிற்கமாட்டாமல்அஞ்சியோடுகின்றவர்களைக்கொல்லு
தல் பாவமாதல்பற்றியும், உன்னை நான்கொல்லேன்' என்றவாறும்; இது,
குறிப்பெச்சம்: தருமயுத்தஞ்செய்வேனேயன்றி அதருமயுத்தஞ்செய்யேனெ
ன்றான். இச்செய்யுளில், பொதுப்பொருள்மாத்திரமேகூறி அதனாற் சிறப்புப்
பொருள்பெறவைத்தது, பிறிதுமொழிதலணி; இவ்வணி, ஒட்டணியெனவும் பெயர்பெறும். யாசகர் தம்வயிறுபிழைத்தற்காகஇரத்தலன்றியாதொரு
தீங்குஞ்செய்யாமையாலும், இளையவர் எதிர்த்தற்குஏற்ற அறிவும்ஆற்றலும்
இல ராதலாலும், நாவலர் துதிமொழிகூறுபவ ராதலாலும், தூதர் தமது
தலைவர்பணியைச் செய்பவராதலாலும், விருத்தர் எதிர்த்தற்கு ஏற்றதிறலில
ரும் நன்குமதித்துஉபசரிக்கத்தக்க பெருமையுடையரு மாதலாலும், சமர
ஞ்சுவோர்மேற்படைசெலுத்துவது அதருமயுத்த மாதலாலும், ஐம்பெருங்
குரவர் "அரச னுபாத்தியான் தாய் தந்தை தம்முன், நிகரில் குரவ ரிவ

ரிவரைத், தேவரைப் போலத்தொழுதெழுக வென்பதே, யாவருங் கண்ட நெறி" என்றபடி தெய்வமாக்கொண்டாடத்தக்கவராதலாலும், இவர்களைக் கொல்லுதல் கொடியபாதகமாகு மென்க. "மூத்தவ ரிளையோர் வேதமுனிவரர் பிணியின்மிக்கோர், தோத்திரமொழிவோர் மாதர் தூதரென்றிவரைக் கொல்லிற், பார்த்திவர் தமக்கு வேறு பாவ மற்றிதனினில்லை, பூத்தெரிதொடையாய் பின்னும் நரகினும்புகுவ ரென்றான்" என்று மேற் கிருட்டிணன் றூதுசருக்கத்து வருவதும், "மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியான், ஆறன்மையின் முதியாரையு மெறியா னயிலுழவன்" என்ற சிந்தாமணியும் இங்கு நோக்கத்தக்கன.

இர வலர் - இரத்தலில் வல்லவர்; அன்றி. இரவல் அர் - இரக்குந் தொழிலுடையவர். இளையவர்-பாலர். ஏத்து நாவலர்-(யாவராலும்) புகழப்படுகின்ற புலவர்களுமாம். நா வலர் - நாவினாற் கவிபாடவும் வருணிக்கவும் போதிக்கவும் பிரஸங்கஞ்செய்யவும் வல்லவர். அறிவினாலும் பருவத்தாலும் ஒழுக்கத்தாலும் முதியவர்களாகிய ஞானவ்ருத்தர் வயோவ்ருத்தர் சீலவ்ருத்தர் என்னும் மூவகைப்பெரியோரும் அடங்குதற்கு, பொதுப்பட 'விருத்தர்' என்றான். வ்ருத்தர், ஸமரம், குரவ:, பாபம் என்ற வடசொற்கள் - விருத்தர், சமர், குரவர், பாவம் என்று விகாரப்பட்டன. விருத்தர் - கிழவர். வேதியர் - வேதம்வல்லவர். வேதங்களை ஓதுதல் ஓதுவித்தல் என்ற இருதொழிலுக்கும் உரியவர் அந்தணரே யாதலால், அவரே சிறப்பினால் 'வேதியர்' எனப்படுவர். 'அரிவையர்' என்றது - இதைப் பருவப்பெயராகாமல், மகளிரென்றமாத்திரமாய் நின்றது; (அப்பருவத்துக்கு வயதெல்லை - இருபது பிராயமுதல் இருபத்தைந் துபிராயமளவுமாம்.) அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை, தமையன் என்ற ஐவரும் - ஐம்பெருங்குரவ ரெனப்படுவர். என்றிவர் - பெயரெச்சவீறு தொகுத்தல்; கள் - விகுதிமேல்விகுதி. கோறல்- தொழிற்பெயர்; கொல் - பகுதி, தல் - விகுதி, பகுதிமுதல்நீண்டது-விகாரம், தகரம்றகரமானவிடத்துக் குறில்செறியாத லகரங் கெட்டது - சந்தி. ஈற்று ஏகாரம் - தேற்றம். (௭௩)

[துரோணன்முதலியோர் அருச்சுனனை வளைதல்.]

பற்பலவுரையிவன் பகருமெல்லையிற்
சொற்பயினான்மறைத்துவசன்வீடுமன்
கற்பகநிகர்கொடைக்கன்னனாதியோர்
மற்புயநிருபனைவந்துகூடினார்.

(இ - ள்.) பல்பலஉரை - (இவ்வாறு) பலபலவார்த்தைகளை, இவன் பகரும் எல்லையில்-இவ்வருச்சுனன் (துரியோதனனைநோக்கிச்) சொல்லிநிற்கின்றபொழுதில்,—சொல் பயில் நால் மறை துவசன் - (பலர்)சொல்லுதல் பொருந்திய நால்வகைப்பட்ட வேதத்தை யெழுதிய கொடியை யுடையவனான துரோணாசாரியனும், வீடுமன் - பீஷ்மனும், கற்பகம் நிகர் கொடை கன்னன் - கல்பகவிருக்ஷம்போன்ற தானத்தையுடைய கர்ணனும், ஆதியோர் - முதலானவர்கள், மல் புயம் நிருபனை - வலிமையுள்ள தோள்களையுடைய அரசனான அருச்சுனனை, வந்து கூடினார் - திரண்டுவந்து வளைந்தார்கள்; (எ - று.)

பல + பல = பற்பல: அகரம் ஏக லகரம் றகரமாயிற்று; [நன்-உயிர்-௨0.] சொல் - முதனிலைத்தொழிற்பெயர். இனி, சொல் பயில்-கல்வியைப்பிறர்க்குப்போதிப்பதில் தேர்ச்சியுள்ள என்றலு மொன்று; "வீரசாபமுடனுரைக்கும்வெய்யசாபம்வல்லவத்,—திரன்" என்னும்படி சாபாநுக்கிரகங்களைச்செய்யுஞ் சொல்திறமுடைய என்றலுமாம்: புகழ்நிரம்பிய எனினுமாம். மேல் துரோணபருவத்தில் "சொல்லாய் நீ" என்றும், கர்ணபருவத்தில் "சொல்

தவறாத் துரோணன்" என்றும் வருவன காண்க. இனி, சொல் பயில் மறை - சொற்செறிவமைந்த வேத மெனவுந் தகும். மறை - (சிலவருணத்தார்க்கும் மகளிர்க்கும் ஓதலாகாதென்று) மறுக்கப்படுவது; அன்றி, மறைந்த [இரகசியமான] பொருள்களையுடைய தெனினுமாம். நான்மறை-இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன; தைத்திரியம், பௌடிகம், தலவகாரம், சாமம் என்பாரு முளர்.

மறைத்துவசன் - வேதக்கொடியுடையான். "இடையிருவகையோரல்லது நாடிற், படைவகைபெறாஅ ரென்மனார் புலவர்" என்ற தொல்காப்பியச்சூத்திரத்து 'நாடின்' என்பதனால், சிறுபான்மை அந்தணரும் படைக்குரிய ரென்பது கொள்க; அச்சூத்திரவுரையில் 'அவர் - இயமதங்கியாரும [பரசுராமரும்] துரோணனும் கிருபனும் முதலாயினா ரெனக் கொள்க' என்றமை உணர்க. இத்தன்மை, வடமொழித்தருமசாஸ்திரக்கொள்கைக்கும் ஒத்ததே. துரோணன் ஆதியில் வீடுமனிடம் வந்துசேர்ந்தபொழுது வீடுமன் துரோணனைக் கௌரவபாண்டவர்க்குப் பிரதானவில்லாசிரியனாக்கி அவனுக்கு இராசபட்டத்தையும் அரசர்க்குஉரிய குடை கொடி சாமரம் தேர் கிரீடம் முதலிய அங்கங்களையும் அளித்தன னாதலின், இவற்குத் துவசம் உரியதாயிற்று; "முனிநீ ஐயா இதற்குமுன்னம் இன்றுமுதலா, இனி இவ்வுலகுக்கரசா யெம்மிலொருவனாகிக்,குனிவில்வலியா லமருங் கோடி யென்று கொடுத்தான், பனிவெண்குடையு நிருபர்க்குரிய வரிசைபலவும்" என்று கீழ் ஆதிபருவத்திற் கூறியதும். "வன்பின் மிக்க வீடும னுன்னை மன்னு கென், றன்பி னிப்பா ராளவு மன்றே யருள்செய்தான்" என்று மேல் துரோணபருவத்திற் கூறுவதுங் காண்க. மற்றும்,முன்பு தான்செய்த சபதத்தின்படி பாஞ்சாலதேசத்தரசனான துருபதனைத் தனதுமாணாக்கனாகிய அருச்சுனனைக்கொண்டு பொருது வென்று உயிரோடுகட்டிக்கொணர்ந்து அவனதுஇராச்சியத்திற் பாதியைத் துரோணன் தனக்குஉரியதாக்கிக்கொண்டு வாழ்ந்தமைபற்றியும், துரோணனுக்கு இராஜாங்கங்கள் அமையும். "அண்ணலஞ்சிலைவலாரு ளமோகவாசானிற்பின்னை, விண்ணகுவெள்ளிவெற்பின்விஞ்சையருலகினல்லால், மண்ணகத்தில்லை" என்ற சீவகசிந்தாமணியாலும், துரோணனதுவில்லின் திறம் விளங்கும்.

கற்பகம் - கல்பக மென்ற வடசொல்லின் விகாரம்; (வேண்டுவோர் வேண்டுவனவற்றைக்) கல்பிப்ப தென்று பொருள்படும்: கல்பித்தல் - உண்டாகச்செய்தல். இது, பிறர் தன்னிடம்வந்து கினைத்தவற்றையெல்லாம் அவர் சொல்லியிரவாதமுன்னே கைம்மாறுகருதாதுகொடுக்குமியல்பினது; இதனை உவமைகூறியது, கர்ணனது தானச்சிறப்பை விளக்கும். கொடை-தொழிற்பெயர்; ஐ-விகுதி. கன்னன் - கர்ணன் என்ற வடசொல்லின் விகாரம்; இப்பெயர் - கர்ணகுண்டலங்களோடுபிறந்தமைபற்றியது: காதின்வழியேபிறந்ததனால்வந்த பெய ரென்றுங் கூறுவர்; கர்ணம் - காது. இவன் தானத்திற் சிறந்தவ னென்பது பிரசித்தம். ஆதி - வடசொல். மல் - ஆயுதமொடாது உடல்வலிமைகொண்டு தாக்கிச்செய்யும் மற்போர்த்தொழிலுமாம். ஈற்றடிக்கு - துரியோதனராஜனை வந்துஅடுத்தார்க ளென்று உரைப்பினும் இழுக்காது. கிருபனைக்கூடினார் என்றஇயையுமிடத்து, 'வந்து' என்றது-இடைப்பிறவரல். 'பற்பலமொழியிவண்பகருமெல்லையில்' என்றும் பாடமுண்டு; இவண் - இவ்வண்ண மென்க. (௧௬)

[கர்ணன் அருச்சுனனைப் போர்க்குஅழைத்தல்.]

மின்னுடன்மின்மினிவெகுளுமாறுபோற்
றன்னுடனிகரிலாத்தடக்கைவண்மையான்
மன்னுடனிகல்வதுவார்த்தையன்றினி
யென்னுடன்மலைதிநீயென்றுகூறினான்.

(௧௭)

(இ - ள்.) (அவர்களில்), தன்னுடன் நிகர் இலா - தனக்கு ஒப்புமை பெறாத, தட கை வண்மையான் - பெரிய இரண்டுகைகளாலும் கொடுக்கும் கொடையையுடையவனான கர்ணன்,—மின்னுடன் மின்மினி வெகுளும் ஆறு போல் - மின்னலுடனே மின்மினிப்பூச்சி கோபித்துப்பகைத்து (ஒளியாமல்) எதிர்த்தால் அதுபோல,—(அருச்சுனனைநோக்கி), 'நீ—, மன்னுடன் இகல்வது - துரியோதனராஜனுடனே எதிர்த்துப்பேசுவது, வார்த்தை அன்று - காரியமன்று: இனி—, என்னுடன் மலைதி - என்னோடு போர் செய்வாய்', என்று கூறினன் - என்றுவீரவாதஞ்சொல்லிப் போர்க்குஅழைத்தான்; (எ - று.)

மின்னுடன் மின்மினி வெகுளுதலாவது - உன்னிலும் நான் மிக்கவொளியுடையே னென்று மாறுபடுதல்; இது, இல்பொருளுவமை. மின்னல்- அருச்சுனனுக்கும், மின்மினி - கர்ணனுக்கும் கவிகூறிய உவமை. இதனால், வீரத்தில் அருச்சுனனது மிக்கஉயர்வும். கர்ணனது மிக்கதாழ்வும் விளங்கும். இனி, 'மின்னுடன்மின்மினிவெகுளுமாறுபோல்'என்பதனை, துரியோதனனோடுஅருச்சுனன்எதிர்த்தற்குக் கர்ணன்கூறிய உவமையாகக் கொண்டு உரைத்தலும் அமையும். மின்மினி - இருளில்மின்னுவதொரு பறக்கும்புழு; இடைவிட்டொளிசெய்வதென்று பொருள்படுங் காரணக்குறி. தன்னுடன் நிகரிலாவண்மை - வேறுஎவரும்இவ்வாறுசெய்யாமையால் தனக்குத்தானே ஒப்பாகிய ஈகை. வண்மை - வரையாதுகொடுத்தல். 'இகழ்வது' என்னும் பாடத்துக்கு - அவனோடுஇகழ்ந்துபேசுவது வார்த்தையன்று என்று பொருளாம். வார்த்தா என்ற வடசொல் - சொல்லென்றும் செய்தியென்றும் பொருள்படும்; அது. ஆவீறு ஐயாயிற்று. மலைதி - ஏவலொருமைமுற்று; இ - விகுதி, த் - எழுத்துப்பேறு.

முன்பு துரியோதனன் சகுனியைக்கொண்டு தருமபுத்திரனைச் சூதில் வென்று துச்சாதனனைக்கொண்டு பாண்டவரையும் திரௌபதியையும் துகிலுரிபவனைப் பரிபவப்படுத்திய சமயத்தில் துரியோதனாதியர்நூற்றுவரையுந்தானேகொல்வதாக வீமனும் கர்ணனைத் தான் கொல்வதாக அருச்சுனனும் பிரதிஜ்ஞைசெய்திருத்தல்பற்றி, கர்ணன் அருச்சுனனைநோக்கி 'மன்னுடனிகல்வது வார்த்தையன்று இனி என்னுடன்மலைதிநீ'என்று கூறினன்; கீழ்ச் சூதுபோர்ச்சருக்கத்து "பகலவன்தன்மதலையுயிர் பகைப்புலத்துக்கவர்வனெனப் பார்த்தன் சொன்னான்"என்றது காண்க. (௭௫)

[அருச்சுனன் கர்ணனைக்குறித்துத் தேர்செலுத்துதல்.]

கரக்கமும்மதம்பொழிகாய்களிற்றைவிட்
டுரங்கொடுவரியின்மேலோடும்யாளிபோ
னிரக்குமந்நிருபனுநிற்கவந்துபோ
ரிரக்குமக்கன்னன்மேலிரதமேவினான்.

(இ - ள்.) கரக்க - (தன்வடிவம்) மறையும்படி, மும் மதம் பொழி - மூன்றுமதங்களையுஞ் சொரிகின்ற, காய் களிற்றை - கோபிக்குமியல்புள்ளதொரு யானையின்மேற் பாய்வதை, விட்டு - ஒழித்து, உரம் கொடு வரியின் மேல் ஓடும் - வலிமையையுடையதொரு புலியின்மேல் ஓடிப்பாய்கின்ற, யாளி போல் - யாளியென்னும் மிருகம் போல,—(அருச்சுனன்),—நிரக்கும் அ நிருபனும் நிற்க - பொருந்திய அந்தத்துரியோதனராஜனும் நின்றுகொண்டிருக்க (அவனைவிட்டு), வந்து போர் இரக்கும் அ கன்னன்மேல் இரதம் ஏவினான்-எதிரில்வந்து யுத்தத்தையேண்டுகின்ற அந்தக்கர்ணனைக் குறித்துத் (தனது) தேரைச் செலுத்தினான்; (எ - று.)

ஒருயாளி யானையை எளிதில்அழிக்கவல்லதாயிருந்தும் அதனைஅலக்ஷியத்தால்விட்டு ஒருபுலியின்மேற்பாய்ந்தாற்போல, அருச்சுனன் துரியோதனனை எளிதிற்கொல்லவல்லனாயிருந்தும் அதுசெய்யாது இகழ்ந்துவிட்டுக்

கர்ணனைநோக்கிப் போர்க்குச்சென்றனனென்பதாம். உவமையணி. யானை - துரியோதனனுக்கும், புலி - கர்ணனுக்கும், யாளி - அருச்சுனனுக்கும் உவமை. மற்றைவிலங்குகளெல்லாவற்றினும் வலியதும் பெரியதுமான யானையும் வீரங்காட்டுமியல்புள்ளதான புலியும் பராக்கிரமத்தோடு போர்த்திறத்திற் சிறந்ததான யாளியால் எளிதில்அழிக்கத்தக்கனவாதல் போல, பதினாயிரம்யானைபலங்கொண்டவனும் நூற்றுவரில்மூத்தஅரசனுமான துரியோதனனும் வீரவாதங்கூறுமியல்புள்ளகர்ணனும் பராக்கிரமசாலியாய்விற்போரில்வெல்லவல்ல அருச்சுனனால் எளிதில்அழிக்கத்தக்கவரென்பது தோன்றும். விற்போரில் துரியோதனனிலும் கர்ணன் சிறந்தவனென்பது இங்குத் தொனிக்குமெனக் கொள்வர் ஒருசாரார். யாளி - துதிக்கையையுடையதும் யானையைக்கொல்வதும் சிங்கம்போல்வதுமாகியதொருமிருகவிசேஷம்; இது, யாளியானையெனவும்படும்: இச்சொல் சிங்கமென்றபொருளில் வழங்குதலுமுண்டு.

போரிரத்தல் - 'நீ என்னுடன் போர்செய்ய வா'என்று அழைத்தல். யாவர்க்கும் கேட்டவற்றையெல்லாங்கொடுக்கின்ற மகாதாதாவாகிய கர்ணன் அருச்சுனனிடம்வந்து போரையிரந்தனனென்ன ஒருவகைச்சமத்காரமமைய, கவி, கீழிரண்டுசெய்யுள்களில் 'கற்பகங்கர்கொடைக்கன்னன்'என்றும், 'தன்னுடனிகரிலாத்தடக்கைவண்மையான்' என்றும், இச்செய்யுளில் 'வந்துபோரிரக்குமக்கன்னன்'என்றுங் கூறினார். இதனால், போரில் அருச்சுனனுக்குஉள்ள உயர்வையும் கர்ணனுக்குஉள்ள தாழ்வையும் விளக்கியவாறும். மும் மதம் - கர்ணமதம்,கபோலமதம், பீஜமதம் என்பன; கன்னமிரண்டு, குறியொன்று இம்மூன்றிடத்தினின்று பெருகுவனவென்றலுமொன்று. யானை கோபத்தை மறைத்தற்குரியகாலத்தேமறைத்து வெளிப்படுத்தற்குரியகாலத்தேவெளிப்படுத்துதலால், 'காய் களிறு' எனப்பட்டது; "யானையறிந்தறிந்தும்பாகனையேகொல்லும்," "திருகுவெஞ்சினக்களிறனையசீற்றத்தான்" என்பன காண்க. கொடுவரி - ஒருசொல்: வளைவான உடற்கோடுகளையுடையதென்ற காரணப்பொருள்பற்றிப் புலியைக்குறிக்கும்; பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. கொடுமை வளைவாதலை 'கொடுங்கோல்', 'கொடுங்கை'. 'கொடுங்குழை','கொடுமரம்', 'கொடுவாள்' என்றவற்றிலுங் காண்க. இனி, கொடு - கொடுமையான, வரி - புலி என்பாருமுளர். 'கரக்கு மும்மதம்' என்ற பாடத்துக்கு - உடம்பைமறைக்கின்ற மூன்றுவகைமதநீ ரென்று பொருள். 'கரக்கவுண்மதம்பொழி' என்று பாடமாயின், கரம் - துதிக்கையையுடையதும்.கவுள் மதம்- கன்னங்களினின்றுபெருகுகின்ற மதஜலத்தை, பொழி - சொரிகின்றதுமான என்று பொருளாம்; கரமதம் - துதிக்கைத்துளைகளிரண்டினின்று பெருகுகின்ற மதம், கவுள்மதம் - கன்னமதம் என்றலுமாம்: யானைக்குரிய எழுவகைமதத்தில் துதிக்கைமதமும் அடங்கும். நிரத்தல்-கலத்தல். (மூன்றுமடியில் 'நிரைக்கொடுவெம்படைநிற்க'என்ற பாடம் சிறவாமையுணர்க; இரண்டாமடியில் 'உரக்கொடுஞ் சிங்கிமேல்' என்ற பாடமும் அத்தன்மைத்தே.) கரக்க, நிரக்கும், இரக்கும் என்றவற்றில் கர, நிர, இர - பகுதிகள். 'அருச்சுனன் கர்ணன்மேல் இரதம்ஏவினான்'என்றது, 'அரசன் கோயில்கட்டினான்' என்பதுபோல ஏவுதற்கருத்தாவின்வினை; உத்தரனுக்குக் கட்டளையிட்டு அவனைக்கொண்டு செலுத்தினனென்க. 'நிருபனுநிற்க' என்றவிடத்து உம்மையை 'நிருபன்நிற்கவும்'என்றுபிரித்துக்கூட்டுதலுமாம்.(எ)

[இருவரும் கைகலத்தல்.]

இரதமுமிரதமுமெதிர்ந்தபோதிரு
குரதுரகதங்களுங்குமுறியார்த்தன

வுரைதருபாகருமுடன்றுகூவினார்
விரைதனுவளைத்தனர்வீரர்தாமுமே.

(இ - ள்.) இரதமும் இரதமும் எதிர்ந்த போது - அருச்சுனனதுதேரும் கர்ணனதுதேரும் ஒன்றையொன்றுஎதிரிற்சமீபித்துநெருங்கியபொழுது,—இரு குர துரகதங்களும் - இரண்டுதேரிலும்பூட்டிய (வலிய)குளம்புகளையுடையகுதிரைகளும், குமுறி ஆர்த்தன - கனைத்து ஆரவாரித்தன; உரைதரு பாகரும் - சிறப்பித்துச்சொல்லப்படுகின்ற இரண்டுதேர்ச்சாரதிகளும், உடன்று கூவினார் - பெருங்கோபங்கொண்டு ஆரவாரித்தார்கள்; வீரர் தாமும் - இரண்டுவீரர்களும் [கர்ணனும் அருச்சுனனும்], விரை தனு வளைத்தனர் - விரைவாக வில்லைவளைத்தார்கள்; (எ - று.)

இரு துரகதம் - இரண்டுபக்கத்துக் குதிரைகள். குர துரகதம் - (ஒற்றைக்) குளம்புகளினால் விரைந்துசெல்வ தென்னலாம். உடன்று என்ற இறந்தகாலவினையெச்சத்தில், உடல் - பகுதி, ற் - இடைநிலை, உ - விகுதி, லகரம் னகரமானது - சந்திவிகாரம். விரை - விரைந்து: வினையெச்சவிகாரம்; (போர்செய்தலில்) விரைவுகொண்ட வில் என்றால், வினைத்தொகையாம். உரைதரு, தா - துணைவினை. இனி, 'உரை தரு பாகர்' என்பதற்கு - (அக்குதிரைகளுக்குக்) குறிப்புக்கூறுகின்ற பாகர்களென்று உரைப்பாருமுளர். முதலடியிலுள்ள உம்மையிரண்டும் - எண்ணுப்பொருளன. மற்றை மூன்றுஉம்மைகளில், முதலது - எதிரதுதழுவியஎச்சமும், மற்றையிரண்டும் - இறந்ததுதழுவியஎச்சமு மாம். (எஎ)

[இருவரும் நெடும்பொழுது சமமாகப்பொருதல்.]

இருவருமெதிரெதிரேவும்வாளியால்
வெருவருமிருளுறவிசும்புதூர்ந்தது
பொருவருமமர்நெடும்போதுதாக்கியு
மொருவருமிளைத்திலருவமைவேறிலார்.

(இ - ள்.) வேறு உவமை இலார் - (தமக்குத் தாமே ஒப்பாவதன்றித் தமக்கு) வேறுஒப்புமையில்லாதவர்களாகிய, இருவரும் - கர்ணன் அர்ச்சுனன் என்ற இந்தஇரண்டுபேரும், எதிர் எதிர் ஏவும்-எதிருக்கெதிரே [தம்மில் ஒருவரைக்குறித்து ஒருவர்] செலுத்திய, வாளியால் - அம்புகளினால்,— வெருவரும் இருள் உற - அஞ்சத்தக்க இருள் உண்டாக, விசும்பு தூர்ந்தது - ஆகாயம் மறைந்தது; (இவ்வாறு). பொருவு அரும் அமர் - ஒப்பில்லாத யுத்தத்தை, நெடும் போது தாக்கியும் - வெகுநேரம் உக்கிரமாகச்செய்தும், ஒருவரும் இளைத்திலர் - (இவ்விருவரில்) ஒருவராயினும் சிறிதும்வலிகுறைந்தனரில்லை; (எ - று.)

நிரைநிரையாகத்தொடுத்த கப்பலவாகிய அம்புகள் அடர்ந்து சூரியனை மறைத்தலால் இருள்உண்டாயிற் றென்க. வெருவரும் என்பதில், வெருவு என்ற வினைச்சொல்லும் வா என்ற துணைவினையும் தொடர்ந்து தொகுத்தல்விகாரப்பட்டு ஒருசொல்தன்மையுற்ற வெருவா - பகுதி; அது, குறுக்கலும் விரித்தலு மாகிய விகாரங்களைப்பெற்று, வெருவருஎன நின்றது. வெரு வரும் என்றுபிரித்து, அச்சமுண்டாகத்தக்க வென்றலு மொன்று; இப்பொருளில், வெரு - முதனிலைத்தொழிற்பெயர். இளைத்திலர் - எதிர்மறைப் பலர்பா லிறந்தகால முற்று. உவமை-உபமா என்ற வடசொல்லின் விகாரம். 'பொருவரும் அமர்' என்பதற்கு-(ஒருவரை ஒருவர்)ஒக்கின்ற போரென்று உரைப்பாருமுளர்; இப்பொருளில், பொருவு என்ற பகுதி ஈறு தொக்கது: வா - துணைவினை. 'விசும்புதூர்த்தனர்' என்றும், 'இளைத்திலரொத்தவாண்மையார்' என்றும் பாடமோதுவர் ஒருசாரார். (எஅ)

[கர்ணன் தேர்முதலியன அழிந்து ஓடுதல்.]

மற்றொருதொடையினிற்சுவேதவாகனன்
முற்றொருகணத்திடைமூன்றுகோல்விட
விற்றொருகணத்திடையிவுளிபாகுதே
ரற்றொருவினனடலாண்மையங்கர்கோன்.

(இ - ள்.) (இங்ஙனம்பொருகையில்),—சுவேத வாகனன்-வெண்ணிற மான குதிரைகளை யுடையவனாகிய அருச்சுனன், மற்று - பின்பு, ஒரு தொடையினில்-ஒரு பிரயோகத்தில், முற்று ஒரு கணத்திடை-ஒரு க்ஷணகாலம் முடிவதற்குள்ளே, மூன்று கோல் விட - மூன்று அம்புகளை ஒருசேரத்தொடுக்க, (அவற்றால்),—இற்று ஒரு கணத்திடை - இததன்மைத்தான அந்த க்ஷணமொன்றிலே, அடல் ஆண்மை அங்கர் கோன் - வலிமையையும் வீரத் தன்மையையுமுடைய அங்கதேசத்தார்க்கரசனான கர்ணன், இவுளி பாகு தேர் அற்று - குதிரைகளும் சாரதியும் தேரும் அழிந்து, ஒருவினன்-(போரி னின்று) நீங்கிசென்றான்; (எ - று.)

மற்று - இடைச்சொல். ஒரு தொடை-தொடுக்குந்தரமொன்று. கணம்-ஒருகாலநுட்பம். இற்று - இகரசுட்டடியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர்; று - விகுதி. அற்று, அறு - பகுதி. அங்கர்கோன் இவுளிபாகுதேர்அற்று ஒருவினன் - சினைவினை, முதல்வினைகொண்டது. ஒருவினன், ஒருவு - பகுதி. அடல் ஆண்மை பல பராக்கிரமங்கள். சிவபிரானது நெற்றிக்கண்ணின் நெருப்புக்கு இரையாகி வெந்த மன்மதனது அங்கம் [சரீரம்] விழுந்த இடம், அக்காரணத்தால், அங்கதேசமென்று பெயர்பெற்றது; "வாரணத்துரிவையான் மதனனைசினவுநாள், ஈரமற் றங்கம் இங்குகுதலா லிவணெலாம், ஆரணத்துறையுளா யங்கநாடு" என்ற கம்பராமாயணங் காண்க. (எக)

[கர்ணன் மீண்டும்மீண்டும் வந்து பொருது தோற்றேடுதல்.]

ஒருவியிட்டோடிமற்றோரோர்தேர்மிசை
மருவியிட்டெதிருறவந்துமோதியு
முருவியிட்டனகணையொன்றுபோற்பல
வெருவியிட்டனனவன்மீளமீளவே.

(இ - ள்.) அவன் - அந்தக்கர்ணன், ஒருவியிட்டு ஓடி - (போர்) நீங்கி ஓடிப்போய், மற்று ஓர் ஓர் தேர்மிசை - வேறு ஒவ்வொரு தேரின்மேல், மருவியிட்டு - சேர்ந்து [ஏறி]. எதிர் உற வந்து மோதியும் - (அருச்சுனனுக்கு) எதிராக வந்து போர்செய்தும், ஒன்று போல் பல கணை உருவியிட்டன - ஓர் அம்புபோலவே (அருச்சுனனது) பல அம்புகளும் (ஒருதொடையாகத் தனதுஉடம்பில்) தைத்துப்புதைந்தோடினவாக, மீள மீள - மறுபடியும் மறுபடியும், வெருவியிட்டனன் - அஞ்சிப்போயினான்; (எ - று.)

கர்ணன் போரினின்றுநீங்கியோடி வேறொருதேரின்மேலேறி மீண்டு அருச்சுனனெதிரில்வந்துபொருவதும், அருச்சுனனம்புகள்பல தனதுஉடலில் தைக்கப்பெற்றவனாய் அஞ்சிததோற்றோடுவதுமாகப் பலமுறைநிகழ்ந்த தென்க. 'உருவியிட்டன' என்பது, முற்றெச்சமாய், உருவியிடவென்னும் பொருள்தந்துநின்றது; இதனை முற்றாகவேகொண்டு பொருளுரைத்தால் ஏகவாக்கியமாகாது பிந்நவாக்கியமாகிப் பொருள் சித்தியா தென்க. 'மீள மீள' என்ற அடுக்கு, பன்மைப்பொருளது. நான்கடியிலும், இடு - துணைவினை; பின்னிரண்டடிகளில் துணிவுப்பொருளுணர்த்துவ தென்னலாம். 'மோதியும்' என்ற உம்மை - உயர்வுசிறப்பு. (அ0)

[பலமுறை தோற்றோடிய கர்ணனை நோக்கி அசுவத்தாமன் சில கூறத்தொடங்குதல்.]

இம்முறைவந்துவந்தெதிர்ந்துவெஞ்சமர்
மும்முறைமுறிதலுமுனிவன்மாமக
னம்முறைமுதுகிடுமருக்கன்மைந்தனைத்
தெம்முறைமையிற்சிலவார்த்தைசெப்புவான்.

(இ - ள்.) (கர்ணன்), இ முறை - இவ்வாறு, வெம் சமர் - கொடிய போரில், வந்து வந்து -, எதிர்ந்து - எதிர்த்து, மும் முறை முறிதலும் - மூன்றுதரம் தோற்றுப்போனவளவில்,—முனிவன் மா மகன் - துரோணாசாரியனது சிறந்தகுமாரனாகிய அசுவத்தாமன், அ முறை முதுகு இடும் அருக்கன்மைந்தனை - அவ்வாறு முதுகுகாட்டித்தோற்றோடுகின்ற சூரியகுமாரனாகிய அக்கர்ணனை (நோக்கி), தெவ் முறைமையின் சில வார்த்தை செப்புவான் - பகைத்தன்மையையுடைய சிலவார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்தஇரண்டுகவிகளிற் கூறுகின்றார்.

'வந்து வந்து' என்ற அடுக்கு, பன்மைப்பொருளது. பரமசிவனருளால் தோன்றியவனாதலாலும், "பிதும் ஸதகுணம் புத்ர:" என்கிறநியாயமாய்த் தந்தையானதுரோணனினும் பலமடங்கு கல்வி கேள்வி அஸ்திர ஸஸ்திர ஸாஸ்திரப் பயிற்சி முதலியவற்றிற் சிறந்தவனாதலாலும், 'மாமகன்' என்று சிறப்பித்துக்கூறப்பட்டான். துரோணன்மனைவியாகிய கிருபியின் வடிவழகைக் கேள்வியுற்றும் ஒருகால் கண்டும் மிகக்காமுற்ற சிவபிரானது அருளினாற் குதிரையினிடமாகப் பிறந்தவனிவன்; துரோணனாலும், கிருபியினாலும் வளர்க்கப்பட்டவன்; எழு சிரஞ்சீவிகளில் ஒருவன். முதுகுஇடுதல் - புறங்கொடுத்தல். தெவ் + முறைமை = தெம்முறைமை: மகரம் வர வகரம் மகரமாத்திரிந்தது. "தெவ்வென் மொழியே (தொழிற்பெயரற்றே), மவ்வரின் வஃகான் மவ்வுமாகும்" என்பது நன்னூல்விதி. இத்தொடரை ஆறும்வேற்றுமைத்தொகையென்றாவது பண்புத்தொகையென்றாவது கொள்க. முறைமையிற் சில - 'இன்' சாரியை நிற்க இரண்டனுருபுதொக்கது. வார்த்தை - ஆவீறு ஐயான வடசொல். செப்புவான், செப்பு - தெலுங்கினின்று வந்து வழங்கிய திசைச்சொல். தெம்முறைமையிற் சிலவார்த்தை - மாறுபாடுகொண்ட சிலவார்த்தைகளென்றபடி. (அக)

[இதுவும், அடுத்தகவியும் - அசுவத்தாமனது இகழ்ச்சிவார்த்தை.

தேருமொன்றொருவனேதேரிலாளுமிங்
கியாருமஞ்சுதிரெனவிகழ்ந்துரைத்தநீ
போருடைந்தோடுதல்போதுமோநறுந்
தாருடன்பொலிதருதாமமார்பனே.

(இ - ள்.) நறும் தாருடன் பொலிதரு - வாசனைவீசுகின்ற பூமாலையுடனே விளங்குகின்ற, தாமம் மார்பனே - இரத்தினவாரத்தைத்தரித்த மார்பையுடையவனே! 'தேரும் ஒன்று - (எதிர்ப்பக்கத்தில்) தேரும் ஒன்றுதான்: தேரில் ஆளும் - அத்தேரிலேறிப்போர்க்குவந்தவனும், ஒருவனே - ஒருத்தன்தான்; (இங்ஙனமிருக்கவும்), இங்கு யாரும் அஞ்சுதிர் - இங்கு எல்லாரும் அச்சமடைகின்றீர்களே!' என - என்று, இகழ்ந்து உரைத்த - (எங்களையெல்லாம்) அவமதித்துப்பேசின, நீ—, போர் உடைந்து ஓடுதல் - (அந்தஒருவனோடுசெய்யும்)யுத்தத்தில் தோற்று முன்நிற்கமாட்டாமல் ஓடிப்போவது, போதுமோ - தகுமோ? (எ - று.)

மற்றையாவரையும் இகழ்ந்துபேசிவந்த நீயே இவ்வாறுஓடினால் யாவரும் உன்னை இகழாரோ என்றபடி. இங்கியார்-குற்றியலிகரம்; இங்கு அலகு பெறவில்லை. முதலடியிலுள்ள உம்மையிரண்டும் - ஒன்றையொன்றுநோ

க்கி முறையே எதிரதும் இறந்ததும் தழுவிய எச்சப்பொருளனவாம். அஞ்சுதிர் - முன்னிலைப்பன்மைமுற்று; த் - எழுத்துப்பேறு. 'யார்' என்ற சொல் இருதிணையைம்பால்மூவிடத்துக்கும்பொதுவாக வழங்குதலால், 'யாருமஞ்சுதிர்' என்ற முடிபை இடவழுவமைதியென்னாது வழாநிலையாகவேகொள்ளலாம். இகழ்ந்துரைத்தது - கீழ் ௬௨ - ஆஞ் செய்யுளிற் காண்க. 'நறுந்தார்' எனவே, பூமாலையாயிற்று; இங்கு, வெட்சிப்பூமாலையெனக்கொள்ளலாம். பொலிதரு, தா - துணைவினை. தாமம் - வடசொல். 'தாமமார்பன்' என்ற தொடர்க்கு - விளக்கமுள்ள மார்பையுடையவனென்றும் பொருள் கொள்ளலாம். நினது மார்பு போரில் எதிர்கொடுத்தற்கன்றி அலங்காரத்திற்கே அமைந்ததுபோலு மென்ற கருத்துத் தொனிக்குமாறு 'நறுந்தாருடன்பொலிதரு தாமமார்பனே' என்று விளித்தார். (அ௨)

சொல்லலாமிருந்துழிச்சொன்னசொற்படி
வெல்லலாமென்பதுவிதிக்குங்கூடுமோ
மல்லலாளியைப்பலவளைந்துகொள்ளினுங்
கொல்லலாயிருக்குமோகுஞ்சரங்களால்.

(இ - ள்.) இருந்தஉழி - இருந்தஇடத்திலே (இருந்துகொண்டு), சொல்லல் ஆம் - (எவ்வளவுசெய்தற்கரியகாரியத்தையும் செய்துமுடிப்பேனென்று எளிதில் யாயாற்) சொல்லுதல் (யாவர்க்கும்) எளியதாம்; சொன்ன சொல் படி - தான்சொல்லிய அச்சொல்லின்படியே, வெல்லல் ஆம் என்பது - (பகைவரைப் போரில்) ஜயித்துவிடலா மென்பது, விதிக்கும் - தெய்வத்துக்கும். கூடுமோ - நிச்சயமாகக்கைகூடுவதொருகாரியமோ? [அன்று]; (அன்றியும்), மல்லல் ஆளியை - வலிமைமிகுதியையுடைய சிங்கத்தை, பல வளைந்துகொள்ளினும் - பலயானைகள் ஒன்றாகத்திரண்டுசூழ்ந்துகொண்டாலும், குஞ்சரங்களால் - அந்த யானைகளால், கொல்லலாயிருக்குமோ - கொல்லும்படியாயிருக்குமோ? [இராதே]; (எ - று.)

அரியவற்றை எண்ணிச சொல்லுதல் வலிமையில்லாதவர்க்கும் இயலுதலால் 'சொல்லலாம்'என்றும், அவற்றை அவ்வாறு செய்தல் வலிமையுள்ளவர்க்கும் இயலாதுபோதலால் 'விதிக்குங்கூடுமோ' என்றுங் கூறப்பட்டது; "சொல்லுதல் யார்க்கு மெளிய அரியவாஞ், சொல்லிய வண்ணஞ் செயல்" என்றார் திருவள்ளுவரும். 'விதிக்குங் கூடுமோ' என்றதனால், நினக்குக் கூடாமை பெரியதொன்றன்று என்றபடி. 'பலயானைகள் கூடினாலும் ஒரு சிங்கத்தைக் கொல்லமுடியுமோ' என்ற உபமானவாக்கியம் 'சாதாரணவீரர் பலர் திரண்டெதிர்த்தாலும் மகாவீரனான அருச்சுனனொருவனை வெல்ல முடியாது' என்ற உபமேயக்கருத்தைத் தோன்றுவித்ததனால், பின்னிரண்டடி - பிறிதுமொழிதலென்னும்அலங்காரம். இருந்துழி - தொகுத்தல். விதி - வடசொல்; பிரமனுமாம். 'விதிக்கு' என்பதில், நான்கனுருபு மூன்றுவதன் கருத்தாப்பொருளது. 'விதிக்கும்' என்ற உம்மை - அவ்விதியினது செய்தற்கரியசெயல்களையுஞ்செய்துமுடிக்கவல்ல பேராற்றலை விளக்குதலால், உயர்வுசிறப்புப்பொருளது ஓகாரங்களிரண்டும் - எதிர்மறை. மல்லல் - மிருகங்களுக்கெல்லாம்அரசாயிருக்குந் தலைமையுமாம். 'வளைந்து கொள்ளினும்' என்ற உம்மை, வளைந்துகொள்ளமாட்டாமையை விளக்கும். சிங்கத்தை யானைகள் வளைத்தல், இல்பொருளுவமை. ஆளி - யாளி: மரூஉ. குஞ்சர மென்ற வடசொல்லுக்கு - காட்டுப்புதர்களிற்சஞ்சரிப்பதென்பது காரணப்பொருள். (அ௩)

[துரோணன்மேலும் வீடுமன்மேலும் அருச்சுனன் அம்புசெலுத்தல்.]

கொழுதுமம்பினுமிகக்கொடியகூற்றினை
பழுதறுநாவினன்பகரும்வேலையின்

முழுதுணர்முனியையுமுந்தைதன்னையுந்
தொழுதுபற்குனன்சிலதொடைகளேவினன்.

(இ - ள்.) பழுது அறு நாவினன் - குற்றமற்ற நாவையுடையவனான அசுவத்தாமன், கொழுதும் அம்பினும் மிக கொடிய கூற்று இவை - (உடம்பில்) தைத்துஊடுருவுகின்ற அம்புகளைக்காட்டிலும் மிகவுங்கொடுமையுடையனவாகிய இப்படிப்பட்ட வார்த்தைகளை, பகரும் வேலையில் - (கர்ணனை நோக்கிச்) சொல்லி யிகழ்கின்ற அப்பொழுதில்,—பற்குனன் - அருச்சுனன்,—முழுது உணர் முனியையும் - எல்லாவற்றையும்அறிந்த துரோணாசாரியனையும், முந்தைதன்னையும் - பாட்டனான பீஷ்மனையும், தொழுது - வணங்காநின்று, சில தொடைகள் ஏவினன் - சிலஅம்புகளைப் பிரயோகித்தான்; (எ - று.)

எய்தஅமபும் கூறியஇழிமொழியும் பிறர்நெஞ்சில்தைத்து அவரைவருத்துதல்தொழிலால் தம்மில்ஒன்றோடொன்றுஒக்குமாயினும்,பின்னர்ஆறிப்போம்படியானபுண்ணையுண்டாக்குகின்ற வில்லம்பினும் எந்நாளும்ஆறாதவடுவையுண்டாக்குகின்ற சொல்லம்பு மிகவுங்கொடியதாகுதலால், 'கொழுதுமம்பினு மிகக்கொடிய கூற்று' எனப்பட்டது; நினைக்கும்போதெல்லாம் வருத்தத்தைத்தருஞ் சொல் லென்க. கொழுதுதல் - துளைத்தல். அம்பினும், இன் - ஐந்தனுருபு: எல்லைப்பொருளது; உம் - உயர்வுசிறப்பு. கூறப்படுவது, கூற்று. நாவிற்குப் பழுது - பொய்யுரைபேசுதல். "பொய்ம்மைமொழி புகன்றறியேம் புகல மனமெண்ணுகினும், மெய்ம்மையல துரையாகா வேதநவில்பயிற்சியால்" என்றபடி சத்தியமான வேதத்தை யோதிப்பயின்றதனாற் பொய்படாத நாவினை யுடையா னென்பார், 'பழுதறநாவினன்' என்றார். இனி, நாவிற்குப் பழுது-பொய், புறஞ்சொல், கடுஞ்சொல். பயனில்சொல்என வாக்கில்நிகழும் பாவநான்கு மென்றுங் கொள்ளலாம்; இவை சொற்குற்றமெனப்படும். இனி, (அருள்கொண்டுகூறினாலும் வெகுண்டுகூறினாலும் அந்தந்தப்பயன்களைத் தந்தேவிடுகின்ற நிறைமொழிகளையுடைமையாற்) பழுதுபடுதல் [தவறிப்போதல்] இல்லாத நாவுடையா னென்றுமாம்.

'முழுதுணர்' என்னும் அடைமொழியை முந்தைக்கும கூட்டலாம்; அவரும் திரிகாலஞானி யாதலால். பழமையுணர்த்துகிற 'முந்தை' என்ற பண்புப்பெயர், இங்குப் பாட்டனுக்கு ஆகுபெயராம். முன்தந்தையென்பது முந்தையென மருவிய தென்பர் ஒருசாரார்; தந்தைக்கு முற்பட்டவனென்பது கருத்து: என்றது, பாட்டனும். பீஷ்மனை அருச்சுனனுக்குப் பாட்டனென்றது, பாண்டுவின் தந்தையாகிய விசித்திரவீரியனுக்கு முன் பிறந்தவனாதலின்; பெரியபாட்ட னென்க. பற்குனன் - பல்குந னென்ற வடசொல்லின் விகாரம்; பங்குனிமாதத்தில் உத்தரபல்குநி [உத்தரம்] என்னும் நக்ஷத்திரத்திற் பிறந்ததனால், பல்குநனென்று அருச்சுனனுக்குப் பெயர்: இப்பெயர் தமிழிற் சிறுபான்மை பங்குனனெனத்திரிந்தும்வழங்கும். தொழுது தொடையேவுதல் - இரண்டுபாதங்களிலும் இரண்டுஅம்புகளைச் செலுத்துவது. 'தொழாநின்று' என்னும் நிகழ்காலவினையெச்சம், இங்கு 'தொழுது' எனத் திரிந்தகின்றது; "கொழுநற் றொழுதெழுவாள்," "தொழுதெழுவார் வினைவள நீறெழ" என்னுந் திருவள்ளுவரிலும் திருக்கோவையாரிலும் போல: இங்கே நிகழ்காலமென்றது, முடிக்குஞ்சொல்லால்உணரப்படுந்தொழிலோடுஉடன்நிகழ்தலை. 'கண்மூடிச்சிரித்தான்,' 'நீந்திச்சென்றான்,' 'விரைந்துபோயினன்,' 'நகுபுவந்தான்,' 'ஓடிவந்தான்' என்றஇடங்களில் முன்நின்றஇறந்தகாலவினையெச்சங்கள் நிகழ்காலப்பொருளனவாதல் காண்க. இனி,"நோர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்,வேர்த்து

வெகுளார் விழுமியோர்" என்றவிடத்து 'வேர்த்துவெகுளார்' என்றதையும், 'வாய்திறந்தழுங்கினன்,' 'குறட்டைவிட்டுறங்கினன்' என்பவற்றையும் போல, 'தொழுது சிலதொடைகளேவினன்' என்றதை 'சிலதொடைகளேவித்தொழுதான்' என முன்பின்னாகக்கொண்டு விகுதிபிரித்துக் கூட்டி யுரைத்தலு மொன்று. அம்புகளையேவி அதனால் தன்வணக்கத்தை யுணர்த்தின னென்பது கருத்து. இருவரும் பெருமுதுகுரவ ராதலால், அவர்களைத் தொழுது தொடையேவினன். 'பகருமெல்லையில்' என்றும் பாடமுண்டு. 'அசுவத்தாமன் அம்பினும்மிகக்கொடியனவான இவ்வார்த்தைகளைச் சொல்லிக் கர்ணனையிகழும்போது, அருச்சுனன் துரோணனையும் பீஷ்மனையும் வணங்கிச் சிலஅம்புகளையேவினன்' என ஒருவகை முரண் தோன்றுமாறு சமத்காரமாகக் கூறிய நயம் கருதற்பாலது. (அச)

[துரோணன் அருச்சுனனையெதிர்த்தல்.]

தாளிணை யிறைஞ்சிய தனஞ்ச யன்றொடும்
வாளிகண் டுளமிக மகிழ்ச்சி கூரவு
மீளிமை யுடையவவ் வீரன் மீதெழுந்
தூளிசெய் தேரினைத் துரோண னுந்தினன்.

(இ - ள்.) (அப்பொழுது),—துரோணன்—,—தாள் இணை இறைஞ்சிய - (தனது) உபயபாதங்களை வணங்குதற்பொருட்டு, தனஞ்சயன் தொடும் - (தனது இரண்டுபாதங்களின்மேலும்) அருச்சுனன் தொடுத்த, வாளி- அம்புகளிரண்டையும், கண்டு - (தான்) பார்த்தலால், உளம் மிக மகிழ்ச்சி கூரவும் - (தன்) மனம் மிகுதியாய்மகிழ்ச்சியடையவும்,—மீளிமை உடைய அ வீரன்மீது - வெல்லுந்திறமையையுடைய அந்த மகாவீரனாகிய அருச்சுனன்மேல், எழும் தூளி செய் தேரினை உந்தினன் - மேற்கிளம்பும் புழுதிகளை யுண்டாக்குகின்ற (தனது) இரதத்தைச் செலுத்தினன்; (எ - று.)

கண்டு உளமகிழ்தல் - தனது அந்தரங்கசிஷ்யனான அருச்சுனனது திறமையையும் பணிவையும் நோக்கி யென்க. இங்ஙனம் மனமகிழவும் அவனுடன்பொருதற்குத் தேர்செலுத்தியது, துரியோதனனுக்காகச் சோற்றுக்கடன்கழிக்கவேண்டுதலால்; மேல் அ௬ - ஆஞ் செய்யுளைக் காண்க.

இறைஞ்சிய - இறைஞ்சுதற்கு: செய்யியவென்னும்வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம்; இறைஞ்சு-பகுதி: 'இய' என்றவிகுதியே காலங்காட்டும். இச்சொல்லிற்குமுன் வருமொழிமுதல்வலி இயல்பானது, "செய்யியவென்னும்வினையெச்சம் .........முன் இயல்பே" என்றதனால்; இனி, 'இறைஞ்சிய' என்றதை வணங்கின என்றுஇறந்தகாலப்பெயரெச்சமாகக்கொள்ளுதல் சிறப்பன்று; அருச்சுனன் அம்புதொடுத்தது வணக்கத்தைப்புலப்படுத்தற்கென்பது விளங்காதாதலால். வாள் - கூர்மை; அதனையுடையது வாளியென அம்பிற்குக் காரணக்குறி யென்பர்; இ - பெயர்விகுதி. 'காணுதலால்' என்றது, 'கண்டு' எனத் திரிந்தது. கூர் - ஒன்றனது சிறத்தலாகிய குறிப்பை யுணர்த்தும் உரிச்சொல்; "கூர்ப்பும் கழிவும் உள்ளதுசிறக்கும்" என்பது தொல்காப்பியம். உம் - உயர்வுசிறப்பு. தூளீ - வடசொல். 'வீரன்மேனெடுந், தூளிசெய்தேரினை' என்றும் பாடமுண்டு. (அரு)

வேறு.

[அருச்சுனன் துரோணனைநோக்கிச் சிலகூறத்தொடங்குதல்.]

உந்துதேர் முனியை யந்த வுதிட்டிர னிளவ னோக்கிச்
சிந்தையி லன்பு கூரச் சேவடி பணிந்து போற்றி
யந்தண ரரசே யுன்ற னருளினா லடவி நீங்கி
வந்தன மென்று சிற்சில் வாசக மியம்பு வானே,

(௬அ)

(இ - ள்.) தேர் உர்ந்த முனியை - (அவ்வாறு தன்மேல்) இரதத்தைச் செலுத்திவந்த துரோணாசாரியனை, அந்த உதிட்டிரன் இளவல் - தருமபுத்திரனது தம்பியாகிய அந்தஅருச்சுனன், நோக்கி - பார்த்து, சிந்தையில் அன்பு கூர - மனத்திற் குருபக்தி மிகாநிற்க, சே அடி பணிந்து - (அவ்வாசிரியனது) சிவந்த பாதங்களைக்குறித்து வணங்கி, போற்றி - துதித்து,'அந்தணர் அரசே - பிராமணச்சிரேஷ்டனே! (நாங்கள்) உன்தன் அருளினால்- உனது அநுக்கிரகத்தால், அடவி நீங்கி வந்தனம் - காட்டில்வாசஞ்செய்ய வேண்டியகாலங்களைக்கழித்து மீண்டுவந்தோம்,' என்று - என்றுசொல்லி, சில் சில் வாசகம் இயம்புவான் - (மற்றும்) சிலசிலவார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்தஇரண்டுகவிகளிற் கூறுகின்றார்.

உதிட்டிரன் - யுதிஷ்டிரன் என்ற வடசொல்லின் விகாரம்; போரிற் சலியாது உறுதியாய் நிற்பவ னென்பது பொருள். இளவல் - இளையவன்: இளமை யென்ற பண்புப்பெயர் ஈறுபோயிற்று; அல் - பெயர்விகுதி. இங்கு அருச்சுனனை 'உதிட்டிரனிளவல்' என்றது, தருமசிந்தையுடையவனென்றற்கு; போரிற் பின்வாங்காதவ னென்பதும இதில்தோன்றும். சிந்தா என்னும் வடமொழி, ஆவீறுஐயாயிற்று. செம்மை+அடி=சேவடி: செம்மையென்ற பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு முன்நின்றமகரமெய்வகரமெய்யாத்திரிந்தது; யகரமெய்யாத்திரிந்து சேயடியெனநிற்றலு முண்டு. சே+அடி=சேவடி என்றவிடத்து வகரமெய்யை "ஏமு னிவ்விருமையும், உயிர்வரி னுடம்படுமெய்யென்றாகும்" என்றபடி வந்த உடம்படுமெய் யென்றலுமொன்று.

'அந்தணர்' என்பது அம் தண் அர் எனப்பிரிந்து, அழகிய தண்மையை[குளிர்ச்சியான அருளை] யுடையவ ரென்று பொருள்படும்; இது, காரணக்கருதியபொழுது அருளையுடையபலரையுங்குறிக்கத்தக்கதாயினும்,இடுகுறியளவாய்ப் பிராமணர்க்கேவழங்குதலால், காரணவிடுகுறிப்பெயராம்: இதனை. வடநூலார் யோகரூட மென்பர். இது முனிவரையுணர்த்துதலை "அந்தண ரென்போ ரறவோர் மற் றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுகலான்" என்று திருவள்ளுவர் கூறியதனாலு முணர்க. இனி, அந்தணரென்பதை அந்த அணவு அர் என்றுபிரித்து வேதாந்தத்தையேபொருளென்றுமேற்கொண்டுபார்ப்பவரென்று காரணப்பொருள்கூறுதலு மொன்று; (பார்ப்பா ரென்னும் பெயர்க்குங் காரண மிதுவே.) அரசு - உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச்சொல்; இது - இங்கு, சிறந்தவனென்றமாத்திரமாய்நின்றது. அடவி - ஈயீறு இகரமான வடசொல். 'அடவிநீங்கி' என்றதில், உபலக்ஷணத்தால் அஜ்ஞாதவாசமும் அடங்கும்; பன்னிரண்டு வருஷமாகிய வனவாசத்தை யெடுத்துக்கூறி, ஒருவருஷமாகிய அஜ்ஞாதவாசத்தை உபலக்ஷணத்தாற்பெறவைத்தன னென்க. 'வந்தனம்' என்றது, உளப்பாட்டுத் தன்மைப்பன்மைமுற்று; மற்றைப்பாண்டவர்நால்வரையும் திரௌபதியையும் உட்படுத்துதலால். வாசகம் - தற்சமவடசொல்.

இதுமுதல் ஐம்பத்தொருகவிகள் பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்குகொண்டஅறுசீராசிரியவிருத்தங்கள். இவற்றில், மூன்று ஆறுஞ் சீர்கள் தேமாச்சீர்களாகவேநிற்கும். 'பெரும்பாலும்'என்றது, விளச்சீர்நிற்றற்குரியவிடத்துச் சிறுபான்மை அதனோடொத்த காய்ச்சீர் வருமாதலின்; அதனை மேல் அக - ஆஞ் செய்யுளின் மூன்றாமடியில் நான்காஞ்சீர் முதலிய சிலவிடத்திற் காண்க; பிறஇடங்கட்கும் இஃது ஒக்கும். (அசு)

[இதுவும், அடுத்தசெய்யுளும் - அருச்சுனனது பணிமொழி.]

யாதுமொன்றறியாவென்னை யிவனலாதிலையென்றிந்த
மேதினிமதிக்குமாறின்முதற்படைகள்யாவுந்

தீதறத்தந்தவுண்மைத்தெய்வநீயென்றாற்பஞ்ச
பாதகந்தன்னிலொன்றுன்பதயுகம்பிழைப்பதையா.

(இ - ள்.) ஐயா - சுவாமி! யாதும் ஒன்று அறியா என்னை - யாதொரு கல்வியையும் அறிந்திராத என்னை, இவன் அலாது இலை என்று இந்த மேதினி மதிக்கும் ஆறு - 'இவ்வருச்சுனனேயல்லாமல் (இவ்வுலகத்து வில் வின்திறம்முதலியவற்றில் வேறெவரும் வல்லவர்) இல்லை' என்று இந்தநில வுலகத்திலுள்ளவரெல்லாரும் நன்குமதித்துக்கொண்டாடும்படி, வில் முதல் படைகள் யாவும் - வில் முதலிய ஆயுதங்களின் தொழில்களெல்லாவற்றை யும், தீது அற தந்த - சிறிதுந்தீங்கில்லாமல் (எனக்கு) உபதேசித்தருளிய, உண்மை தெய்வம் - சத்தியமான தெய்வமாகின்றாய், நீ—, என்றால்—,உன் பத யுகம் பிழைப்பது - உனது உபயபாதங்களுக்குப் பிழைசெய்வது, பஞ்ச பாதகம்தன்னில் ஒன்று-ஐந்துமகாபாபங்களில ஒன்றாகுமன்றோ! (எ - று.)

ஒன்றுந்தெரியாதிருந்தவெனக்குத் தநுர்வேதமுழுவதையும் வெகுசிறப் பாகக்கற்பித்த மெய்க்கடவுள் நீ யென்றால் உனக்குமாறாகநடப்பது ஐம் பெரும்பாதகங்களிலொன்றாகிய குருத்துரோக மன்றோ வென்றனனென் பதாம். மேற் பதினான்காம்போர்ச்சருக்கத்தில் "ஆதியந்தணன்வந்ததுகண் டிகலானிலன் சினமின்றி நலம்பெற, நீதியன்றுனுடன்சமருந்திடல் நீபெ ருங்குரு நின்கழலென்றலை, மீதுகொண்டன னென்றுவணங்கவும்" என்று வீமன்விஷயமாகச்சொல்வது இங்குஒப்புநோக்கத்தக்கது. பஞ்ச மகாபாத கங்கள் - கொலை, பொய், களவு, கட்குடித்தல், குருத்துரோகம் என்பன; சிறிதுவேறுபடக் கூறுதலு முண்டு.

யாதும், உம் - இழிவுசிறப்பு; 'யாதுமொன்று' என்பது 'யாதொன்றும்' என உம்மை பிரித்துக்கூட்டப்பட்டது. இலை-தொகுத்தல். இவனலாதிலை யென்று இந்த மேதினி மதிக்குமாறு—"கலையினதகலமும் காட்சிக்கின்ப மும், சிலையினதகலமும் வீணைசெல்வமும, மலையினினகலியமார்பனல்ல தில், வுலகினிலிலையென வொருவனுயினான்," "பேருலகி, லுண்மைக்கிவ னே வலிக்கிவனே யுறவுக்கிவனே யுரைக்கிவனே.திண்மைக்கிவனேநெறிக் கிவனே தேசுக்கிவனே சிலைக்கிவனே, வண்மைக்கிவனே" என்றாற்போலக் கொள்க. 'இவ்வருச்சுனனல்லாது இவ்வுலகில் வில்முதலியபடைக்கலங்க ளின்திறங்களில்லை' என்று இவ்வுலகத்தார் மதிக்கும்படி அப்படைக்கலக் கல்விகளைப் பழுதறக்கற்பித்துக்கொடுத்த பிரதியக்ஷதெய்வமாகின்றாய் நீ யென்பது கருத்து. 'வின்முதற்படைகள்' என்றது -இலக்கணையாய், அவற் றின் கல்வியைக் குறித்தது. "எழுத்தறிவித்தவ னிறைவனாகும்" என்றபடி ஐம்பெருங்குரவரிலொருவனாகியஉபாத்தியாயனைத் தெய்வமாகக்கொள்ள வேண்டுதலாலும், கடவுளே குருவடிவமாய் அறிவுபுகட்டுகின்றன னென்ப வாதலாலும், 'உண்மைத்தெய்வம் நீ' என்றான். தனது பணிவும் குருபக்தி யும் தோன்ற, 'உனக்குப்பிழைப்பது' என்னாது 'உன்பதயுகம்பிழைப்பது' என்றனன்.

பூர்வத்தில் திருமாலாற் கொல்லப்பட்ட மதுகைடபரென்னும் அசுரர் களது மேதஸ்ஸினால் [உடற்கொழுப்பினால்] நனைந்தமைபற்றி, பூமிக்கு 'மேதினீ' என்று பெயர்; அவ்வடசொல், மேதினி யென விகாரப்பட்டது: அது-இங்கு இடவாகுபெயராய்,அதிலுள்ளாரைக்குறித்தது. "உலகமென்ப துயர்ந்தோர்மாட்டே" என்பதுகொண்டு, இங்கு அதன்பரியாயநாமமாகிய 'மேதினி'என்பதற்கு உயர்ந்தவரென்று கொள்ளுதல் ஏற்கும்; நன்குமதித் தற்குச் சிறக்கின்றவர் அவரே யாதலால். தீதறத் தருதல் -ஐயந்திரிபுகளில் லாதபடி மெய்ப்பொருள்பயிற்றுதல். தெய்வம் - தைவ மென்ற வடசொல் லின் விகாரம். பஞ்சபாதகம், பதயுகம் - வடமொழித்தொடர்கள். 'ஆர்ய' என்ற வடசொல், 'ஐய' என விகாரப்பட்டது. (அஎ)

[அருச்சுனன் 'உங்களுடன் போர்செய்யேன்' என்றல்.]

மன்னொடுசூழநின்றமாசுணமுயர்த்தகோவை
மின்னொடுமுருமேறென்னவெகுண்டமர்புரிவதல்லா
னின்னொடுங்கிருபனோடுநின்மகனோடுமுந்தை
தன்னொடும்புரியேன்வெம்போர்தக்கதோசரதம்பாவம்.

(இ - ள்.) மன் ஒடு சூழ நின்ற - (பல) அரசர்கள் (தன்னை) ஒருங்கு சூழ (நடுவில்) நிற்கின்ற, மாசுணம் உயர்த்த கோவை - பாம்புக்கொடியை உயரநாட்டியுள்ள துரியோதனராசனை, மின்னொடும் உரும ஏறு என்ன வெகுண்டு - மின்னலுடனே தோன்றுகின்ற பேரிடிபோலக் கோபித்து, அமர் புரிவது அல்லால் - (அவனுடன்) போர்செய்வதல்லாமல்,—நின்னொடும் - உன்னுடனும், கிருபனோடும் - கிருபாசாரியனுடனும், நின் மகனோடும் - உனது குமாரனாகிய அசுவத்தாமனுடனும், முந்தைதன்னொடும்-பாட்டனாகிய பீஷ்மனுடனும், வெம் போர் புரியேன் - கொடிய யுத்தத்தைச் செய்யமாட்டேன்; தக்கதோ - (உங்களுடன் யான் போர்செய்வது) தகுதியுடையதாகுமோ? [ஆகாது]: சரதம் பாவம் - (அது) நிச்சயமாகப் பாவமேயாகும்; (எ - று.)

துரோணனும் கிருபனும் ஆசிரியர்களாதலாலும், அசுவத்தாமா ஆசாரியபுத்திரனாதலாலும், பீஷ்மன் பிதாமகனாதலாலும், இவர்களோடு போர்புரியேனென்றான். குருவைப்போலவே குருபுத்திரனையும் நன்குமதிக்கவேண்டுமென்பது நூற்கொள்கையாதலுணர்க.

கிருபன் - கௌதமமுனிவனது பௌத்திரன்; சரத்வான் என்ற முனிவனது குமாரன்; துரோணன் மனைவியான கிருபியின் உடன்பிறந்தவன்: ஆதலால், துரோணனுக்கு மைத்துனன்; கௌரவ பாண்டவரது முதல்வில்லாசிரியன்: துரோணன் ஆசிரியனாதற்குமுன்பு பாண்டவ துரியோதனாதியர்க்கு வில்வித்தைகற்பித்துவந்தனனிவனென உணர்க. ஏழுசிரஞ்சீவிகளிலொருவனிவன். நாணற்காட்டிற் பிறந்திருந்த இவனையும் இவன்தங்கையையும் அங்கு வேட்டையாடவந்த சந்தநுமகாராஜன் பார்த்துக் கிருபையினாலெடுத்து வளர்த்ததனால், இவர்கட்கு முறையே கிருபனென்றும் கிருபியென்றும் பெயர்களாயின. பிறகு ஒருகால் அந்தச் சரத்வானென்ற முனிவன் அத்தினாபுரிக்கு வந்து தன்மகனை இக்கிருபனுக்கு வில்வித்தைமுழுவதையுங் கற்பித்துக்கொடுத்துச் சென்றனனாதலாற் கிருபன் சிறந்த வில்லாசிரியனாய் அங்குவிளங்கினன். கௌதமகுலத்தார் ஆதியில் க்ஷத்திரிய சம்பந்தமுடையராயினமைபற்றி க்ஷத்திரியத்தன்மையோடுகூடியபிராமணர்களாயிருந்தார்களாதலின், வில்முதலிய படைக்கலங்கட்கு உரியராயினர். "இடையிரு வகையோ ரல்லது நாடிற், படைவகை பெறாஅ ரென்மனார்புலவர்" என்ற தொல்காப்பியத்து மரபியற் சூத்திரத்து 'நாடின்' என்பதனால், சிறுபான்மை அந்தணரும் படைக்குஉரிய ரென்பது கொண்டவாறு காண்க; அச்சூத்திரவுரையில் 'அவர் இயமதங்கியாரும் துரோணனும் கிருபனும் முதலாயினா ரெனக் கொள்க' என்றமை யுணர்க.

முதலடியில், 'ஒடு' என்ற இடைச்சொல் - 'உடன்' என்றதுபோல, ஒருங்குஎன்னும்பொருளதாய்நின்றது. இனி, 'ஒடு' என்ற மூன்றனுருபு கருத்தாப்பொருளில்வந்ததெனக் கொண்டு, மன்னராற்சூழப்பட்டுநின்றவென்று உரைப்பாரு முளர். தனது அம்புகட்கு அஞ்சித் துரியோதனன் பற்பலஅரசர்கட்குநடுவில் நின்றமை தோன்ற, 'மன்னொடுசூழநின்ற மாசுணமுயர்த்தகோவை' என்றான். இனி, மாசுணமுயர்த்தகோவையும் அவனைச் சூழநின்ற மன்னர்களையும் வெகுண்டு அமர்புரிவதல்லாமலென்றும் உரைக்கலாம். 'மாசுணம்' என்ற பெரும்பாம்பின்பெயர். அதன்வடிவையெழு

திய துவசத்துக்கு இங்கு ஆகுபெயராம். உருமேறு—'வேலேறு,' 'வாளேறு' என்பனபோலக் கொள்க; பெரியதையும் சிறந்ததையும் 'ஏறு' என்றல், மரபு. கோவை வெகுண்டு எனஇயையும். 'வெகுண்டுயிர்கவர்வதல்லால்' என்ற பாடம் சிறவாமை, கீழ் ௭௧, ௭௨ - ஆஞ் செய்யுள்களினால் விளங்கும். முந்தை - மூதாதை. (௮௮)

[துரோணன் 'போர்செய்யவேண்டும்' என்றல்.]

அம்முனிதன்னோடிவ்வாறருச்சுனன்புகலவல்விற்
கைம்முனிவனுஞ்செஞ்சோற்றுக்கடன்கழித்திடுதல்வேண்டுந்
தெம்முனைமதியாவீராதேவர்தம்பகையைவென்ற
வெம்முனைகாணுமாறுவில்வளைத்திடுகவென்றான்.

(இ - ள்.) இ ஆறு - இவ்விதமாக, அருச்சுனன்—, அ முனிதன்னோடு புகல - அந்தத் துரோணாசாரியனுடனே சொல்ல,—வல் வில் கை முனிவனும் - வலிய வில்லை யேந்திய கையையுடைய அத்துரோணனும்,—(அருச்சுனனை நோக்கி), 'தெவ் முனை மதியா வீரா - பகைவர்களுடைய போரைச் சிறிதும்லக்ஷியஞ்செய்யாத மகாவீரனே! செம் சோறு கடன் கழித்திடுதல் வேண்டும் - (துரியோதனனுக்கு நாங்கள்) செவ்வியசோற்றுக்கடனைக்கழித்திடவேண்டும்; (ஆதலால்), தேவர்தம் பகையை வென்ற வெம் முனை காணும் ஆறு - (இந்திரன்முதலிய)தேவர்கட்குப் பகைவர்களாகிய நிவாதகவச காலகேய ரென்னும் அசுரர்களைச் சயித்த (உனது)உக்கிரமான யுத்தசாமர்த்தியத்தை (நாங்கள்) பார்க்கும்படி, வில் வளைத்திடுக - வில்லைவளைத்து (எங்களுடன்) போர்செய்வாயாக,' என்றான் - என்று கட்டளையிட்டான்.

'செஞ்சோற்றுக்கடன்கழித்திடுதல்வேண்டும்' என்றது, துரியோதனன் எங்களுக்குச் செவ்வையாய் அளித்துவருகின்ற சோற்றுக்குப் பிரதியுபகாரமாக அவனுக்குஉதவியாய் உங்களுக்குமாறாக நாங்கள் போர்செய்யவேண்டுவது கடமை யென்றபடி; மேற் கிருட்டிணன்தூது சருக்கத்தில் "திடம்படுத்திட வேலிராசராசனுக்குச் செருமுனைசசென்று செஞ்சோற்றுக், கடன் கழிப்பதுவே யெனக்கினிப் புகழுங் கருமமுந் தருமமு மென்றான்" என்றும், பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "ஆனின்றீம்பால், வெஞ்சோற்றோடினிதருந்தி யமுதருந்தும் விண்ணவர்போ லிந்நெடுநாள் விழைந்து வாழ்ந்தேன், செஞ்சோற்றுக்கடனின்றேகழியேனாகில் திண்டோள்கள்வளர்த்ததனாற்செயல்வேறுண்டோ" என்றும் வருதல் காண்க. பகை - பகைவர்க்குப் பண்பாகுபெயர். தேவசத்ருக்களென்பது, அசுரர்க்கு ஒருபெயர். 'காணுமாறுன்வில்வளைத்திடுகவென்றான்' என்று பாடமோதுவாரு முளர். 'தெவ்முனை மதியா'என்பதற்கு - பகைவரைப் போரிற் பொருள்செய்யாத எனவுமாம். மதியா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். 'வேண்டும்'என்பது, ஒருவகை வியங்கோள்; இங்கு, இன்றியமையாதென்னும்பொருளது. (௮௯)

[துரோணனும் அருச்சுனனும் தம்மிற் பொருதல்.]

குருவுமக்குருவைத்தப்பாக்குருகுலக்கோவுந்தங்க
ளருவரைத்தோளிணையறைதரப்பிறைவில்வாங்கிக்
கருவுயிர்த்தெழுந்தகாலமழைமுகில்கால்கொண்டென்ன
வொருவருக்கொருவர்வாளியோரொருகோடியெய்தார்.

(இ - ள்.) (பின்பு),—குருவும் - துரோணாசாரியனும், அ குருவை தப்பா - அந்தஆசிரியனதுவார்த்தையைத் தவறாத, குரு குலம் கோவும் - குருவென்னுஞ் சந்திரகுலத்தரசனது வம்சத்துத் தோன்றிய சிறந்தஅரசனாகிய அருச்சுனனும்,—வில் பிறை வாங்கி - (தம்தமது) வில்லைப் பிறைச்சந்திரனைப்போல வளைத்து,—தங்கள் அரு வரை தோளில் நாணி அறைதர - தம்

தமது அழித்தற்கரியமலைகள்போலுந்தோள்களிலேவில்லின் நாண்படும்படி [தோளளவும்நாணியையிழுத்து],—கருஉயிர்த்துஎழுந்த காலம் மழைமுகில் கால்கொண்டு என்ன - பெய்துகொண்டு வானத்திலெழுந்த கார்காலத்து நீர்கொண்ட(இரண்டு)காளமேகங்கள் மழைக்கால்களைக்கொண்டாற்போல, வாளி ஓர் ஒரு கோடி ஒருவருக்கு ஒருவர் எய்தார் - ஒவ்வொருகோடிஅம்புகளைத் தம்மில் ஒருவரைக்குறித்து ஒருவர் தொடுத்தார்கள்; (எ - று.)

துரோணனும் அருச்சுனனும் வில்லைவளைத்து நாணியையிழுத்து மழைபெய்தாற்போலக் கோடிகோடியம்புகளை ஒருவரைக்குறித்து ஒருவர் பிரயோகித்தன ரென்பதாம். உவமையணி.

குரு என்னும் வடசொல்லுக்கு - (அஜ்ஞானமாகிய) இருளைப் போக்குபவ னென்பது காரணப்பொருள்; கு - இருள், ரு-போக்குபவன். முதலில் 'போர்புரியேன்' என்றுசொன்ன அருச்சுனன் பிறகு துரோணன் 'வில் வளைத்திடுக' என்றவளவிலே மறுது அவ்வாசிரியனது கட்டளைக்குஇணங்கிப் போர்தொடங்கியமைபற்றி, 'குருவைத்தப்பாக்குருகுலக்கோ' என்றார். அறைதர, தா - துணைவினை. கருவுயிர்த்தல் - பிரஸவித்தல்; இங்கு, வயிறு நிரம்பக்கொண்ட நீரை மழையாப்பொழிதல். கால்கொள்ளுதல்-மழைக்காலிறங்குதல். கரு - கர்ப்பமென்ற வடசொல்லின் விகாரம். 'குருவைத்தப்பாக் குருகுலக்கோ' என்றதொடரில்'குரு'என்ற ஒருசொல்லே வெவ்வேறு பொருளில்வந்தது, சொற்பின்வருநிலையணியாம். (௬0)

[இருவரும் சிறிதுபொழுது சமமாகப்பொருதல்.]

அதிரதர்தம்மையெண்ணிலணிவிரன்முடக்கவொட்டா
முதிர்சிலைமுனியும்வீரமுனிவிலாமுகனும்விட்ட
கதிர்முனைப்பவனவேகக்கடுங்கொடும்பகழியாவு
மெதிரெதிர்கோத்ததல்லாற்பட்டிலவிருவர்மேலும்.

(இ - ள்.) அதிரதர்தம்மை எண்ணில் - அதிரதர்களை (அறிவுடையார்) எண்ணுமிடத்து, அணி விரல் முடக்க ஒட்டா - (தன்னை எண்ணி மடக்கிய கடைவிரலுக்குப் பின் தன்னோடொக்க வேறொருவரையெண்ணிப்) பவித்திரவிரலைமடக்கக்கூடாத [ஒப்பற்ற என்றபடி], முதிர் சிலை முனியும்-மிகப்பயின்ற வில்வித்தையையுடைய துரோணாசாரியனும், வீரம் முனிவு இலா முகனும் - வீரத்தன்மையினாலுண்டாகின்ற கோபக்குறி யில்லாத முகத்தையுடையவனான அருச்சுனனும், விட்ட-(தம்மில் ஒருவரைக்குறித்து ஒருவர்) தொடுத்த, கதிர் முனை - கூரிய நுனியையும், பவன வேகம்-காற்றுப்போல விரைந்துசெல்கின்ற வேகத்தையுமுடைய, கடுங் கொடும் பகழி யாவும் - மிகக்கொடிய அம்புக ளெல்லாம், எதிர் எதிர் கோத்தது அல்லால்-(தம்மில் ஒன்றற்குஒன்று) நேருக்குநேராய்மோதி இடையில்தடைப்பட்ட தல்லாமல், இருவர்மேலும் பட்டில - (இலக்காகஎய்யப்பட்ட) இரண்டுவீரர்களில் ஒருவருடம்பிலும் பட்டுத்தைத்தனவில்லை; (எ - று.)

குருவாகியதுரோணன்போலவே அவனிடத்துப்படைக்கலம்பயின்ற சீடரிற்சிறந்தவனான அருச்சுனனும் வில்வித்தையில்மிக்கதிறமுடையவனாதலால், இவ்விருவரும்எதிர்த்துத் தமதுபலவகைத்திறமைகளையுங்காட்டி ஒருவர்மீதுஒருவர்எய்த அம்புகளெல்லாம் அவரவர்மாறாகஎய்தஎதிரம்புகளினால் தடுக்கப்பட்டு இடையில் ஒன்றோடொன்றுமுட்டிக் கீழ்விழுந்திட்டனவேயன்றி ஒன்றேனும் இவர்களுடம்பிற்படவில்லை யென்பதாம். தம்மேல் விரைந்துவரும்அம்புகளைக் குறிதவறுமல் எதிரம்பு கோத்து மறத்திடுதலில் இவ்விருவர்க்கும் சமமாகவுள்ள திறத்தை யெடுத்துக்கூறியது, இது. மேற் பதினான்காம்போர்ச்சருக்கத்தில், "இட்டி யாசிரியனுங் கிரீடியும் பொரப் பொரப், பட்டவில்லை யிருவர்மேலும் விட்டவிட்ட பகழியே", "ஒரிரண்டு

தனுவும் வாளியோரோர்கோடி யுதையவே, காரிரண் டெதிர்ந்து தம்மின் மலைவுறுங்கணக்கெனப், போரிரண்டுவீரருக்குமொத்துநின்றபொழுதிலே" என்பது, இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் எனத் தேர்வீரர் நால் வகைப்படுவர். அதிரதர் - முழுத்தேரரசர்; அவராவார் - ஒருதேரில்ஏறி நின்று தம்தேர்குதிரைசாரதிகட்குஅழிவுவாராமற்காத்துப் பலவாயிரந்தேர் வீரரோடெதிர்த்து வேறுதுணையில்லாமலே போர்செய்துவெல்லும் வல்ல மையுடையார். அவரிற்சிறிதுதாழ்ந்தவர், மகாரதர்; இவர், பதினோராயிரந் தேர்வீரரோடு பொருபவர். சமரதர் - ஒருதேர்வீரனோடு தாமும்ஒருவராய் எதிர்க்கவல்லவர். அர்த்தரதர் - அவ்வாறு எதிர்க்குமளவில் தம்தேர்முதலிய வற்றை இழந்துபோம்படியானவர்; இவர்இருவர்சேர்ந்தால், ஒருசமரத னுக்கு ஒப்பாவர்.

கடைவிரல், பவித்திரவிரல், நடுவிரல், சுட்டுவிரல், பெருவிரல் என்று முறையேகூறப்படுகிற கைவிரலைந்தனுட் கடைவிரலை முதலாகவைத்துமட க்கி ஒன்றுமுதலாகஎண்ணித்தொகையிடுதல், மரபு. உலகத்திலுள்ள சிறந்த அதிரதவீரர்களை யெண்ணித்தொகையிடக்கருதித் துரோணசாரியனொருவ னென்று முதலிற் கடைவிரலொன்றைமடக்கியெண்ணியபின்பு இவனோ டொப்பவைத்துஎண்ணுதற்குஏற்றசிறந்தஅதிரதவீரர்வேறொருவரில்லாமை யால் இரண்டாவதாகியபவித்திரவிரலைமடக்கியெண்ணக்கூடாத ஒப்பற்ற சிறப்புள்ள தநுர்வேதப்பயிற்சிமிகுதியையுடைய துரோணனென்பது,'அதி ரதர்தம்மையெண்ணி லணிவிரல்முடக்கவொட்டா முதிர்சிலைமுனி' என்ற தன் கருத்து. கீழ் இராயசூயச்சருக்கத்தில், "மண்மிசைநால்வீரனிற்கு மணிமகுடத்தணியாங்கு" என்றதும், மேற் பதினேழாம்போர்ச்சருக்கத் தில் "மற்றையணிவிரன்முடக்கவிணையிலாத மத்திரபூபன்" என்பதும், இங்குஒப்புநோக்கத்தக்கன. "முன்பு கவிகளை யெண்ணுகிற சந்தர்ப்பத்தி லே கடைவிரல் காளிதாஸனையேற்றுக்கொண்டது; இப்பொழுதும் அவனு க்குச்சமானனான கவி இல்லாமையாலே, அநாமிகையென்கிற இரண்டா வதுவிரல் பொருளுள்ளதாயிற்று [தான் ஏற்கும்பெயர்ப்பொருளொன்றை யும்பெற்றிலது]" என்று வடநூலிற்கூறிய வருணனையும் இங்குக்கருதத்தக் கது. இத்தகையசிறப்பு இவனிடமிருத்தல்பற்றி, முடக்கவொட்டாமையை இவன்மேலேற்றிக் கூறினர். அணியப்படுவதென்னுங்காரணத்தால் எல்லா ஆபரணங்களையுங்குறிக்கின்ற 'அணி'என்ற காரணப்பொதுப்பெயர், இங் குச் சிறப்பாய்ப் பவித்திரமென்றஅணிகலத்தைக்குறித்தது; பொதுப்பெயர் சிறப்புப்பொருளையும் சிறப்புப்பெயர் பொதுப்பொருளையும் சிலஇடங்களி லுணர்த்துதல், பாஷைநடை: ஆகவே, அணிவிரல், பவித்திரவிரல் என்பன பரியாயநாமமாயின. இனி, ஆராயுமிடத்து அதிரதரெவரையுந் தமக்குமுன் விரல்மடக்கிஇிற்பிடிக்கவொட்டாத வில்லின்தேர்ச்சியையுடைய முனிவ னென்று உரைத்தல் சிறப்பன்று.

முடக்க-முடங்க வென்பதன் பிறவினை; பகுதியினிடையிலுள்ள மெலி வலியாதல், பிறவினைக்குறி. முதிர்தல் - தேறுதல். இங்கு 'சிலை' என்றது - வில்முதலியஆயுதங்களிற்பயிலும்வகைகளையும் பகைவெல்லுதற்குரிய மந்தி ராதிப்பிரயோகங்களையும் அறிவிக்கின்ற தநுர்வேதத்தைக் குறித்தது; இலக் கணை. அருச்சுனன் தனதுஆசிரியனாகிய துரோணன்மீது தன்மனத்துப் பகைமையில்லாதிருக்கையில் அக்குருவின்கட்டளைப்படியே விளையாட்டா கப்போர்செய்கின்றமை தோன்ற, 'வீரமுனிவிலாமுகன்' என்றார். மனக் குறிப்பறிதற்குக் கருவி முகமாதலால், 'வீராவேசமில்லாதமுகமுடையவன்' என்றது - "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம், கடுத்தது காட்டும்

முகம்'' என்றபடி, மனத்திற்சினமில்லாதவ னென்றதைக் காட்டும். இனி, இதற்கு - வீரத்தன்மை வெறுப்பில்லாததங்கிய முகத்தையுடையவ னென்று பொருள்கொள்ளுதல் சிறவாமை யுணர்க. 'முனியும் வீரமுனிவிலா முகனும்' என்றவிடத்து, சொல்நிலையால், முனிபவனும் முனிதலில்லாத முகத்தையுடையவனு மென ஒருபொருள் தோன்றுதலால், தொடைமுரண் காண்க. இங்கு 'முகன்' என்றது - முகமென்ற அஃறிணைப்பெயரின்மேற் பிறந்த உயர்திணையாண்பாற்பெயர். கதிர் - ஒளியுமாம். பவந வேகம் - வடமொழித்தொடர். கடுமை, கொடுமை - ஒருபொருட்பன்மொழி; மிகுதியாகிய குறிப்பை யுணர்த்துங் கடியென்னும்உரிச்சொல் கடுவென ஈறுதிரிந்த தென்றலு மொன்று; ''கடுங்கால்' என்னுமிடத்துப் போல. கோத்தது - இறந்தகாலத்தொழிற்பெயர்; ஆகவே, 'பகழியாவும் கோத்ததல்லாற் பட்டில' என்ற முடிபு வழாநிலையேயாம். இனி, 'கோத்தத'என்பதை ஒன்றன்பால்வினைமுற்றெனக் கொண்டால், இம்முடிபைப் பன்மையில்ஒருமை வந்தவழுவமைதி யெனவேண்டும்; தனித்தனிகோத்ததென்க. 'கோத்தவல்லால்' என்று பாடமோதுவாரு முளர். பட்டில - எதிர்மறைப் பலவின்பாலிறந்தகாலமுற்று. 'இருவாமேலும்', உம்மை - முற்றுப்பொருளது. (கக)

[போர்த்திறத்தில் அருச்சுனன் சிறத்தலும், அதுகண்டு துரோணன் வியத்தலும்.]

வண்டுதான்முரலுங்கஞ்சமாலையான்பயிற்றுவித்துப்
பண்டுதான்கண்டகூற்றிற்பதின்மடங்குயர்ந்தபண்பால்
மிண்டுதானவரைவென்றவிறலுடைவிசயன்வின்மை
கண்டுதானவன்றனோடுகற்பதற்குன்னினானே.

(இ - ள்.) வண்டு முரலும் கஞ்சம் மாலையான் - வண்டுகள்(மொய்த்து) ரீங்காரஞ்செய்கின்ற தாமரைமலர்மாலையையுடையவனான துரோணன்,— மிண்டு தானவரை வென்ற விறல் உடை விசயன் வின்மை - நெருங்கிய (நிவாதகவசர்முதலிய)அசுரர்களை சயித்த வீரத்தன்மையையுடைய அருச்சுனனது விற்றொழில்வல்லமை,தான் பண்டு பயிற்றுவித்து கண்ட கூற்றின் பதின்மடங்கு உயர்ந்த பண்பால் - தான் முன்பு (அவனுக்கு ஆசிரியனாயிருந்து) கற்பித்துக்கொடுத்துப் பரீக்ஷித்துப்பார்த்திருந்தவளவினும் பத்துப் பங்குஅதிகமாக மிக்கிருந்ததன்மையினால்,கண்டு - அதுகண்டு,தான் அவன் தனோடு கற்பதற்கு உன்னினான்-தான் அவ்வருச்சுனனிடத்து (வில்வித்தை) கற்றுக்கொள்ளுமாறு கருதினான்; (எ - று.)

துரோணன், முன்பு தான் அருச்சுனனுக்குக் கற்பித்துவைத்திருந்ததைக்காட்டிலும் பலமடங்குஅதிகமாக அவன் இப்பொழுது போர்செய்கின்ற திறத்தைப் பார்த்து, தான் அந்தஅருச்சுனனிடத்தில் வில்வித்தை கற்றுக்கொள்ளவேண்டு மென்று கருதின னென்க.

"ஆசா னுரைத்த தமைவரக் கொளினுங், காற்கூறல்லது பற்றலனாகும்'' என்றவர்தாமே "அவ்வினையாளரொடு பயில்வகை யொருகால், செவ்விதி னுரைப்ப வவ்விருகாலும், மையறு புலமை மாண்புடைத்தாகும்'' என்று புலமைத்திறம்நிரம்பும்வகைகூறின ராதலின்,அவ்வகைகளின் மிகுதியாற் சிறுபான்மை ஆசிரியனிலும் மாணாக்கன் கல்வியிஞ்சுத லுண்டு. துரோணனிடம்வில்வித்தைகற்றுத்தேர்ந்தஅருச்சுனன் பிறகு அக்கினிபகவானிடத்துக் காண்டீவவில்லும் அக்ஷயதூணீரமும்பெற்றும், பின்னர் வனவாசகாலத்துப் பரமசிவனிடத்துப் பாசுபதாஸ்திரமும்வில் அம்பறாத்தூணி முதலியனவும் பெற்றும், அப்பால் இந்திரனாலழைக்கப்பட்டுத் தேவலோகத்துக்குச்சென்றபொழுது இந்திரனிடத்துப் பல அஸ்திரசஸ்திரங்களைப் பெற்றும் சிறந்தன னென வுணர்க.

மேருவைக் கோடி யோடித்த கதை:—முன்னொருகாலத்தில் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார் பலசாலி யென்று விவாதமுண்டாக, அதனைப் பரீக்ஷித்தறிதற்பொருட்டு வாயுதேவன் மேருமலையின் சிகரத்தைப் பெயர்த்துத் தள்ளுவதென்றும் ஆதிசேஷன் அதுபெயரவொட்டாமற் காத்துக்கொள்வதென்றும் கோட்பாடுண்டாகி, அங்ஙனமே இருவரும் தேவர்முதலியோரது முன்னிலையில் தம்தம் வலிமையைக் காட்டத் தொடங்கிய பொழுது, ஆதிசேஷன் தனது பெரிய உடம்பினால் மேருவை வளைந்து தனது ஆயிரந்தலைகளாலும் மேருமலையின் ஆயிரஞ்சிகரங்களையும் கவிந்துகொண்டு பெயரவொட்டாமல் வெகுநேரம் காக்க, பின்பு வாயுதேவன் தன் வலிமையால் அம்மலைச்சிகரங்களில் மூன்றைப் பெயர்த்துக்கொண்டுபோய்த் தென்திசையில் தள்ளிவிட்டன னென்பதாம்.

பரிவு இல் நின்னை என்றுஎடுத்து, (நல்லோர்பக்கல்) அன்பில்லாத உன்னை யென்றலுமாம்; ஸாதுக்களை நலியவனான துரியோதனனுக்குக் கொடியாய் அமைந்தமைபற்றியும் இங்ஙனங் கூறத்தகும். 'பரிவு' என்ற ஒருசொல்தானே துன்பத்தையும் அன்பையும் உணர்த்துதலை, "பரிவென்ப துன்ப மின்பம் பகருமன்பிற்கு மப்பேர்" என்ற சூடாமணிநிகண்டினாலும் அறிக. அரவை - அரா என்ற குறியதன்கீழ்ஆகாரம் குறுகி ஐயுருபையேற்றது. அவநிபன் - வடமொழிப்பெயர்: அரசன்; பூமியைக் காப்பவன். பதாகை - பெருங்கொடி; ஆவீறு ஐயான வடசொல். வெல்வன் - 'அன்'விகுதி தன்மைக்கு வந்தது. மற்று - அசை.

அருச்சுனன்தேர்க்கொடியிலுள்ள அநுமன் துரியோதனன்தேர்க்கொடியிலெழுதப்பட்டுள்ளபாம்பைநோக்கி 'என்தந்தை உன்தலைவனை முன்னமே வென்றுள்ளான்: அவ்வாறே இப்பொழுது யான் உன்னைவெல்வேன்' என்று கறுக்கொண்டு வீரவாதங்கூறிப் போர்க்குநெருங்குகின்றவாறு போல நெருங்கின னென்றார்; தற்குறிப்பேற்றவணி. (௬௫)

[அருச்சுனன் போருது பலவீரரை யழித்தல்.]

வட்டமாகவில்வளைத்தெதிர்மண்டலநிலையாய்த்
தொட்டவாளியானடிமுதன்முடியுறத்துணிப்புண்
டிட்டமாமணிக்கவசமும்பிளந்தெதிருள்ளார்
பட்டொழிந்தனரொழிந்தவர்யாவர்புண்படாதார்.

(இ - ள்.) (அப்பொழுது அருச்சுனன்), எதிர் - (பகைவர்க்கு) எதிரில், மண்டலம் நிலை ஆய் - (விற்றொடுத்து அம்பினையெய்வார்க்குஉரிய)மண்டலமென்னும் நிலையில் நின்று, வட்டம் ஆக - வட்டவடிவாக, வில் வளைத்து - வில்லை வளைத்து, தொட்ட - பிரயோகித்த, வாளியால் - அம்புகளினால், அடிமுதல் முடி உற - கால்முதல் தலைவரையிலும், துணிப்புண்டு - அறுக்கப்பட்டவர்களாகியும்,—இட்ட மா மணி கவசமும் - (உடம்பின்மேற் பாதுகாப்பாக) அணிந்த பெரிய ரத்தினங்களிழைத்துச்செய்யப்பட்ட கவசமும், பிளந்து - பிளக்கப்பட்டவர்களாகியும்,—எதிர் உள்ளார் - எதிரிலுள்ள பகைவீரர்கள், பட்டு ஒழிந்தனர் - இறந்துபோனார்கள்; ஒழிந்தவர் - (அவ்வாறு) இறவாமல் நின்றவர்களுள், புண் படாதார் யாவர் - விரணமடையாதவர் எவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

அருச்சுனனெய்தஅம்புகளினால், பகைவீரர்களிற் பெரும்பாலார் உடலறுப்புண்டு துணிபடக் கவசம்பிளவுபட இறந்தொழிந்தனர்; இறவாமல் எஞ்சிநின்ற வீரர்களிற் புண்படாதவ ரெவருமில்லை யென்பதாம்.

இரண்டுகால்களையும் மண்டலாகாரமாக [illegible] நிற்கின்ற நிலை, மண்டலநிலை யெனப்படும்; "இருகால் மண்டலித் [illegible]

டலகிலே" என்பது பிங்கலந்தை. பிளந்து - செயப்பாட்டுவினைப்பொரு ளது: செய்வினையாகவுங் கொள்ளலாம்; இச்சொல் - தன்வினை பிறவினை களுக்கும் செயப்படுபொருள்குன்றியவினை குன்றாவினைகளுக்கும் பொது வென்பதை யுணர்க. எதிருள்ளார் அடிமுதல்முடியுறத்துணிப்புண்டு கவ சம்பிளந்து பட்டொழிந்தனர் - சினைவினை, அச்சினைக்குரிய முதலின் வினை யோடு முடிந்தது; "சினைவினை சினையொடும் முதலொடுஞ் செறியும்" என் றார் நன்னூலார்: இனி, 'பிளந்து' என்றதைப் பிளக்க வெனச்செயவெனெச்ச மாகத் திரித்தலுமாம். கவசம்பிளந்தபின் உடம்பில்அம்புருவுதல் எளிதாத லால், பட்டொழிதலுக்குக் கவசம்பிளத்தல் காரணமாம். 'துணிப்புண்டு' என்றதில், உண் என்ற துணைவினை - செயப்பாட்டுவினைப்பொருளை யுணர் த்தும். 'வாளியான்' என்றதை 'பிளந்து' என்பதனோடுங் கூட்டுக. தொட்ட, தொடு - பகுதி. 'எதிர்ந்துள்ளார்' என்றும பாடமுண்டு. 'பட்டொழிந்தனர்' என்றதில், ஒழி என்ற துணைவினை - துணிவுணர்த்திற்று. (௬௬)

[அருச்சுனன் துரியோதனனது குதிரைபாகர்களை யழித்து அவனைப் பரிகசித்தல்.]

வேகவற்றியநதியனவிதநடைபபுரவி
பாகவற்றினைத்தலைபறமலைந்துபாழ்படுத்தி
மாகவற்றினிற்பொய்த்தசூதாடியவஞ்ச
நாகவற்றியபுன்மொழிநிருபனைநகைத்தான்.

(இ - ள்.) (அருச்சுனன்),—வற்றிய நதி அன வேகம் - நீர்ப்பெருக்குக் குறைந்த ஆறு (தணிந்து ஓடுவது) போன்ற [மந்தமான] வேகமுள்ள, நடை விதம் - கதியின் தன்மையை யுடைய, புரவி - குதிரைகளும், பாகு - சாரதி யும், அவற்றினை - ஆகிய அவைகளை, தலை அற - தலை துணிபடும்படி, மலைந்து - போர்செய்து, பாழ் படுத்தி - அழியச்செய்து,—மா கவற்றினில் - பெரிய சூதாடுகருவியால், பொய்த்த சூது ஆடிய - பொய்க்குஇடமான சூதாட்டத்தை (தன் மாமனைக்கொண்டு) ஆடி(த் தருமபுத்திரனை) வென்ற, வஞ்சம் - வஞ்சனை யையுடையவனும், நா கவற்றிய புல் மொழி - நாவினால் (அவர்கட்கு) மன வருத்தமுண்டாம்படிகூறிய இழிசொற்களையுடையவனுமான, நிருபனை - அத்துரியோதனராசனைநோக்கி, நகைத்தான் - சிரித்தான்; (எ - று.)

வற்றுதல் - இங்கு, நீர்வடிதல். அருச்சுனன் செய்யும் போர்த்திறத்து க்கு அஞ்சித் துரியோதனன்குதிரைகள் வலிகுறைந்து நடைதளர்ந்ததனால், அவற்றுக்கு வற்றிய நதி உவமை கூறப்பட்டது. இனி, முதலடிக்கு-(தன்னி டத்து நடப்பவராது அடி) சுடும்படி நீர்வற்றியநதியைப் போலப் பொலிவிழ ந்ததையும் (இயல்பிற்) பலவகைநடைகளையுடையவையுமான குதிரைக ளெ னினும் அமையும்; சூரியகிரணத்தால் நீர்முழுவதும்வற்றிப்போன நதி பொ லிவழிந்து பலர்க்கும் பயன்படாதவாறுபோல அருச்சுனனம்புகளால் வலி மைமுழுவதும்ஒடுங்கிப் பொலிவிழந்து பயன்படாதனவான குதிரைக ளெ ன்க. வேக - (வெயில்) காய்தலால் எனினுமாம். அன - 'அன்ன' என்றதன் தொகுத்தல். பாழ்படுத்தி நகைத்தா னென இயையும். 'சூதாடிய', 'புன் மொழி' என்ற இரண்டும், நிருபனுக்கு அடைமொழி. 'நதியென' என்னும் பாடத்துக்கு - நடப்பவரடிசுடும்படி நீர்ப்பெருக்குஅற்றுப்போன நதியைப் போலத் தேர்க்குதிரைகளையும் பாகனையும் பாழாக்கியென்று பொருளாம்.

பெரும்போர்செய்து அடையவேண்டிய வெற்றியை எளிதில்அடையச் செய்தலால், 'மா கவறு' எனப்பட்டது; இகழ்ச்சியுமாம். வற்றிய - கவலைப் படுத்திய; கவற்று - பகுதி; இது, கவலென்பதன் பிறவினை: அதில், து - விகுதி. புன்மொழி - திரௌபதியைக் கொணர்ந்து துகிலுரியச் சொன்

னது முதலியன; "தன்னியதருமன்செய்தபாவமோ சகுனிசெய்த, புன்னியசெறியோ வந்தப்பொதுமகள்யாகசாலே, நண்ணியதவமோ மற்றைநால்வருந்தலைமைகூர, வெண்ணியமதியோ வெண்ணினிங்ஙனம்விளைந்த தென்றான்" இங்ஙனம்பல,சூதுபோர்ச்சருக்கத்தில் ஆறாங்கவிக்குக்காண்க. இங்கு, நகை - இகழ்ச்சிகாரணமாகப் பிறந்தது. 'பாகு' என்பது-பொருளால்உயர்திணையாயினும்,சொல்லால் அஃறிணை யாதலால், புரவியோடுசேர்த்து 'அவற்றினை' என்று அஃறிணையாற் சுட்டப்பட்டது. 'அவற்றினை' - சுட்டடிப் பலவின்பாற்பெயராகிய 'அவ்' என்றதன் இரண்டாம்வேற்றுமை; அற்று - சாரியை: "வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே" என்றார் நன்னூலார்; 'இன்' என்பதும் சாரியை. தலே - தலைமையானஉறுப்பு என்பதுபற்றிய காரணக்குறி; வடநூலாரும் சிரசை 'உத்தமாங்கம்' என்பர். பொய்த்தசூது—"பொருள்கெடுத்துப் பொய்மேற்கொளீஇ யருள்கெடுத், தல்லலுழப்பிக்குஞ் சூது," "உண்மையுயர்வழிக்கும் . சூது" என்றார் பிறரும். விதம் - வடசொல். கவற்றினில் - கவறு என்றதன் ஐந்தாம்வேற்றுமைவிரி; இல்-ஐந்தனுருபு, இன் - சாரியை. இச்செய்யுளில் அடிதோறும் முதலெழுத்துமாத்திரம் வேறுபட்டுநிற்க, அடுத்தசிலஎழுத்துக்கள்ஒன்றிநின்று பொருள்வேறுபட்டது, திரிபு என்னுஞ் சொல்லணி. நகை - நக என்ற பகுதியின் தொழிற்பெயர்;ஐ-விகுதி: பகுதியீற்றுஅகரம் தொகுத்தல். (௬எ)

[தப்பியோடத்தொடங்கிய துரியோதனனை அருச்சுனன் மறித்துச் சில கூறத்தொடங்குதல்.]

பாகும் வாசியு மமைந்ததொர் தேர்மிசைப் பாய்ந்து-
மாகு சூழவுந் தப்பிய வரிநிற மாபோ
லேகு கின்றபே ரிராசரா சனையெதிர் தகைந்து
கோகு தட்டிடு தனஞ்சய னிவையிவை கூறும்.

(இ - ள்.) மாகு சூழவும்-வலையானது (தன்னைச்)சூழ்ந்துகொள்ளவும், தப்பிய - (அதினின்று) தப்பியோடிய, வரி நிறம் மா போல் - (உடம்பிற்) கோடுகளையும் (பலவகை)நிறங்களையு முடைய புலிபோல, (எந்தப்பக்கத்திலுந் தன்னைப் போகவொட்டாமல் அருச்சுனன் வளைந்துகொள்ளவும்), பாகும் வாசியும் அமைந்தது ஓர் தேர்மிசை பாய்ந்து ஏகுகின்ற - சாரதியும் குதிரைகளும் நன்றாய்ப்பொருந்தப்பெற்றதாகிய வேறொரு தேரின்மேற் குதித்தேறித் தப்பியோடுகின்ற, பேர் இராச ராசனை - பெரிய அரசர்கட்கு அரசனாகிய துரியோதனனை, எதிர் தகைந்து - (அவ்வனந் தப்பிச் செல்லவொட்டாமல்) எதிரே தடுத்து, கோகு தட்டிடு - தோள்களைக் கொட்டியாரவாரஞ்செய்கின்ற, தனஞ்சயன் - அருச்சுனன், இவை இவை - இந்த இந்த வார்த்தைகளை, கூறும் - சொல்வான்; (எ - று.)—அவற்றை, அடுத்த ஐந்து கவிகளிற் காண்க.

உவமையணி. தன்காடு புறங்காடு என்னும் வேற்றுமையின்றி எங்கும் ஒருசிகராகக் கொடுமைசெய்து திரியும் புலியை உவமைகூறியதனால், துரியோதனன் வேற்றரசர்க்குப்போலவே தனது தாயாதிகளான பாண்டவர்க்குந் தீங்குபுரியு மியல்பின னென்பதும், அவன் மச்சதேசத்தைத் தனது தேசம்போலவேகொண்டு அங்குத் தன்னிச்சைப்படி தீங்குபுரியத்தொடங்கின னென்பதும் தோன்றவைத்தார். சூழவும்,உம்மை-உயர்வுசிறப்பு. தனஞ்சயன்-வடசொல்; தருமபுத்திரன் இராஜசூயயாகஞ் செய்யமுயன்றபொழுதில், அருச்சுனன் வடக்கிற்சென்று பலஅரசர்களைச் சயித்து அவர்கள்செல்வத்தைத்திறைகொணர்ந்ததனால், அவனுக்கு 'தனஞ்சயன்' என்று ஒரு பெயராயிற்று;இனி,இப்பெயர்க்கு-வெற்றியைச் செல்வமாகவுடையவ னென்றும்

பொருள்கொள்ளலாம்: இப்பெயர், அவ்வத்துபலபராக்கிரமத்தைவிளக்கும். 'ராஜராஜன்' என்பது, துரியோதனனுக்கு ஒருபெயர்; வடசொல். இங்கே 'பேரிராசராசன்' என்றது, இகழ்ச்சி. தோள்தட்டுதல்-வீரக்குறிப்பு. இலைமின்கு—அரிசக்கு, பன்மைப்பொருளது. வரிசிறைமா—புலிக்கு 'சித்ரகாயம்' என்று ஒருபெயர் வடமொழியில் வழங்குவது காண்க. (கஅ)

வேறு.

[இதுமுதல் ஐந்துகவிகள்-அருச்சுனன் துரியோதனனை இகழ்ந்துகூறியன.]

கார்முகங் கைத்தலத் திருப்பக் கைம்மிகு
போர்முகந் தன்னினீ புறந்தந தேகினூ
லூர்முகக் களிற்றின்மே லுலாவும் வீதியின்
வார்முகக் கனதன மாத ரென்சொல்வார்.

(இ - ள்.) கார்முகம் - வில், கைத்தலத்து - (உன்)கையிலே, இருப்ப - அணிபடாதிருக்கவும், நீ—, கை மிகு போர்முகந்தன்னில் - கைகலததற்கு [பொருதற்கு] இடமான யுத்தகளத்தில், புறம் தந்து ஏகினால் - முதுகு காட்டி யோடினால்,—ஊர் முகம் - ஊர்கோலமாக, களிற்றின்மேல்-யானைமேலேறி, உலாவும் - (நீ)பவனிவருகின்ற, வீதியின் - தெருக்களிலே, வார் முகம் கன தனம் மாதர் - கச்சை மேலேதரித்த பருத்த கொங்கைகளையுடைய மகளிர், என் சொல்வார் - என்ன சொல்வார்கள்! (எ - று.)

நீ ஊர்க்குச்சென்று யானைமேல் வீதிகளிற் பவனிபோகும்பொழுது கோலங்காண வருகின்ற மகளிர் உன் வீரமின்மையைப் பற்றி என்ன நிந்தனை சொல்வரென்பதாம். உனது ஆண்மை மகளிரும்இகழும்படியானதே யென்று இகழ்ந்தபடி. 'என்சொலார்' என்றும் பாடமுண்டு. ஆகவே, புறந்தந்தேகாமல் நின்று போர்செய்வாயாக என்பது, குறிப்பெச்சம். ஆயுதமின்றிப் போர்செய்தல் அரியதாதலாற் கைவில்லும் அற்றுஓடினால் அவ்வளவாக் குற்றமில்லை யென்பான், 'கார்முகங் கைத்தலத் திருப்பப் புறந்தந்தேகினால்'என்றான். ஊர்முகம் உலாவுதல் - ஊர்வலமாகச் செல்லுதல். இனி, ஊர்முகமென்பதனை வீதியோடு இயைத்து - ஊரிலுள்ள வீதியென்றும், களிற்றோடு இயைத்து - பொருந்தியமுகபடாத்தையுடைய களிறென்றுமாம். ஏறிச்செலுத்தப்படுந் தன்மையையுடைய என்றலுமொன்று. கைம்மிகு - கைத்திறம்மிக்க எனினுமாம். இச்செய்யுளை, சீழ்ப்போந்த ௬௬-ஆஞ் செய்யுளின் பின்னிரண்டடிகளோடு ஒப்பிடுக. போரிற் புறகொடுத்தல், தோல்விக்குறி.

கார்முகம் - வடசொல்; (போர்த்)தொழிலிற் சிறந்ததென்று காரணப் பொருள்பெறும்: கர்மம் - தொழில். 'இருப்ப' என்ற செயவெனெச்சம் - நிகழ்காலம்; ப் - எழுத்துப்பேறு. தனம் - ஸ்தநமென்னும் வடமொழியின் விகாரம். "மாதர்காதல்" என்ற தொல்காப்பியத்தின்படிகாதலையுணர்த்தும் 'மாதர்' என்ற உரிச்சொல் - பண்பாகுபெயராய், விரும்பப்படுகின்ற அழகையுடைய மகளிரைக் குறித்தது.

இதுமுதற் பதினேழு கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீரொன்று மாச்சீரும்,மற்றை மூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (கக)

இருபுறஞ்சாமரமிரட்டத்திங்கள்போ
லொருகுடைநிழற்றவிவ்வுலகின்னதா
மருவலர்கைதொழவாழுகின்றநீ
பொருமுனைகாண்டலும்போதல்போதுமோ.

(இ - ள்.) இரு புறம் - இரண்டு பக்கங்களிலும், சாமரம் இரட்ட - சாமரங்கள் வீசவும், திங்கள் போல் - பூரணசந்திரன்போல, ஒரு குடை - ஒப்பற்ற வெண்கொற்றக்குடை, நிழற்ற - நிழலைச் செய்யவும், இ உலகம் - இந்த நிலவுலகமுழுவதும், நின்னது ஆ - உன்வசத்ததாக, மருவலர் கை தொழ - பகைவர்கள் கைகூப்பிவணங்கும்படி, வாழுகின்ற - அரசாண்டு வீற்றிருக்கின்ற, நீ —, பொரு முனை காண்டலும் - போர்செய்யுமிடத்தைப் பார்த்தமாத்திரத்திலே, போதல் - புறங்கொடுத்தோடுதல், போதுமோ - தகுமோ? (எ - று.)

'பொருமுனை காண்டலும் போதல் போதுமோ' என்றது - சிறிதுநேரம் போர்செய்தாயினும் போகலாகாதோ? போர்க்களத்தைக் கண்டமாத்திரத்தில் இவ்வாறுமீண்டுபோவது, அரசர்க்கரசும் பகைவர்களையெல்லாம் வெல்லும் வல்லமையுடையவனுமாகிய உனக்குப் பேரவமானந் தருவதொன்றன்றோ என்றபடி. சாமரம்-சமர மென்னும் மானினது வாலின் வெண்மயிரினாற் செய்யப்பட்டதோர் இராஜசின்னம்; வடமொழித் தத்திதாந்தநாமம். இரட்ட, நிழற்ற - வினைச்செவ்வெண். குடைக்குத் திங்கள் - வெண்மையாலும், வட்டவடிவாலும், தண்ணொளி பரப்புதலாலும் உவமை. ஒரு குடை - ஏகச்சத்ரம். உலகம் - லோகமென்னும் வடமொழியின் விகாரம்; இது, சேனாவரையர் கொள்கை: இதனை மறுத்துத் தமிழ்மொழியேயா மென்பர் நச்சினார்க்கினியர். நின்னது-நீ என்னும் முன்னிலை முதனிலையடியாய்ப் பிறந்து 'து' விகுதியும் அகரச்சாரியையும் பெற்ற ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். ஆ - ஆக வென்பதன் விகாரம். ஓகாரம் - எதிர்மறை. மருவலர் - சேராதவர்: எனவே, பகைவராயிற்று; எதிர்மறை வினையாலணையும்பெயர்: மருவு-பகுதி, அல்-எதிர்மறையிடைநிலை. காண்டலும் — து, அல்-சாரியைகள்; உம்-இறந்தகாலவினையெச்சவிகுதி. (௭௦)

உன்பெருந் துணைவரோடுன்னையோர்கணத்
தென்பெருங்கணைகளுக்கிரைகளாக்குவேன்
வன்பெருங்கொடிமிசைமடங்கலேற்றினான்
றன்பெருவஞ்சினந்தப்புமேகொலாம்.

(இ - ள்.) உன் பெருந் துணைவரோடு உன்னை - உன்னுடைய பெரிய தம்பிமார்களையும் உன்னையும், ஓர் கணத்து - ஒருக்ஷணகாலத்திற்குள், என் பெருங் கணைகளுக்கு - எனது பெரிய அம்புகளுக்கு, இரைகள் ஆக்குவேன் - உணவாகச் செய்துவிடுவேன்; (அங்ஙனஞ் செய்வேனாயின்), வல் பெருங் கொடிமிசை மடங்கல் ஏற்றினான்தன் - வலிய பெரிய கொடியில் ஆண்சிங்கத்தினது வடிவத்தையுடையவனான வீமசேனனது, பெரு வஞ்சினம் - பெரிய சபதம், தப்புமே கொல் ஆம் - தவறிப்போகுமே! (எ - று.)

'ஆதலால், அதுசெய்திலேன்' என்றது, குறிப்பெச்சம். உங்களை இப்பொழுது யான் கொல்லாமல் விடுதற்குக் காரணம், வீமன் சபதந் தப்பினவனாவனே யென்கின்ற எண்ணமொன்றே யன்றி வேறன்று என்றான். 'பெருந் துணைவர்' என்றது - தொண்ணூற்றொன்பதின்மரென எண்ணிற் பெரிய தம்பியரென்றற்கு. ஒரு சிங்கம் பலயானைகளை மிகஎளிதில் அழிக்கவல்லதாதல்போல வீமனொருவனே துரியோதனனுடனுதித்தோரையெல்லாம் அலக்ஷ்யமாய் அழிக்கவல்லவ னென்பது போதரும். 'ஏற்றினான்தன்' என்றவிடத்தில், 'தன்' என்பது - சாரியை; ஆறனுருபென்பாருமுளர். துரியோதனன் சகுனியைக்கொண்டு தருமபுத்திரனைச் சூதில்வென்று பாண்டவரை அடிமைப்படுத்தியபின்பு திரௌபதியைத் துச்சாதனனைக்கொண்டு மயிர்பிடித்திழுத்துச் சபையிற் கொணர்ந்து துகிலுரி

ர்றும் [illegible] னபடியின்மே னட்கா ரென்றுசொல்லியும் பங்கப்படுத்தியபொ முது, அதனால் பொறுது வீமசேனன் 'துரியோதனுதியர் நூற்றுவரையும் நானே கொல்வேன்' என்று பிரதிஜ்ஞைசெய்துள்ளா னாதலால், இப்பொ ழுது அருச்சுனன்,தான் துரியோதனுதியரைக் கொன்றிட்டால் அவ்வீமன் சபதம் தவறுமே யென்பது கருதி, கொல்லாமல் வலியழித்தோமெம்படி செ ய்தின்றா னென்க; (மேல் பதினான்காம்போர்ச்சருக்கத்தில் "மாறுபட் டிவனை யின்றுயிர்கவர்ந்துவிடின் மாமருத்தின்மகன்வஞ்சினமழிந்துவிடும், வேறுபட்டுவெருவும்படியெதிர்தமரிஞேடுவிப்பது பெருந்தகைமை யென்று கொடு, நூறுபட்டமகவின்றலைவனெஞ்சமிக நோதகக் கடிதெதிர்தன னெ திர்தனவில், நீறுபட்டதுபெருங்கவசம் வந்தவழிநேர்படத்திருமினன் சமரி னின்றிலனே"என வருவதுங் காண்க.) ஏகாரம் - தேற்றத்தோடு இரக்கப் பொருளது. கொல், ஆம் - அசைகள்.

கணம் - க்ஷணம் என்னும் வடமொழியின் விகாரம். கணைக்குப் பெரு மை - கூர்மைமிகுதியும், குறிதப்பாமையும். பெருங் கணைகள் - பாசுபதம் முதலியன. 'உன்னை என்கணைகளுக்குஇரைகளாக்குவேன்' என்றது-அம் புகளை எய்து உன்னை அழித்துவிடுவே னென்றபடி; உண்ணுதது உண்பது போலச் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி: "உண்டற்குரிய வல்லாப்பொ ருளை, உண்டனபோலக் கூறலு மரபே"என்பது, தொல்காப்பியம்; [நன் - பொது - ௫௮.] சொல்வேனென்பதை வேறொருவகையாற் சொன்னத னால், இது - பரியாயமொழியணி; பிறிதினவிற்சியணியெனவும், பரியாய வணியெனவும் படும்: "கருதியதிளவா தப்பொருள்தோன்றப், பிறிதொன்றுரைப்பது பரியாயம்மே" என்ற தண்டியலங்காரத்தால், இதன்இலக் கண முணர்க. கொடிக்குப் பெருமை - உயர்வு. ஏறு - ஆண்மைப்பெயர்; இனி, கொடிமேல் மடங்கலின் வடிவத்தை ஏற்றினவ னென்றுங் கொள்ள லாம். 'ஏற்றினன்'என்பது-முந்தினபொருளில்,'ஏறு'என்ற பெயரின்மேற் பிறந்த குறிப்புவினையாலணையும்பெயர்: இன் - சாரியை; பிந்தினபொரு ளில், 'ஏற்று' என்ற பிறவினைப்பகுதியின்மேற் பிறந்த தெரிநிலைவினையா லணையும்பெயர்: இன் - இறந்தகாலவிடைநிலை. 'கொடிமிசைமடங்கலேற் றினன்' என்ற தொடரால், வீமன் தனது திறத்துக்கு ஏற்ற கொடியுடையா னென்பது போதரும். கொடிமிசை, மிசை - ஏழனுருபு. மடங்கல் - (பிடரி மயிர்) மடங்குதலை யுடையது என ஆண்சிங்கத்துக்குக் காரணக்குறி; தொ ழிலாகுபெயர்: சிங்கத்தின்பெயர்களிலொன்றாகிய 'கேஸரீ'என்ற வடசொ ல்லும் பிடரிமயிர்களையுடையதென்று பொருள்படுத லுணர்க. 'மடங்கலே றனன்' என்னும் பாடத்துக்கு-தனது துவசத்தின்மேலுள்ள சிங்கவேற்றை யொத்தவ னென்று பொருள்; தனது பெருவீரத்துக்கு அறிகுறியாகச் சிங் கத்தைக் கொடியாகக் கொண்டவ னென்க: இத்தொடரைச் சபாபருவத் தில் "தனதுகேதனக்கேசரியனையான்" என்றதனோடு ஒப்பிடுக. (௭௧)

எங்களைக்கானில்விரட்டிவியேகவெண்
டிங்களைப்போனெடுந்திகிரியோச்சினீர்
சங்களைபயில்வளநாடன்றண்டினு
லங்களைக்களப்பலியூட்டுநாளையே.

(இ - ள்.) (நீங்கள்),—எங்களை கானில் விட்டு - எங்களைக்காட்டிற்குப் போகும்படி அனுப்பிவிட்டு, இரவி ஏக வெண் திங்களை போல் - சூரியன் மறைந்துபோக (அஸ்தசமயத்திலே) வெண்ணிறமான சந்திரன் ஒளிவீசி [illegible]போல, நெடுந் திகிரி ஓச்சினீர் - பெரிய ஆஜ்ஞாசக்கரத்தை (ஆளுமையை) செலுத்தி வாழ்ந்து விளங்கினீர்கள்; உங்களை-(இவ்வாறு [illegible])உங்களை, நாளையே-நாளைக்கே [illegible]

படி]; சங்கு அளை பயில் வளம் நாடன் - சங்குகள் சேற்றிலுள்ள வளைகளில் தங்கும் வளப்பத்தையுடைய குருநாட்டுக்குஉரியவனுகிய வீமன், தண்டினால் (தண்டாயுதத்தினாலென்னும்) கதாயுதத்தால், களம் பலி ஊட்டும் - போர்க்களத்திற்கொன்று பலியிடுவான்; (எ - று.)

நாங்கள் இந்திரப்பிரஸ்தநகரத்தில்வசித்திருந்தவரையிலும் நீங்கள் பெருஞ்சிறப்படைந்திலீரென்பான், 'எங்களைக்கானில்விட்டுஇரவியேகவெண்டிங்களைப்போல் மெருக்கிரியோசினீர்' என்றான்; சூரியன்முன்னே சந்திரனொளி விளங்காதவாறுபோல வெளிப்பட்டுவந்த எங்கள்முன்னே இனி உங்களரசு செல்லாதென்றற்கு இங்ஙனங்கூறினனுமாம். உவமையணி. இரவி ஏகுதல் - சூரியன் அஸ்தமித்தல். ஆஜ்ஞையைச் சக்கரமென்றும் குடையென்றும் கோலென்றும் கூறுதல். மரபு. சங்குகள்தங்குதல், நீர்வளமிகுதியால். அளை - குழைசேறு; வளையுமாம். இனி, அளையென்பதை அளைந்து என்னும்வினையெச்சத்தின்விகாரமாக்கொண்டு, சங்குகள்அளைந்துபயிலுகின்ற வென்றலுமாம்; "வரிப்புனை பந்து" என்றாற் போல: 'சங்கினைப் பயில் வளநாடன்' என்பதும் பாடம். இங்கு, வீமனை 'வளநாடன்' என்றது, பகைவரைவெல்பவர்க்கு அவர்நாடுஉரியதாகின்றஇயல்புபற்றி. இன்றைக்கு யான் உயிரோடுவிட நீங்கள் உய்ந்தொடிப்போனாலும் நாளைக்குவீமன்கதைக்குத் தப்பிப்போகமுடியாதென்பதாம். இங்கு 'நாளை'என்றது, இனி விரைவி லென்றமாத்திரமாய்நின்றது; நாலடியாரில் "நாளைத்,தழீஇத் தழீஇத் தண்ணம் படும்"என்றவிடத்திற்போல. ஏ - தேற்றம். களப்பலியூட்டும் - துணித்துப் போர்க்களத்தெய்வத்துக்கும்பேய்களுக்கும உணவாக இடுவேன்.

ஊட்டும், ஊட்டும்-பகுதி; அது - உண்என்பதன் பிறவினை: அதில், டு - பிறவினைவிகுதி, பகுதி முதல்நீண்டது - விகாரம். (கஉ)

[கொல்லத்தகாதவ ரிவ ரென்பது.]

இரவலரிளையவரேத்துநாவலர்
விரவியதூதுவர்விருத்தர்வேதிய
ரரிவையர்வெஞ்சமரஞ்சுவோர்பெருங்
குரவரென்றிவர்களைக்கோறல்பாவமே.

(இ - ள்.) இரவலர் - யாசகர்களும், இளையவர் - இளம் பிள்ளைகளும், ஏத்தும் நாவலர் - (அரசரைப்) புகழ்கின்ற ஸ்துதிபாடகர்களும், விரவிய தூதுவர் - (வேற்றரசரிடமிருந்து) தம்மிடத்துவந்த தூதர்களும், விருத்தர் - முதியவர்களும், வேதியர் - பிராமணர்களும், அரிவையர் - மகளிரும், வெம் சமர் அஞ்சுவோர் - கொடிய போரில் அஞ்சியோடுபவர்களும், பெருங் குரவர் - பெரிய ஐங்குரவர்களும், என்ற இவர்களை—, கோறல்-கொல்லுதல், பாவம் - தீவினையாம்; (எ - று.)

'போரில் முன்னிற்கமாட்டாமல்அஞ்சியோடுகின்றவர்களைக்கொல்லுதல் பாவமாதல்பற்றியும், உன்னை நான்கொல்லேன்' என்றவாறும்; இது, குறிப்பெச்சம்:தருமயுத்தஞ்செய்வேனேயன்றி அதருமயுத்தஞ்செய்யேனென்றான்.இச்செய்யுளில்,பொதுப்பொருள்மாத்திரமேகூறி அதனாற் சிறப்புப் பொருள்பெறவைத்தது, பிறிதுமொழிதலணி; இவ்வணி, ஒட்டணியெனவும் பெயர்பெறும்.யாசகர் தம்மிறப்பினைழுத்தற்காகஇரத்தலன்றியாதொருதீங்குஞ்செய்யாமையாலும், இளையவர் எதிர்த்தற்குஏற்ற அறிவும்ஆற்றலும் இலராதலாலும், நாவலர் துதிமொழிகூறுபவராதலாலும், தூதர் தமதுதலைவர்பணியைச் செய்பவராதலாலும்,விருத்தர் எதிர்த்தற்கு ஏற்றதிறலிலரும் நன்குமதித்துஉபசரிக்கத்தக்க பெருமையுடையருமாதலாலும், சமருக்குஅஞ்சுவோர்மேற்படைசெலுத்துவது அதருமயுத்தமாதலாலும், ஐம்பெருங்குரவர் "அரச னுபாத்தியான் தாய் தந்தை தம்முன், நிகரில் குரவ ரிவ

சிலரைத், தேவரைப் போலத்தொழுதெழுக வென்பதே, யாவருங் கண்ட நெறி" என்றபடி தெய்வமாகக்கொண்டாடத்தக்கவ ராதலாலும், இவர்களைக் கொல்லுதல் கொடியபாதகமாகு மென்க. "மூத்தவ ரிளையோர் வேதமுனி வரர் பிணியின் மிக்கோர், தோத்திரமொழிவோர் மாதர் தூத ரென்றிவரைக் கொல்லிற், பார்த்திவர் தமக்கு வேறு பாவ மற்றிதனினில்லை, பூத்தெரிதொ டையாய் பின்னும் நரகினும்புகுவ ரென்றான்" என்று மேற் கிருட்டிணன் தூதசருக்கத்து வருவதும், "மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியான், ஆறன்மையின் முதியாரையு மெறியா னயிலுழவன்" என்ற சிந்தாமணியும் இங்கு நோக்கத்தக்கன.

இர வலர் - இரத்தலில் வல்லவர்; அன்றி. இரவல் அர் - இரக்குந் தொழிலுடையவர். இளையவர்-பாலர். ஏதது நாவலர்-(யாவராலும்) புகழப் படுகின்ற புலவர்களுமாம். நா வலர் - நாவினாற் கவிபாடவும் வருணிக்கவும் போதிக்கவும் பிரஸங்கஞ்செய்யவும் வல்லவர். அறிவினாலும் பருவத்தாலும் ஒழுக்கத்தாலும் முதியவர்களாகிய ஞானவ்ருத்தர் வயோவ்ருத்தர் சீலவ்ருத்தர் என்னும் மூவகைப்பெரியோரும் அடங்குதற்கு, பொதுப்பட 'விருத்தர்' என்றான். வ்ருத்தர், ஸமரம், குரவஃ, பாபம் என்ற வடசொற்கள் - விருத்தர், சமர், குரவர், பாவம் என்று விகாரப்பட்டன. விருத்தர் - கிழவர். வேதியர் - வேதம்வல்லவர். வேதங்களை ஓதுதல் ஓதுவித்தல் என்ற இருதொழிலுக்கும் உரியவர் அந்தணரே யாதலால், அவரே சிறப்பினால் 'வேதியர்' எனப்படுவர். 'அரிவையர்' என்றது - இங்குப் பருவப்பெயராகாமல், மகளி ரென்றமாத்திரமாய் நின்றது; (அப்பருவத்துக்கு வயதெல்லை - இருபது பிராயமுதல் இருபத்தைந்துபிராயமளவுமாம்.) அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை, தமையன் என்ற ஐவரும் - ஐம்பெருங்குரவ ரெனப்படுவர். என்றிவர் - பெயரெச்சவீறு தொகுத்தல்; கள் - விகுதிமேல்விகுதி. கோறல்- தொழிற்பெயர்; கொல் - பகுதி, தல் - விகுதி, பகுதிமுதல்நீண்டது-விகாரம், தகரம்றகரமானவிடத்துக் குறில்செறியாத லகாரங் கெட்டது - சந்தி. ஈற்று ஏகாரம் - தேற்றம். (எங)

[துரோணன்முதலியோர் அருச்சுனனை வளைதல்.]

பற்பலவுரையிவன் பகருமெல்லையிற்
சொற்பயினான்மறைத் துவசன்வீடுமன்
கற்பகநிகர்கொடைக்கன்னனாதியோர்
மற்புயநிருபனை வந்துகூடினார்.

(இ - ள்.) பல்பலவுரை - (இவ்வாறு) பலபலவார்த்தைகளை, இவன் பகரும் எல்லையில்-இவ்வருச்சுனன் (துரியோதனனைநோக்கிச்) சொல்லிநின்றபொழுதில்,—சொல் பயில் நால் மறை துவசன் - (பலர்) சொல்லுதல் பொருந்திய நால்வகைப்பட்ட வேதத்தை யெழுதிய கொடியை யுடையவனான துரோணாசாரியனும், வீடுமன் - பீஷ்மனும், கற்பகம் நிகர் கொடை கன்னன் - கல்பகவிருக்ஷம்போன்ற தானத்தையுடைய கர்ணனும், ஆதியோர் - முதலானவர்கள், மல் புயம் நிருபனை - வலிமையுள்ள தோள்களையுடைய அரசனான அருச்சுனனை, வந்து கூடினார் - திரண்டுவந்து வளைத்தார்கள்; (எ - று.)

பல + பல = பற்பல: அகரம் ஏக லகரம் றகரமாயிற்று; [நன்-உயிர்-உ0.] சொல் - முதனிலைத்தொழிற்பெயர். இனி, சொல் பயில்-கல்வியைப்பிறர்க்குப்போதிப்பதில் தேர்ச்சியுள்ள என்றலு மொன்று; "வீரசாபமுடனாரைக் கும்வெய்யசாபம்வல்லவத், தீரன்" என்னும்படி சாபாநுக்கிரகங்களைச்செய்யுஞ் சொல்திறமுடைய என்றலுமாம்: புகழ்மிகப்பெய எனினுமாம். மேல் துரோணபருவத்தில் "சொல்லாய் நீ" என்றும், கர்ணபருவத்தில் "சொல்

கோ - கண். கனம்-கர்ணமென்பதன் விகாரம். கோகர்ணநாகம்-வடமொழித்தொடர். கண்களையேகாதுகளாகவுமுடையதாய் வடமொழியில் 'சக்ஷுஃஸ்ரவஸ்' என்றும், தென்மொழியில் 'கட்செவி' என்றும் பெயர்பெறுதலால், 'கோகர்ணநாகம்' எனப்பட்டது; பாம்புகட்குக் கண்ணாகியபொறியொன்றிலேயே காணுதலும் கேட்டலுமாகிய புலனறிவிரண்டும் அமைந்திருத்தல் காண்க. 'நாக வேகக் கொடியவன்' என்றதொடர் - பாம்புபோல உக்கிரமான கொடுந்தன்மையை யுடையவனென்றும் பொருள்படும். மோகனக் கணை - மயக்கமுண்டாக்குகின்ற அம்பு. படிக்கண், கண் - ஏழனுருபு. தாகனக்கடவுள் - (அகப்பட்டவற்றையெல்லாந்)தகிக்குமியல்புள்ள தேவன்; தகித்தல் - எரித்தல். கடவுள் - (இவ்வுலகசம்பந்தத்தைக்) கடந்துள்ளவன் எனத் தேவனுக்குக் காரணக்குறி; கட - பகுதி, உள் - பெயர் விகுதி: 'விளையுள்' என்பதிற் போல. கடத்தலையுடையவன் எனத் தொழிலாகுபெயராகிய காரணக்குறி யென்பாரு முளர்; அப்பொழுது, உள் - தொழிற்பெயர்விகுதி: 'விக்குள்' என்பதிற் போல. மோஹநம், தாஹநம், வாஹநம்-வடசொற்கள். மணிப் பொலந் தேர் - அடிக்குமமணிகள்கட்டிய அழகிய தேரென்றுமாம்; பெரியஇரத்தினங்கள்பதித்தபொற்றேரென்றும் உரைப்பர். வெள்ளை - பண்புப்பெயர்; ஐ - விகுதி. வாகநம் என்பதற்கு - சுமப்பது என்று பொருள்; குதிரைக்குக் காரணக்குறி: வாஹமென்றும் வழங்கும். குரிசில் - ஆண்பாற் சிறப்புப்பெயர். ஈற்றேகாரம், வியப்புத்தோன்ற நின்றது. 'மாகனற்கடவுடந்த மணிப்பொலந்தடந்தேர்' என்ற பாடத்துக்கு, மா கனற்கடவுள் - சிறந்த அக்கினிதேவனென்க. அக்கினிதேவன் அருச்சுனனிடத்தினின்றுகாண்டவவனத்தைஇரையாகப்பெற்றுக்கொண்டு அதற்குஈடாகத்தேர்முதலியவற்றைக்கொடுத்தனனாதலால்,அவ்வொப்புமை தோன்ற'தந்த' என ஒப்போன்கூற்றாற்கூறப்பட்டதெனலாம்;"என்றபோதினின்னிச்சையின்படி யுணவீந்தன மிமைப்போழ்திற், சென்றுகொள்கெனத் தனஞ்சயன்கூறலுஞ் சிந்தைகூர்மகிழ்வெய்தி, மன்றலந்துழாய்மாயவனருளினால் வடிக்கணை மாளாமல், தன்றுதாணியுஞ் சாபமு மிரதமுஞ் சுவேதவாசியு மீந்தான்" என்று காண்டவதகனச்சருக்கத்துக்கூறியதனால், தாகனக்கடவுள்தந்தசந்தர்ப்பமறிக. 'தாகனக்கடவுள்தந்த' என்ற அடைமொழியை வெள்ளைவாகனத்தோடுங்கூட்டுக. முடியடி படிக்கண்வீழ்த்தான்—தலைமாடுகால்மாடாக விழுத்தினனென்றல் வழக்கு. (க00)

[அருச்சுனன் பகைவர்களுடையஆடைகளைப் பறித்தல்.]

இத்தரையிடங்கொளாமலிறந்தனர்போலவீழ்ந்த
மத்தரைமயிர்கொய்தென்னமணிக்கொடித்தூசுந்தூசு
முத்தரைவண்டற்பாவைக்குடுத்துதற்கென்றுகொய்தா
னத்தரைமவுலித்திங்களமுதுகப்புடைத்தவில்லான்.

(இ - ள்.) இ தரை இடம் கொளாமல் - இப்போர்க்களத்தினிடம்முழுவதிலும் அடங்காமல், இறந்தனர் போல வீழ்ந்த - மரணமடைந்தவர்போல விழுந்துகிடக்கின்ற, மத்தரை - மயக்கமடைந்த அவ்வீரர்களையெல்லாம், மயிர் கொய்து என்ன - மொட்டையடித்தாற் போல, மணி கொடி தூசும் - (அவர்களுடைய)அழகிய துவசங்களிற் கட்டிய சீலைகளையும், தூசும் - (அவர்கள்தரித்துள்ள) ஆடைகளையும், உத்தரை வண்டல் பாவைக்கு உடுத்துதற்கு என்று கொய்தான் - உத்தரையைத்தக்கொண்டுவிளையாடுகின்ற பிரதிமைகளுக்கு (அலங்காரமாக)த் தரிப்பதற்கென் றெண்ணிப் பறித்தான்: (யாவனெனில்),—அத்தரை - சிவபெருமானை, மவுலி - சிரசில், திங்கள் அமுது உக புடைத்த - (அங்குவசிக்கின்ற) பிறைச்சந்திரனிடத்தினின்று அமிருதம்

சிந்தும்படி அடித்த, வில்லான் - வில்லின் தண்டத்தையுடையவனான அருச்சுனன்; (எ - று.)

உத்தரை - விராடன்மகள்; உத்தரன்தங்கை. உத்தரனும் பிருகந்நளையும் போர்க்குப்புறப்பட்டபோது, இவள் தனது விளையாட்டுப்பிரதிமைகளையலங்கரித்தற்குப் பலவகைப்பட்டாடைகள் கொணர்ந்துதரும்படி வேண்டினளாதலால், உத்தரைவண்டற்பாவைக்குஉடுத்துதற்கென்று தூசுகளைக் கவர்ந்தான். 'அம்ருதகிரணன்' என்று ஒருபெயர்பெறும்படி சந்திரனது கிரணங்களெல்லாம் அமிருதமயமானவை யாதலால், 'திங்களமுதுக' எனப்பட்டது; கீழ்க் குருகுலச்சருக்கத்தில், "அருந்த வானவர்க் காரமு தன்புடளிப்போன்," "தனது மண்டலம் பொழியமிழ்தின் மெய்குளிரவேவைத்தோன்" என்றமை காண்க. சிவபிரான்முடியில் அருச்சுனன் விற்கழுந்திலடித்த வரலாறு, ௪௯ - ஆஞ்செய்யுளி னுரையிற் கூறப்பட்டது. மவுலித்திங்களமுதுக—கீழ் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்தில் "உழுந்துருளுமெல்லைதனில் வில்லினெடுநாணறவுரத்தொடெடுதிரோடி வரிவிற், கழுந்துகொடு மாமுடியின் மோதுமுனிழுந்தவுயர்கண்ணிபடுபீலி மதியின், கொழுந் தமுது சோர... ... .....வேடனு மினைத் தவசமுற்றன னரோ" என்றது காண்க.

மத்தர், உத்தரா - வடசொற்கள். மத்தர் - மதங்கொண்டவருமாம். பொலிவிழத்தலை விளக்குதற்கு, 'மயிர்கொய்தென்ன' என்று உவமைகூறினார்; மயிர்கொய்தல், அவமானப்படுத்துதற் குறிப்புமாம்: தூசுபறித்தலும் அப்படியே. வண்டல் - மகளிர்விளையாட்டு. அத்தர் - தலைவர்; உயர்வுப் பன்மை. 'அர்த்தர்' என்பது அத்தரென விகாரப்பட்ட தென்றுகொண்டால், அர்த்தநாரீசுவரமூர்த்தியாகிய சிவபெருமானென்றுஆகும்; அர்த்தம்-பாதி. அமுது - அம்ருத மென்ற வடசொல்லின் விகாரம்; மரணத்தைத் தவிர்ப்பது [சாவாமருந்து] என்று பொருள். 'மயிர்கொய்து' என்பது, ஒரு சொல்தன்மைப்பட்டு 'மத்தரை' என்பதற்கு முடிக்குஞ்சொல்லாய்நின்றது. 'உடுத்துதற்கு' என்றவிடத்து, நான்கனுருபு - நிமித்தகாரணகாரியப் பொருளது; 'கு'விகுதிபெற்ற செயவெனெச்ச மென்றால், து அல் - சாரியைகளாம். 'மவுலி' என்றது - 'திங்களமுதுக' என்பதனோடும், 'புடைத்த' என்பதனோடும் இயையும். அத்தரைப் புடைத்த என்க. புடைத்த வில்லான் - வில்லாற் புடைத்தவன். 'இத்தரையிடங்கொளாமல்' என்றதனால், பகைவர்களின் மிகுதி கூறியவாறும். (௯0௯)

[மயங்கிவிழுந்தவர்கள் நெடும்பொழுதுகழித்துத் தெளிந்தெழுந்தோடுதல்.]

விழுந்தவர்நெடும்போதாகமெய்யுணர்வெய்திமெல்ல
வழுந்தியபகழியோடுமரிபடுகவசத்தோடு
மெழுந்துதம்மிரதம்யானையிவுளியினேறியேறித்
தொழுந்தகுதெய்வமன்னசூரனைத்துதித்துமீண்டார்.

(இ - ள்) விழுந்தவர் - (அவ்வாறு மோகநாஸ்திரத்தால் மயங்கி) விழுந்து கிடந்த பகைவரனைவரும், நெடும் போது ஆக - வெகுநேரங்கழிந்தபின்பு, மெய் உணர்வு எய்தி - உண்மையான அறிவு உண்டாகப்பெற்று [மயக்கந்தெளிந்து], அழுந்திய பகழியோடும் - (உடம்பில்) தைத்துக்கிடக்கின்ற அம்புகளுடனும், அரிபடு கவசத்தோடும் - பலதுளையடைந்த கவசத்துடனும், மெல்ல எழுந்து - மெதுவாக எழுந்து, தம் இரதம் யானை இவுளியின் ஏறி ஏறி - தம்தமது தேர் யானை குதிரைகளின்மேல் ஏறிக்கொண்டு, தொழும் தகு தெய்வம் அன்ன சூரனை - (யாவரும்) வணங்கத்தக்க கடவுளைப் போன்ற மகாவீரனாகிய அருச்சுனனை, துதித்து-மெச்சிக்கொண்டே, மீண்டார் - திரும்பித் தமதுஊர்க்குச் சென்றார்கள்; (எ - று.)

மெய் உணர்வு எய்தி - உடம்பில் உணர்வுவந்துகூடப்பெற்று என்றுமாம். மெல்ல - பண்படியாப்பிறந்த குறிப்புவினையெச்சம். 'பகழியோடும்,' 'கவசத்தோடும்' என்ற இடங்களில், 'ஓடு' என்ற மூன்றனுருபு - அடைமொழிப்பொருளது. பிறர்செய்தற்கரியசெயல்களைத் தான்எளிதிற் செய்துமுடிக்குந் திறத்திற் கடவுள்போன்றவ னென்பார், 'தொழுந்தகு தெய்வமன்ன சூரன்' என்றார். அவனை இவர்கள் துதித்தது, தம்மையுயிரோடுவிட்ட உபகாரத்தை நோக்கி யென்க. அரிபடுதல்-துளைக்கப்படுதல். 'எறி எறி' என்ற அடுக்கு, பன்மைப்பொருளது. (௬0௨)

[அருச்சுனன் துரியோதனனை மகுடபங்கஞ்செய்தல்.]

கொடிமதிற்பாகைவேந்தன்கொங்கர்கோன்புரவிக்காலால்
வடதிசையரசர்தங்கண்மாமணிமகுடம்போல
வடலுடைவிசயனொற்றையம்பினான்மீண்டுஞ்சென்று
படவரவுயர்த்தகோவைப்பண்ணினான்மகுடபங்கம்.

(இ - ள்.) கொடி மதில் பாகை வேந்தன் - துவசங்கள்நாட்டிய மதில்கள்சூழ்ந்த வக்கபாகையென்னும்நகரத்து அரசனும், கொங்கர் கோன் - கொங்குநாட்டிலுள்ளார்க்குத் தலைவனு மாகிய வரபதியாட்கொண்டானென்பவன், புரவி காலால் - (தனது) குதிரைகளின் கால்களால், வட திசை அரசர்தங்கள் மா மணி மகுடம் போல - வடக்குத்திக்கிலுள்ள அரசர்களது சிறந்தஇரத்தினங்கள்பதிக்கப்பெற்றகிரீடங்களைப் பங்கஞ்செய்வதுபோல, -அடல் உடை விசயன் வலிமையையுடைய அருச்சுனன்,மீண்டும் சென்று-மறுபடியுந்தொடர்ந்துசென்று,ஒற்றைஅம்பினால்-(தனது)அம்பொன்றினால், படம் அரவு உயர்த்த கோவை மகுடபங்கம் பண்ணினான்-படமெடுக்குமியல்புள்ளபாம்பின்வடிவ மெழுதிய கொடியை உயரநாட்டிய துரியோதனராஜனது கிரீடத்தைக் கீழேவிழும்படிதள்ளி (அவனை)அவமானப்படுத்தினான்.

அருச்சுனன் துரியோதனனது கிரீடத்தை ஓரம்பினாற்கீழேதள்ளி அவனை அவமானப்படுத்தியதற்கு, வரபதியாட்கொண்டான் போரில் தான்ஏறிச்செல்லுகின்றகுதிரையின் தூக்கியமுன்கால்களை வடதிசையிலுள்ளஅரசர்களதுமுடியிற்சூடியகிரீடத்தின்மீதுவைத்து அதனை இடறச்செய்து அவர்களை அவமானப்படுத்துதலை உவமைகூறினார். இந்நூலாசிரியர் வரபதியாட்கொண்டானை இந்நூலின்இடையிடையே புகழ்ந்துபேசுதற்குக் காரணம்,நூலாசிரியர்வரலாற்றில் விளக்கப்பட்டது. ஒருபெயரின் ஒருபகுதியைக்கொண்டு அப்பெயர்முழுவதையுங்குறித்தல் [நாமைகதேசே நாமக்ரஹணம்] என்ற நியாயத்தால், 'வக்கபாகை' என்ற ஊர்ப்பெயர் 'பாகை' எனப்பட்டது; சத்தியபாமையை 'பாமை' என்றல் போல: "பாகையாட்கொண்டான்" என்று மேற் பதினாறாம்போர்ச்சருக்கத்திலும், "பாகை வேந்தன்" என்று பதினேழாம்போர்ச்சருக்கத்திலும் வருதல் காண்க. வரபதியாட்கொண்டான் சோழபாண்டியமன்னவர்கட்கு உதவியாகச் சென்று அவர்கட்குப் பகைவர்களாய் வடக்குத்திக்கிலிருந்த அரசர்களையெல்லாம் வென்று அச்சோழபாண்டியர்கட்குஅரசைநிலைநிறுத்தின னென்றவிவரமறிக. ("மற்றவனிப்புவியாளும்வளவனுக்கு முடிகவித்து வழுதித்தெவ்வைச்,செற்றவனுக் கவனியெல்லாஞ்செங்கோன்மைநிலையிட்டுச் செல்வமெல்லாம், கற்றவருக் கிருகையுடைக் கற்பகம்போ லினிதளித்துக் கமலமாதும், கொற்றவையு மனங்களிப்பத் தன்னும மேருவினுங் கோட்டினானே," "தென்னாட்டில் வடநாட்டிற் குடநாட்டிற் குணநாட்டிற் றெவ்வரோடக், கன்னாட்டி யமர்பொருது கங்கைநீ ரூட்டுவித்துக் கண்டன்வேங்கை, பொன்னாட்டுமெழுதியவன் திருமரபோர் பெற்றபுகழ் யாவர்பெற்றா, ரந்நாட்டுக்கொற்றமெல்லாமக்குரிசில்புகழொடவதரித்ததன்றே" என்று இந்நூற்சிறப்புப்பாயிரத்தில்

இந்நூலாசிரியர்குமாரராகிய வரந்தருவார் கூறுவதனாலும், இவ்வரபதியாட்கொண்டானது போர்வெற்றிச்சிறப்பு நன்குவிளங்கும். கொடிமதிற்பாகை —"ஆற்றியமெய்ச்செல்வத்தாலளகையையென் றருங்கவினலமாருரை, மாற்றிய பொற்றடமதில்சூழ்வக்கபாகை" என்பர் சிறப்புப்பாயிரத்தும்.)

தலைதணித்தால் வீமன் சபதந்தவறு மென்பதுபற்றி, மகுடபங்கம் பண்ணினவளவோடு விட்டிட்டனன். கீழ்-௬௧-ஆஞ்செய்யுளில் "ஏகுகின்ற பேரிராசராசனையெதிர்தகைந்து" என்றதனை நோக்கி, 'மீண்டுஞ்சென்று' எனப்பட்டது. அரவு - அரவக்கொடிக்கு ஆகுபெயர். மகுடபங்கம் - வடமொழித்தொடர். (௬0௩)

[அஜ்ஞாதவாஸம் பூர்ணமாகவில்லை யென்று துரியோதனன் வீடுமனிடம் ஆக்ஷேபித்தல்.]

வல்லினிலழிந்துநின்முன்மன்னவைதன்னினன்று
சொல்லியகாலஞ்செல்லாமுன்னிவர்தோற்றஞ்செய்தார்
புல்லியகானினின்னம்போகநீபுகறியென்று
வெல்படைவேந்தன்சொல்லவீடுமன்மீண்டுஞ்சொல்வான்.

(இ - ள்.) (அப்பொழுது),—வெல் படை வேந்தன்-(பகைவரை) வெல்லுதற்குரியஆயுதங்களையுடைய துரியோதனராஜன்,—(வீடுமனைநோக்கி),— 'இவர் - இப்பாண்டவர்கள், வல்லினில் அழிந்து - சூதாட்டத்தில் தோற்று, அன்று - அக்காலத்தில், நின் முன் - உனது முன்னிலையிலே, மன் அவை தன்னின் - இராஜசபையில், சொல்லிய - வரையறுத்துச்சொல்லியுடன்பட்ட, காலம் - அஜ்ஞாதவாசஞ்செய்யவேண்டிய ஒருவருஷகாலம், செல்லாமுன் - முடியக்கழிவதற்குமுன்னமே, தோற்றம் செய்தார் - வெளிப்பட்டுத்தோன்றிவிட்டார்கள்; (ஆதலால் முன்னையசியமத்தின்படி), இன்னம்-மறுபடியும், புல்லிய கானின் போக - இழிவான காட்டிற்குச் செல்லும்படி, நீ புகறி-நீ(அப்பாண்டவர்களைநோக்கிச்)சொல்வாயாக', என்று சொல்ல—, வீடுமன் - பீஷ்மன், மீண்டும் சொல்வான் - (அதற்குப்) பிரதியுத்தரஞ்சொல்பவனானன்; (எ - று.)—அதனை, அடுத்தகவியிற் காண்க.

வல் - சூதாடுகருவி; அதுகொண்டாடும் ஆட்டத்துக்கு இங்கு ஆகுபெயர். அவை - ஸபா என்ற வடசொல்லின் சிதைவு. தோற்றம் - தோன்றுதல்; தொழிற்பெயர்: தோன்று - பகுதி, அம் - விகுதி, வலித்தல் - விகாரம். புல்லிய - புன்மையென்னும் பண்பி னடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; இ - சாரியை: புற்களையுடைய வென்ற பொருளில், புல் என்ற பெயரினடியாப் பிறந்ததாம்; நெருங்கிய என்றபொருளில், புல்என்ற வினைப்பகுதியினடியாப்பிறந்தஇறந்தகாலப்பெயரெச்சம்; (முன்பு)சேர்ந்திருந்தஎன்று பொருள்கொண்டாலும் இங்ஙனமே. 'இன்னம்' என்பது - எதிர்காலக்குறிப்பதோ ரிடைச்சொல்; இனியு மென்றபடி. புகறி என்ற ஏவலொருமைமுற்றில், புகல் - பகுதி, இ - விகுதி, த் - எழுத்துப்பேறு, தகரம் றகரமானவிடத்து லகரங்கெட்டது - சந்தி. வெல் படை - வினைத்தொகை. படை - சேனையுமாம். இங்கு 'வெல்படைவேந்தன்' என்றது, இகழ்ச்சிக்குறிப்பாகிய எதிர்மறையிலக்கணை; கார்முகம் கைத்தலத்திருப்பப் போர்முகத்துப் புறந்தந்துபோனவ னாதலால், இங்ஙனங்கூறுதல் ஏற்கும். ஏதேனும் ஒருவகையால் தனக்குவெற்றியையுண்டாக்கிக்கொள்ள முயல்கின்ற அரச னென்ற பொருளுந் தோன்றும்: வெற்றியைப் படைக்கும் வேந்தனென்க. இனி, வெல் என்ற வினைத்தொகையைச் செயப்பாட்டு வினைப்பொருளில்வந்தசெய்வினையென்றுகொண்டு,(அருச்சுனனால்)வெல்லப்பட்ட சேனையையுடைய துரியோதனராச னென்று உரைத்தலு மொன்று. நின்

முன் - உனதுஎதிரில்; முன் - இடமுன். கீழ் - இக-ஆஞ்செய்யுளில் 'வீடுமன் நினைவிதுவென்றான்' என்றதை நோக்கி இங்கு 'மீண்டுஞ் சொல்வான்' என்றதாகவுங் கொள்ளலாம். மன்னவைதன்னில் நன்று சொல்லிய காவம் என்றுபிரித்து உரைத்தலுமாம்; ராஜசபையில் (ஐயந்திரிபின்றி) நன்றாகச் சொல்லிவரையறுத்த காலமென்க. செல்லாமுன்-செல்லாதமுன்பு. (௬0௮)

[அஜ்ஞாதவாசம் பூர்ணமாய்விட்ட தென்று வீடுமன் விடையளித்தல்.]

செந்நெலேகன்னல்காட்டச்சேர்ந்தயற்செறுவினின்ற
கன்னலேகமுகுகாட்டுங்கங்கைநீர்நாடகேண்மோ
வின்னலேயுழந்தோர்காலமிந்துவினியக்கந்தன்னா
லென்னலேசென்றதென்றானெஞ்சினிலழுக்கிலாதான்.

(இ - ள்.) 'செந்நெலே கன்னல் காட்ட - செந்நெற்பயிர்கள்தாம் கரும்புகள்போலவளர்ந்துதோன்றாநிற்க, அயல் செறுவில் சேர்ந்து நின்ற கன்னலே கமுகு காட்டும் - பக்கத்துநிலங்களிற் பொருந்தியிருக்கின்ற கரும்புகள்தாம் பாக்குமரங்கள்போலவளர்ந்துகாணப்படுகின்ற, கங்கைநீர் நாட - கங்காநதியின்நீர் பாயப்பெற்ற குருநாட்டுக்குத் தலைவனே! கேண்மோ - (நான்சொல்வதை நீ நன்கு) கேட்பாயாக:இன்னலே உழந்தோர் காலம் - (இளமைதொடங்கித்) துன்பங்களையேயனுபவித்துவருந்தியவர்களான பாண்டவர்கள்(மறைந்துவசிக்கவேண்டிய) ஒருவருஷகாலமானது, இந்துவின் இயக்கந்தன்னால் - சந்திரனது ஸஞ்சாரத்தால் [சாந்திரமானபக்ஷரீதியாய்], என்னலே சென்றது - நேற்றேயே கழிந்துவிட்டது.' என்றான் - என்று (துரியோதனனைநோக்கிச்)சொல்லினான்: (யாவனெனில்),நெஞ்சினில் அழுக்குஇலாதான்-மனத்திற் களங்கஞ்சிறிதுமில்லாதவனான பீஷ்மன்; (எ-று.)

இவ்வாறுகூறியது. திருவேங்கடமலைக்குவடக்கிலுள்ளார்க்குச் சௌரமானபக்ஷத்திலும் சாந்திரமானபக்ஷம் சிறந்ததாதலின்; சந்திரகுலத்தரசர் சாந்திரமானபக்ஷரீதியை அநுசரித்தற்குரிய ரென்பதுபற்றியுமாம். சாந்திரமானவருஷமாவது - அமாவாசைக்கமாவாசை ஒருமாச மெனக்கொண்டு கணக்கிட்டுச் சந்திரனுடைய சம்பந்தத்தால் ஏற்படுத்தும் வருஷம். இனி, சூரியன் ஒருராசியிலிருந்து மற்றொரிராசிக்குப் போகுங் காலத்தை மாச மெனக்கொண்டு மூந்நூற்றறுபத்தைந்துநாள்கணக்கிட்டு ஏற்படுத்தும் வருஷம் சௌரமானவருஷ மென்றும். மூந்நூற்றறுபதுநாள்கணக்கிட்டு ஏற்படுத்தும்வருஷம் ஸாவநவருஷமென்றுஞ் சொல்லப்படும். சீவகசிந்தாமணி நச்சினார்க்கினியருரையில்'மூந்நூற்றறுபத்தைந்துநாள்ஓர்யாண்டானசௌரமானபட்சம்'என்றும், 'சௌரமானபட்சத்தாலே ஐந்துநாள்ஏறுகின்றது' என்றும், 'இவ்விடத்தில் சௌரமானபட்சத்தால் மாசித்திங்கள்கொள்ளார்; சாந்திரமானபட்சஞ்சிறந்ததாகலின்' என்றும் வருதல் காண்க. பக்ஷபாதமில்லாமல் உண்மைகூறியமைபற்றி, 'நெஞ்சினிலழுக்கிலாதான்' என்றார்; மனத்துக்கு அழுக்கு - தீயசிந்தனை: அழுக்கு-குற்றமென்றபடி. பாண்டவர்களை 'இன்னலேயுழந்தோர்'என்றுகுறித்ததனால், அவர்கள்பக்கல்வீடுமனுக்குள்ள இரக்கம் வெளியாம்.

செந்நெற்பயிர்கள் கரும்புகள்போலவும் கரும்புகள் பாக்குமரங்கள் போலவும் வளரும் நீர்நாடு என, அதிசயோக்திவகையால் நீர்வளச்செழுமையும் நிலவளச்செழுமையுங் கூறியவாறும்; "கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்ன" எனப்பிறர்கூறுமாறுங் காண்க. 'செந்நெலே','கன்னலே' என்ற ஏகாரங்கள் - தேற்றத்தோடு இழிவுசிறப்பு. செந்நெல் - நீர்வளத்துவிளைவதொரு நெற்சாதி. கமுகு - க்ரமுக மென்ற வடசொல்லின் சிதைவு. கங்கை - ஆவீறு ஐயான வடசொல். கேண்மோ, மோ - முன்

னிலையசை.' இன்னலே, எ - பிரிநிலை. இந்து - வடசொல்; ஆதலால், அதனீற்றுக்குற்றியலுகரம் இன்சாரியையின்முதலுயிர்வரக்கெடவில்லை. இயக்கம் - தொழிற்பெயர்; இயங்கு - பகுதி. அம் - விகுதி, வலித்தல் - விகாரம். நென்னல் - நெருநல் என்பதன் மரூஉ. ஏகாரம்-தேற்றம். கன்னல்காட்டுதல் - கரும்பினுருவைத் தான் கொண்டு காட்டுதல்; கமுகுகாட்டுத லென்பதும் இவ்வாறே: இங்கு 'காட்ட', 'காட்டும்' என்றவை - உவமவாசகமாய் நின்றன. சேர்ந்து - (நெல்வயலை) அடுத்து என்றுமாம். 'சேர்ந்தநற்செறுவினின்ற' என்றபாடத்துக்கு - (நெல்வயலை)அடுத்தநல்லநிலத்திலுள்ளவென்பது பொருள். 'நென்னலேகழிந்ததென்றான்' என்றும் பாடபேதமுண்டு. (௧௦௬)

[துரியோதனன் தனதுஊர்க்குச்செல்லுதல்.]

அரவினையுயர்த்தகோமானவ்வுரைகேட்டபோழ்தே
பரவையினிரவிகண்டபனிமதிபோலமாழ்கி
வரவரவறிதுமென்றுமாபெருஞ்சேனையோடு
மிரவிடையாருந்துஞ்சவெயில்வளைநகரிபுக்கான்.

(இ - ள்.) அரவினை உயர்த்த கோமான்-பாம்புக்கொடியை உயரநாட்டிய துரியோதனராசன், அ உரை கேட்ட போழ்தே - அந்தவீடுமன்வார்த்தையைக் கேட்டவளவிலே, பரவையின் இரவி கண்ட பனி மதி போல மாழ்கி - (கீழ்)கடலினின்றுஉதித்த சூரியனைக் கண்ட குளிர்ந்தசந்திரன்போல ஒளிமழுங்கி[மனந்தளர்ந்து], வர வர அறிதும் என்று-'போகப்போகப் பார்த்துக்கொள்வோம்'என்றுஎண்ணி, மாபெருஞ்சேனையோடும் - மிகப்பெரிய சேனையுடனே. இரவிடை யாரும் துஞ்ச - நடுராத்திரியில் யாவருந் தூங்குகையில், எயில் வளை நகரி புக்கான் - மதில்கள்சூழ்ந்த (தனது)அஸ்திநாபுரியிற் போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

தாம்தோற்றுமீள்வதை ஊரவர்கண்டால்இகழ்வரே யென்னும் நாணத்தினால், அவர்கள்விழித்திருக்கின்றசமயத்திற்செல்லவிரும்பாமல், அவர்களனைவருந்தூங்குகின்ற நள்ளிரவிற் போய்ச்சேர்ந்தன னென்க. இரவிடை- இடையிரவு: இராப்பொழுதின்நடுவில்; பாதிராத்திரியி லென்க. 'எயில்வளைநகரி' என்றார், மிக்க பாதுகாவலை யுடைய தென்றற்கு. 'எழில்வளநகரி' என்றும் பாடம். 'மாபெருஞ்சேனை' என்றது. சேனை உருவத்திற் பெரிதாயிருந்தும் வலிமையிற்சிறப்புறாது சிறுமைப்பட்ட தென்ற இகழ்ச்சி குறித்தற்குப் போலும். பனி மதி-குளிர்ச்சியாகிய சந்திரன் எனப் பண்புத்தொகையாகவும், குளிர்ச்சியையுடைய சந்திரன் என இரண்டனுருபும் பயனுந்தொக்கதொகையாகவுங் கொள்ளத்தக்கது; உம்மைத்தொகையாகக் கொண்டு, சூரியனைக்கண்ட பனியும் மதியும் போல வென்றலுமாம்.

கோமான், மான் - பெயர்விகுதி. பரவை - பரந்திருப்பது எனக் காரணப்பெயர்; பர அல்லது பரவு - பகுதி, ஐ - கருத்தாப்பொருள்விகுதி. மாபெரு - ஒருபொருட்பன்மொழி. 'துஞ்சப் புக்கான்' என்றவிடத்துச் செயவெனெச்சம் - காரணப்பொருளும் காரியப்பொருளு மாகாது உடனிகழ்ச்சிப்பொருளன தாதலால். நிகழ்காலம். மாழ்கி, மாழ்கு - பகுதி. ஒளிமாழ்கி - முகம்வாடி யென்றபடி. வரவர அறிதும் என்று - (இப்பாண்டவர்பக்கல் நாம்செய்யவேண்டுவதை) நாள்செல்லச்செல்ல ஆராய்ந்தறிவோ மென்றுகருதி யென்க. 'வரவர' என்ற அடுக்கு - காலக்கிரமத்திலென்றபடி. 'அறிதும்' என்றது - தனித்தன்மைப்பன்மை; கர்ணன்முதலியோரை உளப்படுத்தியதுமாம்: 'தும்' என்ற தன்மைப்பன்மைவிகுதி, இங்கு எதிர்காலங் காட்டிற்று; [நன் - வினை - ௧௫, பத - ௧௮.] சேனையோடும் புக்கான் எனவியையும்.

(௧௦௭)

[அருச்சுனன் ஆயுதங்களைவைத்துவிட்டுப் பேடிவேடங்கொள்ளுதல்.]

வேந்தனைமுதுகுகண்டவெந்திறல்வீரன்மீண்டு
போந்துமுன்னெடுத்தவன்னிப்பொதும்பரின்புறத்துவந்து
வாய்ந்தவாயுதங்கள்யாவும்வைத்தெழில்வடிவமாற்றி
யாந்தகவெண்ணிப்பேடியாயினனென்பமாதோ.

(இ - ள்.) வேந்தனை முதுகுகண்ட - துரியோதன ராசனைப் புறங்கொடுத்தோடச்செய்த, வெம் திறல் வீரன் - கொடிய வல்லமையையுடைய வீரனாகிய அருச்சுனன், முன் போந்து எடுத்த வன்னி புறத்து மீண்டு வந்து - முன்பு சென்று தான்ஆயுதங்களையெடுத்துக்கொண்ட வன்னிமரத்தினருகில் மறுபடியும்வந்து, வாய்ந்த ஆயுதங்கள் யாவும் பொதும்பரின் வைத்து - தனக்குஏற்றவையாயமைந்த (வில்முதலிய) ஆயுதங்களையெல்லாம்(கட்டி) அம்மரப்பொந்திலே மறைத்துவைத்துவிட்டு, எழில் வடிவம் மாற்றி - அழகிய தனதுமெய்யுருவத்தை யொழித்து, ஆம் தகவு எண்ணி பேடி ஆயினன் - இனிமேல்ஆகவேண்டியகாரியத்தைஆலோசித்து முன்போலப் பேடிவேடங்கொண்டான்; (எ - று.)

'ஆந்தகவெண்ணி' என்றது, பின்னர்த்தருமன்முதலியோருடனே தானும் ஒருங்குவெளிப்படவேண்டுமென்றுகருதி யென்றவாறு; பேடியாகுமாறெண்ணி அங்ஙனமாயின னென்றுமாம்; ஆந்தகவெண்ணுதல் - இப்போரைஉத்தரன்வென்றதாகத்தோன்றுவிக்குங்கருத்துமாம். என்ப - அசை; சீவகசிந்தாமணியுரையிலும் தொல்காப்பியவுரையிலும் நச்சினார்க்கினியர் 'என்ப' என்ற அசையைப் புறனடையாற்கொண்டுள்ளார்: இனி, என்ப - என்றுசொல்வர் என்று பலர்பால்முற்றாகக்கொண்டால், இதற்குஎழுவாய் முதனூலாசிரியராதல்வேண்டும். மாது, ஓ - ஈற்றசை. ஆயுதம் - வடசொல். வாய்ந்த - வெற்றிபொருந்திய வென்றலுமாம்; (அக்கினிமுதலிய தேவர்களாற்) கிடைத்த வென்றலு மொன்று. (கoஎ)

[அருச்சுனனும் உத்தரனும் விராடனகர்க்குமீளுதல்.]

இவ்வெயிலெறிக்கும்பைம்பொனிலங்குதேர்மீண்டுமேகக்
கைவெயிலெறிக்கும்பைம்பூட்காளைதன்றேரிலேறி
வெவ்வெயிலாறும்வண்ணம்விரைந்துபோய்விராடன்மூதூ
ரவ்வெயில்சூழ்ந்தகாவினமர்ந்தனனரசரேறே.

(இ - ள்.) அரசர் ஏறு - அரசர்கட்கு ஆண்சிங்கம்போன்றவனாகிய அருச்சுனன்,—வெயில் எறிக்கும் - சூரியனொளிபோன்றஒளியை வீசுகின்ற, பைம் பொன் - பசும்பொன்னினாலாகிய, இலங்கு - விளங்குகின்ற, இ தேர் - இந்த [அக்கினிபகவான்கொடுத்த] இரதம், மீண்டும் ஏக - திரும்பிச் சென்றுவிட,—(தான்),—கை வெயில் எறிக்கும் - பக்கங்களில் ஒளியை வீசுகின்ற, பைம் பூண் - பசுமையான ஆபரணங்களை யணிந்த, காளைதன் - உத்தரகுமாரனது, தேரில்—, ஏறி - ஏறிக்கொண்டு, விரைந்து போய் - வேகமாகச் சென்று, வெவ் வெயில் ஆறும் வண்ணம் - கொடிய வெயில் வெப்பத்தா லுண்டான தாபம் தணியும்படி, விராடன் மூது ஊர் அ எயில் சூழ்ந்த காவின் அமர்ந்தனன் - விராடராஜனுடைய பழமையான நகரத்தினது அழகியமதிலின் புறத்திற் சூழ்ந்துள்ள சோலையிற் சேர்ந்துதங்கினன்.

போர்முடிந்தவுடனே அருச்சுனனது தேர் அவனதுகருத்தின்படி மீண்டுசென்றுவிட, பேடிவேடங்கொண்ட அருச்சுனன் உத்தரனதுதேரிலேறி முன்போலத்தேர்செலுத்திக்கொண்டு வெயிற்பொழுதில் அதிவேகமாக விராடநகரத்தைநோக்கிச்செல்லுகையில், வெயில்வெப்பத்தாலாகிய

இளைப்புத்தணியுமாறு அந்நகர்ப்புறச்சோலையிற் சிறிதுபொழுது உத்தரனும் தானுமாகத் தங்கின னென்பதாம். அக்கினிபகவான்கொடுத்த நான்குவெள்ளைக்குதிரைகள்பூண்ட குரங்குக்கொடித்தேர் முன்புஅருச்சுனன்கருதிய மாத்திரத்தில் வந்துசேர்ந்தமை கீழ் - ருஎ - ஆஞ்செய்யுளிற் கூறப்பட்டதனால், போர்முடிந்தபின்பு அத்தெய்வத்தேர் முன்புதானிருந்தவிடத்திற்கு மீண்டுசெல்வதை இங்குக்கூறுகின்றார். பசும்பொன்னாலாகிய ஆபரணங்களென்பார், 'பைம்பூண்' என்றார்.

பூண் என்பது - பூணப்படுவதாகிய காரணம்பற்றி வழங்கும் பெயராய் ஆபரணங்கள்பலவற்றிற்கும்பொதுவாய்நிற்றலால், காரணப்பொதுப்பெயர்; செயப்படுபொருளுணர்த்தும்விகுதி புணர்ந்துகெட்டது. முதுமை + ஊர் = மூதூர்: பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டது. 'மூதூர்' எனவே, ஊர் பழையதாயினும் இப்படிப்பட்டபோரையறிந்திராத தென்பது கருத்து. கா - பாதுகாக்கப்படுவதென்றுபொருள்படுங் காரணக்குறி; இதுவும் செயப்படுபொருள்விகுதிபுணர்ந்துகெட்ட பெயரே. விலங்குகளிற் சிங்கம் போல அரசர்களில்தலைவ னெனபது, 'அரசரேறு' என்றதன் கருத்து. 'சிங்கம்' முதலிய சிலசொற்கள் சிறப்புணர்த்தும்பெயர்களாய்வழங்கும். இனி, பகையரசர்களாகிய யானைகளுக்கு ஆண்சிங்கமாயுள்ளவ னென்றுங் கூறலாம்; ஏகதேசவுருவகம். ஏறுபோன்றவனை 'ஏறு' என்றது, உபசாரவழக்கு. 'கைவ்வெயில்' என்ற பாடத்துக்கு, வகரவொற்று எதுகைநயநோக்கிவந்த விரித்தல்விகார மெனவேண்டும். வெம்மையுடையது வெயில் எனக் காரணக்குறி; வெம்மை யென்ற பண்புப்பகுதி, ஈறுபோய் முன்னின்றமகரமெய் யகரமாத்திரிந்து 'வெய்' எனநின்றது: இல் - பெயர்விகுதி. பத்துப்பாட்டினுட் பெரும்பாணாற்றுப்படையில் "அவ்வாய் வளர்பிறை" என்பதற்கு - 'அழகிய இடத்தையுடைய வளரும்பிறை' என்றும், நெடுநல்வாடையில் "அவ்விதழவிழ்பதம்" என்பதற்கு - 'அழகிய இதழ்கள் விரியுஞ்செவ்வி' என்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரையெழுதிப்போந்தன ராதலால், இங்கு 'அவ்வெயில்' என்பதற்கு - அழகியமதிலென்றுபொருள்கொள்ளுதல் சாலும்; 'அம்' என்பதுபோல 'அ' என்பதும் அழகுகுறிக்குமென்க. (௧௦௮)

[அருச்சுனன் உத்தரனுக்குத் தமதுவரலாறுகூறுதல்.]

ஆறியபசுந்தண்காவினசைவொரீஇயிருந்தவீர
னேறியகானிற்பல்யாண்டிருந்தபினேனையாண்டு
மாறியவடிவத்தோடிவ்வளநகர்வைகினோமென்
றூறியவமுதச்சொல்லாலுத்தரற்குரைசெய்தானே.

(இ - ள்.) ஆறிய - வெப்பமில்லாத, பசு - பசுமையான, தண் - குளிர்ந்த, காவின் - (அந்தச்) சோலையில், அசைவு ஒரீஇ இருந்த - இளைப்பாறிக்கொண்டிருந்த, வீரன் - வீரனாகிய அருச்சுனன்,—உத்தரற்கு - உத்தரனை நோக்கி,—'(நாங்கள்), ஏறிய கானில் பல் யாண்டு இருந்தபின் - சிறந்த காடுகளில் அநேகவருஷகாலம் [பன்னிரண்டுவருஷம்] வசித்திருந்தபின்பு, ஏனை ஆண்டு - மற்ற ஒருவருஷகாலம், மாறிய வடிவத்தோடு - உண்மையுருவத்தையொழித்து வேறுபட்டஉருவத்துடனே, இ வளம் நகர் வைகினோம் - வளப்பமுள்ள இந்நகரத்தில் (அஜ்ஞாத)வாசஞ் செய்தோம்,' என்று—, அமுதம் ஊறிய சொல்லால் உரைசெய்தான் - அமிருதம்போன்று இனிமைமிக்க வார்த்தைகளினாற் கூறினான்; (எ - று.)

'ஏறியகானிலிருந்தபின் வளநகர்வைகினோம்' என்றதனால், கடவுளருளால் எங்களுக்கு எங்கும் என்றும் ஒருகுறையுமில்லை யென்றானும். வனவாசஞ்செய்யுநாட்களில் நகரப்பிரவேசஞ்செய்யலாகா தென்பதும், அஜ்ஞாத

வாசஞ்செய்யுநாட்களில் வநவாசஞ்செய்யலாகா தென்பதும் அறிக. ஓரீஇ- ஒருவி யென்ற இறந்தகாலவினையெச்சம், விகாரப்பட்டு அளபெடுத்தது; சொல்விகாரப்பட்டதனாற் சொல்லிசையளபெடை. ஒருவுதல் - நீங்குதல். 'அசைவறவிருந்தவீரன்' என்றும் பாடமுண்டு. ஏறிய கான் - காமியவனம், துவைதவனம் முதலியன. இதற்கு - மரங்களுயர்ந்த காடென்று உரைப்பாரு முளர். 'ஊறிய அமுதச் சொல்'என்பதற்கு - (பாற்கடல்)சுரந்த அமிருதம்போன்ற சொல் என்றும் உரைப்பர். மகிழ்ச்சியைவிளைத்தலால், 'ஊறியஅமுதச்சொல்'எனப்பட்டது. இலையாகிய சினையினது பண்பாகிய பசுமையை முதலாகியசோலையின்மே லேற்றி,'பசுங்கா'எனப்பட்டது. பல+யாண்டு = பல்யாண்டு: "பலசிலவெனுமிவை" என்னுஞ் சூத்திர விதி. 'உத்தரற்கு உரைசெய்தான்' என்றவிடத்து, நான்கனுருபு-கோடற்பொருளின்பாற்படும். (௧0௧)

['உத்தரன்வெற்றிபெற்றுமீள்கின்றனன்' என்று விராடனுக்குச்சொல்லும்படி அருச்சுனன் தூதரையனுப்புதல்.]

பேடிதேர்செலுத்தச்சென்றபிள்ளையும்பெரும்போர்வென்று
கோடிதேர்முதுகுகண்டுகோநிரைமீட்டானென்றென்
றோடிநீர்சொன்மினென்றுதூதரையோடவிட்டா
னீடுநீர்பரக்குங்கங்கைநாடுடைநிருபர்கோமான்.

(இ - ள்.) நீடு நீர் பரக்கும் - மிகுதியான நீர் பரவியோடப்பெற்ற, கங்கை - கங்காநதி பாய்கின்ற, நாடு - குருநாட்டை, உடை - உடைய,நிருபர் கோமான் - அரசர்க்கரசனாகிய அருசசுனன்,—'பேடி தேர் செலுத்த - ஆண்மையில்லாத பேடி தேரையோட்ட, சென்ற - (போர்செய்தற்குத் தனியே) புறப்பட்டுப்போன, பிள்ளையும் - இளங்குமரனான உத்தரனும்,பெரும் போர் வென்று - பெரிய போரில் வெற்றிகொண்டு,கோடி தேர் முதுகு கண்டு - மிகப்பலதேர்வீரர்களை முதுகுகாட்டியோடச்செய்து, கோ நிரை மீட்டான் - (பகைவர்கவர்ந்துசென்ற) பசுக்கூட்டத்தைத் திருப்பிக்கொண்டுவந்தான்', என்று என்று—, நீர் - நீங்கள், ஓடி சொன்மின் - ஓடிச்சென்று சொல்லுங்கள், என்ற - என்றுசொல்லி, தூதரை ஓட விட்டான் - (சில)தூதர்களை(விராடனிடம்)விரைந்துசெல்லும்படி அனுப்பினான்; (எ-று.)

தாங்கள் விராடராஜனால்ஆதரிக்கப்பட்டமையால், அவ்வுபகாரத்துக்குப் பிரதியுபகாரமாக, இப்போரை உத்தரனே வென்றனனென்று அவனுதந்தைதாயர்முதலியோர் கருதி மகிழும்படி செய்விக்க வெண்ணி அருச்சுனன் இங்ஙனஞ்செய்திசொல்லுமாறு விராடனைக்குறித்துத் தூதரையேவின னென்க.

பிள்ளை - இளமைப்பெயர்; உம்மை - இழிவுசிறப்பு. தென்புறத்திற் போர்க்குச்சென்ற விராடராஜனுடன் தருமன்முதலிய நால்வருஞ் சென்றுள்ளா ராதலால் அவன் உடனே வெற்றிபெற்று நிரைமீட்டு மீண்டிருப்பனென்கிற நிச்சயங் கொண்டு,இறந்ததுதழுவியவெச்சவும்மைபெய்து, 'பிள்ளையும்'என்றதாகக் கொள்ளுதலு மொன்று. 'பேடிதேர்செலுத்த,' 'பிள்ளை', 'பெரும்போர்,' 'கோடிதேர்'என்பன - உத்தரனதுபோர்த்திறத்தை நன்கு விளக்குங் கருத்தின. தேர் - தேர்வீரர்க்கு ஆகுபெயர். மகிழ்ச்சிபற்றிய அடுக்காகப் பலமுறைசொல்லுமாறு கூறின னென்பது தோன்ற, 'என்று என்று' எனப்பட்டது; ஊர்முழுவதிலும் அரசனிடத்துஞ் சொல்லும்படி யென்ற கருத்தில் 'என்று' என்றசொல் இருமுறைகூறப்பட்ட தெனலுமாம். முன்னையநியமத்தின்படி வநவாஸஅஜ்ஞாதவாஸங்களை இடையூறின்றிக்கழித்தாயினமைபற்றியும், குருநாட்டையாளுகின்ற துரியோதனனை

வென்றிட்டமைபற்றியும், இங்கு அருச்சுனனை 'கங்கைநாடுடை நிருபர் கோமான்' என்றார். 'பின்னை யப்பெரும்போர் வென்று' எனவும், 'மீட்டா னென்றங் கோடிகூறுமையி னென்று' எனவும் பாடமுண்டு. பரக்கும்என்ற பெயரெச்சத்தில், கு - சாரியை; இச்சாரியையின்றி 'பரவும்' என்றும் நிற்கும். அரசன்முதலியோரது கவலையை விரைவிலொழிக்குங்கருத்தினனாய் 'ஓடிநீர்சொன்மின்' என்றான். (௧௧௦)

[அன்றைக்காலையிலேயே விராடராஜன் தனதுநகரத்துவந்துசேர்ந்தமை.]

இங்கிவனிவ்வா றுய்ப்பமுற்பகலேகியாங்கட்
கங்குலிற்சேனையோடுங்கண்படையின் றிவைகிச்
செங்கதிரெழுந்தபின்னர்த்தென்றிசைப்பூசல்வென்ற
வெங்கழல்விராடன்றானுமீண்டுதன்னகரிபுக்கான்.

(இ - ள்.) இங்கு - இவ்விடத்தில் [நகர்ப்புறசோலையில்], இவன் - இவ்வருச்சுனன், இ ஆறு உய்ப்ப - இவ்விதமாக(ச் சொல்லி)த் தூதரை யனுப்ப,—(அதற்குள்ளே),— முன் பகல் - (அதற்கு) முந்தினநாளின் பகலில், தென் திசை - (தனது நகர்க்குத்) தென்புறத்தில், ஏகி - புறப்பட்டுச் சென்று, பூசல் - (அங்குநடந்த) போரில், வென்ற - (திரிகர்த்தராசனை) வென்று நிரைமீட்ட, வெம் கழல் விராடன்தானும் - (பகைவர்க்கு) அச்சந் தருகின்ற வீரக்கழலையுடைய விராடராஜனும், ஆங்கண் - அவ்விடத்திலே, கங்குலில் - அன்றை யிராத்திரிமுழுவதும், சேனையோடும் - (தனது)சேனையுடனே, கண்படை இன்றி வைகி - தூங்குதலில்லாமல் தங்கியிருந்து, (மறுநாள்), செம் கதிர் எழுந்த பின்னர் - சிவந்தகிரணங்களையுடைய சூரியன் உதித்தபின்பு, மீண்டு - திரும்பி, தன் நகரி புக்கான் - தனது நகரத்துக்கு வந்துசேர்ந்தான்; (எ - று.)

'உய்ப்ப' என்ற செயவெனெச்சத்தை, மேல் ௧௧௭ - ஆங் கவியிலுள்ள 'தூதர்போய்த்தொழுதுசொன்னார்'என்பதனோடுகூட்டுக. இடையிலுள்ளது, அச்சமயத்திற்குள்நிகழ்ந்திருந்தசெய்தியைக் கூறியது; கீழ் - ௨௬ - ஆஞ்செய்யுளில்'படைவருமெனக் கங்குலங்கிருந்தான்'என்றதனோடு தொடர்ச்சிப்பட நிகழ்ந்தசெய்திகூறுகின்றார்: அதனால், கங்குலிற் கண்படையில்லாதிருந்ததன் காரணம் விளங்கும்.

ஏகி, வைகி என்றவற்றில்—ஏகு, வைகு - பகுதி. 'அக்கண்' என்பது, மெலித்தல்விகாரம்பெற்று'அங்கண்'எனநின்று, அது பின்பு நீட்டல்விகாரம் பெற்று'ஆங்கண்'என்றாயிற்று. 'அங்கு' என்ற சுட்டுப்பெயர் 'ஆங்கு' என முதல்நீண்டு 'அண்'என்ற இடப்பொருள்விகுதியோடு கூடி 'ஆங்கண்'என நின்ற தெனினும் இழுக்காது. கண்படை - கண்மூடியுறங்குதல்; தொழிற் பெயர்: கண்படு - பகுதி, ஐ - விகுதி. செங் கதிர் - பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; அடையடுத்த சினையாகுபெய ரெனினும் அமையும். பின்னர், அர் - சாரியை. ஏகிவென்ற என்றும், வைகிமீண்டு என்றும் இயையும். விராடன்தானும், உம் - எதிரதுதழுவியஎச்சம். (௧௧௧)

[மகன்போர்க்குச்சென்ற செய்தி கேட்டு விராடன் வருந்துதல்.]

தடம்பதியடைந்தகாலைத்தன்மனையடைந்தபேடி
திடம்படுதடந்தேரூரத்திருமகன்சென்றசெய்கை
விடம்படுவெகுளிவேற்கட்சுதேட்டிணைவிளம்பக்கேட்டாங்
குடம்புயிரின்றிவீழ்ந்ததென்னுமா றுருகிவீழ்ந்தான்.

(இ - ள்.) (விராடராஜன்),—தட பதி அடைந்த காலை - (அவ்வாறு தனது) பெரிய நகரை யடைந்தபொழுதில்,—தன் மனை அடைந்த பேடி -

தனது மாளிகைக்குவந்துசேர்ந்திருந்த பிருகந்நளையென்னும் பேடி, இடம் படு தட தேர் ஊர - வலிமைபொருந்திய பெரிய தேரை யோட்ட, திரு மகன் - (தனது) சிறந்தகுமாரனாகிய உத்தரன், சென்ற - (வடக்கும் பக்கத்திற் போர்க்குச்)சென்ற, செய்கை - செய்தியை, விடம் படு வெகுளி வேல் கண் சுதேட்டிணை விளம்ப - நஞ்சுதீற்றிய கோபமுள்ள வேலாயுதம் போன்ற கண்களையுடைய சுதேஷ்ணையாகிய தனது மனைவி சொல்ல, கேட்டு - (தான்) செவியுற்று, ஆங்கு - அப்பொழுதே[கேட்ட அவ்விடத்திலே], உடம்பு உயிர் இன்றி வீழ்ந்தது என்னும் ஆறு - உடம்பு உயிர்நீங்கிவிழுந்த தென்னும்படி, உருகி வீழ்ந்தான் - (போர்த்திறமில்லாத தனது இளங்குமரன் என்னுவனோ வென்னும் வருத்தத்தால்) மனங்கரைந்து மூர்ச்சித்துக் கீழேவிழுந்தான்; (எ - று.)

அடைந்தகாலை விளம்ப என இயையும். திரு மகன் - செல்வப்பிள்ளை. செய்கை - 'கை'விகுதி பெற்ற தொழிற்பெயர். விஷம் - வடசொல். வெகுளி என்ற தொழிற்பெயரில், இ - விகுதி. மகளிர்கண்ணுக்கு வேலுவமை-கூர்மையும்,ஆடவர்நெஞ்சுறுதியையழிக்குந்திறமும் பற்றி யென்க. மைதீட்டிய கண்ணுக்கு உவமையாதற்பொருட்டு, விடம்படுவேல்கூறினர். எதிரியவரது கோபத்தை வேலின்மேல்ஏற்றி 'வெகுளிவேல்' எனப்பட்டது; 'சினவாள்' என்றாற் போல: ஒருவகை யுபசாரவழக்கு. வெகுளிகொண்டு எறியப்படும் வே லெனினுமாம். 'தன்மனையிருந்தபேடி' என்றும், 'உடம்புயிர் போகவீழ்ந்தது' என்றும் பாடமுண்டு. (ககஉ)

[விராடனைக் கங்கபட்டன் தேற்றுதல்.]

சந்தனவளறும்வாசத்தண்பனிநீரும்வீசி
வெந்திறல்வேந்தன்றன்னைமென்மையாலிருந்துதேற்றி
மைந்தனிப்பொழுதேவென்றுவருகுவன்பொற்றேரூர்ந்தா
ளந்தமெய்ப்பேடியாகிலென்றனனந்தணாளன்.

(இ - ள்.) (அப்பொழுது).—அந்தணாளன் - கங்கபட்டனென்கிற சந்யாசியாகிய தருமபுத்திரன்,—இருந்து - (பக்கத்தில்) இருந்து,—சந்தனம் அளறும் - சந்தனக்குழம்பையும், வாசம் தண் பனிநீரும் - நறுமணமுள்ள குளிர்ச்சியான பனிநீரையும், வீசி-(அவ்விராடராஜன்மீது)தெளித்து, வெம் திறல் வேந்தன்தன்னை மென்மையால் தேற்றி - (பகைவர்க்கு)அச்சந்தரு கிற வல்லமையையுடைய அவ்வரசனை மெதுவாய்மூர்ச்சைதெளியச்செய்து, 'அந்த மெய் பேடி - உண்மையாக அந்தப்பேடி [பிருகந்நளை],பொன் தேர் ஊர்ந்தாள் ஆகில்-அழகிய தேரை யோட்டிக்கொண்டுசென்றனளேயாயின், மைந்தன் - (உத்தர)குமாரன், இப்பொழுதே வென்று வருகுவன் - வெகு விரைவிலே (பகைவரைச்) சயித்து நிரைமீட்டுவருவன்,'என்றனன் - என்று தேறுதல்கூறினான்; (எ - று.)

சந்தநம், வாஸம் - வடசொற்கள். அளறு - சேறு. 'மென்மையால்' என்பதற்கு - மென்மையானகாற்றினாலென்று உரைப்பாருமுளர். 'மேன்மையால்' என்ற பாடத்துக்கு - சிறந்த உபாயங்களா லென்பது பொருள். ஏ - தேற்றம். வருகுவன், கு - சாரியை. மெய்ப் பேடி - உண்மையன்புடைய பேடி யெனினுமாம்; இத்தொடரில், மெய்யினால் [வடிவுமாத்திரத்தால்] பேடி [வலிமையாற் பேடியன்று]என்ற பொருள் உள்ளுறையாய்த்தோன்றுதல் காண்க: இனி, பொய்ப்பேடித்தன்மையை வெளிப்படாதுமறைத்தற்கு 'மெய்ப்பேடி' என்றாருமாம். 'அந்தரப்பேடி' என்றும் பாடமுண்டு. அந்தணாளன் என்ற பெயர் - அம் தண் ஆளன் என்றுபிரிந்து, அழகிய குளிர்ந்த அருளை ஆள்பவனென்று பொருள்படும்; இது முனிவர்க்கு உரியதாதல்

"அந்தணரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண் டொழுகலான்" என்ற திருக்குறளால் விளங்கிற்று. அழகிய குளிர்ச்சியை யுள்ளுவ னாதலால் இங்ஙனம் சைத்தியோபசாரஞ்செய்தும் குளிர்ந்தசொற்க ளைக்கூறியும் சமயத்தில் தாபசாந்திசெய்பவனுயின னென்னுங் கருத்துத் தோன்றுதலால், கருத்துடையடைகோளியணி. 'மிகுந்துயரிருந்துதேற்றி' என்றும், 'மெய்ம்மெலிவிருந்துதேற்றி' என்றும், 'மெல்லெனவிருந்துதேற்றி' என்றும் பாடமோதுவாரு முளர். (௧௧௩)

[தூதர் சென்று விராடனிடஞ் செய்திகூறல்.]

அறன்மகன்வாய்மைதேறியரசனுங்கிருந்தவெல்லை
மறனுடையுரககேதுவன்சமரழிந்தவாறு
முறமலைந்தொருதன்றேர்கொண்டுத்தரன்வென்றவாறுந்
தொறுநிரைமீட்டவாறுந்தூதர்போய்த்தொழுதுசொன்னார்.

(இ - ள்.) அறன்மகன் வாய்மை - தருமபுத்திரனது வார்த்தையி னால், அரசன் - விராடராஜன், தேறி - (சிறிது) தெளிவடைந்து, ஆங்கு இருந்த எல்லை - அவ்விடத்தி லிருந்த சமயத்தில்,—தூதர் - (அருச்சுன னனுப்பிய) தூதுவர், போய் - (அவ்விராடனிடஞ்) சென்று,—தொழுது - (அவ்வரசனை) வணங்கி,—மறன் உடை உரககேது வல் சமர் அழிந்த ஆறும் - வலிமையுள்ள பாம்புக்கொடியையுடையவனான துரியோதனன் வலியபோ ரில் தோற்றுப்போன செய்தியையும்,—உத்தரன்—, ஒரு தன் தேர் கொ ண்டு - தனது இரதமொன்றைக்கொண்டே, உறமலைந்து - நன்றாகப் போர் செய்து, வென்ற ஆறும் - (பகைவரைச்) சயித்த செய்தியையும், தொறு நிரை மீட்ட ஆறும் - (பகைவர்கவர்ந்த) பசுக்கூட்டங்களை மீட்டுக்கொண்டு வந்த செய்தியையும், சொன்னார் - சொன்னார்கள்; (எ - று.)

வாய்மை - உண்மையான மொழி. வாய்மை தேறி - சொல்லை நம்பி யெனினுமாம். இருந்தஎல்லை, சொன்னார் என இயையும். மறன் - மறம்: ஈற்றுப் போலி. உடை உரககேது என்பதனைப் பிறவினைவினைத்தொகையாகக்கொ ண்டு, (பகைவரது) வலிமையை யழிக்கின்ற துரியோதன னென்றலுமாம். உரக கேது - பாம்பின்வடிவைக் கொடியிலுடையவன் என வேற்றுமைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; வடநூன்முடிபு. உற - மிகுதி யாக; "சால உறு தவ நனி கூர் கழி மிகல்" என்றபடி மிகுதிப்பொருளுணர் த்துகின்ற 'உறு' என்னும் உரிச்சொல்லடியாப் பிறந்த செயவெனெச்சம். தேர்கொண்டு - தேர்க்கு யாதோரபாயமும் வராதபடி பாதுகாத்துக்கொண்டு அத்தேரிலிருந்தபடியே யென்றவாறும். எளிதில்வெல்லப்பட்டமை தோ ன்ற, 'அழித்தவாறு' என இவன்செய்கையாக்கூறாமல் 'அழிந்தவாறு' என அவன்செய்கையாக்கூறினார். (௧௧௪)

[அரசன் மகிழ்ந்து அனைவரும்எதிர்கொள்ளச்சொல்லுதல்.]

சீதளவமுதவாரிசெவிகளிற்செறிந்ததென்னத்
தூதர்வந்துரைத்தசொல்லாற்சோகமுந்துனியுமாறித்
தாதையன்றேதுசெய்தான்றனையொழிந்துள்ளசேனை
யாதிபரெவருமெய்தியண்ணலையெதிர்கொள்கென்றான்.

(இ - ள்.) சீதளம் அமுத வாரி - குளிர்ச்சியான அமிருதவெள்ளம், செவிகளில் செறிந்தது என்ன - காதுகளிற்சேர்ந்தது போல, தூதர் வந்து உரைத்த சொல்லால் - அத்தூதர்கள் வந்து சொல்லிய அச்சொற்களினால், தாதை - (உத்தரனது) தந்தையாகிய விராடன், சோகமும் துனியும் மாறி - துன்பமும் கவலையும் நீங்கப்பெற்றவனாய் [மிகமகிழ்ந்து], அன்று - அப்

பொழுது, எது செய்தான் - என்னகாரியஞ்செய்தான்! (என்றால்),—தனை ஒழிந்து உள்ள சேனை ஆதிபர் எவரும் - தன்னையொருவனைத்தவிர உள்ள சேனைத்தலைவர்களெல்லாரும், எய்தி - சென்று, அண்ணலை எதிர்கொள்க-பெருமையிற்சிறந்தவனாகியஉத்தரனை எதிர்கொண்டுஅழைத்துவருவாராக, என்றான் - என்று கட்டளையிட்டான்; (எ - று.)

தேவாமிருதம் நாவுக்குஇனிமைதருவது போல இத்தூதர்சொற்கள் அரசனதுசெவிக்கு இனிமைதருவதுபற்றியும்,அமிருதம் மரணத்தைத்தவிர்ப்பதுபோல இத்தூதர்சொற்கள் அரசனதுபெருஞ்சோகத்தை மாற்றுவது பற்றியும்,'சீதளவமுதவாரிசெவிகளிற்செறிந்ததென்னத் தூதர்வந்துரைத்த சொல்லால்'எனப்பட்டது. 'செறித்ததென்ன'என்ற பாடத்துக்கு-குளிர்ச்சியானஅமிருதவெள்ளத்தைக் காதுகளிற்சொரிந்துநிரப்பியதுபோலவென்று பொருள். வியப்புத் தோன்ற, 'தாதைஅன்றுஎதுசெய்தான் தனையொழிந்துள்ள சேனையாதிபரெவருமெய்தி யண்ணலையெதிர்கொள்கென்றான்' என்று வினவும் விடையுமாகக் கூறினர். சேனைத்தலைவர் எதிர்கொள்ள வேண்டுமென்பது கூறவே, சேனைகளும் அடங்கும். இனி, சேனைகளும் ஆதிபரும் எனினுமாம். துனி - சோகத்தின்பின் சிறிதுபொழுது நிகழ்வது; அச்சமுமாம்: துனியும் ஆறி என்றஎடுத்துஉரைக்கவும் இடமுண்டு.

ஸீதளம், அம்ருதவாரி, தூதர், ஶோகம் - வடசொற்கள். 'அன்று' என்பது - அகரச்சுட்டடியாப்பிறந்து காலமுணர்த்தி ஏழாம்வேற்றுமைப் பொருள்படநின்ற இடைச்சொல். ஒழிந்து=ஒழிய: எச்சத்திரிபு. அதிபர் - ஆதிபர் என விகாரம்; வடசொல். 'எவருமேகி' என்பதும் பாடம். அண்ணல்-பெருமையுடையோன்; ஆண்பாற்சிறப்புப்பெயர். எதிர்கொள்ளுதல், மரியாதை. எதிர்கொள்கென்றான் - வியங்கோளீறு தொகுத்தல். (கசு)

[விராடராசன்கொண்ட மிக்கமகிழ்ச்சியைக் கவி இழித்துரைத்தல்.]

சோரர்தங்கருவைத்தங்கள்கருவெனத்தோளிலேந்தி
யார்வமுற்றுருகுநெஞ்சினறிவிலார்தம்மைப்போல
வீரன்வெஞ்சமரம்வெல்லவிராடனுத்தரன்வென்றானப்
போரினையென்னுமேனிபுளகெழப்பூரித்தானே.

(இ - ள்.) சோரர்தம் கருவை - (தம் மனைவியர்பக்கல்) கள்ளப்புருஷராகியஅயலார்க்குப் பிறந்த குழந்தையை, தங்கள் கரு என - தங்கட்குப் பிறந்த குழந்தை யென்றுஎண்ணி, தோளில் ஏந்தி - (அக்குழந்தையைத் தங்கள்) தோள்களில் தூக்கிவைத்துக்கொண்டு, ஆர்வம் உற்று உருகும் நெஞ்சின் - (அக்குழந்தையினிடத்து) அன்புகொண்டு இளகுகின்ற மனத்தையுடைய, அறிவு இலார்தம்மை போல - அறிவில்லாத (சில) ஆடவரைப் போல,—வீரன் வெம் சமரம் வெல்ல - மகாவீரனாகியஅருச்சுனன் கொடிய போரில்வெற்றிகொண்டவனாயிருக்க, விராடன்—, அ போரினை - அந்த யுத்தத்தை, உத்தரன் வென்றான் என்னு - (தன்மகனான) உத்தரன் ஜயித்தானென்றுஉட்கொண்டு, மேனி புளகு எழ பூரித்தான் - (மிக்கமகிழ்ச்சியால்) உடம்பு புளகமுண்டாகப் பருத்துநின்றான்; (எ - று.)

சோரர்தம் கரு - சோரபுருஷராற்பிறந்த பிள்ளை. சோரர் - வடசொல்: கள்ளர்; இங்கே, பிறரறியாதபடி வந்து அயலார்க்குரியமாதரைத் தமக்குரியராக்கிக்கொள்பவர். கரு - கர்ப்ப மென்ற வடசொல்லின் சிதைவு. தம்மனைவி பிறர்க்குப்பெற்ற பிள்ளையைத் தம்பிள்ளையென்று கொஞ்சிக் குலாவிக் கொண்டாடும் பேதையர்போல, விராடன் அருச்சுனனதுபோர்வெற்றியைத் தன்மகனதுபோர்வெற்றியென்று மாறுபடக்கருதி உண்மையறியாது மிகமகிழ்ந்தன னென்பதாம். உவமையணி. உண்மை

புணருமிடத்து இவ்வகைத் தகுதியில்லாதமகிழ்ச்சிக்கு இடமில்லை யென்பதுபட, 'அறிவிலார்' என்றார்; அறிவிலார் - உண்மையுணராத பேதையர். ஆர்வமாவது - மனைவியரிடத்தும் தாய் தந்தை புத்திரர் முதலிய சுற்றத்தாரிடத்தும் மனமகிழ்ச்சிநிகழ்த்திப் பிணிப்பித்துநிற்கும் நேயம். புளகு - வடமொழிவிகாரம். புளகமெழுதல் - மயிர்சிலிர்த்தல். மேனிபுளகித்தலும், மேனிபூரித்தலும் - மகிழ்ச்சியினாலாகும் மெய்ப்பாடுகள். விராடன் மேனி பூரித்தான் - திணைவழுவமைதி; [நன் - பொது - உசு.] நெஞ்சின், இன் - சாரியை; சாரியைநிற்க இரண்டனுருபும் பயனும் தொக்கன. (கககசு)

[விராடனகரத்தார் தமது நகரத்தை யலங்கரித்தல்.]

பூழிகளடக்கிச்செம்பொற்பூரணகும்பம்வைத்து
வாழையுங்கமுகுநாட்டிமணியொளித்தீபமேற்றிச்
சூழவன்பதாகைகட்டித்தோரணம்பலவுநாற்றி
யேழுயர்மாடமூதூரெங்கணுங்கோடித்தாரே.

(இ - ள்.) (அந்நகரத்திலுள்ளார்யாவரும்),—பூழிகள் அடக்கி - (நிரம்பத் தண்ணீர்தெளித்து வீதிகளிற்) புழுதிகளை (மேற்கிளம்பாதபடி) அடக்கியும், செம் பொன் பூரண கும்பம் வைத்து-சிவந்தபொன்மயமான நீர்நிறை குடங்களை (வாயில்திண்ணைகளில்) வைத்தும், வாழையும் கமுகும் நாட்டி - வாழைமரங்களையும் பாக்குமரங்களையும் (பந்தர்க்கால்முதலியவற்றிற்கட்டி) நிறுத்தியும், மணி ஒளி தீபம் ஏற்றி - இரத்தினமயமான ஒளியையுடைய விளக்குக்களை ஏற்றிவைத்தும், சூழ வல் பதாகை கட்டி-சுற்றிலும்[நகரமெங்கும்] வலிய துவசங்களைக் கட்டியும், தோரணம் பலவும் நாற்றி-பலவகைத் தோரணங்களையும் (கட்டித்) தொங்கவிட்டும், ஏழ் உயர் மாடம் மூதூர் எங்கணும் கோடித்தார் - உயர்ந்த ஏழுநிலைகளை [உபரிகைகளை] யுடைய மாளிகைகளையுடைய பழமையான அந்நகரமுழுவதும் அலங்கரித்தார்கள்.

அரசன்கட்டளைப்படி நகரத்தவரனைவரும் இங்ஙனம் நகரையலங்கரித்தனரென்க. தேர்முதலியனவரும்பொழுது புழுதிகிளம்பிமறைத்திடாமைப் பொருட்டு, தண்ணீர்தெளித்துப் புழுதிகளையடக்குவர். பூரணகும்பமும், விளக்கும், கொடியும் - அஷ்டமங்கலங்களிற் சேர்ந்தவை; ("சாமரை தீபந் தமனியப்பொற்குடங், காமர்கயலினிணைமுதலாத் - தேமருவு, கண்ணாடி தோட்டி கதலிகை வெண்முரசம், எண்ணிய மங்கலங்க ளெட்டு" என்பது காண்க.) பூரணகும்பம் - நிறைகுடம். வாழை - 'வாழையடிவாழையாய் வாழ்ந்து' என்னும்படி தனது அடியில்தோன்றுங்கன்றுகளினால் தனதுகுலம் என்றும்இடையற்றுப்போகாதபடி வாழ்வது என்று பொருள்படுங் காரணக்குறி; வாழ் - பகுதி, ஐ-கருத்தாப்பொருள்விகுதி. 'மணியொளித்தீபமேற்றி' என்பதற்கு - இரத்தினதீபங்களையும் நீசுடர்விளக்குக்களையும் விளங்க வைத்து என்றும், மாணிக்கத்தினொளிபோலவிளங்குந் தீபங்களை யேற்றி யென்றும் உரைப்பாரு முளர்.

பூர்ணகும்பம், க்ரமுகம், மணி, தீபம், பதாகா, தோரணம்- வடசொற்கள். சூழ - நகரைச்சூழ. பதாகை - பெருங்கொடி. நாற்றி, நாற்று-பகுதி; இது - நால் என்பதன் பிறவினை: று - பிறவினைவிகுதி; நாலுதல் - தொங்குதல். ஏழ் உயர் மாடம் மூதூர் எங்கணும் - ஏழுநிலைகளா லுயர்ந்த மாளிகைகளடர்ந்த விராடபுரத்தில் எல்லாவிடத்தும். ஏழ் - ஏழுநிலைகளுக்கு எண்ணலளவையாகுபெயர். 'ஏழ்' என்பது இயற்பெய ரென்பர், தொல்காப்பியனார்; 'ஏழு' என்பது இயற்பெய ரென்பது, நன்னூலார்மதம். எங்கணும் - எவ்விடத்தும். எங்கண் - எக்கண் என்பதன் மெலித்தல். கோடித்தார் - கோடி - பகுதி. (ககஎ)

[விராடனும் கங்கபட்டனும் சூதாடுகையில், தோல்வியுற்ற விராடன் ஒன்றுகூறல்.]

மகன்வருமளவும்வெஞ்சூதாடுதும்வருகவென்றாங்
ககமிகமகிழ்ந்துவேந்தனந்தணன்றன்னோடாட
மிகமுனியடுத்துவெல்லவென்றியுத்தரன்முன்மேவா
ரிகலழிந்தென்னவிப்போரழிதிநீயெந்தையென்றான்.

(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது, வேந்தன் - விராடராசன், அகம் மிக மகிழ்ந்து - மனம் மிகவுங்களித்து, (கங்கபட்டனைநோக்கி), 'மகன் வரும் அளவும் - (எனது) புதல்வன் [உத்தரகுமாரன்] வரும்வரையிலும், வெம் சூது ஆடுதும்-(மேன்மேல்)விருப்பத்தைத்தருகின்ற சூதாட்டத்தை(நாமிருவரும்) ஆடுவோம்: வருக - வருவாயாக,' என்று - என்றுசொல்லி வலியஅழைத்து, அந்தணன் தன்னோடு ஆட - சந்நியாசியாகிய அக் கங்கபட்டனுடனே சூதாடாநிற்க,—(அச்சூதாட்டத்தில்), முனி - கங்கபட்டன், அடுத்து - அடுத்தடுத்து, மிக வெல்ல - மிகுதியாக [பலஆட்டம்] ஜயிக்க,—(அப்பொழுது விராடன் ஓராட்டந்தொடங்கிக் கங்கபட்டனைநோக்கி),'எந்தை - எமதுஐயனே! வென்றி உத்தரன் முன் - ஜயசாலியாகிய உத்தரனுக்கு எதிரில், மேவார் இகல் அழிந்து என்ன - பகைவர்களான துரியோதனாதியர் வலிமைகெட்டமை போல, இ போர் - இனிஆடும்இந்தஆட்டத்தில், நீ—, அழிதி - (என்முன்)தோற்பாய் [நான் உன்னை வெல்வேன்]',என்றான்-என்றுசொன்னான்.

வெம் சூது - ஆடுவோர்க்கு மிக்கவிருப்பத்தைத்தருகின்ற சூதாட்டம்; "இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூது" என்றார் திருவள்ளுவனாரும். 'வெம்மை' என்ற சொல் பண்புப்பெயராய் வெப்பத்தையும் கொடுமையையும் உணர்த்துதலே யன்றி,உரிச்சொல்லாய் விருப்பத்தையும் உணர்த்துதலை "வெம்மை வேண்டல்" என்னும் தொல்காப்பியத்து உரிச்சொல்லியற்சூத்திரத்தால் உணர்க. கொடியசூதென்றுபொருள்கொள்ளுதல், இங்குச் சிறவாது. சூது-த்யூதமென்ற வடசொல்லின் சிதைவு. ஆடுதும்-முன்னிலையையுளப்படுத்திய தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று; 'தும்'விகுதி,இடம் பால் காலங்களைக் காட்டியாது.மிக அடுத்து வெல்லுதல்-இடைவிடாமற் பலமுறை வெற்றிகொள்ளுதல். சூதாட்டத்தில் தோல்வியுற்றவர் அந்த மனவருத்தத்தாற் கோபங்கொண்டு வென்றவரைப்பழித்தல் இயல்பாதலால்,'இவ்வாட்டத்தில்நீதோற்பாய்'என்றான்; ("மறத்தையே, பூண்டு விரோதஞ்செய்யும் பொய்ச்சூது", "மருவும், ஒருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது" என்பன காண்க.) மகனது வெற்றியைப்பற்றித் தான்கொண்ட அளவிறந்தமனமகிழ்ச்சியால், அதனை இனித்தான்பெறும்வெற்றிக்கு உவமைகூறினன். இத்தன்மை விளங்கவே,'அகம் மிகமகிழ்ந்து' என்றார்; மிக - வரம்புகடக்க என்றபடி. அகம்-உள்ளிடம்; அகத்துறுப்பாகிய மனத்துக்கு இடவாகுபெயர். 'வேந்தனந்தணன்றன்னோடாட மிகமுனியடுத்துவெல்ல' என்ற தொடர், அந்தணனது சிறப்புத் தோன்ற நின்றது. வென்றி - தொழிற்பெயர்; வெல் - பகுதி, றி-விகுதி, லகரம் னகரமானது-சந்தி விகாரம்.முன்-இடமுன். மேவார்-விரும்பாதவர், சேராதவர்; எனவே, பகைவராம்: எதிர்மறை வினையாலணையும்பெயர்; மேவு - பகுதி. இகல் அழிதல் - போரில் தோற்றலுமாம். அழிந்தென்ன - அழிந்தென்ன என்றதன் தொகுத்தல்.

போர் - பொரு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். படைகளைக் கொண்டு செய்யும் போரில் வெற்றிதோல்விகளால் இராச்சியத்தைப் பெறுதலும் இழத்தலும் நிகழ்தல்போல, காய்களைக்கொண்டுசெய்யுஞ் சூதாட்டத்திலும் ஜயாபஜயங்காரணமாகப் பொருள்களைப் பெறுதலும் இழத்தலும்

நேர்வதுபற்றி, சூது 'போர்' எனப்பட்டது; உருவகம். அன்றியும், சூதாட்டத்தில் ஒருவர் தமதுகாயைக்கொண்டு எதிரியின் காயைக் கொல், அடி, வெட்டு என்று கூறிக் களைவதனாலும், சூதாட்டம் போரெனத்தகும். அழிதி என்ற ஏவலொருமைமுற்றில், த் - எழுத்துப்பேறு. முனிவனை 'எந்தை' என்றுவிளித்தது, சிறப்புப்பற்றி வந்த மரபுவழுவமைதி; எமது சுவாமியென்றவாறும். 'எந்தை'என்ற முறைப்பெயரில், யாம் என்றபகுதி 'எம்'என்று விகாரப்பட்டது; ஐ-விகுதி. அண்மைவிளி யாதலின், இயல்பு. 'இகலழிந்தென்னவிப்போரழித்தனையென்னையென்றான்' என்றும் பாடம். (௧௧௮)

[போர்வெற்றி பேடியினுடையதே யென்றுகூறிக் கங்கபட்டன் பேடியைப்புகழ்ந்துபேசுதல்.]

என்றவன்மொழிந்தபோதிலெண்ணில்வெஞ்சேனையோடு
வன்றிறலுரககேதுவலியழிந்துடைந்துபோக
வென்றவன்பேடியேதன்மெய்ந்நடுங்காமற்போரி
னின்றுநின்சிறுவன்வெல்லவல்லனோநிருபரேறே.

பிருகந்நளையென்றோதும்பேடியைப்பேடியென்று
கருதனீயவனேமுன்னங்காண்டவமெரித்தகாளை
யொருதனித்தடம்பொற்றேரூர்ந்தும்பருக்காகவும்ப
ரரிகளையரிதின்வென்றானென்றனனந்தணாளன்.

இவ்விரண்டுசெய்யுள்களும் - குளகம்; ஒருங்குஉரைக்கப்படுகின்றன.

(இ - ள்.) (௧௧௯)என்று அவன் மொழிந்த போதில்-என்று அவ்விராடராசன் சொன்னவளவில்,—(௧௨0) அந்தணாளன் - சந்யாசியாகிய கங்கபட்டன்,—(விராடனைநோக்கி),—(௧௧௯) 'நிருபர் ஏறே - அரசர்சிங்கமே! வல் திறல் உரககேது-மிக்கவலிமையையுடைய பாம்புக்கொடியனான துரியோதனன், எண் இல் வெம் சேனையோடு - கணக்கில்லாத கொடியசேனைகளுடனே,வலி அழிந்து உடைந்து போக-வலிமைகெட்டுத்தோற்றோடிப்போய் விடும்படி, வென்றவன் - (தானொருவனாகச)சயித்தவன், பேடியே - (உத்தரனுக்குத் தேர்செலுத்திக்கொண்டுசென்ற)பேடிதான்; (அவனையன்றி), நின் சிறுவன் - உனது இளங்குமரன், தன் மெய் நடுங்காமல் - (அச்சத்தால்) தனதுஉடம்பு நடுக்கமடையாமல், போரில் - யுத்தத்தில், நின்று - எதிர் நின்று, வெல்ல வல்லனோ - (துரியோதனாதியரைச்) சயிக்க வல்லமையுடையனோ? [அல்லனென்றபடி];(அன்றியும்),—(௧௨0) பிருகந்நளை என்று ஓதும் பேடியை - பிருகந்நளையென்று (பெயர்) சொல்லப்படுகின்ற பேடிவடிவாயுள்ளவனை, நீ—, பேடி என்று கருதல் - (சாதாரணமான) பேடியென்று இழிவாக எண்ணாதே; (பின்னை யென்னவென்றால்),—அவனே - அவன்தான், முன்னம் - முன்பு, காண்டவம் எரித்த காளை - காண்டவவனத்தை (அக்கினிக்குஉணவாகக் கொடுத்து) எரிப்பித்த வீரனான அருச்சுனனது, ஒரு தனி தட பொன் தேர் - ஒப்பற்ற தனித்த [வேறுதுணையில்லாத] பெரிய பொன்மயமான தேரை,ஊர்ந்து - செலுத்திச்சென்று. உம்பருக்கு ஆக - (இந்திரன் முதலிய) தேவர்கட்கு உதவியாக,உம்பர் அரிகளை - அத்தேவர்கட்குப்பகைவர்களாகிய அசுரர்களை, அரிதின் - அருமையாக, வென்றான் - சயித்திட்டான்,' என்றனன் - என்றுசொன்னான்; (எ - று.)

(௧௧௯) எண்ணில் - ஆலோசித்துப்பார்க்குமிடத்து என்றுமாம். பகைவரது வலிமையும் பரப்பும் தோன்ற 'எண்ணில்வெஞ்சேனையோடு வன்திறலுரககேது' என்றும், உத்தரனது வலிமையின்மை தோன்ற'சிறுவன்' என்றும் கூறினன். ஆகவே, மெய்ந்நடுங்குதலும் நில்லாமையும் இயல்பாயின,

'மெய்ந்நடுங்காமல் நின்று வெல்ல வல்லனோ' என்றது - நிற்கவும்வல்லனல்லன் வெல்லவும்வல்லனல்லன் என்றபடி. வல், திறல் - ஒருபொருட் பன்மொழி. 'உடைந்துபோக'என்றது -'வென்றவன்'என்பதனோடும், 'வெல்ல' என்பதனோடும்இயைத்தற்குரியது. உருவத்தாற் பேடியே யன்றி ஆற்றலாற் பேடியன் றென்பது விளங்க, 'வென்றவன் பேடி' என ஆண்பாலாற் கூறினன்; அஜ்ஞாதவாசகாலங் கழிந்துவிட்டதனால் இனிஉண்மையுணர்த்தலாமென்பதுபற்றி இங்ஙனங்கூறின னென்றலுமாம். 'வென்றவன் பேடி' என்ற முடிபை, சொல்நிலைநோக்கியமுடிபன்றிப் பொருள்நிலைநோக்கிய முடி பென்னலாம். 'வென்றவள்பேடி' என்று பாடமோதுவாரு முளர்; அடுத்தசெய்யுளில் 'அவனே,' 'வென்றான்' என்பவற்றோடு ஒப்புநோக்குமிடத்து அதுசிறவாமை யுணர்க. பேடியே, ஏகாரம் - பிரிநிலையோடு தேற்றம். வல்லனோ, ஓ - எதிர்மறை.

'உத்தரன்' என்னாது 'நின்சிறுவன்' என்றதில், விராடனது சிறுமையும் ஒருவாறுகுறிக்கப்பட்டதாம்; அவன் கீழ்த் துரியோதனனைச்சார்ந்தவனாகிய சுசர்மாவினாற் கட்டப்பட்டமை காண்க. அரசராகிய தம்மை ஒரு வருஷகாலம் வைத்துப் பாதுகாத்த உபகாரத்தைக் கருதியும், "வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க ணூறெய்தி" என்றபடி தம்மாலாகிய இருபுறத்துநிரைமீட்சிவெற்றியும் தமக்குத்தலைவனைவிராடன்மேலதாகுதல்பற்றியும், 'நிருபரேறே' என்றுவிளித்தனன். நிருப ரேறு - அரசர்க்குச் சிங்கம்போன்றவன்; கீழ் க0அ - ஆஞ் செய்யுளில் 'அரச ரேறு' என்றது காண்க. "நமக்குள் மாறுபடும்பொழுது நாம்ஐவரும் அவர்கள்நூற்றுவருமாயினும், பிறரால் பரிபவம்நேரும்பொழுது நாம் நூற்றைவர்" என்று ஒரு சமயத்திற்கூறியுள்ளவாறு தருமபுத்திரன் துரியோதனுதியரிடத்து ஸ்வாபிமானமுடையவனாதலின், விராடன் துரியோதனுதியரைத் தன்மகனினும் இழித்துரைத்தமை பொறாது இங்ஙனங்கூறினான்: அன்றியும், உண்மையை உள்ளபடி உணர்த்தவேண்டு மென்பதும் கருத்து: தமது அன்பர் காரணமின்றிச் செருக்குக்கொண்டால் அதனைத் தக்கவாறுகூறி யொழித்தல் ஆன்றோர்கடமை; அரசர்செருக்கியவிடத்து அமைச்சர் செயற்பாலதும் அது.

(கஉ0) அருச்சுனன் பேடிவடிவங்கொண்டு விராடனிடம் வந்தபோது "ஏயவெஞ்சிலைக்கையருச்சுனன்கோயிலிருப்பதோர்பேடி நான்" என்று சொன்னதைக் கங்கபட்டன் நேரிற் கேட்டும், விரதசாரணியென்னும் வண்ணமகளாகிய திரௌபதி அப்பேடியைக்குறித்து உத்தரனிடம் "வித்தரம்பெறுதேர்விடும் விசயனுக் கிவள்" என்றுசொன்னதைக் கேள்வியுற்றுமுள்ளா னாதலால், அவற்றிற்கேற்ப 'அவனே முன்னங் காண்டவமெரித்த காளையொருதனித்தடம்பொற்றேரூர்ந்து'என்றான். சத்தியவிரதனும் அந்தணனு மாகிய தருமபுத்திரனது இவ்வார்த்தை, 'அவனே முன்னம் காண்டவமெரித்தகாளை, (மற்றும்), ஒப்பற்ற தனித்த பொன்மயமான பெரிய (இந்திரனது)தேரி லேறிச்சென்று தேவர்கட்காகத் தேவசத்துருக்களாகிய (நிவாதகவச காலகேய ரென்னும்) அசுரர்களை அருமையாக வென்றவன்' என்ற உண்மைப்பொருளையு முடையதாத லுணர்க. 'பேடியைப் பேடியென்றுகருதல்' என்றதிலும், பேடியுருவங்கொண்டவனை இயல்பான பேடியென்று எண்ணாதே யென்ற பொருள் தோன்றும்.

**காண்டவமெரித்த கதை:**—இந்திரப்பிரத்தநகரத்தைச்சார்ந்ததொரு பூஞ்சோலையிற் கிருஷ்ணனும் அருச்சுனனும் உல்லாசமாக வசித்திருக்கையில் ஒருநாள் அக்கினிபகவான் அந்தணவடிவங்கொண்டு வந்து 'எனக்கு மிகப்பசிக்கின்றது: உணவிடுக' என்று வேண்ட, அவ்விருவரும் 'நீவேண்டியபடி உணவிடுவோம்' என்று வாக்குதத்தஞ்செய்ய, உடனே தீக்கடவுள்

நிஜரூபங்கொண்டு 'இந்திரனது காவற்காடாய் யாவர்க்கும் அழிக்கவொண்ணாதபடி நிலவுலகத்திலிருக்கின்ற காண்டவவனத்தை அதிலுள்ள சராசரங்களுடனே எனக்கு விருந்திடவேண்டும்' என்ன, கிருஷ்ணஅருச்சுனர்கள் அங்கேபுக்குஒதுங்கியிருக்கின்றஅசுரர்முதலியதுஷ்டர்களை யழித்தருளவேண்டு மென்னும் நோக்கத்தால் 'நீ இதனைப் புசி' என்று இசைந்து அளிக்க, உடனே நெருப்புப் பற்றி யெரித்த தென்பதாம். அங்ஙனம்எரிக்கையில், இந்திரன்சினந்துபெய்வித்த பெருமழையைச் சரக்கூடுகட்டித்தடுத்தும், கோபித்துத் தேவர்கூட்டத்துடன் வந்து பொருத இந்திரனைப் புறங்கொடுத்தோடச்செய்தும், அவ்வனத்தினின்று தப்பியோடத்தொடங்கிய பிராணிகளை அம்பெய்து தழலில் விழுத்தியும் பலவாறுஉதவிபுரிந்ததனால், அருச்சுனன் 'காண்டவமெரித்த காளை' எனப்பட்டான். இங்கு 'எரித்த' என்றது, ஏவுதற்கருத்தாவின் வினை.

பின்னிரண்டடியிற் குறித்த வரலாறு, சகூ - ஆஞ் செய்யுளி னுரையிற் கூறப்பட்டது. கருதல் - எதிர்மறை யொருமை யேவல். அலனே, ஏ - பிரிநிலையோடு தேற்றம். ஒருதனி - தன்னந்தனி யென்றவாறுமாம். 'உம்பர்' என்ற மேலிடத்தின்பெயர் - அங்குஉள்ள தேவர்க்கு இடவாகுபெயராம்; இதில், உகரச்சுட்டு மேலிடத்தைக் குறித்தது: (இதன் எதிர்மொழி, இம்பர்.) அரி - பகைவன்: வடசொல். தேவசத்ருக்களென்பது, அசுரர்க்கு ஒருபெயராக வழங்கும். அசுரர்களைவெல்லுதல் அருச்சுனனுக்குஎளிதாயினும் அவர்களைப்பிறர்வெல்லுதல் அருமை யென்பதுபற்றி, 'அரிதின்வென்றான்'என்றனன். அரிதின் - பிறர்வெல்லுதற்குஅரியவாற்றால் என்க. 'அரிகளையமரின்வென்றான்' என்றும் பாடமுண்டு. 'பிருகந்நளையென்று' என்றவிடத்து ளகரஐகாரம் ஐகாரக்குறுக்கமாயினும், அதனை அழுத்திப்படிக்கவேண்டும்; செய்யுளோசையின்பொருட்டு. (கஉ0)

[விராடன் அதனைமறுத்துப்பேசுதல்.]

கோடியின்கோடியானகுருக்கடஞ்சேனைதன்னை
யோடியென்புதல்வன்றானேயொருதனிபொருதுவென்று
நீடியநிரையுமீட்டுமீண்டனனென்னநீயப்
பேடியைவிறல்கொண்டாடிப்பேசுதிபிரமமூர்த்தீ.

(இ - ள்.) (அதுகேட்ட விராடன் கங்கனைநோக்கி),—பிரமமூர்த்தீ - தவவடிவமுடையவனே! என் புதல்வன்தானே - எனதுபுத்திரனே, ஒருதனி - தன்னந்தனியே [ஒருதுணையுமில்லாமல்], ஓடி - விரைந்துசென்று, பொருது - போர்செய்து, கோடியின் கோடி ஆன குருக்கள்தம் சேனைதன்னை - பலகோடிக்கணக்கான குருகுலத்தவரதுசேனையை, வென்று - சயித்து, நீடிய நிரையும் மீட்டு - மிகுதியான பசுக்கூட்டங்களையும் திருப்பிக்கொண்டு, மீண்டனன் - திரும்பிவந்தான், என்ன-என்று (யான்)சொல்லவும், நீ—, அ பேடியை - அந்தப் பேடியாகிய பிருகந்நளையை, விறல் கொண்டாடி பேசுதி - பெருமைபாராட்டிப் புகழ்ந்துபேசுகின்றாய்;(எ-று.)

கோடியின் கோடி - கோடியாகிய கோடி யெனப் பண்புத்தொகை; கோடியென்னும்எண்ணினாற் பெருக்கிய கோடியென்னும்எண் என்பது கருத்து: அது, பதுமமெனவும், கோடாகோடியெனவும், மகாகோடியெனவும்படும். தான் - தேற்றம்; ஏ - பிரிநிலை. ஒரு தனி - ஒருபொருட் பன்மொழி. பேசுதி என்றதில், முன்னிலையொருமை 'இகர' விகுதி - நிகழ்காலங்குறித்தது; த் - எழுத்துப்பேறு. ப்ரஹ்மமூர்த்தி - வடசொல்; ஈறுநீண்டது, விளியுருபு. பிரமம் - ஞானமும், வேதமுமாம்; ஞானமேஒருவடிவங்கொண்டாற்போன்றவ னென்க: அந்தணரை 'வேதமூர்த்திகள்' என்றல்,

வழக்கு. விவேகியாகிய நீ இங்ஙனங்கூறுதல் தகுமோ? என்பதாம். 'குருகுலச் சேனைதன்னை' என்றும் பாடமுண்டு; 'குருக்கள்வெஞ்சேனைதம்மை' என்று பாடமோதுவாரு முளர். 'நிரையுமீட்டு' என்றவிடத்து, உம்மை - எச்சப் பொருளது. (௬௮.௪)

[இதுவும் அது.]

புன்னவையானமாற்றம்புகன்றனரெனினுங்கேட்டாங்
கின்னவைநன்றுநன்றென்றிதம்படமொழிவதல்லான்
மன்னவையிருந்துநாளும்வழிபடுமாந்தர்மன்னர்
சொன்னவைமறுத்துமாறுசொல்வரோசுருதிவல்லாய்.

(இ - ள்.) சுருதி வல்லாய் - வேதம்வல்லவனே! புல் நவை ஆன மாற்றம் புகன்றனர் எனினும்-மிகவும்பிழையான வார்த்தைகளை (அரசர்)சொல்லினராயினும், கேட்டு - (அவற்றைச் செவிகொடுத்துக்) கேட்டு, ஆங்கு-அப்பொழுது, இன்னவை நன்று நன்று என்று - 'இவ்வார்த்தைகள் மிகநன்றாயுள்ளன' என்று, இதம் பட - (அவ்வரசர்க்குப்) பிரியமாக, மொழிவது அல்லால் - (அரசரையடுத்துவாழ்பவர்) ஒட்டிப்பேசுவதல்லாமல், மன் அவை நாளும் இருந்து வழிபடும் மாந்தர் - ராஜசபையிலே நாள்தோறும் இருந்து (அரசர்க்குக்) கீழ்ப்படிந்துநடக்கின்ற மனிதர்கள், மன்னர் சொன்னவை மறுத்து மாறு சொல்வரோ - (இவ்வாறு) அரசர்சொன்னவற்றைத் தடுத்து எதிர்பேசுவார்களோ? [பேசார் என்றபடி]; (எ - று.)

புல், நவை - ஒருபொருட் பன்மொழி. 'புகன்றனரெனினும்' என்ற உம்மை - அங்ஙனம் அவர்புகலா ரென்பது பட நின்றது. நன்றன்றென்று சொல்வதாயினும் பின்பு சமயம்பார்த்துத் தக்கபடிசொல்லவேண்டுமேயன்றி அப்பொழுதே மறுத்துச்சொல்லலாகா தென்பான், 'ஆங்கு' என்றான். இன்னவை நன்று - பன்மையில் ஒருமை வந்த பால்வழுவமைதி: பன்மையொருமைமயக்கம்; [நன் - பொது - ௨௪௩.] ஒவ்வொருவார்த்தையும் தனித்தனி நன்று என்றபடி. 'நன்று நன்று' என்ற அடுக்கு, உவகைபற்றியது. இதம் - ஹிதம் என்ற வடசொல்லின் விகாரம். 'நாளும்' என்பதில், உம்மை - தொறுப்பொருளது. மாந்தர் - பன்மைப்பெயர். எல்லாந்தெரிந்த உனக்கு இந்தமுறைமைதெரியாதோ வென்றற்கு,கீழ் 'பிரமமூர்த்தி' என்றும், இங்கு 'சுருதிவல்லாய்' என்றுங் கூறினான். ஶ்ருதி என்ற வடசொல்லுக்கு-(எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்யக்கிரமத்திலே கர்ணபரம்பரையாற்) கேட்கப்பட்டுவருவ தென்று பொருள். வல்லாய் - வல்லான் என்றதன் ஈறுதிரிந்த விளி. இங்கு, வழிபடுதல் - அரசரது குறிப்பின் வழியிற் சேர்ந்து ஒழுகுதல். என்குறிப்பின்வழிநடப்பதற்குரிய நீ யான்சொன்னவற்றைவெட்டிப் பேசுதல் தகுதியன் றென்பதாம். இன்னவை - இகரச்சுட்டடியாப்பிறந்த பலவின்பாற்பெயர்; ன் - சாரியை, மற்றொரு னகரமெய் - சந்தி, அ - சாரியை, வை - விகுதி.

"இகழினிகழ்ந் தாங் கிறைமக னென்று, புகழினுமொக்கப் புகழ்ப—இகன்மன்னன், சீர்வழிப்பட்டதே மன்பதை மற்றென்செய்யும், நீர்வழிப் பட்ட புணை" என்ற நீதிநெறிவிளக்கம், இங்கு நோக்கத்தக்கது. (௬௨௨.)

[மீண்டும் கங்கபட்டன் மறுத்துப்பேசுதல்.]

என்னவுமிடங்கொடாமலெதிருறவிருடிமீண்டுங்
கன்னன்விற்றுரோணன்மைந்தன்காங்கெயன்முதலினோரை
மன்னவவெல்லநின்சேய்வல்லனோவந்துசொன்னாற்
பின்னைநீதெளிதியென்றான்பீடுடைப்பேடிதன்னை.

(இ - ள்.) என்னவும் - என்று(விராடன் சினந்து)சொல்லவும்,—இருடி - முனிவனாகிய கங்கபட்டன்,—இடம்கொடாமல் - (அவன்கொள்கைக்குச்)சிறிதும்இணங்காமல்[தாழாமல்],—எதிர் உற - (அவன்வார்த்தைக்கு) மாறாக,—மீண்டும் - மறுபடியும்,—'மன்னவ - அரசனே! கன்னன் - கர்ணனும், வில் துரோணன் - வில்லாசிரியனாகிய துரோணனும், மைந்தன் - அவன்மகனான அசுவத்தாமனும், காங்கெயன் - கங்காதேவியின் குமாரனான பீஷ்மனும், முதலினோரை - முதலிய வீரர்களை, நின் சேய் - உனது மகன் [உத்தரன்], வெல்ல வல்லனோ - சயிக்கமாட்டுவனோ? வந்து சொன்னால் - (அக்குமரனே)வந்து கூறினால், பின்னை - பின்பு, நீ—, பீடு உடை பேடிதன்னை - பெருமையையுடைய அப்பேடியை, தெளிதி - (போர்வென்றவனென்று) ஐயமறத்தெரிந்துகொள்வாய்', என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)

ருஷி, காங்கேயன் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. காங்கேயன் - தத்திதாந்தநாமம். அருச்சுனனோடொத்தஆற்றலுடையவனென்பது பற்றி, கன்னனை முற்கூறினான். 'காங்கெயன்முதலினோர்' என்று பெரியோனான பீஷ்மனைத் தலைமையாகவெடுத்துக்கூறிக் குருகுலத்தவரனைவரையுங் குறித்தனன். இங்கு 'நின் சேய்' என்றதற்கு, கீழ் ககக - ஆஞ்செய்யுளில் 'நின் சிறுவன்' என்றதற்குக் கூறியது கொள்க. செம்மை யென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு முன்நின்ற மகரமெய் யகரமாத் திரிந்து 'சேய்'எனநின்றது; இது - முதலில், செம்மைநிறமுடைய முருகக்கடவுளுக்குப் பண்பாகுபெயராய், பின்பு ('குமாரன்' என்ற வடசொற்போல),அச்சுப்பிரமணியமூர்த்திபோன்றஅழகியபுதல்வனுக்கு உவமையாகுபெயராய் வழங்குதலால், இருமடியாகுபெயர். பீடுடைப் பேடிதன்னைத் தெளிதி - பேடியின் பெருமையை யறிவா யென்றபடி. (கஉ௩)

[விராடன் மிகக்கோபித்துக் கங்கபட்டனைக் கவறுகொண்டு அடித்தல்.]

கொடுவிலாண்மையினாலின்றென்குமரன்வென்றிடவுஞ்சற்று
நடுவிலாதவரிற்பல்காலென்கொனீநவில்வதென்னாக்
கடுவிலாடரவிற்பொங்கிக்கவற்றினாலெறிந்துநக்கான்
வடுவிலாமுனியைமன்னன்வடுப்படுமாறுமன்னோ.

(இ - ள்.) மன்னன் - (அதுகேட்ட) விராடராசன்,—(கங்கபட்டனை நோக்கி), 'இன்று - இன்றைத்தினத்தில், என் குமரன் - எனது மகன், கொடு வில் ஆண்மையினால் - கொடிய விற்போர்த்தொழிலில் தனக்குஉள்ள திறமையினால், வென்றிடவும்-(பகைவரைச்) சயித்திருக்கவும், நீ—, சற்றும் நடு இலாதவரின் - சிறிதும்நடுவுநிலைமையில்லாதவர்போல [பக்ஷபாதமுடையவர்போல], பல் கால் - பலமுறை, நவில்வது - (அதனை இல்லையென்று மறுத்து என்மகனையிகழ்ந்து பேடியைப்புகழ்ந்து)பேசுவது, என்கொல் - என்னோ?' என்னா - என்றுசொல்லி, கடு இல் ஆடு அரவின் பொங்கி - விஷமில்லாதிருக்கையிற்படமெடுத்தாடுகின்றதொரு பாம்புபோலச் சீறி, வடு இலா முனியை - குற்றமில்லாத அம்முனிவனை, வடு படும் ஆறு - தழும்புபடும்படி, கவற்றினால் எறிந்து - சூதாடுகருவியினால் வீசியடித்து, நக்கான் - சிரித்தான்; (எ - று.)—மன் ஓ - ஈற்றசை.

திறமையில்லாத விராடன் சீறுதற்கு,நஞ்சில்லாதபாம்பு படமெடுத்துச் சீறினாற்போலுமென உவமைகூறியவாறும். கடு - விஷத்துக்கு, இல்-இருப்பிடமான, ஆடு அரவின் - படமெடுத்தாடும் பாம்புபோலவென்றும், கடுவில் ஆடு அரவின் - விஷத்தினாற் படமெடுத்தாடும் பாம்புபோல வென்றும் உரைப்பாருமுளர். சிரித்தது, வெகுளியினால். 'வடுவிலாமுனியை வடுப்படுமாறு எறிந்து'என்றவிடத்து, சிலேடைபற்றிய விரோதாலங்காரங் காண்க;

வடு - குற்றமும், தழும்பும். கொடுமை - வளைவுமாம்; (எசு) 'கொடுவரி' என்றவிடத்திற் போல.

நடுவுநிலைமையாவது - பகைவர் அயலார் நண்பர் என்னும் மூன்று வகையாரிடத்தும் அறத்தின்வழுவாமல் ஒப்பநிற்கின்ற பக்ஷபாதமில்லாத நிலைமை. இத்தகைமையில்லாதவரியல்பு,ஒருதலையாப்பேசுதல். வென்றிட என்பதில், இடு என்ற துணைவினை - துணிவுணர்த்திற்று. உம் - உயர்வுசிறப்பு. இலாதவரின், அரவின் என்றவற்றில், இன் - ஐந்தனுருபு, ஒப்பு. என்கொல், கொல் - அசை. நக்கான், நகு - பகுதி; இடையே ஒற்றுஇரட்டி இறந்தகாலங்காட்டிற்று. 'கொடுவிலாடமரிலின்றென்குமரன்'என்று பாடமோதுவர் ஒருசாரார். (கஉச)

[கங்கபட்டனதுநெற்றியிலிரத்தம்பொசிதலை விரதசாரணி பார்த்தல்.]

எற்றியகவறுநெற்றியெதிருறவிருந்தகங்க
னெற்றியிற்சென்றுவாசநிறைத்தகுங்குமத்தின்சேற்றாற்
பற்றியதிலகம்போலப்படுதலும்பாங்கர்நின்ற
வற்றியவோடையன்னவனப்பினுண்மருண்டுகண்டாள்.

(இ - ள்.) எற்றிய கவறு - (விராடன்) வீசியெறிந்த அச்சூதாடுகருவியானது,சென்று - போய், எதிர் உற இருந்த கங்கன் நெற்றியில் - எதிரில்வீற்றிருந்த கங்கபட்டனது நெற்றியில், வாசம் நிறைத்த குங்குமத்தின் சேற்றால் பற்றிய திலகம் போல - வாசனையைமிகுதியாகவீசுகின்ற குங்குமப்பூவின்குழம்பினு லிட்ட திலகம்போல (இரத்தம் பொசியும்படி), நெற்றி படுதலும் - தாக்கிப் பட்டவளவில்,—பாங்கர் நின்ற-பக்கத்தில்நின்ற, வற்றிய ஓடை அன்ன வனப்பினுள் - நீர்வறண்டஓடைபோன்ற [அலங்காரமில்லாத]அழகுள்ள வண்ணமகளாகிய திரௌபதி,மருண்டு கண்டாள்-(அதனை) வெருண்டு பார்த்தாள்; (எ - று.)

மருண்டுகாணுதல், முனிவடிவமாயுள்ள தன்கணவனை அரசன் புண்படுத்தியதனு லாகிய கவலையால். ஆபரணமணிதல்முதலியவற்றா லுண்டாகுஞ் செயற்கையழ கில்லாமையும், தன்கணவர் உருக்கரந்துஅடிமைபூண்டிருத்தலா லாகிய வருத்தத்தாற் பொலிவிழந்திருத்தலும், அரசியுருவத்தையொழித்துப் பணிசெய்பவள்வடிவத்தைக்கொண்டிருத்தலும் பற்றி'வற்றியவோடையன்ன' என்றும், இயற்கையழகுடைமைபற்றி 'வனப்பினுள்' என்றுங் கூறினார். நெற்றி என்ற சொல் இரண்டனுள், முன்னது-இறந்தகாலவினையெச்சம்; நெற்று-பகுதி. பின்னது-பெயர்ச்சொல். பாங்கர்=பாங்கு; மென்றொடர்க்குற்றியலுகரத்துக்கு அர் - போலி. குங்குமம், திலகம் - வடசொற்கள். திலகம் - நெற்றிப் பொட்டு. 'வாசநிறைத்த'என்றும் பாடமுண்டு. மருண்டு கண்டாள் - கண்டு மருண்டாள் என்று விகுதிபிரித்துக்கூட்டலுமாம். ஓடை - நீரோடுமெதெனக் காரணக்குறி. (கஉ௫)

[அவள் அவ்விரத்தத்தைத் துடைத்தல்.]

பல்கியகிளையுந்தேசும்பார்த்திவன்வாழ்வுந்தாங்க
ளல்கியநகருமின்றேயழியுமென்றஞ்சியேகொ
னல்கியநேயமேகொனயனநீர்மல்கமல்க
மல்கியகுருதிதன்னைமாற்றினாள்வண்ணமாதே.

(இ - ள்.) 'பார்த்திவன் - (விராட)ராஜனது, பல்கிய கிளையும் - மிகுதியான பந்துவர்க்கமும், தேசும் - ஒளியும், வாழ்வும் - வாழ்க்கையும்,தாங்கள் அல்கிய நகரும் - தாங்கள் (அஜ்ஞாதவாசமாகத்) தங்கியிருந்த அவ்விராட நகரமும், இன்றே அழியும் - (இக்கங்கபட்டனது இரத்தம் கீழேசிந்தினால்)

இன்றைக்கே அழிந்துபோய்விடும்,' என்று - என்றுஎண்ணி அதனால், அஞ்சியேகொல் - அச்சங்கொண்டதனாலேயோ?(அன்றி), நல்கிய நேயமேகொல்- (தன்கணவனாகிய அத்தருமபுத்திரனிடத்துத்) தான்வைத்துள்ள அன்பினாலேயோ? வண்ணம் மாது-வண்ணமகளாகிய திரௌபதி, நயனம் நீர் மல்க மல்க-தன்கண்களினின்று நீர் மிகுதியாய்ப்பெருகப்பெருக, மல்கிய குருதி தன்னை மாற்றினாள் - (கங்கபட்டனது நெற்றியினின்று) மிகுதியாய்வெளிப்பட்ட இரத்தத்தை (க் கீழேசிந்தவொட்டாமல்) துடைத்துப் போக்கினாள்.

நிரபராதியும் சாந்தமூர்த்தியும் நற்குணநற்செயல்களிற்சிறந்தவனும் முனிவடிவமாயுள்ளவனு மான தருமபுத்திரனை விராடன் சினந்து ஊறுபடுத்தியதனால் அவனது நெற்றியினின்று பெருகும் இரத்தம் கீழேசிந்துமாயின் அத்தீவினைப்பயனால் விராடனும் அவனதுநாடும் சுற்றத்தோடு அழிதல்கூடுமென்பதையும், தனது மூத்ததமையனான தருமபுத்திரனை எவரேனும் புண்படுத்திக்குருதிசிந்துவித்தால் அவரைவேரோடழித்துவிடுவதென்று அருச்சுனன் விரதங்கொண்டுள்ளவனாதலால் அவனால் விராடனுக்குப் பேரழிவு நேர்தல்கூடு மென்பதையும் எண்ணித் திரௌபதி அஞ்சியதனாலும், தன் பிராணநாயகனாகிய அத்தருமபுத்திரனிடத்து அவள் தான்கொண்டுள்ள அன்பினாலும், அருகிலிருந்துகண்ணுற்ற பணிப்பெண்ணாகிய அவள் கண்ணுங்கண்ணீருமாய் விரைந்தோடிவந்து தருமனது நெற்றியிரத்தத்தைக் கீழேசிந்தாதபடி தனது ஆடையினால்துடைத்தன ளென்ற கருத்தை இங்ஙனம்விகற்பவகையாற்கூறினார்.(அருச்சுனன் இவ்வகைவிரதமுடையனாதல் பற்றி, அவனுக்கு ஜிஷ்ணுவென்று ஒருபெயர் வழங்கிய தென்பதை, "மட்டிலாவலிபெற்றுள்ளவானவர்முதலோரேனு, மிட்டமற்றுதிட்டிரப்பேரிறைவனையவமானித்தால், தொட்டவான்கணையாற்சென்னிதுணிப்பதென்றிருக்குஞ்சொல்லாற், சிட்டுணுவென்றுநாமஞ்செய்தனர்தெளிந்தமேலோர்" என்ற நல்லாப்பிள்ளைபாரதத்தாலும் அறிக. மேல்வெளிப்பாட்டுச்சருக்கத்தில் "தன்னைநிகர்கிற்பவரிலாததனுவல்லோன்,என்னைதிருநெற்றியிலிருத்தவடுவென்றான், மின்னையும்வெறுத்தொளிரு மேதகுநிறத்தாள், பின்னையவனுக்குநிகழ்பெற்றியுரைசெய்தாள்," "உரைத்தபொழுதிப்பொழுதிவ்வூரெரிகொளுத்தித், தரைத்தலைவனைத்தலைதடிந்திடுவெலென்னா, விரைத்தடவரைப்புயன்வெகுண்டுவிலெடுத்தான், இரைத்துவரு கான்மகனு மெரிவிழிசிவந்தான்," "அனலுமுதுகானகமகன்றுநெடுநாள்நம், நினைவுவழுவாமலிவணீழலிலிருந்தோம், சினமிகுதலிற்றவறுசெய்தனனெனப்போய், முனிதல்பழுதாகுமெனமுன்னவன்மொழிந்தான்" என வருஞ் செய்யுள்களிற் கூறும் விஷயமும் நோக்கத்தக்கது.)

பல்கிய, பல்கு - பகுதி; அல்கிய, நல்கிய,மல்கிய என்பவற்றிற்கும் இங்ஙனமே காண்க. கிளை-மரத்தைக் கிளைபோல ஒருவனைத் தழுவிநிற்கும் உறவினத்துக்கு உவமவாகுபெயர். தேசு-தேஜஸ்என்ற வடசொல்லின் சிதைவு. அரசனுக்கு ஒளி—"உறங்குமாயினு மன்னவன்தன்னொளி, கறங்குதெண்டிரைவையகங்காக்குமால்" என்றபடி உறங்காநிற்கவும் தான் உலகங்காக்கின்ற அவனது தெய்வத்தன்மையும்,தான் உயிர்வாழுங்காலத்து மிக்குத்தோன்றுதலுடைமையும், புகழு மாம். பார்த்திவன் என்ற வடசொல், பிருதிவியை யாளுபவ னென்று பொருள்படும்; பிருதிவி - பூமி. நயநம் - வடசொல். மல்க மல்க-அடுக்கு, இடைவிடாமை குறிப்பது. அல்கிய நகர் - பெயரெச்சம், இடப்பெயர்கொண்டது. பார்த்திபன் என்பதை, கிளை தேசு என்றவற்றோடும் கூட்டுக. ஏகாரம் நான்கனுள், முதலது - தேற்றம்; ஈற்றது - ஈற்றசை; மற்றையிரண்டும் - பிரிநிலை. 'கொல்' இரண்டும் - ஐயம். வண்ணம் மாது - (விராடன்மனைவியாகிய சுதேட்டிணைக்கு) அலங்காரஞ்செய்யும் பெண். (கஉக)

[விராடன் கழிவிரக்கங்கொள்ளுதல்.]

கண்ணினீர்மல்கவண்ணக்காரிகைகலையாலந்த
வண்ணமாமுனிவன்சோரிமாற்றியகாலையையுற் [மென்
றெண்ணமுஞ்செயலும்வேறாயென்செய்தோமென்செய்தோ
றண்ணலுந்தன்னைநொந்தாங்கருஞ்சினம்பாவியென்றான்.

(இ - ள்.) அந்த வண்ணம் - அவ்வாறு, வண்ணம் காரிகை - வண்ண மகள், கண்ணின் நீர் மல்க - தன்கண்களினின்று நீர்ப்பெருக, கலையால் - (தனது) ஆடையினால், மா முனிவன் சோரி - சிறந்த அந்தக்கங்கமுனிவனுடைய இரத்தத்தை, மாற்றிய காலை - துடைத்த பொழுது, அண்ணலும்-பெருமையிற்சிறந்தவனான விராடராஜனும், ஐயுற்று - சந்தேகமடைந்து, 'எண்ணமும் செயலும் வேறு ஆய் - நினைப்பும் தொழிலும் வேறுபட்டு, என் செய்தோம் என் செய்தோம் - (ஆலோசனையில்லாமல்) என்ன தவறான காரியஞ் செய்துவிட்டோம்! என்னதவறானகாரியஞ்செய்துவிட்டோம்!!' என்று - என்று பலதரம்எண்ணி, தன்னை நொந்து - தன்னைத்தானே வெறுத்துக்கொண்டு, ஆங்கு-அப்பொழுது, அருஞ் சினம் பாவி என்றான்-'அடக்குதற்குஅரிய கோபம் கெட்டது'என்று பச்சாத்தாபப்பட்டான்; (எ-று.)

வண்ணம் என்ற சொல் இரண்டனுள், முன்னது - அலங்காரமென்ற பொருளிலும், பின்னது - வகையென்றபொருளிலும் நின்றது. அந்த வண்ணம் மாமுனிவன் என்றுஎடுத்து, அந்த அழகிய சிறந்த கங்கமுனிவனென்றலு மொன்று. காரிகை - அழகியபெண். கலை - சேலை; இங்கு, முன்தானை. ஐயுற்று - ஐயமுற்று என்பதன் விகாரம். முனிவனது நெற்றியிற் பொசியும் இரத்தத்தை வண்ணமகள் துகிலால் துடைத்த தென்னவென்று விராடன் சங்கைகொண்டனன். 'எண்ணமுஞ் செயலும் வேறாய்'என்றது, இவ்வளவுகாலமாய்க் கங்கபட்டனிடத்து வைத்திருந்த அன்போடுகூடிய மதிப்பாகிய நினைப்பும் இப்பொழுது கவற்றினாலெறிந்த கடுந்தொழிலும் ஒன்றோடொன்று ஒற்றுமையுடையதன்றாகி யென்றபடி. 'என்செய்தோம் என்செய்தோம்' என்ற அடுக்கு-இரக்கம்பற்றியது. பாவி-பாபீயென்ற வடசொல்லின் விகாரம். 'அருஞ்சினம்பாவம்'என்னாது 'அருஞ்சினம் பாவி'என்றதை "அழுக்காறெனவொருபாவி"என்றாற்போலக் கொள்க. பண்பிற்குப் பண்பி யில்லையாயினும் தன்னையுடையவனை இம்மைமறுமையிரண்டிலுங் கெடுக்கின்ற கொடுமைபற்றி, சினத்தை 'பாவி' என்றனரென்க; கொடியவனை 'பாவி' என்னும் வழக்கு இருத்தலால். எண்ணம் - அம்விகுதிபெற்ற தொழிற்பெயர். அருஞ்சினம்—"உள்ளங்கவர்ந்தெழுந்தோங்குசினங் காத்துக், கொள்ளுங் குணமே குணமென்க - வெள்ளந், தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து, விடுத்த லரிதோ விளம்பு" எனக் காண்க. (கஉஎ)

[மாலைப்பொழுதில் உத்தரன் நகர்க்குமீளுதல்.]

ஆயிடையத்தக்குன்றுக்காதபனணியனாகச்
சேயிடையெதிர்கொள்கொற்றச்சேனைமன்னவர்கள்சூழ
வீயிடைவரிவண்டார்க்கும்வியன்பெருங்காவுநீங்கிப்
போயிடைநெருங்கிவேந்தன்புதல்வனப்புரத்தைச்சேர்ந்தான்.

(இ - ள்.) அ இடை - அப்பொழுது, ஆதபன் - சூரியன், அத்தம் குன்றுக்கு அணியன் ஆக - அஸ்தமனகிரிக்குச் சமீபத்திற் சென்றவனாக [சாயங்கால மாகுஞ் சமயத்தில்],—வேந்தன் புதல்வன் - விராடராசனுடைய குமாரன்[உத்தரன்],—சேய் இடை எதிர் கொள் கொற்றம் சேனை மன்னவர்கள் சூழ - வெகுதூரம்வந்து தன்னை யெதிர்கொண்டு அழைத்துச்செல்லுகின்ற வெற்றியையுடைய சேனைத்தலைவர்கள் (தன்னைச்) சூழ்ந்துவர,—

வீயிடை வரி வண்டு ஆர்க்கும் - மலர்களில் உடற்கோடுகளையுடைய வண்டுகள் மொய்த்து ஆரவாரிக்கப்பெற்ற, வியல் பெருங் காவு - அகன்ற பெரிய சோலையினின்று, நீங்கி போய் - புறப்பட்டுச் சென்று, இடை நெருங்கி - நடுவிடத்தைக் கடந்து நெருங்கி, அ புரத்தை சேர்ந்தான்-அந்தப்பட்டணத்தை யடைந்தான்; (எ - று.)

அ + இடை = ஆயிடை: செய்யுளிற் சுட்டுநீண்டவிடத்து உயிர்வர யகரந் தோன்றிற்று; [நன் - உயிர் - கரு:] இடப்பொருளனவான சொற்கள் காலப்பொருளையுங் காட்டும். அஸ்தம், ஆதபன் - வடசொற்கள். அத்தக்குன்று - மேற்றிசையில் மேல்கடலைச்சாரவுள்ள தெனப்படும். அத்தக்குன்று - இருபெயரொட்டுப்பண்புத்தொகை. ஆதபன் - எங்கும் நன்றாய்த் தபிப்பவன். அணியன் - அணிமையென்ற பண்பினடியாப் பிறந்த பெயர். சேய் - சேய்மையென்ற பண்பி னடி. இடை-இடம். தென்புறத்துப் பகைவென்று நிரைமீட்டுவந்த சேனை யென்பது பற்றி, 'கொற்றச்சேனை' என்றார். வரி - இசைப்பாட்டுமாம். வியல் - உரிச்சொல்; "வியலென்கிளவி யகலப்பொருட்டே" என்பது தொல்காப்பியம். வியல் + பெரு=வியன்பெரு; சிறுபான்மை லகரம் வலிவர னகரமாயிற்று: "குறில்செறியா ல ள" என்னுஞ் சூத்திரத்து 'பிற' என்ற மிகையைக் காண்க. காவு, உ - சாரியை; நாவு, தெருவு நடுவு, என்றவற்றிற் போல. அப்புரம் - விராடபுரம். (கஉ௮)

[உத்தரன் வீதியில் உலாப்போதல்.]

பரந்துவெம்படைகண்மின்னப்பல்லியம்பலவுமார்ப்பத்
துரந்துமும்மதமும்பாயுந்துதிக்கைவாரணங்கள்சூழப்
புரந்தரனகரிற்காளப்புயல்வருமாறுபோல
வுரந்தருபேடிதன்றேரூரவேவீதியுற்றான்.

(இ - ள்.) (அங்ஙனஞ்சேர்ந்த உத்தரன்),—வெம் படைகள் - கொடிய ஆயுதங்கள், பரந்து மின்ன - பரவிப் பிரகாசிக்கவும், பல் இயம் பலவும்-பல வகைவாத்தியங்களெல்லாம், ஆர்ப்ப - ஆரவாரிக்கவும்,—துரந்து மும் மதமும் பாயும் - தொடர்ச்சியாக [இடைவிடாமல்] மூன்றுவகைமதங்களும் பெருகப்பெற்ற, துதிக்கை வாரணங்கள் - துதிக்கையையுடைய யானைகள், சூழ - (தன்னைச்)சூழ்ந்துவரவும்,—புரந்தரன் நகரில் - தேவேந்திரனது பட்டணத்தில், காளம் புயல் வரும் ஆறு போல - கறுத்தமேகம் வருவது போல, உரம் தரு பேடி தன் தேர் ஊர - தனக்கு வெற்றியைக்கொடுத்த பேடியாகிய பிருகந்நளை தனது தேரைச் செலுத்த, வீதி உற்றான் - அந்நகரத்து வீதிகளின் வழியே சென்றான்; (எ - று.)

பரந்துமின்னுதல் - நெடுந்தூரமளவும் பிரகாசித்தல். ஒன்றன் கூட்டம், பலவினீட்டம் என்ற இரண்டைக்கருதி, 'பல்லியம்பலவும்' என்றார்: வாத்தியங்களின்வகை யொவ்வொன்றிலும் பற்பல வெனக. 'பல்லியம் பணிலமார்ப்ப' என்ற பாடத்துக்கு - பலவகைப்பட்டவாத்தியங்களும் சங்குகளும் ஆரவாரிக்க வென்பது பொருள். 'சுரந்தெழு மதங்கள் பாயும்' என்ற பாடம், கண்ணிரண்டு கபோலமிரண்டு துதிக்கைத்துளையிரண்டு குறியொன்று என்னும் எழிடத்து மதங்களும் மேன்மேற்சுரந்து பெருகப்பெற்ற என்று பொருள்படும். செல்வவளச்சிறப்புப்பற்றி, விராடபுரத்துக்குத் தேவேந்திரனது அமராவதிநகரம் உவமை. இனிமையையும் மகிழ்ச்சியையும் விளைத்தலில், உத்தரன்வருதல் நீர்கொண்டகாளமேகம் வருதல் போலு மெனக. காளமேகத்தை உவமைகூறியதற்கு ஏற்ப, படைகளாகியமின்னலும் வாத்தியமுழக்கமாகிய இடியும் யானைமதமாகிய மழையும் கூறின ரென்னலாம். உம்மைகள்-முற்றுப்பொருளன. புரந்தரன்-பகைவரது நகரங்களை அல்லது

உடம்புகளை அழிப்பவன்; வடசொல்: புரம் - ஊரும், உடலும் அருச்சுனன் தான் வென்ற ஆண்மையை உத்தரனதாக அனைவரும் கருதும்படி அது போக்கியமைபற்றி, 'ஊர்தருபேடி' என்றார். இனி, காளப்புயல் என்பதை உவமையாகுபெயராகக்கொண்டு, காளமேகம்போன்ற திருமாலினவதாரமாகிய உபேந்திரமூர்த்தி பகைவென்றுவந்தாற்போல வென்று பொருளுரைத்தலுமொன்று; விராடனது மகனாகிய உத்தரன் வெற்றியோடு விராடபுரத்துவீதியில் வந்ததற்கு, இந்திரனது தம்பியாகிய உபேந்திரன் பகைவென்று இந்திரநகரத்துவீதியில் வருதல் ஒப்புமை யென்க. (கஉகூ)

[விராடன் எதிர்கொண்டு உத்தரனைத் தழுவுதல்.]

வென்றுமீள்குமரன்றன்னைவீதிகடோறுமாத
ரன்றெதிர்கொண்டுநன்னீராசனமெடுத்துவாழ்த்தக்
குன்றெறிந்தவனைக்கண்டகுன்றவில்லியைப்போன்முந்தச்
சென்றவன்பிதாவுந்தேர்மேற்சிக்கெனத்தழீஇக்கொண்டானே.

(இ - ள்.) வென்று மீள் குமரன்தன்னை - பகைவென்று மீண்டுவருகின்ற இளமகனாகிய உத்தரனை, வீதிகள் தோறும் - (அவன் செல்லுகின்ற விராடபுரத்து) வீதிகளிலெல்லாம், மாதர் - (அந்நகரத்துமாளிகைகளிலுள்ள) மகளிர்கள், அன்று - அப்பொழுது, எதிர்கொண்டு - எதிர்கொண்டுசென்று, நல் நீராசனம் எடுத்து வாழ்த்த - நல்ல மங்களவாலத்தி யெடுத்துச் சுழற்றி வாழ்த்தாநிற்க,—அவன் பிதாவும் - அவனது தந்தையாகிய விராடனும்,— குன்று எறிந்தவனை - கிரௌஞ்சகிரியை (வேல்கொண்டு) பிளந்திட்ட (தனது இளையகுமாரனான) சுப்பிரமணியனை, கண்ட - பார்த்த, குன்றம் வில்லியை போல் - மகாமேருகிரியை வில்லாகக்கொண்டவனாகிய சிவபிரானைப்போல, முந்த தேர்மேல் சென்று - விரைவாகத் தேரின்மீது (ஏறி) எதிர்கொண்டு சென்று, சிக்கென தழீஇக்கொண்டான் - (அவ்வுத்தரனை) இறுகத்தழுவிக் கொண்டான்; (எ - று.)

தோறு - ஏழாவதன் இடப்பன்மைப் பொருளதாகிய இடைச்சொல். எதிர்கொண்டு, நீராசனமெடுத்து வாழ்த்த, தழீஇக்கொண்டான் என்பவற்றிற்கெல்லாம் 'குமரன்தன்னை' என்றது - செயப்படுபொருள். நீராஜநம் - வடசொல்; இது, திருஷ்டிதோஷங்கழிதற்பொருட்டுச் சுழற்றுவது: சுண்ணாம்புகலந்தமஞ்சள்நீரை ஒருதட்டிற்கொண்டு அதன்நடுவிற்கர்ப்பூரமேற்றி வைத்து அதனை எடுத்து மங்களகரமாக மாதர்கள் விசேஷகாலங்களில் ஒருவர்க்குச் சுழற்றுதல் மரபு. வில்லி என்றதில், இ - ஆண்பாற்பெயர்விகுதி. குன்று என்ற பொதுப்பெயர், சந்தர்ப்பத்தினால் கிரௌஞ்சமும் மேருவுமாகிய சிறப்புப்பொருளைக் குறித்தது. குன்றம், அம் - சாரியை. உத்தரனது தந்தையாகியவிராடனுக்கு முருகக்கடவுளின் தந்தையாகியசிவபிரானும், வெற்றிபெற்றுமீண்ட இளையகுமாரனான உத்தரனுக்கு அங்ஙனமாகியமுருகக் கடவுளும் ஒப்புமை யெனக் காண்க. பிதா - வடசொல். தழீஇக்கொண்டான் = தழுவிக்கொண்டான்; சொல்லிசையளபெடை. 'நன்னீராசிகளெடுத்துவாழ்த்த' என்ற பாடத்துக்கு, நல்நீர் - நல்லதன்மைகளையுடைய, ஆசிகள் - வாழ்த்துக்களை, எடுத்து - எடுத்துச்சொல்லி, வாழ்த்த என்று பொருள்காண்க.

குன்றெறிந்த கதை:—சூரபதுமன்முதலிய கொடியஅசுரர்களை அழித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்த தேவர்களது வேண்டுகோளுக்கு இரங்கிய சிவபிரானால் உண்டாக்கப்பட்ட இளையகுமாரனான முருகக்கடவுள் அவ்வசுரர்களையழித்தற்பொருட்டுப் படையெடுத்துத் தேவர்களுடனே சூரபதுமனது மகேந்திரநகரத்தை நோக்கிச் செல்லும் வழியிடையே வாலுறவோங்கிய கிரௌஞ்சகிரியைக் கண்டு தேவர்கள் திகைத்திடுதலும், நாரத

முனிவன் கூறியதனால் அம்மலையில் ஒருசார் மாயமாபுரியிலே சூரபதும னது தம்பியான தாரகன் பலஅசுரசேனையுடனேயிருத்தலை யறிந்து,முருகக் கடவுள் தனக்குத்தம்பிமுறையாகின்றவீரவாகுவைச்சேனையோடு போர்க்கு அனுப்ப, தாரகாசுரனும சேனையுடன்வந்து போர்செய்கையில், அசுரர்கள் அழிந்திட, யானைமுகமுள்ள அத்தாரகாசுரன் கடும்போர்புரிந்து சுப்பிர மணியபரிவாரமான பூதகணங்களை யழித்து முடிவில் முன்னிற்கமாட்டா மல் அம்மலையில் ஒருகுகையிலே ஒளித்தனனாக, தொடர்ந்துசென்ற வீர வாகுமுதலியோர் பலர் அக்குகையினுள்ளே அம்மலையின் மாயையால் மயங் கிக்கிடக்க, தாரகன் போர்க்களம்புகுந்து பூதகணங்களை வருத்தித் துரத்த, இச்செய்திகளை நாரதமுனிவன்சொல்லக் கேட்டு முருகவேள் சேனையுடன் சென்று போர்செய்து அவ்வசுரனது துதிக்கையையுந் தந்தங்களையுந் துணி த்து அவனது சேனைகளை யழிக்கையில், அவன் அக்கிரௌஞ்சமலையுடன் கூடிப் பலமாயைகள்புரிய. ஆறுமுகமூர்த்தி வேலாயுதத்தையெறிந்து அம் மலையையும் அவ்வசுரனையும் அழித்து,மயங்கிக்கிடந்த தனதுவீரர்களையெல் லாம் தனது திவ்வியசக்தியால் எழுப்பி யழைத்துக்கொண்டு அப்பாற்சென் றன னென்பதாம். அன்றியும், சிவபிரான் பரசுராமனுக்கும் சுப்பிரமணிய னுக்கும் ஒருங்கு படைக்கலவித்தை பயிற்றுவித்தபின்பு அவர்கள்திறத்தைப் பரீக்ஷிக்கையில், பரசுராமன் அம்பெய்து கிரௌஞ்சகிரியைத் துளைக்க, குமாரமூர்த்தி தனதுவேற்படையை அக்கிரியின்மீதுஎறிந்து அதனைப்பிள ந்து தனதுவேலின்திறத்தைக் காட்டின னென்ற வரலாறும் உண்டு.

சிவபிரான் மகாமேருமலையை வில்லாகக்கொண்டது, திரிபுரசங்கார காலத்தில்; அவ்வரலாறு வருமாறு:—தாரகாசுரனதுபுத்திரர்களாகிய வித் யுந்மாலி தாரகாட்சன் கமலாட்சன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து மயனென்பவனால் சுவர்க்க மத்திய பாதாள மென்ற மூன்றிடங்களிலும் முறையே பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களால் அரண்வகுக்கப் பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந்தன்மையுடைய மூன்றுபட்டணங் களைப் பெற்று, மற்றும் பலஅசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம்நினை த்தவிடங்களிற் பறந்துசென்று பலஇடங்களையும் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால், சிவபெருமான், பூமியைத் தேராகவும், சந்திரசூரிய ரைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்குவேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச்சாரதியாகவும், மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாக வும், விஷ்ணுவை வாயுவாகியசிறகமைந்த அக்கினியைமுனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக் கொண்டு யுத்தசன்னத்தனாய்ச்சென்று போர்செய்யயத்தனித்துப் புன்சிரிப் புச்செய்து திருமாலாகியஅம்பையெய்து அவ்வசுரரனைவரையும் பட்டணங் களோடு எரித்தருளின னென்பதாம். 'குன்றவில்லி' என்ற பெயரினால், கல்லை வில்லாகவளைத்து அதுகொண்டு தொழில்செய்ய வல்லவ னெனச் சிவபிரானது மிக்கதிறமை விளங்கும். (க௫0)

[அரண்மனையிற் புகுந்த உத்தரன் கங்கபட்டனதுநெற்றியில் வடுவைக் காணுதல்.]

தழுவியவரசன் றாளிற்றலையுறவீழ்ந்துவேந்தர்
குழுவிடைக்கொண்டுபோகக்கோயிலிற்புகுந்தபின்னர்ப்
பழுதறுவாய்மைவேதபண்டிதன்பாதம்போற்றிச்
செழுமலர்வதனநோக்கித்திருநுதல்வடுவுங்கண்டான்.

(இ - ள்.) (உத்தரகுமாரன்),—தழுவிய அரசன் தாளில் - (தன்னை) அணைத்துக்கொண்ட விராடராசனது பாதங்களில், தலை உற - தனதுதலை

பமேம்படி, வீழ்ந்து - விழுந்து(ஸாஷ்டாங்கமாக)வணங்கி,—வேந்தர் குழு இடை கொண்டு போக - அரசர்கூட்டம்(சுற்றிலுஞ்சூழ்ந்து) இடையிலே (தன்னை) அழைத்துக்கொண்டு போக, கோயிலில் புகுந்த பின்னர் - அரண்மனையிற்சேர்ந்தபின்பு,—பழுது அறு வாய்மை - குற்றமற்றஉண்மைமொழிகளையுடைய, வேத பண்டிதன் - வேதம்வல்லவனாகிய கங்கபட்டனது, பாதம் - சீர்பாதங்களை, போற்றி - வணங்கி,—செழு மலர் வதனம் நோக்கி - செழுமையான செந்தாமரைமலர்போன்ற (அவனது)திருமுகத்தைப் பார்த்து, திரு நுதல் வடுவும் கண்டான் - (அம்முகத்திலே) அழகியநெற்றியில் ஊறுபட்டிருத்தலையும் பார்த்தான்; (எ - று.)

கோயில்—கோ + இல்: அரசனது மாளிகை; அல்லது, தலைமையான மாளிகை: 'கோவில்'என வகரவுடம்படுமெய்பெற்று வரற்பாலது 'கோயில்' என யகரம் பெற்றது, இலக்கணப்போலி. தருமபுத்திரன் சத்தியவிரதனாதலால், அவனுக்கு 'பழுதறுவாய்மை' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. அந்தணவடிவங்கொண்டவனாதலால், தருமன் 'வேதபண்டிதன்' எனப்பட்டான். வேதபண்டிதன், பாதம், வதனம் - வடசொற்கள். "பூவிற்குத் தாமரையே" என்றபடி எல்லாமலர்களினும் தாமரைமலர் மிகச்சிறத்தல்பற்றி, 'செழுமலர்' எனப்பட்டது. ஊறுபட்டிருக்கையிலும் முகச்சுளிப்புறாத பொறையுடைமை, 'செழுமலர்வதனம்' என்றதனால் விளங்கும். வீழ்ந்து புகுந்தபின்னர் என இயையும். வடுவும் என்ற உம்மை - இறந்தது தழுவியஎச்சம். 'தழுவியசனகன்றனில்' என்றும் பாட முண்டு; சனகன் - பெற்றதந்தை. (கூக)

[நிகழ்ந்தசெய்தியை யறிந்து உத்தரன் உளம்வருந்துதல்.]

திகழ்ந்தநின் னுதலி னூறுசெய்தவர்யார்கொலென்ன
நிகழ்ந்தமைதந்தைகூறநெஞ்சினாற்றந்தைதன்னை
யிகழ்ந்தமைநுவலும்போதைக்கெல்லையின்றிவனைப்போல
வகழ்ந்தநீராடைஞாலத்தார்கொலோவமைவின்மிக்கோர்.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (அதுகண்ட உத்தரன்), 'திகழ்ந்த நின் நுதலின் - விளங்குகின்ற உனது நெற்றியிலே, ஊறு செய்தவர்-வடுப்படுத்தியவர், யார்கொல் - யாரோ?' என்ன - என்று (அக்கங்கபட்டனை) வினவியளவில்,—நிகழ்ந்தமை - நடந்தசெய்தியை, தந்தை - தந்தையான விராடன், கூற - சொல்ல,—(கேட்டறிந்த உத்தரன்), நெஞ்சினால் - தன்மனத்தினால், தந்தைதன்னை - தன்பிதாவான அவ்விராடனை, இகழ்ந்தமை - வெறுத்ததை, நுவலும் போதைக்கு - சொல்லுமளவுக்கு, எல்லை இன்று - ஒருவரையறையில்லை; (அங்ஙனம் மிகவெறுத்தபின்பு உத்தரன்), 'இவனை போல - இம்முனிவனைப்போல, அமைவின் மிக்கோர் - பொறுமையிற் சிறந்தவர், அகழ்ந்த நீர் ஆடை ஞாலத்து - (சகரசக்கரவர்த்திகுமாரர்களால்) தோண்டப்பட்ட கடலை ஆடையாகவுடைய [கடல்சூழ்ந்த] இந்நிலவுலகத்தில், ஆர்கொலோ - வேறு யாருளரோ? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

உறுவது ஊறு எனக் காரணக்குறி. நிகழ்ந்தமை, இகழ்ந்தமை - மையீற்று இறந்தகாலத்தொழிற்பெயர்கள். போதைக்கு, ஐ - சாரியை. நீர் - கடலுக்கு இலக்கணை. அமைவாவது - காரணம்பற்றியாவது,பேதைமையாலாவது ஒருவன் தமக்குக்குற்றஞ்செய்தவிடத்துத் தாமும் அவனுக்கு அதனைச்செய்யாது பொறுத்தல். மிகுதியாகஇகழ்ந்தது-அம்முனிவனைத் தருமபுத்திரனென்று தானறிந்ததனாலும்,"வென்றவன் பேடியே"என்று அவன் கூறியது உண்மையேயாக அதுபற்றி விராடன் அவனைச் சினந்து கவறுகொ

ண்டெறிந்தது பெருந்தீங்காதலாலு மென்க. ஐம்பெருங்குரவரிலொருவனு கிய தந்தையைச் சொற்செயல்களால் வெறுத்தல் கூடாமையாலும், மனம் பொறுமையாலும், நெஞ்சினு லிகழ்ந்தான். பூமியைச்சூழ்ந்த கடலே, பூமி யாகியபெண் உடுக்கும் ஆடை யென்றல் - மரபு. (கௌஉ)

[உத்தரன் தந்தையும் தானுமாய்த் தருமனை வணங்கிச் சினந்தீர்த்தல்.]

செறுப்பதுபெருமையன்றுசிறியவர்செய்ததீமை
பொறுப்பதேபெருமையென்றுபூசுரன்பாதம்போற்றி
வெறுப்பதுவிளைத்ததாதைவீழ்ந்தபின்றானும்வீழ்ந்து
மறுப்பதுபுரியாஞானிமனத்துனியகற்றினனே.

(இ - ள்.) சிறியவர் செய்த தீமை - சிறியோர்செய்த தீங்கை, செறுப் பது - வெறுத்துக் கோபிப்பது, பெருமை அன்று - பெருந்தன்மையன்று; பொறுப்பதே - (அதனைப்)பொறுத்துக்கொள்வதே, பெருமை - பெருந்தன் மையாம்,' என்று - என்றுசொல்லி, வெறுப்பது விளைத்த தாதை வீழ்ந்த பின் தானும் வீழ்ந்து பூசுரன் பாதம் போற்றி - வெறுக்கத்தக்க[தீய]காரி யத்தைச் செய்த தந்தையான விராடன் (கங்கபட்டனது பாதங்களில்)வீழ் ந்து நமஸ்கரித்தபின்பு (மைந்தனாகிய)தானும் அந்தணனாகியஅக்கங்கபட் டனது பாதங்களில் வீழ்ந்து வணங்கி,—மறுப்பது புரியா ஞானி - (சரண மடைந்தவரது வேண்டுகோளைத்) தடுத்தல்செய்யாத தத்துவஞானமுடை யவனான அம்முனிவனது, மனம் துனி - மனத்திலடங்கிய சிறுகோபத்தை யும், அகற்றினன் - போக்கினன்; (எ - று.)

"சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம், பெரியோராயிற் பொறுப்பது கடனே" என்றார் பிறரும். சிறியவர் - அறிவாலும் ஒழுக்கத்தாலும் பிரா யத்தாலும் சிறியவர். பூஸுரன் என்ற வடசொல்லுக்கு-(பிரமதேஜஸினால்) பூமியில் தேவன்போல விளங்குபவ னென்பது பொருள். பிறர்வேண்டு கோளுக்குஇசையாமல் மறுதலிக்குங்குணம் இயல்பிலேயே யில்லாதவ னென்பார்,'மறுப்பதுபுரியாஞானி'என்றார்; இத்தொடர்க்கு-எவராலும் தடுக்க வொண்ணாத கல்வியறிவுடையவ னென்ற பொருளும் அமையும். செறுப் பது, பொறுப்பது,மறுப்பது - எதிர்காலத்தொழிற்பெயர்கள். வெறுப்பது- எதிர்காலவினையாலணையும்பெயர். அகற்றினன், அகல்என்பதன்பிறவினை யான அகற்று - பகுதி. சிறியவர்செய்த தீமை - இடைநிலைத்தீவகம்.(கௌ௩)

[உத்தரகுமாரனைக்கண்டு சுதேட்டிணை மகிழ்தல்.]

ஆன்றமைந்தடங்குகேள்வியண்ணலுமவனைப்பெற்ற
தோன்றலும்பின்னர்ச்சென்றுசுதேட்டிணைகோயிலெய்த
வின்றவப்பொழுதினோகையெண்மடங்காகவீசச்
சான்றதன்மகனைக்கண்டுமகிழ்ந்தனடவத்தின்மிக்காள்.

(இ - ள்.) ஆன்று அமைந்து அடங்கு கேள்வி - மிகநிறைந்துஅடங்கி யிருக்கின்ற நூற்கேள்வியையுடைய, அண்ணலும் - பெருந்தன்மையிற்சிறந் தவனான உத்தரனும், அவனை பெற்ற தோன்றலும் - அக்குமாரனைப்பெற்ற தந்தையான விராடராசனும், பின்னர் - பின்பு, சுதேட்டிணை கோயில் - சுதேஷ்ணைவாழ்கின்ற அந்தப்புரத்துக்கு, சென்று எய்த - போய்ச்சேர,— தவத்தின் மிக்காள் - தவத்தினால் மிக்கவளாகிய அவள், சான்ற தன் மகனை கண்டு - வெற்றியாற்சிறந்த தனதுகுமாரனைப் பார்த்து, ஈன்ற அ பொழு தின் ஓகை எண் மடங்கு ஆக வீச - தான் அப்பிள்ளையைப்பெற்றபொழுது அடைந்த மகிழ்ச்சியினும் (இப்பொழுதை)மகிழ்ச்சி எட்டுப்பங்கு அதிகமா கப் பெருகாநிற்க, மகிழ்ந்தனள் - சந்தோஷமடைந்தாள்; (எ - று.)

ஈன்றபொழுதை மகிழ்ச்சி—"வயாவும் வருத்தமும் ஈன்றக்காலுைவும், கவாஅன் மகற்கண்டு தாய் மறந்தாஅங்கு" என்பதனுற் காண்க. புதல்வனை மடியிற்கண்ட பொழுதுவகையினும் சால்புடையனுகக்கண்ட சிறப்புவகை பெரி தாதலால், 'ஈன்றவப்பொழுதி னுைகை யெண்மடங்காக வீச' என்முர்; "ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச், சான்றேனெனக் கேட்ட தாய்" என்முர் திருவள்ளுவரும். ஓகை - களிப்பு; உவகையென்ப தன் மரூஉ. எண்மடங்கு என்றது, பலமடங்கு என்றபடி. ஆகவே, தாயு வகைக்கு அளவின் றென்றவாரும். தவத்தின்மிக்காள்-மிக்கதவமுடையாள்: இங்குத் தாய்க்குத் தவம் - இவ்வாறு நல்லறிவும் நல்லொழுக்கமுமுடைய குமாரனைப் பெறுதற்கு ஏற்ற நல்வினை.

ஆன்றுஎன்பதிற் பகுதியாகிய'ஆல்'என்பதை, 'சால்' என்பதன் மரூஉ வென்றவது 'அகல்' என்பதன் மரூஉ வென்றவது கொள்க. அடங்கு கேள்வி - அடக்கமுடையனுயிருத்தற்குக்காரணமான நூற்கேள்வி யெனினு மாம். தோன்றல் - ஆண்பாற்சிறப்புப்பெயர்: (மற்றையோரினுஞ் சிறந்து) விளங்குபவன்; அல் - கருத்தாப்பொருள்விகுதி. 'எண்மடங்காகிவிஞ்ச' என்றும் பாடமுண்டு. (கஙஎ)

[பிருகந்நளைசெய்தி.]

ஓடியுத்தரன்றேரூரவொருமுனையாகத்தன்னை
நாடியுத்தரிக்கமாட்டாநராதிபர்பதாகைத்தூசுங்
கோடியுத்தரியப்பட்டுங்குழமகன்றனக்குநல்கிப்
பேடியுத்தரைதன்னேடும்பெற்றதாய்பின்புநின்றுள்.

(இ - ள்.) பேடி - பேடியாகிய பிருகந்நளை,—உத்தரன் - உத்தரகுமா ரன், ஓடி - (முதலிற் பகைவர்சேனையைக்கண்டு) அஞ்சியோடி, தேர் ஊர- (பின்பு தன்வார்த்தையால்தெளிந்து) தேரையோட்ட, (தான்சென்றுபொ ருது), தன்னை நாடி - தன்னைக்கண்டமாத்திரத்திலே, ஒரு முனை ஆக - ஒரேதுணிவாக, உத்தரிக்கமாட்டா - முன்நிற்கமாட்டாமற் போன, நர அதிபர் - (துரியோதனன்முதலிய) அரசர்களது,பதாகை தூசும் - கொடிச் சீலைகளையும்,கோடி உத்தரியம் பட்டும்-அவர்கள்மேலேதரித்திருந்த அனே கம் பட்டாடைகளையும், குழமகன்தனக்கு - (உத்தரைவைத்துக்கொண்டு விளையாடுகின்ற) பிரதிமைக்காக, நல்கி - (அலங்கரித்தற்பொருட்டுக்) கொ டுத்து, உத்தரைதன்னேடும்-உத்தரையுடனே,பெற்றதாய் பின்பு நின்றுள்- அவளையீன்றதாயாகிய சுதேட்டிணையின் பின்புறத்தில் ஒதுங்கிநின்றுள்.

கீழ் சுoக - ஆஞ் செய்யுளில் "மணிக்கொடித் தூசுந் தூசும், உத்தரை வண்டற்பாவைக் குடுத்துதற்கென்று கொய்தான்" என்று கூறியவர், அவ ற்றை அப்பிருகந்நளையாகியஅருச்சுனன் உத்தரைக்குக் கொடுத்த செய்தி யை இங்குக் கூறினர். குழமகன் - மரப்பாவை; இளமகன்போன்ற வடிவ மமைந்த தென்று காரணப்பொருள் காணலாம்: 'குழமணன்' என்றும் வழ ங்குவ துண்டு; "குழகியெங்கள்குழமணன்கொண்டு கோயின்மைசெய்து கன்ம மொன்றில்லை" எனக்காண்க. 'குலமகடனக்குநல்கி' என்ற பாடத் துக்கு - உயர்ந்தகுலத்திற் பிறந்த பெண்ணுகிய உத்தரைக்குக் கொடுத்து என்பது பொருள். உத்தரன் தேரூர, ஓடி - தான்விரைந்துசென்று என்று மாம். 'ஒருமுனையாக,' 'தன்னைநாடி'என்ற இரண்டும் - உத்தரிக்கமாட்டா மைக்கு அடைமொழி; இனி, ஒருமுனையாகத் தன்னைநாடி - ஒரேதுணிவா கத் தன்னைக்குறித்துப் போர்க்குவந்து, உத்தரிக்கமாட்டா - (பின்பு) முன் னிற்கமாட்டாமற்போன என்றலும் அமையும். கோடி - புதுமையுமாம் நரஅதிபர் - மனிதர்க்குத்தலைவர்: தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர்

உத்தரீயம் - மேலாடை; வடசொல். உத்தரியப்பட்டு, உத்தரீயமாகிய பட்டு என இருபெயரொட்டுப்பண்புத்தொகை. நாணத்தால் மகளிர்பின்னே யொதுங்கிநிற்றல்,பேடியரியல்பு. உத்தரைதன்னோடும்,உம்மை-இசைநிறை.

இச்செய்யுளில் திரிபு என்னுஞ் சொல்லணி காண்க. (௧௩௫)

[நிகழ்ந்தசெய்திகளை உத்தரன் ஏகாந்தத்தில் தந்தைக்குக் கூறுதல்.]

தந்தையுந் தானு மாங்குத் தனித்திருந் தடைய லாரை
முந்திய வமரிற் சென்று முனைந்துபோர் விளைத்த வாறும்
வந்தவர் சாய்ந்த வாறு மணிநிரை மீட்ட வாறுஞ்
சுந்தர கிரிகள் போலுந் தோளினன் றோன்றச் சொல்வான்.

(இ - ள்.) சுந்தர கிரிகள் போலும் தோளினன் - அழகிய மலைகள்போன்ற தோள்களையுடையவனான உத்தரன்,—ஆங்கு - அப்பொழுது, தந்தையும் தானும் தனித்து இருந்து - விராடனுந் தானுமாகத் தனியிடத்தே யிருக்கையில்,—அடையலாரை - பகைவர்களை, முந்திய அமரில் சென்று - முற்பட்ட யுத்தகளத்திற் போய், முனைந்து - எதிர்த்து, போர் விளைத்த ஆறும்- யுத்தஞ்செய்த விதத்தையும், வந்தவர் சாய்ந்த ஆறும் - எதிர்த்துவந்தஅரசர்கள் தோற்றுப்போன விதத்தையும், மணி நிரை மீட்ட ஆறும் - அழகிய பசுக்கூட்டத்தை மீட்டுவந்த விதத்தையும், தோன்ற சொல்வான் -விளங்கச் சொல்பவனானான்; (எ - று.)—இதன் விவரத்தை, அடுத்தகவியிலுங்காண்க.

தனித்திருந்து சொல்வான் என இயையும். இருந்து=இருக்க: எச்சத்திரிபு. தமதுஅரண்மனையிற் பாண்டவர் இரகசியமாக அஜ்ஞாதவாசஞ்செய்திருந்தமையையும், அவர்களில் அருச்சுனனே இப்போர்வென்றனனென்பதையுங் கூறுகின்றானாதலின், தனித்திருந்து கூறுபவனானான். அடையலார் - சேராதவர்; எதிர்மறைவினையாலணையும்பெயர்: அல் - எதிர்மறையிடைநிலை. மணி நிரை - மணிகள்கட்டிய பசுக்களுமாம். ஸுந்தரகிரி - வடமொழித்தொடர். 'சாய்ந்த ஆறு'என்றதில், மோகநாஸ்திரத்தாற் கீழேவிழுந்து கிடந்ததும் அடங்கும். கீழ் ௧00-ஆஞ் செய்யுளில் "முடியடி படிக்கண் வீழ்த்தான்" என்றமை காண்க. (௧௩௬)

வேறு.

[இதுவும் அது: அருச்சுனனே பிருகந்நளை யென்றல்.]

உருப்பசிவெஞ் சாபத்தாற் பேடி யான
வுருவமொழித் தருச்சுனனா முருவங் கொண்டு
பொருப்பனைய கவித்துவசத் தேர்மேல் வண்ணப்
பொருசிலைதன் கரத்தேந்திப் புகுந்த போது
செருப்புரவி யிரவியெதிர் திமிரம் போலத்
திறலரியேற் றெதிர்கரியின் றிறங்கள் போல
நெருப்பெதிர்ந்த பதங்கம்போ லழிந்தா ரைய
நிரைநிரைபோ யணியாகி நின்ற வேந்தர்.

(இ - ள்.) ஐய - தந்தையே! (பிருகந்நளை), உருப்பசி வெம் சாபத்தால் பேடி ஆன உருவம் ஒழித்து - (முன்பு) ஊர்வசியிட்ட கொடியசாபத்தாற் பேடியாய்க்கிடந்த செயற்கைவடிவத்தைப் போக்கி, அருச்சுனன் ஆம் உருவம் கொண்டு - அருச்சுனனாகிய தனது இயற்கைவடிவத்தை யடைந்து, பொருப்பு அனைய கவித் துவசம் தேர்மேல் - மலைபோன்றதும் குரங்குக்கொடியுடையதுமான (தனக்குஉரிய) தேரின்மேலேறி, வண்ணம் பொரு சிலை தன் கரத்து ஏந்தி - அழகிய போர்க்குஉரிய தனது காண்டீவ

வில்லைத் தன்கையிலெடுத்துக்கொண்டு, புகுந்த போது - (போர்க்களத்திற்) பிரவேசித்தபொழுது, அணி ஆகி நின்ற வேந்தர் - படைவகுத்துவந்து நின்ற பகையரசர்கள், செரு புரவி இரவி எதிர் திமிரம் போல - போர் செய்யவல்லகுதிரைபூண்ட(தேரையுடைய)சூரியனை யெதிரிற்கண்ட இருள் போலவும், திறல் அரி ஏறு எதிர் கரியின் திறங்கள் போல - வலிமையுடைய ஆண்சிங்கத்தை யெதிரிற்கண்ட யானைக்கூட்டங்கள் போலவும், நெருப்பு எதிர்ந்த பதங்கம் போல் - விளக்கையெதிர்த்த விட்டிற்பறவைகள் போலவும், நிரை நிரை போய் அழிந்தார் - (அவ்வருச்சுனனைக் கண்டமாத்திரத்தில்) கூட்டங்கூட்டமாய்த் தோற்றோடிப்போனார்கள்; (எ - று.)

உருப்பசி - ஊர்வசீஎன்ற வடசொல்லின் சிதைவு; அப்பெயர் - தொடையினின்று பிறந்தவளென்று பொருள்படும்: ஊரு-தொடை. நாராயண முனிவரது தொடையினின்று பிறந்தவளாதலால், இவள் இப்பெயர்பெற்றனள். குருசிஷ்யக்கிரமத்தைஉலகத்தார்க்குஉணர்த்துதற்பொருட்டு விஷ்ணுவின் அம்சமாய்க் குருவும் சிஷ்யனுமாகத் திருவவதரித்த நாராயணன் நரன் என்ற முனிவர்கள் பதரிகாச்சிரமத்தில் தவஞ்செய்துகொண்டிருக்கையில் இந்திரனேவலால் அப்ஸரஸ்திரீகள்பலர் அங்குவந்து தங்களுடைய மேனிமினுக்கினாலும் ஆடல் பாடலாதி விநோதங்களாலும் அவர்களுடையதவத்துக்கு இடையூறுசெய்யத் தொடங்க, அதனாற் சிறிதுங்கலங்காத அவர்களுள் நாராயணமுனிவர் அம்மகளிரை அவமானப்படுத்தக்கருதித் தமதுதொடையினின்று ஒருகட்டழகியைச் சங்கற்பத்தா லுண்டாக்க, அவளது ஒப்புயர்வற்ற திவ்வியசௌந்தரியத்தை நோக்கி அதேவமாதர்கள் மிகவெள்கி அவளையே தங்கட்குத் தலைவியாகக்கொண்டு அவளுடன் தமதுஉலகத்துக்குச்சென்றனரென்பது வரலாறு; அவளே ஊர்வசி சபி, ரவி, ஹரி என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. கரம், திமிரம், பதங்கம் - வடசொற்கள். ஹரி (யானைமுதலியவற்றை) ஹரிப்பது; ஹரித்தல்-அழித்தல். போய் அழிந்தார் - அழிந்துபோனார் என விகுதிபிரித்துக் கூட்டுக. நிரை நிரை போய் என்பதற்கு - தாம் வரிசைவரிசையாக வந்த ஒழுங்கு கெட்டு என்றும், தாம் வகுத்துநின்ற அணிவகுப்பும் தாம்கவர்ந்துசென்ற பசுக்கூட்டங்களும் நீங்கப்பெற்று என்றும் பொருள் கொள்ளலாம். 'உருவமொழிந்து' என்றும் பாடமுண்டு. எதிர்திமிரம், எதிர்கரி - (இறந்தகால)வினைத்தொகை; ஆனது பற்றியே, வலி இயல்பாயிற்று. பொருப்பனைய தேரென இயையும்.

இதுமுதல் இச்சருக்கம்முடியுமளவு முள்ள நான்குகவிகள் - பெரும்பாலும் ஒன்று இரண்டு ஐந்து ஆறாஞ்சீர்கள் காய்ச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரிய விருத்தங்கள். (கஙஎ)

[மற்றைப்பாண்டவரும் திரௌபதியும் இன்னாரின்னா ரென்றல்.]

அருகுவிடாதுனக்குயிர்நண்பாகிநீதி
  யறமுரைப்போனறத்தின்மகனைவேண்டு
மருமலருமான்மதமுந்துறந்தகூந்தல்
  வண்ணமகள்பாஞ்சாலன்கன்னிபோலும்
வெருவருமற்போர்கடந்தமடையன்றன்னை
  வீமனெனவயிர்க்கின்றேன்வேந்தேமற்ற
விருவரினுமாவலானகுலன்றானே
  யினனிரையின்காவலாணிளையகோவே.

(இ - ள்.) வேந்தே - அரசனே! உனக்கு உயிர் நண்பு ஆகி - உனக்கு உயிர்போன்ற சிநேகிதனாய், அருகு விடாது - (உன்)சமீபத்தை விடாமல்

[எப்பொழுதும் உனதுஅருகில் இருந்துகொண்டு], நீதி அறம் உரைப்போன் - நியாயங்களையும் தருமங்களையும் (அப்பொழுதைக்கப்பொழுது) எடுத்துச்சொல்லிவருகின்றவனான கங்கபட்டன், அறத்தின் மகன் ஆக வேண்டும் - தருமபுத்திரனாக இருத்தல்வேண்டும்; மரு மலரும் - நறுமணமுள்ள மலர்களையும், மான்மதமும் - கஸ்தூரிப்புழுகையும், துறந்த - இழந்திருக்கின்ற, கூந்தல் - கூந்தலையுடைய, வண்ணம் மகள் - அலங்காரஞ்செய்யும் பணிப்பெண்ணாகிய விரதசாரணி, பாஞ்சாலன் கன்னிபோலும் - பாஞ்சாலதேசத்தரசனான துருபதனுடைய மகளாகிய திரௌபதிபோலும்; வெருவரும் மல் போர் கடந்த - அஞ்சத்தக்க மல்லயுத்தத்தில் (எல்லாமல்லரையும வென்றுவந்தானொரு மல்லனைச்) சயித்த, மடையன்தன்னை - சமையற்காரனாகிய பலாயனனை, வீமன் என அயிர்க்கின்றேன் - வீமசேனனென்று உத்தேசிக்கின்றேன்; மா வலான் - குதிரைத்தொழிலில்வல்லவனான தாமக்கிரந்தி, மற்ற இருவரினும் - மறைப்பாண்டவர்களிரண்டு பேரிலும், நகுலன் தானே - நகுலனாகவேண்டும்; இனன் நிரையின் காவலான் - கூட்டமாகிய பசுக்களைக் காத்தல்வல்லவனான தந்திரிபாலன், இளைய கோவே - (ஐவருள்) இளையவனாகிய சகதேவனே யாகவேண்டும்.

உயிர் நண்பு - பிராணசிநேகிதன். நண்பு - நண்பனுக்குப் பண்பாகு பெயர். நண்பு என்ற பண்புப்பெயரில், நள்-பகுதி, பு - விகுதி, ளகரம்ணகரமானது - சந்தி; இது, வினைப்பகுதியினடியாப்பிறந்த பண்புப்பெயரெனப் படும்: தொழிற்பெயரெனினும் இழுக்காது. அறம் - தருமக்கடவுளாகிய யமன். 'அறமுரைப்போனறத்தின்மகன்' என்றதில், தந்தையின் தகுதிக்கு ஏற்றபடி மைந்தனும் அறநெறிதேர்ந்தவனென்றது விளங்கும். மான்மதம்- கஸ்தூரியென்னும் மானினது கொழுப்பு; வடமொழியில் ம்ருகமத மெனப்படும். திரௌபதி தன்னைத் துரியோதனன் துச்சாசனனைக்கொண்டு தலைமயிர்பிடித்திழுத்துச் சபையிற்கொணர்ந்து துகிலுரிந்தும் தன்மடிமேலுட் காரென்றுசொல்லியும் பங்கப்படுத்தியபொழுது 'துரியோதனாதியர் நூற்றுவரையுங்கொன்று வெற்றிமுரசறைந்தா லன்றி யான் விரித்தகூந்தலை யெடுத்து முடித்து அலங்கரிப்ப தில்லை' என்று சபதஞ்செய்து அங்ஙனமே தலைவிரிகோலமாயிருத்தலால், 'மருமலரு மான்மதமுந் துறந்த கூந்தல் வண்ண மகள் பாஞ்சாலன்கன்னிபோலும்' என்றான்; (கீழ்ச் சூதுபோர்ச்சருக்கத்தில் "அரசவையி லெனையேற்றி யஞ்சாமல் துகில்தீண்டி அளகந்தீண்டி, விரைசெயளியினம்படிதார்வேந்தரெதிர் தகாதனவே விளம்புவோரைப், பொருசமரின் முடிதுணிந்துப் புலால்நாறுவெங்குருதி பொழிய வெற்றி, முரசறையும்பொழுதல்லால் விரித்தகுழ லினியெடுத்து முடியே னென்றாள்" என்றமை காண்க.) கன்னி - கந்யா என்ற வடசொல்லின் சிதைவு. ஆகவேண்டும், போலும்,அயிர்க்கின்றேன் என்றவை - ஊகித்தற்பொருளன. 'என அயிர்க்கின்றேன்' என்றதைப் பின்னிரண்டுவாக்கியங்கட்குங் கூட்டுக.

பாண்டவர் அஜ்ஞாதவாசஞ்செய்கையில், ஆயிரம்மல்லர்சூழப் பெருமல்லனொருவன் விராடராஜசபைக்குவந்து மற்போரில் தன்னோடொப்பவரெவருமில்லை யென்று செருக்கிப் பேச, அப்பொழுது அவ்வரண்மனையிலுள்ள மல்லரனைவரும் அரசன்கட்டளைப்படி அம்மகாமல்லனுடன் பொருது தோற்றனராக, பிறகு கங்கபட்டன்சொன்னபடி விராடன் வீமனாகிய பலாயனனை யேவ, அவன் மற்போர்பொருது அம்மல்லர்தலைவனை எளிதில்வென்றனனென்ற வரலாறு, கீழ் மற்போர்ச்சருக்கத்தில் விளக்கப் பட்டது. மற்போர் - ஆயுதமெடாது உறுப்புக்களால் தாக்கி உடல்வலிமை கொண்டுசெய்யும் போர். இனன் - இனமென்பதன் ஈற்றுப்போலி; 'இன்னிரை' என்ற பாடத்துக்கு - இனிமையான பசுக்கூட்ட மென்க. (௩௩-அ)

[உத்தரையை அருச்சுனனுக்கு மணம்புரிவிக்கலா மென்றல்.]

ஆனேயேயடுங்களிற்றூர் தம்மையாரு
மறியாமலிந்நகர்க்கணடங்கிநின்றூர்
நாளேயேவெளிப்படுவர்நெருநலேதந்
நாளுள்ளகழிந்தனவானயந்துகேண்மோ
வேளேயேயனையவெழிற்றோகைவாகை
வேளேயேயனையவிறல்விசயனென்னுங்
காளேயேயடியேனுக்கிளையகாதற்
கன்னிகைக்குவரனென்றுகருதுவாயே.

(இ - ள்.) ஆனேயே அடும் களிற்றூர் - (அறிந்தறிந்தும்) பாகனேயே கொல்லுகின்ற ஆண்யானைச்சேனையை யுடையவர்களான இப்பாண்டவர்கள், தம்மை யாரும் அறியாமல் - தம்மை (இன்னாரென்று) எவரும் தெரிந்துகொள்ளக்கூடாதபடி, இ நகர்க்கண் - இந்தப் பட்டணத்தில், அடங்கிநின்றூர் - (அஜ்ஞாதவாசமாக) மறைந்திருந்தார்கள்; நாளேயே வெளிப்படுவர் - நாளைக்கே தங்கள் மெய்யானவடிவம் வெளிப்பட்டுத்தோன்றுவர்; நெருநலே - நேற்றே, தம் நாள் உள்ள கழிந்தன - அவர்கள் தாம் மறைந்து கழிக்கவேண்டியனவாயிருந்த அஜ்ஞாதவாச தினங்கள் கழிந்துவிட்டன; நயந்து கேண்மோ - (யான் இப்பொழுதுசொல்வதை) விரும்பிக்கேட்பாயாக: வேளேயே அனைய - மன்மதனேயே போன்ற, எழில் - அழகையும், தோகை வாகை வேளேயே அனைய - மயில்வாகனத்தையும் வெற்றிமாலையையுமுடைய முருகக்கடவுளேயே போன்ற,விறல் - வெற்றியையுமுடைய, விசயன் என்னும் - அருச்சுனனாகிய, காளேயே - வீரனே, அடியேனுக்கு இளைய - எனக்குத்தங்கையாகிய, காதல் கன்னிகைக்கு - அன்புமிக்க ரைக்கு,வரன் என்று-ஏற்ற கணவனென்று,கருதுவாய் - எண்ணுவாய்

"யானை, அறிந்தறிந்தும் பாகனேயே கொல்லும்", "தானும் விலகுமுறிப்பது பாகு பரிக்கோல் யாவுந் தூரததே,காணினு நின்று கொதிப்பது" என்றபடி மதயானை தனக்குஆவனசெய்துதன்னையடக்கியாளும்பாகன்மீது முன்பு தன்னை அவன் கடிந்தமைபற்றிக் கறுக்கொண்டு அவனைக் கொல்லுமியல்பின தாதலால், 'ஆனேயே யடுங் களிறு' எனப்பட்டது. நால்வகைச்சேனையுள்ளும் "படைதனக்கு யானை வனப்பாகும்" என்றபடி சிறப்பாகிய யானையைத் தலைமைபற்றி யெடுத்துக்கூறியது,மற்றமூன்றுக்கும் உபலக்ஷணம். இனி, களிற்றூர் - யானைபோன்றவ ரெனினுமாம்; கோபத்தை மறைத்தற்குரியகாலத்தே மறைத்து வெளிப்படுத்தற்குரியகாலத்தே வெளிப்படுத்துந் தன்மைக்கும், வலிமைக்கும், நடைக்கும், காம்பீரியத்துக்கும் உவமை. ஆனேயே, வேளேயே என்றவற்றில்,ஏகாரம் - உயர்வுசிறப்பு. நாளையே, நெருநலே, காளேயே என்றவற்றில், ஏகாரம் - தேற்றம். உள்ள - பெயர். கழிந்தனவால், ஆல் - ஈற்றசை. கேண்மோ, மோ - முன்னிலையசை. வேள் - மன்மதனும் முருகனு மாதலை, "வே ளறுமுகன் காமன் பேர்" என்ற நிகண்டினாலும் அறிக. தோகை - மயிலிறகு; மயிலுக்குச் சினையாகுபெயர். 'வாகை' என்ற மரத்தின்பெயர்-(அதன்மலர்களாலாகிய மாலைக்கு இருமடியாகுபெயராம். வாகைப்பூமாலை, போரில் வென்றவர் சூடுவது. மூன்றுமடியில் 'வேளேயே' என்ற சொல் வெவ்வேறுபொருளில் அடுத்துவந்தது, படக்கு என்னுஞ் சொல்லணியாம். தோகை வாகை யென்றவிடத்துப் பிராசமென்னுஞ் சொல்லணி காண்க. கன்னிகை-கந்யகா என்றவடசொல்லின்விகாரம்; கலியாணமாகாதபெண். வரன்-வடசொல்.()

(உ௪)

[இவைகேட்டு விராடன் மகிழ்தல் முதலியன.]

மகனிவைமற் றுரைத்தளவிற் றாதை கேட்டு
மனநடுங்கி யிருடியுடன் மகிழ்ச்சி கூர்ந்தான்
பகலமரி லேறியமெய்ப் பராக மாறப்
பகலோனும் புனல்படிவான் பரவை சேர்ந்தான்
றகவுடைய பாண்டவரும் வண்ண மாதுந்
தனித்தெண்ணிப் பரகாய சரிதர் போலப்
புகலரிய பழையதம வடிவங் கொண்டார்
போனபக லவனுதயப் பொருப்பின் மீண்டான்.

(இ - ள்.) மகன் இவை உரைத்த அளவில் - உத்தரகுமாரன் இவ்வார்த்தைகளைச் சொன்னவளவில், தாதை - தந்தையாகிய விராடன், கேட்டு—, மனம் நடுங்கி - மனத்தி லச்சமடைந்து, இருடியுடன் - கங்கபட்டனுடனே, மகிழ்ச்சி கூர்ந்தான் - மிகுதியாய்க் களித்து அளவளாவுபவனானான்; (அப்பொழுது), பகலோனும் - சூரியனும், பகல் அமரில் மெய் ஏறிய பராகம் மாற - அன்றைப்பகலில் (அருச்சுனனுக்கும் துரியோதனாதியர்க்கும்) நடந்த போரில் (தரையினின்று)எழுந்து தன்மேற் படிந்த புழுதி யொழியும்படி, புனல் படிவான் - நீராடுதற்கு, பரவை சேர்ந்தான் - (மேற்றிசைக்) கடலை யடைந்தான் [அஸ்தமித்தான்]; (அவ்விராத்திரியில்], தகவு உடைய பாண்டவரும் - பெருமையையுடைய பாண்டுபுத்திரரைந்துபேரும், வண்ணம் மாதும் - வண்ணமகளாகிய திரௌபதியும், தனித்து எண்ணி - தனியாகஇருந்து இரகசியமாக ஆலோசித்து, பர காய சரிதர் போல - பரகாயப்பிரவேசஞ்செய்தவர்கள்போல, புகல் அரிய பழைய தம வடிவம் கொண்டார் - வருணித்துச்சொல்லுதற்குஅருமையாகவுள்ள பழமையான தங்கள் வடிவத்தை யடைந்தார்கள்; போன பகலவன் - அஸ்தமித்த சூரியன், உதயம் பொருப்பில் மீண்டான் - திரும்பி உதயகிரியில் வந்தான் [உதித்தான்]; (எ - று.)—மற்று - அசை.

மிகச் சிறந்தவர்களாகிய பாண்டவர்களையும் திரௌபதியையும் தன் கீழ்அடங்கிய பரிவாரங்களாகக் கொண்டிருந்ததையும், தருமபுத்திரனைக் கவறுகொண்டுஅடித்ததையுங் கருதி விராடன் மனநடுங்கினன். உரைத்தளவு - தொகுத்தல். மாலைப்பொழுதில் விளங்குகின்ற சூரியனது இயற்கைச்சிவப்பைப் பகற்பொழுதிற் போர்க்களத்தினின்று எழுந்த புழுதி படிந்ததனா லாகிய தாகவும்,இயல்பில் அஸ்தமிப்பதை அப்புழுதிநீங்க மேல்கடலிற் குளிப்பதாகவும் வருணித்தவாறும்; தற்குறிப்பேற்றவணி. பாண்டவர் - வடமொழித் தத்திதாந்தநாமம். பராகம், பரகாயசரிதர் - வடசொற்கள். பரகாயசரிதர் - தமது உடம்பை விட்டு வேறோருடம்பிற் புகுந்திருந்து மீண்டும் தமது உடம்பில் வருபவர்; இது, ஒருவகை யோகசித்தி. கூடுவிட்டுக் கூடுபாய்த லெனப்படும். பகலோன் - பகற்பொழுதைச் செய்பவன். தம, அ - ஆறனுருபு. அரிய அஞ்ஞாதவாசம் இடையூறின்றி இனிதுநிறைவேறப்பெற்றமையும், துரியோதனாதியரைப் பின்னர்ப் பெரும் போரில்வெல்வதற்கு முற்குறியாக இப்போரில் வெற்றிகொண்டமையும் பற்றி, 'தகவுடையபாண்டவர்'என்று சிறப்பித்துக் கூறப்பட்டனர். 'மனநடுங்கி நெகிழ்ச்சியுடன் மகிழ்ச்சிகூர்ந்தான்' என்றும் பாட முண்டு. 'பகலோனும்'என்றவிடத்து, உம்மை - எச்சப்பொருளது; எண்ணுப்பொருளதன்று; வேறுவாக்கியத்தில் தனித்து வந்ததனால். (௬௦)

நிரைமீட்சிச்சருக்கம் முற்றிற்று.

# வில்லிபுத்தூராழ்வார் வரலாறு.*

வில்லிபுத்தூராரென்பவர், தமிழில்மகாபாரதம்பாடியஒருமகாகவி. இவர் பிராமணசாதியிற்பிறந்தவரென்பது, இந்நூற்சிறப்புப்பாயிரத்தில் "வண்ண நான்கினு முயர்ந்துளோ ரொருமுனி வந்தான்" என்றதனால் விளங்கும்.

இவருடைய மதம் வைஷ்ணவ மென்பது, சிறப்புப்பாயிரத்தில் "பைந்துழாய்முடிப் பரமனைப் பலகவித்துறையுஞ், சிந்தையான்மொழிந் தன்பர் தந்திருவுளம்பெற்றேன்" என வருதலினாலும், இவர் இப்பாரதத்தின் முதலிலும் இந்நூற்சருக்கங்களின் தொடக்கத்திலும் ஸ்ரீமகாவிஷ்ணுவின்விஷயமாகவே பலவாறு கடவுள்வாழ்த்துக்கூறியுள்ளதனாலும், "எங்கள்மாதவன்" என்று நூலைத் தொடங்கியிருப்பதனாலும், வில்லிபுத்தூராழ்வா ரெனத் திருநாமமுடைமையாலும், தெளிவாகத் தெரியவருகின்றது.

இவர் ஒன்பதாம்போர்ச்சருக்கத்துக் காப்புச்செய்யுளில் "ஓராறுபேதசமயங்களுக்கு முருவாகிநின்ற வொருவ, னீராறுநாம முறைசெய்து மண்கொ டிடுவோர்கள்காணு மிமையோர்" எனத் துவாதசோர்த்துவபுண்டரத்தைச்சிறப்பித்துக்கூறியுள்ளதனால், இவர் திருமண்காப்புச்சாத்தும்ஸ்ரீவைஷ்ணவரென விளங்கும். இன்னும், இவர் திருமாலினிடத்துமாத்திரமேயன்றி அப்பெருமானடியார்களுட்சிறந்தவரான ஆழ்வார்களிடத்தும் ஈடுபாடுடையவ ரென்பதை, பதினைந்தாம்போர்ச்சருக்கத்துக்காப்பில் "கொத்தவிழ்த்த சோலைமன்னு குருகையாதிநெஞ்சிலே, வைத்தமுத்திநாதன்" என நம்மாழ்வாரையும், பத்தாம்போர்ச்சருக்கத்துக் காப்பில் "கலிய னெங்கள் மங்கையாதி கண்டுகொண்ட நாமமே" எனத் திருமங்கையாழ்வாரையுங் கூறியுள்ளதனாற் காண்க.

இவர் திருவவதரித்த ஊர், நடுநாட்டிலுள்ள சனியூ ரென்பது.

நடுநாடென்று சொல்லப்படுகிற திருமுனைப்பாடிநாட்டிற் சனியூரிலே பிராமணசாதியிலே வைஷ்ணவமதத்தில் வீரராகவாசாரியரென்பவர்க்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்த இவ்வில்லிபுத்தூரார், இளமையிலேயே நல்லாசிரியரையடுத்துக் கல்விகற்று, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் மிகவல்லவராய், வடமொழியிலும் மிக்கதேர்ச்சி பெற்று, ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகைக் கவிகளையும் மிகஎளிதில் அமிழ்தினும்இனியனவாகப் பாடவல்லராய், சேரசோழபாண்டியரென்னுந் தமிழ்நாட்டுமூவேந்தர்களாலும் மிக்க சிறப்புடன் விரும்பியழைக்கப்பட்டு ஆங்காங்குச்சென்று தமதுகல்வித்திறத்தைப் பலவகையாலுங்காட்டி அவர்களைக் களிப்பித்து, அவர்கள் அன்போடு அபிமானித்து மிகுதியாகவழங்கிய சிறந்த பல பெரும்பரிசுகளைப் பெற்று, பற்பலகவித்துறைகள்பாடித் திருமாலை இரவும்பகலும் எப்பொழுதுந் துதித்துக்கொண்டு, தமிழ்நாடு முழுவதிலும் தமது கல்விப்பெரும்புகழைப் பரவச்செய்துவந்தார். அங்ஙனம் வருகையில், முற்கூறிய திருமுனைப்பாடிநாட்டிலே வக்கபாகையென்னும் இராஜதானியில் வீற்றிருந்து செங்கோல்செலுத்தி, தலை இடை கடையென்னும் மூவகைச் சங்கத்திலே வளர்ந்துவந்த தமிழ் பின்பு பங்கத்தையடையாதபடி நான்காவதொரு சங்கம்போல அதனைப்பாதுகாத்து, அருங்கவிப்புலவர்களை அன்புடன் ஆதரித்துவந்த வள்ளலும், கல்வி அறிவு ஒழுக்கங்களாலும் செல்வம் அதிகாரம் முதலிய நலங்களாலுங் குறைவின்றி மிகச் சிறப்புற்றுவிளங்கியவனுமாகிய கொங்கர்குலத்துத்தோன்றிய வரபதியாட்கொண்டா னென்கிற அரசன், இவ்வில்லிபுத்தூராரது கல்வி கேள்வித் திறமைகளையும் அடக்கம் ஒழுக்கம் அன்பு அருள் வாய்மை முதலிய நற்குணங்களையுங் கேள்வியுற்று அறிந்து 'இக்குணங்களெல்லாம் ஒருவரிடத்திலே

---

* இவ்வரலாறு, இவர்குமாரராகிய வரந்தருவார் [வரதாசாரியர்] இருபத்திரண்டு செய்யுள்களாற் செய்துள்ள சிறப்புப்பாயிரத்தைப் பிரதான ஆதாரமாகக் கொண்டும், மற்றுஞ்சில ஆதாரங்களால் வேறு சில விஷயங்களைச் சேர்த்தும் ஒருவாறு காட்டப்படுகிறது.

ஒருங்குஅமைந்திருப்பது அருமை அருமை!' என்று மிகஆச்சரியமுற்று இவரை வரவழைத்து அநேக சன்மானங்கள் செய்து தனது ஆஸ்தானபண்டிதராக அமைத்துவைத்து, ஒருநாள் இவரை நோக்கி 'உமக்கும் நீர் எழுந்தருளி யுள்ள இந்த எனது சமஸ்தானத்துக்கும் உலகமுள்ளளவும் அழியாப்பெருங் கீர்த்தி உண்டாகி நிலைபெறும்படி, வடமொழியில் ஸ்ரீவேதவியாசமகாமுனி வரால் விரித்துரைக்கப்பட்ட மகாபாரதசரித்திரத்தைத் தமிழ்பயில்வோ ரனைவரும் ஓதியுணர்ந்து உய்யுமாறு செந்தமிழில் விருத்தப்பாடல்களினால் ஒருபெருங்காப்பியமாகப் பாடித்தந்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, இவர் அவ்வேண்டுகோளுக்கு இசைந்து (இதிகாசமிரண்டனுட் பெரியதாகிய) மகாபாரதத்தை மகாகாவியமாகச் சொற்சுவைபொருட்சுவைகள் மிக்கு விளங்கும்படி நல்லநடையிலே பாடியருளினர். இது நிற்க:

இவர்பாரதம்பாடியகாரணம், இன்னும்இரண்டுவகையாகவுங் கூறப்படும். அவற்றுள், முதலாவது வருமாறு:—இந்தவில்லிபுத்தூரார்க்கும் இவர் தம்பியார்க்கும் தாயபாகத்தைப்பற்றி விவாதமுண்டாக, அவ்விஷயத்தை அவர்கள் அரசனிடம்அறிவித்தனர்; அரசன் இவரதுகல்வித்திறத்தை முன்னமே கேள்வியுற்று அறிந்துள்ளவனாதலால் 'இவ்வளவு கற்றறிந்தவர்க்கும் உண்மையறிவு உண்டாகவில்லையே!' என்று மிகவும்விசாரமடைந்து 'அவ் வுண்மையறிவை இவர்க்கு உண்டாக்குவதற்கு ஏற்ற உபாயம், (தாயபாகங் காரணமாகத் துரியோதனாதியர் மாறுபட்டுஅழிந்ததைக் கூறும்)மகாபாரத நூலில் இவரைப் பழகும்படி செய்வதே' என்று நிச்சயித்து 'மகாபாரதத்தை நீர் தமிழிற் பாடவேண்டும்; பாடினபின்புதான் உங்கள் வழக்குத் தீர்க்கப் படும்' என்று கட்டளையிட்டான்; உடனே இவர் அவ்வாறே அப்பாரதத் தைப்பாடி அந்நூலின் நீதியிற்கருத்துஊன்றியவராய், பின்பு தாமே தம்தாய பாகத்தில் வெறுப்புற்று, அதனையும் தம்பிக்கே கொடுத்துவிட்டனரெனக் கூறுவர் சிலர்.

வேறுசிலர் கூறுமாறு:—இவ்வில்லிபுத்தூரார் தம்மோடுவாதஞ்செய்து தோற்றவர்களது காதுகளைத் தோண்டியறுக்குந் துறட்டைக் கையிற் கொண்டுசென்று ஆங்காங்குஉள்ள பலபுலவர்களையுஞ் சயித்துவருகிற பொழுது திருவண்ணாமலைக்குப் போயினர்; அங்குத்தங்கிய கல்விமான்கள் இவரைக்கண்டும் இவர்செய்கையைக்கேட்டும் அஞ்சியோடிச்சென்று தமது தலைவரும் திருப்புகழ்பாடியவருமாகிய *அருணகிரிநாதரென்னும் பெரும் புலவர்க்குச் செய்தியை அறிவித்தார்கள்; அப்புலவர்பெருமான் வில்லிபுத்தூரரது செருக்கை யடக்கக் கருதுக்கொண்டு அவரைவருவித்து 'யான் இப்பொழுது நூதனமாகப்பாடுகின்றதொரு நூலுக்கு யான் பாடிவரும் பொழுதே பொருள்கூறிவருவீராயின், உமதுகல்வித்திறம் விளங்கும்' என்று அலட்சியமாகச் சொல்லினர்; சொல்லவே, இவ்வாசிரியர், கடுஞ் சினங் கொண்டு, தம்மையெதிர்க்கிறஅவரைவென்று அங்குந் தமதுவெற்றிக்கொடி யை நாட்டக்கருதி, அக்கொள்கைக்கு உடன்பட்டார்; உடனே அருணகிரி நாதர் ஆசுகவியாக நூறுபாட்டில் முருகக்கடவுள்விஷயமாக 'கந்தரந்தாதி' என்னும் யமகவந்தாதியைப் பாடத்தொடங்கிப் பாடிவர, வில்லிபுத்தூரா ரும் உடனுக்குடனே ஒவ்வொரு செய்யுட்கும் பொருள்கூறிவந்து இடை யில் ஐம்பத்துநான்காம் பாட்டாகிய

"திதத்தத்தத்தித்தத்திதிதாதைதாதத்துத்தித்தத்திதா
திதத்தத்தத்தித்ததிதித்தித்ததேதுத்துதித்திதத்தா
திதத்தத்தத்தித்தத்தைதாததிதேதுதைதாததத்து
திதத்தத்தத்தித்தித்திதிதிதிதுதிதிதொத்ததே"

* இவர் பிரபுடதேவமகாராஜாகாலத்திலிருந்தவரென்றும், அவன்காலம் இப்பொழுதைக்கு ஏறக்குறைய ௪௫0-வருடங்கட்குமுன்பென்றும் கூறுவர்.

என்னும்ஒருமெய்யால்வர்தசெய்யுட்குப்பொருளுரைக்கமாட்டாமற்போனமையால் தோல்வியடைந்து தம்துறட்டையெறிந்துவிட்டு அவ்வூரினின்றும் புறப்பட்டுப்போவாராயினர்:போம்வழியிற் சிவாலயமொன்று இருக்க,அது தம்கண்ணிற்படாதபடி தம்மைச்சுற்றித்திரையிடும்படி வில்லிபுத்தூரார் தம் பரிசனங்களையேவிச் சிவநிந்தனைசெய்து, அதுகேட்டு அளவிறந்த கோபங்கொண்ட அருணகிரிநாதரது சாபத்தாற் கண்ணிழந்து,அச்சாபம்நீங்குதற்பொருட்டுச் சிவவிஷயமாக ஒருநூல் செய்யும்படி அவரால் ஆஜ்ஞாபிக்கப்பட்டார்; பட்டும் வீரவைஷ்ணவராதலால் தம் மதாபிமானத்துக்குப் பங்கம் வராமல் சிவஸ்துதி சிற்சிலவிடத்து விரவிவரும்படி இப்பாரதத்தைச் சாபநிவிருத்தியின்பொருட்டுப் பாடிக் கண்பெற்றார் என்பது.

இந்த இரண்டுவகை வரலாறுகளும், இந்நூலின் பாயிரத்தோடு மாறுபடுகின்றதனாலும், இவர்மகனார்கூறிய பாயிரத்தை மறுக்கத்தக்க பிரபல ஆதாரமொன்றும் இவ்வரலாறுகட்குஇல்லை யாதலாலும்,இவை யாவராலுந் தகுதியெனஏற்றுக்கொள்ளத்தக்கனவல்லவென்று தோன்றுகின்றது.

இவர், தம்காலத்திற் கல்விச்செருக்கடைந்திருந்த புலவர்கள் பலரையும் தமது வித்தியாசாமர்த்தியத்தால் வென்று, அவ்வெற்றிக்கு அடையாளமாக, தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் தமதுகையிலே எப்பொழுதும் ஆயுதமாகவைத்துக்கொண்டுள்ள துறட்டுக்கோலால் மாட்டியிழுத்து அறுத்துவந்தன ரென்பது,

“குட்டுதற்கோ பிள்ளைப்பாண்டிய னிங்கில்லை
துரும்பியளவாக் காதைக் துடைந்துதோண்டி
யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டொன்றா முடிந்து தலையிறங்கப்போட்டு
வெட்டுதற்கோ கவி யொட்டக்கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே”

என வழங்குந் தனிப்பாடலினால் அறியப்படும்.

ஒருவன்பாடும் பாட்டில் ஏதாவது குற்றங் கண்டால், கண்டவுடனே அவனது தலையில் நறுக்கென்று குட்டுவது, பிள்ளைப்பாண்டிய னென்னும் அரசனது செய்கை; அவனிடம் பரிசுபெறவந்த வித்துவான்கள் பலரும், ‘குட்டுப்பட்டாலும்மோதிரக்கையாற்படவேண்டும்’ என்கிறபழமொழியைப் புதுமொழியாக ஞாபகப்படுத்திக்கொண்டு, வந்தவழியே திரும்பிப்போய் மேன்மேற் கல்விகற்க முயல்வது, அவன்காலத்தில் இயல்பா யிருந்ததாம். கவிபாடிவருபவர்களையெல்லாம் சயித்துப் பிடித்துச் சிறைச்சாலையிலடைப்பித்து, தேவி கொலுவிருக்கின்ற நவராத்திரிகாலத்திற் சிறைக்கூடத்திலிருந்து வெளிப்படுத்தி அவர்களை இருவரிருவராகக் குடுமியோடு குடுமி முடிபோட்டு இறங்கிநிற்கத் தேவி முன்பாக நிறுத்திப் பிடாரிக்குச் சோடுகடா வெட்டுவதுபோலச் சற்றும்இரக்கமில்லாமல் அவர்கள்தலைகளைப்பதைக்கப் பதைக்க வெட்டிப் பலிசெலுத்துவது ஒட்டக்கூத்தரென்னும் புலவரது வழக்கமாம். அவைபோலவே, இவ்வில்லிபுத்தூராரும், வாதஞ்செய்யும் பொழுது எதிரி தோற்றால் அவன்காதில் துறட்டைமாட்டிப் பிடித்திழுத்துக் காதை ஒட்ட அறுத்து, யானையின் மதக்களிப்பை அங்குசத்தால் அடக்குவதுபோல அவர்கள்கல்விச்செருக்கைத் தம்துறட்டினா லொழிப்பதைத் தமது வழக்கமாக வைத்துக்கொண்டு விருதுகூறிச்சென்று திக்குவிசயஞ் செய்துவந்தார். இவர்காலத்து அரசர்கள் இவரிடத்தில் மிகவும்அன்புவைத்திருந்ததனால், இவர்இங்ஙனஞ்செய்ய இடங்கொடுத்துவந்தார்கள்.

இவருடைய காலம் இப்பொழுதைக்குச் சற்றேறக்குறைய ஐந்நூறு வருஷத்துக்கு முன் என்பர்.

பாயிரத்தில் "நான்காஞ்சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமல் தலைகண்டானே" என்று இவர்காலத்திலிருந்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனைக் கூறியிருத்தலால், இவர்காலம் கடைச்சங்கத்தார் காலத்துக்குப்பின் என்பது மாத்திரமே தெளிவாகத் தெரியவருகிறது.

இவர்க்கு வில்லிபுத்தூரரென்றும் வில்லிபுத்தூராழ்வாரென்றும்வழங்கி வருகிற பெயர் யாதுகாரணத்தால் வந்தது? பாண்டிய நாட்டில் திருநெல்வேலிப்பிராந்தத்திற்பிரசித்தமாகவுள்ளவிஷ்ணுஸ்தலமான ஸ்ரீவில்லிபுத்தூரிற் பிறந்தவரா? அன்றி, அங்கு வளர்ந்தவரா? அல்லாக்கால், அவ்விடத்து வாழ்ந்தவரா? என்றால்,—இக்காரணங்களொன்றாலு மன்று, இவர்க்குஇப்பெயர் வந்தது; பின்னை யென்னையோ வெனில்,—வைஷ்ணவசம்பிரதாயத்திற்சிறந்தபக்தர்களென்றுசொல்லப்படுகிற ஆழ்வார்கள் பன்னிருவருள் ஒருவரும்,பெரியாழ்வாரென்றும் பட்டர்பிரானென்றும் விஷ்ணுசித்தரென்றும் வேறுதிருப்பெயர்களை யுடையவரும், ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்ததனால் வில்லிபுத்தூராழ்வா ரென்று வழங்கப்படுபவரு மாகிய பாகவதசிகாமணியினுடைய இத்திருநாமத்தையே தந்தைதாயர்கள் இவர்க்குப் பெயராக இட்டு வழங்கினார்களென்று உணர்க; (பரிசுத்திகரமென்கிறகாரணத்தால், கடவுள்பெயரும் அடியார்களின்பெயரும் மனிதர்கட்கு இட்டு வழங்கப்படும்.) இவருடைய தந்தைதாயர் பெரியாழ்வார்பக்கல் மிக்கபக்தியுடையராய் அவர்க்குவழிபாடுசெய்ய, அவ்வாழ்வாரருளால் இம்மகன் பிறக்க, இக்குமாரனுக்கு அவ்வாழ்வார்பெயரையிட்டனரென்னலாம். அல்லது, அந்தப் பெரியாழ்வார் பாலியத்திலே எவரிடத்தும் யாதொருநூலும் படியாதவராயிருந்தும் பின்பு பகவானருளாற் பெரியதிவ்வியப்பிரபந்தம் பாடவல்ல மகாபண்டிதராய்விட்டதுபோல, இவரும் தெய்வகடாக்ஷம்பெற்ற வரகவியென்கிற காரணம்பற்றி, இவர்க்கு வில்லிபுத்தூராழ்வாரென்றுபெயர்வந்ததென்றுங் கொள்ளலாம். [ஆழ்வார்என்பதற்கு-எம்பெருமானுடைய திருக்கலியாணகுணகணங்களாகிய பெருங்கடலில் அமிழ்ந்து நெஞ்சுருகி ஈடுபடுபவரென்று பொருள். இப்பெயரால் மற்றுஞ்சிலபக்தர்களை வழங்குவதைப் பரதாழ்வான், சத்துருக்கனாழ்வான், பிரகலாதாழ்வான்,கஜேந்திராழ்வான், சுதரிசனாழ்வான், கம்பநாட்டாழ்வார் முதலிய பெயர்களிலுங் காண்க.]

விஷ்ணுவின் அம்சாவதாரமாகிய கிருஷ்ணனுடைய சரித்திரம் மகாபாரதத்தில் இடையிடையே வருகிறதென்ற சிறப்புப்பற்றியே இவ்வாசிரியர் பாண்டவசரித்திரத்தைப் பாடுதற்கு உடன்பட்டுப் பாடினார்; இது,

"முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கு
மென்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்"

என இவர் தாமே தற்சிறப்புப்பாயிரத்திற் கூறியுள்ளதனாற் பெறப்படும். [வேதவியாசபகவானும் வடமொழிமகாபாரதத்தில்இவ்வாறேகூறியிருக்கின்றார். இனி, இச்செய்யுளின்மூன்றாமடியின்முதலில் 'மன்னுமாதவன்' என்பதை மன்னும் மாதவன்எனப்பிரித்து-நித்தியனாகியதிருமகள்கொழுநனான திருமா லென்று பொருள்கொள்வதை விட்டு, மன்னும் மாது அவன் என்றாவது மன் உமா தவன் என்றாவது பதம்பிரித்து - ஸ்தாணுவாகிய உமாபதியானசங்கர னெனப் பொருள்கொண்டு, சிவபிரானது சரித்திரம் இந்நூலின் இடையிடையேவழங்குவதென்ற விருப்பத்தால் தாம்இதனைப்பாடஇசைந்தவராகக் கூறினா ரென்று உரைப்பாரு முண்டு;அது சரியன்று:என்னெனில்,— இந்நூலில் ஆதிபருவத்தில் அருச்சுனன்தீர்த்தயாத்திரைச்சருக்கத்திலும்,

ஆரணியபருவத்தில் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்திலும், துரோணபருவத்தில் பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திலும் ஆக மூன்றிடத்தில் மாத்திரமேயல்லாமல் நூல்முழுவதும இடையிடையே (கண்ணனுடைய சரித்திரம் காணப்படுவது போலச்) சிவபிரானுடைய பிரஸ்தாபம் இல்லாமையாலும், வைஷ்ணவராகிய இவர் சிவசரித்திரம் வருவதென்று பாடினரென்பது உசிதமல்லாமையாலும் எனக் காண்க.]

அன்றியும், இவர் இந்நூலில்ஒவ்வொருசருக்கத்தின்தொடக்கத்திலும் திருமால்விஷயமாகக் காப்புச்செய்யுள் கூறியுள்ளதனாலும், "மறந்தும்புறந்தொழா" நல்லவைஷ்ணவரென்பது நன்குவிளங்கும். [சிலசருக்கங்களிலே காப்புச்செய்யுள் காணப்படவில்லை; அதற்குக்காரணம்-ஆசிரியராற்பாடப்பட்ட செய்யுள்கள் பிற்காலத்தில் ஏடெழுதுவோரால் எழுதாதுவிடப்பட்டு இல்லையாயின வென்றாவது, * தொல்காப்பியம் முதலிய சில நூல்களிற்போலச் சிலசருக்கங்களின் ஆரம்பத்தில் மானசிகமாத்திரமாகக் கடவுள் வணக்கஞ் செய்யப்பட்டுச் செய்யுளுருவமாய் வாசிகமாகக் காப்புசசெய்யப்படவில்லை யென்றாவது கொள்க.]

ஆயின், வைஷ்ணவராகிய இவர் இந்நூலின் முதற்காப்பாக

"நீடாழியுலகத்து மறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநாள்
ஏடாகவடமேருவெற்பாகவங்கூரெழுத்தாணிதன்
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ.

முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறந்
திருகாமல்வினைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
புருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரும்
ஒருகோடிபூதேவருங்கைதொழுங்கோவையுறவுன்னுவாம்"

என்றஇரண்டு பாடல்களால் சிவகுமாரராகிய விநாயகரை ஸ்தோத்திரஞ் செய்வானேன்?என்றால்,—தம்மைச்சரணமடைந்தவர்கள்தொடங்குந் தொழில்கட்கு வருகிற விக்கினங்களைப் போக்குதலாலும் தம்மையடையாமல் அகங்கரித்தவர்கள் ஆரம்பிக்கிற செய்கைகட்குப் பல இடையூறுகளை உண்டாக்குதலாலும் 'விக்நேச்வரர்' என்று திருநாமம்பெற்றுள்ள ஸ்ரீவிநாயகமூர்த்தி சைவர்கட்குமாத்திரமேயன்றிச் சிறுபான்மை பிறர்க்கும் ஒருசார் வழிபடுகடவு ளாதலாலும், வேதவியாசர் மகாபாரதத்தை இயற்றிவருகிற பொழுது விநாயகர் அந்நூலை மகாமேருமலையிலே எழுத்தாணிகொண்டு எழுதிவந்ததும் இடையிலே அவ்வெழுதுகருவி ஒடிந்துபோனபொழுது 'வல்லவனுக்குப் புல்லும்ஆயுதம்' என்றவகையாய் யானைமுகக்கடவுளாகிய தமது தந்தங்களில் ஒன்றைப் பறித்து அதனையே கருவியாகக் கொண்டு எழுதிமுடித்தருளியதுமாகிய இந்த முக்கியமான காரணத்தைக்கொண்டு நோக்குமிடத்து விநாயகர் இந்நூலின்முதலில்வைத்தற்குஏற்றஇயைபுடையவ ராதலாலும், வைஷ்ணவர்கள் விநாயகரை விஷ்வக்ஸேந ரென்கிற சேனைமுதலியாரது அம்சமென்று கொண்டாடுவது மரபாதலாலும், இவரும் விநாயகரைப் பாடின ரென்க.

இவ்வில்லிபுத்தூரார் சிவத்வேஷம்பாராட்டுகிற வீரவைஷ்ணவ ரல்லர். அது - அருச்சுனன்தீர்த்தயாத்திரைச்சருக்கத்திலும், அருச்சுனன்தவநிலைச்சருக்கத்திலும், பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திலும் சைவசம்பிரதாயத்துக்கு வழுவுறாதபடி சிவபிரானைச் சிறப்பித்தும் இதரதேவர்களைத்தாழ்த்தியுங் கூறியதனால், நன்குபுலனாகின்றது.

---

*'தொல்காப்பியம் முதலியவற்றில் நூற்குப் புறமாகவே மங்கலம் செய்யப்பட்டது' என்பது, தருக்கசங்கிரகவுரை.

வியாசர் புராணங்களில் ஒவ்வொருதேவரை ஒவ்வோரிடத்திற்சந்தர்ப்பத்துக்கேற்பச் சிறப்பித்துக்கூறியிருத்தல்போலவே, இவரும் தமதுநூலில் சூரியன் அக்கினி முதலிய மற்றைத்தேவர்களையும் சமயம்வந்தவிடத்துப் பக்ஷபாதமில்லாமற் சிறப்பித்துக்கூறியிருக்கின்றார். பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "மூவர்தத்தம்வடிவாமுதல்வன்" எனச் சூரியபகவானைச் சிறப்பித்துக்கூறியுள்ளவாறும், பிறவுங்காண்க; [இதற்கு திரிமூர்த்திகளின் சொரூபமாகவுள்ள தலைவனான சூரிய னென்று பொருள்.]

கடைச்சங்கப்புலவருள் ஒருவராகிய பெருந்தேவனாரென்பவர், மகாபாரதத்தைத் தமிழில் வசனமும்பாடலுமாக விரவிவருகிற 'சம்பு' என்கிற நடையிலே பாடியிருக்கின்றனர்; பெரும்பாலும் வெண்பாக்களால் அமைந்ததுபற்றி, அந்நூலுக்குப் பாரதவெண்பா வென்று பெயர். அது, இப்பொழுதைக்கு ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறுவருஷத்துக்கு முந்தியது. * இவ்வில்லிபுத்தூரார் அந்தப்பாரதவெண்பாவின் சொல்லையும் பொருளையும் ஆங்காங்கு வெகுவாகத் தழுவி நாலாயிரத்துமுந்நூற்றுச்சொச்சம் பாடல்களாற் பாரதத்தைப்பாடினர் இவர்பாடிய பாரதம் வடமொழிவியாசபாரதத்தின் வழிநூலென்னத் தட்டில்லை.

"மண்ணி லாரண நிகரென வியாதனார் வகுத்த
எண்ணிலா நெடுங்காதையை யானறிந் தியம்பல்"

என்று இவர்தாமே அவையடக்கத்திற் கூறியிருக்கின்றார். ஆயினும், இவர்பாடிய நூல் ஸம்ஸ்கிருதபாஷையில் அகஸ்தியபட்டரென்பவர் இயற்றியுள்ள பாலபாரத மென்னுங் காவியத்தின் பொருளமைதியோடு பலவிடங்களில் ஒத்திருக்கின்றது; ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, இந்நூலுக்கும் அந்நூலுக்கும் இடையிடையே பலவேறுபாடுகளும் உள்ளனவாயினும், சிற்சிலவிடங்களில் இந்நூல் அந்நூலின் மொழிபெயர்ப்பென்றே சொல்லலாம்படியுள்ளது.

வில்லிபுத்தூரார் தமதுபாரதத்திற் பாடியது, முதற்பத்துப்பருவமே; மற்றையெட்டுப் பருவங்கள் அவராற் பாடப்படவில்லை. அதற்குக் காரணம்: அவற்றைப்பாடுதற்குமுன் அவர் காலஞ்சென்றிருக்கலாம்; அல்லது, நூல் முழுவதையும் பாடினால், பாண்டவர்கள் கிருஷ்ணபகவான் என்கிற மகாபுருஷர்களது கேட்பவர்க்குவருத்தத்தையுண்டாக்கத்தக்க மரணசரித்திரத்தைத் தம்வாயாற் சொல்லவேண்டுமே யென்று கருதி, 'பாண்டவர்கள் இராச்சியம் ஆண்டு வாழ்வாராயினர்' என்பதனோடு முடித்துவிட்டதாகக் கூறலாம். பாண்டவசரித்திரங் கூறுகிற பாரதசம்பு முதலிய சில நூல்களிலும் பின்னிட்டகதை காணப்படவில்லை. [கம்பர் இராமாயணத்தில் உத்தரகாண்டம் பாடாமல் விட்டதற்கும் இப்படிப்பட்ட காரணத்தையே முக்கியமாகக் கொள்ளலாம்; இப்பொழுதும் இராமாயணபாராயணஞ் செய்பவர்கள் உத்தரகாண்டம் படிப்பதில்லையன்றோ?] அவ்வாறே இவரும் பின்னையசரித்திரத்தைக் கூறாமல் "கனைகடற்பா ரளித்து அவரு மந்நகரி லறநெறியேகருதி வாழ்ந்தார்" என மங்களகரமாகச் சரித்திரத்தைப் பாடிமுடித்தன ரெனக் கொள்வது தகுதியுடையது. இனி, இந்நூலின் பின்னைய பருவங்களும் பாடப்பட்டுப் பிற்காலத்திற் கிடைத்தற்கு அரியவையாயின

---

* அந்நூல் பன்னீராயிரம் பாடல்களை யுடையதென்று தொண்டைமண்டலசதகத்திற் கூறியிருப்பினும், அது இப்பொழுது முழுவதும் கிடைப்பதில்லை உத்தியோகபருவந் தொடங்கித் துரோணபருவம் வரையிலும் எண்ணூறுபாடல்களே கிடைக்கின்றன.

வென்று சொல்வாருமுளர்.* வில்லிபுத்தூரார்பாடிய பாரதத்திலே சுருக்கமாகக் கதையைத் தொகுத்துக்கூறும் மூந்நூறு நானூறு பாடல்கள் தவிர மற்றை நாலாயிரஞ்செய்யுட்களை யெடுத்துக்கொண்டு, பிற்காலத்தில் நல்லாப்பிள்ளையென்பவர், புதிதாகத் தாம் பதினோராயிரம் பாடல்பாடி இடையிடையிற்கோத்தும் இறுதியிற் சேர்த்தும் பாரதம் பதினெட்டுப் பருவங்களையும் பூர்த்திசெய்தார்; அது 'நல்லாப்பிள்ளைபாரதம்' என வழங்கும்: அந்நூலாசிரியர், இற்றைக்கு நூறுவருஷங்களின்முன் இருந்தவர் இது தவிர, இற்றைக்கு கஙுO வருடங்களின்முன் இருந்த அஷ்டாவதானம் - அரங்கநாதகவிராயர் பாடிய பாரதத்தின் பிற்பகுதியும் ஒன்று உளது; அது, ஏறக்குறைய உகூOO - செய்யுளுடையது.

இப்பாரதத்துக்கும் இதன்முதனூலாகிய வியாசபாரதத்துக்கும் இடையிடையே கதையமைதிகள் சிற்சில வேறுபடுவது "முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி, அழியாமரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிப்படி இவ்வாசிரியராற் பிறநூல் மேற்கோள்கொண்டு அமைக்கப்பட்டதாதல் வேண்டுமெனை அறிக.

இவர் மகாபாரதமொன்றுதவிர வேறுநூலெதுவும் பாடியிருப்பதாகத் தெரியவரவில்லை.

இவர், தமக்குப்பலசெல்வமுங்கொடுத்து ஆதரித்துத் தம்மைக்கொண்டு பாரதத்தைப் பாடும்படி செய்வித்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனை இப்பெருங்காப்பியத்தில் இடையிடையே புகழ்ந்துபேசியிருக்கிறார்.

இப்படி, பாலில்விஷங்கலப்பதுபோலப் பெரிய இதிகாசத்தினிடையிலே ஒருமனிதனைத் துதித்தல் தகுமோ? நரகவனம் நரகவனமன்றோ? என்று ஓர் ஆட்சேபந் தோன்றலாம்: இங்ஙனந்தோத்திரிப்பது தகுதியன்றாயினும், அரசன் தமக்குச்செய்த நன்றியை மறவாமல் உபகாரஸ்மிருதியாகப் பாடினரென்பதுபற்றிப் பலரும் அங்கீகரிப்பார்கள்; அன்றியும், ப்ரஸ்துதமான உபமேயமுகத்தால் அவன்பெயரைப் பிரஸ்தாபிக்காமல் அப்ரஸ்துதமான உபமானமுகத்தாற் புகழ்ந்துகூறியதும் ஒருசமாதானமாகலாம். இங்ஙனமே தம்மைப்பாதுகாத்த பிரபுக்களைத் தாம்செய்யும்நூல்களில் நன்றியறிவுகாரணமாக எடுத்தெடுத்துவது, புலவர்களின் இயற்கை. கம்பர் இராமாயணத்தில திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளலையும், புகழேந்திப்புலவர் நளவெண்பாவில் முரணைநகர்ச்சந்திரன்சுவர்க்கியையும், மண்டலபுருஷன் சூடாமணிநிகண்டில்கிருஷ்ணதேவராயனையும்சிறப்பித்துக்கூறியவாறு காண்க. இன்னும், இவர், தமது நூலில், தமிழ்நாட்டரசராகியசேரசோழபாண்டியர்களைப்பற்றிப் பிரஸ்தாபம்வருகிறபொழுது மிக்கசிறப்பாகக் கூறுவர்,

"காவிரியென்னத்தப்பாக்கருணையான்" என, நளசக்கரவர்த்தியினது கருணைக்கு, தமிழ்நாட்டிற் பிரசித்திபெற்ற காவேரிநதியைத் தண்மைக்குந் தவறாமைக்கும் உவமையெடுத்துக்கூறினர்.

"தங்கள்மால் வரையில் வைகுந் தமிழ்முனி தன்னைப் போலப்
பொங்குவெண் டரங்க முந்நீர்ப் புணரிக ளேழுஞ் சேர
வெங்கையால் வாருங்கொற்ற வேழமா மேற்கொண்டானே"

---

* "கலியுகவியாதன்சொல்லக்கணபதியெழுதுபாடல்
பொலிவுறுதமிழிலாறாயிரமெனவிருத்தம்போற்றிச்
சலிவறவில்லிபுத்தூரிறைவனுஞ்சார்வபௌம
னொலிகெழுமறையோர்கோமானுயர்ந்தவருவப்பச்சொன்னான்"

என ஒருசெய்யுள் வில்லிபுத்தூரார்பாரதத்து எட்டுப்பிரதியொன்றிற் பாயிரத்துடனே காணப்படுகின்றது. இதுபழையபாடலாகஇருக்குமாயின், இதிற்கூறியஆறாயிரம்பாடல்களிற்பத்துப்பருவங்களானநாலாயிரத்துமுந்நூற்றுச்சொச்சம்போக மற்றவைஇவர்பாடியஎட்டுப்பருவங்களெனக்கொள்ளலாம்.

என்றதனால், தமிழுக்கு ஆதியிலக்கண நூலாசிரியராகிய அகஸ்தியமகாமுனிவர் கடலைக்குடித்தருளிய கதையைக் கொண்டாடினார். இன்னமும் "தங்கள் தமிழ்க்குழலிசையைத் தன்செவிக்கு விடமென்னும்" என்றதனால், வேய்ங்குழலின் இசைப்பாட்டின் இனிமைக்கு, தமிழ்ப்பாஷையை உவமைகூறினார். "தங்கள் மூவகைத்தமிழும் போலச், சிந்தையிற்குளிக்குமாறு சிலீமுகம் மூன்று விட்டான்" என்றதில், அம்புகள் நன்றாகப் பகைவர்நெஞ்சிற் பதிந்திடுதற்கு, தமிழ்ப்பாஷை கற்றவர்மனத்திற்பதிதலை உவமையாக்கினார்.

இங்ஙனம் தமது தேசாபிமான பாஷாபிமானங்களை வெளிப்படுத்துவது பலர்க்கும் வழக்கமேயாம்.

இவர் தமதுநூலிற் பெரும்பாலும் வடமொழிகளைத் தனிமொழியாகவும் தொடர்மொழியாகவும் இன்னமொழியின் சம்பந்தமான தென்று எளிதில் தெரியவொண்ணாதபடி திரித்தும் மொழிபெயர்த்தும் உபயோகித்திருத்தலால், வடமொழியிலும் மிகவல்லவ ரென நன்குவிளங்குகின்றது.

தமிழில் எந்த நூலாசிரியரும் வடமொழிகளை இவரவ்வளவு எடுத்துக் கொள்ளவில்லை. வடசொற்களைத் தமிழ்ககாப்பியதததில்நுழைக்கிற வழக்கம் இவர்காலந்தொடங்கித்தான் அதிகமாயிருத்தல்வேண்டும். சங்கத்தார்காலத்துப் பழையநூல்களில் அத்தனையாக வடமொழிகள் அகப்படா; சுத்த தமிழ்ப்பதங்களே மிகுதியாயிருக்கும்.

இவரது பாடல்களில் உவமை, உருவகம், எடுத்துக்காட்டுவமை, தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள்வைப்பு, பிறிதுமொழிதல், உயர்வுநவிற்சி முதலிய பொருளணிகள் அமைந்திருப்பதுமாத்திரமே யன்றி, மடக்கு (யமகம்), பிராசம் முதலிய சொல்லணிகளும் ஆங்காங்கு அமைந்திருத்தலையும், இவரதுசெய்யுள்நடை பலவிடத்தும் முடுகுடையதாதலையும், பலவகைச்சந்தங்கள் சந்தப்போலிகள் வண்ணங்கள் பொருந்தியிருத்தலையும் காணலாம்.

"பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா லொருவர்பகரொணாதே" என்று சிறப்பித்துக்கூறப்பட்டுள்ள படிக்காசுப்புலவரும், திருப்புகழ்பாடியஅருணகிரிநாதரும் முதலிய சிலர்போலவே இவ்வில்லிபுத்தூராரும் சிறந்த சந்தக்கவி யென்று இவர்நூலால் தெரிகின்றது.

சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்குஇனிமை, நன்மொழிபுணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல் முதலிய நூலழகுகளெல்லாம் இவர்நூலில் நன்குஅமைந்திருத்தல், இப்பாரதத்தைப் பார்க்கப் பார்க்கச் செவ்விதிற் புலனாம்.

'குன்றக்கூறல்' முதலிய குற்றங்களிலொன்றும்இந்நூலிலில்லையென்று பொதுப்படக் கூறலாம்; அன்றியும், பலநூல்களிற் காணக்கூடிய 'சென்று தேய்ந்திறுதல்' என்னுங் குற்றம் இந்நூலிலில்லை யென்பது, இந்நூலை ஆதியோடந்தமாக நோக்குவார்க்குத் தானேதெரியும். யுத்தவருணனை, எல்லா நூலகளினும் இந்நூலிற் சிறததல் காண்க.

"முன்னோர்மொழிபொருளேயன்றி யவர்மொழியும்,பொன்னேபோற் போற்றுவம்" என்றவாறு, இவருடைய நூலில் ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் சொற்பொருட்கருத்துக்கள் சிற்சிலஇடத்து எடுத்து ஆளப்பட்டிருத்தல், உய்த்துநோக்குமிடத்து விளங்கும்.

---

இனி, இப்பொழுதைக்கு எட்டுவருடங்களின் முன்பு இருந்த முருகதாசரென்பவர் இயற்றிய 'புலவர்புராணம்' என்னும் புதுநூலிற் கூறப்பட்டுள்ள வில்லிபுத்தூரார்சரித்திரம், இதுவரையிற்கூறிய வரலாற்றோடு சிற்சிலவேறுபாடுடையது; அதனை அனைவரும் அறிதற்பொருட்டு, அந்நூலிலுள்ளவாறு அச்சரித்திரம் அடியிற் குறிக்கப்படுகிறது:—

பெண்ணைநாட்டில் சனியூரில் பிராமணசாதியில் வைஷ்ணவசமயத்தில் தோன்றிய இரண்டுசகோதரர், கல்வியில்தேர்ந்து திருமாலைத்துதித்து அப்பெருமானருளால் அக்கல்விப்பொருளோடு செல்வப்பொருளும் நிரம்பியவராய் ஒருவரோடொருவர் மிகஅன்புபூண்டு பாண்டியநாட்டிலுள்ள ஸ்ரீவில்லிபுத்தூரை யடைந்து அங்குத் தம்தம் மனைவியருடனே ஏககுடும்பமாய் இல்லறவாழ்க்கை நடத்திவந்தார்கள். அவர்களில் மூத்தவர், வில்லிபுத்தூராரென்று சிறப்புப்பெயர் பெற்றார். இங்ஙனமிருக்கையில், கொங்குநாட்டரசனான ஆண்டான்பிள்ளையென்பவன், வடமொழியிலுள்ள மகாபாரதத்தைத் தமிழ்ச்செய்யுள்களாற் செய்விக்கக் கருதி, 'அங்ஙனஞ்செய்யவல்லவர் யார்?' என்று விசாரிக்கையில், வில்லிபுத்தூராரும் அவர்தம்பியாருமே அதற்குத் தக்கவரென்றும், அவர்கள் மிக்கசெல்வமுடையோராதலால் அரசனையும் பொருள்செய்யாரென்றும், ஒருவர்க்கொருவர் உற்ற துணைவராகிய அவர்களாற் பிறருதவி வேண்டப்படுவதில்லை யென்றும் அறிந்து, அவர்கட்குள் ஏதேனும் சிறிது மாறுபாட்டை யுண்டாக்கி அந்தச்சந்தர்ப்பத்தில் தன் கருத்தை முடித்துக்கொள்ளக்கருதியவனாய், விதவையாகிய ஒருபார்ப்பனக்கிழவியை அழைத்து வணக்கத்தோடு உபசரித்துச் செய்திகூறி 'அம்மா! நீர் அவர்கள்வீட்டுக்குச் சென்று அவர்கட்குள் கலகத்தைஉண்டாக்கவேண்டும்' என்று கூறி அவளுக்கு வேண்டியபொருளையுங் கொடுத்து அனுப்பிவிட்டு, பின்பு மதுரைக்குச்சென்று பாண்டியனைக்கண்டு அவனிடம் ஏகாந்தத்தில் இச்செய்திமுழுவதையுஞ் சொல்லி, 'அவர்களுடையவழக்குவந்தால் எவ்விதத்திலும் என்னிடத்தில் அனுப்பவேண்டும்' என்று வேண்டி, 'அங்ஙனமேஆகுக' என்று அதற்கு இணங்கிய அப்பாண்டியனது அநுமதியைப் பெற்று மீண்டனன். இது நிற்க:

அரசனிட்ட கட்டளைப்படியே அக்கிழவி வில்லிபுத்தூரார்வீட்டுக்குச் சென்று அவர்மனையாளிடத்தும் அவர்தம்பி மனையாளிடத்தும் கலந்துஇனிமையாகப் பேசிப்பழகி அவ்விருவரும் தன்னைநல்லவளென்று நம்புமாறு நடந்துகொண்டே அவர்கட்குள் ஒருத்திமேல் ஒருத்தியிடம் பொல்லாதபல கோட்சொற்களைக் கூறி உட்பகைமையைவிளைவித்து அவர்கள் ஒருவரோடொருவர் எதிர்த்துப்பேசிக் கலகஞ்செய்யவும் தம்தம்கணவரைத் தம்தம் வசமாக்கி நடத்தவும் மூட்டிவிட்டாள். அதனால் மாறுபாடுகொண்ட வில்லிபுத்தூராரும் அவர்தம்பியாரும் தமது பொருளைப் பாகஞ்செய்துதருதலை வேண்டித் தங்கள்நாட்டரசனான பாண்டியனிடம் வர, அவ்வேந்தன், முற்கூறியபடி அவர்களைக் கொங்குநாட்டரசனிடத்தே செலுத்தினன். அவ்வாறேசென்ற அவர்களைக் கண்டு கொங்கராசன் மகிழ்ச்சிகொண்டு அவர்கட்கு மிக்கஉபசாரஞ்செய்து வடமொழிமகாபாரதத்தை இரண்டுபாகமாப்பிரித்து அவ்விருவரிடமுங் கொடுத்து 'நீங்கள் இந்நூலைத் தமிழ்ப்பாடலாகச்செய்த பின்னரே நான் உங்கள்செல்வத்தைப் பாகித்துக்கொடுப்பேன்' என்று கூறினான். அச்சொல்லை அவர்கள் திருமால்கட்டளையாகவே சிரமேற்கொண்டு அங்ஙனமே சிலநாள் அவன்வசத்திலிருந்து, சொற்சுவையும் பொருளழகும் ஓசைச்செறிவும் சந்தப்பொலிவும் வண்ணப்பொருத்தமு முள்ள ஆறாயிரங்கவிகளாற் பாரதத்தைப் பாடி முடித்திட்டார்கள்.

இப்படி தன்கருத்து முற்றியதனாற் களிகூர்ந்த கொங்கர்கோமான், தானே ஒருபார்ப்பனக்கிழவியைக்கொண்டுகுடும்பக்கலகம்விளைத்தவிதத்தை

அவர்கட்கு விவரமாகத்தெரியக்கூறி, அவர்கட்குஉண்டான விரோதத்தைத் தணிவித்து, அவர்களைநோக்கி'நீங்கள்என்விருப்பத்தைநிறைவேற்றியதால், நான் உங்கள்விருப்பத்தை நிறைவேற்றச் சித்தனாயிருக்கிறேன்; நீங்கள்விரும்புவதைக்கூறுமின்' என்றுகூற,வில்லிபுத்தூரார்,'என்னோடுமாறுபட்டுச்சந்தம்பாடத்தொடங்கி அதில் தவறியவர்களுடைய காதுகளைத் துணிக்குமாறு வாள் கொடுக்கக்கடவாய்' என்று தம்விருப்பத்தை வெளியிட, அரசன் அங்ஙனமே வாள்கொள்ளுமாறு அருள்செய்தான். தமையனாரிடத்து முதிர்ந்த அன்பையுடைய தம்பியார் 'எனக்கென்று தனியே உரியது யாதுமில்லை' என்றுகூற, அரசன், தமையனார்க்கு அடங்கிநடக்கிற அவரது மனநிலைமையைக் கண்டு மகிழ்ந்து அவர்க்குப்பலவிருதுகளைக்கொடுத்தான். அவற்றைப் பெற்றுக்கொண்டு அவரிருவரும் தம்மூர்சேர்ந்தனர். முன்பு பகைமூட்டிய மூதாட்டியும் பின்பு அவர்கள்மனைவியர்க்குப் பற்பல நியாயங்களை யெடுத்துக்கூறித் தனதுசொற்றிறத்தால் அவர்களது மாற்சரியத்தைத் தீர்த்து அவர்களைப் பழையபடி கூட்டுறவாக்கிவைத்திட்டனள். முன்பு தலைவிரிகோலங்கொண்டஒருத்தியால் முடிந்த மகாபாரதத்தைக்குறித்து இப்பொழுது 'மொட்டைச்சியொருத்தியால் முடிந்தது' என்று பலர்பேசலுற்றனர்.

வில்லிபுத்தூரார், புலவர்திலகராய், தம்மோடுமாறுபட்டுத்தோற்ற புலவர்களுடைய காதுகளைக் கொய்வதே தொழிலாகக்கொண்டு கவிதார்க்கிகசிங்கமென்றுவொருசிறப்புப்பெயர்பெற்று,புலவர்களதுசெருக்கையெல்லாம் ஒழித்துவந்தார். அவர்தம்பியாரோ, புலமைத்திறம் வாய்ந்திருந்தும் சாந்தகுணத்தையே மேற்கொண்டிருந்தனர்.

கீழ்க்கூறியவாறு வில்லிபுத்தூரார் பெருமிதங்கொண்டுவாழுநாட்களுள் ஒருநாள், அநந்தனென்னும்பெயருள்ள பெரிய புலவனொருவன், தனது கவித்திறத்துக்குமெச்சிப் பற்பலஅரசர்தந்த பரிசுகளைப் பெற்றவனாய் அவரிடத்தில் வந்துசேர்ந்தான். அவர் அவனைப் பலவாறு பரீக்ஷித்து, அதிலெல்லாம் அவன் தவறாது தேறிவந்தமைகண்டு, பின்னர், பாடுதற்குஅரியதொரு பெரிய சந்தக்குழிப்பைக் கொடுத்து 'இதற்குஏற்ப நீ ஒருசந்தக்கவி பாடுதி, பார்ப்போம்' என்ன, அங்ஙனமே அந்தஅநந்தகவி உடனே ஒருசந்தக்கவி பாட, அதிற்பிழைகண்டு இவர் ஆடம்பரத்தோடு அவனது காதை யறுக்கப் போகையில், அவன், 'ஐயா! என்பெயர்கொண்டகட்செவியாகியஆதிசேஷனுக்குச் செவியுறுப்பில்லை; நீவிர் இதனை ஆராய்ந்து செய்ம்மின்' என்று துணிந்துகூற,அதுகேட்ட வில்லிபுத்தூரார்'இப்பொழுது நாம் இவன்காதை யறுப்பின் இவ்வநந்தன் அவ்வநந்தனோடு ஒப்பாய்விடுவனே!' என்பதை உன்னி அவன்செவியை யறுக்கத்துணியாராய், அவன்சொன்ன சமயோசிதமான வார்த்தைக்கு உவப்படைந்து,'நீசொன்னஇந்தச்சாதுரியமானவார்த்தைக்கு ஒருவெகுமதியாக உனக்குச் செவியைக் கொடுத்தேன்,போ'என்று கம்பீரமாகக்கூறி அவனை அனுப்பிவிட்டனர்.

பிறகு வில்லிபுத்தூரார், அருணகிரிநாதரென்னும் புலவரது பெருமையைக் கேள்வியுற்றுப் பொறாமைகொண்டு திருவண்ணாமலைக்குச் சென்று அவருடன் மாறுபட்டு, அவர்பாடுங் கந்தரந்தாதிச்செய்யுள்கட்கு உடனுக்குடனே உரைகூறிவருபவராய் இடையிலேதோற்றுச் செருக்கொழிந்து வாட்படையையிழந்து அருணகிரிநாதரோடுநண்புபூண்டு,அவர்பாடியகந்தர் திருப்புகழுக்கு ஈடாகத் தாமும் இராமகாதைத்திருப்புகழ் பாடிப் பெருமை பெற்றுத் தம்மூர்க்கு மீண்டு அடக்கத்தோடு வாழ்ந்திருந்தனர். நற்குணநற்செய்கைகளுடன் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகுபவராய்ச் சில காலங்கழித்தபின் வில்லிபுத்தூரார் முன்னும், அவர்தம்பியார் பின்னுமாக இருவரும் பரமபதமடைந்தார்கள்.

ஸ்ரீ

# பாரதம்.

பாரதம் என்னுஞ் சொல்லுக்கு - பரதனது வம்சத்தவரைப்பற்றிய நூல் என்று பொருள். இங்குக்குறித்த பரதனென்பவன் - சந்திரவம்சத்தில் துஷ்யந்தமகாராசனுக்குச் சகுந்தலையினிடந்தோன்றிப் பிரசித்திபெற்ற ஓர்அரசன். [இராமன்தம்பியான பரதனும், பரதகண்டமென்றதற்குக் காரணனான ஜடபரதனும்,பரதநாட்டியமென்றதற்குக்காரணனான பரதனு மல்லன்.] பரதவம்சத்துத்தோன்றியவர், பாரதர்; அவராவார்-பாண்டவரும்,துரியோதனாதியரும்: அவர்களது சரித்திரத்தை உணர்த்தும் நூல், பாரத மெனப்பட்டது. இது - வடமொழித் தத்திதாந்தநாமம்; [ஒருவடசொல் சிறிதுமாறித் தன்னோடுஇயைபுடையபொருளையாயினும் தன்பொருளையாயினும் உணர்த்துவது, தத்திதாந்தநாமம்.] இனி,வருணாச்சிரமதருமம், ராஜதருமம், மோக்ஷதருமம், நீதி முதலிய சிறந்த உறுதிப்பொருள்களையெல்லாம் அறிவிப்பதனால் முனிவர்கள் சீர்தூக்கிப்பார்க்குமிடத்து மற்றையெல்லாநூல்களினும் மிக்கபாரம் [அதாவது - மகிமை]உடைமைபற்றி, இந்நூலுக்குப் பாரதமென்னும் பெயர் இடப்பட்ட தென்றுங் கொள்ளலாம். முன்னொருகாலத்தில் தேவர்யாவரும் நான்குவேதங்களையும் ஒருதட்டிலும் பாரதத்தை மற்றொரு தட்டிலுமாகத் துலாக்கோலில் வைத்து நிறுக்க, வேதமனைத்தையும்வைத்த பக்கத்தினும் இந்நூலைவைத்தபக்கம் வலிதாயிருந்ததென வடநூற்பாரதத்தின் அநுக்ரமணிகை யத்தியாயம் கூறும். (இனி, இந்தச்சொல்லை, பார் அதம் என இரண்டுசொல்லாகப்பிரித்து, அதம் என்பதை ஹதம் என்னும் வடமொழிப்பெயரின் திரிபாகக் கொண்டு, பூமியிலுள்ள பல துஷ்ட அசுரர்களும் கெட்ட அரசர்களும் முதலியோரது நாசத்தைக் கூறுவதொரு நூலென்று பொருள்கூறுவாரு முளர்; அது பொருந்தாது: ஏனெனில்,— பாரதம்என்னும் வடமொழி ஒருமொழியாதலாலும், அதற்கு வடமொழிக்கு ஏற்பப் பொருள்கூறுவது தகுதியே யன்றித் தமிழ்மொழிக்குஏற்பப் பொருள்கூறுதல் தகாமையாலு மெனக் காண்க.)

யாவரும் மேற்கொண்டு பூசிக்கத்தக்க மேம்பாட்டையுடைத்தாயிருத்தல்பற்றி, இந்த இதிகாசம் 'மகா' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டு, மகாபாரத மெனவும் வழங்கும். அந்தமேம்பாடாவது - இருக்குமுதலிய நான்குவேதங்களோடு ஒப்ப ஐந்தாம்வேதமென்று சிறப்பித்துக்கூறப்படும் மகிமை; "பாரதஃபஞ்சமோவேதஃ", "நீடாழியுலகத்துமறைநாலொடைந் தென்றுநிலைநிற்கவே,வாடாததவவாய்மைமுனிராசன் மாபாரதஞ்சொன்ன நாள்" என்பன காண்க. அன்றியும், மிகச்சிறந்ததான ஸ்ரீபகவத்கீதையைத் தன்னுள் பீஷ்மபர்வத்திலும், ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்தை ஆநுசாஸநிகபர்வத்திலும் அடக்கிக்கொண்டிருப்பது, இந்நூலுக்கு, எல்லாநூல்களினுஞ் சிறந்த மேம்பாடாம்.

இந்நூலை முதலில் வடமொழியிற் செய்தவர், ஸ்ரீவேதவியாசமகாமுனிவர்; (இவர்-இக்கதாநாயகர்க்குப் பாட்டனாராவர்.) இவரால் வைக்கப்பட்ட 'பாரதம்' என்கிற முதனூலின் பெயரே வழிநூலாகிய இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. பாரதத்துக்கு 'ஜயம்' என்றும் ஒரு சிறப்புப்பெய ருண்டு; (நால்வகைப்புருஷார்த்தங்களையும்பெறுதற்குக் காரணமாகும் நூல் ஜயமெனப் பெயர்பெறு மென்பது, வடமொழிநிகண்டு; எல்லாநூல்களினும் மேம்

பட்டு அவற்றைவென்றதென்றும், பதினெட்டுப்பகுப்புள்ளதென்றும் இதற்குப்பொருள்கூறலும் உண்டு.)

பாரதம் அந்தக்தப்பாகத்தின்விஷயத்தைக்குறிக்குஞ்சொற்களால்ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம், பீஷ்மபருவம், துரோணபருவம், கர்ணபருவம், சல்லியபருவம், ஸௌப்திகபருவம், ஸ்திரீபருவம், சாந்திபருவம், ஆநுசாஸநிகபருவம், அசுவமேதபருவம், ஆசிரமவாசபருவம், மௌசலபருவம், மகாபிரஸ்தாநபருவம், ஸ்வர்க்காரோகணபருவம் எனப் பெயர்பெற்ற பதினெட்டுப்பருவங்கள்அடங்கியது. அவற்றுள்,

ஐந்தாவது

# உத்தியோகபருவம்.

உத்யோகபர்வம் என்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டது. உத்தியோகத்தினது விஷயமான பருவ மென்று பொருள்; ஆறும்வேற்றுமைத்தொகை: விஷயமாகவுடைமை, வேற்றுமைப்பொருளாகிய சம்பந்தம். உத்யோகம்-முயற்சி: இங்கே, பாண்டவர்கள் இராச்சியத்தைப் பெறுதற்குச் செய்த பிரயத்தினம். பர்வம்-கணு: கரும்பு மூங்கில் முதலியவற்றிற்கு ஏகதேசமாகிய [ஏகதேசம்-ஒருபகுதி] கணுப் போல நூலுக்கு ஏகதேசமாகிய உறுப்பைப் பருவமென்பது-உவமவாகுபெயர். ஆகவே, பாண்டவர்கள் வனவாச அஜ்ஞாதவாசங் கழித்தபின்பு துரியோதனனிடத்தினின்றுந் தமது தாயபாகத்தை மீண்டும்பெறுதற்பொருட்டுச்செய்த முயற்சியின் விஷயமான பாக மென்பது கருத்து. இனி, இத்தொடர்மொழியை இரண்டனுருபும்பொருளும் உடன் தொக்கதாகக் கொண்டு, பாண்டவர்களது முயற்சியைக் கூறும் நூற்கூறபா டென்று பொருள் கொள்ளுதலும் ஒன்று. இது வடமொழிப் புணர்ச்சி யாதலால், வருமொழிமுதல்வலி இயல்பாயிற்று; [நன் - மெய் -௩௪.] "இணைந்தியல்காலை" [நன் - பத-௨௨.] என்ற சூத்திரவிதியால், உத்யோகம் - உத்தியோகம் என யகரத்திற்கு முன் இகரமும், பர்வம் - பருவம் என வகரத்திற்குமுன் உகரமும் வந்தன.

---

நான்காவது

## கிருட்டிணன்தூதுசருக்கம்.

ஸ்ரீகிருஷ்ணபகவான் பாண்டவர்க்காகத் துரியோதனனிடத்துத் தூது சென்ற வரலாற்றை யுணர்த்தும் பாகம். க்ருஷ்ணன் என்ற வடமொழிப் பெயர் - கருநிறமுடையவ னென்றும்,(யாவர்மனத்தையும்)கவர்பவ னென்றும், (எல்லாத்தொழில்களையுஞ்) செய்பவனென்றும், அசுரர்களுயிரைப் பறிப்பவனென் றும்,மற்றும்சிலவகையாகவும்பொருள்படும். கிருஷ்ணனது தூது என ஆறும் வேற்றுமைத்தொகை.

கிருஷ்ணன் - திருமாலின் ஒன்பதாம் அவதாரமூர்த்தி; வசுதேவர்க்கும் தேவகிக்கும் திருமகனாய்த் திருவவதரித்து,இடையர்தலைவனாகிய நந்தகோபனும் அவன்மனைவியான யசோதையும் வளர்க்க வளர்ந்தவன்.

### கதைத்தொடர்ச்சி.

[பாரதகதை,பிரசித்தமானதாதலால்,இந்தப்பருவத்துக்கு முன்கதைத்தொடர்ச்சி சுருக்கமாகவே எழுதப்படுகிறது.]

சந்திரகுலத்திலே புதன் புரூரவா ஆயு நகுஷன் யயாதி பூரு துஷ்யந்தன் பரதன் ஹஸ்தி குரு முதலிய பலஅரசர்கள் தோன்றியபின் அம்மரபில் உதித்து இப்பரதகண்டத்திலே அஸ்திநபுரியிற் செங்கோல்செலுத்திய

சந்தனு வென்னும் அரசனுக்கு முதல்மனைவியாகிய கங்கையின் குமாரன் பீஷ்மனென்பவனும், இரண்டாம்மனைவியாகிய யோஜநகந்தியின் மகன் விசித்திரவீரிய னென்பவனும் இருந்தார்கள். (முன்பு சத்தியவதியென்னும் பெயரோடு இருந்து பராசரமுனிவனோடு சேர்ந்து வியாசமுனிவனைப் பெற்றுப் பின்பு அப்பராசரனருளாற் கன்னிப்பருவமடைந்த சந்தவதியெ ன்னும் மறுபெயரையுடைய இந்த யோஜநகந்தியினிடம் சந்தனுவுக்குப் பிறந்த முதற்குமாரனான சித்திராங்கதன், அப்பேருள்ள ஒருகந்தருவனாற் கொல்லப்பட்டு இளமையில் இறந்தான்.) முன்னைய விரதத்தின்படி வீடு மன் விசித்திரவீரியனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வித்தான். விசித்திரவீரி யன் மகப்பெறாது இறந்ததன்பின் அவனுடையபத்தினிகளுள் அம்பிகையி னிடத்துத் திருதராஷ்டிரனும்,அம்பாலிகையினிடத்துப் பாண்டுவும்,சந்ததி விருத்தியின்பொருட்டுத் தாய்சொற்கடவாத வியாசபகவானது திருவரு ளாற்பிறந்தனர்.அம்பிகையாலேவியனுப்பப்பட்ட தாதிப்பெண்ணினிடத்து வியாசனருளாற் பிறந்த விதுரனென்னுங் குமாரனும் இருந்தான்.

திருதராட்டிரன் பிறவிக்குருடனாதலால்,விதுரனை மந்திரியாககொண்டு பாண்டு திருதராட்டிரனுக்கு முடிசூட்டித தானே இராஜாங்ககாரியம் பார் த்துவந்தான்; பாண்டுவுககு மனைவியுடன் சேரக்கூடா தென்று சாபம்நேரி ட்டதனால், அவனனுமதிப்படி, அவனது மூததமனைவியாகிய குந்தி,தனக்கு இளமையில் துருவாசமுனிவனுபதேசித்திருந்த மந்திரத்தின் மகிமையால் வந்த யமதருமராஜனால் யுதிஷ்டிரனையும், வாயுதேவனால் பீமசேனனையும், தேவேந்திரனால் அருச்சுனனையும் பெற்றாள். (முன்பு கன்னிப்பருவத்துச் சூரியனாற் குந்தியினிடம் பிறந்தவன், கர்ணன்.) குந்தியின் சக்களத்தியான மாத்திரி, அவளால் அம்மந்திரம் உபதேசிக்கப்பெற்று,அசுவிநீதேவர்களால், நகுலன் சகதேவன் என்னும் இரட்டைப்பிள்ளைகளைப் பெற்றாள். திருத ராட்டிரனுக்குத் துரியோதனன் துச்சாசனன் முதலிய நூறுபிள்ளைகளும், துச்சளை யென்னும் ஒருபெண்ணும் காந்தாரியினிடம் பிறந்தார்கள். (பஞ்ச பாண்டவர்களுள், தருமபுத்திரன் துரியோதனாதியர்நூற்றுவரினும் மூத்தவ னென்றும், வீமன் முதலிய மற்றைநால்வரும் துரியோதனனுக்கு இளையவ ரென்றும் அறிக.)பாண்டு சிலகாலத்துக்குப்பின் இறந்துபோனான். அப்பொ ழுது மாத்திரி சககமனஞ்செய்தாள்: (ஸஹகமநம் - உடன்கட்டையேறுதல்.)

பின்பு பாண்டவரும் துரியோதனாதியரும் கூடி அத்தினாபுரியில் விளையாடுகையில், வீமன் துரியோதனாதியரினும் மிகமேம்பட்டுத் தோன் றினான். அதனால், அவனிடம் அவர்கள் மிக்கபொறாமைகொண்டார்கள். அதனாலாகிய அசசத்தால், துரியோதனன் கர்ணனைத் தனக்குத்துணையா கக் கொண்டான் பிறகு வீடுமன் இந்தநூற்றைவர்க்கும் கிருபாசாரிய னைக்கொண்டும், துரோணாசாரியனைக்கொண்டும் படைக்கலவிதததைபயிற்று விக்க, அதில துரியோதனாதியரினும் பாண்டவர் மிகத் தேர்ச்சியடைந் தனர்.அப்பால் வீடுமன், திருதராட்டிரனோடும் விதுரனோடும் ஆலோசித்து, சகலகுணசம்பந்நனான தருமபுத்திரனுக்கு இளவரசுமுடி சூட்டினான். அதுகண்டுஅழுக்காறுமிக்க துரியோதனனது கருத்துக்கு இணங்கிய திருத ராட்டிரன் புரோசனனென்னுந் துர்மந்திரியுடன் சதியாலோசனை செய்து பாண்டவர்களை வாரணாவதநகரத்துக்குச் செலுத்தி அங்கு அரக்குமாளிகை யில் வசிக்கச்செய்து இரவில்தீவைத்தெரித்துவிடுவதென்றுசெய்த தந்திரத் தைப் பாண்டவர்கள் சிறியதந்தையாகிய விதுர னேவிய சிற்பியால் அறிந்து தப்பிப் பிராமணவேடம்பூண்டு திரிந்து, திரௌபதியின் சுயம்வரத்துக்குச் சென்று, அங்குக்கட்டியிருந்த யந்திரத்தை அறுத்து அருச்சுனன் திரௌப தியைக் கொண்டுவர, தாயார்சொற்படி அந்த ஒருத்தியை ஐவரும் மணஞ் செய்துகொண்டு திருதராஷ்டிரனால் அழைக்கப்பட்டு அஸ்திநபுரத்துக்கு வந்தார்கள். திருதராட்டிரன் மந்திரிகள்முதலானாரோடு ஆலோசித்துத்

தருமபுத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வித்தபின்பு, அப்பெரியதந்தையின் கட்டளைப்படி பாண்டவர் காண்டவப்பிரத்தமென்னுங் கடுங்காட்டிற் சேர்ந்து, அங்குக் கண்ணபிரானது கருத்தின்படி தெய்வத்தச்சனான விசுவகருமன் நிருமித்த இந்திரப்பிரத்தமென்னும் நகரத்தில் இருந்து அரசாள, துரியோதனாதியர் அஸ்திநபுரியில் இருந்து அரசாள்வாராயினர்.

பிறகு தருமபுத்திரன் தனது தம்பிமார்நால்வரைக்கொண்டு திக்குவிஜயஞ்செய்து ராஜசூயயாகம்முடித்து பெருமகிமையுடன் விளங்கினான். அதுகண்டு பொறாமைகொண்டு துரியோதனன் யுதிட்டிரனைத் தந்திரமாகத் தன்னிடம் அழைப்பித்துத் தன்மாமனான சகுனியைக்கொண்டு அவனுடன் சூதாடுவித்து அவனது செல்வம்முழுவதையும் பறித்துக்கொண்டு, அவனையும் அவனதுதம்பிமாரையும் அவர்களது மனைவியான பாஞ்சாலியையும் அடிமையாக்கி. அவளைத் தீண்டக்கூடாத காலத்தில் துச்சாதனனைக்கொண்டு சபையிற் பலாத்காரமாகக் கொணர்ந்து துகிலுரியச்செய்தான். அப்பொழுது, ஸ்ரீகிருஷ்ணனுக்கிரகத்தால் அவள் மேல்மேல் ஆடை வளரப்பெற்று மானங்காத்துக்கொண்டாள். பின்பு அவளது கற்பின்பெருமைக்கு அஞ்சித் திருதராட்டிரன் அவர்களை அடிமைத்தன்மையினின்று நீக்கிச் செல்வத்தையுங் கொடுத்தனுப்ப, துரியோதனாதியர் அதனை மறுத்து அவற்றையெல்லாம் கவர்ந்துகொண்டு, மறுசூதாடி அடிமைநீங்கிய அவர்களைப் பன்னிரண்டுவருஷம்வனவாசமும் ஒருவருஷம்அஜ்ஞாதவாசமும்(அஜ்ஞாதவாசமாவது - ஒருவரும் தம்மைஇன்னாரென்று அறியவொண்ணாதபடி நாட்டில் மறைந்து வசித்தல்.) செய்துவந்தால் அரசுபெறுமாறு நியமனஞ்செய்து அனுப்பினார்கள்.

அங்ஙனமே பாண்டவர்கள் திரௌபதியுடனே சென்று பன்னிரண்டு வருஷம் காமியவனம் முதலிய இடங்களில் வசித்து, பின்பு மாறுவேடம் பூண்டு விராடநகரத்தில் ஒருவருஷகாலம் அஜ்ஞாதவாசஞ் செய்தனர். அந்தப் பதின்மூன்றாவதுவருடத்தி னிறுதியில் துரியோதனன், பாண்டவர்கள் விராடநகரத்தில் இருக்கலாமென ஒருவாறு ஊகித்துஉணர்ந்து, அவர்களைக் கண்டுபிடிக்கும்படி படையெடுத்துச் சென்று, அந்நாட்டை இருபுறத்தும் வளைத்துப் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துசெல்ல, அருச்சுனனொழிந்த நால்வரும் விராடனுடன் சென்று தென்புறத்தில் திரிகர்த்தரையும், விராடகுமாரனான உத்தரனுக்குத் தேரூர்ந்துசென்ற பேடிவடிவான அருச்சுனன் வடபுறத்தில் துரியோதனாதியரையும் போரில்வென்று, முன்னைய நியதிப்படி பதின்மூன்றுவருடமுங் கழிந்துவிட்டதனால், அப்பொழுது பாண்டவர்களும் திரௌபதியும் நிஜரூபத்தோடு வெளிப்பட்டனர்.

பின்னர் விராடராசன், அவர்கட்கு விசேஷஉபசாரஞ்செய்து தூதர்கள்மூலமாகச் செய்திதெரிவித்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்திமுதலான உறவினர்களையும் மற்றும்அரசர்களையும்வரவழைத்து,அருச்சுனகுமாரனான அபிமந்யுவுக்குத் தன்மகளான உத்தரையை மணம்புரிவித்தான்.

பின்பு பாண்டவர்கள் விராடனால் அமைக்கப்பட்ட உபப்பிலாவியமென்ற பட்டணத்தை யடைந்து கிருஷ்ணன்முதலிய அரசர்களுடனே இராச்சியம்பெறும் உபாயத்தை ஆலோசித்து முடிவுசெய்து உலூகனென்னும் அந்தணனைத் திருதராட்டிரனிடந் தூதனுப்ப, அவ்வேதியன் சென்று செய்திகூறுகையில், அங்குத் துரியோதனன், துரோணர்முதலிய பெரியோர்பலர் சொல்லவுங் கேளாமல், கர்ணன்முதலிய சிற்றினத்தவரின் கருத்தையே முக்கியமாகத் தழுவி, சிறிதும் இராச்சியங் கொடுக்கமாட்டேனென்றுசொல்லிவிட, அச்செய்தியை அம்முனிவன் பாண்டவர்க்குங் கண்ணனுக்குந் தெரிவித்துச் சென்றான். அதன்பின் கண்ணபிரானைத் தம்தமக் ..போரில்எற்றுணையாகும்படி துரியோதனனும் அருச்சுனனும் துவாரகா

புரிக்குச் சென்று சமகாலத்தில் வேண்ட, அப்பெருமான், தந்திரமாக, துரியோதனனுக்கு யாதவசேனை முழுவதையுந் துணையனுப்புவதாகச் சொல்லி, தான்மாத்திரம் பாண்டவர்க்கே துணைவனாய் அருச்சுனனுடன் உபப்பிலாவியத்துக்கு வந்துசேர்ந்தனன். பிறகு திருதராட்டிரனது வேண்டு கோளினால் சஞ்சயனென்னும்முனிவன் பாண்டவர்பக்கல்வந்து 'அரசாட்சி பலபெருந்துன்பங்கட்கு இடமாகுதலால், அதனிடத்து ஆசையை விட்டு வனத்தை யடைந்து பெருந்தவஞ்செய்தலே சிறந்தஅறிவு' என்று வைராக் கியம் போதிக்க, பாண்டவர்கள், அதற்குச் சிறிதும் உடன்படாது மறுத்து விட்டனர் என்பதாம்.

[கடவுள்வணக்கம்.]

க. பேர்படைத்தவிசயனுடன்மும்மைநெடும்பிறவியினும்பிரி யானாகிச், சீர்படைத்தகேண்மையினாற்றேரூர்தற்கிசைந்தருளுஞ்செ ங்கண்மாலைப், பார்படைத்தசுயோதனற்குப்படையெடேனமரிலெ னப்பணித்தகோவைக், கார்படைத்தநிறத்தோனைக்கைதொழுவார் பிறவாழிக்கரைகண்டாரே.

(இதன்பொருள்.) பேர்படைத்த-கீர்த்தியைப்பெற்ற,விசயனுடன்-அருச் சுனனுடனே,மும்மைநெடும்பிறவியினும் - மூன்று சிறந்ததிருவவதாரங்களி லும், பிரியான் ஆகி - நீங்காதவனாயிருந்து, சீர் படைத்த கேண்மையினால்- சிறப்பைப்பொருந்திய நட்பினால், தேர் ஊர்தற்கு இசைந்தருளும் - (அவ் வருச்சுனனுக்குச் சாரதியாய்த்)தேரைச்செலுத்துதற்கு உடன்பட்டருளிய, செங் கண் மாலை - சிவந்த திருக்கண்களையுடைய திருமாலின் திருவவதார மானவனும், பார் படைத்த சுயோதனற்கு - இராச்சியத்தைப்பெற்றுள்ள துரியோதனனுக்கு, அமரில் படை எடேன் என பணித்த - போர்க்களத்தில் (எதிர்ப்பக்கத்தில்) ஆயுதத்தை யெடுத்துப் போர்செய்யே னென்று வாக்குத் தத்தஞ்செய்த, கோவை - (யாவர்க்குந்) தலைவனும், கார் படைத்த நிறத் தோனை - மேகம்பெற்றகரியநிறத்தைத் தான்உடையவனு மாகிய கண்ண பிரானை, கைதொழுவார்-கைகூப்பிவணங்குபவர்,பிற ஆழி கரை கண்டாரே- பிறப்பாகிய கடலின் அக்கரையை அடைந்தவரேயாவர்; (என்றவாறு.)

இது-காப்புச்செய்யுள்;இதனால், தாம்எடுத்துக்கொண்டசருக்கம் இடை யூறில்லாமல் இனிதுமுடியும்பொருட்டு உயர்ந்தோர்வழக்கத்தின்படியே கவி கடவுள்வாழ்த்துக் கூறுகிறார். கடவுள்வணக்கம், இரண்டுவகைப்படும்; வழி படுகடவுள்வணக்கமென்றும், ஏற்புடைக்கடவுள்வணக்க மென்றும். வழிபடு கடவுள்வணக்கமாவது - தாம்தாம் குலதெய்வமாகக் கொண்டு ஆராதிக்கிற கடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம் - வைஷ்ணவசமயத்தார் விஷ் ணுவையும், சைவமதத்தவர் சிவனையும், ஜைநர் ஜிநனையும், பௌத்தர் புத்த னையும் வணங்குதல் போல்வன. ஏற்புடைக்கடவுள்வணக்கமாவது - தாம் தாம்செய்யஎடுத்துக்கொண்ட காரியத்துக்குத் தகுதியையுடைய கடவுளை வணங்குதல்; இதற்குஉதாரணம் - இராமாயணங்கூறுபவர் இராமனையும், பாகவதஞ்சொல்பவர் கண்ணனையும்,கந்தபுராணமுரைப்பவர் சுப்பிரமணிய மூர்த்தியையும் வணங்குதல் போல்வன. ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தவ ரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இவ்வாழ்த்து - தமக்கு வழிபடுகடவு ளும், எடுத்துக்கொண்ட இதிகாசத்துக்கு ஏற்புடைக்கடவுளு மாகிய திருமா லைப் பற்றியதென அறிக. கண்ணபிரான்இந்நூலுக்குஏற்புடைக்கடவுளென் பது - இந்நூலாசிரியர் தற்சிறப்புப்பாயிரத்தில் "மூன்னுமாமறைமுனிவருந் தேவரும்பிறரும், பன்னுமாமொழிப்பாரதப்பெருமையும்பாரேன், மன்னு மாதவன்சரிதமுமிடையிடைவழங்கும், என்னுமாசையால்யானுமீதியம்புதற் கிசைந்தேன்" எனக்கூறியதனாற் பெறப்படும். இச்செய்யுள்-பிறதிருவவதா

ரங்களைப்பற்றியுங் கூறியதாயினும்,எல்லாம் ஸ்ரீமகாவிஷ்ணுவினது மூர்த்தியே யாதலால், ஏற்புடைக்கடவுள்வாழ்த்து என்னத் தட்டில்லை.

மும்மைநெடும்பிறவி - நரநாராயணரும், இராமலக்குமணரும், கிருஷ்ணஅருச்சுனரும்; இதனை மேல் வீட்டுமபருவத்தில் கீதையில் கண்ணன் அருச்சுனனைநோக்கி "உன்னையான்பிரிவதில்லை யொருமுறைபிரிந்து மேல்நாள், நன்னிலாஎறிக்குமபூணுய்நரனுநாரணனுமானோம்","பின்னொருபிறப்பின் யாமே இராமலக்குமப்பேர்பெற்றோம்,இந்நெடும்பிறப்பில் நீயும்யானுமா யீண்டுகின்றோம்"என்பதனால் உணர்க. நாராயணனும் இராமனும் கண்ணனென்றும், நரனும் இலக்குமணனும் அருச்சுனனென்றும் அறிக. இதனால், அருச்சுனன் திருமாலினதுஅவதாரமென விளங்கும்.இனி,இம்மூன்று பிறவியினுள் இராமலக்குமணனை நீக்கி, இந்திரோபேந்திரரைக் கூட்டி, இந்திரன்-அருச்சுனனும்,உபேந்திரன்-கண்ணனுமென உரைப்பாருமுளர்; அது-நூல்வழக்கோடு பொருந்தாது. பிறவி - தொழிற்பெயர்; வி - விகுதி. (ஒருவர்க்கொருவர் யோகக்ஷேமசமாசாரங்களைக்) கேட்பதுபற்றி, கேண்மையென்று நண்பிற்குப் பெயர். கார்படைத்த, படைத்த - உவமவுருபாகவுமாம். கைகள்படைத்தற்குப் பயன் எம்பெருமானைத்தொழுதலேயாம் என்ற சிறப்புப்பொருள் விளக்குதற்கு,'கைதொழுவார்'என்றார். தொழுவார் என எதிர்காலத்தாற்கூறியதற்குஏற்ப,'பிறவாழிக்கரைகாண்பார்'எனக்கூற வேண்டியதை அங்ஙனங் கூறாமல் கண்டாரென இறந்தகாலத்தாற் கூறியது - தெளிவும விரைவும பற்றி வந்த காலவழுவமைதி; [நன் - பொது - ௩௩.] ஈற்றுஏகாரம் - தேற்றம்; ஈற்றசையுமாம். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்"என்றபடியே எம்பெருமானைத் தொழுபவர்க்குப் பிறவியறுதலும் தொழாதவர்க்குப் பிறவியறாமையுமாகிய இரண்டும் நியம மாதலால், 'தொழுவார் பிறவாழிக்கரைகண்டாரே'எனக் கூறினார். "அற்றதுபற்றெனி, லுற்றதுவீடு," "பசையற்றாலன்றேயப்போதேவீடதவேவீடுவீடாமே." "பற்றற்றகண்ணேபிறப்பறுக்கும்"என்றாற்போல, கடவுளைத் தொழுதமாத்திரத்தில் பிறவித்துயரம் தவறாமல்அழிந்தேவிடுமென்பார்,'பிறவாழிக்கரைகண்டாரே'என்றாரென்றுங் கொள்க. பிறவாழிக் கரைகண்டாரே என்றதனால்,பிறப்பற்றுக்கருமசரீரமொழிந்துதிவ்வியசரீரம் பெற்றுமீளாதமுத்தியுலகஞ்சேர்ந்து நிரதிசயஇன்பமடைந்துஅங்குஎன்றும் ஒருபடிப்பட வாழ்வ ரென்பதாம். பிற - பிறப்பு;முதனிலைத்தொழிற்பெயர். ஆழ்ந்திருப்பது - ஆழி எனக் கடலுக்குக் காரணப்பெயர்; இ - கருத்தாப் பொருள்விகுதி: இனி,(பிரளயகாலத்தில் உலகங்களை)அழிப்பதென்றும்,வட்டவடிவாகவுள்ளதென்றும் பொருள்கொள்ளலாம். காரணகாரியத்தொடர்ச்சியாய்ப் பிறப்பு மேல்மேல் வருதலால், கடலெனப்பட்டது.பிறப்பாகிய கடலென்றதற்கேற்ப,'முத்தியாகியகரை'என்றது-ஏகதேசவுருவகவணி. பிறப்பையொழித்து முத்தியைப்பெறவேண்டுதலால்,அது அக்கடலைக்கடந்து அடையும் அக்கரையாயிற்று.இனி,"அறவாழியந்தணன்தாள் சேர்ந்தார்க்கல்லால்,பிறவாழி நீந்த லரிது"என்ற குறளில், பிறவாழிஎன்பதற்கு - 'அதனிற்பிறவாகிய கடல்கள்' என்று உரைத்துள்ளதனால், அங்ஙனமே இங்கும் பிறஆழி என்பதற்கு - எம்பெருமானையொழிந்த விஷயாந்தரங்களாகிய கடல்களென்றுங் கொள்ளலாம்.

அருச்சுனனுக்கு இராச்சியமில்லையாயினுங் கீர்த்தியுண்டு; துரியோதனனுக்கு இராச்சியமிருந்துங் கீர்த்தியில்லை,என்ற சிறப்பும் இழிவும் தோன்ற, 'பேர்படைத்த', 'பார்படைத்த' என்ற சொற்களால் அவரை விசேடித்தார். யாவரினுஞ்சிறந்த திருமால் தேரூர்தலாகிய இழிதொழிலை ஏற்றுக்கொண்டு தனதுசௌலப்பியத்தைக் காட்டியருளுதற்குக் காரண மாதலால் கண்ணனுக்கு அருச்சுனனிடத்திலுள்ள நட்பு.'சேர்படைத்தகேண்மை'

எனப்பட்டது; அருச்சுனனுக்குத்தேரூர்தலை "செறிந்த மால்பெறுஞ்சிறப்பு" எனக் கீழ் நிரைமீட்சிச்சருக்கத்திற் கூறியதுங் காண்க. மாலே, கோவை, நிறததோளைக் கைதொழுவார்-ஒருபொருள்மேற் பலபெயர் அடுக்கிவந்து, இறுதியில் ஒருமுடிக்குஞ்சொல்லைப் பெற்றன; [நன் - பொது - சக.]

இதுமுதல் முப்பத்துமூன்று கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீர் இரண்டும் மாச்சீரும், மற்றைநான்கும் காய்ச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (க)

[சஞ்சயன் சென்றபின்பு தருமன் கண்ணனைநோக்கிச் சொல்லத்தொடங்குதல்.]

உ. ஞானமன்பொ டினிதுரைத்து ஞானமுனி யகன்றதற்பின் சாமபேத,தான தண்டமெனநிருபர்தருமமுறைமையிற்புகலுந்தகுதி நோக்கித், தூநறுந்தண்டுளவோனைத் தூதுவிடுவதற்கெண்ணிச்சுனை கடோறு, மேனலந்தண்கிரிப்பெருந்தேனிறைக்குமெழிற்குருநாடனியம்புவானே.

(இ - ள்.) ஞானம் - தத்துவஞானத்தை, அன்பொடு - அன்புடனே, இனிது - இனிமையாக, உரைத்து - (தருமனுக்குச்)சொல்லி, ஞானம் முனி - தத்துவஞானமுடைய சஞ்சயமுனிவன், அகன்றதன்பின் - புறப்பட்டுப்போனபின்பு.— ஏனல் - தினைப்பயிர்களையுடைய, அம் - அழகிய, தண் - குளிர்ச்சியான, கிரி - மலைகள். சுனைகள்தோறும் - சுனைகளிலெல்லாம், பெருந் தேன் நிறைக்கும் (தம்மிடத்திலுள்ள மலர்களாலும் தேன்கூடுகளைக்கொண்டும்)மிகுதியான மதுவை நிறைக்கப்பெற்ற, எழில்-அழகிய,குருநாடன் குருநாட்டையுடையவனான யுதிட்டிரன்,—சாமபேத தான தண்டம் என-சாமமும் பேதமும் தானமும் தண்டமும் என்று,நிருபர் தருமம்-இராச தருமத்திலே, முறைமையின் புகலும்-முறையே கூறப்படுகிற, தகுதி-(நால் வகைஉபாயங்களின்)தன்மையை,நோக்கி-ஆலோசித்து, தூ நறுந் தண் துளவோனை தூது விடுவதற்கு எண்ணி - பரிசுத்தகுணத்தையும் நல்வாசனையையுங் குளிர்ச்சியையுமுடைய திருத்துழாய்மாலையை யுடையவனான கண்ணபிரானைத் (துரியோதனனிடம்) தூதாக அனுப்பும்படி நினைத்து, இயம்புவான் - கூறுபவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

அரசர்க்குஉரிய நான்கு உபாயங்களுள், சாமம் முதலில் உபயோகிக்கத் தக்கதும், மற்றவை அதன்பின் முறையே உபயோகிக்கத்தக்கவையு மாதலால், தருமன், முதலிற் சாமோபாயத்திலே நின்று, முன்னர் உலூகனைத் தூதனுப்பியதன்மேலும் இப்பொழுது கண்ணனையுந் தூதனுப்பக் கருதினன் என்க. சாமம் முதலிய முதல் மூன்று உபாயங்களாற் பகைவரைவழிப் படுத்தி அடக்கமுடியாதபொழுதே இறுதியுபாயமான தண்டத்தை உபயோகிக்கவேண்டுமென்பது, அரசநீதி.

ஸஞ்ஜயன் என்ற வடமொழிப்பெயர்- (ஐம்புலன்களை) நன்றாகவென்றவனென்று காரணப்பொருள்படும். (இவன் கவல்கணனது குமாரனாதலால், காவல்கணி யென்றும் ஒருபெயர்பெறுவன்.) இவன் - திருதராஷ்டிரனுக்கு மிகவும்இஷ்டனான நண்பன்; இவன் அவனுக்குச் சிலசமயங்களில் தேர்செலுத்துதலுமுண்டு. ஞானம் - ஞானத்தைவிளக்குஞ்சொற்களுக்குக் காரியவாகுபெயர். அன்பொடு என்றதனால், சஞ்சயன் துஷ்டரான துரியோதனாதியரிடத்திலன்றிச் சாதுக்களான பாண்டவரிடத்து மெய்யன்புடையானென விளங்கும்.அன்பொடு என்பதில்,உடனிகழ்ச்சிப்பொருளுக்கு உரிய 'ஒடு' என்னும் மூன்றனுருபு - அடைமொழிப்பொருளது; அன்புடைய

ஞய் என்றபடி. இனிது - இம்மைமறுமைகட்கு இனிமையைத்தருவனவாக என்றவாறு: அகன்றதற்பின், குருநாடன், நோக்கி, எண்ணி, இயம்புவான் என அந்வயங் காண்க. சாமம் - இன்சொற்சொல்லல். பேதம் - மென்மையாலும் வன்மையாலும் பகைவர்மனத்தை வேறுபடுத்தல். தானம் - பகைவர்மனமகிழும்படி கொடுத்தல். தண்டம் - பகைவரைப் போர்செய்து அழித்தேவிடுதல். ஸாமபேததாநதண்டம் என்ற உம்மைத்தொகை - வடநூல் முடிபு; அஃறிணை உம்மைத்தொகைக்குப் பன்மையீற்றாலே முடியவேண்டுமென்கிற நியதி இல்லாமையால், சாமபேததானதண்டங்களெனப்படவில்லை.

தூய்மையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் இடைமெய்யுங்கெட்டுத் தூ என நின்றது. சுனை - ஊற்றுள்ள மலையின்நீர்நிலை. தேன் இறைக்கும் எனப் பதம்பிரித்து, அழகிய குளிர்ந்த மலைகளிலே தினைப்புனத்துக்குச் சுனைகளெல்லாவற்றினின்றும் மிக்க தேனை நீராக இறைக்கப்பெற்ற என்றும் உரைக்கலாம். தேனிறைக்கும நாடு - பெயரெச்சம் இடப்பெயர்கொண்டது. ("இருபுனலும் வாய்ந்தமலையும் வருபுனலும், வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு" என்றபடி) மழைபெய்யாமல் வறந்தகாலத்திலுங் குறைவின்றி நீர்வளத்தைக் கொடுக்குஞ் சிறப்புடையதும் அழித்தற்கு அரிய அரணுகவுள்ளதும் ஆகிய மலையின் அமைதி அந்நாட்டிற்கு உண்டென்பதை விளக்கினர். நாட்டிற்கு அழகாவது - அளவிறந்த பொருளுடைமையாற் பிறநாட்டவராலும் விரும்பப்படுதல். இனி, எழில் - நிலவளம் நீர்வளம் முதலிய வளங்களுமாம். குருநாடு-சந்திரகுலத்துக் குருவென்னும் அரசனாற் சீர்திருத்தியாளப்பட்ட நாடு. பதின்மூன்றுவருஷகாலமாக நாட்டையிழந்துள்ள தருமனை இங்கே 'குருநாடன்' என்றது, முன்னே அரசாண்ட பாண்டுவின் முதற்குமாரனும் துரியோதனனுதியரினும் பிராயத்தில் மூத்தவனும் அவர்களை அழித்தற்குஏற்ற ஆற்றலுடையவனு மாகிய இந்தயுதிஷ்டிரனே அந்நாட்டிற்கு உரியவனென்ற தகுதிபற்றியும், முன்பு அரசாண்டதுபற்றியும், இனி விரைவில் ஆள்வதுபற்றியும் என்க. 'சுனைகள்தோறும் ஏனலந்தண்கிரிப் பெருந்தேனிறைக்கு மெழிற் குருநாடு' என நாட்டின் சிறப்புக் கூறவே, அத்தன்மையதான நாட்டை விட்டுக் காட்டுக்குச் செல்ல எவர்க்கும் மனமுண்டாகா தென்பது குறிப்பிக்கப்பட்டது. தருமமுறைமை - தருமசாஸ்திரமுமாம்; முறைமை - காரியவாகுபெயர். (உ)

[கண்ணனைநோக்கித் தருமன் கூறுதல்.]

௩. செஞ்சொன்முனிசஞ்சயனுக்கியாமுரைத்தகருமமு முன்
சென்றகாலை, யஞ்சொன்முனிபுரோகிதனுக்கவனிசைத்தகருமமுநீ
யறிதியன்றே, நஞ்சுதனைமிகவருந்திநன்மருந்துமந்திரமும்விரைந்து
நாடா, தெஞ்சினர்தங்களைப்போலவிருக்குமதோயார்மனத்துமிருக்
குஞ்சோதீ.

(இ - ள்.) யார் மனத்தும் இருக்கும் சோதீ - (நற்குணநற்செயல்களின் சிறப்பினாலும் புகழினாலும்) யாவர்மனதிலும் வீற்றிருக்கின்ற பேரொளியுடையவனே!— செம் சொல் முனி சஞ்சயனுக்கு - நல்வார்த்தைகளை உபதேசித்த சஞ்சயமுனிவனுக்கு, யாம் உரைத்த கருமமும் - நாம் சொன்ன செய்தியையும், அம் சொல் முனி புரோகிதனுக்கு - அழகிய சொற்களைக் கூறும் புரோகிதனான உலூகமுனிவனுக்கு, முன் சென்ற காலை - முன்னே (நமக்காகத்) தூதுசென்றபொழுதில், அவன் இசைத்த கருமமும் - அத் துரியோதனன் சொன்ன செய்தியையும், (எல்லாவற்றையும்), நீ அறிதியன்றே - நீ அறிவாயன்றோ? நஞ்சுதனை மிக அருந்தி - விஷத்தை மிகுதியாக உண்டு, நல் மருந்தும் மந்திரமும் விரைந்து நாடாது - (அவ்விஷத்தை

யொழிக்கத்தக்க)சிறந்த மருந்துகளையும் சிறந்த மந்திரத்தையும் விரைவாக [உயிர்நீங்குவதற்குள்ளே] தேடாமல், எஞ்சினர்தங்களை போல-உயிரோடுங் குபவரைப்போல, இருக்குமஃதூஉ-(நாம் யாதொருமுயற்சியுஞ் செய்யாது) இருப்பது தகுதியோ?(எ-று.)—இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்.

"இன்று பூசைபோல் இருந்துழியுரைக்கும் ஈது இகலதன்று இருவர்க்கும், துன்றுபூசலிற் காணலாம் ஆண்மையும் தோள்வலிமையும்" என்றும், "எமதே பார், தங்கள்கானகம் தமது" என்றுந் துரியோதனனும், "என்னறத்தினில்நின்று தெவ்வரை யிருவிசும்பினி லேற்றினல், பின்னறத்தினில் விளைவுகூரும்" என்று யானும், "பாரமான சுயோதனனுதியரென்னும் நூறு பசுப் படுத்து" என்று வீமனும், "இவர்களிப்பூமியாளுதல் அவர்களுக்கு அமருலகமேறுதல் புரிதவம்" என்று நீயுங் கூறியதெல்லாம் உனக்குத் தெரியும்: இங்ஙனமிருக்க, இராச்சியத்தைப் பெறுதற்பொருட்டுத் தக்க உபாயத்தைச் செய்யாமலிருப்பது தகுதியன்று; அபாயத்திற்கே காரணமாம் என்று தருமன் கண்ணனைநோக்கிக் கூறினன் என்க. விரைவில் அதற்கு வேண்டிய மந்திராலோசனை செய்து முடிவுதுணியவேண்டுமென்பது கருத்து. இக்கவிமுதற் பலசெய்யுள்களில் அவ்வாலோசனையே கூறப்படுகிறது.

யாம்-இங்கு முன்னிலையையும் படர்க்கையையும் உளப்படுத்திய தன்மைப்பன்மை; நானும் நீயும் வீமனும் என்க. செஞ்சொல் - இதமானசொல். முனிசஞ்சயன், முனிபுரோகிதன்-முன்பின்னாகத் தொக்குவந்த இருபெயரொட்டுப்பண்புத்தொகை; இதில், பொதுப்பெயர் முன்னும், சிறப்புப் பெயர் பின்னும் நின்றவாறு காண்க. சஞ்சயனுக்கு+யாம்=சஞ்சயனுக்கியாம்: குற்றியலிகரம்; [நன் - உயிர் - ௧௨, எழுத்து - ௯௮.] காலம் - காலை என ஈறு திரிந்தது. நூதலக்ஷணத்தின்படி சமயோசிதமாக ஆராய்ந்து ஒழுங்கானசொற்களை உரைக்கத்தக்கவனென்பார், 'அஞ்சொல்முனிபுரோகிதன்' என்றார். அறிதி என்ற முன்னிலையொருமைத் தெரிநிலைவினைமுற்றில்,—இ-விகுதி, த்-எழுத்துப்பேறு. அன்றே - தேற்றம். பின்னிரண்டடியிற்கூறிய உவமை - அபாயத்திற்குக்காரணமான பகையை மிகமூட்டி அதனைஒழித்தற்கு எற்ற உபாயங்களைத் தேடாதிருத்தலை விளக்கும். நல் மருந்து - உயிர்தரும் மருந்து. மந்திரம் - விஷமந்திரம். ஓ-எதிர்மறை. ஜ்யோதிஸ் என்ற வடசொல் சோதியென விகாரப்பட்டது சோதீ - ஈறுநீண்ட விளி. 'யார்மனத்துமிருக்குஞ்சோதீ' என்றது, பேதையரோடு ஞானியரோடு வாசியற அனைவரும் அறிந்து மனங்கொள்ளத்தக்க திவ்வியமகிமையையுடையவன் கண்ணபிரானென்பதைக் காட்டும்; மற்றும் இத்தொடர்-யாவரதுமனத்திலும் அந்தர்யாமியாய் எழுந்தருளியிருக்கின்ற ஒளிவடிவமானவனென்ற பொருளையும் பெறும். எல்லார்கருத்தையும் நீ நன்குஉணர்ந்தவனாதலால் உனக்குத்தெரியாதது ஒன்றுமில்லை யென்றற்கு, 'யார்மனத்து மிருக்குஞ் சோதீ' எனவிளித்ததுமாம். (௩)

[தருமனையும் அவன்தம்பியரையும் நோக்கிக் கண்ணன்
ஒன்றுசொல்லத்தொடங்குதல்.]

௪. அருஞ்சமரம்புரியும்வகையவருரைத்தாராறனு மறமொன்றின்றிப், பெருஞ்சமரம்விளைக்குமதுகடனன்றென்றருள்வெள்ளம் பெருகக்கூறும், பொருஞ்சமரநெடுமுரசப்பூங்கொடியோன்றனை நோக்கிப்புயப்போர்வாணனிருஞ்சமரந்தொலைத்தபிரானிளைஞரையுமுடனிருத்தியியம்புவானே.

(இ-ள்.) அருஞ் சமரம் புரியும் வகை - அருமையான போரைச் செய்யும்படி, அவர் உரைத்தார் ஆனலும்-அத்துரியோதனுதியர்கள் கூறினாராயினும், அறம் ஒன்று இன்றி - சிறிதும் தருமமில்லாமல், பெருஞ் சமரம்

விளைக்குமது - (பலர்க்குஅழிவுண்டாகப்)பெரியபோரைச் செய்வது, கடன் அன்று - நீதியன்று, என்று—, அருள் வெள்ளம் பெருக கூறும் - கருணைப் பெருக்கு மிகச்சொல்லுகிற, பொரும் சமரம் நெடு முரசம் பூ கொடியோன் தனை நோக்கி - மோதுகின்ற போருக்கு உரிய பெரியபேரிகையின் வடிவத்தையெழுதிய அழகியகொடியையுடையவனான யுதிட்டிரனைப் பார்த்து,— புயம் போர் வாணன் இருஞ் சமரம் தொலைத்த பிரான்-(ஆயிரங்)கைகளாலும் போர்செய்யவல்ல பாணாசுரனது பெரியபோரை ஒழித்திட்ட கண்ணபிரான்,—இளைஞரையும் உடன் இருத்தி (அத்தருமனது) தம்பியர்நால்வரையுங் கூடஇருக்கசெய்து, இயம்புவான் - (சிலவார்த்தை) சொல்பவனானான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

தருமபுத்திரன் மகாசாதுவும் கருணைக்கடலு மாதலால் பலபோக்கு அழிவுஉண்டாகுமாறு போர்செய்து அரசுபெற விரும்புதலின்றிச் சமாதானத்தையே முகஙியமாகக்கொண்டு பேசினனென்க. மேலும் இதுகாண்க.

'அறமொன்றின்றி' என்றதை மத்திமதீபமாய் முன்னுங்கூட்டி, அறமொன்றின்றி அவர்அருஞ்சமரம்புரியும்வகை உரைத்தாரானாலும் என்க. பிறவுயிரைக்கொல்லுதல் எல்லாத்தருமங்களுள்ளுஞ் சிறந்த கருணையின் ஒழிவேயாதலால், 'அறமொன்றின்றி' எனப்பட்டது. பூ + கொடி = பூங்கொடி: பூப்பெயர்முன் இனமென்மை தோன்றிற்று; [நன்-உயிர்-௫௦.] பூங்கொடி-அழகையுடைய கொடி யென்றால், இரண்டாம்வேற்றுமை யுருபும் பயனுந் தொக்கதொகையும்; அழகாகிய கொடி யென்றால், பண்புத்தொகையுமாம். தனதுவெற்றிக்குஅறிகுறியாகவும், மங்கலகரமாகவும் தருமன் முரசத்தைக் கொடியிற்கொண்டனன். ஸமரம், முரஜம், புஜம், பாணன்-வடசொற்கள்.

வாணன்சமரத்தைத்தொலைத்தவரலாறு:—பலிசக்கரவர்த்தியின் சந்ததியிற்பிறந்தவனான பாணாசுரனுடைய பெண்ணாகிய உஷையெனபவள், ஒருநாள் ஒருபுருஷனோடுதான்சேர்ந்ததாகக் கனாக்கண்டு, அவனிடத்தில் மிக்க ஆசைபற்றியவளாய்த் தன்உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள்மூலமாக, அந்தப்புருஷன் கிருஷ்ணனுடைய பௌத்திரனும் பிரத்யும்நனது குமாரனு மாகிய அநிருத்த னென்று அறிந்துகொண்டு 'அவனைப்பெறுதற்கு உபாயஞ்செய்யவேண்டும்' என்று அத்தோழியை வேண்ட, அவள் தன்யோகவித்தைமகிமையினால் துவாரகைக்குச்சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனு அவனோடு இருக்க, இச்செய்தியைக் காவலாளராலறிந்த அந்தப்பாணன் அநிருத்தனை நாகாஸ்திரத்தினால் கட்டிப்போட்டிருக்க, துவாரகையிலே அநிருத்தனைக்காணாமல் யாதவர்களெல்லாரும் கலங்கியிருந்தபோது நாரதமகாமுனிவனால்நடந்தவரலாறுசொல்லப்பெற்ற ஸ்ரீகிருஷ்ணபகவான், தனக்குவாகனமான கருடனை நினைத்தருளி, உடனேவந்துநின்ற அக்கருடாழ்வானது தோளின்மேலேறிக்கொண்டு, பலராமன்முதலானோரோடுகூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளிப் பெரும்போர்செய்து சுதரிசனமென்கிற தனதுசக்கரத்தைப்பிரயோகித்துப் பாணனது ஆயிரந்தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையுஞ் சிதைப்பதாக இருக்கையில், சிவபிரான் வேண்டியபடி அவ்வாணனை நான்குகைகளோடும் உயிரோடும் விட்டருளின னென்பதாம்.

இடப்பக்கத்துக்கைஐந்நூற்றிலும் ஐந்நூறுவிற்பிடித்து வலப்பக்கத்துக் கைஐந்நூற்றினாலும் அம்புகள்தொடுத்துப் போர்புரிபவனாகலால், 'புயப்போர் வாணன்' என்றார். (பிரான் என்பதன் பெண்பால்-பிராட்டி.) இளைஞரென்ற சொல்லில், பாண்டவர்மனைவியான திரௌபதியையும், சாத்தகியையும் அடக்கவேண்டும்; அவர்கள் உடனிருந்தது, 41, 48 - ஆங் கவிகளில்

விளங்கும். இளைஞர்என்பதில் பகுதியாகிய இளமையென்பது, ஈறுபோய் இடை அகரம்ஐயாயிற்று; ஞ்-பெயரிடைநிலை; உம் - இறந்ததுதழுவியஎச்சம்.

[இதுவும் அது.]

ரு. செய்வராலினமுகளுந்திருநாடுபெறநினைவோசென்றுமீள
ப், பைவராயருங்கானிற்பயின்றுதிரிதரநினைவோ பகைத்தபோரி,
லுய்வராரெனவிரைவினுருத்தெழுந்துபொரநினைவோவுண்மையாக,
வைவராமவனிபர்க்குநினைவேதென்றருள்புரிந்தானமரர்கோமான்.

(இ - ள்) 'செய்-கழனிகளிலே. வரால் இனம் - வரால்மீன்களின் கூட்டம். உகளும் - துள்ளப்பெற்ற. திரு நாடு - அழகிய குருநாட்டை, பெற - (சமாதானத்தாற்) பெற்றுக்கொள்ள, நினைவோ - எண்ணமோ? மீள சென்று - மறுபடியும் போய், பைவர்ஆய் - துன்பமனுபவிப்பவராய், அருங் கானில் - (வசித்தற்கு) அருமையான காட்டிலே, பயின்று திரிதர - பொருந்திச சஞ்சரிக்க, நினைவோ - எண்ணமோ? பகைத்த போரில்-(ஒருவரோடொருவர்) பகைத்துச்செய்கிற யுத்தத்தில், உய்வர் ஆர் என - 'நமக்கு எதிரிற்) பிழைப்பவர் யார்?' என்றுகருதி, விரைவின் - விரைவாக, உருத்து எழுந்து - கோபங்கொண்டு புறப்பட்டு. பொர - போர்செய்தற்கு, நினைவோ - எண்ணமோ? ஐவர் ஆம அவனிபர்க்கும் - ஐந்து அரசர்களுக்கும், உண்மை ஆக நினைவு எது-மெய்ம்மையாக எண்ணம் யாது?' என்று— அமரர் கோமான் - தேவர்கட்குத் தலைவனான கண்ணபிரான், அருள்புரிந்தான் - கருணையோடு வினவியருளினன்; (எ - று.)

'போரின்றிச் சமாதானத்திலே இராச்சியங்கிடைப்பதானால்மாத்திரம் அதனைப்பெற்றுக்கொண்டுவாழப் பிரியமா? அல்லது, முன்பு பன்னிரண்டு வருஷம் வாசஞ்செய்து பழகியுள்ள கொடியவனத்திற்கே மீளவுஞ் சென்று ஆயுளுள்ளவளவும் அங்குச் செல்வமின்றி வறுமைத்துன்பத்துடனேவசிக்கப் பிரியமா? அன்றி, மானத்தையும் வீரத்தையுமே முக்கியமாகக் கொண்டு துணிவாகச் சென்று துரியோதனாதியரையெதிர்த்துப்போர்செய்துவென்று இராச்சியத்தைப் பெறப் பிரியமா? உங்கட்குத் தனித்தனியுள்ள உத்தேசத்தைச் சொல்லுங்கள்' என்று கண்ணபிரான் பஞ்சபாண்டவரை நோக்கி வினவியருளினன் என்பதாம். "போர்வீரர்தம்மோடும் போந்தரசு கொள்வீரோ, பார்வீரரென்று பாசியக்கால் - ஓர்வீர்நீர், உய்வீராய்முன்னடைந்த வெங்கானம் போவீரோ, ஐவீருஞ் சொல்வீ ரமர்ந்து" என்றார் பாரதவெண்பாவிலும். மூன்றும்வாக்கியத்தில் 'பொர' என வருதலால், முதல்வாக்கியத்தில் 'பெற' என்றது - சமாதானத்தா லென்றதாயிற்று. கழனியை 'செய்' என்பது - பன்றிநாட்டார் வழங்குந் திசைச்சொல்; செய் - கழனியாதலை 'நன்செய்', 'புன்செய்' என்றவிடங்களிலுங் காண்க. வரால் என்றது 'வராலினம்' என்றதனால், வாளை கயல் மலங்கு முதலிய மற்றும்பல சாதிகள் கொள்ளப்படும். 'செய்வராலினமுகளும்' என்றதனால், நிலவளத்துக்குக் காரணமான நீர்வளத்தின்மிகுதி கூறியவாறு. திருநாடு - செல்வம் நிரம்பிய நாடுமாம்.

ஓகாரம் மூன்றும் - ஐயவினா. பைவு - பை என்னும் பகுதியடியாப் பிறந்த தொழிற்பெயர்; வருந்துதலென்று பொருள்; (இது - தல் விகுதிபெற்று, பைதல் எனவும் நிற்கும்.) அதனையுடையவர்-பைவர். 'உய்வரார்' என்றது, எவரும் நமக்குமுன்எதிர்ப்பவர் பிழையாரென்ற துணிவை விளக்கும். கான்-கானந மென்ற வடசொல்லின் விகாரம். திரிதர, தா - துணைவினை. போர்-பொருவென்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். ஆர்-யார்என்பதன் மரூஉ. ஐவராம் அவனிபர் - பஞ்சபாண்டவர்க்குத் தொகைக்குறிப்பு; இது - இங்கே, முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி; [நன் - பொது - ௨௯.]

அரசர்களான உங்களைத்துபேர்க்கும் என்க. அவநியர் என்ற வடசொல்-பூமி யைக்காப்பவ ரென்று பொருள்படும்; அவநி - பூமி. அமரர் - (அமிருதமுண் டதனால்) மரணமில்லாதவர்; வடசொல். அமரர்கோமான்-தேவாதிதேவன். கோமான், மான் - பெயர்விகுதி. (௮)

[சமாதானத்திற் காரியத்தை முடிக்கவேண்டுமென்று தருமன் கண்ணனைநோக்கிக் கூறுதல்.]

௯ வயிரமெனுங்கடுநெருப்பைமிகமூட்டிவளர்க்கினுயர்வரைக் காடென்னச், செயிரமரில்வெகுளிபொரச்சேரவிருதிறத்தேமுஞ் சென்றுமாள்வேங், கயிரவமுந்தாமரையுங்கமழ்பழனக்குருநாட்டிற் கலந்துவாழ, வுயிரனையாய்சந்துபடவுரைத்தருளென்றா னறத்தி னுருவம்போல்வான்.

(இ - ள்.) 'உயிர் அனையாய் - (எங்கட்கு) உயிரை ஒத்தவனே!— வயிரம் எனும் கடுநெருப்பை - பகைமையாகிய கொடியதீயை, மிக மூட்டி வளர்க்கின் - மிகுதியாக மூளச்செய்து விருத்திபண்ணினால், உயர் வரை காடு என்ன - உயர வளர்ந்த மூங்கிற்காடு (தானே அழிதல்)போல, செயிர் அமரில் - உக்கிரமான யுத்தத்தில், வெகுளி பொர - கோபத்தோடு போர் செய்தலால், சேர - ஒருசேர, இரு திறத்தேமும் - (துரியோதனாதியரும் நாங்களு மாகிய) இரண்டு பக்கத்தாரும், சென்று மாள்வேம் - போய் அழி வோம்; (அங்ஙனம் அழியாமல்),—கயிரவமும் தாமரையும் கமழ் பழனம் குருநாட்டில்-ஆம்பல்மலர்களும் தாமரைமலர்களும் வாசனை வீசுகிற கழனி களையுடைய குருநாட்டிலே, கலந்து வாழ - (நாங்கள் ஒருவரோடொருவர் பகையின்றிக்) கூடிவாழும்படி, சந்து பட - சமாதானமுண்டாக, உரைத் தருள் - (நீ அவர்கட்குத் தூது) சொல்லியருள்வாய்,' என்றான் - என்று (கண்ணனைநோக்கிச்) சொன்னான்: (யாவனெனில்,)—அறத்தின் உருவம் போல்வான்-தருமத்தினது வடிவத்தையொத்தவனான யுதிட்டிரன்;(எ-று.)

'வயிரமெனுங்கடுநெருப்பைமிகமூட்டி வளர்க்கின்' என்றவிடத்து உரு வகமும், 'வரைக்காடென்னமாள்வேம்' என்றவிடத்து உவமையும் உள்ளன. மூங்கிற்கூட்டம்-ஒன்றோடொன்றுஉராய்ந்து தீப்பற்றி எல்லாம் அழிதற்கு உவமை. வீரரின்தன்மை - வைரம்: வடமொழித் தத்திதாந்தநாமம். அது-வயிரம்என முதற்போலிபெற்றது;கயிரவம்என்பதும் இவ்வாறே: [நன்-எழு த்து-௬அ.]சேர்ந்தாரைக்கொல்லுதலால், வைரம் நெருப்பாக உருவகப்படுத் தப்பட்டது; ("சினமென்னுஞ்சேர்ந்தாரைக்கொல்லி யினமென்னும், ஏமப் புணையைச்சுடும்" என்றார் திருவள்ளுவரும்.) மூட்டி, மூள் என்பதன் பிற வினையான மூட்டு-பகுதி. வரையென்னும் கணுவின்பெயர்-அதனையுடைய மூங்கிலுக்குச் சினையாகுபெயர். இருதிறத்தேம் - படர்க்கையையுளப்படுத் திய தன்மைப்பன்மை. பகலிலே சூரியனைக்கண்டு மலரத்தக்க தாமரையும் இரவிலேசந்திரனைக்கண்டுமலரத்தக்க ஆம்பலும் ஒருங்குகூடியுள்ள கழனி களை யுடையதென நாட்டை வருணித்ததனால், ஒன்றக்கொன்று மாறுபா டுள்ள அசேதநங்களும் ஒற்றுமைப்பட்டு வாழுமிடத்து, பகுத்தறிவுடைய மனிதருள்ளுஞ் சிறந்தஅரசராகிய நாங்கள் கூடிவாழாதிருப்பது தகுதியோ? எனக் குறிப்பித்தபடி.

கைரவம் - வடசொல். தாமரை - தாமரஸம் என்னும் வடமொழியின் திரிபு. பாண்டவர்க்குக் கண்ணன் உயிரோடொத்த நண்ப னாகுதலாலும், உடம்பினுள் உயிர்போல உயிர்க்குள் உயிராய்ப் பரமாத்மா ஜீவாத்மாவினி டத்து அந்தரியாமியாய்த் தங்குதலாலும், 'உயிரனையாய்' என்றது ஏற்கும். சந்து - ஸந்தி யென்னும் வடசொல்லின் திரிபு. உருவம் - ரூப மென்னும்

வடசொல்லின் விகாரம். அறத்தினுருவம்போல்வான் - நூல்களிற் கூறப்பட்ட தருமங்களெல்லாம் நிறைந்தவனென்றபடி. (௬)

[சமாதானத்திற்குவராத அவர்களை அழிப்பது தகுதியென்று கண்ணன் கூறுதல்.]

௭. அரவுயர்த்தோனுடன்மறுசூதாடிநீர்வென்றவந்நாளவன்றான்சொன்ன, விரதமொழிதவிராமல்வெங்கானம்போய்மீண்டீர்வெய்யோனுங்கள், குருநிலத்திற்பாதியினிக்கொடாதிருந்தாலாங்கவனைக்கொன்றுபோரில், இருநிலத்தையாளவினித்துணிவதேகடனென்றானெம்பிரானே.

(இ - ள்.) 'அரவு உயர்த்தோனுடன் - பாம்புக்கொடியை உயர எடுத்தவனான துரியோதனனுடனே, மறு சூது ஆடி - இரண்டாம் முறை சூதாட்டமாடி, நீர் வென்ற அ நாள் - (அவ்வாட்டத்தில்) நீங்கள் சயித்த அக்காலத்தில், அவன் தான் சொன்ன - அத்துரியோதனன் கூறிய, விரதம் மொழி - கட்டளையாகிய வார்த்தை, தவிராமல் - தப்பாமல், வெம் கானம் போய் மீண்டீர் - கொடியவனத்திற்கு (ப்பலவருஷகாலஞ்) சென்று திரும்பி வந்துவிட்டீர்கள்; இனி - இப்பொழுது, வெய்யோன் - கொடுமையுடையவனான துரியோதனன், உங்கள் குரு நிலத்தில் பாதி - குருநாட்டில் உங்களுக்குஉரிய அமைப்பங்கை, கொடாது இருந்தால் - கொடாமலிருப்பானானால், ஆங்கு - அவ்விடத்தில், அவனை - அத்துரியோதனனை, போரில் - யுத்தத்தில், கொன்று—, இரு நிலத்தை - இருதிறத்தாருடைய இராச்சியத்தையும் [பூமிமுழுவதையும்], ஆள - அரசாளும்படி, துணிவதே - நிச்சயிப்பதே, இனி கடன் - இனிமேற் செய்தற்குஉரிய கடமையாம்,' என்றான் - என்று கூறினான்: (யாவனெனில்),—எம் பிரான் - நமக்கெல்லாந் தலைவனாகிய கண்ணபிரான்; (எ - று.)

'மறுசூதாடிவென்ற' என்றது, முதலில்ஆடிய சூதாட்டங்களில் தோற்றுத் தாங்கள்அனைவரும் துரியோதனனுக்குஅடிமைப்பட்ட தன்மை நீங்குமாறு திரௌபதியின் வார்த்தைப்படி தருமபுத்திரன் மீண்டும் ஓராட்டமாடி அதில் வென்று அடிமையொழிந்ததை. 'அந்நாள் அவன் தான் சொன்ன விரதமொழி' என்றது, அதற்குமுன் அவன் "தந்தைதனருளாற்பெற்றீ ருரிமையுந் தம்பிமாரும், பைந்தொடிதானும் நீயும் பதிபெயர்ந்து உயர்ந்த வேயின், வெந்தழலனையகானின் வெளிப்படாதுறைமின் இனநேற, இந்த மாதரணிகைவிட்டேகுமி னெழுமி னென்றான்" என்றதை; இதன் கருத்து, கீழ் "அரிவையோடகன்று நீவிரைவிரும் அடவியெய்திச், சுரர்தினமீராறு அங்கண் தன்னுதிர் மன்னுநாட்டின், ஒருவரும் அறியாவண்ணம் ஒரு தினம் உறைதிர் உங்கள், பெருவிறலரசும வாழ்வும் பின்னுறப்பெறுதிர்" என்று, பன்னிரண்டுவருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஜ்ஞாதவாசமுஞ் செய்துவந்தால் நாடுபெறுவதாக விவரிக்கப்பட்டது. 'வெங்கானம் போய் மீண்டீர்' என்றதில், அஜ்ஞாதவாசமும் அடக்கப்பட்டது 'விரதமாவது - இன்னஅறஞ் செய்வேனென்றும், இன்னபாவம் ஒழிவேனென்றும் தம் ஆற்றலுக்குஏற்ப வரைந்துகொள்வது' ஆதலின், இங்கே பன்னிரண்டுவருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஜ்ஞாதவாசமுஞ் செய்துதீர்வோமென்று தருமன் உறுதிப்பாடு செய்துகொள்ளுதற்குக் காரணமாகத் துரியோதனன் சொன்னவார்த்தை, 'விரதமொழி' எனப்பட்டது. வ்ரதம் - வடசொல்: அது திரிந்தது: நியம மென்றபடி. இனி, மாஸம் - மாதம், ச்வாஸம் - சுவாதம் என்பனபோல, விரஸமென்னும் வடமொழி விரதமெனத் திரிந்ததாகக் கொண்டு, இனிமையில்லாத பேச்சு எனவுமாம்.

தனது கொடுமைக்கு அறிகுறியாகத் துரியோதனன் பாம்பைத் தனது கொடியிற் கொண்டனன்; அது - அவனது நன்றியறிவின்மை, எப்பொழுதும்வக்கிரகதியிற்செல்லுந்தன்மை, நாவிரண்டுடைமை என்பவற்றிற்கும் அறிகுறியாகின்றது. 'அரவுயர்த்தோன்' என்றவிடத்தில் அரா என்ற குறிய தன்கீழ் ஆக குறுகிறது. பாதி-பகுதிஎன்பதன் மரூஉ. இரு-இரண்டு என்பதன் விகாரம். இருமை யென்னும் பண்புப்பெயரின் விகாரமாகக்கொண்டு, பெரியபூமியை யென்றுமாம. கீழ்த் தருமன் 'அறமொன்றின்றிப் பெருஞ் சமரம் விளைக்குமது கடனன்று' என்றதை, கண்ணன் 'ஆகையவனைக்கொன்று போரில் இருநிலத்தையாள வினித்துணிவதே கடன்' என மறுத்துக் கூறினன். கொலை பொதுப்படக் கொடியதாயினும், சத்தியத்திற்குக் கட்டுப்படாத அவனைக் கொல்வது பாவமாகாது, தருமத்தின்பாற்படுமெனற படி. 'எம்பிரான' என்பதில்—எம் என்ற பன்மை - எல்லாவுயிர்களையும உளப்படுத்தியது. 'இனி' என்ற இடைசசொல் - இரண்டாமடியில் நிகழ்காலத்தையும். மூன்றாமடியில் எதிர்காலத்தையுங் காட்டிறறு. துணிவதே. ஏ - பிரிநிலை, ஈற்றேகாரம் - அசை. (எ)

['பலரைக்கொல்லுமாறு போர்செய்வது தகுதியன்று' என்று தருமன் கூறுதல்.]

அ. குரவரையுங்கிளைஞரையுங்குலத்துரியதுணைவரையுங்கொன்றுபோர்வென், றரவநெடுங்கடலாடையவனியெலாந்தனியாளுமரசுதன்னிற், கரவுறையுமனத்தாதைமுனிக்குரைத்தமொழிப்படியே கானந்தோறு, மிரவுபகற்பலமூலசாகநுகர்ந்துயிர்வாழ்தலினிது நன்றே.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) குரவரையும் - பெரியோர்களையும், கிளைஞரையும் - உறவினரையும், குலத்து உரிய துணைவரையும் - ஒருகுலத்திலே பிறந்த(அன்பு செய்தற்கு) உரிய தம்பிமார்களையும், போர் - யுத்தத்திலே, கொன்று--, வென்று - ஜயித்து, அரவம் நெடுங் கடல் ஆடை அவனி எலாம் - ஆரவாரத்தையுடைய பெரியகடலை ஆடையாகவுடைய பூமிமுழுவதையும், தனி ஆளும்-(மற்றொருவருமின்றித்) தனியே அரசாளுகிற, அரசுதன்னின் - அரசாட்சியைக்காட்டிலும்,—கரவு உறையும் மனம் தாதை - வஞ்சனைபொருந்திய மனத்தையுடைய பெரியதந்தையான திருதராட்டிரன், முனிக்கு உரைத்த- சஞ்சயமுனிவனிடத்துச் சொல்லியனுப்பிய, மொழி படியே - சொல்லின் படியே, கானம் தோறும் - காடுகள்தோறும் (சென்று), இரவு பகல் - இராத்திரியிலும் பகலிலும், பலம் மூலம் சாகம் நுகர்ந்து - பழங்களையும் கிழங்குகளையும் இலைகளையும் உண்டு, உயிர் வாழ்தல் - பிழைத்திருத்தல், இனிது நன்றே - மிகவும் நல்லதேயாம்; (எ - று.)

அரசுதன்னின், உயிர்வாழ்தல், இனிதுநன்று என இயையும்.

குரவர் என்றது-(பெரியபாட்டனாகிய) பீஷ்மர்,(முதலாசிரியராகிய) கிருபர், (இரண்டாமாசிரியராகிய) துரோணர், (அவர் தமகனான) அசுவத்தாமா, (சிற்றப்பனாகிய) விதுரன் முதலியோரை. குரவர் - குரு என்பதன் பன்மையான குரவः என்னும் வடசொல்லின் திரிபு. கிளைஞர் என்றது - சகுனி முதலியோரை. கிளைஞர் என்ற சொல்லில், கண்பரும் அடங்குவர். கிளைஞர் - மரத்துக்குக் கிளைபோல ஒருவனுக்கு அங்கமாகுபவர் எனக் காரணப்பெயர்: இப்பகுபதத்தில், ஞ்-பெயரிடைநிலை. துணைவர்-துரியோதனாதியர்; இதில், வ் - பெயரிடைநிலை. அரவம் - ரவமென்னும் வடசொல், ரகரத்துக்கு அகரம் மொழிமுதலாக முன்வரப்பெற்றது; [நன்-பத-௨௧.] இனி, அரவமென்பதை - அரா என்னுந் தமிழ்மொழியின் விகாரமாகிய

அரவு என்பது அம்சாரியைபெற்றதெனக் கொண்டு, அரவம் - ஆதிசேஷனாற் சுமக்கப்பட்ட, அவனி-பூமி யென்னலுமாம். பூமியைச்சூழ்ந்த கடலை, பூமியாகியபெண் உடுக்கும் ஆடையாகக் கூறுதல், கவிமரபு; அவநி என்ற வடமொழிப்பெயர் - அரசர்களாற் பாதுகாக்கப்படுவதென்று காரணப்பொருள்பெறும்; அவநம் - காத்தல். எலாம்-எல்லாம்என்பதன்விகாரம். இங்கு, எலாம் என்ற பெயர் - பொருளின்பன்மைகுறியாமல் ஒருபொருளின்பலவிடங் குறித்தது; தனி ஆளுதல் - ஏகசக்ராதிபத்தியமுமாம்.

கரவு - (பொருள்களை) மறைத்தல்; தொழிற்பெயர்; கர - பகுதி. தாதை - தாத என்னும் வடசொல்லின் திரிபு. இரவு - இராஎன்பதன் விகாரம். இரவுபகல் - உம்மைத்தொகைமேல் வந்த ஏழாம்வேற்றுமைத்தொகை. பலமூலவ்ருாகம் என்ற உம்மைத்தொகை - வடநூல்முடிபு. இனி, பல என்பதைத் தமிழாகக்கொண்டு, அநேகமாகிய வேர்களையுந் தழைகளையும் என்னவுமாம். இனிது நன்று - ஒருபொருட்பன்மொழி; [நன் - பொது - சஎ.] இங்கே, மிகுதிகுறித்தது. இனி, இம்மைக்கு இனிது, மறுமைக்கு நன்று என்றதாகவுங் கருத்துக் கொள்ளலாம். "நன்று பெரிதாகும்" என்ற தொல்காப்பியத்தால், நன்று என்பது - பெரிதென்னும் பொருளுணர்த்துதலால்,நன்றுஇனிது எனஇயைத்து, மிகவும்இனியது என்றுமாம். மொழிப்படியே, ஏ - அசை. ஈற்றேகாரம் - தேற்றம். (அ)

['அது தகுதியன்று' என்று கண்ணன் கூறுதல்.]

கூ. கோதிலானிந்தமொழிகூறுதலுமாமாயன்கூறலுற்றான்,மோதமருக்கிளைத்துநீர்மொய்த்தபெருங்கானகத்தே முடுகிச்சென்றாற், பூதலத்தோரேசாரோ புகன்றபெருவஞ்சினமும்பொய்த்திடாதோ, நீதியோவெனவுரைத்தானங்கதற்குநிகழ்தருமனிகழ்த்தலுற்றான்.

(இ - ள்.) கோது இலான் - குற்றமில்லாதவனான தருமன், இந்த மொழி - இவ்வார்த்தையை, கூறுதலும் - சொன்னவளவிலே, மா மாயன் - மிக்கமாயையையுடையவனான கண்ணன், கூறல் உற்றான் - சொல்லத்தொடங்கினவனாய், —'நீர் - நீங்கள், மோது அமருக்கு இளைத்து - தாக்குதல்செய்யும் போருக்குப் பின்னிடைந்து, மொய்த்த பெருங் கான் அகத்தே - அடர்ந்தபெரியகாட்டினிடத்திலே, முடுகி சென்றால் - விரைந்து செல்வீர்களானால், பூதலத்தோர் ஏசாரோ - பூமியிலுள்ளவர் யாவரும் இகழமாட்டார்களோ? புகன்ற பெரு வஞ்சினமும் பொய்த்திடாதோ - (திரௌபதியைத் துகிலுரிந்தகாலத்தில் நீங்கள் சபையிற்) சொன்ன பெரியசபதமும் பொய்யாகிவிடாதோ? நீதியோ - (நீங்கள் அப்படி செய்வது) ராஜதருமமாகுமோ?' என - என்று, உரைத்தான் - கூறியருளினான்; ஆங்கு - அப்பொழுது, அதற்கு - அக்கண்ணன்வார்த்தைக்கு, (உத்தரத்தை), நிகழ் தருமன் - விளங்குகிற யுதிட்டிரன், நிகழ்த்தல் உற்றான் - கூறத்தொடங்கினான்; (எ - று.)— அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

'சமாதானத்தால் இராச்சியத்தைப் பெற்றாற் பெறுவது: இன்றாயின், போர்செய்து சுற்றத்தாரைக்கொன்று பெறுதலினும் வனத்திற்சென்றுவசித்தலே மேல்' எனத் தருமன்சொன்ன கருத்தில், துரியோதனன் சமாதானத்தில் இராச்சியங்கொடானாதலால், போர்செய்யாது வனம்புகுதலே பலிப்பது எனக் கருதி, கண்ணன் அது தகுதியன்றென நியாயங்காட்டி விளக்கினான்; அதனால், தருமபுத்திரன் சிறிதுகருத்துமாறி வேறுகூறுவன்.

துரியோதனன் சகுனியைக்கொண்டு சூதாடிவென்று பாண்டவரை அடிமைப்படுத்தியபின் திரௌபதியைத் துச்சாதனனைக்கொண்டு கூந்தல் பிடித்து இழுத்துவைத்து துகிலுரிந்தும், மடியின்மேல் உட்காரென்று சொல்

வியும் மங்கப்படுத்திய பொழுது, திரௌபதி 'அத்தொடை வழியாகத் துரி யோதனனுக்கு உயிர் நீங்குக' என்று சபித்தது, 'துரியோதனனுயிர் துற்று வரையும் தொன்று தொற்றிருக்கரைப்பொழுதே விரித்தகைத்தின் யான் எடுத்து முடிப்பேன்' என்று பிரதிஜ்ஞை செய்ய, அப்பொழுது 'துரியோத னுடிய அத்தனையும் நானே கொல்வேன்' என்றும், 'துச்சாதன னைக்கொன்று அவனுடம்பிலிரத்தத்தைக் குடிப்பதன்முன் கையினால் நீரெடுத்துக் குடிப்பதில்லை' என்றும், 'எனது கதாயுதத்தால் நீரையடித்து அக்குத்தெறிக்குந் துளிகளையே உண்டு உயிர்வாழ்வேன்' என்றும் வீம னும், 'இவ்வனம் துரியோதனன் துஷ்டகாரியஞ் செய்தற்குப் பெருந் துணையாய் நின்ற கர்ணனைப் போரிற் கொல்வேன்' என்று அருச்சுன னும், சகுனியின் தந்தையைத் தான் கொல்வதாக நகுலனும், சகுனியைக் கொல்வதாகச் சகதேவனும் சபதஞ்செய்ததைக் கீழ்ச் சூதுபோர்ச்சருக்கத் திற் காண்க. போரில்லாவிடின் இச்சபதமொன்றும் நிறைவேறாதாதலால், 'புகன்றபெருவஞ்சினமும் பொய்த்திடாதோ' எனப்பட்டது. கொடியபகை வரைக் கொல்லுதற்குக் கூசுதலும், இராசசியத்தைப்பெற முயலாமையும் சபதந்தவறுதலும் அரசர்க்குச் சிறிதுந்தருமமல்லவாதலால், 'நீதியோ' என் றான். லோகாபவாதத்திற்குப் பயப்படுவது எல்லாவற்றினும் முக்கியமாத லால், 'பூதலத்தோ ரேசாரோ' என அதனை முதலிற் கூறினன்.

கோது-மனமொழிமெய்களின் குற்றங்களாகிய தீயசிந்தை,தீயசொல், தீயசெயல் என்பன. மாயையையுடையவன், மாயன்; மாயையாவது - செய் தற்கரியனசெய்யுந் திறம்; பிரபஞ்சகாரணமான மூலப்பிரகிருதியுமாம். ஆச்சரியகரமான குணங்களுஞ் செயல்களுமென்னலுமாம். இனி, மாயை போலக் கருநிறமுடையா னென்றுங் கொள்வர். ஏசாரோ - தவறுமல் ஏசுவர்; இரண்டு எதிர்மறை - உடன்பாட்டோடு தேற்றமும் உணர்த்தின: பொய்த்திடாதோ என்பதிலும் இவ்வாறே; பொய்க்கவே பொய்க்கு மெ ன்க. மோது அமர், திகழ் தருமன் - வினைத்தொகைகள். அமர் - ஸமர மென்ற வடசொல்லின் விகாரம். பூதலம், நீதி - வடசொற்கள். திகழ்தல் - ஒளிசெய்தல். (௧)

[இதுவும், மேற்கவியும் - கண்ணனுக்குத் தருமன் தூதுபேசும்விதங் கூறுதல்.]

௬0. நீதூதுநடந்தருளியெமதுநினைவவர்க்குரைத்தானினைவின் வண்ணந்,தாதூதியளிமுரலுந்தண்பதியுந்தாயமுந்தான்றாரானாகின், மீதூதவனைக்குலமும்வலம்புரியுமிகமுழங்கவெய்யகாலன்,மாதூதர் மனங்களிக்கப்பொருதெனினும்பெறுவனிதுவசையுமன்றே.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நீ—, தூது நடந்தருளி - (எங்களுக்காகத் துரியோத னுடியரிடம்) அருட்டனுன் தூதுசென்று, எமது நினைவு அவர்க்கு உரைத் தால் - எங்களுடைய எண்ணத்தை அவர்கட்குச் சொன்னால், நினைவின் வண்ணம் - (நமது) எண்ணப்படி, தாது ஊதி அளி முரலும் தண் பதியும் - பூவிதழ்களை(வாயினால்)ஊதி வண்டுகள் ஒலித்தற்குஇடமான குளிர்ச்சியான நாட்டின்பாகத்தையும், தாயமும் - அப்பங்குக்கு உரிய செல்வ அதிகாரங் களையும்,(துரியோதனன்கொடுப்பான்);தான் தாரான்ஆகில்-அவன் (அப்படி நமக்குக்) கொடாமற்போவானானால், மீது - அதற்குமேல்,—ஊது அனைகுல மும் - ஊதப்படுகிற (சாதாரணமான) சங்குகளின் கூட்டங்களும், வலம் புரியும் - (சிறந்த) வலம்புரிச்சங்குகளும், மிக முழங்க - மிகுதியாக ஒலிசெய் யவும், வெய்ய காலன் மா தூதர் மனம் களிக்க - கொடிய யமனது பெரிய தூதர்கள் மனம் மிகமகிழவும், பொருது எனினும் - போர்செய்தாயினும்,

பெறுவன் - (இராச்சியத்தைப்) பெறுவேன்; இது - இங்ஙனம் மூன்றுவிதமான வழியை மூன்றும் அடைவித்தபின்பு பெரும்பகையும் அன்றே யுமாகாதே; (எ-று.)

இப்படிச்செய்வதில் குரவர்முதலியோரைக் கொன்றதென்று வரும் பழிப்பும் போருக்கு அஞ்சி வணங்கினான் என்ற பழிப்பும் ஆகிய இரண்டுஞ் சேரும் இடமில்லை யென்ற கருத்தால், 'வசையுமன்று' என்றான். முதல் மூன்றுபாயங்களில் வழிப்படாத எதிரிகளை முடிவில் தண்டோபாயத்தால் தொலைத்தல் இராசநீதியாதலால் அது பழிபாவங்கட்கு இடமாகாது என்பது கருத்து; பொறுமையில்லாமல் உறவினர்முதலானவர்களை அழிக்கத் தொடங்கிவிட்டானென்று பின்பு ஒருவர் சொல்லுதற்கு இடமில்லாதபடி பகைவர்கொள்கையை முழுதும் தெளிவாக முன்னமே அறிந்திடுதல் அவசியம்; ஆதலால், முன் ஒருமுறை புரோகிதன் தூதுசென்றதேயன்றி மீண்டும் ஒருமுறை எல்லாவுபாயங்களிலும்வல்லவனான நீயே நேரிற்சென்று தந்திரமாகக்கேட்டபின்பும் துரியோதனன் இராச்சியபாகம் கொடுத்திடாது மறுப்பானாயின் அதன்பிறகு நாம் அப்பக்கத்தாரைப் போரில்அழிப்பது தவறாகாது; ஆனதுபற்றி, நீ எங்கட்காக ஒருகால் தூதுசென்றருளவேண்டும் என்ற வேண்டியபடியாம். "நின்னைச் செலவிட்டால் நீர்நாடு தாராரேனும், பின்னைப் பொருகை பிழையன்றே—உன்னைத்தான், மாதவனே மாயவனே மாலவனே மற்றெமக்கோர், தூதவனே யாக்கத் துணி" என்பது பாரதவெண்பா.

நினைவின்வண்ணம் தாராளுகில் என இயையும். தாது - மகரந்தப்பொடியுமாம். அளி - வடசொல். தாதுதி யளிமுரலும், தண் என்ற அடைமொழிகள் - நாட்டின் சிலவள நீர்வளங்களை உணர்த்தும். வளைக்குலம் - ஒன்றன்கூட்டத்தற்கிழமைப்பொருளில் வந்த ஆறும்வேற்றுமைத்தொகை. பின்னே 'வலம்புரி' என்றமையின், 'வளைக்குலம்' என்றது, இடம்புரியைக் குறிக்கு மென்னலாம். வளை-(உள்ளே)சுழிந்த வடிவமுடையது; வலம்புரி - வலப்பக்கத்தாற் சுழிந்திருப்பது; காரணப்பெயர்கள். (வலம்புரிக்கு எதிர் - இடம்புரி.)இடம்புரிச்சங்கு ஆயிரஞ்சூழ்ந்தது வலம்புரியென நூல்கள்கூறும்; என்பது, சாதாரணசங்கத்திலும் வலம்புரிச்சங்குக்கு ஆயிரமடங்கு அதிகமாகவுள்ள சிறப்பைத் தெரிவிப்பதாம். வெற்றிச்சங்கு, மங்கலச்சங்கு, கொடைச்சங்கு என்ற மூவகையுள், இங்குக் கூறியன - வெற்றிகுறிப்பன. யமதூதர்கள் பயங்கரமானபெரியவடிவங்கொண்டு வருதல் இயல்பாதலாலும், அவர்கள் உயிரைத் தவறாதுகொண்டேவிடுவே ராதலாலும், அவர்களை 'மாதூதர்' என விசேடித்துக்கூறினன். அவர்கள் பலபிராணிகளைச் சிரமமில்லாமல் எளிதிற்கொண்டுபோதற்குப் போர் கருவியாகுதலால், 'காலன்தூதர் மனங்களிக்கப் பொருது' எனப்பட்டது. வசையும், உம் - இழிவுசிறப்பு. வசையுமன்று என்ற உம்மையை ஒழியிசைப்பொருளதாக்கி, புகழாகு மென்றுங் கருத்துக்கொள்க. ஏ - தேற்றம். (௧௦)

௧௧. முந்துூர்வெம்பணிக்கொடியோன்மூதூரினடந்துழவர்முன்றிறேறு, நந்தூரும்புனனாட்டின்றிறம்வேண்டுகோடெடான்றுதல்கானுகி, நீந்தூர்வேண்டவையிலெனிலந்திலம்வேண்டுவைமறுத்தாலடு போர்வேண்டு, சிந்தூரத்திலகநுதற்சிந்தாக்கின்மருப்பொசித்தசெங்கண்மாலே.

(இ - ள்.) சிந்தூரம் - சிந்தூரமென்னும் ஒருவகைச்செம்பொடியாலாகிய, திலகம் - திலகத்தை அணிந்த, நுதல் - நெற்றியையுடைய, சிந்தூரத்தின் - (குவலயாபீடமென்னும்) யானையினது, மருப்பு - தந்தத்தை, ஒசித்த - ஒடித்த, செம் கண் மாலே - சிவந்த திருக்கண்களையுடைய கண்

னனே!— மூந்து ஊர் - விரைவாகஊர்ந்துசெல்கின்ற, வெம் பணி - கொடிய பாம்பின் வடிவத்தை யெழுதிய, கொடியோன் - துவசத்தையுடையவனை துரியோதனனது, முது ஊரில் - பழமையான நகரமாகிய அஸ்தினபுரியில், நடந்து - (நீ) சென்று,—உழவர் முன்றில் தோறும் - உழுதுபயிர் செய்பவர்களது வீடுகளின் முன்னிடங்களிலெல்லாம், நந்து ஊரும் - சங்குகள் தவழப்பெற்ற, புனல் - நீர்வளப்பத்தையுடைய, நாட்டின் - குருநாட்டினது, திறம் - பாகத்தை, வேண்டு - (அவனை)விரும்பிக்கேள்; நாடு ஒன்றும் நல்கான் ஆகில் - (அவன்) அந்நாட்டில் நமக்குஉரிய ஒருபங்கு முழுவதையுங் கொடுக்கச் சம்மதியானானால், ஐந்து ஊர் வேண்டு - (எங்கள் ஐந்து பேர்க்குமாக) ஐந்து ஊரை விரும்பிக்கேள்; அவை இல் எனில்-அந்த ஐந்து ஊரையுங் கொடுப்பதில்லை யென்றால், ஐந்து இலம் வேண்டு - ஐந்து வீடுகளை விரும்பிக்கேள்; அவை மறுத்தால் - அவ்வைந்துவீடுகளையும் (கொடேனென்று) மறுப்பானானால், அடு போர் வேண்டு - கொல்லுதற்குஉரிய யுத்தத்தை விரும்பிவருவாய்; (எ - று.)

இராச்சியத்தைக் கேட்குமிடத்து, கொடுக்கச் சம்மதிப்படானானால், எங்களெவர்க்கும் தலைக்குஓர்ஊராக ஐந்துஊரையாவது கேள்; அதுவும் இல்லையென்றால், தலைக்குஒருவீடாக ஐந்துவீட்டையாவது கேள்; இன்னம் எங்களுக்காக நீதானே நேரிற்சென்றுதாழ்ந்து யான்கூறியபடிஇடங் கேட்கவும் அவன் ஐந்துவீடுதானும் கொடுத்திடே னென்றால், அப்பொழுது, நாம் போர்செய்யக்கடவோமாக முடிவுகூறிவருவாய் என்பதாம். "ஆண்டபதின்மூன்றுஞ் சென்றன வென்று உரிமை, வேண்டிவிடுக விறல் வேந்தீர் - வேண்டினாற், பார்காட்டித் தந்தானேல் தந்தானும் தாரானேற், போர்காட்டிற்றன்றே பொர"என்றபடிஅவன் அரசுகொடேனென்றுமறுப்பதே போர்செய்யுங்குறிப்பை விளக்குவதாயிருக்கவும்,'அவைமறுததால் அடு போர்வேண்டு' என்றது - முன்பு 'வனவாசஅஜ்ஞாதவாசங்களின்பின் அரசு கொடுப்பேன்' என்று வாக்குதத்தஞ்செய்தவன் இப்பொழுது அவ்வுறுதி மொழியை நிறைவேற்றாமற் பொய்த்ததுபோல, இப்பொழுது 'போர்செய்வேன்'என்கிறவன் பின்பு அதனையும்நிறைவேற்றாமற் பொய்த்துப்போகாதபடி அதனையேனும் தவறாமல் நடத்துமாறு உறுதிசெய்துவருவாய் என்றபடி. "கார்தோற்றுப்போகத் தொடுக்குங்கரத்தானே, பார்வேண்டிற் பாம்புயர்த்தோன் தான்மறுத்தால்-ஊர்வேண்டில், ஆங்கவையுந் தான்மறுத்தாலைந்து மனை தான்வேண்டிப், பாங்குடன்நீ போதாய் பரிந்து," "மன்னவர்களெல்லாருந் தாமறியப் பார்வேண்டி, அன்னவனு மைந்தின் மறுத்தானேல் - பின்னைப், பொருபடைக்கைமாலே நீ போர்வேண்டிப் போதாய், அரவுயர்த்தோன்தன்பா லகன்று" என்பன பாரதவெண்பா.

நடந்து வேண்டு என இயையும். ஊர்பணி, அடுபோர் - வினைத்தொகைகள். மூந்தூர்கொடியென இயைத்து, சிறப்புப்பொருந்திய துவசம் அல்லது மூந்திச்செல்லுகிற துவசம் என்றுங் கொள்ளலாம். பணீ என்னும் வடசொல்லுக்கு - படத்தையுடையது என்று பொருள்; (பணம் - படம்.) பணிக்கொடியோன் - பாம்புபோலக் கொடுமை யுடையவ னென்றுமாம். கொடியோன் என்பதை, நல்கான் என்பதற்கு எழுவாயாகவும் கொள்ளலாம். உழவர் - மருதநிலமாக்கள். முதுமை + ஊர் = மூதூர்: பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டது. இல் + முன் = முன்றில்: முன்பின்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை; இது - இலக்கணப்போலி யெனப்படும். நல்கான், நல்கு-பகுதி. இலம், அம் - சாரியை. வேண்டுதல் - பிரார்த்தித்தல். திலகம் - நெற்றிப்பொட்டு, ஸிந்தூரம், திலகம், ஸிந்தூரம் - வடசொற்கள்.

...மறைவர் அஞ்சத்தக்க போராற்றலுடையவனே யென்பார், 'சிந்தூரத்தின் ...ழும்பொரித்த செங்கண்மாலே'என்றுவிளித்தார். சிந்தூரந்திலகநுப்

போசித்த கதை:—வில்விழாவென்கிற வியாஜம் வைத்துக் கம்சனால் வரவழைக்கப்பட்டு ஸ்ரீகிருஷ்ணபலராமர்கள் கம்ஸனரண்மனையைநோக்கிச் செல்லுகையில், அவனது அரண்மனைவாயில்வழியில் தம்மைக்கொல்லும்படி அவனாலேவிநிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் பட்டத்துயானை கோபித்துவர, அந்தயாதவவீரர் அதனை யெதிர்த்து அதன்தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியையெடுப்பதுபோல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அடித்து அந்தமதயானையை உயிர்தொலைத்துவிட்டு உள்ளேபோயின ரென்பதாம்.

செங்கண்மால்-செந்தாமரைமலர்போன்ற கண்களையுடைய திருமால் [புண்டரீகாக்ஷன் என்றபடி]. அடியார்களை அருளுடன் நோக்கிநோக்கிக் கண்கள்சிவந்தனபோலும்; இதுவே கொடியவர்திறத்துக் கோபத்தாற்சிவந்ததுமாம். இங்கு 'செங்கண்மாலே' என்றது, உனது கண்ணோட்டத்தினால் நாங்கள் சமாதானத்தில் இராச்சியம்பெற்றுவாழக்கூடு மென்று குறிப்பித்தவாறும். மாலே,ஏகாரம்மிக்கது-விளிக்குறி. மால்-பெருமை. அடியார்கள்பக்கல்அன்பு, திருமகளிடத்துக்காதல், மாயை, கருநிறம் இவற்றையுடையவன்.

[அதுகேட்டு வீமன் வெறுத்துக்கூறுதல்.]

௧௨. மூத்தோன்மற்றிவையுரைப்பவிளையோன்வெஞ்சினமனத்தின்மூளமூள, நாத்தோமிலுரைபதறக்கதுமெனவுற்றெழுந்திறைஞ்சிஞாலமெல்லாம், பூத்தோனேபூந்தவிசிற்பூவைபுணர்மணிமார்பா புன்மையாவுந், தீர்த்தோனேயூனமிலான்மானமிலாதுரைப்பதற்கென்செய்வதென்றான்.

(இ - ள்.) மூத்தோன் - (பாண்டவருள்) மூத்தவனான தருமன், இவை உரைப்ப - இவ்வார்த்தைகளைக் கூற,— மற்று - பின்பு,— இளையோன் - (அவனுக்கு) அடுத்ததம்பியான வீமன்,—வெம் சினம் மனத்தில் மூள மூள - கொடிய கோபம் மனத்திலே அதிகமாக மேன்மேல் உண்டாகி வளர, நா தோம் இல் உரை பதற-நாக்கிலிருந்துவருகிற குற்றமற்ற சொற்கள் குளற, கதும்என எழுந்து இறைஞ்சி உற்று-விரைவாகஎழுந்து (கண்ணபிரானை) வணங்கிநின்று,— (அக்கண்ணனைநோக்கி),— 'ஞாலம எல்லாம் பூத்தோனே - உலகங்களெல்லாம் நாபித்தாமரைமலரினின்று உண்டாகப்பெற்றவனே! பூ தவிசில் பூவை புணர் மணி மார்பா - (எல்லாமலருள்ளுஞ் சிறந்த) செந்தாமரைமலராகியஆசனத்தில் வீற்றிருக்கின்ற கிளிகொஞ்சுவதுபோன்றஇன்சொற்களையுடையவளான திருமகள் வீற்றிருக்கப்பெற்ற (கௌத்துபமென்னும்) தெய்வவிரத்தினத்தையு மணிந்த திருமார்பையுடையவனே! புன்மை யாவும் தீர்த்தோனே - (அன்பர்களது) குறைகளையெல்லாம் நீக்கியருளியவனே! ஊனம் இலான் - குற்றமில்லாதவனான இத்தருமபுத்திரன், மானம் இலாது உரைப்பதற்கு - மானமில்லாமல் (இங்ஙனம்) பேசுவதற்கு, என் செய்வது - (யாம்) செய்வது யாது?' என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)—மற்று - அசையுமாம்.

மூத்தோன், மூ - வினைப்பகுதி; மூத்தல் - பிராயம்முதிர்தல். இளையோன் என்ற சொல்லில்,போர்க்குஇளைக்காதவன் என்ற பொருளும் தொனிக்கும். மூளமூள - அடுக்கு, மிகுதிப்பொருளது. ஊனம், மானம் - வடசொற்கள். தோம் - தோஷம்என்னும் வடமொழியின் சிதைவு என்பர். உரைபதறுதற்குக் காரணம்,கோபாவேசம். கதுமென-விரைவுக்குறிப்பு இடைச்சொல். உற்று, உறு - பகுதி. இறைஞ்சி, இறைஞ்சு - பகுதி. முதலடியில் மூத்தோனையும், நான்காமடியில் பிராசமுங் காண்க.

('பர்திக்கமலத்தட்ஞ்சூழர்ங்கர் படைப்பழிப்பும், செந்தித்திவைதமில்லை கண்டீர் அத்திசைமுகனொடு,உத்திக்கமலம்விரித்தால்விரியும் உலக்கடையின்,

உயர்வுசிறப்பு; ஆளுவது-இழிவுசிறப்பு. அஞ்சினேன் = அஞ்சுகிறேன்; இயல்பினால் நிகழ்காலம் இறந்தகாலமாகச்சொல்லப்பட்டகாலவழுவமைதி. (௧௩.)

௧௪. கானாளவுனைவிடுத்தகண்ணிலாவருளிலிதன்காதன்மைந்தன், றானாளுந்தரணியெல்லாமொருகுடைக்கீழ்நீயாளத்தருவனின்றே, மேனாணம்முரிமையறக்கவர்ந்தபெருந்துணைவனுனைவெறாதவண்ணம், வானாளவானவர்கோன்றன்பதமற்றவன்றனக்கேவழங்குவேனே.

(இ - ள்.) உனை - உன்னை, கான் ஆள - வனத்தையடைந்துவாழும்படி, விடுத்த-ஏவியனுப்பிய, கண் இலா அருள் இலிதன் காதல் மைந்தன்-பிறவிக்குருடனும் கருணையில்லாதவனுமாகிய திருதராட்டிரனது அன்புக்குஉரிய மகனான துரியோதனன், தான் ஆளும் - தான் (இப்பொழுது தனியே) அரசாண்டுவருகிற, தரணி எல்லாம்-இராச்சியம்முழுவதையும், ஒரு குடைக்கீழ் நீ ஆள - ஒற்றைவெண்கொற்றக்குடைநிழலிலே நீஅரசாளும்படி, இன்றே தருவன்-இப்பொழுதே (உனக்குக்) கொடுப்பேன்; (அதுவுமல்லாமல்), மேல் நாள் நம் உரிமை அற கவர்ந்த பெருந் துணைவன்-முன்னாளில் நமக்கு உரிய அரசாட்சிச்செல்வமுழுவதையும் (உன்னிடத்தினின்று) பறித்துக்கொண்ட பெரிய தம்பியான துரியோதனன், உனை வெறாத வண்ணம்-(தனது இராச்சியத்தை நீ உன்னுடையதாக்கி ஆளுவதற்காக) உன்னை வெறுக்கவேண்டாதபடி, வான் ஆள - (நிலவுலகத்திலும் மேலான) வீரசுவர்க்கலோகத்தை யடைந்து வாழுமாறு, வானவர் கோன்தன் பதம் - தேவர்கட்கு அரசனான இந்திரனது உலகமாகிய அமராவதிநகரத்தை, அவன் தனக்கே வழங்குவேன் - அத்துரியோதனனுக்கே கொடுப்பேன்; (எ - று.) —மற்று - வினைமாற்று மற்றவன் என்று எடுத்து, பகைவனாகிய அவன் என்றலுமாம் ஈற்றுஏகாரம் - தேற்றம்.

மிகவிரைவிலே போரில் தவறாமல் துரியோதனனைக் கொன்று விண்ணுலகேற்றி அவனது அரசாட்சிச்செல்வமுழுவதையும் உனக்குக்கொடுத்திடுவே னென்பதாம். மண்ணுலகத்தையிழந்ததுன்பம் விண்ணுலகத்தையடைந்தஇன்பத்தால் நீங்கும்படி என ஒருசமத்காரந்தோன்ற, 'உனைவெறாதவண்ணம் வானாள' எனப்பட்டது. 'வெறாதவண்ணம்' என்றதனால், தனக்கு வீரசுவர்க்கம் கிடைத்தற்குக் காரணமாகிய உன்னைப்பற்றி மகிழும் வண்ணம் என்றதாகவுங் கொள்ளலாம். கொடியவனான துரியோதனனைக் கொல்வேன் என்ற பொருளை 'வானாள வானவர்கோன்தன்பதம் மற்று அவன்தனக்கே வழங்குவேன்' என வேறுவாய்பாட்டினாற் கூறியது, பிறிதின்நவிற்சியணி. துரியோதனனது இராச்சியத்தை வாங்கி உனக்குக்கொடுத்து, இந்திரலோகத்தை அவனுக்குக் கொடுப்பே னென்பதில், மாற்றுநிலையணியென்னும் பரிவர்த்தனாலங்காரம் தோன்றுதலுங் காண்க; அதன்வகை மூன்றனுள், சிறியதைவாங்கிக்கொண்டு பெரியதைக்கொடுப்பதாகக் கூறியது இது.

உனை - உன்னை யென்பதன் தொகுத்தல். 'கானாளஉனைவிடுத்த' என்றது, அருளிலிதன்மைந்தனுக்கு அடைமொழி; அருளிலிக்கு அடைமொழியாக்கவுந் தகும். கண்இலா-கண்ணோட்டமில்லாத எனினுமாம். கண்இலா அருளிலி-தயைதாக்ஷிண்யமில்லாதவ னென்றபடி, "கண்ணென்னுங்கண்ணோட்டமில்லாத கண்", "கண்ணோட்டமில்லவர் கண்ணிலர்" என்பவாதலால், கண்ணோட்டமில்லாமையை, கண்ணில்லாமை யெனத்தகும். கண்ணில்லாமையால் அதுசென்றவழிநிகழ்வதாகிய கண்ணோட்டமும் இலனாயினானென்றவாறு. இனி, 'கண்இலா' என்றது - ஊனக்கண் இல்லாமையையே யன்றி ஞானக்கண்இல்லாமையையுங் காட்டும்.

இலி, இ - பெயர்விகுதி; 'வில்லி' என்பதிற் போல. தரணி என்ற வடசொல், (பொருள்களைத்) தரிப்பதுஎன்ற காரணப்பொருளோடு பூமியைக் குறிக்கும். அரசாட்சியை 'குடை' என்றும், 'சக்கரம்' என்றும், 'கோல்' என்றும் கூறுதல் மரபு. ஒரு குடை - இரண்டாவதில்லாமல் ஒன்றேயான அரசாட்சி; தனியரசாட்சி; ஏகாதிபத்தியம்; ஒப்பற்ற ஆட்சியுமாம். இன்றே என்ற ஏகாரம் - தேற்றத்தோடு விரைவையுங் காட்டும். மேல்நாள் - ஆறு பொருதநாளில், உரிமை அற - உரியசெல்வம் நம்மைவிட்டுநீங்க என்றுமாம். உரிமை - உரியபொருளுக்குப் பண்பாகுபெயர். தருமனது தம்பியராகிய வீமன்முதலியோரினும் துரியோதனன் மூத்தவனாதலால், அவன் 'பெருந்துணைவன்' எனப்பட்டனன்; அன்றி, 'பெருந்துணைவன்' என்பது - இகழ்ச்சியுமாம்: மிக்கவலியுடையா னென்பது பற்றியுமாம். வான் - ஆகாயத்திலுள்ள உலகத்துக்கு இடவாகுபெயர். கோன், ன் - சாரியை; ஆன், மான், ஊன் என்பவற்றிலும் இவ்வாறே: [நன் - உருபு - ௬.] அவன்தனக்கே, ஏ - பிரிநிலை. (௧௪)

[இதுவும், மேற்கவியும் - வீமன் கண்ணனை நோக்கிக் கூறியவை.]

௧௫. போர்முடித்தானமர்பொருதுபுலம்புறுசொற்பாஞ்சாலி பூந்தண்கூந்தற், கார்முடித்தானிளையோர்முன்கழறியவஞ்சினமுடித்தான்கடவுட்கங்கை, நீர்முடித்தானிரவொழித்தநீயறியவசையின்றிநிலைநின்றோங்கும், பேர்முடித்தானிப்படியேயார்முடித்தாரிவனுடனேபிறப்பதேநான்.

(இ - ள்.) கடவுள் - தெய்வத்தன்மையையுடைய, கங்கை - கங்காநதியினது, நீர் - சலத்தை, முடித்தான் - சடையில் தரித்த சிவபிரானது, இரவு - இரத்தலதொழிலை, ஒழித்த - நீக்கியருளின, நீ—, அறிய - உணர, போர்முடித்தான் - யுத்தத்தை நிறைவேற்றினான்; அமர் பொருது - யுத்தத்தைச்செய்து, புலம்புஉறு சொல் பாஞ்சாலி பூ தண் கூந்தல் கார் முடித்தான் - அழுதல்மிக்க சொற்களையுடைய திரௌபதியினது அழகிய குளிர்ந்த மேகம்போற் கரிய கூந்தலை முடிக்கச்செய்தான்; இளையோர்முன் கழறியவஞ்சினம்முடித்தான் - தம்பிமார்கள் முன்னே (சபையிலே) உறுதியாக்கூறின சபதங்களை முடியச்செய்தான்; வசைஇன்றி நிலைநின்று ஓங்கும் பேர் முடித்தான் - பழிப்பில்லாமல் என்றும் அழியாது சிறந்துநிலைநிற்கிற கீர்த்தியை முழுவதும் பெற்றான்; இப்படியே யார் முடித்தார் - இங்ஙனம் இவன்போல (முடிக்கவேண்டுவன எல்லாவற்றையும்) முடித்தவர் யார்? நான் இவனுடனே பிறப்பதே - (சுத்தவீரனாகிய) யான் (அவனம்இல்லாதவனாகிய) இவனுடன் தம்பியாகப்பிறத்தல் தகுதியோ? [அன்றென்றபடி]; (எ - று.)—ஈற்றேகாரம் - வினாவகையால் மிக்கஇரக்கத்தைக் காட்டும்.

"சூழ்சபையிற் சூளுற்ற சூளுறவு மஞ்ஞான்றென், பாழியந்தோள் பட்டபரிபவமும் - வாழியாய், நின்னோடே தோற்றுதற்கு நோற்றேனே பாவியேன், என்னோட்டெழுத்தோ விது" என்றார் பாரதவெண்பாவிலும். இப்பாட்டில், 'முடித்தான்' என வந்தன பலவும் - எதிர்மறையிலக்கணையால், ஒன்றையும் முடிக்கவில்லை யென்பதை விளக்கும்; இது - இகழ்ச்சிபற்றிய பிறகுறிப்பின்பாற்படும். புலம்பு - முதனிலைத்தொழிற்பெயர். உறுசொல் - உரிச்சொற்றொடர். பாஞ்சாலி பாஞ்சாலதேசத்தரசன்மகள்; தத்திதாந்தநாமம். பூ - பூக்களைமுடித்தற்குரிய என்றுமாம். கூந்தற்கார் - முன்பின்னாகத்தொக்க உவமத்தொகை. கங்காநதிக்குத் தெய்வத்தன்மை - தன்னில் ஒருகால்மூழ்கியவரது அருவினையனைத்தையும்அழித்து உயர்பதமளித்தலும், "சதுர்முகன்கையிற் சதுப்புயன்காலிற் சங்கரன்சடையினில் தங்கு"தலும்.

நீர்-நீர மென்னும் வடமொழியின் திரி பென்பர் இரவு-இரத்தல்; தொழிற் பெயர்: இர-பகுதி.

திருமால் உலகமளந்தகாலத்தில் மேலே சத்தியலோகத்திலே சென்ற அவரது திருவடியைப் பிரமன் தன்கைக்கமண்டலதீர்த்தத்தாற் கழுவிவிளக்க, அந்த ஸ்ரீபாததீர்த்தமாகப்பெருகிய கங்காநதியை, சூரிய குலத்துப் பகீரதசக்கரவர்த்தி கபிலமுனிவரது நெற்றிக்கண்ணின் நெருப் புக்கு இரையாய் உடலெரிந்து சாம்பராய் நற்கதியிழந்த தனதுமூதாதைய ரான சகரபுத்திரர் அறுபதினாயிரவரை நற்கதிபெறுத்தும்பொருட்டு மேலு லகத்திலிருந்து நிலவுலகத்துக்குக் கொணர்கையில், அவனதுவேண்டுகோ ளால் சிவபிரான் அந்நதியை முடியின்மேலேற்றுச் சிறிதுசிறிதாகப் பூமியில் விட்டருளினனென்பதும்;பரமசிவன் ஒருகாலத்தில் தன்னைப்போலவே பிர மனும் ஐந்துசிரமுடையனாயிருப்பது பலரும்பார்த்துமயங்குதற்கிட மாயிருக் கின்றதெனக் கருதி, அவனதுசிரங்களைக் கொய்துவிட,அக்கபாலம் அப் படியே அவன்கையில் ஒட்டிக்கொள்ளுதலும், இதற்கு என்செய்வதென்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந்தொலையப்பிச்சையெடுக் கவேண்டும்; என்றைக்குக் கபாலம்நிறையுமோ, அன்றைக்கே இது கையை விட்டுஅகலும்' என்றுஉரைக்க, சிவபிரான் பலகாலம் பலதலங்களிலுஞ் சென்று பிச்சையேற்றுக்கொண்டு வருந்தித்திரிந்தும் அக்கபாலம் நிறைந்து நீங்காதாக, ஒருநாள் ஸ்ரீமகாவிஷ்ணுவை அடைந்து ஏற்றபோது, அவர் அக்ஷயமென்றுபிச்சையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டுஅகன்றது என்பதும் - 'கங்கைமுடித்தானிரவோழித்த' என்றதன் வரலாறுகள்.

உலகத்தில்நடக்குந் தொழில்கள்எல்லாவற்றையுங் காண்பவனாய்நின்ற கடவுளையே சாட்சியாக்கி,'நீயறிய'என்றது."வசையொழியவாழ்வாரே வாழ் வாரிசையொழிய,வாழ்வாரே வாழாதவர்"என்றபடிசிறிதும்நிந்தனைக்கிடமில் லாததே புகழெனச்சிறப்பித்துக்கூறப்படுவதாதலால், 'வசையின்றிநிலைநின் றோங்கும் பேர்'என்றது. இனி, போர்முடித்தான் - யுத்தத்தை இல்லையாக்கி னன்; கூந்தல்கார் முடித்தான் - கூந்தலாகிய மேகத்தைப் பாழாக்கினன்; கங்கைநீர்முடித்தான் - கங்கைநீரையொடுக்கினன்;பேர்முடித்தான் - கீர்த் தியை ஒழித்தான்;யார்முடித்தார்-யாவர்அழித்தார் எனப்பொருள்கொள்ளி னும் அமையும். தான்முடியாவிடினும்,முடிக்கவல்லவனாய்முடிக்கத்தொடங் குகிற வீமனையும் இவன் முடிக்கவொட்டாமற்செய்தற்கு,இவனுக்குத்தம்பி யாகப்பிறந்தஅவனதுஉடற்பிறப்பே காரண மாதலால்,அதனை'இவனுடனே பிறப்பதே நான்' என வீமன் வெறுத்தான். (௩௫)

௩௬. அணிந்துவருஞ்சமரிலெதிர்ந்தரவுயர்த்தோனுடனரசருட லமெல்லாந் துணிந்திரண்டுபடப்பொருதுதொல்லையுலகரசாளத்து ணிவதல்லாற், றணிந்தறமுங்கிளையுறவுங்கொண்டாடித் தானின்னந் தனித்துத்தேவிப்,பணிந்திரந்துபுவிபெற்றுண்டிருப்பதற்கே துணிகி ன்றான்பட்டபாடே.

(இ - ள்.) அணிந்து வரும் - (இருதிறத்துச்சேனைகளும்) ஒழுங் காகவகுக்கப்பட்டுநெருங்கிவருகிற, சமரில்-போர்க்களத்திலே, அரவுஉயர்த் தோனுடன் எதிர்ந்து-பாம்புக்கொடியனான துரியோதனனுடன் எதிர்த்து, அரசர் உடலம் எல்லாம் துணிந்து இரண்டுபட - (துரியோதனனும் அவ னுக்குத்துணையாக வருபவர்களுமான) அரசர்களது உடம்புகளெல்லாம் துணிபட்டுஇரண்டாகும்படி,பொருது-போர்செய்து(பகைமுடித்து),தொல் லைஉலகு-(நமது)பழையஉரிமையாகிய இராச்சியத்தை, அரசுஆள-அரசாட்சி செய்ய,துணிவது அல்லால்-நிச்சயிப்பதே யல்லாமல்,—தான் - இத்தருமன் தான்,தணிந்து-சாந்தமாய்,அறமும் கிளை உறவும் கொண்டாடி-தருமத்தை

யும் சுற்றத்தாரது உறவுமுறைமையையும் முக்கியமாகப்பாராட்டி, இன்னம் தனி தூது எவி - (உலூகனைத் தூதனுப்பிய) பின்பும் ஒருதூதனைச் செலுத்தி, பணிந்து இரந்து - (பகைவனை)வணங்கி யாசித்து, புவி பெற்று-இராச்சியத்தை (அவன்கொடுக்கச் சிறிது) பெற்று, உண்டு இருப்பதற்கே-புசித்து உயிர்வாழ்ந்திருப்பதற்கே, துணிகின்றான் - நிச்சயிக்கிறான்; பட்ட பாடே- (எல்லாவருத்தங்களினும்) மிக்கவருத்தமாகும் இது!(எ-று.)—ஈற்றுஏகாரம்- தேற்றத்தோடு இரக்கம்.

போர்பொருது பகைமையயழித்து வென்று அரசுபெற்றுப் புகழோடு வாழ்தல் எளிதாயிருக்க, தாழ்ந்து இரந்து அரசுபெற்று மானமின்றி உயிர் வாழக்கருதுதல் மிக்கபழிப்புக்குஇடமாகு மென்பதாம். "ஆற்றுவரேல் தோள்வலியாற் கொள்வதுவும் ஆற்றாரேல், தோற்பதுவும் வேந்தர்க்குச் சொல்லியதே—மேல்தானோர், மன்னவரை மன்னவர்கள் மண்ணிரந்தா ரில்லைகாண், என்னவரசாள்கையிது" என்றார் பாரதவெண்பாவிலும்.

அணிந்து வரும் - நாளைக்குச் சமீபித்துவருகிற என்றுமாம். உடலம், அம் - சாரியை. தொல்லை - பண்புப்பெயர்; ஐ - விகுதி. 'தொல்லையுலகு' என்றது, பழமையான உலகமுழுவதையும் என்றும் பொருள்படும். கிளை- கிளைபோன்ற உறவினர்க்கு உவமையாகுபெயர். (௧௬)

[அதற்குத் தருமன் சமாதானஞ் சொல்லுதல்.]

௧௭. பரிவுடன்மற்றிவைகூறும்பவனகுமாரனை மலர்க்கைபணித்துநோக்கிக், குருகுலத்தோர்போரேறேகுற்றமதுபார்க்குங்காற்சுற்றமில்லை, யொருகுலத்திற்பிறந்தார்களுடன்வாழும்வாழ்வினைப்போலுறுதியுண்டோ, விருவருக்கும்வசையன்றோவிருநிலங்காரணமாகவெதிர்ப்பதென்றான்.

(இ - ள்.) பரிவுடன் - வருத்தத்துடனே, இவை கூறும் - இவ்வார்த்தைகளைச் சொல்லுகிற, பவன குமாரனை - வாயுபுத்திரனான வீமனை, (தருமன்),—மலர் கை பணித்து - தாமரைமலர்போன்ற தனதுகையால் அமர்த்தி அடக்கி, நோக்கி - (அவனைப்)பார்த்து,—'குரு குலத்தோர் போர் ஏறே - குரு வென்னும் அரசனது குலத்திற் பிறந்த அரசர்களுள் போரிற் சிறந்த ஆண்சிங்கம் போன்றவனே! குற்றமது பார்க்கும் கால் சுற்றம் இல்லை - குற்றத்தையே ஆராய்ந்தால் (எவர்க்கும்) உறவினராவார் இல்லை; ஒரு குலத்தில் பிறந்தார்கள் உடன் வாழும் வாழ்வினை போல் உறுதி உண்டோ - ஒருகுடும்பத்திலே பிறந்தவர்கள் தமக்குள் மாறுபாடின்றி ஒத்து வாழும் இல்வாழ்க்கையைப்போல நன்மைதருவது (வேறு) உண்டோ?[இல்லையன்றோ]; இரு நிலம் காரணம் ஆக எதிர்ப்பது - பெரியஇராச்சியங் காரணமாக எதிர்த்துப்போர்செய்வது,இருவருக்கும் வசை அன்றோ-இருதிறத்தார்க்கும் பழிப்பாகாதோ?' என்றான்-என்றுசொன்னான்;(எ-று.)—மற்று- அசை: இந்த அவசியமில்லாதபதத்தால், 'மற்றுஇவை' என்பதற்கு — இன்னும் இதுபோன்றவற்றை யென்று பொருள்கொள்ளலாம்.

சினங்கொண்ட வீமனை மேன்மைப்படுத்தி அவனைத் தன்கருத்துக்கு உட்படுத்துமாறு,தருமன், 'குருகுலத்தோர்போரேறே' என்று விளித்தான். பவனகுமாரன் என்னும் ஆறும்வேற்றுமைத்தொகை - வடநூல்முடிபு. பவனன் என்ற வடசொல்லுக்கு - சஞ்சரிப்பவ னென்பது காரணப்பொருள். குருகுலத்தோர் ஏறு - விலங்குகளுட் சிறப்புடையதாகிற சிங்கம்போலக் குருகுலத்தாருட் சிறந்தவனென்க; இனி, கௌரவரெனப்படுகிற துரியோதனுதியாரகியயானைகளை யொழிப்பதற்குச் சிங்கம் போன்றவ னென்றுமாம். ஏறுபோல்பவனை ஏறுஎன்றது-உபசாரவழக்கு.ஏறு-சிலவிலங்குகளின் ஆண்

மைப்பெயர். 'போரேறு' என்றது, பலபராக்கிரமங்களை விளக்கக் கூறியது. சிறந்தவீரனுக்குச் சிங்கம் - நடை வலிமை நோக்குத் தைரிய காம்பீரியங்களால் உவமையாம். இன்னமல ரென்று குறியாது 'மலர்' என்று மாத்திரம் கூறினால், அது - "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே" என்றபடி, எல்லா மலர்களுள்ளுஞ் சிறந்த தாமரையைக் குறிக்கும். கைக்குத் தாமரைமலர் உவமை-செம்மை மென்மை அழகுகளில். குற்றமது என்றவிடத்து, 'அது' என்பது - பகுதிப்பொருள்விகுதி. கால் - காலமென்பதன் விகாரம். உண்டோ, ஓ-எதிர்மறை. அன்றே - தேற்றம். பரிவுடன் - (தமையனிடத்து) அன்புடனே, அல்லது இரக்கத்துடனேயென்றுங் கொள்ளலாம்.

"குற்றம்பார்க்கிற் சுற்றமில்லை" என்பது - ஒளவையார் அமுதமொழி. உலகத்திற் குற்றமில்லாதவர் அரிய ராதலால், ஒவ்வொருவரிடத்தும் குற்றத்தையே நோக்கினாற் சுற்றம் இல்லையாகும்; ஆதலால், உறவினரிடத்துஉள்ள பிழைகளையெல்லாம் பொறுப்பது கடமை யென்றபடி. "உற்றாரையெல்லா முடன்கொண்டாசாளப், பெற்றா லதின்மிக்க பேறுண்டோ—வெற்பார், பனிமருவும் பூந்தொங்கற் பாழியந்தோள் வீமா, தனிமரமுந் தோப்பாமோ தான்" என்பது பாரதவெண்பா. (௧௭)

[இதுவும் அது.]

௧௮. உரிமையுடன்றம்பியரன் றுணர்வறியாமையினவைக்கணு ரைத்தமாற்றம், பரிபவமோகேட்டோர்க்குப்பரிபவமென்பதுபிறரா ற்பட்டாலன்றோ, கருதிலதுமற்றெவர்க்குமொவ்வாதோகண்மலரிற் கைபடாதோ, பொருதொழிலுங் கடைநிலத்திற்கிடந்ததேயென மொழிந்தான்புகழேபூண்பான்.

(இ - ள்.) 'தம்பியர் - (நமது)தம்பிமார்கள், உரிமையுடன் - சுவதந்திரத்தினாலும், உணர்வு அறியாமையின் - தேர்ந்த அறிவு இல்லாமையாலும், அன்று - அக்காலத்தில், அவைக்கண் - சபையிலே, உரைத்த - சொன்ன, மாற்றம் - வார்த்தை, கேட்டோர்க்கு-(அதனைக்)கேட்டநமக்கு, பரிபவமோ - அவமானத்தைத் தருவதோ? [அன்று என்றபடி]; பரிபவம் என்பது பிறரால் பட்டால் அன்றோ - (ஒருவர்க்கு) அவமானத்தைத் தருவ தென்பது ஒருகுலத்திற் பிறந்தவரல்லாதவரால் நேர்ந்தாலன்றோ? கருதில் - ஆலோசிக்குமிடத்து, அது - அவ்விஷயம் [பிறராற் பட்டால் மாத்திரமே அவமானம், தம்மவராற் பட்டால் அவமானமன்று என்பது], மற்று எவர்க்கும் ஒவ்வாதோ - (உலகத்தில்) எல்லார்க்கும் உடன்பாடாகாதோ? [யாவர்க்கும் சம்மதமே யென்றபடி]; கண் மலரில் கை படாதோ - (ஒருவனது) தாமரைமலர்போன்ற கண்ணில் (அவனது) கை படுதலில்லையோ? பொரு தொழிலும் கடை நிலத்தில் கிடந்ததே - போர் செய்யுந் தொழிலும் (அரசர்க்கு உரியவுபாயங்களுள்) இறுதியிடத்தில் இருக்கவேயிருக்கிறது,' என-என்றும், புகழே பூண்பான் - கீர்த்தியையே ஆபரணமாக அணிபவனான தருமன், மொழிந்தான் - (வீமனைநோக்கிக்) கூறினான்; (எ - று.)

"தாமானங் கூறப்பெறுவரே தம்பிமார், தீமானஞ் செய்ததனால் தீங்குண்டோ—ஆமாகில், ஆமளவும் நட்புகர்துஅன்றாகில் நின்றதே, தேமருவு தாரோய் செரு" என்பது பாரதவெண்பா. கேட்டோர்க்கு - தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. 'கண்மலரில் கைபடாதோ' என்றது - தமது அவயவங்களுள்ஒன்றில்மற்றொன்று அஜாக்கிரதையினாற்பட்டு அதற்கு வருத்தத்தை உண்டாக்கினால் அதற்காக அவ்வருத்தும் உறுப்பைக் கோபித்துக் களைபவ ரில்லாமை போல, ஒருகுடும்பத்தவருள் ஒருவர் மற்றொருவர்க்குச் சோர்வினால் தீங்கிழைத்தால் அதற்காக அவரை அழிப்பது தகுதியன்று என்பதை உணர்த்திநின்றது. இங்ஙனம் உபமான வாக்கியத்தால் உபமே

யத்தைப் புலப்பட வைத்தது, பிறிதுமொழிதலணியாம்; "இன்றுசெயி னும் விடுதற் கரியாரைத், தன்னைத் துறத்தல் தகுவதோ - துன்ன ருஞ்சீர், விண்குத்து நீள்வரை வெற்ப களைபவோ, கண்குத்திற் றென்று தங்கை" என்னும் நாலடியார்ப்பாட்டை இங்கே அறிக. 'பொருதொழிலுங் கடைநிலத்திற் கிடந்ததே' என்றது - எல்லாவுபாயங்களுள்ளும் தண்டோ பாயம் இறுதியிற் செய்யத்தக்கதாய்க் கடைசியில் வைக்கப்பட்டுக் கீழ்மை யுடையதா மென்றும், சமாதானத்தால் இராச்சியம் பெறுவிட்டால் முடிவில் போர் இருக்கவேயிருக்கிற தென்றும் கூறியவாறும். 'தமையன் தமப்பனோ டொத்தவன்' என்ற நியாயத்தால், தன்பிள்ளைகள் செய்த குற் றத்தைத் தந்தை பொறுத்துக் குணமாகப் பாவிப்பதுபோலத் தன்தம்பிகள் செய்யுங் குற்றத்தைத் தமையன் பொறுத்துக் குணமாகக் கொள்ளவேண் டும் என்ற கருத்தாற் கூறியது,முதலிரண்டடி; பஞ்சபாண்டவரிற் பிரதான னான தருமபுத்திரனுக்குத் துரியோதனாதியர் தம்பியராதல் உணர்க.

பொருதொழிலும், உம் - இழிவுசிறப்போடு, இறந்ததுதழுவிய எச்சம். வீமன்கருத்தின்படி தருமன் புகழை விரும்பாதவனல்லன், போரினாற்புகழ் பெறுதலையொழித்துப் பொறுமையாற் புகழ்பெறுங் கருத்தினன் என்பார், 'புகழேபூண்பான்' என்றார். உணர்வுஅறியாமையின் - அறியவேண்டுவன அறி யாமையால் என்க; இன் - ஐந்தனுருபு, ஏது. பரிபவம் - வடசொல். கிடந்த தே, ஏ - தேற்றம். புகழே என்ற ஏகாரம் - பிரிநிலையோடு, உயர்வுசிறப்பு.

[இதுவும், அடுத்தகவியும் - வீமன் தருமனை நோக்கிச் சொல்வன.]

௧௧. சூடுகின்றதுழாய்முடியோன்சுரருடனேமுனிவர்களுஞ்சு ருதிநான்குந், தேடுகின்றபதஞ்சிவப்பத்திருநாடுபெறத்தூதுசெல்ல வேண்டா, வாடுகின்றமடப்பாவைதன்வாமுமென்வாமும்வழுவா வண்ணங்,கோடுகின்றமொழியவன்பாலெனைத்தூதுவிடுகவினிக்கொ ற்றவேந்தே.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) கொற்றம் வேந்தே - வெற்றியையுடைய அரசனே! - சூடுகி ன்ற துழாய் முடியோன் - தரிக்கின்ற திருத்துழாய் மாலையையுடைய திரு முடியையுடையவனான கண்ணபிரான், சுரருடனே முனிவர்களும் சுருதி நான்கும் தேடுகின்ற பதம் சிவப்ப - தேவர்களும் முனிவர்களும் நான்கு வேதங்களும் (இன்னமும் உண்மைகாணாமல்) தேடப்பெற்ற தனது திரு வடிகள் (நடத்தலாற்) செந்நிறமடையும்படி, திரு நாடு பெற - செல்வம் மிக்க இராச்சியத்தை (நாம்) பெறுதற்காக, தூது செல்ல வேண்டா - தூது போகவேண்டுவதில்லை; வாடுகின்ற மடம் பாவைதன் வாமும் - வருந்துகிற இளம்பெண்ணான திரௌபதியினது சபதமும், என் வாமும் - எனது சபத மும், வழுவா வண்ணம் - தவறாதபடி, கோடுகின்ற மொழியவன்பால் - நீதி தவறிச்சொல்மாறுபடுகின்றவனான துரியோதனனிடத்து, இனி எனை தூது விடுக - இப்பொழுது என்னைத் தூதனுப்புவாயாக; (எ - று.)

கண்ணன் தூதுசென்றால் ஒருகால் சந்திசேர்ந்து முன்செய்த சபதங் கள் தவறிவிடக்கூடு மென்று, வீமன், அவை தவறாமல் நிறைவேறும்படி தன்னைத்தூதனுப்புமாறு வேண்டுகிறான்: தன்னைத்தூதனுப்பினால் தூதுசெ ல்லும்பொழுதே துரியோதனாதியர் நூற்றுவரையும் ஒழித்துப் பிரதிஜ்ஞை களை நிறைவேற்றிவிடலா மென்ற கருத்து, மூன்றாமடியால் விளங்கும்; அன்றியும், தான் தூதுசென்றால் சமாதானமில்லாமல் போரையே செய்யும் படி முடிவுசெய்துவரலா மென்பதுமாம்.

துழாய் - துளஸீ யென்ற வடசொல்லின் சிதைவு. ஸுரர் - (பாற்கடல் கடைந்தகாலத்து அதனினின்று தோன்றியதொரு வாருணியென்னுஞ் சிறந்த) சுரையைப் பானஞ்செய்தவ ரென்பது பற்றிய காரணப்பெயர்; வடசொல்: சுரை - மது. ஸ்ருதி - வடசொல்; எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்யக்கிரமத்தில் கர்ணபரம்பரையிலே கேள்வியில் வழங்குவ தென்று பொருள்படுங் காரணப்பெயர். பரமாத்மாவின்ஸ்வரூபத்தை நாடிச்சொல்லிக்கொண்டேசென்ற வேதம் அதன்முடிவு தனக்குஎட்டாமையால் மீண்டதென்பது, அவ்வேதம்சொல்வதனாலேயே தெரிகிறது; ஆனதனால், "ஆரேயறிவாரனைத்துலகுமுண்டுமிழ்ந்த, பேராழியான்தன் பெருமையை" என்றபடி எம்பெருமானது தன்மை தேவர் முனிவர் யாவர்க்கும் அறிதற்கு அரியதாதலாலும், 'சுரருடனே முனிவர்களும் சுருதிநான்கும் தேடுகின்ற பதம்' எனப்பட்டது. (இச்சருக்கத்துக்கு அடுத்ததான படையெழுச்சிச்சருக்கத்தின் தொடக்கத்தில், பாண்டவர்க்காகத் துரியோதனனிடந் தூதுசென்றுவந்த கண்ணபிரானைப் பற்றிக் கூறுமிடத்து "கடந்த ஞானியர் கடவுளர் காண்கலாக் கழலிணை சிவப்பேறத், தொடர்ந்தநான்மறை பின்செலப் பன்னகதுவசன் மாநகர்த் தூது, நடந்த நாயகன்" என்பதும், எட்டாம் போர்ச் சருக்கத்தில் "நான்முகப் புனிதனும் முனிவர் யாவரும் தேவரும், ஏத்த நாலுவேதங்களும் தேட நின்ற தா ளெம்பிரான்" என்பதும், "வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா, ஆதிதேவர்" என்ற கம்பராமாயணமும் காண்க.)

வேண்டா - வேண்டு மென்பதன் எதிர்மறை; 'வேண்டாம்' என்பதும் பாடம். பாவை - சித்திரப் பிரதிமைபோல அழகியவள்; மனதிற்குத் திருப்தி யுண்டாகு மளவுங் கலைத்துக்கலைத்து மிகச் சீர்திருத்தமாக எழுதக்கூடு மாதலால், சித்திரப்பாவை மிகஅழகியதாம்; இனி, கண்மணிப் பாவைபோல அருமையானவ ளென்றுமாம்: பாவைபோல்பவளைப் பாவையென்றது - உவமையாகுபெயர். மடப்பாவை - மடமை பாவை என்றாவது, மடம் பாவை என்றாவது பிரிக்க; மடமை - இளமை: மகளிர்க்குஉரிய குணங்களி லொன்றான பேதைமையுமாம். வரம் - விருப்பமுமாம். கோடுகின்ற மொழியவன் - நீதிதவறிய சொற்களையுடையவன், சொன்னசொல்மாறுபட்டவன். அவன்சொன்னசொல் தவறியமைக்கு நானே தூதுசெல்லுதல் தகுதியென்பது, நான்காமடியின் கருத்து. என்னைத்தூதனுப்பினால் வெற்றி தவறுமென்பான், 'எனைத்தூதுவிடுக இனிக் கோற்ற வேகதே' என்றான்.

௨௦. மலைகண்டதெனவென்கைம்மறத்தண்டின்வலிகண்டுமகவான்மைந்தன், சிலைகண்டுமிருவர்பொருந்திறல்கண்டுமெமக்காகத் திருமானின்ற, நிலைகண்டுமிவள்விரித்தகுழல்கண்டுமிமைப்பொழுதி னேரார்தம்மைக், கொலைகண்டுமகிழாமலவன்குடைக்கீழுயிர்வாழக் குறிக்கின்றாயே.

(இ - ள்.) மலை கண்டது என - மலையைப் பார்த்தாற் போல, என் கை மறம் தண்டின் வலி கண்டும் - எனது கையி லுள்ள கொடுமையையுடைய கதாயுதத்தினது வலிமையைப் பார்த்திருந்தும், மகவான் மைந்தன் சிலை கண்டும் - இந்திரனது குமாரனான அருச்சுனனது காண்டீபவில்லின் தொழிலைப் பார்த்திருந்தும், இருவர் பொரும் திறல் கண்டும் - மற்றையிரண்டு தம்பியராகிய நகுலசகதேவர்கள் போர்செய்யும் வல்லமையைப் பார்த்திருந்தும், எமக்குஆக திருமால் நின்ற நிலை கண்டும் - நமக்கு உதவியாக ஸ்ரீமகாவிஷ்ணுவின் அம்சமான கிருஷ்ணமூர்த்தி உடன்பட்டுநின்ற உறுதிநிலையைப் பார்த்திருந்தும், இவள் விரித்த குழல் கண்டும் - இத்திரௌபதி விரித்துள்ள கூந்தலைப் பார்த்திருந்தும், இமைப்பொழுதில் நேரார்

தம்மை கொலை கண்டு மகிழாமல் - ஒருநொடிப் பொழுதினுள்ளே பகைவர்களை (நாங்கள்) கொலை செய்தலைப் பார்த்து உவப்படையாமல், அவன் குடைக்கீழ் உயிர் வாழ குறிக்கின்றாயே - அத்துரியோதனனது ஆளுகையின்கீழ் (அடங்கியிருந்து அரசுபெற்று) உயிரோடுகூடிவாழ எண்ணுகின்றாயே! (எ - று.)—ஏகாரம் - அவ்வெண்ணத்தின் இழிவை நன்கு விளக்கும்.

'இவள் விரித்த குழல் கண்டும்' என்றதனால், துரியோதனாதியரைக்கொல்லுதற்குக் காரணமும், மற்றையவற்றால் அவர்களைக் கொல்லுதற்கு ஏற்ற ஆற்றலும் கூறியவாறும். இங்கு 'உயிர்வாழக்குறிக்கின்றாயே' என்றதனால், இங்ஙனம் மானங்கெட்டுவாழ்தலினும் இறத்தலே தகுதி யென்பது போதரும். எமக்குஆக - எமக்கு (வெற்றி) உண்டாக என்றலுமாம்.

வீமன்கையிலுள்ள கதாயுதம் பகைவர்களைத் தவறாதுகொல்லும் இயல்பினதாய்ச் சத்ருகாதினி யென்று பெயர்பெறும்; அதனது அவ்வகையான சிறப்புத் தோன்ற, 'மறத்தண்டு' என்றான். வீமனுக்கு இக்கதை, அசுரத்தச்சனான மயனால் அளிக்கப்பட்டது. அருச்சுனனுக்குக் காண்டீவவில், காண்டவதகனகாலத்திலே அக்கினிபகவான் கொடுத்தது. மகவாந் என்ற வடசொல்லுக்கு-யாகங்களை யுடையவ னென்று காரணப்பொருள்; மகம்-யாகம்: வாந் - வடமொழி ஆண்பாற்பெயர்விகுதி. நூறு அசுவமேதயாகங்களைச் செய்து தேவராஜபதவி பெறுதலால், இந்திரனுக்கு இப்பெயர்; யாகத்திற் கொண்டாடப்படுந் தேவர்கள் பலர்க்குந் தலைவனாதல்பற்றியுமாம். இருவர் - தொகைக்குறிப்பு: இரட்டைய ரென்றவாறுமாம். இமைப்பொழுது - இயற்கையில் ஒருகால் கண்ணிமைகளை மூடித்திறத்தற்கு வேண்டும் பொழுது. நேரார் என்பதற்கு - உடன்பட்டு இணங்கி வாழாதவ ரென்று பொருள்; எனவே, பகைவராம்: எதிர்மறைப் பலர்பால் வினையாலணையும் பெயர். உம்மைகள் - உயர்வுசிறப்பு. (௨0)

[கண்ணன் வீமனைச் சமாதானப்படுத்துதல்.]

௨௧. வெம்புயவீமனும்வெகுண்டுமீண்டுமிவையெடுத்துரைப்ப
மேகமேனிப், பைம்பொனெடுந்தனித்திகிரிப்பரந்தாமன்கருணையுடன்பரிந்துநோக்கி, யம்புவியின்முன்பிறந்தோரரசுநெறிமுறையுரைத்தாலதுகேளாமற், றம்பியருமறுப்பரோ தலைவவினிக்கடுங்கோபந்தணிகவென்றான்.

(இ - ள்.) வெம் புயம் வீமனும் - (பகைவர்க்குப்) பயங்கரமான தோள்களையுடைய வீமசேனனும், வெகுண்டு - கோபங்கொண்டு, இவை மீண்டும் எடுத்து உரைப்ப - இவ்வார்த்தைகளை மறுபடியும் எடுத்துச்சொல்ல,—(அப்பொழுது),—மேகம் மேனி - மேகம்போற் கரிய திருமேனியையும், பைம் பொன் நெடுந் தனி திகிரி-பசும்பொன் மயமான பெரிய ஒப்பற்ற சக்கராயுதத்தையுமுடைய, பரந்தாமன் -(எல்லாவொளிகளினுஞ்)சிறந்தவொளியையுடையவனான கண்ணபிரான், கருணையுடன் - அருளுடனே, பரிந்து நோக்கி-(வீமசேனனை) அன்பாகப் பார்த்து,—'தலைவ-சிறந்த வீரனே! அம்புவியில்-அழகிய நிலவுலகத்தில், முன்பிறந்தோர்-முன்னேபிறந்தவர் [மூத்தவர், தமையனார் என்றபடி], அரசு நெறி முறை உரைத்தால்-இராசநீதியின் முறைமையைக் கூறினால், அது கேளாமல் --அவ்வார்த்தையைக் கேட்டு அங்கீகரியாமல், தம்பியரும் மறுப்பரோ - தம்பிமார்களும் மறுப்பார்களோ? [அல்ல ரென்றபடி]; (ஆதலால்), இனி கடுங் கோபம் தணிக - இனி (நீ) கடுமையான கோபம் ஆறுவாயாக,' என்றான்-என்று கூறியருளினான்; (எ-று.)

துரியோதனாதியர்களை அழிக்கவேண்டு மென்பதுபோலவே, பாண்டவருள் ஒருவரோடொருவர் மாறுபடக்கூடாதென்பதும் தனது திருவுள்ள

மாதலால், கண்ணன் இங்ஙனம் ஏற்றபடி நீதிபோதித்து வீமனதுகோபத்தை மிகாது தணிப்பவனானான்.

வீமனும் என்ற உம்மை-கதைத்தொடர்ச்சிபற்றிவந்த இறந்ததுதழுவிய எச்சம். மீண்டும் என்ற உம்மையும் - இறந்தததுதழுவியஎச்சமே. கீழ்ப் பதினோராங்கவிமுதல் நான்குகவிகளில் ஒருகால் வீமன சில கூறியுள்ளதனை நோக்கி, 'மீண்டும் இவையெடுத்துரைப்ப' என்றனர். பரந்தாமன் என்ற வடசொல்லுக்கு - (எல்லாப் பதவிகளினுஞ்) சிறந்த முத்திதானத்தையுடையவனென்றும் பொருள்கொள்ளலாம்; தாமம் - ஒளியும், இடமுமாம். தலைவ (நீ) கோபந் தணிக - குணப்பெயர் குணியின்முடிபை யேற்றது. 'தலைவ' என்றது - தன்வழிப்படுத்துதற்காகத் துதியாக் கூறியது. தம்பியரும், உம்மை - சிறப்பும்மை. திருமாலின் சக்கராயுதம், சுதரிசன மென்னும் பெயரினது. (உக)

[இதுமுதல் நான்கு கவிகள் - ஒருதொடர்; அருச்சுனன்வார்த்தை.]

உஉ மைக்காலமுகிலூர்திவானவர்கோன்றிருமதலைவணங்கிநின்று, முக்காலங்களுமுணருமுகுந்தனுக்குமுதல்வனுக்குமொழிவான்மன்னோ,வக்காலம்பொறுத்தவெலாமமையாமலின்னமிருந்தறமேசொன்னு, லெக்காலம்பகைமுடித்துத்திரௌபதியுங்குழன்முடிக்கவிருக்கின்றாளே.

(இ - ள்.) (இங்ஙனம் வீமனது கோபத்தைக் கண்ணபிரான் தணித்தபின்பு), மை - கரிய, காலம் - கார்காலத்துமழைபொழிகின்ற, முகில்-மேகத்தை, ஊர்தி - வாகனமாகவுடைய, வானவர் கோன் - தேவர்கட்கு அரசனை இந்திரனது, திரு மதலை-சிறந்தகுமாரனாகிய அருச்சுனன்,—வணங்கி நின்று நமஸ்கரித்து எழுந்து நின்று,—முக்காலங்களும் உணரும் முகுந்தனுக்கும் - மூன்றுகாலத்துச்செய்திகளையும் அறிகிற கண்ணபிரானுக்கும், முதல்வனுக்கும் - மூத்ததமையனான தருமனுக்கும், மொழிவான் - (சிலவார்த்தை) கூறுவான்: (அவை யாவையெனின்:—) 'அ காலம் பொறுத்த எலாம் அமையாமல் - (முன்பு சூதாடிய) அந்தக்காலத்திற் (பகைவர்பிழைகளைப்) பொறுத்த செய்கைகளெல்லாம் போதாமல், இன்னம் இருந்து அறமே சொன்னால் - இப்பொழுதும் (போர்முயற்சியின்றிப் பொறுத்து) இருந்து (அப்பொறுமையாகிய) தருமத்தையே போதித்துக்கொண் டிருந்தால், எ காலம்-எப்பொழுது,பகை முடித்து-(நாம்)பகைவர்களைக் கொன்று, (அதன் பிறகு), திரௌபதியும் குழல் முடிக்க இருக்கின்றாள் - திரௌபதியும் (தனதுசபதத்தை நிறைவேற்றித் தனது விரித்த)கூந்தலை யெடுத்துமுடித்து அலங்கரிக்க இருக்கின்றாள்! (எ - று.)—இரண்டாமடியின் ஈற்றில், மன், ஓ - அசைகள்.

தாங்கள் செய்த சபதங்களுக்கெல்லாம் திரௌபதியினது பரிபவமே காரணமாதலால், அவள்பிரதிஜ்ஞையையேபிரதானமாகஎடுத்துக்கூறினன்.

ஊர்தி - ஏறிநடத்தப்படுவது என வாகனத்துக்குக் காரணப்பெயர்; ஊர்தல்-ஏறிச்செலுத்தல்: இ - செயப்படுபொருள்விகுதி, த்-எழுத்துப்பேறு. மேகவாகன னென்று இந்திரனுக்கு ஒருபெயர். காலமுகில் - காலமென்னும் பொதுப்பெயர், இங்கே சிறப்பாய்க் கார்காலத்தைக் குறிக்கும். இனி, மைக் கால முகில் - அஞ்சனம்போலக் கரிய மேக மென்றுமாம். மைக்காலமுகில் - நீர்கொண்டமேக மென்றபடி. கடவுள் ஸர்வஜ்ஞனாதலால், 'முக்காலங்களுமுணரும்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இங்கு 'முக்காலம்'என்றது - முக்காலவரலாற்றை யுணர்த்தியதனால், காலவாகுபெயர். முகுந்தன் - முத்தியுலக இன்பத்தையும், இவ்வுலக இன்பத்தையும் (தன்னடியார்க்குத்) தருபவன்; மு - முத்தி, கு - பூமி, த - கொடுப்

பயன். 'பொறுத்த' என்பதைப் பெயரெச்சமாகவும், பலவின்பால் வினையாலணையும்பெயராகவுங் கொள்ளலாம். 'முடித்து' என்னுஞ் செயவெனெச்சம் பிறகருத்தாவின்வினைகொண்டு முடிதற்கு ஏலா தாதலால், அதனை, அவ்வினையையுங்கொள்வதற்குஏற்ற செயவெனெச்சமாக 'முடிக்க' எனத் திரித்துக்கொள்க; [நன் - வினை - உ௫, உ௭]. துரியோதனன் செய்த குற்றம் பலவாதல்பற்றி, அவற்றைப்பொறுத்தலும் பலவாதலால், 'பொறுத்தவெலாம்' எனப் பன்மையாக் கூறப்பட்டது. த்ரௌபதி என்ற வடசொல்-துருபதராசனதுமகளென்று பொருள்படுந் தத்திதாந்தநாமம்; அது ஈறு இகரமாயிற்று. ஈற்றடியில், முடித்தல் என்ற வினையை வெவ்வேறுபொருளில் உபயோகித்தது, ஒருவகைச் சமத்காரம். (உஉ)

உ௩. தேவராயினும்பழையதெயித்திபராயினுமற்றுஞ்செப்புகின்றோர், யாவராயினுமெதிர்ந்தோருயிருணவென்றிருப்பதுவேயென்கைவாளி,மூவராயவர்களுக்குமுதல்வனாகியமூர்த்திமுகில்தோய்பூகமீவராலுகளுங்கயற்குருநாடென்னிவனவன்பால்வேண்டுமாறே.

(இ - ள்.) மூவர் ஆயவர்களுக்கும் முதல்வன் ஆகிய மூர்த்தி - திரிமூர்த்திகளுக்குங் காரணனான சிறந்தவடிவமுடைய பெரியோனே! தேவர் ஆயினும் - தேவர்களானாலும், பழைய தெயித்தியர் ஆயினும் - பழமையான அசுரர்களானாலும், மற்றும் செப்புகின்றோர் யாவர் ஆயினும் - இன்னும் சொல்லப்படுகிறவர் எவரானாலும், எதிர்ந்தோர் - (போரில்) எதிரிட்டவர்களது, உயிர் - உயிரை, உண என்றே - உண்ணும் பொருட்டாகவே, என் கை வாளி - எனது கையி லுள்ள அம்பு, இருப்பது—; (அப்படியிருக்க), இவன் - இத்தருமன், முகில் தோய் பூகம் மீ வரால் உகளும் கயல் குருநாடு - மேகங்களை அளாவ உயர்ந்த பாக்குமரங்களின்மீது வரால்மீன்கள் குதிக்கப்பெற்ற (நீர்வளச் சிறப்பையுடைய) கழனிகளையுடைய குருநாட்டை, அவன்பால் வேண்டும் ஆறு - அத்துரியோதனனிடம் இரக்க விரும்பும்விதம், என் - யாதுகாரணத்தால்? (எ - று.)

அசுரர் தேவர்களினும்மூத்தவராதலால், 'பழையதெயித்தியர்'என்றது; இதுபற்றி, அசுரர்க்கு 'பூர்வதேவர்' என்று ஒருபெயர்: இக் காரணத்தால் கீழ் நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கத்தில் அவர்களை 'புரோசரம்' என்றதுங் காண்க. தைத்தியர்-(காசியபமுனிவரது மனைவிமார்களுள்) திதியென்பவளது புத்திரர்; வடமொழித் தத்திதாந்த நாமம்: அது, தெயித்தியர் எனப் போலி விகாரம் பெற்றது. இரண்டாமடியின் முதலில் 'எவராயினும்' என்றும் பாடம். உண - உண்ண; தொகுத்தல். உயிருண - உயிரை உடம்பினின்று கவர்ந்துகொள்ள என்றபடி; "உண்டற்குரிய வல்லாப்பொருளை, உண்டனபோலக் கூறலு மரபே" என்று தொல்காப்பியத்துச் சொல்லப்பட்ட மரபுவழுவமைதியால், உண்ணுதற்கு உண்ணப்படாததும் உண்பதும் உண்ணப்படுவதுமாக உரைக்கப்பட்டன. உணவு என்று எனப் பிரித்து, உயிரைத் தனக்கு இரை யென்று கருதியிருப்பதென்றலுமாம்.

திருப்பாற்கடலில் எழுந்தருளியுள்ள திருமாலின் வியூகமூர்த்திகளாகிய வாஸுதேவன், ஸங்கர்ஷணன், பிரத்யும்நன், அநிருத்தன் என்ற நால்வருள், பிரதானமூர்த்தியான வாசுதேவன், பிரம விஷ்ணு ருத்திர ரூபிகளாய்ப் படைத்தல் காத்தல் அழித்தல்தொழில்களைச்செய்யும் மற்றைமூவர்க்குங் காரணனாதலால், அக்கிலையைக்கருதி, 'மூவராயவர்களுக்குமுதல்வனாகியமூர்த்தி' என்றார்; இனி, "முதலாவார்மூவரே அம்மூவருள்ளும், முதலாவான் மூரிநீர்வண்ணன்", "தேவராய்த் தேவர்க்குந் தெரியாத வொளியுருவாய், மூவராய் மூவர்க்குள்முதல்வனாய் நின்றோய் நீ" என்றவற்றைத் அடியொற்றி 'மூவராயவர்களுக்கும் முதல்வனாகிய' எனப் பாடங்கொண்டு, திரிமூர்த்தி

களுள்ளும் மற்றை யிருமூர்த்திகளுக்குக் காரணமாகிய மூர்த்தியே என்றும் உரைக்கலாம்; "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும், தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்" என்றார் பெரியாரும். மூவராய் அவர்களுக்கும் முதல்வனாகிய எனப் பிரித்தும் உரைக்கலாம். மூவர் என்ற தொகைக்குறிப்பின்மேல், ஆயவர்கள் - பகுதிப்பொருள்விகுதி. மூர்த்தி - இயல்பாகிய அண்மைவிளி.

பூகம் - வடசொல். முகில்தோய் பூகம் மீ வராலுகளும் வயல் - பாக்கு மரங்களின் உயர்ச்சிச்செழுமையையும், மீன்களின் துள்ளற்கொழுமையையும் விளக்கியவாறு. பாக்குமரத்துக்கும் மேகத்திற்கும் வரால்மீனுக்கும் சம்பந்தமில்லாதிருக்கவும், சம்பந்தத்தைக் கற்பித்துக்கூறியது - தொடர்புயர்வு நவிற்சியணி; இதனை வடநூலார் ஸம்பந்தாதிசயோக்தியென்பர். இதனால், நாட்டின் வளம் தொனிக்கும். உணவென்றிருப்பதுவே - உணவே என்றிருப்பது என ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. (௨௩)

௨௪. நீண்டாதகற்புடையசெழுந்திருவைத்துகிலுரியச்செய லொன்றின்றி, நீண்டானேகரியானேநிமலாவென்றரற்றினளாய்நின் றுசோர, மாண்டார்போலதுகண்டுமன்னவையில்யாமிருந்தமாசுதீர, வேண்டாவோவேண்டுவதுமேம்படுநல்லறமேயோவேந்தர்வேந்தே.

(இ - ள்.) வேந்தர் வேந்தே - அரசர்களுக் கரசனே! தீண்டாத - (அயற்புருஷரால்) தொடுதற்குத்தகாத, கற்பு உடைய - பதிவிரதாதருமத்தையுடைய, செழுந் திருவை - அழகிய இலக்குமிபோன்ற திரௌபதியை, துகில் உரிய - (துரியோதனன் தம்பி) ஆடையைக் களைகையில், (அவள்), செயல் ஒன்று இன்றி - (அதற்குப் பரிகாரமாகச்) செய்யத்தக்கது ஒருகாரியமுமில்லாமல், நீண்டானே கரியானே நிமலா என்று அரற்றினள் ஆய் - (முன்னே திரிவிக்கிரமனாய்)நீண்டவனே! கரியதிருநிறமுடைய கண்ணனே! குற்றமற்றமூர்த்தியே! என்று கூவி (க் கதறிக் கண்ணனையே) பிரார்த்தித்தவளாய், நின்று சோர - தளர்வடைந்து நிற்க, அது கண்டும் - அந்நிலையைப் பார்த்திருந்தும், யாம் - நாம் ஐவரும், மன் அவையில் - அவ்விராசசபையிலே, மாண்டார்போல் இருந்த - (யாதொன்றுஞ் செய்யாமல்) இறந்தவர்போலத் தொழிலற்றிருந்த, மாசு - குற்றம், தீர வேண்டாவோ - நீங்கவேண்டுவதில்லையோ? வேண்டுவது மேம்படு நல் அறமேயோ - செய்யவேண்டுவது சிறந்த நல்லதருமமாகிய பொறுமைமாத்திரமோ? (எ - று.)

அவளதுபதிவிரதாதருமத்தினது நெருப்போடொத்த தூய்மையை விளக்குதற்கு, 'தீண்டாதகற்பு' என்றார்; இனி, அவளைத் துகிலுரித்தது தீண்டக்கூடாமல் விலக்காயிருந்தகாலத்திலாதலால், 'தீண்டாத திரு' என்றதாகவும் கொள்ளலாம். கற்பு - கணவனையே தெய்வமாகக்கொண்டு அவனுக்குக்கீழ்ப்படிந்து நடக்கும் நடத்தை; பாதிவிரத்தியம். கணவனிற்சிறந்த தெய்வமில்லையென்றும் அவனை இன்னபடி வழிபடவேண்டு மென்றும் தாய்தந்தையரும், அந்தணரிடத்தும் பெரியோரிடத்தும் உறவினரிடத்தும் தேவரிடத்தும் நடக்கவேண்டுவது இன்னபடியென்று கணவனும் கற்பித்தலால் ஒழுகும் ஒழுக்கமாதலின், கற்பு என்பது - காரணப்பெயரென்பர். இனி, கல்லின் தன்மைபோல நிலைகுலையாத உறுதியுடைய தென்றுமாம். திரௌபதி, பேர்கூறினமாத்திரத்தில்பெரும்பாவங்களையொழிக்கவல்ல பஞ்சகன்னிகைகளுள் ஒருத்தியாவள் என அறிக; (அவராவார் - அகலிகை, திரௌபதி, சீதை, தாரை, மண்டோதரி என இவர்.) முன்னையபிறப்பின்வரத்தாலும், குந்திதேவியின் கட்டளையாலும், ஐவர்க்கு மனைவியானதால், திரௌபதியின் கற்புநிலைமைக்குச் சிறிதும் குறைபாடில்லை யென அறிக. திரு - திரௌபதிக்கு உவமையாகுபெயர். கல்வியையுடையார்க்கெல்லாம் பொதுவாகிற

திருமகள்போல, இவளை மனைவியாகப்பெறுதற்கேற்ற புண்ணியன் மனைவிதமுடைய பாண்டவரைவர்க்கும் இவள் பொதுப்படமனைவியாதலால், இவளைத் திருமகளோடு உவமித்தது. திருமகளுவமை - அழகுக்கும் செல்வநிறைவிற்குமாம். செழுந்திரு என விசேடித்தது, அவள்போல இவள் இடையில் விட்டுநீங்காளாதலால்.

துகிலுரிதல் - வஸ்திராபஹரணம். "அருகணுகி மடவாரை யஞ்சாமல் துகிலுரிவா னடர்ந்தபோதில், இருகைசுறுமலர் குவிய எம்பெருமானிணையடிக்கே யிதயம்வைத்தாள்," "ஆருகி யிருதடங்கண் அஞ்சன வெம்புனல் சோர வளகஞ்சோர, வேறான துகில்தகைந்தகைசோர மெய்சோர வேறோர் சொல்லுங், கூறாமற்கோவிந்தாகோவிந்தாவென்றாற்றிக்குளிர்ந்து நாவில், ஊறாதவமிழ்தூற வுடல்புளகித்து உள்ளமெலா முருகினளே", "அருமறை சொல்லியநாமமாயிரமுமுரைத்தழைக்க" எனக் கீழ்ச்சூதுபோர்ச்சருக்கத்து வந்ததை இங்கே உணர்க. மாண்டார், மாள் - பகுதி; மாட்சிமைப்பட்டார் என்ற பொருளில், மாண்-பகுதி. வேண்டுவது மேம்படுநல்லறமேயோ என்பதற்கு-இராச்சியத்தையிரப்பது பெருமைபெறத்தக்க சிறந்த இராசதருமந்தானோ? என்றும் உரைக்கலாம். உயிர் நீங்கிய உடலை 'மாண்டார்' என உயர்திணையாற்கூறினது, மரபுவழுவமைதி. வேந்தர்வேந்து-ராஜாதிராஜன்.

உரு பொன்னாருந்திகிரியினான்போனாலும்பொறைவேந்தன்புகன்றவெல்லாஞ், சொன்னாலுமவன்கேளான்விதிவலியாற்கெடுமதிகண்டோன்றாதன்றே, யெந்நாளுமுவர்நிலத்தினென்முளைவித்திடினும்விளைவெய்திடாது, பன்னாகந்தனக்கமிர்தங்கொடுத்தாலும்விடமொழியப்பயன்கொடாதே.

(இ - ள்.) பொன் ஆரும் திகிரியினான் - பொன் மயமாய்ப் பொருந்திய சக்கராயுதத்தை யுடையவனான கண்ணபிரான், போனாலும் - தூது சென்றருளினாலும், பொறை வேந்தன் புகன்ற எல்லாம்-பொறுமைக்குணத்தையுடைய யுதிட்டிரராசன் கூறிய சமாதான வார்த்தைகளை யெல்லாம், சொன்னாலும் - (கண்ணன்) சொல்லியருளினாலும், அவன் கேளான் - அத்துரியோதனன் கேட்டு அதன்படி நடக்கமாட்டான்; (ஏனெனில்,—) விதி வலியால் கெடு மதி கண் தோன்றாது அன்றே - போகூழின் வலியினால் அழிதற்குக் காரணமான அறிவுக்கு (நீதி) கட்புலப்படாதாம்; எ நாளும் உவர் நிலத்தின் என் முளை வித்திடினும் விளைவு எய்திடாது - எப்பொழுதும் களர்நிலத்தில் எந்தவிதையை விதைத்திட்டாலும் (அது) விளைதலை யடையமாட்டாது; பன்னாகந்தனக்கு அமிர்தம் கொடுத்தாலும் விடம் ஒழிய பயன் கொடாதே - பாம்புக்குப் பாலை யூட்டினாலும் அது விஷத்தைத்தவிர வேறு நல்லபயனைத் தராதன்றோ; (எ - று.)

மூன்றாமடியில் உபமானம் - எவ்வளவு நல்ல உபதேசத்தை எவ்வளவு காலம் செய்தாலும் அது தீயோர்மனத்திற் சென்றுபதிந்து பலியாதென்ற கருத்தையும், நான்காமடியில் உபமானம் - தீயோர்க்கு நல்லன உபதேசித்தால் அவர் அதற்கு எதிராகத் தீங்குகளையே புரிவ ரென்ற கருத்தையும் விளக்க வந்தன. இங்கே 'உவர்நிலம்' என்றது, விதைத்த விதையையெல்லாம் முளைக்கவொட்டாமற்செய்யும் க்ஷாரபூமியை. அந்தச் சவட்டுநிலம் ஒருவாற்றாலும்பயன்படாத அறிவிலார்க்கு உவமையாதலை, "பயவாக் களரனையர் கல்லாதவர்" எனத் திருக்குறளிலுங் காண்க. கெல் முளை எனப் பதம்பிரித்து உரைத்தலில், பொருட்சிறப்பின்மை உணர்க. (இரண்டு நான்காமடிகளை "பாதமறைவெவ்வரவினுக்குப் பாலு செய்யும்புகட்டிடினும், வாதை செய்யும் கல்விடமே வளருமா போல் மனுநூலும், வேதமனையோராயிரமும் விளக்குங் கலையுந் தசக்கிரிவ, னேதவோதப் போதங்கெட்

டபோதமான தோன்றியதே" என்ற ஒட்டக்கூத்த ருத்தரகாண்டச்செய்யு ளோடு ஒப்பிடுக.) நிலைமையடைவிக்கவேண்டிய முன்னைய பிறப்பின் கருமம் வந்துஉற்றபோது எந்தநியாயமும் மனத்திற்கு இணங்காதாதலால், 'விதி வலியாற் கெடுமதி கண்தோன்றுதன்றே' எனப்பட்டது; "பேதைப்படுக்கு மிழவூ ழறிவு" என்றார் திருவள்ளுவனாரும். அன்றே - தேற்றம்.

எக்காலும் என்ற உம்மை - முற்றுப்பொருளது; மற்ற உம்மைகள் - உயர்வுசிறப்பு. பன்னாகம் - பந்நகம் என்பதன் விகாரம்; பல் நாகம் எனப் பதம்பிரித்து,விஷப்பற்களையுடைய பாம்பு எனினுமாம்: 'பைந்நாகம்' என்ற பாடத்துக்கு - படத்தையுடைய பாம்பென்க. விடம் - வடசொல் திரிபு. பொன் ஆரும் - திருமகள்பொருந்தியிருக்கப்பெற்ற என்று உரைத்து, இனி யினுக்கு அடைமொழியாக்கினும் அமையும். அம்ருதம் - வடசொல்; மர ணத்தைத் தவிர்ப்பது என்று காரணப்பொருள்பெறும். (உ௫)

[இக்கவியிற் பின்னிரண்டடிகளும், அடுத்த மூன்றுகவிகளும் - நகுலன்வார்த்தை.]

உ௬. பார்த்தனிவைபுகன் றிறைவன்பணித்தருளவிருந்ததற்பின் பரிவினோடுநீ, தீர்த்தனிருபதமிறைஞ்சித்தருமனையுங்கைதொழுதுசி னங்கொள்வேலா, னீத்தநெடுங்கடலெழுபாரடலைவர்பெறுவரெனு நிகழ்ச்சிபொய்யோ, கோத்தருமந்தனிலாண்மைகூறுதோகூறுகநீ கொற்றவேந்தே.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பார்த்தன் - அருச்சுனன், இவை புகன்று - இவ்வார்த்தை களைச் சொல்லி, இறைவன் பணித்தருள - (யாவர்க்குந்) தலைவனாகிய கண்ணபிரான் (கோபந்தணிவாயென்று) அடக்கிக்கூறியருள, இருந்ததன் பின் - (பேச்சைமுடித்து) இருந்தபின்பு,—சினம் கொள் வேலான் - கோ பத்தைக்கொண்ட வேலாயுதத்தையுடையவனான நகுலன்,—பரிவினோடும்- அன்புடனே,தீர்த்தன் இரு பதம் இறைஞ்சி-பரிசுத்தமூர்த்தியான கண்ண பிரானது இரண்டு திருவடிகளையும் வணங்கி, தருமனையும் கைதொழுது - யுதிட்டிரனையும் கைகூப்பித்தொழுது, (யுதிட்டிரனைநோக்கி),—கொற்றம் வேந்தே - வெற்றியையுடைய அரசனே! 'நீத்தம் நெடுங் கடல் எழு பார் - வெள்ளமயமான பெரியகடலினாற் சூழப்பட்ட ஏழுதீவுகளாகவுள்ள பூமி முழுவதையும், அடல் ஐவர் பெறுவர் - வலிமையை யுடைய பஞ்சபாண்ட வர்கள் (துரியோதனனிடமிருந்து) பெறுவார்கள்,' எனும் நிகழ்ச்சி - என்று (உலகத்தார்) சொல்லுஞ் சொல், பொய்யோ - பொய்யாகுமோ? கோ தரு மந்தனில் ஆண்மை கூறுதோ - இராசதருமத்தில் (பராக்கிரமம் முதலிய) ஆண்மகனுக்கு உரிய தன்மை சொல்லப்பட வில்லையோ? [பொறுமையே சொல்லப்பட்டுள்ளதோ?] நீ கூறுக - நீ சொல்வாயாக; (எ - று.)

மேல் வீமன்வார்த்தை முடிந்தபின்பு கண்ணன் "அம்புவியில் முன்பிறந் தோ ரரசநெறி முறையுரைத்தா லதுகேளாமல், தம்பியரும் மறப்பரோ தலைவ வினிக்கெடுக்கோபந்தணிக" என்றுகூறி அவனைச் சாந்தப் படுத்திய தற்கும், மேல் நகுலன்வார்த்தை முடிந்தபின்பு நன்றெனக் கையமைத்தரு ளுவதற்கும் ஏற்ப, இங்கு 'இறைவன் பணித்தருள' என்பதற்கு இவ்வாறு பொருள்கொள்ளப்பட்டது. தாமே வெற்றி பெறுதல் நிச்சய மென்பதை விளக்குதற்கு,'அடலைவர்'என்றும்,'நிகழ்ச்சி பொய்யோ'என்றுங் கூறினன்; அடுத்தசெய்யுளின் ஈற்றடியிலும் இக்கருத்துப்படவுரைத்தல் காண்க. இன் கே 'நிகழ்ச்சி'என்றது, 'பொறுத்தவர் பூமியாள்வார்' என உலகத்துவழங்கு வதையு மாகலாம். அரசர்கள் பராக்கிரமத்தைக்காட்டுவது இராசதருமமன் றோ என்பது - இறுதியடியின் கருத்து.

பார்த்தன் - பிருதையின்மகன்; தத்திதாந்தநாமம்: (பிருதை - குந்தி.) இது அருச்சுனனுக்குச் சிறப்பாகவழங்கும்:காரணவிடுகுறி; தாய்க்குஇளைய மகனிடத்தில் அன்பு மிகுதி யென்ற பொதுநியாயம், இதற்குக் காரணமாக லாம். இறைவன் - தலைமையுணர்த்தும் இறைமையென்னும் பண்பினடி யாகப் பிறந்த பெயர்; இனி, அந்தரியாமியாய் எல்லாப் பொருளிலுந் தங்கு கிறவன் என்றும் பொருள்கொள்ளலாம்: இறுத்தல் - தங்குதல். இருந்ததற் பின் என்பதற்கும், இறைஞ்சி, தொழுது, வேலான் என்பவற்றிற்கும் - மேல் முப்பதாங்கவியில் 'உரைத்ததற்பின்' என வருவது, முடிக்குஞ் சொல். தீர்த்தன் - வடசொல்; இது-திருமாலுக்குப் பெயராதலை, "தீர்த்த னுலகளந்த சேவடி" எனத் திருவாய்மொழியிலுங் காண்க. உடையானது சினத்தை ஆயுதத்தின்மேல் ஏற்றி, 'சினங்கொள்வேல்'என்றார்;உபசாரவழ க்கு: இனி,'சினங்கொள்' என்பது-வேலானுக்கு அடைமொழியாகலுமாம்.

நீத்தம் - நீந்தப்படுவது என வெள்ளத்துக்குக் காரணக்குறி; நீந்து - பகுதி, அம்-செயப்படுபொருள்விகுதி, வலித்தல்-விகாரம். எழுபார் - ஜம்பூ, பிலட்சம், குசம், கிரௌஞ்சம், சாகம், சால்மலி, புஷ்கரம் என்னும் ஏழு தீவுகளாகவுள்ளவை. ஏழுதீவுகளும் ஏழுகடல்களுள் தனித்தனி ஒவ்வொன் றாற்சூழப்பட்டுள்ளனவென்பது, புராணக்கொள்கை.எழுகடல்கள்-உவர்நீர், கருப்பஞ்சாறு, கள்,நெய்,தயிர்,பால், நன்னீர் என இவற்றின் மயமானவை. ஐவர் - தொகைக்குறிப்பு. (உசு)

உஎ. கேவலந்தீர்வலியபகைகிடக்கமுதற்கிளர்மழைக்குக்கிரி
யொன்றேந்து, கோவலன்போயுரைத்தாலுங்குருநாடுமரசுமவன்
கொடுக்கமாட்டா, னவலம்பூதலத்தரசர்நாடிரந்தோமெனநம்மைந
கையாவண்ணங், காவலன்றன்படைவலியுமெனதுதடம்புயவலியுங்
காணலாமே.

(இ - ள்.) கேவலம் தீர் - சிறுமை யில்லாத [பெரிய என்றபடி], வலிய பகை - உறுதியான பகைமை, கிடக்க - (நமக்கும் அவர்க்கும் வெகு காலமாக) நிலைத்திருப்பதனால்,—முதல் கிளர் மழைக்கு கிரி ஒன்று ஏந்து கோவலன் போய் உரைத்தாலும் - முன்னொரு காலத்திலே மிகுதியாகப் பெய்த மழையைத் தடுப்பதற்கு(க் கோவர்த்தனமென்னும்) மலையொன்றை (க் குடையாக) எடுத்தருளிய கண்ணபிரான் தூதுபோய்ச் சொன்னாலும், அவன் - அத்துரியோதனன், குருநாடும் அரசும் கொடுக்க மாட்டான் - குருநாட்டின் பாகத்தையும் (அதற்குஉரிய) அரசாட்சியையும் (நமக்குக்) கொடுக்கமாட்டான்; (ஆதலால்),—அம் நாவல் பூதலத்து அரசர் - அழகிய ஜம்பூத்துவீபத்திலுள்ள அரசர்களெல்லாரும், நாடு இரந்தோம் என நம்மை நகையா வண்ணம்-இராச்சியத்தை(ப்பகைவனிடம்)யாசித்தோமென்று (நம்மை இகழ்ந்து) சிரித்துப் பரிகாசஞ்செய்யாதபடி, காவலன்தன் படை வலியும் - அரசனான துரியோதனனது சேனாபலத்தையும், எனது தட புயம் வலியும் - (தம்பியாகிய) என்னுடைய பெரிய தோள்களின் வலிமை யையும், காணல் ஆமே - (விரைவில் எதிரிறந்தென்று பிரதியட்சமாகப்) பார்த்திடலாமே; (எ - று.)

துரியோதனனை வேரோடு அழித்து விடுதல் என்னொருவனாலேயே செய்யக்கூடிய சிறியதொழிலாயிருக்க,வலியற்றவர்போல எளிமைதோன்ற வீணாகச் சமாதானம்பேசுதல் சிறிதுந் தகுதியன்றென்று கூறினனென்க. நகுலன் இவ்வகைப்பெருந்திறலுடையனாதலை, "நகுலன் பரியேறினொலொ ன்று மூன்று, புவனங்க ளேழும் புடைபோய்-இகலும், அவனுடைய வில்லு மதிரதரு மெல்லாம், இவனுடைய முன்னில்லா ரிங்கு" என்று (பாரதவெ ண்பாவிற்) கண்ணன் கூறியதனாலும் உணர்க. 'எமது தடம்புய வலியும்'

என்ற பாடத்திற்கு - (வீமன் முதலிய) எங்களுடைய பெரியதோள்வலியையு மென்க.

அடைக்கலமடைந்தவர்களை ஆதரிக்கிற கண்ணபிரானது உயர்வு தோன்ற, 'முதற் கிளர்மழைக்குக் கிரியொன்றேந்து கோவலன்' என்றான். முதல்-இளமையிலே என்றபடி. 'முகில்கிளர்மழைக்கு' என்றும்பாடமுண்டு. மழைக்குக் கிரியேந்திய கதை:—திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாருங் கூடி மழையின் பொருட்டாக இந்திரனை ஆராதித்தற்கென்று வழக்கப்படி சமைத்த சோற்றைக் கண்ணபிரான் ஒருகால் அவனுக்கு இடாதபடி விலக்கிக் கோவர்த்தனமலைக்கு இடச் சொல்லித் தானே ஒரு தேவதா ரூபங் கொண்டு அமுதுசெய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பலமேகங்களை யேவிக் கண்ணன்விரும்பிமேய்க்கிற கன்றுகட்கும் பசுக்கட்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்குதரும்படி கல்மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தனமென்னும் மலையை எடுத்துக் குடையாகப்பிடித்து மழையைத்தடுத்து எல்லாவுயிர்களையும் இடையூறு சிறிதுமின்றிக் காத்தருளின னென்பதாம். இதனால், கண்ணபிரானது அடைக்கலம் புகுந்தோரை ஆதரிக்கும் உயர்வு தோன்றும்.

'தீர்வரிய' எனப் பாடமோதி, தீர்வு அரிய பகை - நீங்குதலில்லாத விரோதம், கேவலம்-மிகுதியாக, முதல்-இளமைதொடங்கி, கிடக்க - (நமக்குள்) இருத்தலால் என உரைப்பாரு முளர். "தீராக் கோபம் போராய் முடியும்" என்பது நீதி யாதலால், பலநாளாயுள்ள பகைமை சமாதானமாய் முடியாது என்றான். நாவலம்பூதலம், அம் - சாரியை யெனினுமாம். இத்தத்துவீபத்தின் மத்தியிலுள்ள மகாமேருமலையின்தென்புறத்தி லிருக்கின்றதொரு மிகப்பெரிய நாவல்மரத்தைப்பற்றித்தான், ஜம்பூத்வீப மென்கிற பெயர் இதற்கு உண்டாயிற்று; ஜம்பூ - நாவல். கோவலன்-கோபாலன் என்னும் வடசொல்லின் விகாரம்; பசுக்களைக் காப்பவ னென்றும், உயிர்களைக் காப்பவனென்றும், பூமியைக்காப்பவனென்றும்பொருள்படும். இனி, தமிழ்மொழியாகவே, கோ வலன் எனப்பிரித்து, பசுக்களைக்காத்தலில்வல்லவன் எனப்பொருள்கொள்ளினுமாம். காவலன்-கா வலன் எனப்பிரிந்து காத்தற்றொழிலில்வல்லவ னென்றும், காவல் அன் எனப்பிரிந்து காத்தற் றொழிலையுடையவ னென்றும் பொருள்படும். நாவலந்தீவைக் கூறியது - மற்றைத் தீவுகட்கும் உபலக்ஷண மென்றலும் ஒன்று. அருகிலுள்ளவ ராதலின், இத்தீவினரசரைமாத்திரம் எடுத்துக்கூறினான். உம்மைகள்ஐந்தனுள், முதலது-சிறப்பு, மற்றவை - எண்ணும்பொருளன. (உஎ)

உஅ. அன்னநடையரம்பைதனையவுணர்கவர்ந்திடவிமையோரரசுக்காக,முன்னமவருடன்பொருதுசிறைமீட்டானங்குலத்துமுதல்வனன்றோ, மன்னவையில்யாங்காணமடவரலைத்துகிலுரிந்தவலியோன்றன்பா, லின்னமிரந்தவன்குடைக்கீழிருந்தக்காநம்மையுலகென்சொலாதே.

(இ - ள்.) நம் குலத்து முதல்வன் - நாம்பிறந்த குலத்தில் தோன்றிய பழையஅரசனாகிய புரூரவனென்பவன், முன்னம் - ஆதிகாலத்திலே, அன்னம் நடை அரம்பைதனை - அன்னப்பறவையின் நடைபோன்ற நடையையுடைய (ஊர்வசி யென்னும்) தேவமகளை, அவுணர் கவர்ந்திட - அசுரர்கள் (பலாத்காரமாக) எடுத்துச்செல்ல, இமையோர் அரசுக்காக - தேவர்களுக்குஅரசனான இந்திரன்பொருட்டாக, அவருடன் பொருது-அவ்வசுரரோடு யுத்தஞ்செய்து, சிறை மீட்டான் அன்றோ - (அவளை அவ்வசுரரது) காவலில்

நின்றும் விலேத்தானன்றோ? (அவ்வாறிருக்க), மடவாலே - (நம்மைவர்க்கும் பத்தினியான) இளமைப்பருவத்தின் வருகையையுடைய திரௌபதியை, மன் அவையில் - இராசசபையிலே, யாம் காண - (தொழுதாராகிய) நாமெல்லோரும் பார்க்க,துகில் உரித்த-(துச்சாதனனுல்)வஸ்திராபஹரணஞ்செய்த, வலியோன்தன்பால் - நெஞ்சுறுதியுள்ள துரியோதனனிடத்து, இன்னம்- இன்னமும், இரந்து - (இராச்சியத்தை) யாசித்து,அவன் குடை கீழ் இருந்தக்கால் - அவனதுஅரசாட்சியின்கீழே வாழ்ந்திருந்தால், உலகு நம்மை என் சொலாது - உலகத்தவர் நம்மை யாதுதான் சொல்லமாட்டார்கள்?[பெரும்பழி கூறுவ ரென்றபடி]; (எ - று.)

சந்திரனதுமைந்தனுகிய புதன் இளையினிடத்துப் பெற்ற புத்திரனுகிய புரூரவனென்பவன், நிலவுலகத்தில் ஒரு பூஞ்சோலையில் வந்து விளையாடிக் கொண்டிருந்த தேவலோகத்துமாதர்களுள் ஊர்வசியை அசுரர்கள் கவர்ந்து செல்கையில், அவள்முறையிட்டதைக் கேட்டு,இந்திரனுக்குவருகிற மானக்கேட்டை ஒழிக்கக் கருதி, உடனே தேரேறிச் சென்று பொருது அசுரர்களைவென்று அவளைமீட்டுவந்து, பின்பு இந்திரன் தூதனுப்பியதனுல் அவளை மணஞ்செய்துகொண்டு, அவளிடத்தில் ஆயுவென்னுங் குமாரனைப் பெற்றானென்பது-கீழ்க் குருகுலச்சருக்கத்துக்கதை.இங்ஙனந் தனக்கு யாதொரு சம்பந்தமுமில்லாத தேவதாசியை அத்தேவர்க்குப் பகைவரான அசுரர் பங்கப்படுத்தமுயல்வதைப் பார்த்து மனம்பொறாமல் இந்திரனுக்குஉபகாரமாக அக்கொடியவரை வென்று அவளை அவர்களினின்றுமீட்டு அவளதுதுன்பத்தைத்தீர்த்தருளிய பெருங்கண்ணோட்ட முடைய புரூரவ சக்கரவர்த்தியினது மரபிற் பிறந்த நாம், அக்கினிசாட்சியாகப் பலருமறிய விரும்பி மணம்புரிந்தமனைவியைப்பங்காளிகள் பலருமறியச்சபையிலேபிடித்திழுத்துத்துகிலுரிந்துபங்கப்படுத்தியதைப் பார்த்தும் சிறிதும்மானமின்றி அவர்களையழித்துஅவளதுதன்பத்தைத்தீர்க்கச்சிறிதும்முயலாமல் அவர்கள்கீழேயேயிருந்து இரந்து இராச்சியம்பெற்று ஆண்டு உண்டு வயிறுவளர்த்து வாழத் துணிவது தகுதியோ? எனத் தருமனது அளவுகடந்த பொறுமையை இகழ்ந்து கூறியவாறு.

நடை - தொழிற்பெயர்; ஐ - விகுதி: நட என்னும் பகுதியீறு தொகுத்தல் விகாரம். அரம்பை - ரம்பா என்னும் வடமொழியின் திரிபு; ரகரம் அகரத்தை முதலிற்பெற்று இறுதிஆகாரம் ஐயாயிற்று: [நன்-பத - உக,உ௦.] இந்த ஒருதேவமாதின்சிறப்புப்பெயர் - எல்லாத்தேவமகளிர்க்கும் பொதுப்பெயராக வழங்கி, பின்பு இங்கே சிறப்பாய் ஊர்வசியைக் குறித்தது. இமையோர் - கண்ணிமையாதவர்; எதிர்மறைவினையாலணையும்பெயர்: எதிர்மறைஆகாரம்புணர்ந்துகெட்டது; விகுதியீற்றயலாகாரம் ஓகாரமாயிற்று. இனி,இமையில் (மூடாமையாகிய)விசேஷமுடையவர் என உடன்பாடாகப் பொருளுரைப்பினும் அமையும். இமையோரரசு-தேவராசன். முதல்வன் - ஆதிபுருஷன். மடவரல்-ஆறும்வேற்றுமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; இங்கே, மடமை - பெண்மைக் குணங்களுள் ஒன்றாய், அது - நாணம் அச்சம் பயிர்ப்பு முதலிய மற்றைக் குணங்களுக்கும் உபலக்ஷணமு மாகலாம். வலியோன் - அன்பின்றித் தீமைசெய்ய அஞ்சாத கன்னெஞ்சுடையா னென்றபடி. உலகு என்னும் பால்பகாஅஃறிணைப்பெயர்- பொருளால்உயர்திணைப்பன்மைகுறிப்பினும், சொல்நிலைக்கேற்ப,சொலாது என்னும் அஃறிணையொருமைமுற்றைக் கொண்டது. அன்றோ - தேற்றம். இருந்தக்கால் - காலீற்று எதிர்காலவினையெச்சம். (உ௮)

உகூ. வானெறிபோய்க்கரந்துறைந்துகடவநாள்கழித்ததற்பின் கானகிங்கி, மீனமிலாவகைவந்தார்நந்திணைவரெனச்சிறிதுமிரங்க

னாகின், மாநகரும்வளநாடுமுரிமையுந்தன்மொழிப்படியேவழங்கானா
கிற், றானறியாதவன்பிறர்போய்க்கற்பித்தாலறிவனோதரணிவேந்தே.

(இ - ள்.) தரணி வேந்தே - நிலவுலகத்தை ஆளும் அரசனே!—(துரி யோதனன்), —'நம் துணைவர் - நமது உடன்பிறந்தவர் [பாண்டவர்], கான் நெறி போய் - (பன்னிரண்டுவருஷகாலம்) காட்டுவழியிற் சென்று வசித்தும், சார்ந்து உறைந்து - (ஒருவருஷகாலம்) மறைந்து வசித்தும், கடவ நாள் கழித்து - (வனவாச அஜ்ஞாதவாசங்களிற் கழிக்கக்) கடமைப்பட்டன வான நாள்களை [பதின்மூன்றுவருஷங்களை]ப் போக்கி, அதன்பின் - அதன் பின்பு, கானம் நீங்கி - காட்டில்வசித்தலை விட்டு, ஊனம் இலா வகை - யா தொருகுறைவு மில்லாதபடி, வந்தார் - மீண்டுவந்தார்கள்', என - என்று, சிறிதும் இரங்கான் ஆகின் - (இயற்கையில் தானாகக்)கிஞ்சித்தும்மனமிரங் கானானால்,—மா நகரும் - பெரிய இந்திரப்பிரஸ்த நகரத்தையும், வளம் நாடும் - எல்லாவளங்களையுமுடைய குருநாட்டின் பாகத்தையும், உரிமை யும் - (அதன்)அரசாட்சிஉரிமையையும், தன் மொழி படியே - தான் முன்பு சொன்ன வார்த்தையின்படியே, வழங்கான் ஆகின் - கொடானானால்,— தான் அறியாதவன் பிறர் போய் கற்பித்தால் அறிவனோ - தானாக உணராத வன் வேறொருவர் போய்ச் சொன்னால் அறிந்து அதன்படி நடப்பனோ? [மாட்டா னென்றபடி]; (எ - று.)

'மற்றைத்திறத்தார் தம்கடமையைக் குற்றமில்லாது நடத்தினர்; நாமும் நம்முடையசொல்லைத் தவறாது நடத்தவேண்டும்' என்று நினைதது செய் பவனானால், இதுவரையிற் செய்திரானோ? இனி, ஒருவர் போய்ச் சொல்வத னால் செய்யப்போகிறானோ? என்பது கருத்து. இத்தன்மையானவனிடத்து இனித் தூதுசெல்வதனாற் பயனில்லை யென்பது, குறிப்பெச்சம். இரங்கா னாகின், வழங்கானாகின் என்ற எதிர்கால வினையெச்சங்களுக்கு - இரங்கா னாதலால், வழங்கானாதலால் என்று தேற்றமாகவே கருத்து; இங்ஙனம் வடமொழியிலும் உண்டு. இரங்காதவனாயினும் அவனை ஒருவாறு ஒப்புக்கொ ள்ளலாம், சொன்னசொல்தவறுகிறவனிடத்து நியாய மேதென்பார், 'மொ ழிப்படியே வழங்கானாகின்' என்றார்.

கேட்பவர்க்கு எளிதாகத் தோன்றுதற்குத் தேவமானத்தாற்கணக்கிட் டுப் பன்னிரண்டோ ரொன்றும் ஒருநா ளொன்றுங் கூறியனுப்பினார்களாத லால், அதனை அநுசரித்து இங்கும் நகுலன் 'கடவநாள்' என்றான்; (அதனைச் சூதுபோர்ச்சருக்கத்தில் "அடவியெய்திச், சுரர்தினமீராறங்கட்டுன்னுநிர் மன்னுநாட்டின், ஒருவருமறியாவண்ண மொருதினமுறைதிர்", "மறைந்து றைநாளினும்மை" என்றவற்றாற்காண்க: "கடவநாள்கழித்து" என்றார், அரு ச்சுனன் தவநிலைச்சருக்கத்திலும்; "அன்றுசபையு ளரவுயர்த்தோ னோட்டிய நாள், சென்றுகழிந்தன நீதின்மை," "பட்டநுதல்யானைப்பாண்டவரோ டா டவர்கள், ஒட்டியநாளேயுறைந்தார்கள்" எனப் பாரதவெண்பாவிலும் கா ண்க:) மனிதர்க்கு ஒருவருஷம், தேவர்க்கு ஒருநாளாம். கடவ-கடமையென் னும்பண்பினடியாப்பிறந்த பலவின்பால் வினையாலணையும்பெயர். இரட் டுறமொழிதலால், ஊனமிலாவகை என்பதற்கு - முன்புஏற்பட்ட நிபந்தனை க்குக்குறைவில்லாமலும் க்ஷேமமாகவும் என்க. சிறிதும், உம்மை-இழிவுசிற ப்பு. 'தானறியாதவன் பிறர்போய்க்கற்பித்தால்அறிவனோ' என்ற பொதுப் பொருளால், துரியோதனன் கண்ணன்சொன்னாலும் இராச்சியங் கொடா னென்ற சிறப்புப்பொருளைப் பெறவைத்தது, பிறிதுமொழிதலணியின்பாற் படும். 'இரங்கானகி' என்று பாடங்கொண்டு, இரங்காதவனாய் வழங்கானா னல் 'தூதனனுப்பினாலும் வழங்கான்' என்று வருவித்துப் பொருள்கூறின், இச்செய்யுள் - வேற்றுப்பொருள்வைப்பணியாம். இரண்டாமடியிலுள்ள 'ஆகின்' என்பதற்கு, ஆய் எனப் பொருள் கொள்ளவும் இடமுண்டு. ("இடம்

பட மெய்ஞ்ஞானக்கற்பினு மென்று,மடங்காதா ரென்றுமடங்கார் - தடங் கண்ணாய், உப்பொடு நெய்பால் தயிர் காயம் பெய்தடினுங்,கைப்பறுபேய்ச் சுரையின் காய்" என்னும் நாலடியார்ப்பாட்டை இங்கே அறிக.) (உக)

[கண்ணன் கட்டளையிட, சகதேவன் கூறத்தொடங்குதல்.]

௫0. நகுலனிவையுரைத்ததற்பினன்றெனக்கையமைத்தருளி நகுலன்சொல்லு, மிகல்விசயன்றன்மொழியுந்திறல்வீமனியம்பிய தும்யாவுங்கேட்டோம், புகலரியவுணர்வுடையோய்புகழுடையோய் திறனுடையோய்புகனீயென்ன, முகிலனையதிருமேனிமுகுந்தனுக்கு மனமுருகமொழிகின்றானே.

(இ - ள்.) நகுலன் இவை உரைத்ததன் பின் - நகுலன் இவ்வார்த்தைகளைச்சொன்னதன்பின்பு,—(கண்ணபிரான்),—நன்றுஎன -'இதுநன்றாயுள்ளது' என்றுகருதி,கை அமைத்தருளி-(போதுமென்று)கையமர்த்திக்குறிப்புக்காட்டி அடக்கியருளி,—(சகதேவனைப்பார்த்து),—'நகுலன்சொல்லும்-நகுலனது வார்த்தையையும், இகல் விசயன்தன் மொழியும் - பராக்கிரமத்தையுடைய அருச்சுனனது வார்த்தையையும், திறல் வீமன் இயம்பியதும்-வலிமையையுடைய வீமசேனன் கூறியதையும்,யாவும்-(முன்னும் பின்னும் தருமன் கூறியதையும்) எல்லாம், கேட்டோம்—; புகல் அரிய உணர்வு உடையோய் - (எவராலும் சிறப்பித்துச்)சொல்லுதற்கு முடியாத மெய்யறிவுடையவனே! திறல் உடையோய்-வல்லமையையுடையவனே! புகழ்உடையோய்-கீர்த்தியையுடையவனே! நீ புகல் - நீ (உனதுகருத்தைக்) கூறு,' என்ன - என்றுசொல்ல,—(உடனே சகதேவன்),—முகில் அனைய திருமேனி முகுந்தனுக்கு-மேகத்தையொத்துக் கரியஅழகிய வடிவமுடைய கண்ணபிரானுக்கு, மனம் உருக மொழிகின்றான்-திருவுள்ளங்கரையும்படி (உத்தரம்) கூறுகின்றான்; (எ-று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

திறல் - சொல்வன்மையுமாம். நகுலன் முதலாகக் கூறியது, எதிர்நிரனிறையின்பாற்படும். விஜயன் - அருச்சுனன்; வடசொல்; விசேஷஜயமுடையவனென்றும், தன்னைச் சயிப்பவரெவரு மில்லாதவ னென்றும் பொருள்படும் காரணப்பெயர். முன்னையபொருளில் வி - விசேஷமும், பின்னையபொருளில் வி - எதிர்மறையுங் குறிப்பன. விசயன், பார்த்தன், பற்குனன், கிரீடி, சுவேதவாகனன், பீபற்சு, கிருஷ்ணன், சவ்வியசாசி, தனஞ்சயன், (பாகசாஸநி, நரன், ஜிஷ்ணு) என்பன - அருச்சுனனது மறுபெயர்களாம். பாண்டவர்ஐவருள் சகதேவன் தத்துவஞானியும் நிஷ்பக்ஷபாதியு மாதலால், கண்ணன் அவனை 'புகலரியவுணர்வுடையோய் புகழுடையோய் திறலுடையோய்' என உயர்த்தி விளித்தான். அதனால், எல்லாம்வல்ல கடவுளான கண்ணபிரானும் நன்குமதிக்குஞ் சிறப்புடையவன் சகதேவனென்க. புகல் என வந்த சொல் இரண்டனுள், முதலது-முதனிலைத்தொழிற்பெயர்: புகலுதல் என்று பொருள்; இதற்கு, நான்காம்வேற்றுமைத்தொகை: பின்னது - ஏவல். யாவும்—யா - அஃறிணைப்பன்மை வினாப்பெயர்; உம்மை - முற்று. முகுந்தனுக்கும் என உயர்வுசிறப்பும்மை படவும் பதம்பிரிக்கலாம். (௫0)

[சகதேவன்வார்த்தை.]

௫௧. சிந்தித்தபடிநீயுஞ்சென்றாலென்னொழிந்தாலென்செறிந்த தாறு, மைந்தர்க்குண்முதல்வனிலம்வழங்காமலிருந்தாலென்வழங்கினாலென், கொந்துற்றகுழலிவளுமுடித்தாலென்விரித்தாலென்குறித்தசெய்கை, யந்தத்தின்முடியும்வகையடியேற்குத்தெரியுமோவாதிமூர்த்தி.'

(இ - ள்.) ஆதி மூர்த்தி - (எல்லாப்பொருள்களுக்கும்) முதன்மையான கடவுளே! சிந்தித்த படி - (இப்பொழுது தருமபுத்திரன்) ஆலோசித்த படி, நீயும் சென்றால் என்-நீ தூதுபோனாலு மென்ன? ஒழிந்தால் என்-அப்படிபோகாமலிருந்தாலு மென்ன? செறிந்த நூறு வமந்தர்க்குள் முதல்வன்-நெருங்கின உறவாகவுள்ள நூறு குமாரர்களுள் முதல்வனாகிய துரியோதனன், நிலம் வழங்காமல் இருந்தால் என் - இராச்சியத்தை (எங்களுக்கு)க் கொடுக்காமலிருந்தா லென்ன? வழங்கினால் என்-கொடுத்தால் என்ன?இவளும் - இத்திரௌபதியும், கொந்து உற்ற குழல் - பூங்கொத்துக்கள்பொருந்தின கூந்தலை, முடித்தால் என்-எடுத்துமுடித்து அலங்கரித்தால் என்ன? விரித்தால் என் - (அங்ஙனம்முடிக்காமல்) விரித்தபடியேயிருந்தால் என்ன? குறித்த செய்கை - (நீ)நினைத்த காரியம், அந்தத்தில் முடியும் வகை - கடைசியில்முடியும்விதம், அடியேற்கு தெரியுமோ - அடியேனுக்குத் தெரியுமோ? [தெரியாது என்றபடி]; (எ - று.)—எதுஎப்படிநடந்தாலும் எல்லாம் உனது சங்கற்பத்தின்படியே முடியு மென்பது கருத்து.

நீயும் என்ற உம்மை - உயர்வுசிறப்போடு எதிரதுதழுவியஎச்சம்; கீழ் உலூகன்தூது சென்றதைநோக்கி, இறந்ததுதழுவிய எச்சமுமாம். 'இவளும்' என்ற உம் - இறந்ததுதழுவியஎச்சத்தோடு இழிவுசிறப்பு கொந்துற்றகுழல் என்பதற்கு-திருத்தமில்லாமல் சிக்குப்பட்டு அடர்ந்திருக்கிற கூந்த லென்றும் உரைக்கலாம். கொந்து - கொத்துஎன்பதன்மெலித்தல். நூறுமைந்தர்-தொகைக்குறிப்பு. மைந்தர் - திருதராட்டிரனது புத்திரர். மைந்தர் - வீரரென்றுமாம். செறிந்த - தம்மில் ஒருவரோடொருவர் ஒற்றுமைப்பட்ட என்றுங் கொள்ளலாம். அடியேற்கு - உனதுஅடியவனாகிய எனக்கு. ஓ - எதிர்மறை. 'அந்தத்தில்முடியும்வகை அடியேற்குத்தெரியுமோ' என்றது - அவையடக்கமாகக்கூறியது; இங்ஙனங் கொள்ளாவிடின்,அடுத்தகவியில்"ஒருவருக்குந் தெரியாதிங் குன்மாயை யானறிவே னுண்மையாக" என்றதனோடு மாறுகொளக்கூறலாம்: "நீயேகுங், காரணங்களெல்லாமறிந்தேனே"எனப் பாரதவெண்பாவிலுங் காண்க. அந்தம், ஆதிமூர்த்தி - வடசொற்கள். மூர்த்தி - அண்மைவிளி. (ரு௬)

[இதுவும் அது.]

ருஉ. முருகவிழ்க்கும்பசுந்துளபமுடியோனேயன்றலகைமுலைப் பாலுண்டு, மருதிடைச்சென்றுயர்சகடம்விழவுதைத்துப்பொதுவர் மனைவளர்ந்தமாலே, யொருவருக்குந்தெரியாதிங்குன்மாயையானறி வேனுண்மையாகத், திருவுளத்துக்கருத்தெதுவோவதுவெனக்குங் கருத்தென்றான்றெய்வமன்னன்.

(இ - ள்.) 'முருகு - நறுமணத்தை, அவிழ்க்கும் - வெளிப் பரப்புகிற, பசுந் துளபம் - பசுநிறமான திருத்துழாய் மாலையை யணிந்த, முடியோனே - திருமுடியை யுடையவனே!— அன்று - (குழந்தையாயிருந்த) அந்தக் காலத்தில், அலகை முலை பால் உண்டு - (பூதனை யென்னும்) பேய்மகளது முலையின்பாலைப் பருகியருளியும், மருது இடை சென்று - இரட்டைமருதமரத்தின் நடுவிலே (தவழ்ந்து)சென்றும், உயர் சகடம் விழ உதைத்து-உயர்ந்த சகடாசுரனை(இறந்து)கீழ்விழும்படி காலாலுதைத்தும், பொதுவர் மனை வளர்ந்த - இடையர்களது மாளிகைகளிலே வளர்ந்தருளிய, மாலே - திருமாலே!—உன் மாயை - உனது மாயை, இங்கு ஒருவருக்கும் தெரியாது - இவ்விடத்தில் ஒருத்தருக்குக் தெரியாது; உண்மை ஆக யான் அறிவேன் - (அதனை) உள்ளபடி யான் அறிவேன்; (ஆதலால்), திருஉளத்து கருத்து எதுவோ அது எனக்கும் கருத்து - (உனது) சிறந்த மனத்தில் நிகழ்கிற எண்ணம்யாதோ அதுவே எனது எண்ணமுமாம்', என்றான் -

என்றுசொன்னான்: (யாவனெனில்),—தெய்வம் அன்னான் - (முக்காலத்துச்செய்திகளையும் அறிதலில்) கடவுளை யொத்தவனான சகதேவன்;(எ-று.)

தத்துவஞான முடைமை தோன்ற, சகதேவன் தானே கண்ணனை நோக்கித் தனைப்பற்றி, 'ஒருவருக்குந்தெரியாது உன்மாயை, யான் அறிவேன் உண்மையாக' என்றான்; 'நீயருங் காரணங்க ளெல்லாம் அறிந்தேனே" என்றார் பாரதவெண்பாவிலும். முருகு அவிழ்க்கும் - தேனை உள்ளிருந்து சொரியு மென்றுமாம். துளபம் - துளஸீ என்ற வடமொழியின் சிதைவு. துளபம் - திருமாலுக்குஉரியது: விஷ்ணுவின் அவதாரங்களிலெல்லாம் இது உரிய தென்க; அன்றியும், அவதாரங்களில் திருமால் அணிந்து கொள்ளும்மாலைகளெல்லாம் துளசியின் அம்சமாகுமென்பதையும் உணர்க. உயர்சகடம் - வினைத்தொகை; பண்புத்தொகையன்று: உயர்ந்த, உயர்கிற, உயரும் எனக்காலந்தோன்றநிற்றலால். மால்-பெருமை: அல்லது, மாயை; அல்லது, அடியவர்களிடத்து மிகுந்தவிருப்பம்: அதனை யுடையவனுக்குப் பண்பாகுபெயர். உண்மையாக - நிச்சயமாக. தெய்வம் - தைவம்: வடசொல். எனக்கும், உம்மை - இறந்தது தழுவியது.

காடும் காடுசார்ந்த இடமுமாகிய முல்லைநிலமானது நாடும் நாடுசார்ந்த இடமுமாகிய மருதநிலத்துக்கும் மலையும் மலைசார்ந்தஇடமுமாகிய குறிஞ்சி நிலத்துக்கும் இடையி லுள்ளதனால், அந்நடுநிலமான முல்லைநிலத்தில் வாழ்கிற சாதியார்க்கு இடையரென்று பெயர்;இடையர், பொதுவர் என்பவை-ஒருபொருளன.

அலகைமுலைப்பாலுண்டகதை:—கிருஷ்ணனைப்பெற்றதாயான தேவகியினது உடன்பிறந்தவனாதலால் அக்கண்ணபிரானுக்கு மாமனாகிய கம்சன், தன்னைக் கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் ஒளித்துவளர்தலை அறிந்து, அக்குழந்தையை நாடியுணர்ந்து கொல்லுதற்பொருட்டுப் பல அசுரர்களை யேவ, அவர்களில்ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி, நல்லபெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்குவந்து, அங்குத் தூங்கிக்கொண்டிருந்தகண்ணனாகியகுழந்தையை எடுத்துத் தனதுநஞ்சுதீற்றியமுலையைக்கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால்இறுகப்பிடித்துப் பாலுண்ணுகிறபாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்புநரம்புகளின்கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தனன் என்பதாம்.

மருதிடைச்சென்ற கதை:—கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் துன்பப்படுத்துகின்ற பலதிருவிளையாடல்களைச் செய்யக் கண்டு கோபித்த நந்தகோபன்மனைவியான யசோதை, ஒருநாள் கிருஷ்ணனைத் திருவயிற்றிற்கயிற்றினாற்கட்டி ஒருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலையிழுத்துக்கொண்டுதவழ்ந்து, அங்கிருந்த இரட்டைமருதமரத்தின் நடுவிலே எழுந்தருளிய பொழுது, அவ்வுரல் குறுக்காய்நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்துவிழுந்தவளவிலே, முன் நாரதர்சாபத்தால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்கிரீவன் என்னுங் குபேரபுத்திரர்இருவரும் சாபந்தீர்ந்து சென்றனர் என்பதாம். அந்தக குபேரபுத்திரர்கள் முன்புஒருகாலத்தில் பலதெய்வமகளிருடனே ஆடையில்லாமல் ஜலக்கிரீடைசெய்துகொண்டிருக்கையில், நாரதமகாமுனிவர் அங்குஎழுந்தருள, மங்கையரனைவரும் நாணங்கொண்டு ஆடையெடுத்துஉடுத்துநீங்க, இந்தமைந்தர்மாத்திரம் மதுபானமயக்கத்தால் வஸ்திரமில்லாமலேயிருக்க, நாரதர் கண்டு கோபங்கொண்டு 'மரங்கள்போ லிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்றுசபித்து, உடனே அவர்கள்வேண்டிக்கொண்டதற்கு இரங்கி, 'நெடுங்காலஞ்சென்றபின்பு திருமால் உங்களையடையுஞ் சமயத்தில் இவ்வடிவமொழிந்து முன்னையவடிவம்பெற்று மீள்வீர்' என்று சாபவிடைகூறிப் போயின ரென்று அறிக.

சகடமுதைத்த கதை:—நந்தகோப கிருகத்தில் ஒருவண்டியின் கீழ்ப் புறத்திலே தொட்டிலிற் பள்ளிகொண்டிருந்த ஸ்ரீகிருஷ்ணன், ஒருகால் அச்சகடத்திலே கம்சனால் ஏவப்பட்ட அசுரனொருவன் வந்து ஆவேசித்துத் தன்மேலேவிழுந்து தன்னைக் கொல்ல முயன்றதை அறிந்து, பாலுக்கு அழுகிறபாவனையிலே தனது சிறியதிருவடிகளை மேலேதூக்கியருள, அவ்வடிகளால் உதைபட்டமாத்திரத்தில், அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அசுரனுட்பட அழிந்த தென்பது. (௩உ)

[கண்ணன் 'யுத்தம்நேராதிருப்பதற்குஉபாயம் யாது?' என்ன, சகதேவன் விடைகூறத் தொடங்குதல்.]

௩௩. இவ்வண்ணஞ்சாதேவனியம்புதலுநகைத்தருளியிகலோர் சொன்ன, வவ்வண்ணம்புகலாமல்விரகுரைத்தானிவனென்னவவ னொடாங்கோர், பைவண்ணமணிக்கூடந்தனிலெய்திப்பாரதப்போர் பயிலாவண்ண, முய்வண்ணஞ்சொல்லுகநீயுபாயமெனத்தொழுது ரைப்பானுரங்கொள்வேலான்.

(இ - ள்.) இ வண்ணம் - இந்தப்படி, சாதேவன் - சகதேவன், இயம்புதலும் - சொன்னவுடனே, (கண்ணபிரான்), நகைத்தருளி - புன்சிரிப்புக் கொண்டருளி, 'இகலோர் சொன்ன அ வண்ணம் புகலாமல் - வலிமையையுடைய மற்றைப்பாண்டவர்கள் கூறின அந்தப்படி கூறாமல், இவன் - இச்சகதேவன், விரகு உரைத்தான் - தந்திரமாகச்சொன்னான்,' என்ன - என்று கருதி, அவனொடு - அச்சகதேவனுடனே, ஆங்கு - அவ்விடத்தில் [அல்லது அப்பொழுது], ஓர் பை வண்ணம் மணி கூடந்தனில் எய்தி - பசுமைநிறமுள்ள மரகதரத்தினங்களால் அமைக்கப்பட்டதொரு மண்டபத்தினுள்ளே (மற்றவர்களைவிட்டுச்) சென்று,—(சகதேவனை நோக்கி),—'பாரதம் போர் பயிலா வண்ணம் - பாரதயுத்தம் நடவாதபடியும், உய் வண்ணம் - (எல்லாரும்) அழியாது பிழைத்து வாழும்படியும், நீ—, உபாயம் சொல்லுக - (தக்கதோர்) உபாயத்தைச் சொல்வாயாக,' என - என்றுசொல்ல, உரம் கொள் வேலான் - வலிமையைக்கொண்ட வேலாயுதத்தை யுடையவனான சகதேவன், தொழுது - (கண்ணனை) வணங்கி, உரைப்பான் - கூறுபவனானான்; (எ - று.)—அதனை, அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

கண்ணனுக்கு நகைப்பு, தனது திருவுள்ளக்கருத்தை உள்ளபடி யறிந்து கூறிய சகதேவனது திறத்தைக் கண்டு வியந்ததனாலானது. தனதுகருத்தை வெளியிடாதிருக்கவேண்டி இங்ஙனம் கண்ணன் சகதேவனைத் தனியே வினவுமாறு ஏகாந்தமாக அழைத்துச்சென்றனனென்க. சாதேவன் - வடசொல்திரிபு. விரகு உரைத்தான் - (நமது) மாயையை எடுத்துக்கூறினான் என்றுமாம். பை - பசுமையென்னும் பண்புப்பெயரின் விகாரம். வண்ணம்- வர்ணம்: வடசொல். பாரதப்போர்-பரதவம்சத்தாருள் நிகழும் போர். (௩௩)

வே று.

[சகதேவன் கூறும் உத்தரம்.]

௩௪. நீபாரதவமரில்யாவரையுநீறாக்கிப்
பூபாரந்தீர்க்கப்புரிந்தாய்புயல்வண்ணா
கோபாலாபோரேறேகோவிந்தாநீயன்றி
மாபாரதமகற்றமற்றார்கொல்வல்லாரே.

(இ - ள்.) புயல் வண்ணா - மேகம்போலக்கரியதிருநிறமுடையவனே! கோபாலா - பசுக்களைக் காக்கும் இடைச் சாதியில் வளர்ந்தவனே! போர் ஏறே - போரில் ஆண்சிங்கம் போன்றவனே! கோவிந்தா - கோவிந்தனென்னுந்திருநாமமுடையவனே!—நீ—, பாரதம் அமரில் - பாரதயுத்தத்தில்,

யாவரையும் நீறு ஆக்கி - எல்லாரையும் அழியச்செய்து, பூ பாரம் தீர்க்க - பூமிதேவியின் சுமைமிகுதியை யொழிக்க, புரிந்தாய் - விரும்பியருளினாய்; (ஆதலால்), மா பாரதம் - (உன்கருத்துப்படி நிகழும்) பெரிய பாரதப்போரை, நீ அன்றி - (அதனை நடத்தும்) நீயே யல்லாமல், அகற்ற வல்லார் - ஒழிக்கவல்லவர், மற்று ஆர்கொல் - வேறு யாரோ? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)—இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்.

'நீயன்றி மாபாரதமகற்ற மற்றார்கொல்வல்லார்' என்றது, பாரதயுத்தத்தைநடத்தி முடித்திடுமாறு சங்கற்பித்துக்கொண்டுள்ள நீயே அது நிகழவொட்டாது தடுப்பதற்கும் வல்லமை யுடையாய் என்பதைக் குறிக்கும். கோவிந்த னென்ற திருநாமம், கோவர்த்தனமலையைக் குடையாக எடுத்துப் பசுக்களைப் பாதுகாத்தருளிய காலத்திற கண்ணனுக்கு உண்டானது;இதற்கு-பசுக்களைக்காப்பவனென்றுபொருள்:இப்பெயர் - உயிர்களைக் காப்பவனென்றும், பூமியைக் காப்பவ னென்றும் பொருள்படும். அகற்ற - அகல என்பதன் பிறவினை. கொல்-அசை.பூபாரம்தீர்த்தல்-பூமியில்நிறைந்த துஷ்டஅசுரர்களையும் கெட்டஅரசர்களையும் ஒழித்து அதனாற் பூமிக்குநேர்ந்த பாரத்தைப் போக்குதல்.

இதுமுதல் இருபத்திரண்டு கவிகள் - காய்ச்சீர்களும் மாச்சீர்களும் விளச்சீர்களுமாக நான்குசீர்களும் விரவிவந்த அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள்; சீர்கள் அளவொத்துவாராமையாலும், தாழம்பட்ட ஓசையுடைமையாலும், நாற்சீர் நான்கடித்தரவுக்கொச்சகமெனினும் அமையும். (௩௪)

[இதுவும் அது.]

௩௫. பாராளக்கன்னனிகற்பார்த்தனைமுன்கொன்றணங்கின்
காரார்குழல்களைந்துகாலிற்றளைபூட்டி
நேராகக்கைப்பிடித்துநின்னையுயான்கட்டுவனேல்
வாராமற்காக்கலாமாபாரதமென்றான்.

(இ - ள்.) 'கன்னன் பார் ஆள - கர்ணன் பூமியை அரசாட்சி செய்யும்படி, இகல் பார்த்தனை முன் கொன்று - (அவனிடத்துப்) பகைமையையுடைய அருச்சுனனை முன்னே கொலைசெய்து,அணங்கின் கார் ஆர் குழல் களைந்து - சிறந்தமகளான திரௌபதியினது கருநிறம் பொருந்திய கூந்தலை அரிந்துவிட்டு, காலில் தளை பூட்டி கை பிடித்து நின்னையும் யான் நேர்ஆக கட்டுவனேல்-கால்களிலே விலங்கையிட்டுக் கைகளையும் பிடித்து உன்னையும் நான் தகுதியாகக் கட்டிவைப்பேனானால், மா பாரதம் வாராமல் காக்கலாம் - பெரிய பாரதப்போர் நடந்திடாதபடி தடுத்திடலாம்,' என்றான் - என்றுசொன்னான், (சகதேவன்); (எ - று.)

இங்ஙனம் சகதேவன் தம்மவரென்றும் பிறரென்றும் வேறுபாடு காட்டாது நடுவுநிலைமையாகத் தனது உள்ளக்கிடையைச் சிறிதும் ஒளியாமல் வெளியிட்டனனென்க. தருமன் எங்ஙனமாயினும் அரசாளவேண்டுமென்றதும், அருச்சுனன் கர்ணனைக்கொல்வேனென்ற சபதமும், விரித்தகூந்தலை முடிக்குமாறு திரௌபதிகூறிய பிரதிஜ்ஞையும், கண்ணனது சங்கல்பமுமே பாரதயுத்தம்நடப்பதற்குமூலமாதலால்,இங்ஙனங்கூறப்பட்டது. வீமசேனனதுபெரியபிரதிஜ்ஞைகள், திரௌபதியின் பிரதிஜ்ஞையை நிறைவேற்றுதற்கு அங்கமாய் முடிதலால், அப்பிரதானமாக்கி அதில் அடக்கப்பட்டன. நகுலசகதேவர்களது சபதங்கள், பிரதானமல்ல வென்று நீக்கப்பட்டன. இவருக்குக்கூறிய இக்காரியங்களெல்லாம் செய்துமுடிக்கக் கூடாதன வாதலால்,பாரதப்போர்வாராமற்காத்தலும் முடியாதெனக் குறிப்பித்தபடியாம்.

அணங்கு - தேவமகளும், திருமகளும், மோகினி யென்னும் பெண்தெய்வமுமாம்; இங்கே, திரௌபதிக்கு உவமவாகுபெயர். கன்னன் கர்ணன் என்ற வடசொல்லின் விகாரம்; இப்பெயர், கர்ணகுண்டலங்களோடு

பிறந்தமை பற்றியது: காதின்வழியே பிறந்ததனால் வந்த பெயரென்றுங் கூறுவர்; கர்ணம் - காது. பாண்டவர்கள்தாயான குந்திதேவி கன்னிகையா யிருந்தபொழுது தனக்குத் துருவாசமுனிவ ருபதேசித்த மந்திரத்தைப் பரீட்சித்தறியும்பொருட்டுச் சூரியனைநினைத்து அம்மந்திரத்தை உச்சரிக்க,உடனே அத்தேவன் வந்து அவளுக்கு அநுக்கிரகித்ததனால், அவளிடம் பிறந்த புத்திரன் இவன்; இவனைப் பிறந்தபொழுதே குந்தி பழிக்கு அஞ்சி மிதக்கும் மரப்பெட்டியொன்றில் வைத்துப்பூட்டிக் கங்கையாற்றில் விட்டிட, அதனைத் திருதராட்டிரனது தேர்ப்பாகனான அதிரதனென்பவன் கண்டெடுத்துத் திறந்து பார்த்துக் கொண்டுபோய்த் தன்மனைவியான ராதையும் தானுமாக வசுசேனனென்று பெயரிட்டு வளர்த்தான்: இவனுக்குக் கர்ணனென்ற பெயர் ஆகாசவாணி யிட்டது. இவன் துரியோதனனுக்குப் பிராணசிநேகிதனாகி அவனருளால் அங்கதேசத்திற்கு அரசனாயினான். கார் ஆர் குழல் - மேகத்தை யொத்த கூந்தலுமாம்; ஆர் - உவமவுருபு. எல் - என்னில்; மரூஉ. ("குற்றமேகாக்கபொருளாக," "அரும்பண்பினாற்றீமை காக்க," "செல்லிடத்துக்காப்பான் சினங்காப்பான்" என்ற விடங்களிற் போல,) இங்கே, காத்தல் - தடுத்தற்பொருளதாயிற்று. நின்னையும், உம் - இறந்ததுதழுவியஎச்சத்தோடு, உயர்வுசிறப்பு. 'கன்னன்பாரான' என்றது - துரியோதனனது தீச்செயல்களெல்லாவற்றிற்கும் அவனே பெரியஉதவியாய்நிற்பதனாலும், பாண்டவதுரியோதனாதியர் அனைவரிலும் மூத்தவனாதலாலும், துரியோதனனுக்கு மிகநண்பனும் பாண்டவர்க்கு மிகப்பகைவனுமாதலாலும், ஈகைக்குணமுடைய அரசனாதலாலுமென்க. 'காலில் தளை பூட்டி' என்பதற்கு - திரௌபதியின்காலிலே விலங்கைப் பூட்டி யென்று உரைப்பாருமுளர்; அதற்கு இங்கே இயைபின்று. கைப்பிடித்து - கைகளாற் பிடித்து என்றலுமொன்று. (௬௫)

[கண்ணன் சகதேவனதுதிறத்தைப் பரீக்ஷித்தல்.]

௬௬. முன்னநீகூறியவையெல்லாமுடித்தாலு
மென்னைநீகட்டுமாறெவ்வாறெனமாய
னுன்னைநீதானுமுணராதாயுன்வடிவந்
தன்னைநீகாட்டத்தளைந்திடுவன்யானென்றான்.

(இ - ள்.) (இங்ஙனங்கூறிய சகதேவனைநோக்கி),—மாயன் - விசித்திர சக்தியை யுடையவனான கண்ணன்,—'நீ முன்னம் கூறியவை எல்லாம் முடித்தாலும் - நீ முன்னேசொன்ன காரியங்களையெல்லாம் நிறைவேற்றினாலும், நீ என்னை கட்டும் ஆறு எ ஆறு - (இறுதியிற்சொன்னபடி) நீ என்னைக் கட்டும் வகை எப்படி?' என - என்றுவினவ,—(அதற்குச் சகதேவன்),—'உன்னை நீதானும் உணராதாய் - உனது (அருளுடைமை முதலிய) குணங்களின் பெருமையை நீயும் அறியமாட்டாதவனே! உன் வடிவந்தன்னை நீ காட்ட - உனதுதிவ்வியசொரூபத்தை நீ (என்னுடைய) அறிவிற்கு விஷயமாக்கியிருப்பதால், யான் தளைந்திடுவன் நான் (உன்னைக்) கட்டிவிடுவேன்', என்றான் - என்று (கண்ணனைநோக்கிக்) கூறினான்; (எ - று.)

முன்னங்கூறியவை - கர்ணனை அரசாள்வித்தல், அருச்சுனனைக்கொல்லுதல், திரௌபதியின்குழலைக் களைதல். சகதேவன் கடவுளின்கருணையால் தத்துவஞான மடைந்துள்ளதனால், அக்கடவுளின் அடியார்க்கெளியனாந்தன்மையைக் கருதி இங்ஙனங் கூறினனென்க. முடித்தாலும் என்ற உயர்வுசிறப்பும்மை, முடித்தலின் அருமைதோன்ற நின்றது. 'உன்னை நீதானு முணராதாய்' என்றதனால், எம்பெருமானது எவராலும் அளவிடப்படாத அனந்தசக்தி விளக்கப்பட்டது; ஆதலால், இது எம்பெருமானுக்கு ஒருகுறைவு கூறியதாகாது: "தனக்குந் தன்தன்மை யறிவரியான்" என்றார் திருவாய்மொழியிலும். தன்தன்மையுணராதவ னென்றால், எம்பெரு

மானது முற்றுணர்வுக்குக் குறைவு வாராதோ என்னில்,—ஒவ்வொரு பொருளின் தன்மையையும் உள்ளபடி அறிவதே முற்றுணர்வுக்கு இலக்கணமாதலால், அநந்தசக்தியை அவ்வாறே அளவிடமுடியாதென்றே உணர்வதனால், குறைவு வாராதென்க. வடிவம், அம் - சாரியை. நீதானும்-ஸர்வஜ்ஞனானநீயும்என்றபடி. நீதானும்என்றஉம்மையால், மற்றவர் அறியமாட்டாமை நன்குவிளங்கும். காட்ட - காரணப்பொருட்டாய்வந்த செயவெனெச்சம்.

[இதுவும்அது.]

௬௭. மாயவனுமன்பன்மனமறிவான்கட்டுகவென்
றாயவடிவுபதினாறாயிரங்கொண்டான்
றாயவனுமூலமாந்தோற்றமுணர்ந்தெவ்வுலகுந்
தாயவடியிணைகடன்கருத்தினாற்பிணித்தான்.

(இ - ள்.) மாயவனும் - விசித்ரசக்தியுடையவனான கண்ணனும், அன்பன்மனம்அறிவான் -(தன்னிடத்து)மிக்கபக்தியுடையனான சகதேவனது கருத்துநிலையை அறிதற்பொருட்டு,—கட்டுக என்று -'(என்னை நீ; கட்டுவாயாக' என்று சொல்லி, ஆய வடிவு பதினாறாயிரம் கொண்டான் - பொருந்திய பதினாறாயிரம்திருவுருவங்களை(ஒருங்கே) எடுத்துக்கொண்டான்; (அப்பொழுது),—தூயவனும்-பரிசுத்தனான சகதேவனும், மூலம் ஆம் தோற்றம் உணர்ந்து - (அவ்வடிவங்கட்கெல்லாம்)முதன்மையான திருவுருவத்தை (இன்னதென்று தனது தத்துவஞானத்தால்) அறிந்து, எ உலகும் தாய அடி இணைகள் - எல்லாவுலகங்களையும் அளவிட்ட (அவ்வெம்பெருமானது) உபயபாதங்களை, தன் கருத்தினால் பிணித்தான் - தனது மனமாகிய கயிற்றினாற் கட்டினான்; (எ - று.)

சகதேவன் கடவுளின்அருளால் உண்மையறிவை யடைந்துள்ளானாதலால், பகவானதுசொரூபத்தைத் தனதுகருத்தால் உறுதியாகத் தியானித்தான்என்பதாம். பதினாறாயிரம் கோபஸ்திரீகளோடும் பதினாறாயிரம்இராஜகன்னிகைகளோடும் தனித்தனிசேர்தற்கு இவ்வவதாரத்தில் திருமாலுக்குப் பதினாறாயிரம்வடிவம்அமைந்ததாதலால்,'ஆயவடிவு பதினாறாயிரம்'என்றார். ("பத்துடையடியவர்க் கெளியவன்" என வைஷ்ணவத்திலும், "பத்திவலையுட்படுவோன்" எனச் சைவத்திலும் அடியார்கள் அருளிச்செய்தபடி) கடவுள் அன்புக்கு வசப்பட்டவராதலால், கருத்தினாற் பிணிக்கலாம்படியாயிற்று. 'பிணித்தான்' என்ற வினையினால், கருத்தைக் கயிறாகக் கொள்க; இஃது, ஏகதேசவுருவகத்தின்பாற்படும்.

ஆய - ஒன்றையொன்று ஒத்ததாகிய என்பாருமுளர். ஆய=ஆகிய. மாயவனும், தூயவனும் என்ற உம்மைகள் - எச்சப்பொருளன. அன்பன் - பக்தன். அறிவான் - சோதித்தற்கு; வானீற்று எதிர்காலவினையெச்சம். 'மூலமாந்தோற்றம்' என்றது - அக்கடவுளின் நிஜவடிவத்தை. தோற்றம் - தோன்றுதலுடையது; தொழிலாகுபெயரென்றாவது, அம்-கருத்தாப்பொருள்விகுதி யென்றாவது கொள்க. தாய=தாவிய.

உலகந் தாய கதை:—மகாபலி யென்னும் அசுரராசன் தன்வல்லமையால் இந்திரன் முதலிய யாவரையுஞ் சயித்து மூவுலகங்களையும் தன் வசப்படுத்தி அரசாண்டு செருக்குக் கொண்டிருந்த பொழுது, அரசிழந்த தேவர்கள் திருமாலைச் சரணமடைந்து வேண்ட, அவன், குள்ளவடிவமான வாமனாவதாரமெடுத்துக் காசியபமுனிவர்க்கு அதிதிதேவியினிடந் தோன்றிய பிராமணப்பிரமசாரியாகி, வேள்வியியற்றி யாவர்க்கும் வேண்டிய அனைத்தையுங் கொடுத்துவந்த அந்தப்பலியினிடஞ்சென்று,தவஞ்செய்தற்குத் தன் காலடியால் மூவடி மண்வேண்டி,அதுகொடுத்தற்கு இசைந்து அவன்தத்தஞ்செய்த நீரைக் கையில் ஏற்று, உடனே திரிவிக்கிரமனாக ஆகாயத்தை

அளாவிவளர்ந்து ஓரடியால் மண்ணையும் ஓரடியால் விண்ணையும் அளந்து, மற்றோரடியால் அவனையும் பாதாளத்தில் அழுத்தி அடக்கினன் என்பதாம். ஒருபாதத்தால் மண்ணுலகத்தை அளந்ததிலே அதன்கீழுள்ள உலகங்களேழும் அடங்குதலாலும், மற்றோரடியால் விண்ணுலகத்தை யளந்ததிலே புவர்லோகம் முதலிய மேலுலகங்களாறும் அடங்குதலாலும், 'எவ்வுலகுந் தாய அடியிணைகள்' எனப்பட்டன. (௩௭)

[கண்ணன் சகதேவனுக்குப் பிரத்தியக்ஷமாகக் காட்சிகொடுத்தல்.]

௩௮. நீதேவனென்றறிந்துநெஞ்சாற்றனைக்கட்டுஞ்
சாதேவன்கண்களிக்கத்தானையாய்முன்னின்றான்
பூதேவருங்கனகபூங்காநிழல்வைகு
மாதேவருந்தேடிக்காணாமலரடியோன்.

(இ - ள்.) பூதேவரும் - பூமியில்வசிக்குந் தேவர்களாகிற அந்தணர்களும், கனகம் பூ கா நிழல் வைகும் மா தேவரும் - பொன்மயமான அழகிய கற்பகச்சோலையின் நிழலிலே வசிக்கிற சிறந்த தேவர்களும், தேடி காணா - தேடியும் பார்க்கமுடியாத, மலர் அடியோன் - தாமரைமலர்போன்ற திருவடிகளையுடையவனான கண்ணபிரான்,— நீ தேவன் என்று அறிந்து நெஞ்சால் தனை கட்டும் சாதேவன் கண் களிக்க - 'நீயே கடவுளாவாய்' என்று (தனது சொரூபத்தை) உணர்ந்து மனத்தினாலே தன்னைக்கட்டின சகதேவன் கண்ணாற்கண்டு களிக்கும்படி, தானே ஆய் முன் நின்றான் - (மற்றையுருவங்களையெல்லாம் மறைத்து அவற்றிற்குக்காரணமானதும் சகதேவனாற் கருதப்பட்டதுமான) தனது நிஜரூபமேயாய் அவனெதிரில் (காட்சிகொடுத்து) நின்றருளினான்; (எ - று.)

"பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரியவித்தகன்" என்ற இரண்டுதன்மைகளும் - இச்செய்யுளால் நன்குவிளக்கப்பட்டன. தேவன் என்ற சொல்லுக்கு - விளங்குபவனென்றும், வானுலகத்தவனென்றும் பொருள். கனகப்பூங்கா - பொன்மயமானபூக்களையுடைய சோலை யென்றுமாம். தேவர்கள் விண்ணுலகத்திற்பஞ்சதருக்களின்நிழலில்வசித்தல், "இன்றளிர்க் கற்பகநறுந்தேனிடைதுளிக்கு நிழலிருக்கை" எனக் கம்பராமாயணத்திற் கூறியதனாலும் விளங்கும்; அதுபற்றியே, 'காநிழல் வைகும் மாதேவர்' என்றது. பொன்னுலகத்திலுள்ள எல்லாப்பொருளும் பொன்மயமானவையாதலால், 'கனகப்பூங்கா' எனப்பட்டது. காக்கப்பட்டது கா என்று, செயப்படுபொருள்விகுதிபுணர்ந்துகெட்டகாரணப்பெயர். பூதேவர் - பூமியில்தேவர்போலச் சிறப்புப்பெற்று விளங்குபவர்; "நிலத்தேவர்" என்றார் ஆழ்வாரும். இங்கே, 'பூதேவரும் மாதேவரும் தேடிக்காணாத அடி' என்றது - அன்புநிலையிற்குறைவுபட்டார்க்கு அகப்படாத தன்மையை. கடவுளையறிதற்கு இடமும் சாதியும் குலமும் முதலியன காரணமல்ல, மனத்தூய்மையே காரணம் என்பது - இதில் விளங்கும். மலரடி - உவமத்தொகை; வினைத்தொகையாய், (திரிவிக்கிரமாவதாரகாலத்தில் உலகமெங்கும்) பரந்த திருவடியெனினுமாம். திருமாலின் அம்சாவதாரமான கண்ணபிரான் சகதேவனது பத்தியை உணர்ந்திருந்தும் இவ்வாறு பரீட்சித்தது - அதனைத் தான் அநுபவித்துக்களிக்கவும், இச்சகதேவனுக்குள்ள சிறப்பை வெளிப்படுத்தவுமென்க.

[கண்ணன் 'என்காலைவிடுக' என்றுசொல்ல, சகதேவன்வரம்வேண்டுதல்.]

௩௯. அன்பாலின்றென்னையறிந்தேபிணித்தமைநன்
றென்பாதந்தன்னையினிவிடுகவென்றுரைப்ப
வன்பாரதப்போரில்வந்தடைநந்தேமைவரையு
நின்பார்வையாற்காக்கவேண்டுமெனுமோலே.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) (கண்ணன் சகதேவனை நோக்கி),—'அன்பால் இன்று என்னை அறிந்து பிணித்தமை நன்று - பக்தியினால் இப்பொழுது எனது சொரூபத்தை (நீ) உணர்ந்து கட்டியது நன்றாகவுள்ளது: இனி என் பாதந் தன்னை விடுக - இனி எனது கால்களை விட்டிடுவாயாக,' என்று உரைப்ப- என்று சொல்ல,—(அதற்குச் சகதேவன் கண்ணனைநோக்கி),—'நெடு மாலே பெருமைக்குணமுடையவனான கண்ணனே!—வந்து அடைந்தேம் ஐவரையும் - (உன்னை வந்துசேர்ந்துள்ளவர்களான எங்களைந்துபேரையும், வல் பாரதம் போரில் - (இனிநிகழும்) கொடிய பாரதயுத்தத்திலே, நின் பார்வையால் காக்கவேண்டும் - உனது அருள்நோக்கத்தால் காத்தருள வேண்டும்;' (எ - று.)—'என்று' என, அடுத்தகவியோடு இயையும்.

பிணித்தமை - இறந்தகாலத்தொழிற்பெயர்; மை - விகுதி. அடைந்தேம் ஐவர் - தன்மையிற்படர்க்கைவந்த இடவழுவமைதி; வழாநிலையாயின், 'ஐவேம' என நிற்கும்: இதில், உம்மை - இனைத்தென்றறிபொருளில் வந்த முற்றும்மை. பார்வை - நோக்கம்; கடாக்ஷம்: தொழிற்பெயர்: வை - விகுதி. நெடு மால் - மகாவிஷ்ணு; திரிவிக்கிரமாவதாரத்தில் நீண்ட மாலுமாம். ()

[கண்ணன் சகதேவனுக்கு வரமளித்து, நடந்ததை இரகசியமாகவைக்கும்படி நியமித்தல்]

௫௦ என்றென்றிறைஞ்சியிருதாமரைத்தாளி
லொன்றுங்கதிர்முடியாற்கோமென்றுரைத்தருளி
யின்றிங்கிருவேமுமிப்போதுரைத்தமொழி
யொன்றும்பிறரறியவோதாதொழிகென்றான்.

(இ - ள்.) என்று என்று - என்று பலதரஞ்சொல்லி, இறைஞ்சி நமஸ்கரித்து, இரு தாமரை தாளில் - (கண்ணனது) தாமரைமலர்போன்ற இரண்டுதிருவடிகளிலே, ஒன்றும் - பொருந்திய [சரணமடைந்த], கதிர் முடியாற்கு - ஒளியுள்ள கிரீடத்தையுடையவனான சகதேவனுக்கு, (கண்ணன்), ஓம் என்று உரைத்தருளி - 'அப்படியாகுக' என்று உடன்பாடாகக்கூறியருளி,—'இன்று இங்கு இருவேமும் இப்போது உரைத்த மொழி ஒன்றும் - இன்றைத்தினம் இவ்விடத்தில் நாமிரண்டுபேரும் இப்பொழுது (தனியே) பேசிக்கொண்ட வார்த்தைகளுள் ஒன்றையும், பிறர் அறிய ஓதாது ஒழிக - எவரும்அறியச் சொல்லாமல்விடுவாயாக,' என்றான் - என்றுகூறினான்; (எ - று.)

என்று என்று - அடுக்கு, பன்மைப்பொருளது; இது, சகதேவனது அன்பு மிகுதியை விளக்கும். ஓம் - அங்கீகாரப்பொருளை யுணர்த்தும் வடமொழி யிடைச்சொல்; (வடமொழிமாககாவியத்தி னுரையில் மல்லிநாதசூரி உரைத்தவாறுங் காண்க.) இருவேம் - இரண்டென்னும்எண்ணினடியாப்பிறந்த தன்மைப்பன்மைப்பெயர்; (முன்னிலை - இருவீர், படர்க்கை - இருவர்.) 'ஓதாதொழிக' என்றது, அவதாரத்தின் மெய்ப்பாட்டால். ஓதாதொழிக - ஒருசொல்தன்மையது; இதில், 'ஒழி' - துணிவுப்பொருளுணர்த்தும். (௫௦)

[சகதேவன் திரௌபதியைநோக்கித் தனது அபிப்பிராயங் கூறுதல்.]

௫௧. ஆண்டிருந்தவவை நீங்கியறிவுடையோரிருவோரும்
பாண்டவர்கண்முன்னெய்திப்பழுதில்புகழ்ப்பாஞ்சாலி
நீண்டகருங்குழல்சோரநின்றாளைமுகநோக்கி
யீண்டவரிலிளையோனுஞ்சந்துமிகவினிதென்றான்.

(இ - ள்.) அறிவுஉடையோர் இருவோரும் - பேரறிவுடையவர்களான (கண்ணன் சகதேவன் என்ற) இரண்டுபேரும்,—(பின்பு), ஆண்டு இருந்த

அவை நீங்கி-அங்குத்தனியேசென்றிருந்த மண்டபத்தினின்றுநீங்கி,பாண்டவர்கள் முன் எய்தி - மற்றையபாண்டவர்கட்கு முன்னே வந்து சேர,—(அப்பொழுது), அவரில் இளையோனும் - அப்பாண்டவர்களுள் இளையவனான சகதேவனும்,—நீண்ட கருங் குழல் சோர நின்றாள் பழுது இல் புகழ் பாஞ்சாலியை முகம் நோக்கி - நீட்சிபெற்ற கருநிறமுள்ள கூந்தல் விரிந்து கிடக்க நின்றவளாகிய குற்றமில்லாத கீர்த்தியையுடைய திரௌபதியை முகத்தைப் பார்த்து, ஈண்டு சந்து மிக இனிது என்றான் - 'இப்பொழுது சந்தி [சமாதானம்] மிகநல்லது' என்று கூறினான்; (எ - று.)

'எய்தி' என்னுஞ் செய்தெனெச்சத்தை 'எய்த'எனச் செயவெனெச்சமாகத்திரித்து, 'என்றான்' என்பதனோடு முடிக்க. பாஞ்சாலி நின்றாளை - நின்றாள்பாஞ்சாலியை: உருபுபிரித்துக்கூட்டல். சந்து-தூதுமாம். துரியோதனனிடந் தூதுபோய்வரவேண்டு மென்பதே கண்ணன்திருவுள்ளக்கருத்தென்றுதெரிந்தவனாதலின், அதற்குஇணங்கிச் சகதேவன்தானும்'சந்துமிகவினிது' என்று கூறினனென்க. இருவர் - இருவோர் என ரகரவீற்றுஅயல் அகரம் ஓகாரமாயிற்று. பாஞ்சாலி - பாஞ்சாலதேசத்தரசனது [துருபதனது] மகள் என்று பொருள்படும் வடமொழித் தத்திதாந்தநாமம். பழுதில் புகழ் - கலங்காத கற்பினாலாகியது; இவள் பஞ்சகன்னிகைகளுள் ஒருத்தியாதலின், இவளுக்கு'பழுதில்புகழ்'என்ற அடைமொழி கொடுக்கப்பட்டதுமாம்;(மற்றைநால்வர்-அகலிகை,சீதை,தாரை,மண்டோதரி.) ஈண்டு, ஈண்டு - சுட்டுநீண்டது. நின்றாளை முகம் நோக்கி - நின்றாளை முகத்தைப் பார்த்து: இரண்டுசெயப்படுபொருள்வந்த செய்வினை; உருபுமயக்கமாக, நின்றவளது முகத்தைப் பார்த்து என்றுங் கொள்ளலாம். (௪௧)

[கண்ணனும் அவ்வாறே கூற, கேட்டுத் திரௌபதி வருந்துதல்.]

௪௨. தருமனுக்குங்கருத்திதுவேதமருடன்போர்புரியாம
லிருநிலத்தினுடன்வாழ்தலெனக்குநினைவென்றுரைத்தான்
வரிமலர்க்கண்புனல்சோரமலர்மறந்தகுழல்சோர
விரைமலர்ச்செஞ்சேவடிக்கீழ்வீழ்ந்தழுதாண்மின்னனையாள்.

(இ - ள்.) 'தருமனுக்கும் கருத்து இதுவே - யுதிட்டிரனுக்கும் இதுவே கருத்தாகும்: தமருடன் போர் புரியாமல் - நெருங்கின உறவினர்களாகிய துரியோதனாதியர்களுடனே போர்செய்யாமல், இரு நிலத்தில் உடன் வாழ்தல் - பெரிய பூலோகத்திலே சமாதானமாக ஒற்றுமைப்பட்டு ஒருங்குகூடி வாழ்வதே, எனக்கும் நினைவு - எனக்கும் கருத்தாம்,' என்று உரைத்தான் - என்று (கண்ணபிரான்) கூறியருளினான்; (உடனே),—மின் அனையாள்-மின்னற்கொடியையொத்தவளான திரௌபதி,—வரி மலர் கண் புனல் சோர-(உத்தமவிலக்கணமாகஅமைந்த சிவந்த) இரேகைகளையுடைய பூப்போன்ற (தனது) கண்களினின்று நீர் சொரியவும், மலர் மறந்த குழல் சோர- (பலகாலமாகப்பூமுடித்தலைமறந்துள்ள தன்கூந்தல் நெகிழ்ந்து புரளவும், விரை மலர் செம் சே அடிக்கீழ் வீழ்ந்து அழுதாள் - வாசனையையுடையதாமரைமலர்போன்ற மிகச்சிவந்த (கண்ணபிரானது) திருவடிகளில் விழுந்து புலம்பினாள்;(எ-று.)புலம்பும்வகையை, அடுத்த மூன்று பாடல்களிற் காண்க.

ஐம்பொறிகளையும் உரியபுலன்களிற்செலுத்தி ஒற்றுமைப்பட்டு நிற்கும் மனம்போலப் பஞ்சபாண்டவர்களையும் உரியதொழில்களிற்பிரவேசிக்கும்படி செய்விக்கிற கண்ணபிரானும் போரை விரும்பாமல் சமாதானத்தையே நாடிக் கூறியதனால், திரௌபதி 'இனித் தன் சபதம் நிறைவேறுமாறு இல்லை' என்று கருதித் தனது கருத்து முற்றுப்பெறுமாறு வேண்டி அக்கண்ணபிரானது திருவடிகளிலே விழுந்து புலம்புவாளாயின ளென்க. நெஞ்சமின்ப நோக்கி, 'இது' என்றது - சந்தியாயிற்று. முன்னிரண்டடி

யைச் சகதேவனது வார்த்தையாகக் கொண்டால், கீழ்க்கவியிற்கூறியதன் விவரமான அநுவாத மெனக. இருநிலத்தில்-அத்தினபுரி இந்திரப்பிரத்தம் என்னும் இரண்டு இராச்சியபாகங்களி லென்றுமாம். தருமனுக்கும், உம்- அரசாட்சிக்குஉரிய மூத்தமகனான தருமபுத்திரனுக்கு என உயர்வுசிறப்பும், எதிரதுதழுவியஎச்சப்பொருளு முடையது. எனக்கும், உம் - இறந்ததுதழு வியஎச்சம். பதின்மூன்றுவருடமாக விரிந்த கூந்த லாதலின், 'மலர்மறந்த குழல்' எனப்பட்டது. வரிக்கண் என இயையும்; வரி மலர் என எடுத்து, வண்டுகள்மொய்க்கும் மல ரெனினுமாம். வரிமலர்-தாமரை யென்றேனும், கருங்குவளை யென்றேனும் கொள்க. செம் சே - மிகுதியுணர்த்தவந்த ஒரு சொல்லடிக்கு. சே - செம்மையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதி நீண்டு இடைநின்றமகரமுங் கெட்டது. சேவடி, வ்-உடம்படுமெய்: பண்புப் பெயரின் இடைமகரம் வகரமாகத்திரிந்ததாகவுங் கொள்ளலாம். திருவடி கள் சிவந்திருத்தல், உத்தமவிலக்கணம். செம்-அழகிய, சே-சிவந்த எனினு மாம். அடிக்கீழ், கீழ் - ஏழனுருபு. மின்உவமை - மென்மைக்கும்,ஒளிக்கும்.

[இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: திரௌபதி புலம்புதல்.]

௯௩. சாலக்கனகன்றனிமைந்தனை முனிந்த
காலத்தவனறைந்தகற்றாணிடைவந்தாய்
மூலப்பேரிட்டழைத்தமும்மதமால்யானைக்கு
நீலக்கிரிபோன்முன்னின்றநெடுமாலே.

(இ - ள்.) கனகன்-பொன்னிறமான உடம்பையுடையவனான இரணி யன், தனி மைந்தனை-ஒப்பற்ற(தனது)புத்திரனான பிரகலாதனை, சாலமுனி ந்தகாலத்து-மிகவுங்கோபித்த காலத்தில், அவன் அறைந்த கல் தூணிடை- அவ்விரணியன் கையால்தாக்கின கற்கம்பத்தினிடத்தில், வந்தாய்-(நரசிங்க மூர்த்தியாகத்) திருவவதரித்தவனே!—மூலம் பேர் இட்டு அழைத்த - ஆதி மூலமேயென்ற பெயரைச் சொல்லிக் கூப்பிட்ட, மும்மதம்மால் யானைக்கு- மூன்றுமதங்களையுடைய பெரியதொரு யானையைக் காத்தற்கு, நீலம் கிரி போல் முன் நின்ற - நீலமலையொன்று நின்றதுபோல எதிரில் எழுந்தருளி நின்ற, நெடு மாலே - பெருமைக்குணமுடைய திருமாலே! (எ - று.)

("பள்ளியிலோதிவந்த தன்சிறுவன் வாயிலோ ராயிர நாமம், ஒள்ளிய வாகிப் போத வாங்கதனுக்கு ஒன்றுமோர் பொறுப்பிலனாகிப், பிள்ளையைச் சீறிவெகுண்டு தூண்புடைப்பப் பிறையெயிற்றனல்விழிப்பேழ்வாய்த், தெ ள்ளிய சிங்கமாகிய தே," "அளந்திட்ட தூணை யவன் தட்ட வாங்கே, வளர் ந்திட்ட வாளுகிர்ச்சிங்கவுருவாய், உளந்தொட்டிரணிய னொண் மார்பகலம், பிளந்திட்ட கைகள்," "எடுத்தகராங்கதுவ நிமிர்கையெடுத்து மெய்கலங்கி, உடுத்ததிசையனைத்தினுஞ்சென்றொலிகொள்ள வுறுதுயரால்,அடுத்தபெருந் தனிமூலத் தரும்பரமே பரமே யென்று, எடுத்தொரு வாரண மழைப்ப நீ யோ வன் றேனென்றாய்," "மூலமேயென்ற கரிமுன் வந்திடர்தொலைத்து, நீலமேகம்போல நின்றான்" என்றார் முன்னோரும்.)

தன்பெயரைச் சொல்லாமல் நாராயணநாமத்தையே சொல்லிவந்த பிரகலாதனை இரணியன் பலவகையாகக்கொல்லக்கருதி அவையொன்றும் முடியாமல் இறுதியில்'நீசொன்னவிடத்தில் நாராயணன் இல்லாவிட்டால், நானே உன்னைக் கோபந்தீரக் கொன்று குருதி பருகுவேன்' என்ற சமயத் தில், அவன் காட்டின தூணினின்று புறப்பட்டதனால், 'சாலமுனிந்தகால த்து' என்றது. இருந்திரிமமான செய்கையொன்றும் முன்பே செய்து அமைத்துவைத்தற்கு உரியதல்லாத தென நன்கு விளக்குதற்கு: 'கற்றூ ணிடை வந்தாய்' எனப்பட்டது.

யானைக்கு முன் நின்ற கதை:—இந்திரத்யும்நனென்னும்அரசன் மிக்க விஷ்ணுபக்தியுடையனாய் ஒருநாள் விஷ்ணுபூசைசெய்கையில், அகஸ்திய மகாமுனிவன் அவனிடம் எழுந்தருள, அப்பொழுது அவன் தன் கருத்து முழுவதையுந் திருமாலைப்பூசிப்பதிறசெலுத்தியிருந்ததனால், அவ்விருடியின் வருகையை அறிந்திடானாய் அவனுக்கு உபசாரமொன்றுஞ் செய்யாதிருக்க, அம்முனிவன் தன்னை அரசன் அலக்ஷ்யஞ்செய்தானென்று மாறாகக்கருதிக் கோபித்து 'நீ யானைபோலச் செருக்குற்றிருந்ததனால் யானையாகக் கடவை' என்று சபிக்க. அங்ஙனமே அவன் ஒருகாட்டில் யானையாகத் தோன்றினனாயினும், முன்செய்த விஷ்ணுபக்தியின் மகிமையால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந்தாமரைமலர்களைக் கொண்டு திருமாலை அருச்சித்துப்பூசித்துவருகையில், ஒருநாள் பெரியதொரு தாமரைத்தடாகத்தில் அருச்சனைக்காகப் பூப்பறித்தற்குப் போய் இறங்கியபொழுது. அங்கே (முன்புநீர்நிலையில்நின்றுதவஞ்செய்துகொண்டிருந்த தேவலனென்னும்முனிவனது காலைப்பற்றியிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தால்) பெரிய முதலையாய்க்கிடந்த ஹூஹூஎன்னுங்கந்தருவன் அவ்யானையின்காலைக் கௌவிக்கொள்ள, அதனை விடுவித்துக்கொள்ளமுடியாமல் கஜேந்திரன் 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய்அங்குஎழுந்தருளித் தனதுசக்கராயுதத்தைப் பிரயோகித்து முதலையைத்துணித்து யானையை அதன்வாயினின்றும் விடுவித்து இறுதியில் அதற்கு முத்தியைஅருள்செய்தனனென்பதாம்.

சகலவிதத்தாலுங் காப்பாற்றவேண்டிய தந்தையால் மைந்தனுக்கும், ஒருவிலங்காலே மற்றொருவிலங்குக்கும் நேர்ந்த துன்பத்தைப் பொறாமல் அலைகுலையத் தலைகுலைய ஆங்காங்கு விரைந்துவந்து உதவின மகாகுணத்திலே ஈடுபட்டு இவ்வாறு கூறி அழைத்தது, இங்ஙனமவருந்துந் தன்குறையையும் தீர்த்தருளவேண்டுமென்ற குறிப்பு.

மூலப் பேர்-மூலமாகிய பேர் எனப் பொதுப்பெயரும் சிறப்புப்பெயருமாகத்தொடர்ந்த இருபெயரொட்டுப் பண்புத்தொகையாக விரிக்க. நீலக்கிரி - நிறத்துக்கும், அழகுக்கும், சலியாத திண்மைக்கும், அளவிடப்படாத பெருமைக்கும் உவமை முன் - இடமுன். மும்மதம் - கன்னமிரண்டு, குறியொன்று இவற்றிற் சொரிவது. கநகம் - ஸ்வர்ணம்: வடசொல். ஹிரண்யன் என்ற பெயர் பொன்னிறமானவனென்பதுபற்றியதாதலால், அதன் பரியாயநாமமாக 'கனகன' என்றார். இரணியகசிபு என்றும் இவனுக்குப் பேருண்டு. (சங.)

சச. கற்றைக்குழல்பிடித்துக்கண்ணிலான்பெற்றெடுத்தோன்
பற்றித்துகிலுரியப்பாண்டவரும்பார்த்திருந்தார்
கொற்றத்தனித்திகிரிக்கோவிந்தாநீயன்றி
யற்றைக்குமென்மானமார்வேறுகாத்தாரே.

(இ - ள்.) கொற்றம் - வெற்றியை யுடைய, தனி - ஒப்பில்லாத, திகிரி - சக்கரத்தையுடைய, கோவிந்தா - கண்ணபிரானே!—கண் இலான் பெற்று எடுத்தோன் - குருடனான திருதராட்டிரன் பெற்றுவளர்த்த துச்சாதனன், கற்றை குழல் பிடித்து - தொகுதியான (எனது) கூந்தலைப் பிடித்து இழுத்து (வந்து), துகில் பற்றி உரிய-(எனது) ஆடையைப் பிடித்து அவிழ்க்கையில், பாண்டவரும் பார்த்துஇருந்தார் - (என்கொழுநரான) இப்பாண்டவரைவரும் பார்த்துக்கொண்டு (யாதொருபரிகாரமுஞ் செய்யாமற் சபையிற் சும்மா)இருந்தார்கள்; அற்றைக்கும் - அக்காலத்திலும், என் மானம் நீ அன்றி வேறு ஆர் காத்தார - எனதுமானத்தை நீயல்லாமல் வேறே யார்தாம் காத்தவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

பிறர்க்கு உதவியதைக் கீழ்ச்செய்யுளாற்கூறி, தனக்கு முன்பு உதவியதை இச்செய்யுளாற்கூறுகிறாள். 'ஆபத்து நேர்ந்தகாலத்தில் மகளிர்க்குத் தம் தம் கணவர் குறைநீக்குவார்கள்: எனக்கோ கணவர் ஒருவர்க்குஐவராயிருந்தும், ஆபத்துக்காலத்தில் உதவுமாறு இல்லை' என்பது, முன்னமே நடந்த வரலாற்றால் விளங்குவதால், இப்பொழுது நீ காப்பாற்றினாலுண்டு: இல்லாவிட்டால் இல்லை; எனது சாபத்தையும் சபதத்தையும் நிறைவேறச்செய்து எனது மானத்தைக் காக்கவேண்டுவது உனதுபாரமே என்று குறைவேண்டினளென்பதாம். பாண்டவரும், உம்மை-உயர்வுசிறப்பு; அப்பாண்டவர்கள் மானத்தைக்காக்கவேண்டிய உரிமையும் புயவலிமையும் உடையாரென்ற பொருளைத் தரும். அற்றை-அன்றுஎன்னும் மென்றொடர் வன்றொடராய் ஐகாரச்சாரியை பெற்றது. அற்றைக்கும், உம்மை - எதிரதுதழுவியது.

௪௫. மன்றிலழைத்தெனக்குமாசளித்தமன்னவன்பாற்
சென்றுதமக்கைந்தூர்திறல்வீரர்பெற்றிருந்தா
லன்றுவிரித்தவருங்கூந்தல்வல்வினையே
னென்றுமுடிப்பதினியெம்பெருமானென்றழுதாள்.

(இ - ள்.) எம்பெருமான் - எமது தலைவனே! மன்றில் - சபையிலே, அழைத்து - (துச்சாதனனால்) வருவித்து, எனக்கு—, மாசு அளித்த - (மானபங்கமாகிய) குற்றத்தைச் செய்து) தந்த, மன்னவன்பால் - துரியோதனராசனிடத்தில், சென்று - (இரந்து)போய், திறல் வீரர் - வலிமையையுடையவீரர்களாகிய பாண்டவர்கள், தமக்கு ஐந்து ஊர் பெற்று - தங்கட்கு ஐந்து ஊர்களைப் பெற்று, இருந்தால் - வாழ்ந்திருந்தால்,—வல் வினையேன் - கொடியதீவினையையுடையவளாகிய யான், அன்று விரித்த அரும் கூந்தல் - (துகிலுரிந்த) அக்காலத்து விரித்திட்ட அருமையாகிய கூந்தலை, இனி என்று முடிப்பது - இனிமேல் எப்பொழுது முடித்திடுவது?" என்று - என்று சொல்லி, அழுதாள் - புலம்பினாள்; (எ - று.)

முன் இரண்டடி பேரவமானத்தைச்செய்த அத்துரியோதனனிடத்து அரசுமுறைதவறி இரந்து இராச்சியத்தில் மிகச்சிறியபாகத்தைப் பெறுதல் பெருவீரரான இப்பாண்டவர்க்குச் சிறிதுந்தக்கதன்று என்பதைக் காட்டும். அருங் கூந்தல்-இத்தன்மையதாய் அழகிதாக நீண்டுவளர்ந்த தொகுதியான கூந்தல் பிறர்க்கு இல்லை யென்றபடி; அல்லது, எல்லாஅழகுகளினும் மயிர்முடியழகு சிறந்ததாக முதலில் எடுத்துக்கூறப்படுதலின், அதுபற்றி, 'அருங் கூந்தல்' என்றதாகவுங் கொள்ளலாம்: அது முதலிற் கூறப்படுதலை, "மயிர் வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பும்," "குஞ்சியழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்" இவை முதலியவற்றிற் காண்க. வெகுகாலமாகத் தான் பலவகைத்துன்பங்களை அனுபவித்தற்குக் காரணமான தனது கொடிய வலியஊழ்வினையைத் தானே வெறுத்துக்கொண்டாள். பெருமான் - பெருமையையுடையவன்; ஈற்று 'மை'போன பெரு என்னும் பண்படி - பகுதி, மான் - ஆண்பாற்பெயர்விகுதி; ஆன் - விகுதி யென்றால், பண்புப்பெயர் ஈற்றைகாரம் மாத்திரங் கெட்டதென்க இச்சொல் - இங்கே. இயல்பாகிய அண்மைவிளி. என்று என்ற வினா - இனிமுடித்தலில்லையென எதிர்மறையோடு இரக்கத்தையும் உணர்த்தும். ௪௫

[சாத்தகி 'சமாதானங் கூடாது' என்றல்]

௪௬. தண்டிருந்ததிவன்கரத்திற்றனுவிருந்ததவன்கரத்தில்
வண்டிருந்தபூங்குழன்மேன்மாசிருந்ததெனவிருந்தா
கண்டிருந்திறல்வீரருங்கருதலர்பாலூர்வேண்டி
யுண்டிருந்துவாழ்வதற்கேயுரைக்கின்றீருரையீரே.

(இ - ள்.) (திரௌபதியைச் சபையில் இழுத்து வந்து துகிலுரிந்த காலத்தில்), இவன் கரத்தில் - இந்த வீமசேனனது கையிலே, தண்டு இருந்தது-(சத்துருகாதினியென்னுஞ் சிறந்த) கதாயுதம் இருந்தது; அவன் கரத்தில்-அந்தஅருச்சுனனது கையிலே, தனுஇருந்தது - (காண்டீவ மென்னுஞ் சிறந்த) வில் இருந்தது; (அங்ஙனமிருந்தும்),வண்டு இருந்த பூ குழல்-வண்டுகள் இடைவிடாதுமொய்த்திருத்தற்கு இடமான பூக்களை முடித்த கூந்தலையுடையவளான திரௌபதி, மேல் மாசு இருந்தது என-தன்மேலே (மானபங்கமாகிய) பழிப்பு நிலைத்துநின்றதென்று(யாவரும்)சொல்லும்படி, இருந்தாள் - (அவமானமடைந்து இருந்தாள்;(அந்நிலையை), எல்லீரும்-நீங்களெல்லோரும், கண்டு இருந்தீர் - (கண்ணெதிரிற்) பார்த்துக்கொண்டு (அப்பொழுது சும்மா) இருந்துவிட்டீர்கள்; (இப்பொழுதும்), கருதலர்பால் ஊர் வேண்டி உண்டு இருந்து வாழ்வதற்கே உரைக்கின்றீர் - மதியாத பகைவர்களிடத்தில் (ஒவ்வொரு ஊரை) யாசித்துப்பெற்று (அதனால் வருவதை)ப்புசித்து உயிரோடிருந்து வாழ்வதற்கே வழிசொல்லுகிறீர்கள்; உரையீர் - (இனி அவ்வவமானம்நீங்கும்விதத்தைச்) சொல்லுங்கள்; (எ-று.)

இது சாத்தகிவார்த்தையென்பது, மேல்௯அ-ஆங்கவியில் "சாத்தகிநின் றிவையுரைப்ப" என வருவதால் விளங்கும்.

நண்பர்பக்கலிலும் யாதோரியையபு மில்லாத பிறர்பக்கலிலுமே எதாயினுமொன்றை இரந்துவாழ்தல் மிக்க இளிவரவுக்கு இடமாயிருக்க, பகைவர்பக்கல் இரந்துவாழக் கருதுவது என்னபேதைமை! என்றபடி. போரையே கருதாது சமாதானத்தையே கருதிக் கூறிய தருமன் சகதேவன் கண்ணன் இவர்களையும், தம்கருத்துச் சமாதானத்தின்மேலன்றிப் போரின்மேலாக வேறுபட்டிருப்பினும் இவர்கள்வார்த்தையைக்கடக்கமாட்டாத வீமன் முதலிய மூவரையும் பார்த்து, சுத்தவீரனான சாத்தகி, இவர்கட்கும் திரௌபதிக்கும் பகைவரால்நேர்ந்த அவமானங்களைக் கருதி மனம்பொறாது, தக்கசமயத்தில் நல்லஆலோசனையைச் சொல்லாதிருப்பது தகுதியன்றென்று பதைத்துக்கூறினனென்க. (கீழ் வாசுதேவனைப் படைத்துணையழைத்தசருக்கத்தி னிறுதியில் அருச்சுனனோடு கண்ணன் துவாரகையினின்று அத்தினாபுரிக்கு வந்தானென்றதிலே,அவன் தம்பியான சாத்தகி உடன்வந்தமையும அடங்கிய தென அறிக; இராமாயணத்தில் விசுவாமித்திரர் தமதுவேள்வியைக்காத்தற்கு இராமனை அனுப்பும்படி சக்கரவர்த்தியைக் கேட்டதில், அவ்விராமபிரானுக்கு வலதிருக்கையோடொத்த இலக்குமணனும் அடங்கிநின்றதுபோல,'கண்ணன் எழுந்தருளினான்' என்றதில், அவனது உயிரோடொத்த தம்பியான சாத்தகி வந்தானென்பதும் கூறாமலே அடங்கிய தெனக் கொள்க.)

உரைக்கின்றீர் என்பதை - உரைக்கின்றவர்களே என விளியாகவுங் கொள்ளலாம். கண்டிருந்தீர் என்பதை - பெயராகக்கொண்டு, கண்டிருந்த நீவிரெல்லீரும் என்றலுமாம். தண்டிருந்தது, தனுவிருந்தது என்றவை - அவையிருந்தும் பயனற்றவையாயின என்பதேதோடு, அவர்கள் பகைமுடிக்க வல்லவராயினும் தருமன் பொறுமைக்குஅஞ்சி அடங்கியிருந்தார்களென்பதையும் தெரிவித்தன. இரண்டாமடிக்கு கூந்தல்மேற் பழிப்புள்ளதென்னும்படி அசுவிரிக்கப்பட்டிருந்த திரௌபதியை என்றும். திரௌபதி (மிக்கவீரர்களான கணவர்கள் பார்த்துச் சும்மா இருக்கத் தான் பகைவர்களைக் கற்பு வலிமையால்அழிப்பது)தன்மேற்பழிப்புக்கிடமா மென்றுகருதி அஞ்சிச் சும்மாஇருந்தா ளென்றும் உரைப்பாருமுளர். இனி, முதலிரண்டடிக்கு வீமன் கையிற் கதையிருந்ததும் அருச்சுனன்கையில் வில்இருந்ததும் புகழ்தாராது அவர்களிடம் பழிப்பிருத்தற்குக் காரணமாயிற்று என்னும்படி திரௌபதி (துன்பமடைந்து)இருந்தா ளென்றலும் ஒருரையாம். மான அவமானங்

களை நினையாது வயிறுவளர்த்தலே பெரிதென நினைக்கின்றீ ரென்பான், 'உண்டிருந்துவாழ்வதற்கே' என்றான். உரையீர் - அங்ஙனஞ் சொல்லாதீர் எனினுமாம். இச்சொல்-உடன்பாடு எதிர்மறை இரண்டுக்கும் பொதுவாம்.

இவன் - அண்மைச்சுட்டு, அவன் - சேய்மைச்சுட்டு: சபையில் வீற்றிருக்கையில் சாத்தகிக்கு மிகஅருகில் வீமனும், சிறிதுதூரத்தில் அருச்சுனனும் வீற்றிருந்ததனால், இங்ஙனம் சுட்டினது. பூங்குழல் - வேற்றுமைத்தொகை யன்மொழி; இதனை அடையடுத்த சினையாகுபெய ரெனக் கொள்ளினும் இழுக்காகாது. இப்பாட்டில் முன்னிரண்டடிகள் - படர்க்கையாகவும், பின்னிரண்டடிகள் - முன்னிலையாகவும் கூறப்பட்டது, அலட்சியத்தைக்காட்டி இடவழுவமைதியின்பாற்படும். கருதலர் - நன்குமதித்து எண்ணுத லில்லாதவர்: காரணக்குறி; எதிர்மறைவினையாலணையும்பெயர்: அல் - எதிர்மறையிடைநிலை. வாழ்வதற்கே. ஏ - பிரிநிலையோடு இழிவுசிறப்பு. எல்லீர்-முன்னிலைப்பன்மைக் குறிப்புவினையாலணையும்பெயர்;(இதன்தன்மை-எல்லோமென்றும், படர்க்கை-எல்லாமென்றும் வரும்.) 'கண்டிருந்தீ ரெல்லீரும்' என்றது, பாண்டவரைவரையும் ஈற்றுஏகாரம் - இரக்கம். (௪௬)

[இதுவும் அது.]

௪௭. சண்டமுகிலுருமனையசராசந்தன்றனக்கஞ்சி
வண்டுவரையரணாகவடமதுரைகைவிட்ட
திண்டிறன்மாதவன்மதியோதிகழ்தருமன்றன்மதியோ
பண்டுமவர்கருத்தறிந்துபார்போய்வேண்டுவதென்றான்.

(இ - ள்.) சண்டம் - உக்கிரமான, முகில் உரும் - மேகத்தில் தோன்றுகிற இடியை, அனைய - ஒத்த, சராசந்தன்தனக்கு - ஜராசந்தனுக்கு, அஞ்சி - பயந்து, வள் துவரை அரண் ஆக - அழகிய துவாரகாபுரியையே காப்பிடமாகக்கொண்டு, வட மதுரை கைவிட்ட - வடக்கிலுள்ள தனது மதுராபுரியை முழுதும்விட்டுநீங்கின, திண் திறல் மாதவன் - மிகுந்தவலிமையையுடைய கண்ணனது, மதியோ - அறிவின் காரியமோ? திகழ் தருமன்தன் மதியோ - விளங்குகின்ற யுதிட்டிரனது அறிவின் காரியமோ? பண்டு அவர் கருத்து அறிந்தும் - முன்னமே அத்துரியோதனனுடையது எண்ணத்தை (உலூகன் முதலியோரால்) தெரிந்திருந்தும், பார் போய் வேண்டுவது - மறுபடி சென்று இராச்சியத்தை யாசிப்பது, என்றான் - என்றுகூறினான், (சாத்தகி); (எ - று.)

இவ்விரண்டு கவிகளும் சாத்தகிவார்த்தை யென்பது, வருங்கவியில் "சாத்தகிதன் றிலையுரைப்ப" என்பதனால் விளங்கும். முதலிரண்டடிகளால், பகைவர்க்குப்பயந்தோடுகிறவ னென்று கண்ணனது பராக்கிரமத்தை இகழ்ந்துகூறியபடி. 'திண்திறல்' என்ற மிகுந்தவலிமைகுறிக்கிற ஒருபொருட்பன்மொழியும், இங்கு இகழ்ச்சிபற்றி வந்ததுபோலும்; அல்லது, பலமிருந்தும்தைரியமில்லை யென்றதை உணர்த்தியதுமாம். புத்திசாலியான சாத்தகி இங்ஙனம் பெரியோரை இகழ்ந்தது, இதனாலேனும் அவர்க்கு வீராவேசமுண்டாகி அவர்கள் போருக்கு எழுந்து பகையையொழிக்கவேண்டு மென்ற நல்ல கருத்தினா லென்க.

முதலிரண்டடிகளிற் கூறிய விவரம்:—மகததேசத்து அரசனும் தேவர்களுக்குப் பகைவனும் ஆகிய பிருகத்திரத னென்பவன் மைந்தனில்லாக் குறையால் வனத்திற்சென்று சண்டகௌசிகமகாமுனிவனை வணங்கி வரம் வேண்ட, அவன் தனது வாசஸ்தானமாக இருக்கும் மாமரத்தின் கனியொன்றைக் கொடுக்க, அதனை அவன் காசிதேசத்தரசன்பெண்களாகிய தன்மனைவிமார்இருவர்க்கும் பகிர்ந்து கொடுத்தான்; அதனால், அவ்விருவரிடத்தும் பாதிபாதியாகக் குழந்தை பிறந்தது; அவற்றை அவன் ஊர்ப்

புறத்தில் எறிந்துவிடும்படி கட்டளையிட, அங்ஙனம் எறியப்பட்ட அப் பிளவுகளை அந்தக்கிராமதேவதையாகிய ஜரையென்பவள் இரவில் ஊர் வலம்வருகையில் கண்டு எடுத்துப் பொருத்தி உயிர்ப்பித்து, தன்னாற்பொருத்தப்பட்டகாரணத்தால் ஜராசந்தனென்று பெயரிட்டு வளர்க்கும்படி அக்குழந்தையைத் தந்தையினிடம் கொடுத்துப் போயினள்: அங்ஙனம் வளர்ந்த அந்நாட்டில் கிரிவிரசமென்னும் நகரத்தில் அரசாண்டு பற்பல அரசர்களைப் போரிற் கொன்றுவென்று செருக்குக்கொண்டிருந்த அவன், அஸ்தி பிராப்தி என்னுந் தனது இரண்டுபெண்களைக் கண்ணனது மாமனான கம்சனுக்கு மணஞ்செய்வித்திருந்தான்: பின்பு அச்சராசந்தன், கண்ணன் கம்சனைக் கொன்றது காரணமாக வெகுகோபங்கொண்டு கிருஷ்ணனை வம்சத்தோடு கொல்லவேண்டுமென்று அநேகம்பெருஞ்சேனையோடு எதிர்த்து வந்து மதுராபுரியை வளைத்துப் பெரும்போர்செய்து பலராமகிருஷ்ணர்களாலும் யாதவசேனையாலுந் தானுந் தன்சேனையும் வெல்லப்பட்டு ஓடிப்போனான்; இங்ஙனம் பதினெட்டு முறை மீண்டும் வருவது பொருவது தோற்பது ஓடுவதாய்ப்பங்கப்பட்டபின் கோபாவேசங்கொண்டுபலமானபெருஞ்சேனையைத் திரட்டிக்கொண்டுவந்தான்; இப்படியிருக்கையில், யவனதேசாதிபதியான காலயவனன் பலபராக்கிரமங்களாற்செருக்குக்கொண்டு, நாரதமுனிவரால்கிருஷ்ணபலராமர்களையேதான்எதிர்த்தற்குஏற்றபலவான்களாக அறிந்து, சேனையைச் சித்தஞ் செய்துகொண்டு போரின்பொருட்டு மதுரைக்கு வந்தான்; அத்தருணத்தில், கண்ணன், யாதவசேனைக்குநாசமுண்டாகக்கூடுமென்றுநினைத்து, சமுத்திரராசனைப்பன்னிரண்டுயோசனைதூரம்இடமவிடும்படிகேட்டு, அந்நடுக்கடலில், பகைவர்உட்புகவொண்ணாதபடி மிகவுங்காப்புடைத்தான துவாரகாநகரத்தை நிருமித்து, மதுரையிலிருந்த சனங்களையெல்லாம் அந்நகரத்திற் கொண்டு சேர்த்து, காலயவனன் வருகையில், கண்ணன் தான் தனியே ஓராயுதமு மில்லாமல் மதுரையினின்று வெளியேபுறப்பட்டு ஓடினன் என்பது வரலாறு. தான் அவதாரவிசேஷத்தில்அடைந்திருக்கும் மனிதத்தன்மையை அனுசரித்துக் காலத்துக்கு ஏற்ற கோலமாய்க் கண்ணன் இங்ஙனஞ் செய்தது, ஜராசந்தன் வீமனால் பின்பு மரணமடையவேண்டியஊழ்வினையினுண்மையை நோக்கி யாயினும்,இராசதருமத்தைப் பார்க்கு மிடத்துப் பகைக்குப்பயந்து பங்கப்பட்டதாகவே முடிதலால், இவ்வாறு சாத்தகி கூறினது.

சராசந்தனுக்கு இடி யுவமை - அச்சந்தருதற்கும், தவறாது அழித்தற்குமென்க. "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற், காடுமுடைய தரண்" என்ற நால்வகை யரண்களுள் முதலாகக் கூறப்பட்ட நீரரண் கடலால் நன்கு அமைந்திருக்கிற சிறப்புத் தோன்ற, 'துவரையரணாக' என்றார். மதுராஎன்னும் வடசொல், ஆவீறு ஐயாயிற்று; மதுவென்னும் அரசனால் முதலில் சிருத்தி யாளப்பட்டதனாலும், கண்ணுக்கு இனிதா யிருத்தலாலும், மதுரையென்ற பெயர். பாண்டியநாட்டிலுள்ள தென்மதுரையினின்று பிரித்தற்கு, 'வடமதுரை' எனப் பிறிதினியைபு நீக்கிய விசேஷணங் கொடுத்துக் கூறவேண்டிற்று. கைவிட்ட என்பதில், கை - விடுதல் வினையைச் சிறப்பித்து நின்ற தமிழுபசர்க்கம். மாதவன் என்னும் வடமொழித் திருநாமத்துக்கு - திருமகளது கொழுநனென்று பொருள்; ஆறும்வேற்றுமைத்தொகை: மா - இலக்குமி, தவன்-கணவன். திகழ் என்ற வினைத்தொகை யடைமொழியையும் இங்கே இகழ்ச்சிகுறிப்பதாகவே கொள்ளுதல், தகுதி. மதியெனக் காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது. சண்டம்-வடசொல். பண்டு என்றது- அரக்குமாளிகையில் வைத்து எரிக்கநினைத்தது, வீமனைக் கழுவேற்றியது முதலிய அனைத்தையும் உட்படுத்தும். பண்டும், உம்மை - மாற்றப்பட்டது. [illegible]வது - எதிர்காலத் தொழிற்பெயர். ஓகாரங்கள் - ஐயவினாவோடு இழிவுசிறப்பு.

([illegible])

[கண்ணன் திரௌபதியைநோக்கி ஒன்றுகூறத்தொடங்குதல்.]

௪௮. சாத்தகிநின்றிவையுரைப்பச்சடைக்குழலாளழுதரற்றக்
கோத்தருமன்முதலாயகுலவேந்தரைவரையும்
பார்த்தருளியருள்பொழியும்பங்கயக்கணெடுமாலு
மேத்தரியபெருங்கற்பினிளையாளுக்கிவையுரைப்பான்.

(இ - ள்.) சாத்தகி - கண்ணன் தம்பி, நின்று - (உறுதியோடு) நின்று, இவை உரைப்ப - இவ்வார்த்தைகளைச் சொல்லவும்,— சடை குழலாள் - (பின்னிமுடிக்கப்படாமல்) சடையாகத்திரித்துவிடப்பட்ட கூந்தலையுடையளான திரௌபதி, அழுது அரற்ற-புலம்பிக் கதறவும்,—(கேட்டு),— அருள் பொழியும் - கருணையைச் சொரிகின்ற, பங்கயம் கண்-தாமரைமலர் போலுங் கண்களையுடைய, நெடு மாலும் - பெருமைக்குணமுள்ள கண்ணனும், கோ தருமன் முதல் ஆய குலம் வேந்தர் ஐவரையும் பார்த்தருளி - தலைவனை யுதிட்டிரனை முதலாகவுடைய சிறந்தகுலத்திற்பிறந்த அரசர்களைந்துபேரையும் [பஞ்சபாண்டவரையும்] கருணையோடுநோக்கி,—ஏத்து அரிய பெரு கற்பின் -(எவராலும்)துதித்தற்குஅருமையான சிறந்த பதிவிரதாதருமத்தையுடைய, இளையாளுக்கு திருமகள்போன்றவளான திரௌபதிக்கு.இவை உரைப்பான்-இவ்வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ - று.)— அவற்றை, அடுத்தகவியிற் காண்க.

யதுகுலத்தரசர்களில் வசுதேவனுக்கு உடன்பிறந்தமுறையாகின்றவனும் சிநியென்பவனதுமகனுமான சததியகனது குமாரனாகிய சாத்தியகி, பிராயத்திற் கண்ணனிலும்இளையனாதலால் கண்ணனுக்குத் தம்பிமுறையாயவன். ஸாத்யகி என்னும் வடமொழித்தத்திதாந்தநாமம் திரிந்தது. இலக்குமணன் இராமனிடத்துப்போல இவன் கண்ணனிடம் மிக்கஅன்புகொண்டு அவன்கருத்துக்குச் சிறிதும்மாறுபடாது நடப்பவன். அன்றியும், இவன் அருச்சுனனிடம் வில்வித்தையைக் கற்றறிந்த மாணாக்கனாதலால், ஆசிரியனாகிய அருச்சுனனிடத்தும் அதுகாரணமாக மற்றைப்பாண்டவரிடத்தும் நீதிமுறைவழுவாமல் அன்போடு ஒழுகுவன். இவனுக்கு யுயுதாநனென்றும், சைநேயனென்றும் பெயர்களுண்டு.

கோத்தருமன் - தருமக்கோவென மாற்றி, தருமராசனென்னலாம். அருள்பொழியுங்கண்-கருணைமிகுதி கண்ணில் விளங்கும் என்றபடி. திருப்பாற்கடல் கடைந்தகாலத்து அதனினின்று முன்னர் மூதேவியும் பின்னர் ஸ்ரீதேவியும் பிறந்தனராதலால், இவர்கட்கு, முறையே, மூத்தாள் இளையாள் என்றும், தமக்கை தங்கை என்றும், முன்னவள் பின்னவள் என்றும் பெயர்கள் வழங்கும். இங்கே, 'இளையாள்' என்றது - பாஞ்சாலிக்கு உவமையாகுபெயர். பங்கயம் - பங்கஜம் என்ற வடசொல்லின் விகாரம்; சேற்றினின்று முளைப்பதென்று அவயவப்பொருள்பெறும்: காரணவிடுகுறிப்பெயர்; பங்கம் - சேறு. பங்கயக்கண்மால் - புண்டரீகாக்ஷன். (௪௮)

[இதுமுதல் மூன்றுகவிகள் - கண்ணன் திரௌபதியைத் தேற்றுதல்.]

௪௯. தொல்லாண்மைப்பாண்டவர்க்குத்தூதுபோய்மீண்டதற்பி
னல்லாயுன்பைங்கூந்தனானேமுடிக்கின்றே
னெல்லாருங்காணவினிவிரிப்பதெண்ணரிய
புல்லார்தமந்தப்புரமாதர்பூங்குழலே.

(இ - ள்.) நல்லாய் - நற்குண நற்செய்கைகளையும் அழகையும் உடையவளே! தொல் ஆண்மை பாண்டவர்க்கு தூது போய் மீண்டதன் பின் - பழமையான [இயற்கையாகவுள்ள]பராக்கிரமத்தையுடைய பாண்டவர்கட்காக(நான் துரியோதனனிடம்)தூதுசென்றுதிரும்பிவந்தபின்பு, உன் பைங் கூந்தல் நானே முடிக்கின்றேன் - உனது கருமையான கூந்தலை

நானே முடித்திடுகிறேன்; எல்லாரும் காண - அனைவரும் பார்க்கும்படி, இனி விரிப்பது - இனிமேல் விரிக்கப்படுவது,—என் அரிய - கணக்கிடமுடியாத [அளவிறந்த], புல்லார்தம் - பகைவர்களான துரியோதனாதியருடைய, அந்தப்புரம் மாதர் - அந்தப்புரத்திலுள்ள மனைவியரான மகளிரது, பூ குழலே - மலர்களையணிந்த கூந்தல்களே; (எ - று.)

தருமபுத்திரனது கருத்தின்படி நான் பாண்டவதூதனாய்ச்சென்றுவந்தவுடனே விரைவில் துரியோதனாதியரைக் கொல்வித்து உன்சபதத்தைத் தவறாமல் நிறைவேற்றுவே னென்று திரௌபதிக்கு அபயமளித்தன னென்க. "உன்கருத்தே முற்றுவிப்பே னெண்ணுதலா யொண்டிறலான், தன் கருத்தை யான்சென்று சந்தித்தால்—பின்சடையா, மிக்குழலை நீ முடிக்க வெந்தெழிலான்தேவிமார், அக்குழல்கள் தாம் விரிப்பா ரங்கு" என்றார் பாரதவெண்பாவிலும். ("அந்தகன்சிறுவ னரசர்தமரசற்கிளையவ னணியிழையைச்சென்று,எந்தமக் குரிமைசெய்யெனத் தரியா தெம்பெருமானருளென்னச்,சந்தமர்குழலாளலக்க ணூற்றுவர்தம்பெண்டிருமெய்திநூலிழப்ப, இந்திரன்சிறுவன்தேர்முனின்றான்" என்ற ஆழ்வாரருளிச்செயலும் நோக்கத்தக்கது.) தருமனது மிக்கபொறுமையை விளக்கத் தான் தூதுபோகக் கருதியதேயன்றி, கிருஷ்ணனுடைய மனப்பூர்வமான எண்ணம் போரைநடத்துவதிலேயே யென்பது, முன்னிரண்டடிகளில் வெளியாம். பின்னிரண்டடிகளிற் கூறியது, கொழுநர் இறந்தபின் மனைவியர் புரண்டுவிழுந்துபுலம்புகையிற் கூந்தலை விரித்தலை. 'அந்தப்புரமாதர்' என்றது, உள்ளிருந்த உன்னை அவன் சபையில் இழுத்துவந்ததற்குப் பிரதியாக அந்தப்புரத்திலுள்ள மகளிர் வெளிப்பட்டுப் போர்க்களத்தில் வந்து துன்புறுவர் என்றற்கு; 'எல்லாருங் காண' என்றதும், இப்படிப்பட்ட கருத்தை விளக்கும். குழல் - சாதியொருமை யாதலால், 'விரிப்பது' என்ற ஒன்றன்பாற் சொல்லைக் கொண்டது. உனது கூந்தலொன்றை விரித்ததற்கு எதிராக, அவர்களது கூந்தல் நூறு விரிக்கப்படும் என்றவாறு: இச்செய்யுளில் மாற்றுநிலையணி தோன்றுமாறு காண்க மீண்டு அதன்பின் என்றும் பிரித்து உரைக்கலாம்.

தொல்லாண்மை - பண்புத்தொகை. நல்லாய் - ஈறுதிரிந்த விளி; நல்லாள் என்ற இலக்குமியின்பெயர், இங்கே பெண்மாத்திரத்தை யுணர்த்திற்று. நீலம் பசுமை கருமை இந்நிறங்களை வேறுபாடுகருதாது அபேதமாகக்கூறுதல் கவிமர பாதலால். 'பைங்கூந்தல்' எனப்பட்டது; இனி, பசுமை - குளிர்ச்சியுமாம்: 'பச்சைஜலம்' என்பதிற்போல. நானே, ஏ-பிரிநிலையோடு தேற்றம். முடிப்பேன் என எதிர்காலமாக் கூறவேண்டியிடத்து, முடிக்கின்றேன் என நிகழ்காலத்தாற் கூறியது, விரைவும்தெளிவும்பற்றிய காலவழுவமைதி;[நன்-பொது-௩௩.]புல்லார் - (தம்மைச்) சேராதவர்; எனவே,பகைவராம்; புல் என்ற வினைப்பகுதியடியாப் பிறந்த எதிர்மறைப்பலர்பால்வினையாலணையும்பெயர். இனி, புன்மையென்னும்பண்படியாப் பிறந்த குறிப்புப்பெய ரெனக்கொண்டு,அற்பரானகௌரவ ரென்றுமாம். எண்ணரிய - நினைத்தற்குங்கூடாத இழிகுணமுடைய எனினுமாம். அந்தப்புரம்-வடசொல்: அரண்மனையில் ராஜஸ்திரீகள்வசிக்கும் காப்புடைய உள்ளிடம். "மாதர் காதல்" என்ற தொல்காப்பியத்தின்படி விருப்பத்தையுணர்த்தும் 'மாதர்' என்னும் உரிச்சொல் - பண்பாகுபெயராய், விரும்பப்படுகிற அழகியமகளிரைக் குறிக்கும். புல்லார்தம்மாதர்—தம் - சாரியை. (௬௧)

௯0. மைக்குழலாய்கேளாய்மருவாருடற்புலத்துப்
புக்குழலாகுங்கொழுவாம்போர்வாளபிமன்னுத்
தொக்குழலும்வெங்கோன்மைத்தொல்வேந்தர்தங்குலமு
மிக்குழலுஞ்சேரமுடியாதிரானென்றான்.

(இ - ள்.) மை குழலாய் - கருநிறத்தையுடையகூந்தலையுடையவளே! கேளாய் - (யான்சொல்வதைக்) கேள்: மருவார் - பகைவர்களது, உடல் - உடம்பாகிய, புலத்து - விளைநிலத்திலே, புக்கு - நன்றாகப்பிரவேசித்து, உழல் ஆகும் - உழுதற்கு உரிய, கொழு ஆம் - இருப்புக்கொழுவாகிய, போர் வாள் - போரிற்சிறந்த வாளாயுதத்தையுடைய, அபிமன்னு - அபிமந்யு வானவன்,—தொக்கு உழலும் - ஒன்றாகக்கூடிச் சஞ்சரிக்கின்ற, வெம் கோன்மை தொல் வேந்தர்தம் குலமும் - கொடுங்கோன்மையையுடைய பழமையான அரசர்களது கூட்டத்தையும், இ குழலும் - இந்த உனதுகூந்தலையும், சேர - ஒருசேர, முடியாது இரான் - முடிக்காமலிருக்கமாட்டான், என்று ஒன் - என்று (கண்ணன்) கூறியருளினன்; (எ - று.)

வேந்தர்குலத்தை அழியச்செய்து உனதுகூந்தலையும் முடிக்கச்செய்வனென்பதாம். முடியாது - இரட்டுறமொழிதலாக ஒருங்கு இரண்டுபொருள் பட்டது, சிலேடையணியின்பாற்படும். முடிதல் - கெடுத்தலும், கட்டுதலுமாம். மைக்குழல் - உவமத்தொகையாய், அஞ்சனம்போன்ற அல்லது மேகம்போன்ற கூந்த லென்றுமாம். மருவார் என்ற எதிர்மறைப் பெயருக்கு - சேராதவரென்று பொருள்; மருவுதல் - சேர்தல். புலம் - கழனி. உழல் - தொழிற்பெயர்; உழு - பகுதி. கொழு - காறு. உடற்புலத்து உழலாகுங் கொழுவாம் வாள் - உருவகம். ஆம் - உவமவுருபென்னலுமாம் "வாளுழவன்" என்றார் கம்பரும். அபிமன்னு - வடசொற்றிரிபு; கண்ணனுடன்பிறந்தவளான சுபத்திரையினிடம் அருச்சுனனுக்குப்பிறந்த புத்திரன்: இளமையிலேயே வில்வித்தையில் ஒப்புயர்வின்றி மிகச்சிறந்தவன்; ஆனதுபற்றியே, மற்றையோர் விட்டாலும் பகைவர்களை இவன்விடானென இங்குக்கூறியது. (௩௦)

௩௧. பெண்ணீர்மைகுன்றாப்பெருந்திருவின்செங்கமலக்
கண்ணீர்துடைத்திருதன்கண்ணிற்கருணையெனுந்
தெண்ணீரினாற்பொருந்தத்தேற்றினான்சாற்றுகின்ற
மண்ணீரனலனிலம்வான்வடிவாமாமாயன்.

(இ - ள்.) சாற்றுகின்ற - (நூல்களில்) எடுத்துக் கூறப்படுகின்ற, மண் - பூமியும், நீர் - ஜலமும், அனல் - அக்கினியும், அனிலம் - வாயுவும், வான் - ஆகாயமும் ஆகிய பஞ்சபூதங்களின், வடிவு ஆம் - சொரூபமாகிய, மா மாயன் - மிக்கமாயையையுடையவனான கண்ணபிரான்,—தன் இரு கண்ணின் கருணை எனும் தெள் நீரினால் - தனது இரண்டுகண்களினின்று சொரிகின்ற அருளாகிய தெளிவான நீரினாலே, பெண் நீர்மை குன்றா பெருந் திருவின் செம் கமலம் கண் நீர் துடைத்து - பெண்மைக்கு உரியகுணங்களொன்றுங் குறையாத சிறந்த இலக்குமிபோன்ற திரௌபதியினது செந்தாமரைமலர் போலுங்கண்களின் நீரைப்போக்கி, பொருந்த தேற்றினான் - தக்கபடி [மனம் வருந்தாதிருக்குமாறு] (அவளைச்) சமாதானப்படுத்தியருளினான்; (எ - று.)

தனதுகடாக்ஷவீக்ஷணத்தில் தோன்றுங் கருணைத்தெண்ணீரினால் அத்திரௌபதியினது சோகக்கண்ணீரை அகற்றினனென்க. தம்மைச்சேர்ந்தவர் துன்பமடையக் கண்டபோது அன்புடையாரது கண்களினின்று அகத்தேநிகழ்கிற அன்பு புறத்தேதோன்றும்படி கண்ணீர் ததும்பு மாதலின், 'கண்ணிற்கருணையெனுந்தெண்ணீர்' எனப்பட்டது. கருணையெனுந் தெள்நீர் - அருளென்கிற தெளிவான குண மென்றும் உரைப்பர்.

நாணம் மடம் அச்சம் பயிர்ப்புஎன மகளிர்க்குணம்நான்காம்; அவற்றுள், நாணமாவது - செய்யத்தகாதவற்றில் உள்ளமொடுங்குதல்; மடமாவது - எல்லாம்அறிந்தும் ஒன்றும்அறியாதுபோலிருத்தல்: கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமை யெனவும்படும்; அச்சமாவது - புதியதைக்கண்டவிடத்து அஞ்சுதல்; பயிர்ப்பாவது - தன்கணவனல்லாத ஆடவரது ஆடைமுதலியன

தன்மேற்பட்டால் அருவருத்தல்: மற்றையபெண்குணங்கள்யாவும் இந்நாணில் அடக்கப்படும். கண்ணீர் - இங்கே, சோகபாஷ்பம். நீர் - நீரம், அனல்-அநலம், அனிலம்-அநிலம்; வடமொழிகளின்விகாரம். உற்பத்திக்கிரமத்தில், ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து நிலமும் பிறந்தன வென வேதம் ஓதுதலால், அக்காரியகாரணமுறைப்படியே 'மண்ணீரனலனிலம்வான்' என அடுக்கினர்; இனி, லயகாலத்தில், நிலம் நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்புக் காற்றிலும், காற்று வானத்திலும் ஒடுங்கு மென்பது நூல்வழக்காதலால், அம்முறைப்படி வைத்தா ரெனினுமாம். ஈற்றடி, எம்பெருமான் எல்லாப்பொருள்களின் சொரூபமுமானவனென்பதை விளக்கும்; "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்." "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச், சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனா யயனானாய்" என்றார் ஆழ்வாரும். தேற்றினான் சாற்றினன் - பிராசம். (௧௯)

[ஆலோசனைச்சபையில் வரத்தகாதவர்கள்.]

௨௰. துன்றுபிணியோர்துறந்தோரடங்காதோர்
கன்றுசினமனத்தோர்கல்லாதவரிளையோ
ரொன்றுமுறைமையுணராதவர்மகளி
ரென்றுமிவர்மந்தணத்தினெய்தப்பெறாதாரே.

இதுவும், அடுத்தகவியும் - குளகம். இக்கவி - தருமன்வார்த்தை.

(இ - ள்.) துன்று பிணியோர் - மிக்க நோயை யுடையவர்களும், துறந்தோர் - (பற்றுக்களை முற்றத்)துறந்தவர்களும், அடங்காதோர் - வணக்கமில்லாதவர்களும், கன்று சினம் மனத்தோர் - தபிக்கிற[மிக்க]கோபத்தையுடைய மனத்தையுடையவர்களும், கல்லாதவர் - படியாதவர்களும், இளையோர் - சிறுபிள்ளைகளும், முறைமை ஒன்றும் உணராதவர் - நீதியைச் சிறிதும் அறியாதவர்களும், மகளிர் - மாதர்களும், இவர் - என்கிற இவர்கள்,—என்றும் - எப்பொழுதும், மந்தணத்தின் - ஆலோசனை செய்யுமிடத்தில், எய்த பெறாதாரே - வருதற்குந் தகுதியில்லாதவரே யாவர்; (எ - று.) —'என்னைக்கழறி' என அடுத்தகவியோடுதொடரும். ஈற்றுஏகாரம்-தேற்றம்.

தன்கருத்தின்படி கண்ணன் நடப்பதைத் திரௌபதி இடையில்வந்து தடுத்து மனத்தை மாற்றுவதுபற்றி வெறுப்புக்கொண்ட தருமபுத்திரன், மகளிர் ஆலோசனையிடத்துவருதலைத் தடுக்கவேண்டி, அவ்விஷயத்தில் அவர்க்கு இனமாய் நிற்பவரையும் உடன்கூறினானென்க. மிக்கநோயாளிகள்முதலிய இவர்கள், ஆய்ந்து செய்வன தவிர்வன அறிந்து பேசி முடித்து ஒழுகாராதலால், மந்திராலோசனைச்சபையில் வரவுந்தகாதவராவர். உலகப்பற்றுக்களைத்துறந்தவர்கள், மிகக்கூரிய நுண்ணறிவுடையராயினும், இம்மையில் ஒருவர்க்கு நேரும் இலாபநஷ்டங்களை ஊன்றிக்கருதிப் பெறவும் ஒழிக்கவுஞ் செய்யும் முயற்சிகளில், கடவுட்சிந்தனையிலழுந்தும் தமது மனத்தைச் சிறிதுஞ் செல்லவிடாராதலால், அவர்களும் விலக்கப்பட்டனர். ("பேதைமையென்பது மாதர்க்கு அணிகலம்," "நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே" என்றபடி) மகளிர் இயற்கையிலும் செயற்கையிலும் மாறாத பேதைமையுடையராதலால, அவர்கள் வருதலுந் தகாது. "மூடன் ஊமையன் குருடன் செவிடன் கிளி கிழவன் ஸ்திரீ நோயாளிகள் மிலேச்சன் அங்கஹீநன் இவர்கள் தாங்கள் ஆலோசிக்கிறஇடத்திலிருந்தால் தூரத்திவிடவேண்டியது" என்ற மநுதர்மசாஸ்திரமும், கம்பராமாயணத்து யுத்தகாண்டத்தில் மந்திரப்படலத்திலே "புனைகுழன் மகளிரோ டினைஞரைப் போக்கினான், நினைவுறு காரிய நிகழ்ந்த நெஞ்சினான்" என்றதும் இங்கு அறியற்பாலன. 'ஆப்தனுயிருந்தாலும்மூர்க்

களை ஆலோசனையினின்று விலக்கவேண்டும்' என்னும் காமந்தகமென்ற இராசநீதிநூல். பிறவும் இங்ஙனமே கண்டுகொள்க.

ஒன்றும் முறைமை என எடுத்து, பொருத்தமான நீதி முறைமை யெனினுமாம். மக - இளமை: உரிச்சொல்; அதனையுடையவள், மகள்: ள்- பெண்பால்விகுதி; அதன்மேல், இர் - பலர்பால்விகுதி. மந்தணம் - மந்த்ர மென்ற வடசொல்லின் விகாரம்; ஆலோசனையைக் குறிக்கிற இச்சொல்-இலக்கணையால், அதுசெய்தற்கு உரியஇடத்துக்கு வந்தது. தனதுகருத்துக்கு மாறுபாடாகக் கூறிய வீமன் முதலிய மூவரையும், 'அடங்காதோர், கன்றுசினமனத்தோர், இளையோர்' என்ற சொற்களாற் சிறிது இகழ்ந்ததாகவுங் கொள்ளலாம். எய்தஎன்றசெயவெனெச்சத்தின்ஈற்றில்,இழிவுசிறப்புப்பொருளுள்ள எச்சவும்மை விகாரத்தால் தொக்கது; இதனால், அவர்கள் வரவுந்தகாதவர்: ஆலோசனைசொல்லவுந் தகாதவ ரென்று கருத்து. (௫௨)

[தருமபுத்திரன்வேண்டுகோளினால் கண்ணன் தூதுசெல்லத்தேரேறுதல்.]

௫௩. என்னக்கழறியிருந்தோருரைதவிர்த்து
நின்னொப்பவரில்லாய்நீயேகெனவுரைப்ப
மன்னர்க்குமன்னவன்பான்மாயோனுந்தூதாகிப்
பொன்னுற்றநேமிப்பொருபரித்தேர்மேற்கொண்டான்.

(இ - ள்.) (யுதிட்டிரன்),—என்ன கழறி - என்று உறுத்திக்கூறி, இருந்தோர் உரை தவிர்த்து - (மற்றும் அங்கு) இருந்த (வீமன் அருச்சுனன் நகுலன் சாத்தகி) என்பவரது பேச்சுக்களையும் அடக்கி, (கண்ணனை நோக்கி),—'நின் ஒப்பவர் இல்லாய் - உன்னை யொப்பவர் (எவரையும்) பெறாதவனே! நீ ஏகு - நீ தூதுசெல்வாய்',என உரைப்ப- என்றசொல்ல,—மாயோனும் - கண்ணனும்,—மன்னர்க்கு மன்னவன்பால் - அரசர்கட்குஅரசனான துரியோதனனிடத்து, (செல்லுதற்குஉரிய), தூது ஆகி - தூதனாய்,பொன் உற்ற நேமி பொரு பரி தேர் மேற்கொண்டான்-பொன்னினாலமைந்த சக்கரங்களையுடையதும் போர்செய்தற்குஉரிய குதிரைகளைப் பூட்டியதுமாகிய (தனது) இரதத்தின்மீது ஏறியருளினான்; (எ - று.)

கழறி,தவிர்த்து,உரைப்ப என்ற வினைகளுக்கு.இடத்திற்குஏற்ப, தருமனென்த் தோன்றாஎழுவாய் வருவித்து முடிக்க. "பெண்டிரும் பிள்ளைகளும் பித்தர்களு மென்னறிவார்,அண்டர்தொழநின்றருளு மச்சுதனே -மண்ட, எழுந்தஇளநாகக்கொடியோன்பா லீண்ட, எழுந்தருளா யென்றா னெடுத்து" என்றார் பாரதவெண்பாவிலும்.

ஒப்பவரில்லாமை கூறவே, உயர்பவரில்லாமை தானேவிளங்கும்;"தனக்குவமையில்லாதான்" என்பது, திருக்குறள்; "தன்னொப்பாரில்லப்பன்", "ஒத்தாரை மிக்காரை யிலையாய மாமாயா" என்றார் ஆழ்வாரும். நின் ஒப்பவரில்லாய்-உனக்கு நீயே சமானமானவ னென்றபடி 'ராஜராஜன்' என்று துரியோதனனுக்கு ஒருபெயர். நேமித்தேர், பரித்தேர்எனத் தனித்தனி இயையும். (௫௩)

[இதுவும், மேற்கவியும் - குளகம்: கண்ணன் சென்று அத்தினபுரியைக் காணுதலைக் கூறும்.]

௫௪. சங்குமணிமுரசுஞ்சல்லரியுந்தாரைகளு
மெங்குமுழங்கவெழில்வெண்குடைநிழற்றப்
பொங்குகவரிபுடையிரட்டவெண்ணிலா
வங்கமொருநான்குமவனிபருந்தற்சூழ.

(இ - ள்) (கண்ணன் தேர்மேலேறிப் புறப்படுகையில்), சங்கும்-சங்குகளும், அணி முரசும் - அழகியபேரிகைகளும், சல்லரியும் - சல்லரியென்னும் வாத்தியவிசேஷங்களும், தாரைகளும் - தாரையென்னும் ஊதுகருவிகளும், எங்கும் முழங்க - எல்லாவிடங்களிலும் மிகஒலிக்கவும், எழில் வெள் குடை - அழகிய வெண்கொற்றக்குடை, நிழற்ற - நிழலைச்செய்யவும், பொரு கவரி - விளங்குகின்ற சாமரங்கள், புடை இரட்ட - பக்கங்களில் வீசவும், எண் இலா-கணக்கில்லாத, அங்கம் ஒரு நான்கும்-(ரதகஜதுரகபதாதியென்னுஞ் சதுரங்கசேனைகளும், அவனிபரும் - அரசர்கள் பலரும். தன் சூழ - தன்னைச்சுற்றிலும் வரவும், (எ-று.)—'சென்றருளி, கண்டான்' என மேற்கவியோடு தொடரும்.

"முரசொலியுஞ் சங்கொலியு மூரித்தேர்த்தானை,திரைசெய்கருங்கடல் போற் செல்ல" என்றார் பெருந்தேவனாரும் முழங்க, நிழற்ற, இரட்ட, சூழ இந் நான்கு செயவெனெச்சங்களும் - உம்மைகள் தொக்குநின்றதனால், வினைச்செவ்வெண். நிழற்ற, நிழல்என்பதன் பிறவினையான நிழற்று-பகுதி. கவரி-சமரீஎன்னும்வடமொழியின் திரிபு; இப்பெண்மானின்பெயர் அதன் வால்மயிரினாற்செய்யப்பட்டதோரிராசசின்னத்துக்கு இருமடியாகுபெயர். தாரை - சிறுசின்ன மெனப்படும். (௩௪)

௩௫ கல்வரையும்பாலைக்கடுஞ்சுரமுங்கான்யாறு
நல்வரையுநீர்நாடுநாளிரண்டிற்சென்றருளித்
தொல்வரையகோபுரமுநீண்மதிலுஞ்சூழ்ந்திலங்கு
மல்வரையதோளான்வளமாநகர்கண்டான்.

(இ - ள்.) (கண்ணன்),—கல் வரையும் - கற்களடர்ந்த மலைகளையும் [குறிஞ்சிநிலத்தையும்], பாலை கடுஞ் சுரமும் - பாலைநிலமாகிய கொடிய வெப்பங்கொண்டஇடத்தையும், கான் யாறும் - காட்டாறுகளையும்[முல்லைநிலத்தையும்]. நல் வரையும் நீர் நாடும் - நன்மையைத் தம்மிடத்தேகொண்ட நீர்வளமுள்ள நாடுகளையும [மருதநிலத்தையும்], நாள் இரண்டில் சென்று அருளி - இரண்டுநாளிற் போய்க் கடந்தருளி,—(மூன்றாநாளில்),—தொல் வரைய கோபுரமும் - பழமையான நிலைகளையுடைய கோபுரங்களாலும், நீள் மதிலும் - உயர்ந்த மதில்களாலும், சூழ்ந்து - சூழப்பட்டு, இலங்கும் - விளங்குகின்ற. மல் வரைய தோளான் வளம் மா நகர் - மற்போர்த் தொழிலுக்கு வரம்பாகவுள்ள புயங்களையுடையவனான துரியோதனனது சிறப்புக்களையுடைய பெரிய அத்தினபுரியை, கண்டான் - பார்த்தான்.

உபப்பிலாவியத்துக்கும் அத்தினபுரிக்கும் இடையிலுள்ள வழி இரண்டு நாளைப்பிரயாணத்துக்குமேல் உள்ளதென்று தெரிகிறது. "காடும் மலையுங் கடும்புனல்சே ராறுகளும், நாடும் பலபொழிலு நண்ணிப்போய்—பீடுடைய, மூத்தாளைசெய்யு முகில்வண்ணன் மூன்றாநாள், அத்திநகரெய்தினானங்கு" என்றார் வெண்பாவிலும். ஐவகைநிலங்களுள், கடலும் கடல்சார்ந்தஇடமு மாகிய நெய்தனிலம் உபப்பிலாவியத்துக்கும் அத்தினபுரிக்கும் இடையில் இல்லையாதலால், கூறாதவிடப்பட்டது. இப்பாட்டில், 'சென்றருளி,' 'கண்டான்' என்ற வினைகளுக்கு, கீழ் ௩௩-ஆங்கவியில் வந்த 'மாயோன்'என்பதே எழுவாய். மல்வரையதோளான் என்றதொடர்க்குக் கண்ணபிரானென்று பொருள்கொண்டால், இதுவே எழுவாயாம்.

சுரம்-ஜ்வரமென்னும்வடமொழியின்சிதைவென்பர். கல்வரையும்என்பதற்கு - கற்களைக்கொண்டுள்ள என்று பொருள்கூறி, பாலைக்கடுஞ்சுரத்துக்கு அடைமொழியாக்கி, நல்வரையும் - அழகிய மலைகளையும் என்றுரைப்பாரு முளர். வரையும் - பெயரெச்சம். 'நல்வரையநீர்நாடு' என்ற பாடத்து

க்கு, அழகியஎல்லையையுடைய நீர்வளமுள்ள நாடென்க. காணிலந்தோயாத கடவுளர்க்கெல்லாந் தலைவனான ஆதிமூர்த்தி இங்ஙனம் கல்வரை முதலிய வற்றைக் கடத்தற்குக் காரணம், காரணமின்றியெழுந்த கருணையேயாத லால், 'சென்றருளி' என்றார். மூன்றாமடியில், வரை-உயர்ந்தஇடம். வரைய் என்பதற்கு - மலைபோன்ற என்று உரைத்தால், 'தொல்வரைய' என்பதை மதிலுக்கும் அடைமொழியாக்கலாம். வரைய வரை என்ற பகுதியினடி யாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். கோபுரம் - வடசொல். தொன்மை - பலநாளாக அழிவுபடாமை. (௯௫)

வேறு.

[இக்கவியும், மேலைக்கவியும் - அந்நகரத்தையடுத்துள்ள சோலைகளின் தன்மையைக் கூறும்.]

௯௬. மேவுசெந்துகிர்த்திரளுமாமரகதவிதமுங்
கோவைவெண்கதிர்த்தரளமுநிரைநிரைகுயிற்றித்
தாவும்வெம்பரித்தேரினன்றனக்கெதிர்சமைத்த
காவணங்களிற்றோன்றினபச்சிளங்கமுகம்.

(இ - ள்.) பசு இளங் கமுகம் (அவ்வத்தினாபுரத்தைச்சூழ்ந்த சோலை களிலுள்ள)பசுநிறமுள்ள இளமையான பாக்குமரங்கள்,—மேவு செம் துகிர் திரளும்-(யாவராலும்) விரும்பப்படுகிற [மிகஅழகிய] செந்நிறமான பவழங் களின்தொகுதிகளையும், மா மரகதம் விதமும்-சிறந்தமரகதமென்னும்பச்சை யிரத்தினங்களின் வகைகளையும், கோவை வெள் கதிர் தரளமும் - வடமாக அமைந்த வெண்மையான ஒளியையுடையமுத்துக்களையும், நிரை நிரை குயி ற்றி - வரிசைவரிசையாகப் பதித்து, தாவும் வெம் பரி தேரினன் தனக்கு எதிர் சமைத்த - தாவிப்பாய்கின்ற விரைவையுடைய குதிரைகளைப் பூட்டிய தேரின்மீது வருகிற கண்ணபிரானுக்கு எதிரிலே(அலங்காரமாக அமைத்து வைக்கப்பட்ட, காவணங்களின்-பந்தல்கள்போல, தோன்றின விளங்கிக் காணப்பட்டன; (எ - று.)

நகரவருணனை முதலியன-பெருங்காப்பியவிலக்கணங்களின் உறுப்பாம்.

உவமையணி. பாக்குமரத்திலுள்ள பழுத்தகுலைகளுக்குப் பவழத்திர ளும், பச்சைக் குலைகள் பசிய இலைகள் முதலியவற்றிற்கு மரகதவிதமும், விரிந்துதொங்கும் வெள்ளியபாளைகளுக்கு முத்துக்கோவையும்உவமையாம். இடைவிடாதுமேலடர்ந்து இரவியின்கதிர்கள்சிறிதும்நுழைய இடங்கொடா து நிழல்செய்தலால்,பாக்குமரச்சோலைகள் பந்தல்போன்றன. செயற்கைப் பந்தலில் இரத்தினங்களை அமைத்தல், செல்வமிக்கோர்க்கு உரியதாம். சிற ந்த அரசர் தமது இடத்துக்கு வருகையில் அவர்க்குப் பிறஅரசர் உபசாரஞ் செய்யும்முறைப்படி கண்ணன்வருகையில்துரியோதனன் அவனுக்குஉபசார மாக அமைத்துவைத்த பந்தல் போன்றன கமுகம் என வருணித்தவாறு. மேவு - பொருந்திய என்றுமாம் கோக்கப்படுவது, கோவை; ஐ - செயப்படு பொருள் விகுதி. மரகதம், தரளம் - தற்சமவடமொழி. குயிற்றி, குயில் என்பதன் பிறவினையான குயிற்று - பகுதி; குயிற்றுதல்-அமையச்செய்தல். நிரைநிரை - அடுக்கு, பன்மைபற்றியது. தாவும் வெம்பரித் தேரினன்தனக் கெதிர் என்பதற்கு-சூரியனுக்குஎதிராகவென்று உரைப்பாருமுளர்; அடுத்த கவிகளில்''உம்பர்நாயகன்வரவுகண்டு''என்றும்,''திருவின்கணவனுக்கெதிர் காட்டும்'' என்றும், ''நடந்தநாயகன்'' என்றும் வருவனவற்றோடு இயையா வாதலால், அவ்வுரை இங்குச் சிறவாதாம். தாவும்வெம் - மகரக்குறுக்கம்; [நன் - எழுத்து - ௯௪.]பசு+இளை=பச்சிளை:பண்புப்பெயர் ஈறுபோய்த் தன் னொற்றிரட்டிற்று. கமுகம் - க்ரமுக மென்னும் வடமொழியின் திரிபு.

இதுமுதல் நாற்பத்துநான்கு கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள்; விருத்தக்கலித்துறையெனவும், காப்பியக்கலித்துறையெனவும் படுபவையும் இவையே. (இசு)

ருஎ. வம்புலாமகில்சந்தனம்வருக்கைமாகந்தஞ்
சம்பகந்தமாலம்பலதிசைதொறுந்தயங்க
வும்பர்நாயகன்வரவுகண்டுளங்களிகூர்ந்து
தும்பிபாடினதோகைநின்றாடினசோலை.

(இ - ள்.) சோலை - (அந்நகரத்தையடுத்த) சோலைகளிலே, வம்பு உலாம் - வாசனைவீசுகிற, அகில் - அகில்மரங்களும், சந்தனம் - சந்தனமரங்களும், வருக்கை - பலாமரங்களும், மாகந்தம் - தேமாமரங்களும், சம்பகம்-சண்பகமரங்களும், தமாலம் - பச்சிலைமரங்களும், பல திசைதொறும் - பலதிக்குக்களிலும், தயங்க - அசைந்து விளங்காநிற்க, உம்பர் நாயகன் வரவு கண்டு உளம் களி கூர்ந்து - தேவாதிதேவனை கண்ணபிரானது வருகையைப் பார்த்து மனம்களிப்புமிகுந்து, தும்பி பாடின - வண்டுகள் பாடினவாக, தோகை நின்று ஆடின-மயில்கள் நிலைநின்றுகூத்தாடின; (எ-று)

உயர்திணையும் அஃறிணையு மாகிய எல்லாப்பிராணிகளின் மனத்திலும் எம்பெருமான் எழுந்தருளியுள்ளவனாதலால், அவன் வருகையைக்கண்டுவண்டுகளும் மயில்களும மகிழ்ச்சிகூர்வனவாயின. இனி, மூன்றாமடியை ஏதுத்தற்குறிப்பேற்றமாக்கி, சோலையின் இயற்கையைக் கற்பனைமுகத்தாற் கூறியதாகவுங் கொள்ளலாம். 'வம்புஉலாம்' என்பதைச் சந்தனம் முதலியவற்றிற்குங் கூட்டுக. உலாம் - உலாவும்: விகாரம். அகில்-சந்தனம்போல நறுமணமுடைய தொரு மரவிசேடம். சந்தனம, மாகந்தம், சம்பகம், தமாலம், நாயகன் - வடசொற்கள். சம்பகம் - வண்டுணுமலர்மரங்களில் ஒன்று. பல திசை - பத்துத்திக்குக்கள். முதல் இரண்டடிகளில், வண்டுகள் பாட மயில்கள் ஆடுவதைக் கண்டுங் கேட்டுஞ் சிரகரகம்பஞ்செய்து ஆநந்திக்குஞ் சனங்களாக மரங்களைக் கற்பித்த தென்னலாம். உம்பரென்னும் மேலிடத்தின் பெயர், அங்குள்ள தேவர்க்கு இடவாகுபெயர். உம்பரென்பதில், உகரச்சுட்டு - மேலிடத்தை யுணர்த்திற்று; இதன் எதிர்மொழி - இம்பர்: இவ்விடம். பாடின - வினைமுற்றுவினையெச்சம். தோகை - சினையாகுபெயர். (இஎ)

[இதுமுதற் பதினேழுகவிகளில் அத்தினபுரியின் அமைதி வருணிக்கப்படுகிறது: இது - அந்நகரத்து நீர்நிலைகளின் வருணனை.]

ருஅ. அணிகொளத்தினபுரியெனுமணங்குசெந்திருவின்
கணவனுக்கெதிர்காட்டுநீராசனங்கடுப்ப
மணமிகுத்தசெந்தாமரைமலருடன்சிறந்த
புணரியிற்பெரும்புனலையுங்கொள்வனபொய்கை.

(இ - ள்.) அணி கொள் - அழகைக்கொண்ட, அத்தினபுரி எனும் அணங்கு - அஸ்தினாபுரியென்னும் பெண், செம் திருவின் கணவனுக்கு - சிவந்தநிறமுடைய திருமகளது கொழுநனான கிருஷ்ணமூர்த்திக்கு, எதிர் காட்டும் - எதிரிலே காண்பிக்கிற, நீராசனம்-மங்களவாலத்தியை, கடுப்ப - ஒக்கும்படி,—பொய்கை-(அந்நகரத்திலுள்ள) தடாகங்கள்,—மணம் மிகுத்த செம் தாமரை மலருடன் - வாசனையை மிகுவிக்கிற செந்தாமரைமலர்களுடனே; சிறந்த புணரியின் பெரும் புனலையும் கொள்வன - சிறந்தகடல்கள்போல மிக்கநீரையும் (தம்மிடத்தே) கொண்டுள்ளன; (எ - று.)

'கொள்வன' என்பதைப் பெயராக்கொண்டு, பொய்கைக்கு அடைமொழியாக்கிவிட்டு, 'சிறந்த' என்பதை முற்றாக்கி யுரைப்பினும் அமையும். ஒருபெரியபாத்திரத்தில் மஞ்சள்நீரைவார்த்து அதன்நடுவில் திருவிளக்கேற்றிவைத்து மங்களகரமாகப் பெண்கள் விசேஷகாலங்களில் ஒருவர்க்கு ஆலத்தியெடுத்தல், மரபு. அங்ஙனம், பொய்கை - ஆலத்தித்தட்டையும், பொய்கையில் மிக்க நீர்-அவ்வாலத்திநீரையும், அந்நீரிடையிற்பூத்த செந்தாமரைமலர் - அவ்வாலத்திநீர்நடுவில் ஏற்றிய தீபத்தையும், இப்படிப்பட்ட பொய்கையையுடைய அத்தினபுரி - கண்ணனெதிரிலே அவ்வாலத்தியையேந்தும்ஒருமங்கையையும் போலு மென வருணிக்கப்பட்டவாறு; தற்குறிப்பேற்றவணி. 'புரீ'என்பது வடமொழியிற் பெண்பாற்சொல்லாதலால், அதனை மகளாகக்கூறியது-மிகப்பொருந்தும். பெண்ணுக்கு ஏற்ப, அணிகொள் என்பதற்கு - ஆபரணங்களைத்தரித்த வென்றும் உரைக்கலாம்.

சந்திரகுலத்தில் ஹஸ்தியென்றுஓரரசன்; அவனாற்சீர்திருத்தப்பட்டமைபற்றியும், யானைச்சேனைகளை மிகுதியாகவுடைமைபற்றியும், 'ஹஸ்திநாபுரீ' என்று பெயர்; அது 'அத்தினபுரி' என விகாரப்பட்டது.

நீராஜநம் - வடசொல்; இது - கண்ணெச்சில்கழித்தற்கு எடுக்கப்படுவது. கடுப்ப - தற்குறிப்பேற்றவுருபு. புணரி - (நதிகளோடு)புணர்வதெனக் காரணப்பெயர்; புணர்தல் - சேர்தல், இ-கருத்தாப்பொருள்விகுதி. ஆறுகளாகிய பெண்களுக்குச் சேருமிடமாகிய கடலைக் கணவனாகக் கூறுதல், கவி மரபு; இதனை 'நதீபதி' என்னுங் கடலின்வடமொழிப்பெயராலும் அறிக. புணரியிற் பெரும் புனல் - கடலினும் மிக்க நீர் என்றால், ஈற்றடி - உயர்வு நவிற்சியணியாம். (௬௮)

[அந்நகரத்து அகழியின் வருணனை.]

௬௯. நடந்தநாயகன்கோலமாய்வேலைசூழ்ஞால
மிடந்தநாளிடையதுவழியாகவந்தெழுந்து
படர்ந்தபாதலகங்கைநயப்படர்மதில்சூழ்ந்து
கிடந்ததாமெனச்சிறந்ததுதாழ்புனற்கிடங்கு.

(இ - ள்.) நடந்த - (அத்தினபுரிக்கு இப்பொழுது பாண்டவதூதனாக எளிதில்) எழுந்தருளிய, நாயகன் - யாவர்க்குந்தலைவனான கண்ணன், கோலம் ஆய்-(முன்பு)வராகாவதாரமூர்த்தியாய், வேலை சூழ் ஞாலம்-கடல் சூழ்ந்த பூமியை, இடந்த நாளிடை - (கோட்டாற்) குத்தியெடுத்து வந்த காலத்திலே, அது வழி ஆக - அக்கோடுகுத்திப்பிளந்த பூமியின் துளையின்வழியாக,வந்து எழுந்து படர்ந்த-புறப்பட்டுமேலெழுந்து(பூமியின்மீது) பரவிய, பாதலகங்கை-பாதாளகங்காநதியானது, படர் அ மதில் சூழ்ந்து கிடந்தது ஆம் - பரந்த அந்தமதிலை வளைந்திருந்ததாம், என-என்று சொல்லும்படி, தாழ் புனல் கிடங்கு - ஆழ்ந்தநீரையுடைய அவ்வகழி, சிறந்தது - சிறப்புற்றது; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. அவ்வகழி மிகவும்ஆழ்ந்துதெளிவாகவும்இனிதாகவுமுள்ள நீரை யுடைமையின், பாதலகங்கையை ஒப்புமை எடுத்துக்காட்டினார். (கீழுலகத்திலுள்ள கங்கைக்குப் போகவதியென்று பெயர்; அதனை, "ஓதப்புனற்பொன்னிநன்னீ ரரங்க ருலகளந்த, பாதத்துநீர் விண்படியிலே மூன்றிலும் பால்புரைவெண், சீதத்தரங்கமந்தாகினியாகிச் செழுங்கங்கையாய், மேதக்கபோகவதியாகி நாளும்விழுகின்றதே" என்ற திருவரங்கத்துமாலையினாலும் அறிக.) கோலம், பாதலகங்கை - வடசொற்கள்.

வராகாவதாரகதை:—இரணியனதுஉடன்பிறந்தவனான இரணியாக்கனென்னுங் கொடிய அசுரராசன் தன்வலிமையாற் பூமியைப்பாயாகச்சுரு

ட்டியெடுத்துக்கொண்டு கடலில்மூழ்கிச்சென்றபோது, தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மகாவராகரூபமாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக்கண்டு பொருது கோட்டினாற்குத்திக்கொன்று, பாதாளலோகத்தைச்சார்ந்திருந்தபூமியை அங்குநின்றுகோட்டினாற்குத்தியெடுத்துக் கொண்டுவந்து பழையபடி விரித்தருளினன்.

அங்ஙனம் திருமாலின் அவதாரமாகிய வராகமூர்த்தி பூமியைக்கோடு கொண்டுகுத்தியெடுத்தபோது பூமியிலே உண்டான துளையின்வழியாய்ப் பாதாளகங்கை பூமிக்குள்ளெழுந்துவந்து இந்நகரத்துமதிலைச்சூழ்ந்தாற் போன்றது, ஆழ்ந்தஅகழியில்நிறைந்துள்ள தெள்ளிய இனிய நன்னீரென்பது, இச்செய்யுளின் கருத்து. (௯௧)

[அந்நகரத்து மதில்களின் வருணனை.]

௯௦ அடிநிலத்திலேபடிவனவிடிமுகிலனைத்து
முடிநிலத்திலுக்குடுபதத்தினுமுடிவில்லை
நெடியசக்கரப்பொருப்பையுநிகரிலாவிதற்கோர்
படிவகுத்ததாமெனும்படி பரந்ததுபுரிசை

(இ - ள்.) இடி முகில் அனைத்தும் - இடியிடிக்கின்ற மேகங்களெல்லாம், அடி நிலத்திலே படிவன - (அந்நகரத்துமதிலின்) அடிப்புறத்திலே வந்து படிவனவாம்; முடி நிலத்தினுக்கு - (அம்மதிலின்) சிகரத்தினிடத்துக்கு, உடு பதத்தினும் - நக்ஷத்திரமண்டலத்திலும், முடிவு இல்லை - முடிதலில்லையாம்; (இங்ஙனம் மேகமண்டலத்தையும் நக்ஷத்திரலோகத்தையும் மிகக் கடந்து), நெடிய சக்கரப்பொருப்பையும் நிகர் இலா இதற்கு ஓர் படிவகுத்தது ஆம் எனும் படி - (எல்லாமலைகளினும்) உயர்ந்த சக்கரவாளமலையையும் ஒப்பில்லாத இம்மதிலுக்கு ஒருவாறுஉவமையாக அமைக்கப்பட்டதா மென்று சொல்லும்படி, புரிசை - மதில், பரந்தது - பரவியுள்ளது; (எ - று.)

முன்னிரண்டடிகளில் தொடர்புயர்வுநவிற்சியணியும், பின்னிரண்டடிகளில் தற்குறிப்பேற்றவணியுமாக வேறுபாடுதோன்ற விரவிவந்த சேர்வையணி. இடிமுகில்-வினைத்தொகை; இடியையுடைய முகிலென வேற்றுமைத்தொகையுமாம். உடுபதம்-வடசொற்றொடர்; உடு நட்சத்திரம், பதம்-ஸ்தானம். சக்கரவாளமலை - பூமியைச்சூழ்ந்த கடலைச் சுற்றிலும் கோட்டை மதில்போல வளைந்திருப்பதொரு மலை; சக்கரம்போல வட்டமாக இருத்தலால், சக்கரவாளமென்று பெயர். உம்மைகள் - உயர்வுசிறப்பு. (௯௦)

[அந்நகரத்துக் கொடிச்சீலைகளின் வருணனை]

௯௧. பகலினுங்கடும்பரிதிதன்கதிர்பரப்பாம
விகலியெங்கணுமெறிந்துகால்பொருதலினேத்திப்
புகலுகின்றமந்தாகினித்தரங்கமேபோல
வகல்விசும்பிடைமிடைவனநெடுங்கொடியாடை.

(இ - ள்.) நெடு-நீண்ட, கொடி ஆடை - கொடிகளின்சீலைகள்,—கடும் பரிதி பகலினும் தன் கதிர் பரப்பாமல் - வெப்பத்தையுடைய சூரியன் மத்தியானகாலத்திலுந் தனது கிரணங்களை வீசாதிருக்கும்படி, இகலி எங்கணும் கால் எறிந்து பொருதலின் - (அவனோடு) பகைத்து எல்லாவிடங்களிலும் காற்று வீசி மோதுதலினால்,— ஏத்தி புகலுகின்ற மந்தாகினி தரங்கமே போல - (யாவராலும்)புகழ்ந்துகூறப்படுகிற தேவகங்காநதியினது அலைகள் போலவே, அகல் விசும்பிடை மிடைவன - இடம்பரந்தஆகாயத்தில் நெருங்குவன; (எ - று.)

ஆகாயத்தில்மிகவுயரத்தில் நெருங்கி அசைந்து சூரியகிரணங்களையும் உட்புகவொண்ணாதபடி மறைத்துவிளங்குகிற வெண்மையான கொடிச்சீலை

கன் வெண்ணிறமான ஆகாசகங்காநதியின் அசைகின்ற குளிர்ந்த அலைகளை யொக்கு மென்பதாம்; உவமையணி. காற்றிலே கொடிச்சீலைகள் அசைவதை, சூரியனிடத்துப் பகையாற் பகலினும் கதிர்பரப்பாமல் மறைப்பதாகக் குறித்தது, தற்குறிப்பேற்றவணி. விசும்பிடைமிடைவன நெடுங்கொடியாடை - பிராசமென்னுஞ் சொல்லணி. ஒவ்வொரு நிழலும் அவ்வப்பொருளின் அடியிலடங்குதற்குஉரிய காலமான நடுப்பகலிலும் நிழல்செய்யும்படி மிகப்பல கொடிகள் நெருங்கி நீண்டு உள்ளன வென்க.

பகலினும், உம் - அப்பொழுது நிழல்தருதலின் அருமையை விளக்குதலால், உயர்வுசிறப்பு: இதனை எச்சவும்மையாக்குதல் சிறப்பின்றாம். பரிதி, மந்தாகினீ, தரங்கம் - வடசொற்கள். ஆகாசகங்கைக்கு மந்தாகினி யென்று பெயர். பரப்பு - பரவென்னுந்தன்வினைப்பகுதி பு என்னும் பிறவினையிறுதி பெற்றதென்றாவது, பரம்புஎன்பது-பிறவினைக்காக மெல்லொற்றுவல்லொற்றான தென்றாவது கொள்க. இகலி, இகல்-பகுதி. எங்கண்-எக்கண்என்பதன மெலித்தல். அகல் விசும்பு-வினைத்தொகை. கொடியாடை-த்வஜபடம். "கங்கைகங்கையென்றவாசகத்தாலே கடுவினைகளைந்திடுகிற்கும்", "எழுமையுங்கூடி யீண்டியபாவ மிறைப்பொழுதளவினிலெல்லாம், கழுவிடும்பெருமைக்கங்கை" என்ற பெரியார்பாசுரங்களாலும். ஏத்திப்புகலப்படும் மந்தாகினியின் மகிமையை அறிக. அணியணியாக வீசியடித்தலால். கொடிநிரைக்கு அலைவரிசை உவமையாம. (௬௧)

[அந்நகரத்து மாடமாளிகைகளின் வருணனை.]

௬௨. புயங்கபூமியோபுரந்தரற்கமைத்தபொன்னுலகோ
தயங்குசெல்வநீடளகையோநிகரெனுந்தரத்த
வியங்குகார்முகில்வரையினின்றெழுவனபோல
வயங்குகாரகினறும்புகையுயிர்ப்பனமாடம்.

(இ - ள்.) வரையினின்று எழுவன - மலைகளினின்று மேலெழுவனவான, இயங்கு கார் முகில் - (எப்பொழுதுஞ்) சஞ்சரிக்குந் தன்மையுள்ள கரிய நீர்கொண்டமேகங்களை, போல - ஒக்கும்படி, வயங்கு கார் அகில் நறும் புகை உயிர்ப்பன - விளங்குகின்ற கருமையான அகிற்கட்டைகளின் சுகந்தமுள்ள புகையை மேலெழுப்பப்பெற்றவையான, மாடம் - (அந்நகரத்து) உபரிகைவீடுகள்,—'புயங்க பூமியோ - நாகலோகமோ? புரந்தரற்கு அமைத்த பொன் உலகோ - இந்திரனுக்காகப்படைக்கப்பட்ட சுவர்ணமயமான சுவர்க்கலோகமோ? தயங்கு செல்வம் நீடு அளகையோ - (எல்லாவற்றினுஞ்) சிறந்துவிளங்குகிற செல்வப்பொருள்மிக்க (குபேரனது) அளகாபுரியோ? நிகர்-(இவ்வீடுகளுக்கு) ஒப்பு,' எனும்-என்று கருதத்தக்க, தரத்த - தன்மையையுடையன; (எ - று)

முன்னிரண்டடி - ஐயநிலையுவமையணியும், பின்னிரண்டடி-உவமையணியுமாம். புயங்கம்=புஜங்கம். மார்பினால் ஊர்ந்துசெல்வது எனப் பாம்புக்குக் காரணப்பெயர்; வடசொல். பாதாளலோகத்திலுள்ள நாகஜாதியாரதுஇராசதானியான போகவதியென்னும்நகரம், அழகு செல்வம் ஆகியவற்றில் மிகச்சிறந்ததாம். தேவலோகத்திலுள்ள இந்திரனது இராசதானிக்கு அமராவதியென்பது பெயர். செல்வம் - நவநிதிகள். தரம் - தகுதி. தரத்த - பலவின்பாற்குறிப்புவினைமுற்று. மலை - மாடத்துக்கும், காளமேகம்-புகைக்கும் உவமை. கார்ப்புகையென்றும் இயைக்கலாம். 'காழகில்' என்ற பாடத்துக்கு - வைரம்பற்றிய அகி லென்க. 'தரத்தது' என்ற பாடத்துக்கு மாடங்கள் இங்ஙனம் உள்ளனவாதலால், நகரம் புயங்கபூமிமுதலியவற்றுள் எதனையொக்குமோவென்று ஐயுறத்தக்கதென்க. எழுவன-பெயர். அகிற்புகை- இடத்துக்கும் கூந்தலுக்கும் ஆடையாபரணங்கட்கும் நறுமணமூட்டுதற்கு இடுவது. (௬௨)

[அந்நகரத்து இராசவீதிகளின் இயல்பு.]

௯௩. மன்னர்வேழமுஞ்சேனையுமெதிரெதிர்மயங்கப்
பின்னுமுன்னுமெம்மருங்கினும்பெயரிடம்பெறாமற்
றுன்னிநின்றவரேகுமினேகுமினென்னு
மென்னுமோசையேயுள்ளனவீதிகளெல்லாம்.

(இ - ள்.) வீதிகள் எல்லாம் - (அந்நகரத்து) நெடுந்தெருக்கள்தோறும்,—மன்னர் - அரசர்களது, வேழமும் - யானைகளும், சேனையும் - மற்றைச் சேனைகளும், எதிர்எதிர்மயங்க - (ஒன்றோடொன்று) எதிரெதிரில்நெருங்கிக் கலத்தலால், பின்னும் முன்னும் எம்மருங்கினும் பெயர் இடம்பெறாமல் - பின் பக்கத்திலும் முன்பக்கத்திலும் மற்றுமெல்லாப்பக்கங்களிலும் இடம்விட்டுப் புடைபெயர்தற்குஉரிய இடத்தைப் பெறாமையால், துன்னி நின்றவர் ஏகுமின் ஏகுமின் என்னும் என்னும ஓசையே - நெருங்கிநின்றவர்கள் போங்கள் போங்கள் என்று (பிறரைநோக்கிப்) பலகாற்சொல்லுகிற ஒலிகளே, உள்ளன - நிறைந்துள்ளன; (எ - று.)

மிக்கநெருக்கத்தால் மன்னவர்களின் நாற்படைகளும் போக்கிட மில்லாமல் ஒன்றோடொன்று தலைதடுமாறு மென்க. "தோகையர்குழாமுமை ந்தர்சும்மையுந்துவன்றி யெங்கும், ஏகுமினேகுமென்றென்றிடையிடைநிற்ற லல்லாற், போகில மீளகில்லா பொன்னகர்வீதியெல்லாம்" என்ற கம்ப ராமாயணம் இதற்கு ஒப்புநோக்கத்தக்கது.

மன்னர்வேழம் என்பதற்கு-அரசர்கள் ஏறும் யானைகளென்று உரைத்து, சேனை - நால்வகைப்படையென்றுங் கொள்ளலாம். ஏகுமின் - ஏவற் பன்மை; மின் - விகுதி. அடுக்குக்கள் - விரைவும், பன்மையுங் குறிக்கும். ஒரே அடியில், 'பின்னும் முன்னும்' என மாறுபட்ட சொற்கள் வந்தது - தொடைமுரண். (௯௩)

[இது-அந்நகரத்துக் கடைத்தெருவின் வருணனை.]

௯௪. வரையெலாம்பலவனமெலாங்கடலெலாம்வளைந்த
தரையெலாம்படுபொருளெலாந்தனித்தனிகுவித்த
நிரையெலாங்கவராவணநீர்மையைப்புலவோ
ருரையெலாந்தொடுத்துரைப்பினுமுவமைவேறுளதோ.

(இ - ள்.) வரை எலாம் - எல்லாமலைகளிலும், பல வனம் எலாம் - பலவகைப்பட்ட எல்லாக்காடுகளிலும், கடல் எலாம் - எல்லாக்கடல்களிலும், வளைந்த தரை எலாம் - (அக்கடல்) சூழ்ந்த எல்லாநாடுகளிலும், படு - உண்டாகிற, பொருள் எலாம் - எல்லாப்பொருள்களையும், தனித்தனி குவித்த - வெவ்வேறாகக்குவித்துவைத்துள்ள, நிரை எலாம் - வரிசைகளையெல்லாம், கவர் - (தன்னிடத்திலே) கொண்டுள்ள, ஆவணம் - கடைவீதியினது, நீர்மையை - தன்மையை, புலவோர் - புலவர்கள், உரை எலாம் தொடுத்து உரைப்பினும் - (தங்கள்) சொற்களையெல்லாம் புனைந்து வருணித்துச்சொல்லத்தொடங்கினாலும், உவமை வேறு உளதோ - (அக்கடைத்தெருவிற்கு எடுத்துச்சொல்லத்தக்க) உபமானப்பொருள் வேறு (உலகத்தில்) உள்ளதோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

எனவே, அதற்கு அதுவே உவமையாமென்றவாறு. அதிசயோக்திமுதலிய புனைந்துரைவகையாற் கற்பித்துக்கூறினும் கூறலாமேயன்றி, பொருளொப்புமையெடுத்துச்சொல்லக்கிடையாதென்பதாம். மலைபடுபொருள்கள் மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமம் முதலியன. காடுபடு பொருள்கள் இறால், தேன், அரக்கு, மயிற்பீலி, நாவி முதலியன. கடல்படு

பொருள்கள்-உப்பு, முத்து, பவளம், சங்கு, ஓர்க்கோலை முதலியன. நாடுபடு பொருள்கள் - செந்நெல், சிறுபயறு, கரும்பு, வாழை, செவ்விளநீர் முதலியன. பலவென்பதைப் பிறவற்றிற்குங் கூட்டலாம். இனி, பலவாம் என வட சொற்றொடராக எடுத்து, பயன்களைத்தரும் வன மென்றுங் கொள்ளலாம். தரை - (பொருள்களைத்) தரிப்பது. ஆவணம், உவமை - ஆபணம், உபமா எனனும் வடசொற்களின் திரிபுகள். புலவர் - புலவோர் என ககரவீற்றயல் அகரம ஒவாயிற்று. (கச)

[இது - அந்நகரத்துச் சதுரங்கசேனைகளின் தன்மை.]

கரு. விரவுகான்மலரினும்பலவீரரின்விதங்கள்
பரவைவெண்மணலினும்பலபுரவியின்பந்தி
யிரவில்வானமீனினும்பலயானையினீட்ட
நிரைகொள்கார்த்துளியினும்பலதேரணிநிலையே.

(இ - ள்.) (அந்நகரத்தில்), வீரரின் விதங்கள் - வீரர்களது பகுப்புக்கள், கான் விரவு மலரினும் பல-காட்டிற்பொருந்திய பூக்களின்தொகையினும் மிகப்பலவாம்; புரவியின் பந்தி - குதிரைகளின்வரிசைகள், பரவை வெள் மணலினும் பல-கடலின் வெள்ளியமணல்களின்தொகையினும் மிகப் பலவாம்; யானையின் ஈட்டம் - யானைகளின்கூட்டங்கள், இரவில் வானம் மீனினும் பல - இராத்திரிகாலத்தில் ஆகாயத்தில் (விளங்குகிற)நட்சத்திரங் களின் தொகையினும் மிகப்பலவாம்; தேர் அணி நிலையே - இரதங்களின் அழகியவரிசைகள், நிரை கொள் கார் துளியினும் பல-கூட்டத்தைக்கொண் ட மேகங்களின் மழைநீர்த்துளிகளினும் மிகப்பலவாம்; (எ - று.)

எனவே, நால்வகைப்படையும் அங்கு வரம்பிகந்தன என்பதாம். ரதகஜ துரகபதாதி என்பவற்றை எதிர்நிரனிறைபடக்கூறினர். முதல் வாக்கியத் தில் வீரரின்விதங்கள் என்றதில், காலாள்வீரர்மாத்திரமேயன்றி, யானைதேர் குதிரைகளில் ஏறும் வீரரும் அடங்குவர். பரவியுள்ளது, பரவை; கடலுக்குக் காரணப்பெயர்: பர அல்லது பரவு - பகுதி, ஐ - கருத்தாப்பொருள்விகுதி. பந்தி-பங்தியென்னும்வடசொல்லின்திரிபு. ஆகாயத்தில்மின்னுதல்பற்றி, நட் சத்திரங்களுக்கு வானமீனெனப்பெயர்;மின்னுதல்-விளங்குதல், பளபளத் தல். மின்னுவது, மீன்; வினைமுதற்பொருள்விகுதி புணர்ந்துகெட்டுப் பகுதி முதல்நீண்ட காரணப்பெயர். இனி, கரியதாய் அளவின்றிப்பரந்த வானமா கிய கடலிற் சஞ்சரிக்கும் மீன்கள்போல விளங்குவன என்ற காரணமுங் கூற லாம். ஈட்டம் - ஈண்டுதலுடையது; ஈண்டு - பகுதி: ஈண்டுதல் திரளுதல்; அம் - வினைமுதற்பொருள்விகுதி. (கரு)

[இது-அந்நகரத்து மாளிகைகளைப் பற்றியது.]

ககா. ஆசிலாமறையந்தணராலயமொருபால்
மாசிலாமுடிமன்னவர்மாளிகையொருபாற்
காசிலாமதியமைச்சர்தங்கடிமனையொருபாற்
பேசிலாவளவணிகர்தம்பேரிடமொருபால்.

(இ - ள்.) (அந்நகரத்து இராசவீதியிலே),—ஒரு பால் - ஒருபக் கத்தில், ஆசு இலா மறை அந்தணர் ஆலயம் - குற்றமில்லாத வேதங்களை யுணர்ந்த பிராமணர்களது கிருகங்களும்,—ஒரு பால் - ஒருபக்கத்தில்,மாசு இலா முடி மன்னவர் மாளிகை - குற்றமில்லாத கிரீடத்தையுடைய அரச குலத்தாரது கிருகங்களும்,—ஒரு பால் - ஒருபக்கத்தில், காசு இலா மதி அமைச்சர்தம் கடி மனை-குற்றமில்லாத அறிவையுடைய மந்திரிகளது சிறப் பையுடைய கிருகங்களும்,—ஒரு பால் - ஒருபக்கத்தில், பேசு இலா வளம்

வணிகர்தம் பேர் இடம் - (வருணித்துச்) சொல்லுதற்கு அரிய செல்வத்தை யுடைய வைசியர்களது பெரிய கிருகங்களும், (உள்ளன); (எ - று.)

வினை வருவிக்க. வீடென்னும்ஒருபொருளைத்தரும் ஆலயம், மாளிகை, மனை, இடம் என்ற நான்கு சொற்கள் இக்கவியில் வந்தது - பொருட்பின் வருநிலையணி; வடநூலார் அர்த்தாவ்ருத்திதீபகமென்பர். 'ஆலிலா' முதலிய அடைமொழிகளை அந்தணர்முதலியோர்க்குக் கூட்டாமல், ஆலயம் முதலியவற்றோடு இயைப்பினும் அமையும். பிராமணர் பூதேவராதலால், அவரது வீடு தேவகிருகத்துக்குஉரிய 'ஆலயம்' என்ற பெயராற் கூறப்பட்டது. அந்தணர்—அம் தண் அர் எனப் பிரிந்து, அழகிய தண்மையை [குளிர்ந்த அருளை] யுடையவரென்றும்; அந்த அணவு அர் எனப் பிரிந்து, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவரென்றும் பொருள்படும்: இது, பிராமணர்க்குக் காரணவிடுகுறிப்பெயராம். அமைச்சர் - அமாத்யரென்ற வடமொழியின் விகாரம்; அரசரது அருகிலிருந்து அறிவுகூறுபவரென்று பொருள்படும்; (அமா - சமீபம்.) 'உழையிருந்தார்,' 'உழையர்' என்பன - இப்பொருள்கொண்ட தமிழ்மொழிகளாம். வணிகர் - வணிக் என்னும் வடசொல்லின் பன்மை; வணிகர் - வியாபாரஞ்செய்பவர். கடி - சிறப்பு, விளக்கம், காவல், மணம் முதலிய பலபொருள்களைக் குறிக்கும் உரிச்சொல்; [நன் - உரி - கக.] இப்பாட்டில், அடிதோறும் 'ஒருபால்' என இறுதியில் ஒன்றிவந்தது - இயைபுத்தொடை; சொற்பொருட்பின்வருநிலையணி.

[இது-அந்நகரத்துப் பலவகையொலிகளைக் கூறுகின்றது.]

கூ०१. மங்கலந்திகழ்மனையெலாம்வலம்புரியோசை
திங்கடோய்நெடுந்தலமெலாஞ்செழுஞ்சிலம்போசை
யங்கண்மாநகரனைத்துமும்முரசதிரோசை
யெங்கணுங்கடவுளரிடந்தொறுமுழவோசை.

(இ - ள்.) மங்கலம் திகழ் மனை எலாம் - சுபகாரியங்கள் விளங்கப்பெற்ற வீடுகள்தோறும், வலம்புரி ஓசை - வலம்புரிச்சங்குகளின் ஒலிகளும்,— திங்கள் தோய் நெடுந் தலம் எலாம் - சந்திரனையளாவிய உயர்ந்த உபரிகையிடங்களிலெல்லாம், செழுஞ் சிலம்பு ஓசை - (மாதர்கள் காலிலணியும்) அழகிய சிலம்பென்னும் அணியின் ஒலிகளும்,— அம் கண் மா நகர் அனைத்தும் - அழகியஇடத்தையுடைய பெரிய அந்நகரம்முழுவதிலும், மும் முரசு அதிர் ஓசை - மூன்றுவகை முரசவாத்தியங்கள் ஒலிக்கிற ஒலிகளும்,— எங்கணும் கடவுளர் இடம் தொறும் - எவ்விடத்துமுள்ள தேவாலயங்களிலெல்லாம், முழ ஓசை - மத்தளங்களின் ஒலிகளும், (உள்ளன); (எ - று.)

இதற்கும் முடிக்குஞ்சொல் வருவிக்க. ஒவ்வோரிடத்தையும் வருணித்துக்கூறும்போது, ஆங்காங்குப் பலவகையோசைகள் உள்ளனவெனக் கூறுதல், கவிமரபு. இப்பாட்டில், ஒவ்வொரு அடியிலும் இறுதியில் ஓசையென வந்தது - அணியிலக்கணத்தில் சொற்பொருட்பின்வருநிலையும், யாப்பிலக்கணத்தில் இயைபுத்தொடையுமாம். மங்கலந்திகழ்என்பதற்கு-சாமரம் தீபம் முதலிய மங்கலப்பொருள்கள் விளங்கப்பெற்ற என்றுங் கொள்ளலாம். மும்முரசு - வெற்றிமுரசு, மங்கலமுரசு, கொடைமுரசு என்பன. கடவுளர் - (இவ்வுலக சம்பந்தத்தைக்) கடத்தலை யுடையவர்; கடவுள் - கடத்தல்: தொழிற்பெயர்; கட - பகுதி, உள் - விகுதி. முழ-முழா என்னும் குறியதன் கீழ் ஆ, குறுகிற்று. மேல்மாடத்துக்கு 'சந்திரசாலை' என்ற வடமொழியில் ஒருபெயர்உள்ளதுபற்றி, 'திங்கள்தோய்நெடுந்தலம்' என்றனரென்னலாம். மங்கலம், தலம் - வடசொற்கள். (சஎ)

[துரியோதனனது அரண்மனையின் வருணனை.]

௩௮. முன்றிலின்கணின்றிடம்பெறாவரசர்மாமுடிக
ளொன்றொடொன்றறைந்தெற்றிமேலொளிர்பொறிசிதறிச்
சென்றுசென்றுறுதிசைதொறுந்திகழ்ந்ததுசெம்பொற்
குன்றெனும்படிகுருகுலநாயகன்கோயில்

(இ - ள்.) முன்றிலின்கண் நின்று - வெளிமுற்றத்திலே நெருங்கி நின்று, இடம் பெறா - (உள்ளேசெல்லுதற்கும் அங்குவிசாலமாகநிற்றற்கும்) இடத்தைப்பெறாத, அரசர் - (புறநாட்டு மன்னர்களது, மா முடிகள் சிறந்த கிரீடங்கள், ஒன்றொடு ஒன்று அறைந்து எற்றி - ஒன்றோடொன்று பட்டுத் தாக்கியதனால், ஒளிர் பொறி மேல் சிதறி - விளங்குகின்ற பொற்பொடிகள் ஆகாயத்திலே சிதறி, (அதனால்), சென்று சென்று உறு திசைதொறும் - (அப்பொறிகள்) போய்ப்போய்ப்பொருந்துகிறதிக்குகளிலெல்லாம், செம் பொன் குன்று எனும்படி - சிவந்தபொன்மயமான மேருமலை யென்னும்படி, குரு குலம் நாயகன் கோயில் - குருவம்சத்துப்பிறந்ததலைவனான துரியோதனனது அரண்மனை, திகழ்ந்தது - விளங்கிற்று; (எ - று.)

மலைபோலமிகப்பெரியதான துரியோதனனது அரண்மனையின் வாயிலினின்று அரசர்கள்கிரீடங்களின்பொற்பொடிகள் சிதறி மேலெழுந்து பல திசைகளிற்பரவுதலால், அவ்வரண்மனை பொன்மலையென்னும்படி இருந்தது என்பதாம்; ஒளிர்பொறிசிதறி என்பதற்கு - விளங்குகிற அனற்பொறிவீசுதற்குஒப்பான ஒளியை வீசுதலால் என்றலு மொன்று. இச்செய்யுள் - அரசர்களின்மிகுதியை விளக்கவந்த அதிசயோக்தி. மூன்றாமடி - முற்றுமோனை. இல் + முன் - முன்றில்; வீட்டின் முன்னிடம் என்று பொருள்; முன்பின்னாகத்தொக்க ஆறாம்வேற்றுமைத்தொகை: இலக்கணப்போலி. இடம்பெறாமைக்குக் காரணம் - அரசர்கள் அளவிறந்தவராதல்; அன்றி, அரண்மனையின் இடநெருக்க மன்று. கோயில் - ராஜகிருகம்: கோ + இல் = கோவில்எனவரற்பாலது கோயிலெனவந்தது, இலக்கணப்போலி. எற்றி, எற்று - பகுதி.

[கண்ணன் அந்நகரத்துத்தென்புறத்துச்சோலையில் தங்குதல்.]

௩௯. என்றிசைக்குநல்லொளிநிமிரெழின்மணிமகுடக்
குன்றிசைக்குர்வண்கோபுரநீணகர்குறுகித்
தென்றிசைக்குளிர்செண்பகமலர்தொறுஞ்சிறைத்தே
னின்றிசைக்கும்வண்சோலைவாயமர்ந்தனனெடுமால்.

(இ - ள்.) என்று இசைக்கும் - என்று இவ்விதமாகச்சொல்லத்தக்க,— நல் ஒளி நிமிர் - சிறந்தஒளிமிகுந்த, எழில் மணி மகுடம் - அழகியஇரத்தினங்களைப்பதித்த சிகரங்களையுடைய, குன்று இசைக்கும் - மலைகளையொத்த, வண் கோபுரம் - அழகிய கோபுரங்களையுடைய, நீள் நகர் - பெரிய அவ்வத்தினாபுரியை, நெடுமால் - பெருமைக்குணமுடையவனான கண்ணபிரான்,— குறுகி - சமீபித்து,— தென் திசை - (அந்நகரத்தின்) தெற்குப்பக்கத்தில்,— குளிர் செண்பகம் மலர் தொறும் சிறை தேன் நின்று இசைக்கும் வண் சோலைவாய் - குளிர்ந்தசண்பகப்பூக்களிலெல்லாம் இறகுகளையுடையவண்டுகள் தங்கி ஒலிக்கப்பெற்ற அழகியதொரு சோலையில், அமர்ந்தனன் - எழுந்தருளியிருந்தான்; (எ - று.)—என்றுஇசைக்கும் நகர் என இயையும்.

இரண்டாமடியில், இசைக்கும் - உவமவுருபு. வண்டுணாமலராகிய சண்பகத்தில் வண்டுகள் நின்று இசைக்கிறதாகக் கூறுதல் எங்ஙனம் பொருந்துமெனின்,— வண்டுகள் சண்பகமலரிலுள்ள தேனைக் குடித்தால் இறந்துபடுமென்பதேயன்றி, மற்றைமலர்களிற்போலச் சாதாரணமாக அதனிடத்திலும் மொய்த்துச்சேர்வது அசம்பாவிதமன்றென்று, இங்ஙனம் வருமிடங்

களிலெல்லாம் சமாதானங் கூறப்படும்; அன்றியும், மிகஉஷ்ணகரமான சண்பகமும் அந்நகரத்தின் வளத்தால் வண்டுமொய்க்கும்படி குளிர்ந்துள்ள தென்றுங் கூறலாம்: 'குளிர்சண்பகம்' என அடைமொழி கொடுத்துக் கூறியது, இதற்கு ஒக்கும்: அல்லது, மிக்க மதுபானமயக்கத்தைத் தகாத விடத்திற்சென்றுசேர்தற்குங் காரண மென்னலாம்: இனி, நின்று என்பதற்கு - சண்பகமலரிற் சேராது தடைப்பட்டு நின்று என்று உரைப்பினும் அமையும். செண்பகம்-சம்பகமென்னும் வடமொழியின் திரிபு. சோலைவாய், வாய் - ஏழனுருபு. கோபுரத்துக்கு மகுடம் - கலசத்தோடுகூடிய மேலிடம். சோலையில்அமர்ந்தது, நெடுந்தூரம்வந்தஇளைப்பு ஆறுதற்பொருட் டென்க; துரியோதனனது நோக்கத்தை நோக்குதற்குமாம். மூன்றுமடியில்,தென்று இசை எனப் பதம்பிரித்து, தென்றற்காற்றுப் பொருந்துதலையுடைய என உரைப்பாருமுளர். இச்செய்யுளில் ஒவ்வோரடியிலும் முதலெழுத்து மாத்திரம் வேறுபட்டிருக்க, இரண்டுமுதலிய சிலவெழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறுபட்டுவந்தது - திரிபுஎன்னுஞ் சொல்லணியாம். (௬௯)

[கண்ணபிரான் சோலையில்தங்கியதைத் தூதுவர் துரியோதனனுக்கு அறிவித்தல்]

௭௦. அன்றுதூதுகொண்டிலங்கைதீவிளைத்தவரைவர்க்
கின்றுதூதுவந்தெயிற்புறத்திறுத்தனரென்னுத்
துன்றுதூதுவண்டினமுரறொடையலான்றனக்குச்
சென்றுதூதுவரியம்பினர்சேவடிவணங்கி.

(இ - ள்.) (அப்பொழுது), தூதுவர் - தூதர்கள்,—சென்று (அரண்மனையிலுள்ள துரியோதனனிடம்)போய், சே அடி வணங்கி - (அவனது)சிவந்த பாதங்களைத் தொழுது,துன்று தூது வண்டுஇனம் முரல் தொடையலான் தனக்கு-நெருங்கின தூதாகவிடப்பட்ட வண்டுகளின்கூட்டங்கள்ஒலிக்கப்பெற்ற(நஞ்சாவட்டைப்)பூமாலையையுடையவனான அத்துரியோதனனுக்கு,—'அன்று தூது கொண்டு இலங்கை தீ விளைத்தவர் - முன்பு[ஸ்ரீராமாவதாரஞ்செய்த அக்காலத்தில்]தூதனுகிய அநுமானல் (இராவணனது) லங்காபுரியில் நெருப்புப்பற்றவைத்தருளியவரான திருமால், இன்று ஐவர்க்கு தூது வந்து - இப்பொழுது பஞ்சபாண்டவர்களின்பொருட்டுத்(தாமே) தூதாகிவந்து, எயில் புறத்து இறுத்தனர்-(உனது நகரத்து) மதிலின் வெளியில் தங்கியுள்ளார்.' என்னு - என்று, இயம்பினர்-சொன்னார்கள்; (எ - று.)

தமது தூதனைக்கொண்டு இலங்கையை அழித்தவர் தாமே இப்பொழுது உனதுநகரத்திற்குத் தூதாகவந்ததனால் உனதுநகரத்திற்கு என்ன தீங்கு நேருமோ என்பது, குறிப்பு. இராமதூதனுய்ச் சீதையைத்தேடிக்காணச்சென்ற அநுமான் அசோகவனத்தை அழித்தபின் இராவணனது ஏவலாளரால் வாலில்தீமூட்டப்பட்டு அதைக்கொண்டு இலங்காபுரியை எரித்தமை, மிகப்பிரசித்தம். இராமன், கிருஷ்ணன் என்ற இருவரும் திருமாலின் அவதாரமே யாதலால்,'இலங்கைதீவிளைத்தவர் தூதுவந்து இறுத்தனர்'என அபேதமாகக்கூறப்பட்டது. 'அன்று தூதுகொண்டு இலங்கை தீவிளைத்தவர் இன்று ஐவர்க்குத்தூதுவந்து எயிற்புறத்து இறுத்தனர்' என்ற தொடரால், திருமாலுக்கு இராமாவதாரத்தினும் கிருஷ்ணாவதாரத்தில் மிக்குள்ள சௌலப்பியமும், அடியார்களிடத்து வாற்சலியமும நன்குவிளங்கும். "முன்னோர் தூதுவானரத்தின்வாயின் மொழிந் தரக்கன்,மன்னூர்தன்னை வாளியினுல் மாளமுனிந்தவனே, பின்னோர் தூதாதிமன்னர்க்காகிப் பெருநிலத்தார், இன்னார்தூதனெனநின்றாய்" என்ற ஆழ்வாரருளிச்செயலை நினைத்துச் செய்யப்பட்டது இச்செய்யு ளென்னலாம்.

தூதுகொண்டு, கொண்டு - மூன்றும்வேற்றுமைச்சொல்லுருபு. விளைத்தவர், இறுத்தனர்-ஒருவரைக்கூறும் உயர்வுப்பன்மை. வண்டுகள், தமது காதலைத் தெரிவித்தற்பொருட்டு மகளிரால் தூதுவிடப்பட்டவை; "சங்கங்கேய் செங்கைநல்லார்விடுத்தனசுரும்பின்சாலங், கொங்கெங்கேயெங்கேயென்று தனித்தனிகுடையுந்தாரான்" எனக் கீழ் நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்கத்தில் அருச்சுனனைக்கூறியதுங் காண்க. இனி, தூது வண்டு-தூதுவிடுதற்குஉரிய வண்டுமாம். தூதுவிடப்படுதற்குரிய கிளி, மேகம், நாரை, அன்னம் முதலியவற்றுள் வண்டும் ஒன்றுதலால், 'தூதுவண்டு' எனப்பட்டது. துன்றுவண்டு, முரல்தொடையல்-வினைத்தொகைகள். தொடையல்-மாலை: தொடு-பகுதி, ஐ - செயப்படுபொருள்விகுதி, அல்-சாரியை. தூதென்ற சொல் ஒரே பொருளிற் பன்முறைவந்தது - சொற்பொருட்பின்வருநிலை. (எ0)

[துரியோதனனது கட்டளையால் நகரத்தை அலங்கரித்தல்.]

எக. தொல்லைநாயகன்வந்தனனென்றலுஞ்சுரும்பார்
மல்லன்மாலையானேவலான்மாநகர்மாக்க
ளெல்லைநீண்மதில்வட்டம்யோசனையெழுநூறுஞ்
செல்வமாநகர்த்தெருவினையொப்பனைசெய்தார்.

(இ - ள்.) தொல்லை நாயகன் வந்தனன் என்றலும் - '(யாவர்க்கும்) ஆதிநாயகனான கண்ணபிரான் எழுந்தருளினான்' என்று (தூதர்கள்) செய்திகூறியவுடனே,—சுரும்பு ஆர் மல்லல் மாலையான் ஏவலால் - வண்டுகள் நிறைந்த அழகுள்ள பூமாலையையுடையவனான துரியோதனன் கட்டளையிட்டதனால்,—மா நகர் மாக்கள் - பெரியஅஸ்திநாபுரியிலுள்ள சனங்கள்,—நீள் வட்டம் மதில் எல்லை எழுநூறு யோசனை ஆம் - நீண்டு வளைவாகச்சூழ்ந்துள்ளமதிலின் அளவு எழுநூறுயோசனைதூரமாகப்பெற்ற, செல்வம் மா நகர் - செல்வங்களையுடைய பெரிய அவ்வத்தினாபுரியின், தெருவினை-வீதிகளை, ஒப்பனை செய்தார் - அலங்காரஞ்செய்தார்கள்; (எ - று.)

கண்ணன் தனக்குப் படைத்துணையாகப் பலசேனைகளைக் கூட்டியனுப்பியருளியஉபகாரத்தைக் கருதியும், அரசர்க்குள் ஒருவர்க்கொருவர் செய்ய வேண்டும் மரியாதைக்கிரமம் பற்றியும், துரியோதனன் இங்ஙனம் கண்ணனைக்கௌரவித்துஉபசரிக்கக்கருதிக் கட்டளையிட்டான். 'தொல்லைநாயகன் வந்தனன் என்றலும்' என்றது-தொடர்ச்சியைவிளக்கவந்த அநுவாதம்; கூறியதுகூற லன்று. (அநுவாதம்-முன்புசொன்னதை மீண்டும் ஒருபயனைநோக்கிச்சொல்லுதல்; இது - குற்றமன்று. கூறியதுகூறல் - முன்புசொன்னதை ஒருகாரணமு மின்றி மீண்டுஞ் சொல்லுதல்; இது - குற்றமாம்.) மல்லல் - வளப்பமுணர்த்தும் உரிச்சொல்; "மல்லல் வளனே" என்பது தொல்காப்பியம். வட்டம், யோசனை - வ்ருத்தம், யோஜநா என்னும் வடசொற்களின் திரிபு. யோசனை, காதம் என்பன - ஒருபொருளன; அது-எழுமைநாழிகை வழி: (நாற்காதத்தை யோசனையென்பது - ஜைநநூல்வழக்கு.) மற்றைத் தேவர்கட்குப்போல எம்பெருமானுக்கு நாயகத்தன்மை நடுவில் ஏறிட்டுக் கொண்டதன்று என்பார், 'தொல்லைநாயகன்' என்றார். (எக)

[துரியோதனன் கண்ணனையெதிர்கொள்ளச்செல்ல, சகுனி தடுத்தல்.]

எஉ. மின்னுமாமுகிற்பல்லியவிதங்கண்முன்முழங்க
மன்னர்மன்னவனெழுந்தனன்மாலெதிர்கொள்வா
னென்னைநீயவற்கெதிர்செல்வதென்றுதன்மருகன்
றன்னைவன்பொடுதகைந்தனன்கொடுமைகூர்சகுனி.

(இ - ள்.) மின்னும் - மின்னுகிற, மா முகில் - பெரிய மேகங்களின் முழக்கம்போல, பல் இயம் விதங்கள் - அநேகமான வாத்தியங்களின்வகைகள், முன் முழங்க-(தனக்கு)முன்னிடத்திலே மிகவொலிக்க,-மன்னர்மன்னவன் - அரசர்க்கரசனான துரியோதனன்,—மால் எதிர்கொள்வான் - கண்ணனை எதிர்கொண்டுஉபசரித்தற்பொருட்டு, எழுந்தனன் - புறப்பட்டான்; (அப்பொழுது),— கொடுமை கூர் சகுனி - கொடுந்தன்மைமிக்க சகுனியானவன்,—அவற்கு நீ எதிர்செல்வது என்னை என்று - 'அவனுக்கு நீ எதிர்கொண்டுபோவது என்னகாரியம்?' என்று கூறி, தன் மருகன் தன்னை - தனது மருமகனாகிய துரியோதனனை, வன்பொடு தகைந்தனன் - (எதிர்செல்லவொட்டாது) வலியத் தடுத்துவிட்டான்; (எ - று.)

"ஆயனை மாலென் றறியார்போ லாக்கையனுர், தூயதருமன்தன் தூதுவனாய்த் - தாயம், கொடுப்பிக்க வந்தானைக் கோவே நீ காண, அடுப்பதோ வென்று னழித்து" என்றார் பெருந்தேவனாரும்.

கொட்டுவன ஊதுவனமுதலிய பலவகையும்அடங்க'பல்லியவிதங்கள்' என்றார். மால் எதிர்கொள்வான் - உயர்திணையில் இரண்டனுருபு தொக்கது. முகில்-உவமத்தொகை. கொள்வான் - வானீற்று எதிர்காலவினையெச்சம். சகுனி-காந்தாரதேசத்தரசன்; சுபலனென்னும் அரசனது புத்திரன்; திருதராட்டிரனது மனைவியாகிய காந்தாரியுடன் பிறந்தவன்: ஆதலால், துரியோதனனுயிர்க்கு மாமன்: சூதாடுதலில் மிகவல்லவன். இம்மைமறுமைகளில் எண்ணிறந்த நன்மைகளைத் தருதற்கு ஏற்ற கண்ணனை யெதிர்கொள்ளுதலைத் தடுத்த தீவினையுடைமைபற்றி, 'கொடுமைகூர்சகுனி' என அவனைக்கவி வெறுத்துக்கூறினர். என்னை எவனென்னும் வினாப்பெயர் இடைகுறைந்து 'என்' என நின்று ஐகாரச்சாரியைபெற்றது. (எஉ)

[துரியோதனன் கண்ணனுக்கு இடமமைத்துச் சபையில் வீற்றிருத்தல்.]

எங. சீர்வலம்புரிதிகிரிசேர்செங்கையான்றனக்குக்
கார்வலம்புரிகோயிலுங்காட்சியுமமைத்துப்
போர்வலம்புரிநிருபருமிளைஞருய்போற்றத்
தார்வலம் புரியவனிருந்தனன்பொலந்தவிசின்.

(இ - ள்.) (சகுனி கூறியபடியே எதிர்கொள்ளுதலை யொழிந்த பின்பு),—வலம்புரி தாரவன் - நந்தியாவட்டமலர்மாலையையுடையவனாகிய துரியோதனன்,—சீர் வலம்புரி திகிரி சேர் செம் கையான்தனக்கு - சிறப்பையுடைய(பாஞ்சஜந்யமென்னும்) வலம்புரிச்சங்கமும் (சுதரிசநமென்னுஞ்) சக்கரமும் பொருந்திய சிவந்த திருக்கைகளை யுடையவனான கண்ணபிரானுக்கு, கார் வலம் புரி கோயிலும் காட்சியும் அமைத்து-மேகங்கள் சூழ்ந்து செல்லுதற்குஉரிய [மேகமண்டலம்வரையில் உயர்ந்த] ஒரு சிறந்த இருப்பிடத்தையும(அதிற்பல)அலங்காரங்களையும்சித்தஞ்செய்துவைத்து,—போர் வலம் புரி நிருபரும் இளைஞரும் போற்ற - போரில் (தம்தமது) வெற்றியை விரும்புகிற (பல) அரசர்களும் தன்தம்பிமார்களும்(தன்னைப்)புகழ்ந்துவணங்க, பொலம் தவிசின் இருந்தனன் - பொன்மயமான சிங்காதனத்தில் வீற்றிருந்தான்; (எ - று.)

"தன்னகரிகோடித்துத் தண்டலைக ளெண்டிசையும்,பொன்னகரிபோலப்பொலிந்திலங்கக்-கொன்னவிலுங், கூராழிவேந்தனுக்குக் கோயிலிடங் குறித்தான், பாராளு மன்னன் பரிந்து" என்றார் வெண்பாவிலும்.

கார் - கருமையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு இடைஉகரமுங் கெட்டது; இது, கருநிறமுடைய மேகத்துக்குப் பண்பாகுபெயர். எம்பெருமானுக்கென்று அமைத்த இருப்பிடமாதலின்,அதனை'கோயில்'என்

றது மிகப்பொருந்தும். காட்சி-காணுதற்குஉரிய அலங்காரத்திற்கு ஆகுபெயர்; சி-தொழிற்பெயர்விகுதி. 'போர்வலம்புரி' என்றஅடைமொழியை இளைஞர்க்கும் கூட்டுக. ஈற்றடியில்,வலம்புரி-நஞ்சாவட்டை. தார் வலம்புரியன் - வலம்புரித் தாரவன் என விகுதி பிரித்துக் கூட்டுக. பொன் + தவிசு=பொலந்தவிசு; இப்புணர்ச்சி "பொன்னென் கிளவி யீறுகெட முறையின், முன்னர்த்தோன்றும் லகாரமகாரம், செய்யுண்மருங்கிற்றொடரியலான" என்ற தொல்காப்பியவிதியா லமைந்தது; பிற்காலத்தார் நிகண்டுகளில் 'பொலம்' என ஒருசொற் கொண்டுள்ளதனால்,பொலம் கழல் என்று பிரித்து மகரவீற்றுப்புணர்ச்சியின்பாற் படுத்துதலு முண்டு. தவிசின், இன் - ஏழனுருபு.

மேகத்திற்கும் கோயிலுக்கும் சம்பந்த மில்லாதிருக்கவும் சம்பந்தத்தைக் கற்பித்துக் கூறியதனால், 'கார்வலம்புரிகோயில்' என்றது - தொடர்புயர்வுநவிற்சியணி. இச்செய்யுளில் ஒவ்வோரடியிலும் முதலெழுத்துத்தவிர இரண்டுமுதலிய சிலஎழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறுபடவந்தது, திரிபு என்ற சொல்லணியாம். (௭௩)

[வீடுமன்முதலியோர் கண்ணனை எதிர்கொள்ளுதல்.]

௭௪. தொல்பகீரதிமைந்தனுந்துரோணனுஞ்சுதனும்
வில்விதூரனுங்கிருபனுமுதலியவேந்தர்
மல்குமூவிருபத்துநூறாயிரமகிபர்
செல்வநாயகற்கியோசனையிரண்டெதிர்சென்றார்.

(இ - ள்.) தொல் பகீரதி மைந்தனும் - பழமையாகிய கங்காபுத்திரனை பீஷ்மனும், துரோணனும்—, சுதனும் - (அவனது) மகனான அசுவத்தாமனும்,வில் விதூரனும் - வில்வித்தையில்வல்ல விதூரனும், கிருபனும்—, முதலிய - முதலான, வேந்தர்-அரசர்களும், மல்கு மூவிருபத்து நூறாயிரம், மகிபர் - (மற்றும்) நெருங்கிய அறுபதுலட்சம் அரசர்களும், செல்வம் நாயகற்கு - எல்லாச்செல்வங்களையுமுடைய தலைவனான கண்ணபிரானுக்கு, யோசனை இரண்டு எதிர் சென்றார்-இரண்டுயோசனைதூரம் எதிர்கொண்டு போனார்கள்; (எ - று.)

அக்காலத்தில் வாழ்ந்துள்ள குருகுலத்து அரசர்களுள் வீடுமன் பெரியவனாதலின், 'தொல் பகீரதிமைந்தன்' எனப்பட்டான். இனி, தொன்மையைப் பகீரதிக்கு அடைமொழியாக்கி, (திரிவிக்கிரமாவதாரகாலந்தொடங்கித்) தொன்றுதொட்டுள்ள கங்கை யென்றுங் கொள்ளலாம். பகீரதி - பாகீரதீ யென்னும் வடமொழித் தத்திதாந்தநாமத்தின் குறுக்கல்; (சூரியகுலத்தரசனாகிய) பகீரதனாற் கொணரப்பட்ட தென்று பொருள்பெறும்; ("சகரர் தம்பொருட் டருந்தவம் பெரும்பகல்தள்ளிப், பகிரதன் கொணர்ந்திடுதலாற் பகிரதியாகி" என்றார் கம்பரும்.)

துரோணர் - துரோணகும்பத்தினின்று தோன்றியவர்; பரத்துவாசமுனிவரது குமாரர்; கிருபாசாரியருடன்பிறந்தவளான கிருபியின் கணவர்; அசுவத்தாமனது தந்தை; சகலசாஸ்திரங்களையும் தம்பிதாவினிடங்கற்றுப் படைத்தொழிலைப் பரசுராமரிடத்து ஏழுநாளிற்பயின்றவர்; துரியோதனாதியர்க்கும் பாண்டவர்க்கும் அஸ்திரசஸ்திரங்களைக் கற்பித்த ஆசிரியர். சுதன் - ஸுதன் என்ற வடசொல்லின் திரிபு. விதூரன்-விதுரனென்பதன் நீட்டல். "வெற்றி விதுரன்கை வில்லிருக்க மேதினியின்,மற்றவனை வெற்றி கொள்ளுமா றுண்டோ" என்னும்படி விதுரன் வில்வித்தையிற் சிறந்தவனாதலால்,'வில்விதூரன்' என்றார். கிருபர்-கௌதமமுனிவரதுபௌத்திரர்; சரத்வான்என்றமுனிவரது குமாரர்; துரோணர்மனைவியானகிருபிக்கு உடன்பிறந்தவர்; துரியோதனாதியர்க்கும் பாண்டவர்க்கும் முதல்வில்லாசிரியர்; நாணற்காட்டிற் பிறந்த இவரை, அங்கு வேட்டையாடவந்த சந்தனுமகாரா

கன் கண்டு சிறுமையினுல் வெறுத்தவளைத்தமைபற்றி, இவர்க்கு இப்பெயர் வந்தது.

முதலிரண்டடியிற் கூறியவருள், வீடுமனும் விதுரனும் ஒழிந்த மூவரும் அந்தணராயினும், அவர்களை 'வேந்தர்' என்றது, அவர்கள் வீடுமன் திருதராட்டிரன் விதுரன் என்பவரது கருத்தின்படி அரசர்க்குஉரிய குடை கொடி முதலிய இராஜசின்னங்களைப் பெற்று வாழ்ந்ததனுல்; (இதனுல், கீழ் வாரணுவதச் சருக்கத்தில் "முனி நீ யையா விதற்குமுன்ன மின்றுமுதலா, இனி யிவ்வுலகுக்கரசா யெம்மி லொருவனுகிக், குனிவில்வலியா வமருங் கோடி யென்று கொடுத்தான், பனிவெண்குடையு நிருபர்க்குரிய வரிசை பலவும்" என்றது கொண்டு உணர்க:) இனி, தொல்காப்பியத்து மரபியலில் "அந்தணாளர்க்கு அரசு வரைவின்றே" என்ற சிறப்புவிதிபற்றி வேந்தரென்றதாகவுங் கொள்ளலாம்.

மூவிருபத்து நூருயிர மகிபர் - பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். மஹீபர் - வடசொல்: பூமியைக் காப்பவர்; மஹீ - பூமி. இக்கவியில் 'அறுபதுலட்சம்அரசர்,' இரண்டுயோசனைதூரம், கீழ் எக - ஆம் கவியில் 'எழுநூறுயோசனை' என இப்படிப்பட்டவற்றை அவ்வத்தொகையையே குறியாமல் மிகுதியைவிளக்கும் அதிசயோக்தி யெனக் கருதுதல் பொருத்தம். இம்மை மறுமை வீடு என்னும் மூன்று இடங்களிலும் யாவரும் பெறும் ஐசுவரியங்களெல்லாம் எம்பெருமானுடையவை யாதலால், 'செல்வ நாயகன்' என்றார்; 'செல்வி நாயகன்' என்ற பாடத்துக்கு-செல்வத்துக்குத் தலைவியான திருமகளது கொழுநனென்க. நாயகற்கியோசனை-குற்றியலுகரம் யகரம்வர இகரமான தென்றாவது, யகரமுதல்வடமொழி இகரத்தை முன்பெற்ற தென்றாவது கொள்க. (எச)

[கண்ணன் விதுரனதுமாளிகையினுட் செல்லுதல்.]

எரு. வந்துவந்திருமருங்கினுமன்னவர்வணங்கப்
பைந்துழாய்முடிப்பரமனுங்கண்மலர்பரப்பி
யந்தமாநகர்புகுந்தபினரசனில்புகாமற்
புந்திகூரருள்விதுரன்வாழ்வளமனைபுகுந்தான்.

(இ - ள்.) (இங்ஙனம்), மன்னவர் - அரசர்கள், இரு மருங்கினும் - இரண்டு பக்கங்களிலும், வந்து வந்து - (எதிர்கொண்டு) மிகுதியாகவந்து, வணங்க - (கண்ணபிரானை) நமஸ்கரிக்க,—பைந் துழாய் முடி பரமனும் - பசிய திருத்துழாய்மாலையைச்சூடிய திருமுடியையுடைய(யாவரினுஞ்)சிறந்தவனுன அக்கண்ணனும்,--கண் மலர் பரப்பி - (தனது)தாமரைமலர்போலுந் திருக்கண்களால் (அவர்களைக்) குளிரப் பார்த்தருளி,—அந்த மா நகர் புகுந்த பின் - அந்தப் பெரிய அத்தினபுரியினுட் சென்ற பின்பு,—அரசன் இல் புகாமல் - துரியோதனராசனது அரண்மனைக்குச் சென்று சேராமல்,புந்தி கூர் அருள் விதுரன் வாழ் வளம் மனை புகுந்தான் - தத்துவஞானத்தையும் மிக்க அருளையு முடைய விதுரன் வசிக்கின்ற எல்லாவளங்களையுமுடைய திருமாளிகையினுட் சென்றான்; (எ - று.)

"தாங்கேயனுள்ளிட்ட காவலர்கடற்சூழ, வாங்கெதிர்கொண்ட வரசர்களைத்—தேங்கொலிநீர், மல்லமருந்தோளானை மன்னுவது நாளை யென்று, வில்விதுரன்வீடணைந்தான் வேறு" என்றார் வெண்பாவில். விதுரன் பரமபாகவதனுதலாலும், பாண்டவர்பக்கல் மிக்க பிரியமுடையவனுதலாலும், கண்ணன் அவன் மனைக்கே சென்றனன் கண்ணனது பஞ்சபிராணன்களை யொத்த பஞ்சபாண்டவர்களுக்குத் துரியோதனன் பகைவனுதலால், அவனரண்மனைக்குச் செல்லவில்லை. "வெற்றிவிதுரன்கைவில்லிருக்க மேதினியில், மற்றவனை வெற்றிகொள்ளுமா றுண்டோ" என்று தருமபுத்திரன்

கொண்ட சங்கைக்குப் பரிகாரமாக, கண்ணன் யாவரினும் வில்வித்தையிற் சிறந்த விதுரன் எதிர்ப்பக்கத்தில் வந்து போர்செய்து பாண்டவர்களை வெற்றியடைய வொட்டாமற் செய்யாதிருத்தற்குஓர்உபாயத்தைஉத்தேசித்தும், விதுரன்வீட்டிற் புகுந்தன னென்க. இங்ஙனம் புகுந்தது, துரியோதன னுக்கு விதுரனிடத்தில் வெகுளியையும், விதுரனுக்குத் துரியோதனனிடத் தில் வெறுப்பையும் உண்டாக்குவதை மேலே காண்க.

முதலடி-முற்றுமோனை. வந்துவந்து - அடுக்கு, மிகுதிப் பொருளது. பர மன் -தனக்குமிக்காரையில்லாதவ னென்றும், சிறந்தஇலக்குமியையுடையவ னென்றும் பொருள்படும் வடசொல். கண்மலர் = மலர்க்கண்; முன்பின்னு கத்தொக்க உவமைத்தொகை. புந்தி-புத்தி: வடசொல்திரிபு கண்ணன் உட் புகுதற்கேற்ற பாக்கியத்தைப் பெற்றதனால், 'வாழ்வளமனை' எனப்பட்டது.

[கண்ணன் விதுரன்மாளிகையிலே சிங்காதனத்தில்வீற்றிருத்தல்.]

எசு. வேந்தர்யாரையும்விடைகொடுத்தகன்றபின்விமலன்
வாய்ந்தமாளிகைநடுவணோர்மண்டபங்குறுகி
யாய்ந்தவல்லவர்நவமணியழுத்தியவரியே
றேந்துமாசனமிடப்பொலிந்ததன்மிசையிருந்தான்.

(இ - ள்.) வேந்தர் யாரையும் - (எதிர்கொண்ட) அரச ரெல்லா ரையும், விடை கொடுத்து - (இன்சொற்சொல்லிச்) செலவுகொடுத்தனுப்பி விட்டு,—அகன்ற பின் - (அவர்கள்) நீங்கினபின்பு,—விமலன் - குற்றமற்ற பரிசுத்தமூர்த்தியான கண்ணன்,—வாய்ந்த மாளிகை நடுவண்-பொருந்திய (விதுரனது) கிருகத்தின் நடுவிலுள்ள, ஓர் மண்டபம் - ஒரு மண்டபத்தை, குறுகி - அடைந்து,—ஆய்ந்த வல்லவர் நவ மணி அழுத்திய - (சிற்பநூல் களை) ஆராய்ந்த வல்லவர்களால் நவரத்தினங்களையும் பதித்துச்செய்யப் பட்ட, அரி ஏறு ஏந்தும் ஆசனம் - ஆண்சிங்கந் தாங்குவதுபோ லமைந்த ஆசனமொன்றை, இட - (விதுரன் கொண்டுவந்து) சமர்ப்பிக்க, அதன் மிசை பொலிந்து இருந்தான் - அத்திவ்விய சிங்காதனத்தின்மீது விளக்க மாக எழுந்தருளியிருந்தான்; (எ - று.)

விடை-விடுதல்: தொழிற்பெயர்; விடு-பகுதி, ஐ-விகுதி. விமலன்-குற்ற மற்றவன்; வடசொல். நடுவண், அண்-விகுதி. இடப்பொருள்காட்டும். வல்ல வர் நவமணிகளை யாய்ந்தழுத்திய என்றுமாம். நவமணி கோமேதகம்.நீலம், பவழம், புட்பராகம். மரகதம், மாணிக்கம். முத்து. வைடூரியம். வைரம் என் பன. மண்டபம், நவமணி, ஆஸநம் - வடசொற்கள். (எசு)

[விதுரன் கண்ணபிரானைவணங்கி உஜ்ஜீவித்தல்.]

எஎ. இருந்துவந்தருளிறைவனையிறைஞ்சி மணிறைஞ்சிப்
பெருந்துவந்தனைப்பிறப்பையுமிறப்பையும்பிரித்தான்
மருந்துவந்தனையமரருக்கருளியமாயோன்
விருந்துவந்தனனென்றுளமுருகியவிதுரன்.

(இ - ள்.) 'வந்தனை அமரருக்கு - (தன்னை) வணக்குதலைச் செய்த தேவர்கட்கு, மருந்து - (திருப்பாற்கடலினின்று உண்டான) அமிருதத்தை, அருளிய-பகிர்ந்துகொடுத்தருளிய, மாயோன் - ஆச்சரியசக்தியுள்ளவனான திருமால், விருந்து வந்தனன் - எனது குடிசைக்கு) விருந்தினனாக எழுந் தருளினான்,' என்று - என்று கருதி, உளம் உருகிய-(மிக்ககளிப்பால)மனங் கரைந்த, விதுரன்—,—இருந்து உவந்தருள் இறைவனை-(சிங்காதனத்தில்) வீற்றிருந்து திருவுள்ளமுகந்தருளுகிற கண்ணபிரானை, இறைஞ்சினன் - வணங்கினான்: இறைஞ்சி-(அங்ஙனம்)வணங்கி, (அம்மாத்திரத்தாலே),பெருந்

துவந்தனை பிறப்பையும் இறப்பையும் பிரித்தான் - பெரிய இருவகைவினைகளையும் (அவற்றின்காரியமான) ஜநநத்தையும் மரணத்தையும் ஒழித்தவனுமான்; (எ - று.)

என்றது, இனிப் பிறப்பின்றி முத்திபெறும்படி எல்லாக்கருமங்களையும் எம்பிரானருளால் ஒழித்தா னென்பதாம் "தீப்பிறக்குஞ் சக்கரக்கைச் செங்கண்மாலென்னுடைய, நாய்க்குடிலைலேறுழைந்தான் நானுயர்ந்தேன்- வாய்த்த, பிறப்பைக் கழித்தேன் பெரும்பதம்பெற்றேனென்று, இறப்பைப் பிரித்தா னெழுந்து" என்றார் வெண்பாவிலும். 'பிறப்பையும் இறப்பையும் பிரித்தான்' என்றது, அவற்றிற்குக்காரணமான கரும மொழிந்ததை;இது- உபசாரவழக்கு. இம்மையிலே கருமமொழிந்து நின்றவன், ஜீவன்முக்தனெனப்படுவன். த்வந்த்வம்என்ற வடசொல் துவந்தன்என விகாரப்பட்டது; இரண்டாக இருப்பதெனப் பொருள்படும் இச்சொல் இங்குஅங்ஙனமுள்ள புண்ணியபாவங்களையுணர்த்திநின்றது;இருவினைகளைத்துவந்தனென உயர் திணையாண்பாலாற் கூறியது, செறலினுலாகியதிணைவழுவமைதியாலும்,இச்சொல் வடமொழியில் ஒருமையாயிருப்பதனுலு மெனஅறிக. நல்வினையும் பிறப்பிற்குக் காரணமாதலால், இங்கு இருவினையையும்அடக்கி,'துவந்தனை' என்றார். அவை சஞ்சிதம், ஆகாமியம், பிராரப்தம் என்றுமூன்றுவகைப்படும்; பிறப்பு அநாதியாய்வருதலின் உயிரான் அளவின்றிஈட்டப்பட்டுள்ள வினைகள் - சஞ்சிதம்; அவற்றுள் இறந்த உடம்புகளால் அனுபவித்தன ஒழியப் பிறந்தவுடம்பால் அனுபவிக்கக்கடவனவாய் நின்றவை - பிராரப்தம்; ஆகாமியம் - இனி அநுபவிக்கக்கடவனவாய் எஞ்சி நின்றவை; அவற்றுள், இச் செய்யுளால், சஞ்சிதமும் ஆகாமியமும் ஒழிந்தமை கூறினர். இனி, துவந்தனைஎன்பதற்கு-அலைவுக்குஇடமான என்றும், (காரணகாரியத்தொடர்ச்சியாய் ஒன்றோடொன்றுகூடி) இணைபட்ட என்றும் உரைப்பாரு முளர்.

பிறப்பு,இறப்பு - தொழிற்பெயர்கள். தேவர்களும் அசுரர்களும் கூடிப் பாற்கடலைக் கடைந்தகாலத்தில், திருமால் தான் இரண்டுவடிவங்கொண்டு அவர்கள்பக்கல் நின்று இழுத்துக்கடைந்ததும், கடைகையில் தந்வந்திரி யென்னும்வடிவத்தோடு அமிருதகலசத்தைக்கையிலேந்தி அக்கடலினின்று எழுந்ததும்,மோகினிவடிவங்கொண்டு அசுரர்களை வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு தேவர்கட்கு அமரராம்படி பிரசாதித்ததும் ஆகிய எல்லாம் அடங்க, 'மருந்துவந்தனையமரருக்குஅருளிய மாயோன்' என்றார். துருவாசமுனிசாபத்தாற் செல்வங்களையெல்லாம் இழந்த தேவர்கள் திருமாலைச் சரணமடைந்து நமஸ்கரித்தப் பிரார்த்தித்ததுபற்றி, 'வந்தனையமரருக்கு' என்றது. இச்செய்யுளில் திரிபு என்னுஞ் சொல்லணி காண்க. (எஎ)

[இதுவும் அது.]

எஅ கோடுகொண்டகைக்குரிசிலைபலர்ந்தகோகனதக்
காடுகண்டெனக்கண்டுதன்கண்ணிணைகளியாத்
தோடுகொண்டதார்விதுரனிப்பிறப்பையுந்தொலைத்தான்
வீடுகண்டவர்க்கியம்பவும்வேண்டுமோவேண்டா.

(இ - ள்.) தோடு கொண்ட தார் விதுரன் - பூவிதழ்களைக்கொண்ட மாலையையுடைய விதுரன்,—கோடு கொண்ட கை குரிசிலை-சங்கத்தையேந்திய திருக்கையையுடைய கண்ணபிரானை,—அலர்ந்த கோகனதம் காடு கண்டு என - மலர்ந்த தாமரைமலர்க்காட்டைக் கண்டாற்போல, கண்டு - தரிசித்து, தன் கண் இணை களியா - தனது கண்களிரண்டும் களிப்படைந்து, இ பிறப்பையும் தொலைத்தான்-இந்தச்சன்மத்துக்கருமத்தையும் நீக்கினன்; வீடு கண்டவர்க்கு - முத்தியின் சொரூபத்தை யறிந்தவர்களுக்கு,

இயம்பவும் வேண்டுமோ - (ஒருவர்) சொல்லவும் வேண்டுமோ? வேண்டா-வேண்டுவதில்லை; (எ - று.)

எம்பெருமானது தன்மையை யுணர்ந்தவர்கள் முத்தியின் தன்மையை யுணர்ந்தவர்களே யாவ ராதலின், அங்ஙனமே பரமபாகவதனான விதுரன் கண்ணனைப் பரம்பொருளாக வுணர்ந்து தரிசித்துத் தனது இருவினைகளும் தொலைந்து ஜீவந்முக்த னாயின னென்க. பிராரப்தம் ஒழிந்தமை, இப்பாட்டினாற் கூறப்பட்டது. நான்காமடி - கவிக்கூற்று. இவ்வடியிற்கூறிய பொதுப்பொருள் முதல்மூன்றடிகளிற் கூறிய சிறப்புப்பொருளை விளக்குதலால், வேற்றுப்பொருள்வைப்பணியாம். குரிசில்-ஆண்பாற் சிறப்புப்பெயர். திருமாலின் முகம் வாய் கண் கை உந்தி பாதம்முதலியஉறுப்புக்களெல்லாம் செந்தாமரைபோல்வன வாதலின், 'கோகனதக்காடு கண்டெனக் கண்டு' என்றது. கோகநதம்என்னும் வடசொல்லுக்கு-சக்கரவாகமென்னும் பறவைகள் தன்னில் மகிழ்ந்து வாழப்பெறுவ தென்றுவது,கோகமென்னும் நதியில் முதலில் உற்பத்தியான தென்றுவது பொருள்கொள்க. காடு-தொகுதியென்றபடி. இப்பிறப்பையும், உம்மை-இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. இயம்பவும், உம்மை - இழிவுசிறப்பு. வீடு - (இவ்வுலகப்பற்றை) விட்டு அடைவது; முத்தியென்னும் வடசொல்லின் பொருளது. கண்ணனைத் தாமரைக்கா டென்றதற்கு ஏற்ப, விதுரனது கண்ணிணையை வண்டின மென்க. இச்செய்யுளின் இரண்டாமடியில் ஒவ்வொருசீரின் முதலெழுத்தும் ஒன்றிவந்தது, யாப்பிலக்கணத்தில் முற்றுமோனை யெனப்படும். (எ௮)

[விதுரன் கண்ணபிரானைத்தரிசித்துப் பரவச னாதல்.]

௭௯. உள்ளினானுணர்ந்துள்ளமுமுருகினனெழுந்து
துள்ளினன்விழுந்திணையடிசூடினன்றுயரைத்
தள்ளினன்மலர்த்தடக்கையாற்றத்துவவமுதை
யள்ளினனெனக்கண்களாலருந்தினனளியோன்.

(இ - ள்.) அளியோன் - (கண்ணனது) அருளைப் பெற்றவனாகிய விதுரன்,—உள்ளினன்-(கண்ணனைத்) தியானித்தான்; உணர்ந்து - (அங்ஙனம் பகவானது சொரூபத்தை) நினைத்து அறிந்து, உள்ளமும் உருகினன் - மனமுங்கரைந்தான்; (அங்ஙனம் மனங்கரைதற்குக் காரணமான மிக்ககளிப்பால்), எழுந்து துள்ளினன் - (ஆநந்தபரவசனாய்) எழுந்துகுதித்தான்; விழுந்து - (கீழே) விழுந்து, இணை அடி சூடினன் - (கண்ணனது) உபயபாதத்தை(த் தலையின்மேல்) அணிந்துகொண்டான் ; துயரை தள்ளினன் - பிறவித்துன்பங்களையெல்லாம் ஒழித்தான்; மலர் தட கையால் தத்துவம் அமுதைஅள்ளினன் என-தாமரைமலர்போன்ற பெரிய தன்கைகளால் மெய்ப்பொருளாகிய அமிருதத்தை அள்ளியெடுத்தவன்போல, கண்களால் அருந்தினன்-(தனது)கண்களால் (கண்ணனது வடிவழகை) உண்டான்; (எ - று.)

உள்ளினன் என்பதற்கு - (கண்ணன் எழுந்தருளப்பெற்ற தனது பாக்கியவிசேஷத்தை) நினைத்தா னென்றும், தத்துவஅமுதை அள்ளினனென என்பதற்கு-நித்தியஇன்பமாகிய அமிருதத்தை அள்ளியெடுத்து உண்டவன் போல வென்றும், அளியோன் என்பதற்கு - தான்கருணையுடையவ னென்றும் உரைப்பாரு முளர். உள்ளமும் உருகினன் என்ற உம்மையை ஆக்கவும்மையாக்கி, உடம்பும் நீராயுருகி வியர்த்தா னெனக் கொள்ளலாம். சூடுதலென்ற வினைக்கு ஏற்ப, இணையடியை மல ரென்க. தத்வம், அம்ருதம் - வடசொற்கள். கண்களால் அருந்துதல் - ஆசைதீர நன்றாக முழுவதுந் தரிசித்துத் திருப்திபெறுதல்; "பருகுவான் போலநோக்கி" என்பதுங் காண்க: இங்குவாயின்புலத்தைக் கண்ணின்மேல்ஏற்றியது, உபசாரவழக்காம். (௭௯)

[விதுரன் கண்ணபிரானுக்கு முகமன் கூறுதல்.]

௮௦ முன்னமேதுயின்றருளியமுதுபயோததியோ
பன்னகாதிபப்பாயலோபச்சையாலிலையோ
சொன்னநால்வகைச்சுருதியோகருதிநீயெய்தற்
கென்னமாதவஞ்செய்ததிச்சிறுகுடிலென்றான்.

* (இ - ள்.) 'முன்னமே துயின்றருளிய முது பயோததியோ - அநாதிகாலமாக(நீ யோகநித்திரைசெய்தருளப்பெற்ற பழமையாகிய திருப் பாற்கடல்தானோ? பன்னக அதிபன் பாயலோ - சர்ப்பங்களுக்குத் தலைவனான ஆதிசேஷனாகிய திருப்பள்ளி மெத்தைதானோ? பச்சை ஆல் இலையோ - பசுநிறமுள்ள ஆலிலைதானோ? சொன்ன நால் வகை சுருதியோ - (மேன்மையாகச்) சொல்லப்பட்ட நான்குவகையான வேதந்தானோ? இ சிறு குடில் - இந்தச் சிறிய குடிசை, நீ கருதி எய்தற்கு என்ன மா தவம் செய்தது - நீ(ஒருபொருளாகத் திருவுள்ளத்தில்)நினைத்து எழுந்தருளுதற்கு என்ன பெரிய தவத்தைச் செய்ததோ?' என்றான் - என்று (விதுரன் கண்ணனை நோக்கிப்) புகழ்ந்து கூறினான்; (எ - று.)

பிரமன் முதலான சகலதேவர்களும்உட்பட யாவும் அழிந்துபோகின்ற யுகாந்தகாலத்தில் ஏகார்ணவமான மகாப்ரளயசமுத்திரத்திலே ஸ்ரீமகாவிஷ்ணு அண்டங்களையெல்லாம்தம்திருவயிற்றில்அடக்கிவைத்துக்கொண்டு சிறு குழந்தை வடிவமாய் ஆதிசேஷாம்சமான ஓர் ஆலிலையின்மீது பள்ளிகொண்டு தமது மாயாஸ்வரூபமான யோகநித்திரையைக் கைக்கொண்டு திருக்கண்வளர்ந்தருளுவர். வேதங்களில் பகவானது சொரூபம் வருணிக்கப்படுதலபற்றி, அது அவனுக்கு இருப்பிடமாம். மிக்கதவஞ்செய்திருந்தாலன்றி நீ யெழுந்தருளும பாக்கியத்தைப் பெறலாகா தாதலால், 'என்ன மாதவஞ்செய்தது' எனப்பட்டது. கண்ணன் எழுந்தருளப்பெற்ற இது, கண்ணனது வாசஸ்தானமான பொருள்களுள் யாதாயினுமொன்றன் அம்சமாக இருக்குமோ வென ஐயமுற்றார்; ஐயவுவமையணி. இச்சிறுகுடில் என்னமாதவஞ்செய்தது - செய்யாததைச் செய்வதுபோலக் கூறிய மரபுவழுவமைதி: இது-உலகநவிற்சியணி. விநயத்தால் தன்னைமிகத்தாழ்த்தி, தனதுசம்பந்தமான மாளிகையை'இச்சிறுகுடில்' என்றான். பயோததி முதலியனவல்லாததும், மாதவஞ் செய்யாததுமாகிய எனது இச்சிறுகுடிசையில் நீ எழுந்தருளியது, உனது இயற்கைக்கருணையே யென முகமன் கூறியபடி.

'முன்னமே துயின்றருளிய' என்ற அடைமொழியை, பன்னகாதிபப் பாயல், பச்சையாலிலை எனபவற்றிற்கும கூட்டலாம. பயஸ்+உததி=பயஉததி; இவ்வடசொற்றொடர், தமிழில் பயோததியென விகாரப்பட்டு வழங்கிறது. பயம் - பால்: உததி - கடல். பன்னகாதிபன்-வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி. அதிபப்பாயல்-உயர்திணையீறு விகாரம். ஸ்ருதி-எழுதாக்கிளவியாய்த் தொன்றுதொட்டுக் கேள்வியால்வருவதெனக் காரணக்குறி. ஓகாரம் நான்கும் - ஐயம். (௮௦)

[விதுரன் கண்ணனுக்கு விருந்துசமைப்பித்தல்.]

௮௧ மும்மையாகியபுவனங்கண்முழுதையுமருந்து
மெம்மையாளுடைநாயகன்விருந்தினுக்கிசைந்தா
னம்மவென்றனனுழுநூறுபிரமடையர்
தம்மைநோக்கினனவர்களுமவிரைவுடன்சமைத்தார்.

(இ - ள்.) 'மும்மை ஆகிய புவனங்கள் முழுதையும் - மூன்று வகையான [சுவர்க்க மத்திய பாதாளமென்னும்] உலகங்களெல்லாவற்றையும், அருந்தும-(பிரளயகாலத்தில்) உட்கொண்டருளிய, எம்மையாள்

நாயகன் - நம்மையெல்லாம் அடிமையாகவுடைய தலைவனாகிய திருமால், விருந்தினுக்கு இசைந்தான் - (எளிய எனது குடிசையில்) விருந்துண்ண உடன்பட்டான்; அம்ம - (இது) ஆச்சரியம்!' என்றனன் - என்று கருதி, ஆறு நூறாயிரம் மடையர்தம்மை நோக்கினன் - ஆறுலட்சஞ் சமையற்காரரை (க்குறிப்பாக)ப் பார்த்தான்; அவர்களும் - அச்சமையலாளரும், விரைவுடன் சமைத்தார் - துரிதமாகச் சமையல்செய்தார்கள்; (எ - று.)

உலகங்கள் ஏழும் பதினான்குமா யிருக்க, மூன்று என்றது என்னை யெனின்,—மேல், கீழ், நடு என்கிற நோக்கத்தாலென்க; (அன்றி, கிருதகம், அகிருதகம், கிருதகாகிருதகம் என மூவகைப்பட்ட உலக மென்றுமாம். கிருதகம் - செய்யப்பட்டது: பூமி பாதாளம் முதலாயின. அகிருதகம் - செய்யப்படாதது: தபோலோக சத்திய லோகங்கள். கிருதகாகிருதகம் - செய்யப்பட்டதும் செய்யப்படாததுமா யிருப்பது: சுவர்க்கலோகம் முதலியன. பிரமனது தினப்பிரளயத்தில் அழிவது கிருதக மென்றும், அங்ஙனம்அழியாமலிருப்பது அகிருதகமென்றும், பாதியழிந்தும் பாதியழியாமலுமிருப்பது கிருதகாகிருதகமென்றும்உணர்க.) திருமால்மூன்றுஉலகங்களையும் உண்பது, யாவும்அழியுங் கற்பாந்தகாலத்தில். மும்மை - மூன்றென்ற மாத்திரமாய் நின்றது. புவனம் - வடசொல். முழுது - முழுமையென்னும் பகுதியினடியாகப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்; இச்சொல் பன்மைப்பொருளையுணர்த்தி, ஒருமைவிகுதியை ஏற்றுவரும். விருந்து - இங்கே, புதிதாய்வந்தவனுக்கு இடும் உணவுக்கு இருமடியாகு பெயர். அம்ம - வியப்பிடைச்சொல். 'ஆறு நூறாயிரம் மடையர்' என்றது, கவிகளுக்கு இயற்கையான அதிசயோக்தி; மிகப்பல ரென்றபடி. மடை - சமைத்தல்; தொழிற்பெயர்: மடு-பகுதி, ஐ-விகுதி; அதனையுடையவர், மடையர்: (இச்சொல் அறிவிலாதவர்எனப் பொருள்படுமிடத்தில், மடைமையென்னும்பண்பினடியாப் பிறந்ததாம்.) புவனங்கள் முழுதையும் என்றதில், திரிலோகத்திலுமுள்ள சராசரங்களான எல்லாவுயிர்களும் அடங்கும். அரசர் வெளிப்படையாகவன்றிக் கண் முகம் முதலிய உறுப்புக்களின் குறிப்பாற் கூறும் இயல்பினரும், அவர்களிடத்துப் பயில்பவர் அக்குறிப்பையுணரும் நுண்ணறிவுடையவருமா யிருப்ப ராதலால், 'மடையர்தம்மைநோக்கினன் அவர்களும் விரைவுடன் சமைத்தார்' என்றார். (அக)

[இதுவும் அது.]

ருஉ. வந்தகொற்றவேல்வரிசிலையவர்க்கும்வாளவர்க்குங்
கந்தடர்ப்பனகரிக்கும்வெங்கவனவாம்பரிக்கு
மைந்துபத்துநூறாயிரமரசர்க்குமெவர்க்கு
மிந்திரற்குமெய்தாவமுதெனும்படியியற்ற.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) வந்த - (கண்ணனுடன்) வந்த, கொற்றம் வேல் வரி சிலையவர்க்கும் - வெற்றியைத்தரும் வேலாயுதத்தையுங் கட்டமைந்த வில்லையுமுடைய வீரர்களுக்கும், வாளவர்க்கும் - வாளாயுதத்தை யுடைய வீரர்களுக்கும், கந்து அடர்ப்பன கரிக்கும் - கட்டுத்தறியை முறிப்பனவாகிய மதயானைகளுக்கும், வெம் கவனம் வாம் பரிக்கும் - விரைந்தநடையை யுடைய தாவிப்பாயுங் குதிரைகளுக்கும், ஐந்து பத்து நூறு ஆயிரம் அரசர்க்கும் - ஐம்பதுலட்சம் அரசர்களுக்கும், எவர்க்கும் - மற்றும் எல்லோர்க்கும், இந்திரற்கும் எய்தா அமுது எனும்படி இயற்ற - தேவேந்திரனுக்குங்கிடைக்காத தேவாமிருதமென்னும்படி (உணவுகளைச்) சித்தஞ்செய்ய (எ - று.)—'அருந்தி' என மேற்கவியோடு தொடரும்.

முதலடியிற் கூறியவர் - வேல்வீரரும் வில்வீரரும் வாள்வீரரும். கந்தஸ்கந்தம், கவனம் - கமநம்: வடசொற்றிரிபுகள். கரத்தையுடையது, கரி; கரம் - கை, இங்கே துதிக்கை: இனி, இதற்கு - கருநிறமுடையதெனப் பொருள்கூறலாகாது; வடசொல்லாதலின். எவர்க்கும் என்றது, பரிசனங்களை உட்படுத்தி. (௮௮)

[கண்ணனும் அவனுடன்வந்தோரும் விருந்துண்டு மகிழ்ந்திருத்தல்.]

௮௯. அமைத்தவாசநன்னீர்கொடுமஞ்சனமாடிச்
சமைத்தபல்கறியடிசிறம்விருப்பினலருந்தி
யுமைக்குநாயகனிரவொழித்தருளினனுதவ
விமைப்பிலாரமுதருந்தியவியல்பெனவிருந்தார்.

(இ - ள்.) உமைக்கு நாயகன் இரவு ஒழித்து அருளினன்-உமாதேவிக்குக்கணவனாகிய சிவபிரானது யாசகத்தொழிலைப் போக்கிக் கருணைசெய்த கண்ணபிரான்,—அமைத்த வாசம் நல் நீர்கொடு மஞ்சனம்ஆடி-(விதுரனது பரிவாரங்களாற்) சித்தஞ்செய்யப்பட்ட பரிமளமுடைய நல்லதீர்த்தத்தால் ஸ்நாநஞ்செய்து,சமைதத பல் கறி அடிசில் தம்விருப்பினல் அருந்தி-சமைக்கப்பட்ட பலவகைக்கறியமுதோடு கூடிய நல்லுணவைத் தமதுவிருப்பத்தோடு அமுதுசெய்தருளி, உதவ -(பிறர்க்கெல்லாங்)கொடுக்க,—(அவர்கள் உண்டு), இமைப்பு இலார் அமுது அருந்திய இயல்பு என இருந்தார் - கண்ணிமைத்தலில்லாததேவர்கள் அமிருதத்தையுண்டதன்மைபோலத் திருப்தியடைந்திருந்தார்கள்; (எ - று.)

மஞ்சனம் - மஜ்ஜநம் என்னும் வடமொழியின் திரிபு; நீராடுதலென்று பொருள். அடிசில் - அடுஎன்னும் பகுதியின்மேல் இசில் விகுதிபெற்ற தொழிற்பெயரென்றும், இது ஆகுபெயராய்ச் சமைக்கப்பட்ட உணவை உணர்த்துமென்றுங் கூறுவர். 'ஒழித்தருளினன்' என்றதற்கு ஏற்ப, தன் என ஒருமையாகக்கூறாது, 'தம்'எனப் பன்மையாகக் கூறினது - ஒருமைப்பன்மைமயக்கம். விருப்பு-விரும்பு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். பார்வதிதேவி ஐந்துபிராயமானவுடனே சிவபிரானைமணஞ்செய்தற்குத் தவஞ்செய்ய விரும்பியவளாய்த் தன்கருத்தைப் பெற்றோர்க்குத்தெரிவிக்க, அவர்களால் ("அன்னைகேளெம்மினீங்கி யருந்தவமாற்றற் கொத்த, தின்னதோர் பருவ மன்று வியாண்டுமோரைந்தே சென்ற, நின்னுடல் பொறுதா லீண்டிக்கிலைமையைத்தவிர்தி"என்றுகூறி முதலில்)மறுக்கப்பட்டதனால், அவளுக்கு உமையென்று ஒருபெயர்; உ, மா என்பதற்கு அம்மா வேண்டா என்று பொருள்; வடசொல். இரவு - தொழிற்பெயர்; இர பகுதி, வு - விகுதி. அவர்கள் உண்ட உணவு தேவாமிருதம்போன்றதென்பது, ஈற்றடியினால் விளங்கும்.

உமைக்குநாயகனிரவொழித்தகதை:—ஒருகாலத்திலே பரமசிவன்தன்னைப்போலவே பிரமனும் ஐந்துதலையுடையனாயிருப்பது பலரும்பார்த்துமயங்குதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி,அவனதுசிரமொன்றைக்கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக்கொள்ளுதலும்,அவன் 'இதற்கு என் செய்வது?' என்று கவலைப்பட,தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவம் தொலையப் பிச்சை யெடுக்கவேண்டும்: என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையை விட்டு அகலும்' என்று உரைக்க,சிவபிரான் பலகாலம் பலதலங்களிலுஞ்சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, பின்பு ஒருநாள் பதரிகாச்சிரமத்தையடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது, அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது என்பதாம். (௮௯)

[யாவரும் தாம்பூலம் முதலியவற்றைத் தரித்தபின்பு கண்ணன் சிங்காதனத்தில் வீற்றிருத்தல்.]

௮௪. வாசநீருஞ்வண்சுண்ணமுமுறைமுறைவழங்கப்
பூசுறுந்தொழிற்பூசினார்சூடினார்புனைந்தார்
வீசுசாமரமிரட்டவெண்மதிக்குடைநிழற்றக்
கேசவன்மணிக்கேசரித்தவிசிடைக்கிளர்ந்தான்.

(இ - ள்.) (இங்ஙனம் யாவரும் புசித்தபின்பு),—வாசம் நீரும் - நறுமணத்தையுடைய பனிநீர் கலவைச்சந்தனக்குழம்பு முதலியவற்றையும், வள் சுண்ணமும் - அழகியவாசனைப்பொடிகளையும், முறை முறை வழங்க - ஒன்றன் பின் ஒன்றாக (விதுரன்) கொடுக்க,—(அவற்றை), பூசுறும் தொழில் பூசினார் - பூசவேண்டிய வகைப்படியே (மார்பு தோள் முதலிய இடங்களிற்) பூசிக்கொண்டார்கள்; சூடினார் புனைந்தார் - (விதுரனாற்கொடுக்கப்பட்ட புஷ்பசரம் மாலை முதலியவற்றைத் தலையிற்) சூடிக்கொண்டார்கள் (உடம்பில்) தரித்துக் கொண்டார்கள்; (அப்பொழுது),—கேசவன் - கண்ணபிரான்,—வீசு சாமரம் இரட்ட - வீசுதற்குஉரிய சாமரங்களை வீசவும், வெள் மதி குடை நிழற்ற - வெண்மையான பூர்ணசந்திரன்போன்ற வெண்கொற்றக்குடை நிழலைச்செய்யவும்,—மணி கேசரி தவிசு இடை - இரத்தினங்களைப்பதித்துள்ள சிங்காதனத்தினிடத்திலே, கிளர்ந்தான் - விளக்கமாக வீற்றிருந்தருளினான்; (எ - று.)

வாசநீர்-பனிநீர்; இதைக் கூறியது, கலவைச்சந்தனக்குழம்பு முதலியவற்றிற்கும் உபலக்ஷணம். சுண்ணம்-சூர்ணமென்னும்வடசொல்லின் சிதைவு. 'பூசறுதொழில்' என்ற பாடத்திற்கு, பூசுதற்கென்று வரையறுக்கப்பட்ட இடங்களி லென்க. சாமரம் - சமரமென்னும்மானின் வால்மயிரினாற் செய்யப்பட்டது: தத்திதாந்தவடமொழி. குடைக்குப் பூர்ணசந்திரன் - வட்டவடிவிலும், வெண்ணிறத்திலும், ஒளியிலும், குளிர்ச்சிசெய்தலிலும் உவமை. மதி - (யாவராலும்) மதிக்கப்படுவ தெனக் காரணப்பெயர்; செயப்படுபொருள் விகுதி புணர்ந்துகெட்டது. இரட்ட, நிழற்ற - வினைச்செவ்வெண். கேசவ னென்னும் வடமொழித் திருநாமத்துக்கு - பிரமனையும் உருத்திரனையுந் தன் அங்கத்திற் கொண்டவ னென்றும் (க-பிரமன், ஈச-சிவன்), அழகிய தலைமயிர்களையுடையவ னென்றும், கேசியென்னும் அசுரனைக் கொன்றவ னென்றும்பொருள்கள் கூறப்படும். கேஸரீயென்னும் வடசொல்லுக்கு-பிடரிமயிர்களையுடையதென்று பொருள்; ஆண்சிங்கம்: கேஸரம் பிடரிமயிர்.

[சூரியாஸ்தமன வருணனை.]

௮௫. ஞானகஞ்சுகவிதுரன்வாழ்மனையினாயகனும்
போனகம்பரிவுடனுகர்ந்திருந்தவப்பொழுதிற்
றானுமேருவுக்கப்புறத்தவ்வமுதருந்தப்
பானுவும்பெருங்குடதிசைப்பரவையிற்படிந்தான்.

(இ - ள்.) ஞானம் - தத்துவஞானமாகிய, கஞ்சுகம் - கவசத்தைத் தரித்த, விதுரன்—, வாழ் - வாசஞ்செய்கின்ற, மனையில் - திருமாளிகையிலே, நாயகனும் - (எல்லாவுயிர்க்குந்) தலைவனான கண்ணபிரானும்,—போனகம் - உணவை, பரிவுடன் - (விதுரன்பக்கல்) அன்புடனே, நுகர்ந்து - அமுதுசெய்து, இருந்த - வீற்றிருந்த, அ பொழுதில் - அந்தச்சமயத்திலே,—பானுவும் - சூரியனும்,—தானும்—, மேருவுக்கு அப்புறத்து அ அமுது அருந்த - மகாமேருகிரிக்கு அந்தப்புறத்திலே (சென்று) அப்படிப்பட்ட தேவா

மிருதத்தை உண்ணுதற்கு, பெருங் குட திசை பரவையில் படிந்தான் - பெரிய மேற்குத்திக்குக்கடலில் நீராடினான்; (எ - று.)

ஒருவன் ஒருதொழிலைச் செய்ததைப் பார்த்த மாத்திரத்தில் தானும் அத்தொழிலைசெய்யவேண்டுமென்ற கருத்து உண்டாதலாகிய உலகவியல்பு, இங்கே சூரியனிடத்தேற்றிக் கூறப்பட்டது. சூரியன்முதலிய கிரக நக்ஷத்திரதாரகைகளெல்லாம் கிழக்கில்உதித்து மேற்கில் அஸ்தமிப்பனவற்றைக் கீழ்கடலில் உதித்து மேல்கடலில் அஸ்தமிப்பனவாகத தோற்றமாதிரத்தைக்கொண்டு வருணித்தல், கவிமரபு சூரியன் கடலில் மூழ்குதற்குக் காரண மாகாத தானும்மேருவுக்குஅப்புறத்ததுஅவ்வமுதருந்துங்கருத்தை ஏதுவாகக் கற்பித்துக் கூறியதனால், ஏதுத்தற்குறிப்பேற்றவணி. உண்பொழுது நீராடியுண்டல் மரபாதலின், 'அமுதருந்தப் பரவையிற்படிந்தான்'என்றார். 'மேருவுக்கு அப்புறம்' என்றது, மேருவின்வடபுறத்தை. 'அமுதருந்த' என்றது, அமுதருந்துதல் அமரரான தேவர்க்கெல்லாம் இயல்பாதலால். கவசம் உடம்பைப் பாதுகாத்தல்போல ஞானம் உயிரை நற்கதியிற்செலுத்திப் பாதுகாத்தல்பற்றி, ஞானகஞ்சுகம்' எனப்பட்டது. ஜ்ஞானகஞ்சுகவிதரன் - வடசொற்றொடர்.

இச்செய்யுளிலுள்ள உம்மைகள் மூன்றனுள், முன்னது - பின்னையவற்றைநோக்கி எதிரதுதழுவிய எச்சமும், மற்றையிரண்டுஉம்மைகள் - முன்னையதைநோக்கி இறந்ததுதழுவிய எச்சமுமாம். பாநுஎன்னும்வடசொல்லுக்கு- விளங்குபவனென்றும், விளக்குபவனென்றும் பொருள். குடக்கு+திசை= குடதிசை; திசைப்பெயர்முன் திசைப்பெயர்வரினிலைமொழிஈற்றுயிர்மெய்யும் ககரவொற்றும் நீங்கின; [நன் - உயிர் - நஙக] பரவை - பரந்திருப்பதெனச் சமுத்திரத்திற்குக் காரணக்குறி. (அரு)

[செவ்வானத்தோற்றத்தின் வருணனை.]

அகூ. கருதியந்தணர்யாவருந்தங்கடன்கழிப்பச்
சுருதியென்னும்வெஞ்சாபமேலம்புகைதொடுத்துப்
பரிதிதன்பெரும்பகைவர்மேல்விடுத்தலிற்பரந்த
குருதியாமெனசிவந்தெழச்சிவந்ததுகுடபால்.

(இ - ள்.) அந்தணர் யாவரும் - பிராமணர்களெல்லாரும், தம் கடன் கழிப்ப கருதி - (மாலைக்காலத்தில்) தாம்கழிக்கவேண்டிய கடமைகளைக் கழிக்க எண்ணி, சுருதி என்னும் வெம் சாபம் மேல் - வேதமந்திரமாகிய கொடியவில்லின்மேலே,அம்பு கை தொடுத்து - (அர்க்கிய)நீராகிய பாணத்தைக் கையால்வைத்து, பரிதிதன் பெரும் பகைவர்மேல் விடுதலின் - சூரியனது பெரியபகைவர்களான (மந்தேகரென்னும்) அசுரர்களின்மேலே பிரயோகித்தலால், பரந்த - (எங்கும்) பரவிய, குருதி ஆம் என - இரத்தமாகும் (இது) என்னும்படி, சிவந்து எழ - (செவ்வானம்) மிக்குததோன்றுதலால்,—குட பால்-மேற்குத்திசை, சிவந்தது-செந்நிறமடைந்தது; (எ - று.)

மந்தேகாருணமென்னுந்துவீபத்தில் வாழும் மந்தேகரென்னும் அரக்கர்கள் உக்கிரமானதவத்தைச்செய்து பிரமனிடத்து வரம்பெற்று அதனாற்செருக்கி எப்பொழுதுஞ் சூரியனை வளைந்து எதிர்த்துப் போகவொட்டாது தடுத்துப் போர்செய்கின்றன ரென்றும், அந்தணர்கள் சந்தியாகாலங்களில் மந்திரபூர்வகமாகக் கையிலெடுத்துவிடும் அர்க்கியநீர்த்தங்கள் வச்சிராயுதம் போலாகி அவர்கள்மேல் விழுந்து அவர்களை அப்பால்தள்ளிச் சூரியனது சஞ்சாரத்துக்குத்தடையில்லாதபடி செய்கின்றனவென்றும் வேதம்கூறும். மாலைப்பொழுதிற் செவ்வானம்பரந்ததை இங்ஙனம் அடிபட்ட அரக்கரது இரத்தம்பட்டுச் சிவந்ததாக உத்பிரேக்ஷித்தார்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி

இரண்டாமடியிலுள்ள உருவகம் இதற்கு அங்கமாய் நின்றது. அம்பு என்ற ஒருசொல்லே இங்கு இருபொருள்பட்டு நீராகிய அம்பு எனப்பட்டது; ம்லிஷ்டரூபக மெனப்படும்: சிலேடைபொருந்தின உருவக மென்க. அம்பு என்னுஞ் சொல் - பாணத்தைக்குறிக்கும்போது தென்மொழியும், நீரைக் குறிக்கும்போது வடமொழியுமாம். அம்புசெலுத்துதற்கு வில் இன்றியமை யாதகருவியா யிருத்தல்போல, இந்நீரைச் செலுத்துதற்கு வேதமந்திரம் இன்றியமையாமையின், இதனை 'வில்'என்றது. சுருதி - இங்கு, காயத்திரி மந்திரம். இவ்வரக்கர்கள் என்றும் அழியாதவ ராதலாலும், எப்பொழுதுஞ் சூரியனையே எதிர்ப்பவ ராதலாலும், 'பரிதிதன்பெரும்பகைவர்' எனப்பட் டார். பால் - பக்கம். பரந்த, நிவந்து—பர, நிவ - பகுதிகள். (அசு)

[மாலைப்பொழுதிற் கடலோரத்தில் விளங்குகிற பவழக்கோடி களின் வருணனை.]

அஎ. தரங்கவாரிதிப்புறத்தெதிர்மலைந்தவெஞ்சமரி
லுரங்கொள்கூர்நெடும்படைகளாலுடன்றமந்தேகர்
துரங்கமேழுடைக்கடவுளைநிரைநிரைதுணித்த
கரங்கள்போன்றனகரைதொறும்வளர்துகிர்க்காடு.

(இ - ள்.) கரைதொறும் - கடற்கரையி லெங்கும், வளர் - வளர்ந்து தோன்றுகிற, துகிர் காடு-பவழக்கொடிகளின் கூட்டங்கள்,—தரங்கம்வாரிதி புறத்து - அலைகளையுடைய கடலின் மேலிடத்தில், எதிர் மலைந்த வெம் சமரில்-எதிர்த்துப்போர்செய்த கொடிய யுத்தத்தில், உடன்ற-பெருங்கோ பங்கொண்ட, மந்தேகர்-மந்தேகரென்னும்அரக்கர், உரம்கொள்கூர்நெடும் படைகளால் - வலிமையைக்கொண்ட கூர்மையாகிய பெரிய (தமது) ஆயு தங்களால்,துரங்கம் எழ் உடை கடவுளை-ஏழுகுதிரையையுடைய சூரியனை, நிரை நிரை துணித்த - வரிசைவரிசையாகத் துண்டுசெய்த, கரங்கள் - கிர ணங்களாகிய கைகளை, போன்றன - ஒத்தன; (எ - று.)

கரங்கள் - ம்லிஷ்டரூபகம். கரம்-வடசொல். இது இவ்விருபொருளு முடைய தாதலை "கரமென்ப கிரணஞ் செங்கை கழுதைநஞ் சிறுத்தலும் பேர்" என்னும் நிகண்டினாலும் அறிக. தரங்கவாரிதி - வடசொற்றொடர்; அலைக்கடலென்பது. இதற்குஎற்ற தென்மொழித்தொடர். வாரிதி-நீர்தங்கு மிடமெனக் கடலுக்குக்காரணக்குறி;வாரி-நீர்.உடன்ற,உடல்-வினைப்பகுதி. துரங்கம் - துரிதமாகச்செல்வது; காரணப்பெயர். கடலில்வளர்ந்த பவழக் கொடிகளை, அக்கடலின்மீது வானத்திற்பொருத மந்தேகரால் ஆயுதங் கொண்டு துணித்துத்தள்ளப்பட்ட சூரியனது கைகள்போலு மெனக் குறித் தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. (அஎ)

[அவ்வந்திமாலையிற் குவிந்த தாமரைமலர்களின் வருணனை.]

அஅ. நீதியிற்புகல்பகலெலாநீரரமகளிர்
மீதுறைத்தெழும்வெவ்வெயில்படாவகைவிரித்துப்
போதுபுக்கதென்றினம்படச்சுருக்கியபூம்பட்
டாதபத்திரம்போன்றனதாமரையடவி.

(இ - ள்.) தாமரை அடவி - (மாலைக்காலத்திற் குவிந்த) தாமரை மலர்த் தொகுதிகள்,—நீதியின் புகல் பகல் எலாம் - முறைமையாகச்சொல் லப்படுகிற பகற்பொழுது முழுவதிலும், உறைத்து எழும் வெம் வெயில் - உக்கிரமாகஎழுகிற உஷ்ணமாகிய சூரியனொளி, நீர் அரமகளிர்மீது - நீரில் வாழுந் தெய்வமகளிர்மேல், படா வகை - படவொண்ணாதபடி, விரித்து - பரப்பப்பட்டிருந்து,—போது புக்கது என்று - அப்பகற்பொழுது ஒடுங்கி விட்டதென்ற காரணத்தால், இனம் பட சுருக்கிய - வரிசையாக மடக்கப்

பட்டு, பூ பட்டு ஆதபத்திரம் - அழகிய [அல்லது மென்மையான] பட்டுக் குடைகளை, போன்றன - ஒத்தன; (எ - று.)

நீரின்மீது பகல்முழுவதும் மலர்ந்திருந்து அப்பகல்கழிகையில்குவிந்த தாமரைமலர்களை, நீர் தன்னிடத்தில்வாழுந் தேவமாதர்மீது சூரியகிரணம் பட்டு உறைக்காதபடி பகலமுழுவதும் மேலேவிரித்துப் பிடித்து அப்பகல் கழிகையில் மூடிவிட்ட குடைகளைப் போன்றன வென்று குறித்தார்; இது வும், தன்மைத்தற்குறிப்பேற்றவணி. வெண்தாமரைமலர்களை வெண்பட்டுக் குடைகளாகவும், செந்தாமரைமலர்களைச் செம்பட்டுக் குடைகளாகவுங் கொள்க. ஆதபத்ரம்என்னும்வடசொல்லுக்கு-வெயிலினின்றுகாப்பதென்று பொருள்;ஆதபம்-வெயில்: நன்றாகத்தபிப்பது. வெம்மையுடையது, வெயில் எனக் காரணக்குறி; வெம்மையென்பது ஈறுகெட்டு முன்னின்றமெய் திரிந்த வெய் - பகுதி, இல் - பெயர்விகுதி நீரரமகளிர் - ஜலதேவதாஸ்திரீ கள். அரமகளிர் - அமரமகளிர் என்பதன் மரூஉ; அரம்பைமகளிர் என் பதன் விகாரமு மாம். நீதியின் விரித்து என இயைத்து, தருமமாக மலர்த் திப்பிடித்து என்றும் உரைக்கலாம். போது - பொழுது என்பதன் மரூஉ. புக்கது, புகு - பகுதி. சுருக்கு - சுருங்குஎன்பதன் பிறவினை. (அஅ)

[இது - அந்திக்காலத்தில் அந்நகரம் இருந்த காட்சி.]

௮௯. கலந்துமங்கலமுழவுவெண்சங்கொடுகறங்க
மிலைந்தபூங்குழல்வனிதையர்மெய்விளக்கெடுப்பக்
கலந்ததாமரைத்தடமெலாங்குவிந்ததுகண்டு
மலர்ந்ததாமரைவாவிபோன்றதுநகர்வட்டம்.

(இ - ள்.) (மாலைப்பொழுதில்), மங்கலம் முழவு-மங்கலகரமான பேரி கைகள், வெண் சங்கொடு-வெண்ணிறமான மங்கலச்சங்குகளுடனே, கலந்து- கூடி, கறங்க-ஒலிக்கவும்,—மிலைந்த பூ குழல் வனிதையர் - சூடின மலர்களை யுடைய கூந்தலையுடைய மகளிர், மெய் விளக்கு எடுப்ப-உண்மையான தீபங் களையேந்தவும்,—நகர் வட்டம்-அவ்வத்தினபுரியின் பரந்தஇடமானது,—கல ந்த தாமரை தடம் எலாம் குவிந்தது கண்டு மலர்ந்த தாமரை வாவி போன் றது-பொருந்தின தாமரைமலர்களையுடைய தடாகங்களெல்லாம் (அப்பொ ழுதுஅத்தாமரைமலர்) குவியப்பெற்றதைப் பார்த்துத் தான்மலர்ந்ததொரு தாமரைத்தடாகத்தை யொத்தது; (எ - று.)

நகர்வட்டமாகிய தாமரைவாவிக்கு - பலவகைவாத்திய கோஷத்தைப் பலவகைப்பறவையொலியாகவும், சங்கங்களை நீர்வாழுயிர்களாகவும், மக ளிரை நீரரமாதர் அல்லது நீர்விளையாடும்பெண்களாகவும், திருவிளக்குக் களைத் தாமரைமலர்களாகவுங் கொள்க. இயற்கையான தாமரைத்தடாகம் சூரியாஸ்தமனத்திற் பூவொடுங்கினதைப்பார்த்து அப்பொழுது தான்பூப் பூத்ததொரு செயற்கைத்தாமரைத்தடாகத்தைப் போன்றது விளக்கொளி யும் ஒலியும் அமைந்த நகரம் என வருணித்ததனால், இது - ஏதுத்தற்குறிப் பேற்றவுவமையணி. முதலடியிற் கூறினது, அந்தியில் வாத்தியம் முழக்கப்படுதலை. மங்கல மென்பதைச் சங்கோடுக் கூட்டுக. முழவு - முழாஎன்னுங்குறியதன்கீழ்ஆ, குறுகி உகரமேற்றது. மிலைந்த பூங்குழல், கலந்ததாமரைத்தடம், மலர்ந்ததாமரைவாவி இவை - வடமொழிநடை; பூ மிலைந்த குழ லென்றும், தாமரைகலந்ததட மென்றும், தாமரைமலர்ந்த வாவியென்றுங் கருத்து. மூன்றாமடியில், தடமெலாங்கலந்ததாமரை குவிந் தது கண்டு என்றும்இயைக்கலாம். வனிதை, வாவி-வனிதா, வாபீ என்னும் வடசொற்களின் திரிபுகள். விளக்கு - (பொருள்களை) விளங்கச்செய்வது; கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்துகெட்ட காரணக்குறி யென்றாவது,முத

னிலைதிரிந்த தொழிலாகுபெயரென்றுவது கொள்க. "தணிமலர்த்திருமகள் தயங்குமாளிகை, இணரொளிபரப்பிநின் றிருள்துரப்பன, திணிசுடர் நெய்யுடைத்தீவிளக்கமோ, மணிவிளக்கல்லன மகளிர்மேனியே" எனக் கம்பர் கூறியபடி மகளிர்மேனியாகியவிளக்கும் இரத்தினவிளக்கும் உண்மையால், அவற்றையொழித்து, நெய்யுடைத்தீவிளக்கமென்றற்கு, 'மெய்விளக்கு'என்றார்; இனி, வனிதையர் மெய்விளக்கெடுப்ப என்பதற்கு - மகளிர் தமதுபளபளக்கும் உடம்பாகிய விளக்கை வெளிக்காட்ட என்றும்,மகளிர் தமது உடம்பையும் விளக்கையும் காட்டுதலும் ஏந்துதலுஞ் செய்ய என்றும் உரைப்பாருமுளர். நகர்வட்டம் - வட்டவடிவமான நகர மென்றுமாம். (௮௯)

[இதுவும், அடுத்தகவியும் - குளகம்; விதுரன் கண்ணனை வணங்கி எழுந்தருளியகாரணத்தை வினவல்.]

௯0. உரகபுங்கவன்மணிமுடியொப்பனதீப
மிருமருங்கினுமாயிரமாயிரமேந்த
வரிசுமந்தபேராசனத்தழகுடனிருந்த
புரவலன்றனைப்புண்ணியவிதுரனும்போற்றி.

(இ - ள்.) உரக புங்கவன் - பாம்புகட்குத்தலைவனாகிய ஆதிசேஷனது, மணி முடி - மாணிக்கத்தை யுடைய சிரங்களை, ஒப்பன - ஒத்துவிளங்குவனவாகிய.தீபம்-திருவிளக்குக்களை,இரு மருங்கினும்-இரண்டு பக்கத்திலும், ஆயிரம் ஆயிரம் ஏந்த - பலஆயிரக்கணக்காக(ப் பரிவாரங்கள்) எடுத்துப்பிடிக்க, அரி சுமந்த பேர் ஆசனத்து - சிங்கந்தாங்கினதாகச் சித்திரித்துச்செய்யப்பட்ட பெரியபீடத்திலே,அழகுடன் இருந்த - பொலிவோடு எழுந்தருளியிருந்த, புரவலன்தனை - காத்தற்றொழிலில்வல்லவனான கண்ணபிரானை, புண்ணியம் விதுரனும் - நல்வினைகளையுடைய விதுரராசனும்,போற்றி-வணங்கி, (எ - று.)—'என்றான்' என அடுத்தகவியோடு தொடரும்.

புங்கவம் என்பதற்கு - ஆண்பசு [எருது] என்று பொருள்; காளை, சிங்கம், யானை, புலி முதலிய சொற்கள் - உயர்திணையில் வரும்பொழுது சிறப்புப்பொருளைக் குறிப்பன வாகுதலால், தலைவனென்கிற பொருளில் புங்கவனென்றது. உரகம்-(காலில்லாமையால்) மார்பினால்(நகர்ந்து) செல்வது; உரம் மார்பு. அகல்முதலியவற்றில் எரியும் தீசுவாலை ஆதிசேஷனுடைய சிரசிலுள்ள மாணிக்கங்களையொத்திருக்கு மென்க; உவமையணி. மணிமுடி என்பதை-முடிமணி என மாறுதல் பொருந்தும் 'ஆயிரமாயிரமேந்த' என்றும்பாடம். பரமபாகவதனாதலாலும், கண்ணபிரான்தன்வீட்டுக்கு எழுந்தருளும் பாக்கிய முடைமையாலும், 'புண்ணியவிதுரன்' என்றார். புரவலன் காத்தற்றொழிற்கடவுளென்றபடி; அரசனெனினுமாம. (௯0)

௯௧. பொங்கராவணைபொலிவறப்போந்தபின்பொதுவர்
தங்கள்பாடியில்வளர்ந்துமாமருதிடைத்தவழ்ந்து
கங்கைமாநதிகால்வழிகருணையங்கடலே
யிங்குநீதனிநடந்தவாறுரைத்தருளென்றான்.

(இ - ள்.) '(பாற்கடலிலே),—பொங்கு சிறந்தன்மையுள்ள, அரா - ஆதிசேஷனாகிய, அணை - திருப்பள்ளிமெத்தை, பொலிவு அற - (நீ இவ்வுலகத்தில் எழுந்தருளிவிட்டமையால்) விளக்கத்தை யொழியும்படி, போந்த பின் - (அங்குநின்று இங்குத்) திருவவதரித்தபின்பு, பொதுவர்தங்கள் பாடியில் வளர்ந்து - இடையர்களது சேரியான கோகுலத்திலே வளர்ந்தருளி, மா மருதிடை தவழ்ந்து - பெரிய இரட்டைமருதமரத்தின் நடுவிலே தவழ்ந்துசென்றவனும், கங்கை மா நதி கால் வழி - சிறந்த கங்காநதி திருவடியினின்று பெருகப்பெற்ற, கருணை அம் கடலே - அழகியகிருபாசமுத்

திரமே!—நீ இங்கு தனி நடந்த ஆறு உரைத்தருள் - நீ இவ்விடத்தில் [இப்பொழுது] தனியே எழுந்தருளின காரணத்தைக் கூறியருள்வாய்,' என்றான் - என்றுகூறினன், (விதுரன்); (எ - று.)

"பாற்கடலில் தங்குகின்ற திருமாலாகிய இந்நாராயணமூர்த்தி, ஆதிசேஷனாகிய பாயலை விட்டு மதுரைக்கு வந்தானன்றோ!" என்று கூறியுள்ளபடி, பாற்கடலிற் பாம்பணையிற் பள்ளிகொள்ளும்பரமனே திருவவதரித்ததனால் 'பொங்கராவணை பொலிவறப்போந்தபின்' என்றார்: இவ்வாறுகூறுவது, கடவுளின் அம்சமுழுவதும் அப்பாற்கடலி லில்லாமையா லென்க.

முதல்மூன்றுஅடிகள்-விதுரன் கண்ணபிரானைப் போற்றியபடி. போந்த என்பதில் பகுதியாகிய போ என்பதைப் புகு என்பதன் மரூஉ என்பர். பொதுவர்தங்கள்பாடி - திருவாய்ப்பாடி. திருமால் உலகமளந்தகாலத்தில் மேலே சத்தியலோகத்திற்சென்ற அப்பிரானது திருவடியைப் பிரமன் தன் கைக்கமண்டலதீர்த்தத்தாற் கழுவி விளக்க, அந்த ஸ்ரீபாததீர்த்தமாகப் பெருகிய நீரே கங்காநதி யென்பது. கருணையங்கட லென்றதற்கு ஏற்ப, 'கங்கைமாநதிகால்வழி' என்பது - ஒருசமத்காரம்; கால்-வாய்க்கால். பொங்கு - விளங்குகிற என்றுமாம். (௯௧)

[கண்ணன் தான் தூதுவந்ததை கூறுதல்.]

௯௨. தோட்டுவந்துசெந்தேனுகர்சுரும்புசூழ்தொடையாய்
காட்டுவந்துமுன்றிரிந்துதங்கடவநாள்கழித்து
நாட்டுவந்தபேரைவர்க்குநற்குருநாடு
கேட்டுவந்தனமென்றனன்விதுரனுங்கேட்டான்.

(இ - ள்) (அதுகேட்ட கண்ணபிரான்),—(விதுரனை நோக்கி), 'தோடு வந்து செம் தேன் நுகர் சுரும்பு சூழ் தொடையாய் - பூவிதழ்களில் வந்துசிவந்ததேனைப்பருகுகிற வண்டுகள் சுற்றிலும்மொய்க்கப்பெற்ற மாலையையுடையவனே!—முன் காடு உவந்து திரிந்து - முன்னே காடுகளில் மகிழ்ச்சிகொண்டு சஞ்சரித்து, தம் கடவ நாள் கழித்து - (முன்பு அஜ்ஞாதவாசத்தில்) தாங்கள் கழிக்கக் கடமைப்பட்டனவான நாள்களையுங் கழித்து, நாடு வந்த - (இப்பொழுது) மச்சதேசத்து உபப்பிலாவியத்தில் (வெளிப்பட்டு) வந்துள்ள, பேர் ஐவர்க்கு - ஐந்துபேருக்கு [பஞ்சபாண்டவர்க்கு], நல் குரு நாடு கேட்டு - சிறந்த குருநாட்டிற் பாகங்கேட்டற்கு, வந்தனம் - வந்தோம்,' என்றனன் - என்றுகூறியருளினன்; விதுரனும்—, கேட்டான் - (அதனை அன்போடு) கேட்டான்; (எ - று.)

'விதுரனுங்கேட்டான்' என வேண்டாதுகூறினது, அவன் பாண்டவரிடத்தில் மிக்க அன்புகொண்டுள்ளவனாதலால் கண்ணன்கூறியதைப் பேராவலோடு கேட்டுக் கொண்டாடினு னென்பதைக் குறிப்பிக்கும். முதலடியில் உவந்த எனப் பிரித்து - மகிழ்ந்து என்றும், இரண்டாமடியில் வந்து எனப்பிரித்து - சென்று என்றும் உரைத்தலுமாம். பேரைவர் - பெருமையையுடைய ஐவ ரென்றுமாம். கேட்டு - கேட்க என்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபு. (௯௨.)

[விதுரன் 'சமாதானத்தில் துரியோதனன் அரசுகொடான்' என்றல்]

௯௩. முழக்கினுலுயர்முரசுயர்த்தவன்றனக்குரிமை
வழக்கினாலறிந்தடலரவுயர்த்தகோன்வழங்கான்
றழக்கினாலிருதிசையினுமுரசெழச்சமரி
லுழக்கினாலலதுணர்வனோவென்றவனுரைத்தான்.

(இ - ள்.) (அங்ஙனம் கண்ணபிரான் கூறியதற்கு, உடனே),—அவன் - அவ்விதுரன்,—'அடல் அரவு உயர்த்த கோன் - கொடுமையை

யுடைய பாம்புக்கொடியை உயரஎடுத்த அரசனாகிய துரியோதனன், முழக்கினால் உயர் முரசு உயர்த்தவன்தனக்கு - ஆரவாரத்தால்மிக்க முரசின்வடிவையெழுதியகொடியைஉயரவெடுத்தவனாகியயுதிட்டிரனுக்கு, உரிமை-உரிய இராச்சியபாகத்தை, வழக்கினால் அறிந்து-நீதிப்படி உணர்ந்து, வழங்கான்-கொடுக்கமாட்டான்; நால் இரு திசையினும்-எட்டுத்திக்குக்களிலும்,முரசு-பேரிகைகள், தழக்கின் - ஆரவாரத்துடனே, எழ - மிக்குத்தோன்ற, சமரில் - போரில், உழக்கினால் அலது - கலக்கினாலல்லாமல், உணர்வனோ - (அவன்) அறிவானோ? (அறியான்),'என்று உரைத்தான் - என்று (துரியோதனன்தன்மையை எடுத்துக்) கூறினான்; (எ - று.)

துரியோதனன் முறைப்படி நடவாதவனென்பது அவனது கொடியிலேயே விளங்குமென்பான், அத்துரியோதனனை 'அடலரவுயர்த்தகோன்' என்றான்; இவ்வாறு விசேஷ்யத்தை ஒருகருத்துப்படச்சொல்வது, கருத்துடையடைகோளியணியாம். முழக்கு, வழக்கு, தழக்கு - முழங்கு,வழங்கு, தழங்கு என்னும் முதனிலைகள் திரிந்த தொழிற்பெயர்கள். உழக்கினால், உழஎன்பதன்பிறவினையான உழக்கு - பகுதி. உரிமை - உரியபொருளுக்குப் பண்பாகுபெயர். நாலிருதிசை - பண்புத்தொகை: நான்குபெருந்திக்குக்களும், நான்குமூலைத்திக்குக்களும். வழக்கு - மூத்தவனுக்கு அரசுஉரியது என்பதும், 'பன்னிரண்டுவருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஜ்ஞாதவாசமுஞ் செய்துவந்தால் உரியபாகத்தைக்கொடுப்பேன்' என்று கூறிய சொல் தவறாமல் முன்கொடுத்ததை மீண்டுங் கொடுத்தல் வேண்டுமென்பதும் என்க. உணர்வனோ, ஓ - எதிர்மறை. (கூ௩)

[கண்ணன் 'அரசுகொடாவிடின் பாண்டவர் போரினாற் பெறுவர்'என்றல்.]

கூ௪. வாளைவாவியிலுகண்டெழவளரிளங்கமுகின்
பாளைவாயளிமுரன்றெழும்பழனநாடுடையா
னாளைவாழ்வவர்க்களித்திலனெனிலெதிர்நடந்து
மூளைவாயுகமுடிப்பர்வெம்போரெனமொழிந்தான்.

(இ - ள்.) (அதுகேட்டுக் கண்ணபிரான்), 'வாளை - வாளைமீன்கள், வாவியில் - நீர்நிலைகளிலே, உகண்டு எழ - துள்ளியெழும்புதலினால், வளர் இளங்கமுகின் பாளைவாய்-(அருகில்)வளர்ந்துள்ள இளமையான பாக்குமரங்களின் பாளைகளிலுள்ள, அளி - வண்டுகள், முரன்று எழும்-ஒலித்து எழப்பெற்ற, பழனம் நாடு - கழனிகளையுடைய குருநாட்டை, உடையான் - (தனதாக) உடையவனாகிய துரியோதனன், நாளை - நாளைக்கு, வாழ்வு - செல்வவாழ்க்கையை [இராச்சியபாகத்தை], அவர்க்கு-அப்பாண்டவர்கட்கு, அளித்திலன் எனில் - கொடானானால்,—(அந்தப் பாண்டவர்கள்), எதிர் நடந்து - எதிர்த்துவந்து, மூளை வாய் உக - (அத்துரியோதனாதியர்களது) மூளைகள் வாய்வழியே சிந்தும்படி,வெம் போர் - கொடியயுத்தத்தில்,முடிப்பர் - (அவர்களை) அழித்திடுவார்கள்,' என - என்று, மொழிந்தான் - கூறியருளினான்; (எ - று.)

முன்னிரண்டடி - மருதநிலவருணனை. வாவி, கமுகு - வாபீ,க்ரமுகம் என்ற வடசொற்களின் திரிபுகள். கமுகம்பாளையில் வண்டு ஒலித்தெழுதற்கு, வாவியில் வாளை குதித்தெழுதல் காரண மாதலால், எழ என்னுஞ் செயவெனெச்சம் - இறந்தகாலம். உகண்டு, முரன்று என்பவற்றில்—உகள், முரல் - பகுதிகள். நாளை - எதிர்காலங்குறிப்பதோரிடைச்சொல்; இனி விரைவில் என்றபடி. 'அவர்க்கு' என்றதிலுள்ள அகரம் - நெஞ்சறிசுட்டு; அன்றி, பிரசித்தியைக் காட்டுவதுமாம். மூளை - ஒருவகைக்கிணம். (கூ௪)

[கண்ணன் 'அரசுகோடாமை உலகவியல்பே' என்றல்.]

கூரு. விரைந்துபாய்பரிமன்னவரிதம்படமெலிவுற்
றிரந்துவேண்டினுங்கிளைஞருக்கொருபொருளீயார்
பரந்தபோரினிலெதிர்த்தவர்படப்படப்பகழி
துரந்தபோதவர்க்குதவுவர்சொன்னவையெல்லாம்.

(இ - ள்.) விரைந்து பாய் பரி மன்னவர் - துரிதப் பட்டுப் பாய்ந்து செல்லுகிற குதிரைகளையுடைய அரசர்கள்,—மெலிவு உற்று இதம் பட இரந்துவேண்டினும்-(உறவினர்)தளர்ச்சியடைந்துஇனிமைபொருந்த(த்தம்மை) யாசித்துப் பிரார்த்தித்துக்கேட்டாலும், கிளைஞருக்கு - அவ்வுறவினர்க்கு, ஒரு பொருள் ஈயார் - சிறிதுபொருளையுங் கொடுக்கமாட்டார்கள்; அவர் - அவ்வுறவினர்களே, எதிர்த்து - (தம்மை) எதிரிட்டு, பரந்த போரினில் - மிக்க யுத்தத்திலே, பட பட - (தம்மீது)மேன்மேற் படும்படி, பகழி - அம்புகளை, துரந்த போது - பிரயோகித்த பொழுது, அவர்க்கு அவர்களுக்கு, சொன்னவை எல்லாம் - (அவர்கள்) சொன்ன பொருள்களையெல்லாம், உதவுவர்-கொடுத்திடுவோர்கள்; (எ - று.)—இதுவும்,அடுத்தகவியும்-ஒருதொடர்.

இது-உலகத்திற் பெரும்பான்மையான இயற்கையை மன்னவர்மேல் ஏற்றிக்கூறியது.உறவினர்கள் இரந்துகேட்டால் கொடுப்பதில்லை; அவர்கள் தங்கட்கு அம்புகளால் இரணங்கொடுத்தால் கேட்டவைகொடுப்பார்கள் என்ற இக்கருத்தில் மாறுநிலையணி காண்க. "பெற்றோர் பிறந்தார் பெருநாட்டார்பேருலகில்,உற்றாருகந்தாரெனவேண்டார்-மற்றோர்,இரணமகொடுத்தாலிடுவ ரிடாரே, சரணமகொடுத்தாலுந் தாம்" என்ற செய்யுளும் இக்கருத்துக்கொண்டதே. படப் பட - அடுக்கு, இடைவிடாமைப்பொருளது. எதிர்த்தவா படப்பட-எதிர்த்தவர்கள் மிகுதியாக அழியும்படி யென்றுமாம். இனி, எதிர்த்தவர் துரந்தபோது என இயைத்து உரைத்தலுமாம். இதம் - ஹிதம்: வடசொல். சொன்னவை - இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும்பெயர். (கரு)

[கண்ணபிரான் கண்வளர்தல்]

கூசு. என்றுபாரினிலியற்கையும்விதுரனுக்கியம்பி
வென்றுபோர்கெழுநேமியான்விடைகொடுத்தருளிக்
குன்றுபோற்புயக்காவலர்கொடுந்துடிகறங்க
மன்றலுண்மலர்ப்பாயலின்மீதுகண்வளர்ந்தான்.

(இ - ள்.) என்று பாரினில் இயற்கையும் விதுரனுக்கு இயம்பி - என்று இவ்வாறு உலகத்திலுள்ள இயல்பையும் விதுரனுக்குக் கூறி,—போர் வென்று கெழு நேமியான்-போரில் வெற்றிகொண்டு விளங்குகிற சக்கராயுதத்தையுடையவனான கண்ணபிரான்,—விடை கொடுத்து அருளி - (அவ்விதுரனுக்குச) செலவுகொடுத்தனுப்பிவிட்டு,—குன்று போல் புயம் காவலர் கொடுந் துடி கறங்க - மலைகள்போன்ற தோள்களையுடைய காவலாளர்கள் கொடிய (ஒலியையுடைய) துடியென்னும் வாத்தியத்தை ஒலிக்க, மன்றல் நாள் மலர் பாயலின்மீது கண்வளர்ந்தான்-பரிமளத்தையுடைய அன்று மலர்ந்த மலர்களைக்கொண்டு பரப்பப்பட்ட படுக்கையின்மேற் பள்ளிகொண்டருளினான்; (எ - று.)

உம் - எச்சம். மூன்றுமடியிற் கூறியது,இரவில் துயில்கொள்ளவேண்டிய பொழுது வந்தமைக் குறித்தற்கு அடையாளமாக வாத்தியம் வாசிக்கப்படுதலை. முற்காலத்தில் அரண்மனைகளில் அவ்வக்காலங்கள் வந்தமையை அரசர்கள் அறியுமாறு வாத்தியமுழக்கத்தால்அறிவித்தல்,மரபு. கொடுந்துடி-கோமான [மிக்க] தொனியையுடைய துடி யென்க; இனி, கண்ணபிரா

னிருக்குமிடத்திலொலிப்பதால், பாண்டவதூதனுய்வந்த அப்பிரானிடத்தும் பகைமைகொண்டுள்ள துரியோதனுதியர்க்குக் கொடிய துடி யென்றலும் ஒன்று; ஒலியின் தன்மையை வாத்தியத்தின்மேலேற்றிக்கூறிய உபசாரவழக்கு: இனி, வளைந்த துடி யென்பாரு முளர். மன்றல் - வாசனை. நாள் மலர் - புதியமலர். மலர்ப்பாயல் - புஷ்பசயநம்; இது, விதுரன் கண்ணபிரானுக்காக அமைத்த தென்க. கண்வளர்தல் - ஒருசொல். (கூகூ)

[இது - இராத்திரிகால வருணனை.]

கூஎ. குளிருமாமதிமுகத்தொளிர்குமுதவாய்மலர்த்தித்
தளவவாணகைபரப்பிவண்சததளமலர்க்கை
யளவிலேகுவித்தளியொடுமகன்றிலாமையினுற்
களிகொடோள்விலைக்கணிகையைப்போன்றதக்கங்குல்.

(இ - ள்.) குளிரும் மா மதி முகத்து ஒளிர் குமுதம் வாய் மலர்த்தி - குளிர்ச்சியாகவுள்ள பெரிய பூர்ணசந்திரன் போன்ற தனது முகத்திலே விளங்குகிற செவ்வாம்பல்மலர்போன்ற வாயைத் திறந்து [குளிர்ந்த பெரிய சந்திரமண்டலத்தினெதிரிலே விளங்குகிற ஆம்பலரும்புகளின் நுனியை மலரச்செய்து], தளவம் வாள் நகை பரப்பி-முல்லையரும்புபோன்ற பிரகாசமான பற்களி னொளியைப் புன்சிரிப்பினுற்பரவச்செய்து [முல்லைமலர்களின் ஒள்ளிய விளக்கத்தை வெளித்தோற்றி], வள் சததளம் மலர் கை அளவிலே குவித்து அளியொடும் அகன்றிலாமையினல் - அழகிய தாமரைமலர் போன்ற (தன்) கையை (ப்பொருள்வந்த) அளவிலே குவியச்செய்து (வெளித்தோற்றத்துக்கு) அன்போடு நீங்காமையால் [அழகிய தாமரைமலரினிடத்தை (வண்டுகள் வந்து சேர்ந்த) அளவிலே குவியச்செய்து அவ்வண்டுகளோடும் நீங்காமையால்], அ கங்குல் - அவ்விராத்திரி, களி கொள் தோள் விலை கணிகையை - (பொருள்கொடுப்பவர் பலருந் தழுவிக்) களிப்புக்கொள்ளுதற் கிடமான தோள்களையுடைய வேசையை, போன்றது - ஒத்தது; (எ - று.)

இப்பாட்டு - சிலேடையுவமையணி. இதில், முதல் மூன்றடி - விலைமகளுக்கும், இரவுக்கும் சிலேடையாக இருபொருள் பட்டது. அளி - அன்பும் வண்டு மாதலை "வண்டின்பெயரு மதுவுங்கொடையும், அன்புங் கூறும் அளியென் கிளவி" என்ற திவாகரத்தாலும் அறிக. அளி - அன்பைக்குறிக்கையில் தமிழும், வண்டைக்குறிக்கையில் ஸம்ஸ்கிருதமுமாம். தனது முகமண்டலத்திலுள்ள அதரத்தி னழகை வெளிக்காட்டி மினுக்குதலும், வாய்மலரைத்திறந்து பல்லினழகுதோன்றப் புன்சிரிப்புச்செய்தலும், சமயம்பார்த்துக் கைநீட்டிப் பணம்பறித்தலும், மனத்திற் சிறிதும் அன்பில்லாதிருந்தும் பொருள்காரணமாக வெளியில் அன்பை மிகுதியாகக்காட்டுதலும் ஆகிய வேசையரியல்புகளும்;சந்திரனுதித்தமாத்திரத்தில் ஆம்பல் மலர்தலும், முல்லைமலர் விளங்குதலும், தன்னில்மொய்த்த வண்டோடு தாமரைகுவிதலும் ஆகிய இரவின் இயல்புகளும் இதில் விளங்கும். வேசைக்கு ஆகும்பொழுது, அளியொடும்அகன்றிலாமையினல் என்பதற்கு - அன்பினுடன் பரவாமையால் என உரைப்பினும் பொருந்தும். வடமொழியிற் பெண்பாற்சொல்லும் பலர்க்கும்பொதுவு மாகிய இரவைப் பொதுமகளாக வருணித்தல் மிகப் பொருந்துமாறு காண்க. குமுதம், தளவம் - அவற்றின் மலர்களுக்கு முதலாகுபெயர். குமுதம் - வடசொல். தளவம் - தளவு என்பதன்மேல், அம் - சாரியை. வாள் என்பது - ஒளியையுணர்த்தும்பொழுது, உரிச்சொல்லாம்; 'வாளொளியாகும்" என்பது தொல்காப்பியம். சததளம் என்பதற்கு - நூறு[மிகப்பல] இதழ்களை யுடைய தென்றும்,கணிகாஎன்பதற்கு-(செல்வத்தையே எப்பொழுதும்) விரும்பி எண்ணுபவ ளென்றும் காரணப்பொருள்;

இவை - வடசொற்கள். விலைக்கணிகை - தனது இன்பத்தைப் பொருளுக்கு விற்றலையுடைய கணிகை. விலை - தொழிற்பெயர்; வில் - பகுதி, ஐ - விகுதி. வேசைக்கு ஆம்பொழுது,சததளமலர்க்கை அளவிலே குவிதது என்பதற்கு - வருபவர்அளவிற்கேற்பத் தனதுகையைக் கூப்பி யுபசரித்து என்றலு மொன்று. சததளம் - நூறாகிய இதழை யுடைய தெனப் பண்புத்தொகையன் மொழி. (௧௭)

[இருள்நீங்கிக் கீழ்வானம் வெளுக்கச் சூரியகிரணங்கள் வெளித் தோன்றுதல்.]

௧௮. அளைந்தவாரிருட்கடல்பொறுதொருபுடையண்டம்
பிளந்ததாமெனக்கரும்படாம்பீறியதென்ன
வளைந்தவேழ்கடல்வற்றமேல்வடவையின்முகத்தீக்
கிளர்ந்ததாமெனக்கிளர்ந்தனவிரவியின்கிரணம்.

(இ - ள்.) அளைந்த - (எங்கும்) பரவிநிறைந்த, ஆர் இருள் - போக்குதற்கு அரிய இருட்கூட்ட மாகிய, கடல் - கடல்வெள்ளத்தை, பொறுது - பொறுக்கமாட்டாமல், அண்டம் - இவ்வண்டகோளம், ஒரு புடை - ஒருபக்கத்தில்[கீழ்த்திசையில்என்றபடி],பிளந்தது ஆம் என - பிளந்ததுபோலுமென்றுசொல்லவும்,—கரும் படாம் பீறியது என்ன - கருநிறமுடையதொரு பெருஞ்சீலை (ஒருபக்கத்திற்) கிழிந்ததுபோலு மென்று சொல்லவும்,—வளைந்த ஏழ் கடல் வற்ற-(உலகத்தைச்)சூழ்ந்துள்ள ஏழுகடல்களும் வற்றும்படி, வடவையின் முகம் தீ-படபாமுகாக்கினி,மேல் கிளர்ந்தது ஆம் என-மேலே எழுந்ததுபோலு மென்று சொல்லவும்.இரவியின் கிரணம் - சூரியனது கிரணங்கள், கிளர்ந்தன - வெளிவிளங்கின; (எ - று.)

பின்மாலைவேளையில் கன்னியிருள் மிக்கிருக்கையில் திடீகென்று கீழ்வானமவெள்ளென்னச் செஞ்சுடர்ஞாயிற்றின்கிரணங்களிற்சில முன்னர்த் தோன்றுதலை இங்ஙனம் வருணித்தார்; தற்குறிப்பேற்றவணி. முன்னிரண்டடிகள் - இருள்நீங்கக் கீழ்வானம் வெளுத்தலையும், பின்னிரண்டடிகள்- சூரியனுதிப்பதற்கு முன்னமே சூரியகிரணங்களிற்சில தோன்றுவதையும் கூறியன. படாம்-படமென்னும் வடசொல்லின் திரிபு. வடவை படபாஎன்னும்வடமொழியின்சிதைவு; பெண்குதிரையென்று பொருள். கடலினிடையிலே ஒருபெண்குதிரையின்முகத்தில் நெருப்புஉள்ளதென்றும், அதுமழை முதலியவற்றால்வருகிற நீரினால் கடல் பொங்காதபடி அந்நீரை உறிஞ்சுவதென்றும், யுகாந்தகாலத்தில் அது அங்குநின்று எழுந்து உலகங்களையெரித்தொழிப்பதென்றும நூற்கொள்கை.அண்டம், ரவி, கிரணம்-வடசொற்கள். அண்டம்-உலகவுருண்டை. ஆர் இருள் நிறைந்தஇருளுமாம். கிரணம்-பால்பகாஅஃறிணைப்பெயர். சூரியனுடைய பலகிரணங்கள் வெளித்தோன்றுமாதலால் 'கிளர்ந்தன'எனப் பன்மையாற் கூறினர்.'இரவியின் கிரணம் கிளர்ந்தன' என்பதற்கு அருணோதயமாயிற்று எனக் கருத்துக் கூறலாம். (௧௮)

[சூரியோதய வருணனை.]

௧௯. இகலும்வாளரவுயர்த்தவனிருந்ததொல்பதியி
லகிலநாயகனொருதனிநடந்தவாறறிந்து
மகரவாரிதியகன்றுமாமருங்குறவணைந்த
திகிரிபோலவந்தெழுந்தனனிரவிகீழ்த்திசையில்.

(இ - ள்.) இகலும் - பகைக்குந் தன்மையுள்ள, வாள் அரவு உயர்த்தவன் - கொடிய பாம்புக்கொடியை உயரவெடுத்தவனாகிய துரியோதனன், இருந்த - அரசவீற்றிருக்கப்பெற்ற, தொல் பதியில்-பழமையான அத்திநாபுரியிலே, அகிலம் நாயகன் - எல்லாப்பொருள்கட்குந் தலைவனாகிய திரு

மால், ஒரு தனி நடந்த ஆறு - ஒருதுணையுமில்லாமல் தனியனாய்ச்சென்று சேர்ந்த விதத்தை, அறிந்து—, மகரம் வாரிதி அகன்று மா மருங்கு உற அணைந்த - சுறாமீன்களையுடைய கடலினின்று நீங்கி(அக்கண்ணபிரானது) சிறந்த பக்கத்தில் வந்து சேர்தற்குச் சமீபித்த, திகிரி போல - (அக்கடவுளது சுதரிசனமென்னும்)சக்கராயுதம்போல,இரவி-சூரியன், கீழ் திசையில் வந்து எழுந்தனன் - கிழக்குத்திக்கில் வந்து உதித்தான்; (எ - று.)

சூரியன் உதிப்பதற்குச் சிறிதுமுன்னமே அவனது கிரணங்களிற் சில வெளித்தோன்றுவதை முற்செய்யுளாற் கூறி, இச்செய்யுளாற் சூரியனே உதயமாயினமையைக் கூறுகிறார் திருமாலினதுசக்கரத்தின் அம்சமான சூரியனுக்கு அச்சக்கரத்தை உவமைகூறி வருணித்தல், மிகப்பொருந்தும்; "செஞ்சுடரோன், திருமால்திருக்கைத் திருச்சக்கர மொக்கும்" என்றார் ஆழ்வாரும். அன்றியும், எங்கும் உபமேயத்தினும் உபமானம் சிறந்திருக்க வேண்டுமென்கிற அலங்காரநூலார்கொள்கையின்படி,இங்கு, கோடிசூரிய பிரகாசமானதிகிரி இரவிக்கு உவமையாதற்கு ஏற்குமாறு காண்க. ("தென்னலங்கையிற்கொண்ட தென்னேயே நேமியாக வந்நீலமேனியா, னின்னமும்பொரத் தேடு மாகவத் தின்றுமென்றுசெங் கண்ணியேகொலோ, தன்னெடுந்தனிச்சயிலமும் பொலந் தபனியத்தடஞ் சயிலமாகவே, மின்னெடுஞ்செழுங்கதிர் பரப்பினன் வெய்யவேழ்பரித்தேர்விபாகரன்" என மேல் வீட்டுமபருவத்தில் சூரியோதயவருணனை கூறுவதையும் அறிக.) எம்பெருமானுக்குப்பகையாகுமவரை உடனே அழித்தற்குச் சமயத்தை எதிர்நோக்கிக் காத்திருக்கிறசக்கரம்,அத்திருமால் கிருஷ்ணாவதாரத்தில் பகைவனான துரியோதனனது ஊர்க்குத் தனியேசென்றதை அறிந்து முன்னாக்கிரதையாக ஓடிவந்து அவனருகிற் சேர இருந்தாற்போன்றது, சூரியமண்டலம் எனக் குறித்தார்; இதுவும் - தற்குறிப்பேற்றவணியே.

ஒருதனி - தன்னந்தனியென்பதுபோலத் தனிமைச்சிறப்பையுணர்த்தும் ஒருபொருட்பன்மொழி. தமையன்தம்பிமாராயினும். புத்திரபவுத்திராதியராயினும், பாண்டவராயினும் உடனில்லாமலென்றபடி; கீழ் எடு - ஆங் கவியிலும் இங்ஙனமே கொள்க. சுறாமீன் கடலில்மாத்திரமே வாழ்தல் பற்றி, 'மகரவாரிதி' என அது கடலுக்கு அடைமொழியாக்கப்பட்டது; இதனை 'மகராலயம்' என்னும் கடலின் வடமொழிப்பெயராலும் அறிக மாமருங்கு என்பதில், வலப்பக்கமென்ற கருத்தும் அடங்கும். கிழக்கு + திசை = கீழ்த்திசை:நிலைமொழி ஈற்றுயிர்மெய்யும் ககரவொற்றும் அகரவுயிரும் கெட்டு முதல்நீண்டது; [நன் - உயிர் - ௩௬.] ("அரியதானவர்க்கடிந்த வைம்படையும் புடைதயங்க. . ...பாற்கடலுட் பருமணிச்சூட், டாயிரவாய்ப்பாம்பணைமே லறிதுயிலினினிதமர்ந்தோய்" என்றபடி திருமால் திருப்பாற்கடலில் பஞ்சாயுதங்களும் புடைசூழ்ந்து காப்பப் பள்ளிகொள்ளுதலால்,அப்பாற்கடலைவிட்டு இங்குத திருவவதரித்தபோது சக்கரமும் வேண்டியசமயத்தில் உதவுமாறு அக்கடலைவிட்டு அகன்றுவந்த தென்னுங் கருத்துப்பட 'மகரவாரிதியகன்று' என்றார். (௬௬)

வேறு.

[இது முதல் நான்குகவிகள் - அன்றைக்குத் துரியோதனன் கொலுமண்டபத்தில் அரசுவீற்றிருந்தற்சிறப்புக் கூறப்படுகின்றது.]

௬௦௦. சோதிவானதிமைந்தனும்பழையசுருதியாலுயர்துரோணனு
மாதியாகவுயிரினும்வியப்புறவடுத்தமன்னவரநேகரு
நீதியாறுவகையைந்துபத்தொடாறுபத்தொராயிரவர்கிருபருந்
தீதிலாததிறலக்குரோணிபதினொன்றுபெற்றமிகுசேனையும்.

இது முதல் ஐந்துகவிகள் - குளகம்.

(இ - ள்.) சோதி-ஒளியையுடைய, வானம் நதி மைந்தனும்-ஆகாயத்தி லுள்ள கங்காநதியின் து குமாரனான வீமேனும், பழைய சுருதியால் உயர் - அசரதியான வேதங்களை யறிதலாற் சிறந்த, துரோணனும்—, ஆதி ஆக - முதலாக, உயிரினும் வியப்பு உற - (துரியோதனனுக்குத் தன்) உயி ரினும் (சிறந்தவரென்று) அதிசயிக்கும்படி, அடுத்த - நெருங்கியுள்ள, மன் னவர் அநேகரும் - அரசர்கள்பலரும், நீதி - முறைமையையுடைய, ஆறு வகை ஐந்து பத்தொடு அறுபத்தொராயிரவர் நிருபரும் - மூன்றுலட்சத்து அறுபத்தோராயிரம் அரசர்களும், தீது இலாத திறல் - குற்றமில்லாத வலி மையையுடைய,அக்குரோணிபதினொன்றுபெற்ற மிகு சேனையும்-பதினொரு அக்ஷௌஹிணி யென்னுந் தொகையைப் பெற்ற மிகுந்த சேனைகளும், (எ - று.)—'வந்து சூழ' என மேற்கவியில் தொடரும்.

சோதி - க்ஷத்திரிய தேஜசு; "உறங்குமாயினு மன்னவன்றன்னொளி, கறங்குதெண்டிரை வையகங் காக்குமால்" எனக் கூறியபடி தாம் உறங்கு கையிலும் உலகத்தைக்காக்கின்ற அரசரது தெய்வத்தன்மையோடு கூடிய ஒளி யென்க; இனி, புகழ் என்றுங் கொள்ளலாம். ஜ்யோதிஸ்-வடசொல். வேதம் - பிறநூல்கள் போல ஒருவராற் செய்யப்படாமல் கடவுளால் வெளியிடப்படுதல்மாத்திரமாய்க் கடவுளைப்போலவே நித்தியமாய் என்றும் ஒருபடிப்பட இருத்தலால், 'பழையசுருதி' எனப்பட்டது. உயிரினும் வியப் புற - ஒவ்வொருபிராணிக்கும் தன்தன் உயிரினிடத்தில் எவ்வளவு அன்பு இருக்குமோ அதனினும் அதிகமாகத் துரியோதனனுக்கும் இவ்வரசர்களுக் கும் ஒருவர்க்கொருவர் அன்பு உள்ள தென்க. ஆறுவகையைந்துபத்தொ டறுபத்தொராயிரவர்—ஐந்துபத்து-ஐந்தாகிய பத்து என ஐம்பது:ஆறுவகை யைந்துபத்து - ஆறினாற் பெருக்கப்பட்ட ஐம்பது என முந்நூறு; முந்நூறா யிரவரும், அறுபத்தொராயிரவரும் எனத் தனித்தனி இயைக்கவே, மூன்று நூறாயிரத்து அறுபத்தொரு ஆயிர மென்னுந் தொகையையுடையராயிற்று; இனி, நீதியாறுவகை - அறுவகை முறைமைகளையுடைய, ஐந்துபத்தொடு அறுபத்தொராயிரவர்-ஐம்பது ஆயிரத்தோடு அறுபத்தொரு ஆயிரங் கூடிய லட்சத்துப்பதினோராயிரம் பேர் என்று உரைப்பாருமுளர். மூன்றாமடி யின் கருத்து. மிகப்பலரென்பதே. ஆறுவகை நீதி - ஓதல், வேட்டல், ஈதல், உலகோம்பல், படைபயிற்றல், பொருதல் என்னும் அரசறுதொழி லென் றேனும்; அறநிலையறம், மறநிலையறம், அறநிலைப்பொருள், மறநிலைப்பொ ருள், அறநிலையின்பம், மறநிலையின்பம் என்னும் அரசியலா றென்றேனும்; அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்னும் ஆறுஅங்க மென் றேனுங் கொள்க. திறலுக்குத் தீது - தோல்வி. அநேகர் - ஒன்றல்லாதவர்; எனவே, பலர்: ந+ஏக எனப் பிரிந்து புணரும். அக்குரோணி - அக்ஷௌ ஹிணி என்னும் வடசொல்லின் சிதைவு; அது - தேர் இருபத்தோராயிரத் தெண்ணூற்றெழுபது, யானை - இருபத்தோராயிரத்தெண்ணூற்றெழுபது, குதிரை - அறுபத்தையாயிரத்தறுநூற்றுப்பத்து, காலாள் - லக்ஷத்தொன்பதி னாயிரத்துமுந்நூற்றைம்பது; ஆக, இரண்டுலக்ஷத்துப்பதினெண்ணாயிரத் தெழுநூறு கொண்டது.

இதுமுதல் நாற்பத்தொருகவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந் தாஞ் சீர்கள் மாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறுஞ் சீர்கள் விளங்காய்ச்சீர் களும், ஏழாவது விளச்சீரு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீ ராசிரியவிருத்தங்கள். (௬௦௦)

௬௦௩. தொக்கவெண்கவரி யாலவட்டநிரைசொட்டைவாள்பரி சைதுகிலுடன்,கைக்களாசியிவைகொண்டுலாவிவருகன்னிமங்கையர்

களனைவரு, மிக்கவேதியர்கள்வல்லபல்கலைவிதத்திலுள்ளவர்கள்யா வருந், தக்கதம்பியரும்வந்துசூழவுயர்தரணிமேனிருபர்தம்பிரான்.

(இ - ள்.) தொக்க - (கற்றையாக) அடர்ந்துள்ள, வெள் கவரி - வெண் ணிறமான சாமரங்களும், ஆலவட்டம் நிரை - ஆலவட்டங்களின் வரிசை களும், சொட்டை - வளைதடிகளும், வாள் - வாளாயுதங்களும், பரிசை - கேடகங்களும், துகிலுடன் - விருதுக்கொடிச்சீலைகளும், கை களாசி - கை யிற்கொள்ளுதற்குஉரிய படிக்கங்களும், இவை - (என்னும்) இவற்றை, கொ ண்டு - கைகளில் எடுத்துக்கொண்டு, உலாவி வரு - ஒழுங்காக நடந்து வரு கிற,கன்னி மங்கையர்கள் அனைவரும்-மணம்பெறாதஇளம்பெண்கள்பலரும், மிக்க வேதியர்கள் - மிகுந்த வேதம்வல்ல அந்தணர்களும், வல்ல பல் கலை விதத்தில் உள்ளவர்கள்-தாம்தாம்வல்ல அநேக வகையான சாஸ்திரங்களின் பகுப்புக்களில் தங்கியுள்ளவர்களும், யாவரும் - மற்றும் எல்லோரும், தக்க தம்பியரும்-(தனக்குத்)தகுந்த தம்பிமார்களும், வந்து சூழ - வந்துதன் னைச்சுற்றிலுமிருக்க, உயர் தரணிமேல் நிருபர்தம் பிரான் - சிறந்தபூமியிலு ள்ள அரசர்களுக்கெல்லாந் தலைவனான துரியோதனன்,—(எ - று.)—'வாச வன்கொலெனவைகினான்' என அடுத்தகவிக்குஅடுத்தகவியோடு இயையும்.

ஆலவட்டம் - கால்செய்வட்ட மென்பர்; வட்டவடிவமான ஒருவகைப் பெருவிசிறி. பரிசை-தன்மேற் பிரயோகிக்கப்படும் ஆயுதங்களைத் தடுத்தற் குப் பிடிக்கும் ஒருகருவி. மங்களகரமாகச் சிலவஸ்திரத்தைச் சுருக்கிப் பிடி க்கும் மரபும் உண்டு. களாசி - தாம்பூலம் முதலியவை ஏந்தும் ஒருவகைப் பாத்திரம். கைக்களாசி சிறுகளாசியுமாம். கன்னி - கந்யா என்னும் வட சொல்லின் திரிபு. தம்பிமார்களும் தமையன்போலவே கொடுமையிற் சிறந் தவராதலால், 'தக்க தம்பியர்' என்றது. (௪0௪)

௪0௨. நிரைகதிர்க்கனகநீள்சுவர்ப்பவளவுத்திரத்திடைநிரைத்த வொண், பருமணிக்கிரணபற்பராகவயிரத்துலாமிசைபரப்பிவெண், டரளவர்க்கவயிடூரியப்புதியகோமளப்பலகைதைத்துமா, மரகதத்தி னொருகோடிதூணிரையமைத்தமண்டபமருங்கரோ.

(இ - ள்.) நிரை - தொகுதியான, கதிர்-ஒளியையுடைய, கனகம்-பொ ன்னினாற்செய்யப்பட்ட, நீள் சுவர் - நீண்டசுவர்களின்மேல், பவளம் உத்தி ரத்துஇடை-பவழத்தாற்செய்யப்பட்ட உத்திரங்களுக்கு இடையிடையிலே, நிரைத்த - ஒழுங்காக அமைக்கப்பட்ட, ஒள் பரு மணி கிரணம் பற்பராகம் வயிரம் துலாம்-ஒளியுள்ள பருத்தமாணிக்கங்களாலும்ஒளியையுடையபதும ராகமென்னும் இரத்தினங்களாலும் வயிரக்கற்களாலும் அமைந்த வரிச் சல்களை, மிசை பரப்பி - மேலே பரம்பவைத்து, வெள் தரளம் வர்க்கம் - வெண்மையான முத்துக்களின் திரள்களாலும், வயிடூரியம் - வைடூரியமெ ன்னும் இரத்தினங்களாலும் (செய்யப்பட்ட), புதிய கோமளம் பலகை - புதுமையான அழகிய பலகைகளை,தைத்து - பதித்து, மா மரகதத்தின்-சிற ந்த மரகதரத்தினத்தா லாகிய, ஒரு கோடி தூண் - ஒரு கோடி தூண்களை, நிரை அமைத்த - வரிசையாகநிறுத்தப்பட்டுள்ள, மண்டபம் மருங்கு - சபா மண்டபத்தினிடத்திலே,—(எ - று.)—'வைகினான்' என அடுத்தகவியோடு இயையும். அரோ - ஈற்றசை.

இங்ஙனம் பொன்னாலும் நவரத்தினங்களாலுமே அமைந்துள்ளது மண்டபமெனச் செல்வச்சிறப்பைவருணித்ததனால்,வீறுகோளணி. துலாம்- இங்கு,உத்திரத்தின்உறுப்பு. நிரைத்த-அளவொத்துஅமைந்த என்றபடி. பவ ளம், பற்பராகம், வயிரம், தூண் இவற்றை - ப்ரவாளம், பத்மராகம், வஜ் ரம்,ஸ்தூணுஎன்னும் வடசொற்களின் சிதைவென்பர். கனகம்,தரளம்,கோம

ளம், கோடி - வடசொற்கள். வைடூர்யமென்னும் வடமொழி, முதற்போலி பெற்றது. பத்மராகமென்னும் வடசொல்லுக்கு-(செந்) தாமரை மலர்போலச் செந்நிறமுடையதென்று பொருள். துலாம் - கைத்துண்டமாம். (௪0௨)

௪0௩. முட்டநித்திலநிரைத்தபந்தரினகைத்தசீரரிமுகத்தகால், வட்டமெத்தைகொடமைத்தபீடமிசை வாசவன்கொலெனவைகினான், பட்டவர்த்தனருமகுடவர்த்தனருர்வந்துசேவடிபணிந்தபினிட்டபொற்றவிசின்முறைமையாலினிதிருக்கவென்றவரையேவியே.

(இ - ள்.) முட்ட - மிகநெருங்கும்படி, நித்திலம் நிரைத்த - முத்துக்களை ஒழுங்காகக்கோத்து அமைக்கப்பட்ட, பந்தரின்-பந்தலின்கீழ்,—நகைத்த சீர் அரி முகத்த கால்-சிரிக்கின்றதன்மையையுடைய சிங்கத்தின் முகவடிவமாகச்சித்திரிக்கப்பட்ட கால்களையுடையதும், வட்டம் மெத்தைகொடு அமைத்த - வட்டவடிவமான மெத்தையைக்கொண்டு மேல்அமைத்துவைக்கப்பட்டதுமான, பீடம்மிசை-சிங்காதனத்தின்மீது, வாசவன்கொல் என - தேவேந்திரனோ வென்று (பார்ப்பவர்)கருதும்படி, வைகினான்-(வந்து)வீற்றிருந்து,—பட்டவர்த்தனரும் மகுடவர்த்தனரும் வந்து சே அடி பணிந்தபின் - பட்டந்தரித்த அரசர்களும மகுடந்தரித்த அரசர்களும் வந்து சிவந்த (தனது) பாதங்களை நமஸ்கரித்தபின்பு, இட்ட பொன் தவிசில் இனிது இருக்க என்று-அங்கு இடப்பட்டுள்ள பொனமயமான ஆசனங்களில் இனிமையாக இருப்பீர்களாக வென்று, அவரை - அவ்வரசர்களை, முறைமையால் - (அவரவர்க்குரிய) முறைமைப்படி, ஏவி - கட்டளையிட்டு,—(எ - று.)—'கண் பரப்பி' என மேற்கவியோடு தொடரும்.

பந்தர் - பந்தல்: இறுதிப்போலி. மெத்தை - மெத்தென்றிருப்பது. வாஸவன் - அஷ்டவசுக்களுக்குத் தலைவன்; அல்லது, எல்லாஐசுவரியமுமுடையவன். பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர் -அரசர்களின் பகுப்புக்கள். ஒருகோடிகிராமம் ஆள்பவன் - மகுடவர்த்தன னென்றும், அவனுக்குமேற்பட்டவன் - பட்டவர்த்தன னென்றுங் கூறுவர். கொல் - ஐயம். (௪0௩)

[கண்ணனை எதிர்கொள்ளக்கூடாதென்று துரியோதனன் அரசர்க்குக் கட்டளையிடுதல்.]

௪0௪. காவன்மன்னவர்முகங்கடோறுமிருகண்பரப்பியமர்கருதுவோர், ஏவலின்கண்வருதூதனுமிடையனின்றுநம்மவையிலெய்தினால், லோவலின்றியெதிர்சென்றுகண்டுதொழு துறவுகூறிலினியுங்களூர், தீவலஞ்செயவடர்ப்பனென்றுநனிசீறினான்முறைமைமாறினான்.

(இ - ள்.) முறைமை மாறினான் - நீதிதவறினவனான துரியோதனன், காவல் மன்னவர் முகங்கள் தோறும் இரு கண் பரப்பி - (இராச்சியத்தை) ஆளுதற்றொழிலையுடைய அரசர்களது முகங்களிலெல்லாந் தனது இரண்டுகண்களைப் பரவச்செய்து (அவர்களை நன்றாகப் பார்த்து), 'அமர் கருதுவோர் ஏவலின்கண் வரு தூதன் ஆம் இடையன் - (இராச்சியத்தைப்பெறும்பொருட்டுப்) போரைச் செய்யக்கருதுகிற பாண்டவர்களது கட்டளையினால் வருகின்ற தூதனாகிய இடையர்சாதியனான கண்ணன், இன்று - இன்றைக்கு, நம் அவையில் - நமது இந்தச்சபையில், எய்தினால் - வந்தால், ஓவல் இன்றி எதிர் சென்று கண்டு தொழுது உறவு கூறில் - (நீங்கள் யாராயினும்) ஒழிதலில்லாமல் (அவனை) எதிர்கொண்டுபோய்ப் பார்த்து வணங்கி உறவுகொண்டாடுவீரானால், இனி உங்கள் ஊர் தீ வலம் செய அடர்ப்பன் -அதன்பின் உங்களுடைய ஊர்களை நெருப்புச்சூழும்படி கொளுத்திவிடுவேன்', என்று—,நனி சீறினான் - மிகக்கோபமாகக் கூறினான்; (எ - று.)

இராசதருமம்சிறிதுமில்லாதகொடுங்கோல்மன்னனாதலின், இங்ஙனங் கூறினன் என்பார், 'சீறினன் முறைமைமாறினன்' என்றார். 'உறவுகூறில்' என்ற பாடத்துக்கு - உறவுமுறைமைக்குரிய உபசாரவார்த்தைகளைச் சொன்னால் என்றபடி. ஓவல் இன்றி - சும்மா இராமலென்றவாறு. ஓவல் - தொழிற்பெயர்; நீங்குதலென்று பொருள். ஓவு - பகுதி: இதனை ஒருவு என்பதன் மரூஉ என்பர். இடையர்மனையில் வளர்ந்ததுமாத்திரத்தைக் கொண்டு, இடையனென இகழ்ந்தான். இங்ஙனம், பாண்டவர்மேலுள்ள கோபம், அவர்தூதனான கண்ணன்மேற் சென்றது. (௧௦௪)

[கண்ணன் துரியோதனனது சபையில் எழுந்தருளுதல்.]

௧௦௫. இந்தவண்ணமுரைசெய்துமன்னருமிராசராசனுமிருக் கவே, தந்தவண்ணனுடன்வந்தவண்ணலொளிதங்குகண்டுயிலுணர்ந் தபின், கந்தவண்ணமலர்கொண்டுகைதொழுதுகாலையிற்பலகடன்கழி த்து, இந்தவண்ணமுனிருந்தபேரவையிலேயினனிசைகொள்வேயினன்.

(இ - ள்.) இந்த வண்ணம் - இவ்வாறு, உரை செய்து - கூறி, இராச ராசனும் - துரியோதனனும், மன்னரும் - (மற்றை) அரசர்கள் பலரும், இருக்கவே - (சபையில்) வீற்றிருக்கையிலே,—இசை கொள் வேயினன் - சப்தசுரங்களையுமுடைய புள்ளாங்குழலை (இளமையில் பசுமேய்க்கையில்) ஊதினவனாகிய, தந்தவண்ணனுடன் வந்த அண்ணல் - யானைத்தந்தம் போலவெளுப்பானதிருமேனிசிறத்தையுடையபலராமனுடன்பிறந்த பெரு மைக்குணமுடையகண்ணன், ஒளிதங்குகண் துயில்உணர்ந்தபின் (விதுரன் மனையில்) சூரியன்சந்திரனென்னும் இருசுடரின்வடிவமாகப்பொருந்தியத னதுகண்கள்உறங்குதலொழிந்துஎழுந்தபின்பு, கந்தம் வண்ணம்மலர்கொண் டு கைதொழுது காலையில் பல கடன் கழித்து - பரிமளத்தையும் அழகையுமு டைய பூக்களைக் கையிலேந்தி(ச்சூரியபகவானை)க் கைகூப்பிவணங்கி(இங்ங னம்) உதயகாலத்திற் செய்தற்குரிய பலகடமைகளையுஞ் செய்துமுடித்து, இந்த வண்ணம் முன் இருந்த பேர் அவையில் ஏயினன் - இப்படி முன் னமே (துரியோதனாதியர் கூடி) யிருந்த பெரியசபையில் எழுந்தருளினன்.

அண்ணல் - ஆண்பாற்சிறப்புப்பெயர்; பண்பாகுபெயரென்றுங் கூறுவர். பலராமன் வெண்மையானதிருமேனிநிறமுடையவனாதலின், 'தந்தவண் ணன்' எனப்பட்டான். திருமாலுக்குச் சூரியன் வலத்திருக்கண்ணும், சந் திரன் இடத்திருக்கண்ணுமாதலின், 'ஒளிதங்குகண்' என்றார். பலகடன் - சந்தியாவந்தனம் முதலிய நித்தியவைதிகச்சடங்குகள். வேய் - மூங்கிலினா லாகிய குழலுக்குக் கருவியாகுபெயர். இசைப்பது, இசை. இசைத்தல் - பாடு தல். வந்த-பிறந்த; கூடவந்த வென்றன்று. (௧௦௫)

[வீடுமன்முதலியோர் எதிர்கொண்டு சென்றுவணங்க, கண்ணபிரான் சபையிற் சென்று ஆசனத்தில் இருத்தல்.]

௧௦௬. துன்னுகங்கைமகனுந்துரோணனொடுசுதனுநீதிபுனைவிது ரனும், மன்னர்மன்னனை யொழிந்தமன்னவரும் வந்துசேவடி வணங் கினர், கன்னனுந்தலைகவிழ்ந்திருந்தனனமுன்றுளஞ் சகுனிகருகினா ன், முன்னநின்றவர்களிட்டபீடமிசைமொய்குழாய்முகிலுமெய்தினன்.

(இ - ள்.) (அப்பொழுது),—துன்னு - (அங்கே) பொருந்தியிருந்த, கங் கை மகனும்-வீடுமனும்,துரோணனொடு சுதனும்-துரோணாசாரியனும் அவன் மகனான அசுவத்தாமனும், நீதி புனை விதுரனும் - நியாயத்தையே (தன க்கு ஆபரணமாகக்)கொண்ட விதுரனும்,மன்னர் மன்னனை ஒழிந்த மன்னவ ரும்-துரியோதனனையொழிந்த மற்றையரசர்களெல்லோரும்,வந்து சே அடி வணங்கினர் - அருகில்வந்து சிவந்த (கண்ணனது) திருவடிகளை வணங்கி

ஞர்கள்; கன்னனும் - கர்ணனேவெனில், தலை கவிழ்ந்து இருந்தனன்-(ஒன்றுந் தோன்றாது) தலையிறங்கி உட்கார்ந்திருந்தான்; சகுனி - சகுனியோ, அழன்று உளம் கருகினன் -(தமது எற்பாட்டின்படியன்றி எல்லோரும் கண்ணனைக்கௌரவித்ததைப் பார்த்துப் பொறாது) மனம் கொதித்து வெதும்பினன்; (அங்ஙனமிருக்க), மொய் துழாய் முகிலும் - நெருங்கின திருத்துழாய்மாலையையுடைய காளமேகம்போன்ற கண்ணனும்,முன்னம் நின்றவர்கள் இட்ட பீடம்மிசை எய்தினன்-முன்னிடத்துநின்றவர்கள் கொண்டுவந்துசமர்ப்பித்த ஆசனத்தின்மீது எழுந்தருளியிருந்தான்; (எ - று.)

இப்பாட்டில் விதுரனுக்குக்கொடுத்த அடைமொழியைக் கவனிக்க. துரியோதனனது கருத்துக்கு மாறுபாடாக எழுந்து உபசரிக்கவும், தன் மனச்சாட்சிக்குமாறுபாடாக எழுந்து உபசரியாதிருக்கவும்மாட்டாது, கன்னன் தலைகவிழ்ந்திருந்தான்;அன்றிக்கே,தனது உயிர்த்தோழனது கட்டளை சிறிதும் பயன்படாததை நோக்கி நாணித் தலைகவிழ்ந்தா னென்றுங் கொள்க. கண்ணனைக் கண்டமாத்திரத்தில் யாவரும் தம்வசமின்றிப் பரவசப்பட்டு எழுந்துவிட்டதனால், துரியோதனனது கட்டளை சிறிதுஞ்செல்லாது பறந்தது. விநாசகாலம் சமீபித்ததனால் ஊழ்வினைபற்றித் துரியோதனன் முதலிய சிலர் மனம்நெகிழவில்லை. நின்றவர்கள் என்ற பன்மை - ஒருவர்முன் ஒருவராய்ப் பலர் விரைந்தோடிவந்து அன்போடு பீடமிடலுற்றன ரென்பதை விளக்கும். துரியோதனனது அக்கிரமங்களுக்கெல்லாம் சகுனி மூலமாதலால், அவன் அழன்று உளங்கருகினன். சகுனி உளங்கருகினன் - சினைவினை முதல்கொண்டது. அழன்று, அழல்-பகுதி. பீடம்-வடசொல். ()

[துரியோதனன், கண்ணன் தனது அரண்மனையிலிறங்காமைக்குக் காரணம் வினவுதல்.]

௧0எ. முன்னகங்குடை கவித்தகாளமுகின் முன்னிருந்தபின் முகங்கொடா, தென்னகந்தனையொழித்துநென்னலிடையிந்தமாநகரிலெய்தியும், பொன்னகங்கொள்புயவிதுரனில்லிடைபுகுந்ததென்கொலிதுபுகலெனுப், பன்னகந்தனையுயர்த்தகோவுமுரைபகரமாலுமெதிர்பகருவான்.

(இ - ள்.) முன் - முன்னே [இளமையில் இந்திரன் பெருமழைபொழிவித்தபொழுதில் என்றபடி], நகம் - கோவர்த்தனமலையை, குடை கவித்த-குடையாக எடுத்துப்பிடித்த, காள முகில்-கரியமேகத்தையொத்த கண்ணபிரான்,முன் இருந்த பின்-முன்னே வீற்றிருந்தபின்பு, பன்னகந்தனை உயர்த்த கோவும் - பாம்புக்கொடியை உயரஎடுத்த துரியோதனராசனும், முகம் கொடாது-லட்சியஞ் செய்யாமல், 'நென்னலிடை - நேற்றைப்பொழுதிலே, இந்த மா நகரில் எய்தியும்-இந்தப்பெரியபட்டணத்தில் (நீ) வந்துசேர்ந்தும்,என் அகந்தனை ஒழித்து-எனதுவீட்டிற்குவருதலை நீக்கி, பொன் அகம் கொள் புயம் விதுரன் இல்லிடை - பொன்னுபரணங்களைத் தன்னிடத்தே கொண்ட தோள்களையுடைய விதுரனது வீட்டில், புகுந்தது - (நீ) நுழைந்தது, என்கொல் - என்னகாரணத்தால்? இது புகல்-இதற்கு விடைசொல்,' எனு - என்று, உரை பகர - வார்த்தைசொல்ல,—மாலும்-கண்ணபிரானும், எதிர் பகருவான்-மறுமொழி கூறுபவனானான்; (எ-று.)—அதனை, மேலிரண்டுகவிகளிற் காண்க.

நகம் - வடசொல். 'கவித்த' என்றபாடத்துக்கு - பசுக்களும் கன்றுகளும் எட்டிப் புல்மேயலாம்படி தலைகீழாக எடுத்துப்பிடித்த என்க; "மதுசூதனனெடுத்து மறித்த மலை","காம்பாகக்கொடுத்துக்கவித்த மலை"என்றார் பெரியாழ்வாரும். என் அகம் என்றதில், துரியோதனனது அகங்கார

மமகாரங்கள் நன்கு விளங்கும். பொன் - கருவியாகுபெயர். இனி, பொன் நகம் கொள் புயம்-பொன்மலையையொத்த தோளென்றும், பொன் அகம் கொள் இல் - திருமகள் இடமாகக்கொண்ட வீடென்றும், பொன் நகம் கொள் இல்-மேருமலையையொத்த மாளிகை யென்றும் உரைக்க இடமுண்டு. முகங்கொடாது ஒழித்தனை இயைப்பினும் அமையும். 'என் அகந்தனையொழித்து' என முதலில் துரியோதனன்வாக்கில் அமங்கலமானவார்த்தை வந்தது காண்க: மேல் முடிவுக்கு ஏற்ப. (௪0௭)

[கண்ணபிரான் தான்துரியோதனனரண்மனையில் எழுந்தருளாமைக்குக் காரணங்கூறுதல்.]

௪0௮. என்னினின்னிலொருபேதமில்லையிதுவென்னினின்னிலதுவென்னினு, மின்னின்மின்னிலகுவிறனெடும்படைவிதுரன்வந்தெதிர்விளம்பினு, னுன்னிலின்னமுளதொன்றுபஞ்சவருரைக்கவந்தவொருதூதன்யா, னின்னிலின்னடிசிலுண்டுநின்னுடன்வெறுக்கவெண்ணுவதுநீதியோ.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒரு தொடர். இதுவும், மேற்கவியும் - கண்ணன்வார்த்தை.

(இ - ள்.) என் இல் நின் இல் ஒருபேதம் இல்லை-என்வீடென்றும்உன் வீடென்றும் ஒருபேதம் (எனக்குக்) கிடையாது; இது என் இல்-இந்த உன் வீடு என்வீடு;அது நின் இல் - (துவாரகையிலுள்ள)அந்த என்வீடு உன்வீடு: என்னினும்-என்றிருந்தாலும்,மின்னின்மின் இலகு விறல் நெடு படை விதுரன் வந்து எதிர் விளம்பினன்-மின்னலைக்காட்டிலும் (மிகுதியாக) ஒளிவிளங்கப்பெற்ற வெற்றியைத்தரும் பெரிய ஆயுதத்தையுடைய விதுரன் எதிர் கொண்டுவந்து பேசினான்; (உன்வீட்டுக்குவராமல் அவன்வீட்டுக்குப்போனதற்கு இது ஒருகாரணம்); உன்னில் - ஆலோசிக்குமிடத்து, இன்னம் உளது ஒன்று - இன்னமும் ஒருகாரண முண்டு:—பஞ்சவர் உரைக்க வந்த ஒரு தூதன் யான் - பாண்டவர்கள் சொல்லியனுப்ப வந்த ஒருதூதனுவேன் நான்; (அப்படிப்பட்டவன்), நின் இல் இன் அடிசில் உண்டு நின்னுடன் வெறுக்க எண்ணுவது நீதியோ - உனது வீட்டில் இனிமையான உணவை உட்கொண்டு பின்பு[உன்னோடு வெறுக்கப் பேசக் கருதுவது நியாயமோ? (நியாயமன்று என்பது ஒருகாரணம்;) (எ - று.)

என்னில் நின்னில் ஒருபேதமில்லை என்பதற்கு - எனக்கும் உனக்கும் ஒருவித்தியாசமில்லை யென்றும் உரைக்கலாம். இந்த உன்வீடு எனது அன்பரான பாண்டவருடையது, உன்னுடையதன்று; மேலுலகத்திலுள்ள வீரசுவர்க்கமே உன்னுடையது என்ற கருத்து,'இது என் இல் நின் இல் அது' என்பதில் தொனிக்குமாறு காண்க. 'முன்னிலகு' என்ற பாடத்துக்கு - முன்புவிளங்குகிற என்க. விதுரனுக்கு 'மின்னின் மின்னிலகு விறனெடும் படை' என்ற அடைமொழி கொடுத்ததனால், அவன்படையை ஞாபகத்துக் கொண்டன்றோ யான் அங்குப் புகுந்தது என்ற கருத்து ஒலிவகையால் தோன்றும். விதுரன் வந்து எதிர்விளம்பியமை முன்னே கூறப்படாவிடினும், இங்குக் கூறப்பட்டதனால் அங்குக் கொள்ளத்தக்கது; இதனை அங்குச் சொல்லாதது - 'உரைத்தும்' என்னும் உத்தியாம்: இங்ஙனமே காவியங்களில் கூறவேண்டிய பொருளை. எங்கேனும் ஓரிடத்துக் கூறி, மற்றையவிடங்களிற் கூறாது விடுதலைப் பலவிடத்திலுங் காணலாம். பஞ்சவர் - ஐந்தென்னும் பொருள் தரும் பஞ்ச என்னும் வடமொழியடியாப் பிறந்த பெயர். 'உண்டவீட்டுக்கு இரண்டகம் நினைக்கலாகாது' என்பது - நான்காமடிக்கு ஏற்ற பழமொழி. ஒன்று - ஆகுபெயர். (௪0௮)

[நரகிற் செல்லுதற்கு உரியவர்.]

௭0௯. அரவமல்கியபதாகையாய்மதியமைச்சராயரசழிப்பினு
ங்,குரவர்நல்லுரைமறக்கினும்பிறர்புரிந்தநன்றியதுகொல்லினு,மொ
ருவர்வாழ்மனையிலுண்டுபின்னுமவருட னழன்றுபொரவுன்னினு,
மிரவியுள்ளளவுமதியமுள்ளளவுமிவர்களேநரகிலெய்துவார்.

(இ - ள்.) 'அரவம் மல்கிய பதாகையாய் - பாம்பின் வடிவம் பொருந்தின பெருங்கொடியையுடையவனே!—மதி அமைச்சர் ஆய் அரசு அழிப்பினும் - நல்லறிவுடைய [அல்லது அரசனுக்கு அறிவுஉறுத்தற்குரிய] மந்திரிகளாயிருந்து அரசாட்சியை (வேண்டுமென்று) கெடுத்தாலும், குரவர் நல் உரை மறக்கினும் - பெரியோர்களது நல்ல உபதேசமொழிகளை (க்கேட்டு ஒழுகாது) விலகிநடந்தாலும், பிறர் புரிந்த நன்றியது கொல்லினும் - அயலார்செய்த உபகாரத்தை மறந்தாலும், ஒருவர் வாழ் மனையில் உண்டு பின்னும் அவருடன் அழன்று பொர உன்னினும் - ஒருவர் வசிக்கின்றவீட்டிலே அவருணவைப் புசித்துப் பின்பு அவருடன் கோபித்துப்போர்செய்யக்கருதினாலும், இவர்களே - இந்த நான்கு அக்கிரமத்தொழில்களைச் செய்பவர்களே, இரவி உள் அளவும் மதியம் உள் அளவும் நரகில் எய்துவார் - சூரியனுள்ளவரையிலும் சந்திரனுள்ள வரையிலும் நரகலோகத்திற் சேர்ந்து துன்பங்களை அனுபவிப்பார்கள்; (எ - று.)

துரியோதனன்வீட்டில் தான் இறங்காமைக்கு ஏற்ற காரணங் கூறுதற்கு, 'ஒருவர்வாழ்மனையிலுண்டு பின்னு மவருட னழன்றுபொர வுன்னின்' என்றது மாத்திரமே போதுமாயினும், மற்றை மூன்று கொடுவினைகளையும் முன்னே இனமாகஉடனெடுத்துக்கூறியது-நீயும் சகுனி முதலிய உன்னைச் சேர்ந்தவர்களுமே இப்படிப்பட்ட பெரும்பாவங்களைச் செய்துபயில்பவர், நான் அப்படிப்பட்டவனல்லன் என அவனுக்கு உறைக்கும்படி சுட்டிக்காட்டுதற்பொருட் டென்க. குரவர் - தந்தை, (தாய்), தமையன், வம்சகுரு, உபாத்தியாயன், அரசன் என இவர். நல்உரை - இம்மைமறுமைகளுக்கு நன்மையை விளைக்கும் வார்த்தை.மறக்கத்தக்க தீயஉரையை அவர்கூறாரென்றற்கு, 'நல்லுரை' எனப்பட்டது. 'பிறர் புரிந்த நன்றியது கொல்லினும்' என்பதற்கு - ஒருவர் ஒருவர்க்குச்செய்யும் உபகாரத்தைக் கெடுத்தாலும் என்றும் பொருள்கொள்ளலாம். "எந்நன் றிகொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன் றிகொன்ற மகற்கு" முதலியன-இதற்கு மேற்கோளாம். உன் அமைச்சர்கள் உனக்கு இதங்கூறாது உனதுஅரசை யழிப்பவ ரென்றும், நீ பீஷ்மர் துரோணர் கிருபர் விதுரர் முதலிய பெரியோரது உறுதிமொழிகளைக் கேளாது மறப்பவ னென்றும், சித்திரசேனன் கட்டினது முதலான காலத்தில் பாண்டவர்செய்த உபகாரத்தை நீ மறப்பவ னென்றும், பீஷ்மர் முதலியவர் உன்கட்டளைப்படி நடப்பது உனதுவார்த்தை சரியென்கிற காரணத்தா லன்று, சோற்றுக்கடன் கழிக்கவேண்டு மென்கிற கருத்தினாலேயே யென்றும் குறிப்பாக உணர்த்தினபடியாம். இரவியுள்ளளவும் மதியமுள்ளளவும் - உலகமழியுமளவும் என்றபடி. ஆழ்வயிற்றடக்கி என்றும் மீட்டு உமிழ்கலாத எரிவாய் வெம்மைகூர்நரகில் அழுந்துவர் என்க. நன்றியது, மதியம் என்பவற்றில்—,அது,அம் - அசைகள். மற்றைத் தீவினைசெய்தவர் நரகமடைந்தாலும், அவர்களுக்கு மீளுதற்குஉரிய எல்லையொன்று உண்டு;இவர்களுக்கோ அது இல்லை: நரகலோகமழிந்தால் உண்டு என்பது,'இவர்களே நரகிலெய்துவார்'என்றபிரிநிலைஏகாரத்தால்விளங்கும்.

['நீ வந்த காரியம் யாது?' என்று கண்ணனைத் துரியோதனன் வினவுதல்.]

௧௧0. சீதநாண்மலர்மடந்தைகேள்வனிவை செப்பவுந்தெரியவொப்பிலா, நாதநாயகன்முகத்தில்வைத்தவிருநயனனுமிமிகாதை

செயாத், தூதனாகிவருதன்மைசொல்லுகென மன்னர்மன்னனிது சொன்னபின், வேதநாறுமலருந்திவண்டுளபவிரைசெய்தாரவனுமு ரைசெய்வான்.

(இ - ள்.) சீதம் - குளிர்ச்சியான, நாள் - புதிய, மலர் - தாமரைப்பூ வில் வாழ்கின்ற, மடந்தை-சிறந்தமகளான இலக்குமிக்கு, கேள்வன்-கணவ னான கண்ணன், இவை - இவ்வார்த்தைகளை, தெரிய செப்பவும் - விளக்க மாகச் சொன்னவளவிலே, — மன்னர் மன்னன் - துரியோதனன், ஒப்பு இலா நாத நாயகன் முகத்தில் வைத்த இரு நயனன் ஆகி - (தனக்கு) உவ மைபெறாத தலைமைத்தேவர்களுக்குந் தலைவனாகிய அக்கண்ணனது முக த்திற் செலுத்தின இரண்டுகண்களையு முடையவனாய், மிக நகைசெயா - (இகழ்ச்சிதோன்ற) மிகுதியாகச் சிரித்தல்செய்து, தூதன் ஆகி வரு தன்மை சொல்லுக என - 'நீ தூதனாய்வந்த தன்மையைச் சொல்வாயாக' என்று, இது சொன்ன பின் - இவ்வார்த்தையைச் சொன்னபின்பு - வேதம் நாறும் மலர் உந்தி வள் துளபம் விரை செய் தாரவனும் - வேதங்கள்பரிமளிக்கிற திருநாபித்தாமரைமலரையும் அழகிய திருத்துழாயினாலாகிய வாசனையைச் செய்கின்ற மாலையையு முடைய கண்ணபிரான், உரைசெய்வான்-சொல்லு பவனானான்; (எ - று.)—அதனை, மேலிரண்டுகவிகளிற் காண்க.

திருமாலின் உந்திக்கமலமலரில் எப்பொழுதும் பிரமன் வேதத்தை ஓதிக்கொண்டிருத்தலால், 'வேதநாறு மலருந்தி' என்றார். வேதம் நா றும் - வேதம் ஒலிக்கும் என்றபடி; ஒருபுலன் மற்றொருபுலனாக உபசரிக் கப்பட்டது; இனி, 'வேதனாறும்' என்ற பாடத்துக்கு, வேதன் - பிரமன், நா றும் - தோன்று மென்க. நாறுஎன்னும் பகுதி இவ்விருபொருளுமுடையதா தலை, நாற்றம், நாற்று என்ற சொற்களிற் காண்க. மடந்தை - இங்கே பரு வப்பெயராகாமல் பெண்ணென்றமாத்திரமாய் நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை-பதினான்குமுதல்பத்தொன்பதுஅளவுமாம். கேண்மையையுடை யவன், கேள்வன்; கேண்மை - நண்பும் உறவும் அன்பும்: வ் - பெயரிடை நிலை. நாதநாயகன் - நாதர்நாயகன் எனப் பிரித்துப் புணர்க்க; "நிலவிகார மா முயர்திணை." நயனம், நாதநாயகன், வேதம் - வடசொற்கள். வேதம் என்ற வடசொல்லுக்கு-(நன்மைதீமைகளைத்) தெரிவிப்பதென்று பொருள்; அறிவித்த லென்னும் பொருளுள்ள வித் என்ற வினையடியினின்று பிறந்தது.

[இதுவும், அடுத்தகவியும் - பாண்டவர்க்கு நாடுகொடுக்கும்படி கண்ணன் துரியோதனனுக்குக் கூறுதல்.]

௧௧௧. சூதினாலரசிழந்துநின்றுணைவர்சொன்னசொல்லும்வழு வாதுபோ, யேதிலார்களெனநொந்துதண்ணிழலிலாதகானினிடை யெய்தியுந், தீதிலாவகைகுறித்தநாள்பலகழித்துவந்தனர் செகத்தி னிற், கோதிலாதகுருகுலமகீபவவருரிமைநண்பொடுகொடுத்தியே.

இது முதல் ஐந்துகவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) செகத்தினில் - நிலவுலகத்திலே, கோது இலாத - குற்ற மில்லாத, குரு குலம் - குருவென்னும் அரசனது மரபிலே பிறந்த, மகீப - அரசனே!-நின் துணைவர் - உனதுஉடன்பிறந்தவரான பாண்டவர்கள், சூதி னால் - (சகுனியுடன்ஆடின) சூதாட்டத்தால், அரசு இழந்து - இராச்சியத் தைக் கைவிட்டு, சொன்ன சொல்லும் வழுவாது - (அப்பொழுது நீங்கள்) சொன்னவார்த்தையையுந்தவறாமல், ஏதிலார்கள் என-யாதொருசம்பந்தமு மில்லாத அயலார்போல, போய் - புறப்பட்டுச்சென்று, நொந்து - வருந்தி, தண் நிழல் இலாத கானினிடை எய்தியும்-குளிர்ந்தநிழலில்லாத காட்டிற் சேர்ந்தும், தீது இலா வகை - குற்றமில்லாதபடி, குறித்த பல நாள் - முன்

னே குறிப்பிட்ட அநேகநாட்களை, கழித்து வந்தனர் - தொலைத்துவந்தார்கள்; (ஆதலால், இப்பொழுது நீ), அவர் உரிமை - அவர்களுக்குஉரிய இராச்சியபாகத்தை, நண்பொடு - (பகைமையில்லாமல்) சிநேகத்துடனே, கொடுத்தி - கொடுப்பாய்; (எ - று.)

துணைவர்-பிராதாக்கள். செகம் - ஜகத்: வடசொல். தீதிலாவகை என்றதில், அஜ்ஞாதவாசம் அடக்கப்பட்டது; அதில் யாவராயினும் இவரை இன்னாரென்று காண்பாராயின், அது மீண்டும் வனவாசம்முதலியனசெய்தற்கேற்றதீதாம். 'ஆண்டுபல' என்னாது 'நாள்பல'என்றதற்குக் காரணம்,முன் கூறப்பட்டது. குருகுலத்துக்குக் கோதின்மை - உடன்பிறந்தவர்களோடு பகையாடாமை முதலியன. (கசக)

கசஉ. சொல்லவாவுரகதுவசநின்னுரியதுணைவர்தங்களையழைத்துநீ, வல்லவாறுசிலநாடளித்தவர்கடம்முடன்கெழுமிவாழ்தியேல,நல்லவாய்மைநிலையுடையையென்றரசர் நாடொறும்புகழ்வர் நண்புகொண்,டல்லவாமெனமறுத்தியேலறமுமாண்மையும்புகழுமல்லவே.

(இ - ள்.) சொல் - புகழ்ச்சொல்லை, அவாவு - விரும்புந்தன்மையுள்ள, உரக துவச - பாம்புக்கொடியோனே! - நீ—, நின் உரிய துணைவர்தங்களை அழைத்து-உனது அன்புக்கு உரிய உடன்பிறந்தவர்களான பாண்டவர்களை வரவழைத்து, வல்ல ஆறு சில நாடு அளித்து - கூடினபடி சிலநாடுகளை (அவர்களுக்கு) க் கொடுத்து, அவர்கள்தம்முடன் கெழுமி - அவர்களோடு கலந்து ஒருமித்து, வாழ்தியேல் - வாழ்வாயானால், (உன்னை), நல்ல வாய்மை நிலை உடையை என்று - சிறந்தசத்தியவுறுதியையுடையா யென்றுசொல்லி, அரசர் நண்பு கொண்டு நாள்தொறும் புகழ்வர் - எல்லாவரசரும் (உன்னிடத்து) அன்புவைத்துத் தினந்தோறுந் துதிப்பார்கள்; அல்ல ஆம் என மறுத்தியேல் - (இங்ஙனம் அழைத்தல் கொடுத்தல் கெழுமுதல் வாழ்தல் முதலியன) தகுதியல்லாதனவாகு மென்றுகருதி (அரசுகொடாது) மறுப்பாயானால், (அங்ஙனம் மறுத்தல்), அறமும் ஆண்மையும் புகழும் அல்ல - தருமமும் ஆண்மைக்குணமும் புகழும் ஆகா; (எ - று.)

அல்ல வெனப் பன்மைவினைமுற்றுக் கொடுத்தது - ஒருமைப்பன்மை மயக்கம்.அல்லவாமென என்பதில்,ஆம்-அசையென்றுங்கொள்ளலாம்.வல்லவாறு - நீதிக்குஉரியபடி; அல்லது, உனக்குவிருப்பமானபடி யென்றவாறு. நண்புகொண்டு என்பதை, வாழ்தி யென்பதனோடுங் கூட்டலாம். உரிய - அரசுக்குரிய சுதந்தரமுள்ள எனலுமாம். முன்வாக்கியத்தில்-அறமும் புகழும் ஆண்மையுமாம் என்பதும், பின்வாக்கியத்தில் - புகழார் என்பதும் எதிர்மறைவகையால் தாமே ஏற்படும். (கசஉ)

[இதுவும், அடுத்தகவியும் - துரியோதனன் வார்த்தை ;
'பாண்டவர்க்குப் பாகங்கொடேன்' என்றுகூறுதல்.]

கசங. என்றுகேசவனியம்பவங்கெதிரிராசராசனுமியம்புவா,னன்றுசூதுபொருதுரிமையாவையுமிழந்துபோயினர்களைவரு,மின்றுநீவிரகின்மீளவுங்கவரவெண்ணினைவரிலெளியனோ,சென்றுகானிலவரின்னமுந்திரிவதுறுதியென்றுநனிசீறியே.

(இ - ள்.) என்று—,கேசவன் - கண்ணன், இயம்ப - சொல்ல, அங்கு எதிர் - அவ்வார்த்தைக்கு எதிராக, இராசராசனும்-துரியோதனனும், இயம்புவான் - சொல்லுபவனாய்,—'ஐவரும்-பஞ்சபாண்டவர்கள், அன்று - அக்காலத்தில், சூதுபொருது-சூதாட்டமாடி, (அதில்தோற்று), உரிமை யாவும் இழந்து போயினர்கள் - (தங்களுக்கு) உரிய பொருள்களையெல்லாம் கைவிட்டுச்சென்றார்கள் ; இன்று-இப்பொழுது. நீ—,விரகின்-தந்திரமாக,

மீளவும் - மறுபடி, கவர - (அப்பொருள்களை என்னிடத்தினின்று) பறிக்க, எண்ணின் - நினைத்தால், நான் அவரில் எளியனோ - நான் அவர்களைக்காட்டிலும் (வலிமைமுதலியவற்றிற்) குறைந்தவனோ? அவர் - அப்பாண்டவர், இன்னமும் - இனிமேலும், கானில் சென்று - காட்டிற்போய், திரிவது - அலைய வேண்டுவதே, உறுதி - (அவர்களுக்கு) நன்மைதருவதாம்', என்று - என்று சொல்லி, நனி சீறி - மிகக்கோபித்து, — (எ - று.) — 'கழற' என மேல் ககடு-ஆங் கவியோடு குளகமாகத் தொடரும்.

அங்கு - அப்பொழுது என்றும், அவ்விடத்தில் என்றும், அவரில் எளியனோ - அவர்கள்போல எளிதிற்கவர்ந்துகொள்ளத்தக்கவனோ? என்றும் உரைப்பாரும், நனிசீறி என்று இயம்புவான் என இயைத்து முடிப்பாரும் உளர். இரண்டாம்அடியில் நன்று எனப் பிரித்தல் - மோனைக்குப் பொருந்தாது. (ககங)

ககச. நீவெறுக்கிலெனிருந்தமன்னவர்திகைக்கிலென்பலநினைக்கிலென்,போய்நகைக்கிலெனுரைத்தவுண்மைமொழிபொய்த்ததென்றமரர்புகலிலென், வேய்மலர்த்தொடையலைவரென்னுடன்மிகைத்துவெஞ்சமர்விளைக்கிலெ, னீயிருக்குமிடமெனினுமிப்புவியில்யானவர்க்கரசினிக்கொடேன்.

(இ - ள்.) நீ வெறுக்கில் என் - நீ (என்னை) வெறுத்தாலென்ன? இருந்த மன்னவர் திகைக்கில் என் - இங்கிருந்தஅரசர்கள்(இதுஎன்னவென்று) பிரமித்தாலென்ன? பல நினைக்கில் என் - (நீயும் இவர்களும்) அநேகஎண்ணங்களை எண்ணினாலென்ன? போய் நகைக்கில் என் - (மறைவிற்)சென்று சிரித்தாலென்ன? உரைத்த உண்மை மொழி பொய்த்தது என்று அமரர் புகலில் என் - (நான்முன்)சொன்னவார்த்தைசத்தியந்தவறிற்றென்று தேவர்கள் சொன்னாலென்ன? வேய் மலர் தொடையல் - அணிந்த பூமாலையையுடைய, ஐவர் - பஞ்சபாண்டவர், என்னுடன் — ,வெம் சமர் - கொடிய போரை, மிகைத்து விளைக்கில் - அதிகமாகச்செய்தால், என் - என்ன? ஊசி இருக்கும் இடம் எனினும் - ஊசி தங்குதற்கு வேண்டியஅளவு இடமாயினும், இ புவியில் அரசு அவர்க்கு இனி யான் கொடேன் - இந்தப்பூமியில் அரசாள அவர்களுக்கு இனி நான் கொடுக்கமாட்டேன்; (எ - று.)

என் என்ற வினா - 'அதனாலெனக்குவருவதொருதீங்குமில்லை' என்ற எதிர்மறைப்பொருள் பட நின்றது. நான்காமடியில் நீயெனப்பதம்பிரித்தல் பொருந்தாது. (ககச)

[கண்ணன் மீண்டும் துரியோதனனை வேண்டுதல்.]

ககரு. கார்வழங்குருமெனச்சினத்தினொடுகண்ணிலான்மதலைகழறவும், பார்வழங்கநினைவில்லையேலவனிபாதியாயினும்வழங்குவாய், தார்வழங்குதடமார்பவென்னவதுதானுமன்னவன்மறுக்கவைந், தூர்வழங்குகெனவுற்றிரந்தனனிவ்வுலகெலாமுதவுமுந்தியான்.

(இ - ள்.) (என்று), கண் இலான் மதலை - திருதராட்டிரகுமாரன் [துரியோதனன்], சினத்தினொடு - கோபத்துடனே, கார் வழங்கு உரும் என - மேகந்தருகிற இடியைப்போல, கழறவும் - (உறுதியாகச்) சொன்னவளவில், — இ உலகு எலாம் உதவும் உந்தியான் - இந்த உலகங்களையும் இவ்வுலகத்து உயிர்களெல்லாவற்றையும் படைத்தருளுந் திருநாபியையுடைய கண்ணபிரான், — (துரியோதனனை நோக்கி), 'தார் வழங்கு தடமார்ப - மாலையுலாவப்பெற்ற பரந்த மார்பையுடையவனே! பார் வழங்க நினைவு இல்லை எல் - இராச்சியபாகம் முழுவதையுங் கொடுக்கக் கருத்தில்லையானால், அவனி

பாதி ஆயினும் வழங்குவாய்-அவ்விராச்சியபாகத்திற் பாதியையாயினுங் கொடுத்திடுவாய்,'என்ன - என்றுசொல்ல, அதுதானும் - அவ்வார்த்தையையும், மன்னவன் - துரியோதனன், மறுக்க - (கொடேனென்று) தடுத்துவிட,—(பிறகு கண்ணன்), 'ஐந்து ஊர் வழங்குக என - ஐந்துஊரையாயினுங் கொடுப்பாய்'என்று, உற்று இரந்தனன் - பொருந்தி [உடன்பட்டு வணக்கமாக] யாசித்தருளினன்; (எ - று.)

"ஒருநாலுமுகத்தவனோடுலகீன்று யென்ப ரதன்,திருநாபிமலர்ந்ததல் லால் திருவுளத்திலுணராயால்" என்பது சித்தாந்தமாதலால், 'உலகெலாமுதவுமுந்தியான்' என்றார். மார்புபரந்திருத்தல் - உத்தமவிலக்கணம். இங்ஙனம் லோபியைச் சென்றுயாசிக்க இணங்குதல் அருமைபற்றி,'உற்றுஇரந்தனன்' என்றார். உலகங்களையெல்லாந் தனதாகவுடையவன்,முன்னேகொடையாளியான மாவலிபக்கல் மூவடி வேண்டியது போலவுமன்றி, இப்பொழுது மகாலோபியான துர்க்குணமுடைய துரியோதனனிடம் அன்பர்க்காக இவ்வாறுஇரந்தான் எனப் பரத்துவமும் சௌலப்பியமும் தோன்றுமாறு காண்க. கார் - துரியோதனனுக்கும், உரும் - கடுஞ்சொல்லுக்கும் உவமை.

[துரியோதனன் அதனையும் மறுத்தல்.]

கககூ. மாடளிக்குலநெருங்குபைந்துளவமாலையாய் மகரவேலைசூழ், நாடளித்திடவுமைந்துபேருடையநகரளித்திடவும்வேண்டுமோ, காடளிக்கவதனிடைதிரிந்துறை கரந்துபோயினர்கள்காணவோர், வீடளிக்கினும்வெறுப்பரோவிதனைவிடுகவென்றெதிர்விளம்பினன்.

(இ - ள்.) (அதற்குத் துரியோதனன்), 'மாடு - பக்கங்களிலே, அளிகுலம் - வண்டுகளின்கூட்டம், நெருங்கு-இடைவிடாது மொய்க்கப்பெற்ற, பைந் துளவம் - பசுநிறமான திருத்துழாயினாலாகிய, மாலையாய் - மாலையையுடைய கண்ணனே!—மகரம் வேலை சூழ் நாடு அளித்திடவும்-சுறுமீன்களையுடைய கடல் சூழ்ந்த நாடு முழுவதையும் கொடுக்கவும்,பேர் உடைய ஐந்து நகர் அளித்திடவும்-பெயரையுடைய ஐந்துஊர்களைக் கொடுக்கவும், (அவர்களுக்கு) , வேண்டுமோ—? காடு அளிக்க - (நாம் முன்பு) காட்டை இடமாகக் கொடுக்க,அதனிடை திரிந்து-அதில் அலைந்து, உறைகரந்து போயினர்கள் - அவ்வசிக்குமிடத்தினின்றும் உருமறைந்து ஓடிப்போனவர்கள், காண - (மீண்டுந் தம்மதாகப்) பார்க்கும்படி, ஓர் வீடு அளிக்கினும் - ஒரு வீட்டைக்கொடுத்தாலும், வெறுப்பரோ - (அதனைவேண்டாமென்று) வெறுத்திடுவார்களோ? [மாட்டார்க ளென்றபடி];இதனை விடுக - (என்பக்கல் சிறிதேனும்இடம்பெறும்)இக்கருத்தை(இனி நீ)ஒழிக', என்று எதிர்விளம்பினன்-என்று எதிர்மொழி கூறினன்; (எ - று.)

எதிர் என்ற சொல்லில், விரோதமான மொழி யென்ற கருத்தும் இரட்டுறமொழிதலாற் பெறப்படும்; கீழ் ௧0எ - ஆங் கவியில் 'எதிர்பகருவான்' என்றதிலும் இங்ஙனம் காண்க. ஐந்துபேருடைய - பஞ்சபாண்டவர்களது என்று உரைப்பாருமுளர். உறையுமிடம், உறை. (கககூ)

[இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்: கண்ணன் துரியோதனனுக்கு அறிவுகூறுதல்.]

ககஎ. தந்தைகாதலுறுதன்மைகண்டிளையதாய்ப்பயந்தவிருதம்பியர்க்,கிந்தவாழ்வுமரசுங்கொடுத்தவனுநின்குலத்தொருவனிங்குளான், முந்தமாநிலமனைத்திலுக்குமுயர்முறைமையாலுரியவரசருக், கைந்தமாநகருநீகொடாதொழிபினென்னதாகுமுனதரசியல்.

(இ - ள்.) தந்தை- தனதுபிதா, காதல் உறு-ஆசைமிகுந்த, தன்மை - தன்மையை, கண்டு - பார்த்து, இளைய தாய் பயந்த இரு தம்பியர்க்கு - தனது சிறிய (மாற்றுத்) தாய் பெற்ற புதல்வரான தனதுதம்பிமார் இருவருக்கு:இந்த வாழ்வும் அரசும் - இந்தக்குருநாட்டரசாட்சியையும் அதற்கு உரியசெல்வத்தையும், கொடுத்தவனும் - கொடுத்தஅரசனும், நின் குலத்து ஒருவன் இங்கு உளான் - உனதுகுலத்திற்பிறந்த ஒருத்தன் இவ்விடத்திலே [இப்பொழுது] இருக்கிறான்; (அங்ஙனமிருக்க),உயர் முறைமையால்-(உன்னினும் பிராயத்தில்) மூத்ததன்மையால், மா நிலம் அனைத்தினுக்கும் முந்த உரிய - பெரியபூமிமுழுவதுக்கும் பழமையாகப் பாத்தியதையையுடைய, அரசருக்கு - யுதிட்டிரன் முதலியோர்க்கு,நீ—,ஐந்து மா நகரும் கொடாது ஒழியின் - ஐந்துபெரியவூர்களையாயினுங் கொடாமல் விடுவாயானால், உனது அரசு இயல் - உனது அரசாட்சியின் இயல்பு, என்னது ஆகும் - என்னநீதியுடையதாம்?[நீதிசிறிதுமில்லாத தென்றபடி], (எ - று.)

தந்தை - சந்தனு. இளையதாய் - பரிமளகந்தி. இருதம்பியர் - சித்திராங்கதனும்,விசித்திரவீரியனும். கொடுத்தவன்-வீடுமன். முதல்மனைவியான கங்கை வீடுமனைப்பெற்றுச் சந்தனுவைவிட்டுநீங்கினபின்,சந்தனு, செம்படவன்வளர்த்தமகளாகிய பரிமளகந்தியென்பவளைக் கண்டுகாமுற்று மணம்பேச,அவள்தந்தை 'மனுநீதிமுறைப்படி மூத்தமனைவியின்குமாரன் அரசாள, என்மகளுக்குப்பிறக்கும்பிள்ளை அரசின்றிக் கீழ்மைப்பட்டுநிற்பானாதலால், நான் உனக்கு மகளைக் கொடேன்' என்று சொல்ல, அதனையறிந்த பீஷ்மன், தந்தைக்கு மணஞ்செய்வித்தற்பொருட்டு,தான் மணஞ்செய்துகொள்வதில்லை யென்றும், இராச்சியத்தைத் தன்தம்பிக்கே கொடுப்பே னென்றும் தேவர்கள்முன்னிலையில் பயங்கரமான சபதஞ் செய்து, அம்மகளைத் தந்தைக்கு மணஞ்செய்வித்து, பின்பு அவளுக்குப்பிறந்த சித்திராங்கதன் விசித்திரவீரியன் என்பவர்க்கே முன்னையவாக்குப்படி அரசாட்சியைக்கொடுத்தானென வரலாறு அறிக. "கங்கைதன்வயிற்றிற்றோன்றித் தாதைதன் காதல் தீர்ப்பான்,எங்களுக் கரசும் வாழ்வுமிருநிலமுழுதுந்தந்து"என மேற் கன்னபருவத்தில் துரியோதனன் கூறுமாறுங் காண்க. (கக௭)

கக௮. ஒருகுலத்தினிலிரண்டுமன்னவருடன்பிறந்துரிமையெய்தினு,லிருகுலத்தவருமொக்கவாழ்வுறுதலெக்குலத்தினுமியற்கையே, பொருகுலக்களிறுவளர்திசைக்கண் மிகுபுகழ்பரப்பியெழுபுவிபெறுங், குருகுலத்தவரியற்கைநன்றெனமொழிந்தனன்கரியகோவலன்.

(இ - ள்.) ஒரு குலத்தினில் - ஒரேமரபில், இரண்டு மன்னவர் - இரண்டுஅரசர்,உடன் பிறந்து-ஒக்கத்தோன்றி, உரிமை எய்தினால் - அரசாட்சியுரிமையையடைந்தால், இரு குலத்தவரும் - இரண்டுதிறத்தாரும், ஒக்க வாழ்வு உறுதல் - ஒருநிகராக வாழ்வையடைதல், எ குலத்தினும் - எல்லாக் குலங்களிலும், இயற்கையே - (நிகழும்) இயல்பேயாம்; பொரு - போர் செய்யுந் தன்மையுள்ள, குலம் - சிறந்த, களிறு - யானைகள் [திக்கஜங்கள்], வளர் - வளர்ந்து நிற்கப்பெற்ற, திசைக்கண் - எட்டுதிக்குக்களிலும், மிகு புகழ் பரப்பி - மிகுந்தகீர்த்தியைப் பரவச்செய்து,எழு புவி பெறும்-ஏழுதீவுகளாகவுள்ள பூமிமுழுவதையும் (தம்மதாகப்)பெற்ற, குருகுலத்தவர் - குருவம்சத்திற்பிறந்த அரசரது, இயற்கை - சுபாவம், நன்று - மிகநன்றாகவுள்ளது!என - என்று,மொழிந்தனன்-கூறினான்:(யாவனெனில்),—கரியகோவலன் - கருநிறமுடைய கண்ணபிரான்; (எ - று.)

நன்று - சிறிதும் நன்றன்று என்றபடி; குறிப்பு: எதிர்மறையிலக்கணை. திசைக்களிறு - ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம்என எட்டு; இவை - கிழக்கு

முதலியதிக்குக்களில் முறையே நின்றிருந்து பூமியைத்தாங்குவன: இவற்றின் பெண்யானைகள் - அப்பிரமு, கபிலை, பிங்கலை, அநுபமை, தாமிரவர்ணி, சுப்ர தந்தீ, அங்கனை, அஞ்சநாவதி எனப்படும். (ககஅ)

[துரியோதனன் கோபத்துடன் மறுத்துக்கூறல்.]

கக௯. பேரராவணை துறந்தமாயனிவைபேசவன்பினொடுபின்னை
யுஞ், சீரராவினையுயர்த்தகோவும்விழிதீயெனும்படிசெயிர்த்துளே,
போரராநிரு பன்மணிநெடுஞ்சுடிகையாயிரங்கொடுபொறுத்தபார்,
வீரரானவரதல்லவோவுரிமைவேண்டுமோவெனவிளம்பினான்.

(இ - ள்.) பேர் - பெரிய, அரா - ஆதிசேஷனாகிய, அணை - சயனத்தை, துறந்த - விட்டு இங்கு வந்து அவதரித்த, மாயன் - கண்ணன், இவை பேச - இவ்வார்த்தைகளைச் சொல்ல,—சீர் அராவினை உயர்த்த கோவும் - சிறந்த பாம்புக்கொடியை உயரவெடுத்த துரியோதனராசனும், வன்பினொடு - கொடுமையுடனே, விழி தீ எனும்படி உளே செயிர்த்து - கண்கள்நெருப்பென்னும் படி [மிகச்சிவக்குமாறு] மனத்திலே கோபித்து, 'போர் அரா நிருபன் - போர் செய்யவல்ல பாம்புகளுக்குத் தலைவனாகிய ஆதிசேஷன், மணி நெடு ஆயிரம் சுடிகை கொடு - மாணிக்கத்தையுடைய நீண்ட ஆயிரந்தலைகளால், பொறுத்த - சுமக்கப்பெற்ற, பார் - பூமி, வீரர் ஆனவரது அல்லவோ - வீரர்களுடைய பொருளன்றோ? உரிமை வேண்டுமோ - (அதனை அடைதற்குப்) பாத்தியதை தகுதியோ?' என - என்று, பின்னையும் விளம்பினான் - மறுபடியுங் கூறினான்; (எ - று.)

நீ சொல்லுகிறபடி பாண்டவர்கள் உரியவராயினும், நாங்கள் வீரர்களாதலால் நாங்களே ஆளத்தக்கதென்பதாம். பேரரா - பாம்புகளுட் பெரிய பாம்பு; தலைமைநாகம். வன்பினொடு பேச என்றும் இயைக்கலாம். அன்பினொடு எனப் பிரித்து, பாண்டவர்பக்கல் அன்புடனே சொல்ல என்றுமாம். கண்கள் மிகச்சிவத்தல் - பெருங்கோபக்குறி. மனிதரைக் காப்பவனென்னும் பொருளை யுணர்த்தும் நிருபனென்றபெயர் - இங்கே காரணங் கருதாமல், அரசனென்றமாத்திரமாய் நின்றது. சுடிகை - உச்சிக்கொண்டை. கொடு - கொண்டு. (ககக)

[கண்ணன் இறுதியாகத் துரியோதனனைப் போர்வேண்டுதல்.]

சஉ0. பொய்வளர்ந்தமொழிமன்னன்மற்றிவைபுகன்றபின்புபுய
வலியினால், ஐவர்தங்களரசுங்கொடாமலடலாண்மைகொண்டெதிர
டர்த்தியேல், மெய்விளங்கவருகுருநிலத்தினிடைவந்துவெஞ்சமர்வி
ளைக்கவே, கைவழங்குகெனநின்றதூணிடையறைந்துரைக்குமிவை
காவலன்.

(இ - ள்.) பொய் வளர்ந்த மொழி மன்னன் - பொய்ம்மிகுந்த சொற்களையுடைய துரியோதனராசன், மற்று இவை புகன்ற பின்பு - இன்னும் இப்படிப்பட்டவார்த்தைகளைச் சொன்னபின்பு, (கண்ணன்), 'புய வலியினால் - தோள்களின் வலிமையினாலே, ஐவர் தங்கள் அரசும் கொடாமல் - பஞ்சபாண்டவர்களது அரசாட்சியை (அவர்களுக்கு)க் கொடுத்திடாமல், அடல் ஆண்மை கொண்டு - பல பராக்கிரமங்களால், எதிர் அடர்த்தியேல் - எதிரிற் போர் செய்வாயானால்,—மெய் விளங்க வரு குரு நிலத்தினிடை வந்து வெம் சமர் விளைக்க - உண்மை விளங்கப்பெற்ற குருக்ஷேத்திரத்திலே வந்து கொடிய போரைச் செய்வதற்கு, கை வழங்குக - கைதட்டிக்கொடுப்பாயாக,' என - என்று சொல்ல,—காவலன் - துரியோதனராசன், (மிகக்கோபித்து), நின்ற தூணிடை அறைந்து - எதிரில் நின்ற

தூணின்மீது கையால்மோதி, இவை உரைக்கும்-இவ்வார்த்தைகளைச்சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை, மேல் நான்குகவிகளிற் காண்க.

முன் சூதாட்டம் முடிந்தகாலத்திற் சொன்ன வார்த்தையின்படி இப்பொழுது அரசுகொடாமல் பொய் சேர்ந்த மொழி மன்னனானதனால், அவன்வார்த்தையை இப்பொழுது கண்ணன் நம்பாமல், அவனைக்கையால் தன்கையையடித்துச் சபதஞ்செய்து தரும்படி கேட்டருளினான். 'அடர்த்தியே'என்ற பாடத்துக்கு - போர்செய்வாயே என்று பொருள்; ஏகாரம் இகழ்ச்சிவிளக்கும். அவரவர்பராக்கிரமம் உள்ளதுஉள்ளபடி அங்குவெளிப்படலாமென்றகருத்தால்,'மெய்விளங்கவரு'என்றஅடைமொழியைக் குருநிலத்துக்குக் கொடுத்த தென்னலாம். (௧௨0)

[இதுமுதல் நான்குகவிகள்-ஒருதொடர்; துரியோதனன் பலவாறு பழித்துரைத்தல்.]

௧௨௧. புன்பிறப்புடையபொதுவர்தங்களொடுபுறவிலானிரைபுரந்திடு, முன்பிறப்புமுரலோடுகோவியருனைப்பிணித்ததுமறந்துநீ, மன்பிறப்பிலுயர்குருகுலத்தவர்தம்வாய்மைதானுமொருமாசிலா,வென்பிறப்புமுணராமலோசபையிலிந்தவாசகமியம்பினாய்.

(இ - ள்.) புல் பிறப்பு உடைய - இழிவான உற்பத்தியையுடைய, பொதுவர்தங்களொடு - இடையர்களுடனே, புறவில் - முல்லை நிலமாகிய காட்டிலே, ஆன் நிரை - பசுக்கூட்டங்களை, புரந்திடும் - மேய்த்திடுகின்ற,உன் - உன்னுடைய, பிறப்பும் - பிறப்பின் இழிவையும்,கோவியர் - இடைப்பெண்கள், உனை - உன்னை, உரலோடு - உரலுடனே, பிணித்ததும் - கட்டிவைத்த அவமானத்தையும், நீ மறந்து—,—மன் பிறப்பில் உயர் - இராசகுலங்களிலே சிறந்த, குருகுலத்தவர்தம் - குருகுலத்திற் பிறந்த அரசர்களது, வாய்மைதானும் - சத்தியத்தையும்,ஒரு மாசு இலா என் பிறப்பும் - ஒரு குற்றமுமில்லாத எனது பிறப்பின்பெருமையையும், உணராமலோ-அறியாமலோ, சபையில்-சபையிலே, இந்த வாசகம் இயம்பினாய் - (நீ) இவ்வார்த்தைகளைச் சொன்னாய்? (எ - று.)

மறவாமலும் அறிந்தும் இருப்பாயாயின் இங்ஙனங் கூறா யென்பதாம். கோவிய ரென்ற சொல்லில் - கோபஸ்திரீக ளென்ற பொருள்மாத்திரமேயன்றி,கோபமுடையவ ரென்ற பொருளுந் தோன்றுமாறு அறிக; "மாறுகொண்டேயொருகோபி பற்றி,யடிக்கும்பொழுதில்" என்றார் திருவரங்கத்து மாலையிலும். வாசகம் - வடசொல். (௧௨௧)

௧௨௨. ஏவிலங்குசிலையைவர்வந்தணுகின்யானயர்ந்தெளிதிருப்பனோ, கோவிலங்குபொரவஞ்சுமோகரடகுஞ்சரங்கள்பகைகொண்டகால், மேவிலங்குமுன்மலைத்தல்கையறையவேண்டுமென்றதுநின்மேன்மையோ, நாவிலங்குமெனவெண்ணியோமிகவுநன்றுநன்றரசர்ஞாயமே.

(இ - ள்.) ஏ - அம்புகள், இலங்கு - விளங்கப்பெற்ற, சிலை - வில்லையுடைய, ஐவர் - பஞ்சபாண்டவர், வந்து அணுகின் - (போருக்கு)வந்து நெருங்கினால், யான் அயர்ந்து எளிது இருப்பனோ - நான் சோர்வடைந்து எளிமையாக இருந்திடுவேனோ? கரட குஞ்சரங்கள் பகை கொண்ட கால் - மதயானைகள் விரோதித்து எதிர்த்தலைச்செய்த காலத்து,கோ இலங்கு-இராசமிருகமாகிய சிங்கம், பொர அஞ்சுமோ - (அவற்றுடன்) போர்செய்தற்குப் பயப்படுமோ? 'அங்கு மலைத்தல் மேவில் - அவ்விடத்துப் போர்செய்வதை உடன்பட்டால், முன் கை அறைய வேண்டும்-முன்னே கையடித்துத்

தரவேண்டும்', என்றது-என்று(நீ)கூறினது, நின் மேன்மையோ-உனதுசெருக்கினாலோ? நா விலங்கும் என எண்ணியோ-(எனது)சொல் தவறுமென்றுகருதியோ? அரசர் ஞாயம் மிகவும் நன்று நன்று - அரசர்களது நீதி மிக அழகிது அழகிது! (எ - று.)

அரசனாகியஎன்னை அரசனாகியநீ இங்ஙனம் மதித்தது சிறிதுந்தகாதென்றவாறு. மிருகேந்திரனான சிங்கமொன்று மதயானைகள் பலவற்றிற்குப் பயப்படாமல் அவற்றை எளிதில் அழித்தல்போல,ராஜராஜனான நான் செருக்குக்கொண்ட பாண்டவரைவர்க்கு அஞ்சாமல் அவர்களை அழித்திடுவேனென்பதாம். முன்னிரண்டடி - எடுத்துக்காட்டுவமை. முதலடி - உபமேயமும், இரண்டாமடி - உபமானமுமாம். ஏ+இலங்கு=ஏவிலங்கு; தனிமொழியாகிய பெயர்ச்சொல் ஏகாரத்தின்முன் வகரவுடம்படுமெய் தோன்றிற்று. குஞ்சரமென்னும் வடசொல்லுக்கு - காட்டுப்புதர்களிற் சஞ்சரிப்பதென்று பொருள்; குஞ்சம் - புதர். நா-சொல்லுக்குக் கருவியாகுபெயர். நன்று நன்று - அடுக்கு, இகழ்ச்சிபற்றினது; மிகவும் நன்றுநன்று: எதிர்மறையிலக்கணை. ஞாயம் - ந்யாயமென்னும் வடசொல்லின் திரிபு. (கஉஉ)

கஉங. அளிவருங்குழல்பிடித்துமன்னவையிலைவருக்குமுரியாளைநா, னௌிவருந்துகிலுரிந்தபோ தருகிருந்து கண்டவர்களல்லவோ, துளிவரும்புனல்பரிந்தருந்தியிடுசோறுதின்றுயிர்சுமந்துதோ, ளிளிவரும்படியிருந்தபாவியருமின்றுமானநிலையுணர்வரோ.

(இ - ள்.) ஐவருக்கும் உரியாளை - பாண்டவரைந்துபேருக்கும் உரிய மனைவியான திரௌபதியை, மன் அவையில்-இராசசபையிலே,(துச்சாதனனால்), அளி வரும் குழல் பிடித்து - வண்டுகள் மொய்க்கப்பெற்ற கூந்தலைப் பிடித்து இழுத்து வந்து,நான்—,எளி வரும் துகில் உரிந்த போது-அவமானமுண்டாதற்குக் காரணமான வஸ்திராபஹரணத்தைச் செய்த காலத்தில், அருகு இருந்து கண்டவர்கள் அல்லவோ - (யாதொன்றுஞ் செய்ய முடியாமல்) பக்கத்தி லிருந்து பார்த்துக்கொண்டிருந்தவர்களன்றோ; துளி வரும் புனல் பரிந்து அருந்தி-(காட்டில்) சிறுதுளிகளாக வருகின்ற [கிடைத்தற்கரிய] நீரை வருத்தப்பட்டு [அல்லது விரும்பி]க் குடித்து, இடு சோறு தின்று - (யாவராயினும்) இட்டசோற்றைத் தாம் உண்டு, உயிர் சுமந்து - அரிதின்உயிரைத்தாங்கி, தோள் இளி வரும்படி இருந்த - புயங்கள் இழிவடையும்படிபிழைத்திருந்த, பாவியரும்-பாவிகளான அப்பாண்டவர்களும், இன்று - இப்பொழுது, மானம் நிலை உணர்வரோ-மானத்தின் நிலைமையை அறிவார்களோ? [அறியா ரென்றபடி]; (எ - று.)

அருந்துகில் எளிவுஉரிந்தபோதுஎனப்பிரித்துஇயைத்து, பிறராற்களைதற்கு அருமையான ஆடையை யான் எளிதில் கவர்வித்தபொழுது என்று உரைப்பாருமுளர். துரியோதனனது அக்கிரமத்துக்குத் துச்சாதனன் கைபோல அபேதமாகத் துணைநின்றனனாதலால், 'நான் அளிவருங்குழல் பிடித்துத் துகிலுரிந்தபோது' என்றது.துளிவரும்புனல் பரிந்தருந்தி என்றது, கடுங்காட்டில் வேண்டியபொழுது நீர் கிடைத்தலரி தாதலின்;அதனைக் கீழ் நச்சுப்பொய்கைச்சருக்கத்து வரலாற்றாலு மறிக. இடுசோறு என்றது, வனவாசகாலத்தில் சூரியன்கொடுத்த அக்ஷயபாண்டத்தாலும், அஜ்ஞாதவாசத்தில் விராடராசனாலுங் கிடைத்த உணவை. உண்டு என்னவேண்டிய விடத்துத் தின்று என வினைமாற்றிக்கூறியது, இகழ்ச்சிவிளக்கும்; ஒருவகையுபசாரவழக்கு. இளிவரும் என்றதில், இளிவா - பகுதி; அது - இழி வா என்ற இரண்டுபகுதிகள் ஒருசொல்தன்மைப்பட்டுப் போலிபெற்று நின்றது போலும். இராச்சியமுழுவதையும் இரண்டறஆளும் பாக்கியசாலிகளான எங்கள் போலன்றி,பாண்டவர்கள் இருந்த ராச்சியத்தையும் இழந்து அலைந்துவருந்

தூதற் கேற்ற தீவினை யுடைய ரென்பான்,பாவிய ரென்றான். பாவி - பாபீ என்ற வடமொழியின் திரிபு. (கஉங)

கஉ௪. அன்னையானவருமிருவராமுதலளித்ததந்தையர்களைவ ராம்,பின்னையாசைகொடுகுருகுலத்துரிமைபெறுவராமொருபிறப்பி லோர், மின்னையாமிவர்களைவரும் பரிவினொடுதனித்தனிவிரும்புவா, ரன்னையாமவரோடொருகுலத்தரசனென்பதம்மவிவையென்கொ லாம்.

(இ - ள்.) (இப்பாண்டவர்க்கு), அன்னை ஆனவரும் இருவர் ஆம் - தாயானவர்களும் இரண்டுபேராம்; முதல் அளித்த தந்தையர்கள் ஐவர் ஆம் - பிரதானமாய் இவர்களைப்பெற்ற பிதாக்கள் ஐந்துபேராம்; (இங்ஙன மிருக்க), பின்னை - பின்பு, ஆசை கொடு - விருப்பங்கொண்டு, குருகுலத்து உரிமை பெறுவர் ஆம் - குருகுலத்துக்குரிய பாத்தியதையை அடைந்தவரா வர்களாம்; இவர்கள் ஐவரும் - இப்பாண்டவர் ஐந்துபேரும், ஒரு பிறப் பில் - ஒருசன்மத்திலே, ஓர் மின்னை - ஒருபெண்ணை, பரிவினொடு-அன்புட னே, தனித்தனி விரும்புவார் ஆம்-(மணஞ்செய்துகொண்டு) தனித்தனி கா தலிப்பராம்; அவரொடு ஒரு குலத்து அரசன் என்பது - அவர்களோடு ஒப்ப ஒருகுலத்திற்பிறந்த அரச னென்று சொல்வது, என்னை ஆம் - (தாய் தந்தை குலத்துரிமை மணஞ்செய்தல் முதலிய எவற்றிலும் ஒருகுற்றமுமில் லாத) என்னையாம்; அம்ம - ஆச்சரியம்! இவை என்கொல் ஆம் - இவைகள் என்ன அநீதியாம்! (எ - று.)

இதில், ஆம் எனப் பலவிடத்தும் வந்த சொல்-அலட்சியந்தோன்றநிற் கும்;"கைத்தோடுஞ் சிறை கற்போயை, வைத்தோ னின்னுயிர்வாழ்வானும், பொய்த்தோர்வில்லிகள் போவாராம், இத்தோடொப்பதி யாதுண்டே" எனக் கம்பராமாயணத்திற் போல: கீழ் மணிமான்வதைச்சருக்கத்தில், "ஒருவனும் மானுடன்" என்பது முதலிய மூன்றுகவிகளிலுங் காண்க. அன்னையர் இருவர்-குந்தியும், மாத்திரியும். தந்தையர் ஐவர் - யமன், வாயு, இந்திரன், அசுவிநீதேவரிருவர் என்பவர். பேருக்குத் தந்தையான பாண்டு அப்பிரதானனென்று, 'முதலளித்ததந்தையர்' என்றான்.வளர்த்தவன்பாண் டுவாயினும், பெற்றவர் வேறுபல ரென்க. மூத்தவன் இளையவன் என்னும் முறைமையைப்பார்த்தல் முதலியன ஒருகுலத்திற்பிறந்தவர்களுக்கன்றோ? இவர்கட்கும் குருகுலத்துக்கும் என்னசம்பந்த மென முதலுக்கே சுழிவைக் கத் தொடங்குகிறான். மின்-பெண்ணுக்கு உவமையாகுபெயர். தன்னை அவர்க்குஉடன்பிறந்தவனென்பதும் அகௌரவமென வெறுக்கிறான்.(கஉ௪)

[கண்ணன்அவ்விடத்தினின்றுபுறப்பட்டு விதுரன்மாளிகையையடைதல்.]

கஉரு. ஞாலமுற்றுமுடையவன்மொழிந்திடநகைத்துவண்டுவ ரைநாதனுஞ்,சாலமுற்றுமினியவர்கருத்தெனநினைந்துபேரவைதண ந்துபோய்க், கோலமுற்றசிலைவிதுரன்வாழ்வுபெறுகோயில்சென்று நணிகுறுகினான், சீலமற்றவர்சினந்தபோதுமொருதீதிலாதவர்செயிர் ப்பரோ.

(இ - ள்.) ஞாலம் முற்றும் உடையவன் - நிலவுலகமுழுவதையுந் தன தாகவுடைய துரியோதனன், மொழிந்திட-(இவ்வாறு)சொல்ல,—வள் துவ ரை நாதனும் - அழகிய துவாரகாபுரிக்குத் தலைவனான கண்ணபிரானும்,— நகைத்து - (அவனதுபேதைமைச்செருக்கை நோக்கிச்)சிரித்து, இனி அவர் கருத்து சால முற்றும் என நினைந்து - இனிமேல்அப்பாண்டவர்களதுஎண் ணம் மிகமுடிவுபெறு மென்று எண்ணி, பேர் அவை தணந்து போய்-பெரிய

அச்சபையை நீங்கிப் புறப்பட்டு, கோலம் உற்ற சிலை விதுரன் வாழ்வுபெறு கோயில் - அழகுமிகுந்தவில்லையுடைய விதுரன் வாழ்தலைப்பெற்ற திருமாளிகையை, சென்று நனி குறுகினன்-போய்த் தகுதியாக அடைந்தான்; சீலம் அற்றவர் சினந்த போதும்-நல்லொழுக்கமில்லாதவர்கள் கோபங்கொண்ட காலத்திலும், ஒரு தீது இலாதவர் - சிறிதுந் துர்க்குணமில்லாத பெரியோர்கள், செயிர்ப்பரோ-(எதிரில்) கோபிப்பார்களோ? [கோபியார் என்றபடி].

துர்க்குணமுடைய துரியோதனன் இங்ஙனங் கோபங்கொண்டதற்குச் சற்குணநிதியான கண்ணன் எதிராகச் சிறிதுஞ்சீறினனில்லை யென்ற சிறப்புப்பொருளை, நான்காமடியிற் கூறிய பொதுப்பொருளால் விளங்க வைத்ததனால், வேற்றுப்பொருள்வைப்பணி. (கஉ௫)

[கண்ணனுக்கு விருந்திட்டதுபற்றி விதுரனைத் துரியோதனன் சினந்து கூறுதல்.]

கஉ௬. கரிந்துமாலைசருகாகவும்புதியகமலவாண்முகம்வெயர்க்கவுந்,திருந்துகண்ணிணைசிவக்கவுங்கொடியசெய்யவாயிதழ்துடிக்கவு,மிருந்தபேரவையினெடிதுயிர்த்திடுமிராசராசனவனுக்கிவன், விருந்துசெய்தவுறவென்கொலென்றரசரெதிர்விதுரனைவிளம்புவான்.

(இ - ள்.) மாலை - (தான் தரித்த) பூமாலைகள், கரிந்து சருகு ஆகவும்-கருகி உலர்ந்துபோகவும்,—புதிய கமலம் வாள் முகம் - அன்றலர்ந்த செந்தாமரைமலர்போன்ற ஒளியையுடைய தனதுமுகம், வெயர்க்கவும் - வேர்வையடையவும்,—திருந்து கண் இணை சிவக்கவும் - அழகாகவுள்ள இரண்டு கண்களும் செந்நிறமடையவும்,—கொடிய செய்ய வாய் இதழ் துடிக்கவும் - கொடுஞ்சொற்களைச்சொல்லுந்தன்மையுள்ள சிவந்த தன்வாயின் உதடுகள் துடிக்கவும்,—இருந்த பேர் அவையில் நெடிது உயிர்த்திடும்-வீற்றிருந்தபெரியசபையிலே (அளவிறந்தகோபத்தாற்) பெருமூச்சுவிடுகிற, இராசராசன்-துரியோதனன்,—(கண்ணன்சென்றபின்பு),—அவனுக்கு இவன் விருந்து செய்த உறவு என்கொல் என்று-'அக்கண்ணனுக்கு இவ்விதுரன் விருந்துபசாரஞ்செய்தற்குஉரிய சம்பந்தம் யாதோ?' என்றுசொல்லி, அரசர் எதிர் - (அங்கிருந்த)அரசர்களதுமுன்னிலையில், விதுரனை விளம்புவான் - விதுரனை (நிந்தித்து)ப் பேசுபவனானான்; (எ - று.)—அதனை, மேலிரண்டு கவிகளிற் காண்க.

இக்கவியிற்கூறிய செயல் பலவும் - தீராப்பெருங்கோபத்தின்காரியம். சொல்லின்கொடுமையை வாயின்மேலேற்றிக் கூறினர். இவனுக்கும் அவனுக்கும் நெருங்கின உறவில்லை யென்பான், 'என்கொல்' என்றான். (கஉ௬)

[இதுவும், மேற்கவியும் - துரியோதனன் விதுரனைப் பழித்துக் கூறுதல்.]

கஉ௭. வன்பினாலவனிவௌவவென்றுகொலென்மனையிலுண்டியைமறுத்தவன்,றன்பதாகினியொடினிதருந்தும்வகைதன்னிலின்னமுதியற்றினா,னென்பிதாவொடுபிறந்துமின்றளவுமென்கையோதனமருந்தியு, மன்புதானுடையனல்லனென்பகைதனக்குமுற்றபகையல்லனோ.

(இ - ள்.) (இவ்விதுரன்), வன்பினால் அவனி வௌவ என்று கொல் - பலாத்காரமாக(எனது) இராச்சியத்தைப்(பாண்டவர்) பறித்துக்கொள்ளவேண்டுமென்றுகருதியோ? என் மனையில் உண்டியை மறுத்தவன் தன் பதாகினியொடு இனிது அருந்தும் வகை தன் இல் இன் அமுது இயற்றினான் - எனதுவீட்டில் உணவுகொள்ளுதலையொழித்த கண்ணன் தனதுசேனையுடனே இனிமையாக உண்ணும்படி தனதுவீட்டில்(அவனுக்கு)இனியஉண

வை அமைப்பித்தான்; (இவன்), என் பிதாவொடு பிறந்தும் - எனது தந்தையுடனே ஜநித்தும், இன்று அளவும் என் கை ஓதனம் அருந்தியும் - இன்றைத்தினம்வரையிலும் எனதுகையால் அளிக்கப்பட்ட அன்னத்தைப் புசித்தும், அன்புதான் உடையன் அல்லன் - (என்னிடத்து) அன்புடையவனல்லன்; (ஆதலால்), என் பகை தனக்கும் உற்ற பகை அல்லனோ - எனக்கு நேரிற்பகைவனாகவுள்ளவனினும் (மறைந்து உட்பகைவனாகவுள்ள இவன்) மிகுந்தபகையாளியல்லனோ? (எ - று.)

"பழுதெண்ணுமந்திரியிற்பக்கத்துட்டெவ்வோரெழுபதுகோடியுறும்" என்ற நீதியைக் கருதி, அகப்பகையானஇவன் புறப்பகையினுங் கொடியனென்றான். இனி, 'என்பகை தனக்கும் உற்றபகையல்லனோ' என்பதற்கு - எனக்குப்பகைவனாகவந்த கண்ணனைத் தனக்கும் பொருந்திய பகைவனாக (என்மனிதனான இவ்விதுரன்) பாவிக்கவேண்டுவது கடமையன்றோ? என்ற கருத்துப்பட உரைப்பாருமுளர். வெளவ - அகரவீற்றுவியங்கோள்; வெள - பகுதி. உண்டி - உண்ணப்படுவது; உண் - பகுதி, ட் - எழுத்துப்பேறு, இ - செயப்படுபொருள்விகுதி. பதாகிநீ என்னும் வடசொல்லுக்கு - கொடியையுடைய தென்று பொருள்; பதாகா - கொடி. யுதிட்டிரன்முதலிய ஐவர்க்குப் பாண்டு சொந்தத்தந்தையல்ல னெனக் கீழ்க்கூறினனாதலால், விதுரனை அவர்கள்தந்தையோடுபிறவாமல் தன்தந்தையோடுமாத்திரம் பிறந்தவனாகப் பேசினன். பிதா, ஓதநம் - வடசொற்கள். கையோதனம் என்றது, சுதந்திரத்தை நன்குவிளக்க. உம்மைகள் - உயர்வுசிறப்பு. (கஉஎ)

கஉஅ. முதல்விழைந்தொருவனுடனியைந்தபொருள்பற்றியின்புறமுயங்கினு, மதிகமென்றபொருளொருவன்வேறுதரினவனையேயொழியவறிவரோ, பொதுமடந்தையர்தமக்குமண்ணிலிதுபுதுமையல்லவவர்புதல்வனும், விதுரனின்றவனொடுறவுகொண்டதோர்வியப்பையென்சொலிவெறுப்பதே.

(இ - ள்.) (தாசிகள்), இயைந்த பொருள் பற்றி - (ஒருவன்) மனமிசைந்துகொடுத்த செல்வத்தைக் கைப்பற்றிக்கொண்டு, ஒருவனுடன் - அவ்வொருபுருஷனுடனே, முதல் விழைந்து இன்பு உற முயங்கினும் - (அப்பொருள்காரணமாக)முதலில் விரும்பிஇன்பம்மிகக் கூடியிருந்தாலும், (பின்பு), வேறு ஒருவன் அதிகம் என்ற பொருள் தரின் - வேறொருபுருஷன் அதனினும்மிகுதியான செல்வத்தைக் கொடுத்தால், அவனையேஒழிய அறிவரோ - அவ்விரண்டாமவனைத்தவிர(முன்னவனை ஒருபொருளாக)மதிப்பார்களோ? [மதியார்]; பொது மடந்தையர் தமக்கு மண்ணில் இது புதுமை அல்ல - (ஒருவனுக்குஉரியவரல்லாமல் பொருள்கொடுப்பவரெல்லோர்க்கும்) பொதுப்பட்ட விலைமகளிர்க்கு உலகத்தில் இவ்வியல்புகள் புதிதானவையல்ல [தொன்றுதொட்டுள்ளவை]; (ஆதலால்), அவர் புதல்வன் ஆம் விதுரன் - அப்படிப்பட்டவர்களுள் ஒருதாசியினது புத்திரனாகிய விதுரன், இன்று - இப்பொழுது, அவனொடு - (புதிதாய்வந்த) கண்ணனுடனே, உறவு கொண்டது - (பழையவனான என்னிடம் அன்பைவிட்டு)நண்புபாராட்டினதாகிய, ஓர் வியப்பை - ஒரு அதிசயத்தை, என் சொலி வெறுப்பதே - என்னசொற்சொல்லி வெறுக்கவேண்டுவது? (எ - று.)—இது, அல்ல - ஒருமைப்பன்மைமயக்கம்.

வெறுக்கக்காரணமில்லை, தாயின்குணம் மகனைத்தொடர்ந்தது எனப் பழித்தான். பாண்டவர்க்கு இராச்சியம்வந்தால் தனக்குஅதிகசெல்வாக்கு இருக்குமென்று இங்ஙனஞ்செய்தான்போலுமெனக் கருதினன். (கஉஅ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்: விதுரன் துக்கமறுமொழிகூறி வில்லைமுறித்துப்போகடுதல்.]

கஉகூ. இன்னவாறிவனுரைத்தபோதவனெழுந்திருந்துவசை யென்னைநீ, சொன்னவாய்குருதிசோரவாள்கொடுதுளைத்துநின்மு டிதுணிப்பன்யான், மன்னவாகுருகுலத்திலேயொருவன்மைந்தனுரு யிரைவௌவினு, னென்னவானவர்நகைப்பரேயெனையுரைத்தநாவு டனிருத்தியோ.

(இ - ள்.) இன்ன ஆறு - இந்தப்படி, இவன் - துரியோதனன், உரை த்த போது - சொன்னபொழுது, அவன் - விதுரன், எழுந்திருந்து-(வருத்தத் தோடு)எழுந்துநின்று, நீ என்னை வசைசொன்ன வாய்-நீ என்னைப்பழிமொழி கூறின வாயில், குருதி சோர - இரத்தம் பெருகும்படி, யான்—, வாள்கொடு துளைத்து-(அதனை என்)வாளாயுதத்தால்துளைசெய்து, நின்முடி துணிப்பன்- உனது தலையையும் வெட்டிடவல்லேன்; மன்னவா-அரசனே! குருகுலத்திலே ஒருவன் மைந்தன் ஆர் உயிரை வௌவினுன் என்ன - (சிறந்த) குருவமிசத் திலே ஒருத்தன் புதல்வனது அருமையான உயிரைக்கவர்ந்தானென்று, வான வர் நகைப்பரே - (இவ்வுலகத்தாரேயன்றித்) தேவர்கள் பரிகசித்துச் சிரிப் பார்களே; [அதற்கே ஆலோசிக்கிறேனென்றபடி]; எனை உரைத்த நாவுடன் இருத்தியோ-(இல்லாவிடின்) என்னை (நிந்தித்துக்) கூறின நாக்கோடு(இன் னும்நீ)வாழ்ந்திருப்பாயோ? (எ - று.)—'எழுந்திருந்து' என்பது மேல் கஙக- ஆங் கவியோடு இயையும்.

'மன்னவாழ்குருகுலம்' என்றபாடத்துக்கு - (தொன்றுதொட்டு) நிலை பெறவாழுங் குருமரபெனக. உயிரைவௌவுதல்-உடம்பினின்று ஒழித்தல். இவ்வுலகத்தில் பலர் துரியோதனனோடொப்ப நீதியறியாதவ ராதலால், அவரையொழித்து, வானவரையே கூறினர். மன்னவா என்றது, அரசச்செல் வச்செருக்கினாலன்றோ நீ இவ்வாறுகுளறின தென உணர்த்துதற்கு. (கஉகூ)

க௩0. ஈண்டவர்க்குதவியாயதூதெனவிசைப்பவற்குலகமெங்க ணு, நீண்டவர்க்குதவியாயினேனெனநினைத்துநீயெனையடர்த்தியே, மாண்டவர்க்குதவியாய பேரறமுமிசையுமாண்மையும்வளர்த்திடும், பாண்டவர்க்குதவியாகிலென்னைமுடிமன்னரானவர்பழிப்பரோ.

(இ - ள்.) ஈண்டு - இவ்விடத்தில், அவர்க்கு - அப்பாண்டவர்களுக்கு, உதவி ஆய-துணையான, தூது என - தூதனென்று, இசைப்பவற்கு-சொல் லப்பட்டவனாகிய, உலகம் எங்கணும் நீண்டவற்கு - எல்லாவுலகங்களிலும் (திரிவிக்கிரமனாய்) நீண்டுவளர்ந்த கண்ணபிரானுக்கு, உதவி ஆயினேன் - விருந்துஉதவுதல்செய்பவனானேன், என-என்று, நினைத்து—, நீ—, எனை - என்னை, அடர்த்தியே-(நிந்தனைசொல்லி) வருத்துகிறாயே; (இங்ஙனமன்றி), மாண்டவர்க்கு - (அறிவு குணம் செயல்களில்)மாட்சிமைப்பட்டவர்களான, உதவி ஆய பேர் அறமும் இசையும் ஆண்மையும் வளர்த்திடும் பாண்டவர் க்கு - (இம்மைமறுமைகளில்) உதவுவதான சிறந்த தருமத்தையும் கீர்த்தி யையும் பராக்கிரமத்தையும் அபிவிருத்திசெய்யுந்தன்மையுள்ள அப்பாண்ட வர்களுக்கே, உதவி ஆகில்-(யான் வெளிப்படையாகப் போரில்) துணைவனா னல், முடி மன்னர்ஆனவர் என்னை பழிப்பரோ-கிரீடாதிபதிகளான அரசர் கள் என்னை நிந்திப்பார்களோ? [நிந்தியார் என்றபடி]; (எ - று.)

'பாண்டவதூதனுக்கு உதவினதற்கு, நீ இப்பொழுது என்னைப் பழித் திட்டாயே; அப்பாண்டவர்க்கே உதவினாலும் குற்றமுண்டோ?' என்றான். இரண்டும் குற்றமாகாமைக்கு, 'இவன், பரிசுத்தரான பாண்டவர்க்குத் தூத ன்: துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ் செய்யுந் திருமால்; அவர்கள், எவ்வா

ற்ருனுஞ்சிறந்தவர்'என ஏற்றஅடைமொழிகொடுத்து விளக்கினுன். இசைப் பவற்கு,நீண்டவற்குஎன்பனவும், மாண்டவர்க்கு,பாண்டவர்க்குஎன்பனவும்-ஒருபொருட்பலபெயர்கள். உலகமெங்கணும்நீண்டவற்கு என்றது, உன்னை விட எத்தனையோமடங்கு பலபராக்கிரமங்களிற் சிறந்தவனும் யோக்கிய னும் திரிலோகாதிபதியுமாகிய அசுரராசனுனமாவலி தேவர்களது அரசைக் கவர்ந்து ஒருகணப்பொழுதில் எம்பெருமானுற் பட்ட பாட்டைக் கருதுவா யெனக் குறிப்பித்தபடியாம்;இனி,இத்தொடரில்,பகவானதுஸர்வாந்தர்யா மித்துவம்,ஜகச்சரீரகத்துவம், சௌலப்பியம் முதலிய திருக்கலியாணகுணங் கள் விளங்குமாறுங் காண்க. மாண்டவர்க்கு உதவியாய என்பதற்கு - நல் லோர்களுக்குச் சகாயரான என்றும்,மாண் தவர்க்கு எனப் பிரித்து-சிறந்த தவத்தைச் செய்யும் முனிவர்களுக்கு உதவுபவரான என்றும் பொருள் கொள்ளலாம். இனி, இந்தஅடைமொழியை அறம்முதலியவற்றிற்குச் சேர் ப்பினும் அமையும். (கந0)

கநக. சொல்லிரண்டுபுகலேனினிச்சமரினின்றுவெங்கணைதொ டேனெனு, வில்லிரண்டினுமுயர்ந்தவில்லதனைவேறிரண்டுபடவெட் டினுன்,மல்லிரண்டினையுமிருவராகிமுன்மலைந்தகாளமுகில்வந்துதன், னில்லிரண்டுதினம்வைகுதற்குலகிலெண்ணிலாததவமெய்தினுன்.

(இ - ள்.)'சொல் இரண்டு புகலேன்-(யான்)இரண்டுவார்த்தை சொல்ல மாட்டேன்;இனி சமரில் நின்று வெம் கணை தொடேன்-இனிமேல் போரில் (எவர்பக்கத்தும்)நின்று கொடியஅம்பைத்தொடுக்கமாட்டேன்',எனு-என்று சொல்லி,வில் இரண்டினும் உயர்ந்த வில்லதனை - (உலகத்திற்பிரசித்தமான சிவதநுசு விஷ்ணுதநுசு என்ற)இரண்டுவிற்களுட் சிறந்த (விஷ்ணுவினதா கிய தனது) வில்லை, வேறு இரண்டுபட வெட்டினுன் - தனித்தனி இரண்டு துண்டாம்படிவெட்டியெறிந்துவிட்டான்: (யாவனெனில்),-மல்இரண்டினை யும்-(சாணூரன் முஷ்டிகன் என்னும்) இரண்டுமல்லர்களையும், இருவர் ஆகி-(தானும் பலராமனு மாக) இரண்டுபேராயிருந்து, முன் மலைந்த - முன்னே [இளம்பிராயத்தில்] போர்செய்து அழித்த,காளம்முகில்-கரியமேகம்போன்ற ஸ்ரீகிருஷ்ணபகவான்,தன் இல்-தனதுமாளிகையிலே,வந்து இரண்டுதினம் வைகுதற்கு - எழுந்தருளி இரண்டுநாள் தங்கியருளுதற்கு, உலகில் - இவ் வுலகத்திலே, எண் இலாத தவம் எய்தினுன்-அளவில்லாத தவப்பேற்றைப் பெற்றவனுன விதுரன்; (எ - று.)

வில்இரண்டுஇன்னவையென்பது,அடுத்தகவியில்"அச்சுதன்சந்தவில்லு மான்வில்லும்"என்றதனுலும் அறியப்படும். இவ்விரண்டுவிற்களின் வரலாற் றையுஞ் சிறப்பையும் "ஒருகால்வருகதிராமென வொளிகால்வன வுலையா, வருகார்தவழ் வடமேருவின் வலிசால்வன வையம்,அருகாவினை புரிவானுள னவனு லமைவன தாம், இருகார்முக முள யாவையு மேலாதன மேனுள்", "ஒன்றினையுமையாள்கேள்வ னுவந்தனன் மற்றையொன்றை, நின்றுலகளந்த நேமி நெடியமால் நெறியிற்கொண்டான்" எனக் கம்பராமாயணத்துப் பரசுராமப்படலத்துக் கூறியதனுலும் உணர்க. இனி,வில்இரண்டினும்உயர் ந்த வில்லதனைஎன்பதற்கு-தனதுவிற்களிரண்டட்சிறந்தவொருவில்லையென் றும்,பிரசித்தமான சிவவில் விஷ்ணுவில் என்ற இரண்டினுஞ் சிறந்த தனது வில்லை யென்றும் பொருள்படு மாயினும், மேல் - கசக - ஆங்கவியில் "இரு சிலையுண்டென்றிந்த விருநிலத்தியம்பும் வில்லின்,ஒருசிலை முறித்த சீற்றம்" எனக் கண்ணன் கூறியருளுதலை நோக்கி, அவற்றையொழித்து, பொருத்த மான பொருள் கொள்ளப்பட்டது.சிவன்வில் திருமால்வில் என்றஅவ்விரண் டனுள், பலமுறை முறிந்துபோன சிவன்வில்லினும் என்றும்முறியாத திரு மால்வில் சிறந்ததாதல் அறிக; அதனை "ஆனம்முடையுமையண்ணலை யந்நா

ஞுறுசிலைதான், ஊனம்முளது'',''செருமலைகின்றபோழ்தில் திரிபுரமெரித்த தேவன், வரிசிலையிற்றது'', ''ஊனவில்லிறுத்தமொய்ம்பு'', ''வேதியாவிறுவ தேயன்றி வெண்மதிப்,பாதியான்பிடித்தவில் பற்றப்போதுமோ''என்ற கம் பர்வாக்குக்கொண்டும் உணர்க. ''வெற்றி, காட்டிய கரியமாலும் கார்முகந் தன்னைப்பாரில், ஈட்டியதவத்தின்மிக்க இரிசிகற்கீந்துபோனான்'', ''இரிசிக னெந்தைக்கீயவெந்தையுமெனக்குத்தந்த,வரிசிலையிதுநீநொய்தின்வாங்குதி'' எனக் கம்பராமாயணத்துக் கூறியபடி பரம்பரையாக இராமபிரானிடம் வந்துசேர்ந்த திருமால்வில், பின்பு வழிமுறையாக விதுரனளவும் வந்து சேர்ந்திட்டதுபோலும்.

கம்சசபையிற் கிருஷ்ணபலராமர்செல்லுகையில்,தம்மைக்கொல்லும்படி அவனுலேவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள்சிலர் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர்செய்ய, அவர்களையெல்லாம் இந்த யாதவவீரரிருவரும் மற்போரினுலேயே கொன்று வென்றிட்டன ரென்பது கதை. ஆவேசாவதாரமான பலராமனிலும் அம்சாவதாரமான கண்ணன் பிரதான னாதலால், அவனையே இங்குத் தலைமையாக எடுத்துக் கூறியது.

சொல் இரண்டு புகலேன் என்றது, சுருக்கமாகவன்றிப் பலவார்த்தை கூறேனென்றும், இன்று சொன்ன சொல் என்றுந்தவறே னென்றுங் கருத் துப்படும். பின் இரண்டடிகள் - பரமபாகவதரான விதுரரது பாக்கியவிசே ஷத்தை விளக்கின. மிகுந்ததவஞ்செய்திருந்தாலொழிய இங்ஙனங் கண் ணன் அருள்செய்யப் பெறும் பேறு கிடைக்கா தாதலால்,'எண்ணிலாததவ மெய்தினன்' என்றார்.

இனி, 'வில்லிரண்டினினுயர்ந்தவில்' எனப் பாடங்கொண்டு, பிரசித்த மான இரண்டுவிற்கள்போலச் சிறந்த வில் லென்று உரைத்தல், அடுத்தகவி யில் ''அச்சுதன்சந்தவில்லு மரன்வில்லு மொப்பதொரு தாமவில்'' என்பத னேடும், பாரதவெண்பாவில் ''கண்ணுதலான் றன்சிலைக்குங்காகுத்தன் றன் சிலைக்கு, மெண்ணுங்கானோராமெழிற்சிலை'' என்றதனேடும் இயையும்; மேல் கசக - ஆங்கவியில் ''வில்லின்'' என்பதற்கும் - இதற்கேற்ப, விற்கள் போலவெனக் கொள்ளலாம். (கங்க)

[விதுரன் சபையைவிட்டுச்சென்றபிறகு அங்குள்ளஅரசர் வருந்துதல்.]

கஙஉ அந்தவில்லினைமுறித்தவில்லிதனதாலயம்புகுதவச்சுத ன், சந்தவில்லுமரன்வில்லுமொப்பதொருதாமவில்லினைமுறிப்பதே, முந்தவில்லியரிலெண்ணும்வில்லுடையவிசயன் வந்தமரின்முடுகினு, லெந்தவில்லியெதிர்நிற்கும்வில்லியினியென்றுகாவலரிரங்கினர்.

(இ - ள்.) அந்த வில்லினை முறித்த - (அங்ஙனம்)அவ்வில்லை முறித்துப் போகட்ட, வில்லி - வில்வித்தையில்வல்ல விதுரன், தனது ஆலயம் புகுத - தன்னுடைய திருமாளிகையைச் சென்றடைய,—காவலர் - (அச்சபையி லுள்ள)அரசர்கள்பலரும், 'அச்சுதன் சந்தம் வில்லும்-திருமாலினது அழகிய வில்லையும், அரன் வில்லும் - சிவபிரானது வில்லையும், ஒப்பது - ஒத்திருப்ப தாகிய,ஒரு தாமம் வில்லினை - ஒளியையுடையதொரு வில்லை, முறிப்பதே - (இவன்)முறித்தெறிந்துவிடுவதா? வில்லியரில் முந்த எண்ணும் - வில்வீரர் களுள் முதன்மையாக(யாவராலும்)மதிக்கப்படுகிற,வில் உடைய விசயன் - (சிறந்த காண்டீவமென்னுந்) தனுசையுடைய அருச்சுனன், அமரின் வந்து முடுகினல் - போரில்வந்துபராக்கிரமித்தால்,இனி எதிர் நிற்கும் வில்லி எந்த வில்லி-(அவனுக்கு)இனிமேல்எதிரில் நிற்கும் வில்வீரன் எந்த வில்லாளி?[எவ ருமில்லை யென்றபடி]', என்று—,இரங்கினர்-மனமிரங்கினர்கள்; (எ - று.)

ஏகாரம்-துரியோதனனது அநர்த்தத்துக்குக் காரணத்தை நோக்கின கழிவிரக்கம். எனவே, அருச்சுனனைத் தகுதியாக எதிர்க்க வல்லவன் இப் பக்கத்தில் விதுரனே யென்பதாம். பகவான் எழுந்தருளப்பெற்றதனால், ஆலய மென்றது;"மார்வமென்பதோர் கோயி லமைத்து" என்றாற்போல. அச்சுதன் - அச்யுதன்என்ற வடமொழியின் திரிபு; (தன்னைச் சரணமடைந்தவர் களை) நழுவவிடாதவ னென்றும், அழிவில்லாதவ னென்றும் பொருள். தலைமைநோக்கி, அச்சுதன்சந்தவில்லை முதலிற் கூறினது. முன்கவியில் "வில்லிரண்டினுமுயர்ந்தவில்" என்றதனோடு, இக்கவியில், "அச்சுதன் சந்தவில்லு மரன்வில்லு மொப்பது" என்றது மாறுகொளக்கூற லாகாது: முன்னது கவிக்கூற்றும், பின்னது-அங்குள்ள அரசர்கூற்று மாதலால்; இனி, அக்குற்றத்திற்குச் சிறிதும்இடமின்றி, 'ஒப்பதரு' எனப் பாடங்கொள்ளினும் அமையும். புகுத,து-சாரியை. வில்லி, இ - பெயர்விகுதி; இங்கு ஆண்பாலுக்கு வந்தது. முடுகினால், முடுகு - பகுதி. அரன் - ஹரன்; வடசொல்: (உகாந்த காலத்தில் உலகமனைத்தையும்) அழிக்குங் கடவுள்; (தன்னையடைந்தவர்களது துன்பங்களை) ஒழிப்பவ னென்றும் பொருள் கூறுவர். (கஙஉ)

[வீடுமன் துரியோதனனைக் கண்டித்தல்.]

கஙங. காரனைத்தும்விடுதாரையன்னபலகணைகளேவியமர்கருதும்வில், வீரனைப்பழுதுரைத்தநீபகையையெங்ஙனேதனிகொல்வெல்லுவாய், பாரனைத்துமினியைவராளும்வகைபண்ணுவித்தனையழிந்ததுன், பேரனைத்துமெனவுள்ளழிந்துசிலபேசினானுயர்பிதாமகன்.

(இ - ள்.) (பின்பு), உயர் பிதாமகன் - (கௌரவபாண்டவர்க்குச்) சிறந்த (பெரிய) பாட்டனான வீடுமன்,—உள் அழிந்து - (நடந்தசெய்தியை நோக்கி) மனஞ்சிதைந்து,—'கார் அனைத்தும் விடு தாரை அன்ன-மேகங்களெல்லாம் பெய்கின்ற மழைநீர்த்துளிகளை யொத்த, பல கணைகள்-அநேக பாணங்களை, ஏவி - செலுத்தி, அமர் கருதும் - போர்செய்தலையே விரும்புகிற, வில் வீரனை - வில்லில் வல்ல வீரனான விதுரனை, பழுது உரைத்த-நிந்தனைபேசிய, நீ—, பகையை - பகைவர்களை, எங்ஙனே - எவ்வாறு, வெல்லுவாய் - சயித்திடுவாய்? தனிகொல் - தனியனாகவோ? இனி—, பார் அனைத்தும் - பூமிமுழுவதையும், ஐவர் ஆளும் வகை - பாண்டவர்களே அரசாளும்படி, பண்ணுவித்தனை - நீயேசெய்வித்துவிட்டாய்; உன் பேர் அனைத்தும் அழிந்தது-உனது புகழ்முழுவதும் அழிந்துவிட்டது,' என-என்று, சில பேசினான் - சிலவார்த்தைகளைக் கூறினான்; (எ - று.)

பிதாமஹன் - வடசொல்: தந்தைக்குத்தந்தை. இக்கவியால், வீடுமன் துரோணன் கிருபன் அசுவத்தாமன் கர்ணன் முதலிய எல்லாவீரரினும் விதுரன் சிறந்தவ னென்பது விளங்கும்;மேல் கன்னபருவத்தும்,வீடுமன் துரோணன் என்பவர்க்குமுன் விதுரனைக் கூறுமாறு காண்க. எங்ஙன்-எங்ஙனம் என்பதன் விகாரம். முன்னே அழிந்த புகழ் போக மற்றதும் இப்பொழுது அழிந்துவிட்ட தென்பார், 'உன்பேரனைத்து மழிந்தது' என்றார். (கஙங)

[இதுவும், அடுத்தகவியும் - துரியோதனன் வீடுமனைநோக்கி விதுரனைப்பற்றி அலட்சியமாகக் கூறியவை.]

கஙச. பிதாமகன்பரிவுடன்முனிந்துசிலபேசநாசமுறுபேரனும், விதாரமொய்ம்பனும்விதுரனல்லதுவில்வல்லவீரர்பிறரில்லையோ, வுதாரசீலனுயரங்கர்கோன்வரிவிலொன்றுமேயமையுமுற்றெழும், பதாதியோடமரிலெவரும்படமலைந்திடப்பரணிபாடவே.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பிதாமகன் - வீடுமன், பரிவுடன் - வருத்தத்துடனே [அல்லது அன்புடனே], முனிந்து - கோபித்து, சில பேச - சிலவார்த்தைகளைச் சொல்ல, நாசம் உறு பேரன் ஆம் - அழிவையடைதற்குரிய பௌத்திரனாகிய,விதாரம்மொய்ம்பனும்-போரில்வல்லதுரியோதனனும், (கூறுவான்);-- விதுரன் அல்லது வில் வல்ல வீரர் பிறர் இல்லையோ-விதுரனையன்றி வில்வித்தையில் திறமையுள்ள வீரர் மற்றவர்எவரு மில்லையோ? உதார சீலன் - (லோபஞ்சிறிதுமில்லாத) தானத்தையே ஒழுக்கமாகக் கொண்டவனாகிய, உயர் அங்கர் கோன் - சிறந்த அங்கதேசத்திலுள்ளார்க்குத் தலைவனான கர்ணனது, வரி வில் ஒன்றுமே - கட்டமைந்த வில்லொன்றுதானே, அமரில் - போரில், ஐவரும்-பாண்டவர் ஐந்துபேரும்,உற்று எழும் பதாதியோடு - மிக்கு எழுகிற சேனைகளுடனே, பட-அழியவும், பரணி பாட - (புலவர்கள்) பரணியென்னும்பிரபந்தத்தைப் பாடப்பெறவும், மலைந்திட - போர்செய்தற்கு, அமையும் - போதும்; (எ-று.)—'விதாரமொய்ம்பனும்'என்றது, மேல் கருசு - ஆங் கவியில் 'என்றுகூற' என்பதனோடு இயையும்.

பரணி - தொண்ணூற்றாறு பிரபந்தவகையுள் ஒன்று; அது - போர்முகத்து ஆயிரங்களிற்றியானையைக்கொன்ற வீரனைத் தலைமகனாகக் கொண்டு கடவுள்வாழ்த்தும் வாயில்கடைதிறப்பும் பாலைநிலமும் காளிகோயிலும் பேய்களோடுகாளியும் காளியோடுபேய்களும் சொல்லத் தான்சொல்லக்கருதிய தலைவன்சீர்த்தி விளங்கலும் அவன்வழியாகப் புறப்பொருள் தோன்ற வெம்போர்வழங்க விரும்பலும் என்னும் இவற்றையெல்லாம் இருசீரடி முச்சீரடி யொழித்து மற்றைய அடியாக ஈரடிப்பஃறொழிசையாற் பாடுவது. கலிங்கத்துப்பரணி முதலியன காண்க.

பாட்டன்பெயரைப் பௌத்திரனுக்குஇடுவது பெரும்பாலும் உலகமரபாதலால், அம்மகன்மகனுக்கு, 'பேரன்' என்பது-காரணப்பெயர்; இதனை 'பௌத்ரன்'என்னும் வடசொல் சிதைந்ததென்றுங் கூறுவர். நாசமுறு பேரன் - எதிர்காலவினைத்தொகை; அழியும்பெயரையுடையா னென்றுமாம்: கீழ்க்கவியில் 'பேர்' என்றதற்கும் இவ்வாறே. சிவபிரானது நெற்றிக்கண்ணின் நெருப்புக்கு இரையாய் எரிபட்ட மன்மதனது அங்கம் [உடல்] விழுந்த இடமாதலால், அங்கதேசமென்று பெயர்;"வாரணத்துரிவையான் மதனனைச் சினவுநாள், வீரமற்றநங்கமிங்குகுதலா லிவணெலாம், ஆரணத்துறையுளா யங்கநாடு" என்ற கம்பராமாயணத்தாலும் அறிக. நாசம், பதாதி - வடசொற்கள். பதாதி-காலாட்படை; மற்றைச் சேனைகட்கு உபலட்சணம்; "எடுத்தமொழி யினஞ் செப்பலு முரித்தே;" [நன்-பொது-எ.] முற்றுஎழும் எனஎடுத்து - முழுவதும் எழும் என்றுமாம். துரியோதனனை 'நாசமுறுபேரன்' என்றதனால், பாண்டவர் 'நாசமறுபேரர்' எனத் தொனிக்கும். உதார சீலன்-வடசொற்றொடர். கர்ணனது வில்லுக்குக் காலபிருஷ்டமென்றும், விஜயமென்றும் பெயர். "மேகவாகனன்பாற்பெற்றவெயிலவனியமத்தங்கி, யாகியமுனிவற்கீந்த வரும்பெருஞ்சாபம்பெற்றேன்"என மேற்கன்னபருவத்திற் கூறுவதனாலும் இதன் மகிமையை உணர்க. (கருச)

கருரு. நீயிருக்கநெடுவிற்கையாசிரியனவனிருக்கநிகரற்றவன்,சேயிருக்கவிறன்மன்னரிப்படிதிரண்டிருக்கவெதிர்சென்றுநீள்,வேயிருக்குமிதழிடையனுக்குநல்விருந்துசெய்தவன்வெறுக்கிலென், போயிருக்கிலென்முறிக்கிலென்சிலைமலைந்துநம்மொடெவர்போர்செய்வார்.

(இ - ள்.) நீ இருக்க-(நமதுபக்கத்தில் வீடுமனாகிய) நீ இருக்க,—நெடு வில் கை ஆசிரியன் அவன் இருக்க - நீண்டவில்லேந்திய கையையுடைய ஆசாரியனாகியஅத்துரோணன்இருக்க,—அவன்சேய் நிகர் அற்று இருக்க-அவனது குமாரனான அசுவத்தாமன் ஒப்பில்லாமல் இருக்க,—விறல் மன்னர்

இ படி திரண்டு இருக்க - வெற்றியையுடைய அரசர்கள் பலர் இவ்வாறு கூடியிருக்க,—நீள் வேய் இருக்கும் இதழ் இடையனுக்கு எதிர் சென்று நல் விருந்து செய்தவன் வெறுக்கில் என் - நீண்ட புள்ளாங்குழல் பொருந்தின அதரத்தையுடைய இடைச்சாதியனான கிருஷ்ணனுக்கு எதிர்கொண்டு போய்ச்சிறந்தவிருந்துபசாரஞ்செய்த விதுரனொருவன்வெறுத்தால் என்ன? போய் இருக்கில் என் - (தனியே) போய் இருந்தால் என்ன? சிலை முறிக்கில் என்-வில்லை முறித்துப்போகட்டுவிட்டால் என்ன? நம்மொடு மலைந்து எவர் போர் செய்வார் - நம்மோடு எதிர்த்துப் போர்செய்ய வல்லவர் யாவருளர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

விதுரன்கோபித்துப்போனதனால் நமதுதுணைவலிக்கு யாதொருகுறைவுமில்லை யெனத் துரியோதனன் செருக்கிக்கூறியவாறு. கிருபாசாரியன் பிராயத்தில் முதிர்ந்தவனாய் மூப்படைந்தமை பற்றி, அவனை அப்பிரதானமாகக் கூறாதுவிட்டது; இக்கருத்து, கீழ் வாரணாவதச்சருக்கத்தில் "பரிவுடனிவன்படைபயிற்றப் பின்னரும், குருபதி வேறொரு குருவைத் தேடினானிருளறமதிகிலவெறித்ததாயினும், பரிதியைநயக்கு மிப்பரவைஞாலமே" என்றதுகொண்டும் விளங்கும். இனி, 'ஆசிரியரவர்'எனப் பாடங்கொண்டு, கிருபனையும் அடக்குதலும் ஒன்று.சிவபிரானருளாற் பிறந்த சிறப்புப்பற்றி, அசுவத்தாமனை'நிகரற்று'எனவிசேடித்தது.நிகரற்றவன்சேய் என எடுத்து-நிகரற்றதுரோணனது சேய்என்றும், நிகரற்றசிவனது சேய்என்றும்,நிகரற்றவனான சேய் என்றும் உரைப்பினும் பொருந்தும். செம்மையென்ற பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு முன்நின்றமெய்திரிந்து சேய்என நின்றது; இது-முதலிற்பண்பாகுபெயராய், செந்நிறமுடைய முருகக்கடவுளை உணர்த்தி,பின்உவமவாகுபெயராய், அவனைப்போன்ற பலபராக்கிரமங்களையுடைய மைந்தனைக் குறித்ததனால், இருமடியாகுபெயர்; (குமாரனென்னும் வடமொழியும்,இங்ஙனம் முருகக்கடவுளின் பெயர் மகனை யுணர்த்தும்.)(௧௩௫)

[இதுவும், அடுத்தகவியும் - கர்ணன் கூறிய செருக்குமொழி.]

௧௩௬. என்றுகூறவிறலங்கர்பூபதியும் யானிருக்கவிகல்விசயனைச், சென்றுசீறியுயிர்கொள்ளவல்லவர்கள்யாவரென்றுநனிசெப்புவீர், கன்றினால்விளவெறிந்தகள்வனிவனின்றுதேர்நனிகடாவினும், மன்றுபோரினிடைகாணலாகுமெனதாடல்வெஞ்சிலையினாண்மையே.

(இ - ள்.) என்று கூற - என்று (இவ்வாறு துரியோதனன்)சொல்ல,— விறல் அங்கர் பூபதியும்-சிறப்பையுடைய அங்கதேசத்தார்க்குத் தலைவனான கர்ணனும், 'யான் இருக்க - நான் இருக்கையில், இகல் விசயனை சென்று சீறி உயிர் கொள்ள வல்லவர்கள் யாவர் என்று நனி செப்புவீர் - வலிமையுள்ள அருச்சுனனைப் (போரில் எதிர்த்துப்) போய்க்கோபித்து அவனுயிரைக் கவரவல்லவர் யாரென்று நன்றாகச்சொல்லுகிறீர்; கன்றினால் விள எறிந்த கள்வன் இவன் - கன்றைக்கொண்டு விளாமரத்தை வீசியடித்த மாயையையுடைய இக்கண்ணன், நின்று தேர் நனி கடாவினும்-(முன்னே)நின்று தேரை நன்றாகச்செலுத்தினாலும்,எனது ஆடல் வெம் சிலையின் ஆண்மை-என்னுடைய வெற்றியைத்தரவல்ல வில்லின் திறமையை, அன்று போரினிடை காணல் ஆகும் - அப்பொழுது யுத்தகளத்தில் (யாவர்க்கும் பிரதியக்ஷமாகப்) பார்த்தல் கூடும்; (எ-று.)—இப்பாட்டில்'அங்கர்பூபதியும்' என்றது, வருங் கவியில் 'என்றுஇவைஉரைசெய்தான்' என்பதனோடு முடியும்.

பூபதி - பூமிக்குத்தலைவன்;முன்னே'அங்கர்'எனவந்ததனால்,இது-இங்குக் காரணக்கருதாது, அரசனென்றமாத்திரமாய்நின்றது. கம்ஸனால்ஏவப்பட்ட கபித்தாசுரன், விளாமரத்தின் வடிவமாய், கண்ணன் தன்கீழ்வரும் பொழுது மேல்விழுந்து கொல்வதாக எண்ணி வந்துநிற்க, அதனை யறிந்த

கிருஷ்ணபகவான், அவ்வாறே தன்னைமுட்டிக்கொல்லும்பொருட்டுக் கன்றி னுருவங்கொண்டுவந்த வத்ஸாசுரனைப் பின்னிரண்டுகால்களையும் பிடித்து எடுத்துச்சுழற்றி விளாமரத்தின்மேல் எறிய, இருவரும் இறந்து தமது அசுர வடிவத்துடனே விழுந்தனர் என்பது கதை. கன்று - பசுவின் இளமைப் பெயர்: "யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையு, மானோ டைந்துங் கன்றெனற்குரிய" என்பது-தொல்காப்பியம். கள்வன், வ்-பெயரிடைநிலை. இரண்டாமடிக்கு-அருச்சுனனைக்கொல்லவல்லவர் நானேயன்றி வேறெவரு மில்லை யென்று கருத்து. (கரு௬)

கருள. அம்பரத்தவருடன்றுசீறினு மோரம்பிலேயழிவர்திண் ணம்யான், வெம்பணிப்பகழியேவிலாவியுடன்மீளுவானமரில்விசய னோ, விம்பரிற்புகலவிருதளத்தினுமெனக்குநேரொருவரில்லையென், றும்பர்கற்பகமுநாணவண்மையினுயர்ந்தவீரனிவையுரைசெய்தான்.

(இ - ள்.) அம்பரத்தவர் - (பூமியிலுள்ள மனிதர்கள்மாத்திரமேயன்றி) ஆகாயத்திலுள்ள தேவர்களும், உடன்று சீறினும் - (என்னுடன்) பகைத் துக் கோபித்தாலும், ஓர் அம்பிலே அழிவர்-(என்னுடைய) ஒருபாணத்தினு லே அழிவடைவார்கள்; திண்ணம் -(இது)நிச்சயம்; யான்—,அமரில்-யுத்த த்தில், வெம் பணி பகழி ஏவில் - கொடிய நாகாஸ்திரத்தைப் பிரயோகித் தால், விசயன் - அருச்சுனன், ஆவியுடன் மீளுவானோ-உயிருடன்திரும்பிச் செல்வானோ? [செல்லான், இறந்தேயொழிவனென்றபடி]; இம்பரில் - இவ்வுல கத்திலே, எனக்கு நேர் புகல-எனக்கு உவமை யெடுத்துச்சொல்ல, இரு தள த்தினும் ஒருவர் இல்லை - இருதிறத்துச்சேனையிலும் ஒருத்தரும் இல்லை, என்று இவை - என்று இவ்வார்த்தைகளை, உம்பர் கற்பகமும் நாண வண் மையில் உயர்ந்த வீரன் - தேவர்களது கல்பகவிருட்சங்களும் (இவன்கொ டைக்கு உவமையாகாமல்) வெட்கமடையும்படி தானகுணத்திலே சிறந்த வீரனான கர்ணன், உரை செய்தான் - சொன்னான்; (எ - று.)

செருக்குடையனாதலால்,இங்ஙனம் தற்புகழ்ச்சியும் பரநிந்தையும் செய் தான். அம்பரம் - வடசொல். காண்டவதகன காலத்தில் அவ்வனத்தினி ன்று ஓடுகிற பிராணிகளை அருச்சுனன் அம்பெய்துகொன்று அத்தழலிலே வீழ்த்திவருகிறபொழுது, தக்ஷகனென்னும் நாகராசனது மனைவி தன்குழந் தையாகிய அசுவசேனன் என்னும் சிறுநாகத்தைத் தன்வாயினுள் மறைத்து வைத்துக்கொண்டு ஆகாயமார்க்கத்தில் எழும்ப, அதுகண்டு பார்த்தன் தன்பாணத்தால் அந்நாககன்னிகையின்தலையைத் துணித்துவிட, அதன் வாயிலிருந்த நாககுமாரன் வால்மாத்திரம் அறுப்புண்டு பிழைத்தெழுந்து, தன்தாயைக்கொன்றஅவன்மீது கறுக்கொண்டு, அவனுக்குப்பகைவன்யா ரென்று விசாரித்து, அஸ்திரவடிவமாகிக் கன்னனையடைந்தன னென்பது, 'பணிப்பகழி'என்பதன் வரலாறு.இதனை அருச்சுனனைக்கொல்லவொட்டா தபடி கண்ணன் தந்திரமாகத்தடுத்துவிடுந்தன்மையை, மேல் கன்னபருவத் திற்காண்க. இருதளம்-பாண்டவசேனையும்,கௌரவசேனையும். கல்பகமென் னும் வடசொல்லுக்கு - (நினைத்தமாத்திரத்தில் வேண்டியபொருள்களைக்) கல்பிப்பது என்று பொருள்; கல்பித்தல் - உண்டாகச்செய்தல். அம்பில், இல் - ஐந்தாமுருபு, ஏதுப்பொருளது. (கருஎ)

[வீடுமன் கர்ணனைக்கண்டித்துக்கூறுதல்.]

கருஅ. திசையனைத்தினும்வளைந்ததானவரையிரவிவந்தவொரு திசையின்வாய், நிசையெனப்பொருதுவானவர்க்கரசளித்துவந்தவி றனீர்மையான், விசையனுக்குநிகர்நீகொலோகடவுள்வெண்மதிக்கு நிகர்வெள்ளியோ, வசைவில்விற்றொழிலும் வல்லையோ வெனவொர நைசவிலாதவனறைந்தனன்.

(இ - ள்.) (அதுகேட்டுக் கோபித்து), ஓர் அசைவு இலாதவன் - (எக்காரியத்திலும்) சிறிதுசோர்வுமில்லாத வீடுமன்,—(கன்னனைநோக்கி),—'திசை அனைத்தினும் - எல்லாத் திக்குக்களிலும், வளைந்த - சூழ்ந்துகொண்ட, தானவரை-அசுரர்களை, இரவி வந்தது ஒரு திசையின்வாய் நிசை என-சூரியன்வந்ததொருதிக்கிலே (அவனைக் கண்டமாத்திரத்தில் அழிகின்ற) இருள் போலாம்படி,பொருது-போர்செய்துஅழித்து,வானவர்க்குஅரசுஅளித்துவந்த - (தேவலோகத்துச்சென்று அங்குள்ள) தேவர்களுக்கு அரசாட்சிச்சிறப்பைக் கொடுத்துவந்த, விறல் சீர்மையான்-வெற்றித்தன்மையுடையவனுன, விசையனுக்கு - அருச்சுனனுக்கு,நிகர் - ஒப்பானவன், நீகொல்ஓ-நீதானோ? கடவுள் வெள் மதிக்கு நிகர் வெள்ளியோ - தெய்வத்தன்மையுள்ள வெண்ணிறமுள்ள பூர்ணசந்திரனுக்கு ஒப்பாகுபவன் சுக்கிரன்தானோ? அசைவு இல் வில் தொழிலும் வல்லையோ-(அவ்வருச்சுனனைநோக்குமிடத்து நீ)தளர்ச்சியில்லாத வில்வித்தையும் பயின்றவனுவாயோ?" என-என்று, அறைந்தனன் - கூறினான்; (எ - று.)

அருச்சுனன், அருந்தவமியற்றிப் பரமசிவனிடத்துப் பாசுபதம்முதலிய அஸ்திரசஸ்திரங்கள்பலவற்றைப் பெற்றபின்பு,ஆங்குவந்து அழைத்துப்போன தன்தந்தையான இந்திரனுடனே தேவலோகஞ்சேர்ந்து, அங்கு இந்திரன்முதலிய தேவர்கள் வேண்டிக்கொண்டதனால், அவர்க்குப்பகைவராய்ப் பலநாளாகப் பெருந்துன்பமியற்றிவந்த கடலிடையிலுள்ள தோயமாபுரவாசிகளான நிவாதகவசர் என்னும் அசுரர் மூன்றுகோடி பேரையும், அந்தரத்துள்ள இரணியபுரவாசிகளான காலகேயர் என்ற அசுரர் அறுபதினாயிரவரையும் போர்செய்துஅழித்து ஒழித்தானென்பது, கீழ்நிவாதகவசர் காலகேயர்வதைச்சருக்கத்து வரலாறு.

தானவரென்னும் வடமொழித்தத்திதாந்தநாமத்துக்கு - (காசியபமுனிவரதுமனைவிமார்களுள்)தநு என்பவளது மக்க ளென்று பொருள். ஒளியில் சந்திரனதுபெருமைக்கும் சுக்கிரனதுசிறுமைக்கும் எவ்வளவுவேறுபாடுஉண்டோ? அவ்வளவுவேறுபாடு உண்டு, பலபராக்கிரமங்களில் அருச்சுனனது பெருமைக்கும் கர்ணனதுசிறுமைக்கும் என்பதாம். மூன்றாமடி- எடுத்துக்காட்டுவமையணி. நிசை யென - உவமையணி. சூரியன் உதித்தமாத்திரத்தில் இருள் இருந்தஇடந்தெரியாமல் ஒழிவதுபோல, அருச்சுனனெதிர்த்த மாத்திரத்தில் அசுரர்கள் அனைவரும் இருந்தஇடந்தெரியாமல் ஒழிந்தனரென்க. நிவாதகவசர்கள் இருந்தது கீழ்கடலி லாதலால், 'இரவிவந்ததொரு திசையின்வாய்' என்பதற்கு-சூரியன்உதித்தற்குஇடமான கிழக்குத்திக்கிலே என்றும் பொருள்கொள்ளலாம். பொருது - அழித்து; காரணம் காரியமாக உபசரிக்கப்பட்டது. மதிக்குத் தெய்வத்தன்மை - சிவபிரான்திருமுடியிலுறைதலும், திருமால்திருவுள்ளத்தினின்றுஉதித்தலும், தேவர்க்கெல்லாம் தனதுஅமிருதகிரணமளித்தலும்,ஔஷதிகளெல்லாவற்றுக்குந் தலைவனுதலும் முதலியன. வெண்மை - இனம்விலக்குதற்கு வந்ததல்லாத இயற்கையடைமொழி. வெண்ணிறமுடைமைபற்றி, வெள்ளியென்று பெயர்; இ - பெயர் விகுதி. அளித்து உவந்த என்றும் பிரித்து உரைக்கலாம். நிசை - நிஸாஎன்னும் வடமொழியின் திரிபு. விசையன்-இடைப்போலி. கொல்-அசை.(கஅ)

[கர்ணன் வீடுமனைநோக்கி நிஷ்டூரமாகச் சில கூறுதல்.]

கஅக. அவன்மொழிந்தமொழிதன்செவிப்படலுமருகிருந்தமுதருந்துநீ, யிவனுடன்சிலர்பகைக்கின்மற்றவர்தமிசையுமாண்மையுமியம்புவாய், புவனமொன்றுபடவரினுமென்றனெடுபொருவராயினெதிர்பொரவிடாய், சிவனுமென்கணையையஞ்சுமென்றுநனிசீறினுனிரவிசிறுவனே.

(இ - ள்.) அவன் மொழிந்த மொழி-(இங்ஙனம்) அவ்வீமன் சொன்ன வார்த்தை, தன் செவி படலும் - தனதுகாதில் நுழைந்தவளவிலே [அதனைக் கேட்டமாத்திரத்தில் என்றபடி],—இரவி சிறுவன் - சூரியபுத்திரனான கர்ணன்,— (அவ்வீமனை நோக்கி), 'அருகு இருந்து அமுது அருந்தும் நீ - (எப்பொழுதும் இத்துரியோதனனது)சமீபத்திலேயிருந்து(அவனது) அன்னத்தையுண்ணுகிற நீ,(எப்போதும்),இவனுடன் சிலர் பகைக்கில்-இத்துரியோதனனுடன் வேறுயாரேனும் சிலர் பகைமைகொண்டால், (அப்பொழுது), மற்று அவர்தம் இசையும் ஆண்மையும் இயம்புவாய் - எதிரிகளான அவர்களது கீர்த்தியையும் பராக்கிரமத்தையுமே எடுத்துக்கூறும் இயல்புடையாய்; புவனம் ஒன்றுபட வரினும் - எல்லாவுலகத்தாரும் ஒருமிக்கத்திரண்டு வந்தாலும், என்தனொடு பொருவர் ஆயின் - என்னுடனே போர்செய்யவல்லவரானால், எதிர் பொர விடாய்-எதிர்த்துப்போர்செய்யவிடுவாய்; சிவனும் என்கணையை அஞ்சும் - சிவபிரானும் எனதுஅம்புக்கு அஞ்சுவான்,' என்று - என்றுசொல்லி, நனி சீறினன் - மிகுதியாகக் கோபித்தான்; (எ - று.)

சிவன் என்ற வடசொல்லுக்கு- (யாவர்க்கும்) மங்களத்தைச் செய்பவனென்று பொருள்; சிவம் - சுபம். உம் - உயர்வுசிறப்பு; அது - அப்பிரானது வெகுண்டுஉலகமழிக்கும்ஆற்றலையும்,முன் அருச்சுனன் வில்நாணற்றுத்திகைக்கும்படி எதிர்த்துப்போர்செய்த திறமையையும்குறிக்கும்.இவன் இங்ஙனங் கூறினது பேதைமை யென்பார்,'சிறுவன்'என்றார். சிவனும் என் கணையை அஞ்சும்-"அச்சக்கிளவிக்கு ஐந்துமிரண்டும், எச்சமிலவே பொருள்வயினான" என்பதனால், இரண்டாம்வேற்றுமை விரியாகக் கூறினார். (கங்க)

[யாவரும் தம்தம் இருப்பிடங்கட்குச் செல்லுதல்.]

கச0. இரவிமைந்தனொடுகங்கைமைந்தனெதிர்வாய்மையொன் றையுமிசைத்திலன், பொரவறிந்திடுதுமன்றுவெஞ்சமரிலென்றெழுந்துதனிபோயினா, னரவவெங்கொடியுயர்த்தகோவுமிகலரசருக்குவிடைநல்கினான், விரவுபைந்துளபமாலையான்விதுரன்மனையிலுற்றது விளம்புவாம்.

(இ - ள்.) (பின்பு), கங்கை மைந்தன் - வீமன், இரவி மைந்தனொடு - கர்ணனுடனே, எதிர்வாய்மை ஒன்றையும்-பிரதியான வார்த்தையொன்றையும், இசைத்திலன் -கூறாதவனாய், 'அன்று - (போர்நடக்கும்)அக்காலத்தில், வெம் சமரில் - கொடியபோர்க்களத்தில், பொர-போர்செய்கையில், அறிந்திடுதும் -(இவனது ஆண்மையை நேரில்) அறிவோம்,' என்று - என்றுகருதி, எழுந்து தனி போயினான் -(அச்சபையைவிட்டு)எழுந்து தனியே சென்றான்; அரவம் வெம் கொடி உயர்த்த கோவும் - பாம்பின்வடிவமெழுதிய கொடியதுவசத்தை உயரஎடுத்த துரியோதனராஜனும், இகல் அரசருக்கு - வலிமையையுடையஅரசர்களுக்கெல்லாம், விடை நல்கினான் -(சபையினின்று)செலவு கொடுத்துஅனுப்பினான்; (இதுநிற்க), விரவு பைந் துளபம் மாலையான் - பொருந்தின பசிய திருத்துழாய்மாலையையுடைய கண்ணபிரானது, விதுரன்மனையில் உற்றது - விதுரனதுமாளிகையில் நடந்த செய்தியை, விளம்புவாம் - (இனிக்) கூறுவோம்; (எ - று.)—அதனை, மேற் காண்க.

நான்காமடி - கவிக்கூற்று. விளம்புவாம் - கவிகளுக்குஉரிய இயற்கைத் தன்மைப்பன்மை. என்று - என்றுசொல்லி என்றும்உரைப்பர். வாய்மை - வாயின்தன்மை; வாய் - சொல்லுக்குக் கருவியாகுபெயர். இசைத்திலன் - முற்றெச்சம். உற்றது - வினையாலணையும்பெயர். (கசO)

வேறு.

[விதுரன் வில்லை முறித்தகாரணத்தைக் கண்ணன் வினவுதல்.]

கசக. பொருசிலைமுறித்தவீரன்கோயிலிற்புகுந்துநேமிக்
குரிசிலைவணங்கியாங்கணிருப்பவக்குரிசினோக்கி
யிருசிலையுண்டென்றிந்தவிருநிலத்தியம்பும்வில்லி
னொருசிலைமுறித்தசீற்றமென்கொலோவுரைசெயென்றான்.

(இ - ள்.) (இதுமுற்க): பொரு சிலை முறித்த வீரன் - போர்செய்தற்கு உரியவில்லை முறித்துப்போகட்ட சுத்தவீரனுனவிதுரன், கோயிலில்புகுந்து-தனது சிறந்த மாளிகையிலே சென்று, நேமி குரிசிலை வணங்கி - (அங்குத் தனக்குமுன் சென்றிருந்த) சக்கரபாணியான கண்ணபிரானை நமஸ்கரித்து, ஆங்கண் இருப்ப-அவ்விடத்தில் இருக்கையில்,—அ குரிசில்-அந்தக்கண்ண பிரான், நோக்கி-(விதுரனைப்)பார்த்து, 'இரு சிலை உண்டு என்று இந்த இரு நிலத்து இயம்பும் வில்லின் ஒரு சிலை முறித்த சீற்றம் - இரண்டுசிறந்தவிற் கள்உள்ளனவென்று இந்தப்பெரியபூலோகத்திற் (பிரசித்தமாகச்) சொல்லப் படுகிற விற்களுள் ஒன்றாகிய உனதுவில்லை(நீ)முறித்துப்போகட்ட கோபம், என்கொலோ - யாதுகாரணம்பற்றியதோ? உரைசெய் - சொல்,' என்றான் - என்று கேட்டருளினன்; (எ - று.)

விதுரன்வில்முறித்தசெய்தியைக் கண்ணன் தனதுஞானத்திருக்கண் ணினாலும் ஜனவதந்தியினாலும் அறிந்தனனென்க. சீற்றம்-தொழிற்பெயர்; சீறு - பகுதி, அம் - விகுதி, ற் - விரித்தல்விகாரம். ஆங்கண் - அக்கண் என்ப தன் மெலித்தலும் நீட்டலும். 'குருசில்' எனவும் பாடம்.

இதுமுதல் ஐம்பதுகவிகள்-முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீ ராசிரியவிருத்தங்கள். (கசக)

[இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: விதுரன்சொல்லும் உத்தரம்.]

கசஉ. ஆவதுகருதானாகிலமைச்சர்சொற்கேளானாகில்
வீவதுகுறியானாகில்விளைவதுமுணரானாகி
னாவதுகாவானாகிலவனுக்காநடந்துபோரிற்
சாவதுபழுதென்றன்றோசகத்துளோர்சாற்றுகின்றார்.

(இ - ள்.) '(ஒருவன்), ஆவது கருதான் ஆகில் - (தனக்கும் பிறர்க் கும்) நன்மையாகுங் காரியத்தை ஆலோசியானானாலும், அமைச்சர் சொல் கேளான் ஆகில் -மந்திரிகளதுவார்த்தையைக் கேட்டுநடவானானாலும், வீவ து குறியான் ஆகில்- (தான்) அழிவதைச் சிந்தியானானாலும்,விளைவதும் உண ரான் ஆகில் - (இம்மைமறுமைகளில் தனக்கு இனி)விளையும் பயன்களை அறி யானானாலும்,நாஅது காவான் ஆகில் - (தனது)நாக்கை(த்தீச்சொற்சொல்லா மல்) அடக்கிவையானானாலும், அவனுக்கு ஆ நடந்து - அவனுக்குஉதவியாகச் சென்று, போரில் சாவது - யுத்தத்தில் இறப்பது, பழுது - குற்றமாகும்,' என்று அன்றோ சகத்து உளோர் சாற்றுகின்றார் - என்றே உலகத்திலுள்ள பெரியோர்கள்எல்லோரும் சொல்லுகிறார்களன்றோ? (எ - று.)

ஆவதுகருதாமை முதலாக இங்குக்கூறிய துர்க்குணங்களை யுடைய துரியோதனனுக்கு உதவியாகச்சென்று போரில்இறத்தல் பழிபாவங்களைத் தருவதாதலால்,அதனை ஒழித்தேன் என்பதாம். 'ஆகில்'எனப் பலவிடத்தும் வந்தவை - வினைச்செவ்வெண். இவை - 'பழுது'என்பதைக்கொண்டுமுடியும். "யாகாவாராயினுநாகாக்ககாவாக்கால்,சோகாப்பர்சொல்லிழுக்குப்பட்டு" என்றதிருக்குறளினாலும்,மொழியடக்கம்-மற்றை மெய்யடக்க மனவடக்கங்

களினும் முக்கியமாதலை அறிக. ஆவது, வீவது, விளைவது எதிர்காலவினையாலணையும்பெயர். நாவது, அது-அசை. சாவது-எதிர்காலத்தொழிற்பெயர். இனி, நாவது - நாவினிடத்ததான சொல் எனக் குறிப்புவினையாலணையும் பெயருமாம். அன்றோ - தேற்றம். (கசஉ)

கசங. செல்வம்வந்துற்றகாலைத்தெய்வமுஞ்சிறிதுபேணார்
சொல்வனவறிந்துசொல்லார்சுற்றமுந்துணையுநோக்கார்
வெல்வதேநினைவதல்லால்வெம்பகைவலிதென்றெண்ணார்
வல்வினைவிளைவுமோரார்மண்ணின்மேல்வாழுமாந்தர்.

(இ - ள்.) மண்ணின்மேல் வாழும் மாந்தர் - பூமியில்வாழ்ந்திருக்கும் மனிதர்சிலர்,—செல்வம் வந்து உற்றகாலை-(தமக்குப்,பொருள்வந்துசேர்ந்த காலத்து, தெய்வமும் சிறிது பேணார் - (அது தன்பக்கல் வருதற்குச் காரணமாகத் திருவருள்புரிந்த) கடவுளையும் சிறிதும்விரும்பிக்கொண்டாடார்; சொல்வன அறிந்து சொல்லார் - தாம்சொல்லும்வார்த்தைகளை(த் தக்கவை தகாதவையென்று ஆராய்ந்து) உணர்ந்துசொல்லமாட்டார்கள் ; சுற்றமும் துணையும் நோக்கார் - உறவினரென்றும் நண்பரென்றும் தாட்சிணியம்பார்க்கமாட்டார்கள்; வெல்வதே நினைவது அல்லால் வெம் பகை வலிது என்று எண்ணார் - தாம் சயித்திடுவோம் என்பதையே கருதுவதல்லாமல் கொடிய பகைவருக்கம் தம்மினும்வலிமையுடைய தென்று மதிக்கமாட்டார்கள் ; வல் வினை விளைவும் ஓரார்-(எல்லாவற்றினும்)வலிமையுடைய ஊழ்வினையின் பயனையும்ஆராயமாட்டார்கள்;(எ-று.)—இதுஎன்னபேதைமை?என்றபடி.

அற்பகுணமுடையவனான துரியோதனன் தனக்குச்செல்வமிருத்தலால் இங்குக் குறித்த துர்க்குணங்களையெல்லாம் மிகக்கொண்டுள்ளானென்றற்கு, பொதுவாக இதுகூறினார். பேணப்படுவன யாவற்றுள்ளும் தலைமை கருதி,தெய்வத்தை உயர்வுசிறப்பும்மை கொடுத்து முதலிற் கூறினார். "ஊழிற்பெருவலியாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந்துறும்" என்றபடி எவ்வாற்றாலுங் கடக்கவொண்ணாத உறுதியுடைமைபற்றி,'வல்வினை' எனப்பட்டது. விளைவும்,உம்-இறந்ததுதழுவியஎச்சமும்,உயர்வுசிறப்பும். சிறிதும்என்பதனிறுதியில், இழிவுசிறப்பும்மை-தொகுத்தல்விகாரப்பட்டது. வெல்வதே, ஏ - பிரிநிலையோடு தேற்றம். (கசங)

கசச. நினைக்கவுந்தொழவுமெட்டாநீயெழுந்தருளப்பெற்றுந்
தனக்கிதுதகுதியென்றுதமருடன்வாழவெண்ணான்
மனக்கடுங்கனலினான்றன்மனத்தினாலுரைத்தபுன்சொ
லெனக்கிசையாமல்யானுமிருஞ்சிலையிறுத்ததென்றான்.

(இ - ள்.) '(யாவராலும்), நினைக்கவும் - (மனத்தினால்) சிந்தித்துப்பார்த்தற்கும், தொழவும் - (மொழி மெய்களால்) வணங்குதற்கும், எட்டா - எட்டாத, நீ—, எழுந்தருளபெற்றும்-(தனது அரண்மனைக்குக்கருணையோடு) வந்துசேரப்பெற்றிருந்தும், இது தனக்கு தகுதி என்று - நீ அருளிச்செய்த சொல் தனக்குத்தக்க தென்று உட்கொண்டு, தமருடன் வாழ எண்ணான் - ஞாதிகளான பாண்டவர்களோடு ஒத்துவாழ்தற்கு நினையாதவனும், மனம் கடும் கனலினான் - மனத்திற் கொடிய கோபாக்கினியையுடையவனுமாகிய துரியோதனன், தன் மனத்தினால் உரைத்த-தனதுமனக்கருத்தோடு பொருந்தி(உன்னையும் என்னையும்)நிந்தித்துக்கூறின, புல் சொல்-இழிவானவார்த்தை, எனக்கு இசையாமல் - எனக்குப்பொருந்தாமையால்,யானும் இருஞ்சிலை இறுத்தது - நானும் பெரியவில்லை முறித்திட்டது', என்றான் - என்று (கண்ணனைநோக்கி விதுரன்) கூறினான்; (எ - று.)

"சினமென்னுஞ்சேர்ந்தாரைக்கொல்லி யினமென்னு,மேமப்புணையைச்சுடும்" என்றதன் நீதிப்படி துரியோதனனது மனத்திற்பொருந்தின கோபாக்கினி இனி அவனைக்கெடுப்பதேயன்றி அவனுக்கு உறுதிமொழிகூறும் நல்லினமான என்னை அகற்றுதலுஞ் செய்தது என்பார் 'மனக்கடுங்கனலினான்' என்றும், தான் அறியாமல்தவறிச்சொன்னதன்றுவேண்டுமென்றுஅடத்தோடு சொன்னது என்பார் 'தன்மனத்தினுலுரைத்த' என்றுங் கூறினர். கோபத்தைக் கடுங்கனலென உருவகப்படுத்தின விதப்பு-உலகத்துநெருப்புச்சுடுவது தான்சேர்ந்தவிடத்தையே, இந்நெருப்புச் சேராதவிடத்தையுஞ் சுடுமென்னும் வேற்றுமை தோன்ற நின்றது. இறுத்தது - தொழிற்பெயர், வினைமுற்றாய் நின்றது; இதனை, வடநூலார் பாவேப்பிரயோக மென்பர். (௧௪௪)

[இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: கண்ணன் விதுரனை நோக்கிக் கூறுவன.]

௧௪௫. மாயனுமகிழ்ந்துநோக்கிமாசுணமுயர்த்தமன்னன்
போயருஞ்சேனையோடுபோர்க்களங்குறுகும்போது
நீயவனருகுநில்லாதொழியினுன்னேயமைந்தர்
தாயமுஞ்செல்வமுற்றுந்தரணியும்பெறுவரன்றே.

(இ - ள்.) (அதுகேட்டு), மாயனும்-கண்ணனும்,—மகிழ்ந்து-திருவுள்ளமுகந்தருளி, நோக்கி - (விதுரனைப்) பார்த்து, மாசுணம் உயர்த்த மன்னன்- பாம்புக்கொடியை உயரவெடுத்த துரியோதனராசன், போய் - புறப்பட்டுச்சென்று, அருஞ்சேனையோடு - (பிறரால்வெல்லுதற்கு) அருமையான சேனையுடனே, போர் களம் குறுகும்போது - யுத்தகளத்தை அடையும்பொழுதில், நீ அவன் அருகு நில்லாது ஒழியின் - நீயொருத்தன் அவனதுபக்கத்தில் நிற்காமல் நீங்கினால், உன் நேயம் மைந்தர் - உனது அன்புக்குஉரிய குமாரரான பாண்டவர், அன்றே - அப்பொழுதே, தாயமும் - இராச்சியபாகத்தையும், செல்வம் முற்றும்-மற்றும் பொருளெல்லாவற்றையும், தரணியும் - பூமிமுழுவதையும், பெறுவர் - அடைவார்கள்; (எ - று.)—அன்றே - தேற்றமுமாம். இப்பாட்டில், 'நோக்கி' என்பது, மேல் ௧௪௭-ஆங்கவியில் 'என்றருளி' என்பதோடு குளகமாகத் தொடரும்.

விரைவில் தனதுதிருவுள்ளக்கருத்து நிறைவேறு மென்று கண்ணன் மகிழ்ந்துகூறின னென்க. நீ எதிர்ப்பக்கத்தி லிருந்தால் பாண்டவர்க்குப் பகைவெல்லுத லரிதெனக் கண்ணன் விதுரனுக்கு முகமன்கூறினவாறு.

௧௪௬. ஏற்றியநறுநெய்வீசியிந்தனமடுக்கினாலுங்
காற்றுவந்துறாதபோதுகடுங்கனல்கதுவவற்றோ
நீற்றணிநிமலனன்னநின்கைவில்லிற்றதாயிற்
சீற்றவேலரசன்சேனைதென்புலம்படர்கைதிண்ணம்.

(இ - ள்.) நறு நெய் வீசி - நல்லமணமுள்ள நெய்யை மிகுதியாகச் சொரிந்து, இந்தனம் - விறகுகளை, ஏற்றிய - தீப்பற்றவைத்தற்கு, அடுக்கினாலும் - (ஒன்றன்மேலொன்று) பொருந்தவைத்தாலும், காற்று வந்து உறாத போது-(ஏற்ற)காற்று (சமயத்துக்கு)வந்து உதவிசெய்யாதபொழுது, கடுங்கனல் கதுவ வற்றோ-மிகுந்தநெருப்புப் பற்றவல்லதோ? [அன்றென்றபடி]; நீறு அணி நிமலன் அன்ன நின் கை வில் இற்றது ஆயின்-விபூதியைத் தரித்த குற்றமற்ற சிவபிரானை யொத்த உனது கையி லுள்ள வில் முறிந்ததானால், சீற்றம் வேல் அரசன் சேனை தென் புலம் படர்கை - கோபத்தையுடைய வேலாயுதத்தையுடைய துரியோதனராசனது சைனியம் யமலோகத்துக்குச் செல்லுதல் [அழிதல்], திண்ணம் - நிச்சயம்; (எ - று.)

பல துணைக்கருவிகள் அமைந்திருந்தாலும் கனலின்வளர்ச்சிக்குக் காற்றின் உதவி அவசியமாதல்போல, பலவகை வலிமைகள் அமைந்திருந்தாலும் துரியோதனனது வெற்றிக்கு ஏற்றசாதனமான உனது உதவி இல்லாமையால் அவன் வெல்லற்பாலனல்லன் என்பதாம். கூற்றுவனதுஇடம் தென்திசையிலுள்ளதாதலின் 'தென்புலம்'என்றும், போரிற்புறங்காட்டாது பகைவராலிறந்துவீரசுவர்க்கம்பெறுபவரும் யமதரிசனம்பெற்றேசெல்லவேண்டுதலின் 'தென்புலம்படர்கை' என்றும் கூறினர். திண்ணம்-திண்மை, திட்பம் என்பனபோல, பண்புப்பெயர்; அம் - விகுதி. படர்கை - கை விகுதிபெற்ற தொழிற்பெயர். இந்தநம் - வடசொல். பகையைத் தவறாது அழிக்கும் ஆற்றலுக்கு, அழித்தற்கடவுளான உருத்திரமூர்த்தியை உவமைகூறினர். முன்னிரண்டடி - பிறிதுமொழிதல் லவஙகாரம்.

ஏற்றிய-செய்யியஎன்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம்; இனி, இறந்தகாலப்பெயரெச்சமாக்கி மிகுதியான எனப் பொருள்கொண்டு, நெய்யோடு சேர்ப்பினும் அமையும். வற்று-வல்என்னும்பண்படியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று; று-விகுதி. நிமலன்-ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மல மற்றவன். இருவரும் பரமபாகவத ராதலால், விதுரனை சிவனோடு ஒப்பிட்டதென்றுங் கூறுவர். (கசசு)

கசஎ. பன்னியபுரையில்கேள்விப்பயனுகர்மனத்தாய்நின்னை
மன்னவன்மொழிந்தவெல்லாம்பொறுத்தியென்றருளிமாயோ
னந்நகர்தன்னில்வண்மையருளழகாண்மைபேசுங்
கன்னனைப்பயந்தகாதற்கன்னிதன்கோயில்புக்கான்.

(இ - ள்.)'பன்னிய - சிறப்பித்துச்சொல்லப்பட்ட, புரை இல் - குற்றமில்லாத, கேள்வி - நூற்கேள்விகளின், பயன் - பிரயோசனமான தத்துவப்பொருளை, நுகர்-(எப்பொழுதும் சிந்தித்து) அனுபவிக்கிற, மனத்தாய்-மனத்தையுடைய விதுரனே! நின்னை மன்னவன் மொழிந்த எல்லாம்-உன்னைத் துரியோதனராசன் கூறியவற்றையெல்லாம், பொறுத்தி - பொறுத்துக்கொள்வாய்,'என்று அருளி-என்றுசொல்லியருளி, மாயோன்-கண்ணன், அந்நகர்தன்னில் - அவ்வத்தினபுரியிலே, வண்மை அருள் அழகு ஆண்மை பேசும் கன்னனை பயந்த காதல் கன்னிதன் கோயில் புக்கான் - உதார குணம் கருணை சௌந்தரியம் பராக்கிரமம் என்பவற்றிற் சிறப்பித்துச்சொல்லப்படுகிற கர்ணனை இளமையிற்பெற்ற அன்பையுடைய குந்திதேவியினது வாசஸ்தானத்தை அடைந்தருளினன்; (எ - று.)

இச்சருக்கத்தில், கண்ணனதுமாயையின்காரியமான பல அற்புதச்செய்கைகளை நோக்கி வியந்து, பலவிடத்து அவனை 'மாயோன்'எனக் குறிக்கிறார்; விதுரனைத் துரியோதனனினின்று பிரித்த அற்புதத்தைக் குறித்துக் கீழ் கசகு - ஆம்கவியில் 'மாயன்'எனக் கூறி, இனிக் குந்திமூலமாகக் கர்ணனைத் துரியோதனனினின்று பிரிக்கத்தொடங்கிய அற்புதத்தைக் குறித்து இங்கு'மாயோன்'என்றார். கன்னிகையாயிருந்தகாலத்துக் குந்தி கர்ணனைப் பெற்றமை விளங்க, இங்கு'கன்னி'எனப்பட்டாள். 'காதற்கன்னி' என்றது-அப்பொழுதுசூரியனைவிரும்பினதனாலும், தன்மக்களிடத்து இயல்பாகஅன்புடையளாதலாலும், கண்ணனிடத்துவிசுவாசமுடையவளாதலாலு மென்க. இனி, 'வண்மையருளழகாண்மை பேசும்' என்பதற்கு-தனது ஈகைமுதலிய குணங்களைத் தானே புகழ்ந்துகூறும்இயல்புடையனென்றும், 'கன்னனைப்பயந்த' என்பதற்கு - (தனதுசிறந்தகுமாரனான அருச்சுனனுக்கு நெடுங்காலமாகப் பெரும்பகையாய்ச் சிறந்த வில்வல்லமையையும் தவறாத கொடிய கறுவுள்ள நாகாஸ்திரத்தையும் உடைமைபற்றிக்) கர்ணனை அஞ்சின என்றும் உரைக்கலாம். கேள்விக்குக் குற்றம் - ஐயம் திரிபு அறியாமைகள். இங்கே,

கேள்வி-அனுபவமுடைய நல்லாசிரியர்பக்கலில் உறுதிமொழிகளை உபதேசிக்கக் கேட்டல். அஃறிணையும்மைத்தொகை பன்மையாய்முடியவேண்டுமென்னும் நியதி இன்மையால், 'வண்மையருளழகாண்மை' என ஒருமையாகக் கூறப்பட்டது. கீழ் ஆரணியபருவத்தின்முதலில் "அன்னையைச் சுபலன் பாவையருகுறவிருத்தி" என்றதனால், 'காந்தாரிவீட்டை யடுத்துக் குந்தி இருந்தனளென அறிக. 'நின்னை மன்னவன் மொழிந்தவெல்லாம்பொறுத்தி' என்று அருளினது, எம்பிரானது இயற்கைக்கருணையைக் காட்டும். (௧௪௭)

[குந்திதனதுமாளிகைக்குஎழுந்தருளியகண்ணனைவிருப்பத்தோடுகாணுதல்.]

௧௪௮. மண்டலமதியமன்னமாசறுமுகத்தினளுந்
திண்டிறன்மருகன்றன்னைச்சென்றெதிர்கொண்டுகண்டு
வெண்டிரைமகரவேலைவிரிபுனன்முகந்துதோன்றுங்
கொண்டலைமகிழ்ந்துகாணுங்குளிர்பசுந்தோகைபோன்றாள்.

(இ - ள்.) (அப்பொழுது), மண்டலம் மதியம் அன்ன - சந்திரமண்டலத்தைப்போன்ற, மாசு அறு முகத்தினளும் - களங்கமில்லாத முகமண்டலத்தையுடைய குந்திதேவியும், திண் திறல் மருகன்தன்னை - மிக்கவலிமையையுடைய தனதுமருமகனை கண்ணனை, சென்று எதிர்கொண்டு கண்டு - எதிர்கொண்டுபோய்ப் பார்த்து, வெள் திரை மகரம் வேலை விரிபுனல்முகந்து தோன்றும் கொண்டலை மகிழ்ந்து காணும் குளிர் பசு தோகை போன்றாள் - வெண்மையான அலைகளையும் சுறாமீன்களையு முடைய கடலின் மிகுந்தநீரை மொண்டுகொண்டு மேலெழுகின்ற காளமேகத்தைச் சந்தோஷித்துப்பார்க்கின்ற அதனாற்குளிர்ந்த பசுநிறமுள்ள மயிலை யொத்தாள்; (எ - று.)

உவமையணி. நீர்கொண்டமேகம்-நீலநிறமுள்ளகண்ணனுக்கும், மேகத்தைக்கண்டு தாபமொழிந்து மனமகிழும் மயில் - கண்ணனைத்தரிசித்துத் துயரந்தணிந்து மனமகிழ்ந்த குந்திக்கும் உவமை. நிறம்பற்றித் திருமாற்கு மேகமும், சாயல்பற்றிப் பெண்ணுக்கு மயிலும் உவமையாம். மண்டலமதியம்-கலைகள்நிறைந்து வட்டவடிவமாகப் பூர்ணமாகவேயுள்ள சந்திரன். இனி, மண் தலம் மதியம் எனப்பிரித்து - நிலவுலகத்தில்வந்ததொரு சந்திரனென்று இல்பொருளுவமையாக்கி உரைப்பாரு முளர். பலநாளாகப் புத்திரரைப்பிரிந்து செல்வத்தையிழந்து சோகமுற்று வாடியிருந்த குந்தியின் முகம் கண்ணன்வந்தானென்றமாத்திரத்தில் மிகத்தெளிவையடைந்த தென்பார், இங்கு 'மாசறுமுகத்தினள்' என்றார். இதில் நெற்றியில் திலகமற்றிருந்ததன்மையும் தோன்றும். குந்திக்கு உடன்பிறந்தமுறையாகிற வசுதேவரது குமாரனாதலால், கண்ணன் மருகனாவன். (௧௪௮)

[குந்தி மகிழ்ந்து கண்ணனை வந்தகாரியம்வினவுதல்.]

௧௪௯. யானுறையில்லின்வந்ததென்னமாதவமென்றேத்திக்
கானுறைமைந்தர்தம்மைக்கண்டனள்போன்றாளாகித்
தேனுறைதுளவினான்றன்செய்யமாமுகத்தைநோக்கி
வானுறைபுரிசைமூதூர்வந்ததென்னருடியென்றாள்.

(இ - ள்.) 'யான் உறை இல்லின் வந்தது - நான் வசிக்கிற இவ்வீட்டில் (நீ)வந்துசேர்ந்தது, என்ன மாதவம்-(யான்செய்துள்ள) எந்தப்பெருந்தவத்தின்பயனோ?"என்று ஏத்தி-என்று(கண்ணனைநோக்கிக்)கூறித்துதித்து,(குந்திதேவி),கான் உறை மைந்தர்தம்மை கண்டனள் போன்றாள் ஆகி - (கண்ணனைப்பார்த்தமாத்திரத்தில்) வனவாசஞ்செய்த தன்புத்திரரைவரைப் பார்த்தவள்போல மகிழ்ந்தவளாய், தேன் உறை துளவினான்தன் செய்ய மாமுகத்தை நோக்கி - தேன்பொருந்திய திருத்துழாய்மாலையையுடைய கண்ணனது சிவந்தஅழகிய திருமுகத்தைப் பார்த்து,வான் உறை புரிசை முதுஊர்

வந்தது என் அருடி என்றாள் - 'ஆகாயத்தையளாவிப்பொருந்திய மதில்களையுடைய பழமையான இவ்வூர்க்கு (நீ)வந்ததுஎன்னகாரணம்?சொல்லியருள்வாய்' என்றுகூறினாள்; (எ - று.)

இரண்டாமடியால், தன்மக்களிடத்து எவ்வளவு அன்போ அவ்வளவு அன்பு குந்திக்குக்கண்ணனிடமென்பது விளங்கும். அன்றியும்,அவயவியான கண்ணனை நோக்கினமாத்திரத்தில், அவயவமான பாண்டவரைப் பார்த்தாறபோன்றவளானாள். "மாலோனுயிர்போல்வான்" என்றிறே, பாண்டவரைக் கூறுமாறு. தேன்உறை துளவு - வண்டுகள் மொய்க்குந் துளசி யென்றும்,வான்உறை புரிசை-மேகந்தங்கும் மதிலென்றும் உரைக்கலாம். அருடி-ஏவலொருமைமுற்று; அருள் - பகுதி, இ - விகுதி, த் - எழுத்துப்பேறு, தகரம்டகரமானவிடத்து ளகரம்கெட்டது - சந்தி: இதில், ட் - எழுத்துப்பேறு என்றும்,து -சாரியை, உகரம்கெட்டதென்றுங் கூறுவாருமுளர். (௧௪௯)

[கண்ணன் குந்திக்கு நடந்தவரலாறு கூறுதல்.]

௧௫௦ நின்பெரும்புதல்வர்சொல்லநெடும்புனனாடுவேண்டி
வன்புடையரசர்கோமான்மனக்கருத்தறியவந்தேன்
றென்புலவேந்தன்வெஃகச்செருத்தொழில்புரிவனென்றா
னென்பலசொல்லினாளையெதிர்க்கவேயியைந்ததென்றான்.

(இ - ள்.) (அதுகேட்டுக் கண்ணன் குந்தியை நோக்கி), 'நின் பெரும் புதல்வர் சொல்ல-உனதுசிறந்தபுத்திரர்கள் சொல்லியனுப்ப, நெடும் புனல் நாடு வேண்டி-மிக்க நீர்வளமுள்ள குருநாட்டின்பாகத்தைப் பெறவிரும்பி, வன்பு உடை அரசர் கோமான் மனம் கருத்து அறிய-வலிமையுடைய ராஜராஜனான துரியோதனனது உள்ளத்தினெண்ணத்தை அறியும்பொருட்டு, வந்தேன்-(யான் இங்கு)வந்தேன்; (அதற்கு அவன்), தென் புலம் வேந்தன் வெஃக - தெற்குத்திக்குக்குத்தலைவனான யமன் (உயிர்களை) விரும்பும்படி, செருதொழில்புரிவன் என்றான்-போர்த்தொழிலைச்செய்வேனென்றுசொன்னான்;பலசொல்லின்என்-பலவார்த்தைகளைசசொன்னதனால்என்னபயன்? [ஒன்றுமில்லை யென்றபடி]; நாளை எதிர்க்கவே இயைந்தது-இனிவிரைவில் (இருதிறத்தாரும்) எதிர்த்துப்போர்செய்யவேநேர்ந்தது,' என்றான்-என்று கூறியருளினான்; (எ - று.)

வன்பு - சிறிதுங் கருணையில்லாமல் அநீதியிற்செல்லுங் கல்நெஞ்சின் தன்மையையுங் குறிக்கும்.வன்புடையரசர் - துச்சாதனன் கர்ணன் சகுனி திரிகர்த்தன் முதலியோராய்,அவர்கட்கெல்லாந்தலைவனென்றுமாம்.அஷ்டதிக்குப்பாலகருள் தெற்குத்திக்குக்குத்தலைவன், கூற்றுவன். வெஃக - கவர என்றுமாம். புரிவன்- தன்மையொருமை. சாமம்முதலிய முதல்மூன்று உபாயங்களைக்குறித்துப் பலவார்த்தைகளைக் கூறி ஒன்றும்பயன்படாமற்போனமையும், 'என்பலசொல்லின்' என்றதிற் பெறப்படும். (௧௫௦)

[அதுகேட்டுக் குந்தி வருந்துதல்.]

௧௫௧. என்றலுங்குந்திசாலவிரங்கினளெதிர்ந்தபோரில்
வென்றிடுவோர்கள்யாரோவிதியினாலமர்க்களத்திற்
பொன்றிடுவோர்கள்யாரோவென்றுளம்புலர்ந்துநொந்தா
ளன்றவடன்னைத்தேற்றியாழியானுரைக்கலுற்றான்.

(இ-ள்.)என்றலும்-என்று(கண்ணன்)அருளிச்செய்தவளவிலே,குந்தி—, சால இரங்கினள் - மிகவும் இரக்கமுற்றவளாய்,'எதிர்ந்த போரில் - இனிச் சமீபிக்க இருக்கின்ற யுத்தத்தில்,வென்றிடுவோர்கள் யாரோ - சயித்திடுபவர் யாவரோ? விதியினால் - ஊழ்வினையால், அமர் களத்தில் - யுத்தகளத்திலே, பொன்றிடுவோர்கள் யாரோ - அழிந்திடுபவர்கள் யாவரோ?'என்று - என்று

சொல்லி, உளம் புலர்ந்து - மனம்வாடி, நொந்தாள் - வருந்தினள்; அன்று - அப்பொழுது, ஆழியான் - சக்கராயுதத்தையுடைய கண்ணன், அவள்தன்னை தேற்றி - அந்தக்குந்திதேவியைச் சமாதானப்படுத்தி, உரைக்கல் உற்றான் - (சிலவார்த்தை) கூறத்தொடங்கினன்; (எ - று.)—அவற்றை, மேல் ஏழுகவிக ளிற் காண்க.

குந்தியென்றபெயர்க்குக் காரணம், மேல் ௧௯௪-ஆங்கவியிற் கூறப்படும். விதியினால் என்பதை மத்திமதீபமாகவென்றிடுவார்கள்என்பதனோடுங்கூட்டுக. ஆகூழால் வெற்றியும், போகூழால் அழிவும் நேர்ந்திடும். விதி, ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி என்பன - ஒருபொருட்சொற்கள். அஃதாவது - இருவினைப்பயன் செய்தவனையே அடைவதற்குஏதுவாகிய நியமம். ஆழியான் - திருப்பாற்கடலிற் பள்ளிகொண்ட கடவுளுமாம். தேற்றி - துன்பந்தெளியச்செய்து. (௧௯௧)

[இதுமுதல் ஏழுகவிகள்-ஒருதொடர்: கண்ணன் கர்ணனதுபிறப்பு முதலியவற்றைக் குந்திக்குக் கூறுவன.]

௧௯௨. தன்மைநானுரைப்பக்கேணின்றந்தைதன்மனையினீயுங்
கன்னியாயிருந்துவாழுங்காலையோர்முனிவன்வந்து
சொன்னமந்திரமோரைந்தினொன்றினாற்சூரன்றன்னை
முன்னினையவனுமன்றுவந்துநின்முன்புநின்றான்.

(இ - ள்.) தன்மை நான் உரைப்ப கேள் - (முன்புநடந்ததொரு உண்மையானசெய்தியின்) தன்மையைநான்சொல்ல (நீ இப்பொழுது) கேட்பாய்: நின் தந்தைதன் மனையில் - உன்னுடைய பிதாவான குந்திபோஜராஜனது அரண்மனையிலே, நீயும் கன்னிஆய் இருந்து வாழும் காலை - நீயும் மணமில்லாத இளமகளாயிருந்து வாழ்கிற காலத்தில், ஓர் முனிவன் - ஒப்பற்ற (துருவாச) முனிவன், வந்து சொன்ன —, மந்திரம் ஓர் ஐந்தின் - ஐந்துமந்திரங்களுள், ஒன்றினால் - ஒருமந்திரத்தினால், சூரன் தன்னை - சூரியனை, முன்னினை - (நீ) நினைத்தாய்; அவனும் - அச்சூரியனும், அன்று - அப்பொழுது, நின் முன்பு - உன்னெதிரில், வந்து நின்றான் —; (எ - று.)

சாபத்தாலும் கோபத்தாலும் பேர்படைத்த பயங்கரனான துர்வாசமுனிவன ஒருகாலத்தில் குந்திபோஜராஜனது அரண்மனைக்கு எழுந்தருள, அங்கு அவ்வரசன் அம்முனிவர்க்கு எல்லாப்பணிவிடைகளும் இயற்றும்படி நுண்ணறிவுடையகன்னிகையான குந்தியை நியமிக்க, அவளும் அங்ஙனமே தவறாமல் ஒருவருஷகாலம்உபசரித்துவர, அம்முனிவன் அங்குநின்றுசெல்கையில், மிகமனமுவந்து குந்திக்குச் சிலமந்திரமுபதேசித்து அதனால்தேவர்களை வரவழைக்கவும் அவரருளால் புத்திரபாக்கியத்தைப்பெறவு மாகுமென்று கூறிப்போக, பெண்களுக்கு இயற்கையான பேதைமையையுடைய குந்தி அதனைப் பரீக்ஷித்துப்பார்க்க விரும்பித் தனியே மேல்மாடத்துச் சென்று ஏகாந்தமாக இருந்து ஒருமந்திரத்தைச்சொல்லிச் சூரியனைத் தியானிக்க, உடனே சூரியன் உக்கிரமானவடிவத்தைவிட்டுச் சாந்தமான வடிவத்தோடு அருகில்வந்துசேர்ந்தான். சூரன் - ஸூரன்: வடசொற்றிரிபு; வீரன்என்றபொருளில், ஶூரன் என்னும் வடசொல்லின் திரிபாம். மந்திரம்-மறைபொருள்.

௧௯௩. கதிரவனருளினாலோர்கணத்திடைக்காதல்கூர
மதலையங்கொருவன்றன்னைப்பயந்தபின்வடுவென்றஞ்சி
மிதவையம்பேழைதன்னிற்பொதிந்துநீவிடவப்போதங்
நதியுமம்மகவைக்கங்கைநதியிடைப்படுத்ததன்றே.

(இ - ள்.) கதிரவன் - ஆயிரங்கிரணங்களையுடைய சூரியன், அருளினால் - கருணையினால், ஓர் கணத்திடை - ஒருகணப்பொழுதிலே, காதல் கூர -

இன்பமடைய, (அதனால்), அங்கு-அப்பொழுது [அவ்விடத்தில்], மதலை ஒரு வன் தன்னை-ஒருபுத்திரனை,பயந்த பின்-(நீ)பெற்றபின்பு,வடு என்று அஞ்சி-(இது உனக்கும் உன்மரபுக்கும்) பழிப்பாமென்று பயந்து, நீ—,மிதவை அம் பேழைதன்னில் பொதிந்து-நீரில்மிதக்குந்தன்மையதாகிய ஒருமரப்பெட்டியிலே (அக்குழந்தையை) அடக்கஞ்செய்து,விட-(அப்பெட்டியை யமுனாநதியிலே) செலுத்திவிட, அப்போது—, அ நதியும் - அவ்யமுனையாறும், அ மகவை கங்கை நதியிடை படுத்தது - அக்குழந்தையை (ப்பெட்டியுடனே) கங்காநதியிற் கொண்டுபோய்ச்சேர்த்தது; (எ - று.)—அன்றே - தேற்றம்; ஈற்றசையுமாம்.

தேவர்களது அநுக்கிரகத்தாலுள தாங்கருப்பம் காலதாமதமின்றி உடனேபிறந்திடு மென்பது மரபு. பேழைதன்னில் அம்மகவை அப்போதுபொதிந்து கங்கைநதியிடைவிட(அப்பேழையை)அன்றே[அன்றையதினமே]அந்நதியும் படுத்தது [கொண்டுவந்தது] என்று அநுவயித்தும் உரைக்கலாம். மிதவை, ஐ-கருத்தாப்பொருள்விகுதி. பேழை-பேடிகாஎன்னும்வடமொழியின் சிதைவென்பர். (௯௩)

௯௪. காதனின்புதல்வன்றன்னைக்கண்ணிலாவரசன்பொற்றேர்ச்
சூதன்வந்தெடுத்துக்கொண்டுசுதனெனவளர்த்தகாலை
யாதபனிவனையாருங்கன்னனென்றழைக்கவென்றான்
றாதையும்விசும்பிற்சொன்னநாமமேதக்கதென்றான்.

(இ - ள்.) காதல் நின் புதல்வன் தன்னை - அன்புக்குஉரிய உனதுபுத்திரனை, கண் இலா அரசன் பொன் தேர் சூதன் - திருதராட்டிரராசனது பொன்மயமான இரதத்தைச்செலுத்தும்பாகனான அதிரதனென்பவன்,வந்து எடுத்துக்கொண்டு-(அக்கங்கையாற்றுக்கு)வந்து எடுத்துக்கொண்டுசென்று, சுதன் என வளர்த்த காலை - தன்புத்திரனாகப்பாவித்து வளர்த்தகாலத்தில், ஆதபன் - சூரியன், இவனை யாரும் கன்னன் எனறு அழைக்க - 'இப்புதல்வனை எல்லோரும் கர்ணனென்றுஅழைப்பாராக,' என்றான்-என்று (அசரீரிவாணியாகச்)சொன்னான்; தாதையும்-(வளர்க்கிற)தந்தையான அதிரதனும், விசும்பின் சொன்ன நாமமே தக்கது என்றான்-'ஆகாயத்திற்சொல்லப்பட்ட பெயரே தகுதியுடையது' என்று கூறினான்; (எ - று.)

இப்புத்திரன் பிறந்தபொழுதே கர்ணகுண்டலங்களோடு கூடியிருந்தமைபற்றிக் கர்ணனென்ற பெயர் இவனுக்குத் தகுந்ததென்றதாகவுங் கொள்ளலாம். ஸூதன், ஸுதன் - வடசொற்கள். "பாரமாமரபினிற்பிறந்தவர் மொழிப்பழுதினுக்குஅழுதுஅஞ்சிப், பூரமாநதிப்பேடகத்திடைநனிபொதிந் தொழுக்கினள்" என்பதேயன்றிக் குழந்தையினிடம்மனப்பூர்வமாகஅன்பில்லாதவளல்லள் என்பது தோன்ற, 'காதல்நின்புதல்வன்' என்றார். (௯௪)

௯௫. பண்புடைக்குமரனகற்றபடைத்தொழில்பலவுங்கண்டு
நண்புடையுரிமையெல்லாநல்கிமாமுடியுஞ்சூட்டி
வண்பணியுயர்த்தகோமான்வாழ்வவற்களித்தான்மற்றைத்
திண்பரித்தேர்வல்லோரிலவனையார்செயிக்கவல்லார்.

(இ - ள்.) பண்பு உடை-(இத்தன்மையான) சிறப்பையுடைய,குமரன்-(உனது)குமாரனான கர்ணன், கற்ற-(பரசுராமனிடத்துக்) கற்றறிந்த, படை தொழில் பலவும் - ஆயுதவித்தைகளெல்லாவற்றையும், கண்டு - பார்த்து, வன் பணி உயர்த்த கோமான் - அழகியபாம்புக்கொடியை உயரஎடுத்த துரியோதனராசன், அவற்கு - அக்கன்னனுக்கு, நண்பு - சிநேகத்தால, உடை உரிமை எல்லாம் தனனுடைய உரியஅரசாட்சிச்செல்வங்கள்பலவற்றையும், நல்கி - கொடுத்து, மா முடியும் சூட்டி - பெரியகிரீடத்தையுந் தரிப்பித்து,

வாழ்வு அளித்தான் - (அங்கதேசத்து இராச்சியாதிபத்தியத்தின்) வாழ்வைக் கொடுத்திட்டான்; அவனை-அக்கன்னனை,மற்றை திண் பரி தேர் வல்லோரில் - வலியகுதிரைகளைப்பூட்டிய தேரையுடைய மற்றைவீரர்களில், யார் செயிக்க வல்லார்-எவர்வெல்லவல்லவர்? [ஒருவருமில்லையென்றபடி].

கர்ணனது படைத்தொழில்பலவற்றைத் துரியோதனன் கண்டது-பாண்டவரும் துரியோதனாதியரும் கிருபாசாரியதுரோணாசாரியர்களிடத்து வில்வித்தை முதலியவற்றைக் கற்றுப்பயின்று முடிந்தபின், பீஷ்மர் விதுரர் முதலிய பலரது முன்னிலையில் தம்தமது அஸ்திரசஸ்திரப்பயிற்சியைக் காட்டுகையில்,கர்ணனும் இடையில்எழுந்துவந்து தனதுதிறமையைக்காண்பித்தபொழுதி லென்க. "அன்றகுதன்மதலைதன்னையங்கராசனாக்கினான், மின்தயங்குமுடிகவித்து வேந்தெலாம்வியக்கவே," "தானிருந்தவரிமுகஞ் செய்தாள்சுமந்ததவிசின்மே, லூனிருந்தபடையினானையுடனிருத்தி வண்டுசூழ், தேனிருந்தமாலை வாகுசிகரமீதுதெண்டிரைக், கானிருந்தமண்டலங் கருத்தினாலிருத்தினான்" என்றார் கீழ் ஆதிபருவத்தில் இவ்வரலாறுகூறுமிடத்தில். ஜயிக்கஎன்பது - மோனைத்தொடைநோக்கி, செயிக்கவெனத் திரிந்தது. (க௫௪)

க௫௫. அந்தநின்மைந்தன்றானேயருஞ்சிலைவிசயனோடு
வந்தெதிர்மலையநின்றானுறவுமற்றறியமாட்டான்
சிந்தையினையந்தீரவிதனைநீதெளியச்சொல்லிக்
கொந்தவிழலங்கலானைக்கூட்டுகவிரைவினம்மா.

(இ - ள்.) அந்த நின் மைந்தன் தானே - அப்படிப்பட்ட உனது புத்திரனான கர்ணனே, அருஞ் சிலை விசயனோடு-அருமையானவில்வித்தைவல்ல அருச்சுனனுடனே, வந்துஎதிர்மலையநின்றான்-வந்துஎதிர்த்துப்போர்செய்ய இருக்கிறான்;உறவு மற்று அறியமாட்டான் - (அருச்சுனன் தனக்குத் தம்பியென்ற) பந்துத்துவமுறைமையை(அவனும்)அறிகிறானில்லை;(ஆதலால், அவனுக்கு), இதனை - இவ்வுறவுமுறைமையை, சிந்தையின் ஐயம் தீர - மனத்திற் சந்தேகம் நீங்கும்படி, தெளிய நீ சொல்லி - நம்புதலோடு அறியும்படி நீ (சென்று) கூறி, கொந்து அவிழ் அலங்கலானை-பூங்கொத்துக்கள் விரியப்பெற்ற மாலையையுடைய அக்கர்ணனை, விரைவின் கூட்டுக - சீக்கிரத்தில் (பாண்டவர்களோடு)கூடும்படி செய்வாயாக; (எ - று.)—அம்மா என்பதை-ஈற்றசையென்றுவது, கேட்பித்தற்பொருளதாகிய அம்மவென்னும்முன்னிலையிடைச்சொல் நீட்டம்பெற்றதென்றுவது, மரியாதைபற்றிய அம்மையென்பதன் ஈறுதிரிந்த விளி யென்றுவது கொள்க.

உறவு - தொழிற்பெயர்; உறுதல், தொடர்ச்சி: உறு - பகுதி, அ - சாரியை, உ - விகுதி. மற்று - வினைமாற்று; மலையநின்றான், உறவறியமாட்டான் என வேறுபட்ட வினைகளின் இடையே வந்ததனால். முன்னே கர்ணன் அருச்சுனன்விஷயமாக "முனைந்தபோரின்முடிதுணித்துன்முகசரோருகத்தினாற்,சினந்தணிந்தரங்கபூசைசெய்வன் "என்றுவீரவாதமும்,கர்ணன்விஷயமாக அருச்சுனன் "பகலவன்றன்மதலையுயிர் பகைப்புலத்துக்கவர்வன்" என்று சபதமுஞ் செய்துள்ளது முதலியனபற்றி 'மலையநின்றான்' என்றது. தனக்கும் இவனுக்குமுள்ள உறவைஅறிந்தால்இங்ஙனஞ்செய்யான்என்பது தோன்ற 'உறவுமற்றறியமாட்டான்' என்றார். சிந்தையினையந்தீர'என்றது, இதற்குமுன் பலமகளிர் தாம்தாம் கர்ணனுக்குத்தாயென்றுசொல்லி அவனிடம் மிகுந்தபொருள்பெறவிரும்பி வந்து வீண்போயினராதலால். கொந்து - எதுகைநோக்கிய மெலித்தல். (க௫௬)

க௫௭. தம்பியரைந்துபேருந்தனித்தனியேவல்செய்ய
வம்பவிழலங்கலோடுமாமணிமகுடஞ்சூட்டி

பம்புவிமுழுதுநீயேயாளலாம்வருகவென்று
னும்பர்காவனையகையானுன்னுரைமறுத்தானாகில்.

(இ - ள்.) 'தம்பியர் ஐந்து பேரும் - (பஞ்சபாண்டவராகிய) தம்பிமார் ஐவரும், தனி தனி ஏவல் செய்ய - வெவ்வேறாகப் பணிவிடை புரிய, வம்பு அவிழ் அலங்கலோடு-நறுமணம்வீசும் மலர்மாலையுடனே, மா மணி மகுடம் சூட்டி - பெரியஇரத்தினகிரீடத்தைத் தரித்து, அம் புவி முழுதும் - அழகிய பூலோகம்முழுவதையும், நீயே ஆளலாம் - நீயே தனிப்பட அரசாளலாம்; (ஆகையால்), வருக - (பாண்டவர்பக்கல்) வந்துசேர்ந்துவிடுவாயாக,' என்றால் - என்றுசொல்லி(ஆசைகாட்டி)அழைத்தால்,(அப்பொழுது), உம்பர் காவனைய கையான் - (தானத்தில்) தேவர்களது கற்பகச்சோலையை யொத்த கையையுடைய கர்ணன், உன் உரை மறுத்தான் ஆகில் - உனதுவார்த்தைக்கு இசையாமல் தடுத்திடுவானானால்,(எ-று.)—"விசயன்மேல்மறுகணைதொடுக்காவண்ணம்வரம்வேண்டுக" என மேற்கவியோடுகுளகமாகத்தொடரும்.

கர்ணன்மிக்ககொடையாளியாதலால், அவனுக்குக்கற்பகவிருக்ஷங்களை உவமைகூறினர். (கடுஎ)

கஙு௮. எரியமுதருந்தக்கானமெரித்தநாளகன்றுபோன
வரவினையங்கர்கோமானாசுகமாகக்கொண்டான்
வரிசிலைவிசயன்றன்மேன்மறுகணைதொடுக்காவண்ண
மொருவரம்வேண்டுகென்றானுற்றவர்க்குறுதிசூழ்வான்.

(இ - ள்.) எரி - அக்கினிதேவன், அமுது அருந்த - உணவாகஉண்ணும்படி, கானம் - காண்டவவனத்தை, எரித்த நாள் - தகித்தகாலத்தில், அகன்று போன -(அங்கிருந்து) நீங்கிச்சென்ற, அரவினை -(தக்ஷககுமாரனான அசுவசேனனென்னுஞ்சிறு)பாம்பை, அங்கர் கோமான் - அங்கநாட்டார்க்குத்தலைவனான கர்ணன், ஆசுகம் ஆக கொண்டான் - அஸ்திரமாகக்கொண்டுள்ளான்; (ஆதலால், அவன்), வரி சிலை விசயன் தன்மேல் - கட்டமைந்த வில்லையுடைய அருச்சுனன்மேலே, மறு கணை தொடுக்காவண்ணம் - அந்தஅஸ்திரத்தை இரண்டாம்முறை பிரயோகியாதபடி, ஒரு வரம் வேண்டுக - ஒருவரத்தை (நீ கர்ணனை)க்கேட்டுப் பெறுவாயாக, என்றான் - என்று (குந்திக்கு உபாயம்) கூறினான்:(யாவனெனில்),—உற்றவர்க்கு உறுதி சூழ்வான் -(தன்னை) அடைந்தவர்க்கு நன்மையையே ஆலோசிப்பவனாகிய கண்ணபிரான்; (எ - று.)

கிருஷ்ணனும்அருச்சுனனும் ஒருநாள்பூம்பந்தேறிட்டு விளையாடிக்கொண்டிருக்கையில், அக்கினிபகவான், மிகப்பசித்து அந்தணவடிவத்தோடு வந்து, இந்திரனதுகாவற்காடாய் யாவர்க்கும்அழிக்கவொண்ணாதபடி நிலவுலகத்தி லிருக்கின்ற காண்டவவனமென்னும்பூந்தோப்பைஅதிலுள்ள சராசரங்களுடனே எனக்குவிருந்திடவேண்டு மென்று வேண்ட, கிருஷ்ணார்ச்சுனர்கள், அங்கேபுக்கு ஒதுங்கியிருக்கின்ற அசுரர் முதலிய துஷ்டர்களை அழித்தருளவேண்டு மென்னும் நோக்கத்தால், 'நீ இதனைப்புசி' என்று இசைந்து அளிக்க, உடனே நெருப்புப்பற்றி எரித்ததென்பது கதை. ஆசுகம்என்னும் வடசொல்லுக்கு - விரைவிற்செல்வதென்று பொருள்; ஆசு - துரிதமுணர்த்தும்வடமொழியிடைச்சொல். அப்பொழுது அக்கினிபகவானால்அருச்சுனனுக்குக் காண்டீவமென்னும் வில் முதலியன கொடுக்கப்பட்டமையும், அக்கினி எரிப்பதற்கு அருச்சுனன் அப்பொழுது தனதுவில்வல்லமையைக்கொண்டு மிகஉதவிசெய்துநின்றமையும் தோன்ற, இங்கு 'வரிசிலைவிசயன்' என்றார்.()

[இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்: அதுகேட்ட குந்தி வருந்திக்கூறுதல்.]

கஙகூ. மன்றலந்தெரியல்வெய்யோன்மதலையென்மைந்தனென்ப
தன்றெனக்குரைத்தாயினவனுடனனுகவொட்டேன்

சென்றுயிரொழிக்குமாறுசெருவினை விளைத்துப்பின்னை
யின்றெனக்குரைத்தாயையா வென்னினைந்தென் செய்தாயே.

(இ - ள்.) மன்றல் அம் தெரியல் வெய்யோன் மதலை - பரிமளமுள்ள அழகிய பூமாலையையுடைய சூரியனதுகுமாரனாகவழங்கப்படுகிற கர்ணன், என் மைந்தன் என்பது-எனதுபுத்திரனென்ற செய்தியை, அன்று எனக்கு உரைத்தாய் ஆயின்-முன்னமே எனக்குச் சொல்லியிருந்தாயானால், அவனுடன் அணுக ஒட்டேன்-அத்துரியோதனனுடனே(இக்கர்ணனைச்)சேரச்செய்யாதிருப்பேன்;சென்று உயிர் ஒழிக்கும் ஆறு செருவினை விளைத்து-(போர்க்களத்திற்) போய் உயிரைமாய்த்துக்கொள்ளும்படி போரை மூட்டிவிட்டு, பின்னை - அதன்பின்பு, இன்று - இப்பொழுது, எனக்கு—,உரைத்தாய் - (நீ இந்தச்செய்தியைக்) கூறினாய்; ஐயா-ஐயனே! என் நினைந்து என் செய்தாய் - என்ன எண்ணமெண்ணி என்ன காரியஞ் செய்தாய்?(எ-று.)—இது தகுதியன்று என்றபடி.

தெரியல் - விளங்குதல்; விளங்கும்மாலைக்குத் தொழிலாகுபெயர்: அல்-கருத்தாப்பொருள்விகுதியெனினும் அமையும். அவனுடன் நணுக என்றும் பதம்பிரிக்கலாம். ஐயா என்று மருகனைக் கூறினது, அன்புபற்றிவந்த மரபு வழுவமைதி. ஈற்று ஏகாரம் - இரக்கம். (கஅகூ)

ககூ0. கான்பட்டகனலிற்பாயுங்கடுங்கணைவிலக்கினேனேல்
வான்பட்டபுரவித்தேரோன்மகன்படுமகவான்மைந்தன்
றான்பட்டுமடியுஞ்சென்றுதடாதினியிருந்தேனாகில்
யான்பட்டகொடுமைநன்றென்றென்பட்டாளிரங்கிவீழ்ந்தாள்.

(இ - ள்.) கான் - காண்டவவனத்திலே, பட்ட-பற்றின, கனலின்-அக்கினியினின்றும், பாயும்-(வெளியிற்புறப்பட்டுச்) செல்லலுற்ற, கடும் கணை - கொடுமையான நாகாஸ்திரத்தை, விலக்கினேன் ஏல் - (இரண்டாம்முறை அருச்சுனன்மேற் பிரயோகிக்காதபடி கர்ணனைத்) தடுத்தேனானால், வான் பட்ட புரவி தேரோன் மகன் படும் - ஆகாயத்திற்செல்லுகிற குதிரையைப் பூட்டிய தேரையுடைய சூரியனது குமாரனான கர்ணன் இறப்பான்; இனி சென்று தடாது இருந்தேன் ஆகில் - இப்பொழுது போய் (அந்தஅஸ்திரத்தை)த் தடுக்காமலிருந்தேனானால், மகவான் மைந்தன் தான் பட்டு மடியும்- இந்திரகுமாரனான அருச்சுனன்தான் அந்தஅஸ்திரம்பட்டு இறப்பான்;[இங்ஙனம் இருவகையிலும் எனக்குத் தீதாய்முடிகிறது]; (ஆதலால்), யான் பட்ட கொடுமை-நான்அடைந்த கொடியதிலைமை, நன்று - நன்றாயுள்ளது! என்று - என்றுசொல்லி,(குந்திதேவி), என் பட்டாள்-என்னபாடுபட்டாள்? (எனின்), இரங்கி வீழ்ந்தாள் - புலம்பிக்கொண்டு கீழேவிழுந்திட்டாள்.

கான்பட்டகனலின்பாயும் என்பதற்கு-காட்டுத்தீப்போல உக்கிரமாகப் பாய்கிறஎன்றும் உரைக்கலாம். என்பட்டாள் என்பது, மிகுந்ததுன்பமடைந்தாள் என்பதை விளக்கும். நன்று - தீதுஎன்றபடி; பிறகுறிப்பு. (ககூ0)

[இதுவும், அடுத்தகவியும் - கண்ணன் சிலகூறிக் குந்தியைத்தேற்றுதல்.]

ககூக. தேக்குந்தியகிலுஞ்சாந்துஞ்சிந்துநீர்நதிசூழ்செல்வக்
கோக்குந்தியரசன்பாவைகுலைந்தழுங்கொடுமைகண்டு
மீக்குந்தியுதிகடோறும்வெண்ணெயுந்தயிருமுண்ட
வாக்குந்திமலரோன்பின்னுமனத்தளர்வகற்றினனே.

(இ - ள்.) தேக்கு - தேக்குமரங்களை, உந்தி - தள்ளி, அகிலும் - அகிற்கட்டைகளையும், சாந்தும் - சந்தனமரங்களையும், சிந்தும் - அடித்துக்கொண்டுவருகின்ற, நீர் - நீர்வளமுள்ள, நதி - ஆற்றினால், சூழ்-சூழப்பட்ட, செல்வம் கோ - பொருளையும் சிறப்பையுமுடைய, குந்தி - குந்திதேசத்து,

அரசன் - அரசனுடைய, பாவை - பெண்ணான குந்திதேவி, குலைந்து - மனநிலை கலங்கி, அழும் - புலம்புகிற, கொடுமை - கொடியநிலைமையை, கண்டு - பார்த்து,—மீ குந்தி - (உயரமான எணி உரல் முதலியவற்றின்) மேல் ஏறி உட்கார்ந்து, உறிகள்தோறும் வெண்ணெயும் தயிரும் உண்ட - (இடையர்களது) உறிகளிலெல்லாமுள்ள வெண்ணெயையுந் தயிரையும் அமுதுசெய்தருளிய, வாக்கு - திருவாய்மலரையும், உந்தி மலரோன் - திருநாபித்தாமரை மலரையுமுடைய கண்ணன், பின்னும் மனம் தளர்வு அகற்றினான் - மீண்டும் (அவளது) மனத்தளர்ச்சியை நீக்கியருளினான்; (எ - று.)

கீழ் கஅக - ஆங்கவியில் அவளதுது ன்பத்தைத் தேற்றினமை ஒருகால் கூறப்பட்டதனால், இங்கு 'பின்னும்' என்றார். தேக்குமுதலியன - மலைபடுபொருள்கள். மலையிலிருந்து உற்பத்தியாகும்நதியாதலால், குறிஞ்சிநிலப்பொருள்களை அங்குநின்று கொழித்துக்கொண்டு வருவதாயிற்று. குந்தி - யதுகுலத்துச் சூரராசனது மகள்; இவளைத் தந்தை தனது நண்பனும் அபுத்திரனுமாகிற குந்திபோசதேசத்தரசனான குந்தியென்பவனுக்குத் தத்துக்கொடுத்திருந்ததனால், 'குந்தியரசன்பாவை' என்றார். இவளுக்கு, இதுபற்றியே, குந்தி யென்ற பெயர். பிருதை யென்பது, இவளது இயற்பெயர். உறி - உறப்படுவதென்னும் பொருளில், இ என்னுஞ் செயப்படுபொருள்விகுதி பெற்றபெயரென்பர். வாக் - வடசொல். வாக்குமலர், உந்திமலர் என இரண்டுக்கும் மலர் என்பதைக் கூட்டுக. "சேயாறு, தேக்குந்திச் சந்திடறிச் சேயணைக்குந் தண்பணைசூழ், மாக்குந்திக் கோமான் மகள்" என்ற பாரதவெண்பாவோடு இதனை ஒப்பிடுக. (கஅக)

கஅஉ. பைவருந்தலைகளைந்துபடைத்தபன்னகமேபோல
வைவரும்படுதனன்றோவங்கர்கோன்படுதனன்றோ
வுய்வருஞ்சமரிலாவியொருவர்போயொருவருய்யார்
நைவருந்துயரமாறிநடப்பதேகருமமென்றான்.

(இ - ள்.) (மனத்தளர்வகற்றின கண்ணன் அக்குந்தியை நோக்கி),— 'பை வரும் - படத்தோடு பொருந்தின, ஐந்து தலைகள் - ஐந்து தலைகளை, படைத்த - பெற்ற, பன்னகமே போல - பாம்புபோல, ஐவரும் - பாண்டவர் ஐந்துபேரும், படுதல் - இறத்தல், நன்றோ - நல்லதோ? அங்கர் கோன் - அங்கநாட்டார்க்கு அரசனாகிய கர்ணனொருவன், படுதல் - இறத்தல், நன்றோ - நல்லதோ? உய்வு அருஞ் சமரில் ஆவி ஒருவர் போய் ஒருவர் உய்யார் - தப்பிபிழைத்தலரிதாகப்பெற்ற யுத்தத்தில் (பஞ்சபாண்டவருள்) ஒருவர் இறக்க (மற்றைநால்வரில்) ஒருவரும் பிழைத்திரார்; (ஆதலால்), நைவரும் துயரம் மாறி நடப்பதே - (நீ) மனந்தளர்கிற துன்பம் நீங்கி (க்கன்னன்பக்கல்) செல்வதே, கருமம் - (செய்தற்குரிய) தொழிலாம்,' என்றான் - என்றுகூறினான்.

கர்ணன் சமாதானத்தில் பாண்டவரோடு கூடாவிடின், உன்மக்கள் அறுவருள் கர்ணனாவது அருச்சுனனாவது இறத்தல் திண்ணம்: அவ்விருவருள் அருச்சுனன் இறப்பானாயின் அது, மற்றைநால்வர்பாண்டவரும் அழிதற்குக்காரணமாய் முடியும்; ஆதலால், அதனினும் கர்ணனொருவன் இறப்பதே மேல்: ஆகையால், அவனைப் பாண்டவரோடு கூட்டுதற்கும், கூட்ட முடியாவிடின் நாகாஸ்திரத்தை இரண்டாமுறைசெலுத்தாதபடி வரங்கேட்டற்குமாகச் செல்வதே தகுதியானதொழிலெனக்கண்ணன்உறுதிகூறினான். இப்பாட்டின் முதலடியும், மூன்றாமஅடியும் - பஞ்சபாண்டவர் உடல்வேறும் உயிரொன்றும் என்னும்படி அந்நியோந்நியமாயிருப்பவர் என்பதை விளக்கும். தலைகளைந்துபடைத்த பன்னகம் - ஐந்தலைநாகம். உய்வுஅருஞ்சமர் - நேராதபடி தப்புவித்தற்குக் கூடாத போர் என்றுமாம். துயரம் ஆறி என்றும் பிரிக்கலாம். ஓகாரங்கள் - வினாவகையால், முன்னது நன்றன்றென்றும்,

பின்னது நன்றே யென்றும் உணர்த்தும். போய்என்பதைப் போகஎன்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபாகக் கொள்க. "ஐவர்க்குமோருயிரே யைந்தாறு ப்புமாதலா, லைவருஞ்சாகை யழகிதோ—வைவே, லொருவனுமேசாகையழ கன்றேயென்றான், திருமகள்சேர்மார்பன்சிறந்து" என்றார் பாரதவெண்பா விலும். (௧௩௨)

[இதுவும், அடுத்தகவியும் - சூரியாஸ்தமனவருணனை.]

௧௩௩. காளமாமுகிலின்மேனிகரியநாயகனுந்தேற்றி
மீளமாதவத்தின்மிக்கவிதுரன்வாழ்மனையினெய்த
வாளமால்வரையில்வெய்யோன்குறுகினன்வருணன்றிக்கி
னீளமால்யானைநெற்றிநிறத்தசெந்திலகம்போன்றே.

(இ - ள்.) காளம் மா முகலின்-கரியபெரியமேகம்போல, மேனி கரிய-திருமேனிநிறம் கறுத்துள்ள, நாயகனும்-கண்ணபிரானும்,—தேற்றி-(இங்ஙனம் குந்தியைச்) சமாதானப்படுத்தி அனுப்பிவிட்டு,—மா தவத்தின் மிக்க விதுரன் வாழ் மனையின்-சிறந்ததவத்தில்மிகுந்தவிதுரன் வசிக்கிற திருமாளிகையிலே, மீள எய்த - மறுபடியும் போய்ச்சேர,—வெய்யோன் - சூரியன், நீளம் மால் யானை நெற்றி செம் நிறத்த திலகம் போன்று-நீட்சியையுடைய பெரியதொரு யானையினது நெற்றியிலமைந்த சிவந்தநிறத்தையுடைய (சிந்தூரத்) திலகத்தை யொத்து, வருணன் திக்கில் - வருணனைத் தெய்வமாக வுடைய மேற்குத்திக்கிலே, வாளம் மால் வரையில் - பெரியசக்கரவாளகிரியில், குறுகினன்-போய்ச்சேர்ந்தான் [அஸ்தமித்தா னென்றபடி]; (எ - று.)

உவமையணி. மேற்குத்திக்கில் அஸ்தகிரியை யடைந்தா னென்பதைச் சக்கரவாளகிரியில் ஒரு பகுதியை அடைந்தா னெனக் கூறியது. 'மாதவத்தின்மிக்க' என்ற அடைமொழியை விதுரனுக்காவது, மனைக்காவது கூட்டுக. வாள எனப் பதம்பிரித்து, வாள்என்பதன்மேற் பிறந்த குறிப்புப்பெயரெச்சமாக் கொண்டு, ஒளியையுடைய என்றுமாம். அஷ்டதிக்பாலகருள், மேற்குத்திக்குத்தலைவன், வருணன். திலகம்-இங்கே, வட்டவடிவமான நெற்றிப் பொட்டு. கண்ணன் விதுரன்மனையிற் சேர்கையில், சூரியன் வாளமால்வரையிற்குறுகினன் என உடனிகழ்ச்சிப்பொருளைத் தருதலால், எய்தவென்னுஞ் செயவெனெச்சம் - நிகழ்காலத்தது. (௧௩௩)

௧௩௪. நாற்றிசையுலகுதன்னினான்மறையுணர்ந்தோர்தாமும்
போற்றிசைமாலையென்னும்பொற்புடையணங்குவைக
மாற்றிசைவிலாதசெம்பொன்மண்டபந்தன்னிலாதி
மேற்றிசைக்கடவுளிட்டவெயின்மணிப்பீடம்போன்றான்.

(இ - ள்.) நால் திசை-நான்கு திக்குக்களுக்கும் உட்பட்ட, உலகுதன்னில்-உலகத்திலுள்ள, நால் மறை உணர்ந்தோர் தாமும் - நான்குவேதங்களையறிந்த அந்தணர்களெல்லோரும், போற்று இசை - துதிமொழியைக் கூறப்பெற்ற, மாலை என்னும்-சந்தியென்கிற, பொற்பு உடை அணங்கு - அழகையுடைய சிறந்த தெய்வப்பெண், வைக - வீற்றிருக்கும்படி, மாற்று இசைவு இலாத செம் பொன் மண்டபந்தன்னில்-உரைமாற்றுக் கூறுதற்குமுடியாத [மிகவும்மாற்றுயர்ந்த]சிவந்தபொன்னினாலாகியதொருமண்டபத்திலே, ஆதி மேல் திசை கடவுள் - பழமையான மேற்குத்திக்குக்குத்தலைவனான வருண தேவன், இட்ட - போகட்ட, வெயில் மணி பீடம்-வெவ்விய ஒளியையுடைய இரத்தினமயமானதொரு ஆசனவட்டத்தை, போன்றான் - (அப்பொழுது சூரியன்) ஒத்தான்; (எ - று.)

உவமையணி. சந்தியாகாலங்களில் அந்தணர்யாவரும் வேதமந்திரங்களைச்சொல்லி நமஸ்காரம் முதலியன செய்து வைதிகச்சடங்கு புரிதலால்,

'நான்மறையுணர்ந்தோர்தாமும் போற்றிசை மாலை' என்றது. ஸந்த்யா என்பது-வடமொழியிற் பெண்பாற்சொல்லாதலால், அதனை 'மகள்' என்றது மிக ஏற்கும். மாற்றிசைவிலாத செம் பொன் - பத்தரைமாற்றுக்கு மேற்பட்ட தங்க மென்றபடி. மண்டபம் - அந்திச்செவ்வானத்துக்கும், அதிலிட்ட பல காற்பீடம் - ஆயிரங்கதிரிரவிக்கும் உவமை. "பொற்பே பொலிவு" என்னுந் தொல்காப்பியத்தால் பொற்பு - அழகுணர்த்தும் உரிச்சொல்லாம்; இனி, இது-பொன் பு எனப் பகுதியும் விகுதியுமாகப் பிரிந்து, பொன்னின் தன்மையென்றும் பொருள்படும். இப்பாட்டில், 'ஆதி' என்பதற்கு-(தேவருள்) முதல்வனான சூரியனென்று உரைத்து, அதனை-'போன்றான்' என்பதற்கு எழுவாயாக்குவாருமுளர். (௧௬௪)

[இது-அவ்வந்திப்பொழுதில் இயல்பாகத் தாமரை குவிதலையும், செவ்வல்லி மலர்தலையும் வருணிப்பது.]

௧௬௫ கொண்டமென்சிறைவண்டெ.ன்னுங்கொழுநருக்கிடங்கொடாமன், முண்டகக்குலத்துமாதர்முகங்குவிந்தூடிநிற்பக், கண்டெதிர்நின்றகாதற்கயிரவக்கணிகைமாதர், வண்டுறைநின்றுதங்கள் வாய்மலர்ந்தழைக்கலுற்றார்.

(இ - ள்.) மெல் சிறை வண்டு என்னும் - மென்மையான இறகுகளையுடைய வண்டுகளாகிய, கொண்ட கொழுநருக்கு - (தம்மை உரிமைப்பொருளாகப்) பெற்ற கணவருக்கு, இடம் கொடாமல் -(தம்பக்கல்வந்துசேர இணங்கி) இடந்தராமல், முண்டகம் குலத்து மாதர் - தாமரைகளாகிய குடிப்பெண்கள், ஊடி-ஊடல்கொண்டு, முகம் குவிந்து நிற்ப-முகம்வாடிநிற்க,— கண்டு - (அச்செய்தியைப்) பார்த்து, (இதுவே தமக்கு நல்லசமயமென்று அறிந்து),—எதிர் நின்ற கயிரவம் காதல் கணிகை மாதர்-எதிரில்நின்ற செவ்வல்லிகளாகிய ஆசைகாட்டும் வேசைமகளிர், வள் துறை நின்று - அழகிய இறங்குதுறைகளிலே நின்று, தங்கள் வாய் மலர்ந்து அழைக்கல் உற்றார் - தங்கள் (பூவாகிய) வாயைத் திறந்து (வண்டுகளாகிய அப்புருஷரை) அழைக்கத்தொடங்கினார்கள்; (எ - று.)

கருத்து-வெளிப்படை. உருவகவணி. வண்டுக்கு 'மென்சிறை' என்ற அடைமொழி கொடுத்ததற்கு ஏற்ப, கொழுநரை அழகியமேனியையுடையவரெனக் கருதுக. துறை - நீர்க்கரையும் வாயில்முன்னிடமுமாம். குலஸ்திரீகள் கணவரோடு சிறிதபிணங்கின சமயம் பார்த்து அவ்வாடவரை விலைமாதர் தாம் இழுத்து வசப்படுத்துத லாகிய உலகவியல்பு, இதில் உணர்த்தப்பட்டது. ஊடல் - கணவன்மனைவியருள் விளையாட்டுவகையாலுண்டாகுஞ் சிறுகலகம். (௧௬௫)

[இதுவும், மேற்கவியும் - சந்திரோதயவருணனை.]

௧௬௬. கானெலாமலர்ந்தமுல்லைககனமீதெழுந்ததென்ன
வானெலாம்வயங்குதாரைநிரைநிரைமலந்துதோன்ற
வேனிலான்விழவின்வைத்தவெள்ளிவெண்கும்பமென்னத்
தூநிலாமதியம்வந்துகுணதிசைத்தோன்றிற்றம்மா.

(இ - ள்.) கான் எலாம் மலர்ந்த முல்லை - காடுகளிலெல்லாம் மலர்ந்த முல்லைமலர்கள், ககனம் மீது எழுந்தது என்ன-ஆகாயத்தின்மேல் எழுந்து தோன்றினால் அதுபோல, வான் எலாம் வயங்கு தாரை - ஆகாய முழுவதிலும் விளங்குகிற நட்சத்திரங்கள், நிரை நிரை மலர்ந்து தோன்ற-வரிசைவரிசையாக விளங்கி (வெண்ணிறமாக)க் காணப்பட,—வேனிலான் விழவின் வைத்த வெள்ளி வெள் கும்பம் என்ன - வசந்தகாலத்துக்கு உரிய மன்மதனது உத்ஸவகாலத்தில் (மங்களகரமாக) வைக்கப்பட்ட வெள்ளியி

ஞலாகிய வெண்ணிறமான பூர்ணகும்பம்போல, தூ நிலா மதியம் வந்து குணதிசை தோன்றிற்று-சுத்தமான நிலாவையுடையபூர்ணசந்திரமண்டலம் வந்து கிழக்குத்திக்கில் உதித்தது; (எ - று.)—அம்மா - ஈற்றசை.

முன்னிரண்டடி - நட்சத்திரப்பிரகாசமும், பின்னிரண்டடி-சந்திரோதயமுங் கூறிற்று. வேனில் - இங்கே சித்திரையும் வைகாசியு மாகிய இளவேனிற்பருவம். அக்காலத்தில் மன்மதனுக்குப் போர்த்தொழிலில் ஊக்க மிகுதிஉண்டாதல்பற்றி,அவனுக்கு 'வேனிலான்' என்ற பெயர். வேனிலான் விழவுக்குரியகாலம் - இரவு.கும்பம் - குடம்:வடசொல்.விழவு - விழா என்பதன் விகாரம். உவமையணி. (௧௬௬)

௧௬௭. தூவியனிலவுதோன்றத்துணைவரைப்பிரிந்தோர்கண்கள்
காவியுமாம்பலும்பைங்கருவிளமலரும்போன்ற
மேவியமகளிர்கண்கண் மீனெறிபரவையேழுந்
தாவியவுழையுங்காதற்சகோரமும்போன்றமாதோ.

(இ - ள்.) தூ இயல் நிலவு தோன்ற - சுத்தமான தன்மையையுடைய சந்திரகாந்தி விளங்குகையில், துணைவரை பிரிந்தோர் கண்கள் - கணவரைப்பிரிந்த மனைவியரது கண்கள்,(இராமுழுவதுந் தூங்குவதின்றி மூடாம லிருத்தலால்), காவியும் ஆம்பலும் பை கருவிள மலரும் போன்ற-நீலோற்பலமலர்களையும் ஆம்பல்மலர்களையும் குளிர்ந்தகருவிளமலர்களையும் ஒத்தன; மேவிய மகளிர் கண்கள் - (கணவரைக்) கூடியுள்ள மனைவியரது கண்கள், (நிலாவைக்கண்டு மிகக்களித்தலால்), மீன் எறி பரவை எழும் - மீன்களைவீசுகிற எழுகடல்களையும், தாவு இயல் உழையும் - தாவிப்பாயுந்தன்மையையுடைய மான்களையும், காதல் சகோரமும் - (நிலாவில்) விருப்பத்தையுடைய சகோரபட்சிகளையும், போன்ற - ஒத்தன; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசை.

இச்செய்யுள் - நிலாத்தோற்றத்தில் விரகிகளுக்குத் துன்பமும், மற்றையோர்க்கு இன்பமும் உண்டாதலைக் கூறியது.

ஆணுக்குப் பெண்ணும்,பெண்ணுக்கு ஆணுந் துணையாதல்பற்றி,'துணைவரைப்பிரிந்தோர்' என்ற சொல்லில்,நாயகியரைப்பிரிந்த நாயகரும் அடங்குவ ராயினும், பின்வாக்கியத்தில் 'மேவியமகளிர்' என வந்ததனால், அது நோக்கி, தலைவரைப்பிரிந்த தலைவிய ரென்று உரைக்கப்பட்டது. காவி முதலிய மலர்கள் இராமுழுவதும் குவியாதுள்ளனவும்,கடல் முதலிய பொருள்கள் சந்திரனைக்கண்டுகளிப்பனவுமாம். சகோரம்-நிலவை யுணவாக்கொள்வதொரு பறவைவிசேஷம்:வடசொல்.தூ வியல் நிலவு எனப்பிரித்து,வியல்-பரந்த என்று முரைக்கலாம்;"வியலென்கிளவி யகலப்பொருட்டே" என்பர் தொல்காப்பியனார்: அது-உரிச்சொல். உழையென்றது, சந்திரனிடத்துள்ள மானை யாகலாம். (௧௬௭)

[இது - கவிக்கூற்று.]

௧௬௮. அரவியலல்குலாருமகிழ்நருமன்புகூர
விரவியவமளியெய்திவீதிமாநகரியெங்கும்
பரவையினிமிர்ந்தவோதையமர்ந்தபின்பரித்தேர்வேந்த
னிரவிடைச்சூழ்ந்தவண்ணமின்னதென்றியம்புகின்றாம்.

(இ - ள்.) அரவு இயல்அல்குலாரும்-பாம்பின்படம்போன்ற அல்குலையுடைய மகளிர்களும், மகிழ்நரும் - கணவர்களும், அன்பு கூர - அன்புமிக, விரவிய அமளி எய்தி - பொருந்தினசயனத்தையடைந்து,வீதி மா நகரி எங்கும்-நெடுந்தெருக்களையுடைய பெரியஅப்பட்டணமுழுவதிலும்,பரவையின் நிமிர்ந்த ஓதை-கடலொலிபோல மிகுந்துள்ளதாகிய ஓசை, அமர்ந்த பின்-

அடங்கியபின்பு,—இரவுஇடை-நடுராத்திரியிலே, பரி தேர் வேந்தன் - குதிரைகளைப்பூட்டின் தேரையுடைய துரியோதனராசன், சூழ்ந்த வண்ணம் - ஆலோசித்தவிதத்தை, இன்னது என்று இயம்புகின்றும் - இத்தன்மையதென்று கூறத்தொடங்குகிறோம்; (எ - று.)—அதனை, மேற் பதினன்கு கவிகளிற் காண்க.

மகிழ்நர் - மகிழ்ச்சியுள்ளவர்; ந்-பெயரிடைநிலை. எய்தி - எய்தவெனச் செயவெனெச்சமாத் திரிக்க. நள்ளிரவில்ஜனங்கள்ஒலியடங்குதல், இயல்பு.

## துரியோதனன்முதலியோர் இரவிற்செய்த சதியாலோசனை.

[துரியோதனன்முதலியோர் ஆலோசனைசெய்யச் சபாமண்டபமடைதல்.]

கககூ. தந்தையுந்தம்பிமாருங் கன்னனுஞ்சகுனிதானுஞ்
சிந்தையிற்றெளிந்தகல்விச்செழுமதியமைச்சர்தாமு
முந்தரவுயர்த்தகோமானேவலான்முழுதுமெண்ணி
மந்திரமிருப்பான்வந்தோர்மண்டபங்குறுகினாரே.

(இ - ள்.) தந்தையும் - பிதாவான திருதராட்டிரனும், தம்பிமாரும் - தம்பியரான (துச்சாசனன்முதலிய)தொண்ணூற்றொன்பதின்மரும், கன்னனும்—, சகுனிதானும்—, சிந்தையில் தெளிந்த கல்வி செழு மதி அமைச்சர்தாமும் - மனத்திலே ஐயந்திரிபற அறிந்த கல்வியையும் சிறந்தநுண்ணறிவையு முடைய மந்திரிகளும், முந்து அரவு உயர்த்த கோமான் ஏவலால் - சிறந்த பாம்புக்கொடியை உயரவெடுத்த துரியோதனராசனது கட்டளையினால், முழுதும் எண்ணி மந்திரம் இருப்பான் - நன்றாகஆராய்ந்து ஆலோசனைசெய்திருக்கும்பொருட்டு, ஓர் மண்டபம் வந்து குறுகினார் - ஒருமண்டபத்தை வந்துஅடைந்தாகள்; (எ - று.)

ஏவலால் வந்துகுறுகினர் என இயையும். இருப்பான்-பானீற்றுஎதிர்காலவினையெச்சம். கல்வியாலும் செழுமதியாலும் தாம்தெளிந்த பொருள்களைத் துரியோதனனிடத்து அச்சத்தால் வெளிக்கூறாது நிற்பவரென்பது தோன்ற, 'சிந்தையிற் றெளிந்த கல்விச செழுமதி யமைச்சர்' என்றார். முந்து உயர்த்த என இயைத்து, முன்னிடத்திலே உயரவெடுத்த என்றும் உரைப்பர். மந்த்ரம் - வடசொல். ஓர்மண்டபம்-இரகசியஆலோசனைச்சபை.

[துரியோதனன் மற்றையோரை வினவுதல்.]

கஉ0. தீதறுமதிவல்லோரைச்செழுமதிக்குடையானேக்கிப்
பாதவவனத்திற்போனபாண்டவர்தம்மைமீண்டு
மேதகவழைத்துநாடுவேண்டுமினென்றுமூட்டும்
யாதவன்றனித்துவந்தானென்செய்வதியம்புமென்றான்.

(இ - ள்.) செழு மதி குடையான் - கலைநிறைந்த பூர்ணசந்திரன்போன்றவெண்கொற்றக்குடையையுடையதுரியோதனன்,—தீது அறு மதி வல்லோரை நோக்கி - குற்றமற்ற அறிவில்வல்ல தந்தைமுதலியோரைப் பார்த்து, 'பாதவம் வனத்தில் போன - மரங்களையுடைய காட்டிற்குச் சென்ற, பாண்டவர்தம்மை - பாண்டவர்களை, மேதக அழைத்து - மேன்மையாகக் கூப்பிட்டு, நாடு மீண்டும் வேண்டுமின் என்று-(உங்கள்நாட்டை)மறுபடிவிரும்பிக்கேளுங்க ளென்று சொல்லி, மூட்டும்-கலகத்தையுண்டாக்குகிற, யாதவன் - யதுகுலத்தவனாகிய கண்ணன், தனித்து வந்தான் - தனியனாக இங்குவந்தனனன்றோ? என் செய்வது-(நாம் இப்பொழுது) என்னசெய்யத்தக்கது? இயம்பும் - சொல்லுங்கள்,' என்றான்-என்றுகூறினான்; (எ-று.)

பாதபம் - வடசொல்; காலால் நீரைக்குடிப்ப தென்று பொருள்; பாதம் - அடி: "நின்று, தமர வனர்தெங்கு தாளுண்டநீரைத். தலையாலேதான்

தருதலால்" என்பதுங் காண்க. மேதக-மேன்மைபொருந்த; கௌரவமாக என்றபடி. மே - மேன்மையென்னும் பண்பி னடி. (கஎ0)

[திருதராட்டிரன் 'கண்ணனைக்கொல்லவேண்டும்' என்றுகூறுதல்.]

கஎக. பொரும்படைமைந்தன்கூறத்தந்தையும்பொருந்தச்சொல்வா
னிரும்புலிவலையிற்பட்டால்விடுவரோவெயினராஞேர்
வரம்பில்வெஞ்சேனையோடும்வளைந்தினிமாயன்றன்னைக்
கரும்பொழுதகலுமுன்னேகொல்வதேகருமமென்ருன்.

(இ - ள்.) பொரும் படை மைந்தன் கூற - போர்செய்தற்குரிய சேனையையுடையகுமாரனை துரியோதனன் இவ்வாறுசொல்ல,—தந்தையும்-பிதாவான திருதராட்டிரனும்,—பொருந்த சொல்வான் - (தன் மகன் மனத்துக்கு) இசையும்படி கூறுபவனாய்,'இரும் புலி வலையில் பட்டால் - பெரியபுலியொன்று(தானுகவந்து)வலையிலே அகப்பட்டுக்கொண்டால்,எயினர்ஆனோர்-வேடர்களானவர்கள், விடுவரோ - (அதனைக்கொல்லாமற்) புறத்துச்செல்லவிட்டிடுவார்களோ? [விடாரன்ரே?]; (ஆதலால்), இனி - இப்பொழுது, கரும் பொழுது அகலும் முன்னே - (இருளாற்) கரிய இவ்விராப்பொழுது கழியுமுன்னமே, மாயன் தன்னை - கண்ணனை, வரம்பு இல் வெம் சேனையோடும் வளைந்து-எல்லையில்லாத கொடியசேனையுடனே (சென்று)சூழ்ந்து,கொல்வதே - கொன்றுவிடுவதே,கருமம் - செய்யத்தக்கதொழில்,' என்ருன்-என்று கூறினன்; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணி. படை - ஆயுதமுமாம். இரும்புலிஎன்றது-வலையிற்சிக்குவிக்கவொண்ணுதபுலி யென்றபடி. வளைந்து-முற்றுகைசெய்து. இருளின் கருமை, பொழுதின்மேல் ஏற்றப்பட்டது. பகலிற் கொல்லமுடியாது என்பான்'கரும்பொழுதகலுமுன்னே'என்றும்,தனியே கொல்லமுடியாது என்பான் 'வரம்பில்வெஞ்சேனையோடும்வளைந்து'என்றுங் கூறினன்.

[இதுமுதல் மூன்றுகவிகள் - அதனை விகர்ணன் தடுத்ததைக் கூறுவன.]

கஎஉ. கண்ணிலானுரைத்தமாற்றங்கேட்டலுங்காவலோரின்
மண்ணிலாரிதற்குமுன்புதூதரைவளைந்துகொன்ருர்
ரெண்ணிலாவிந்தவெண்ணமெவ்வுழிக்கற்றதென்று
வெண்ணிலாமுறுவல்செய்துவிகன்னனும்விளம்பலுற்ருன்.

(இ - ள்.) கண் இலான் உரைத்த மாற்றம்-ஊனக்கண்ணோடு ஞானக்கண்ணு மில்லாத திருதராட்டிரன் (இவ்வாறு) சொன்ன வார்த்தையை, கேட்டலும்-கேட்டவளவிலே,—விகன்னனும்-விகர்ணனென்னுந்துரியோதனன்தம்பியும்,—'மண்ணில் - உலகத்தில், காவலோரில்-அரசர்களுள், இதற்கு முன்பு—, தூதரை வளைந்து கொன்ருர் - தூதுவந்தவரைச் சூழ்ந்து கொலைசெய்தவர்,ஆர் - யார்? [எவருமில்லை யென்றபடி]; எண் இலா இந்த எண்ணம் - ஆலோசனையில்லாத இந்த நினைப்பு, எ உழி கற்றது - எந்த இடத்தினின்று அறிந்துகொண்டது?' என்று—, வெள் நிலா முறுவல் செய்து விளம்பல் உற்ருன் - வெண்ணிறமான சந்திரகாந்திபோல வெள்ளிய புன்சிரிப்பைச் செய்து கூறத்தொடங்கினன்; (எ-று.)—அதனை,மேலிரண்டு கவிகளிற் காண்க.

விகன்னன் - விகர்ணன்: வடசொற்றிரிபு; இவன்-துரியோதனனது இறுதித்தம்பி: இராவணன்தம்பியருள் விபீஷணன்போல, நீதிகளை நன்கு உணர்ந்து நியாயவழியையேபேசுகிறதற்குணமுடையவன்; கீழ்ச் சூதுபோர் நடந்தகாலத்தில் துரியோதனனேவலால் துச்சாதனன் திரௌபதியைமுடிபிடித்திழுத்துவந்தபொழுதும்இவன் நீதியெடுத்துக்கூறினன்:இதுபற்றியே, மேல் யுத்தத்தில் வீமன் இவனை விதியாற் கொல்லவேண்டிய பொழுதும்

மிகஇரங்குமாறு காண்க. இங்கே, நகைப்பு - தந்தையதுபேதைமைநோக்கி யுண்டானது. 'எண்ணிலாவிந்தவண்ணமெவ்வழிக்கேற்றது' என்றும் பாடம். எண்ணிலா - நினைக்கத்தகாத என்றபடி. (கஎஉ)

[கொல்லத்தகாதவர்.]

கஎங. மூத்தவரிளையோர்வேதமுனிவரர்பிணியின்மிக்கோர்
தோத்திரமொழிவோர்மாதர் தூதரென்றிவரைக்கொல்லிற்
பார்த்திவர்தமக்குவேறுபாவமற்றிதனினில்லை
பூத்தெரிதொடையாய்பின்னுநரகினும்புகுவரென்றான்.

(இ - ள்.) 'பூ தெரி தொடையாய் - மலர்களாலமைந்த விளங்குகின்ற மாலையையுடையவனே!—மூத்தவர் - முதியவர்களும், இளையோர் - இளம் பிராயமுள்ளவர்களும், வேதம் முனிவரர் - வேதங்களையறிந்த பிராமணச் சிரேஷ்டர்களும், பிணியில் மிக்கோர்-நோயில் மிகுந்தவர்களும்,தோத்திரம் மொழிவோர் - ஸ்துதிபாடகர்களும்,மாதர்-மகளிரும், தூதர் - தூதர்களும், என்ற இவரை-என்றுசொல்லப்பட்டஇவர்களை, கொல்லின் - கொன்றால், பார்த்திவர்தமக்கு - அரசர்களுக்கு. இதனின் - இதுபோல (க்கொடிய), வேறு பாவம்—, இல்லை—; பின்னும் - மேலும், நரகினும் புகுவர் - (இவர்களைக்கொன்றவர்) நரகத்திலுஞ் சேர்வார்கள்,' என்றான்-என்று(விகர்ணன்) கூறினான்; (எ - று.)—மற்று-அசை.

"இரமலரிளையவரேத்துகாவலர்,விரவியதூதுவர் விருத்தர் வேதியர், அரிவையர்வெஞ்சமரஞ்சுவோர்பெருங், குரவரென்றிவர்களைக்கோறல்பாவமே" என்றார் கீழ் நிரைமீட்சிச்சருக்கத்தும். இராமதூதனை அனுமானைக் கொல்லத்துணிந்தஇராவணனுக்கு விபீஷணன்"மாதரைக்கொலைசெய்தார் களுளரெனவரினும்வக்க, தூதரைக்கொன்றனார்களியாவரே தொல்லைநல்லோர்" என்பதுமுதலாக நீதிகூறியவாறுங் காண்க. அறிவினாலும் வயதினாலும் ஒழுக்கத்தாலும் முதிர்ந்தவர்களாகிய ஞானவ்ருத்தர் வயோவ்ருத்தர் சீலவ்ருத்தர் என்னும்மூவகைப்பெரியோரும்அடங்குதற்கு, பொதுப்பட 'மூத்தவர்' எனப்பட்டது. தோத்திரம்-ஸ்தோத்ரம்: வடசொல். தோத்திரமொழிவோர் - அரசரை எப்பொழுதும் அருகிலிருந்து புகழ்ந்துபாடும் ஒருசாதியார்; இனி, ஒருவரைத் துதித்துக் கீழ்ப்படிபவருமாம். சிலபாவங்கள் பெரியனவாயினும், சிறந்தபிராயச்சித்தங்களால் இம்மையிலே ஒழிக்கத்தக்கனவாக இருக்குமன்றோ? அங்ஙனமன்றி, இது எந்தப்பிராயச்சித்தத்தாலுந் தீராமல் மறுமையில் அனுபவித்தே தீரத்தக்க பாவமாகும் என்பதை விளக்கும்பொருட்டு, 'பின்னும் நரகினும்புகுவர்' என்றான். என்றிவர் தொகுத்தல்விகாரம். இனி, என்ற இவர் எனவெடுத்து-என்றஎன்பதை எண்ணிடைச்சொல்லாக்கொண்டு,அது நின்றவிடத்துப் பிரிந்து பிறவிடத்துஞ் சென்று பொருந்திப் பொருள்படுமென்றலும் ஒன்று. தூதரைக்கொல்லலாகாதென்றற்கு இனமாகப் பிறரையும் எடுத்துக்கூறினான். 'பூத்தெரிதொடையாய்'என்ற விளியைத் திருதராட்டிரனை நோக்கிய தென்றுவது,துரியோதனனை நோக்கியதென்றுவது கொள்க. இது - பூத்து எரி எனப் பிரித்து, அமங்கலப்பொருள்தருமாறுங் காண்க. (கஎங)

கஎச. பழியுடைப்பகைஞரேனுந்தன்பெரும்பதியில்வந்தா
லழிவுறக்கோறல்பாவமாண்மையுமன்றுமென்பார்
கழிகடற்சேனைசூழக்கங்குலின்வளைந்திட்டாலு
மெழிலுடைக்கொண்டல்வண்ணனகப்படானெவர்க்குமென் [றான்.

(இ - ள்.) (இன்னும் அவ்விகர்ணன்), 'பழி உடை பகைஞர் ஏனும் - (தன்னைப்) பழித்தலையுடைய பகைவர்களாயிருப்பினும், தன் பெரு பதியில்

வந்தால்-(அவர்கள்) தனதுபெரியவூருக்கு வந்தால், அழிவு உற கோறல் - (அவர்களை) அழிவையடையும்படி கொல்லுதல்,பாவம் - தீவினையாம்;(அது), ஆண்மையும் அன்று ஆம் - ஆண்தன்மைக்குஉரியதும் ஆகாது, என்பார் - என்று (அறிவுடையபெரியோர்கள்) கூறுவார்கள்; கழி கடல் சேனை சூழ - மிகுந்தகடல்போற்பெரிய சேனைகள் வந்து சுற்றிலும்நிற்க, கங்குலின் வளைந்திட்டாலும் - இராத்திரிகாலத்தில் சென்றுசூழ்ந்திட்டாலும், எழில் உடை கொண்டல் வண்ணன் - அழகையுடைய மேகம்போன்ற நிறமுடையவனான கண்ணன், எவர்க்கும் அகப்படான் - எப்படிப்பட்டவலிமையையுடையோர்க்கும்(பிடித்துக்கொல்லக்)கிடைக்கமாட்டான்', என்றான்-என்றுகூறினான்.

பழிஉடை - எல்லாராலும் பழிக்கப்படுதலையுடைய என்றும் பொருள் கொள்ளலாம். கழிகடல், கழி - மிகுதியுணர்த்தும்உரிச்சொல்; ஆனது பற்றியே, வருமொழிமுதல்வலி இயல்பாயிற்று: [நன் - மெய் - ருக]. கீழ்த் திருதராட்டிரன் 'மாயன் தன்னைக்கரும்பொழுதகலுமுன்னே கொல்வது' எனக் கரியோனைக்காரிருளிலேயேகொல்லவேண்டுமென்பதுபடக்கூறியதை மறுத்து,இவன் 'கங்குலின்வளைந்திட்டாலுமெழிலுடைக்கொண்டல்வண்ண னகப்படான்' என்றதனால், கறுத்தவனைக்கரியஇருளிற்கண்டுபிடிப்பது கஷ்டமென்பதுபடக் கூறி, கண்ணனது வெல்லுதற்கரிய மாயைநிலையை வெளியிட்டவாறு. பகைஞர்,ஞ் - பெயரிடைநிலை. (கஎச)

[இதுவும், அடுத்த கவியும் - துச்சாதனன்வார்த்தை.]

கஎரு. வெம்புயவலியான்மாதைவிரிதுகிலுரிந்தவீரன்
தம்பியைமுனிந்துசீறித்தமையனைநோக்கிச்சொல்வான்
வம்பவிழலங்கன்மார்பமந்தணமுரைக்கலுற்றால்
இம்பர்மற்றியாதுசொல்லவிளைஞரையழைத்ததென்றான்.

(இ - ள்.) (இங்ஙனம் விகர்ணன் சொல்லக் கேட்டவளவில்),—வெம் புயம் வலியால் மாதை விரி துகில் உரிந்த வீரன் - கொடியதோள்களின் வலிமையால் அழகியதிரௌபதியினது பெரியஆடையை அவிழ்க்கலுற்ற துச்சாதனன்,—தம்பியை முனிந்து சீறி - தம்பியாகிய அவ்விகர்ணனை மிகக் கோபித்து,தமையனை நோக்கி சொல்வான் - தமையனான துரியோதனனைப் பார்த்துச் சொல்பவனாய்,—'வம்பு அவிழ் அலங்கல் மார்ப - வாசனைவீசுகிற பூமாலையையணிந்த மார்பையுடையவனே! மந்தணம் உரைக்கல் உற்றால் - இரகசியமான ஆலோசனை சொல்லத்தொடங்கினால், இம்பர்-(அதற்குரிய) இவ்விடத்தில், யாது சொல்ல-எந்தஆலோசனையைச் சொல்லும்பொருட்டு, இளைஞரை அழைத்தது - சிறியோர்களைக் கூப்பிட்டது?' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)—மற்று - அசை.

மந்திராலோசனைக்குத்தகாத சிறியோர்களை அவ்வாலோசனைசெய்யுமிடத்தில் வரவழைத்தது சிறிதுந்தகுதியன்று என்றான். இந்நீதி இச்சருக்கத்தின் கஉ-ஆங்கவியிலுங் காணப்பட்டது. இப்பாட்டின்முதலடி - இவனது தோள்வலிமை போர் முதலிய ஆற்றல்தொழில்களுக்கு அமைந்ததன்று, ஒருபெண்ணைத்துகிலுரியும் இழிதொழிலுக்கே அமைந்ததுபோலும் எனக் கவி இகழ்ந்தவாறு. இங்கே, வீரனென்றது, இகழ்ச்சி. விரிதுகில் - எதிர்காலவினைத்தொகையாக, (கண்ணன் திருவருளால்) விரிவதாகுஞ்சேலை யென்றும்பொருள்படும்.இதனால், அத்தஅற்புதச்செய்கையையும்இவன்செய்து முடிக்கமாட்டாத இழிதகைமை தோன்றும். முனிந்து சீறி - ஒருபொருட் பன்மொழி. (கஎரு)

கஎசு. அதிரதர்முதலாவுள்ளவவனிபர்வளைந்துநிற்ப
வெதிர்முகிறவழுங்கோயிலெரியினையெங்குமூட்டி

விதுரனுமவனுஞ்சேரவெந்திடமலைவதல்லால்
மதிபிறிதில்லையின்னேவல்விரைந்தெழுமினென்றான்.

(இ - ள்.) (இன்னும் அத்துச்சாதனன்), 'அதிரதர் முதலோர் உள்ள அவனிபர் எதிர் வளைந்து நிற்ப - அதிரதர்முதலாக இருக்கிற அரசர்கள் (பலர்) (நம்முடன்) எதிரிலேவளைந்துகொண்டு நிற்க, முகில் தவழும் கோயில் எங்கும் எரியினை மூட்டி - மேகங்கள்தவழப்பெற்ற [மிகவுயர்ந்த] (விதுரனது) சிறந்த வீட்டிலே எல்லாப்பக்கத்தும் நெருப்பைப்பற்றவைத்து, விதுரனும் அவனும் சேர வெந்திட மலைவது அல்லால் - விதுரனும் அக்கண்ணனும் ஒருசேர வெந்திறக்கும்படி அழிப்பதல்லாமல், பிறிது மதி இல்லை - வேறு ஆலோசனையில்லை; (ஆதலால்), இன்னே - இப்பொழுதே, வல்விரைந்து - மிகத்துரிதப்பட்டு, எழுமின்-புறப்படுங்கள்', என்றான்-என்றுகூறினான்; (எ-று)

தேர்வீரர் - அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் என நால்வகைப் படுவர். அதிரதர்-முழுத்தேரரசர்; அவராவார் - தாம் ஒருதேரில் ஏறிநின்று தம் தேர் குதிரை சாரதிகளுக்கு அழிவுவாராமற் காத்துப் பலவாயிரந்தேர் வீரரோடு வேறுதுணையில்லாமலே போர்செய்துவெல்லும் வல்லமையுடையார். அவரிற்சிறிதுதாழ்ந்தவர்-மகாரதர்; இவர் - பதினோராயிரந் தேர்வீரரோடு வேறுதுணையில்லாமலே போர்செய்து வெல்லும் வல்லமையுடையார். சமரதர் - ஒருதேர்வீரனோடு தாமும் ஒருவராய் எதிர்க்கவல்லவர். அவ்வாறு எதிர்த்துப்போர்செய்யுமளவில் தமது தேர் முதலியவற்றை இழந்து போம்படியானவர் - அர்த்தரதர்; இவர்கள் இருவர் சேர்ந்தால் ஒருசமரதனுக்கு ஒப்பாவர். இந்நால்வகையாருள்ளும் அதிரதர் சிறந்தவராதலால், அவர்களையே தலைமையாக் கூறினது. முகில்எதிர்தவழும் என இயைத்து, மேகங்கள் நேரில்வந்து தவழப்பெற்ற என்றுங் கொள்ளலாம். இவர்களை எரிகிறவீட்டில்நின்று வெளியில்ஓடிச்செல்லாதபடி பொருது அடித்துத்தள்ள வேண்டுமென்பான், 'மலைவது' என்றான். வல்விரைந்து-ஒருபொருட்பன்மொழி; வல் - விரைவுணர்த்து மிடைச்சொல். விதுரன்மீதுள்ள கோபத்தாலும், இருவரும் ஒருமனையில் வசித்தலாலும், அவனையும் உடன்கொல்ல வேண்டுமென்றான். இதனால், கண்ணனொருவனைக்கொல்லவேண்டுமென்ற திருதராட்டிரனினும், கண்ணன் விதுரன் என்ற இருவரையுங் கொல்லவேண்டுமென்றதுச்சாதனனது மிக்ககொடுமை நன்குவிளங்கும். வல்விரைந்து- நள்ளிரவு கழிந்திடுதற்குமுன்னே என்றபடி. (கசக)

[கர்ணன் தற்புகழ்ச்சியாகக் கூறுதல்.]

கஎஎ. செங்கதிரெழுந்துசிறிற்செறியிருணிற்பதுண்டோ
இங்கிவனிருந்தவில்லிலெரியிடவேண்டுமோதான்
வெங்கணையொன்றினாலேவிளிந்திடவென்றுமீள்வேன்
கங்குலினெழுமினென்றுகன்னனுங்கனன்றுசொன்னான்.

(இ - ள்.) (அதுகேட்டு), கன்னனும்—, 'செம் கதிர் எழுந்து இறின்-சிவந்த கிரணங்களையுடைய சூரியன் உதித்து அழிக்கத்தொடங்கினால், செறி இருள் நிற்பது உண்டோ - நெருங்கின இருள் அழியாமல்நிற்பது (எங்கேனும்) உள்ளதோ? [இல்லை யென்றபடி]; இங்கு இவன் இருந்த இல்லில் எரி இட வேண்டுமோ தான் - (இக்கண்ணனைக்கொல்வதற்காக) இவ்வூரில் இவன் வந்துதங்கியிருக்கிற வீட்டில் நெருப்புப்பற்றவைக்கவேண்டுமோ? [வேண்டுவதில்லை]; வெம் கணை ஒன்றினாலே விளிந்திட வென்று மீள்வேன்-கொடிய ஒருபாணத்தாலே (நான் அவனை) இறக்கும்படி சயித்துத் திரும்புவேன்; கங்குலின் எழுமின்-இவ்விராவிலேயே(போர்க்குப்)புறப்படுங்கள்', என்று—, கனன்று சொன்னான் - கோபித்துக் கூறினான்; (எ - று.)

கன்னன் எப்பொழுதும் தனதுபலபராக்கிரமங்களை மிக்கனவாகத் தானேமதித்துள்ளவனுதலால், இங்ஙனந் தைரியத்தோடு கூறினன். செங்கதிர் என்பது-வெண்கதிரானசந்திரனைப்பிரித்தலால்,செம்-இனம்விலக்க வந்த அடைமொழி. முதலடியிற்சொன்ன உபமானம் - யான் போர்க்கு எழுந்துகோபித்துச்சென்றால் கண்ணன் இறவாதிருப்பனோ? என்ற உபமேயத்தை உணர்த்தலால், பிறிதுமொழிதலாம். சூரியபுத்திரனை தனக்குச் சூரியனையும்,கருநிறமுடைய கண்ணனுக்கு இருளையும் ஏற்குமாறு உவமை கூறினன். (கஎஎ)

[இதுவும், அடுத்தகவியும் - சகுனி 'கண்ணனைப் படுகுழி பாய்ச்சிக் கொல்லவேண்டும்' என்றல்.]

கஎஅ. பதிப்பெயர்ந்தேகிநாளைப்பகைவரைக்கூடுமாயின்
விதிப்பயனென்னநம்மைவெஞ்சமர்வெல்லவொட்டான்
மதிப்பதென்வேறுகள்ளமாயனைமனையிற்கோலிச்
சதிப்பதேகருமமென்றுசௌபலன்பின்னுஞ்சொல்வான்.

(இ - ள்.) (அதுகேட்டு), சௌபலன் - (காந்தாரநாட்டரசனுன) சுபலனென்பவனது புத்திரனுகியசகுனி,--'(இக்கண்ணன்),பதி பெயர்ந்து ஏகி-இவ்வூரைவிட்டுநீங்கிச்சென்று,நாளை - நாளைக்கு, பகைவரை கூடும் ஆயின்-பகைவர்களான பாண்டவர்களைச் சேர்ந்திடுவானுனல், விதி பயன் என்ன-(முற்பிறப்பிற்செய்த கொடிய) ஊழ்வினைப்பயன்போல, நம்மை வெம் சமர் வெல்ல ஒட்டான் - நம்மைக் கொடியபோரிற் சயிக்கவிடமாட்டான்; (ஆதலால்), வேறு மதிப்பது என் - வேறே ஆலோசிக்கவேண்டுவது என்ன? கள்ளம் மாயனை - வஞ்சனையையுடைய கண்ணனை, மனையில் கோலி - (நம்முடைய) வீட்டிலே (வரவழைத்து) வளைந்துகொண்டு, சதிப்பதே - வஞ்சனையாக வெல்வதே, கருமம் - செய்தொழிலாம்', என்று - என்றுசொல்லி, பின்னும் சொல்வான் - மறுபடியுங் கூறுவான்; (எ - று.)—அதனை, மேற்கவியிற் காண்க.

இப்பாட்டிற் கூறிய கருத்தின் விவரணமே, அடுத்தபாட்டு. விதிப்பயன் தவறாததுபோல, இவன் நம்மை வெற்றியடைவியாமை தவறாதென்பான், 'விதிப்பயனென்னநம்மைவெஞ்சமர்வெல்லவொட்டான்'என்றான்.கள்ளம்-தொழிற்பெயர்; கள் - பகுதி, அம் - விகுதி : இது - வேறுவிகுதிபெற்று, களவு என்றும் வரும்; இதன் எதிர்மறை-கள்ளாமை. கோலுதல்-அகப்படச் செய்தலும், சூழ்தலுமாம். 'மனையிற்கோலிச் சதிப்பது' என்பதற்கு-விதுரன் வீட்டிலேயே வளைந்து கொல்லுவதென உரைப்பினுமாம். சௌபலன்-தத்திதாந்தநாமம். (கஎஅ)

கஎகூ. கொல்லுவதியற்கையன்றுகுழிபறித்தரக்கரோடு
மல்லரையிருத்திமேலோராசனம்வகுத்துநாளை
யெல்லிடையழைத்துவீழ்த்திவிகலுடன்விலங்குபூட்டித்
தொல்லருஞ்சிறையில்வைத்தறூதருக்குரிமையென்றான்.

(இ - ள்.) 'கொல்லுவது - (தூதரைக்)கொல்லுதல்,இயற்கை அன்று-(நல்லரசர்க்குத்)தக்கதன்று ; குழி பறித்து - பெரும்பள்ளந்தோண்டி,அரக்கரோடு மல்லரை இருத்தி - இராக்கதர்களையும் மற்போர்வீரரையும் (அதனுள்ளே மறைவாக)இருக்கவைத்து,மேல் - மேலே, ஓர் ஆசனம் வகுத்து - ஒரு ஆசனத்தை அமைத்து, நாளை எல்லிடை அழைத்து - நாளைப்பகலிலே வரவழைத்து, வீழ்த்தி - (அக்குழியிலே)விழும்படிசெய்து, இகலுடன் - வலிமையோடு,விலங்கு பூட்டி-விலங்கைப் பூட்டி,தொல் அருஞ் சிறையில் வைத்தல் - பழமையான பொறுத்தற்கரிய சிறைச்சாலையிலே வைத்திடுதலே, தூ

தருக்கு உரிமை-தூதர்களுக்குச்செய்தற்குரிய தண்டனை',என்றான் - என்று சொன்னான், (சகுனி); (எ - று.)

இயற்கை - தொழிற்பெயர்; இயலுத லென்க:இயல் - பகுதி, கை - விகுதி. நிலத்திற் குழிந்துள்ளது, குழி (கஎகூ)

[இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: துரியோதனன் படுகுழியமைத்ததைக் கூறும்.]

கஅ0. மாதுலனுரைத்தமாற்றமருகனுமிசைந்துகங்குற்
போதிடையனேகமல்லர்வருகெனப்புகன்றுதானு
நீதியினிருந்துதாழநிலவறைசமைத்தபின்ன
ராதிநூறாயிரம்போரரக்கரையதனுள்வைத்தான்.

(இ - ள்.) மாதுலன்-மாமனான சகுனி, உரைத்த - சொன்ன, மாற்றம்-வார்த்தையை, மருகனும் - மருமகனான துரியோதனனும், இசைந்து - உடன்பட்டு[அங்கீகரித்து],கங்குல் போது இடை-அந்தகாரமானதிரிப்பொழுதில்தானே, அனேக மல்லர் வருக என புகன்று-பலமற்போர்வீரர்கள் வருவாராக வென்று கூறி, (வரவழைத்து), தானும்—,நீதியின் இருந்து - (அவ்வாலோசனைக்குரிய) முறைமையிலே இருந்துகொண்டு, நிலம் அறை தாழ சமைத்த பின்னர் - நிலவறையை ஆழமாக உண்டாக்கினபின்பு, ஆதி நூறு ஆயிரம் போர் அரக்கரை-பழமையான போரில்வல்ல இராக்கதர்கள் லட்சம் பேரை, அதனுள் வைத்தான்-அந்நிலவறையினுள்ளே இருத்தினான்; (எ-று.)

மாதாவினுடன்பிறந்தவன், மாதுலன். நிலவறை பூமிக்குள் வெட்டப்படும் பள்ளம். 'நூறாயிரம்போரக்கர்'என்றும் பாடம். நீதியின்தாழ இருந்து என இயைத்து - ந்யாயத்தினின்று கீழ்ப்பட இருந்து[வழுவி]என்று உரைப்பாருமுளர். (கஅ0)

கஅக. மல்லர்பப்பரவர்தம்மைமற்றதினிரட்டிவைத்தான்
வில்லுடைவீரர்தம்மைவேறதினிரட்டிவைத்தான்
பல்படைவல்லோர்தம்மைப்பதின்மடங்கதனில்வைத்தா
னல்லிலோர்கடிகைதன்னிலறிவனையழைக்கவென்றே.

(இ - ள்.) அறிவனை அழைக்க என்று - நுண்ணறிவுடைய கண்ணனை (மறுநாள்)அழைக்கவேண்டுமென்று கூறி,(அவனைம்வருகையிற் பிடித்திடுதற்கு),அல்லில் ஓர் கடிகைதன்னில்-அவ்விராத்திரியில் ஒருநாழிகைப்பொழுதினுள்ளே,மல்லர் பப்பரவர்தம்மை-மல்லர்களையும் பப்பரர்களையும், அதின் இரட்டி வைத்தான் - அவ்விராக்கதர்தொகையினும் இரண்டுமடங்காக [இரண்டுலட்சம்பேரை] (அந்நிலவறையினுள்) இருக்கசெய்தான்; வில் உடை வீரர்தம்மை - வில்லையேந்திய வீரர்களை,வேறு - தனியே,அதின் இரட்டி வைத்தான்-அத்தொகையினும் இரண்டுமடங்காக[நாலுலட்சம்பேரை] வைத்திட்டான்; பல் படை வல்லோர்தம்மை - பலஆயுதங்களிலும் வல்ல சூரர்களை, அதனில் பதின்மடங்கு வைத்தான் - அத்தொகையினும் பத்து மடங்காக[நாற்பதுலட்சம்பேரை] அங்குஇருத்தினான்; (எ - று.)—மற்று - அசை; பின்பு என்றுமாம்.

பப்பரவர்-பப்பரநாட்டிலுள்ளவர்; இவர் - மிலேச்சசாதிவகையினுட்பட்டவர். மல்லர்பப்பரவர்தம்மை - மற்போர்வல்லவராகிய பப்பரவரை யென்றுமாம்.இரட்டுதலையுடையது - இரட்டி; இரட்டுதல் - இரண்டாதல்: இ-கருத்தாப்பொருள்விகுதி. கடிகை-கடிகாஎன்னும் வடமொழியின்திரிபு; அது, இருபத்துநான்குநிமிஷங் கொண்ட நேரம். 'அழிக்க' என்றும்பாடம்.

கஅஉ. பெரும்பிலவறையையேபின்பிளப்பிறுனிரைத்துமூடி
யரும்பெறன்மணிகளாலோராசனமதன்மேலாக்கிச்

சுரும்பிமிர்மாலைதூக்கித்தொழிலுடைவிதானமேற்றி
வரம்பிலாவென்றிவேலான்மாறிலாவண்ணஞ்செய்தான்

(இ - ள்.) வரம்புஇலா வென்றி வேலான் - எல்லையில்லாத வெற்றியைத் தருகின்ற வேலாயுதத்தையுடைய துரியோதனன், (தன்வேலையாட்களைக் கொண்டு), பெரும் பிலம் அறையை - பெரிய பள்ளமான அந்நிலவறையை, வேயின் பிளப்பினால் நிரைத்து மூடி - மூங்கில்களின்பிளப்புக்களினால்மேலே வரிசையாய்ப்பரப்பிமூடி, அதன்மேல் - அம்மூடியதன்மேல், அரும் பெறல் மணிகளால் ஓர் ஆசனம் ஆக்கி - அருமையானபெறுதலையுடைய இரத்தினங்களால் ஒருபீடத்தைச் சித்தஞ்செய்து, சுரும்பு இமிர் மாலை தூக்கி தொழில் உடை விதானம் ஏற்றி - வண்டுகள்மொய்த்தொலிக்கப்பெற்ற பூமாலைகளைத் தொங்கவிடப்பெற்று(ப்பலவகைவிசித்திர)வேலைப்பாட்டையுடையமேற்கட்டியை(அவ்வாசனத்திற்குமேல்) உயரத்தில்அமைத்து, மாறு இலா வண்ணம் செய்தான் - வேறுபாடுதோன்றாதபடி (எல்லாவற்றையும்) அமைத்துவைத்தான்; (எ - று.)

'அரும்பெறல்மணி' என்றது - வடமொழிநடை; இதனை "அருங்கேடன்," "சென்றுசேர்கல்லாப்புள்ளபுள்ளி, லென்றாழ்வியன்குளம்" என்பனபோலக் கொள்க: இனி, பெறலருமணி என மாற்றிஇயைத்து, பெறுதற்கருமையான மணியெனினுமமையும். பிளப்பு - பிளக்கப்பட்டபொருளுக்குத் தொழிலாகு பெயர்; பு - விகுதி. தூக்கியென்னும்வினையெச்சம், உடையவென்னுங்குறிப்புப் பெயரெச்சத்தைக் கொண்டது. விதானம் - வடசொல். மாறிலாவண்ணம் என்றது, நிலவறையின்மேல்அமைத்துவைத்தது தோன்றாதபடி என்றவாறு.

[இதுமுதல் மூன்றுகவிகள் - சூரியோதயவருணனை.]

௧௩௫. அடியவர்மனத்திலுள்ளவாரிருட்கங்குறீர்க்கு
நெடியவனிருக்கவென்றுநிலவறைவிரகிற்செய்த
கடியவனியற்கையஞ்சிக்கங்குலுங்கடிதிற்போகப்
படியவர்துயிலும்போகப்பரிதியுமுதயஞ்செய்தான்.

(இ - ள்.) 'அடியவர் மனத்தில் உள்ள - (தனது) தொண்டர்களதுஉள்ளத்திலுள்ள, ஆர் இருள் கங்குல் - (மற்றையோர்க்குப்போக்குதற்கு) அரிய (அஞ்ஞான)அந்தகாரமாகியஇரவை, தீர்க்கும் - அழித்தருளுகிற, நெடியவன் - பெருமைக்குணமுடைய கண்ணபிரான், இருக்க - வீற்றிருக்கவேண்டும்,' என்று - என்று கருதி, விரகின் - வஞ்சனையாக, நிலம் அறை செய்த - நிலவறையைச் செய்துமுடித்த, கடியவன் - கொடுந்தன்மையுடைய துரியோதனனது, இயற்கை - துஷ்டசுபாவத்துக்கு, அஞ்சி - பயந்து, கங்குலும் - இராத்திரியும், கடிதின் போக - விரைவாகக்கழிய, பரிதியும் - சூரியனும், படியவர் துயிலும் போக - நிலவுலகத்திலுள்ளாரது நித்திரையும் ஒழியும்படி, உதயம் செய்தான் - உதித்தலைச்செய்தான்; (எ - று.) --- உதித்தானென்றபடி.

ஏதுத்தற்குறிப்பேற்றவணி. இரவுஇயல்பாகக்கழிந்ததைத் துரியோதனனதுகொடுமைக்குஅஞ்சிவிரைவிற்போனதாகஉத்பிரேக்ஷித்தார். ஆரிருள் - மூச்சுடர்க்குத்தீராத இரு ளென்றபடி. இருள்தீர்க்கும் நெடியவன் இருக்கவென்று நிலவறைவிரகின்கங்குலிற்செய்த என்று இயைப்பினும் அமையும்.

௧௩௬. சிரந்தருசுடிகைநாகத்திரண்மணிபலவுஞ்சிந்தி
நிரந்தரமருவிவீழுநிறந்திகழுதயக்குன்றிற்
பரந்தெழுமருக்கன்சூழ்ந்தபடரிருட்கங்குல்கண்டு
புரந்தரன்கோயிலிட்டபொங்கொளித்தீபம்போன்றான்.

(இ - ள்.) சிரம் தரு சுடிகை - தலையிற்பொருந்திய உச்சிக்கொண்டையையுடைய, நாகம் - பாம்புகளின், திரள் மணி பலவும் - தொகுதியான

பலமாணிக்கங்களும்,சித்தி-சிதறப்பெற்று, நிரந்தரம் அருவி வீழும் - இடை விடாமல் சிந்தூரஅருவி விழப்பெற்ற,நிறம் திகழ் - (அதனால்) செந்நிறம்விளங்குகிற, உதயம் குன்றில்-உதயகிரியிலே, பரந்து எழும் - பரவியவடிவமாய் உதித்த, அருக்கன் - சூரியன்,—சூழ்ந்த படர் இருள் கங்குல் கண்டு - சுற்றிலும்பரவிய மிகுந்தஇருளைப் பார்த்து,புரந்தரன் - இந்திரன், கோயில் இட்ட - தன்அரண்மனையில் வைத்த, பொங்கு ஒளி தீபம்-மிகுந்த ஒளியையுடைய திருவிளக்கை, போன்றான் - ஒத்தான்; (எ - று.)

தற்குறிப்பேற்றவுவமையணி. இந்திரன் கிழக்குத்திக்குப்பாலகனாதலால், கீழ்த்திசையிலுதித்த சூரியனை அவன்கோயிலிலிட்ட தீப மென்றார். அக்கினிவடிவமான தீபத்தி னொளியினும் சூரியனொளிக்கு உள்ள மிகுதி விளங்க,'பொங்கொளி' எனஉபமானத்துக்கு அடைமொழிகொடுத்தது. சிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியர்'உதயகிரியிற் சிந்தூரஅருவிவீழ்ந்தசிந்தூராகாத்திற்பிறந்து பதினறுசதுர்யுகஞ்சிவப்பேறின முழுமாணிக்கம் இருளைக் கெடுத்தலின், இருள்பருகுமருமணியென்றார்'என உரைத்ததுகொண்டு,இங்கே, அருவி - சிந்தூரஅருவி யெனப்பட்டது. இனி, நீரருவியுமாம். பரந்து-விரைந்து என்றுமாம். அந்தரம்-இடையீடு, அதுஇன்மை, நிரந்தரம். (௧௯௪)

௧௯௫. தொடர்ந்தொளிருதயராகத்தோடுறநெருங்கிமேன்மே
லடர்ந்தரிபரந்துகாமனாகமவேதம்பாடத
தடங்கயன்மலைந்துலாவத்தாமரைமுகமுங்காதன்
மடந்தையர்முகமுஞ்சேரமணம்பெறமலர்ந்தமாதோ.

(இ - ள்.) தொடர்ந்து ஒளிர் - (இடைவிடாது) தொடர்ச்சிபெற்று விளங்குகிற, உதயம் ராகத்தோடு - சூரியோதயகாலத்துக்குஉரிய பண்ணுடனே, உற - பொருந்த, நெருங்கி-சமீபித்து,மேல்மேல்அடர்ந்து - மேலே மேலே நெருக்கி, அரி-வண்டுகள், பரந்து - விரைவாகப்பரவி, காமன் ஆகமம் வேதம்-சோலைகளிற் பொருந்தின மரங்களின் பகுப்புக்களிலே, பாட - இசைபாடவும், தட கயல் - பெரியகயல்மீன்கள், மலைந்து உலாவ - மேலே தாக்கிசஞ்சரிக்கவும்,[தடகயல்-பெரியகயல்மீன்கள்போற் பிறழுந்தன்மையனவான கண்கள், தொடர்ந்து ஒளிர் உதயம் ராகம் தோடு உற நெருங்கி-நெடுந்தூரம்விடாதுசென்று விளங்குகிற உதயகாலத்துச்சூரியனை யொத்த செந்நிறத்தையுடைய (இரத்தினங்களாலாகிய) தோடென்னுங்காதணியை அளாவும்படி சமீபித்து,மேல்மேல்அடர்ந்து-(அக்காதுகளின்) மேலேமேலே நெருங்கி, அரி பரந்து - சிவந்தஇரேகைகள் பரவப்பெற்று, காமன் ஆகமம் வேதம் பாட-மன்மதனது சாஸ்திரங்களையும் வேதத்தையும் வெளிக்கூறுமாறு, மலைந்து உலாவ-(பக்கங்களிற்) சென்று சஞ்சரிக்கவும்], தாமரை முகமும் - தாமரைமலர்களின் மேலிடங்களும், காதல் மடந்தையர் முகமும் - அன்புள்ள மகளிரது முகங்களும், சேர - ஒருசேர, மணம் பெற - நறுமணத்தைப் பெறும்படி, மலர்ந்த - மலர்ந்தன; (எ - று.)

இப்பாட்டு - சூரியோதயகாலத்தில தாமரை மலர்தலும், பெண்கள் கண்விழித்து முகமலர்தலும் ஆகிய இரண்டுதன்மைகள் நிகழ்தலை ஒன்றோடொன்று உபமானஉபமேயத்தன்மைபடச் சிலேடைவகையோடு வருணித்தது; சிலேடையுவமையணி. தாமரைமேற் செல்லுகையில், ஆகமம்-மரம்: அகமம் - வடசொல்; நடத்தலில்லாததென்று பொருள். வேதம்-பேதம்என்னும்வடசொல்லின்விகாரம்;பேதித்தஎன்பது வேதித்தஎன வருதல்போல, பேதம்என்பது வேதம்என வந்தது.காமன்ஆகமவேதம் பாட என்றது-இரவில் தாமரைகுவிந்திருத்தலால் அக்குகின்று மற்றைவிருட்சவருக்கங்களிற் சென்றுசேர்ந்த வண்டுகள் பகலில் தாமரைமலர்தலை அங்குநின்றுநோக்கி மகிழ்ச்சியாற் பாட்டுப்பாடஎன்றபடி.தடம் கயல் எனப்பிரித்து,தடாகத்திற்

கயல்க ளென்றுமாம். உதயம் ராகம் தோடு உற எனப்பிரித்து, உதயகாலத்துக்குரிய செந்நிறத்தையுடைய பூவிதழ்களிலே பொருந்த என்றும் உரைப்பர். இனி, முகத்தின்மேற் செல்லுகையில், கண்கள் சிறியனவல்லாமல் பெரியனவாகப் பரவிநீண்டிருத்தலை, கவிகள், கண்கள் காதுகளை அளாவியுள்ளன வென்று வருணித்தல் மரபு. பெண்களுக்குக் கண்களிற்சிலசிவந்தரேகைகள் பரவியிருத்தல் உத்தமவிலக்கணம். பெண்கள்கண்கள் காமனுகமவேதம் பாட என்றது, இங்கிதப்பார்வைகளால்[குறிப்புநோக்கத்தால்]ஆடவர்களை அழைத்தல் பேசுதல் மகிழ்வித்தல் முதலியன செய்வதை. கயல் - கண்களுக்கு உவமையாகுபெயர். உத்தமசாதிப்பெண்களது முகம் பரிமளமுடைத்தாயிருக்குமென்பது நூல்மரபாதலால்,'மணம்பெற'எனப்பட்டது. இனி, மணம்பெற என்பதற்கு-மங்களகரமாக என்று உரைத்தலு மொன்று. மலைந்து உலாவுதல் - பிறழ்ந்து பலவாறுநோக்குதல். (கஅரு)

[அரசர்யாவரும் துரியோதனனரண்மனைசேர்தலும், கண்ணன் எழுந்து காலைக்கடன்முடித்தலும்.]

கஅசு. இருந்துயி லுணர்ந்துவேந்தர்யாவருமிரவிற்சற்றும்
வருந்துயிலிலாதகண்ணன்வாழ்பெருங்கோயில்புக்கார்
பெருந்துயிலநந்தபோகப்பேரணை துறந்தமாலு
மருந்துயிலெழுந்துகாலையருங்கடன்முறையிற்செய்தான்.

(இ - ள்.) (இங்ஙனம் சூரியன்உதித்தபின்பு), வேந்தர் யாவரும் - அரசர்களெல்லோரும்,இருந்துயில் உணர்ந்து-பெரியதூக்கம் தெளிந்துஎழுந்து, இரவில் வரும்துயில் சற்றும் இலாத கண்ணன் வாழ் பெருங் கோயில் புக்கார்-இராத்திரிமுழுவதும் இயல்பாகவருந்தன்மையதான தூக்கம் சிறிதும் பெறாத கண்களையுடைய துரியோதனன்வாழ்கிற பெரியஅரண்மனையை வந்துஅடைந்தார்கள்;அநந்தன் போகம் பேர் அணை பெருந் துயில் துறந்த மாலும்-ஆதிசேஷனது உடம்பாகிய பெரிய சயனத்திலே நெடுங்காலம்யோகநித்திரைசெய்தலைவிட்டு (இங்கு) அவதரித்த திருமாலாகிய கண்ணனும், அருந் துயில் எழுந்து-(பிறர்க்கு)அருமையான அறிதுயில் நீங்கி எழுந்திருந்து, காலை அருங் கடன் முறையின் செய்தான் - உதயகாலத்திற்செய்தற்குரிய அரிய (ஸ்நாநம் ஸந்தியாவந்தநம் முதலிய) கடமையான அநுஷ்டாநங்களைச் செய்யவேண்டும்முறைமைதவறாமற் செய்துமுடித்தருளினன்; (எ-று.)

துரியோதனனை 'இரவில்சற்றும்வருந்துயிலிலாத கண்ணன்' என்றது, அவன் அவ்விராமுழுதிலும் பெரியசதியாலோசனையில் இருந்தனனாதலால். அநந்தனென்னும்வடசொல்லுக்கு - (பிரளயகாலத்திலும்) அழிதலில்லாதவனென்று பொருள்; ந+அந்த அன் என்றுபிரிக்க: அந்தம் - இறுதி. பாம்பினுடலுக்குப் போக மென்று வடமொழியிற் பெயர்; இதனையுடைமைபற்றி, பாம்பு - போகியென்று ஒருபெயர்பெறும். அநந்தம் போகம் பேர் அணை என்பதற்கு - எல்லையில்லாத பேராநந்தத்தை யனுபவித்தற்குரிய சிறந்த திருப்பள்ளிமெத்தையென்றும் உரைக்கலாம். (கஅசு)

[தூதுவர் வந்துஅழைக்க, கண்ணன் துரியோதனனரண்மனைசேர்தல்.]

கஅஎ. மாதவனிருந்தகோயில்வந்தடிவணங்கிமன்னன்
றூதுவராழியங்கைத்தோன்றலேதுளபமாலே
யாதவகுலத்தோரேறேயெழுந்தருள்கென்றுனின்றும்
மேதகுமரசனென்றூர்முகுந்தனும்விரைந்துசென்றான்.

(இ - ள்.) (அப்பொழுது), மன்னன் தூதுவர்-துரியோதனனது தூதர்கள், மா தவன் இருந்த கோயில் வந்து - திருமகள்கொழுநனான கண்ணன் எழுந்தருளியுள்ள (விதுரனது) மாளிகைக்கு வந்து, அடி வணங்கி-(கண்ண

னது) திருவடிகளை நமஸ்கரித்து, (அவனை நோக்கி), 'ஆழி அம் கை தோன்றலே - சக்கராயுதத்தையேந்திய அழகிய திருக்கையையுடைய அரசனே! துளபம் மாலே - திருத்துழாய்மாலையையுடைய கண்ணபிரானே! யாதவ குலத்தோர் ஏறே - யதுவினது சம்பந்தமானகுலத்து அரசர்கட்குச் சிங்கம் போலச் சிறந்தவனே!—இன்று - இப்பொழுது, எம் மேதகும் அரசன் - எங்களது மேன்மையுள்ள அரசனான துரியோதனன், எழுந்தருள்க என்றான் - (நீ தன்னிடம்) வந்தருளவேண்டுமென்று கூறினன்', என்றார்-என்றுசொன்னார்கள்; முகுந்தனும் - திருமாலாகிய கண்ணனும், விரைந்து சென்றான் - துரிதமாகப் புறப்பட்டுப்போயருளினன்; (எ - று.)

ஆழியங்கை-கையுந் திருவாழியுஞ் சேர்ந்த சேர்த்தியா லாகிய அழகு; கைக்குத் திருவாழி ஆபரணம்போல அழகுகொடுத்து நிற்பதென்க. தோன்றல்-(யாவரினுஞ்சிறந்து விளங்குபவனுக்குத்தொழிலாகுபெயர்; இதில், அல்-கருத்தாப்பொருள்காட்டுவ தென்றுங் கொள்ளலாம்: இது - ஆண்பாற்சிறப்புப்பெயர். (கஅஎ)

[துரியோதனன் சபையில் வீற்றிருந்தசிறப்பு.]

ஃஅஅ. கந்தடுகளிற்றுவேந்தன்கண்ணிலாவரசுங்கங்கை
மைந்தனுமுதலாவுள்ளமன்னருமதிவல்லோருந்
தந்திரவகையுமேனையிளைஞருந்தன்னைச்சூழ
விந்திரனிருக்கையன்னகோயிலூடினிதிருந்தான்.

(இ - ள்.) (அங்ஙனம் தூதரால் அழைக்கப்பட்டுக் கண்ணன் செல்லுகையில்), கந்து அடு களிறு வேந்தன்-கட்டுத்தறியைமுறிக்கின்ற மதயானைச்சேனையையுடைய துரியோதனராசன்,—கண் இலா அரசும் - திருதராட்டிரனும், கங்கை மைந்தனும் - வீடுமனும், முதல் ஆ உள்ள - முதலாகவுள்ள, மன்னரும்-அரசர்களும், மதி வல்லோரும்-அறிவில்வல்ல அமைச்சர்களும், தந்திரம் வகையும் - சேனையின் பகுப்புக்களும், ஏனை இளைஞரும் - மற்றுந் தம்பிமார்களும், தன்னை சூழ-தன்னைச்சுற்றிலுமிருக்க, இந்திரன் இருக்கை அன்ன கோயிலூடு-தேவேந்திரனது இருப்பிடத்தையொத்ததனது சபாமண்டபத்தின் மத்தியிலே, இனிது இருந்தான் - (கண்ணுக்கு) இனிமையாகவீற்றிருந்தான்; (எ - று.)

இருக்கை - இருப்பிடத்துக்குத் தொழிலாகுபெயர்; கை - தொழிற்பெயர்விகுதி. தந்த்ரம் - வடசொல். (கஅஅ)

[கண்ணனை மாத்திரம் உள்ளேவிடுமாறு துரியோதனன் ஏவலாளர்க்குக் கட்டளையிடுதல்.]

கஅகூ. நாமவேலரசரோடுநால்வகைச்சேனையோடு
மாமுகில்வண்ணன்வந்தானென்றனர்வரவுகண்டோர்
வீமலர்த்தொடையினானும்வேத்திரத்தவரைநோக்கித்
தாமரைத்தடங்கண்மாயன்றன்னையேவிடுமினென்றான்.

(இ - ள்.) (அப்பொழுது), வரவு கண்டோர் - (கண்ணபிரானது) வருகையைப் பார்த்தவர்கள், 'நாம வேல் அரசரோடும் - (பகைவர்க்கு) அச்சத்தைத்தருகிற வேலாயுதத்தையுடைய பல அரசர்களுடனும், நால்வகைசேனையோடும் - சதுரங்கசைனியத்துடனும், மா முகில் வண்ணன் - கரிய மேகம் போன்ற திருநிறமுடைய கண்ணன், வந்தான் —,' என்றனர் - என்று(துரியோதனனுக்குக்) கூறினார்கள்; (அதுகேட்டு), வீ மலர் தொடையினானும் - வண்டுகள் மொய்க்கப்பெற்ற பூக்களால்தொடுக்கப்பட்ட மாலையையுடைய துரியோதனனும், வேத்திரத்தவரை நோக்கி - (கையிற்) பிரம்பேந்தியுள்ள காவலாளரைப் பார்த்து, தாமரை தட கண் மாயன்தன்னையே விடுமின்

என்றான் - 'தாமரைமலர்போன்றபெரியகண்களையுடையகண்ணனொருவனை மாத்திரமே உள்ளேவரவிடுங்கள்' என்று கட்டளையிட்டான்; (எ - று.)

ஏ - பிரிநிலை; மற்றையரசர்களையுஞ் சேனையையும் விலக்கிற்று. கண்ணனை எளிதிற் சிறையில் இடும்பொருட்டு, தனியே அனுப்பச்சொன்னான். பறவைப்பொதுப்பெயராகிய விஹன் னும் வடசொல்-இங்கே சிறப்பாய் வண்டை உணர்த்தி, வீஹ நீண்டுநின்றது. வேத்ரம்-வடசொல்; பிரம்பங்கோல்.

[உட்சென்ற கண்ணபிரானுக்குத் துரியோதனன் பொய்யாசன மளித்தல்.]

கசூ0 தன்பெருஞ்சேனைநிற்கத்தண்டுழாயலங்கலானு
மின்புறநகைத்துவேந்தரிருந்தபேரவையினெய்த
மின்புணர்துவசநாகவிடநிகர்மனத்தினானு
மன்பொடுதிகிரியானையதன்மிசையிருக்கவென்றான்.

(இ - ள்.) (அத்துரியோதனன்கட்டளையை வாயில்காவலாளர் கூறியதனால்),தன் பெருஞ் சேனை நிற்க-தனதுபெரியசேனை(உள்ளேசெல்லாது வெளியிலேயே) நிற்க,தண் துழாய் அலங்கலானும் - குளிர்ந்ததிருத்துழாய் மாலையையுடைய கண்ணனும், இன்பு உற நகைத்து - (கண்டவர்க்கு)மகிழ்ச்சியுண்டாம்படி புன்சிரிப்புச்செய்து, வேந்தர் இருந்த பேர் அவையின் எய்த- (துரியோதனன் முதலிய) அரசர்கள் வீற்றிருந்த பெரியசபையினுள்ளே செல்ல,(அப்போது),மின் புணர் துவசம் நாகம் விடம் நிகர் மனத்தினானும்- ஒளிபொருந்திய கொடியில பாம்பையும் அப்பாம்பின்விஷத்தையொத்த [மிகக்கொடிய] கருத்தையுமுடைய துரியோதனனும், திகிரியானை-சக்கராயுதத்துக்குரிய கண்ணனை, அன்பொடு - அன்புடனே, அதன்மிசை இருக்க என்றான் - 'அந்தஆசனத்தின்மேல் வீற்றிருப்பாயாக' என்று சொன்னான்.

மாயவனாகிய தன்னைவஞ்சிக்கநினைத்த பேதைமையை நோக்கிக்கண்ணன்நகைத்தான் விஷம் - தவறாமற் கொல்லுங்கொடுமைக்கு உவமை. அதன்மிசை-இரவில் வெகுசிரமப்பட்டு அமைத்த பீடத்தின்மேல். அன்பொடு-வெளிக்கு அன்புடையான்போலக் காட்டி யென்றபடி.வேண்டுமாயின்மிகப்பலரையும் அழிக்கக்கூடிய ஆற்றலை விளக்குதற்கு,'திகிரியான்'என்றார். (கசூ0)

வேறு.

[இதுமுதல் உஉ-கவிகள் - கண்ணன் விசுவரூபங்கொள்ளுதலும், அதனால் மற்றையோர் படும் பாடுகளும் கூறும்.]

கசூக. இறைவனெழிற்கதிர்மணிகளழுத்தியதவிசினிருத்தலுமே
நெறுநெறெனக்கொடுநிலவறையிற்புகநெடியவனப்பொழுதே
மறலியெனத்தகுகிருபனியற்றியவிரகைமனத்துணரா
முறுகுசினத்துடனடியதலத்துறமுடிககனத்துறவே.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) (துரியோதனன் சுட்டிக்காட்டியவண்ணம்), இறைவன் கண்ணபிரான்,எழில்கதிர்மணிகள் அழுத்தியதவிசின் இருத்தலுமே-அழகையும்ஒளியையுமுடையஇரத்தினங்களைப்பதிக்கப்பெற்றஅவ்வாசனத்தில்வீற்றிருந்தவளவில்,நெறுநெறென-(அந்நிலவறையைமூடியமூங்கிற்பிளப்புக்கள்) நெறுநெறுஎன்று ஒலிபடமுறிய, நிலவறையில் கொடு புக-(அவ்வாசனம்உள்ளிறங்கித் தன்னை) நிலவறையிற் கொண்டுசெல்ல,—நெடியவன்-பெருமையுடைய கண்ணன்,—அப்பொழுதே—, மறலி என தகு கிருபன் இயற்றிய விரகை மனத்து உணரா - (கொடுமையில்)யமனென்றுசொல்லத்தக்க துரியோதனராசன் செய்த வஞ்சனையைத் திருவுள்ளத்திலறிந்து, முறுகு சினத்துடன்-மூண்டெழுந்த கோபத்துடனே,அடி அதலத்து உற - (தனது)திரு

வடி பாதாளத்திற் செல்லவும்,முடி ககனத்து உற-(தனது)திருமுடி வானத்திற் செல்லவும், (எ-று.)—'நிமிர்ந்தனன்'என அடுத்தகவியோடு தொடரும்.

செறு செறெனை - ஒலிக்குறிப்பு; சப்தாநுகரணம். துரியோதனனது வஞ்சனையினின்று மாயவன் தப்புதற்கு அவன்சூழ்ச்சியை முன்னமேஅறிய வேண்டுவதில்லை யென்பார்,'அப்பொழுதே உணரா' என்றார். மறல்-கொடுமை: அதனையுடையவன். மறலி ; இ - பெயர்விகுதி : இனி, இப்பெயர்க்கு-மறுக்கப்படாதவனென்றும் பொருளுரைக்கப்படும்.கொடுநிலவறையில்என எடுத்து, கொடுமையான நிலவறையிலே யென்றும் உரைக்கலாம். 'நெடியவன்' என்றது - திரிவிக்கிரமாவதாரகதையைச்சுட்டும், மேல் 'அடியதலத்தற முடிககனத்தற' என்பதற்கு ஏற்ப வென்க.

இதுமுதல முப்பதுகவிகள் - பெரும்பாலும் ஈற்றுசீரொன்று விளங்காய்ச்சீரும். மற்றவையைந்தும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடிநான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (௧௧௧)

௧௧௨. அஞ்சினமஞ்சினமென்றுவிரைந்துயரண்டர்பணிந்திடவுந்
துஞ்சினமினறெனவன்பணியின்கிளைதுன்பமுழந்திடவும்
வஞ்சமனங்கொடுவஞ்சகனின்றிடுவஞ்சனைநன்றிதெனு
நெஞ்சில்வெகுண்டுலகொன்றுபடும்படிநின்றுநிமிர்ந்தனனே.

(இ - ள்.) (கண்ணன்), வஞ்சகன் வஞ்சம் மனம் கொடு இன்று இடு வஞ்சனை இது நன்று எனு - ('பாண்டவரை இராச்சியம்) வஞ்சித்தவனாகிய துரியோதனன் வஞ்சனையான எண்ணத்தைக்கொண்டு இப்பொழுதுசெய்த வஞ்சிப்பு நன்றாயிருந்தது'என்றுகருதி,நெஞ்சில் வெகுண்டு-மனத்திற் கோபங்கொண்டு,—(தனதுவடிவததின்பெருமையை நோக்கி), உயர் அண்டர் அஞ்சினம் அஞ்சினம் என்று விரைந்து பணிந்திடவும்-மேலிடத்திலுள்ள தேவர்கள் பயந்தோம் பயந்தோமென்றுகூறி நமஸ்கரிக்கவும், வல் பணியின் கிளைஇன்றுதுஞ்சினம் என துன்பம் உழந்திடவும்-(கீழுலகிலிருந்துபூமியைத்தாங்கும்) வலியபாம்புவருக்கங்கள் (அப்பெருவடிவத்தின் பாரமிகுதியை நோக்கி)இப்பொழுது (சுமக்கலாற்றாது சிதைந்து) இறந்தோமென்று கருதித் துன்பத்தை மிகுதியாகஅடையவும், உலகு ஒன்றுபடும்படி நின்று நிமிர்ந்தனன் - எல்லாவுலகங்களிலும பொருந்தும்படி உயர்ந்து நின்றருளினன்; (எ - று.)—என்றது, விசுவரூபங்கொண்டா னென்றதாம்.

அஞ்சினம் அஞ்சினம்-அடுக்கு, மிகுதிவிளக்குவது. உயர் அண்டர் - எல்லாப்பிறப்புக்களுள்ளுஞ் சிறந்த தேவருமாம். துஞ்சுதல் - தூங்குதல் ; இறத்தலைத் துஞ்சுதலென்பது,மங்கலவழக்கு.கீழ்ப்பாட்டில், 'அடிஅதலத்தற முடிககனத்தற' என்றதற்கேற்ப, முறைப்படுத்தாது, இப்பாட்டின் முதலிரண்டடிகளை மாறுபடநிறுத்தியது,எதிர்நிரனிறைப்பொருள்கோள்.அண்டர்-அண்டகோளத்தின்மேலிடதள்ளவர். வஞ்சகா என்றவடசொல், ஈறுதிரிந்தது. இன்றுதுஞ்சினம்-விரைவுந் தெளிவும் பற்றிய காலவழுவமைதி; வழாநிலையாயின், இன்ற துஞ்சுகின்றனம் என்ன நிற்கும். (௧௧௨)

௧௧௩. மல்லரரக்கர்குலத்தொடுபப்பரர்வாளினர்வேலினர்போர்
வில்லினரிப்படிதுற்றநிலத்தறைமேவியவீரரெலாந்
தொல்லைபிடிக்கயர்வுற்றுயிரிற்றுறுசுடிகையராவெனவே
கல்லெனவுட்கினர்தத்தமுடற்பலகால்கொடுதைத்திடவே.

(இ - ள்.) (அப்பொழுது),—மல்லர் - மற்போர்வீரர்களும், அரக்கர் குலத்தொடு - இராக்கதர்கூட்டமும்,பப்பரர் - பப்பரநாட்டுவீரர்களும்,வாளினர் - வாள்வீரர்களும், வேலினர் - வேல்வீரர்களும், போர் வில்லினர் - போர்செய்தலில்வல்ல வில்வீரர்களும், (ஆக), இப்படி - இவ்வாறு, துற்ற -

நெருங்கியுள்ள, இலத்து அறை மேவிய வீரர் எலாம் - இலவறையினுட்பொருந்தியிருந்த வீரர்களெல்லோரும், தத்தம் உடல் பல கால் கொடு உதைத்திட - தங்கள்தங்கள்உடம்பை (க் கண்ணன் தனது) அநேகங்கால்களைக்கொண்டு உதைத்திடுதலால், தொல்லை இடிக்கு அயர்வுற்று உயிர் இற்று உறு சுடிகை அரா என - பழமையான [முதிர்ந்த] பேரிடிக்குச் சோர்வடைந்து உயிரொழிந்து கழிகின்ற உச்சிக்கொண்டையையுடைய பாம்புகள் போல, கல்என உட்கினர் - கல்லென்றவொலிபட அஞ்சினார்கள்; (எ - று.)

இடியோசைக்குப் பாம்புகள் அஞ்சியொடுங்கியழியு மென்பது, நூற்றுணிபு; "விரிநிற நாகம் விடருளதேனும், உருமின்கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" என்ற நாலடியாரிலுங் காண்க; இலத்தின்கீழ்ப்பிலத்தில் தங்குதல் பற்றி மல்லர் முதலியோர்க்கு நாகங்களும், இவரையஞ்சுவித்து அழித்தல் பற்றித் திருமால்திருவடிகளுக்கு இடியும் உவமையாதற்கு மிகஏற்கும். கல்லெனஎன்றது, அப்பொழுது அவர்கள் அச்சத்தால் நடுங்கி வாய்குளறிப் பேரிரைச்சலிட்டதை. பலகால் - விசுவரூபத்திற்கொண்டவை. இற்றஎன்றஇறந்த காலப்பெயரெச்சத்தில், இறு - பகுதி; அது இரட்டிக் காலங்காட்டிற்று. தொல்லையிடி - துன்பந்தரும் இடியுமாம். (கஙங)

கஙச. அற்புதபங்கயநற்பதமுந்தலினக்குழியின்புடையே
சற்பதலந்தொறுமற்றுவிழுந்தனதத்தநெடுந்தலைபோய்
முற்பவனன்பொரமுக்குவடுந்துணிபட்டுமுடங்கியபொன்
வெற்பெனநின்றனர்வெற்றுடலங்கொடுவிற்படைகொண்டவரே.

(இ - ள்.) அ குழியின் புடையே - அப்பிலவறையின்உள்ளிடத்திலே, வில் படை கொண்டவர் - வில்லாகியஆயுதத்தையேந்திநின்ற வீரர்கள், அற்புத பங்கயம் நல் பதம் உந்தலின் - ஆச்சரியகரமான தாமரைமலர்போன்ற அழகிய(கண்ணனது)திருவடிகள் உதைத்தலால், தத்தம் நெடுந் தலை அற்று போய் சற்ப தலம் தொறும் விழுந்தன - தங்கள்தங்களது பெரியதலைகள் அறுபட்டுப் போய் நாகங்கள்வசிக்கிறஇடமாகிய அப்பாதாளலோகம் முழுவதிலும் விழுந்திட்டனவாக,—வெறு உடலம் கொடு - (தலையில்லாத) [உயிரற்ற]வெற்றுடம்புகளை மாத்திரங் கொண்டு, முன் பவனன் பொர முக் குவடும் துணிபட்டு முடங்கிய பொன்வெற்பு என நின்றனர் - முன்னே வாயுதேவன் மோதுதலால் மூன்று சிகரங்கள் அறுபட்டு அழகொழிந்த மேருமலை போல நின்றார்கள்; (எ - று.)

மூன்றாமடியிற் குறித்த வரலாறு:—முன்னொருகாலத்தில் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார் பலசாலி யென்று விவாத முண்டாக, அதனைப் பரீட்சித்தறியும்பொருட்டு, வாயுதேவன் மேருமலையின்சிகரத்தைப் பெயர்த்துத்தள்ளுவதென்றும் ஆதிசேஷன் அதுபெயரவொட்டாமற் காத்துக்கொள்வதென்றும் ஏற்பாடு உண்டாகி, அங்ஙனமே இருவரும் தேவர்முதலியோரது முன்னிலையில் தத்தம்வலிமையைக் காட்டத்தொடங்கியபொழுது, ஆதிசேஷன் தனது ஆயிரம்படங்களாலும் மேருமலையின் ஆயிரஞ்சிகரங்களையுங் கவித்துக்கொண்டு பெயரவொட்டாமல் வெகுநேரங் காக்க, பின்னர் வாயுதேவன் தன்வலிமையால் அம்மலைச்சிகரங்களில்மூன்றைப் பெயர்த்துக்கொண்டுபோய்த் தென்திசையில் தள்ளிவிட்டானென்பது, இங்குக்குறித்த கதை.

பிறவிப்பிணிக்கு மருந்தாகலின், 'நற்பதம்' என்றார்; "வாலறிவனற்றாள்" என்றார் திருவள்ளுவனாரும். வெறுமை + உடல் = வெற்றுடல்; பண்புத்திரிபு. பெருவடிவத்துக்கு மலையும், அதன் தலைக்குச் சிகரமும், அதனைப் போக்கிய எம்பிரான் திருவடிக்கு வாயுதேவனும் உவமை. (கஙச)

கசுரு. மேல்வலியுற்றெதிர்வீசியெழிற் கருமேகநிறத்திருமால்
கால்விசையிற்படமோதுதலிற்பொருகாமர்புயத்துணைபோய்
நீலநிறக்கவின்வாசவன்வச்சிரநீள்படையிற்சிறகீர்
மால்வரையொத்தனர்வாகைபெறக்கதிர்வாள்களெடுத்தவரே.

(இ - ள்.) வாகை பெற கதிர் வாள்கள் எடுத்தவர் - (கண்ணனைச் சிறைபிடித்து) வெற்றியைப் பெறும்பொருட்டு ஒளியையுடைய [அல்லது கூர் நுனியுள்ள] வாளாயுதங்களை யேந்திநின்ற வீரர்கள்,—எழில் கரு மேகம் நிறம் திருமால் - அழகிய காளமேகம்போன்ற திருமேனிநிறத்தையுடைய கண்ணபிரான், மேல் - தங்கள்மீது, வலி உற்று - மிகவலிமைகொண்டு, எதிர் வீசி - எதிராகவீசி, கால் - திருவடிகளால், விசையின் பட - உக்கிரமாகப்படும்படி, மோதுதலின் - தாக்குதலினால், பொரு காமர் புயம் துணை போய் - போர்செய்தற்குரிய அழகிய (தமது) தோள்களிரண்டும் அற்று, நீலம் நிறம் கவின் வாசவன் நீள் வச்சிரம் படையின சிறகு ஈர் மால் வரை ஒத்தனர் - நீலநிறத்தையும் அழகையு முடைய இந்திரனால் பெரிய தனது வச்சிராயுதத்தைக்கொண்டு இறகறுக்கப்பட்ட பெரியமலைகளைப் போன்றனர்; (எ - று.)

இந்திரன் வச்சிராயுதத்தால் மலைகளின் சிறகறுத்த வரலாறு:—முன்னொருகாலத்தில் மலைகளெலலாம் பறவைகள்போல இறகுடையனவாயிருந்து அவற்றால் உலகமெல்லாம் பறந்து திரிந்து பலவிடங்களின்மேல் உட்கார்ந்து அவ்விடங்களையெல்லாம் பிராணிகளுடனே அழித்துவர, அதனை முனிவர்முதலியோராலறிந்த தேவேந்திரன், சினந்துசென்று தனது வச்சிராயுதத்தால் அவற்றின்இறகுகளை அறுத்துத்தள்ளிவிட்டானென்பதாம்.

இந்திரன் நீலநிறமுள்ளவனுதலை "வில்லாலொளிர்மேகமெனப்பொலிவான்" என்ற கம்பராமாயணத்தாலு மறிக. வாகையென்னும்ஒருவகைமரத்தின்பெயர், அம்மரத்தின் மலரினாலாகிய மாலைக்கு இருமடியாகுபெயர். வாகை - காட்டுவாகையென்னும்மரம்: இதனையேஇக்காலத்தார்காட்டுவாழையெனமாற்றிவழங்குவர்போலும் வாகைப்பூமாலைபகைவரைவென்றோர்சூடுவதாதலை, "வெட்சிநிரைகவர்தல்மீட்டல்கரந்தையாம், வட்கார்மேற் செல்வது வஞ்சியாம்—உட்கா,தெதிரூன்றல்காஞ்சி யெயில்காத்தல் நொச்சி,யதுவளைத்த லாகு முழிஞை யதிரப், பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர்,செருவென்றதுவாகையாம்" என்பதனாலும்அறிக. மலைகள் - பெருவடிவுகொண்ட வீரர்க்கும், அம்மலைச்சிறகுகள் - அவர்களது கைகளுக்கும், கருநிறமுடையஇந்திரன் - கருநிறமுடையகண்ணனுக்கும், தவறாது பகைவரையழிக்கும்இந்திரனது வச்சிராயுதம் - அப்படிப்பட்ட எம்பிரான் திருவடிக்கும் உவமை. ஈர்வரை - வினைத்தொகை. (கசுரு)

கசுசு. வெயில்விடுபைத்தலையமளிமிசைத்துயில்விபுதர்களுக்கரியோன்பயிலவுதைத்தலினவர்களுரத்திடைபதமலர்பட்டுருவா,மயில்கடவிக்கடவுளர்பகையைக்கதிர்மகுடமுருக்கியவே, ளயில்கொடுகுத்தியநெடுவரையொத்தனரயில்களெடுத்தவரே.

(இ - ள்) அயில்கள் எடுத்தவர் - வேலாயுதங்களை யேந்திநின்ற வீரர்கள்,—வெயில் விடு பை தலை அமளிமிசை துயில் விபுதர்களுக்கு அரியோன் பயில உதைத்தலின் - (மாணிக்கத்தால்) ஒளியை வீசுகிற படத்தையுடைய தலைகளையுடைய(ஆதிசேஷனாகிய)சயனத்தின்மேல் யோகநித்திரைசெய்தருள்பவனும் தேவர்கட்கு(அறிதற்கு)அருமையானவனுமாகிய கண்ணபிரான் உறுத்தும்படி உதைத்திடுதலால்,—அவர்கள் உரத்திடை பதம் மலர் பட்டு உருவா - தத்தமது மார்பினிடையிலே (அப்பிரானது) தாமரைமலர்போலுந் திருவடி பட்டு ஊடுருவித்துளைக்கப்பெற்று,(அதனால்),மயில் கடவி கடவுளர்

பகையை கதிர் மகுடம் முருக்கிய வேள் அயில் கொடு குத்திய நெடு வரை ஒத்தனர் - மயில்வாகனத்தை யேறிச்சென்று தேவர்களது பகைவர்களாகிய (சூரபதுமன் முதலிய பல) அசுரர்களை ஒளிபொருந்திய கிரீடத்தையுடைய தலைகளை யழித்திட்ட சுப்பிரமணியமூர்த்தியால் வேலாயுதத்தைக் கொண்டு துளைக்கப்பட்ட பெரிய (கிரௌஞ்சமென்னும்) மலையை ஒத்தார்கள்; (எ - று.)

பின்னிரண்டடியிற் குறித்த கதை:—சிவபிரானது இளையகுமாரனும்த் தேவர்வேண்டுகோளால் அசுரர்களையொழித்தற்குத் தேவசேனாபதியாம் பொருட்டு அவதரித்த முருகக்கடவுள், சூரபதுமனைப் பொருது அழித்தற்குச் செல்லும் வழியிடையே, கிரௌஞ்சனென்னும் அசுரன் பெரியமலைவடிவங்கொண்டு அவனை கலிவதாக எதிர்வந்துநிற்க, அதன்மேல் அப்பெருமான் தனது தெய்வத்தன்மையுள்ள வேற்படையை யேவி அதனைத் துளைத்து அழித்திட்டன னென்பது கதை; பரசுராமனும் சுப்பிரமணியனும் பரமசிவனிடம் வில்முதலிய ஆயுதப்பயிற்சியைச் செய்து முடித்தபின்பு, இவர்களுள் உயர்வு தாழ்வு அறியும்பொருட்டுச் சிவபிரான் உமாதேவியின்முன்னிலையிலே இவர்களுக்குக் கிரௌஞ்சமலையைச் சுட்டிக்காட்டி 'இதனைத் துளைத்திடும்' என்றருளிச்செய்ய, பரசுராமபிரான் அம்பெய்து அதனைத் துளையிட்டுக் காட்ட, முருகக்கடவுள் வேலாயுதத்தைவீசியெறிந்து அம்மலையைப் பிளந்திட்டன னென்றுங் கதை கூறப்படும்.

துயில் அரியோன் என இயையும். விபுதர்-விசேஷபுத்திமான்கள்: இதுபற்றி, தேவர்க்குத் தமிழில் 'புலவர்'என்று ஒருபெயர். மகுடம் - சிரசுக்குத் தானியாகுபெய ரென்றுவது, கதிர்மகுடம் - வேற்றுமைத்தொகையன்மொழி யென்றுவது கொள்க. முருக்கிய - முருங்கிய என்பதன் பிறவினை; முருங்குதல்-அழிதல். வேள் என்னும் வினைப்பகுதி-விரும்புதலென்றுபொருள்படுதலால், வேளென்னும் ஆண்பாற்சிறப்புப்பெயர்க்கு-விரும்பப்படும் அழகுடையவ னென்று காரணப்பொருள்கூறலாம்; செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்ட தென்க. இச்சொல் - முன்னேவந்த அடைமொழியால், காமவேளை விலக்கி நின்றது. (கஙஈ)

கஙஎ. மின்சுடிகைப்புயகங்கள்வெருக்கொளும் வெங்கருடக்
கொடியோன்,வன்பதபற்பநகங்கொடெடுத்துயர்வண்ககனத்திடலான்,முன்புவனத்திடைவந்துகவிக்கிறைமொய்ம்புணரப்புகல்போ,தென்புமலைக்குறுபண்பையடுத்தனரெஞ்சியபப்பரரே.

(இ - ள்.) மின் - (மாணிக்கத்தின்) ஒளிபொருந்திய, சுடிகை - உச்சிக்கொண்டையையுடைய, புயகங்கள்-பாம்புகள், வெருக்கொளும்-அச்சங்கொள்ளுதற்குக்காரணமான, வெம் கருடன் - வெவ்விய கருடப்பறவையின் வடிவத்தை யெழுதிய, கொடியோன்-துவசத்தையுடைய கண்ணபிரான், பற்பம் பதம் வல் நகம் கொடு-தாமரைமலர்போன்ற திருவடிகளின் வலிய நகத்தினால், எடுத்து-தூக்கி, உயர் வண் ககனத்து இடலால் - உயர்ந்தபெரியஆகாயத்திலே வீசியெறிதலால், எஞ்சிய பப்பரர் - அழிந்த பப்பரநாட்டுவீரர்கள், முன்பு-முன்னே [ஸ்ரீராமாவதாரகாலத்தில்], வனத்திடை வந்து - தண்டகாரணியத்திலே வந்து, கவிக்கு இறை மொய்ம்பு உணர புகல் போது - வானரங்களுக்குத்தலைவனான சுக்கிரீவன் (இராமபிரானது) வலிமையை அறிதற்குக் கூறியபொழுது, என்பு மலைக்கு உறு பண்பை - (துந்துபியின்) எலும்புமலைக்கு நேர்ந்த தன்மையை, அடுத்தனர் - ஒத்தார்கள்; (எ - று.)

பின்னிரண்டடியிற்கூறிய வரலாறு:—இராமபிரான் அநுமான்மூலமாகச் சுக்கிரீவனோடு சிநேகஞ்செய்து அவனது மனைவியைக் கவர்ந்துகொண்டு அவனை இராச்சியத்தினின்று துரத்திவிட்ட அவனது அண்ணனான வாலியை

அவன்வேண்டுகோளால் தாம் கொல்வதாக வாக்குத்தத்தஞ்செய்ய, வாலியைக் கொல்லவல்ல வலிமை இவருக்கு உளதோ வென்று சுக்கிரீவன் சிறிது சந்தேகிக்க, அந்தஐயத்தை அகற்றுதற்பொருட்டு ஸ்ரீராமமூர்த்தி, அங்கேஒருபால் மலைபோலக்குவிந்துகிடந்த (முன்புவாலியாற்கொல்லப்பட்ட) துந்துபியென்னும்பேரசுரனது உடம்பின்என்புக்குவியலை அச்சுக்கிரீவன் கருத்தின்படி தமதுகால்விரலால் எடுத்துத்தெறித்து வெகுதூரத்தில் வீசி அவனுக்கு நம்புதலுண்டாக்கினு ரென்பதாம்.

கிருஷ்ணாவதாரமூர்த்திக்கு இராமாவதாரமூர்த்தியையும், கொடியபப் பாருக்குக் கொடியஅரக்கனென்னையும் உவமைகூறினர். பாம்பைக் கருடன் எளிதில்அஞ்சுவித்தல்போல, பாம்புக்கொடியோனைக் கருடக்கொடியோன் எளிதில்அஞ்சுவிக்கவல்லவனென்பார், இங்ஙனங்கூறினர். பதபற்பம் - முன்பின்னாகத்தொக்க உவமத்தொகை. பற்பம் - பத்மம்என்னும்வடமொழியின் திரிபு; 'பற்பநாபன்' என்பதிலுங் காண்க. கவி - கபிஎன்னும் வடசொல் திரிந்தது. (௧௧௭)

௧௧௮. மைந்துபடைத்துயர்பஞ்சவர்சொற்படிவந்தமலர்க்கழலா
லுந்தியுதைத்துடலம்புதையப்பிலமொன்றியொளித்திடலா
லந்தணன்முற்பகல்வந்துபுடைத்திடவஞ்சிநிலத்திடைவீழ்
விந்தமொடொத்தனர்வன்குழியிற்றிகழ்வெங்கணரக்கருமே.

(இ - ள்.) மைந்து - வலிமையை, படைத்து - பெற்று, உயர் - சிறந்த, பஞ்சவர்-பாண்டவர்களது, சொல்படி - சொல்லின்படி, வந்த - தூதுவந்த, மலர் கழலால்-தாமரைமலர்போன்ற திருவடிகளைக்கொண்டு, உந்தி உதைத்து-(கண்ணபிரான்) தள்ளி உதைத்தலால், உடலம் புதைய - உடம்புகள் அழுந்திடும்படி, பிலம்ஒன்றிஒளித்திடலால்-நிலவறையினுட்படிந்துமறைந்துவிடுதலால், வல் குழியில் திகழ் வெம் கண் அரக்கரும் - வலியநிலவறைப் பெரும்பள்ளத்திலேவிளங்கிய பயங்கரமானகண்களையுடையஇராக்கதரெல்லோரும்,—அந்தணன் - அகத்தியமுனிவன், முன் பகல் - ஆதிகாலத்தில், வந்து புடைத்திட - அருகில்வந்து அழுத்தியிட, அஞ்சி-பயந்து, நிலத்திடை வீழ் - பூமியிலே யொடுங்கிய, விந்தமொடு - விந்தியமலையுடனே, ஒத்தனர்- போன்றார்கள்; (எ - று.)

பின்னிரண்டடியிற் குறித்த வரலாறு:—முன்னொருகாலத்தில் விந்தியமலை மேருமுதலிய எல்லாமலைகளினுந் தான் உயரவேண்டுமென்று கருதி, ஆகாயத்தையளாவிஉயர்ந்து, சூரியன்முதலியகிரகங்களும் நட்சத்திரங்களுஞ் செல்லுகின்ற வழியை யெல்லாம் மறைத்துநின்றபொழுது, தேவர் முனிவர் முதலிய யாவரும் வந்து அதனையடக்கியருளவேண்டுமென்று அகஸ்தியரைப் பிரார்த்திக்க, அவர் அங்குஎழுந்தருளி, அப்பொழுதுதம்மைக்கண்டுவணங்கிநின்றஅம்மலையை'இனி யான் வடதிசையிலிருந்து தென்திசைக்குச்சென்று மீண்டுவருமளவும் இவ்வாறே குறுகிக் கிடப்பாய்'என்று சொல்லிக் கையாலமைத்து அடக்கியருளிஅம்மலையின்மேலேறி அப்பாற்சென்றனரென்பதாம்.

உபமேயத்தில் 'மலர்க்கழலாலுந்தி' என வருதலால், உபமானத்திலும் 'புடைத்திட' என்பதற்கு - காலாலேமிதிக்கவெனப் பொருள் கொள்ளுதல் பொருத்தம். "யோகமுறு பேருயிர்கள்தாம் உலைவுறும,லேகுநெறியாதென மிதித்து அடியினேறி, மேகநெடுமொலைதவழ் விந்தமெனும் விண்தோய், நாகமது நாகமுற நாகமென நின்றான்" என்றார் கம்பரும். விந்தம் - விந்தியம்; வடசொற்றிரிபு. 'ஒடு'என்னும் மூன்றனுருபு, ஒப்புப்பொருளில்வந்தது. அந்தணன் என்ற பொதுப்பெயர், இங்கே இடம்நோக்கிச் சிறப்பாக அகத்தியரைக் குறித்தது. வெங்கண் - கொடுந்தன்மையுமாம். (௧௧௮)

கஹகூ. அந்தவிடத்தெறிபம்பரமொத்துடலஞ்சுழலச்சுழலக்
குந்தியுறித்தயிருண்டவர்பொற்கழல்கொண்டுசுழற்றுதலான்
முந்தமரர்க்கமுதந்தரமைக்கடன்முன்சுழலச்சுழலு
மந்தரமொத்தனர்குந்தமெடுத்தெதிர்வந்துமலைந்தவரே.

(இ - ள்.) அந்த இடத்து - அவ்விடத்திலே, எறி பம்பரம் ஒத்து - வேகமாகவீசியெறியப்பட்ட பம்பரத்தைப் போன்று, உடலம் சுழல சுழல - உடம்பு இடைவிடாது மிகச்சுழலும்படி, குந்தி உறி தயிர் உண்டவர் - (உயரமானவிடத்திலேறி) உட்கார்ந்து உறியில்வைத்த தயிர்களையெல்லாம் (இளமையில்) அமுதுசெய்தருளிய கண்ணபிரான், பொன் கழல் கொண்டு - (தமது) அழகிய திருவடிகளைக்கொண்டு, சுழற்றுதலால் - சுழலச்செய்தலால்,—குந்தம் எடுத்து எதிர் வந்து மலைந்தவர் - எறியீட்டிகளையெடுத்துக்கொண்டு எதிரில்வந்து போர்செய்யலுற்ற வீரர்கள்,—முந்து - முன்னொருகாலத்திலே, அமரர்க்கு அமுதம் தர - தேவர்களுக்கு அமிருதந்தருகையில், மை கடல்முன் - கரிய பாற்கடலிலே, சுழல - (அக்கடல்வெள்ளஞ்)சுழிக்கும்படி, சுழலும் - (தான்) சுழன்ற, மந்தரம் - மந்தரமலையை, ஒத்தனர் - (தனித்தனி) போன்றார்கள்; (எ - று.)

இதிற்குறித்தகதை, பிரசித்தம். திருப்பாற்கடல் வெளுத்த நிறத்ததாயினும், திருமாலினது திருமேனியின் நிழலீட்டாலே கறுத்தநிறத்த தாகுதலால், 'மைக்கடல்' என்றார்; "நீலக்கடலுள் நெடுங்காலங் கண்வளர்ந்தான்," "கருந்தண்மாகடற் கண்டுயின்றவன்", "நீலக்கடல் கடைந்தாய்" என்றார் பெரியாரும்: "மையாழியிற்றுயிலு மாலையான்" எனப் புகழேந்திப்புலவர் கூறியதுங் காண்க; வடமொழியிற் போஜராஜனும் இவ்வாறுகூறுவன்: இனி, இருண்டுள்ள நிலவறைக்கு உவமையாதல்நோக்கி, மைக்கடல் என் இல்பொருளுவமை கூறியதாகவுங் கொள்ளலாம். சுழலச் சுழல - அடுக்கு, இடைவிடாமைபற்றியது. பம்பரம் - ஒருவிளையாட்டுக்கருவி. பொற்கழல்- பொன்னலாகிய வீரக்கழலையணிந்த பாதமெனினுமாம். குந்தம்-வடசொல். குந்தி, குந்து - பகுதி. கடல்முன், முன் - ஏழனுருபு; [ஏன்-பெயர்-சு]. ()

உOO. முட்டியதொல்குருதிக்கடன்மல்கலின்முட்டிகொள்பல்
விரலா, னெட்டுடலம்வகிர்பட்டதனுள்விழநித்தர்செய்கொல்வினை
யான், மட்டறவல்விறலுற்றெதிர்செல்கவிமைக்கடலெல்லையிலே,
யிட்டனகல்வரையொத்தனர்வெல்கழலெக்குலமல்லருமே.

(இ - ள்.) முட்டிய தொல் குருதி கடல் மல்கலின் - (அந்தநிலவறை முழுவதிலும்) பாய்ந்த பழமையான இரத்தவெள்ளம் நிறைந்ததனால், முட்டி கொள் பல் விரலால் நெடு உடலம் வகிர் பட்டு அதனுள் விழ - கைப்பிடியாகக் கொண்ட(கண்ணனது)பலவிரல்களால் நீண்ட தம்தம்உடம்பு பிளவுபட்டு அக்குருதிக்கடலினுள்ளே விழும்படி, நித்தர் செய் - ஆதிமத்தியாந்தரகிதனை அக்கண்ணபிரான் செய்திட்ட, கொல் வினையால் - கொலைத்தொழிலால்,—வெல் கழல் எ குலம் மல்லரும் - வெல்லுதற்கடையாளமான வீரக்கழலையுடைய சிறந்த மல்லர்கள்யாவரும்,—மட்டு அற வல் விறல் உற்று எதிர்செல் கவி - அளவில்லாமல் மிகுந்தவலிமைகொண்டு(இராவணனை)எதிர்த்துச்சென்ற குரங்குகள், மை கடல் எல்லையிலே இட்டன - கரியகடலிலே (அணைகட்டுதற்குப்)போகட்டனவாகிய, கல் வரை - கல்மயமான மலைகளை, ஒத்தனர் - போன்றார்கள்; (எ - று.)

சீதையைக் கவர்ந்துசென்ற இராவணனை வெல்லுதற்கு இராமபிரான் சேனையாக்கூட்டிக்கொண்டுபோனவானரவீரர்கள் தென்கடலில்அணைகட்டுதற்பொருட்டுப் பலமலைகளைக்கொணர்ந்துகடலில்இட்டனரென்பதுகதை. இரத்தவெள்ளத்துக்கு உவர்நீர்க்கடலும், மல்லர்க்கு மலைகளும் உவமை. முட்டி - முஷ்டி. நித்தர் - நித்யர்; வடசொற்கள். (உOO)

உ0௬. எப்புவிநிற்பனவெக்கிரிநிற்பனவெக்கடனிற்பனவென்
றிப்புவனத்துயிர்முற்றுமயக்குறவுட்கினரெய்த்திமையோர்
மைப்புயலொத்தொளிர்பச்சைநிறத்தினன்வர்க்கமலர்க்கழலா
லொப்பறமட்குழியுற்றவரைப்படவொத்திமிதித்தலுமே.

(இ - ள்.) மை - கரிய, புயல் - மேகத்தை, ஒத்து - போன்று, ஒளிர் - விளங்குகின்ற, பச்சை நிறத்தினன் - பசியதிருநிறத்தையுடைய கண்ணபிரான், வர்க்கம் மலர் கழலால் - பலவாகிய தாமரைமலர்போன்ற திருவடிகளால், ஒப்பு அற - உவமையில்லாதபடி, மண் குழி உற்றவரை - நிலவறைப் பெரும்பள்ளத்திற்பொருந்திய வீரர்களை, பட - அழியும்படி, ஒத்தி மிதித்தலும் - அழுத்திமிதித்தவளவிலே,—இ புவனத்து உயிர் முற்றும் - இந்த நிலவுலகத்திலுள்ள பிராணிகளெல்லாம்,—'எ புவி நிற்பன - (இப்பொழுது அழியாமல்) எந்தவுலகங்கள் நின்றிடுவன? எ கிரி நிற்பன - எந்தமலைகள் (சலியாது) நிலைநிற்பன? எ கடல் நிற்பன - எந்தக்கடல்கள் (கரைபுரளாது) நிலைநிற்பன?' என்று - என்று எண்ணியும் சொல்லியும், மயக்கு உற - திகைப்பையடைய, இமையோர் - தேவர்களும், எய்த்து - சோர்ந்து, உட்கினர் - அஞ்சினார்கள்; (எ - று.)

வர்க்கம் - கூட்டம்: வடசொல். ஒத்திமிதித்தல் - தாளஅடைவுபட மிதித்தலுமாம். 'ஒற்றி' எனவும் பாடம். (உ0௬)

உ0௭. கொண்டன்முழக்கெனவம்புவியைக்கடல்கொண்டெழுதற்கெதிருஞ், சண்டமுழக்கெனவனபவனக்கிளைதந்தமுழக்கெனவே, வண்டினமொய்த்தெழுவண்டுளவத்தொடைவண்டுவரைத்திருமா, லண்டமுகட்டுறநின்றுசிரித்தனனங்கணெருப்பெழவே.

(இ - ள்.) (அப்பொழுது),—வண்டு இனம் - வண்டுகளின் கூட்டங்கள், மொய்த்து எழு - நெருங்கிப் பறக்கப்பெற்ற, வள் துளவம் தொடை - அழகிய திருத்துழாய்மாலையையுடைய, வள் துவரை திருமால் - வளப்பங்களையுடைய துவாரகாபுரிக்கு அதிபதியான சிறந்தகண்ணபிரான்,—கொண்டல் முழக்கு என - மேகத்தின் இடிமுழக்கம்போலவும், அம் புவியை கடல் கொண்டு எழுதற்கு எதிரும் சண்டம் முழக்கு என - அழகியநிலவுலகத்தை (ப்பிரளய)க் கடல் தனக்கு உள்ளாக்கிக்கொண்டு மேற்கிளர்தற்குப் பொங்குகையில் உண்டாகின்ற பயங்கரமான ஆரவாரம்போலவும், வல் பவனம் கிளை தந்த முழக்கு என - வலியகாற்றின் வருக்கத்தால் உண்டாகிற பேரொலிபோலவும், அம் கண் நெருப்பு எழ - அழகிய தனதுகண்களினின்று நெருப்பு உண்டாக, அண்டம் முகடு உற நின்று சிரித்தனன் - அண்டகோளத்தினது மேல்முகட்டையளாவும்படி உயர்ந்துநின்று நகைத்திட்டான்; (எ - று.)

இங்கே, சிரிப்பு - பெருவெகுளிபற்றியது: இது - வீராட்டகாசமெனப்படும். சண்டம் - கொடுமை: வடசொல். இப்பாட்டில் வந்த உவமை மூன்றனுள், இடையிற்கூறிய கடலைப் பிரளயக்கடலென்றதனால், அதுவே உபலக்ஷணமாக, கொண்டல் பவனம் என்பவற்றையும் பிரளயகாலத்தில் பெருமழைபொழிந்து உலகையழிக்கவரும் மேகங்களாகவும், அக்காலத்து உலகையழிக்கும் பெருஞ்சுழல்காற்றாகவுங் கொள்க. பவனக்கிளையென்றது - ஸப்தமருத்துக்களையும். (உ0௭)

உ0௮. ஒன்றுபடக்கடலம்புமுகப்பனவும்பர்குலத்தருவுஞ்
சென்றுமுறிப்பனவெண்டிசையிற்குலசிந்துரமெற்றுவவெண்
குன்றமுடைப்பனபைம்பொனுரக்கிரிகொண்டுதிரிப்பனவா
லன்றுதனித்தனிநின்றுமலைத்தருளங்கைகள்பற்பலவே.

(இ - ள்.) (அந்தவிசுவரூபமூர்த்திக்கு), அன்று - அக்காலத்தில், தனி தனி நின்று மலைத்தருள் - வெவ்வேறாகநின்று போர்செய்கின்ற [illegible]

கள் பல பல - அழகிய மிகப்பலவான திருக்கைகள்,—கடல் அம்பு ஒன்று பட முகப்பன - கடல்நீரை முழுவதும் ஒருங்கே மொண்டெடுக்கவல்லனவும், உம்பர் குலம் தருவும் சென்று முறிப்பன - மேலுலகத்திலுள்ள தேவர்களது சிறந்த கல்பகவிருட்சங்களையும் அளாவிப்போய் முறிக்கவல்லனவும், எண் திசையில் குல சிந்துரம் எற்றுவ - எட்டுத்திக்குக்களிலுமுள்ள சிறந்த திசையானைகளை அப்பால் தள்ளவல்லனவும், எண் குன்றம் உடைப்பன - எட்டுக்குலமலைகளையும் உடைக்கவல்லனவும், பைம் பொன் உரம் கிரி கொண்டு திரிப்பன - பசும்பொன்மயமான வலிமையையுடைய மகாமேருமலையை எடுத்துச்சுழற்றவல்லனவு மாக இருந்தன; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

அஷ்டகுலபருவதங்களாவன - கைலாசம், இமயம், மந்தரம், விந்தியம், நிஷதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதநம் என்பன. பைம்பொனுரக்கிரி என வருதற்கு ஏற்ப 'வெண்குன்றம்' என எடுத்து - வெள்ளிமலையான கைலாச மென்று உரைத்தலு மொன்று. கொடியவர்களைக் கொல்லுதல் நல்லவர்களைப்பாதுகாத்தற்காதலால், 'மலைத்தருள்' என்றது. (௨௦௩)

௨௦௪. துகிரிதழ்வைத்துநல்வளைகண்முழக்கினதொடர்சிலகைத்தல
யகிலம்வெருக்கொளவரிமழுவெற்றினவடுசிலகைத்தலமே[மே
புகலும்வடிக்கணையுதணமெடுத்தனபொருசிலகைத்தலமே
திகழ்விசயத்தொடுசிலைகள்குனித்தனசிலசிலகைத்தலமே.

(இ - ள்.) தொடர் சில கை தலம் - (ஒன்றையொன்று) தொடர்ந்த (விசுவரூபமூர்த்தியினது) சில கைகளின் இடங்கள், துகிர் இதழ் - பவழம் போலசிவந்த வாயிலே, நல் வளைகள் - சிறந்த (வலம்புரிச்) சங்கங்களை, வைத்து முழக்கின - வைத்து ஒலிப்பித்தன; அடு சில கை தலம் - (பகைவரைக்) கொல்லவல்ல சில கைகள், அகிலம் வெரு கொள - உலகமுழுவதும் அஞ்சும்படி, அரி மழு எற்றின - துணிக்கவல்ல கோடாலிப்படையை வீசின; பொரு சில கை தலம் - போர்செய்யவல்ல சில கைகள், புகலும் - (சிறப்பித்துச்) சொல்லப்படுகின்ற, வடி கணை - கூர்மையான அம்புகளையும், உதணம் - கூர்மைகுறைவான மொட்டம்புகளையும், எடுத்தன - ஏந்தின; சில சில கை தலம்—, திகழ் விசயத்தொடு - விளங்குகின்ற வெற்றியுடனே, சிலைகள் குனித்தன - விற்களை வளைத்தன; (எ - று.)

உதணம் - அலகில்லா அம்பு; இனி, 'உவணம்' எனப் பாடங் கொண்டு - கருடாஸ்திர மென்பாரும், அரிமழு என்பதற்கு - அனல்வடிவமான எரியிரும்புப்படையென்று உரைப்பாரும் உளர். வடிக்கணை - வடித்தலையுடைய அம்பு; வடித்தல் - நெருப்பில்வைத்துக்காய்ச்சியடித்து அராவிக்கூராக்குதல்.

௨௦௫. வெங்கணையத்திரள்குந்தநிறப்படைவெம்புமுலக்கைகள்போர்
பொங்கியவச்சிரமுந்துகலப்பைகள்புண்கழுவர்க்கமயி
லெங்குமலைத்தெழுசெஞ்சுரிகைத்திரடண்டமிவற்றினொடுந்
தங்கியசக்கரபந்திதரித்தனதண்பலகைத்தலமே.

(இ - ள்.) தண் - குளிர்ந்த [காண்டற்கு இனிய], பல கை தலம் - அநேகங்கைகள்,—வெம் கணையம் திரள் - கொடிய வளைதடிகளின் கூட்டமும், நிறம் குந்தம் படை - ஒளியையுடைய கைவேலாகிய ஆயுதங்களும், வெம்பும் உலக்கைகள் - பயங்கரமாகவுள்ள உலக்கைகளும், போர் பொங்கிய வச்சிரம் - போர்த்தொழிலில் மிகுந்த வச்சிராயுதங்களும், உந்து கலப்பைகள் - செலுத்தப்படுகிற கலப்பைகளும், புண் கழு வர்க்கம் - (பகைவரது) தசைதோய்ந்த இருப்புமுட்படைகளின் கூட்டமும், அயில் - பெருவேல்களும், எங்கும் மலைத்து எழு செம் சுரிகை திரள் - எவ்விடத்தும் போர்செய்து

சிறக்கின்ற (குருதிதோய்தலாற்) சிவந்த உடைவாள்களின் கூட்டமும், தண்டம் - கதாயுதங்களும், இவற்றினுடனே - (ஆகிய) இப்படைகளுடனே, தங்கிய சக்கரம் பந்தி - தனக்குஏற்ற சக்கராயுதங்களின் வரிசைகளையும், தரித்தன - தாங்கியிருந்தன; (எ - று.)

சக்கரபாணியாதலால், 'தங்கியசக்கரபந்தி' என்றார். பந்தி, சுரிகை-பங்க்தி, க்ஷுரிகா என்னும் வடசொற்களின் திரிபு. மூந்தனைப் பதம்பிரித்து-சிறந்த என்றும், அலைத்தனைப்பதம்பிரித்து - வருத்தின என்றும் உரைப்பினுமாம். ()

௨0௬. மேலெழுமங்கதிர்வாளுறைபோம்படிவீசினவான்புடையே
தோலினமேந்தினநீள்கவணேந்தினசோரிகள்சோர்ந்திடவே
ஞாலமெலாம்பொருதோமரம்வாங்கினநாவொருமூன்றனவாஞ்
சூலமொடோங்கினபாசமொடோங்கினசூழ்சிலபூங்கரமே.

(இ - ள்.) சூழ் சில பூ கரம் - சுற்றிலுமுள்ள சில அழகிய கைகள்,— மேல் எழும் அம் கதிர் வாள் - மேலேஎழுந்துவிளங்குகிற அழகிய ஒளியையுடைய வாளாயுதங்களை, உறை போம்படி - உறைகழியும்படி, வீசின - எடுத்து மேலெறிந்தன; வான் புடையே - ஆகாயத்தினிடத்தே [மிகஉயரத்திலென்றபடி], தோல் இனம் ஏந்தின - தோலினாலமைந்த பல கேடகமென்னும் ஆயுதங்களைத் தரித்தன; நீள் கவண் ஏந்தின - நெடுந்தூரஞ்செல்லுந்தன்மையவான கவண்கற்களை எறிதற்குஎடுத்தன; சோரிகள் சோர்ந்திட - (பகைவருடல்களில்) இரத்தவெள்ள மொழுகும்படி, ஞாலம் எலாம் பொரு தோமரம் வாங்கின - உலகத்தவரெல்லாரோடும் போர்செய்து அழிக்கவல்ல தோமரமென்னும் ஆயுதங்களை எடுத்துக்கொண்டன; நா ஒரு மூன்றன ஆம் சூலமொடு ஓங்கின - மூன்றுநாக்குக்களையுடையனவாகிய சூலாயுதங்களோடு உயர்ந்தன; பாசமொடு ஓங்கின - கயிற்றுவடிவமான பாசமென்னு மாயுதங்களோடு உயர்ந்தன; (எ - று.)

இப்பாட்டில் எல்லாவாக்கியங்களுக்கும் 'சிலகரம்' என்பதே எழுவாய். கீழ்ப்பாட்டில், சுரிகை என உடைவாள் வந்ததனால், இங்கே வாள் என்றது - பெரிய வாளை. மேலெழும்அங்கதிர்வாள் என்பதற்கு-ஆகாயத்தில் விளங்குகின்ற சூரியன்போல் ஒள்ளிய வாளெனினும் அமையும். தோல் - கருவியாகுபெயர். ஞாலம் - இடவாகுபெயர். கவண் - எறிகல். தோமரம் - பேரீட்டி. நாவொருமூன்றனவாஞ்சூலம் - முத்தலைவேல். (௨0௬)

௨0௭. சிலசிலகைத்தலமடுகழலிற்பலதிணிகழல்கட்டினவே
சிலசிலகைத்தலமறுகுபுயத்திடைசெறிதொடையிட்டனவே
சிலசிலகைத்தலமணிகொளுரத்திடைபணிகடிருத்தினவே
சிலசிலகைத்தலம்விரல்கொடுசுட்டினசெறுநர்திகைத்திடவே.

(இ - ள்.) சில சில கை தலம்—, அடு கழலில் - (பகைவரைக்) கொல்லுகிற திருவடிகளில், பல செறி கழல் - அநேகமான நெருங்கின வீரக்கழல்களை, கட்டின—; சில சில கை தலம்—, மறுகு புயத்திடை - சுழல்கிறதோள்களில், செறி தொடை - அடர்ந்த பூமாலைகளை, இட்டன - தரித்தன; சில சில கை தலம்—, அணி கொள் உரத்திடை - அழகைக்கொண்ட மார்பினிடத்தில், பணிகள் - ஆபரணங்களை, திருத்தின - ஒழுங்காக அணிந்தன; சில சில கை தலம்—, செறுநர் திகைத்திட - பகைவர்கள் (அச்சத்தால்) திகைப்படையும்படி, விரல்கொடு சுட்டின - (அவர்களை) விரல்களாற் குறித்துக் காட்டின; (எ - று.)

மணிகொள் எனப் பதம்பிரித்து-கௌஸ்துபரத்தினத்தை யணிந்துள்ள என்றும் உரைக்கலாம். செறுநர் - பகைப்பவர்; இப்பகுபதத்தில், ந் - பெயரிடைநிலை. இப்பாட்டில், எந்த அடியை எடுத்து எந்தஇடத்திற் கூட்டினும் பொருளும் செய்யுளோசையும் வேறுபடாதிருக்கலால் பொருள்கோ...

மாட்சிமாறு அடிமாறிமாற்றுப்போருள்கோள்; கீழ் ௨0௪ - ஆம் பாட்டிலும் இது. 'அவிர்கழல்' என்ற பாடத்திற்கு, அவிர்தல் - விளங்குதல். (௨0௭)

௨0௮. மாயிருஞாலமெலாம்வெளியாயொளிர்மரகதசோபையுறப், போயிருபாலும்வளைந்துவளைந்தெதிர்பொருமுனைவெம்படையோ, டாயிரமாயிரமங்கைபுறப்படவண்டருமாதவரும், பாயிரநான்மறைபாடிவியந்துபணிந்துபுகழ்ந்தனரே.

(இ - ள்.) மா இரு ஞாலம் வெளி எலாம் ஆய் - மிகப்பெரிய பூலோகத்தி லுள்ள வெளியிடங்களிலெல்லாம் பொருந்தி, ஒளிர் மரகதம் சோபை உற - விளங்குகிற பச்சையிரத்தினத்தின் காந்தி பொருந்த, இரு பாலும் போய் வளைந்து வளைந்து - இரண்டுபக்கத்திலுஞ் சென்று சூழ்ந்து சூழ்ந்து, எதிர் பொரு முனை வெம் படையோடு - எதிர்த்துப்போர்செய்யவல்ல கூர்நுனியையுடைய கொடிய ஆயுதங்களுடனே, ஆயிரம் ஆயிரம் அம் கை - அனேகமாயிரம் அழகிய திருக்கைகள், புறப்பட - (அவ்விசுவரூபத்தினின்று) வெளிப்பட்டுத்தோன்ற, (அதனைக் கண்டு), வியந்து - அதிசயித்து, பணிந்து - வணங்கி, அண்டரும் - தேவர்களும், மா தவரும் - மிக்க தவமுடைய முனிவர்களும், பாயிரம் நால் மறை பாடி - முகவுரையையுடைய நான்குவேதங்களைச் சுரத்துடனே சொல்லி, புகழ்ந்தனர் - துதித்தார்கள்.

வியத்தல் - மனத்தின்தொழிலும், புகழ்தல் - வாக்கின்தொழிலும், பணிதல் - உடம்பின்தொழிலு மாகத் திரிகரணங்களாலுங் கொண்டாடினமை விளங்கும். மா + இரு = மாயிரு: ஒருபொருட் பன்மொழி; உரிச்சொற் புணர்ச்சியாதலால், பொதுவிதிப்படி வகரமெய்பெறாது யகரம்பெற்று முடிந்தது: [நன் - மெய்யீறு - ௩௬]; "மாமுன்னுயிர்வரின் யகரமெய்தோன்றும்" என வழங்குஞ் சூத்திரத்தையும் உணர்க. பாயிரம் என்றது - வேதத்தின் முதலி லுள்ள பிரணவமகாமந்திரத்தை; இனி, பாயிரம் - புகழ்ச்சி எனக் கொண்டு, பாயிரமறை - கடவுளைத்துதிப்பனவான வேத மென்றுமாம். ஞாலமெலாம் வெளியாய் என்று எடுத்து - உலகமுழுவதும் விளக்கமடைய என்று உரைப்பினும் அமையும். ஆய் - ஆக; எச்சத்திரிபு. மரகத சோபா - வடசொல். ஆயிரமாயிரம் - ஆயிரத்தாற் பெருக்கிய ஆயிரம்: அதாவது - பத்துலக்ஷம் என்றும் உரைப்பர். (௨0௮)

௨0௯. ஆரணனேயரனேபுவனங்களனைத்தையுமன்றுதவுங்
காரணனேகருணாகரனேகமலாசனிகாதலனே
வாரணமேபொதுவேயொருபேரிடவந்தருளும்புயலே
நாரணனேமுனியேன்முனியேலெனநாகர்பணிந்தனரே.

(இ - ள்.) 'ஆரணனே - பிரமரூபியே! அரனே - உருத்திரரூபியே! புவனங்கள் அனைத்தையும் அன்று உதவும் காரணனே - உலகங்களெல்லாவற்றையும் அக்காலத்தில் [சிருஷ்டிகாலத்தில்] படைத்தருளிய மூலகாரணக்கடவுளே! கருணை ஆகரனே - திருவருளுக்கு இருப்பிடமாகவுள்ளவனே! கமலா ஆசனி காதலனே - தாமரைமலரைத் தங்குமிடமாகவுடைய திருமகளுக்கு அன்புள்ளகொழுநனே! வாரணம்-ஒரு யானை [கஜேந்திரன்], பொதுவே-பொதுவாகவே, ஒருபேர் இட-(ஆதிமூலமேஎன்று) ஒருபெயரை இட்டுக் கூவியழைக்க, வந்து - உடனே எழுந்தருளிவந்து முன்நின்று, அருளும் - கருணைசெய்த, புயலே - காளமேகம்போன்றவனே! நாரணனே - நாராயணனே! முனியேல் முனியேல் - கோபியாதே கோபியாதே', என - என்றுகூறி, நாகர் - சுவர்க்கலோகவாசிகளான தேவர்கள், பணிந்தனர் - வணங்கினார்கள்; (எ - று.)

ஆரணம்-வேதம். பிரமன் எப்போதும் நான்குமுகங்களாலும் நான்குவேதங்களையும் ஓதுதல்பற்றி ஆரணன்என்று பெயர். திருமால் பிரமரூபியாய்

நின்றுபடைத்தலையும் நாராயணநிலையில்நின்றுகாத்தலையும் உருத்திரரூபியாய் நின்று அழித்தலையுஞ் செய்கின்றனனென்பது நூற்கொள்கை யாதலால், 'ஆரணனே யரனே' என அபேதமாக்கூறினர்; "நீராய்நிலனாய்த் தீயாய்க் காலாய்நெடுவானாய்ச், சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாய்அயனானாய்", "முனியேநான்முகனே முக்கண்ணப்பா" என்றார் திருவாய்மொழியிலும். "மூவர் காரியமுந் திருத்தும் முதல்வன்" எம்பிரான் என்றபடி. கஜேந்திராழ்வான் ஆதிமூலமேயென்றுபொதுப்படக்கூப்பிட்டபொழுது எம்பெருமானல்லாத பிறதேவரெல்லோரும் தாம்நாம் அச்சொல்லுக்குப்பொருளல்ல ரென்று கருதியொழிய.திருமால் தாமே வந்து அருள்செய்தன ரென நூல்கள் கூறும்: "அழைத்ததுசெவியிற்கேட்டுமயனரனாதியாயோர்,புழைக்கைவெங்கரிமுன் காப்பப் புகுந்தில ராகியாகித, தழைத்தகாரணனேயென்ற தனிப்பெயர்ப் பொருள்யாமல்லோ, மிழைத்தகாரியம் யாமாவோ மென்செய்துமா லின் றென்றார்" எனப் பாகவதத்திலுங் காண்க; "அண்டரெலாம்யாம்மூலமலே மென் றகல்போழ்திற,புண்டரிகக்கட்புண்ணிய னன்புள்ளரசின்மேற், கொண்டெதிரெய்திக் கரியசெய்து கொடுவெங்கோய், கண்டுளநெக்கானஞ்சலையஞ்சேல் களிறென்று" என (க்காஞ்சிப்புராணத்து)ப் பிறசமயத்தார் கூறியவாறு முணர்க. நாரணன்-வடசொற்றிரிபு. நாராயணன்-நார+ அயந+அன்எனப்பிரிக்க: சிருஷ்டிப்பொருள்களுக்கெல்லாஞ் சேர்விடமானவனென்று பொருள்; சிருஷ்டிப்பொருள்களைத்தனக்குஇருப்பிடமாகவுடையவனென்றும்,பிரளயகாலத்துநீரைத் தனக்கு இருப்பிடமாகவுடையவனென்றும் பொருள்கள் படும். நாகம்-சுவர்க்கம். முனியேல் முனியேல்-அடுக்கு, அன்பு பற்றியது. வாரணமே, ஏ - அசை; சிறப்புமாம். (உ௩௯)

உ௪0. மாதவனேமுனியேலெமையாளுடைவானவனேமுனியேல்
யாதவனேமுனியேலிதயத்திலிருப்பவனேமுனியே
லாதவனேமுனியேன்மதிவெங்கனலானவனேமுனியே
னீதவனேமுனியேன்முனியேலெனநின்றுபணிந்தனரே.

(இ-ள்.) 'மா தவனே - திருமகள்கொழுநனே! முனியேல் - கோபித்தருளாதே; எமை ஆள் உடை வானவனே - எம்மை அடிமையாகவுள்ள கடவுளே! முனியேல்—; யாதவனே - யதுகுலத்தில் திருவவதரித்தவனே! முனியேல்—; இதயத்தில் இருப்பவனே - (எல்லோருடைய) மனத்திலும் எழுந்தருளியிருப்பவனே! முனியேல்—; ஆதவனே - சூரியசொரூபியானவனே! முனியேல்—; மதி வெம் கனல் ஆனவனே - சந்திரன் வெவ்விய அக்கினி இவர்களின் சொரூபமானவனே! முனியேல்—; நீதவனே - நீதிமுறைமையுடையவனே! முனியேல் முனியேல்—,' என-என்றுகூறி, நின்று பணிந்தனர் - (முனிவர்கள் எங்கும்) நின்று வணங்கினார்கள்; (எ - று.)

கீழ் "மாயிருஞாலம்"என்ற கவியில், தேவர்களும் முனிவர்களும் புகழ்ந்தன ரெனக் கூறியதில். தேவர்கள்புகழ்ந்தவிதத்தை அடுத்த "ஆரணனே யரனே" என்ற கவியாற் கூறி, முனிவர்கள் புகழ்ந்தவிதத்தை அதற்கு அடுத்த இக்கவியாற் கூறுகின்றாராதலின்,'முனிவர்'எனத் தோன்றாஎழுவாய் வருவிக்கப்பட்டது. இனி, கீழ்க்கவியில் 'நாகர்'என்பதற்கு - பாதாளலோகவாசிக ளென்று உரைத்து, மூவுலகத்தாருள் மேலுலகத்தாரும் கீழுலகத்தாரும் துதித்து வணங்கியமை கீழிரண்டுகவிகளிலுங் கூறப்பட்ட தெனக்கொண்டு, இக்கவிக்கு நிலவுலகத்தா ரென்று எழுவாய் வருவித்தலுமொன்று. அன்பால்நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர்நினைந்த வடிவோடு கடவுள் விரைந்து சென்று வீற்றிருத்தலின், 'இதயத்திலிருப்பவனே' என்றார்; என்றது, அந்தர்யாமித்வத்தையு மாகலாம். (உ௪0)

உ௪க. கங்கைமகன்கதிரோன்மகனம்பிகைகாதன்மகன்றனய, ரங்கவையின்கணிருந்தராதிபரடையவெழுந்தடைவே. செங்கை

குவித்தசிரத்தினராயுணர்வொன்றியசிந்தையரா, யெங்கள்பிழைப்
பினையின்றுபொறுத்தருளென்றுபணிந்தனரே.

(இ - ள்.) கங்கை மகன் - கங்காபுத்திரனான வீடுமனும், கதிரோன் மகன் - சூரியபுத்திரனான கர்ணனும், அம்பிகை காதல் மகன் - அம்பிகையினது விருப்பமுள்ள புத்திரனான திருதராட்டிரனும், தனயர் - (அவனது புத்திரர்பலரும், அங்கு அவையின்கண் இருந்த நரஅதிபர் - (இன்னும்)அப்பொழுது அச்சபையிலிருந்த அரசர்களும், அடைய-எல்லோரும், எழுந்து-எழுந்திருந்து, அடைவே - முறைப்படி, செம் கை குவித்த சிரத்தினர் ஆய்-சிவந்த கைகளைத் தலைமேற் கூப்பியவர்களாய், உணர்வு ஒன்றிய சிந்தையர் ஆய் - அறிவுள்ள மனமுடையவர்களாய், எங்கள் பிழைப்பினை இன்று பொறுத்தருள் என்று - 'எங்கள் குற்றங்களை இப்பொழுது பொறுத்தருள்வாயாக' என்று சொல்லி, பணிந்தனர் - வணங்கினார்கள்; (எ - று.)

இது - பரவசமாக நிகழ்ந்தது. குற்றம் துரியோதனனது ஆயினும், அதனைத் தாங்கள் தடுக்காமலே உடன்பட்டார்போலிருந்ததனால்,'எங்கள்பிழைப்பு' என்றது. பிழைப்பு-பிழைசெய்தல்; தொழிற்பெயர். செங்கைகுவித்த சிரத்தினர்-செங்கை சிரத்திற்குவித்தன ரென விகுதிபிரித்துக் கூட்டப்பட்டது. நராதிபர்-மனிதர்க்குத் தலைவர்; நர+அதிபர் எனப்பிரியும்.தலைமேற் கைகளைக்குவித்து வணங்குதல், திரியங்கநமஸ்கார மெனப்படும். (௨௧௧)

௨௧௨.கண்ணபொறுத்தருள்வெண்ணெயருந்தியகள்வபொறுத்தருள்கார், வண்ணபொறுத்தருள்வாமபொறுத்தருள்வரதபொறுத்தருணீ, திண்ணமனத்துணர்வொன்றுமிலாதவர்செய்தபெரும்பிழையென், றண்ணன்மலர்க்கழல்சென்னியில்வைத்தெதிரன்றுதுதித்தனரே.

(இ - ள்.) 'கண்ண - ஸ்ரீகிருஷ்ணனே! மனத்து திண்ணம் உணர்வு ஒன்றும் இலாதவர் செய்த பெரும் பிழை - மனததில் உறுதியான அறிவு சிறிதுமில்லாத நாங்கள் செய்த பெரிய குற்றங்களை, நீ பொறுத்தருள்—; வெண்ணெய் அருந்திய கள்வ - வெண்ணெயைக் களவுகொண்டு அமுதுசெய்தவனே! பொறுத்தருள்—; கார் வண்ண - மேகம்போன்ற கருநிறமுடையவனே! பொறுத்தருள்—; வாம - பேரழகுடையவனே! பொறுத்தருள்—; வரத - (அடியார்களுக்கு வேண்டிய) வரங்களைத் தருபவனே! பொறுத்தருள்—,' என்று - என்றுசொல்லி, அண்ணல் மலர் கழல் சென்னியில் வைத்து - பெருமையிற் சிறந்த கண்ணபிரானது தாமரைமலர்போலுந் திருவடிகளைத் தம்தலையின்மேல் வைத்துவணங்கி, அன்று - அப்பொழுது, எதிர் - எதிரில், துதித்தனர் - துதிசெய்தார்கள்; (எ - று.)—இதற்கு, முற்பாட்டிலுள்ள 'கங்கைமகன்' முதலியோர்களே எழுவாய்.

க்ருஷ்ண னென்னும் வடமொழி, பிராகிருதபாஷைமூலமாய்க் கண்ணன் எனத் திரிந்துவந்தது;'கண்ணனென்பது-கரியானென்னும் பொருளதோர்பாகதச்சிதைவு'என்று திருக்கோவையாருரையில் பேராசிரியர் கூறியவாறு காண்க. இலாதவர் - தம்மைப்பிறர்போற்கூறியது:தன்மையிற்படர்க்கைவந்த இடவழுவமைதி. (௨௧௨)

[கண்ணன் விசுவரூபத்தை அடக்கிக்கொள்ளுதல்.]

௨௧௩. தேவரும்வாசவனுந்தவருந்திசைமுகனுநராதிபரும்
யாவருமன்பினொடாயிரநாமமுமெண்ணியிறைஞ்சுதலான்
மூவருமொன்றெனநின்றருணாதனுமுனிவுதவிர்ந்தருளா
மீவருமண்டமுறுந்திருமேனியொடுங்கினன்மீளவுமே.

(இ - ள்.) தேவரும் - தேவர்களும், வாசவனும் - (தேவர்களுக்கு அரசனான) இந்திரனும், தவரும் - தவஞ்செய்துள்ள முனிவர்களும், திசை

[இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: கண்ணன் கர்ணனுக்குப் பிறப்புணர்த்துவன.]

உகஅ வண்மையினுயரங்கர்குலாதிபமதிகுலம்வாழ்வுறவந்
துண்மையினுயர்மன்னவரைவருமுன்னினுனக்கிளையோர்
பெண்மையினுயர்குந்திவயிற்றிடைபெருமையினிதயத்
திண்மையினுயர்நின்னையுமன்பொடுதினகரனல்கினனே.

(இ - ள்.) வண்மையினால் உயர் - தானத்தாற் சிறந்த, அங்கர் குல அதிப - அங்கநாட்டிலுள்ளாரது கூட்டத்துக்குத் தலைவனே!—மதி குலம் வாழ்வு உற வந்து - சந்திரகுலம் சிறப்படையும்படி (அதில்) வந்து பிறந்து, உண்மையினால் உயர் - சத்தியத்தாற் சிறந்த, மன்னவர் ஐவரும் - பாண்டவராசர் ஐந்துபேரும், உன்னில் உனக்கு இளையோர் - ஆலோசித்துப்பார்க்குமிடத்து உனக்குத்தம்பியராவர்; (எவ்வாறெனின்),—பெண்மையினால் உயர் குந்தி வயிற்றிடை - பெண்மைக்குணங்களாற் சிறந்த குந்திதேவியினது வயிற்றிலே, பெருமையினால் இதயம் திண்மையினால் உயர் நின்னையும் - பெருந்தன்மையினாலும் மனவுறுதியினாலுஞ் சிறந்த உன்னையும், அன்பொடு - அன்புடனே, தினகரன் - சூரியன், நல்கினன் - (அவர்களுக்குமுன்பு) பெற்றான்.

இதயத்திண்மை - தைரியம். வண்மை - ஏற்றார்க்கு மாறாது கொடுத்தல்.

உகசு. ஏயுநெடுங்கொடிமுரசுடையோனையெழிற்றருமன்றரவே
வாயுவழங்கினன்வீமனைநல்கினன்விசயனைவாசவனு
மாயுநிகழ்ந்திடுவேதமருத்துவரன்பொடளித்தனர்செந்
தேயுவெனுந்திறனகுலனையுஞ்சகதேவனையும்பெரிதே.

(இ - ள்.) (உன்னைச் சூரியன் பெற்றபின்பு குந்தியினிடத்தில்), ஏயும் நெடு கொடி முரசு உடையோனை - பொருந்திய பெரியமுரசக்கொடியுடைய யுதிட்டிரனை, எழில் தருமன் - அழகிய யமதருமராசன், தர - உண்டாக்க, வாயு—, வீமனை - வீமசேனனை, வழங்கினன் - பெற்றான்; வாசவனும் - இந்திரனும், விசயனை - அருச்சுனனை, நல்கினன் - பெற்றான்; ஆயு நிகழ்ந்திடு வேதம் மருத்துவர் - ஆயுளைப்பற்றிக்கூறுகிற வேதத்தை யறிந்த தேவவைத்தியர்களான (இரட்டையராகிய) அசுவிநீதேவர்கள், செம் தேயு எனும் திறல் நகுலனையும் சகதேவனையும் - செந்நிறமுள்ள அக்கினியெனத்தக்க பராக்கிரமத்தையுடைய நகுலன் சகதேவன் என்னும்இரட்டைப்பிள்ளைகளை, பெரிது அன்பொடு அளித்தனர் - மிகுதியான அன்புடனே பெற்றார்கள்; (எ - று.)

மாத்திரியினிடம் பிறந்தவரான நகுலசகதேவரை இங்கே குந்திமைந்தராக அபேதமாக் கூறியது - அந்தமாத்திரிக்கு அந்தமந்திரத்தை உபதேசித்தவள் குந்தி யாதலாலும், பாண்டுவோடு மாத்திரி சககமனஞ்செய்து இறந்துவிட இவ்விருவரையுங் குந்தியே அன்போடுவளர்த்தன ளாதலாலுமென்க. குந்தி நினைத்த அப்பொழுது கூற்றுவன் கோரவடிவமின்றிச் சாந்தமானதொருவடிவங்கொண்டு வந்தமை தோன்ற,'எழிற்றருமன்' என்றார். ஆயுர்வேதமாவது - வியாதியின் காரணம் குறி முதலியவற்றை நன்கு அறிந்து, மந்திரம் ஔஷதம் முதலியவற்றால் தகுந்த சிகிச்சை செய்யும்படி ஆயுள் ஆரோக்கியம் முதலியவற்றைச் சொல்லும் வைத்தியநூல். மருத்துவர் - மருந்தின் தன்மையறிந்துசெய்துதருபவர்; இதில், பகுதி-மென்றொடர்வன்றொடராயிற்று. தேயு - தேஜஸ் என்னும் வடமொழியின் திரிபு;இவ்வொளியின்பெயர், ஒளியையுடைய அக்கினிக்குச் சினையாகுபெயர். பராக்கிரமத்தைச் செந்நிறமுடைய தென்று வருணித்தல் கவிமரபாதலாலும், பராக்கிரமம் பிறரையழிக்கவல்லதாதலாலும், 'செந்தேயுவெனுந்திறல்' எனப்பட்டது. வெற்றிக்கு ஏற்ற கொடி யென்பதற் 'ஏயு நெடுங்கொ...

உஉ0. அந்தணன்முன்றருமந்திரமைந்தினிலறுவரையுங்கடவுட்
குந்திபயந்தனள்யானினியென்பலகூறுவதுங்களினீ
ரிந்தநிலம்பெறுவீர்தவிர்கிற்பெறயாரினிவேறுரியார்
வந்தினிநும்பியர்தம்மொடுசேர்கெனமாயன்மொழிந்தனனே.

(இ - ள்.) அந்தணன் - துருவாசமுனிவன், முன் தரு - முன்னே [கன்னிகையாயிருக்கையில்]உபதேசித்த, மந்திரம் ஐந்தினில் - ஐந்துமந்திரங்களால், அறுவரையும் - உங்களாறு பேரையும், கடவுள் குந்தி பயந்தனள் - தேவசம்பந்தமுள்ள குந்திதேவி பெற்றாள்; யான் இனி பல கூறுவது என் - நான் இனிமேற் பல வார்த்தைசொல்லவேண்டுவ தென்ன? உங்களில் நீர் இந்த நிலம் பெறுவீர் - உங்களுக்குள்ளே நீங்கள் இந்த இராச்சியத்தைப் பெற்றுக்கொள்ளக்கடவீர்; தவிர்கின் - அங்ஙனம் பெறாது விட்டால், இனி பெற உரியார் வேறு யார் - இனிப்பெறுதற்கு உரியவர் வேறுயாவர்? [எவருமல்ல ரென்றபடி]; (ஆதலால்), இனி - இப்பொழுது. நும்பியர் தம்மொடு வந்து சேர்க - உன் தம்பிமாரோடு வந்துகூடுவாயாக, என - என்று, மாயன் மொழிந்தனன் - கண்ணன் (கன்னனுக்குக்) கூறியருளினான்;(எ-று.)

"கரியவன் கன்னற்குஅன்றுபிறப்பினைத் தேற்றியாங்கு" என இவ்வரலாற்றைச் சீவகசிந்தாமணியில் பிற [அருக] சமயத்தாரும் உவமையெடுத்துக்கூறியிருக்குமாறு காண்க. அந்தணன் - பொதுப்பெயர், இடம்நோக்கிச் சிறப்புப்பொருளுணர்த்திற்று. கீழ்ச் சம்பவச்சருக்கத்தில் "தெரிவைகேளெனச் செவிப்படுத் தொருமறை தேவரில் யார்யாரைக், கருதி நீ வரவழைத்தனை யவரவர்கணத்துநின் கரஞ்சேர்வார்"எனத் துருவாசமுனிவர் தேவர்பலரைக்கருதத்தக்கஒருமந்திர மளித்ததாகக் கூறியதனோடு இது மாறுகொளக்கூறலாகாதபடி, அப்பெரியமந்திரமொன்றின் பகுதிகள் இவ்வைந்து மெனக் கருத்துக்கொள்க. நும்பியர், நீர் - பகுதி; அது நும் எனத் திரிந்தது: [நன் - உருபு அ.] 'வந்தினிதும்பியர்' என்ற பாடத்துக்கு - இனிது வந் தென்க. வந்து - துரியோதனனை விட்டு வந்து. தவிர்கின், கு - சாரியை. தந்திரமாகக்கூறி பித்திரபேதஞ்செய்யலுற்ற சூழ்ச்சியை நோக்கி இங்கே 'மாயன்' என்றார். நும்பியர் - பாண்டவர். (உஉ0)

வேறு.

[இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்: கன்னன் கண்ணனைநோக்கிக் கூறும் உத்தரம்.]

உஉக. கன்றால்விளவின்கனியுகுத்துங்கழையாணிரையின்கணமழைத்துங்,குன்றான்மழையின்குலந்தடுத்துங்குலவுஞ்செல்வக்கோபாலா, வின்றுலெனதுபிறப்புணர்ந்தேனென்றன்புருகியெம்பியர்பாற், சென்றாலென்னைநீயறியச்செகத்தாரென்றுஞ்சிரியாரோ.

(இ - ள்.) கன்றால் விளவின் கனி உகுத்தும் - ஒருமாயக்கன்றைக்கொண்டு (ஒருவஞ்சனை) விளாமரத்தின் பழங்களைக் கீழ்ச்சிந்துவித்தும், கழையால் நிரையின் கணம் அழைத்தும் - வேய்ங்குழலிசையால் பசுக்களின்கூட்டத்தை ஒருங்குவரவழைத்தும், குன்றால் மழையின் குலம் தடுத்தும் - கோவர்த்தனமலையினால் மேகங்களின்கூட்டத்தை மறைத்தும், குலவும் - மகிழ்கின்ற, செல்வம் - எல்லாச்செல்வங்களையுமுடைய,கோபாலா - கோபாலனென்னுந்திருநாமமுடையவனே!இன்று எனதுபிறப்பு உணர்ந்தேன் - இப்பொழுது (நீ சொல்ல) என்னுடைய பிறந்தவரலாற்றை யறிந்தேன், என்று-என்றகாரணத்தால், அன்பு உருகி-அன்பால் மனங்கரைந்து, எம்பியர்பால் - என் தம்பியரான அப்பாண்டவரிடம்,சென்றால் - (இப்பொழுது துரியோதனனைவிட்டு நான்) போனால், நீ அறிய—, செகத்தார் - நிலவுலகத்துச்

சனங்கள், என்றும் - எப்பொழுதும், என்னை —, சிரியாரோ - (பரிகாசஞ்செய்து) சிரிக்கமாட்டார்களோ? [நன்குசிரிப்பரே என்றபடி]; (எ - று.)

கழை - மூங்கில்; அதனாலாகிய குழலுக்குக் கருவியாகுபெயரும், அத னிசைக்கு முதலாகுபெயரு மாக இருமடியாகுபெயராம். பகல்முழுவதும் முல்லைநிலத்திற் பரவிச்சென்று மேய்ந்த பசுக்களை மாலைப்பொழுதில் ஒன்று சேர்த்தற்கு இனிதாக வேய்ங்குழலூதுதல், இயல்பு; அக்கீதத்தின் இனிமை யைப் பசுக்கள் அறிந்து நன்குகேட்டற்கு அருகில்வந்துநிற்கு மென்க. பின் னே 'கணம்' என வந்ததனால், முன்னே 'நிரை' - பசுக்கூட்டத்தையுணர்த்தா மல், பசுமாத்திரத்தை யுணர்த்திற்று. மூன்றுமடியில், ஆல் - அசை.

இதுமுதற் பதினைமூகவிகள் - பெரும்பாலும் மூன்று ஆறுஞ் சீர்கள் - காய்ச்சீர்களும், மற்றைநான்கும் மாசசீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (௨௨௧)

௨௨௨. ஆரென்றறியத்தகாதவெனையரசுமாக்கிமுடிசூட்டிச்
சீருந்திறமுந்தனதுபெருந்திருவுமெனக்கேதெரிந்தளித்தான்
பாரின்றறியநூற்றுவர்க்கும்பழிதீர்வென்றிப்பாண்டவர்க்கும்
போரென்றறிந்துஞ்செய்நன்றிபோற்றாதவரிற்போவேனோ.

(இ - ள்.) (துரியோதனன்), ஆர் என்று அறிய தகாத எனை - இன்னா னென்று அறிந்துகொள்ளுதற்குத் தகுதியில்லாத என்னை, அரசும் ஆக்கி - இராசகுலத்தவனாகவும் வைத்து, முடிசூட்டி - கிரீடாபிஷேகஞ்செய்வித்து, தனது சீரும் திறமும் பெரு திருவும் - தனக்குரியசிறப்புக்களையும் அதிகார த்தையும் மிக்கசெல்வத்தையும், எனக்கே தெரிந்து அளித்தான் - எனக்கு ஒருவனுக்கே தன்மனமறிந்துகொடுத்தான்; (அங்ஙனமிருக்க), இன்று - இப் பொழுது, பார் அறிய - உலகத்தார்யாவரும் அறியும்படி, நூற்றுவர்க்கும் - (துரியோதனாதியர்) நூறுபேருக்கும், பழி தீர் வென்றி பாண்டவர்க்கும் - பழிப்புக்கிடமில்லாத சயத்தையுடைய பாண்டவர்களுக்கும், போர் என்று - சண்டைநேர்வதென்று, அறிந்தும் - தெரிந்திருந்தும், செய் நன்றி போற்றா தவரின் - (ஒருவர்) செய்த உபகாரத்தை நினையாது மறப்பவர்போல, போ வேனோ - (துரியோதனனைவிட்டுப் பாண்டவரிடத்துச்) செல்வேனோ? [செ ல்லமாட்டேன் என்றபடி]; (எ - று.)

ஆர் - யார்; மரூஉ. சூடி - சூட்டியென்பதன் பிறவினை. இங்கே, கர்ண னதுவார்த்தையில் பாண்டவர்க்கு 'பழிதீர்வென்றி' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டதனால், அக்கன்னன் பாண்டவர்பக்கல் சிறிது அபிமானங் கொண்டானென்பது விளங்கும். பழிதீர்வென்றி - தருமயுத்தத்தாற்சயித் தல்; புகழ்தரும்வெற்றி. (௨௨௨)

[கண்ணன் கர்ணனுக்குவிடைகொடுத்துஅனுப்பிவிட்டு, அசுவத்தாமனை அழைத்தல்.]

௨௨௩. இரவிக்குரியதிருமதலையிவ்வாறுரைக்கவிசைவண்டு [பாம
விரவிப்பயிலுந்துழாய்முடியோன்வேறோர்மொழியும்விளம்
புரவிற்றடந்தோளுரவோனையேகென்றருளியொருசார்வெம்
புரவித்தாமாவின்றானைவருகென்றழைத்துப்புகல்கின்றான்.

(இ - ள்.) இரவிக்கு உரிய திரு மதலை - சூரியனுக்குஉரிய செல்வப்புதல்வ னான கர்ணன், இ ஆறு உரைக்க - இந்தப்படி சொல்ல, (அதன்பின்பு), இசை வண்டு விரவி பயிலும் துழாய் முடியோன் - தேம்பாடுகிற வண்டுகள் கலந்து மொய்க்கப்பெற்ற திருத்துழாய்மாலையை யணிந்த திருமுடியையு டைய கண்ணன், வேறு ஓர் மொழியும் விளம்பாமல் - வேறொருவார்த்தை யெதையுஞ் சொல்லாதவிட்டு, உரம் வில் தட தோள் உரவோனை - வலிமை யுடைய வில்லை யேந்திய பெரியதோள்களின்வலிமையுடைய அக்கன்னனை

ஏகு என்று அருளி - நீ செல்வாயென்று அன்போடு அனுப்பிவிட்டு, ஒருசார் வெம் புரவித்தாமா நின்றானை - (அங்கு) ஒருபக்கத்தில் நின்றிருந்தவனாகிய (போரிற்) கொடிய அசுவத்தாமனை, வருக என்று அழைத்து - வருவாயாக வென்று அருகிற்கூப்பிட்டு, புகல்கின்றான் - இரகசியமாக (சிலவார்த்தை) கூறுகிறவனானான்; (எ - று.)—அதனை, மேலிரண்டு கவிகளிற் காண்க.

"எந்நன்றிகொன்றார்க்கு முய்வுண்டாமுய்வில்லை,செய்ந்நன்றிகொன்ற மகற்கு" என்ற நீதியில் கன்னன் உறுதியாகநின்றனனாதலால்,திருமதலை யென்பதற்கு - சிறந்தகுமாரனென்றும், உரவோன் என்பதற்கு - புத்திபல முடையவனென்றுங் கூறலாம். புரவி,அசுவம் என்பன - குதிரையாகியவொரு பொருளைக்குறிப்பன வாதலால்,அசுவத்தாமாவைப் புரவித்தாமாவென்றார்; பரித்தாமா,இவுளித்தாமா என்றுங் கூறுவர். துரோணர்மனைவியாகிய கிருபி யின் அழகைக் கண்டு மிகக்காமுற்ற சிவபிரானது அருளினாற் குதிரையி னிடம்பிறந்தவனிவனென்று வரலாறு அறிக. அசுவத்தாமனென்பதற்கு- குதிரையைப் பிறப்பிடமாகவுடையவனென்று பொருள். 'வேறோர்மொழி யும் விளம்பாமல்' என்றது,கர்ணனிடத்து நாகாஸ்திரத்தைப்பற்றிக் குந்தி கூறவேண்டுமென்று நினைத்துத் தான் கூறாமல் விட்டதை.　　(உஉ௩)

[இதுமுதல் நான்குகவிகள் - கண்ணன் அசுவத்தாமனை மித்திர பேதஞ்செய்தல்.]

உஉ௪. போயேகானம்பலதிரிந்துபுகன்றவிரதம்பொய்யாதோ,
ராயேவந்தபாண்டவர்களைந் தூர்வேண்டமறுத்ததற்குச்,சேயேயனை
யசிலைமுனிவன்சேயேநாளைச்செருக்களத்தி, னீயேகரியென்றெடுத்
துரைத்தானெடியோன்றுளபமுடியோனே.

(இ - ள்.) 'சேயே அனைய - முருகக்கடவுளையே ஒத்த, சிலை முனிவன் சேயே - வில்லாசிரியனாகிய துரோணாசாரியனது புத்திரனே!—கானம்பல போயே திரிந்து - காடுகள்பலவற்றிற் சென்றுகொண்டே அலைந்து,புகன்ற விரதம் பொய்யாதோர் ஆயே - (வனவாச அஜ்ஞாதவாசங்களைப்பற்றிக்) கூறிய விரதமொழியைத் தவறாமல் நிறைவேற்றினவர்களாகியே,வந்த-மீண்டு வந்த, பாண்டவர்கள் - பாண்டுபுத்திரர்களுக்காக, ஐந்து ஊர் வேண்ட - (யான்) ஐந்தூரையாயினும்(கொடுத்திடும்படி)பிரார்த்திக்க, மறுத்ததற்கு- (துரியோதனன் சிறிதுங்கொடுக்கமாட்டேனென்று)தடுத்துச்சொன்னதற் கு, நாளை செரு களத்தில் - இனிவிரைவில்நடக்கும் போர்க்களத்தில், நீயே கரி - நீயே சாட்சியாவாய்,' என்று—, எடுத்து உரைத்தான் - (அசுவத் தாமனைநோக்கி) எடுத்துக்கூறியருளினான்;(யாரெனில்),—நெடியோன்-எல் லாப்பெருமையையுமுடையவனும், துளபம் முடியோன்-திருத்துழாய்மாலை யையணிந்த திருமுடியையுடையவனு மாகிய கண்ணபிரான்; (எ - று.)

அசுவத்தாமனுக்குச் சுப்பிரமணியன் உவமை - பலபராக்கிரமங்களால் மாத்திரமேயன்றி, சிவனருளாற் பிறந்தவனாதலாலும் ஏற்கும். இங்கு அசு வத்தாமனை 'சேயேயனைய' எனக் கண்ணன் உவமைகூறி விளித்ததனால், முருகக்கடவுள் தேவசேனாதிபதியானதுபோல இவன் துரியோதனனதியர் சேனைக்குத்தலைவனாவனாயின் அவர்களைவெல்லுதல் அரிதென்ற கருத்தால் இவனிடஞ்சிறிதுபேதஞ்செய்யலுற்ற கருத்துப் புலப்படும். கரி - சாட்சியெ ன்னும்பொருளதாதலை "இந்திரனே சாலுங் கரி", "உய்த்திட்டுத் தேனிக் கரி" எனத் திருக்குறள் நாலடியார்களிலுங் காண்க. மறுத்ததற்குக் கரி - இங்கே நான்கனுருபு, தகுதிப்பொருளது. "பிதுஸ்ஸதகுணம்புத்ர:" என்ற படி தந்தையினும் பலமடங்கு கல்வி கேள்வி அஸ்திரசஸ்திரசாஸ்திரப்பயிற்சி முதலியவற்றிற் சிறந்தவனென்பது விளக்க, 'சிலைமுனிவன்சேயே' என்றார். 'நீயே கரி' எனப் பிரிநிலையேகாரங்கொடுத்துக் கூறியதனால், பிறரெவரும் இங்கு உண்மையுரைக்குந்தகுதியுடையவரில்லையெனப் புகழ்ந்துகூறியவாறு.விரதம்-

கொள்கைதவறாமல் ஒழுகுதல். பாண்டவர்கள் நிச்சயமாகச் சயித்திடுவாராதலால், நாட்டைக்குறித்து நூற்றுவரைக்கொல்வது தகுதியோ வென்று யாவரேனுங் கூறுவாராயின், அப்பொழுது, இராச்சியஞ்சிறிதுங்கொடேனென்று சொல்லித் துரியோதனன் மறுத்ததாகிய தகுந்தகாரணத்தை நீ யெடுத்துச் சொல்லவேண்டுமென்றபடியாம். சிரஞ்சீவியாதலால் இவன் அழியானென்று இவனைக் கரிபோக்கியது. ஏகாரங்களுக்கு ஏற்றபடி பொருளுணர்க.

உஉரு. ஆறுவுனதாண்மைக்குநிகரவனிதலத்தில்வேறுண்டோ
ஞானாதிபனேபோர்க்களத்தினாகக்கொடியோன்பணிந்துன்னை
சேனாபதியாகென்றாலுஞ்செலுத்தேனென்றுநீமறுத்தி [ச்
யானாலுய்வரைவருமற்றவர்பாலுனக்குமன்புண்டே.

(இ - ள்.) ஞான அதிபனே-அறிவுக்குத் தலைவனாக வுள்ளவனே! ஆறு - (எப்பொழுதும் நீங்காத, உனது ஆண்மைக்கு - உனதுபராக்கிரமத்துக்கு, நிகர் - சமானமாக, அவனி தலத்தில் - பூலோகத்தில், வேறு உண்டோ - வேறுயாருடையதேனும் பராக்கிரமமுள்ளதோ? [ஏதுவுமில்லை யென்றபடி]; போர் களத்தில் - யுத்தகளத்திலே, நாகம் கொடியோன் - பாம்புக்கொடியுடையதுரியோதனன், உன்னை —, பணிந்து - வணங்கி, சேனாபதி ஆகு என்றாலும் - சேனைத்தலைவனாவா யென்றுசொன்னாலும், செலுத்தேன் என்று - அச்சேனைத்தலைமையை நடத்தமாட்டேனென்று, நீ மறுத்தி ஆனால்-நீ தடுத்துவிடுவாயானால், ஐவரும் - பாண்டவரைந்துபேரும், உய்வர் - பிழைத்திடுவார்கள் [இல்லாவிடின் அரிதென்றபடி]; அவர்பால் உனக்கும் அன்பு உண்டே அப்பாண்டவர்பக்கல் உனக்கும் அன்புள்ளதன்றோ? (எ - று.)

இது, அசுவத்தாமனைநோக்கிக் கண்ணன் அருளிச்செய்தது. இதில், அசுவத்தாமனது யாவர்பராக்கிரமத்தினுஞ்சிறந்த மிகுந்தபராக்கிரமம் விளங்கும். மற்று - அசை. (உஉரு)

உஉசு. ஆயோதனத்திலடலரியேறனையான்றன்னையிவ்வாறு, மாயோனுரைத்துத்தன்விரலின்மணியாழியை மண்ணிடைவீழ்த்தான், சேயோனதனையெடுத்தவன்றன்செங்கைகொடுக்கவாங்காமற், றூயோயூர்கோள்பரிதிதனைச்சூழ்ந்ததகல்வான்மீதென்றே.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) இ ஆறு - இந்தப்படி, மாயோன் - கண்ணபிரான், ஆயோதனத்தில் அடல் அரி ஏறு அனையான் தன்னை - போரில் வலிமையையுடைய ஆண்சிங்கத்தைப்போன்றவனை அசுவத்தாமனை (நோக்கி), உரைத்து-கூறி, தன் விரலின் மணி ஆழியை - தனது கைவிரலிலுள்ள இரத்தினமிழைத்த மோதிரத்தை, மண்ணிடைவீழ்த்தான்-பூமியிலே (தானாகவிழுந்ததுபோலத் தோன்ற) நழுவவிட்டருளினான்; (அப்பொழுது), அதனை-அம்மோதிரத்தை, சேயோன்-(பலபராக்கிரமங்களில்)முருகக்கடவுள்போன்ற அசுவத்தாமன், எடுத்து - கையிலெடுத்து, அவன் தன் செம் கை கொடுக்க - அக்கண்ணபிரானது சிவந்தகையிலே கொடுத்திட, (அவ்வெம்பெருமானும்), வாங்காமல் - (அதனை உடனே கையில்) வாங்கிக்கொள்ளாமல் [வாங்குதற்குமுன்பு என்றபடி], (அவ்வசுவத்தாமனைநோக்கி), 'தூயோய்-பரிசுத்தியுடையவனே! அகல் வான்மீது - பரந்த ஆகாயத்தில், பரிதிதனை - சூரியனை, ஊர்கோள் - மண்டலம், சூழ்ந்தது-சுற்றிற்று', என்று-என்றுசொல்லி, (எ - று.)—'வான்வாய் நோக்க' என மேற்கவியோடு தொடரும்.

ஒருவனோடு ஒருவன் பேசிக்கொண்டிருக்கையில், ஒருவனதுகையிலுள்ளபொருள் கீழேநழுவிவிழுந்தால், அதனை மற்றொருவன்எடுத்துக்கொடுத்தலாகிய உலகவியல்புபற்றி, இங்கே கண்ணன்வீழ்த்தின மணியாழியை அசுவத்தாமன் எடுத்து அவன்கையிற் கொடுக்கலுற்றான். இங்கேகண்ணன்

செய்யும் மாயை, மேற்கவியில் விளக்கும். ஆயோதநம் - வடசொல். அநேக யானைகளை எளிதில்ஒருங்குஅழிக்கவல்ல சிங்கம்போலப் போரில் பலஅரசர்களை ஒருங்கே அழிக்கவல்லவீரனென்றற்கு,'அடலரியேறனையான்'என்றார். வட்டவடிவமாகவுள்ளதுபற்றி,ஆழிஎன்று மோதிரத்திற்குப் பெயர். சேயோன் - சேய்என்னும் உயர்திணைஒருமைப்பெயரின்மேல் ஆன்என்றஆண்பால் விகுதி தொடர்ந்து, ஆ ஓ வாயிற்று; இனி,செய்யோன்என்பது - சேயோன் என விகாரப்பட்டதென்றுங் கொள்ளலாம். சேயோன் என்பதற்கு - செம்மைக்குணமுடையோன் என்று உரைத்து,கபடமில்லாதவனென்று கருத்துக்கொள்வாரும் உளர். ஊர்ந்துகொள்வதுபற்றி, பரிவேஷத்திற்கு ஊர்கோள் என்று பெயர்; முதனிலைதிரிந்ததொழிலாகுபெய ரென்றாவது,கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்து கெட்டுப் பகுதி விகாரப்பட்ட தென்றாவது கொள்க: ஊர்தல் - சூழ்தல். (உஉசு)

உஉஎ. வரித்தாமரைக்கட்டிருநெடுமால் வான்வாய்நோக்கவரி விற்கைப், பரித்தாமாவுமாழியுடன்பரிதிவடிவந்தனைப்பார்த்தான், கிரித்தாழ்கவிகைக்கருங்கள்வன்கிளர்நூன்முனிவன்மைந்தனையும், பிரித்தானவனுஞ்சூளுற்றானென்றாரிருந்தபேரவையோர்.

(இ - ள்.) வரி - (சிவந்த) இரேகைகளையுடைய, தாமரை - செந்தாமரைமலர்போன்ற,கண் - திருக்கண்களையுடைய,திரு நெடு மால் - சிறந்த பெரியகண்ணபிரான்,வான் வாய் நோக்க - ஆகாயத்தினிடத்தைப் பார்க்க, வரி வில் கை பரித்தாமாவும் - கட்டமைந்த வில்லில் வல்ல கையையுடைய அசுவத்தாமனும், ஆழியுடன் - (தன்கையிற்கொண்ட கண்ணன்) மோதிரத்துடனே, பரிதி வடிவந்தனை பார்த்தான் - சூரியனதுஉருவத்தைப் பார்த்திட்டான்; (இச்செயல்களைநோக்கி), இருந்த பேர் அவையோர் - (அங்குப்) பெரியசபையிலிருந்தவர்களெல்லாரும், 'கிரி தாழ் கவிகை கரு கள்வன் - கோவர்த்தனமலையாகிய கவிந்த குடையை யேந்திய கருநிறமுள்ள மாயவனாகிய கண்ணன்,கிளர் நூல் முனிவன் மைந்தனையும் - விளங்குகின்ற முப்புரிநூலையுடைய துரோணாசாரியனது புதல்வனான அசுவத்தாமனையும்,பிரித்தான் - (துரியோதனனினின்று) பேதப்படுத்தினான்; அவனும் - அவ்வசுவத்தாமனும், சூள் உற்றான் - (ஏதோ) சபதஞ்செய்துகொடுத்தான்', என்றார் - என்று (தங்களுக்குள்) கூறினார்கள்; (எ - று.)

இங்குக் கண்ணன் அசுவத்தாமனிடத்து இயற்கைபோலச் செய்வித்த செய்கையால், பிறன்கைம்மோதிரத்தை அவன்கையினின்று தான் கையில் வாங்கிப் பூமியைத்தொடடு ஆகாயத்தைநோக்கிச் செய்வதாகிய ஒருசபதத்தை அசுவத்தாமன் கண்ணனுக்குச் செய்துகொடுத்ததாகப் பார்ப்பவர்க்குத் தோன்றிற்று. இங்ஙனம் கண்ணன் அசுவத்தாமனிடத்தில் கௌரவர் யாவர்க்கும் நம்பிக்கைகெடும்படி சூழ்ச்சிசெய்ததுபற்றியே, கீழ்க்கவியில் கண்ணனை 'மாயோன்' என்றும், இக்கவியில் 'கள்வன்' என்றுங் கூறினர். பரிதிஎன்று சூரியமண்டலத்துக்கும வடமொழியிற் பெயர். "நூலே கரக முக்கோல் மணையே, யாயுங்காலை யந்தணர்க்குரிய"எனத் தொல்காப்பியத்திற்கூறிய மரபுபற்றி,'கிளர்நூல்முனிவன்மைந்தன்'என்றார்.இனி,இத்தொடர்க்கு-விளங்குகின்ற வேதசாஸ்திரங்களையும் வில்வித்தையையும் உணர்ந்தவன் என்றும் உரைக்கலாம். இருந்த பேரவையோர் - பேரவையிருந்தோர் என விகுதிபிரித்துக் கூட்டுக. (உஉஎ)

[துரியோதனன், அசுவத்தாமனை இனிநம்பலாகா தென்றல்.]

உஉஅ. தனிவந்தகனுந்தூதனைப்போய்த்தானேயணுகித்தடஞ் சாப, முனிவன்புதல்வன்மோதிரந்தொட்டருஞ்சூண்முன்னர்மொழிகின்றா, னினிவந்துறவாய்நின்றாலுமெங்ஙன்றெளிவதிவனையெனத், தனிவந்தரசர்முகநோக்கிச்சொன்னானடிபேறன்னானே.

(இ - ள்.) (அப்பொழுது), இடி ஏறு அன்னான் - பேரிடியையொத்த [மிகக்கொடிய] துரியோதனன், தனி வந்து-(அதுநோக்கிக்) கோபம் மிகுந்து, அரசர் முகம் நோக்கி - மற்றையரசர்களதுமுகத்தைப் பார்த்து, 'தடசாபம் முனிவன்புதல்வன்-பெரியவில்வித்தையில்வல்ல துரோணாசாரியனது புத்திரனான அசுவத்தாமா, தனி வந்து அகலும் தூதனை-தனியேவந்து செல்கிற தூதனான கிருஷ்ணனை, தானே போய் அணுகி - தானாகவே போய்ச் சேர்ந்து, மோதிரம் தொட்டு - (அவனது) மோதிரத்தைக் கையில்வாங்கி, முன்னர்-எதிரில், அரு சூள்-அருமையானபிரதிஜ்ஞையை, மொழிகின்றான்-சொல்லுகிறவனானான்; (ஆகையால்), இனிவந்து உறவு ஆய்நின்றாலும்-(இவன்) இனிமேல் (நம்மிடம்) வந்து நட்புடையவனாய் நின்றாலும், இவனை எங்ஙன் தெளிவது - இவனை எவ்வாறு நம்புவது?' என - என்று, சொன்னான்.—.

தூரத்திலிருந்துபார்த்த துரியோதனனுக்குக் கண்ணன் அசுவத்தாமனைக்கூப்பிட்டதும், அசுவத்தாமன் பூமியினின்று மோதிரத்தையெடுத்ததும் முதலியன தெரியாவாதலால், இங்ஙனங்கூறினான். இனி, தானேயணுகி என்பதற்கு - நமதுகட்டளையில்லாமல் தானேசென்று என்றும் உரைக்கலாம். மேல் வீட்டுமபருவத்தில் "வீரசாபமுடனுரைக்கும் வெய்யசாபம்வல்லவத் தீரன்" என்றபடி துரோணன் வில்வித்தைவல்லமைமாத்திரமேயன்றிச் சாபானுக்கிரகசக்தியு முடையவனாதலால், 'தடஞ்சாபமுனிவன்' என்பதற்கு-பெரியசாபங்கொடுக்கவல்ல முனிவ னென்று முரைக்கலாம்; இரட்டுற மொழிதல். உறவு - சேர்தல்; உறவினனுக்குத் தொழிலாகுபெயர். ஏறு - ஆண்பாற்பெயர்; பெரியதையுஞ் சிறந்ததையும் ஏறென்றல், மரபு; பெரிய அலையை ஆணலை யென்றலுங் காண்க. (௨௨௮)

[அதுகண்டு அசுவத்தாமன் வருந்துதல்.]

௨௨௯. துளியார்மதுவின்வலம்புரித்தார்த் துரியோதனன்றான் சொல்லியதும், ஒளியாரவையிலவாள்வேந்தரொருவர்க்கொருவருரைத்தனவுங், களியானையனான்செவிப்படலுங்கலங்கிச்சித்தமிவரென்னைத், தெளியாவண்ணம்பேதித்தான் திருமாலென்றேசிந்தித்தான்.

(இ - ள்.) துளி ஆர் - துளித்தல் பொருந்திய, மதுவின் - தேனையுடைய, வலம்புரி தார் - நஞ்சாவட்டைப்பூமாலையையுடைய, துரியோதனன்—, தான்—, சொல்லியதும் - சொன்னவார்த்தையும், ஒளி ஆர் அவையில் - விளக்கம்பொருந்தின அச்சபையிலே, வாள் வேந்தர் - ஆயுதங்களையுடைய அரசர், ஒருவர்க்கு ஒருவர் உரைத்தனவும் - ஒருத்தருக்கு ஒருத்தர் சொன்ன வார்த்தைகளும், களி யானை அனான் செவி படலும் - மதக்களிப்பையுடைய ஆண்யானையைப்போன்றஅசுவத்தாமனது காதுகளிற் கேள்விப்பட்டவளவிலே,—(அவன்),—சித்தம் கலங்கி-மனம்கிலேகுலைந்து, 'இவர் என்னை தெளியாவண்ணம் - இவர்கள் என்னை நம்பாதபடி, திருமால் - கண்ணன், பேதித்தான் - மாறுபாடுசெய்தான்', என்றே சிந்தித்தான் - என்றெண்ணினான்.

[கண்ணன் விதுரன்மாளிகையிற்சென்று இந்திரனைநினைத்தல்.]

௨௩௦. தண்ணந்துளபமுடியோனுந்தனித்தங்கிருந்துதன்மனத்தி, னெண்ணம்பலித்ததெனமகிழ்ந்தேயிளையோன்றனக்குவிடைநல்கி, விண்ணின்றமரர்மிகத்துதிக்கவிதுரன்மனையின்மேவியபின்,றிண்ணங்கடவு - குலவரசன்வருமாறறிந்துசிந்தித்தான்.

(இ - ள்.) தண் அம் துளபம் முடியோனும் - குளிர்ந்த அழகிய திருத்துழாய்மாலையணிந்த முடியையுடைய கண்ணனும்,—இளையோன்தனக்கு விடை நல்கி-அசுவத்தாமனுக்குச் செலவுகொடுத்தனுப்பி, (அதன்பின்), தனித்து அங்கு இருந்து - அங்கு ஓரிடத்தில் தனியனாயிருந்து, தன் மனத்தின் எண்ணம் பலித்தது என மகிழ்ந்தே - தன்மனத்திற்கருதிய கருத்து முழுவதும்நிறைவேறிவிட்டதென்று மகிழ்ந்து[illegible]

துதிக்க விதுரன் மனையில் மேவிய பின் - ஆகாயத்திலே வந்துநின்று தேவர்கள் மிகுதியாகத்துதிசெய்யாநிற்க விதுரனது மாளிகையில் எழுந்தருளிய பின்பு, திண்ணம் கடவுள் குலம் அரசன் வரும் ஆறு அறிந்து சிந்தித்தான் - கலங்காதமனவுறுதியையுடைய தேவர்கூட்டத்துக்கு அரசனான இந்திரன் அருகில்வரும்படி ஆலோசித்து நினைத்தான்; (எ - று.)

'அங்குத்தனித்திருந்து' என்பதை 'விதுரன்மனையின்மேவியபின்' என்றதன்பின் எடுத்துக்கூட்டினும், 'திண்ணம்' என்பதை 'பலித்தது' என்பதனோடு கூட்டினும் அமையும். 'பலித்தது' என்றது, சாதியொருமையால். (உ௬0)

[கண்ணன் அங்குவந்த இந்திரனை நோக்கிக்கூறத்தொடங்குதல்.]

உ௬க. அந்தக்கணத்தில்வந்திறைஞ்சுமாகண்டலனைமுகநோக்கிக்
கந்தத்துளபமுடியோனுங்கண்ணுங்கருத்துங்களிகூரத்
தந்தத்தொழிலினரிசுமந்ததவிசினிடையேயுடனிருத்தி
முந்தக்கருதுகின்றவினைமுடிப்பானுபாயமொழிகின்றான்.

(இ - ள்.) அந்த கணத்தில் - அங்ஙனம்வரும்படி நினைத்த அந்நிமிஷத்திலேயே, வந்து—, இறைஞ்சும் - வணங்கின, ஆகண்டலனை - இந்திரனை, முகம் நோக்கி - முகத்தைப் பார்த்து, கந்தம் துளபம் முடியோனும் - நறுமணத்தையுடைய திருத்துழாய்மாலையைத் தரித்த திருமுடியையுடையவனான கண்ணனும், கண்ணும் கருத்தும் களி கூர - (தனது) கண்களும் மனமும் களிப்புமிக, தந்தம் தொழிலின் அரி சுமந்த தவிசின் இடையே உடன் இருத்தி - யானைத்தந்தத்தாலமைந்த விசித்திரவேலைப்பாட்டையுடைய சிங்கஞ்சுமந்தவடிவமாகச்செய்யப்பட்டதொரு ஆசனத்தினிடத்திலே உடனே (அவனை) வீற்றிருக்கச்செய்து, முந்த கருதுகின்ற வினை முடிப்பான் - பிரதானமாகத் தானினைக்கின்ற காரியத்தை நிறைவேற்றுதற்பொருட்டு, உபாயம் மொழிகின்றான் - தந்திரத்தைக் கூறுகின்றவனானான்; (எ - று.)—அதனை, மேல் ஆறுகவிகளிற் காண்க.

ஆகண்டலன் என்னும் வடசொல்லுக்கு - நன்றாக (ப் பகைவரை) த் துணிப்பவனென்று பொருள். கண்களிகூர்தல், பார்த்தலால். கருத்துக்களிகூர்தல், எண்ணம்முடியுமென்ற தெளிவால். தந்தம் - யானைமருப்பு. முந்தக்கருதுகின்ற - முன்னமே தொடங்கி எண்ணிவருகின்ற என்றும், தவிசினிடையே உடனிருத்தி - தானிருந்தஆசனத்திலேயே உடன்வீற்றிருக்கச்செய்து என்றும் உரைக்கலாம். முந்தக்கருதுகின்ற வினை - கர்ணனாற் போரில் அருச்சுனன் கொல்லப்படாதபடி காத்தல். கருதுகின்ற வினை - பெயரெச்சம் செயப்படுபொருள் கொண்டது. மைந்தனுக்கு நன்மைசெய்யும்பொருட்டுத் தந்தையான இந்திரனை வரவழைத்தான். (உ௬க)

[இதுமுதல்ஆறுகவிகள்-ஒருதொடர்: கண்ணன்இந்திரற்குஉபாயங்கூறுதல்.]

உ௬உ. கிரியின்சிறகையரிபடையாய்கேண்மோவாண்மைக்களமீதில்
வரிவெஞ்சிலைக்கைவிசயனுக்குமாறாய்முனிந்துவருகின்ற
வெரியுங்கனல்வாய்விடவரவொன்றிவனுக்குற்றபகையான
வரியின்புதல்வன்றனக்கொருபேரம்பாகியதாரறியாதார்.

(இ - ள்.) கிரியின் சிறகை அரி படையாய் - மலைகளின் இறகுகளை அறுத்திட்ட வச்சிராயுதமுடையவனே! கேண்மோ - (யான்சொல்வதைக்) கேட்பாயாக; ஆண்மை களம்மீதில் - பராக்கிரமத்தைக்காட்டுதற்கிடமான போர்க்களத்துமுனையில், வரி வெம் சிலை கை விசயனுக்கு மாறு ஆய் - கட்டமைந்த கொடிய வில்லையேந்திய கையையுடைய அருச்சுனனுக்குச் சத்துருவாகி, முனிந்து வருகின்ற (கடுகோபமாகக்) கறுக்கொண்டுவருகிற, எரியும் கனல் வாய் விடம் அரவு ஒன்று - பற்றியெரிகிற நெருப்புப்போன்ற

நுனியையுடையதொரு விஷப்பாம்பு, இவனுக்கு உற்ற பகை ஆன அரியின் புதல்வன்தனக்கு - இவ்வருச்சுனனுக்கு மிகுந்தபகையாளியாகிய சூரியபுத்திரனான கர்ணனுக்கு, ஒரு பேர் அம்பு ஆயது - ஒரு பெரிய அஸ்திரமாயமைந்திருப்பதை, அறியாதார் ஆர் - (உலகத்தில்) அறியாதவர் எவர்? [யாருமில்லை; மிகப்பிரசித்தமாக எல்லோருமறிவர் என்றபடி]; (எ - று.)

எரியுங் கனல்வாய் அரவு என்பதற்கு - (காண்டவவனத்தில்) எரிகிற அக்கினியினின்று எழுந்த அம்பென்றும் உரைக்கலாம். கேண்மோ, மோ- முன்னிலையசை. அரியென்னும் பலபொருளொருசொல, இங்கேசந்தருப்பத்திற்கேற்பச் சூரியனைக் குறித்தது: (இருளை) அழித்தல்பற்றி, ஹரியென்று சூரியனுக்கு வடமொழியிற பெயர். இனி, ஆய் என்பதை ஆகவென்பதன் திரிபெனக்கொண்டு, மாறாய் - சத்துருவாதற்கு என்றும் உரைக்கலாம்.

உ௱௩. கன்னன்விசயன்றனைக்கொல்லிற்கடற்பார்முழுதுங்கண் ணில்லா, மன்னன்புதல்வன்றனக்கேயாமொழிந்தோர்தாமுமுடிந்தி டுவார், முன்னஞ்சூதின்மொழிந்தபகைமுடியாதிருக்கினவர்க்கன்று, நின்னெஞ்சறியயானறியநினக்கேவசையுநிலையாமே.

(இ - ள்.) (அந்த அம்பைக்கொண்டு), கன்னன் விசயன்தனை கொல்லின் - கர்ணன் அருச்சுனனைக்கொன்றிட்டால், கடல் பார் முழுதும் - கடல் சூழ்ந்த பூலோகம்முழுவதும், கண் இல்லா மன்னன் புதல்வன் தனக்கே ஆம் - திருதராட்டிரபுத்திரனான துரியோதனனுக்கே உரியதாய்விடும்; (அன்றியும், அருச்சுனன் இறந்தால்), ஒழிந்தோர்தாமும் மடிந்திடுவார் - மற்றைப் பாண்டவரும் இறந்துவிடுவார்கள்; (இங்ஙனம்), முன்னம் சூதில் மொழிந்த பகை முடியாது இருக்கின் முன்னே சூதுபோர்நிகழ்ந்தபொழுது (அருச்சுனன் முதலியோர் கன்னன்முதலியோரைக் கொல்லுதாகக்) கூறின சபத வார்த்தை நிறைவேறாமலிருந்தால், அவர்க்கு அன்று (அருச்சுனன்முதலிய) அப்பாண்டவர்க்குமாத்திரமே பழியாகாது: நின் நெஞ்சு அறிய யான் அறிய - உன்மனம் அறியவும் நானறியவும், நினக்கே வசையும் நிலை ஆம் ஏ-(அருச்சுனனது தந்தையான) உனக்கே பழிப்பும் (என்றும் அழியாது நிச்சயமாய்) நிலைநிற்பதாகும்; (எ - று.)—ஈற்றேகாரம் - தேற்றம்.

இங்ஙனம் கண்ணன் இந்திரனைத் தந்திரமாகத் தன்வழிப்படுத்தற்குக் கூறுகிறான் வசையும் என்ற உம்மை-புத்திரசோகம்மாத்திரமேயன்றி யென்ற பொருளை விளக்குதலால எச்சப்பொருள தென்னலாம் (உ௱௩)

உ௱௪. கவசங்கனககுண்டலமென்றிரண்டுபுனையிற்கற்பாந்த, திவசம்பொரினுங்கன்னனுயிர்செகுப்பார்மண்ணிற்சில ருண்டோ, வவசங்கிளைஞருறத்துணைவரரற்றக்களத்திலடுகுரக்குத், துவசம்படைத்தோன்படும்பயந்ததுணைவாவின்னேசொன்னேனே.

(இ - ள். (தான்பிறந்தபொழுதே உடம்புடன் பிறந்த), கவசம் - கவசமும், கனக குண்டலம் - பொன்மயமான குண்டலமென்னுங் காதணியும், என்ற இரண்டு - என்று சொல்லப்பட்ட இவ்விரண்டையும், புனையின் தரித்திருப்பானானால், கற்ப அந்த திவசம் பொரினும் - கல்பகாலத்தின் முடிவுநாள்வரையிற் போர்செய்தாலும், கன்னன் உயிர் செகுப்பார் - கர்ணனது உயிரை ஒழிப்பவர், மண்ணில் சிலர் உண்டோ-பூமியில் (எவரேனுஞ்) சிலருளரோ? [எவருமில்லை யென்றபடி]; (ஆதலால்), கிளைஞர் அவசம் உற-பந்துக்கள் (சோகத்தாற்) பரவசத்தை யடையவும், துணைவர் அரற்ற - உடன்பிறந்தவர்கள் கதறிப்புலம்பவும், களத்தில் - போர்க்களத்தில், அடு குரக்கு துவசம் படைத்தோன் - (பகையை) அழிக்கவல்ல குரங்கின்வடிவத்தை யெழுதின கொடியைப்பெற்ற அருச்சுனன், படும் - (கன்னனால்) இறப்பான்; பயந்த துணைவா - (அவனைப்) பெற்றவனும் (எனக்குச்) சிநேகிதனுமாகிய

இந்திரனே! இன்னே சொன்னேனே - (அதனை முன்சாக்கிரதையாக) இப்பொழுதே (உன்னிடம்) கூறிவிட்டேன்; (எ - று.)

குரங்குக்கொடி - தேருடன் காண்டவதகனகாலத்தில் அக்கினிதேவனால் அருச்சுனனுக்கு அளிக்கப்பட்டது; பின்பு வீமசேனன் புட்பயாத்திரையாக அளகாபுரிக்குச் சென்றபொழுது, இடையில் அநுமானைக் கண்டு வணங்கி வேண்டிப் போர்க்களத்தில் அருச்சுனன் தேர்க்கொடியில் வந்து நின்று மகிழ்ந்து கூத்தாடும்படி வரம்பெற்றான். கல்பாந்தவிஸம்-வடசொற்றொடர். கல்பம் - பிரமனுயுள். கவசகுண்டலங்களுக்கு இத்தன்மை - சூரியனது வரத்தினால் அமைந்தது. இங்கே "உய்யவுடன்பிறந்த வொண்கவசங் கன்னனுடன், செய்யுஞ்செருவிற் சிதைக்கவல்லான்—ஐயனே, இந்திரனேயன்றி யிணையாருமில்லையே,வந்துபோர்செய்வார்கள் மற்று" என்ற பாரத வெண்பாவை யறிக. ந + வசம் = அவசம். (உரு௪)

உருரு. வல்லார்வல்லகலைஞருக்குமறைநூலவர்க்குங்கடவுளர்க்கு, மில்லாதவர்க்குமுள்ளவர்க்கு மிரந்தோர்தமக்குந் துறந்தவர்க்குஞ், சொல்லாதவர்க்குஞ்சொல்பவர்க்குஞ்சூழுஞ்சமயாதிபர்களுக்கு, மல்லாதவர்க்குமிரவிமகனரியதானமளிக்கின்றான்.

(இ - ள்.) வல்லார் வல்ல கலைஞருக்கும் - வல்லவர்களுள்ளும் வல்லவராகிய சாஸ்திரஞானமுடையோர்க்கும், மறை நூலவர்க்கும் - வேதமாகிய நூலில்வல்ல பிராமணர்களுக்கும், கடவுளர்க்கும் - தேவர்களுக்கும், இல்லாதவர்க்கும் - பொருளில்லாத ஏழைகளுக்கும், உள்ளவர்க்கும் - பொருளுள்ள செல்வவான்களுக்கும்,இரந்தோர்தமக்கும் - யாசித்தவர்களுக்கும், துறந்தவர்க்கும் - (சம்சாரப்பற்றுக்களை விட்ட துறவிகளுக்கும், சொல்லாதவர்க்கும் - (தமதுகுறையைச்) சொல்லாதவர்களுக்கும், சொல்பவர்க்கும் - (தமதுகுறையை எடுத்துச்) சொல்பவர்களுக்கும், சூழும் சமய அதிபர்களுக்கும் - ஆராய்ச்சிசெய்கின்ற வெவ்வேறுமதங்களுக்குத் தலைவர்களானவர்களுக்கும், அல்லாதவர்க்கும் - இவரொழிந்த மற்றுமெல்லோர்க்கும், (சிறிதும்வேறுபாடுஇல்லாமல்). இரவி மகன் - சூரிய புத்திரனான கர்ணன், அரிய தானம் அளிக்கின்றான் - (பிறராற்கொடுத்தற்கு) அரியனவான தானங்களைக் கொடுக்கிறான்; (எ - று.)

இனி, வல்லார்வல்லகலைஞருக்கு என்பதற்கு - வல்ல ஆசிரியரிடத்துக் கல்விபயின்றுவல்லவரான மாணுக்கர்களுக்கு என்றும், மறைநூலவர்க்கு என்பதற்கு - வேதங்களையும் சாஸ்திரங்களையும் அறிந்தவர்களுக்கு என்றும், துறந்தவர்க்கு என்பதற்கு - (ஆதரவாகவுள்ளவர்களால்) கைவிடப்பட்டவர்களுக்கு என்றும். (இரத்தலைத்)துறந்தவர்களுக்கு என்றும், சொல்லாதவர்க்கு என்பதற்கு - தன்னைப் புகழ்ந்துகூறாதவர்களுக்கு என்றும், சொல்பவர்க்கு என்பதற்கு - தன்னைப்புகழ்ந்துகூறுபவர்களுக்கு என்றும், அல்லாதவர்க்கு என்பதற்கு - பகைவர்க்கு என்றும் உரைப்பாருமுளர். பொருளிலாரையும்பொருளுடையாரையும், இல்லாதவர்உள்ளவர்என்பது - உலகவழக்கு;"உடையார்முனில்லார்போல்"எனத்திருக்குறளிலுங் காண்க.

உருசு. மைந்தற்குறுதிநீவேண்டின்வல்லேமுனிவர்வடிவாகிச்
சந்தப்பனுவலிசைமாலைத்தாகைரனைவிரைந்தெய்தி
யந்தக்கவசகுண்டலங்களளிப்பாயென்றுலவுடனுன்று
மிந்தப்புவியின்மறுத்தறியானுயிரேயெனினுமீந்திடுவான்.

(இ - ள்.) நீ--,மைந்தற்கு உறுதி வேண்டின் - உன்மகனான அருச்சுனனுக்கு நன்மையைப்பெற விரும்புவாயானால், வல்லே-விரைவிலே, முனிவர் வடிவு ஆகி - முனிவர்க்குரிய உருவத்தையுடையவனாய், சந்தம் பனுவல் இசை மாலை தான ஆகரனை - அழகியபாடல்களிலமைந்த கீர்த்திவரிசையை

புடைய தானகுணத்துக்கு இருப்பிடமான கர்ணனை,விரைந்து எய்தி-துரிதமாகஅடைந்து,அந்த கவச குண்டலங்கள் அளிப்பாய் என்றால் - அவனுடம்பிலுள்ள கவசத்தையும் குண்டலங்களையும் கொடுத்திடுவாயென்று வேண்டினால், இந்த புவியில் அவன் ஒன்றும் மறுத்து அறியான் - இந்தவுலகத்தில் அக்கன்னன் ஒருபொருளையும்(கொடுக்கஇயலாதென்றுசொல்லி) மறுத்தறியமாட்டான்;உயிரே எனினும் ஈந்திடுவான் -(இரக்கப்படுவது தனது) உயிரேயானாலும் (அதனையுந் தவறாது)கொடுத்திடுவான்; (எ - று.)

கொடுப்பானதுஉயர்வும் பெறுவானதுஇழிவுந்தோன்ற,'ஈந்திடுவான்' என்றது;இங்கே "ஈதாகொடுவெனுமூன்றுமுறையே, இழிந்தோனுப்போன்மிக்கோனிரப்புரை"என்றதைக் காண்க. தாநாகரன-தீர்க்கசந்திபெற்ற வடசொற்றொடர். உரையும் பாட்டும் என இருவகைப்பட்ட புகழில், பாட்டின்புகழ் இவனுக்குச் சிறப்பாக அமைந்துள்ளவாற்றை 'சந்தப்பனுவலிசைமாலை' என்ற அடைமொழியால் விளக்கினார்; இந்தஅடைமொழிக்கு - பலசந்தங்களையுடையநூல்களாகிய கவிமாலைகளையேற்ற என்றுஉரைப்பாருமுளர். உயிரினும்இனிதாய் இன்றியமையாதது எவர்க்கும் வேறொன்று இன்றாதலால்,'உயிரேயெனினும்' என்ற ஏகாரமும், உம்மையும் - உயர்வு சிறப்பு.அந்தணர்க்குஉரிய அறுவகைத்தொழிலில், இரத்தலும் ஒன்றாதலால், அதற்குரிய அவ்வடிவமாகப் போகச் சொன்னான். (உகூ௬)

உகூஎ. இரண்டுமவன் பாலீகவரினிருந்தேரூர்ந்திப்படியரசர்
திரண்டுவரினும்வெஞ்சமரிற்றிண்டேர்விசயனெதிர்நில்லார்
முரண்டுபொருவிற்கன்னனுந்தன்முன்னேயெய்திமுடிசிதறிப்
புரண்டுமறியுமெனவணங்கிப்புத்தேளரசன்போகின்றான்.

(இ - ள்.) இரண்டும் - (மேற்கூறிய கவச குண்டல மாகிய) இரண்டு பொருளையும்,அவன்பால் நீ கவரின்-அக்கன்னனிடத்தினின்று நீ பெற்றுக்கொண்டுவந்தால்,இ படி அரசர் - இக்தப்பூலோகத்திலுள்ள அரசர்களெல்லோரும்,இருந் தேர் ஊர்ந்து - பெரியதேரின்மேலேறிச்செலுத்தி, திரண்டுவரினும் - (ஒருதொகையாகக்) கூடிவந்தாலும், வெம் சமரில் - கொடியயுத்தத்தில்,திண் தேர் விசயன் எதிர் நில்லார் - வலியஇரதத்தையுடையஅருச்சுனனுக்கு எதிரில் நிற்கமாட்டார்கள்; முரண்டு பொரு வில் கன்னனும் - பகைத்துப்போர்செய்கிறவில்வல்லஅக்கர்ணனும், தன் முன்னே எய்தி - அவ்வருச்சுனனுக்குஎதிரில்வந்து,முடி சிதறி - (அவனம்பால் தன்)தலை சிதறப்பெற்று,புரண்டு-கீழ்விழுந்துஉருண்டு,மறியும் இறப்பான், என - என்று (ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி உபாயங்) கூற,(உடனே), புத்தேள் அரசன் - தேவர்களுக்குஅரசனான இந்திரன்,வணங்கி-(கண்ணபிரானை) நமஸ்கரித்து,போகின்றான்-(கன்னனிடஞ்)செல்பவனானான்; (எ - று.)

கவரின் - தந்திரமாகக் கிரகித்துவிட்டால். முரண்டென்னுந்தெரிநிலைவினையெச்சத்தில், முரண்-வினைப்பகுதி. புத்தேள்-தேவன்; இதன்பன்மை-புத்தேளிர் என நிற்கும். (உகூஎ)

வேறு.

[இந்திரன் கிழவடிவங்கொண்டு கர்ணன்மாளிகைவாயிலை யடைதல்.]

உகூஅ. தண்டுதாளெனக்குனிந்துடலலமரத்தாளிணைதளர்ந்து தள்ளாடக், கண்டியாவருங்கைதொழுக்கவித்தகைக்குடையுடன்கங்கைநீர்நுரையை, மொண்டுமேலுறச்சொரிந்ததாமெனநரைதிரையுடன்மூப்பொருவடிவங்,கொண்டதாமெனவொருமுனியாகியேகொற்றவன்வாயில்சென்றடைந்தான்.

(இ - ள்.) தண்டு தாள் என - (நடக்கும்ஆற்றல்குறைதலால்முன்னே ...

வும், உடல் குனிந்து அலமர - உடம்பு கூன்வளைந்துதளரவும், தாள் இணை தளர்ந்து தள்ளாட - இரண்டுகால்களும் சோர்வையடைந்து (நன்குநடக்க மாட்டாமல்) நடுங்கவும், யாவரும் கண்டு கை தொழ - எல்லோரும்(தனது வ்ருத்தவேதியவடிவத்தைப்)பார்த்து நன்குமதித்துக் கைகூப்பிவணங்கவும், கவித்த கை குடையுடன் - மேலே கவியுமாறு பிடித்த சிறியகுடையுடனே, கங்கை நீர் நுரையை மொண்டு மேல் உற சொரிந்தது ஆம் என நரை - கங்காநதியினது நீரின் நுரையைமொண்டெடுத்து மேலேமிகுதியாகச்சொரிந்ததுபோல வுள்ள வெள்ளை மயிர்களும், திரையுடன் - தோல்சுருங்குதலும் ஆகிய இவற்றுடனே, மூப்பு ஒரு வடிவம் கொண்டது ஆம் என - முதுமைப் பருவமே ஒருபுருஷரூபத்தைக்கொண்டாற்போன்றது மென்று சொல்லும் படி, ஒரு முனி ஆகி - ஓர் அந்தணனதுவடிவங்கொண்டவனாய், (இந்திரன்), கொற்றவன் வாயில் சென்று அடைந்தான் - வெற்றியையுடையகர்ணனது வீட்டின்வாயிலைப் போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

"தண்டுகாலாவூன்றியூன்றித் தள்ளிநடவாமுன்" என்றார் திருமங்கை யாழ்வாரும். கங்காநதி இயல்பில் வெண்ணிறமானநீரையுடைய தாதலால், நரையின் மிக்க வெண்மைக்கு அதன் நுரையை உவமையெடுத்துக்கூறினர். அலமர என்னுஞ் செயவெனெச்சத்தில், அலமா - பகுதி. நரைப்பது, நரை; திரைப்பது, திரை: வினைமுதற்பொருள்விகுதி புணர்ந்துகெட்ட பெயர்கள். நரைத்தல் - மயிர்வெளுத்தல்: திரைத்தல் - தோல்சுருங்குதல்; இவையெல்லாம், முதுமைப்பருவத்தின் இயற்கை. மூப்பு - மூத்தல், பிராயம்முதிர்தல்: மூவென்னும்வினைப்பகுதியடியாப்பிறந்த தொழிற்பெயர். இப்பாட்டில், தன்மைநவிற்சியணி,மூன்றுஉவமைகளை அங்கமாகக்கொண்டு வந்தது. "நூலே கரகம்" என்ற சூத்திரத்து 'ஆயுங்காலை'என்றதனால் குடைமுதலிய சிலவும் அந்தணர்க்குஉரியனவென்று கொள்ளப்பட்டவாறும்,"எறித்தருகதிர்தாங்கி யேந்தியகுடைநீழல்" எனக் கலித்தொகையிற்கூறப்பட்டவாறுங் காண்க. "தண்டொடுபிடித்ததாழ்கமண்டலத்துப், படிவவுண்டிப்பார்ப்பனமகனே" என்றபடி அந்தணர்க்குத் தண்டும் உரியதாம்.

இதுமுதற் பதின்மூன்றுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஈற்றுச்சீரும் மாச்சீர்களும், மற்றவையைந்தும் விளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (உரு அ)

[கர்ணன் உள்ளேவந்த இந்திரனை வணங்கி உபசரித்தல்.]

உருகூ. அடுத்ததானமும்பரிசிலுமிரவலர்க்கருளுடன்முற்பகல
ளவுங், கொடுத்துநாயகன்புகுந்தனனாளைநீர்குறுகுமினென்றவன்
கோயிற், றடுத்தவாயிலோர்மீளவுமுணர்த்தலிற்றலைவனுந்தருகென
விரைவின், விடுத்தநான்மறைமுனியைமுன்காண்டலும்மேவந்தனுந்
தொழுதடிவீழ்ந்தான்.

(இ - ள்.) (இங்ஙனம் இந்திரன் பெருங்கிழவனாய் மிகமெதுவாகச் சிரமப்பட்டுச் சென்றுசேர்கையில் காலதாமதப்பட்டதனால்), 'இரவலர்க்கு - யாசகர்களுக்கு, அடுத்த தானமும் - செய்தற்குரிய தானங்களையும், பரிசிலும் - வெகுமானங்களையும், அருளுடன் - கருணையுடனே, முன் பகல் அளவும் - பகலின்முற்பொழுது கழியும்வரையிலும், கொடுத்து—, நாயகன் - எங்கள்தலைவனான கர்ணன், புகுந்தனன் - உள்ளே சென்றுவிட்டான்; (ஆதலால்), நாளை நீர் குறுகுமின் - நாளைக்கு நீர் வாரும்,' என்று - என்றுசொல்லி, தடுத்த - (முதலில்) தடைகூறின, அவன் கோயில் வாயிலோர் - அக்கன்னனது அரண்மனையின் வாசற்காவலாளர்கள், மீளவும் - மறுபடிசென்று, உணர்த்தலின் - (இந்தவ்ருத்தவேதியனது வருகையைக் கன்னனுக்குத்) தெரிவித்ததனால், தலைவனும் - எசமானனான கர்ணனும், தருக என - (அவரை உள்ளே) வரவிடுக வென்று சொல்ல, விரைவின் விடுத்த - துரிதமாகஉள்ளேயனுப

த்துவந்துவிடப்பட்ட, நால் மறை முனியை - நான்குவேதங்களும்வல்ல அம்முனிவனை. முன் காண்டலும் - எதிரிற்பார்த்தவளவிலே, வேந்தலும்-கர்ண மகாராசனும், தொழுது - கைகூப்பி அஞ்சலிசெய்து, அடி வீழ்ந்தான்-(அவனது) திருவடிகளில் வீழ்ந்து (சாஷ்டாங்கமாக) நமஸ்கரித்தான்; (எ - று.)

தடுத்தவாயிலோர் மீளவும்உணர்த்துதற்குக் காரணம், இவனதுமூப்பின் முதிர்ச்சியைநோக்கியெழுந்த இரக்கம்.நீர்குறுகுமின்-சிறப்புப்பன்மை. முற்பகல் - பின்முன்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை:இலக்கணப் போலியெனவும்படும். முற்பகல் - பகலின்முன்பாதி. முன்னிடத்திலிருந்து கொடுத்தல் இயல்பாதலால்,'கொடுதுப்புகுந்தனன்'என்றார். மனையினுள்ளேயுள்ள பிரபு எவ்வளவுவள்ளன்மையுடையனாயினும் வாயில்காவலாளர் வருகிற யாசகரை உட்செல்லவொட்டாமல் தடுத்துவிடுதலாகிய உலகவியல்பு, இங்கே காணப்படுகின்றது. (௨௫௯)

['நீவிரும்பியவற்றைக் கொடுப்பேன்' என்று கர்ணன் இந்திரனுக்குக் கூறுதல்.]

௨௬௦. என்னமாதவம்புரிந்தனன்பரிந்துநீயீண்டெழுந்தருளுதற்கென்று, பொன்னினாசனத்திருத்திமெய்யருளுடன்பூசையுமுறைமுறைபுரிய, வன்னவேதியன்றளர்ந்தவென்னடையினாலானதேபிற்பகலென்று, சொன்னவேலையினகைத்துனக்களிப்பனீசொன்னவையாவையுமென்றான்.

(இ - ள்.) (கர்ணன் நமஸ்கரித்தபின் அவ்வந்தணனைப் பார்த்து),'நீ—, ஈண்டு - இவ்விடத்தில், பரிந்து - அன்புகொண்டு, எழுந்தருளுதற்கு-கருணையோடு வருவதற்கு, என்ன மா தவம் புரிந்தனன்-(நான்) என்னபெருந்தவத்தைச் செய்துள்ளேனோ?' என்று - என்று (உபசாரவார்த்தை) கூறி, பொன்னின் ஆசனத்து இருத்தி-(அப்பிராமணனைப்) பொன்மயமானதொருஆசனத்திலே யெழுந்தருளப்பண்ணி, மெய் அருளுடன் - உண்மையான கருணையுடனே, பூசையும் - (அதிதியாய்வந்த அந்தணனுக்குச்செய்தற்குரிய) உபசாரங்களையும், முறை முறை புரிய - நூல்முறைமைப்படி செய்ய, (அப்பொழுது), அன்ன வேதியன் - அந்தப்பிராமணன், 'தளர்ந்த என் நடையினால் - மிகத்தளர்ச்சிபெற்றுள்ள எனதுநடையினாலே.பின் பகல் ஆனதே - (இங்கு நான்வந்துசேர்தற்குப்) பிற்பகற்பொழுதாய்விட்டது,' என்றுசொன்னவேலையின்-என்றுசொன்னபொழுது, (கர்ணன்),நகைத்து-சிரித்து,நீசொன்னவை யாவையும் உனக்கு அளிப்பன் என்றான் - ('காலங்கடந்தாலும் இப்பொழுது) நீ விரும்பிச்சொன்ன பொருள்களையெல்லாம் (உனக்கு நான்) கொடுப்பேன்' என்று கூறினான்; (எ - று.)

முற்பகல்கழிந்துவிட்டது காரணமாக இவன் வேண்டியபொருளைக் கொடுக்கமாட்டான் என்று தன்பக்கல் இந்திரன் இகழ்ச்சியான கருத்துக் கொண்டமையை நோக்கி கர்ணன் சிரித்தான்; மிகுந்த அன்பால் முகமலர்ந்துசிரித்தானென்றுமாம்: அன்றி,பரிகாசமாகச் சிரித்தானெனக் கொள்ளலாகாது;அது வள்ளன்மைக்குக் குறைவுபாடாதலால். இரப்பானதுசிறுமையும் ஈவானதுபெருமையுந் தோன்ற, 'மெய்யருளுடன்'எனப்பட்டது. மூப்புடைய பூதேவனது சிறப்பை நோக்கி, 'பூசை' என்றார்; பூசை-ஆராதனை.

[கர்ணனது சபதமொழி.]

௨௬௧. அருத்தியீதல்பொற்சுரதருவினுக்குமற்றரிதுநீயளித்தியோவென்று, விருத்தவேதியன்மொழிந்திடநகைத்துநீமெய்யுயிர்விழைந்திரந்தாலும், கருத்தினோடெனக்களித்திலேனெனினெதிர்கறுத்தவர்கண்ணிணைசிவப்ப, வுருத்தபோரினிற்புறந்தருகிருபர்போயுறு[illegible]

(இ - ள்.) 'அருத்தி ஈதல் - (எனக்கு)விருப்பமான பொருளைக் கொடுத்தல், பொன் சுர தருவினுக்கும் - பொன்மயமான தேவதருவாகிய கற்பக விருட்சத்துக்கும், அரிது - அருமையானதாம்; (அங்ஙனமிருக்க), நீ அளித்தியோ-நீ கொடுத்திடுவாயோ?' என்று,—விருத்த வேதியன் - அந்தக்கிழப் பிராமணன், மொழிந்திட - சொல்ல,—(கர்ணன்),—நகைத்து - சிரித்து, 'மெய்உயிர் நீ விழைந்து இரந்தாலும்-எனது உடம்பிலுள்ள உயிரை நீ விரும்பிக்கேட்டாலும்,கருத்திேனாடு-மனசசம்மதியுடனே, உனக்கு அளித்திலேன் எனின் - உனக்குக்கொடாமற்போவேனானால், (யான்),—எதிர் கறுத்தவர் - எதிரிற்கோபித்துநின்ற பகைவர்கள்,கண் இணை சிவக்க-இரண்டுகண்களுஞ் சிவக்கும்படி, உருத்த-உக்கிரமாகச்செய்கிற, போரினில் - யுத்தத்தில், புறந்தரு - முதுகுகொடுத்துச்செல்கிற,நிருபர் - அரசர்கள்,போய் உறு - (மறுமையிற்) போய்ச்சேர்கிற. பதம் - துர்க்கதியை, உறுவன் - அடைவேன்', என்று உரைத்தான் - என்று கூறினான்; (எ - று)—மற்று-வினைமாற்று.

கருத்தின்றிக்கொடுத்தல், சிறப்புடையதானமாகாது. கருமையென்ற பண்படி திரிந்த வினைப்பகுதித்தன்மைப்பட்ட கறுத்தல்என்பது-ஒருவகை நிறத்தை மாத்திரமே யன்றிக் கோபத்தையும் உணர்த்துவதாதலே, "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப்பொருள"என்னுந் தொல்காப்பியத்தாலும் அறிக. வீரர்க்குப் போரிற்புறந்தருதல் மிகப்பாவம். இங்கே, நகைத்தல் - தன்னைப் பிறன் இகழ்ந்தமைகாரணமாக வந்தது. அளித்தியோ, ஓகாரம் - வினாவோடு எதிர்மறை குறிக்கும். விருத்தன் - வ்ருத்தன்: வடமொழி. (உசக)

[கர்ணன் இந்திரனுக்குக் கவசகுண்டலங்களை அளித்தல்.]

உசஉ. வந்தவந்தணன்கவசகுண்டலங்களைவாங்கிநீவழங்கெனக்கென்னத், தந்தனன்பெறுகெனவவன்வழங்கவிண்டலத்திலோர் தனியசரீரி, யிந்திரன்றனைவிரகினான்மாயவனேவினான்வழங்கனீயெனவுஞ், சிந்தையின்கணோர்கலக்கமற்றளித்தனன்செஞ்சுடர்த்தினகரன்சிறுவன்.

(இ - ள்.) (அதுகேட்டு), வந்த அந்தணன் -(இரப்பதற்கு)வந்த அந்தப்பிராமணன்,கவச குண்டலங்களை வாங்கி நீ எனககுவழங்கு என்ன -('கூடப்பிறந்த) கவசத்தையுங் குண்டலங்களையும் (உன்உடம்பினின்று) கழற்றி நீ எனக்குக்கொடு' என்று கேட்க, (உடனே),அவன் - அக்கன்னன்,தந்தனன் பெறுக என வழங்க - 'கொடுத்துவிட்டேன் பெற்றுக்கொள்வாயாக' என்று சொல்லி (அவற்றை அவனுக்கு)க் கொடுக்கலுறுகையில்,—விண் தலத்தில் - ஆகாயத்தினிடத்திலே,ஓர் தனி அசரீரி - ஒப்பில்லாததொரு ஆகாயவாணி, (கன்னனைநோக்கி),'மாயவன் இந்திரன் தனை விரகினால் ஏவினான்-கண்ணன் இந்திரனை வஞ்சனையால் (இங்ஙனம் இரக்க) அனுப்பினான்; (ஆதலால்), நீ வழங்கல் - நீ கொடுத்திடாதே,'எனவும்-என்றுசொல்லவும்,—(அதுகேட்டு இல்லையென்னாமல்), செம் சுடர் தினகரன் சிறுவன் - சிவந்தகிரணங்களையுடைய சூரியனதுபுத்திரனான கர்ணன்,சிந்தையின்கண் ஓர் கலக்கம் அற்று-மனத்திற்சிறிதுகலங்குதலுமில்லாமல், அளித்தனன்-(அவனுக்கு அவற்றைக்) கொடுத்திட்டான்; (எ - று.)

இதனால், கர்ணனது வரம்புகடந்த வள்ளன்மை விளக்கும். வடமொழி முடிபான கவசகுண்டலமென்னும்உம்மைத்தொகை, பன்மையீறுபெற்றது. தந்தனன் - தெளிவும் விரைவும் பற்றி, எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. அசரீரி - உடம்புடையதல்லாத சொல்தெய்வம்; ஒருருவமுங் கண்ணுக்குப் புலப்படாமற் பேச்சுமாத்திரங் கேட்பது.சரீரம்-உடம்பு: அதனையுடையது, சரீரி; அதன்எதிர்மொழி-அசரீரி.இது, இங்குச் சூரியனேயவலால் இங்ஙனங் கூறிற்று. இது உண்மையை யுணர்ந்து எடுத்துக்கூறின உயர்வை நோக்கி, இதற்கு 'தனி' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. வழங்கல் - எதிர்

மறையொருமையேவல்; எதிர்மறைவியங்கோளெனினும் அமையும்: அல் - விகுதி. சூரியனது தொழில்எதனாலுந் தடைப்படாததுபோல, இவனது தொழிலும் எதனாலுந் தடுக்கப்படாதது என்பார், 'தினகரன்சிறுவன்' என்றார்.

[இதுவும், மேற்கவியும்-குளகம்: இந்திரன் கர்ணனுக்கு வேல்கொடுத்தல்.]

உ௪௫. அண்டர்யாவருமலர்மழைபொழிந்தனரந்தரதுந்துபியார்ப்பக், கொண்டல்வாகனன்கொண்டமெய்யொழிந்துதன்கோலமெய்யுடன்வெளிநின்றான், கண்டுமாமனமுருகியேகளித்திடுங்கன்னனுக்கநெடுங்கடவுள், மண்டுபோரினில்வயந்தருமிதுவெனமற்றொருகொற்றவேலெடுத்தே.

(இ-ள்.) (அங்ஙனங்கொடுத்தபொழுது), அண்டர் யாவரும் - தேவர்களெல்லோரும், அந்தர துந்துபி ஆர்ப்ப - ஆகாயத்திலுள்ள தேவதுந்துபி வாத்தியங்கள் முழங்க, அலர் மழை பொழிந்தனர் - புஷ்பவருஷத்தைச் சொரிந்தார்கள்; கொண்டல் வாகனன் - மேகத்தை வாகனமாகவுடைய இந்திரன், கொண்ட மெய் ஒழிந்து-(தான் கபடமாக) எடுத்த கிழப்பிராமணவடிவம் நீங்கி, தன் கோலம் மெய்யுடன் வெளிநின்றான்-தனது அழகிய இயற்கையாகிய வடிவத்துடனே வெளிப்பட்டுநின்றான்; கண்டு-(அங்ஙனம் தேவராசனான இந்திரன் தன்னிடம்வந்து இரந்துபெற்றதைப்) பார்த்து, மா மனம் உருகி-பெருமைக்குணமுடைய தனது மனங் கரைந்து, களித்திடும் - மிகமகிழ்கிற, கன்னனுக்கு - கர்ணனுக்கு, அ நெடுங் கடவுள் - அந்தச் சிறந்ததேவனான இந்திரன், மற்று - பின்பு, மண்டு போரினில் வயம் தரும் இது என - 'கொடுமையாகிய மிக்க யுத்தத்தில் வெற்றியைக்கொடுக்கும் இவ்வாயுதம்' என்று கூறி, ஒரு கொற்றம் வேல் எடுத்து - வெற்றியைத்தருவதொரு வேலாயுதத்தைக் கையிலெடுத்து, (எ - று.)—'கொடுப்ப' என மேற்கவியோடு தொடரும்

அலர்மழைபொழிதல் - பூக்களை மழைபோல மிகுதியாகச்சொரிதல். அந்தரதுந்துபி-வடசொற்றொடர். வாஹநம்-வகிப்பதென்றுபொருள்; வகித்தல் - சுமத்தல். காளமேகத்தை இந்திரனுக்கு வாகனமெனக் கூறுதல், கவிசமயம். தெய்வத்தன்மையால், நினைத்தமாத்திரத்தில் வேல் இந்திரன் கைக்கு வந்தது. யாவரும் மலர் என்றும் பிரிக்கலாம். (உ௪௫)

உ௪௬. வெலற்கருந்திறல்விசயன்மேலொழித்துநீவெஞ்சினமடங்கல்போனெஞ்சிற், கலக்கமொன்றறப்பொருதிறல்புனைந்திடுகடோற்கசக்காளைதன்னுயிரே, யிலக்குவந்தெதிர்மலைந்தபோதிதற்கெனவேவெனமறையையுமியம்பிச், சொலற்கருஞ்புகழ்ச்சுரபதிகெடுப்பவத்தோன்றலுந்தொழுதுகைக்கொண்டான்.

(இ - ள்.) '(இந்த வேலாயுதத்தை), நீ—, வெலற்கு அருந் திறல் விசயன் மேல் ஒழித்து - (எவராலும்) வெல்லுதற்கு முடியாத வல்லமையையுடைய அருச்சுனன்மேற் பிரயோகிப்பதை விட்டு, வெம் சினம் மடங்கல்போல் - கொடியகோபத்தையுடைய ஆண்சிங்கம்போல, நெஞ்சில் கலக்கம் ஒன்று அற - மனத்தில் நிலைகலங்குதல் சிறிதுமில்லாமல், பொரு - போர்செய்கிற, திறல் - வல்லமையை, புனைந்திடு - மேற்கொண்டுள்ள, கடோற்கசன் காளை தன் - (வீமன்மகனான) கடோத்கசனென்னும் இளவீரனது, உயிரே - பிராணனே, எதிர் வந்து மலைந்த போது - (அவன்) எதிரில் வந்து போர்செய்தபொழுது, இதற்கு இலக்கு என-இந்தஆயுதத்துக்குக்குறியாக இருக்க, (இதனை அவன்மீது) பிரயோகிப்பாய்,' என-என்றுசொல்லி, மறையையும் இயம்பி - (அதற்குரிய) மந்திரத்தையும் உபதேசித்து, சொலற்கு அரும் புகழ் சுரபதி - (எவராலுஞ்)சொல்லுதற்குமுடியாத கீர்த்தியையுடைய தேவராச

னான இந்திரன், கொடுப்ப - (அந்தவேலைக்) கொடுக்க, அ தோன்றலும் - அந்தக்கர்ணராசனும், தொழுது - (இந்திரனை)வணங்கி,கைக்கொண்டான் - (அவ்வாயுதத்தைப் பணிவோடு) பெற்றுக்கொண்டான்; (எ - று.)

வீமசேனன், மற்றைப்பாண்டவர்நால்வரையுங் குந்தியையுந் தோளிலேந்திக்கொண்டு, அரக்குமாளிகையினின்று தப்பிப்பிழைத்து, இடிம்பவனமென்னும் பெருங்காட்டை யடைய, அங்கு இடிம்பியென்னும் இராக்கதப்பெண் வந்து வீமனைக்கண்டுகாதலித்துவிவாகஞ்செய்துகொள்ளவேண்டுகையில், அவளது அண்ணனான இடிம்பனென்னும் இராக்கதன் வந்து வீமனையெதிர்த்துப்போர்செய்ய, வீமன் தனதுவலிமையால் அவனைக் கொன்றுதள்ளிவிட்டு, அவளை மணந்து, அவளிடம் கடோத்கசனென்னுங்குமாரனையுண்டாக்கினனென்ற வரலாற்றை,கீழ் வேத்திரகீயச்சருக்கத்திற் காண்க. அக்கடோற்கசன் பாண்டவர்க்குத் துணையாகவந்து போர்செய்யுமாறும், அப்பொழுது இவ்வேலினால் கன்னன் அவனைக்கொல்லுமாறும், மேற் பதினான்காம்போர்நாளிரவில் நிகழும். மடங்கல்-பிடரிமயிர் மடங்குதலையுடையதெனத் தொழிலாகுபெயராகிய காரணக்குறியென்பர்; அடிக்கடிபின்னே திரும்பிப்பார்ப்ப தென்றதனால் வந்த பெய ரென்பாரு முளர். இலக்கு - லக்ஷ்யம் என்னும் வடசொல்லின் திரிபு. (உ௪௪)

[இந்திரன் கண்ணனிடம் சென்று நடந்ததைக் கூறுதல்.]

உ௪௫. நிரந்தரம்புகழ்நிலைபெறுங்கன்னனை நெஞ்சுறமகிழ்ந்தவணிறுத்திப், புரந்தரன்பசுந்தண்டுழாயணிந்திடும்புயல்வணனிருந்துழிப்போந்தே,யிரந்துசென்றுதான்மொழிந்ததுமவ்வளவீந்ததுமாங்கவற்கிசைத்தான், வரந்தருந்திருமாலதைவினவியவ்வாசவன்றனக்குரைவழங்கும்.

(இ - ள்.) (பின்பு), புரந்தரன் - இந்திரன், நெஞ்சு உற மகிழ்ந்து - மனம் மிகமகிழ்ச்சிபெற்று, நிரந்தரம் புகழ் நிலைபெறும கன்னனை அவண் நிறுத்தி - இடைமாறாமல்[எப்பொழுதும்]கீர்த்திநிலைபெற்ற கர்ணனை அவ்விடத்திலே நிற்கச்செய்து [தான் விடைபெற்றுக்கொண்டு], பசுந் தண் துழாய் அணிந்திடும் புயல் வணன் இருந்த உழி போந்து - பசுநிறமான குளிர்ந்த திருத்துழாய்மாலையைத் தரித்திட்ட காளமேகவர்ணனாகிய கண்ணபிரான் எழுந்தருளியுள்ள இடத்தை அடைந்து,—தான் சென்று இரந்து மொழிந்ததும் - தான் (கன்னனிடம்)போய் யாசித்துச்சொன்னதையும்,அவ்வளவு ஈந்ததும் - அம்மாத்திரத்தில் (அவன் தனக்குக்) கொடுத்ததையும், ஆங்கு அவற்கு இசைத்தான் - அவ்விடத்தில்[அப்பொழுது] அக்கண்ணனுக்குக் கூறினான்; வரம் தரும் திரு மால் - (வேண்டுவோர்க்கு வேண்டிய) வரங்களையெல்லாங் கொடுத்தருளுகிற திருமகள்கொழுநனான கண்ணன், அதை வினவி - அந்த இந்திரன்வார்த்தையைக் கேட்டு, அ வாசவன்தனக்கு உரை வழங்கும் - அந்தஇந்திரனுக்குத் தான் ஒருவார்த்தை கூறுவான்; (எ-று.)—அதனை,அடுத்த கவியிற் காண்க.

புயல்வண்ணன் இருந்தவுழி - விதுரன்மாளிகை. மனம்மிகமகிழ்தற்குக் காரணம், கண்ணன்கட்டளைப்படியும் தான்விரும்பினபடியும் அருச்சுனனுக்கு அபாயமுண்டாகாதவாறு கன்னனிடங் கவசகுண்டலங்களைப் பெற்றுவிட்டது.'அவ்வளவீந்ததும்'என்ற பாடத்துக்கு-வரையாதுகொடுப்பவனாகிய அக்கர்ணன் கொடுத்ததையு மென்க; வளல் - வள்ளல். எல்லாவரங்களையும் எல்லோர்க்குந்தரவல்ல எம்பெருமான் இங்குத் தான் ஒருவனை இரந்ததும் மற்றொருவனை யிரக்கும்படி பிறனைத்தூண்டினதும் ஆகிய இவையெல்லாம், மனிதனாய்அவதரித்ததற்கேற்ற திருவிளையாடலேயாமென்பது தோன்ற, இங்கு 'வரந்தருந்திருமால்'என்றார். நிறுத்தி - நில்என்பதன் பிறவினையான நிறுத்து - பகுதி. (உ௪௫)

[கண்ணன் இந்திரனுக்குச் சிலகூறுதல்]

உசகூ. உண்மையாகவெஞ்சமர்முகத்தெறிபடையொன்றும்வந் துடலுறவொட்டாத், திண்மையாலுயர்கவசகுண்டலங்களைச்சென் றிரந்தவற்கிவன்கொடுத்தா, னெண்மையாயினுங்கிளைஞரேயேற்பி னுமியல்பிலாப்புன்செல்வரியார், வண்மையாளர்தம்மாருயிர்மாற்ற லார்கேட்பினுமறுக்கிலாரென்றே.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) 'வெம் சமர்முகத்து - கொடிய போர்முனையிலே, எறி படை ஒன்றும் வந்து - (பகைவர்) வீசுகிற ஆயுதமொன்றும் வந்து, உண்மை ஆக உடல் உற ஒட்டா - மெய்யாக உடம்பிற்படுதற்கு இடங்கொடாத, திண்மையால் - வலிமையினாலே, உயர் - சிறந்த, கவச குண்டலங்களை - கவசத்தையும் குண்டலங்களையும், சென்று இரந்தவற்கு - போய் யாசித்தவனுக்கு, இவன் கொடுத்தான் - இக்கர்ணன் கொடுத்திட்டான்; இயல்பு இலா புல் செல்வர் - இயற்கையில்நற்குணமில்லாத இழிவான செல்வமுடையவர்கள், எண்மை ஆயினும் - (இரக்கப்படும்பொருள் தம்மாற் கொடுக்கப்படுதற்கு மிக)எளியதாயிருந்தாலும், கிளைஞரே ஏற்பினும் - அதனையிரப்பவர் (நெருங்கிய)உறவினர்(அல்லது நண்பர்களே)ஆனாலும், ஈயார் - (ஒன்றையும்)கொடுக்கமாட்டார்கள்; வண்மையாளர் கொடையாளிகளோ வெனின்,—தம் ஆர் உயிர் - (இரக்கப்படுவது)தமது அரியஉயிரேயானாலும், மாற்றலார் கேட்பினும் - (அதனைப்)பகைவர்கள் வந்து இரந்தாலும், மறுக்கிலார் - தடுத்துக் கொடாதொழியார்கள்', என்று - என்றுசொல்லி, (எ - று.)—'விடைகொடுத்ததன்பின்' என மேற்கவியோடு தொடரும்.

உத்தமரது தானச்சிறப்பை யெடுத்துக்கூறுவார், அதற்கு எதிராகிய அதமரது லோபகுணத்தின் இழிவையும் உடனெடுத்துக் காட்டினர். இங்கே முன்னிரண்டடிகளில் 'கர்ணன் மிகுந்தகொடையாளி' என்ற சிறப்புப் பொருளைப் பின்னிரண்டடிகளில் 'உத்தமரது உதாரகுணம் இத்தன்மையது' என்றபொதுப்பொருள்கொண்டுவிளக்கியது வேற்றுப்பொருள்வைப்பணி. இரந்தவற்கு - இரந்தஉனக்கு என முன்னிலைப்படர்க்கை. உயிரினும்அரியது இன்றாதலின், 'ஆருயிர்' எனப்பட்டது. ஆருயிர் - பண்புத்தொகை; அருமை உயிர்: இனி, வினைத்தொகையாகக் கொண்டு, நிறைந்த [பஞ்ச]பிராணங்களையுடையதென்றுமாம். எண்மையாயினும், கிளைஞரேயேற்பினும், ஆருயிர்மாற்றலார் கேட்பினும் என்றவற்றால், உலோபிகளுக்கும் உதாரகுணமுடையார்க்கும் உள்ள வேறுபாடு நன்குவிளக்கப்பட்டது. வண்மையாளர் - வண்மைக்குணத்தையாள்பவர். மாற்றலார் - தம்மிடத்து மனத்தை மாற்றுதலுடையவரென உடன்பாட்டுக்குறிப்புவினையாலணையும்பெயராகியகாரணக்குறி. பின் இரண்டடி - உலகஇயற்கைகூறியது. எண்மைஎன்னும்பண்புப்பெயரில், எள் - பகுதி; அது இகரம் பெற்று எளிமையென்றும் நிற்கும். செல்வம் படைத்ததற்குப் பயன் பிறர்க்குக்கொடுத்தலே யாதலால், அத்தன்மையில்லாதாரை, 'இயல்பிலாப் புன்செல்வர்' என்றார். (உசகூ)

[கண்ணன் குந்தியைக் கர்ணனிடம் அனுப்புதல்.]

உசஎ. வாசவன்றனக்குவிடைகொடுத்ததன்பின் வந்தகாரியந் தனைமுடிப்பான், கேசவன்றனதுதாதையேயடுதிக்கேண்மைகூர் தெரிவையைக்கிட்டித், தேசவன்றந்தகுரிசில்பால்விரைவிற்செல்கெ னப்பயந்தசேயினையும், பாசமுன்னுறமலேவலாற்றனதுபாதபங் கயஞ்சிவப்பித்தாள்.

(இ - ள்.) வாசவன்தனக்கு - இந்திரனுக்கு, விடை கொடுத்ததன்பின் - செல்லுகொடுத்தனுப்பியபின்பு, கேசவன் - கண்ணன், வந்த காரியந்தனை

முடிப்பான் - (தான் திருவுள்ளத்திற்கருதி)வந்த தொழிலை நிறைவேற்றும் பொருட்டு,தனது தாதையோடு உதித்த கேண்மை கூர் தெரிவையை விட்டு-தனது தந்தையாகியவசுதேவருடன்பிறந்த[தனது அத்தையாகிய] (யாவரிடத்தும்) அன்புமிக்க குந்திதேவியை அடைந்து, தேசவன் தந்த குரிசில்பால் விரைவின் செல்க என-ஒளிமிகுதியையுடையசூரியன்பெற்றகுமாரனுனகர்ணனிடத்திற் சீக்கிரமாகச்செல்வாயென்று சொல்ல, பயந்த சேயிழையும் - (அவனைப்) பெற்றவளான குந்திதேவியும், பாசம் முன் உற - (மைந்தனுகிய கன்னன்பக்கல்)அன்பு (தனக்கு) முன்செல்ல,மால் ஏவலால்-கண்ணனது கட்டளைப்படி, தனது பாத பங்கயம் சிவப்பித்தாள்-தன்னுடைய தாமரை மலர்போன்ற கால்களைச் சிவக்கச்செய்தாள்; (எ - று.)—கன்னன்பக்கல்நடந்துசென்றாள் என்பதாம்.

முன்னே இராமாவதாரத்தில் சூரியகுமாரனை சுக்கிரீவன்பக்கத்திற் சேர்ந்து இந்திரபுத்திரனை வாலியை வதைத்ததற்குப் பிரதியாக இவ்வவதாரத்தில் இந்திரகுமாரனை அருச்சுனன்பக்கல் சேர்ந்து சூரியபுத்திரனை கர்ணனை அழித்தருளுகின்றான்போலும். தெரிவை - இங்கே பெண்ணென்னுமாத்திரமாய் நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை - இருபத்தாறுமுதல் முப்பத்தொன்றளவும். தேசு - தேஜஸ்எனனும் வடமொழியின் திரிபு: கிரணம்;அதனையுடையவன், தேசவன். சேயிழை யென்பதற்கு-சிவந்த [செம்பொன்னாலாகிய] ஆபரணங்களையுடையவ ளென்று பொருள்; பண்புத்தொகை யன்மொழி. செம்மை இழை யெனப் பிரிக்க. இழை - இரத்தினங்களையிழைத்துச் செய்வது தென ஆபரணமாய்; இனி, இழையென்னும் நூலின்பெயர் - சினையாகுபெயராய், இங்கு ஆடையையுணர்த்துவ தென்றுங் கொள்ளலாம். (உசஎ)

[தனதுமாளிகைக்குவந்த குந்திதேவியைக் கர்ணன் எதிர்கொண்டு சென்று உபசரித்தல்.]

உசஅ வந்துகுந்திநின்கோயிலெய்தினளெனவாயிலோருரைத்திடமைந்தன், முந்துமன்புடன்றொழுதெதிர்கொண்டுநன்முறைமையாலாசனத்திருத்தி, யிந்துவின்கதிர்கண்டுமேன்மேலுமுற்றிரங்கிவான்கரைகடந்தேறுஞ், சிந்துவெண்டிரைச்சிந்துவொத்துருகுந்தெரிவையோடுரைசிலசெப்பும்.

(இ - ள்.) (இங்ஙனம் குந்தி கர்ணன்வீட்டுக்கு நடந்து சென்று சேர்கையில், குந்தி வந்து நின்கோயில் எய்தினள் என வாயிலோர் உரைத்திட - குந்திதேவி வந்து உனது சிறந்தஅரண்மனையை அடைந்தாளென்று வாயில்காவலாளர்(கன்னனிடஞ்)சொல்ல, மைந்தன்-புத்திரனுகியகர்ணன், முந்தும் அன்புடன் - மிகுந்தஅன்புடனே, எதிர்கொண்டு - எதிர்கொண்டு வந்து, தொழுது - வணங்கி, நல் முறைமையால் - (சாஸ்திரங்களில் தாய்க்குச்செய்யும்படிசொன்ன)நல்ல உபசாரமுறைதவறாமல்,ஆசனத்துஇருத்தி-(சிறந்தோர்) ஆசனத்திலே வீற்றிருக்கச்செய்து, இந்துவின் கதிர் கண்டு மேல்மேலும் உற்று இரங்கி வான் கரை கடந்து ஏறும் சிந்து வெள் திரை சிந்து ஒத்து உருகும் தெரிவையோடு - சந்திரனது கிரணத்தைப் பார்த்து (மிகமகிழ்ந்து) மேலேமேலே பொங்கி ஒலித்துப் பெரியகரையைக் கடந்து மீதெழுகிற வீசுகிற வெண்மையான அலைகளையுடைய கடலைப் போன்று மனம்மிகமகிழ்கிற அக்குந்தியுடனே, சில உரை செப்பும் - சிலவார்த்தைகளைக் கூறுவான்; (எ - று.)—அதனை, அடுத்தகவியிற் காண்க.

சந்திரனைக்கண்டமாத்திரத்திற் கடல் பொங்குவது, பிரசித்தம். சூரியபுத்திரனுகர்ணனுக்குச் சந்திரனையும், அவனது தாய்க்குச் சந்திரனுக்குஉற்பத்திஸ்தானமான கடலையும் உவமைகூறினர். இந்து-வடசொல்.நான்காமடியிலுள்ள சிந்துவெனனுஞ்சொல்இரண்டனுள்,முன்னது-தமிழ்வினைப்பகுதி; பின்னது - ஸிந்துவென்னும் வடமொழிப்பெயர். (உசஅ)

[குந்தி கர்ணனைநோக்கி 'நான் உனக்குத்தாய்' என்றல்.]

உசக. அன்னைவந்ததென்னருந்தவப்பயனெனவன்பினுலின்பு
றவணங்கி, யென்னைவந்தவாறென்னமற்றவளுமேயீன்றதாயானுனக்
கென்று, முன்னைவந்தொருமந்திரந்தவமுனிமொழிந்ததுங்கதிரவன
ருளாற், பின்னைவந்ததுபேழையில்விடுத்ததும்பிழையிலாதுரைத்
திடக்கேட்டே.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) 'அன்னை - தாயே! வந்தது-(நீ என்னிடம்) வந்தது,என் அரு தவம் பயன் - எனது அருமையான தவத்தின்பயனும்',என-என்றுசொல்லி, அன்பினுல்—,இன்புஉற வணங்கி - மகிழ்ச்சிபொருந்த (அவளை) நமஸ்கரித்து, வந்த ஆறு என்னை என்ன - '(நீ இங்கே) வந்த காரியம் என்ன?'' என்று கேட்க,—மற்று - பின்பு, அவளும் - அக்குந்தியும், யான் உனக்கு ஈன்ற தாய் என்று - 'நான் உனக்குப் பெற்றதாயாவேன்' என்று (முதலிற்சுருக்கமாகக் கூறி,)(உடனே),—தவம்முனி-தவத்திற்சிறந்ததுர்வாசமுனிவன்,முன்னை-இளம்பிராயத்திலே,வந்து—,ஒரு மந்திரம் - ஒருமந்திரத்தை, மொழிந்ததும்-(தனக்கு) உபதேசித்தருளினதையும், கதிரவன் அருளால் - சூரியனது அனுக்கிரகத்தால், பின்னை - பின்பு, வந்ததும் - (கன்னன்) பிறந்ததையும், பேழையில் விடுத்ததும் - (தான் அவனைப்) பெட்டியில் (வைத்து நதியிற்) செலுத்தினதையும், (ஆகிய வரலாறுகளை),பிழை இலாது உரைத்திட - தவறுதலில்லாமற்சொல்ல, கேட்டு-(கர்ணன்)செவியுற்று,—(எ - று.)—'மதித்து' என மேற்கவியோடு குளகமாக இயையும்.

அன்னை-அண்மைவிளி;அன்னையாகிய நீ என முன்னிலைப்படர்க்கையுமாம். "சாபத்தாலுஞ் சாபமொழிதன்னுல் வளருந் தவத்தாலுங், கோபத்தாலும் பேர்படைத்த கொடியமுனிவன துருவாசன்" ஆதலால்,'தவமுனி' என்றார். உனக்கு ஈன்ற தாய் - நான்காம்வேற்றுமை, முறைப்பொருளது.

[கர்ணன் சிலகூறி அதனை மறுத்தல்.]

உருo. மாயனார்விரகிதுவெனமனத்தினின்மதித்துவந்தளித்திடு
ம்வள்ள, னீயநாளெனைப்பயந்தவளென்னினுநின்மொழிநெஞ்சுறத்
தேறேன், பேயனார்சிலர்பேரறிவின்மையாற்பெற்றதாயெனக்கென
வந்து,தூயநாகரினமைந்ததோர்துகிலாற்றுன்பமுற்றெறன்புருவானார்.

(இ - ள்.) உவந்து அளித்திடும் வள்ளல் - (தன்னைவந்து அடைபவர்க்கு வேண்டியபொருள்களை) மகிழ்ச்சியோடு கொடுத்திடுகிற உதாரகுணமுள்ளவனாகிய கர்ணன்,—இது மாயனார் விரகு என மனத்தினில் மதித்து - (இங்ஙனம் இவள்சொல்லும்) இது கண்ணபிரானது வஞ்சனையாக இருத்தலுங்கூடுமென்று மனத்திலே நினைத்து, அவளைநோக்கி),—'நீ அநாள் எனை பயந்தவள் என்னினும் - நீ அக்காலத்தில் என்னைப் பெற்றவளென்று சொன்னாலும், நின் மொழி நெஞ்சு உற தேறேன் - உன்வார்த்தையை மனத்திற்பொருந்த நம்பமாட்டேன்; பேய் அனார் சிலர் - பேயையொத்தவராகிய சிலமகளிர், பேர் அறிவு இன்மையால் - சிறந்த அறிவு இல்லாமையால், எனக்கு பெற்ற தாய் என வந்து - எனக்குஈன்றதாயேனென்று (தனித்தனி உறவு)கூறிவந்து,தூய நாகரின் அமைந்தது ஓர் துகிலால் - பரிசுத்தகுணமுள்ள தேவர்களால் அமைக்கப்பட்டதொரு வஸ்திரத்தால், துன்பம் உற்று - மரணவேதனையடைந்து, என்பு உரு ஆனார் - எலும்புமாத்திரம் மிகுந்த வடிவமானார்கள்; (எ - று.)

இன்னுள்பெற்றபிள்ளை யென்று எற்படாத கர்ணன் மிகுந்த உதாரகுணமுடையவனு யிருந்ததனுல், உலகத்தில் பணப்பித்துக்கொண்ட பல மகளிர் இவனிடம்வந்து தாம்தாம் தாயென்றுகூறிச் செல்வம்பறிக்கமுயல, அதனைநோக்கிக் கர்ணன் தேவர்களைவேண்டவே, அவர்கள் தெய்வத்தன்

மையுள்ள ஓராடையைத் தந்து 'உண்மையான தாயொருத்தி யொழிய வேறெவரேனும் தாயென்று வருபவர் இதனை உடுத்தால் இறப்பர்' என்று சொல்லிப் போக, அங்ஙனம் அவனாற் பரீட்சிக்கப்பட்டுப் பலதாய்மார் அச்சேலையால் உடலெரிபட்டு ஒழிந்தன ரென வரலாறு காண்க. பேய்-கண்ணனுக்குத் தாயாக வஞ்சனையால்வந்த பூதனையென்னும் பேய்மகளாகவுமாம். அந்நாள் - அநாளென எதுகைப்பொருத்தநோக்கிய தொகுத்தல்.

வேறு.

[கர்ணனளித்த ஆடைகளைத் தரித்துக் குந்தி அழியாதிருத்தல்.]

உருக. அடாதுசெய்தவர்படாதுபட்டனரெனுமங்கர்கோனரு ண்மொழிகேட்டுத், தடாதவன்புடைக்கெடாததூமொழிபகர்தைய லுமையலிற்றவிர்ந்து, படாமதென்கையிற்றருகெனவருதலும்பயந் திலேனெனிலெனைமுனியென், றெடாவிரித்தலைத்துடற்படப்போர் த்தெதிரீன்றதாயாமெனவிருந்தாள்.

(இ - ள்.) 'அடாது செய்தவர் - தகாதகாரியத்தைச் செய்தவர்கள், படாது பட்டனர் - படுதற்கரிய பாடுபட்டு இங்ஙனம் ஒழிந்தார்கள்,' எனும் - என்றுசொன்ன, அங்கர் கோன் அருள் மொழி - கர்ணனது கருணையோடுகூடிய வார்த்தையை, கேட்டு,—, தடாத அன்பு உடை கெடாத தூ மொழி பகர் தையலும் - (எவராலும்) தடுக்கப்படாத அன்பையுடையவளும் குற்றமில்லாத பரிசுத்தமான சொற்களைச் சொல்பவளு மாகிய அழகிய அக்குந்தியும், மையலின் தவிர்ந்து - மயக்கத்தினின்று நீங்கி, படாம் அது என் கையில் தருக என - 'அந்தவஸ்திரத்தை என துகையிலே கொடுப்பாய்' என்றுசொல்லி, வருதலும்-(அவனாற்கொடுக்கப்பட்டுஅதுதன்கைக்கு) வந்தவளவிலே,—பயந்திலேன் எனில் எனை முனி என்று-('யான் இவனைப்) பெற்றவளல்லேனானால் என்னைக்கோபித்தழிப்பாய்' என்று (அத்தெய்வவஸ் திரத்தை நோக்கிச்) சொல்லி, எடா விரித்து அலைத்து உடல் பட போர்த்து-(அதனை) எடுத்துப் பிரித்து உதறித் தன்உடம்பிலேபடும்படி போர்த்துக் கொண்டு, எதிர்-(அக்கர்ணனது)எதிரிலே, ஈன்ற தாய்ஆம் என - பெற்றதாய் இவளேயாம் என்றுதெளியும்படி, இருந்தாள் - வீற்றிருந்தாள்; (எ - று.)

அடாது - பொய்யுறவுகூறுதல். அடாது, படாது - எதிர்மறைஒன்றன் பால்வினையாலணையும்பெயர்கள். "அறந்தூறந்தென்று மடாதனசெய்தாலவர் கொலோ படாதனபடாதார்" என்றார் கீழ்ச்சடாசுரன்வதைச்சருக்கத்தும். 'அடாதுசெய்தவர் படாதுபடுவர்' என்பது, ஒருபழமொழி. எனும்மொழியென இயையும். இவள் பொய்த்தாயாயின் வீணே இறக்கலாகாது என்ற நல்லகருத்தோடு கூறியதனால், 'அருள்மொழி' எனப்பட்டது. தையல் - அழகுடையவளுக்குப் பண்பாகுபெயர். மையலிற்றவிர்ந்து - என்னாகுமோவென்ற சங்கையில்லாமலென்றபடி; இவள் இங்ஙனம் மையலிற்றவிர்ந்தது, கண்ணன்பேச்சிலுள்ள விசுவாசத்தால். படாம் - படமென்னும் வடசொல்லின் திரிபு; 'முகபடாம்' என்பதிலுங் காண்க.

இதுமுதற் பதினன்குகவிகள்-பெரும்பாலும் இரண்டு நான்கு ஏழாஞ் சீர்கள் மாசீர்களும், மற்றைநான்கும் விளசீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள்; கீழ் உசஎ - ஆம் கவியும் இவ் வாறே. (உருக)

[அதுகண்டு வியந்த கர்ணனைநோக்கிக் குந்தி சிலகூறுதல்.]

உருஉ. இருந்ததாயீன்றவன்றபோலுருகியிருதடங்கொங்கை பால்சொரிந்தா, ளருந்துவான்போலவிரவிசேய்விரும்பியாதரத்துட ன்புளகானான், புரிந்ததாயன்போடிறுகுறத்தழுவிப்பொன்முடிமோ யினனுயிராய், பரிந்துகானன்றேயுனைவளர்த்தெடுக்கப்பாக்கியஞ்செ ய்திலேனென்றாள்.

(இ - ள்.) இருந்த தாய்-(இங்ஙனம் ஆசனத்தில்) வீற்றிருந்த தாயான குந்திதேவி, ஈன்ற அன்று போல் - பெற்ற அந்நாளிற்போல, உருகி - மனம் மிக அன்பு கொண்டு, இரு தட கொங்கை பால் சொரிந்தாள் - தனது பெரிய இரண்டு தனங்களினின்றும் பாலைச்சொரியவிட்டாள்; (அப்பொழுது), இரவி சேய் - சூரிய புத்திரனான கர்ணன், விரும்பி-(தாய்பக்கல்) அன்புகொண்டு, அருந்துவான்போல-(அம்முலைப்பாலை) உண்பவன்போல, ஆதரத்துடன் - ஆசையுடனே, புளகு ஆனான் - உடம்புமயிர்சிலிர்க்கப்பெற்றான்; புரிந்த தாய்-(இங்ஙனஞ்)செய்த தாயான அக்குந்தி, அன்போடு—, இறுகுற தழுவி - (அவனை) நன்றாக அணைத்துக்கொண்டு, பொன் முடி மோயினள் உயிரா - அழகிய அவனது உச்சியை மோந்து பெருமூச்சுவிட்டு, நான் உனை அன்றே பரிந்து வளர்த்து எடுக்க பாக்கியம் செய்திலேன் என்றாள் - 'நான் உன்னைப்பெற்ற அக்காலத்திலேயே அன்புகொண்டு எடுத்துவளர்க்க நல்வினைப்பயன் பெற்றேனில்லை' என்று கூறினாள்; (எ - று.)

மிக்க அன்பினால், இப்பொழுது தனங்களிற் பால்சுரந்தது. "அன்றன் போடெடுத்தணைத்து முலைக்கணூறலமுதூட்டி" என்பர் மேற்கன்னபருவத்தும். மோயினள்-முற்றெச்சம்; "மோயினளுயிர்த்தகாலை" என்றார் பிறரும். மோ - பகுதி, ய் - எழுத்துப்பேறு, இன் - இறந்தகாலஇடைநிலை, அள் - பெண்பால்விகுதி. உடம்பில்மயிர்சிலிர்த்தல், அன்பின்மெய்ப்பாடு. ஆதரம், புளகம், பாக்யம்-வடசொற்கள். பாக்கியம் - அதிருஷ்டம்; நல்லூழ்ப்பேறு. இறுகுற-அழுந்த. 'பால்சுரந்தாள்'என்றும் பாடம். "பொங்குமுலைப்பாலூட்டிப் பூந்தடங்கண்மையெழுதி, மங்கையர்பாராட்ட வளராதே யெங்குநின், பானுமின் சொற்பவளவன்னவாய்முதனை, யானுரப்பெற்றிலேனங்கு" என்றார் பாரதவெண்பாவிலும். (உ௫௨)

[இதுவும் அது.]

உ௫௩. வருகவென்மதலாயிளைஞரைவருநின்மலரடியன்பினால் வணங்கி, யுரிமையான்மனமொத்தேவலேபுரியவொருதனிச்செய்ய கோலோச்சி, யரசெலாம்வந்துன்கடைத்தலைவணங்கவாண்மையுஞ் செல்வமும்விளங்கக், குருகுலாதிபர்க்குங்குரிசிலாய்வாழ்வுகூர்வதே கடனெனக்குறித்தாள்.

(இ - ள்.) (பின்பு குந்தி கர்ணனைப்பார்த்து), 'என் மதலாய் - எனது புத்திரனே! வருக - (என்னுடன்) வருவாயாக; இளைஞர் ஐவரும் - (பாண்டவர்களாகிய உன்)தம்பியரைந்துபேரும், நின் மலர் அடி அன்பினால் வணங்கி - உனது தாமரைமலர்போலும்பாதங்களை அன்பால்நமஸ்கரித்து, உரிமையால் - க்ஷத்திரியதருமமுறைப்படி, மனம் ஒத்து ஏவலே புரிய - மனம் ஒருமித்து நீயேவின சிறுகுற்றேவல்தொழில்களையே செய்ய, ஒரு தனி - ஒப்பற்ற தனியாய், செய்ய கோல் ஓச்சி - (நீ) செங்கோலைநடத்தி, அரசு எலாம் வந்து உன் கடைத்தலை வணங்க - அரசர்களெல்லாரும் வந்து உனது வாயிற்புறத்தில்நின்று வணங்கவும், ஆண்மையும் செல்வமும் விளங்க - வீரமும் செல்வமும் விளங்கவும், குரு குல அதிபர்க்கும் குரிசில் ஆய்-குருகுலத்து அரசர்கட்கெல்லாம்அரசனாய், வாழ்வுகூர்வதே-வாழ்க்கை மிகவேண்டுவதே, கடன் - (நீ செய்தற்குஉரிய)கடமை,' என-என்று, குறித்தாள்-குறிப்பிட்டுக் கூறினாள்.

மதலாய் - மதலையென்பது ஈறுதிரிந்த விளி; [நன் - பெயர் - ௪௧.] ஏவலேபுரிய - அரசுபுரியாமலென்றபடி. ஒருதனி - தன்னந்தனியே. ஓச்சி, ஓச்சு - பகுதி. தலைக்கடை - கடைத்தலையென முன்பின்னாகமாறிய இலக்கணப்போலி. கூர்வதே, ஏ - பிரிநிலையோடு தேற்றம். (உ௫௩)

[இதுவும், மேற்கவியும்-ஒருதொடர்; அதுகேட்டுக் கர்ணன் குந்தியை நோக்கிக் கூறுவன.]

உ௫௪. பெற்றநீர்மகவன்பிலாமையோவன்றிப்பெரும்பழிநாணி யோவிடுத்தீர், ரற்றைநாட்டொடங்கியென்னையின்றளவுமாருயிர்த்

துணையெனக்கருதிச், கொற்றமாமகுடம்புனைந்தரசளித்துக்கூடவு ண்டுரியதம்பியருஞ், சுற்றமானவருமென்னடிவணங்கத் தோற்றமு மேற்றமுமளித்தான்.

(இ - ள்.) பெற்ற நீர் - (என்னை)ஈன்ற நீர், மகவு அன்பு இலாமையோ - புத்திரவாற்சலியமில்லாமையினாலோ? அன்றி - அல்லது, பெரு பழி நாணியோ - பெரியலோகாபவாதத்துக்கு வெட்கப்பட்டோ?விடுத்தீர்-(என்னை)விட்டுவிட்டீர்;அற்றை நாள் தொடங்கி - அன்றையதினம்முதல்,இன்று அளவும் - இன்றைவரையிலும், என்னை—,ஆர் உயிர் துணை என கருதி-அருமையானஉயிரோடொத்தநண்பனாகநினைத்து, (துரியோதனன்), கொற்றம் மா மகுடம் புனைந்து - வெற்றியைவிளக்குகிற சிறந்தகிரீடத்தை (எனக்குச்) சூட்டி, அரசு அளித்து-(அங்கதேசத்து) அரசாட்சியையுங் கொடுத்து, கூட உண்டு - (என்னை) உடன்வைத்துக்கொண்டு புசித்து,உரிய தம்பியரும் சுற்றமானவரும் என் அடி வணங்க - (அவனுக்கு)உரியதம்பிமார்களாகிய துச்சாதனன் முதலியோரும் (மற்றும்அவனுடைய) உறவினரானவர்களும் எனது பாதங்களை நமஸ்கரிக்க, தோற்றமும் ஏற்றமும் அளித்தான்-பிரசித்தியான பேரையும் உயர்வையும் (எனக்குக்) கொடுத்தருளினான்; (எ - று.)

இவன் பழிநாணி விடுத்தது,அன்பில்லாது விடுத்ததுபோலு மாதலால், இதுவோ அதுவோ என விகற்பித்தான். அன்று + நாள்=அற்றைநாள்; [நண் - உயிர் - ௩௪,௩௫,௧௪,அ.]தோற்றம் - தோன்றுவதான புகழுக்குக் காரணப்பெயர். ஏற்றம் - ஏறுதல்: மேம்பாடு; தொழிற்பெயர். (உ௫௪)

உ௫௫ மடந்தைபொற்றிருமேகலை மணியுகவோசறத்திகழு மேகாந்த, விடந்தனிற்புரிந்தேநானயர்ந்திருப்பவெடுக்கவோகோக்க வோவென்றான், திடம்படுத்திடவேலிரா சராசனுக்குச்செருமுனைச் சென்றுசெஞ்சோற்றுக், கடன்கழிப்பதுவேயெனக்கினிப் புகழுங் கருமமுந்தருமமுமென்றான்.

துரியோதனனுக்குத் தன்னிடத்தில் மிகுந்த விசுவாசம் [நம்பிக்கை] எனத் தெரிவித்தற்கு, முன்னேநடந்ததொரு அந்தரங்கமானசெய்தியைக் கர்ணன் எடுத்துக்கூறுகிறான்.

(இ - ள்.) மாசு அற திகழும் ஏகாந்தம் இடந்தனில் - குற்றமில்லாமல் விளங்குவதொரு இரகசியமான இடத்திலே,நான்—,மடந்தை பொன் திரு மேகலை மணி உக புரிந்து - (துரியோதனன்மனைவியான) பானுமதியினது பொன்னினாலாகிய அழகிய மேகலாபரணத்தின் மணிகளைச் சிந்தும்படி செய்து, அயர்ந்து இருப்ப-செயலற்றுச் சிந்தித்திருக்க, (அப்பொழுது துரியோதனன் வந்து), எடுக்கவோ கோக்கவோ என்றான் - ('இம்மணிகளை நான்) எடுத்துக்கொடுப்பேனாகவா? கோத்துக்கொடுப்பேனாகவா?" என்று (எனக்குஅச்சம்நீங்கும்படி அன்போடு) கேட்டான்; (அப்படிப்பட்ட), வேல் இராச ராசனுக்கு-வேலில்வல்ல துரியோதனராசனுக்கு, திடம் படுத்திட - உறுதியைஉண்டாக்குதற்கு, செரு முனை சென்று-(நான்) போர்க்களத்திலே போய், செம் சோறு கடன் கழிப்பதுவே-(அவன்)செவ்வையாகப்போகட்டு வந்த சோற்றுக்கு உரிய கடனைத் தீர்ப்பதே,எனக்கு இனி புகழும் கருமமும் தருமமும் - எனக்கு இனிமேல் கீர்த்திதருவதும் செய்தக்கதொழிலும் அறமுமாம், என்றான் - என்று (கன்னன் குந்தியைநோக்கிக்) கூறினான்; (எ - று.)—இங்ஙனஞ் சொல்லித் துரியோதனனைவிட்டுப் பாண்டவரிடம் வரமாட்டே னென்று கன்னன் தடுத்தான்.

"வெஞ்சோற்றேடினிதருந்தி யமுதருந்தும்விண்ணவர்போ லிந்நெடு நாள்விழைந்துவாழ்ந்தேன், செஞ்சோற்றுக்கடனின்றேகழியேனாகில் திண் டோள்கள்வளர்த்ததனாற் செயல்வேறுண்டோ," "செருவிலெனதுயிரனைய

தோழற்காகச்செஞ்சோற்றுக்கடன்கழித்தேன்" எனக் கன்னபருவத்துக் கூறுமாறுங் காண்க. முன்பு ஒருநாள் கர்ணன் துரியோதனன்மனைவியான பானுமதியோடுதனிமையானஇடத்திற்சூதாட்டமாடிக்கொண்டிருக்கையில், துரியோதனன் தூரத்தில்வருதலைக் கண்டு பானுமதி எழுந்துசெல்ல. அவன் வருதலைப்பாராதகர்ணன் ஆட்டத்தின்நடுவில்எழுந்துசெல்லலாகாதென்று அவள்மடியைப்பற்றி இழுத்தபொழுது,மேகலையறுந்து மணிகள்உதிரவே,அச்சமயத்தில் துரியோதனன்வந்ததை நோக்கிக் கன்னன் அஞ்சி வெள்கி என் செய்வதென்று அலமருகையில், அத்துரியோதனன், கன்னன் அஞ்சாதபடி 'இம்மணிகளை நான் எடுத்துக்கோத்துக்கொடுக்கட்டுமா'என்றுகேட்டனனென்பது வரலாறு. செஞ்சோறு-சிறந்தஅன்னம்;அறுசுவையோடுகூடியஉணவு; மானக்குறைவு இல்லாதபடி இட்டுவந்தது. மேகலை - எட்டுக்கோவையுடையது; "எண்கோவை மேகலை" என்பது காண்க. ஏகாந்தம் - வடசொல். "பன்மணிகள் சிந்திப் பரந்துகிடந்தது கண்,டின்மணிக்கென்புகுந்த தென்னும்-நன்மணியைக், கோக்கோ பொறுக்கவோ வென்றானுக் கென்னுயிரைப், போக்காதொழிவேனோ புக்கு," "மைத்தடங்கண்மாதேவி வார்துகிலை யான்பிடிக்க, வற்றுவிழுந்தவருமணியை—மற்றவற்றைக், கோக்கேனோ வென்றுரைத்த கொற்றவற்கென் னுருயிரைப், போக்கேனோவெஞ்சமத்துப் புக்கு" என்றார் பாரதவெண்பாவிலும். (௨௫௫)

[குந்தி வருந்துதல்.]

௨௫௬. பின்னையும்பற்பன்மொழிந்தபின்பலவும்பேசியென்பூசலோவிளைந்த, துன்னிநீரிங்குவந்ததென்கரவாதுண்மையாலுள்ளவாறுரைமி, னென்னமைந்தனுமிப்பரிசினாலுரைப்பவீன்றறத்துறந்தவன்றையினு,மன்னைநெஞ்சழிந்தேயிருகணீர்சொரியவலறிவாய்குழறிநொந்தழுதாள்.

(இ-ள்.) மைந்தனும்-புத்திரனான கர்ணனும்,பின்னையும் பலபல மொழிந்த பின் - பின்னும் அநேகவார்த்தைகளைச் சொன்னபின்பு, 'பலவும் பேசி என் - பலவார்த்தைகளையுஞ் சொல்லிப் பயன்என்ன? பூசலோ விளைந்தது-யுத்தமோ உண்டாய்விட்டது; நீர் இங்கு உன்னி வந்தது என் - நீர் இவ்விடத்தில் [என்னிடத்தில்] நினைத்துவந்தகாரியம் யாது? கரவாது உண்மையால் உள்ள ஆறு உரைமின் - ஒளிக்காமல் மெய்யாக உள்ளபடிசொல்லும்,' என்ன - என்று,இ பரிசினால் உரைப்ப-இந்தவிதமாகச் சொல்ல,—அன்னை-தாயான குந்தி, ஈன்று அற துறந்த அன்றையினும் - பெற்று (உடனே) நீங்கும்படி விட்ட அந்நாளினும் (அதிகமாக), நெஞ்சு அழிந்து - மனம்வருந்தி, இரு கண் நீர் சொரிய - தனதுஇரண்டுகண்களினின்றும் நீர்பெருக, அலறி-கதறி,வாய் குழறி - வார்த்தைதடுமாறி, நொந்து - வருந்தி, அழுதாள் - புலம்பினாள்; (எ - று.)

இங்கே 'பெற்றமனம்பித்து, பிள்ளைமனங்கல்லு' என்றபழமொழியை அறிக. 'உன்னிநீர் இங்குவந்தது என்'என்பதற்கு-இப்பொழுதுநீர்கருதிவந்ததனால் என்னபயனென்று உரைப்பினும் அமையும். 'அறத்துறந்த' என்றபாடத்துக்கு—அறல் - நீரிலே - துறந்த, விட்ட என்க. பழிக்குஅஞ்சிவிட்டவளேயன்றி அன்பின்றிவிட்டவளல்லளாதலால், அக்காலத்து மிகுந்தசோகமுற்றேயிருப்பள். விளைந்தது என இறந்தகாலத்தாற் கூறினது, இனித்தவறாதென்ற துணிவால். (௨௫௬)

[குந்தியைக் கர்ணன் தேற்றுதல்.]

௨௫௭. ஆண்டுமாமகனுமிருகணீர்துடைத்தவ்வன்னையைப்பன்முறைதேற்றி, மூண்டவல்வினையின்பயனலாதியார்க்குமுயற்சியால் வருவதொன்றுண்டோ,வேண்டும்யாவையுமேதருகுவேனீரும்வேண்டியவேண்டுகவென்னப், பாண்டுவின்றிருமாமனைவியுமதற்குப்பண்பி

(இ - ள்.) ஆண்டு - அப்பொழுது, மா மகனும் - பெரிய முதற்புத்திரனை கர்ணனும், இரு கண் நீர் துடைத்து - (அவளது) இரண்டுகண்களினின்றும் பெருகுகிற நீரைத் துடைத்து, அ அன்னையை பல் முறை தேற்றி - அப்படிஅழுகிற தாயைப் பலதரம்சமாதானப்படுத்தி, 'மூண்டவல்வினையின் பயன் அலாது யார்க்கும் முயற்சியால் வருவது ஒன்று உண்டோ-(முற்பிறப்பிற்செய்யப்பட்டு இப்பிறப்பிற்)பயன்தரநின்ற வலியகருமத்தின்பயன்சேர்வதேயல்லாமல் எவர்க்கும் தமதுபிரயத்தனத்தால் விளைவதொருபயன் உண்டோ? [இல்லை யென்றபடி]; வேண்டும் யாவையுமே தருகுவேன்-(யான் எல்லோர்க்கும்) விரும்பிக்கேட்ட பொருள்கள் எல்லாவற்றையுமே கொடுக்கும் இயல்புடையேன்; (ஆதலால்), நீரும் வேண்டிய வேண்டுக - நீரும் (இது தவிர) உமக்குவேண்டியபொருள்களை வேண்டுவீராக,' என்ன - என்றுசொல்ல, பாண்டுவின் திரு மா மனைவியும் பாண்டுமகாராசனது சிறந்தபெரிய மூத்தமனைவியான குந்தியும், அதற்கு-அக்கன்னன்வார்த்தைக்கு, பண்பின்ஆல்- இனிமையாக, இன்னன பகர்வாள்-இவ்வார்த்தைகளைக் கூறுவாள்; (எ-று.) —அவற்றை, மேற்கவியிற் காண்க.

முன்னையஊழ்வினைப்பயன்படியே நடக்கும்; நான்வரும்படி நீர்செய்கிறமுயற்சி பயன்படாததைப்பற்றி வருந்தவேண்டா என்பது, இரண்டாமடியின் கருத்து. வேண்டிய - பெயர். (உருஎ)

[குந்தி கர்ணனிடம் வரம்வேண்டுதல்.]

உருஅ. பார்த்தன்வெஞ்சமரினின்னுடன்மலைந்தாற்பகைப்பெரும்பாந்தளம்பகழி, கோத்தலும் பிழைத்தான் மறித்துநீவிடுத்துக் கோறலென்றொருவரங்குறித்தாள், வாய்த்தமற்றவர்களிளைஞரென்றவரைமலையலென்றொருவரங்குறித்தாண், மூத்தவன்காதலிளைஞர் தம்பொருட்டான்மொழிந்தமைகேட்டிவைமொழிவான்.

(இ - ள்.) 'பார்த்தன்-அருச்சுனன், வெம் சமரில்-கொடியயுத்தத்தில், நின்னுடன் மலைந்தால்-உன்னுடன்போர்செய்தால்,(அப்பொழுதுநீ), பகை பெரு பாந்தள் அம் பகழி-(அவனுக்கு முன்னமேதொடங்கிப்)பகையாயுள்ள பெரியசிறந்தநாகாஸ்திரத்தை, கோத்தலும்- (அவன்மேல் ஒருதரம்) தொடுத்தவளவில், பிழைத்தால் - (அவன் அதற்குத்) தப்பிப் பிழைப்பானானால், மறித்தும் நீ விடுத்து கோறல் - மறுபடியும் (அந்தஅஸ்திரத்தை) நீ (அவன்மேற்) பிரயோகித்து(அவனை)க்கொல்லாதே,' என்று ஒரு வரம் குறித்தாள்- என்றுசொல்லி ஒருவரத்தைக் குறிப்பிட்டு வேண்டினாள்; 'வாய்த்த மற்றவர்கள் - பொருந்தின மற்றைப்பாண்டவர்நால்வரை, இளைஞர் என்று - தம்பிமார்களெனக்கொண்டு, அவரை மலையல் - அவர்களைக் கொல்லாதே', என்று ஒரு வரம் குறித்தாள்—; மூத்தவன் - தமையனான கர்ணன், காதல் இளைஞர்தம் பொருட்டு-அன்புக்குஉரிய தனதுதம்பியர்களுக்காக, மொழிந்தமை - (தாய் இங்ஙனஞ்) சொன்னதை, கேட்டு—, இவை மொழிவான் - இவ்வார்த்தைகளைக் கூறுவான்; (எ-று.)—அவற்றை, மேற்கவியிற் காண்க.

அம்பகழி—பகழிக்கு அழகு, குறித்தஇலக்குத்தவறாமை; இனி, அம் - அல்வழிச்சாரியை யெனவுமாம். கோறல், மலையல் - எதிர்மறையொருமை ஏவல்கள். மலையலென்பதற்கு-போர்செய்யாதே என்றுகூறுதல் மேல் யுத்தபருவங்களோடு மாறுபடுமென விடுக்க. ஆல் - அசை. (உருஅ)

[கர்ணனது மறுமொழி.]

உருகூ. தெறுகணையொன்றுதொடுக்கவுமுனைந்துசெருச்செய்வோன்சென்னியோடிருந்தான், மறுகணைதொடுப்பதாண்மையோவலியோமானமோமன்னவர்க்கறமோ,வுறுகணையொன்றேபார்த்தன்

மேற்றொடுப்பனொழிந்துளோருய்வரென்றுரைத்தான், தறுகணரல
ர்க்குந்தறுகணனைவர்க்குந்தண்ணளிநிறைந்தசெங்கண்ணன்.

(இ - ள்.) 'தெறு கணை ஒன்று தொடுக்கவும் - அழிக்கவல்ல அஸ்திரத்தை ஒருமுறைபிரயோகிக்கவும், முனைந்து செருசெய்வோன் சென்னியோடு இருந்தால்-எதிர்த்துப்போர்செய்யும்பகைவன் தலைதுணிக்கப்படாமல் அதனோடு பிழைத்திருந்தால், மறு கணை தொடுப்பது - (அவன்மேல் அந்தஅஸ்திரத்தை)இரண்டாம்முறை விடுப்பது, மன்னவர்க்கு - அரசர்களுக்கு, ஆண்மையோ-பராக்கிரமமாகுமோ? வலியோ-வல்லமையோ? மானமோ-பெருமையோ? அறமோ-தருமமாகுமோ? [ஆகாதென்றபடி]; உறுகணை ஒன்றே பார்த்தன்மேல் தொடுப்பன் - (நான்)அடைந்துள்ள நாகாஸ்திரத்தை ஒருதரமே அருச்சுனன்மேற் பிரயோகிப்பேன்; ஒழிந்துளோர் உய்வர் - அவனொழிந்த பாண்டவர்நால்வரும் (என்னாற் கொல்லப்படாமற்) பிழைத்திடுவார்கள்,' என்று உரைத்தான் - என்றுகூறினான்; (யாவனெனில்),—தறுகணர் அலர்க்கும்-கொடியவரல்லாத நல்லவர்க்கும், தறுகண் ஆனவர்க்கும் - கொடுமையையுடையோர்க்கும், (வேறுபாடின்றி), தண் அளி நிறைந்த - குளிர்ச்சியான கருணை நிரம்பின, செம் கண்ணன்-சிவந்தகண்களையுடைய கர்ணன்.

[இதுவும், மேய்கவியும்-ஒருதொடர்: கர்ணன்குந்தியைநோக்கிக்கூறுவன.]

உகூ0 பெருவரமிரண்டும்பெற்றபின்றன்னைப்பெற்றதாயினைக்
கரங்குவித்துத், தருவரமெனக்குமிரண்டுளவுலகிற்சராசரங்களுக்
கெலாந்தாயீர், வெருவருமமரிற்பார்த்தனாலடியேன்வீழ்ந்தபோதவ
னிபரறிய, மருவருமுலைப்பாலெனக்களித்துந்தமகனெனும்வாய்மை
யுமுரைப்பீர்.

(இ - ள்.) பெரு வரம் இரண்டும் பெற்ற பின் - பெரியவரங்கள் இரண்டையும் (குந்தி தன்னிடம்)பெற்றபின்பு, (கன்னன்), தன்னை பெற்ற தாயினை கரம் குவித்து - தன்னைப்பெற்றதாயாகிய அவளைக் கைகூப்பிவணங்கி, 'உலகில் சர அசரங்களுக்கு எலாம் தாயீர் - உலகத்திலுள்ள சராசரப்பொருள்களெல்லாவற்றிற்குந் தாயாகவுள்ளவரே! எனக்கும் தரு வரம் இரண்டு உள - எனக்கும் (நீர்)கொடுக்கவேண்டிய வரங்கள் இரண்டு உண்டு; (அவை யாவையெனின்),—வெருவரும் அமரில்-அஞ்சத்தக்கயுத்தகளத்திலே, பார்த்தனால் அடியேன் வீழ்ந்த போது-அருச்சுனனால் நான் இறந்துவிழும்பொழுது, அவனிபர் அறிய-அரசர்களெல்லாருமறியும்படி, மரு வரு முலை பால் எனக்கு அளித்து - மணம்பொருந்திய (உமது)முலைப்பாலை எனக்குக்கொடுத்து, உம்தம் மகன் எனும் வாய்மையும் உரைப்பீர் - உம்முடைய புத்திரன் யானென்கிற உண்மையையும் வெளியிட்டுக் கூறுவீர்; (எ - று)

"மன்னனுயிர்த்தே மலர்தலையுலகம்" என உலகத்திலுள்ளஎல்லாப்பிராணிகளுக்கும் உயிராகக்கூறப்படுகிற அரசனைப் பெற்ற தாயாதல்பற்றி, குந்தியை, 'உலகிற்சராசரங்களுக்கெல்லாந்தாய்' என்றது; அன்றியும், தாயைத் தெய்வமாகப் பாவிக்கவேண்டு மென்பதுபற்றி, இங்ஙனம் கூறியதாகவுங் கொள்ளலாம். மருவுஅரு - பெறுதற்குஅருமையான என்றுமாம். "தார்ப் பொலியுந்தோளான் றடஞ்சிலைக்கைப்பார்த்தனாற், போர்க்களத்தில் யான் மாண்ட போதகத்துத்—தாக்கமருட், டேர்வேந்தர் காணச் செருக்களத்தே நீர்வந், தாரமுலைதருவீ ராங்கு" என்றார் பாரதவெண்பாவிலும். (உகூ0)

உகூக. உய்வருதிறல்வெம்போர் முடிப்பளவு முமக்குநான்மக
னெனுந்தன்மை, யைவருமறியாவண்ணநீர்காப்பீரல்லதங்கவர்சிறித
றியின், மைவருங்கடற்பாரனைத்தையுமெனக்கேவழங்குவர்வழங்கி

னல்யானென்ன், கைவருந் துணைவன் றனக்கலால் வழங்கேன் கடைப்பிடி கருமமீதென்றான்.

(இ - ள்.) உய்வு அரு திறல் வெம் போர் முடிப்பு அளவும் - தப்புதலருமையான வலியகொடிய பாரதப்போர் முடிக்கிறவரையிலும், உமக்கு நான் மகன் எனும் தன்மை ஐவரும் அறியா வண்ணம் நீர் காப்பீர் - உமக்கு நான்புத்திரனென்கிற உண்மையைப் பாண்டவர்ஐந்துபேரும் அறியாதபடி நீர் மறைத்துவைக்கக்கடவீர்; அல்லது - அங்ஙனமன்றி, அங்கு அவர் சிறிது அறியின் - அப்படி அவர்கள் சிறிதாயினும் அறிந்தாரானால், மை வரும் கடல் பார் அனைத்தையும் எனக்கே வழங்குவர் - கருநிறம்பொருந்திய கடல் சூழ்ந்த பூமிமுழுவதையும் எனக்கே கொடுத்திடுவார்கள்; வழங்கினல்-(அங்ஙனங்)கொடுத்தால், யான்—, என் கை வரும் துணைவன்தனக்கு அலால் வழங்கேன்-எனக்குப் (பலகாலமாகப்)பயின்றுவந்த சிநேகிதனான துரியோதனனுக்கே(அதனைக்கொடுப்பேனே)யல்லாமல் (பிறர்க்குக்) கொடுக்கமாட்டேன்; ஈது கடைப்பிடி கருமம் - இது உறுதியாகக்கொண்ட செயலாம், என்றான் - என்று (கர்ணன் குந்தியைநோக்கிக்) கூறினான்; (எ - று.)

இனி, ஈதுகருமம் கடைப்பிடி எனமாற்றி, இக்காரியத்தை மறவாமல் உறுதியாகக்கொள்வாய் எனவுரைத்தல்,கீழ்ப்பலவிடத்தும்மரியாதைபற்றிய முன்னிலைப்பன்மையாகக் கூறியவற்றோடு மாறுகொள்ளு மென விடுக்க. கைவருந்துணைவன் - கையையொத்துஉதவும் நண்பனென்றுமாம். "உன்னுடையமைந்தர்க்கிவ்வுண்மைதனை யுரைக்கி, லன்னவர்கள் பாகமெனக் களிப்பர்—பின்னதனை, யீங்கெனதுதோழர்கே யான்கொடுப்ப னதலா, லாங்கவர்கட் கில்லை யரசு" என்ற பாரதவெண்பாவையுங் காண்க. (உகூக)

[குந்தி கன்னனிடம் சேர்தல்.]

உகூஉ. என்றலுமதுகேட்டீன்றதாயொக்குமென்றுகொண்டிவ் வரநேர்ந்து, வன்றுயர்மேன்மேல்வளரயான்றளராவகையுயிருனக்கு முற்பெயர்வ, தென்றினியெனத்தன்கண்கணீர்சொரியவினைந்துநைந்தழுதழுதிரங்கி, யென்றருண்மதலைதனைத்தழீஇநிறுத்தியாதவனிருந்துழிச்சென்றாள்.

(இ - ள்.) என்றலும் - என்று(கன்னன்)சொன்னவளவிலே,—அதுகேட்டு—, ஈன்ற தாய் - (அவனைப்) பெற்ற தாயாகிய குந்தி,—ஒக்கும் என்றுகொண்டு-(இவை)தகுமென்று உடன்பட்டு, இ வரம் நேர்ந்து - இந்த இரண்டு வரங்களையுங்கொடுத்து, வல் துயர் மேல்மேல் வளர-கொடியதுன்பம்மேலே மேலே அதிகப்பட்டுவளர,'யான் தளரா வகை - நான் தளர்ச்சியடையாதபடி, உனக்கு முன் உயிர் பெயர்வது - உனக்குமுன்னே (நான்) உயிர்நீங்குவது, இனி என்று - இனி எக்காலத்திலோ?' என - என்றுசொல்லி, தன் கண்கள் நீர் சொரிய - தனது கண்கள் நீரைப்பெருக்க, இனைந்து - சோகித்து, நைந்து - வாடி, அழுது அழுது - மிகப்புலம்பி, இரங்கி-இரக்கமுற்று, என்று அருள் மதலைதனை தழீஇ - சூரியன்பெற்றபிள்ளையான அக்கன்னனைத் தழுவி, நிறுத்தி-(அங்கே அவனை) நிறுத்திவிட்டு[விடைபெற்று], யாதவன் இருந்த உழி சென்றாள் - கண்ணன் இருந்தஇடத்துக்குப் போனாள்; (எ - று.)

என்று - ஒளியையுடையதெனக் காரணப்பெயர்: எல் - ஒளி: பகுதி.

[கண்ணன் மகிழ்ந்து மீண்டு பாண்டவரிடம் வருதல்.]

உகூங. கண்ணனுங்குந்திகன்னனோடுரைத்தகருத்தெலாந்தி நந்தமாக்கேட்டாங், கெண்ணமுமுடிந்ததெனமகிழ்ந்தந்தவணங்கையுமில்லிடையிருத்தித், தண்ணளியுடன்றன்பின்வருநிருபர்தம்மையு

முறைமுறைநிறுத்திப், பண்ணமைதடந்தேர்மீதுகொண்டன்றேபா ண்டவருறைநகரடைந்தான்.

(இ - ள்.) கண்ணனும்—, குந்தி கன்னனோடு உரைத்த கருத்து எலாம் - குந்தி கர்ணனுடன் சொன்ன எண்ணங்களையெல்லாம், திருத்தம் ஆ கேட்டு - செவ்வையாக்கேட்டு, ஆகு எண்ணமும் முடிந்தது என மகிழ்ந்து - அக்கன்னனிடத்திலும் தான் எண்ணியஎண்ணம் நிறைவேறிற்றென்று சந்தோஷித்து, அந்த அணங்கையும் இல்லிடை இருத்தி - சிறந்தமகளாகிய அக்குந்தியையும் வீட்டி லிருக்கச்செய்து, தண் அளியுடன் தன் பின் வரும் நிருபர்தம்மையும் முறை முறை நிறுத்தி - குளிர்ச்சியான அன்புடனே தன் பின்னேதொடர்ந்துவருகிறஅரசர்களையும் ஒருவரையொருவரையாகநிற்கச் செய்துவிட்டு, பண் அமை தட தேர் மீது கொண்டு - அலங்காரம்அமைந்த பெரியதனதுதேரின்மேலேறிக்கொண்டு, அன்றே பாண்டவர் உறை நகர் அடைந்தான் - அப்பொழுதே புறப்பட்டுப் பாண்டவர்கள்வசிக்கிற (உபப் பிலாவிய) நகரத்தைச் சேர்ந்தான்; (எ - று.) (உ௬௩)

[கண்ணன் நடந்தவற்றைப் பாண்டவர்க்கு உரைத்தல்.]

உ௬௪. தூதுபோயரவத்துவசனோடுறுதி சொன்னதுமறுத்த வன்சினந்து, மோதுபோர்புரியத்துணிந்ததும்விதுரன்மூரிவில்லிறு த்ததுங்கங்குற், போதுபோர்வஞ்சம்விளைத்ததுங்கன்னன்புரந்தரற் கீந்ததும்பயந்த, மாதுபோய்வரங்கள்பெற்றவையொழியமற்றெலா மைத்துனர்க்குரைத்தான்.

(இ - ள்.) தூது போய் - (தான்) தூதுசென்று, அரவம் துவசனோடு - துரியோதனனுடனே, உறுதி சொன்னதும் - நன்மைதருவதான சமாதான வார்த்தையைக்கூறியதையும், அவன் - அத்துரியோதனன், மறுத்து - (அதனை உடன்படாது) தடுத்து, சினந்து - கோபித்து, மோது போர் புரிய துணிந்ததும் - தாக்குகின்ற யுத்தத்தைச் செய்ய நிச்சயித்ததையும், விதுரன்—, மூரி வில் இறுத்ததும் - வலிமையையுடைய [அல்லது பழைய] தனதுவில்லை யொடித்துப்போகட்டுவிட்டதையும், கங்குல் போது - இராக்காலத்தில், (ஆலோசித்துத் துரியோதனன்), வஞ்சம் போர் விளைத்ததும் - வஞ்சனையான யுத்தத்தை (நிலவறையில்) அமைத்துவைத்ததையும், கன்னன்—, புரந்தரற்கு ஈந்ததும் - இந்திரனுக்கு (த் தன்கவச குண்டலங்களைக்) கொடுத்ததையும், பயந்த மாது போய் வரங்கள் பெற்றவை ஒழிய மற்று எலாம் - பெற்றதாயான குந்தி சென்று (கர்ணனிடத்து) வரங்கள்பெற்றவற்றைத் தவிர மற்று முள்ள எல்லாச்செய்திகளையும், மைத்துனர்க்கு உரைத்தான் - (ஸ்ரீகிருஷ்ண பகவான் தனது) மைத்துனர்களாகிய பாண்டவர்களுக்குக் கூறியருளி னான்; (எ - று.)

பயந்தமாது போய் வரங்கள்பெற்றவற்றைக் கூறாததற்குக் காரணம், கீழே விளக்கப்பட்டது. அத்தைமகனை மைத்துனனென்பது-முற்காலத்து வழக்கம்போலும். மற்றெலாம் என்றதில், அசுவத்தாமனைப் பேதித்தது அடங்கும். (உ௬௪)

கிருட்டிணன்தூதுசருக்கம் முற்றிற்று.

# வில்லிபுத்தூராழ்வார் வரலாறு.

வில்லிபுத்தூராரென்பவர், தமிழில்மகாபாரதம்பாடியஒருமகாகவி. பிராமணசாதியிற்பிறந்தவரென்பது, இந்நூற்சிறப்புப்பாயிரத்தில் "வண்ண நான்கினு முயர்ந்துளோ னொருமுனி வந்தான்" என்றதனால் விளங்கும்.

இவருடைய மதம் வைஷ்ணவ மென்பது, சிறப்புப்பாயிரத்தில் "பைந்துழாய்முடிப் பரமனைப் பலகவித்துறையுஞ், சிந்தையான்மொழிந் தன்பர்தந்திருவுளம்பெற்றேன்" என வருதலினாலும், இவர் இப்பாரதத்தின் முதலிலும் இந்நூற்சருக்கங்களின் தொடக்கத்திலும் ஸ்ரீமகாவிஷ்ணுவின்விஷயமாகவே பலவாறு கடவுள்வாழ்த்துக்கூறியுள்ளதனாலும், "எங்கள் மாதவன்" என்று நூலைத் தொடங்கியிருப்பதனாலும், வில்லிபுத்தூராழ்வா ரெனத் திருநாமமுடைமையாலும், தெளிவாகத் தெரியவருகிறது.

இவர் ஒன்பதாம்போர்ச்சருக்கத்துக் காப்புச்செய்யுளில் "ஓராறுபேத சமயங்களுக்கு முருவாகிநின்ற வொருவ, னீராறுநாம முரைசெய்து மண்கொ டிடுவார்கள்காணு மிமையோர்" எனத் துவாதசோர்த்துவபுண்டரத்தைச்சிறப்பித்துக்கூறியுள்ளதனால், இவர் திருமண்காப்புச்சாத்தும்ஸ்ரீவைஷ்ணவரென விளங்கும். இன்னும், இவர் திருமாலினிடத்துமாத்திரமேயன்றி அப்பெருமானடியார்களுட் சிறந்தவரான ஆழ்வார்களிடத்தும் ஈடுபாடுடையவ ரென்பதை, பதினோராம்போர்ச்சருக்கத்துக்காப்பின் "கொத்தவிழ்த்த சோலைமன்னு குருகையாதிநெஞ்சிலே, வைத்த முத்திநாதன்" என நம்மாழ்வாரையும், பத்தாம்போர்ச்சருக்கத்துக் காப்பில் "கலிய னெங்கள் மங்கையாளி கண்டுகொண்ட நாமமே" எனத் திருமங்கையாழ்வாரையுங் கூறியுள்ளதனாற் காண்க.

இவர் திருவவதரித்த ஊர், நடுநாட்டிலுள்ள சனியூ ரென்பது.

பெண்ணையாறுபாயப்பெற்றதும், திருக்கோவலூர் முதலிய விஷ்ணுஸ்தலங்களையும் திருவெண்ணெய்நல்லூர்முதலிய சிவஸ்தலங்களையு முடையதும், நடுநாடென்று சொல்லப்படுவது மாகிய திருமுனைப்பாடிநாட்டிற் சனியூரிலே பிராமணசாதியிலே வைஷ்ணவமதத்தில் வீரராகவாசாரிய ரென்பவர்க்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்த இவ்வில்லிபுத்தூரார், பாலியத்திலேயே நல்லாசிரியரையடுத்துக் கல்விகற்று, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் தம்மையொத்தாரும்மிக்காரும்இல்லையாம்படி மிக வல்லவராய், வடமொழியிலும் மிக்கதேர்ச்சி பெற்று, ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகைப்பட்ட கவிகளையும்சிரமமில்லாமல் மிகவெளிதில் அமிழ்தினும்இனியனவாகப்பாடவல்லராய், சேரசோழபாண்டிய ரென்னுந் தமிழ்நாட்டுமூவேந்தர்களாலும் மிக்க சிறப்புடன் விரும்பியழைக்கப்பட்டு ஆங்காங்குச்சென்று தமதுகல்வித்திறத்தைப் பலவகையாலுங் காட்டி அவர்களைக் களிப்பித்து அவர்கள் அன்போடு அபிமானித்து மிகுதியாக வழங்கிய சிறந்த பல பெரும்பரிசுகளைப் பெற்று, பற்பலகவித்துறைகள்பாடித் திருமாலை இரவும்பகலும் எப்பொழுதுந் துதித்துக்கொண்டு, (வடக்கே திருவேங்கடமும் தெற்கே கன்னியாகுமரியும் கிழக்கிலும் மேற்கிலுங் கடலும் எல்லையாக அமையப்பெற்றுள்ளதும், சோழநாடு பாண்டியநாடு மலைநாடு கொங்குநாடு நடுநாடு தொண்டைநாடு எனப் பலவகையாகப் பகுக்கப்பட்டுள்ளதுமாகிய) தமிழ்நாடு முழுவதிலுந் தமது கல்விப்பெரும் புகழைப் பரவச்செய்துவந்தார். அங்ஙனம் வருகையிலே, முற்கூறிய திருமுனைப்பாடிநாட்டிலே வக்கபாகை யென்னும் இராசதானியிலே வீற்றிருந்து செங்கோல்செலுத்தி, தலை இடை கடை யென்னும் மூவகைச் சங்கத்திலே வளர்ந்துவந்த தமிழ் பின்பு பங்கத்தையடையாதபடி காக்காவ

* இவ்வரலாறு, இவர்குமாரராகிய வரந்தருவார் [வரதாசாரியர்] இருபத்திரண்டு செய்யுள்களாற் செய்துள்ள சிறப்புப்பாயிரத்தைப் பிரதான ஆதாரமாக்கொண்டும், மற்றுஞ்சில ஆதாரங்களால் வேறு சிலவிஷயங்களைச் சேர்த்தும் ஒருவாறு காட்டப்படுகிறது.

தொரு சங்கம்போல அதனைப்பாதுகாத்து, அருங்கவிப்புலவர்களை அன்புடன் ஆதரித்துவந்த வள்ளலும், கல்வி அறிவு ஒழுக்கங்களாலும் செல்வம் அதிகாரம் முதலிய நலங்களாலுங் குறைவின்றி மிகச்சிறப்புற்றுவிளங்கியவனுமாகிய கொங்கர்குலத்துத்தோன்றிய வரபதியாட்கொண்டானென்கிற அரசன், இவ்வில்லிபுத்தூராரது கல்விகேள்வித் திறமைகளையும் அடக்கம் ஒழுக்கம் அன்பு அருள் வாய்மை முதலிய நற்குணங்களையுங் கேள்வியுற்று அறிந்து 'இக்குணங்களெல்லாம் ஒருவரிடத்திலே ஒருங்கே அமைந்திருப்பது அருமை அருமை!'என்று மிகஆச்சரியமுற்று இவரைவரவழைத்து அநேகசம்மானங்கள் செய்து தனது ஆஸ்தானபண்டிதராக அமைத்துவைத்து, ஒருநாள் இவரைநோக்கி 'உமக்கும் நீர் எழுந்தருளியுள்ள இந்த எனது சம்ஸ்தானத்துக்கும் உலகமுள்ளவளவும் அழியாப்பெருங்கீர்த்தி உண்டாகி நிலைபெறும்படி, வடமொழியில் ஸ்ரீவேதவியாசமகாமுனிவரால் விரித்துரைக்கப்பட்ட மகாபாரதசரித்திரத்தைத் தமிழ்பயில்வோர்அனைவரும் ஓதியுணர்ந்துஉய்யுமாறு செந்தமிழில் விருத்தப்பாடல்களினால் ஒருபெருங்காப்பியமாகப் பாடித்தந்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, இவர் அவ்வேண்டுகோளுக்கு இசைந்து (இதிகாசமிரண்டனுட்பெரியதாகிய) மகாபாரதத்தை மகாகாவியமாகச் சொற்சுவைபொருட்சுவைகள் மிக்குவிளங்கும்படி நல்லநடையிலே பாடியருளினார். இது நிற்க:

இவர்பாரதம்பாடியகாரணம் இன்னும்இரண்டுவகையாகவுங் கூறப்படும்.

அவற்றுள், முதலாவது வருமாறு:—இந்தவில்லிபுத்தூரார்க்கும் இவர் தம்பியார்க்கும் தாயபாகத்தைப்பற்றி விவாதமுண்டாகி அவ்விஷயத்தை அவர்கள் அரசனிடம் அறிவித்தனர்; அரசன் இவரது கல்வித்திறத்தை முன்னமே கேள்வியுற்று அறிந்துள்ளவனாதலால் 'இவ்வளவு கற்றறிந்தவர்க்கும் உண்மையறிவு உண்டாகவில்லையே!'என்று மிகவும்விசாரமடைந்து'அவ்வுண்மையறிவை இவர்க்கு உண்டாக்குவதற்கு ஏற்றஉபாயம், (தாயபாகங்காரணமாகத் துரியோதனாதியர் மாறுபட்டுஅழிந்ததைக் கூறும்) மகாபாரதநூலில் இவரைப் பழகும்படிசெய்வதே' என்றுநிச்சயித்து 'மகாபாரதத்தை நீர் தமிழிற் பாடவேண்டும்; பாடினபின்புதான் உங்கள் வழக்குத் தீர்க்கப்படும்' என்று கட்டளையிட்டான்; உடனே இவர் அவ்வாறே அப்பாரதத்தைப்பாடி அந்நூலின் நீதியிற்கருத்துஊன்றினவராய், பின்பு தாமே தம்தாயபாகத்தில் வெறுப்புற்று,அதனையும் தம்பிக்கே கொடுத்துவிட்டனரெனக் கூறுவர்சிலர்.

வேறுசிலர் கூறுமாறு:—இவ்வில்லிபுத்தூரார் தம்மோடு வாதஞ்செய்து தோற்றவர்களது காதுகளைத் தோண்டியறுக்குந் துறட்டைக் கையிற் கொண்டு சென்று ஆங்காங்குள்ள புலவர்களையுஞ் சயித்துவருகிறபொழுது திருவண்ணாமலைக்குப் போயினர்; அங்குத்தங்கியகல்விமான்கள் இவரைக்கண்டும் இவர்செய்கையைக்கேட்டும் அஞ்சியோடிச்சென்று தமதுதலைவரும் திருப்புகழ்பாடியவருமாகிய *அருணகிரிநாத ரென்னும் பெரும்புலவர்க்குச் செய்தியை அறிவித்தார்கள்; அப்புலவர்பெருமான் வில்லிபுத்தூராரது செருக்கை யடக்கக் கருத்துக்கொண்டு அவரைவருவித்து 'யான் இப்பொழுது நூதனமாகப்பாடுகின்ற தொரு நூலுக்கு யான்பாடிவரும்பொழுதே பொருள்கூறிவருவீராயின், உமதுகல்வித்திறம் விளங்கும்' என்று அலட்சியமாகச்சொல்லினர்; சொல்லவே, இவ்வாசிரியர், கடுஞ்சினங்கொண்டு, தம்மையெதிர்க்கிற அவரை வென்று அங்குந் தமதுவெற்றிக்கொடியை நாட்டக்கருதி, அக்கொள்கைக்கு உடன்பட்டார்; உடனே அருணகிரிநாதர் ஆசுகவியாகநூறுபாட்டில்முருகக்கடவுள்விஷயமாக'கந்தரந்தாதி'என்னும் யமகவந்தாதியைப்பாடிவர, வில்லிபுத்தூராரும் உடனுக்குடனே ஒவ்வொரு செய்யுட்கும் பொருள்கூறிவந்து இடையில் ஐம்பத்துநான்காம் பாட்டாகிய

* இவர் பிரபுடதேவமகாராஜாகாலத்திலிருந்தவரென்றும், அவன்காலம் இப்பொழுதைக்குஏறக்குறைய சுஙO-வருடங்கட்குமுன்பென்றும் கூறுவ

* "திதத்தத்தத்தித்தத்திதிதாதைதாததுத்தித்தத்திதா
திதத்தத்தத்தித்தத்தித்தித்தேதுத்துதித்திதத்தா
திதத்தத்தத்தித்தத்தைதாததீதேதுதைதாததத்து
திதத்தத்தத்தித்தித்திதீதிதிதுதிதீதொத்ததே"

என்னும் ஒருமெய்யால்வந்தசெய்யுட்குப் பொருளுரைக்கமாட்டாமற்போனமையால் தோல்வியடைந்து தம்துரட்டை யெறிந்துவிட்டு அவ்வூரினின்றும் புறப்பட்டுப் போவாராயினர்: போம்வழியிற் சிவாலயமொன்று இருக்க,அது தம்கண்ணிற்படாதபடி தம்மைச்சுற்றித் திரையிடும்படி வில்லிபுத்தூரார் தம்பரிசனங்களையேவிச் செவிந்தனைசெய்து, அதுகேட்டுஅளவிறந்தகோபங்கொண்ட அருணகிரிநாதரது சாபத்தாற் கண்ணிழந்து, அச்சாபம் நீங்கும்பொருட்டுச் சிவவிஷயமாக ஓர் நூல்செய்யும்படி அவரால்ஆஜ்ஞாபிக்கப்பட்டார்; பட்டும் வீரவைஷ்ணவராதலால் தம் மதாபிமானத்துக்குப் பங்கம் வாராமல் சிவஸ்துதி சிற்சிலவிடத்து விரவிவரும்படி இப்பாரதத்தைச் சாபநிவிருத்தியின்பொருட்டுப் பாடிக் கண்பெற்றார் என்பது.

---

* (இதன்பொருள்.) தித தத்த தித்த - தித ததத தித்த என்னும் இத் தாளவொத்துக்களை, திதி - (தனது திருநடனத்தாற்) காக்கின்ற, தாதை- தந்தையான பரமசிவனும், தாத - பிரமனும், துத்தி - படப்புள்ளிகளையுடைய, தத்தி - (ஆதிசேஷனென்னும்)பாம்பினது, தா - இடத்தையும்,திதம்- நிலைபெற்ற, தத்து-ததும்புகிற, அத்தி-சமுத்திரத்தையும், (சயனமாகக்கொண்ட),ததி தித்தித்ததே து-தித்திப்புடையதான தயிரையே உண்ட கண்ணனும், துதித்த - துதிசெய்யும்படியான, இதத்து - பேரின்பசொரூபியாகிய, ஆதி - முதல்வனே! தத்தத்து - தந்தங்களையுடைய, அத்தி - ஐராவதயானையால் (வளர்க்கப்பட்ட), தத்தை - கிளிபோன்ற தெய்வயானையம்மைக்கு, தாத - தொண்டனே! தீதே துதை - தீமையே நெருங்கின, தாது - (ஏழு) தாதுக்களையுடையதும், அதத்து - மரணத்தோடும், உதி - பிறப்போடும், தத்து - (அநேக) ஆபத்துக்களோடும், அத்து - இசைந்திருப்பதுமான, அத்தி தித்தி-எலும்புகளை மூடியதொரு பையைப் போன்ற இவ்வுடல், தீ - அக்கினியினால், தீ - எரிக்கப்படுகிற,திதி - தினத்தில், துதி தீ - (உன்னைத்) துதிக்கும்புத்தி,தொத்ததே-(உனக்கே)அடிமையாகவேண்டும்;(என்றவாறு.)

திரிமூர்த்திகளாலும் கொண்டாடப்படுபவனே! தெய்வயானை கொழுநனே! இவ்வுடம்பழியுங்காலத்து உன்னைத்துதிக்கும் எனது அறிவை உன் திருவடிக்கு அடிமையாக்கவேண்டும் என்பதாம். தீ - எழுவாய், தொத்தது- பயனிலை. தித தத்த தித்த இம்மூன்றும் - பிற தாளமானங்கட்கும் உபலட்சணம். திதி - ஸ்திதி, தாதை - தாத, தாத - தாதா; வடசொல் திரிபுகள். படைத்தற்கடவுளாகையால் எல்லாப்பிராணிகட்கும் தந்தையாதல்பற்றி, 'தாத' என்று பிரமனைக் குறித்ததாகவுங் கொள்ளலாம். தத்தி - பாயுந்தன்மையதெனப் பாம்புக்குக் காரணப்பெயர்; தத்துதல் - பாய்தல்: ஊர்தலுமாம்; இ - கர்த்தாப்பொருள்விகுதி: இனி, ஆபத்தை விளைப்பதென்றுமாம்; தத்து-அவமிருத்து, இ-பெயர்விகுதி. தா-இடத்தை யுணர்த்துகையில்,உரிச்சொல். திதம் - ஸ்திதம்: வடசொல். தத்து - வினைத்தொகை. அத்தி-அப்தி என்னும் வடசொல்லின் திரிபு. ததி-வடசொல். து-முதனிலைத்தொழிலாகு பெயராகிய காரணக்குறி. துதித்த - ஸ்துதித்த. துதித்திதம் - பெயரெச்சவீறு தொகுத்தல். இதம் - ஹிதம்; வடசொல். தந்தம் - தத்தம் என யமகநோக்கிய வலித்தல்.அத்தி-ஹஸ்தீ யென்னும் வடமொழியின்திரிபு. தத்தை- உவமையாகுபெயர்; இன்சொல்லில் உவமம். தாத - தாஸ; வடசொல். அவனிடத்து மிக்க அன்பினால், அவனேவியபணிகளைச் செய்தலின், தாசனென்றது. அதம் - ஹதம். உதி - முதனிலைத் தொழிற்பெயர். அத்து - இசைப்பு. அத்தி-அஸ்தீ: வடசொல். தீ - அறிவைக்குறிக்கையில்,வடசொல். தொத்தது-குறிப்புமுற்று; தொத்து - அடிமை: ஏ-பிரிநிலையோடு, தேற்றம்.

இந்த இரண்டுவகை வரலாறுகளும், இந்நூலின் பாயிரத்தோடு மாறுபடுகின்றதனாலும், இவர்மகனார்கூறிய பாயிரத்தை மறுக்கத்தக்க பிரபல ஆதாரமொன்றும் இவ்வரலாறுகட்கு இல்லையாதலாலும், இவை யாவராலுந் தகுதியென்றுஏற்றுக்கொள்ளத்தக்கனவல்லவென்றுதோன்றுகின்றது.

இவர் தம்காலத்திற் கல்விச்செருக் கடைந்திருந்த புலவர்கள் பலரையுந் தமது வித்தியாசாமர்த்தியத்தால் வென்று அவ்வெற்றிக்கு அடையாளமாகத் தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் தமதுகையிலே எப்பொழுதும் ஆயுதமாகவைத்துக்கொண்டுள்ள துறட்டுக்கோலால் மாட்டியிழுத்து அறுத்துவந்தன ரென்பது,

"குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னிங்கில்லை
தறும்பியாலாக் காதைக் குடைந்து தோண்டி
யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டொன்று முடிந்து தலையிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவி யொட்டக்கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே"

என வழங்குந் தனிப்பாட்டாலும் அறியப்படும்.

ஒருவன்பாடும் பாட்டில் ஏதாவது குற்றங்கண்டால், கண்டவுடனே அவனது தலையில் நறுக்கென்று குட்டுவது, பிள்ளைப்பாண்டிய னென்னும் அரசனதுசெய்கை;அவனிடம்பரிசுபெறவந்த வித்துவான்கள்பலரும், 'குட்டுப்பட்டாலும் மோதிரக்கையாற் படவேண்டும்' என்கிற பழமொழியைப் புதுமொழியாக ஞாபகப்படுத்திக்கொண்டு, வந்தவழியே திரும்பிப்போய் மேன்மேற் கல்விகற்க முயல்வது, அவன்காலத்தில் இயல்பா யிருந்ததாம். கவிபாடிவருபவர்களையெல்லாஞ் சயித்துப் பிடித்துச் சிறைச்சாலையிலடைப்பித்து, தேவி கொலுவிருக்கின்ற நவராத்திரிகாலத்திற் சிறைக்கூடத்திலிருந்து வெளிப்படுத்தி அவர்களை இருவரிருவராகக் குடுமியோடு குடுமி முடிபோட்டு இறங்கிநிற்கத் தேவிமுன்பாக நிறுத்திப் பிடாரிக்குச் சோடுகடா வெட்டுவதுபோலச் சற்றும்இரக்கமில்லாமல் அவர்கள்தலைகளைப் பதைக்கப் பதைக்க வெட்டிப் பலிசெலுத்துவது, ஒட்டக்கூத்தரென்னும் புலவரது வழக்கமாம். அவைபோலவே, இவ்வில்லிபுத்தூராரும், வாதஞ்செய்யும்பொழுது எதிரி தோற்றால் அவன்காதில் துறட்டைமாட்டிப் பிடித்திழுத்துக் காதை ஒட்ட அறுத்து, யானையின் மதக்களிப்பை அங்குசத்தால் அடக்குவதுபோல அவர்கள்கல்விச்செருக்கைத் தம்துறட்டினா லொழிப்பதைத் தமது வழக்கமாக வைத்துக்கொண்டு விருதுகூறிச்சென்று திக்குவிசயஞ் செய்துவந்தார். இவர்காலத்து அரசர்கள் இவரிடத்தில் மிகவும்அன்புவைத்திருந்ததனால், இவர் இங்ஙனஞ்செய்ய இடங்கொடுத்துவந்தார்கள்.

இவருடைய காலம் இப்பொழுதைக்குச் சற்றேறக்குறைய ஐந்நூறு வருஷத்துக்கு முன் என்பர்.

பாயிரத்தில் "நான்காஞ்சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமல் தலைகண்டானே" என்று இவர் காலத்திலிருந்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனைக் கூறியிருத்தலால், இவர்காலம் கடைச்சங்கத்தார் காலத்துக்குப்பின் என்பது மாத்திரமே தெளிவாகத் தெரியவருகிறது.

இவர்க்கு வில்லிபுத்தூராரென்றும் வில்லிபுத்தூராழ்வாரென்றும் வழங்கிவருகிற பெயர் யாதுகாரணத்தால் வந்தது? பாண்டியநாட்டில் திருநெல்வேலிப்பிராந்தத்திற் பிரசித்தமாகவுள்ள விஷ்ணுஸ்தலமான ஸ்ரீவில்லிபுத்தூரிற் பிறந்தவரா? அன்றி, அங்கு வளர்ந்தவரா? அல்லாக்கால் அவ்விடத்து வாழ்ந்தவரா? என்றால்,— இக்காரணங்க ளொன்றுமன்று, இவர்க்கு இப்

பெயர் வந்தது; பின்னை யென்னையோவெனில்,— வைஷ்ணவசம்பிரதாயத்திற் சிறந்தபக்தர்களென்றுசொல்லப்படுகிறஆழ்வார்கள்பன்னிருவருள் ஒருவரும்,பெரியாழ்வாரென்றும் பட்டர்பிரானென்றும் விஷ்ணுசித்தரென்றும் வேறுதிருப்பெயர்களை யுடையவரும், ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்ததனால் வில்லிபுத்தூராழ்வா ரென்று வழங்கப்படுபவரு மாகிய பாகவதசிகாமணியினுடைய இத்திருநாமத்தையே தந்தைதாயர்கள் இவர்க்குப் பெயராக இட்டு வழங்கினார்க ளென்று உணர்க; (பரிசுத்திகரமென்கிறகாரணத்தால், கடவுள்பெயரும் அடியார்களின்பெயரும் மனிதர்கட்கு இட்டு வழங்கப்படும்.) இவருடைய தந்தைதாயர் பெரியாழ்வார்பக்கல் மிக்கபக்தியுடையராய் அவரைவழிபாடுசெய்ய, அவ்வாழ்வாரருளால் இம்மகன் பிறக்க, இக்குமாரனுக்கு அவ்வாழ்வார்பெயரை யிட்டன ரென்னலாம்.அல்லது, அந்தப் பெரியாழ்வார் பாலியத்திலே எவரிடத்தும் யாதொருநூலும் படியாதவராயிருந்தும் பின்பு பகவானருளாற் பெரியதிவ்வியப்பிரபந்தம் பாடவல்ல மகாபண்டிதராய்விட்டதுபோல, இவரும் தெய்வகடாக்ஷம்பெற்ற வரகவியென்கிற காரணம்பற்றி, இவர்க்கு வில்லிபுத்தூராழ்வாரென்று பெயர்வந்த தென்றுங் கொள்ளலாம். [ஆழ்வார்என்பதற்கு-எம்பெருமானுடைய திருக்கலியாணகுணகணங்களாகிய பெருங்கடலில் அமிழ்ந்து நெஞ்சுருகிஈடுபடுபவரென்றுபொருள். இப்பெயரால் மற்றுஞ்சிலபக்தர்களை வழங்குவதைப் பரதாழ்வான், சத்துருக்கனாழ்வான்,பிரகலாதாழ்வான், கஜேந்திராழ்வான், சுதரிசனாழ்வான், கம்பநாட்டாழ்வார் முதலிய பெயர்களிலுங் காண்க.]

விஷ்ணுவினுடைய அம்சாவதாரமாகிய கிருஷ்ணனுடைய சரித்திரம் மகாபாரதத்தில் இடையிடையே வருகிற தென்ற சிறப்புப்பற்றியே இவ்வாசிரியர் பாண்டவசரித்திரத்தைப் பாடுதற்கு உடன்பட்டுப் பாடினார்; இது

" முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கு
மென்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்"

என இவர்தாமே தற்சிறப்புப்பாயிரத்திற் கூறியுள்ளதனாற் பெறப்படும். [வேதவியாசபகவானும் வடமொழிமகாபாரதத்தில்இவ்வாறேகூறியுள்ளார். இனி, இச்செய்யுளின் மூன்றாமடியின் முதலில் 'மன்னுமாதவன்' என்பதை மன்னும் மாதவன் எனப்பிரித்து - நித்தியனாகிய திருமகள்கொழுநனை திருமாலென்று பொருள்கொள்வதை விட்டு மன்னும் மாது அவன் என்றாவது மன் உமா தவன் என்றாவது பதம்பிரித்து-ஸ்தாணுவாகியஉமாபதியான சங்கர னெனப் பொருள்கொண்டு, சிவபிரானதுசரித்திரம் இந்நூலின் இடையிடையேவழங்குவதென்ற விருப்பத்தால் தாம் இதனைப்பாடஇசைந்ததாகக் கூறினா ரென்று உரைப்பாரு முண்டு; அது சரியன்று: ஏனெனில்,— இந்நூலில் ஆதிபருவத்தில் அருச்சுனன்தீர்த்தயாத்திரைச்சருக்கத்திலும், ஆரணியபருவத்தில் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்திலும், துரோணபருவத்தில் பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திலும் ஆக மூன்றிடத்தில்மாத்திரமேயன்றி நூல்முழுவதும் இடையிடையே (கண்ணனுடைய சரித்திரங் காணப்படுவது போலச்) சிவபிரானுடைய பிரஸ்தாபம் இல்லாமையாலும், வைஷ்ணவராகிய இவர் சிவசரித்திரம்வருவதென்றுபாடினா ரென்பது உசிதமல்லாமையாலும் எனக் காண்க.]

அன்றியும், இவர் இந்நூலில் ஒவ்வொருசருக்கத்தின்தொடக்கத்திலும் திருமால்விஷயமாகக் காப்புச்செய்யுள் கூறியுள்ளதனாலும்," மறந்தும்புறந்தொழா" நல்லவைஷ்ணவ ரென்பது நன்குவிளங்கும். [சிலசருக்கங்களிலே காப்புச்செய்யுள் காணப்படவில்லை; அதற்குக்காரணம் - ஆசிரியராற்பாடப்பட்ட செய்யுட்கள் பிற்காலத்தில் ஏடெழுதுவோரால் எழுதாதுவிடப்பட்டு

இல்லையாயின வென்றாவது, * தொல்காப்பியம் முதலிய சில நூல்களிற் போலச் சிலசருக்கங்களின் ஆரம்பத்தில் மாநசிகமாத்திரமாகக் கடவுள் வணக்கஞ் செய்யப்பட்டுச் செய்யுளுருவமாய் வாசிகமாகக் காப்புச்செய்யப் படவில்லை யென்றாவது கொள்க.]

ஆயின், வைஷ்ணவராகிய இவர் இந்நூலின் முதற்காப்பாக

"நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநாள்
ஏடாகவடமேருவெற்பாகவங்கூரெழுத்தாணிதன்
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ.

முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறந்
திருகாமல்விளைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
புருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரும்
ஒருகோடிபூதேவருங்கைதொழுங்கோவையுறவுன்னுவாம்."

என்ற இரண்டு பாடல்களால் சிவகுமாரராகிய விநாயகரை ஸ்தோத்திரஞ் செய்வானேன்? என்றால்,—தம்மைச்சரணமடைந்தவர்கள் தொடங்குந்தொழில்கட்கு வருகிற விக்கினங்களைப் போக்குதலாலும் தம்மையடையாமல் அகங்கரித்தவர்கள் ஆரம்பிக்கிற செய்கைகட்குப் பல இடையூறுகளை உண்டாக்குதலாலும் 'விக்நேச்வரர்' என்று திருநாமம்பெற்றுள்ள ஸ்ரீவிநாயகமூர்த்தி சைவர்கட்குமாத்திரமேயன்றிச் சிறுபான்மை பிறர்க்கும் ஒருசார் வழிபடுகடவுளாதலாலும், வேதவியாசர் மகாபாரதத்தை இயற்றிவருகிற பொழுது விநாயகர் அந்நூலை மகாமேருமலையிலே எழுத்தாணிகொண்டு எழுதிவந்ததும் இடையிலே அவ்வெழுதுகருவி ஒடிந்துபோனபொழுது 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்றவகையாய் யானைமுகக்கடவுளாகிய தமது தந்தங்களில் ஒன்றைப் பறித்து அதனையே கருவியாகக் கொண்டு எழுதிமுடித்தருளினதுமாகிய இந்த முக்கியமானகாரணத்தைக்கொண்டு நோக்குமிடத்து விநாயகர் இந்நூலின்முதலில்வைத்தற்குஏற்றஇயைபுடையவ ராதலாலும், வைஷ்ணவர்கள் விநாயகரை விஷ்வக்ஸேந ரென்கிற சேனைமுதலியாரதுஅம்சமென்று கொண்டாடுவது மரபாதலாலும்,இவரும் விநாயகரைப் பாடின ரென்க.

இவ்வில்லிபுத்தூரார் சிவத்வேஷம்பாராட்டுகிற வீரவைஷ்ணவரல்லர். அது-அருச்சுனன்தீர்த்தயாத்திரைச்சருக்கத்திலும், அருச்சுனன்தவநிலைச்சருக்கத்திலும், பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திலும் சைவசம்பிரதாயத்துக்கு வழுவுறாதபடி சிவபிரானைச்சிறப்பித்தும் இதரதேவர்களைத்தாழ்த்தியுங் கூறியதனால், நன்குபுலனாகிறது. அருச்சுனனது கையிலுள்ள காண்டீவவில்லினது கழுந்தினாற் சிவபிரான் அடிபட்ட செய்தியைச் சொல்லும்பொழுது

"விண்ணிலுறைவானவரில்யாரடிபடாதவர்விரிஞ்சனரியேமுதலினோர்
மண்ணிலுறைமானவரில்யாரடிபடாதவர்மனுக்கள்முதலோர்களதலக்
கண்ணிலுறைநாகர்களில்யாரடிபடாதவர்கள்கட்செவிமகீபன்முதலோர்
எண்ணில்பலயோனியிலும்யாவடிபடாதனவிருந்துழியிருந்துழியரோ"

என்றது முதலியவற்றாலும்,பதின்மூன்றாம்போர்நாளின்இரவிலே சைந்தவனென்கிறசயத்திரதனை அருச்சுனன் அடுத்தநாளில் தவறாமற்கொல்லவேண்டிப் பரமசிவனிடத்துச் சிறந்த சில அஸ்திரசஸ்திரங்களைப் பெறுதற்காகக் கண்ணனுடனே கைலாசத்துக்குச் சென்ற செய்தியைச் சொல்லும்போது

†"புரநகை யாலெரி புராரி தன்முனம்
நரனொடு நாரணன் நணுகி நண்பினால்

* 'தொல்காப்பியமு முதலியவற்றில் நூற்குப் புறமாகவே மங்கலம் செய்யப்பட்டது' என்பது, தருக்கசங்கிரகவுரை.

† இப்பாட்டு, எமக்குக்கிடைத்த ஏட்டுப்பிரதிகளுள் எதிலும் இல்லை.

சரணபங் கயமுறத் தாழ்ந்து பன்முறை
கரமுற முகிழ்த்திது கழறன் மேயினர்''

என்றது முதலியவற்றாலுந் தெளிவாகத்தெரிகிறது. இன்னும், இவர் அருச்சுனன் தவநிலைச்சருக்கத்தில்

*''ஓரேனந்தனைத்தேடவொளித்தருளுமிருபாதத்தொருவனந்தப்
போரேனந்தனைத்தேடிக்கணங்களுடன்புறப்பட்டான்'' எனவும்,
''பையரவிணடிபுருகூதனிவர்சூழ்தரப்பச்சைமயில்பாதியுடனே
துய்யவிடைமீதொருசெழுஞ்சுடரெழுந்ததுதொழுந்தகையதாகுமளவோ''

எனவுங் கூறியவற்றையும் நோக்குக. † வியாசர் புராணங்களில் ஒவ்வொரு தேவரைஒவ்வோரிடத்திற்சந்தர்ப்பத்துக்கேற்பச்சிறப்பித்துக்கூறியிருத்தல் போலவே,இவரும் தமதுநூலில் சூரியன் அக்கினி முதலிய மற்றைத் தேவர்களையும் சமயம்வந்தவிடத்துப் பக்ஷபாதமில்லாமற் சிறப்பித்துக்கூறியிருக்கிறார். பதினேழாம்போர்ச்சருக்கத்தில்''மூவர்தத்தம்வடிவாமுதல்வன்''எனச் சூரியபகவானைச் சிறப்பித்துக்கூறியுள்ளவாறும் பிறவுங் காண்க; [இதற்கு-திரிமூர்த்திகளின் சொரூபமாகவுள்ள தலைவனான சூரியனென்றுபொருள்.]

கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய பெருந்தேவனாரென்பவர்,மகாபாரதத்தைத் தமிழில் வசனமும்பாடலுமாக விரவிவருகிற 'சம்பு' என்கிற நடையிலே பாடியிருக்கின்றனர்;பெரும்பாலும் வெண்பாக்களால் அமைந்ததுபற்றி,அந்நூலுக்குப் பாரதவெண்பா வென்று பெயர். அது இப்பொழுதைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம் வருஷத்துக்கு முந்தியது.‡ இவ்வில்லிபுத்தூரார் அந்தப்பாரதவெண்பாவின் சொல்லையும்பொருளையும் ஆங்காங்கு வெகுவாகத் தழுவி நாலாயிரத்துமுற்நூற்றுச்சொச்சம்பாடல்களாற் பாரதத்தைப் பாடினர். இவர்பாடிய பாரதம் வடமொழி வியாசபாரதத்தின் வழிநூ லென்னத் தட்டில்லை.

''மண்ணிலா வாரண நிகரென வியாதனார் வகுத்த
எண்ணிலா நெடுங்காதையை யானறிந் தியம்பல்''

என்று இவர்தாமே அவையடக்கத்திற் கூறியிருக்கிறார். ஆயினும், இவர் பாடியநூல் ஸம்ஸ்கிருதபாஷையில்அகஸ்தியபட்டரென்பவர் இயற்றியுள்ள பாலபாரத மென்னுங் காவியத்தின் பொருளமைதியோடு பலவிடங்களிலொத்திருக்கின்றது; ஒப்பிட்டுப்பார்க்குமிடத்து இந்நூலுக்கும் அந்நூலுக்கும் இடையிடையே பலவேறுபாடுகளும் உள்ளனவாயினும் சிற்சிலவிடங்களில் இந்நூல் அந்நூலின் மொழிபெயர்ப்பென்றே சொல்லலாம்படி யுள்ளது; இதற்கு அரிதில் தேடியெடாமல் எளிதில் அகப்பட்ட சில உதாரணங்கள் வருமாறு:—நூலின் முதலில் சந்திரனைக்கூறுமிடத்து, பாலபாரதம் - ''அத்ரிநேத்ரப்ரபவஃ''=வில்லிபுத்தூரார் பாரதம் - '' அத்திரிப்பெயரந்தண னம்பகந்தனில்......பிறந் தொளிசிறந்தோன்''; பாலபாரதம் - ''நக்ஷத்ரகணஸ்யநாதஃ''=வில்லிபாரதம் - ''பொருந்த வானுறைநாள்களைநாடொறும் புணர்வோன்''; பாலபாரதம் - ''ஸம்பாவநீயச் சிரஸாசிவேந''

* வில்லிபுத்தூராரைஆதரித்த அரசன் சைவமதத்தனாகவிருக்கலாமென்றும், இவர் அவனுக்கு முகோல்லாசமாக நூலிற் சிலவிடத்துச் சிவபிரானை விசேடித்துக்கூறியிருத்தல் கூடுமென்றும், அங்ஙனங் கூறியவற்றிற்கெல்லாம் வெளிப்படுபொருளொழிய வேறு உள்ளுறைபொருளும் உண்டென்றும் உய்த்துணர்ந்து கூறுதலும் ஒன்று.

† இப்படி சிவஸ்தோத்திரமான பாடல்கள் பலஏட்டுப்பிரதிகளில் இல்லை; பழையஏடுகளோடொப்பிட்டுப்பார்த்தால்யாவர்க்குமசம்புதலுண்டாம்.

‡ அந்நூல் பன்னீராயிரம் பாடல்களை யுடையதென்று தொண்டைமண்டலசதகத்திற் கூறியிருப்பினும்,அது இப்பொழுது முழுவதும் கிடைப்பதில்லை. உத்தியோகபருவந் தொடங்கித் துரோணபருவம் வரையிலும் எண்ணூறுபாடல்களே கிடைக்கின்றன.

=வில்லிபாரதம் - "திருந்தவானவர்க்கரியவன்செஞ்சடைமுடிமே, லிருந்த வானவன்": இங்ஙனம் பலவிடத்து ஒத்துவரும்.

வில்லிபுத்தூரார் தமதுபாரதத்திற் பாடியது, முதற்பத்துப்பருவமே; மற்றையெட்டுப் பருவங்கள் அவராற் பாடப்படவில்லை. அதற்குக் காரணம்: அவற்றைப்பாடுதற்குமுன் அவர் காலஞ்சென்றிருக்கலாம்; அல்லது, நூல் முழுவதையும் பாடினால் பாண்டவர்கள் கிருஷ்ணபகவான் என்கிற மகாபுருஷர்களது கேட்பவர்க்கு வருத்தத்தையுண்டாக்கத்தக்க மரணசரித்திரத்தைத் தம்வாயாற்சொல்லவேண்டுமேயென்றுகருதி 'பாண்டவர்கள் இராச்சியம் ஆண்டு வாழ்வாராயினர்' என்பதனோடு முடித்துவிட்டதாகக் கூறலாம். பாண்டவசரித்திரங் கூறுகிற பாரதசம்பு முதலிய சில நூல்களிலும் பின்னிட்டகதை காணப்படவில்லை. [கம்பர் இராமாயணத்தில் உத்தரகாண்டம் பாடாமல் விட்டதற்கும் இப்படிப்பட்ட காரணத்தையே முக்கியமாகக் கொள்ளலாம்; இப்பொழுதும் இராமாயணபாராயணஞ்செய்பவர்கள் உத்தரகாண்டம் படிப்பதில்லையன்றோ?] அவ்வாறே இவரும் பின்னையசரித்திரத்தைக் கூறாமல் "கனைகடற்பா ரளித்து அவரு மந்நகரி லறநெறியேகருதி வாழ்ந்தார்"என மங்களகரமாகவே சரித்திரத்தைப் பாடிமுடித்தன ரெனக் கொள்வது தகுதியுடையது. இனி,இந்நூலின் பின்னைய பருவங்களும் பாடப்பட்டுப் பிற்காலத்திற் கிடைத்தற் கரியவையாயினவென்று கொள்வாரு முளர்.* வில்லிபுத்தூரார்பாடிய பாரதத்திலே சுருக்கமாகக் கதையைத் தொகுத்துக்கூறும் முந்நூற நானூறு பாடல்கள் தவிர மற்றை நாலாயிரஞ்செய்யுட்களை யெடுத்துக்கொண்டு, பிற்காலத்தில் நல்லாப்பிள்ளையென்பவர், புதிதாகத் தாம் பதினோராயிரம் பாடல்பாடி இடையிடையிற்கோத்தும் இறுதியிற் சேர்த்தும் பாரதம் பதினெட்டுப் பருவங்களையும் பூர்த்திசெய்தார்; அது 'நல்லாப்பிள்ளைபாரதம்' என வழங்கும்: அந்நூலாசிரியர்,இற்றைக்கு நூறுவருஷங்களின்முன் இருந்தவர்.இதுதவிர, இற்றைக்கு கஞ0-வருடங்களின்முன் இருந்த அஷ்டாவதானம் - அரங்கநாதகவிராயர் பாடின பாரதத்தின் பிற்பகுதியும் ஒன்று உளது; அது ஏறக்குறைய உ௲00 - செய்யுளுடையது. மகாபாரதத்தின் ஆதிபருவத்தை மாத்திரம் விரித்துப் பாடிய தொரு தமிழ்நூல் உண்டு; அது, மடவைப்பதியில் வாழ்ந்த திம்மராயனென்பான் அம்பலத்தாடுமையரைக்கொண்டு பாடுவித்தது: அந்நூலை 'ஆதிபருவத்தாதி' என்று வழங்குவர்.

இப்பாரதத்துக்கும் இதன்முதனூலாகிய வியாசபாரதத்துக்கும் இடையிடையே கதையமைதிகள் சிற்சில வேறுபடுவது "முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப்,பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி,அழியா மரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிப்படி இவ்வாசிரியராற் பிறநூல் மேற்கோள்கொண்டு அமைக்கப்பட்டதாதல் வேண்டு மென அறிக. [கம்பராமாயணத்துக்கும் வால்மீகிராமாயணத்துக்கும் சிலசிலவிடத்து ஒன்றோடொன்று வேறுபாடுகாணப்படுதற்கும் காரணம் இதுவே: அன்றி, ஜைமினிபாரதத்தை முதனூலாகக்கொண்டு இவர் மொழிபெயர்த்தாரென்பது,முழுவதுஞ் சரியன்று; இவர் தாமே வியாசபாரதத்திலிருந்து எழுதுவதாகக் கூறியுள்ளார். (ஜைமினிபாரதத்தில் அசுவமேதபருவமொன்று தவிர மற்

* "கலியுகவியாதன்சொல்லக்கணபதியெழுதுபாடல்
பொலிவுறுதமிழிலாறாயிரமெனவிருத்தம்போற்றிச்
சலிவறவில்லிபுத்தூரிறைவனுஞ்சார்வபௌம
னொலிகெழுமறையோர்கோமானுயர்ந்தவருவப்பச்சொன்னான்"

என, ஒருசெய்யுள் வில்லிபுத்தூரார்பாரதத்துட்பெப்பிரதியொன்றிற் பாயிரத்துடனே காணப்படுகின்றது. இது பழையபாடலாகவிருக்குமாயின், இதிற் கூறிய ஆறாயிரம்பாடல்களில் பத்துப்பருவங்களாகநாலாயிரத்துமுந்நூற்றுச்சொச்சம்போகமற்றவை இவர்பாடியவெட்டுப்பருவங்களெனக்கொள்ளலாம்.

றையபருவங்களெல்லாம் வியாஸசாபத்தால் அக்காலத்திலேதானே அழிந்து விட்டன வென்பது ஐதிஹ்யம்.)

இவர் மகாபாரதமொன்றுதவிர வேறுநூலெதுவும் பாடியிருப்பதாகத் தெரியவரவில்லை. கந்தரந்தாதியுரை இவர்செய்ததென்று கூறுவர் ஒருசாரார்.

இவர், தமக்குப்பலசெல்வமுங்கொடுத்து ஆதரித்துத் தம்மைக்கொண்டு பாரதத்தைப் பாடும்படி செய்வித்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனை இப்பெருங்காப்பியத்தில் இடையிடையே புகழ்ந்துபேசியிருக்கிறார்:—

"சொன்மழைபொழிந்துநாடொறுந்தனதுதோள்வலிதுதிக்குநாவலர்க்குப்
பொன்மழைபொழியுங்கொங்கபூபதிதன்பொற்பதம்பொருந்தலர்போலக்
கன்மழைபொழியுங்காளமாமுகிலுங்கடவுளர்த்தூர்ந்தவன்கரத்தில்
வின்மழைபொழியக்கற்களுந்துகளாய்மேனியும்வெளிறிமீண்டனவே"

என்ற பாடலில், அருச்சுனனது பாணங்களினால் மேகங்கள் சின்னபின்னப்பட்டுச் சிதறியொழிந்ததற்கு வரபதியாட்கொண்டானுடையமுன்னிலையில் அவன்பகைவர்கள் சிதறியோடுதலை ஒப்புமைகூறினர்.

"கொடிமதிற் பாகை வேந்தன் கொங்கர்கோன் புரவிக் காலால்
வடதிசை யரசர் தங்கள் மாமணி மகுடம் போல
அடலுடை விசய னுற்றை யம்பினால் மீண்டுஞ் சென்று
படவர வுயர்த்த கோவைப் பண்ணினான் மகுட பங்கம்"

என்னும் பாட்டில், உத்தரகோக்கிரகணகாலத்தில் அருச்சுனன் துரியோதனனை ஒருபாணத்தாற் கிரீடத்தைக்கீழேதள்ளிஅவமானப்படுத்தியதற்கு, வரபதியாட்கொண்டான் தானேறிப்போர்க்குச்செல்கிறகுதிரையின் முன்கால்களால் வடக்குத்திக்கிலுள்ளஅரசர்களைப் பங்கஞ்செய்வதை உவமைகூறினார்.

"கோவலர்சூழ் பெண்ணை நாடன் கொங்கர்கோன் பாகை வேந்தன்
பாவலர் மானங் காத்தான் பங்கயச் செங்கை யென்ன
மேவல ரமரென் னுமல் வெங்களந் தன்னில் நின்ற
காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனக மாரி"

என்கிற செய்யுளில், கர்ணன் யுத்தத்திற்குச் செல்கின்றபொழுது பகைவர் நண்ப ரென்கிற பேதமில்லாமல் யாவர்க்குந் தானஞ்செய்துவருதற்கு, வரபதியாட்கொண்டான் தானஞ்செய்தலை ஒப்பிட்டார்.

"நாகையாப் புகழான் பெண்ணை நதிவளஞ் சுரக்கு நாடன்
வாகையாற் பொலிதிண் டோளான் மாகதக் கொங்கர் கோமான்
பாகையாட் கொண்டான் செங்கைப் பரிசு பெற்றவர் நெஞ்சென்ன
ஓகையாற் செருக்கி மீண்டா ருதிட்டிரன் சேனை யுள்ளார்"

என்ற கவியில், தருமபுத்திரனது சேனையிலுள்ள வீரர்கள் வெற்றிகொண்டு களிப்போடு படைவீட்டுக்கு மீளுதற்கு, வரபதியாட்கொண்டானிடம் வெகுமானம்பெற்றவர்கள் திருப்தியோடு திரும்பிவருவதை உவமைகூறினார்.

இப்படி, பாலில்விஷங்கலப்பதுபோலப் பெரிய இதிகாசத்தினிடையிலே ஒருமனிதனைத் துதித்தல் தகுமோ? நர கவனம் நரக வனமன்றோ? என்று ஓர் ஆட்சேபந் தோன்றலாம்: இங்ஙனந்தோத்திரிப்பது தகுதியன்றாயினும், அரசன் தமக்குச்செய்த நன்றியை மறவாமல் உபகாரஸ்மிருதியாகப் பாடினா ரென்பதுபற்றிப் பலரும் அங்கீகரிப்பார்கள்; அன்றியும், ப்ரஸ்துதமான உபமேயமுகத்தால் அவன்பெயரைப் பிரஸ்தாபிக்காமல் அப்ரஸ்துதமான உபமானமுகத்தாற் புகழ்ந்து கூறியதும் ஒருசமாதானமாகலாம். இங்ஙனமே தம்மைப்பாதுகாத்த பிரபுக்களைத் தாம்செய்யும்நூல்களில் நன்றியறிவுகாரணமாக எடுத்தெடுத்துவது, புலவர்களின் இயற்கை. கம்பர் இராமாயணத்தில் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப வள்ளலையும், புகழேந்திப்புலவர் நளவெண்பாவில் முரணைநகர்ச்சந்திரன் சுவர்க்கியையும், மண்டலபுருடன் சூடாமணிநிகண்டில்கிருஷ்ணதேவராயனையும்சிறப்பித்துக்கூறியவாறுகாண்க. இன்னும், இவர், தமது நூலில், தமிழ்நாட்டரசராகிய சேரசோழபாண்

டியர்களைப்பற்றிப் பிரஸ்தாபம்வருகிறபொழுது மிக்கசிறப்பாகக்கூறுவர்:—
"வஞ்சிமதுரைபுகாருடையான்வடமண்டலிகர்திறைவாரியநேரியன்[ருள்",
விஞ்சிமுனைதொறும்வாளசுரேசரைவென்றபொழுதடல்வானவர்கோன
"அண்டர்குலபதியாம்விடைவாகனன்அம்பொன்முடிமலர்நாறிடுதாளினன்
எண்டிசையுமனுநீதிசெய்கோலினன்எங்குமொருகுடையாலிடுநீழலன்
மண்டுகிரணசிகாமணிமோலியன்வண்டுமதுநுகர்தாதகிமாலையன்
மிண்டுமுதுபுலியேறுபதாகையன்வென்றிவளவனையார்நிகர்வீரரே"
என்றவற்றால், சோழராசனுக்கு ஒப்பான வீரர் எவருமில்லை யென்றார்.

"மீனவன் வழுதி மாறன் வெண்மதி மரபில் வந்தோன்
வானவர் முதல்வன் சென்னி வரிவளை யுடைத்து மீண்டோன்"

என்றதனால், பாண்டியன் இந்திரனைக் கிரீடபங்கம் பண்ணின சிறப்பையும்,

"தந்தையை முதுகுகண்டோன் தனயனுக் கிளைக்குமோ தான்"

என்றதனால், பாண்டியன் சிவனைப் பிரம்பால் முதுகிலடித்த வலிமையையும்,

"காலினாற் றுகைத்து வேலைக் கனைகட லேழு முன்னாள்
வேலினாற் சுவற்றுங் கொற்ற வெங்கயல் விலோத வீரன்"

என்றதனால், பாண்டியன் ஒருகாலத்துத் தன்நகர்மேற் பொங்கியெழுந்த கடலின்மீது கோபித்து அதனை வேலினால் வற்றச்செய்த வன்காலில்விழுந்து வணங்கப்பண்ணின மகிமையையும்,

"முழுதுணர்ந்தருள் முனிவரன்புகல் மும்மைவண்டமிழும்
பழுதறும்படி தெளிநு ரேறிய பலகையொன் றுடையான்"

என்றதனால், பாண்டியன் தமிழ்ச்சங்கத்தையுடையனான தகைமையையும்,

"கூறியசெஞ்சொலேடுகுறித்தெதிர்கொண்டவையை,யாறுடையவன்"

என்றதனால், வைகைநதி தமிழ்ப்பாடல்களின் அருமையையும் வைதிகமதத்தின்பெருமையையுந் தெரிந்து வெளியிட்ட ஏற்றத்தையுங் கூறியுள்ளார்.

"பராவுபேருடைச் சேர செம்பியருடன் பாண்டியன் முதலோரும்"

எனச் சேரனைச் சிறப்பித்துக்கூறு மிடமுங் காண்க.

"காவிரியென்னத்தப்பாக்கருணையான்" என, நளசக்கரவர்த்தியினது கருணைக்கு, தமிழ்நாட்டிற் பிரசித்திபெற்ற காவேரிநதியைத் தண்மைக்கும் தவறாமைக்கும் உவமையெடுத்துக்கூறினார்.

"தங்கள்மால் வரையில் வைகுந் தமிழ்முனி தன்னைப் போலப்
பொங்குவெண் டரங்க முந்நீர்ப் புணரிக ளேழுஞ் சேர
வெங்கையால் வாருங் கொற்ற வேழமா மேற்கொண்டானே"

என்றதனால், தமிழுக்கு ஆதியிலக்கணநூலாசிரியராகிய அகஸ்தியமகாமுனிவர் கடலைக்குடித்தருளியகதையைக் கொண்டாடினார். இன்னமும் "தங்கள் தமிழ்க்குழலிசையைத் தன்செவிக்கு விடமென்னும்" என்றதனால், வேய்ங்குழலின் இசைப்பாட்டின் இனிமைக்கு, தமிழ்ப்பாஷையை உவமைகூறினார். "தங்கள் மூவகைத்தமிழும் போலச், சிந்தையிற்குளிக்குமாறு சிலீமுக மூன்று விட்டான்" என்றதில், அம்புகள் நன்றாகப் பகைவர்நெஞ்சிற் பதிந்திடுதற்குத் தமிழ்ப்பாஷை கற்றவர்மனத்திற்பதிதலை உவமையாக்கினார்.

இங்ஙனம் தமது தேசாபிமான பாஷாபிமானங்களை வெளிப்படுத்துவது யாவர்க்கும் வழக்கமேயாம்.

இவர் தமதுநூலிற் பெரும்பாலும் வடமொழிகளைத் தனிமொழியாகவும் தொடர்மொழியாகவும் இன்னமொழியின் சம்பந்தமான தென்று எளிதில் தெரியவொண்ணாதபடி திரித்தும் மொழிபெயர்த்தும் உபயோகித்திருத்தலால், வடமொழியிலும் மிகவல்லவரென நன்குவிளங்குகின்றது. தொடர்மொழியாகப் பிரயோகித்திருத்தற்கு உதாரணமாக, "புராதநாகமவேதகீத புராணரூபம்","சலதரகஞ்சலசாலம்","இமநாகபவான்","விகங்கராசன்", "மத்தவயாதவவாசவகேசவ","சதுரந்தயாநம்","பரதநாதவேத பரத்துவராசன்", "தபோலவிகடகடகரிதுரகம்பதாதியிரதம்", "நவரத்நகணகிரண

வும்" முதலியவற்றையும்; மொழிபெயர்த்தற்குஉதாரணமாக,நீரின்உற்பத்திக்குஇடமானவனென்னும் பொருள்கொண்ட 'க்ருபீடயோநி' என்னும் வடசொல்லை மொழிபெயர்த்து "அம்மனை" [அம்-நீர்; மனை-இடம்: அது,நெருப்பு]என்றும், 'மநோரதம்'என்னும் வடசொல்லை மொழிபெயர்த்து "உள்ளமான தேர்" என்றுங் கூறியது முதலியவற்றையும்; சிதைத்து உபயோகப்படுத்தற்கு உதாரணமாக,'ஜமதக்நி' என்பதை "இயமதங்கி" என்றும்,'அஸ்திரம்' என்பதை "அச்சிரம்" என்றும் பிரயோகித்தது முதலியவற்றையுங் காண்க. தனிமொழியாக உபயோகித்தற்கு உதாரணம் அளவிறந்தன.

தமிழில் எந்த நூலாசிரியரும் வடமொழிகளை இவரவ்வளவு எடுத்துக்கொள்ளவில்லை. வடசொற்களைத் தமிழ்க்காப்பியத்தில் நுழைக்கிற வழக்கம் இவர்காலந்தொடங்கித்தான் அதிகமாயிருத்தல்வேண்டும்.சங்கத்தார்காலத்துப்பழையநூல்களில் அத்தனையாக வடமொழிகள் அகப்படா; சுத்ததமிழ்ப்பதங்களே மிகுதியாயிருக்கும்.

இவரது பாடல்களில் உவமை, உருவகம், எடுத்துக்காட்டுவமை, தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள்வைப்பு, பிறிதுமொழிதல், உயர்வுநவிற்சி முதலிய பொருளணிகள் அமைந்திருப்பதுமாத்திரமே யன்றி, மடக்கு (யமகம்), பிராசம் முதலிய சொல்லணிகளும் ஆங்காங்கு அமைந்திருத்தலையும், இவரதுசெய்யுள்நடை பலவிடத்துமுடுகுடையதாதலையும்,பலவகைச்சந்தங்கள் சந்தப்போலிகள் வண்ணங்கள் பொருந்தியிருத்தலையும் காணலாம்.

"பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா தொருவர் பகரொணாதே"என்று சிறப்பித்துக்கூறப்பட்டுள்ள படிக்காசுப்புலவரும்,திருப்புகழ்பாடிய அருணகிரிநாதரும் முதலிய சிலர்போலவே இவ்வில்லிபுத்தூராரும் சிறந்தசந்தக்கவி யென்று இவர்நூலால் தெரிகிறது.

சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்குஇனிமை, நன்மொழிபுணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல் முதலிய நூலழகுகளெல்லாம் இவர் நூலில் நன்குஅமைந்திருத்தல், இப்பாரதத்தைப் பார்க்கப்பார்க்கச் செவ்விதிற் புலனாம். ஏகலவ்யனென்னும் வேடனுடைய வரலாறு முழுவதுமாகிய ஒரு பெரியவிஷயத்தை இவர் பாரதத்தில்

"ஏகலைவனென்றொருகிராதன் முனியைத்தனியிறைஞ்சி யிவனே வலின்வழா, ஞகலையடைந்து மிகுபத்தியொடு நாடொறுமருச்சுனனை யொத்துவருவான், மேகலைநெடுங்கடல்வளைந்த தரணிக்க ணொருவில்லி யென வின்மையுடையான், மாகலைநிறைந்து குருதக்கிணை வலக்கையினில் வல்விரல் வழங்கியுளனால்"

என ஒருசெய்யுளினால் தொகுத்துக்கூறியிருத்தலைச் சுருங்கச்சொல்லலுக்கும் விளங்கவைத்தலுக்கும் உதாரணமாகக் காண்க. இங்ஙனமே பலவிடங்களில் தொகுத்துக்கூறியுள்ளதனாலேயே, வடமொழியில் லக்ஷத்துஇருபத்தையாயிரஞ்சுலோகமாகப்பரந்துள்ள மகாபாரதம் தமிழில்இவ்வளவுசுருக்கமாக அடங்கிய தென்னலாம். மேற்காட்டப்படுகிற "இருந்தத்ற்கொரு பாட்டு"என்றதொடக்கத்துப் புலவர்புராணச்செய்யுள், இவ்வழகுகளை நன்குகளெடுத்துக்காட்டும். இந்நூலின் 'ஓசையுடைமை'முதலிய அழகுகள் பிரசித்தம்; "தொடைச்சிதைவோசை"என்பதுமுதலாக வரும் புலவர்புராணச்செய்யுள்களும் அவற்றை விளக்கும். 'குன்றக்கூறல்' முதலிய குற்றங்களிலொன்றும் இந்நூலிலில்லை யென்று பொதுப்படக்கூறலாம்; அன்றியும், பலநூல்களிற்காணக்கூடிய 'சென்றுதேய்ந்திறுதல்' என்னுங் குற்றம் இந்நூலிலில்லையென்பது,இந்நூலைஆதியோடந்தமாகநோக்குவார்க்குத்தானே தெரியும். யுத்தவருணனை, எல்லாநூல்களினும் இந்நூலிற் சிறத்தல்காண்க.

"முன்னோர் மொழிபொருளேயன்றி யவர்மொழியும்,பொன்னேபோற் போற்றுவம்" என்றவாறு, இவருடைய நூலில் ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் சொற்பொருட்கருத்துக்கள் சிற்சிலஇடத்து எடுத்து ஆளப்

பட்டிருத்தல், உய்த்துநோக்குமிடத்து விளங்கும்; தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் "மறஞ்சுவர் மதிளெடுத்து மறுமைக்கே வெறுமைபூண்டு, புறஞ்சுவரோட்டைமாடம் புரளும்போது அறியமாட்டீர், அறஞ்சுவராகி நின்ற அரங்கனார்க்கு ஆட்செய்யாதே, புறஞ்சுவர்கோலஞ்செய்து புட்கவ்வக் கிடக்கின்றீரே" என்றாற்போல, இவர் சூதுபோர்ச்சருக்கத்தில் கர்ணனைப்பற்றி "அறஞ்செறிதானம்வண்மை யளவிலாதளித்து நாளும், புறஞ்சுவர்கோலஞ்செய்வான் பூபதிக்குரைக்கலுற்றான்" என்றும், மற்றும் அவ்வாழ்வார் அத்திவ்வியப்பிரபந்தத்திலே "மருவியபெரியகோயில் மதிட்டிருவரங்க மென்னாக், கருவிலேதிருவிலாதீர் காலத்தைக்கழிக்கின்றீரே" என்றதைக் கருதி, இவர் பதினெண்காம்போர்ச்சருக்கத்தில் பாகவதர்களைப்பற்றி "கரியபைம்புயலைக் கைதொழுமவரே கருவிலே திருவுடையவரே" என்றுங் கூறினாற்போல்வன காண்க. மற்றும் நம்மாழ்வார் கண்ணனது செளலப்பியத்தில் ஈடுபட்டு "பத்துடையடியவர்க்கு எளியவன் பிறர்களுக்கு அரிய, வித்தகன் மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறலடிகள், மத்துறுகடைவெண்ணெய்களவினி லுரவிடையாப்புண்டு, எத்திறம் உரலினோடிணைந்திருந்தேங்கியவெளிவே" என்று அருளிச்செய்தாற்போல, இவரும், "பூத்தநாபியந்தாமரைப்பூவில் வந்து பல்பூதமுஞ், சேர்த்த நான்முகப் புனிதனு முனிவர்யாவருந் தேவரு, மேத்த நாலுவேதங்களுந் தேடுகின்ற தாளெம்பிரான், பார்த்தன்மாமணித்தேர்விடும் பாகனான தெப்பான்மையே" என்று பாடினமையும், பிறவுங் கண்டுகொள்க.

இனி, இப்பொழுதைக்கு ஏழெட்டுவருடங்களின்முன்புஇருந்த முருகதாசரென்பவர் இயற்றிய 'புலவர்புராணம்' என்னும் புதுநூலிற் கூறப்பட்டுள்ள வில்லிபுத்தூரார்சரித்திரம், இதுவரையிற்கூறிய வரலாற்றோடு சிற்சில வேறுபாடுடையது; அதனை அனைவரும் அறிதற்பொருட்டு, அந்நூலிலுள்ளவாறு அச்சரித்திரம் அடியிற் குறிக்கப்படுகிறது:—

பெண்ணைநாட்டில் சனியூரில் பிராமணசாதியில் வைஷ்ணவசமயத்தில் தோன்றிய இரண்டுசகோதரர், கல்வியில்தேர்ந்து திருமாலைத்துதித்து அப்பெருமானருளால் அக்கல்விப்பொருளோடு செல்வப்பொருளும் நிரம்பியவராய் ஒருவரோடொருவர் மிகஅன்புபூண்டு பாண்டியநாட்டிலுள்ள ஸ்ரீவில்லிபுத்தூரையடைந்து அங்குத் தம்தம்மனைவியருடனே ஏககுடும்பமாய்இல்லறவாழ்க்கைநடத்திவந்தார்கள். அவர்களில் மூத்தவர், வில்லிபுத்தூராரென்று சிறப்புப்பெயர் பெற்றார். இங்ஙனமிருக்கையில், கொங்குநாட்டரசனான ஆண்டான்பிள்ளையென்பவன், வடமொழியிலுள்ள மகாபாரதத்தைத் தமிழ்ச்செய்யுள்களாற் செய்விக்கக்கருதி, 'அங்ஙனஞ்செய்யவல்லவர் யார்?' என்று விசாரிக்கையில், வில்லிபுத்தூராரும் அவர்தம்பியாருமே அதற்குத் தக்கவரென்றும், அவர்கள் மிக்கசெல்வமுடையோராதலால் அரசரையும் பொருள் செய்யாரென்றும், ஒருவர்க்கொருவர்உற்றதுணைவராகிய அவர்களாற் பிறருதவி வேண்டப்படுவதில்லையென்றும் அறிந்து, அவர்கட்குள் ஏதேனும் சிறிதுமாறுபாட்டையுண்டாக்கி அந்தச்சந்தர்ப்பத்தில் தன்கருத்தைமுடித்துக்கொள்ளக்கருதியவனாய், விதவையாகிய ஒருபார்ப்பனக்கிழவியை அழைத்து வணக்கத்தோடு உபசரித்துச செய்திகூறி 'அம்மா! நீர் அவர்கள்வீட்டுக்குச்சென்று அவர்கட்குள் கலகத்தை உண்டாக்கவேண்டும்' என்றுகூறி அவளுக்கு வேண்டியபொருளையுங் கொடுத்து அனுப்பிவிட்டு, பின்பு மதுரைக்குச்சென்று பாண்டியனைக்கண்டு அவனிடம் ஏகாந்தத்தில், இச்செய்திமுழுவதையுஞ்சொல்லி, 'அவர்களுடையவழக்கு வந்தால் எவ்விதத்திலும் என்னிடத்தில் அனுப்பவேண்டும்' என்றுவேண்டி, 'அங்ஙனமேஆகுக' என்று அதற்கு இணங்கிய அப்பாண்டியனது அநுமதியைப் பெற்று மீண்டனன். இது நிற்க.

அரசனிட்ட கட்டளைப்படியே அக்கிழவி வில்லிபுத்தூரார்வீட்டுக்குச் சென்று அவர்மனையாளிடத்தும் அவர்தம்பிமனையாளிடத்தும் கலந்து இனி

மையாகப்பேசிப்பழகி அவ்விருவரும் தன்னைநல்லவளென்று நம்புமாறு நடந்துகொண்டே அவர்கட்குள் ஒருத்திமேல் ஒருத்தியிடம் பொல்லாதபல கோட்சொற்களைக் கூறி உட்பகைமையை விளைவித்து அவர்கள் ஒருவரோடொருவர் எதிர்த்துப்பேசிக் கலகஞ்செய்யவும் தம்தம்கணவரைத் தம்தம் வசமாக்கி நடத்தவும் மூட்டிவிட்டாள். அதனால் மாறுபாடுகொண்ட வில்லிபுத்தூராரும் அவர்தம்பியாரும் தமதுபொருளைப் பாகஞ்செய்துதருதலை வேண்டித் தங்கள்நாட்டரசனான பாண்டியனிடம் வர, அவ்வேந்தன், முற்கூறியபடி அவர்களைக் கொங்குநாட்டரசனிடத்தே செலுத்தினன். அவ்வாறேசென்ற அவர்களைக் கண்டு கொங்கராசன் மகிழ்ச்சிகொண்டு அவர்கட்கு மிக்கஉபசாரஞ்செய்து வடமொழிமகாபாரதத்தை இரண்டுபாகமாகப்பிரித்துஅவ்விருவரிடங்கொடுத்து 'நீங்கள் இந்நூலைத் தமிழ்ப்பாடலாகச்செய்த பின்னரே நான் உங்கள்செல்வத்தைப் பாகித்துக்கொடுப்பேன்' என்று கூறினான். அச்சொல்லை அவர்கள் திருமால்கட்டளையாகவே சிரமேற்கொண்டு அங்ஙனமே சிலநாள்அவன்வசத்தில்இருந்து,சொற்சுவையும் பொருளழகும் ஓசைச்செறிவும் சந்தப்பொலிவும் வண்ணப்பொருத்தமு முள்ள ஆறாயிரங் கவிகளாற் பாரதத்தைப் பாடிமுடித்திட்டார்கள்.

இப்படி தன்கருத்துமுற்றியதனாற் களிகூர்ந்த கொங்கர்கோமான்,தானே ஒருபார்ப்பனக்கிழவியைக்கொண்டு குடும்பக்கலகம்விளைத்த விதத்தை அவர்கட்கு விவரமாகத்தெரியக்கூறி, அவர்கட்குஉண்டான விரோதத்தைத் தணிவித்து, அவர்களைநோக்கி'நீங்கள்என்விருப்பத்தைநிறைவேற்றியதால், நான் உங்கள்விருப்பத்தை நிறைவேற்றச் சித்தனாயிருக்கிறேன்; நீங்கள் விரும்புவதைக் கூறுமின்' என்றுகூற,வில்லிபுத்தூரார்,'என்னோடுமாறுபட்டுச் சந்தம்பாடத்தொடங்கி அதில் தவறியவர்களுடைய காதுகளைத் துணிக்குமாறு வாள் கொடுக்கக்கடவாய்' என்று தம்விருப்பத்தை வெளியிட, அரசன் அங்ஙனமே வாள்கொள்ளுமாறு அருள்செய்தான். தமையனாரிடத்து முதிர்ந்த அன்பையுடைய தம்பியார் 'எனக்கென்று தனியே உரியது யாதுமில்லை' என்று கூற, அரசன், தமையனார்க்கு அடங்கிநடக்கிற அவரது மனநிலைமையைக் கண்டுமகிழ்ந்து அவர்க்குப் பலவிருதுகளைக் கொடுத்தான். அவற்றைப் பெற்றுக்கொண்டு அவ்விருவரும் தம்மூர்சேர்ந்தனர். முன்பு பகைமூட்டிய மூதாட்டியும் பின்பு அவர்கள்மனைவியர்க்குப் பற்பலநியாயங்களை யெடுத்துக்கூறித் தனதுசொற்றிறத்தால் அவர்களது மாற்சரியத்தைத் தீர்த்து அவர்களைப் பழையபடி கூட்டுறவாக்கிவைத்திட்டனள். முன்பு தலைவிரிகோலங்கொண்ட ஒருத்தியால் முடிந்த மகாபாரதத்தைக்குறித்து இப்பொழுது 'மொட்டைச்சியொருத்தியால் முடிந்தது' என்று பலர் பேசலுற்றனர்.

வில்லிபுத்தூரார், புலவர்திலகராய், தம்மோடுமாறுபட்டுத்தோற்ற புலவர்களுடைய காதுகளைக் கொய்வதே தொழிலாகக்கொண்டு கவிதாசார்வபௌமரென்று ஒருசிறப்புப்பெயர்பெற்று,புலவர்களதுசெருக்கையெல்லாம் ஒழித்துவந்தார். அவர்தம்பியாரோ, புலமைத்திறம் வாய்ந்திருந்தும் சாந்தகுணத்தையே மேற்கொண்டிருந்தனர். கீழ்க்கூறியவாறு வில்லிபுத்தூரார் பெருமிதங்கொண்டுவாழுநாட்களுள் ஒருநாள் அநந்தனென்னும்பெயருள்ள பெரிய புலவனொருவன், தனதுகவித்திறத்துக்குமெச்சிப் பற்பலஅரசர்தந்த பரிசுகளைப் பெற்றவனும் அவரிடத்தில்வந்துசேர்ந்தான். அவர் அவனைப்பலவாறுபரீக்ஷித்து,அதிலெல்லாம்அவன்தவறாதுதேறிவந்தமைகண்டு,பின்னர்ப் பாடுதற்குஅரியதொரு பெரிய சந்தக்குழிப்பைக் கொடுத்து 'இதற்குஏற்ப நீ ஒருசந்தக்கவி பாடுதி, பார்ப்போம்' என்ன, அங்ஙனமே அந்த அநந்தகவி உடனே ஒருசந்தக்கவிபாட,அதிற்பிழைகண்டு இவர் ஆடம்பரத்தோடு அவனதுகாதையறுக்கப்போகையில், அவன், 'ஐயா! என்பெயர்கொண்ட ஆதிசேஷனுக்குச் செவியில்லை; நீவிர் இதனை ஆராய்ந்து செய்ம்மின்' என்று துணிந்துகூற,அதுகேட்டவில்லிபுத்தூரார் 'இப்பொழுது நாம்இவன்காதை

யறுப்பின் இவ்வாசந்தன் அவ்வாசந்தனோடு ஒப்பாய்விடுவனே' என்பதை உன்னி அவன்செவியையறுக்கத் துணியாராய்,அவன்சொன்ன சமயோசித மான வார்த்தைக்கு உவப்படைந்து, அவனைநோக்கி 'நீசொன்ன இந்தச் சாதுரியமான வார்த்தைக்கு ஒருவெகுமதியாக உனக்குச்செவியைக்கொடுத் தேன், போ' என்று சம்பிரமாகக்கூறி அவனை அனுப்பிவிட்டனர்.

பிறகு வில்லிபுத்தூரார், அருணகிரிநாதரென்னும் புலவரது பெருமை யைக் கேள்வியுற்றுப் பொறாமைகொண்டு திருவண்ணாமலைக்குச் சென்று அவருடன் மாறுபட்டு, அவர்பாடுங் கந்தரந்தாதிச்செய்யுள்கட்கு உடனுக் குடனே உரைகூறிவருபவராய் இடையிலேதோற்றுச் செருக்கொழிந்து வாட்படையையிழந்து அருணகிரிநாதரோடுநண்புபூண்டு,அவர்பாடிய கந்தர் திருப்புகழுக்கு ஈடாகத் தாமும் இராமகாதைத்திருப்புகழ்பாடிப் பெருமை பெற்றுத் தம்மூர்க்கு மீண்டு அடக்கத்தோடு வாழ்ந்திருந்தனர். நற்குணநற் செய்கைகளுடன் திருமாலடிக்கேதொண்டுபூண்டொழுகுபவராய்ச் சிலகா லங்கழித்தபின் வில்லிபுத்தூரார் முன்னும், அவர்தம்பியார் பின்னுமாக இருவரும் பரமபத மடைந்தார்கள்.

அடியில்வருகிறபுலவர்புராணச்செய்யுள்கள் வில்லிபுத்தூராரதுசிறப்பை யும்,அவர்பாடியபாரதத்தின்நடைச்சிறப்பையும்நன்குவிளக்குதல்காண்க:—

" காவியப் புலமை வாய்ந்தோர் கணக்கில் பற்பல ராலும்
தாவில்சீர் வில்லிபுத்தூர்த் தமிழ்ப்புலவரை யொவ்வாரே
தேவினத் தெதுவானாலுந் தேசிகன்றனக் கொப்பாமோ
ஆவியை யுடலி லுள்ள வவயவத் திரள் போலாவே.

இருந்ததற் கொருபாட் டப்பா லெழுந்ததற் கொருபாட் டோதிப்
பெருந்தொகைப் படுத்துவாரைப் பேதையர் வியந்து கொள்வார்
மருந்துறழ் கவியொன்றூற் பல் வான்பொரு டெளிவாச் சொல்லுந்
திருந்தியற் பாரதச்சீர் தெரிபவர் சிலர்தா மன்றே.

தொடைச்சிதை வோசை மோனைச் சோர்வுறச் சொல்லும் பெட்பாற்
கடைப்படு புலவர்தங்கள் காவ்யப் பகுதி யெல்லாம்
மடைத்தலைக் குருகை வானோ மருட்டுசீர் வில்லிபுத்து
ருடைப்பெரும் புலவர் பாடற் கொப்பெனச் செப்பொணாதே.

ஆமையுந் தவளை யாதி யனவுமே யனைய வாகிப்
போமையக் காவியங்கள் புவியினி லனந்த முள்ள
தீமைதீர் மகவான் விண்ணிற் செலுத்தும்வெண் பரிபோற் செல்லும்
பாமையலறக் கொள்கின்ற பாரத முதற் சின்னூலே.

திண்ணமுந் தெளிவு மோசைச் செறிவு மார்தரு பாச்சிலம்
வண்ணவாய்ப் புலவ ரோர்வார் மற்றைய ரறியமாட்டார்,"

" காளி காட்டேரி யாதிகளை யுபாசித் தாலுந்
தேளினிற் றுயர்செய்வாரைச் செகம் பெரும்புலவ ரென்னும்
வாளினற் புலவர் பல்லோர் வார்செவி யரிந்து வாழ்ந்த
ஆளிநேர் பனவன் மாட்சி யறிந்தவர் சிலர்தா மம்மா.

வரைதொறு நடஞ்செய்வானை வழிபடு மருணைநாதன்
தரையில் சித்திரமாச் சொல்லுங் கந்தரந்தாதிப் பாடற்
குரையுட னவன்சொன் மாட்சி யொண்டமிழ்ப்புலவ ரோர்வார்
திரையுறு கரிய சிந்தைச் சிறியவர் தேறி டாரே."

———

ஸ்ரீ

கடவுள்துணை.

# மகாபாரதம்.

பாரதம் என்னுஞ் சொல்லுக்கு - பரதனது வம்சத்தவரைப்பற்றிய நூல் என்று பொருள். இங்குக் குறித்த பரதனென்பவன்-சந்திரவம்சத்தில் துஷ்யந்தமகாராசனுக்குச் சகுந்தலையினிடந்தோன்றிப்பிரசித்திபெற்ற ஓரரசன். [இராமன்தம்பியான பரதனும், பரதகண்டமென்றதற்குக் காரணனான சடபரதனும், பரதநாட்டியமென்றதற்குக்காரணனான பரதனு மல்லன்.] பரதவம்சத்துத்தோன்றினவர், பாரதர்; அவராவார்-பாண்டவரும், துரியோதனாதியரும்: அவர்களது சரித்திரத்தை உணர்த்தும் நூல், பாரதமெனப்பட்டது. இது - வடமொழித் தத்திதாந்தநாமம்; [ஒருவடசொல் சிறிதுமாறித் தன்னோடு இயைபுடையபொருளையாயினும் தன்பொருளையாயினும் உணர்த்துவது, தத்திதாந்தநாமம்.] இனி, வருணாச்சிரமதருமம், ராஜதருமம், மோக்ஷதருமம், நீதி முதலிய சிறந்த உறுதிப்பொருள்களையெல்லாம் அறிவிப்பதனால் முனிவர்கள் சீர்தூக்கிப்பார்க்குமிடத்து மற்றையெல்லாநூல்களினும் மிக்கபாரம் [அதாவது-மகிமை] உடைமைபற்றி, இந்நூலுக்குப் பாரதமென்னும் பெயர் இடப்பட்டதென்றுங் கொள்ளலாம். முன்னொருகாலத்தில் தேவர்யாவரும் நான்குவேதங்களையும் ஒருதட்டிலும் பாரதத்தை மற்றொருதட்டிலுமாகத் துலாக்கோலில் வைத்துநிறுக்க, வேதமனைத்தையும் வைத்த பக்கத்தினும் இந்நூலை வைத்த பக்கம்வலிதாயிருந்ததென வடநூற்பாரதத்தின் அநுக்ரமணிகை யத்தியாயம் கூறும். [இனி, இந்தச்சொல்லை, பார் அதம் என இரண்டுசொல்லாகப்பிரித்து, அதம் என்பதை ஹதம் என்னும் வடமொழிப்பெயரின் திரிபாகக் கொண்டு, பூமியிலுள்ள பல துஷ்ட அசுரர்களும் கெட்ட அரசர்களும் முதலியோரது நாசத்தைக் கூறுவதொரு நூலென்று பொருள் கூறுவாருமுளர்; அது பொருந்தாது: ஏனெனில்,— பாரதம்என்னும் வடமொழி ஒருமொழியாதலாலும், அதற்கு வடமொழிக்கு ஏற்பப் பொருள் கூறுவது தகுதியேயன்றித் தமிழ்மொழிக்கு ஏற்பப் பொருள்கூறுதல் தகாமையாலு மெனக் காண்க.]

யாவரும் மேற்கொண்டு பூசிக்கத்தக்க மேம்பாட்டை யுடைத்தாயிருத்தல்பற்றி, இந்த இதிகாசத்துக்கு 'மகா' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. அம்மேம்பாடாவது-இருக்குமுதலிய நான்குவேதங்களோடு ஒப்ப ஐந்தாம்வேதமென்று சிறப்பித்துக்கூறப்படும் மகிமை; "பாரதஃபஞ்சமோவேதஃ", "நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே, வாடாததவவாய்மைமுனிராசன் மாபாரதம்சொன்னநாள்," "மண்ணிலாரணங்களென வியாதனார் வகுத்த, எண்ணிலாநெடுங்காதை," "சதுர்வேதங்கள், பாரதந்தன்னோ டைந்தாம்படியினாற் பகர்ந்தமூர்த்தி" என்பன காண்க. அன்றியும், மிகச்சிறந்த பகவத்கீதையைத் தன்னுள் பீஷ்மபர்வத்திலும், ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்தை ஆநுசாஸநிகபர்வத்திலும் அடக்கிக்கொண்டிருப்பது, இந்நூலுக்கு, எல்லாநூல்களினுஞ் சிறந்தமேம்பாடாம். மகாபாரதம் என்னும் பண்புத்தொகைநிலைத்தொடர்மொழி - வடமொழிப்புணர்ச்சி யாதலால், வருமொழி முதல் வலி இயல்பாயிற்று; [நன்னூல் - மெய்யீற்றுப்புணரியல் - ௫௯.] இந்நூலை முதலில் வடமொழியிற் செய்தவர், ஸ்ரீவேதவியாசமகாமுனிவர்; இவரால் வைக்கப்பட்ட 'பாரதம்' என்கிற முதனூலின் பெயரே "முதனூல் கருத்த னளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை

முதல் நிமித்தினும்,இடுகுறியானும் நூற்கு எய்தும்பெயரே" என்னுஞ்சூத்தி ரத்து விதிப்படி வழிநூலாகிய இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. பாரதத் துக்கு 'ஜயம்' என்றும் ஒருசிறப்புப்பெய ருண்டு;(நால்வகைப்புருஷார்த்தங் களையும்பெறுதற்குக் காரணமாகும்நூல் ஜயமெனப் பெயர்பெறுமென்பது, வடமொழிநிகண்டு; எல்லாநூல்களினும் மேம்பட்டு அவற்றைவென்றதென் றும், பதினெட்டுப்பகுப்புள்ளதென்றும் இதற்குப்பொருள்கூறலும் உண்டு.)

உபதேசபரம்பரையில்வந்த ஒருவனுடைய பழையசரித்திரமொன்றைப் பிரதானமாகஎடுத்துப் பலகிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக் கூறும் நூல் இதிகாசமென்றும் [இதிகாசம் - பழையவரலாறு], உலகத்தின் தோற் றம்,ஒடுக்கம்,முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந் தரம் என்னும் ஐந்துவிஷயங்களை விரவிக்கூறும் நூல் புராண மென்றும் [புராணம் - ஐந்து இலக்கணங்களுடன் பழையவரலாறுகளை யுணர்த்தும் நூல்] வேறுபாடு உணரத்தக்கது. இதிகாசம் - இராமாயணமும், பாரதமும்; புராணம்-பிராம்மம் முதலாகப் பதினெட்டுவகைப்படும். இந்த இதிகாசபுரா ணங்கள் - வேதத்தின்கருத்தை இன்னதென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றி விளக்குதல்பற்றி, வேதத்திற்கு உபப்ரும்ஹணங்களென்று சொல்லப் படும்; உபப்ரும்ஹணமென்றால் - வளர்ப்பதென்று பொருளாம். இவற்றுள், புராணங்களினும் இதிகாசம் பிரபலமானபிரமாணமென்றும், அதுபற்றியே இதனை முன்னர்வைத்து 'இதிகாசபுராணம்' எனக் கூறுவதென்றும் அறிக.

இந்நூல்,பெருங்காப்பியமாம்.(பெருங்காப்பியஇலக்கணத்தை இப்புத் தகத்தில் தனியே காணலாம்.) இந்நூலிற் பெருங்காப்பிய இலக்கணங்கள் பலவும் வருவதை ஆங்காங்குக் காண்க.

பாரதம் அந்தந்தப்பாகத்தின்விஷயத்தைக்குறிக்குஞ்சொற்களால் ஆதி பருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம், பீஷ்மபருவம், துரோணபருவம், கர்ணபருவம், சல்லியபருவம், ஸௌப்திக பருவம், ஸ்திரீபருவம், சாந்திபருவம், ஆநுசாஸநிகபருவம், அசுவமேதபரு வம், ஆசிரமவாசபருவம், மௌசலபருவம், மகாபிரஸ்தாநபருவம்,ஸ்வர்க்கா ரோகணபருவம் எனப் பெயர்பெற்ற பதினெட்டுப்பருவங்கள் அடங்கியது. அவற்றுள்,

## ஏழாவது

# துரோணபருவம்.

'த்ரோணபர்வம்' என்ற வடமொழித்தொடர், விகாரப்பட்டது. துரோணனது சம்பந்தமான பருவ மென்று, ஆறாம்வேற்றுமைத்தொகை யாகக் கொள்க; விஷயமாகவுடைமை, வேற்றுமைப்பொருளாகிய சம்பந் தம்: ஆகவே, துரோணன்விஷயமான பருவ மென்பது கருத்து. இனி, இரண்டாம்வேற்றுமை யுருபும்பயனுமுடன்தொக்க தொகையாக,துரோண னைப்பற்றிய பருவ மெனினும் அமையும். துரோணன் துரியோதனனுயிர்க் குச் சேனைத்தலைவனாய் நின்று ஐந்துநாள் போரை நடத்திய கதையைக் கூறும் பாக மென்று பொருள். பர்வம்-கணு; கரும்பு மூங்கில் முதலியவற் றிற்கு ஏகதேசமாகிய[ஏகதேசம்-ஒருபகுதி]கணுப்போல,நூலுக்கு ஏகதேச மாகிய உறுப்பை 'பருவம்' என்பது - உவமவாகுபெயர்; "இணைந்தியல் காலை" என்ற நன்னூற்சூத்திரத்து "ரவ்வழி உவ்வுமாம்" என்றதனால், பர் வம் பருவமென ரகரத்திற்குப்பின் உகரம் வந்தது; இனி, அச்சூத்திரத்து 'மன்னக்கு உகரமும்' என்றதனால் வகரத்துக்குமுன் உகரம்பெற்றதெனக் கூறினும் இழுக்காகாது.

துரோணன் - பரத்துவாசமுனிவனது குமாரன்; கிருபாசாரியனுடன் பிறந்தவளான கிருபியின் கணவன்; அசுவத்தாமனது தந்தை; சகலசாஸ்திரங்

கலையுந் தன்பிதாவினிடங்கற்றுப் படைத்தொழிலைப் பரசுராமனிடத்து ஏழு நாளிற் பயின்றவன்; துரியோதனாதியர்க்கும் பாண்டவர்க்கும் அஸ்திர சஸ்திரங்களைக் கற்பித்த ஆசிரியன்: [முதலிற் சிறிதுகாலம் கிருபனும், பின்பு பிரதானமாகத் துரோணனும் கௌரவபாண்டவர்க்கு வில்வித்தைபயிற்றினவைத்தன ரென அறிக.] இவன், துரியோதனாதியர்க்கு இரண்டாவது சேனைத்தலைவன். [முதலிற் படைத்தலைவனாகவிருந்த பீஷ்மன் பத்தாம்போர்நாளிலே சிகண்டியைமுன்னிட்ட அருச்சுனனால்அழித்துவிழுத்தப்பட்டபின்பு துரோணன்சேனாதிபதியாக்கப்பட்டனன்.] வைதிகவிரதாநுட்டானஞ்செய்துகொண்டிருக்கையில் தேவர்களா லேவியனுப்பப்பட்ட மேனகையின் சட்டழகைக் கண்டு காதல்கொண்ட பரத்துவாசமுனிவனது விருப்பத்தால் ஒரு துரோணகும்பத்திற் பிறந்தமைபற்றி, இவனுக்குத் துரோணனென்றுபெயர்; துரோணகும்பம்-பதக்களவுகொண்ட பாத்திரம்: [துரோணம்-பதக்கு, இரண்டுகுறுணி.] இனி, துரோணம் என்று வில்லுக்குப் பெய ருண்மையால், துரோணனென்பது - வில்வன்மைபற்றிவந்த பெயருமாம். இவன், அங்கிவேசமுனிவன்பக்கலிலும் படைகள்தேர்ந்தான்.

கீழ் ஆதிபர்வம் முதலாகவும், மேல் சௌப்திகபர்வம் முதலாகவும் கதாநாயகரான பாண்டவரது சரித்திரபாகத்தின்விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களாற் பருவங்களுக்குப் பெயரிடும் ஆசிரியர், இங்கு (அவ்வாறே ச்வேதபர்வம், த்ருஷ்டத்யும்நபர்வம் எனப் பெயர்குறியாது) பீஷ்மபர்வம், த்ரோணபர்வம், கர்ணபர்வம், சல்யபர்வம் எனத் துரியோதனாதியரோடுசேர்ந்தவரைப்பற்றின சொற்களாற்பெயரிடக் காரணம் என்னையோவெனின்,—எதிரிகளின் சிறப்பை நன்கு எடுத்துக்காட்டி அப்படிப்பட்டவர்களை இவர்கள் வென்றிட்டார்களெனக் கதாநாயகரைப் பெருமைப்படுத்தவேண்டியென்க. இனி, துரோணவதபர்வம் என்பது மத்தியமபதலோபமாய்த் துரோணபர்வமென நின்ற தென்றலு மொன்று; பிறவற்றிற்கும் இங்ஙனமே கொள்க.

## நான்காவது

# பதினான்காம்போர்ச்சருக்கம்.

பாண்டவர்க்கும் துரியோதனாதியர்க்கும் நடந்த பதினெட்டுநாளையுத்தத்திலே பதினான்காநாள்யுத்தத்தைக் கூறும் பாக மென்று பொருள். இது-இப்பருவத்தின் நான்காஞ்சருக்கமாம். போர்ச்சருக்கம்-போரைக்கூறுஞ்சருக்கமென இரண்டனுருபும்பொருளுந்தொக்கதொகை; போரினது சம்பந்தமான சருக்க மென விரித்தால் ஆறும்வேற்றுமைத்தொகையாம். சருக்கம்-ஸர்க்கம்என்றவடசொல்லின்விகாரம்; முடிபு அல்லது படைப்புஎன்றுபொருள்; அது சங்கேதத்தால், ஒருபெரியவகுப்பினுட்பட்டசிறியபாகத்தைக் குறிக்கும். பத்து + நான்கு = பதினான்கு; உம்மைத்தொகையில், நிலைமொழிஈற்றுயிர்மெய்கெட இன்சாரியைதோன்றிற்று; [நன்-உயிரீற்றுப்புணரியல்-சஎ.]

## கதைத்தொடர்ச்சி.

[பாரதகதை பிரசித்தமானதாதலால், இந்தச்சருக்கத்துக்குமுன்கதைத்தொடர்ச்சி சுருக்கமாகவே எழுதப்படுகிறது.]

சந்திரகுலத்திலே புதன் புரூரவா ஆயு நகுஷன் யயாதி பூரு துஷ்யந்தன் பரதன் ஹஸ்தி குரு முதலிய பல அரசர்கள் தோன்றியபின் அம்மரபில் உதித்து இப்பரதகண்டத்தில் அஸ்திநபுரியிற் செங்கோல்செலுத்திய சந்தநுவென்னும் அரசனுக்கு முதன்மனைவியாகிய கங்கையின் குமாரன் பீஷ்மனென்பவனும், இரண்டாம்மனைவியாகிய யோஜநகந்தியின் மகன் விசித்திரவீரியனென்பவனும் இருந்தார்கள். [முன்னர்ச் சத்தியவதியென்னும் பெயரோடிருந்து பராசரமுனிவனோடு சேர்ந்து வியாசமுனிவனைப் பெற்றுப் பின்பு அப்பராசரனருளாற் கன்னிப்பருவமடைந்த சத்தவதி யென்னும்

மறுபெயருடைய இந்த யோஜநகந்தியினிடம் சந்தனுவுக்குப்பிறந்த முதற் குமாரனான சித்திராங்கதன், அப்பெயருள்ள ஒருகந்தருவனால் கொல்லப்பட்டு இளமையில் இறந்தான்.] முன்னையவிரதத்தின்படி வீடுமன் விசித்திரவீரியனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தான். விசித்திரவீரியன் மகப்பெறாது இறந்தபின் அவனது பத்தினிகளுள் அம்பிகையினிடத்துத் திருதராஷ்டிரனும், அம்பாலிகையினிடத்துப் பாண்டுவும், சந்ததிவிருத்தியின் பொருட்டுத் தாய்சொற்கடவாத வியாசபகவானது திருவருளாற் பிறந்தனர். அம்பிகையாலேவியனுப்பப்பட்ட தாதிப்பெண்ணினிடத்து வியாசனருளால் அவதரித்த விதுர னென்னும் குமாரனும் இருந்தான். திருதராட்டிரன் பிறவிக்குருட னாதலால், விதுரனை மந்திரியாக வைத்துக்கொண்டு, பாண்டு, திருதராட்டிரனுக்கு முடிசூட்டித் தானே இராசாங்ககாரியம் பார்த்துவந்தான். பாண்டுவுக்கு மனைவியுடன் சேரக்கூடாதென்று சாபம் நேரிட்டதனால், அவனுமதிப்படி, அவனது மூத்தமனைவியாகிய குந்தி, தனக்கு இளமையில் துருவாசமுனிவனுபதேசித்திருந்த மந்திரத்தின் மகிமையால் வந்த யமதருமராசனால் யுதிஷ்டிரனையும், வாயுதேவனால் பீமசேனனையும், தேவேந்திரனால் அருச்சுனனையும் பெற்றாள். [முன்பு கன்னிப்பருவத்துச் சூரியனாற் குந்தியிடம் பிறந்தவன், கர்ணன்.] அவளுடைய சக்களத்தியான மாத்திரி, அவளால் அம்மந்திரமுபதேசிக்கப்பெற்று, அசுவினீதேவர்களால், நகுலன் சகதேவன் என்னும் இரட்டைப்பிள்ளைகளைப் பெற்றாள். திருதராட்டிரனுக்குத் துரியோதனன் துச்சாசனன்முதலிய நூறுபிள்ளைகளும், துசசலையென்னும் ஒருபெண்ணும் காந்தாரியினிடம் பிறந்தார்கள். [பஞ்சபாண்டவர்களுள் தருமன் துரியோதனாதியர் நூற்றுவரினும் மூத்தவ னென்றும், வீமன் முதலிய மற்றைநால்வரும் துரியோதனனுக்கு இளையவ ரென்றும் அறிக.] பாண்டு சிலகாலத்துக்குப்பின் இறந்துபோனான். அப்பொழுது மாத்திரி சககமனஞ்செய்தாள். [சககமனம் - உடன்கட்டையேறுதல்.] பின்பு பாண்டவரும் துரியோதனாதியரும் கூடி அத்தினபுரியில் விளையாடுகையில் வீமன் துரியோதனாதியரினும் மிகமேம்பட்டுத் தோன்றினான். அதனால் அவனிடம் அவர்கள் மிக்கபொறாமை கொண்டார்கள்.

அதனாலாகிய அச்சத்தால் துரியோதனன் கர்ணனைத் தனக்குத் துணையாகக்கொண்டான். துரியோதனாதியர் வீமனைக் கொல்லும்படி பலவாறு முயற்சிசெய்தும் அவன் தெய்வசங்கல்பத்தால் இறவாமல் ஒவ்வொருவகையால் தப்பிப்பிழைத்தனன். பின்பு வீடுமன் இந்தநூற்றைவர்க்கும் கிருபாசாரியனைக்கொண்டும் துரோணாசாரியனைக்கொண்டும் படைக்கலவித்தை பயிற்றுவித்தான். அதில் துரியோதனாதியரினும் பாண்டவர் தேர்ச்சியடைய, அவர்களுள்ளும் அருச்சுனன் அனைவரினும்சிறப்புற்றுவிளங்கினான். அப்பால் அவரவர் திறத்தை அனைவருங்காணுமாறு துரோணன் கட்டளைப்படி வீடுமன் விதுரன்முதலியோர்முன்னிலையிலே அந்த இராசகுமாரர்கள் செய்த விளையாட்டுப்போரில் அருச்சுனனது திறமை சிறந்துவிளங்க, அதனைக்கண்டு யாவருங்கொண்டாடியதற்கு மனம்பொறானாய், சபையிலிருந்த கர்ணன் தான் எழுந்துசென்று தனது திறத்தை எல்லாரும்அதிசயிக்கும்படிகாட்டி அருச்சுனனைப் போர்க்குஅழைக்க, அருச்சுனன், 'நீயாரெனக்குஎதிர்!' என்று அலட்சியமாகப்பேசவே, கர்ணன் 'உன் தலையைக் கொய்வேன்' என்று வீரவாதங் கூறினான். அப்பொழுது, பிறப்பறியாத கர்ணனைக்குறித்துக் கிருபாசாரியன் தேர்ப்பாகன்மகனென்று இழித்துக்கூற, துரியோதனன் அதற்குப்பலவாறு மாறுகூறிக் கர்ணனை அங்கதேசத்தரசனாகமுடிசூட்டி உயர்த்தினான். பிறகு துரோணன் தன் மாணாக்கர்களாகிய அந்தக்குருகுலகுமாரரனைவரையும் நோக்கி 'எனக்குமுன்பு துரோகஞ்செய்தவனான துருபதனைப் போரில்வென்று கட்டிக்கொணர்தலே எனக்கு நீங்கள்கொடுக்கவேண்டிய குருதட்சிணை'

என்றுகூற, அங்ஙனமே அவர்கள் சேனைகளுடன் பாஞ்சாலதேசத்திற்குச்சென்று முற்றுகைசெய்து விளைத்த பெரும்போரில், துரியோதனன் முதலியோரும் துருபதனால் தோல்வியடைந்து தம்மூர்க்கு மீண்டோட, அருச்சுனன் தன் வல்லமையால் துருபதனைவென்று கட்டிக்கொணர்ந்து ஒப்பிக்க, துரோணன் அவனைப் பலவாறு பரிகசித்துப்பரிபவப்படுத்தி அவனுடைய இராச்சியத்திற் பாதியைக் கவர்ந்துகொண்டு தனது பெருமிதந்தோன்ற மற்றொரு பாதியை அவனுக்கேகொடுத்து அவனைக் கட்டவிழ்த்து உயிரோடுவிட்டிட்டான். இப்படி அவமானமடைந்து மனவருத்தத்தோடு ஊர்சேர்ந்த துருபதன், துரோணன்மீது கொண்ட வைரத்தால் அவனைக் கொல்லுதற்கு ஒரு மகனையும், அருச்சுனனது திறமையைக் கண்டு வியந்ததனால் அவனுக்கு மணஞ்செய்வித்தற்கு ஒருமகளையும் பெறவிரும்பியவனாய், யாசன் உபயாசன் என்னும் முனிவர்களைக்கொண்டு புத்திரகாமயாகஞ்செய்விக்க, அவ்வேள்விப்பயனால் அவ்வோமத்தீயினின்று ஒருகுமாரனும் ஒருகுமாரியும் தோன்றினர்; அவர்களே திருஷ்டத்யும்நனும், திரௌபதியும். இப்பால் வீடுமன், திருதராட்டிரனோடும் விதுரனோடும் ஆலோசித்து, சகலகுணசம்பந்நனான தருமபுத்திரனுக்கு இளவரசுமுடிசூட்டினான். அதுகண்டு அழுக்காறுமிக்க துரியோதனனுடைய கருத்துக்கு இணங்கிய திருதராட்டிரன், புரோசனனென்னுந் துர்மந்திரியுடன் சதியாலோசனைசெய்து, வாரணாவதமென்னும் நகரத்தில் அரக்குமாளிகையொன்று கட்டிமுடித்துப் பாண்டவர்களை அதில்வசிக்கச்செய்து ஓரிரவில் அம்மாளிகையில் தீப்பற்றவைத்து அவர்களை ஒழித்துவிடுவதென்று நிச்சயித்து, அவ்வமைச்சனைக்கொண்டே அந்நகரத்தை விசேஷமாக அலங்கரிப்பித்து, ஒருநாள் தருமபுத்திரனைநோக்கி 'நீ உனது தம்பியர்நால்வருடன் வாரணாவதத்துச்சென்று தனியேவாழ்வாய்' என்று கட்டளையிட்டு, அப்புரோசனனையே துணையாக்கி அவனோடும் அவனுக்கு அடங்கிய பரிவாரத்தோடும் அனுப்ப, பாண்டவரும் குந்தியும் வாரணாவதத்திற்சென்று, தங்கட்கென்று புதிதாகச்செய்யப்பட்ட மாளிகையில் வசித்திருந்தனர். அங்ஙனம் வசிக்குநாட்களிலே பாண்டவர்கள் அரக்குமாளிகையின் தன்மையையும், புரோசனனதுசெய்கைகளையும் உற்றுநோக்கிச் சங்கைகொண்டிருக்கையில், விதுரனாலனுப்பப்பட்ட சிற்பியொருவன் வீமனிடம்வந்து, திருதராட்டிரனது கட்டளையின்படி புரோசனன் வஞ்சனையாக இந்தமாளிகையைக் கட்டும்பொழுது அவனது சூழ்ச்சியை யுணர்ந்த விதுரனுடைய ஏவலால் தான் இம்மாளிகையினுள்ளே ஒருபுறத்தில் நீண்ட சுரங்கவழியொன்றை நெடுந்தூரத்திலுள்ள ஒருவனத்திற் சென்று சேரும்படி எவருமறியாமல் அமைத்துள்ள தந்திரத்தை அந்தரங்கமாகத்தெரிவித்து, அவ்வழிக்குத்துவாரம் ஒருதூணின்கீழ் உள்ளதென்பதையும் குறிப்பாகச் சொல்லிச்செல்ல, பின்பு ஒருநாளிரவில் வீமன் புரோசனனை அம்மாளிகையிலேயேபடுக்கச்சொல்லி அவன் நன்றாகத்தூங்கியபின் அவ்வீட்டில் தானே நெருப்புப்பற்றவைத்துவிட்டுத் தன்னுடன்பிறந்தவர்களையும் தாயாரையும் எடுத்துக்கொண்டு சுரங்கவழியாக ஒருவனத்திற்சேர்ந்தான். துரியோதனன் கட்டளைப்படி பாண்டவர்க்கு விஷங்கலந்ததேனைக்கொடுத்து அவர்களைக் கொல்லவந்த ஐந்துவேடர்களும் அவர்கள் தாயும் அந்நாளில் அவ்வரக்குமாளிகையில் தங்கித் தீப்பட்டு இறந்தனராதலால், பொழுதுவிடிந்தபின் அங்குவந்துபார்த்த ஊராரெல்லாரும், பாண்டவருந் தாயுமே எரிப்பட்டு இறந்தனரென்று இரங்கினார்கள். அவ்வாறே நாடெங்கும் பிரசித்தியாயிற்று. அதனால் அவ்வுலகம்முழுவதும் வருத்தமடைய, துரியோதனனியர் மாத்திரமே மனமகிழ்ச்சிகொண்டனர்.

பாண்டவரும் குந்தியும் வனஞ்சேர்ந்தவுடன், மனிதர்களைக்கொன்று கொண்ணும்படி இடிம்பனென்னும்அரக்கனால் அனுப்பப்பட்ட அவன்தங்கை

யான இடிம்பியென்னும் அரக்கி, அருகில் வீமனைக் கண்டவளவிலே அவன்மீது மோகங்கொண்டு அவனோடு ஆசைவார்த்தை பேசிக்கொண்டிருக்குமளவில், அதுகண்டு கோபித்துவந்த இடிம்பன் கடுஞ்சொற்கூறி வீமனுடன் வலியப் போர்தொடங்க, வீமன், தனது வலிமையால் இடிம்பனைக்கொன்று தொலைத்தபின் இடிம்பியின் வேண்டுகோளின்படி தாயுந் தமையனும் இட்ட கட்டளையால் அவளை மணஞ்செய்துகொண்டான். பின்பு சாலிகோத்திரமுனிவனத்தில் வசிக்கையில் அவள்வயிற்றிற் கடோற்கசனென்ற புதல்வன் தோன்றினன். ஐவரும் குந்தியும் அவனைத் தாயுடனே இடிம்பவனத்துக்கு அனுப்பிவிட்டு வியாசமுனி வந்து நியமித்தபடி அந்தணவடிவுகொண்டு வேத்திரகீயமென்னும் ஊர்க்கு விருந்தினராய்ச் சென்று அங்கு ஓரந்தணன்மனையிலிருக்கு நாட்களில் ஒருநாள், அவ்வீட்டுப்பார்ப்பனி புலம்பலுற்றாள்: அதற்குக்காரணமென்னவென்று குந்தி விசாரிக்க, அவள் சொல்வாள்:'இவ்வூர்க்கு அருகிலுள்ள வனத்தில் வசிக்கிற பகனென்னுங்கொடியஅரக்கன் ஒருகாலத்தில் இவ்வூரினுள்வந்து பலரையும்ஒருங்கேகொன்றுதின்னத்தொடங்குகையில், இவ்வூரார் அஞ்சி ஆலோசித்து 'நாங்களே நாளுக்கு ஒருவீடாக முறைவட்டம் ஏற்படுத்திக்கொண்டு ஒருவண்டிச்சோற்றையும்ஓர் ஆளையும்உனக்கு உணவாக இட்டுவருகிறோம்: நீ எங்களை ஒருங்கே கொல்லாதே' என்றுகூறி அவனைச் சிறிதுசாந்தப்படுத்தினர்; அதுமுதல் அவ்வாறே நடந்துவருகிறது. இன்றைக்கு என்வீட்டுமுறை; 'என் மகனையாவது கணவனையாவது இன்று இழப்பதை நோக்கி இரங்குகிறேன்'என்றுசொன்ன அவ்வீட்டுக்காரிவார்த்தையைக் கேட்டவுடனே குந்தி 'என் மக்களைவருள் வலியனான இரண்டாமவனை இன்றைப்பலிக்கென்று செலுத்தினால் அவன் அரக்கனைக் கொன்று மீள்வன்' என்றுகூறி அவள்சோகத்தை ஆற்றினாள். அவ்வாறே வண்டிச்சோற்றுடனே வனத்தைநோக்கிப் புறப்பட்ட வீமன் சிறிது தாமதமாகச் சென்று பகனைக்கண்டு உடனே அச்சோறுமுழுதையும் உண்டுவிட, அதுகண்டு பெருங்கோபங்கொண்ட பகன் எதிர்த்துப் போர்தொடங்க, வீமன் மற்போர்செய்து பகனைக்கொன்றொழித்து ஊர்க்குமீண்டுவர, அனைவரும் அவனைக் கண்டு கொண்டாடினார்கள்.

அரக்குமாளிகையிற் பாண்டவரிறந்தனரென்றுகேள்வியுற்ற துருபதன் திரௌபதிக்குச் சுயம்வரம்கோடிக்க, பலதேசத்து அரசர்களும் பாஞ்சாலதேசத்துராஜதானியில் வந்துசேர்ந்தனர். அச்செய்தியையறிந்துசெல்லும் வேத்திரகீயத்துவேதியரோடு பாண்டவரைவரும் குந்தியும் சென்று வழியில் வியாசமுனியைக் கண்டுவணங்கி அவனருள்பெற்றுத் துருபதநகரஞ் சார்ந்து, ஒரு குயவன்வீட்டிற் குந்தி வசிக்கப் பாண்டவர்கள் சுயம்வரசபையைச் சேர்ந்தார்கள். அங்கு வந்து வீற்றிருந்த அரசர்களை நோக்கித் திட்டத்துய்மன் 'இவ்வில்லை வளைத்து நாணேற்றி அம்புதொடுத்து அதனால் இந்த யந்திரசக்கரத்தினுள்ள குறியையெய்துவீழ்த்துபவனே என் தங்கைக்குக் கணவனாவன்' என்றுகூறினான். அரசர்களனைவரும் அங்ஙனஞ்செய்யமாட்டாமற்போனபின்பு, அந்தணவடிவத்தோடிருந்த அருச்சுனன் திட்டத்துய்மனைநோக்கி'அரசரன்றி அந்தணரில் யாரேனுங் குறிசெய்தால் அவனுக்குப் பாஞ்சாலி மாலைசூட்டுவளோ?" என்றுவினவியதற்கு, அவன் 'சூட்டுவள்' என்றான். உடனே அருச்சுனன் வில்லையெடுத்துக் குறியையெய்தலும், திரௌபதி அவனுக்கு மாலைசூட்டினாள். அதுகண்டு பொறாமைகொண்ட துரியோதனனது தூண்டுதலால் அரசர்களெல்லாரும் எதிர்த்துப்போர்செய்ய, பாண்டவர் அவர்களைவென்று பாஞ்சாலியோடு குயவன்வீட்டுக்குச் சென்று 'அம்மா! இன்று ஒருநற்பொருள்பெற்றோம்' என்றுசொல்ல, உள்ளிருந்துஅதுகேட்ட குந்தி, அங்கிருந்தபடியே 'அதனை ஐவீரும் உண்மின்' என்றுசொல்லி வெளியேவந்து திரௌபதியைக்கண்டு 'ஆ ஆ! என்னினைந்தேன்! என்சொன்னேன்!என்செய்தேன்!"என்று கலங்கினள். தருமபுத்தி

ரன் 'தாயே! நினது வாய்மொழி வேதமொழியேயாம்: எங்கள்எண்ணமும் அப்படியே' என்றுசொல்லி, பின்னர்த் துருபதராசன் தங்களைப் பாண்டவர் களென்று அறிந்து வந்து அரண்மனைக்குஅழைத்துப்போய் அருச்சுனனுக் கும் பாஞ்சாலிக்கும் மணஞ்செய்யத்தொடங்கினபோது 'நாங்கள்ஐவரும் இவளை விவாகஞ்செய்துகொள்வோம்' என்றான். அதற்குத் துருபதன் இணங்காமல் தடுமாற்றமுற்ற சமயத்தில், வியாசமாமுனிவன் எழுந்தருளி, பாஞ்சாலியும் பாண்டவர்களு மாகிய இவர்களுடைய பூர்வஜந்மவிருத்தாந் தத்தை எடுத்துச்சொல்லி விளக்கி 'இவளை இவ்வைவரும் மணப்பது முறை' என்றுசொல்லியருளினன்.¹ அதுகேட்டுத் தெளிந்த துருபதன், யுதிஷ்டிரன் முதலான ஐவர்க்கும் திரௌபதியை முறையே மணஞ்செய்வித்தான். அச் செய்திகேள்வியுற்றுத் துரியோதனாதியர் படையெடுத்துவந்து பாண்டவ ரோடு போர்செய்து அவரால் வெல்லப்பட்டுத் தோற்றோடினர். அதனை யறிந்த திருதராஷ்டிரன் தூதுவிடுத்துஅழைக்க, பாண்டவர் அஸ்திநபுரஞ் சேர்ந்தனர்.

திருதராஷ்டிரன் மந்திரிகள்முதலானாரோடு ஆலோசித்துத் தரும புத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தபின்பு, அப்பெரியதந்தையின் கட்டளைப்படி பாண்டவர் காண்டவப்பிரத்தமென்னுங்கடுங்காட்டிற்சேர்ந்த னர். அங்குச் சிறந்தநகர்செய்யவிரும்பிக் கண்ணபிரான் இந்திரனோடு விசுவ கர்மனை வருவிக்க, அங்ஙனம்வந்த இந்திரனது கட்டளைப்படி அத்தெய் வத்தச்சன் சிறந்ததொருநகரத்தை நிருமிக்க, அதற்குக் கண்ணன் இந்திரன் பெயரால் இந்திரப்பிரத்தமென்று பெயரிட்டுப் பாண்டவரை அதிற்குடியே ற்றியருளிச் சென்றனன். பின்பு அங்கெழுந்தருளிய நாரதமாமுனிவன், தன் னையுபசரித்த பாண்டவர்க்கு, திலோத்தமையை ஒருங்கு விரும்பிய சுந்தோ பசுந்தர் தம்மிற்பகைமையுற்று ஒருவரையொருவர் அழிந்தவரலாற்றையெடு த்துக்கூறி, 'நீங்களைவரும் திரௌபதியை ஒருங்குகாமுறுதல் தகுதியன்று; முறையே ஒருவருடத்துக்கு ஒருவராகக் கூடிவாழ்தல் தகுதி. அங்ஙனம் ஒருவரோடு சேர்ந்திருக்கும்போது, மற்றைநால்வர் அவளைக்காணின் தீர்த்த யாத்திரைசெய்தல்வேண்டும்' என்று நியமிக்க, அவர்கள் அம்முறைமையை மேற்கொண்டு ஒழுகுவாராயினர்.

இங்ஙனம் நிகழ்கையி லொருநாள் ஓர்அந்தணன் அரண்மனைவாயிலில் வந்து'எனதுபசுக்களை வேடர் கொள்ளைகொண்டார்கள்'என்று முறையிட, அதுகேட்டவுடன் அவர்களைப் பொருதுவென்று நிரைமீட்டுக்கொடுத்தற் பொருட்டு ஆயுதமெடுத்தற்குச்சென்ற அருச்சுனன் அங்குத் தருமனுடன் திரௌபதியைக் கண்டதனால், வேடர்களைவென்று நிரைமீட்டுக்கொடுத்த வுடனே தருமனிடம்விடைபெற்றுத் தீர்த்தயாத்திரைசெல்லலானான். அங் ஙனஞ்சென்று கங்கையில்நீராடுகையிற் கண்டுகாதலித்த உலூபியென்னும் நாககன்னிகையோடு நாகலோகஞ்சேர்ந்து அவளைமணந்து இராவானென்ன் னும்மகனைப் பெற்றபின்பு, அநேகதிவ்வியதலங்களின்வழியாகத் தென்மது ரைசேர்ந்து, சித்திரவாகனபாண்டியன்மகளான சித்திராங்கதையை விவா கஞ்செய்துகொண்டு, அவளிடம்பிறந்த பப்புருவாகனனென்னுங் குமார னைப் பாண்டியன்தன் வேண்டுகோளின்படி அவனது சந்ததிக்காகவே கொடுத்துவிட்டு, பின்னும் பூப்பிரதக்ஷிணமுறையால் துவாரகைசேர்ந்து, கண்ணனது தங்கையான சுபத்திரையைத் தந்திரமாக மணஞ்செய்து கொண்டு கண்ணபிரானுடனே இந்திரப்பிரத்தத்துக்கு வந்துசேர்ந்தனன். பின்பு சுபத்திரைவயிற்றில் அபிமந்யுவும், திரௌபதிவயிற்றிற் பஞ்சபாண்ட வர்க்கு உபபாண்டவரைவரும் பிறந்தார்கள். அவர்களில் அபிமன் சிறந்து தோன்றினன்.

பின்பு தருமபுத்திரன் தனதுதம்பிமார்நால்வரைக்கொண்டு திக்குவிச

யஞ்செய்து ராஜசூயயாகம்முடித்து வெகுமகிமையுடன் விளங்கினான். அது கண்டு பொறாமைகொண்டு துரியோதனன் யுதிட்டிரனைத் தந்திரமாகத் தன்னிடம் அழைப்பித்துத் தன் மாமனான சகுனியைக்கொண்டு அவனுடன் சூதாடுவித்து அவனது செல்வம்முழுவதையும் பறித்துக்கொண்டு அவனையும் அவனது தம்பிமாரையும் அவர்களது மனைவியான பாஞ்சாலியையும் அடிமையாக்கி, அவளைத் தீண்டக்கூடாத காலத்தில் துச்சாதனனைக்கொண்டு சபையிற் பலாத்காரமாகக்கொணர்ந்து துகிலுரியச்செய்தான். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணனநுக்கிரகத்தால் அவள் மேன்மேல் ஆடைவளரப்பெற்று மானங்காத்துக்கொண்டாள். பின்பு அவளது கற்பின்பெருமைக்கு அஞ்சித் திருதராட்டிரன் அவர்களை அடிமைத்தன்மையினின்று நீக்கிச் செல்வத்தையுங் கொடுத்தனுப்ப, துரியோதனனுதியர் அதனை மறுத்து அவற்றையெல்லாங் கவர்ந்துகொண்டு, மறுசூதாடி அடிமை நீங்கின அவர்களைப் பன்னிரண்டுவருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஜ்ஞாதவாசமும் [அஜ்ஞாதவாசமாவது - ஒருவரும் தம்மை இன்னாரென்று அறியவொண்ணாதபடி நாட்டில் மறைந்துவசித்தல்]செய்துவந்தால் அரசுபெறுமாறு நியமஞ்செய்து அனுப்பினார்கள்.

அங்ஙனமே பாண்டவர்கள் திரௌபதியுடன்சென்று பன்னிரண்டுவருஷம் காமியவனம்முதலிய இடங்களில் வசித்துப் பின்பு மாறுவேடம்பூண்டு விராடநகரத்தில் ஒருவருஷகாலம் அஜ்ஞாதவாசஞ் செய்தனர். அந்தப் பதின்மூன்றுவதுஆண்டினிறுதியில், துரியோதனன்,பாண்டவர்கள் விராடநகரத்தில் இருக்கலாமென ஒருவாறு ஊகித்து உணர்ந்து, அவர்களைக் கண்டுபிடிக்கும்படி படையெடுத்துச்சென்று, அந்நாட்டை இருபுறத்தும் வளைத்துப் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துசெல்ல, அருச்சுனனொழிந்த நால்வரும் விராடனுடன்சென்று தென்புறத்தில் திரிகர்த்தரையும், விராடகுமாரனான உத்தரனுக்குத் தேரூர்ந்துசென்ற பேடிவடிவான அருச்சுனன் வடபுறத்தில் துரியோதனனுதியரையும் போரில் வென்று, முன்னையநியதிப்படி பதின்மூன்றுவருடமுங் கழிந்துவிட்டதனால், அப்பொழுது பாண்டவர்களுந் திரௌபதியும் நிஜரூபத்தோடு வெளிப்பட்டனர். பின்பு விராடராசன், அவர்களுக்கு விசேஷஉபசாரஞ்செய்து தூதர்கள்மூலமாகச் செய்தி தெரிவித்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்திமுதலான உறவினர்களையும் மற்றும்அரசர்களையும் வரவழைத்து, அருச்சுனகுமாரனான அபிமந்யுவுக்குத் தன்மகளான உத்தரையைச் சுபமுகூர்த்தத்தில் மணம்புரிவித்தான்.

பின்பு பாண்டவர்கள் விராடனால் அமைக்கப்பட்ட உபப்லாவியமென்ற பட்டணத்தை யடைந்து கிருஷ்ணன்முதலிய அரசர்களுடனே இராச்சியம்பெறும் உபாயத்தை ஆலோசித்து முடிவுசெய்து உலூகனென்னும் அந்தணனைத் திருதராட்டிரனிடந் தூதனுப்ப, அவ்வேதியன் சென்று செய்திகூறுகையில், அங்குத் துரியோதனன், துரோணன்முதலிய பெரியோர் பலர்சொல்லவுங் கேளாமல் கர்ணன்முதலிய சிற்றினத்தவரின் கருத்தையே முக்கியமாகத் தழுவிச் சிறிதும் இராச்சியங் கொடுக்கமாட்டேனென்றுசொல்லிவிட, அச்செய்தியை அம்முனிவன் பாண்டவர்க்குங் கண்ணனுக்குந் தெரிவித்துச்சென்றான். அதன்பின் கண்ணபிரானைத் தந்தமக்குப்போரில் ஏற்றதுணையாகும்படி துரியோதனனும் அருச்சுனனும் ஒருங்கேசென்றுவேண்ட, அப்பெருமான், தந்திரமாக, துரியோதனனுக்கு யாதவசேனை முழுவதையுந் துணையனுப்புவதாகச் சொல்லி, தான்மாத்திரம் பாண்டவர்க்கே துணைவனாயினான். பின்பு திருதராட்டிரன் தூவேண்டுகோளால் சஞ்சயனென்னும் முனிவன் பாண்டவர்பக்கல்வந்து 'அரசாட்சி பலபெருந்துன்பங்கட்கு இடமாகுதலால், அதனிடத்து ஆசையைவிட்டு வனத்திலடைந்து பெருந்தவஞ்செய்தலே சிறந்தஅறிவு' என்று வைராக்கியம்

போதிக்க, பாண்டவர்கள் அதற்குச் சிறிதும் உடன்படாது மறுத்துவிட்டனர். அதன்பின்னர்ப் பாண்டவர் மீண்டும் ஆலோசித்துக் கண்ணபிரானையே தூதனுப்ப, அப்பிரான் சென்று சொன்ன நீதிகளையுஞ் சற்றும் உட்கொள்ளாமல் துரியோதனன் சிறிதும் அவர்கட்கு இடங்கொடுக்கமாட்டேனென்று துணிவாய்க் கூறிவிட்டதுமன்றி, அங்குக்கிருஷ்ணனைக்கொல்லும்படி ஒருதந்திரமுஞ்செய்ய, கிருஷ்ணபகவான் தனது திவ்வியசக்தியால் மிகப்பெரிதாக விசுவரூபமெடுத்து அதற்குத்தப்பி மீண்டு பாண்டவரிடம் வந்து அங்கு நடந்தசெய்திகளையெல்லாந் தெரிவித்தருளினான். பின்பு, பாண்டவர் ஏழுஅக்ஷௌஹிணி சேனையையும், கௌரவர் பதினொரு அக்ஷௌஹிணி சேனையையுந் திரட்டிக்கொண்டு, இருதிறத்தவரும் குருக்ஷேத்திரத்தில் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர்செய்யத் தொடங்கினார்கள்.

அப்பொழுது பாண்டவர்பக்கத்தில் முதலிற்சேனாபதியாய்நின்ற விராடகுமாரனான சுவேதன் முதல்நாட் போரிலேயே வீடுமனால் இறந்துவிட, அதன்பின் இரண்டாநாள்முதல் துருபதகுமாரனான த்ருஷ்டத்யும்நன் சேனாபதியாக நியமிக்கப்பட்டான். [இவன், பதினெட்டுநாட்போரும்முடியுமளவும் இறவாதுநிற்பன்.] எதிர்ப்பக்கத்துச் சேனைக்கு முதற்பத்துநாள்வரையில் பீஷ்மன் சேனைத்தலைவனாயிருந்து போர்நடத்திப் பத்தாம்போரில் சிகண்டி முன்னாக அருச்சுனனெய்த அம்புமழையால் வலியழிந்து ஒடுங்கினபின் துரியோதனன் துரோணனைச் சேனாதிபதியாக்கினான்.

பின்பு பதினோராநாட்போரில் அருச்சுனகுமாரனான அபிமந்யு துரியோதனபுத்திரனான இலக்கணனை வலியழித்துச் சிறைபிடிக்க, அவன் தந்திரமாக அரிதில்தப்பிமீண்டான். இங்ஙனம் தருமன்பக்கத்தார்க்கு வெற்றி நிகழச் சூரியாஸ்தமனமானவுடன் தோற்றுமீண்ட துரியோதனன் தனது சபையில் மிகவருந்தித் துரோணனை நோக்கி 'நீ நாளைக்குத் தருமனை உயிரோடு பிடித்துக் கொடுத்தாலன்றி இப்பழி நீங்காது' என்ன, துரோணன் 'வீமஅருச்சுனரைத்துணையாகவுடைய தருமனை அகப்படுத்தல் இப்பிறப்பில் ஆகாது; கண்ணன் தேரூரவருகிற அருச்சுனனை அருகில்வாராதபடி யாவரேனுந் தகைவாராயின், நானேத் தருமனைப் பற்றுதல்கூடும்' என்றான். அதுகேட்டுத் திரிகர்த்தன்முதலிய ஸம்சப்தகர் அங்ஙனமே தாம் அருச்சுனனையும் வீமனையுந் தகைந்திடுவதாகப் பலசபதஞ்செய்ய, துரியோதனன் அவர்கட்குச் சிறப்புச்செய்து விடைகொடுத்துத் தனதுஇடஞ் சென்றான்.

மறுநாளுதயத்தில் எதிரிகள்செய்தியை ஒற்றாலறிந்த தருமன் அதனைக் கிருஷ்ணார்ச்சுனர்க்குத் தெரிவித்துப் போர்தொடங்கியவுடனே, கௌரவசேனையில் வந்த ஸம்சப்தகர் அருச்சுனனைத் தனியே போர்க்கு அழைத்துச் சென்றனர். அச்சமயம்பார்த்துத் துரோணன் தருமனைப்பிடித்தற்காகக் கடும்போர்நடத்திப் பலமுறைதோற்றுமீண்டான். அப்பொழுது, பகதத்தன் யானைச்சேனையோடு வந்து செருச்செய்ய, அவனையெதிர்த்த வீமன் வெல்லமாட்டாதவனாக, அச்சமயத்தில் தருமன் கண்ணனை நினைத்தலும், கிருஷ்ணன் ஸம்சப்தகரை வென்ற அருச்சுனனோடு அங்குச்சேர்ந்து போர்நடத்தப் பகதத்தன் அருச்சுனனெய்த கணைகளால் யானையோடிறந்தான். பின்பு அருச்சுனனும் வீமனும் எதிர்த்தவரையெல்லாம் அழித்துவருத்த, கௌரவசேனை தோற்றுமீண்டது. சூரியாஸ்தமனமானபின் துரியோதனனைச்சூழ்ந்த துணையரசர்கூட்டத்திலே தருமனை வெல்லமாட்டாமைக்காகக் கர்ணன் துரோணனைப் பரிகசித்துப்பேச, துரோணன் 'தருமனை வெல்லவல்லார் யாருமில்லை; உண்டானால் நானேமுதல் வெல்லலாம்' என்று திட்டமாகக் கூறியபின், துரியோதனன் அரசர்க்கு விடைதந்தான்.

பதின்மூன்றாநாளிலும், ஸம்சப்தகர் அருச்சுனனைத் தனியே போர்க்கு அழைத்துப்போக, துரோணன் தன்சேனையைச் சக்கரவியூகமாகவகுத்து

உக்கிரமாகப் போரை நடத்தினன்; அப்பொழுது தருமன் அபிமனையழைத்துச் சக்கரவியூகத்தைப் பேதித்துச்செல்லும்படி சொல்ல, அவன் சென்று வியூகத்தைப் பிளந்து துரோணன்முதலானாரை வென்று போர்புரிகையில், அபிமனுக்குத் துணையாம்பொருட்டு வீமன்விரைந்துசெல்ல,எதிர்த்தவர்யாவரும்புறங்கொடுத்தலைக் கண்ட துரியோதனன் சயத்திரதனைநோக்கி 'உனக்குச் சிவபிரானளித்துள்ள கொன்றைமாலையை நீ இடையிலிட்டு வீமனையும் அபிமனையும் ஒருவரோடொருவர் சேராதபடிசெய்து,சிவபிரானளித்த கதையினால் அபிமனையழித்தலே தகுதி'என்றுகூற,அங்ஙனமே சைந்தவன் குறுக்காகஇட்டகொன்றைமாலையைக்கடக்கஅஞ்சி வியூகத்தின்வெளியேவீமனும் உள்ளேஅபிமனுமாக நின்றிட்டனர்.தனிப்பட்ட அபிமனை அனைவருஞ்சூழ்ந்து பொருகையில், அவன் பற்பலரைக் கொன்று பற்பலரைவென்று இறுதியில் பலமுறைமீண்டுபொருத கர்ணனாற் குதிரைகளும் பாகனும் தேரும்வில்லும் அழிந்தபின் வாளையேந்திப்பொருது பலரைவெல்லுமளவில், துரோணன் அவனது வலக்கையைத் துணித்திட்டான். அதன்பின்னும் அக்குமரன் பின்வாங்காமல் மந்திரபலத்தால் ஒருதேருருளையையே சக்கரமாக்கிக்கொண்டு சேனையை யழித்திடுதலும், சயத்திரதன் வந்து கதைப்போர்செய்து அபிமனைக் கொன்றிட்டான்.அதனையறிந்து தருமன்முதலியோர் மிகச்சோகித்தனர். சூரியன் அஸ்தமிக்கையில்,சஞ்சத்தகரைவென்றுவந்தஅருச்சுனன்செய்தியறிந்துபுலம்பிவியாசமாமுனிவந்துதேற்றவுந்தேறாமல்புத்திரசோகத்தால் தீக்குளித்து இறக்கத்தொடங்கும்பொழுது,முன்பு கண்ணன்செய்த உபாயத்தின்படி வந்த முனிவடிவான இந்திரன் தடுத்திடவே,அருச்சுனன்,'நாளைச் சூரியாஸ்தமநத்திற்குள் நான் சைந்தவனைக்கொல்லாவிட்டால் அக்கினிப் பிரவேசஞ்செய்வேன்'என்று சபதஞ்செய்தான். அச்சபதந் தவறாமல் நிறைவேறவேண்டுமே யென்று கவலைகொண்ட தருமனைத் தேற்றிக் கண்ணன் அருச்சுனனோடு கருடன்மீதேறிக் கைலைசென்று சிவனைத்தரிசிக்குமளவில் அப்பெருமான் தக்க வில்லும் அம்பும் அருச்சுனனுக்கு அளித்தபின் அவ்விருவரும் மீண்டனர்.அவர்கைலைசென்றசெய்தியைத்தருமனாலேவப்பட்டுவந்த கடோத்கசனால் அவ்விரவில் அறிந்து துரியோதனன் கர்ணனோடு பரிகாச வார்த்தைகள்கூறவே, கடோத்கசனும் வெகுவாக நிந்தைமொழிகூறி மீண்டான். பின்பு துரியோதனன் தன்இனத்தாரோடு கவலைப்பட, துரோணன் சமாதானப்படுத்தினன். கர்ணனும், துர்மர்ஷணனும், தாம்தாம் சைந்தவனைக் காப்பதாக வீரவாதங்கூறினர். அநந்தரம் சூரியன் தோன்றினவளவில், மீண்ட கிருஷ்ணார்ச்சுனரும், கடோத்கசனும், தருமனை யெழுப்பித் தம்தம்செய்தி கூறினர்.

[தெய்வவணக்கம்: கிருஷ்ணஸ்துதி.]

அரியதண் கலைவாண் மதியமுங் கொதிகொ ளாலமுந் தனதிடத் தடக்கி, யுரியவொண் கங்கா நதிக்கொரு பதியா யுரைபெறு முயர்மகோ ததியிற், பரியதிண் சிலையோ டம்பெலா முகந்து பற்குனப் பொருப்பிடைப் பொழியுங், கரியபைம் புயலைக் கைதொழு மவரே கருவிலே திருவுடை யவரே.

இது - காப்புச்செய்யுள்; இதனால், தாம் எடுத்துக்கொண்ட சருக்கம் இடையூறில்லாமல் இனிது முடியும்பொருட்டு உயர்ந்தோர் வழக்கத்தின்படியே கவி கடவுள்வாழ்த்துக்கூறுகிறார். கடவுள்வணக்கம், இரண்டுவகைப்படும்; வழிபடுகடவுள்வணக்கமென்றும்,எதிர்ப்புடைக்கடவுள்வணக்கமென்றும். வழிபடுகடவுள்வணக்கமாவது - தாம்தாம்குலதெய்வமாகக்கொண்டு ஆராதிக்கிற கடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம் - வைஷ்ணவசமயத்தார் விஷ்ணுவையும், சைவமதத்தவர் சிவனையும், ஜைநர் ஜிநனையும், பௌத்தர் புத்த

னையும் வணங்குதல் போல்வன. ஏற்புடைக்கடவுள்வணக்கமாவது - தாம் தாம் செய்ய எடுத்துக்கொண்ட காரியத்துக்குத் தகுதியையுடைய கடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம் - இராமாயணங்கூறுபவர் இராமனையும், பாகவதஞ்சொல்பவர் கண்ணனையும்,கந்தபுராணமுரைப்பவர் சுப்பிரமணிய மூர்த்தியையும் வணங்குதல்போல்வன. ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தவரான இந்நூலாசிரியரால் கூறப்பட்ட இவ்வாழ்த்து - தமக்கு வழிபடுகடவுளும், எடுத்துக்கொண்ட இதிகாசத்துக்கு ஏற்புடைக்கடவுளு மாகிய திருமாலைப் பற்றிய தென அறிக. திருமாலின் திருவவதாரமாகிய கண்ணபிரான் இந் நூலுக்கு ஏற்புடைக்கடவுள் என்பது - இந்நூலாசிரியர் தற்சிறப்புப்பாயி ரத்தில் "முன்னுமாமறை முனிவருந் தேவரும் பிறரும், பன்னுமாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்,மன்னுமாதவன் சரிதமு மிடையிடைவழங்கு, மென்னு மாசையால் யானு மீதியம்புதற் கிசைந்தேன்" எனக் கூறியத ளுற் பெறப்படும்; இத்தன்மை, வியாசபாரதத்தின் அநுக்ரமணிகையத்தி யாயத்திலும் நன்கு விளங்கும்.

ஆயின், இந்நூலின்தொடக்கத்திற் கடவுள்வணக்கங்கூறியது போதா தோ? சருக்கந்தோறும் பெரும்பாலும் தனியே கடவுள்வணக்கங் கூறுவா னே னெனின்,—நூல்ஒன்றேயாயினும் சருக்கங்கள் பொருளால்வேறுபடுத லாலும், நூலின் முதலிடைகடைகளிற் கடவுள்வாழ்த்துக்கூறுதல் மிகவும் மங்கலமாதலாலும், கல்விக்குப்பயன் கடவுளைவணங்குதலே யாதலாலும், இவ்வாறு கூறின ரென்க.*

(இதன்பொருள்.) அரிய - (பிறர்க்கு) அருமையான, தண் - குளிர்ச்சி யாகிய, கலை வாள் - கலைகளின் ஒளியையுடைய, மதியமும் - சந்திரனையும், கொதி கொள் - கொதிமையைக்கொண்ட, ஆலமும் - விஷத்தையும், தனது இடத்து - தன்னிடத்திலே, அடக்கி-அடங்கவைத்துக்கொண்டு, உரிய ஒள் கங்காநதிக்கு ஒரு பதி ஆய் - தனக்குஉரியதான சிறந்த கங்காநதிக்கு ஓர் இடமாய் [ஒருதலைவனாய்], உரை பெறும் - புகழ்பெற்ற, உயர் மகோததி யில் - சிறந்த (பரமசிவனாகிய) பெருங்கடலினின்று, பரிய திண் சிலையோடு அம்பு எலாம் முகந்து-பெரிய வலிய வில்லும் அம்பும் ஆகிய எல்லாவற்றை யும் நிரம்ப எடுத்து, பற்குனன் பொருப்பிடை - அருச்சுனனாகிய மலையி டத்தே, பொழியும்-சொரிந்த, கரிய பைம் புயலை-கருநிறமுடைய குளிர்ந்த மேகம்போன்ற கண்ணபிரானை, கைதொழுமவரே - கைகூப்பிவணங்குந் தன்மையுடையவர்கள்தாமே, கருவிலே திரு உடையவரே - கருப்பத்திலே தொடங்கி ஐசுவரியமுடையவராவர்; (என்றவாறு.)

சந்திரனையும் விஷத்தையுந் தன்னிடத்திலேகொண்டு கங்காநதிக்கு இருப்பிடமாய்ப் புகழ்பெற்ற சிறந்த சிவபிரானிடத்தினின்று பெரியவலிய வில்லையும் அம்பையும் அருச்சுனன் பெறும்படி செய்வித்த கரியதிருநிறமுங் குளிர்ந்ததிருவருளு முடைய கண்ணபிரானிடத்து, சந்திரனையும் விஷத் தையுந் தன்னிடத்திலேகொண்டு கங்காநதிக்குத் தலைவனாய்ப் பிரசித்தி

* 'அஃதேல், ஒருநூற்கு எடுத்துக்கோடற்கண்ணே வணக்கஞ்சொல லுத லன்றி அதிகாரந்தோறுஞ் சொல்லியது என்னையோ வெனின்,— நூல்ஒன்றேயெனினும் அதிகாரங்கள் பொருளான்வேறுபடுதலானும், முன் னையொருசாரார் ஓரோவதிகாரத்தை ஒருநூலாக்கிப் பாயிரம் முழுதும் பகர்தலானும், "ஆதியு மந்தமு நவெு மங்கலம்,ஓதிய முறைமையி னுரைப்ப ராயிடின், ஏத்தி லிருநிலக் கிழத்தி யின்புற, நீதியம் பனுவல்கள் நிலவு மென்பவே" என்பவாதலானும், 'கற்றதனாற் பயன், குற்றமற்று முற்று முணர்ந்த ஒற்றைநாதன் பொற்றுளிணைமலர் போற்றல்' என்பதனானும், சொன்னு ரெனக் கொள்க' என்பது, நன்னூலின் பழையவுரை.

பெற்ற கடலினின்று நிரம்ப நீரை முகந்தெடுத்து மழைத்துளிகளாகவும் மழைக்கற்களாகவும் மலையின்மீது நிரம்பச்சொரிகிற குளிர்ந்த காளமேகத்தின் தன்மையை ஏற்றிக் கூறினார்; உருவகவணி. இதில், மதியமும் ஆலமும் தனதிடத்து அடக்குதல் - உபமானம் உபமேயம் இரண்டுக்கும் பொருந்துதலும், பதி சிலை அம்பு என்ற சொற்கள் உபமானமாகிய கடலோடு இயையுமிடத்து முறையே கணவன் மழைக்கல் நீர் என்றும், உபமேயமாகிய சிவபிரானோடு இயையுமிடத்து முறையே இடம் வில் பாணம் என்றும் பொருள்பட்டு அச்சிலேடை உருவகத்துக்கு அங்கமாய் அமைதலும் காண்க.

கடலுக்கு, மதியை அடக்குதல் - பாற்கடல்கடைந்தகாலத்து அக்கடல் சந்திரனதுஉற்பத்திக்கு இடமானதும், நாள்தோறும் சந்திரனுதித்தல் கடலினின்று தோன்றுகின்றவாறுபோல இருத்தலுமென்க; ஆலம் அடக்குதல் - பாற்கடல்கடைந்தகாலத்து அக்கடல் கொடிய ஹாலாஹலமென்னும்விஷந்தோன்றுதற்குஇடமாயினமை; கங்காநதிக்குப்பதியாதல்-கங்கைநதியாகிய பெண்ணுக்குக் கடல் கணவனாதலும், கடல் கங்கைநதிசேருமிடமாதலும். எல்லாநதிகளுங் கடலிற்சென்றுசேர்தலும், நதீசப்தமும் ஸமுத்ர சப்தமும் வடமொழியில் முறையே பெண்பால் ஆண்பாற் சொற்களாக அமைந்திருத்தலு மாகிய தன்மைபற்றி, நதிகளை மனைவிகளாகவும் கடலை அவர்கட்குக்கணவனாகவும் கூறும் மரபை, கடலின் 'நதீபதி' என்கிற வடமொழிப்பெயராலும் அறிக. இத்தன்மை, எல்லாநதிகட்கும் ஒக்குமாயினும், இங்கே 'கங்காநதிக் கொரு பதியாய்' என்று எடுத்துக்கூறினது, அந்நதியின் ஒப்புயர்வற்றசிறப்புப்பற்றி யென்க; அவ்யாற்றின் மிக்கசிறப்பு, பிரசித்தமானது. மேகத்துக்குச் சிலை ஆலங்கட்டியும், அம்பு சாதாரணநீர்த்துளியு மென்க. மிக்கவலிமையும், எதற்குஞ்சலியாதஉறுதியும், அளவிடவொண்ணாத உயர்வும், பொருள்வண்மையும் முதலியன உடைமைபற்றி, அருச்சுனனிடத்து மலையின் தன்மையை யேற்றிக்கூறினார். கண்ணனுக்குக் காளமேகம் கருநிறத்தால் மாத்திரமே யன்றி உலகத்தின் தாபத்தை யொழிக்கிற குளிர்ந்த கருணைமழையைச் சொரியுந்தன்மையாலும் அமையு மென்க.

சிவபிரானுக்கு, சந்திரனையும் விஷத்தையும் அடக்குதல் - சந்திரனைத் தலையில் தரித்தலும், விஷத்தைக்கழுத்தில்நிறுத்தலும்; கங்காநதிக்குஒருபதியாதல்-கங்கையைச் சடையில் வைத்துக்கொண்டிருத்தல். பெண்பாலாகிய கங்கை சிவபிரானை நீங்காதுசேர்ந்திருக்குந் தன்மையும், சிவபிரான் குமாரனையுண்டாக்குதற்கு வெளிப்படுத்திய அனற்பொறிகளைக் கங்காநதி ஏற்றுக்கொண்டிருந்தமையும் பற்றி, சிறுபான்மை சிவபிரானைக் கங்கைக்குக் கணவனென்று கூறுதலும் உண்டு. உபமேயமாகிய சிவபிரான் பலதேவர்களினுஞ்சிறப்புப்பெற்று மகாதேவனென்றும் மகேசுவரனென்றும் கருணைக் கடலென்றும் உயர்த்திக்கூறப்படுந்தன்மை தோன்ற, உபமானமாகிய கடலை 'உயர் மகோததி' என்று விசேடித்துக்கூறினரென்க. கண்ணபிரான் பதின்மூன்றாநாளிரவில் அருச்சுனனைக் கைலாசத்துக்கு அழைத்துக்கொண்டு போய் அவனுக்குச் சிவபிரானைக்கொண்டு சிறந்தவில்லையும் அம்பையுங் கொடுப்பித்தமை, கதைத்தொடர்ச்சியில் விளக்கப்பட்டது. பெறுதற்கரிய பொருள்களாய்ப் பரமசிவனிடமிருந்த வில்அம்புகளை அருச்சுனன் எளிதிற்பெற்றுப் பயன்படுத்திக்கொள்ளுதற்குக் கண்ணன் புருஷகாரமாய் நின்று உதவியமைபற்றி, கண்ணனை 'பரமசிவனாகிய பெருங்கடலிடத்தினின்று சிலையும் அம்பும் முகந்து பற்குனப்பொருப்பிடைப் பொழியுங் கரிய பைம்புயல்' என்றார். "ஈண்டு நல்குதி விறலெய்தும் வண்ணமே", "கூனல் விற்கணைகளுங் குறைவுறாததோர், அகிழற்பொய்கையுங் கொடுத்தி தோழ நீ" என்று கண்ணன் சிவபிரானிடத்துச் சுவாதீனமாகச் சொல்லி, அது கேட்டவுடனே அப்பெருமான் "யானென நீயென வே, றன்றி வையாவு மளித்திடுதற் குனையல்லது வல்லவர் யார்" என்று தடையில்லாமற் கொடுக்

கும்படி செய்வித்த தன்மை தோன்ற,'முகந்து' என்றார். முகத்தல்-மொண்டெடுத்தல். வில்அம்புகளோடு அவற்றிற்கு உரிய முஷ்டி நிலை என்பனவும், ருத்திரமகாமந்திரமும் கொடுப்பித்தமை, 'எல்லாம்', 'பொழியும்' என்ற சொற்களாற் குறிப்பிக்கப்பட்டன வென்க.

அடியவர்க்குஎளியவனும் அமரர்கட்குஅரியவனுமான கண்ணபிரான் தனதுபெருங்கருணையால் தன்னைச்சேர்ந்த பாண்டவர்க்குச் சகாயனாய் நின்றுஅருச்சுனனதுசபதத்தைநிறைவேற்றச்செய்தற்பொருட்டுஅவனுடன் கைலாசத்துக்குச்சென்று அதற்குஉரிய கருவிகளை அவ்வருச்சுனனுக்குச் சிவபிரானைக்கொண்டு கொடுப்பித்தருளின வரலாற்றைக் கீழ்ப் பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திற் கூறிவந்தபொழுது அப்பிரானது அநந்தகலியாண குணங்களில் இவ்வாசிரியர்க்கு உண்டான ஈடுபாடு அச்சருக்கம்முடிந்தபின்பும் ஆராது தலையெடுத்துநின்றதனால், அச்செய்தியையேகுறித்து அடுத்த இச்சருக்கத்துக்குக் கடவுள்வாழ்த்துக் கூறினார்.

கருவிலேதிருவுடைமையாவது - கருப்பத்தி லிருக்கும்பொழுதே எம்பெருமானது திருவருளைப் பெற்று அதனால் "கருவரங்கத்துட் கிடந்து கைதொழுதேன் கண்டேன்" என்றும், "கருக்கோட்டியுட் கிடந்து கை தொழுதேன் கண்டேன்" என்றுஞ் சொல்லுகிறபடி அங்கிருக்கும்பொழுதே அப்பெருமான் தனதுசொரூபரூபகுணவிபூதிகளைக் காட்டிக் குளிர நோக்கித் தரிசநந்தரப்பெற்று வணங்கி அப்பயிற்சியின்நிறைவினாற் பிறந்த பின்பும் ஒருகாலும் அப்பரமனை மறவாமல் எப்பொழுதும் பகவத்பக்தியாகிற ஐசுவரியத்தைப் பரிபூர்ணமாக உடையராயிருத்தல். தொண்டரடிப் பொடியாழ்வார் " மருவிய பெரியகோயில் மதிட்டிருவரங்க மென்னாக், கருவிலே திருவிலாதீர் காலத்தைக் கழிக்கின்றீரே" என்றதில், எம்பெருமானுக்கு அடிமைபூணாதவரை 'கருவிலேதிருவிலாதவர்' என்று இகழ்ந்து அருளிச்செய்தமைகொண்டு,இவர் இங்கு எம்பெருமானுக்குஅடிமைபூண்பவரை 'கருவிலே திருவுடையவர்' என்றார். (இப்படி இவ்வாசிரியர் ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் சொற்பொருட்கருத்துக்களைப் பொன்னே போற்போற்றியெடுத்தாண்டிருத்தலை, மற்றுஞ்சிலவிடங்களிலும் இந்நூலிற் காணலாம்.) 'கருவிலேதிருவுடையவன்' என்பதற்கு ஏற்ற வடமொழிப்பெயர், 'கர்ப்பஸ்ரீமாந்' என்பது.

கலை - கலா என்னும் வடசொல் ஆவீறு ஐயாயிற்று; கங்காநதீ என்ற வடசொல்,ஈயீறு இகரமாயிற்று; ஆலம்-ஹாலம் என்ற வடசொல் திரிந்தது; [நன்-பத-உ0.] பதிஎன்பது-கணவனைக் குறிக்கும்போது, வடசொல்லாம். மஹோததி - வடமொழித்தொடர்: மஹா உ.ததி என்பவை சேர்ந்தன; வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி: 'அஆமுன் உஊவரின் அவ்விரண்டும்கெட ஓர்ஓகாரம்தோன்றும்.' உததி - நீர்தங்கும்இடமெனக் காரணப்பொருள் படும்;உதம்=உதகம் - ஜலம். சிலைஎன்பது - கல்லையும்,அம்புஎன்பது - நீரையும் குறிக்கும்போது, வடசொற்களாம். பற்குனன், கரு, திரு என்பன - முறையே பல்குநன், கர்ப்பம், ஸ்ரீ என்ற வடசொற்களின் சிதைவுகள்.

அரிய - பெறுதற்கு அருமையான எனினுமாம். கலை - சந்திரன்பங்கு. மதியம், அம் - சாரியை. கொதி - முதனிலைத்தொழிற்பெயர். கொதித்தல்-தபித்தல். கங்காநதிக்கு ஒண்மை - தன்னில் நீராடியவரது அருவினையொழித்து அவர்க்கு உயர்பதமளிக்கும் மேன்மை.நதி-கிழக்குநோக்கிச்செல்லும் ஆறு; (மேற்குமுகமாகச்செல்லும் ஆறு, நத மெனப்படும்.)உயர் மகோததி - வினைத்தொகை. உகந்துஎனப்பதம்பிரித்து-மகிழ்ந்துஎன உரைத்தலும் ஒன்று.எலாம்=எல்லாம்: தொகுத்தல். பற்குனன் + பொருப்பு=பற்குனப்பொருப்பு; "சிலவிகாரமா முயர்திணை" என்றதனால்,உயர்திணைப்பெயரீற்று னகரம்கெட்டு வருமொழிமுதல்வலி இரட்டிற்று.இடை-ஏழனுருபு;[நன்-பெயர்-சஉ.]பொழியும்என்றபெயரெச்சத்தில்,'உம்'விகுதி-காலமுணர்த்தாமல் தன்

மைமாத்திரத்தை உணர்த்திற்று. பசுமை+புயல்=பைம்புயல்: இங்கு, பசுமை - குளிர்ச்சியின்மேலது. தொழுமவர் என்றமையாது 'கைதொழுமவர்' என்றது - கைபடைத்தபயன்பெறக் கூப்பி அஞ்சலிசெய்து வணங்குபவர் என்றவாறு. தொழுமவரே என்ற ஏகாரம் - பிரிநிலையும், கருவிலே என்ற ஏகாரம் - அசைநிலையும், உடையவரே என்ற ஏகாரம் - தேற்றமுமாம்.

சிவபிரான் மதியம்அடக்கின கதை:—[திருவேங்கடத்தந்தாதியுரை, கடு - ஆம் பக்கம் பார்க்க.]

**ஆலம்அடக்கிய கதை:**—[திருவேங்கடத்தந்தாதியுரை, பக் - கூகு.]

இனி, 'கொதிகொளாலமுந்தனதிடத்தடக்கி' என்பதற்கு - சிவபிரானுடேசேர்கையில், வெதும்புதலைக்கொண்ட மழுவாயுதத்தைத் தனதுகையிலே கொண்டு என்று உரைப்பாரும் உளர்; ஆலம் - மழுப்படை. 'அரிய தண் கலை வாள் மதியம்' என்பதற்கும் - (பிறர்க்கு) அருமையான இனிய ஒள்ளிய சாஸ்திரஞானம் என்று பொருள்கொள்ளலாம்; கலை - கல்வி: மதி - அறிவுஎன்னும் பொருளில், வடசொல்.

**கங்கைதரித்த கதை:**—[திருவேங்கடத்தந்தாதியுரை, ப-கு௯, க0௩.]

பற்குனன், பார்த்தன், கிரீடி, சுவேதவாகனன், பீபற்சு, விசயன், கிருஷ்ணன், சவ்வியசாசி, தநஞ்சயன், (பாகசாசனி, நரன், ஜிஷ்ணு)என்பன - அருச்சுனனது மறுபெயர்களாம். பங்குனிமாதத்தில் உத்தரபல்குநி [உத்தரம்] என்னும் நக்ஷத்திரத்திற் பிறந்ததனால், பல்குநன் என்று அருச்சுனனுக்குப் பெயர். இப்பெயர், தமிழிற் சிறுபான்மை பங்குனனெனத் திரிந்தும் வழங்கும்.

'கரியவண்புயல்' என்றும் பாட முண்டு.

இதுமுதற் பதினொரு கவிகள்-பெரும்பாலும் இரண்டு நான்கு ஏழாஞ்சீர்கள் மாசசீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (க)

[தருமபுத்திரன் சேனையுடன் போர்க்குப் புறப்படுதல்.]

காலையாதபனைத்தருமன்மாமதலை கைதொழுகடன்முடித்தருளிச், சாலையார்தழல்செய்வேள்வியந்தணர்க்குத் தானமுந்தகுவன வழங்கி, மாலையாமளவிற்றனஞ்சயன்மொழிந்த வஞ்சினம்வழுவற முடிப்பான்,வேலையாரரவப்பலபணைமுழங்க வெம்முரட்சேனையோ டெழுந்தான்,

(இ - ள்.) காலை - (பதினன்காநாட்)சூரியோதயகாலத்தில்,—தருமன் மா மதலை - யமதருமராசனது சிறந்தகுமாரனான யுதிட்டிரன்,—ஆதபனை கைதொழு கடன் முடித்தருளி - சூரியனைக் கைகூப்பிவணங்கிச் செய்ய வேண்டிய கடமைத்தொழில்களை அன்புடன்செய்துமுடித்து,—சாலை-யாக சாலையில், ஆர் - பொருந்திய, தழல் - அக்கினியில், செய் - செய்கிற, வேள்வி - யாகங்களையுடைய, அந்தணர்க்கு - பிராமணர்களுக்கு, தகுவன தானமும் - தக்கனவாகிய தானங்களையும், வழங்கி - மிகுதியாகக் கொடுத்து,—மாலைஆம் அளவில் - (அன்றைத்தினம்) மாலைப்பொழுது வருமளவிற்குள், தனஞ்சயன் மொழிந்த வஞ்சினம் வழு அற முடிப்பான் - அருச்சுனன் (முதல்நாளிற்) சொன்ன சபதத்தைத் தவறுதலில்லாமல் நிறைவேற்றும்பொருட்டு,—வேலை ஆர் - கடலொலியையொத்த, அரவம் - ஆரவாரத்தையுடைய, பல பணை - அநேகவகைவாத்தியங்கள், முழங்க - மிகஒலிக்க, வெம் முரண் சேனையோடு - கொடியவலிமையையுடைய தன்சேனையுடன், எழுந்தான் - (போர்க்குப்) புறப்பட்டான்; (எ - று.)

காலை, தருமன்மாமதலை, முடித்தருளி, வழங்கி, முடிப்பான், சேனையோடு எழுந்தான் என்று இயையும். பதினன்காநாளுதயத்தில், தருமன்,

காலையில் தவறாமற்செய்யவேண்டிய சந்தியாவந்தநம் சூரியநமஸ்காரம் முதலிய வைதிகநித்தியகர்மாநுட்டாநங்களை முடித்துக்கொண்டு, சற்பாத்திரமாகிய உத்தமபிராமணர்கட்குச் சிறந்த பலதானங்களைச் செய்து, பின்பு, முந்தினநாட்சாயங்காலத்தில் அருச்சுனன்செய்த சயத்திரதவத மாகிய பிரதிஜ்ஞை அன்றைச்சூரியாஸ்தமநத்திற்குள் தவறாமல் நிறைவேறுதலை உத்தேசித்து,பலவகைவாத்தியங்கள் கோஷிக்கச் சேனையுடன் போர்க்கு எழுந்தனன் என்பதாம்.

தருமத்தினின்று தவறினவர்க்குத் தக்கதண்டனைசெய்து தருமத்தைக் காத்தலால்,யமனுக்கு வடமொழியில் தர்மனென்று பெயர். கொடியவர்க்கு ஏற்றதண்டனைசெய்து நல்லவர்களை நன்குபாதுகாக்கிற நடுவுநிலைமையில் "பிதுச் சதகுணம் புத்ரஃ"என்றபடி தந்தையாகிய யமனினும் மைந்தனாகிய யுதிட்டிரன் மிகப்பலமடங்கு மேம்பட்டவனென்ற சிறப்புத் தோன்ற,'தருமன்மாமதலை' என்றார். மா-மஹா என்ற வடசொல்லின் திரிபு. உயர்ந்தவர் செய்யும் ஒவ்வொருதொழிலும் அன்புமிகுதியின்பயனான அருளுடன் கூடியேயிருத்தல்பற்றி, 'முடித்தருளி'என்றார். சாலா, வேலா,ஸேநா என்ற வடசொற்கள் திரிந்தன. சாலையார்தழல் - வைதிகாக்கினி யென்றபடி. "அறப்பயனுந்,தான்சிறிதாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப்போர்த்துவிடும்"என்றபடி நல்லொழுக்கமுடையார்க்குச்செய்யுந்தானம்மிக்கபயனைத் தருதலால், சாலையார்தழல்செய் வேள்வி யந்தணர்க்குத் தானம்வழங்கினான். வேள்வி-'வி'விகுதிபெற்றதொழிற்பெயர்;வேட்டல்: ஓமஞ்செய்தல். அந்தணர் என்பது-அம் தண் அர் எனப்பிரிந்து,அழகியதண்மையை [குளிர்ச்சியானஅருளை] யுடையவரென்றும்; அந்த அணவு அர் எனப்பிரிந்து, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவரென்றும் பொருள் படும்; இது,பிராமணர்க்குக் காரணவிடுகுறிப்பெயராம்:[அணவுதல் - தழுவுதல்.] தாநம், தநஞ்ஜயன் - வடசொற்கள். தானமும் என்ற உம்மை - முதலடியைநோக்கி இறந்ததுதழுவியஎச்சப்பொருளதாம்.தகுவனதானம்-கோதாநம், பூதாநம், அந்நதாநம், ஸ்வர்ணதாநம் முதலிய சிறந்த கொடைகள்.

'மாலையாமளவில்'என்பது,'முடிப்பான்'என்பதனோடு இயையும்.இனி, மாலையாமளவில்மொழிந்த என இயைத்து,முந்தினநாளைமாலைப்பொழுதிற் சொன்ன என்றலு மொன்று. தருமபுத்திரன் ராஜஸூயயாகஞ்செய்யவேண்டியபொழுதில், அருச்சுனன் வடக்கிற்சென்றுபலஅரசர்களைச்சயித்து அவர்கள்செல்வத்தைத் திறைகொணர்ந்ததனால், அவனுக்கு 'தநஞ்ஜயன்' என்று ஒருபெயர்; இனி, இப்பெயர்க்கு-வெற்றியைச் செல்வமாகவுடையவ னென்றும ஒருபொருள்கொள்ளலாம். இப்பெயர், அவனது பலபராக்கிரமங்களை விளக்கும். முடிப்பான் -'பான்' விகுதி பெற்ற எதிர்காலவினையெச்சம். வேலை யென்னும் கடலின்பெயர்-இங்கு முதலாகுபெயராய், அதன்ஒலியை யுணர்த்திற்று. ஆர்-உவமவுருபு. ரவம் என்ற வடசொல், அகரத்தை மொழி முதலிற்பெற்று, அரவம் என நின்றது; [நன்-பத - உக.](அரவம் என்பது - பாம்பைக்குறிக்கும்பொழுது, அரா என்னுந் தமிழ்மொழி விகாரப்பட்டு 'அம்' சாரியை பெற்றதாம்.) பலபணை - கொட்டுவன ஊதுவன முதலியன. 'முழங்க' என்பது - எல்லாவற்றிற்கும் பொதுவினை. (உ)

[அருச்சுனன் போர்க்குப் புறப்படுதல்.]

அடைந்தவரிடுக்கணகற்றுதற்கெண்ணி யாடகப்பொருப்பினொற்க டலைக்,கடைந்தமுதளித்தகருணையங்கடலேகடும்பரிச்சந்தனங்கட வ,மிடைந்தொளியுமிழும்வேற்படைத்தடக்கை வீமனுமினைஞரும் பலரும், குடைந்திருபுறனுங்கைவரமகவான் குமரனுமமர்க்களங் குறுக.

இதுவும், வருங்கவியும்-குளகம்; ஒருதொடரெனப்படும். குளகமாவது-பலபாடல்கள் தொடர்ந்து ஒருவினைகொண்டுமுடிவது; "குளகம் பலபாட்டொருவினை கொள்ளும்." குளகமல்லாதது-முத்தகமெனப்படும்; அது-ஒருசெய்யுள் தனியேநின்று முடிவது: "முத்தகச்செய்யுள் தனிநின்று முடியும்."

(இ - ள்.) அடைந்தவர் -(தன்னைச்)சரணமடைந்த தேவர்களது, இடுக்கண்-துன்பத்தை, அகற்றுதற்கு-போக்குதற்கு, எண்ணி-நினைத்து, ஆடகம் பொருப்பினால்-பொன்மயமானமந்தரமலையைக்கொண்டு,கடலை கடைந்து-பாற்கடலைக் கடைந்து, அமுது அளித்த-(அத்தேவர்கட்கு) அமிருதத்தைக் கொடுத்த,கருணை அம் கடலே-அருளுக்கு அழகியஒருகடல்போலஇடமாகவுள்ளவனாகிய கண்ணபிரான்தானே, கடும் பரி சந்தனம் கடவ-வேகத்தையுடைய குதிரைகள்பூட்டிய தனதுதேரைச் செலுத்தவும்,—மிடைந்து ஒளி உமிழும்-மிகுதியாக ஒளியைவீசுகிற, வேல் படை-வேலாயுதத்தையேந்திய, தட கை - பெரியகையையுடைய, வீமனும் - வீமசேனனும், இளைஞரும் - தம்பிமாரான நகுலசகதேவர்களும், பலரும் - மற்றும் பலஅரசர்களும், இரு புறனும் - (தனது) இரண்டுபக்கங்களிலும், குடைந்து - நெருங்கி, கை வர - கைகள்போல ஏற்றதுணையாக அடுத்துவரவும்,— மகவான்குமரனும் - இந்திரகுமாரனான அருச்சுனனும், அமர் களம் குறுக - யுத்தகளத்தைச்சேர்ந்திட, (எ-று.)— இதில், 'குறுக' என்றது - அடுத்தகவியில், 'மைத்துனன் வகுத்து நின்றான்' என்பதனோடு தொடர்ந்து முடியும்.

கீழ்க்கவியில், 'தருமன்மாமதலைசேனையோ டெழுந்தான்' என்றதில், மற்றையோர் எழுந்ததும் அடங்குமாயினும், அன்றைத்தினத்தில் உக்கிரமாகப்போர்செய்துசபதத்தைநிறைவேற்றவேண்டிய பாரத்தைஅருச்சுனன் மேற்கொண்டுள்ளவனாதலால், அவனதுவருகையைச் சிறப்பாகத் தனியேயெடுத்துக்கூறினர். வீமனும் நகுலசகதேவர்களும் சாத்தகி முதலிய மற்றும் பலஅரசரும் அவனையடுத்துநின்றதற்கும் இதுவே காரணம். கடவ,கைவர என்ற வினையெச்சங்கள், குறுக என்றதைக் கொள்ளும். அருச்சுனன், கண்ணன் தனக்குத் தேர்செலுத்தவும்,வீமன்முதலியோர் தனதுஇருபுறத்துஞ் சூழ்ந்துவரவும், போர்க்களங்குறுக என இயையும். முன்னிரண்டடி-கிருபாசமுத்திரமான கண்ணன் வரம்புகடந்தெழுந்த பெருங்கருணையினால் அருச்சுனனுக்குச் சாரதியாயமைந்து அவனது தேர்க்குதிரைகளைச் செலுத்தி உதவிவருந் தன்மையை விளக்கும்.

துர்வாசமுனிசாபத்தால் எல்லாச்செல்வத்தையுமிழந்து அச்சமயம்நோக்கிஎதிர்த்துப்பொருத அசுரர்களால் வலிமையையுமிழந்து தன்னைச்சரணமடைந்த தேவர்களின் துன்பத்தைப் போக்குதற்பொருட்டுத் திருமால் கடல்கடைந்து அமுதமளித்ததனால், 'அடைந்தவரிடுக்கணகற்றுதற் கெண்ணிக் கடலைக் கடைந்து அமுதளித்த கடல்' என்றார். 'எண்ணி' என்றது, 'கடைந்து' 'அளித்த' என்றவற்றோடு இயையும்; இனி,'எண்ணி'என்றதனை 'கடவ' என்றதனோடு இயைத்து, தன்னைச்சார்ந்த பாண்டவர்களது துன்பத்தைத்தீர்க்கத்திருவுளங்கொண்டு கண்ணன்தேர்செலுத்த என்னலுமாம். துன்பம்நேர்ந்தகாலத்துக் கண்இடுங்குதல்பற்றி, துன்பத்துக்கு'இடுக்கண்' என்பது, காரணப்பெயர்: இடுங்குகண் என்பது - இடுக்கண் என விகாரப்பட்டதென்றும், அக்காரியத்தின்பெயர் அதன்காரணமான துன்பத்தின் மேல் நின்றதென்றும் அறிக; (அலக்கண், உறுகண்,பழங்கண்,புன்கண் எனவழங்குந் துன்பத்தின்பெயர்கட்கும் இதுபோலவே காரணப்பொருளமைக்கலாம்.) ஆடகம்-ஹாடகம்:வடசொல்; இது,நால்வகைப்பொன்களுள்ஒன்று; (மற்றவை-கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் எனப்படும்.) பொன்மயமான மேருமலை எல்லாமலைகளினுஞ்சிறந்ததாதலால்,அதன்தன்மையை மந்தரத்

தின்மேலேற்றி, 'ஆடகப்பொருப்பு' என்றாரென்க;*அன்றியும்,மேரு, மந்தரம்,இமயம் என்பவற்றைக் கவிகள் அபேதமாகக்கொண்டு,ஒன்றன்தன்மையை மற்றொன்றின்மேல் ஏற்றிக் கூறும் வழக்கமும் உண்டு: இனி, பொன் உண்டாகுஞ்சுரங்கங்களையுடைய மலையென மந்தரத்துக்கே ஒருபெயராகவுமாம். கருணைக்கடல் - நீர்நிரம்பின கடல்போலக் கருணைநிரம்பின கடவுள் என்பதாம். 'கருணையங்கடல்' என்பதில், அம் - சாரியையாகவுமாம். கடல் கடைந்ததொருகட லெனச் சமத்காரந் தோன்றக் கூறினார். தேவர்களைக் காத்தற்பொருட்டுப் பாற்கடல்கடைந்து அமுதமளித்ததுபோலவே, தேவாம்சமான பாண்டவர்களைக் காத்தற்பொருட்டுப் போர்க்கடலைக் கடைந்து வெற்றியளிக்குங் கருணாநிதி யென்பார், இங்கு அத்தன்மையைக் கூறினார். முன்பு கடல்கடைந்தமுதளித்தவனும், இப்பொழுது கிருஷ்ணாவதாரஞ் செய்தவனும் ஒருதிருமாலே யாதலால்,அத்தன்மை கண்ணன்மேல் ஏற்றிக் கூறப்பட்டது. கடலே என்ற ஏகாரம் - உயர்வுசிறப்பு. கடும்பரி, கடுமை - விரைவு; இதனை, கடி யென்னும் உரிச்சொல்லின் திரிபு என்பாரும் உளர். சந்தனம் - தேரைக் குறிக்கையில், ஸ்யந்தநம் என்ற வடசொல்லின் திரிபு.

கடல்கடைந்த கதை:—[திருவே, ப - கடு.] அப்பொழுது, அமிருதத்தோடு எல்லாச்செல்வங்களும் வெளியெழுந்தவளவிலே, அசுரர்கள் அமிருதத்தைப் பலாத்காரமாகக் கவர்ந்துகொள்ளத் தொடங்கியபொழுது, நாராயணமூர்த்தி மோகினிப்பெண்வடிவங்கொண்டு அவ்வடிவழகால் அசுரர்களை மயக்கி வஞ்சித்து அமுதத்தைத் தான் கைக்கொண்டு தேவர்கட்கே பகிர்ந்து கொடுத்தனன்.

அகற்று - அகல் என்பதன் பிறவினை; று - விகுதி. கருணை - ஆவீறு ஐயான வடசொல். மிடைந்து - மிடைய என்னும் எச்சத்தின் திரிபு; [நன்-வினை - உஎ.] இனி, மிடைந்துவர என இயைத்து,அடுத்துவர எனினுமாம். அன்றி, மிடைந்தொளி என்பதை மிடைந்தவொளி யென்பதன் தொகுத்தலாகக் கொண்டு,மிக்கஒளி யென்றலும் ஒன்று. வெல்வது வேல் என்று காரணப் பெயர். படை-(பகைவரைப்) படுத்தற்குக் கருவியானது; படு - பகுதி: படுத்தல் - அழித்தல், ஐ - கருவிப்பொருள்விகுதி. (இது சேனைக்குப் பெயராம்பொழுது, ஐ - கருத்தாப்பொருள்விகுதியாம்.) வேற்படை - வேலாகிய ஆயுதமென இருபெயரொட்டு. அழித்தற்றொழிற்கடவுளான சிவபிரான் கையிற் சூலவேலையும், பிராணிகளை யழிக்கிற யமன் கையிற்காலவேலையும், அசுரரையழித்தற்குத்தோன்றிய முருகக்கடவுள் கையில் வேலையுங் கொண்டிருத்தல்பற்றி,வேற்படையே சிறந்ததென்று பலஇடங்களிலும் அதனையே பிரதானமாகக் கூறி, மற்றைய வில் வாள் முதலிய ஆயுதங்களை அதன் உபலக்ஷணத்தாற் பெறவைத்தல், மரபு. வீமன் - பீமன் என்ற வடசொல்லின் விகாரம்; (பகைவர்க்குப்) பயங்கரனானவ னென்று பொருள். இளைஞர் - இளமையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர்;பண்புப்பெயர் ஈறுபோய் இடைஅகரம் ஐயாயிற்று: ஞ் - பெயரிடைநிலை. குடைதல் என்பது நீரில் விளையாடுதலையுங் குறிக்குமாதலின், ஒருதொடராய் நின்ற அடுத்த கவியிற் சேனையைக் கடலென்பதற்கு ஏற்ப, அதனிடையே செல்லுதலை'குடைந்து' என்றாரென்னலுமாம்; அது, இங்கு, உல்லாசமாக ஊக்கத்தோடு செல்லுதலை விளக்கும். புறன் - இறுதிப்போலி. கைவர - படைவகுப்பில் வர எனினுமாம்; கை - படைவகுப்பு: இனி, 'கை' என்பதை, தமிழுபசருக்கமாத்திரமாய்நின்றதெனக் கொள்ளுதலு மொன்று. மகவான்-வடசொல்; யாகங்களை

*சீவகசிந்தாமணியில் "இமயநட்டரவுசுற்றி,யத்தலையலறமுந்நீர்கடைந்தவர்" என்றதில் மந்தரத்தை இமயமென்றதும்,அதனுரையில் நச்சினார்க்கினியர்'மந்தரத்தின்தொழிலைஇமயத்துக்குஏற்றினார்,அது மலையரையனாதலின்; "இமயவில்வாங்கிய" என்றார்பிறரும்' என்றதும், இங்கு நோக்கத்தக்கன.

யுடையவ னென்று பொருள்படும்: (நூறு) அசுவமேதயாகங்களைச் செய்தவ னென்றும், யாகங்கள்பலவற்றிற்குத்தலைவனென்றுங்கருத்து.குமரன்-குமாரன் என்ற வடசொல்லின் குறுக்கல்; இது, கு மாரன் எனப் பிரிந்து, மாரன்-மன்மதனையும், கு - குற்சிதரூபமுடையவ னென்று சொல்லத்தக்க கட்டழகுடையவ னென்று காரணப்பொருள்பெறும்; இந்தச் சுப்பிரமணியக்கடவுளின் பெயர் - உவமையாகுபெயராய், புதல்வர்க்கு வழங்கும்: ('சேய்'என்ற தமிழ்ச்சொல்லும் இது.) அமர் - ஸமரம் என்ற வடசொல்லின் சிதைவு; குமரனும், உம்மை - கீழ்க்கவியில், 'தருமன் மாமதலை சேனையோடு எழுந்தான்' என்றதை நோக்கி இறந்ததுதழுவியஎச்சம். (௩)

[திட்டத்துய்மன் பாண்டவர்சேனையை அணிவகுத்தல்.]

சோனையம்புயலிற்கணைதொடும்பதாதிதுரகதந்துரகதத்தடந்தேர்
யானையென்றுரைக்குநால்வகையுறுப்புமிராசமண்டலமுகமாகத்
தானையங்கடலைமிடலுறவகுத்துத்தான்முதற்பேரணியாகச்
சேனையின்பதியாமைத்துனனின்றான்றேவரும்யாவரும்வியப்ப.

(இ - ள்.) சேனையின் பதி ஆம் - (பாண்டவ)சேனைக்குத் தலைவனான, மைத்துனன்-(பாண்டவர்களது)மைத்துனனாகிய திருஷ்டத்யும்நன்,—சோனை-விடாப்பெருமழைபொழிகிற, அம் - அழகிய, புயலின் - மேகம்போல, கணை தொடும்-அம்புகளை மிகுதியாய்ப் பிரயோகிக்கிற, பதாதி-காலாள்களும், துரகதம்-குதிரைகளும், துரகதம் தட தேர்-குதிரைகள்பூண்ட பெரியதேர்களும், யானை-யானைகளும்,என்று உரைக்கும்-என்று சொல்லப்படுகிற, நால்வகை - சதுரங்கங்கள், உறுப்பும் - ஏற்றஅவயவங்களும், இராச மண்டலம்-அரசர்கள்கூட்டம்,முகம் ஆக - முகமுமாக அமையும்படி,தானை அம் கடலை-(தனது) அழகிய சேனாசமுத்திரத்தை, மிடல் உற - வலிமைமிக, தேவரும் யாவரும் வியப்ப - (வானத்தில் நின்று போர்காணும்) தேவர்களும் மற்றும் எல்லோரும் (கண்டு) அதிசயிக்கும்படி, வகுத்து - வியூகம் வகுத்து,—தான்—,முதல் பேர் அணி ஆக - அச்சேனையின்முகத்திற்கு ஒரு பெரிய அலங்காரமாக, நின்றான் - முன்நின்றான்; (எ - று.)

சோனையம்புயல், தானையங்கடல் என்றவற்றில், அம் - சாரியையுமாம். புயலின், இன் - ஐந்தனுருபு, ஒப்புப்பொருள். பதாதி, துரகதம், ராஜமண்டலம், முகம், தேவர் - வடசொற்கள். சதுரங்கசேனைகளை முன்பின்னாக முறைப்படுத்தியமைத்தார்; இனி, வீரசுவர்க்கஞ்செல்லவேண்டுமென்னும் விருப்பத்தோடு போர்செய்தற்குரிய விவேகத்தையுடைமையின் காலாளை முதலிலும், குதிரை தான் ஓரங்கமாதலேயன்றி மற்றோரங்கமாகிய தேரை நடத்துந் தகுதியுடைமையின் அதனை அதன்பின்னும், குதிரையாலன்றித் தேர் தானேசெல்லாமையால் அதனை அதன்பின்னும்,நால்வகைச் சேனையுள்ளும் யானை அழகியதாய்ச் சிறத்தலால் அதனை இறுதியிலுமாக நிறுத்தின ரெனக் காரணங் காணலுமாம். பதாதியென்பது - கால்களால் நடப்பவனென்றும், துரகதமென்பது - விரைந்துசெல்வதென்றும் பொருள்படும்; துரகம், துரங்கம், துரங்கமம் என்பவற்றிற்கும் பொருள் இதுவே. தானைக்கடல் - கடல்போல மிகப்பரந்த சேனை யென்க; அணியணியாக வருதல்பற்றியும், அச்சந்தருதல்பற்றியும், சேனைக்குக் கடலுவமை ஏற்கும். சேனைகளை அணிவகுக்கிற உத்தேசம், கண்டபடி தனித்தனி பிரிந்து பரவியிருத்தலினும் ஒருவடிவமமையத் திரண்டுநிற்கையில் வெல்லுதற்கரிதாய்ப் பகைவரை எளிதிலழிக்கு மென்ப தாதலால்,'மிடலுற வகுத்து'என்றார். அரசர்களை முகமாகவும், நால்வகைச்சேனைகளை மற்றைஅவயவங்களாகவும் அமைத்து அணிவகுத்தன னென்க. பாண்டவர்களது மனைவியான திரௌபதியின் தமையனாதலால், திருஷ்டத்யும்நன், பாண்டவர்க்கு மைத்துனனானவன்; மைத்துனன் - இங்கே, மனைவியினுடன்பிறந்தவன்.

இவன், மகாரதவீரன். 'தேவரும் யாவரும் வியப்ப' என்று, அவன் அன்று அணிவகுத்த சிறப்பைக் கொண்டாடினார். முதற்பேரணியாக - முற்பகுதியின் முற்புறத்தில் என்க. யாவர் - மனிதர் முதலியோர். 'முகமும்' என்ற உம்மை தொக்கது. (௮)

[துரோணன் கௌரவசேனையை அணிவகுத்தல்.]

பாப்புவெம்பதாகைப்பார்த்திவன்பணியாற்பத்திரண்டியோசனைப்பரப்பிற், றீப்புறஞ்சூழநடுவெணிற்பதுபோற்செயத்திரதனையிடைநிறுவிக், கோப்புறப்பரிதேர்குஞ்சரம்பதாதிகூறுநூன்முறையணிநிறுத்திக், காப்புறத்திசைகளெட்டினுநெருங்கக்காவலர்யாரையுநிறுத்தி.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) பாம்பு - பாம்பின்வடிவமெழுதிய, வெம் - பயங்கரமான, பதாகை - கொடியையுடைய, பார்த்திவன் - துரியோதனராசனது, பணியால் - கட்டளையின்படி,—பத்து இரண்டு யோசனை பரப்பில் - இருபது யோசனை விசாலமுள்ள இடத்திலே, தீ புறம் சூழ நடு வெண் நிற்பது போல்- நெருப்புப் புறத்திற் சூழ்ந்துநிற்க அதன்நடுவில் நிற்பதுபோல, செயத்திரதனை இடை நிறுவி - சயத்திரதனை (க் கொடிய பெரிய சேனையின்) மத்தியிலே நிற்கச்செய்து,—கோப்பு உற - இடைவிடாமல் ஒன்றோடொன்று தொடர்ச்சியாக அமையும்படி, பரி தேர் குஞ்சரம் பதாதி - குதிரை தேர் யானை காலாள் என்ற நால்வகைச்சேனைகளையும், கூறும் நூல் முறை - (படைவகுப்பைக்) கூறுகிற சாஸ்திரங்களின் முறைமைப்படி, அணி நிறுத்தி - ஒழுங்குபடச் சுற்றிலும்நிற்கச்செய்து,—காப்பு உற - (அவனுக்குக்) காவலாக அமையும்படி, திசைகள் எட்டினும் - எட்டுத்திக்குக்களிலும், காவலர் யாரையும் - காக்குந்திறமமைந்தவர்களான அரசர்கள்பலரையும், நெருங்க நிறுத்தி - இடைவிடாதுநிற்கும்படி வைத்து,(எ - று.)—இப்பாட்டிலும், அடுத்தஇரண்டுபாடல்களிலு முள்ள 'நிறுத்தி' என்ற சொற்களெல்லாம், எ - ஆம் பாட்டி லுள்ள 'நின்றனன்' என்றதனைக் கொண்டுமுடியும்; அப்பாட்டிலுள்ள 'துரோணன்' என்பதே இவற்றிற்கெல்லாம் கருத்தாவாம்.

பதின்மூன்றாம்போர்நா ளிரவிலே தான் சபைகூடியிருக்கும்பொழுது வந்த கடோற்கசனால் அருச்சுனனது சபதத்தை யறிந்த துரியோதனன், துரோணனைநோக்கி 'நாளைஒருநாட்பகற்பொழுதுமுழுதும் சேனையைச் சீராகஅணிவகுத்துச் சைந்தவனைப் பாதுகாத்து அருச்சுனனை அனலிற் குளிப்பிக்கவேண்டும்' என்று மிகவும் பிரார்த்தித்தன னாதலால், இங்கே 'பார்த்திவன்பணியால்' என்றார்; அதனை, கீழ்ச்சருக்கத்தில் வந்த "கொடி நெடுஞ்சேனையைக் கூறுசெய்து நீ, கடிகைமுப்பது முடன் காக்க வல்லையேல், வடிவுடைச் சிந்துமாமகனு முய்குவன், வெடியனற் குளிக்குவன் விசயன்றானுமே" என்றதனால் உணர்க. அங்ஙனம் துரியோதனன் வேண்டிக் கொண்டதற்குத் துரோணன் "மணிமதிலரணென மன்னுசேனையை, யணிபெறநிறுத்தி ஆமளவுங்காப்பன் யான்"என்று வாக்குத்தத்தஞ்செய்துள்ளானாதலால், அங்ஙனமே மிக்ககாப்பு அமையும்படி அணிவகுக்கின்றனனென்க. இத்தன்மை, எட்டாம்பாட்டிற் கூறப்படும்.

பாம்பு+வெம்=பாப்புவெம்; மென்றொடர் வேற்றுமையில் இனவன்றொடராயிற்று; [நன் - உயிர் - ௩௪.] பதாகை - பெருங்கொடி; ஆவீறு ஐயான வடசொல். பார்த்திவன் என்ற வடசொல் - தத்திதாந்தநாமமாய், பிருதிவிக்குத் தலைவனென்று பொருள்படும்; பிருதிவீ-பூமி; (பிருதுவென்னும் அரசனாற் சீர்திருத்தப்பட்டது.) துரியோதனன் தனதுகொடுமைக்கு அறிகுறியாகப் பாம்பைக் கொடியிற்கொண்டனன்போலும்; அதனால், அவ

னது நன்றியறிவின்மையும், நாவிரண்டுடைமையும், எப்பொழுதும் வக்கிர கதியிற்செல்லுந் தன்மையும் விளங்கும். பத்திரண்டு - பண்புத்தொகை; பத்தாகிய இரண்டு எனப் பெருக்கலாக விரியும்: உம்மைத்தொகையாக்கி, கூட்டலாகப் பன்னிரண்டெனப் பொருள்படுத்தல், இங்குப் பொருந்தாது; கடு - ஆம்பாட்டில் "பதிற்றிரண்டு" என வருவது காண்க. யோசனை - யோஜநா என்ற வடசொல்லின் திரிபு. இங்கு, யோசனை யென்பதற்கு முன்னுள்ள இகரத்தை - வடமொழி யகரத்துக்கு இகரம் முன்வந்தது [நன் - பத- ௨௨] என்றாவது, குற்றியலுகரம் யகரம்வர இகரமாத்திரிந்தது [நன்-உயிர்- ௬௪; எழுத்து - ௯௮] என்றாவது கொள்க. யோசனை, காதம் என்பன - ஒரு பொருளன வென்பர்; வேறுபாடுகூறுதலு முண்டு. பரப்பு - பரந்தஇடத்துக்கு, 'பு' விகுதிபெற்ற தொழிலாகுபெயர்.

ஜயத்ரதன் என்ற வடசொல் - சயத்திரத னெனத் திரிந்து, அது பின்பு மோனைப்பொருத்தத்தின்பொருட்டு, முதல்அகரம் எகரமாக விகாரப்பட்டு, செயத்திரத னென நின்றது. இவன் துரியோதனுதியருடன் பிறந்தவளான துச்சளையின் கணவன்; சிந்துதேசத்தரசன்; அதனால், சைந்தவ னென்று ஒரு பெயர்பெற்றவன்: சமரதவீர னிவன். அபிமனைக் கொன்ற இவனை அருச்சுனன் சபதப்படி கொல்லவொண்ணுவண்ணம் மாலைப்பொழுதளவும் பாதுகாப்பதுவே துரியோதனுதியரது முயற்சி யாதலால், இங்ஙனம் துரோணன் அவனை இடைநிறுத்திச் சுற்றிலும் வெகுதூரமளவும் சேனைகளையும் அரசர்களையும் நிறுத்தி அணிவகுப்பானுயினன்.

நிறுவி, நிறுத்தி என்பவற்றில் பகுதியான நிறுவு, நிறுத்து என்பன-நில் என்பதன் பிறவினை; இவற்றில், முறையே உ து என்பன - பிறவினைவிகுதி: இடையில் வந்த 'து' என்னும் சாரியை லகரத்தின்முன் றகரமாயினதும், பகுதியீற்றுமெய் கெட்டதும், வகரதகரமெய்கள் தோன்றினதும் - சந்தி. கோப்புஉற-கோத்தல்பொருந்த. கோப்பு, காப்பு - 'பு' விகுதிபெற்ற தொழிற்பெயர்கள். இங்கே, 'கூறும்நூல்' என்றது - காமந்தகம், சுக்ரநீதி, மநுஸ்மிருதி முதலியவற்றை. நூல் என்னும் பெயர்க் காரணத்தையும், அது உவமையாகுபெயராதலையும், நன்னூல் - பொதுப்பாயிரம் - ௨௪, ௨௫-சூத்திரங்களிற் காண்க. காப்புஉற - பாதுகாப்பு மிக எனினுமாம். திசைகளெட்டு - கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு.

இரண்டாம்அடியில், சயத்திரதன் கொடியசேனைசூழ இடைநிற்றற்கு நெருப்புச்சூழஇடைநிற்றலை உவமைகூறியது, உவமையணி. பாணுசுரன் முதலிய சிலர்க்கு நெருப்புக்கோட்டையிருந்தது கருதி, சயத்திரதனுக்குப் பாதுகாவலாகச் சூழ்ந்த சேனைக்குத் தீயரண் உவமைகூறப்பட்டதென்க. அடுத்தவரையழித்தலாற் சேனை தீயோ டொக்கும். (௫)

தூசியின்முதனுள்வஞ்சினமொழிந்ததன்மருடணன்றனைநிறுத்தி
யூசியுநுழையாவண்ணம்விற்பதாதிவயவரையுரனுறநிறுத்தி
வாசியிலிபத்திற்றேரிலெண்பட்டமன்னரையிருகையுநிறுத்திப்
பேசியகன்னன்சகுனிசல்லியரைப்பேரணியாகவேநிறுத்தி.

(இ - ள்.) முதல் நாள் - முந்தினநாளில் [பதின்மூன்றாம்போர்நாளிரவில்], வஞ்சினம் மொழிந்த - (மறுநாள்மாலைப்பொழுதளவும் சயத்திரதனைத் தான்காப்பதாகச்) சபதஞ்சொன்ன, தன்மருடணன்தனை - தூர்மர்ஷணனென்ற ராஜனை, தூசியில் - முன்னணிச்சேனையிலே, நிறுத்தி-நிற்கவைத்து,—ஊசியும் நுழையா வண்ணம் - சிறியஊசியும் இடையில்நுழைய வொண்ணாதபடி [மிகஅடர்த்தியாக], வில் பதாதி வயவரை - வில்வில்வல்ல காலாள்வீரர்களை, உரன் உற - வலிமைபொருந்த, நிறுத்தி - (அவனுக்கு உதவியாக அவனுடன்) நிற்கச்செய்து,—வாசியில் - குதிரைகளிலும், இபத்

தில் - யானைகளிலும், தேரில் - தேர்களிலும் (ஏறியுள்ள), என் பட்ட மன்னரை-வலிமைபொருந்திய அரசர்களை, இரு கையும் நிறுத்தி - இரண்டுபக்கங்களிலும் நிற்கச்செய்து,—பேசிய கன்னன் - (சயத்திரதனைத் தான் பாதுகாப்பதாகப்) பிரதிஜ்ஞைகூறின கர்ணனையும், சகுனி சல்லியரை - சகுனியையும் சல்லியனையும், பேர் அணி ஆகவே நிறுத்தி - பெரிய நடுச்சேனையிற் பொருந்தும்படி நிறுத்தி, (எ-று.)—'சகடதுண்டத்து நின்றனன் துரோணன்' என வருங்கவியோடு தொடர்ந்து முடியும்.

தூசி-முந்துற்றுப்பொருபடை;இது,தாரெனவும், கொடிப்படையெனவும்படும். துன்மருடணன்-வடசொல் திரிபு; துர்மர்ஷணன் என்ற பெயர்-(பகைவரால்) பொறுக்கவொண்ணாதவ னென்று காரணப்பொருள்படும்; இவன் - துரியோதனன்தம்பியருள் ஒருவன்; மகாரதவீரரிற் சிறந்தவன்: கீழ் அணிவகுப்புச்சருக்கத்தில் "வழா,மானமிகு துன்மருட ணற்றலைவர்மாரதரில்", "அரசற்குரியவனுசரிவ ரர்த்தரதரில்,துங்க வயவீரர்"என்றவற்றால் இவனை மகாரதனாகவும், மற்றைத்துரியோதனன்தம்பிமார்களை அர்த்தரதராகவும் பிரித்து வகுத்துக்கூறியமை காண்க. பதின்மூன்றாம்போர்நாட் சூரியாஸ்தமனத்தின்பின் அருச்சுனன்செய்த சபதத்தைத் தருமனனுப்பின தூதனை கடோற்கசனால் அறிந்து துரியோதனன் துரோணன்முதலானோரைநோக்கி 'நாளைப்பகல்முப்பதுநாழிகையளவும் நீங்கள் சயத்திரதனைப் பத்திரமாகப் பாதுகாத்து அருச்சுனன்சபதத்தைப் பொய்யாக்கி அவன்சபதப்படி நெருப்பிற்குதித்து இறந்திடுமாறு செய்யவேண்டும்'என்று வேண்டியபொழுது, துர்மர்ஷணன் அங்ஙனமே தான்காப்பதாக உறுதிமொழிகூறியதனை, கீழ்ச்சருக்கத்தில் "அன்மருள் திமிர மெய்தளவு நாளையில், தென்மருள் தெரியல்வேற் சிந்துவேந்தனைக், கன்மருள் திகிரியிற் காப்பன்யா னென்றான், துன்மருடணனெனுந் துணைவன் றானுமே" என வந்ததனால் அறிக. அப்பொழுது கர்ணனும் தான்காப்பதாகச் சபதஞ்செய்தமைபற்றி, 'பேசியகன்னன்' எனப்பட்டான்; அது, கீழ்ச்சருக்கத்தில் "கோப் பலருடன் பலகூற மற்றவர், நாப்பல நவிலினும் நாளை வான்பகல், தாப்புலி நிகர் சயத்திரதன் றன்னுயிர், காப்பல்யா னென்றனன் கதிரின் மைந்தனே" என்றதனால் விளங்கிற்று.

கன்னன் - கர்ணன் என்றதன் திரிபு; இப்பெயர், கர்ணகுண்டலங்களோடு பிறந்தமைபற்றியது: காதின்வழியே பிறந்ததனால் வந்த பெயரென்றுங் கூறுவர்; கர்ணம் - காது. பாண்டவர்கள்தாயான குந்திதேவி கன்னிகையாயிருக்கும்பொழுது தனக்குத் துருவாசமுனிவருபதேசித்த மந்திரத்தைப் பரீட்சித்தறியும்பொருட்டுச் சூரியனை நினைத்து அம்மந்திரத்தை உச்சரிக்க, உடனே அத்தேவன் வந்து அவளுக்கு அநுக்கிரகித்ததனால், அவளிடம் பிறந்த புத்திரன், இவன்; இவனைப் பிறந்தபொழுதே குந்தி பழிக்கு அஞ்சி மிதக்கும்மரப்பெட்டியொன்றில் வைத்துப் பூட்டிக் கங்கையாற்றில் விட்டிட, அதனைத் திருதராட்டிரனது தேர்ப்பாகனான அதிரதனென்பவன் கண்டெடுத்துத் திறந்துபார்த்துக் கொண்டுபோய்த் தன்மனைவியான ராதையும் தானுமாக வசுசேனனென்று பெயரிட்டு வளர்த்தான்: இவனுக்குக் கர்ணன் என்ற பெயர் ஆகாசவாணி இட்டது. இவன், பின்பு துரியோதனனுக்குப் பிராணசிநேகிதனாகி அவனருளால் அங்கதேசத்துக்கு அரசனாயினன். போர்த்தொடக்கத்தில் வீடுமன் வீரர்களை அணிவகுக்கும்பொழுது இவனை அதிரதமகாரதசமரதவீரர்வகையில் எதிலுஞ் சேர்த்திடாது கடையினத்தவரான அர்த்தரதரிற் சேர்த்திட, அதனால் இவன் மிக்ககோபங்கொண்டு 'வீடுமனிறக்குமளவும் யான் போர்செய்து உதவுத லில்லை' என்று சபதங்கூறிப் போய் அங்ஙனமே பத்தாநாட்போரில் வீடுமன் ஒழிந்தபின் பதினோராநாள் முதலாக வந்து போர்செய்கின்றனனென அறிக.

சகுனி-காந்தாரதேசத்தரசன்; சுபல னென்னும் அரசனது புத்திரன்; திருதராட்டிரனது மனைவியாகிய காந்தாரியுடன் பிறந்தவன்; ஆதலால், துரியோதனுதியர்க்கு மாமன்: சூதாடுதலில் மிகவல்லவன்: இவன், சமரதன். சல்லியன் - (பகைவர்க்கு)அம்புநுனிபோல் (வருத்தஞ்செய்)பவன் என்பது பற்றிய காரணப்பெயர்; சல்யம்-அம்புமுனை. இவன் - மத்திரதேசத்து அரசன்; பாண்டுமகாராசனது இரண்டாம்மனைவியாகிய மாத்திரிக்கு உடன்பிறந்தவனுதலின், நகுலசகதேவர்க்கு மாமனுவன். சல்லியன் பாண்டவர்க்குப்போர்த் துணையாம்பொருட்டுத் தன்நாட்டிலிருந்து வரும்வழியில், துரியோதனன் தருமபுத்திரன்செய்ததென்றுதோன்றும்படி ஆங்காங்குத் தண்ணீர்ப்பந்தல் முதலியனவைத்து எல்லாப்பொருளுங் குறைவற அமைத்து வஞ்சனையாக விருந்து செய்விக்க, இவன் அதனை ஆராயாது உண்டு, அங்ஙனந் தன்னையுபசரித்தவனுக்குத் துணைசெய்யத் தான்கடமைப்பட்டிருப்பதாக வாக்களித்து, பின்பு துரியோதனன்செய்ததென்று தெரிந்து கலுழ்ந்தும், வாக்குத்தத்தஞ்செய்துவிட்டதுபற்றி, துரியோதனன்வேண்டுகோளின்படி அவனுக்கே துணையாயினு னென்ன வரலாறு காண்க. இவனும் சமரதவீரனே.

ஊசியும் என்ற உம்மை - அதன்சிறுமையை உணர்த்தினதனால், இழிவு சிறப்பு. "வய வலி யாகும்" என்ற தொல்காப்பியத்தால், வய என்பது-வலிமையையுணர்த்துவதோர் உரிச்சொல்லாம்; அதனையுடையவர், வயவர்: வயம் என்பது - பகுதியாயின், வெற்றியென்று பொருள். உரன் - இறுதிப்போலி. வாஜி, இபம் - வடசொற்கள். எண்பட்ட என்பதற்கு - சிறப்பாகஎண்ணப் பட்ட அதாவது நன்குமதிக்கப்பட்ட என்றும், பெருந்தொகைப்பட்ட என்றும், கணக்கிறந்த என்றும் பொருள்கொள்ளலாம். பேசிய என்பதற்கு - சிறப்பித்துக்கூறப்படுகிற என்று பொருளுரைத்து, சகுனிசல்லியர்க்கும் அடைமொழியாக்குதலும் ஒன்று; அன்றியும், கீழ்ச்சருக்கத்தில், "நின்ற காவலர்களும் நிசைபுலர்ந்துழிச், சென்று போர்புரிந்து நின்தெவ்வர்யாரையும், வென்று மீளுது மென விடைகொண்டாரரோ" என்றதனால், சகுனி சல்லியன்முதலிய மற்றை அரசர்களும் தாம்தாம் பகைவெல்வதாகத் துரியோதனன்முன்னிலையிற் சபதஞ்செய்தன ரென விளங்குதலால், பேசிய என்பது-சபதஞ்செய்த என்ற பொருளிலேயே சகுனிசல்லியர்க்கும் அடைமொழியாகலாம். சகுனி + சல்லியன் = சகுனிசல்லியர்; பலர்பால் விகுதி பெற்ற உயர்திணை உம்மைத்தொகை; [நன் - பொது - உக.] (சு)

அணிக ளைந்தைந்தா லைவகைவியூகமாகிய சேனையின்சிரத்து,
மணிமுடிபுனைந்துவைத்தெனவலங்கல் வலம்புரிமார்பனைநிறுத்திப்,
பணிவுறுமவுணர்பதாகினிவகுத்தபார்க்கவனிவனெனப்பயில்போர்த்,
துணிவுடன்பல்தேர்சூழ்வரச்சகடதுண்டத்துநின்றனன்றுரோணன்.

(இ - ள்.) அணிகள் ஐந்து ஐந்தால்-தனித்தனி ஐந்துஐந்துபகுப்பாகப் பிரிக்கப்பட்ட சேனைத்தொகுதிகளால், ஐவகை வியூகம் ஆகிய - ஐந்துவகை வியூகமாக வகுக்கப்பட்ட, சேனையின் - சேனையினுடைய, சிரத்து - முடியில், மணி முடி புனைந்து வைத்து என - இரத்தினகிரீடத்தைத் தரித்து வைத்தாற்போல, வலம்புரி அலங்கல் மார்பனை நிறுத்தி - நஞ்சாவட்டைப் பூமாலையைத் தரித்த மார்பையுடையவனுன துரியோதனனை நிற்கச்செய்து,— பணிவு உறும் அவுணர் பதாகினி வகுத்த பார்க்கவன் இவன் என-தன்னை வணங்குதல்பொருந்திய அசுரர்களுடைய சேனையை அணிவகுத்த சுக்கிராசாரியனே இவனென்று (ஒப்புமையால் தன்னைக்)கூறும்படி,—பயில் போர் துணிவுடன் - இடைவிடாமற் போர்செய்யும் உறுதியுடனே,—பல் தேர் சூழ்வர - பலதேர்கள் தன்னைச்சூழ்ந்துவர,—துரோணன்—, சகட துண்டத்து - சகடவியூகத்தின் முகத்திலே, நின்றனன்-தான் நின்றான்; (எ-று.)

சதுரங்கங்கள்கூடின தனதுபெருஞ்சேனைத்தொகுதியைத் தனித்தனி ஐந்தாகப்பிரித்து, அவற்றை ஐந்துவியூகமாக அமைத்து, அவற்றிற்கெல்லாம் ஒருமகுடம்வைத்தாற்போல அலங்காரமாயமையும்படி துரியோதனனைத் தலைமையாகநிறுத்தித் தான் அவ்வைந்து வியூகங்களுட் பிரதானமானதும் மற்றை நான்கையுந் தனக்குள்ளே கொண்ட மகாவியூகமுமான சகடவியூகத்தின் முன்னிடத்திலே நின்றனனென்பதாம். ஐந்துவியூகம்-சகடம், பதுமம், கர்ப்பம், சூசி, கூடம் என்பன. பெருந்தொகுதியாகவும் கொடியதாகவும்உள்ள அசுரசேனையைத் தேவர்களோடு பொருதற்கு அணிவகுத்த அசுரகுருவும் அசுரசேனாபதியுமான சுக்கிராசாரியன், பெருந்தொகுதியும் கொடியதுமாகவுள்ள அசுராம்சமான கௌரவசேனையைத் தேவாம்சமான பாண்டவரோடு பொருதற்கு அணிவகுத்த கௌரவகுருவும் கௌரவசேனாபதியுமான துரோணாசாரியனுக்கு ஏற்றஉவமையாதல் காண்க. துரோணனுக்குத் துரியோதனாதியர்போலச் சுக்கிரனுக்கு அசுரர்கள் கீழ்ப்படிந்து அடங்கிய சிஷ்யராதல் தோன்ற, 'பணிவுறு மவுணர்' என்றார். "அக்கரம்யாவுமுணர்ந்த சிலைக்குரு ஆசுரர்சேனைநசெ,சுக்கிரனார் நிகரென்ன" என்று பதின்மூன்றாம் போர்ச்சருக்கத்திலும் துரோணனுக்குச் சுக்கிரனை உவமைகூறினர்.

வ்யூகம் - படைவகுப்பு. சகடவியூகம்-நால்வகைச்சேனைகளையும் வண்டிபோல வடிவம் அமையும்படி ஒழுங்குபட நிறுத்துதல். சிரம், பதாகினி - சிரஸ், பதாகிநீ என்ற வடசொற்களின் திரிபு. பதாகினி என்பது - கொடிகளையுடையதெனக் காரணப்பொருள்படும்; பதாகா - துவசம். மணி, பார்க்கவன், சகடதுண்டம் - வடசொற்கள். மயிர்முடியப்படுகிற காரணத்தால் தலையைக் குறிக்கிற 'முடி' என்ற சொல், அதில் அணியுங் கிரீடத்துக்கு இடவாகுபெயராம். வைத்தெனன-வைத்தாலென என்று எச்சத்திரிபாகவாவது, வைத்ததென என்று தொழிற்பெயர்விகாரமாகவாவது கொள்க. அலங்கல்-தொங்கியசைதல்; அசைகிற மாலைக்குத் தொழிலாகுபெயர்: அல் - கருத்தாப்பொருள்விகுதி யெனினுமாம். நந்தியாவர்த்தம், துரியோதனனுக்கு உரிய அடையாளப்பூமாலை. பார்க்கவன் - ப்ருகு என்னும் முனிவனது சந்ததியிற் பிறந்தவன்; தத்திதாந்தநாமம். பல + தேர் = பஃறேர்; பல என்பது - தன்முன் பிறிதுவர அகரம்கெட்டுத் தனிக்குறி லடுத்த லகரம் தகரம்வர ஆய்தமாக, லகரத்தின்முன் தகரம் றகரமாயிற்று: [நன் - உயிர் - ௨0; மெய் - ௨௫, ௩௪.] இந்த ஆய்தம் - ஆய்தக்குறுக்கமாம்;[நன்-எழுத்து- ௬௨.] மாத்திரை, கால்; [நன் - எழுத்து - ௬௪.] 'பஃறேர்சூழ்வர' என்றது - பல தேர்வீரர் தன்னைச்சுற்றி வந்து நிற்க என்றவாறு. சூழ்வர என்றதில், வா-துணைவினை. 'வியூகமாக்கி யச்சேனையின்' என்றும் பாட முண்டு. (௭)

[துரோணன் படைவகுத்ததன் சிறப்பு.]

மந்தணமிருந்துகங்குலின்முதனாண்மன்னனோடியம்பியவகையே
யந்தணனணிந்தவிரகினைவிமானத்தமரருமதிசயித்துரைத்தார்
சந்தணிகடகவாகுநீள்சிகரச்சயத்திரதனையொருபகலிற் [றித்தே.
கொந்தழலுரோடத்தனஞ்சயன்பொருதுகோறலோவரிதெனக்கு

(இ - ள்.) முதல் நாள் கங்குலின்-முந்தினநாளிரவில், மந்தணம் இருந்து-ஆலோசனைச்சபையிலேயிருந்துகொண்டு, மன்னனோடு இயம்பிய வகையே - துரியோதனனுடன் சொன்னபடியே, அந்தணன் - பிராமணனான துரோணன், அணிந்த - அணிவகுத்த, விரகினை - தந்திரத்தை, (கண்டு),— விமானத்து அமரரும் - (வானத்தில்) விமானத்தின்மீது இருந்துகொண்டு போர்காண்கிற தேவர்களும்,—'சந்து அணி - சந்தனக்குழம்பைப் பூசியவையும், கடகம் - கடகமென்னும்வளையை யணிந்தவையும், நீள் சிகரம் - உயர்ந்தமலையுச்சியோன்றவையுமான, வாகு-தோள்களையுடைய, சயத்திரதனை —, கொந்து அழல் உரோடம் தனஞ்சயன் - பற்றியெரிகிற நீத்திரன்போ

ன்ற பெருங்கோபத்தையுடைய அருச்சுனன், பொருது - போர்செய்து, ஒரு பகலில் - இன்றை ஒருபகற்பொழுதினுள்,கோறலோ-கொல்லுதலோ, அரிது - அருமையானது', என குறித்து - என்று எண்ணி,—அதிசயித்து உரைத்தார் - (துரோணன்படைவகுத்த திறத்தைப்பற்றி) ஆச்சரியப்பட்டுக் கொண்டாடிப் பேசினார்கள்; (எ - று.)

மந்தணம் - மந்த்ரம் என்ற வடசொல்லின் திரிபு; ஆலோசனையைக் குறிக்கிற இச்சொல்-இலக்கணையால், அதுசெய்தற்குஉரிய இடத்துக்கு வந்தது; கீழ்க் கிருட்டிணன்தூதுசருக்கத்தில் "என்றுமிவர் மந்தணத்தினெய்தப் பெறுதாரே" என்றவிடத்துங் காண்க. முதலடியிற் குறித்த செய்தி, ஐந்தாம்பாட்டி னுரையிற் காட்டப்பட்டது. அந்தணன் அணிந்த விரகு— "இடையிருவகையோ ரல்லது நாடின்,படைவகை பெறுஅ ரென்மனார் புலவர்" என்றதொல்காப்பியச்சூத்திரத்து 'நாடின்'என்பதனால், சிறுபான்மை அந்தணரும் படைக்குஉரிய ரென்பது கொள்க; அச்சூத்திரவுரையில் 'அவர் இயமதங்கியாரும் துரோணனும் கிருபனும் முதலாயினா ரெனக் கொள்க' என்றமை உணர்க: இத்தன்மை, வடமொழித்தருமசாஸ்திரக்கொள்கைக்கும் ஒத்ததே. விமாநம்,அமரர், கடகம், சிகரம் - வடசொற்கள். விமானம் - தேவரூர்தி, வானத்திற் பறந்துசெல்வது. அமரர் - (அமிருதமுண்டதனால்) மரணமில்லாதவர்; உம் - உயர்வுசிறப்பு; எச்சவும்மையாக்கின், பிறரும் அதிசயித்தனரென்பது அமையும். அதிசயித்து - அதிசயம் என்னும் வடசொல்லின்அடியாகப் பிறந்த தெரிநிலைவினையெச்சம். சந்து, வாகு, உரோடம் - சந்தநம், பாஹு, ரோஷம் என்ற வடசொற்களின் விகாரம். பகைவர்படைக்கலங்களால் ஊறடையாத திண்மையும் பருமையும் உயர்வும் பற்றி, 'வாகுநீள்சிகரம்' எனப்பட்டது. நீள் சிகரம், கொந்தழல் - வினைத்தொகைகள். அருச்சுனனது கோபத்துக்குத் தீயுவமை - பகையைத் தவறாதழிக்குங் கொடுமைக்கு. கோறலோ, ஓகாரம் - தெரிநிலை. (அ)

[அருச்சுனன் போர்தொடங்குதல்.]

செய்த்தலைக்கயலும்வாளையும்பிணங்குஞ்செழும்புனற்சிந்து நாட்டரசைக், கைத்தலத்தடங்கும்பொருளெனக்காத்துக்காவலர் நின்றபேரணிகண், டுத்தமோசாவுமுதாமனுமுதலோரோரிருபுறத் தினுஞ்சூழ, வித்தகவலவன்முன்செலத்தடந்தேர்விசயனவ்வினைஞ ர்மேனடந்தான்.

(இ - ள்.) செய்த்தலை - கழனிகளிலே, கயலும் - கயல்மீன்களும், வாளையும் - வாளைமீன்களும், பிணங்கும் - (ஒன்றோடொன்று) மாறுபட்டுப் பொருகிற, செழும் புனல் - மிக்கநீர்வளப்பத்தையுடைய,சிந்து நாடு - சிந்து தேசத்தின், அரசை - இராசனை சயத்திரதனை, கைத்தலத்து அடங்கும் பொருள் என - கையிலடங்கிய பொருளைப் (பாதுகாத்தல்) போல, காவலர்-காக்குந்திறமமைந்தவர்களான அரசர்கள்,காத்து நின்ற - பாதுகாத்து நின்ற, பேர் அணி - பெரிய (எதிர்ப்பக்கத்துப்) படைவகுப்பை, கண்டு - பார்த்து,—தட தேர் விசயன் - பெரிய தேரையுடைய அருச்சுனன், உத்தமோசாவும் உதாமனும் முதலோர்-உத்தமௌஜஸ் என்பவனும் யுதாமந்யு என்பவனும் முதலான வீரர்கள், ஓர் இரு புறத்தினும் சூழ - (தனது) இரண்டுபக்கங்களிலும் அடுத்துவரவும்,—வித்தகம் வலவன்-திறமையுள்ள சாரதியான கண்ணபிரான், முன் செல - (தனது தேரின்) முன்னிடத்திற் பொருந்தவும், அ வினைஞர்மேல் நடந்தான் - எதிர்ப்பக்கத்துப்போர்வீரர் மேற் (போர்க்குச்) சென்றான்; (எ - று.)

கயல், வாளை என்பன - மீனின் சாதிபேதம். குறைவான நீரிற் சிறுமீன்களும் நிறைவான நீரிற் பெருமீன்களுஞ் சஞ்சரிக்கிற இயல்பின்படி சிறிய கயல்மீன்கள் தங்குதற்குஉரிய கழனிகளிலும் நீர்ப்பெருக்குமிகுதி

யாற் பெரிய வாளைமீன்கள் வந்துபாய்கின்றன வென்ற தன்மையும், சிறு மீன்களைப் பெருமீன்கள் உணவாகக்கொள்ளுதல் இயல்பாயினும் அந்நாட்டுக்கழனியில் நீர்வளத்தாற் கொழுத்துள்ள சிறியகயல்மீன்கள் வெளியிலிருந்துவருகிற பெரியவாளைமீன்களை யெதிர்க்கும் வலிமையுடையன வென்ற தன்மையுந் தோன்ற, சிந்துதேசத்தின் நீர்வளச்சிறப்பை வர்ணித்தன ரென்க. செய் என்பது - வயலாதலை, 'நன்செய்,' 'புன்செய்' என்ற வழக்கிலுங் காண்க; இது, பன்றிநாட்டில் வழங்குந் திசைச்சொல்: தலை - ஏழனுருபு. வலிந்து, தலம் - வடசொற்கள். அரசு - ராஜந்சப்தபவம். கைக்குள் அடங்கிய சிறியபொருளை எவ்வளவுநன்றாகப்பாதுகாக்கக்கூடுமோ அவ்வளவுநன்றாகச் சயத்திரதனை அரசர் பாதுகாக்க முயன்றனரென்பது, 'கைத்தலத்தடங்கும் பொருளெனக் காத்து' என்றதனால் விளங்கும்; இதனை, "வையகமுழுவதும் வறிஞ னோம்பு மோர், செய்யெனக் காத்து" என்றாற் போலக் கொள்க. உத்தமோசா, உதாமன் - வடசொல் திரிபுகள்; இவ்விருவரும், துருபதனுக்கு நெருங்கியஉறவினரான பாஞ்சாலராசர். உத்தமௌஜஸ் என்பது - உத்தம ஓஜஸ் எனப் பிரிந்து, மேலானஒளியையுடையானென்று பொருள்படும்; இவன்பெயர் 'உத்தமபாநு' என வழங்குதலும் உண்டு. யுதாமந்யு - போரிற் கோபமுடையா னெனக் காரணப்பொருள்படும். வித்தகவலவன் - ஞானஸ்வரூபியான சாரதியுமாம். வினைஞர் - (போர்த்) தொழிலுடையவர்; ஞ் - பெயரிடைநிலை.

விசயன் - விஜயன் என்னும் வடமொழியின் திரிபு; இதற்கு - விசேஷமான வெற்றியை யுடையவ னென்று பொருள். இராசசூயயாகத்திற்காக வடக்கிற்சென்று பலஅரசர்களை வென்றதனாலும், காண்டவதகனகாலத்துத் தேவர்களைச் சயித்ததனாலும், பாசுபதம்பெறுங்காலத்துப் பரமசிவனை யெதிர்த்து விற்கழுந்தால் முடியிலடித்ததனாலும், பின்பு தேவர்க்குப் பகைவரான நிவாதகவசர் காலகேயர்களை வதைத்ததனாலும், மற்றும்பல வெற்றிகளாலும் இவனுக்கு இப்பெயர் அமைந்தது. இனி, விசயன் - தன்னைச் சயிப்பார் எவருமில்லாதவ னென்றும் பொருள்கொள்வர். முன்னையபொருளில் வி - விசேஷமும், பின்னையபொருளில் வி - எதிர்மறை குறிப்பதுமாம். இங்கு 'விசயன்' என்ற பெயராற் குறித்தது, சயத்திரதனை வெல்ல வல்லானென்னுங்கருத்தை விளக்குதலால், கருத்துடையடைகோளியணி.

அருச்சுனன் ஸ்வதந்திரனாகத் தொழில்செய்யாமற் கிருஷ்ணனுக்குப் பரதந்திரனாகநின்று தொழில்செய்தல் தோன்ற 'வித்தகவலவன் முன்செல விசயன் வினைஞர்மேல் நடந்தான்' என்றார். கண்ணன் தான் யார்யார்மீது போர்க்குத்தேரைச்செலுத்துகின்றானோ, அவ்வவர்மீது அருச்சுனன் போர் செய்யத்தொடங்கினனென்றவாறு. இனி, 'முன்செல' என்பதற்கு - முன்னேநின்று செலுத்த என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று; அப்பொழுது தன்வினை பிறவினைப்பொருளில் வந்த தென்க. 'வலவன்செலுத்திட' என்றும் பாடம். இங்கே 'நடந்தேர்' என்றது, காண்டவதகனகாலத்தில் அக்கினி பகவானாற் கொடுக்கப்பட்ட பெருமையையுடைய தே ரென்றவாறு. (௧)

[அருச்சுனனம்புக்குப் பகைவர்சேனையழிதல்.]

போர்முகத்தடங்காமடங்கலேறனையான் விதம்படப்பொழி சிலீமுகங்கள், கார்முகத்தெழுந்ததாரைபோல்வழங்கக் கார்முகத்தொலியினாற்கலங்கித், தார்முகத்தரசன்றம்பியோடணிந்த சாதுரங்கமுமுடனுடைந்து, நீர்முகத்துடைந்தகுரம்பெனத் துரோணனின்றுழிச்சென்றடைந்தனவே.

(இ - ள்.) போர் முகத்து - யுத்தகளத்திலே, அடங்கா மடங்கல் ஏறு அனையான் - அடங்குதலில்லாத சிறந்த ஆண்சிங்கத்தை யொத்தவனாகிய அருச்சுனன், விதம் பட - பலவகையாக, பொழி - சொரிந்த, சிலீமுகங்

கள் - அம்புகள், கார் முகத்து எழுந்த தாரை போல் - மேகத்தினிடத்தி னின்று வெளியெழுந்த மழைத்தாரைகள் போல, வழங்க - மிகுதியாக மேற் செல்லுமளவில்,—தார் முகத்து அரசன் தம்பியோடு அணிந்த சாதுரங்க மும் - முன்னணிச்சேனையினிடத்தே பொருந்திய துரியோதனனது தம்பி யான துச்சாசனனுடன் அணிவகுக்கப்பட்டுப் பொருந்தியிருந்த சதுரங்க சேனைகளெல்லாம், கார்முகத்து ஒலியினால் கலங்கி - (அருச்சுனனது காண் டீவமென்னும்) வில்லினது (நாணியின்) ஓசையாற் கலக்கமடைந்து, நீர் முகத்து உடைந்த குரம்பு என-நீர்ப்பெருக்கு மிக்குப்பாய்தலால் உடைந்த கரைபோல, உடன் உடைந்து - ஒருசேரச் சிதைந்து, துரோணன் நின்ற உழி சென்று அடைந்தன - துரோணாசாரியன் நின்றவிடத்திற் போய்ச சேர்ந்தன; (எ - று.)

எத்துணைப்பெரியவிலங்குக்கும் பின்னிடாத ஆற்றலையுடைய மிருக ராஜனான சிங்கம்போல எத்துணைப்பெரியவீரர்க்கும் பின்னிடாத பராக் கிரமமுடைய மகாவீரனான அருச்சுனனென்பார், 'போர்முகத்தடங்கா மடங்கலே றனையான்' என்றார். அவனது அம்புமழையினால் நிலைகொள் ளாது எதிர்ப்படை எளிதிலுடைந்த தென்பது, 'நீர்முகத்துடைந்த குரம் பென' என்ற உவமையால் விளங்கும். குரம்பு - வயலின் வரம்புமாம்; கழனி யின்காற்புறவரம்பும் மிக்கநீர்ப்பெருக்கினால் அழியுமாறுபோல, கௌரவரது நால்வகைச்சேனையும் அருச்சுனனதுபாணவர்ஷத்தினால்அழிந்தனவென்க. 'விதம்படப் பொழி சிலீமுகங்கள் கார்முகத்தெழுந்ததாரைபோல்வழங்க' என்றதனால், வில்லினொலி இடிமுழக்கம்போலு மென்பது தொனிக்கும். வழங்கு அக்கார்முகம் என்று பிரித்தும் பொருள்கொள்ளலாம்.

போர் - பொரு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். அடங்கா- அடங்காத: ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெச்சம். ஆண்சிங்கம் - பலபராக் கிரமங்களுக்கு உவமை. ஏறு - ஆண்பாற்பெயர். 'மடங்கல்' என்பதே பிடரி மயிர்மடங்கப்பெற்றதான ஆண்சிங்கத்தைக் குறித்தலால், 'ஏறு' என்பது- சிறப்பை யுணர்த்திற்று. அனையான் என்பதில், அன் என்னும் உவமவுருபி டைச்சொல்-பகுதி, ஐ-சாரியை. விதம், சிலீமுகம், கார்முகம் - வடசொற்கள். சிலீமுகம்— சிலீ-கூர்மையை, முகம்-நுனியிலுடையதெனப் பொருள்படும். கார்முகம்-(போர்த்)தொழிலிற் சிறந்த தென்று காரணப்பொருள்படும்; கர் மம் - தொழில். தார்-முன்னணிச்சேனை. 'அரசன்தம்பியோடு அணிந்த சாது ரங்கம்' என்பது-துரியோதனன்தம்பியான துச்சாதனனுடன் அணிவகுத்து நின்ற சேனை யென்றும், துரியோதனனதுதம்பியான துர்மர்ஷணனோடு பொருந்திநின்ற சேனை யென்றும் பொருள்படக்கூடிய தாயினும், அடுத்த கவியின் இரண்டாமடியையும், முதனூலையும்நோக்கி இதற்கு இங்ஙனம்பொ ருள்கொள்ளப்பட்டது. தம்பி என்பதில், தாம்-பகுதி, முதல்குறுகிற்று; பி - முறைப்பெயர்விகுதி. இனி, தமக்குமுன்னேபிறந்தவ னென்றபொருளால் தமையனைக்குறிக்கிற 'தம்முன்' என்ற பெயர்போல, தமக்குப்பின்னேபிறந் தவனென்று பொருள்படும் 'தம்பின்' என்றதொரு பெயர் தம்பியென ஈறு விகாரப்பட்டு வருவதெனக் கொள்வாருமுளர். சாதுரங்கம்-சதுரங்கமென் பதன்விகாரம்; சதுர் + அங்கம் எனப் பிரியும்; யானை தேர் குதிரை காலாள் என்னும் நான்கு அங்கங்களையுடைய தெனப் பொருள்படும். உம்மை - முற் றுப்பொருளது. உடன்-இடைச்சொல்; இது விரைவிலே யென்றும் பொருள் படும். நீர் - நீரமென்னும் வடசொல்லின் விகார மென்பர்; தமிழ்மொழியு மாம். என - உவமவுருபு. நின்றுழி - நின்றவுழி யென்பதன் தொகுத்தல்.

இரண்டாமடியில் 'கார்முகம்' என்ற சொல் முன்னர்த் தொடர் மொழியாயும் பின்னர்த் தனிமொழியாயும் வெவ்வேறுபொருளில் வந்தது, மடக்கு என்னுஞ் சொல்லணியின்பாற்படும். (௧0)

[அருச்சுனன் எதிர்ச்சேனையையழித்துத் துரோணனை நெருங்குதல்.]

புரவிமுப் பதினா யிரங்கொடு முனைந்து பொருந்திறற் கிருத
வன் மாவுங்,கரவிறற் கரிநூ றாயிரங் கொண்டு காதுதுச் சாதனன்
றானும், மிரவியைக் கண்ட மின்மினிக் குலம்போ லீடழிந் திடவு
டன் றெங்குஞ், சரவிதப் படையால் விண்டலந் தூர்த்துத் தானை
கா வலன்முனை சார்ந்தான்.

(இ - ள்.) முப்பதினாயிரம் புரவி கொடு - முப்பதினாயிரங்குதிரைகளை
உடன்கொண்டுவந்து, முனைந்து பொரு-மிகமுயன்று போர்செய்த, திறல்-
வல்லமையையுடைய, கிருதவன்மாவும் - கிருதவர்மா என்ற அரசனும்,
கரம் விறல் - துதிக்கையின் வலிமையையுடைய, கரி நூறாயிரம் கொண்டு-
லக்ஷம் யானைகளை உடன்கொண்டு, காது - எதிர்த்துப்போர்செய்த, துச்சா
தனன் தானும் - துச்சாசனனும், இரவியை கண்ட மின்மினி குலம் போல்-
சூரியனைக்கண்ட மின்மினிப்பூச்சிக்கூட்டம்போல, ஈடு அழிந்திட - (தமது)
வலிமைகெடும்படி, எங்கும் உடன்று - எவ்விடத்தும் போர்செய்து, விதம
சரம் படையால் - பலவகைப்பட்ட அம்புகளாகிய ஆயுதங்களால், விண்தலம்
தூர்த்து - ஆகாயத்தினிடத்தை நிறைத்துக்கொண்டு,(அருச்சுனன்),தானை
காவலன் முனை சார்ந்தான் - கௌரவசேனைத்தலைவனான துரோணனது
முன்னிடத்தைச் சேர்ந்தான்; (எ - று.)

கொடு-கொண்டுஎன்பதன்தொகுத்தல். கிருதவன்மா,-வடசொல்திரிபு;
இவன், துரியோதனன் கண்ணனைப் படைத்துணையழைக்கப் போனபொ
ழுது அப்பெருமானால் அவனுக்குத் துணையாகக் கொடுக்கப்பட்ட யாதவ
சேனைக்குத் தலைவனாக அனுப்பப்பட்டவன்: யதுகுலத்தில் ஹ்ருதிகனென்
பவனது குமாரன்; சமரதத்தலைவரில் ஒருவன்."காலினும் நான்றவொருதனிக்
கையினும், வாலினும் மருப்பினுங் கோறல்வல்லதாய்" என்று அரசயானை
யிலக்கணத்திற் கூறியபடி யானை துதிக்கையாற் போர்செய்து பகையழிக்
குந்தரத்த தாதலால்,'கரவிறற்கரி'எனப்பட்டது.காதுதுச்சாதனன்-வினைத்
தொகை. துச்சாஸநன் என்ற வடமொழிப்பெயர், கொடியகட்டளையை
யுடையா னென்று பொருள்படும். இவன், துரியோதனனது அடுத்ததம்பி;
அர்த்தரதத்தலைவன். தான்-அசை. ரவி-வடசொல்; இகரம் பெற்றது. மின்
மினி-காரணப்பெயர்;இருளில்மின்னிக்கொண்டுபறப்பது.முனைசார்ந்தான்-
இரண்டாம்வேற்றுமைத் தொகையாதலால், விகாரத்து இயல்பாயிற்று;
[நன் - உருபு - கக.] 'முனைசசார்ந்தான்' என்ற பாடத்துக்கு, முன்னிடத்
திற் போய்ச்சேர்ந்தா னென்க.

சூரியனில்லாதசமயத்தில் இருளில் மின்னிக்கொண்டு விளங்கிநின்ற
மின்மினிக்குழாம் சூரியன்வந்தவளவில் அவ்விளக்கம் ஒழிதல்போல, அருச்
சுனன் வருமுன் பலபராக்கிரமங்காட்டிவந்த பகையரசர்கள் அவன்வரக்
கண்டவளவிலே அவ்வாற்றல் முற்றும்ஒடுங்கின ரென்க. அருச்சுனனுக்குச்
சூரியனையும் பகைவர்க்கு மின்மினியையும் உவமைகூறியதில், அருச்சுனன்
எளிதிற்பகையழிக்கும்பேராற்றலுடையா னென்பதும், பகைவர்கள் அவனு
க்கு எவ்வாற்றாலும் ஆற்றா ரென்பதும் விளங்கும். (கக)

வேறு.

[அருச்சுனனும் துரோணனும் போர்செய்தல்.]

சென்ற விற்ற னஞ்ச யற்கு முனைகு லைந்த சேனைவாய்
நின்ற வத்து ரோண னுக்கு நீடு போர்வி ளைந்ததா
லொன்றொ டொன்று தாக்க தங்க ளுருமின் விஞ்சி யதிர்வுறக்
குன்று குன்றொ டுற்றெ னக்கொ டிக்கொ டோர்கு லுங்கவே.

(இ-ள்.) சென்ற-(இவ்வாறு) போன, வில் தனஞ்சயற்கும்-விற்போரிற்

சிறந்தவனான அருச்சுனனுக்கும்,முனை குலைந்த சேனைவாய் நின்ற-முன்பக் கம்கலக்கமடைந்த(எதிர்ப்புறத்துச்)சேனையில் நின்றுள்ள, அ துரோணனுக் கும்-அந்தத்துரோணாசாரியனுக்கும்,— துரகதங்கள்-தேர்க்குதிரைகள், உரு மின்-இடியோசைபோல, ஒன்றொடு ஒன்று விஞ்சி அதிர்வுற-ஒன்றைக்காட் டிலுமொன்று மிகுதியாகக்கனைத்தல்செய்யவும், குன்று குன்றொடு உற்று என-மலைகள் ஒன்றோடொன்று சமீபித்தாற் போல, கொடி கொள் தேர் குலுங்க-கொடிகட்டியுள்ள இருவர்தேர்களும் அசைந்துநெருங்கவும், நீடு போர் விளைந்தது - பெரும்போர் உண்டாயிற்று;(எ-று.)—ஆல் - ஈற்றசை; செய்யுளிறுதியில் நிற்பதுமாத்திரமேயன்றி,அடியிறுதியிலும் வினைமுற்றினி றுதியிலும்நிற்கும்இடைச்சொல்லும் பொருள்தராதாயின் ஈற்றசையேயாம்.

அருச்சுனனும் துரோணனும் ஒருவர்க்கொருவர் சலியாதமகாவீரராத லால் நெடுநேரம்பொருதன ரென்க. முனைகுலைந்தஎன்பதற்கு-வலிமைநிலை யழிந்த என்றும் பொருள்கொள்ளலாம். சேனைவாய், வாய் - ஏழனுருபு. நீடு போர்-வினைத்தொகை. மூன்றாமடிக்கு-மற்றொன்றோடு நெருங்கிய குதிரை கள், இடியினும் மிக்குஒலிக்க எனினும் அமையும்; இவ்வுரைக்கு, ஒன்றுதுர கதம்-வினைத்தொகை; ஒன்றுதல்-சேர்தல். உருமின் என்பதிலுள்ள 'இன்' என்னும் ஐந்தனுருபு-முந்தினஉரைக்கு ஒப்புப்பொருவும்,பிந்தினஉரைக்கு உறழ்பொருவும் ஆம். விஞ்சி-விஞ்ச என எச்சத்திரிபாகக் கொள்க. 'மிஞ்சி' என்ற பாடத்துக்கு,'விஞ்சி' என்பதன் மரூஉ என்க.வலிமை பெருமைகளில், தேர்க்கு மலை உவமை. 'சென்றவித்தனஞ்சயற்கு' என்றும் பாடம்.

இதுமுதல் இருபத்திரண்டு கவிகள்-பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று விளச்சீரும்,மற்றையாறும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள்; இப்படிப்பட்டவற்றைச் சந்தவிருத்தமென்பது, சந்தப்போலியாயிருத்தல்மாத்திரத்தைக்கொண்டேயென அறிக;குழிப்புக்கு ஒத்துவருவனவே சந்தவிருத்தமாம். இவற்றை, முதலாறு சீர்களையும் மூன்றுபெருஞ்சீராகப் பிரித்து, கலிவிருத்த மென்ன வேண்டுமென்பது, ஒருசாரார்கொள்கை. அறுசீராகப் பிரித்தலும் அமையும். (கஉ)

முட்டியாலுநிலையினாலுமொய்ம்பினாலுமுரணுறத்
தொட்டவில்லுநிமிர்வறத்தொடுத்தவின்மையாலுமுன்
கிட்டியாசிரீயனுங்கிரீடியும்பொரப்பொரப்
பட்டவில்லையிருவர்மேலும்விட்டவிட்டபகழியே.

(இ-ள்.) ஆசிரீயனும்-துரோணாசாரியனும், கிரீடியும் - அருச்சுனனும், முன் கிட்டி-எதிரிலே [ஒருவரையொருவர்]நெருங்கி,முட்டியாலும்-கையில் விற்பிடிக்குந் திறத்தினாலும், நிலையினாலும் - (விற்போரில்நிற்றற்குரிய)நிலை வகைகளாலும், மொய்ம்பினாலும்-தோள்வலிமையினாலும், முரண் உற தொ ட்ட வில்லு நிமிர்வு அற-வலிமைபொருந்தக் கையிலேந்திய விற்கள் நிமிர்த லொழிய [நன்றாகவளைய], தொடுத்த - அம்புதொடுத்த, வின்மையாலும் - விற்போர்த்திறத்தினாலும், பொர பொர - மிகுதியாக(ஒருவரோடொருவர்) மேன்மேற் போர்செய்கையில், விட்ட விட்ட பகழி-(ஒருவர்மேலொருவர்) மிகுதியாக விட்ட அம்புகளெல்லாம், இருவர்மேலும் பட்ட இல்லை - இரண்டு பேர்மேலும் பட்டனவில்லை ; (எ - று.)

குருவாகிய துரோணன்போலவே அவனிடத்துப் படைக்கலம்பயின்ற சிஷ்யர்களுட் சிறந்தவனான அருச்சுனனும் வில்வித்தையில்மிக்கதிறமுடைய வனாதலால், இவ்விருவரும் எதிர்த்துத் தமது பலவகைத்திறமைகளையுங் காட்டி ஒருவர்மீது ஒருவர் எய்த அம்புகளெல்லாம் அவரவர் மாறாக எய்த எதிரம்புகளினால் தடுக்கப்பட்டு இடையில் ஒன்றோடொன்று முட்டிக் கீழ் விழுந்திட்டனவேயன்றி ஒன்றேனும்இவர்களுடம்பிற்படவில்லையென்பதாம்.

முட்டி, ஆசிரியன், கிரீடி - முஷ்டி, ஆசார்யன், கிரீடீ என்ற வடசொற்

களின் திரிபுகள். 'ஆசிரியன்' என்பது, செய்யுளோசையின்பொருட்டு, 'ஆசிரீயன்'என நீட்டல்விகாரம் பெற்றது. முட்டி - கைப்பிடி. நிலை - போரில் வில்வளைத்து அம்பினை எய்வார்க்கு உரிய நிலை; அது - பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரதியாலீடம் என நான்குவகைப்படும்:இவற்றுள், ஒருகாலில் நின்று ஒருகால்முடக்கல்-பைசாசநிலை, இருகாலும் பக்கல்வளைய மண்டலித்தல்-மண்டலநிலை,வலக்கால் மண்டலித்து இடக்கால்முந்துறல்-ஆலீடநிலை, வலக்கால்முந்துற்று இடக்கால்மண்டலித்தல் - பிரதியாலீடநிலை. நிலை - நிற்றல்; ஐ விகுதிபெற்ற தொழிற்பெயர். மொய்ம்பு - புஜபலம். வில்லு, உ - சாரியை. நிமிர்வு அற - வளைவுமாறுதல் இல்லையாக: எப்பொழுதும் நன்கு வளைந்து நிற்க. வின்மை என்பதில், மை - தன்மைப்பொருள் விகுதி. முன் - இடமுன். கிரீடி-கிரீடமுடையவன்; பாசுபதம்பெற்றபின்பு நிவாதகவசகாலகேயவதத்திற்காகத் தேவேந்திரன் அருச்சுனனைத் தன்உலகத்துக்கு அழைத்துக்கொண்டுபோனபொழுது அங்குத் தன்ஆசனத்தில் அருத்தாசனங்கொடுத்து அதில் வீற்றிருக்கவைத்து முன்பு பிரமன் தனக்குத்தந்தருளிய இரத்தினகிரீடத்தைச் சூட்ட, அம்முடியணியை உரியதாகப்பெற்றனனாதலால், அருச்சுனனுக்கு 'கிரீடி' என்று பெயர். பொரப்பொர, விட்டவிட்ட என்ற அடுக்குக்கள் - மிகுதியை விளக்கும். பட்ட - அன்சாரியை பெறாத பலவின்பால்முற்று. இல்லை - எதிர்மறைப்பொதுக் குறிப்புமுற்று. பகழி என்பது - பால்பகாவஃறிணைப்பெயராதலால், பட்ட என்ற பன்மைமுற்றோடு இயைந்தது; [நன் - பெயர் - உசு.] (கரு)

தேரிரண்டுமிடம்வலந்திரிந்துசூழவரமுனைந்
தோரிரண்டுதனுவும்வாளியோரோர்கோடியுதையவே
காரிரண்டெதிர்ந்துதம்மின்மலைவுறுங்கணக்கெனப்
போரிரண்டுவீரருக்குமொத்துநின்றபொழுதிலே.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ-ள்.) தேர் இரண்டும்-(தங்கள்) தேர்களிரண்டும், இடம் வலம் திரிந்து சூழவர-இடசாரியாகவும் வலசாரியாகவும் மண்டலமாகவும் உலாவிவரவும்,—ஓர் இரண்டு தனுவும்-(தங்களுடைய)ஒப்பற்ற விற்களிரண்டும்,ஓர் ஓர் கோடி வாளி-ஒவ்வொன்று ஒவ்வொருகோடிக்கணக்கான அம்புகளை,முனைந்து உதைய-விரைந்து செலுத்தவும்,—இரண்டு கார் தம்மில் எதிர்ந்து மலைவுறும் கணக்கு என-இரண்டுமேகங்கள் தமக்குள்[ஒன்றோடொன்று]எதிர்த்துப் போர்செய்யும்விதம்போல,—இரண்டு வீரருக்கும்-(துரோணன் அருச்சுனன் என்ற)இரண்டுவீரர்களுக்கும்,போர் ஒத்து நின்ற பொழுதிலே-யுத்தம் ஏற்றத்தாழ்வில்லாமற் சமமாக நடந்துநின்றபொழுதிலே, (எ - று.)— 'மால் தேரைஉட்செலுத்தினான்'என அடுத்தகவியோடுதொடர்ந்துமுடியும்.

இடசாரி-இடப்பக்கமாகச் செல்லுதல். வலசாரி-வலப்பக்கமாகச்செல்லுதல். மண்டலம்-முழுவதும் சுற்றுதல். தனு-தநுஸ் என்ற வடசொல்லின் விகாரம். கோடி-வடசொல்: நூறுலக்ஷம்; மிகப்பல என்றபடி. விற்கொண்டு இடைவிடாது அம்புமழைபொழிதலில் துரோணார்ச்சுனர்க்குக் காளமேகம் உவமை. காரிரண்டெதிர்ந்துதம்மில்மலைதல்-இல்பொருளுவமை. ஓர்-ஒன்று என்பதன் விகாரமான இது, உகரம்பெறாமலும் முதல்நீளாமலும் நின்றது. 'காரிரண்டதிர்ந்து' என்றும் பாடமுண்டு. (கசு)

[அப்போது கண்ணன் துரோணனை விலகித் தேரை உட்செலுத்தல்.]

இகல்செய்வெஞ்சிலைக்கைவீரவிந்நிலந்தனக்குநின்
பகைவனின்றவர்நிலம்பதிற்றிரண்டியோசனை
புகலுகின்றபொழுதுசென்றதென்றவட்பொறாமன்மா
துகளுகின்றபரிகொடேரையுள்ளுறச்செலுத்தினான்.

(இ - ள்.)(அப்பொழுது),—மால்-கண்ணபிரான்,—அவண் பொறுமல்-அவ்விடத்து(க் காலதாமதஞ்செய்தலை)ப் பொறுமல்,—(அருச்சுனனை நோக்கி),—'இகல் செய் - போரைச் செய்கிற, வெம் சிலை-கொடிய (காண்டீவ) வில்லை ஏந்திய, கை-கையையுடைய, வீர - வீரனே! நின் பகைவன் நின்ற அ நிலம் - உனது பகைவனான சயத்திரதன் நின்றுள்ள அவ்விடம், இ நிலந் தனக்கு - (நாம்நிற்கும்) இவ்விடத்துக்கு, பதிற்றிரண்டு யோசனை - இருபதுயோசனை தூரமாம்; புகலுகின்ற பொழுது சென்றது - கணக்கிட்டுச் சொல்லப்படுகிற பொழுது கழிந்திட்டது', என்று - என்றுசொல்லி,—உகளுகின்ற பரி கொள் தேரை - தாவிச்செல்லுகிற குதிரைகளைப் பூண்ட (அருச்சுனனது)தேரை, உள் உற செலுத்தினன் - (துரோணனது வியூகத்தின்) உள்ளே பாய்ந்து செல்லும்படி ஓட்டியருளினான்; (எ - று.)

கௌரவசேனாமுகத்தில்நின்றுள்ள துரோணனோடு அருச்சுனன் போர் செய்கையில் வெற்றிதோல்விநிகழாமலே நெடும்பொழுது கழிய, அந்தக் காலதாமதத்தைக்கண்டு பொறாத கிருஷ்ணமூர்த்தி அருச்சுனனைநோக்கி 'உன்பகைவன் நின்றுள்ள இடம் இவ்விடத்துக்கு இருபதுயோசனையுள்ளது: அங்ஙனம் இருக்கையில், இவ்வாசிரிய னொருவனுடனே விடாது திறங்காட்டிப் பொருதுகொண்டிருந்தால் வீணே காலங் கழிகிறதாதலால், அப்பால் நெடுந்தூரஞ்சென்று இடைப்பட்ட எதிரிகளையெல்லாம் வென்று பகை கொன்று சபதத்தை நிறைவேற்றுதல் அரிதாய்விடும்: ஆனதுபற்றி, இப்பயனில்போரை இவ்வளவோடு நிறுத்துவாய்' என்று குறிப்பாகச்சொல்லிக் கொண்டே தந்திரமாகத் தனது தேர்க்குதிரைகளைத் துரோணனைவிலகி அவனதுவியூகத்தினுட் பாய்ந்து சென்றுசேரும்படி விரைவாகத்தூண்டி ஓட்டினன் என்பதாம்.

நிலம் - (சலியாமல்)நிற்பது என்று பூமிக்குக் காரணப்பெயர்; நில் - பகுதி, அம் - கருத்தாப்பொருள்விகுதி; இப்பொருள்படப் பூமிக்கு வடமொழியில் 'அசலா' என்றும், 'ஸ்திரா' என்றும் பெயர்களுண்டு. பகைவன், வ் - பெயரிடைநிலை. பதிற்றிரண்டு - பண்புத்தொகை; பத்தாகிய இரண்டு என விரியும்: இற்று - சாரியை. பத்து + இரண்டு = பதிற்றிரண்டு; [நன் - உயிர் - சஎ.] இது - உம்மைத்தொகையில், பன்னிரண்டு எனப் புணரும். புகலுகின்ற, உகளுகின்ற என்பவற்றில், உ-சாரியை. செலுத்து-செல் என்பதன் பிறவினை; இதில், உ-சாரியை. புகலுகின்றபொழுதுசென்றது என்பதற்கு - நீ சபதங்கூறினகாலம் கழிந்திடுகின்றதென இடைநிலைபிரித்துக் கூட்டிப் பொருள்கொள்ளுதல் பொருத்தம் (கஞ)

[பின்பு துரோணன் அருச்சுனனைத் தொடர்ந்து நெருங்குதல்.]

எதிர்த்ததேர்விழித்திமைக்குமளவின்மாயமிதுவெனக்
கதித்துரங்கவிசையினோடுகண்கரந்துகழிதலு
மதிர்த்தடர்ந்துபின்றொடர்ந்தடுத்தபோதருச்சுனன்
கொதித்துவந்தகுருவொடம்மதிருகிநின்றுகூறுவான்.

(இ - ள்.) எதிர்த்த - எதிரிலே நின்றிருந்த, தேர் - (அருச்சுனனது) தேரானது, விழித்து இமைக்கும் அளவில்-கண்மூடித்திறக்குமளவினுள்ளே, மாயம் இது என - மாயைபோல, கதி துரங்கம் விசையினோடு - நடைவல்ல குதிரைகளின் வேகத்தால், கண் கரந்து கழிதலும்-கண்ணுக்கு(எட்டாமல்) மறைந்து (நெடுந்தூரம்) போய்விட்டவளவிலே, (துரோணன்), அதிர்த்து - ஆரவாரஞ்செய்துகொண்டு, அடர்ந்து - நெருங்கி [விடாமல்], பின் தொடர்ந்து அடுத்த போது - (அத்தேரைப்) பின்னேதொடர்ந்து சமீபித்தபொழுது, அருச்சுனன்—, கொதித்து வந்த குருவொடு - (அங்ஙனம்) கோபங்கொண்டு வந்த அத்துரோணாசாரியனை நோக்கி, திருகி நின்று கூறுவான் -

முகந் திரும்பிநின்று (சிலவார்த்தை) சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்தகவியிற் காண்க. அம்ம - வியப்பிடைச்சொல்.

தேர் கழிதலும் என இயையும். விழித்து இமைக்குமளவில் - இமைத்து விழிக்குமளவில் என விகுதிபிரித்துக்கூட்டுக; இயல்பாக ஒருமுறை கண் மூடித்திறக்கிற ஒருமாத்திரைப்பொழுதினுள்ளே என்றபடி. மாயம் இது என - மாயைச்செயல் இது வென்று கண்டோர் சொல்லும்படி; மாயம் - மாயா என்ற வடசொல் ஈறுதிரிந்தது. கதி - வடசொல். விசையினோடு என்றதில், ஓடு என்னும் மூன்றுமுருபு - கருவிப்பொருளில் வந்தது. கழிதலும் - 'உம்' விகுதிபெற்ற இறந்தகாலவினையெச்சம்; இதில், து அல்-சாரியைகள்: இவ்வினையெச்சம், பிற்பொருளோடு விரைவையுங் குறிக்கும். குரு என்ற வடசொல்லுக்கு - (அஜ்ஞாநமாகிய) மனவிருளை ஒழிப்பவ னென்று பொருள்; கு - இருள், ரு - போக்குபவன். அம்ம என்றது - கண்ணன் தந்திரமாகத் தேர்செலுத்தி நெடுந்தூரஞ்சென்ற திறத்தையும், துரோணன் விடாதுதொடர்ந்துசெல்லுந்திறத்தையும், அருச்சுனன் இனித்தந்திரமாகத் துரோணனுக்குச் சமாதானங்கூறுந் திறத்தையும் கருதிய வியப்புப்பற்றி வந்தது. 'மதித்தடர்ந்து' என்று பாடங்கொண்டு 'ஆலோசித்துநெருங்கி' என்று உரைத்தல், மோனைத்தொடைக்கு முரணும். 'திருகி'என்பதற்கு - மாறுபட்டுச்சினந்து என்று பொருள்கூறுதலும், மேல்வரும் அருச்சுனனதுபணிவுமொழிகளோடு நோக்கப் பொருந்தாதாம்.

அருச்சுனன் - அர்ஜுநன் என்ற வடசொல்லின் திரிபு: இதற்கு - வெண்ணிறமுடையவ னென்று பொருள்: இது - முதலில், இந்நிறமுடைய கார்த்தவீரியமகாராசனுக்குப் பெயராயிருந்து, பின்பு, அவனைப்போன்ற சௌரியதைரியங்களையுடைய இப்பார்த்தனுக்கு இட்டுவழங்கப்பட்டது: இது உவமவாகுபெயரின்பாற்படும். பார்த்தன் கருநிறமுடையவனாதலால், அவனுக்கு அருச்சுனனென்பது - நிறம்பற்றிவந்த பெய ரென்றல் பொருந்தாது. இனி, "குருச்சுடர் மணிசெய் பச்சைக் கொழுந்துடற் பொலிவு நோக்கி, யருச்சுனனென்ப ரீதென் னரும்பெயர் வந்த பான்மை"என்னும் நல்லாப்பிள்ளைபாரதச் செய்யுளைக்கொண்டு, அருச்சுனனென்பது - பசுமை நிறம்பற்றிவந்த பெய ரென்றலும் ஒன்று. அன்றியும், பார்த்தன் (பார்வதி போல) முதலிற் பிறந்தபொழுது வெண்ணிறமுடையனாயிருந்து பின்பு கருநிறமடைந்தா னென்று கூறுவது முண்டு. (கசு)

[அருச்சுனனது விநயமொழி கேட்டுத் துரோணன் விட்டிடல்.]

ஐயநின்னொடமர்திளைத்தலமரருக்குமரிதுநின்
செய்யபங்கயப்பதங்கள்சென்னிவைத்தசிறுவன்யான்
வெய்யவென்சொல்வழுவுறாமைவேண்டுமென்னமுறுவலித்
தெய்யவந்தமுனிவுமாறியேகுகென்றியம்பினான்.

(இ - ள்.) 'ஐய - ஸ்வாமீ! நின்னொடு அமர் திளைத்தல் - உன்னுடன் போரை விடாதுசெய்தல், அமரருக்கும் அரிது - தேவர்கட்கும் அருமையானது: யான்-நானோ, நின் - உனது, செய்ய பங்கயம் பதங்கள் - சிவந்ததாமரைமலர்போன்ற திருவடிகளை, சென்னி வைத்த-தலைமேற்கொண்டு வணங்குகிற, சிறுவன் - சிறியவனாவேன்; என் - (அப்படிப்பட்ட) எனது, வெய்ய சொல் - கொடுமையான சபதச்சொல், வழுவுறாமை வேண்டும்-தவறாதபடி அநுக்கிரகிக்கவேண்டும்', என்ன - என்று (அருச்சுனன் துரோணனை நோக்கி நல்வார்த்தை) சொல்ல, (அதுகேட்டுத் துரோணன்), எய்ய வந்த முனிவு மாறி - (அவன்மேல் அம்பு)எய்தற்கு வந்த கோபந் தணிந்து, முறுவலித்து - புன்சிரிப்புச்செய்து, ஏகுக என்று இயம்பினான் - 'செல்வாய்' என்று சொன்னான்; (எ - று.)

'அமிருதமுண்டதனால் இறவாதஇயல்புபெற்றவரும், புலபராக்கிரமங்

துளில் மேம்பட்டவரும், விசேஷபுத்திமான்களும், மந்திரபலமுடையவரு மான தேவர்கட்கும் விடாப்போர்செய்து வெல்லமுடியாத உன்னோடு, உன து திருவடித்தொண்டுபூண்டொழுகும் மாணாக்கர்குழாத்தில் ஒருசிறியனான யானோ பொருது வென்று அப்பாற்செல்லுந் தரமுடையேன்? அல்லேனாத லால், யான் செய்த சபதம் தவறாதபடி நீ செய்தருளவேண்டும்' என்று அருச்சுனன் பணிவாகப் பிரார்த்திக்க, அதனால் துரோணன் கோபந் தணிந்து அவ்வேண்டுகோளை மறுக்கமாட்டாமல்தாக்ஷிணியப்பட்டு அப்பொ ழுது இருந்த அவனது சந்தர்ப்பத்தை நோக்கிப் புன்சிரிப்புச்செய்து அநுமதி தந்து சென்றனனென்பதாம். 'ஸ்வாமி! உன்னுடன்போர்செய்யத் தேவ ராலுமாகாதென்றால், யானோ உன்னையெதிர்க்கவல்லேன்?' என்று தோத் திரஞ்செய்து 'நினது சீடனாகிய அடியேன் செய்த சபதத்தை நிறைவேறச் செய்தல், குருவாகிய நினக்கு முறையன்றோ?" என்று அருச்சுனன் வணக்க மாகச்சொல்லி வேண்டவே, துரோணன் கோபமாறி அவனுக்குச் செல்ல விடையளித்தனனென்க. அமர்வல்லார்க்கும் நின்னுடன்அமர்செய்தல் இய லாது எனச் சமத்காரப்பொருளொன்று 'அமர்திளைத்தல் அமரருக்குமரிது' என்ற சொற்போக்கில் தோன்றுதல் காண்க. சிறுவன் யான் - தன்மையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி. முனிவும்ஆறி என்றும்பிரித்துரைக்கலாம்.

ஆர்ய என்னும் வடமொழி, பிராகிருதபாஷையில் அய்ய என்று ஆகித் தமிழில் 'ஐய' எனத் திரிந்து வழங்கும்; சிறந்தவன் என்று பொருள். பங்கயம்-பங்கஜம் என்ற வடசொல்லின் திரிபு; சேற்றில்முளைப்பதென்று பொருள்: பங்கம் - சேறு; இது - தாமரைக்குக் காரணவிடுகுறி. பதம் - வடசொல். வழுவுறாமை - மைவிகுதிபெற்ற எதிர்மறை வினையெச்சம்; அப் படிப்பட்ட தொழிற்பெயராகக் கொண்டும் பொருளுரைக்கலாம்: இதில், உறு - துணைவினை. வேண்டும் என்பது - 'உம்' விகுதிபெற்றுவந்த ஒருவகை வியங்கோள்முற்று. முறுவலித்து - முறுவல் என்னும் பெயர்ச்சொல்லின் அடியாகப் பிறந்த தெரிநிலைவினையெச்சம்; காதலித்து, கடைக்கணித்து என்பனபோல. இங்கு வந்த நகைப்பு - இகழ்ச்சிநகையின்பாற்படும். ஏகுக +என்று - ஏகுகென்று; வியங்கோளின் ஈற்றகரம், செய்யுள்விகாரத்தால் தொக்கது. 'முனியுமாறி' என்றும் பாடம்; முனியும்- துரோணனும், ஆறி- கோபந்தணிந்து என்று பொருள். (கஎ)

[பின்பு அருச்சுனன் பொருதுகொண்டு பாசவியூகஞ் சேர்தல்.]

ஈசனால்வரங்கள்பெற்றவிந்திரன்றன்மதலைகாம்
போசனாதியெண்ணின்மன்னர்பொருதழிந்துவெருவியுட்
கூசநாலுபாலுநின்றநின்றசேனைகொன்றுபோய்ப்
பாசநாமவணியினின்றவீரரோடுபற்றினான்.

(இ - ள்.) ஈசனால் வரங்கள் பெற்ற - சிவபிரானாற் பலவரங்கள் அரு ளப்பெற்ற,இந்திரன் தன் மதலை-தேவேந்திரனது குமாரனான அருச்சுனன், —காம்போசன் ஆதி - காம்போஜதேசத்தரசன் முதலான, எண் இல் மன் னர்-கணக்கில்லாதஅரசர்கள்,பொருது அழிந்து-(தன்னுடனே)போர்செய் துவலிமைசிதைந்து,வெருவி - அஞ்சி, உள் கூச-மனம் இடுக்கிடும்படி, நாலு பாலும் நின்ற நின்ற சேனை கொன்று போய் - நான்குப்பக்கங்களிலும் மிகு தியாக நின்றுகொண்டிருந்த சேனைகளைக் கொன்றுகொண்டே சென்று,— பாசம் நாமம் அணியில் நின்ற வீரரோடு பற்றினான் - பாசமென்னும்பெய ருடைய அணிவகுப்பில்உள்ள வீரர்களுடனே போர்தொடர்ந்தான்;(எ-று.)

இங்கே 'பாசநாமஅணி' என்றது-கீழ்ச்சொன்ன ஐவகைவியூகங்களுள் ஒன்றான சூசிவியூகத்தை யென அறிக; என்னையெனின்,—"பாச மூசித்து ளையொடு கயிறே" என்ற திவாகரத்தின்படி ஊசித்துளையைக்குறிக்கிற'பா சம்' என்ற சொல், இலக்கணையால், ஊசியைக்குறிக்க, அது, ஊசியின்பெய

ரான சூசீஎன்பதை உணர்த்து மென்க: இது, அசுவத்தாமனைத் தூரகத்தம் னென்றாற்போன்ற கவிவழக்கு. சூசீவியூகமாவது - ஊசிபோல வடிவமமைய யச் சேனையை ஓரேவரிசையாய் ஒழுங்குபட நிறுத்துவது; இதற்கு, நூல்க ளில், எறும்புவரிசை உவமைகூறப்பட்டுள்ளது. இங்கே 'காம்போசன்' என் றவன்பெயர் ஜலசந்தனென்று மூதனூலால் தெரிகின்றது. இவனும் இருத வர்மாவும் துரியோதனனும் கர்ணனும் சூசீவியூகத்திற் பிரதானமாக நின் றன ரென்றும் அந்நூலிற் கூறப்பட்டுள்ளது.

பாண்டவர்வனவாசஞ்சென்றபொழுது அவர்களில்அருச்சுனன்வியாச பகவானது கட்டளையின்படி அவரிடம் மந்திரோபதேசம் பெற்றுக் கைலை சென்று தவம்புரிந்து சிவதரிசனம்பெற்று அப்பெருமானிடம் வில் பாசுபதா ஸ்திரம் அம்பறாத்தூணி முதலியவற்றைப் பெற்றதும், பதின்மூன்றாம்போர் நாளிரவிலே கண்ணனுடன் கைலைசேர்ந்து சிவபிரானிடம் வில் அம்பு முத லியன பெற்றதும், பிரசித்தம். பெற்ற மதலை யென இயையும்.ஈசன்,வரம், இந்த்ரன், காம்போஜன், ஆதி, நாமம் - வடசொற்கள்.வரம் - வேண்டுவன கொள்ளுதல். இந்திரன் தன் மதலை என்பதில், தன்-சாரியை.நாலு - நான்கு என்பது ஈறுகெட்டு னகரம் லகரமாய் உகரம்பெற்றது. அழிந்து-தோற்று. பாசம் - வலைபோல அகப்பட்டவர் மீண்டுவருதற்குஅரியதும், நாம - அச்சந் தருவதுமான, அணியில் என்றும் கூறுவர்; நாம் - உரிச்சொல். (௧௮)

[அருச்சுனன் கர்ணனோடு போர்செய்யக் கருதுதல்.]

முன்னர்முன்னர்வந்துவந்துமுனைகடோறுமுந்துறு
மன்னர்தந்தம்வில்லும்வேலும்வாளும்வென்றிவாளியிற்
சின்னபின்னமாகவெய்துசெல்லுமத்தனஞ்சயன்
கன்னனின்றவுறுதிகண்டுகண்ணனோடுமுரைசெய்தான்.

விலங்கிநம்மையமர்திளைக்கவிடதன்விற்சுதக்கண
னலங்கல்வேலவந்திமன்னனவன்புதல்வனுதியா
வலங்கொள்வாகைவீரர்சேனைவளையநின்றகன்னனைக்
கலங்குமாறுபொருதுபோகவேண்டுமென்றுகருதியே.

இவ்விரண்டு கவிகளும் - குளகம்.

(இ - ள்.) (௧௯) முனைகள்தோறும் - போர்க்களத்தின் இடங்கள்தோ றும், முன்னர் முன்னர் வந்து வந்து - ஒருத்தரினும் ஒருத்தர் முற்பட்டு மிகுதியாகவந்து, முந்துறும் - எதிர்ப்பட்டுப்பொருகிற, மன்னர்தம்தம்- அந்தஅந்த அரசர்களது, வில்லும் வேலும் வாளும்-வில்முதலிய ஆயுதங்கள், வென்றி வாளியின் - வெற்றியைத்தருகிற (தனது) அம்புகளால், சின்ன பின்னம் ஆக - பலபலதுண்டுகளாய் முறியும்படி,எய்து - அம்புதொடுத்துக் கொண்டு, செல்லும் - செல்லுகிற, அ தனஞ்சயன் - அந்தஅருச்சுனன்,— கன்னன் நின்ற உறுதி கண்டு - (அவ்விடத்திற்) கர்ணன் பெருமிதம்பட நிற்கிற வலிமையைப் பார்த்து,—(௨௦) 'விடதன் - விடதன் என்னும் அரச னும், வில் சுதக்கணன் - விற்போர்வல்ல சுதக்ஷிணன் என்ற அரசனும், அலங்கல் வேல் அவந்தி மன்னன் - (போர்) மாலையைத் தரித்த வேலாயு தத்தையுடைய அவந்திநகரத்து அரசனும், அவன் புதல்வன் - அவனது புத்திரனும், ஆதி ஆ - முதலாக, வலம் கொள் வாகை வீரர் - வலிமையைக் கொண்டவரும் வெற்றியையுடையவருமான வீரர்கள், சேனை - சேனைக ளோடு,வளைய-தன்னைச்சூழ்ந்துநிற்க,நம்மை விலங்கி அமர் திளைக்க நின்ற- நம்மைக் குறுக்கிட்டு விடாப்போர்செய்ய நின்றுள்ள, கன்னனை-கர்ணனை, கலங்கும் ஆறு-அவ்வுறுதிநிலைகலங்கும்படி, பொருது-போர்செய்துவென்று, போக வேண்டும் - (நாம்) அப்பாற் செல்லவேண்டும்', என்று கருதி-என்று

ன்னவி,—(கக) கண்ணனும் உரைசெய்தான் - (அக்கருத்தைக்) இருவ்ரு ன்னுடனே சொன்னான்; (எ - று.)

இவ்விரண்டுபாடல்களும் ஒருதொடராதலால், தொடர்ச்சியாக இங்ஙனம் அந்வயித்துப் பொருள்கூறப்பட்டது; இங்ஙனம் பொருட்கு ஏற்றபடி சொற்களை யெடுத்துக் கொண்டுகூட்டிப் பொருளுரைத்தல், தொல்காப்பியத்திற் கூறப்பட்ட செய்யுளுறுப்பு இருபத்தாறனுள் 'மாட்டு' என்னும் உறுப்பாம்.

கக.—"முன்னர்முன்னர்வந்துவந்து முனைகடோறுமுந்துறும்" என்றதனால், வீரர்க்குப் போர்செய்தலிலுள்ள உற்சாகமிகுதி விளங்கும். முன்னர், அர் - சாரியை; பிறபலசாரியைகளும், முன் பின் என்ற சொற்களோடு தொடரும். வாள் - வாளம் என்னும் வடசொல்லின் விகாரமென்பர்; தமிழ்மொழியுமாம். வாளியின், இன் - ஐந்தனுருபு, ஏதுப்பொருள்; (கருவிப்பொருள் ஏதுப்பொருளில் அடங்கும்.) சிங்கம் - வடசொல்; கண்டதுண்டம். கண்ணனும், உம் - அசைநிலை.

௨0.—விலங்கித் திளைக்க என இயையும். நம்மை-இயல்புபற்றிய தனித்தன்மைப்பன்மையென்றாவது, கண்ணனைக்கூட்டிய உளப்பாட்டுத்தன்மைப்பன்மையென்றாவது கொள்க. சுதக்கணன், அவந்தி, வலம்-ஸுதக்ஷிணன், அவந்தீ, பலம் என்ற வடசொற்களின் விகாரம். அவந்தி - முத்திதரும்நகரமேழனுள் ஒன்று; (மற்றவை - அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, துவாரகை.) வாகை என்னும் ஒருவகைமரத்தின்பெயர் - இங்கு, இலக்கணையால், அம்மரத்தின்மலர்களாலாகிய மாலையை அறிகுறியாகச்சூடுகிறவெற்றியைக் குறித்தது; மும்மடியாகுபெயர். ("வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம், வட்கார்மேற் செல்வது வஞ்சியாம்—உட்கா, தெதிரூன்றல் காஞ்சி யெயில்காத்தல் நொச்சி, யதுவளைத்தலாகுமுழிஞை — யதிரப், பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர், செருவென்றது வாகையாம்" என்றதனால் இன்னஇன்னபூமாலை வீரர்க்கு இன்னஇன்னசமயத்துத் தரித்தற்குஉரிய தென்பதை அறிக.) போக என்பதில், போ - பகுதி, கு - சாரியை என்பர் ஒருசாரார்; போகு - பகுதி என்பர் மற்றொருசாரார். போகவேண்டும் என்பதை ஒருசொல் லென்றல், ஒருசாரார்கொள்கை: அப்பொழுது அதற்கு 'நாம்' என்பது தோன்றாஎழுவாய்; மற்றொருசாரார் போக என்னும் வினையெச்சம் தொழிற்பெயர்த்தன்மைப்பட்டு வேண்டும் என்ற முற்றைக் கொண்ட தென்பர். 'அவன்மகன் றனுதியா' என்ற பாடத்துக்கு, தன் என்பது - வேண்டாவழிச்சாரியை யென்க. ஆதியா என்பதில், ஆ என்பது - ஆக என்னும் செயவெனெச்சத்தின் விகாரம்; (இது - "சாவவென் மொழியீற்றுயிர்மெய் சாதலும்விதி" என்றதன் உபலக்ஷணத்தால்அமையும்.) சுதக்ஷிணன் - காம்போஜராசன்மகன்: விந்தஅநுவிந்தர், அவந்தியரசர்: இவை, வடநூலிற் கண்டவை. (௨0)

[அருச்சுனன் கர்ணனை எதிர்தேல்.]

ஒக்குமென்றுசெங்கண்மாலுமுளவுகோல்கொடிவுளியைப்
பக்கநின்றபானுமைந்தன்முனையுறப்பயிற்றலு
மிக்கவெம்பதாதியோடுசூழநின்றவிருதரும்
தொக்குவந்துவிசயன்மீதுசுடுசரந்தொடுக்கவே.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) (அங்ஙனம் அருச்சுனன்சொன்னவுடனே), செம் கண் மாலும் - சிவந்த திருக்கண்களையுடைய கண்ணபிரானும், ஒக்கும் என்று - (அது) பொருந்தும் என்று அங்கீகரித்து, உளவுகோல் கொடு - குதிரை தூண்டுங்கோலினால், இவுளியை - தன்தேர்க்குதிரைகளை, பக்கம் நின்ற

பானு மைந்தன் முனை உற - அருகிலேயுள்ள சூரியகுமாரனான கர்ணனது முன்னே சேரும்படி, பயிற்றலும் - செலுத்தினவளவிலே,—[illegible] பதாதியோடு - மிகுதியான கொடிய காலாட்சேனையுடனே, [illegible] (அக்கர்ணனது)சுற்றிலும் நின்ற, விருதரும் - வீரர்களும், தொக்கு [illegible] ஒருங்குகூடிவந்து, விசயன்மீது - அருச்சுனன்மேல், சுடு சரம் தொகை [illegible] அழிக்கவல்ல அம்புகளைச் செலுத்த, (எ - று.)—'வயவரைக் கலக்கினான்' என அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும்.

'ஒக்கும்' என்றது - அங்கீகாரவார்த்தை. செங்கண்மால் - செந்தாமரைமலர்போலுங் கண்களையுடையவன்; புண்டரீகாக்ஷன். அடியவரை அருளுடன் நோக்கிநோக்கிக் கண்கள் சிவந்தனபோலும்; இதுவே, கொடியவர்மேற் கோபத்தாற் கண்சிவந்ததாகவுந் தோன்றும். மாலும், விருதரும் என்ற உம்மைகள் - கதைத்தொடர்ச்சிபற்றிவந்த இறந்ததுதழுவிய எச்சவும்மைகள். உளவுகோல் - கசைக்கோல். பக்கம், பானு - பக்ஷம், பாநு என்ற வடசொற்களின் திரிபுகள். பாநு என்ற சொல்- விளங்குபவன் எனக் காரணப்பொருள்படும். பயிற்று - பயில் என்பதன் பிறவினை; று - விகுதி. விருது - வெற்றி; அதனையுடையவர், விருதர். சுடுசரம்-உக்கிரமான அம்பு; நெருப்பிலிட்டுக் காய்ச்சியடித்து அராவிய அம்புமாம். தொக்கு - தொகு என்னும் குறிலிணைப்பகுதி. இடையில் தன்னொற்றிரட்டி இறந்தகாலங் காட்டிற்று; உ - வினையெச்சவிகுதி.

இதுமுதற் பதின்மூன்றுகவிகள் - அந்தாதித்தொடையமையப் பாடப்பட்டிருக்குமாறு காண்க. இது - பொருட்டொடர்நிலையிடையிலே வந்த சொற்றொடர்நிலை. (உக)

[கர்ணனைச்சார்ந்த வீரர்களை அருச்சுனன் அழித்தல்.]

சரந்தொடுத்தவயவரைச்சரத்தினிற்றனித்தனி
யுரங்குளிக்கவாகுவீழவுதரமூழ்கவொளிமுடிச்
சிரங்களற்றுமறியவென்புசிந்தவாய்கடுளைபடக்
கரந்துடிக்கவிருபதங்கடறியவேகலக்கினான்.

(இ - ள்.) சரம் தொடுத்த - (இவ்வாறு தன்மீது) பாணங்களைப் பிரயோகித்த, வயவரை - வீரர்களை,—உரம் குளிக்க-(அவர்களுடைய) மார்பில் (அம்புகள்) மூழ்கவும், வாகு வீழ - தோள்கள் துணிபட்டு விழவும், உதரம் மூழ்க - வயிற்றில் (அம்புகள்) அழுந்தவும், ஒளி முடி சிரங்கள் அற்று மறிய- பிரகாசமுள்ள கிரீடத்தைத் தரித்த தலைகள் துணிபட்டு விழவும், என்பு சிந்த - எலும்புகள் வெளிச்சிதறவும், வாய்கள் துளை பட - வாய்கள் துளைப்படவும், கரம் துடிக்க - கைகள் (துணிபட்டுத்) துடிக்கவும், இரு பதங்கள் தறிய - இரண்டுகால்களும் துணிபடவும்,—சரத்தினில் - (அருச்சுனனது) அம்புகளினால், தனி தனி - தனியே தனியே, கலக்கினான் - கலங்கச்செய்தான்; (எ - று.)

வயவரைக் கலக்கினான் என இயையும். 'உரம்குளிக்க', 'உதரம்மூழ்க' என்பவற்றிற்கு - மற்றவற்றோடு ஒப்ப, மார்பு அம்புகுளிக்கப்பெறவும்,வயிறு அம்புகுளிக்கப்பெறவும் என்றும் உரைக்கலாம். உதரம் - வடசொல். 'குளிக்க' முதலிய செயவெனெச்சங்களெல்லாம் காரியப்பொருளன வாதலால், எதிர்காலம். தறியவே, ஏ - அசை. (உஉ)

[அருச்சுனனது போர்த்திறத்தைத் தேவருங் கொண்டாடுதல்.]

கலக்கமுற்றுவில்லிழந்துகவனமாவிழந்துமே
விலக்கமற்றகளிறிழந்துகொடிகொடேரிழந்துபோ
யுலக்கவிட்டளக்கர்வாயுலம்பவோடுகல்லெனத்
துலக்கமுற்றுவருதல்கண்டுசுரருநின்றுதுதிசெய்தார்.

(இ - ள்.) கலக்கம் உற்று - (இவ்வாறு) கலக்கத்தையடைந்தும், வில் இழந்து - விற்களை யிழந்தும், கவனம் மா இழந்து-நடைவல்ல குதிரைகளை யிழந்தும், மேல் - மற்றும், இலக்கம் அற்ற களிறு இழந்து - எண்ணில்லாத யானைகளை யிழந்தும், கொடி கொள் தேர் இழந்து - துவசத்தைக்கொண்ட தேர்களை யிழந்தும், போய் - தோற்றுப்போய், உலக்க - அழியும்படி, இட்டு- (எதிர்ப்பக்கத்து வீரர்களையெல்லாம்) செய்திட்டு, அளக்கர்வாய் உலம்ப ஓடு கலம் என-கடலிலே ஒலியுண்டாக விரைந்துசெல்கிற மரக்கலம்போல, துலக்கம் உற்று வருதல் - விளக்கம்பொருந்தி (அருச்சுனன் தன்தேரின் மீது) விரைந்துவருதலை, கண்டு - பார்த்து, சுரரும் - தேவர்களும், நின்று- திகைத்துநின்று, துதி செய்தார் - தோத்திரஞ்செய்தார்கள்; (எ - று.)

பூமியிற் போர்நிகழும்பொழுது அதனை வானத்தின்மீது வந்துநின்று விநோதமாகக்கண்டு வெற்றிகொள்வாரைப் புகழ்தல், தேவரியல்பு. சிறப்புடையரான தேவரும் துதித்தன ரென்றதனால், பிறர்துதித்தமை தானே புலப்படும். மிகப்பரந்தகடலினிடையிலே தடையற ஊடறுத்துக்கொண்டு மேன்மையான தோற்றத்தோடு அழகியதாகவிரைந்துசெல்கிற மரக்கலம், மிகப்பரந்த சேனையினிடையிலே தடையறப் பகைதொலைத்துக்கொண்டு பெருமிதத்தோடு அழகிதாக விரைந்துசெல்கிற அருச்சுனனுக்கு உவமையெனக் காண்க.

கவனம், சுரர், துதி - கமநம், ஸுரர், ஸ்துதி என்ற வடசொற்களின் திரிபு. பாற்கடல் கடைந்தபோது அதனினின்று உண்டான தொரு சுரையை [வாருணியென்னும் ஒருவகைமதுவை]ப் பானஞ்செய்ததுபற்றித் தேவர்க்குச் சுரர் என்றுபெயர். களிறு-ஆண்பாற்பெயர்;இது யானைக்குஉரியதாதலை "வேழக்குரித்தே விதந்து களிறென்றல்" என்ற தொல்காப்பியத்தால் அறிக. களி - மதக்களிப்பு; அதனையுடைய தெனக் காரணப்பெயர்; இதில், று - பெயர்விகுதி: ஒன்றன்பால்விகுதியன்று; பால்பகாவஃறிணைப்பெயராதலால். (களிறு என்றதன் பெண்பால் - பிடி.) உலக்க - உல என்னும் வினைப்பகுதியினடியாகப் பிறந்த செயவெனெச்சம்; கு - சாரியை, க் - சந்தி. விட்டு எனப் பதம்பிரித்தும் பொருள்கொள்ளலாம். துலக்கம் - துலங்கு என்ற பகுதியின் தொழிற்பெயர்; அம் - விகுதி; வலித்தல் - விகாரம். உபமானமாகிய மரக்கலத்துக்கு 'உலம்பவோடு' என்ற அடைமொழி கொடுத்துக் கூறினதனால், அருச்சுனன் தனதுவெற்றிதோன்றச் சிங்கநாதஞ்செய்துகொண்டு வந்தன னென விளங்கும். கலம் என்ற பொதுப்பெயர் - இங்கே, சந்தர்ப்பத்தால், மரக்கலத்தை யுணர்த்திற்று. (௨௫)

[இனி, கர்ணனும் அருச்சுனனும் பொருதல்.]

துதியினாலுயர்ந்தவண்மையுடையபானுசூனுவுங்
கதியினாலுயர்ந்தமாவொடொத்ததேர்கடாவினான்
மதியினாலுயர்ந்தகொற்றவலவனுந்துதேருடன்
விதியினாலுயர்ந்தசாபவெஞ்சமந்தொடங்கினார்.

(இ - ள்.) (அவ்வாறு அருச்சுனன்வருதலைக் கண்டு),— துதியினால் உயர்ந்த - புகழினாற் சிறந்த, வண்மை உடைய - ஈகைக்குணத்தையுடைய, பானு சூனுவும் - சூரியகுமாரனான கர்ணனும்,— கதியினால் உயர்ந்த - பலவகைநடைகளாற் சிறந்த, மாவொடு - குதிரைகளோடு, ஒத்த - கூடின, தேர் - (தனது) தேரை,— மதியினால் உயர்ந்த கொற்றம் வலவன் உந்து தேருடன் - ஞானத்தினாற் சிறந்த வெற்றியையுடைய சாரதியான கண்ணபிரான் செலுத்துகிற(அருச்சுனனது)தேருடன், கடாவினான் - நெருங்கச் செலுத்தினான்; (பின்பு இருவரும்), விதியினால் உயர்ந்த - (தநுர்வேதத்திற் கூறிய) விதிகளின்படி சிறந்துள்ள, சாபம் - வில்லைக்கொண்டு செய்கிற, வெம் சமம் - கொடிய போரை, தொடங்கினார்-செய்யத்தொடங்கினார்கள்.

வண்மை-பண்புப்பெயர்; யாசகர்க்குத் தடையில்லாமலும், வரையறையில்லாமலுங் கொடுத்தல்; "ஈதலிசைபடவாழ்தல்", "உரைப்பா ருரைப்பவையெல்லாம் இரப்பார்க்கு ஒன்று, ஈவார்மேல் நிற்கும்புகழ்" என்றபடி புகழின் காரணம் பலவற்றுள்ளும் ஈதலே சிறந்ததென்பது தோன்ற,'துதியினுயர்ந்த வண்மை' என்றார். இனி, 'துதியினுயர்ந்த' என்றது-கர்ணனுக்கு அடைமொழியாகவுமாம்; கர்ணன் தானத்தினாற் புகழ்படைத்தவனாதல் பிரசித்தம். 'ஒத்த தேர்'என்பதற்கு-அருச்சுனன்தேர்க்குச் சமமான தனதுதேர் என்றும்உரைப்பர். ஸ்துதி,மதி, விதி,சாபம்-வடசொற்கள். (௨௪)

தொடங்குபோரில்வலியினாலுமதனினுந்துலங்குமெய்
விடங்கினாலும்வின்மையாலுமுவமைதம்மில்வேறிலார்
விடங்கொள்வாளிமின்பரப்பிவெய்யநாணிடிக்கவே
மடங்கல்போலிரண்டுவில்லுமண்டலம்படுத்தினார்.

(இ - ள்.) வலியினாலும் - பலத்தினாலும், மதனினும் துலங்கு மெய் விடங்கினாலும் - மன்மதனைக்காட்டிலும் மிகுதியாகவிளங்குகிற உடம்பின் அழகினாலும், வின்மையாலும் - விற்போர்த்திறத்தினாலும், தம்மில் உவமை வேறு இலார் - (தமக்குத்தாமேயன்றித்) தம்மினும் வேறுஒப்புப்பெறாதவரான அருச்சுனனும் கர்ணனும்,—தொடங்கு போரில் - செய்யத்தொடங்கிய யுத்தத்திலே,—விடம்கொள் வாளி - (கொடுமையில்)விஷத்தையொத்த அம்புகளாகிய, மின்-மின்னல்களை,பரப்பி - பரவச்செய்து,—வெய்ய நாண்-கொடிய வில்நாணி, இடிக்க - இடியோசையைச்செய்ய,—மடங்கல் போல்-மேகங்கள்போல, இரண்டு வில்லும் - (தமது) விற்களிரண்டையும், மண்டலம் படுத்தினார் - நன்றாகவளைத்தார்கள்; (எ - று.)

மடங்கல் என்பதற்கு - சந்தர்ப்பத்திற்கு ஏற்ப, மேகம் என்று பொருள்கூறப்பட்டது; மேகம் மின்னல்பரப்பி இடிமுழக்கி வானவில்வளையப் பெறுதல்போல, இவர் அம்புபரப்புதலுற்று நாணொலிமுழக்கி வில்வளைவு செய்தனரென்க. இனி, மடங்கல் என்பதற்கு - யமனென்றும்,சிங்கமென்றும், அக்கினியென்றும் பொருள்கொள்ளுதலும் ஒன்று; அப்பொழுது கொடுமை மாத்திரத்திற்கே உவமையாம்.இனி,'மடங்கல்'என்று கற்பாந்தகாலத்துக்குப் பெயருள்ளதனால், அது காலவாகுபெயராய், அக்காலத்து அளவிலாமழைபொழிந்து உலகையழிக்கலுறும் மேகத்தைக் குறிக்குமெனக் கொள்ளுதல் நேராம்.

வலிமை அழகு வில்திறம் என்பவற்றில் அருச்சுனனுக்குக் கர்ணனும், கர்ணனுக்கு அருச்சுனனும் ஒருகால் ஒப்பாகக்கூடுமேயன்றிப் பிறர் இவர்க்கு ஒப்பாகாரென்பது 'உவமை தம்மில்வேறிலார்' என்றதன் கருத்து. உவமை, விடம் - உபமா, விஷம் என்ற வடசொற்களின் திரிபு. மின்னுவது மின் எனக் காரணப்பெயர். மண்டலம் - வடசொல். கொள் - உவமவுருபு. அம்புக்கு, நஞ்சுஉவமை - தான்படப்பெற்றாரைத் தவறாமற்கொல்லுதற்கு; பகைவருயிரைக்கவரத்தக்க மிக்ககொடுமைவாய்ந்தஅம்பு என்றபடி. 'விடங்கொள்வாளி' என்பதற்கு - நுனியில் நஞ்சுதீற்றிய அம்பென்பாரும் உளர். மதனினும் என்ற உம்மை - உயர்வுசிறப்பு. இரண்டுவில்லும் என்ற உம்மை-முற்றுப்பொருளது. மற்றவை - எண்ணுப்பொருளன. 'மதனினும்' என்பதற்கு - களிப்பினாலும் என்று உரைத்து 'உவமையிலார்' என்பதனோடு இயைத்தலும், அதனினும் எனப் பதம்பிரித்து அவ்வலிமையைக்காட்டிலும் மிக்குவிளங்குகிற தேகசௌந்தரிய மென்று உரைத்தலும் சிறப்புடையனவல்ல. நிலையில்லாமையாற் பொய்யாகிய உடலை 'மெய்' என்றல் - மங்கலவழக்கு. நான்காமடியில் வந்த உவமையணிக்கு, மூன்றாமடியில் வந்த உருவகவணி அங்கமாதல் காண்க. (௨௫)

மண்டலம்படுத்தவில்லின்வலிகொள்கூரவாளியால்
விண்டலம்புதைந்துதங்கண்மெய்படாமல்விலகினார்
குண்டலங்கள்வெயிலுமூரல்குளிர்நிலாவும்வீசவே
மண்டலம்புகாமனேர்வயங்குவாண்முகத்தினர்.

(இ - ள்.) குண்டலங்கள் - (தம்தமது) குண்டலமென்னுங் காதணிகள், வெயிலும் - சூரியகாந்திபோன்ற ஒளியையும், மூரல் - புன்சிரிப்பு, குளிர் நிலாவும் - குளிர்ந்த சந்திரகாந்திபோன்ற ஒளியையும், வீச - மிகுதியாக வெளிப்படுத்த, மண்டல் அம்பு காமன் நேர் வயங்கு - பெரும்போர் செய்கிற (புஷ்ப)பாணங்களையுடைய மன்மதனுக்கு ஒப்பாய்விளங்குகிற, வாள முகத்தினர் - பிரகாசமுள்ள முகத்தையுடையவர்களான அருச்சுனனும் கர்ணனும்,—மண்டலம் படுத்த வில்லின் - (தாம்தாம்) நன்றாகவளைத்துப்பிடித்த விற்களினால் எய்த,வலி கொள் கூர வாளியால் - வலிமையைக் கொண்ட கூர்மையையுடைய அம்புகளினால், விண் தலம் புதைந்து - ஆகாயத்தின் இடம் மறைந்து,தங்கள் மெய் படாமல் - தங்களுடம்பு ஊறுபடாதபடி, விலகினார் - எதிர்தடுத்தார்கள்; (எ - று.)

ஒருவர்க்கொருவர் சமமான தன்மையையுடைய இவ்விருவரும் ஒருவர் மேலொருவர் அம்புகளைச் செலுத்தியவளவில், அவரவர் மாறாகஎய்யும் எதிரம்புகள் அந்தந்தஅம்புகளைத் தடுத்திட்டதனால், இரண்டும் இடையில் ஒன்றோடொன்று தாக்கிக் கீழ்விழுந்திடவே, இருவரும் அம்புக்கு இலக்காகாதபடி நின்றன ரென்பதாம். இது, தம்மேல்விரைந்துவரும் அம்புகளைக் குறிதவறாமல் எதிரம்புகோத்து மறுத்திடுந் திறங் கூறியது.

கூர - கூர் என்னும் பகுதியின்மேற் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; க்ரூர என்னும் வடசொல்லின் திரிபாகக் கொண்டு, கொடிய என்று பொருள்கொள்ளலுமாம். விண்தலத்தின்வினையாகிய 'புதைந்து'என்ற செய்தெனச்சம், பிறகருத்தாவாகிய மெய்யின் வினையான 'படாமல்' என்றதனைக் கொண்டுமுடிதற்கு ஏலாததனால், புதைந்து என்பதைப் புதைய வெனச் செயவெனெச்சமாகத்திரித்துப் பொருள்கொள்ளுதல் பொருத்தம்; [நன் - வினை, உகூ, உஎ.] குண்டலம் - வடசொல். புன்சிரிப்புச்செய்யுங்காலத்து வெள்ளியபற்களின்ஒளி சிறிதுவெளித்தோன்றுந் தன்மை, 'மூரல்குளிர் நிலாவீச' எனப்பட்டது. இங்கே வந்த சிரிப்பு, வீரத்துஎழுந்தவெகுளிநகையாம். வெயில்-வெம்மையையுடையதெனக் காரணப்பெயர்; வெம்மையென்னும் பண்புப்பகுதி,ஈறுபோய் முன்நின்றமெய் திரிந்து வெய் எனநின்றது; இல்-பெயர்விகுதி. மண்டல்-தொழிற்பெயர்; மண்டு - பகுதி. அம்புகாமன்- சந்தவின்பம்நோக்கி இயல்பாய்நின்ற இரண்டாம்வேற்றுமை யுருபும் பயனுமுடன்தொக்கதொகை. விலகினார்-விலக்கினார்: தன்வினை, பிறவினைப்பொருளது. மண் தலம் புகாமல் நேர் வயங்கு வாள் முகத்தினர் என்றுபிரித்து, தரையைநோக்காமல் [தலை குனியாமல்] எதிராகநிமிர்ந்து விளங்குகிற ஒள்ளியமுகத்தையுடையவ ரென்று உரைத்தலும் ஒன்று. மூன்றாமடியில், வெயில் நிலா என்ற மாறுபட்டசொற்கள் வந்தது, முரண்தொடையின்பாற்படும். வீசவே, ஏ - அசை. (உகூ)

முகத்தினின்றகன்னனோடுமுடிமகீபரோடுநின்
றிகற்செய்கின்றகடிகையோரிரண்டுசென்றதென்றுள
மிகக்கனன்று[illegible]தரும்வில்லுமெய்யணிந்தகவசமுந்
தகர்த்துமார்பின்மூழ்கவாளியேவினன்றனஞ்சயன்.

(இ - ள்.) முகத்தில் நின்ற - எதிரிலே தலைமையாய் நின்ற, கன்னனோடும் - கர்ணனுடனும், முடி மகீபரோடும் - கிரீடந்தரித்த (அவனைச் சார்ந்த)அரசர்களுடனும், நின்று இகல் செய்கின்ற - எதிர்த்துநின்று போர்

செய்கிற, கடிகை - நாழிகை, ஓர் இரண்டு சென்றது - இரண்டுகழிந்திட்டது, என்று - என்றுஉட்கொண்டு,—தனஞ்சயன் - அருச்சுனன், உளம் மிக கனன்று - மனம் மிகக்கொதித்து,தேரும் வில்லும் மெய் அணிந்த கவசமும் தகர்த்து மார்பில் மூழ்க - (அக்கர்ணன்முதலியோருடைய) தேரையும் வில்லையும் உடம்பில் தரித்த கவசத்தையும் பிளந்து அவர்கள்மார்பிலும் மிகப்பதியும்படி, வாளி ஏவினன் - அம்புகளைச் செலுத்தினான்; (சு - று.)

கர்ணனும் அருச்சுனனும் வெற்றிதோல்விநிகழாதபடி சமமாகப்பொருது வருகையில் இரண்டுநாழிகைப்பொழுது கழிந்திட்டதைக் கருதி அருச்சுனன் மிகக்கோபித்து எதிரிக்குப் பலவகையழிவையுண்டாக்கும்படி சில சிறந்த அம்புகளை உக்கிரமாகப் பிரயோகித்தனன் என்பதாம். பகல்முப்பது நாழிகைக்குட் சபதத்தைத் தவறாமல் நிறைவேற்றவேண்டுமே யென்ற கவலையால், இடையில் நாழிகைகழிதலைப்பற்றி மிகச்சினந்தான்.

இகற்செய்கின்ற கடிகை - பெயரெச்சம் காலப்பெயர் கொண்டது. 'இகற்செய்கின்று' என்ற பாடம் பொருத்தமானது; நிகழ்காலவினையெச்சமாய், போர்செய்துகொண்டு எனப் பொருள்படும். மஹீப ரென்ற வடசொல்லுக்கு - பூமியைக் காப்பவரென்று பொருள்; மஹீ - பூமி. கடிகை - கடிகா என்ற வடசொல் திரிந்தது; இருபத்துநான்குநிமிஷங் கொண்ட பொழுது. உளம் - உள்ளம்: உள்ளுறுப்பு, அந்தஃகரணம். கனன்று, கனல்-பகுதி. கவசம் - வடசொல்; இரும்புமுதலியவற்றாலாகிய உடம்பின்மேற் சட்டை. 'முகத்தினின்ற' என்பதற்கு - சேனைமுகத்திலே நின்ற என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று. (உஎ)

[கர்ணன் தோற்க, சுதாயு அருச்சுனனை எதிர்த்தல்.]

தனஞ்சயன்கையம்பினொந்துதபனன்மைந்தன்மோகியா
மனந்தளர்ந்திளைத்தபின்னர்வருணராசன்மாமகன்
கனன்றெழுந்துசேனையோடுவந்துகார்முகங்குனித்
தினங்கொள்வாளியேவினனெதிர்ந்தபோரிலீறிலான்.

(இ - ள்.) தனஞ்சயன் கை அம்பின் - அருச்சுனனது கையினால் எய்யப்பட்ட அம்புகளினால், தபனன் மைந்தன் - சூரியகுமாரனான கர்ணன், நொந்து - வருந்தி, மோகியா - மயக்கமடைந்து, மனம் தளர்ந்து - மனஞ் சோர்ந்து, இளைத்த பின்னர் - மெலிவடைந்தபின்பு,—எதிர்ந்த போரில் ஈறு இலான் - எதிரிட்டுச்செய்யும்யுத்தத்தில் அழிவில்லாதபடி வரம்பெற்றவனாகிய, வருணராசன் மா மகன் - நீர்க்கு அரசனாகிற வருணனது சிறந்த குமாரனான சுதாயுவென்பவன், கனன்று எழுந்து - கோபங்கொண்டு புறப்பட்டு, சேனையோடு வந்து - (தன்) சேனையுடனே (அருச்சுனனெதிரில்) வந்து, கார்முகம் குனித்து - வில்லை வளைத்து, இனம் கொள் வாளி - தொகுதியைக்கொண்ட அம்புகளை, ஏவினன் - (அருச்சுனன்மேற்) பிரயோகித்தான்; (எ - று.)

வருணபகவானுக்குப் பன்னவாதை யென்பவளிடம் பிறந்த புத்திரனாகிய சுதாயுவென்பவன், கையில்ஆயுதமில்லாதவன்மேல் தனதுஆயுதம் எறியப்பட்டாலன்றி வேறுஎவ்வாற்றாலும் தானிறவாதபடி வரம்பெற்று அவ்வரபலத்தால் எப்போரிலும் தோல்வியடையாமல் வெற்றிபெற்றுவந்தானென்ற வரலாற்றை, கூஉ - ஆம் பாட்டால் அறிக. மோகியா - செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகால வினையெச்சம்; மோஹ மென்னும் வடமொழிப்பெயரினடியாப் பிறந்தது. வருணராசன் - வருணனாகிய அரசனென இருபெயரொட்டு; இவன், மேற்குத்திக்குப்பாலகன். இனங்கொள்வாளி ஏவுதல் - பல அம்புகளை இடையறாதுதொடுத்தல். ஈறு - இறுதி; இறு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். தபனன் - தபிக்

இறவனெனப் பொருள்படுங் காரணக்குறி. மைந்து - இளமை; அதனை யுடையவன், மைந்தன். (௨௮)

[அருச்சுனனம்புகள் சுதாயுவினுடம்பைத் துளைபடுத்தமாட்டாமை.]

ஈறிலாதவீரன்வந்தெதிர்த்தகாலைவீரரின்
மாறிலாதவிசயன்விட்டமறைகொள்வாளியாவையுஞ்
சேறிலாதசெறுவில்வித்துசெந்நெலென்னவவனுடற்
பேறிலாமன்முனையுறப்பிளந்துகீழ்விழுந்தவே.

(இ - ள்.) ஈறு இலாத வீரன் - அழியாவரம்பெற்ற வீரனான அந்தச் சுதாயு, வந்து எதிர்த்த காலை - முன்வந்து எதிர்த்தபொழுது,—வீரரில் மாறு இலாத விசயன் - வீரர்களில் எதிரில்லாதவனான [மகாவீரனான] அருச்சுனன், விட்ட - பிரயோகித்த, மறைகொள் வாளி யாவையும்-மந்திர பலத்தைக்கொண்ட அம்புகளெல்லாம்,—சேறு இலாத செறுவில் வித்து செந்நெல் என்ன - சேறு இல்லாத கழனியிலே விதைத்த செந்நெல்விதைகள்போல, அவன் உடல் பேறு இலாமல் - அவனுடம்பினுள்ளே சென்று பாயப்பெறுதலில்லாமல், முனை உற பிளந்து - (அவனுடம்பிற் பட்டமாத்திரத்தில்) நுனிமுழுவதும் ஒடிபட்டு, கீழ் விழுந்த - கீழே விழுந்திட்டன.

வரபலம்பெற்ற சுதாயுவின்மேல் அருச்சுனன் எய்த பாணங்களெல்லாம், அவனுடம்பைப் பிளந்து உட்சென்று ஊறுபடுத்தமாட்டாமல், அவனது வலியஉடம்பிற் பட்டமாத்திரத்தால் தாம் கூர்நுனிமழுங்கிக் கீழ்விழுந்திட்டன என்பதாம். மிக்கநீர்வளமுள்ள இடத்திலேயே விளையுந்தன்மையதான செந்நெலென்னும்ஒருவகைநெற்பயிர்விதை ஈரமில்லாதகழனியில் விதைக்கப்பட்டால் அங்குச் சிறிதும்முளைக்கமாட்டாமல் வீண்படுதலை, மற்றையோருடம்பில் ஊன்றிப் புண்படுத்தும் அருச்சுனனம்பு சுதாயுவினுடம்பிற் சிறிதும்பிரவேசிக்கமாட்டாது வீண்பட்டதற்கு உவமைகூறினார். சேறில்லாத கழனியைச் சுதாயுவினுடற்கு உவமைகூறியதனால், அவனுடம்பு சிறிதும்நெகிழ்தலில்லையென்பது போதரும். மறைகொள்வாளி - அஸ்திரங்கள். வித்து செந்நெல் - இறந்தகாலவினைத்தொகை; 'வித்த'என்ற பாடம்-வித்திய என்ற தெரிநிலைப்பெயரெச்சத்தின்பொருளைத் தருதல், இலக்கணத்துக்கு ஒத்ததன்று; இனி, இறந்தகால இடைநிலை புணர்ந்துகெட்டதெனக் கொள்வாருமுளர். பேறு - பெறுதல்: முதனிலைதிரிந்த தொழிற்பெயர். விழுந்த - முற்று. மாறு - ஒப்புமாம். (௨௯)

[அருச்சுனன் சுதாயுவின்வில்லை அழித்தல்.]

விழுந்தவாளிகண்டுபின்னும்விசயனூரிவிற்குனித்
தழுந்தவாளியொன்றுபத்துநூறுவன்பொடடைசினு
னெழுந்தவாளிவாளியால்விலக்கவேவியாசுகங்
கழுந்ததாகவவனெடுத்தகார்முகங்கலக்கினான்.

(இ - ள்.) விழுந்த - (இங்ஙனம் பயனின்றிக்) கீழ்விழுந்திட்ட, வாளி-(தனது) அம்புகளை, கண்டு - பார்த்து, பின்னும் - மீண்டும், விசயன் - அருச்சுனன், ஊரி வில் குனித்து - வலிமையையுடைய வில்லை வளைத்து, அழுந்த-(அவனுடம்பிற்) பதியும்படி, வாளி ஒன்று பத்து நூறு - ஆயிரக்கணக்கான அம்புகளை, வன்பொடு அடைசினான் - வலிமையோடு செலுத்தினான்; எழுந்த - (இங்ஙனம் தன்மேல் உக்கிரமாக) வந்த, வாளி - அம்புகளை, வாளியால் விலக்க-(சுதாயு தானெய்யும்)எதிரம்புகளால் தடுக்க, (பின்பு அருச்சுனன்), ஆசுகம் ஏவி-பாணங்களைப் பிரயோகித்து, கழுந்து அது ஆக அவன் எடுத்த கார்முகம் கலக்கினான்-வைரமுள்ளதாக அந்தச்சுதாயு கையிலேந்தியுள்ள வில்லை யழித்திட்டான்; (எ - று.)

முன்னர்ச் சுதாயுவின்மேலெய்த அம்புகளெல்லாம் வீண்பட்டமை கண்டு அருச்சுனன் மற்றும்பல கூரியஅம்புகளை உக்கிரமாகப் பிரயோகிக்க, அவற்றை அவன் எதிரம்புகோத்துத் தடுக்க, பின்பு அருச்சுனன் அம்பெய்து அவனது வலிய வில்லைச் சிதைத்திட்டனன் என்பதாம்.

ஒன்றுபத்துநூறு - பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். அடைசு எனினும், அடசு எனினும் ஒக்கும்; சகரத்தின்முன்வந்த அகரஐகாரப்போலி; [நன் - எழுத்து-சுஅ.] ஆசுகம் என்ற வடசொல்லுக்கு - விரைந்துசெல்வதென்று காரணப்பொருள். கழுந்து என்பது - உறுதியென்னும் பொருளதாதலை, "கழுந்தோடும் வரிசிலைக்கைக் கடற்றானை" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க. இனி, ஈற்றடிக்கு - அவன் எடுத்த கார்முகம் - சுதாயு கைப்பிடித்த வில், கழுந்தது ஆக - (நாணியற்றுக்)கொம்புமாத்திரமாய் நிற்கும்படி, அருச்சுனன் கலக்கினான் என்று பொருள் கொள்ளினும் அமையும்; கழுந்து என்பது - வில்லின்தண்டமென்னும் பொருளதாதலை "வில்லினெடு நாணற வுரத்தொ டெதி ரோடி வரிவிற், கழுந்துகொடு மாமுடியின் மோதுமுன்" எனக் கீழ் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்திலுங் காண்க. கழுந்தது என்பதில், 'அது' என்பது - பகுதிப்பொருள்விகுதி. (௩0)

[சுதாயுவின் கதையைக் கண்ணன் மார்பில் ஏற்றல்.]

முகங்கலங்கமெய்கலங்கமுடிகலங்கமூரிமார்
பகங்கலங்கமற்றொர்தண்டருச்சுனன்றன்மேல்விட
நகங்கலங்கவுருமின்வந்ததததனையும்பர்நாயகன்
சகங்கலங்கவேற்றனன்றனதுமெய்யினாகவே.

(இ - ள்.) மற்று - (தனது வில் அழிந்த)பின்பு, (சுதாயு), முகம் கலங்க - முகம் கலக்கமடையும்படியாகவும், மெய் கலங்க - உடம்பு வலிமைகுலையும் படியாகவும், முடி கலங்க - தலை சிதறும்படியாகவும், மூரி மார்பு அகம் கலங்க - வலிமையுள்ள மார்பின் இடம் சிதையும்படியாகவும், ஓர் தண்டு - ஒருகதாயுதத்தை, அருச்சுனன்தன்மேல் விட - அருச்சுனன்மேலே வீச, —நகம் கலங்க உருமின் வந்தது அதனை - மலைசிதையும்படி (மேல்விழுகிற கொடியபெரிய) இடிபோல வந்த அந்தத்தண்டாயுதத்தை, உம்பர்நாயகன் - தேவர்கட்குத் தலைவனான கண்ணபிரான், தனது மெய்யின் ஆகவே - தனது உடம்பிற் படும்படி, சகம் கலங்க ஏற்றனன் - உலகம்(கண்டு) திடுக்கிட ஏற்றுக்கொண்டான்; (எ - று.)

அருச்சுனனால் வில் அழிபட்டபின்பு சுதாயு மிக்ககோபங்கொண்டு பகையைத் தவறாமல் அழிக்கவல்லதொரு கதாயுதத்தையெடுத்து அருச்சுனன்மேல் எறிய, அதனை, அவனுக்குப் பாகனாய் முன்நின்ற கண்ணன் தன்மார்பிற் படும்படி வலியஏற்றுக்கொண்டனன் என்பதாம். கண்ணன் ஏற்றுக்கொண்டசூழ்ச்சி, மேல்விளங்கும். அந்தக்கதை அருச்சுனன்மேற் பட்டிருந்தால், அவனைப் பலவகையாலுஞ் சிதைத்திருக்கு மென்பது, முன்னிரண்டடியால் விளங்கும். 'நகங்கலங்கவுருமின்வந்ததததனை' என்று கூறியது, அவ்வாயுதத்தின் வலிமைமிகுதியை விளக்கும். 'முடிகலங்க' என்பதற்கு - கிரீடம் சிதைய என்று உரைத்தலும் ஒன்று. சகங்கலங்குதல்- லோகநாயகனான இவனுக்கு இதனால் என்ன அபாயம் நேர்ந்திடுமோ வென்று தம்தம்அன்புபற்றி யாவரும் சங்கித்தலா லென்க. கண்ணன் எப்பொருளுந்தானேயானவ னென்பதுபற்றி 'சகங்கலங்க' என்றாரெனினுமாம். அருச்சுனன்தன்மேல் என்றவிடத்து, தன் - சாரியை. உம்பர் - நித்தியசூரிகளுமாம்.

'நகங்கலங்க' என்றது, 'விழுகிற' என வருவிக்கப்பட்ட பெயரெச்சவினையைக் கொள்ளும். சகம் - ஜகத் என்ற வடசொல்லின் திரிபு. தனது,

ஆத - ஆறனுருபு. மெய்யின், இன் - ஏழனுருபு. மற்றுஎன்னும் இடைச்சொல் - இங்கே, பின் என்னும் பொருளது. ஏற்றனன், ஏல்-பகுதி. (௯௧)

[சுதாயு இறக்கத்தேவர்கள் கண்ணன்மீது பூமழைபொழிதல்.]

ஆகவத்தில்விசயனுய்யவையன்மெய்யிலறையுமுன்
மோகரித்தெறிந்ததெவ்வன்முடிதுளங்கிமண்மிசைச்
சோகமிக்குவிழுதல்கண்டுதூரகாரியாதலான்
மாகமுற்றவமரர்செம்பொன்மழைபொழிந்துவாழ்த்தினர்.

(இ - ள்.) ஐயன் - (யாவர்க்குந்) தலைவனான கண்ணபிரான், தூர காரி ஆதலால் - வருங்காரியமறிந்து தொழில்செய்பவனாதலால், ஆகவத்தில் விசயன் உய்ய - போரிலே அருச்சுனன் இறவாதுபிழைக்கும்படி, மெய்யில் அறையுமுன் - (தனது) திருமேனியில் தாக்குமாறு (அக்கதாயுதத்தை) ஏற்றுக்கொண்டவுடனே, மோகரித்து எறிந்த தெவ்வன்-மிகஉக்கிரங்கொண்டு (அவ்வாயுதத்தைப்) பிரயோகித்த பகைவனான சுதாயு, முடி துளங்கி - தலை சாய்ந்து, சோகம் மிக்கு - துன்பம் மிகுந்து, மண்மிசை விழுதல் - தரையிலே விழுந்திட்டதனை, கண்டு - பார்த்து,—மா கம் உற்ற அமரர் - பெரிய வானத்திற் பொருந்திய தேவர்கள், செம் பொன் மழை பொழிந்து வாழ்த்தினர் - சிவந்த பொன்மயமான கற்பகமலர்மழையைச் சொரிந்து வாழ்த்துக்கூறினார்கள்; (எ - று.)

சுதாயு அழியாதவரம்பெற்றகாலத்தில், தன்ஆயுதம் நிராயுதர்மேற் பட்டால்மாத்திரம் தான் இறந்திடும்படி விலக்கும் பெற்றவனாதலால், யாவுமறிந்த கண்ணபிரான், அருச்சுனனைத்தவறுமற்கொல்லும்படி அவன்மேற் சுதாயு எறிந்த கதையைத் தன்மார்பில்ஏற்றுக்கொள்ள, கையிலாயுதமில்லாத அப்பெருமான்மேல் அப்படைக்கலம் பட்டமாத்திரத்திலே சுதாயு கீழ் விழுந்து இறக்க, அருச்சுனன் பிழைத்திட்டான்; இங்ஙனம் அடியவனைக் காத்தற்பொருட்டுச் சர்வஜ்ஞனாகியகண்ணன் வரம்புகடந்துசெய்த பெருங்கருணைத்திறத்தைக் கொண்டாடித் தேவர்கள் பூமாரி சொரிந்து வாழ்த்துக் கூறினரென்பதாம். இப்படி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி திருவருளால் அருச்சுனனைத் தந்திரமாகப் பாதுகாத்தருளியதை "வருணன் மாமதலை வாசவன் மதலை மார்பினிலெறிந்த வெங்கதையைக், கருணையான் மருமம்புதையவேற்றந்தக் காலை கையறும்படி கண்டாய்" எனத் தருமன் (மேற் பதினேழாம்போர்ச் சருக்கத்திற்)பாராட்டியெடுத்துக்கூறிக் கண்ணனைத் துதிக்குமாறுங் காண்க; இச்சருக்கத்தின் ௯௯ - ஆஞ் செய்யுளும் காணத்தக்கது.

ஆஹவம் - வடசொல். அறையுமுன் என்றது, தாக்கினவுடனே யென விரைவைக் காட்டும். "தெவ்வுப் பகையாகும்" என்ற தொல்காப்பியத்தின்படி 'தெவ்' என்பது-பகைமையுணர்த்துவதோர் உரிச்சொல்லாம்; அதனடியாகப்பிறந்த ஆண்பாற்பெயர் - தெவ்வன். சோகம், தூரகாரீ - வடசொல். மாகம் - மஹா கம் என்ற வடசொல்லின் திரிபு. பொன்னுலகமாகிய தேவலோகத்திலுள்ளவையாவும் பொன்மயமானவை யாதலால்கற்பகப்பூமழை 'செம்பொன்மழை' எனப்பட்டது. தூரகாரி - வெகுதூரத்திலினிவருஞ் செய்கையை முன்னமே அறிந்து அதற்குஏற்ற பரிகாரஞ் செய்பவன்; இங்கே, தூரமென்றது, காலத்தின்சேய்மையை: வெகுகாலத்தின்முன்பு நடந்தவற்றை அறிந்து அவற்றிற்கேற்றபடிதொழில்செய்பவனென்ற பொருளும், 'தூரகாரி' என்ற பெயரில் அடங்கும். 'ஐயன்மெய்யிலறையுமுன் தெவ்வனழிதல்' என்றவிடத்து, விரைவுதோன்றக் காரணத்தின்முன் காரியம்நிகழ்ந்ததாகக்கூறும் மிகையுயர்வுநவிற்சியணி காண்க. முடிதுளங்கி - தலைசோர்ந்தி யெனினுமாம். (௯௨)

[தேவர்கள் கண்ணனுக்குக் கூறிய வாழ்த்து.]
வாழி வாழி குந்தி மைந்தன் வலவன் வாழி வாழியே
வாழி வாழி யவனி யுய்ய வந்த நாதன் வாழியே
வாழி வாழி காள மேக வண்ணன் வாழி வாழியே
வாழி வாழி வாசு தேவன் வாழி வாழி வாழியே.

(இ - ள்.) குந்தி மைந்தன் வலவன் - குந்திதேவியின் புத்திரனான அருச்சுனனது தேர்ப்பாகன், வாழி வாழி - வாழ்வானாக வாழ்வானாக; வாழி வாழி—; அவனி உய்ய வந்த நாதன் - பூமிதேவி (பாரந்தீர்ந்து)வாழும் படி திருவவதரித்த தலைவன், வாழி வாழி—; வாழி—; காள மேக வண்ணன் - கார்காலத்து நீலமேகம்போன்ற திருநிறமுடையவன், வாழி வாழி—; வாழி வாழி—; வாசுதேவன் - வசுதேவகுமாரன், வாழி வாழி—;வாழி வாழி வாழி—;(எ - று.)—ஏகாரம் நான்கும் - ஈற்றசை.

குந்திமைந்தன்வலவன், அவனியுய்யவந்தநாதன், காளமேகவண்ணன், வாசுதேவன் என்ற நான்கும் - ஒருபொருள்மேற்பலபெயராய்வந்து தனித் தனி ஒருவனை முடிக்குஞ்சொல்லைக் கொண்டன; [நன் - பொது - ௬௪.]

குந்திமைந்தன்வலவன் - பார்த்தசாரதி. தந்தைக்கு மூத்தமகனிடத்தும், தாய்க்கு இளையமகனிடத்தும் பெரும்பாலும் அன்பு மிகுதி யாதல் பற்றி, குந்திமைந்தர்மூவருள் இளையவனான அருச்சுனன், 'குந்திமைந்தன்' எனப்பட்டான்: இதுபற்றி,அருச்சுனனுக்கு 'பார்த்தன்' என்று ஒருபெயர் இருத்தலுங் காண்க. குந்தி - யதுகுலத்துச சூரராசனது மகள்; கிருஷ்ணனது தந்தையான வசுதேவனது உடன்பிறந்தவள்: அதனால், கிருஷ்ணனுக்கு அத்தை. இவளைத் தந்தை தனதுநண்பனும் பிள்ளையில்லாதவனுமாகிய குந்திபோசதேசத்துஅரசனான குந்தி யென்பவனுக்குத் தத்துக்கொடுத்ததுபற்றி, இவளுக்குக் குந்தியென்று பெயர்வழங்கிற்று. (பிருதையென்பது, இவளது இயற்பெயர்.) இதனால், குந்தியென்பது - தந்தைபெயர் பெண்ணுக்கு வந்ததோர் ஆகுபெய ரென்க.

துஷ்டர்களான பலஅசுரர்களும் அரசர்களும் ஏககாலத்தில் ஒருங்கே தோன்றிச்செழித்ததனா லாகிய பாரத்தைப் பொறுக்கமாட்டாத பூமிதேவி தேவர்கள்மூலமாகத் திருமாலைசசரணமடைந்து தனது பாரந்தீர்த்தருளும் படிபிரார்த்திக்க,அங்ஙனமே அப்பெருமான் கொடியோரையழித்து நிலச் சுமை தீர்க்கும்பொருட்டுக் கண்ணனாகத் திருவவதரித்து அதுமுதல் அத் தொழிலைச் செய்துகொண்டுவருதலால், 'அவனியுய்யவந்த நாதன்'என்றார். அவனியென்பது, நாதன் என்பதனோடுஞ் சேரும்; பூமிதேவி திருமாலுக்கு ஒருமனைவியாதலால்.

நாதன், காளமேகவர்ணன், வாஸுதேவன் - வடசொற்கள். வாசுதேவன்-தத்திதாந்தநாமம். வாழியவென்னும் வியங்கோள், ஈற்றுஉயிர்மெய் கெட்டு,வாழி யென நின்றது; அதன்முன் வலிஇயல்பாம்:[நன் - உயிர்-௧௬௮.] அடுக்கு - மகிழ்ச்சிபற்றியது ; மகிழ்ச்சி வரம்புகடந்ததனால், "அசைநிலை பொருள்நிலை யிசைநிறைக்கு ஒருசொல், இரண்டு மூன்று நான்கு எல்லை முறைமொழிக்கும்" என்ற அடுக்கிலக்கணவரம்புங் கடந்ததென்க. (௩௩)

வேறு.

[சுதாயு இறந்த காரணத்தை அருச்சுனன் கண்ணனை வினவல்.]
என்றி யாவருந் துதிசெய விரகினா லெதிர்த்தகா வலன்றன்னைக், கொன்ற போதுதன் னுயிர்பெறு தனஞ்சயன் கொண்டல்வண் ணனைப்போற்றி, நின்றன் மேனியி லெறிகொடுங் கதைபட வெறிந் தவ னெடுவானிற், சென்ற மாயமொன் றிருந்தவா றடியனேன் றெரியுமா றுரையென்ன.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) என்று—, யாவரும் - எல்லாரும், துதி செய - தோத்திரம் பண்ணும்படி, விரகினால் - தந்திரமாக, எதிர்த்த காவலன்தன்னை கொன்ற போது - எதிர்த்துப்போர்செய்த சுதாயுஎன்னும் அரசனைக் (கண்ணன்) கொன்றருளியபொழுது, தன் உயிர் பெறு தனஞ்சயன் - தனதுஉயிர் இற வாமற் பிழைக்கப்பெற்ற அருச்சுனன், கொண்டல் வண்ணனை போற்றி- காளமேகம்போன்ற திருநிறமுடைய கண்ணபிரானைத் துதித்து, 'எறி கொடுங் கதை-வீசியெறிந்த கொடியகதாயுதம், நின்தன் மேனியில்-உனது உடம்பில், பட - பட்டஅளவிலே, எறிந்தவன் - (அவ்வாயுதத்தைப்)பிரயோ கித்தவனான சுதாயு, நெடு வானில் சென்ற - (இறந்து)பெரியதேவலோகத் திற்குப் போன, மாயம் ஒன்று - ஆச்சரியகரமான ஒருசெய்கை, இருந்த ஆறு - உண்டான காரணத்தை, அடியனேன் தெரியும் ஆறு உரை - உனது அடியவனாகிய யான் அறியும்படி கூறியருள்வாய்', என்ன-என்றுவேண்டிய வளவிலே, (எ - று.)—'என்று அருள்செய்தான் தேர்ப்பாகன்' என மேல் ருரு - ஆம் கவியோடு குளகமாய்த் தொடர்ந்து முடியும்.

கண்ணன் சுதாயுவைத் தந்திரத்தாற்கொன்றபடியினாலே உயிர்பிழை த்த அருச்சுனன் கண்ணனைவணங்கி 'ஸ்வாமி! அக்கதாயுதம் நினது திரு மேனியிற்பட்டமாத்திரத்திலே அவன் இறந்துபட்டான்: இஃது என்ன மாயம்! இதனைவிளங்கச்சொல்லியருளவேண்டும்' என்றுபிரார்த்திக்க என் பதாம். விரகினாற் கொன்றபோது என இயையும்.

என்று+யாவர்=என்றியாவர்: குற்றியலிகரம்; [நன் - உயிர் - கச; எழுத்து - ருஅ.] கொண்டல் - கொள்ளுதல் என்னும் பொருளுணர்த் துந் தொழிற்பெயர்: நீர்கொண்ட மேகத்துக்குத் தொழிலாகுபெய ராம்; இதில், கொள் - பகுதி, தல் - விகுதி, ளகரதகரங்கள் முறையே ணகரடகரங்களானது - சந்தி. மாயம் - தந்திரம். அடியனேன் - அடிமை யென்னும் பண்பினடியாகப் பிறந்த தன்மையொருமைக் குறிப்புவினையா லணையும்பெயர்: இதில், அன் - சாரியை. வான் என்ற ஆகாயத்தின் பெ யர் - அங்கு உள்ள தேவலோகத்துக்கு இடவாகுபெயராம். போரிற்புறங் கொடாது பகைவராலிறந்தவர் வீரசுவர்க்கம்பெறுவ ரென்ற நூல்துணிபு பற்றி, 'நெடுவானிற்சென்ற' எனப்பட்டது.

இதுமுதற் பதினைந்து கவிகள் - பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும், ஈற்றுச்சீர் மாங்காய்ச்சீரும், மற்றைநான்கும் விளச்சீர்களு மாகிய கழிநெடி லடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். இவற்றில் இரண்டாஞ் சீர் கூவிளச்சீராகவே வரும். (ருச)

[இதுவும் அடுத்த கவியும் - சுதாயுசெய்தியைக் கண்ணன் கூறல்.]

பன்னவாதையென்றொருத்திதாய்தந்தையும்படுதிரைப்பரவைக்கு
மன்னவன்றரப்பெற்றனன்பலபெரும்படையொடும்வலிகூரத்
துன்னுநாமமுஞ்சுதாயுமற்றொருவராற்றோற்றுயிரழிவில்லான்
முன்னிராயுதன்மிசையிவன்படையுறின்முடிவுறும்வரம்பெற்றான்.

(இ - ள்.) பன்னவாதை என்ற ஒருத்தி - பன்னவாதையென்று பெ யர் சொல்லப்பட்ட ஒருத்தி, தாய் - (இவனுக்குத்) தாய்; தந்தையும்-(இவ னது) தகப்பனும், படு திரை பரவைக்கு மன் - மிக்கஅலைகளையுடைய கட லுக்குத் தலைவனான வருணன்; பல பெரும் படையொடும் - அநேகமான பெரிய ஆயுதங்களுடனே, வலி - (தேக) பலத்தையும், கூர - மிகுதியாக, அவன் தர பெற்றனன்-அவ்வருணன் கொடுக்கப்பெற்றான் (இவன்); துன்னு நாமமும் - (இவனுக்குப்) பொருந்திய பெயரும், சுதாயு-சுதாயு என்பதாம்; மற்று ஒருவரால் தோற்று உயிர் அழிவு இல்லான்-வேறுஎவராலும் தோல்வி யடைதலும் இறத்தலும் பெறாதவனான இவன்,—முன் - முன்பு, நிராயு

தன்மிசை இவன் படை உறின் முடிவு உறும் வரம்பெற்றான் - கையில் ஆயுத மில்லாதவன்மேல் தனது ஆயுதம் எறியப்பட்டால் மாத்திரமே தான் இறக் கும்படியான வரத்தைப் பெற்றுள்ளான்; (எ - று.)

தாயை மூழ்கூறினர், அன்பிற்சிறத்தலால். என்றொருத்தி-பெயரெச்ச வீறு தொகுத்தல். தந்தை என்பதில், தாம் - பகுதி; அது, முதல்குறுகிற்று: தை - முறைப்பெயர்விகுதி; இதனை 'தாத' என்னும் வடசொல்லின் திரிபா கக் கொள்ளுதலும், இதற்கு - தந்தவனென்று காரணப்பொருள்கூறுதலும் பொருந்தாவாம்: எந்தை உந்தை நுந்தை என்றவற்றோடும், தம்பி தமையன் தங்கை தமக்கை என்பவற்றோடும் இயையா வாதலால். உம்மைகள் - இறந் ததுதழுவிய எச்சம். படு திரை - ஒலிக்கின்ற அலை யெனினுமாம். பரவை - பரந்துள்ள தெனக் காரணப்பெயர்; பர அல்லது பரவு - பகுதி: ஐ - கருத் தாப்பொருள்விகுதி; [பறப்பது, பறவை - பட்சி.] மன்-பெருமை: உரிச் சொல்; இது - அதனையுடைய மன்னவனுக்குப் பண்பாகுபெயராம். கூர- மிகுதிப்பொருளுணர்த்தும் 'கூர்' என்னும் உரிச்சொல்லினடியாகப் பிறந்த செயவெனெச்சம். சுதாயு-வடசொல் திரிபு; ச்ருதாயு என்ற பெயர் - ச்ருத ஆயுஸ் எனப் பிரிந்து, பிரசித்தமான ஆயுளையுடையான் என்று பொருள் படும். இவன் அழிக்கப்படாத ஆயுளையுடையனாந் தன்மைக்கு ஏற்ப 'சுதாயு' எனப் பெயர்பெற்றன னென்பது விளங்க, 'துன்னுநாமமுஞ் சுதாயு'என் றார். நிராயுதன் - வடசொல்.

இவன்பெயர், வியாசபாரதத்தில் 'ச்ருதாயுதன்' என்று உள்ளது; பிர சித்தமான படைக்கலமுடையான் என்று பொருள்படும். இவனது தந்தை, வருணன்: தாய், பர்ணாசா என்னும் மகாநதி. 'இம்மகன் மரணமில்லாதவ னாயிருக்கும்படி வரமளிக்கவேண்டும்' என்று பர்ணாசை வருணனை வரங் கேட்க, அந்நீர்க்கடவுள், மனைவியைநோக்கி 'பகைவரால் வெல்லுதற்கரிய னாம்படி இவனுக்கு வரங்கொடுக்கிறேன்: உலகத்திற் பிறந்தவரெவர்க்கும் எக்காலத்தும் மரணமில்லாதிருப்பது முறைமையன்று' என்றுசொல்லி, திவ்வியமான தொரு கதாயுதத்தை மந்திரபூர்வமாக மைந்தனுக்குக் கொ டுத்து, 'இது தவறாமற் பகையழிக்க வல்லது: ஆனால், போர்செய்யாதிருப்ப வன்மேல் இது பிரயோகிக்கப்படின் அவனைக்கொல்லாமல் மீண்டுவந்து பிரயோகித்தவனையே கொன்றிடும்' என்று கூறியிருந்தான்; அங்ஙனமிருந் தும், காலம் சமீபித்ததனால் சுருதாயுதன் அவ்வருணன்கட்டளையைக் கரு தாமற் போரிற் கோபத்தோடு கதையை வீச, அது போர்செய்தலின்றிப் பாகனாய்நின்ற கண்ணனுடம்பிற் பட்டதனால், அப்பரமனை யாதுஞ்செய்ய லாற்றாது திரும்பிச்சென்று அவனையே வதைத்துக் கீழ்விழுந்தது என்றும், பின்பு ச்ருதாயு அச்யுதாயு என்றவ ரிருவரும் அவர்கள்புத்திரரான நியுதாயு தீர்க்காயு என்ற இருவரும் முறையே அருச்சுனனுடன் எதிர்த்து மாண் டன ரென்றும் வியாசபாரதம் கூறுகின்றது. (ருஙு)

எறிந்தவெங்கதைகொன்றிடும்படைக்கலனெடுத்தவருடற்பட்டா
லறிந்துநானிடையேற்றலினவனுயிரழிந்ததென்றருள்செய்தான்
பிறிந்தயோனிகளனைத்துமாய்முதலுமாய்ப்பெருமிதமனத்தோடு
செறிந்தவர்க்கொருசகாயனாயருந்துயர்தீர்த்திடுந்தேர்ப்பாகன்.

(இ - ள்.) 'எறிந்த வெம் கதை-(இவன்)பிரயோகித்த கொடியகதாயுதம், படைக்கலன் எடுத்தவர் உடல் பட்டால் - கையில் ஆயுதம்ஏந்தியுள்ளவ ருடைய உடம்பிற் பட்டால், கொன்றிடும் - (அவர்களைத்) தவறாமற் கொன் றுவிடும்; (அப்படிப்பட்ட ஆயுதத்தை), நான் அறிந்து இடை ஏற்றலின் - (கையிற்படைக்கலமில்லாத) யான் (அவன்செய்தியை) உணர்ந்து நடுவில் ஏற்றுக்கொண்டதனால், அவன் உயிர் அழிந்தது - அவனது உயிர் இறந்திட் டது,' என்று—, அருள்செய்தான் - சொல்லியருளினான்: (யாவனெனில்),

—பிறிந்த யோனிகள் அனைத்தும் ஆய் - (பலவாறாகப்) பிரிவுபட்ட பிறப்பு வகைகளையுடைய எல்லாச்சராசரங்களின் வடிவமாய், முதலும் ஆய்-(அவற் றிற்கெல்லாம்) மூலகாரணமுமாய், பெருமிதம் மனத்தோடு - பெருந்தன் மையையுடைய மனத்துடனே, செறிந்தவர்க்கு ஒரு சகாயன் ஆய் - (தன்னை) அடைந்தவர்க்கு ஒருதுணைவனாய், அருந்துயர் தீர்த்திடும் - (அவர் களது) ஒழித்தற்கரிய துன்பத்தை ஒழித்திடுகிற, தேர்ப் பாகன் - (பார்த்த) சாரதியான கண்ணபிரான்; (எ - று.)

கொன்றிடும் என்பதில், இடு என்ற துணைவினை - துணிவுணர்த்தும். 'அறிந்த நான்' என்ற பாடமும் பொருந்தும். பிரிந்த என்பது பிறிந்த என எதுகைநோக்கித் திரிந்த தென்றாவது, பிரி என்பது போலப் பிறி என ஒரு தனிவினை உள்ள தென்றாவது கொள்க. யோனிகளனைத்தும் - நால்வகைத் தோற்றத்து எழுவகைப்பிறப்பின் எண்பத்துநான்குநூறாயிரம் யோனி பேதஙகள்; ("ஊர்வ பதினொன்று மொன்பது மானிடம்,நீர் பறவை நாறகா லோர்பப்பத்தாம் - சீரிய, பந்தமாந்தேவர் பதினா லயன்படைத்த, அந்த மில்சீர்த் தாவர நாலைந்து"என்பது காண்க.) 'யோனிகளனைத்துமாய்'என் றது - அநாதியாய்த் தொடர்ந்துவருகிற கருமத்துக்கு ஏற்றபடி பலவகைப் பிறப்புக்கொள்ளுகிற சகலஜீவாத்மாக்களுள்ளும் அந்தராத்மாவாய் நின்று அவற்றைக்கொண்டு தொழில்செய்பவனாய் என்றபடி; இது, எம்பெரு மானது ஜகச்சரீரகத்வம் கூறியவாறாம். 'முதலுமாய்' என்றதில், அவற்றைப் படைத்தல் காத்தல் அழித்தல் செய்து அவற்றிற்கெல்லாந் தலைமைபூணுந் தன்மை தோன்றும். பெருமிதம்-பேரெல்லை. எம்பெருமான் சரணமடைந் தவரைப் பாதுகாக்குந்தன்மை, ஈற்றடியால விளஙகும். கண்ணன், தன்னை யடுத்த பாண்டவர்க்கு ஒப்பற்றதனித்துணைவனாய்நின்று அவர்க்கு நேரும் பலவகைத்துன்பஙகளையும் தவறாமலொழித்துவருதல் தோன்ற, 'செறிந்த வர்க் கொருசகாயனா யருந்துயர்தீர்த்திடுந் தேர்ப்பாகன்' என்றார்; 'தேர்ப் பாகன்'என்றதனால், கண்ணனது செளலப்பியம் [அடியவர்க்கெளிமை] வெ ளியாம். என்று மழியாமல் நித்தியமாயுள்ள உயிர்க்கு,'அழிவு'என்பது, உட ம்பினின்று நீங்குதலேயாம். அனைத்து என்பது - சொல்லால் ஒருமையாயி னும், பொருளாற் பன்மையாம்; இதில், அத்தனை என்பதன் மரூஉவான அனை - பகுதி. கலம் - கலன் என இறுதிப்போலி. (௩௬)

[பின்பு சுதாயு அருச்சுனனை எதிர்த்து அழிதல்.]

கதாயுதந்தனக்குரியநாயகன்மிசைகதைபடச்சிதைவுற்றுச்
சுதாயுவென்பவன்பலபெரும்படையுடன்றுறக்கமெய்தியபின்னர்ச
சதாயுவென்றவனிளவன்மற்றவனினுஞ்சமர்புரிந்தவன்றானுங்
கெதாயுவாயினன்கிரீடியோடெதிர்த்தவர்யாவரேகெடாதுய்வார்.

(இ - ள்.) கதாயுதந்தனக்கு உரிய நாயகன்மிசை-கதாயுதத்துக்குஉரிய தலைவனான கண்ணபிரான்மேல், கதை பட - (தனது) கதாயுதம் பட்டத னால், சுதாயு என்பவன்—, சிதைவு உற்று - அழிவடைந்து, பல பெரும் படையுடன் - (மற்றும் அருச்சுனனாற் கொல்லப்பட்ட தனது) பெரிய பல சேனைவீரர்களுடனே, துறக்கம் எய்திய பின்னர் - வீரசுவர்க்கமடைந்த பின்பு,—சதாயு என்ற அவன் இளவல் - அவனது தம்பியான சதாயுஎன்ப வன், அவனினும் - அந்தசுதாயுவினும் மிகுதியாக, சமர் புரிந்து - (அருச் சுனனோடு) போர்செய்து, அவன்தானும் - அவனும், கெத ஆயு ஆயினன் - கழிந்துபோன ஆயுளுடையவனானான் [இறந்தான் என்றபடி]; கிரீடியோடு எதிர்த்தவர்-அருச்சுனனோடு எதிரிட்டவருள், யாவரே-எவர்தாம், கெடாது உய்வார் - அழியாமற் பிழைப்பவர்? [எவருமில்லை என்றபடி]; (எ - று.)

கிரீடி என்ற பெயர் - இந்திரனால்முடிசூடப்பெற்று நிவாதகவசர் கால கேயர்முதலியோரைத் தனியேசென்றுபொருது எளிதில்அழித்தவனென்ற

சிறப்பைக் காட்டும். கதாயுதம், சுதாயு, சதாயு, கதாயு என்பன - தீர்க்கசந்தி பெற்ற வடசொற்கள்; 'அஆமுன் அஆவரின் அவ்விரண்டுங் கெட ஓர் ஆகாரம் தோன்றும்'. கதாயுதம் - கதையாகிய படைக்கலம்என இருபெயரொட்டு. கண்ணன் கௌமோதகியென்ற சிறந்த கதைக்கு உடையவனாதலால், 'கதாயுதந்தனக்குஉரிய காயகன்' எனப்பட்டான். 'கதாயுதந்தனக்குரியநாயகன்மிசை கதைபட' என்று ஒரு சமத்காரந் தோன்றக் கூறினர். 'படையுடன்' என்பதற்கு - இங்கே 'ஆயுதங்களுடன்' என்று உரைத்தல், சிறப்பன்று. துறக்கம் - (இவ்வுலகசம்பந்தத்தைத்) துறந்து அடையுமிடம் எனக் காரணப்பெயராம்: துற - பகுதி, க் - சந்தி, கு - சாரியை, அம் - விகுதி. இனி, சுவர்க்கமென்பது துறக்கமெனச் சிதைந்த தென்பாரும் உளர். சதாயு என்பது - சத ஆயுஸ் எனப் பிரிந்து, மிக்கஆயுளுடையவ னென்று பொருள்படும்; சதம்-நூறு: இங்கே, மிகுதி. என்ற என்னும் பெயரெச்சத்து ஈறு தொகுத்தல். இளவல் - இளமையுடையான்; இளமைஎன்னும்பண்புப் பகுதி ஈறுபோயிற்று; அல் - பெயர்விகுதி. அவனினும், இன் ஐந்தனுருபு - எல்லைப்பொருளது. 'சதாயு என்ற அவன்இளவல் அவனினும் சமர்புரிந்து கெதாயுவாயினன்' என்றவிடத்து, 'அவன்தானும்' என்றது வேண்டுவதன்றாயினும், தமையன்போலவே தம்பியும் விரைவில் அழிந்தான் என்ற தன்மையை விளக்குதலால், தகுதிபற்றிவந்ததென்க. கதாயுஎன்பது, மோனைப் பொருத்தம்நோக்கி 'கெதாயு' எனத் திரிந்துநின்றது. யாவர் என்றவினா- எதிர்மறைப்பொருளுணர்த்திற்று; ஏகாரம்-உறுதிவிளக்கும். சதாயு, கதாயு என்றவை - வடமொழி அன்மொழித்தொகைகள். தீர்க்கமானஆயுளுடையவன் அற்பமானஆயுளுடையவனானான் என முரண்தோன்ற, 'சதாயு கெதாயுவாயினன்' என்றார்; என்றது, அருச்சுனனது ஆற்றலை வியந்தவாறும். மற்று - அசை. (௩௭)

[பின்பு ஸஹஸ்ரபாஹு என்பவன் அருச்சுனனை எதிர்த்தல்.]

ஆயிரம்பதின்மடங்குதேரிபமதன்மும்மடங்கடல்வாசி
யாயிரஞ்சதமதனின்மும்மடங்குகாலாளுடனணியாக்கி
யாயிரம்புயத்தருச்சுனனிகரெனவாழியாற்றுணிப்புண்ட
வாயிரம்புயத்தவனெனவெதிர்த்தனனுடலாயிரவாகு.

(இ - ள்.) ஆயிரம்பதின்மடங்கு தேர் - பதினாயிரம் தேர்களும், அதன் மும்மடங்கு இபம்-முப்பதினாயிரம் யானைகளும், ஆயிரம் சதம் அடல் வாசி- நூறாயிரம் வலிய குதிரைகளும், அதனின் மும்மடங்கு காலாளுடன்-மூன்று லக்ஷம் காலாள்வீரர்களும் ஆகிய சேனையோடு, அணி ஆக்கி - அணிவகுத்துக்கொண்டு, ஆயிரம் புயத்து அருச்சுனன் நிகர் என - ஆயிரந் தோள்களையுடைய கார்த்தவீரியார்ச்சுனன் ஒப்பென்று சொல்லும்படியும், ஆழியால் துணிப்புண்ட ஆயிரம் புயத்தவன் என - (கண்ணனது) சக்கராயுதத்தால் துணிக்கப்பட்ட ஆயிரந்தோள்களையுடைய வாணாசுரன்போலவும், அடல் ஆயிரவாகு - வெற்றியையுடைய ஸஹஸ்ரபாஹு என்பவன், எதிர்த்தனன்- (வந்து அருச்சுனனை) எதிர்த்தான்; (எ - று.)

ஆயிரவாகு - ஆயிரந்தோள்களையுடையவன்; பண்புத்தொகையன்மொழி. பதின்மடங்கு என்றதில், இன்-பண்புத்தொகையில் வந்த சாரியை; [நன்- உயிர் - ௬௭.] மடங்கு - பங்கு. இபம், புஜம் - வடசொற்கள். அதனின்மும் மடங்கு - பதினாயிரத்தினும் மூன்றுபங்கு. அதனின் மும்மடங்கு - நூறாயிரத்தினும் மூன்றுபங்கு. காலாள் - (வாகனமில்லாமல்) கால்களால் நடந்து செல்லும் ஆள் என வேற்றுமைத்தொகையாக விரியும். ஸஹஸ்ரபாஹுவுக்குக் கார்த்தவீரியார்ச்சுனனும், பாணாசுரனும், ஆயிரந்தோள்களுடைமையோடு கொடுமையிலும் திருமாலால் அழிக்கப்படுதலிலும் உவமை யென அறிக. கார்த்தவீரியார்ச்சுனன் விஷ்ணுவின் ஆவேசாவதாரமான பரசுராம

னால் கொல்லப்பட்டதும், பாணன் விஷ்ணுவின் அம்சாவதாரமான கிருஷ்ணனால் தோள் துணிக்கப்பட்டதும் போல, இவன் விஷ்ணுவின் அம்சபேதமான அருச்சுனனாற் கண்ணபிரானிடம்பெற்றதொரு மந்திரத்தைக் கொண்டு தோளறுத்துத் தொலைக்கப்படுதல் காண்க.

அர்ஜுநன் என்ற வடசொல் - வெண்ணிறமுடையான் என்று பொருள்படும். இவன் - கிருதவீரியமகாராஜனது புத்திரனாதலால், கார்த்தவீரியார்ஜுநனெனப்படுவன். சந்திரவமிசத்திற் பிறந்த யயாதிமகாராசனது மூத்தகுமாரனாகிய யதுவினது குலத்தவனாகிற கிருதவீரியனது குமாரனான அருச்சுனனென்பவன், நாராயணாம்சமாய் அத்திரிகுமாரராய் விளங்குகிற தத்தாத்திரேய மகாமுனிவரை ஆராதித்து அவருடைய அநுக்கிரகத்தினாலே ஆயிரந்தோள்களுடைமை, போரில்வெற்றி, பூமியை முறைப்படிகாத்தல், பகைவர்களால் அவமானப்படாமை, சகலலோகங்களுங் கொண்டாடும்படியான மகாபுருஷனால் மரணம் முதலிய பலவரங்களைப் பெற்று, பலவேள்விகளையும் இயற்றி, மாஹிஷ்மதி நகரத்திற் பலகாலம் அரசாண்டு வந்தான்; இவன் ஒருகாலத்தில் நருமதையாற்றிற் சலக்கிரீடைசெய்துகொண்டு மதுபானத்தால் மதித்திருக்கையில், திக்குவிசயஞ்செய்துவருகிற இராவணன் தன்னைஎதிர்க்கக் கண்டு, அவனைத் தனது ஆற்றலால் எளிதிற் கட்டித் தனதுபட்டணத்திற் கொண்டுபோய்ச் சிறைச்சாலையில்வைத்து, பின்பு அவனது மூதாதையாகிய புலஸ்தியமகாமுனிவரது வேண்டுகோளினால் அவனைச்சிறைவிடுத்து, அம்முனிவரருளால் 'ராவணஜித்' என்கிற பெரும்பெயரைப் பெற்றவன். இவன் ஒருகாலத்திற் சேனையுடனே வனத்திற் சென்று வேட்டையாடிவந்து பரசுராமனது தந்தையான ஜமதக்கினிமகாமுனிவரது ஆச்சிரமத்தை யடைந்து அவரநுமதியால் அங்கு விருந்துண்டு மகிழ்ந்து மீளுகையில், அவரிடமிருந்த ஓமதேனு அவர்க்குப் பலவளங்களையும் எளிதிற் சுரந்தளித்தலைக் கண்டு அதனிடம் ஆசைகொண்டு அப்பசுவை அவரநுமதியில்லாமற் பலாத்காரமாகக் கவர்ந்துபோக, இதனை அறிந்த பரசுராமன் பெருங்கோபங்கொண்டு ஆயுதங்களுடனே சென்று கார்த்தவீரியார்ச்சுனனுடன் போர்செய்து அவனைப் பதினொருஅக்ஷௌஹிணி சேனையுடனே நிலைகுலைத்து அவனது ஆயிரந்தோள்களையும் தலையையும் தனதுகோடாலிப்படையால் வெட்டிவீழ்த்தி வெற்றிகொண்டானென்பது வரலாறு; ஜமதக்கிமகாமுனிவரைக் கார்த்தவீரியன் யாதொருகாரணமுமின்றிக் கொன்றிட்டானென்றும் நூல்களிற் கதை கூறப்படும்.

வாணாசுரன் வரலாறு:—[திருவே. ப-௬௧.] நான்குதோள்குறைவாகத் துணிக்கப்பட்டிருக்கவும், 'துணிப்புண்ட ஆயிரம்புயத்தவன்' என்றது, சுருங்கச்சொல்லல் என்னும் அழகுபடக் கூறியதாம்; அன்றியும், அவை அருள்பற்றியே விடப்பட்டனவாதல் அறிக. (௫௮)

[ஸஹஸ்ரபாஹு அருச்சுனன்மேல் அம்பெய்தல்.]

உரங்களாயிரம்பொலங்கிரியனையனவோரொருகுனிவிற்கள்
கரங்களாயிரங்கொடுவளைத்தாயிரங்கண்ணன்மைந்தனைநோக்கி
வரங்களாயிரமறையொடும்பெற்றவன்மதிவகிர்முகமான
சரங்களாயிரமாயிரமொருதொடைதனிலெழும்படியெய்தான்.

(இ - ள்.) ஆயிரம் - மிகப்பலவான, வரங்கள் - வரங்களையும், மறையொடும் - (அஸ்திரங்களுக்கு உரிய) மந்திரங்களையும், பெற்றவன் - பெற்றவனான அந்த ஆயிரவாகு,—ஆயிரம் உரங்கள் பொலம் கிரி அனையன - மிகப்பலவான வலிமைகளையுடைய பொன்மயமான மகாமேருகிரியைப் போன்றனவான, ஓர் ஒரு குனி விற்கள் - வளையுமியல்பையுடைய விற்கள் ஒவ்வொன்றையும், கரங்கள் ஆயிரம் கொடு - (தனது) ஆயிரங்கைகளால், வளைத்து- வளைத்து நாணேற்றி,—ஆயிரம் கண்ணன் மைந்தனை நோக்கி - ஆயிரங்கண்

களையுடையவனான இந்திரனது குமாரனாகிய அருச்சுனனைக்குறித்து, மதி வகிர் முகம் ஆன சரங்கள் - சந்திரனதுபிளப்புப்போன்ற நுனியுடையன வான (அர்த்தசந்திர) பாணங்களை, ஒரு தொடைதனில் ஆயிரம் ஆயிரம் எழும்படி - தொடுக்குந்தரமொவ்வொன்றிலும் மிகப்பல ஆயிரக்கணக்காக மேற்செல்லும்படி, எய்தான் - பிரயோகித்தான்; (எ - று.)

இரண்டாமடியொழிந்த மூன்றுஅடிகளிலும் 'ஆயிரம்' என்றது, மிகப் பலவென்னும் பொருளது. 'கரங்களாயிரங்கொடு' என்றதை, 'சரங்களெய் தான்' என்றதனோடு கூட்டுக. ஆயிரங்கைகளுள் ஐந்நூறுகைகளில் வில் வளைத்துப்பிடித்துக்கொண்டு ஐந்நூறுகைகளால் அம்பெய்தன னென்க; இது, அடுத்தகவியால் விளங்கும். வில்லுக்கு மலை - வலிமை பருமைகளில் உவமம். மலைகளிற்பெரியதானமேருமலை திரிபுரசங்காரகாலத்திற் சிவபிரா னுக்கு வில்லாகியமைபற்றி, அப்படிப்பட்டசிறப்புடைய விற்கள் என்றற்கு, 'பொலங்கிரியனையன விற்கள்' என்றார். பொன் + கிரி = பொலங்கிரி; இப் புணர்ச்சி "பொன்னென்கிளவி யீறுகெட முறையின், முன்னர்த் தோன் றும் லகார மகாரம், செய்யுண்மருங்கிற் றொடரியலான" என்ற தொல்கா ப்பியவிதியால் அமைந்தது; பிற்காலத்தார் பொன்னிற்கு'பொலம்' என்றே தனிமொழியாக ஒருபெயர்கூறுவர். ஆயிரங்கண்ணன் - ஸஹஸ்ராக்ஷன்; அக லியையை விரும்பியகாரணமாகக் கோபங்கொண்ட கௌதமமுனிவரது சாபாநுக்கிரகங்களால் தேவேந்திரன் ஆயிரங்கண்பெற்றமை, பிரசித்தம். புறத்தார்க்குப் புலனாகாது பிரயத்தனபூர்வமாக மறைக்கத்தக்க தென்ற காரணம்பற்றி,'மறை'என்று மந்திரத்துக்குப்பெயர்.தொடை-தொடுத்தல்; 'ஐ' விகுதி பெற்ற தொழிற்பெயர். எய்தான், எய்-பகுதி; (இச்சொல் சே ரான் எனப் பொருள் படும்போது, அதில், எய்து - பகுதியாம்.) (ரு௧)

[அருச்சுனன் ஆயிரவாகுவின் அம்புகளை விலக்கல்.]

எடுத்தபோதிலொன்றருங்குதைநாணிடையிசைத்தபோதொருபத்துத்
தொடுத்தபோதினூறுகைத்தபோதாயிரமெனவருஞ்சுடர்வாளி
யடுத்தபோர்முடிமன்னவன்விடும்விடுமநேகமாயிரமம்புந்
தடுத்தபோதொருதனுவுமைஞ்ஞூறடற்றனுவுடனெதிர்நின்ற.

(இ - ள்.) எடுத்த போதில் - (தொடுக்கும்பொருட்டுக் கையில்) எடுத்த பொழுதில், ஒன்று - ஒன்றும், அருங் குதை நாணிடை - அருமையான வில் லின் நாணியிலே, இசைத்த போது - வைத்த பொழுதில், ஒரு பத்து - பத்தும், தொடுத்த போதில் - (வில்லினால்) தொடுத்த பொழுதில், நூறு - நூறும், உகைத்த போது - (எதிரியின்மேற்) செலுத்தியபொழுது, ஆயிரம் என - ஆயிரமுமாக இருக்கும்படி, அருஞ் சுடர் வாளி - பெறுதற்கரியன வும் ஒளியுள்ளனவுமான அம்புகளை, (அருச்சுனன் ஏவி அவற்றால்), போர் அடுத்த முடி மன்னவன் விடும் விடும் அநேகம் ஆயிரம் அம்பும் தடுத்தபோது - போரில்நெருங்கின கிரீடாதிபதியான ஸஹஸ்ரபாகுஎன்னும் அரசன்(தன் மேல்) மிகுதியாகப்பிரயோகித்த பலஆயிரக்கணக்கான அம்புகளையெல் லாம் தடுத்தபொழுது, ஒரு தனுவும் - (அருச்சுனனுடைய) வில் ஒன்று தானே, ஐஞ்ஞூறு அடல் தனுவுடன் எதிர் நின்ற - வலிமையையுடைய (ஆயிரவாகுவினது) ஐந்நூறுவிற்களுடனே எதிர்த்துநின்றது; (எ - று.)

ஆயிரவாகு தனது பல கைகளாலும் அளவிறந்த அம்புகளை ஏவுகை யில், அருச்சுனன் தனது இருகைகளாலேயே அவற்றிற்கெல்லாம்எதிராக அளவிறந்தஅம்புகளைச் சொரிந்து சலியாது போர்செய்தனன் என்பதாம். இதனால், அருச்சுனனது காண்டீவவில்லின் வலிமைச்சிறப்பும், அவனது போர்த்திறமிகுதியும் நன்குவிளங்கும். இப்பாட்டின்முன்னிரண்டடி,எய்கிற அம்பு ஒவ்வொன்றே தெய்வத்தன்மையால் வரவரப் பலவாய் வளர்ந்து சென்று எதிரிமேலே விளக்கியது. "ஐந்நூறுகை யாடல்விற்கொள, ஐந்து

நூறுகையம்புதொட்டிட" என்று கார்த்தவீரியார்ச்சுனனைப்பற்றியும், "ஐந் நூறுசெங்கர மடற்சிலை குழைப்ப, ஐந்நூறுசெங்கர மழற்கணை தொடுப்ப" என்று பாணாசுரனைப்பற்றியுங் கூறியுள்ளவைபோல, இவன் இடப்பக்கத் துக்கை ஐந்நூற்றில் ஐந்நூறுவிற்கொண்டு வலப்பக்கத்துக்கைஐந்நூற்றி னாலும் அம்புகள்தொடுத்துப் பொருதான் என்பது வெளியாம்.

குதை என்னும் வில்லின் அடியின்பெயர், இங்கு வில்லுக்குச் சினையாகு பெயராம். குதை - அம்பின்அடியுமாம். அநேகம்-ந+ஏகம்: ஒன்றல்லாதது; பல. ஐஞ்ஞூறு - இடைப்போலி; [நன் - எழுத்து - கூ.] நின்ற - நின்றது என்பதன் ஈறுதொகுத்தல். வாளி தடுத்தபோது எனஇயையும். என வரும் என்றும் பிரிக்கலாம். (௪௦)

[அருச்சுனன் ஆயிரவாகுவின் தோள்களையெல்லாந் துணித்தல்.]

அலிமுகந்தொழுமிளவல்வாணனைப்புயமழித்தமாமறையொன்று
வலிமுகங்கொடியுயர்த்தவன்செவியினிலுரைக்கமற்றதுபெற்றங்
குலிமுகஞ்செறிவரிசிலைகால்பொரக்குனித்துவன்பொடுதொட்ட
சிலிமுகங்களிற்றுணித்தனனாயிரஞ்சிகரவாகுவுஞ்சேர.

(இ - ள்.) அலி - (தமையனை) பலராமனை, முகம் தொழும் - முன் நின்று வணங்குந்தன்மையுள்ள, இளவல் - தம்பியான கண்ணபிரான், வாணனை புயம் அழித்த மா மறை ஒன்று - (முன்பு தான்) வாணாசுரனை (ஒருங்கே ஆயிரந்)தோள்துணித்தற்கு உபயோகித்த சிறந்ததொரு மந்தி ரத்தை, வலிமுகம் கொடி உயர்த்தவன் செவியினில் உரைக்க - குரங்குவடிவத் தைக் கொடியிலே உயரஎடுத்துள்ளவனான அருச்சுனனது காதிலே (அப் பொழுது) உபதேசிக்க, மற்று - பின்பு [உடனே], (அருச்சுனன்), அது பெற்று - அந்தமந்திரத்தைத் தெரிந்துகொண்டு, அங்குலி முகம் செறி வரி சிலை - கைவிரல்களின் இடையிலே உறுதியாகப் பிடித்த கட்டமைந்த காண் டீவவில்லை, கால் பொர குனித்து - நுனிகள் வளைந்துபொருந்தும்படி வளைத்து, வன்பொடு தொட்ட - வலிமையோடு பிரயோகித்த, சிலிமுகங் களின் - அம்புகளினால், ஆயிரம் சிகரம் வாகுவும் - மலையுச்சிபோலுயர்ந்த வலிய (அவனது) ஆயிரந்தோள்களையும், சேர துணித்தனன் - ஒருங்கே துணித்திட்டான்; (எ - று.)—மற்று - அசையுமாம்.

கண்ணன் தான் வாணனையழித்த சிறந்த மந்திரமொன்றை அருச் சுனனுக்கு உபதேசிக்க, அருச்சுனனும் அதுபெற்றுத் தனதுவில்லைவளைத்து அந்தமந்திரபூர்வமாக அம்புதொடுத்துச் சகசிரவாகுவின் ஆயிரந்தோள்களை யுந் துணித்திட்டன னென்பதாம்.

பலராமன் - கண்ணனுக்குத் தமையன்; திருமாலின் எட்டாம் அவ தாரம்: இவனிடத்து ஆதிசேஷனது அம்சமுங் கலந்திருந்தது. வசுதேவ னுடைய பத்தினிகளுள் தேவகியின் கர்ப்பத்தில் (ஏழாவதுகருவாக) ஆறு மாசமும், ரோகிணியின் கர்ப்பத்தில் ஆறுமாசமும் இருந்து பிறந்தவ னிவன். இவனுக்குக் கலப்பையும் உலக்கையும் ஆயுதங்கள். தேவகியின் எட் டாவதுகருப்பத்தில் அவதரித்தவனும் திருமாலின் ஒன்பதாம்அவதாரமு மான கண்ணனுக்கு இவன் தமையனாதல் காண்க. முகந் தொழும் என் பது, தலையால் வணங்கு மென்றும் பொருள்படும்.

அலி - ஹலீ என்னும் வடசொல்லின் விகாரம்; ஹலம் என்னும் ஆயு தத்தையுடையவ னென்று பொருள்: ஹலம் - கலப்பை. அலி முகந்தொழு மிளவல் - அம்சாவதாரமான தன்னினும் ஆவேசாவதாரமான பலராமன் குறைந்தசக்தியுடையனாயினும், அத்தெய்வத்தன்மையைக் கருதாமல், அவ தாரங்கொண்ட மனிதத்தன்மைக்கு ஏற்றவாறு தமையனான அவனைக் கண் ணன் அவ்விதிப்படி தந்தைபோலக் கொண்டாடி வழிபடுவ னென்க. வா ணன், வலிமுகம், சிலிமுகம் - பாணன், வலீமுகம், சிலீமுகம் என்ற வட

சொற்களின் திரிபு. வலீமுகம்என்பது-தோல்மடிப்புக்களை முகத்திலுடைய தென்று பொருள்படும். அங்குலி, சிகரம் - வடசொற்கள். கால் பொர - வில்லின் தண்டம் போர்க்கு உதவ என்க. ஆயிரம் சிகரவாகுவும், உம்- இனைத்தென்றறிபொருளில் வந்த முற்றும்மை; [நன் - பொது - சஅ.]

குரங்குக்கொடியும், நான்குவெள்ளைக்குதிரைகள் பூட்டிய தேரும், காண்டீவவில்லும், அக்ஷயதூணீரமும், காண்டவதகனகாலத்தில் அக்கினி தேவனால் அருச்சுனனுக்கு அளிக்கப்பட்டன. பின்பு வீமசேனன் புஷ்ப யாத்திரையாக அளகாபுரிக்குச் சென்றபொழுது, இடையில் அநுமானைக் கண்டு வணங்கி வேண்டிப் போர்க்களத்தில் அருச்சுனனது தேர்த்துவசத் தில் அவ்வனுமன் வந்துநின்று மகிழ்ந்துகூத்தாடும்படி வரம்பெற்றான். (சக)

மீதலந்தனக்கிறைவன்வச்சிரத்தினால்வெற்பினஞ்சிறகற்றுப்
பூதலந்தனில்விழுவபோல்விழுந்தனபுயங்களாயிரமும்போய்க்
காதலங்கனை தடம்படிந்தேகுதல்கண்டுகாமுகனாகிப்
பாதலம்புகுந்தின்பமெய்தியவிறற்பார்த்தன்வெங்கணையாலே.

(இ - ள்.) காதல்-விரும்பப்படுதற்குஉரிய, அங்கனை - அழகியவளான உலூபி, தடம் படிந்து-நீர்நிலையிலே நீராடி, ஏகுதல் - செல்லுதலை, கண்டு - பார்த்து, காமுகன் ஆகி - (அவளிடத்து) ஆசைகொண்டவனாய், பாதலம் புகுந்து - (அவளுடன்) பாதாளலோகத்தைச் சேர்ந்து, இன்பம் எய்திய - (அவளோடு) சுகம்பெற்ற, விறல் பார்த்தன் -வலிமையையுடைய அருச்சுன னது, வெம் கணையாலே - கொடிய அம்புகளினால்,—புயங்கள் ஆயிரமும் - (சகசிரவாகுவின்) ஆயிரந்தோள்களும்,—மீதலந்தனக்கு இறைவன்-மேலுல கத்துக்குத்தலைவனான இந்திரனது, வச்சிரத்தினால் - வச்சிராயுதத்தினால், வெற்பின் அம் சிறகு - மலைகளின் அழகிய இறகுகள், அற்று பூதலந்தனில் விழுவ போல் - அறுபட்டுப் பூமியில் விழுவனபோல,—போய் விழுந்தன - துணிபட்டுக் கீழ்விழுந்திட்டன; (எ - று.)

உவமையணி. இந்திரகுமாரனான அருச்சுனனுக்கு - இந்திரனும், அருச்சுனனது வலிய அம்புகட்கு - வலிய வச்சிராயுதமும், வலியபெரிய ஆயிரவாகுவுக்கு - மலையும், அவன்தோள்கட்கு - மலையிறகுகளும் உவமை யெனக் காண்க. பூர்வத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போல இறகுடை யனவாயிருந்து அவற்றால் உலகமெங்கும் பறந்துதிரிந்து பலவிடங்களின் மேலும் உட்கார்ந்து அவ்விடங்களையெல்லாம் பிராணிகளுடனே அழித்து வர, அதனை முனிவர்முதலியோரால் அறிந்த தேவேந்திரன் சினந்துசென்று தனதுவச்சிராயுதத்தால் அவற்றின்சிறகுகளை அறுத்துத்தள்ளிவிட்டன னென்பது கதை. வெற்புஇனம் சிறகற்று என எடுத்து, மலைவருக்கங்கள் இறகற்று நிலத்தில் விழுவனபோல என்று உரைத்தால், மலைகள் தோள் களுக்கு உவமையாம். மீதலம் - இங்கே, சுவர்க்கலோகம்.

பின்னிரண்டடிகளிற் குறித்த வரலாறு, கதைத்தொடர்ச்சியில் விளக் கப்பட்டது. காதலங்கனை - (தன்னிடத்து) ஆசைகொண்ட பெண் என்று மாம். அங்கநா என்ற வடசொல்லுக்கு - அழகிய அங்கமுடையாளென்பது உறுப்புப்பொருள்.

வஜ்ரம், காமுகன், பாதலம் - வடசொற்கள். பார்த்தன் - பிருதையின் மகன்; தத்திதாந்தநாமம். 'விழுந்தனன்' என்ற பாடமும் பொருந்தும். பூதலம் - பூமியினுடைய இடம் என உடையதும் உடைமையும் வேறாகாத ஆறும்வேற்றுமைத்தொகை யென்றாவது, பூமியாகிய இடம் என இருபெய ரொட்டுப்பண்புத்தொகை யென்றாவது கொள்க. விழுவ - 'அன்' சாரியை பெறாத பலவின்பாற்பெயர். போய் என்பதற்கு - தீர்த்தயாத்திரையாகச் சென்று என்று உரைத்து, கண்டு என்பதனோடு சேர்ப்பினும் அமையும்.

போய்ப்படிந்து என இயைத்து - பாதாளத்தினின்று வந்து கங்கையில் மூழ்கி என்றலும் ஒன்று. (சஉ)

அன்றருச்சுனனாயிரம்புயங்களுமரிந்தனன்மழுவீர
னின்றருச்சுனனிவன்புயமரிந்தனனென்றிமையவரேத்தத்
துன்றருச்சுனநான்மறையுரனுடன்றொடரமுன்றவழ்ந்தோடிச்
சென்றருச்சுனமிரண்டுதைத்தருளினோன்செலுத்துதேரவன்சென்றான்.

(இ - ள்.) 'அன்று - அந்நாளில், அருச்சுனன் ஆயிரம் புயங்களும் - கார்த்தவீரியார்ச்சுனனது ஆயிரம் தோள்களையும், மழு வீரன் - கோடாலிப் படையையுடைய மகாவீரனான பரசுராமன், அரிந்தனன் - அறுத்திட்டான்: (அதுபோலவே), இன்று - இந்நாளில், அருச்சுனன் - இந்த அருச்சுனன், இவன் புயம் அரிந்தனன் - இந்த ஆயிரவாகுவின் தோள்களை யறுத்திட்டான்', என்று - என்றுசொல்லி, இமையவர் - தேவர்கள், ஏத்த - புகழ,—துன்று - விடாது நெருங்கிய, அருச்சுனம் - பரிசுத்தமான, நால் மறை - நான்கு வேதங்களும், உரனுடன் - உரனுடனே, தொடர - பின் தொடர்ந்துவர, முன் தவழ்ந்து ஓடி சென்று - முன்னே தவழ்ந்துகொண்டு விரைவாகப் போய், இரண்டு அருச்சுனம் உதைத்தருளினோன் - இரண்டு மருதமரங்களை உதைத்து அருள்செய்தவனான கண்ணபிரான், செலுத்து - (பாகனாயமைந்து) ஓட்டுகிற, தேரவன் - தேரையுடையவனான அருச்சுனன், சென்றான் - (அப்பாற்) போயினான்; (எ - று.)—'ஏத்தச் சென்றான்' என இயையும்.

அன்று - கிருதயுகத்தில். மழுவீரன் - மழுவையே தனக்குஆயுதமாகக் கொண்டு அதுவே நிரூபகமாகப் பரசுராமனென்று பெயர்பெற்றவன். முன்னிரண்டடிகளில், உபமான உபமேய வாக்கியங்களுக்கு இடையிலே உவமவுருபு கொடாமற் கூறியது, எடுத்துக்காட்டுவமையணி. முதலடியில் 'அன்று அருச்சுனன் ஆயிரம்புயங்களும் அரியப்பட்டனன்' என்றும், இரண்டாமடியில் 'இன்று அருச்சுனன் ஆயிரம் புயங்களையும் அரிந்தனன்' என்றும் சொற்போக்கில் தொடைமுரண் தோன்றக் கூறியது, கவிசமத்காரம். தேர் அவன் சென்றான் என்றுபிரித்து, தேரின்மீது அவ்வருச்சுனன் சென்றானென்றலும் ஒன்று. இமையவர்-இமயமலையில் வாழ்பவர்; அன்றி, இமையில்விசேஷமுடையவர்: அதாவது-மூடாதஇமையையுடையவர்; இமையாதவர் என்றுபொருள்உரைத்தால், எதிர்மறையாகாரம்புணர்ந்துகெட்டதென்னவேண்டும். வெண்ணிறத்தையுணர்த்தும் அர்ஜுந மென்ற வடசொல் - மூன்றாமடியில், இலக்கணையாய், சுத்தமென்றபொருளில் வந்தது. இனி, அருச்சனம் என்ற வடசொல்திரிபு எதுகைநயத்துக்காக அருச்சுனமென விகாரப்பட்டதாகக் கொண்டு, அருச்சுனம்-சுவாமிபூசைக்குஉதவுகிற அல்லது பூசிக்கத்தக்க, மறை யென்று உரைத்தலும் ஒன்று; அர்ச்சநா என்பது அருச்சுன மென விகாரப்படுதலை, "அயன்சே, யருச்சுனக் கினிதருளிய கண்ணன்" எனப் பாகவதத்திலுங் காண்க. நான்மறை - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன. தொடர்தல் - அனுசரித்தல்; "உரனும் வேதமுந் தொடர......விரவிநின்ற மாமருதினூடு தாம்மெத்தெனத் தவழ்ந்தருளி" என்றார் கீழ் ஏழாம்போர்ச்சருக்கத்தும். எல்லாத்தத்துவப்பொருள்களையும் உணர்த்தவல்ல வேதங்களும் பகவானுடைய ஸ்வரூபரூபகுணவிபவங்களையெல்லாம் முற்றுமறியமாட்டாது இன்னுந்தேடுகின்றமையால், 'நான்மறை யுரனுடன் தொடர' என்றார். அன்றியும், 'அசேதனமாகிய உரனோடு சகலஞானங்கட்கும்ஆதாரமான வேதங்களுந் தொடர' என்றதனால், திருமாலினருள்பெற்றால் அசேதநங்களும் சேதநங்களோடு ஒப்புமைபெறு மென்பது தோன்றும். வேதம் எப்பொழுதும் பகவானோடிடம் பின்தொடர்வது என்பதுபற்றியன்றே, இப்பொழுதும் திருக்கோயில்களில்

உத்ஸவங்கண்டருளுகிறபொழுது வேதபாராயணஞ்செய்பவர் எம்பெருமானது பின்புறத்தே செல்வது. பின்னிரண்டடியில், எம்பெருமானது பாரத்வத்தோடு ஸெளலப்பியமும் விளங்கும்.

கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல திருவிளையாடல்களைச் செய்யக் கண்டு கோபித்த நந்தகோபர்மனைவியான யசோதை, ஒருநாள் கிருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினால் கட்டி ஒரு உரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை யிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டைமருதமரத்தின் நடுவிலே எழுந்தருளியபோது, அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்துவிழுந்தவளவில், முன் நாரதர்சாபத்தால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்கிரீவன் என்னும் குபேரபுத்திரரிருவரும் சாபந்தீர்ந்து சென்றனர் என்பது கதை. இந்தக் குபேரபுத்திரர்கள் முன்பு ஒருகாலத்திற் பலதெய்வமகளிருடனே ஆடையில்லாமல் ஒருதடாகத்திலே ஜலக்கிரீடைசெய்துகொண்டிருக்கையில், நாரதமகாமுனிவர் அங்குஎழுந்தருள, மங்கையரனைவரும் நாணங்கொண்டு ஆடையெடுத்து உடுத்து நீங்க, இந்த மைந்தர்மாத்திரம் மதுபானமயக்கத்தால் நிர்வாணமாகவேயிருக்க, நாரதர் கண்டு கோபங்கொண்டு 'மரங்கள்போலிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபித்து, உடனே அவர்கள் வேண்டியதற்கு இரங்கி, 'நெடுங்காலஞ் சென்றபின்பு திருமால் உங்களை யடையுஞ் சமயத்தில் இவ்வடிவமொழிந்து முன்னைய வடிவம் பெற்று மீள்வீர்' என்று சாபவிடைகூறிப் போயினர் என அறிக. (சா.)

[பின்பு பலஅரசர் திரண்டு அருச்சுனனை எதிர்த்தல்.]

கடிகைமுப்பதுஞ்சிந்துவுக்கரசனைக்காக்குமாறறைகூவி
யிடியிடித்தெனப்பல்லியமார்த்தெழவெழுகடற்படையோடும்
படிநடுக்குறப்பணிக்குலநெளித்திடப்பட்டவர்த்தனருள்ளார்
முடிதரித்தவரனைவருந்திரண்டொருமுனைபடவெதிர்சென்றார்.

(இ - ள்.) பட்டவர்த்தனர் உள்ளார் - (கிரீடமில்லாமல்) நெற்றிப்பட்டம் மாத்திரம் தரித்து அரசாளும் பட்டவர்த்தனர்களாக உள்ளவர்களும், முடி தரித்தவர் - கிரீடத்தைத்தரித்து அரசாளும் மகுடவர்த்தனர்களாக உள்ளவர்களும் ஆகிய, அனைவரும் - எல்லாஅரசர்களும்,—திரண்டு - ஒருங்குகூடி, கடிகை முப்பதும்-(அன்றைப்பகல்) நாழிகைமுப்பதும், சிந்துவுக்கு அரசனை - சிந்துதேசத்து அரசனாகிய சயத்திரதனை, காக்கும் ஆறு - (தாம்) பாதுகாக்கும்படி (நிச்சயித்து),—அறைகூவி - (அருச்சுனனை) வலியப் போர்க்கு அழைத்துக்கொண்டு,—பல் இயம் - அநேகவிதவாத்தியங்கள், இடி இடித்து என - இடியிடித்தாற்போல, ஆர்த்து எழ - ஆரவாரித்து மிக்குமுழங்க,—எழு கடல் படையோடும் - எழுசமுத்திரங்கள்போன்ற சேனைகளுடனே,—படி நடுக்கு உற - (பாரமிகுதியால்) பூமி நடுக்கமடையவும், பணி குலம் நெளித்திட - (மற்றும் அதனால் பூமியைத்தாங்குகிற) பாம்புகளின்கூட்டம் (சுமக்கமாட்டாது)தலையசைக்கவும், ஒரு முனை பட - ஓரே நோக்கமாக, எதிர் சென்றார் - அருச்சுனனெதிரில் வந்தார்கள்; (எ - று.)

பதினான்காநாட்பகல்முழுவதும் அருச்சுனன்கையிற்படாதபடி சயத்திரதனைத் தாம் பாதுகாப்பதாக மிகப்பல அரசர்கள் ஒன்றுகூடித் தமது பெரிய சேனைகளோடு பூமிநடுங்கும்படி அருச்சுனனுக்குஎதிரே சென்றார்கள் என்பதாம்.

எழுகடல் - உப்புநீர், கருப்பஞ்சாறு, கள், நெய், தயிர், பால், நன்னீர் இவற்றின்மயமானவை; எழுகடல் என்பதைப் பண்புத்தொகையாகக் கொள்ளாமல் வினைத்தொகையாகக் கொண்டு, பொங்கி யெழுகிற கடலென்றும் உரைக்கலாம். சேனைக்குக் கடலுவமை - அளவிறந்து பரப்புக்

கும், அணியணியாகவருதற்கும், பேராரவாரத்துக்கும், அச்சந்தருதற்கும், அழிவுசெய்தற்குமென்க. நடுக்கு - கம்பித்தல்: நடுங்கு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். ஒருகோடி கிராமம் ஆள்பவன் - மகுடவர்த்தன னென்றும், அவனிற்சிறிதுதாழ்ந்தவன் - பட்டவர்த்தனனென்றுங்கூறுவர். முனை - துணிவு, போர்கலத்தல்; உக்கிரத்தன்மையுமாம். காக்குமாறு அறைகூவி என்பதற்கு - தாம்தாம் காப்பதாகப் பிரதிஜ்ஞைசெய்து வீரவா தங்கூறி என்றும் உரைக்கலாம். காக்குமாறு, அறைகூவி, எழ, படையோடும், நடுக்குற, நெளித்திட, திரண்டு, முனைபட என்றவையெல்லாம்-'சென்றூர்' என்ற ஒருமுற்றைக் கொண்டன. சர்ப்பராஜனும் ஆயிரந்தலைகளை யுடையவனுமான ஆதிசேஷன் நடுவிலும், அவனுக்குத் துணையான அஷ்ட மகாநாகங்கள் கிழக்குமுதலிய எட்டுத்திக்குகளிலுமாகப் பூமியின்கீழிருந்து பூமியைத் தாங்குகின்றன ரென்பது, புராணக்கொள்கை. 'படி நடுக்குறப் பணிக்குலம் நெளித்திட'என்றது - அதிசயோக்தி; ஓரிடத்தே மிகுதியாகப் பலர் திரண்டமையை நன்குவிளக்கும். (சச)

[அத்தனைபேரோடும் அருச்சுனனொருவன் பொருதல்.]

பரிதியால்வளைப்புண்டசெம்பரிதியிற்பற்குனன்றனுவாங்கித்
தெரிசரங்களோரோருவருக்காயிரஞ்சிரமுதலடியீறு
நெரிதரும்படிதொடுத்துவெங்கொடிபரிநேமிதேர்பலகோடி
கரிகளுந்துணிபடப்படமலைந்தனன்கடிகையொன்றினின்மாதோ.

(இ - ள்.) பரிதியால் வளைப்புண்ட - பரிவேஷத்தாற் சூழப்பட்ட, செம் பரிதியின் - சிவந்த சூரியன்போல, (இத்தனை பேராற் சூழப்பட்டு இடையில் நின்று), பற்குனன் - அருச்சுனன், தனு வாங்கி - வில்லை வளைத்து, தெரி சரங்கள் - ஆராய்ந்தெடுக்கப்பட்ட[சிறந்த]அம்புகளை, ஓர் ஒருவருக்கு ஆயிரம் - ஒவ்வொருத்தருக்குஆயிரம்வீதமாக, சிரம் முதல் அடி ஈறு ஆ நெரிதரும்படி - (அவர்களுடைய) தலைமுதல் கால்இறுதியாக (எல்லாவுறுப்புக் களுஞ்) சிதையும்படி, தொடுத்து - (அவர்கள்மேற்) பிரயோகித்து,—வெம் - பயங்கரமான, கொடி - துவசங்களும், பரி - குதிரைகளும், நேமி - தேர்ச் சக்கரங்களும், தேர்-தேர்களும், பல கோடி - அநேககோடிக்கணக்கான, கரிகளும் - யானைகளும், துணி பட பட - மிகுதியாகத் துண்டுபடும்படி, கடிகை ஒன்றினில் - ஒருநாழிகைப்பொழுதிலே, மலைந்தனன் - எதிர்த்துப் பொருதான்; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசைகள்.

ஊர்கோள்வட்டத்தாற் சூழப்பட்ட சூரியன்போல மிகப்பலஅரசராற் சூழப்பட்ட அருச்சுனன் தான்ஒருவனாகவே அவ்வளவுபேரையும் எதிர்த்து வில்வளைத்து ஒவ்வொருத்தருக்கும் ஆயிரமாகப் பாணப்பிரயோகஞ்செய்து அவர்களுடைய குதிரை தேர் யானை என்னும் வாகனங்களையும் சேனைகளையும் கொடிமுதலிய இராசசின்னங்களையும் தலைமுதலிய உடம்பின் உறுப்புக்களையும் சின்னபின்னமாக ஒருநாழிகைப்பொழுதினுள் அழித்திட்டன னென்பதாம்.

பரிதி - வடசொல். இங்கு வந்த 'பரிதி' என்ற சொல் இரண்டனுள், முந்தினது - ஒவ்வொருசமயத்துச் சூரியனைச் சூழ்ந்து காணப்படும் மண்டலத்தையும், பிந்தினது - சூரியனையும் குறிக்கும். சூரியனுக்குச் செம்மை - இயற்கையடைமொழி; இனம்விலக்கவந்ததன்று. வெம் என்பதையும், பல கோடி என்பதையும் மற்றவற்றுக்கும் கூட்டலாம். கொடி பரி நேமி தேர் கரிகள் என எண்ணும்மை தொக்குநின்றவை பெயர்ச்செவ்வெண்ணுதலால், அவற்றின் இறுதியில் எச்சவும்மை கொடுக்கப்பட்டது; [நன்-இடை-அ.] நேமி - வடசொல். நெரிதரும்படி - நெரியும்படி; தா - துணைவினை. (சரு)

[அருச்சுனன்முன் பகைவர்கள் அழிதல்.]

போரில்வெவ்விடாய்தணிவுறக்களத்தினிற்புறங்கொடுத்தவர்சோரி
நீரின்மூழ்கியுங்கழுகிடுகாவணநீழலாறியுஞ்சென்றார்
தேரில்வாசியிற்களிற்றில்வந்தவர்களிற்சேவடிசிவப்பேற
யாரியார்குதித்தோடுதலொழிந்தவரெறிபடைவீழ்த்திட்டே.

(இ - ள்.) களத்தினில் - அந்தப்போர்க்களத்திலே, புறங்கொடுத்தவர் - முதுகுகொடுத்த வீரர்கள், போரில் வெவ் விடாய் தணிவுற - போரில் (தங்கட்குஉண்டான) கொடியஇளைப்புத் தணிவடையும்படி, சோரி நீரில் மூழ்கியும் - இரத்தவெள்ளத்திலே முழுகியும், கழுகு இடு காவணம் நீழல் ஆறியும் - (அங்குப் பிணந்தின்ன வந்த) கழுகுகள் (தாம் வானத்திலே இடைவிடாது பரவுதலால்) அமைத்த பந்தலின் நிழலிலே தாபந்தீர்ந்தும், சென்றார் - போனார்கள்; தேரில் - தேர்களின்மேலும், வாசியில் - குதிரைகளின் மேலும், களிற்றில் - யானைகளின்மேலும், வந்தவர்களில் - எதிர்த்துவந்த வீரர்களில், யார் யார் - யாவர்தாம், எறி படை வீழ்த்திட்டு - (பகைவர் மேற்) பிரயோகித்தற்குஉரிய ஆயுதங்களைக் கீழேபோகட்டுவிட்டு, சே அடி சிவப்பு ஏற - (இயற்கையிற்) சிவந்தனவாகிய (தங்கள்)பாதங்கள் செந்நிறம் மிகும்படி, குதித்து ஓடுதல் ஒழிந்தவர் - (தம்தம் வாகனங்களினின்று கீழே) குதித்து ஓடுதலை நீங்கினவர்கள்? [ஓடாதவர் எவருமில்லை யென்றபடி].

அருச்சுனனை யெதிர்த்தவரில் இறந்தவர் போக மிச்சமானவ ரனைவரும் அவனால் வலியழிக்கப்பட்டுத் தோற்று அவனெதிரில் நிற்கவும் ஆற்றாராய்ப் புறங்கொடுத்து விரைவில் ஓடிப்போய் உயிர்தப்பினர் என்பதாம். அவன்முன்னிலையில் தம்தம்வாகனங்களின்மீதுநின்றாலும் அவன்விடமாட்டானென்று அஞ்சி அவற்றினின்று விரைவிற் குதித்து, கையில் ஆயுதங்களோடு கூடியிருந்தால் அவன் தம்மை அழிக்கக்கூடு மென்ற சங்கையினாலும் அவன்விஷயத்திலுண்டான அச்சமிகுதியா லாகிய கைந்நடுக்கத்தாலும் படைக்கலங்களைக் கீழேபோகட்டு ஓடின ரென்க. அங்ஙனம் புறங்கொடுத்தவர்கள் இரத்தவெள்ளத்தில் மூழ்குதலையும், கழுகுநிழலிற் பொருந்துதலையும் - விடாய்தணிதற்பொருட்டு நீரில்மூழ்குதலும், நிழலிற்பொருந்துதலுமாகக் கற்பித்தார்; தற்குறிப்பேற்றவணி. 'கழுகிடுகாவணநீழல்' என்றதை, கீழ் நிவாதகவசகாலகேயர்வதைச்சருக்கத்தில் வந்த "பத்திப்படைமேற் பருந்தின் குலம் பந்தர்செய்ய" என்றதனோடும், மேற் பதினாறாம்போர்ச் சருக்கத்தில் வரும் "பயிலமறைத்தன பாறு பருந்தொடு பலகழு கந்தரமே", "இற்றகைகால்செறி களமுழுதுங் கழு கிட்டன காவணமே" என்பவற்றோடும் ஒப்பிடுக.

சொரிவது சோரி எனக் காரணப்பெயர்; கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்துகெடுகையில், பகுதிமுதல் நீண்டது. செம்மை+அடி = சேவடி: பண்புப்பகுதி ஈறுபோய் ஆதிநீண்டு முன்நின்ற மகரமெய் வகரமெய்யாத் திரிந்தது; [நன் - பத-கூ.] இனி, முன்நின்றமெய்யுங் கெட்டு "எமுன் இவ் விருமையும்" என்றதனால் வகரவுடம்படுமெய் பெற்ற தென்றலும் ஒன்று. யார்+யார்=யாரியார்; தன்னொழி மெய்ம்முன் யகரம்வர இகரந் தோன்றிற்று; [நன் - மெய் - ரு.] வீழ்த்திட்டு என்றதில், இடு என்பது - துணிவுப் பொருளைக் காட்டும். (சஅ)

நின்றுபட்டனர்தனித்தனியமர்புரிநிருபர்முந்துறவோடிச்
சென்றுபட்டனர்சேனைமண்டலீகர்வெஞ்சினம்பொழிசிறுசெங்க [ட்
குன்றுபட்டனபட்டனநவகதிக்குரகதக்குலம்யாவு
மன்றுபட்டவர்க்குறைபிடப்போதுமோவநேகநாளினும்பட்டார்.

(இ - ள்.) அமர் புரி நிருபர் - (அருச்சுனனுடன்) போர்செய்த அரசர்

கள், தனி தனி - தனித்தனியே, நின்று பட்டனர் - எதிர்த்துநின்றநிலையில் இறந்தார்கள்; சேனை மண்டலீகர் - சேனைகளோடுகூடிய மண்டலீகர் என்னுஞ் சிற்றரசர்கள், முந்துற ஓடி சென்று - விரைவாக (ப் புறங்கொடுத்து) ஓடிப்போய், பட்டனர் - தோற்றார்கள்; வெம் சினம் பொழி - கொடியகோபத்தை மிகுதியாகவெளிக்காட்டுகிற, சிறு செம் கண் - சிறிய சிவந்த கண்களையுடைய, குன்று - மலைகள்போன்ற யானைகள், பட்டன - அழிந்தன; நவ கதி - ஒன்பதுவகை நடைகளையுடைய, குரகதம் குலம் யாவும் - குதிரைகளின்கூட்டங்களெல்லாம், பட்டன - அழிந்தன;—அனேகம் நாளினும் பட்டார் - (இதற்குமுன்) பலபோர்நாட்களிலும் அழிந்தவர், அன்று பட்டவர்க்கு உறை இட போதுமோ-அப்பதினான்காம்போர்நாளில் அழிந்தவர்கட்கு உறையிடுதற்காவது போதுமோ? [போதா தென்றபடி]; (எ - று.)

உறையிடுதலாவது - பொருள்களைக் கணக்கிடும்போது ஞாபகத்தின் பொருட்டு ஒவ்வொரு பெருந்தொகைக்கு ஒன்றாக இடுவதோர் இலக்கக் குறிப்பு. இதற்குமுன் பதின்மூன்றுநாள்களில் இறந்தவர்களது தொகை அன்றைநாளில் இறந்தவர்களதுதொகைக்கு உறையிடுதற்கும் போதாது என்று, அன்றுஇறந்தவர்களது தொகைமிகுதியை விளக்கியவாறு. உறையிடுதலின்தன்மையை "தறையிடத்தே யுழ லெல்லாப்பிறவிதமக்கு மள, வுறையிடத் தேய்ந்திடு மிவ்வந்திவானத துடுக்குலமே" (திருவே. ௩௪ - ஆம் பாட்டு) என்றாற்போல்வன கண்டு உணர்க.

நிருபர் - ந்ருபர் என்ற வடசொல்லின் விகாரம்: ஏழாமுயிர் 'இரு' ஆயிற்று; மனிதரைக்காப்பவரென்று பொருள்: ந்ரு - மனிதர். மண்டலீகர்- நாற்பதுகிராமம்ஆள்பவர்; மகுடவர்த்தனர் நாலாயிரவரை அடக்கியாள்பவர் என்பர், ஒருசாரார். குன்று - அதுபோன்ற வலிய பெரிய யானைக்கு உவமையாகுபெயர். மதம்பிடித்த உத்தமயானைக்கு உரிய 'வெஞ்சினம்பொழி சிறுசெங்கண்' என்ற அடைமொழியினால், குன்றுஎன்றது - யானையைக் குறித்தது; பிறகுறிப்பு. நவ கதி - ஆஸ்கந்திதம், தோரிதகம், ரேசிதம், வல்கிதம், ப்லுதம், பஞ்சளி, மூரளி, ஸுடாலம், வலநம் என்பன; இனி, பார்க்குந்தோறும் புதுமையாகவுள்ள கதி என்றலு மொன்று. தனித்தனி என்பதை 'முந்துறவோடி' என்பதனோடும் இயைக்கலாம். மனத்தினுள்ள கோபம் கண்ணின்கொடுநோக்கத்தால் விளங்குதல்பற்றி 'வெஞ்சினம்பொழி சிறுசெங்கண்' என்றார்; உத்தமயானையிலக்கணத்தில் "தீயுமிழ் சிறுகண்" என வருதல் அறிக. சினம் - கோபாக்கினியென்றபடி. 'பட்டார்' என்றது - ஆகுபெயராய் அவர்தொகையை உணர்த்திற்றாதலால், 'போதும்' என்ற செய்யுமென்முற்றைக் கொண்டது; அன்றி, செய்யுமென்முற்றுப் பல்லோர்படர்க்கைக்குஉரியதாகாமை யுணர்க: [நன் - வினை - ௨௧.] பட்டார்என்பதை ஆகுபெயராகக் கொள்ளாவிட்டால், வினைமுற்று 'போதுவரோ' என்று பலர்பாலாக இருத்தல் வேண்டும். யா - அஃறிணைப்பன்மை வினாப்பெயர்; இதில் 'வை' என்னும் பலவின்பால்விகுதி புணர்ந்துகெட்டதென்க. (௬எ)

[அருச்சுனனது விற்போர்த்திறச்சிறப்பு.]

அநேக மாயிரம் பேர்படக் கவந்தமொன் றாடுமக் கவந்தங்க
ளநேக மாயிர மாடவெஞ் சிலைமணி யசைந்தொரு குரலார்க்கு
மநேக நாழிகை யருச்சுனன் சிலைமணி யார்த்ததக் களம்பட்ட
வநேக மாயிரம் விருதரை யளவறிந் தார்கொலோ வுரைக்கிற்பார்.

(இ - ள்.) அநேகம் ஆயிரம் பேர் பட - (போரில்) பலஆயிரம்பேர்இறக்க, கவந்தம் ஒன்று ஆடும் - ஒருகவந்தம் (எழுந்துநின்று) கூத்தாடும்; அ கவந்தங்கள் அநேகம் ஆயிரம் ஆட - அத்தன்மையனவான கவந்தங்கள் பல ஆயிரம் எழுந்துகூத்தாட, வெம் சிலை மணி அசைந்து ஒரு குரல் ஆர்க்கும் -

பயங்கரமான வில்லிற் கட்டியுள்ள மணி அசைந்து ஒருமுறை ஒலிக்கும்; அருச்சுனன் சிலை மணி - (அத்தன்மையுள்ள) அருச்சுனனது காண்டீவவில்லின் மணி, அநேக நாழிகை ஆர்த்தது - (அப்போது) பலநாழிகைப்பொழுது ஒலித்தது; (என்றால்),—அ களம் பட்ட - அந்தப் போர்க்களத்தில் (அன்று) இறந்த, அநேகம் ஆயிரம் விருத்தரை - பலஆயிரம் வீரர்களை, ஆர்கொலோ - யார்தாம், அளவு அறிந்து உரைக்கிற்பார் - (இவ்வளவென்று) தொகையறிந்து சொல்லவல்லார்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

இப்பாட்டிற்கூறிய மரபை "ஆனையாயிரந் தேர்பதினாயிர மடர்பரியொருகோடி, சேனைகாவலராயிரம்பேர் படிற் செழுங்கவந்த மொன்றாடுங், கானமாயிர மாயிர கோடிக்குக் கவின்மணி கணிலென்னும், ஏனையம்மணி யேழரைநாழிகை யாடிய தினிதன்றே" என்று கம்பராமாயணத்திலும், "பேரொத்த வாயிரம்பேர் மடிந்தாற் பிறக்குங் கவந்த, நேரொத்தவாடு மதாயிர மாடி னெடுஞ்சிலையி, னேரொத்த கிண்கிணி சற்றோலிடு மதொரியாம நின்று, காரொத்தமேனி யரங்கர்தம் போரிற் கறங்கியதே" என்று திருவரங்கத்துமாலையிலும், இராமன் மூலபலத்தை அழித்த திறத்தைப்பற்றிக் கூறியவற்றாலும் அறிக; இது, வடநூல்களிலுங் கூறப்பட்டுள்ளது.

கவந்தம் - கபந்தம் என்ற வடசொல்லின் திரிபு; இதற்கு - வடமொழி நிகண்டில், தொழிலுடன் கூடின தலையற்றஉட லென்று பொருள் கூறப்பட்டிருக்கின்றது. மணி - அடிக்கும்மணி, கண்டை. மணியில் அடிக்கிற உறுப்பை 'நா' என்றல் மரபாதலின், அதன் ஒலியை 'குரல்' என்றார். நாழிகை - நாடிகா என்றதன் திரிபு; இருபத்துநான்குநிமிஷம். ஆர் - யார் என்பதன் மரூஉ; கொல், ஓ - அசைநிலைகள். உரைக்கிற்பார் என்பதில், கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை. இச்செய்யுளில் 'அநேகம்' என்ற சொல் அடிதோறும் முதலில்வந்தாலும் ஒரேபொருளதாதலால், யமகமென்னுஞ் சொல்லணியாகாது; சொற்பொருட்பின்வருநிலையென்னும் பொருளணியேயாம். (சஅ)

வேறு.

[படுகளச்சிறப்பு.]

வெவ்வாசிநெ டுந்தேர்மிசை நிமிராவரி விற்கொண்
டிவ்வாறமர் புரிவேலையி லெழுசெங்குரு தியினா
லவ்வாடர வுடையானழி யாயோதன மந்திச்
செவ்வானக மெனவந்துசி வப்பேறிய தெங்கும்.

(இ - ள்.) வெவ் வாசி - வேகமுள்ள குதிரைகள்பூண்ட, நெடுந் தேர் மிசை - பெரிய தேரின்மீது, நிமிரா வரி வில் கொண்டு - வளைவுமாறாத கட்டமைந்த வில்லை யேந்திக்கொண்டுநின்று, இ ஆறு - இப்படி, அமர் புரி வேலையில் - (அருச்சுனன்) போர்செய்தபொழுதில், எழு - மிக்குப்பெருகிய, செம் குருதியினால் - சிவந்தஇரத்தத்தால்,—அ ஆடு அரவு உடையான் அழி ஆயோதனம் எங்கும் - படமெடுத்தாடுந் தன்மையுள்ள பாம்பின்வடிவத்தைக் கொடியிலுடையவனான அந்தத்துரியோதனனது அழிபட்ட போர்க்களம் முழுவதும்,—அந்தி செவ் வான் அகம் என - மாலைப்பொழுதிற் காணப்படுகிற செவ்வானம்போல, சிவப்பு வந்து ஏறியது - செந்நிறம்பரவிமிகப்பெற்றது.

உவமையணி. நிமிரா வில் - வளைந்த வில். வேலை - வேலா என்னும் வடசொல்லின் திரிபு. அகரச்சுட்டு, பிரசித்தியையுங் காட்டும். அரவு என்ற பாம்பின்பெயர், அதன் வடிவ மெழுதிய கொடியைக் குறிக்கும்போது ஆகுபெயராம். ஆயோதனம் - வடசொல்; இந்தப்போரின்பெயர் - தானியாகுபெயராய் அதுநிகழும்இடத்தைக் குறித்தது. செவ்வானகம் - சிவந்தவானத்தின் இடம். சிவப்பு - செம்மை யென்னும் பண்பினடி 'சிவ'என விகாரப்பட்டு, 'பு' என்னும் விகுதி பெற்றது.

இதுமுதற் பதினேழு கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் மாங்கனிச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (சக)

[மத்தியானகால வருணனை.]

முருகாரிருசிறைவண்டினமுளரிப்புதுமலர்விட்
டருகார்பொழினிழலூடணியலர்நாண்மலருறவே
யிருகாலமுமுக்கால்விடுகைம்மாரியிருக்கா
லொருகாலருமறையோர்விடுபதநண்ணினனுதயன்.

(இ - ள்.) முருகு ஆர் - தேனையுண்ணுந்தன்மையுள்ள, இரு சிறை வண்டு இனம் - இரண்டிறகுகளையுடைய வண்டுகளின் கூட்டம், புது முளரி மலர் விட்டு - புதிய [அன்றுமலர்ந்த] தாமரைப்பூக்களை விட்டு நீங்கி, அருகு ஆர் பொழில் நிழலூடு - சமீபத்திற் பொருந்திய சோலைகளின் நிழலிலேயுள்ள, அணி அலர் நாள் மலர் - அழகிய மலர்ந்த புதிய பூக்களில், உற - சேரும்படி,— உதயன் - சூரியன்,—அரு மறையோர் - (அறிதற்கு) அரிய வேதங்களையுணர்ந்த பிராமணர், இருக்கால் - வேதமந்திரத்தைக்கொண்டு [காயத்திரியுச்சாரணத்தோடு], இரு காலமும் முக்கால் விடு கை மாரி - (காலை மாலை என்ற) இரண்டுபொழுதிலும் மூன்றுமுறை கைகளால் எடுத்துவிடுகிற அருக்கியநீர்ப்பொழிவை, ஒரு கால் விடு - ஒருமுறை சொரிகிற, பதம் - தானத்தை, நண்ணினன் - சேர்ந்தான் [உச்சியடைந்தான்]; (எ - று.)—பதம் - இடம்: வடசொல்; சமயமுமாம்.

காலையிலும்மாலையிலும் செய்யும் சந்தியாவந்தனங்களில் மூன்றுமுறையும், மாத்தியான்னிகத்தில் ஒருமுறையும் காயத்திரிமந்திரங்கூறி அருக்கியம் விடுதல் * மரபாதலால், 'உச்சமடைந்தான்' என்ற பொருளை இங்ஙனங் கூறினர்; இது, பிறிதினவிற்சியணி; இதன் இலக்கணம் - கருதியபொருளை அதற்கு இயல்பாகஉரிய வகையாற் கூறுதல். சூரியோதயகாலத்திலே நீர்நிலையில் மலர்ச்சி பெற்ற தாமரையில் மொய்த்து அதிலுள்ள தேனை வயிறு நிரம்பப் பருகிய வண்டுகள் அச்சூரியன் உச்சிவானமடைந்தபோது வெயில் மிக்கதனா லாகிய தாபத்தைப் பொறுக்கமாட்டாமல் தாமரையைவிட்டுப் பக்கங்களிலுள்ள சோலைகளிலிருக்கிற மரங்களின் நிழலில் மலர்ந்த வேற்றுப்பூக்களை நாடியடைகின்றன என்று, அக்காலத்தின் வெயில்மிகுதியை முன்னிரண்டடிகளால் விளக்கியவாறு.

'முருகார்' என்பது, வண்டுக்கு அடைமொழி; முருகுஆர்தல் - நறுமணத்தை யுட்கொள்ளுதலும், அழகுநிரம்புதலும், இளமைபொருந்துதலும் ஆம். இருசிறை என்றது, இனமில்லாதுவந்த இயற்கையடைமொழி; அது - இறகுகளின் அழகையும், விரைவையும் காட்டும்; பெரியஇறகென்றபொருளில் 'இருஞ்சிறை' என வரும். முளரி - முட்களையுடைய அரியை யுடையதென வேற்றுமைத்தொகை யன்மொழியாகிய காரணவிடுகுறிப்பெயர்; அரி - அரை: தண்டின் சுற்றுப்புறம். புதுமலர், நாண்மலர் என்பன - ஒரு பொருட்சொற்கள்: அன்றைநாளிற் பூத்த பூ. இருக்கு - ருக் என்ற வடசொல்லின் திரிபு; இந்த வேதமந்திரத்தின்பெயர், சிறப்பாய், மந்திரங்களுட் சிறந்த காயத்திரியை உணர்த்திற்று. வேதங்களை ஓதுதல் ஓதுவித்தல் என்னும் இருதொழிற்கும் உரியவர் அந்தணரேயாதலால், 'மறையவர்' என்ற பெயர், காரணவிடுகுறியாய், அவரையே குறிக்கும். உதயன் - உதித்தலையுடையவன். உற நண்ணினன் என இயையும். ஏ - அசை. அலர் - வினைத்தொகை. மலர் - மலர்வது என்ற பொருளில், கருத்தாப்பொருள்விகுதி

* இதற்குமாறாகச் சிலர் மாத்தியான்னிகத்தில் இருமுறைகாயத்திரியர்க்கியப்பிரதாநஞ்செய்தல் கல்பபேதவிதிபற்றியதாதல் வேண்டுமென அறிக.

ணர்ந்து கெட்ட பெயர். நிழலூடு; ஊடு-எழனுருபு. அருக்கியநீர் விடுகிற த்தேசம், சூரியனைச்சூழ்ந்துபொரும் மந்தேகர் என்னும் அரக்கரை அழித் தல். இருகாலம், முக்கால், இருக்கால், ஒருகால் என்றவிடங்களில் சப்தசித் திரமும், பதநண்ணின னுதயன் என்றவிடத்துப் பிராசமுங் காண்க. (௫௦)

[அருச்சுனன் அங்கு ஒருதடாகம் உண்டாக்கல்.]

விரவார்முனையடுதேர் நுகவெவ்வாசிகள்புன லுண்
டுரவாவிடிலோடாவினியென்றையனுரைப்ப
வரவாபரணன்றந்தருளருமாமறைவருணச்
சரவாய்வரவெய்தானவணெழலுற்றதொர்தடமே.

(இ - ள்.) (அப்பொழுது),—ஐயன் - (யாவர்க்குந்) தலைவனான கண் ணன், (அருச்சுனனை நோக்கி), 'விரவார் முனை அடு - பகைவரது போரை அழிக்கவல்ல, தேர் - (நமது) தேரினது, நுகம் - நுகத்தடியிற் பூட்டப்பட் டுள்ள, வெவ் வாசிகள் - விரைந்துசெல்லத்தக்க குதிரைகள், புனல் உண்டு உரவா விடில் - நீர்பருகி வலிமையடையாவிட்டால், இனி ஓடா - இனி மேல் ஓடமாட்டா,' என்று உரைப்ப - என்றுசொல்ல,—(உடனே அருச்சு னன்),—அரவ ஆபரணன் தந்தருள் அரு மா மறை - நாகங்களை ஆபரண மாகவுடைய சிவபிரான் (தனக்குக்)கொடுத்தருளிய (பிறர்க்கு)அருமையான சிறந்த உருத்திரமந்திரம், வருணம் சரவாய் வர - வாருணாஸ்திரத்திலே அமையும்படி, எய்தான் - பாணப்பிரயோகஞ் செய்தான்; (அம்மாத்திரத் திலே), அவண் - அவ்விடத்தில், ஓர் தடம் - ஒரு தடாகம், எழல்உற்றது - உண்டாயிற்று; (எ - று.)

'நமது தேர்க்குதிரைகள் நீர்வேட்கையாற் சோர்வடைந்தனவாதலால், இனி நீர்குடித்துஇளைப்பாறுவிடின் ஓடமாட்டா' என்று கண்ணன் சொன் னவுடனே, அருச்சுனன் சிவபிரானிற்பெற்ற உருத்திரமகாமந்திரத்தை உச் சரித்து வாருணாஸ்திரத்தை அருகில் தரையில் ஓரிடத்திற் செலுத்தினவளவி லே, அந்த மந்திராஸ்திர பலத்தால் அவ்விடத்தில் நீர்நிலையொன்று புது மையாகத் தோன்றிற் றென்பதாம். இந்த மந்திரம், பதின்மூன்றாம்நாளிர வில் அருச்சுனன் கைலாசஞ்சென்று சிவபிரானை வணங்கியபொழுது அப் பெருமானது கட்டளைப்படி அமிருதஸரஸிலிருந்து வெளிவந்த அந்தணன் அருச்சுனனுக்கு உபதேசித்தது; இது, வேண்டினவற்றையெல்லாம் உண் டாக்கித்தர வல்லது. வருணச்சரம் - நீர்க்கடவுளாகிய வருணனைத் தெய்வ மாகவுடைய அஸ்திரம்.

விரவார் - சேராதவ ரெனப் பகைவர்க்குக் காரணக்குறி; எதிர்மறைப் பலர்பால் வினையாலணையும்பெயர். விரவார் முனை அடு - பகைவரைப் போரில் வெல்லவல்ல என்று பதவுரை கூறலு மொன்று. உரவாவிடில் - இளைப்பாறவிட்டால் என்றபடி. உண்பன தின்பன பருகுவன நக்குவன எனப் பிரித்துக்கூறுமிடத்து உண்ணலென்பது சிறப்புவினையும், அங்ங னம் பாகுபாடுகருதாது பொதுப்படக்கூறுமிடத்துப் பசிதாகங்கள்தீரஉட் கொள்ளப்படுவனவெல்லாம் உணவெனப்படுதலின் உண்ணலென்பது பொ துவினையு மாகுதலால், 'புனல்பருகி' என்னாது 'புனலுண்டு' எனப்பட்டது. ஓடா - எதிர்மறைப் பலவின்பால்முற்று. 'ஓடாது' என்ற பாடம் 'வாசிகள்' என்ற பன்மையெழுவாயோடு முரணுதலால் சிறப்பன்று; இனி, பன்மை யொருமைமயக்கமென வழுவமைத்தலுமாம். 'சரவாய்', வாய் - ஏழனுருபு.

அரவாபரண னென்ற விவரம்:—ஒருகாலத்திற் பரமசிவன் தன்னை மதியாத தாருகவனத்து முனிவர்களது கருவத்தைப் பங்கஞ்செய்யவும் அவர்கள்மனைவிமார்களின் கற்புநிலையைப் பரிசோதிக்கவுங் கருதித் தான் ஒருவிடவடிவங்கொண்டு அவரில்லந்தோறுஞ் சென்று பிக்ஷாடனஞ்செய்து,

தன்னை நோக்கிக் காதல்கொண்ட அம்முனிபத்தினியரது கற்புநிலைமையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறாமற் கோபம்பூண்ட அம்முனிவர்கள் அபிசாரயாகமொன்று செய்து, அவ்வோமத்தீயினின்று எழுந்த நாகங்கள் பூதங்கள் மான் புலி முயலகன் வெண்டலை முதலியவற்றையும் அவ்வோமத்தீயையும் சிவனைக் கொன்றுவிடும்படி ஏவ, சிவபெருமான், தன்மேற் பொங்கிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும், பூதங்களைத் தனது கணங்களாகவும் கொண்டு, மானை இடக்கையில் ஏந்தி, புலியைத் தோலையுரித்து உடுத்து, முயலகனை முதுகிற் காலாலூன்றி, வெண்தலையைக் கையிற்பற்றிச் சடைமேலணிந்து, நெருப்பை ஒருகையிலேந்தி, இங்ஙனமே அவற்றையெல்லாம் பயனிலவாகச் செய்துவிட்டன னென்பதாம். (நக)

[அக்குளத்தின் வருணனை.]

ஆழம்புணரியினும்பெரிததினும்பெரிதகலஞ்
சூழெங்கணும்வண்டாமரைதுறையெங்கணுநீலங்
கீழெங்கணுநெடுவாளைவரால்பைங்கயல்கெண்டை
வாழுங்கரையருகெங்கணும்வளர்கின்னரமிதுனம்.

(இ - ள்.) ஆழம் - (அக்குளத்தின்)ஆழம், புணரியினும் பெரிது-கடலின் ஆழத்திலும் அதிகமானது; அகலம் - (அக்குளத்தின்) அகலமும், அதினும் பெரிது - கடலின் அகலத்திலும் அதிகமானது; சூழ் எங்கணும் - (அக்குளத்தில்) சுற்றிலுமுள்ள எவ்விடத்தும், வண் தாமரை - செழிப்பான தாமரைகளும்,—துறை எங்கணும்-(அக்குளத்தின் இறங்கு) துறைகளி லெல்லாம், நீலம் - கருங்குவளைகளும்,—கீழ் எங்கணும் - (அதன்)உள்ளிடம் முழுவதிலும், நெடு வாளை - நீண்ட வாளைமீன்களும், வரால் -வரால்மீன்களும், பைங் கயல் - பசுநிறமான கயல்மீன்களும், கெண்டை - கெண்டைமீன்களும்,—கரை அருகு எஙகணும் - கரைப்பக்கங்களி லெல்லாம், வளர் கின்னர மிதுனம் - நன்றாகவளர்ந்த கின்னர மிதுனங்களும், வாழும் - (இனிமையாகத்) தங்கும்; (எ - று.)

இதனால், தெய்விகமாகவுண்டான அத்தடாகத்தின் ஆழம் அகலம் நீர்வளச்சிறப்பு என்பவை விளங்கும். கின்னரமிதுனம் - கின்னரமென்னும் நீர்வாழ்பறவையின் ஆணும் பெண்ணுமான இரட்டை. எப்பொழுதும் ஆணும்பெண்ணுமாய் இரட்டைப்பட்டுநின்று கிந்நரமென்னும் வாத்தியங் கைக்கொண்டு பாடித் திரிவ தொரு தேவசாதிக்கும் கிந்நரமிதுந மென்று பெயருண்டு; இவை, குதிரைமுகமும் மனிதவுடம்பும் உடையவை. கிந்நரமிதுநம் - வடமொழித்தொடர்.

ஆழம், அகலம் - 'அம்'விகுதிபெற்ற தொழிற்பெயர். முதலடியிலுள்ள உம்மைகள் - உயர்வுசிறப்பு; மற்றவை - முற்றுப்பொருளன. முதலடி - உயர்வுநவிற்சியணி வகையால் அக்குளத்தின் ஆழமிகுதியையும் அகலமிகுதியையும் விளக்கியது. புணரி - (நதிகளாற்) சேரப்படுவ தெனக் காரணப் பெயர்; புணர் - பகுதி, இ - செயப்படுபொருள்விகுதி. நீலம்-நீலோத்பலம். வாளைமுதலியன - மீனின் சாதிபேதம். பைங் கயல் - செழிப்பான கயல் எனினுமாம். (நஉ)

ஒருபால்வளர்போதாநிரைகருநாரைகளொருபா
லொருபாலுள்மகிழ்நேமிகளன்றிற்குலமொருபா
லொருபான்மடவன்னம்புனலரமங்கையரொருபா
லொருபாலிருபாலுந்தவழ்மானிநத்துறைபுள்ளினம்.

(இ - ள்.) (மற்றும் அக்குளக்கரையில்), ஒரு பால் - ஒருபக்கத்தில், வளர் போதா நிரை - நன்றாகவளர்ந்த பெருநாரைகளின் கூட்டமும், ஒரு பால்—, கரு நாரைகள் - கறுப்புநாரைகளும், ஒருபால்—, உளம் மகிழ்

நேமிகள்-தம்மிற்கூடி மனம்மகிழ்கிற சக்கரவாகப்பறவைகளும்,ஒருபால்—, அன்றில் குலம் - கிரௌஞ்சமென்னும் பறவைகளின் கூட்டமும், ஒரு பால்—, மட அன்னம் - இளமையான அன்னப்பறவைகளும், ஒருபால்—, புனல் அர மங்கையர் - நீரில்வாழும் தேவமகளிரும், ஒருபால்—, இரு பாலும் தவழ் ஒளி-இரண்டுபக்கங்களிலும் பரவிச்செல்கிற ஒளியையுடைய, சங்கு - சங்குகள்.உறை - தங்கப்பெற்ற,புளினம்-மணல்மேடுகளும்,(உண்டு). வினைமுற்று,வருவிக்கப்பட்டது.சக்கரவாகப்பறவைகள் பகலில் ஆணும் பெண்ணுங் கூடிக் குலாவுந் தன்மையன வாதலால், 'உளம்மகிழ் நேமிகள்' எனப்பட்டன.நேமி-வடசொல்; [திருவே.ப-௨௫.] புனல்அரமங்கையர்-நீரர மகளிர் எனப்படுவர்; ஜலதேவதாஸ்திரீகள். அரமங்கையர் - அமரமங்கை யர் அல்லது அரம்பைமங்கையர் என்பதன் விகாரம். புளினம் - வடசொல். இப்பாட்டில் 'ஒருபால்' என்றது ஒருபொருளிலே பலவிடத்து வந்தது, சொற்பொருட்பின்வருநிலையணி. (௩௩)

[கண்ணன் தேர்க்குதிரைகளை நீர்பருகுவித்தல்.]

தலமாமகளுந்தித்தடநிகரானதடங்கண்
டுலமாறுகொளிருதோள்வலியுடைவள்ளலுரைப்பக்
குலமாமணியனையான்விரைதேர்நின்றெதிர்குதியா
வலமானதுரங்கங்களைவள்வார்விசிநெகிழா.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) தலம் ஆம் மகள் - பூமியாகிய பெண்ணினது, உந்தி தடம் நிகர் ஆன - நாபியினிடத்துக்கு ஒப்பான, தடம் - அக்குளத்தை, கண்டு - பார்த்து, உலம் மாறு கொள் இரு தோள் வலி உடை வள்ளல்-திரண்டகல் தூணோடு (தமக்கு ஒப்பாகா தென்று) பகைமைகொள்கிற இரண்டுதோள் களின் வலிமையையுடைய வரையாதருளுந்தன்மையுடையவனான அருச்சு னன், உரைப்ப - சொல்ல,—மா குலம் மணி அனையான் - பெரிய சிறந்த சாதி நீலரத்தினம் போன்றவனான கண்ணன், விரை தேர் நின்று எதிர் குதியா - வேகமாகச்செல்லுமியல்பினதான தனதுதேரினின்று முன்னே குதித்து, வலம் ஆன துரங்கங்களை - வலிமையுடையனவான குதிரைகளை, வள் வார் விசி நெகிழா - தோற்கயிற்றாலாகிய கட்டுக்களை யவிழவிட்டு, (எ - று.)— 'வாரிபருக்கி' என அடுத்தகவியோடு தொடரும்.

உரைப்ப - இங்ஙனம் தனது அம்பின்திறத்தால் நீர்நிலையை யுண்டாக் கியவுடனே அருச்சுனன் கண்ணனைநோக்கி 'இனித் தேர்க்குதிரைகட்கு நீரூட்டி இளைப்பாற்றலாம்' என்று சொல்ல என்க. உலகத்தில் உப மானமாய்ப் பிரசித்தமாகவழங்குகிற குளத்தை உபமேயமாகவும், உபமேய மாய்ப் பிரசித்தமாகவழங்குகிற நாபியை உபமானமாகவும் மாற்றிக் கூறினது,எதிர்நிலையணி; வடநூலார் 'ப்ரதீபாலங்காரம்' என்பர். உந்திக்கு நீர்நிலை உவமையாதலை "வேயிருதோ ளாலுதர மிக்கவுந்தி நீர்ச்சுழியாம்" என்ற இரத்தினச்சுருக்கத்தாலும் அறிக; "பொங்கு சுழியென்னும் பூந் தடம்", "அகன்சுனையென்னுங் கொப்பூழ்" என்றார் பிறரும். தடாகத் துக்கு, உந்தி - வடிவுவமை. தலம் மா மகள் எனப் பிரித்து, சிறந்த பூமி தேவி யென்றலும் பொருந்தும். சிந்தாமணியில் "கற்பாடழித்த கனமா மணித்தூண்செய் தோளான்" என்றாற்போல, 'உலமாறுகொ ளிருதோள் வலியுடை வள்ளல்' என்றார், திரண்டுருண்டு பருத்த தூணோடு நெய்ப்புடைய வடிவிலும் வலிமையிலுங் கற்றூணினும்மேம்பட்ட தோள் என்க. குதிரை கட்கு நீர்வேண்டுமென்று கண்ணன் கூறியவுடனே ஒரு பெரிய நீர்நிலை யையுண்டாக்கிக் கொடுத்த சிறப்புத் தோன்ற, இங்கு 'வள்ளல்' என்றார். வள்ளல் - வண்மையை யுடையவன்; அல் - பெயர்விகுதி. கண்ணனுக்கு,

சிறந்தசாதிநீலமணி - நிறத்தில் உவமை. தேர்நின்று என்பதில், நின்று - ஐந்தாம்வேற்றுமைச் சொல்லுருபு: நீக்கப்பொருளது. குதியா, செகிழா - உடன்பாட்டு வினையெச்சம். (௧௪)

குவளைப்பரிமளமேவருகுளிர்வாரிபருக்கிப்
பவளத்துவர்வாயானிருபாதங்கைவிளக்கித்
தவளக்கிரியொருநாலெனமேன்மேலொளிதருபே
ரிவுளிக்குமிளைப்பாறவிளைப்பாறினனிப்பால்.

(இ - ள்.) குவளை - நீலோற்பலமலரினது, பரிமளம் - சுகந்தம், மேவரு - பொருந்திய, குளிர் வாரி - குளிர்ந்த (அக்குளத்தின்) நீரை, பருக்கி- (குதிரைகளைக்) குடிப்பித்து,—பவளம் துவர் வாயான் - பவழம்போலச் சிவந்த வாயையுடைய அக்கண்ணபிரான்தானும், இரு பாதம் கை விளக்கி- தனது இரண்டு திருவடிகளையும் திருக்கைகளையும் அலம்பிக்கொண்டு,— தவளம் கிரி ஒரு நால் என மேல் மேல் ஒளிதரு - வெண்ணிறமான நான்கு (வெள்ளி) மலைகள்போல மிகுதியாக விளங்குதல்பொருந்திய, பேர் இவுளிக்கும் - பெரிய குதிரைகட்கும், இளைப்பு ஆற - இளைப்புத் தணிய, இப்பால் - இப்பக்கத்தில், இளைப்பு ஆறினன் - (தானும்) சிரமந்தீர்த்துக் கொண்டனன்; (எ - று.)—'இவுளிக்குலம்' என்றும் பாடம்.

கண்ணன் குதிரைகளைநீர்குடிப்பித்துத் தானுங் கைகால்களைக் கழுவிக்கொண்டு அக்குதிரைகளினிளைப்பைத்தீர்த்துத் தானும் இளைப்பாறினனென்பதாம். திருமாலாகிய கண்ணபிரானுக்கு 'இளைப்பு' என்றது, அவதாரத்துக்குஏற்ற மாநுடபாவனையாற் கொண்டது. 'குவளைப்பரிமளமேவருகுளிர்வாரி' என்றதனால், அக்குளத்து நீலோற்பலமலர்களின் மிகுதியும் நறுமணச்சிறப்பும் விளங்கும். பேர் இவுளி - புகழ்பெற்ற குதிரை யெனினுமாம். சேனைகள் கைகலந்து போர்செய்யுமிடத்திற் பாண்டவர்பக்கத்தில் நிகழ்ந்த செய்கைகளை இதுவரையிற் கூறி, இனித் துரியோதனனுயர்பக்கத்தில் நடந்த செய்தியைக் கூறுவாராய், இப்பாட்டினிறுதியில் 'இப்பால்' என்றும், அடுத்த பாட்டின் முதலில் 'அப்பால்' என்றுங் கூறுகின்றார். பரிமளம், வாரி, பாதம், தவளம் - வடசொற்கள். பவளம் - ப்ரவாளம் என்ற வடசொல்லின் சிதைவு. பருக்கி-பருகு என்பதன் பிறவினை. மேவரு என்பதில்,வா என்ற துணைவினை வரு என விகாரப்பட்டது;மேவு என்றபகுதிஈறுதொக்கது. இனி, குவளைப்பரிமளமே வரு எனப்பிரித்து, நீலோற்பலமலர்களின் சுகந்தமே மிகுதியாகப் பொருந்திய என்றும் உரைக்கலாம்; ஏ - பிரிநிலை. குளிர் வாரி - வினைத்தொகை. வாய் இயல்பிற் சிவந்திருத்தல், உத்தமவிலக்கணம். இந்தவெள்ளைக்குதிரைகள், அக்கினிபகவானால் அளிக்கப்பட்டவை; இவற்றை யுடைமையால், அருச்சுனனுக்குச் சுவேதவாகநனென்று ஒருபெயர். (௧௫)

[அருச்சுனனுக்குத் தோற்ற வீரர்கள் துரியோதனனிடம் முறையிடுதல்.]

அப்பாலிவனுடனேபொருதனிலத்தெதிர்சருகோ
டொப்பாயுளம்வெருவெய்தியுடைந்தோடியுவீரர்
தப்பாரொருவருமின்றுசமரந்தனில்விசயன்
கைப்பாய்கணைபொரநேர்ந்தவர்கழன்மன்னவவென்றார்.

(இ - ள்.) இவனுடனே பொருது - இந்த அருச்சுனனோடு போர்செய்து, அனிலத்து எதிர் சருகோடு ஒப்பு ஆய் - காற்றின்முன் சேர்ந்த சருகோடு சமமாய் [காற்றிலகப்பட்ட சருகுபோல], உளம் வெருவு எய்தி உடைந்து ஓடிய - மனத்தில் அச்சமடைந்து உறுதிநிலைகெட்டுப் புறங்கொடுத்தோடின, வீரர் - வீரர்கள்,—அப்பால் - எதிர்ப்பக்கத்தில்,—(துரியோதனனைச் சேர்ந்து அவனை நோக்கி), 'கழல் மன்னவ - வீரக்கழலையணிந்த

அரசனே! இன்று - இன்றைநாளில், அடு சமரத்தனில் - (பகைவரை) அழிக்குந்தன்மையதான கொடும்போரில், விசயன் கை பாய் கணை பொர - அருச்சுனனது கையினின்று விரைந்துவெளிவருகிற அம்புகள் தாக்குத லால், நேர்ந்தவர் ஒருவரும் தப்பார் - (அவனை) எதிர்த்தவருள் ஒருவரும் இறவாமல் உயிர்தப்பிப்பிழையார்,' என்றார் என்றுசொன்னார்கள்; (எ-று.)

அப்பால், வீரர் என்றார் என இயையும். இங்கு 'வீரர்' என்றது, இகழ்ச்சிக்குறிப்பு. அநிலம் - வடசொல். அனிலத்து எதிர் சருகு - அருச் சுனன்முன் வீரர்கள் எளிதில் அழிந்து ஓடுதற்கு உவமை. அனிலத்துஎதிர் - அத்துச்சாரியைநிற்க வேற்றுமையுருபு தொக்கது. வெருவு - அஞ்சுதல்; முதனிலைத்தொழிற்பெயர். இன்று - இகரச்சுட்டடியாப்பிறந்து காலத்தைக் குறித்து ஏழாம்வேற்றுமைப்பொருள்படநின்ற இடைச்சொல். அடுசமரம் - வினைத்தொகை. கழல் - வீரர்கள் தமதுவீரத்துக்கு அறிகுறியாகக் காலில் அணிவதோர் ஆபரணம். 'பொர நேர்ந்தனர்' என்றும் பாடமுண்டு. (௩௬)

[துரியோதனன் துரோணனை யடுத்துக் குறைகூறுதல்.]

துரியோதனனவர்சொல்லியசொற்றன்செவிசுடவே
யரியோடெதிர்பொரவஞ்சியவடல்வாரணமனையா
னெரியோடியபுரியென்னவிளைத்தாரணவேள்விப்
பெரியோனடியெய்திச்சிறுமையினலிவைபேசும்.

(இ-ள்.) அவர் - அந்தவீரர்கள், சொல்லிய - அவ்வாறுசொன்ன, சொல் - பேச்சு, தன் செவி சுடவே - தனது காதுகளை வருத்துதலாலே,—அரியோடு எதிர் பொர அஞ்சிய அடல் வாரணம் அனையான் துரியோதனன் - சிங்கத்தோடு எதிர்நின்று போர்செய்தற்குப் பயந்த வலிமையையுடைய யானையைப் போன்றவனாகிய துரியோதனன்,—எரி ஓடிய புரி என்ன இளைத்து - தீமிகுதியாகப்பற்றிய நகரம்போலச் சோர்ந்து,—ஆரணம் வேள்வி பெரியோன் அடி எய்தி - வேதவிதிப்படி யாகங்கள்செய்துள்ள பெரியோனான துரோணாசாரியனது பாதங்களைச் சேர்ந்து,—சிறுமையினால் - (தன்சேனையினது) எளிமைகாரணமாக, இவை பேசும் - இவ்வார்த்தை களைச் சொல்வான்; (எ-று.)—அவற்றை அடுத்த மூன்றுகவிகளிற் காண்க.

தன்பக்கத்தவர் இங்ஙனம் அருச்சுனன்முன் வலிகுறைந்து பரிபவப் படுதற்குப் பரிகாரஞ்செய்யவேண்டி அத்தன்மையைக்குறித்துப் பேசுவ னென்பார், 'சிறுமையினா லிவைபேசும்' எனறார். சிறுமையினால் - மனக் குறையினால்; அன்றி, துரோணனுக்குக் கீழ்மைதோன்றும்படி பேசுவ னெனினுமாம். துர்யோதநன் என்ற வடமொழிப்பெயர் - (பகைவர்க்குக்) கொடிய போரை யுடையவ னென்று பொருள்படும்; அன்றி, கெட்ட [அநீதியாகச்செய்கிற] போருடையா னென்று காரணப்பொருள் கொள்ளு தலும் ஒன்று. இரண்டாம் அடியால், துரியோதனன் பதினாயிரம்யானை பலங்கொண்டவனாயினும் பராக்கிரமக்குறைவினால் அருச்சுனனையெதிர்த் துப்போர்செய்தற்குஅஞ்சும்இயல்புடையா னென்ற தன்மையை விளக் கினார். புரீ என்ற வடசொல், புரியென ஈறு இகரமாயிற்று. மிகத்தீப்பற் றிய நகரம், மிகப்பொலிவழிதற்கு உவமம். எரியோடியபுரி - அநுமானால் எங்கும் தீப்பற்றவைக்கப்பட்ட இலங்கையென்னவுமாம். 'எரி யோடிய புரி யென்ன' என்பதற்கு - நெருப்புப்பற்றிய வைக்கோற்புரிபோல வென்று உரைத்தலும் அமையும். பெரியோன் - அறிவொழுக்கங்களினாலும் பிரா யத்தாலும் பெரியவன்; ஞானவ்ருத்தன், சீலவ்ருத்தன், வயோவ்ருத்தன்: பலவகைப் பெருமையை யுடையவன். அனையான் பேசும் - செய்யுமென் முற்று ஆண்பாலிற் சென்றது; [நன் வினை - உக.]

இனி, 'எரியோடியபுரியென்ன' என்பதற்கு - சிவபரானால் தீப்பற்றி யெரிந்த முப்புரம்போல வென்றும் உரைக்கலாம். அவ்வரலாறு வருமாறு:— தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி தாரகாட்சன் கமலாட்சன் என்னும் மூவரும் மிக்க தவஞ்செய்து மயனென்பவனால் சுவர்க்க மத்திய பாதாள மென்ற மூன்றிடங்களிலும் முறையே பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களால் அரண்வகுக்கப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந் தன்மையுடைய மூன்றுபட்டணங்களைப் பெற்று, மற்றும்பல அசுரர்களோடு அக்நகரங்களுடனே தாம்நினைத்த இடங்களிற் பறந்துசென்று பலஇடங்களையும் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால், சிவபெருமான், பூமியைத் தேராகவும், சந்திரசூரியரைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்து அக்கினியைமுனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிற போர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு யுத்தசன்னத்தனாய்ச்சென்று போர்செய்யயத்தனித்துப் புன்சிரிப்புச்செய்து திருமாலாகியஅம்பையெய்து அவ்வசுரரைவரையும் பட்டணங்களோடு எரித்தருளின னென்பது. (௬௭)

[இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்; துரியோதனன் துரோணனைநோக்கிக் கூறிய வார்த்தை.]

அதிரேகவிறற்பற்குனனம்போடெதிரம்பிட்
டெதிரேறியவயமன்னரிலெம்மன்னர்பிழைத்தார்
கதிரேகிடுமுன் றுச்சளைகணவன் றலைகடிதிற்
பிதிரே றுவதல்லாததுபிழைப்பிப்பவரிலரால்.

(இ - ள்.) அதிரேகம் - மிகமேம்பட்ட, விறல் - பலபராக்கிரமங்களையுடைய, பற்குனன் - அருச்சுனனது, அம்போடு - அம்புகளுடன் மாறாக, எதிர் அம்பு இட்டு - எதிரம்புதொடுத்துக்கொண்டு, எதிர் ஏறிய - அவனெதிரிலே எதிர்த்துச்சென்ற, வய மன்னரில் - வலிமையுடைய அரசர்களில், எ மன்னர் பிழைத்தார்-எந்த அரசர் அழியாமற்பிழைத்தார்? [எவருமில்லையென்றபடி]; (இங்ஙனம் ஆகுதலால்), கதிர் ஏகிடுமுன் - சூரியன்மறைந்து செல்வதற்கு [அஸ்தமித்தற்கு] முன்னே, துச்சளை கணவன் தலை - (எமது தங்கையான) துச்சளையின் கொழுநனாகிய சயத்திரதனது தலை, கடிதின் - விரைவிலே, பிதிர் ஏறுவது அல்லாது - (அருச்சுனன்செய்தசபதத்தின்படி அவனாற்) சிதறிப்பொடிபடுவதல்லாமல், அது பிழைப்பிப்பவர் இலர் - அங்ஙனமாகுதலைத் தவறச்செய்யவல்லவர் எவருமில்லை; (எ - று.)— ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

எமது உடன்பிறந்தவளான துச்சளை மங்கலநாணிழவாதபடி அவள் கணவனான சயத்திரதனை உயிர்காத்தல் அதியவசிய மென்பது தோன்ற 'துச்சளைகணவன்' என்றும், இதுவரையிலும் அருச்சுனனையெதிர்த்தவர்களில் யாரும் அழியாதுபிழைத்திலராதலால் இனியும் அவ்வாறேயாமென்பது தோன்ற 'பிழைப்பிப்பவரிலர்' என்றுங் கூறினான். எதிர் ஏறிய - எதிரில் மிக்குச்சென்ற. கதிர் என்ற கிரணத்தின் பெயர் - சினையாகுபெயராய், சூரியனைக் குறிக்கும். பிதிரேறுதல் - பொடியாய்எழுதல்; (துண்டுபட்டுப்) புழுதிபடியக் கீழ்விழுதல் எனினுமாம். அதுபிழைப்பிப்பவர் - சயத்திரதனை இறவாமல் தப்பியுயிர்பிழைக்கச்செய்பவர் என்றபடி. கடிது-கடுமை யென்னும் பண்பினடியாய்ப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புமுற்றெச்ச வினையுரி; இன் - சாரியை.
(௬௮)

காணுதவிடத்தாண்மையுறக்கூறுவர்கண்டா
லேணுடமர்முனைதன்னிலிமைப்போதெதிரில்லார்
நாணுதுமுன்வென்னிட்டிடுநஞ்சேனையடங்கச்
சேணுடுறுமின்றேயொருசெயல்கண்டிலமையா.

(இ - ள்.) (நம்சேனைவீரர்), காணுத இடத்து - (அருச்சுனனைக்) காணுத இடத்திலே [அருச்சுனனில்லாத இடத்தில் என்றபடி], ஆண்மை - (அவனைத் தாம்தாம் வெல்வதாகப்) பராக்கிரமவார்த்தைகளை, உற கூறுவர் - மிகுதியாகச் சொல்வார்கள்; (அங்ஙனஞ்சொல்பவர்கள்), கண்டால் - (அவனை எதிர்வரப்) பார்த்தால், எண் ஆடு அமர் முனைதன்னில் - வலிமையாற் செய்யும் போர்க்கு உரிய களத்தில், இமை போது எதிர் நில்லார் - ஒருமாத்திரைப் பொழுதேனும் எதிர்த்துநிற்கமாட்டார்கள்; (இங்ஙனம் ஆகுதலால்), நம் சேனை அடங்க - நமது சேனைமுழுவதும், நாணுது - வெட்கமில்லாமல், முன் - (அவனது) முன்னிலையில், வென் இட்டிடும் - முதுகுகொடுத்தோடு கின்றன; (அங்ஙனம் ஓடவே), இன்றே சேண் நாடு உறும் - (சயத்திரதன்) இன்றைக்கே (அருச்சுனனாற் கொல்லப்பட்டுச்) சுவர்க்கலோகஞ் சேர்வான்; ஐயா - ஸ்வாமீ! ஒரு செயல் கண்டிலம் - (இதற்குப்பரிகாரமாக) ஒருசெய்கையையுங் கண்டோமில்லை; (எ - று.)

இப்பாட்டின் முன்னிரண்டடிகளை "சொல்லுதல் யார்க்கு மெளிய அரியவாம், சொல்லிய வண்ணஞ் செயல்" என்றாற்போலக் கொள்க. உற - மிகுதியுணர்த்துகிற 'உறு' என்ற உரிச்சொல்லினடியாப் பிறந்த செயவெனெச்சம். இமைப்போது - இயற்கையில் ஒருமுறை கண்இமைத்தற்கு வேண்டும் பொழுது; இதனையடுத்து இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. சந்தர்ப்பம் நோக்கி, 'சேணுடுறும்' என்பதற்கு - 'சயத்திரதன்' என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது; அன்றி, முதுகுகொடுக்குஞ்சேனை அருச்சுனனாற் கொல்லப்பட்டு இறந்திடு மென்றல் சிறவாமை காண்க. சேண்நாடு - வானத்திலுள்ள உலகம்; வீரசுவர்க்கம். இன்றே, ஏ - பிரிநிலையோடு, தேற்றம். கண்டிலம் - துரோணனைக்கூட்டியஉளப்பாட்டுத்தன்மைப்பன்மை; ["அம்ஆம் என்பன முன்னிலையாரையும், .. .தன்னொடு படுக்குந் தன்மைப்பன்மை".] (௰௧)

குனிநாணுடைவரிவிற்படைவிசயற்கெதிர்குறுகித்
தனிநானவனுயிர்கொள்ளுதறவிர்கிற்குதலல்லான்
முனிநாயகவேறோர்விரகில்லைத்திருமுன்னே
யினிநாடியடும்போர்விரைவொடுகாணுதியென்றான்.

(இ - ள்.) முனி நாயக - முனிவர்கட்குத் தலைவனே! குனி - வளைக்கப்பட்டதும், நாண் உடை - நாணியை யுடையது மாகிய, வரி வில் படை - கட்டமைந்த (காண்டீவ) வில்லாகிய ஆயுதத்தையுடைய, விசயற்கு எதிர் - அருச்சுனனுக்கு எதிரிலே, நான் —, தனி - தனியே, குறுகி - சமீபித்து (ப் போர்செய்து), அவன் உயிர் கொள்ளுதல் - அவனது உயிரைக் கவர்தல், (அல்லது), தவிர்கிற்குதல் - (அவனால்) இறந்தொழிதல், அல்லால் - என்னும் இவையே யல்லாமல், வேறு ஓர் விரகு இல்லை - (இப்பொழுதுசெய்யத்தக்கது) வேறொருபாய மில்லை; (ஆகையால்), திரு முன்னே - உனது எதிரிலே, இனி - இனிமேல், நாடி - (நான்) முன்சென்று, அடும் - பகையழிக்கத் தொடங்கிச் செய்யப்போகிற, போர் - போரை, விரைவொடு காணுதி - விரைவிற் பார்ப்பாய், என்றான் - என்று (துரியோதனன் துரோணனைநோக்கிக்) கூறினான்; (எ - று.)

சிறந்தவில்வீரனான அருச்சுனனை எதிர்த்துநின்று கொல்பவனைப் பார்ப்பவர் எவருமில்லை யாதலால், இனி நானே தனியே அவன்முன் சென்று

பொருது அவனைக் கொல்லுதலாவது அவனாற் கொல்லப்படுதலாவது வேண்டும்: அவ்வாறு இப்பொழுது உனது கண்முன்னே நான் விரைந்து சென்று தொடங்கும் போரைக் காண்பாய் என்றான்; இதனால், சேனைத் தலைவனாகிய நீ அரசனாகிய நானே சென்று பொரும்படி விட்டுப் பகை யழித்தலில் உபேக்ஷைசெய்துள்ளா யென்று நிட்டூரமாகக் கூறியவாறும்: நீ நன்குபொருது பகையழித்திடாது பராமுகஞ்செய்தனை யாயினும், யான் பகையழித்தற்குப் பொருதொழில் செய்தலைக் காணுதலையாவது செய்வாய் என்றதாகக் கொள்க.

தவிர்கிற்குதல் என்ற தொழிற்பெயரில், தவிர் - பகுதி, தல் - விகுதி, கில் - ஆற்றலுணர்த்தும்இடைநிலை, கு - சாரியை, லகரம் றகரமானது - சந்தி. முநி என்ற வடமொழிக்கு-(கடவுளை எப்பொழுதும்)தியானஞ்செய் பவன் அல்லது திரிகாலஞானமுடையவன்என்று பொருள்;இனி,(எல்லாப் பற்றுக்களையும்) முனிந்தவன் [வெறுத்துவிட்டவன்] ஆதலால் முனி என்று தமிழ்வகையாற் காரணப்பொருள் கூறலாகாது, வடசொல்திரிபாதலின். திருமுன்னே - உனது சந்நிதானத்திலே; இது - துரியோதனனது குரு பக்தியைக் காட்டுதலோடு, இகழ்ச்சிக்குறிப்பாயும் நிற்கும். 'முன்' என்ற இடைச்சொல் - முன்னிடத்தை யுணர்த்திப் பெயர்ச்சொல்தன்மைப்பட் டதனால், 'திரு' என்றது - அதனை விசேடித்தது.'இனி'-எதிர்காலங்குறிப்ப தோர் இடைச்சொல். (சு0)

[இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர் : அதற்குத் துரோணன் கூறும் உத்தரம்.]

முனியுந்தரணிபனொடுசின்மொழிநன்கினுரைக்குந்
துனிகொண்டுளமழியாதொழிதுணிவுற்றனைமுதலே
யினியஞ்சியிளைத்தெண்ணிடுமெண்ணந்தகவன்றா
லனிகங்களழிந்தாலுநின்னாண்மைக்கழிவுண்டோ.

(இ - ள்.) (இங்ஙனந்துரியோதனன்சொன்னவற்றைக் கேட்டு), முனியும் - துரோணாசாரியனும், தரணிபனொடு - (துரியோதன) ராசனுடனே, சில் மொழி - சிலவார்த்தைகளை, நன்கின் உரைக்கும் - நன்றாகச் சொல்வான்:—(நீ), முதலே - முன்னமே, துனி கொண்டு உளம் அழியாது-(பகைவர்க்கு) அச்சங்கொண்டு மனஞ்சோர்த லில்லாமல், ஒழி துணிவு உற்றனை-(அதற்கு மாறான துணிவை யடைந்தாய்; இனி - இப்பொழுது, அஞ்சி - (பகைக்குப்) பயந்து, இளைத்து - மெலிந்து, எண்ணிடும் - சிந்திக்கிற, எண்ணம் - சிந்தனை, தகவு அன்று - தகுதியுடையதன்று; ஆல் - ஆதலால்,— அனிகங்கள் அழிந்தாலும் - (உனது) சேனைகள் அழிவடைந்தாலும், நின் ஆண்மைக்கு அழிவு உண்டோ - உனது பராக்கிரமத்துக்கு அழிவு உண்டாகலாமோ? (எ - று.)

இப்பாட்டில், இரண்டாம்அடி முதல் சுஉ - ஆம் பாட்டில் மூன்றாம் அடி வரையில் துரோணன்வார்த்தை.

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின், எண்ணுவ மென்பது இழுக்கு" என்றபடி நீ முன்னமே பகைவரது வல்லமையைக் கருதிச் சினந் தணிந்து சமாதானப்படாமல் உயிர்போவதானாலும் இராச்சியங்கொடுப்ப தில்லையென்று கடுந்துணிபுகொண்டாய்; அங்ஙனந்துணிந்து போர்தொடங்கிவிட்டபின்பு அஞ்சுதலிலும் சோர்தலிலும் சிந்தித்தலிலும் பயனென்னை? சேனையழிந்தாலும் உனது தைரியங் குறையலாகாது என்றனன் என்க. இப்படி அவனதுகுற்றம் அவனுக்கு நெஞ்சிலுறைக்கும்படி பேசினமையற்றி, 'சில்மொழி நன்கினுரைக்கும்' என்றார். இரண்டாம்அடிக்கு— முதலே துணிவுற்றனை - (போரேசெய்வதாக) முன்னமே துணிவுகொண்

டாய்; துனி கொண்டு உளம் அழியாதொழி - (இப்பொழுது) அச்சங்கொண்டு மனமழியாதிருப்பாய் என்றும் உரைக்கலாம்; ஒழி-துணிவுணர்த்தும்: இதனை அமங்கலக்குறிப்பாய்வந்ததென்னலாம்; முந்தினபொருளில் 'ஒழி துணிவுற்றனே' என்றதும் அது.

தரணிபன் - பூமியைப் பாதுகாப்பவன்; தரணி-பூமி. சில+மொழி= சின்மொழி; சில என்பது பிறிதுவரா அகரங்கெட்டு லகரம் னகரமாயிற்று; [நன் - உயிர் - உ0, மெய்-உச.] நன்கு-'கு' விகுதிபெற்ற பண்புப்பெயர்: இன் - சாரியை; இது, வினையுரியாய் நின்றது. அநீகம் - வடசொல். 'இனி' என்பது, இப்பொழுது என்னும் பொருளில் வந்தது. (சுக)

உரனுல்வருதேரொன் றினிலுற்றோரிருவரையு
நரநாரணரிவரென்பர்கண்ஞானத்தினுயர்ந்தோ
ரரனார்திருவருளான்முனையடல்வாளிகள்பலவும்
வரனுயர்மறையும்பிறர்மற்றார்நனிபெற்றார்.

(இ - ள்.) உரனுல் வரு - வலிமையோடு வருகிற, தேர் ஒன்றினில் - ஒரு தேரிலே, உற்றோர் இருவரையும் - பொருந்திய (அருச்சுனன் கிருஷ்ணன் என்ற) இருவரையும், ஞானத்தின் உயர்ந்தோர் - தத்துவஞானத்தாற் சிறந்த பெரியோர்கள், நர நாரணர் இவர் என்பர்கள் - 'நரனும் நாராயணனுமே இவர்கள்' என்று சொல்வார்கள்; (அன்றியும் அவ்விருவர்போல), அரனார் திரு அருளால் - சிவபிரானது சிறந்த கருணையினால், முனை அடல் வாளிகள் பலவும் - போரிற் பகையழித்தற்குஉரிய அம்புகள்பலவற்றையும், வரனுல் உயர் மறையும் - வரமாகச் சிறந்த மந்திரங்களையும், பிறர் ஆர் நனி பெற்றார் - வேறு எவர் மிகுதியாகப் பெற்றவர்? [எவருமில்லை யென்றபடி.]

முன்னொருகாலத்திலே குருசிஷ்யக்கிரமத்தை உலகத்தில் அனைவர்க்கும் விளக்கும்பொருட்டு நரனென்னும் சிஷ்யனும் நாராயணனென்னுங் குருவுமாகப் பதரிகாச்சிரமத்தில் தோன்றிச் சீடனுக்குக் குரு தத்துவப் பொருள்களை உபதேசிப்பதாக வீற்றிருக்கின்ற திருமாலின் இருமூர்த்திகள் தாமே இங்கு முறையே அருச்சுனனுங் கண்ணனு மாக அவதரித்ததனால், நர நாரண ரிவரென்பர். இங்கும் அருச்சுனனைச் சிஷ்யனாக்கிக் கண்ணன் குருவாய் நின்று கீதையுபதேசித்துத் தத்துவம் விளக்கியருளியமை காண்க. கண்ணபிரான் தானே அருச்சுனனைநோக்கி "உன்னை யான் பிரிவதில்லை யொருமுறைபிரிந்து மேனாள், நன்னிலாவெறிக்கும்பூணாய் நரனு நாரணனுமானோம்," "பின்னொரு பிறப்பின் யாமே யிராம லக்குமப் பேர் பெற்றோம், இந்நெடும்பிறப்பில் நீயும் யானுமா யீண்டு நின்றோம்" என்று அருளிச்செய்தமையும் அறிக. "நவையினற்றவம் புரிதரு நரனெனு நாமன், புவி வழுத்துசீ ரருச்சுன னெனப் புகுந்துதித்தான், எவரும் போற்று நாராயணனெனும்பெய ருறுவோன், கவின்விளங்கிய கண்ணனென் றுதித்தனன்மாதோ" என்பது பாகவதம். இதுபற்றியே, அருச்சுனனுக்கு 'நரன்' என்று ஒருபெயர். நாரணன் - நாராயண னென்பதன் விகாரம்; நார அயந எனப் பிரியும்; இயற்பெய ராதலால், வடமொழிவிதிப்படி நிலைமொழி ரகரத்தை நோக்கி வருமொழிநகரம் ணகரமாயிற்று. சிருஷ்டிப்பொருள்களுக்கெல்லாம் இருப்பிடமானவ னென்றும், சிருஷ்டிப்பொருள்களை இடமாகக்கொண்டவ னென்றும்,பிரளயப்பெருங்கடலைத் தங்குமிடமாகவுடையவ னென்றும், மற்றும்பலவாறாகவும் இத்திருநாமத்துக்குப் பொருளுரைப்பர்.

உரனுல் வரு தேர் - அக்கினிபகவானால் அளிக்கப்பட்ட அழியாவாற்றலுடைய அருந்தே ரென்றபடி. நர நாரணர் - பன்மைவிகுதிபெற்ற உயர்திணையும்மைத்தொகை. வரன் - ஈற்றுப்போலி. அருளாற் பெற்றா ரென இயையும். வரனுயர்மறை - மிகவிரும்பித் தவம்முதலிய பெருமுயற்சி

செய்து பெறப்படும் மந்திர மென்றபடி. 'மற்றூர்களிபெற்றூர்' என்றதில் பிராசங் கூர்க்க. மற்று - அசை; வினைமாற்றுமாம். (௬௨)

தவரோடவனின்றால்விதிதானுந்தரமல்ல
னெவரோமலையோடும்பொருதிருதோள்வலிபெற்று
ருவரோதநிறத்தோனவன்விரைதேர்தனியூர்வா
னவரோடினியமர்வெல்லுதலாராயினுமரிதால்.

(இ - ள்.) அவன் - அந்தஅருச்சுனன், தவரோடு நின்றால்-(காண்டீவ) வில்லுடன் எதிர்நின்றால், விதிதானும் தரம் அல்லன் - படைத்தற்கடவுளான பிரமனும் (அவனையெதிர்க்கத்) தகுதியுடையானல்லன்; மலையோடும் பொருது - மலையுடனே தாக்கிப்போர்செய்து, இரு தோள் வலி பெற்றூர் - தமது இரண்டுதோள்களின்வலிமையை அழியாமற்பெற்றவர்கள், எவரோ-யார்தாமோ? [எவருமில்லை யென்றபடி]; (அன்றியும்), அவன் விரை தேர் தனி ஊர்வான் - அவ்வருச்சுனனது விரைந்துசெல்லுந் தேரை ஒப்பில்லாதபடி செலுத்துபவன், உவர் ஓதம் நிறத்தோன் - உப்புச்சுவையையுடைய கருங்கடல் போலுந் திருநிறமுடையனுன திருமால்; (ஆதலால்), இனி - இப்பொழுது, அவரோடு அமர் வெல்லுதல் - அவ்விருவருடன் போர் செய்து சயித்தல், ஆர் ஆயினும் அரிது - யாவர்க்காயினும் அருமையானதேயாம்; (எ - று.)—ஆல் - அசை.

இனி, இரண்டாமடிக்கு - அக்கினிமலை வடிவமான சிவபிரானுடனே போர்செய்து அழியாத புயவலிமை பெற்றவர் (அருச்சுனனொழிய)வேறுயாரோ?என்றுபொருள்கொள்ளினுமாம்.தவர்-இடுகுறிப்பெயர்.விதி-வடசொல். விதிதானும் என்ற உயர்வுசிறப்பு உம்மை - அவரவர்அடையத்தக்க பயன்களை நியமிப்பவனும் விரும்பியபடி தொழில்செய்யவல்லவனுமான அவனது திறமையைக் காட்டும். 'இனி' என்பதற்கு - இங்ஙனமாதலால் என்றும் பொருள்கொள்ளலாம். அவர் - கிருஷ்ணர்ச்சுனர். 'நனி யூர்வான்' என்ற பாடத்துக்கு - நன்றாகச் செலுத்துபவ னென்க. (௬௩)

அதிகம்பகைதமரோடுறலாகாதெனவரசர்க்
கெதிரன்றவையிடையேவசையேதேதுபுகன்றாய்
விதுரன்றனதுளநொந்தடல்வில்லுந்துணிசெய்தான்
மதியின்றிறனறிவோர்மொழிவழிவந்திலைமன்னே.

(இ - ள்.) 'தமரோடு - நெருங்கிய உறவினருடன், அதிகம் பகை உறல் ஆகாது - மிகுதியாகப் பகைமைகொள்ளுதலாகாது,' என - என்று (விதுரன் நீதி) போதிக்க, அன்று - அச்சமயத்தில், அவையிடையே - சபைநடுவிலே, அரசர்க்கு எதிர் - பலஅரசர்கள்முன்னிலையில், ஏது ஏது வசை புகன்றாய் - (அவனைக்குறித்து) என்னஎன்ன நிந்தைமொழி கூறினாய்? [மிகப் பழித்தா யென்றபடி]: (அதனால்), விதுரன் - அவ்விதுரன், தனது உளம் நொந்து - தன்னுடைய மனம் வருந்தி, அடல் வில்லும் துணி செய்தான் - வலிமையையுடைய தன்வில்லையுந் துணித்துப் போகட்டான்; மதியின் திறன் அறிவோர் மொழி வழி வந்திலை - நல்லறிவின்வகைகளை யறிந்த பெரியோர் சொன்ன நல்வழியிலே(நீ)நடந்தாயில்லை;(எ-று.)—மன்,ஓ-ஈற்றசை.

கண்ணன் பாண்டவர்க்குத் தூதாய்வந்தமைபற்றி அவனையும், அவனுக்குத் தன் வீட்டில் இடங்கொடுத்து விருந்துசெய்து உபசரித்தமைபற்றியும் பாண்டவர்க்கு இராச்சியங்கொடுக்கும்படி பலவாறுநீதிபோதித்து வற்புறுத்தியமைபற்றியும் விதுரனையுந் துரியோதனன் பலவாறு இராசசபையில் தூஷிக்க, விதுரன் கடுங்கோபங்கொண்டு 'பாதகனுகிய உன்பொருட்டுப் போர்செய்யேன்; இத்தனைநாளாய் உன்சோற்றையுண்டமைபற்றி, உனக்கு எதிராகப் பாண்டவரோடு சேர்ந்தும் பொரேன்' என்றுசொல்லித் தனது

மிகச்சிறந்தவில்லை இரண்டு துண்டாக முறித்துப்போகட்டுவிட்டான். விது ரன் - "வெற்றி விதுரன்கை வில்லிருக்க மேதினியில், மற்றவனை வெற்றி கொள்ளுமாறுண்டோ" என்றபடி விற்போர்த்திறத்தில் மற்றையாவரினும் மிகவல்லவன்: இவனை யமதருமராசனது அம்சமென்றும், பரமபாகவதர் களி லொருவ னென்றும் நூல்கள் கூறும். இவன், அருச்சுனனையும் வீமனை யும் ஒருங்கேயெதிர்க்கும் வல்லமையுடையா னென்று மதிக்கப்படுவன். "விதுரனும் வெஞ்சொ லாற்றான் வில்லினை யொடித்து நின்றான், அதிரத னொ வன்றி யங்கர்கோ னமரில் வாரான், முதிர்படை விசயன் வீமன் மூண்டு அமர் புரியுங் காலை, எதிரினி நானு நீயு மல்லது இங்கு இலக்கு வேறார்" என்று எட்டாம்போர்நாளில் வீடுமன் இவன் போரில்வாராமை யைக்குறித்து இரங்கலாகக்கூறியதில் இவனைப்பற்றின நன்குமதிப்பு விளங் குதலுங் காண்க. பாரதயுத்தம்நடந்தசமயத்தில் இவன் பலராமனுடன் தீர்த்தயாத்திரை சென்றிட்டன னென அறிக. இவனைப்பற்றித் துரியோத னன் கூறிய பலவகைவசைகள்:—எனது இராச்சியத்தைக் கவர்ந்து எனது பகைவரான பாண்டவர்க்குக் கொடுத்தற்பொருட்டு அவர்கள் தூதனாய் வந்தவனும், ஆனதுபற்றி என் வீட்டில் நேரில்வந்து இறங்காதவனுமான கண்ணனுக்கும் அவனுடன்வந்த சேனைக்கும் இனிமையாக உண்ணும்படி உன்வீட்டில் நீ இடங்கொடுத்து நல்விருந்து செய்வித்ததனால், எனது அரசு நீங்குதலில் நீ மிக்கபிரியமுடையாய் என்றதும்: எனது சிறியதாதையும் இன்றளவும் என்சோறுண்டவனுமா யிருந்தும் என்னிடத்து அன்பில்லாது என்பகைவரிடத்து அன்புகொண்டு எனக்குத் துரோகஞ்செய்யுஞ் சிந்தனை யுள்ள நீ, வெளிப்படையான அப்பகைவரினும் மிகக்கொடிய உட்பகையா வாய் என்றதும்: என்னிடத்தில் இதுவரையில் மிக்கபொருள்பெற்றிருந்தும் அவரிடத்தும் இன்னுஞ் செல்வம்பெறலாமென்ற கருத்துப்பற்றி நீ இங் ஙனஞ்செய்தாய் என்றதும்: அங்ஙனஞ் செய்தது, ஒருவனிடத்து மிக்க செல்வம்பெற்றிருப்பினும் அதனோடு திருப்திப்படாமல் மேலுஞ்செல்வம் வேண்டிப் பிறனைச்சேரும் இயல்பையுடைய தாசியின் புத்திரனான உனக் குத் தகுதியே என்றதும் முதலியன. 'மதியின்திறனறிவோர் மொழிவழி வந்திலே' என்றது, பீஷ்மன் துரோணன் கிருபன் உலூகன் கண்ணன் முதலான நுண்ணறிவுடையோர் பலர் கூறிய நல்லறிவைச் சிறிதுங் கைப் பற்றி நடந்திலனாதலால்.

அதிகம், மதி - வடசொற்கள். பகை - பகைமை யென்னும் பண்பினடி. தமர் - தம்மவர்; கிளைப்பெயர்: தாம்-பகுதி, அர் - விகுதி. 'வில்லும்' என்ற உம்மையை - உளம்நோந்ததுமன்றி வில்லையுந் துணிசெய்தானென்ற கருத் துப்பற்றியாவது, தான் போர்க்கு உதவாமையோடு தனது வில்லாயினும் பிறர்க்கு உதவலாகாதபடி அதனையும் ஒடித்திட்டான் என்ற கருத்துப்பற்றி யாவது வந்த இறந்ததுதழுவிய எச்சவும்மை யென்றாயினும், வில்லின் சிறப் பை விளக்கும் உயர்வுசிறப்பும்மை யென்றாயினுங் கொள்க. (௯௪)

[பலகூறிய துரோணன் துரியோதனனுக்கு ஒருகவச மளித்தல்.]

மன்னாகவ மதியாவிறல் வயவன்றனை விசயன்
றன்னாலொரு பகலேயுயிர் தபுவித்திட லாமோ
மின்னார்வடி வேலாயிவை விதியின்செய லன்றோ
வென்னாவொரு கவசந்தனை யிவன்மெய்யினி லிட்டான்.

(இ - ள்.) (ஆயினும்), மன் ஆகவம் மதியா - பெரிய போரை ஒருபொரு ளாகக் கருதாத, விறல் - பராக்கிரமத்தையுடைய, வயவன்தனை - வீரனான சயத்திரதனை, விசயன்தன்னால் - அருச்சுனனால், ஒரு பகலே - இந்த ஒரு பகற்பொழுதினுள்ளே, உயிர் தபுவித்திடல் - உயிரழித்திடுதல், ஆமோ -

முடியுமோ? மின் ஆர் வடி வேலாய் - மின்னல்போன்ற ஒளிபொருந்தின கூர்மையான வேலாயுதத்தையுடையவனே! இவை விதியின் செயல் அன்றே - (அருச்சுனனாற் சயத்திரதன் இன்றைப்பகலே கொல்லப்படுதலும் படாமையு மாகிய) இவை ஊழ்வினைப்பயனல்லவோ? என்று - என்று சொல்லி, (துரோணன்), ஒரு கவசந்தனை - ஒருகவசத்தை, இவன் மெய்யினில் இட்டான் - இத்துரியோதனனுடம்பிலே பூட்டினான்; (எ - று.)

"பணிவுறு புண்ணிய பாவ முற்றுவ, துணிவுறத் தெரியுமோ தும்பை மாலையாய்", "முப்பது கடிகையின் மொழிந்த வஞ்சினந், தப்பதா படாதெனின் தனஞ்சயன் சிலைக்கு, ஒப்பதொன் றில்லை மற் றுரைத்தவா செயல், அப்பதுமாசனன் றனக்குமாகுமோ", "மல்வினால் மல்லரை மலைந்த மாலவட்,புல்லினானென்னினுஞ் சிந்துபூபனை, வில்லினால் வெல்லரிது" என்று இக்கருத்துப்படவே முந்தினநாளிரவிலும் துரோணன் துரியோதனன்முன்னிலையிற் கூறியவாறு காண்க. 'மன்னுகவமதியா விறல்' என்ற அடைமொழியால், சைந்தவனதுபோர்த்திறச்சிறப்பை வெளியிட்டபடி. முன்னிரண்டடி- துரியோதனனுக்கு ஒருவகைச்சமாதானமுண்டாதற்பொருட்டுக் கூறியது. தபுதல் - அழிதல்; "உப்பகார மொன்றெனை மொழிப, இருவயினிலையும் பொருட்டாகும்மே" என்ற தொல்காப்பியத்தால், புகரவீற்று முற்றுகரமொழி தமிழில் 'தபு' என்ற ஒன்றே யுள்ள தென்றும், அது தன்வினை பிறவினை யிரண்டுக்கும் பொது வென்றும் அறிக. விதியாவது - இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைகிற நியதி. அன்றே - தேற்றம். இவை அன்றே - 'உண்டு' என்ற உடன்பாடுபோல 'அன்று' என்ற எதிர்மறையும் ஐம்பால்மூவிடப் பொதுக்குறிப்புமுற் றாதலால், இம்முடிபு வழாநிலையேயாம். என்று - உடன்பாட்டெச்சம். 'தவிர்வித்திடலாமோ' என்றும், 'இனிவிதியின்செயலென்றே' என்றும், 'இவன்மேனியிலிட்டான்' என்றும் பாடங்க ளுண்டு. 'சயத்திரதனை அருச்சுனன் கொல்லலாகாதபடி பாதுகாக்க உறுதிகொண்டுள்ளோம்: ஆயினும், தெய்வச்செயல் வேறாயிருப்பின் யாம்என்செய்யலாம்' என்பார், 'இவைவிதியின்செயலன்றே' என்றானென்க. "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான் முந்துறும்" என்ற திருக்குறளினாலும், "வேண்டினும் வேண்டாவிடினு முறற்பால, தீண்டாவிடுதலரிது" என்ற நாலடியாரினாலும், விதியின்செயல் தவறாமையை யுணர்க. (கூ)

வேறு.

[துரோணன் துரியோதனனுக்கு அக்கவசத்தின் சிறப்பைக் கூறுதல்.]

பங்க யாசனன் வாசவற் களித்தது வாசவன் பயில்போரி,
லங்க ராவினுக் குதவிய தங்கரா வெனக்கரு ளியதிந்தத், தொங்
கன் மாமணிக் கவசமெவ் வீரருந் தொழத்தகு கழற்காலாய்,புங்க
வாளியிற் படைகளி லொன்றினும் பொன்றிடா திதுவென்றான்.

(இ - ள்.) 'எ வீரரும் - எல்லாவீரர்களும், தொழ தகு - வணங்கத்தக்க, கழல் காலாய் - வீரக்கழலையணிந்த பாதத்தையுடையவனே! தொங்கல் - (வெற்றி)மாலை தரித்தற்குஉரியதும், மா மணி - சிறந்த இரத்தினங்கள் பதித்ததுமான, இந்த கவசம்—, பங்கய ஆசனன் - (திருமாலின் நாபித்) தாமரைமலரை இருப்பிடமாகவுடையவனான பிரமன், வாசவற்கு - தேவேந்திரனுக்கு, அளித்தது - முன்பு கொடுத்தருளியது: (பின்பு), வாசவன் - அவ்விந்திரன், பயில் போரில் - இடைவிடாதுசெய்யும் போரின் முடிவில், அங்கராவினுக்கு உதவியது - அங்கிரசுக்குக் கொடுத்தது: (அதன்பின்பு), அங்கரா - அந்த அங்கிரசு, எனக்கு அருளியது - எனக்குக் கொடுத்தது: இது - இக்கவசம், புங்கம் வாளியில் - சிறந்த அம்புகளிலும், படைகளில் -

மற்றைஆயுதங்களிலும், ஒன்றிலும் - ஒன்றினாலும், பொளைப்படாது - அழி திடாது,' என்றான் - என்று (அக்கவசத்தின் வரன்முறையையும் [illegible] வலிமைச்சிறப்பையும் துரோணன் துரியோதனனுக்குக்) கூறினான்; (எ-று.)

பங்கஜாஸநன் - தீர்க்கசந்திபெற்ற வடமொழிப்பெயர். அங்கரா - அங்கிரா: என்னும்வடசொல்லின் திரிபு. அங்கிரஸ்என்பவன் - தேவகுருவான பிருகஸ்பதியின் தந்தை; இவனுக்குச் சித்திரசிகண்டி யென்றும் ஒரு பெயர் 'இந்த' என்பது - இகரச்சுட்டின் மரூஉ. தொங்கல் - தொழிலாகுபெயர் தொங்கல் - நீண்டுதொங்குதலையுடைய, கவச மென்றலும் ஒன்று: தொங்கல் என்று ஆபரணக்கடைப்பூட்டுக்கு ஒருபெய ரிருப்பதையும் அறிக. புங்கம் - அம்பின் அடியுமாம்.

முன்பு இந்திரன்முதலிய தேவர்கட்கும் விருத்திராசுரனுக்கும் நடந்த பெரும்போரில் அசுரனாற் சிதைவடைந்த தேவர்கள் திருமாலின்கட்டளைப் படி பிரமனுடன் மந்தரமலையையடைந்து சிவபிரானைச் சரணம்புக, அப் பெருமான் தனது மேனியினின்று தோன்றியதொரு சிறந்த கவசத்தை மந்திரபலத்துடனே அளித்தருள, எந்த ஆயுதத்தாலும் அழிக்கப்படாத அதனைத் தரித்துத் தேவேந்திரன் விருத்திரனை யெதிர்த்துப் பொருது கொன்றன னென்றும், அதன்பின் இந்திரன் அக்கவசத்தை அங்கிரசுக்குக் கொடுக்க, அங்கிரசு தன் குமாரனான பிருகஸ்பதிக்குத் தர, பிருகஸ்பதி அக்நிவேசயமுனிவனுக்கு அருள, அம்முனிவன் தன் மாணாக்கனான துரோணனுக்கு ஈந்தருளின னென்றும், முதனூலில் விவரங் கூறப்பட்டுள்ளது.

இதுமுதற் பத்துக்கவிகள் - இச்சருக்கத்தின் ௩௪ - ஆம் கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (௬௬)

[துரியோதனனும் மற்றும்பலரும் அருச்சுனனுடன் போர்க்குஎழுதல்.]

இட்டபொற்பெருங்கவசமோடெழுந்தனனிராசராசனுமுள்ள
பட்டவர்த்தனர்மகுடவர்த்தனர்களும்பலபடைஞருங்கூடி
யெட்டிபத்தின்வெஞ்செவிகளுஞ்செவிடுறப்பல்லியமெழுந்தார்ப்ப
முட்டவிட்டனர்தனஞ்சயனின்றமாமுனையில்வேன்முனையொப்பார்.

(இ - ள்.) இட்ட - (துரோணன்) பூட்டின, பொன் பெருங் கவசமோடு - பொன்மயமான பெரிய கவசத்துடனே, இராசராசனும் - அரசர் கட்குஅரசனான துரியோதனமகாராசனும், எழுந்தனன் - (போர்க்குப்) புறப்பட்டான்; வேல் முனை ஒப்பார்-வேலாயுதத்தின் நுனிபோலக் கொடிய வர்களாகிய, உள்ள - (அவன்சேனையில்) உள்ள, பட்டவர்த்தனர் - பட்ட வர்த்தனர்களும், மகுடவர்த்தனர்களும்—, பல படைஞரும் - மற்றும் பல சேனைவீரர்களும், கூடி - ஒருங்கு சேர்ந்து,—எட்டு இபத்தின் வெம் செவி களும் - எட்டுத் திக்கு யானைகளின் கொடிய காதுகளும், செவிடு உற - (மிக்கஒலியைக் கேட்டலாற்) செவிடாம்படி, பல் இயம் - பலவகைவாத்தி யங்கள், எழுந்து ஆர்ப்ப - மிக்கு ஒலிக்க,—தனஞ்சயன் நின்ற மா முனை யில்-அருச்சுனன் நின்றுள்ள பெரியபோர்க்களத்தினிடத்திலே, முட்ட விட்டனர் - சென்றுநெருங்கும்படி (தம்தம் வாகனங்களைச்) செலுத்தினார்கள்.

பலஅரசர்களை வென்று தலைமைபூண்டுநின்றதனால், 'ராஜராஜன்' என்று துரியோதனனுக்கு ஒருபெயர் பலபடைஞர் - மண்டலீகர், மந்திரி கள், தந்திரிகள்,சாமந்தர் முதலிய வகுப்பினர். படைஞர் என்றபெயர்க்கு- ஆயுதமுடையவரென்றாவது,சேனையுடையவரென்றாவது காரணப்பொருள் கொள்க; இதில், ஞ் - பெயரிடைநிலை. எட்டு யானைகள் - ஐராவதம், புண் டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப் பிரதீகம் என்பன; இவை - கிழக்குமுதலாக எட்டுத்திசைகளிலும் முறையே கீழ்நின்று பூமியைத் தாங்குவன: அஷ்ட திக்கஜ மெனப்படும். வெம் செவி கள் - எவ்வகை ஓசையைக் கேட்டாலும் நிலைகலங்காத காதுகள் என்ற

படி. எட்டுத்திக்குக்களின் இறுதியெல்லைகளிற் கீழிருந்து அவற்றைத்தாங்குகிற திக்குயானைகளின் செவிகளும் மிக்கவொலியதிர்ச்சியாற் புலனழிகின்றன எனவே, நிலவுலகத்து மற்றைய பிராணிகள் செவிபெடுதல் கூறவேண்டாதாயிற்று; இது, ஓசைமிகுதியை விளக்கவந்த அதிசயோக்தி. விட்டனரென்ற வினைமுற்றுக்கு ஏற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. 'வேல்முனையொப்பார்' என்றது, அவர்களது பகையழிக்குங்கூர்மையை விளக்கும்; வேல்முனைபோலக் கடுங்கொலைபுரிவா ரென்றபடி. (கஎ)

[கௌரவசேனை அருச்சுனதடாகத்தில் இளைப்பாறுதல்.]

சென்றசென்றவெஞ்சேனைகளிளைப்பறத்தெய்விகத்தினில்வந்த
மன்றலம்பெரும்பொய்கைநீர்பருகியப்பொய்கையின்வளநோக்கி
யென்றுமென்றுநாநுகர்புனலன்றுநல்லின்னமுதிதுவென்பார்
தென்றலந்தடஞ்சோலையிற்கரைதொறுஞ்சேர்ந்துதம்விடாய்தீர்வார்.

(இ - ள்.) சென்ற சென்ற - (இங்ஙனம்) மிகுதியாகப் புறப்பட்டுப் போன, வெம் சேனைகள் - கொடிய (துரியோதனனது)சேனையிலுள்ளார், இளைப்பு அற - தமது இளைப்புத் தணியும்படி, தெய்விகத்தினில் வந்த மன்றல் அம் பெரும் பொய்கை நீர் பருகி - (அருச்சுனன்எய்த அஸ்திரத்தினது) தெய்வதத்தன்மையா லுண்டான பரிமளமுள்ள அழகிய பெரிய தடாகத்தின் நீரைக் குடித்து, அ பொய்கையின் வளம் நோக்கி அக்குளத்தினது வளப்பத்தைப் பார்த்து, 'இது - இக்குளத்தின் நீர், என்றும் என்றும் நாம் நுகர் புனல் அன்று - இத்தனைகாலமாக நாள்தோறும் நாம் குடித்துவந்த நீர்போல்வதன்று: நல் இன் அமுது - சிறந்த இனிய அமிருதம் போல்வதாம்', என்பார் - என்று வியந்து சொல்வார்கள்; (மற்றும்), கரை தொறும் - (அத்தடாகத்தின்) கரைகளிலுள்ள, தென்றல் அம் தட சோலையில் - தென்றற்காற்றுஉலாவப்பெற்ற அழகிய பெரிய சோலைகளில், சேர்ந்து - தங்கி, தம் விடாய் தீர்வார் - தங்கள் தாபந் தணியப்பெறுவார்கள்; (எ - று.)

'சேனைகள்' என்பது - சொல்லால் அஃறிணையாயினும், இங்கு உயர்திணைப்பொருளின்மேலதாதலால், 'என்பார்','தீர்வார்' என்ற உயர்திணைப் பன்மைமுற்றுக்களைக் கொண்டது. 'சேனைகள் விடாய்தீர்வார்' என்ற முடிபு, "உயர்திணை தொடர்ந்த பொருள்முத லாறும்,அதனொடு சார்த்தின் அத்திணை முடிபின" என்றபடி வந்த திணைவழுவமைதி. தைவிகம் - வடசொல். "வண்டார் குவளைய வாவியும் பொய்கையும்" என்ற சிந்தாமணிச் செய்யுளின் உரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'பொய்கை - மானிடராக்காத நீர்நிலை' என்றது, இங்கு அறியத்தக்கது. நா நுகர் எனப் பதம் பிரித்து, நாவினாற் பருகுகிற என்று உரைத்தல், சிறப்பன்று. நுகர் - பொதுவினை. தென்றல் - தெற்கிலிருந்து வருவதெனக் காரணப்பெயர்; இதில், பகுதியாகிய தெற்கு என்பது, ஈறுகெட்டு றகரம் னகரமாய்,தென் என நின்றது; து - சாரியை, அல் - பெயர்விகுதி, சாரியையின் உகரம் கெட்டுத் தகரம் றகரமாத் திரிந்தது - சந்தி. நீர்க்குச் சுகந்தம், அதிலுள்ள பூக்களின் சம்பந்தத்தா லானது; முன்னும் "குவளைப்பரிமளமேவரு குளிர்வாரி" என்றார். (கஅ)

மத்தவாரணங்கொண்டுசெந்தாமரைவனங்கலக்குறுவிப்பார்
தத்துபாய்பரிகளும்புனலருத்துவார்தாமுநீர்படிகிற்பார்
கைத்தலங்களிலளியினமெழுப்பிமென்காவிநாண்மலர்கொய்வா
ரித்தலந்தனிலிம்மலர்ப்பரிமளமில்லையென்றணிகிற்பார்.

(இ - ள்.) (மற்றும் அத்துரியோதனசேனையார்), மத்தம் வாரணம்கொண்டு - (தங்கள் தங்கள்) மதயானைகளால், செ தாமரை வனம் - (அந்நீர்நிலையிலுள்ள) செந்தாமரைத்தொகுதியை, கலக்குறுவிப்பார் - கலக்குவிப்

பார்கள்; தந்து பாய் பரி - தாவி விரைந்துசெல்வனவான குதிரைகட்கு, நறும் புனல் அருத்துவார் - சுகந்தமுள்ள அக்குளத்தினீரைக் குடிப்பிப்பார்கள்; தாமும் நீர் படிகிற்பார் - தாங்களும் அந்நீரில் மூழ்குவார்கள்; கைத்தலங்களில் - கைகளினால், அளி இனம் எழுப்பி - (மிகுதியாக மொய்த்துள்ள) வண்டின்கூட்டங்களை ஓட்டிவிட்டு, மெல் காவி நாள் மலர் கொய்வார் - மென்மையான நீலோற்பலத்தின் அன்றுமலர்ந்த பூக்களைப் பறிப்பார்கள்; 'இ மலர் பரிமளம் - இந்தப்பூக்களுக்கு உள்ளவ்வளவு நறுமணம், இ தலந்தனில் - இவ்வுலகத்தில், இல்லை-(வேறுஎதற்கும்) இல்லை', என்று - என்று கொண்டாடி, அணிகிற்பார் - (அக்கருங்குவளைமலர்களைச்) சூட்டிக்கொள்வார்கள்; (எ - று.)

மத்தவாரணம் - வடமொழித்தொடர். அடர்ந்த தாமரைத்தொகுதியைத் தாமரைக்காடென்றல், மரபு. வநம், அளி, பரிமளம் - வடசொற்கள். அருத்து - அருந்து என்பதன் பிறவினை. எழுப்புதல்-எழுந்தோடச்செய்தல். தாமரைப்பொய்கையில் இறங்கிக் கலக்குதல், யானையின் இயல்பு. இவர்கள் தம்யானைகளை அவற்றின் விருப்பத்தின்படி அங்ஙனஞ் செய்வித்தது,அவை சோர்வுதீர்ந்து உற்சாகமடைதற்பொருட் டென்க. இச்செய்யுளின் பின்னிரண்டடிகளிலும், அக்குளத்திலுள்ள குவளைமலர்களின்சிறப்பு விளங்கும். கலக்குறுவிப்பார்—கலக்கு - கலங்கு என்பதன் பிறவினை: உறு-துணைவினை, வி - பிறவினைப்பகுதியின்மேல் வந்த பிறவினைவிகுதி. (௬௧)

[யாவரும் தன்னைச்சூழ்ந்ததை அருச்சுனன் காணுதல்.]

இன்னவாறுதம்மசைவொழிந்தியாவருமிபதுரகத்தோடு
மன்னவாவியைவளைத்தனர்கடல்வளையாழிமால்வரையென்னத்
துன்னுமாமணித்தேரினின்றிழிந்துதன்சுவேதமாநீரூட்டு
மன்னுவார்கழன்மகபதிமதலையவ்வருதினிக்கடல்கண்டான்.

(இ - ள்.) இன்ன ஆறு - இந்தப்படி, தம் அசைவு ஒழிந்து - தங்கள் இளைப்புத் தீர்ந்து, யாவரும் - துரியோதனசேனையாரெல்லாரும், இப துரகத்தோடும் - (அங்ஙனமேஇளைப்புத்தீர்ந்த) யானைகுதிரைகளுடனே, கடல் வளை மால் ஆழி வரை என்ன - சமுத்திரத்தைச்சூழ்ந்துள்ள பெரிய சக்கரவாளமலை போல, அன்ன வாவியை வளைத்தனர்-அந்தக்குளத்தைச் சூழ்ந்துகொண்டார்கள்; துன்னும் மா மணி தேரினின்று - நிறைந்த சிறந்த இரத்தினங்கள் பதித்த தனதுதேரிலிருந்து, இழிந்து - (அக்குளத்தில்) இறங்கி, தன் சுவேதம் மா நீர் ஊட்டும் - தனதுவெள்ளைக்குதிரைகளை நீர்பருகுவிக்கிற, மன்னு வார் கழல் மகபதி மதலை - பெருமை பொருந்திய நீண்ட வீரக்கழலையுடைய இந்திரகுமாரனான அருச்சுனன், அ வருதினி கடல் கண்டான் - அந்தச்சேனாசமுத்திரத்தைப் பார்த்தான்; (எ - று.)

'தன்சுவேதமாநீரூட்டும்' என்றது - ஏவுதற்கருத்தாவின் வினை:தனது சாரதியான கண்ணனைக்கொண்டு தேர்க்குதிரைகட்கு நீரூட்டுகிற என்று கருத்துக்கொள்க: இங்ஙனங் கொள்ளாவிடின், கீழ்வந்த ௫௫ - ஆங் கவியோடு மாறுகொளக்கூறலாம்.

இன்ன, அன்ன - சுட்டடியாப்பிறந்த குறிப்புப்பெயரெச்சங்கள்; ன் - சாரியை, மற்றொரு ன் - சந்தி. சக்கரவாளகிரி - பூமியைச் சூழ்ந்துள்ள கடலைச்சுற்றிக் கோட்டைமதில்போலச் சூழ்ந்திருப்ப தொரு பெருமலை; இது - இங்கே, துரியோதனசேனையாரனைவரும் அக்குளத்தை முற்றுகைசெய்தற்கு உவமை. இபதுரகம்-பன்மையீறுபெறாத அஃறிணையும்மைத்தொகை; வடமொழிப்புணர்ச்சியாதலின், வலிஇயல்பு. 'துரகம்' என்றது, அதனாற் செலுத்தப்படுகிற தேரையுங் குறிக்கும்; மேல் ௭௨ - ஆஞ் செய்யுளில்"தேரினுங் களிற்றினும் பரியினு நிரை நிரை தரங்கம்போற், சென்ற வீரர்" என்

பது காண்க. வாவி - வாபீ என்ற வடசொல்லின் திரிபு. ச்வேதம், வரூதிநீ - வடசொற்கள். ஊட்டு - உண் என்பதன் பிறவினை. மகபதி-யாகங்களுக்குத் தலைவன். வரூதினிக்கடல் - கடல்போன்ற சேனை என முன்பின்னாகத் தொக்க உவமைத்தொகையாகக் கொள்க.

வளைத்தன ரென்ற வினைமுற்றுக்கு, வளைக்க என வினையெச்சமாகப் பொருளுரைத்து, அதனை 'கண்டான்' என்ற முற்றோடு கூட்டி ஏகவாக்கியமாக்கியே உரைத்தல்வேண்டுமென்பது ஒருசாரார்கொள்கை; இதனை, இங்ஙனம் வருவனவற்றிற்கெல்லாங் கொள்க. (எ0)

[அருச்சுனன் தேரில் ஏறமலே அவர்களுடன் போர்செய்யத் துணிதல்.]

கண்டபோதுமுன்காண்டவமழித்தவன்கடவுள்வாவியினன்னீ
ருண்டவாசியைத்தேருடன்பிணித்துவில்லோரிமைப்பினில்வாங்கி
வண்டுழாய்மதுமாலையாய்வளைந்துமேல்வருவரூதினிதன்னை
யண்டரூர்புகவிடுத்தபின்றேரின்மேலாகுமாறருளென்றான்.

(இ - ள்.) கண்ட போது - (அந்தப்பகைவரது சேனைத்தொகுதியைப்) பார்த்தபொழுது,—முன் காண்டவம் அழித்தவன் - முன்பு காண்டவவனத்தை அழியச்செய்தவனான அருச்சுனன்,—(கண்ணனைநோக்கி),—'வள் துழாய் மது மாலையாய்-செழிப்பானதிருத்துழாயினாலாகிய தேனையுடைய மாலையை யுடையவனே! கடவுள் வாவியின் நல் நீர் உண்ட வாசியை தேருடன் பிணித்து-தெய்வத்தன்மையுள்ள இந்தக்குளத்தின் நல்ல நீரைக் குடித்த குதிரைகளை (நீ) தேரிலே கட்டிவிட்டு,—வில் வாங்கி - (நான்) வில்லை வளைத்து, வளைந்து மேல் வரு வரூதினிதன்னை-சூழ்ந்து (நம்மேல்) நெருங்கி வருகிற இச்சேனையை, ஓர் இமைப்பினில் - ஒருமாத்திரைப்பொழுதினுள்ளே, அண்டர் ஊர் புக விடுத்த பின் - வீரசுவர்க்கஞ்சேரும்படி (கொன்று) செலுத்தியபின்பு, தேரின்மேல் ஆகும் ஆறு - (நாம்) தேரின்மேல் ஏறும்படி, அருள் - கருணைசெய்வாய்,' என்றான் - என்று சொன்னான்.

அருச்சுனன் கண்டபொழுது, பகைவர்சேனைகள் சுற்றிலும் மிகுதியாக நெருங்கி யிருந்ததனால், இனித் தேரிற் குதிரைகளைப் பூட்டிச் சித்தஞ் செய்து அதன்மீது ஏறிப் போர்செய்யத் தொடங்குமளவினுள் அவை மேன்மேலும் மிக்கு நெருங்கிவிடு மென்பதுபற்றி அங்ஙனஞ்செய்யாமற் கீழ்நின்றவாறே பொருது அவற்றைத் தொலைத்துப் பின்பு தேரிலேற நினைத்து, கண்ணனுக்கு அக்கருத்தைத் தெரிவித்து, குதிரைகளைத் தேரிலொருசார்கட்டிவிடச்சொல்லித் தான் அநுமதிபெற்றா னென்பதும், அதற்குள் தேரைச் சித்தஞ்செய்யுமாறு கண்ணனுக்குக் குறிப்பித்தன னென்பதும் இதில் தோன்றும்.

இந்திரப்பிரத்தநகரத்தைச்சார்ந்ததொருபூஞ்சோலையிற் கிருஷ்ணனும் அருச்சுனனும் உல்லாசமாக வசித்திருக்கையில் ஒருநாள் அக்கினிபகவான் அந்தணவடிவங்கொண்டு வந்து, 'எனக்கு மிகப்பசிக்கின்றது: உணவிடுக' என்று வேண்ட, அவ்விருவரும் 'நீ வேண்டியபடி உணவிடுவோம்' என்று வாக்குதத்தஞ்செய்ய, உடனே தீக்கடவுள் நிஜரூபங்கொண்டு 'இந்திரனது காவற்காடாய் யாவர்க்கும் அழிக்கவொண்ணாதபடி நிலவுலகத்திலிருக்கின்ற காண்டவவனத்தை அதிலுள்ள சராசரங்களுடனே எனக்கு விருந்திடவேண்டும்' என்ன, கிருஷ்ணஅருச்சுனர்கள் அங்கேபுக்கு ஒதுங்கியிருக்கின்ற அசுரர் முதலிய துஷ்டர்களை அழித்தருளவேண்டுமென்னும் நோக்கத்தால் 'நீ இதனைப் புசி' என்று இசைந்துஅளிக்க, உடனே நெருப்புப் பற்றியெரித்த தென்பது, கீழ் ஆதிபருவத்துக் கூறிய கதை. அங்ஙனம் எரிக்கையில், இந்திரன் சினந்து பெய்வித்த பெருமழையைச் சரக்கூடுகட்டித் தடுத்தும், கோபித்துத் தேவர்கூட்டத்துடன் வந்து பொருத இந்திரனைப் புறங்கொடுத்தோடச்செய்தும், அவ்வனத்தினின்று தப்பியோடுகிற பிராணிகளை அம்

பெய்து கொன்று தழலில் விழுத்தியும் பலவாறு உதவிபுரிந்தமையால், அருச்சுனன் 'காண்டவமழித்தவன்' எனப்பட்டான்.

'பிணித்து' என்பது - 'அருள்' என்னும் ஏவலொருமைமுற்றோடும், 'வில்வாங்கி,' 'ஓரிமைப்பினில்' என்றவை - 'விடுத்தபின்' என்பதனோடும், 'கண்டபோது,' 'முன்காண்டவமழித்தவன்' என்பவை - 'என்றான்' என்னும் முற்றோடும் இயையும். இமைப்பு - இமைப்பொழுது: 'பு' விகுதிபெற்ற தொழிலாகுபெயர். அண்டம் - வானம்: அதிலுள்ளார், அண்டர்; தேவர், கொன்றபின் என்ற பொருளை 'அண்டரூர்புகவிடுத்தபின்' என வேறுவகையாற்கூறியது, பிறிதினவிற்சியணி. காண்டவம், மது - வடசொற்கள். மாலையாய் - மாலையான் என்றதன் ஈறுதிரிந்த விளி. முன் - காலமுன்; இராசசூய யாகஞ்செய்தற்குமுன் பென்க. (எக)

[அருச்சுனன் அவ்வீரர்பலரை அழித்தல்.]

கன்றுசிந்தையன்கோபவெங்கனல்பொழிகண்ணினன்காலாளாய்
நின்றுதேரினுங்களிற்றினும்பரியினுநிரைநிரைதரங்கம்போற்
சென்றவீரரைத்தனித்தனிசரத்தினாற்சிதையுடற்குன்றாகக் [றான்.
கொன்றுகொன்றுசூழ்வரக்குவித்தனன்மணிக்குன்றுதானெனநின்

(இ - ள்.) (என்றுசொல்லிப் பின்பு அருச்சுனன்), கன்று சிந்தையன் - கொதித்த மனமுடையவனும், கோபம் வெம் கனல் பொழி கண்ணினன் - வெவ்வியகோபாக்கினியைச சொரிகிற கண்களையுடையவனுமாய், காலாள் ஆய் நின்று - (தேரிலேறாமலே) பதாதியாகக் கீழேநின்றுகொண்டு,—தேரினும் - தேர்களிலும், களிற்றினும் - யானைகளின்மேலும், பரியினும் - குதிரைகளின்மேலும், நிரை நிரை - வரிசைவரிசையாக, தரங்கம் போல் - அலைகள்போல, சென்ற - (மேன்மேல்) வந்த, வீரரை - வீரர்களை, தனி தனி - தனியேதனியே, சரத்தினால் - (அவர்கள்மேலெய்த) அம்புகளினால், கொன்று கொன்று - மிகுதியாகக்கொன்று, சிதை உடல் குன்று ஆக - நொருங்கின (அவர்களுடைய) உடம்புகள் மலைகள்போலத் திரளும்படி, சூழ்வர குவித்தனன் - சுற்றிலும் குவித்து, மணி குன்று தான் என நின்றான் - நீலரத்தினமலையொன்றுபோலத் தான் (இடையிலே) நின்றிட்டான்; (எ-று.)

கோபம், தரங்கம் - வடசொற்கள். அலையுவமை - ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ச்சியாய் அணியணியாக மேல்மேல் வருதற்கு. சிதையுடல் - வினைத்தொகை. மேன்மையானதோற்றத்தோடு சலியாமல் எதிர்நிற்றற்கு, குன்று உவமை; அருச்சுனன் நீலநிறமுடையவனாதலால், நீலமலையை உவமைகூறினார். சிந்தையன், கண்ணினன் - குறிப்புமுற்று வினையெச்சம்; [நன்-வினை - ௩௨.] பரியினுஞ் சென்ற என இயையும். (எ௨)

[கிருபன் முதலியோர் அருச்சுனனோடு பொருதல்.]

தலைவனாமுனிகிருபனுங்கிருதனுந்துரகதத்தாமாவு
மலைவுறாமனத்தரசருஞ்சேனையுமுனைந்தணியணியாகச்
சிலைவலானெதிர்மிசைபடத்தேர்மிசைவிசையுறச்சிலைவாங்கி
வலையவாகுவின்வலியெலாங்காட்டினார்வரங்கொள்வாளிகள்வல்லார்.

(இ - ள்.) (பின்பு),—வரம் கொள் - மேன்மையைக்கொண்ட, வாளிகள் - அம்புகளைத் தொடுத்தலில், வல்லார் - வல்லவர்களாகிய, தலைவன் ஆம் முனி கிருபனும் - சிறந்தஅந்தணனாகிய கிருபாசாரியனும், கிருதனும் - கிருதவர்மாவும், துரகதத்தாமாவும் - அசுவத்தாமனும், அலைவு உறா மனத்து அரசரும் - கலக்கமடையாத மனத்தையுடைய பலஅரசர்களும், சேனையும் - அவர்கள்சேனைவீரர்களும், முனைந்து - ஊக்கங்கொண்டு, அணி அணி ஆக - வரிசை வரிசையாக, சிலை வலான் எதிர் - வில்வில்வல்லவனான அருச்சுனனுடைய எதிரிலே, தேர்மிசை - தேர்களின்மேல் (வந்துநின்று), மிசை

பட - அவன்மேலே (அம்புகள்)படும்படி, விசை உற - வேகமாக, சிலை வாங்கி - (தம்தம்) வில்லை வளைத்து, வலையம் வாகுவின் வலி எலாம் காட்டினர்-வளையையணிந்த தங்கள் தோள்களின் வலிமைமுழுவதையும் வெளிக்காட்டினார்கள்; (எ - று.)

தங்களாலியன்றவளவும் கொடிய விற்போரைச் செய்தன ரென்பதாம். கிருபன் - கௌதமமுனிவனது பௌத்திரன்: சரத்வாந் என்ற முனிவனது குமாரன்; துரோணன்மனைவியான கிருபியின் உடன்பிறந்தவன்; கௌரவ பாண்டவரது முதல்வில்லாசிரியன்: சமரதவீர னிவன். நாணற்காட்டிற் பிறந்திருந்த இவனையும் இவன்தங்கையையும் அங்கு வேட்டையாடவந்த சந்தநுமகாராசன் பார்த்துக் கிருபையினால் எடுத்துவளர்த்ததனால், இவர்கட்கு முறையே கிருபனென்றும், கிருபியென்றும் பெயர்கள் ஆயின. பிறகு ஒருகால் அந்தச் சரத்வானென்ற முனிவன் அத்திநபுரிக்குவந்து தன்மகனைகிருபனுக்கு வில்வித்தைமுழுவதையுங் கற்பித்துக்கொடுத்துச் சென்றன னாதலால், கிருபன் சிறந்தவில்லாசிரியனாய் அங்கு விளங்கின னென்று அறிக. கௌதமகுலத்தார் ஆதியில் க்ஷத்திரியசம்பந்தமுடையரானமைபற்றி க்ஷத்திரியத்தன்மையோடுகூடின பிராமணர்களா யிருந்தார்களாதலின்,வில் முதலிய படைக்கலங்கட்கு உரியராயினர். துரகதம், அசுவம் என்பன-குதிரையாகிய ஒருபொருளைக் குறிப்பன வாதலால், அசுவத்தாமாவை 'துரகதத்தாமா' என்றார்; பரித்தாமா, புரவித்தாமா, இவுளித்தாமா என்றுங் கூறுவர். துரோணன்மனைவியாகிய கிருபியின் வடிவழகைக் கேள்வியுற்றும் ஒருகால் கண்டும் மிகக்காமுற்ற சிவபிரானது அருளினாற் குதிரையினிடம் பிறந்தவ னிவ னென்று வரலாறு அறிக. அசுவத்தாம னென்பதற்கு - குதிரையைப் பிறப்பிடமாக வுடையவ னென்று பொருள். இவன், துரோணனாலும், துரோணன்மனைவியான கிருபியினாலும் வளர்க்கப்பட்டவன்; அதிரதவீரனிவன். மலைவுறு எனப் பிரித்து உரைத்தல், மோனைத்தொடைக்குப் பொருந்தாது. வலயம் என்ற வடசொல் - போலியால், வலைய மென நின்றது; [நன் - எழுத்து - கூஅ.] வரங் கொள் வாளிகள் - (தேவர்களிடத்தினின்று) வரமாகப்பெற்ற அஸ்திரங்களுமாம். (எஙு)

[அந்தணபேரோடும் அருச்சுனனொருத்தன் பொருதல்.]

கைதவன்குலக்கன்னிகேள்வனுமொருகணைக்கொருகணையாக
வெய்துவெங்கணையாவையும்விலக்கிமேலிரண்டுநாலெட்டம்பால்
வெய்தினேமியந்தேரொடுகொடிகளும்வில்லும்வாசியும்வீழக்
கொய்துகொய்துபல்பவுரிவந்தனன்விறற்குன்றவில்லியொடொப்பான்.

(இ - ள்.) (அப்பொழுது), விறல் குன்றம் வில்லியொடு ஒப்பான்-வலிமையையுடைய மேருமலையை வில்லாகவுடையனான சிவபிரானோடு ஒப்பவனாகிய, கைதவன் குலம் கன்னி கேள்வனும் - பாண்டியனுடையகுலத்திலே பிறந்த (சித்திராங்கதையென்ற) பெண்ணுக்குக் கணவனான அருச்சுனனும், ஒரு கணைக்கு ஒரு கணை ஆக எய்து - (அப்பகைவர்கள் தன்மேல் தொடுத்த) அம்புஒவ்வொன்றுக்கும் ஒவ்வொன்றாக எதிரம்புதொடுத்து, வெம் கணையாவையும் விலக்கி - கொடிய அவர்களம்புகளையெல்லாம் (தன்மேற்படாதபடி) இடையிலே தடுத்திட்டு,—மேல் - பின்பு,—இரண்டு நால் எட்டு அம்பால் - சிலசில அம்புகளினால், வெய்தின் - விரைவிலே, நேமி அம் தேரொடு - சக்கரவலிமையுள்ள அழகிய (அவர்களுடைய) தேர்களும், கொடிகளும் - தேர்த்துவசங்களும், வில்லும் - விற்களும், வாசியும் - குதிரைகளும், வீழ - (துணிபட்டு) விழும்படி, கொய்து கொய்து - மிகுதியாகத்துணித்து, பல் பவுரி வந்தனன் - பலமுறை தான் சுழன்றுகொண்டு நின்றான்; (எ - று.)

அருச்சுனனொருவனைக் கிருபன்முதலிய பலர் ஒருங்குசூழ்ந்து அம்பு தொடுத்துப் பொருதபோது, அருச்சுனன் தான் சுழன்றுகொண்டே

பாணப்பிரயோகஞ்செய்து அவர்களனைவருடையஅம்புகளையுந் தடுத்து மற்றும் அவர்களுடைய தேர் குதிரை வில் முதலியவற்றையுந் துணித்தன னென்பதாம். பவுரி - தன்னிலே தான் சுற்றுதல். "இவர் பெருந்தேரின் மேலோனொருவனே யிலக்கதாகத், தவருடன் குனித்தனேக சாயகந் தொடுத்த காலைக், கவுரிபங்காளன்றன்னைக் கண்ணுறக் கண்ட காளை, பவுரிவந் தொன்றுந் தன்மேற்படாமல் வெம்பகழி கோத்தான்" எனக் கீழ் நிரைமீட்சிச்சருக்கத்தில் வந்தசெய்யுள்,இங்கு ஒப்புநோக்கத்தக்கது. வெய்தின்-கொடுமையாக எனினுமாம்.

'கைதவன்குலக்கன்னிகேள்வன்'என்ற விவரம், கதைத்தொடர்ச்சியில் விளக்கப்பட்டது. கன்னி - கந்யா என்ற வடசொல்லின் திரிபு; கலியாணமாகாத இளம்பெண் என்று பொருள். 'இரண்டொரலெட்டம்பு' என்ற தொடரைப் பண்புத்தொகையாகவும் உம்மைத்தொகையாகவும் கொண்டு விகற்பித்தால், அறுபத்துநாலென்றும் நாற்பத்தெட்டென்றும் இருபத்துநாலென்றும் பதினாலென்றும் பலவாறு பொருள்படும். குன்றம், அம் - சாரியை. சிவபிரான் மகாமேருமலையை வில்லாகக்கொண்டது, திரிபுரசங்காரகாலத்தி லென்க. 'குன்றவில்லி' என்ற பெயரினால்,கல்லை வில்லாக வளைத்து அதுகொண்டு தொழில்செய்யவல்லவனெனச் சிவபிரானது மிக்க திறமை விளங்கும். வில்லி என்ற பெயரில், இ - ஆண்பாற்பெயர்விகுதி. அருச்சுனனுக்குச் சிவபிரானை உவமைகூறியது, தவறுதுபகையையழித்த விற் சங்காரக்கடவுளான உருத்திரமூர்த்தியைப் போன்றவ னென்று அவனது போர்த்திறமையை விளக்குதற்பொருட்டு. அருச்சுனன் குன்றவில்லியொ டொப்பவனாதல், அவன் பாசுபதம்பெறுங்காலத்திற் சிவபிரானோடு பொருது அப்பெருமானை விற்கழுந்தினால் முடியிலடித்ததனாலும் விளங்கும். கேள்வன் - அன்பையுடையவன்; கேண்மையென்னும் பண்பினடியாகப் பிறந்த பெயர்; வ் - பெயரிடைநிலை. (எஉ)

[பகைவரம்பு அருச்சுனன்மேலும், அருச்சுனனம்பு பகைவர் மேலும் வருதல்.]

தேரி னின்றவர் பாரினின் றவன்மிசை விடுகணைத் திரண்மின்னுக்
காரி னின்றுபா தலமுற வுரகமேற் கனன்றுவீழ் வனபோன்ற
பாரி னின்றவன் றேரினின் றவர்மிசை விடுகணை பாதாலத்
தூரி னின்றுரு மையும்விழுங் குவமென வுரகமே றுவபோன்ற.

(இ - ள்.) தேரில் நின்றவர் - தேர்களில் நின்ற கிருபன் முதலியோர், பாரில் நின்றவன்மிசை - (தேரில் ஏறாமல்) தரையில் நின்ற அருச்சுனன் மேல், விடு - பிரயோகித்த, கணை திரள் - அம்புகளின்தொகுதிகள்,—காரின்று-மேகங்களினின்று, பாதலம் உற-பாதாளலோகத்திலே பொருந்த, உரகம்மேல் - நாகங்களின்மேல், கனன்று வீழ்வன - கொதித்துக்கொண்டு விழுவனவாகிய, மின்னு - மின்னல்களை [இடிகளை], போன்ற - ஒத்தன;— பாரில் நின்றவன் - தரையில் நின்றவனான அருச்சுனன், தேரில் நின்றவர் மிசை - தேர்களில் நின்ற அவ்வெதிரிகளின்மேல், விடு - பிரயோகித்த, கணை - அம்புகள்,—உருமையும் விழுங்குவம் என - இடியையும் விழுங்கிவிடுவோமென்று, உரகம் - அந்நாகங்கள்,பாதாலத்து ஊரினின்று - அந்தப் பாதாளலோகத்திலிருந்து, ஏறுவ - மேலேறுவனவற்றை, போன்ற-ஒத்தன.

கார்காலத்துக் காளமேகங்களினின்று மின்னல்கள் நிலவுலகத்தின் கீழுள்ளநாகசாதிகள் அஞ்சியொடுங்கியமொறு அவற்றின்மேல் உக்கிரமாக இடிவடிவமாய் விழுவனபோல, கீழ்நின்ற அருச்சுன னஞ்சும்படி பயங்கரமாய் அவன்மேல் விழுந்திட்டன, தேர்மேல்நின்ற பகைவ ரெய்த கொடிய அம்புகள்; அவ்விடி தம்மேல் விழவருவதைக் கண்டு அவற்றைத் தாம் எதிர்

சென்று விழுங்கியழித்திடக்கருதி அந்நாகங்கள் பாதாளத்தினின்று மே லெழும்பிச் சென்றாற்போல, தேர்மேல் நின்ற அப்பகைவரது அம்புகளைத் தடுத்து அவர்கள்மீது உக்கிரமாய் விரைந்தெழுந்து மேற்சென்றன, கீழ் நின்ற அருச்சுனனெய்த கொடியஅம்புகள் என்பதாம்: தற்குறிப்பேற்றம். "விரிகிறநாகம் விடருளதேனும், உருமின்கடுஞ்சினஞ் சேணின்று முட் கும்" என்றதனாலும், வானத்தினின்று இடிவிழுதல் பாதாளத்திலுள்ள நாகங்கள் திடுக்கிடுதற்குக் காரணமாதல் காண்க. இடியையும் விழுங்கு வோ மென்று நாகமெழுதல் - இல்பொருளுவமை [அபூதோபமை]. மின் னலே இடியாதலால், 'மின்' என்றார்.

மின்னு, உ - சாரியை; [நன் - மெய் - கச.] காரினின்று, ஊரினின்று என்றவற்றில், நீக்கப்பொருளில் ஐந்தாம்வேற்றுமை 'இன்' உருபின்மேல் 'நின்று'என்பது சொல்லுருபாக வந்தது. வீழ்வன, எறுவ - பலவின்பாற் பெயர்கள். போன்ற - பலவின்பால்முற்று. பார் - பார்க்கப்படுவ தென்று வது, பருமையுடைய தென்றுவது காரணப்பொருள்; லோகம்,மஹீ என்ற வடமொழிப்பெயர்கள் முறையே இப்பொருள்படுதல் காண்க. பாதாலத்து ஊர் - பாதாலமாகிய ஊரென இருபெயரொட்டுப்பண்புத்தொகை. உரு மையும், உம் - உயர்வுசிறப்பு: உரும் - இடி; ஐ - இரண்டனுருபு. திரள் போன்ற என்றும், கணை போன்ற என்றும் இயையும். (எடு)

## வேறு.

[அருச்சுனன் பகைவரையழித்தபின்பு தேரேறுதல்.]

சேணி லத்தின்மிசை நின்றமர்தொ டங்கினவர் தேர்க ளிற்றன த றிந்தனநெ டுந்துவச,நாணி யற்றனவொ டிந்தனத டஞ்சிலையு நா க முற்றவரொ ழிந்தனரி ரிந்தனர்க, ணீணி லத்தினிடை நின்று சமர் வென்றவனு நேமி வச்ரமகு டம்புனைகொ டிஞ்சியுடை,யேணி லத்திவுளி முந்தமுனை யுந்திரத மேறி யிட்டனன்மு குந்தனுட னின்புறவே.

(இ - ள்.) சேண் நிலத்தின்மிசை நின்று - உயர்ந்த இடத்தின்மேல் [தேரின்மேல்] நின்று, அமர் தொடங்கினவர் - போர்தொடங்கின பகை வர்களுடைய, தேர்கள்—, இற்றன - முறிந்தன: நெடுந் துவசம் - நீண்ட கொடிகள், தறிந்தன - ஒடிந்தன; நாணி - வில்நாணிகள், அற்றன - அறு பட்டன; தட சிலையும் - பெரிய விற்களும், ஒடிந்தன - துண்டுபட்டன; நாகம் உற்றவர் ஒழிந்தனர் - (அப்பகைவர்களில் இறந்து) வீரசுவர்க்கஞ் சேர்ந்தவர்கள் நீங்கலானவர்கள், இரிந்தனர்கள் - அஞ்சியோடிப்போனார்கள்; நீள் நிலத்தினிடை நின்று - நீண்டதரையிடத்திலே நின்று, சமர் வென்ற வனும் - போரில்வெற்றிகொண்டவனான அருச்சுனனும்,—நேமி - சக்கரங் களையும், வச்ர மகுடம் புனை கொடிஞ்சி - வச்சிரரத்தினமயமான கலசத் தைக் கொண்ட சிகரத்தையும், உடை - உடையதும், ஏண் நிலத்து இவுளி முந்த முனை உந்து - வலிய போர்க்களத்தினிடத்திலே குதிரைகள் முற்பட உக்கிரமாகச் செலுத்துகின்றதுமான, இரதம் - (தனது) தேரின்மேல், முகுந்தனுடன் - கண்ணபிரானுடனே, இன்பு உற - இனிமையாக, ஏறியிட் டனன் - ஏறினன்; (எ - று.)

இங்ஙனம் பகைவர்பலர் தேரின்மீதும் அருச்சுனன் தரையிலுமாக நின்று தொடங்கிச் செய்த போரில் அருச்சுனனம்புகளாற் பகைவர்களு டைய தேர் முதலியன சின்னபின்னமாய் அவர்களிற் பலர் இறக்க, மற் றையோர் அஞ்சி நிலைகெட்டு முதுகிட்டு ஓட, அவ்வளவிலே, அருச்சுனன், கண்ணனாற் குதிரை பூட்டிச் சித்தஞ்செய்யப்பட்ட தனதுதேரின்மீது அப் பெருமானுடனே ஏறின னென்பதாம். கொடிஞ்சி - தேரின் மேலுறுப்பு;

இனி, 'வச்ரமகுடம்புனைகொடிஞ்சியுடை' என்பதற்கு - வச்சிரகலசத்தையும் அழகிய கொடிஞ்சியென்னும் உறுப்பையு முடைய என்றும் பொருள் கொள்ளலாம்; அப்பொழுது, கொடிஞ்சி யென்பது - தாமரைமலரின் வடிவமாகச் செய்து தேரின் முன்னிடத்து வைக்கப்படுவதோ ருறுப்பாம். உடை, உந்து என்ற இரண்டும்-இரதத்துக்கு அடைமொழி. த்வஜம், நாகம், நேமி, வஜ்ரம், மகுடம், ரதம், முகுந்தன் - வடசொற்கள். கம் - சுகம்; அது இல்லாதது - அகம் [ந+கம்]; அதாவது - அசுகம் [துக்கம்]: அது இல்லாத இடம் - நாகம் [ந+அகம்]; எனவே, துன்பமின்றி இன்பம்நிறைந்த இடமென்றதாம்: இரண்டு எதிர்மறை, உடன்பாட்டை யுணர்த்திற்று. சிலையும், உம்மை - இறந்தது தழுவிய எச்சம். பகைதணிந்ததனால், 'இன்புற எறியிட்டனன்' என்றார்.

இதுமுதற் பதினாறு கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் தேமாச்சீர்களும், மற்றையாறும் கூவிளங்காய்ச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தங்கள்.* (எசு)

[அப்பொழுது துரியோதனன் அருச்சுனனை எதிர்த்தல்.]

ஏறியிட்டவன்விரைந்திரதமுங்கடவி யேகலுற்றபினியம்பல
தழங்கியெழ, வேறுபட்டமருடைந்தவர்களுந்திருகி மேலிடச்சகு
னியுந்தினகரன்சுதனு,மாறியிட்டரதகுஞ்சரதுரங்கமமுமாகவிப்ப
டிபொரும்படையொடன்றுநனி, சூறியிட்டனன்வலம்புரியலங்கல்
புனை தோளிலெப்புவனமுந்தனிசுமந்தவனே.

(இ - ள்.) ஏறியிட்டவன் - (இங்ஙனந் தேர்மேல்)ஏறின அருச்சுனன், இரதமும் விரைந்து கடவி - அத்தேரையும் (கண்ணபிரானைக்கொண்டு) விரைவாகச்செலுத்தி, ஏகல் உற்ற பின் - மேற்சென்றவுடனே,— வலம்புரி அலங்கல் புனை தோளில் எ புவனமும் தனி சுமந்தவன் - நந்தியாவர்த்தப் பூமாலையை (அடையாளமாகத்) தரித்த தோள்களிலே பூமிமுழுவதையுந் தனியே தாங்கினவனாகிய துரியோதனன்,— பல இயம் தழங்கி எழ - பல வகைவாத்தியங்கள் மிக்குஒலிக்கவும்,— வேறுபட்டு அமர் உடைந்தவர்களும் திருகி மேல் இட - நிலைகலங்கிப் போரில்(முன்பு அருச்சுனன்முன்) தோற்றோடினவர்களும் திரும்பி முன்னிட்டுவரவும், சகுனியும் தினகரன்சுதனும் ஆறியிட்ட ரத குஞ்சர துரங்கமமும் ஆக - (மாமனாகிய) சகுனியும் சூரிய புத்திரனாகிய கர்ணனும் (தெய்வப்பொய்கையில் நீர்பருகி) இளைப்பாறின தேர்யானைகுதிரைகளுமாக, இப் படி பொரும் படையொடு - இவ்வாறு போர்செய்யவல்ல சேனையுடனே, அன்று - அப்பொழுது, நனி சூறியிட்டனன் - மிகவும் கோபாவேசங்கொண்டு வந்தான்; (எ - று.)

அருச்சுனன் பகையழித்துக் கண்ணனுடன் தேரேறி அப்பாற்செல்லுமளவிலே, முன்பு துரோணனிடம் அழியாக்கவசம்பெற்ற துரியோதனன், அதனாற் செருக்கி, சகுனியையும் கர்ணனையும் சேனைகளையும் உடன்கொண்டு,தோற்று மீள்கிற தன்பக்கத்து வீரர்களையும் தைரியப்படுத்தி உற்சாகமுண்டாக்கி மீளவும் போர்க்கு.எழச்செய்துகொண்டு, மிகஉக்கிரமாக அருச்சுனனை யெதிர்த்துவந்தனன் என்பதாம். 'சூறியிட்டனன்' என்பதற்கு - சுழல்காற்றுப்போலக் கொடியனாய்வந்தன னென்று பொருள்; சூறையென்பது சுழல்காற்றுதல் காண்க: சூறி யென்ற வினையெச்சத்தில், சூறு-பகுதி. இத்தனைநாளாய் இல்லாத உற்சாகத்தை அந்நாளில் அடைந்துவந்தன னென்பார், 'அன்று சூறியிட்டனன்' என்றார். 'தோளிலெப்புவனமுந் தனி சுமந்தவன்' என்பதற்கு - தோள்வலியாற் பகைவென்று பூலோகமுழுவ

* 'தான தத்ததன தந்ததன தந்ததன தான தத்ததன தந்ததன தந்ததன' என்பது, இவற்றிற்குச் சந்தக்குழிப்பாம்.

தையும் பொதுமைநீக்கித் தானே தனியரசாள்கின்றவ னென்று கருத்து: சுமத்தல் - தாங்குதல், காத்தல்; "பன்னகஞ்சுமந்த வைப் போர்த்தோளினிற் பரிக்கு மன்னர் மன்னன்", "அவனி சுமந்தன புயமும்" என இவ்வாறு கூறுதல், கவிகளியல்பு. துரியோதனன், ராஜராஜ னாதலால், இங்ஙனங் கூறப்பட்டான். சாரதியாகிய கண்ணன் தேர்செலுத்தியதை 'எறியிட்டவன் விரைந் திரதமுங்கடவி' என்று அருச்சுனன்மேல் ஏற்றிக்கூறியது, ஏவுதற் கருத்தாவின்வினை. தேர்க்குதிரைகள் இளைப்பாறியதை 'ஆறியிட்ட ரதம்' எனத் தேர்களின்மேல் ஏற்றிக்கூறினார்; இது, ஒருபொருளின்வினையை மற்றொருபொருளின்மே லேற்றிக்கூறின உபசாரவழக்கு.

திநகரன் - பகலைச்செய்பவன் என்று பொருள்படும் வடசொல்; திநம் - பகல். ஸூதன், புவநம் - வடசொற்கள். வேறுபட்டு - முன்பின்னாய் [புறங்கொடுத்து] எனினுமாம். மோனை நோக்குமிடத்து, மாறியிட்ட என எடுத்துஉரைக்க இயலாமை காண்க. ரத குஞ்சர துரங்கமம் - பன்மை விகுதிபெறாத அஃறிணையும்மைத்தொகை. (எஎ)

[அதுகண்டு அருச்சுனன் கண்ணனை வினவுதல்.]

யோதனத்திலிவனென்கணெதிரின்றளவும்யோசனைக்குமிடை
நின்றிலன்முனைந்துசமர், மோதுகைக்குநினைவுண்டுகொலெதிர்ந்து
மிகமோகரித்துவருகின்றதுதெரிந்ததிலை,யாதுபெற்றனனெடுஞ்சிலை
கொல்வெங்கணைகொலேதமற்றகவசங்கொலிரதங்கொலென, மாத
வற்கிடைவணங்கியிதுவென்கொலென வாசவக்கடவுண்மைந்தனு
ரைதந்தனனே.

(இ - ள்.) 'இன்று அளவும் - இன்றைத்தினம் வரையிலும், இவன் - இத்துரியோதனன், யோதனத்தில் - யுத்தத்திலே, என் கண் எதிர் - எனது கண்ணுக்குஎதிரிலே, யோசனைக்கும் இடை நின்றிலன் - யோசனைதூரத்தி னுள்ளும் நின்றானில்லை; (அப்படிப்பட்டவன் இப்பொழுது), எதிர்ந்து - (என்னை) எதிர்த்து, மிக மோகரித்து வருகின்றது - மிகவும் வீராவேசங் கொண்டுவருகிறசெயல், முனைந்து சமர் மோதுகைக்கு நினைவுஉண்டுகொல்- உக்கிரங்கொண்டு தாக்கிப் போர்செய்தற்கு எண்ணமுண்டானதனாலே யோ? (வேறு எதனாலேயோ?) தெரிந்தது இலை - தெரியவில்லை; (அன்றியும்), நெடுஞ் சிலைகொல் - சிறந்த வில்லையோ, வெங் கணைகொல் - கொடியஅம்பு களையோ, ஏதம் அற்ற கவசங்கொல் - அழிவில்லாத கவசத்தையோ, இரதங்கொல் - (அப்படிப்பட்ட) தேரையோ, யாது பெற்றனன் - (இவற்றில்) எதனைப் பெற்றானோ?' என - என்று எண்ணி, — வாசவன் கடவுள் மைந்தன்- தேவேந்திரனது குமாரனான அருச்சுனன், — மாதவற்கு இடை வணங்கி - கண்ணபிரானது முன்னிலையிலே தொழுது, — இது என்கொல் என உரை தந்தனன் - இது என்னகாரணத்தாலோ? என்று வினவினான்; (எ - று.)

அங்ஙனம் துரியோதனன் மிக்கயுத்தாவேசத்தோடு படையெழுந்து வந்ததனைக் கண்ட அருச்சுனன், 'இத்தனை நாளாய் என்முன் நெடுந்தூரத் தில் வந்து நிற்றற்கும் அஞ்சுபவனான இவன் இப்பொழுது இங்ஙனம் மிக்க உற்சாகத்தோடு எதிர்த்துப் போர்க்குவருகிறதற்குக் காரணம், தன்னா லியன்றவளவும் வலிமைகாட்டிக் கடுமையாகப் போர்செய்திடவேண்டு மென்ற எண்ணம்மாத்திரமோ? அன்றி, வேறுஏதேனும் உண்டோ? சிறந்த வில் அம்பு கவசம் தேர்களுள் யாதாயினுமொன்றைப் புதிதாகப் பெற்ற னனோ?' என்று சங்கித்து, கண்ணபிரானைத் தொழுது அதன்காரணத் தைக் கேட்டனன் என்பதாம். முனைந்து சமர்மோதுகைக்கும் நினைவுஉண்டு கொல் என்றுபிரித்து, இன்றைவரையிலும் போர்க்களத்தில் என்கண்ணெ திரில்நிற்கவும்மாட்டாத இத்துரியோதனனுக்கு இப்பொழுது முற்பட்டுப்

போர்செய்தற்கும் கருத்து உண்டாமோ? என்று உரைப்பினும் அமையும். மோகரித்து - ஆரவாரித்து எனினுமாம். ஈற்றடியில், மாதவன் இடை வணங்கி என்று பதம்பிரித்து, கண்ணபிரானைக் கிடத்தலால்[வீழ்ந்து] வணங்கியென்று உரைப்பாரு முளர்;ஸாஷ்டாங்கமாகநமஸ்கரித்தென்பது கருத்து. வருகின்றது - நிகழ்காலத்தொழிற்பெயர்; து - விகுதி, அ - சாரியை.

யோதநம், மாதவன்-வடசொற்கள். 'ஏதமற்ற' என்றதை, இரதத்துக்குங் கூட்டுக. கொல் என்ற இடைச்சொல்-இரண்டாம்அடியில் வினா: மூன்றாம்அடியில் ஐயம்: நான்காம்அடியில் அசை. மாதவன்—மா-இலக்குமிக்கு, தவன்-கணவன் என்று காரணப்பொருள். வாசவக்கடவுள் - இந்திரனாகிய தேவனென இருபெயரொட்டு; "சிலவிகாரமாமுயர்திணை" என்றதனால், நிலைமொழியுயர்திணைப்பெயரீறு கெட வருமொழிமுதல்வலி இரட்டிற்று. கடவுள் - (இவ்வுலகசம்பந்தத்தைக்) கடத்தலை யுடையவன்: தொழிலாகு பெயர்; உள் - தொழிற்பெயர்விகுதி: விக்குள்,விளையுள் என்றவற்றிற்போல. உரைதருதல் - பேச்சுக்கொடுத்தல். மாதவற்கு - உருபுமயக்கம். (எஅ)

[அதற்குக் கண்ணன் விடைகூறுதல்.]

ஈசனப்பொழுதுணர்ந்தருளிவென்றிவரி யேறுவிற்குரியபற்குனனுடன்பழைய, வாசவற்கயன்வழங்குகவசந்துவச மாசுணற்கருளினன்கலசசம்பவனு, மாசுகத்தினிலொழிந்தபலதுங்கமுனை யாயுதத்தினிலழிந்திடுவதன்றதனை, நீசெகுத்திடுதியென்றுதுரகங்களையு நேர்படக்கடவினன்கதிவிதம்படவே.

(இ - ள்.) ஈசன் - (யாவர்க்குந்)தலைவனான கண்ணபிரான்,—அப்பொழுது—, உணர்ந்தருளி - (நடந்தசெய்தியைத் தன துமுற்றுணர்வினால்) அறிந்து;—வென்றி வரி ஏறு விற்கு உரிய பற்குனனுடன் - வெற்றியைத்தருகிற கட்டமைந்த சிறந்த (காண்டீவ)வில்லுக்கு உரிய அருச்சுனனுடனே,— 'வாசவற்கு அயன் வழங்கு - தேவேந்திரனுக்குப் பிரமன் (முன்பு)கொடுத்த, பழைய கவசம் - பழமையான கவசத்தை, கலச சம்பவனும் - பாத்திரத்தினின்று தோன்றியவனான துரோணனும், துவசம் மாசுணற்கு - கொடியிற் பெரும்பாம்புவடிவமுடையவனான துரியோதனனுக்கு, அருளினன் - (இப்பொழுது) கொடுத்தான்; (அக்கவசம்), ஆசுகத்தினில் - அம்புகளினாலும், ஒழிந்த பல துங்கம் முனை ஆயுதத்தினில் - மற்றும் பலவகையான சிறந்த கூரிய படைக்கலங்களினாலும் ,அழிந்திடுவது அன்று - அழிவதன்று ; அதனை - அக்கவசத்தை, நீ—,செகுத்திடுதி - அழித்திடுவாய்', என்று - என்றுசொல்லி, துரகங்களையும் - (தேர்க்)குதிரைகளையும்,நேர் பட - துரியோதனனெதிரிலே செல்லும்படி, கதி விதம் பட - (பலவகை) நடைவிகற்பம் பொருந்த, கடவினன் - செலுத்தினான் ; (எ - று.)

முதலடியில் 'உணர்ந்தருளி,' 'பற்குனனுடன்' என்றவை - ஈற்றடியில் 'என்று'என்பதனைக் கொள்ளும்.ஏறுவில் - நாணேற்றுதற்குஉரிய வில்லென்றும், பேரிடிபோன்ற வில்லென்றும் பொருள்படும். கலசஸம்பவன் - வடமொழிப்பெயர் ; இது 'துரோணன்' என்ற பெயரின் பொருள் கொண்ட காரணக்குறி.இப்பெயரினால்,நூல்களில் அகஸ்தியமாமுனிவனையும் வசிஷ்டமாமுனிவனையும் வழங்குவது உண்டு. ஈசன் - ஸர்வேசுவரன்; இவ்வடசொல் - (எல்லா) ஐசுவரியமுமுடையவ னென்று காரணப்பொருள்பெறும். ஆசுகம் - விரைந்து செல்வது: வடசொல்; ஆசு - விரைவு. (எக)

[அருச்சுனன் பகைவர்களின்மேல் அம்புமழைபொழிதல்.]

கானகத்தினிடைமண்டியெரியங்கிதரு கார்முகத்தின்வலிகொண்டுமுனைவெஞ்சமரின்,மேனடக்குமவர்தங்கண்மகுடங்களினுமேருவொத்துயர்புயங்களினுமூந்தியினு, மானனத்திலுமுறைந்துருவ

வெம்பரிதி யாயிரக்கிரணமும்புடைபரந்ததென, வானகத்துவெளி
யின்றியணிபந்தரிடவாளிவிட்டனன்மனஞ்செய்துதனஞ்செயனே.

(இ - ள்.) (அப்பொழுது), — தனஞ்செயன் - அருச்சுனன்,—மனம் செய்து - (கண்ணபிரான்கூறியதை) மனத்திலே கொண்டு,—கானகத்தினிடை மண்டி எரி அங்கி தரு கார்முகத்தின் வலி கொண்டு - (காண்டவ) வனத்திற் பற்றியெரியும் அக்கினிபகவான் (தனக்குக்) கொடுத்த (காண்டீவ)வில்லின்வலிமையால்,— முனை வெம் சமரில் மேல் நடக்குமவர்தங்கள் மகுடங்களினும் - ஊக்கத்தோடுசெய்கிற கொடிய போரில் தன்மேல் எதிர்த்துவருகிற பகைவீரர்களுடைய கிரீடங்களிலும், மேரு ஒத்து உயர் புயங்களினும் - மேருமலையைப்போன்று உயர்ந்துள்ள தோள்களிலும், உந்தியினும் - நாபியிலும், ஆனனத்தினும் - முகத்திலும், நுழைந்து உருவ - தைத்து உட்புகுந்து அப்பாற்செல்லும்படி,—வெம் பரிதி ஆயிரம் கிரணமும் புடை பரந்தது என - உஷ்ணமான சூரியனது ஆயிரங்கிரணங்களும் எப்புறத்தும் பரவுதல் போல, வானகத்து வெளி இன்றி அணி பந்தர் இட - ஆகாயத்திலே வெற்றிடமில்லாமல் நெருங்கியபந்தலிட்டாற்போல இடைவிடாதுசென்று பரவும்படி, வாளி விட்டனன் - பாணங்களைப் பிரயோகித்தான்; (எ - று.)

அங்கி - அக்நி என்ற வடசொல்லின் சிதைவு. ஆநநம் - வடசொல். உருவ - ஊடுருவ. அம்புக்குச் சூரியகிரணம் - ஒளிகடுமைகளிலும், மிகுதியாய் ஒருங்கே எங்கும்பரவுதலிலும் உவமம். பந்தர் - இறுதிப்போலி. மனஞ்செய்து - ஊக்கங்கொண்டு என்றவாறுமாம். 'மனஞ்செய்து' என்றதனோடு **பிராசம்** அமைதற்கு, 'தனஞ்செயன்' என்று திரித்தார். (அ0)

[அருச்சுனனம்புகளினாற் பகைவர்சேனை சின்னபின்னப்படுதல்.]

நாதெறித்தனதுரங்கமநெடுஞ்சிலைகணாணியற்றனவுடைந்தன
தடந்திகிரி, பாதமற்றனமதங்கயவிதங்கள்பொரு பாகர்பட்டனர்ம
றிந்தனநெடுந்துவச, மோதுதற்கெதிர்முனைந்தவர்சிரங்கள்பொழி
மூளையிற்களமடங்கலுநெகிழ்ந்தரச, ராதபத்திரமழிந்தனவிவன்ற
னுட னாதரத்தொடுசரந்தொடவியைந்தவரே.

(இ - ள்.) (அருச்சுனனெய்த அம்புகளினால்),—துரங்கமம் - குதிரைகள், நா தெறித்தன - நாக்குத் தெறித்துவிழப்பெற்றன; நெடுஞ் சிலைகள் - நீண்ட விற்கள், நாணி அற்றன - நாணறுபட்டன; தட திகிரி - பெரிய தேர்ச்சக்கரங்கள், உடைந்தன - உடைபட்டன; மதங்கய விதங்கள்-யானை வருக்கங்கள், பாதம் அற்றன - கால்கள் அறுபட்டன; பொரு - போர்க்கு உரிய, பாகர் - யானைதேர்குதிரைகளைச் செலுத்துபவர்கள், பட்டனர் - இறந்தார்கள்; நெடுந் துவசம் - நீண்டகொடிகள், மறிந்தன - முறிந்துவிழுந்தன; மோதுதற்கு எதிர் முனைந்தவர் - தாக்கிப்போர்செய்தற்பொருட்டு அருச்சுனனெதிரில் உக்கிரமாக வந்தவர்களுடைய, சிரங்கள் - தலைகள், பொழி - (உடைபட்டு) வெளிச்சொரிந்த, மூளையின் - மூளைகளினால், களம் அடங்கலும் - போர்க்களம்முழுவதும், நெகிழ்ந்து-நெகிழ்ச்சிபெற,—இவன்றனுடன் ஆதரத்தொடு சரம் தொட இயைந்தவர் - இவ்வருச்சுனனுடன் ஊக்கத்தோடு அம்புதொடுக்கத் தொடங்கினவர்களான, அரசர் - பகையரசர்களது, ஆதபத்திரம் - குடைகள், அழிந்தன—; (எ - று.)

துரங்கமம் நாதெறித்தன, சிலைகள் நாணியற்றன, மதங்கயவிதங்கள் பாதமற்றன - அஃறிணைமுதலைத்தொடர்ந்த சினை அம்முதலின் வினையையே கொண்ட முடிபு. மதங்கஜவிதம் என்ற வடசொல்தொடர் திரிந்தது; மதங்கஜம் என்பதற்கு - மதங்கமுனிவனிடத்தினின்றும் (ஆதிகாலத்தில்) உண்டானதென்று காரணப்பொருள்; இனி, மதம் கயம் எனப் பிரித்து, மதம்பிடித்த யானைகளென்றலும் ஒன்று. பத்ரம் முந்த்ரம் ம்ருகம் என்றும்,

கிரிசரம் வகசரம் நதிசரம் என்றும் நூல்களிற் கூறப்படுகிற யானைவகை களைக் கருதி, 'மதங்கயவிதங்கள்' என்றார். பொரு பாகர்-வினைத்தொகை. மூளையின்நெகிழ்ந்து-மூளைப்பசையால் ஈரங்கொள்ளஎன்றபடி.'நெகிழ்ந்து' என்ற செய்தெனெச்சம், 'அழிந்தன' என்ற பிறகருத்தாவின்வினையைக் கொண்டுமுடிதற்கு ஏலா தாதலால், அதனைப் பிறகருத்தாவின்வினையையுங் கொண்டுமுடிதற்கு ஏற்ற செயவெனெச்சமாக 'நெகிழ' எனத் திரிக்க; [நன் - வினை - உடு, உஎ.] ஆதபத்ரம் என்ற வடசொல்—ஆதபம் - வெயிலி னின்று, த்ரம் - காப்பது என்று காரணப்பொருள்படும்; வெயிலைமறைத்து உதவுவ தென்று கருத்து. ஆதரம் - வடசொல். இவன்தனுடன் சரந்தொட இயைந்தவர் - அருச்சுனன்மேல் அம்புதொடுத்தற்குப் பொருந்தியவர்.'ஆர் தரத்தொடு' என்ற பாடத்துக்கு, இவ்வருச்சுனனோடு திறமையுடன் அம்பு தொடுத்தற்குப் பொருந்தினவர் யார்? [எவருமில்லை] எனப் பொதுப்பொ ருளாக வுரைக்க; இப்பாடம் சிறக்கும். (அக)

[அருச்சுனன்முன் சிறந்தபகைவீரர்பலர் தோற்றல்.]

ஆரமர்க்கண்மிகநொந்திரவிமைந்தனெடி தாகுலத்தொடுமிரிந் தனன்விரிந்தமணி, வார்கழற்சகுனியுந்துணைவருந்தமுகமாறியிட் டனர்மறிந்தனர்கலிங்கர்பலர்,சீருடைக்கிருதனுங்கிருபனும்பழைய சேதிவித்தகனுமஞ்சினரோடுங்கினர்கள், பூரிபட்டிலனெருங்கி யணிநின்றுபொருபூபர்பட்டனரொழிந்தவர்புறந்தரவே.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) ஆர் அமர்க்கண் - அருமையான அப்போரிலே,—இரவி மைந்தன் - சூரியகுமாரனான கர்ணன், மிக நொந்து - மிகவும் வருந்தி, நெடிது ஆகுலத்தொடும் - மிக்க கலக்கத்துடனே, இரிந்தனன் - தோற்று ஓடிப்போனான்; விரிந்த மணி - ஒளிவீசுகிற இரத்தினங்கள் பதித்த, வார் கழல் - நீண்ட வீரக்கழலையுடைய, சகுனியும்—, துணைவரும் - (அவனது) தம்பிமார்களும், தம் முகம் மாறியிட்டனர் - தமதுமுகம்மாறிப் புறங்கொ டுத்திட்டார்கள்; கலிங்கர் பலர் - கலிங்கதேசத்து அரசர் பலரும், மறிந் தனர் - தோற்றுத்திரும்பினார்கள்; சீர் உடை - சிறப்பையுடைய, கிருதனும்- கிருதவர்மாவும்,கிருபனும் - கிருபாசாரியனும், பழைய சேதி வித்தகனும் - பழமையான சேதிதேசத்து அரசனும், அஞ்சினர் ஒடுங்கினர்கள் - பயந்து ஒடுங்கினார்கள்; பூரி - பூரிசிரவாவென்பவன், பட்டிலன் - இறந்தானில்லை [உயிர்மாத்திரத்தோடு மீண்டா னென்றபடி]; நெருங்கி அணி நின்று பொரு பூபர் - நெருக்கங்கொண்டு படைவகுப்பிலே நின்று போர்செய்த அரசர்களில், பட்டனர் ஒழிந்தவர் - இறந்தவர்கள்போகச் சேடித்தவரெல் லாம், புறம் தர - முதுகுகொடுக்க, (எ - று.)—'தரணிமண்டலதுரந்தரன் முனைந்தனன்' [துரியோதனன் போர்செய்தான்] என, வருங்கவியோடு தொடரும்.

இரிந்தனன், முகம்மாறியிட்டனர், மறிந்தனர், அஞ்சினர் ஒடுங்கினர் கள்,பட்டிலன், புறந்தர என்ற பலசொற்களில் தோற்றுச்செல்லுத லென்ற ஒருபொருளே வந்தது,பொருட்பின்வருநிலையணி.ஆரமர்-பண்புத்தொகை; அருமை யென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு இடைஉகரமுங் கெட்டது; வினைத்தொகையாய், நிறைந்த போ ரெனினுமாம். ஆகுலம் - வடசொல். துணைவர் - துணையாய்நின்றவருமாம். முகம்மாறுதல் - எதிர் முகமாகநிற்றலையொழிதல். (கலிங்கத்துப்பரணியிற் கூறியவாறு) கலிங்க நாடு ஏழுவகைப்படுதலால், அந்நாடுகளின் அரசர் 'கலிங்கர்பலர்' எனப்பட் டனர். வீமசேனனை 'வீமன்' என்றல்போல, கிருதவர்மாவை 'கிருதன்' என்றும், பூரிசிரவாவை 'பூரி' என்றுங் கூறினார்; இங்ஙனம் ஒரு பெயரை

அப்பெயரின் ஒருபகுதியாற் குறித்தலே, வடநூலார், 'நாமைகதேசேநாம க்ரஹணம்' என்பர். பட்டிலன் என எதிர்மறைமுகத்தாற் கூறியது, மரண வேதனையடைந்து அரிதில் உயிரோடுமீண்டானென்பதை விளக்கும். பூபர்-வடசொல்; பூமியைக் காப்பவர். ஒழிந்தவர் - மிச்சப்பட்டவர். அஞ்சினர் - முற்றெச்சம். (அஉ)

[துரியோதனன் அருச்சுனனை எதிர்த்தல்.]

தேவருக்கரசனுந்துகனபந்திநிகர் தேரிடைப்பணிநெடுங்கொடி நுடங்கியெழ, மாவுகைத்துவலவன்றிறலுடன்கடவ மாமுடிக்கண் மகுடந்திகழவன்றுபெறு, காவன்மெய்க்கவசமுந்தனிபுனைந்துசிலை கால்வளைத்தவிர்பெரும்பிறைமுகஞ்செய்கணை, தூவியுற்றெதிர்மு னைந்தனனனந்தவொளி தோய்கழற்றரணிமண்டலதுரந்தரனே.

(இ - ள்.) அனந்தம் ஒளி தோய் - அளவில்லாத பிரகாசம் பொருந்திய, கழல் - வீரக்கழலையுடைய, தரணி மண்டல துரந்தரன் - பூமண்டலமுழுவதையும் அரசாள்பவனான துரியோதனன்,—தேவருக்கு அரசன் உந்து - தேவராசனான இந்திரன் தூண்டிச்செலுத்துகிற, கன பந்தி - மேகராசியை, நிகர் - ஒத்த [மிகவிரைந்துசெல்லுகிற], தேரிடை - தேரிலே, பணி நெடுங் கொடி - பாம்புவடிவமெழுதின உயர்ந்த கொடி, நுடங்கி எழ - அசைந்து விளங்கவும்,—வலவன் - சாரதி, திறலுடன் - வல்லமையுடனே, மா உகைத்து - குதிரைகளைத் தூண்டி, கடவ - (தேர்) செலுத்தவும்,—மா முடிக்கண் - அழகிய தலையிலே, மகுடம் திகழ - கிரீடம் விளங்கவும்,—அன்று பெறு-அன்றைத்தினத்தில் (துரோணாசாரியனிடத்தினின்று தான்) பெற்ற, மெய் காவல் கவசமும் - உடம்பைக்காத்தற்கு உரிய கவசத்தையும், தனி புனைந்து - ஒப்பில்லாதபடி தரித்துக்கொண்டு, சிலை கால் வளைத்து - (தனது) வில்லைக் கோடிகள்வளையச்செய்து,—அவிர் - விளங்குகிற, பெரு-பெரிய, பிறை முகம் செய் கணை - அர்த்தசந்திரபாணங்களை, தூவி - மிகுதியாகப் பிரயோகித்துக்கொண்டு, எதிர் உற்று முனைந்தனன் - அருச்சுனனெதிரில் வந்து உக்கிரமாகப் போர்செய்தான்; (எ - று.)

இந்திரன் மேகவாகனனாதலால், 'தேவருக்கரசனுந்து கனபந்தி' எனப்பட்டது. தேவராஜனால் வச்சிராயுதங்கொண்டு வலியஅடித்து விரைவிற் செலுத்தப்படுகிற மேகவர்க்கம்போல விரைந்துசெல்லும் ராஜராஜனது தேரென்க. கனபந்தி-கநபங்க்தி என்ற வடசொல்தொடரின் திரிபு. பிறைமுகஞ்செய்கணை - கலைகுறைந்தசந்திரனது வடிவமாக நுனியமையச் செய்யப்பட்ட அம்பென்க. தூவுதல் - சொரிதல். அநந்தம் - வடசொல்: ந+அந்தம்; ந - எதிர்மறைகுறிப்பது: அந்தம் - எல்லை. தரணி மண்டல துரந்தரன் என்பதற்கு - பூமண்டலமுழுவதன் (ஆளுகைப்) பாரத்தைத் தாங்குபவனென்று பொருள்; வடமொழித்தொடர். (அ௩)

[அருச்சுனனம்புகளினால் துரியோதனன்கவசம் பிளவுபடாமை.]

கோமகக்குரிசின்முந்தவிடுமம்புபல கோறொடுத்தெதிர்விலக்கி விசயன்றனது,தீமுகக்கணையனந்தநிலையொன்றின்முனைசேரவிட்டனன்விடுத்தபொழுதத்துவிறன், மாமணிக்கவசமெங்குமுடனொன்றியொருமால்வரைப்புயலினுண்டுளிவிழுந்தபரி,சாமெனத்தலைமழுங்கியவையொன்றுமவனுகமுற்றிலவசைந்திலனசஞ்சலனே.

(இ - ள்.) (இவ்வாறு), கோமகன் குரிசில் - (அரசர்க்கெல்லாம்) அரசனான துரியோதனராசன், முந்த விடும் - முற்படச் செலுத்திய, அம்பு பல - அநேக பாணங்களை, விசயன் - அருச்சுனன், கோல் தொடுத்து - (தனது) அம்புகளைப் பிரயோகித்து, எதிர் விலக்கி - எதிரெதிரே தடுத்து, (மற்றும்),

தனது தீ முகம் கணை அனந்தம் - நெருப்புப்போலக் கொடிய நுனியை யுடைய தனது அநேகபாணங்களை, நிலை ஒன்றில் - ஒரேசமயத்திலே, முனை சேர - எதிர்சென்றுசேரும்படி, விட்டனன்-செலுத்தினான்; விடுத்த பொழுதத்து - அங்ஙனஞ் செலுத்தியபொழுதில், அவை - அவ்வம்புகள், விறல் மா மணி கவசம் எங்கும் உடன் ஒன்றி - வலிமையுள்ளதும் சிறந்ததும் இரத்தினம்பதித்ததுமான (அத்துரியோதனனது) கவசம் முழுவதிலும் ஒருசேரச் சென்று தாக்கி, ஒரு மால் வரை புயலின் நுண் துளி வீழ்ந்த பரிசு ஆம் என - ஒரு பெரிய மலையின்மேல் மேகத்தின் சிறிய நீர்த்துளிகள் விழுந்த விதம்போல, தலை மழுங்கி - நுனி கூரழிந்து, ஒன்றும் அவன் ஆகம் உற்றில - ஒன்றேனும் அவனுடம்பிற் படவில்லை; (ஆகவே), அசஞ்சலன் - (எதற்குஞ்) சலியாத இயல்புடையவனான துரியோதனன், அசைந்திலன் - சிறிதுஞ் சலித்தானில்லை; (எ - று.)

பெரிய வலிய மலையின்மேல் மேகத்தின் சிறியமழைநீர்த்துளிகள் விழுந்தால் அவைஅக்கல்லைத்துளைத்துக்கொண்டு உள்ளிறங்கமாட்டாமற் சிதறித்தெறித்துவிடுதல்போல,அருச்சுனன்ஒருங்கேஎய்தகூரியஅம்புகளெல்லாம் துரியோதனனதுவலியகவசத்திற்பட்டவளவிலே,அதனைத்துளைத்துக் கொண்டு உட்சென்று உடம்பிற்பட்டு ஊறுசெய்யமாட்டாமல், வலியஅக்கவசத்தில் தாக்கினதனால் தாம் கூர்மைமழுங்கிப் பயனின்றிச் சிதறிப்போய் விடவே, அருச்சுனன் எத்தனையம்புகளெய்தும் துரியோதனன் போரிற் சலிப்படையவில்லை யென்பதாம்.அசலமாகியமலை காளமேகத்தின் சோனைமாரிக்குச் சிறிதுஞ்சலியாதவாறுபோலவே, அசஞ்சலனான துரியோதனன் அருச்சுனனதுபாணவர்ஷத்துக்குச்சிறிதுஞ்சலித்திலனென்பதுபோதரும்.

கோமகன் + குரிசில் = கோமகக் குரிசில்; "சிலவிகாரமா முயர்திணை": தலைவனாகிய வீர னென்க. கோ மகன் - தலைவனான மனிதன்; இதற்கு - ராஜகுமார னென்ற பொருளும் உண்டு.குரிசில் - ஆண்பாற்சிறப்புப்பெயர். முந்தவிடும் - எதிரிலே வேகமாகப்பிரயோகித்த என்க. கோல் என்பதற்கு - கொல்லுந்தன்மையது என்றுவது, கோல்போல நீண்டவடிவமாகவுள்ளது என்றுவது காரணப்பொருள் காண்க. தீமுகக் கணை - நெருப்பில்வடித்த அம்புமாம். பொழுதத்து, அத்து - சாரியை. 'பரிசாம்' என்பதில், ஆம் - அசை. அசஞ்சலன் - வடசொல். நிலையொன்றில் - ஏககாலத்தில். (௮௪)

[பின்பு அருச்சுனனெறிந்த வேற்படையை அசுவத்தாமன் துணித்தல்.]

வீரன்விட்டனசரங்களவனொண்கவச மேலுறப்படுதலின்றி
விழுகின்றநிலை, யோரிமைப்பினிலறிந்துகுமரன்கையயி லோடுரைக்
கவுவமம்பெறுவிடங்கொளயில், தேரினிற்பொலியநின்றிருகைகொ
ண்டுநனி சீறிமெய்ப்படவெறிந்தனனெறிந்தள்வில், வார்சிலைக்குரு
வின்மைந்தனதுகண்டதனை வாளியிற்றுணிபடும்படிமலைந்தனனே.

(இ - ள்.) வீரன் - சிறந்தவீரனான அருச்சுனன்,—விட்டன சரங்கள் - தான் தொடுத்தவையான அம்புகள், அவன் ஒள் கவசம் மேல் உற படுதல் இன்றி - அத்துரியோதனனது ஒளியுள்ள கவசத்தின்மேல் உட்செல்லும்படி படுதலில்லாமல், விழுகின்ற - தாக்கிக்கீழ்விழுந்திடுகின்ற, நிலை - தன்மையை, ஓர் இமைப்பினில் - ஒருநொடிப்பொழுதிலே, அறிந்து—,—குமரன் கை அயிலோடு உவமம் உரைக்க பெறு-முருகக்கடவுளின் கையிலுள்ள வேலாயுதத்தோடு தன்னை உவமைசொல்லும்படி (சிறப்புப்) பெற்ற, விடம் கொள் அயில் - விஷத்தையொத்த [கொடிய] வேலாயுதத்தை, தேரினில் பொலிய நின்று - (தனது) தேரிலே விளங்க நின்றுகொண்டு, இரு கை கொண்டு - இரண்டுகைகளாலும் எடுத்து, நனி சீறி-(துரியோதனன்மேல்) மிகக்கோபித்து, மெய் பட - அவனுடம்பிலே படும்படி, எறிந்தனன் - வீசி

னன்; எறிந்த அளவில் - (அங்ஙனம்) வீசியவளவிலே,—வார் சிலை குருவின் மைந்தன் - நீண்ட வில்லுக்கு ஆசிரியனான துரோணனது புத்திரனாகிய அசுவத்தாமன், அது கண்டு - அங்ஙனம் எறிந்ததைப் பார்த்து, அதனை - அவ்வேலை, வாளியின் - (தனது) அம்புகளினால், துணி படும்படி - துண்டாகும்படி, மலைந்தனன் - எதிர்த்துப் போர்செய்தான் ; (எ - று.)

தனது அம்புகளில் ஒன்றும் துரியோதனன்கவசத்தைத் துளைக்கமாட்டாமையைக் கண்டு கோபித்து அருச்சுனன் வலிமையோடு எறிந்த சிறந்த கொடிய வேற்படையை, துரியோதனனுக்கு உதவியாய் வந்த அசுவத்தாமன் அம்பெய்து துணித்தனன் என்பதாம். "ஏவின்மூதண்டத் தைம்பெரும்பூத மூமடிவது, ஏய பல்லுயிரு மொருதலை முடிப்பது ஏவர்மேல் விடுக்கினு மவர்தம், மாயிருந்திறலும் வரங்களுஞ் சிந்தி மன்னுயிருண்பது எப்படைக்கும், நாயகமாவது ஒருதனிச்சுடர்வேல்" என்ற கந்தபுராணத்தினால், சுப்பிரமணியன்கைவேலினது சிறப்பை யறிக; அது, சூரபதுமனைக் கொல்லுதற்கென்று சிவபெருமான் நிருமித்துக்கொடுத்தது. அதனோடு ஒப்புமைகூறத்தக்க வே லென்று இவ்வேலின்சிறப்பை விளக்கினார். கொள - உவமவுருபு. 'விடங்கொளயில்'என்பதற்கு - நுனியில்விஷந்தடவிய வேலென்று உரைப்பாரும் உளர். 'இருகைகொண்டு எறிந்தனன்' என்றதனால், அவ்வேலின் வலிமைமிகுதி விளங்கும். அசுவத்தாமனது விற்போர்த்திறச்சிறப்பைக் கூறுவார், 'வார்சிலைக்குருவின்மைந்தன்' என்றார்.

அறிந்து,நின்று, கொண்டு, சீறி, எறிந்தனனென இயையும். எறிந்தளவில் - எறிந்தவளவில் என்பதன் தொகுத்தல். (அகு)

[பிறகு அருச்சுனன் சோர்ந்து மயங்குதல்.]

வாகைநெட்டயிறுணிந்திடலும்வன்பினுடன் மானிரைத்திர
தமுங்கடவிவந்துமுத லாகவத்தினிலுடைந்தவரடங்கமுனை யா
யெதிர்த்தொருமுகம்படநெருங்கிமிக,மோகரித்துவருகின்றசெயல்
கண்டமரர் மூவருக்கரியவன்கழல்பணிந்துபரி, தாகமுற்றமர்தொ
டங்கவுமறந்துகமழ் தாரருச்சுனனுயங்கினனநந்தரமே.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) வாகை - வெற்றியைத் தரவல்ல, நெடு - நீண்ட, அயில் - வேலாயுதம், துணிந்திடலும் - (இவ்வாறு) துண்டுபட்டவுடனே, முதல் ஆகவத்தினில் உடைந்தவர் அடங்க - முன்பு (தனக்குமுன்) போரில் தோற்றவரெல்லாரும், வன்பினுடன் மான் நிரைத்து இரதமும் கடவி வந்து - வலிமையுடன் குதிரைகளை ஒழுங்குபடுத்தித் தேரையுஞ் செலுத்திக்கொண்டுவந்து, முனை ஆய் எதிர்த்து - துணிவுகொண்டு (தன்னை) எதிர்த்து, ஒரு முகம் பட நெருங்கி - (தன்னைநோக்கி) ஒரேமுகமாகத் திரண்டு அடர்ந்து, மிக மோகரித்து வருகின்ற - மிகவும் உக்கிரங்கொண்டு வருகிற, செயல் - செய்கையை, கண்டு-பார்த்து,—கமழ் தார் அருச்சுனன்- மணம்வீசுகிற போர்மாலையையுடைய அருச்சுனன்,—பரிதாகம் உற்று - மிக்கவருத்தத்தை யடைந்து, அமர் தொடங்கவும் மறந்து - போர்செய்தற்கும் மறந்து, அமரர் மூவருக்கு அரியவன் கழல் பணிந்து - மூன்றுமூர்த்திகட்கும் அருமையான ஸ்ரீமந்நாராயணனது திருவவதாரமாகிய கண்ணபிரானது திருவடிகளை நமஸ்கரித்து, உயங்கினன் - சோர்ந்துநின்றான் ; அநந்தரம் - பின்பு, (எ - று.)—'கண்ணன் வலம்புரி வாயில் வைத்தனன்' என, வருங்கவியோடு தொடர்ந்துமுடியும்.

அருச்சுனன், தனது அம்புகள் துரியோதனன்கவசத்தைப் பிளக்கமாட்டாமையையும் தனதுவேல் அசுவத்தாமனால் துணிக்கப்பட்டதையுங் கண்டு உற்சாகங்கொண்டு முன்புதோற்றோடினவரும்முட்பட எல்லாவீரரும் தன்னைநோக்கிஒருமுகமாய்நெருங்கி வீராவேசத்தோடுபோர்க்குவருதலைப்

பார்த்து, மிக்கவருத்தமடைந்து, எதிர்த்துப்போர்செய்தலை யொழிந்து, கண்ணன்கழலிணையை வணங்கியபடியே சிறிதுபொழுதுசோர்ந்துநின்றன னென்பதாம். இதற்குக் காரணம் - காலையிலிருந்து இடைவிடாது பல ரோடும் பெரும்போர்செய்துவந்ததனாலாகிய மிக்கஇளைப்பும், தனதுஆயு தங்கள்பலவும் பயன்படாமையைக் கண்ட மனவெழுச்சிக்குறைவும், மிகப் பல அரசரோடு தான்ஒருவனே போர்செய்திடுமாறு தனக்குத் துணையின் மையு மென்க.

திருப்பாற்கடலில் எழுந்தருளியுள்ள திருமாலின் வியூகமூர்த்திகளா கிய வாசுதேவன் சங்கர்ஷணன் பிரத்யும்நன் அநிருத்தன் என்ற நால்வருள் பிரதானமூர்த்தியான வாசுதேவன், பிரம விஷ்ணு ருத்திரரூபிகளாய்ப் படைத்தல் காத்தல் அழித்தல் தொழில்களைச் செய்யும் மற்றைமூவர்க்குங் காரணனாகி அவர்கட்கும் அரியவனாய்ச் சிறத்தல்பற்றியும், அவ்வாசுதேவனே இங்குக் கண்ணனாக அவதரித்தமைபற்றியும், 'மூவருக்கு அரியவன்' என்றார்; கீழ்க் கிருட்டிணன்றூதுசருக்கத்தில் "மூவராயவர்களுக்கு முதல்வனாகிய மூர்த்தி" என்றும், முதற்போர்ச்சருக்கத்தில் "விதித்தோனாகி மூவருமாகி யந்தமூவர்க்கு முதல்வனாகி" என்றும் வாசுதேவனைத் தனியே பிரித்துச் சிறப்பித்துக்கூறியவாறுங் காண்க. சங்கர்ஷணப் பிரத்யும்ந அநிருத்தர்களே இங்குக் கிருஷ்ணனது தமையனான பலராமனும், புத்திரனான பிரத்யும்ந னும், பௌத்திரனான அநிருத்தனு மாக அம்சங்கொண்டவ ரென அறிக. இனி, 'மூவருக்கு' என்பதை உருபுமயக்கமாகக்கொண்டு, திரிமூர்த்திகளுள் ளும் (மற்றையிருமூர்த்திகளுக்கு) அறிதற்கு அருமையானவ னென்று பொ ருள்கொள்ளுதலும் பொருந்தும்; "சிவனுக்கு மலரிலுறைபிரமற்கு முணர் வரிய திகிரிக்கைவலவன்" எனக் கீழ்ப் பன்னிரண்டாம்போர்ச்சருக்கத்துக் கூறியது இங்கே காணத்தக்கது. அமரர் மூவர் - பிரம ருத்திர இந்திர ரென்றலும் ஒன்று.

நெடுமை + அயில் = நெட்டயில்; பண்புப்பெயர் ஈறுபோய்த் தன் னொற்று இரட்டிற்று. மான், ன் - சாரியை; "ஆ மா கோ னவ்வணையவும் பெறுமே." அமரர் - தேவர். மூவர் - தொகைக்குறிப்பு. மூவருக்கு என்ற தன் இறுதியில், இனத்துஎன்று அறிபொருளில் வரும் முற்றும்மை விகா ரத்தால் தொக்கது. 'பரிதாபம்' என்றாற்போல, 'பரிதாகம்' என்றார்; வட சொல்: இதில், பரி என்பது - மிகுதியை விளக்குவதோர் உபசர்க்கமாம். அமர்தொடங்கவும் என்ற சிறப்பும்மை-அமர்தொடங்குதலின் இன்றியமை யாமையைக் காட்டும். கமழ் தார் - வினைத்தொகை. தார் என்ற பெயரில், போர்ப்பூமாலையோடு அடையாளப்பூமாலையும் அடங்கும்; "படையுங் கொ டியுங் குடையும் முரசும், நடைநவில் புரவியுங் களிறுந் தேருந், தாரும் முடியும் நேர்வன பிறவுந், தெரிவுகொள் செங்கோ லரசர்க் குரிய" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தின் உரையில் 'தாரெனவே, போர்ப்பூவும் தார்ப் பூவு மடங்கின' என்றது அறியத்தக்கது. ஆஹவம், அநந்தரம்-வடசொற்கள்.

வன்பினுடன் என்றவிடத்து, 'மைந்தினுடன்' என்றும் பாடமுண்டு. 'வேகமுடன்' என்ற பாடம் 'தானதன' என்ற சந்தமாய் 'தந்ததன' என்ற வாய்பாடுபெற்றி முன்னும்பின்னுந்தவறுதுவருஞ் சந்தத்திற்கு ஒவ்வாது. (௮௬)

[கண்ணன் அதுகண்டு சங்கநாதஞ்செய்தல்.]

கோமணிக்குரலுகந்துபுறவின்கணுயர்கோவலர்க்குநடுநின்று முன்வளர்ந்தமுகில், காமனுக்கினியதந்தைசமரம்பொருது காதன் மைத்துனனயர்ந்தநிலைகண்டுபல, தாமரைக்குளொருதிங்களெனவ ங்குலிகொடாழ்தடக்கைகளிரண்டொருமுகப்படவில, மாமணிக்குழ ன்மணங்கமழ்செழும்பவளவாயில்வைத்தனலந்திகழ்வலம்புரியே.

(இ - ள்.) கோ - பசுக்களினுடைய, மணி - (கழுத்திலே கட்டப்பட்டுள்ள) அடிக்கும்மணிகளின், குரல் - ஓசையை, உகந்து-விரும்பிக்கேட்டுக்கொண்டு, புறவின்கண்-முல்லைநிலத்திலே, உயர் கோவலர்க்கு நடு நின்று-சிறந்த இடையர்கட்கு நடுவிலே நின்று, முன் - முன்பு [இளமையில்], வளர்ந்த—, முகில் - மேகம்போன்றவனும், காமனுக்கு இனிய தந்தை - மன்மதனுக்குப் பிரியமுள்ள பிதாவுமான கண்ணன்,—காதல் மைத்துனன் சமரம் பொருது அயர்ந்த நிலை கண்டு - தனது அன்புக்குஇடமான மைத்துனனாகிய அருச்சுனன் போர்செய்து சோர்வடைந்த நிலைமையைப் பார்த்து,—பல தாமரைக்குள் ஒரு திங்கள் என - பலதாமரைமலர்களின் இடையிலே ஒருசந்திரன் (விளங்கினாற்) போல,— அங்குலி கொள் தாழ் தட கைகள் இரண்டு - விரல்களின் அழகைக் கொண்ட நீண்ட பெரிய (தனது)திருக்கைகளிரண்டும், ஒரு முகம் பயில-(தனது) ஒப்பற்றமுகத்திலே பொருந்த, (அக்கைகளில்), நலம் திகழ் வலம்புரி - சிறப்பு விளங்குகிற(பாஞ்சசன்னியமென்னும்) தனதுவலம்புரிச்சங்கத்தை, மா மணி குழல் மணம் கமழ் செழும் பவளம் வாயில் வைத்தனன் - சிறந்த அழகிய வேய்ங்குழலின் பரிமளம் வீசப்பெற்ற செழுமையான பவழம்போல மிகச்சிவந்த தனதுதிருவாய் மலரிலே வைத்து ஊதினான்; (எ - று.)

அருச்சுனன் சோர்ந்து போரொழிந்ததைக் கண்டு, கண்ணபிரான், பகையழித்தற்பொருட்டும் அருச்சுனன்சோர்வை ஒழித்தற்பொருட்டும் தனதுதிவ்வியசங்கத்தை வாயில்வைத்து முழக்கத்தொடங்கினனென்க. செந்தாமரைமலர்கள்போன்ற தனது இரண்டுகைகளினாலும் செந்தாமரைமலர்போன்ற தனதுவாயிலே வெள்ளியசங்கத்தை வைத்ததற்கு, பலதாமரைமலர்களினுள்ளே பொருந்திய வெண்டிங்கள் உவமை யெனக் காண்க. சந்திரன்சமீபித்தபொழுது தாமரைமலர்குவிதல்போலச் சங்கத்தையெடுத்து வாயில்வைத்துக்கொண்டு ஊதுகையிற் கைகளும் வாயும் குவியும்இயல்பை நோக்குக. "கைவண்ணந் தாமரை வாய் கமலம்போலும்" என்றதனால், எம்பெருமானது திருக்கைகளோடு திருவாய்க்கும் தாமரை உவமையாதல் அறிக; செம்மை மென்மை அழகுகளில் உவமம். சங்கத்துக்குப் பூர்ணசந்திரனுவமை - வெண்மையிலும் ஒளியிலும் பருத்தவடிவிலு மென்க. கண்ணபிரான் சங்கத்தைக் கைகளால் விரலழுந்தப்பிடித்தபொழுது உண்டான அழகில் ஈடுபடுவார், 'அங்குலிகொள் தாழ்தடக்கைகள்' என்றார். அத்திருக்கைவிரல்கள், செந்தாமரைமலரினிதழ்கள்போலும். தாழ் கை - முழங்காலளவும் நீண்டு தொங்கும் கை: ஆஜாநுபாஹு; கைகள்நீண்டிருத்தல், உத்தமபுருஷலக்ஷணம்.

கண்ணன் இளமையிற் கன்றுகாலிகளை மேய்க்கையில் அவற்றை ஒருங்கு குவித்தற்காகவும் மகிழ்ந்துஇனிதுவளரச்செய்தற்காகவும் சிறப்பாக வேணுகானஞ்செய்த தன்மைபற்றி, 'மாமணிக்குழல்மணங்கமழ்செழும் பவளவாய்' என்றார். 'குழல்மணங்கமழ் வாய்' என்றது, பலநாள் பலபொழுது குழல்பயின்ற வாய் என்றபடி. குழலின்இனியஒலி வெளியெழுந்து விளங்கப்பெற்ற வாய் என்ற பொருளில் 'குழல்மணங்கமழ் வாய்'என்றது-ஒருபுலனின்தன்மையை மற்றொருபுலனின்மேல் ஏற்றிக்கூறின உபசாரவழக்காம். இனி, (சர்வகந்த மூர்த்தியான எம்பெருமானது திருவாய்மலரிலே நெடுநாள் பலபொழுது பட்டதனால்) வேய்ங்குழல் அத்திவ்வியபரிமளம்வீசுதற்குக் காரணமான திருவாயுமாம். திருமாலின்வாய்க்குப் பவளம், நிறம்பற்றிய உவமை; இதுபற்றி, 'திருப்பவளம்'என்றே அதற்கு ஒருபெயர் வழங்கும். வலம்புரி - வலப்பக்கமாக உட்சுழிந்திருக்கும் உத்தம சங்கம்; "இடம்பி யாயிரமே சூழ்ந்த திடம்புரி யென்று கூறும், ஒப்பில்சங் காயிரஞ் சூழ்தரும் வலம்புரி யென்றோதும், அப்படி யதுவுஞ் சூழ்ந்த சலஞ்சலமாகு

மற்றைத், தப்பிலாச் சலஞ்சலங்கள் சார்ந்தது பாஞ்சசந்யம்" என்ற நிகண்டினாலும்,ஸ்ரீபாஞ்சசன்னியத்தின் மிகமேம்பட்டசிறப்பை யறிக. இப்படிப் பட்டசிறப்போடு ஓர்இசைக்கருவியாக அமைதல்மாத்திரமே யன்றி,தனது பெருமுழக்கத்தாற் பகைவரை அஞ்சிமயங்கி அழியச்செய்து வெற்றிகொள்ளுந்தன்மையதாகி, அவ்வழிவுத்தொழிலோடு நில்லாமல் அடியார்கட்கு உற்சாகத்தை விளைத்து எழுப்பவல்ல திவ்வியசக்தியையு முடைமையால், அச்சங்கம் 'நலந்திகழ்வலம்புரி' எனப்பட்டது.

'கோமணிக்குரலுகந்து' என்றது,பசுக்களினிடத்திற் கண்ணன் மிக்க அன்புகொண்டிருந்தமையைக் காட்டும்; அப்பசுக்கள் களிப்போடு தலையசைத்துக்கொண்டு அருகிற்செல்லும்பொழுது அவற்றின் கழுத்திடுமணியோசையைக் கேட்டுத் திருவுளமகிழ்ந்தருள்வனென்க. புறவு - காடும்காடு சார்ந்தஇடமு மாகிய முல்லைநிலம்; "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்ற தொல்காப்பியத்தால், இந்நிலத்திற்குஉரிய தெய்வம் திருமாலென விளங்கும். கண்ணபிரான் முல்லைநிலத்திலே கோகுலமெனப்படுகிற ஆயர்பாடியில் இடையர்கள்நடுவிலே வளர்ந்ததனால், 'புறவின்கண் உயர்கோவலர்க்குநடுநின்று முன்வளர்ந்த முகில்' என்றார். புறவின்கண், கண் - ஏழனுருபு,இன்-சாரியை. க்ஷத்திரியசாதியிற் சந்திரகுலத்தில் வசுதேவகுமாரனாய் அவதரித்த கண்ணன் விரும்பிச்சென்று கலந்து வளரப்பெற்ற பாக்கியமுடைமையால், இடையர் 'உயர்கோவலர்' எனப்பட்டனர். சிவபிரான் மன்மதனை யெரித்த காலத்தில் அம்மன்மதன்மனைவியான ரதீதேவி மிகவருந்தி அக்கடவுளைச் சரணமடைந்து பலவாறு பிரார்த்திக்க, அக்கடவுள், அவன் அவளுக்குமாத்திரம் ரூபமுடையவனாகவும் மற்றையோர்க்கு ரூபமில்லாதவனாகவும்இருக்கும்படி அருள்செய்ய, அவ்விரதி'என்கணவன் என்னை உருவமுடையவனாய் மீளவும் கூடுங்காலம் எப்பொழுது?" என்றுவினவ,'பூமிபாரநிவிருத்தியின்பொருட்டுத் திருமால் கண்ணனாகத் திருவவதரிக்கையில், அப்பிரானது குமாரனாய்க் காமன் தோன்றி நின்பாற்கூடுவன்' என்று சங்கரன் வரமளித்திருந்தான்; அதன்படி பின்பு கண்ணனது மனைவியும் திருமகளின் திருவவதாரமுமான உருக்குமிணிப்பிராட்டியினிடம் மன்மதன் பிரத்யும்நனென்னுங் குமாரனாகத் தோன்றினன் என்ற வரலாறுபற்றி, கண்ணனை 'காமனுக்கினியதந்தை' என்றார். 'இனியதந்தை' என்றது - தந்தைமைந்தருள் ஒருத்தர்க்கு ஒருத்தர்மேலுள்ள அன்பைப் புலப்படுத்தும். கண்ணனுக்குத்தந்தையான வசுதேவர்க்கு உடன்பிறந்தமுறையாகிற குந்தியின் குமாரனாதலால், அருச்சுனன் கண்ணனுக்கு அத்தைமகனாவன்: அத்தைமகனை மைத்துன னென்பது, முற்காலத்து வழக்கம்போலும்; அன்றியும், மைத்துனன் என்பதற்கு -உடன்பிறந்தவளதுகணவன் என்று பொருள் கொள்ளினும் இங்குப் பொருந்தும்: கண்ணனுடன் பிறந்தவளான சுபத்திரையை அருச்சுனன் மணஞ்செய்தவனாதல் காண்க. மைத்துனன்பக்கல் அன்புமிகுகிற இயல்பு தோன்ற, 'காதல்மைத்துனன்' என்றார்; கீழ் அணிவகுப்புச்சருக்கத்திலும் "உயர்மைத்துனமையால் விறலுதவுதற்கு வரு கரியவன்" என்றார். கண்டு, வலம்புரி வாயில் வைத்தனன் என இயையும்.

கோ - பசுவைக் குறிக்கையில், வடசொல். கோ வலர் - பசுக்களை(க் காக்க) வல்லவ ரென்று காரணப்பொருள்: இதனைக் கோபாலர் என்ற வடசொல்லின் திரிபென்றலும் ஒன்று. முகில் - உவமையாகுபெயர். அங்குலி - வடசொல். நலம் - நன்மை: 'அம்'விகுதி பெற்ற பண்புப்பெயர். (அஎ)

[கண்ணனது சங்கநாதத்தாற் பகைவர்கள் மோகமடைதல்.]

நாகர்பொற்றருவையம்புவியிலன்றுதருநாகன்வச்சிரவலம்புரி
முழங்குகுரன்,மேகமொக்குமெனவெண்டிரையெறிந்துபொருவே
லையொக்குமெனவெங்கணுமெழுந்தபொழு,தாகமுற்றுறநெகிழ்ந்து

புளகம்புரியவாகவத்தெழுகடுஞ்சினமடிந்தவிய,மோகமுற்றனரெதி ர்ந்துபொருமண்டலிகர்மோழைபட்டதுகொலண்டமுகடுஞ்சிறிதே.

(இ - ள்.) நாகர் - தேவர்களது, பொன் தருவை - பொன்மயமான பாரிஜாதவிருக்ஷத்தை, அன்று-அக்காலத்தில் [முன்பு ஒருகாலத்தில் என்றபடி], அம் புவியில் தரு - அழகிய பூலோகத்திற் கொணர்ந்திட்ட, நாதன் - தலைவனான கண்ணபிரானது, வச்சிரம் வலம்புரி - வயிரம்போலுறுதியுள்ள சிறந்த சங்கம், முழங்கு - மிகஒலித்த, குரல் - ஓசை, மேகம் ஒக்கும் என - மேகத்தின் இடியோசையை யொக்குமென்று சொல்லும்படியாகவும், வெள் திரை எறிந்து பொரு வேலை ஒக்கும் என - வெண்ணிறமான அலைகளை வீசிமோதுகிற கடலின் ஆரவாரத்தை யொக்குமென்று சொல்லும்படியாகவும், எங்கணும் எழுந்த பொழுது - எல்லாவிடங்களிலுஞ் சென்று பரவின பொழுது,—எதிர்ந்து பொரு மண்டலிகர்-எதிர்த்துப்போர்செய்கிற பூமண்டலாதிபதிகளான அரசர்கள் (எல்லாரும்), ஆகம் முற்றுற நெகிழ்ந்து - உடம்புமுழுவதுந் தளர்ந்து, புளகம் புரிய - மயிர்ச்சிலிர்ப்புச்செய்யவும், ஆகவத்து எழு கடுஞ் சினம் - போர்செய்தலில்மிகுதியாகவுண்டான கொடிய கோபம், மடிந்து அவிய - குறைந்துஒடுங்கவும், மோகம் உற்றனர் - மயக்கமடைந்தார்கள் ; (அப்பொழுது), அண்டம் முகடும் - அண்டகோளத்தின் மேல்முகடும், சிறிது மோழைபட்டது கொல் - சிறிதுவெடிப்படைந்தது போலும் ; (எ - று.)

கண்ணன் திருவாய்மலரில்வைத்து ஊதி முழக்கஞ்செய்த சங்கத்தின் பேரொலி வெளிப்பட்டு எங்கும் பரவத்தொடங்கியபொழுது, அவ்வாரவாரத்தைக் கேட்டுப் பகைவர்கள் அஞ்சிநடுங்கி வலிமையொடுங்கிமூர்ச்சிக்க, அப்பேரொலியினாலாகியஅதிர்ச்சியினால் அண்டகோளமும் சிறிதுபிளவுபட்டது என்பதாம். "ஓதம் வந்தெழுந்த தென மேக நின்றதிர்ந்த தென ஊழியும் பெயர்ந்த தெனவே, மாதிரங்களுஞ் செவிடுபோ யகண்டமும் பொதுளி வாய்பிளந்த தண்டமுகடும், சீதரன் செழுந்துளபமாதவன் நயங்கருணைசீத பங்கயங்கொ டிருவின், நாதன் வெஞ்சமங்கருதி யூதுகின்ற சங்கின் முழு நாதம் வந்தெதிர்ந்த பொழுதே" எனக் கீழ்ப் பத்தாம்போர்ச்சருக்கத்தில் வந்ததையும், "தருணவாணிருபர் மயங்கிவீழ்தர வெண்சங்கமு முழக்கி" என மேற் பதினேழாம்போர்ச்சருக்கத்தில் வருவதையுங் காண்க. "அத்தைமகன்றேரினின் றெதிரேற்ற மன்னர், கலங்கத் தன்நத்தைக் குறித்தான்" என்ற திருவேங்கடத்தந்தாதியும் இங்கு நோக்கத்தக்கது.

இப்பொழுது கண்ணன் பகைவர்களைத் தனதுசங்கினொலியால்மயங்கியழியச்செய்தமை, முன்பு தேவலோகத்தினின்று பாரிசாததருவைப் பூலோகத்துக்குக்கொணர்ந்தபொழுது எதிர்த்த தேவர்களைத் தனதுசங்கநாதத்தினாலே பங்கப்படுத்தினமைபோலு மென்பார், இங்குக் கண்ணபிரானுக்கு 'நாகர்பொற்றருவை யம்புவியி லன்றுதரு' என்ற அடைமொழிகொடுத்தார்; இந்த விசேஷணம் ஒருகருத்தை யுட்கொண்டதனால்,கருத்துடையடைமொழியணி. அவ்வரலாறு வருமாறு:—கண்ணன் நரகாசுரனை யழித்தபின்பு, அவனால் முன்பு கவர்ந்துபோகப்பட்ட(இந்திரன்தாயான அதிதிதேவியின்) குண்டலங்களை அவளுக்குக் கொடுக்கும்பொருட்டுச் சத்தியபாமையுடனே கருடன்தோளின்மேலே தேவலோகத்துக்குச் செல்ல, அங்கு இந்திராணி சத்தியபாமைக்குச் சகலஉபசாரங்களைச் செய்தும், தேவர்க்கேயுரிய பாரிஜாதபுஷ்பம் மானுடப்பெண்ணாகிய இவளுக்குத் தகா தென்று சமர்ப்பிக்கவில்லை யாதலின், அவள் அதனைக் கண்டு விருப்புற்றவளாய், சுவாமியைப் பார்த்து, 'பிராணநாயகனே! இந்தப்பாரிஜாததருவைத் துவாரகைக்குக் கொண்டுபோகவேண்டும்' என்றதைக் கண்ணபிரான் திருச்செவிசார்த்தி, உடனே அந்தவிருட்சத்தை வேரோடுபெயர்த்துப் பெரியதிருவடியின் திருத்

தோளின்மேல் வைத்தருளி, அப்பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப்போர்செய்த இந்திரனைச் சகலதேவசைனியங்களுடன் சங்கநாதத்தினாலே பங்கப்படுத்தி, பின்பு வணங்கின அவனது பிரார்த்தனைப்படியே பாரிஜாதமரத்தைத் திருத்துவாரகைக்குக் கொண்டுவந்து சத்தியபாமைவீட்டுப் புறங்கடைத்தோட்டத்தில் நாட்டியருளின னென்பதாம். அப்பொழுது தேவர்யாவரும் சங்கொலியால் மயங்கியழிந்தமை, "அருட்கொண்டலன்ன அரங்கர் சங்கோசையி லண்ட மெல்லாம், வெருட்கொண்டிடர்பட மோகித்து வீழ்ந்தனர் வேகமுடன், தருக்கொண்டு போகப்பொறுதே தொடருஞ் சதமகனுஞ், செருக்கொண்ட முப்பத்து முக்கோடி தேவருஞ் சேனையுமே" என்றதனால் விளங்கும்.

பொன்மயமான தேவலோகத்தி லுள்ள எல்லாப்பொருளும் பொன்மயமானவை யாதலால், 'பொற்றரு' எனப்பட்டது. கண்ணன் கொணர்ந்த பாரிசாதமரம், தேவலோகத்திலுள்ள கற்பதரு ஐந்தனுள் ஒன்றும்; மற்றவை - சந்தானம், மந்தாரம், கற்பகம், அரிசந்தனம் என்பன. மயிர்ச்சிலிர்ப்பு, இங்கே அச்சமிகுதியா லானது. 'நாதன் வச்சிரவலம்புரி' என்பதற்கு - கண்ணனது சிறந்தஆயுத மான சங்க மென்றும் கொள்ளலாம்: வச்சிர மென்ற இந்திராயுதத்தின் பெயர், இங்குச் சிறந்தஆயுத மென்ற மாத்திரமாய் நின்றதென்க. மேகம், வேலை - அவற்றின் ஒலிக்கு முதலாகுபெயர். 'மோலை' என்ற பாடம், போலிவழக்கென்னத்தக்கதாயினும், "ஈரெட்டும் மூவைந்துமாம் உடல் தேற்றவும் ...... .. ..சிந்தைசெய்து, நேரிட்டுரைப்பர் அறிவொன்றிலாதவர் நீ யவற்றைப், பாரிட்டமாகப் பெரியோர்தமதுரை பார்த்தறியே" என்ற வீரசோழியத்தால் ழகரளகரப்போலி மறுக்கப்பட்டுள்ளதனாலும், மற்றை யிலக்கணநூல்களிலும் அப்போலி விதிக்கப்படாமையாலும், விலக்கத்தக்கதென்க. கொல் - ஒப்பில்போலி; உரையசைமாத்திரமாய் நின்றது. (அஅ)

[அப்போழுது கண்ணன் அருச்சுனனுக்குச் சிறந்தவேல்தருதல்.]

பானிறப்புரவியுந்துமிரதங்கடவு பாகன்மற்றவர்மயங்கியதுணர்ந்தருளி,மேனிலத்துநரகன்றனுயிர்கொன்றதொருவேல்கொடுத்திதனில்வென்றிடுதியென்றளவில், வானவச்சிரன்மகன்கடிதுவந்து
பெருவாழ்வுபெற்றனனெனும்பரிவினன்றனது, ஞானபத்தியொடெழுந்துவலம்வந்துதிரு நாண்மலர்ப்பதம்வணங்கியதுகொண்டனனே.

(இ - ள்.) பால் நிறம் - பால்போல வெளுத்தநிறத்தையுடைய, புரவி - குதிரைகளினால், உந்தும் - செல்லுகிற, இரதம் - (அருச்சுனனது) தேரை, கடவு - செலுத்துகின்ற, பாகன் - சாரதியான கண்ணன், அவர் மயங்கியது உணர்ந்தருளி - அப்பகைவர்கள் மோகித்த தன்மையை அறிந்தருளி, மற்று - பின்பு, மேல் நிலத்து நரகன்தன் உயிர் கொன்றது ஒரு வேல் கொடுத்து - முன்னொருகாலத்திலே பூமிதேவிபுத்திரனான நரகாசுரனது உயிரைத் தான் அழித்திட்டதாகிய ஒரு வேலாயுதத்தை (அருச்சுனனுக்கு)க் கொடுத்து, இதனில் வென்றிடுதி என்ற அளவில் -(இதனால் துரியோதனனைச்)சயித்திடுவா யென்று அருளிச்செய்தவளவிலே,— வானம் வச்சிரன் மகன் - தேவலோகத்தி லுள்ள வச்சிராயுதபாணியான இந்திரனது புத்திரனாகிய அருச்சுனன், கடிது - விரைவாக, உவந்து - சந்தோஷித்து, பெரு வாழ்வு பெற்றனன் எனும் பரிவினன்-பெரிய செல்வவாழ்க்கையைப் பெற்றிட்டே னென்ற அன்பையுடையவனாய், தனது ஞான பத்தியொடு - தன்னுடைய தத்துவ ஞானத்தோடும் பக்தியோடும், எழுந்து—, வலம் வந்து - (கண்ணபிரானைப்) பிரதக்ஷிணஞ்செய்துவந்து, திரு நாள் மலர் பதம் வணங்கி - அழகிய அன்று

மலர்ந்ததாமரைமலர்போன்ற (அப்பெருமானது)திருவடிகளை நமஸ்கரித்து, அது கொண்டனன் - அந்தவேற்படையைப் பெற்றுக்கொண்டான்;(எ - று.)

**நரகனைக்கொன்றகதை:**—திருமால் வராகாவதாரஞ்செய்து பூமியைக் கோட்டாற்குத்தியெடுத்தபொழுது அத்திருமாலின் பரிசத்தாற் பூமிதேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும்,அசமயத்திற்சேர்ந்துபெறப்பட்டவனாதலால் அசுரத்தன்மைபூண்டவனு மான நரகனென்பவன். பிராக்ஜ்யோதிஷமென்னும் பட்டணத்தி லிருந்துகொண்டு, சகலபிராணிகளையும் மிகஉபத்திரவித்து, தேவர் சித்தர் கந்தருவர் முதலானவர்களுடைய கன்னிகைகளையும் ராஜாக்களுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபகரித்துக் கொண்டுபோய்த் தான்மணம்புணர்வதாகக்கருதித் தன்மாளிகையிற் சிறைவைத்து,வருணனுடைய குடையையும்மந்தரகிரிச்சிகரமான இரத்தின பருவதத்தையும் தேவர்கள்தாயான அதிதிதேவியின் குண்டலங்களையுங் கவர்ந்துபோனதுமன்றி, இந்திரனுடைய ஐராவதயானையையும் அடித்துக் கொண்டுபோகச் சமயம்பார்த்திருக்க, அஞ்சி வந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளினால், கண்ணபிரான் கருடனை வரவழைத்து, பூமிதேவியம்சமான சத்தியபாமையுடன் தான் கருடன்மேலேறி, அந்நகரத்தை அடைந்து சக்கராயுதத்தைப் பிரயோகித்து, அவன்மந்திரியான முரன் முதலிய பலஅசுரர்களையும் இறுதியில் அந்நரகாசுரனையும் அறுத்துத் தள்ளியழித்திட்டனன் என்பதாம். சக்கரப்படையால் நரகன்தலையைத் துணித்ததாகப் பாகவதம் முதலிய பலநூல்களிலும் கூறியிருக்கவும், இங்கு 'நரகன்றனுயிர்கொன்றதொரு வேல்' என்றது, புராணாந்தர கல்பாந்தர கதைப்போக்கைப் பற்றிய தென்றாவது, இவ்வேல் அச்சக்கராயுதத்தின் அம்சமென்ற காரணத்தால் அங்ஙனங் கூறப்பட்ட தென்றாவது கொள்க.

என்றளவில் - தொகுத்தல். தவறாது பகையழிக்கத்தக்க சிறந்தபடைக்கலத்தைப் பெற்ற மாத்திரத்திலே பகையழித்து அரசாட்சி பெற்று வாழ்தலா லாகும் மகிழ்ச்சியைப் பெற்றா னென்பது, 'பெருவாழ்வு பெற்றனனெனும் பரிவினன்' என்றதனால் விளங்கும். 'பெற்றனன்' என்ற இறந்தகாலம், விரைவுந் தெளிவும்பற்றிய காலவழுவமைதி. பெற்றனன் என்றதில், அன் - தன்மையொருமைவிகுதி. ஞானபத்தி - ஜ்ஞாநபக்தி யென்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டது; பன்மைவிகுதிபெறாத அஃறிணையும்மைத்தொகை. வலம்வருதல் - வலப்பக்கமாகச் சுற்றிவருதல். (அக)

[அருச்சுனன் துரியோதனன்கவசத்தை யழித்தல்.]

மாறுபட்டிவனை யின்றுயிர்கவர்ந்துவிடின் மாமருத்தின்மகன்
வஞ்சினமழிந்துவிடு,மூறுபட்டுவெருவும்படியெறிந்தமரினோடுவிப்
பதுபெருந்தகைமையென்றுகொடு, நூறுபட்டமகவின்றலைவனெஞ்
சமிக நோதகக்கடிதெறிந்தனனெறிந்தளவி, னீறுபட்டதுபெருங்
கவசம்வந்தவழி நேர்படத்திருகினன்சமரினின்றிலனே.

(இ - ள்.)'இவனை - இத்துரியோதனனை,மாறு பட்டு-எதிர்த்து,இன்று- இப்பொழுது, உயிர் கவர்ந்துவிடின் - கொன்றுவிட்டால், மா மருத்தின் மகன் வஞ்சினம் அழிந்துவிடும் - சிறந்த வாயுதேவனது குமாரனான வீமனது சபதம் தவறிப்போய்விடும்; (ஆதலால், இவனைக் கொல்லாமல்), ஊறு பட்டு வெருவும்படி - (இவன்) விரணப்பட்டு அஞ்சும்படி, எறிந்து - (இந்த வேலாயுதத்தை இவன்மேல்) வீசி, அமரின் ஓடுவிப்பது - போரிலே (இவனைப்) புறங்கொடுத்தோடும்படி செய்வது, பெருந் தகைமை - மேலான செய்கையாம்,' என்று கொடு - என்று எண்ணிக்கொண்டு, (அருச்சுனன்), நூறு பட்ட மகவின் தலைவன் நெஞ்சம் மிக நோதக - நூறென்னுந்தொகை பொருந்திய (திருதராட்டிர)புத்திரர்கள் தலைவனான துரியோதனனது

மனம் மிகவும்வருந்தும்படி, கடிது எறிந்தனன் - வேகமாக(வேற்படையை அவன்மேல்) வீசினான்; எறிந்த அளவில்-(அங்ஙனம்) வீசியவளவிலே,பெருங் கவசம்-சிறந்த அந்தக்கவசமானது, நீறுபட்டது-பொடியாய்விட்டது: (உடனே துரியோதனன்), வந்த வழி நேர்பட திருகினன் - தான்வந்தவழியே நேராகத் திரும்பிப்போய்விட்டான்; சமரில் நின்றிலன் - போரிற் சிறிதும் எதிர்நின்றானில்லை;(எ - று.)

துரியோதனன் சகுனியைக்கொண்டு பாண்டவரைச் சூதில்வென்று அடிமைப்படுத்தினபின் திரௌபதியைத்துச்சாதனனைக்கொண்டுமயிர்பிடித்திழுத்துவந்து துகிலுரிந்தும், என்மடியின்மேல் உட்காரென்றுசொல்லியும் பங்கப்படுத்தியபொழுது, அதுகண்டு பொறாது வீமசேனன்'துரியோதனாதியர் நூற்றுவரையும் நானே கொல்வேன்' என்று பிரதிஜ்ஞைசெய்துள்ளானாதலால், இப்பொழுது அருச்சுனன், தான் துரியோதனனைக் கொன்றிட்டால் அவ்வீமன்சபதந் தவறுமே யென்று கருதி, கொல்லாமல் வலியழிந்தோடும்படிசெய்யத் துணிந்தன னென்க. நெஞ்சம்மிகநோதக - மார்பு மிகவும் வருத்தமடையும்படி என்றலும் ஒன்று; இப்பொருளில், நெஞ்சம்-மார்புக்கு, தானியாகுபெயர்.

மருத் - வடசொல். மகவுஎன்பதில், உ - சாரியை; இந்த இளமையின் பெயர் - பிள்ளையென்றபொருளில், பண்பாகுபெயர் ; இது, இயற்பொருளில் உரிச்சொல்லும், ஆகுபெயர்ப்பொருளில் உயர்திணைப்பெயரு மாயினும், சொல்லால் பால்பகாவஃறிணைப்பெய ராதலால், பிள்ளைக ளென்ற பன்மைப்பொருளைக் குறித்தது. நெஞ்சம், அம் - சாரியை. நோதக= நோவ; இதில், தகு - துணைவினை : நொ என்ற வினைப்பகுதி முதல்நீண்டது. இனி,நோவுதகஎன்பது நோதகஎனத் தொகுத்தலெனினும்அமையும். எறிந்தளவு - விகாரம். (கூ0)

[அருச்சுனன் அசுவத்தாமனாதியரை வென்று ஓட்டுதல்.]

ஆறு பத்திருப தைம்பதுபெ ரும்பகழி யாக விட்டுவரி வன்சிலையும் வெம்பரியு,மேறு பைத்தலைநெ டுந்துவச மும்புதிய வேழுதட்டிரத முந்துணிசெய் தங்கருகு, சீறு தற்குவரு திண்குருவின் மைந்தனொடு தேர ருக்கன்மக னுஞ்சகுனி யும்பலரும்,வீறு கெட்டிருப தங்கொடுவி ரைந்துசெல மீள விட்டனன்மு னெண்டிசையும் வென்றவனே.

(இ - ள்.) எண் திசையும் முன் வென்றவன் - எட்டுத்திக்கிலுள்ளாரையும் முன்பு சயித்தவனான அருச்சுனன்,—பெரும் பகழி - சிறந்தஅம்புகளை, ஆறு பத்து - அறுபதும், இருபது - இருபதும், ஐம்பது ஆக - ஐம்பதுமாக, விட்டு - செலுத்தி, (அவற்றால் துரியோதனனது), வரி வல் சிலையும் - கட்டமைந்த வலிய வில்லையும், வெம் பரியும் - கொடிய குதிரைகளையும், பைதலை ஏறு நெடுந் துவசமும் - படத்தையுடைய தலையையுடைய பாம்பின்வடிவம் ஏறியிருக்கப்பெற்ற பெரிய கொடியையும், புதிய ஏழு தட்டு இரதமும்- ஏழுதட்டுக்களையுடைய புதுமையான தேரையும், துணிசெய்து - துண்டுபடுத்தி,—அங்கு - அப்பொழுது, அருகு - அவனருகிலே, சீறுதற்கு வரு - (தன்னோடு) கோபித்துப் பொருதற்கு வந்த, திண் குருவின் மைந்தனொடு - வலிய துரோணாசாரியனது புத்திரனான அசுவத்தாமனும், தேர் அருக்கன் மகனும் -(சிறந்த)தேரையுடைய சூரியனது புத்திரனான கர்ணனும், சகுனியும்—, பலரும் - மற்றும் பல அரசர்களும்,வீறு கெட்டு-பராக்கிரமமழிந்து, இரு பதம் கொடு விரைந்து செல - (தேரழிந்ததனால் தங்கள்) இரண்டு கால்களைக்கொண்டே வேகமாக ஓடிப்போம்படி, மீள - மறுபடியும், விட்டனன் - (அவர்கள்மேல் அம்புகளைச்) செலுத்தினான் ; (எ - று.)

அருச்சுனன் துரியோதனனது கவசத்தைப்பிளந்து வலியழித்ததனைக் கீழ்க்கவியிற் கூறி, இக்கவியின் முன்னிரண்டடிகளில் அவனது வில் குதிரை கொடி தேர்களை அழித்ததனையும், பின்னிரண்டடிகளில் அவனுக்குத் துணைவராய் வந்த பலரையும் வென்று துரத்தினமையையுங் கூறினர். இப்பாட்டில், துரியோதனனது வில்முதலியவற்றைத் துணித்ததாகக் கூறினது, கீழ்ப்பாட்டிற் சொன்னபடி அவன் புறங்கொடுத்தோடுதற்கு முன்பு நிகழ்ந்த செய்கையை அநுவாதத்தாற் கூறியதாம்; அன்றி, துரியோதனன் சமரில் நின்றிலனாய் வந்தவழி நேர்படத்திருகினபின்பு அவனது வில் முதலியவற்றை அருச்சுனன் துணித்தனனென்பது பொருந்தாமை காண்க. வில்முதலியவற்றை அருச்சுனன் துணித்தவுடனே துரியோதனன் மீண்டானென்ற செய்கையை முறையிலுயர்வுநவிற்சியணிபட விரைவுவிளங்கக் கூறுங் கவிசமயம்பற்றி, முன்பு 'துரியோதனன் திருகினன்' என்றும், பின்பு 'வில்முதலியவற்றை அருச்சுனன் துணிசெய்தனன்' என்றும் சமத்காரமாகக் கூறினரென்றலும் ஒன்று.

பைத்தலை - அன்மொழித்தொகை. பொருதல் என்ற காரியத்தை, சீறுதல் என்ற காரணத்தின் பெயராற் குறித்தது,உபசாரவழக்கு.'முன் எண்திசையும் வென்றவன்' என்றது, அருச்சுனன் இராஜசூயயாககாலத்தில் வடக்கிற் சென்று பல அரசர்களை வென்றது மாத்திரமே யல்லாமல், பின்பும் நிவாதகவசர் காலகேயர் சித்திரசேனன் நிரைகவர்ந்ததுரியோதனாதியர் முதலிய பலரையும் பலவிடத்தும் வென்றமைபற்றி யென்க. திசை - திசையிலுள்ளார்க்கு; இடவாகுபெயர். (௧௧)

வேறு.

[பலரும் அருச்சுனன்முன் பலவாறு அழிதல்.]

வேர்த்தெதிர் விசயன் வென்றகளத்தி
லார்த்தெதிர் வந்தா ரார்கொல்பி ழைத்தா
ரேத்திய பதினெண் பூமியி னெண்ணும்
பார்த்திவர் பற்பல வாயிரர் பட்டார்.

(இ - ள்.) விசயன் - அருச்சுனன், வேர்த்து - கோபங்கொண்டு, எதிர் வென்ற - எதிர்த்துச் சயித்த, களத்தில் - போர்க்களத்திலே, ஆர்த்து எதிர் வந்தார் - ஆரவாரஞ்செய்துகொண்டு அவனெதிரில் வந்தவர், ஆர்கொல் பிழைத்தார் - யாவர் பிழைத்தவர்? [எவருமில்லை யென்றபடி]; ஏத்திய - சிறப்பித்துச்சொல்லப்படுகிற, பதினெண் பூமியின் - பதினெட்டுநாடுகளிலுமுள்ள, எண்ணும் - நன்குமதிக்கப்படுகிற, பார்த்திவர்-அரசர்கள், பற்பல ஆயிரர் - பலபல ஆயிரம்பேர், பட்டார் - அழிந்தார்கள்; (எ - று.)

இச்செய்யுளின் முன்னிரண்டடியை, கீழ் ௫அ-ஆஞ் செய்யுளின் முன்னிரண்டடியோடு ஒப்பிடுக. 'வேர்த்து' என்றது, காரணத்தைக் காரியமாக உபசரித்தது. பதினெட்டுநாடுகள் - சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம்,குசலம்,திராவிடம்என்பன; ஐம்பத்தாறு தேசங்களென்று மற்றும் பலதேசங்களும் உளவாயினும்,இவையே பதினெட்டுப்பாஷைகட்குஉரிய தேசமாய்ப் பிரசித்திபெற்றவை: அத்தன்மை தோன்ற, 'ஏத்திய பதினெண்பூமி' என்றார். இனி, பதினெண்பூமி - பதினெட்டுத் தவீபங்க ளென்றலும் ஒன்று. எதிர் என்ற பகுதியே எதிர்த்தென வினையெச்சப்பொருள் பட்டது;"வரிப்புனைபந்து"என்றதில், 'வரி' என்பது வரிந்து எனப் பொருள்படுதல்போல. கொல் - அசை.

இது முதல் ஆறு கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் மூன்றாஞ்சீரும் விளச்சீர்களும், மற்றையிரண்டும் மாச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௧௨)

தம்பியருந்துச்சாதனன்முதலோ
ரம்பிலழிந்துதமாருயிருய்ந்தா
ரெம்பெருமானன்றெரிகணையேவ
வம்பரமுற்றதனைவருமுற்றார்.

(இ - ள்.) துச்சாதனன் முதலோர்-துச்சாசனன் முதலியவர்களான, தம்பியரும் - தம்பிமார்களும், அம்பில் அழிந்து - அருச்சுனனம்புகளால் வலியழிந்து, தம் ஆர் உயிர் உய்ந்தார் - (அரிதில்தப்பித்)தங்களுடைய அரிய உயிர் பிழைத்தார்கள்; அனைவரும் - மற்றும் எல்லாரும், எம்பெருமான் அன்று எரி கணை ஏவ அம்பரம் உற்றது உற்றார் - எமது தலைவனான திருமால் அந்நாளில் [முன்பு ஒருகாலத்தில்] ஆக்நேயாஸ்திரத்தைப் பிரயோகிக்க (அதனால்) கடல் பட்ட பாட்டை யடைந்தார்கள்; (எ - று.)

வலியொடுங்கி யடங்கினர் என்பதாம். திருமாலின் திருவவதாரமான இராமபிரான் இலங்கைக்குச்செல்லும்போது அடங்கியொழுகாத கடலின் செருக்கை யடக்குதற்கு ஆக்நேயாஸ்திரந்தொடுக்கத்தொடங்கவே கடலரசன் தவிப்படைந்து அடங்கியொடுங்கின னென்ற வரலாற்றைத் திருவேங்கடத்தந்தாதியுரையிலே [பக்கம் - ௫௫] காண்க. "கருணைகொண்ட வக்கண்ணன் கருதலும், வருணன் வந்தில னென்று மலர்விழி, யருணம் வந்தவ னம்பரத் தேவினான், தருண வெய்யவன் போன்ற தழற்கணை", "அன்னகாலை யறிந்து வருணன் வந்து, இன்னல்தீர்க்கு மிராமனை யெய்தியுன், மன்னுசீர் சொலி வாழ்வுற யாருமென், சென்னிமே லணை செய்யெனச் செப்பினான்" என்ற பாகவதச்செய்யுள்களைப் பார்க்க. அம்பர மென்பது கடலென்னும் பொருளதாதலை "அம்பரம் கூறையும் கடலும் ஆகாயமும்" என்ற திவாகரத்தாலும் அறிக.

தம்பியர் உயிருய்ந்தார் என்றமுடிபு, "உயர்திணைதொடர்ந்த பொருள் முதலாறும், அதனொடு சார்த்தி னத்திணை முடிபின" என்ற விதியா லமைந்தது. 'எம்பெருமான்' என்றதில், 'எம்' என்ற தன்மைப்பன்மை - எல்லாவுயிர்களையும் உளப்படுத்தும். பெருமான் என்பதில், மான்-பெயர்விகுதி; பெருமையென்பது ஈற்றுஐகாரம் மாத்திரங் கெட 'ஆன்' விகுதி பெற்றதென்றலும் ஒன்று.

இனி, பின்னிரண்டடிக்கு - சிறந்த கடவுளான சிவபிரான் முன்பு நெருப்புமுனையுடைய (திருமாலாகிய) கணையை எவியதனால் ஆகாயசஞ்சாரியான திரிபுரம் அழிந்ததுபோல அனைவரும் அழிந்தார்கள் என்று பொருளுரைப்பாரு முளர்; அது பொருந்துமேனும் உணர்க. (௬௩)

மாரதர்வீழ்ந்தாரதிரதர்மாய்ந்தார்
சாரதிகளும்வன்றலைகளிழந்தார்
நாரதன்முதலோர்நாகரநேகர்
பாரதமின்றேபற்றறுமென்றார்.

(இ - ள்.) (அப்பொழுது அருச்சுனனால் வழிக்கப்பட்டு), மாரதர்-மகாரத வீரர்கள், வீழ்ந்தார் - இறந்து கீழ்விழுந்தார்கள்; அதிரதர் - அதிரதவீரர்கள், மாய்ந்தார் - இறந்தார்கள்; சாரதிகளும்-தேர்ப்பாகர்களும், வல் தலைகள் இழந்தார் - வலிய (தம்தம்)தலைகளை யிழந்தார்கள்; நாரதன் முதலோர் நாகர் அநேகர் - (வானத்தில் நின்று போர்விநோதம் பார்த்துக்கொண்டிருந்த) நாரதன்முதலிய தேவர்கள்பலரும், பாரதம் இன்றே பற்று அறும் என்றார் - பாரதயுத்தம் இன்றைக்கே முற்றமுடிந்திடு மென்று சொல்பவரானார்கள்; (எ - று.)

அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் எனத் தேர்வீரர் நால்வகைப் படுவர். அதிரதர் - முழுத்தேரரசர்; அவராவார் - ஒருதேரில் ஏறிநின்று தம் தேர் குதிரை சாரதிகட்கு அழிவுவாராமற் காத்துப் பலவாயிரந்தேர்வீர

ரோடு எதிர்த்து வேறுதுணையில்லாமலே போர்செய்து வெல்லும் வல்லமை யுடையார். அவரிற் சிறிதுதாழ்ந்தவர் - மகாரதர்; இவர் - பதினோராயிரந் தேர்வீரரோடு பொருபவர். சமரதர் - ஒருதேர்வீரனோடு தாமும் ஒருவராய் எதிர்க்கவல்லவர். அர்த்தரதர் - அவ்வாறு எதிர்க்குமளவில் தம்தேர் முதலி யவற்றை இழந்துபோம்படியானவர்; இவர் இருவர் சேர்ந்தால், ஒருசமரத னுக்கு ஒப்பாவர்.

நாரதன்-பிரமபுத்திரன்,தேவவிருடி, சங்கீதத்திற்சிறந்தவன்,மகதீஎன் னும் வீணையை யுடையான், திரிலோகசஞ்சாரி, கலகப்பிரியன். நாரதன் என்றவடசொல் - ஆத்மஞானத்தை யுபதேசிப்பவ னென்றும், மனிதர்க்கு உள்ள ஒற்றுமையைக் கெடுப்பவ னென்றும் காரணப்பொருள்படும்; நரர் - ஆன்மாக்கள், மனிதர்; அவர்கள்சம்பந்தமானது - நாரம்; த - கொடுத்த லும், கெடுத்தலும். இவன் தேவமுனிவ னாதலால்,'நாரதன் முதலோர் நாக ரநேகர்'என்றார். ஸாரதி - வடசொல். பாரதம்-பரதவம்சத்தாருள் நிகழும் போர். இன்றேஎன்ற ஏகாரம் - பிரிநிலையோடு தேற்றம். வீழ்ந்தார், மாய்ந் தார், தலைகளிழந்தார் என்ற ஒருபொருட்பன்மொழிகள் வந்ததனால், பொ ருட்பின்வருநிலையணி. (௧௪)

[வேறுசெய்தி கூறத்தொடங்குதல்.]

இந்தவயப்போரிம்முறைவென்று
பைந்துளவோனும்பார்த்தனுமாகச்
சிந்துமகீபற்றேடிமணித்தே
ருந்துறுமெல்லையுற்றதுரைப்பாம்.

(இ - ள்.) இந்த வய போர் - இந்த வலிய போரிலே, இ முறை வென்று- இந்தவிதமாய் (ப் பகைவரை) ச் சயித்து, பைந் துளவோனும் பார்த்தனும் ஆக - பசுநிறமான திருத்துழாய்மாலையையுடைய கண்ணனும் அருச்சுனனு மாக, (இவ்விருவரும்), சிந்து மகீபன் தேடி-சிந்துநாட்டரசனான சயத்திர தனைத் தேடிக்கொண்டு, மணி தேர் உந்துறும் எல்லை - மணிகள் கட்டிய தேரைச் செலுத்துமளவில், உற்றது - நடந்த வேறொரு செய்தியை, உரைப் பாம் - இனிச் சொல்வோம்; (எ - று.)—அதனை, மேல் ௩௧ - கவிகளிற் கூறுகிறார்.

இது-கவிக்கூற்று:கதையிற்சம்பந்தப்படாமல்கவிதான்சொல்லும்வார்த்தை.

துளவு - துளஸீ என்னும் வடசொல்லின் திரிபு. மகீபன்+தேடி=மகீ பற்றேடி; இரண்டாம்வேற்றுமையுருபு தொக்கவிடத்து உயர்திணைப்பெய ரீறு விகாரமாயிற்று; [நன் - உருபு - ௧௬.] மணித் தேர் - அழகிய தேரும், இரத்தினம்பதித்த தேருமாம்.'உரைப்பாம்'என்ற தனித்தன்மைப்பன்மை- கவிகட்கு உரிய இயற்கைபற்றியது. உற்றது - வினையாலணையும் பெயர்.(௧௫)

[கண்ணனது சங்கொலி கேட்டலும் தருமன் கலங்குதல்.]

வள்ளல்குறித்தவலம்புரிநாதத்
தெள்ளமுதந்தன்செவியுறுபோழ்தி
னுள்ளணிநின்றமுரசமுயர்த்தோன்
றள்ளுறுநெஞ்சிற்சங்கையனானான்.

(இ - ள்.) வள்ளல் - (அடியார்கட்கு) வரையாமல்அருள்செய்யுந்தன் மையனான கண்ணபிரான், குறித்த - (முன்பு) ஊதிமுழக்கின, வலம்புரி - சிறந்த சங்கத்தினது, நாதம் - ஓசையாகிய, தெள் அமுதம் - தெளிவான அமிருதம், தன் செவி உறு போழ்தின்-தனது காதிற் பட்டவுடனே,—உள் அணி நின்ற முரசம் உயர்த்தோன் - நடுச்சேனைமத்தியிலே நின்ற தருமபுத் திரன், தள்ளுறு நெஞ்சில் சங்கையன் ஆனான் - சஞ்சலப்படுந்தன்மை யுள்ள தன்மனத்திற் சந்தேகங்கொண்டவனானான்; (எ - று.)

இங்கே, சங்கை - அருச்சுனனுக்கு யாதுஇடையூறு நேர்ந்ததோ என்ற கவலை. கண்ணனது சங்கநாதத்தைக் கேட்டவுடன் தருமபுத்திரன் சங்கித்ததன் காரணம், அடுத்தகவியின் இடையிரண்டடிகளில் விளங்கும். அருச்சுனனது பலபராக்கிரமம் முதலியவற்றையும் எல்லாம்வல்லகண்ணபிரானது உதவி அவனுக்கு உடன்இருத்தலையும் அறிந்திருந்தும், மனத்தின் தன்மை ஒருநிலைப்படாமற் பலவாறு நல்லவற்றையுந் தீயவற்றையுங் கருதுவதாதலால் அதன்போக்குக்கு ஏற்பச் சங்கித்தனனென்பார், 'தன்னுறுநெஞ்சிற் சங்கையனானன்' என்றார்; "அதிஸ்நேஹஃ பாபசங்கீ" என்றபடி அருச்சுனன்பக்கல் தனக்குஉள்ள மிக்கஅன்பினால் 'அவனுக்கு என்னதீங்கு வருமோ!' என்று காரணமில்லாமல் இயல்பாகவே எப்பொழுதுங் கவலைகொள்ளும் மனத்தனான தருமபுத்திரன் சங்கொலிகேட்டவளவிலே சங்கையுற்றனனென்க. அருச்சுனன் இன்றைப்பகலிலே தவறாது சபதத்தை நிறைவேற்றி உயிருய்தலைக்குறித்துத் தருமபுத்திரன் கவலைகொண்டிருக்குமளவிலே சங்கொலிகேட்டதனால் "புண்ணிற் புளிப்பெய்தாற்போல"க் கலக்கத்தின்மேற்கலக்க முற்றனனென்றுங் கொள்க. பகைவர்க்கு மிக்க அச்சத்தை விளைக்குந் தன்மையதாயினும் அன்பர்க்குச் செவிக்கினிமைதருவதாதலால், சங்கநாதம் 'தெள்ளமுதம்'எனப்பட்டது. முரசமுயர்த்தோன்-பேரிகைவாத்தியத்தின் வடிவ மெழுதின கொடியை உயரநிறுத்தினவன்; இங்கே, முரசமென்பது - கொடிக்கு, இருமடியாகுபெயர்; தனதுவெற்றிக்கு அறிகுறியாகவும் மங்கலகரமாகவும் தருமபுத்திரன் முரசத்தைக் கொடியிற் கொண்டனன். (கஅ)

[தருமன் சாத்தகியை அருச்சுனனுக்குத் துணைசெல்லச் சொல்லுதல்.]

தன்றுணை நின்ற சாத்தகி யைக்கூய்
வென்றிடு போரில் விசயனி ளைத்தா
லன்றிமு ழக்கா னதிர்வளை யையன்
சென்றறி குதிநீ யென்றுரை செய்தான்.

(இ - ள்.) (இங்ஙனம் சங்கைகொண்ட தருமபுத்திரன்),—தன் துணை நின்ற சாத்தகியை கூய் - தனக்குத்துணையாகநின்ற சாத்தகியை அழைத்து,—(அவனை நோக்கி),—'வென்றிடு போரில் - சயித்திடுதற்குரிய யுத்தத்திலே, விசயன் இளைத்தால் அன்றி - அருச்சுனன் இளைப்படைந்தாலல்லாமல், ஐயன்-தலைவனான கண்ணபிரான், அதிர் வளை முழக்கான் - அதிர்ச்சியுண்டாக்கவல்ல சங்கத்தை ஊதி ஒலிசெய்யமாட்டான்; (ஆதலால்), நீ—, சென்று - (அவர்கள்உள்ளஇடத்துக்குப்) போய், அறிகுதி - (நிகழ்ந்தசெய்தியை) அறிவாய்,' என்று—, உரைசெய்தான் - சொன்னான்; (எ - று.)

இப்பாட்டில் இரண்டுமூன்றாமடிகளிற் கூறிய விஷயம், தூரத்தில்நிகழும் நிகழ்ச்சியைத் தெரிவித்தற்பொருட்டுக் கண்ணன் அன்றைத்தினத்தில் தருமபுத்திரனோடு செய்த தொரு சங்கேதமென அறிக; இங்ஙனங் கொள்ளாவிடின், முன்னும் பின்னும் சிலசமயங்களில் வெற்றிக்கு அறிகுறியாகக் கண்ணன் சங்கநாதஞ்செய்தனனென வருமவற்றோடு மாறுபடும்: அன்றியும், மற்றையோர்க்குப்போலச் சங்கம் கண்ணனுக்கு ஒருதுகருவிமாத்திரமாகாமல் ஆயுதமாகவும் இருத்தலால், பாண்டவர்க்குஉதவியாகப் படைக்கலம்எடேனென்று துரியோதனனுக்குச் சபதஞ்செய்திருந்த கண்ணன் அச்சபதத்துக்குமாறாக அருச்சுனன் போர்செய்கையில் அவ்வாயுதத்தைத் தான் உபயோகிக்கிறது அவனுக்குஉண்டானதோர்இளைப்புப்பற்றியேயாதல்வேண்டு மென்று கொள்ளுதற்கும் இடமுண்டு. மேற் பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "வஞ்சினமறந்து நேமியுந்தரித்து வலம்புரி குறித்து" எனச் சக்கராயுதத்தைப் பிரயோகித்தலோடு சங்கநாதத்தைச்

செய்தலோடு வாளியறக் கூறியிருக்குமாறு காண்க. இனி, 'அதிர்வளைமுழக்கான்' என்ற சொற்போக்கினால், வெற்றிக்கு அறிகுறியாகிற சங்கொலிக்கும், இளைப்புக்கு அறிகுறியாகிற சங்கொலிக்கும் வேறுபாடறிந்து கூறினா னென்னலுமாம்.

யதுகுலத்தரசர்களில் வசுதேவனுக்கு உடன்பிறந்தமுறையாகின்றவனும் சினியென்பவனது மகனு மான சத்தியகனது குமாரனாகிய சாத்தியகி, பிராயத்திற் கண்ணனினும் இளையவனாதலால், கண்ணனுக்குத் தம்பிமுறையாவன். ஸாத்யகி என்னும் வடமொழித்தத்திதாந்தநாமம், திரிந்தது. இலக்குமணன் இராமனிடத்துப்போல இவன் கண்ணனிடம் மிக்கஅன்பு கொண்டு அவன்கருத்துக்குச் சிறிதும்மாறுபடாது நடப்பவன்; அன்றியும், இவன், அருச்சுனனிடம் வில்வித்தையைக் கற்றறிந்த மாணாக்கனாதலால், ஆசிரியனாகிய அருச்சுனனிடத்தும் அதுசம்பந்தமாக மற்றைப்பாண்டவரிடத்தும் நீதிமுறைவழுவாமல் அன்போடு ஒழுகுவன். இவனுக்கு யுயுதானனென்றும், சைநேய னென்றும் பெயர்களுண்டு.

கூய் என்றதில், கூ - பகுதி, ய் - இறந்தகாலவினையெச்சவிகுதி. அறிகுதி என்ற ஏவலொருமைமுற்றில், கு - சாரியை. (கஎ)

வேறு.

[அதற்குச் சாத்தகி இஷ்டத்தோடு உடன்படுதல்.]

வன்கட் டிண்டோண் மன்பலர் நிற்க
வென்கட் டந்தா னின்னுரை யென்னா
மன்கட் டாரோன் மலரடி வீழ்ந்தான்
றன்கட் டாண்மைத் தன்முனொ டொப்பான்.

(இ - ள்.) 'வன்கண் - வலியதன்மையையும், திண் தோள் - வலிய தோள்களையுமுடைய, மன் பலர் - அரசர்கள் பலர், நிற்க - (தன் அருகிற்) காத்துக்கொண்டிருக்கவும், (தருமபுத்திரன் அவர்களில் ஒருவர்க்கும் இக்கட்டளையையிடாமல்), இன் உரை - இனிய (இவ்) வார்த்தையை, என்கண் தந்தான் - என்னிடத்திற் கூறினான்,' என்னா - என்றுஎண்ணி (மகிழ்ச்சி கொண்டு),—தன் கட்டு ஆண்மை தன் முனொடு ஒப்பான் - தனதுவலிய பராக்கிரமத்தில் தனதுதமையனான கண்ணபிரானோடு ஒப்பவனான அந்தச் சாத்தகி,—மன் கள் தாரோன் மலர் அடி வீழ்ந்தான் - மிகுதியான தேனுள்ள பூமாலையையுடைய தருமபுத்திரனது தாமரைமலர்போன்றபாதங்களில் விழுந்து நமஸ்கரித்தான்; (எ - று.)

இப்பொழுது நமஸ்கரித்தது, விடைபெற்றுச்செல்லுகையிற் செய்யும் உபசார மென அறிக. மற்றும்பலபேர் சுற்றிலும் கட்டளையை எதிர்பார்த்து நிற்கவும் அவர்கட்குஇந்தஉரிமையைக்கொடாமல் எனக்கேகொடுத்ததனால் என்னிடம் தருமனுக்கு மிக்கவிசுவாச மென்றும், ஆதலால் யான் அம்மொழியைக் கடவாமல் முறைமைப்படி நிறைவேற்றுதற்குஉரியே னென்றும் கருதி உடன்பட்டு விடைபெறுபவனாயினன் என்பதாம். அருச்சுனனது அழிவிலாற்றலை அறிந்தவனாயினும், தருமன்கட்டளையைக் கடத்தற்குஅஞ்சி உடன்பட்டன னென்க.

மன் - பெருமை; பெருமையுடைய மன்னர்க்குப் பண்பாகுபெயர். என்கண் தந்தான் - தருதல்வினை தன்மைக்கு வந்தது; [நன் - பொது - கூ0.] கட்டாண்மை - உறுதியான ஆண்தன்மை; பேராண்மை. முன் - முன்னேபிறந்தவனுக்குக் காலவாகுபெயர். 'இன்னுரை' என்றவிடத்து 'இவ்வுரை' எனவும் பாடமுண்டு; இக்கட்டளைச்சொல் என்று பொருள்.

இக்கவி - மூன்றுஞ்சீரொன்று விளச்சீரும், மற்றைமூன்றும் மாச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தம். (கஅ)

வேறு.

[சாத்தகி அருச்சுனனாற்றலைத் தருமனுக்குக் கூறுதல்.]

கண்ணுற நில்லார் கடவுளர் முதலாம்
விண்ணவ ரேனும் விசயன் வெகுண்டான்
மண்ணிலெ திர்க்கு மன்னவர் யாரோ
தண்ணளி நெஞ்சுந் தருமமு மிககோய்.

இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) 'தண் அளி நெஞ்சும் - குளிர்ந்த கருணையுள்ள மனமும், தருமமும் - அறச்செய்கையும், மிக்கோய் - மிகுந்த யுதிஷ்டிரனே! விசயன் வெகுண்டால் - அருச்சுனன் கோபங்கொண்டால், கடவுளர் முதல் ஆம் விண்ணவர் ஏனும் - தேவர்கள் முதலான வானுலகத்தவர்களேயாயினும், கண் உற நில்லார் - அவன்கண்ணுக்கு எதிராக நிற்கவும் மாட்டார்கள்; (அங்ஙனமிருக்க), மண்ணில் எதிர்க்கும் மன்னவர் யாரோ - இப்பூலோகத்தில் (அருச்சுனனை)எதிர்க்கவல்ல அரசர் எவரோ? [எவருமில்லை]; (எ - று.)

இது - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி; வடநூலார்,காவ்யார்த்தாபத்தியலங்காரமென்பர்: அதனிலக்கணம் -ஒருபொருளைச்சொல்லி அது கொண்டு மற்றொருபொருளை தண்டாபூபிகாந்யாயத்தால்எளிதிற்சித்திக்க வைத்தல்; தண்டத்தை அபகரித்தமை கூறியதனால் அதிற்கட்டிவைத்த அப்பம் முதலிய உணவு அபகரிக்கப்பட்டமையும் தானேவிளங்குதல் போல, அருச்சுனனைஎதிர்க்கவல்லார் தேவரிலுமில்லையென்றதனால் மனிதரிலில்லையென்பது எளிதிற் சாதிக்கப்பட்டவாறு காண்க.

கண்ணுறநில்லார் - கண்பார்வைக்கு இலக்காகாமல் விலகுவரென்றபடி. கடவுளரென்றது - தேவர்களைக் குறிப்பதென்றும், விண்ணவரென்றது - அவரினத்தவரான அசுரர் யக்ஷர் கந்தருவர் வித்தியாதரர் கிந்நரர் கிம்புருஷர்முதலிய கணங்களை யுளப்படுத்திய தென்றும் இங்கு வேறுபாடு கொள்க. இனி, 'கடவுளர்முதலாம் விண்ணவர்' என்றதற்கு-திரிமூர்த்திகள் முதலான தேவர்கள் என்றலும் ஒன்று. ஏன் - எனின் என்பதன் மரூஉ. 'விண்ணவரேனும்' என்ற உயர்வுசிறப்பும்மை - அவர்களது மிக்கவலிமை, எளிதில்இறவாதஇயல்பு, பேரறிவு முதலியவற்றைக் காட்டும். மிக்கோய் - மிக்கான் என்பதன் ஈறுதிரிந்த விளியான 'மிக்காய்' என்பது, யகரவீற்றயல்ஆகாரம் ஓகாரமாயிற்று.

இதுமுதல் ஐந்து கவிகள், ௬௨-ஆங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (௬௬)

[சாத்தகி தருமன்கட்டளைப்படி செல்லுதல்.]

என்றறன்மைந்தனேவறலைக்கொண்
டன்றொருதேர்மேலதிரதரோடுஞ்
சென்றனன்வெய்திற்றேவகிமைந்தன்
றுன்றியசெருவிற்றூசிபிளந்தே.

(இ - ள்.) என்று - என்று (தருமபுத்திரனுக்குத் தைரியஞ்) சொல்லி,— தேவகி மைந்தன் - தேவகியின்மகனான சாத்தகி,—அறன் மைந்தன் ஏவல் தலைக்கொண்டு-தருமபுத்திரனதுகட்டளையைத் தலைமேற்கொண்டு,—அன்று - அப்பொழுது,—ஒரு தேர்மேல்-ஒப்பற்றதொரு தேரின்மேலே,—அதிரதரோடும்-(பல)அதிரதவீரர்களுடனே,—துன்றிய செருவில் தூசி பிளந்து-நெருங்கியபோரிற் (பகைவரது) முற்படையை(த் தனது ஆயுதங்களினாற்) பிளந்துகொண்டு, வெய்தின் சென்றனன் - விரைவாகச் சென்றான்;(எ - று.)

தேவகி - ஈயீறுஇகரமான வடசொல்; இவள், வசுதேவனது மனைவி: கண்ணனைப்பெற்ற தாய். சத்தியகனதுபுத்திரனான சாத்தகியை 'தேவகி மைந்தன்'என்றது-நற்குணநற்செய்கைகளிற்சிறந்த அத்தேவகி,தனது அரு

மைத்திருமகனுன கண்ணனிடம் பேரன்புடையவனும் அவனுக்குத் தம்பி முறையாகின்றவனுமான சாத்தகியினிடம் புத்திரவாஞ்சை வைத்திருந்தன னென்பதுபற்றி யென்க: (கம்பராமாயணத்து மந்தரைசூழ்ச்சிப்படலத்தில் முதலில் இராமனிடம் புத்திரவாற்சலியம் வைத்திருந்த கைகேயி "இராமனைப்பயந்தஎற்கு இடருண்டோ" என்றதனேடு இதனை ஒப்பிட்டு அறிக.) இனி, தேவகிமைந்தன் துன்றிய செருவின் - தேவகிபுத்திரனுன கண்ணன் பொருந்தியுள்ள போர்க்களத்தை நோக்கி, தூசி பிளந்து - (எதிர்ப்பட்ட) முன்னணிச்சேனையைப் பிளந்துகொண்டு, சென்றனன் எனவுரைத்து, சாத்தகி என்னுந் தோன்ருஎழுவாய் வருவித்தலும் ஒன்று.

அறன் என்றதை - 'தேவர்களை இருதிணையாகவும் குறிக்கலாம்' என்ற இயல்பின்படி யமதருமராசனைக்குறித்த அறம் என்ற அஃறிணைப்பெயரின் இறுதி மகரம் னகரப்போலிபெற்றதென்ருவது, அப்பெயர் மகரம்கெட்டு 'ன்' என்னும் உயர்திணையாண்பால் விகுதியோடு புணர்ந்ததென்ருவது கொள்க. தலைக்கொள்ளுதல் - சிரஸாவகித்தல், கௌரவித்தல். 'ஏவறனைக் கொண்டு' என்ற பாடத்துக்கு - ஏவலை யுட்கொண்டு என்றுபொருள்; தன்-சாரியை. (க00)

[சாத்தகி கிருதவன்மனைத் தோற்பித்தல்.]

விருதொடுமுந்தவிளங்கியகொற்றக்
கிருதனையாதிக்கேழலொடொப்பா
னொருதனுவுங்கொண்டேர்பரிமாவு
மிரதமும்வில்லுமிமைப்பிலழித்தான்.

(இ - ள்.) ஆதி கேழலொடு ஒப்பான் - ஆதிவராகமூர்த்தியோடு ஒப்பவனுன சாத்தகி,— விருதொடு - பிருதாவளிகளுடனே, முந்த விளங்கிய - முற்பட [எதிரிலே] சிறப்பாகக்காணப்பட்ட, கொற்றம் - வெற்றியையுடைய, கிருதனை - கிருதவன்மாவை,— ஒரு தனுவும் கொண்டு - தனது ஒருவில்மாத்திரத்தைக் கொண்டு,— ஊர் பரிமாவும் இரதமும் வில்லும் இமைப்பில் அழித்தான் - தேரை நடத்திக்கொண்டு விரைந்துசெல்லுகிற குதிரைகளும் தேரும் வில்லும் கண்ணிமைப்பொழுதிலே அழியச்செய்தான்.

'ஆதிக்கேழல்' என்றது, உலகத்தின்கீழிருந்து அதனைத் தாங்குகிற பழைய பெரிய விஷ்ணுவின்அம்சமான பன்றியைக் குறிக்கும். அன்றியும், முன்னொருகாலத்திற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன இரணியாக்கனைத் திருமால் வராகரூபமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற்குத்தியெடுத்துக் கொண்டு வந்து விரித்தருளினனென்றும், இப்பொழுது நடக்கிற வராககல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப்பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமானபிரளயசலத்தில் முழுகியிருந்த பூமியை மேலேஎடுக்க நினைத்து ஸ்ரீவராகாவதாரத்தைச் செய்தருளிக் கோட்டுநுனியாலே பூமியை எடுத்துவந்தன னென்றும் வரலாறுகள் உண்டு. வராகமூர்த்தி சிறிதும்சிரமமில்லாமற் பெரியஉலகமுழுவதையும் எளிதில்தாங்கும் வல்லமையுடையனுயிருப்பதுபோல எப்படிப்பட்ட பெரும்போரையும் அலட்சியமாக இளைப்பின்றித் தாங்கும் ஆற்றலுடையவன் சாத்தகி யென்பார், 'ஆதிக்கேழலொடொப்பான்' என்ருர்; "ஊனமில் ஞால மொடுங்கு மெயிற்ருண், ஏன மெனுந்திறல் மாவலி யென்பான்" எனக் கம்பராமாயணத்தில் மகாபலிசக்கரவர்த்திக்கு ஸ்ரீவராகநாயனுரை உவமைகூறியது காண்க. கீழ் "தன்கட்டாண்மைத் தன்முனொடொப்பான்" என்றும், இங்கு 'ஆதிக்கேழலொடொப்பான்' என்றுங் கூறியதனுல், கண்ணன்தம்பியாகிய சாத்தகிக்குப் பலபராக்கிரமங்களில் திருமாலோடு ஒப்புமை கூறியவாரும்.

விருதொடு முந்த விளங்கிய - பலபேர் பலவிருதுவரிசைகளைக் கூறி வரத் தலைமையாக எதிரில்நின்ற என்றபடி. இனி, விருதொடு விளங்கிய - பராக்கிரமந் தோன்ற மேன்மையான தோற்றத்தோடு நின்ற என்றும், வெற்றியைக்குறிக்கிற சின்னம்முதலிய வாத்தியங்களுடனே முன்நின்ற என்றும், வெற்றியைக்குறிக்கிற கொடியின் சிறப்புடனே எதிராகநின்ற என்றும்கொள்ளலாம். 'ஒருதனுவும்' என்றசிறப்பும்மை-வேறோராயுதத்தைத் துணையாக வேண்டாமையைக் காட்டும். ஊர்பரிமா-வினைத்தொகை. (௧0௧)

[பலரையும் அழித்துவந்த சாத்தகியைச் சலசந்தன் எதிர்த்தல்.]

பன்மகநூறாயிரவர்பரித்தே
ரன்மிகநூறாயிரவரழிந்தார்
மன்மதவெங்கைமலைமிசைவீரன்
றன்முன்மலைந்தான்றார்ச்சலசந்தன்.

(இ - ள்.) பரி தேரன்-குதிரைகள்பூண்டதேரையுடைய சாத்தகி, மிக-மேலிட்டுவருதலால்,—பன்-சிறப்பித்துச்சொல்லப்படுகிற, நூறு-பகையழிக்குந்தன்மையுள்ள, மக ஆயிரவர் - (பல) ஆயிரக்கணக்கான கண்ணன்மக்களும், நூறாயிரவர் - லக்ஷக்கணக்கான மற்றைவீரர்களும், அழிந்தார்-சிதைந்தார்கள்; (இங்ஙனம் சிதைகையில்), தார் சலசந்தன் - போர்மாலையையுடைய சலசந்தனென்னும் அரசன், மன் மதம் வெம் கை மலைமிசை-மிகுதியான மதத்தையும் கொடிய துதிக்கையையு முடைய மலைபோன்ற யானையின்மேலே (வந்து), வீரன்தன் முன் மலைந்தான் - சிறந்தவீரனான அச்சாத்தகியின் முன்னே பொருதான்; (எ - று.)

இக்கவியின் முன்னிரண்டடி - கிருதவர்மாவினுடன் நின்ற பலவீரர்களின் அழிவைக் கூறியது. துரியோதனனும் அருச்சுனனும் ஒருங்கேசென்று கண்ணபிரானைத் தம்தமக்குப் போரில்உதவியாகுமாறு அழைத்தபொழுது, அப்பெருமான், முன்பு தனக்குப் பதினாறாயிரம் கோபஸ்திரீகளிடம் பிறந்தவர்களான நாராயணகோபாலர்பதினாறாயிரவரையும் பலயாதவவீரர்களையும் ஓரக்ஷௌகிணி சேனையையும் துரியோதனனுக்குப் படைத்துணையாகுமாறு கட்டளையிட்டு,கிருதவர்மாவென்ற யாதவவீரனை அப்பெருஞ்சேனைக்குத் தலைவனாக்கித் துரியோதனனுடன் செலுத்தியுள்ளானாதலால், அவர்களில் கிருதவர்மா சாத்தகியின்முன் அழிந்ததைக் கீழ்க்கவியிற்கூறி,அவனுடன்நின்ற பல ஆயிரக்கணக்கான கிருஷ்ணபுத்திரர்களும், லக்ஷக்கணக்கான சேனைவீரர்களும் சாத்தகியின்முன் அழிந்ததை இக்கவியிற்கூறினரென்க. கண்ணன்மக்களையே சாத்தகியின்மக்கள்போலக் கூறியது, தலைவன்பிள்ளைகளிடம் அவனுக்குஉள்ள அன்புரிமையினாலென்க.

இனி, 'பன்முகநூறாயிரவர்' என்ற பாடத்துக்கு - பல் முகம் நூறாயிரவர் பரி தேர் - பலவகையாகவந்த லக்ஷக்கணக்கானவீரர்களுடைய குதிரைகள்பூண்ட தேர், அல் மிக - இருள்போல மிக்குச்சூழ, நூறாயிரவர் - அவ்விலக்ஷம்பேரும்,அழிந்தார்-(சாத்தகியினால்)சிதைந்தார்கள் என்றுஉரைக்கலாம்: இவ்வுரைக்கு இரண்டாம்அடியில் வந்த 'நூறாயிரவர்' என்றது - சுட்டுமாத்திரமாய் 'அவர்' என்ற பொருளைத் தந்த தென்க; முகம் - இடமுமாம். தார் - சேனை யெனினுமாம். மன் மதம் - (என்றும் மாறாமல்) நிலைபெற்ற மத மென்னவுமாம். வெம் கை-உஷ்ணமான துதிக்கை யென்றலும் ஒன்று; மதயானைக்கு உடம்பு சூடாயிருக்கும். மலை - உவமையாகுபெயர். 'மன்மதவெங்கை' என்ற அடைமொழியினால், மலையென்றது யானையென்ற பொருளைத் தெரிவித்தல், பிறகுறிப்பாம். (௧0௨)

[சலசந்தன் சாத்தகியின்முன் ஓடுங்குதல்.]

தார்ச்சல சந்தன் சாத்தகி யென்னுங்
கார்ச்செல வாய கணைமழை யாலே

போர்ச்சல மில்லாப் புகர்மலை யோடு
மேற்சல மெய்தி வெங்கன லானான்.

(இ - ள்.) தார் - போர்மாலையையுடைய, சலசந்தன் - அந்தச் சலசந்தனென்பவன்,— சாத்தகி என்னும் கார் செலவு ஆய-சாத்தகியென்கிற மேகத்தினின்று வெளிப்பட்டுவந்தனவான, கணை மழையாலே - பாணவர்ஷத்தால்,— போர் சலம் இல்லா புகர் மலையோடு - போரிற்கலங்குதலில்லாத முகச்செம்புள்ளிகளையுடைய மலைபோன்ற யானையுடனே, மேல் சலம் எய்தி - மிக்ககலக்கத்தை யடைந்து, வெம் கனல் ஆனான் - வெவ்வியநெருப்புப்போன்றவனானான்; (எ-று.)

சலசந்தனிடத்து நெருப்பின்தன்மையையும், அவன்யானையினிடத்து மலையின்தன்மையையும், சாத்தகியினிடத்து மேகத்தின்தன்மையையும், அவன் பிரயோகிக்கிற அம்புத்தொகுதியினிடத்து அம்மேகம் சொரிகிற மழையின்தன்மையையும் ஏற்றிக்கூறினார்; உருவகவணி. ஒருபெரியமலையிற்பற்றியெரிகிற நெருப்பு மேகம்மிகுதியாகச்சொரிந்த மழையினால் தான் அம்மலையுடனே அழிதல்போல, பெரியயானையின்மேற் கொடியனாய்வந்த சலசந்தன் சாத்தகியெய்த அம்புகளினால் தனதுயானையோடும் ஒழிந்தனனென்பதாம். மேலே நீர்சொரிதலால் நெருப்புத் தான்உள்ளவிடத்தே தணிந்திடுதல், இயல்பு. 'மேற்சலமெய்தி' என்ற தொடர் - சொல்லாற்றலால், மேலேநீர்பொருந்தப்பெற்று என்ற பொருளையுந் தரும்; இதில் சிலேடையணி தொனிக்கின்ற தென்க. 'மேற்சலமெய்து வெங்கனலானான்' என்ற பாடம், மேலே நீர்வந்துவிழப்பெற்ற கடுநெருப்புப்போ லாயினானென இனிதுபொருள்படும்.

அசையும்பொருளான யானையை அசையாப்பொருளான மலையாக ஒற்றுமைநயம்படக்கூறுதல் பொருந்துமோ வென்ற ஆசங்கையை வருவித்துக்கொண்டு, யானைக்கும் போரிற்சலியாமை [சோர்வுபடாமை] உண்டென விளக்குவார், 'போர்ச்சலமில்லாப் புகர்மலை' என்றார். முகத்திற் செம்புள்ளிகளிருத்தல் உத்தமயானையிலக்கண மாதலால், 'புகர்மலை' எனப்பட்டது; பதினான்காம்போர்ச்சருக்கத்தின் எ, அ - ஆம் கவிகளையுங் காண்க. சலம் - வடசொல். மேல் - பின்பு என்றுமாம். (கOரு)

வேறு.

[துரியோதனன்தம்பியர்நால்வரைச் சாத்தகி வெல்லுதல்.]

நாட்ட மில்லா நரபதி மைந்த
ரீட்ட மாக வீரிரு வோர்கள்
கூட்டம் பெய்யக் கொடுமுனை வென்றான்
வேட்டம் போன வெங்களி றொப்பான்.

(இ - ள்.) நாட்டம் இல்லா நரபதி மைந்தர் - கண்களில்லாத அரசனான திருதராஷ்டிரனது புத்திரர்கள், ஈரிருவோர்கள் - நாலுபேர், கூட்டம் ஆக - ஒருதிரளாக(வந்து), கூட்டு அம்பு எய்ய - தொகுதியாகப் பாணங்களைப் பிரயோகிக்க,—வேட்டம் போன வெம் களிறு ஒப்பான் - வேட்டையாடச்சென்ற கொடிய ஆண்யானையைப் போன்றவனான சாத்தகி, கொடுமுனை வென்றான் - கொடிய அவர்கள்போரைச் சயித்தான்; (எ - று.)

இயற்கையில் வலிமைமிகுதியையுடையதும் அடங்காச்சினமுள்ளதுமான யானை வேட்டைக்குச்சென்றால் பலபிராணிகளையுந் தவறாமல்அழிக்க வல்லதாதல்போல, பலமுஞ் சினமு முடையவனாய்ப் பகைவரை எளிதில் அழிக்க வல்லா னென்பது, நான்காமடியின் கருத்து. விசித்திரவீரியனது மனைவியரில் ஒருத்தியான அம்பிகை தனது மாமியார்கட்டளையினால் தரும

சாஸ்திரவிதிப்படி சந்ததிவிருத்தியின்பொருட்டு மைத்துனனான வியாச மகாமுனிவனோடு சேர்கையில் மிகஅஞ்சிக் கண்களை விழியாதிருந்ததனால் அவளிடம் பிறவிக்குருடனாகத் திருதராட்டிரன் பிறந்தா னென்ற வரலாறு, ஆதிபருவத்திற் கூறப்பட்டது.

நர பதி - வடசொல்; மனிதர்க்குத் தலைவ னென்று பொருள். ஈட்டம்- ஈண்டு என்ற பகுதியின் தொழிற்பெயர்; அம் - விகுதி, வலித்தல் - விகாரம். கூட்டு - கூடு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். கூட்டு அம்பு எய் அ கொடு முனை என்று பிரித்து, தொகுதியான அம்புகளை யெய்கிற அந்தக் கொடியபோர்க்களத்து என்று பொருள்கொள்ளுதலுமாம். இருவர், இருவோர்என ரகரவீற்றயல்அகரம் ஓகாரமாயிற்று. வேடு என்ற நெடிற்றொடர், தன்னொற்றிரட்டி, அம்சாரியை பெற்று, வேட்டம் என நின்றது. இதுவும், அடுத்தகவியும், ௬௮-ஆங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (க0௪)

[இங்ஙனம் பொருதுசெல்லுகிற சாத்தகியைத் துரோணன் பார்த்தல்.]

யாரும் போரி லெளிவர வீரஞ்
சாருஞ் சாபந் தன்னொடு நேமித்
தேருந் தானுஞ் சென்றிடு வோனைக்
கூருஞ் சாபக் குருவெதிர் கண்டான்.

(இ - ள்.) யாரும் போரில் எளிவர - (தன்னையெதிர்ப்பவர்) எல்லாரும் யுத்ததில் எளிமையடையும்படி, வீரம் சாரும் சாபந்தன்னொடு - போர்த் திறம்பொருந்திய வில்லுடனே, நேமி தேரும் தானும் சென்றிடுவோனை - சக்கரவலிமையுள்ள தேரும் தானுமாக(த் தடையறச) செல்பவனான சாத்தகியை, கூரும் சாபம் குரு - மிக்கவில்வித்தையில்வல்ல துரோணாசாரியன், எதிர் கண்டான் - எதிரிற் பார்த்தான்; (எ - று.)

எளிவர-சோர்வடைய; அவமானப்பட: இச்செயவெனெச்சத்தில், எளிவர- பகுதி: எளிமை யென்னும் பண்பினடியும் வாஎன்ற வினைப்பகுதியுஞ் சேர்ந்து ஒருசொல்தன்மைப்பட்டன வென்க. தேரும் தானும் சென்றிடுவோன்- அஃறிணை தன்னிற்சிறந்த உயர்திணையோடு சேர்ந்ததனால் அதன் ஒருமை முடிபையே கொண்ட திணைபால்வழுவமைதி. கூரும் - மிகுதியுணர்த்துகிற கூர் என்னும் உரிசொல்லடியாப் பிறந்த தெரிநிலைப்பெயரெச்சம். சாபகுரு - (தவவலிமையாற்) சபிக்கவல்ல ஆசிரிய னென்றலும் ஒன்று; "வீரசாப முட னுரைக்கும் வெய்யசாபம் வல்ல அத்தீரன்" என்றார் இரண்டாம்போர்ச் சருக்கத்தும். (க0௫)

வேறு.

[துரோணன் சாத்தகியைப் போர்க்குஅழைக்க, அவன் மறுமொழிகூறல்.]

ஏக லேகலென் னுடனினி யமர்புரிந் தேகென்
றாகு லம்படத் தகைந்தன னடற்சிலை யாசான்
மேக வண்ணனுக் கிளவலும் வேதிய ருடன்போர்
மோக ரிப்பது தகுதியன் றெனக்கென மொழிந்தான்.

(இ - ள்.) 'ஏகல் ஏகல் - போகாதே போகாதே; இனி - இப்பொழுது, என்னுடன் அமர் புரிந்து - என்னோடு போர் செய்தே, ஏகு - (பின்பு அப்பாற்) செல்', என்று-என்றுசொல்லிக்கொண்டு, ஆகுலம் பட - ஆரவாரமுண்டாக, அடல் சிலை ஆசான் - வலிய வில்லாசிரியனான துரோணன், தகைந்தனன் - (சாத்தகியைத்) தடுத்தான்; (அப்பொழுது), மேகவண்ணனுக்கு இளவலும் - மேகம்போன்ற திருநிறமுடையவனான கண்ணனுக்குத் தம்பியாகிய சாத்தகியும், 'வேதியருடன் போர் மோகரிப்பது - பிராமணருடனே கொடுமையாகப்போர்செய்வது, எனக்கு தகுதி அன்று - (க்ஷத்திரியனான) எனக்கு உசிதமன்று', என மொழிந்தான் - என்று சொன்னான்.

இங்ஙனம் உபசாரமாகக்கூறிய சாத்தகிவார்த்தையில், 'நீ உன்சாதிக்கு இயல்பில்உரியதல்லாத போர்த்தொழிலை மேற்கொண்டாயாயினும், சாதி கௌரவத்தையுடைய உன்னை யெதிர்த்துப் போர்செய்தற்கு க்ஷத்திரியதருமந்தவறுதவனான யான் துணிவுடையேனல்லேன்' என்று துரோணனைப்பற்றிய இகழ்ச்சியுந் தோன்றும்.

இங்ஙனந் தந்திரமாக மறுமொழிகூறித் தப்பி யுட்செல்லும் உபாயம் மாயவனான கண்ணனது தம்பிக்கு உரிய தென்பது தோன்ற,'மேகவண்ணனுக்கிளவல்' என்றார். ஏகல் - 'அல்' விகுதி பெற்ற எதிர்மறையொருமையேவல்; அடுக்கு - உறுதிப்பொருளை விளக்கும். ஆகுலம்பட - ஆடம்பரமாக; இது இப்பொருளதாதலை, " மனத்துக்கண் மாசிலனாதலனைத்தறன், ஆகுல நீர பிற" எனத் திருக்குறளிலுங் காண்க. ஆசான் - ஆசார்ய னென்னும் வடசொல்லின் சிதைவு. வேதியர் - வேதங்களை ஓதுதற்கும் ஓதுவித்தற்கும் உரியவர். தகுதி - 'தி'விகுதி பெற்ற தொழிலாகுபெயர்.

இதுமுதற் பதினைந்து கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள். (க0சு)

[இருவரும் பொருது இளைத்தல்.]

இருவருந்தமதிருசிலையெதிரெதிர்குனித்தா
ரிருவருங்கொடும்பகழியுமுறைமுறையெய்தா
ரிருவருந்தமதேர்சிலையாவையுமிழந்தா
ரிருவரும்பெரும்பொழுதமர்திளைத்தனரிளைத்தார்.

(இ - ள்.) இருவரும் - (துரோணன் சாத்தகி யென்ற) இரண்டுபேரும், தமது இரு சிலை - தம்வில்இரண்டையும், எதிர் எதிர் குனித்தார் - (ஒருவர்க்கொருவர்) எதிரிலே வளைத்தார்கள்; இருவரும் - அவ்விரண்டுபேரும், கொடும் பகழியும் - கொடிய அம்புகளையும், முறை முறை எய்தார் - (ஒருவர்மேல் ஒருவர்) மாறிமாறிப் பிரயோகித்தார்கள்; இருவரும் - இரண்டுபேரும், தம தேர் சிலை யாவையும் இழந்தார் - தங்களுடைய தேர் வில் முதலிய எல்லாவற்றையும் (அப்போரில் எதிரம்புகளால்) இழந்தார்கள்; இருவரும்—,பெரும் பொழுது அமர் திளைத்தனர் - நெடுநேரம் இடைவிடாது போர்செய்து, இளைத்தார் - சோர்வடைந்தார்கள்; (எ - று.)

தம, அ - ஆறும்வேற்றுமையின் பன்மையுருபு. துரோணனம்புகளினாற் சாத்தகியும் சாத்தகியினம்புகளினால் துரோணனும் தேர்முதலியன அழியப்பெற்றன ரென்பது, மூன்றாமடியின் கருத்து. திளைத்தல் - இடைவிடாதுபயிலுதல். 'அமர்விளைத்தனர்' என்றும் பாடமுண்டு. துரோணன் தகைந்ததற்குச் சாத்தகி 'வேதியருடன் போர்மோகரிப்பது தகுதியன்று எனக்கு' என்று மறுமொழிகூறியபின்பும் துரோணன் விடாதுபோர்தொடங்கியதனாற் சாத்தகியும் எதிரம்பு தொடுக்கவேண்டியதாயிற் றென்க. 'இருவரும்' என்ற சொல் அடிதோறும்வந்தது, சொற்பொருட்பின்வருநிலை. 'இருவரும்' என்றது - முதலடியொழிந்த மூன்றுஅடிகளிலும் சுட்டுமாத்திரமாய்நின்றது. முறைமுறை - முறைப்படி எனினுமாம்; கோக்குமுறைமைபிறழாம லென்றவாறு. (க0எ)

[சாத்தகி இளைப்புத்தீர்ந்து அப்பாற்செல்லுதல்.]

இளைத்துவேதியனிற்பமன்னவனிளைப்பாறி
யுளைத்தடம்பரித்தேருமற்றொன்றுமேல்கொண்டு
வளைத்தவில்லொடுமன்னணிகலக்கிமேல்வருவோன்
கிளைத்தபல்பெருங்கிரணனில்வயங்கொளிகிளர்ந்தான்.

(இ - ள்.) வேதியன் - முனிவனாகிய துரோணன், இளைத்து நிற்ப - சோர்ந்துநிற்கையில்,—மன்னவன் - அரசனாகிய சாத்தகி, இளைப்பு ஆறி - சோர்வுதீர்ந்து, உளை தட பரி தேரும் மற்று ஒன்று மேல்கொண்டு - பிடரி மயிரையுடைய பெரியகுதிரைகள் பூட்டிய வேறொருதேரி லேறி, வளைத்த வில்லொடும் - (கையில்) வளைத்துப்பிடித்த (வேறொரு) வில்லுடனே, மன் அணி கலக்கி - பெரிய (பகைவர்)சேனையைக் கலங்கச்செய்துகொண்டு, மேல் வருவோன் - அதன்மேல் வருபவனாய்,—கிளைத்த பல் பெருங் கிரணனில் - நிறைந்துபெருகிய அநேகமான பெரியஒளிகளையுடைய சூரியன் போல, வயங்கு ஒளி கிளர்ந்தான் - (இயல்பிலே) விளங்குகிற தேககாந்தி மிக்குத் தோன்றினான்; (எ - று.)

கிரகணம்பிடிக்கப்பட்ட சூரியன் அதனினின்று மீண்டபின்பு மிக்கு விளங்கி இருளையழித்துக்கொண்டு மேற்செல்லுமாறுபோல, இளைப் படைந்த சாத்தகி அவ்விளைப்புத்தணிந்தவுடன் பகைவர்சேனையைக் கலக்கிக்கொண்டு விசேஷகாந்திவிளங்க மேற்சென்றனன் என்று கருத்துக் கொள்க. 'வேதியன் இளைத்துநிற்க மன்னவன் இளைப்பாறி' என்றதில், போர்த்தொழில் க்ஷத்திரியர்க்குச் சிறக்குமாறுபோலப் பிராமணர்க்குச் சிறவாமை தோன்றும்; அந்தணன் இளைத்தேநிற்க அரசன் இளைப்பாறி ஒளி கிளர்ந்தானென்க. தேரும், வில்லொடும் என்ற உம்மைகள் - இறந்தது தழுவியஎச்சம்; இளைப்புத்தீர்ந்ததுமன்றி வேறொருதேரிலேறுதலும் வேறொருவில்லையெடுத்து வளைத்துப் பொருது பகையழித்து மேற்செல்லுதலுமுடையனாயின னென்க.

'மற்றொன்று' என்பதை, 'வில்லொடும்' என்பதோடுங் கூட்டுக; கீழ்ப் பாட்டில், "இருவருந் தம தேர்சிலை யாவையு மிழந்தார்" என வந்ததனால். நிற்ப என்ற செயவெனெச்சத்தில், ப் - எழுத்துப்பேறு. மன்னணி - ராஜசமூகமுமாம். கிளைத்தல் - செழித்தல். பல்கிரணன் - ஆயிரங்கிரணன். பெருங் கிரணம் - நெடுந்தூரத்திலுஞ் சென்றுவிளங்குங் கிரணம். கிரணம்-ஒளி: வடசொல். உவமையணி. (௧0அ)

[துச்சாசனன் சேனையுடன் சாத்தகியை யெதிர்த்துத் தோற்றல்.]

யானைதேர்பரிவீரரீரொன்பதுநிலத்துத்
தானையோடுதுச்சாதனனடுத்தெதிர்தடுத்தான்
சோனைமேகமொத்திவன்பொழிதொடைகளாற்கலங்கிப்
பூனைபோலழிந்திருபதஞ்சிவந்திடப்போனான்.

(இ - ள்.) யானை - யானைகளும், தேர் - தேர்களும், பரி - குதிரைகளும், வீரர் - காலாள்வீரர்களும் ஆகிய, ஈரொன்பது நிலத்து தானையோடு - பதினெட்டுத் தேயங்களினின்றும் வந்த சதுரங்க சேனைகளுடனே, துச்சாதனன்—, எதிர் அடுத்து-எதிரிலேவந்துநெருங்கி, தடுத்தான் - (சாத்தகியைத்) தடுத்து, சோனை மேகம் ஒத்து இவன் பொழி தொடைகளால் கலங்கி - விடாப்பெருமழைபொழியும் மேகம்போன்று இச்சாத்தகிசொரிந்த அம்புகளினால் உறுதிநிலைகலங்கி, அழிந்து-தோற்று, இரு பதம் சிவந்திட - (தனது) இரண்டுகால்களும் சிவக்க, பூனைபோல் போனான் - பூனை போல ஒடுங்கித் தந்திரமாகத் தப்பியோடிச் சென்றனன்; (எ - று.)

'யானைதேர்பரிவீரர்' என்றது, "வெம்பரி தடந்தேர் வேழம் வேல் சிலை வடிவாள் வல்லோர்" என்ற அறுவகைச்சேனையையுங் குறித்ததுமாம். "படைதனக்கி யானை வனப்பாகும்", "யானையுடைய படை காண்டல் முன்னினிதே" என்றபடி யானைச்சேனை சிறத்தலாலும், மற்றைத் தேர் குதிரைகள்போலன்றி யானை மதத்தாற்கதஞ்சிறந்து தானும் வலியப்போர்

செய்தலாலும், அது முற்கூறப்பட்டது. தொடை-தொடுக்கப்படுவது என அம்புக்குக் காரணக்குறி; ஐ - செயப்படுபொருள்விகுதி. 'பதஞ்சிவந்திடப் பூனைபோற்போனன்' என்றதனால், வாகனத்தையிழந்து அரிதில்உயிர்தப்பிப் பதுங்கியோடினனென விளங்கும். சிவந்திட என்பதிற் பகுதியான 'சிவ' என்பது, செம்மை யென்னும் பண்பினடி விகாரப்பட்டது. (௧0௯)

[சாத்தகி பலரையும் வென்று அருச்சுனனைச் சார்தல்.]

இடையில்வந்துவந்தெதிர்த்தவர்யாரையுங்கடந்து
புடைவருந்தனதனீகினிநிழலெனப்போதத்
தடையறும்படிதருக்குடன்சார்பெரும்பருவ
விடைநடந்தெனநடந்தனன்விசயனின்றுழியே.

(இ - ள்.) (இங்ஙனந் துச்சாதனனை வென்ற சாத்தகி),—இடையில் வந்து வந்து எதிர்த்தவர் யாரையும் கடந்து - நடுவிலே மிகுதியாகவந்து எதிர்த்தவர்களெல்லாரையும் வென்று,—புடை வரும் தனது அனீகினி நிழல் என போத - பக்கங்களிலேவருகிற தனதுசேனை நிழல்போல விடாமல்தொடர்ந்துவர,—தடை அறும்படி - தடையில்லாமல், தருக்குடன் சார் பெரும் பருவம் விடை நடந்து என-களிப்போடு பொருந்திய சிறந்த காளைப்பருவத்தையுடைய எருது சென்றாற்போல, விசயன் நின்ற உழி நடந்தனன் - அருச்சுனனுள்ளஇடத்திற் சென்றான்; (எ - று.)

அநீகம் - குதிரைமுதலியவற்றின் கூட்டம்: அதனையுடையது அநீகிநீ; வடசொல். போத, து - சாரியை; போது எனத் தனியே ஒருபகுதியுமாம். விடை - வ்ருஷ மென்ற வடசொல்லின் சிதைவு. இளவெருது - பெருமிதத் தோற்றத்துக்கு உவமை. (௧௧0)

[பின்பு தருமன் வீமனையும் ஏவுதல்.]

பின்னருங்கொடிமுரசுடைப்பெருந்தகைவருந்தி
முன்னநின்றவாயுவின்மகன்முகனுறநோக்கி
மன்னரெண்படுவருதினிவாரியினுப்ப
ணென்னராயினரும்பியுமெம்பெருமானும்.

தகலருந்திறற்சாத்தகிதன்னையும்விடுத்தேம்
பகலுமேற்றிசைப்பட்டதுபாஞ்சசன்னியமும்
புகலுகின்றதுபோர்முகத்ததிர்குரல்பொம்ம
விகல்வலம்படநீயுமங்கேகுதியென்றான்.

இவ்விரண்டுகவியும் - குளகம்.

(இ - ள்.) (௧௧௧) பின்னரும் - (சாத்தகியை யனுப்பின) பின்பும்,—கொடி முரசு உடை பெருந்தகை - துவசத்திலே முரசவாத்தியவடிவத்தையுடைய பெருமைக்குணமுள்ளவனான தருமபுத்திரன்,—வருந்தி - (அருச்சுனன்விஷயத்தி லுண்டான சங்கையால் முன்போல) வருத்தமடைந்து,—முன்னம் நின்ற வாயுவின் மகன் முகன் உற நோக்கி - (தன்)எதிரில்நின்ற வாயுகுமாரனான வீமசேனனுடைய முகத்தை அன்புபொருந்தப் பார்த்து,—'மன்னர் எண் படு வருதினி வாரியின் நாப்பண்-அரசர்களுடைய பெருந்தொகைபெற்ற சேனையாகிய கடலின் நடுவிலே, உம்பியும் எம்பெருமானும் - உனதுதம்பியான அருச்சுனனும் எமது தலைவனான கண்ணபிரானும், என்னர் ஆயினர் - எத்தன்மையரானார்களோ? (௧௧௨) தகல் அருந் திறல் சாத்தகிதன்னையும் விடுத்தேம் - தகுதியுள்ள அருமையான வலிமையையுடைய சாத்தகியையும் யாம் அனுப்பினோம்: பகலும் மேல்திசை பட்டது - சூரியனும் மேற்குத்திக்கிற் சாயலுற்றது: பாஞ்சசன்னியமும் - (கண்ணனது)சங்கமும், போர்முகத்து - யுத்தகளத்திலே, அதிர் குரல் - அதிர்ச்சி

யுண்டாக்குகிற பெருமுழக்கத்தை, பொம்ம புகலுகின்றது-மிகுதியாக ஒலிக்கின்றது; இகல் வலம் பட-போரில் வெற்றியுண்டாக,நீயும் அங்கு ஏகுதி-நீயும் அவ்விடத்திற்குச் செல்வாய்', என்றான் - என்று கட்டளையிட்டான்.

தருமபுத்திரன், சாத்தகியைத் துணையனுப்பினபின்பும், கண்ணனது பாஞ்சசன்னியமுழக்கம் கேட்கப்பட்டதனால், அருச்சுனனுக்கு இளைப்பு உண்டாயிற்றோவென்று சங்கித்து, வீமனையும் அழைத்துத் துணைசெல்லச் சொல்லினனென்பதாம். (௧௧௧)நோக்கி,(௧௧உ) என்றான் என இயையும்.

௧௧௧.—பெருந்தகை - இங்கே, பெருந்தகைமையுடையவன்; பண்புத்தொகையன்மொழி: தகை - தகுதி, சற்குணம். கொடிமுரசுஉடை - முரசுக்கொடியையுடைய என மொழிமாறினுமாம். உற நோக்கி - உற்றுப்பார்த்து எனினுமாம். வருந்துதற்குக் காரணம் - ௯௬, ௯எ-ஆம் கவிகளில் விளங்கிற்று. முகன்-போலி. எண் படு - வலிமைபொருந்திய என்றும், நன்குமதிப்புப் பெற்ற என்றும், வரையறையில்லாத என்றும், எளிமை யற்ற என்றுங் கொள்ளலாம். வரூதிநீ - வடசொல்; வரூதம் - தேர்க்காப்பு: அதனையுடையது. வாரி-வடசொல்; இந்த நீரின் பெயர்-இங்கே கடலுக்கு இலக்கணை. என்னர் - எகரவினாவடியாப்பிறந்த குறிப்புவினையாலணையும்பெயர்; இரண்டு னகரங்களில், முன்னது - சாரியை, பின்னது - சந்தி. உம்பியென்ற பெயரை - உன்தம்பி யென்றதன் மரூஉவென்றுவது, 'நீர்' என்னும்பகுதி 'உம்' என்று விகாரப்பட்டு, 'பி' என்னும் முறைப்பெயர்விகுதி பெற்றதென்றுவது கொள்க.

௧௧உ.—தகல் - தொழிற்பெயர். தகல் அருந் திறல்-(பிறர்க்கு) உரிமையல்லாத திறமையுமாம்.விடுத்தேம்-இயல்புபற்றிய தனித்தன்மைப்பன்மை. பகல் என்ற பொழுதின் பெயர் - இங்கே சூரியனுக்கு ஆகுபெயராம். 'பகலும் மேற்றிசைப்பட்டது' என்றதனால், பகற்பொழுது கழிவதற்குள் அருச்சுனனது சபதம் நிறைவேறவேண்டுமே யென்று கொண்ட கவலை தோன்றும். பாஞ்சஜந்யம் - வடசொல்; பஞ்சஜந னென்னும் அசுரனது எலும்பினா லாகிய தென்று இதற்குக் காரணப்பொருள்: சங்கினுருவந்தரித்துச் சமுத்திரசலத்திற் சஞ்சரித்துக்கொண்டிருந்த பஞ்சஜந னென்ற அசுரன், மேல்கடலிற் பிரபாசதீர்த்தகட்டத்தில் ஒருகால் நீராடப்புக்க சாந்தீபினி முனிபுத்திரனைக் கவர்ந்துகொண்டுபோய்விட,பின்பு சாந்தீபினிமுனிவனிடம் சகலசாஸ்திரங்களையுங் கற்ற கண்ணன் குருதக்ஷிணையாக அம்மகனை மீட்டுக்கொடுக்கப்புக்கபொழுது கடலிற் பிரவேசித்து அந்தப்பஞ்சஜநனைக் கொன்று அவனது எலும்பாகிய சங்கத்தைக் கைக்கொண்டன னென்பது வரலாறு. புகலுதல் - வாய்விடுதல். பொம்ம - ஒலிக்குறிப்புமாம். இகல் வலம் பட - பலபராக்கிரமம் பொருந்த என்றும், பகைவர் வலிமையழிய என்றும் பொருள்கொள்ளலாம். அங்கு-கிருஷ்ணார்ச்சுனருள்ளவிடத்திற்கு. இச்செய்யுளிலுள்ள உம்மைநான்கில், 'சாத்தகிதன்னையும்' 'நீயுமங்கேகுதி' என்ற உம்மைகளும், 'பகலும்மேற்றிசைப்பட்டது' 'பாஞ்சசன்னியமும் புகலுகின்றது' என்ற உம்மைகளும் - தனித்தனி ஒன்றையொன்றுநோக்கி முறையே எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சப்பொருளனவாம். (௧௧உ)

[அவ்வேவலின்படி வீமன் செல்லுதல்.]

சொன்னவார்த்தையும்பிற்படமுற்படத்தொழுது
தன்னொடொத்ததோள்வலியுடைத்தராணிபரநேகர்
மன்னுநால்வகைப்படையொடுந்திரண்டிருமருங்கும்
பின்னுமுன்னுமொய்த்துடன்வரப்போயினன்பெரியோன்.

(இ - ள்.) சொன்ன வார்த்தையும் பின் பட - (இங்ஙனம் தருமபுத்திரன்) கட்டளை கூறின வார்த்தையும் பின்னாம்படி, முற்பட - விரைவாக, பெரியோன் - வலிமையிற்பெரியவனான வீமன், தொழுது - (தருமபுத்தி

ரனை) வணங்கி (விடைபெற்று),—தன்னொடு ஒத்த தோள் வலி உடை தரணிபர் அநேகர் - தன்னோடு மனமொத்தவர்களும் புயபலத்தையுடையவர்களுமான அரசர்கள் பலர், மன்னும் நால் வகை படையொடும் திரண்டு - மிகுதியான சதுரங்கசேனைகளுடனே கூடி, இரு மருங்கும் - (தனது) இரண்டுபக்கங்களிலும்,பின்னும் முன்னும்-தனக்குப் பின்னேயும் முன்னேயும், மொய்த்து - நெருங்கி,உடன் வர - கூடவர,போயினன் - சென்றான்; (எ-று.)

தருமபுத்திரன்கட்டளையிட்டவுடனே சிறிதுந்தடைசொல்லாமல் வீமசேனன் விரைவாக விடைபெற்றுச் சென்றானென்ற பொருளை, காரண காரியங்களை விரைவுவிளங்கப் பின்முன்னாக மாற்றிக்கூறும் முறையிலுயர்வு நவிற்சியணிபடக் கூறுவார், 'சொன்னவார்த்தையும் பிற்பட முற்படத் தொழுது போயினன்' என்றார். வார்த்தை - வார்த்தா என்ற வடசொல் திரிந்தது. பெரியோன் - அருச்சுனனுக்கு அடுத்ததமையனென்றவாறுமாம். முற்படத் தொழுது - (தருமபுத்திரனது) முன்னிலையிலே நமஸ்கரித்து என்றுங் கொள்ளலாம். முதலடியில் 'முற்பட,' 'பிற்பட' என்றும், ஈற்றடியில் 'பின்னும்,' 'முன்னும்' என்றும், 'வர,' 'போயினன்' என்றும் மாறுபட்ட சொற்கள் வந்தது, தொடைமுரண். 'தன்னொடொத்ததோள்வலியுடைத் தரணிப ரநேகர்' என்றதற்கு - தனக்குநிகராயுள்ள புயபலத்தையுடைய பல அரசர்களென்றலுமொன்று. (௧௧௩)

[வீமன் பலதேயத்துவீரர்களை வென்று செல்லுதல்.]

கலிங்கர்மாகதர்மாளவர்கவுசலர்கடாரர்
தெலுங்கர்கன்னடர்யவனர்சோனகரொடுசீனர்
குலிங்கராரியர்பப்பரர்கொப்பளர்முதலோர்
விலங்கினார்களைவிண்ணுறவிலக்கிமேல்விரைந்தான்.

(இ - ள்.) கலிங்கர் - கலிங்கதேசத்தவரும், மாகதர் - மகததேசத்தவரும், மாளவர் - மாளவதேசத்தவரும், கவுசலர் - கோசலதேசத்தவரும், கடாரர் - கடாரதேசத்தவரும், தெலுங்கர் - தெலுங்குதேசத்தவரும், கன்னடர் - கன்னடதேசத்தவரும், யவனர் - யவனதேசத்தவரும், சோனகரொடு - சோனகதேசத்தவரும், சீனர் - சீனதேசத்தவரும், குலிங்கர் - குலிங்கதேசத்தவரும், ஆரியர் - ஆர்யாவர்த்தத்தவரும், பப்பரர் - பப்பரதேசத்தவரும், கொப்பளர் - கொப்பளதேசத்தவரும், முதலோர் - முதலானவர்களாய், விலங்கினார்களை - (தன்னைக்) குறுக்கிட்டவர்களை, விண் உற விலக்கி - (இறந்து) வீரசுவர்க்கமடையும்படி ஒழித்துக்கொண்டு, (வீமன்), மேல் விரைந்தான் - விரைவாக அப்பாற்சென்றான்; (எ - று.)

தன்னையெதிர்த்த கலிங்கம்முதலிய நாட்டுப் படைவீரர்களையெல்லாங் கொன்று விலக்கிக்கொண்டு பகைவர்வியூகத்தினுள் விரைந்து சென்றனன் வீமனென்பதாம். மாகதர், கௌஸலர் - தத்திதாந்தநாமம். கவுசலர் - முதற்போலி. ஸ்ரீகாளஹஸ்தி பீமேசுவரம் ஸ்ரீசைலம் என்னும் மூன்று சிவலிங்கஸ்தானங்களை எல்லையாகவுடைய தேசம், அக்காரணத்தால், த்ரிலிங்கதேச மெனப் பெயர்பெறும்; அதுவே தெலுங்கமென மருவிற்று. கன்னடர்- கர்ணடகர். விந்தியமலைக்கும் இமயமலைக்கும் இடையிலே கிழக்கும் மேற்கும் கடலெல்லையாகவுடைய புண்ணியபூமி, ஆரியாவர்த்த மெனப்படும்; அதிலுள்ளவர், ஆரியர். இங்குக் குறித்த நாடுகளிற் சில - பதினெட்டுப் பாஷைகள்வழங்குந் தேயங்களினுட்பட்டவை; மற்றுஞ்சில-ஐம்பத்தாறுதேசங்களிற் சேர்ந்தவை. இப்பாட்டின் முதல்மூன்றடிகளில், அடைமொழியில்லாமல் நாட்டார்பெயர்களை அடுக்கிவைத்தது, ஓர் அழகாம். கோசலமென்பது - க உசல எனப் பிரித்து, பிரமனுக்கு உல்லாசத்தை [மகிழ்ச்சியை]த் தருவ தெனப் பொருள்படும்; பலதேசங்களையும் படைத்தவன் கண்ணுக்கண்டுகளிக்கும்படி சிறப்பாகவுள்ள தேச மென்க. (௧௧௪)

[துரியோதனன்தம்பியர்பலர் வீமனை இடையிடையே தடுத்தல்.]

உரங்கவெங்கொடியுயர்த்தகாவலன்றனக்கிளையோர்
துரங்கமாதிகொள்பலபெருஞ்சேனையிற்சூழ்ந்தோ
ரிரங்குமாழ்கடல்பேருகவிறுதியிலெறியுந்
தரங்கநேரெனவிடையிடைதனித்தனிதகைந்தார்.

(இ - ள்.) துரங்கம் ஆதி கொள் - குதிரைமுதலியவற்றைக் கொண்ட, பல பெருஞ் சேனையின் - பல பெரியசேனைகளினால், சூழ்ந்தோர் - சூழப்பட்டவர்களாகிய, வெம் உரங்கம் கொடி உயர்த்த காவலன்தனக்கு இளையோர் - பயங்கரமான பாம்புக்கொடியை உயரநிறுத்தின துரியோதனராசனது தம்பிகள்,—இரங்கும் ஆழ் கடல் பேர் உகம் இறுதியில் எறியும் தரங்கம் நேர் என - ஒலிக்கின்ற ஆழ்ந்த கடல் மகாகற்பமுடிவுகாலத்தில் (உலகையழிக்குமாறு) வீசுகிற அலைகள் தமக்குஒப்பென்னும்படி, இடை இடை தனி தனி தகைந்தார் - (வீமசேனனை) நடுவிலே நடுவிலே தனித்தனியே தடுத்தார்கள்; (எ - று.)

உரங்கம் - உரகம் என்பதன் விகாரம். சேனையிற்சூழ்ந்தோர் - சேனைகளோடு வீமனை வளைந்துகொண்டவர்களாய் எனினுமாம். 'பேருகவிறுதி' என்பது - பிரமனது ஆயுளின்முடிவை; அப்பொழுதே சகலலோகங்களும் கடலால் அழிக்கப்படும். ஊழிக்காலத்துப் பொங்கியெழும் பெருங்கடலின் அலைகளை உவமைகூறியதனால், அவர்களுடைய சேனைப்பெருக்கம் விளங்கும். உகம் - யுக மென்ற வடசொல்லின் விகாரம். (கக௫)

[அவர்கள் வீமன்மேற் படைக்கலம்வழங்குதல்.]

முல்லைமல்லிகையுற்பலங்குமுதமாமுளரி
பல்லம்வாளயில்சூலமென்பனமுதற்பகழி
யெல்லையில்லனவிடையறுவகைதொடுத்தெதிர்ந்தார்
வில்விதங்களில்யாவையும்பயின்றகைவிறலோர்.

(இ - ள்.) வில் விதங்களில் - விற்போர் வகைகளிலே, யாவையும் பயின்ற - எல்லாவற்றையும் பழகித் தேர்ந்த, கை விறலோர் - கைத்திறமையையுடையவர்களான அத்துரியோதனனது தம்பிமார்,—முல்லை - முல்லையரும்புபோன்றமுனையையுடைய அம்புகளும், மல்லிகை - மல்லிகையரும்புபோன்றமுனையையுடைய அம்புகளும், உற்பலம் - குவளையரும்புபோன்ற முனையையுடைய அம்புகளும், குமுதம் - ஆம்பலரும்புபோன்றமுனையையுடைய அம்புகளும், மா முளரி-சிறந்த தாமரையரும்புபோன்ற முனையையுடைய அம்புகளும், பல்லம் - பல்லமென்னும்அம்புவிசேடங்களும், வாள் - வாளும், அயில் - வேலும், சூலம் - சூலமும், என்பன முதல் - என்கின்ற இவை முதலான, பகழி - ஆயுதங்களை, எல்லை இல்லன - அளவில்லாதனவாக, இடை அறு வகை தொடுத்து - இடைவிடாமல் மேன்மேற் பிரயோகித்துக்கொண்டு, எதிர்ந்தார் - (வீமனை) எதிரிட்டார்கள்; (எ - று.)

மல்லிகா உத்பலம் என்ற வடசொற்கள், திரிந்தன. குமுதம், பல்லம், சூலம் - வடசொற்கள். 'முல்லை' முதலியன - அந்தந்தஅரும்புபோலக் கூர்நுனியமைக்கப்பட்ட அம்புகளை யுணர்த்தின. முளரி—"தாமரைத்தலையவாளி" என்றார் கம்பரும்; இது - வடமொழியில் 'நாளீகாஸ்த்ரம்' எனவும், தமிழில் 'மொட்டம்பு' எனவும்படும். எல்லாமலர்களிலுந் தாமரை சிறத்தலால், அதற்கு 'மா' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இனி, மா - மாமலர்போலும் முனையுடைய அம்பென்றலு மொன்று. பகழி என்ற அம்பின்பெயர் - இங்கு, ஆயுதமென்றமாத்திரமாய் நின்றது; சிறப்புப்பெயர், பொதுப்பொருளின்மேலது. இனி, முதலடிக்கு - மன்மதனுக்கும் பாணங்களாகவுள்ள மலர்கள்போல் ஆற்றல்மிக்க அம்புகளென்பாருமுளர். (கக௬)

[அவர்களில் விந்தனும் விந்தரனும் இறத்தல்.]

விந்தன் விந்தரனிருவருமேலிடுமுனையிற்
றந்தம்வாசியும்தேர்விடுபாகருந்தாமு
மந்தரந்தனிற்றலைகள்போய்முகில்களையலைப்பச்
சிந்துசோரியம்பெருங்கடலலைத்திடச்சிதைந்தார்.

(இ - ள்.) விந்தன் விந்தரன் இருவரும் - (அத்துரியோதனன்தம்பிமாருள்)விந்தன் விந்தரன்என்ற இரண்டுபேரும்,—மேலிடு முனையில் - மிக்குச் செய்த போரில்,—தம் தம் வாசியும் தேர் விடு பாகரும் தாமும் - தம்தம்முடைய தேர்க்குதிரைகளும் தேர்செலுத்துஞ் சாரதிகளும் தேர்வீரர்களான தாமுமாக,—தலைகள் அந்தரந்தனில் போய் முகில்களை அலைப்ப - தலைகள் (துணிபட்டு மேலெழும்பிச் சிதறி) ஆகாயத்திற்சென்று மேகங்களைச்சிதறடிக்கவும், சிந்து சோரி அம் பெருங் கடல் அலைத்திட - (உடம்பினின்று) வழிகின்ற இரத்தம் அழகிய பெரியகடலை(ச் சென்று) கலக்கவும், சிதைந்தார் - அழிந்தார்கள்; (எ - று.)

விந்தன் விந்தரன் என்பவர்கள் செய்த போரில் வீமனால் தம்குதிரைகளும் பாகரும் அழியத் தாமும் அழிந்தன ரென்பதாம். 'இருவரும், வாசியும் பாகருந் தாமும் சிதைந்தார்' என்றது - உயர்திணையும் அஃறிணையும் விரவி மிகுதியினால் உயர்திணைமுடிபுகொண்ட திணைவழுவமைதி; [நன் - பொது - உஎ.] இரண்டாம் அடியால், அவர்கள்தேர்க்குதிரைகளும் சாரதிகளும் தலைதுணிபட்டு இறந்தமை விளங்கிற்று. மேலிடுதல் - முன்னிட்டு வருதலுமாம். அந்தரம் - வடசொல். இவர்கள்கொடுமைதோன்ற,தலைவேறு உடல்வேறானபின்பும் வானத்திற் சென்று மேகங்களை யலைத்தலையும் நெடுந்தூரஞ்சென்று கடலையலைத்தலையும் ஏற்றிக்கூறின ரென்க. (கசஎ)

[அவர்களில் குண்டலபோசி முதலிய மூவர் இறத்தல்.]

போர்க்குமுந்துறுதேரினன்குண்டலபோசி
தீர்க்கலோசனன்றிண்டிறற்சித்திரசேனன்
மார்க்கநேர்படவிலங்கிமாமறலிநேர்வரினுந்
தோற்கலாதவர்மூவருந்தம்முயிர்தோற்றார்.

(இ-ள்.) போர்க்கு முந்துறு தேரினன் - சண்டைக்கு முற்பட்டுவருகிற தேரையுடையவனான, குண்டலபோசி - குண்டலபோசியென்பவனும், தீர்க்கலோசனன் - தீர்க்கலோசனனென்பவனும், திண் திறல் - மிக்கவலிமையையுடைய, சித்திரசேனன் - சித்திரசேனனென்பவனும், (ஆகிய), மா மறலி நேர் வரினும் தோற்கலாதவர் - சிறந்தயமன் எதிர்த்து முன்வந்தாலும் தோல்வியடையாதவர்களான, மூவரும் - (துரியோதனன்தம்பிமார்) மூன்றுபேரும்,— மார்க்கம் நேர்பட விலங்கி - (வீமன்செல்லும்) வழியிலே எதிராகத்தடுத்து, தம் உயிர் தோற்றார் - (அவனால் அழிக்கப்பட்டுத்) தமது உயிரை யிழந்தார்கள்; (எ - று.)

தீர்க்க லோசனன் என்றது - நீண்ட கண்களையுடையவ னென்றும், சித்ரஸேநன் என்றது - வியக்கத்தக்க[அல்லதுபலவகைப்பட்ட]சேனையையுடையவ னென்றும் பொருள்படும். மார்க்கம்-வடசொல். யாரையும் அழிக்குந் தவறாதபேராற்ற லுடையா னென்பார், 'மாமறலி' என்றார். மறல் - அழிக்குங்கொடுமை: அதனை யுடையவன், மறலி; இ - பெயர்விகுதி, உம் - உயர்வுசிறப்பு. தோற்கலாதவர் என்றதில், தோல் - பகுதி; கு அல் - சாரியைகள், ஆ - எதிர்மறையிடைநிலை; அன்றி, அல் - எதிர்மறையிடைநிலை, ஆ - சாரியை யென்றும், 'இல்' என்பது போலக் கல் என்பதும் - ஆற்றலுணர்த்துவதோ ரிடைநிலை யென்றும் கொள்ளுதலும் ஒன்று: த் - எழுத்

துப்பேறு, அ - சாரியை, அர் - விகுதி, மற்றவை-சந்தி. 'மறவிநேர்வரினும் தோற்கலாதவர்'—மிக்க வலிமையை விளக்க வந்த அதிகயோக்தி. (ககஅ)

[அவர்களில் மற்றும் முப்பதுபேர் இறத்தல்.]

சேரமுப்பதுகுமாரர்கள்சென்றமர்மலைந்தோ
ரோரொருத்தருக்கோரொருசாயகமுடற்றிச்
சூரன்மெய்த்துணைநோதகும்படியுடன்றொலைத்தான்
மாருதச்சுதன்வல்லவில்லாண்மையார்வல்லார்.

(இ - ள்.)சேர சென்று அமர் மலைந்தோர்-ஒருசேரஎதிர்வந்து போரை மிகுதியாகச்செய்தவர்களான,முப்பது குமாரர்கள் - (திருதராட்டிர)புத்திரர் முப்பதுபேர்களுள், ஓர் ஒருத்தருக்கு - ஒவ்வொருத்தருக்கும், ஓர் ஒரு சாயகம் - ஒவ்வோர் அம்பை, உடற்றி - வலிமையோடு எய்து,சூரன் மெய் துணை நோதகும்படி - சூரனான துரியோதனனது உடற்காவலாகவுள்ள அத் தம்பிமார்கள் வேதனைமிகும்படி, உடன் தொலைத்தான் - (அவர்களை) ஒருசேர அழித்தான்; மாருதன் சுதன் வல்ல வில் ஆண்மை வல்லார் யார்- வாயுகுமாரனான வீமன் தேர்ந்த விற்போர்த்திறத்தைத் தேர்ந்தவர் (வேறு) யார் உள்ளார்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

'சூரன்மெய்த்துணை நோதகும்படி' என்பதற்கு - (அவர்கள் சூரியமண்டலத்தைப் பிளந்துகொண்டு வீரசுவர்க்கஞ்செல்லுதலால்) சூரியனுடைய உடம்பாகிய உறுப்பு நோவுமிகும்படி யென்றும் உரைக்கலாம். சூரனென்பது - முந்தினபொருளில் ஶூர னென்ற வடசொல் திரிந்ததும், பிந்தின பொருளில் ஸூர னென்ற வடசொல் திரிந்ததுமாம். இனி, சூரன்மெய்த்துணை - சூரனான அருச்சுனனுடைய தமையனாகிய வீமன், தொலைத்தான் என்பர் ஒருசாரார். ஸாயகம், மாருதம், ஸுதன் - வடசொற்கள். இங்கே, 'மாருதச்சுதன்' என்றது - "தந்தையே மைந்தனாகிறான்" என்னும் நூல் வழக்குக்கு ஏற்ப, தந்தையாகிய வாயுபோலவே மைந்தனான வீமனும் மிக்க வலிமையுடையா னென்றதை விளக்குதற்கு. (ககக)

[கௌரவசேனை சிதைதல்.]

ஆயு வற்றவர் சுயோதன னிளைஞரே ழைவர்
வாயு புத்திரன் வாளியா லாருயிர் மடியச்
சாய்த லுற்றது சடக்கெனத் தரணிபன் வியூகந்
தேயு வொத்திவன் சேறலுந் திமிரநே ரெனவே.

(இ - ள்.) (இவ்வாறு),சுயோதனன் இளைஞர் ஏழைவர் - துரியோதனனது தம்பிமார் முப்பத்தைந்துபேர், வாயுபுத்திரன் வாளியால் - வீமசேனனது பாணங்களால், ஆயு அற்றவர் - ஆயுளொழிந்தவர்களாய், ஆர் உயிர் மடிய - அரியஉயிரிறக்க,—இவன் -வீமன், தேயு ஒத்து - அக்கினிபோன்று, சேறலும் - கொடுமையாகச்சென்றவளவிலே,— தரணிபன் வியூகம் - துரியோதனராசனது படைவகுப்பு, திமிரம் நேர் எனவே-(அங்கொருப்பினொளியின்முன் பட்ட) இருள் தனக்கு உவமை யென்னும்படி, சடக்கென சாய்தல் உற்றது - விரைவாக அழிவடைந்தது; (எ - று.)

துரியோதனன்தம்பியர் முப்பத்தைவர் மடிய, வீமன்முன் பகைவரணிவகுப்புச் சிதறிற் றென்பதாம்; உவமையணி. ஆயு - ஆயுஸ் என்ற வடசொல்லின் விகாரம்.ஸுயோதநன் என்ற வடசொல் - நல்ல[தனக்கு வெற்றியைத் தரவல்ல] போரை யுடையவ னென்று காரணப்பொருள்படும். புத்ரன் என்ற வடசொல்லுக்கு - புத்என்னும் நரகத்தினின்று (தனது தாய் தந்தையரைக்) காப்பவனென்று காரணப்பொருள்: புத் - பிள்ளைபெறாதவரடைவதொரு நரகம். சடக்கென - விரைவுக்குறிப்பு. தேயு-தேஜஸ் என்ற வடசொல்லின் சிதைவு.திமிரம் - வடமொழித்தத்சமம்.சேறலும் என்றதில்,

செல் - பகுதி, [illegible] சாரியைகள்; உம் - இறந்தகாலங் காட்டும் வினையெச்சவிகுதி; [illegible] சந்தி. (௧௨௦)

[illegible]

[அதுகண்டு துரோணன் வீமனெதிரில் வருதல்.]

ஏகு கின்றது கண்டுபெ ருங்கட லேழு மொண்டுவி ழுங்கிய
திர்ந்தெழு மேக மம்புபொ ழிந்தென வெங்கணும் வீசு மம்புவி
ரைந்துவி ரைந்திட, யூக மின்றுபி ளந்துத னஞ்சய னோடி வன்
புகு தந்திடி னம்படை, யாகு லம்படு மென்றுத டஞ்சிலை யாரி
யன்சம ரந்தனின் முந்தவே.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) ஏகுகின்றது கண்டு - (இங்ஙனம் வீமன்) செல்லுகிறதைப் பார்த்து,—தட சிலை ஆரியன் - பெரிய வில்வித்தையில் ஆசிரியனான துரோணன்,—'பெரு - பெரிய. கடல் ஏழும் - எழுகடல்களையும், மொண்டு விழுங்கி - நிரம்பமுகந்து உட்கொண்டு, அதிர்ந்து - ஆரவாரித்துக்கொண்டு, எழு - (வானத்தில்) எழுகிற, மேகம்—, அம்பு பொழிந்து என - நீரைப்பொழிந் தாற்போல, எங்கணும் - எல்லாவிடங்களிலும், வீசும் - வலிவாகப் பிரயோகிக்கிற, அம்பு - பாணங்கள், விரைந்து விரைந்திட - வெகுவேகமாகச்செல்ல, இவன் - இவ்வீமன், இன்று - இப்பொழுது, யூகம் - (நமது) படைவகுப்பை, பிளந்து - பிளந்திட்டு, தனஞ்சயனோடு புகுதந்திடின் - உட்புகுந்து அருச்சுனனுடன் சேர்ந்திட்டால், நம் படை ஆகுலம் படும் - நமதுசேனை கலக்கமடைந்துவிடும்,' என்று - என்றெண்ணி, சமரந்தனில் முந்த - போரில் (வீமன்முன்) வர, (எ - று.)—'அந்தணன் வந்தது கண்டு' என அடுத்தகவியோடு தொடரும்.

எதிர்ப்பவரையெல்லாம் அழித்துக்கொண்டு வீமன் வருதலால் துரியோதனனுடைய வியூகம் நிலைகுலையத்தொடங்க, அதுகண்ட துரோணன், இப்படி இவன் பெருமழைபோல அம்புசொரிந்து வியூகத்தைப் பேதித்துக் கொண்டு உட்பிரவேசித்து அருச்சுனனோடு சேர்ந்துவிட்டாற் பின்பு எவராலும் வெல்லலாகா தாதலால் நமதுசேனைக்குப் பெருங்கலக்கமுண்டாகுமென்று கருதி அங்ஙனஞ்செல்லலாகாதபடி தடுத்தற்கு இடையில்வந்து எதிரிட்டனன் என்பதாம்.

ஏகுகின்றது - நிகழ்காலத்தொழிற்பெயர். யூகம் - வ்யூஹ மென்ற வடசொல்லின் விகாரம். புகுதந்திடின், தா - துணைவினை.

இதுமுதல் ஒன்பதுகவிகள் - முதற்சீர் தேமாச்சீரும் மற்றைமூன்றும் கூவிளச்சீர்களுமாய் வந்தது அரையடியாகவும், அஃதிரட்டிகொண்டது ஓரடியாகவும், அவ்வடிநான்குகொண்டு, நேரசைமுதலான அரையடிக்கு ஒற்றொழித்துப் பதினேரெழுத்துப்பெற்றுவந்த சந்தக்கலிப்பாக்கள்.* (௧௨௧)

[வீமன்வணங்கவும் துரோணன் தணியாமற் போர்தொடங்குதல்.]

ஆதியந்தணன்வந்ததுகண்டிகலானிலன்சினமின்றிநலமபெறு
நீதியன்றனுடன்சமருந்திடனீபெருங்குருநின்கழலென்றலை
மீதுகொண்டனனென்றுவணங்கவும்வேதியன்கைமிகுந்துபுகுந்தெதிர்
மோதியம்புதெரிந்தனன்வன்றிறன்மூரிவெஞ்சிலையுங்குனிகொண்டதே.

(இ - ள்.) ஆதி அந்தணன் - பெரிய பிராமணனான துரோணன், வந்தது - எதிர்வந்ததை, கண்டு - பார்த்து, இகல் அனிலன் - வலிமையையுடைய வாயுகுமாரனான வீமன், சினம் இன்றி - கோபமில்லாமல், (அவ

*'தான தந்தன தந்தன தந்தன தான தந்தன தந்தன தந்தன' என்பது, இதற்குச் சந்தக்குழிப்பாம்.

ளைநோக்கி), 'உனுடன் சமர் உடற்றிடல் - 'உன்னோடு (யான்) போர்செய்தல், நலம் பெறு நீதி அன்று - நன்மைபெறும்படியான நியாயமன்று; [illegible] னில்),—நீ பெருங் குரு,- நீ (எனக்குச்)சிறந்தஆசாரியன்; (ஆதலால்), நின் கழல் என் தலைமீது கொண்டனன் - உனது திருவடிகளை எனது தலையின் மேற் கொண்டேன்', என்று - என்றுசொல்லி, வணங்கவும் - நமஸ்கரிக்கவும்,—வேதியன் - பிராமணன், கைமிகுந்து-(மாறுபாடொழியாமல்)வரம்பு கடந்து, எதிர் புகுந்து மோதி - எதிரில்வந்து தடுத்து, அம்பு தெரிந்தனன்-(சிறந்த) பாணங்களை(எடுத்துவிடுதற்கு)ஆராய்வானாயினான்;(அப்பொழுது), வல் திறல் மூரி வெம் சிலையும் - மிக்கவலிமையையுடைய பழைய கொடிய அவன்கைவில்லும், குனிகொண்டது - வளைந்தது; (எ - று.)

துரோணாசாரியன்எதிர்த்தமை கண்டு வீமசேனன் கோபங்கொள்ளாமல் 'நான் உன்னோடுபொருவது நீதியன்று: நீ எனக்குக் குரு' என்று பணிமொழிகூறி வணங்கவும், துரோணன் அவ்வணக்கத்துக்கு இணங்காமற் கைமிஞ்சி அம்புகளைத் தேர்ந்தெடுத்தலும், வில்வளைத்தலுஞ் செய்தனன் என்பதாம்.

ஆநிலன் - அநிலன்மகன்; வடமொழித்தத்திதாந்தநாமம்; அநிலன் - வாயு. ஆதியந்தணன் - நால்வகைவருணத்துள்ளும் முதலதான பிராமண வருணத்தான் எனினுமாம். நலம்பெறு நீதி - இம்மைமறுமைகளிற் புகழ் புண்ணியங்களை விளைக்கும் முறைமை. 'சமர்செய்திடல்' என்ற பாடம், 'தந்தன' என்ற சந்தத்துக்குச் சிறவாது. 'அமபுதெரிந்தன' என்ற பாடத்துக்கு - துரோணனதுகைகள் மிகுதியாகச்சென்று எதிர்மோதத் தொடங்கி அம்புகளை ஆராய்வனவாயின வெனக் கைமேலேற்றுக. குனிகொள்ளுதல் - வளைவையடைதல்; குனி - முதனிலைத்தொழிற்பெயர். (கஉஉ)

[துரோணன்தேரை வீமன் எடுத்தெறிதல்.]

வீரனொன்றுமொழிந்திலன்வந்துமுன் வீழ்சரங்கள்விலங்கிவயம்புனை, தேரினின்றுமிழிந்துநடந்தெதிர் சேரவந்துசெழுஞ்சிலையின்குரு, வூருகின்றவயங்கிரதந்தனை யோரிரண்டுகரங்கொடுவன்புடன், வாரியுந்தவெறிந்தனன்வண்புயல் வானினின்றவரஞ்சியொதுங்கவே.

(இ - ள்.) வீரன் - வீரனாகிய வீமன்,—ஒன்றும் மொழிந்திலன்-(வாயினால்) ஒன்றுஞ்சொல்லாமல்,—வந்து முன் வீழ் சரங்கள் விலங்கி-எதிரிலே வந்து மேல்விழுகிற (துரோணனது) அம்புகளுக்கு(த் தந்திரமாக) விலகி, வயம் புனை தேரினின்றும் இழிந்து - வெற்றியைக்கொண்ட தனதுதேரினின்று இறங்கி, நடந்து எதிர் சேர வந்து - நடந்துகொண்டு எதிரிலே நெருங்கிவந்து,—செழுஞ் சிலையின் குரு ஊருகின்ற வயங்கு இரதந்தனை - சிறந்தவில்லாசிரியனான துரோணன் ஏறிநடத்துகிற விளங்குகின்ற தேரை, ஓர் இரண்டு கரங்கொடு - (தனது) ஒப்பற்ற இரண்டுகைகளாலும், வன்புடன் வாரி - வலிமையோடு ஒருசேர எடுத்து, வள் புயல் வானில் நின்றவர் அஞ்சி ஒதுங்க - செழிப்பானமேகங்கள்சஞ்சரிக்கிற வானத்திலே நிற்கின்ற தேவர்கள் அஞ்சி விலகும்படி, உந்த எறிந்தனன் - மேல்நோக்க வீசினான்.

கீழ்த் தான்கூறிய விநயவார்த்தை துரோணனால் அங்கீகரிக்கப்படாமல் அலட்சியஞ்செய்யப்பட்டதனால் மீளவும் ஒன்றுங் கூறத் தொடங்கினானில்லை யென்பதும், வாயினால் வீரவாதமாகச் சொல்லுதல்மாத்திரத்திற் பயனில்லையாதலால் கையினால் தொழில்செய்து திறங்காட்டுவதே தகுதியென்று கருதினா னென்பதுந் தோன்ற, 'ஒன்றுமொழிந்திலன்' என்றார். கீழ் வீமன் வணக்கமாகக்கூறியது குருபக்தியினாலேயன்றித் திறமையில்லாமையினாலன் றென்றும், இவன் செய்தற்கரியன செய்யுந் திறமுடை

யா னென்றும் கூறுவார், 'வீரன்' என்றார். வண்புயல் - நீர்வளத்தைத்தரும் மேகமுமாம். வன்பு - பண்புப்பெயர். (கஉங)

[தேரும் துரோணனும் சிதைதல்.]

நாகவிந்தம்வளர்ந்துகிளர்ந்ததுநாகமொன்றியதென்றுநடுங்கிட
மேகபந்திகலங்கவெழுந்ததுமீளவும்புவியின்கண்விழுந்தது
பாகனங்கநெரிந்ததுநொந்ததுபாரமுந்துளைவிண்டனமண்டுருள்
வேகவெம்பரியுந்தலைசிந்தினவேதியன்றனதென்புமொடிந்ததே.

(இ - ள்.) 'விந்தம் நாகம் - விந்தியமலை, வளர்ந்து கிளர்ந்தது-வளர்ச்சி பெற்று மேலெழுந்ததாய், நாகம் ஒன்றியது - தேவலோகத்தைச் சார்ந்திட்டது,' என்று - என்றுஎண்ணி, நடுங்கிட - (தேவர்கள்) மிகஅஞ்சும்படியாகவும், மேக பந்தி கலங்க - மேகவரிசை இடையிலே நிலைகுலையும்படியாகவும், அது - அந்தத்துரோணன்தேர், எழுந்து - மேற்சென்று,மீளவும்-பின்பு, புவியின்கண் விழுந்தது - தரையிலே விழுந்திட்டது; (அப்பொழுது), பாகன் அங்கம் - சாரதியினுடைய உடம்பு, நெரிந்தது - நொறுங்கிற்று; பாரமும் - பூமியும், நொந்தது - நோவடைந்தது; மண்டு உருள் - வலிமைமிக்க தேர்ச்சக்கரங்கள், துளை விண்டன - துளைபிளந்தன; வேகம் வெம் பரியும் - வேகத்தையுடைய கொடியகுதிரைகளும், தலை சிந்தின - தலைசிதறின; வேதியன் தனது என்பும் - துரோணாசாரியனது எலும்பும், ஒடிந்தது - முறிந்தது; (எ - று.)

முன்னொருகாலத்தில் நாரதமாமுனிவன் விந்தியகிரியினிடஞ்சென்று 'மகாமேருமலை, மிகவுயர்ந்திருப்பதனாலும், சூரியன்முதலியகிரகங்கள் தன்னைவலம்வரப் பெறுதலாலும்,தன்னிடந் தேவர்கள்பலர் வசிப்பதனாலும்,மற்றும்பலகாரணங்களினாலும், மிக்கசெருக்குக்கொண்டிருக்கின்றது' என்று கலகஞ்செய்ய, உடனே விந்தியமலை மேருமலையோடு மாறுபட்டு அதனினும் பெரிதாக வளர்ந்து வானத்தையளாவி அங்குச்சஞ்சரிக்கிற சூரியசந்திராதிகளுடைய கதியையுந் தடுத்து அப்பாற்செல்லவுந் தொடங்க,அதுகண்டு அஞ்சிய தேவர்கள் அகஸ்தியமகாமுனிவனைச் சரணமடைந்து அவனைக்கொண்டு, அம்மலையை அடக்கினார்க ளென்ற சரித்திரத்தைக் கருத்திற்கொண்டு, தேர் மேல்வருதலை நோக்கித் தேவர்கள் அவ்விந்தியமலை மீண்டும் வளர்ந்தெழுந்து தேவலோகத்தைச் சார்ந்த தெனக் கருதி அஞ்சுகின்றன ரென்றார்.

நாகவிந்தம் - விந்தநாகம் என மாறுக; முன்பின்னாகத் தொக்க இருபெயரொட்டுப்பண்புத்தொகை. நாகம் - மலை; வடசொல்: சலியாததென்று காரணப்பொருள்பெறும். விந்தம் - விந்த்யம் என்ற வடசொல்லின் சிதைவு. தேரைக்கண்டு விந்தியமலையென்று மாறுபாடாகவுணர்ந்ததாக் கூறினமை, மயக்கவணி. பாரம் என்பதற்கு - பொருள்களைப் பரிப்பதென்று காரணப்பொருள்; அன்றி, பார் என்ற தமிழ்மொழியின்மேல் அம் - சாரியை யென்றலும் ஒன்று. இனி, பாரமும் நொந்தது என்பதற்கு - தேரும் சிதைந்ததென்பாரும் உளர். உருள் - உருள்வதுஎனக் காரணப்பெயர்; கருத்தாப் பொருள்விகுதி புணர்ந்து கெட்டது; கெடாவிடின், உருளி என்றாவது, உருளை என்றாவது நிற்கும். (கஉச)

[பலவீரர்கள் வீமனை வளைதல்.]

விழுவிக்குமவன்றனைவென்றிவன்மேனடந்துழியெண்டிசையும்படை
சூழவந்துவளைந்தனரந்தகனுதர்தங்களிலும்பெருவஞ்சக
ரேழுமண்டலமும்புதையும்பரிசேறுகின்றதரங்கநெடுங்கட
லூழியும்பெயர்கின்றதெனும்படியோதைவிஞ்சவுடன்றுசினங்கொடே.

(இ - ள்.) இங்கு - இவ்வாறு, வீழ - கீழ்விழும்படி, அவன்தனையும் வென்று - அந்தத்துரோணனையும் சயித்து, இவன் - வீமன், மேல் நடந்த உழி - அப்பாற்சென்றபொழுது,—அந்தக தூதர்தங்களினும் பெரு வஞ்சகர் - யமதூதர்களைக்காட்டிலும் வலிமைமிக்க வஞ்சனையுடையவரான (அநேக) வீரர்கள்,—ஏழு மண்டலமும் - எழுவகையுலகங்களும், புதையும் பரிசு - அழுந்தும்படி, ஏறுகின்ற - பொங்கிமேலெழுகிற, தரங்கம் - அலைகளையுடைய, நெடுங் கடல் - பெரிய கடலினால், ஊழியும் பெயர்கின்றது எனும்படி - கற்பம்மாறுகிற கால மென்று சொல்லும்படி, ஓதை விஞ்ச - ஆரவாரம் அதிகப்பட,—உடன்று - பகைத்து, சினம் கொடு - கோபங்கொண்டு, எண் திசையும் - எட்டுத்திக்குக்களிலும், படை சூழ - சேனைகள்சூழ, வந்து வளைந்தனர் - வந்து (வீமனைச்) சூழ்ந்துகொண்டார்கள்; (எ - று.)

கற்பாந்தகாலத்திற் சகலலோகங்களையும் அமிழ்த்தும்படி பொங்கியெழுகிற பிரளயப்பெருங்கடலின் பேரொலிக்கு ஒப்பான ஆரவாரத்தைச் செய்துகொண்டு கொடியபலவீரர்கள் சேனைகளோடும் வந்து வீமனை ஒருங்குசூழ்ந்தனர் என்பதாம். அந்தகதூதர் - வடமொழித்தொடர். அந்தகன் - (பிராணிகட்கெல்லாம்) அழிவைச் செய்பவ னென்று பொருள்; அந்தம் - முடிவு. எந்தவகையாலாவது தந்திரமாய் அழிப்பதில் தவறாதவ ரென்பார், 'அந்தகதூதர்தங்களினும் பெருவஞ்சகர்' என்றார்.

'இங்கும்' என்ற உம்மையைப் பிரித்து, 'அவன்றனை' என்பதனோடும் கூட்டி, அதற்கு உயர்வுசிறப்போடு இறந்ததுதழுவிய எச்சப்பொருளும் கொள்ளப்பட்டது. ஊழியும், உம் - உயர்வுசிறப்பு. (கஉரு)

[பூரியையும் அவந்திராசனையும் வீமன் வெல்லுதல்.]

காரிலைந்துமடங்குபுலம்பின காகளஞ்சுரிசங்குமுழங்கின
பேரிபம்பினகொம்புதழங்கின பேரியங்கள்பெயர்ந்துகறங்கின
பூரியும்பொருதஞ்சியவந்தியர் பூபனும்புறமன்றிடவெங்கணை
மாரிசிந்திமலைந்தனன்வெஞ்சின மாறமுன்பவனன்றிருமைந்தனே.

(இ - ள்.) (அப்பொழுது),— காரில் ஐந்து மடங்கு - மேகங்களினும் ஐந்துபங்கு அதிகமாக, காகளம் - எக்காள மென்னும் ஊதுகுழல்கள், புலம்பின - ஒலித்தன; சுரி சங்கு—உட்சுழிந்த சங்கவாத்தியங்கள், முழங்கின - ஒலித்தன; பேரி - பேரிகைகள், பம்பின-ஒலித்தன; கொம்பு-ஊதுகொம்புகள், தழங்கின - ஒலித்தன; பேர் இயங்கள் - பெரிய (மற்றும் பல)வாத்தியங்கள், பெயர்ந்து கறங்கின - கிளர்ந்துஒலித்தன; பூரியும்-பூரி என்னும் அரசனும், அவந்தியர் பூபனும் - அவந்திதேசத்தவரரசனும், பொருது-(தன்னுடன்) போர்செய்து, அஞ்சி - பயந்து, அன்று புறம் இட - அப்பொழுதே முதுகுகொடுக்கும்படி, பவனன் திரு மைந்தன் - வாயுவினது சிறந்தகுமாரனை வீமன், வெம் கணை மாரி சிந்தி-கொடியஅம்புமழையைப்பொழிந்து, வெம் சினம் மாற - தனதுகடுங்கோபம் அடங்க, முன் - எதிர்நின்று, மலைந்தனன் - போர்செய்தான்; (எ - று.)

'ஒலித்தன' என்ற ஒருபொருளைத் தருகிற புலம்பின முழங்கின பம்பின தழங்கின கறங்கின என்ற பலசொற்கள் வந்தது, **பொருட்பின்வருநிலையணி.** 'புலம்பல்' என்பது தொனித்த லென்னும் பொருளதாதலை "முழங்கல் தழங்கல் கத்தல் புலம்பல்" என்ற பிங்கலந்தையினாலும் உணர்க. 'காரிலைந்துமடங்கு' என்றதை, 'புலம்பின' முதலிய ஐந்தனோடும் கூட்டுக. சுரிசங்கு - வினைத்தொகை. பேரீ - வடசொல். பூபன் - பூமியைக் காப்பவன்; வடசொல். மிக்கபெரும்போரைச் செய்தனனாதலாலும், பெரியோர்சினம் விரைவில்தணிந்திடுந்தன்மையதாதலாலும், 'சினம்மாறமலைந்தனன்' என்றார். 'கோபத்தின்பின்னைச் சிறிதுபொழுது நிற்பது சினம்' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர். இனி, சினம் மாற - கோபத்தால்

(மனம்) மாறுபட எனினுமாம். சினம் ஆற எனப் பதம்பிரித்து உரைத்தல், மோனைக்கு முரணும். பவநன் என்ற வடசொல் - (எப்பொழுதுஞ்)சஞ்சரிக்கிறவ னென்று காரணப்பொருள்படும். காகளம், சங்கு, பேரி, கொம்பு - வாத்தியவிசேஷங்கள். பேரி - முரசம். கணைமாரி - பாணவர்ஷம். (கஉசு)

[வீமனுடன் கர்ணன் போர்செய்யத்தொடங்குதல்.]

மாசுணந்தலைநொந்துசுழன்றன மாதிரங்கண்மருண்டுகலங்கின
வீசுதெண்டிரையம்புவெதும்பினமேலையண்டமும்விண்டுபகிர்ந்தன
பூசலின்கணுடன்றுகழன்றவர் போர்தொடங்கநினைந்துபுகுந்தன
ராசுகன்றிருமைந்தனுடன்சுட ராதபன்குமரன்சமர்முந்தவே.

(இ - ள்.) ஆசுகன் திரு மைந்தனுடன் - வாயுவினது சிறந்த குமாரனான வீமனோடு, சுடர் ஆதபன் குமரன் - பிரகாசத்தையுடைய சூரியனது குமாரனான கர்ணன், சமர் முந்தவே - போரில் எதிர்த்தவளவிலே,— பூசலின்கண் உடன்று கழன்றவர் - கீழ்ப் போரில் (வீமனோடு) எதிர்த்துத் தப்பியோடிப்போனவர்கள், போர்தொடங்க நினைந்து புகுந்தனர் - (வீமனுடன் மீண்டும்) போர்செய்ய எண்ணி வந்துசேர்ந்தார்கள்;(அவர்களின் அதிபாரத்தால்), மாசுணம் - (பூமியைத்தாங்குகிற ஆதிசேஷன் முதலிய) பெரும் பாம்புகள், தலை நொந்து சுழன்றன - தலைவருந்திச் சுழலலாயின;மாதிரங்கள் - திக்குக்கள், மருண்டு கலங்கின - (இது என்னோ என்று) திகைத்துக் கலக்கமடைந்தன;வீசு தெள் திரை அம்பு-வீசுகின்ற தெளிவான அலைகளையுடைய கடல்கள், வெதும்பின - (இவர்களது உக்கிரத்தன்மையை நோக்கித் தாம்) தாபங்கொண்டன; மேலை அண்டமும் - அண்டகோளத்தின் மேலிடங்களும், விண்டு பகிர்ந்தன - (இவர்களது ஆரவாரத்தா லாகிய அதிர்ச்சியால்) வெடிபட்டுப் பிளவுற்றன; (எ - று.)

இதில், முதல் மூன்றுஅடிகளிலும் பலதொழில்கள் ஒருங்கு கூறப்பட்டது, கூட்டவணி யென்னும் ஸமுச்சயாலங்காரம். ஆசுகன் - விரைந்து செல்லுபவன்: வடசொல். அம்பு - வடசொல்: நீர்; கடலுக்கு ஆகுபெயர். உடன்று - (வீமனால்) வருந்தி யெனினுமாம். (கஉஎ)

[வீமனும் கர்ணனும் பொருதல்.]

கோபம்விஞ்சினர்விஞ்சைவரம்பெறு கூர்சரங்கடெரிந்தனர்கொண்டனர்,சாபமுங்குனிதந்தெதிருந்தினர் தாரைவெம்பரிதங்கிரதங்களு, நீபமெங்குமலர்ந்தெனமண்டுசெந் நீர்பரந்திடநின்றுமுனைந்தெழு,பூபர்தங்களுடம்புசிவந்தனர்பூரமெங்குமலைந்துபுரண்டவே.

(இ - ள்.) (அவ்விருவரும்),— கோபம் விஞ்சினர் - கோபம்மிக்கவர்களாய்,— விஞ்சை வரம் பெறு - மந்திரபலத்துடனே வரமாகப்பெற்ற, கூர் சரங்கள் - கூரிய அம்புகளை, தெரிந்தனர் கொண்டனர் - ஆராய்ந்து எடுத்துக்கொண்டு, சாபமும் குனிதந்து - விற்களையும் வளைத்து, தாரை வெம்பரி தங்கு இரதங்களும் - (பலவகை) நடைகளையுடைய கொடிய குதிரைகள் பூட்டிய தங்கள்தேர்களையும், எதிர் உந்தினர்-(ஒருவர்க்கொருவர்)எதிரிலே செலுத்தினார்கள்; நீபம் எங்கும் மலர்ந்து என - செங்கடப்பமரங்கள் எவ்விடமும் மலர்ந்தாற்போல, மண்டு செம் நீர் பரந்திட - மிக்க இரத்தம் எங்கும்பரவ, நின்று முனைந்து எழு - நிலைநின்று போர்செய்துவிளங்குகிற, பூபர் - (அவ்விரண்டு) அரசரும், தங்கள் உடம்பு சிவந்தனர் - (அவ்விரத்தப் பெருக்கினால்) தங்கள் உடம்பு செந்நிறமடையப்பெற்றார்கள்;(அவர்களுடம்பினின்று), பூரம் - (இரத்தப்) பெருக்குக்கள், எங்கும் - எவ்விடங்களிலும், அலைந்து - அலைவீசிக்கொண்டு, புரண்ட - வழிந்தோடின; (எ - று.)

தாரை - தாரா என்ற வடசொல்லின் திரிபு. தாரையெனினும், கதியெனினும் ஒக்கும்.ஆஸ்கந்திதம்முதலிய குதிரைநடைவகை யைந்தும்,பஞ்ச

தாரைகளெனப்படும். இரத்தம்பெருகிநிரம்புதற்குச் செங்கடம்புமலர்தல் உவமையாதலே, "பூபர் தங்கள் புயங்களு மார்பமுஞ், சாபவெங்கணை தைத்திரு சோரியால், நீப மென்னவுஞ் செம்மலர்க் கோடுடை, நீப மென்னவு நின்றன ராண்மையால்" என முதற்போர்ச்சருக்கத்திலுங் காண்க. நீபம், பூரம் - வடசொற்கள். புரண்ட - முற்று. விஞ்சை வரம் பெறு - உபயோகிக்குந்திறமையோடு மேன்மையாகப் பெற்ற எனினுமாம். பூபர் உடம்பு சிவந்தனர் - திணைவழுவமைதி; [நன் - பொது - உசு.] (கஉஅ)

[வீமனும் கர்ணன் தேருடன் சிதைதல்.]

மாரு தன்புதல் வன்றொடு மம்பினின் மாவி ரண்டுமி ரண்டும் விழுந்தன, சோரும் வன்றுவ சந்தறி யுண்டது சூத னுந்தலை சிந்தினன் முந்திய, தேரு முந்துரு ளுந்துகள் கொண்டன சேம வெங்கவ சந்துளை விஞ்சிய,தார வெண்குடை யம்புலி யும்பிறை யான தஞ்சலி நெஞ்சும ழிந்ததே.

(இ - ள்.) (அப்பொழுது),—மாருதன் புதல்வன் தொடும் அம்பினில் - வாயுகுமாரனான வீமன் பிரயோகித்த பாணங்களினால்,மா இரண்டும் இரண்டும் விழுந்தன - (கர்ணனது தேர்க்) குதிரைகள் நான்கும் இறந்துவிழுந்தன; சோரும் வல் துவசம் தறியுண்டது - அசைந்தாடுந்தன்மையுள்ள வலியகொடி முறிபட்டது; சூதனும் தலை சிந்தினன் - தேர்ப்பாகனும் தலை சிதறினான்; முந்திய தேரும் - முற்பட்டுவந்த இரதமும், உந்து உருளும் - அதனைநடத்துகிற சக்கரங்களும், துகள் கொண்டன - பொடிபட்டன; சேமம் வெம் கவசம் - (உடம்புக்குப்) பாதுகாவலாகவுள்ள வலியகவசம், துளை விஞ்சியது - துளைகள்மிகப்பெற்றது;ஆரம் வெள் குடை அம்புலியும்-முத்துமயமான ஒற்றைவெண்கொற்றக்குடையாகிய சந்திரமண்டலமும், பிறை ஆனது - (பிளவுபட்டுப்) பிறைச்சந்திரன்போலக் குறைவடிவாயிற்று; அஞ்சல் இல் நெஞ்சும் அழிந்தது - எதற்கும் அஞ்சுதலில்லாத (அவனது) மனமும் மிகத்தளர்ந்தது; (எ - று.)—ஏ - ஈற்றசை; தேற்றமுமாம்.

இச்செய்யுளில், 'மாருதன்புதல்வன் றொடுமம்பினில்' என்றதனாலும், அடுத்தசெய்யுளில் 'அழிந்து கன்னனும்' என்பதனாலும், குதிரைகள் முதலியன கர்ணனுடையவை யென விளங்கும். தறியுண்டது என்பதில், 'உண்' என்பது - செயப்பாட்டுவினைப்பொருளை யுணர்த்திற்று. ஸூதன் - வடசொல். முந்திய தேர் - சிறந்த தேருமாம். துகள், சேமம், ஆரம் - தூளீ, க்ஷேமம், ஹாரம் என்ற வடசொற்களின் திரிபு. துகள்கொள்ளுதல் - பொடியாந்தன்மையை யடைதல். குடைக்குப் பூர்ணசந்திர னுவமை - வட்டவடிவிற்கும், வெண்மைநிறத்துக்கும், இனியஒளிக்கும், குளிர்ச்சிதருதற்கு மென்க. கர்ணன்கொடி - கச்சைக்கொடி: யானைக்கழுத்திடுகயிற்றின்வடிவ மெழுதப்பெற்றது. துளையெனினும், தொளையெனினும் ஒக்கும். 'இரண்டு மிரண்டும்' என்ற உம்மைகள் - எண்ணுப்பொருளன. (கஉகூ)

வேறு.

[கர்ணனுக்கு அவன்மகன் தன்தேரைக் கொடுத்தல்.]

அழிந்து கன்னனுங் கால்விசை யினிலிவ னம்பினுக் கெட்டாமல் வழிந்து போதல்கண் டடல்விட சேனனவ் வள்ளலுக் கெதிரோடி யிழிந்து தன்பெருந் தடமணித் தேரின்மே லேற்றலு மிவனேறிக் கழிந்த நீர்க்கணை கோலுவான் போலவன் கண்ணெதி ருறச்சென்றான்.

(இ - ள்.) (இவ்வாறு), கன்னனும் - கர்ணனும், அழிந்து - (தேர்முதலியன) அழியப்பெற்று, கால் விசையினில் - கால்களின் வேகத்தால், இவன் அம்பினுக்கு எட்டாமல் வழிந்து போதல் - வீமனுடைய பாணங்களுக்கு இலக்காகாதபடி வேகமாக நழுவியோடிச் செல்லுதலை, கண்டு - பார்

த்து, அடல் விடசேனன் - வலிமையையுடைய (அவன்மகனான) விருஷ சேனனென்பவன், அ வள்ளலுக்கு எதிர் ஓடி - வண்மைக்குணமுடையவனான அக்கர்ணனுக்கு எதிரிலே விரைந்துசென்று. இழிந்து - (தன்தேரினின்று) இறங்கி, தன் பெருந் தட மணி தேரின்மேல் - பெருமையுள்ளதும் பெரியதுமான அழகிய தனது தேரின்மேல், ஏற்றலும் - (அவனை) ஏற்றிக்கொண்டவளவிலே, இவன் - கர்ணன், ஏறி - அத்தேரிலேறி, கழிந்த நீர்க்கு அணை கோலுவான் போல் - கடந்துசென்ற நீர்ப்பெருக்கைத் தடுப்பதற்கு அணைகட்ட முயல்பவன் போல, அவன் கண் எதிர் உற சென்றான் - அவ்வீமனதுகண்களுக்கு எதிராக (மீண்டும்) சென்றான்; (எ - று.)

விடசேனன் - வடசொல் திரிபு; இவன், கர்ணனது குமாரன்: "யாமினியி லெவ்வுயிர்க்கு மேற்றதயில் மாற்றுவோன், மாமதலை கோமதலை மான்தேர் விடசேனன்" என்பர் மேற் பதினேழாம் போர்ச்சருக்கத்தும். கால்விசையினில் - காற்றுப்போன்ற விரைவினு லென்றுமாம். பெருந் தட - ஒருபொருட்பன்மொழியாய், தேரின்மிக்கபெருமையைக் குறிக்கு மென்னுமாம். கழிந்தநீர்க்குஅணைகோலுதல் - வடமொழியில்'கதஜலஸேதுபந்தநம்' எனப்படும். பெருகிச்சென்றுதீர்ந்த வெள்ளத்துக்குப் பின்பு தடுத்து வைத்தற்பொருட்டு அணைகோலுதலிற் சிறிதும்பயனில்லாமைபோல, மிகமே லிட்டுவந்திட்ட வீமனைக் கர்ணன் எதிர்த்தல் சிறிதும்பயன்படாது முடிதலால், 'கழிந்தநீர்க்கு அணைகோலுவான்போல் அவன்கண்ணெதிருறச் சென்றான்' என்றார்; உவமையணி. ஏற்றாது மாற்றாது கொடுக்கும் ஈகையிற் சிறந்தவனாதலால், கர்ணன் 'வள்ளல்' எனப்பட்டான்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - கீழ் முப்பத்துநான்காங்கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (கூ0)

[கர்ணன் தோற்கத் துரியோதனன் தம்பியரிருவரை ஏவுதல்.]

சென்றுமீளவும்வீமனோடெதிர்ந்துவெஞ்சிலையமர்புரிந்தந்தக்,
குன்றுபோனெடுந்தேருநுண்டுகள்படக்குலைந்துவென்கொடுத்தோ
டக், கன்றிநாகவெங்கொடியவன்கண்டுதன்கண்ணிகரிளையோரை,
யொன்றிநீர்விரைந்துதவுமென்றிருவரையொருகணத்தினிலேவ.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) (கர்ணன்), மீளவும் சென்று - மறுபடியும் போய், வீமனோடு எதிர்ந்து - வீமனுடன் எதிரிட்டு, வெம் சிலை அமர் புரிந்து - கொடியவிற்போரைச்செய்து, அந்த குன்று போல் நெடுந்தேரும் நுண் துகள்பட - மலைபோன்ற பெரிய அந்தத்தேரும் (முந்தியதேர்போலவே) சிறுபொடிகளாய்விட, குலைந்து - நிலைகுலைந்து, வென் கொடுத்து ஓட - புறங்கொடுத்து ஓடிப்போக,—வெம் நாகம் கொடியவன் - பயங்கரமான பாம்புக்கொடியையுடையவனாகிய துரியோதனன், கண்டு - (அதனைப்) பார்த்து, கன்றி - கோபித்து, தன் கண் நிகர் இளையோரை இருவரை - தனதுகண்களைப் போன்ற அருமைத்தம்பியரிரண்டுபேரை, நீர் விரைந்து ஒன்றி உதவும் என்று - 'நீங்கள் வேகமாகச் சென்று சேர்ந்து (கர்ணனுக்குத்) துணைசெய்வீர்கள்' என்றுசொல்லி, ஒரு கணத்தினில் ஏவ - ஒருக்ஷணப்பொழுதிலே [மிகவிரைவிலே]செலுத்த, (எ - று.)—'இருவரும் கடிதுடற்றுச்சிலைவாங்கி அமர்புரிந்து உடல்சிதைந்து வானிடைச் சென்றார்' என, வருங்கவியோடு தொடர்ந்து முடியும்.

**'கண்ணிகரிளையோர்' என்றதனால் - துரியோதனனுக்குத் தம்பியரிடத்திலுள்ள மிக்கஅன்பும், அவன் அவர்களை அருமையாகப் பாதுகாத்துவந்த தன்மையும், அவனுக்கு அவர்கள் சிறந்தஅங்கமாகஇருந்து உதவிவந்தமையும் விளங்கும். உதவும் - 'உம்'விகுதிபெற்றுவந்த ஏவற்பன்மை. தேரும் என்ற**

உம்மை - இறந்ததுதழுவியஎச்சத்தோடு உயர்வுசிறப்பு. நாகவெங்கொடியவனென்ற பெயர்-பாம்புபோல மிக்ககொடுமையுடையவனென்ற பொருளையுங் காட்டும். (கரு௧)

[அவ்விருவரும் வீமனாற் கொல்லப்படுதல்.]

கன்னனைக்கடிதுற்றிருவருமதுகயிடவரெனத்தக்கோர்
மன்னருக்கரியனையவீமனுக்கெதிர்வரிசிலையுறவாங்கி
யந்நிலத்தினிலவனுடனெடும்பொழுதமர்புரிந்தவன்கையிற் [றார்.
செந்நிறக்கொடும்பகழியாற்றம்முடல்சிதைந்துவானிடைச்சென்

(இ - ள்.) மது கயிடவர் என தக்கோர்-மது கைடபன் என்ற இரண்டு அசுரர்களென்று (ஒப்புமையாற்) சொல்லத்தக்கவர்களான, இருவரும் - (கொடிய வலிய அத்துரியோதனன்தம்பியர்) இரண்டுபேரும்,— கன்னனை கடிது உற்று - கர்ணனை விரைவாக அடுத்து,— மன்னருக்கு அரி அனைய வீமனுக்கு எதிர் - அரசர்கட்குச் சிங்கம்போன்ற வீமசேனனுக்கு எதிரிலே, வரி சிலை உற வாங்கி - கட்டமைந்த வில்லை நன்றாகவளைத்து, அ நிலத்தினில் - அவ்விடத்திலே, அவனுடன்-அவ்வீமனுடன், நெடும்பொழுது அமர் புரிந்து - வெகுநேரம் போர்செய்து, அவன் கையின் செம் நிறம் கொடும் பகழியால் - அவன்கையினாலேவப்பட்ட சிவந்தநிறமுடைய கொடிய அம்புகளினால், தம் உடல் சிதைந்து-தங்களுடைய உடம்பு அழிபட்டு, வானிடை சென்றார் - வீரசுவர்க்கத்துக்குப் போனார்கள் [இறந்தன ரென்றபடி].

மதுகைடபர் - உம்மைத்தொகை; மகாபலசாலிகளான இவ்வசுரரிருவரும், ஆதிசிருஷ்டிகாலத்தில் தோன்றியவர்; இவர்கள் செருக்கிக் கடலிலிழிந்து திருமாலை யெதிர்த்துப் பெரும்போர்புரிய, இவர்களை அப்பெருமான் தனது துடைகளினால் இடுக்கிக் கீழேதள்ளிக் கால்களால் மிதித்துத் துவைத்துக் கொன்றான். (இவர்களது உடம்பினின்று வெளிப்பட்ட கொழுப்பினால் நனைந்தமைபற்றி, பூமிக்கு'மேதினீ' என்று ஒருபெயர் வழங்கும்.) கைடவன், கயிடவன் எனப் போலிபெற்றது. 'மன்னருக்கு அரியனைய வீமன்' என்றது - விலங்குகட்கு அரசாய்ச் சிறந்த சிங்கம்போல அரசர்கட்குத் தலைவனாய் உயர்ந்த வீம னென்றும், யானைமுதலிய விலங்குகளை எளிதில் அழிக்கவல்ல சிங்கம்போலப் பகையரசரை எளிதில் அழிக்கவல்ல வீமனென்றும் கருத்துப்படும். சிங்கக்கொடியுடையானுக்குச் சிங்கத்தைஉவமை கூறினார். 'செந்நிறப்பகழி' என்றதில், முன்பு உடல்துளைத்துக் கொல்லப்பட்ட பகைவரது செந்நீர் தோய்ந்துள்ள தன்மையுந் தோன்றும். (கரு௨)

[பின்பு கர்ணன் வீமனைக்கொல்வதாகச் சபதஞ்செய்தல்.]

தனதுகண்ணெதிரிருவருமழிந்தபின்றபனன்மைந்தனுநொந்து
கனதுரங்கமமுடுகுதேர்வயப்படைக்காவலன்முகநோக்கி
யுனதுதம்பியரிருவரைச்செற்றவன்முடித்தலையொடியேனே
லெனதுபுன்றலையவன்கையிற்கொடுப்பனென்றேறினனொருதேர்மேல்.

(இ - ள்.) தனது கண் எதிர் - தன்னுடைய கண்களுக்கு எதிரிலே, இருவரும் அழிந்த பின் - (தனக்குத்துணையாகவந்த) அத்துரியோதனன் தம்பியரிரண்டுபேரும் (வீமனால்) இறந்தவுடனே, தபனன் மைந்தனும் - சூரியகுமாரனான கர்ணனும், நொந்து - வருந்தி, கன துரங்கமம் முடுகு தேர் வய படை காவலன் முகம் நோக்கி - சிறந்த குதிரைகள் விரைவாக நடத்தப்பெற்ற தேரையும் வலிய சேனைகளையு முடைய துரியோதனராசனது முகத்தைப் பார்த்து, 'உனது தம்பியர் இருவரை செற்றவன் முடி தலை ஒடியேனேல் - உன்னுடைய தம்பிமா ரிரண்டுபேரை (என்முன்னிலையில்) அழித்திட்டவனான வீமனது கிரீடந்தரித்த தலையை (நான் இப்பொ

பொழுது) துணிந்திடசமர்ப்போரேனுனால், எனது புன் தலை அவன் கையில் கொடுப்பன் - என்னுடைய அற்பமானதலையை அவ்வீமனது கையிலே யிழப்பேன்', என்று - என்றுசபதங்கூறி, ஒரு தேர்மேல்-வேறொரு தேரில், ஏறினான்—; (எ - று.)

இப்பொழுது நான் எதிர்த்துப்பொருது வீமனைக்கொல்வேன்: அங்ஙனம் இயலாதாயின், அவன்கையாற் கொல்லப்படுவேன்; இவ்விரண்டிலொன்று தவறேன் என்று பிரதிஜ்ஞைசெய்தனன் கர்ணன் என்பதாம்.

தபநன்-(வெயிலினால்) தபிப்பவன். தநதுரங்கமம்-வடமொழித்தொடர். தனது பகைவனைக் கொல்லாத நிலைமையை யிகழ்ந்து, 'எனதுபுன்தலை' என்று தன்னைத்தானே இழித்துக்கூறினான். நோக்கி என்று எனஇயையும்.

முன்பு கண்ணன் துரியோதனனிடந் தூதுவந்தபோது அப்பெருமான் தனக்கு அந்தரங்கமாகச்சொன்னதனாற் கர்ணனைத் தனதுமூத்தமகனென்றுஅறிந்த குந்தி, அக்கண்ணன்தூண்டுதலாற் கர்ணனிடஞ்சென்று அவன்பிறப்பை அவனுக்கு உணர்த்திப் பாண்டவர்பக்கல் வந்துசேருமாறு அழைத்ததற்கு அவன் இணங்காதபிறகு,'நாகாஸ்திரத்தை இரண்டாம்முறை அருச்சுனன்மேல் தொடுக்கலாகாது' என்றும், 'மற்றைப் பாண்டவர்நால்வரையுங் கொல்லலாகாது'என்றும் வேண்டியஇரண்டுவரங்கட்கும் கர்ணன் இணங்கி 'அங்ஙனமேயாகுக' என்று அத்தாய்க்கு வாக்குதத்தஞ்செய்துள்ளான்; அதற்குமாறாகக் கர்ணன் இப்பொழுது வீமனைத்தான்கொல்வதாகச் சபதஞ்செய்வது,"எல்லாம், வெகுண்டார்முற் றோன்றாக் கெடும்"என்றபடி அனைத்தையும்மறக்கச்செய்கிற கோபாவேசத்தின் காரிய மென்க. (கஙங)

[கர்ணன் வீமனெதிரில் வீரவாதஞ்செய்தல்.]

குனித்தசாபமுந்தொடுத்தசாயகங்களுங்குலவுமால்வரைத்தோளுந்
துனித்தநெஞ்சமுமுரிந்தனபுருவமுமெரிந்தகண்களுந்தோன்றப்
பனித்ததேரொடும்போருடன் றெழுதரும்பரிதியின்விரைந்தெய்தி
யினித்தராதலமுரககேதனற்கெனவிளவலோடிகல்செய்தான்.

(இ - ள்.) குனித்த சாபமும் - வளைத்த வில்லும், தொடுத்த சாயகங்களும் - எய்கிற அம்புகளும், குலவு மால் வரை தோளும் - (நெடுந்தூரம்) விளங்குகின்ற பெரிய மலைகள்போன்ற தோள்களும், துனித்த நெஞ்சமும்- கோபங்கொண்ட மனமும், முரிந்தன புருவமும் - (கோபத்தால்) நெறித்தனவான புருவங்களும், எரிந்த கண்களும் - (கோபாவேசமிகுதியால்) தீப்பொறி பறக்கப்பெற்ற கண்களும், தோன்ற-காணப்பட, பனித்த தேரொடும் - அசைந்துசெல்லுகிற தேருடனே, (கர்ணன்), போர் உடன்று எழுதரும் பரிதியின் - போர்செய்தற்கு உக்கிரங்கொண்டு புறப்படுகிற சூரியன் போல, விரைந்து எய்தி - விரைவாக (வீமனை) அடைந்து,— இளவலோடு- (உண்மையில் தனது) தம்பியான அவனுடனே,—இனி தராதலம் உரககேதனற்கு -'இனிமேல் நிலவுலகம் பாம்புக்கொடியனான துரியோதனனுக்கே (நிலைத்திடும்),' என - என்று, இகல் செய்தான் - வீரவாதஞ்செய்தான்.

துரியோதனதியரைக் கொல்வே னென்று சபதஞ்செய்துள்ளவனும் வலிமையிற்சிறந்தவனு மான உன்னை இப்பொழுது நான் கொல்வேன்; கொல்லவே, பின்பு அவர்களை வெல்லவல்லா ரெவரும் இல்லை யாதலால், துரியோதனனுக்கே இராச்சியம் நிலைபெற்றிடும் என்றபடி.

போர்செய்தலிலுண்டானவீராவேசத்தால் தோள்கள்புடைபருத்தமை தோன்ற, 'குலவுமால்வரைத்தோள்'என்றார். புருவம் - ப்ரூঃ என்னும் வடசொல்லின் சிதைவு என்பர். எரிந்தகண்கள் - கோபமிகுதியாற் கண்களிலாகிய செந்நிறமிகுதியை, அந்நிறமும் அச்சந்தருந்தன்மையும்பற்றித் தீப்பொருந்தியவையாகக்கூறுதல், கவிசமயம். 'போருடன்றெழுதரும் பரிதி'

என்றது, தனக்குப்பகையாகிய இருளை யெதிர்த்துத் தாக்கி யழித்தற்கு வெம்மையோடு உதிக்கிற சூரிய னென்றபடி. 'தந்தையே மைந்தனாகிறான்' என்பது நூல்வழக்காதலால், சூரியகுமாரனுக்குச் சூரியனையே உவமை கூறியது மிகவேற்கும். தந்தை இருளழிக்கப் புறப்படுதல்போல மைந்தன் பகையழிக்கப்புறப்பட்டன னென்க. 'பனித்ததேரோடும்' என்றது - சூரியன் கர்ணன் என்ற இருவர்க்கும் அடைமொழியாகத்தகும்; முறையே'எழுதரும்'என்பதனோடும், 'எய்தி' என்பதனோடும் இயைக்க. 'போருடன்றெழுதரும்பரிதிபோல்' என்பதற்கு - (மந்தேகரென்னும்அரக்கர்களுடன்)போர் செய்து அவர்களை யழித்துக்கொண்டு உதயஞ்செய்கிற சூரியன்போல வென்று பொருள்கொள்ளுதலும் பொருந்தும். தூராதலம், உரககேதனன் - வடமொழித்தொடர்கள். நான்காம்அடிக்கு - இனிமேல் நிலவுலகம் துரியோதனனுக்கே நிலைத்திடு மென்று (யாவருஞ்) சொல்லும்படி தம்பியான வீமனுடன் பொருதா னென உரைத்தலும் நேராம். (௬௨௪)

[வீமனும் கர்ணனும் எதிர்த்த நிலைமை.]

ஆற்றையொத்தனகால்வழியளைபுகுமாமைதொட்டடன்மள்ளர்
சேற்றையொத்தனநித்திலமெடுத்தெறிசெல்வநீள்குருநாடன்
காற்றையொத்தனன்வலியினாற்சினத்தினாற்கதிரவன்றிருமைந்தன்
கூற்றையொத்தனன்பிறப்பிலேதுவக்குளோர்குணங்களுங்கொள்ளாரோ.

(இ - ள்.) ஆற்றை ஒத்தன கால் வழி-(பெருமையினாலும் நீர்மிகுதியினாலும்)ஆறுபோன்றனவாயுள்ள வாய்க்கால்களின்வழியாய், அளை புகும்-குழை சேற்றுக்கழனிகளிற் சேர்கிற, ஆமை தொட்டு - ஆமைகளைக்குறித்து, அடல் மள்ளர்-வலிமையையுடைய உழவர்கள், சேற்றை ஒத்தன நித்திலம் எடுத்து எறி-அச்சேற்றைசசார்ந்துள்ளனவான முத்துக்களை யெடுத்து வீசியடிக்கிற, செல்வம்-செல்வசசிறப்பு, நீள்-மிக்க, குருநாடன்-குருநாட்டுக்கு உரியவனான வீமன், வலியினால் - தேகபலத்தால், காற்றை ஒத்தனன்-காற்றைப்போன்றான்: கதிரவன் திரு மைந்தன் - சூரியனது சிறந்தகுமாரனான கர்ணன், சினத்தினால் - கோபத்தால், கூற்றை ஒத்தனன் - யமனைப் போன்றான் ; பிறப்பிலே துவக்கு உளோர் குணங்களும் கொள்ளாரோ - பிறப்பிலே சம்பந்தமுள்ளவர்கள்(அசசம்பந்தமுடையார்க்கு உரிய)குணங்களையுங் கொள்ள மாட்டார்களோ? [தவறாமற் கொள்வ ரென்றபடி]; (எ - று.)

வீமன் வாயுகுமார னாதலால் தனதுதந்தையின்வலிமையைத் தான் கொண்டு அவன்போலானா னென்றும், கர்ணன் யமனது தம்பியாதலால் தனது தமையனது கோபத்தைத் தான்கொண்டு அவன்போலானா னென்றும் சமத்காரமான கருத்து நிகழ, 'பிறப்பிலே துவக்குளோர் குணங்களுங் கொள்ளாரோ' என்றார். வீமனும் கர்ணனும் காற்றையும் யமனையும் போன்றா ரென்ற சிறப்புப்பொருளை, 'பிறப்பிலே துவக்குளோர் குணங்களுங் கொள்ளாரோ' என்ற பொதுப்பொருள்கொண்டு சாதித்ததனால், வேற்றுப்பொருள்வைப்பணி. யமன் சூரியனுக்கு ஸம்ஜ்ஞை யென்னும் மனைவியினிடத்து முன்புபிறந்த மகனாதலாலும், கர்ணன் சூரியனுக்குக் குந்திதேவியினிடம் பின்புபிறந்த புத்திரனாதலாலும், கர்ணனை 'யமனது தம்பி' என்றது. யமன் சூரியன்மகனாதலை "வெங்கதிர் விவச்சுவா னென வுரைப் போன் விளங்கு வைவச்சுத மனுவை. அங்கண்மாஞாலம் புகழ்தருங் கூற்றை யருந்திறல்யமுனையை யளித்து" என்ற பாகவதத்தாலும் அறிக. இதனால், யமனுக்கு வைவஸ்வத னென்று ஒருபெயர்; விவஸ்வானுடைய[சூரியனுடைய] குமார னென்று பொருள்.

உழவர்கள் கழனிகளிலே சேற்றுப்பயிர்செய்கையில் வேற்றிடத்து ஆமைகள் அந்நிலத்தின் நீர்வளச்சிறப்பை நோக்கி அங்குச் சென்று வாழ்தற்பொருட்டு வாய்க்கால்களின் வழியாய் வந்துசேர, அதுகண்ட அவ்வுழ

வர்கள், தாம் உழவுத்தொழில் நிகழ்த்தும்பொழுது தமதுஉழுபடைகளில் அவை அகப்பட்டு அழிந்திடாவண்ணம் அவற்றை விலக்கும்பொருட்டு அங்குக்கிடக்கிற முத்துக்களை யெடுத்து அவற்றின்மேல் எறிகின்றனரென வர்ணனையின்போக்குக் காண்க. நீர்வளச்சிறப்பினால் அங்குத்தங்குகிற இப்பிசங்குகளினின்று தோன்றுகின்ற முத்துக்கள், செல்வப்பெருக்கினால் எவரு மெடுப்பவ ரில்லாமைபற்றி, கண்டவிடமெங்குஞ் சிந்திக்கிடக்கின்றன என்பது, இதில் நன்குதோன்றும். இங்ஙனம் செல்வமிகுதியை வர்ணித்தது, வீறுகோளணி; வடநூலார் உதாத்தாலங்கார மென்பர்: "வியத்தகுசெல்வமும் மேம்படுமுள்ளமும், உயர்ச்சிபுனைந்துரைப்பது உதாத்தமாகும்" என்ற தண்டியலங்காரச்சூத்திரத்தால், இதன்இலக்கண மறிக. 'ஆற்றையொத்தன கால்' என்றது, அகலம் நீளம் ஆழம் இவற்றால் மிகப்பெரிய வாய்க்கால்க ளென்றபடி.

ஆறு-யாறு என்பதன் மரூஉ. மள்ளர்என்றது-இங்கே, மருதநிலத்து ஆடவரின்பெயர். ஒத்தல்என்பது-இரண்டாமடியில் பொருந்துதலென்றபொருளிலும், மற்றைமூன்றடிகளில்ஒப்புமைப்பொருளிலும் வந்தது. குருநாடு-குரு என்னுஞ் சந்திரகுலத்தரசனால் ஆளப்பட்ட நாடு. பிறப்பு - பிறந்தஇடத்து உறவுமுறைமை. துவக்கு - துவங்கு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். கொள்ளாரோ என்றதில், இரண்டு எதிர்மறை உடன்பாட்டையுணர்த்தித் தேற்றக்கருத்தை விளக்கிற்று.

வீமனை 'குருநாடன்' என்றது, அப்பொழுது குருநாடுமுழுவதுக்கும் உரியவனாய்அரசாள்கிற துரியோதனனைக் கொன்று அந்நாட்டின்அரசாட்சியுரிமையைக் கைப்பற்றும் வல்லமையுடைய னாதலால். நாட்டுக்குக்கொடுத்த அடைமொழியில், அந்நாட்டுவீரர் தமது தொழிலுக்கு இடையூறாகவருமுயிர்களைக் கையிலகப்பட்ட சிறந்தகருவிகளைக்கொண்டு விலக்கும் ஆற்றலுடையா ரென்ற கருத்துத் தோன்றுதல் காண்க. (கஙு)

[வீமன் கர்ணனெதிரில் வீரவாதஞ்செய்தல்.]

தேறல்வண்டிமிர்தெரியலான்றினபதிசிறுவனைமுகநோக்கி
யாறல்வெஞ்சமத்தென்னுடன்முனைந்தனைமுனைந்தனையானாலும்
வேறலென்கடனின்னைமன்னவையின்முன்விளம்பியவசனத்தாற்
கோறலெம்பிதன்கடனெனவரிசிலைகுனித்தனன்கொடித்தேரோன்.

(இ - ள்.) தேறல் வண்டு இமிர் தெரியலான் - தேனில் வண்டுகள் மொய்த்தொலிக்கப்பெற்ற மலர்மாலையையுடையவனாகிய, தினபதி சிறுவனை - பகற்பொழுதுக்குத் தலைவனான சூரியனது குமாரனாகிய கர்ணனை, முகம் நோக்கி - முகத்தைப்பார்த்து,—'(நீ), என்னுடன்—, ஆறு அல் வெம் சமத்து - நியாயவழியல்லாத கொடியபோரிலே, முனைந்தனை - வீராவேசங் கொண்டாய்; முனைந்தனை ஆனாலும் - அங்ஙனங்கொண்டு போர்தொடங்கினையானாலும், நின்னை - உன்னை, வேறல் - வெல்லுதல்மாத்திரமே, என் கடன் - எனதுகடமை; மன் அவையில் - ராஜசபையில், முன் விளம்பிய - முன்புசொன்ன, வசனத்தால் - சபதவார்த்தைப்படி, கோறல் - (உன்னைக்) கொல்லுதல், எம்பிதன் கடன் - எனதுதம்பியின்கடமை,' என - என்று சொல்லி, கொடி தேரோன் - (சிங்கக்)கொடி கட்டிய தேரையுடையவனான வீமன், வரி சிலை குனித்தனன் - கட்டமைந்த வில்லை வளைத்தான்.

உன்னைக்கொல்வதாக அருச்சுனன் முன்பு சபதஞ்செய்திருத்தலால், நீ அவனை யெதிர்த்துக் கொல்லத்தொடங்குதலாவது, அங்ஙனந்தொடங்கிப் பொருகையில் அவன்கையால் இறத்தலாவது இரண்டிலொன்றை அடைவதற்குத் துணிந்து செல்வது நீதியாம்; அங்ஙனமன்றி, என்னுடன் இப்படி சபதஞ்செய்து புறப்படுதல் தகுதியன்று என்பான், 'ஆறல்வெஞ்

சமத்து என்னுடன் மூனைத்தனை' என்றான். இவன் எதிர்த்துவருகிற உக்கிரத்தன்மைபற்றி இவனைத் தான்கொல்லவேண்டுவது அவசியமாயினும், தனதுதம்பியான அருச்சுனனது சபதத்தைப் பொய்யாக்காமைப்பொருட்டு அங்ஙனங்கொல்லாது வெல்லுதல்மாத்திரஞ்செய்து உயிரோடுவிட வேண்டியிருத்தலின், இங்ஙனங் கூறினான். இனி, வனவாசஅஜ்ஞாதவாசங் கடந்தபின்பு கொடுப்பதாக உறுதிகூறியுள்ள அரசாட்சியை அங்ஙனங் கொடாமலொழிந்து தொடங்கிச்செய்யும் போர் அக்கிரமப்போரே யாதலால், அதுபற்றி, 'ஆறல்வெஞ்சமம்' என்றதாகவுங் கொள்ளலாம்; அன்றி, ஆறுவதல்லாத தணியாக்கொடும்போரெனினும் ஒக்கும். துரியோதனன் தருமபுத்திரனைச் சூதில்வென்று திரௌபதியைத் துகிலுரிந்தகாலத்தில், அருச்சுனன், இங்ஙனந் துரியோதனன்துஷ்டகாரியஞ்செய்தற்குப் பெருந்துணையாய் நின்ற கர்ணனைப் போரிற்கொல்வேனென்று சபதஞ்செய்துள்ளான்; அதனை, கீழ்ச் சூதுபோர்ச்சருக்கத்தில் "பகலவன்றன் மதலையுயிர் பகைப்புலத்துக் கவர்வனெனப் பார்த்தன் சொன்னான்" எனக் காண்க. கடன் - தவறாமற்செய்யுந் தொழில். 'தேறல்வண்டிமிர்தெரியலான்' என்பது, வீமனுக்கு அடைமொழியாகவுமாம்.

தெரியல் - விளங்குவது என மாலைக்குக் காரணக்குறி; அல் - கருத்தாப்பொருள்விகுதி. சிறுவனை முகம் நோக்கி - உருபுமயக்கமாக, சிறுவனது முகத்தை நோக்கி என்றலுமாம். வசநம் - வடசொல். 'நின்னை' என்பதை 'கோறல்' என்பதனோடுங் கூட்டுக. (கூகூ)

[அப்போரிற் கர்ணன் வீமனைத் தேரழித்தல்.]

இலக்கமற்றவெங்கணைகளாலிருவருமெதிரெதிரமராடிக்
கலக்கமுற்றபின்றினகரன்மதலையக்காற்றின்மைந்தனைச்சீறி
யலக்கணுற்றிடப்பலபெருங்கணைதொடுத்தவன்விடுங்கணையாவும்
விலக்கிவச்சிரத்தேரும்வெம்புரவியும்விறற்றுவசமும்வீழ்த்தான்.

(இ - ள்.) இருவரும் - (வீமன் கர்ணன் என்ற) இரண்டுபேரும், இலக்கம் அற்ற வெம் கணைகளால் - எண்ணிக்கையில்லாத கொடிய அம்புகளினால், எதிர் எதிர் அமர் ஆடி - ஒருவர்க்கொருவர் எதிரிலே போரை மிகுதியாகச் செய்து, கலக்கம் உற்ற பின் - இளைப்படைந்தபின்பு, தினகரன் மதலை - கர்ணன், அ காற்றின் மைந்தனை - அவ்வீமனை, சீறி - மிகுதியாகக் கோபித்து, அலக்கண் உற்றிட - (அவன்) துன்பமடையும்படி, பல பெருங் கணை தொடுத்து - அநேகம் சிறந்தபாணங்களை (அவன்மேற்) பிரயோகித்து, அவன் விடும் கணை யாவும் விலக்கி - அவன் (தன்மேல்) விடும் அம்புகளையெல்லாம் (தனதுஎதிரம்புகளினால்) தடுத்து, (அவ்வீமனுடைய), வச்சிரம் தேரும் - வச்சிரம்போல்உறுதியான தேரையும், வெம் புரவியும் - வேகமுள்ள குதிரைகளையும், விறல் துவசமும் - வெற்றிக்குஅறிகுறியான (சிங்கக்)கொடியையும், வீழ்த்தான் - பிளந்துதள்ளினான் ; (எ - று.)

திநகரன் மதலை - பகலைச்செய்பவனான சூரியனது புத்திரன். காற்றின் மைந்தன் - வாயுபுத்திரன். அலக் கண் - சஞ்சலப்பட்ட கண்களையுடைமை எனக் காரியத்தின்பெயர் காரணமான துன்பத்தின்மேல் நிற்கும் ; அலம் - சஞ்சலம். வச்சிரத்தேர் - வச்சிரரத்தினம்பதித்த தேருமாம் ; வச்சிரம் - இந்திராயுதமும், ஓரிரத்தினமும், மரவைரமும். வீழ்த்தான் - வீழ்ந்தான் என்பதன் பிறவினை ; இதிற் பகுதியாகிய வீழ் என்பது - தன்வினை பிறவினையிரண்டுக்கும் பொது. (கூஎ)

[வேலெறிந்த கர்ணன்மேல் வீமன் கதைவீசுதல்.]

காலினல்வருங்காலின்மைந்தனைக்கடுங்கதிரவன்றிருமைந்தன்
வேலினலைடர்த்தெறிதலுமெறிந்தவேல்வேறிருதுணியாகக்

கோலினலவன் றுணித்துமீளவுமழல்கொளுத்தியென்றொருதண்டு
நாலினன்முழமுடையதுகன்னன்மேலெறிந்தனனகைசெய்தான்.

(இ - ள்.) காலினால் வரும் - (தேரிழந்ததனாற்) கால்களால் நடந்து மேல் வருகிற, காலின் மைந்தனை - வாயுபுத்திரனான வீமனை, கடுங் கதிரவன் திரு மைந்தன் - உஷ்ணமானகிரணங்களையுடையவனாகிய சூரியனது புத்திரனான கர்ணன், வேலினால் அடர்த்து எறிதலும் - வேலாயுதத்தால் வலிமை கொண்டு வீசியடித்த வளவிலே,— அவன் - வீமன், எறிந்த வேல் வேறு இரு துணி ஆக - தன்மேல் எறியப்பட்ட அந்தவேலாயுதம் இரண்டுதுண்டாகப் பிளவுபடும்படி, கோலினால் துணித்து - (தானெய்த) அம்புகளினால் துண்டித்து, மீளவும் - பின்பு, அழல் கொளுத்தி என்று - தீப்பற்றினாற்போல அழிப்பா யென்று சொல்லி, நாலின் நால் முழம் உடையது ஒரு தண்டு - பதினாறுமுழமுள்ள ஒருபெரியகதாயுதத்தை, கன்னன்மேல் எறிந்தனன் - கர்ணன்மேற் பிரயோகித்து, நகைசெய்தான் -(கோபாவேசத்தாற்)சிரித்தான்.

இங்குக்கூறின நகை - வீரத்துஎழுந்த வெகுளிநகை; அன்றி, இதனாற் கர்ணன் பங்கப்படுதலை நோக்கிய இகழ்ச்சிபற்றிய நகைப்புமாம். 'காலினால்வருங் காலின்மைந்தன்' என்றவிடத்துச் சொல்நயங் காண்க; விரைந்துமேல்வருதற்குஉரியவன் வீம னென்பதும் விளங்கும். கொளுத்தி- இகரவிகுதி பெற்ற ஏவலொருமைமுற்று; இதிற்பகுதியான கொளுத்து என்பது - கொள் கொளுந்து என்ற இரண்டுக்கும் பிறவினையாம். நாலினால் - பண்புத்தொகை; உம்மைத்தொகையாயின், எட்டு என்று ஆகும். நகை-சிரித்தல் : முதனிலைத்தொழிற்பெயர் ; நகு-பகுதியாயின், ஐ-தொழிற்பெயர்விகுதி. (கூஅ)

[வீமன் கர்ணனை வென்றதைத் துரியோதனன் கண்டமை.]

தேரவன்றிருமைந்தனேறியதடந்தேரும்வாசியுஞ்சிந்தி
யூரவந்தவெம்பாகனுந்தலைபிளந்தோடலுற்றனன்பின்னும்
வீரனும்பெருவலியுடன்வருகெனவேறொர்தேர்மேற்கொள்ளத்
தூரநின்றவரிருவருமுடன்றமைசுயோதனன்கண்ணுற்றான்.

(இ - ள்.)தேரவன் திரு மைந்தன் - சிறந்ததேரையுடையவனான சூரியனது சிறந்தமகனாகிய கர்ணன், (வீமனெறிந்த கதையினால்), ஏறிய தட தேரும் வாசியும் சிந்தி - தானேறியுள்ள பெரியதேரும் அதன்குதிரைகளும் அழியப்பெற்று, ஊர வந்த வெம் பாகனும் தலை பிளந்து - (அத்தேரைச்) செலுத்துதற்குஅமைந்த கொடியசாரதியும் தலைபிளக்கப்பெற்று, பின்னும் ஓடல் உற்றனன் - மீண்டும் ஓடத்தொடங்கினன் ;(அப்பொழுது), வீரனும் - அவனைவென்றவனான வீமனும், பெரு வலியுடன் - மிக்கவலிமையுடனே, வருக என வேறு ஓர் தேர் மேற்கொள்ள - 'வருவதாக' என்று சொல்லி (உடனேவருவித்து) வேறொருதேரின்மேல் ஏறிக்கொள்ள,—சுயோதனன்- துரியோதனன், தூரம் நின்றவர் இருவரும் உடன்றமை - தூரத்திலுள்ளவர்களான (அந்த வீமன் கர்ணன் என்ற) இரண்டுபேரும் போர்செய்து அடைந்த நிலையை, கண்ணுற்றான் - (அங்கிருந்து) பார்த்தான் ; (எ - று.)

ஒற்றைத்தனியாழியையும் எழுகுதிரைகளையும் உடையதாய் நாள்தோறும் தவறாமல் உலகமுழுவதுஞ் சுற்றிவருகிற வலிய பெரிய சிறந்த தேரையுடைமையால், சூரியன் 'தேரவன்' எனப்பட்டான். அன்றி, இனி, 'தேரவன்திருமைந்தன்' என்பதற்கு - (திருதராட்டிரனது) தேர்ப்பாகனான அதிரதனென்பவன் எடுத்துவளர்த்த மகனாகிய கர்ண னென்றும் பொருள் கொள்ளலாம். ஓடலுற்றனன் என்பதற்கு எழுவாய் - மைந்தனென்பது. தேரும் வாசியும் சிந்தி, பாகனும் தலைபிளந்து என்றவை-அங்கத்தின்வினையை அங்கியின்மேல் ஏற்றிக்கூறியவை, கூo, கூக - ஆங் கவிகளில் இரு

முறை தோற்றோடியமை கூறியதனால், 'ஓட்டுற்றனன் பின்னும்' என்றார். பின்னும்என்பதை'வீமன்தேர்மேற்கொள்ள' என்பதனோடு இயைத்தலுமொன்று. வருகென - வியங்கோளினீற்றகரம் தொகுத்தல். அவரிருவருமுடன்றமை சுயோதனன் தூரம் நின்று கண்ணுற்றானென்றலுமாம். உடன்றமை - இறந்தகாலத்தொழிற்பெயர்; உடல் - பகுதி. (கூஅக)

[துன்முகன் வீமனால் இறத்தல்.]

கண்டுதுன்முகனெனுந்தனியிளவலைக்கடிதினேவலுங்கங்குல்
வண்டுசெஞ்சுடர்வளையவந்திறந்தெனவலியவார்சிலைவாங்கிக்
கொண்டுதிண்டிறல்வாளியான்மலைமிசைக்கொண்டல்பெய்வதுபோல
மண்டுபோர்புரிந்தண்ணல்கைப்பகழியால்வானிமைப்பினிலுற்றான்.

(இ - ள்.) கண்டு - (அங்ஙனம்)பார்த்து, (துரியோதனன்), துன்முகன் எனும் தனி இளவலை - துர்முக னென்ற ஒப்பற்ற தனதுதம்பியை, கடிதின் ஏவலும் - விரைவாக (வீமன்மேற்) செலுத்தியவளவிலே, (அவன்), கங்குல் வண்டு செம் சுடர் வளைய வந்து இறந்து என - இராக்காலத்திற் பறப்பதொரு பூச்சி [விட்டில்] சிவந்தவிளக்கொளியைச் சூழவந்து அதிற்பட்டு இறந்தாற்போல, வலிய வார் சிலை வாங்கி கொண்டு - வலிமையுள்ள நீண்ட வில்லை வளைத்தெடுத்துக்கொண்டு (வந்து),மலைமிசை கொண்டல் பெய்வது போல - மலையின்மேற் காளமேகம் மழைபொழிவதுபோல, திண் திறல் வாளியால் மண்டு போர் புரிந்து - மிகவலிய அம்புகளினால் (வீமன்மேல்) மிக்கபோரைச் செய்து, அண்ணல் கை பகழியால் - சிறந்தவீரனான அவ் வீமனது கையாலெய்யப்பட்ட அம்புகளினால்,இமைப்பினில் - கண்ணிமைப் பொழுதிலே, வான் உற்றான் -(இறந்து)வீரசுவர்க்கஞ்சேர்ந்தான்; (எ - று.)

துர்முகனதுஇழிவும் வீமனதுஉயர்வுந் தோன்ற, முறையே, விளக்குப் பூச்சியையும் விளக்கொளியையும் உவமைகூறினார். விளக்கைக்கைப்பற்ற வந்த விட்டில் அச்சுடரிற் பட்டுத் தான் எளிதில்அழிதல்போல, துர்முகன் வீமனைவெற்றிகொள்ளவந்து அவனம்புக்குஇலக்காகித் தான்எளிதில்அழிந்தன னென்க. மலரில் வண்டு மொய்த்தல்போல,தீயில் விட்டில் மொய்த்தலால், அது 'வண்டு' எனப்பட்டது. துர்முகனெய்த அம்புகள் வீமனுடம்பினுட் பாய்ந்து ஊறுசெய்யமாட்டாமைக்கு, மலைமேல் மேகம்பொழிதலை உவமைகூறினார்.

துர்முகன் என்ற வடமொழிப்பெயர்,கொடியமுகமுடையவ னென்று பொருள்படும். வலிய - குறிப்புப்பெயரெச்சம்; குறிப்புவினையெச்சமாகக் கொண்டு, 'வாங்கி' என்பதனோடு இயைத்து, வலிமையாக வளைத்து என்று உரைத்தலுமாம். (கூஅ0)

[கர்ணன்எறிந்த தோமரம் வீமனால் துணிக்கப்படுதல்.]

தாளினோடியகன்னன்மன்னவன்விடுதம்பிவீழ்தலும்வீமன்
றோளினோடிமண்மிசைபுதைதரவொருதோமரந்தனையேவ
வேளினோடிசைவீமன்மேலதுசெலும்வேலையின்விடவெவ்வாய்க்
கோளினோடியகுரிசில்கைக்கணையினாற்கோளழிந்ததுமன்னோ.

(இ - ள்.) தாளின் ஓடிய கன்னன் - (முன்பு) கால்களினால் விரைந்து ஓடிய கர்ணன், மன்னவன் விடு தம்பி வீழ்தலும் - துரியோதனனேவின அவன்தம்பியான துர்முகன் இறந்துவிழுந்தவளவிலே, (மீண்டும் வந்து), வீமன் தோளின் ஓடி மண்மிசை புதைதர - வீமனது தோளில் விரைந்து பாய்ந்து (பின்பு) தரையிற் புதைந்திடும்படி, ஒரு தோமரந்தனை ஏவ - ஒரு தோமராயுதத்தைப் பிரயோகிக்க,—அது—, வேளினோடு இசை வீமன்மேல் - முருகக்கடவுளோடு (உவமை) சொல்லப்படுகிற வீமசேனன்மேல், செலும் வேலையின் - செல்லும்பொழுது, விட ம் வெம் வாய் கோளின் ஓடிய குரிசில்

கை கணையினால் - விஷமுள்ள கொடிய வாயையுடைய (இராகுவென்னும்) கிரகம்போல(ப் பயங்கரமாய்) விரைந்துவந்த வீமன்கையம்பினால், கோள் அழிந்தது - வலிமை சிதைந்திட்டது; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை.

கோளழிந்தது - அழிவடைந்து வீண்பட்டதென்றபடி. தோமரமென்று இருப்புலக்கைக்கும், கைவேலுக்கும், பேரீட்டிக்கும் நூல்களிற் பெயர் வழங்குகின்றது. பல பராக்கிரமங்கட்கு முருகக்கடவுளை உவமைகூறினார். 'வேளினோடு இசை' என்பதற்கு - மன்மதனோடு உவமைகூறப்படுகிற என்று பொருளுரைத்தலும் ஒன்று. வேள் - விரும்பப்படுபவன் எனக் காரணப்பெயர்; வேட்டல் - விரும்புதல்:செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்டது. இசை - ஒத்த என உவமவுருபுமாம். கோளினோடிய கணை யென்க. 'விட வெவ்வாய்க் கோள்' எனவே, இராகு வென்றதாயிற்று. (கசக)

[துரியோதனன்தம்பியர் அறுவரை வீமன் தொலைத்தல்.]

மன்னர் மன்னவன் றம்பிய ரிருவரை மாருதி மிசையேவ
முன்னர் வந்தவ ரிருவரும் படபட முனைந்துபோர் மதியாமன்
மின்னி ருங்கணை விகருணன் முதலியோர் வீமன்மே லோரைவர்
பின்ன ருஞ்செல நால்வரைப் பிறைமுகக் கணையினாற் பிளந்திட்டான்.

(இ - ள்.) (அதுகண்டு), மன்னர் மன்னவன் - ராஜராஜனான துரியோதனன், (மீண்டும்), தம்பியர் இருவரை - தனது தம்பிமார் இரண்டுபேரை, மாருதிமிசை ஏவ - வாயுபுத்திரனான வீமன்மேற் செலுத்த,— முன்னர் வந்தவர் இருவரும் - ஒருவர்முன் ஒருவராக விரைவாக எதிர்த்துவந்த அவ்விரண்டுபேரும், பட பட - உடனுக்குடனே இறக்க,—முனைந்து - கோபங்கொண்டு, போர் மதியாமல் - (வீமனோடு)பொருதலை அரிதென்றுகருதாமல்,மின் இருங் கணை விகருணன் முதலியோர் ஓர் ஐவர் - மின்னல்போல விளங்குகின்ற பெரியஅம்புகளையுடைய விகர்ணன் முதலிய (துரியோதனன்தம்பிமார்) ஐந்துபேர், பின்னரும் - பின்பும், வீமன்மேல் செல - (துரியோதனனாலேவப்பட்டு) வீமன்மேல் எதிர்த்துச்செல்ல, (வீமன் உடனே), நால்வரை - (அவர்களில் விகர்ணனொழிந்த) நான்குபேரை, பிறை முகம் கணையினால் பிளந்திட்டான்-அர்த்தசந்திரபாணங்களினாற் பிளந்தழித்தான்.

மாருதி - மாருதனது மகன்; தத்திதாந்தநாமம்: மாருதன் - வாயு: (மாருதி என்ற பெயர் அநுமானுக்கும் வழங்கும்.) முனைந்து, போர்மதியாமல் என்றவற்றை வீமனுக்கு இயைத்து உரைப்பினுமாம்.

விகருணன் - வடசொல் திரிபு. இவன் - துரியோதனனது இளைய தம்பியரில் ஒருவன். இராவணன்தம்பியருள் விபீஷணன்போல, துரியோதனன்தம்பிமாருள் இவன் நீதிகளை நன்குஉணர்ந்து நடுவுநிலைமையோடு நியாயவழியையே பேசுகின்ற நற்குணமுடையவன். முன்பு சூதுபோர்நடந்தகாலத்தில் துரியோதனனேவலால் துசசாதனன் திரௌபதியை முடிபிடித்துஇழுத்துவந்தபொழுது, இவன் வெகுவாக நீதியை எடுத்துக்கூறினான். பின்பும் கிருஷ்ணன் தூதுவந்தசமயத்தில் துரியோதனனும் திருதராட்டிரனும்அவனைக்கொல்லும்படிஆலோசித்தபொழுது, இவன்,தூதரைக் கொல்வது தகுதியன்றென அறிவுகூறி மறுத்தான். இந்நற்குணம்பற்றியே. இப்பொழுதுபோரில் வீமன்'துரியோதனனதியர் நூற்றுவரையுங்கொல்வேன்' என்று முன்புசொன்ன சபதந் தவறாதபடி இவனை விதியாற் கொல்ல வேண்டியபொழுது இரங்குகின்றான்; இவனுக்கு வீமனிடத்துக் கோபம் இயல்பாக உள்ளதன் றென்றும், தன்தமையனான் துரியோதனனுக்குச் சோற்றுக்கடன் கழித்தற்பொருட்டாகவே ஆகியது என்றும் அறிக. இவனது நல்லுணர்வை நன்குமதித்துக் கவி இவனை ஆறும்போர்ச்சருக்கத்தில் "ஞானவிகனன்" எனச்சிறந்தஅடைமொழிகொடுத்து மேம்படுத்திக் கூறியிருக்கின்றார். (கசஉ)

வேறு.

[வீமன் விகர்ணனைநோக்கி 'உன்னுடன் போர்செய்யேன்' என்றல்.]

பகரு நால்வரும் பட்டபின் பைங்கழல்
விகரு ணன்பொர வெஞ்சிலை வாங்கலும்
புகலும் வஞ்சினம் பொய்க்கினு நின்னுட
னிகல்செய் யேனெம்பி யேகுகென் றானரோ.

(இ - ள்.) பகரும் - (கீழ்ச்)சொல்லப்பட்ட, நால்வரும் - (துரியோதனன்தம்பிமார்) நான்குபேரும், பட்ட பின் - இறந்தபின்பு, பைங் கழல் விகருணன் - பசுமையான [பசும்பொன்மயமான] வீரக்கழலையுடைய விகர்ணனென்பவன், பொர - போர்செய்தற்பொருட்டு, வெம் சிலை - கொடிய வில்லை, வாங்கலும் - வளைத்தவளவிலே,—(வீமன் அவனை நோக்கி), 'எம்பி- எனது தம்பியே! புகலும் வஞ்சினம் பொய்க்கினும் - (நான்) சொன்ன சபதம் தவறுவதானாலும், நின்னுடன் இகல் செய்யேன் - உன்னோடு போர்செய்யமாட்டேன்: ஏகுக - (நீ) செல்வாயாக,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

இப்படிசொன்னதன் காரணம், அடுத்த இரண்டுகவிகளில் விவரமாம். புகலும் வஞ்சினம் பொய்க்கினும் -"பாஞ்சாலிக்கு அரசவையிற்பழுதுரைத்தோ னுடல் எனது படையா மேழி,போஞ்சாலினிணஞ்சொரியத் துணைவரொடு குலமாளப்பொருவேன் யானே" என்று திரௌபதியைத்துகிலுரிந்த காலத்திற் கூறின பிரதிஜ்ஞை தவறுவதானாலும் என்றபடி.

துரியோதனன்தம்பியை வீமன் தன் தம்பியாக 'எம்பி' என விளித்தது, யோக்கியனான அவனிடத்தில் தனக்குஉள்ள அன்புமிகுதிபற்றிய உபசாரவழக்காம்; அன்றியும், துரியோதனன் வீமன்பிறந்ததினத்துக்கு முந்தினதினத்தின் இரவிலும்,மற்றைத்தொண்ணூற்றொன்பதின்மரும் அதற்கு அடுத்ததினம் முதலாக ஒவ்வொருதினத்திலும் பிறந்தன ரென்பது சரித்திரமாதலால்,வீமன் தனதுபெரியதந்தையின்மக்களுள் இளையவனான விகர்ணனை எம்பியென்னத் தட்டில்லை:"அன்னநா ளனிலன்மைந்தன் பிறந்தனனாக அற்றை, முன்னைநா ளருக்கன் வேலைமுழுகிய முகூர்த்தந்தன்னி, லின்னநா ளுருவ முற்றி யெழில்பெறு மென்றுமுன்னோன், சொன்னநாள் வழுவுறமற் சுயோதனன் றோன்றினானே," "கோள்களி னிலையால் தீமை கொண்டன முகூர்த்தந்தன்னில், தேள்களிற் கொடிய மற்றைச் சிறுவருஞ் சேர வோரோர், நாள்களிற் பிறந்த பின்னர் நங்கையு மொருத்தி வந்தாள், தோள்களிற் கழையை வென்ற துச்சளை யென்னும் பேராள்" என்ற சம்பவச் சருக்கத்துச் செய்யுள்களினால், வீமன் பிறந்த நாளுக்கு முதல்நாளிற் பிறந்தவன் துரியோதன னென்றும், வீமன்பிறந்தநாளிற் பிறந்தவன் துச்சாசன னென்றும், மற்றைத்தொண்ணூற்றெட்டுப்பேரும் அதற்கு அடுத்த நாள்களில் முறையே பிறந்தவ ரென்றும் விளங்குதல் காண்க. எம்பி - அண்மைவிளியாதலின், இயல்பு. பகரும் - சிறப்பித்துச சொல்லப்படுகிற என்றுமாம். பசும்பொற்கழ லென்பார், 'பைங்கழல்' என்றார்.

இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்றுமாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (கசந)

[இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்: மற்றும் வீமன் விகர்ணனை நோக்கிக் கூறுவன.]

சுடுவுரைக்கனலன்ன துச்சாதனன்
வடுவுரைக்கவுமன்[illegible]றமன்றிடை

நடுவுரைக்குநன்னாவுடையாயுனைக்
கொடுவுரைக்கணையேவினுங்கொல்லுமோ.

(இ - ள்.) கனல் அன்ன - நெருப்பையொத்த, சுடு உரை - கொடுஞ் சொற்களையுடைய, துச்சாதனன்—, மன் உறை மன்று இடை - அரசர்கள் தங்கிய சபையின் நடுவிலே, வடு உரைக்கவும் - நிந்தையான வார்த்தைகளைக் கூறவும், நடு உரைக்கும் - (அங்கு) நடுவுநிலைமையாகப் பேசிய, நல் நா உடையாய் - சிறந்த நாக்கையுடையவனே! கொடு உரை கணை ஏவினும் - கொடியசாபச்சொற்போலத் தவறாமல்அழிக்கவல்ல அம்புகளை (நான் உன் மேற்) பிரயோகித்தாலும், உனை கொல்லுமோ - (அவை) உன்னைக் கொல் லுமோ? [கொல்லா என்றபடி]; (எ - று.)

இங்ஙனஞ் சொன்னது, கொடியோரையழிக்குந்தன்மையுள்ள எனது அம்புகள் நல்லோர்மேற்பிரயோகிக்கப்பட்டாலும் அவரைக் கொல்லா வென்ற கருத்தை விளக்கும். நான் கொடியஅம்புகளை உன்மேல் ஏவி உன் னைக் கொல்லமாட்டே னென்ற பொருளை, துணிவுதோன்ற இங்ஙனம் அம் பின்மேல் வைத்துக் கூறின னென்க. இதனை, "பொய்ம்மைமொழி புகன் றறியேம் புகல மனமெண்ணுகினும், மெய்ம்மையல துரையா நா வேதநவில் பயிற்சியால்" என்றாற்போலக் கொள்க.

அருள்கொண்டு கூறினாலும் வெகுண்டு கூறினாலும் அந்தந்தப்பயன் களைத் தந்தேவிடுகிற நிறைமொழிமாந்தரான முனிவரது வாயினின்றுவருங் கோபச்சொல் தவறாமல் அழிவுசெய்தலில் அம்புக்கு உவமைகூறப்படுதலை, "வைத வைவின் மராமர மேழ்தொளை, யெய்த வெய்தவன்," "சொல் லொக்குங் கடிய வேகச் சுடுசரம்," "வைதாலன்ன வாளிகள்" எனக் கம்ப ராமாயணத்திலுங் காண்க.

சுடுவுரை - கடுஞ்சொல். "தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே, நாவி னாற் சுட்ட வடு" என்றபடி கொடுஞ்சொல் தழும்புபோல என்றும் ஆறாத வருத்தத்தை மனத்திற்குத் தருதல்பற்றி, 'வடு' எனப்பட்டது. மன்னுறை மன்று - ராஜசபை. நடுவுரைத்தல் - பகைவர் நண்பர் அயலார் என்னும் மூன்றுவகையாரிடத்தும் தருமநெறிதவறாமல் சமமாக நின்று பேசுதல். சூதுபோர்ச்சருக்கத்தில் "மன்வந்திருந்த சங்கத்து உன்யாம னிருந்தான் ஐவரு மூன், முன்வந்திருந்தார் முன்கொண்ட முறையான் முயங்கு முடி வேந்தர், மின்வந்தனைய நுண்ணிடையாய் விழிநீர் சொரிந்து மெலிய வுனக்கு, என்வந்ததுகொல் பொதுமகளிர்க்கு அரிதோ விழிநீ ரெளி தென் றான்" என்றதனால், துச்சாதனன் திரௌபதியைச் சபையிற் கொடுமை யாகப் பழித்ததையும்; "பொல்லாநெறியி லனைவீரும் போகாவண்ணம் புக லீரே," "முறையோ வென்றென் றவனிதலமுழுது முடையான் முடித் தேவி, நிறையோடழிந்து வினவவு நீர் நினைவுற்றிருந்தீர் நினைவற்றோ, இறையோன் முனியு மெனநினைந்தோ இருந்தால் உறுதி யெடுத்தியம்பல், குறையோ கண்கண்டது நாளுங் குலத்துப்பிறந்தோர் கூறீரோ," "தன் னேரில்லா நெறித்தருமன் தனவென் றுரைக்கத்தக்க வெல்லாம், முன்னே தோற்றுத் தங்களையு முறையே தோற்று முடிவுற்றான், சொன்னேருரைக் குத் தான் பிறர்க்குத் தொண்டாய்விட்டுச் சரிகுழலைப், பின்னே தோற்க வுரிமையினாற் பெறுமோ வென்று பேசீரே" என்றவற்றால், விகர்ணன்கூறிய நிஷ்பக்ஷபாதமான நீதிமொழியையும் அறிக. (கசச)

பாரறிந்துபழிக்குட்படாதநின்
னேரறிந்தும்பொரவெஞ்சிலையுமோ
போரறிந்துபொருகவென்றானெடுஞ்
சீரறிந்தவர்செய்ந்நன்றிகொல்வரோ.

(இ - ள்.) பார் அறிந்து - உலகத்தார் அறிய, பழிக்கு உள் படாத - குற்றத்துக்கு உள்ளாகாத, நின் - உனது, நேர் - நீதிநெறியை, அறிந்தும் - தெரிந்திருந்தும், நெஞ்சு - (எனது) மனம், பொர இயையுமோ - (உன்னோடு) போர்செய்யச் சம்மதிக்குமோ? [சம்மதியாது என்றபடி]; (ஆதலால்), அறிந்து போர் பொருக - (வேறு யாருடனாயினும்) ஆராய்ந்து போர்செய்வாயாக, என்றான் - என்று (விகர்ணனை நோக்கி வீமன்) கூறினான்: நெடுஞ் சீர் அறிந்தவர் செய் நன்றி கொல்வரோ - சிறந்த நல்லொழுக்கமுறைமையை யுணர்ந்தவர் (தமக்குப் பிறர்) செய்த நன்மையை மறந்து அவர்க்குத் தீங்குசெய்வரோ? [செய்யார் என்றபடி]; (எ - று.)

மூன்றாமடியில், அறிந்து என்றது-உன்னுடன் தவறாமற் போர்செய்யத் தக்கவரை நாடியுணர்ந்து என்றபடி. துரியோதனன்போலவும் துச்சாசனன் முதலிய மற்றைத்தம்பியர்போலவும் தங்கட்குஅபகாரஞ்செய்தலின்றித் தங்கட்கு அநுகூலமாகச் சபையில் நியாயம்பேசின விகர்ணன்விஷயத்தில் வீமன் நன்றிமறவாமையோடிருந்தனனாதலாற் போர்செய்யேனென்றான் என்ற சிறப்புப்பொருளை, சிறந்த நீதிமுறைமை யுணர்ந்தவர் செய்நன்றி சிதைப்பரோ வென்ற பொதுப்பொருள்கொண்டு விளக்கியதனால், வேற்றுப் பொருள்வைப்பணி. இதனால், வீமனது மேன்மைக்குணம் விளங்கும். போர் அறிந்து பொருக என்றால் என்றுபிரித்து, தெரிந்து போர்செய்வாயாக என்று சொன்னாலும் என்று பொருள்கூறுதலும் ஒன்று. நெடுஞ்சீரறிந்தவர் - பெரியஉபகாரச்சிறப்பையுணர்ந்தவர். கொல்லுதல் - சிதைத்தலாதலை, "செய்ந்நன்றி கொன்ற மகற்கு" எனத் திருக்குறளிலுங் காண்க; இது, இலக்கணை. முதலடியில், அறிந்து என்றது - அறிய வென்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபு. செய்நன்றி - இறந்தகால வினைத்தொகை. (கசஉ)

[விகர்ணன் போர்தொடங்குதல்.]

வீமனிப்படிச்சொல்லவும்வேரியந்
தாமமுற்றதடவரைத்தோளினன்
மாமணிச்சிலைவாங்கியவ்வீமன்மேற்
றீமுகக்கணையுஞ்சிலசிந்தினான்.

(இ - ள்.) வீமன் இப்படி சொல்லவும்—, (கேளாமல்), வேரி அம் தாமம் உற்ற தட வரை தோளினன் - வாசனையுள்ள அழகிய (போர்) மாலை பொருந்திய பெரியமலைபோலுந் தோள்களையுடையவனான விகர்ணன், மா மணி சிலை வாங்கி - பெரிய சிறந்தவில்லை வளைத்து, அவ்வீமன்மேல்—, தீ முகம் கணையும் சில சிந்தினன் - நெருப்புப்போலக் கொடிய கூர் நுனியுள்ள சில பாணங்களையும் பிரயோகித்தான்; (எ - று.)

இச்செய்யுளில் 'சிலைவாங்கி' என்பது கீழ் கஎ௬ - ஆஞ் செய்யுளில் "சிலைவாங்கலும்" என்றதன் அநுவாத மென்க; தொடர்ச்சி விளங்கக் கூறியது: ஆகவே, கூறியதுகூற லென்னுங் குற்ற மாகாது. 'கணையும்' என்ற உம்மை - 'சிலைவாங்கி' என்றதை நோக்கி இறந்தது தழுவிய எச்சம். 'சொல்லவும்' என்ற உம்மை - உயர்வுசிறப்பு. மாமணிச்சிலை யென்பதற்கு - பெரிய மணிகட்டிய வில் லென்பாரு முளர். (கசக)

[விகர்ணன் வீமனை வலியப் போர்க்கு அழைத்தல்.]

எம்முனோர்களெனைவருமுங்கையில்
வெம்முனைக்கணையால்விளிந்தேகவு
மும்முன்யானொருவேனுமுய்வனெகொலோ
வம்மின்வார்சிலைவாங்குகென்றேறினன்.

(இ - ள்.) 'எம் முனோர்கள் எனைவரும் - எமது தமையன்மார்களெல்லாரும், உம் கையில் - உமது கையினால் ஏவப்படுகிற, வெம் முனை கணை

யால் - கொடிய நுனியையுடைய அம்புகளினால், விளிந்து ஏகவும்-இறந்து போகவும், உம் முன் - உமது முன்னிலையில், யான் ஒருவேனும் உய்வேன் கொல் ஓ - நானொருத்தன்மாத்திரம் பிழைத்திருப்பேனோ? வம்மின் - (போர்க்கு) வருவீராக ; வார் சிலை வாங்குக - நீண்ட வில்லை வளைப்பீராக', என்று ஓதினான் - என்று (வீமனைநோக்கி விகர்ணன்) சொன்னான்; (எ-று.)

'உம்கையில்' என்றும், 'உம்முன்' என்றும், 'வம்மின்' என்றும் வந்தவை - தமையனைநோக்கித் தம்பிகூறிய உயர்வுப்பன்மை. இங்ஙனம் உபசாரமாகக் கூறியதனாலும், விகர்ணனது நற்குணம் விளங்கும். 'எம்முன்னோர்களனைவரும்' என்றது, எமது உடன்பிறந்தவர்களெல்லாரும் என்றபடி. அவர்களிற் பலர் தனக்கு முன்பிறந்தவர்களாதலால், 'முன்னோர்கள்' என்றான். 'எம்முன்னோர்கள்' என்றவிடத்து 'எம்' என்றது - தனித்தன்மைப்பன்மை: ஆதலால், 'யானொருவேனு முய்வேன்கொலோ' என்னும் ஒருமையோடு பால்வழுவாகாது, பன்மையொருமைமயக்கமாம்.

'எனைவரும் விளிந்தேகவும்' என்றது, பலர் வீமனால் இறந்ததனாலும், மற்றையோரும் இறப்ப ரென்ற துணிவினாலு மென்க. எனைவர் என்பதில், எத்தனை யென்பதன் மரூஉவான எனை - பகுதி, வ் - எழுத்துப்பேறு. வம்மின் - ஏவற்பன்மை. உம்முன் - உங்களெதிரில் என மற்றைப்பாண்டவர் நால்வரையுங் கூட்டிய உளப்பாட்டுமுன்னிலைப்பன்மை யெனினுமாம். ஒருவேனும், உம் - இழிவுசிறப்பு. (கசஎ)

[வீமன் போர்தொடங்குதல்.]

மிகநகைத்தும்வெறுத்துந்திரிபுர
தகனனொத்தசமீரணன்மாமகன்
முகனுறச்சென்றுமூரிவில்வாங்கிமே
லிகனிறக்கணையேவினனென்பவே.

(இ - ள்.) திரிபுரதகனன் ஒத்த - திரிபுரமெரித்தவனான உருத்திரமூர்த்தியைப்போன்ற [பலபராக்கிரமங்களிற்சிறந்த], சமீரணன் மா மகன் - வாயுவின் சிறந்த புத்திரனாகிய வீமன், (அதுகேட்டு), மிக நகைத்தும் - மிகுதியாகச் சிரித்தும், வெறுத்தும் - வெறுப்புக்கொண்டும், முகன் உற சென்று - அவனெதிராகப்போய், மூரி வில் வாங்கி-வலியவில்லை வளைத்து, மேல் - அவன்மேல், இகல் நிறம் கணை-வலிமையையும் ஒளியையுமுடைய அம்புகளை, ஏவினன் - எய்தான் : என்ப - என்று சொல்வர் ; (எ - று.)— 'என்ப' என்றதற்கு எழுவாய், முதனூலாசிரியராதல் வேண்டும். 'என்ப' என்பதை அசையாகக்கொள்ளுதலே பொருத்தம்; சீவகசிந்தாமணியுரையிலும், தொல்காப்பிய வுரையிலும் நச்சினார்க்கினியர் 'என்ப' என்ற அசையைப் புறனடையாற் கொண்டுள்ளார்.

த்ரிபுரதஹநன் - வடமொழித்தொடர். ஸமீரணன் என்ற வடமொழிப்பெயர்க்கு - நன்றாகச்சஞ்சரிப்பவனென்பது காரணப்பொருள். (கசஅ)

[இருவரும் பொருதல்.]

ஏவினாலிவ்விருவருமவெஞ்சம
மேவினார்மெய்ப்படாமல்விலக்கினார்
கூவினாரறைகூவிப்பொருதிளைத்
தோவினார்தமையேநிகரொத்துளார்.

(இ - ள்.) தமையே நிகர் ஒத்து உளார்-(வேறுஉவமையில்லாமல்)தங்களையே தாங்கள் உவமையாகப் பொருந்தியுள்ளவரான, இ இருவரும் - (வீமன் விகர்ணன் என்ற) இந்த இரண்டுபேரும்,—ஏவினால் - அம்புகளைக் கொண்டு, வெம் சமம் மேவினார் - கொடிய போர் செய்தற்குப் பொருந்தினார்கள் ; மெய் படாமல் விலக்கினார் - (தங்களுள் எதிரி எய்யும் அம்புக

ளைத்) தம்மேற்படாதபடி (எதிரம்புகளால்) தடுத்தார்கள்; கூவினர் - (வீராவேசத்தால்) ஆரவாரஞ்செய்தார்கள்; அறை கூவி - வீரவாதங்கூறி, பொருது - போர்செய்து, இளைத்து - இளைப்படைந்து, ஓவினர் - (சிறிதுபொழுது) போரொழிந்துநின்றார்கள்; (எ - று.)

ஏ-அம்பைக்குறிக்கும் ஓரெழுத்தொருமொழி; பெயர்ச்சொல் ஏகாரத்தின்முன் உயிர்வருகையில் வகரவுடம்படுமெய் வந்தது. ஓவினர் - ஒருவினர் என்பதன் மரூஉ; இதற்கு - வருந்தின ரென்று பொருள்கூறுதலும் ஒன்று. 'தமையேநிகர்ஒத்துளார்' என்பதற்கு-ஒருவர்க்கொருவர் சமமானவ ரென்று கருத்துக்கொள்ளுதலும் ஒன்று. (கசக)

[விகர்ணன் வீமனைக் கவசமுதலியன அழித்தல்.]

விகனன்விட்டகணைகளின்வீமன்மெய்
யிகன்மணிக்கவசம்பிளந்தேறுதே
ரகலரிக்கொடியற்றுக்கொடிஞ்சியுஞ்
சகலமுற்றுத்தனுவுமுரிந்ததே.

(இ - ள்.) விகனன் விட்ட கணைகளின் - விகர்ணன் எய்த அம்புகளினால்,—வீமன் - வீமனது, மெய் - உடம்பில் தரித்த, இகல் மணி கவசம் - வலியதும் இரத்தினம்பதித்ததுமான கவசம், பிளந்து - பிளந்திட,—ஏறு தேர் அகல் அரி கொடி அற்று - (அவ்வீமன்) ஏறியுள்ள தேரிற் கட்டிய பரந்த சிங்கவடிவ மெழுதிய கொடியுந் துணிபட,—கொடிஞ்சியும் சகலம் உற்று - (அவனது)தேர்மொட்டும் துண்டுபட,—தனுவும் முரிந்தது-வில்லும் ஒடிபட்டது; (எ - று.)

பிளந்து,அற்று,உற்று என்றசெய்தெனெச்சங்களை,பிளக்க,அற,உற என்ற செயவெனெச்சங்களின் திரிபாகக் கொள்க. சகலம் - வடசொல். (கருo)

[வீமன் விகர்ணனைத் தலைதுணித்தல்.]

மின்னையொத்தவிறற்படைமாருதி
பின்னைவிட்டபிறைமுகவார்கணை
யன்னைசித்தமலமரப்பின்னவன்
றன்னைவெற்றிமகுடந்தடிந்ததே.

(இ - ள்.) மின்னை ஒத்த - மின்னலைப்போன்று விளங்குகிற, விறல் படை - வலிய ஆயுதங்களையுடைய, மாருதி - வீமன், பின்னை விட்ட - பின்பு தொடுத்த, வார் பிறை முகம் கணை - நீண்ட அர்த்தசந்திரபாணமானது,— பின்னவன்தன்னை - தம்பியான விகர்ணனை,—அன்னை சித்தம் அலமர - (அவனைப்பெற்ற) தாய் மனம் சோகிக்கும்படி, வெற்றி மகுடம் தடிந்தது - சிறந்த கிரீடத்தைத் தரித்த தலையைத் துணித்தது; (எ - று.)

மக்களிடம் தாய்க்குஉள்ள அன்பின்மிகுதிபற்றி, 'அன்னைசித்தமலமர' என்றார். 'வெற்றி மகுடம்' என்பதை, அன்மொழித்தொகை யென்றாவது, அடையடுத்தவாகுபெய ரென்றாவது கொள்க. வெற்றிமகுடம் - ஜயசூசகமான கிரீடமுமாம். அன்னை - காந்தாரி. (கருக)

[வீமன் கர்ணன்முதலியோரை வென்று மேற்செல்லுதல்.]

கோவிகன்னன்கொலைபடப்பற்பல
ராவிகன்னமறைகணையாலறப்
பாவிகன்னன்பதைக்கவென்றேகினன்
மேவிகன்னகம்போற்புயவீமனே.

(இ - ள்.) (இவ்வாறு), கோ விகன்னன் - விகர்ணராசன், கொலை பட - கொல்லப்படவும், பற்பலர் ஆவி - மற்றும்பல வீரர்களது உயிர், கன்னம் அறை கணையால் - காதளவும் நாணியையிழுத்து விடப்படுகிற அம்புகளி

னுல், அற - (உடம்பினின்று) ஒழியவும், பாவி கன்னன் பதைக்க - தீவினை யுடையவனான கர்ணன் துடிக்கவும், வென்று - வெற்றிகொண்டு, மேவு இகல் நகம் போல் புயம் வீமன் - நிலைபெற்ற வலிய மலைபோன்ற தோள்களையுடைய வீமன், ஏகினான் - அப்பாற் சென்றான்; (எ - று.)

கோ விகன்னன் - மேன்மையையுடைய விகர்ணனுமாம். கனன மறுதல் - காதிற்படுதல். கன்னம்-கர்ண மென்ற வடசொல்லின் விகாரம். கர்ணன் வரையாதுகொடுக்கும் வண்மையுடையனாய்ப் புண்ணியசாலியாயினும், அவனை 'பாவிகன்னன்' என்றது, துரியோதனன்செய்யுங் கொடுமைகட்கெல்லாந் துணைநின்று தூண்டுகோலாகுதலால். மகாபாபிகளுடன் சே ... லும் மகாபாதகங்களிலொன்றாதல் காண்க. அன்றியும், அடுத்தடுத்து பலமுறைதோற்றல் பாபபலமேயாதலும் உணரத்தக்கது.

இச்செய்யுளில், திரிபு என்னுஞ் சொல்லணி காண்க; அது நோக்கியே, ஈற்றடியில் 'இகன்னகம'எனத் தனிக்குறில்செறியாதலகரமவருந்ததிரிந்த பின் மாயாதுதிரிந்துநின்றது. இனி, கல் நகம போல் புயம் வீமன் - கல் மலைபோன்ற தோள்களையுடைய வீமன், மேவி - (கர்ணனிடஞ்) சென்று, வென்றுஏகினான் என்றுஉரைப்பாருமுளர்; அவ்வுரைககு 'மேவிககன்னன்' என வலிமிகாதது திரிபுநயத்தின்பொருட் டென்னவேண்டும். (கஉ)

[வீமன், முன்சென்ற சாத்தகியோடு சேர்தல்.]

அன்றுசாதத்தலகைகளாடவே
சென்றுசாத்தகிதன்னுடன்சேர்ந்தனன்
றுன்றுசாத்திரத்தின்படிசூழ்முனை
வென்றுசாத்தியவாகைகொள்வேலினன்.

(இ - ள்.) துன்று சாத்திரத்தின் படி - பொருந்திய நூல்முறைமைப் படி, சூழ் முனை வென்று - (பகைவர்) சூழ்ந்துசெய்த போரைப் (பொருது) வென்று, சாத்திய - சூட்டிய, வாகை - (வெற்றிக்குஅறிகுறியான) வாகைப்பூமாலையை, கொள் - கொண்ட, வேலினன் - வேலாயுதத்தையுடையவனான வீமன்,— அன்று - அப்பொழுது, சாதத்து அலகைகள் ஆட - கூட்டமான பேய்கள் கூத்தாட, சென்று - மேற்சென்று, சாத்தகிதன்னுடன் சேர்ந்தனன் - சாத்தகியோடு சேர்ந்தான்; (எ - று.)

பேய்கள், அங்குப் பிணந்தின்னவந்தவை. அவைகளாடுதல், மிகுதியாக உணவுகிடைக்கப்பெற்று உண்டு களித்தலால். ஜாதம் - வடசொல்; ஜாதி: ("ஜாதிர் ஜாதஞ்ச ஸாமாந்யம்" என்ற வடமொழியமரநிகண்டை யறிக.) சாத்திரம் - சாஸ்த்ர மென்ற வடசொல்லின் விகாரம்; இங்கே, சாத்திர மென்றது, ஆயுதசாஸ்திரத்தையும், நீதிசாஸ்திரத்தையும். சாதத்து அலகைகள் என்பதற்கு - பூதங்களோடு பேய்கள் என்றும், பூதகணத்திற்சேர்ந்த பிசாசங்க ளென்றும், உணவுகொண்ட பேய்கள் என்றும், மகிழ்ச்சியுள்ள பேய்கள் என்றும் உரைகொள்ளலாம். முனை - பகையுமாம். (கங)

[சாத்தகியும் வீமனும் அருச்சுனனை யடுத்தல்.]

அங்கி தன்னொ டனிலமுஞ் சேர்ந்தெனச்
சங்க பாணிதன் றம்பியும் வீமனும்
செங்க லங்கலஞ் சேற்றிடை மூழ்கிய
வெங்க ளத்துவி சையனைக் கூடினார்.

(இ - ள்.) அங்கிதன்னொடு அனிலமும் சேர்ந்து என - நெருப்பும் காற்றும் சேர்ந்தாற் போல, சங்கபாணிதன் தம்பியும் வீமனும் - சங்கத்தைத் திருக்கையிலுடையவனான கண்ணபிரானது தம்பியாகிய சாத்தகியும் வீமனும், செம் கலங்கல் சேற்றிடை மூழ்கிய வெம் களத்து - சிவந்ததும் கலங்க

லாகவுள்ளதுமான (இரத்தச்) சேற்றில் முழுகிய கொடிய போர்க்களத்தி னிடையில் நின்ற,விசையனை-அருச்சுனனை,கூடினார்-சேர்ந்தார்கள்; (எ-று.)

உவமையணி. நெருப்பு காற்று என்ற இரண்டும் - சாத்தகி வீமன் என்ற இருவர்க்கும் உவமை யென்றாவது, இவ்விருவர்க்கும் காற்றும் அருச் சுனனுக்கு நெருப்பும் உவமையென்றாவது கொள்க. ஶங்கபாணி-வடமொழி த்தொடர். மூன்றாமடியில், அம் - சாரியை. செம் அம் எனச்சேர்த்து, செந்நீ ரென்றலும் ஒன்று ; அம் - நீர். (கஙச)

வேறு

[பகைவர்பலரும் மீண்டு மூவரையும் எதிர்த்தல்.]

தேவரும் பரவு பாகன் செலுத்துதேர் விடலை யோடு
மூவருஞ் சுடர்கண் மூன்று மூண்டெனத் திரண்ட காலை
மேவருஞ் சமரின் முன்னம் வென்கொடுத் துடைந்த வேந்தர்
யாவருந் திருகி வந்தாங் கெதிரெதி ராகிச் சூழ்ந்தார்.

(இ - ள்.) (சாத்தகியும் வீமனும்), தேவரும் பரவு பாகன் செலுத்து தேர் விடலையோடு - தேவர்களும் துதிக்கப்பெற்ற (கண்ணனாகிய) சாரதி செலுத்துகின்ற தேரையுடைய சிறந்தவீரனான அருச்சுனனோடு (சேர்ந்து), மூவரும் - ஆகிய இந்தமூன்றுபேரும், சுடர்கள் மூன்றும் மூண்டு என - (சூரியன் சந்திரன் அக்கினி என்னும்) முச்சுடர்களும் கூடியெழுந்தாற் போல, திரண்ட காலை - ஒருங்குகூடியபொழுது,— மேவு அருஞ் சமரில் முன்னம் வென் கொடுத்து உடைந்த வேந்தர் யாவரும் - கிட்டுதற்கருமை யான போரில் முன்புபுறங்கொடுத்துத் தோற்றோடிய பகையரசர்களெல்லா ரும், திருகி வந்து-திரும்பிவந்து, ஆங்கு எதிர் எதிர் ஆகி சூழ்ந்தார்-அவ்விட த்தில் (அவர்கட்கு)எதிரிலே எதிரிலே பொருந்திச் சூழ்ந்துகொண்டார்கள்.

தேவரும், உம் - உயர்வுசிறப்பு. செலுத்து - செல் என்பதன் பிறவினை; து - விகுதி: உ - சாரியை. விடலை - ஆண்பாற் சிறப்புப்பெயர்.

இதுமுதல் ஒன்பது கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ் சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். இவற்றில் மூன்று ஆறாஞ் சீர்கள் தேமாச்சீர்களாகவே நிற்கும். (கஙரு)

[சாத்தகியும் பூரிசிரவசும் பொருதல்.]

சாத்தகிதானும்பூரிசவாவும்வெஞ்சாபம்வாங்கிக்
கோத்தனர்பகழிசென்றுகுறுகினதேருந்தேருஞ்
சேர்த்தனர்மலைந்தகாலைச்சிலைதுணிவுண்டுதேர்விட்
டேத்தருந்தடக்கைகொட்டியிருவருமல்லினின்றார்.

(இ - ள்.) (அப்பொழுது), சாத்தகிதானும்-சாத்தகியும், பூரிசவாவும்- பூரிச்ரவஸ் என்பவனும், வெம் சாபம் வாங்கி - கொடிய வில்லை வளைத்து, பகழி கோத்தனர்-அம்பு தொடுத்தார்கள்;(அச்சமயத்தில்), தேரும் தேரும் - (அந்தஇரண்டுபேருடைய) தேர்களும், சென்று குறுகின-எதிர்த்துப்போய் நெருங்கின;சேர்த்தனர் - (இவ்வாறு தேர்களை)நெருங்கச்செலுத்தி,மலைந்த காலை - போர்செய்தபொழுது, இருவரும் - இரண்டுபேரும், சிலை துணி வுண்டு - வில் துணிபட்டு, (பின்பு), தேர் விட்டு-தேரைவிட்டுஇறங்கி, ஏத்து அருந் தட கை கொட்டி - துதிப்பதற்குமுடியாத [மிகச்சிறந்த] பெரிய (தங்கள்) கைகளைத் தட்டிக்கொண்டு, மல்லில் நின்றார் - மற்போர்செய்த லில் முயன்றுநின்றார்கள்;(எ - று.)

பூரிசவா - பூரிச்ரவா: என்ற வடசொல்லின் விகாரம்; இவன், சிறந்த அதிரதவீரன். மல்-ஆயுதமில்லாமல் தேகபலங்கொண்டு செய்யும்போர். ஏ தரும் எனப்பிரித்து, மேன்மை பெற்ற எனினுமாம்; ஏ-உரிச்சொல்.(கஙசு)

[பூரிசிரவனைக் கொல்லும்படி கண்ணன் அருச்சுனனுக்குக் கூறுதல்.]

மல்லினின்வென்றுவீழ்த்திமாயவன்றம்பிதன்னைக்
கொல்லுவான்முனைந்துமற்றைக்கோமகனடர்த்தனோக்கிக்
கல்லினின்மாரிகாத்தோன்கண்டுவில்விசயனோடுஞ்
சொல்லினன்பகைவன்றன்னைச்சுடர்முடிதுணித்தியென்றே.

(இ - ள்.) மாயவன் தம்பிதன்னை - கண்ணபிரானுடைய தம்பியான சாத்தகியை, மற்றை கோமகன் - பகையரசனான பூரிசிரவன், மல்லினின் வென்று வீழ்த்தி - மற்போரினாற் சயித்துக் கீழேதள்ளி, கொல்லுவான் முனைந்து - (அவனைக்)கொல்ல முயன்று, அடர்த்தல் - வருத்துதலை, கல்லினின் மாரி காத்தோன் - (கோவர்த்தன) மலையைக்கொண்டு மழையைத் தடுத்தவனான கண்ணன், கண்டு - பார்த்து, நோக்கி - ஆலோசித்து, வில் விசயனோடும் - வில்லில்வல்ல அருச்சுனனுடனே, பகைவன்தன்னை சுடர் முடி துணித்தி என்று சொல்லினன் - 'பகைவனான பூரிசிரவனை ஒளியை யுடைய தலையைத் துணித்திடுவாய்' என்று சொல்லியருளினான்; (எ - று.)

இங்ஙனஞ் சொன்னதன் காரணம் - மற்போரில் பூரிசிரவன் சாத்தகியினும் மிகவல்லவனாதலும்,சாத்தகியை உயிர்பிழைப்பிக்க வேறுவகையில்லாமையும் என்க. கொல்லுவான் - எதிர்காலவினையெச்சம். காத்தல் என்பது-தடுத்தல் என்னும் பொருளதாதலை "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்" என்ற திருக்குறளிலுங் காண்க; அன்றி,மாரி காத்தோன் - மழையினின்று (இடையர்களையும் பசுக்களையும்) பாதுகாத்தவனென ஐந்தாம் வேற்றுமைத்தொகையாகவுங் கொள்ளலாம். சுடர் முடி - பிரகாசமுள்ள கிரீடத்தைத் தரித்த தலையென அன்மொழித்தொகையுமாம். கல்லினிற் காத்த என இயையும். கல்லினின் மாரி என எடுத்து - கல்மழை யென்றுங் கொள்ளலாம்: கல் - ஆலங்கட்டி; "கல்லெடுத்துக் கன்மாரிகாத்தா யென்னும்", "கல்லினால்வருகன்முகில்விலக்கியகரியமாமுகில்"என்பன காண்க; பதினேந்தாம்போர்ச்சருக்கத்து ௩௪ - ஆம் பாடலில் "கற்கொண்டு கன்மழைமுன் தடுத்த கண்ணன்" என வருவதும் காணத்தக்கது.

மாரிகாத்த கதை:—[திருவே. ப - ௫௧.]இவ்வரலாற்றால், தேவராசனையும் வெல்லத்தக்க எம்பிரானது திவ்வியசக்தியும், மநுஷ்யாவதாரத்திலும் அவ்வற்புதசக்தியைக் காட்டித தன்அடிமைகளை ஆதரித்தருளும் வாற்சலியமும் விளங்கும். (௧௫௭)

[அருச்சுனன் அரிதின்உடன்பட்டு அவனைத் தோள்துணித்தல்.]

இருவருமுனைந்தபோரிலிளைத்தவற்குதவியாகப்
பொருவதுகடனன்றென்றுபோற்றியவிசயன்றன்னை
வெருவரமுனைந்துசீறிமீளவும்விளம்பமாயன்
றிருவுளமறிந்துதெவ்வன்றிண்புயந்துணியவெய்தான்.

(இ - ள்.) (அதுகேட்டு), 'இருவரும் முனைந்த போரில் - இரண்டுபேரும் தொந்தயுத்தமாகத்தொடங்கிச்செய்த போரில்,இளைத்தவற்கு உதவி ஆக-இளைத்தவனுக்குச் சகாயமாக, பொருவது - (வேறொருவன்)போர்செய்வது, கடன் அன்று - முறைமையன்று', என்று - என்று மறுத்துச்சொல்லி, போற்றிய - வணங்கின, விசயன்தன்னை - அருச்சுனனை, மாயன் - மாயவனான கண்ணன், வெருவர - (அவன்) அஞ்சும்படி, முனைந்து சீறி - மிகக் கோபித்து, மீளவும் விளம்ப - மறுபடியுஞ் சொல்ல, (அருச்சுனன்), திரு உளம் அறிந்து - (கண்ணபிரானுடைய) சிறந்த மனக்கருத்தை யுணர்ந்து, தெவ்வன் திண் புயம் துணிய எய்தான் - பகைவனான பூரிசிரவனது வலிய தோள் அறும்படி பாணம்பிரயோகித்தான்: (எ - று.)

இருவர் தம்மிற் போர்செய்கையில் வேறொருவர் நடுவறப்பிரவேசித்து அவர்களி லொருவரை யழிப்பது நியாயமன் றென்பது, அருச்சுனன்செய்கை. முனைந்து = முனிந்து. முனைந்து சீறி-ஒருபொருட்பன்மொழி. மாயன் திருவுளம் - அருமையான சாத்தகியை உயிர்காக்கவேண்டும் என்பதனோடு, அதர்மயுத்தஞ் செய்கிற துரியோதனாதியரோடு செய்யும் போரில் இது வழுவாகா தென்பதும்; ௧௪0-ஆம் பாடலையுங் காண்க. இங்குக் கண்ணனை 'மாயன்' என்றது, வஞ்சகரையழித்தற்கு எற்பன செய்யுஞ் சூழ்ச்சியுடையா னென்றவாறு. கண்ணன் 'முடிதுணித்தி' என்று கட்டளையிடவும் அங்ஙனஞ்செய்ய மனமெழாமையால், தோள்மாத்திரத்தைத் துணித்தான்; மற் போரிற் பூரிசிரவன் சாத்தகியைக்கீழேதள்ளி அவன்மார்பின்மேலிருந்து உடைவாளை வலக்கையிலெடுத்துச் சாத்தகியின் தலையைத் துணித்தற்கு ஓச்சுமளவில், அங்ஙனமோச்சிய கையை அருச்சுனன் தோளளவுந்துணித்திட்டன னென்க. இங்ஙனம் இவன் தோள்துணித்தது, உடனே சாத்தகி அவன்தலையைத் துணித்தற்கு ஏதுவாயதனால், இவன் கண்ணன் கட்டளையைத் தவறியவனல்லன்; அன்றியும். இச்சமயத்திற் கண்ணனது திருவுள்ளம் சாத்தகியை உயிர்காத்தல வேண்டுமென்பதே யாதலால் அதற்கேற்பப் பூரிசிரவனது தோளையே துணித்தனன் அருச்சுன னென்பார் 'மாயன்திருவுளமறிந்துதெவ்வன்திண்புயந்துணியவெய்தான்' என்றாரென்றுங்கொள்க. ௧௪௮

[சாத்தகி பூரிசிரவனைத் தலைதுணித்தலும், துரியோதனன் இகழ்தலும்.]

புயந்துணிவுண்டபூரிசவாவினைப்புரிந்துதள்ளிச்
சயம்புனைவாளிற்றும்பைத்தார்புனைதலையுங்கொய்து
வயம்புனைந்திளவனிற்பமன்னறமன்றிப்போரென்
றியம்பியவிராசராசற்கெதிர்மொழியியம்பலுற்றான்.

(இ - ள்.) புயம் துணிவுண்ட - (அருச்சுனனம்பினால்) தோளறுபட்ட, பூரிசவாவினை - பூரிசிரவனை, இளவல் - கண்ணனதம்பியான சாத்தகி, புரிந்து தள்ளி - மகிழ்ச்சிகொண்டு கீழே தள்ளி, சயம் புனை வாளின் - வெற்றிகொண்ட (தனது) உடைவாளினால், தும்பை தார் புனை தலையும் கொய்து - தும்பைப்பூமாலையைத் தரித்த (அவனது) தலையையும் அறுத்து, வயம் புனைந்து நிற்ப - வெற்றிகொண்டு நிற்க, (அதுகண்டு), 'இ போர் - இந்த யுத்தம், மன் அறம் அன்று - இராசதருமமன்று', என்று இயம்பிய - என்றுசொன்ன, இராசராசற்கு - அரசர்க்கரசனான துரியோதனனுக்கு, எதிர் மொழி இயம்பல் உற்றான் - (கண்ணபிரான்) விடைகூறத் தொடங்கினான்; (எ - று.)—அவ்விடையை, அடுத்த கவியிற் காண்க.

எதிர்மொழி - பிரதிவார்த்தை. புரிந்து - எழுந்து எனினுமாம். சயம் புனை - வெற்றிமாலையைத் தரிக்கும் என்றுமாம்; சயம் - ஆகுபெயர். (௧௪௯)

[கண்ணன் துரியோதனனுக்கு ஏற்றவிடைகூறுதல்.]

நென்னனீரபிமன்றன்னைநேரறவென்றபோரு
முன்னமேசுவேதன்றன்னைவீடுமன்முடித்தபோரு
மன்னறமுறைதவாமன்மலைந்தனிரென்றுநக்கான்
றன்னைவந்தடைந்தோர்க்குற்றதளர்வெலாமொழிக்குந்தாளான்.

(இ - ள்.) தன்னை வந்து அடைந்தோர்க்கு - வந்து தன்னைச் சரணமடைந்தவர்கட்கு, உற்ற தளர்வு எலாம் ஒழிக்கும்-நேர்ந்ததுன்பங்களையெல்லாம் நீக்கியருளுகிற, தாளான் - திருவடியை யுடையவனான கண்ணபிரான்,—(துரியோதனனை நோக்கி),—'நென்னல் - நேற்று, அபிமன் தன்னை - அபிமந்யுவை, நீர் - நீங்கள், நேர் அற - தடையில்லாமல், வென்ற - சயித்த, போரும் - போரையும், முன்னமே - முதல்நாளிலேயே, சுவேதன்தன்னை - சுவேதனை, வீடுமன் முடித்த - பீஷ்மன் கொன்ற, போ

ரும் - போரையும், மன் அறம் முறை தவாமல் மலைந்தனிர் - இராசதரும முறைமை தவறுமற் செய்தீர்கள்,' என்று - என்றுசொல்லி, நக்கான் - சிரித்தான் ; (எ - று.)

பதின்மூன்ருநாட்போரிற் சக்கரவியூகத்தினுள்ளே பிரவேசித்த அபிமந்யுவை அவ்வியூகத்தின் வெளியிலே செல்லவொண்ணுதபடியும், வீமன் முதலியோர் அவனுக்கு உதவியாக வியூகத்தினுள்ளே புகுதலாகாதபடியும், இடையிலே சைந்தவனைக் கொண்டு அவனுக்குச் சிவபிரானளித்திருந்த கொன்றைமாலையைக் குறுக்கேயிட்டு மறித்து, வியூகத்தினுள் தனிப்பட்ட அபிமனை அனைவரும் சூழ்ந்து பொருது, அவனது தேர்க்குதிரைகள் பாகன் தேர் வில் என்னுமிவற்றைக் கர்ணனும்,வலக்கையைத் துரோணனும், அவனது உடம்பைச் சயத்திரதனு மாகத் துணித்திட்ட தன்மை, கதைத் தொடர்ச்சியிற் கூறப்பட்டது. முதல்நாட்போரிற் பாண்டவரது முதற்சேனுபதியும் விராடனதுமூத்தகுமாரனு மான சுவேதன் வீடுமனை யெதிர்த்து விற்போர்செய்து அப்போரில் அவன்கையிலெடுக்கிறவில்லைப் பலமுறை துணித்து வெல்ல, அப்பொழுது வானத்தில்நின்ற தேவர்கள் குறிப்பாகச் சொன்ன தந்திரத்தை யுணர்ந்து வீடுமன் சுவேதனைநோக்கி 'உனக்கு விற்போரொழிய வேருேராயுதப்போர் தெரியாதோ?' என்று இகழ்ச்சிதோன்றப் பேசுதலும், அவன் வில்லைக்கைவிட்டு வாளையேந்திக்கொண்டு போர் தொடங்குகையில் வீடுமன் தான் எதிரில் வாளெடுத்துப் போர்செய்யாமல் வில்லெடுத்துப் பொருது அவனது தோளையும் முடியையுந் துணித்த தன்மை, முதற்போர்ச்சருக்கத்திற் கூறப்பட்டது. இந்த இரண்டு பெரிய அக்கிரமயுத்தங்களை நடத்தின நீங்கள், சாத்தகியும் பூரிசிரவனும் பொருகையில் அருச்சுனன் அம்பெய்து பூரிசிரவனைத் தோள்துணித்ததை ஒருசிறுமையாகப் பேசுவது,வெகு அழகிது! என்று கண்ணன் பரிகசித்து,அவ்விகழ்ச்சியின்மிகுதி தோன்றச் சிரித்திட்டான். தன்னையடுத்தவர்கட்கு நேருந் தீங்குகளையெல்லாம் எவ்வாற்ருலாயினுந் தீர்த்தருளுங் கடப்பாடு கொண்ட அபாரகருணைநிதி யாதலால்,இங்ஙனஞ்செய்யச்சொன்னதுமன்றி அதற்குப் பரிந்துபேசுதலுஞ் செய்தன னென்பது தோன்ற, 'தன்னை வந்தடைந் தோர்க்குற்ற தளர்வெலா மொழிக்குந் தாளான்' என்ருர்.

நென்னல் - நெருநல் என்பதன் மரூஉ. நேரற என்பதற்கு - எதிரிலே யல்லாமல் சக்கரவியூகத்தினுள்ளே மறைவாக என்றும், ஒப்பில்லாமல் என்றும், தகுதியில்லாமல் என்றும் பொருள்கொள்ளலாம். ச்வேதன் - வடசொல். தாள் - முயற்சியுமாம். தவாமல் என்றதில், தபு என்பதன் மரூஉவான தவு - வினைப்பகுதி. 'மன்னறமுறைதவாமல் மலைந்தனிர்' என்றது - இகழ்ச்சிக்குறிப்பாகிய எதிர்மறையிலக்கணையால், அங்ஙனம் மலைந்திலீர் என்ற கருத்தை நன்குவிளக்கிற்று.

பீஷ்ம னென்ற வடசொல்லுக்கு - பயங்கரனைவ னென்று உற்பத்தியருத்தம்; பயங்கரமான விரதமுடையவ னென்று கருத்து: இவன், தனது தந்தைக்கு யோசநகந்தியை இரண்டாவதுமணஞ்செய்வித்தற்கு அவளை வளர்த்த தந்தையான செம்படவன் இசைதற்பொருட்டு, தான் மணஞ்செய்துகொள்வதில்லை யென்றும், மூத்தவனுய்ப் பட்டத்துக்குஉரிய தனது இராச்சியத்தையும் மற்றையெல்லாச்செல்வங்களையும் தனக்குச்சிறிய தாயாகவருமவட்குப் பிறக்கும் பிள்ளைக்கே கொடுப்பதாகவும், இங்ஙனம் ஒழித்தற்கரிய மண்ணுசை பெண்ணுசை பொன்னுசை யென்னும் மூவகை யாசையையும் இளமையிலேயே ஒழித்துக் கேட்போர் அஞ்சும்படியான சபதத்தைச் செய்ததனல், இவனுக்கு இப்பெயர் ; தேவர்கள்முன்னிலையில் இத்தவிரதத்தைக் கொண்டதனல் தேவவிரத னென்றும், சந்தனுமைந்தனுதலால் சாந்தநவ னென்றும், கங்கைகுமார னுதலால் காங்கேய னென்றும் இவனுக்குப் பெயர்க ளுண்டு. (௧௬௦)

[அருச்சுனன் வீமனுடனும் சாத்தகியுடனும் பகைவர்சேனையை நெருங்குதல்.]

பின்னரும்விசயனிற்பப்பேணலார்பின்னிட்டோட
மன்னரின்மலைந்தோர்தம்மைவாளியால்வானிலேற்றி
முன்னவனோடுமந்தமுகில்வண்ணனிளவலோடுந்
தன்னுரைவழுவாவண்ணந்தரியலர்படையைச்சார்ந்தான்.

(இ - ள்.) பின்னரும் - பின்பும், விசயன் - அருச்சுனன், நிற்ப - (போரில்) நிலைநிற்றலால், பேணலார் - பகைவர்கள், பின் இட்டு ஓட - புறங்கொடுத்து ஓடிப்போக, (அவ்வருச்சுனன்), மன்னரில் மலைந்தோர்தம்மை வாளியால் வானில் ஏற்றி - பகையரசர்களில (புறங்கொடாது) எதிர்த்துப் போர்செய்தவர்களை(த் தனது) அம்புகளினால் வீரசுவர்க்கத்திற்செலுத்திக் கொண்டு, முன்னவனோடும் - தனதுமுன்பிறந்தவனான வீமனுடனும், அந்த முகில் வண்ணன் இளவலோடும் - காளமேகம்போலுந் திருநிறமுடையனான கண்ணபிரானது திருத்தம்பியாகிய அச்சாத்தகியுடனும், தன் உரை வழுவா வண்ணம் - தனது சபதவார்த்தைதவறுதலில்லாமல்நிறைவேறுதற்பொருட்டு, தரியலர் படையை சார்ந்தான் - பகைவர்களது உட்சேனையை நெருங்கினான்.

பேணலார் - (தனதுஆக்கத்தை) விரும்பாதவர்: தரியலர் - பொறாதவர்; இரண்டும் - எதிர்மறைவினையாலணையும்பெயர்: அல் - எதிர்மறையிடைநிலை. வானிலேற்றி - கொன்று; பிறிதினவிற்சி. தன்னுரைவழுவாவண்ணம் - சயத்திரதனைக் கொல்லுதற்பொருட்டென்க. இங்கே, 'தரியலர்படை' என்றது, பின்னணிச்சேனையை. முன்னவன் - தமையன். (ககசு)

[எதிரிகள் சயத்திரதனை நிலவறையுள் மறைத்துவைத்துப் பாதுகாத்தல்.]

அருக்கனோர்கணத்திலத்தமடையுமவ்வளவுங்காக்கிற்
செருக்கிளர்விசயனின்றேதீயிடைவீழ்தறிண்ண
நெருக்குபுநின்மினென்றுநிலவறையதனிலந்த
மருக்கமழ்தொடையலானைவைத்தனர்மருவலாரே.

(இ - ள்.) 'அருக்கன் - சூரியன், ஓர் கணத்தில் - ஒரு க்ஷணப்பொழுதிலே [மிகவிரைவிலே என்றபடி], அத்தம் அடையும் - அஸ்தகிரியை அடைவான் [அஸ்தமிப்பான்]; அவ்வளவும் - அதுவரையிலும், காக்கின் - (சயத்திரதனைப்) பாதுகாத்தால், செரு கிளர் விசயன் - போரிற் சிறந்த அருச்சுனன், இன்றே - இன்றைத்தினமே, தீயிடை வீழ்தல் - அக்கினிப் பிரவேசஞ்செய்து இறத்தல், திண்ணம் - நிச்சயம்: (ஆதலால்), நெருக்குபு நின்மின் - (அச்சயத்திரதனுள்ள இடத்துக்கு அருச்சுனன் செல்லவொண்ணாதபடி இடைவிடாது) நெருக்கிக்கொண்டு நில்லுங்கள்', என்று - என்று சொல்லிக்கொண்டு, மருவலார் - பகைவர்கள், அந்த மரு கமழ் தொடையலானை - வாசனை வீசுகிற மாலையைத் தரித்தவனான அந்தச்சயத்திரதனை, நிலவறையதனில் வைத்தனர் - நிலத்திலுண்டாக்கிய ஓரறையினுள்ளே (மறைத்து)வைத்தார்கள்; (எ - று.)

அஸ்தம் - வடசொல். திண்ணம் - திண்மை; 'அம்' விகுதி பெற்ற பண்புப்பெயர். நெருக்குபு - செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம். மருவலார் - விரும்பாதவர், சேராதவர். கிளர்தல் - விளங்குதலும், உற்சாகங்கொள்ளுதலும். 'மருக்கமழ்தொடையலான்' என்பதற்கு - (சிவபிரானிடத்து வரமாகத்) தெய்வமணம்வீசுங் கொன்றைமாலையைப் பெற்றவனென்றும் பொருள்கொள்ளலாம். (கசுஉ)

[சயத்திரதன் கட்புலனாகாமை.]

நச்சனை யரவ மென்ன நடுங்கின னின்ற காலைத்
துச்சனை கணவன் றன்னைத் தோற்றமொன் றுனுங் காணான்

ரஸ மென்ற வடசொல்லின் விகாரம். அயஸ் என்ற வடசொல், அயமென்று விகாரப்பட்டது. மயக்கு - மயக்குதல்; முதனிலைத்தொழிற்பெயர். அருச்சுனனைச் சீர்திருத்தித் தன்வழிப்படுத்தி அவனைக்கொண்டு பகையழித்தலிற் கண்ணபிரானுக்கு உள்ள ஆதாரமும், எப்படிப்பட்டதையும் எளிதில்மாற்ற வல்ல அப்பெருமானது ஸர்வசக்தியும், எளிதில் மெய்யுணர்வை இனிது புகட்டுகிற கீதையின் சிறப்புந் தோன்ற, 'அருச்சுனனாற்கிதாக நயத்திரத மொழிக்கீதை நவின்ற பிரான்' என்றார். நயமொழி - செவிக்கினிய செஞ்சொற்கள். இரதமொழி-ஆழ்ந்துபார்க்கப்பார்க்க மேன்மேற் பொருள்பயக்குஞ் சொற்கள். கீதையுபதேசித்தவரலாறு - [திருவே. ப - சச.] (கசுகு)

[கண்ணன் அருச்சுனனைநோக்கிச் சயத்திரதனைக்கொல்லச்சொல்லுதல்.]

எண்சிறந்தமகன்றலைமைநிலத்திட்டான் றலைதுகளாகென்றுநாடித், தண்சமந்தபஞ்சகமென்றொருமடுவி லிவன்றாதைதருப்பிக்கின்றா, னொண்சரங்கொண்டிவன்றலைமற்றவன்கரத்திற் போய்விழநீயுடற்றாகென்று, திண்சயங்கொள்விசயனுக்குச்சிந்துபதி தனைக்காட்டித்திருமால்சொன்னான்.

(இ - ள்.) "'எண் சிறந்த மகன் தலையை - வலிமைமிக்க (எனது) புத்திரனை சயத்திரதனது தலையை, நிலத்து இட்டான் - தரையிலே தள்ளியவனது, தலை —, துகள் ஆக - பொடியாய்விடக்கடவது', என்று நாடி - என்று குறித்து வரம்வேண்டிப்பெற்று, (அதன்பின் இப்பொழுது), இவன் தாதை - இச்சயத்திரதனது தந்தையான வ்ருத்தக்ஷத்ரன், தண் சமந்தபஞ்சகம் என்ற ஒரு மடுவில் - குளிர்ந்த ஸ்யமந்தபஞ்சக மென்ற ஒப்பற்ற மடுவிலே, தருப்பிக்கின்றான் - (சந்தியாவந்தனந் தொடங்கி) அருக்கியசலமெடுத்துவிடுகிறான்: அவன் கரத்தில் - அத்தந்தையின் கையிலே, இவன் தலை போய் விழ - இம்மைந்தனது தலை போய்விழும்படி, ஒள் சரம் கொண்டு - ஒளி பொருந்திய [சிறந்த] பாணங்களினால், நீ உடற்றுக - நீ பொருது அழிப்பாயாக', என்று —, திண் சயம் கொள் விசயனுக்கு - வலிய வெற்றியைக் கொள்ளும் அருச்சுனனுக்கு, திருமால் - கண்ணபிரான், சிந்துபதிதனை காட்டி - சிந்துநாட்டரசனை அச்சைந்தவனைச சுட்டிக்காண்பித்து, சொன்னான் - கூறியருளினான்; (எ - று.) — மற்று - அசை.

இச்சயத்திரதனதுதந்தையான வ்ருத்தக்ஷத்ரனென்னும் பேர்பெற்ற அரசன் வெகுகாலங்கழித்தபின்பு அருமையாக இப்பிள்ளையைப் பெற்று அதன்பின் இவனதுதலையைக் கீழேதள்ளுபவனது தலை பொடியாச்சிதறிவிடுமென்று ஆகாயவாணி வரமருளவும்பெற்று மகிழ்ந்து அப்பால் இவனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்துவிட்டு வனம்புகுந்து ஸ்யமந்தபஞ்சக மென்ற மடுவின் கரையில் தன்மகனது ஆக்கம்முதலியவற்றைக் குறித்து அரியதவத்தைச் செய்துகொண்டிருக்கின்றான்; இவன்தலையை நீ நேரிற் கீழேதள்ளாமல் தக்கஅம்புகளை ஒன்றன்மேலொன்று விடாதுதொடுத்து அவற்றால் அத்தலையை உடம்பினின்று வேறாக்கி அப்பாற்செலுத்தி, சூரியாஸ்தமனமாய்விட்டதென்று கருதி விரைவாக மாலைக்கடன் கழிக்கததொடங்கி அருக்கியசலமேந்தியுள்ள அத்தந்தையின் கையில் விழச்செய்வாயாயின், அவன் அத்தலையைத் தன்கையாற் கீழேயெறிந்து அதனால் தன்தலைவெடித்து இறப்பான்; ஆகவே, பகைவனது தந்தையையுங் கொன்றதாக முடிவதோடு உன்தலைக்கு அபாயமும் இலதாம் என்று கண்ணன் அருச்சுனனுக்கு நல்லுபாய மறிவுறுத்தின னென்பதாம்.

ஆகென்று, உடற்றுகென்று - விகாரம். ஸ்யமந்தபஞ்சகம்-பரசுராமன் பல அரசர்களையுங் கொன்று அவர்களிரத்தத்தாற் பிதிருக்களுக்குத் தர்ப்பணஞ்செய்தற்பொருட்டு உண்டாக்கிய ஐந்துகுளங்களின் தொகுதி; "மன்னவர்தமுடற்சோரி வழிந்து சமந்தபஞ்சகமா, மென்ன நிலைபெற்ற தடங்

களு மங்கே யங்கே யுண்டு" என மேற் பதினெட்டாம்போர்ச்சருக்கத்து வருதலுங் காண்க. (௧௬௬)

[அருச்சுனன் அப்படியே சயத்திரதனைக் கொல்லுதல்.]

வரத்தினின்முன் பெறுசாபம்வாங்கியருச் சுனன்சிந்துமகீபன் மௌலிச்,சிரத்தினிலெய்தலுந்துணிந்ததொருசரத்தாற் றுணிதலு மச்சிரம்வீழாமற், சரத்தினைமேன்மேலெவித்தடத்திருந்து தருப்பி த்ததாதைதன்பொற், கரத்திடையேவீழ்வித்தானவனதனை நிலத்தி ட்டக்கணத்தின்மாய்ந்தான்.

(இ - ள்.) (உடனே), அருச்சுனன்—, வரத்தினில் முன் பெறு சாபம் வாங்கி - வரமாக முந்தினநாளிற் (சிவபிரானிடம்) பெற்ற வில்லை யெடுத்து வளைத்து, சிந்து மகீபன் மௌலி சிரத்தினில் - சிந்துநாட்டரசனது கிரீட மணிந்த தலையின்மேல், எய்தலும் - (ஓரம்பை) எய்த மாத்திரத்திலே, ஒரு சரத்தால்-அந்த அம்பொன்றினால், துணிந்தது-(அந்தத்தலை) அறுபட்டது; துணிதலும் - அங்ஙனம் அறுபட்டவுடனே, அ சிரம் வீழாமல்-அத்தலை கீழ் விழுந்திடாதபடி, சரத்தினை மேல் மேல் எவி - அம்புகளை இடைவிடாமல் மேன்மேல் தொடுத்து, தடத்து இருந்து தருப்பித்த தாதைதன் பொன் கரத்திடையே வீழ்வித்தான் - ஸ்யமந்தபஞ்சக தடாகத்திலே பொருந்தி அருக்கியசலமெடுத்துவிடுகிற இவன்தந்தையான விருத்தக்ஷத்திரனது அழ கிய கையிலே (அத்தலை) விழும்படி செய்தான்; (செய்யவே), அவன் அதனை நிலத்து இட்டு அ கணத்தில் மாய்ந்தான் - அத்தந்தை அத்தலையைக் கீழே போகட்டு (அதனால்) அந்தக்ஷணத்திலே இறந்தான்; (எ - று.)

சயத்திரதனது தலையை நேரில் நிலத்திலே தள்ளியவன் அருச்சுனனு காமல் அவன்தந்தையே யானதனால், அவன் தலைவெடித்து இறந்தன னென்க. முன் - பதின்மூன்றாம்போர்நா ளிரவில்; அவ்விரவிற் சிவபிரா னிடம் சைந்தவனைக்கொல்லுதற்குரிய வில்லம்புகளைக் கிருஷ்ணார்ச்சுனர் பெற்றுவந்தமை, பிரசித்தம்.

("தருணவாணிருபர் மயங்கிவீழ்தர வெண்சங்கமு முழக்கி நேமியினு, லருண னுதயத்தை மறைத்திரவழைத்தாங் கபிமனுக் கரும்பழி கொண் டாய்" என மேற் (பதினேழாம்போர்ச்சருக்கத்திற்) கண்ணனைத் தருமன் துதிக்குமாறு இங்கு உணரத்தக்கது. "நாழிகைகூறிட்டுக் காத்துநின்ற வரசர்கள்தம் முகப்பே, நாழிகை போகப் படைபொருதவன் தேவகிதன் சிறுவன், ஆழிகொண்டன் றிரவி மறைப்பச் சயத்திரதன்தலையைப். பாழி லுருளப் படைபொருதவன் பக்கமே கண்டா ருளர்" என்று பெரியாழ் வாரும், "பாழியான்மிக்க பார்த்தனுக் கருளிப் பகலவ னொளிகெடப் பகலே, யாழியா லன்றங் காழியை மறைத்தா னரங்கமாநகரமர்ந்தானே" என்று திருமங்கையாழ்வாரும், "மாயிரு ஞாயிறு பாரதப் போரில் மறைய வங்ஙன், பாயிருள் நீதந்த தென்னகண் மாயம் பவளநெற்றிச், சேயுயர் மாமதில் சூழரங் கேச திரண்டுதித்த, ஆயிரங் கோடி திவாகரன் போ லொளி ராழிகொண்டே" என்று பிள்ளைப்பெருமாளையங்காரும் அருளிச் செய்தமை காண்க.) (௧௬௭)

[சயத்திரதன் இறந்ததற்குத் துரியோதனன் மிகஇரங்குதல்.]

முன்பட்டானருக்கனெனவெளிப்பட்டான்வெளிப்பட்டுமுடி விற்சிந்து,மன்பட்டான்மாமாயன்மாயமிதென்றறியாமன்மகன்போ ய்ப்பட்ட, பின்பட்டானவன்றந்தையினிப்பட்டா ரெவருமெனப் பிழைப்பட்டான்போ,லென்பட்டானரவுயர்த்தோனெரிப்பட்டான் விசயனெனவெண்ணிநின்றான்.

(இ - ள்.) முன் அருக்கன் பட்டான் என-எதிரிற் சூரியன் அஸ்தமித்தானென்ற காரணத்தால், சிந்து மன் - சிந்துதேசத்தரசனான சயத்திரதன், வெளிப்பட்டான்-(நிலவறையினின்று) வெளிவந்தான்: வெளிப்பட்டு -(அங்ஙனம்) வெளிவந்து, முடிவில் - இறுதியிலே, பட்டான் - (அருச்சுனனால்) இறந்திட்டான்; மா மாயன் மாயம் இது என்று அறியாமல்-மிக்க மாயையையுடையவனான கண்ணபிரானது தந்திர மிது வென்று உணராமல்,மகன் போய் பட்ட பின் அவன் தந்தை பட்டான் - தன்மகனான சயத்திரதன் இறந்துபோனபின்பு அவனது தந்தையான விருத்தக்ஷத்திரனும் இறந்தான்; இனி - இவர்கள் இறந்தபின், எவரும் பட்டார் - (நம்பக்கத்தவர்) யாவரும் இறந்தவரேயாவர். என - என்றுசிந்தித்து,பிழைப்பட்டான் போல் - (குறித்தஇலக்குத்) தவறியவன்போல,விசயன் எரி பட்டான் என எண்ணி நின்றுன் அரவுஉயர்த்தோன் என் பட்டான் - அருச்சுனன்அக்கினிப்பிரவேசஞ் செய்துஇறந்தானென்று எண்ணி மகிழ்ந்துநின்றவனான துரியோதனன் என்னவருத்தமடைந்தான்! [மிகவருந்தினான் என்றபடி]; (எ - று.)

முன் - முதலில், வெளிப்பட்டான் எனினுமாம். பட்டான் - மறைந்தான். முடிவில் - அப்பகலிற் பெரும்பான்மையும் மறைந்து தப்பிநின்று அதன்இறுதியிலே யென்க. 'இது' என்றது, தன்கையில் தன்மைந்தன் தலை விழச் செய்தலை. 'மாமாயன் மாய மிதென் றறியாமல்' என்றது, 'அவன் தந்தை பட்டான்' என்பதனோடு இயையும்; 'மகன் போய்ப்பட்ட' என்பதனோடு இயைத்து, 'இது' என்பதற்கு-சூரியன்மறைத லென்று உரைத்தலும் பொருந்தும். 'இனிப் பட்டா ரெவரும்' என்றது, இனி யாவரும் தவறாமல் அழிந்திடுவ ரென்ற துணிவினால்; தெளிவுபற்றி, எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்டது: காலவழுவமைதி. தாம் பகையழித்து வெற்றி பெறுதற்குச் சயத்திரதனைத் துரியோதனன் சிறந்ததுணையாகக் கருதியிருந்தனனென்பது இங்கு நன்குவிளங்குதல் காண்க. சூரியன் அஸ்தமிக்குமளவும் சயத்திரதன் அருச்சுனனுக்குப்புலப்படாமல் நின்றதனால், அருச்சுனன் சபதப்படி தீக்குதித்துஇறந்திடுவது தவறா தென்று எண்ணித் துரியோதனன் களித்துநின்றான்: அப்படி நிச்சயமாய் எண்ணியிருந்த உத்தேசம் தவறிப்போய் வேறுவகையாய் முடிந்தமைபற்றி, 'பிழைப்பட்டான் போல்' என்றார்; இங்கே, 'போல்' என்றது, ஒப்பில்போலி: அன்றியும், (கையிற்கிடைத்த பொருள்)தவறப்பெற்றவன்போல மிகவருந்தினனென்க. 'எரிப்பட்டான்' என்ற இறந்தகாலமும் தெளிவுபற்றிய வழுவமைதியே. அரவுஉயர்த்தோன் - பாம்புக்கொடியை உயர்த்தியவன். (௧௬௮)

[கண்ணன்திருவாழி விலகச் சூரியன் விளங்குதல்.]

கன்னசவுபலர்முதலாங்காவலருஞ் சுயோதனனுங்கரந்தான்
வெய்யோன், சொன்னமொழிபிழைத்தான்வெஞ்சுவேததுரங் கம
னென்றுதுள்ளியார்த்தா, ரன்னபொழுதெம்பெருமான்பணிகொ
ண்ட சுடராழியகற்றநோக்கி, யின்னமொருபனைத்தனைப்போழ்து
ண்டெனநின் றனனெழுபேரிவுளித்தேரோன்.

(இ - ள்.) கன்ன சவுபலர் முதல் ஆம் காவலரும் - கர்ணனும் சகுனியும் முதலான அரசர்களும், சுயோதனனும் - துரியோதனனும்,—'வெய்யோன் கரந்தான் - சூரியன் அஸ்தமித்தான்: (அதன்பின்பு சயத்திரதனைக் கொன்றதனால்),வெம் சுவேத துரங்கமன் சொன்ன மொழி பிழைத்தான்- கொடிய (நான்கு)வெள்ளைக்குதிரைகளையுடையவனான அருச்சுனன் (முந்தினநாட்)சொன்ன சபதவார்த்தை தவறினான்,' என்று - என்று எண்ணியும் சொல்லியும், துள்ளி ஆர்த்தார்-குதித்துஆரவாரஞ்செய்தார்கள்; அன்ன பொழுது - அவ்வளவிலே, எம் பெருமான் - எமக்குத்தலைவனான கண்ணபிரான், பணி கொண்ட சுடர் ஆழி அகற்ற - (தனது) கட்டளையை நிறை

வேற்றிய விளங்குகிற சக்கராயுதத்தை விலகச்செய்ய,—கோக்கின்—யார்க் குமிடத்து,—எழு பேர் இவுளி தேரோன்-ஏழு பெரிய குதிரைகளையுடைய தேரையுடையவனான சூரியன். இன்னம் ஒரு பனை தனை போழ்து உண்டு என நின்றனன்-(அஸ்தமிப்பதற்கு) இன்னமும் ஒருபனைமரத்தளவு இடங் கொண்ட பொழுது உண்டென்று சொல்லும்படி நின்றான்; (எ - று.)

சவுபலன் - சௌபலனென்பதன் போலி; இவ்வடமொழிப்பெயர், ஸுபலனதுமக னென்று பொருள்படும். சுடராழி-கோடிசூரியப் பிரகாசங் கொண்ட சக்கரம். காயத்ரி, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என்ற ஏழு சந்தசுகள் சூரியனுக்கு ஏழுகுதிரைகளாய் நிற்கின் றனவென்பது நூற்கொள்கை; அன்றி, சூரியன்தேர் 'ஏழு=ஸப்த' என் னும் பெயர்கொண்ட ஒருகுதிரையைக் கொண்ட தென்றலும், சூரியன் தேர்க்குதிரையொன்றற்கு ஏழுபெயர்க ளென்றலும் உண்டு. (கசுக)

[இதுவும், அடுத்தகவியும் - சேனையிலுள்ளாரிவார்த்தை.]

விரியோதநெடுங்கடலில்வீழ்வதன்முன் விரைந்துரகன்விழு ங்கினனோ, வெரியொடிமகனிறக்குமெனமகவான் மறைக்கமுகிலே வினனோ, கரியோன்கைத்திகிரியினான்மறைத்தனனோ விருள்பரந்த கணக்கீதென்னோ, பெரியோர்கடிருவுள்ளம்பேதித்தா லெப்பொரு ளும்பேதியாதோ.

(இ - ள்.) விரி - பரவுகின்ற, ஓதம் - அலைகளையுடைய, நெடுங் கட லில் - பெரிய கடலிலே, வீழ்வதன்முன் - விழுந்து அஸ்தமிப்பதன்முன்னே, (சூரியனை), உரகன் - பாம்புவடிவமான ராகு அல்லது கேது, விரைந்து விழுங்கினனோ-விரைவாகவந்துவிழுங்கிப் பின்பு உமிழ்ந்தனனோ? (அன்றி), மகவான் - இந்திரன், மகன் எரி ஓடி இறக்கும் என - தன்பிள்ளையான அருச்சுனன் அக்கினிப்பிரவேசஞ்செய்து இறப்பனே யென்பதைப்பற்றி, (அங்ஙனம்இறவாமைப்பொருட்டு), மறைக்க முகில் ஏவினனோ-(சூரியனை) மறைத்தற்கு மேகங்களைச் செலுத்தினனோ? (அல்லது), கரியோன்-கிருஷ்ணன், கை திகிரியினால் மறைத்தனனோ - தன்கைவசப்பட்ட சக்கரத்தைக் கொண்டு (சூரியனை) மறைத்திட்டானோ? இருள் பரந்த கணக்கு ஈது என் னோ - சூரியன் உண்மையாகஅஸ்தமிப்பதற்குமுன்னமே இடையில் இருள் பரவிய விதம் யாதுகாரணத்தா லானதோ? பெரியோர்கள் திரு உள்ளம் பேதித்தால் எ பொருளும பேதியாதோ - பெரியோர்களுடைய சிறந்த மனம் மாறினால் எதுப்பொருளும் மாறுபடாதோ? (எ - று.)

இயல்பான சூரியாஸ்தமனத்துக்குச் சிறிதுபொழுதைக்குமுன்பு கிரக ணம்நேர்ந்ததனாற் சூரியன் சிறிதுபொழுதுமறைந்திருந்தனனோ வென்று சங்கித்தல், முதலடியின் தாற்பரியம். தோற்றம்மாத்திரத்தைக்கொண்டு, சூரியசந்திராதியரது உதய அஸ்தமனங்களை முறையே கீழ்கடலினின்று எழுவதாகவும் மேல்கடலினுள்விழுவதாகவுங் கூறுதல், கவிமரபு. இந்திரன் மேகவாகனனாய் மேகங்களையேவுதற்குரியனாதல்பற்றி நேர்ந்தது, இரண் டாமடியிற்குறித்த ஆசங்கை. ஈற்றடி - கண்ணன்முதலான மகான்களு டைய மனம் துரியோதனன்விஷயத்தில் மாறுபட்டிருத்தலாற் பகலும் இர வாக மாறியதுபோலும் என்ற சிறப்புப்பொருளைப் பொதுப்பொருளால் விளக்கியவாறும்.

மகவான்-(நூறுஅசுவமேத) யாகமுடையவன்; வடசொல்: மகம்-யாகம், வாந் - வடமொழிப்பெயர்விகுதி. 'இங்கு - இப்பெயராற் குறித்ததில்.தமிழ் வகையால், பிள்ளைக்குச் சொந்தக்காரனெனவும் ஒருகருத்து நிகழ்தல் காண்க. கரியோன் - கருநிறமுடையவன்; இப்பெயர், க்ருஷ்ண னென் னும் பொருளது. மாயவ னென்பது, இதன் உட்கோள்.

**சூரியனை உரக்னவிழுங்குதலின் விவரம்:**—ஒவ்வொருசமயத்திற் சந்திரனையுஞ் சூரியனையும் மறைக்கிற பூமியின்சாயையும் சந்திரனதுசாயையுமாகிய ராகு கேது வென்னுஞ் சாயாகிரகங்களைக் கரும்பாம்புசெம்பாம்புகளாகக் கூறுதல், கவிசமயம்; அன்றியும், பாற்கடல்கடைகையி லுண்டான அமிருதத்தை யெடுத்துக்கொண்ட திருமால், மிகஅழகிய மோகினியென்னும் பெண்வடிவத்தால் அசுரர்களை மயக்கித் தேவர்கட்கே அமிருதத்தைப் பங்கிட்டுக்கொடுத்துவருகையில், இராகுவென்னும் ஓர்அசுரன் தான் இருத்தற்குஉரிய அசுரர்கூட்டத்தை விட்டுத் தந்திரமாகத் தேவர்கோட்டியினிடையிலே புக்குக் கையேற்று அமிருதத்தை வாங்கி யுண்ண, அதனைச் சந்திரசூரியர் குறிப்பித்தமாத்திரத்தில், எம்பெருமான் அவனை அகப்பையால் அடித்துத் தலைவேறுஉடல்வேறாக்க, அமிருதமுண்டதனால் உயிர்நீங்காத அந்தத்தலையும் உடலும் விஷ்ணுவின் அநுக்கிரகத்தால இராகுகேதுக்களென இரண்டுகிரகங்களாகிச் சூரியன்முதலிய எழுகிரகங்களோடு சேர்ந்து, தம்மேற் கோள்சொன்ன சந்திரசூரியர்க்குப் பகையாய், சிற்சில காலத்தில் அவர்களைப் பிடித்துக்கொள்கின்றன: அவையே கிரகணமெனப்படும் என ஒரு புராணகதையும் உண்டு. (௧௭0)

உந்திரதத்தனிவலவனுபாயத்தால்வருணன்மகனுயிரைமாய்த்தான்
மந்திரமொன்றறிவித்துவயபுயமாயிரத்தோனைமடிவித்திட்டான்
றந்திரமெய்ம்மயங்கிவிழத்தன்சங்கமுழக்கினான்றபனன்மாய
விந்திரசாலமுஞ்செய்தானிந்திரன்சேய்வெல்லாமல்யார்வெல்வாரே.

(இ - ள்.) உந்து இரதம் தனி வலவன் - உயர்ந்த (அருச்சுனனது) தேரைச் செலுத்துகின்ற ஒப்பற்ற சாரதியான கண்ணன், உபாயத்தால் - ஒரு தந்திரத்தால், வருணன் மகன் உயிரை மாய்த்தான் - வருணனது குமாரனான சுதாயுவின் உயிரைப் போக்கினான்; (பின்பு), மந்திரம் ஒன்று அறிவித்து - ஒரு மந்திரத்தை (அருச்சுனனுக்கு) உபதேசித்து, வய புயம் ஆயிரத்தோனை மடிவித்திட்டான் - (அதனால் அருச்சுனன்) வலிய ஆயிரவாகுவைக் கொல்லும்படி செய்தான்; (அதன்பிறகு), தந்திரம் - பகைவர்சேனை, மெய் மயங்கி விழ - உடம்பு தெரியாமல் மயக்கமடைந்து விழும்படி, தன் சங்கம் முழக்கினான் - தனது பாஞ்சசன்னியத்தை ஒலிப்பித்தான்; (இவையல்லாமல்), தபனன் மாய இந்திரசாலமும் செய்தான் - சூரியன் மறையும்படி பெருமாயையையுஞ் செய்தான்; (ஆதலால்), இந்திரன் சேய் வெல்லாமல் யார் வெல்வாரே - (அக்கண்ணபிரானது உதவியைப் பலவாற்றாலுங் கொண்ட) அருச்சுனன் (போரில்) வெற்றிகொள்ளாமல் (வேறு) யார் போரில் (வெற்றி) கொள்வர்?

௩௧, ௩௨, ௩௫, ௩௬, ௬௧, அஅ, ௧௬௪ - இக்கவிகள், இங்கு நோக்கத்தக்கன. தந்த்ரம் - சேனை: வடசொல். மாய்தல் - மறைதல்; "களிறுமாய்க்குங் கதிர்க்கழனி" என்றவிடத்திற் போல. சேய் - செந்நிறமுடையவனான முருகனது பெயர், மகனுக்கு வழங்கும். இந்த்ரஜாலம் - வடசொல்: உள்ளதை இல்லாததாகவும், இல்லாததை உள்ளதாகவும், ஒன்றை மற்றொன்றாகவுங் காட்டும் சிறந்த மாயவித்தை; அறுபத்துநான்கு கலைஞானங்களிலொன்று. (௧௭௧)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்: துரியோதனன் சிலகூறிப் போர்தொடங்குதல்.]

முடையெடுத்தநவநீதந்தொட்டுண்டுங்கட்டுண்டு முதனாளைக்,
குடையெடுத்துமழைதடுத்தும்வஞ்சனைக்கோர் கொள்கலமாங்
கொடியபாவி, படையெடுத்துவினைசெய்யேனெனப்புகன்றமொழி
தப்பிப்பகைத்தபோரி, னிடையெடுத்தநேமியினால்வெயின்மறைத்
தா னின்னமிவனென்செய்யானே.

(இ - ள்.) முடை எடுத்த - முடைநாற்றம் பொருந்திய, நவநீதம்-வெண்ணெயை, தொட்டு உண்டும் - கையாலெடுத்து அமுதுசெய்தும், கட்டுண்டும் - (அதற்காக ஆய்ச்சியரால்) கட்டப்பட்டும், முதல் நாள் - இளம்பிராயத்திலேயே, நாகம் குடை எடுத்து மழை தடுத்தும் - (கோவர்த்தந) மலையைக் குடையாக எடுத்துப் பிடித்து அதனால் (இந்திரன்பெய்வித்த) மழையைத் தடுத்தும், வஞ்சனைக்கு ஓர் கொள் கலம் ஆம் - வஞ்சனைகட்கு ஓர் இருப்பிடமாகவுள்ள, கொடிய பாவி - கொடும்பாவியான கண்ணன், படை எடுத்து வினை செய்யேன் என புகன்ற மொழி தப்பி - '(போரில்) ஆயுதமேந்தித் தொழில்செய்யேன்' என்று (என்னுடன்) சொன்ன சபதவார்த்தை தவறி, பகைத்த போரினிடை எடுத்த நேமியினால் வெயில் மறைத்தான் - (ஒருவரோடொருவர்) பகைத்துச்செய்கிற போரின்நடுவிலே தான் ஏந்திய சக்கராயுதத்தைக்கொண்டு சூரியனை மறைத்திட்டான்; இன்னம் இவன் என் செய்யானே - இன்னமும் இந்தக்கண்ணன் எந்த அநீதிதான் செய்யமாட்டான்? [பலவுஞ்செய்வான் என்றபடி]; (எ - று.)

நவநீதம் என்ற வடசொல்லுக்கு - புதியதயிரினின்று கடைந்தெடுக்கப்பட்ட தென்று காரணப்பொருள்கூறுவர். கொள்கலம் - பாத்திரம்; வினைத்தொகை. கலம் - மரக்கலமுமாம். பாண்டவர்கட்கு விரோதமாகத் தான் செய்யும் முயற்சிகட்கெல்லாம் எற்ற மாறு செய்து தன்னைப் பங்கப்படுத்திவருதல்பற்றி, துரியோதனன் கண்ணனை மிக வெறுத்து, 'கொடிய பாவி' என்று வைதான். பாபீ - வடசொல்; தீவினையுடையான். 'படையெடுத்து வினைசெய்யே னெனப் புகன்ற மொழி' என்றது - துரியோதனன் கண்ணனைத் தனக்குப் படைத்துணையாக அழைக்கப் போனபொழுது, முந்திப் பாண்டவர்க்கு உதவியான அப்பெருமானை 'போரிற்படையெடாதிருக்கவேண்டும்' என்று வேண்ட, அப்பெருமான் அதற்குஉடன்பட்டு 'அருச்சுனனுக்குத்தேருர்தலேயன்றிப் படைக்கலமெடுத்து நம்மோடு போர்செய்யேன்' என்று வாக்குதத்தஞ்செய்ததை. மூன்றாநாட்போரில் பீஷ்மன் உக்கிரமாகயுத்தஞ்செய்து பாண்டவசேனையையெல்லாம் பாணவர்ஷத்தால் அழித்துவரவும் அருச்சுனன் எதிரிற்போர்செய்யாமல் திகைத்துநின்றபோது கண்ணன் தனது பிரதிஜ்ஞை தவறிச் சக்கராயுதத்தையெடுத்துக்கொண்டு போர்செய்யத்தொடங்கியது மன்றி, இன்றைப்போரிலும் சக்கரப்படையாற் சூரியனை மறைத்ததுபற்றி, 'படையெடுத்துவினை செய்யேனெனப்புகன்றமொழிதப்பிப் பகைத்தபோரினிடையெடுத்த நேமியினால் வெயின்மறைத்தான்' என்றன னென்க.

கீழ் வாசுதேவனைப்படைத்துணையழைத்தசருக்கத்தில் "போரிற்படையெடாதொழிமின்" என்று வேண்டிய துரியோதனனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் "நடையுடைப்புரவித்திண்டேர்நானிவற்கூர்வதன்றி, மிடைபடையேவினும் மோடமர்செயேன் வேந்த" என்று வாக்குதத்தஞ்செய்ததை மூன்றாநாட்போரில் தவறிய தென்னெனின்,—போரில்ஆயுதமெடுப்பதில்லை யென்று கண்ணன் கூறியதைக் கேள்விப்பட்டு வீடுமன் கண்ணனைத் தான்போரில்ஆயுதமெடுப்பிப்பதாகத் துரியோதனனுக்குமுன் பிரதிஜ்ஞைசெய்தன னாதலால், எம்பெருமான் 'தனது சபதந் தவறினுந் தவறுக, தனதுஅன்பனாகிய வீடுமனது சபதம் பொய்க்கலாகாது' என்று தன்திருவுள்ளத்திற்கொண்ட திருவருளினால் அங்ஙனஞ்செய்தனனென்க. பரமாத்மாவாகிய கண்ணன் சபதந் தவறினால், அகர்மவசியனும் நிரங்குசஸ்வதந்த்ரனுமான அவனுக்கு வருவதொருகுற்றமில்லை: ஜீவகோடிகளிலொருவனான வீடுமன் சபதந்தவறினாலோ அத்தீவினையால் மறுமையில் யமதண்டனைக்கு உள்ளாவான்; ஆதலால், தனது சிறந்தபக்தனும் பரமபாகவதர்களிலொருவனாக எண்ணப்படுபவனுமாகிய வீடுமனை ஊழ்வினையொழித்துப்பரமபதமடைவிக்கவேண்டு மென்ற

பெருங்கருணையே இங்ஙனம் வரம்புகடந்ததற்கு ஏற்ற காரணமாம். தனது வாய்மைதவறியாயினும் அடியார்கட்குவருகிற ஆபத்தைப் போக்கி அவர்களைக் காத்தருள்கிற பகவானது பேரருளுடைமை இதனால்விளங்குகின்றது. மூன்றாம்போர்ச் சருக்கத்தில் "யானரகிற்புகுதாம லெனக்குயர்வானுலகைத் தருவா, னீ நினைவுற்றது போனபிறப்பிலென்னிடுதவப்பயனே, யானுமினிப்பிறவாமலளித்தருளீச" என்றதும், பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "வஞ்சினமறந்து நேமியுந்தரித்து" என்று தருமபுத்திரன் கண்ணனைக் கொண்டாடுவதும், ஸ்ரீபாகவதத்தில் வீடுமன்வார்த்தையாக "எழிற்படையெடுக்கிலேனென்றிசைத்த நின்மொழிவிட்டென்னை, விழுப்படையெடுப்பித்தன்றி விடுகலனென யான்சொற்ற, மொழித்திறம்பிழையாவண்ண முறுகுவெஞ்சினத்தவாழி,யழற்படையெடுத்தாயன்பர்க்கினியைநீபெரிதுமன்றே" என்றதுங் காண்க. இங்குக் கண்ணன் நேமியினால் வெயின்மறைத்தது, "மம ப்ராணாஹி பாண்டவா: [எனக்குப் பிராணன்களன்றோ பாண்டவர்கள்]" என்று கண்ணபிரான்தானே அருளிச்செய்துள்ளபடி தர்மிஷ்டர்களானபாண்டவர்கள்பக்கல் அவன்கொண்டுள்ள பெருங்கருணையினாலேயே. துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநங்களே திருவவதாரத்தின் நோக்கமாதலால், துரியோதனன்பக்கத்தவனான சயத்திரதனைத் தொலைத்தற்காக இதுசெய்தனன். எம்பெருமானுக்குத் திவ்வியாயுதமான திருவாழி வேண்டியபொழுதெல்லாம் வேண்டியவாறெல்லாம் உதவுதல் இயல்பே. தொட்டு - களவினாற்கவர்ந்து எனினுமாம். வெயில் - சூரியகிரணம்: சூரியனுக்குச் சினையாகுபெயர். (கஎ௨)

ஒற்றைநெடுந்திகிரியினன்மறைவதன்மு னைவரையுமுடனே மோதிச், செற்றிடுதல்யான்படுதறிண்ணமெனச் சேனையொடுஞ்சென்றுசூழ்ந்தான், கொற்றவனதுரைகேட்டுக்கொடிநெடுந்தேர் நரபாலர்சபதங்கூறி, மற்றவரோடொருகணத்தில்வம்மினெனத்தனித்தனிபோய்மலைதலுற்றார்.

(இ - ள்.) 'ஒற்றை நெடுந் திகிரியினன் - பெரிய ஒற்றைத்தேராழியையுடையவனான சூரியன், மறைவதன் முன் - (இனி உண்மையாக) அஸ்தமிப்பதன்முன்னே, ஐவரையும் உடனே மோதி செற்றிடுதல் - பாண்டவரைந்துபேரையும் ஒருசேரத்தாக்கி (யான்)கொன்றிடுதலாவது, யான் படுதல் - (அங்ஙனம் அது கூடாவிட்டால் அவர்களால்) யான் இறத்தலாவது, திண்ணம் - (இரண்டில் ஒன்று) நிச்சயம்,' என - என்று வீரவாதஞ்செய்துகொண்டு, (துரியோதனன்), சேனையொடும் சென்று சூழ்ந்தான் - சேனையுடனே போய் (ப் பாண்டவரை)ச் சூழ்ந்துகொண்டான்; கொற்றவனது உரை கேட்டு - வெற்றிபெற்றவனான துரியோதனராசனது அந்த வார்த்தையைக் கேட்டு, கொடி நெடுந் தேர் நரபாலர் - கொடிகட்டிய உயர்ந்த தேரையுடைய அவன்சேனையரசர்களும், சபதம் கூறி - (தாம்தாம்) சபதவார்த்தை சொல்லிக்கொண்டு, ஒரு கணத்தில் - ஒரு கணப்பொழுதிலே, வம்மின் என - '(போர்க்கு)வாருங்கள்' என்றுசொல்லி அறைகூவிக்கொண்டு, மற்றவரோடு - எதிர்ப்பக்கத்தாருடனே, தனி தனி போய் மலைதல் உற்றார் - தனித்தனியே சென்று போர்செய்யத்தொடங்கினார்கள்; (எ - று.)

நரபாலர்-எதிர்ப்பக்கத்து அரசர்கள் என்றுகொண்டு,அவரோடு - அத்துரியோதநாதியரோடு என்றலுமொன்று; இவ்வுரைக்கு, மற்று - அசை: பின்பு எனினுமாம். நர பாலர் - மனிதரைக்காப்பவர்: வடசொல். சூரியன் ஒற்றையுருளையையுடைய தேரின்மீது செல்பவனாதலால், 'ஒற்றைநெடுந்திகிரியினன்' என்றார்; இன் - சாரியை. இனி, திகிரி இனன் என்று பிரித்து, திகிரி - தேர்ச்சக்கரத்தையுடைய. இனன் - சூரியன் எனினும் அமையும்;

இநன் - சூரியன்: வடசொல். திண்ணம்=திண்மை: 'அம்' விகுதிபெற்ற பண்புப்பெயர்; 'பம்' விகுதி பெற்றுத் திடபமெனநிற்றலு முண்டு. (௧௦௩)

[இருதிறத்தவரும் போர்செய்தல்.]

துருபதனுஞ்சாத்தகியுந்துரௌபதிமைந்தருமுடுகித்தொட்ட
சாபக்,குருவுடனேபோர்செய்தார்தம்பியருஞ்சுயோதனனுங்கொற்ற
வேந்த, ரொருபதினாயிரவரும்போய்வீமனுடனுடற்றியவனூர்ந்த
தேருமவ, வரிசிலையுமழித்தனர்பினவனும்வெறுங்கரதலத்தால்வல்
போர்செய்தான்.

(இ - ள்.) துருபதனும் - துருபதராசனும், சாத்தகியும்—, துரௌபதி மைந்தரும் - திரௌபதியின்குமாரர் ஐந்துபேரும், முடுகி - விரைந்து [அல்லது கோபம்மூண்டு], தொட்ட சாபம் குருவுடனே-பிடித்த வில்லையுடைய துரோணாசாரியனுடனே, போர் செய்தார்—; சுயோதனனும்-துரியோதனனும், தம்பியரும் - அவன்தம்பிமார் பலரும், கொற்றம் வேந்தர் ஒரு பதினாயிரவரும் - வெற்றியையுடைய துணையரசர் பதினாயிரம்பேரும், போய்—, வீமனுடன்—, உடற்றி - போர்செய்து, அவன் ஊர்ந்த தேரும் வரி சிலையும் அழித்தனர் - அவன்ஏறிய தேரையும் (அவனது) கட்டமைந்தவில்லையும் அழித்தார்கள்; பின் - பின்பு, அவனும - அவ்வீமனும், வெறுங் கரதலத்தால் வல் போர் செய்தான் - ஆயுதமில்லாத வெறுங்கைகளினாற் கொடும் போரைச செய்பவலானான்; (எ - று.)

துருபதன் - திரௌபதியின் தந்தை: பாஞ்சாலராசன்; இவனுக்கு யாகசேனனென்றும் பெயர். துரௌபதிமைந்தர் - திரௌபதியினிடம் பஞ்சபாண்டவர்க்கு முறையேபிறந்த விந்தன், சோமன், வீரகீர்த்தி, புண்டலன், சயசேனன் என்பவர்; இவர்பெயர் வேறுவகையாகவும் வழங்கும்: இவர்கள் உபபாண்டவரென்றும், பஞ்சத்ரௌபதேயரென்றுங் கூறப்படுவர். த்ரௌபதீ - த்ருபதனதுமகள்' வடமொழித் தத்திதாந்தநாமம். சாபக்குரு - வில்லாசிரியன். 'வறுங்கரதலம்' என்றும் பாடம்; பொருள் இதுவே. (௧௦௪)

[வீமன் வெறுங்கையாற் போர்செய்தல்.]

பரியெடுத்துப்பரியெற்றிப்பரித்தேராற்றேரெற்றிப்பனைக்கைவேகக்
கரியெடுத்துக்கரியெற்றிக்காலனிகர்காலாளாற்காலாளெற்றிக்
கிரியெடுத்துவிரியாழிகடைந்ததடந்தோளிருடிகேசனென்ன
வரியெடுத்தகொடிவிடலைதோள்வலியாலுழக்கியரிநாதஞ்செய்தான்.

(இ - ள்.) அரி எடுத்த கொடி விடலை - சிங்கவடிவத்தைத்தரித்த கொடியையுடைய வீரனான வீமன்,—பரி எடுத்து பரி எற்றி - குதிரைகளையெடுத்து (அவற்றாற்)குதிரைகளைமோதியும், பரி தேரால் தேர் எற்றி - குதிரைகள் பூண்ட தேர்களை யெடுத்து (அவற்றால்) தேர்களைத்தாக்கியும், பனைக் கை வேகம் கரி எடுத்து கரி எற்றி-பனைமரம்போலுந் துதிக்கையையும் உக்கிரத்தன்மையையுமுடைய யானைகளை யெடுத்து (அவற்றால்) யானைகளைப் புடைத்தும், காலன் நிகர் காலாளால் காலாள் எற்றி - யமன்போன்ற காலாள்வீரரையெடுத்து (அவர்களாற்)காலாள்வீரரை யடித்தும்,—கிரி எடுத்து விரி ஆழி கடைந்த தட தோள் இருடிகேசன் என்ன-மந்தரமலையைக்கொண்டு பரவியதிருப்பாற்கடலைக் கடைந்த பெரியதோள்களையுடைய திருமால்போல,—தோள் வலியால் உழக்கி-(தனது) தோள்களின்வலிமையாற் (கௌரவசேனைக்கடலைக்) கலக்கி,—அரிநாதம் செய்தான் - (வெற்றித்தோன்றச்) சிங்கநாதஞ் செய்தான்; (எ - று.)

பனைக்கை - வடிவுவமை; 'பணைக் கை' என்ற பாடத்துக்கு - பருத்த கையென்க. காலாளுக்கு யமனுவமை, அழிக்குங்கொடுமைக்கு. இருடிகேசன் - ஹ்ருஷீகேசனென்ற வடசொல்லின் விகாரம்; அத்திருநாமம் -

ஹ்ருஷீக ஈசன் எனப் பிரிந்து, இந்திரியங்களுக்குத் தலைவனென்று பொருள்படும்; வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி: 'அ ஆ முன் இ ஈ வரின் இரண்டுங்கெட ஏரேகாரம் தோன்றும்.' விடலை - ஆண்பாற் சிறப்புப்பெயர். உழக்கி—உழ என்பதன் பிறவினையான உழக்கு - பகுதி. அரிநாதஞ் செய்தல்-சிங்கம்கர்ச்சிப்பதுபோலக் கர்சசித்தல். சிங்கக்கொடியையுடைய வீரன் சிங்கநாதஞ்செய்தான் என ஒருசமத்காரந் தோன்றக் கூறினார். திருப்பாற்கடலைக்கடைந்த திருமால், பகைவர்சேனைக்கடலைக்கலக்குகிற வீமனுக்கு உவமை.பாற்கடல்கடைந்தபொழுது மத்தாகக்கொண்ட மந்தரமலை கடலில்ஆழ்ந்திடாதபடி அதனைத் திருமால் மகாகூர்மரூபங்கொண்டு கீழ்நின்று முதுகில்தாங்கியதும் அடங்க, 'கிரியெடுத்து' எனப்பட்டது. காலன் - (பிராணிகளின் ஆயுட்காலத்தைக்) கணக்கிடுபவன் : வடசொல். காலாள் - வாகனமின்றிக் கால்களால்நடந்துசெல்லும் ஆள்; மூன்றும்வேற்றுமை யுருபும்பயனுமுடன்தொக்கதொகை. (கஎரு)

[துரியோதனன்தம்பியரிருவரை வீமன் கொல்லுதல்.]

நிருபர்தொழுங்கனைகழற்காணிலவேந்தன்றம்பியரினெடும்போதாக, விருவர்புறங்கொடாமலதிர்ந்தெதிர்ந்திருதோள்வலிகாட்டவிருவரோடு, மொருவரொருவரையறியாவண்ணமிவனொருவனுமேயுடன்றுசீறிப், பொருதுபிருகனையும்விறற்சூசிதனையும்வானிற்போக்கினனே.

(இ - ள்) நிருபர்-அரசர்கள், தொழும் - வணங்குகிற, கனை கழல் கால்-ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த பாதத்தையுடைய, நிலம் வேந்தன் - பூமி முழுவதுக்கும் அரசனான துரியோதனனது, தம்பியரில் - தம்பிமார்களுள், இருவர் - இரண்டுபேர், நெடும் போது ஆக - வெகுநேரமாக, புறங்கொடாமல் - முதுகுகொடாமல், அதிர்ந்து எதிர்ந்து - ஆரவாரஞ்செய்துகொண்டு எதிரிட்டு, இரு தோள் வலி காட்ட - (தங்கள்) இரண்டுதோள்களின் வலிமையை வெளிக்காட்ட,—இருவரோடும் - அந்தஇரண்டுபேருடனும், இவன் ஒருவனுமே - இந்த வீமனொருத்தன்தானே, உடன்று சீறி பொருது-மிகக் கோபித்துப் போர்செய்து, பிருகனையும் விறல் சூசிதனையும் - பிருகனென்றும் பராக்கிரமத்தையுடையசூசியென்றும் பெயர்கொண்ட அவ்விரண்டுபேரையும், ஒருவர் ஒருவரை அறியா வண்ணம் வானில் போக்கினன் - ஒருத்தர் மற்றொருத்தரை அறியாதபடி வீரசுவர்க்கத்திற் செலுத்தினன்; (எ-று.)

ஒருத்தர்க்கொருத்தர் எவ்வளவுநெருக்கமாகப் பயின்ற மிக்கஅன்புள்ள அணுகியஉறவுமுறைமையையுடையராயினும், அம்முறைமை உடம்பைப்பற்றினதேயன்றி உயிரைப்பற்றினதன்றாதலின் உடம்பைவிட்டுஉயிர் நீங்கினவளவிலே அத்தன்மை ஒழிகின்ற இயல்பு விளங்க, 'ஒருவர் ஒருவரை அறியாவண்ணம் வானிற்போக்கினன்' என்றார்: சகோதரராய்ஒருங்குவந்தவர் இறந்து ஒருவர்ஒருவரையறியாமற் செல்லும்படி யென்றவாறு; அன்றி, இதற்கு-முன்பின்னாகாமற் சமகாலத்திலே இறக்கும்படி அழித்தானென்று கருத்துக்கொள்ளுதலுமாம். உடன்று சீறி-ஒருபொருட் பன்மொழி. (கஎசு)

[கடோற்கசன்மகனை அசுவத்தாமன் கொல்லுதல்.]

இகலிடிம்பன்மருமகனுந்திருமகனுங்குருமகனோடெதிர்ந்துபல்கா, லகலிடஞ்செஞ்சேறுகவமரருடனசுரரைப்போலமர்செய்காலைப், பகனுடன்காரிருள்பகைத்தாற்பலிக்குமோவஞ்சனபன்மனையப்போதிற், புகலிடம்பொன்னுலகாக்கிப்போக்கினனொருகணையாற்புரவித்தாமா.

(இ - ள்.) இகல் - வலிமையையுடைய, இடிம்பன் மருமகனும் - இடிம்பனது உடன்பிறந்தவளின் புத்திரனான கடோற்கசனும், திரு மகனும்-(அக்

கடோத்கசனது) சிறந்த புத்திரனான அஞ்சனபர்வனும், குரு மகனோடு - துரோணாசாரியனது புத்திரனான அசுவத்தாமனுடனே, பல் கால் எதிர்த்து - பலமுறை எதிரிட்டு, அகல் இடம் செம் சேறு ஆக - பரந்த போர்க்களத்தினிடம் (இரத்தப்பெருக்கினால்) சிவந்தசேறாகும்படி, அமரருடன் அசுரரை போல் அமர் செய் காலை - தேவர்களுடன் அசுரர்கள் (போர்செய்தல்) போலப் போர்செய்தபொழுது,— பகலுடன் கார் இருள் பகைத்தால் பலிக்குமோ - சூரியனுடனே கரியஇருள் பகைமைகொண்டாற் பயன்படுமோ? [பயன்படாது அழிந்தேவிடும்]; (அவ்வாறே), அ போதில் - அப்பொழுது, புரவித்தாமா - அசுவத்தாமன், (தன்னோடுமாறுபட்டெதிர்த்த), அஞ்சனபன்மனை—, ஒரு கணையால் - ஓரம்பினால், புகல் இடம் பொன் உலகு ஆக்கி போக்கினான் - அவன் செல்லுதற்குஉரிய இடம் வீரசுவர்க்கமாம்படி செலுத்தினான் [கொன்றான் என்றபடி]; (எ - று.)

கால்-காலமென்பதன் கடைக்குறை. இடிம்பன்மருமகன்-இடிம்பனது உடன்பிறந்தவளாகியஇடிம்பியினிடம் வீமசேனனுக்குப் பிறந்த குமாரன்; இவன்பிறந்தது, வீமன் உடன்பிறந்தவரையும் தாயையும் எடுத்துக்கொண்டு அரக்குமாளிகையினின்று தப்பி உயிர்பிழைத்துச் சென்றபொழுதென அறிக' (விவரம் முன் கதைத்தொடர்ச்சியிற் கூறப்பட்டது.) இவன் பின்பு தனதுதந்தையானவீமனையும் மற்றைஅவனுடன்பிறந்தவர்களையும் விட்டுப் பிரிந்துசெல்லுகையில, அன்போடு வணங்கி, அவர்கள் தன்னை வேண்டிய காலத்து நினைக்கும்படியாகவும், அங்ஙனம் நினைத்தமாத்திரத்திலே தான் வந்துஉதவுவதாகவும் வாக்குத்தத்தஞ்செய்து சென்று பின்னர் அங்ஙனமே அவர்கள் நினைக்கிறபோதெல்லாம் வந்து உதவிவந்தனனென்றும், பாரத யுத்தத்துக்கும் துணைநின்று உதவுகின்றனனென்றும் உணர்க. பூதேவனான அசுவத்தாமனுக்குத் தேவரும், அரக்கரான கடோற்கசனுக்கும் அவன்மகனுக்கும் அரக்கரும் உவமைகூறப்பட்டனர். பின்னிரண்டடி - எடுத்துக் காட்டுவமையணியின்பாற்படும். ஹிடிம்பன் - வடசொல். குரு - கௌரவ பாண்டவர்க்கு வில்லாசிரியன். 'மருமகனுந் திருமகனுங் குருமகனோடு' என்றவிடத்துப் பிராசமென்னுஞ் சொல்லணி காண்க. (கஎஎ)

[கடோற்கசனை அசுவத்தாமன் அடித்துத்தள்ளுதல்.]

மகன்பட்டசினங்கதுவவரையுறழ்தோட்கடோற்கசன்மாமலை
கள்வீசி, யகன்பட்டநுதல்வேழமன்னான்மேலெறிந்தெறிந்திட்டா
ர்த்தகாலைக், குகன்பட்டந்தனக்குரியகோமுனிவன்மாமைந்தன்வீ
மன்கையிற், பகன்பட்டபாடெல்லாம்படுத்தியொருகதாயுதத்தாற்
படியில்வீழ்த்தான்.

(இ - ள்.) (பின்பு), வரை உறழ் தோள் கடோற்கசன் - மலையையொத்த தோள்களையுடைய கடோற்கசன், மகன் பட்ட சினம் கதுவ - (தனது) புத்திரன் கொல்லப்பட்டதனாலாகிய கோபம் மிகமூள, அகல் பட்டம் நுதல் வேழம் அன்னான்மேல் - அகன்ற பட்டமணிந்த நெற்றியையுடைய யானை போல வலியவனான அசுவத்தாமன்மேல், மா மலைகள் வீசி எறிந்து எறிந்திட்டு - பெரிய மலைகளை யெடுத்து வேகமாகமிகுதியாய்எறிந்து, ஆர்த்த காலை - ஆரவாரித்தபொழுது,— குகன் பட்டந்தனக்கு உரிய கோ முனிவன் மா மைந்தன் - முருகக்கடவுளின் பெருமைநிலைக்குஉரியவனும் சிறந்தஅந்தணனான துரோணனது சிறந்தகுமாரனுமான அசுவத்தாமன்,— வீமன் கையில் பகன்பட்ட பாடு எல்லாம் படுத்தி - வீமசேனனதுகையிற் பகாசுரன் பட்ட பாடெல்லாம் (அக்கடோற்கசன்) படும்படி செய்து, ஒரு கதாயுதத்தால் படியில் வீழ்த்தான் - ஒருகதையினால் (அடித்து அவனை) நிலத்திலே தள்ளினான்.

ஹ்ருஷீக ஈசன் எனப் பிரிந்து, இந்திரியங்களுக்குத் தலைவனென்று பொருள்படும்; வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி: 'அ ஆ முன் இ ஈ வரின் இரண்டுங்கெட ஓர்ஏகாரம் தோன்றும்.' விடலை - ஆண்பாற் சிறப்புப்பெயர். உழக்கி—உழ என்பதன் பிறவினையான உழக்கு - பகுதி. அரிநாதஞ்செய்தல்-சிங்கம்கர்ச்சிப்பதுபோலக் கர்ச்சித்தல். சிங்கக்கொடியையுடைய வீரன் சிங்கநாதஞ்செய்தான் என ஒருசமத்காரந் தோன்றக் கூறினார். திருப்பாற்கடலைக்கடைந்த திருமால், பகைவர்சேனைக்கடலைக்கலக்குகிற வீமனுக்கு உவமை.பாற்கடல்கடைந்தபொழுது மத்தாகக்கொண்ட மந்தரமலை கடலில்ஆழ்ந்திடாதபடி அதனைத் திருமால் மகாகூர்மரூபங்கொண்டு கீழ்நின்று முதுகில்தாங்கியதும் அடங்க, 'கிரியெடுத்து' எனப்பட்டது. காலன் - (பிராணிகளின் ஆயுட்காலத்தைக்) கணக்கிடுபவன் : வடசொல். காலாள் - வாகனமின்றிக் கால்களால்நடந்துசெல்லும் ஆள்; மூன்றும்வேற்றுமை யுருபும்பயனுமுடன்தொக்கதொகை. (கஎரு)

[துரியோதனன்தம்பியரிருவரை வீமன் கொல்லுதல்.]

நிருபர்தொழுங்கனைகழற்கானிலவேந்தன்றம்பியரினெடும்போதாக, விருவர்புறங்கொடாமலதிர்ந்தெதிர்ந்திருதோள்வலிகாட்டவி ருவரோடு, மொருவரொருவரையறியாவண்ணமிவனொருவனுமேயுடன்றுசீறிப், பொருதுபிருகனையும்விறற்சூசிதனையும்வானிற்போக்கினனே.

(இ - ள்.) நிருபர்-அரசர்கள், தொழும் - வணங்குகிற, கனை கழல் கால்-ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த பாதத்தையுடைய, நிலம் வேந்தன் - பூமிமுழுவதுக்கும் அரசனான துரியோதனனது, தம்பியரில் - தம்பிமார்களுள், இருவர் - இரண்டுபேர், நெடும் போது ஆக - வெகுநேரமாக, புறங்கொடாமல் - முதுகுகொடாமல், அதிர்ந்து எதிர்ந்து - ஆரவாரஞ்செய்துகொண்டு எதிரிட்டு, இரு தோள் வலி காட்ட - (தங்கள்) இரண்டுதோள்களின் வலிமையை வெளிக்காட்ட,—இருவரோடும் - அந்தஇரண்டுபேருடனும், இவன் ஒருவனுமே - இந்த வீமனொருத்தன்தானே, உடன்று சீறி பொருது-மிகக்கோபித்துப் போர்செய்து, பிருகனையும் விறல் சூசிதனையும் - பிருகனென்றும் பராக்கிரமத்தையுடையசூசியென்றும் பெயர்கொண்ட அவ்விரண்டுபேரையும், ஒருவர் ஒருவரை அறியா வண்ணம் வானில் போக்கினன் - ஒருத்தர் மற்றொருத்தரை அறியாதபடி வீரசுவர்க்கத்திற் செலுத்தினன்; (எ-று.)

ஒருத்தர்க்கொருத்தர் எவ்வளவுநெருக்கமாகப் பயின்ற மிக்கஅன்புள்ள அணுகியஉறவுமுறைமையையுடையராயினும், அம்முறைமை உடம்பைப்பற்றினதேயன்றி உயிரைப்பற்றினதன்றாதலின் உடம்பைவிட்டு உயிர் நீங்கினவளவிலே அத்தன்மை ஒழிகின்ற இயல்பு விளங்க,'ஒருவர் ஒருவரை அறியாவண்ணம் வானிற்போக்கினன்' என்றார்: சகோதரராய்ஒருங்குவந்தவர் இறந்து ஒருவர்ஒருவரையறியாமற் செல்லும்படி யென்றவாறு; அன்றி, இதற்கு-முன்பின்னாகாமற் சமகாலத்திலே இறக்கும்படி அழித்தானென்று கருத்துக்கொள்ளுதலுமாம். உடன்று சீறி-ஒருபொருட் பன்மொழி. (கஎசு)

[கடோற்கசன்மகனை அசுவத்தாமன் கொல்லுதல்.]

இகலிடிம்பன்மருமகனுந்திருமகனுங்குருமகனோடெதிர்ந்துபல்கா, லகலிடஞ்செஞ்சேறுகவமரருடனசுரரைப்போலமர்செய்காலைப், பகனுடன்காரிருள்பகைத்தாற்பலிக்குமோவஞ்சனபன்மனையப்போதிற், புகலிடம்பொன்னுலகாக்கிப்போக்கினனொருகணையாற்புரவித்தாமா.

(இ - ள்.) இகல் - வலிமையையுடைய, இடிம்பன் மருமகனும் - இடிம்பனது உடன்பிறந்தவளின் புத்திரனான கடோற்கசனும், திரு மகனும்-(அக்

கடோத்கசனது) சிறந்த புத்திரனான அஞ்சநபத்மனும், குரு மகனோடு - துரோணாசாரியனது புத்திரனான அசுவத்தாமனுடனே, பல் கால் எதிர்ந்து - பலமுறை எதிரிட்டு, அகல் இடம் செம் சேறு ஆக - பரந்த போர்க்களத்தினிடம் (இரத்தப்பெருக்கினால்) சிவந்தசேறாகும்படி, அமரருடன் அசுரரை போல் அமர் செய் காலை தேவர்களுடன் அசுரர்கள் (போர்செய்தல்) போலப் போர்செய்தபொழுது,—பகலுடன் கார் இருள் பகைத்தால் பலிக்குமோ - சூரியனுடனே கரியஇருள் பகைமைகொண்டாற் பயன்படுமோ? [பயன்படாது அழிந்தேவிடும்]; (அவ்வாறே), அ போதில் - அப்பொழுது, புரவித்தாமா - அசுவத்தாமன், (தன்னோடுமாறுபட்டுஎதிர்த்த), அஞ்சனபன்மனை—, ஒரு கணையால் - ஓரம்பினால், புகல் இடம் பொன் உலகு ஆக்கி போக்கினான் - அவன் செல்லுதற்குஉரிய இடம் வீரசுவர்க்கமாம்படி செலுத்தினான் [கொன்றான் என்றபடி]; (எ - று.)

கால்-காலமென்பதன் கடைக்குறை. இடிம்பன் மருமகன்-இடிம்பனது உடன்பிறந்தவளாகிய இடிம்பியினிடம் வீமசேனனுக்குப் பிறந்த குமாரன்; இவன்பிறந்தது, வீமன் உடன்பிறந்தவரையும் தாயையும் எடுத்துக்கொண்டு அரக்குமாளிகையினின்று தப்பி உயிர்பிழைத்துச் சென்றபொழுதென அறிக: (விவரம் முன் கதைத்தொடர்ச்சியிற் கூறப்பட்டது.) இவன் பின்பு தனதுதந்தையானவீமனையும் மற்றைஅவனுடன்பிறந்தவர்களையும் விட்டுப் பிரிந்துசெல்லுகையில், அன்போடு வணங்கி, அவர்கள் தன்னை வேண்டிய காலத்து நினைக்கும்படியாகவும், அங்ஙனம் நினைத்தமாத்திரத்திலே தான் வந்துஉதவுவதாகவும் வாக்குதத்தஞ்செய்து சென்று பின்னர் அங்ஙனமே அவர்கள் நினைக்கிறபோதெல்லாம் வந்து உதவிவந்தனனென்றும், பாரதயுத்தத்துக்கும் துணைநின்று உதவுகின்றனனென்றும் உணர்க. பூதேவனான அசுவத்தாமனுக்குத் தேவரும், அரக்கரான கடோற்கசனுக்கும் அவன்மகனுக்கும் அரக்கரும் உவமைகூறப்பட்டனர். பின்னிரண்டடி - எடுத்துக்காட்டுவமையணியின்பாற்படும். ஹிடிம்பன் - வடசொல். குரு - கௌரவ பாண்டவர்க்கு வில்லாசிரியன். 'மருமகனுந் திருமகனுங் குருமகனோடு' என்றவிடத்துப் பிராச மென்னுஞ் சொல்லணி காண்க. (கஎஎ)

[கடோற்கசனை அசுவத்தாமன் அடிந்துத்தள்ளுதல்.]

மகன்பட்டசினங்கதுவவரையுறழ்தோட்கடோற்கசன்மாமலை
கள்வீசி, யகன்பட்டநுதல்வேழமன்னான்மேலெறிந்தெறிந்திட்டா
ர்த்தகாலைக், குகன்பட்டந்தனக்குரியகோமுனிவன்மாமைந்தன்வீ
மன்கையிற், பகன்பட்டபாடெல்லாம்படுத்தியொருகதாயுதந்தாற்
படியில்வீழ்த்தான்.

(இ - ள்.) (பின்பு), வரை உறழ் தோள் கடோற்கசன் - மலையையொத்த தோள்களையுடைய கடோற்கசன், மகன் பட்ட சினம் கதுவ-(தனது) புத்திரன் கொல்லப்பட்டதனா லாகிய கோபம் மிகமூள, அகல் பட்டம் நுதல் வேழம் அன்னான்மேல் - அகன்ற பட்டமணிந்த நெற்றியையுடைய யானை போல வலியவனானஅசுவத்தாமன்மேல், மா மலைகள் வீசி எறிந்து எறிந்திட்டு - பெரிய மலைகளை யெடுத்து வேகமாகமிகுதியாய்எறிந்து, ஆர்த்த காலை- ஆரவாரித்தபொழுது,—குகன் பட்டந்தனக்கு உரிய கோ முனிவன் மா மைந்தன் - முருகக்கடவுளின் பெருமைநிலைக்குஉரியவனும் சிறந்தஅந்தணனான துரோணனது சிறந்தகுமாரனுமான அசுவத்தாமன்,—வீமன் கையில் பகன்பட்ட பாடு எல்லாம் படுத்தி-வீமசேனனதுகையிற் பகாசுரன் பட்டபாடெல்லாம்(அக்கடோற்கசன்)படும்படி செய்து, ஒரு கதாயுதத்தால் படியில் வீழ்த்தான் - ஒருகதையினால் (அடித்துஅவனை)நிலத்திலே தள்ளினான்.

கடம் - குடம்; உத் கசம் - மயிரில்லாதது: இவனுடைய குடம் போன்ற தலை மயிரின்றியிருந்ததனால், கடோத்கச னென்று இவனுக்குப் பெயரிடப்பட்ட தென்று வடநூல் கூறும்; குணசந்திபெற்ற பெயர். மகன் பட்ட சினம் - புத்திரனிறந்ததனாலாகிய சோகம். உறழ் - உவமவாசகம். மலைபோன்ற தோள்களை யுடையவன் பெரியமலைகளை வீசின னென ஒருவகைச்சமத்காரந்தோன்றக் கூறினர்.

அகல் என்ற வினைத்தொகையை, பட்டம் நுதல் என்ற இரண்டுக்குங் கூட்டலாம். அகல் + பட்டம் = அகன்பட்டம்; "குறில்செறியா லள" என் னுஞ்சூத்திரத்து 'பிற' என்றதனால் அமைக்க. குகன்பட்டந்தனக்குரிய மைந் தன் எனஇயையும்; முருகக்கடவுள்போல அசுவத்தாமனும் சிவகுமாரனா கிய சிறப்புடையா னென்பதாம். குஹன் என்ற வடமொழிப்பெயர் - அஞ் ஞானவிருளை யழிப்பவ னென்றும், அடியார்களுடைய இதயமாகிய குகை யில் தங்குபவ னென்றும், தேவசேனையைப் பாதுகாப்பவ னென்றும் கா ரணப்பொருள்படும்.

வீமன்பகனையழித்தவரலாறு. முன்கதைத்தொடர்ச்சியிற் கூறப்பட்டது. "உலாவருந் தனது தாதை யொத்த வலியுடைய காளை கழ லுதையி னால், விலாவொடிந்து தடமார்பொடிந்து மிடல்வெரிநொடிந்து படுவெம் பிணப், புலாலணைந்த விருகவு ளொடிந்து பொருபுய மொடிந்து கடை யொத்தவாய், நிலாவெழுநகொடியவெயி றொடிந்து செயலின்றி வாணிருத னிற்கவே" எனக் கீழ் வேத்திரகீயசருக்கத்தில் வந்த செய்யுளினால், வீமன்கையிற் பகன்பட்ட பாடெல்லாம் அறிக. பாடு - வருத்தம். (௧௭௮)

[கடோற்கசனைக் கொல்லும்படி துரியோதனன் வேண்டியதற்குக் கர்ணன் உடன்படாமை.]

மோகித்துவிழுமரக்கன்மீண்டெழுந்துமோகரிக்கமுடிமகீப
ன்,வேகித்துக்கன்னனைப்பார்த்திவனுயிரைவீட்டுகெனவேகத்தண்
டாற்,சோகித்துத்தளர்ந்தான்மேற்றொடேன்விசயனுயிருணவென்
றொடைபோய்ச்சாலத்,தாகித்ததிப்பொழுதேகொன்றுனக்குக்கட
ன்ஞாலந்தருவேனென்றான்.

(இ - ள்.) மோகித்து விழும் - (இங்ஙனம்) மூர்ச்சித்துக் கீழவிழுந்த, அரக்கன் - கடோற்கசன், மீண்டு எழுந்து மோகரிக்க - பின்பு மயக்கந் தெளிந்து ஆரவாரஞ்செய்ய,— (அதுகண்டு), முடி மகீபன் - கிரீடாதிபதி யான துரியோதனன், வேகித்து - விரைவுகொண்டு, கன்னனை பார் த்து—, இவன் உயிரை வீட்டுக என - 'இக்கடோற்கசனுயிரை (இப்பொ ழுது) ஒழிப்பாயாக' என்றுசொல்ல,— (அதற்குக் கர்ணன்),— 'வேகம் தண் டால் சோகித்து தளர்ந்தான் மேல் - விசையுள்ள (அசுவத்தாமனது) கதை யினால் வருந்தித் தளர்ச்சியுற்ற இவன்மேல், தொடேன் - (இப்பொழுது நான்) அம்புதொடுக்கமாட்டேன்: என் தொடை - எனது அம்பு, போய்—, விசயன் உயிர் உண - அருச்சுனனது உயிரைக் கொள்ளுதற்கு, சால தாகித் தது - மிக வேட்கைகொண்டுள்ளது; (ஆதலால்), இப்பொழுதே கொன்று உனக்கு கடல் ஞாலம் தருவேன் - இப்பொழுதே (அருச்சுனனைக்) கொ ன்று உனக்குக் கடல்சூழ்ந்த நிலவுலகம் முழுவதையும் (இடையூறின்றித் தனியேயுரியதாம்படி) கொடுப்பேன்', என்றான் - என்றுசொன்னான்; (எ-று.)

இதனால், கர்ணன் தருமயுத்தஞ்செய்தலிலேயே விருப்புடையானென் பதும், தனது திறமையை மிகமேம்பட்டதாகக் கருதும் மிக்கசெருக்கு டையா னென்பதும் நன்குவிளங்கும். சோர்ந்தசமயத்திற் கொல்லுதல் நீதியன் றாதலின், அதற்கு உடன்படேன் என்றான். வீட்டுக, வீடு என்ப தன் விகாரமான வீடு என்பதன் பிறவினையாகிய வீட்டு - பகுதி. (௧௭௯)

[கிருபாசாரியன் கர்ணனைப் பரிகசித்தல்.]

நிருபனுடனிரவிமகன்புகன்றவுரைகேட்டருகேநின்றவிற்கைக்,
கிருபன்மிகநகைத்தெதிரேகிட்டினுன்முதுகிடுவை கிரீடிதன்னைப்,
பொருபகழிக்கிரையாகப்போக்குகின்றே னெனமொழிவைபோர்வ
ல்லோர்க, ளுருவழியத்தம்வலிமையுரைப்பரோவெனவுரைத்தானு
ரையான்மிக்கோன்.

(இ - ள்.) நிருபனுடன் - துரியோதனராசனுடனே, இரவி மகன் - சூரியகுமாரனுன கர்ணன், புகன்ற - சொன்ன உரை - அந்த வார்த்தையை, கேட்டு—, அருகே நின்ற - சமீபத்திலே நின்ற, உரையால் மிக்கோன் - புகழ்ஞற் சிறந்தவனுன, வில் கை கிருபன் - வில்லையேந்திய கையையுடைய கிருபாசாரியன், மிக நகைத்து - மிகுதியாகச் சிரித்து, (கர்ணனை நோக்கி), 'எதிரே கிட்டினுல் முதுகு இடுவை - (அருச்சுனன்) எதிரிலே கிட்டினுற் புறங்கொடுப்பாய்; (அவன்கிட்டாதபொழுது), கிரீடிதன்னை பொரு பகழிக்கு இரை ஆக போக்குகின்றேன் என மொழிவை - அருச்சுனனைப் போர்செய்கிற அம்புகட்கு உணவாம்படி ஒழிக்கிறேனென்று வீரவாதங்கூறுவாய்; போர் வல்லோர்கள் உரு அழிய தம் வலிமை உரைப்பரோ - போர்செய்தலில் வல்லமையுள்ளவர்கள் தமதுபெருமைகெடத் தமதுவலிமையைத் தாமே எடுத்துச்சொல்வார்களோ?' என-என்று, உரைத்தான் - சொன்னுன்; (எ - று.)

இப்பாட்டின் உ, ந - ஆம் அடிகளை இச்சருக்கத்தின் ருகூ - ஆம் பாட்டின் முதலிரண்டடிகளோடு ஒப்பிடுக. தற்புகழ்ச்சி செய்துகொள்ளுதல் தனதுபெருமைக்குக் குறைவாதலால், 'உருவழியத் தம்வலிமையுரைப்பரோ' என உரைத்தான்; "தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர், நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்," "தோன்ற தோற்றித் துறைபல முடிப்பினுந், தான் தற்புகழ்தல் தகுதியன்றே," "கற்றனவுங் கண்ணகன்ற சாயலு மிற்பிறப்பும்,பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும் தானுரைப்பின், மைத்துனர் பல்கி மருந்திற் றணியாத, பித்தனென் றெள்ளப்படும்" என்றவை இங்கு நோக்கத்தக்கன. உரு அழிய - தனது பெருமிதம் (பலமுறை)கெடாநிற்கையிலும் என்றும் உரைக்கலாம். உரையால் மிக்கோன் - பேசுந்திறத்தாற் சிறந்தவனெனினுமாம்; புறங்கூறலாகவன்றி எதிரிலேயே இகழ்ந்துகூறின கூற்றின் சிறப்பைப் பாராட்டுவார் 'உரையான்மிக்கோன்' என்றாரென்க. (கஅ0)

[கர்ணன் அருச்சுனனை யெதிர்த்துத் தோற்றல்.]

அம்மொழிதன்செவிசுடப்போ யக்கணத்தேவிசயனுடனங்க
ராயன், வெம்முனைசெய்போரழிந்துதேரழிந்து வென்னிட்டான்
மீண்டுமீண்டு, மம்முறையிற்பற்குனனுலாவியொழிந்தவரரசரநேக
கோடி, யெம்மொழிகொண்டுரைப்பரிதானுரைக்கவெமக்காயிரநா
வில்லைமாதோ.

(இ - ள்.) அ மொழி - கிருபாசாரியன்கூறிய அந்தவார்த்தை, தன்செவி சுட - தனது காதுகளை மிகவும் வருத்தியதனுல், அ கணத்தே அந்தக்ஷணத்திலேயே, அங்க ராயன் - அங்கதேசத்துஅரசனுன கர்ணன், விசயனுடன் - அருச்சுனனுடனே, போய் - (போர்க்குச்) சென்று, (விரைவிலே அருச்சுனனுல்), வெம் முனை செய் போர் அழிந்து - கொடிய போர்க்களத்திற் செய்கிற (தனது) போர்த்திறம் அழிபட்டு, தேர் அழிந்து - தேர் அழிபட்டு, மீண்டும் மீண்டும் - மறுபடியும் மறுபடியும் [பலமுறை யென்றபடி], வென் இட்டான் - புறங்கொடுத்தான்; அ முறையில் - அச்சமயத்திலே, பற்குனனுல் ஆவி ஒழிந்தவர் அரசர் - அருச்சுனனுல் உயிரொழிந்த அரசர்கள், அநேக

கோடி - பல கோடிக்கணக்கினராவர்; (இப்படிப்பட்ட அருச்சுனனது போர்த்திறம்), எம் மொழி கொண்டு உரைப்பு அரிது - எமது வாக்கினாற் சொல்லுதற்கு அரியது; (ஏனெனில்,—) உரைக்க எமக்கு ஆயிரம் நா இல்லை - பேசுதற்கு எமக்கு ஆயிரம்நாக்கு இல்லை; (எ - று.)— ஆல், மாது ஓ - ஈற்றசைகள்.

ராயன் - ராஜன் என்ற வடசொல்லின் திரிபு. செவிசுட - காதுகளின் வழியாய்ச்சென்று [கேட்கப்பட்டு] மனத்தைவருத்தவே யென்றபடி. வெம் முனை செய் போர் - கொடுமையாக முனைந்துசெய்கிற போர் எனினுமாம். 'ஆவியழிந்தவர்' என்பதும் பாடம். ஆயிரம்நாக்கு இருந்தாலன்றி அது சொல்லமுடியா தென்பதாம். (கஅக)

[அசுவத்தாமனது போரும், சூரியாஸ்தமனமும்.]

அந்தமுனை தனின்மீண்டு மந்தணன்றன் றிருமதலை குந்தி போசன், மைந்தரிரு வரையிரண்டு வடிக்கணையான் மடிவித்தான் மாயோன் வன்கைச், செந்திகிரி தனிலடங்கி முடங்கியதன் கிரணத்தின் சிறுமை நாணி, யுந்துதிரைச் சிந்துவினி லோராழித் தேரோனு மொளித்திட் டானே.

(இ - ள்.) மீண்டும் - பின்பும், அந்த முனைதனில் - அந்தப்போர்க்களத்திலே, அந்தணன்தன் திரு மதலை - துரோணாசாரியனது சிறந்த குமாரன் [அசுவத்தாமன்], குந்திபோசன் மைந்தர் இருவரை - குந்திபோசராசனது புத்திர ரிரண்டுபேரை, இரண்டு வடி கணையால் - கூரிய இரண்டுஅம்புகளினால், மடிவித்தான் - அழியச்செய்தான்; (அப்பொழுது), ஓர் ஆழி தேரோனும் - ஒற்றைச்சக்கரமுள்ள தேரையுடையவனான சூரியனும்,— மாயோன் வல் கை செம் திகிரிதனில் அடங்கி முடங்கிய தன் கிரணத்தின் சிறுமை நாணி - கண்ணபிரானது வலிய திருக்கையிலுள்ள சிவந்தசக்கரத்தினுள் அடங்கிமறைந்த தனது ஒளிகளின் எளிமையைக்குறித்து வெட்கப்பட்டு, உந்து திரை சிந்துவினில் ஒளித்திட்டான் - வீசுகின்ற அலைகளையுடைய கடலிலே மறைந்திட்டான்; (எ - று.)

குந்திபோசன் - குந்தியின் வளர்த்ததந்தை. சூரியன்அஸ்தமித்தல் மேல்கடலில்மூழ்கிமறைதல்போலத்தோன்றுகிற இயல்பினிடத்து, தன்கிரணம் கண்ணன்கைச்சக்கரத்தினுள் அகப்பட்டு மறைபட்ட அவமானத்துக்கு வெள்கிக் கடலிலொளித்தானென்று கவி தானாக ஒரு காரணங்கற்பித்துக் கூறினமையால், ஏதுத்தற்குறிப்பேற்றவணி. 'வண்கை' என்ற பாடம், ஈகைக்குணமுள்ள கை யென்று பொருள்படும். வடிக்கணை - வடித்தலையுடைய கணை: இரண்டனுருபும் பயனுந் தொக்கதொகை. மூன்றாமடியில் 'அடங்கிமுடங்கிய'என்றவிடத்தும், நான்காமடியில் 'உந்துதிரைச் சிந்துவினில்'என்றவிடத்தும் பிராசமென்னுஞ்சொல்லணிகாண்க. (கஅஉ)

## இனி, இராத்திரி யுத்தம்.

### வேறு.

[துரியோதனன் இரவிலும் போர்செய்யத் தொடங்குதல்.]

இசையினும்பெருக நன்றெனத்தனதியற்கை யான்மிகவளர்த்திடும், வசையினுங்கரிய விருள்பரந்துழிவ யங்குதீபநெடுவாளினா, னிசையினும்பொருது மென்று தெவ்வர்முனை நேர்நடந்தனனெருங்குகுன், றசையினும்புடவி யசையினுஞ்சமரி லசைவிலாததனி யாண்மையான்.

(இ - ள்.) நெருங்கு குன்று அசையினும் - ஒன்றோடொன்று நெருங்கிய மலைகள் சலித்தாலும், புடவி அசையினும் - பூமி சலித்தாலும், சமரில்

அசைவு இலாத - போரில் தான்சலித்தலில்லாத, தனி ஆண்மையான் - ஒப்பற்ற பராக்கிரமமுள்ளவனான துரியோதனன்,—இசையினும் பெருக நன்று என தனது இயற்கையால் மிக வளர்த்திடும் வசையினும் கரிய இருள் பரந்த உழி - புகழைக்காட்டிலும் மிகவும் நல்லதென்று கருதித் தனதுகொடிய இயல்பினால் மிகுதியாகத்தான்வளரச்செய்கிற பழியைக்காட்டிலுங் கருமையான இருட்டுப் பரவியபொழுது,—வயங்கு தீபம் நெடு வாளினால் நிசையினும் பொருதும் என்று - விளங்குகிற விளக்குக்களின் மிக்கஒளியினது உதவியால் இராத்திரியிலும் போர்செய்வோ மென்று நிச்சயித்து, தெவ்வர் முனை நேர் நடந்தனன்-பகைவர்கள்முன்னிலையிலே எதிர்த்துச்சென்றான்.

சூரியன்அஸ்தமித்து இராப்பொழுதாகி எங்கும்இருள்மூடிக்கொள்ளவும், போரிற்சிறிதுஞ்சலிப்புறாத துரியோதனன் 'இரவிலும் பொருவோம்' என்று துணிந்து பகைவரை யெதிர்த்துச் சென்றனனென்பதாம்.

நன்றென வளர்த்திடும் என்றுஇயையும். "வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய, வாழ்வாரே வாழாதவர்" என்ற நீதியை மனத்திற் கொண்டு வசையொழிய இசைபெற்றுவாழ்தல் முறைமையாயிருக்க அங்ஙனஞ்செய்யாது இசையொழியவசைபெற்றுவாழ்கிற துரியோதனன் கீர்த்தியினும் அபகீர்த்தியையே சிறந்ததென்று மதித்தனன்போலு மென்பார், 'இசையினும் பெருகநன் றென வளர்த்திடும் வசை' என்றார்.

கீர்த்தியை வெண்ணிறமுடைய தென்றும், அபகீர்த்தியைக் கருநிறமுடைய தென்றுங் கூறுதல், கவிமரபு. புகழ்பழிகளுட் புகழின்பெருமையைச் சிறிதும் பாராட்டாது துரியோதனன் தான் மேன்மேல் ஈட்டுகிற பழியினுங் கருமையான இரு ளென்று, இருளின் கருநிறமிகுதியை எடுத்துக்கூறினர். அசலமாகிய மலையும் அசலையாகிய பூமியும் தம்தம் சலநமின்றி ஸ்திரமாகஇருக்கும்நிலைமை மாறிச் சலிப்பதானாலும் தான் போரில் உறுதிநிலை கலங்காதவ னென்க. தனது இயற்கை - தனது இயல்பான தீக்குணம்; பழிபாவங்கட்குஇடமானதீமையை யிழைத்து வசையைவளர்ப்பது துரியோதனனுக்கு இயற்கையிலமைந்ததொரு தீக்குணமென்க. நிசை - ஆவீறுஜயான வடசொல். தனக்குப் பிராணபதமான சைந்தவ னிறந்தபின்பும் துரியோதனன் போர்செய்யுங்கருத்தையொழியாது இரவிலும்போர் செய்யத் துணிந்தன னாதலால், 'சமரிலசைவிலாத தனியாண்மையான்' என்றார்.

இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ்சீர்கள் மாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறாஞ் சீர்கள் கூவிளங்காய்ச்சீர்களும், ஏழாவது விளச்சீரு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (கஅ௬)

[துரியோதனன் தன்சேனைமுழுவதும் நிறைய விளக்கேடுப்பித்தல்.]

பகலிராவரவழைத்தனன்பகைவர்பாகனென்றுபடுபகலையவ்
வகலிராவினிலழைத்தனன்கொலெனவண்டகூடமுறவிருளறுத்
திகலிராகவொளியுமிழ்விளக்கினமெடுக்கவென்றுகடிதேவினான்
றகலிராததொர்மனத்தினான்வலியதனதனேர்தருதனத்தினான்.

(இ - ள்.) பகைவர் பாகன் - (தனக்குப்) பகைவர்களான பாண்டவர்கட்கு உரிய தேர்ப்பாகனான கண்ணன், பகல் இரா வர அழைத்தனன் - (சூரியனைச் சக்கரத்தால் மறைத்துப்) பகலிலே இரவை வரும்படி செய்தான், என்று-என்று எண்ணி,(அதற்கு மாறாக), படு பகலை-நடுப்பகற்பொழுதை,அ அகல்இராவினில்-அன்றைத்தினத்துநீண்டஇராத்திரியிலே,அழைத்தனன்கொல் - (இவன்)வரவழைத்தானோ? என-என்று (காண்பவர்)கூறும்படி, —தகல் இராதது ஓர் மனத்தினான் வலிய தனதன் நேர்தரு தனத்தினான் - தக்கஉயர்குணமில்லாததொரு மனத்தையுடையவனும் வலிமையு

டைய குபேரன்போன்ற செல்வமுடையவனுமான துரியோதனன், அண்டகூடம் உற இருள் அறுத்து இகல் - அண்டகோளத்தினிடம் முழுவதிலும் இருளை யொழித்து எதிர்க்கவல்ல, இராகம் ஒளி உமிழ் விளக்கு இனம் - சிவந்த ஒளியை வீசுகிற விளக்குக்களின் கூட்டத்தை, எடுக்க-ஏற்றுவீராக, என்று—, கடிது ஏவினன் - விரைவில் (ஏவலாளர்க்குக்) கட்டளையிட்டான்.

சயத்திரதனைக்கொல்லுதற்பொருட்டுக் கண்ணன் பகலில்இரவைவருவித்தபடியால் அதற்குமாறாகத் துரியோதனன் இரவிற்பகலைவரச்செய்தானென்று பார்த்தவர்வியந்துரைக்கும்படி இருளென்பதுசிறிதுமில்லாதவாறு சுடர்விளக்கெடுக்க வென்று கட்டளையிட்டன னென்பதாம்: தற்குறிப்பேற்றவணி. பஞ்சபாண்டவர்களில் ஒருத்தர்க்கொருத்தர் அன்புரிமையாலுள்ள ஒற்றுமை விளங்க, அருச்சுனன்பாகனைப் பகைவர்பாக னென்று பொதுப்படக் கூறினார்; இனி, அத்தொடர்-பகைவர்பக்கத்தவ னென்றும் பொருள் படும். பாகம் - பகுதி; வடசொல். படு பகலை - கழிந்துபோன பகற்பொழுதை யெனினுமாம். இகல்ஒளி - (மற்றையொளிகளைப்) பகைக்கின்ற ஒளியுமாம். இராக்கதர்க்கன்றி மனிதர்க்குப் போர்செய்யஉரியதல்லாத இராப்பொழுதில்விளக்கொளியினுதவிகொண்டுபோர்செய்யக்கருதிப் பகல்போல வெளிச்சமுண்டாக்குமாறு சிறந்தவிளக்குக்களை மிகுதியாகஏற்றும்படி கட்டளையிட்டதற்குக் காரணம் துரியோதனனது தீக்குணமும் செல்வச்செருக்குமென்பது, ஈற்றடியினால் விளங்கும். மனத்தினன்வலிய - நெஞ்சுறுதியுடைய எனினுமாம்; தனத்தினனுக்கு அடைமொழி. ராகம் - வடசொல். கடிதுஎடுக்க வென்றும் இயைக்கலாம். தகல்-தகுதி, யோக்கியதை: தொழிலாகுபெயர். தநதன் என்ற வடசொல் - செல்வத்தைத் தருபவ னென்றும், செல்வத்தைக் காப்பவ னென்றும் காரணப்பொருள்படும். ஈற்றடியில் 'மனத்தினன்', 'தனத்தினன்' என்றவிடத்துப் பிராசங் காண்க. (கஅ௪)

[தருமபுத்திரனும் தன்சேனைமுழுவதும் விளக்கேடுப்பித்தல்.]

பொங்கியாடரவெழுந்தநேகவிதமானதென்றமரர்புகலுமா
றங்குவாளரவுயர்த்தகோனினைவறிந்தளப்பரியவாகவ
மெங்குமானைபரிதேர்கடோறுமொளிர்தீபகாகளமெடுக்கவே
சங்குதாரையெழநின்றனன்றருமன்மதலைதம்பியர்கடம்மொடும்.

(இ - ள்.) அங்கு - அப்பொழுது,—தருமன் மதலை - யமதருமராசனது குமாரன் [தருமபுத்திரன்],—வாள் அரவு உயர்த்த கோன் நினைவு அறிந்து - கொடியபாம்புவடிவத்தை(க் கொடியில்) உயரநிறுத்திய துரியோதனராசனது எண்ணத்தை அறிந்து,—ஆடு அரவு பொங்கி எழுந்து அநேக விதம் ஆனது என்று அமரர் புகலும் ஆறு - படமெடுத்தாடுந்தன்மையுள்ள ஆதிசேஷன் சீறி(ப் பாதாளத்தினின்று) மேலெழுந்து பலவகையாகத் தோன்றியதென்று தேவர்கள் (ஒப்புமையாற்) சொல்லும்படி, அளப்பு அரிய ஆகவம் எங்கும் ஆனை பரி தேர்கள்தோறும் ஒளிர் தீப காகளம் எடுக்க - அளவிடுதற்குஅருமையான [மிகப்பரந்த] போர்க்களம் முழுவதிலும் ஆனைகள் குதிரைகள் தேர்களென்னும் இவற்றிலெல்லாம் விளங்குகிற விளக்குக்கலங்களை அமைக்க(ச்சொல்லி),—சங்கு தாரை எழ - சங்கவாத்தியங்களும் தாரை யென்னும் ஊதுகருவிகளும் மிக ஒலிக்க, தம்பியர்கள்தம்மொடும் - (வீமன் முதலிய) தம்பிமார்களுடனே, நின்றனன் - (போர்க்குச் சித்தனாய்) நின்றான்; (எ - று.)

போர்க்களத்திற் பலவிடத்தும் அநேகவிளக்குகள் விளங்குவது, தனது ஆயிரம்முடிகளிலு முள்ள மாணிக்கங்களின் சோதி விளங்க ஆதிசேஷன் மேலெழுந்தாற்போன்றது என்று வருணித்தார்; உவமையணி. இத்தோற்றத்தின்சிறப்பு வானத்திலிருந்து போர்காண்கிற தேவர்கட்கே நன்கு விளங்கு மாதலால், 'அமரர்புகலுமாறு' எனப்பட்டது. சங்குதாரையெழு

தல், போர்தொடங்குதற்கு அறிகுறி. பொங்கி யெழுந்து என இயையும்; பொங்கி ஆடு எனஇயைத்து உரைப்பினுமாம். அரவு என்ற பாம்பின்பொதுப்பெயர், இங்குச் சிறப்பாய்ச் சர்ப்பராஜனைக் குறித்தது. அறிந்து நின்றனன் எனக் கூட்டுக. (கஅரு)

[இருதிறத்துவீரரும் தனித்தனி எதிர்த்துப் போர்தொடங்குதல்.]

கருதிவாகைபுனைவிசயன்மேல்விசயகன்னன்முந்தியமர்கடுகினான்
கிருதவன்மனெனும்விருதன்மாமுரசகேதனன்றனெதிர்கிட்டினான்
சுருதிமாமுனிதுரோணனும்பழையதிட்டத்துய்மனொடுதுன்னினான்
பொருதுமாய்வனெனவீமனோடுயர்புயங்ககேதுமிகுபோர்செய்தான்.

(இ - ள்.) வாகை - வெற்றியையே, கருதி - பிரதானமாக எண்ணி, புனை - மேற்கொள்கிற, விசயன்மேல் - அருச்சுனன்மேல், விசய கன்னன் - வெற்றியையுடைய கர்ணன், முந்தி அமர் கடுகினான் - முற்பட்டுவந்து போரை விரைவாகத்தொடங்கினான்; கிருதவன்மன் எனும் விருதன் - கிருதவர்மா வென்ற வீரன், மா முரசகேதனன்தன் எதிர் கிட்டினான் - பெரிய பேரிகைவடிவத்தையெழுதிய கொடியையுடையவனான தருமபுத்திரனது எதிரிலே போர்செய்யச் சமீபித்தான்; சுருதி மா முனி துரோணனும் - வேதம்வல்ல சிறந்த அந்தணனான துரோணாசாரியனும், பழைய திட்டத்துய்மனொடு துன்னினான் - (தனக்குப்) பழம்பகையாகத் தோன்றியுள்ளவனான திட்டத்துய்மனுடன் (போர்க்கு) நெருங்கினான்; பொருது மாய்வன் என - போர்செய்து இறப்பேனென்று துணிந்து, வீமனோடு—, உயர் புயங்க கேது - உயர்ந்த பாம்புக்கொடியையுடையவனான துரியோதனன், மிகு போர் செய்தான் - மிக்க போரைச் செய்தான்; (எ - று.)

வாகை யென்னும் ஒருவகைமரத்தின் பெயர் - அதன்மலர்மாலையை அறிகுறியாகக்கொண்ட வெற்றிக்கு, மும்மடியாகுபெயர். துருபதன்செய்த புத்திரகாமயாகத்தின் அக்கினியினின்று துரோணனைக்கொல்லுதற்கென்றே தோன்றியமை தோன்ற, 'பழையதிட்டத்துய்மன்' என்றார். புஜங்கம் - வடசொல்; வளைந்துசெல்வது. கருதி-(அருச்சுனனைவெல்ல)நினைத்து, அமர்கடுகினானென இயைத்து உரைப்பினுமாம். 'வாகைபுனை' என்ற அடைமொழியின் பொருத்தத்துக்கும் 'விசயன்' என்றபெயரின் காரணப்பொருளுக்கும் ஏற்ப, 'விசய கன்னன்' என்பதற்கு - (முன்பு பலமுறை) நீங்கிய சயத்தையுடைய கர்ணன் என வுரைத்தலு மொன்று; வி = விகதம்: போனது. 'விசையன்மேல் விசையகன்னன்' என்ற பாடத்துக்கு, விசையன் என்பது - இடைப்போலி யென்றும், விசைய கன்னன் - போர்வேகத்தையுடைய கர்ணன் என்றும் பொருள்காண்க. வாகைபுனை விசயன் - வெற்றிமாலைசூடுதற்குரிய அருச்சுன னென்றுமாம். பொருதுமாய்வன் - போரில் தோல்வியுற்றுமீளேன் என்றவாறு. புஜங்ககேது - வடமொழி அன்மொழித்தொகையாகிய பெயர். முந்தியமர்கடுகினான், எதிர்கிட்டினான், துன்னினான், போர்செய்தான் என்றவை - ஒருபொருளனவாதலால், பொருட்பின்வருநிலையணி. (கஅசு)

சல்லியன்பெருகுசல்லியத்தொடுசதானிகன்றனொடுபோர்செய்தான்
வல்லியம்புனைகடோற்கசன்றனொடுபோர்செய்தான்முனிவன்மைந்தனு
மெல்லியங்குசுட்ரினுமணிச்சுடர்களெழுமடங்கொளியெறிக்கவும்
பல்லியம்பலமுழங்கவுந்தரணிபாலரிப்படிபகைக்கவே.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) சல்லியன்—, பெருகு சல்லியத்தொடு - மிக்க அம்புகளினால், சதானிகன்தனொடு போர் செய்தான் - சதாநீகனுடன் போர்செய்தான்; வல்லியம் புனை கடோற்கசன்தனொடு - புலியையொத்த கடோற்கசனுட

னே, முனிவன் மைந்தனும் - துரோணன்மகனான அசுவத்தாமனும், போர் செய்தான்—; எல் இயங்கு சுடரினும் - பகலிலே பொருந்திவிளங்குகிற சூரியனது ஒளியைக்காட்டிலும், எழு மடங்கு - ஏழுபங்கு அதிகமாக, மணி சுடர்கள் - அழகிய விளக்குக்கள். ஒளி எறிக்கவும் - ஒளியை வீசவும், பல் இயம் பல முழங்கவும் - பலவகைப்பட்ட வாத்தியங்கள் பலவும் மிகஒலிக்கவும், தரணிபாலர் - அரசர்கள், இப்படி பகைக்க - இங்ஙனம் மாறுபட்டு எதிர்க்க, (எ - று.)—அருச்சுனன் கர்ணனைப் பிளந்தா னென்று அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

பெருகு சல்லியத்தொடு - மிக்கவருத்தங்கருந்தன்மையுடனே யென்றுமாம். சதாநீக னென்ற பெயர் - நூறுசேனையையுடையா னென்று பொருள்படும்; இவன், மத்ஸ்யதேசத்தரசனான விராடனது தம்பி. புலி - கொடுமைக்கு உவமை. புனே - உவமவுருபு. ஒன்றன்கூட்டமும் பலவினீட்டமும் பற்றி, 'பல்லியம்பல' என்று இரண்டுபன்மை கூறினர். தரணி பாலர் - பூமியை யாள்பவர். 'சல்லியன் பெருகுசல்லியத்தொடு' என்றவிடத்து மடக்கு என்னுஞ் சொல்லணி காண்க. சல்லியத்தொடு என்றவிடத்து, 'ஓடு' என்னும் மூன்றனுருபு-கருவிப்பொருளது; "ஊசியொடுகுயின்ற தூசும்பட்டும்" என்றவிடத்துப்போல. மணிச்சுடர்கள் - இரத்தினதீபங்களுமாம். மணிச சுடர்க ளென்பதற்கு - தாம்அணிந்த ஆபரணங்களின் இரத்தினகாந்திக ளென்று உரைப்பாரு முளர். (கஅஎ)

[அருச்சுனன் கர்ணனை வெல்லுதல்.]

எற்றருந்தபனனேகினனினியெனக்குவாசிகொடிநீடுதேர் [ர்
முற்றருங்கனலினொளியெழுந்ததெனமுரணழிந்திடமொழிந்துபோ
விற்றருங்கணைகளால்விழப்பொருதுவெயிலவன்சுதனைமீளவும்
பிற்றரும்படிபிளந்தனன்றனுசர்பின்னிடப்பொருதபெற்றியான்.

(இ - ள்.) தனுசர் பின் இட பொருத பெற்றியான் - (நிவாதகவசர் காலகேயர் என்னும்) அசுரர்கள் பிறபிடும்படி (முன்பு) போர்செய்த பெருமையையுடையவனான அருச்சுனன், (கர்ணனைப்பார்த்து), 'எல் தரும் தபனன் ஏகினன் - (உனதுதந்தையான) ஒளியைவெளிவீசுகிற சூரியனே போய்விட்டான்: இனி - இப்பொழுது, எனக்கு வாசி கொடி நீடு தேர் முன் தரும் கனலின் ஒளி எழுந்தது - எனக்கு (நான்குவெள்ளைக்) குதிரைகளும் குரங்குக்கொடியும் உயர்ந்ததேரும் முதலியவற்றை முன்புகொடுத்த அக்கினியின் ஒளி தோன்றிவிளங்கியது', என - என்று, முரண் அழிந்திட - (அவனது) உறுதிநிலை குலையும்படி, மொழிந்து - வீரவாதங்கூறி, வில் தரும் கணைகளால் - தனதுவில்லினால் எய்யப்படும் அம்புகளால், விழ - (அவனது குதிரைகள் கொடி தேர்முதலியன) கீழ்விழும்படி, போர் பொருது - போர் செய்து, வெயிலவன் சுதனை - சூரியபுத்திரனான அக்கர்ணனை, மீளவும் - மறுபடியும், பின் தரும்படி - புறங்கொடுக்கும்படி, பிளந்தனன் - (உடம்பைப்) பேதித்தான்; (எ - று.)

அழியாக் கவசகுண்டலம் முதலிய சிறப்புக்களை உனக்குஉதவி உன்னைப் பாதுகாத்துவந்த உன்தந்தையான சூரியனே இப்பொழுது ஒழிந்தான்: எனக்குக் குதிரை முதலியவற்றைத் தந்துஉதவிய அக்கினியே இவ்விராப்பொழுதில் விளங்குகின்றான்; ஆகவே, நீதோற்க நான்வெல்வேன் என்று அருச்சுனன் கர்ணனைநோக்கி வீரவாதங்கூறின னென்க. இது உனக்கு வெற்றிக்காலமன்று, எனக்கே வெற்றிக்காலம் என்று சமத்காரமாகச்சொல்லி அவன்மனநிலையைக் குலைத்தவாறும். எல் - ஒளியுணர்த்துவதோர் இடைச்சொ லெனப்படும். தபநன் - தபிப்பவன். வெயிலவன் - உஷ்ணகிரணன். கஅக - ஆம் கவியை நோக்கி, 'மீளவும் பிற்றரும்படி' என்றார். தநுஜர் - வடசொல்; (காசியபமுனிவர்மனைவிமார்களுள்) தநுவினிடத்தி

னின்று தோன்றியவர். பின்னிடுதல்-புறங்கொடுத்தல். எல் தரும் தபனன்-(உனக்கு)விளக்கத்தைத் தந்த சூரியன் என்றும் பதவுரை கூறலாம்.

தனுசர்பின்னிடப் பொருத செய்தி:—பாண்டவர் வனவாசகாலத்தில் வியாசமாமுனிவன் வந்து தேறுதல்கூறியபின்பு அம்முனிவனிடம் மந்திரோபதேசம்பெற்ற அருச்சுனன், கைலாசத்திற்சென்று தவமியற்றிப் பரமசிவனிடத்துப் பாசுபதாஸ்திரம் முதலியன பெற்றபின்னர், அங்குவந்து அழைத்துப்போன தந்தையான இந்திரனுடனே தேவலோகஞ்சேர்ந்து, அங்குத் தேவர்கள்வேண்டியபடி., அவர்கட்குப்பகைவராய்ப் பலநாளாகப்பெருந்துன்பமியற்றிவந்த கடலிடையிலுள்ள தோயமாபுரவாசிகளான நிவாதகவசரென்னும்அசுரர்மூன்றுகோடிபேரையும், அந்தரத்துள்ள இரணியபுரவாசிகளான காலகேயரென்னும்அசுரர்அறுபதினாயிரவரையும் ஆங்காங்குச் சென்று போர்செய்து அழித்திட்டன னென்பதாம். (கஅஅ)

[கிருதவன்மாவைத் தருமன் சயித்தல்.]

ஒருதன்வாகுவலியாலும்வார்சிலேயுதைத்தவாளிவலியாலுமொண்
குருதிபொங்கவடுதருமராசன்ரகுகுலவிராமனிகராயினான்
கிருதவன்மனெனவருநராதிபதிகெட்டுமாவிரதம்விட்டுவா
ணிருதர்சேகரனொடுவமையாயவனெடுங்களத்திலெதிர்நின்றிலன்.

(இ - ள்.) ஒரு தன் வாகு வலியாலும் - ஒப்பற்ற தனதுதோள்வலிமையினாலும், வார் சிலே உதைத்த வாளி வலியாலும் - நீண்டவில்லினின்று செலுத்திய அம்புகளின் வலிமையினாலும், ஒள் குருதி பொங்க அடு - ஒள்ளிய இரத்தம் வெளிச்சொரியும்படி போர்செய்கிற, தருமராசன் - யுதிட்டிரன், ரகு குலம் இராமன் நிகர் ஆயினான் - ரகுவென்னும் அரசனது வம்சத்திலே திருவவதரித்த ஸ்ரீராமன்போலானான்; கிருதவன்மன் என வரும் நராதிபதி - கிருதவர்மாவென்று பேர்பெற்றுவந்த அரசன், கெட்டு - தோற்று, மா இரதம் விட்டு - பெரியதேரை விட்டு இழிந்து, வாள் நிருதர் சேகரனொடு உவமை ஆய்-கொடிய அரக்கர்தலைவனான இராவணனோடு ஒப்பாய், நெடுங் களத்தில் அவன் எதிர் நின்றிலன் - பெரியபோர்க்களத்திலே அத்தருமனெதிரிலே நிற்கமாட்டாதவனாய்ப் புறங்கொடுத்துச் சென்றான்.

இராவணன் முதல்நாட்போரில் யாவையுமிழந்தமையும், அப்பொழுது இராமபிரான் அவனைக்கொல்லாமல் 'இன்றுபோய் நாளைவா' என்று விடுத்தமையும் பிரசித்தம். "வாரணம்பொருதமார்பும் வரையினையெடுத்ததோளும், நாரதமுனிவற்கேற்பநயம்படவுரைத்தநாவும், தாரணிமவுலிபத்துஞ் சங்கரன்கொடுத்தவாளும், வீரமுங் களத்தேபோட்டு வெறுங்கையோடிலங்கைபுக்கான்" என்ற கம்பராமாயணச்செய்யுள் இங்குக் காணத்தக்கது. தருமபுத்திரனது அம்புக்கு ஆற்றாது கிருதவன்மன் சிலையொழிந்து நிலைதளர்ந்து சென்றா னென்றும், அதுகண்ட தருமபுத்திரன் அவனைக்கொல்லாது கருணைசெய்தன னென்றும் உவமையால் விளங்கும். யுதிட்டிரன் தருமயுத்தஞ்செய்பவனாதலின் எதிரியைச் சோர்வுற்றசமயத்திற் கொல்லாதுவிடுத்தருளின னென்பது விளங்க, இங்கு 'தருமராசன்' என்றார். இந்தவிசேஷ்யம் இங்ஙனம் ஒருகருத்தையுட்கொண்டதனால், கருத்துடையடைகோளியணி. தர்மராஜன் - அறத்துக்குத் தலைவன், தருமநெறிதவறாத அரசன். இது, யமனதுபெயர் அவன்மகனை யுணர்த்தியதுமாம். பிருகுகுலராமனான பரசுராமனினும் யதுகுலராமனான பலராமனினும் வேறுபாடு தோன்ற, தசரதராமனை 'ரகுகுலராமன்' என்றார். ரகு - சூரியவம்சத்திற் பிரசித்திபெற்ற ஓரரசன்; இவன்குலத்தில் அவதரித்ததனால், ராமனுக்கு ராகவ னென்று ஒருதிருநாமமும் வழங்கும். நர அதிபதி - மனிதர்க்குத் தலைவன். மா இரதம்-குதிரைகள்பூண்ட தேரெனினுமாம். நிருதர்சேகரன்-

அரக்கர்க்குத் தலையணிபோலச் சிறந்தவன். இராவணன் கைலாசகிரியைப் பெயர்க்கத்தொடங்கி அதன்கீழகப்பட்டுக்கைநசுக்குண்டு ஸாமவேதகாந த்திறற் சிவபிரானை மகிழ்வித்தபோது அப்பெருமான் மனமுவந்து அளித்த சந்திரஹாஸமென்னுஞ் சிறந்ததொரு வாளாயுதத்தைப் பெற்று மேம்பட்டன னாதலால், 'வாள்நிருதர்சேகரன்' என்பதற்கு - வாட்படையை யேந்திய ராக்ஷஸராஜ னென்றும் பொருள்கொள்ளலாம். 'எதிர்நின்றனன்' என்ற பாடத்துக்கு - ஒன்றும்எதிர்செய்யமாட்டாது நெடுமரம்போல எதிரிலேநின்றன னென்னலாம்; "அறங்கடந்தவர்செயலிதென் றுலகெலா மார்ப்ப, நிறங்கரிந்திட நிலம்விரல்கிளைத்திட நின்றான், இறங்குகண்ணினனெல்லழிமுகத்தினன் றலையன், வெறுங்கைநாற்றினன் விழுதுடை யாலன்னமெய்யன்" என்றார் கம்பரும். ரேகரம் - வடசொல். 'சிலையுகைத்த' என்றும் பாடம். வடமொழியாகவே, 'ரது' என்றார். (கஅக)

[கர்ணனை அருச்சுனன் மீளவும் வென்று துரத்துதல்.]

வாளமாகவில்வணக்கியும்பர்பதிமைந்தன்வாளிரவிமைந்தனைக்
கோளமானகுடையிரதம்வாசிசிலைகொடிமுருக்கியமர்கொள்ளவே
மீளமீளவுமழிந்தழிந்தவனோர்வேலினாலெறியவேலையுந்
தூளமாகவடிவாளியாலெதிர்துணித்துவன்பொடுதுரக்கவே.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) வாளம் ஆக வில் வணக்கி-வட்டவடிவமாக வில்லைவளைத்து, உம்பர் பதி மைந்தன் - தேவராசனான இந்திரனது மகனாகிய அருச்சுனன், வாள் இரவி மைந்தனை - ஒளியுள்ள சூரியனது மகனான கர்ணனை, கோளம் ஆன குடை இரதம் வாசி சிலை கொடி முருக்கி அமர் கொள்ள-வட்டவடிவமான குடையும் தேரும் குதிரைகளும் வில்லும் கொடியும் என்பவற்றை அழித்துப் போரில் வெற்றிகொள்ள,— அவன் - அக்கர்ணன், மீள மீளவும் அழிந்து அழிந்து - பலமுறையுந் தோற்று, (பின்பு), ஓர் வேலினால் எறிய - ஒரு வேலாயுதத்தினால் வீசிமோத,— (அருச்சுனன்), வேலையும் - அவ்வேற்படையையும், தூளம் ஆக - பொடியாம்படி, வடி வாளியால் - கூரியஅம்புகளினால், எதிர் துணித்து - எதிரிலே துண்டித்து, வன்பொடு துரக்க - வலிமையோடு துரத்த, (எ-று.)—'மத்திரத்தலைவன் மனம்முரிந்து ஓடினான்' என வருங்கவியோடு தொடர்ந்துமுடியும்.

முருக்கி - முருங்கி யென்பதன் பிறவினை. வன்பொடு துரக்க-வலியத் துரத்த. (கஅ௦)

[சல்லியனைச் சதானிகனும், அசுவத்தாமனைக் கடோற்கசனும் வெல்லல்.]

முன்சதாகதிமுருக்கமேருகிரிமுடிமுரிந்தெனமுரண்கொள்
போர், வன்சதானிகன்வளைத்தவிற்கணையின்மத்திரத்தலைவன்மன
முரிந்,தென்செய்தான்முடிவிலோடினான்விறலிடிம்பிமைந்தன்முனி
மைந்தன்மேன்,மின்செய்தாரையயிலேவினானவன்விரைந்துதேரின்
மிசைவீழவே.

(இ - ள்.) முன்-முன்னொருகாலத்தில், சதாகதி-வாயுதேவன், முருக்க-விசையாகத்தாக்கியதனால், மேரு கிரி - மகாமேருமலை, முடி முரிந்து என-சிகரம்ஒடிபட்டாற்போல, முரண் கொள் போர் வல் சதானிகன் வளைத்த வில் கணையின் - மாறுபாடுகொண்ட போரில் வலிய சதாநீகன் வணக்கிய வில்லினால் எய்த அம்பு படுதலால், மத்திரம் தலைவன்-மத்திரநாட்டரசனான சல்லியன், மனம் முரிந்து - இதயம்சிதைந்து, முடிவில் - இறுதியில், என் செய்தான் - யாதுசெய்தான்? (எனில்), ஓடினான் - புறங்கொடுத்து ஓடிப் போய்விட்டான்; விறல் இடிம்பி மைந்தன் - வலிமையையுடைய இடிம்பியின் புத்திரனான கடோற்கசன், முனி மைந்தன்மேல் - துரோணகுமார

ஞன அசுவத்தாமன்மேல், மின் செய் தாரை அயில் - மின்னலையொத்து விளங்குகிற கூர் நுனியையுடைய வேலாயுதத்தை, அவன் விரைந்து தேரின் மிசை வீழ-அவன் விரைவிலே தேரின்மேல்மூர்ச்சித்துவிழும்படி, ஏவினன்-பிரயோகித்தான்; (எ - று.)

எதற்குஞ்சலியாத சல்லியன் மனம்முரிந்ததற்கு, அசலமாகிய மேரு முடிமுரிந்தது உவமம். ஸதாகதி - வடசொல்; எப்பொழுதுஞ் சஞ்சரித்தலை யுடையவன். செய்-உவமவுருபு. மின்செய்-ஒளியைச் செய்கிற எனினுமாம்.

மேருகிரி முடிமுரிந்த கதை:— முன்னொருகாலத்தில் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார்பலசாலி யென்று விவாத முண்டாக, அதனைப் பரீக்ஷித்தறியும்பொருட்டு வாயுதேவன் மேருமலையின்சிகரத்தைப் பெயர்த்துத்தள்ளுவ தென்றும்,ஆதிசேஷன் அதுபெயரவொட்டாமற் காத்துக்கொள்வ தென்றும் கோட்பாடு உண்டாகி, அங்ஙனமே இருவரும் தேவர்முதலியோரது முன்னிலையில் தம்தம் வலிமையைக் காட்டத்தொடங்கிய பொழுது, ஆதிசேஷன் தனது பெரிய உடம்பினால் மேருவை வளைந்து தனது ஆயிரந்தலைகளினாலும் மேருமலையின் ஆயிரஞ்சிகரங்களையுங் கவிந்துக்கொண்டு பெயரவொட்டாமல் வெகுநேரங்காக்க, பின்பு வாயுதேவன் தன்வலிமையால் அம்மலைச்சிகரங்களில் மூன்றைப் பெயர்த்துக்கொண்டுபோய்த் தென்திசையில் தள்ளிவிட்டனன் என்பதாம். (கககூ)

[திட்டத்துய்மன் துரோணனைச் சயித்தல்.]

தானைகாவலனுமுந்துறப்பொருதுதரணிமன்னன்விடுசமர்முகச்
சேனைகாவலனையோடவோடவொருதெய்வவாளிகொடுசீறினு
ஞனைதேர்புரவியாளொடுற்றெதிரணிந்தமன்னவர்களனைவரு
மேனைமன்னவர்தமக்குடைந்துமுதுகிட்டுமன்னனருகெய்தினர்.

(இ - ள்.) தானை காவலனும் - பாண்டவசேனைத்தலைவனான திட்டத்துய்மனும், முந்துற பொருது - விரைவாகப் போர்செய்து, தரணிமன்னன் விடு சமர் முகம் சேனை காவலனை - பூமியையாளுகிற துரியோதனராசனாலேவப்பட்ட போரின் முன்னே நின்ற சேனைத்தலைவனான துரோணனை, ஓட ஓட - மிகுதியாய் ஓடும்படி, ஒரு தெய்வ வாளிகொடு சீறினன் - தெய்வத்தன்மையுள்ள ஓர் அம்பினாற் கோபித்து எதிர்த்தான்; (இங்ஙனமே), ஆனை தேர் புரவி ஆளொடு உற்று எதிர் அணிந்த மன்னவர்கள் அனைவரும்- யானையும் தேரும் குதிரையும் காலாளு மாகிய சதுரங்கசேனையுடனே பொருந்தி எதிரில்அணிவகுத்துநின்ற (துரியோதனன்பக்கத்து) அரசர்களெல்லாரும், ஏனை மன்னவர்தமக்கு உடைந்து முதுகு இட்டு - மற்றை [எதிர்ப்பக்கத்து]அரசர்கட்குத் தோற்றுப் புறங்கொடுத்து,மன்னன் அருகு எய்தினர் - துரியோதனராசனருகிலே (சென்று) சேர்ந்தார்கள்; (எ - று.)

தெய்வவாளி - அஸ்திரம். (ககஉ)

[அலாயுத னென்னும் அரக்கன் துரியோதனனிடம் வருதல்.]

அன்னபோதினிலநேகநூறுபதினாயிரந்திறலரக்கரோ
டின்னவாறெனவுரைக்கவேநிகரிலாததிண்டிறலலாயுதன்
கன்னசௌபலர்தமக்குநண்பனிருள்கங்குலோர்வடிவுகொண்டனன்
மன்னர்யாவரும்வெருக்கொளச்சமரின்மன்னர்மன்னனடிமன்னினன்.

(இ-ள்.) அன்ன போதினில்-அப்பொழுது,—கன்ன சௌபலர்தமக்கு நண்பன் - கர்ணனுக்கும் சகுனிக்கும் சிநேகிதனும், இருள் கங்குல் ஓர் வடிவு கொண்டு அனன் - இருண்ட இராத்திரிதானே ஒருபுருஷவடிவத்தைக் கொண்டுவந்தாற் போன்றவனும் ஆகிய, இன்ன ஆறு என உரைக்க நிகர் இலாத திண் திறல் அலாயுதன்-இன்னதன்மையென்றுசொல்லுதற்கு ஒருவமைபெறாத மிக்கவலிமையையுடைய அலாயுத னென்னும் அரக்கன்,

அநேகம் நூறு பதினாயிரம் திறல் அரக்கரோடு - அநேகம்பத்துலக்ஷக்கணக் கான வலியஇராக்கதர்களுடனே, மன்னர் யாவரும் வெரு கொள - அர சர்களெல்லாரும் அச்சங்கொள்ளும்படி, சமரில் - போர்க்களத்திலே, மன் னர் மன்னன் அடி மன்னினான் - இராசராசனான துரியோதனனது பாதத் திற் பொருந்தினான் [துரியோதனனை வணங்கினான் என்றபடி]; (எ - று.)

ஹலாயுதன் - வடசொல்; ஹல ஆயுதன் - கலப்பையைப் படைக்கல மாக வுடையவ னென்று பொருள்படும். (இது, பலராமனுக்குப் பெயராக வும் வழங்கும்.) இருள் கங்குல் ஓர்வடிவுகொண்டனன் - மிக்க கருநிறமு டையவன்; தற்குறிப்பேற்றவுவமை. கன்னசௌபலர் - உயர்திணையும் மைத்தொகை. இருள்கங்குல் - வினைத்தொகை; இருளையுடைய கங்கு லென்றபொருளில். 'இருட்கங்குல்' என நிலைமொழியீறுதிரியும். மன்னனடி மன்னினான் - துரியோதனனருகிற்சேர்ந்தான் என்றலு மொன்று. (கககூ)

[அலாயுதன் சபதஞ்செய்து வீமனை நெருங்குதல்.]

இன்றி ராவிடியு முன்னர் வெஞ்சமமெ திர்ந்த பஞ்சவர்க ளெஞ்சிடக், கொன்று பார்முழுது நின்ன தாகவுயர் வானு ளோர் பதிகொ டுப்பன்யா, னென்று கோடிசப தப்பு கன்றெதிரெ டுத்த தீபமு மிருண்டிடச், சென்று வீமனொடு கிட்டி னான்விசைகொ டேரி ரண்டுமுடன் முட்டவே.

(இ - ள்.) 'இன்று இரா விடியும் முன்னர் - இன்றையிராப்பொழுது கழிந்து சூரியனுதிக்குமுன்னே [இன்றையிரவிலேயே], வெம் சமம் எதிர் ந்த பஞ்சவர்கள் எஞ்சிட கொன்று - கொடியபோரில் எதிர்க்கிற பாண்ட வர்களைவரும் அழியும்படி கொன்று, பார் முழுதும் நின்னது ஆக - பூமண் டலம் முழுவதும் உன்னுடையதேயாகுமாறு, உயர் வான் உளோர் பதி கொடுப்பன் யான் - உயர்ந்த வானத்திலுள்ள தேவர்களது இடத்தை [வீர சுவர்க்கத்தை] (அவர்கட்கு இடமாக)க் கொடுப்பேன்யான்,' என்று-என்று இவ்வாறு, கோடி சபதம் புகன்று - மிகப்பலசபதவார்த்தைகளைச் சொல்லி, எதிர் எடுத்த தீபமும் இருண்டிட சென்று-எதிரிலேவற்றப்பட்டுள்ள விளக் குக்களின் ஒளியும் (தனதுகருமைமிகுதியால்) இருளடையும்படி போய், வீமனொடு—, விசை கொள் தேர் இரண்டும் உடன் முட்ட-வேகங்கொண்ட தன்தேரும் அவன்தேரு மாகிய இரண்டும் ஒன்றோடொன்று தாக்கும்படி, கிட்டினான் - சமீபித்தான்; (எ - று.)

நின்னது - பெயர். 'இராமுடியுமுன்னர்' என்பதும் பாடம். (ககச)

வேறு.

[அலாயுதனும் மற்றும்பலஅரக்கர்களும் போர்தொடங்குதல்.]

பணைத்திரு புயக்கிரி வளர மாற்றலர் பயப்பட வயப்படு பய மி னூற்றவர், துணைப்பெற மனச்சின முடுக நாக்கொடு சுழற்றுக ணெருப்பெழ நிருதர் பார்த்திப, னிணைப்பிறை யெயிற்றிள நிலவி னுற்செறி யிருட்கிழி தரப்பகை முனையி லேற்குமு, னணைத்திரு புறத்தினும்வருமிராக்கத ரதிர்த்தனரெதிர்த்தனரமரைநோக்கியே.

(இ - ள்.) நிருதர் பார்த்திபன்-அரக்கர்தலைவனான அலாயுதன், இரு புயம் கிரி - (தனது) இரண்டு தோள்களாகிய மலைகள், பணைத்து வளர-(யுத் தாவேசத்தாற்) புடைபருத்துப் பூரிக்கவும், மாற்றலர் பயப்பட - பகைவர் கள் அச்சமடையவும், வய படு பயம் இல் நூற்றுவர்-வலிமைமிக்கவர்களும் நற்பயனில்லாதவர்களுமான துரியோதனாதியர், துணை பெற - (தன்னால்) உதவிபெறவும், மனம் சினம் முடுக - தன்மனத்திலே கோபம் அதிகப்பட வும், நாக்கொடு சுழற்று கண் - நாக்கிலும் வட்டமிடுகிற கண்களிலும்,நெரு

ப்பு எழ - தீப்பொறி கிளம்பவும், இணை பிறை எயிறு இள நிலவினால்-இரண்டுஇளஞ்சந்திரன்போன்ற தனதுகோரதந்தங்களின் இளநிலாப்போன்ற வெள்ளொளியால், செறி இருள் கிழிதர - அடர்ந்தஇருள் பிளவுபடவும், பகை முனையில் ஏற்கும் முன்-பகைவர்களுடையபோர்க்களத்திலேசென்று எதிர்த்தற்குமுன்னே,—அணைத்து இரு புறத்தினும் வரும் இராக்கதர் - அவனைச்சார்ந்து இரண்டுபக்கங்களிலும் நெருங்கி வருகிற ராக்ஷஸர்கள், அதிர்த்தனர் - ஆரவாரஞ்செய்துகொண்டு, அமரை நோக்கி எதிர்த்தனர்- போரைநோக்கி எதிர்த்துச்சென்றார்கள்; (எ - று.)

அலாயுதனென்னுமரக்கன், பகைவர் பயமடையவும் துரியோதனாதியர் துணையடையவும் தோள்பூரித்துக் கடுஞ்சினங்கொண்டு கண்களில் நெருப்புத்தோன்றப் பகைவரையெதிர்ப்பதன்முன், அவனைச்சேர்ந்தஅரக்கர்கள் ஆரவாரித்துப் பகைவர்களை யெதிர்த்தார்க ளென்பதாம்.

போரென்றமாத்திரத்திற் புயம்பூரித்தல், மகாவீரர்க்குஇயற்கை. புயக்கிரி - மலைகள்போன்ற தோள்கள் என முன்பின்னாகத்தொக்கஉவமத்தொகையாக்கொள்க. 'நாக்கொடு சுழற்று கண்' என்றது, நாவைத் துழாவிக் கண்ணைச் சுழற்றினான் என்றவாறுமாம். மாற்றலர் - (மனத்தை)மாற்றுதலுடையவர்; உடன்பாட்டுக் குறிப்பு வினையாலணையும்பெயர். நூற்றவர் - தொகைக்குறிப்பு; இங்கே, அவர்களில் இறந்தவரொழிந்தாரைக் குறித்தது. பிறை - எயிற்றுக்கு, வெள்ளொளியோடு வளைந்தவடிவிலும் உவமம். பகைமுனையில் - பகைவர்கள்முன்னிலையில் எனினுமாம்.

இதுமுதற் பத்துக் கவிகள் - முதல் இரண்டு ஐந்து ஆறுஞ் சீர்கள் கருவிளச்சீர்களும், மூன்று ஏழாஞ் சீர்கள் புளிமாச்சீர்களும், நான்கு எட்டாஞ் சீர்கள் கூவிளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தங்கள்.* இவற்றில் வல்லோசைமிக்குவந்தது, வல்லிசைவண்ணம். இவற்றில் ஆங்காங்குப் பிராசமு முள்ளது. (ககக)

[அரக்கர் நெருக்கிப் போருதல்.]

இருட்கிரியெனத்தகுகரியதோற்றமு மெயிற்றினினிணப்பிண
முடைகொணாற்றமு,முருக்கலர்வெளுத்திடுமருணநாட்டமு முகிற்
குரலினைத்திடமுதிரும்வார்த்தையு, மருட்படுகருத்திடைகதுவுசீற்
றமு மதக்கடகளிற்றதிமதமுமாய்ப்புடை, நெருக்கினர்தருக்கினர்
விறனிசாசரர் நிமிர்த்தனர்வடிக்கணைசிலைகள்கோட்டியே.

(இ - ள்.) இருள் கிரி என தகு - இருள்மயமானதொருமலையென்று சொல்லத்தக்க, கரிய தோற்றமும் - கருநிறமுள்ளவடிவமும், எயிற்றினில்- பற்களில், கொள் - கொண்ட, பிணம் நிணம் முடை நாற்றமும்-(தின்னப்பட்ட) பிணங்களின் கொழுப்புக்களினது துர்க்கந்தமும், முருக்கு அலர் வெளுத்திடும் அருணம் நாட்டமும் - முருக்கம்பூவும்வெண்ணிறமடையும்படியான சிவந்தகண்களும்,முகில் குரல் இளைத்திட முதிரும் வார்த்தையும்- மேகங்களின்இடிமுழக்கமும் மெலிவடையும்படி(அதனினும்) உரத்த பேச்சும், மருள் படு கருத்திடை கதுவு சீற்றமும் - மயக்கம்பொருந்திய மனத்திலே மூண்டெழுகிற கோபமும், மதம் கடம் களிறு அதி மதமும் ஆய்-வலிமையுள்ள மதயானைபோன்ற மிக்ககொழுப்பு முடையவர்களாய்,விறல் நிசாசரர் - வலிமையையுடைய அந்த அரக்கர்கள், புடை நெருக்கினர் - பக்கங்களில் வந்து நெருங்கிநின்று, தருக்கினர் - போரில்உற்சாகங்கொண்டவர்களாய், சிலைகள் கோட்டி - விற்களை வளைத்து, வடி கணை நிமிர்த்தனர் - கூரியஅம்புகளைப் பிரயோகித்தார்கள்; (எ - று.)

---

* தனத்தன தனத்தன தனன தாத்தன தனத்தன தனத்தன தனன தாத்தன என்பது, இவற்றுக்குச் சந்தக்குழிப்பாம்.

தோற்றம் - தோன்றுவதெனக் காரணக்குறி. முருக்கலர் வெளுத்தி டும் அருணநாட்டம்-செந்நிறமுடையமுருக்கம்பூவும் தமதுமிக்கசெந்நிறத் தின்முன் வெண்ணிறமுடையன வென்னலாம்படி நிறங்கொண்ட கண்க ளென்க. வெண்ணிறத்தோடு செந்நிறத்துக்கு எவ்வளவுவேறுபாடுஉண்டோ அவ்வளவுவேறுபாடு உண்டு,பலாசம்பூவின்செந்நிறத்தோடு அரக்கர்கண்கள் கோபத்தாற்கொண்ட மிக்கசெந்நிறத்துக்கு என்பது கருத்து. வார்த்தை- இங்கு வீரவாதம். தருக்கினர் - செருக்குக்கொண்டவர்களாய் எனினுமாம். நெருக்கினர், தருக்கினர் - முற்றெச்சம். அருணம் - வடசொல். கோட்டி- பிறவினைவினையெச்சம்; கோடு - தன்வினைப்பகுதி. மருள் - பேதைமையு மாம். "மதவே மடனும் வலியு மாகும்" என்ற தொல்காப்பியத்தால், மத வென்னும் உரிச்சொல் வலிமையுணர்த்துவதாதல் அறிக. கடம் - கன்னம்; மதத்துக்கு இடவாகுபெயர். நிசா சரர் - இரவிற் சஞ்சரிப்பவர்; அரக்கர்க் குப் பகலினும் இரவில் வலிமை மிகுதி. நிமிர்த்தல் - செலுத்தல். (கசுகூ)

[அலாயுதனும் வீமனும் போர்தொடர்தல்.]

அருக்கனைமறைத்தவர்கடவுதேர்த்தலை யருச்சுனன்முதற்பலது ணைவர்சாத்தகி,செருக்குடையமைத்துனர்குமரர்காத்திடு செருக்க ளம்வெருக்கொளவளையுமாத்திரை,மருச்சுதன்வளைத்ததொர்தனு வினற்சிலவடிக்கணைதொடுத்தலுமிரவுலாத்திரி,துருத்தனும்வளைத் தனநெடியகாற்சிலைதொடுத்தனனிலக்கறுதொடைகள்வாய்க்கவே.

(இ - ள்.) அருக்கனை மறைத்தவர் - சூரியனைமறைத்தருளியவரான கண்ணபிரான்,கடவு-செலுத்துகிற,தேர்த்தலை-தேரிலேயுள்ள,அருச்சுனன் முதல்-அருச்சுனன் முதலான, பல துணைவர்-பலதம்பிமார்களும், சாத்தகி- சாத்தகியும்,செருக்குஉடையமைத்துனர்-போர்க்களிப்பையுடைய(திட்டத் துய்மன்முதலிய தமது)மைத்துனன்மார்களும்,குமரர்-(தமது)புத்திரரான உபபாண்டவர் கடோத்கசன்முதலியோரும், காத்திடு-பாதுகாத்துவருகிற, செரு களம் - போர்க்களத்தை, வெரு கொள - அச்சங்கொள்ளும்படி, வளை யும் மாத்திரை-(அலாயுதனும் பலஅரக்கர்களும்) சூழ்ந்தவளவிலே,—மருத் சுதன் - வாயுகுமாரனான வீமன்.வளைத்தது ஓர் தனுவினால்-வணக்கின தன் துஒருவில்லினால்,சில வடி கணை தொடுத்தலும்-கூரியசிலஅம்புகளைத்தொடு த்தவுடனே, இரவு உலா திரி துருத்தனும் - இராத்திரியில் உல்லாசமாகத் திரிகிற வஞ்சகனான அலாயுதனும், நெடிய சிலை கால் வளைத்தனன்-நீண்ட விற்கழுந்தை வளைத்து, இலக்கு அறு தொடைகள் - எண்ணிக்கையில்லாத அம்புகளை, வாய்க்க தொடுத்தனன்-பொருந்தப் பிரயோகித்தான்; (எ - று.)

மறைத்தவர் - உயர்வுப்பன்மை. தேர்த்தலை, தலை - ஏழனுருபு. பல துணைவர் - தம்பியர்மூவர். மருத்ஸுதன்; வடமொழித்தொடர். உலாத்திரி - உலாவித்திரி யென்பதன் தொகுத்தல்; வினைப்பகுதியே வினையெச்சப் பொருள்பட்ட தென்னலாம். துருத்தன் - தூர்த்தனென்ற வடசொல் விகாரப்பட்டது. சிலைக்கால் - தநுர்த்தண்டம். வாய்க்க - பலிக்க;எதிரிகள் மேற்சென்று தைத்துத் தவறாதுபயன்படுமாறு என்றபடி. (கசுஎ)

[பின்பு வீமன் அலாயுதனது தேர்முதலியவற்றை யழித்தல்.]

மருச்சுதன்வடிக்கணையமரர்மாற்றலன் வடிக்கணைதடுத்துமவ ல்லிரதமாற்றியும்,விருப்புடன்விரித்தணிதுவசம்வீழ்த்தியும் விறற் பரிகளைத்துணிதுணிகளாக்கியு, முரத்தொடுசெலுத்தியவலவனற் றலையுருட்டியுமணிச்சிலையொடியநூக்கியு, மிருட்டொளியுடற்பல துளைகளாக்கியு மிமைப்பொழுதினிற்றிறன்மடியமாய்த்தவே.

(இ - ள்.) மருத் சுதன் வடி கணை - வீமசேனனது கூரியஅம்புகள்,— அமரர் மாற்றலன் வடி கணை தடுத்தும் - தேவர்கட்குப் பகைவனான அவ்வ

ரக்கனது கூரியஅம்புகளைத் தடுத்தும், வல் இரதம் மாற்றியும் - (அவன் ஏறியிருந்த) வலிய தேரை யொழித்தும், விருப்புடன் விரித்து அணி துவசம் வீழ்த்தியும் - (அவன்) விருப்பத்தோடு விரித்துக்கட்டிய கொடியை அறுத்துத் தள்ளியும், விறல் பரிகளை துணி துணிகள் ஆக்கியும் - வலிமையையுடைய குதிரைகளை வெட்டிப் பலதுண்டுகளாகச்செய்தும், உரத்தொடு செலுத்திய வலவன் ஆற்றலை உருட்டியும் - வலிமையோடு தேர்செலுத்தி வந்த சாரதியின் வல்லமையைப் புரளச்செய்தும், மணி சிலை ஒடிய நூக்கியும் - உறுதியான வில்லை ஒடிபடும்படி துணித்துத்தள்ளியும், இருட்டு ஒளி உடல் பல துளைகள் ஆக்கியும் - இருட்டுப்போன்ற கரியஒளியையுடைய உடம்பைப் பலதுளைகளாகச்செய்தும், இமை பொழுதினில் - ஒரு மாத்திரைப்பொழுதிலே, திறல் மடிய மாய்த்த - (அவனது) வலிமையொழியும்படி அழித்தன.

விரித்து - விளங்கும்படி பரப்பி. 'வலவன்மாத்தலை யுருட்டியும்' என்ற பாடத்துக்கு - பாகனது பெரியதலையைத் துணிபட்டுக் கீழுருளச்செய்து மென்க. இருட்டு - இருள் என்ற பெயர் 'டு'என்னும் பகுதிப்பொருள்விகுதி பெற்றது. மாய்த்த-முற்று. அமரர்மாற்றலன்-தேவசத்ரு:இங்கு அலாயுதன். அரக்கர்கள் தேவர்கட்கு ஜந்மசத்ருக்களாதலின், இங்ஙனங்கூறினர்; இங்குத் தேவாம்சமான பாண்டவர்க்குப் பகைவனாய் வந்தமையுங் காண்க. இருட்டு ஒளி உடல் - இருள்போலத் தோன்றுகிற உடம்பு எனினுமாம்; ஒளியுடல் - வினைத்தொகை. ஒளி - மறைதலாய், இருள்போல விளக்கம் மறைந்த உடல் எனினுமாம். மருச்சுதன் வடிக்கணை மாய்த்த என்க; யாற்றுநீர்ப்பொருள்கோள். (௯௯)

[அலாயுதன் எறிந்த மலைகளை வீமன் பொடிபடுத்தல்.]

நிலத்திடைகுதித்தனன்வடவைபோற்பெருநெருப்பெழவிழித்தனனெடியமூச்சுடன்,வலத்துயரலப்படைநிசிசரோத்தமன் வரைத்திரளெடுத்தெதிர்முடுகியோச்சலு, முலப்புயநிமிர்த்தொருகதையினாற்றனாரத்துடனடித்தவைபொடிகளாக்கின,னிலக்கமில்சுரர்க்கிடமுதவுகோத்திர வெழிற்குவடொடித்தவனுதவுகூற்றமே.

(இ - ள்.) (அதன்பின்), வலத்து உயர் அலம் படை நிசிசர உத்தமன் - வலிமையில் மிக்க கலப்பைப்படைக்கலமுடைய அரக்கர்தலைவன் [அலாயுதன்], நெடிய மூச்சுடன் - பெருமூச்சுடனே, நிலத்திடை குதித்தனன் - (தேரினின்று) தரையிற் குதித்து,வடவை போல் பெரு நெருப்பு எழ விழித்தனன் - படபாமுகாக்கினிபோலப் பெருநெருப்பு வெளிக்கிளம்பும்படி கோபத்தோடுஉறுக்கிப்பார்த்து, வரை திரள் எடுத்து எதிர் முடுகி ஓச்சலும் - மலைக்கூட்டங்களையெடுத்து (வீமனுக்கு) எதிரில் விரைவாகவீசியவளவிலே, — இலக்கம் இல் சுரர்க்கு இடம் உதவு - கணக்கில்லாத தேவர்கட்கு இருப்பிடமாக உதவுகிற, கோத்திரம்-(மேரு)மலையினது, எழில் குவடு - வளர்ச்சியையுடைய (மூன்று) சிகரங்களை, ஒடித்தவன் - முறித்தவனான வாயுதேவன், உதவு - பெற்ற, கூற்றம் - யமன்போன்ற வீமன், உலம் புயம் நிமிர்த்த ஒரு கதையினால் - திரண்ட கற்றூண்போன்ற (தனது) கையினால் உயரஎடுத்த ஒப்பற்றதொரு கதாயுதத்தைக்கொண்டு, தனது உரத்துடன் அடித்து - தனது முழுவலிமையோடு தாக்கி, அவை பொடிகள் ஆக்கினன் - அம்மலைகளைத் தூளாகச்செய்தான்; (எ - று.)

வடவை - படபா என்ற வடசொல் திரிந்தது; இப்பெண்குதிரையின் பெயர், கடலிடையில் ஒருபெண்குதிரைமுகத்தினின்று தோன்றுந் தீக்கு ஆகுபெயராம்; அத்தீ, கடல்நீரை மழைநீரால்மிகாதபடி உறிஞ்சுவது. வலத்து உயர்அலப்படை - வலக்கையில் உயரஎடுத்த கலப்பையைப்படையென்னும் [illegible]

குத்தல். இடமுதவுதல் - இடங்கொடுத்தல். தேவர்கட்குச் சுவர்க்கம்போலவே மேருமலையும் ஓரிடமாம்; அன்றியும், அம்மலையின் சிகரங்களில் மூன்று திரிமூர்த்திகட்கு இடமா மென்றும் புராணங் கூறும். கோத்ரம் என்ற வடமொழிப் பெயர் - பூமியைக் காப்ப தென்ற காரணப்பொருளினால், மலையைக் குறிக்கும். எழில் - எழுச்சி; 'இல்' விகுதி பெற்ற தொழிற்பெயர். கூற்றம் - உவமையாகுபெயர். மலைகளைப் பொடியாக்குதற்கு உரிய ஆற்றல் வீமனுக்கு இயல்பில் அமைந்திருப்பதை விளக்குதற்கு, 'மகாமேருவின்சிகரங்களை யொடித்தவனது மகன்' என்றார். வீமனது கதை 'சத்துருகாதினி' எனப் பெயர்பெறும். 'தனது' என்பதைப் புயம் கதை என்றவற்றோடுங் கூட்டுக. 'கோத்திரக்குவடொடித்தவனுதவுகூற்றம்'—"மருத்துதவு கூற்று" என்றார் மணிமான்வதைச்சருக்கத்தும்; ஒருதேவன்பெற்ற மற்றொருதேவன் என ஒருநயந்தோன்றக் கூறியவாறும். (கககூ)

[கடோற்கசன் வீமனை விலக்கித் தான் அலாயுதனை போதித்தல்.]

பரத்துவசனுக்குறவுரியகோத்திரி பரிச்சுடருடைப்பெயர்முனி
குலோத்தமன், மரித்தனனெனத்தனியயில்கொடோச்சிய மணிச்சி
றுபொருப்பினைநிகர்கடோற்கச, னெரித்தலையரக்கனொடெதிரியாய்
ச்சமரனைத்தருமருச்சுதன்முனைதல்கீழ்த்தொழி, லுரத்துடன்ம
லைத்திவனுயிரைமாட்டுவனுருத்தெனவுடற்றினனுறுதிபோற்றவே.

(இ - ள்.) பரத்துவசனுக்கு உற உரிய கோத்திரி - பரத்துவாசமுனிவனுக்கு மிகவும்உரிய குலத்திற் பிறந்தவனாகிய, பரி சுடர் உடை பெயர் முனி குல உத்தமன் - அசுவத்தாமாவென்னும் பெயரையுடைய முனிவர்கூட்டத் தலைவன், மரித்தனன் - இறந்தான், என - என்றுசொல்லும்படி, தனி அயில் கொடு ஓச்சிய - ஒப்பற்ற வேலாயுதத்தைக்கொண்டு (அவனை) வீசியெறிந்த, மணி சிறு பொருப்பினை நிகர் கடோற்கசன் - நீலமணிக் குன்றையொத்த [கருநிறமுடைய] கடோத்கசனானவன்,—'எனை தரு மருத் சுதன் - என்னைப்பெற்ற தந்தையும் வாயுகுமாரனுமான வீமசேனன், எரி தலை அரக்கனொடு எதிரி ஆய் - நெருப்புப்போன்ற [செம்பட்டமயிருள்ள] தலையையுடைய இவ்விராக்கதனுடனே சமமாய்நின்று எதிர்த்து, சமர் முனைதல் - போரை முயன்றுசெய்தல், கீழ் தொழில் - இழிவான செயலாம்: (ஆதலால்), உரத்துடன் மலைத்து இவன் உயிரை மாட்டுவன் - வலிமையோடு(நான்)எதிர்த்துப்பொருது இவனுயிரை மாள்விப்பேன்', என-என்று சொல்லி, உருத்து-கோபங்கொண்டு, உறுதி போற்ற - (தனது) பேருக்கத்தை(ப்பலரும்) கொண்டாடும்படி, உடற்றினன் - (அலாயுதனுடன்) எதிர்த்துப் பொருபவனானான்; (எ - று.)

அசுவத்தாமன் பரத்துவாசமுனிவனது புத்திரனான துரோணனுடைய மகனாதலால், 'பரத்துவசனுக்குறவுரிய கோத்திரி' என்றார். உறவு உரிய என்று பிரித்து, உறவினால் உரிமைபெற்ற என்றலு மொன்று. பரத்துவசன் - பரத்வாஜன் என்ற வடசொல்லின் விகாரம். கோத்திரி - குலத்திற்பிறந்தவன். அஸ்வம் தாம என்ற வடசொற்கள் - முறையே குதிரையென்றும் ஒளியென்றும் பொருள்படுதலால், அசுவத்தாம னென்ற பெயரை 'பரிச்சுடருடைப்பெயர்' என்றார்; இது, லக்ஷிதலக்ஷணை. முனிகுலோத்தமன் - சிறந்த அந்தணன். அசுவத்தாமன் மூர்ச்சித்துவிழுந்து இறந்தவன்போலாம்படி அவன்மேற் கடோற்கசன் கூரியவேலொன்றை யெறிந்தமை, கககக - ஆம் பாட்டிற் கூறப்பட்டது. கருநிறமுடையவனும் வீமன்சிறுவனு மாதல்பற்றி, 'மணிச்சிறுபொருப்பினைநிகர் கடோற்கசன்' என்றார். மலைந்து என்பது, சந்தப்பொருத்தத்தின்பொருட்டு, மலைத்து என வலித்தலாயிற்று. மாட்டுவன் என்ற தன்மையொருமைமுற்றில், மாள் என்னும் வினைப்பகுதி'டு'என்

னும் பிறவினைவிகுதியை யேற்ற மாட்டு என்பது - பகுதியாம்; 'மாட்டு' என்பதை 'நீட்டு' என்பதுபோலக் கொள்க. 'மாற்றுவன்' என்ற பாடமும் பொருந்தும். தந்தையை விலக்கி மைந்தன் வலியப் போரை மேற்கொள்ளும் வீரத்தைப் பாராட்டுவார், 'உறுதிபோற்ற' என்றார். 'உறுதி தோற்ற' என்ற பாடம் - (தனது) வலிமை விளங்க வென்று பொருள்படும். (உ00)

[அலாயுதனும் கடோத்கசனும் ஆரவாரித்தல்.]

இடிக்குரலெனத்தலையுரகர்சாய்த்தன ரெதிர்க்குரலெழுப்பின குலசிலோச்சயம்,வெடித்ததுமுகட்டுயர்கடகமேற்றலை விபத்தென விபத்திரள்வெருவுதாக்கின,துடித்தனரியக்கரொடமரர்தைத்தியர் துணுக்கெனவிமைத்தனர்திசைகள்காப்பவ, ரடிக்கடிபடித்துகள் பரவைதூர்த்தன வரக்கனுமரக்கனுமமரிலார்க்கவே.

(இ - ள்.) அரக்கனும் அரக்கனும் இராக்கதராகிய அலாயுதனும் கடோற்கசனும், அமரில் - போரில், ஆர்க்க - ஆரவாரஞ்செய்ததனால்,— உரகர் - (கீழுலகத்துள்ள) சர்ப்பஜாதியார், இடி குரல் என - (அம்முழக்கத்தை) இடியோசையென்றுகருதி, தலை சாய்த்தனர் - அஞ்சியொடுங்கித் தமதுமுடிசாய்த்துமூர்ச்சித்தார்கள்; குல சிலோச்சயம் - குலபருவதங்கள், எதிர் குரல் எழுப்பின - (அவ்வொலிக்கு) எதிரொலியை உண்டாக்கின; முகடு உயர் கடகம் மேல் தலை - மேலிடம் உயரப்பெற்ற அண்டகடாகத்தினது மேலிடம், வெடித்தது - பிளவுபட்டது; இபம் திரள - (திக்கு) யானைகளின் கூட்டம், விபத்து என - ஆபத்து நேர்வதென்று எண்ணி, வெருவு தாக்கின - அச்சம்மிகப்பெற்றன; இயக்கரொடு அமரர் தைத்தியர் - யக்ஷர்களும் தேவர்களும் அசுரர்களும், துணுக்கென - திடுக்கிட்டு, துடித்தனர் - (உள்ளமும் உடலும்) பதைத்தார்கள்; திசைகள் காப்பவர் - திக்பாலகர்கள், இமைத்தனர்-(அச்சத்தால் தமது இமையாக்கண்களை)இமைத்தார்கள்; படி துகள் - பூமியிலுள்ள புழுதிகள், அடிக்கடி—, பரவை தூர்த்தன - (அதிர்ச்சியகுதியால் நிலத்தினின்று எழும்பிக்) கடலிற்படிந்து அதனை நிறைத்தன.

'அரக்கனு மரக்கனு மமரி லார்க்க' என்பது எல்லாவற்றுக்குங் காரணம். 'அடிக்கடி' என்பதை, எல்லாமுற்றுக்களோடுங் கூட்டுக; "ஆர்க்க' என்பதனோடு இயைப்பினும் அமையும் எதிர்க்குரல்-பிரதித்தொனி. சிலோச்சயம் என்ற வடமொழிப்பெயர் - சிலா உச்சயம் எனப்பிரிந்து, கற்களின் கூட்ட மெனக் காரணப்பொருள்படும். குல பர்வதங்கள் - சிறந்த மலைகள்; இமயம், எமகூடம், கைலை, நிடதம், நீலம், மந்தரம்,விந்தியம் என்பர்; கந்தமாதனமுங் கூட்டி எட் டெனவும்படும். கடகம் - கடாஹ மென்ற வடமொழியின் விகாரம்; பெருங்கொப்பரை: பெரிய கோள மென்றபடி. விபத், இபம், யக்ஷர், அமரர், தைதயர் - வடசொற்கள். தைத்யர் - (காசியபமுனிவர்மனைவியருள்)திதியின் மக்கள்: தத்திதாந்தநாமம். 'தைத்தியர்' என்றவிடத்து 'தானவர்' என்ற பாடம் 'தாத்தன' என்ற சந்தத்துக்குச் சிறவாது. 'தாக்கின' என்பதைத் தாங்கின வென்பதன் வலித்தலெனவுந் தகும்; வெருவுதாக்குதல் - அச்சங்கொள்ளுதல். 'துணுக்கென' என்பதை 'இமைத்தனர்' என்பதனோடுங் கூட்டலாம். "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின், ஓட்டன்றோ வன்கணவர்க்கு" என்ற திருக்குறளும், "வீரரெறி வெம்படைகள் வீழ விமையாளுய்" என்ற சிந்தாமணியுங் கொண்டு, இமைத்தல் அச்சக்குறியாதலை யுணர்க. திசைகள் காப்பவர்- இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என எண்மர்; கிழக்கு முதலாக முறையே கொள்க. அடிக்கு அடி படித்துகள் என்பதற்கு - கால்வைக்குந்தோறும் பூமியினின்று மேலெழுந்த தூளிக ளென்று உரைப்பாரு முளர். துணுக்கென - அச்சக்குறிப்பு. இச்செய்யுளின் அணி, உயர்வுநவிற்சியாம். (உ0க

[அலாயுதனும் கடோற்கசனும் போருதல்.]

சிரித்தனருருத்தனரணுவின்மோட்டுடல் சிறுத்தனர்பெருத்தனர்மதனின்னோக்கின, ரெரித்தனரிரித்தனரருக்கன்மேற்பட வெடுத்தனர்படுத்தனர்புடவிகீழ்ப்பட, முரித்தனகிரிக்கொடுமுடிகளாற்சினை முரித்தனமரத்தனதுணிகளாற்கடி,துரித்தனர்துவக்குரநெரியவேபழு வொடித்தனரிளைத்தனருருவம்வேர்க்கவே.

(இ - ள்.) (அவ்விரக்கரிருவரும்),—சிரித்தனர்-(வீரத்தெழுந்த வெகுளியாற்) சிரித்தார்கள்; உருத்தனர் - பெருஞ்சினங்கொண்டார்கள்; மோடு உடல் அணுவின் சிறுத்தனர் - (தமது) பெரியஉடம்பு அணுப்போலச் சிறுக்கும்படி குழைந்துகாட்டினார்கள்; பெருத்தனர் - (உடனே) பெரியவடிவங்கொண்டு தோன்றினார்கள்; மதனின் நோக்கினர் - செருக்கோடு விழித்துப்பார்த்தார்கள்; எரித்தனர் - தீயெழுப்பினார்கள்; இரித்தனர் - அச்சமுண்டாக்கினார்கள்; அருக்கன்மேல் பட எடுத்தனர் - சூரியன்மேற் படும்படி (கைப்படைகளை) உயர எடுத்தார்கள்; புடவி கீழ் பட படுத்தனர் - தரை கீழாம்படி அவற்றால் மோதினார்கள்; முரித்தன கிரி கொடுமுடிகளால்-ஒடித்தெடுத்த மலைகளின் சிகரங்களைக்கொண்டும்,சினை முரித்தன மரத்தன துணிகளால் - கிளைகள் முறிக்கப்பட்டனவான மரங்களின் துண்டுகளைக்கொண்டும், (ஒருவரை யொருவர் அடித்து), கடிது - விரைவாக, துவக்கு உரித்தனர் - (உடம்பின்) தோலை யுரித்தார்கள்; உரம் நெரிய - மார்புநொருங்க, பழு ஒடித்தனர் - விலாவெலும்புகளை யொடித்தார்கள்; (பின்பு), உருவம் வேர்க்க - உடம்பு வேர்வையடைய, இளைத்தனர் - சோர்வடைந்தார்கள்.

மதன் - மத மென்பதன் போலி. இரித்தல் - அதட்டுதல். 'அருக்கன் மேற்பட எடுத்தனர் புடவி கீழ்ப்படப் படுத்தனர்' என்பதற்கு - (ஒருவரை யொருவர்) சூரியனுக்கும் மேலாம்படி மிகஉயரஎடுத்துத் தரைகுழிபடும்படி கீழே போகட்டார்கள் என்றலும் ஒன்று. மரத்தன - மரத்தின்சம்பந்தமானவை; 'அன்'சாரியை பெற்ற பலவின்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். த்வக் - வடசொல். 'மதனின்னோக்கினர் எரித்தனர்' என்பதற்கு - மன்மதன்மேல் (விழித்த நெற்றிக்)கண்ணினை யுடையவரான சிவபிரான் போல (ஒருவரையொருவர்) எரிக்கத்தொடங்கினார்கள் என்று உரைப்பாருமுளர். இரித்தனர் - (ஒருவரை யொருவர்) துரத்தினார்கள் எனினுமாம். 'முரித்தனர்கிரிக்கொடுமுடிகளாற் சினை' என்ற பாடத்துக்கு—கிரிக்கொடு முடிகளால் - மலைச்சிகரங்களினால், சினை முரித்தனர் -(ஒருவர் மற்றொருவருடைய) உறுப்புக்களை முறித்தார்கள் என்று பொருள்காண்க. சிரித்தனர் உருத்தனர், அணு மோடு, சிறுத்தனர் பெருத்தனர், மேற்பட கீழ்ப்பட, எடுத்தனர் படுத்தனர் என்று மாறுபட்டசொற்கள்வந்தது, தொடைமுரண். இரண்டாம் அடியில் 'அருக்கன்' என்பது 'தனன' என்ற சந்தத்திற்கும், நான்காம் அடியில் 'வேபழு' என்பது 'தாத்தன' என்ற சந்தத்திற்கும் மாறுபடுதலால், அவ்விடங்களிற் சந்தத்துக்கொத்த வேறுபாடங் காணுதல், நலம்; அன்றி, இது சந்தப்போலியுமாம். (உ௱உ)

[கடோற்கசன் அரக்கர்களுடன் அலாயுதனை அழித்தல்.]

சிலைப்படையயிற்படைதெளியும்வாட்படை திறற்பலபடைக்கலவலிமைகாட்டியும்,வலப்படவளைத்துமல்வலிமைகாட்டியும் வயத்தொடுசெயப்புயவலிமைகாட்டியு, முலைப்படுகனற்சினமுதிர்கடோற்கசனுடற்றியவரக்கரையொருவர்போற்பொரு,தலைப்படையரக்கனதுயிரைமாய்த்தனனடற்றொடைகளிற்றொடையடைசிவிழ்த்தியே.

(இ - ள்) உலை படு கனல் - உலைக்களத்திற்பற்றியெழுகிற நெருப்புப்போல, சினம் முதிர் - கோபம் மிக்க, கடோற்கசன்—,—சிலை படை -

வில்லாகியஆயுதமும், அயில் படை - வேலாயுதமும், தெளியும் வாள் படை - தேர்ந்தெடுத்த வாளாயுதமும், திறல் பல படைக்கலம் - வலிமையையுடைய மற்றும் பலஆயுதங்களும் என்பவற்றின், வலிமை - பலத்தை, காட்டியும் - உபயோகித்தும்,—வலம் பட வளைத்து - பலம்பொருந்த (ப் பகைவரைச்) சுட்டி, மல் வலிமை காட்டியும் - மற்போரின் வலிமையை உபயோகித்தும்,— வயத்தொடு சயம் புயம் வலிமை காட்டியும் - பலத்தோடு வெற்றியைக்கொண்ட தோள்களின் திறமையை உபயோகித்தும்,— உடற்றிய அரக்கரை - (தன்னோடு) போராடிய இராக்கதர்களை, ஒருவர் போல் பொருது - ஒருத்தரை (யெதிர்த்தாற்) போலவே (பலரையும்) எதிர்த்துப் போர்செய்து அழித்து,—(பின்பு), அடல் தொடைகளின் தொடை அடைசி வீழ்த்தி - வலிமையையுடைய (தனது) தொடைகளால் (எதிரியின்) தொடைகளை நெருக்கி(அவனை)க் கீழேதள்ளி, அலம் படை அரக்கனது உயிரை மாய்த்தனன் - அலாயுதனென்னும் அவ்வரக்கனது உயிரை யொழித்தான்; (எ-று.)

'தெளியும்' என்பதை, மற்றைப்படைகட்கும் கூட்டலாம். அடைசி, அடைசு-பகுதி. 'தெளியும்' என்பதற்கு - ஒளிபொருந்திவிளங்குகிற [தெளிவாகப் பிரகாசிக்கிற] என்றும், 'தொடைகளின் தொடை அடைசி வீழ்த்தி' என்பதற்கு - (தனது) அம்புகளினால் (பகைவருடைய) அம்புகளை விலக்கித் தள்ளி யென்றும், வரிசைகளாக அம்புகளைச் செலுத்தி(ப்பகைவரை)வீழ்த்தி யென்றும் உரைப்பாரு முளர். படைக்கலவலிமைகாட்டியும், மல்வலிமை காட்டியும், புயவலிமைகாட்டியும், பொருது, வீழ்த்தி மாய்த்தனன் என முடிபு காண்க. (உ0௬)

[தேவர்கள் பலரும் கடோற்கசனைப் புகழ்தல்.]

புரக்குல மெரித்தவர் கயிலை மாக்கிரி புயத்தினி லெடுத்திசை புனைப ராக்ரமன், வரத்தினில் வனத்திடை திரியு நாட்சில மனித்தரொ டெதிர்க்கவும் வயிரி யாய்த்தில, னுரத்துடன் மருச்சுத னுதவி ராக்கத னொருத்தனு மெனைப்பல ருடனு மேற்றெதிர், தரத்தலின் மரித்தன னிவனெ னுப்பலர் துதித்ததி சயித்தனர் சுரரும் வாழ்த்தியே.

(இ - ள்.) புரம் குலம் எரித்தவர் - புரவர்க்கத்தை [திரிபுரத்தை] எரித்தழித்தவரான சிவபிரானது, கயிலை மா கிரி - பெரிய கைலாசபருவதத்தை, புயத்தினில் எடுத்து - (தனது) கைகளினால் நிலைபெயர்த்து, இசை புனை - கீர்த்திபெற்ற, பராக்ரமன் - பராக்கிரமசாலியான இராவணன், வரத்தினில் - சிறந்தபலவரங்களைப்பெற்றிருந்தும், வனத்திடை திரியும் நாள் சில மனித்தரொடு எதிர்க்கவும் வயிரி ஆய்த்திலன் - காட்டிற் சஞ்சரித்தகாலத்தில் இரண்டுமனிதர்களுடனே எதிர்த்தற்கும் வீரமுள்ளவனாயினானில்லை; (அங்ஙனமன்றி), மருச்சுதன் உதவு இராக்கதன் ஒருத்தனும் - வாயுகுமாரனான வீமன் பெற்ற அரக்கனாகிய கடோற்கசனொருத்தன்மாத்திரம், உரத்துடன் - வலிமையுடன், ஏற்று எதிர் தரத்தலின் - எதிர்த்து எதிரிலே தொடர்தலால், எனை பலருடனும் இவன் மரித்தனன் - மிகப்பல அரக்கரோடும் இவ்வலாயுதன் இறந்தான், எனு - என்று, பலர் சுரரும் - தேவர்கள்பலரும், துதித்து - புகழ்ந்து, வாழ்த்தி - (கடோற்கசனை) ஆசீர்வதித்து, அதிசயித்தனர் - வியந்தார்கள்; (எ - று.)

திரிபுரசங்காரஞ்செய்த சிவபிரானது கைலாசகிரியைப் பெயர்த்தெடுத்துப் புகழ்கொண்ட வல்லமையுடையவனாயிருந்தும் பலவரங்கள்பெற்று எங்கும் தடையின்றிச் சஞ்சரிப்பவனாயிருந்தும் இராமலக்ஷ்மணர்களாகிய இரண்டு மனிதர்களுடனே தனியே எதிர்த்துவெல்லுதற்குத் திறமையற்றவனாயொழிந்த ராக்ஷஸராஜனான இராவணனினும் இக்கடோற்கசனாகிய

அரக்கன் தனியேபொருது அரக்கரநேகரைத் தொலைத்து அவர்கட்குத் தலைவனான அலாயுதனையுங் கொன்றதனால் மேம்பட்டவனென்று வியந்து கொண்டாடினரென்க. 'வனத்திடை திரியுநாள் சிலமனித்தரோடெதிர்க் கவும் வயிரியாய்த்திலன்' என்றது, இராமலக்ஷ்மணர் வனவாசஞ்செய்கையில் மாரீசனுடன் வந்த இராவணன் அவர்களைப் பொருது வென்று சீதையைக் கவர்ந்துசெல்லமாட்டாமல் வஞ்சனையாகத் தொழில்செய்தமைபற்றியென்க. 'வரத்தினில் வனத்திடை திரியும் நாள்' என்பதற்கு - (தமது தந்தையாகிய தசரதசக்கரவர்த்தி தமது சிறியதாயான கைகேயிக்குக் கொடுத்திருந்த இரண்டு) வரங்களை நிறைவேற்றுதற்பொருட்டு (இராமலக்குமணர்) வனத்திற் (சென்று) சஞ்சரித்த காலத்தில் என்றும் பொருள்கொள்ளலாம். இனி, இப்பாட்டுக்கு - மனிதராலழிக்கப்பட்ட இராவணனினும் மனிதராலழிக்கப்படாமல் இராக்கதனாலேயே அழிக்கப்பட்ட அலாயுதன் மேலானவனென்னுங் கருத்துப் பட உரைக்கவும் இடமுண்டு.

இராவணன் அளகாபுரிக்குச் சென்று குபேரனோடு எதிர்த்துப் பொருது அவனைவென்று அவனதுபுஷ்பகவிமானத்தைப் பறித்து அதன்மேலேறிக்கொண்டு கைலாசமலைக்குமேலாக ஆகாயமார்க்கத்திலே விரைந்து மீண்டு வருகையில் அம்மலையின்மகிமையால் விமானம் தடைப்பட்டுநிற்க, அதற்குக் காரணமின்னதென்று அறியாது திகைக்கையில், நந்தி எதிரில் வந்து சிவபிரானுக்குத் தங்குமிடமான திருக்கைலாயத்தின் பெருமை யிதுவென்று சொல்லவுங் கேளாமல், தசமுகன், தனது பிரயாணத்துக்குத் தடையாகிய இம்மலையை இப்பொழுதே வேரோடுபறித்து எடுத்து அப்பாலெறிந்துவிட்டுத் தடையின்றி மேற்செல்வேனென்று கூறி விமானத்தினின்றும் இறங்கித் தனது இருபதுகைகளையும் அம்மலையின்கீழ்க் கொடுத்து அதனைப் பெயர்த்து அசைக்க, அதனையுணர்ந்த உருத்திரமூர்த்தி சினந்து தன்கால்விரலாற் சிறிதுஅழுத்தவே, அரக்கன் மலையின்கீழ் அகப்பட்டுக் கைநசுங்கி மிகவருந்தி வெகுகாலம்புலம்பிப் பின்னர்ச் சாமவேதகானத்தாற் சிவனருளைப்பெற்று விடுபட்டு, இராவணனென்ற பெயரையும், சிறந்ததொரு வாட்படையையும், நீண்டஆயுளையும் அப்பெருமான் அளித்தருள அப்பாற்சென்றனனென்பது வரலாறு.

'சில' என்பது - இரண்டை யுணர்த்துதல். நூல்வழக்கு. வயிரி - வைரியென்பதன் போலி. ஆய்த்திலன் என்ற எதிர்மறை யிறந்தகாலமுற்றில், ய் - இடைநிலை யென்றால், து - சாரியை; த் - இடைநிலை யென்றால், ய் - எழுத்துப்பேறு. மனித்தர் - விரித்தல். எனை = எத்தனை யென்பதன் விகாரம். எரித்தவர் - உயர்வுப்பன்மை. பலபராக்கிரமங்களிற்சிறந்த ராக்ஷஸசிரேஷ்டரான இராவணனுக்கும் கடோற்கசனுக்கும் வேறுபாடு தோன்றக் கூறினது, வேற்றுமையணி. (உ0ச)

வேறு.

[கடோற்கசன் பலவுருவங்கொண்டு பொருதல்.]

அன்று கங்குலிற் பலபதி னாயிர மரக்கரோ டலாயுதன் றன்
னைக்,கொன்று வெம்பணிக் கொடியவன் சேனையைக் குரங்குகொள்
சோதைபோற் கலக்கி, யொன்று பத்துநூ றாயிரங் கோடியா முரு
வுகொண் டிவுளிதேர் களிறுள், சென்றி மைப்பொழு தளவையில்
யாவருந் தென்புலம் படருமா செற்றான்.

(இ - ள்.) (கடோற்கசன்),—அன்று கங்குலில் - அன்றைநாளிரவிலே, பல பதினாயிரம் அரக்கரோடு அலாயுதன் தன்னை - அநேகம்பதினாயிரக் கணக்கான இராக்கதர்களுடனே அலாயுதனையும், கொன்று—, வெம் பணி கொடியவன் சேனையை - கொடியபாம்புக்கொடியையுடையவனான துரி

யோதனனது சேனையை, குரங்கு கொள் கோதை போல் கலக்கி - குரங்கு கைக்கொண்டபூமாலைபோல(ச் சின்னபின்னமாம்படி) நிலைகலங்கச்செய்து,— ஒன்று பத்து நூறு ஆயிரம் கோடி ஆம் உருவு கொண்டு - மிகப்பல வான வடிவங் கொண்டு,—சென்று - எதிர்த்துப்போய், இவுளி தேர் களிறு ஆள் - சதுரங்கசேனைகளும், யாவரும் - (அச்சேனாவீரர்) பலரும், இமை பொழுது அளவையில் - ஒருமாத்திரைப்பொழுதளவினுள்ளே, தென் புலம் படரும் ஆ - தென்திசையிலுள்ளதான யமலோகத்துச் சேரும்படி [இறக்கும்படி], செற்றான் - அழித்தான்; (எ - று.)

ஆ - ஆறு என்பதன் விகாரம். சென்று படரும் ஆ என்று இயைத்து, சென்றுசேரும்படி யென்றலு மொன்று. பணிக் கொடியவன் என்பது - பாம்புபோலக் கொடியவ னென்றும் பொருள்படும். பொழுது அளவை - பொழுதாகிய அளவை யென விரியும்; இருபெயரொட்டுப்பண்புத்தொகை. அளவு எனினும், அளவை யெனினும் ஒக்கும்; அளவை யென்பதில், ஐ-சாரியையென்றாவது, வை - தொழிற்பெயர்விகுதி யென்றாவது கொள்க. இனி, அளவையில் யாவரும் என்று எடுத்து, அளவற்றஎல்லாரும் என்னவுந்தகும். குரங்குகொள்கோதைபோற் கலக்கி - உவமையணி.

இக்கவி-முதற்சீரும் ஏழாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றையைந்தும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட எழுசீராசிரியவிருத்தம்.(௨0௫)

வேறு.

[கடோற்கசன் பலவகைமாயை செய்தல்.]

சண்டமாருதமா யெழுந்திடு மொருகாற் சலதியா யெழுந்திடு மொருகாற், கொண்டலா யுதகம் பொழிந்திடு மொருகாற் குன்றமா யுயர்ந்திடு மொருகான், மண்டுபா வகனா யெரிந்திடு மொருகால் வல்லிரு ளாய்வரு மொருகாற், பண்டுதான் வல்ல மாயைகள் பலவும் பயிற்றினன் மாருதி பயந்தோன்.

(இ - ள்.) மாருதி பயந்தோன்-வாயுகுமாரனான வீமன் பெற்ற மகனாகிய கடோற்கசன், ஒரு கால்-ஒருமுறை, சண்டமாருதம் ஆய்-பெருங்காற்று வடிவமாய், எழுந்திடும் - மேல்வீசுவான்; ஒருகால்—, சலதி ஆய் - கடல் வடிவமாய், எழுந்திடும் - பொங்குவான்; ஒருகால்—, கொண்டல் ஆய் - காளமேகவடிவமாய், உதகம் பொழிந்திடும் - நீர்மழைபொழிவான்; ஒருகால்—, குன்றம் ஆய் - மலைவடிவமாய், உயர்ந்திடும் - உயர்ந்துகாணப்படுவான்; ஒருகால்—, மண்டு பாவகன் ஆய் - மூண்டெழுகிற நெருப்பின்வடிவமாய், எரிந்திடும் - எரிந்து தோன்றுவான்; ஒருகால்—, வல் இருள் ஆய் வரும் - வலிய [அழித்தற்கரிய] இருளாய் அடர்ந்துவருவான்; (இவ்வாறு), பண்டு தான் வல்ல மாயைகள் பலவும் பயிற்றினன்-முன்னந் தான் தேர்ந்துள்ள பலவகைமாயைகளையுஞ் செய்திட்டான்; (எ - று.)

ஜலதி - வடசொல்; நீர்தங்குமிடம். பாவகன் என்ற வடசொல் - (பொருள்களைப்) பரிசுத்தமாகச்செய்பவ னென்று காரணப்பொருள்படும்.

இதுமுதல் இச்சருக்கம்முடியுமளவுமுள்ள பதினைந்து கவிகள்-இரண்டு நான்கு ஏழாஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (௨0௬)

[அப்பொழுதுஉண்டான இரத்தப்பெருக்குமிகுதி.]

இம்பர்வாளரக்கர்பிணத்தொடுநிணந்தின் றிடங்கொள்வாய்கொடுமடுத்திலனேற், றும்பிமாபரிமாவீரரென் றிவர்மெய் துணித்தலிற் சொரிந்தசெஞ்சோரி,யம்புராசிகளிலண்டகோளகையிலடங்குமோ வண்டமுமம்பிளந்திட், டும்பர்வாரியையுங்கலக்குமேமிகவுமுண்மை நாமுரைசெயும்பொழுதே.

(இ - ள்.) நாம் உண்மை உரை செயும் பொழுது - நாம் மெய்யாகக் கூறுமளவில்,—(கடோற்கசன்), இம்பர் வாள் அரக்கர் பிணத்தொடு நிணம் தின்று - இவ்விடத்துவந்திறந்த கொடியஅரக்கர்களின் பிணங்களைக் கொழுப்புக்களுடனே புசித்து, இடம் கொள் வாய்கொடு மடுத்திலனேல் - பரந்த வாயினாற் குடித்திடானாயின், தும்பிமா பரிமா வீரர் என்ற இவர் மெய் துணித்தலின் சொரிந்த செம் சோரி - யானை குதிரை வீரர்களது உடம்பைத் துணித்தலாற் பெருகிய சிவந்தஇரத்தம், அம்புராசிகளில் அண்டகோளகையில் அடங்குமோ - கடல்களிலும் அண்டகோளம் முழுவதிலும் அடங்குமோ? (அடங்காமல்), அண்டமும் பிளந்திட்டு - அண்டகோளத்தையும் உடைத்துக்கொண்டு, உம்பர் வாரியையும் மிகவும் கலக்குமே - வெளியிலுள்ள பெரும்புறக்கடலையும் மிகுதியாகச்சேர்ந்து கலங்கச்செய்யுமே.

கடோற்கசன் தான்கொன்ற பிராணிகளின் உடலை உணவாகத்தின்று அவற்றின் இரத்தத்தை நீராகப்பருகின னென்ற உண்மையை இங்ஙனம் வெளியிட்டபடி. இரத்தப்பெருக்கின்மிகுதியை விளக்குதற்கு, இதுகூறினார். பிணத்தொடு நிணந் தின்று - நிணத்தொடு பிணந் தின்று என விகுதி பிரித்துக்கூட்டுக. 'தும்பிமா பரிமா வீரர் என்ற இவர்மெய்' - இருதிணையுங் கலந்து சிறப்பினால் உயர்திணைமுடிபைப்பெற்ற திணைவழுவமைதி: [நன் - பொது - உக.] தும்பிமா பரிமா வீரர் - பெயர்ச்செவ்வெண். தும்பிமா - யானையாகிய விலங்கு; பரிமா - குதிரையாகிய விலங்கு. அம்புராசி - நீரின் தொகுதியுடைய தெனக் காரணக்குறி. நாம் - இயல்புபற்றிவந்த தனித்தன்மைப்பன்மை: கவிக்கூற்று. ஏ - தேற்றம். (உ0எ)

[கடோற்கசனை வேலினாற்கொல்லும்படி துரியோதனன் கர்ணனோடுகூறல்.]

கட்செவியெழுதுங்கொடியுடைக்கொடியோன்கன்னனைக்கடைக்கணித்தருளி,விட்சுரபதிவந்தன்றுனக்களித்தவேலினால்வீமன்மாமகனை, யுட்செறிசினமும்வலிமையுமுயிருமுடனழிந்தும்பரூர்புகுதப்புட்செறிதொடையாய்கொல்கெனவிரைவிற்புகைந்துநாப்பொறியெழப்புகன்றான்.

(இ - ள்.) கட்செவி எழுதும் கொடி உடை கொடியோன் - பாம்பின் வடிவமெழுதப்பெற்ற துவசத்தையுடைய துஷ்டனான துரியோதனன்,— கன்னனை கடைக்கணித்தருளி கர்ணனை அன்போடு பார்த்து,—'புள் செறி தொடையாய் - வண்டுகளடர்ந்த மாலையையுடையவனே! விண் சுரபதி - சுவர்க்கத்தில் வாழ்கிற தேவேந்திரன், அன்று - அந்நாளில் [முன்பொரு சமயத்தில்], வந்து—,உனக்கு—, அளித்த - கொடுத்தருளின, வேலினால்—, வீமன் மா மகனை - வீமனது சிறந்த புத்திரனான இந்தக்கடோற்கசனை, உள் செறி சினமும் வலிமையும் உயிரும் உடன் அழிந்து உம்பர் ஊர் புகுத - மனத்தில் நிறைந்த கோபமும் தேகபலமும் உயிரும் ஒருசேர ஒழியப்பெற்றுத் தேவர்களதுவீரசுவர்க்கத்துச் சேரும்படி, கொல்க - கொல்வாயாக,' என-என்று, விரைவின்-விரைவாக, நா புகைந்து பொறி எழ புகன்றான் - நாக்குப் புகைகொண்டு தீப்பொறியெழும்படி கூறினான்; (எ - று.)

கட்செவி - கண்களையே காதுகளாகவும் உடையது; அன்மொழித்தொகை: வடநூலார் 'சக்ஷுஶ்ரவா:' என்று பாம்புக்கு ஒருபெயர் கூறுவர்; பாம்புகட்குக் கண்ணென்னும்பொறியொன்றிலேயே காணுதலும் கேட்டலு மாகிய புலனறிவிரண்டும் அமைந்திருத்தல் காண்க. பாண்டவர்க்குத் தூதுசென்றபொழுது கண்ணன் ஏவியபடி இந்திரன் அந்தணவடிவங் கொண்டுசென்று கர்ணனை இரந்து அவனதுகவசகுண்டலங்களைப் பெற்றவுடன் சிறந்தவொருவேற்படையை அவனுக்குக் கைம்மாறாகத் தந்தனனென அறிக. விரைவிற்கொல்கவென இயையினுமாம். புள் - பறவை;

பொதுப்பெயர்,சிறப்பாய் வண்டுக்கும் வழங்கும். கடைக்கணித்தல்-கடைக் கண்ணினால் நோக்குதல்; கடாக்ஷவீக்ஷணம். (உ0அ)

[அதற்குக் கர்ணன் உடன்படாமை.]

புகன்றபோதருக்கன்புதல்வனுமாயப்போரிதுகங்குலிப்பொழுதே,யகன்றிடுமகன்றாலிவனுயிர்பிறிதோரம்பினாலகற்றுவித்திடலா, மிகன்றபோர்முனையினாளையிவ்வடிவேலெறிந்துநானிமையவர்க்கிறைவன், மகன்றனா ருயிர்கொன்றுனதுவெண்குடைக்கீழ்வைப்பனிவ் வையகமென்றான்.

(இ - ள்.) புகன்றபோது - (இங்ஙனம் துரியோதனன்)சொன்னபொழுது,—அருக்கன் புதல்வனும் - சூரியகுமாரனான கர்ணனும்,—(அத்துரியோதனனை நோக்கி),—'இது மாயம் போர் - அரக்கனான கடோற்கசன் செய்யும் இப்போர் மாயையினாற்செய்யும் போராம்; கங்குல் - (அரக்கர்க்கு வலிமைமிகுங்காலமான) இராப்பொழுது, இப்பொழுதே அகன்றிடும் - விரைவிலே நீங்கும்; அகன்றால் - நீங்கிவிட்டால், (உடனே), இவன் உயிர் பிறிது ஓர் அம்பினால் அகற்றுவித்திடல் ஆம் - இவனுடையஉயிரை வேறோரம்பினால (எளிதில்) ஒழியச்செய்திடலாம்; நாளை-நாளைக்கு, இகன்றபோர் முனையில் - எதிர்த்துச்செய்யும் போரிடத்திலே, நான்—, இ வடிவேல் எறிந்து - கூரிய இந்த வேலாயுதத்தை வீசி, இமையவர்க்கு இறைவன் மகன்தன் ஆர் உயிர் கொன்று - தேவேந்திரனது புத்திரனான அருச்சுனனது அழித்தற்கரிய உயிரை யழித்து,இ வையகம் உனது வெள்குடை கீழ் வைப்பன் - இந்நிலவுலகமுழுவதையும் உன்னுடைய புகழுள்ள ஆளுகையின்கீழ்(த் தடையற) வைப்பேன்', என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

இனி அருச்சுனன்மேல் எறிந்து அவனைக்கொல்வதற் கென்று வைத்திருக்கிற வேலைக்கொண்டு இவ்வரக்கனைக் கொல்லேன்; மாயப்போர் செய்யும் இவ்வரக்கனை இவ்விரவுகழிந்தவாறே வேறுபடைக்கலத்தாற் கொன்றிடலாம் என்று கூறி மறுத்தன னென்பதாம். இந்தவேல் அருச்சுனனை யாவது கடோற்கசனையாவது இருவரிலொருவனையே தவறாமற் கொல்லவல்லது; "மண்டுபோரினில் வயந்தரு மிதுவென மற்றொரு கொற்றவேலெடுத்தே," "வெலற்கருந்திறல் விசயன்மேலொழித்து நீ வெஞ்சினமடங்கல்போ னெஞ்சிற், கலக்கமொன்றறப் பொருதிறல் புனைந்திடு கடோற்கசக்காளைதன் னுயிரே,யிலக்குவந்தெதிர்மலைந்தபோ திதற்கென வேவெனமறையையு மியம்பிச், சொலற்கரும்புகழ்ச் சுரபதி கொடுப்ப வத்தோன்றலுந் தொழுது கைக்கொண்டான்" எனக் கீழ்க் கிருட்டிணன் றூதுசருக்கத்து வந்தமை காண்க:"பார்த்தனைப் பட்டுருவப் பாம்பா மெனமதியாய், மூர்த்தி யிதுவொப்ப தில்லையென்றான் - பேர்த்து, விடுவிகன்றவேதியனும் வீமன்மகன் றன்மேற், படவென்று கைவிட்டான் பார்த்து", "வண்டமர்தார் வானவர்கோ னங்கர்கோன் றன்னுடைய, குண்டலங் கைக்கொண்டவன்கை வேல்கொடுத்தே - யிண்டன், ஒருவரைக்கொல் லென்றுணர்ந் துணர்ந்தபோனு, னிருவிசும்பிற் றேவர்கோ னோர்ந்து" என்ற பெருந்தேவனார்பாரதமுங் காணத்தக்கது.

அரக்கர் நிசாசரராதலால் இரவில் மாயப்போரை மிகுதியாகச்செய்ய வல்ல ரென்பதுபற்றிக் கடோற்கசனதுபோரை 'மாயப்போர்' என்றும், இம்மாயம் பகலில் அங்ஙனஞ் [illegible]லா தெனக்கொண்டு 'கங்குலகன்றால் இவனுயிர்அகற்றுவித்திடலாம்' என்றுங் கூறினான். பெரியதோராபத்திற் பிரயோகிக்கத்தக்க அத்தெய்வவேற்படையைக் கடோற்கசன்மேல் இப்பொழுது விடுத்துப் போக்காது அதுகொண்டு பின்பு அருச்சுனனைக் கொல்லலா மென்பது, கர்ணன் [illegible]ருத்து. நாளை - பின்பு என்றபடி. வையகம் - (பொருள்களை) வைக்குமிட மெனக் காரணக்குறி. (உ0க)

[துரியோதனன் வற்புறுத்தக் கர்ணன் வேலெறிதல்.]

என்றலுமரசன்யாமுமெம்படையு மிரவிடைப்பிழைக்கநீயிவ னைக், கொன்றுபோர்பொருதுசிலைவிசயனையுங் கொல்லுதியெனம னங்கொதித்துக், கன்றலுமவ்வேலக்கணத்தவன்மேற்காலவெஞ்சூ லமொத்தெறிந்தான், றென்றலுநிலவுநிகரெனத்தன்னைச்சேர்ந்தவ ரிளைப்பெலாந்தீர்ப்பான்.

(இ - ள்.) என்றலும் - என்று(கர்ணன்)சொன்னவுடனே, அரசன் - துரியோதனன்,—'யாமும் எம் படையும் இரவிடை பிழைக்க-நாமும் நமது சேனையும் இவ்விரவிலே தப்பிப்பிழைத்திடுமாறு, நீ இவனை கொன்று - நீ (அவ்வேலினால்) இவ்வரக்கனை (இப்பொழுது) கொன்று, போர் பொருது சிலை விசயனையும் கொல்லுதி - (பின்பு)போர்செய்து வில்வில்வல்ல அருச் சுனனையும் (வேறோராயுதத்தாற்) கொல்வாயாக', என - என்றுசொல்லி, மனம் கொதித்து கன்றலும் - மனம் மிகவெதும்பியவளவில்,—தென்றலும் நிலவும் நிகர் என தன்னை சேர்ந்தவர் இளைப்பு எலாம் தீர்ப்பான் - தென் றற்காற்றும் நிலாவும் ஒப்பாம்படி தன்னையடுத்தவர்களுடைய இளைப்புமுழு வதையுங் களைபவனான கர்ணன், அ கணத்து - அந்தக்ஷணத்திலே, அ வேல்- அந்தவேலாயுதத்தை, அவன்மேல் - அந்தக்கடோற்கசன்மேல், காலன் வெம் சூலம் ஒத்து எறிந்தான் - யமனது கொடிய சூலாயுதத்தை (யெறிந் தாற்) போல எறிந்தான்; (எ - று.)

'இப்பொழுது இவ்வேலினால் இவ்வரக்கனைக் கொன்று எம்மையும் எமதுசேனையையும் பிழைப்பித்தாற் பின்பு அருச்சுனனை வேறுவகையாற் கொல்லலாம்' என்று கூறித் துரியோதனன் நிர்ப்பந்தித்தமாத்திரத்திலே, மிக்க கண்ணோட்டமுடைய தோழனான கர்ணன் அவனதுபேச்சை மறுக்க மாட்டாமல் தாட்சிணியப்பட்டுக் கடோற்கசன்மேல் வேலையெறிந்தன னென்பதாம். தென்றலும் நிலாவும் போலத் தன்னையடுத்தவரிளைப்பைத் தீர்ப்பவனாதலின், தன்னைத்துணைகொண்ட துரியோதனனது சங்கடத் தைத் தீர்க்கும்பொருட்டு அவன்கருத்துக்குத் தான்இணங்கி வேலெறிந்தா னென்னுங் கருத்து அமையக் கூறியதனால், கருத்துடையடைகோளியணி. காலசூலம் - தவறாமல் அழித்தற்கு உவமை. காலன் + வெஞ்சூலம் = கால வெஞ்சூலம்; "சிலவிகாரமாமுயர்திணை." விசயனையும், சிலை - விற்போர்த் திறத்தினால், கொல்லுதி என்று கூறலுந் தகும். (உகo)

[கடோற்கசன் இறத்தல்.]

எறிந்தவேல்பகைவன்மார்பகந்துளைத்திட்டிந்திரனிடத்துமீ ண்டெய்த, மறிந்தமால்வரைபோலரக்கனுமுகம்பார் மருங்குறவிழு ந்துயிர்மடிந்தான், செறிந்தருகணைந்தசேனையும்பயந்தோர்சிந்தை யுஞ்செயலறக்கலங்க, வறிந்தவர்க்கன்றியறியொணாவையனவர்துய ரகற்றுமாறுரைப்பான்.

(இ - ள்.) எறிந்த வேல் - (கர்ணன்)வீசிய வேற்படை, பகைவன் மார் பகம் துளைத்திட்டு - பகைவனான கடோற்கசனது மார்பினிடத்தை நன்றா கத்துளைத்து, இந்திரனிடத்து மீண்டு எய்த - (தனக்குஉரியவனான)இந்திர னிடத்திலே மீண்டுசென்றுசேர,—அரக்கனும் - கடோற்கசனும், மறிந்த மால் வரை போல் - கவிழ்ந்துவிட்ட பெரியமலைபோல, பார்மருங்கு முகம் உற விழுந்து-தரையிலே முகம்படும்படி கவிழ்ந்துவிழுந்து, உயிர்மடிந்தான்- இறந்தான்; (அப்பொழுது), செறிந்து அருகு அணைந்த சேனையும் - அடர் ந்து அருகிலடுத்துள்ள பாண்டவர்சேனையும், பயந்தோர் சிந்தையும் - (அவ னது) தந்தையரான பாண்டவரது மனமும், செயல் அற கலங்க - செய் தொழிலொன்றுமில்லாதபடி கலக்கமடைய,—அறிந்தவர்க்கு அன்றி அறிய

ஒணா ஐயன்-தத்துவஞானமுடையோர்க்கேயன்றி (மற்றையோர்க்கு)அறிய முடியாத கடவுளான கண்ணபிரான், அவர் துயர் அகற்றும் ஆறு உரைப்பான் - அவர்களுடைய துன்பத்தைப் போக்கும்பொருட்டு(ச் சில) சொல்வான்; (எ - று.)—அதனை அடுத்தஇரண்டுகவிகளிற் காண்க.

மருங்கு-ஏழனுருபு. பயந்தோர்-பெற்றவர். பெரியதாதையையும் சிறிய தாதையரையுஞ் சேர்த்து 'பயந்தோர்' என்றது,உபசாரவழக்கின்பாற்படும்; இதனால், பாண்டவரைவரிடத்தும் கடோற்கசனுக்குஉள்ள பிதிருபக்தியும், அவர்கட்கெல்லாம் அவன்பக்கலுள்ள புத்திரவாற்சல்யமும் விளங்கும். அறிந்தவர் - எல்லாப்பொருள்களினியல்பையும் ஐயந்திரிபற உள்ளபடியுணர்ந்தவர். "பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய, வித்தகன்" என்றாற்போல, 'அறிந்தவர்க்கன்றி யறியொணா வையன்' என்றார். அறியொணா - அறியவொண்ணாத என்றதன் மரூஉ. (உகக)

[இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்: கிருஷ்ணன் பாண்டவர்க்குச் சமாதானங்கூறல்.]

இந்தவேல்கவசகுண்டலங்கவர்நாளிந்திரனிரவிமைந்தனுக்குத்
தந்தவேலிதனையாவர்மேல்விடினுந்தரிப்பறத்தெறுமவன்வரத்தா
லுந்தவேலமரில்விசயன்மேற்றொடுக்குமுரகவம்பினுக்குயிருய்ந்தா
லந்தவேலையின்மற்றெறிவதற்கிருந்தானாற்றலாற்கூற்றினுங்கொடியோன்.

(இ - ள்.) இந்த வேல் - இவ்வேற்படை, இந்திரன் கவச குண்டலம் கவர் நாள் இரவி மைந்தனுக்கு தந்த வேல் - இந்திரன் (கர்ணனது) கவச குண்டலங்களை இரந்துபெற்றகாலத்தில் அவனுக்குக் கொடுத்த வேலாம்: இதனை - இவ்வாயுதத்தை, யாவர்மேல் விடினும் - யார்மேற் பிரயோகித்தாலும், (இது), அவன் வரத்தால் - அவ்விந்திரனது வரத்தினால், தரிப்பு அற தெறும் - (அவர்களைத்) தாங்கமுடியாதபடி கொல்லும்; ஆற்றலால் கூற்றினும் கொடியோன் - வலிமையால் யமனினுங் கொடியவனான கர்ணன், அமரில் விசயன்மேல் தொடுக்கும் உரகம் அம்பினுக்கு உயிர் உய்ந்தால் - போரில் (தான் இனி) அருச்சுனன்மேற் பிரயோகிக்கும் நாகாஸ்திரத்துக்கு (அவ்வருச்சுனன்) உயிர் தப்பிப்பிழைப்பானாயின், அந்த வேலையில் - அச்சமயத்தில், உந்த வேல் - இந்த வேற்படையை, எறிவதற்கு இருந்தான் - (அவன்மேற்) பிரயோகித்தற்கு எண்ணியிருந்தான்; (எ - று.)

**நாகாஸ்திரத்தின் வரலாறு:**—கிருஷ்ணஅருச்சுனரது அநுமதியின்படி காண்டவவனத்தை நெருப்புப்பற்றியெரிக்கையில் அங்குநின்றோடுகிற பிராணிகளை அருச்சுனன் அம்பெய்துகொன்று அத்தழலிலே வீழ்த்திவருகிற பொழுது, தக்ஷகனென்னும்நாகராசனது மனைவி தன்குழந்தையாகியஅசுவசேனனென்னுஞ் சிறுநாகத்தைத் தன்வாயினுள் மறையவைத்துக்கொண்டு அங்கிருந்து ஆகாயமார்க்கத்தி லெழும்ப,அதுகண்டு பார்த்தன் தன்பாணத்தால் அந்த நாககன்னிகையின் தலையைத் துணிக்க, உடம்பு நெருப்பிலும் தலை வெளியிலு மாக விழுந்தது; அப்பொழுது அதன்வாயிலிருந்த நாககுமாரன் வால்மாத்திரம் அறுப்புண்டு பிழைத்துஎழுந்து, தன்தாயைக் கொன்ற அவன்மீது கறுக்கொண்டு, அவனுக்குப் பகைவன்யாரென்று விசாரித்து அஸ்திரவடிவமாகக் கர்ணனை யடைந்தன னென்பதாம். அதனை அருச்சுனன்மேல் அவன் ஒருமுறையே விடும்படியும், அப்பொழுது அருச்சுனன் அதற்குத் தப்பிப் பிழைத்தால் மீண்டும் அதனை அவன்மேல் விடாதபடியும் குந்திதேவி கர்ணனிடம் வரம்பெற்றதனால், கர்ணன், தனது நாகாஸ்திரத்துக்கு அருச்சுனன் ஒருகால் தப்பிப்பிழைத்திடுவானாயின் பின்பு அவன்மேல் இவ்வேலை யெறிந்து அவனைக் கொல்லக் கருதியிருந்தன னென்க. 'இதனை யாவர்மேல் விடினுந் தரிப்பறத் தெறும் அவன்வரத்தால்'—"இந்த

வேல் கொள்ளு நீ யாவரே யாயிடினும், உய்ங்தொழியாவண்ண முயிர் கொள்ளும் - அந்தமில்சீர், அங்கத்தார்கோவே யமரர்கோன் நான் உனக்குத், தந்தவேல் கொள்ளாய் சமைந்து" என்று (பெருந்தேவனார்பாரதத்தில்) இந்திரன் கர்ணனை நோக்கிக் கூறியவாறு அறிக.

கவச குண்டலம் - உம்மைத்தொகை; வடசொல். தரிப்பற - உயிர் பிழைத்திராதபடி யெனினுமாம். அவன்வரம் - அவ்விந்திரனளித்த வரம்; அக்கர்ணன்பெற்ற வர மெனினுமாம். உந்தவேல் என்றவிடத்து, உகரச்சுட்டு - இகரச்சுட்டின்பொருளில் வந்தது. உந்து அ வேல் எனப்பிரித்து, அவ்வேலென்பது அவேலெனத் தொக்கதென்றுகொண்டு, (இப்பொழுது கடோற்கசன்மேற்) செலுத்திய அந்தவேற்படையை யென்று உரைப்பாருமுளர். வரத்தால் தொடுக்கும் என இயைத்து, அக்கர்ணன்தான் குந்திக்கு அளித்த வரத்தினால் அருச்சுனன்மீது போரில் (ஒருமுறையே) பிரயோகிக்கும் நாகாஸ்திரத்துக்கு என்றலு மொன்று. 'ஆற்றலாற்கூற்றினுங்கொடியோன்' என்றது, கர்ணன் இவ்வேற்படையைக் கைக்கொண்டிருப்பனாயின் அருச்சுனனைத்தவறாது அழிக்கவல்ல னென்றவாறு; ஒருகால் கூற்றுவனுக்கு உயிர்தப்பினும் கர்ணனுக்கு உயிர்தப்புத லரிதென்க. தரிப்பு-தொழிற்பெயர். அந்த, இந்த, உந்த - முச்சுட்டின் மரூஉ. (உகஉ)

அலப்படையவனுமநேகமாயிரம்பேர்ரக்கரும்விளியுமாறடர்த்
தோ,னுலப்படையவுந்தானுய்யவுமரசனுரைத்தலாலோச்சினனிவன்
மேல்,வலப்படமுனையிலின்றுமக்கவனிவழங்கினன்கன்னனேயென்
றுன்,குலப்படவரவின்முடியின்மேனடித்தகூத்துடைக்கோவியர்கூத்தன்.

(இ - ள்.) 'அலம் படையவனும் - அலாயுதனும், அநேகம் ஆயிரம் பேர் அரக்கரும் - (மற்றும்) பல ஆயிரக்கணக்கான பெரிய இராக்கதர்களும், விளியும் ஆறு - இறக்கும்படி, அடர்த்தோன் - பொருது அழித்தவனான கடோற்கசன், உலப்பு அடையவும் - அழிவையடையும்படியும், தான் உய்யவும் - தான்பிழைத்திடும்படியும், அரசன் - துரியோதனன், உரைத்தலால் - சொன்னதனால், (கர்ணன்), இவன்மேல் ஓச்சினன் - (அவ்வேற்படையை) இந்தக்கடோற்கசன்மேல் வீசியெறிந்தான்; (ஆதலால்). முனையில் - போரில், வலம் பட - வெற்றியுண்டாக, உமக்கு - உங்கட்கு, கன்னனே - கர்ணன்தானே, இன்று - இன்றைக்கு, அவனி வழங்கினன் - இராச்சியத்தைக் கொடுத்தவனாயினான்', என்றான் - என்றுசொல்லியருளினான்: (யாவனெனில்),—குலம் படம் அரவின் முடியின்மேல் நடித்த கூத்து உடை - சிறந்த படத்தையுடைய (காளியனென்னும்) பாம்பினது தலையின்மேல் ஆடிய நடனத்தையுடைய, கோவியர் கூத்தன் - கோபஸ்திரீகளோடு கூத்தாடியவனாகிய கண்ணபிரான்; (எ - று.)

இந்தவேலை இப்பொழுது உபயோகியாமல் வைத்திருந்து, பின்பு அருச்சுனன் நாகாஸ்திரத்துக்குத் தப்பியுய்வானாயின் அப்பொழுது அவன்மேல் எறிவானானால், அவன் தவறாமல் இறந்திடுவ னாதலால், அங்ஙனஞ்செய்யாமல் இதனை இப்பொழுதே இவன்மேல் எறிந்து போக்கியமைபற்றி, உமக்குக் கர்ணனே போரில் வெற்றியும் அரசும் இன்றுகொடுத்தவனாவ னென்று கண்ணன் அருளிச்செய்தான். எத்துணைப்பேராற்றலுடையோரையுந் தவறாதுகொல்லவல்ல கொடிய இவ்வேலாயுதத்தைக் கர்ணன் வைத்திருந்து பின்பு அருச்சுனன்மேலேவாது கடோற்கசன்மேல் இப்பொழுதுஎறிந்துவிட்டது, இனி அருச்சுனன் இறவாது பிழைத்துப் பகைவெல்லப் பாண்டவர்அரசுபெறுதற்கு ஏதுவாதலால், 'இன்று உமக்கு அவனிவழங்கினன் கன்னனே' என்றா னென்க; அவனிவழங்குதற்குக் கர்ணன் பரம்பரைக்காரணமென்றவாறு. இந்தஉண்மையை வெளியிட்டது, பாண்டவரது புத்திரசோகத்தைத் தீர்க்கும்பொருட் டென்க. அருச்சுனனது பிழைப்பைக் கூறித்

கடோற்கசனது இறப்புத்துயரத்தைத் தீர்த்திட்டான். 'போரரக்கர்' என்றும் பாடம். குல அரவு என இயையும்: சிறந்தஜாதிநாக மென்க.

அரவின்முடிமேல்நடித்த கதை:—[திருவே. ப. கசு, க0சு.]

கண்ணன் திருவாய்ப்பாடியில் ஆய்ச்சியரோடு கலந்து குரவைக்கூத்து [ராஸக்கிரீடை], குடக்கூத்து முதலிய நடனங்களைத் திருவிளையாட்டாக நிகழ்த்தி அவர்கள்மனத்தை மகிழ்வித்துத் தானும் திருவுள்ளமுவந்தமை பற்றி, 'கோவியர்கூத்தன்' என்றார். பசுக்களைக் காப்பவ னென்ற காரணத்தால், இடையனுக்கு வடமொழியில் கோப னென்று பெயர்; அதன்பெண்பாலான கோபீ யென்பது விகாரப்பட்டுக் கோவி யென்று ஆகி, பின்பு பலர்பால்விகுதியேற்றுக் கோவியரென நின்றது. கூத்து - தொழிலுணர்த்தும் பகாப்பதமாகிய பெயர்.

இந்தஇடத்திற் கண்ணபிரானை வேறுவகையாற் குறியாமல் 'அரவின் முடியின்மேல் நடித்த கூத்துடைக் கோவியர்கூத்தன்'எனக் குறித்ததனால், கடோற்கசன்மேற் கர்ணன் வேலையெறிந்து அவனைக்கொன்றவளவிலே அருச்சுனன் பிழைத்ததற்காகக் கண்ணபிரான் மிகமகிழ்ந்து கூத்தாடின னென்று வியாசபாரதத்திற் கூறப்பட்ட செய்தி குறிப்பித்தவாறும். (உகங)

[அதுகேட்டுப் பாண்டவர் தேறி மகிழ்தல்.]

தருமனுமருத்துமடன்மருத்துவருந்தந்தவர்மருத்துவான்மகனைப்
பெருமையும்வலியுநல்வினைப்பயத்தாற்பெற்றனமெனவுறத்தழுவி
யருமையினளித்தமகவுடைச்சோகமாற்றியங்குவகையராஞர்
கருமமுமுலகத்தியற்கையுமுணர்ந்தோர்கலங்குதலுறுவரோகலங்கார்.

(இ - ள்.) தருமனும் - யமதருமராசனும், மருத்தும் - வாயுதேவனும், அடல் மருத்துவரும் - வல்லமையுள்ள தேவவைத்தியரான அசுவிநீதேவர்களும், தந்தவர்-பெற்றகுமாரராகிய தருமனும் வீமனும் நகுலசகதேவரும், அங்கு - அப்பொழுது [கண்ணன்வார்த்தையைக் கேட்டபொழுது], பெருமையும் வலியும் நல் வினை பயத்தால் பெற்றனம் என - கௌரவத்தையும் வலிமையையும் புண்ணியப்பயனாகப்பெற்றோ மென்று எண்ணி, மருத்துவான்மகனை உற தழுவி - இந்திரகுமாரனான அருச்சுனனை நன்றாகத்தழுவிக்கொண்டு, அருமையின் அளித்த மகவுடைசோகம் ஆற்றி - அருமையாகத் தாம்பெற்ற புத்திரனான கடோற்கசனது சம்பந்தமான விசனத்தை யொழித்து, உவகையர் ஆனார் - மகிழ்ச்சியுடையவரானார்கள்:கருமமும் உலகத்து இயற்கையும் உணர்ந்தோர் - வினைப்பயனையும் உலகநடத்தையின் தன்மையையும் அறிந்தவர்கள்,கலங்குதல் உறுவரோ-கலக்கமடைவார்களோ?கலங்கார் - கலக்கமடையமாட்டார்கள்; (எ - று.)

ஈற்றடியிற்கூறிய பொதுப்பொருளைக்கொண்டுமற்றையடிகளிற்கூறிய சிறப்புப்பொருளை விளங்கவைத்ததனால், வேற்றுப்பொருள்வைப்பணி. மற்றைப் பாண்டவரது பெருமைக்கும் வலிமைக்கும் அருச்சுனன் முக்கிய காரண மென்பதுபற்றி, அவன்பிழைக்கப்பெற்றதனைமற்றவர் 'பெருமையும் வலியும் நல்வினைப்பயத்தாற் பெற்றனம்' என்று பாராட்டினர். மகவுடைச்சோகம் - புத்திரசோகம்; மகனிறந்ததனாலான சோக மென்க. 'மகவுடை சோகம்' என்ற பாடம் - மகவு உடை சோகம் என்றுபிரிந்து, மகனிறந்த சோகம் என்று பொருள்படும்; உடைசோகம் - வினைத்தொகை: காரணப் பொருளது. உலகத்தியற்கை-உலகத்திற் சுகதுக்கங்கள் வந்துநேரிடுதலும், போரில் வீரர்க்கு அழிவு இயல்பாதலும். மருத், மருத்வாந் - வடசொற்கள். மருத்துவர் - மருந்துதருபவர்; மருந்து என்ற மென்றொடர்ப்பகுதி வன்றொடராயிற்று:அர் - விகுதி. மருத்வாந்-தேவர்களையுடையவன். வற்புறுத்த, 'கலங்குதலுறுவரோ கலங்கார்'என வினவிடையாக்கூறினார். (உகச)

[துரோணன் விராடனையும் துருபதனையும் தலைதுணித்தல்.]

இராவணன்படுபோர்க்களமெனக்கிடந்தவிந்தவெங்களத்திடை
மீண்டு, மராவுயர்துவசனாணையால்வரிவில்லாரியனனீகினியுடன்போ
ய்,விராடனும்யாகசேனனுமுதலாம்வேந்தரோடெதிர்ந்தமர்மலைந்து,
தராதிபர்பலரோடவ்விருவரையுஞ்சரங்களாற்சிரங்களைத்தடிந்தான்.

(இ - ள்.) இராவணன் படு போர் களம் என கிடந்த - இராவணன் இறந்துவிழுந்த யுத்தகளம்போலிருந்த [மிகப்பலஅரக்கர் இறந்துவிழப்பெற்ற], இந்த வெம் களத்திடை - இந்தக்கொடியபோர்க்களத்திலே, மீண்டும் - பின்பு, அரா உயர் துவசன் ஆணையால் - பாம்புவடிவத்தை உயரநிறுத்திய கொடியையுடையவனான துரியோதனனது கட்டளையினால், வரி வில் ஆரியன் - கட்டமைந்த வில்வித்தையில் தேர்ந்த ஆசாரியனான துரோணன், அனீகினியுடன் போய் - சேனையுடனே சென்று, விராடனும் யாகசேனனும் முதல் ஆம் வேந்தரோடு எதிர்ந்து அமர் மலைந்து - விராடனும் துருபதனும் முதலான அரசர்களுடனே எதிர்த்துப் போர்செய்து, தராதிபர் பலரோடு அ இருவரையும் - பலஅரசர்களுடனே அந்தஇரண்டுபேரையும், சரங்களால் சிரங்களை தடிந்தான் - அம்புகளினால் தலைகளைத் துணித்தான்.

ராவணன் என்ற வடசொல் - கூவினவனென்று பொருள்படும்: கைலாசமலையின்கீழ்க் கையகப்பட்டுக்கொண்டபொழுது பேராரவாரமிட்டமைபற்றி வந்த பெயர்; இனி, (தான்செய்யும் பலதுன்பங்களினால் உலகத்தாரை அலறிக்) கதறிக் கூவச்செய்தவன் என்றுமாம்; அன்றி, விச்ரவஸின் மகனென்னும் பொருளில் ராவணனென்று ஆயிற்றென்றும் காரணங்கூறுவர். ஆணை - ஆஜ்ஞா என்ற வடசொல்லின் சிதைவு. தரா அதிபர் - பூமிக்குத்தலைவர். 'சரங்களாற்சிரங்களை' என்றவிடத்துப் பிராசங் காண்க. (உகரு)

[திட்டத்துய்மன் 'மறுநாள் துரோணனைக் கொல்வேன்' எனல்.]

துருபதன்மடிந்தவெல்லையிற்றிட்டத்துய்மனும்வெகுண்டுள
ஞ்சுடப்போ,யிருபதமரசர்முடிகமழ்முனியையேன்றுவஞ்சினமெடு
த்துரைத்தான், பொருபகைமுனையிலெந்தையையென்முன்பொன்
றுவித்தனையுனைநாளை, நிருபர்தமெதிரேநின்மகன்காணநீடுயிரகற்
றுவனென்றே.

(இ - ள்.) துருபதன் மடிந்த எல்லையில் - துருபதராசன் இறந்தவளவிலே,—திட்டத்துய்மனும் - (அவன்மகனான) த்ருஷ்டத்யும்நனும், — வெகுண்டு - கோபித்து, உளம் சுட - மனந்தபிக்க, போய் - சென்று,—இருபதம் அரசர் முடி கமழ் முனியை ஏன்று - இரண்டுபாதங்களிலும் அரசர்களது முடியின் மணம் வீசப்பெற்ற துரோணாசாரியனையெதிர்த்து,—'பொரு பகை முனையில் - போர்செய்கிற பகைவர்களுடைய முன்னிலையிலே, எந்தையை - எமதுதந்தையான துருபதனை, என் முன் - எனதுஎதிரிலே, பொன்றுவித்தனை - அழித்தாய்; (ஆதலால்), உனை - உன்னை, நாளை - நாளைக்கு, நிருபர்தம் எதிரே - அரசர்கள்முன்னிலையிலே, நின் மகன் காண - உனதுபுத்திரனான அசுவத்தாமன் பார்க்க [அவனெதிரிலே], நீடு உயிர் அகற்றுவன் - நெடுநாள்வாழுந்தன்மையதான உயிரை ஒழிப்பேன்,' என்று—, வஞ்சினம் எடுத்து உரைத்தான் - சபதவார்த்தைகளையெடுத்துச்சொன்னான்.

இருபதம் அரசர்முடிகமழ் முனி - பாண்டவர் துரியோதனனாதியர் முதலிய அரசர்கள் ஸாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்கையில் அவரவர்களது முடி தனது பாதங்களிலே படப்பெற்ற முனிவனென்க; இத்தொடர்க்கு - அரசரதுமுடிகளில் தனது உபயபாதமலர்மணம்வீசும்படியுள்ள முனிவனென்று பதவுரைகூறினும் அமையும். பகை - பண்பாகுபெயர். இன்றைப்பொழுது

கழிந்திட்டதாதலின், 'ஈரானை' என்றான். நிலையுயிர் - அழிவின்றி நிலைபெற்று நிற்கும் உயிர். 'பகை' என்றது - கௌரவர்பக்கத்தாரை. ([illegible])

[அருச்சுனன் வைரங்கொண்டு துரோணனை வெல்லுதல்.]

மாமனை மகுடந் துணித்தன னெவரும்வணங்குதாண் முனியென
வயிர்த்துக், காமனையழகுங் கந்தனை விறலுங்கவர்ந்தவெங்கார்முகவீ
ரன், சோமனைவகிர்செய்தனையவெம்முனையதொடைகளாற்சுரும்பு
சூழ்கமலத், தாமனைமுதுகுகண்டனன்முன்னந்தயித்தியர்முதுகிட
த்தக்கோன்.

(இ - ள்.) எவரும் வணங்கு தாள் முனி - யாவரும்வணங்கும் பாதங்களையுடைய துரோணாசாரியன், மாமனை மகுடம் துணித்தனன் - தங்கள் மாமனான துருபதனைத் தலைதுணித்திட்டான், என - என்று, வயிர்த்து - வைரங்கொண்டு,—காமனை அழகும் கந்தனை விறலும் கவர்ந்த வெம் கார்முகம் வீரன்-மன்மதனது அழகையும் சுப்பிரமணியனது பராக்கிரமத்தையும் தனதாகக்கொண்ட கொடியகாண்டீவவில்லையுடைய வீரனும், முன்னம் தயித்தியர் முதுகு இட தக்கோன் - முன்பு (நிவாதகவசர் காலகேயர் என்னும்) அசுரர்கள் முதுகிடும்படி செய்தவனுமான அருச்சுனன்,—சோமனை வகிர் செய்து அனைய வெம் முனைய தொடைகளால் - சந்திரனைப் பிளவு செய்தாற்போன்ற கொடியகூர்நுனியையுடைய அம்புகளினால் [அர்த்தசந்திரபாணங்களால்], சுரும்பு சூழ் கமலம் தாமனை முதுகு கண்டனன் - வண்டுகள் சூழ்ந்து மொய்க்கப்பெற்ற தாமரைமலர்மாலையையுடையவனான அந்தத்துரோணாசாரியனைப் புறங்கண்டான் [முதுகிடும்படி வென்றான்.]

மாமன் - இங்கே, மனைவியின் தந்தை. மகுடம் என்ற கிரீடப்பெயர் - தலைக்குத் தானியாகுபெயராம். மிக்கஅழகையும் பேராற்றலையு முடைய வில்வீர னென்பது, இரண்டாமடியின் கருத்து. காமனையழகும் கந்தனை விறலும் - காமனழகையும் கந்தன்விறலையு மென ஐயுருபுபிரித்துக்கூட்டுக; இனி, ஐ — சாரியை யென்றால், அழகு விறல் என்பன - இரண்டனுருபுத்தொகையாம். தாமரைப்பூமாலை, அந்தணர்க்கு உரியது; இனி, கமலத்தாமம் - தாமரைமணிமாலையுமாம்: அப்பொழுது'சுரும்புசூழ்'என்றது, கமலத்துக்கு இயற்கையடைமொழி. "பைங்கமலத் தண்டெரியற் பட்டாபிரான்" எனப் பெரியார்பணித்ததுகொண்டும், அந்தணர்க்குத் தாமரைமாலை உரியதாத லறிக. ஸோமன் - வடசொல். தயித்தியர் = தைத்யர்: போலி.

'முன்னம் தைத்தியர் முதுகிடத் தக்கோன்' என்ற விவரம்:—[கீழ் கஅஅ - ஆங் கவியி னுரையிற் கூறப்பட்டது.] (உகஎ)

[துரியோதனன் சாத்தகியினால் வெல்லப்படுதல்.]

பூத்தகிக்குலமுமால்வரைக்குலமும்புகரிபக்குலங்களும்புகழக்
காத்தகிலமுந்தன்குடைநிழற்படுத்துக்காவலர்நீதியைக்கடந்தோன்
சேத்தகில்புழுகுசந்தனங்கமழுந்திருப்புயத்தணிதருந்திருத்தார்ச்
சாத்தகிமுனைச்சென்றம்முனைக்காற்றாதரியெதிர்கரியெனத்தளர்ந்தான்.

(இ - ள்.) அகி குலமும - மகாநாகங்களின் வர்க்கமும், மால் வரை குலமும்-பெரிய குலபருவதங்களின் வர்க்கமும், புகர் இபம் குலங்களும் - (உத்தமவிலக்கணமாகிய)செம்புள்ளிகளையுடைய திக்கஜங்களின் வர்க்கங்களும், பூத்து புகழ - பொலிவுபெற்றுக் கொண்டாடும்படி, அகிலமும்-உலகமுழுவதையும், தன் குடை நிழல் படுத்து - தனது வெண்கொற்றக்குடையின் நிழலிலே பொருந்தச்செய்து[தனதுதனியரசாட்சியின்கீழ்ப் படுத்தி], காத்து - பாதுகாத்து, காவலர் நீதியை கடந்தோன் - இராசநீதிவரம்பைக் கடந்தொழுகியவனான துரியோதனன்,—சேத்து - செந்நிறமுடைய, அகில்

புழுகு சந்தனம் - அகில்தேய்வையும் கஸ்தூரிப்புழுகும் கலந்த கலவைச் சந்தனக்குழம்பு, கமழும் - பரிமளிக்கப்பெற்ற, திரு புயத்து-அழகிய தோள்களிலே, அணிதரும் - தரித்த, திரு தார் - அழகிய மாலையையுடைய, சாத்தகி - சாத்தகியினது, முனை - எதிரிலே, சென்று - போய், அ முனைக்கு ஆற்றுது - அவனதுபோர்க்கு ஈடுகொடுக்கமாட்டாமல், அரி எதிர் கரி என தளர்ந்தான் - சிங்கத்தையெதிர்த்தயானைபோல மிகத்தளர்ச்சியடைந்தான்.

கீழிருந்து ஆயிரந்தலைகளாலும் பூமியைத்தாங்குகிற சர்ப்பராசனை ஆதிசேஷனும், அவனுக்குஉதவியாய் எட்டுத்திக்குக்களிலும் நின்று தாங்குகின்ற அஷ்டமகாநாகங்களும், பலதிசைகளில் மேலுங் கீழும் பொருந்தி நின்று பூமியைத்தரிக்கிற அஷ்டகுலபர்வதங்களும், எட்டுத்திக்குக்களிலுங் கீழிருந்து பூமியைச்சுமக்கிற அஷ்டதிக்கஜங்களுங் கொண்டாடும்படி உலகமுழுவதையுந் தனியே தாங்குகிறு னென்று துரியோதனனது அரசாட்சிச் சிறப்பைக் கூறியபடி. சூதுபோரிற் பாண்டவரை வென்றமை, திரௌபதியைத் துகிலுரியத்தொடங்கியமை, வநவாசஅஜ்ஞாதவாசங்களைக் கடந்த பின்பும் பாண்டவர்க்கு அரசுஇல்லையென்றமை முதலிய பலஅக்கிரமங்களையுடைமைபற்றி, 'காவலர்நீதியைக் கடந்தோன்' என்றார். அஹி-வடசொல். சேத்து - செந்நிறம்; "செந்நிறப்பெயரு மொப்பு மசைச்சொலும், உறுப்புங் கருத்தும் ஐயமும் சேத்தெனல்" என்ற பிங்கலந்தையை அறிக. அரியெதிர்கரி - இல்பொருளுவமை; இதனால், சாத்தகியின் பெருமையும் துரியோதனனது சிறுமையும் விளங்கும். 'அரியெதிர்கரியென' என்றவிடத்துப் பிராசங் காண்க. 'அரியெதிர்க்கரியென' என்ற பாடத்துக்கு - சிங்கத்தின் முன் யானைபோல வென்க. (உகஅ)

[கௌரவர் தோற்றுச் செல்லுதல்.]

அனைவருமொருவர்போ லுடைந்தவனியாளுடையரசனோடமரிற்
றுனைவருதடந்தேர் துரகதங்களிறுமுதலியயாவையுந்தோற்று
நினைவருவிறலோர் தனித்தனிநெருக்கிநின்றுழிநின்றுழித்துரக்க
வனைவருங்கழற்கால்கொப்புளமரும்பவாசறைப்பாசறையடைந்தார்.

(இ - ள்.) நினைவு அரு விறலோர் அனைவரும் - மனத்தினால்நினைத்தற்கும் அருமையான பராக்கிரமத்தையுடைய பாண்டவர்பக்கத்தவரெல்லாரும், தனி தனி நெருக்கி - தனியே தனியே [ஒவ்வொருவரும்] எதிர்த்து வந்து தாக்கி, நின்றஉழி நின்றஉழி துரக்க - நின்றநின்றஇடங்கள்தோறுந் துரத்துதலால்,— அமரில் - போரிலே, அவனி ஆள் உடை அரசனோடு அனைவரும் ஒருவர் போல் உடைந்து - பூமியை யாளுதலுடைய துரியோதனராசனுடன் கௌரவர்பக்கத்தவரெல்லாரும் ஒருத்தர்போலவே தோற்று, துனை வரு தட தேர் - விரைந்துவருகிற பெரியதேர்களும், துரகதம் - குதிரைகளும், களிறு- யானைகளும், முதலிய - முதலாகவுள்ள, யாவையும்- எல்லாச்சிறப்புக்களையும், தோற்று - இழந்து,— கழல் கால் கொப்புளம் அரும்ப — வீரக்கழலையணிந்த பாதங்களிலே கொப்புளமுண்டாக, ஆசறை- முடிவிலே, பாசறை அடைந்தார் - (தமது)படைவீட்டைச் சேர்ந்தார்கள்.

துனைவரு - துனைந்துவரு; பகுதியே வினையெச்சப்பொருள்பட்டது. நின்றுழி - விகாரம். ஆசறை - 'ஐ'விகுதிபெற்றதொழிற்பெயர்; ஆசறுதி - முடிவு. பாசறை - பகைமேற்சென்றோர்உறையுமிடம். 'ஆசறைப் பாசறை' என்றவிடத்துப் பிராசங் காண்க. வனைவரும் கழல் கால் என்றுஎடுத்து, அணிந்த வீரக்கழலையுடைய கால் என்று உரைப்பினுமாம்; வனைவரும் = வனையும்: வா - துணைவினை. இவ்வுரைக்கு, மோனைப்பொருத்தத்திற்கு ஏற்ப, வாசறை பாசறை என்று எடுத்து, வாசஞ்செய்யுமிடமான படைவீடு என்க; வாசறை - வாசவறை யென்பதன் விகாரம். (உகக)

[மறுநாட் சூரிய னுதித்தல்.]

முற்பொழு தொருபொற் றிகிரியான் மறைந்த தாழ்வற மூளெரி முகத்தி,லற்பொழு தடைந்த வாயிரஞ் சுடரு மநேகநூ றாயிரஞ் சுடராய், நற்பொழு திதுவென் றியாவரும் வியப்ப நாகரா லயம்வலம் புரிந்து, பிற்பொழு தவற்றைக் கவர்ந்துசென் றுதயப் பிறங்கலிற் பிறங்கினன் பெரியோன்.

(இ - ள்.) பெரியோன் - தேவர்களில் முதல்வனான சூரியன்,— ஒரு பொன் திகிரியால் முன் பொழுது மறைந்த தாழ்வு அற - ஒப்பற்ற பொன்னிறமான [அல்லது அழகிய] திருவாழியால் முந்தினநாளில் தான்மறைபட்டதனாலாகிய குறைவு நீங்க, மூள் எரி முகத்தில் அல் பொழுது அடைந்த ஆயிரம் சுடரும் அநேகம் நூறு ஆயிரம் சுடர் ஆய் - பற்றியெழுந்தன்மையுள்ள அக்கினியினிடத்திலே இராக்காலத்திற்சேர்ந்த தனது ஆயிரங்கிரணங்களும் பலநூறாயிரக்கணக்கான விளக்கொளிகளாய் மிக்குவிளங்கிநின்று,— நாகர் ஆலயம் வலம் புரிந்து-தேவர்கட்குத் தங்குமிடமான மகாமேருகிரியைப் பிரதக்ஷிணஞ்செய்துகொண்டு,—பின் பொழுது - பின்பு, அவற்றை கவர்ந்து சென்று - அவ்வொளிகளையெல்லாம் மீளவுங்கவர்ந்துகொண்டுவந்து,— நல் பொழுது இது என்று யாவரும் வியப்ப - இதுநல்லகாலமென்று எல்லாரும் (தானுதிக்கிறஅக்காலத்தைக்) கொண்டாடும்படி, உதயம் பிறங்கலில் பிறங்கினன் - உதயபருவதத்திலே விளங்கினான்; (எ - று.)

சூரியன் அஸ்தமிக்கிற பொழுதில் தனது கிரணங்களை அக்கினியினிடம் வைத்துவிட்டுச் சென்று பின்புஉதிக்கையில் அக்கிரணங்களை அக்கினியினின்றும் மீட்டுக்கொள்கின்றனனென்பது, நூற்கொள்கை. அங்ஙனம் அக்கினியினிடத்தில் வைக்கப்பட்ட சூரியகிரணங்கள் அன்றைநாளிரவில் மிகப்பல விளக்கொளிகளாய் விளங்கினமையை, சூரியன் சக்கரத்தால் தான் மறைபட்ட குறைதீரத் தனது ஆயிரங்கிரணங்களையும் அவ்விரவிற்பலநூறாயிரங்கிரணங்களாக வளரச்செய்துநின்றதாகக் கற்பித்துக்கூறினார்; தற்குறிப்பேற்றவணி. அந்நாளிரவிற் போர்நிகழ்கையில் தேர்தோறும் ஐவைந்தும், யானைதோறும் மும்மூன்றும், குதிரைதோறும் ஒவ்வொன்றுமாகச் சேனைகளிற் பெரியதீபங்கள் ஏற்றியமைக்கப்பட்டனவென்று முதனூலிற் கூறியுள்ளதனால், 'அநேக நூறாயிரஞ் சுடர்' எனப்பட்டது. முற்பொழுது - மாலைப்பொழுதில். பிற்பொழுது - விடியற்காலத்தில். பிறங்கல் - விளங்குதல்; மலைக்குத் தொழிலாகுபெயர்: அல்-கருத்தாப்பொருள்விகுதி யெனினுமாம். மேருமலையின்தெற்கிற் பகலிலும், வடக்கில் இரவிலுமாகச் சஞ்சரித்துச் சூழுந் தன்மைபற்றி, 'நாகராலயம் வலம்புரிந்து' என்றார். (உஉ0)

பதினான்காம்போர்ச்சருக்கம் முற்றிற்று.

---

# பதினைந்தாம்போர்ச்சருக்கம்.

ஸ்ரீ வ ர.

[தெய்வ வணக்கம்: விஷ்ணுஸ்துதி.]

சித்த சித்தொ டீச னென்று செப்பு கின்ற மூவகைத்
தத்து வத்தின் முடிவு கண்ட சதுர்ம றைப்பு ரோகிதன்
கொத்த விழ்த்த சோலை மன்னு குருகை யாதி நெஞ்சிலே
வைத்த முத்தி நாத னன்றி வான நாடர் முதல்வர்யார்.

(இ - ள்.) சித்து - சித்தும், அசித்தொடு - அசித்தும், ஈசன் - ஈசுவரனும், என்று செப்புகின்ற - என்று சொல்லப்படுகிற, மூ வகை தத்துவத்தின் - மூன்றுவகைப்பட்ட தத்துவப்பொருள்களின், முடிவு-தேர்ந்த நிலை

யை, கண்ட - அறிந்த, சதுர் மறை புரோகிதன்-நான்குவேதங்களும் வல்ல ஆசிரியரும், கொத்து அவிழ்த்த சோலை மன்னு குருகை ஆதி - பூங்கொத்துக்கள் மலரப்பெற்ற சோலைகள் பொருந்திய திருக்குருகூரி லவதரித்த தலைவருமான நம்மாழ்வாரால், நெஞ்சிலே வைத்த - மனத்திலே வைத்துத் தியானிக்கப்பெற்ற, முத்தி நாதன் அன்றி - பரமபதத்துக்குத் தலைவனான ஸ்ரீமந்நாராயணனேயல்லாமல்,வானநாடர் முதல்வர்-தேவர்கட்குத் தலைவராகவுள்ளவர், யார் -யாவர் உளர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

சித் அசித் ஈஸ்வரன் என்ற மூன்றுவகைத் தத்துவங்களைக் கொண்ட சித்தாந்தத்தை உள்ளபடி யுணர்ந்தவரும், நான்குவேதங்களை வல்லவரும், ஸ்ரீவைஷ்ணவவிசிஷ்டாத்வைதமார்க்கப் பிரவர்த்தனத்துக்குப் பிரதான ஆசாரியராகவுள்ளவரும்,திருக்குருகூரென்கிற திருநகரியில் திருவவதரித்த பிரபந்நஜநகூடஸ்தருமான நம்மாழ்வாரால் மனத்திலே கொண்டு தியானிக்கப்படுகிற பரமபதநாதனை திருமாலே தேவர்க்கெல்லாந் தலைவனும் முந்தினவனுமாவ னென்பதாம். சித் - உணர்வுடையது; ஆத்மா. அசித் - உணர்வில்லாதது; ஜடம். ஈசன் - முழுமுதற்கடவுள். ஸ்ரீவைஷ்ணவவிசிஷ்டாத்வைதசித்தாந்தத்துக்கு உரிய இந்தமூன்றுதத்துவங்களின் தன்மையை, தத்வத்ரயம், ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலிய நூல்களிற் பரக்கக்காண்க. ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்ற நான்கு வேதங்களின் தேர்ந்தபொருளையும் முறையே திருவிருத்தம் திருவாசிரியம் திருவாய்மொழி பெரியதிருவந்தாதி யென்ற நான்குதிவ்வியப்பிரபந்தங்களாகத் திருவாய்மலர்ந்தருளியமை தோன்ற, 'சதுர்மறைப்புரோகிதன்' என்றார். புரோகிதன் - வைதிககாரியங்களில் முன்வைக்கப்படுபவன்; அக்காரியங்களை நடத்துபவன்: இங்ஙனமே நம்மாழ்வாரும் ஆழ்வார்கள் ஆசாரியர்களுடைய கோஷ்டியில் முன்வைக்கப்படுபவராதலும், தத்துவமார்க்கத்துக்கு வழிகாட்டுபவராதலும் பற்றி, 'புரோகிதன்' எனப்பட்டனர். 'கொத்தவிழ்த்தசோலைமன்னு' என்ற அடைமொழி, ஆழ்வார் அவதரித்த திவ்வியதேசத்தின் செழுமையைக் காட்டும். குருகை - இது, 'ஆழ்வார்திருநகரி' என வழங்கப்படும். ஆதி - பிரதமஆசாரியர். இவ்வாழ்வாரது வைபவத்தை, ஆழ்வார்கள்சரித்திரத்திற் பரக்கக்காண்க. "உயர்வற வுயர்நல முடையவன் யவனவன், மயர்வற மதிநல மருளினன் யவனவன், அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன், துயரறு சுடரடி தொழுதெழென் மனனே" என்று இவ்வாழ்வார் சரமப்பிரபந்தமான திருவாய்மொழியின் தொடக்கத்தில் தமதுமனத்தைநோக்கிக் கூறியிருத்தல்கொண்டு, 'குருகையாதி நெஞ்சிலே வைத்த முத்திநாதனன்றி வானநாடர் முதல்வர் யார்' என்றார். முக்தி - வடசொல். வானநாடர் - விண்ணுலகத்தில் வாழ்பவர்; பரமபதத்து நித்யசூரிகளுமாம். இப்பாட்டினால், இந்நூலாசிரியர் நம்மாழ்வார்பக்கலிலே ஈடுபாடுகொண்டமை நன்குவிளங்கும்.

இதுமுதற் பதினொரு கவிகள் - கீழ்ச்சருக்கத்தின் கஉ - ஆங் கவி போன்ற எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (க)

[இருதிறத்தவரும் போர்க்கு எழுதல்.]

எடுத்ததீபவொளியுமேனையிருளுமேகவேழுமாத்
தொடுத்ததேரருக்கர்சோதிதொழுதுதங்கடொழில்கழித்
தெடுத்தகோபமூளநின்றிரண்டுசேனையரசருங்
கடுத்துளங்கறுத்துவெய்யகண்சிவந்துகடுகினார்.

(இ - ள்.) எடுத்த தீபம் ஒளியும்-ஏற்றிய விளக்குக்களின் பிரகாசமும், ஏனை இருளும் - (அதற்கு)மாறான இருளும், ஏக - நீங்கிச்செல்ல [சூரியனுதிக்க], — இரண்டுசேனை அரசரும்-இருதிறத்துச்சேனையாசர்களும், — ஏழுமா தொடுத்த தேர் அருக்கர் சோதி தொழுது - ஏழுகுதிரைகள் பூட்டிய

தேரையுடைய சூரியபகவானது ஒளியை வணங்கி [சூரியநமஸ்காரஞ்செய்து], தங்கள் தொழில் கழித்து - (மற்றும்உதயகாலத்தில்) தாங்கள் கடமையாகச்செய்தற்கு உரிய(சந்தியாவந்தனம் முதலிய நித்திய)கருமங்களைச் செய்துமுடித்து, எடுத்த கோபம் மூள நின்று-மிக்ககோபம் பற்றியெழ நின்று, உளம் கடுத்து கறுத்து - மனம் மாறுபட்டுச் சினந்து, வெய்ய கண் சிவந்து-(அதனால்) கொடியகண்கள் செந்நிறமடையப்பெற்று, கடுகினர் - (போர்க்கு) விரைந்துசென்றார்கள்; (எ - று.)

சூரியனுதித்தவளவிலே விளக்கொளிமழுங்குதலும் இருளொழிதலும் இயல்பு. அருக்கர் - உயர்வுப்பன்மை. ஜ்யோதிஸ் - வடசொல். உளங்கறுத்து - "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள" என்பது தொல்காப்பியம். உளங் கறுத்து, கண் சிவந்து என ஓரடியில் மாறுபட்டசொற்கள் வந்தது, முரண்தொடையின்பாற்படும். ஏனை யிருள் - மற்றை [விளக்கொளி செல்லாதஇடங்களில் தங்கிய] இருள். 'எடுத்ததீபவொளியு மேனை யிருளுமேக' என்றவிடத்து உடனவிற்சியணியிருத்தல் காண்க. (உ)

[கண்ணன் அருச்சுனன்முதலியோருடன் போர்க்களஞ்சேர்தல்.]

நாலுசாபநிலையும்வல்லநரனும்வீமனகுலனு
நாலுபாகமானசேனைநாதனுஞ்சிரங்களா
நாலுகூறுசெய்துதானுநரனுமுந்தநடவினா
னாலுவேதமுடிவினுக்குமாதியானநாரணன்.

(இ - ள்.) நாலு வேதம் முடிவினுக்கும் ஆதி ஆன நாரணன் - நான்கு வேதங்களின் தேர்ந்தகொள்கைகட்கெல்லாம் விஷயமான முதற்கடவுளாகிய திருமாலின் திருவவதாரமான கண்ணபிரான்,—சாபம் நாலு நிலையும் வல்ல - வில்வளைத்து அம்புதொடுப்பார்க்கு உரிய நான்குவகை நிலைகளுந் தேர்ந்த, நரனும் - அருச்சுனனும், வீமன் - வீமனும், நகுலனும்—, நாலு பாகம் ஆன சேனை நாதனும் - சதுரங்கசேனைக்குத் தலைவனான திட்டத்துய்மனும், சிரங்கள் ஆ - தலைகளாக [தலைமையாக என்றபடி], நாலு கூறு செய்து - (தம்பக்கத்துச் சேனையை) நான்கு பங்காகப் பிரித்து, தானும் நரனும் முந்த நடவினான் - (அவற்றைத்) தானும் அருச்சுனனுமாக முற்படச்செலுத்தினான்; (எ - று.)

நாலு சாபநிலை - கீழ்ச்சருக்கத்தின் ௧௩-ஆம் பாட்டி னுரையிற் கூறப்பட்டது. சாபம் - வடசொல். நாலுபாகமான - தேர் யானை குதிரை காலாளென்று நான்குபகுதியாகிய. சிரங்களா - போர்முனையில்நிற்குந் தலைமைவீரர்களாக என்க. 'வீமநகுலரும்' என்பதும் பாடம். நரனும் தானும் நடவினான் - இரண்டு உயர்திணையொருமை அடுக்கிச் சிறப்பினால் ஒருமைமுடிபையேற்றது: [நன் - பொது - உ௬.] நடவினான் - பிறவினைமுற்று; இதில், வு - பிறவினைவிகுதி: 'இருவு' [இருத்து] என்பதிற்போல. வேதாந்தப்பிரதிபாத்யனென்பது, ஈற்றடியின்கருத்து; வேதமுடிவு - உபநிஷத்துக்கள். (௩)

[வாலவீமனும் சோமதத்தனும் அருச்சுனனால் அழிதல்.]

வாலவீமனென்றுபார்மதித்தவாண்மைமன்னனுஞ்
சூலபாசபாணிதன்னொடொத்தசோமதத்தனு
மாலகாலமெனவுருத்தடர்த்தபோரின்முந்துறக்
காலனூரிலேகினார்கிரீடியேவுகணைகளால்.

(இ - ள்.) வாலவீமன் என்று - வாலவீமனென்று பெயர்சொல்லப்பட்டு, பார் மதித்த - நிலவுலகத்தாரால் கொண்டாடப்பட்ட, ஆண்மை - பராக்கிரமத்தையுடைய, மன்னனும் - அரசனும்,—சூலபாசபாணிதன்னொடு ஒத்த - சூலாயுதத்தையும் பாசமென்னுமாயுதத்தையும் கையிலுடைய யமனோடு சமனான, சோமதத்தனும் - சோமதத்தனென்ற அரசனும்,—ஆலகா

லம் என உருத்து அடர்த்த போரில் - ஆலாகலவிஷம்போலக் கோபித்து நெருக்கிச்செய்த போரிலே, முக்துற - முற்பட, கிரீடி ஏவு கணைகளால் - அருச்சுனன் செலுத்திய அம்புகளினால், காலன் ஊரில் ஏகினர் - யமலோகத்திற் சேர்ந்தார்கள்; (எ - று.)

ஆண்மை - ஆண்தன்மை; பௌருஷம்: வாண்மை எனப் பதம் பிரித்து, ஆயுதத்திறமை யென்று உரைப்பினும் அமையும். பாசம் - கயிற்று வடிவமான ஆயுதம். சோமதத்தன் - பூரிசிரவாவின் தந்தை; (சோமதத்தன் மகனாதலால், பூரிசிரவனுக்கு 'ஸௌமதத்தி' என்று ஒருபெயர் வழங்கும்.) ஆலகாலம் - ஹாலா ஹலமென்ற வடசொல்லின் விகாரம்; பாற்கடலில் தோன்றிய கொடுவிஷம். (௬)

[அருச்சுனனது போர்த்திறம்.]

என்முனென்முனென்றுமன்னர்யாரும்யாருநவிலவே
முன்முனின்றியாவரோடுமூரிவில்வணக்கினான்
வின்முனெண்ணவில்லுமில்லைவெஞ்சமத்துமற்றிவன்
றன்முனெண்ணவீரரில்லையெனவருநதனஞ்சயன்.

(இ - ள்.) என் முன் என் முன் என்று - எனக்குமுன்னே (போர்செய்ய வேண்டும்) எனக்குமுன்னே (போர்செய்ய வேண்டும்) என்று, மன்னர் யாரும் யாரும் நவிலவே - பகையரசர்கள் பற்பலரும் (தனித்தனி) கூறிய வளவிலே, முன் முன் நின்று - ஒவ்வொருவரெதிரிலும் நின்று, யாவரோடும் - அவர்களெல்லாரோடும், மூரி வில் வணக்கினான் - வலிய வில்லை வளைத்துப் பொருதான்: (யாவனெனில்),—'வில்முன் எண்ண வில்லும் இல்லை - (இவனது காண்டீவ) வில்லின்முன் (ஒருபொருளாக) மதிக்கப்படுதற்கு வேறொரு வில்லும் இல்லை: வெம் சமத்து - கொடிய போரில், இவன் தன் முன் எண்ண - இவனெதிரில் நன்குமதிக்கப்படுதற்கு, மற்று வீரர் இல்லை - வேறொரு வீரரும் இல்லை', என - என்றுசொல்லும்படி, வரும் - (சிறப்புடையவனாய்)வருகிற, தனஞ்சயன் - அருச்சுனன்; (எ - று.)

'மற்று' என்பதை, 'வில' என்பதனோடு கூட்டுக; உம் - எதிரதுதழுவிய எச்சப்பொருளது. இச்செய்யுளிற் பலவிடத்தும் 'முன்' என்பது - இடப்பொருளில் வந்தது. இனி, 'வில்முன் எண்ண வில்லும் இல்லை' என்பதற்கு - இவனது வில்லுக்கு மேலாக முதலில்வைத்துவிரல்மடக்கியெண்ணுதற்கு வேறொரு வில்லு மில்லை யென்று உரைப்பினும் அமையும்; 'இவன் றன்முனெண்ண வீரரில்லை' என்பதற்கும் இங்ஙனமே கொள்க. முன்முன் இன்றி யாவரோடும் எனப் பிரித்து, (அவர்களைத் தான் ஒருபொருளாக மதித்திலனாதலால் அவர்கள்விருப்பத்தின்படி) ஒவ்வொருவர்முன்புந் தனித்தனி நின்றுபோர்புரியாமல் ஏககாலத்தில் அனைவரோடும் வில்லைவளைத்துப்போர் செய்தான் என்று உரைக்கவுந் தகும். (௭)

[துரோணனது போர்த்திறம்.]

ஈரிரண்டுமுகமும்வந்தெதிர்ந்தவீரர்சேனைக
ளீரிரண்டும்வேறுவேறுபட்டுவென்னிடப்புடைத்
தீரிரண்டொர்தொடையில்வாளியேவியேவியிகல்செய்தா
னீரிரண்டுமையிரண்டுமானவிஞ்சையெய்தினான்.

(இ - ள்.) ஈர் இரண்டும் ஐ இரண்டும் ஆன விஞ்சை எய்தினான் - பதினான்குவகையான வித்தைகளை யடைந்துள்ளவனாகிய துரோணன்,—ஈரிரண்டு முகமும் வந்து எதிர்ந்த - நான்குபக்கங்களிலும் வந்து எதிரிட்ட, வீரர் சேனைகள் ஈரிரண்டும் - பாண்டவரது சேனைகள் நான்கும், வேறு வேறு பட்டு வென் இட - சின்னபின்னமாகிப் புறங்கொடுக்கும்படி, புடைத்து - மோதி, ஓர் தொடையில் ஈரிரண்டு வாளி ஏவி ஏவி; தொடுக்குந்தொறும்

வொன்றிலும் நந்நான்குபாணங்களைச் செலுத்தி, இகல் செய்தான் - போர் செய்தான்; (எ - று.)

இச்செய்யுளின்இறுதியடியிற் குறிக்கப்பட்டவன் துரோணனென்பது, அடுத்தசெய்யுளில் 'புந்திகூர் துரோணனுக்கு யாவரும்புறந்தர'என்று இச்செய்யுளிற்கூறியசெய்தியை அநுவாதமாகக் கூறியமைகொண்டு உணரப்படும். விஞ்சை-வித்யா என்ற வடசொல்லின் சிதைவு. ஈரிரண்டும் ஐயிரண்டுமான-நான்கும் பத்து மாகிய; பதினான்குவித்தைகள்-வேதம் நான்கு, சிக்ஷை வியாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என்ற வேதாங்கம் ஆறு, மீமாம்சை தர்க்கம் புராணம் தர்மசாஸ்திரம் என்ற உபாங்கம் நான்கு என இவை. நாற்புறத்துஞ்சூழ்ந்த நால்வகைச்சேனைக்கும் ஒவ்வொன்றுக்குஒவ்வோர்அம்பாக நான்குஅம்புகள் ஒவ்வொருமுறையிலுஞ் செலுத்தப்பட்டன வென்க. (சு)

[குந்திபோசன் துரோணனுடன் எதிர்த்தல்.]

புந்திகூர்துரோணனுக்கியாவரும்புறந்தரக்
குந்திபோசனெண்ணிலாயிரங்குறித்ததேர்களோ
டுந்திமீளமுடுகியந்தமுனிவனோடுடன்றபோ
தந்திவானமொத்ததம்மவமர்புரிந்தவாகவம்.

(இ - ள்.) புந்தி கூர் துரோணனுக்கு - ஞானம் மிக்க துரோணாசாரியனுக்கு, யாவரும் புறம் தர - எல்லாரும் (இப்படி) முதுகுகொடுக்க,—குந்திபோசன்—, எண் இல் ஆயிரம் குறித்த தேரகளோடு - கணக்கில்லாத [மிகப்பல] ஆயிரங்களாகக் குறிக்கப்பட்ட தேர்களுடனே, மீள உந்தி - மறுபடி சென்று, முடுகி - விரைந்து, அந்த முனிவனோடு - அந்தத்துரோணாசாரியனுடனே, உடன்ற போது - பகைத்து எதிர்த்தபொழுது,—அமர் புரிந்த ஆகவம் - போர்செய்த அந்தயுத்தகளம், அந்தி வானம் ஒத்தது - (இரத்தப் பெருக்கினால்) மாலைக்காலத்துச் செவ்வானம் போன்றது; (எ - று.)

ஒருதரம் புறங்கொடுத்தமைபற்றி, 'மீளவுந்தி' என்றார். புந்தி - புத்தியென்பதன் மெலித்தல். அம்ம-இரத்தமிகுதிபற்றிவந்த வியப்பிடைச்சொல். 'அவர்புரிந்தவாகவம்'என்றபாடமும்பொருந்தும். குறித்தல்-எண்ணுதல்.(எ)

[சல்லியன் நகுலனோடும், மாளவன் சாத்தகியோடும் பொருதல்.]

குருவொடுற்றடர்ந்துகுந்திபோசன்விற்குனிக்கவே
வருசமத்துமத்திரன்றன்மருகனோடுமுடுகினான்
மூரண்மிகுத்தகோபவங்கிமூளவந்தமாளவன்
கருநிறத்தனந்தசாயியிளவலோடுகடுகினான்.

(இ - ள்.) குருவொடு உற்று அடர்ந்து - (கௌரவபாண்டவர்க்கு) வில்லாசிரியனான துரோணனுடனே யெதிர்த்துப் பொருது நெருங்கி, குந்திபோசன்—, வில் குனிக்க - வில்வளைத்துப் போர்செய்ய,—வரு சமத்து - எதிர்த்துவருகிற போரில், மத்திரன் - மத்திரநாட்டரசனான சல்லியன், தன் மருகனோடு - தனதுஉடன்பிறந்தாள்மகனான நகுலனுடனே, முடுகினான் - விரைந்து போர்செய்தான்; மூரண் மிகுத்த கோபம் அங்கி மூள வந்த - பகைமையைமிகுவிக்கிற கோபாக்கினி பற்றியெழ எதிர்த்து வந்த, மாளவன் - மாளவநாட்டரசனான இந்திரவர்மா வென்பவன், கருநிறத்து அனந்தசாயி இளவலோடு - கரிய திருநிறமுடையவனும் ஆதிசேஷனிற் பள்ளிகொள்பவனுமான திருமாலின் [கண்ணபிரானது] தம்பியாகிய சாத்தகியுடன், கடுகினான் - விரைந்து போர்செய்தான்; (எ - று.)

இச்செய்யுளின் முதலடி - முந்தினசெய்யுளின் அநுவாதம். மாளவன் பெயர், மேல் கஅ - ஆஞ் செய்யால் விளங்கும். அநந்த சாயீ - வடசொல்.

அநந்தன் - (பிரளயத்திலும்) அழிவில்லாதவன். 'மருகரோடு' என்றபாடத்துக்கு, நகுலசகதேவர்களுடன் என்க. மருகன்=மருமகன். (அ)

[மற்றும்பலர் மற்றும்பலரோடு எதிர்த்தல்.]

முனிவன்மைந்தனிந்திரன்றன்மைந்தனோடுமுடுகினான்
றினகரன்றன்மதலைகாலின்மைந்தனோடுசீறினான்
றனுவின்விஞ்சுதென்னனோடுசகுனிபோர்தொடங்கினா
னினியகண்டமுஞ்செறுக்குமிறுதிகாலமென்னவே.

(இ - ள்.) இனி-இப்பொழுது, அகண்டமும் செறுக்கும் இறுதி காலம்- உலகமுழுவதையும் அழிக்கின்ற கற்பாந்தகாலம், என்ன - என்று (யாவரும்) எண்ணும்படி,—முனிவன் மைந்தன் - துரோணபுத்திரனான அசுவத்தாமன்,இந்திரன்தன் மைந்தனோடு - இந்திரகுமாரனான அருச்சுனனுடன், முடுகினான் - விரைந்து பொருதான்; தினகரன்தன் மதலை - சூரியபுத்திரனான கர்ணன், காலின் மைந்தனோடு - வாயுபுத்திரனான வீமனுடன், சீறினான்-கோபித்துப்பொருதான்;தனுவின் விஞ்சு தென்னனோடு - வில்தொழிலிலே மிக்க பாண்டியனுடன், சகுனி போர்தொடங்கினான்—;(எ-று.)

தென்னன் - பரதகண்டத்துத் தென்னுடாகிய பாண்டியநாட்டையாள்பவன். இங்குப் பாண்டியன் சித்திராங்கதையென்னுந் தன்மகளை அருச்சுனனுக்குக் கொடுத்தவனான சித்திரவாகனனென்பான். 'இறுதிக்காலம்' என வலிமிகாதது, செய்யுளோசைநயத்தின்பொருட்டு. ஈற்றடியினால், இவர்கள்செய்த போரின் கொடுமையை விளக்கியவாறும். திநகரன்-பகலைச் செய்பவன்: வடசொல். (கூ)

[கௌரவசேனை வெல்லுதல்.]

எந்தவெந்தமன்னர்தம்மிலிருவராகியமர்செய்தா
ரந்தவந்தவீரர்செய்தவாண்மைசொல்லுமளவதோ
முந்தமுந்தவென்றுவென்றுமோகரித்ததெவ்வர்தாம்
வந்தவந்தவழிமடங்கநின்றதவ்வருதினி.

(இ - ள்.) எந்த எந்த மன்னர் - எந்தெந்த அரசர்கள், தம்மில் இருவர் ஆகி அமர் செய்தார் - (கீழ்க் கூறியபடி) தமக்குள் இரண்டிரண்டுபேராய்ப் போர்செய்தார்களோ, அந்த அந்த வீரர் - அந்தந்த வீரர்கள், செய்த—, ஆண்மை-பராக்கிரமச்செயல், சொல்லும் அளவதோ - சொல்லுந்தரமுள்ளதோ? [அன்றென்றபடி]; முந்த முந்த வென்று வென்று மோகரித்த தெவ்வர் - முன்னே முன்னே [பல நாட்களில்] மிகுதியாகச் சயித்து ஆரவாரித்த பகைவர்களாகிய பாண்டவசேனையார், தாம் வந்த வந்த வழி மடங்க - தாம் தாம் வந்தவந்த வழியே மீண்டு புறமிட, அ வருதினி-அந்தக் கௌரவசேனை, நின்றது - (வெற்றிகொண்டு) நின்றது; (எ - று.)

இச்செய்யுளின்மூன்றுமடியையும்,அடுத்தசெய்யுளையும்நோக்கி'அவ்வருதினி' என்பதற்கு - கௌரவசேனை யென்று பொருள்கொள்ளப்பட்டது. வந்தவந்தவழி மடங்க - எந்தெந்தவழியாய் வந்தனரோ அந்தந்தவழியாய்த் திரும்பிச்செல்ல. (க0)

[பாண்டவசேனை தோற்றல்.]

தேயு வாளி வருணன் வாளி தேவர் வாளி திண்மைகூர்
வாயு வாளி முதல வனைத்து வாளி யானு மலைதலா
லாயு நான்மு னிக்கு டைந்த தன்பு மிக்க தந்தையுந்
தாயு மாகி மண்பு ரந்த தருமன் விட்ட தானையே.

(இ - ள்.) தேயு வாளி - ஆக்கேயாஸ்திரமும், வருணன் வாளி - வாருணாஸ்திரமும், திண்மை கூர் வாயு வாளி - வலிமைமிக்க வாயவ்யாஸ்திரமும்,

தேவர் வாளி - (மற்றும்பல) தேவர்களின் அஸ்திரமும், முதல் - முதலான, அனைத்து வாளியாலும் - எல்லாஅஸ்திரங்களினாலும், மலைதலால் - போர் செய்ததனால்,—அன்பு மிக்க தந்தையும் தாயும் ஆகி - மிக்க அன்புள்ள தந்தையும் தாயும் போன்று, மண் புரந்த - இராச்சியத்தை ஆண்ட, தருமன் - யுதிஷ்டிரன், விட்ட-செலுத்தின, தானை - சேனை,—ஆயும் நூல் முனிக்கு-தேர்ந்தெடுத்த [சிறந்த]சாஸ்திரங்களில் வல்ல துரோணாசாரியனுக்கு,உடைந்தது - தோற்று நிலைகுலைந்தது ; (எ-று.)—மலைதலால் உடைந்தது என்க.

மலைதற்குக் கருத்தா - துரோணன். தேயு - தேஜஸ் என்ற வடசொல்லின் சிதைவு. தேயுவாளி - அக்கினியைத் தெய்வமாகவுடையதும் நெருப்புமயமானதுமான அஸ்திரம். வருணன்வாளி - வருணனைத் தெய்வமாகவுடையதும் நீர்மயமானதுமான அஸ்திரம். வாயுவாளி - வாயுவைத் தெய்வமாகவுடையதும் காற்றுமயமானதுமான அஸ்திரம். 'தேவர்வாளி' என்பது-தலைமைத்தேவர்களான திரிமூர்த்திகளின் அஸ்திரம் என்றும் பொருள்படும்; அவை - பிரமாஸ்திரம், நாராயணாஸ்திரம், பாசுபதாஸ்திரம் என்பன. ஆயும்நூல்முனி - நூல் ஆயும் முனி யென மாறினுமாம். மக்களைத் தந்தைதாயர் மிக்கஅன்போடு ஆவனசெய்து பாதுகாத்தல்போல, மன்னுயிர்களைப் பரிபாலித்த தருமபுத்திர னென்க. ஆகி - உவமவாசகம். (கக)

வேறு.

[அச்சமயத்தில் முனிவர்பலர் துரோணனிடம் வருதல்.]

குருவுமக் குருகு லேசன் கொற்றவெஞ் சேனை தானும்
பொருகளங் கொண்டு வாகை புனைந்துதா நின்ற போதி
லொருவரை யொருவ ரொவ்வா வும்பர்மா முனிவர் யாருந்
துருவனு முவமை சாலத் துரோணனை வந்து சூழ்ந்தார்.

(இ - ள்.) குருவும் - துரோணாசாரியனும், அ குருகுல ஈசன் கொற்றம் வெம் சேனைதானும் - குருகுலத்துக்குத்தலைவனான துரியோதனனது வெற்றியையுடைய கொடிய அச்சேனையும், பொரு களம் கொண்டு - போர் செய்யுங்களத்தை வெற்றிகொண்டு, வாகை புனைந்து நின்ற போதில் - (அவ்வெற்றிக்குஅறிகுறியாக) வாகைப்பூமாலையைத் தரித்து நின்றபொழுதில்,—ஒருவரை ஒருவர் ஒவ்வா - ஒருத்தர்க்கு மற்றொருத்தரை உவமை சொல்லக்கூடாத [ஒப்பில்லாத], மா உம்பர் முனிவர் யாரும் - சிறந்த தேவவிருடிகள் பலரும், துருவனும் உவமை சால் அ துரோணனை - துருவனுக்கும் உவமையாகப் பொருந்துகிற [மிக்கசிறப்பையுடைய] அந்தத்துரோணாசாரியனை, வந்து சூழ்ந்தார் - (இம்மண்ணுலகில்) வந்து சூழ்ந்தார்கள்.

இவர்கள் சூக்ஷ்மரூபங்கொண்டு வந்தன ரென்று முதனூலால் அறிக. 'உம்பர் மா முனிவர்' என்பதற்கு-தேவர்களும் சிறந்த முனிவர்களு மென்று உரைத்தல், முதனூலோடு பொருந்தாது. துருவன் - சுவாயம்புவமனுவின் மகனான உத்தானபாதனுக்குச் சுநீதியென்னும் மூத்தமனைவியினிடம் பிறந்த குமாரன்; இவன், தன்மாற்றாந்தாயான சுருசியாலும் அவளுக்கு வசப்பட்ட தன்தந்தையாலும் இளமையிலே உபேக்ஷிக்கப்பட்டு நகரத்தைவிட்டு நீங்கிவனம்புகுந்து சப்தருஷிகளிடம்மந்திரோபதேசம்பெற்று ஸ்ரீமகாவிஷ்ணுவை இடைவிடாது தியானித்து, அப்பெருமானருளால்,மூன்றுலோகங்களுக்கும் மேற்பட்டதும் சகலகிரகநக்ஷத்திரங்களுக்கும் ஆதாரமானதும் அவர்களுடைய ஸ்தானங்கட்கெல்லாம் அதியுந்நதமுமான திவ்வியபதவியை யடைந்து வாழ்கின்றன னென்பது, கதை. அப்படிப்பட்ட துருவனுக்கும் உபமானமாகக் கூறுதற்கேற்ற மேம்பாடுள்ள துரோண னெனச் சிறப்பித்துக்கூறினார்; உபமேயத்தினும் உபமானம் சிறந்திருத்தல்வேண்டு மென்பது, அலங்காரநூலார் துணிபு. நிலவுலகமுழுதும் ஆளும் அரசர்களான கௌரவபாண்டவராதியோர்க்குக் குருவாய்ச் சிறந்த துரோணன தநிலைமை

உலகத்தவரனைவராது நிலைமையினும் மேம்படுதலும், துருவன் கிரகநக்ஷத்ரங்களைச்செலுத்துந்திறத்தினும் மேலாகத் துரோணன் சேனைகளைச்செலுத்துதிறவனாதலுங் காண்க. 'துருவனும் உவமைசால்' என்பதற்கு - (அத்துரோணன் துருவனை யொக்குமாறு என்று பொருள்கூறி, கிரகநக்ஷத்திரங்கள் துருவனைச்சூழுமாறுபோலத் தேவரிஷிகள் துரோணனைச் சூழ்ந்தார்கள் என்று கருத்துரைப்பினுமாம். தான், தாம் - அசை.

இதுமுதற் பதினெட்டுக் கவிகள் - கீழ்ச்சருக்கத்தின் கஅ - ஆங் கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (கஉ)

[அம்முனிவர்கள் எதிர்கொண்ட துரோணனை நோக்கிப் பேசத்தொடங்கல்.]

மகத்தியன்மரீசியாதியெழுவருமலயச்சார
லகத்தியன்முதலாவுள்ளவனைவரும்வருதல்கண்டு
செகத்தினினிறைந்தகேள்விச்சிலைமுனியெதிர்சென்றேத்தி
முகத்தினுலிறைஞ்சிநிற்பமொழிந்தனர்மொழிகள்வல்லார்.

(இ - ள்.) மகத் இயல் - பெருமையாகிய தன்மையையுடைய, மரீசி ஆதி - மரீசி முதலிய, எழுவரும் - எழுபேரும் [ஸப்தருஷிகளும்], மலயம் சாரல் அகத்தியன் முதல் ஆ உள்ள - பொதியமலையின் சாரலிலே வாழ்கின்ற அகத்தியன் முதலாக வுள்ள, அனைவரும் - எல்லாவிருடிகளும், வருதல் - (தன்னிடம்) வருதலை, கண்டு - பார்த்து, செகத்தினில் நிறைந்த கேள்வி சிலை முனி - உலகத்தில் நிரம்பிய நூற்கேள்விகளையுடைய வில்வித்தைவல்ல அந்தணனான துரோணாசாரியன், எதிர் சென்று ஏத்தி - (அவர்களை) எதிர்கொண்டு சென்று துதித்து, முகத்தினுல் இறைஞ்சி நிற்ப - தலைவணங்கி நமஸ்கரித்து நிற்க,—மொழிகள் வல்லார் - பேச்சுக்களில் வல்லவர்களான அம்முனிவர்கள், மொழிந்தனர் - (துரோணனைநோக்கிச் சில) சொன்னார்கள்; (எ - று.)—அவற்றை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க

மஹத் - வடசொல்; மகிமை. மரீசியாதி யெழுவர் - மரீசி, வசிஷ்டர், அத்திரி, விசுவாமித்திரர், கௌதமர், ஜமதக்நி, பரத்துவாசர் என்பவர்; மூதனூலால் அறிக. இது, ஒருவகைச் சப்தருஷிக்கிரமம். அகஸ்தியமுனிவர் வடதிசைநீங்கித் தென்திசைவந்து பொதியமலையில்வாழ்ந்தன ரென்பது பிரசித்தம். அகஸ்த்யர் என்ற வடமொழிப்பெயர் - விந்தியபருவதத்தை வளரவொண்ணாது தடுத்து அடக்கியவ ரென்று காரணப்பொருள்படும்; அகம்-மலை, சவியாதது. செகத்-ஜகத் என்ற வடசொல் திரிந்தது. கேள்வி-உபதேசத்தாற்பெற்ற ஞானம். மொழிகள்வல்லார்-சொல்வன்மையையுடையோர்; என்றது, அரசியலுரிமைபூண்டு நிற்கின்ற துரோணன் தமது உபதேசத்தைக் கேட்டவளவிலே அதனைத் துறந்து பரகதிசேரத்துணிந்திடும்படி வற்புறுத்திப்பேசி வசப்படுத்தவல்லவ ரென்றபடி. மகத்து இயல் எனப் பிரித்து, யாகங்களின் உரிமையை யுடைய என்றலும் ஒன்று; யாகங்களிற் பயின்ற அதாவது - யாகங்களைச் செய்த என்றும் பொருள்படும். (கஙு)

[இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்; முனிவர்கள் துரோணனுக்குச் செய்யும் உபதேசம்.]

மறைகெழுநூலுந்தேசுமாசிலாத்தவமுஞான
முறைவருமுணர்வுமல்லான்முனிவரர்க்குறுதியுண்டோ
துறைகெழுகலைகள்வல்லாய்துன்னலர்ச்செகுக்கும்போரு
நிறைதருவலியும்வாழ்வுநிருபர்தம்மியற்கையன்றோ.

(இ - ள்.) துறை கெழு கலைகள் வல்லாய் - (பற்பல) பொருட்டுறைகள் விளங்கப்பெற்ற சாஸ்திரங்களில் வல்லவனே! மறை கெழு நூலும் - வேதங்களும் அவற்றின்பொருள்விளங்கப்பெற்ற சாஸ்திரங்களும், தேசும் - பிரமதேஜசும், மாசு இலா தவமும் - குற்றமில்லாத தபசும், ஞானம் முறை

வரும் உணர்வும் - ஞானநூல்களின்படியே உண்டாகின்ற மெய்யறிவும், அல்லால் - என்னும் இவையே யல்லாயல், முனிவரர்க்கு - சிறந்தஇருடி சட்கு, உறுதி உண்டோ-நன்மைதருபவை வேறுஉண்டோ? [இல்லையென்றபடி]; துன்னலர் செகுக்கும் போரும் - பகைவர்களையழிக்கின்ற போரும், நிறைதரு வலியும் - நிறைந்தபலமும், வாழ்வும் - செல்வவாழ்க்கையும், நிருபர்தம் இயற்கை அன்றோ - அரசர்கட்கு உரிய இயல்பன்றோ? (எ - று.)

அந்தணனாகிய நீ முனிவர்க்குஉரிய வேதசாஸ்திரங்களையும் பிரமதேஜசையும் தவத்தையும் தத்துவஞானத்தையுங் கைவிட்டு அரசர்க்குரியபோரையும் வலிமையையுஞ் செல்வவாழ்க்கையையுங் கைக்கொள்ளுதல் முறைமையன்று; அவற்றைவிட்டு இவற்றைக்கொள்வாயாக என்றபடி. தவத்துக்குமாசு-கூடாவொழுக்கம்முதலியன. உறுதிதருவதை'உறுதி'என்றது,காரியவாகுபெயர். துன்னலர் - சேராதவர்; எதிர்மறைவினையாலணையும்பெயர். (௧௪)

தொடுகணைவில்லும்வாளுந்துரகமுங்களிறுந்தேரும்
விடுகவெஞ்சினமும்வேண்டாவிண்ணுலகெய்தல்வேண்டுங்
கடுகநின்னிதயந்தன்னிற்கலக்கமற்றுணர்வினொன்று
படுகவென்றுரிமைதோன்றப்பகர்ந்தனர்பவமிலாதார்.

(இ - ள்.) தொடு கணை வில்லும் - தொடுக்கின்ற அம்புகளையுடைய வில்லையும், வாளும் - வாளையும், துரகமும் - குதிரையையும், களிறும்-யானையையும், தேரும் - தேரையும், வெம் சினமும் - கொடிய கோபத்தையும், விடுக-விட்டிடுவாயாக: வேண்டா - (இவை) வேண்டுவதில்லை: விண் உலகு எய்தல் வேண்டும் - மேலுலகத்தை யடைதல்வேண்டும்; (ஆதலால்), கடுக - விரைவாக, நின் இதயந்தன்னில் கலக்கம் அற்று - உனது மனத்திலுள்ள சஞ்சலம் ஒழிந்து, உணர்வின் ஒன்று படுக - அறிவில் ஒன்றுபட்டுநிற்பாயாக, என்று—, உரிமை தோன்ற - (தங்கட்கு அவனிடத்திலுள்ள) உரிய அன்பு வெளியாகுமாறு, பகர்ந்தனர் - சொன்னார்கள்: பவம் இலாதார் - பிறப்பில்லாதவர்களான அம்முனிவர்கள்; (எ - று.)

உணர்வின் ஒன்றுபடுக - ஒப்பற்ற பரதத்வஞானம் நிலைபெறுவாயாக என்றபடி; அன்றி, முனிவர்களானஎம்மோடு ஒற்றுமைப்பட்டு எங்களைப் போல நிற்பாயாக என்றும் உரைக்கலாம். பவமிலாதார் - கருமமொழிதலாற் பிறப்பற்று முத்திபெறும்நிலையி லுள்ளவர். தொடு கணை வில் - கணை தொடுவில் என மாறினுமாம். வேண்டா - வேண்டும் என்ற வியங்கோளின் எதிர்மறை; இனி, வேண்டப்படா எனச் செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினைப்பலவின்பால்முற்றுமாம். ஹ்ருதயம்,பவம் என்ற வடசொற்கள் திரிந்தன. உரிமைதோன்ற - ஸ்வாதந்திரியமாக வென்க; அவனுக்கு உரிய கடமை அவனுக்குப்புலனாகுமாறு என்றலு மொன்று. (௧௫)

[அதுகேட்டுத் துரோணன் போரொழிந்து பொறுமைமேற்கொள்ளல்.]

ஆனபோதாசானருஞ்சிலருமறையந்தத்துள்ள
ஞானமும்பிறந்துபோரிலாசையுநடத்தலின்றித்
தூநலந்திகழுஞ்சோதிச்சோமியமடைந்துநின்றான்
யானமும்விமானமல்லாலிரதமேல்விருப்பிலாதான்.

(இ - ள்.) ஆன போது-இங்ஙனம் முனிவர்கள் உபதேசித்தபொழுது, ஆசான் - துரோணாசாரியன், அரு மறை அந்தத்து உள்ள ஞானமும் நெஞ்சில் பிறந்து - (அறிதற்கு)அரிய வேதாந்தத்தி லமைந்துள்ள தத்துவஞானமும் மனத்தில் தோன்றப்பெற்று, போரில் ஆசையும் நடத்தல் இன்றி - போர் செய்தலில் விருப்பமும் செல்லுதலில்லாமல், யானமும் விமானம் அல்லால் இரதம்மேல் விருப்பு இலாதான் - வாகனங்களுள்ளும் (வானத்திற் சஞ்சரிப்பதான) விமானத்தின்மேலே (விருப்பங்கொண்டதே) யல்லாமல்

தேரின்மேல் விருப்பமில்லாதவனாய், தூ நலம் திகழும் சோதி சோமியம் அடைந்து நின்றான் - பரிசுத்தமான நன்மை விளங்கும் பெருமைக்குக் காரணமான பொறுமையை யடைந்துநின்றான்; (எ - று.)

ஸௌம்ய மென்ற வடசொல்லின் திரிபாகிய சௌமியமென்பது, சோமியமென விகாரப்பட்டுநின்றது; கௌதமனென்பது கோதமனென்றும், கௌசிகனென்பது கோசிகனென்றும், கௌசல்யையென்பது கோசலையென்றும், மௌலியென்பது மோலியென்றும் வழங்குதல்போல: சாந்தகுணம் என்று பொருள். அக்குணம் எல்லாக்குணங்களுள்ளும் மிக்க சிறப்பையுடைமையால், அதற்கு 'தூநலந்திகழுஞ் சோதி' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. "ஒளி யொருவற் குள்ள வெறுக்கை" என்ற திருக்குறளில் 'ஒளி' என்பது போல, இங்கே 'சோதி' என்பது - பெருமையென்ற பொருளில் வந்தது; அக்குறளினுரையிற் பரிமேலழகர் 'ஒளி - தான் உளனாயகாலத்து மிக்குத்தோன்றுதலுடைமை; "ஒளிநிறான் ஓங்கு புகழ் செய்யான்" என்றார் பிறரும்' என உரைத்தமை உணரத்தக்கது. இனி, 'தூ நலந் திகழுஞ் சோதிச் சோமியம்' என்பதற்கு - பரிசுத்தமான நற்குணங்கள் விளங்கப்பெற்ற பரஞ்சோதியாகிய கடவுளை யடைதற்குரிய சாந்தகுணவமைதியை யென்றும் பொருள்கொள்ளலாம். அன்றி, 'சோதிச் சோமியம்' என்பதை ஜ்யோதிஷ்டோமீய மென்னும் வடசொல்லின் திரிபெனக் கொண்டு, ஜ்யோதிஷ்டோமயாகத்தின்பயனாகிய நல்வினை யடுக்கப்பெற்று நின்றான் என்று பொருள்கொள்ளலுமாம்; முற்செய்த நற்கருமத்தினாலாகிய நல்வினை, உடம்புநீங்கிப்போங்காலத்து உயிரை மக்கட்கதியினின்று தேவகதியிற் கொண்டு செலுத்துதற்கு அடுத்துநின்றதென்க: சோதிட்டோமமென்பது - சுவர்க்கமடைவிப்பதொரு சிறந்த யாகம்.

ஆசான் - வடசொற்சிதைவு. வேதாந்தம் - வேதங்களின் பிரிவாகிய கர்மகாண்டம் பிரமகாண்டம் என்ற இரண்டனுட் பிந்தினதும், வேதத்தின் தேர்ந்தகருத்துமாகிய உபநிஷத்துக்கள். யாகம், விமாநம் - வடசொற்கள். விமானம் - தேவவூர்தி. அரசர்க்குரிய தேரின்மேல் ஏறிநிற்றலை ஒரு சிறப்பாகக்கொள்ளாமல், புண்ணியப்பயனால்விமானம்வந்துதோன்றஅதன்மேலேறி வானுலகஞ்சேர்தலிலேயே கருத்தைச்செலுத்தினனென்க. (கசு)

[துரோணனைக்கொல்ல இதுவே சமய மென்று கண்ணன் கருதுதல்.]

கோடையால்வற்றிமீண்டுங்கொண்டலானிறைந்ததெண்ணீ
ரோடையாமென்னநின்றோன்முன்னரேயுரைத்தவார்த்தை
மாடையாலிந்த்ரநீலமணிவரைவளைத்தாலன்ன
வாடையானறிந்துசொற்றவவதியீதென்றுகொண்டான்.

(இ - ள்.) இந்த்ரநீல மணி வரை மாடையால் வளைத்தால் அன்ன ஆடையான் - இந்திரநீலரத்தினமயமானதொரு மலை பொன்னினாற் சூழப்பட்டாற் போன்ற பொற்பட்டாடையையுடையவனான கண்ணபிரான்,— கோடையால் - கோடைக்காலத்து முதிர்ந்த வெயிலினால், வற்றி - நீர்வறண்டு, மீண்டும் - மறுபடியும், கொண்டலால் நிறைந்த - மேகம் மழைபெய்ததனால் நிரம்பிய, தெள் நீர் - தெளிவான நீரையுடைய, ஓடை ஆம் என்ன - நீரோடைபோல, நின்றோன் - (அகம்கிரம்பித் தணிந்து) நின்றவனான துரோணன், முன்னரே - முன்னமே [முதல்நாட்போர்த்தொடக்கத்திலேயே], உரைத்த - சொன்ன, வார்த்தை - பேச்சை, அறிந்து - ஞாபகத்திற் கொண்டு,— சொற்ற அவதி ஈது என்று கொண்டான் - அவன்சொன்ன சமயம் இதுவே யென்று திருவுள்ளம்பற்றினான்; (எ - று.)

முனிவர்கள்பலர் வந்துசெய்த தத்துவஞானோபதேசத்தால் துரோணன் நல்லறிவுற்றுப் போர்விருப்பற்றுச் சாந்திபெற்று நிற்றலை நோக்கிக் கண்ணபிரான், அவன் முதல்நாட்போர்த்தொடக்கத்தில் தன்னைக்கொல்லு

முபாயங்கூறியவண்ணஞ் செய்துமுடித்தற்கு இதுவே வாய்த்தசமயமென்று எண்ணினனென்பதாம்.

போர்த்தொடக்கத்திலே பாண்டவருடன் கிருஷ்ணன் பீஷ்மனிடஞ் சென்று நல்வார்த்தைகூறி அவனைவெல்லுமுபாயத்தை அவனாலறிந்துகொண்ட பின்பு துரோணனிடஞ் சேர்ந்து நல்வார்த்தைகூறி அவனை வெல்லுமுபாயஞ்சொல்லும்படி வேண்ட, அதற்குத் துரோணன் 'யான் போர்செய்யுமளவும் உமக்கு வெற்றியுண்டாகா தாதலால், என்னைக் கொல்லவேண்டும்: யான் போர்செய்கையில் என்னைக்கொல்லவல்லார் இல்லை;படைக்கலமெடாமற் சோர்ந்திருப்பேனாயின் என்னை ஒருவன் கொல்லுதல்கூடும்; பெரிய துயரச்செய்தியை நம்பிக்கைக்கிடமானஒருவன் சொல்லக் கேட்டால், படைக்கலமெடுத்துப் போர்செய்தலொழிவேன் யான்' என்று கூறியுள்ளா னென அறிக. "போயவர் குருவின்பாதம் போற்றி மூன்னிற்பச் செங்கண்,மாயவ னவனை நோக்கி வாகையந்தாமஞ் சூட, நீயவர்க் களித்தி யாகி லுண்டலால் நின்னை வையந், தாயவர் தமக்கும் வேற லரிதெனச் சாற்றினனே", "மன்மகன் றருமன் வென்று வையக மெய்த நிற்பான், என்மகனெனக்கு முன்னே யிறந்தன னென்று வான்னில், வின்மக பதியை யொக்கும் வேந்தர்முன் சொல்லிற் சூரன், தன்மகன் மகனே பின்னைச் சாபமென் றெடுக்கிலேனே", "என்பெருஞ் சாபங் கைவிட்டி யானெதிர்நிற்றலாலுந், தன்பெருஞ் சாபத்தாலுஞ் சமரிடைத் திட்டத்துய்மன், வன்புட னெனக்குக் கூற்றாய் மலைகுவன் மலைந்தவன்றே, நின்பெருங்கருத்து முற்றும் எகுவீர் நீவி ரென்றான்" என்ற செய்யுட்களைக் காண்க.

சகல வேத சாஸ்திரங்களையுந் தேர்ந்த மனம் அத்தேர்ச்சிக்குஏற்ற ஒழுக்கநிலையில் உறுதியாகநிற்றற்குஉரிய தத்துவஞானத்தை இதுவரையிலுங்கொள்ளாதிருந்த நிலைக்கு ஓடை கோடையால் வற்றிய தன்மையையும், இப்பொழுது முனிவர்களது கைம்மாறுகருதாதஇதோபதேசத்தால் அந்தமெய்யுணர்வு நிரம்பப்பெற்ற நிலைக்கு அவ்வோடை கொண்டலால் தெண்ணீர்நிறைந்த தன்மையையும் உவமைகூறினர். ஓடை-நீரோடுமிடம். கோடைக்காலம் - முதுவேனிற்பருவம்; க்ரீஷ்மருது: ஆனிஆடிமாதங்கள். இந்திரநீலமணிமலை - நீலநிறமுடைய எம்பெருமான்திருமேனிக்கும், அது பொன்னால்வளைக்கப்படுதல் - அத்திருமேனி திவ்வியபீதாம்பரத்தால் உடுக்கப்படுதற்கும் உவமையாம். இந்த்ரநீலம் - உயர்ந்தசாதிநீலம். சொற்ற, ற் - இறந்தகாலஇடைநிலை. அவதி-வடசொல். உவமையணி. ஆம்-அசை. (கஎ)

[கண்ணன் திட்டத்துய்மனைத் துரோணன்மேல்ஏவித் தருமனுடன்பேசல்.]

கடல்வடிம்பலம்பநின் றகைதவன் றன்னோடோதிச்
சுடுகனலளித்ததிட்டத் துய்மனையவன்மேலேவி
வடுவுரைமறந்துஞ்சொல்லாமன்ன றன்மைந்தனோடு
மடியவரிடுக்கண்டீர்ப்பானுமுறையருளிச்செய்வான்.

(இ - ள்.) அடியவர் இடுக்கண் தீர்ப்பான் - (தனது) அடியார்களுடைய துன்பங்களைப்போக்கியருள்பவனான கண்ணபிரான்,—கடல் வடிம்பு அலம்ப நின்ற - கடலிலே தனதுவேலின் நுனியைக் கழுவிச் சிறப்புற்றுநின்ற, கைதவன் தன்னோடு-பாண்டியனுடனே, ஓதி-சொல்லி, சுடு கனல் அளித்த திட்டத்துய்மனை - சுடுகின்ற நெருப்பினாற் பெறப்பட்ட த்ருஷ்டத்யும்நனை, அவன்மேல் ஏவி - துரோணன்மேற் (போர்க்குச்) செலுத்தி,—வடு உரை மறந்தும் சொல்லா மன் அறன் மைந்தனோடும் - குற்றமாகிய வார்த்தைகளை மறந்துங்கூறாத பெருமையையுடைய தருமபுத்திரனுடனே, ஆம் முறை - தக்கபடி, அருளிச்செய்வான் - (சிலவார்த்தைகளைக்) கூறியருள்வான்; (எ - று.)—அவற்றை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

கண்ணன் பாண்டியனுடனே சொல்லித் திருஷ்டத்யும்நனைத் துரோ ணன்மேற் செலுத்தித் தருமபுத்திரனுடனே சிலகூறலாயின னென்பதாம். திட்டத்துய்மன் அப்பொழுது அருகிலில்லாமல் தூரத்திலிருந்ததனால்,கண் ணன் அவனுக்கு நேரிற் செய்திசொல்லச் சந்தர்ப்பமின்றிப் பாண்டியனு டன்சொல்லி, அவன்மூலமாக,துரோணனைப் பொருதுகொல்லுதற்கேற்ற சமய மிதுவே யென்ற செய்தியைத் திட்டத்துய்மனுக்குத் தெரிவித்தன னென்பது, 'கைதவன் தன்னோ டோதித் திட்டத்துய்மனை யவன்மேலேவி' என்பதன் கருத்து. இனி, கண்ணன் தான் சொல்லிப் பாண்டியனோடு திட்டத்துய்மனைத் துரோணன்மேற் செலுத்தி யென்று பொருள்கொள்ள வும் இடமுண்டு.

இங்கே, பாண்டியனென்றது, அருச்சுனனுக்குப்பெண்கொடுத்த சித் திரவாகனபாண்டியனை யாதல் வேண்டும். ஒரு பாண்டியராசன் சேரசோழ ரையும் மற்றும்பலநிலவுலகத்துஅரசர்களையும் வென்று அவர்கள்நாடுகளை யெல்லாங் கைப்பற்றிக்கொண்டதுமல்லாமல் தேவாசுரயுத்தத்தில்அசுரர்க் குத்தோற்று வந்து தன்னைத்துணைவேண்டிய தேவர்கட்கு உதவியாகச் சென்று போர்செய்து அசுரர்களைத் தொலைத்தபின் அவர்களுடையஇரத் தந்தோய்ந்த தனது வேலாயுதத்தைக் கடலில் வந்து கழுவி அதனால் 'கடல்வடிம்பலம்பநின்ற பாண்டியன்' என்று பேர்பெற்றன னென ஓர் ஐதிஹ்யம் கூறப்படும். (அவன்பெயர் மதுரைக்காஞ்சியிலும், புறநானூற்றி லும் 'நெடியோன்' என்ற சொல்லாலுங் குறிக்கப்பட்டுள்ளது. புறநானூற் றில் "முந்நீர்விழவி னெடியோன்" என்றவிடத்து அதன் உரையாசிரியர் 'முந்நீர்க்கண் வடிம்பலம்ப நின்ற னென்ற வியப்பால் நெடியோனென்று ரென்ப' என உரைத்ததும் உணரத்தக்கது. இவன் கடலில் இரத்தத்தைக் கழுவிய அபசாரந் தீர்தற்பொருட்டு அக்கடல்தெய்வத்துக்குத் திருவிழா நடத்தின னென்றுங் கூறுவர்.)அப்பாண்டியனது தன்மையை இங்கே சித் திரவாகனன்மேல் ஏற்றி 'கடல்வடிம்பலம்பநின்றகைதவன்' என்றார். இங் ஙனம் ஒருகுலத்தரசருள் ஒருவர்க்குஉரிய தன்மையை மற்றொருவர்மே லேற்றி உபசாரவழக்காகக் கூறும் ஒருவகைக் கவிமரபைப் பலஇடங்களிற் காணலாம். (உக்கிரகுமாரபாண்டியனுக்குஉரிய) இந்திரன்முடிமேல் வளை யெறிந்தமை,கடல்சுவறவேல்விட்டமை,(அரிமர்த்தனபாண்டியனுக்குஉரிய) சிவபிரானைப் பிரம்பால் முதுகி லடித்தமை என்ற வரலாறுகளை மேற் பதி னேழாம்போர்ச்சருக்கத்திற் சித்திரவாகனபாண்டியன்மேல் ஏற்றிக்கூறு மாறுங் காண்க. இனி, 'கடல்வடிம்பலம்பநின்றகைதவன்' என்பதற்கு - தனதுஆளுகைக்குஉட்பட்ட இடத்துக்குச் சுற்றிலும் கடல் எல்லையாக அமைந்து தளும்பும்படி கடல்சூழ்ந்த நிலவுலகம்முழுவதும்ஆட்சிசெலுத்தி நின்றவ னென்று உரைப்பினும் அமையும்; "ஓங்குதிரை வியன்பரப்பி, னொலிமுந்நீர் வரம்பாக,.........உலகமாண்ட உயர்ந்தோர்மருக" என்ற மதுரைக்காஞ்சியால், பாண்டியர் கடல்எல்லையாக உலகத்தையாண்ட உயர்ச்சி பெற்றோ ரென்று தெரிகிறது.

'சுடுகனலளித்த திட்டத்துய்மன்' என்றது, அவன் துரோணனைக் கொல்லப்பிறந்தவ னென்பதை விளக்கும்; அதன் விவரம் :—அங்கிவேச முனிவனிடத்தில் துரோணாசாரியனுடன் வில்வித்தையைக்கற்றுவந்தபொ ழுது 'எனக்கு இராச்சியங்கிடைத்தபின்னர்ப் பாதி உனக்குப் பங்கிட்டுக் கொடுப்பேன்'என்று அவனுக்கு வாக்குதத்தஞ்செய்திருந்த பாஞ்சாலராச னான துருபதன், பின்பு ஒருகாலத்தில் அத்துரோணன் தன்குழந்தைக்குப் பாலுக்காகப் பசுவேண்டுமென்று சென்று கேட்டபொழுது, முகமறியாத வன்போல 'நீயார்?' என்றுவினவிச் சிலபரிகாசவார்த்தைகளைச் சொல்லிச் சபையிற் பங்கப்படுத்த, அப்பொழுது அவன் 'என்மாணாக்கனைக்கொண்டு

உன்னை வென்று கட்டிக்கொணரச்செய்து உன் அரசையுங் கைக்கொள்வேன்' என்று சபதஞ்செய்துவந்து, பின்பு அங்ஙனமே அருச்சுனனைக் கொண்டு பங்கப்படுத்தி அந்தப்பிரதிஜ்ஞையை நிறைவேற்றிவிட, அவ்யாகசேனன் துரோணன்மீது மிகக்கறுக்கொண்டு அவனைக்கொல்லும்பொருட்டு ஒருபுத்திரனும் அருச்சுனனதுபலபராக்கிரமங்களைக் கண்டு மகிழ்ந்து அவனுக்கு மணஞ்செய்துகொடுக்கும்பொருட்டு ஒரு புத்திரியும் உதித்தல் வேண்டுமென்று புத்திரகாமயாகஞ் செய்விக்க, அவ்வோமத்தீயினின்று திட்டத்துய்மனும் திரௌபதியும் தோன்றின ரென்பதாம்.

வடுவுரை - பொய், கோள், கடுஞ்சொல், பயனில்சொல் எனபன; இவை, வாக்கின்கண் நிகழும் பாவம் நான்காம். "பொருள் தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த, மாசறு காட்சியவர்" என்றாற்போல, 'வடுவுரை மறந்துஞ்சொல்லா மன்னறன்மைந்தன்' என்றார். இனி,வடுவுரையென்பதற்கு - பொய்ம்மொழி யென்றும், "ஆறாதே, நாவினாற் சுட்ட வடு" என்றாற்போல என்றும்ஆறாத வடுவை யுண்டாக்குகின்ற கடுஞ்சொல்லென்றும் சிறப்பாகப் பொருள்கொள்ளுதலும் ஒன்று. 'மறந்தும்' என்ற இழிவு சிறப்பும்மையால்,இயல்பிற்சொல்லாமை தெளிவாம். மன்னறன்மைந்தன்-இராசனாகிய யுதிட்டிர னென்னவுமாம்.

இடுக்கண் - இடுங்குகண் என்பதன் விகாரம்; கண் இடுங்குதற்குக் காரணமான துன்பம்: காரியத்தின்பெயர், காரணத்தின்மேல்நின்றது. அடியார்களைப் பாதுகாக்குந்தன்மையனான கண்ணன் தன்அடியார்களாகிய பாண்டவர்களைப் பாதுகாத்தற்பொருட்டுப் பகையாகிய துரோணனைக் கொல்லுதற்கு வேண்டியபடி சமயோசிதமாக அருளோடு சிலகூறுவானென்பது, ஈற்றடியின் கருத்து. ஆம் முறை அருளிச்செய்வான்-இனிநடக்கவேண்டிய வகையைச் சொல்லியருள்வான் என்றும் உரைக்கலாம்.'ஆமுரை' என்ற பாடத்துக்கு, ஆம் உரை - தக்கவார்த்தைகளை யென்க. (௧அ)

[இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்: துரோணனைக்கொல்லும் வகையைக் கண்ணன் தருமனுக்குக் கூறல்.]

மந்தரமனையபொற்றோண்மாருதிமாளவக்கோ
னிந்திரவன்மாமேற்சென்றெரிகணைதொடுத்தபோரி
லந்தரமடைந்ததையவச்சுவத்தாமாவென்னுஞ்
சிந்துரமதனைவேறோர்திசைக்களிறொப்பதன்றே.

(இ - ள்.) ஐய - ஐயனே! மந்தரம் அனைய - மந்தரமலையை யொத்த, பொன் தோள் - அழகியதோள்களையுடைய, மாருதி-வீமசேனன், மாளவம் கோன் இந்திரவன்மா மேல் சென்று - மாளவதேசத்தரசனாகிய இந்திரவர்மாவென்பவன்மேல் எதிர்த்துப்போய், எரி கணை தொடுத்த - ஜ்வலிக்கின்ற அம்புகளைச் செலுத்திச் செய்த,போரில்—, அச்சுவத்தாமா என்னும் சிந்துரம்-அசுவத்தாமாவென்னும் பெயருள்ள (அவ்விந்திரவர்மாவின் பட்டத்து) யானையானது, அந்தரம் அடைந்தது - (இறந்து) மேலுலகடைந்தது;வேறு ஓர் திசை களிறு அதனை ஒப்பது அன்று - (அவ்யானைக்கு அதுவே உவமையாவதன்றி)வேறாகிய திக்குயானையொன்றும் அதற்கு ஒப்பாகமாட்டாது.

குலகிரியாகிய மந்தரம் பாற்கடலைக்கலக்குதல்போல வீமன்தோள் பகைவர்சேனைக்கடலைக் கலக்கவல்ல தென்பார், 'மந்தரமனைய பொற்றோள்' என்றார். பொன்தோள் - பொன்னாபரணமணிந்த தோளுமாம். அசுவத்தாமாவென்னும்யானை, இந்திரவர்மன்ஏறிவந்தது. ஸிந்தூரம், அந்தரம் - வடசொற்கள். ஐய - கண்ணன் தருமனை அன்புடன் அழைத்த விளி; தருமனதுஉயர்வுதோன்ற இங்ஙனம்அழைத்தன னென்னலாம். (௧௯)

மதலைபேரெடுத்துப்போரின்மடிந்தவா றுரைத்தபோதே
விதலையுறுகிப்பின்னைவில்லெடான்வீதறிண்ண

முதலமர்தன்னிலந்தமுனிவரன்மொழிந்தமாற்ற
நுதலுதிநீயேசென்றுநுவலுதிவிரைவினென்றான்.

(இ - ள்.) மதலை பேர் எடுத்து - துரோணன்மகனான அசுவத்தாமா வென்ற பேரை யெடுத்து, போரில் மடிந்த ஆறு உரைத்த போதே - போரில்இறந்ததாகக் கூறியபொழுதே, (துரோணன்), விதலையன் ஆகி - மனச்சஞ்சலமுடையவனாய், பின்னை - பின்பு, வில் எடான் - வில்லையெடுத்துப் போர்செய்யாமல், வீதல் - இறத்தல், திண்ணம் - நிச்சயம்; முதல் அமர் தன்னில் - முதல்நாட்போரில், அந்த முனிவரன் - சிறந்த முனிவனான அந்தத்துரோணன், மொழிந்த - சொன்ன, மாற்றம் - வார்த்தையை, நுதலுதி - கருதுவாயாக: நீயே சென்று விரைவின் நுவலுதி - நீயே (துரோணன் முன்)சென்று விரைவில் அங்ஙனம் கூறுவாய், என்றான் - என்று (கண்ணன் தருமனைநோக்கிச்) சொன்னான்; (எ - று.)

இந்திரவர்மாவின் அசுவத்தாமாவென்னும்யானை இறந்தஉண்மையைத் துரோணபுத்திரனான அசுவத்தாமா இறந்ததாகத்தோன்றும்படி நீ துரோணனுக்குக் கூறி அதனால் அவன் மனம் வருந்திப் போரொழிந்து இறக்கும்படி செய்திடவேண்டு மென்று கண்ணன் தருமனுக்குக் கூறினான். விதலை - நடுக்கம். நுதலுதல் - கருதுதல். (உ0)

[அதற்குத் தருமன் உடன்படாமை.]

வையினால்விளங்குநேமிவலம்புரிவயங்குசெம்பொற்
கையினனந்தணாளன்கையறல்புகன்றகாலை
மெய்யினால்வகுத்ததன்னமெய்யுடைவேந்தன்கேட்டுப்
பொய்யினாலாள்வதிந்தப்புவிகொலோவென்றுநக்கான்.

(இ - ள்.) வையினால் விளங்கு நேமி - கூர்மையோடு விளங்குகின்ற சக்கரமும், வலம்புரி - சங்கமும், வயங்கு - விளங்கப்பெற்ற, செம் பொன் கையினன் - சிவந்த அழகிய திருக்கைகளையுடையவனான கண்ணன், அந்தணாளன் கையறல் புகன்ற காலை - (இங்ஙனம்) துரோணன் செயலற்று ஒழியும் வகையைச் சொன்னபொழுது,—மெய்யினால் வகுத்தது அன்ன மெய் உடை வேந்தன்-சத்தியத்தினாலமைக்கப்பட்டதுபோன்ற உடம்பையுடைய தருமராசன், கேட்டு—,பொய்யினால் ஆள்வது இந்த புவி கொல் ஓ என்று- இந்தப் பூமியைப் பொய்கூறி அதனாற் பெற்று ஆளுவது தகுதியோ? என்று கூறி, நக்கான் - சிரித்தான்; (எ - று.)

நிலையில்லாத இந்த அரசாட்சிச்செல்வத்தின்பொருட்டுப் பொய்சொல்லிப் பழிபாவங்களைப் பெறமாட்டே னென்று மறுத்தான். சிரிப்பு, இகழ்ச்சியாலானது. வை - கூர்மை: உரிச்சொல். அம் தண் ஆளன் - அழகியகுளிர்ச்சியை [குளிர்ந்த அருளை] ஆளுபவன். கையறல் - கையறும்உபாயத்துக்கு ஆகுபெயர். மெய்யினால் வகுத்தஅன்ன மெய்யுடை வேந்தன் - சத்தியமயமான அரசனென்க. 'மெய்யினால்வகுத்தஅன்னமெய்' என்றது, தற்குறிப்பேற்றம். உடம்புக்கு 'மெய்' என்ற பெயர் தருமபுத்திரன்விஷயத்திற் பொருத்தமுடைத்தாயிருக்கின்ற தென ஒரு நயந்தோன்ற இங்ஙனங் கூறின ரென்னலாம். நக்கான், நகு - பகுதி. (உக)

[இதுவும், தருமன்வார்த்தை: பொய்ம்மையின் தீப்பயன்.]

அண்ணியகிளையுமில்லுமரும்பெருமகவுமன்புந்
திண்ணியசீருமிக்கசெல்வமுந்திறலுந்தேசு
மெண்ணியபொருள்கள்யாவுமியற்றியதவமுமேனைப்
புண்ணியமனைத்துஞ்சேரப்பொய்ம்மையாற்பொன்றுமன்றே.

(இ - ள்.) இல்லும் - மனைவாழ்க்கைத்துணையும் [தாரமும்], அரும் பெரு மகவும் - அரிய பெரிய சந்தானமும், அண்ணிய கிளையும் - நெருங்கிய

மற்றைப்பந்துவர்க்கமும், அன்பும்—, திண்ணிய சீரும் - உறுதியுள்ள அழியாத புகழும், மிக்க செல்வமும்—, திறலும் - வலிமையும், தேசும் - ஒளியும், எண்ணிய பொருள்கள் யாவும் - மற்றும் எண்ணப்படும்பொருள்கள் யாவையும், இயற்றிய தவமும் - செய்த தபசும், எனை புண்ணியம் அனைத்தும் - மற்றைப்புண்ணியங்கள் யாவையும், சேர - ஒருசேர, பொய்ம்மையால் - பொய்சொல்லுதலினால், பொன்றும்அன்றே - அழிந்துவிடுமன்றோ! (எ - று.)—அன்றே-தேற்றம்; பொய்கூறிய அப்பொழுதே யெனினுமாம்.

இனை - உவமையாகுபெயர். இல் - இடவாகுபெயர். முந்திக்கூறிய இம்மைப்பயன்களுக்கும், இறுதியிற்கூறிய புண்ணியமாகிய மறுமைப்பயனுக்கும் இடையில், வேறுபாடுதோன்றற்'எனை' என்ற சொல்லைப் பெய்தார். "மக்கட்பேற்றிற் பெரும்பேறில்லை" ஆதலால், 'அரும்பெருமகவு' எனப்பட்டது; பெறுதற்கரியபெருமைவாய்ந்த புத்திரபாக்கிய மென்க. (உஉ)

[அதற்குக் கண்ணன் சமாதானங்கூறத் தொடங்குதல்.]

என்றுகொண்டினங்கொள்கோவினிடர்கெடவெழிலியேழுங்
குன்றுகொண்டடர்த்தமாயன்கூறவுமறுத்துக்கூறக்
கன்றுகொண்டெறிந்துவெள்ளிற்கனிநனியுதிர்த்துவஞ்சம்
வென்றுகொண்டவனுமீளவிளம்புவனென்பமாதோ.

(இ - ள்.) இனம் கொள் - கூட்டமாகத்திரளுதலைக் கொண்ட, கோவின் - பசுக்களின், இடர் - துன்பம், கெட - நீங்கும்படி, எழிலி ஏழும் - ஏழு மேகங்களையும், குன்று கொண்டு அடர்த்த - (கோவர்த்தன)மலையைக் கொண்டு வலியஎதிர்த்துத்தடுத்துவிட்ட, மாயன் - அற்புதசக்தியையுடையவனை கண்ணபிரான் தானே, கூறவும் - சொல்லவும், என்று கொண்டு மறுத்து கூற - (தருமன்) என்று இவ்வாறு (அதனைத்) தடுத்துச்சொல்லவே,—கன்றுகொண்டு எறிந்து - கன்றினால் வீசி, வெள்ளில் கனி நனி உதிர்த்து - விளாமரத்தின்பழத்தை மிகுதியாய் உதிரச்செய்து, வஞ்சம் வென்று கொண்டவனும் - (அவற்றின்) வஞ்சனையைச் சயித்துக் கொண்டவனாகிய கண்ணனும், மீள விளம்புவன் - மறுபடி கூறுவான்; (எ - று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க. என்ப, மாது ஓ - ஈற்றசைகள்.

'என்றுகொண்டு' என்பதில், கொண்டு - அசை; இனி, என்றுஎண்ணிக் கொண்டு என்றலும் ஒன்று. கோ - வடசொல். கூறவும்,உம்-உயர்வுசிறப்பு.

கன்றால் விளவின்கனியுதிர்த்த கதை:—கம்சனுலேவப்பட்ட கபித்தாசுரன், விளாமரத்தின்வடிவமாய், கண்ணன் தன்கீழ்வரும்பொழுது மேல் விழுந்துகொல்வதாகஎண்ணி வந்துநிற்க,அதனையறிந்து,கிருஷ்ணபகவான், அவ்வாறே தன்னைமுட்டிக்கொல்லும்பொருட்டுக் கன்றின்வடிவுகொண்டு தான்மேய்க்குங்கன்றுகளோடு கலந்திருந்த வத்ஸாசுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச்சுழற்றி விளாமரத்தின்மேலெறிய,இருவரும் இறந்து தமது அசுரவடிவுடனே விழுந்திட்டனர் என்பது. இதனால், பகைகொண்டு பகையழித்தலாகிய கண்ணனதுவிசித்திரசக்தி விளங்கும். (உங)

[இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்: கண்ணன் தருமனுக்குக் கூறுஞ் சமாதானம்.]

உம்மையின்மறுமைதன்னினுறுபயனிரண்டும்பார்க்கி
னிம்மையில்விளங்கும்யார்க்குமவரவரியற்கையாலே
மெய்ம்மையேயொருவர்க்குற்றவிபத்தினைமீட்குமாகிற்
பொய்ம்மையுமெய்ம்மைபோலப்புண்ணியம்பயக்குமாதோ.

(இ - ள்.) உம்மையில் - கழிந்தபிறப்பிலும், மறுமைதன்னில் - வரும்பிறப்பிலும், உறு - பொருந்திய, பயன் இரண்டும் - வினைப்பயன்கள் இரண்டும்,—பார்க்கின் - ஆராயுமிடத்து,—இம்மையில் அவர் அவர் இயற்கை

யாலே - இப்பிறப்பிற்காணப்படுகிற அவரவாது தன்மைகளினாலே, யார்க்கும் - எல்லார்க்கும், விளங்கும்—; ஒருவர்க்கு உற்ற விபத்தினை - ஒருவர்க்கு மிக்க ஆபத்தை, மெய்ம்மையே மீட்கும் ஆகில் - உண்மையாகவே [தவறாமல்] போக்குமானால், பொய்ம்மையும் - அசத்தியமும், மெய்ம்மைபோல - சத்தியம்போலவே, புண்ணியம் பயக்கும் - நல்வினையைத் தரும்.

பார்க்கின் - ஆலோசித்துப்பார்த்தால். கழிபிறப்பு வருபிறப்பு என்னும் இரண்டின் வினைப்பயனும் இப்பிறப்பில் அவரவரியற்கையால் விளங்கும் என்றது - இப்பிறப்பில் ஒருவர் அநுபவிக்கிற இன்பதுன்பங்களினால் முற்பிறப்பில் அவர்செய்த நல்வினை தீவினைகளை ஊகித்தறியலாமென்றும், இப்பிறப்பில் ஒருவர்செய்யும் நல்வினைதீவினைகளைக்கொண்டு வருபிறப்பில் அவர்அடையும் இன்பதுன்பங்களை ஊகித்தறியலா மென்றுங் கூறியபடி. முதலிரண்டடி - ஒருவர்செய்தவினை பயன்தருதலில் தவறாது என்ற நியதியை உடன்பட்டுக் கூறியவாறும். பின்னிரண்டடியினால், பெரிய ஆபத்துக் காலத்தில் அதனை நீக்கும்பொருட்டுப் பொய்கூறலா மென்று வற்புறுத்தியபடி. 'பிராணாபாயத்தைத்தீர்த்தற்பொருட்டுப் பொய்கூறுதலிற் பாவமில்லை' என்பது நூற்கொள்கை; "பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்" என்ற திருக்குறளும், அதன் விசேடவுரையிற் பரிமேலழகர் 'குற்றந்தீர்ந்த நன்மை - அறம்: அதனைப் பயத்த லாவது - கேடாதல் சாக்காடாதல் எய்தநின்றதோ ருயிர் அச்சொற்களின் பொய்ம்மையானே அதனின்நீங்கி இன்புறுதல். நிகழாததுகூறலும், நன்மைபயவாதாயின் பொய்ம்மையாம், பயப்பின் மெய்ம்மையாம் என்பது கருத்து' என்றதும் இங்கு உணரத்தக்கன. இனி, உம்மையில் - மறுபிறப்பிலும், மறுமைதன்னில் - இறந்தபின்வருஞ் சுவர்க்காதிகதியிலும்,உறு-நேர்கிற, பயன் இரண்டும் - வினைப்பயன் இரண்டையும், பார்க்கின் - ஆராயுமிடத்து, (அவை),யார்க்கும்—,இம்மையில் அவரவர்இயற்கையாலே விளங்கும் என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று. மெய்ம்மையே என்பதற்கு - இதுமெய்யேயாம் என்றும் கொள்ளலாம். விபத் - வடசொல். மாது ஓ - ஈற்றசை. (உச)

வல்லவரனந்தகோடிமறைகளின்படியேயாய்ந்து
சொல்லியவறங்கள்யாவுநின்னிடைத்தொக்கவாறாற்
புல்லியபொய்யொன்றென்னும்பொருபெருநெருப்புக்கீர
மில்லைநீயொன்றுமெண்ணாதியம்புதியிதனையென்றான்.

(இ - ள்.) வல்லவர் - அறிந்தபெரியோர்கள், அனந்த கோடி மறைகளின் படியே - அளவிறந்த கோடிக்கணக்கான வேதவாக்கியங்களிற் கூறியபடியே, ஆய்ந்து - ஆராய்ந்து, சொல்லிய - சொன்ன, அறங்கள் யாவும் - தருமங்களெல்லாம், நின்னிடை தொக்க - உன்னிடத்துக் கூடியுள்ளன; ஆறால் - என்றால் [ஆதலால் என்றபடி], புல்லிய பொய் ஒன்று - (இப்பொழுது) சேர்கிற இந்தஒருபொய்யானது, என் ஆம் - யாதுதீங்கு தருவதாம்? [ஒருதீங்கையுந் தாராது என்றபடி]; பொரு பெரு நெருப்புக்கு ஈரம் இல்லை - மூண்டெழுந்த மிக்கநெருப்புக்கு ஈரத்தாலாகும் அபாயம் இல்லை; (ஆகவே), நீ ஒன்றும் எண்ணாது-நீ யாதொன்றையுஞ் சிந்தியாமல், இதனை இயம்புதி - இப்பொய்யொன்றைக் கூறக்கடவாய், என்றான் - என்று (கண்ணன் தருமனுக்குக்) கூறினான்; (எ - று.)

'வேதங்க ளநந்தம்' என்று வேதந்தானே கூறியுள்ளது. தொக்க - 'அன்'சாரியை பெறுதுவந்த முற்று. புல்லிய - அற்பமாயுள்ள எனினுமாம். முந்தியபொருளில், புல்லிய என்பது - தெரிநிலை யிறந்தகாலப் பெயரெச்சம்; இன் என்ற இடைநிலை *றுதொக்கது: பிந்தியபொருளில், புன்மையென்னும் பண்பினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; இ - சாரியை. அசுவத்தாமா இறந்தமைகூறுதல், நிகழாததுகூறலன்றி நிகழ்ந்ததனையே

மாறுபாடாக்கூறுத லாதலால், புல்லியபொய் [சிறுபொய்] எனப்பட்டதென்க. பொரு நெருப்பு - எல்லாவற்றையும் எரித்துவிடத்தக்க நெருப்பு எனினுமாம். 'பெருநெருப்புக்கு ஈரமில்லை' என்பது,பழமொழி. பெரியோர் கூறியஅறங்கள்யாவும் நின்னிடத்து ஒருங்கேஅமைந்துள்ளதனால், இச்சிறு பொய்யினாற் சிறிதும்தவறுண்டாகாது:பெருநெருப்புக்குச் சிறியஈரத்தினாற் சிறிதுங்கெடுதியில்லாதவாறுபோல என்றான்; எடுத்துக்காட்டுவமை. (௨௫)

[தருமன் துரோணனைநகிற் சென்று பொய்கூறத்தொடங்குதல்.]

போரறமலைந்துவென்றுபோதத்தாற்பவங்களேழும்
வேரறவெல்லநிற்பான்வீடுறநின்றவெல்லை
வாரறவயமாவோட்டிவயங்குதேர்கடவிச்சென்று
பேரறன்மைந்தனாவிற்பிழையறப்பேசுவானே.

(இ - ள்.) போர் அற மலைந்து - போரை மிகுதியாகச் செய்து, வென்று - வெற்றிகொண்டு, (பின்பு), போதத்தால் - தத்துவஞானத்தினால், பவங்கள் ஏழும் வேர் அற வெல்ல - எழுவகைப்பிறப்புக்களையும் வேரோடறும்படி சயித்திட, நிற்பான் - சித்தனாய்நிற்பவனான துரோணன், வீடு உற நின்ற எல்லை - முத்தியடையும்படி நின்ற இடத்திலே,—பேர் அறன் மைந்தன் - பெருமையையுடைய தருமபுத்திரன், வார் அற வய மா ஓட்டி வயங்கு தேர் கடவி சென்று - (குதிரைகளைக்கட்டிய)தோற்கயிறு அறுபடும்படி வலிய குதிரைகளை விசையாகத்தூண்டி விளங்குகிற தனது தேரை நடத்திக்கொண்டு போய், நாவின் - (தனது)நாவினால், பிழை அற பேசுவான் - தவறுஇல்லையாகச் சொல்பவனானான்; (எ - று.)— அதனை, அடுத்தகவியிற் காண்க.

அசுவத்தாமா இறந்தா னென்று தான்கூறும் பொய்யை முழுப்பொய் யாகவன்றிச் சிலேடைவகையாற் சமத்காரமாக அக்கருத்துநிகழக் கூறுவது பற்றி, 'பிழையறப் பேசுவான்' என்றார்; அத்தன்மையை, அடுத்தகவியிற் காண்க. இனி, 'பிழையறப்பேசுவான்' என்பதற்கு - சோர்வில்லாமற் கூறுவா னென்றும், குற்றமாகிய சொல்லை நன்றாகச்சொல்வா னென்றும் பொருள்கொள்ளலாம்.போர்அறமலைந்து-எதிர்ப்போர்இல்லையாம்படிபோர் செய்து எனினுமாம்; அன்றி, போர் அறம் எனப்பிரித்து, அறப்போரென மாற்றி,தருமயுத்தஞ்செய்து என்றலுமொன்று. பவங்கள் ஏழ்-தேவர் மக்கள் விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்பன. வேரறவெல்லுதல்- பிறப்புக்கு மூலகாரணமான கருமத்தின் தொடர்ச்சி சிறிதுமில்லையாகச் சயித்தல்; கருமமொழியப் பிறப்பற்று முத்திபெற நின்றவிடத்து என்க. எல்லை - சமயமுமாம். வீடுற நின்ற எல்லை - (உடம்பினின்று உயிர்) நீங்க நின்ற அளவிலே யெனினுமாம். தோல்வார் அறுதல் குதிரைகளின் வரம்பு கடந்த விசையினால். பவம் - வடசொல். (௨௬)

[தருமன் பொய்கூறும் வகை.]

அத்தனேயடுவல்லாண்மையச்சுவத்தாமாவென்னு
மத்தவாரணத்துக்கையோமாருதிசிங்கமானா
னெத்தனைகோடிசேனையிக்களத்திறந்ததிந்த
வித்தகன்மலைந்துசெற்றவிரகையென்சொல்வதென்றான்.

(இ - ள்.) 'அத்தனே - தலைவனே! அடு வல் ஆண்மை - (பகையை) அழிக்கும் கொடியவலிமையை யுடைய, அச்சுவத்தாமா என்னும் அசுவத்தாமாவென்கிற, மத்த வாரணத்துக்கு-மதங்கொண்ட யானைக்கு, மாருதி - வீமசேனன், சிங்கம் ஆனான் - சிங்கம்போலாயினான்; ஐயோ—! எத்தனை கோடி சேனை - எத்தனைகோடிக்கணக்கான சேனை, இ களத்து இறந்தது- இந்தப்போர்க்களத்திலே (அசுவத்தாமனால்) இறந்திட்டது; இந்த வித்த

கன் - இந்தச் சதுரப்பாடுடையவன் [வீமன்], மலைந்து செற்ற - (அவ்வசுவத்தாமாவைப்) பொருது அழித்த, விரகை - தந்திரத்தை, என் சொல்வது - என்னவென்று சொல்லமுடிவது!' என்றான் - என்று (துரோணனைநோக்கிச்) சொன்னான், (தருமன்); (எ - று.)

அத்தனே - சுவாமி! இது, துரோணனைநோக்கிய விளி. அடுதல் - பொருதலுமாம். அசுவத்தாமா வென்ற யானையை வீமன் சிங்கம்போல அழித்தான் என்றும், அசுவத்தாமாவாகிய யானையை வீமனாகிய சிங்கம் அழித்திட்டது என்றும் கவர்பொருள்படக் கூறிய நயம் மறிக. சிங்கம் - ஸிம்ஹ மென்ற வடசொல்லின் விகாரம்; (எல்லாவிலங்குகளையும்) ஹிம்ஸிக்க வல்லதென்று காரணப்பொருள்படுகிற ஹிம்ஸ மென்ற சொல் ஸிம்ஹமென வடமொழியில் எழுத்துநிலை மாறியது. சேனை - சாதியொருமை யாதலால், 'இறந்தது' என்ற ஒன்றன்பால்முற்றைக் கொண்டது. என்சொல்வது - சொல்லுந்தரமின்று என்றபடி. ஐயோ - இரக்கக்குறிப்பிடைச்சொல். (௨௭)

[அதுகேட்டுத் துரோணன் படைக்கலங் கைவிட்டுநிற்றல்.]

தீதிலா னுரைத்தமாற் றஞ்செவிப்படுமளவினெஞ்சிற்
கோதிலானெடுத்தவில்லுங்கொடியவெங்கணையும்வீழ்த்திப்
போதிலானிறந்தான்போலும்புதல்வனென் றினைதலின்றி
யேதிலான்போலநின்றான்யார்கணும்பந்தமில்லான்.

(இ - ள்.) தீது இலான் - குற்றமற்றவனான தருமன், உரைத்த - சொன்ன, மாற்றம் - வார்த்தை, செவி படும் அளவில் - காதிற்பட்டவளவிலே [கேட்டவுடனே],— நெஞ்சில் கோது இலான் - மனத்திற் குற்றமில்லாதவனான துரோணன்,— எடுத்த வில்லும் கொடிய வெம் கணையும் வீழ்த்தி - தான்கையிலேந்தியுள்ள வில்லையும் மிகக்கொடிய அம்புகளையும் கீழேபோகட்டு,— 'புதல்வன் - (தனது)மகனான அசுவத்தாமன், போது இலான் இறந்தான் போலும் - ஆயுட்பொழுதில்லாதவனாய் இறந்துவிட்டான்போலும்', என்று - என்றுஎண்ணி, இனைதல் இன்றி - வருந்துதலில்லாமல், யார்கணும் பந்தம் இல்லான் - எவரிடத்தும் ஆசைப்பாசபந்தம் இல்லாமல் நின்ற அந்தத்துரோணன், ஏதிலான் போல நின்றான் - அயலான்போல நின்றான்; (எ - று.)

பிறப்புக்குஏதுவான அவா முனிவருபதேசத்தால் அற்றமைபற்றி, 'இனைதலின்றி யேதிலான்போலநின்றான் யார்கணும்பந்தமில்லான்' என்றார். ஏதிலான் - யாதொருசம்பந்தமுமில்லாதவன்; நொதுமலன், உதாசீனன். பந்தம் - கட்டு. அவ்வார்த்தை கேட்டவளவில் ஆயுதங்களைக் கீழே போகட்டமை, முன்கூறியசொல்லை நிறைவேற்றியவாறும். தீது - பழிபாவம். கோது - தீயசிந்தை. போலும் - ஒப்பில்போலி. (௨௮)

[அச்சமயத்தில் திட்டத்துய்மன் துரோணன்தலையைத் துணித்தல்.]

முள்ளிய ளக் கோயின் முனிநடுத் தலையை முன்னங்
கிள்ளிய பிணாக பாணி கிரீசனோ டொத்த வீரன்
றள்ளிய பரித்தேர்த் திட்டத் துய்மன தம்பு சென்று
தள்ளிய தப்போ தந்தத் தவமுனி தலையை யந்தோ.

(இ - ள்.) முள் இயல் நாளம் கோயில் - முட்கள் பொருந்திய தண்டையுடைய தாமரையைத் தங்குமிடமாகவுடைய, முனி - அந்தணனான பிரமனது, நடு தலையை - (ஐந்துதலைகளுள்)நடுவிலுள்ள தலையை, முன்னம் கிள்ளிய - முன்பு கிள்ளியெடுத்த, பிணாகபாணி கிரீசனொடு - பினாகமென்னும் வில்லைக் கையிலுடையவனான சிவபிரானுடனே, ஒத்த—, வீரன் - வீரனாகிய, தள்ளிய பரி தேர் திட்டத்துய்மனது - தள்ளியோடுகிற குதிரைகள் பூண்ட தேரையுடைய திட்டத்துய்மனுடைய, அம்பு—, சென்று -

போய், அப்போது—, அந்த தவம் முனி தவத்தையுடைய முனிவனை அந்தத்துரோணனது தலையை, தன்னியது - துணித்துக் கீழே தள்ளிற்று; அந்தோ - ஐயோ! (எ - று.)— 'அந்தோ' என்றது, கவிகூறிய இரக்கச்சொல்.

பிரமனதுநடுத்தலையைச் சிவபிரான் முன்பு கிள்ளினாற்போல, இப்பொழுது துரோணனது தலையைத் திட்டத்துய்மன் துணித்தானென்பார், இங்ஙனங்கூறினார். முள் இயல் நாளம் - தாமரைக்கு, அன்மொழித்தொகையாகிய பெயர் கோயில் - தேவர்தங்குமிடம்; சிறந்தஇடமென்று பொருள்படுகிற கோவில்என்பதன் இலக்கணப்போலி: கோ + இல். நாளக்கோயில் - திருமாலின் நாபீகமலம். பிரமன், பெருந்தவமுடையானாதலின், 'முனி' எனப்பட்டான். கிரீசன் - கிரி + ஈசன்: (கைலாச) கிரிக்குத் தலைவன்; தீர்க்கசந்தி. இவ்வுவமையால் துரோணனது ஒழுக்கமும் திறமையும், திட்டத்துய்மனது கோபமும் பகையழித்தல்வன்மையும் விளங்கும். துரோணன் சோர்ந்துநின்ற நிலையில் திட்டத்துய்மன் அவன்தலையைத் துணித்தது அக்கிரமமென்னுங் கருத்துப்பட, பிரமனைச் சிவன் நிஷ்காரணமாகத் தலைகிள்ளியதனை உவமைகூறினாரென்பர். அந்தோ - ஹந்த என்ற வடசொல்லின் சிதைவு.

முதலிரண்டடியிற் குறித்த கதை:—[திருவே. ப. ருசு.] (உக)

வேறு.

[துரோணன் இறந்ததனை அசுவத்தாமன் காணுதல்.]

பட்டனன் வாச பதிநிகர் சேனா பதியென்னக்
கெட்டது நாக கேதனன் வீரங் கிளர்சேனை
தொட்டவில் லாண்மைத் தூரகத தாமா வெதிரோடிக்
கட்டழல் வேள்வித் தந்தையி றந்த களங்கண்டான்.

(இ - ள்.) வாசபதி நிகர் - பிருகஸ்பதியை யொத்த, சேனாபதி-(கௌரவ) சேனைத்தலைவனான துரோணன், பட்டனன் - இறந்தான், என்ன - என்று அறிந்தவளவிலே,— நாககேதனன் வீரம் கிளர் சேனை - பாம்புக்கொடியனான துரியோதனனது பராக்கிரமம்மிக்க சேனை, கெட்டது - நிலைகுலைந்தது; (உடனே), தொட்ட வில் ஆண்மை தூரகததாமா - கையிற் பிடித்த வில்லின் வலிமையையுடைய அசுவத்தாமன், எதிர் ஓடி - முன்னே ஓடிச்சென்று, கட்டு அழல் வேள்வி தந்தை இறந்த களம் கண்டான் - நியமந்தவறாத வைதிகாக்கினியில் யாகஞ்செய்தலையுடைய தனது தந்தையான துரோணன் இறந்துகிடந்த போர்க்களத்தைப் பார்த்தான்; (எ - று.)

வாசபதி - வாசஸ்பதி யென்ற வடசொல்லின் விகாரம்; சொல்லுக்கு [கல்விக்கு]த் தலைவனென்பது பொருள். பிருகஸ்பதி தேவர்கட்குக் குருவும் சேனைத்தலைவனுமாதல்பற்றி, கௌரவர்க்குக் குருவும் சேனைத்தலைவனுமான துரோணனுக்கு அவனை உவமைகூறினார்; அநீதியுள்ள துரியோதனனியர்பக்கல் நின்று மிக்கஊக்கங்கொண்டு போர்செய்த நிலையில் துரோணனுக்கு முன்பு அசுரகுருவான சுக்கிரனை உவமைகூறிய ஆசிரியர், இங்குத் தத்துவஞானம்பெற்றுப் போர்விருப்பொழிந்து பொறுமைமேற்கொண்டு பாண்டவர்க்குஅநுகூலமாகக் கண்ணனிடஞ்சொன்னபடி உயிர்நீத்தநிலையில் அத்துரோணனுக்குத் தேவகுருவான பிருகஸ்பதியை உவமைகூறினாரென்பதை உய்த்துணர்க. துரோணனது கல்வித்திறத்தை விளக்குதற்குப் பிருகஸ்பதியை உவமைகூறினாரென்றுங் கொள்ளலாம். இனி, வாசபதியென்பதை வாஸவபதி யென்றதன் விகாரமெனக் கொண்டு, இந்திரனாகிய அரசன்போன்ற துரோணனென்று உரைத்தல், சிறப்பின்று. இறந்த களம் - பெயரெச்சம் இடப்பெயர் கொண்டது.

இதுமுதல் நான்கு கவிகள் - முதற்சீர் விளச்சீர் அல்லது மாச்சீரும், இரண்டு நான்காஞ் சீர்கள் மாச்சீர்களும், மூன்றாஞ்சீர் விளச்சீரும், ஐந்தாவது மாங்காய்ச்சீருமாகிய நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள். இவற்றில் முதற்செய்யுளாகிய இது முதற்சீர் கூவிளச்சீரும், அடுத்தமூன்று செய்யுள்களும் முதற்சீர் தேமாச்சீருமாகப் பெற்றுவந்துள்ள வேறுபாடு காண்க. (௩௦)

[அசுவத்தாமன் பித்ருசோகத்தால் வருந்துதல்.]

கண்டான்வீழ்ந்தானம்முனிபாதங்கமழ்சென்னி
கொண்டான்மோதிக்கண்பொழிநீரிற்குளித்திட்டான்
வண்டார்சோரமண்ணுடல்கூரவன்னஞ்ச
முண்டார்போலவெண்ணமழிந்தானுளநொந்தான்.

(இ - ள்.) (அசுவத்தாமன்), கண்டான் - (தந்தையிறந்துகிடந்தநிலைப்) பார்த்தான்; வீழ்ந்தான் - கீழேவிழுந்தான்; அ முனி பாதம் கமழ் சென்னி கொண்டான் - அந்தத்துரோணாசாரியனது திருவடிகளைப் பரிமளிக்கிற தனது சிரசின்மேற் கொண்டான்; மோதி - (தன்னைத் தானே) தாக்கிக்கொண்டு, கண் பொழி நீரில் குளித்திட்டான் - கண்களினின்று பெருகுகிற நீரிலே முழுகினான்; வள் தார் சோர - செழிப்புள்ள (தனது) போர்மாலை கீழேசரியவும், மண் உடல் கூர - உடம்பிற் புழுதி மிகப்படியவும் (பெற்று), வல் நஞ்சம் உண்டார் போல எண்ணம் அழிந்தான் - கொடியவிஷத்தை உட்கொண்டவர்போல நினைப்பற்றான்; உளம் நொந்தான் - மனம்வருந்தினான்; (எ - று.)

தன்மைநவிற்சியணி; 'நஞ்சையுண்டார்போல' என்ற உவமையை அங்கமாகப் பெற்று வந்தது. 'வண்டார்சோர,' 'மண்ணுடல்கூர' என்ற அடைமொழிகளை 'வீழ்ந்தான்' என்றதனோடு இயைத்தலும் அமையும். கமழ் சென்னி - போர்ப்பூமாலைசூடியதனால் வாசனைவீசுகிற முடி யென்க. மோதிக் குளித்திட்டான் என இயையும்; மோதிப் பொழி என்று இயைத்து, அலைமோதிக்கொண்டு கண்களினின்று மிகுதியாச்சொரிகிற நீரி லெனினுமாம். கூர, கூர் - உரிச்சொற்பகுதி. நஞ்சம், அம் - சாரியை. வல்நஞ்சமுண்டார்போல வென்பதற்கு - சிவபிரான்போல வென்றலு மொன்று; "கன்மத்தை ஞாலத்தவ ராருளரே கடப்பார், பொன்மொய்த்ததோளான் மயல்கொண்டு புலன்கள்வேறாய், நன்மத்தைநாகத்தயல்சூடியநம்பனேபோ, லுன்மத்தனானன் றனையொன்றுமுணர்ந்திலாதான்" என்ற கம்பராமாயணங் காண்க: சிவகுமாரனுக்குச் சிவபிரானோடு உவமை ஏற்கும். (௩௧)

[இதுமுதல் மூன்றுகவிகள் - அசுவத்தாமன் புலம்பல்.]

வன்பின்மிக்கவீடுமனுன்னைமன்னாகென்
றன்பினிப்பாராளவுமன்றேயருள்செய்தான்
முன்பினெண்ணவுவமையிலாதாய்முடிவாயோ
வுன்பின்வந்தேனுன்னையொழிந்துய்வேனோ.

(இ - ள்.) வன்பில் மிக்க வீடுமன் - வலிமையில் மிக்க பீஷ்மன், உன்னை—, மன் ஆகு என்று - 'அரசனாவாய்' என்றுசொல்லி, அன்பின் இ பாராளவும் - அன்போடு இந்தவுலகத்தை யாளும்படியாகவும், அன்றே - அக்காலத்திலே, அருள்செய்தான் - கருணையோடு கூறியுள்ளான்; முன் பின் எண்ண உவமை இலாதாய் - முன்னும் பின்னும் (உன்னோடு ஒருங்கொராகவைத்து) எண்ணுதற்கு ஒப்புமையில்லாதவனான நீ, முடிவாயோ - இறந்திடுவாயோ? உன் பின் வந்தேன் - உனக்குப்பின் பிறந்தவனான நான், உன்னை ஒழிந்தும் உய்வேனோ-உன்னையொழியப்பெற்றும் உயிர்வாழ்வேனோ?(எ-று.)

துரோணன் ஆதியில் வீடுமனிடம் வந்து சேர்ந்தபொழுது அவன் இவனைக் கௌரவபாண்டவர்க்குப் பிரதானவில்லாசிரியனாக்கி அவனுக்கு இராசபட்டத்தையும் அரசர்க்கு உரிய குடை கொடி தேர் முதலிய அங்கங்களையும் தந்தனனென அறிக; "முனி நீயையா இதற்கு முன்னமின்று முதலா, இனி யிவ்வுலகுக் கரசா யெம்மி லொருவனாகிக், குனிவில் வலியா லமருங் கோடியென்று கொடுத்தான், பனிவெண்குடையு திருபர்க் குரிய வரிசை பலவும்" என்றார், கீழ் ஆதிபருவத்தும். முன்பின் - வலிமையிலே எனினுமாம். முன்பி னெண்ணவுவமையிலாதாய் - ஒப்புயர்வின்றி அனைவரினும் மேம்பட்டவனான நீ யென்றபடி; "அண்ணலஞ்சிலைவலாருளமோகவாசானிற்பின்னை, விண்ணகுவெள்ளிவெற்பின்விஞ்சையருலகினல்லால், மண்ணகததில்லை" என்றார் சீவகசிந்தாமணியிலும். அருள்செய்தான் அன்றே என மொழிமாற்றி, அருள்செய்தானன்றோ எனவுந் தகும். 'உன் பின்வந்தேன்' என்றது, உனக்கு அடுத்த சந்ததியாய் [மகனாய்]ப் பிறந்தவனென்றபடி. (௩உ)

வில்லாய் நீவெம் போர்முனை வெல்லும் விறலாய்நீ
சொல்லாய் நீதொல் வேதிய ருட்குந் தொழிலாய்நீ
வல்லார் வல்ல கலைகள னைத்தும் வல்லானே
யெல்லா மின்றே பொன்றின வுன்னோ டெந்தாயே.

(இ - ள்.) வில்லாய் நீ-வில்வல்லமையுடையாய் நீ; வெம் போர் முனை வெல்லும் விறலாய் நீ - கொடிய போர்க்களத்திற் பகைவெல்லுந் திறமையுடையாய் நீ; சொல்லாய் நீ - சொல்திறமுடையாய் நீ; தொல் வேதியர் உட்கும் தொழிலாய் நீ - பழமையான அந்தணர்களும் அஞ்சும்படியான வைதிகத்தொழிலுடையாய் நீ; வல்லார் வல்ல கலைகள் அனைத்தும் வல்லானே - (ஒவ்வொரு சாஸ்திரத்திற்) வல்லமையுடையார்பலர் தேர்ந்துள்ள சாஸ்திரங்களெல்லாவற்றையும் ஒருங்கே தனியே தேர்ந்தவனே! எந்தாயே - எனது தந்தையே! எல்லாம் - (கீழ்க்கூறிய விற்றிறம் முதலிய) யாவும், இன்றே - இன்றைக்கே, உன்னோடு - உன்னுடனே, பொன்றின - அழிந்தனவாம்; (எ - று.)

வைதிக லௌகிக தருமங்க ளெல்லாவற்றுக்கும் துரோணன் ஒருநிதி போன்றவனென்பது, இதில்விளங்கும். சொல்லாய்-சாபாநுக்கிரகச்சொற்களையுடையாயெனினுமாம்; புகழையுடையாய் என்றலுமொன்று. 'தொல் வேதியருட்குந்தொழிலாய்' என்றது, பிறந்த அந்தணரியலை விட்டு அரசரிய லிற்புக்கவன்போலத் தோன்றினையாயினும், நீ அந்தப்பிராமணகிருத்தியங்களில் தொன்றுதொட்டுஅம்மரபுதவறாத அந்தணரும் அஞ்சும்படி தேர்ந்துள்ளா யென்றபடி. வேதியர் - வேதம்வல்லவர். இனி, விற்றிறம்முதலியவற்றை உன்போலுணர்வா ரெவருமில்லை யென்ற கருத்தால், 'எல்லா மின்றே பொன்றின வுன்னோடு' என்றான். (௩௩)

## வேறு.

கற்கொண்டு கன்மழைமுன் றடுத்த கண்ணன் கற்கறித்துப் பன்முறித்துக் கழறத் தானு, முற்கொண்ட விரதமறந் தியாருங் கேட்ப முரசுயர்த்தோன் பொய்சொன்னான் முடிவி லந்தச், சொற்கொண்டு வெறுங்கையனா மளவிற் றிட்டத் துய்மனென நின்ற குருத் துரோகி கொன்றான், விற்கொண்டு பொரநினைந்தா லிவனை யல்ல விண்ணவர்க்கு மெந்தைதனை வெல்ல லாமோ.

(இ - ள்.) கல் கொண்டு - (கோவர்த்தன)மலையைக் கொண்டு, கல் மழை முன் தடுத்த - கல்மழையை முன்புதடுத்தருளிய, கண்ணன்—, கல் கறித்து பல் முறித்து - கல்லைக்கடித்தாற்போலப் பற்களைக் கடித்துக்

கொண்டு, கழற - சொல்லவே, முரசு உயர்த்தோன்தானும் - முரசக்கொடியை உயர நிறுத்தியவனான தருமபுத்திரனும், முன் கொண்ட விரதம் மறந்து - பழமையாகத் தான்கொண்டுள்ள(சத்தியமேபேசுதலாகிய)விரதத்தைத் தவறி, யாரும் கேட்ப - எல்லாருங் கேட்கும்படி [வெளிப்படையாக], பொய் சொன்னான்—; முடிவில் - முடிவிலே [அதன்பின்பு என்றபடி], அந்த சொல் கொண்டு வெறுங் கையன் ஆம் அளவில் - அந்தவார்த்தையை உண்மையாகக்கொண்டு (என்தந்தை படைக்கலமொழிந்து) வறுங்கையனாகுமளவில், திட்டத்துய்மன் என நின்ற குருத்துரோகி - த்ருஷ்டத்யும்நனென்று பெயர்கூறப்பட்டுநின்ற குருத்துரோகியானவன், கொன்றான் - (அவனைக்)கொன்றிட்டான்; (இங்ஙனமன்றி), வில் கொண்டு பொர நினைந்தால் - (என்தந்தை) வில்லைக் கையிற்கொண்டு போர்செய்ய எண்ணினால், இவனே அல்ல - இந்தத்திட்டத்துய்மனேயல்லன், விண்ணவர்க்கும் - தேவர்கட்கும், எந்தைதனை வெல்லல் ஆமோ - என்தந்தையை வெல்லுதல் இயலுமோ? [இயலாதென்றபடி]; (எ - று.)

இந்திரன் கல்மழைபொழிந்திட்டதனால், அதனைக் கற்கொண்டு தடுத்தான்; அன்றி, நீர்மழையையே பொழிந்திருப்பானாயின் அதனை நீரைக்கொண்டே தடுக்கவல்ல ஸர்வசக்தன் என்பது தோன்ற, 'கற்கொண்டு கன்மழை முன் தடுத்த கண்ணன்' என்றார். 'கன்மாரியாகையாலே, கல்லையெடுத்து ரக்ஷித்தான்;நீர்மாரியாகில்,கடலையெடுத்து ரக்ஷிக்குங்காணும்' என்று பட்டர் அருளிச்செய்வர்; இத்தால், இன்னத்தைக்கொண்டு இன்னகாரியஞ் செய்யக்கடவோமென்னும் நியதி யில்லை:ஸர்வசக்தனென்கை'என்ற வியாக்கியானவாக்கியம் இங்குஅறியத்தக்கது. 'மலைகொண்டு'என்னாது'கற்கொண்டு' என்றது, அந்தமலைமுழுவதையும் ஒருகல்லையெடுத்தாற்போல அநாயாஸமாக எளிதிலெடுத்தமை தோன்றுதற்கு. 'கற்கொண்டு கன்மழை தடுத்த கண்ணன்' என்றதில், 'நாம் கோவர்த்தனமலையை ஆராதித்தோம்; அதனால்நேர்ந்த தீங்கைப் போக்கிக் கண்ணன் காத்தருளினான்' என்று இடையர்கள் நினைக்கவொண்ணாதென்று நோக்கி அவர்கள்ஆராதித்த மலையைக்கொண்டே காத்தருளியவாறு விளங்கும்.

தம்பக்கத்துச்சேனையை விரையத் தொலைத்துவருகிற துரோணனைக் கொல்லும்வகை வேறுஇல்லாமைபற்றிக் கண்ணன் தான் தருமனைப்பொய் கூறச்சொல்லவும் அவன் கேளாமல் முதலில் மறுத்திட்டமைபற்றி அப்பெருமான் மிகக்கோபித்துப் பல்லைக்கடித்துக்கொண்டு வற்புறுத்தி மீளவும் அத்தருமனைப்பொய்கூறச்சொல்லினனென்பது, 'கற்கறித்துப் பன்முறித்துக் கழற' என்பதனால் விளங்கும். 'கற்கறித்துப் பன்முறித்து' என்றதில் உவமவுருபுதொக்கதனால், தொகையுவமையணி. கழறுதல் - இடித்துரைத்தல். 'முன் பொய்சொன்னான்' என இயைத்து உரைப்பினுமாம்.

துரோணனைக் கொல்லுதற்கென்று துருபதகுமாரனாய்த் தோன்றிய திட்டத்துய்மன் இளமையில் துரோணனையேயடுத்துத் தனக்கு வில்வித்தை கற்பித்துக்கொடுக்கவேண்டுமென்று வேண்ட, துரோணன், தன்னைக் கொல்லப்பிறந்தவனிவனென்பது தெரிந்திருந்தும், 'இவனால் நாம்கொல்லப்படும்படி விதி உளதாயின், அதனை மறுக்கமுடியாதன்றே? நாம் இப்பொழுது இவனுக்கு வில்வித்தைகற்பியாமல் மறுப்போமாயின், அஞ்சினேனென்ற பழிமாத்திரமே மிஞ்சும்; நிகழ்வது நிகழ்க' என்று எண்ணித் துணிந்து இவனுக்கு அக்கல்விமுற்றவுங் கற்பித்தருளினான்; அப்படிப்பட்ட குருவைக் கொன்றதனால், திட்டத்துய்மன் 'குருத்துரோகி' எனப்பட்டான்: குருத்துரோகி - குருவுக்குத் துரோகஞ்செய்தவன். "காணமறுவற்றிலங்கு திறற் கலைசொல்பவன்பாற் கனல்பயந்தோன், சரணமலர் தன்தலைக்கொண்டு தனுநூ லெனக்குத் தருகென்றான், மரண மிவனாற் றனக்கென்ப

துணர்ந்துங் குருவு மறுதளித்தான், அரணியிடத்திற் செறிந்தன்றே வத னைச் செகுப்ப தழலம்மா" என்ற வாரணாவதச்சருக்கத்துச்செய்யுள் நோக் கத்தக்கது. அல்ல,அன்று என்பவை - வேறு இல்லை உண்டு என்பனபோல ஐம்பால்மூவிடத்துக்கும் பொதுவான குறிப்புமுற்றாய் வழங்கிவருவதை இலக்கியப்பயிற்சியால் அறிக.

இதுமுதல் எட்டுக் கவிகள் - பெரும்பாலும் முதல் இரண்டு ஐந்து ஆறாஞ்சீர்கள் காய்ச்சீர்களும்,மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடி லடி நான்கு கொண்ட எண்சீராசிரியவிருத்தங்கள். (௩௪)

[அசுவத்தாமன் எதிர்ப்பக்கத்தவரனைவரையுங் கொல்வே னென்று தொடங்குதல்.]

இப்புதல்வன்றிருத்தாதைபாடுநோக்கி யிவ்வகையேயிரங்குத லுமிராசராச, னப்புதல்வன்றன்னையெடுத்தாற்றித்தேற்றி யம்புய க்கணருவிதுடைத்தளிசெய்காலை, யெப்புதல்வருடனும்விறற்குந்தி மைந்த ரியாவரையுஞ்சென்னிதுணித்தியாகசேனன், மெய்ப்புதல் வன்றனைச்சேரமலைவனென்று வில்வளைத்தான்சொல்வளையாவேத நாவான்.

(இ - ள்.) இ புதல்வன் - துரோணபுத்திரனான இந்த அசுவத்தாமன், திரு தாதை பாடு நோக்கி - தனது மேலான தந்தையின் அழிவைக் குறித் து, இ வகையே இரங்குதலும் - இவ்வாறே சோகித்தவளவிலே,—இராச ராசன் - அரசர்க்கரசனான துரியோதனன், அ புதல்வன் தன்னை - அந்தத் துரோணபுத்திரனை, எடுத்து—, ஆற்றி-ஆறுதல்கூறி, தேற்றி-சமாதானப்படு த்தி,அம்புயம் கண் அருவி துடைத்து-தாமரைமலர்போன்ற அவன் கண்களி னின்று இடையறாதுபெருகும் நீர்ப்பெருக்கைத் துடைத்து, அளி செய் காலை - அன்புகாட்டியபொழுது,—சொல் வளையா வேதம் நாவான்-சொல் தவறாத வேதம்வல்ல நாக்கையுடையவனான அசுவத்தாமன்,—'எ புதல்வரு டனும் - இராசகுமாரரெல்லாருடனே, விறல் குந்தி மைந்தர் யாவரையும்- வெற்றியையுடைய குந்திபுத்திர ரெல்லாரையும் [பாண்டவரைவரையும்], சென்னி துணித்து - தலையறுத்து, யாகசேனன் மெய் புதல்வன்தனை சேர மலைவன் - துருபதனது சிறந்தபுத்திரனான திட்டத்துய்மனையும் ஒருசேரக் கொல்வேன்', என்று - என்று சபதஞ்செய்து, வில் வளைத்தான் - வில்லை வளைத்தான்; (எ - று.)

'சொல்வளையா வேதநாவான்'என்பதனை, அடுத்த சருக்கத்து மூன்றாம் பாட்டில் "சொற்றவறாத துரோணன்" என வருவதனோடு ஒப்பிடுக. 'சொல் வளையா'என்பதற்கு - எவராலும் இகழ்ந்துசொல்லுதற்குக் கூடாத என்றும் உரைக்கலாம். 'சொல்வளையா' என்றது - வேதநாவானுக்கு அடைமொழி; வேதத்துக்கு அடைமொழியாக்கவுந்தகும். மாத்திரியினிடம்பிறந்த நகுலசக தேவரையுஞ்சேர்த்து 'குந்திமைந்தர்' என்று அபேதமாக் கூறியது, புதல்வ ரைப்பெறும் மந்திரத்தை அந்தமாத்திரிக்கு உபதேசித்தவள் குந்தி யாதலா லும், பாண்டுவோடு மாத்திரி சககமனஞ்செய்து இறந்துவிட அவ்விருவரை யும் குந்தியே அன்போடு இளமைதொடங்கி வளர்த்தன ளாதலாலு மென்க; "அந்தணன் முன்தரு மந்திர மைந்தினி லறுவரையுங் கடவுட், குந்தி பயந் தனள்" என்றார் கீழ்க்கிருட்டிணன்தூதுசருக்கத்தும்;"சந்தார் திரள்தோள் தருமற்குந் தம்பியர்க்குங்,கொந்தார் விசயற்குங் கோமாதா" என்ற பெருந் தேவனார்பாரதமுங் காண்க. 'எப்புதல்வர்' என்றது, பாண்டவ புத்திர ரான உபபாண்டவரைக் குறிப்ப தென்றும் உரைப்பர். பாடு - படு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். இரங்குதலும் - 'உம்'ஈற்று இறந்தகால வினையெச்சம்; பிற்பொருளைக் காட்டும். (௩௫)

[கண்ணன்கட்டளையால் அனைவரும் படைக்கலமும் வாகனமு மொழிதல்.]

பாகசாதனன்மதலைதெய்வப்பாகன் பாகடருநெடும்பனைக்கை ப்பகட்டின்மேலான், மேகமேனியன்விரைவிற்றங்கள்சேனை வேந் தையெலாஞ்சென்றெய்தி வில்வாள்வேலும், வாகனாதியுமகற்றிநின் மினென்ன மாருதிமைந்தனையொழிந்தோர்மண்ணின்மீது, யோக ஞானியராகியனைத்துளோரு மொருவரைப்போனிராயுதராயொடு ங்கிநின்றார்.

(இ - ள்.) மேகம் மேனியன்-மேகம்போலக்கரிய திருமேனியையுடை யவனும்,பாகசாதனன் மதலை தெய்வம் பாகன்-இந்திரனுடையகுமாரனான அருச்சுனனது தெய்வத்தன்மையுள்ள தேர்ப்பாகனு மாகிய கண்ணன், பாகு அடரும் நெடும் பனை கை பகட்டின் மேலான் - பாகனைக்கொல்லுந் தன்மையதும் நீண்ட பனைமரம்போன்ற துதிக்கையையுடையதுமான ஓர் ஆண்யானையின்மேல் ஏறினவனாய், விரைவில் தங்கள் சேனை வேந்தை எலாம் சென்று எய்தி - சீக்கிரத்தில் தங்கள்சேனையிலுள்ளஅரசர்களையெல் லாம் போய்ச் சேர்ந்து, வில் வாள் வேலும் வாகன ஆதியும் அகற்றி நின் மின் என்ன -'வில்முதலிய ஆயுதங்களையும் வாகனம்முதலியவற்றையும் நீக்கிவிட்டு நில்லுங்கள்' என்றுசொல்ல,—மாருதி மைந்தனை ஒழிந்தோர் அனைத்துளோரும் - வாயுபுத்திரனான வீமசேனனாகிய வீரனொருத்தனை யொழிந்த மற்றுமுள்ளாரெல்லாரும், யோகம் ஞானியர் ஆகி - யோகப்பயி ற்சியாற்பெறுதற்குஉரிய தத்துவஞானத்தைக கொண்டவர்கள்போன்று, ஒருவரை போல் நிராயுதர் ஆய் - ஒருத்தரைப்போலவே படைக்கலமில்லா தவர்களாய், மண்ணின்மீது ஒடுங்கி நின்றார் - (வாகனங்களினின்று இற ங்கி) வெறுந்தரையிலே போர்ச்செயலற்று ஒடுங்கிநின்றார்கள்; (எ - று.)

பாகஶாஸநன் என்ற வடமொழிப்பெயர் - பாக னென்ற அசுரனை அழி த்தவனென்று காரணப்பொருள்படும். பாகசாதனன்மதலைதெய்வப்பாகன்- பார்த்தசாரதி. பாகடரும்பகடு - மதயானை; "யானை, அறிந்தறிந்தும்பாக னையே கொல்லும்" என்பது நாலடி; "பாகு பரிக்கோல் யாவுந் தூரத்தே, காணினு நின்று கொதிப்பது" என்பர் மேற்சருக்கத்தும். பகடு - யானை யின் ஆண்மைப்பெயர். வேந்து - சாதிப்பெயர். 'ஆதி' என்றதனால், கவச முங் குறிக்கப்பட்டவாறு. வாகநம் - ஏறிநடத்தப்படும் யானை குதிரை தேர் களாகிய ஊர்திகள். மாருதியென்பது - வாயுபுத்திரனென்னும் பொருள தாதலால், மைந்த னென்பதற்கு - வீர னெனப்பட்டது. மாருதிமைந்தன் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 'மாருதமைந்தன்' என்று பாடமா யின், வாயுமைந்தனென்று பொருள்படும்; மாருதம் - காற்று. யோகஞானி யர்ஆகி - யோகத்தையும் ஞானத்தையும் உடையவர்கள்போன்று எனினு மாம். யோகம் - சிலநியமங்களோடுசெய்யுந் தவம். ஆகி - உவமவுருபு. யோக ஞானங்களையுடையவர் திரிகரணமுமொடுங்கிநிற்றல் இயல்பாதலால், அவர் கள்போன்று இவர்கள் ஒடுங்கிநின்றாரென்றார்; கீழ்த் துரோணனும் தத் துவஞானமுதித்தபின்பு போர்விருப்பொழிந்து பொறுமைமேற்கொண்டு நிராயுதனாய் ஒடுங்கிநின்றமை காண்க. எலாம் - இடைக்குறை. (௩௬)

[அசுவத்தாமனது நாராயணாஸ்திரத்தை யாவரும் வணங்குதல்.]

மாற்றரியமறையொடுநாராயணான்றன்வாளிதொடுத்தலுமந்த வாளியூழிக், காற்றெறியொடெழுந்ததெனக்கார்கோண்மொண்டுகொ ரேழுமதிர்ந்ததெனக்கனன்றுபொங்கி, யேற்றரிபோர்க்குழாங்கொ ண்டவயவர்தம்மையெய்தியபோதனைவருந்தம்மிதயமொன்றிச், சாற்றரியவுணர்வினரியேத்தியேத்தித் தாடோய்செங்கரமுகுளந் தலைவைத்தாரே.

(இ - ள்.) மாற்று அரிய மறையொடு - விலக்குதற்கு அருமையான மந்திரப்பிரயோகத்துடனே, நாராயணன்தன் வாளி தொடுத்தலும் - (அசுவத்தாமன்) நாராயணாஸ்திரத்தை ஏவியவளவிலே,—அந்த வாளி - அந்த அஸ்திரமானது, ஊழி காற்று எரியொடு எழுந்தது என - கற்பாந்தகாலத்துப் பெருங்காற்று நெருப்புடனே கிளர்ந்து வீசியதுபோலவும், கார்கோள் மொண்டு கார் ஏழும் அதிர்ந்தது என - சமுத்திரசலத்தை நிரம்ப எடுத்துப் பருகி மேகங்களேழும் இடிமுழங்கியதுபோலவும், கனன்று பொங்கி - உக்கிரங்கொண்டு எழுந்து, ஏறு அரி போல் குழாம் கொண்ட வயவர் தம்மை எய்திய போது - ஆண்சிங்கங்கள்போலத் திரண்டுள்ள (பாண்டவசேனை) வீரர்களைச் சேர்ந்தபொழுது,—அனைவரும் - அவ்வீரரெல்லாரும், தம் இதயம் ஒன்றி - தங்கள் மனத்தில் ஒற்றுமைப்பட்டு, சாற்று அரிய உணர்வினர் ஆய் - சொல்லுதற்கும் அரிய தத்துவஞானத்தையுடையவர்களாய், ஏத்தி ஏத்தி - மிகுதியாகத் துதித்து, தாள் தோய் செம் கரம் முகுளம் தலை வைத்தார் - முழங்காலையளாவிய சிவந்த தங்களுடையகைகளைக் குவித்துத் தலைமேல் வைத்துக்கொண்டு வணங்கினார்கள்; (எ - று.)

முகுள மென்ற வடசொல் - அரும்பெனப் பொருள்படுதலால், கைகளாகிய மலர்களை அரும்புகள்போலக் குவியத் தலைமேல் வைத்தன ரென்க. தாள் தோய் கரம்-தமது முழங்காலளவும் நீண்டுவளர்ந்த கை; ஆஜாநுபாகு. மாற்றரிய மறை - வேறு எந்த மந்திராஸ்திரபலத்தினாலும் தடுக்கமுடியாத பேராற்றலையுடைய மந்திர மென்றபடி. ஊழிக்காலத்துஎழுங்காற்று அக்காலத்துஎழும் நெருப்போடுகூடி உலகையழிக்கக்கிளர்ந்ததுபோல நாராயணாஸ்திரம் மந்திரபலத்துடனே எதிர்ப்பக்கத்தவரனைவரையு மழித்தற்கு எழுந்த தென்க. நாராயணன்தன்வாளி-நாராயணனைத் தெய்வமாகவுடைய அம்பு. மேகங்களினால் நீர்கொள்ளப்படுதல்பற்றி, கடலுக்கு 'கார்கோள்' என்று பெயர். கோள் என்பதை, செயப்படுபொருள்விகுதிபுணர்ந்துகெட்டுக் கொள் என்னும் பகுதி முதல்நீண்ட பெய ரென்னலாம். (௩எ)

[நாராயணாஸ்திரம் அனைவரையும் நீங்கி வீமன்மேற் செல்லுதல்.]

பாருருவித்திசையுருவியண்டகூடம் பாதலத்தினுடனுருவிப் பரந்துசீறி,யோரொருவருடலின்மிசைமயிர்க்கானேறு மோரொரு வெங்கணையாய்வந்துற்றகாலை,நேரொருவர்மலையாமற்றருமன்சேனை நிருபரெலாநிராயுதராய்நிற்றல்கண்டு,போருருவமுனிமைந்தன்றொடுத்தவாளி பொருபடைகொண்மாருதிமேற்போனதாலோ.

(இ - ள்.) முனி மைந்தன் - துரோணபுத்திரனான அசுவத்தாமன், போர் உருவ - போரிலே (பகைவர்மேல்)ஊடுருவிச்செல்லும்படி, தொடுத்த - பிரயோகித்த, வாளி - அந்த நாராயணாஸ்திரமானது, பார் உருவி - பூமியைத்துளைத்தும், திசை உருவி-திக்குக்களைத் துளைத்தும்,பாதலத்தினுடன் அண்டகூடம உருவி - பாதாளலோகத்துடனே அண்டகோளத்தின்முகட்டையும் துளைத்தும், பரந்து - பரவி, சீறி - கோபங்கொண்டு, ஓர் ஒருவர் உடலின்மிசை மயிர்க்கால் தோறும் ஓர் ஒரு வெம் கணை ஆய் - ஒவ்வொருவரது உடம்பிலுமுள்ள மயிர்க்காலெலாவ்வொன்றுக்கும் ஒவ்வொருகொடிய அம்பாய்ப் பெருகி, வந்து உற்ற காலை - வந்து அடுத்தபொழுது, தருமன் சேனை நிருபர் எலாம் - யுதிட்டிரனது சேனையிலுள்ள அரசர்களெல்லாரும், நேர் ஒருவர் மலையாமல் - எதிரில் ஒருவரும் போர்செய்யாமல், நிராயுதர் ஆய் நிற்றல் - கையிற்படையெடாதவராய் வணங்கிநிற்பதை, கண்டு - பார்த்து, (அந்தத்தெய்வஅஸ்திரம்), பொரு படை கொள் மாருதி மேல் போனது - போர்க்குஉரிய ஆயுதத்தை யேந்தியுள்ள வீமசேனன்மேற் சென்றிட்டது; (எ - று.)—ஆல் - ஈற்றசை. ஓ - வியப்பிடைச்சொல்; தலைமுமலழிக்க

வல்ல நாராயணாஸ்திரத்துக்கு அவரனைவருந் தப்பியுய்ய, அது வீமன்மேல் மாத்திரம் சென்றமையா லாகிய வியப்புப்பற்றி வந்தது.

பாந்து - பரபரப்புற்று, விரைந்து என்றுமாம். மயிர்க்கால் - ரோமத் துவாரம். போர் உருவம் முனி மைந்த னென எடுத்து. போரிற் பெருமிதத் தோற்றமுடைய அசுவத்தாம னெனினுமாம்; யுத்தமே ஓருருவங்கொண்டு வந்தாற் போன்ற துரோணன துகுமாரனான அசுவத்தாம னென்றலு மொன்று: தற்குறிப்பேற்றம். அந்தச்சிறந்த அஸ்திரத்துக்கு, படையெடாதவர் மேற் புக்குத் தொழில்செய்யாமை இயல் பென்க. (௯௮)

[வீமன் அந்த அஸ்திரத்தை யெதிர்த்தல்.]

காற்றின்மதலையுந்தனதுதடந்தேருந்திக் கண்சிவந்துமனங்கருகிக்கால்வில்வாங்கிக், கூற்றமெனவெதிர்சென்றுமுனிவன்மைந்தன் கொடுங்கணையைமதியாமற்கடுங்கணாளன், வேற்றுருவங்கொடுகனலி முதலாவுள்ள விண்ணவர்தம்பகழிகளாய்மேன்மேல்வந்த,மாற்றரிய பகழிகளையொன்றுக்கொன்று மாறானபகழிகளான்மாற்றினானே.

(இ - ள்.) (பின்பு), காற்றின் மதலையும் - வாயுபுத்திரனான வீமனும், தனது தட தேர் உந்தி - தன்னுடைய பெரியதேரைச் செலுத்தி, கண் சிவந்து மனம் கருகி - (கோபத்தால்) கண்கள் சிவந்து மனம் வெதும்பி, வில் கால் வாங்கி - தநுர்த்தண்டத்தை வளைத்து, கூற்றம் என எதிர் சென்று - யமன்போல எதிரிலே சென்று, முனிவன் மைந்தன் கொடுங்கணையை மதியாமல் - துரோணபுத்திரனான அசுவத்தாமனது கொடிய அந்த அஸ்திரத்தை லக்ஷ்யஞ்செய்யாமல், கடுங்கணாளன் - அஞ்சாதவலிமையுடையவனாய், வேறு உருவம் கொடு கனலி முதல் ஆ உள்ள விண்ணவர் தம் பகழிகள் ஆய் மேல் மேல் வந்த மாற்று அரிய பகழிகளை - வெவ்வேறுவடிவங்கொண்டு அக்கினி முதலாகவுள்ள தேவர்களது அஸ்திரங்களாய்ப்பரிணமித்து மேன்மேல் வந்த விலக்குதற்கரியஅம்புகளை, ஒன்றுக்கு ஒன்று மாறு ஆன பகழிகளால் - அவற்றில் ஒவ்வொன்றுக்கும் பகையான எதிரம்புகளினால். மாற்றினான் - விலக்கினான்; (எ - று.)

கால்வில்வாங்கி - விற்கால்வாங்கி யென மாற்றுக; இனி, ஒருகாலினால் வில்லின் ஒருகோடியை அழுத்தி அவ்வில்லை வளைத்து என்றும் உரைக்கலாம். மாற்றுதல் - தடுத்தல். ஒன்றுக்கு ஒன்று மாறான பகழிகள் - ஆக்நேயாஸ்திரத்துக்கு வாருணாஸ்திரம் போல்வன காண்க. (௯௯)

[நாராயணாஸ்திரம் வீமனாற் பலவாறு தடுக்கப்படுதல்.]

மூச்சினாலடியுண்டுங்கடுங்கட்கோப முதுகனலாலெரியுண்டுமுனைகொள்வாளி, யோச்சினாலொடியுண்டுங்குனித்தவிற்கா லுதையினாலுதையுண்டுநெடுநாணோசை, வீச்சினாலறையுண்டுங்கடகவாகு வெற்பினாலிடியுண்டும்வெகுளிகூரும், பேச்சினால்வெருவுண்டும்படாததுண்டோ பேரனிலன்மகனாலப்பெருமன்வாளி.

(இ - ள்.) மூச்சினால் - (வீமசேனனது) மூச்சுக்காற்றினால், அடியுண்டும் - அடிபட்டும்,—கடுங் கண் கோபம் முது கனலால் - பயங்கரமான அவன்கண்களினின்று வெளிப்பட்ட முதிர்ந்த கோபாக்கினியினால், எரியுண்டும் - எரிபட்டும்,—முனை கொள் வாளி ஓச்சினால் - கூர்மையைக்கொண்ட அம்பின் பிரயோகத்தால், ஒடியுண்டும் - ஒடிபட்டும்,—குனித்த வில் கால் உதையினால் - வளைத்த விற்கழுந்தின் தெறிப்பினால், உதையுண்டும் - தாக்கப்பட்டும்,— நெடு நாண் ஓசை வீச்சினால் - நீண்டநாணியின் ஓசையினது வேகத்தால், அறையுண்டும் - அடிபட்டும்,—கடகம் வாகு வெற்பினால் - கடகமென்னும் வளையை யணிந்த தோள்களாகிய மலைகளினால், இடியுண்டும் - இடிக்கப்பட்டும்,— வெகுளி கூரும் பேச்சினால் - கோபம்மிக்க வீர

வார்த்தையால், வெருவுண்டும் - அச்சங்கொண்டும்,— பேர் அனிலன் மகனுல் - பெரிய வாயுபுத்திரனுன அவ்வீமனுல், அ பெருமன் வாளி - அப்பெருமானது அம்பு [நாராயணுஸ்திரம்], படாதது உண்டோ - படாதபாடு உண்டோ? [இல்லை: மிக இடர்ப்பட்டது என்றபடி]; (எ - று.)

இதனுல், வீமனது மிக்கஆற்றலை வெளியிட்டபடி. கடகம்-வடசொல்: இது வெற்புக்கும்அடைமொழியாகர்தக்கது; மலைச்சாரலுக்குக்கடகமென்று பெயர். பெருமன் - பெருமையையுடையவன்: திருமால்; மன் - ஆண்பாற் பெயர்விகுதி.பெருமா னென்றதன் குறுக்க லென்றலும்,பெரு மன் என்று பிரித்து-சிறந்த தலைவ னென்றலும்,பெரிய நிலைபெற்ற என்றலும்அமையும். 'கால்' என்றதற்கு ஏற்ப.'உதை' என்ருர். ஈரேழுசை - குணந்வநி. (௪0)

[கண்ணன் வீமனையும் அந்த அஸ்திரத்துக்குத் தப்புவித்தல்.]

தாள்வலியா லெனைப்பலபல் வினைசெய் தாலுந் தப்பவொணு விதிபோலத் தடந்தோள் வீமன், தோள்வலியால் விலக்கவுமத் தொடைபோய் வாசத் தொடைமிடைமார் பகமணுகச் சுராரி தோள்கள், வாள்வலியா லரிந்தபிரான் கையில் வில்லும் வாளியும் வா கனமுமுடன் மாற்றுவித்தா, னுள்வலியார் தமைச்சிலரரற் கொல்ல லாமோ நாரணன்சா யகமிகவு நாணிற் றன்றே.

(இ - ள்.) தாள் வலியால் - முயற்சியின் வலிமையினுல், எனை பல பல் வினை செய்தாலும் - எத்துணைப் பலபலவாகிய தொழில்களை எதிராகச் செய்தாலும், தப்ப ஒணு - தப்பமுடியாத, விதி போல-ஊழ்வினைபோல,— தட தோள் வீமன் தோள் வலியால் விலக்கவும்- பெரியதோள்களையுடைய வீமன் (தனது) புஜபலத்தால் தடுக்கவும், (தடைப்படாமல்), அ தொடை போய் - அந்த அம்பு சென்று,வாசம் தொடை மிடை மார்பு அகம் அணுக- பரிமளத்தையுடைய போர்மாலை நிறைந்த (அவனது) மார்பினிடத்தைச் சேர.— சுர அரி தோள்கள் வாள் வலியால் அரிந்த பிரான் - தேவர்க்குப் பகைவனுன வாணுசுரனது தோள்களை ஆயுதத்தின் வலிமையால் அறுத்திட்ட கண்ணபிரான்.கையில் வில்லும் வாளியும் வாகனமும் உடன் மாற்றுவித்தான் - (வீமனது) கையிலுள்ள வில்லையும் அம்பையும் (அவனது) வாகனத்தையும் உடனே நீக்குவித்தான்; (அதனுல்), நாரணன் சாயகம் மிகவும் நாணிற்று - (அந்த) நாராயணுஸ்திரம் (அவனைக்கொல்லுதற்கு) மிகவும் வெள்கிப்போயிற்று: நாள் வலியார்தமை சிலரால் கொல்லல் ஆமோ - ஆயுள்வலிமையுடையாரை எவராலேனுங் கொல்லமுடியுமோ? [முடியாதென்றபடி]; (எ - று.) — அன்றே - ஈற்றசை; அப்பொழுதே யென்றுமாம்.

வீமனை நாராயணுஸ்திரம் கண்ணன்செய்வித்த தந்திரத்தாற் கொல்லாமலொழிந்த தென்ற சிறப்புப்பொருளை 'நாள்வலியார்தமைச் சிலராற் கொல்லலாமோ' என்ற பொதுப்பொருள்கொண்டு விளக்கியதனுல், வேற்றுப்பொருள்வைப்பணி. தாள்வலி - பிரயத்நபலம். தாள்வலியா லெனைப் பலபல்வினைசெய்தாலுந் தப்பவொணு விதி—"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான் முந்துறும்" என்ருர் திருவள்ளுவரும். மிகவும் நாணிற்று-மனிதனொருவனுல் தான்பட்டபாட்டையும் தான் அவனை ஒன்றுஞ்செய்யக்கூடாமற்போனதையுங்குறித்து மிகவும்வெட்கமடைந்ததென்க. சுராரி - இராவணன் நரகாசுரன் முதலியோரு மென்பர்; சாதியொருமை.

இங்ஙனம் கண்ணன் தன்பக்கத்தவரெல்லாரையும் வலிய அந்த நாராயணுஸ்திரத்துக்குத் தந்திரமாகத் தப்புவித்த திருவருளின் திறத்தைப் பாராட்டி மேல்(பதினேழாம்போர்ச்சருக்கத்தில்) தருமன் கண்ணனை "எவருஞ் சாபட் பண்டிதன் புதல்வ னேவிய வேலினுல் யாங்கள், வீவருந்தன்மை யறிந்து வாகனமும் விறற்படைகளு மொழித்திட்டாய், மூவரு மொரு

வராகி நின்றருளு மூர்த்தியே பார்த்திவர் பலருந், தேவரு முணரார் நின் செயல்" என்று துதிக்குமாறுங் காண்க. (௪௧)

வேறு.

[அசுவத்தாமன் பாசுபதமெடுக்கத்தொடங்கியபொழுது வியாசன்வருதல்.]

விட்ட வெம்பகழி நாணி மீளுதலும் வில்லின் வேதமுணர்
முனிமகன், வட்ட வெஞ்சிலையின் மீது பாசுபத வாளி வைப்பது
மனஞ்செயா,முட்ட வன்பினொடு நின்ற காலையில் வியாத னென்
றுரைசொள் முனிவரன், றொட்ட தண்டுமிதி யடியு மாகியுயர்
சுருதி வாய்மையொடு தோன்றினான்.

(இ - ள்.) விட்ட வெம் பகழி - (அசுவத்தாமன்) பிரயோகித்த கொடிய நாராயணாஸ்திரம், நாணி-வெட்கப்பட்டு, மீளுதலும்- திரும்பியவுடனே,— வில்லின் வேதம் உணர் முனி மகன்-தநுர்வேதத்தையறிந்த துரோணாசாரியனது புத்திரனான அசுவத்தாமன், வட்டம் வெம் சிலையின்மீது-வட்டமாக வளைக்கப்பட்ட கொடிய வில்லின்மேல், பாசுபதம் வாளி வைப்பது-பாசுபதாஸ்திரத்தை வைத்துத் தொடுப்பதாக, மனம் செயா - எண்ணி, முட்ட வன்பினொடு நின்ற காலையில் - மிகக் கொடுமையோடு நின்றபொழுதில்,— வியாதன் என்று உரை கொள் முனிவரன் - வியாசனென்று புகழ்பெற்ற சிறந்தஇருடி,தொட்ட தண்டும் மிதியடியும் ஆகி - கையிலேந்திய பிரமதண்டமும் (பாதத்தில் தரித்த) பாதுகையு முடையவனாய், உயர் சுருதி வாய்மையொடு - சிறந்தவேதவாக்கியங்களுடனே [வேதவாக்கியங்களை உச்சரித்துக் கொண்டு], தோன்றினான் - அங்கு எழுந்தருளினான்; (எ - று.)

வட்டம் - வ்ருத்த மென்ற வடசொல்லின் சிதைவு. பாசுபதம்-பசுபதியின் சம்பந்தமானது: வடமொழித் தத்திதாந்தநாமம்;சிவபிரானைத் தெய்வமாகவுடையது: பசுபதி - சிவபிரான்; பசு - ருஷபத்துக்கு அல்லது உயிர்கட்கு, பதி - தலைவன். வ்யாஸ னென்றது - (வேதங்களை) வகுத்தவனென்பதுபற்றிய காரணப்பெயர்; நடந்த த்வாபரயுகத்தின் அந்தத்தில் திருமால் பராசரமுனிவனது குமாரனாக அவதரித்து,பலவாறுசிதறிக்கிடந்த வேதங்களை ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என நான்காகப் பிரித்துவகுத்தருளின னென்றுஅறிக. முட்ட - எதிர்க்க எனினுமாம். மிதியடி - அடியினால் [கால்களினால்] மிதிக்கப்படுவது எனப் பொருள்படுங் காரணக்குறி. சுருதி வாய்மையொடு - வேதம்போன்ற உண்மைமொழிகளை யுடையனாய் என்றலுமாம். செயா = செய்யா: உடன்பாட்டெச்சம்.

இதுமுதல் இச்சருக்கமுடியுமளவுமுள்ள ஒன்பதுகவிகள் - பெரும்பாலும் முதல் மூன்று ஐந்தாஞ் சீர்கள் மாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறுஞ் சீர்கள் கூவிளங்காய்ச்சீர்களும், ஏழாவது விளச்சீருமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (௪௨)

[வியாசன் அசுவத்தாமனுக்குச் சமாதானங்கூறுதல்.]

நின்றசாபமுனிமைந்தன்வந்தமுனிகிருபனைப்பரமனிகரெனச்
சென்றுகைதொழுதுபரசிடப்பரிவுதீர்கருத்தினொடுசெப்பினா
னன்றுபோரிலழியாகசேனன்மகனழலினூடுவருசாபமும்
வென்றிவாகைபுனைவிசயனோடுகருமேகவண்ணன்வருவிதியுமே.

(இ - ள்.) நின்ற சாபம் முனி மைந்தன் - போரில்நின்ற வில்லுக்குரிய துரோணனது புத்திரனான அசுவத்தாமன், வந்த முனி கிருபனை - அங்கு வந்து சேர்ந்த முனிவர்தலைவனான வியாசனை, பரமன் நிகர் என - யாவரினுஞ்சிறந்த கடவுளோடு ஒப்பாக எண்ணி, சென்று கைதொழுது - எதிர்கொண்டு அருகிற்சென்று கைகூப்பிவணங்கி, பரசிட - துதிக்க,— (அம்முனிவன்),— பரிவு தீர் கருத்தினொடு - (அசுவத்தாமனது) துன்பத்தை

நீக்குங் கருத்துடனே,—அன்று போரில் அழி யாகசேனன் மகன் அழலினூடு வரு சாபமும் - அக்காலத்திற் போரிலே (துரோணசிஷ்யனான அருச்சுனனுக்குத்)தோற்ற துருபதனது புத்திரனாகிய திட்டத்துய்மன் யாகாக்கினியினின்று வந்த வரத்தையும். வென்றி வாகை புனை விசயனோடு கரு மேக வண்ணன் வரு விதியும் - வெற்றிக்கு அறிகுறியான வாகைப்பூமாலையைச் சூடிய அருச்சுனனுடன் காளமேகவண்ணனான கண்ணபிரான் திருவவதரித்த முறைமையையும், செப்பினான்-(அவனுக்கு) எடுத்துக்கூறியருளினான்.

வியாசன் விஷ்ணுவின் உருவ மாதலால், 'பரமன் நிக ரென' எனப்பட்டது. நீர்கருத்து-பிறவினை வினைத்தொகை. தவறாமைபற்றியும், துரோணனுக்குத் தீங்காய் முடிதல்பற்றியும், திட்டத்துய்மன் வரத்தோடு பிறந்தமை 'சாபம்' எனப்பட்டது நான்காமடியிற் குறித்த செய்தி, பூமிபாரந் தீர்த்தற்கு நரநாராயணர் கிருஷ்ணார்ச்சுனராய்த் தோன்றியமை. (௪௩)

[வியாசன் அசுவத்தாமனுக்குச் செய்யும் உபதேசம்]

வரத்தினாலுனதுதந்தைபோரினின்மடிந்ததன்றிபொருவயவர்தஞ்
சரத்தினாலவனைவெல்லவல்லவர்தராதலத்தின்மிசையில்லையா
லுரத்தினால்விறன்மயூரவாகனனையொத்தவீரவினியுள்ளுறச்
சிரத்தினாலரனையடிவணங்கியிடர்தீருமாறுநனிசிந்தியாய்.

இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) உரத்தினால் - வலிமையினால், விறல் மயூர வாகனனை ஒத்த - பராக்கிரமமுள்ளவனான மயில்வாகனமுடைய சுப்பிரமணியனைப் போன்ற, வீர - வீரனே! உனது தந்தை - உனது பிதாவான துரோணன், வரத்தினால் - (துருபதனபெற்ற) வரத்தினால், போரினில் மடிந்தது அன்றி - போரில் இறந்ததே யல்லாமல், தம சரத்தினால் அவனை வெல்ல வல்லவர் - தமது அம்பினால் அந்துரோணனைச சயிக்க வல்லமையுடையயர். ஒரு வயவர் - ஒருவீரரும், தராதலத்தின்மிசை இல்லை - இந்நிலவுலகத்தில் இல்லை; இனி—, உள் உற - மனப்பூர்வமாக, சிரத்தினால் - (உனது) தலையினால், அரனை அடி வணங்கி - சிவபிரானைத் திருவடிதொழுது, இடர் தீரும் ஆறு - பிறவித் துன்பம் நீங்கும்படி, நனி சிந்தியாய் - மிகவும் தியானிப்பாயாக; (எ - று.)

முருகக்கடவுளினால் வேல்கொண்டு பிளக்கப்பட்ட சூரபதுமனது உடம்பின்கூறு இரண்டும் மயில்வடிவமும் கோழிவடிவமும் பெற்று அக்கடவுளருளால் அப்பிரானுக்கு வாகனமும் கொடியுமாய் அமைந்த சிறப்புப்பற்றி, 'மயூரவாஹநன்' என்று முருகக்கடவுளுக்கு ஒருபெயர் வழங்கும். பலபராக்கிரமங்களையுடைமையோடு சிவகுமாரனாதல்பற்றியும, அசுவத்தாமனுக்கு முருகக்கடவுளுவமை ஏற்கும். வரத்தினால் - துரோணன்தான் அளித்த வரத்தினால், மடிந்தது அன்றி - இறந்தன னென்பதல்லாமல் எனினுமாம்; முதல்நாட்போர்த்தொடக்கத்திலே பாண்டவரைமுன்னிட்டுக்கொண்டு வந்து தன்னைப்புகழ்ந்து தன்னைக்கொல்லும்வகையைக் கூறுமாறு தன்னையேவேண்டிய கண்ணனுக்குத் துரோணன் தானேசொல்லிக்கொடுத்த உபாயத்தின்படி இறந்தமை காண்க. ஆல் - ஈற்றசை. (௪௪)

[வியாசன் உபதேசித்து மீள, சூரியன் அஸ்தமித்தல்.]

ஒன்றவைம்புலனைவென்றுநீடுதவமுரிமையிற்புரிதியுற்பவம்
பொன்றவென்றுறுதிகூறியன்பொடுபுகுந்ததெய்வமுனிபோதலு
மன்றவென்றுமிவர்செற்றதிற்சதமடங்குசெற்றனர்களின்றெனா
நின்றவென்றும்வெளிநிற்றலஞ்சிநெடுநீலவேலையின்மறைந்ததே.

(இ - ள்.) 'உற்பவம் பொன்ற - பிறப்பு ஒழியும்படி, ஐம் புலனை - ஐந்து புலன்களின் ஆசையையும், ஒன்ற - ஒருசேர, வென்று - சயித்து [அடக்கி], நீடு தவம் - மிக்க தவத்தை, உரிமையின் - உரியஒழுக்கத்துட

னே, புரிதி - செய்வாயாக', என்று—, உறுதி கூறி - உறுதிமொழிசொல்லி [உபதேசித்து], அன்பொடு புகுந்த தெய்வம் முனி - அன்போடுவந்த தெய்வத்தன்மையுள்ள வியாசமுனிவன், போதலும் - சென்றவளவிலே,—என்றும் இவர் செற்றதின் - எந்நாளிலும் இவர்கள் அழித்தவளவினும், இன்று - இன்றைக்கு, சத மடங்கு - நூறுமடங்கு அதிகமாய், மன்ற - நிச்சயமாக, செற்றனர்கள் - அழித்தார்கள், என - என்று எண்ணி, வெளி நிற்றல் அஞ்சி - வெளியிலேநிற்பதற்குப் பயந்து, நின்ற என்றும் நெடு நீலம் வேலையில் மறைந்தது - (வானத்தில்) நின்ற சூரியமண்டலமும் பெரிய நீலநிறமுள்ள (மேல்)கடலில் மறைந்திட்டது; (எ - று.)

இயல்பாகச் சூரியன் அஸ்தமித்ததை, கௌரவ பாண்டவர்கள் கீழ்ப்பதினான்குநாட்போரிலுங் கொன்றவளவிலும் மிகஅதிகமாக அன்றைத்தினத்திற் பிராணிகளைக்கொன்ற தன்மையைக் கண்டு தானும் அஞ்சி மறைந்ததாகக் காரணங்கற்பித்துக் கூறினமையின், ஏதுத்தற்குறிப்பேற்றவணி. உற்பவம் - உத்பவம் என்ற வடசொல்லின் விகாரம். மன்ற - தேற்றப்பொருள்தருவதோர் இடைச்சொல். என்று - ஒளியுடையதெனக் காரணப்பெயர்; எல் - ஒளி, பகுதி: று - விகுதி. (௬௩)

[இருதிறத்தவரும் படைவீட்டை யடைதல்.]

இருள்பரந்ததினியமையுமிற்றைஅமரென்றுதுன்றுகழலிட்டதா
ளருள்பரந்தவிழியறனின்மைந்தனடுசேனைபாசறையடைந்தபி
னுருள்பரந்திரததுரககுஞ்சரபதாதியோடுகடிதோடினான்
மருள்பரந்ததனிநெஞ்சனாகியடன்மன்னர்மன்னனெனுமன்னனே.

(இ - ள்.) இருள் பரந்தது - இருட்டுப் பரவிவிட்டது: இற்றை அமர் இனி அமையும் - இன்றைத்தினத்துப்போர் இவ்வளவோடு போதும், என்று - என்றுநிச்சயித்து, துன்று கழல் இட்ட தாள் அருள் பரந்த விழி அறனின் மைந்தன் அடு சேனை - பொருந்தியவீரக்கழலையணிந்த பாதத்தையும் கருணை பெருகுகின்ற கண்களையு முடைய தருமபுத்திரனது பகையழிக்கவல்ல சேனை, பாசறை அடைந்த பின் - படைவீட்டை யடைந்த பின்பு,—அடல் மன்னர்மன்னன் எனும் மன்னன் - வலிமையையுடைய இராசராசனென்று பெயர்பெற்ற துரியோதனராசன், மருள் பரந்த தனி நெஞ்சன் ஆகி - (துரோணவதத்தால்) மயக்கம்மிக்க தனித்த மனமுடையவனாய், உருள் பரந்த இரத துரக குஞ்சர பதாதியோடு - சக்கரங்களால் விரைந்துசெல்லுகின்ற தேர்களும் குதிரைகளும் யானைகளும் காலாள்களுமாகிய சதுரங்கசேனையுடனே, கடிது ஓடினான் - விரைவாகஓடிப்போனான்.

மனத்துளமைந்தஅருள் உவந்தநோக்கத்தினால்வெளியாதலால்,'அருள் பரந்தவிழி'என்றார். தனிநெஞ்சு - துணைபெறாத மனம்; இப்படிப்பட்ட தீயசிந்தனையுடையமனம்வேறு எவர்க்கும்இல்லாமையும் தோன்றும். (௬௪)

[துரியோதனன் சஞ்சயனைத் தந்தையினிடம் அனுப்புதல்.]

தனதுபாசறையிலானவக்குரிசில்சஞ்சயன்றனையழைத்துநீ
நினதுகாதலுயிரனையவெந்தைதனைநிசிதனிற்கடிதினெய்தியே
புனைதுழாய்மவுலிவிரகினான்முரசுயர்த்தபூபனுரைபொய்த்ததும்
மெனதுவாழ்வுவலிவென்றிதேசுறுதியாவுமாமுனியிறந்ததும்.

தனஞ்சயன்றலைதுணிக்கநின்றவரிசாபகோபமுதிர்சாயகத்
தினஞ்செய்நாதனருள்செல்வமாமதலைசேனைநாதனினியாவது
மினஞ்செய்வண்டுமுரலுமமார்பனெடியம்பிமேனிகழ்வயாவையு
மனஞ்செய்திவ்விரவுபுலருமுன்கடிதின்வருகவென்றனன்வணங்கியே.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்; ஒருங்கு உரைக்கப்படுகின்றன.

(இ - ள்.) (சஎ) தனது பாசறையில் ஆன - தன்னுடைய படைவீட்டிற் சேர்ந்த, அ குரிசில்-அந்தத்துரியோதனராசன்,—சஞ்சயன்தனை அழைத்து - சஞ்சயமுனிவனை வரவழைத்து,—(சஅ) வணங்கி - நமஸ்கரித்து,—(அவனைநோக்கி),—(சஎ) 'நீ—,—நினது காதல் உயிர் அனைய எந்தைதனை-உன்னுடைய அன்புக்கிடமான உயிரையொத்த [பிராணசிநேகிதனான] என்தந்தையை, நிசிதனில் - இவ்விரவிலே, கடிதின் எய்தி - விரைவாய் அடைந்து,—புனை துழாய் மவுலி - தரித்த துளசிமாலையையுடைய முடியையுடையவனான கண்ணனது, விரகினால் - தந்திரத்தால், முரசு உயர்த்த பூபன் உரை பொய்த்ததும்-முரசக்கொடியை உயரஎடுத்த யுதிட்டிரராசன் பொய் பேசியதையும்,—எனது வாழ்வு வலி வென்றி தேசு உறுதி யாவும் ஆம் முனி - என்னுடைய செல்வவாழ்க்கையும் வலிமையும் வெற்றியும் ஒளியும் தைரியமும் ஆகிய எல்லாவற்றினுருவமாயிருந்த துரோணன், இறந்ததும் - இறந்ததையும்,—(சஅ) தனஞ்சயன் தலை துணிக்க நின்ற - அருச்சுனனது தலையைத் துணித்தற்குத் துணிந்துநின்ற, வரி சாபம் கோபம் முதிர் சாயகம் - கட்டமைந்த வில்லையும் கறுமிக்க நாகாஸ்திரத்தையுமுடைய, தினம் செய் நாதன் அருள் செல்வம் மா மதலை - பகலைச்செய்கின்ற தலைவனான சூரியன் பெற்ற சிறந்த செல்வப்பிள்ளையாகிய கர்ணன், இனி சேனை நாதன் ஆவதும் - இனிமேல்(எனக்குச்)சேனைத்தலைவனாவதையும்,—இனம் செய் வண்டு முரல் தாமம் மார்பனொடு-திரளாகச்சேர்கின்ற வண்டுகள் மொய்த்தொலிக்கப்பெற்ற மாலையைத் தரித்த மார்பையுடையவனான அத்தந்தையுடனே, இயம்பி - சொல்லி,—மேல் நிகழ்வ யாவையும் மனம் செய்து - இனிநடக்கவேண்டியவையெல்லாவற்றையும் ஆலோசித்துக்கொண்டு,—இ இரவு புலரும் முன் கடிதின் வருக - இவ்விராத்திரி கழிந்து விடிவதற்குமுன்னமே விரைவில்மீண்டுவருவாயாக', என்றனன் - என்றுசொன்னான்; (எ - று.)

குரிசில் சஞ்சயனை அழைத்து வணங்கி என்றனன் என்றும், எய்தி இயம்பி மனஞ்செய்து வருக என்றும், பொய்த்ததும் இறந்ததும் ஆவதும் இயம்பி என்றும் இயையும்.

ஸஞ்ஜயன்-திருதராட்டிரனுக்கு மிகவும் இஷ்டனான நண்பன்; இவன் அவனுக்குச் சிலசமயங்களில் தேர்செலுத்துதலும் உண்டு; இப்பெயர்-(ஐம்புலன்களை) நன்றாக வென்றவ னென்று காரணப்பொருள்படும். இவன், கவல்கணனென்பவனது குமாரன்; ஆதலால், இவனுக்கு 'காவல்கணி' என்று ஒருபெயரும் வடமொழியில் வழங்கும். இவன், போர்நாள்தோறும் நிகழுஞ்செய்திகளை இரவிற்சென்று திருதராட்டிரனுக்குக் கூறிவந்தான். துரியோதனன் துரோணனைத் தனது வாழ்க்கை முதலியவற்றிற்கெல்லாம் முக்கியசாதனமாகக் கருதியிருந்தன னாதலால், 'எனது வாழ்வு ........யாவு மாம் முனி' என்றான். புனைதுழாய்மவுலி - அன்மொழித்தொகையாகிய பெயர்.

நிகழ்வ - எதிர்காலப் பலவின்பால் வினையாலணையும்பெயர். (சஅ)

[சஞ்சயன் திருதராட்டிரனிடஞ் சென்று மீளுதல்.]

அந்தவந்தணனுமந்தனோடிவையனைத்துமோதியபினந்தனுஞ்
சிந்தைநொந்தழுதிரங்கியாவும்வினைசெய்திரங்குவதுதீதெனா
மந்தணம்பெருகவெண்ணிமீளவிடவந்துநள்ளிருளின்மைந்தனுக்
குந்தைதந்தவுரையிதுவெனப்புரையிலுரைபுரோகிதனுமுரைசெய்தான்.

(இ - ள்.) அந்த அந்தணனும் - அந்தச்சஞ்சயமுனிவனும், அந்தனோடு-(பிறவிக்) குருடனான திருதராட்டிரனுடன், இவை அனைத்தும் ஓதிய பின்-(சென்று) இவையெல்லாவற்றையுஞ் சொன்னபின்பு,—அந்தனும் - திருதராட்டிரனும், சிந்தை நொந்து அழுது இரங்கி - மனம்வருந்திப் புலம்பிச்

சோகித்து, வினை யாவும் செய்து இரங்குவது தீது எனா - தொழில்களை யெல்லாஞ் செய்துவிட்டு(ப் பின்பு) அநுதபிப்பது தீயது என்று கருதி, பெருக மந்தணம் எண்ணி - மிகுதியாக மந்திராலோசனைசெய்து, மீள விட - (அச்சஞ்சயனைத்) திரும்ப அனுப்ப,—புரோகிதனும் - புரோகிதனான அச்சஞ்சயமுனிவனும், நள் இருளில் - நடுராத்திரியிலே, வந்து - மீண்டுவந்து, மைந்தனுக்கு-திருதராட்டிரபுத்திரனான துரியோதனனுக்கு, உந்தை தந்த உரை இது என புரை இல் உரை உரைசெய்தான் - உன்தந்தை சொல்லியனுப்பிய வார்த்தை இதுவென்று குற்றமில்லாத (சில) வார்த்தைகளைச் சொன்னான்; (எ - று.)

ஒருகாரியத்தைச் செய்யத்தொடங்குமுன் அதைப்பற்றித் தீரவிசாரிக்கவேண்டுமேயன்றிச் செய்யத்தொடங்கியபின்பு அதைக்குறித்துக் கழிவிரக்கமாக வருந்துவது தகுதியற்றது என்பது, இரண்டாமடியின் கருத்து; "எண்ணித் துணிக கருமந் துணிந்தபி, னெண்ணுவ மென்ப திழுக்கு" என்பது திருக்குறள். மந்தணம் - மந்த்ர மென்ற வடசொல்லின் சிதைவு. சஞ்சயன் பாண்டவர்க்கும் துரியோதனாதியர்க்கும் திருதராட்டிரனுக்கும் பலசமயங்களிலும்இதங்கூறிவந்ததனால், அவனை 'புரோகிதன்' என்றார். (சக)

[மறுநாட் சூரியோதய வருணனை.]

புதல்வனான திறலங்கர் பூபனிருள் புலருமுன்பொருபடைக்குமா
முதல்வனாமெனமகிழ்ந்து வாளிரவி முந்துதேர்கடவியுந்தினான்
அதலமாதியுலகேழுமாளுடைய வரவின் மாமணியனைத்தும்வந்
துதயமால்வரையினுச்சியுற்றதுகொலென்னமேதினியுரைக்கவே.

(இ - ள்.) 'இருள் புலரும் முன் - இருட்பொழுது கழிந்து விடிவதற்கு முன்னமே [விடிந்தவளவிலே யென்றபடி], புதல்வன் ஆன திறல் அங்கர் பூபன் - (தனது) மகனான வலிய அங்கநாட்டார்க்கு அரசனாகிய கர்ணன், பொரு படைக்கு மா முதல்வன் ஆம் - போர்செய்கின்ற(கௌரவ) சேனைக்குச் சிறந்த தலைவனாவன்', என - என்றுஎண்ணி, மகிழ்ந்து - மகிழ்ச்சிகொண்டு,—வாள் இரவி - ஒளியையுடைய சூரியன்,—'அதலம் ஆதி உலகு ஏழும் ஆள் உடைய - அதலம் முதலிய கீழேழுலகங்களையும் ஆளுதலுடைய, அரவின் - சர்ப்பராசனான ஆதிசேஷனது, மா மணி அனைத்தும் - சிறந்த மாணிக்கமெல்லாம், மால் உதயம் வரையின் உச்சி - பெரிய உதயகிரியின் சிகரத்திலே, வந்து உற்றதுகொல் - வந்துசேர்ந்ததோ?' என்ன - என்று, மேதினி - நிலவுலகத்தவர், உரைக்க - சொல்லும்படி,—முந்து தேர் கடவி உந்தினான் - சிறந்த தேரை (த் தனது பாகனான அருணனைக் கொண்டு) நடத்திக்கொண்டு தோன்றினான்; (எ - று.)

இயல்பாகப் பெருஞ்சோதியோடு உதித்த சூரியனிடத்து, தன்மகன் இன்று சேனாபதியாவனென்ற மகிழ்ச்சியால் விளக்கங்கொண்டு தோன்றினானென்ற கற்பனையைக் கவி ஏற்றிக்கூறியதனால், தற்குறிப்பேற்றவணி. பின்னிரண்டடியால், சூரியனது சிவந்த ஒளிக்கு ஆதிசேஷனது மாணிக்கங்களின் சிவந்தஒளியை உவமைகூறியவாறு. 'மணியனைத்தும்' என்பது, பொருளாற் பன்மையாயினும், சொல்லால் ஒருமையாதலால், 'உற்றது' என்ற ஒருமைமுற்றைக் கொண்டது. முந்து தேர் - விரைந்துசெல்லுந் தேருமாம். மேதினி - இடவாகுபெயர். (கூ0)

பதினைந்தாம் போர்ச்சருக்கம் முற்றிற்று.

---

துரோணபருவம் முற்றுப்பெற்றது.



## எட்டாவது

# கன்ன பருவம்.

கர்ணபர்வம் என்ற வடமொழித்தொடரின் விகாரம்; கர்ணனது விஷயமான பருவம் என்பது பொருள்: ஆகவே, கர்ணன் துரியோதனனுக்குச் சேனாபதியாய் நின்று இரண்டுநாள் போரைநடத்திய கதையைச் சொல்லும் பாக மென்பது கருத்து.

## முதலாவது

## பதினாறாம்போர்ச்சருக்கம்.

### வேறு.

[தெய்வவணக்கம்: கிருஷ்ணஸ்துதி.]

மாதுல னாகியு மேதில னாகிய வஞ்சன் கஞ்சன் வரவிட்ட,பூதனை தன்னுயிர் முலைபொழி பாலொடு போதர வுண்ட புயல்வண்ணா, மாதவ யாதவ வாசவ கேசவ மாயா வாயா மதுசூதா, வாதியு மந்தமு மாகிய நின்புக ழல்லா துரையே னடியேனே.

(இ - ள்.) மாதுலன் ஆகியும் - மாமனாக இருந்தும், ஏதிலன் ஆகிய - பகைவனான, வஞ்சன் - வஞ்சனையையுடையவனாகிய, கஞ்சன் - கம்சன், வர விட்ட-செல்லும்படி ஏவியனுப்பிய,, பூதனைதன் - பூதனையென்பவளது, உயிர் - பிராணன், முலை பொழி பாலொடு - அவள்முலையினின்று பெருகிய பாலுடனே, போதர - உடம்பைவிட்டுநீங்கும்படி, உண்ட - முலையுண்ட, புயல் வண்ணா - மேகம்போலுங் கரிய திருநிறமுடையவனே! மா தவ - இலக்குமிகணவனே! யாதவ - யதுகுலத்தில்திருவவதரித்தவனே! வாசவ - உபேந்திரனானவனே! கேசவ - பிரமனையும் உருத்திரனையும் அங்கத்திற் கொண்டவனே! மாயா-மாயையையுடையவனே! ஆயா-இடையர்குலத்தில் வளர்ந்தவனே! மது சூதா - மதுவென்னும் அசுரனை அழித்தவனே! ஆதியும் அந்தமும் ஆகிய - (எல்லாப்பொருள்கட்கும்) முதலும் ஈறுமான, நின் - உனது, புகழ் அல்லாது - கீர்த்தியையே (எப்பொழுதுஞ் சொல்லுவேனே) யல்லாமல் (வேறொன்றையும்), அடியேன் - (உனது) அடியவனாகிய யான், உரையேன் - (ஒருபொழுதுஞ்) சொல்லேன்; (எ - று.)—நின்புகழையே எப்பொழுதுஞ் சொல்வே னென்றபடி.

மாதுலன் - தாயுடன்பிறந்தவன். கம்சன் - கண்ணனது தந்தையாகிய வசுதேவரது மனைவியான தேவகிக்குச் சகோதரனாதலால், கண்ணனுக்கு மாமனாவன். ஆகியும் என்னும் உம்மை - உயர்வுசிறப்பு; அது, நெருங்கிய உறவினனாதலாற் பகைவனாதற்குஉரியவனல்ல னென்பதை விளக்கிற்று. ஏதிலன் - யாதொருசம்பந்தமும் இல்லாதவன்: எனவே, பகைவனாயிற்று; ஏதின்மை - பகைமை. பலவகைமாயைகளும் வல்ல அசுராம்சமாதல் தோன்ற, 'வஞ்சன்' என்றார். கஞ்சன் - வடசொல்திரிபு. முன்னிரண்டடியிற்குறித்த கதை:—[திருவே. ப. சகூ.] போதர, தா - துணைவினை. இனி, புயல்வண்ணா - மேகம்போலக் கைம்மாறுவேண்டாமல் தன்அடியார்கட்கு எல்லாநன்மைகளையுஞ்செய்யுங் குணமுடையவனே யென்றும் பொருள் கொள்ளலாம்; வண்ணம் - குணம்.

யாதவன் - தத்திதாந்தநாமம். இந்திரனைக்காத்தற்பொருட்டு அவன் வேண்டுகோளினால் அவனுக்குத் தம்பியாகத் திருவவதரித்து விரோதிநிரஸநஞ்செய்து அவனருகில்எழுந்தருளியிருக்கின்ற உபேந்திரமூர்த்தியை 'வாசவ' என இந்திரன்பெயராற் கூறினார்; இனி, வாசவ - இந்திரஸ்வரூபி

யானவனே என்றும், எல்லா ஐசுவரியமும் உடையவனே என்றும் பொருள் கூறலாம். க்ஷத்திரியஜாதியிலே சிறந்த சந்திரவம்சத்திற் பேர்பெற்ற யது குலத்திற் பிறந்திருந்தும் இடையர்சாதியிற் சேர்ந்து வளர்ந்து கன்று மேய்த்து ஒருத்தி கட்டவும் ஒருத்தி குட்டவுந் தன்னைக் காட்டிக்கொடுத்த சௌலப்பியகுணத்தின் மிகுதி விளங்க, 'ஆயா' என்றார். ஆயர் - பசுக்களையுடையவர் என்று இடையர்க்குப் பெயர்; ஆ - பகுதி, அர் - விகுதி, யகர மெய் - எழுத்துப்பேறு: இனி, ஆயா-(எல்லாவுயிர்கட்குந்) தாயானவனே யென்றுமாம்; ஆய் - தாய். எல்லாப்பொருட்கும் முதலும் முடிவு மானவனெனவே, கடவுளினது பிறப்புஇறப்புஇல்லாதுநித்தியமாயிருக்குந் தன்மை விளங்கும். "இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" ஆதலால், அவன்புகழையன்றி வேறொன்றை உரையே னென்றார்; "மறந்தும் புறந்தொழா மாந்தர்", "வாயவனையல்லது வாழ்த்தாது" என்பனவுங் காண்க.

யாதவ, ஆயா என்னுஞ் சொற்களினால் வசுதேவகுமாரனாய்த் தேவகி திருவயிற்றில் உதித்து நந்தகோபர்மனையில் யசோதைதிருமகனாய் வளர்ந்தருளிய கண்ணனது தன்மை கூறப்பட்டதனால், சூரியபுத்திரனாய்க் குந்தி வயிற்றிலுதித்துத் தேர்ப்பாகன்மனையில் ராதைமகனாய் வளர்ந்த கன்னனது போரைக் கூறுகின்ற இப்பருவத்துக்கு இக்காப்புச்செய்யுள் மிகப் பொருந்துமாறு உய்த்துணர்க; என்னை? இருவரும் ஒருத்திமகனாய்ப்பிறந்து ஒருத்திமகனாய் ஒளித்துவளர்ந்தவ ராதலின். மேல்வரும்பொருளைக் கடவுள் வாழ்த்துச்செய்யுளிற் குறிப்பித்தல், சிறுபான்மை கவிமரபு.

இச்செய்யுளில் முதலடியிலும் மூன்றாமடியிலும் வந்தஎழுத்தே மீண்டும் வந்தது, விருத்தியநுப்பிராச மென்னுஞ் சொல்லணி.

'எதிலனாகியும்' என்றும் பாடம்.

இதுமுதற் பதினொருகவிகள் - பெரும்பாலும் முதல்நான்குசீர் விளச்சீர்களும், ஐந்து ஆறாஞ் சீர்கள் மாச்சீர்களும், ஈற்றுச்சீரொன்று மாங்காய்ச்சீருமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (க)

[துரியோதனன் கர்ணனைச் சேனாபதியாக்கிப் போர்க்களஞ்சேர்தல்.]

கங்கைமகன்சிலையின்குருவென்பவர்காதிமலைந்தேகையற்றா
ரிங்கினியென்னுயிர்நண்பனையல்லதுவெல்லவல்லோரிலரென்றே
யங்கர்பிரானைவருதினியின்பதியாகென்றருள்செய்தவனோடும்
வெங்களமுற்றனனஞ்சுமிழுங்கொடிவேகநாகவிறலோனே.

(இ - ள்.) நஞ்சு உமிழும் - விஷத்தைக் கக்குகின்ற, வேகம் - சினமிகுதியுள்ள, நாகம் - சர்ப்பத்தின் வடிவத்தை யெழுதிய, கொடி - துவசத்தையுடைய, விறலோன் -வலிமையையுடையவனான துரியோதனன்,—கங்கை மகன் - கங்கையின் புத்திரனாகிய பீஷ்மனும், சிலையின் குரு - வில்லாசிரியனாகிய துரோணனும், என்பவர் - என்று சிறப்பித்துச்சொல்லப்படுகின்ற வீரர்கள், காதி மலைந்தே - (தம்மால் ஆனமட்டும் பகைவரைக்) கொன்று போர்செய்தே, கையற்றார் - செயலொழிந்துஅழிந்தனர்; இனி - இனிமேல், இங்கு - இப்போரில், வெல்ல வல்லோர் - (பகைவரைச்)சயிக்க வல்லவர், என் உயிர் நண்பனை அல்லது - எனது உயிரோடொத்த சிநேகிதனாகிய கர்ணனையேயல்லாமல்,இலர்-(வேறுஎவரும்)இல்லை,'என்றே-என்று துணிந்தே,—அங்கர் பிரானை - அங்கதேசத்தார்க்கு அரசனாகிய கர்ணனை, வருதினியின் பதி ஆகு என்று - 'சேனைக்குத் தலைவனாவாய்' என்று, அருள் செய்து - அருளோடு சொல்லி,—அவனோடும் - அக்கர்ணனுடனே,—வெம் களம் - கொடிய போர்க்களத்தை, உற்றனன் - அடைந்தான்; (எ - று.)

பிரமனதுசாபத்தாற் சந்தனுவாய்ப் பிறந்த வருணனுக்கு மனைவியான கங்கையினிடத்து வசிஷ்டமுனிவரதுசாபத்தால் அஷ்டவசுக்களிற் பிரபாச

னென்னும் வசு பீஷ்மனாகத் தோன்றியதனால், 'கங்கைமகன்' எனப்பட்டான். 'என்பவர்' எனச் செயப்படுபொருள்,வினைமுதல்போலக் கூறப்பட்டது; இனி, அகரச்சாரியையுஞ் செயப்பாட்டுப்பொருளுணர்த்தும் 'படு' விகுதியுந் தொக்குநின்றன வெனினும் அமையும். இங்கு - இவ்வுலகத்தில், இலர் என்றுமாம்.வல்லோர், விறலோன் - ஈற்றயல் ஆ ஓவாயிற்று. பீஷ்மதுரோணாதியர் தொலைந்தபின்பும் போர்செய்யுந் துணிவு சிறிதும்ஒழிந்திலனாதலால், 'விறலோன்'என்றார். அருள்செய்தல் - அருளிச்செய்தல்; துரியோதனனது தலைமைபற்றி, இச்சொல்லைப் பிரயோகித்தார். (௨)

[பாண்டவர் போர்க்களஞ் சேர்தல்.]

சொற்றவறாததுரோணனைமௌலிதுணித்ததிட்டத்துய்மனுங்
கொற்றவரைவருமற்றுளபூபருங்வைனதேயக்கொடியோனு
முற்றெழுகசரததுரகபதாதிகளானசேனையுடனேசென் [டார்.
றிற்றையருஞ்சமம்வெல்லுதலெங்கடனென்றுதுன்றியெதிர்கொண்

(இ - ள்.) சொல் தவறாத - வார்த்தைதப்பாத, துரோணனை - துரோணாசாரியனை, மௌலி துணித்த - தலையறுத்திட்ட, திட்டத்துய்மனும் - த்ருஷ்டத்யும்நனும், கொற்றவர் ஐவரும் - வெற்றியையுடைய பஞ்சபாண்டவர்களும்,மற்று உள பூபரும் - மற்றுமுள்ள அரசர்களும்,வைனதேயன் கொடியோனும் - கருடத்துவசத்தையுடையவனான கிருஷ்ணனும்,—உற்று எழு - திரண்டு புறப்படுகின்ற, கச ரத துரக பதாதிகள் ஆன - யானைகளும் தேர்களும் குதிரைகளும் காலாள்களுமாகிய (நான்கு அங்கங்களையுடைய), சேனையுடனே - சேனையோடு, சென்று - (போர்க்களத்துக்குப்) போய்,— 'இற்றை அருஞ் சமம் - இன்றைத்தினத்து அரிய யுத்தத்தில், வெல்லுதல் - (பகைவரைச்)சயித்தல், எம் கடன் - எமது கடமை,' என்று - என்றுஎண்ணிக்கொண்டு, துன்றி - நெருங்கி, எதிர்கொண்டார் - (பகைவர்சேனையை) எதிர்த்தார்கள்; (எ - று.)

'சொற்றவறாத துரோணன்' என்றது - அங்கிவேசமுனிவனிடத்தில் துரோணனுடன் வில்வித்தையைக் கற்றுவந்தபொழுது 'எனக்கு இராச்சியங்கிடைத்தபின்னர்ப் பாதி உனக்குப் பங்கிட்டுக்கொடுப்பேன்' என்று அத்துரோணனுக்கு வாக்குதத்தஞ்செய்திருந்த பாஞ்சாலராசனாகிய துருபதன், பின்பு துரோணன் தன்குழந்தைக்குப் பாலுக்காகப் பசுவேண்டுமென்று சென்று கேட்டபொழுது, முகமறியாதவன்போல 'நீ யார்?' என்று வினவிச் சில பரிகாசவார்த்தைகளைச் சொல்லிப் பங்கப்படுத்த, அப்பொழுது, துரோணன், 'என்மாணாக்கனொருவனைக்கொண்டு உன்னை வென்று கட்டிக் கொணரச்செய்து உன் அரசையுங் கைக்கொள்வேன்' என்று சபதஞ்செய்து, பின்பு அங்ஙனமே அருச்சுனனைக்கொண்டு அப்பிரதிஜ்ஞையை நிறைவேற்றிய வரலாற்றை உட்கொண்டு; இனி, அருள்கொண்டுகூறினாலும் வெகுண்டுகூறினாலும் அந்தந்தப் பயன்களைத் தந்தேவிடுகின்ற நிறைமொழிகளை யுடைமையால், சொல்தவறிப்போதலில்லாதவ னென்றுமாம்: அன்றி, 'என்மக னெனக்கு முன்னே யிறந்தன னென்று வேந்தர்முன் சொல்லின் பின்னைச் சாப மெடுக்கிலேன்'என்று சொன்ன சொல் பொய்க்காதவ னென்றுமாம். ஐவர் - தொகைக்குறிப்பு. பூபர் - பூமியைக் காப்பவர்: வடசொல். வைநதேயன் -(காசியபமுனிவர்மனைவியாகிய)விநதையின் மகன்: தத்திதாந்தநாமம். வைனதேயன் + கொடியோன் = வைனதேயக்கொடியோன்: "சிலவிகாரமா முயர்திணை." (௩)

[கர்ணன் தன்சேனையை மகரவியூகமாக வகுத்தல்.]

கற்கியும்வண்டினமொய்க்கமதம்பொழிகரியுந்தேருங்காலாளும்
பொற்கொடியுங்குடைவர்க்கமுமாலையுமுன்னுளரென்னும்பூபாலர்

நிற்குநிலந்தொறுநிற்குநிலந்தொறுநின்றுநின்றுவினைசெய்ய
மற்கெழுதிண்புயவர்க்கன்மகன்பெருமகரயூகம்வகுத்தானே.

(இ - ள்.) மல் கெழு - மற்போரில் வல்ல, திண் புயம் - வலிய தோள்களையுடைய, அர்க்கன் மகன் சூரியகுமாரனாகிய கர்ணன்,— கற்கியும்-குதிரைகளும், வண்டு இனம் மொய்க்க மதம் பொழி கரியும் - வண்டுக்கூட்டம் மொய்க்கும்படி மதநீரைச் சொரிகின்ற யானைகளும், தேரும் - இரதங்களும், காலாளும் - பதாதிகளும், பொன் கொடியும் - பொற்காம்பையுடைய துவசங்களும், குடை வர்க்கமும் - குடைவரிசைகளும், மாலையும் - (போர்க்கு உரிய) மாலைகளும், முன் - முதலியவற்றை, உளர் - உடையவர், என்னும்- என்றுசொல்லப்படுகின்ற, பூபாலர் - அரசர்கள், நிற்கும் நிலம்தொறும் நிற்கும் நிலம்தொறும் - தாம்தாம் நிற்பதற்குஉரிய இடங்கள்தோறும், நின்று நின்று—, வினை செய்ய - போர்த்தொழிலைச்செய்யும்படி, பெரு மகர யூகம் வகுத்தான் - பெரிய மகரவியூகமாக(ச் சேனையை)அணிவகுத்தான்; (எ - று.)

கற்கி - கல்கி என்ற வடசொல்லின் விகாரம். பொன் - அதனாலாகிய துவசதண்டத்துக்கு, கருவியாகுபெயர். முன்னுளர் - முன்னே யுடையவரென்றும், முதன்மையாகவுடையவ ரென்றும், பரம்பரையாக வுடையவரென்றுமாம். பூபாலர்-பூமியைக் காப்பவர். மகர வியூகம் - சுறுமீன் வடிவமாகச் செய்யப்படும் படைவகுப்பு. யூகம் - வடசொல்விகாரம். மகரத்தின் வாயிடத்திலே கர்ணனும், கண்களிலே சகுனியும் உலூகனும், சிரசிலே அசுவத்தாமனும், கழுத்திலே துரியோதனன் தம்பிமாரனைவரும், இடையிலே பெருஞ்சேனைசூழ்ந்த துரியோதனனும், முன் இடக்காலிலே நாராயண கோபாலரோடு கூடிய கிருதவர்மாவும், வலக்காலிலே திரிகர்த்தரோடுந் தென்னாட்டாரோடுங் கூடின கிருபனும், பின் இடக்காலிலே தன்பெருஞ் சேனையுடன் சல்லியனும், வலக்காலிலே ஆயிரந்தேரோடும் முந்நூறுயானையுடனும் சுசேனனும், வாலிலே பெருஞ்சேனைசூழ்ந்த சித்திர சித்திரசேனரும் நின்றனர் என்று வியாசபாரதத்திற் கூறப்பட்டுள்ளது. (௬)

[கௌரவசேனை பாண்டவசேனையோடு போர்தொடங்குதல்.]

பானுவின்மைந்தன்முனைந்துமகீபதிமைந்தன்சேனாபதியானான்
போனவருஞ்சமர்போகதனித்தனிபொருதுவேறும்போமென்றே
சேனையின்மன்னவர்யாவரும்வெம்பரிமாவின்மேலுந்தேர்மேலும்
யானையின்மேலுமிருந்தவரவ்வவர்தம்மொடம்மஇகலுற்றார்.

(இ - ள்.) வெம் பரிமாவின் மேலும் - கொடிய குதிரைகளின்மேலும், தேர்மேலும்—, யானையின்மேலும்—, இருந்தவர் - இருந்தவராகிய, சேனையின் மன்னவர் யாவரும் - (துரியோதன) சேனையிலுள்ள அரசர்கள் எல்லாரும்,— 'பானுவின் மைந்தன் - சூரியபுத்திரனாகிய கர்ணன், முனைந்து- மிகமுயன்று, மகீபதி மைந்தன் சேனாபதி ஆனான் - (இன்றைக்குத்) திருதராஷ்டிரன்மகனான துரியோதனனது சேனைக்குத் தலைவனாயினான்: போன அருஞ் சமர் போக - இத்தனைநாளாய்க்கழிந்த அரிய போர் கழிக: (இனி), தனி தனி போர் பொருது - தனித்தனியே போர்செய்து, வேறும் - (பகைவரை) வெல்வோம்', என்று - என்றுதுணிந்து,— அ அவர்தம்மொடு - அவ்வவ்வாறு குதிரைமுதலியவற்றின்மேலிருந்த எதிரிகளுடனே, இகல் உற்றார்- போர்தொடங்கினார்கள்; (எ - று.)

அம்ம - அசைநிலையிடைச்சொல்; உக்கிரமாகப்போர்தொடங்கிய தன்மையை விளக்கவந்த வியப்பிடைச்சொல்லுமாம். முனைந்து - ஊக்கங்கொண்டு எனினுமாம். மஹீ பதி -பூமிக்குத் தலைவன். சமர் போனவரும் போக என்றுபிரித்துஇயைத்து - (கீழ்ப்பதினைந்துநாள்களாகப்) போரில் இறந்துபட்டவர்களனைவரும் ஒழிக என்றுஉரைப்பாரு முளர். வேறும் - தன்மைப் பன்மை வினைமுற்று; வெல் - பகுதி: முதல்நீண்டது - விகாரம்; றும் -

விகுதி, எதிர்காலங்காட்டிற்று; [நன் - பத - கஅ:]லகரம்கெட்டது - சந்தி. வெம்மை - வேகமுமாம். (ரு)

[திட்டத்துய்மன் சக்கரவியூகம்வகுக்க, வீமன் யானைமேலேறுதல்.]

நாமமிரண்டொடுபத்துடைநாயகனவிலவெஞ்சேனையினாதன்
மாமருகொற்றவரூதினிவேலையைமருவாரஞ்சிவெருவெய்த
நேமிவியூகமதாகவகுத்திடைநின்றுபோர்செய்நிலயத்தில் [டான்.
வீமன்வயம்புனைதேரினைவிட்டொருவெம்போர்வேழமேல்கொண்

(இ - ள்.) நாமம் இரண்டொடு பத்து உடை - பன்னிரண்டு திருநாமங்களையுடைய, நாயகன் - (யாவர்க்குந்) தலைவனாகிய கிருஷ்ணபகவான், நவில - சொல்ல, (அச்சொல்லின்படி), வெம் சேனையின் நாதன் - (பாண்டவரது) கொடிய சேனைக்குத் தலைவனான திட்டத்துய்மன், மா மரு - பெருமைபொருந்திய, கொற்றம் - வெற்றியையுடைய, வரூதினி - தன் சேனையாகிற, வேலையை - கடலை, மருவார் அஞ்சி வெருவு எய்த - பகைவர்கள் (கண்டு)அச்சமுற்றுக் கலக்கமடையும்படி, நேமி வியூகமது ஆக - சக்கரவியூகமாக, வகுத்து - அணிவகுத்து, இடை நின்று - நடுவில் நின்று, போர் செய் - யுத்தஞ்செய்கின்ற, நிலயத்தில் - இடத்தில்,—வீமன் - வீமசேனன்,—வயம் புனை தேரினை விட்டு - (தான் ஏறியிருந்த) வெற்றியைக் கொண்ட தேரை விட்டு இறங்கி,—வெம் போர் - கொடிய போரைச் செய்யவல்ல,ஒரு வேழம் - ஒரு யானையின்மேல், மேல்கொண்டான் - ஏறிக்கொண்டான்; (எ - று.)

நாமமிரண்டொடுபத்துடைநாயகன் — வாசுதேவனைப் படைத்துணையழைத்தசருக்கத்திலும் முன்னும் "ஆறிருநாமத்தோன்" என்றார்; துவாதசநாமமுடையவன்: அந்நாமங்களாவன - கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன்,விஷ்ணு,மதுசூதநன், திரிவிக்கிரமன், வாமநன், ஸ்ரீதரன்,இருடீகேசன்,பதுமநாபன்,தாமோதரன் என்பன.இரண்டொடு பத்து - இரண்டோடுகூடிய பத்து. வரூதினி வேலையை - கடல்போற்பரந்த சேனையையென்றபடி; முன்பின்னாகத் தொக்க உவமத்தொகை. வரூதினிவேலையை வகுத்து எனஇயையும். மருவார் - எதிர்மறைவினையாலணையும்பெயர்; சேராதவர். வெருவு - முதனிலைத்தொழிற்பெயர். வியூகமது, அது - அசை. சக்ரவ்யூஹம் - சக்கரம்போல வடிவமமையும்படி சேனையை வகுப்பது. பதின்மூன்றாம்போர்நாளிற் பாண்டவசேனை அர்த்தசந்திரவியூகமாக வகுக்கப்பட்டதென வடமொழிப்பாரதத்தில் உள்ளது. நிலயம் - இடம்: இங்கே, சமயம்; (இடத்தையுணர்த்துஞ்சொற்கள் காலத்தையுணர்த்துதலு முண்டு.)'நிலையத்தில்' என்ற பாடத்துக்கு - நிலைமையில் என்னலாம். (சு)

[இதுமுதல் நான்கு கவிகள் - ஒருதொடர்: அந்தயானையின் வருணனை.]

அடிக்கைகனத்துமதம்பொழியாழியினளவும்புகராலழகெய்தி
மடிக்கினுமண்ணுறுகையதுசெந்நிறவாயதுதேயாமதிதன்னை [ய்
யொடித்திருபக்கமும்வைத்தெனமகரிகையொன்றியொன்றியொன்னார்மெ
யிடிக்குமருப்பதுபுன்னையினுண்மலரென்னுஞ்சிரதிருகண்ணும்.

(இ - ள்.) அடிக்கை கனத்து - கையின்அடி பருத்து, மதம் பொழி ஆழியின் அளவும் - மதசலத்தைச் சொரிகின்ற நுனிக்கைவரையிலும், புகரால் - செம்புள்ளிகளினால், அழகு எய்தி - பொலிவுபெற்று, மடிக்கினும் மண் உறு - மடக்கினாலும் நிலத்தளவுந் தாழ்ந்துதொங்குகின்ற, கையது - துதிக்கையையுடையது;—செம் நிறம் வாயது - சிவந்த நிறத்தையுடைய வாயையுடையது;—தேயா மதிதன்னை - குறையாத [பூர்ண] சந்திரனை, ஒடித்து - இரண்டுதுண்டாக்கி, இரு பக்கமும் - இரண்டுபக்கங்களிலும், வைத்து என - வைத்தாற்போல, மகரிகை ஒன்றி - பூண்பொருந்தி, ஒன்னார் மெய் - பகைவரது உடம்பை, ஒன்றி இடிக்கும் - தாக்கிக் குத்துகின்ற, மருப்பது - தந்தங்களையுடையது;—இரு கண்ணும் - இரண்டுகண்களும்

புன்னையின் நாள் மலர் என்னும் - புன்னைமரத்தின் புதிய பூ வென்று உவமை கூறப்படுகின்ற, சீரது - தன்மையையுடையது;—(எ - று.)

மேற் பத்தாம்பாட்டில் வரும் 'அவ்வேழம்' என்பது, இதுமுதல் மூன்று கவிகட்கும் எழுவாயாம். அடிக்கை - முன்பின்னாகவந்த ஆறும்வேற்றுமைத் தொகை; இலக்கணப்போலி. ஆழி-யானைக்கை நுனி. ஏழுமதங்கள்கூறுகின்ற வடநூலார்கொள்கைபற்றித் தும்பிக்கைத்துளைகளிரண்டிடத்து மதங் கூறுவார், 'மதம்பொழி யாழி' என்றார். 'மடிக்கினும் மண்ணுறு' என்றது - அத்துதிக்கையின் நீட்சிமிகுதியை நன்குவிளக்கிற்று; துதிக்கைநீண்டிருத்தல், யானைக்கு உத்தமவிலக்கணம். மகரிகை - யானைக்கொம்பிற்பூண்; சுறாமீனின் திறந்தவாயின் வடிவமாகச் செய்யப்படுவது: மகரமென்பதனடியாப் பிறந்த பெயர்; மகரம் - சுறாமீன். வைத்தென மருப்பது என இயையும். தந்தத்துக்குப் பிறைச்சந்திரன் - வெண்மையினாலும், வளைவினாலும், ஒளியினாலும் உவமை. பக்கமும், கண்ணும் என்ற உம்மைகள்-முற்றுப்பொருளன. ஒன்னார் - ஒன்றார் என்பதன் மரூஉ; சேரார் என்று பொருள். (எ)

திலகமுமோடையுமிலகுறுநெற்றியதாலவட்டச்செவியாலே
பலதிசைமாருதமுய்ப்பதுசெம்புகர்பட்டின்றொழிலிற்பயில்கிற்ப
துலகினைமேல்கொளுமவனதெனக்களியூறியதாலங்குலமொத்துக்
குலவியமத்தகமொத்தகழுத்திலுயர்ந்ததம்பொற்குவடென்ன.

(இ - ள்.) திலகமும் - (சிந்தூரத்) திலகமும், ஓடையும் - பட்டமும், இலகுஉறு - விளங்கப்பெற்ற, நெற்றியது - நெற்றியையுடையது;—ஆலவட்டம் செவியாலே - பெருவிசிறிபோன்ற காதுகளினால், மாருதம் - காற்றை, பல திசை - பலதிக்குக்களிலும், உய்ப்பது - வீசுவது;—செம் புகர் - (உத்தமஇலக்கணமாகிய) சிவந்த புள்ளிகள், பட்டின் தொழிலின் - செம்பட்டினாற்செய்த சித்திரவேலைபோல, பயில்கிற்பது - பொருந்தப்பெற்றது;— உலகினை மேல்கொளுமவனது என - (மூன்று) உலகங்களையும் அரசாளுகின்ற தேவேந்திரனது ஐராவதயானைபோல, களி ஊறியது - மதக்களிப்புப் பொருந்தியது;—அங்குலம் ஒத்து - (உத்தமகஜலக்ஷணத்தின்படி) அங்குலங்கள் அமைந்து, குலவிய - விளங்குகின்ற, மத்தகம் - தலையானது, ஒத்த கழுத்தில் - (அதற்குத்) தக்க கழுத்தில், அம் பொன் குவடு என்ன - அழகிய பொன்மயமான (மேருமலையின்) சிகரம்போல, உயர்ந்தது - உயர்ந்திருக்கப்பெற்றது;—(எ - று.)—ஆல் - ஈற்றசை.

ஓடை - நெற்றிப்பட்டம்; முகபடாம் அன்று: அது, சூழியெனப்படும்; இவ்வேறுபாட்டை "விழுச்சூழிய விளங்கோடைய" என்ற மதுரைக்காஞ்சியின் உரைநோக்கியும் அறிக. ஆலவட்டம் - ஒருவகைப் பெருவிசிறி; தாலவ்ருந்தமென்பதன் சிதைவென்பர். அவனது - பெயர். 'அவனிது' என்னும் பாடத்திற்கு - நிலவுலகத்தைச்சுமக்கின்ற திக்கஜம் இது வென்னும்படியென்க. கொளுமவன் - சிறப்புப்பற்றிய உயர்திணை: கஜேந்திரன், நாகாதிபன் என்பனபோல; "யானையுளரசன்" என்றார் சிந்தாமணியாரும். மத்தகம் - மஸ்தகம்: வடசொல். ஒத்த-நல்லிலக்கணம்அமைந்த எனினுமாம். (அ)

உரத்தினின்முச்சுழியுடையதுதாள்வலிகற்றூணொப்பென்றுரை
செய்யுந்,தரத்ததுவெண்ணெய்நிறத்தநகத்ததுதண்ணந்துளவணிலை
யொத்த,திரத்தினதாமைகிடந்தவெனும்புறவடியதங்கந்திண்ணென்
றே,யுரத்ததுநல்லுதரத்ததிளங்கமுகொத்ததம்மவாலதி.

(இ - ள்.) உரத்தினில் - மார்பில், முச் சுழி உடையது - (உத்தமஇலக்கணமாகிய) மூன்றுசுழிகளை யுடையது;— தாள் - கால்கள், வலி - வலிமையினால், கல் தூண் ஒப்பு என்று-கற்கம்பத்துக்கு ஒப்பானவை யென்று, உரைசெய்யும்-சொல்லத்தக்க, தரத்தது - தன்மையையுடையது;—வெண்ணெய் நிறத்த-வெண்ணெய்போலும் வெண்ணிறத்தையுடைய, நகத்தது-நகங்களை

யுடையது;—தண் அம் துளவன் - குளிர்ந்த அழகிய திருத்துழாய்மாலையை யுடைய திருமாலினது, நிலை - வடிவத்தை, ஒத்த - போன்ற, திரத்தினது- (கருநிறத்)தன்மையையுடையது;—ஆமை கிடந்த எனும் - ஆமைகள் கீழே கிடந்தன வென்னத்தக்க, புறம் அடியது-புறங்கால்களையுடையது;— அங்கம் திண்என்று உரத்தது - உடம்பு திண்ணென்று வலிமையுடையது;— நல் உதரத்தது - அழகிய வயிற்றையுடையது;—வாலதி - வால், இளங் கமுகு ஒத்தது - இளமையான பாக்குமரத்தை ஒத்திருக்கப்பெற்றது;—(எ - று.)

அம்ம - அசை; அவ்யானையின் சிறப்புப் பற்றிய வியப்பிடைச்சொல்லு மாம். உரம்,தாண், துளவு, திரம்,கமுகு என்பவை-முறையே உரஸ்,ஸ்தூணு, துளஸீ, ஸ்திரம், க்ரமுகம் என்ற வடசொற்களின் விகாரங்கள். திண்ணெனல் - வலிமைக்குறிப்பு. ஆமையும், கமுகும் - வடிவில் உவமம். நகம்,அங்கம், உதரம், வாலதி - வடசொற்கள். (௯)

தூணும்விலங்குமுறிப்பதுபாகுபரிக்கோல்யாவுந்தூரத்தே
காணினுநின்றுகொதிப்பதுதன்னிழல்கண்டுசீறுங்கருத்தது
நீணடமுதலியதொழிலொருநாலுநிரந்ததுமேருநிகரென்னச்
சேணுயர்போதரவெழுமுழமுடையதுதெவ்வரஞ்சுமவ்வேழம்.

(இ - ள்.) தூணும் விலங்கும் முறிப்பது - கட்டுத்தறியை ஒடித்துக் கட்டிய இருப்புச்சங்கிலியை அறுத்துவிடத்தக்கது;— பாகு - பாகனும், பரிக்கோல் - அங்குசமும், யாவும் - முதலிய எல்லாவற்றையும், தூரத்தே காணினும் - வெகுதூரத்திற் கண்டாலும், நின்று - (அஞ்சாமல்) நின்று, கொதிப்பது - மனம்வெதும்புந்தன்மையையுடையது;—தன் நிழல் கண்டு- தனது நிழலைப் பார்த்து, சீறும் - (வேறொரு யானையென்றெண்ணிக்) கோ பிக்கின்ற, கருத்தது-எண்ணமுடையது;—நீள் - நீண்ட [மேன்மையான], நடம் முதலிய - நடனம் முதலான, தொழில் ஒரு நாலும் - நான்குதொழில் களும், நிரந்தது - நிரம்பப்பெற்றது;—மேரு நிகர் என்ன - மகாமேருமலைக் குச் சமமென்னும்படி, சேண் உயர் போதர - மிக்க உயர்ச்சி பெற, எழு முழம் உடையது - ஏழுமுழம் உயரமுடையது;—தெவ்வர் அஞ்சும் - பகை வர்கள் (கண்டு) அஞ்சும்படியான, அ வேழம் - அந்த [வீமனேறிய] யானை.

பாகு - உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச்சொல். 'யாவும்' என்ற தனால், ஈட்டிமுதலியன கொள்க. பரிக்கோல்-யானையைக்குத்துங்கோலும், ஈட்டியுமாம். தன்நிழல்கண்டுசீறுங்கருத்தது—"கண்ணிழல்நாறிற்கனன்று தம் நிழலொடு மலைவ" என்றார் சீவகசிந்தாமணியிலும். தொழில்நான்கு - நடனம், துரிதகதி, மந்தகதி, ஓட்டம் என்பன. 'நிரந்து'என்றும்,'நீணடை முதலிய தொழில்களி யாவு நிரம்பி' என்றும் பாடமுண்டு. சேணுயர் - ஒரு பொருட் பன்மொழி. எழுமுழமுயர்தல், உத்தமகஜலக்ஷணம். (௧௦)

[வீமனும் கேமதூர்த்தியும் பொருதல்.]

ஆசில ருந்திற லாசுகன் மைந்தனு மாண்மைக் கெண்ணு மடல்
வீரன்,காசிந ரேசனு மேழுயர் வெம்மத மாரி சிந்துங் கரிமேலோர்,
தூசியின் முந்தமு னைந்துமு னைந்திரு தோளுந் தோளும் போர்
செய்ப, வாசவ ரோரிரு வோரிரு கார்மிசை மலைவ தென்ன மலை
வுற்றார்.

(இ - ள்.) ஆசு இல் - குற்றம்இல்லாத,அருந் திறல் - அருமையான வலி மையையுடைய, ஆசுகன் மைந்தனும் - வாயுகுமாரனான வீமனும், ஆண்மைக்கு எண்ணும் - பராக்கிரமத்தில் நன்குமதிக்கப்படுகின்ற, அடல் வீரன்- வலிய வீரத்தன்மையுடையவனாகிய,காசி நரேசனும் - காசிநகரத்தரசனான கேமதூர்த்தியும்,—ஏழ் உயர் வெம் மதம் மாரி சிந்தும் கரிமேலோர் - ஏழு முழம்உயர்ந்ததும் வெவ்விய மதநீர்மழையைச் சொரிகின்றதுமான தம் தம் யானையின்மேல் ஏறியவர்களாய்,—தூசியின் - முற்சேனையிலே, முந்த -

முன்னே,முனைந்து - விரைந்துசென்று, இரு தோலும் தோலும் - (தங்கள்) யானைகளிரண்டும், முனைந்து - கோபங்கொண்டு, போர் செய்ய - (ஒன்றோடொன்று) யுத்தஞ்செய்யாநிற்க,— வாசவர் ஓர் இருவோர் - இரண்டு இந்திரர், இரு கார்மிசை - (தம்வாகனமாகிய) மேகம் இரண்டின்மேல் (ஏறிக்கொண்டு), மலைவது என்ன - (தம்மிற்) போர்செய்வது போல, மலைவு உற்றார் - (ஒருவரோடொருவர்) போர்செய்யத் தொடங்கினர்; (எ - று.)

திறலுக்கு ஆசு-தோல்வி. ஆசுகன்-விரைவாய்ச் செல்பவன்: வடசொல். ஆண்மைக்கு - உருபுமயக்கம். நரேசன்-நர + ஈசன்; மனிதர்க்குத் தலைவன்: வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி. இவன்பெயர், மேல் கசு - ஆங் கவியால் விளங்கும். எழ் - எழுமுழத்துக்கு எண்ணலளவையாகுபெயர். எழ்மதம் என இமைத்து - இரண்டுகண்கள், இரண்டுகன்னங்கள், துதிக்கைத்துளைகளிரண்டு, குறி என்பவற்றினின்று பாய்கின்ற எழுவகைமதங்க ளென்றுமாம். தூசி - முந்துற்றுப்பொருபடை, முன்னணிச்சேனை. இந்திரர் - வீமசேனனுக்கும் கேமதூர்த்திக்கும், இந்திரனுக்கு வாகனமாகிய மேகம்-அவரேறிய கரியயானைகட்கும் உவமை. வாசவரிருவர் தம்மில்மலைதல், இல்பொருளுவமை. இருவர் - இருவோர் என ரகரவீற்றயலகரம் ஓகாரமாயிற்று; [நன் - பொது - உ- உரையிற் காண்க.] முனைந்து முனைந்து - மிகவூக்கங்கொண்டு எனினுமாம்: அடுக்குத்தொடர். (கக)

வேறு.

அங்குசம் வார்த்தை வன்றா ளடைவினிற் பயிற்றி யேனை
வெங்கதி நடையோ டோட்டம் விதமுற விரைவிற் காட்டி
யங்கசா ரியினு னன்னூ லறிஞர்கொண் டாட வூர்ந்து
செங்கையிற் சிலையுங் கோலித் தீவிழித் துடன்று சேர்ந்தார்.

(இ - ள்.) (அவ்விருவரும்),— அங்குசம் - மாவெட்டியும், வார்த்தை - வாய்ச்சொல்லும், வல் தாள்-வலிய கால்வைப்புக்களும் (ஆகிய இவற்றால்), அடைவினில் பயிற்றி - முறைப்படி பழக்கி,—ஏனை-பின்னும்,—வெம் கதி-துரிதமான நடையையும், நடையோடு - மந்தமான நடையையும், ஓட்டம் - ஓட்டத்தையும், விதம் உற-பலவகைப்பட, விரைவின் - விரைவாக, காட்டி-காண்பித்து,—அங்க சாரியினால்-உடம்பினது வலசாரி இடசாரியாகச் செலுந்தன்மையைக் கண்டு, நல் நூல் அறிஞர் கொண்டாட-நல்ல யானைநூலை அறிந்தவர்கள் மெச்சும்படி, ஊர்ந்து - (தம்தம்யானைகளைச்) செலுத்திக்கொண்டு,—செம் கையில்-சிவந்த கையிலே,சிலையும் கோலி-வில்லையும்வளைத்து, தீ விழித்து - நெருப்புப்பொறிசிந்த விழித்துப்பார்த்து, உடன்று - பெருங்கோபங்கொண்டு, சேர்ந்தார் - (தம்மில்) நெருங்கினார்கள்; (எ - று.)

அங்குசம் - தோட்டியென்னுங் கருவி. வல் என்பதன் லகரம் னகரமாகத் திரிந்தது; பண்படிகளில் லளக்கள் னணக்களாகும்: லகரம் றகரமாகி மெலிந்த தென்னவுமாம்.

இதுமுதல் எட்டுக்கவிகள் - பதினன்காம்போர்ச்சருக்கத்தின் கஙிரு - ஆங் கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (கஉ)

கோடுகைம்முதலாவொன்பதுறுப்பினுங்கோறல்வல்ல
நீடுயர்மாவுமாவுநெருப்பெழமுனைந்துசீற
வாடவர்தாமுமெண்ணிலம்புமாமழைகளேவிச்
சேடனுமமரர்கோவும்வெருக்கொளச்செருச்செய்தாரே.

(இ - ள்.) கோடு - தந்தங்களும், கை - துதிக்கையும், முதல் ஆ - முதலாக, ஒன்பது உறுப்பினும் ஒன்பது அவயவங்களாலும்,கோறல் வல்ல-(பகைவரைக்) கொல்லுதலில் வல்ல, நீடு உயர்-மிக உயர்ந்த,மாவும் மாவும்-(அந்த) இரண்டு யானைகளும்,நெருப்பு எழ - நெருப்புப்பொறி சிதறும்படி, முனைந்து சீற - உக்கிரமாகக் கோபியாநிற்க,—ஆடவர்தாமும் - ஆண்மை

யையுடையவர்களான வீமசேனனும் கேமதூர்த்தியும்,—எண் இல் - கணக்கில்லாத, அம்பு மா மழைகள் - பெரிய பாணவர்ஷங்களை, ஏவி-சொரிந்து கொண்டு,—சேடனும் - (கீழுலகத்திலுள்ள) ஆதிசேஷனும், அமரர் கோவும் - (மேலுலகத்திலுள்ள) தேவேந்திரனும், வெரு கொள - அச்சங்கொள்ளும்படி, செரு செய்தார் - போர்செய்தார்கள் ; (எ - று.)

ஒன்பதுஉறுப்பு - கால்கள் நான்கு, துதிக்கை ஒன்று, தந்தம் இரண்டு, மஸ்தகம் ஒன்று, வால் ஒன்று என இவை. நீடு உயர் - ஒருபொருட்பன்மொழி. ஆடவர் - பௌருஷமுடையோர்; வீரர். கீழுலகில்அரசனான சேடனும் மேலுலகில்அரசனான இந்திரனும் வெருக்கொண்டமை கூறவே, இந்நிலவுலகத்துமாந்தர் வெருக்கொண்டமை தானே பெறப்படும். சேஷன் - (யாவும்அழியும் கல்பாந்தகாலத்திலும் அழியாமல்) சேஷித்திருப்பவன்; சேஷித்தல் - மிச்சப்படுதல். (கரு)

[வீமன் கேமதூர்த்தியின் வேலையும் யானையையும் துணித்தல்.]

ஆசுகன்குமரன்வல்விலாசுகம்பொறாமலஞ்சிக்
காசிபன்கேமதூர்த்திகாயயிலொன்றுவாங்கி
வீசியக்காளைமார்பினெறிதலும்வீமனேவொன்
றேசிலவ்வேலுந்தெவ்வன்யானையுந்துணியவெய்தான்.

(இ - ள்.) ஆசுகன் குமரன் - வாயுகுமாரனான வீமனது, வல் வில் - வலிய வில்லினால் எய்யப்படுகின்ற, ஆசுகம் - அம்புகளை, பொறாமல் - பொறுக்கமாட்டாமல், காசிபன் கேமதூர்த்தி - காசீநகரத்தை ஆள்கின்றவனாகிய கேமதூர்த்தியென்பவன், அஞ்சி - பயந்து, காய் அயில் ஒன்று வாங்கி - (பகைவர்களைக்) கொல்லும்படியான ஒருவேலாயுதத்தை எடுத்து, அ காளை மார்பின் வீசி எறிதலும் - இளவெருதுபோன்ற அவ்வீமனது மார்பிலே வேகமாய் எறிந்தவளவில்,— வீமன்—,— ஏசு இல் அ வேலும் - குற்றமில்லாத அந்த வேலாயுதமும்,தெவ்வன் யானையும் - பகைவனான அக்காசிராசனது யானையும், துணிய - துண்டுபட்டுவிழும்படி, ஏ ஒன்று - ஒருபாணத்தை, எய்தான் - பிரயோகித்தான் ; (எ - று.)—கேமதூர்த்தி க்ஷேமதூர்த்தி.

காசிபன் - 'பூபன்,' 'நிருபன்' என்றாற்போல நின்றது. காளை - உவமவாகுபெயர் ; இது, மேன்மையான தோற்றத்துக்கும், நடைக்கும், வலிமைக்கும் உவமை. ஏ + ஒன்று=ஏவொன்று: ஓரெழுத்தொருமொழியாகிய பெயர்ச்சொல்ஏகாரத்தின்முன் உயிர்வர வகரவுடம்படுமெய் தோன்றிற்று; "ஏமுன் இவ்விருமையும்" என்றார் நன்னூலார். (கசு)

[கேமதூர்த்தி வீமனதுயானையை அடித்துத்தள்ளுதல்.]

கேமனக்கரியினின்றுங்கிரியினின்றிழியுமாளி
யாமெனத்தரணியெய்தியடல்வயிர்த்தண்டொன்றேந்தி
வீமனன்றூர்ந்தவெங்கைவெற்பினைப்புடைத்துவீழ்த்தான்
பூமருதாரினானும்பூவின்மேற்சுரும்பிற்பாய்ந்தான்.

(இ - ள்.) கேமன் - கேமதூர்த்தி,—அ கரியினின்றும் - அந்தயானையினின்றும், கிரியினின்று இழியும் ஆளி ஆம் என - மலையினின்று இறங்குகின்ற சிங்கம்போல, தரணி எய்தி - தரையில் இறங்கிவந்து,—அடல் வயிர் தண்டு ஒன்று ஏந்தி-மிக்க வலிமையையுடைய கதாயுதமொன்றை எடுத்து அதனால், வீமன் அன்று ஊர்ந்த - வீமசேனன் அப்பொழுது ஏறிநின்ற, வெம் கை வெற்பினை - வெவ்விய துதிக்கையையுடைய மலைபோன்றதான யானையை, புடைத்து - அடித்து, வீழ்த்தான் - கொன்று கீழேதள்ளினான்; பூ மரு தாரினானும் - மலர்களால் தொடுக்கப்பட்ட போர்மாலையையுடைய

ஞன வீமசேனனும்,— பூவின்மேல் சுரும்பின் - மலரிற்பாய்கின்ற வண்டு போல, (பூவின்மேல்) பாய்ந்தான் - தரையிற் குதித்தான்; (எ - று.)

வீமசேனன் என்பது - வீமன் என்றும், கிருதவர்மா என்பது - கிருதன் என்றும் நிற்றல்போல, கேமதூர்த்தியென்பது - கேமனென நின்றது. கிரி-யானைக்கு வலிமை பருமைகளாலும், சிங்கம் - கேமனுக்கு நடை வலிமை நோக்குத் தைரிய காம்பீரியங்களாலும் உவமை. ஆளி-துதிக்கையுடையதும் யானையைக்கொல்வதும் சிங்கம்போல்வதுமாகிய யாளியென்னும் மிருக விசேஷமாகவுமாம். ஆம் - அசை. யானை மதம்பிடித்திருக்கும்போது அதன் துதிக்கை வெப்பமாயிருக்கு மாதலால், 'வெங்கைவெற்பு' என்றார்; வெற்பு-உவமையாகுபெயர். 'இரட்டுறமொழிதல்' என்னும் உத்தியால், பூ என்பதற்கு - மலரென்றும் நிலமென்றும் தென்மொழியாகவும் வடமொழியாகவும் ஒருங்கே இருபொருள் கொள்ளப்பட்டன. பூ - பூமி. 'பூவின்மேல்' என்பதை, சுரும்பின் பாய்ந்தான் என்ற இரண்டோடுங் கூட்டுக. (௧௫)

[வீமனும் கேமதூர்த்தியும் கதாயுத்தஞ்செய்தல்.]

கரியமர்க்கொருவரானவிருவருங்காலினின்று
பரியவக்கதைப்போர்வல்லபார்த்திவர்பலருங்காணக்
கிரியொடுகிரிசெய்பூசலிதுவெனக்கிளக்குமாறு
புரிவிலார்பொருதபோர்மற்றியாவரேபுகலவல்லார்.

(இ - ள்.) கரி அமர்க்கு - யானைமேலேறிச்செய்யும் போரில், ஒருவர் ஆன - ஒப்பற்றவராகிய, இருவரும் - இரண்டுபேரும் [வீமனும் கேமனும்], காலின் நின்று - (யானையில்லாமையால் பூமியிற்) கால்களால் நின்றுகொண்டு, பரிய அ கதை போர் வல்ல பார்த்திவர் பலரும் காண - பருத்த கதாயுதத்தாற் செய்கின்ற அந்த யுத்தத்தில் வல்ல அரசர்களெல்லாரும் வியந்து காணும்படி, கிரியொடு கிரி செய் பூசல் இது என கிளக்கும் ஆறு - மலையும் மலையும் (தம்மிற் பகைத்துச்) செய்கின்ற போர் இது வென்று (ஒப்புமையாற்) சொல்லுமாறு, புரிவு இலார் - (வேறு ஓர்) எண்ணமும் இல்லாமல், பொருத - செய்த, போர் - யுத்தத்தை, யாவரே புகல வல்லார் - எவர்தாம் (இத்தன்மையதென்று) சொல்லவல்லவர்? (எ - று.)—அப்போர், யாவராலும் சொல்லுதற்கும் அரிது என்றபடி. மற்று - அசை.

பார்த்திவர் - பிருதிவியை ஆள்பவர்; வடசொல்: பிருதிவி - பூமி. மூன்றாமடி - இல்பொருளுவமை. மற்றியாவர் - குற்றியலிகரம். யாவரென்னும் வினப்பெயர், இங்கு இன்மைகுறித்துநின்றது. புரிவு இலார் - அன்பு இல்லாதவராய் எனினுமாம்; ஒருவரோடொருவர் பகைத்து என்றபடி. முதலடியில் 'ஒருவரான இருவர்' என்றவிடத்து முரண்தொடை காண்க. (௧௬)

[வீமன் கேமதூர்த்தியைக் கொல்லுதல்.]

தண்டொடுதண்டமேந்திச்சாரிகைபலவுங்காட்டிக்
கொண்டலின்முழக்கீதென்னக்குரைகடலொலியீதென்னக்
கண்டவர்க்கன்றிக்கேட்டார்க்குரைப்பருங்கணக்கிற்றாக்கிக்
கொண்டுவன்காயமொன்றாற்கேமனைவீமன்கொன்றான்.

(இ - ள்.) (அவ்வீரரிருவரும்), தண்டொடு தண்டம் ஏந்தி - (தம்தம்) கதாயுதத்தையெடுத்துக்கொண்டு, சாரிகை பலவும் காட்டி - வலசாரி இடசாரிமுதலிய பலவகை நடைவிகற்பங்களையுஞ் செய்துகாண்பித்து, கொண்டலின் முழக்கு ஈது என்ன - மேகத்தின் இடியோசை இதுவென்று சொல்லவும், குரை கடல் ஒலி ஈது என்ன - ஒலிக்கின்ற கடலின் ஓசை இது வென்னவும், (பெருமுழக்கமுண்டாக), கண்டவர்க்கு அன்றி கேட்டார்க்கு உரைப்பு அரும் கணக்கின் - (பிரத்தியக்ஷமாகப்) பார்த்தவர்கட்கேயல்லாமல் (புறத்திருந்து) கேட்டவர்கட்கு (இத்தன்மையதென்று) சொல்லுதற்கு அரியதன்

மையாக, தாக்கிக்கொண்டு-தாக்கிப்போர்செய்துகொண்டிருந்து,— (பின்பு அப்போரில்), வீமன்—, வல் காயம் ஒன்றால்-வலிய கதையின் வீச்சு ஒன்றினால், கேமனை கொன்றான்—; (எ - று.)

ஈது-சுட்டுநீண்டது. 'தாக்கிக்கொண்டு' என்பதைத் தாக்கிக்கொள்ள என எச்சத்திரிபாகக் கொள்ளுதல் இலக்கணத்துக்கு ஏற்கும். (கஎ)

[கர்ணன், நிலைகுலைந்த தன்சேனையை ஒழுங்குபடுத்தல்.]

எறிந்ததண்டமரிற்கேமனிறந்தனனென்றபோழ்தின்
முறிந்ததுவேலைஞாலமுழுதுடைநிருபன்சேனை
யறிந்தெதிரூன்றிவென்றியாண்டகைக்கன்னன்மீளப்
பிறிந்தபல்லணியுமொன்றப்பேரணியாக்கிநின்றான்.

(இ - ள்.) எறிந்த தண்டு அமரில் - வீசியடித்துச்செய்த கதாயுத்தத்தில், கேமன் இறந்தனன்—, என்ற போழ்தில் - என்றமாத்திரத்திலே,—வேலை ஞாலம் முழுது உடை - கடல்சூழ்ந்த நிலவுலகம்முழுவதையும் (தனதாக) உடைய, நிருபன்-துரியோதனராசனது, சேனை—, முறிந்தது - வலிகெட்டு நிலைகெட்டது; வென்றி - வெற்றியையும், ஆண் தகை - ஆண்மைக்குணத்தையுமுடைய, கன்னன் - கர்ணன்,—அறிந்து - (அதனை) அறிந்து, எதிர் ஊன்றி-எதிரிற் சென்று தைரியப்படுத்தி,—பிறிந்த - சிதறுண்டு தனித்தனி பிரிந்துபோன, பல் அணியும் - பலவகைச்சேனைகளும், மீள - திரும்பவும், ஒன்ற-ஒருங்குதிரள, பேர் அணி ஆக்கி நின்றான் - பெரியவகுப்பாகப் படை வகுத்து நின்றான்; (எ - று.)

முரி, பிரி என்பனபோல - முறி, பிறி என்னும் வினைகளும் உள்ளனவாம்; அன்றி, எதுகைநோக்கி ரகரம் திரிந்ததெனினும் ஒக்கும். நிருபன் - மனிதர்களைக் காப்பவன்; வடசொல். பல் அணியும், உம்மை-முற்றுப்பொருளது. பேரணி - பெருமை என்னும் பண்புப்பெயர் ஈறுபோய் ஆதி நீண்டது; [நன் - பத - கூ.] (கஅ)

[பாண்டவசேனை கௌரவசேனையை எதிர்த்தல்.]

பேரணி கலஞ்சேர் மார்பன் பேரணி யாக்கி நின்ற
போரணி மிக்க சேனைப் பொலிவுகண் டொலிகொள் வண்டார்
தாரணி யலங்கன் மௌலித் தருமன்மா மதலை சேனை
யோரணி யாகக் கூடி யுடன்றெதிர் நடந்த தன்றே.

(இ - ள்.) பேர் அணிகலம் சேர் மார்பன் - பெரிய ஆபரணங்கள் பொருந்திய மார்பினையுடைய கர்ணனால், பேர் அணி ஆக்கி நின்ற-பெரியவகுப்பாகப்பகுக்கப்பட்டுநின்ற, போர் அணி மிக்க சேனை-யுத்தத்தையே தனக்கு அலங்காரமாகக்கொண்ட மிகுந்த சேனையினது, பொலிவு - விளக்கத்தை, கண்டு-பார்த்து,—ஒலி கொள் வண்டு ஆர் - ஒலித்தலைக்கொண்ட வண்டுகள் மொய்க்கின்ற, தார் அணி அலங்கல் - மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையைச் சூடிய, மௌலி-முடியினையுடைய, தருமன் மா மதலை - சிறந்த தருமபுத்திரனது, சேனை—,—ஓர் அணி ஆக கூடி - ஒருதிரளாகச் சேர்ந்து, உடன்று - கோபித்து, எதிர் நடந்தது - எதிரே சென்றது; (எ - று.)— அன்று, ஏ - ஈற்றசை; அப்பொழுதே யென்றுமாம்.

கர்ணன், சிறந்த ஆரம் பதக்கம் முதலிய ஆபரணங்களைத் தரித்துள்ளதனால், 'பேரணிகலஞ்சேர்மார்பன்' எனப்பட்டான்; இனி, வீரர்க்குச் சிறந்தஆபரணமெனப்படுகின்றனவான போரிற்படும்பெரும்புண்கள் பொருந்திய மார்பையுடையா னெனினுமாம். "போரின்றி வாடும் பொருநர்சீர்" ஆதலால், 'போரணி மிக்க சேனை' எனப்பட்டது; போரில் மிக்க உத்ஸாஹங் கொண்ட சேனை யென்க. (கக)

வேறு.

இதுமுதல் நான்குகவிகளால், நால்வகைச்சேனையை முறையே வருணிக்கின்றார்.

[யானைவருணனை.]

மகரி கையுமிரு பணைகளும் விரிநுதன் மருவு கலனொடு மினலென வொளிவிட, விகலி யளிமுர லிருகவு ளினுமுட னிழியு மதமழை குமிழிக ளெழவெழ, வகல முடையன முதுகிரு புடையினு மணியு மணிகண கணவென வதிர்தரு, ககன முகிலென வுயர் வடி வுடையன கதியின் விததியின் முடுகின கரிகளே.

(இ - ள்.) மகரிகையும் - பூண்களும், இரு பணைகளும் - (அவற்றை அணிந்த) இரண்டு தந்தங்களும், விரி நுதல் மருவு கலனொடு - பரந்த நெற்றியிலே அணிந்த (பட்டம்முதலிய) ஆபரணங்களுடனே, மினல் என - மின்னல் போல, ஒளி விட - ஒளியை வீசவும்,—அளி - வண்டுகள், இகலி - நெருங்கி [மாறுபட்டு], முரல் - மொய்த்து ரீங்காரஞ்செய்தற்கு இடமான, இரு கவுளினும் - இரண்டு கன்னங்களினின்றும், உடன் இழியும் - ஒருங்குபெருகுகின்ற, மதம் மழை - மதநீர்வெள்ளம், குமிழிகள் எழ எழ - குமிழிகள் மிகுதியாக உண்டாகப்பெறவும்,—அகலம் உடையன - பரப்பையுடையனவாகிய, முதுகு இரு புடையினும் - முதுகின் இரண்டுபக்கங்களிலும், அணியும் - அணியப்பட்டுள்ள, மணி - மணிகள், கணகண என - கணகண என்று ஒலிக்கவும்,—அதிர்தரு ககனம் முகில் என - இடிமுழங்குகின்ற வானத்திற்செல்லும் மேகங்கள் போல,—உயர் வடிவு உடையன கரிகள் - உயர்ந்த உருவத்தையுடையனவாகிய யானைகள்,—கதியின் விததியின் - பலவகை நடைவிகற்பங்களோடு, முடுகின - விரைந்துசென்றன; (எ - று.)

கரிய யானைகள் - காளமேகத்துக்கும், அவற்றின் தந்தங்களும் ஆபரணங்களும் - மின்னலுக்கும், மதமழை - நீர்மழைக்கும், மணியோசை - இடியோசைக்கும் உவமை: உவமையணி.

மகரிகை - துதிக்கையின்மேலெழுதப்படும் மகரிகாபத்திரமுமாம்; அது, சுறாமீன்வடிவமாக எழுதப்படுஞ் சித்திரரேகை. கலன் - போலி. மினல் - தொகுத்தல்விகாரம். முரலல் - ஒலித்தல். கணகண - ஒலிக்குறிப்பு; சப்தாநுகரணம். மகரிகா, ககநம், கதி, விததி - வடசொற்கள். விததி - விஸ்தாரம்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் பெரும்பாலும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் புளிமாச்சீர்களும், மற்றை ஆறும் கருவிளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தங்கள்.*

இவற்றில், ஈற்றெழுத்து ஒன்று ஒழிய மற்றை உயிரெழுத்தனைத்துங் குற்றெழுத்துக்களாகவே வந்தது, ஒரு சொல்லணி யெனக் காண்க; இது, குறுஞ்சீர்வண்ணத்தின்பாற்படும்; "குறுஞ்சீர்வண்ணங் குற்றெழுத்துப் பயிலும்" என்பது தொல்காப்பியம். இவற்றில்வந்த சில ஐகாரக்குறுக்கங்களும், மாத்திரையொப்புமையாற்குற்றெழுத்தோடொப்பவேகொள்ளப்படும். (௨0)

[தேர்வருணனை.]

நிறனின்மிகுவனநவமணிகளினிய னெடியகொடுமுடிநிகர்வன மகுடமு, மறையுமருவியையுவமைகொள்சவரமு மடவிநிகரெனவசைவுறுதுவசமு, முறையினறைகமழ்தொடைபடுமலர்களு முடுகுமிடனுடைமுழைகளுமுடையன, விறகர்கொடுபலமலைதிரிவனவெனவிகலியிசைபெறநடவினவிரதமே.

* தனன தனதன தனதன தனதன தனன தனதன தனதன தனதன என்பது, இவற்றிற்குச் சந்தக்குழிப்பாம்.

(இ - ள்.) திறனில் மிகுவன - (தம்தமக்கு உரிய) திறங்களிற் சிறந்தனவான, நவ மணிகளின் - ஒன்பதுவகை இரத்தினங்களைக்கொண்டு, இயல் - செய்யப்பட்ட, நெடிய - உயர்ந்த, கொடுமுடி நிகர்வன - மலைச்சிகரத்தை ஒப்பனவாகிய, மகுடமும் - முடியையும்,— அறையும் - ஒலிக்கின்ற, அருவியை - மலைநீர்ப்பெருக்கை, உவமை கொள் - (தனக்கு) உவமையாகக் கொண்ட, சவரமும் - சாமரையையும்,— அடவி நிகர் என - காடு உவமையென்னும்படி, அசைவுறு - அசைந்தாடுகின்ற. துவசமும் - கொடியையும்,— முறையின் - ஒழுங்காக, நறை கமழ் - வாசனை வீசுகின்ற, தொடை படு - (மாலையாகத்) தொடுக்கப்பெற்ற, மலர்களும் - பூக்களையும்,— முடுகும் இடன் உடை - நெருங்கிய இடத்தையுடைய, முழைகளும் குகைபோன்ற மறைவிடங்களையும், உடையன - உடையவையாகிய, இரதம் - தேர்கள்,— இறகர் கொடு திரிவன - (இந்திரனால்வெட்டப்படுவதற்குமுன்பு தம்தமக்கு உள்ள) சிறகுகளாற் சஞ்சரிப்பனவாகிய, பல மலை என - பலமலைகள்போல, இகலி - நெருங்கி, இசை பெற - ஒலி பெறும்படி, நடவின - ஓடின; (எ - று.)

தேரின் உச்சி - மலையின் சிகரத்தையும், அதன் சவரம் - மலையருவியையும், அதன் துவசம் - மலையிலுள்ள வனத்தையும், தேரில் தொங்கவிடப்பட்டுள்ள மாலையின்மலர்கள் - மலையிலுள்ள மலர்களையும், தேரில் மறைவாக உள்ள உள்ளிடங்களுட் சில - மலைக்குகைகளையும் ஒத்தலால், விரைந்தோடுகின்ற தேர்கள் - இறகுகளைக்கொண்டு திரிகின்ற மலைகளை யொத்தனவென்பது கருத்து. தற்குறிப்பேற்றவணி.

நவமணி - கோமேதகம், நீலம், பவளம், புஷ்யராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன. சவரம் - சாமரம் என்பதன் விகாரம். தொடை - தொழிற்பெயர்; ஐ - விகுதி. இறகர் - ஈற்றுப்போலி. இரதம் - பால்பகாஅஃறிணைப்பெயராதலால், நடவின என்னும் பன்மைவினையைக் கொண்டது. இசை - புகழுமாம். (உ.க)

[குதிரைவருணனை.]

அடல்கொள்வலிமையில்விரைவினிலுயர்வன வகிலபுவனமு
நொடியினில்வருவன,பொடியின்மிசைவெளிதுகடரவிடுவனபுணரி
யிடையலையலையொடுபொருவன, விடவிபடுபடைமடிதரமிநிமிர்வன
விரியுநறுமலர்கமழ்முகவுயிரன, படியிலொருபடிநிலையறுகதியன
பவனமெனநனிபரவினபரிகளே.

(இ - ள்.) அடல் கொள் - பொருதலைக் கொண்ட, வலிமையில் - பலத்திலும், விரைவினில் - வேகத்திலும், உயர்வன - மிகுந்தவையும்,— அகில புவனமும் - எல்லாவுலகங்களிலும், நொடியினில் - ஒருமாத்திரைப் பொழுதிலே, வருவன - (சென்றுதிரிந்து)வரத்தக்கவையும்,— பொடியின் - (பூமியினின்று எழுப்பப்படுகிற)புழுதிகளினால், மிசை வெளி - மேலுள்ள ஆகாயவெளியெல்லாம், துகள் தர - புழுதிமயமாம்படி, விடுவன - (அப்புழுதிகளைக்) கிளப்பிவிடுபவையும்,— புணரியிடை - கடலிலே, அலை - அலைகின்ற, அலையொடு - அலைவரிசைகளோடு, பொருவன - ஒத்திருப்பவையும்,— விடவி படு - மரம்போல அடர்ந்திருக்கின்ற, படை - சேனை, மடிதர - அழியும்படி, நிமிர்வன - கம்பீரமாகச்செல்பவையும்,— விரியும் - மலர்ந்த, நறு - வாசனைவீசுகின்ற, மலர் - பூக்கள்போல, கமழ் - நல்வாசனைவீசுகின்ற, முகம் உயிரன - முகத்தினின்று வருகின்ற சுவாசத்தையுடையவையும்,— படியில் - பூமியில், ஒரு படி நிலை அறு - ஒரேதன்மையாக நிலைத்தலில்லாத, கதியன - (பலவகை)நடையையுடையவையுமாகிய,— பரிகள் - குதிரைகள்,— பவனம் என - காற்றுப்போல, நனி - மிகுதியாய், பரவின - பரந்துசென்றன; (எ - று.)

இப்பாட்டிலுள்ள விசேஷணங்களெல்லாம - உபமேயமாகிய குதிரைக்கும், உபமானமாகிய காற்றுக்கும் பொது. காற்றுக்குச் சேரும்பொழுது, புணரியிடை அலை அலையொடு பொருவன-கடலில் அலைகின்ற அலைகளோடு பொருந்துவன என்றும், விடவி படு படை மடிதர நிமிர்வன - மரங்களின் அடர்ந்த தொகுதி சாயும்படி வீசுவன என்றும், விரியும் நறு மலர் கமழ் முகம் உயிரன - (கந்தவகனுதலால்) மலர்ந்த நல்ல மலர்களின் மணம் வீசுகின்ற முன்காற்றையுடையன என்றும், படியில் ஒருபடி நிலை அறு கதியன- (சதாகதியாதலால்) பூமியில் ஒருவகைநிலையில்லாத சஞ்சாரத்தையுடையன என்றும் பொருள். சிலேடையை அங்கமாகக்கொண்டு வந்த உவமையணி.

அகிலபுவனம் என்னும் பண்புத்தொகை - வடமொழிப்புணர்ச்சியாதலின், இயல்பாயிற்று; [நன் - மெய் - ருசு.] நொடி - இயல்பாக ஒருமுறை கைந்நொடித்தற்குச் செல்லும் பொழுது. விடவி - விடபீ என்ற வடமொழியின் திரிபு; கிளைகளையுடையது என்று பொருள்: விடபம் - மரக்கிளை.

உயர்ந்தசாதி யச்சுவங்களின் சுவாசத்தில் நல்ல மணம் வீசும்; "புவனதல முற்றுமுடன் வளைய வொரிமைப்பொழுதில் வருவன புறப்புணரியைக், கவனமொடெழுப்பிவிடு துகள்கொடு துகிர்ப்ப விரைகதிகளின் விதத்தை மொழியிற்,பவனகதியைத்தொடர்வ பரிமளவுயிர்ப்புடைய பலவகைநிறத்த பரிமா" என்றார் அணிவகுப்புச்சருக்கத்தும். (உஉ)

[காலாள் வருணனை.]

அரியவிலையனவணிகலனடையவு மறலின்முழுகினதருநவமணியெனவரிவின்முதலியபலபடைகளுமுடல் வலியசெலவுறுபவனசகுலமென நெரியவருவனவகைபடுமிடலணி நிமிரவெழுவன நிரைகெழுதிரையெனவிரிவினளவறுசலநிதிநிகரென வெகுளிமிகு கதிகடுகினர்விருதரே.

(இ - ள்.) அரிய விலையன-(மதித்தற்கு) அருமையான[மிக்க] விலையையுடையவையாகிய, அணி கலன் அடையவும் - (தாம்) அணிந்துள்ள ஆபரணங்களெல்லாம். அறலின் முழுகினது-நீரிற் பொருந்தியதாகிய, அரு நவ மணி என -(கிடைப்பதற்கு)அரிய நவரத்தினம்போலிருப்பவும்,—வரி வில் முதலிய - கட்டமைந்த வில் முதலான, பல படைகளும் - பலவகை ஆயுதங்களும், உடல் வலிய செலவு உறு-உடம்பினல் வலிந்துசெல்லுதல் பொருந்திய, பவனசகுலம் என-நீர்ப்பாம்புக்கூட்டம்போலிருப்பவும்,— நெரிய வருவன-நெருங்கிவருவனவாகிய, வகை படு - பலவகைப்பட்ட, மிடல்-வலிமையையுடைய, அணி - வரிசைகள், நிமிர எழுவன - உயர்ந்து எழுவனவாகிய, நிரை கெழு திரை என - ஒழுங்குபொருந்திய அலைகள்போலிருப்பவும்,— விருதர் - காலாள்வீரர்கள்,— விரிவின் - பரப்பிலே, அளவு அறு - ஓரளவில்லாத, சலநிதி - கடல், நிகர் என - உவமை யென்னும்படி, வெகுளி மிகு கதி கடுகினர்-கோபம்மிக்கநடையுடனேவிரைந்துசென்றனர்.

இரத்தினுகரமாதலால் 'அறலின்முழுகின தருநவமணி'என்றும், உரகமாதலால் 'உடல்வலியசெலவுறு பவனசகுலம்' என்றுங் கூறினர். ஒருமைப்பன்மைமயக்கமாக, 'முழுகினது' என ஒருமையடைமொழிகொடுக்கப்பட்டது. பவனசம் - பவநாசம் என்பதன் விகாரம்; காற்றை உண்பது என்று பொருள். "தோநிலை யரவின் தோற்றமே போலுஞ் சிலைகளும் பிறகளுந் துறைபோய்" என்றார் சிந்தாமணியாரும். ஜலநிதி - நீர்க்கு இருப்பிடமானது: வடசொல். (உரு)

[வாத்தியகோஷ வருணனை.]

முரசுகரடிகைகிணைதுடிபெருமர முருடுபடுபறைமுதலியகருவிக,ளரசவரிவளைகொடுவயிரெழுகுழ லரவவிருதுகண்முதலியக

ருவிக, ளுரைசெய்கருவிகண்முழுவதுமெழுவகை யுலகமுடிவுறவு
கவிறுதியிலெழு, கரைசெய்கடலெனவெறிவளியெனமிசை கஞலி
யுருமெறிகனமெனவதிரவே.

இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்.

(இ - ள்.) முரசு - பேரிகையும், கரடிகை—, கிணை—, துடி—, பெரு
மரம்—, முருடு—, படு - என்றுசொல்லப்படுகின்ற, பறை - பறைகளும்,
முதலிய - முதலான, கருவிகள் - அடிக்கப்படுகின்றவாத்தியங்களும்,— அர
சர் வரி வளை - அரசர்கட்குஉரிய கோடுகளமைந்தசங்குகளும், கொடு வயிர்-
வளைந்த ஊதுகொம்புகளும், எழு குழல் - ஒலியெழுகின்ற வேய்ங்குழல்க
ளும், அரவம் விருதுகள்-ஓசையையுடைய வெற்றிக்குஅடையாளமான சின்
னங்களும், முதலிய - முதலான, கருவிகள் - ஊதுகருவிகளும்,—உரை
செய் - மற்றுஞ் சொல்லப்படுகின்ற, கருவிகள் - வாத்தியங்களும்,—முழு
வதும் - ஆகிய இவையெல்லாம்,— எழு வகை உலகம் முடிவுற - எழுவகை
யுலகங்களும் அழியும்படி, உகம் இறுதியில் - யுகாந்த [பிரளய] காலத்தில்,
எழு - மேற்பொங்கிவருகின்ற, கரை செய் - ஒலித்தலைச் செய்கிற, கடல்
என - கடல்போலவும், எறி வளி என - வீசுகின்ற பெருங்காற்றுப் போல
வும், மிசை கஞலி உரும் எறி கனம் என - ஆகாயத்தின்மேற் பரந்து இடி
யிடிக்கின்ற மேகம்போலவும், அதிர - ஒலிக்க,—(எ - று.)

இக்கவியில் 'அதிர' என்ற செயவெனெச்சமும், மேற்கவியில் 'நடவ'
என்ற செயவெனெச்சமும் - அதன் மேற்கவியி லுள்ள 'பருகின' என்னும்
முற்றைக் கொண்டுமுடியும். முரசு - முரஜம். கரடிகை முதலியன - பறைக
ளின் பேதங்கள். பெருமரம் - பெரியமரத்தினு லாகிய தெனக் காரணப்
பெயர். அரவம் - ரவம் : வடசொல். 'எழுவகையுலகமுடிவுற வுகவிறுதியில்'
என்பதனை வளி கனம் என்பவற்றோடுங் கூட்டுக. (உச)

[இருதிறத்துச்சேனையும் ஒன்றோடொன்று எதிர்த்தல்.]

எறியுமுரசமுமெரிவிழியுரகமு மெழுதுகொடியுடையவரிரு
படையினும்,வெறிகொண்மதமலைகளுமதமலைகளும் விசயமிகுவன
விரதமுமிரதமு, நெறிகொணவகதியிவுளியுமிவுளியு நிருதர்குல
நிகர்விருதரும்விருதரு, நறியதொடைமுடிநிருபருநிருபரு நடலை
யமரிடையடலுடனடவவே.

(இ - ள்.)எறியும் முரசமும் - அடிக்கப்படுகிற வாத்தியமான பேரிகை
யின் உருவத்தையும், எரி விழி உரகமும் - நெருப்புப்போன்ற கண்களையு
டைய பாம்பின் உருவத்தையும், எழுது - (முறையே) எழுதியுள்ள, கொடி
உடையவர் - துவசத்தையுடையவர்களான தருமபுத்திரன் துரியோதனன்
என்னு மிவரது, இரு படையினும் - சேனையிரண்டிலும்,— வெறி கொள் -
பெருங்கோபத்தைக்கொண்ட, மதம் மலைகளும் மதம் மலைகளும் - மதங்
கொண்ட மலைபோன்ற யானைகளும் யானைகளும்,— விசயம் மிகுவன -
வெற்றிமிகுவனவாகிய,இரதமும் இரதமும் - தேர்களும் தேர்களும், — நெறி
கொள் - முறைமையைக் கொண்ட, நவ கதி - ஒன்பதுவகை நடைகளையு
டைய, இவுளியும் இவுளியும் - குதிரைகளும் குதிரைகளும்,—நிருதர் குலம்
நிகர்-அரக்கர்கூட்டத்தை யொத்த,விருதரும் விருதரும்-காலாள்வீரர்களும்
காலாள்வீரர்களும்,—நறிய தொடை-நறுமணமுள்ள மாலைகளைத் தரித்த,
முடி நிருபரும் நிருபரும் - கிரீடாதிபதிகளான அரசர்களும் அரசர்களும்,
நடலை அமரிடை - நடுக்கத்தைத்தருகின்ற போரில், அடலுடன் - வலிமை
யோடு, நடவ - எதிர்த்துச்செல்ல,—(எ - று.)

எறியும் - செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினை. நவகதி
ஆஸ்கந்திதம், தோரிதகம், ரேசிதம், வல்கிதம், புலுதம், பஞ்சளி, முரளி,

சடாலம், வலநம் என்பன; இனி, புலுமையான கதி யென்றலும் ஒன்று. நிருதர் - பயங்கரமான தோற்றத்துக்கு உவமை. "புநவவிற்குனிவெழ வுயிர்ப்பொடுபுகையெழத் துகிர்புரையும்வாய், மருவுமுத்திளநிலவெழத் தனிமன நெருப்பெழ வளர்தடக், கரதலத்தயில்வெயிலெழப் புனைகலன்வனப்பெழ மினிருநீ, ணிரையிமைப்பறுவிழிசிவப்பெழ நிருதரொத்தனர் விருதரே" எனக் கீழ் அணிவகுப்புச்சருக்கத்துக் கூறியதும் இங்குஅறியத்தக்கது. (உரு)

[கன்னனும் நகுலனும் குதிரைமேலேறிச்செல்லுதல்.]

இரவிமதலையுமிரவிதன்மதலைய ரிருவர்மதலையுமிருவருமெதிரெதிர், புரவிமிசைவிசைபடவலமிடநிகழ் புரிவினுடனமர்பொரு பலகதிகளி, னரவினதிபதிமுடிகெழுசுடிகையி னருணமணிவெயிலவணியிலெழநனி, பரவியிருள்வரநிரைநிரையெழுதுகள் பகல்செயொளிவெயில்பருகினசெருகியே.

(இ - ள்.) இரவி மதலையும் - சூரியகுமாரனான கர்ணனும், இரவிதன் மதலையர் இருவர் மதலையும் - சூரியபுத்திரராகிய அசுவினீதேவர் என்னும் இரட்டையரது குமாரனான நகுலனும், இருவரும் - என்கின்ற இரண்டுபேரும், எதிர் எதிர் - எதிர்க்கெதிராக, புரவிமிசை - குதிரைகளின்மேல் (ஏறிக்கொண்டு), விசை பட - வேகமாக, வலம் இடம் - வலப்பக்கமாகவும் இடப்பக்கமாகவும், நிகழ் - செல்லுகின்ற, புரிவினுடன் - சாரிகளுடனே, அமர்பொரு - போர்செய்கின்ற, பல கதிகளின் - பலவகைநடைகளால், (பூமியின் துகளெல்லாம் மேலெழுப்பப்படுதலால்),—அரவின் அதிபதி - (கீழிருந்து பூமியைத் தாங்குகின்ற) சர்ப்பராசனான ஆதிசேஷனது, முடி கெழு - தலையிற் பொருந்திய, சுடிகையின் - உச்சியிலே யுள்ள, அருணம் மணி - செந்நிறமுள்ள மாணிக்கத்தினது, வெயில் - சூரியகாந்திபோன்ற ஒளி, அவனியில் - பூமியிலே, எழ - விளங்காநிற்க,—நனி பரவி - மிகுதியாய்ப் பரந்து, இருள் வர - இருட்டுவரும்படி, நிரை நிரை - கூட்டங்கூட்டமாக, எழு - மேலெழும்புகின்ற, துகள் - புழுதிகள்,— பகல் செய் - பகலைச்செய்கின்ற, ஒளி - ஒளியையுடைய, வெயில் - சூரியகிரணங்களை, செருகி - மறைத்து, பருகின - மூடின; (எ - று.)—இரவி - ரவி: வடசொல்.

உயர்வுநவிற்சியணி. வலமிடநிகழ்புரிவு - வலசாரியும், இடசாரியும். அசுவினீதேவர் - தேவவைத்தியர்; இவர் - பெண்குதிரைவடிவங்கொண்டு வனத்தில் ஒளித்திருந்த சமிஜ்ஞையென்னும் மனைவியினிடத்துக் குதிரைவடிவமாய்ச்சேர்ந்த சூரியனுக்குப் பிறந்த பிள்ளைகள். (உசு)

[அவர்கள்குதிரைகளின் வருணனை.]

அசைவிறுதொடையடிகசைகுசையுரநினை வறியுமுணர்வினவளமையுமுடையன, வசையில்சுழியனபழுதறுவடிவின வருணமொழிகுரன்மனவலிமிகுவன, விசைகொள்பலகதியினும்விரைவுறுவன விபுதர்குலபதிவிடுபரிநிகர்வன, விசைகளொருபதுதிசைகளுமெழுதிய விறைவரிருவருமிசைகொளுமிவுளியே.

(இ - ள்.) இசைகள் - (தமது) கீர்த்திகளை, ஒரு பது திசைகளும் - பத்துத்திக்குக்களிலும், எழுதிய - எழுதிநாட்டிய, இறைவர் இருவரும் - அரசர்கள்இருவரும் [கர்ணனும் நகுலனும்], மிசைகொளும் - ஏறியுள்ள, இவுளி - குதிரைகள்,—அசைவு இல் - சோர்தல்இல்லாத, தொடை அடி - (தம்மேல் ஏறியவரது) தொடைகளின் அடிகளாலும், கசை - சவுக்கின் அடிகளாலும், குசை உரம் - கடிவாளத்தையிழுக்கும் வலிமையாலும், நினைவு - அவர்களெண்ணத்தை, அறியும் - தெரிந்துகொள்ளுகின்ற, உணர்வின - நல்லறிவையுடையவை; வளமையும் உடையன - வளர்ச்சியையும் உடையவை; வசை இல் சுழியன - குற்றமில்லாத சுழிகளையுடையவை; பழுது

அறு வடிவின - குற்றமில்லாத வடிவத்தை யுடையவை; வருணம் - நிறமும், மொழி குரல் - கனைக்கின்ற ஒலியும், மனம் வலி - மனத்தின்ஊக்கமும், மிகுவன - சிறந்துள்ளவை; விசை கொள் - வலிமைகொண்ட, பல கதியினும் - பலவகை நடைகளிலும், விரைவு உறுவன - வேகம்பொருந்துபவை; விபுதர் குல பதி - தேவர்கூட்டத்துக்குத் தலைவனான இந்திரன், விடு - செலுத்துகின்ற, பரி - (உச்சைச்சிரவ மென்னும் வெள்ளைக்)குதிரையை, நிகர்வன - ஒத்திருப்பவை; (எ - று.)

தொடை--ஒருமுப்பு. அடியைக் கசையோடு கூட்டுக. கசை - குதிரைச் சம்மட்டி; குதிரையோட்டுங் கயிறுகவுமாம். உரநினைவு என்று எடுத்து-மனத்தின்எண்ண மென்றுமாம்; 'உளநினைவு' என்றும் பாடம். வர்ணம் - வடசொல்; சாதியுமாம். விபுதர் - விசேஷமான புத்தியை யுடையவர். பத்துத்திசைகள்-கிழக்கு முதலிய எட்டோடு மேல் கீழ் என்னும் இரண்டும். இசைகளொருபதுதிசைகளுமெழுதியஇறைவர்—"நகுலனென் றெல்லாக், குன்றிலுந் தன்பேரெழுதினேன்" எனக் கீழ் விராடபருவத்தில் வந்ததுங் காண்க. குற்றமுள்ள சுழிகள் - சந்திரம், அண்டாவர்த்தம், கௌவகம், காகாவர்த்தம், மூன்வளையம், கேதாரி, கேசாவர்த்தம், பட்டடை என்பன. குற்றமற்றசுழி-கழுத்தில்வலமாகச்சுழிந்திருக்குந் தேவமணிமுதலியன.(உஎ)

[கர்ணநகுலரது போர்.]

முடியுமொருகவிகையுமிருகவரியு முதிருமெரிவிடமுரணரவெழுதிய, கொடியுமுடையவனெலுவலுமுரசுயர் கொடியிலெழுதியகுருபதியிளவலு, நெடியவரிசிலைநிலைபெறவளையவு நிமிரவிடுகணைநிரைநிரைமுடுகவு, மிடியிலெழுமடியதிர்குரல்விளையவு மிவுளியமர்கடிதிகலொடுபுரியவே.

இதுமுதல் ஐந்துகவிகள் - குளகம்.

(இ - ள்.) முடியும் - கிரீடத்தையும், ஒரு கவிகையும் - ஒற்றை (வெண்கொற்ற)க்குடையையும், இரு கவரியும் - இரண்டு சாமரங்களையும், முதிரும் எரி விடம் முரண் அரவு எழுதிய கொடியும் - மிக்க வெதும்புகின்ற விஷத்தையுடைய கோபிக்கிற பாம்பின்வடிவத்தை யெழுதியுள்ள துவசத்தையும், உடையவன் - உடையவனான துரியோதனனுடைய, எலுவலும்-தோழனாகிய கர்ணனும்,—முரசு - முரசத்தின்வடிவத்தை, உயர் கொடியில்-உயர்ந்த துவசத்தில், எழுதிய—, குரு பதி - குருகுலத்துக்குத் தலைவனான தருமபுத்திரனது, இளவலும் - தம்பியாகிய நகுலனும்,—நெடிய வரி சிலை - நீண்ட கட்டமைந்த (தமது) வில், நிலை பெற வளையவும் - நிலையாகவளைந்திருக்கவும்,—நிமிர விடு கணை - வேகமாய் எய்யப்படுகின்ற (தமது) அம்புகள், நிரை நிரை முடுகவும் - வரிசைவரிசையாக விரைந்துசெல்லவும்,—இடியில் - இடியோசையைக்காட்டிலும், எழு மடி - ஏழுமடங்கு அதிகமாக, அதிர் குரல் - ஆரவாரிக்கின்ற ஓசை, விளையவும் - உண்டாகவும்,—இவுளி அமர் - குதிரைமேலிருந்துசெய்யும்போரை, கடிது இகலொடு - மிக்கவலிமையுடனே, புரிய - செய்ய,—(எ - று.)

கவிகை - கவிந்திருப்பது. கவரி - சமரீயென்னும்வடமொழியின் திரிபு; இப்பெண்மானின்பெயர், அதன் வால்மயிராற்செய்யப்பட்டதொரு இராசசின்னத்துக்கு இருமடியாகுபெயர். எலுவல் - கொடுந்தமிழ்நாடுபன்னிரண்டனுட் சீதநாட்டுத் திசைச்சொல்; பெண்பால் - இகுளை. இகலொடு - பகைமையுடனே, கடிது - விரைவாக, புரிய - செய்ய எனினுமாம். முடியும் ஒருகவிகையும் இருகவரியும் கொடியும் - அரசர்க்குஉரிய அங்கங்கள். (உஅ)

[கர்ணனது குதிரைமுதலியன அழிதல்.]

நகுலன்விடுகணைவிதரண்குணபதி நடவுகுரகதநடைபயில்குரமற, விகலும்வரிசிலைநடுவறவடமற விடுகவசமறவெழுதருமிரு

புய, சிகரிபுதையவுமுரமுழுகவுநுத றிலகமெனவொளிதிகழவு
மலைதலின், மகிழ்வுசினமெனுமிருகுணமுடன்மன மறுகநிலனிடை
வலனுற விழியவே.

(இ - ள்.) நகுலன்—,—விடு கணை - தான்எய்கின்ற அம்புகளினால், விதரண குண பதி நடவு - தானகுணத்துக்குத் தலைவனான கர்ணன் ஏறிச் செலுத்துகின்ற, குரகதம் - குதிரையின், நடை பயில் குரம் - கதிகளைப் பயின்ற குளம்புகள் [கால்கள்], அற - அறுபடவும்,—இகலும் - போர்செய்கின்ற, வரி - கட்டமைந்த, சிலை - (அக்கர்ணனது) வில், நடு அற - நடுவில் அற்றுப்போகவும்,—வடம் அற - (அவன் மார்பிலணிந்துள்ள) ஆரங்கள் அறுபடவும்,—இடு கவசம் அற - அவன் தரித்துள்ள கவசம் அற்றுப்போகவும்,—எழுதரும் இரு புய சிகரி - ஓங்கிவளர்ந்த மலைபோன்ற இரண்டுதோள்களில், புதையவும் - அழுந்தவும்,—உரம்-மார்பில், முழுகவும் - உட்புகவும்,—நுதல் - நெற்றியில், திலகம் என-சிந்தூரத்திலகம்போல, ஒளி திகழவும்-(இரத்தத்தால்) சிவந்தஒளி விளங்கவும்,—மலைதலின் - போர்செய்ததனால்,—(கர்ணன்),—மகிழ்வு சினம் எனும் இரு குணமுடன் - களிப்பும் கோபமும் என்கிற இரண்டு குணத்தோடும், மனம் மறுக-மனஞ்சுழல, நிலனிடை-பூமியில், வலன் உற - வலிமைபொருந்த, இழிய - இறங்க,—(எ - று.)

குரகதம் - குளம்புகளாற் செல்வது. எழுதரும் - எழும்: தா - துணைவினை; இனி, எழுது அரும் எனப் பிரித்து, (மனத்திற்குத்திருப்தியாகுமளவுஞ் சீர்திருத்திஎழுதத்தக்க சித்திரத்திலும்)எழுதவொண்ணாத[மிகஅழகிய] புயம் என்றுமாம்: எழு தரும் எனக்கொண்டு - இருப்புத்தூணை யொத்த தோளுமாம். சிகரீ - சிகரமுடையது: வடசொல். மகிழ்வு - சிறந்தவீரனோடு தனக்குப் போர்நேர்ந்ததனாலும், தன் தம்பியாகிய அவனது போர்த்திறத்தைக் கண்டதனாலு மென்க. வலனுறஇழிய - வலப்பக்கமாகக்குதிக்க என்றலு மொன்று. (உக)

[கர்ணன் தேரிலேற நகுலனும் தேரிலேறுதல்.]

இழியுமளவையின்வினையுடைவலவனொ ரிரதம்விரைவொடு
கொடுவரவிரிகதிர், பொழியுமிளவெயிலிரவிமுனுதவிய புதல்வன்
விறலொடுபுகுதலுமுயர்பரி, யொழியநகுலனுமொருதனிரதமிசை
யுபரிசரரெனவுரனொடுபுகுதர, விழியின்மணிநிகர்வலவனும்வலவ
னும் விசையகுரகதம்விசையொடுகடவவே.

(இ - ள்.) இழியும் அளவையின் - (கர்ணன் குதிரையினின்று) இறங்கியமாத்திரத்தில்,—வினை உடை வலவன் - தனக்குஉரியவனான(அக்கர்ணனது) தேர்த்தொழிலிலே வல்ல சாரதி, ஒர் இரதம் - ஒருதேரை, விரைவொடு - வேகத்தோடு, கொடு வர - கொண்டுவரவே,— விரி கதிர் பொழியும் - மிக்ககிரணங்களைச் சொரிகிற, இள வெயில் - இளமையான வெயிலையுடைய, இரவி - சூரியன், முன் - முன்னே, உதவிய - பெற்ற, புதல்வன் - குமாரனாகிய அக்கர்ணன், விறலொடு - வலிமையோடு, புகுதலும் - (அத்தேரில்) ஏறியவளவில்,—நகுலனும்—, உயர் பரி ஒழிய - உயர்ந்த (தன்) குதிரை நீங்கும்படி (அதனைவிட்டு) [தான்ஏறியிருந்த குதிரையை விட்டு என்றபடி], ஒரு தன் இரதம்மிசை - தனது ஒரு தேரின்மேல், உபரிசரர் என - மேலே [ஆகாயத்தில்] சஞ்சரிக்கிற தேவர்கள்போல, உரனொடு - வலிமையோடு, புகுதர - ஏறிநிற்க,—விழியின் மணி நிகர்-(அவரவர்க்குக்)கண்ணின் கருமணி போன்ற [மிகஅருமையான], வலவனும் வலவனும் - தேர்ப்பாகரிருவரும், விசைய குரகதம் - வெற்றியையுடைய (தேர்க்)குதிரைகளை, விசையொடு - வேகத்தோடு, கடவ - செலுத்த,—(எ - று.)

தனி ரதம் எனப்பிரித்து - ஒப்பில்லாத தேர் எனினுமாம். உபரிசரர் எனப் பன்மையாற்கூறினது, கர்ணனுக்கும் உவமையாதற்பொருட்டென்க. விஜயம், விசையம் எனத் திரிந்து போலியாயிற்று. 'விசைய குரகதம் விசையொடு கடவ' என்றவிடத்து, மடக்கு என்னுஞ் சொல்லணி காண்க. விறல்-பெருமிதம். (௩௦)

[கர்ணனும் நகுலனும் போருதல்.]

கடவுமிரதமுமிரதமுமுருள்கதி கடுகவருதலுமிருவருமிருசிலை, யடரவளைவுறநொடியினிலெயிறுடை யயில்கொள்பகழிகளளவில சிதறினர், புடவியுறவகல்வெளிமுழுவதுமிவர் பொழியுமழையெழுபுயன்மழையெனவிழ, வுடலமுகுகுருதியினனையினரரு குதவி செயவருதரணிபருருளவே.

(இ - ள்.) கடவும் - (அப்பாகர்களாற்) செலுத்தப்படுகின்ற, இரதமும் இரதமும் - அத்தேரிரண்டும், உருள் - சக்கரங்களால், கதி கடுக - நடை விரைவுபெற, வருதலும் - வந்தவளவில்,—இருவரும் - கன்னனும் நகுலனும், இரு சிலை - (தம்) வில்இரண்டும், அடர வளைவு உற - நன்றாக வளைவு பெற (வளைத்து), எயிறு உடை - பற்களையுடைய, அயில் கொள் - கூர்மையைக்கொண்ட, அளவு இல - அளவில்லாதவையாகிய, பகழிகள் - அம்புகளை, நொடியினில் - ஒருமாத்திரைப்பொழுதிலே, சிதறினர் - சிந்தினார்கள்; இவர் - இவர்கள், அகல் வெளி முழுவதும் - பரந்த ஆகாயத்தினிடம் முழுதிலும், பொழியும் - சொரிகிற, மழை - பாணவருஷம், புடவி உற-பூமியிலே நிறையும்படி, எழு புயல் மழை என-ஏழுமேகங்களின் மழைபோல, விழ - விழுவதனால்,—உதவி செய அருகு வரு தரணிபர் - (அவ்விருவர்க்கும் போரில்) துணைசெய்தற்காக அருகில்வந்த அரசர்கள், உடலம் உகு குருதியின் நனையினர் - உடம்புமுழுவதும் பெருகுகிற ரக்தத்தினால் நனைந்தவர்களாய், உருள - (கீழ்விழுந்து) புரள,—(எ - று.)

நகுலனுக்குஉதவிசெய்தற்காக அருகில்வந்த அரசர்கள் கர்ணனது அம்புமழையினாலும், கர்ணனுக்குஉதவிசெய்தற்காக அருகில்வந்த அரசர்கள் நகுலனது அம்புமழையினாலும் புண்பட்டுக் குருதியில் நனைந்து கீழ்விழுந்து உருள வென்க. அருகில் - தமக்குஅருகில்; எதிரிக்குஅருகில் எனினுமாம்.

எழுபுயல் - பண்புத்தொகை; அவை - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன: இனி, வினைத்தொகையாய், மேலெழுகின்ற புய லென்றுமாம். உடலம், அம் - சாரியை. நனையினர் - இறந்தகாலமுற்றெச்சம்; இன் - இடைநிலை. உதவி - உதவுதல்; தொழிற்பெயர்: இ - விகுதி. அம்புக்கு, எயிறு - கோடி. (௩௧)

[கர்ணநகுலரது தேர்முதலியன அழிதல்.]

இருவர் பரிகளு முரனுற முழுகின விருவர் வலவரும் விழவெரி கதுவின, விருவ ரிரதமு மழியமுன் முடுகின விருவர் துவசமு மறவிசை கடுகின, விருவர் சிலைகளு நடுவற மருவின விருவர் கவசமு மிடையிடை கெழுமின, விருவர் கவிகையு மறிதர வருடின விருவ ருடலமு மெழுதின கணைகளே.

(இ - ள்.) கணைகள் - (கர்ணனும் நகுலனும் தம்மில் ஒருவர்க்கொருவர் எதிராக எய்த) அம்புகள்,— இருவர் பரிகளும் - இருவர்தேர்க்குதிரைகளின் உடம்பிலும், உரன் உற - வலிமைபொருந்த, முழுகின - செருகின; இருவர் வலவரும் - இருவர்தேர்ப்பாகரும், விழ - இறந்து கீழ்விழும்படி, எரி கதுவின - நெருப்புப்போலப் பற்றின; இருவர் இரதமும் - இருவர்தேரும், அழிய - அழியும்படி, முன் முடுகின - விரைந்து ஊடுருவின; இருவர் துவசமும் - இருவர்கொடிகளும், அற - அறுபடும்படி, விசை கடுகின - வேக

மாய்ச்சென்றன; இருவர் சிலைகளும் - இருவர்விற்களும், நடு அற - நடுவில் அற்றுப்போம்படி, மருவின - பொருந்தின; இருவர் கவசமும் - இருவர்கவசங்களிலும், இடை இடை - இடையிடையே, கெழுமின - தைத்தன; இருவர் கவிகையும் - இருவர்குடைகளும், மறிதர - சாயும்படி, வருடின - தடவின; இருவர் உடலமும் - இருவருடம்பிலும், எழுதின - கிளறின; (எ-று.) உரன்உற-மார்பிற் பொருந்த என்னவுமாம். மறிதர, தா-துணைவினை. (௩௨)

வேறு.

[கர்ணனும் நகுலனும் வேறுதேரேறிக் கடும்போர்தொடங்குதல்.]

கன்ன னும்பரி நகுல னுந்தம காலி னின்றிடவே
பின்ன ரும்பொரு பாகர் தந்தபி றங்கு தேர்மிசையார்
முன்ன ரம்புதொ டுத்த போரினு மும்ம டங்குபொர
மன்னர் யாருமதிக்கு மாறுதொ டங்கி னாரமரே.

(இ - ள்.) கன்னனும்—, பரி - குதிரைத்தொழிலில் வல்ல, நகுலனும்—,—(தேரழிந்து), தம காலின் - தம்முடைய கால்களினால், நின்றிட - கீழேநிற்க, (அதுநோக்கி), பின்னரும்-மறுபடியும், பொரு பாகர் - போரில் வல்ல (வேறு) தேர்ப்பாகர் (இருவர்), தந்த - கொணர்ந்த, பிறங்கு தேர் மிசையார் - விளங்குகிற தேரின்மேல் ஏறினவர்களாய்,—முன்னர் - முன்னே, அம்பு தொடுத்த - பாணங்களை எய்து செய்த, போரினும் - யுத்தத்தைக்காட்டிலும், மும்மடங்கு-மூன்றுபங்குஅதிகமாக, பொர-போர்செய்ய (எண்ணி),—மன்னர் யாரும் மதிக்கும் ஆறு-(கண்ட கேட்ட)அரசர்களெல்லாரும் நன்குமதிக்கும்படி, அமர் தொடங்கினார் - போர்தொடங்கினார்கள்.

நகுலன் குதிரைத்தொழில்வல்லவனாதலை, அவன் அஜ்ஞாதவாசகாலத்தில் தாமக்கிரந்தியென்னும்பெயர்பூண்டு விராடராசனுக்குக் குதிரைச்சாலைத்தலைவனாய் அமர்ந்தமைகொண்டும் உணர்க. தம, அ - ஆறனுருபு.

இதுமுதற் பதினாறு கவிகள் - பெரும்பாலும் முதல் மூன்று ஐந்தாஞ் சீர்கள் மாச்சீர்களும், இரண்டு நான்காஞ் சீர்கள் விளச்சீர்களும், ஈற்றுச்சீரொன்று காய்ச்சீருமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (௩௩)

[கர்ணன் நகுலனை வென்று உயிரோடுவிடுதல்.]

அல்லிநாண்முகையம்புயங்களலர்த்துநாதன்மகன்
சொல்லினாலுயராயுள்வேதியர்சுதனையின்றமரிற்
கொல்லினாதவறுங்கொலென்றொருகோலினாலழியா
வில்லினாலழியாநடக்கெனமீளவிட்டனனே.

(இ - ள்.) அல்லி - அகவிதழ்களையுடைய, நாள் - புதிய, முகை அம்புயங்கள் [அம்புயமுகைகள்]-தாமரையரும்புகளை, அலர்த்தும் - மலரச்செய்கின்ற, நாதன் - தலைவனான சூரியனுடைய, மகன்-குமாரனான கர்ணன்,—'சொல்லினால் உயர் - புகழினாற் சிறந்த, ஆயுள் வேதியர் சுதனை - வைத்தியசாஸ்திரம்வல்லவர்களான அசுவினீதேவரது குமாரனான நகுலனை, இன்று-இப்பொழுது, அமரில் - யுத்தத்தில், கொல்லின் - (நான்) கொன்றால், நா தவறும்-(முன்பு கொல்லேனென்று குந்திக்குச்சொன்ன எனது)நாக்குத் தவறிப்போம்', என்று - என்றுஎண்ணி,—ஒரு கோலினால் - அம்புஒன்றைக்கொண்டு, அழியா வில்லினால் - அழியாத வில்லினாலே, அழியா - தோற்கச்செய்து,—நடக்க என -'(நீ உயிருடன்)செல்வாயாக' என்று (தனது பெருமிதம் தோன்றச்) சொல்லி, மீள-திரும்பும்படி, விட்டனன் - விட்டான்.

அல்லி என்பதன் எதிர்மொழி - புல்லி [புறவிதழ்]. அம்புயம் - அம்புஜம்; நீரிற் பிறப்பது என்று பொருள்படும் வடசொல். அம்பு - நீர். ஆயுர்வேதமாவது - வியாதியின் காரணம் குறி முதலியவற்றை அறிந்து, மந்தி

ரம் ஔஷதம் முதலியவற்றால் தகுந்த சிகிச்சை செய்யும்படி ஆயுள் ஆரோக்கியம்முதலியவற்றைச் சொல்லும் வைத்தியநூல். 'அமரில்கொல்லின் நாதவறும்' என்றது - பாண்டவர்க்கு இராச்சியங்கேட்கும்பொருட்டுத் துரியோதனனிடந் தூதுவந்த கிருஷ்ணனது சொல்லின்படி குந்தி கர்ணனிடம் வந்து, தான் அவன்தா யென்பதையும் பாண்டவர் அவன்சகோதரரென்பதையுந் தெரிவித்துப் பாண்டவர்பக்கஞ் சேரவேண்டுமென்று சொல்லியதற்குக் கர்ணன் இணங்கானாக,பின்னர்க் குந்தி அருச்சுனன்மீது நாகாஸ்திரத்தை இரண்டாம்முறை விடாமலிருக்கவும், மற்றைத்தம்பிமாரைக் கொல்லாமலிருக்கவும் வேண்டு மென்று கேட்ட வரங்க ளிரண்டனையுங் கர்ணன் கொடுத்தன னாதலின். நா தவறும் = சொல் தவறும்: இலக்கணை. தவறுங்கொல், கொல்-அசை. நடக்கென - தொகுத்தல். அழியா என்னுஞ் சொல் இரண்டனுள்,முன்னது-ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்;பின்னது - உடன்பாட்டுஇறந்தகாலவினையெச்சம். (ருச)

[மகதராசனையும் விடதரனையுங் கர்ணன் கொல்லுதல்.]

நின்றமாநகுலற்குவன் றுணையாகிநின் றிடலான்
மன்றன்மாலைவிசாலமார்பினன் மகதபூபனையும்
வென்றிவேன்முருகற்குநேர்புகல்விடதரன் றனையுங்
கொன்றுவாசவன்மைந்தன்மாமுனைகுறுகவேகினனே.

(இ - ள்.) (கர்ணன்),—நின்ற - (முதுகுகாட்டி) நின்ற, மா நகுலற்கு- குதிரைத்தொழில்வல்ல நகுலனுக்கு, வல் துணை ஆகி - வலிய உதவியாகி, நின்றிடலால் - நின்றதனால்,—மன்றல் மாலை - வாசனையையுடைய போர் மாலையைத்தரித்த, விசாலம் மார்பினன்-அகன்ற மார்பினையுடையவனான, மகத பூபனையும் - மகததேசத்தரசனையும்,—வென்றி-வெற்றியைத்தருகிற, வேல் - வேலாயுதத்தையுடைய, முருகற்கு - சுப்பிரமணியக்கடவுளுக்கு, நேர் - (பல பராக்கிரமங்களில்) ஒப்பாக, புகல் - சொல்லப்படுகின்ற, விடதரன்தனையும் - விடதரனென்பவனையும்,— கொன்று—,—வாசவன் மைந்தன் - இந்திரகுமாரனான அருச்சுனனது, மா முனை - சிறந்த போர்செய்யுமிடத்திற்கு, குறுக - சமீபமாக, ஏகினன் - சென்றான் ; (எ - று.)

முருகன் - முருகையுடையவன் ; முருகு - தெய்வத்தன்மை,இளமை, அழகு. நின்றிடலாற் கொன்று என இயையும். (ருரு)

[கர்ணனும் அருச்சுனனும் போர்செய்தல்.]

மடங்கன்மேலெழுமதமுமேலிடவருபணைக்கரிபோல்
விடங்கொள்சாயகவில்லிசென் றுதன்விற்குனித்தடுபோர்
தொடங்குமுன்பலர்வில்லெடுத்தவர்சொல்லும்வில்லியவன்
றிடங்கொண்மார்பினிலம்பிரண்டுதெரிந்துவிட்டனனே.

(இ - ள்.) விடம் கொள் - (தவறாது பகையழித்தலில்)விஷம்போன்ற, சாயகம் - அம்புகளையெய்கின்ற, வில்லி - (காலப்ருஷ்டம் என்னும்) வில்லையுடையவனான கர்ணன்,— மடங்கல்மேல் - சிங்கத்தின்மேல், எழு மதமும் மேலிட - எழுவகைமதமும் மிக, வரு - (போர்க்கு) வருகிற, பணை கரி போல் - பருத்த யானைபோல, சென்று - (அருச்சுனனுக்கு எதிரிற்)போய், தன் வில் குனித்து - தனது வில்லை வளைத்து, அடு போர் - கொல்லுகின்ற போரை, தொடங்கும் முன் - தொடங்குமுன்னமே,—வில் எடுத்தவர் பலர் சொல்லும் வில்லி - விற்பிடித்த வீரரெல்லாராலும் (சிறப்பித்துச்) சொல்லப்படுகின்ற (காண்டீவமென்னும்) வில்லையுடையவனான அருச்சுனன்,— அவன் - அக்கர்ணனது, திடம் கொள் மார்பினில் - வலிமையைக்கொண்ட மார்பில், அம்பு இரண்டு - இரண்டு பாணங்களை, தெரிந்து விட்டனன் - தேர்ந்தெடுத்து எய்தான் ; (எ - று.)

மடங்கல் - அருச்சுனனுக்கும், கரி - கர்ணனுக்கும் உவமை. மடங்கல் மேல் வரு கரி-இல்பொருளுவமம். இவ்வுவமையால், அருச்சுனனது உயர்வும், கர்ணனது இழிவும் விளங்கும். ஒருபெரியயானை மதம்மிகுதலால் தன் நிலையையுஞ் சிங்கத்தின்நிலையையும் மறந்து சிங்கத்துடன்போர்செய்தற்கு வந்தாற்போலக் கர்ணன் தனது செருக்குமிகுதியால் தனதுநிலையையும் அருச்சுனனதுநிலையையும் உணராது அருச்சுனனுடன்போர்செய்தற்குச் சென்றனனென்க. இங்ஙனஞ்செல்லுமிடத்து வெகுவிரைவிலே மிகஎளிதாக அழிவுநேர்தல் இயல்பென்பது, உவமையால் நன்குவெளியாம். விடங்கொள்சாயகம் என்றவிடத்து, கொள் - உவமவுருபு, அன்றி, நஞ்சுதீற்றிய அம்புஎன்றல், சிறப்பன்று. த்ருடம் என்ற வடசொல், திடமென விகாரப்பட்டது. இருவரும் சிறந்த வில்வீரராதலால், கவி, இருவரையும் 'வில்லி' என்று குறித்து, அவர்கட்குஉள்ள ஏற்றத்தாழ்வை உவமையால்விளக்கியதுமன்றி, 'விடங்கொள்சாயகம்' என்றும், 'பலர்வில்லெடுத்தவர்சொல்லும்' என்றும் அவரவர்தகுதிக்குஏற்பக் கொடுத்த அடைமொழிகளாலும் விளக்கினர். 'விடம் கொள் சாயகம்' என்பதற்கு - விஷத்தைக்கொண்ட அம்பு [அதாவது-நாகாஸ்திரம்] என்று உரைத்தலும் தகுதி. "கற்றோர்களமறிவர் கற்றோரே" என்றபடி வீரரது பெருமையை வீரரே அறிவாராதலால், 'பலர்வில்லெடுத்தவர்சொல்லும் வில்லி' என்றார். ஸாயகம் - வடசொல். வில்லி, இ - ஆண்பாற்பெயர்விகுதி. 'போர்தொடங்குமுன் அம்புவிட்டனன்' என்றது, விரைவுகுறிக்கும். அடு போர் - வினைத்தொகை. (௩௬)

[கர்ணன் கிருஷ்ணார்ச்சுனரை வெல்லமாட்டாமல் விலகுதல்.]

அருணவெங்கதிராயிரத்தவனன்பினாலுதவுங்
கருணனுஞ்சிலபகழியோரிருகண்ணர்மார்பில்விடா
வருணமும்பெயரும்பிறிந்திலர்மனமுமொன்றெனவே
தருணவாணிலவெழநகைத்துரைதந்துபோயினனே.

(இ - ள்.) அருணம் - செந்நிறமான, வெம் - வெவ்விய, கதிர் ஆயிரத்தவன் - ஆயிரங்கிரணங்களையுடையவனாகியசூரியன், அன்பினால் உதவும் - அன்போடு பெற்ற (மகனான), கருணனும் - கர்ணனும்,—சில பகழி - சிலஅம்புகளை, ஓர் இரு கண்ணர் மார்பில் - ஒப்பில்லாத இரண்டுகிருஷ்ணரது [கிருஷ்ண அருச்சுனரது] மார்புகளில், விடா - செலுத்தி,—(அவையொன்றும் பயன்படாமையால்),—'(இவ்விருவரும்), வருணமும் - நிறமும், பெயரும் - பேரும், பிறிந்திலர் - வேறுபட்டிலர்; மனமும் ஒன்று - (அவைமாத்திரமன்றி இவர்கட்கு) மனமும் ஒன்றே', என - என்று, வாள் தருணம் நிலவு எழ - ஒளியையுடைய இளமையான சந்திரகாந்திபோன்றபற்களின் வெள்ளொளி வெளித்தோன்றும்படி, நகைத்து - சிரித்து, உரை தந்து - சொல்லிக்கொண்டு, போயினன் - (அப்பாற்) செல்பவனானான்; (எ - று.)

கரியோனென்னும்பொருளதாகிய 'க்ருஷ்ண' என்னும் வடமொழி பிராகிருதமாய், கண்ணனெனச் சிதைந்துவந்தது. இருவர்க்கும் 'கிருஷ்ணன்' என்று பெயராதலாலும், இருவரும் கருநிறமுடையவராதலாலும், *'ஓரிருகண்ணர்' என்றும், 'வருணமும் பெயரும் பிறிந்திலர்' என்றும்

* ஸ்ரீமணவாளமாமுனிகள் அருளிச்செய்த "திருவருண்மால்" என்ற தொடக்கத்துத் திருநாமப்பாசுரத்தில் 'இருகண்ணர்க் கன்புடைய நம்பிள்ளை' என்றவிடத்து, கிருஷ்ணனென்னுந் திருநாமமுடையவர்களான பெரியவாச்சான்பிள்ளை வடக்குத்திருவீதிப்பிள்ளை என்ற இரண்டுஆசார்யர்களையுஞ் சேர்த்து 'இருகண்ணர்' என்றதும், இங்ஙனமே வடமொழித்தனியன்களிலும் "ஸக்ருஷ்ணத்வயெள" என்றும், " ஸ்ரீக்ருஷ்ணத்வயபாதாப்ஜே" என்றும் வருவனவும், இங்கு ஒப்புநோக்கத்தக்கவை.

கூறியது. கிருஷ்ணனென்பது அருச்சுனனுக்குப் பெயராதலை "பார்த்தன் அருச்சுனன் கரியோன்", "பீபத்ஸுர் விஜய: க்ருஷ்ண:" என்றவற்றால் அறிக. வாள் - ஒளியுணர்த்துகையில், உரிச்சொல். தருண நிலவு - இளஞ் சந்திரிகை. (௯௭)

[அருச்சுனன் கர்ணனை 'நாளை வா' என்று விடுதல்.]

அன்றுபோர்புரிசேனையின்பதியானவீரனைநீ
யின்றுபோயினிநாளைவாவெனவினிதியம்பினனால்
வென்றிகூர்வரிவின்மையாலடல்வெவ்வரக்கரைமுன்
கொன்றகாளையையொத்தபேரிசைகொண்டவாண்மையினான்.

(இ - ள்.) அன்று - அப்பொழுது, போர் புரி - யுத்தஞ்செய்த, சேனையின் பதி ஆன-(கௌரவ)சேனைத்தலைவனான, வீரனை-வீரனாகிய கர்ணனை நோக்கி, 'நீ இன்று போய் - நீ இன்றைக்குப் (போர்செய்யாமல் உயிரோடு மீண்டு) போய், இனி - பின்பு, நாளை வா - நாளைக்கு (ப் போர்க்கு) வருவாயாக', என-என்று,இனிது இயம்பினன்-இனிமையாகச் சொன்னான்:(யாவனெனில்,—) வென்றி கூர் - வெற்றிமிகுந்த, வரி - கட்டமைந்த, வின்மையால் - வில்லின் தொழிலால், அடல் வெம் அரக்கரை - வலிமையையுடைய கொடிய இராக்கதரை, முன் - முன்னே [திரேதாயுகத்தில்], கொன்ற—, காளையை - வீரனாகிய ஸ்ரீராமபிரானை, ஒத்த—, பேர் இசை கொண்ட - மிக்க புகழைக் கொண்ட, ஆண்மையினான் - பராக்கிரமசாலியான அருச்சுனன்; (எ - று.)— ஆல் - ஈற்றசை.

இங்குக் கர்ணனை 'வீரன்' என்றது, இகழ்ச்சி. அன்றி, தோல்வியுற்ற அவனை'வீரன்'என்றதனால்,அவனை வென்றவனான அருச்சுனன் மகாவீரனென்பது தானே விளங்குமெனினுமாம். ஸ்ரீராமன்,முதல்நாட்போரிலே போர்க்களத்துத் தன்சேனைமுழுவதும் அழியத் தனியனாய் அகப்பட்ட இராவணனது நிலைமையை நோக்கி மேலும் போர்செய்யாமல் 'இன்றுபோய் நாளை நின் சேனையோடு வா' என்றுகூறி விட்டாற்போல, அருச்சுனனும் தளர்ச்சியுற்ற கர்ணனை நோக்கி 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' என்று இனிதியம்பி உயிரோடுவிட்டதனால், இங்கு இராமனை உவமைகூறினார்; இங்ஙனம் விட்டது, தழிஞ்சி என்னும் புறப்பொருள்துறை: அது,வலியிழந்தவர்மேற் போர்க்குச்செல்லாமல் அவர்க்கு உதவிசெய்து தழுவுவது;"ஆளையாவுனக்கமைந்தன மாருதமறைந்த, பூளையாயின கண்டனை யின்று போய்ப் போர்க்கு, நாளைவாவெனநல்கின னாகிளங்கமுகின், வாளைதாவுறு கோசலநா டுடை வள்ளல்" என்ற கம்பராமாயணச்செய்யுள், இங்கே காணத்தக்கது. 'வின்மையால்' என்பது - 'கொன்ற' என்பதனோடும், 'ஒத்த' என்பதனோடும் இயைதற்கு ஏற்றது. அடல்-கொலைத்தொழிலையுடைய எனினுமாம். பகைவனது சலிப்பைக்கண்டு அச்சமயத்துஅவனைவருத்தாது இனிதுகூறிவிடுத்தது, ஸ்ரீராமபிரானும் அருச்சுனனும் பகைவரிடத்தும் அறநெறி தவறாரென்பதற்கு அறிகுறியாம். (௯௮)

[சாத்தகியும் சல்லியனும் தம்மிற்பொருதல்.]

அல்லியம்புயமனையகண்ணினனனுசனுங்குனிவிற்
சல்லியன்பெயரெனவிளங்கியதானைமன்னவனும்
பல்லியங்கடுவைப்பநீடுபணைப்பகட்டுடனே
வல்லியம்பொருமாறெனப்பொரமாறிலாரொருபால்.

இதுமுதல் ஐந்துகவிகள் - குளகம்.

(இ - ள்.) மாறு இலார் - ஒப்பற்றவராகிய,—அல்லி அம்புயம் அனைய கண்ணினன் அனுசனும் - அகவிதழ்களையுடைய செந்தாமரைமலர் போன்ற திருக்கண்களையுடையவனான கண்ணபிரானது திருத்தம்பியாகிய சாத்தகி

யும்,— குனி வில்-வளைத்த வில்லையுடைய,சல்லியன் பெயர் என விளங்கிய-சல்லியனென்று பேர்விளங்கப்பெற்ற, தானை மன்னவனும் - சேனைகளையுடைய அரசனும்,—பல் இயங்கள் துவைப்ப - பலவகைவாத்தியங்கள் முழங்க,—நீடு பணை பகட்டுடனே-உயர்ந்த பருத்த ஆண்யானையுடனே, வல்லியம் - புலி, பொரும் ஆறு என - போர்செய்யும்விதம்போல, ஒரு பால் - ஒருபக்கத்தில், பொர - போர்செய்ய,—(எ - று.)

அம்புயம் என்னுங் கொடியின்பெயர், அதன்மலர்க்கு முதலாகுபெயர்: இதுபோல்வனவற்றை முதலுக்குஞ் சினைக்கும் பொது வென்பாரு முளர். அநுஜன் - பின் பிறந்தவன்; முன் பிறந்தவன், 'அக்ரஜன்' எனப்படுவன். பகடு-யானை எருமை பசு முதலியவற்றின் ஆண்பெயர். பகடு-சாத்தகிக்கும், வல்லியம் - சல்லியனுக்கும் உவமை. யானையும் புலியும் ஒன்றோடொன்று போர்செய்தால் வெற்றிதோல்வி இன்னதனிடம் நிகழுமென்பது, உறுதியாகச்சொல்லக்கூடியதன்று; அத்தன்மையவற்றை உவமைகூறியதனால், இவ்விருவரும் தம்மிற் சமபலமுடையவ ரென்றவாறும். அதுதோன்றவே, இருவர்க்கும் ஒருங்கே 'மாறிலார்' என்ற அடைமொழி கொடுத்தார். மாறு இலார்-போரிற்பின்வாங்குதலில்லாதவராய் அல்லது போரொழிதலிலராய் என்றலுமாம். 'நீடு பணைப் பகடு' என்பதற்கு - நீண்ட தந்தங்களையுடைய ஆண்யானை யென்று உரைக்கவுந் தகும். நிறம், அழகு,மென்மை, நறுமணம் என்பவற்றிற் சிறத்தலால், அகவிதழை மலர்க்கு அடைமொழியாக அமைத்தல், கவிமரபு. (௩௧)

[சாலுவனும் சேரனும் தம்மிற் பொருதல்.]

மாரனுக்கிளையாமலம்பையைமாதவத்துவிடுந்
தீரனுக்குமொராழிகொண்டுசெலுத்துதேருடைவெஞ்
சூரனுக்கெதிராகிமேனிதுலங்குசேரனெனும்
வீரனுக்குமிகுத்தபேரமர்விளையவேறொருபால்.

(இ - ள்.) மாரனுக்கு-மன்மதனுக்கு, இளையாமல் - தோற்காமல் [வசப்படாமல்], அம்பையை - அம்பையென்பவளை, மா தவத்து விடும் - சிறந்த தவவொழுக்கத்திலே செலுத்திவிட்ட, தீரனுக்கும்-தைரியசாலியான சாலுவனுக்கும்,—ஓர் ஆழி கொண்டு - ஒரு சக்கரத்தால், செலுத்து - செலுத்தப்படுகிற, தேர் உடை - தேரையுடைய, வெம் - வெவ்விய, சூரனுக்கு - சூரியனுக்கு, எதிர் ஆகி-ஒப்பாகி, மேனி துலங்கு-உடம்பு விளங்குகின்ற, சேரன் எனும் வீரனுக்கும்-சேரநாட்டரசனென்கிற சூரனுக்கும்,—வேறு ஒருபால்-மற்றொருபக்கத்தில், மிகுத்த பேர் அமர் - சிறந்த பெரும்போர், விளைய - நடக்க,—(எ - று.)

மாரன் - (பிராணிகளை ஆசைநோயால்) மரணவேதனைப் படுத்துபவன். அம்பை - காசிராசனது பெண்களாகிய அம்பை அம்பாலிகை அம்பிகை என்னும் மூவரில் ஒருத்தி; இவர்கட்குத் தந்தை சுயம்வரங்கோடித்தபொழுது, பீஷ்மன், தன்தம்பியாகிய விசித்திரவீரியனுக்கு மணம்புரிவிக்கவேண்டு மெனக்கருதி அவனுடன் சுயம்வரமண்டபத்துக்குச் சென்று, அங்குக் கையில் மாலையேந்திவந்த அக்கன்னியர் மூவரையும் தன்தேரின் மேல் ஏற்றிக்கொண்டு செல்லுகையில், சுயம்வரத்துக்குவந்திருந்த மற்ற அரசர்யாவரும் சினந்துதிரண்டுவந்து போர்செய்து தோற்றுப்பரிபவப்பட்டுப் பின்னிட, அவர்களுட் சிறிது போரில் முன்னிட்ட சாலுவனிடத்து அம்பை மனத்தைச்செலுத்தி, அதனையறிந்த வீடுமனால் அனுப்பப்பட்டுச் சாலுவனிடஞ் சென்றுசேர, அவன் 'பகைவர் கவர்ந்துபோன உன்னை யான் தொடேன்' என்று மணம்மறுத்துவிட்டதனால், பின்னர் அவள் வீடுமனை மணஞ்செய்தற்பொருட்டுப் பலவாறு முயன்றும் பயன்பெறாதுவனஞ் சென்று தவஞ்செய்து வரம்பெற்று வீடுமனைக் கொல்லுதற்குச் சிகண்டி

யென்னும்அலியாகத் துருபதனிடத்திற்பிறந்தனள் என்பது கதை. ஓராழி-காலரூபமான ஏகசக்கரம். 'ஓர்வாளி கொண்டு செலுத்து தேருடை வெஞ், சூரனுக் கெதிராகி மேனி துளக்கமெய்திய தோள்' என்னும் பாடத்துக்கு-மன்மதனுக்குத் தோற்காமல் அம்பையைப் பெருந்தவத்திற் செலுத்திய ஜிதேந்திரியனான வீடுமனுக்கும் ஓர்அம்பைக்கொண்டுசெலுத்திய [வீடுமனை வலியழித்த] சூரனாகிய அருச்சுனனுக்கும் அவனுக்குஎதிரிற் சென்று உடம்புநடுக்கமடைந்த தோள்வலிமையுடைய கர்ணனுக்கும் (மீண்டும்) பெரும் போர்விளைய எனப் பொருள்கொள்க; பஞ்சபாணனான மன்மதனையும் வென்ற வீடுமனை ஓர் அம்பினால் வெற்றிகொண்ட ரதாதிபதியான சூரனென விசயனது விசேஷஜயத்தை விளக்கியவாறு: தீரனுக்கும்,உம்-உயர்வுசிறப்பு. விடும்என்பதில், 'உம்'விகுதி - காலமுணர்த்தாது தன்மைகுறித்தது. (௪௦)

[பாண்டியனும் சகுனியும் தம்மிற் பொருதல்.]

முழுதுணர்ந்தருண்முனிவரன்புகன்மும்மைவண்டமிழும்
பழுதறும்படிதெளிஞரேறியபலகையொன்றுடையான்
வழுதியுந்தனிமதிநெடுங்குடைமன்னன்மாதுலனும்
பொழுதுசென்றிடுமளவும்வெஞ்சமர்புரியவேறொருபால்.

(இ - ள்.) முழுது உணர்ந்தருள் - எல்லாவற்றையும் அறிந்தருளிய, முனி வரன் - முனிவர்களிற் சிறந்தவனான அகத்தியமாமுனிவன், புகல் - எடுத்துச்சொன்ன, மும்மை வள் தமிழும்-(இயல் இசை நாடகம் என்னும்) மூன்றுவகைச் சிறந்த தமிழையும், பழுது அறும்படி - குற்றமில்லாமல், தெளிஞர் - அறிந்தவர்களான தெய்வப்புலவர்கள், ஏறிய - ஏறிவீற்றிருத்தற்குஇடமான, பலகை ஒன்று உடையான் - ஒப்பற்ற சங்கப்பலகையை யுடையவனாகிய, வழுதியும் - பாண்டியராசனும்,—தனி மதி நெடுங் குடை- ஒப்பற்ற பூர்ணசந்திரன்போன்ற பெரிய குடையையுடைய, மன்னன்-துரியோதனராசனது, மாதுலனும் - மாமனாகிய சகுனியும்,—பொழுது சென்றிடும் அளவும் - பகற்பொழுது கழியுமட்டும், வேறு ஒருபால்-மற்றொருபக்கத்தில், வெம் சமர் - கொடிய யுத்தத்தை, புரிய - செய்ய,—(எ - று.)

முனிவரன் - ருஷிசிரேஷ்டன்: வடமொழித்தொடர். அகஸ்தியமகா முனிவர்,ஸர்வஜ்ஞனெனப்படுகிற சிவபிரானோடு ஒத்த சிறப்புடையவராதலால், 'முழுதுணர்ந்தருள் முனிவரன்'எனப்பட்டனர். புகல் - இலக்கணங் கூறப்பெற்ற என்றபடி. "இருமை வகை தெரிந்து" என்ற திருக்குறளில் 'இருமை'என்பதுபோல, மும்மை என்பது - இங்கு, மூன்றின்தன்மை யென்னும் பொருளையுணர்த்தாமல் மூன்றென்னும்பொருளையே உணர்த்திற்று; இதனை, குணியைக் குணமாகக்கூறுவதோர் மரபுவழுவமைதி யென்பர் நன்னூல்விருத்தியுரையாசிரியர். த்ரவிடம் என்னும் வடமொழி, தமிழெனத் திரிந்தது; இனி, தனிமைப்பொருள்குறித்த தமியென்னும் வினைப்பகுதி யடியாப் பிறந்து வினைமுதற்பொருளுணர்த்தும்விகுதி குன்றி ழகரவொற்றெழுத்துப்பேறு பெற்றுத் தனக்குஇணையில்லாதபாஷை யெனப் பொருள் தருவதென்பாரும், இனிமையுணர்த்தும் தமிழ்என்னுஞ்சொல் எல்லாப் பாஷைகளினும்இனியதாகிய இப்பாஷைக்கு ஆகுபெயராய் வழங்கியதென்பாரும், வேறுபாஷைகளிலில்லாமல் தன்னிடத்தில்மாத்திரமே தனியாக வுள்ள ழகரமென்னும்எழுத்தையுடையதென அன்மொழித்தொகைக்காரணக்குறியென்பாரு முளர். பரமசிவன் தானே அகத்தியனார்க்கு அருளியதாதலாலும், சிறந்ததொண்டர்கள் கடவுளைத் துதித்தது பெரும்பாலும் இந்தப்பாஷையாலே யாதலாலும், வடமொழியோ டொப்புமை இந்தப் பாஷைக்கேயன்றிப் பிறபாஷைகட்கு இன்மையாலும், 'வண்டமிழ்' எனப்பட்டது. தமிழுக்கு வண்மை - வேண்டிய சொற்பொருட்கருத்துக்

கலையெல்லாம் குறைவறத் தன்னிடத்துக் கொண்டிருத்தலோடு, வேறுசில பாஷைகள் தன்னினின்று உற்பத்தியாதற்கு இடமாயிருத்த லென்றுங் கொள்ளலாம். உம்மை - முற்றுப்பொருளது. தெளிஞர், ஞ் - பெயரிடைநிலை.

பூர்வத்தில் மகாமுனிவர்க ளெல்லாருஞ் சேர்ந்து ஸம்ஸ்கிருதபாஷையை அபிவிருத்திசெய்து காசியில் வடமொழிசசங்கமொன்று ஏற்படுத்த, அச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய அகத்தியனார் மற்றைப்புலவர்களோடு பலகாலுந் தருக்கஞ்செய்துவந்து ஒருநாள் அவர்களோடு மாறுகொண்டு அவர்களிறுமாப்பை அடக்குதற்பொருட்டுச் சிவபெருமானிடஞ்சென்று தம்கருத்தை வெளியிட்டுச் சற்றுநேரம் பேசிக்கொண்டிருக்கையில், தாம் நின்ற மண்டபமுழுவதுந் திவ்வியபரிமளமொன்று வீச, அகத்தியர் பரமசிவனைநோக்கி 'ஸ்வாமீ! இவ்வாசனை ஏது?' என வினவ, பரமசிவன் அவரை அம்மண்டபத்தின் ஓர்மூலைக்கு அழைத்துக்கொண்டுபோய்க் குவியலாய்ப் போட்டிருந்த சில ஏட்டுப்பிரதிகளைக் காட்டவே, அவற்றைக் கண்டமாத்திரத்தில் அகத்தியர் மதுரமென்று அருத்தங்கொள்ளும் 'தமிழ் தமிழ்' என்னும்இன்பமானபெயரைச் சொல்ல,உடனே பரமசிவன்,'அந்தப்பாஷைக்கு ஆதாரவிதிகள் இவ்வேட்டுப்பிரதிகளிலுள்ளன' என்று எடுத்துக்கொடுத்து உபதேசிக்க, தக்ஷணமே தக்ஷிணத்திலுள்ள பொதியமலைக்கு வந்து தனிவாசஞ்செய்து அவ்விதிகளைக்கொண்டு 'பேரகத்தியம்', 'சிற்றகத்தியம்' என்னும் இலக்கணநூல்களை இயற்றி, அவற்றைத் தம் முதல்மாணாக்கராகிய தொல்காப்பியர் முதலிய பன்னிருவர்க்குங் கற்பித்தருளி மூவகைத்தமிழையுந் தழைத்தோங்கிப் பரவச்செய்ததனால், 'முனிவரன்புகல் தமிழ்' எனப்பட்டது; இதற்கு வரலாறு சிறிதுவேறுபடக்கூறுதலும் உண்டு. பாணினிபகவான் வடமொழிக்கு இலக்கணநூல் இயற்றியதுபோல அகத்தியர் தமிழுக்கு இலக்கணநூல்இயற்றினரேயன்றிப் பாஷையைஉண்டாக்கினாரில்லையென்றும், வடமொழிபோலத் தென்மொழியும் அநாதி யென்றும் அறிக.

பழுது - ஐயந் திரிபுகள். பலகை - இரண்டுசாணளவிற்குச் சதுரமாயிருக்கின்றதொரு சிறுபலகையாயிருந்து, சரசுவதியம்சமாயுள்ள மெய்ப்புலவர் எத்தனைபேர் வந்தாலும் ஒவ்வொருமுழமாக வளர்ந்து அவர்க்கு ஏற இடங்கொடுக்கும் பீடம்; இப்பலகை - மற்றைப்புலவர்கட்குந் தமக்குங் கல்வித்திறத்திலுள்ள வேறுபாட்டை வெளியிடத்தக்க கருவியொன்றைத் தந்தருளவேண்டுமென வேண்டிய சங்கப்புலவர்களின்பொருட்டாகத் தென்மதுரைச் சோமசுந்தரக்கடவுளாற்கொடுத்தருளப்பட்டது. குடைக்கு மதி உவமை - வட்டவடிவாலும், வெண்மையாலும், ஒளியாலும், குளிர்ச்சியைத்தருதலாலு மென்க. தனிக்குடை-ஒற்றைவெண்கொற்றக்குடை. 'பனிமதி' என்றும் பாடம். பாண்டியன் - அருச்சுனனுக்கு மகளைக்கொடுத்த சித்திரவாகனன். (௪௧)

[துச்சாசனனும் சகதேவனும் தம்மிற்போருதல்.]

குரவர்சொற்கண் மறுத்துவன்பொடுகொண்டபாருடையா
னரவுயர்த்தவனுக்கனந்தரமானதம்பியுடன்
கரவுசற்றுமிலாதசிந்தையன்வாயுவேககதிப்
புரவிவித்தகனிளவல்சென்றமர்புரியவேயொருபால்.

(இ - ள்.) குரவர் - பெரியோர்களுடைய, சொற்கள் - நல்வார்த்தைகளை, மறுத்து - (கேட்டு நடவாமல்) விலக்கி, வன்பொடு - பலாத்காரமாக, கொண்ட - (பாண்டவரிடத்தினின்று) பறித்துக்கொண்ட, பார் உடையான் - பூமியையுடையவனாகிய, அரவு உயர்த்தவனுக்கு - பாம்பைக் கொடியில் உயரவெடுத்தவனான துரியோதனனுக்கு, அனந்தரம் ஆன தம்பியுடன் - பின்னேபிறந்த [அடுத்த தம்பியாகிய] துச்சாசனனுடனே,—கரவு சற்றும்

இலாத சிந்தையன் - கபடம் சிறிதும் இல்லாத நல்மனமுடையவனாகிய, வாயு வேக கதி புரவி வித்தகன் இளவல் - காற்றின் வேகம்போல விரைந்த நடையையுடைய குதிரைகளைப் பயிற்றுந் தொழிலில் வல்லவனாகிய நகுலனது தம்பியான சகதேவன்,—வேறு ஒரு பால் - மற்றொருபுறத்தில், சென்று - போய், அமர் புரிய - போர்செய்ய,—(எ - று.)

குரவர்-குருஎன்பதன்பன்மையாகிய குரவ: என்னும் வடமொழியின் திரிபு. இங்கு 'குரவர்' என்றது - உலூகமுனிவன், பீஷ்மன், துரோணன், கிருபன், விதுரன், கண்ணன் முதலியோரை. அநந்தரம் - வடசொல். (௩௪)

[அசுவத்தாமனும் வீமனும் தம்மிற்போர்தொடங்கல்.]

வேரியம்புயன்வேதம்யாவையும்வில்லின்வேதமும்வல்
லாரியன்றருகடவுண்மைந்தனுமனிலன்மைந்தனுமே
தூரியம்பலகோடிகோடிதுவைப்பவெஞ்சமரே
காரியம்பிறிதில்லையென்றுகலந்துமோதினரே.

(இ - ள்.) வேரி அம்புயன் - வாசனையையுடைய (திருமாலின் திருநாபித்)தாமரைமலரில் தோன்றியவனான பிரமதேவனால் வெளியிடப்பட்ட, வேதம் யாவையும்-(இருக்கு முதலிய)வேதங்களெல்லாவற்றையும், வில்லின் வேதமும் - தநுர்வேதத்தையும், வல் - வல்ல, ஆரியன் - துரோணாசாரியனால், தரு - வளர்க்கப்பட்ட, கடவுள் மைந்தனும் - பரமசிவனது குமாரனான அசுவத்தாமனும்,—அனிலன் மைந்தனும் - வாயுகுமாரனான வீமனும்,—தூரியம் பல கோடி கோடி - அநேககோடிக்கணக்கான வாத்தியங்கள், துவைப்ப - ஒலிக்க,—'வெம் சமரே காரியம் - கொடிய போரே செய் தொழில்: பிறிது இல்லை - வேறொருதொழி லில்லை', என்று-என்றுஎண்ணி, கலந்து மோதினர் - கைகலந்து போர்செய்தார்கள்; (எ - று.)

இனி, வேரியம்புயன் என்பதற்கு - வாசனையையுடைய தாமரைமலர் மாலையையுடையவன் என்றுவது, தாமரைமணிமாலையை யுடையவன் என்றுவது உரைத்து, ஆரியன் என்பதனோடு கூட்டலுமாம். வில்லின்வேதமாவது வில்முதலிய ஆயுதங்களிற் பயிலும் வகைகளையும், சத்துருவை வெல்லுதற்குரிய மந்திரம்முதலிய பிரயோகங்களையும் அறிவிக்கிற ஆயுதசாஸ்திரம். கோடி - நூறுலக்ஷம்; மிகப்பலவாகிய எண்ணிற்கு ஒன்று எடுத்துக்காட்டிய வாறு. கோடிகோடி - அடுக்கு, மிகுதிபற்றியது. சமரே, ஏ - பிரிநிலை. ஆரியன் - உயர்குலத்தில் தோன்றியவன். ஆர்யம் - வடசொல். (௩௫)

[அசுவத்தாமன் வீமனைத் தோற்பித்தல்.]

சுரருலோகமகிழ்ந்தணைந்ததுரோணன்மாமகன்மேல்
வருசதாகதிமகனைநாலிருவாளியேவிவெகுண்
டிரதநேமிகுலைந்துசூதனொடிவுளிநாலும்விழப்
பொருதுசீறினன்முற்பயந்தபுராரியேயனையான்.

(இ - ள்.) முன் பயந்த - முன்னே (தன்னைப்)பெற்ற, புராரியே-திரிபுரசங்காரஞ்செய்த பரமசிவனையே, அனையான் - ஒத்தவனாகிய, சுரர் உலோகம் மகிழ்ந்து அணைந்த துரோணன் மா மகன் - (கீழ்ப் பதினைந்தாம் போரில் இறந்து) தேவலோகத்தை மகிழ்ச்சியோடு அடைந்த துரோணனது சிறந்த குமாரனாகிய அசுவத்தாமன்,—மேல் வரு - தன்மேல் எதிர்த்துவருகிற, சதாகதி மகனை - வாயுகுமாரனான வீமனை (ப் பார்த்து), வெகுண்டு - கோபித்து, நால் இரு வாளி ஏவி - எட்டுப் பாணங்களைப் பிரயோகித்து,—இரதம் நேமி குலைந்து-(அவனது) தேர்ச்சக்கரங்கள் அழிந்து, சூதனொடு - பாகனும், இவுளி நாலும்-நான்கு குதிரைகளும், விழ-விழும்படி, பொருது-போர்செய்து, சீறினன்-கர்ச்சித்தான்[அல்லது அச்சமுறுத்தினன்]; (எ-று.)

உலோகம் - வடமொழிவிகாரம். சிவபெருமானருளால் தோன்றினவ னாதலாலும், "பிதுஸ்ஸதகுணம்புத்ரஃ" என்கிற நியாயமாய்த் தந்தையினும் பலமடங்கு கல்வி கேள்வி அஸ்திர சஸ்திர சாஸ்திரப் பயிற்சி முதலியவற் றிற் சிறந்தவ னாதலாலும், 'மாமகன்' எனப்பட்டான்; இனி, அசுவத்தாம னென்னும் பெயர்பற்றி, 'மாமகன்' என்றுருமாம்: மா-குதிரை. நாலிரு - நாலாகிய இரண்டு எனப் பண்புத்தொகை; நாலும்இரண்டும் என உம்மைத் தொகையாய், ஆறுபாணமென்றுமாம்: இனி, கணக்கைக்குறித்ததாக் கொ ள்ளாமல், நாலு இரண்டு (வாளி) - நாலு அல்லது இரண்டு [சில] பாணம் என அற்பத்திலே கருத்தாகவுமாம். சூதன்-ஸூதன்; வடசொல். புர அரி - புரத்துக்குப் பகைவன்; வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி: புரம் - பட்டணம். (௪௪)

[வீமன் அசுவத்தாமனை வெல்லுதல்.]

மீளமற்றொருதேரிலேறியவீமன்வெஞ்சினமேன்
மூளமற்புயகிரிதடித்திடமூரிவில்வளையா
வாளமொப்பெனமற்றவன்கொடிவாசிபாகொடுதேர்
தூளமுற்றிடமுதுகிடும்படிதொட்டனன்கணையே.

(இ - ள்.) மீள - பின்பு, மற்று ஒரு தேரில் ஏறிய—, வீமன்—,—வெம் சினம்-கடுங்கோபம், மேல் மூள-மேல்மேல் உண்டாக,—மல் புய கிரி - மற் போரில்வல்ல மலைகள்போன்ற தோள்கள், தடித்திட-(கோபாவேசத்தாற்) புடைபருக்க,—மூரி வில் - வலிமையையுடைய [அல்லது பெரிய] வில்லை, வாளம் ஒப்பு என-சக்கரவாளகிரி உவமை யென்னும்படி, வளையா - (வட்ட மாக)நன்கு வளைத்து,—அவன்-அந்த அசுவத்தாமனது, கொடி - துவசமும், வாசி - குதிரைகளும், பாகொடு - சாரதியும், தேர்-தேரும், தூளம் உற்றிட- பொடியாய்விடவும், முதுகு இடும்படி - (அவன்)புறங்கொடுத்துப்போம்படி யாகவும், கணை - அம்புகளை, தொட்டனன் - தொடுத்தான்; (எ - று.)

வாளம்-ஏழுதீவுகளையுஞ்சூழ்ந்த எழுகடல்கட்கும் அப்புறத்தில் வட்ட வடிவாகச் சுற்றியிருப்ப தொரு மலை. முதலடியில், மற்று-பிறிதென்னும்பொ ருளது. மூன்றாமடியில், மற்று - அசை. மற்றவன் - எதிரி எனினுமாம். (௪௫)

[கைகயனும் சுருதகீர்த்தியும் பொருதலும், கிருதவர்மாவோடு பொருது சிகண்டி தோற்றலும்.]

கருதிவாய்த்ததுபோரெனுமெய்களித்தகைகயனுஞ்
சுருதகீர்த்தியுமுடன்மலைந்துதொடங்கினரொருபாற்
கிருதபார்த்திவனுடன்மலைந்துசிகண்டிகெட்டனன்மா
விரதமேற்கொடியாடைவீழ்தரவேகினனொருபால்.

(இ - ள்.) 'போர்-(சிறந்த)யுத்தம், வாய்த்தது-நேர்ந்தது', எனு-என்று, கருதி-எண்ணி, மெய் களித்த-மனங்களிக்கப்பெற்ற, கைகயனும் - கேகய நாட்டரசனும், சுருதகீர்த்தியும்-சுருதகீர்த்தியென்பவனும், உடன் மலைந்து- ஒருவரோடொருவர் எதிர்த்து, ஒரு பால் - ஒருபக்கத்தில், தொடங்கினர் - போர்தொடங்கினார்கள்; சிகண்டி—, ஒருபால் - மற்றொருபக்கத்தில், கிருத பார்த்திவனுடன் - கிருதவர்மாவென்னும் அரசனோடு, மலைந்து - போர் செய்து,—மா இரதம் மேல் - பெரிய தேரின்மேற் கட்டப்பட்டுள்ள, கொடி ஆடை - கொடிச்சீலை, வீழ்தர - அறுபட்டுக்கீழேவிழும்படி, கெட்டனன் - தோற்று, ஏகினன் - போனான்; (எ - று.)

போர்எங்கேயெங்கேயென்று தினவெடுக்குந் தோளுடைய மகாவீரனா தலால், வாய்த்ததுபோரென்று களித்தான்; "போரெனிற் புகலும் புனை கழன் மறவர்" என்றார் பிறரும்: "போரின்றி வாடும் பொருநர்சீர்" என்ப துங் காண்க. 'கருதிவாய்த்ததுபோரெனுமெய்களித்த' என்ற அடைமொழி

யைச் சுருதகீர்த்திக்கும் இயைக்க. கைகயன்பெயர்-விந்தன்; இவன், கௌரவர்பக்கத்தான். ஶ்ருதகீர்த்தியென்பதற்கு பிரசித்தமான கீர்த்தியையுடையவன் என்று பொருள்; இவன், அருச்சுனனுக்குத் துரௌபதியிடம் பிறந்தவன். மெய் - இலக்கணையால், மனத்தை உணர்த்திற்று. களிப்பினால் உடல்பூரித்த என்றுகொள்ளவுமாம். கொடியாடை - த்வஜபடம். (௬௬)

[திட்டத்துய்மன் கிருபனையெதிர்த்துத் தோற்றல்.]

தருமபூபதிசேனையின்பதிசாபவாசிரியன்
கிருபனோடுமலைந்துவெஞ்சமர்கெட்டுநீடிரதம்
புரவிபாகுதரித்ததிண்சிலைபொன்றவன்றுயிரோ
டரிதுபோயினன்வேள்வியாகுதியங்கிவாய்வருவோன்.

(இ - ள்.) ஆகுதி - நெய்ம்முதலியவற்றைவிட்டு ஓமஞ்செய்யப்பட்ட, வேள்வி அங்கிவாய்-யாகத்தீயினிடத்தில், வருவோன் - தோன்றினவனாகிய, தருமபூபதி சேனையின் பதி - தருமராசனது சேனைக்குத் தலைவனான திட்டத்துய்மன்,—சாபஆசிரியன் - (கௌரவபாண்டவர்க்கு முதல்)வில்லாசிரியனான, கிருபனோடு கிருபாசாரியனுடனே, வெம் சமர் மலைந்து - கொடிய போரைச் செய்து,—நீடு இரதம் - உயர்ந்த தேரும், புரவி - குதிரைகளும், பாகு-சாரதியும், தரித்த திண் சிலை-பிடித்த வலிய வில்லும், பொன்ற-அழியும்படி, கெட்டு-தோற்று,—அன்று-அப்பொழுது, உயிரோடு அரிது போயினன் - அருமையாகத்தப்பிப் (பிழைத்து) உயிருடன் போனான்; (எ - று.)

ஆஹுதி - வடசொல். வந்தவனை 'வருவோன்' என்றது, இயல்புபற்றிய காலவழுவமைதி; [நன் - பொது - ௩௩:] இனி, வகர இடைநிலை எதிர்காலமுணர்த்தாமல் தன்மை யுணர்த்திற்று எனினும் அமையும். (௬௭)

[கவிக்கூற்று: படுகளச்சிறப்பின் கூறற்கருமை.]

திங்க ளைத்தலை யாக மன்னவர் செப்பு மாமரபோர்
தங்க ளிற்பகை யாகி வானவர் தான வர்கெதிரா
யெங்க ளுக்கெழு பார டங்கலு மென்று போர்புரியும்
வெங்க ளத்தி னியற்கை யெங்ஙன்வி யந்து கூறுவதே.

(இ - ள்.) திங்களை - சந்திரனை, தலை ஆக - ஆதிபுருஷனாக, மன்னவர் - அரசர்களெல்லாரும், செப்பு - சொல்லுகின்ற, மா மரபோர் - சிறந்த குலத்தில் தோன்றியவர்களான பாண்டவரும் துரியோதனாதியரும், தங்களில் பகை ஆகி - தமக்குள் [ஒருவர்க்கொருவர்] பகைவராகி, வானவர் தானவர்க்கு எதிர் ஆய் - தேவ அசுரர்கட்குச் சமானமாய், 'எழு பார் அடங்கலும் - ஏழுதீவுகளாயுள்ள இப்பூமிமுழுதும், எங்களுக்கு - எங்களுக்கே உரியது,' என்று - என்று தனித்தனி சொல்லிக்கொண்டு, போர் புரியும் - போர்செய்கிற, வெம் களத்தின் - கொடிய யுத்தகளத்தினது, இயற்கை - இயல்பை, வியந்து கூறுவது - புகழ்ந்துசொல்வது, எங்ஙன் - எவ்வாறு? (எ - று.)—அப்போர்க்களத்தின் இயல்பை வருணித்துச்சொல்லுதல் எம்போலியர்க்கு அரியது என்றபடி; ஆயினும் ஒருவாறுசொல்வேனென அவையடக்கங்கூறுமுகத்தால் தோற்றுவாய் செய்தவாறும்.

செப்பு - தெலுங்கில் வழங்குந் திசைச்சொல். பகை-பகைவர்க்கு ஆகுபெயர். வானவர் - தேவாம்சமான பாண்டவர்க்கும், தானவர் - அசுராம்சமான கௌரவர்க்கும் உவமை. எழு பார் - ஜம்பூ, பிலக்ஷம், குசம், கிரௌஞ்சம், சாகம், சால்மலி, புஷ்கரம் என்பன; பண்புத்தொகை. (௬௮)

வேறு.

[இதுமுதற் பதினைந்து கவிகள் - படுகளச்சிறப்பு.]

இற்றகை கால்செறி களமுழு துங்கழு கிட்டன காவணமே
யுற்றது கொள்ளல கைக்குலம் வெங்கள முறைபெறு காவணமே

வெற்றுடல் மன்னர்ச ரிந்தகு டைக்கண்வி ரிந்தன சாமரமே
கொற்றமி கும்பறை யோசைய ழிந்துகு லைந்தன சாமரமே.

(இ - ள்.) இற்ற - அறுபட்ட, கை கால் - கைகளுங் கால்களும், செறி-
திரம்ப விழுந்துகிடக்கப்பெற்ற, களம் முழுதும் - போர்க்களம் முழுவதி
லும், கழுகு - (அவற்றைத் தின்னவந்த) கழுகு என்னும் பறவைகள், (மே
லேஇடைவிடாமல்நெருங்கிப்பரவி), காவணம் இட்டன - பந்தல் போகட்
டன ;—கொள் - (அக்கைகால்களைத் தின்ன) எடுத்துக்கொள்ளுகிற, அல
கை குலம் - பேய்க்கூட்டமானது, உரை பெருகா வணம் - சொல்லுக்கு
அடங்காதபடி, வெம் களம் - பயங்கரமான அப்போர்க்களத்தை, உற்றது -
அடைந்தது ;—வெறு உடல் மன்னர் - வெறுமையாகிய [அதாவது உயிர்
நீங்கிய] உடம்பாய்க்கிடக்கிற அரசரது, சரிந்த குடைக்கண் - முறிந்துகீழ்
விழுந்த குடைகளிலே, சாமரம் - சாமரங்கள், விரிந்தன - பரவலாக
விழுந்து கிடந்தன ;—கொற்றம் மிகும் - வெற்றிமிகுதிக்கு அறிகுறியான,
பறை - பேரிகைகள், ஓசை அழிந்து குலைந்தன - (தோலும் வாரும் இற்றத
னால்) ஒலியிழந்து அழிந்தவை, சா மரமே-பட்ட மரம்மாத்திரமாய்நின்றன.

உரை பெருகா வண்ணம் - சொல் அதிகப்படாதபடி; சொல்லினும்
பொருள் மிகும்படி என்றவாறு; வணம் - விகாரம். வெற்றுடல் - வெறுமை
யின் ஈறுபோய்த் தன்னொற்று இரட்டியது. குடைக்கண், கண் - ஏழனுருபு.
சாமரம் - சமரமென்னும் மானின் சம்பந்தமானது: வடமொழித்தத்திதாந்த
நாமம். சா மரம் - வினைத்தொகை; சாகும் மரம் என்பது செய்யுமெனெச்
சத்து ஈற்றுயிர்மெய்கெட்டு மவ்வீறொற்றழிந்து நின்றதெனினும் அமையும்.
இனி, இரண்டாம்அடிக்கு, அலகைக்குலம் - பேய்க்கூட்டம், உற்று-வந்து,
அது கொள் - அவ்வுறுப்பைக் கொள்ளுகிற, வெம் களம் - கொடிய போர்க்
களம், (பேரிரைச்சலால்), உரை பெருகு ஆவணம் - ஆரவாரம்மிக்க கடைத்
தெருவையே போன்றது என்றும் [ஆபணம் - வடசொல்], நான்காம்அடிக்
கு, சாமரம் - போர்க்களத்தில் [ஸமரமென்பதன்விகாரம்], கொற்றம்மிகும்
பறைகள் ஓசையழிந்துகுலைந்தன வென்றும் உரைக்கலாம். ஏ - ஈற்றசை.

இதுமுதற் பதினைந்து கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று
கூவிளங்காய்ச்சீரும்,மற்றைஐந்தும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடிநான்கு
கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள்.

இவற்றில் இவ்விரண்டடிகளுள் ஈற்றில் எழுத்துக்கள் தனித்தனிஒத்து
வந்தது. மடக்கு என்னுஞ் சொல்லணி; வடநூலார் யமகமென்பர். (௬௧)

மின்புயல்வாய்விரிகின்றனவொத்தனவிரிநுதலோடைகளே
யென்புறவீறிவிழுங்கடதாரையினேயினவோடைகளே
முன்புடைவாலதிசெற்றதுவெம்புகர்முகமுழுகுஞ்சரமே
வன்புடைமால்வரைமறிவனபோலமறிந்தனகுஞ்சரமே.

(இ - ள்.) விரி நுதல் - (யானைகளின்) விசாலமான நெற்றியிலே (கட்
டப்பட்டுள்ள), ஓடைகள் - பட்டங்களானவை, புயல் வாய் விரிகின்றன -
மேகம் வாய்திறந்த வெளிவிடுவனவாகிய, மின் - மின்னலை, ஒத்தன -
ஒத்துவிளங்கின ;—என்பு - எலும்பினின்றும், உற வீறி விழும் - மிகவும்
அதிகமாய்ப் பெருகுகிற, கட தாரையின் - (யானைகளின்) மதசலப்பெருக்
கினால், ஓடைகள் இன - நீரோடைகள் உண்டாயின ;—முன் புடை -
முன்பக்கத்தில், வெம் புகர் முகம் - வெவ்விய புள்ளிகளையுடைய (அவ்
யானைகளின்) முகத்தில், முழுகும் - தைக்கின்ற, சரம் - அம்பானது, (ஊடு
ருவிச்சென்று), வாலதி - வாலை. செற்றது - துணித்தது ;—வன்பு உடை -
வலிமையையுடைய, மால் வரை - பெரிய மலைகள், மறிவன போல - விழுந்து
கிடப்பனவபோல, குஞ்சரம்-யானைகள்,மறிந்தன-இறந்துவீழ்ந்துகிடந்தன.

புயல் - யானைக்கும், மின் - அதன் பட்டத்துக்கும் உவமை. முன்பு உடை எனப் பிரித்து - வலிமையையுடைய, வாலதி யென்றுமாம். 'இன் புறவீறிவிழும்' என்றும் பாடம். பார்வைக்கு வாயைத்திறந்துவிடுவதுபோலக் காணப்படுதலால், 'மின் புயல் வாய்விரிகின்றன' என்றார்; "கருங் கொண்மூ வாய்திறந்த மின்னுப்போல்" என்றார் நாலடியாரிலும். இனி, வாய் - ஏழனுருபு எனக்கொண்டு, புயல்வாய் விரிகின்றன - மேகத்தில் வெளிப்பட்டுவிளங்குவனவான என்றலும் ஒன்று. (௬௦)

பட்டமணிந்தநுதற்கிடையேவிழுதும்பிகள்பட்டனவே
தொட்டியுடன்பொருசமர்முனைசீறியதும்பிகள்பட்டனவே
வெட்டியுறன்புதல்வன்றன்வருதினிவென்றுகளித்தனவே
யிட்டகுமண்டையபேய்பிணமிக்கனவென்றுகளித்தனவே.

(இ - ள்.) பட்டம் அணிந்த - பட்டத்தைத் தரித்த, நுதற்கு இடையே - (யானைகளின்) நெற்றியின் நடுவிலே, விழு - (மதநீரையுண்ணுதற்கு வந்து) விழுந்துமொய்க்கின்ற, தும்பிகள் - வண்டுகள், பட்டன - அகப்பட்டன;—பொரு சமர் முனை - போர்செய்கிற யுத்தகளத்தில், சீறிய - கோபித்துநின்ற, தும்பிகள் - யானைகள், தொட்டியுடன் - அம்பாரியுடனே, பட்டன - இறந்துவிழுந்தன;—அறன் புதல்வன்தன் - தருமபுத்திரனது, வருதினி - சேனைகள், வெட்டி - (பகைவர்சேனைகளைத்) துணித்து, வென்று - சயங்கொண்டு, களித்தன - (மகிழ்ச்சியாற்) களிப்படைந்தன;—பேய்-பேய்கள், இட்ட குமண்டைய - (வயிறு நிறைதலால்) தெவிட்டுதல்பொருந்தினவாகி, பிணம் மிக்கன என்று - பிணங்கள் மிகுந்தன வென்று (மகிழ்ந்து), உகளித்தன - குதித்தன; (எ - று.)

முதலடியில், தும்பி கள் பட்டன எனப் பிரித்து, நெற்றியிடையே விழுந்த வண்டுகள் (அங்குத்தரித்த மாலைகளின்) மதுவில் அகப்பட்டன வெனினுமாம். தொட்டியென்பதைத் தோட்டி யென்பதன் குறுக்க லெனக்கொண்டால், அங்குசமெனப் பொருள்படும். இட்டகுமண்டைய = குமண்டையிட்டன: குமண்டையிடுதல் - உண்டது அதிகமாகித் தெவிட்டல்; குமட்டலென வழங்குதலுங் காண்க. (௬௧)

பழுதறவீழ்படைமன்னவர்பேருடல்பற்பலவம்பினவே
பொழிகுருதிப்புனன்மூழ்கினர்மேனிபுலாலினவம்பினவே
தழல்விழிவாரணவீரர்முடித்தலைதடிவனசக்கரமே
யழலுமிழ்வாள்கள்சுழற்றினமீளவுமாவனசக்கரமே.

(இ - ள்.) பழுது அற - பழிப்பில்லாதபடி, வீழ் - (போரில் இறந்து) கீழே விழுந்துகிடக்கிற, படை மன்னவர் - ஆயுதங்களையுடைய அரசர்களது, பேர் உடல் - பெரிய உடம்புகள், பல் பல அம்பின - மிகப்பல அம்புகளையுடையன [மிகுதியாக அம்புகள்தைக்கப்பெற்றன என்றபடி];—பொழி - பெருகுகின்ற, குருதி புனல் - இரத்தவெள்ளத்தில், மூழ்கினர் - முழுகிக்கிடக்கின்றவரது, மேனி - உடம்புகள், புலாலின வம்பின - புலால்நாற்றமுடையன;—சக்கரம் - சக்கராயுதங்கள், தழல் விழி - (கோபமிகுதியால்) தீப்பொறியைச் சிந்துகிற கண்களையுடைய, வாரணம் வீரர் - யானைமேல் வந்த வீரர்களுடைய, முடி தலை - கிரீடந்தரித்த தலைகளை, தடிவன - அறுப்பன;—வன சக்கரம் - (அவ்வீரர்களுடைய) தாமரைமலர்போலுங் கைகள், மீளவும் - தலையற்ற பின்பும், அழல் உமிழ் வாள்கள் - நெருப்புப்பொறியைச் சிந்துகிற வாள்களை, சுழற்றின—; ஆ - ஆச்சரியம்! (எ - று.)

போர்க்குவந்த வீரர்க்குப் புறங்கொடுத்தோடுதல் பழிப்பே யன்றிப் படைக்கலங்களாற் புண்பட்டு இறத்தல் பழிப்பன்றாதலால், 'பழுதறவீழ் மன்னவர்' என்றார். 'படைமன்னவர்' என்றது - இறந்தபின்பும் ஆயுதம்

பிடித்த பிடியை நழுவவிடாத அவர்களுறுதியை விளக்கிற்று. புலாலின - புலால் என்னும் பெயரடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; இன் - சாரியை: இது, வம்பு என்னும் பெயரைக் கொண்டது. புலாலின வம்பு - ஊனின் சம்பந்தமான துர்க்கந்தம். 'தழல்விழி' என்பது - வாரணத்துக்கும் வீரர்க்கும் அடைமொழியாகத்தக்கது. ஆ - ஹா என்னும் வடசொல்லின் விகாரம்; வியப்பிடைச்சொல். வனசம் - வந ஜம்; நீரிற் பிறப்பது: வநம்-நீர். 'வாளிகள் சுற்றின' என்றும் பாடம். விரைந்து தொழில்செய்பவரது உடம்பு தலைதுணிபட்டபின்பும் சிறிதுபொழுது முன்தொடங்கியதொழிலைத்தொடர்ச்சியாற்செய்தல், இயல்பு. (௩௨)

முழுகியவாளிகள்குழுமியவீரர்முகத்தனவெண்ணிலவே
விழிவழிதீயெழமுறுவல்பரப்பவிரித்தனவெண்ணிலவே
யுழைமழைவீழ்வனபலபடையெங்குமுமிழ்ந்தனவெவ்வெயிலே
யழிவில்வரூதினிசூழ்வெயிலுக்கெதிராவனவெவ்வெயிலே.

(இ - ள்.) குழுமிய - கூட்டமாகத் திரண்டுவந்த, வீரர் - வீரர்களது, முகத்தன - முகத்திற்பொருந்தியவையாகிய, முழுகிய வாளிகள் - தைத்த பாணங்கள், எண் இல-கணக்கில்லாதவையாம்;—விழி வழி-(வீரர்களுடைய) கண்களினின்றும், தீ எழ - (கோபத்தால்) நெருப்புப்பொறி பறக்க, முறுவல் - (அவர்களுடைய) புன்சிரிப்புக்கள், வெள் நிலவு - வெண்மையான நிலாப்போன்ற ஒளியை, பரப்ப - அதிகமாக, விரித்தன - வெளிவீசின;— உழை - பக்கங்களில், மழை - மழைபோல, வீழ்வன - விழுவனவாகிய, பல படை - அநேக ஆயுதங்கள், எங்கும் - எவ்விடத்தும், வெவ் வெயில் - வெவ்விய வெயில்போலும் ஒளியை, உமிழ்ந்தன - வீசின;—அழிவு இல் - அழிதலில்லாத, வரூதினி - சேனையின், சூழ்வு - சூழ்தலாகிய, எயிலுக்கு - மதிலுக்கு, எ எயில் - எந்தமதில்கள்தாம், எதிர் ஆவன - ஒப்பாவன? [எம்மதிலும் ஒப்பாகா என்றபடி]; (எ - று.)

புன்னகைசெய்யும்பொழுது வெள்ளியபற்களின் ஒளி சிறிது வெளித்தோன்றுதலால், 'முறுவல் பரப்ப விரித்தன வெண்ணிலவே' என்றார். இங்குக் கூறிய நகை, வீரத்தாலெழுந்த வெகுளி பொருளாகப் பிறந்தது. எறிவன, எய்வன, வெட்டுவன, குத்துவன என்னும் எல்லாவற்றையுந் தொகுத்து 'பல படை' என்றார். நான்காமடிக்கு - சேனைகள் மதிலினும்உறுதியாகச் சிறிதும்இடைவிடாமற் சுற்றிலும் நின்றன வென்று கருத்து. (௩௩)

சரமழைகாவலர்தங்கண்மனோவனசம்புகமேயினவே
யிரைகவர்புள்ளினொடுள்ளுறவாவனசம்புகமேயினவே
வரைசிறகற்றுவிழுந்தனவென்னமறிந்தனவாரணமே
யருகுநடிப்பனவலகைகள்பாடுவயாமளவாரணமே.

(இ - ள்.) சரம் மழை - பாணவருஷங்கள், காவலர்தங்கள் - அரசர்களது, மனோ வனசம் - இருதயகமலம், புக - ஒடுங்கும்படியாக, மேயின - பொருந்தின;—எயின - (அங்குப்பிணந்தின்ன)வந்தனவாகிய, சம்புகம்-நரிகள், இரை கவர் புள்ளினொடு-(தசையாகிய) உணவைக் கொள்ளுகிற(கழுகு பருந்து முதலிய) பறவைகளுடன், உள் உறவு ஆவன - மனங்கலந்த சிநேகமாவன;—சிறகு அற்று விழுந்தன - (இந்திரனால்) இறகறுக்கப்பட்டு விழுந்தவையாகிய, வரை என்ன - மலைகள் போல, வாரணம் - யானைகள், மறிந்தன - விழுந்துகிடந்தன;—அருகு - பக்கங்களில்,நடிப்பன - கூத்தாடுபவையாகிய, அலகைகள் - பேய்கள், யாமளம் ஆரணம் - யாமளவேதத்தை, பாடு - பாடுவன; (எ - று.)

முதலடி - உருவகவணி; தாமரைஒடுங்கும்படி மழைமேவுதல்போல, வீரரது உள்ளத்தாமரைஒடுங்கும்படி அம்புமழை மேவின வென்க. சம்புகம்-

ஜம்புகம். பாவெ - அன்சாரியைபெருத பலவின்பால்முற்று. யாமளவேதம் - அபிசாரவோமம் மந்திரப்பிரயோகம் முதலியவற்றுற் பிறரைவருத்திக்கொல்லும்வகை முதலியவற்றைக் கூறுகிற அதர்வணவேதத்தின் பாகம்; இதனைக் காளிக்குக்கூறுவ தென்பர். மனோவாஜம் - வடமொழித்தொடர். (௩௪)

செயிருடையாடவர்சோரிபரந்துசிவந்ததுபாரிடமே
வயிறுபெருங்குருதிச்சுனையாகவளர்ந்ததுபாரிடமே
பயிலமறைத்தனபாறுபருந்தொடுபலக்ழுகந்தரமே
யெயிறுடைவாளிதுணிப்பவிழுந்தனவெத்தனைகந்தரமே.

(இ - ள்.) செயிர் உடை - வலிமையையுடைய, ஆடவர் - வீரர்களது, சோரி - இரத்தம், பரந்து - பரவியதனால், பார் இடம் - பூமியினிடம் (முழுவதும்), சிவந்தது - செந்நிற மாயிற்று;—பாரிடம் - பூதகணம், வயிறு - தம் வயிறுகள், பெருங் குருதி சுனை ஆக - பெரிய இரத்தம் நிரம்பிய சுனையை ஒத்திருக்க [வயிறுநிரம்ப இரத்தத்தைக் குடித்து], வளர்ந்தது—;—பாறு - பாறு என்னும் பறவைகளும், பருந்தொடு - பருந்துகளும், பல கழுகு - பலவகைப்பட்ட கழுகுகளும், பயில - (தாம்) சஞ்சரித்தலால், அந்தரம் - ஆகாயவெளியை, மறைத்தன—;—எயிறு உடை - பற்களையுடைய,வாளி - அம்புகள், துணிப்ப - துண்டித்தலினால், விழுந்தன - கீழ்விழுந்தவையாகிய, கந்தரம் - கழுத்துக்கள், எத்தனை - எத்தனையோ? [அளவிடுதற்கு அரியன என்றபடி]; எ - று.)—'எயிறு' என்றது, முனையை.

செயிர் உடை ஆடவர் - (பகைவர்களது) வலிமையை உடைக்கிற [அழிக்கிற] வீர ரென்றுமாம்; (பகைவரால்)வலியழிந்த வீரருமாம்; இப்பொருள்களில், உடை - வினைத்தொகை. பரந்து - காரணப்பொருளதாய் இறந்தகாலங்குறிக்கும் பரக்க என்ற செயவெனெச்சத்தின் திரிபு. பாரிடம் - சாதியொருமை. பாறு - பருந்தின் சாதிபேதம். (௩௫)

உம்பலனேகமிளம்பிடியென்னவொடிந்தனகோடுகளே
செம்புனல்யாறிருபக்கமும்வீழ்குறைசெய்தனகோடுகளே
தும்பிகளாலறையுண்டனகொற்றவர்சூழ்மனவம்புயமே
வெம்புகர்வாளிலழிந்தனமால்வரைவிதமனவம்புயமே.

(இ - ள்.) உம்பல் அனேகம் - பலஆண்யானைகள், இளம் பிடி என்ன - இளமையான பெண்யானைகள்போல, கோடுகள் ஒடிந்தன - தந்தங்கள் ஒடியப்பெற்றன;—செம் புனல் யாறு - சிவந்த இரத்தவெள்ள மாகிய நதிக்கு, இரு பக்கமும் - இரண்டு பக்கங்களிலும், வீழ் குறை - துணிபட்டு விழுந்து கிடக்கின்ற உடற்குறைகள், கோடுகள் செய்தன - கரைகளமைத்தாற்போலிருந்தன;—கொற்றவர் - வெற்றியையுடைய அரசர்களது சூழ் - (பலஎண்ணங்களை) எண்ணுகிற, மனம் அம்புயம் - இருதயகமலங்கள், தும்பிகளால் - யானைகளால், அறையுண்டன - அழிக்கப்பட்டன;—மால் வரை விதம் அன-பெரியமலைகளின்வகையை ஒத்த,அம் புயம்-அழகியதோள்கள், வெம் - கொடிய, புகர்-பளபளப்புள்ள,வாளில் - வாள்களால், அழிந்தன—.

உம்பல் - யானையின் ஆண்பெயர்; பிடி - பெண்பெயர். பெண்யானைகட்குப் பெரும்பாலும் தந்தங்கள் முளையா; முளைத்தபோதிலும் அவை மிகச்சிறியவையாயிருக்கு மென்று அறிக. தாமரையைக் கலக்குதல் யானையின் இயற்கை யாதலால், 'தும்பிகளால் அறையுண்டன மனவம்புயம்' என்றார்; இதில், வண்டுகளால் தாமரை மொய்க்கப்பட்டன வென்னும் பொருளுந் தொனித்தல் காண்க. அறையுண்டன, உண் - செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்துமிகுதி."எண்பதுகோடி நினைந்தெண்ணுவன" ஆதலால், 'சூழ்மனம்' எனப்பட்டது. பக்கம் - பக்ஷ மென்னும் வடமொழியின் திரிபு.

தாள்வலியாடவர்சிரமுருளும்படிதைத்தனசாயகமே
யாழ்குருதித்தடமொத்தனவவரவரவ்வுடல்சாயகமே
யேழ்புயல்வானமிருண்டிடவெங்குமெழுந்தவிருந்துகளே
வீழ்பசியாலுழல்பேயொடுபாரிடமிக்கவிருந்துகளே.

(இ - ள்.) தாள் - முயற்சியையும், வலி - வலிமையையும் உடைய, ஆடவர் - வீரர்களது சிரம் - தலைகள், உருளும்படி - கீழ் விழுந்து புரளும்படி, சாயகம் அம்புகள், தைத்தன—;—அவர் அவர் அவ்வவ்வீரர்களது, அ உடல்- அந்தந்த உடம்புகள், சாய் - விழுந்துகிடக்கிற, அகம்-இடங்கள், ஆழ் குருதி தடம் ஒத்தன - ஆழமாகிய இரத்தம்நிரம்பிய குளத்தைப் போன்றன;—ஏழ் புயல் - ஏழுமேகங்களையுடைய, வானம் - ஆகாயமெல்லாம், இருண்டிட- இருளடையும்படி, எங்கும் - எல்லாவிடத்தும், இருந் துகள் - மிகுதியான புழுதிகள், எழுந்த - கிளம்பின;—வீழ் பசியால் - (உணவை) விரும்புகின்ற பசியினால், உழல்-வருந்துகிற, பேயொடு-பேய்களும், பாரிடம்-பூதங்களும், விருந்துகள் மிக்க - விருந்துகளாகி மிகுந்தன; (எ - று.)

தாள்வலியாடவர் - காலாள்வீரருமாம்; முயற்சியில்வலியவீர ரெனினுமாம். ஏழ்புயல்வானமிருண்டிட - ஏழுமேகங்களினாற்போல வானம் இருளும்படி யென்றுமாம். வீழ்தல் - இங்கு, விரும்புதல். விருந்து - புதுமை; புதிதாய்வருகின்ற விருந்தினர்க்கு ஆகுபெயர். விருந்துகள்மிக்க - அங்கு உள்ள இறைச்சியைத் தின்று இரத்தத்தைக் குடித்துப் பசிதாகங்கள்தீருமாறு மிகுதியாகவந்துதிரண்டன வென்க. 'தாள்வலி' என ழகரத்துக்கு ளகரம் இனவெதுகையாக அமைந்தது. (௬௭)

செய்கடலாமெனவந்துசிவந்தகவந்தமலைந்தனவே
கைகொடுகால்கொடுதம்மின்வெகுண்டுகவந்தமலைந்தனவே
யைவகையானகதிக்குரநாலுமழிந்தனவாசிகளே
மெய்வகையாலிவைகூரெறிகோலெறிவீரர்கைவாசிகளே.

(இ - ள்.) சிவந்த கவந்தம் - செந்நிறமான இரத்தம், செய் கடல் ஆம் என - சிவந்ததொரு கடல்போல, வந்து அலைந்தன - பெருகி அலையெறிந்தன;—கவந்தம் - தலையற்ற உடம்புகள், வெகுண்டு - கோபித்து, தம்மின்- தமக்குள்ளே [ஒன்றோடொன்று], கைகொடு கால்கொடு - கைகளாலும் கால்களாலும்,மலைந்தன-போர்செய்தன;—வாசிகள் - குதிரைகள், ஐ வகை ஆன கதி - ஐந்துவகைப்பட்ட நடைகளையுடைய, குரம் நாலும் - நான்கு குளம்புகளும், அழிந்தன - அழியப்பெற்றன;— இவை - இவையெல்லாம், மெய் வகையால் - உண்மையாக, கூர் எறி கோல் எறி வீரர் கை வாசிகள் - கூர்மை விளங்குகிற அம்புகளை எறிகின்ற வீரர்களுடைய கைகளின் சித்திகளாம்; (எ - று.)

செய்கடல் - பண்புத்தொகை: செம்மையின் ஈறு போய் முன்நின்ற மெய் திரிந்தது; இது, இல்பொருளுவமம். இனி, மற்றைக்கடல்கள்போலப் படைப்புக்காலத்தே உண்டானதன்றிப் புதிதாகச்செய்யப்பட்டதொரு கட லென்னும்படி யென்றுமாம்; 'செய்குன்று' என்றாற்போல: வினைத்தொகை. சிவந்தகவந்தம் - செந்நீர்; கபந்தம் - நீர்: வடசொல். கோபத்தோடு விரைந்துபோர்செய்துநின்ற வீரர்களது உடம்புகள் தலையறுபட்ட பின்பு பதைபதைத்துக் கைகால்கள் துடிப்பனவற்றை, கைகளாலுங்கால்களாலும்போர்செய்வனவாகக் குறித்தார்;தற்குறிப்பேற்றம். கவந்தம்-நீரும் தலையற்றவுடலு மாதலை "காறல் புனல நாரங் கனவிரதங் கவந்தம்," "உடலினிற்குறை கவந்த மட்டை யூபமு முரைக்கும்" என்னும் நிகண்டினாலும் அறிக. ஐங்கதி - "விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்டம், மத்திமஞ் சாரியோ டைந்து" என்பன; ஆஸ்கந்திதம், தோரிதகம், ரேசிதம், வல்கிதம்,

புலுதம் எனவும்படும்: இவற்றுள், நிச்சலமாக அதிவேகமும் அதிமந்தமு மாகாமற் சமமான கதி - ஆஸ்கந்திதம்; அதைக்காட்டிலும் அதிகமாய்ச் சதுரமான கதி - தோரிதகம்; தாளகதியுடன் வட்டமிட்ட கதி - ரேசிதம்; வேகத்தினாலே முன்னங்காலைத் தூக்கிவரும் நடை - வல்கிதம்; அவ்வளவு வேகமாகவும் சமமாகவும் போகுகை - புலுதம்: இனி, மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விருஷபகதி என்பனவுமாம். குதிரைகள் பிளப் பில்லாத ஒற்றைக்குளம்புகளுள்ளன வாதலால், 'குரநாலும்' என்ற உம்மை- இனைத்தென்று அறிபொருளில் வந்த முற்றும்மையாம். எறிகோல் - ஈட்டி யெனினுமாம். (௬அ)

தாரைகளொற்றைகள்வங்கியநீள்வயிர்சங்கமுழக்கினவே
யோரிமையிற்சிலயானைதுரங்கமசங்கமுழக்கினவே
சேரவளைத்தவிலொன்றொருகோடிசிலீமுகமேவினவே
வீரருயிர்ப்புடல்விட்டரமங்கையர்மெய்ம்முகமேவினவே.

(இ - ள்.) தாரைகள் - தாரையென்னும் வாத்தியங்களும், ஒற்றைகள் - ஒற்றையென்னும் ஊதுகொம்புகளும், வங்கியம் - வேய்ங்குழல்களும், நீள் வயிர் - நீண்ட வயிர் என்னும் ஊதுகொம்புகளும், சங்கம் - சங்கங்களும், முழக்கின - மிகஒலிசெய்தன;—ஓர் இமையில் - ஒரு இமைப்பொழுதினு ள்ளே, சில யானை—, துரங்கம சங்கம் - குதிரைக்கூட்டங்களை, உழக்கின - கலக்கின;—வளைத்த வில் ஒன்று - வளைத்துப்பிடித்த ஒவ்வொருவில்லும், ஒரு கோடி சிலீமுகம் - ஒருகோடி அம்புகளை, சேர - ஒருசேர, ஏவின - பிரயோகித்தன;—வீரர் - வீரர்களது, உயிர்ப்பு - உயிர், உடல் விட்டு - உடம் பைவிட்டு, அரமங்கையர் - தெய்வப்பெண்களது, மெய் முகம் - உடம்பினி டத்தை, மேவின - அடைந்தன; (எ - று.)

வங்கியம் - வம்சம் என்ற வடசொல்லின் சிதைவு; இந்த மூங்கிலின் பெயர் - சினையாகுபெயராய், அதனாலாகிய புள்ளாங்குழலைக் குறித்தது. வம்சம் என்பது வங்கியம் என விகாரப்படுதலை, திருவிளையாடற்புராணத் தில் 'வம்சசூடாமணி' என்ற பெயரை 'வங்கியசூடாமணி' எனத் திரித்து உபயோகித்தலைக்கொண்டும் அறிக. முதலடியில், சங்கம் - ஶங்கம்; இரண் டாமடியில், சங்கம் - ஸங்கம். சிலீமுகம் - கூர்முனையை முகத்திலுடை யது. அரமங்கையர் - அமரமங்கையர் அல்லது அரம்பைமங்கையர் அன்றி அப்ஸரமங்கையர் என்பதன் விகாரம். யுத்தகளத்திற் புறங்கொடாது எதிர்நின்று போர்செய்து இறந்தவர் உடனே வீரசுவர்க்கத்தை அடைந்து அங்குள்ள தெய்வமகளிரது உடம்பைத் தழுவி இன்பமனுபவித்தலால், 'வீர ருயிர்ப் புடல் விட் டரமங்கையர் மெய்ம்முக மேவின' என்றார். (௬௯)

பொருகடலொத்தபெருங்குருதிக்கடல்போதவிரைந்தனவே
விரைவுறுதேவர்விமானம்விசும்பிடைபோதவிரைந்தனவே
கருமுகின்முட்டினபட்டவர்கட்கனல்காலுமரும்புகையே
சுரிகையொடற்றுவிழுந்தனமங்கையர்துனியிலரும்புகையே.

(இ - ள்.) பொரு - அலைமோதுகிற, கடல் - கடல்களை, ஒத்த—, பெருங் குருதி கடல் - பெரிய இரத்தவெள்ளங்கள், போத இரைந்தன - மிகவும் ஒலித்தன;—விரைவு உறு - (போரைக்காணுதற்கு) விரைதல்பொருந்திய, தேவர் - தேவர்களது, விமானம் - வாகனமாகிய விமானங்கள், விசும்பிடை போத - ஆகாயமார்க்கத்தில் வருதற்கு, விரைந்தன - விரைவுபட்டன;— பட்டவர் - இறந்தவீரரது, கண் - கண்களினின்று தோன்றுகிற, கனல் - கோபத்தீ, காலும் - வெளியில்விடுகிற, அரும் புகை - (அளவிடுதற்கு) அரு மையான புகைகள், கரு முகில் - கரிய மேகங்களை, முட்டின - அளாவிப் ... காரர்களது, துனியில் - ஊடல்மிகுதியில், அரும்பு -

(அவ்வூடலைத் தீர்த்தற்பொருட்டு அவர்களைத் தொழுது) கூப்புகிற, கை - கைகள், சுரிகையொடு - உடைவாளுடனே, அற்று - அறுந்து, விழுந்தன —.

இறந்த பின்பும் வீரர்கைகளினின்று கனல் புகையை யெழுப்புகிற தென்று, அவர்களது வீராவேசத்தாலுண்டாகுங் கோபமிகுதியைக் கூறிய படி. சுரிகை - க்ஷுரிகா என்னும் வடமொழியின் சிதைவு. 'சுரிகையொடு' என்பதில் ஒடு உருபை - "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்றவிடத் திற்போலக் கருவிப்பொருளாகக் கொண்டு,(எதிரிகளின்) சுரிகையால் அற்று விழுந்தன வெனினுமாம். மங்கையர் - இளமகளிர். ஊடலாவது - இன்ப நிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்குமாறு ஆடவர்மீது மகளிர் கோபித்தல். இங்ஙனம் விளையாட்டுவகையாற் கலவியிற் கொள்ளும் பிணக்கு, புலவி யெனவும்படும். ப்ரணயகலஹமென்பது, இதற்கேற்ற வடசொல். இதன் முதிர்ந்தநிலைமை துனியெனப்படுதலை, "துனியும் புலவியும்" என்ற திருக் குறள்கொண்டு உணர்க. இன்சொல்முதலிய வேறுஉபாயங்களினால் தணிக் கக்கூடிய நிலையைக் கடந்த பெரும்புலவியில், ஆடவர், எவரையும்வசப் படுத்துமியல்பினதான வணக்கத்தை மேற்கொண்டு அவ்வூடலைத்தணிவிக்க முயல்வ ரென்பதை "சில்லரிக் கிண்கிணிமென் தெய்வமலர்ச் சீறடியைத், தொல்லை மணிமுடிமேற் சூட்டினான் - வல்லை, முழுநீலக் கோதை முகத் தே மலர்ந்த, செழுநீல மாறச் சிவப்பு"என்றாற்போன்றஇலக்கியங்களிலும் காணலாம். அரும்பு கை - வினைத்தொகை; அரும்புதல்-கூம்புதல்,குவிதல். 'அரும்பு' என்ற சொல்லின் ஆற்றலால், கைகள் தாமரைமலர்போன்றன வென்பது தொனிக்கும். (கo)

கடகரியேனமொடொத்தனவம்பொடுபோனகரத்தனவே
புடவியின்மீதுறைநிறைமதியம்பலபோனகரத்தனவே
படுதிறல்வேலவர்கண்மணிசென்றுபறித்தனவாயசமே
யடுபணையானையின்வெங்குடர்சென்றுபிடுங்கினவாயசமே.

(இ - ள்.) புடவியின்மீது - பூமியில், உறை-வந்துதங்கிய,நிறை மதியம் பல போல் - (பதினாறுகலைகளும்) நிரம்பிய பல பூர்ணசந்திரர்போன்ற, நகரத்தன - நகங்களையுடையனவாகிய, கட கரி - மதயானைகள், அம்பொடு - (பகைவர் எய்த) அம்பினால், போன கரத்தன - அற்றுவிழுந்த துதிக் கையையுடையனவாகி, ஏனமொடு ஒத்தன - பன்றிகளோடு ஒத்திருந்தன; —வாயசம் - காக்கைகள், படு - இறந்துபோன, திறல் வேலவர் - வலிய வே லாயுதத்தையுடைய வீரர்களது, கண் மணி - கண்களின் கருவிழிகளை, சென்று பறித்தன - போய்க் குத்தியெடுத்தன;—ஆயசம் - ஆயுதங்கள், அடு- (பகைவரைக்) கொல்லுகிற, பணை - பருத்த, யானையின் —, வெம் குடர் - கொடிய குடலை, சென்று பிடுங்கின —; (எ - று.)

அம்பொடு, ஒடு - கருவிப்பொருளது. புடவியின்மீதுறை நிறைமதியம் பலபோல் - இல்பொருளுவமை. மதியம், அம் - சாரியை. குடர் - ஈற்றுப் போலி. ஆயஸம் - இரும்பினாலாகியது எனப் பொருள்படுங் காரணக்குறி; வடமொழித் தத்திதாந்தநாமம்: அயஸ் - இரும்பு. அடு பணை யானை - கொல்லுந் தந்தங்களையுடைய யானை யெனினுமாம்; பணை - கொம்பு. கடகரீ - வடமொழித்தொடர். (கக)

அணிதொடைதேன்மதுகரநிரைசாலவருந்தவிளைத்தனவே
மணிமுடிபாரமுறப்பலநாகம்வருந்தவிளைத்தனவே
கணைபலவீரர்முகத்தனதோளனகண்ணனமார்வனவே
நிணமொடுமூளைநெடுங்குடர்பூதநிரைக்கணமார்வனவே.

(இ - ள்.) அணி - (வீரர்கள்) அணிந்துள்ள, தொடை - மாலைகள், மது கரம் நிரை அருந்த - வண்டுகளின் கூட்டம் குடிக்கும்படி, தேன் - தேனை, சால - மிகுதியாக, விளைத்தன - சொரிந்தன;—பல நாகம் -(கீழிருந்து பூமி

யைத் தாங்குகிற) சர்ப்பங்களெல்லாம், மணி முடி - மாணிக்கத்தையுடைய தம் தலைகளின்மேல், பாரம் உற - சுமை அதிகப்படுதலால், வருந்த இளைத்தன - வருத்தமுண்டாக மெலிந்தன;—பல கணை - பல அம்புகள், வீரர் - வீரர்களது, முகத்தன - முகத்தில்தைத்தனவும், தோளன - தோள்களில் அழுந்தினவும், கண்ணன - கண்களிடத்தனவும், மார்வன - மார்பிற்பாய்ந்தனவுமாயின;—பூதம் கணம் நிரை-பூதகணங்களின் கூட்டம், நிணமொடு-கொழுப்பையும், மூளை - மூளையையும், நெடுங் குடர் - நீண்ட குடல்களையும், ஆர்வன - உண்பன; (எ - று.)

மதுகரம் - தேனைச் சேர்ப்பது. முடியிற் பாரமிகுதல், பலவிடங்களிலுமுள்ள சேனைகள்யாவும் ஓரிடத்திலே திரளுதலால். பல நாகம் - ஆதிசேஷனும்,அவனுக்குத்துணையாய் எட்டுத்திக்குக்களிலும்இருந்துஉடன் தாங்குகிற அஷ்டமகாநாகங்களும். உற - மிகுதிப்பொருளதான உறு என்னும் உரிச்சொல்லினடியாப்பிறந்த காரணப்பொருட்செயவெனெச்சம். நல்லிலக்காதலால், முகம்முதலியன கூறினார். ஒன்றன்கூட்டம், பலவினீட்டம் என இரண்டுவகை உளவாதல் பற்றி, 'பூதநிரைக்கணம்' என்றார். (சுஉ)

ஆவமொ டொத்தன வாடவர் நெஞ்சுக ளாகிய போதகமே
பூவல யத்துட லாருயிர் வானிடை புக்கன போதகமே
மேவுந ரிக்குவி ழைந்தன வெங்கரி வீழ்தலை யோதனமே
நாவல ருக்குமு ரைப்பரி தந்தந னந்தலை யோதனமே.

(இ - ள்.) ஆடவர் - வீரர்களுடைய, நெஞ்சுகள் ஆகிய போது அகம் - இருதயகமலங்களினிடங்கள், (பகைவரெய்த அம்புகள் மிகுதியாக உள்தைக்கப்பெற்றதனால்), ஆவமொடு-அம்பறாத்தூணிகளோடு, ஒத்தன—; —போதகம் - யானைகள், பூ வலயத்து - பூமண்டலத்தில், உடல் - உடம்பும், வானிடை - சுவர்க்கத்தில், ஆர் உயிர்-அருமையான உயிரும், புக்கன - போகப்பெற்றன;—வெம் - கொடிய, கரி - யானைகளின், வீழ் தலை - அறுந்துவிழுந்த தலைகளாகிற, ஓதனம்-உணவுகள், மேவும் நரிக்கு விரும்பி வருகிற நரிகளுக்கு, விழைந்தன - விருப்பமாயின;—அந்த—, நனந் தலை - அகன்ற இடத்தையுடைய, யோதனம் - யுத்தகளத்தின்சிறப்பு, நாவலருக்கும் உரைப்பு அரிது - புலவர்கட்கும் சொல்லுதற்குஅரியது; (எ - று.)

ஆவம் - அம்புக்கூடு. ஆடவர்நெஞ்சுகளாகியபோதகம் ஆவமொடொத்தன—"தாடகைதன் மெய் யாவநிகரென்ன வெஞ்சரத்தா லழுத்தியபின்" என்றார் பன்னிரண்டாம்போர்ச்சருக்கத்திலும். உடம்புகள் கீழேவிழுந்துகிடக்க உயிர்கள் அவற்றைவிட்டு மேலுலகஞ்சென்றன வென்று இரண்டாமடிக்குக் கருத்து. போதகம் - பத்துவருஷத்து யானைக்கன்று: வடசொல். நா வலர் - நாவினால் வருணிக்கவுங் கவிபாடவும் மிகவல்லவர்; உம்மை - உயர்வுசிறப்பு: அது, எப்படிப்பட்ட பொருள்களையும் எடுத்துவருணித்துச் சொல்விமுடிக்கத்தக்க அவர்கள்திறமையை உணர்த்திற்று. ஓதநம், யோதநம் - வடசொற்கள். நனந் தலை - [திருவேங்கடத்தந்தாதியுரை - பக். கூ.] "வெங்களத்தினியற்கை யெங்ஙன் வியந்துகூறுவதே" என்று தொடக்கத்தில் அருமைகூறியவர், ஈற்றிலும் 'நாவலருக்குமுரைப்பரி தந்த நனந்தலையோதனமே' என அருமைகூறி முடித்தார். (சுங)

வேறு.

[சஞ்சத்தகரும் நாராயணகோபாலரும் அருச்சுனனை எதிர்த்தல்.]

பேராண்மைசெய் சேனாபதி பின்னிட்டிடு முன்னே
தேராண்மையும் வில்லாண்மையு முடையானெதிர் செல்லத்
தாராரகல் வரைமார்பினர் சஞ்சத்தகர் தாமு
.......... கோபாலரு மணியாகந டந்தார்.

(இ - ள்.) பேர் ஆண்மை செய் - சிறந்த வீரத்தொழில்களைச் செய்கிற, சேனாபதி - (பாண்டவ) சேனாபதியான திட்டத்துய்மன், பின்னிட்டிடு முன்னே - (கிருபனோடு பொருது) புறங்கொடுக்குமுன்னே,—தேர் ஆண்மையும் வில் ஆண்மையும் உடையான் - தேர்செலுத்துந்திறமையையும் விற்போர்த்திறமையையும் (ஒருங்கே) உடையவனான அருச்சுனன், எதிர் செல்ல - எதிரிற்போக,—தார் ஆர் - போர்மாலைபொருந்திய, அகல் பரந்த, வரை - மலைபோன்ற, மார்பினர்-மார்பையுடையவர்களாகிய, சஞ்சத்தகர்தாமும் - ஸம்சப்தகர் என்னும் வீரர்களும், நாராயணகோபாலரும்-நாராயணகோபாலர்களும், அணி ஆக - ஒழுங்காக, நடந்தார் - (அவ்வருச்சுனனெதிரே) சென்றார்கள்; (எ - று.)—அணி - வரிசை.

பாண்டவசேனாபதி பின்னிட்டமையை, கீழ் ௪௭-ஆம் கவியிற் காண்க; இது, அதன்தொடர்ச்சி: (இடையிற் பதினாறுகவிகள்-போர்க்களவருணனையாய்வந்தன.) அருச்சுனன் தேராண்மையுடையனாதலை, உத்தரகோக்கிரகணகாலத்தில் உத்தரனுக்குத் தேரூர்ந்ததனால் அறிக. 'உடையார்' என்னும் பாடத்திற்கு - தேர்செலுத்துந்திறமையுடைய கிருஷ்ணனும், போர் செய்யுந்திறமுடைய அருச்சுனனும் எதிர்செல்லவென்க. மார்புக்கு மலை உவமை - பகைவர்படைக்கலங்களால் ஊறடையாத உறுதிக்கு. இனி, வரை மார்பினர் - (உத்தமஇலக்கணமாகிய மூன்று) இரேகைகளையுடைய மார்புடையரென்றுமாம்; "வரையகன் மார்பிடை வரையு மூன்றுள" என்றார் சிந்தாமணியிலும். ஸம்சப்தகராவார் - போர்தொடங்குமுன்னமே பலவகைச் சபதஞ்செய்து பின் அவ்வாறே நடத்திக்காட்டும்வீரர்கள்; இவர்கள், பன்னிரண்டு பதின்மூன்றாநாட் போர்களில் அருச்சுனனை அறைகூவித் தனியேஅழைத்துக்கொண்டுபோய் அவனுடன் மிகுதியாகப் பெரும்போர் செய்தனர். நாராயணகோபாலர்கள் - கண்ணனது புதல்வர்; பதினாறாயிரங் கோபஸ்திரீகளிடம் பிறந்தவர். இவர்கள், கண்ணனைப்படைத்துணையழைக்கச்சென்றபோது அப்பெருமானால் துரியோதனனுக்குத் துணையாக அளிக்கப்பட்டனர்; கீழ் உத்தியோகபருவத்து வாசுதேவனைப் படைத்துணையழைத்தசருக்கத்தில் "எம்மையே யொழிய வுள்ள யாதவக்குலத்துளோர்கள்,தம்மையு மெம்முனை தாலகேதுவையுஞ் சேரச், செம்மையோ டுதவியாகக் கொண்டு நீ செல்க வென்று, மும்மையுமுணர்ந்தநாதன் முன்னுறப் பின்னுஞ் சொன்னான்", "கிருதவன்மா வக்குரோணி கிளர்படையோடு நின்பால், வருவனென்றுரைத்து" என்றதும், படையெழுச்சிச்சருக்கத்தில் "எண்ணிருபத்துநூறும் யாதவகுமாராலும்,......எண்ணருஞ் சேனை வெள்ள மெங்கணும்பரந்த" என்றதுங் காண்க. கோபாலர் - பசுக்களைக் காப்பவர். சஞ்சத்தகருள்ளும் நாராயணகோபாலருள்ளுங் கீழ்நாட்போர்களில் இறந்தவர் போக மிச்சப்பட்டவர் இன்று போர்க்கு வந்தனர் என்று அறிக; அது. மேல் ௬௮ - ஆம் கவியில் விளங்கும்.

இதுமுதல் எட்டுக் கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் மாங்கனிச்சீரு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௬௪)

[சத்தியசேனன் கண்ணனுக்கு ஊறுசெய்தல்.]

சட்கோணநெடுந்தேர்மிசைவருசத்தியசேனன்
புட்கோவெழுதியசீர்பெறுபொன்னங்கொடிவலவன்
றுட்கோடுளமறுகும்படிசுடுதோமரமொன்றான்
முட்கோலுடன்வடமுஞ்சிதைவுறமோதினன்முரணால்.

(இ - ள்.) சட் கோணம் - ஆறு மூலைகளையுடைய, நெடு் தேர்மிசை - பெரிய தேரில், வரு-வருகிற, சத்தியசேனன் - சத்தியசேனனென்பவன்,—புள் கோ-பறவைகட்கு அரசனாகிய கருடனை, எழுதிய—, சீர் பெறு - சிறப்

புப் பெற்ற, பொன் அம் கொடி - பொற்காம்பிட்ட அழகிய துவசத்தை யுடைய, வலவன் - (அருச்சுனனது) சாரதியாகிய கண்ணன், துட்கோடு - அச்சத்துடனே, உளம் மறுகும்படி - மனங்கலங்குமாறு,-- சுடு தோமரம் ஒன்றால்-(பகைவரை)அழிக்கவல்லதொரு தோமரமென்கிற ஆயுதத்தால்,— (அக்கண்ணன் கைகளிற்பிடித்துள்ள), முள் கோலுடன் - (தேர்க்குதிரைகளைக் குத்தியோட்டுகிற) இருப்புமுள்ளை முனையிலுடைய கோலும், வடமும்-(குதிரைகளை வலியஇழுத்தற்கும் தளரவிடுதற்கு முரிய வார்க்)கயிறும், சிதைவு உற-அழிவை யடையும்படி, புரணல்-வலிமையோடு, மோதினன் - தாக்கினான்; (எ - று.)

ஷட்கோணம்-வடமொழித்தொடர்; ஷட்-ஆறு. ஸத்யஸேநன் - உண்மையான சேனையையுடையவன். புட்கோ-பக்ஷிராசன். சீர் - ஸ்ரீ என்னும் வடமொழிச்சிதை யென்பர். தோமரம் - இருப்புலக்கைக்கும், கைவேலுக்கும், பேரீட்டிக்கும் பெயர். (சுரு)

[கண்ணன் எதிரிகளின்மேல் தேரை விசையாகச்செலுத்தல்.]

புடையுண்டுளமுருகிப்புயல்போல்வண்ணனகைத்துத்
தொடையுண்டமலர்த்தும்பைசுமக்குந்திரடோளா
ருடையுண்டதொர்கடலாமெனவோடும்படியவர்மேற்
றடையுண்டதடந்தேரினைவிட்டான்முனைதரவே.

(இ - ள்.) புயல் போல் வண்ணன் மேகம்போலுந் திருநிறமுடையவனான கண்ணன்,—புடையுண்டு-(அத்தோமரத்தால)அடிபட்டு,உளம் உருகி-மனம் தளர்ந்து, நகைத்து-(கோபத்தாற்)சிரித்து,—தொடை உண்ட-மாலையாகத் தொடுக்கப்பட்ட, மலர் தும்பை - தும்பைமலர்களை, சுமக்கும் - தரிக்கின்ற, திரள் தோளார் - திரண்ட தோள்களையுடையவர்களான அவ்வீரரெல்லாம், உடையுண்டது ஓர் கடல் ஆம் என - கரையுடைபட்டதொரு கடல்போல, ஓடும்படி—, அவர்மேல்—, தடையுண்ட தட தேரினை-(கீழே சிறிது) தடைப்பட்ட பெரிய (தனது) தேரை, முனைதர - விரைந்துசெல்லும்படி, விட்டான்—; (எ - று.)

தும்பைப்பூமாலை,போர்செய்பவர்க்கு உரியது. தடைஉண்ட-தடையை இல்லையாக்கின,தேர் என்றுமாம்; (எங்கும்)தடையில்லாத தேரென்க.(சுசு)

[அருச்சுனன் சித்திரசேனனையும் மந்திரபாலனையுங் கொல்லல்.]

சென்றாடமர்புரிசேனையுடன்சித்திரசேனன்
வன்றாள்வலிமிகுமந்திரபாலன்றனைவானோர்
தன்றாதையளிக்கும்பல்சரத்தால்விழமோதிக்
கொன்றான்மிடல்வழுவாதகுரக்குக்கொடியுடையோன்.

(இ - ள்.) மிடல் வழுவாத - வீரந் தவறாத,குரங்கு கொடி உடையோன்- அநுமத்துவசத்தையுடையவனான அருச்சுனன்,—சென்று - எதிர்வந்து, ஆடு அமர் புரி-மோதுகிற யுத்தத்தைச் செய்கின்ற, சேனையுடன்-சேனையுடனே, சித்திரசேனன்-சித்திரசேனனையும்,வல் தாள் வலி மிகு மந்திரபாலன் தனை-வலிய முயற்சியும் வலிமையும் மிக்க மந்திரபாலனையும்,—வானோர்-தேவர்களுள், தன் தாதை - தனது தந்தையாகிய இந்திரன், அளிக்கும்-கொடுத்தருளிய, பல் சரத்தால் - பல அம்புகளினால்,—விழ - கீழ்விழும்படி, மோதி - தாக்கி, கொன்றான்—; (எ - று.)

ஆடு அமர் - வினைத்தொகை : இரண்டனுருபும்பொருளுந்தொக்க தொகையாக, (பகைவரை) அடுதலையுடைய போர் எனினுமாம்; அடுதல்-கொல்லுதல்: சுடு படு விடு என்ற பகுதிகள் சூடு பாடு வீடு என முதனிலை திரிந்ததொழிற்பெயராவதுபோல,அடு என்ற முதனிலை ஆடு எனத் திரிந்து தொழிற்பெயராயிற் றென்க. சித்ரஸேநன் - பலவகைப்பட்ட சேனைகளை

யுடையவன். மந்த்ரபாலன் - ஆலோசனையாற் காப்பவன். இந்திரன் அளித்த பல்சரம் - ஐந்திராஸ்திரம் முதலியன வென்க; பாசுபதம்பெற்றபின்பு அருச்சுனனைத் தேவலோகத்துக்கு அழைத்துப்போனபொழுது இந்திரன் அவனுக்குப் பலஅஸ்திரசஸ்திரங்களைத் தந்தருளினன்: கீழ் ஆரணியபருவத்து நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்கத்தில் "ஆடையுங் கலனு மந்த்ரத்துடனடற்படையு நல்கி" என்றது காண்க. வானோர்தன்தாதை யென்றதற்கு-கண்ணனென்றும் சிவனென்றும் பொருள்கூறலாமாயினும், வியாசபாரதத்திற்கு ஏற்ப இவ்வாறு பொருள்கூறப்பட்டது. தாதை என்றது-இலக்கணையாய்த் தலைவனென்னும்பொருள்குறிக்க, வானோர்தன் தாதை - தேவராஜனெனவுந் தகும்; தன் - சாரியை. குரக்குக் கொடி - குரங்கை எழுதிய கொடி; வேற்றுமைப்புணர்ச்சியில் மென்றொடர் வன்றொடராயிற்று;[நன்- உயிர் - ௬௪.] (௬௭)

[அருச்சுனன் சஞ்சத்தகரையும் நாராயணகோபாலரையும் தொலைத்தல்.]

முன்னாண்முதனாலினுமுனைதோறுமுருக்கித்
தன்னாலுயிர்கவராதவர்சஞ்சத்தகர்யாரு
நன்னாரணகோபாலருநாகங்குடியேறப்
பொன்னாண்வரிசிலைகோலினன்மாலோனுயிர்போல்வான்.

(இ - ள்.) மாலோன் உயிர் போல்வான் - கிருஷ்ணபகவானுக்கு உயிர் போல்பவனான அருச்சுனன்,—முன் நாள் முதல் - முதல்நாள் முதலாகிய, நால் நாலினும் - பதினாறு நாட்களிலும், முனைதோறும் - போர்களிலெல்லாம், முருக்கி-கொன்று, தன்னால் உயிர் கவராதவர்-தன்னால்உயிர்கொள்ளப் படாதவராகிய, சஞ்சத்தகர் யாரும் - சம்சப்தகர் எல்லாரும், நல் - நல்ல, நாரணகோபாலரும் - நாராயணகோபாலர்கள்யாவரும், நாகம்-வீரசுவர்க்கத்தில், குடி ஏற - ஏறிக்குடிபோம்படி,—பொன் நாண் - அழகிய நாணியை யுடைய, வரி சிலை - கட்டமைந்த வில்லை, கோலினன் - வளைத்தான் [விற் போர்செய்தான்]; (எ - று.)

நாலால் - பண்புத்தொகை. கவராதவர் - கவரப்படாதவர்: செய்வினை, செயப்பாட்டுவினைப்பொருளது; அகரச்சாரியையும் படுவிகுதியுந் தொக்கன வெனினுமாம். உயிர்கவர்தல் - கொல்லுதல். கம் - சுகம்: அகம் - அதுவல்லாதது, அதாவது-துக்கம்; அஃதில்லாதது-நாகம் எனக் காரணப்பொருள் காண்க: வடசொல். முருக்கி - மெலிவலியான பிறவினை; முருங்குதல்-அழிதல். "மம ப்ராணாஹி பாண்டவா:" எனக் கண்ணன் தானே கூறியுள்ளதற்கு ஏற்ப, 'மாலோனுயிர்போல்வான்' என்றார். இங்கே இவ்வாறு கூறியது, மைந்தரிடத்தினும் அருச்சுனனிடத்துக் கண்ணனுக்கு அன்பு மிகுதி யென்பதையும், தன்மைந்தர்பலரையுங் கொன்றானென்ற கோபம் கண்ணனுக்கு அருச்சுனனிடத்திற் சிறிதும் இல்லை யென்பதையும் நன்கு விளக்குதற் பொருட்டு. (௬௮)

[துரியோதனன்சேனையார் புறங்கொடுத்தல்.]

சஞ்சத்தகர்கண்ணன்றருதனயோர்பலரடைவே
யெஞ்சப்பொருதனன்வெஞ்சிலையிமையோர்பதிமகனென்
றஞ்சிக்களமுழுதுங்கழுதாடக்குறையாடக்
குஞ்சத்தொடுகுடைவீழ்தரமுதுகிட்டனர்கூடார்.

(இ - ள்.) 'வெம் சிலை - கொடிய வில்லையுடைய, இமையோர் பதி மகன் - தேவராஜனான இந்திரனது குமாரனாகிய அருச்சுனன்,—சஞ்சத்தகர் - சம்சப்தகரும், கண்ணன் தரு தனயோர் - கிருஷ்ணன் பெற்ற பிள்ளைகளாகிய நாராயணகோபாலர்களும், பலர் - எல்லாரும், அடைவே - ஒருங்கே, எஞ்ச - அழியும்படி, பொருதனன் - போர்செய்தான்', என்று-

என்ற காரணத்தால்,—கூடார் - பகைவர்கள்,—அஞ்சி - அச்சமுற்று,—களம் முழுதும் - போர்க்களம் முழுவதிலும், கழுத்து ஆட - பேய்கள் கூத்தாடவும், குறை ஆட - உடற்குறைகள் கூத்தாடவும்,—குஞ்சத்தொடு-குச்சங்களும், குடை - குடைகளும், வீழ்தர - விழும்படி (போகட்டு), முதுகு இட்டனர் - புறங்கொடுத்தார்கள்; (எ - று.)

தனயர் - தனயோர் என ரகரவீற்றயலகரம் ஓகாரமாயிற்று; தநயர்-வடசொல். இமையோர் - கண் இமையாதவர். குஞ்சம் - அழகிய மயிரால் செய்யப்பட்ட ஓர்வகை அலங்காரத்துக்கு; "புனைமயிர்க் குஞ்சி பிச்சமின் றவழ் கொடியொ டிட்டு வேற்படை யுடைந்த வன்றே" என்றார் சிந்தாமணியாரும். இனி, குஞ்சம் - குடைக்குச்சுகளுமாம். கூடார் - சேராதவர்: எதிர்மறைவினையாலணையும்பெயர். (௬௬)

[துரியோதனன் பகைவர்மேல் வருதல்.]

முதுகிட்டவர்துரியோதனன்முனைவீழ்தலுநூறைம்
பதுகற்கியுநாலாயிரம்விகடப்பொருபகடு
மதுகைப்படுதேராயிரமுங்கொண்டெதிர்வந்தா
னெதிர்கைப்படவொருமன்னருமில்லாவமர்வல்லான்.

(இ - ள்.) முதுகு இட்டவர் - (அருச்சுனனுக்குப்) புறங்கொடுத்த வீரர்கள், துரியோதனன் முனை - துரியோதனனுக்கு எதிரில், வீழ்தலும் - விழுந்தவுடனே,—எதிர்கை பட - (தன்னை)எதிர்த்தல்செய்தற்கு, ஒரு மன்னரும் இல்லா - ஓரரசரையும் பெறாத, அமர் வல்லான்-போரில் வல்லவனான அத்துரியோதனன்,—நூறு ஐம்பது கற்கியும் - ஐயாயிரங் குதிரைகளையும், விகடம் பொரு நால் ஆயிரம் பகடும் - விசேஷமதத்தையுடைய போர்செய்கின்ற நாலாயிரம் யானைகளையும், மதுகை படு - வலிமைபொருந்திய, தேர் ஆயிரமும் - ஆயிரந்தேர்களையும், கொண்டு - உடன்கொண்டு, எதிர் - எதிரில், வந்தான்—; (எ - று.)

நூறைம்பது-பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். எதிர்கை-தொழிற்பெயர். எதிர்கைப்பட - ஒப்பாகவென்றுமாம். விகடம் - பெருமையுமாம். (௬௭)

[தருமன் துரியோதனனை எதிர்த்தல்.]

குருமித்துந டக்கின்றன னிவனோடுகொ டுங்கா
ருருமிற்பொரு குவமென்றுள முகளித்தெழ முனைமே
னிருமித்துந டந்தான்மனு நீதிக்கொரு நிலையான்
றருமத்தின துயிரென்றுரை தக்கோர்சொல மிக்கோன்.

(இ - ள்.) 'குருமித்து - ஆரவாரித்து, நடக்கின்றனன் - (போர்க்கு) வருகின்றான்: (ஆதலால்), இவனோடு - இத்துரியோதனனோடு, கார் கொடு உருமின் - மேகத்தில் தோன்றுகிற கொடிய இடிபோல, பொருகுவம் - போர்செய்வோம்,' என்று - என்றுஎண்ணி, உளம் - மனம், உகளித்து எழ - (உற்சாகத்தால்)குதித்துக்கிளர,—மனு நீதிக்கு - மனுவினால் (தருமசாஸ்திரத்திற்சொல்லப்பட்ட) நல்லநீதிகட்கெல்லாம், ஒரு நிலையான்-ஓர் இருப்பிடமாகவுள்ளவனும், தருமத்தினது உயிர் என்று - தருமத்துக்கு உயிர்போல இன்றியமையாதவனென்று, தக்கோர் - பெரியோர், உரை சொல - புகழ்ந்துசொல்லும்படி, மிக்கோன் - சிறந்தவனுமாகிய யுதிட்டிரன்,—முனைமேல் -(சேனையின்) முற்பக்கத்தில், நிருமித்து - (யாவரையும்) கட்டளையிட்டுக்கொண்டு, நடந்தான் - எதிர்சென்றான்; (எ - று.)

கொடுமையை உருமோடு கூட்டுக; காரோடு இயைத்து, கொடுங் கார்-(கற்பாந்தகாலத்து விடாப்பெருமழைபொழிகிற) கொடிய மேகங்களாகவுமாம். உருமின், இன்-ஐந்தாம்வேற்றுமை, ஒப்புப்பொருள். பொருகுவம் - தனித் தன்மைப் பன்மை; கு - சாரியை. நிருமித்தல் - நியமித்தல். தருமத்

தினது உயிர் - தருமக்கடவுளாகிய யமனது உயிர்போல்அருமையான புத்திரன் என்றுமாம். தக்கோர் - (ஞானஒழுக்கங்களினால்) தகுதியையுடையவர். முனைமேல் - போரின்மேல் [அதாவது போரைக்குறித்து], நடந்தான் - சென்றான் எனினுமாம். (௭௧)

வேறு.

[சேனைகள் நெருங்குதலும், வாத்தியகோஷமும்.]

துனைவெங்க போல விகட கடகரி துரகம்ப தாதி யிரத மளவில, வெனநின்ற சேனை முடுகி யயில்சிலை யெறிதுங்க வாளொடிகலி யெழவெதிர், குனிசங்கு தாரை வயிர்கண் முதலிய குணில்கொண்டு சாடு பறைகண் முதலிய, தனிதங்கொண் மேக மெனவு மலைபொரு தமரங்கொள் வேலை யெனவு மதிரவே.

இதுமுதல் ஐந்து கவிகள் - குளகம்.

(இ - ள்.) துனை - விரைந்துசெல்லுகின்றவையும், வெம் கபோலம் - வெவ்விய கன்னங்களையுடையவையும், விகடம் - களிமயக்கங்கொண்டவையுமான, கட கரி - மதயானைகளும், துரகம் - குதிரைகளும், பதாதி - காலாள்களும், இரதம் - தேர்களும், அளவு இல - அளவில்லாதன, என - என்றுசொல்லும்படி, நின்ற—, சேனை - இரண்டுசேனைகளும், முடுகி - விரைந்து, அயில் - வேலும், சிலை - வில்லும், எறி துங்கம் வாளொடு-(பகைவர்களைத்) துணிக்கிற சிறந்த வாளும் ஆகிய இவற்றுடனே, இகலி எழ - பகைமைகொண்டு முன்வரவும்,—வெதிர் - வேய்ங்குழல்களும், குனி சங்கு- வளைந்த சங்குகளும், தாரை - தாரைகளும், வயிர்கள் - ஊதுகொம்புகளும், முதலிய - முதலான ஊதுகிற வாச்சியங்களும், குணில் கொண்டு சாடு - குறுந்தடியினால் அடிக்கப்படுகிற, பறைகள் முதலிய - பேரிகைமுதலான வாச்சியங்களும், தனிதம் கொள் மேகம் எனவும் - இடிமுழக்கத்தைக் கொண்ட மேகம்போலவும், அலை பொரு தமரம் கொள் வேலை எனவும்- அலைகள் மோதுகிற ஆரவாரத்தைக் கொண்ட கடல்போலவும், அதிர - மிக ஒலிக்கவும்,—(எ - று.)

துனை கரி யென இயையும். வெதிர் என்னும் மூங்கிலின்பெயர், அதனாலாகிய குழலுக்குக் கருவியாகுபெயர். 'முதலிய' - வினையாலணையும்பெயர். தனிதம் - ஸ்தநிதம் என்னும் வடமொழியின் விகாரம்.

இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் புளிமாங்காய்ச்சீர்களும், இரண்டு ஆறாஞ் சீர்கள் தேமாச்சீர்களும், மூன்று ஏழாஞ் சீர்கள் புளிமாச்சீர்களும், நான்கு எட்டாஞ்சீர்கள் கருவிளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச் சந்த விருத்தங்கள். * (௭௨)

[தூளிவருணனை.]

கதிகொண்டசேனைநடவவெழுதுகள் ககனஞ்சுலாவியனிலகதியுற, முதிரண்டசூரகிரணமிருளெழ முகில்பஞ்சபூதவடிவுபெறவிய, னதிவண்டலாகவமரருறைதரு நகரம்பொன்வீதிபுழுதியெழமுழு,மதியங்க[illegible]மாசுகழியநிரைநிரை வளரண்டகூடமுகமெதிரவே.

(இ - ள்.) கதி கொண்ட - (பலவகை)நடைகளைக் கொண்ட, சேனை - இரண்டு சேனைகளும், நடவ - (முன்) நடப்பதனால், எழு - (பூமியினின்று) கிளம்புகிற, துகள் - புழுதி, ககனம் - ஆகாயமார்க்கத்தில், சுலாவி-சுழன்று, அனில கதி உற - காற்றின் வேகத்தைப் பொருந்த, (அதனால்), முதிர் - (ஒளி) மிகுந்த, அண்ட சூர கிரணம் - ஆகாயத்திலுள்ள சூரியனது கிரணங்

* தனதந்த தான தனன தனதன தனதந்த தான தனன தனதன எனச் சந்தக்குழிப்புக் காண்க.

கள், இருள் எழ - இருட்சியைப் பொருந்தவும், முகில் - மேகம், பஞ்ச பூதம் வடிவு பெற - ஐம்பூதங்களின் வடிவத்தை அடையவும், வியத் நதி - ஆகாசகங்காநதி, வண்டல் ஆக - சேறாகவும், அமரர் உறைதரு நகரம் - தேவர்கள் வாசஞ்செய்கிற அமராவதிப்பட்டணம், பொன் வீதி - பொன்மயமான தெருக்களில், புழுதி எழ - மண்தூளி யெழும்பப்பெறவும், முழு மதி - பூர்ணசந்திரன், அம் கண் - அழகிய தன்னிடம் முழுவதும், மாசு கழிய - களங்கம் மிகப்பெறவும், நிரை நிரை - அடுக்கு அடுக்காக, வளர் - மேன்மேல் வளர்ந்திருக்கிற, அண்ட கூடம் - உருண்டைவடிவமான அண்டத்தின், முகடும் - மேல்முகடும், அதிர - அதிர்ச்சியடையவும்,—(எ - று.)

'முகில் பஞ்சபூதவடிவுபெற' என்றது - ஐம்பெரும்பூதங்களுள் நீர் தீ காற்று வானம் என்னும் நான்குபூதங்களின் சம்பந்தத்தை இயல்பாகவே யுடைய மேகங்கள் இப்புழுதிகளின் சேர்க்கையால் நிலத்தின் சம்பந்தத்தையும் அடைய வென்றபடி. சுவர்க்கலோகத்து ராஜதானியான அமராவதி பொன்னகரமாதலால், 'பொன்வீதி' எனப்பட்டது. வியந்நதீ என்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டது; வியத்+நதீ என்று பிரியும்: வியத் - ஆகாயம். தமிழ்வகையால், வியல் நதி எனப்பிரித்து, பெரிய (ஆகாசகங்கா) நதி யென்றலுமாம். கழி-முன்உள்ளதன் மிகுதியை யுணர்த்தும் உரிச்சொல்; "கூர்ப்பும் கழிவும் உள்ளதுசிறக்கும்"என்பது தொல்காப்பியம். (எங)

[நால்வகைச்சேனைவீரரும் ஒருவரோடொருவர் எதிர்த்தல்.]

குதிகொண்டவாசிவயவர்பலரொடு குதிகொண்டவாசிவயவர் குறுகினர், துதிவெங்கைவேழமறவர்பலரொடு துதிவெங்கைவேழ மறவர்துதையினர், ரதிர்சண்டவேகவிரதர்பலரொடு மதிர்சண்ட வேகவிரதரணுகினர், பொதிவெம்பதாதிவிருதர்பலரொடு பொதி வெம்பதாதிவிருதர்பொதுளவே.

(இ - ள்.) குதி கொண்ட - குதித்தலைக் கொண்ட, வாசி - குதிரைகளின்மேல் ஏறிய, வயவர் பலரொடு - பலவீரர்களுடனே, குதிகொண்ட வாசி வயவர்—, குறுகினர் - நெருங்கவும்,— வெம் - வெவ்விய, துதிக்கை - துதிக்கையையுடைய, வேழம் - யானைகளின்மேல்ஏறிய, மறவர் பலரொடு - வீரர்கள் பலருடனே, துதி வெம் கை வேழம் மறவர்—, துதையினர்-நெருங்கவும்,—அதிர் - ஒலிக்கின்ற, சண்ட வேகம் - மிக்க வேகத்தையுடைய, இரதர் பலரொடும் - தேர்களின்மேலேறிய வீரர்கள் அநேகருடனே, அதிர் சண்டவேக இரதர்—, அணுகினர் - நெருங்கவும்,— பொதி - (வலி)மிகுந்த, வெம் - கொடிய, பதாதி விருதர் பலரொடு - பல காலாள்வீரர்களுடனே, பொதி வெம் பதாதி விருதர்—, பொதுள - நெருங்கவும்,—(எ - று.)

வயவர், மறவர், விருதர் என்பவற்றிற்கு-வெற்றியையுடையவ ரென்று பொருள்; வயம், மறம்,விருது-வெற்றி. குறுகினர், துதையினர், அணுகினர், பொதுள என ஒருபொருளையேகொண்ட பலசொற்கள் வந்தது, பொருட்பின்வருநிலையணி. 'குறுகினர்'முதலிய மூன்றும் - முற்றெச்சம். (எச)

[பாகர் தேர்செலுத்துந் திறமும், யுதிட்டிரதுரியோதனராது அம்புமழைமிகுதியும்.]

புரிசெம்பொனேமிவிசையொடிருகிரி பொருவன்புபோலநவ மணியினொளி, விரிதந்தசோதிபடலமிகுவன மிசைகொண்டதேர்க ள்கடவவலவர்க, ளெரிசெங்கணுகவரசுமுரசமு மெழுதும்பதாகை நிருபரிருவரு, முரிதந்தசாபமுடுகுபகழியின் முகிறங்குவானமுழுதுமறையவே.

(இ - ள்.) செம் பொன் புரி - சிவந்த பொன்னினாற் செய்யப்பட்ட, நேமி - சக்கரங்களின், விசையொடு - வேகத்துடனே, இரு கிரி - இரண்டு

மலைகள்,பொரு-போர்செய்கின்ற, வன்பு போல-வலிமைபோல,—நவமணியின் ஒளி -(இழைக்கப்பட்டுள்ள)நவரத்தினங்களின் காந்தி, விரிதந்த - பரவப்பெற்ற, சோதி படலம் மிகுவன - ஒளிக்கூட்டம் மிகுவனவாகிய, மிசைகொண்ட தேர்கள் - (தாம்) ஏறியுள்ள தேர்களை, வலவர்கள் - சாரதிகள், கடவ-செலுத்தாநிற்கவும்,—எரி-(கோபத்தால்) எரிகிற, செம் கண்-சிவந்த கண்களையுடைய,நாகம் அரசும்-மகாநாகத்தையும்,முரசமும்-முரசத்தையும், எழுதும் - (முறையே) எழுதியுள்ள, பதாகை - கொடிகளையுடைய, நிருபர் இருவரும்-(துரியோதனனும் யுதிட்டிரனுமாகிய)அரசர்கள் இரண்டுபேரும், முரிதந்த - வளைத்த, சாபம்-விற்களினால், முடுகு - விரைவாகஎய்யப்படுகிற, பகழியின்-அம்புகளால், முகில் தங்கு வானம் முழுதும் மறைய - மேகங்கள் தங்கப்பெற்ற ஆகாயம்முழுவதும் மறைவுடையாநிற்கவும்,—(எ-று.)

நேமிவிசையொடு இருகிரி பொருதல்-இல்பொருளுவமம். மலை-தேர்க்குப் பெரியஉருவத்தாலும் மிக்க வலிமையாலும் உவமை. வலவர் - தேர்த்தொழிலிலும் குதிரைத்தொழிலிலும் வல்லவர். சிறந்ததை 'அரசு' என்றல், மரபு. (எ௰)

[தருமனம்புகளினால் துரியோதனன்மார்பிற் குருதிசோரிதல்.]

அறன்மைந்தன்வாளியடையநயனமி லவன்மைந்தன்வாளிவிலகவிரகுடை, விறன்மைந்தன்வாளியடையவிரகிலி விடுபுங்கவாளிவிலகமுறைமுறை, மறமும்பொருதசினமுமிருபுய வலியுந்தவாமலரிதுபொருதபி,னிறமொன்றுமேழுபகழிமுழுகின நிருபன்றன்மார்புகுருதிபொழியவே.

(இ - ள்.) அறன் மைந்தன் - தருமபுத்திரனது, வாளி - அம்புகள், அடைய-எதிரிற்சேர்தலால், நயனம் இலவன் மைந்தன் - கண்களில்லாத [பிறவிக்குருடனான] திருதராட்டிரனது குமாரனாகிய துரியோதனனது, வாளி-அம்புகள், விலக - தடைப்பட்டுநீங்கவும்,—விரகு உடை விறல் மைந்தன் - வஞ்சனையினாற் பெறும் வெற்றியையுடைய வீரனான துரியோதனனது, வாளி-அம்புகள்,அடைய - எதிர்தலால், விரகு இலி விடு புங்க வாளி-வஞ்சனையில்லாத யுதிட்டிரன் எய்கிற சிறந்த பாணங்கள், விலக-தடைப்படவும்,— முறை முறை - முறையே முறையே [மாறிமாறி],— மறமும் - பராக்கிரமமும், பொருத சினமும் - அடங்காத கோபமும், இரு புயம் வலியும்-இரண்டு தோள்களின் வல்லமையும், தவாமல் - அழியாமல், அரிது - அருமையாக,பொருத பின் - போர்செய்தபின்பு,— நிறம் ஒன்றும் - ஒளி பொருந்திய,ஏழுபகழி-(தருமபுத்திரன்எய்த)ஏழம்புகள்,நிருபன் தன் மார்பு-துரியோதனனது மார்பில், குருதி பொழிய - இரத்தம் வழியும்படி, முழுகின - அழுந்தித் தைத்தன; (எ - று.)

தவாமல் என்பதில், தபு என்பதன் மரூஉவாகிய தவு - பகுதி. புங்க வாளி - கட்டமைந்த அம்புமாம். முழுகுதல் - நெடுந்தூரம் பாய்தல். (எக)

[துரியோதனனம்புகளினால் தருமன்மார்பிற் குருதிசோரிதல்.]

விரிகின்றநீலகிரியிலிளவெயில் விழுகின்றதாரையனையுவழகொடு, சொரிகின்றசோரியுடையமகிபதி சுளிவின்றிமீளவொருகைந்நொடியினின், முரிகின்றநீடுபுருவநிகரென முனைகின்றசாபமுரியவிரைவொடு, தெரிகின்றகோல்கண்முழுகியறனருடிருமைந்தன்மார்புகுருதிபொழியவே.

இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்.

(இ - ள்.) விரிகின்ற - பரந்த, நீலகிரியில்-நீலநிறமாகிய மலையில், இளவெயில் - இளஞ்சூரியகிரணம், விழுகின்ற—, தாரை - ஒழுங்கை, அனைய-ஒத்த, அழகொடு-அழகுடனே, சொரிகின்ற சோரி உடைய-(மார்பில்) வழி

கிற இரத்தத்தையுடைய, மகிபதி-(துரியோதன) ராசன், சுளிவு இன்றி-வாட்டமில்லாமல், மீள-திரும்பவும், ஒரு கை நொடியினில்-ஒருகைந்நொடிப்பொழுதிற்குள்ளே, முரிகின்ற நீடு புருவம் நிகர் என - நெறிக்கின்ற நீண்ட புருவம் ஒப்பென்னும்படி, முனைகின்ற சாபம் முரிய - பொருகின்ற வில் வளைவுற, (அதில்), விரைவொடு தெரிகின்ற - வேகத்தோடு ஆராய்ந்து விடுகிற, கோல்கள் - அம்புகள், முழுகி - அழுந்துதலால், அறன் அருள் திருமைந்தன் மார்பு - தருமராசன் பெற்ற சிறந்த குமாரனாகிய யுதிட்டிரனது மார்பிலே, குருதி பொழிய - இரத்தம் வழியாநிற்க,—(எ - று.)

நீலகிரி - கருநிறமுடைய துரியோதனனது வலிய பரந்த மார்புக்கும், அதில் விழுந்துவிளங்குகிற இளவெயில் - மார்பிற் பெருகிவழிகிற செந்நீர்க்கும் உவமை. நீலகிரி - அஷ்ட குலபருவதங்களி லொன்று. 'முரிகின்ற புருவம்' என்றது, அவனது புருவங்கள் கோபத்தால் நெறிக்கின்றன வாதலால். நெறியாதநிலையில் இயல்பாக வளைந்துள்ள புருவங்கள்-வளைந்தவிற்களுக்கும், அப்புருவங்கள் கோபத்தால் நெறிப்படைதல் - அம்பையெய்யும்போது வில் அசைவுறுதற்கும் உவமையாம். நீலகிரி - இந்திரநீலரத்தினமயமான மலையுமாம். முழுகி = முழுக: எச்சத்திரிபு. (௭௭)

[தருமன் துரியோதனனது தேர்முதலியவற்றை யழித்தல்.]

மருமங்கள்சோரிவடியவிருவரு மலைகின்றபோதின்மதுகைநிலை
யொடு, தருமன்குமாரனகைகொடவனிபர் தலைவன்குமாரனுரகது
வசமு, மருமந்ததேரும்விசயவலவனு மடல்கொண்டுபாய்புரவியும
ழிவுற, வுருமஞ்சநாணியெறியுமொலியெழ வொளிவிஞ்சுநாலுபக
ழியுதையவே.

(இ - ள்.) மருமங்கள் - மார்புகள், சோரி வடிய - இரத்தம் வழியும்படி, இருவரும்—, மலைகின்ற போதில் - போர்செய்கின்றபொழுது,— தருமன் குமாரன் - தருமபுத்திரன், மதுகை நிலையொடு - வலிமையான நிலையோடு நின்று,—நகை கொடு - (கோபத்தாற்) சிரித்துக்கொண்டு,—அவனிபர் தலைவன் குமாரன் - அரசர்க்கு அரசனான திருதராட்டிரனது புத்திரனாகிய துரியோதனனது, உரக துவசமும் - பாம்புக்கொடியும், அருமந்த தேரும் - (கிடைத்தற்கு) அரிய அமிருதம்போலச் சிறந்த தேரும், விசயம் வலவனும் - வெற்றியைத்தருகிற சாரதியும், அடல் கொண்டு பாய் புரவியும் - வலிமைகொண்டு பாய்கிற குதிரைகளும், (ஆகிய நான்கும்), அழிவு உற - அழிவடையும்படி,—நாணி எறியும் ஒலி - வில்நாணி தெறிப்பதனாலுண்டாகிய ஓசை, உரும் அஞ்ச - இடியும் அச்சமுறுமாறு, எழ-உண்டாக, ஒளிவிஞ்சுநாலுபகழி-ஒளிமிக்கநான்குஅம்புகளை,உதைய-செலுத்த,(எ - று.)

நிலை - விற்போர்செய்வார்க்குஉரிய நிலை. மர்மம் - வடசொல். அவனிபர் - பூமியைக் காப்பவர். அவனிபர்தலைவன் - ராஜாதிராஜன். அருமந்த - அருமருந்தன்ன என்பதன் மரூஉ. (௭௮)

[துரியோதனன் வீசிய வேற்படையைத் தருமன் துணித்தல்.]

இழிதந்துமீளவிமயமனையதொ ரிரதங்கடாவியெதிரியுரன
டை, யழிதந்துமீளவயில்கொண்முனையதொ ரயில்கொண்டுவீசி
யெறியுமளவையின், மொழிதந்தவேலின்முனை டிவுற முறிகொ
ண்டுகிறிவழியில்விழவெதிர், பொழிதந்ததாலொர்பகழியறவு
புதல்வன்கைவாகைபுனையும்வரிவிலே.

(இ - ள்.) (துரியோதனன்), இழிதந்து - (தேரினின்று) இறங்கி,மீள மறுபடியும், இமயம் அனையது ஓர் இரதம் - இமயமலைபோன்றதொரு பெருந்தேரை, கடாவி - எதிர்நடத்திக்கொண்டு, எதிரி-பகைவன், உரன் இடை

மார்பினிடம், அழிதந்து - அழியப்பெற்று, மீள-திரும்பிப்போம்படி, அயில் கொள் முனையது ஓர் அயில் - கூர்மையைக்கொண்ட நுனியை யுடையதாகிய ஒருவேலாயுதத்தை, கொண்டு - கையிலெடுத்து, வீசி எறியும் அளவையில் - வேகமாய் எறிகிற சமயத்தில்,—அறன் அருள் புதல்வன் - தருமக்கடவுள்பெற்ற புத்திரனது, கை - கையிலுள்ள, வாகை புனையும் - (வெற்றிக்கு அடையாளமாக) வாகைப்பூமாலையைச் சூடிய, வரி வில் - கட்டமைந்த வில்லானது,—மொழிதந்த-(கீழ்ச்) சொல்லப்பட்ட, வேலின் - வேலினது,முனையும் - நுனியும், ஒடிவு உற - ஒடியவும்,முரிவுஉண்டு - (அவ்வேலும்)பிளந்து, கிறி - இரண்டுதுண்டாகி, வழியில் விழ-இடைவழியில் விழவும், ஓர் பகழி-ஓர்அம்பை, எதிர் - எதிரே, பொழிதந்தது - பிரயோகித்தது; (எ - று.)

இமயம் - பனிமலை; (ஹிமம் - பனி.) இது, 'மலையரசன்' எனப்படும். எதிரி - எதிர்ப்பவன்; இ - வினைமுதற்பொருள்விகுதி. ஆல்-ஈற்றசை. (எக)

[தருமன் துரியோதனனைத் தோற்கடித்தல்.]

பிளவுண்டுவேல்விழுதலின்மகிபதி பிழைகொண்டவேழமனையமெலிவினனுளநொந்துநாணியுருளுமிரதமு முடைதந்துபோருமொழியும்வகைசில, கிளரம்புவீசியொருபவளமுது கிரிநின்றதாகுமெனமுனிலைபெறு, வளமைந்தன்வாய்மையுரைசெய்தனன்மிசைவருமும்பர்யாருமிதயமகிழவே.

(இ - ள்.) வேல்—, பிளவுண்டு - பிளக்கப்பட்டு, விழுதலின் - கீழே விழுந்துபோனதனால், பிழை கொண்ட வேழம் அனைய மெலிவினன்-(தன் குறிப்புத்) தவறுதலைக் கொண்ட யானையைப்போன்ற வாட்டத்தையுடைய வனுகிய, மகிபதி - துரியோதனராசன், உளம் நொந்து - மனம்வருந்தி, நாணி - வெட்கப்பட்டு, உருளும் இரதமும் உடைதந்து - சக்கரங்களுந் தேரும் உடையப்பெற்று,போரும் ஒழியும் வகை - போரும் நீங்கும்படியாக, கிளர் சில அம்பு வீசி - விளங்குகிற சில அம்புகளைப் பிரயோகித்து, ஒரு பவள முது கிரி நின்றது ஆகும் என-பவழமயமானதொரு பழைய[பெரிய] மலை நின்றதை ஒக்குமென்னும்படி, முன் - எதிரே,நிலை பெறு - நிலையாக நின்ற,வளம் மைந்தன் - வெற்றியையுடைய வீரனான யுதிட்டிரன்,—மிசை வரும் - மேலே [ஆகாயத்தில்] (போர்காண) வந்த, உம்பர் யாரும் - தேவர்களெல்லாம், இதயம் மகிழ - (கேட்டு ஒக்குமென்று) மனம் மகிழும்படி, வாய்மை - (சில)மெய்வார்த்தைகளை, உரைசெய்தனன் - (துரியோதனனை நோக்கிச்) சொல்லுவானானான்; (எ - று.)—அவற்றை, மேல்இரண்டுகவிகளிற் கூறுகின்றார்.

மலைகளெல்லாம் படைப்புக்காலத்தே படைக்கப்பட்டனவாதலால், 'முதுகிரி' எனப்பட்டது. பவழக்கிரி - தருமனுக்குச் செந்நிறத்தாலும்,ஒளியாலும்,சலியாமல் நிலைநிற்றலாலும் உவமை. பிழைகொண்ட வேழம்-தவறி(ப்படுகுழியிலே)அகப்பட்டுக்கொண்ட யானை யென்றலுமாம்.மெலிவினன்-குறிப்புமுற்றெச்சம். வளம்மைந்தன் - மிக்கவலிமையுடையானுமாம். (அ0)

[இதுவும், அடுத்தகவியும் - தருமன் துரியோதனனை இகழ்தல்.]

அளிதங்குமாலையரசரவையினு னதிவஞ்சமாமனவனிகவர்வுற, வெளிவந்தசூதுபொருதவிரகரி தெளிதின்றுபூசலெனமுன்விடானை, யொ[illegible]சுதேருமுடையபடைகளு முடையுண்டுநீயுமுபறினை, தெளிவென்பதாசுமிலதுன்மனமுறு செருவென்றமையு[illegible]மையுமே.

[illegible] ன்குகவி[illegible]ள் - ஒருதொடர்.

(இ - ள்.) அளி தங்கு - வண்டுகள் மொய்க்கின்ற,மாலை - மாலைகளைத் தரித்த, அரசர் - அரசர்களது,அவையில் - சபையிலே, உன் - உன்னுடைய,

*அதி வஞ்சம் மாமன் - மிக்க வஞ்சனையையுடைய மாமனாகிய சகுனி, அவனி கவர்வுற - (எங்கள்) இராச்சியத்தைப் பறித்துக்கொள்ளும்படி, எளி வந்த சூது பொருத - எளிமைபொருந்திய சூதாட்டத்தை ஆடின, விரகு - தந்திரம், அரிது - (செய்தற்கு) அருமையானது: இன்று - இப்பொழுது, பூசல் - போர்செய்தல், எளிது - (செய்தற்கு) எளியது, என - என்று எண்ணி, முன் - எதிரில், விரவினை - (போர்க்கு)வந்துநின்றாய்போலும்; ஒளி விஞ்சு தேரும் - ஒளிமிக்க இரதமும், உடைய படைகளும் - உடையனவான ஆயுதங்களும், உடையுண்டு - அழிக்கப்பட்டு, நீயும்—, உறுதி தவறினை - (மனத்தின்)வலிமைநிலைமை தவறினாய்; உன் மனம்—, தெளிவு என்பது - தெளிவான அறிவென்பதை, ஆசும் இலது - சிறிதும் உடையதன்று; உறு செரு வென்ற - மிக்க போரிலே (நீ பகைவரைச்) சயித்த, வீரம் - வீரத்தன்மை, அமையும் அமையும் - போதும் போதும்; (எ - று.)*

உன்மாமன் என இயையும். எளிமை - இகழ்ச்சி; இப்பண்புப்பெயர் ஈறுபோயிற்று. ஒருவரோடொருவர் எதிர்த்து ஆடி வெற்றிதோல்விகளைப் பெறுதல்பற்றி, சூதாட்டத்தைப் போரென்றல் மரபு; கீழ்ச் சபாபருவத்திற் சூதுபோர்ச்சருக்கமென்றதுங் காண்க. சூதுபோர் அரியதேயன்றி மோதுபோர் அரியதன்று மிகவெளியது என்று எண்ணினை யாதலின், எதிர்த்து வந்தாய்; அங்ஙனம் எண்ணாமற் சூதுபோரினும் மோதுபோர் அரியதென்று எண்ணினையாயின் போர்க்கு வந்திராய் என்றபடி. கீழ்ப் பன்னிரண்டாம் போரில் தருமபுத்திரன் சகுனியைநோக்கி "சோரத்துடனீபொருதடர்த்த சூதன் றிவை மெய்துளைத்துருவும், வீரப்பகழி யுனையிவற்றால்வெல்வேன்" என்றதும் உணர்க. படைகள் - சேனைகளுமாம். ஆசும், உம்மை - இழிவு சிறப்பு. உறு - உரிச்சொல். அமையும் அமையும்-அடுக்கு, இகழ்ச்சி. (௬௧)

அனிலன்குமாரனரசரசனியெ னனுசன்சொல்வாய்மைபழுது படுமென, வுனையின்றுகோறலொழிவதலதுநி னுரமென்கொலாகு மெனதுகணையெதிர், புனைதும்பைமாலைசருகுபடவெழு பொடிமண் டவோடிமறைகவிரைவுட, னினியெங்களாண்மையுரைசெய்தெது பயனெதிர்வந்துநாளையணிகவிகலியே.

(இ - ள்.) அனிலன் குமாரன் - வாயுபுத்திரனும், அரசர் அசனி — பகையரசர்க்கு இடிபோன்றவனும், என் அனுசன் — எனது தம்பியுமாகிய வீமன், சொல் வாய்மை - (முன்னே) சபதஞ்செய்த வார்த்தை, பழுதுபடும் - (உன்னை நான் கொன்றால்) தவறிப்போகும், என - என்று எண்ணி, உனை - உன்னை, இன்று - இப்பொழுது, கோறல் ஒழிவது அலது - கொல்லுதலைச் செய்யாதொழிவ தல்லாமல், நின் உரம் - உனது வலிமை, எனது கணை எதிர் - என் அம்புகளுக்கு எதிரில், என் கொல் ஆகும் - என்ன தன்மையதாம்? [எளிதில்அழிந்ததா மென்றபடி]; புனை தும்பை மாலை - அணிந்துள்ள தும்பைப்பூமாலை, சருகு பட - சருகாக உலர்ந்துபோம்படி, எழு பொடி மண்ட - (கால்களின்விசையாற்) கிளப்பப்படுகிற புழுதி மிகுமாறு, விரைவுடன் - வேகத்தோடு, ஓடி மறைக - (என்கண்ணெதிரில்நில்லாமல்) ஓடிச்சென்று மறைந்துபோவாயாக; இனி - மேல்மேல், எங்கள் ஆண்மை - எங்கள் பராக்கிரமத்தை, உரைசெய்து - வாயினாற்சொல்லி, எது பயன் - என்ன பிரயோசனம்? நாளை - நாளைக்கு, இகலி - வலிமைகொண்டு, எதிர் வந்து அணிக - எதிரில் அணிவகுத்துப் போர்க்கு வருவாயாக; (எ - று.)

கீழ் ௩௮ - ஆங் கவியிற்போல, இதிலும் தழிஞ்சியென்னும் புறப்பொருட்டுறை காண்க.

சொல்வாய்மை - துரியோதனாதியர் நூற்றுவரையும் [illegible]ன ஒருவனே கதையினாற் பொருது கொல்வேனென்று திரௌபதிமுதலியோரிருந்தகாலத்துக் கூறிய பிரதிஜ்ஞைகள். "பாஞ்சாலிக் காசவையிற் பழுதுரைத்

தோ னுடலெனது படையா மேழி, யோஞ்சாலி னிணஞ்சொரியத் துணைவ ரொடு குலமானப் பொருவேன் யானே" எனக் கீழ்ச் சூதுபோர்ச்சருக் கத்துக் கூறியமை காண்க. உரம் - மார்புமாம். என்கொல், கொல் - அசை. தம்பியர் நால்வரையுங் கூட்டி, உளப்பாட்டுத்தன்மைப்பன்மையாக, 'எங்க ளாண்மை' என்றான். 'ஆண்மை யுரைசெய் தெதுபயன்'- அது யாவர்க்கும் நிச்சயமாகத் தெரிந்ததே யென்றபடி. 'இகலி' என்றது - சேனைகளையும் ஆயுதங்களையும் உடன்கொண்டு என்றவாறும். அணிக - அழகிதாக [பொலி வுடன்] வருக எனினுமாம். (அஉ)

[கதையேறிந்த துரியோதனன்மேல் தருமன் வேலெறிதல்.]

முதிர்குந்தி போசன் மகடன் மகனிவை மொழிதந்த போழ்து
பெருக முறுவல்செய்,ததிருஞ்சு யோத னனுமொ ருயர்கதை யவன்
மன்றன் மார்பி னுரனொ டெறிதர,வெதிர்சென் று நீதி நிருப னுறும
வ னெறிதண்டு கூறு படவு மெறியவன்,விதிருண்டு பாரில் விழவு
மொருதனி விறலுந்து வேல்கொ டுருவ வெறியவே.

(இ - ள்.) போசன் மகள் குந்திதன் முதிர் மகன் - போஜதேசத்து அரசனாகிய குந்தியென்பவனது மகளான குந்தியின் மூத்தகுமாரனாகிய யுதிட்டிரன், இவை மொழிதந்த போழ்து - இவ்வார்த்தைகளைச் சொன்ன பொழுது,—பெருக முறுவல் செய்து - மிகச்சிரித்து, அதிரும் - சிங்கநாதஞ் செய்கிற, சுயோதனனும் - துரியோதனனும், ஓர் உயர் கதை - ஒரு பெரிய கதாயுதத்தை, அவன் அத்தருமனது, மன்றல் மார்பின் - வாசனையை யுடைய மார்பிலே, உரனொடு வலிமையோடு, எறிதர-வீச,—நீதி நிருபன்- நியாயத்தையுடைய தருமபுத்திரன்,— எதிர் சென்று - எதிரிற் போய்,— உறும் - வருகிற, அவன் எறி தண்டு - அவனெறிந்த கதாயுதம், கூறு படவும் - பிளவுபடும்படியாகவும்,—எறிபவன்- (கதையை)எறிந்த அவன், விதிர் உண்டு - நடுக்கமடைந்து, பாரில் விழவும் - பூமியில் விழும்படியாகவும்,— தனி - ஒப்பில்லாத, விறல் உந்து - வலிமையோடு எறியத்தக்க, ஒரு வேல் கொடு-ஒரு வேலாயுதத்தை எடுத்து,உருவ-ஊடுருவும்படி,எறிய-வீச,-(எ-று.)

குந்தி - வசுதேவருடன்பிறந்தவள்; கிருஷ்ணனுக்கு அத்தை: இவளைத் தந்தையான சூரன தனதுநண்பனும் பிள்ளையில்லாதவனுமான குந்தி யென்பவனுக்குத் தத்துக்கொடுத்ததனால், இவளுக்குக் குந்தி யென்று பெயர்; பிருதை யென்பது, இவளது இயற்பெயர். குந்திபோசன்மகள் என்று எடுத்து, குந்திபோஜதேசத்தரசனது மக ளென்றும் உரைக்கலாம். முறுவல்செய்து அதிர்தல் - அட்டஹாஸஞ்செய்தல். மார்புக்கு மன்றல் - தரித்த மலர்மாலைகளினாலும் பூசிய கலவைச்சந்தனத்தினாலு மாகியது. மார்பின், இன் - ஏழனுருபு. (அங)

வேறு.

[துரியோதனன் கீழ்விழக் கர்ணன் அவனையடுத்தல்.]

சூழ்ந்தது விதிகொல் பாகுந் துரகமுந் தேரும் வீழ
வீழ்ந்தனன் வேந்தர் வேந்தன் மெய்தவா வேந்தன் வேலாற்
?ழ்ந்தது நமது கொற்ற மெனநடுத் தரிப்பொன் றின்றி
ாழ்ந்[illegible]ங் கடலோ டொப்பா னடுத்தன னங்கர் கோமான்.

[illegible] - ள். [illegible]த பைங் கடலோடு ஒப்பான் - ஆழமான பசிய கட ஒப்பவனாகிய, அங்கர் கோமான் - அங்கதேசத்தார்க்கு அரசனான [illegible]தர் வேந்தன் ராஜராஜனான துரியோதனன், மெய் தவா வே[illegible]லால் - சத்தியந் தவறாத யுதிட்டிரராசனது வேலினால், பாகும் [illegible] தேரும் வீழ - சாரதியும் குதிரைகளும் தேரும் அழிய, வீழ்ந்தனன் - கீழ்விழுந்தான்; விதி சூழ்ந்தது கொல் - ஊழ்வினை(அவனை

முடித்தற்குச்) சுற்றிக்கொண்டதோ? ஏமேது—, கொற்றம் - வெற்றி, தாழ்ந்தது - தாழ்வடைந்தது', என - என்றுஎண்ணி, நடு தரிப்பு ஒன்று இன்றி - மனம் நிலைநிற்றல் சிறிதும் இல்லாமல் [மனங்கலங்கி], அடுத்தனன் - (துரியோதனனருகில்) வந்துசேர்ந்தான்; (எ - று.)

விதியாவது - இருவினைப்பயன் செய்த உயிரையே சென்றுஅடைதற்கு ஏதுவாகிய நியதி. கொல் - ஐயம். நடு - மனத்திற்கு ஆகுபெயர். பசுமைக்குங் கருமைக்கு முள்ள வேறுபாட்டைப் பாராட்டாது கருங்கடலைப் பைங்கட லென்றல், கவிசமயம்: பசுமை - குளிர்ச்சி யாகவுமாம. கடல் உவமை, கம்பீரமான தோற்றத்திற்கு. பரமசிவனது நெற்றிக்கண்ணின் நெருப்புக்கு இரையாகி வெந்த மன்மதனது அங்கம் [சரீரம்] விழுந்ததனால், அத்தேசத்துக்கு அங்க மெனப் பெயர்; "வாரணத் துரிவையான் மதனனைச் சினவுநாள், ஈரமற் றங்கமிங் குகுதலா லிவணெலாம், ஆரணத் துறையுளா யங்கநாடு" எனக் கம்பராமாயணத்திற் கூறியவாறு காண்க. நடு தரிப்பு ஒன்று இன்றி - இடையில் நிற்றல் சிறிதும் இல்லாமல் எனவுமாம். கோமான், மான் - பெயர்விகுதி. சூழ்ந்ததுகொல் - உண்ணிற்றோ வென்றுமாம்.

இதுமுதல் இச்சருக்கம்முடியுமளவுமுள்ள எட்டுக் கவிகள் - பதினொன்காம்போர்ச்சருக்கத்தின்கடுடு-ஆங்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள்.

[அசுவத்தாமன் துரியோதனனை அடுத்தல்.]

முற்படுதினத்திற்றந்தைமுடிந்தமெய்வருத்தத்தோடு
கற்படுபுண்ணின்மீளத்தடிபடுகணக்கிற்றாக
வெற்படுதடந்தோள்வேந்தன்வீழ்ந்தனனென்றுவெய்தி
னெற்படுபரிதியென்னத்தோன்றினனிவுளித்தாமா.

(இ - ள்.) இவுளித்தாமா - அசுவத்தாமன்,—முன் படு தினத்தில் - முந்தினநாளையுத்தத்தில் [பதினைந்தாம்போர்நாளில்], தந்தை முடிந்த - (தன்) பிதாவாகிய துரோணன் இறந்ததனா லுண்டான, மெய் வருத்தத்தோடு - மனவருத்தத்துடன், கல் படு புண்ணில் மீள தடி படு கணக்கிற்று ஆக - கல் பட்டதனா லாகிய விரணத்திலே மற்றும் தடியடிபட்ட தன்மையதாம்படி, வெற்பு அடு தட தோள் வேந்தன் வீழ்ந்தனன் - மலையையொத்த பெரிய தோள்களையுடைய அரசன் (இன்று) கீழ்வீழ்ந்தான், என்று-என்றுஎண்ணி வருந்தி, வெய்தின் - உக்கிரமாக, எல் படு பரிதி என்ன - பகலில் தோன்றுகிற சூரியன்போல, தோன்றினன் - (அங்கே)வந்தான்; (எ - று.)—இவுளி-குதிரை.

மெய் என்னும் உடம்பின் பெயர், அதன் அந்தக்கரணமாகிய மனத்துக்கு முதலாகுபெயர்; மெய்வருத்தம் - உண்மையான வருத்தமுமாம். கணக்கிற்று - இன்சாரியையும் றுகரவிகுதியும் பெற்று வந்த ஒன்றன்பாற் குறிப்புமுற்று. கற்படுபுண்ணில் மீளத் தடிபடுகணக்கிற்றாக—இது, வருத்தத்தின்மேல்வருத்தத்திற்கு உவமம்; "கற்படும்புணிற் றடிபடுங் கணக்கு" என்பர் மேற் பதினேழாம்போர்சசருக்கத்தும். அடு - உவமவுருபு. வெய்தின் - விரைவாக எனினுமாம். (அ௩)

[கிருபாசாரியன் துரியோதனனை அடுத்தல்.]

ரிவட்டவெங்களிறோடொப்பான்மேதினிக்கரசன்விற்போர்ப்
பூட்டரும்புரவித்தேரும்பொன்றியபூலனுமாகி
யோட்டமிருனையான்கைவேலினுலண்டந்தமாற்றந்
கேட்டனனவர்க்குமுன்னேகிருபவாசிரியன்வந்தா

(இ - ள்.) வேட்டம் வெம் களிறோடு ஒப்பான் - வேட்டையிற்பொருந்திய கொடிய ஆண்யானையோடு ஒப்பவனாகிய, மேதினிக்கு அரசன் - பூமி

க்கு அரசனான துரியோதனன், வில் போர் - வில்லைக்கொண்டுசெய்யும் போரில், பூட்டு அரும் புரவி தேரும் - கட்டிப்பூட்டுதற்கு அரிய குதிரைகள் பூட்டிய தேரும், பொன்றிய புலனும் ஆகி - அழிந்த அறிவும் உடையவனாய், ஓட்டம் இல் தானையான் ஏக வேலினால் - (புறங்கொடுத்து)ஓடுதலில்லாத சேனையையுடையவனான யுதிட்டிரனது கையினால் எறியப்பட்ட வேலினால், உடைந்த - அழிந்த, மாற்றம் - செய்கையை, கேட்டனன் - கேட்டவனாகி, கிருப ஆசிரியன் - கிருபாசாரியன், அவர்க்கு முன்னே வந்தான் - கீழ்க்கூறிய கர்ண அசுவத்தாமர்களுக்குமுன்னே ஓடிவந்தான்; (எ - று.)

வேட்டவெங்களிறு - அடங்காத சீற்றத்துக்கு உவமை. வேட்டவெங்களிறு-வேட்டையிற்பிடிபட்ட களிறுமாம். வேடுஎன்ற நெடிற்றொடர், தன் ஒற்றுஇரட்டி அம்சாரியைபெற்று 'வேட்டம்' என நிற்கும். வில் - வேல் முதலிய மற்றை ஆயுதங்கட்கும் உபலக்ஷணம். பூட்டு அரும் புரவித் தேர் - பூட்டிய அருமையான குதிரைகளையுடைய தேருமாம். ஓட்டம் - தொழிற்பெயர்; அம் - விகுதி. 'முன்'என்னும் இடைச்சொல்-இங்கு;இடப்பொருளையும் காலப்பொருளையும் ஒருங்கே உணர்த்திற்று. (அசு)

[சல்லியன் துரியோதனனை அடுத்தல்.]

காப்புடையொற்றைநேமிக்காவலன்றாமமார்பி
னாப்புகல்வாய்மையான்றனாண்மலர்ச்செங்கைவைவேல்
கோப்புறவீழுமுன்னர்க்கொதித்தெழுமனத்தனாகித்
தாப்புலிபாய்ந்ததென்னச்சல்லியன்றானும்வந்தான்.

(இ - ள்.) காப்பு உடை - காத்தல்தொழிலையுடைய, ஒற்றை நேமி - ஒப்பற்ற ஆஜ்ஞாசக்கரத்தையுடைய, காவலன் - துரியோதனராசனது, தாமம் மார்பில் - (நஞ்சாவட்டைப்பூ) மாலையையுடைய மார்பிலே, நா புகல் வாய்மையான்தன் - நாவினாற் சொல்லப்படுகின்ற சத்தியத்தையே யுடையவனான யுதிட்டிரனது, நாள் மலர் செம் கை - அன்றலர்ந்த செந்தாமரைமலர்போன்ற சிவந்த கையினால் எறியப்பட்ட, வை வேல்-கூர்மையான வேல், கோப்பு உற - கோத்தல்பொருந்த, வீழும் முன்னர் - விழும் முன்னமே, கொதித்து எழும் மனத்தன் ஆகி - கோபித்துஎழுகிற மனத்தையுடையவனாய், சல்லியன்தானும் - சல்லியனும், தா புலி பாய்ந்தது என்ன-வலிய புலி பாய்ந்ததுபோல, வந்தான் - விரைந்துவந்தான்; (எ-று.)

காப்பு, கோப்பு - தொழிற்பெயர்கள்; பு - விகுதி. ஒற்றைநேமி - ஏக சக்ராதிபத்தியம். ஒற்றை - இரண்டற்றது. ஆஜ்ஞையைச் சக்கரமென்றுங் குடையென்றுங் கூறுதல், கவிமரபு. தாமம் மார்பு - ஒளியையுடைய மார்புமாம். "பொய்ம்மைமொழிபுகன்றறியேம் புகலமனமெண்ணுகினும், மெய்ம்மையலதுரையாநா வேதநவில்பயிற்சியால்"என்றாற்போல மறந்தும்பொய் கூறாதவாறு நாவுக்குஉள்ள தூய்மை விளங்க, "நாப்புகல்வாய்மையான்" என்றார். மலர் - கைக்கு,மென்மை அழகுகளால் உவமை. வை, தா - உரிச்சொற்கள்; "வையே கூர்மை," "தாவே வலியும் வருத்தமு மாகும்"என்பன தொல்காப்பியம். இனி, தாப் புலி - தாவுதலையுடைய புலியுமாம். வீழுமுன்னர் வந்தான் - விழுந்தவுடனே வந்தான் என விரைவைவிளக்கும். (அஎ)

[அருச்சுனன் முதலியோர் தருமனை யடுத்தல்.]

எப்பெருஞ்சேனையோடுமெக்குலவேந்தும்வந்து
தப்பருங்கொற்றவேற்கைத்தருமனைவளைந்தகாலை
யப்பெருந்தானைதன்னிலருச்சுனனாதியான
வொப்புருந்தரணிபாலரிவற்குவந்துதவினாரே.

(இ - ள்.) எ குலம் வேந்தும் - உயர்குலத்திற்தோன்றிய எல்லாவரசரும்,எ பெருஞ் சேனையோடும் - பெரிய எல்லாச்சேனைகளுடனும்,வந்து—,

தப்பு அருங் கொற்றம் வேல் கை - தவறுதலில்லாத வெற்றியைத்தருகிற வேற்படையை யெறிந்த கையையுடைய, தருமனை—, வளைந்த காலை - சூழ்ந்தபொழுதில்,—அ பெருந் தானை தன்னில் - அந்தப் பெரிய பாண்டவ சேனையி லுள்ள, அருச்சுனன் ஆதி ஆன - அருச்சுனன் முதலான, ஒப்பு அருந் தரணிபாலர் - உவமையில்லாத அரசர்கள், இவற்கு வந்து உதவினர் - இத்தருமனுக்கு வந்து துணையானார்கள்; (எ - று.)

வேந்து - அரசத்தன்மை; அரசனுக்குப் பண்பாகுபெயர்: அரசு, அமைச்சு, தூது, பாகு என்பனவும் இவ்வாறே; இவற்றை, 'உயர்திணைப் பொருள்தரும் அஃறிணைச்சொல்' என்றலு முண்டு. தப்பரு, ஒப்பரு என்ப வற்றில் அருமை - இன்மையுணர்த்திற்று; "உறற்பால, நீண்டா விடுத லரிது" என்னும் நாலடியாரிலும், "மனக்கவலை மாற்ற லரிது" என்னுந் திருக்குறளிலும் போல. தரணி பாலர் - பூமியைக் காப்பவர். (அஅ)

[பின்பு நிகழ்ந்த போரிற் கௌரவர் புறமிடுதல்.]

இருபடையரசுந்தம்மிலீரிரண்டங்கமாகி
வருபடைகொண்டுநின்றுவல்லவாபூசறாக்கிப்
பொருமரவுடைப்பதாகைப்பூபதிதனையுங்கொண்டாங்
கொருபடைகைக்கொளாமலொன்னலருடைந்துபோனார்.

(இ - ள்.) இரு படை அரசும் - ஆயுதங்களில்வல்ல (கௌரவர் பாண்டவர் என்னும்)இருதிறத்தரசர்களும், ஈர் இரண்டு அங்கம் ஆகி வரு படை கொண்டு - (யானை தேர் குதிரை காலாள் என்னும்) நான்கு அங்கமாகி வருகின்ற சேனையை உடன்கொண்டு, நின்று - எதிர்த்துநின்று, வல்ல ஆ - தாம்தாம் வல்லபடி, தம்மில் - தமக்குள், பூசல் தாக்கி - போரை மோதிச் செய்து,—(பின்பு),—ஆங்கு - அப்போரில், ஒன்னலர் - பகைவர் [கௌரவ சேனையார்], உடைந்து - தோற்று, பொரும் அரவு உடை பதாகை பூபதி தனையும் கொண்டு-(பிராணிகளைத்)தீண்டியழிக்குந்தன்மையதான பாம்பின் வடிவத்தை யெழுதிய கொடியையுடைய துரியோதனராசனையும் எடுத் துக்கொண்டு, ஒரு படை கைக் கொளாமல் - ஓர் ஆயுதத்தையுங் கையிற் கொள்ளாமல் [எல்லாஆயுதங்களையும் இழந்து], போனார் - ஓடிப்போனார் கள்; (எ - று.)

வல்ல ஆ என்பதில்,ஆ - ஆறுஎன்பதன் விகாரம். ஒன்னலர்-ஒன்றலர் என்பதன் மரூஉ; எதிர்மறைவினையாலணையும்பெயர்: சேராதவர். (அகூ)

[பாண்டவசேனையார் வெற்றியோடு மீளுதல்.]

நாகையாப்புகழான்பெண்ணைநதிவளஞ்சுரக்குநாடன்
வாகையாற்பொலிதிண்டோளான்மாகதக்கொங்கர்கோமான்
பாகையாட்கொண்டான்செங்கைப்பரிசுபெற்றவர்நெஞ்சென்ன
வோகையாற்செருக்கிமீண்டாருதிட்டிரன்சேனையுள்ளார்.

(இ - ள்.) உதிட்டிரன் சேனை உள்ளார் - தருமனது சேனையி லுள்ள வீரர்கள்,—நா கையா புகழான் - நாவுக்குக் கைக்காத [மிகஇனிய] கீர்த்தி யையுடையவனும், பெண்ணை நதி வளம் சுரக்கும் நாடன் - பெண்ணையாற் றின் நீர்வளம் மிக்க திருமுனைப்பாடிநாட்டை யுடையவனும், வாகையால் பொலி திண் தோளான் - வெற்றிமாலையால் விளங்குகின்ற வலிய தோள் களையுடையவனும், மா கதம் கொங்கர் கோமான் - மிக்க கோபத்தை யுடைய கொங்கர்குலத்தரசர்க்குத் தலைவனும் ஆகிய,பாகை - வக்கபாகை யென்னும்நகரத்தில் அரசாளுகிற, ஆட்கொண்டான் - வரபதியாட்கொண் டானென்னும் மன்னனது, செம் கை - சிவந்த இரண்டு கைகளினாலுங் கொடுக்கப்படுகிற, பரிசு - வெகுமானத்தை, பெற்றவர் - பெற்ற புலவர்க

வந்து, நெருசு என்ன - மனம்போல, ஓகையால் செருக்கி - மகிழ்ச்சியினாற் களித்து, மீண்டார் - திரும்பித் தம் படைவீட்டுக்குச் சென்றார்கள்; (எ - று.)

'காவலர்க்கு இனியபுகழ்' என்னாமல் 'வாகையாப்புகழ்' என எதிர்மறைமுகத்தாற் கூறியது, எவ்வளவுபுகழ்ந்தாலும் போதுமென்று வெறுப்பைத் தராத அப்புகழின் இனிமைமிகுதியை நன்கு விளக்குதற்கு. புகழாவது - இம்மைப் பயனாகி இவ்வுலகில்நிகழ்ந்து என்றும் இறவாது நிற்குங் கீர்த்தி. "மற்றவனிப்புவியாளும்வளவனுக்குமுடிகவித்து வழுதித்தெவ்வைச், செற்றவனுக்கவனியெலாஞ்செங்கோன்மைநிலையிட்டு... ...கமலமாதுங், கொற்றவையுமணங்களிப்பத் தன்னும மேருவினுங்கோட்டினானே" என்று இந்நூற்சிறப்புப்பாயிரத்திற் கூறியபடி, இவன் சோழராசனுக்குஉதவியாகச் சென்று, அவனுக்குப் பகைவர்களாய்ப் பலதிக்குக்களிலுமிருந்த அரசர்களையெல்லாம் வென்று, அச்சோழனுக்கு அரசை நிறுத்தினனாதலால், அச்சிறப்புத் தோன்ற 'வாகையாற் பொலி திண்டோளான்' என்றார். 'பாகை - முதற்குறை விகாரம். ஆள்கொண்டான் - பலரை அடிமையாகக்கொண்டவன். புலவர்க்கு எடுத்தெடுத்துக்கொடுத்துக் கைகள் சிவந்தனபோலு மென்பார், 'செங்கை' என்றார்; "செல்வமெல்லாங், கற்றவருக் கிருகையுடைக் கற்பகம்போலினிதளித்து" எனச் சிறப்புப்பாயிரத்துக் கூறியிருத்தலும், கீழ்க் காண்டவதகனச்சருக்கத்தில் "சொன்மழைபொழிந்து நாடோறுந் தனதுதோள்வலிதுதிக்குநாவலர்க்குப், பொன்மழைபொழியுங் கொங்கபூபதி" என்றதும், மேற் பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "கோவல்சூழ்பெண்ணைநாடன் கொங்கர்கோன் பாகைவேந்தன், பாவலர்மானங்காத்தான் பங்கயச்செங்கையென்ன, மேவலரெமரென்னாமல் வெங்களந்தன்னினின்ற, காவலன்கன்னையும் பொழிந்தது கனகமாரி" என்பதுங் காண்க. இந்நூலாசிரியர் வரபதியாட்கொண்டானை இந்நூலின் இடையிடையே புகழ்ந்துபேசுதற்குக் காரணம், நூலாசிரியர்வரலாற்றில் விளக்கப்பட்டது. கொங்கர் - கொங்குநாட்டவர். ஓகை - உவகை யென்பதன் மரூஉ. (௧௦)

[அன்றைச் சூரியாஸ்தமனமும், மறுநாட் சூரியோதயமும்.]

அருக்கனுந் தருமன் மைந்த னாண்மையு நிலையுங் கண்டு
வெருக்கொளு நிருப ரென்ன மேற்றிசை வேலை மூழ்கிச்
சுருக்கமில் கங்குற் காலஞ் சென்றபின் சுதன்மே லன்பு
பெருக்கவுண் டாக மீண்டுங் குணகடற் பிறந்திட் டானே.

(இ - ள்.) அருக்கனும் - சூரியனும்,— தருமன் மைந்தன் - தருமபுத்திரனது, ஆண்மையும் - பராக்கிரமத்தையும், நிலையும் - போர்நிலைமையையும், கண்டு - பார்த்து, வெரு கொளும் - அச்சங்கொள்ளுகிற, நிருபர் என்ன - அரசர்கள் (ஓடியொளித்தல்) போல, மேல் திசை வேலை - மேற்குத்திக்கிலுள்ள கடலில், மூழ்கி - முழுகிமறைந்து [அஸ்தமித்து],— சுருக்கம் இல் - சுருங்குதலில்லாத, கங்குல் காலம் - இராப்பொழுது, சென்ற பின் - கழிந்தபின்பு,— சுதன்மேல் அன்பு பெருக்க உண்டாக - (தன்) குமாரனான கர்ணனிடத்து அன்பு மிகுதியாக உண்டாக, (அதனால் அவனைக் காணுதற்கு வந்தவன்போல), மீண்டும் - மறுபடியும், குண கடல் பிறந்திட்டான் - கிழக்குக்கடலில் உதித்தான்; (எ - று.)

அருக்கன் - அர்க்கன். நிலை - கலங்காதஉறுதி. முதலிரண்டடி - உவமையணி. பின்னிரண்டடியில், இயல்பாகச் சூரியன் உதித்தற்குக் காரணமாகாத சுதன்மேலன்புபெருக்கஉண்டாதலை அதற்குக் காரணமாகக் கற்பித்தனால், ஏதுத்தற்குறிப்பேற்றவணி. (௧௧)

பதினாறாம்போர்ச்சருக்கம் முற்றிற்று.

# வில்லிபுத்தூராழ்வார் வரலாறு. *

வில்லிபுத்தூராரென்பவர், தமிழில் மகாபாரதம்பாடிய ஒருமகாகவி. இவர் பிராமணசாதியிற்பிறந்தவரென்பது, இந்நூற் சிறப்புப்பாயிரத்தில் "வண்ண நான்கினு முயர்ந்துளோ னொருமுனி வந்தான்" என்றதனால் விளங்கும்.

இவருடைய மதம் வைஷ்ணவ மென்பது, சிறப்புப்பாயிரத்தில் "பைந் துழாய்முடிப் பரமனைப் பலகவித்துறையுஞ், சிந்தையான்மொழிந் தன்பர்தந் திருவுளம் பெற்றோன்" என வருதலினாலும், இவர் இப்பாரதத்தின் முதலிலும் இந்நூலின் ஒவ்வொருசருக்கத்தின் ஆதியிலும் ஸ்ரீமகாவிஷ்ணுவின் விஷயமாகவே பலவாறு கடவுள்வாழ்த்துக் கூறியுள்ளதனாலும், "எங்கள் மாதவன்" என்று நூலைத் தொடங்கியிருப்பதனாலும், வில்லிபுத்தூராழ்வாரெனத் திருநாமமுடைமையாலும், தெளிவாகத் தெரியவருகிறது.

இவர் ஒன்பதாம்போர்ச்சருக்கத்துக் காப்புச்செய்யுளில் "ஓராறுபேத சமயங்களுக்கு முருவாகிநின்ற வொருவ, னீராறுநாம முறைசெய்து மண்கொடிடுவார்கள்காணு மிமையோர்" எனத் துவாதசோர்த்துவ புண்டரத்தைச் சிறப்பித்துக்கூறியுள்ளதனால், இவர் திருமண்காப்புச்சாத்தும் ஸ்ரீவைஷ்ணவ ரென விளங்கும். இன்னும் இவர் திருமாலிடத்துமாத்திரமேயன்றி அவ்வெம்பெருமானடியார்களுட் சிறந்தவரான ஆழ்வார்களிடத்தும் ஈடுபாடுடையவ ரென்பதை, பதினைந்தாம்போர்ச்சருக்கத்துக் காப்பில் "கொத்தவிழ்த்த சோலை மன்னு குருகை யாதி நெஞ்சிலே, வைத்த முத்திநாதன்" என நம்மாழ்வாரையும், பத்தாம் போர்ச்சருக்கத்துக்காப்பில் "கலிய னெங்கள் மங்கையாதி கண்டுகொண்ட நாமமே" எனத் திருமங்கையாழ்வாரையும் எடுத்துக்கூறியுள்ளதனாற் காண்க.

இவர் திருவவதரித்த ஊர், நடுநாட்டிலுள்ள சனியூ ரென்பது; (இதனைக் கோயமுத்தூரைச் சார்ந்ததென்று சிலர் கூறுவர்.)

பெண்ணையாறு பாயப்பெற்றதும், திருக்கோவலூர்முதலிய விஷ்ணுஸ்தலங்களையும் திருவெண்ணெய்நல்லூர்முதலிய சிவஸ்தலங்களையு முடையதும், நடுநாடென்று சொல்லப்படுவதுமாகிய திருமுனைப்பாடிநாட்டில் சனியூரிலே பிராமணசாதியிலே வைஷ்ணவமதத்தில் வீரராகவாசாரிய ரென்பவருக்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்த இவ்வில்லிபுத்தூரார், பாலியத்திலேயே நல்லாசிரியரையடுத்துக் கல்விகற்று, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் தம்மையொத்தாரும் மிக்காருமில்லையாம்படி மிகவல்லவராய், வடமொழியிலும் மிக்க தேர்ச்சி பெற்று, ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகைப்பட்ட கவிகளையும் சிரமமில்லாமல் மிகஎளிதில் அமிழ்தினும் இனியனவாகப் பாடவல்லராய், சேரசோழபாண்டியரென்னுந் தமிழ்நாட்டுமூவேந்தர்களாலும் மிக்கசிறப்புடன் விரும்பியழைக்கப்பட்டு அங்கங்கே சென்று தமது கல்வித்திறமையைப் பலவகையாலுங்காட்டி அவர்களைக்களிப்பித்து அவர்கள் அன்போடு அபிமானித்து மிகுதியாகவழங்கிய சிறந்த பல பெரும்பரிசுகளைப் பெற்று, பற்பலகவித்துறைகள்பாடித் திருமாலை இரவும்பகலும் எப்பொழுதுந் துதித்துக்கொண்டு, (வடக்கே திருவேங்கடமும் தெற்கே கன்னியாகுமரியும் கிழக்கிலும் மேற்கிலுங் கடலும் எல்லையாக அமையப்பெற்றுள்ளதும், சோழநாடு பாண்டியநாடு மலைநாடு கொங்குநாடு நடுநாடு தொண்டைநாடு எனப் பலவகையாகப் பகுக்கப்பட்டுள்ளதுமாகிய) தமிழ்நாடு முழுவதிலுந் தமது கல்விப் பெரும்புகழைப் பரவச்செய்துவந்தார். அங்ஙனம் வருகையிலே, முன்கூறிய திருமுனைப்பாடிநாட்டிலே வக்கபாகையென்னும் இராசதானியிலே வீற்றிருந்து செங்கோல்செலுத்தி, தலை இடை கடை யென்னும் மூவகைச் சங்கத்தி

* இவ்வரலாறு, இவர்குமாரராகிய வரந்தருவா ரென்கிற வரதாசாரியர் இருபத்திரண்டு செய்யுட்களாற் செய்துள்ள சிறப்புப்பாயிரத்தைப் பிரதான ஆதாரமாகக்கொண்டும், மற்றுஞ்சில ஆதாரங்களால் வேறுசில விஷயங்களைச் சேர்த்தும், ஒருவாறு காட்டப்படுகிறது.

லே வளர்ந்துவந்த தமிழ் பின்பு பங்கத்தையடையாதபடி நான்காவதொரு சங்கம்போல அதனைப் பாதுகாத்து, அருங்கவிப்புலவர்களை அன்புடன் ஆதரித்துவந்த வள்ளலும், கல்வி அறிவு ஒழுக்கங்களாலும் செல்வம் அதிகாரம் முதலிய நலங்களாலுங் குறைவின்றி மிகச்சிறப்புற்று விளங்கியவனு மாகிய கொங்கர் குலத்துத் தோன்றிய வரபதியாட்கொண்டா னென்கிற அரசன், இவ்வில்லிபுத்தூரரரது கல்விகேள்வித்திறமைகளையும் அடக்கம் ஒழுக்கம் அன்பு அருள் வாய்மை முதலிய நற்குணங்களையுங் கேள்வியுற்று அறிந்து 'இக்குணங்களெல்லாம் ஒருவரிடத்திலே ஒருங்கே அமைந்திருப்பது அருமை அருமை!' என்று மிகஆச்சரியமுற்று இவரைவரவழைத்து அநேகசம்மானங்கள்செய்து தனது ஆஸ்தாநபண்டிதராக அமைத்துவைத்து, ஒருநாள் இவரைநோக்கி 'உமக்கும் நீர் எழுந்தருளியுள்ள இந்த எனது சம்ஸ்தாநத்துக்கும் உலகமுள்ளஅளவும் அழியாப்பெருங்கீர்த்தி உண்டாகி நிலைபெறும்படி, வடமொழியில் ஸ்ரீ வேத வியாசமகாமுனிவரால் விரித்துரைக்கப்பட்ட மகாபாரதசரித்திரத்தைச் செந்தமிழில் விருத்தப்பாடல்களினால் ஒருபெருங்காப்பியமாகத் தமிழ்பயில்வோர் அனைவரும் ஓதியுணர்ந்து உய்யுமாறு பாடித்தந்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, இவர் அவ்வேண்டுகோளுக்கு இசைந்து (இதிகாசமிரண்டனுட் பெரியதாகிய) மகாபாரதத்தை மகாகாவியமாகச் சொற்சுவை பொருட்சுவைகள் மிக்கு விளங்கும்படி நல்லநடையிலே பாடியருளினர். இது நிற்க:

இவர் பாரதம்பாடிய காரணம் இன்னும்இரண்டுவகையாகவுங்கூறப்படும். அவற்றுள், முதலாவது வருமாறு:—இந்தவில்லிபுத்தூராருக்கும் இவர்தம்பியாருக்குந் தாயபாகத்தைப்பற்றி விவாதமுண்டாகி அவ்விஷயத்தை அவர்கள் அரசனிடம் அறிவித்தனர்; அரசன் இவரது கல்வித்திறத்தை முன்னமேகேட்டு அறிந்துள்ளவனாதலால் 'இவ்வளவுகற்றறிந்தவருக்கும் உண்மையறிவு உண்டாகவில்லையே' என்று மிகவும் விசாரமடைந்து 'அவ்வுண்மையறிவை அவருக்கு உண்டாக்குவதற்கு ஏற்ற உபாயம், (தாயபாகங்காரணமாகத் துரியோதனுதியர் மாறுபட்டு அழிந்ததைக் கூறும்) மகாபாரதநூலில் இவரைப்பழகும்படி செய்வதே' என்று நிச்சயித்து 'மகாபாரதத்தை நீர் தமிழிற் பாடவேண்டும்; பாடினபின்புதான் உங்கள் வழக்குத் தீர்க்கப்படும்' என்று கட்டளையிட்டான்; உடனே அவர் அவ்வாறே அப்பாரதத்தைப்பாடி, அந்நூலின் நீதியிற் கருத்தூன்றினவராய், பின்பு தாமே தம்தாயபாகத்தில் வெறுப்புற்று, அதனையுந் தம் தம்பிக்கே கொடுத்துவிட்டனர் என்று கூறுவர் சிலர்.

வேறுசிலர் கூறுமாறு:—இவ்வில்லிபுத்தூரார் தம்மோடு வாதஞ்செய்து தோற்றவர்களது காதுகளைத் தோண்டியறுக்குந் துறட்டைக் கையிற்கொண்டு சென்று ஆங்காங்குள்ள பலபுலவர்களையுஞ் சயித்துவருகிறபொழுது திருவண்ணமலைக்குப் போயினர்; அங்குத்தங்கிய கல்விமான்கள் இவரைக்கண்டும் இவர் செய்கையைக்கேட்டும் அஞ்சியோடிச்சென்று தமதுதலைவரும் திருப்புகழ் நூலாசிரியரு மாகிய *அருணகிரிநாத ரென்னும் பெரும்புலவருக்குச் செய்தியை அறிவித்தார்கள்; அப்புலவர்பெருமான் வில்லிபுத்தூரரது செருக்கையடக்கக் கருத்துக்கொண்டு அவரை வருவித்து 'யான் இப்பொழுது நூதனமாகப்பாடப்போகிறதொரு நூலுக்கு, யான்பாடிவரும்பொழுதே கூடப்பொருள் கூறிவருவீ ராயின், உமது கல்வித்திறம் விளங்கும்' என்று அலட்சியமாகச் சொல்லினர்; சொல்லவே, இவ்வாசிரியர், கடுஞ்சினங்கொண்டு, தம்மையெதிர்க்கிற அவரை வென்று அங்குந் தமது வெற்றிக்கொடியை நாட்டக்கருதி, அக்கொள்கைக்கு உடன்பட்டார்; உடனே அருணகிரிநாதர் ஆசுகவியாக நூறு

* இவர் பிரபுடதேவமகாராசாகாலத்திலிருந்தவரென்றும், அவன் அரசாண்டகாலம் இப்பொழுதைக்கு சுநுO - வருடங்களுக்கு முன்பென்றும் தெரிகிறது.

பாட்டில் முருகக்கடவுள்விஷயமாக 'நந்தராந்தாதி' என்னும் யமகவந்தாதியைத் தொடங்கிப் பாடிவர, வில்லிபுத்தூராரும் உடனுக்குடனே ஒவ்வொரு செய்யுட்கும் பொருள் கூறிவந்து இடையில் ஐம்பத்துநான்காம் பாட்டாகிய

*"திதத்தத்தத்தித்தத்திதிதாதைதாததுத்தித்தத்திதா
திதத்தத்தத்தித்ததிதித்தித்ததேதுத்துதித்திதத்தா
திதத்தத்தத்தித்தத்தைதாததிதேதுதைதாததத்து
திதத்தத்தத்தித்தித்திதீதிதிதுதிதிதொத்ததே"

என்னும் ஒருமெய்யால் வந்த செய்யுளுக்குப் பொருள் உரைக்கமாட்டாமற் போனமையால் தோல்வியடைந்து தம்தூட்டை யெறிந்துவிட்டு அவ்வூரினின்றும் புறப்பட்டுப் போவாராயினர்; போம்வழியிற் சிவாலயமொன்று

* (இதன்பொருள்.) தித தத்த தித்த - திததத்த தித்த என்னும் இத்தாளவொத்துக்களை, திதி - (தனது திருநடனத்தாற்) காக்கின்ற, தாதை - தந்தையான பரமசிவனும், தாத - பிரமனும், துத்தி - படப்புள்ளிகளையுடைய, தத்தி - (ஆதிசேஷனென்னும்) பாம்பினது, தா - இடத்தையும், திதம் - நிலைபெற்ற, தத்து - ததும்புகிற, அத்தி - சமுத்திரத்தையும், (சயனமாகக் கொண்ட), ததி தித்தித்ததே து - தித்திப்புடையதான தயிரையே உண்ட கண்ணனும், துதித்த - துதிசெய்யும்படியான, இதத்து - பேரின்பசொரூபியான, ஆதி - முதல்வனே! தத்தத்து - தந்தங்களையுடைய, அத்தி - ஐராவதயானையால் (வளர்க்கப்பட்ட), தத்தை - கிளிபோன்ற தெய்வயானையம்மைக்கு, தாத - தொண்டனே! தீதே துதை - தீமையே நெருங்கின, தாது - ஏழுதாதுக்களையுடையதும், அதத்து - மரணத்தோடும், உதி - பிறப்போடும், தத்து - (அநேக) ஆபத்துக்களோடும், அத்து - இசைந்திருப்பதுமான, அத்தி தித்தி - எலும்புகளை மூடியதொரு பையைப் போன்ற இவ்வுடல், தீ - அக்கினியினால், தீ - எரிக்கப்படுகிற, திதி - தினத்தில், துதி தீ - (உன்னைத்) துதிக்கும் புத்தி, தொத்ததே - (உனக்கே) அடிமையாகவேண்டும்; (என்றவாறு.)

திரிமூர்த்திகளாலுங் கொண்டாடப்படுபவனே! தெய்வயானை கொழுநனே! இவ்வுடம்பழியுங்காலத்து உன்னைத்துதிக்கும் என் அறிவை உன்திருவடிக்கு அடிமையாக்கவேண்டும் என்பதாம். தீ - எழுவாய், தொத்தது - பயனிலை. திதத்த தித்த இம்மூன்றும் - பிற தாளமானங்களுக்கும் உபலட்சணம். திதி - ஸ்திதி, தாதை - தாத, தாத - தாதா; வடசொல் திரிபுகள். படைத்தற் கடவு ளாகையால் எல்லாப் பிராணிகட்கும் தந்தையாதல்பற்றி, 'தாத' என்று பிரமனைக் குறித்ததாகவுங் கொள்ளலாம். தத்தி - பாயுந்தன்மையதெனப் பாம்புக்குக் காரணப்பெயர்; தத்துதல் - பாய்தல்: ஊர்தலுமாம்; இ - கர்த்தாப்பொருள்விகுதி: இனி, ஆபத்தைவிளைப்பதென்றுமாம்; தத்து - அவமிருத்து, இ - பெயர்விகுதி. தா - இடத்தை யுணர்த்துகையில், உரிச்சொல். திதம் - ஸ்திதம்: வடசொல். தத்து - வினைத்தொகை. அத்தி - அப்தி என்னும் வடசொல் திரிபு. ததி - வடசொல் து - முதனிலைத்தொழிலாகுபெயராகிய காரணக்குறி. துதித்த - ஸ்துதித்த. துதித்திதம் - பெயரெச்சவீறு தொகுத்தல். இதம் - ஹிதம்; வடசொல். தந்தம் - தத்த மென யமகநோக்கிய வலித்தல். அத்தி - ஹஸ்தீ யென்னும் வடமொழியின் திரிபு. தத்தை - உவமையாகுபெயர்; இன்சொல்லில் உவமம். தாத - தாஸ; வடசொல். அவளிடத்து மிக்க அன்பால் அவளேவியபணிகளைச் செய்தலின், தாசனென்றது. அதம் - ஹதம். உதி - முதனிலைத் தொழிற்பெயர். அத்து - இசைப்பு. அத்தி - அஸ்தி; வடசொல். தீ - அறிவைக் குறிக்கையில், வடசொல். தொத்து - அடிமை: அதனடியாப்பிறந்த குறிப்புமுற்று, தொத்தது. ஏ - பிரிநிலையோடு, தேற்றம்.

இருக்க, அது தம்கண்ணிற்படாதபடி தம்மைச்சுற்றித் திரையிடும்படி வில்லி புத்தூரார் தம்பரிசனங்களையேவிச் சிவநிந்தனைசெய்து, அதுகேட்டு அளவிறந்த கோபங்கொண்ட அருணகிரிநாதரது சாபத்தாற் கண்ணிழந்து, அச்சாபம் நீங் கும்பொருட்டுச் சிவவிஷயமாக ஓர்நூல்செய்யும்படி அவரால் ஆஜ்ஞாபிக்கப் பட்டார்; பட்டும் வீரவைஷ்ணவராதலால் தம்மதாபிமானத்துக்குப்பங்கம்வாரா மல் சிவஸ்துதி சிற்சிலவிடத்துவிரவிவரும்படி இப்பாரதத்தைச் சாபநிவிருத்தி யின்பொருட்டுப் பாடிக் கண்பெற்றார் என்பது.

இந்த இரண்டுவகை வரலாறுகளும், இந்நூலின்பாயிரத்தோடு மாறுபடு கின்றதனாலும், இவர்மகனார்கூறிய பாயிரத்தை மறுக்கத்தக்க பிரபல ஆதார மொன்றும் இவ்வரலாறுகளுக்கு இல்லை யாதலாலும், இவை யாவராலுந் தருதி யென்று ஏற்றுக்கொள்ளத்தக்கன வல்ல வென்று தோன்றுகிறது.

இவர் தம்காலத்திற் கல்விச்செருக்கடைந்திருந்த புலவர்கள் பலரையுந் தமது வித்தியாசாமர்த்தியத்தால் வென்று அவ்வெற்றிக்கு அடையாளமாகத் தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் தமது கையிலே எப்பொழுதும் ஆயுதமாக வைத்துக்கொண்டுள்ள துறட்டுக்கோலால் மாட்டியிழுத்து அறுத்து வந்தன ரென்பது,

> "குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியனீங் கில்லை
>   குறும்பியள வாக்காதைக் குடைந்து தோண்டி
> யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
>   யிரண்டொன்றா முடிந்துதலை யிறங்கப் போட்டு
> வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்த னில்லை
>   விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
> தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைக ளுண்டு
>   தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே"

என வழங்குந் தனிப்பாட்டாலும் அறியப்படும்.

ஒருவன்பாடும் பாட்டில் ஏதாவது குற்றங் கண்டால் கண்டவுடனே அவன்தலையில் நறுக்கென்று குட்டுவது, பிள்ளைப்பாண்டியனென்னும் அரச னது ஏற்பாடு; அவனிடம்பரிசுபெறவந்த வித்துவான்கள் பலரும் 'குட்டுப் பட்டாலும் மோதிரக்கையாற் படவேண்டும்' என்கிற பழமொழியைப் புது மொழியாக ஞாபகப்படுத்திக்கொண்டு வந்தவழியே திரும்பிப்போய் மேன் மேற் கல்விகற்கமுயல்வது, அவன்காலத்தில் இயல்பாயிருந்ததாம். கவிபாடி வருபவர்களையெல்லாஞ் சயித்துப் பிடித்துச் சிறைச்சாலையி லடைப்பித்து, தேவி கொலுவிருக்கின்ற நவராத்திரிகாலத்தில் சிறைக்கூடத்திலிருந்து வெளிப்படுத்தி அவர்களை இருவர்இருவராகக் குடுமியோடு குடுமி முடிபோட்டு இறங்கிநிற்கத் தேவிமுன்பாக நிறுத்திப் பிடாரிக்குச் சேவுகடாவெட்டுவது போலச் சற்றும் இரக்கமில்லாமல் அவர்கள் தலைகளைப் பதைக்கப் பதைக்க வெட்டிப் பலிசெலுத்துவது, ஒட்டக்கூத்தரென்னும் புலவரது வழக்கமாம். அவைபோலவே இவ்வில்லிபுத்தூராரும் வாதஞ் செய்யும்பொழுது எதிரி தோற்றால் அவன்காதில் மாட்டிய துறட்டைப் பிடித்திழுத்துக் காதை ஒட்ட அறுத்து, யானையின் மதக்களிப்பை அங்குசத்தால் அடக்குவதுபோல அவர்க ளது கல்விச்செருக்கைத் தமது துறட்டினா லொழிப்பதைத் தமது வழக்கமாக வைத்துக்கொண்டு பிருதுகூறிச்சென்று திக்குவிசயஞ் செய்துவந்தார். இவர் காலத்து அரசர்கள் இவரிடத்தில் மிகவும் பிரீதிவைத்திருந்ததனால், இவருக்கு இங்ஙனஞ்செய்ய இடங்கொடுத்துவந்தார்கள்.

[கல்வியின்அருமையைத் தெரிவிக்கிற நல்லவழியாகையால் இவர்செய்து வந்தஇது பாதகமாகாதென்றும், இவர்க்கு இடங்கொடுத்துவந்த அரசர்களும் கொடுங்கோல் மன்னர்களாகா ரென்றும், இல்லாவிட்டால் அக்காலத்திலும்

இக்காலத்திற்போலச் சிற்றறிவுடையோரும் பேரறிவுடையோர்போலவே *பண்டிதர் மகாபண்டிதர் கவி கவிராயர் வித்துவான் வித்வச்சிரோமணி என்பவைமுதலாகக் கண்டதுகண்டபடி பல பட்டப்பெயர்களை எவருங்கொடுக்க வேண்டிய அவசிய மில்லாமலே தாங்களே சொந்தத்தில் வைத்துக்கொண்டு தாந்தோன்றிகளாய்த் திரிவார்க ளென்றும், இப்படிப்பட்ட துர்வழக்கத்தை நிறுத்துவதற்கு ஏதுவானதனால் இவர்செய்துவந்தது லோகோபகாரமான காரியமென்பதற்குச் சிறிதுந்தடையில்லை யென்றும், இல்லாவிடின் கல்வி அபிவிருத்தியாகா தென்றும், இக்காலத்தில் வழங்குகிற ராஜபாஷைப்பரீட்சைக் குரியபட்டங்களை அப்பரீட்சைதேறாதபிறர்வைத்துக்கொண்டாற் குற்றமாவது போலவே முன்காலத்திலும் தகுதியல்லாதவர் பட்டப்பெயர்களைச் சூடுவது குற்றமாயிருந்த தென்றும், அக்காலத்து அரசர்முதலியபிரபுக்கள் தகுதியுடைய பண்டிதர்களின் யோக்கியதையைத் தக்கபடியறிந்து அதற்கேற்ப வெகுமானங்கள் செய்து வந்தார்க ளாகையால் தகுதியல்லாதவர்கள் புலவர்க ளென்று நடித்தால் அவர்களைச்சிட்சிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளுஞ் செய்யப்பட்டிருந்தன வென்றும், இக்காலத்திலோ சம்மானஞ்செய்வது இல்லாமையால் அவமானஞ்செய்வதும் இல்லையாயிற் றென்றுங் கூறுவர்.]

இவருடைய காலம் இன்னதென்பது, எந்தக்காரணத்தாலும் நன்றாகத் தெரியவில்லை. நவீன நாகரிக மடைந்துள்ள பாஷைகளிற்போல நமது சம்ஸ்கிருதம் தமிழ் முதலிய பிராசீனபாஷைகள் பலவற்றிலும் காலக்கணக்கோடு சரித்திரங்களைத் தெளிவாகவும் விவரமாகவும் எழுதிவைக்கிற வழக்கம் அநாதியாக இல்லாமலிருத்தலால், பழைய கவிகள் அரசர்கள் முதலியோரைப் பற்றின காலம்முதலியன தெரிவது அரிதாய்விட்டது. இவருடைய சரித்திரத்தைச் செய்யுள்நடையிலே சுருக்கமாக எழுதிவைத்த இவர் குமாரரும் இவர்காலத்தைக்குறித்து யாதொன்றும் எழுதிவைத்தாரில்லை. இப்பொழுதைக்குச் சற்றேறக்குறைய ஐந்நூறு வருஷத்துக்கு முன் இருந்தவ ரெனத் தமிழ்ப்பண்டிதர்கள் பலர் கர்ணபரம்பரையாகச் சொல்லிவருவதையே ஐதிஹ்யப்பிரமாணத்தால் யாவரும் நம்பவேண்டியிருக்கிறது.

பாயிரத்தில் "நான்காஞ்சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமல் தலைகண்டானே" என்று இவர்காலத்திலிருந்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனைக் கூறியிருத்தலால், இவர்காலம் கடைச்சங்கத்தார்காலத்துக்குப்பின் என்பதுமாத்திரமே தெளிவாகத் தெரியவருகிறது.

கவிகள்பாடியுள்ள நூற்செய்யுட்களின் நடையால் அந்தந்தக்கவிகளின் காலத்தைக் கண்டுபிடிப்ப தொரு வழக்கத்தை முக்கியமாகக் கொண்டு, இவர்பாடியபாரதம் கந்தபுராணத்தின் நடையைப் போன்றுள்ள தென்றும், கந்தபுராணத்தின்காலம் இப்பொழுதைக்கு ஏறக்குறைய ஆயிரத்துநூறு வருடங்களுக்குமுன் என்பது அந்நூற்சிறப்புப்பாயிரத்தாற் புலப்படுதலால் இவர் காலமும் கம்பர்காலம்போலவே ஏறக்குறைய ஆயிரம்வருஷங்களுக்கு முன்பாக இருக்கலா மென்றும் சிலர் ஊகிக்கிறார்கள். நடையொன்றைக்கொண்டே காலத்தை வரையறைசெய்கிற வழியை யாவரும் தடையின்றி ஒருமனமாய் ஏற்றுக்கொள்வது மிகக்கடினம்: ஏனெனில், — புதியகாலத்தவரும்

---

* சிற்றறிவினராய்த் தாமேதக்கபண்டிதரென்று செருக்கியிருந்தபொழுது இப்பட்டப்பெயர்ச்சுமையைத் தலைமேல் ஏறிட்டுக்கொண்டவர், பின்பு அதுதகுதியன்றென்று பிறரால் அறிந்தவுடன் அதனை இறக்கிவிட்டு, வேறுவகையிற் பிறரை மருட்டும்பொருட்டு வெவ்வேறுபெயர்வகைகளைத் தாமே நாடியமைத்துக்கொண்டு வெளிப்படுதலும் உண்டு; அது வியக்கத்தக்கதே. இனி, இராசபாஷைக்குப்போலவே இப்பாஷைகளுக்கும் தக்க பரீக்ஷைகளேற்பட்டுவிட்டால், இப்படிப்பட்ட வழக்கங்கள் எங்கும் ஒடுபட்டுப்போய்விடும்.

* பழையநடையைப்போலப் பாடக்கூடும்; பழையகாலத்தவர்கள் பாடின தும் சிலகாரணங்களினாற் புதியநடையையொத்து இருக்கலாம்; ஒருவர் செய்த பலநூல்களுள் ஒன்றற்கொன்று நடைவேறுபாடு இருத்தலுங் கூடும்; முந்திப்பாடினது ஒருவகையும் பிந்திப்பாடினது ஒருவகையுமாக இருக்கலாம். இற்றைக்கு நூற்றுப்பத்து வருஷத்துக்குமுன் பாடப்பட்டுள்ள காஞ்சிப் புராணமும் அதனோடுசெமகாலத்திற் பாடப்பட்ட தணிகைப்புராணமும், கம்ப ராமாயணம் முதலிய பழையபெருங்காப்பியங்களின் நடையைப் போன் றிருக்கவில்லையா? பழையபக்தர்கள் சிலர் பாடியுள்ள செய்யுட்கள் புதியநடை யைப்போன்று மிக எளிதாக இருக்கின்றனவே; புகழேந்திப்புலவர் பாடியுள்ள நூல்களுள் நளவெண்பாவின் நடை எத்துணைச் சிறப்புடையது? அவர்தாமே பெண்களுக்கென்று பாடியனவாக வழங்குகிற அல்லியரசாணிமாலை, பவழக் கொடிமாலை, புலந்தரன் களவுமாலை என்பவற்றின் நடை எவ்வளவு எளிமை யுடையது? இப்படிப்பட்ட பலகாரணங்களால் நடையைக்கொண்டே காலத் தை நிச்சயிப்பதற்கு நேர்கிற ஆட்சேபங்களை மறுத்தல் அரிதாதல்நோக்கி யாம் அவ்வழியில் இறங்கவில்லை.

இவருக்கு வில்லிபுத்தூரரென்றும் வில்லிபுத்தூராழ்வாரென்றும் வழங்கி வருகிற பெயர் யாதுகாரணத்தால் வந்தது? பாண்டியநாட்டில் திருநெல் வேலி சில்லாவில் பிரசித்தமாகவுள்ள விஷ்ணுஸ்தலமான ஸ்ரீவில்லிபுத்தூரில் பிறந்தவரா ? அன்றி வளர்ந்தவரா ? அல்லாக்கால் வாழ்ந்தவரா ? என்றால்,— இக்காரணங்க ளொன்றுமல்ல மன்று, இவருக்கு இப்பெயர் வந்தது; பின்னை யென்னையோ வெனில்;—வைஷ்ணவசம்பிரதாயத்தில் சிறந்த பக்தர்களென்று சொல்லப்படுகிற ஆழ்வார்கள் பன்னிருவருள் ஒருவரும், பெரியாழ்வாரென் றும் பட்டர்பிரானென்றும் விஷ்ணுசித்தரென்றும் வேறு திருப்பெயர்களை யுடையவரும் ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதாரஞ்செய்த காரணத்தால் வில்லி புத்தூராழ்வாரென்று வழங்கப்படுபவரு மாகிய பாகவதசிகாமணியினுடைய இத்திருநாமத்தையே தந்தைதாயர்கள் இவருக்குப் பெயராக இட்டு வழங் கினார்க ளென்று உணர்க; பரிசுத்திகரமென்கிற காரணத்தால், கடவுள்பெய ரும் அடியார்களது பெயரும் மனிதர்களுக்கு இட்டு வழங்கப்படும். அல் லது, அந்தப் †பெரியாழ்வார் பாலியத்திலே எவரிடத்தும் யாதொருநூலும் படியாதவராயிருந்தும் பின்பு பகவானருளால் பெரியதிவ்வியப்பிரபந்தம்பாட வல்ல மகாபண்டிதராய்விட்டதுபோல, இவரும் தெய்வகடாக்ஷம்பெற்ற வர கவி யென்கிற காரணம்பற்றி, இவருக்கு வில்லிபுத்தூராழ்வாரென்று பெயர் வந்த தென்றுங் கொள்ளலாம். [ஆழ்வார் என்பதற்கு - எம்பெருமானுடைய திருக்கலியாணகுணகணங்களாகிய பெருங்கடலில் அமிழ்ந்து நெஞ்சுருகி ஈடு படுபவ ரென்று பொருள். இப்பெயரால் மற்றுஞ் சில பக்தர்களை வழங்கு வதைப் பரதாழ்வான், சத்துருக்கினாழ்வான், பிரகலாதாழ்வான், கஜேந்திராழ் வான், சுதரிசனாழ்வான், கம்பநாட்டாழ்வார் முதலிய பெயர்களிலுங் காண்க.]

விஷ்ணுவினுடைய அம்சாவதாரமாகிய கிருஷ்ணனுடைய சரித்திரம் மகாபாரதத்தில் இடையிடையே வருகிற தென்ற சிறப்புப்பற்றியே இவ்வா சிரியர் பாண்டவசரித்திரத்தைப் பாடுதற்கு உடன்பட்டுப் பாடினார்; இது,

"முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்

---

* காலபேதத்தால் பாஷையின் இயல்பு மாறுபடுவது, தமிழுக்குப் பெரும் பாலும் இல்லை; வடமொழிக்கும் இப்படியே.

† இவர் சரித்திரத்தை யாம் எழுதிவெளியிட்டுள்ள 'ஆழ்வார்கள் சரித் திரம்' என்னும் வசனநூலிற் பரக்கக் காணலாம்.

மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கு
மென்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்"

என இவர்தாமே தற்சிறப்புப்பாயிரத்திற் கூறியுள்ளதனாற் பெறப்படும். [வேதவியாசபகவானும் வடமொழிமகாபாரதத்தில் இவ்வாறே கூறியுள்ளார். இனி, இச்செய்யுளின் மூன்றாமடியின் முதலில் 'மன்னுமாதவன்' என்பதை மன்னும் மாதவன் எனப்பிரித்து-நித்தியனாகிய திருமகள்கொழுநனான திருமாலென்று பொருள்கொள்வதை விட்டு, மன்னும் மாது அவன் என்றாவது மன் உமா தவன் என்றாவது பதம்பிரித்து-ஸ்தாணுவாகிய உமாபதியான சங்கரனெனப் பொருள்கொண்டு, சிவபிரானது சரித்திரம் இந்நூலின் இடையிடையே வழங்குவதென்ற விருப்பத்தால் தாம் இதனைப் பாட இசைந்ததாகக் கூறினா ரென்று உரைப்பாரு முண்டு; அது சரியன்று; ஏனெனில்;—இந்நூலில் மூன்றாவதாகிய ஆரணியபருவத்தில் அர்ச்சுனன்தவநிலைச்சருக்கத்திலும், ஏழாவதாகிய துரோணபருவத்தில் பதின்மூன்றாம்போர்ச் சருக்கத்திலும் ஆக இரண்டிடத்தில்மாத்திரமே யன்றி நூல்முழுவதும் இடையிடையே (கண்ணனுடைய சரித்திரங் காணப்படுவதுபோலச்) சிவபிரானுடைய பிரஸ்தாபம் இல்லாமையாலும், வைஷ்ணவராகிய இவர் சிவசரித்திரம் வருவதென்று பாடினா ரென்பது உசிதமல்லாமையாலும் எனக் காண்க. இக்காரணங்கள் தக்கனவேயா மென்பது, மதத்துவேஷத்தை யொழித்துப் பார்த்தால் எவர்க்கும் வெள்ளிடைமலைபோலத் தெள்ளிதிற் புலப்படும்.]

அன்றியும், இவர் இந்நூலில் ஒவ்வொருசருக்கத்தின் தொடக்கத்திலும் திருமால்விஷயமாகக் காப்புச்செய்யுள் கூறியுள்ளதனாலும், "மறந்தும் புறந்தொழா" நல்லவைஷ்ணவ ரென்பது நன்குவிளங்கும். [சிலசருக்கங்களில் காப்புச்செய்யுள் காணப்படவில்லை; அதற்குக் காரணம் - ஆசிரியராற்பாடப்பட்ட செய்யுட்கள் பிற்காலத்தில் ஏடெழுதுவோரால் எழுதாதுவிடப்பட்டு இல்லையாயின வென்றாவது, * தொல்காப்பியம் முதலிய சில நூல்களிற் போலச் சிலசருக்கங்களின் ஆரம்பத்தில் மாநசிகமாத்திரத்தால் கடவுள்வணக்கஞ் செய்யப்பட்டுச் செய்யுளுருவமாய் வாசிகமாகக் காப்புச் செய்யப்படவில்லை யென்றாவது கொள்க.]

ஆயின், வைஷ்ணவராகிய இவர் இந்நூலின் முதற்காப்பாக

"நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநாள்
ஏடாகவடமேருவெற்பாகவங்கூரெழுத்தாணிதன்
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ.

முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறந்
திருகாமல்விளைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
புருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரும்
ஒருகோடிபூதவருங்கைதொழுங்கோவையுறவுன்னுவாம்"

என்று இரண்டு பாடல்களால் சிவகுமாரராகிய விநாயகரை ஸ்தோத்திரஞ் செய்வானேன்? என்றால்,—தம்மைச்சரணமடைந்தவர்கள் தொடங்குந் தொழில்களுக்கு வருகிற விக்கினங்களைப் போக்குதலாலும் தம்மையடையாமல் அகங்கரித்தவர்கள் ஆரம்பிக்கிற செய்கைகளுக்குப் பல இடையூறுகளை உண்டாக்குதலாலும் 'விக்நேச்வரர்' என்று திருநாமம்பெற்றுள்ள ஸ்ரீவிநாயகமூர்த்தி சைவர்களுக்குமாத்திரமேயன்றி எல்லோர்க்கும் வழிபடுகடவுளேயாதலாலும், வேதவியாசர் மகாபாரதத்தை இயற்றிவருகிற பொழுது விநாய

* 'தொல்காப்பியம் முதலியவற்றில் நூற்குப் புறமாகவே மங்கலம் செய்யப்பட்டது' என்பது, தருக்கசங்கிரகவுரை.

கர் அந்நூலை மகாமேருமலையிலே எழுத்தாணிகொண்டு எழுதிவந்ததும் இடையிலே அவ்வெழுதுகருவி ஒடிந்துபோன பொழுது 'வல்லவனுக்குப் புல்லும்ஆயுதம்' என்கிறவகையாய் யானைமுகக்கடவுளாகிய தமது தந்தங்களில் ஒன்றைப் பறித்து அதனையே கருவியாகக்கொண்டு எழுதிமுடித்தருளினதுமாகிய இந்த முக்கியமான காரணத்தைக்கொண்டு நோக்குமிடத்து விநாயகர் இந்நூலின்முதலில்வைத்தற்கு ஏற்ற இயைபுடையவ ராதலாலும், வைஷ்ணவர்கள் விநாயகரை விஷ்வக்ஸேநரென்கிற சேனைமுதலியாரது அம்சமென்று கொண்டாடுவது மரபாதலாலும், இவரும் விநாயகரைப்பாடினரென்க.

இவ்வில்லிபுத்தூரார் சிவத்துவேஷம்பாராட்டுகிற வீரவைஷ்ணவ ரல்லர். அது - அருச்சுனன் தவநிலைச் சருக்கத்திலும், பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திலும் சைவசம்பிரதாயத்துக்குச் சிறிதும் வழுவுறாதபடி பரமசிவனைச் சிறப்பித்தும் இதரதேவர்களைத் தாழ்த்தியுங் கூறியுள்ளதனால், நன்குபுலப்படுகிறது. அருச்சுனனது கையிலுள்ள காண்டீவமென்னும் வில்லினது கழுத்தினால் சிவபிரான் அடிபட்ட செய்தியைச் சொல்லும்பொழுது,

"விண்ணிலுறைவானவரில்யாரடிபடாதவர்விரிஞ்சனரியேமுதலினோர்*
மண்ணிலுறைமானவரில்யாரடிபடாதவர்மனுக்கள்முதலோர்களதலக்
கண்ணிலுறைநாகர்களில்யாரடிபடாதவர்கள்கட்செவிமகீபன்முதலோர்
எண்ணில்பலயோனியிலும்யாவடிபடாதனவிருந்துழியிருந்துழியரோ"

என்றது முதலியவற்றாலும், பதின்மூன்றாம்போர்நாளின் இரவில் சைந்தவனென்கிற சயத்திரதனை அருச்சுனன் அடுத்தநாளில் தவறாமற் கொல்லவேண்டிப் பரமசிவனிடத்துச் சிறந்த சில அஸ்திரசஸ்திரங்களைப் பெறுதற்காகக் கண்ணனுடனே கைலாசத்துக்குச் சென்ற செய்தியைச் சொல்லும்போது,

"புரநகை யாலெரி புராரி தன்முனம்
நரனொடு நாரணன் நணுகி நண்பினால்
சரணபங் கயமுறத் தாழ்ந்து பன்முறை
கரமுற முகிழ்த்திது கழறன் மேயினார்"

என்றது முதலியவற்றாலுந் தெளிவாகத்தெரிகிறது. இன்னும், இவர் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்தில்,

†"ஒரேனந்தனைத்தேடவொளித்தருளுமிருபாதத்தொருவனந்தப்
போரேனந்தனைத்தேடிக்கணங்களுடன்புறப்பட்டான்" எனவும்,
"பையரவினுடுபுருகூதனிவர்சூழ்தரப்பச்சைமயில்பாதியுடனே
துப்பவிடைமீதொருசெழுஞ்சுடரெழுந்ததுதொழுந்தகையதாகுமளவோ"

எனவுங் கூறியுள்ளவற்றையும் நோக்குக.‡ வியாசர் புராணங்களில் ஒவ்வொரு

---

* 'விரிஞ்சன்முதலோருததிசூழ்' என்று யாம்கண்ட ஏடுகளின் பாடம்.

† வில்லிபுத்தூராரை ஆதரித்த அரசன் சைவமதத்தனாகவிருக்கலாமென்றும், இவர் அவனுக்கு முகோல்லாசமாக நூலிற்சிலவிடத்துச் சிவபிரானைவிசேடித்துக்கூறியிருத்தல் கூடு மென்றும், அங்ஙனங் கூறியவற்றிற் கெல்லாம் வெளிப்படுபொருளொழிய வேறு உள்ளுறைபொருளும் உண்டென்றும் உய்த்துக்கூறுதலும் ஒன்று.

‡ இப்படி சிலபிரதியிலுள்ளஅளவு சிவஸ்தோத்திரமான பாடல்கள் பல எட்டுப்பிரதிகளில் இல்லை; இது, யாம் வைஷ்ணவ அபிமானத்தாற் கற்பித்துக் கூறுவதன்று; பழையஏடுகளோடொத்திட்டுப்பார்த்தால் யாவர்க்கும் நம்புதலுண்டாம். யாம் அங்ஙனம் பலசுவடிகளோடு சரிபார்த்தே இவ்விஷயத்தைத் துணிந்து வெளியிட்டோம். அப்படிப்பட்ட புத்தகங்க ளிரண்டு, சென்னையிலுள்ள இராசாங்கக் கையெழுத்துப்புத்தகசாலையிலும் உள்ளன.

தேவரை ஒவ்வோரிடத்திற் சந்தர்ப்பத்துக்கேற்பச் சிறப்பித்துக்கூறியுள்ளது போலவே, இவரும் தமதுநூலில் சூரியன் அக்கினி முதலிய மற்றைத் தேவர்களையும் சமயம் வந்தவிடத்துப் பக்ஷபாதமில்லாமல் சிறப்பித்துக்கூறியுள்ளார். பதினேழாம்போர்ச்சருக்கத்தில் "மூவர்தத்தம்வடிவா முதல்வன்" எனச் சூரிய பகவானைச் சிறப்பித்துக்கூறியுள்ளவாறும் பிறவுங் காண்க; [இதற்கு - திரிமூர்த்திகளின்சொரூபமாகவுள்ள தலைவனென்று பொருள்.]

கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய பெருந்தேவனாரென்பவர், மகாபாரதத்தைத் தமிழில் வசனமும் பாடலுமாக விரவிவருகிற 'சம்பு'என்கிற நடையிலே பாடியுள்ளார்; பெரும்பாலும் வெண்பாக்களால் அமைந்ததுபற்றி, அந்நூலுக்குப் பாரதவெண்பா வென்று பெயர்: அது, இப்பொழுதைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம்வருஷத்துக்கு முந்தியது;* இவ்வில்லிபுத்தூரார் அந்தப் பாரதவெண்பாவின் சொல்லையும் பொருளையும் ஆங்காங்கு வெகுவாகத் தழுவி நாலாயிரத்துமுந்நூற்றுச்சில்லரை பாடல்களாற் பாரதத்தைப் பாடியுள்ளார். இவர்பாடியபாரதம் வடமொழிவியாசபாரதத்தின் வழிநூ லென்னத் தட்டில்லை.

"மண்ணி லாரண நிகரென வியாதனார் வகுத்த
எண்ணிலா நெடுங் காதையை யானறிந் தியம்பல்"

என்று இவர்தாமே அவையடக்கத்திற் கூறியிருக்கிறார். ஆயினும் இவர் பாடிய நூல் ஸம்ஸ்கிருதபாஷையில் அகஸ்தியபட்டரென்பவர் இயற்றியுள்ள பாலபாரதமென்னுங்காவியத்தின் பொருளமைதியோடு பலவிடங்களிலொத்திருக்கின்றது; ஒப்பிட்டுப்பார்க்குமிடத்து இந்நூலுக்கும் அந்நூலுக்கும் இடையிடையே பலவேறுபாடுகளும் உள்ளனவாயினும் சிற்சிலவிடங்களில் இந்நூல் அந்நூலின்மொழிபெயர்ப்பென்றே சொல்லலாம்படி யுள்ளது: (இவ்விஷயம், பதினன்கு வருஷங்களின்முன் நாடிக்கண்டுபிடித்து ஒன்பதுவருஷங்களின் முன் எம்மால் முதலில் வெளியிடப்பட்டது;) இதற்கு அரிதில் தேடியெடுக்காமல் எளிதில் அகப்பட்ட சில உதாரணங்கள் வருமாறு:—நூலின் முதலில் சந்திரனைக் கூறுமிடத்து, பாலபாரதம் - "அத்ரிநேத்ரப்ரபவః"=வில்லிபுத்தூரார் பாரதம் - "அத்திரிப்பெய ரந்தண னம்பகந்தனில்........பிறந் தொளிசிறந்தோன்"; பாலபாரதம் - "நக்ஷத்ரகணஸ்யநாதః"= வில்லிபாரதம் - "பொருந்த வானுறைநாள்களை நாடொறும்புணர்வோன்"; பாலபாரதம் - "ஸம்பாவநீயச்சிரஸாசிவேந"=வில்லிபாரதம் - "திருந்தவானவர்க்கரியவன் செஞ்சடைமுடிமே, லிருந்த வானவன்": இங்ஙனம் பலவிடத்து ஒத்துவரும்.

வில்லிபுத்தூரார் தமதுபாரதத்திற் பாடியது, முதற்பத்துப்பருவமே; மற்றையெட்டுப்பருவங்கள் அவராற் பாடப்படவில்லை. அதற்குக் காரணம், அவற்றைப்பாடுவதற்குமுன் நூலாசிரியர் காலஞ்சென்றிருக்கலாம்; அல்லது, நூல்முழுவதையும் பாடினால் பாண்டவர்கள் கிருஷ்ணபகவான் என்கிற மகாபுருஷர்களது கேட்பவர்க்குவருத்தத்தையுண்டாக்கத்தக்க மரணசரித்திரத்தைத் தம்வாயாற்சொல்லவேண்டுமே யென்றுகருதி 'பாண்டவர்கள் இராச்சியம் ஆண்டு வாழ்வாராயினர்' என்பதனோடு முடித்துவிட்டதாகக் கூறலாம். பாண்டவசரித்திரங்கூறுகிற † பாரதசம்பு முதலிய சில நூல்களிலும் பின்னிட்ட கதை காணப்படவில்லை. [கம்பர் இராமாயணத்தில் உத்தரகாண்டம் பாடா

* அந்நூல் பன்னீராயிரம்பாடல்களையுடையதென்று தொண்டைமண்டல சதகத்திற் கூறியிருப்பினும், அது இப்பொழுது முழுவதும் கிடைப்பதில்லை: உத்தியோகபருவந்தொடங்கித் துரோணபருவம்வரையிலும் எண்ணூறுபாடல்களே கிடைக்கின்றன.

† பாலபாரதத்தில் கதை முடியக் கூறப்பட்டுள்ளது; (இறுதியிலுள்ள பத்தொன்பதாவது இருபதாவது சருக்கங்களிற் காண்க:) ஆதலால், அது இங்கே

மல்விட்டதற்கும் இப்படிப்பட்டகாரணத்தையே முக்கியமாகக்கொள்ளலாம்; இப்பொழுதும் ராமாயணபாராயணஞ்செய்பவர்கள் உத்தரகாண்டம் படிப்ப தில்லையன்றோ?] அவ்வாறே இவரும் பின்னையசரித்திரத்தைக் கூறாமல் "கனைகடற்பா ரளித் தவரு மந்நகரி லறநெறியே கருதி வாழ்ந்தார்" என மங்கள கரமாகவே சரித்திரத்தைப் பாடி முடித்தா ரெனக்கொள்வது தகுதியுடைத்து. இனி, இந்நூலில் பின்னைய பருவங்களும் பாடப்பட்டுப் பிற்காலத்திற் கிடைத்தற்கரியவையாயின வென்று கொள்வாரு முளர். *

இவர்பாடியபாரதத்தில் சுருக்கமாகக் கதையைத்தொகுத்துக்கூறும் முந் நூறுநானூறுபாடல்கள்தவிர மற்றைநாலாயிரஞ்செய்யுட்களை யெடுத்துக்கொண்டு, பிற்காலத்தில் நல்லாப்பிள்ளையென்பவர், புதிதாகத் தாம் பதினோராயிரம் பாடல்பாடி இடையிடையிற்கோத்தும் இறுதியிற்சேர்த்தும் பாரதம் பதினெட்டுப்பருவங்களையும் பூர்த்திசெய்தார்; அது - 'நல்லாப்பிள்ளைபாரதம்' என வழங்கும்: அந்நூலாசிரியர், இற்றைக்கு நூறுவருஷங்களின்முன் இருந்தவர்.

எடுத்துக்காட்டத்தக்கதன்று. எமது 98, 99 - யப். ஏ. டெக்ஸ்டுகளின் அநுபந்தத்தையும், பிழைதிருத்தத்தையும் பார்க்க. ஆகவே, பிறர் 'வடமொழியிற் பாரதகதையைக்கூறும் பாலபாரதம், சம்பூபாரதம் முதலிய நூற்களில் இறுதிக் கதைகள் காணப்படாமை எத்தகைய காரணம்பற்றியோ? அத்தகையகாரணம் பற்றியே இவரது பாரதத்திலும் இறுதிப்பாகம் காணப்படாதிருத்தல்கூடு மெனவுங் கூறுப' என்று உடன்பாடாக எழுதினது மறுக்கத்தக்கது.

* "கலியுகவியாதன்சொல்லக்கணபதியெழுதுபாடல்
பொலிவுறுதமிழிலாறுயிரமெனவிருத்தம்போற்றிச்
சலிவுறுவில்லிபுத்தூரிறைவனுஞ்சார்வபௌம
னொலியெழுமறையோர்கோமானுயர்ந்தவருவப்பச்சொன்னான்"

என ஒருசெய்யுள் வில்லிபுத்தூரார் பாரதத்து ஏட்டுப்பிரதியொன்றில் பாயிரத்தோடு காணப்பட்டது. இது பழையபாடலாக இருக்குமாயின், இதிற்கூறிய ஆறுயிரம்பாடல்களில் பத்துப்பருவங்களாகவுள்ள நாலாயிரத்து முந்நூற்றுச் சில்லறை போக மற்றவை இவர்பாடிய எட்டுப்பருவங்க ளெனக் கொள்ளலாம்.

மாவிந்தமென்றும், மகாவிந்தபுராணமென்றும், மகாபெந்தமென்றும், மகாவெந்தமென்றும் பேர்மாறுட்டமாக வழங்கப்படுவ தொரு தமிழ்நூல் உண்டு. அது, சாதாரணசனங்களுக்குக் கதைகூறுங் குழாத்தாற் கொண்டாடப்பட்டுப் பலவிடத்தும் பயில்கிறது. அதன் ஏட்டுப்பிரதி யிரண்டு, இராசாங்கக் கையெழுத்துப்புத்தகசாலையிலும் உண்டு. அந்நூல் பாரதத்துப் பாண்டவரது மகாபிரஸ்தாநசரித்திரத்தைமாத்திரமே சில கிளைக்கதைகளோடு கூறுவது. ஆதலால், அந்நூலின் பெயர், 'மஹாப்ரஸ்தாநம்' என்ற வடசொல் மகாபிரத்த மெனத் திரிந்து அது பின் கண்டபடி சிதைந்த தென்றே கொள்ளத்தக்கது. அதில், பாரதத்தின் பிந்தின எட்டுப்பருவங்களின் சரித்திரம் முழுவதும் கிடையாது. அது - சனமேசயன்கதை, காங்கேயர்மோக்ஷம், கிருஷ்ணதேவன்மோக்ஷம், கலிவருகை, தருமபுத்திராதிகள் தபசுக்கேகுதல் முதலாக, யமன் சோதனை, தன்மபுத்திரர் பூந்தேரேறுதல், அடியாரைக் காட்டுதல் இறுதியாகப் பலசிறுபகுப்புக்களாகப் பிரிக்கப்பட்டுள்ள சுசஙு - செய்யுளுடையது. அந்நூலின் நடை சிறிதுஞ் சிறப்பாகக்கொள்ளத்தக்க தன்று; அந்நடையின் தாழ்வுக்குத் திருஷ்டாந்தமாக அந்நூலின் பாடல்கள் சில இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன:—

"கோலமாந்தன்மனூர் கூண்டொடேகவே
ஞாலமோரரசினைப்பந்துநீத்துடன்

இப்பாரதத்துக்கும் இதன் முதனூலாகிய வியாசபாரதத்துக்கும் இடையிடையே கதையமைதிகள் சிற்சில வேறுபடுவது "முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, யழியாமரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிப்படி இவ்வாசிரியராற் பிறநூல் மேற்கோள்கொண்டு அமைக்கப்பட்டதாதல்வேண்டுமெனா அறிக. [கம்பராமாயணத்துக்கும் வால்மீகிராமாயணத்துக்கும் சிலசிலவிடத்து ஒன்றோடொன்று வேறுபாடுகாணப்படுதற்கும் காரணம் இதுவே.] அன்றி, ஜைமினிபாரதத்தை இவர் முதனூலாகக்கொண்டு மொழிபெயர்த்தாரென்பது முழுவதுஞ்சரியன்று; இவர் தாமே வியாசபாரதத்திலிருந்து எழுதுவதாகக் கூறியுள்ளார்: ஜைமினி பாரதத்தில் அசுவமேதபருவமொன்றுதவிர மற்றையபருவங்களெல்லாம் வியாச சாபத்தால் அக்காலத்திலேதானே அழிந்துவிட்டனவென்பது ஐதிகியம்.

---

மாவிடமொழிமறமகாவெந்தக்கதை
வேலவரருளினல்விளம்பும்பாடலே."
"தேனூறலரிசிதேங்காய்திரள்பணியாரப்பெட்டி
வானூடர்மதிக்குஞ்சேலைவாகுளபதக்கமுத்து
மானுணமக்களார்க்குமணவாளக்கரத்துக்கேற்ற
நாணயமோதிரங்கள்நலமுடனனுப்பினாரே."
"தண்ணுறுதன்மார்தன்னைத்தாக்குளபட்டங்கட்டிக்
கண்ணில்லாதான்காந்தாரிகைதனிற்காட்டிமாயன்
எண்ணெணுக்குமரர்தன்னைரட்சியுமென்றதாகப்
பண்ணுறுதுவாரகைக்குப்பாங்குடன்போவதானார்."
"அந்தமாம்பர்வதத்திலாயுளகுதிரைமூஞ்சி
வந்ததோரைவர்தன்னில்வடிவுள்ளார்தன்னைப்பார்த்துத்
தொந்தமாயோடிவந்துதுய்யதோர்விசயனுரைப்
பந்தமாயணைத்தவாறேபண்டுபோல்முகமதானான்."
"வழியதுமாளவேணும்மன்னனேதன்மராயா
பழமொழிகதைதானென்றுபாங்குடனுரையுமென்ன
மொழிகிறேன்கதைதானென்றுமுன்பொருநாளில்மன்னன்
அழகுடன்தானதர்மம்அளித்தரசாளுநாளில்."
"அந்தமாம்வதிட்டர்வந்துஅனுமனுஞ்சாம்பவானும்
தந்தமாம்விபீடணனும்தாக்குசுக்கிரீபன்கூடத்
தொந்தமாம்பரதசத்ருதுய்யலட்சுமணனங்கதன்
பந்தமாய்க்கொலுசேவிக்கப்பணிமுடிராமர்க்கீந்தார்."

இப்படிப்பட்டநூலைப்பாடியவர் இன்னாரென்று தெரியவில்லை; ஒருசைவ சமயத்தவரென்றுமாத்திரம் அந்நூலால் தெரிகிறது. இப்படி மிகஎளிமைப் பட்ட நடையை யுடைய தொரு நூலை, வில்லிபுத்தூரார்நடைக்குப் பின்வாங்காமற் சிறப்புப்பாயிரம் உரைத்துள்ள வரந்தருவார் பாடிய தென்று ஒருசாரார் கொள்வது, சிறிதுந் தகுதியன்று. அவரது செய்யுள்நடைச்சிறப்பை அவர் பாடிய பாயிரத்தை நோக்கி அறிக; அப்பாயிரச்செய்யுள்களுள் ஒன்று வருமாறு:

" கரும்புங்கமுகுந்தலைதெரியாக்கழனிச்செந்நெற்களையாகி
யரும்புங்குவளைநறுமலர்த்தேனாறுயெங்குஞ்சேறாக
விரும்புஞ்சுருதியிசைகேட்டுவேலைக்கழிக்கானலங்கைதை
சுரும்புந்தும்பிகளுமருந்தமாறுதென்றுஞ்சோறிடுமால்."

மேற்கூறிய மாவிந்தத்தின் நடையோடொத்த நடையையுடைய பாரதத்தின் முந்தினபருவங்களும் வேறு காணப்படுகின்றன. ஆதலால், அவற்றையும், மாவிந்தபுராணத்தையும் இயற்றியவர் ஒருவராகவே யிருக்கலாம்.

இவர் மகாபாரதமொன்றுதவிர வேறுநூலெதுவும் பாடியிருப்பதாகத் தெரியவரவில்லை. [கந்தரந்தாதியுரை இவர்செய்ததென்றுகூறுவர் ஒருசாரார்.]

இவர் தமக்குப் பலசெல்வமுங் கொடுத்து ஆதரித்துத் தம்மைக்கொண்டு பாரதத்தைப்பாடும்படிசெய்வித்த வரபதியாட்கொண்டானென்னுமரசனை இப்பெருங்காப்பியத்தில் இடையிடையே புகழ்ந்துபேசியுள்ளார்.

"கொடிமதிற் பாகை வேந்தன் கொங்கர்கோன் புரவிக் காலால்
வடதிசை யரசர் தங்கள் மாமணி மகுடம் போல
அடலுடை விசய னொற்றை யம்பினால் மீண்டுஞ் சென்று
படவர வுயர்த்த கோவைப் பண்ணினான் மகுட பங்கம்"

என்னும்பாட்டில், உத்தரகோக்கிரகண காலத்தில் அருச்சுனன் துரியோதனனை ஒருபாணத்தாற் கிரீடத்தைக்கீழேதள்ளி அவமானப்படுத்தியதற்கு, வரபதியாட்கொண்டான் தான் ஏறிப் போருக்குச் செல்கிற குதிரையின் முன்கால்களால் வடக்குத்திக்கிலுள்ள அரசர்களைப் பங்கஞ்செய்வதை உவமைகூறினார்.

"கோவல்சூழ் பெண்ணை நாடன் கொங்கர்கோன் பாகை வேந்தன்
பாவலர் மானங் காத்தான் பங்கயச் செங்கை யென்ன
மேவல ரெமரென் னாமல் வெங்களந் தன்னில் நின்ற
காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனக மாரி"

என்கிற செய்யுளில் கர்ணன் யுத்தத்திற்குச் செல்கின்றபொழுது பகைவர் நண்பரென்கிற பேதமில்லாமல் யாவர்க்குந் தானஞ்செய்துவருதற்கு, வரபதியாட்கொண்டான் தானஞ்செய்தலை ஒப்பிட்டார்.

"நாகையாப் புகழான் பெண்ணை நதிவளஞ் சுரக்கு நாடன்
வாகையாற் பொலிதிண் டோளான் மாகதக் கொங்கர் கோமான்
பாகையாட் கொண்டான் செங்கைப் பரிசுபெற் றவர்போஞ் சென்ன
ஓகையாற் செருக்கி மீண்டா ருதிட்டிரன் சேனை யுள்ளார்"

என்ற கவியில், தருமபுத்திரனது சேனையி லுள்ள வீரர்கள் வெற்றிகொண்டு மகிழ்ச்சியோடு படைவீட்டுக்கு மீளுதற்கு, வரபதியாட்கொண்டானிடம் வெகுமானம்பெற்றவர்கள் திருப்தியோடு திரும்பிவருவதை உவமை கூறினார்.

இப்படி பாலில்விஷங்கலப்பதுபோலப் பெரிய இதிகாசத்தினிடையிலே ஒருமனிதனைத் துதித்தல் தகுமோ? நர கவனம் நரக வன மன்றோ? என்று ஒரு ஆட்சேபந் தோன்றலாம்; இங்ஙனந்தோத்திரிப்பது தகுதியன் றாயினும், அரசன் தமக்குச்செய்தநன்றியை மறவாமல் உபகாரஸ்மிருதியாகப் பாடினரென்பதுபற்றிப் பலரும் அங்கீகரிப்பார்கள்; அன்றியும், ப்ரஸ்துதமாகிய உபமேயமுகத்தால் அவன்பெயரைப் பிரஸ்தாபிக்காமல் அப்ரஸ்துதமான உபமானமுகத்தாற் புகழ்ந்துகூறியதும் ஒருசமாதான மாகலாம். இங்ஙனமே தம்மைப்பாதுகாத்த பிரபுக்களைத் தாம்செய்யும்நூல்களில் நன்றியறிவுகாரணமாக எடுத்தேத்துவது, புலவர்களது இயற்கை. கம்பர் தமது இராமாயணத்தில் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பமுதலியாரையும், புகழேந்திப்புலவர் நளவெண்பாவில் முரணைநகர்ச் சந்திரன்சுவர்க்கியையும், மண்டலபுருஷன் சூடாமணிநிகண்டில் கிருஷ்ணதேவராயனையும் சிறப்பித்துக்கூறியவாறு காண்க.

இன்னும் இவர் தமதுநூலில் தமிழ்நாட்டரசராகிய சேரசோழபாண்டியர்களைப்பற்றிப் பிரஸ்தாபம்வருகிறபொழுது மிகச்சிறப்பாகக் கூறுவர்:—

"வஞ்சிமதுரைபுகாருடையான் வடமண்டலிகர்திறைவாரியகேரியன்
விஞ்சிமுனைதொறும்வாளசுரேசரைவென்றபொழுதடல்வானவர்கோனருள்,"

"அண்டர்குலபதியாம்விடைவாகனன் அம்பொன்முடிமலர்நாறிடுதாளினன்
எண்டிசையுமனுநீதிசெய்கோலினன் எங்குமொருகுடையாலிடுநீழலன்

மண்டூகிரணசிகாமணிமோலியன் வண்டுமதுநுகர்தாதகிமாலையன்
மிண்டுமுதுபுலியேறுபதாகையன் வென்றிவளவனையார்நிகர்வீரரே''
என்றவற்றால், சோழராசனுக்கொப்பான வீரர் எவருமில்லையென்றார்.

''மீனவன் வழுதி மாறன் வெண்மதி மரபில் வந்தோன்
வானவர் முதல்வன் சென்னி வரிவளை யுடைத்து மீண்டோன்''

என்றதனால், பாண்டியன் இந்திரனைக் கிரீடபங்கம்பண்ணின சிறப்பையும்,

''தந்தையை முதுகுகண்டோன் தனயனுக் கிளைக்குமோதான்''

என்றதனால், பாண்டியன் சிவனைப் பிரம்பால் முதுகிலடித்த வலிமையையும்,

''காலினாற் றுகைத்து வேலைக் கனைகட லேழு முன்னாள்
வேலினாற் சுவற்றுங் கொற்ற வெங்கயல் விலோத வீரன்''

என்றதனால், பாண்டியன் ஒருகாலத்துத் தன்நகர்மேற் பொங்கியெழுந்த கடலின்மீது கோபித்து அதனை வேலினால்வற்றச்செய்து தன்காலில்விழுந்து வணங்கப்பண்ணின மகிமையையும்,

''முழுதுணர்ந்தருள்முனிவரன்புகல்மும்மைவண்டமிழும்
பழுதறும்படிதெளிஞரேறியபலகையொன்றுடையான்''

என்றதனால், பாண்டியன் தமிழ்ச்சங்கத்தையுடையனான தகைமையையும்,

''கூறியசெஞ்சொலேடுகுறித்தெதிர்கொண்டவையை, யாறுடையவன்'' என்றதனால், பாண்டியநாட்டு வைகைநதி தமிழ்ப்பாடல்களின் அருமையையுஞ் சிறப்புடைமதத்தின்பெருமையையுந் தெரிந்துவெளியிட்ட ஏற்றத்தையுங் கூறியுள்ளார்.

''பராவுபேருடைச் சேரசெம்பியருடன் பாண்டியன்முதலோரும்'' எனச் சேரனைச் சிறப்பித்துக்கூறுமிடமுங் காண்க.

''காவிரியென்னத்தப்பாக்கருணையான்'' என நளசக்கரவர்த்தியினது கருணைக்கு, தமிழ்நாட்டிற்பிரசித்தியான காவேரிநதியைத் தண்மைக்கும் தவறாமைக்கும் உவமையெடுத்துக்கூறினார்.

''தங்கள்மால் வரையில் வைகுந் தமிழ்முனி தன்னைப் போலப்
பொங்குவெண் டரங்க முந்நீர்ப் புணரிக ளேழுஞ் சேர
வெங்கையால் வாருங் கொற்ற வேழமா மேற்கொண் டானே''

என்றதனால், தமிழுக்கு ஆதியிலக்கணநூலாசிரியராகிய அகஸ்தியமகாமுனிவர் கடலைக்குடித்தருளிய கதையைக் கொண்டாடினார். இன்னமும் ''தங்கள் தமிழ்க்குழலிசையைத் தன்செவிக்கு விடமென்னும்'' என்றதனால், வேய்ங்குழலின் இசைப்பாட்டின் இனிமைக்கு, தமிழ்ப்பாஷையை உவமைகூறினார். ''தங்கள் மூவகைத்தமிழும்போலச், சிந்தையிற்குளிக்குமாறு சிலீமுகமூன்று விட்டான்''என்றதில், அம்புகள் நன்றாகப் பகைவர்நெஞ்சிற்பதிதற்குத் தமிழ்ப்பாஷை கற்றவர்மனத்திற்படிதலை உவமையாக்கினார்.

இங்ஙனம் தமது தேசாபிமான பாஷாபிமானங்களை வெளிப்படுத்துவது யாவர்க்கும் வழக்கமேயாம்.

இவர் தமதுநூலிற் பெரும்பாலும் வடமொழிகளைத் தனிமொழியாகவுந் தொடர்மொழியாகவும் இன்னமொழியின் சம்பந்தமானதென்று எளிதில் தெரியவொண்ணாதபடி திரித்தும் மொழிபெயர்த்தும் உபயோகித்திருத்தலால், வடமொழியிலும் மிகவல்லவரென நன்குவிளங்குகின்றது. தொடர்மொழியாகப் பிரயோகித்திருத்தற்கு உதாரணமாக, ''புராதநாகமவேதகீதபுராணரூபம்'', சலதரசஞ்சலசாலம்'', ''இமநாகபவநன்'', ''விகங்கராசன்'', ''மாதவயாதவவாசவகேசவ'', ''சதுரங்கயாகம்'', ''பரதநாதவேத பரத்துவாசன்'', ''கபோலவிகடகடகரிதுரகம்பதாதியிரதம்'', ''நவரத்நகணகிரணவுடு'' முதலிய

வற்றையும்;மொழிபெயர்த்தற்கு உதாரணமாக, நீரின்உற்பத்திக்கு இடமானவ னென்னும் பொருள் கொண்ட 'க்ருபீடயோநி' என்னும் வடசொல்லை மொழிபெயர்த்து "அம்மனை" [அம் - நீர்; மனை - இடம்: அது, நெருப்பு] என்றும், 'மநோரதம்' என்னும் வடசொல்லை மொழிபெயர்த்து "உள்ளமானதேர்" என்றுங் கூறியது முதலியவற்றையும்; சிதைத்து உபயோகப்படுத்தற்கு உதாரணமாக, 'ஜமதக்நி' என்பதை "இயமதங்கி" என்றும், 'அஸ்திரம்' என்பதை "அச்சிரம்" என்றும் உபயோகப்படுத்தியது முதலியவற்றையுங் காண்க. தனிமொழியாக உபயோகித்தற்கு உதாரணம் அளவிறந்தன.

தமிழில் எந்தநூலாசிரியரும் வடமொழிகளை இவரவ்வளவு எடுத்துக் கொள்ளவில்லை. வடசொற்களைத் தமிழ்க்காப்பியத்தில் நுழைக்கிற வழக்கம் இவர்காலந்தொடங்கித்தான் அதிகமாயிருத்தல்வேண்டும். சங்கத்தார்காலத்துப்பழையநூல்களில் அத்தனையாக வடமொழிகள் அகப்படா; சுத்ததமிழ்ப் பதங்களே மிகுதியாயிருக்கும்.

இவரது பாடல்களில் உவமை, உருவகம், எடுத்துக்காட்டுவமை, தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள்வைப்பு, பிறிதுமொழிதல், உயர்வுநவிற்சி முதலிய பொருளணிகள் அமைந்திருப்பதுமாத்திரமேயன்றி, மடக்கு (யமகம்), பிராசம் முதலிய சொல்லணிகளும் ஆங்காங்கு அமைந்திருத்தலையும், இவரது செய்யுள்நடை பலவிடத்து மூடுகுடையதாதலையும், பலவகைச்சந்தங்களும் சந்தப்போலிகளும் வண்ணங்களும் பொருந்தியிருத்தலையும் காணலாம்.

"பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா தொருவர் பகரொணாதே" என்று சிறப்பித்துக்கூறப்பட்டுள்ள படிக்காசுப்புலவரும், திருப்புகழ்பாடிய அருணகிரிநாதரும் முதலிய சிலர் போலவே இவ்வில்லிபுத்தூராரும் சிறந்த சந்தக்கவியென்று இவர்நூலால் தெரிகிறது.

"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவம்" என்றவாறு, இவருடைய நூலில் ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் சொற்பொருட்கருத்துக்கள் சிற்சில இடத்து எடுத்து ஆளப்பட்டுள்ளமையும், உய்த்துநோக்குமிடத்து விளங்கும்; தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் "மறஞ்சுவர் மதிளெடுத்து மறுமைக்கே வெறுமைபூண்டு, புறஞ்சுவரோட்டைமாடம் புரளும்போதறியமாட்டீர், அறஞ்சுவராகிநின்ற அரங்கனார்க்கு ஆட்செய்யாதே, புறஞ்சுவர்கோலஞ்செய்து புட்கவ்வக்கிடக்கின்றீரே" என்றாற்போல, இவர் சூதுபோர்ச்சருக்கத்தில் கர்ணனைப்பற்றி, "அறஞ்செறிதானம் வண்மை யளவிலாதளித்து நாளும், புறஞ்சுவர்கோலஞ்செய்வான் பூபதிக்குரைக்கலுற்றான்" என்றும், மற்றும் அவ்வாழ்வார் அத்திவ்வியப்பிரபந்தத்தில் "மருவியபெரியகோயில் மதிட்டிருவரங்க மென்னாக், கருவிலேதிருவிலாதீர் காலத்தைக்கழிக்கின்றீரே" என்றதைக் கருதி, இவர் பதினொன்காம் போர்ச்சருக்கத்தில் பாகவதர்களைப்பற்றி "கரியபைம்புயலைக் கைதொழுமவரே கருவிலே திருவுடையவரே" என்றுங் கூறினாற்போல்வன காண்க.

மற்றும் நம்மாழ்வார் கண்ணனது சௌலப்பியத்தில் ஈடுபட்டு "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய, வித்தகன் மலர்மகள்விரும்பும் நம் அரும்பெறலடிகள், மத்துறுகடைவெண்ணெய்களவினிலுரவிடையாப்புண்டு, எத்திறம்உரலினோடிணைந்திருந்தேங்கியஎளிவே!" என்று அருளிச்செய்தாற்போல, இவரும் "பூத்தநாபியந்தாமரைப்பூவில் வந்து பல்பூதமுஞ், சேர்த்தநான்முகப்புனிதனு முனிவர்யாவருந் தேவரு, மேத்த நால்வேதங்களுந் தேடநின்ற தாளெம்பிரான், பார்த்தன்மாமணித்தேர்விடும்பாகனான தெப்பான்மையே!" என்று பாடினமையும், பிறவுங் கண்டுகொள்க.

ஸ்ரீ

கடவுள் துணை.

# மகாபாரதம்.

பாரதம் என்னுஞ்சொல்லுக்கு-பரதனது வம்சத்தவரைப்பற்றிய நூலென்று பொருள். இங்குக் குறித்த பரதனென்பவன் - சந்திரவம்சத்தில் துஷ்யந்த மகாராஜனுக்குச் சகுந்தலையினிடந் தோன்றிப் பிரசித்திபெற்ற ஓரரசன். [இராமன்தம்பியான பரதனும், பரதகண்டமென்றதற்குக் காரணனான சடபரதனும், பரதநாட்டியமென்றதற்குக் காரணனான பரதனு மல்லன்.] பரதவம்சத்துத் தோன்றினவர், பாரதர்; அவராவார் - பாண்டவரும், துரியோதனாதியரும்: அவர்களது சரித்திரத்தை உணர்த்தும் நூல், பாரத மெனப்பட்டது. இது - வடமொழித் தத்திதாந்தநாமம். [ஒருவடசொல் சிறிதுமாறித் தன்னோடு இயைபுடைய பொருளையேனும் தன்பொருளையேனும் உணர்த்துவது, தத்திதாந்தநாமம்.] இனி, வருணாச்சிரமதருமம் இராசதருமம் மோக்ஷதருமம் நீதி முதலிய சிறந்த உறுதிப்பொருள்களை யெல்லாம் அறிவிப்பதனால் முனிவர்கள் சீர்தூக்கிப்பார்க்குமிடத்து மற்றை யெல்லா நூல்களினும் மிகுந்த பாரம் [அதாவது - மகிமை] உடைமைபற்றி, இந்நூலுக்குப் பாரத மென்னும் பெயர் இடப்பட்டதென்றுங் கொள்ளலாம்; முன்னொருகாலத்தில் தேவர்யாவரும் நான்குவேதங்களையும் ஒருதட்டிலும் பாரதத்தை மற்றொருதட்டிலு மாகத் துலாக்கோலில் வைத்துநிறுக்க, வேதமனைத்தையும் வைத்த பக்கத்தினும் இந்நூலை வைத்த பக்கம் வலிதாயிருந்த தென வடநூற்பாரதத்தின் அநுக்ரமணிகை யத்தியாயங் கூறும்*. [இனி, இந்தச்சொல்லை, பார் அதம் என இரண்டுசொல்லாகப் பிரித்து, அதம் என்பதை ஹதம் என்னும் வடமொழிப்பெயரின் திரிபாகக் கொண்டு, பூமியிலுள்ள பல துஷ்ட அசுரர்களும் கெட்ட அரசர்களும் முதலியோரது நாசத்தைக் கூறுவதொரு நூலென்று பொருள்கூறுவாரு முளர்; அதுபொருந்தாது: என்னெனில்;—பாரதம் என்னும் வடமொழி ஒருமொழியாதலாலும், அதற்கு வடமொழிக்கு ஏற்பப் பொருள்கூறுவது தகுதியே யன்றித் தமிழ்மொழிக்கு ஏற்பப் பொருள்கூறுதல் தகாமையாலு மெனக் காண்க.]

யாவரும் மேற்கொண்டு பூசிக்கத்தக்க மேம்பாட்டை யுடைத்தாயிருத்தல் பற்றி, இந்த இதிகாசத்துக்கு 'மகா' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. அம்மேம்பாடாவது - இருக்குமுதலிய நான்குவேதங்களோடு ஒப்ப ஐந்தாம்வேதமென்று சிறப்பித்துக்கூறப்படும் மகிமை; "பாரத: பஞ்சமோவேத:", "நீடாழியுலகத்து மறைநாலொடைந்தென்று நிலைநிற்கவே, வாடாததவவாய்மை முனிராசன் மாபாரதஞ்சொன்னநாள்," "மண்ணி லாரணநிகரென வியாதனார் வகுத்த, எண்ணிலாநெடுங்காதை" என்பன காண்க. அன்றியும், மிகச்சிறந்த பகவத்கீதையைத் தன்னுள் பீஷ்மபர்வத்திலும், விஷ்ணுஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்தை ஆநுசாஸநிகபருவத்திலும் அடக்கிக்கொண்டிருப்பது,

---

* 'முனிவர் ஏனையஇதிகாசபுராணங்களுக்கும் பாரதத்திற்குமுள்ள வேற்றுமை யறியக் கருதி அவற்றிற்கு ஒருமணியும் பாரதத்திற்கு ஒருமணியும் தராசில்வைத்துச்சீர்தூக்கி நோக்குங்கால் பாரதமணித்தட்டு பாரமுடைத்தாய்க் கீழ் இறங்கினமையின்' என்றல், வியாசபாரதத்தோடு முரணும்.

இந்நூலுக்கு எல்லா நூல்களினுஞ் சிறந்த மேம்பாடாம். மகாபாரதம் என்னும் பண்புத்தொகைநிலைத்தொடர்மொழி - வடமொழிப் புணர்ச்சியாதலால், வருமொழி முதல் வலி இயல்பாயிற்று; [நன்னூல் - மெய்யீற்றுப் புணரியல் - கூக.] இந்நூலை முதலில் வடமொழியிற் செய்தவர், ஸ்ரீவேதவியாசமகாமுனிவர்; இவரால் வைக்கப்பட்ட 'பாரதம்' என்கிற முதனூலின்பெயரே "முதனூல் கருத்த னளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" என்னுஞ் சூத்திரத்து விதிப்படி வழிநூலாகிய இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. பாரதத்துக்கு 'ஜயம்' என்றும் ஒருபெய ருண்டு.

உபதேசபரம்பரையில்வந்த ஒருவருடைய பழையசரித்திர மொன்றைப் பிரதானமாக எடுத்துப் பலகிளைக்கதைகளோடுபுணர்த்து விரித்துக்கூறும் நூல் - இதிகாச மென்றும் [இதிகாசம் - பழையவரலாறு], உலகத்தின்தோற்றம், ஒடுக்கம், முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந்தரம் என்னும் ஐந்து விஷயங்களை விரவிக்கூறும் நூல் - புராண மென்றும் [புராணம் - ஐந்து இலக்கணங்களுடன் பழையவரலாறுகளை யுணர்த்தும் நூல்] வேறுபாடு உணரத்தக்கது. இதிகாசம் - ராமாயணமும், பாரதமும். புராணம் - பிராம்மம் முதலாகப் பதினெட்டுவகைப்படும். இந்த இதிகாசபுராணங்கள் - வேதத்தின்கருத்து இன்னதென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றிவிளக்குதல்பற்றி, வேதத்திற்கு உபப்பிரஹ்மணங்களென்று சொல்லப்படும்; உபப்பிரஹ்மண மென்றால் - வளர்ப்பதென்று பொருளாம். இவற்றுள், புராணங்களினும் இதிகாசம் பிரபலமான பிரமாண மென்றும், அதுபற்றியே இதனை 'இதிகாசபுராணம்' என முன்னோர் வைத்துக்கூறுவ தென்றும் அறிக.

பெருங்காப்பியமாவது - வாழ்த்து, தெய்வவணக்கம், தலைமைப்பொருளுரைத்தல் என்கிற மூன்றுவகை மங்களங்களுள் ஒன்றை முதலிற் பெற்று, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளையுந் தருந்தன்மையதாய், சிறந்தவொருதலைவன்மேலதாய், நாடு நகரம் மலை கடல் காலம் சந்திரசூரியர் உதய அத்தமனம் விவாகம் முடிகவித்தல் பொழில்விளையாட்டு நீர்விளையாட்டு மதுபானம் மக்கட்பேறு கலவியிற்களித்தல் புலவியிற்புலத்தல் மந்திரம் தூது போர்ச்செலவு போரிடல் வெற்றி முதலிய பலவகை வருணனைகளையுடையதாய், சருக்கம் இலம்பகம் பரிச்சேதம் முதலான பாகுபாடு பொருந்தி, வீரம் முதலிய சுவைகளும் அவற்றைவிளக்குங் கருத்துக்களும் விளங்க, காதுக்கினிய ஒருதிறப்பாட்டாலேனும் பலதிறப்பாட்டாலேனும் கட்டுரையாலேனும் கற்றோராலியற்றப்பட்டுநிற்பதாம். இங்குக்கூறியவர்ணனைகளுள்சிலகுறைந்துவரினும் குற்றமில்லை. இங்ஙனங்கூறியதனால், இதுஒருகதையின்மேலதென்றதாயிற்று. இப்பாரதத்தில் இப்பெருங்காப்பிய இலக்கணங்கள் பலவும் வருவதை ஆங்காங்குக் காண்க. [முற்கூறியவாறு பலவர்ணனைகளைப்பெறுமலும், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினுள் ஒன்றும் பலவும் குறைந்தும் வருவன - சிறுகாப்பியமென்றும், காப்பியமென்றுங் கூறப்படும்; அவை - உலா, பரணி, ஆற்றுப்படை, பிள்ளைத்தமிழ், கோவை, கலம்பகம், அந்தாதி, மாலை முதலாயின.]

பாரதம் - அந்தந்தப்பாகத்தின்விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால் ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம், பீஷ்மபருவம், துரோணபருவம், கர்ணபருவம், சல்லியபருவம், ஸௌப்திகபருவம், ஸ்திரீபருவம், சாந்திபருவம், அநுசாஸநிகபருவம், அசுவமேதபருவம், ஆசிரமவாசபருவம், மௌஸலபருவம், மகாபிரஸ்தானபருவம், ஸ்வர்க்காரோகணபருவம் எனப் பெயர்பெற்ற பதினெட்டுப் பருவங்கள் அடங்கியுள்ளது. அவற்றுள்,

ஒன்பதாவது

# சல்லியபருவம்.

'சல்யபர்வம்' என்ற வடசொல்தொடர், திரிந்தது; [நன் - பத - உஉ.] சல்லியனது சம்பந்தமான பருவ மென்று, ஆறும்வேற்றுமைத் தொகையாகக் கொள்க; விஷயமாகவுடைமை, வேற்றுமைப்பொருளாகிய சம்பந்தம். இனி, இரண்டாம்வேற்றுமை யுருபும்பயனுமுடன்தொக்க தொகையாக, சல்லியனைப்பற்றிய பருவ மெனினும் அமையும். சல்லியன் துரியோதனுதியர்க்குச் சேனைத்தலைவனாய் நின்று ஒருநாள் போரை நடத்திய கதையைக் கூறும் பாக மென்று பொருள். பர்வம் - கணு; கரும்பு மூங்கில் முதலியவற்றிற்கு ஏகதேசமாகிய [ஏகதேசம் - ஒருபகுதி] கணுப்போல, நூலுக்கு ஏகதேசமாகிய உறுப்பை 'பருவம்' என்பது - உவமவாகுபெயர்.

சல்லியன் - (பகைவர்க்கு) அம்புநுனிபோல் (வருத்தஞ் செய்)பவன்; சல்யம் - அம்புமுனை. இவன் - மத்திரநாட்டரசன்; பாண்டுமகாராசனது இரண்டாவது மனைவியாகிய மாத்திரிக்கு உடன்பிறந்தவனுதலால், நகுலசகதேவர்க்கு மாமனுவன். இவன், பாண்டவர் அஜ்ஞாதவாசம் நீங்கியபின் அவர்களுக்குப் போர்த்துணைசெய்யும்பொருட்டுத் தன் நாட்டிலிருந்து வரும்பொழுது,வழியில், துரியோதனன், தருமபுத்திரன் செய்த தென்று தோன்றும்படி ஆங்காங்குத் தண்ணீர்ப்பந்தல் முதலியன வைத்து எல்லாப்பொருளுங் குறைவற அமைத்து வஞ்சனையாக விருந்துசெய்விக்க, இவன், அதனை உண்டு, அங்ஙனந் தன்னை உபசரித்தவற்குத் துணைசெய்யத் தான் கடமைப்பட்டிருப்பதாக வாக்களித்து, பின்னர் அது துரியோதனன்செய்த சூதென்று தெரிந்து வருந்தியும், வாக்குத்தத்தஞ் செய்துவிட்டமைபற்றி, அவனுக்கே துணையாயினன். இவன்-துரியோதனுதியர்க்கு நான்காவது சேனைத்தலைவன். [முதற் பத்து நாளில் பீஷ்மனும், அடுத்த ஐந்துநாளில் துரோணனும், அதற்கு அடுத்த இரண்டுநாளில் கர்ணனும் சேனுபதியாயிருந்து ஒழிந்தன ரென அறிக.] இவன், சமரத வீரரிற் சிறந்தவன்.

கீழ் ஆதிபர்வம் முதலாகவும், மேல் சௌப்திகபர்வம் முதலாகவும் கதாநாயகரான பாண்டவரது சரித்திரபாகத்தின் விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களாற் பருவங்களுக்குப் பெயரிடும் ஆசிரியர், இங்கு (அவ்வாறே பாண்டவர் சேனைத்தலைவர்பெயரால் சுவேதபர்வம், திருஷ்டத்யும்நபர்வம் எனப் பெயர் குறியாது) பீஷ்மபர்வம், துரோணபர்வம், கர்ணபர்வம், சல்லியபர்வம் எனத் துரியோதனுதியர் சேனைத்தலைவரைப் பற்றின சொற்களாற் பெயரிடக் காரணம் என்னையோ வெனின்,—எதிரிகளது சிறப்பை நன்கு எடுத்துக்காட்டி அப்படிப்பட்டவர்களை இவர்கள் வென்றிட்டார்க ளெனக் கதாநாயகரைப் பெருமைப்படுத்தவேண்டி யென்க. இனி, சல்லியவதபர்வம் என்பது மத்தியமபதலோபமாய்ச் சல்லியபர்வமென நின்ற தென்றலு மொன்று. பிறவற்றிற்கும் இங்ஙனமே கொள்க.

## பதினெட்டாம்போர்ச்சருக்கம்.

பாண்டவர்க்கும் துரியோதனுதியர்க்கும்நடந்த பதினெட்டுநாளையுத்தத்தில் பதினெட்டாநாள்யுத்தத்தைக் கூறும்பாக மென்று பொருள். சல்லியபருவமும் இதற்குஅடுத்த சௌப்திகபருவமும் என்னுமிரண்டும் பதினெட்டாம்போர்ச்சருக்க மொன்றில் அடங்கும். போர்ச்சருக்கம் - போரைக்கூறுஞ் சருக்கமென இரண்டனுருபும் பொருளுந் தொக்க தொகை: (போரினது சம்பந்தமான சருக்க மென விரித்து, விஷயமாகவுடைமையாகிய சம்பந்தப்பொருளில் வந்த ஆறும்வேற்றுமைத்தொகை யென்றுங் கொள்ளலாம்.) சருக்கம் - ஸர்க்கம்என்ற வடசொல்லின் திரிபு: முடிபு அல்லது படைப்பு என்றுபொருள்; அது, சங்கேதத்தால், ஒருபெரியவகுப்பினுட்பட்ட சிறியபாகத்தைக் குறிக்கும். பத்து + எட்டு=பதினெட்டு; உம்மைத்தொகையில் நிலைமொழி ஈற்று உயிர்

மெய்கெட இன்சாரியை தோன்றிற்று: [நன் - உயிரீற்றுப்புணரியல் - சஎ.] ஆம்- ஆகு மென்னும் செய்யுமென்னெச்சத்தின் ஈற்று உயிர்மெய் சென்றது; [நன்-வினையியல் - உஉ.] போர்- பொருதல்; பொரு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

## கதைத்தொடர்ச்சி.

[பாரதகதை பிரசித்தமானதாதலால், இந்தச்சருக்கத்துக்கு முன்கதைத் தொடர்ச்சி சுருக்கமாகவே எழுதப்படுகிறது.]

இப்பரதகண்டத்திலே அஸ்திநபுரியில் சந்திரகுலத்திலே யுதித்துச் செங்கோல்செலுத்திய சந்தனுவென்னும் அரசனுக்கு முதல்மனைவியாகிய கங்கையின் குமாரர் பீஷ்மரென்பவரும், இரண்டாம் மனைவியாகிய யோஜநகந்தியின் மகன் விசித்திரவீரியனென்பவனும் இருந்தார்கள். [முன்னர்ச் சத்தியவதியென்னும்பெயரோடு இருந்து பராசரமுனிவரோடுசேர்ந்து வியாசரைப்பெற்றுப் பின்பு அப்பராசரரருளாற் கன்னிப்பருவமடைந்த இந்தக்கந்தவதியினிடம் சந்தனுவுக்குப்பிறந்த முதற்குமாரனான சித்திராங்கதன், அப்பேருள்ள ஒருகந்தருவனாற் கொல்லப்பட்டு இறந்தான்.] முன்னையவிரதத்தின்படி வீடுமர் விசித்திரவீரியனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வித்தார். விசித்திரவீரியனது பத்தினியாகிய அம்பிகையினிடத்துத் திருதராஷ்டிரனும், அம்பாலிகையினிடத்துப் பாண்டுவும், சந்ததிவிருத்தியின்பொருட்டுத் தாய்சொற்கடவாத வியாசபகவானது திருவருளாற் பிறந்தனர். அம்பிகையாலேவியனுப்பப்பட்ட சூத்திரப் பெண்ணினிடத்து வியாசரருளால் அவதரித்த விதுரனென்னுங் குமாரனும் இருந்தான். திருதராட்டிரன் பிறவிக்குருடனாதலால், விதுரனை மந்திரியாக வைத்துக்கொண்டு, பாண்டு, திருதராட்டிரனுக்கு முடிசூட்டித் தானே இராசாங்ககாரியம் பார்த்துவந்தான். பாண்டுவுக்கு மனைவியுடன் சேரக்கூடாதென்று சாபம் நேரிட்டதனால், அவனனுமதிப்படி அவனது மூத்த மனைவியாகிய குந்தி தனக்கு இளமையில் துருவாசமுனிவருபதேசித்திருந்த மந்திரத்தின் மகிமையால் வந்த யமதருமராசனால் யுதிஷ்டிரனையும், வாயுதேவனாற் பீமசேனனையும், தேவேந்திரனால் அருச்சுனனையும் பெற்றாள். [முன்பு கன்னிப் பருவத்துச் சூரியனாற் குந்தியிடம் பிறந்தவன், கர்ணன்.] அவளுடைய சக்களத்தியான மாத்திரி, குந்தியால் அம்மந்திரமுபதேசிக்கப்பெற்று அசுவினீதேவர்களால் நகுலன் சகதேவன் என்னும் இரட்டைப்பிள்ளைகளைப் பெற்றாள். திருதராட்டிரனுக்குத் துரியோதனன் துச்சாசனன் முதலிய நூறுபிள்ளைகளும், துச்சளை யென்னும் ஒரு பெண்ணும் காந்தாரியினிடம் பிறந்தார்கள். [பஞ்சபாண்டவர்களுள் தருமன் துரியோதனாதியர் நூற்றுவரினும் மூத்தவனென்றும், வீமன் முதலிய மற்றை நால்வருந் துரியோதனனுக்கு இளையவரென்றும் அறிக.] பாண்டு சிலகாலத்துக்குப்பின் இறந்துபோனான். அப்பொழுது மாத்திரி சககமனஞ்செய்தாள். பின்பு பாண்டவருந் துரியோதனாதியரும் கிருபாசாரியர் துரோணாசாரியரிடத்து வில்வித்தைகற்கும்போதே, துரியோதனாதியர் பொறாமையினால் பாண்டவரிடத்து ஞாதிப்பகைகொண்டு பலதீமைகள் செய்துவந்தார்கள்; வருகையில், அரக்குமாளிகையிலிட்டுத் தங்களையெரிக்கும்படி துரியோதனாதியர் செய்த யத்தனத்தைப் பாண்டவர்கள் விதுரரால் அறிந்து தப்பிப் பிராமணவேடம்பூண்டு திரிந்து, திரௌபதியின் சுயம்வரத்துக்குச் சென்று, அங்குக்கட்டியிருந்த மச்சயந்திரத்தை அறுத்து அருச்சுனன் திரௌபதியைக்கொண்டுவர, தாயார்சொற்படி அந்த ஒருத்தியை ஐவரும் மணஞ்செய்துகொண்டு அஸ்தினபுரத்துக்கு வந்தார்கள். வந்தவுடனே திருதராட்டிரன் இவர்களை இந்திரபிரஸ்தத்திலும், துரியோதனன் முதலியோரை அஸ்திநபுரியிலும் இருந்து அரசாளும்படி இராச்சியத்தைப் பங்கிட்டுக்கொடுத்தான்.

பின்பு தருமபுத்திரன் தனதுதம்பிமார் நால்வரைக்கொண்டு திக்குவிசயஞ் செய்து ராஜசூயயாகம்முடித்து வெகுமகிமையுடன் விளங்கினன். அதுகண்டு பொறாமைகொண்டு துரியோதனன் யுதிட்டிரனைத் தந்திரமாகத் தன்னிடம் அழைப்பித்துத் தன்மாமனான சகுனியைக்கொண்டு அவனுடன் சூதாடுவித்து அவனதுசெல்வம் முழுவதையும் பறித்துக்கொண்டு அவனையும் அவனது தம்பிமாரையும் அவர்களது மனைவியான பாஞ்சாலியையும் அடிமையாக்கி, அவளைத் தீண்டக்கூடாதகாலத்தில் துச்சாதனனைக்கொண்டு சபையிற் பலாத்காரமாகக் கொண்டுவந்து துகிலுரியச்செய்தான். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணனநுக்கிரகத்தால் அவள் மேன்மேல் ஆடைவளரப்பெற்று மானங்காத்துக்கொண்டாள். பின்பு அவளது கற்பின் பெருமைக்கு அஞ்சித் திருதராட்டிரன் அவர்களை அடிமைத்தன்மையினின்று நீக்கிச் செல்வத்தையுங் கொடுத்தனுப்ப, துரியோதனனியர் அதனை மறுத்து அவற்றையெல்லாங் கவர்ந்துகொண்டு, மறுசூதாடி அடிமைநீங்கின அவர்களைப் பன்னிரண்டுவருஷம் வனவாசமும், ஒருவருஷம் அஜ்ஞாதவாசமும் [அஜ்ஞாதவாசமாவது - ஒருவரும் தம்மை இன்னாரென்று அறியவொண்ணாதபடி நாட்டில் மறைந்துவசித்தல்] செய்துவந்தால் அரசுபெறுமாறு ஏற்பாடுசெய்து அனுப்பினார்கள்.

அங்ஙனமே பாண்டவர்கள் திரௌபதியுடன்சென்று பன்னிரண்டுவருஷம் காமியவனம்முதலிய இடங்களில் வசித்துப் பின்பு மாறுவேடம்பூண்டு விராடநகரத்தில் ஒருவருஷகாலம் அஞ்ஞாதவாசஞ்செய்தனர். அந்தப் பதின்மூன்றாவது ஆண்டினிறுதியில் துரியோதனன், பாண்டவர்கள் விராடநகரத்தில் இருக்கலாமென ஒருவாறு ஊகித்துஉணர்ந்து, அவர்களைக்கண்டுபிடிக்கும்படி படையெடுத்துச்சென்று, அந்நாட்டை இருபுறத்தும்வளைத்துப் பசுக்கூட்டத்தைக்கவர்ந்துசெல்ல, அருச்சுனனொழிந்த நால்வரும் விராடனுடன்சென்று தென்புறத்தில் திரிகர்த்தரையும், விராடகுமாரனான உத்தரனுக்குத் தேரூர்ந்து சென்ற பேடிவடிவான அருச்சுனன் வடபுறத்தில் துரியோதனாதியரையும் போரில் வென்று, முன்னைய ஏற்பாட்டின்படி பதின்மூன்றுவருடமுங்கழிந்துவிட்டதனால், அப்பொழுது பாண்டவர்களுந் திரௌபதியும் நிஜரூபத்தோடு வெளிப்பட்டனர். பின்பு விராடராசன், அவர்களுக்கு விசேஷஉபசாரஞ்செய்து தூதர்கள்மூலமாகச்செய்தியைத்தெரிவித்து, ஸ்ரீகிருஷ்ணமூர்த்திமுதலான பந்துக்களையும் மற்றும்அரசர்களையும் வரவழைத்து, கிருஷ்ணனுடன்பிறந்தவளான சுபத்திரையினிடத்து அருச்சுனனுக்குப் பிறந்த குமாரனான அபிமந்யுவுக்குத் தன்மகளான உத்தரையைச் சுபமுகூர்த்தத்தில் மணம்புரிவித்தான்.

பின்பு பாண்டவர்கள் விராடனால் அமைக்கப்பட்ட உபப்லாவியமென்ற பட்டணத்தை யடைந்து கிருஷ்ணன்முதலிய அரசர்களுடனே இராச்சியம் பெறும் உபாயத்தை ஆலோசித்து முடிவுசெய்து உலூகனென்னும் அந்தணனைத் திருதராட்டிரனிடந் தூதனுப்ப, அவ்வேதியன் சென்று செய்திகூறுகையில், அங்குத் துரியோதனன், துரோணன்முதலிய பெரியோர் சொல்லவுங் கேளாமல் கர்ணன்முதலிய சிற்றினத்தவரின் கருத்தையே முக்கியமாகத் தழுவிச் சிறிதும்இராச்சியங்கொடுக்கமாட்டேனென்று சொல்லிவிட, அச்செய்தியை அம்முனிவன் பாண்டவர்க்குங் கண்ணனுக்குந் தெரிவித்துச் சென்றான். அதன்பின் கண்ணபிரானைத் தந்தமக்குப் போரில் ஏற்றதுணையாகும்படி துரியோதனனும் அருச்சுனனும் ஒருங்கேசென்றுவேண்ட, அப்பெருமான், தந்திரமாக, துரியோதனனுக்கு யாதவசேனை முழுவதையுந் துணையனுப்புவதாகச் சொல்லி, தான்மாத்திரம் பாண்டவர்க்கே துணைவனாயினன். பின்பு திருதராட்டிரனது வேண்டுகோளால் சஞ்சயனென்னும்முனிவன் பாண்டவர்பக்கல் வந்து 'அரசாட்சி பலபெருந்துன்பங்களுக்கும் இடமாகுதலால், அதனிடத்து ஆசையைவிட்டு வனத்தையடைந்து பெருந்தவஞ்செய்தலே சிறந்த அறிவு'

என்று வைராக்கியம்போதிக்க, பாண்டவர்கள் அதற்குச் சிறிதும்உடன்படாது மறுத்துவிட்டனர். அதன்பின்பு பாண்டவர் மீண்டும் ஆலோசித்துக் கண்ண பிரானையே தூதனுப்ப, அப்பிரான் சென்று சொன்ன நீதிகளையுஞ் சற்றும்உட் கொள்ளாமல் துரியோதனன் சிறிதும் அவர்களுக்கு இடங்கொடுக்கமாட்டே னென்று துணிவாய்க்கூறிவிட்டதுமன்றி அங்குக்கிருஷ்ணனைக்கொல்லும்படி ஒருதந்திரமுஞ்செய்ய, கிருஷ்ணபகவான் தனது திவ்வியசக்தியால் மிகப்பெரி தாக விசுவரூபமெடுத்து அதற்குத்தப்பி மீண்டு பாண்டவரிடம்வந்து அங்கு நடந்த செய்திகளை யெல்லாந் தெரிவித்தருளினான். பின்பு, பாண்டவர் ஏழு அக்ஷௌகிணி சேனையையும், கௌரவர் பதினொரு அக்ஷௌகிணி சேனை யையுந் திரட்டிக்கொண்டு, இருதிறத்தவரும் குருக்ஷேத்திரத்தில் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர்செய்யத்தொடங்கினார்கள்.

அப்பொழுது பாண்டவர்பக்கத்தில் முதலிற் சேனாபதியாய்நின்ற விராட குமாரனான சுவேதன் முதல்நாட்போரிலேயே வீடுமனால் இறந்துவிட, அதன் பின் இரண்டாநாள்முதல் துருபதகுமாரனான த்ருஷ்டத்யும்நன் சேனாபதியாக நியமிக்கப்பட்டான். [இவன், பதினெட்டுநாட்போரும்முடியுமளவும் இறவாது நிற்பன்.] எதிர்ப்பக்கத்துச் சேனைக்கு முதற்பத்துநாள்வரையில் பீஷ்மன் சேனைத்தலைவனாயிருந்து போர்நடத்திப் பத்தாம்போரில் சிகண்டிமுன்னாக அருச்சுனனெய்த அம்புமழையால் வலியழிந்து ஒடுங்கினபின் துரியோதனன் துரோணனைச் சேனாபதியாக்கினான். பின்பு துரோணன் ஐந்துநாள் கௌரவ சேனாதிபதியாயிருந்து பதினைந்தாம் போரில் திருஷ்டத்யும்நன்கையம்பால் மாண்டான். அதன்பின் சேனைத்தலைவனாக வந்த கர்ணன் பதினேழாநாளில் அருச்சுனனாற் கொல்லப்பட்டான்.

## தெய்வவணக்கம்: தசாவதாரஸ்துதி.

மீனாமைகேழலொடுநரசிங்கமாகிநிலம்விரகாலளந்தகுறளா
யானாதுசீறுமழுவல்வில்லுவெல்லுமுனையலமுற்றசெங்கையவராய்
வானாடர்வந்துதொழுமண்ணாடர்யாவரையுமடிவிக்கவந்தவடிவாய்
நானாவிதங்கொள்பரியாளாகிநின்றருளுநாராயணாயநமவே.

இது - காப்புச்செய்யுள்; இதனால், தாம் எடுத்துக்கொண்ட சருக்கம் இடையூறில்லாமல் இனிது முடியும்பொருட்டு உயர்ந்தோர்வழக்கத்தின் படியே கவி கடவுள்வாழ்த்துக் கூறுகிறார். கடவுள்வணக்கம், இரண்டுவகைப் படும்; வழிபடுகடவுள்வணக்கமென்றும், ஏற்புடைக்கடவுள்வணக்கமென்றும். வழிபடுகடவுள்வணக்கமாவது - தாம்தாம் குலதெய்வமாகக்கொண்டு ஆராதிக் கிற கடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம் - வைஷ்ணவசமயத்தார் விஷ்ணுவையும், சைவமதத்தவர் சிவனையும், ஜைநர் ஜிநனையும், பௌத்தர் புத்தனை யும் வணங்குதல் போல்வன. ஏற்புடைக்கடவுள்வணக்கமாவது - தாம்தாம் செய்ய எடுத்துக்கொண்ட காரியத்துக்குத் தகுதியையுடைய கடவுளை வணங் குதல்; இதற்கு உதாரணம்- இராமாயணங்கூறுபவர் இராமனையும், பாகவதஞ் சொல்பவர் கண்ணனையும், கந்தபுராணமுரைப்பவர் சுப்பிரமணியமூர்த்தியை யும் வணங்குதல் போல்வன. ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தவரான இந்நூலாசி ரியராற் கூறப்பட்ட இவ்வாழ்த்து-தமக்குவழிபடுகடவுளும்,எடுத்துக்கொண்ட இதிகாசத்துக்கு ஏற்புடைக்கடவுளு மாகிய திருமாலைப் பற்றிய தென அறிக. கண்ணபிரான் இந்நூலுக்கு ஏற்புடைக்கடவுள் என்பது-இந்நூலாசிரியர் தற் சிறப்புப்பாயிரத்தில் "முன்னுமாமறைமுனிவருந் தேவரும் பிறரும், பன்னுமா மொழிப் பாரதப் பெருமையும் பாரேன், மன்னுமாதவன் சரிதமு மிடையிடை வழங்கு, மென்னுமாசையால் யானு மீதியம்புதற் கிசைந்தேன்" எனக் கூறியத

ளூற் பெறப்படும்: இத்தன்மை, வியாசபாரதத்தின் அநுக்ரமணிகையத்தியா யத்திலும் நன்குவிளங்கும்.

(இதன்பொருள்.) மீன்-மீனும், ஆமை - ஆமையும், கோலம் - பன்றியும், நெடு-பெரிய, நரசிங்கம்-மனிதவடிவங்கலந்தசிங்கமும், ஆகி-(என்னும் இவற்றின்) வடிவமாய், நிலம்-உலகத்தை, விரகால் - தந்திரத்தால், அளந்த - அளவிட்ட, குறள் ஆய்-குறுகியவடிவமாய், ஆறுது-தணிவடையாமல், சீறும்-மேன்மேற்கோபிக்கிற, மழு-கோடாலியும், வல் வில்லு - வலிய வில்லும், வெல்லும் மூளை அலம்-பகைவெல்லுதற்குரிய கூர்நுனியையுடைய கலப்பையும், உற்ற-(என்னும் இவை முறையே) பொருந்தின, செம் கையவர் ஆய்-சிவந்தகையையுடைய மூன்று இராமர்களின் வடிவமாய், வான் நாடர் வந்து தொழ - விண்ணுலகத்தவரான தேவர்கள் வந்துவணங்க, மண் நாடர் யாவரையும்-நிலவுலகத்தார்பலரையும், மடிவிக்க-அழித்தற்கு, வந்த-தோன்றின, வடிவு ஆய்-(கண்ணனது) வடிவமாய், நாறு விதம் கொள்-பலவகைப்பட்ட நடைவகைகளைக் கொண்ட, * பரி-குதிரைவடிவங் கலந்த, ஆள் ஆகி-மனிதனது வடிவமாய், நின்று-திருவவதரித்துநின்று, அருளும்-(எல்லாவுயிர்களிடத்தும்) கருணைசெய்யும், நாராயணை-ஸ்ரீமந்நாராயணமூர்த்திக்கு, நம-நமஸ்காரம்; (என்றவாறு.)—ஏகாரம் - ஈற்றசை.

"தேவுடைய மீனமா யாமையா யேனமா யரியாய்க் குறளாய், மூவுருவிலிராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய் முடிப்பான்", "மச்சா கூர், மா கோலா சிங்கா வாமா ராமா ராமா ரா, மா கோபாலா மாவா வாய்" என்றபடி மத்ஸ்யம் கூர்மம் வராகம் நரசிம்மம் வாமநன் பரசுராமன் தசரதராமன் பலராமன் கிருஷ்ணன் கல்கி என்ற பத்துத்திருவவதாரங்களை உரியசமயங்களிற்செய்து துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலநஞ் செய்தருளுகிற திருமாலுக்கே நானடிமை யென்பது இதன் கருத்தாம். இப் பத்து அவதாரங்களுள் முதலொன்பது அவதாரங்களும் முன்புநடந்தவை யென்பதும், இறுதியவதாரம் இனிநடப்ப தென்பதும் தோன்றும்பொருட்டு, மற்றையவதாரங்களுக்கு 'ஆகி', 'ஆய்' என இறந்தகாலச் சொற்கொடுத்தவர் கற்கியவதாரத்துக்கு 'ஆகிநின்றருளும்' என எதிர்காலச் சொற்கொடுத்தன ரென நுட்பமுணர்க. அன்றி, 'அருளும்' என்பதைக் காலங் கருதாது தன்மை யுணர்த்தினதாகக் கொண்டு, எல்லா அவதாரங்களுக்கும் பொதுவாக்கி, ஜீவாத்மாக்களின் ஜந்மம்போலக் கர்மசம்பந்தத்தால் தமக்காகப் பிறந்ததன்றிப் பரமாத்மாவினது திருவவதாரம் இச்சாமாத்திரத்தால் உயிர்களைப்பாதுகாத்தருளுதற்கென்று பிறந்தவாறும் என்ற உண்மையைப் புலப்படுத்துதற்கு 'அருளும்' எனக்கூறினதாகக் கொள்ளினும் அமையும்.

௧. முன்னொருகாலத்தில் பிரமதேவன் கண்துயில்கையில், சோமகனென்னும் அசுரன் வேதங்களையெல்லாங்கவர்ந்துகொண்டு கடலினுள் மறைந்துசெல்ல, பிரமன் முதலிய தேவர்களின் வேண்டுகோளால் திருமால் ஒருபெருமீனாகத்திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனைத்தேடிப்பிடித்துக்கொன்று, அவன் கவர்ந்துசென்ற வேதங்களை மீட்டுக்கொணர்ந்து, அன்னவடிவமாய் அவற்றைப் பிரமனுக்கு உபதேசித்தருளினன்.

௨. துருவாசமுனிவரதுசாபத்தாற் கடலினுட்புக்கு ஒளித்த சுவர்க்கலோகத்துச் செல்வங்களையெல்லாம் மீளவும்பெறும்பொருட்டு இந்திரன்முதலிய தேவர்கள் திருமாலின்நியமனப்படி அசுரர்களுடன்கூடிச்சென்று மந்தரமலையை மத்தாகநாட்டி வாசுகியென்னும்பெரும்பாம்பைக் கடைகயிறாகப்பூட்டித் திருப்பாற்கடலைக் கடைந்தபொழுது, அம்மந்தரகிரி கடலினுள்ளேசென்று அழுந்தி

* 'பரியாளாகி' என்பதற்கு - குதிரைசெலுத்துந்தேர்ப்பாகனாகி யென்று பொருள்கொள்ளுதல், அத்துணையாச் சிறவாது.

விடாதபடி எம்பெருமான் மகாகூர்மரூபத்தைத்தரித்து அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தான்.

௩. ஒருகாலத்தில் பூமியைப் பாயாகச் சுருட்டியெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன இரணியாக்கனைத் திருமால் தேவர்முனிவர்முதலியோரதுவேண்டுகோளால் மகாவராகரூபமாகத்திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற்குத்தியெடுத்துக்கொண்டுவந்து பழையபடி விரித்தருளினன்.

௪. தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும், ஐம்பெரும்பூதங்களாலும், ஆயுதங்களாலும் தனக்குமரணமில்லாதபடி அளவற்றவரங்களைப்பெற்றுத் தேவர்முதலியயாவர்க்குங் கொடுமையியற்றித் தன்னையே கடவுளாகவணங்கச்செய்தவனும் இரணியாக்கனது உடன்பிறந்தவனுமான இரணியன், தன்புத்திரனும் மகாவிஷ்ணுபக்தனுமான பிரகலாதாழ்வான் தன்பெயர்சொல்லிக் கல்வி கற்காமல் நாராயணநாமஞ் சொல்லிவரவே, அவனைக் கொல்லுதற்கு என்ன உபாயஞ்செய்தும் அவன் பகவானருளால் இறந்திலனாக, இரணியன் மகனை நோக்கி 'நீசொல்லும் நாராயணனென்பான் எங்கு உளன்? காட்டாய்' என்ன, அப்பிள்ளை "சாணினுமுளனோர் தன்மையணுவினைச் சதகூறிட்ட, கோணினுமுளன் மாமேருக்குன்றினுமுளன் இந்நின்ற, தூணினுமுளன் நீசொன்ன சொல்லினுமுளன் இத்தன்மை, காணுதி விரைவின்" என்றுசொல்ல, உடனே இரணியன் நன்றென்றுசினந்து 'இங்கு உளனோ?' என்றுசொல்லி எதிரிலிருந்த தொருதூணைப்புடைக்க, அதனினின்றும் பகவான், அப்பொழுதே, மனிதரூபமுஞ்சிங்கவடிவமுங்கலந்த நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றித் திருக்கைந்நகங்களால் அவன்மார்பைப் பிளந்து அழித்திட்டனன்.

௫. மகாபலியென்னும் அசுரராசன் தன்வல்லமையால் இந்திரன்முதலிய யாவரையுஞ்சயித்து மூவுலகங்களையுந் தன்வசப்படுத்தி அரசாண்டு செருக்குக்கொண்டிருந்தபொழுது, அரசிழந்ததேவர்கள் திருமாலைச் சரணமடைந்துவேண்ட, அப்பெருமான் குள்ளவடிவான வாமனாவதாரமெடுத்துக் காசியபமுனிவனுக்கு அதிதிதேவியினிடந் தோன்றின பிராமணப் பிரமசாரியாகி, வேள்வியியற்றி யாவர்க்கும் வேண்டிய அனைத்தையுங் கொடுத்துவந்த அந்தப்பலியினிடஞ் சென்று, தவஞ்செய்தற்குத் தன்காலடியால் மூவடிமண்வேண்டி, அது கொடுத்தற்கிசைந்து அவன்தத்தஞ்செய்த நீரைக் கையிலேற்று, உடனே திரிவிக்கிரமனாக ஆகாயத்தை அளாவி வளர்ந்து ஓரடியால் மண்ணையும் ஓரடியால் விண்ணையும் அளந்து மற்றோரடியால் அவனையும் பாதாளத்திலழுத்தி அடக்கினன்.

௬. உலகத்திலே எவரும் அழிப்பவரில்லாமையால் கொழுத்துத்திரிந்து கொடுமையியற்றிவந்த க்ஷத்திரியவம்சங்கள்பலவற்றை நாசஞ்செய்யும்பொருட்டு நாராயணமூர்த்தி ஜமதக்கிமுனிவனதுமனைவியான ரேணுகையினிடம் ராமனாய்த்திருவவதரித்து, பரசு என்னுங் கோடாலிப்படையையே ஆயுதமாகக்கொண்டு, தனதுதந்தையின்ஓமதேனுவைக்கவர்ந்து அவனைக்கொன்றிட்டதுகாரணமாகக் கார்த்தவீரியார்ச்சுனனையும் அவனது குமாரர்களையுங் கொன்று அழித்து, அதனாலேயே க்ஷத்திரியவமிசம்முழுவதன்மேலுங் கோபாவேசங்கொண்டு, உலகத்திலுள்ள அரசர்கள்பலரையும் இருபத்தொருதலைமுறை பொருது ஒழித்திட்டான்.

எ. ஒருகாலத்தில் தேவர்களெல்லோரும் இராவணன் முதலிய ராக்ஷசர்களின் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் ஸ்ரீமகாவிஷ்ணுவைச்சரணமடைந்து வேண்ட, அப்பிரான் தசரதசக்கரவர்த்திகுமாரனாய் ஸ்ரீராமனாகத் திருவவதரித்து அரக்கர்கள் அனைவரையும் அழித்து நல்லோரைக் காத்தருளினன்.

அ, ௯. துஷ்டஅசுரர்கள்பலரும் கெட்டஅரசர்கள்பலரும் ஒருங்கேகூடி வசிப்பதனாலுண்டான பூமிபாரத்தை நிவிருத்திசெய்யும்பொருட்டு அப்பூமிதே

வியின் பிரார்த்தனையின்படி தேவர்கள் வேண்டியதனால் திருமால் வசுதேவ குமாரராய்ப் பலராமகிருஷ்ணர்களாகத் திருவவதரித்தான்.

க0. கலியுகத்தின்இறுதியில் முழுவதும்அழிகிறதருமத்தை நிலைநிறுத்தும் பொருட்டுத் திருமால் சம்பளமென்னுங்கிராமத்தில் ஓரந்தணன்மகனாய்க் குதிரைவடிவங்கலந்த மனிதவடிவமாய்த் தோன்றி வேதவடிவமானகுதிரையின்மேலேறிக் கையில் வாள்கொண்டு கொடுங்கோல்மன்னரனைவரையுங் கொன்று தருமத்தை நிலைநிறுத்துவன்.

இந்தப்பத்துஅவதாரங்களுள் பரசுராம பலராம அவதாரங்கள் ஆவேசாவதார மென்றும், மற்றவை அம்சாவதார மென்றும், அவற்றுள்ளும் ஸ்ரீராமகிருஷ்ணவதாரங்கள் பூர்ணவதார மென்றுங் கூறப்படும். தனித்தனி மனிதர்களாலும் விலங்குகளாலும் தேவர்களாலும் மற்றையபிராணிகளாலும் தான்சாவதில்லையென்று இரணியன் வரம்பெற்றிருந்ததனால் அவனைக்கொல்லுதற்கு மாயவன் மனிதத்தன்மையும் விலங்கின்தன்மையுங் கலந்ததொரு வடிவத்தை எடுத்தருளினான். 'நெடுநரசிங்கம்' என்றது, அவ்வடிவத்தின் அளவிறந்த வளர்ச்சியைக் கருதி; 'நெடு' என்ற அடைமொழி, 'மீன்', 'ஆமை', 'கோலம்' என்பவற்றிற்கும் இயைக்கத்தகும்: அவையும் மிகப்பெருவடிவங்களாம். கார்த்தவீரியார்ச்சுனன்காலம் முதலாகத் தசரதராமன்காலம் இடையாகப் பீஷ்மன் கர்ணன் இவர்கள்காலம் இறுதியாக நெடுங்காலமளவும் நீங்காமல் பரசுராமன் க்ஷத்திரிய வம்சத்தின்மேற் கொண்ட தீராக்கோபத்தை, அவன்பகையழிக்கும்போர்க்கருவியான கோடாலியின்மேல் ஏற்றி 'ஆனாதசீறுமழு' என்றார். [இதனால், தசாவதாரங்களுள் பரசுராமாவதாரத்துக்கு உள்ள சிறுமையை ஒருவாறுபுலப்படுத்தினபடியுமாம். 'இவற்றில் பரசுராமாவதாரம் அகங்காரயுக்தஜீவனை அதிஷ்டித்துநிற்கிறதாகையாலே முமுக்ஷுக்களுக்கு அநுபாஸ்யம்', 'அநுபாஸ்யமான அவதாரந்தன்னை இவர் அருளிச்செய்வா னென் னென்னில்,—தசாவதாரமும் அருளிச்செய்கிறவளவாகையாலும், அவ்வவதாரத்திற் பண்ணின விரோதிநிரஸநம் தமக்கு அபிமதமாயிருக்கையாலும் அருளிச்செய்தார்' என்ற வியாக்கியானவாக்கியங்கள் இங்கு அறியத்தக்கன. திருமாலுக்குமற்றும்பற்பல அவதாரங்கள் நூல்களிற்கூறப்படினும் இப்பத்தும் முக்கியாவதாரங்களாமென உணர்க. குதிரைக்குப்பலவகைநடை—மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வாநரகதி, விருஷபகதி முதலியன. ஆகி என்றும், ஆய் என்றும் கூறினவை, அந்தந்தவடிவமாகப்பிறந்தபொழுது தனதுதெய்வத்தன்மையையேமேலிடாமல் அததற்கு உரிய உருவம் குணம் செயல்களையே மேற்கொண்டிருந்தமையை உணர்த்து மென்பது சம்பிரதாயம்.] திர்யக்சாதியிற்சேர்ந்த நான்கு அவதாரங்களையும் ஒன்றாகவும், தேவசாதியிற்சேர்ந்த அவதாரத்தை ஒன்றாகவும், மனுஷ்யசாதியிற்சேர்ந்து ஒவ்வொரு ஆயுதத்தைத் தமக்கு நிரூபகமாகக் கொண்டு ஒரேபெயர்பெற்ற மூன்று அவதாரங்களை ஒன்றாகவும், பாரதகதாபுருஷர்களுள் தலைமைபூண்டு அக்காலத்தில் பூமிபாரநிவிருத்தி செய்துகொண்டு நின்ற பிரதானஅவதாரத்தை ஒன்றாகவும், இனி நடக்கவிருக்கும் அவதாரத்தை ஒன்றாகவும் பிரித்துக் காட்டுபவராய், ஆங்காங்கு 'ஆகி', 'ஆய்' என்ற சொற் கொடுத்தார். நாராயணனென்ற திருநாமம் - நார அயந எனப் பிரிந்து, சிருஷ்டிப்பொருள்களுக்கெல்லாம் இருப்பிடமானவ னென்றும், பிரளயப் பெருங்கடலை இருப்பிடமாகவுடையவ னென்றும் மற்றும்பலவாறும் பொருள்படும். நாராயணாய என்றது - பரத்வத்தையும், மற்றது - சௌலப்பியத்தையும் விளக்கும். [பரத்வம்-தலைமை. சௌலப்யம் - அடியார்க்குஎளிமை.] நமஃ என்ற சொல்லின் பொருள் - எனக்கு நான் உரியனல்லேன் (எம்பெருமானுக்கே யுரியேன்) என்பது.

இங்ஙனங் கொடியவரைக்கொன்று அடியவரையளித்தருளுகிற ஆதிதேவன்விஷயமான வணக்கங் கூறியதனால், கவி தானெடுத்துக்கொண்ட காரியம் இடையூறின்றி இனிதுமுடியு மென்பது கருத்து.

இப்பாட்டு-மொழிமாற்று முதலியன இன்மையால், யாற்றுநீர்ப்பொருள்கோள்.

மீன்-மீந மென்னும் வடசொல்லின் திரிபு; மின்னுவது மீன் எனத் தமிழ்க்காரணக்குறியுமாம். கோலம், நாராயணுப - தற்சமவடமொழிகள். நரஸிம்ஹம், ஹலம், நாநாவிதம், நம: என்ற வடசொற்கள் திரிந்தன. ஸிம்ஹம் - ஹிம்ஸ மென்பது முன்பின்னாக எழுத்துமாறிய பெயராய், (யானைமுதலிய பெருவிலங்குகளையும்) இம்சிப்ப தென்று பொருள்படும். நிலம் - (சலியாது) நிற்பது; அம் - கருத்தாப்பொருள்விகுதி. குறள் - குறுகிய வடிவம்: அள் - பண்புப்பெயர்விகுதி யென்பர்; இரண்டடியளவுள்ள வடிவம் குறளெனப்படும். வில்லு, உ - சாரியை. இராமன்வில் - கோதண்ட மெனப் பெயர்பெறும். நாராயணுய - வடமொழியில் நான்காம்வேற்றுமைவிரி.

இப்பாட்டில், சொல்லத்தொடங்கிய தசாவதாரமாகிய பொருளை முன்பின்முறைவழுவாமல் முறைபேகூறியதனால், இது அரதனமாலையணியின்பாற்படு மென்பர் சிலர்; ஆயினும் இதில் யாதொன்றும் சமத்காரம் தோன்றாமையின் இதனை மேற்குறித்த ரத்நாவளியலங்கார மென்றல் பொருந்தா தென்பதே தகுதி.

இதுமுதற் பத்துக் கவிகள் - பெரும்பாலும் முதலைந்துசீரும் காய்ச்சீர்களும், மற்றையிரண்டும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (க)

சூரியோதயவருணனை.

சிதையத்தன்மைந்தனையடுந்தன்மைகண்டுமொருசெயலின்றிநீடு
துயர்கூ, ரிதையத்தனாகியகல்பகலோன்மறித்தவுணரெதிரஞ்சுமாறு
பொருதா,னுதையத்தடங்கிரியுமொளிர்பற்பராககிரியொப்பாகவீசுக
திரிற், புதையப்பரந்தவகலிருளுந்துரந்துரகர்புவனத்திலூடுபுகவே.

(இ-ள்.) தன் மைந்தனை - தனது குமாரனான கர்ணனை, சிதைய - அழியும்படி, அடும் - (அருச்சுனன்) கொன்ற, தன்மை - தன்மையை, கண்டும் - பார்த்தும், ஒரு செயல் இன்றி - (அதற்குப்பரிகாரமாகத் தான் செய்யத்தக்க) ஒரு செயல்இல்லாமல், நீடு துயர் கூர் - பெருந்துன்பம்மிக்க, இதையத்தன் ஆகி - மனத்தையுடையவனாய், அகல் - நீங்கிச்சென்ற, பகலோன் - சூரியன்,—வீசு கதிரின் - வெளிவீசுகிற (தனது) கிரணங்களால்,—தட உதையம் கிரியும் - பெரியஉதயபருவதமும், ஒளிர் பற்பராக கிரி ஒப்பு ஆக - விளங்குகிற பதுமராகரத்தினமயமானதொருமலைபோ லாகவும்,—புதைய பரந்த அகல் இருளும் - (நிலவுலகம்) மறையும்படி பரவிய மிக்கஇருட்டும், துரந்து - துரத்தப்பட்டு, உரகர் புவனத்தில் ஊடு புக-நாகசாதியாரதுபாதாளலோகத்தினுட் செல்லவும்,—மறித்து - மீண்டுவந்து,—அவுணர் எதிர் அஞ்சும் ஆறு பொருதான் - அசுரர்களெதிரிலே (அவர்கள்) அஞ்சும்படி போர்செய்தான்; (எ - று.)

பதினேழாநாட்போரில் தன்மகனை அருச்சுனன் கொன்றதைத் தான்பிரதியக்ஷமாகப்பார்த்திருந்தும் அதற்கு யாதொன்றும்எதிர்செய்யும்விதமில்லாமல் புத்திரசோகத்தோடு மறைந்துசென்ற சூரியன், மறுநாளுதயத்தில், மிக்கவிளக்கத்தோடுகூடி, தனக்குத் தொன்றுதொட்டுப்பகையாகவுள்ள இருளைத் தனது ஒளியால் அழித்துக்கொண்டும், என்றுந்தீராப்பகைவரான மந்தேகரென்னும் அசுரரை அஞ்சுவித்து எதிர்த்துக்கொண்டும் வந்துசேர்ந்தனன் என்பதாம். "வினைவலியுந் தன்வலியும் மாற்றான் வலியும், துணைவலியுந் தூக்கிச் செயல்'

என்றபடி தன்வலிமையையும் எதிரிகள்வலிமையையுஞ் சீர்தூக்கிப்பார்த்து, எதிரிகள்வலிமை மிக்கிருந்ததாயின் தான்அடங்கியொழிதலும், தன்வலிமை மிக்கிருந்ததாயின் மிக்கஊக்கத்தோடு எதிர்த்துச்சென்று பொருது பகைவெல்லுதலும் ஆகிய இராசதருமத்தைச் சூரியன்மேலேற்றிக் கூறினரென்க. மந்தேகாருணமென்னுந் தீவில் வாழும் அரக்கர்கள் உக்கிரமானதவத்தைச்செய்து பிரமனிடத்துவரம்பெற்று அதனாற் செருக்கி எப்பொழுதுஞ் சூரியனை வளைந்து எதிர்த்துத் தடுத்துப் போர்செய்கின்றன ரென்றும், அந்தணர்கள் சந்தியாகாலங்களில் மந்திரபூர்வமாகக் கையிலெடுத்துவிடும் அர்க்கியதீர்த்தங்கள் வச்சிராயுதம்போலாகி அவர்கள்மேல் விழுந்து அவர்களை அப்பால்தள்ளிச் சூரியனதுசஞ்சாரத்துக்குத் தடையில்லாதபடி செய்கின்றன வென்றும், அப்படி அந்தணர்கள் செலுத்தும் அர்க்கியத்தின் ஆற்றலால் சூரியமண்டலத்தின் இடையே ஒருசெந்தீஎழுந்துசொலிக்க அத்தீயில் அவ்வசுரர்கள் விழுந்து ஒழிகின்றன ரென்றும் நூல்கள் கூறும். 'அவுணரெதி ரஞ்சுமாறு பொருதான்' என்றது, அந்தணர்கள் அர்க்கியப்பிரதானஞ்செய்ய அதன்வல்லமையால் தன்னிடத்துஎழுந்துவிளங்கும் பெரியசுவாலையைக் கண்டு அசுரர்கள் அஞ்சத் தோன்றின னென்றவாறு. தனதுமிகச்சிவந்தகிரணங்கள் மிகுதியாகஅடுத்துப்பட்டரவுதலால் உதயபருவதம் மிகச்செந்நிறமடைந்து சிவந்தபதுமராகரத்தினமலைபோலாக வென்பது, மூன்றுமடியின் கருத்து.

கர்ணனைச் சூரியன்மைந்த னென்ற விவரம்:—பாண்டவர்கள்தாயான குந்திதேவி கன்னிகையாயிருக்கும்பொழுது தனக்குத் துருவாசமுனிவருபதேசித்த மந்திரத்தைப் பரீட்சித்தறியும்பொருட்டுச் சூரியனை நினைத்து அந்த மந்திரத்தை உச்சரிக்க, உடனே அத்தேவன் வந்து அவளுக்கு அநுக்கிரகித்ததனால், அவளிடம் பிறந்த புத்திரன், இவன்; இவனைப் பிறந்தபொழுதே குந்தி பழிக்கு அஞ்சி ஒரு மிதக்கும்மரப்பெட்டியில் வைத்துப் பூட்டிக் கங்கையாற்றில் விட்டிட, அதனைத் திருதராட்டிரனது தேர்ப்பாகனான அதிரதனென்பவன் கண்டு எடுத்துத் திறந்து பார்த்துக் கொண்டுபோய்த் தன்மனைவியாகிய ராதையும் தானுமாக வசுசேனனென்று பெயரிட்டு வளர்த்தான்: இவனுக்குக் கர்ணன் என்ற பெயர் ஆகாசவாணி இட்டது. இவன், பின்பு துரியோதனனுக்குப் பிராணசினேகிதனாகி அவனருளால் அங்கதேசத்துக்கு அரசனாயினான். "கனக்கொண்ட கதிர் புதல்வன்பாடறிந்து மூழ்கியதாற் கடலினூடே" என்று கீழ்ப்பதினேழாம்போர்ச்சருக்கத்தில் சூரியாஸ்தமனத்தை வர்ணித்துள்ளாராதலால், அதனை அநுசரித்து 'சிதையத்தன்மைந்தனையடுந்தன்மைகண்டு மொருசெயலின்றி நீடுதுயர்கூ ரிதையத்தனாகி யகல் பகலோன்' என்றார்.

ஹ்ருதயம், பத்மராககிரி என்ற வடசொற்கள் சிதைந்தன. இதயம், உதயம் என்ற வடமொழித்திரிபுகள், எதுகைநோக்கி இதையம், உதையம் என இடைப்போலிபெற்றன; [நன்-எழுத்தியல்-௬அ.] உரகர், புவநம் - வடசொற்கள். உரகராவார்-படமும்வாலுமுடையராய் மனிதவடிவமுந் தெய்வப்பிறப்புமானதொரு சர்ப்பசாதியார். அவர்வசிக்குமிடம், பாதாளம். கண்டும், உம்-இழிவுசிறப்பு. கிரியும், இருளும் என்ற உம்மைகள் - ஒன்றையொன்றுநோக்கி இறந்ததும்எதிரதுந்தழுவியஎச்சமாம். அடும் என்ற பெயரெச்சம் எதிர்காலமுணர்த்தாமல் தன்மையுணர்த்திற்று. கூர், தட - உரிச்சொற்கள். தடங்கிரி - உரிச்சொற்புணர்ச்சியாதலின்,பொதுவிதிப்படி வலிமிகாது இனமெலிமிக்கது; [நன் - மெய் - ௩௬.] பகலோன் - பகற்பொழுதைச் செய்பவன். ஒளிர் பதுமராகம் - வினைத்தொகை. பதுமராகமென்ற இரத்தினப்பெயர் - செந்தாமரைபோலுஞ் செந்நிற முடைய தெனக் காரணப்பொருள்படும். துரந்து - செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினை. (உ)

துரியோதனன்இரவில்ஆலோசித்தமையும்,உதயத்தில்சூரியனைத்தொழுதலும்.

*கண்டுஞ்சலின்றியிரவிருகண்ணிலான்மதலைகண்ணீரின்மூழ்கி*
*யெவரைக், கொண்டுஞ்செகுத்துமுனைமுடிவிப்பதென்றுயர்சகுனி*
*யோடுமெண்ணியிருள்போ, யுண்டுஞ்சுகித்துமலர்மதுவொன்றுசாதி*
*முதலொண்போதுவிட்டுஞிமிறும், வண்டுஞ்சுரும்புமரவிந்தத்தடத்*
*துவரவருவோனைவந்தனைசெய்தான்.*

(இ - ள்.) இரு **கண்** இலான் மதலை-இரண்டுகண்களுமில்லாத [பிறவிக் குருடனான] திருதராட்டிரனது புத்திரனாகிய துரியோதனன்,—**கண்** நீரில் மூழ்கி - (தனதுபிராணசிநேகிதனான கர்ணன் இறந்ததனாலாகிய சோகத்தால்) கண்ணீர்வெள்ளத்திலே முழுகி, இரவு - இராத்திரிமுழுவதும், **கண்** துஞ்சல் இன்றி - கண்மூடித்தூங்குதலில்லாமல், உயர் சகுனியோடும் - (சதியாலோசனையிற்) சிறந்த சகுனியுடனே, எவரைக்கொண்டும் செகுத்து முனை முடிவிப்பது என்று எண்ணி-'எவரைஉதவியாகக்கொண்டாயினும் (பகைவரை) அழித்துப் போரை முடிக்கவேண்டுவது' என்று ஆலோசித்து,— (பின்பு), இருள் போய் - இருட்டுநீங்க,—ஞிமிறும் வண்டும் சுரும்பும் - பலசாதிவண்டுகளும், உண்டும் சுகித்தும் மலர் - (தாம் தேனைக்) குடித்தும் இனிமையாகத்தங்கியும் மகிழ்தற்கிடமான, மது ஒன்று - தேன்பொருந்தின, சாதி முதல் ஒள் போது-ஜாஜீமுதலிய சிறந்தமலர்களை, விட்டு - நீங்கி, அரவிந்தம் தடத்து வர - தாமரைத்தடாகங்களிலே வந்துசேரும்படி, வருவோனை - உதிப்பவனான சூரியனை, வந்தனை செய்தான் - நமஸ்கரித்தான்; (எ - று.)

கீழ்ச்சருக்கத்தின் முடிவில் "பைவரு மாசுணத் துவசப் பார்த்திவனைக் கொண்டேட தம்பாடி புக்கார், தைவருதிண்சிலைத்தடக்கைச்சகுனிதனை முதலான தரணிபாலர்" என்றுகூறினவர் அவ்விரவுமுழுவதும் வருத்தத்தாலும கவலையாலுந் தூங்காமல் துரியோதனன் சகுனியோடு ஆலோசனைசெய்திருந்து இரவுகழியுமளவில் சூரியனுதிக்கக்கண்டு வணங்கினமையை இதிற் கூறினார். ஒருவர் செல்வமுடையராயிருந்தகாலத்தில் அவரிடஞ்சேர்ந்து அவரன்னத்தையுண்டு அவர்பக்கல் இனிதுவாழ்ந்திருந்து அவர்க்குச்செல்வச்குறைவு வந்தவளவிலே நன்றியறிவின்றி அவரைக்கைவிட்டு வேறு செல்வமுடையாரைத் தேடிச்செல்லும் குணக்கேடர்போல, இரவில் ஜாஜிமுதலிய சினைப்பூக்கள் தேனோடுகூடிச்செழித்திருக்கையில் அவற்றைச்சார்ந்து தேனுண்டு அங்குத்தங்கிக் கூடிக்குலாவியின்புற்ற வண்டினம் சூரியோதயத்தில் அம்மலர்கள் பொலிவிழந்தவளவிலே அவற்றைவிட்டு அக்காலத்துமலர்கிற தாமரையை நாடி விரைந்துசேரும்படி வருபவன் சூரியனெனக. என்றது, தாமரைமலரச் சூரியன் உதித்தான் என்றவாறு. ["நிறைந்தோர்த் தேரு நெஞ்சமொடு குறைந்தோர்ப், பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉம், நயனின் மாக்கள் போல வண்டினம், சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர" என்று அகநானூற்றில் சூரியாஸ்தமனகாலத்தை வருணித்தது இங்கு ஒப்புநோக்கத்தக்கது.]

திருதராட்டிரன் கண்ணில்லாமைக்குக் காரணம்:—விசித்திரவீரியனது மனைவிகளுள் ஒருத்தியான அம்பிகை தனதுமாமியார்கட்டளையின்படி சந்ததிவிருத்தியின்பொருட்டு மைத்துனனான வியாசமகாமுனிவனோடு சேர்கையில், மிகஅஞ்சிக் கண்களைவிழியாதிருந்ததனால், அவளிடம் பிறவிக்குருடனாகத் திருதராட்டிரன் பிறந்தான்.

சகுனி - காந்தாரதேசத்து அரசன்; சுபலனென்னும் அரசனது புத்திரன்: திருதராட்டிரனது மனைவியாகிய காந்தாரியுடன் பிறந்தவன்; ஆதலால், துரியோதனாதியர்க்கு மாமன்: சூதாடுதலிலும், துராலோசனைசொல்வதிலும்

மிகவல்லவன். இவன், சமரதன். 'உயர்சகுனி'—இவனுயர்வை "காந்தாரத் தலைவன் சகுனி யிவன் கண்டாய் தக்கோராடாச் சூதுக்கு, நிலைவஞ்சனைக்குந் தரணியரில் யாரே யிவற்கு நிக ரென்றுர்" என்று கீழ் ஆதிபருவத்தில் வந்ததனால் அறிக.

எவரைக்கொண்டும் என்ற உம்மை - பகையழித்தலின்அருமையைக் காட்டும். சகுனியோடும், உம் - இசைநிறை. போய் - போக வென்னும் வினையெச்சத்தின் திரிபு: [நன் - வினை - உஎ.] சாதி, வந்தனை - ஜாஜீ, வந்தநம் என்ற வடசொற்களின் திரிபு. மது, அரவிந்தம் - வடசொற்கள். உண்டு, உண்ணல் - பொதுவினை. ஞிமிறு - மிஞிறு என்பது எழுத்துநிலைமாறிய இலக்கணப்போலி. ஞிமிறு முதலியன - வண்டின் சாதிபேதம். ஞிமிறு - பொன்வண்டு, வண்டு - கருவண்டு, சுரும்பு-பொறிவண்டு. மலர் என்ற வினைத்தொகை, போது என்ற இடப்பெயர் கொண்டது. (௯)

இனிமூன்றுகவிகள்-துரியோதனன்சல்லியனைச்சேனபதியாக்குதல்கூறும்.

தொல்லாண்மைபெந்தைமுதுதந்தைக்குமைந்து றுதுரோணற்கு மண்ணினிகர்வே, யில்லாதவண்மைபுனைவெயிலோன்மகற்குமுடனெண்ணத்தகுந்திறலினன், வில்லாண்மையாலும்வடிவாளாண்மையாலுமயில்வேலாண்மையாலுமவனே,யல்லாதுவேறுசிலரிலரென்று சல்லியனையதியாதரத்தொடழையா.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்; ஒருதொட ரெனப்படும். குளகமாவது - பலபாடல்கள் தொடர்ந்து ஒருவினைகொண்டுமுடிவது; "குளகம் பல பாட் டொருவினை கொள்ளும்". குளகமல்லாதது - முத்தகமெனப்படும்; அது ஒருசெய்யுள் தனியே நின்று முடிவது; "முத்தகச்செய்யுள் தனிநின்றுமுடியும்."

(இ - ள்.) தொல் - பழமையான [தொன்றுதொட்டு இயல்பாகஅமைந்த], ஆண்மை - பராக்கிரமத்தையுடைய, எந்தை முது தந்தைக்கும் - எனது தந்தையின் பெரியதந்தையான வீமனுக்கும், மைந்து உறு - வலிமை மிக்க, துரோணற்கும் - துரோணனுக்கும், மண்ணில் வேறு நிகர் இல்லாத-(தனக்குத் தானேயன்றி) உலகத்தில் வேறுஉவமைபெறாத, வண்மை - ஈகைக்குணத்தை, புனை - அழகிதாகக்கொண்ட, வெயிலோன் மகற்கும் - சூரியனது குமாரனான கர்ணனுக்கும்,வில் ஆண்மையாலும் - வில்லின் திறமையாலும், வடி வாள் ஆண்மையாலும் - கூரிய வாளாயுதத்தின் திறமையாலும், அயில் வேல் ஆண்மையாலும் - கூரிய வேலாயுதத்தின் திறமையாலும், உடன் எண்ண தகும்-சமமாக மதிக்கத்தக்க, திறலினன் - வல்லமையையுடையவன், அவனே அல்லாது - சல்லியனே யல்லாமல், வேறு சிலர் இலர் - வேறு ஒருவரு மில்லை, என்று - என்றுஎண்ணி [அல்லது என்றுசொல்லி], சல்லியனை - அந்தச்சல்லியனை, அதி ஆதரத்தொடு - மிக்க அன்புடனே, அழையா - அழைத்து, (எ - று.)—இக்கவியில் 'அழையா' என்றது, அடுத்தகவியில் 'புகழா' என்றதைக் கொள்ளும்.

கீழ்ச் சேனைத்தலைவர்களாயிருந்த வீடுமன் துரோணன் கர்ணன் என்னு மிவர்க்குப் பலபடியாலும் சமமாகஉடன்வைத்து எண்ணத்தக்கவன் சல்லியனை யன்றி வேறுயாருமில்லை யென்று நிச்சயித்துத் துரியோதனன் அவனை அருகில்வரவழைத்தன னென்பதாம்.

திருதராட்டிரன் பாண்டு இவர்களது தந்தையான விசித்திரவீரியனுக்குத் தமையனாதலால், வீடுமன், கௌரவபாண்டவர்க்குப் பெரியபாட்டனாவன்.

துரோணன்-பரத்துவாசமுனிவனதுகுமாரன்; கிருபாசாரியனுடன்பிறந்தவளான கிருபியின் கணவன்; அசுவத்தாமனது தந்தை; துரியோதனுதியர்க்கும் பாண்டவர்க்கும் அஸ்திர சஸ்திரங்களைக் கற்பித்த ஆசிரியன். [முதலிற்

சிறிதுகாலம் கிருபனும், பின்பு பிரதானமாகத் துரோணனும் கௌரவ பாண்டவர்க்கு வில்வித்தைபயிற்றிவைத்தன ரென அறிக.] வைதிகவிரதாநுட்டானஞ்செய்துகொண்டிருக்கையில் தேவர்களா லேவியனுப்பப்பட்ட மேனகையின் கட்டழகைக் கண்டு காதல்கொண்ட பரத்துவாசமுனிவனது விருப்பத்தால் ஒரு துரோணகும்பத்திற் பிறந்தமைபற்றி, இவனுக்குத் துரோணனென்று பெயர்; துரோணகும்பம் - பதக்களவுகொண்ட பாத்திரம்: [துரோணம் - பதக்கு, இரண்டு மரக்கால்.] இனி, துரோணம் என்று வில்லுக்குப் பெயருண்மையால், துரோணனென்பது - வில்வன்மைபற்றிவந்தபெயருமாம்.

எந்தை யென்பதில், யாம் என்னும் பகுதி எம் என விகாரப்பட்டது; ஐ - முறைப்பொருள் விகுதி. இனி, எம்தந்தை யென்பது எந்தை யென மரூஉ வாயிற் றென்பாரு முளர். தந்தை யென்பதில், தாம் - பகுதி. அது முதல் குறுகிற்று; ஐ - முறைப்பெயர்விகுதி. ஆண்மை - பௌருஷம். வெயிலோன் - உஷ்ணகிரணமுடையவன். வடித்தல் - கூராக்கப்படுதல். செய்யுளாதலின், 'அவன்' என்ற சுட்டுப்பெயர் முன்வந்தது; [நன் - பொது - ௬௫.] அத்யாதரம் - வடமொழித்தொடர். அழைபா - செப்பா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம்; அடுத்தபாடலில் 'நிகழா', 'புகழா' என்றவையும் இது. (௪)

நீயேயெனக்குயிருநீயேயெனக்குளமுநீயேயெனக்குநிதியு
நீயே துணைப்புயமுநீயேவிழித்துணையுநீயேயனைத்துநிலையு
நீயேமுனைச்செருவிலதிரதரின்மாரதரினிகரற்றகோவுமதனா
னீயேமுடித்தியெனதெண்ணத்தையென்றுவகைநிகழாமகிழ்ந்துபுக [ழா.

(இ - ள்.) நீயே—, எனக்கு—, உயிரும்—: நீயே—, எனக்கு—, உளமும் - மனமும்: நீயே—, எனக்கு—, நிதியும் - பொருட்குவியலும்: நீயே—, துணை புயமும் - (எனக்கு) இரண்டுதோள்களும்: நீயே—, விழி துணையும் - (எனக்கு) இரண்டுகண்களும்: நீயே—, அனைத்து நிலையும் - (எனக்கு) எல்லாவலிமைகளும்: நீயே—, செரு முனையில் - போர்க்களத்தில், அதிரதரில் மாரதரில் நிகர் அற்ற - அதிரதர்களுள்ளும் மகாரதர்களுள்ளும் ஒப்பில்லாத, கோவும் - அரசனும் ஆகின்றாய்; அதனால் - ஆதலால், நீயே—, எனது எண்ணத்தை - (பகையழித்தலாகிய) என்கருத்தை, முடித்தி - நிறைவேற்றுவாய், என்று—, உவகை நிகழா மகிழ்ந்து புகழா - உற்சாகம் பொருந்திச் சந்தோஷித்துத் துதித்து, (எ - று.)—இப்பாட்டில் 'புகழா' என்றது, அடுத்தபாட்டில் 'உகந்தனன்' என வரும் வினைமுற்றோடு முடியும்.

எனக்கு உயிர்போல இன்றியமையாதவனும், மனம்போலச் சிறந்தஅகத்துறுப்பாகுபவனும், பொருட்குவியல்போலப் பலவகைநன்மைகளையுந் தருபவனும், தோள்போல உற்றவிடத்துஉதவும் நற்றுணையும், கண்போலச் சிறந்த புறத்துறுப்பாகுபவனும், எல்லாவகைவலிமைகளுக்குங் காரணமாகுபவனும், சமரதனாயிருப்பினும் போர்த்திறத்தில் அதிரதமகாரதர்களினும் மேம்பட்டவனும் நீயே யாதலால், இனி நீ சேனைத்தலைவனாயிருந்து என்கருத்தை முடிப்பாயென்று தனது களிப்பும் மகிழ்ச்சியும் தோன்றத் துரியோதனன் சல்லியனைப் புகழ்ந்தன னென்பதாம்.

துணைப்புயம் - "மெய்சென்று தாக்கும் வியன்கோலடி தன்மேல், கைசென்று தாங்குங் கடிது", "உடுக்கையிழந்தவன் கைபோல வாங்கே, யிடுக்கண் களைவதா நட்பு", "தோளுற்றோர் தெய்வந் துணையாய்த் துயர் தீர்த்த வாறும்" என்றபடி சமயத்தில்துணைசெய்யுந் தோ ளென்க.

அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் எனத் தேர்வீரர் நால்வகைப்படுவர். அதிரதர் - முழுத்தேரரசர்; அவராவார் - ஒருதேரில் ஏறிநின்று தம் தேர்

குதிரை சாரதிகளுக்கு அழிவுவாராமற் காத்துப் பலவாயிரந்தேர்வீரரோடெதிர்த்து வேறு துணையில்லாமலே போர்செய்து வெல்லும் வல்லமையுடையார். அவரிற்சிறிதுதாழ்ந்தவர் - மகாரதர்; இவர் - பதினாயிரந் தேர்வீரரோடு பொருபவர். சமரதர் - ஒருதேர்வீரனோடு தாமும் ஒருவராய் எதிர்க்கவல்லவர். அர்த்தரதர் - அவ்வாறு எதிர்க்குமளவில் தம் தேர் முதலியவற்றை இழந்துபோம்படியானவர்; இவர் இருவர் சேர்ந்தால், ஒரு சமரதனுக்கு ஒப்பாவர்.

உளம் - உள்ளுறுப்பு. ஸ்ரீ, அதிரதர், மஹாரதர் - வடசொற்கள். புயம் - புஜமென்ற வடசொல் திரிந்தது. முடித்தி - ஏவலொருமைமுற்று; த் - எழுத்துப்பேறு. எண்ணம், உவகை - தொழிற்பெயர்கள்; அம், கை - விகுதி. நீயே, ஏகாரம் - பிரிநிலையோடு, தேற்றம். (ரு)

மன்பட்டவர்த்தனருமணிமகுடவர்த்தனருமுறையால்வணங்க வொளிகா, னன்பட்டமுந்தனதுகையாலணிந்துபடைநாலுக்குநாயக மெனு, மின்பட்டவோடைநுதலிபராசன்வன்பிடரின்மிசைவைத்துக ந்தனனரோ, வென்பட்டதப்பொழுதுகுருசேனைமெய்ப்புளகமெழ வொண்கண்முத்தமெழவே.

(இ - ள்.) மன் - பெரிய, பட்டவர்த்தனரும் - பட்டந்தரித்து அரசாளும் அரசர்களும், மணி மகுடவர்த்தனரும் - அழகியகிரீடந்தரித்துஅரசாளும் அரசர்களும், முறையால் வணங்க - முறைப்படிவணங்கும்படி, படை நாலுக்கும் நாயகம் எனு - நால்வகைச்சேனைக்கும் (இவனே) தலைமைபூண்பவனென்று சொல்லி, ஒளி கால் நல் பட்டமும் தனது கையால் அணிந்து - ஒளியைவீசுகிற அழகிய (சேனாபதிக்குஉரிய) பொற்பட்டத்தையும் தனதுகையால் (அவனது நெற்றியிலே) கட்டி, மின் பட்ட ஓடை நுதல் இப ராசன் வல் பிடரின் மிசை வைத்து - மின்னல்போன்றஒளி பொருந்திய பொற்பட்டத்தை யணிந்த நெற்றியையுடைய சிறந்த பட்டத்துயானையின் வலியபிடரியிலே (சல்லியனை யேற்றி) வீற்றிருக்கச்செய்து, உகந்தனன் - (துரியோதனன்) மகிழ்ச்சிகொண்டான்; அப் பொழுது—, குரு சேனை - கௌரவசேனை, மெய் புளகம் எழ - உடம்பில் மயிர்ச்சிலிர்ப்புஉண்டாகவும், ஒள் கண் முத்தம் எழ - விளங்குகிற (தமது) கண்களில் ஆனந்தக்கண்ணீர் தோன்றவும், என் பட்டது - என்னமகிழ்ச்சியடைந்தது! [மிகமகிழ்ந்த தென்றபடி]; (எ - று.)—அரோ - ஈற்றசை.

இனி எல்லாவீரரும் சல்லியனுக்குக் கீழ்ப்படிந்துநடக்கும்படி துரியோதனன் அவனைச் சேனைத்தலைவனென்றுசொல்லிப் பட்டங்கட்டிப் பட்டத்துயானையின்மேலேற்றி மகிழ, அவனது சேனையிலுள்ளார் யாவரும் மிகவும் மகிழ்ச்சிகொண்டன ரென்பதாம். பட்டவர்த்தனர் - கிரீடமில்லாமல் நெற்றிப்பட்டம்மாத்திரந்தரித்து அரசாளுபவர். மகுடவர்த்தனர் - கிரீடந்தரித்து அரசாளுபவர். படைநால் - யானை தேர் குதிரை காலா ளென்னுஞ் சதுரங்கம். சிறந்ததை அரசனென்றல் மரபாதலின், 'இபராசன்' என்றார்; உயர்திணையாண்பாலாற் கூறியதும் சிறப்பையே காட்டும். குரு என்பவன் - சந்திரகுலத்திற் பிரசித்திபெற்ற ஓரரசன்; அவனால் அக்குலம் குருகுலமென்றும், அந்நாடு குருநாடென்றும், அக்குலத்தவர் கௌரவரென்றும் பெயர்பெறுதல் காண்க. இங்கே, அக்குலத்தாரான கௌரவரது சேனை, குருசேனை யெனப்பட்டது. பாண்டவரும் குருகுலத்தாராயினும், குருநாட்டின் அரசுரிமை பெற்றுள்ளவன் துரியோதன னாதலால், குருசேனை யென்றது அவன்சேனையேயாம். நாயகம் - நடுநாயகமணிபோலச் சிறந்தவ னென்றவாறுமாம்.

மன் - உரிச்சொல். நல்+பட்டம்=நன்பட்டம்; பண்படி முன்னின்ற மெய் திரிந்தது. நாலு - நான்கு என்பது ஈறுகெட்டு னகரம் லகரமாய் உக

ரச்சாரியை பெற்றது. ஓடை - யானையின் நெற்றிப்பட்டம்: முகபடாம், சூழி யெனப்படும். முத்தம் - முத்துப்போன்ற நீர்த்துளிக்கு உவமவாகுபெயர். பட்டவர்த்தநர், மகுடவர்த்தநர், பட்டம், நாயகம், இபராஜன், குருஸேநா, புளகம் - வடசொற்கள். முத்தம் - முக்தா என்ற வடசொல்லின் திரிபு; இப் பியினின்று விடுபட்டதென்று காரணப்பொருள்படும். (௬)

துரியோதனன் காலைக்கடன்முடித்துத் தேரேறுதல்.

சேனாபதிக்குவரிசைகள்யாவுநல்கியுயர்தெய்விகமதானபுனலிற்,
றூநானமாடிமறைவாணர்க்கநேகவிததானஞ்சொரிந்துதுகிலுந், தே
னாரலங்கல்பலகலனோடணிந்துபொருதேரிற்புகுந்தனன்வழா,வா
னாளுநாதனதிர்முகிலிற்புகுந்ததெனவன்போடுமன்னர்தொழவே.

(இ - ள்.) சேனாபதிக்கு - சேனைத்தலைவனான சல்லியனுக்கு, வரிசைகள் யாவும் நல்கி - உரியசிறப்புக்களையெல்லாங் கொடுத்து,—உயர் தெய்விகமது ஆன புனலில் - சிறந்த தெய்வத்தன்மையுடையதான புண்ணியதீர்த்தத்தில், தூ நானம் ஆடி - பரிசுத்தமான ஸ்நாநஞ்செய்து,—மறைவாணர்க்கு - அந்தணர்களுக்கு, அநேக வித தானம் சொரிந்து - பலவகைப்பட்ட தானங்களை மிகுதியாகக்கொடுத்து,—துகிலும் - ஆடைகளையும், தேன் ஆர் அலங்கல் - தேன் நிறைந்த பூமாலையையும், பல கலனோடு - பலஆபரணங்களுடனே, அணிந்து - தரித்து,—வழா வான் ஆளும் நாதன் - தவறாமல் தேவலோகத்தைஅரசாளுகிற தலைவனான இந்திரன், அதிர் முகிலில் புகுந்தது என - இடிமுழங்குகிற (தனது வாகனமான மேகத்தில்) ஏறியமைபோல, வன்போடு மன்னர் தொழ - வலிமையோடு அரசர்கள் வணங்க, பொரு தேரில் புகுந்தனன் - போர்செய்தற்குஉரிய தேரின்மீதுஏறினான்; (எ - று.)

செல்வச்சிறப்புமிக்குப் பலவகையின்பம்நுகர்கிற துரியோதனனுக்குத் தேவேந்திரனும், அவன்ஏறிய ஆரவாரத்தோடுவிரைந்துசெல்லுந் தேருக்கு இந்திரனுக்கு வாகனமான மேகமும் உவமை. உவமையணி. புனலுக்குத் தெய்வத்தன்மை - தன்னில்மூழ்கினாரது தீவினையை யொழித்தல். வரிசைகள்- பிருது குடை கொடி சாமரம் மோதிரம் முதலியன.

தூய்மை யென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் இடையிலுள்ள யகரமெய் யுங் கெட்டு, தூ என நின்றது. மறைவாணர் - வேதங்களை ஓதியும் ஓதுவித் தும் வாழ்பவர். வாணர் - வாழ்நரென்பதன் மரூஉ. அலங்கல் - தொங்கியசை தல்; அங்ஙனம் அசையும் மாலைக்குத் தொழிலாகுபெயராம். துகிலும், உம் - எதிரதுதழுவிய எச்சம். கலன் - கல மென்பதன் இறுதிப்போலி. ஸேநாபதி, அநேகவிததாநம், நாதன் - வடசொற்கள். தைவிகம், ஸ்நாநம் என்ற வட சொற்கள் சிதைந்தன. தேன் ஆர் - வண்டுகள் நிறைந்த எனினுமாம். வழா - வழாமல்: ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம். தெய்விகமது, அது - பகுதிப் பொருள்விகுதி. அணிந்து - பொதுவினை. (௭)

துரியோதனன் சல்லியனுடன் போர்க்களஞ்சேர்தல்.

கிருபாரியன்கடவுண்மருகன்றிகத்தபதிசாலுவன்கிருதன்முதலோ
ரிருபாலுமன்னர்வரமுனிவார்பெருஞ்சேனையெங்கணுஞ்சூழவரவே
நிருபாதிபன்றனதுசேனாதிபன்றனொடுநீள்களம்புக்கனனரும் [வே.
பொருபாரதச்சமரமின்றேமுடிப்பலெனுமெண்ணத்திரனொடுபொர

(இ-ள்.) கிருபாரியன் - கிருபாசாரியனும், கடவுள் மருகன் - தெய்வத்தன் மையுள்ள (அவனது) மருமகனான அசுவத்தாமாவும், திகத்த பதி - திரிகர்த்த தேசத்தரசனான சுசர்மாவும், சாலுவன் - சாலுவதேசத்தரசனும், கிருதன் -

கிருதவர்மாவும், முதலோர் - முதலியவர்களாகிய, மன்னர் - அரசர்கள், இருபாலும் - (தனது) இரண்டுபக்கங்களிலும், வர-வரவும்,—முனிவு ஆர் பெரு சேனை - கோபம்மிக்க பெரியசேனைகள், எங்கணும் சூழ வரவே - எவ்விடத்துஞ் சூழ்ந்துவரவும்,—நிருப அதிபன் - அரசர்களுக்குஅரசனான துரியோதனன், தனது சேனாதிபன்தனொடு-தனது சேனைத்தலைவனான சல்லியனுடனே, அரு பொரு பாரதம் சமரம் இன்றே முடிப்பல் எனும் எண்ணத்தினொடு-அருமையாகக் கைகலந்துசெய்யும் பாரதயுத்தத்தை இன்றைக்கே முடிக்கக்கடவேனென்னும் எண்ணத்தோடு, பொர - போர்செய்யும்பொருட்டு, நீள் களம் புக்கனன்-பெரிய (குருக்ஷேத்திரமாகிய) போர்க்களத்தை யடைந்தான்; (எ - று.)

கிருபன் - கௌதமமுனிவனது பௌத்திரன்; சரத்துவந்தமுனிவனது குமாரன்; துரோணன்மனைவியான கிருபியின் உடன்பிறந்தவன்; கௌரவ பாண்டவரது முதல்வில்லாசிரியன்: நாணற்காட்டிற் பிறந்திருந்த இவனையும் இவன்தங்கையையும் வேட்டைக்குவந்த சந்தனுமகாராசன் பார்த்துக் கிருபையினால் எடுத்துவளர்த்ததனால், கிருபனென்றும், கிருபியென்றும் பெயர்கள் உண்டாயின வென அறிக. இவன், சமரதவீரன். அசுவத்தாமன் - துரோணன்மகன்; கிருபனது உடன்பிறந்தவளான கிருபியினால் வளர்க்கப்பட்டவன்; இவன்,சிவாநுக்கிரகத்தாற் பிறந்தவனாதலால், 'கடவுள்மருகன்' எனப்பட்டான். துரோணன்மனைவியாகிய கிருபியின் அழகைக் கேட்டும் ஒருகால் கண்டும் அவளிடம் மிகக்காமுற்ற சிவபிரானது அருளினால் ஒருகுதிரையினிடமாகப் பிறந்தவன் இவ னென்று வரலாறு அறிக. இவன், அதிரதவீரன். கிருதவர்மா என்ற பெயர் கிருத னென விகாரப்பட்டுநின்றது; இப்படி ஒருபெயரின் ஒருபகுதியால் அப்பெயர்முழுதையுங் குறித்தல்,வடமொழியில் 'நாமைகதேசே நாமக்ரஹணம்' எனப்படும். இவன் - துரியோதனன் கண்ணனைப் படைத்துணையழைக்கப்போனபொழுது அவ்வெம்பிரானால் அவனுக்குத் துணையாகக் கொடுக்கப்பட்ட யாதவசேனைக்குத் தலைவனாக அனுப்பப்பட்டவன்: யதுகுலத்தில் இருதிகனென்பவனது குமாரன்; சமரதத்தலைவரில் ஒருவன். கிருபனும் அசுவத்தாமனும் அந்தணராயினும் அரசரையடுத்து அவரருளால் அவர்க்குஉரிய கிரீடம் குடை கொடி சாமரம் முதலிய சின்னங்களைப் பெற்று அரசர்போல் வாழ்ந்தன ரென அறிக. துரியோதனனுக்கு 'ராஜராஜன்' என்று ஒருபெயராதலால், 'நிருபாதிபன்' எனப்பட்டான். பாரதம் - பரதவம்சத்தாருள் நிகழும் போர்: பார் அதம் எனப்பிரித்து, நிலவுலகத்துக்கு நாசத்தைவிளைக்கும் போரென்றலும் ஒன்று.

க்ருப + ஆர்யன் = க்ருபார்யன்; ந்ருப + அதிபன் = ந்ருபாதிபன்; ஸேநா + அதிபன் = ஸேநாதிபன் — தீர்க்கசந்தி பெற்ற வடமொழித் தொடர்கள். த்ரிகர்த்தபதி, ஸால்வ, ஸமரம் என்ற வடசொற்கள் திரிந்தன. எங்கண் - எக்கண் என்பதன் மெலித்தல். நிருபன் - மனிதர்களைக் காப்பவன். முடிப்பல், அல் - தன்மையொருமைவிகுதி. சேனாதிபன்தனொடு, தன் - சாரியை. (அ)

சல்லியன் தன்பக்கந்துச்சேனையை அணிவகுத்தல்.

**தாமந்தராதிபர்கள்பலரொடும்வலப்புடைசலிப்பின்றியணியவிறல்கூர், மாமந்தராதிபர்கள்பலரொடுமிடப்புடைவகுப்பொடணியத் தினகரன், கோமைந்தன்மைந்தனிருவோரொடுஞ்சேனையைக்கொண்டுறவணிந்தனணிகற், சாமந்தர்மண்டலிகர்முடிமன்னர்சூழ்வரத்தரணிபதிபின்னணியவே.**

(இ-ள்.) அம் - அழகிய, தராதிபர்கள்தாம் - பூமிக்குத்தலைவரான அரசர்கள் தாங்கள், பலரொடும் - பலவீரர்களுடனே, வலம் புடை - வலப்பக்கத்தில்,

சலிப்பு இன்றி - நிலைகுலைதலில்லாமல், அணிய - அழகிதாய்நிற்கவும்,—விறல் கூர் - வெற்றிமிக்க, மா மந்தர அதிபர்கள் - சிறந்த மந்திரத்தலைவர்கள் [மந்திரிகள்], பலரொடும் - பலவீரர்களுடனே, இடம் புடை - இடப்பக்கத்தில், வகுப்பொடு அணிய - ஒழுங்கோடு அழகிதாய் நிற்கவும்,—தினகரன் கோ மைந்தன் மைந்தன் - சூரியனது சிறந்தகுமாரனான கர்ணனது புத்திரனான சித்திரசேனன், இருவோரொடும் - (தனது உடன்பிறந்தவரான (சூரியவர்மா சித்திரகீர்த்தி யென்னும்) இரண்டுபேருடனே, சேனையை கொண்டு - (தனது) சேனையை உடன்கொண்டு, உற - முன்னேசெல்லவும்,—இகல் - வலிமையையுடைய, சாமந்தர் - சாமந்தரென்னும் அரசர்களும், மண்டலிகர் - மண்டலாதிபதிகளான அரசர்களும், முடி மன்னர் - கிரீடந்தரித்து அரசாளும் மகுடவர்த்தனராசர்களும், சூழ்வர - சுற்றிலும்வரவும்,—தரணிபதி - பூலோகத்துக்குத் தலைவனான துரியோதனன், பின் அணிய - பின்வகுப்பில் நிற்கவும்,—அணிந்தனன் - (சல்லியன் சேனையை) அணிவகுத்தான்; (எ-று.)

கர்ணன்புத்திரர் மூவர் பெயரை ௩௬ - ஆம் செய்யுளால் அறிக. அம்மூவருள் சித்திரசேனன் பிரதான னாதலால், 'அவன் மற்றை இருவோரொடும் சேனையைக்கொண்டுற' என்றார்; ௩௬ - ஆங் கவியிலும் அவனையும் மற்றையிருவரையும் வேறுபாடுதோன்றக் கூறுமாற்றை உணர்க. ஒருபேரரசனுக்குக் கீழ்ப்பட்டு அவனுடைய நாட்டின் கடைக்கோடியை ஆளுஞ் சிற்றரசர்க்கு 'ஸாமந்தர்' என்று பெயர்; வடசொல். மண்டலீகர் - நாற்பதுகிராமம் ஆள்பவர். [ஒரு கோடிகிராமம் ஆள்பவன் மகுடவர்த்தனனென்றும், மகுடவர்த்தனர் நாலாயிரவரை வணக்கியாள்பவன் மண்டலீகனென்றும், மூன்றுலக்ஷமளவுங்கப்பங் கட்டுபவர் சாமந்தரென்றும் கூறுவர் ஒருசாரார்.]

தரா+அதிபர்=தராதிபர், மந்தர+அதிபர் - மந்தராதிபர்: வடமொழித்தீர்க்கசந்தி. தினகரன் - பகலைச் செய்பவன்; வடசொல். பொருள்களைத் தரித்தலால், பூமிக்குத் தரணி யென்றும், தரா என்றும் வடமொழியிற் பெயர். இருவர் இருவோர் எனச் சிறுபான்மை ஈற்றயல் அகரம் ஒகாரமாயிற்று. (க)

இனிப் பாண்டவர்செய்தி கூறத்தொடங்குதல்; கவிக்கூற்று.

ஒருவருமெனக்குநிகரில்லையெனுமத்திரன்புத்திரனையுரகதுவசன், பொருபடைமுனைக்குரியசேனாபதிப்பெயர்புனைந்தமைபுகன்றனமினிக், குருகுலம்விளங்கவருகுந்திமைந்தர்களிரவிகுமரனைக்கொன்றவிரவிற், பருவரன்மிகுந்துளமினைந்ததும்பாசறைமுனைந்ததும் வியந்துபகர்வாம்.

(இ - ள்.) ஒருவரும் எனக்கு நிகர் இல்லை எனும் - ஒருவரும் எனக்கு (உலகத்தில்) ஒப்பில்லை யென்று செருக்குக்கொண்ட, மத்திரன் புத்திரனை - மத்திரராசனது குமாரனான சல்லியனை, உரக துவசன் - பாம்பின் வடிவமெழுதிய கொடியையுடைய துரியோதனன், பொரு படை முனைக்கு உரிய சேனாபதி பெயர் புனைந்தமை - தாக்கிச்செய்யும்போர்த்தொழிற்குஉரிய சேனைத்தலைவனென்ற பெயரைச் சூடினமையை, புகன்றனம் - கீழ்க் கூறினோம்; இனி - இனிமேல்,—குரு குலம் விளங்க வரு குந்தி மைந்தர்கள் - குருவென்னும் அரசனது குலம் பிரசித்திபடையும்படி (அதில்) தோன்றிய குந்தியின்புத்திரராகிய பாண்டவர்கள், இரவி குமரனை கொன்ற இரவில் - சூரியன்மகனான கர்ணனைக் கொன்ற (பதினேழாம்போர்நாளின்) இரவிலே, பருவரல் மிகுந்து உளம் இனைந்ததும் - துன்பம்மிக்கு மனம் வருந்தியதையும், பாசறை முனைந்ததும் - (தமது) படைவீட்டில் யுத்தாலோசனைசெய்ததையும்,

வியந்து பகர்வாம் - கொண்டாடிக் கூறுவோம்; (எ - று.)—இனிப் பகர்வாம் என இயையும்.

மத்திரன்புத்திரனைச் சேனாபதிப்பெயர் புனைந்தமை - இரண்டு செயப்படுபொருள் வந்த வினை; இனி, உருபுமயக்கமாக, 'மத்திரன்புத்திரனை' என்பதற்கு - சலவியனுக்கு என்று உரைத்தலும் ஒன்று. பாண்டவர்க்கு மாமனாதலால் இவன்பெற்ற மாதுலனென்ற பெயர்,வடமொழியில்,தனக்கு ஒப்பில்லாதவனென்றும் ஒருபொருள்படுதலால், அத்தன்மையைக்கருதி, 'ஒருவருமெனக்குநிகரில்லையெனு மத்திரன்புத்திரன்' என்றனரென்க;என்றது, மாதுலனான சல்லியனென்றவாறு. குந்தியால் வளர்க்கப்பட்டதனால், நகுலசகதேவரும் 'குந்திமைந்தர்' எனப்பட்டனர். இங்கு மத்திரனென்றது, சல்லியன்தந்தையை.

இல்லை - எதிர்மறைப் பொதுக்குறிப்புமுற்று. புத்ரன் என்ற வடசொல்- (தனது தந்தைதாயரைப்) புத்என்னும் நரகத்தினின்றும் நீக்கிக்காப்பவனென்று காரணப்பொருள்படும். உரகம்-மார்பினால் நகர்வது. குமரன் - குமாரனென்பதன் குறுக்கல். உரகத்வஜன், ரவி என்ற வடசொற்கள் திரிந்தன. குருகுலம்- தற்சமவடமொழி. புகன்றனம், பகர்வாம் என்றவை - கவிகளுக்கு உரிய தனித்தன்மைப்பன்மை. புனைந்தமை, இனைந்தது, மூண்டது-இறந்தகாலத்தொழிற்பெயர்கள். 'இனி' என்பது - எதிர்காலங்குறிப்பதோர் இடைச்சொல். (௪0)

வேறு.

கர்ணன் இறந்ததற்குப் பாண்டவர் புலம்பல்.

செவ்விரவிதிருமகனைச்செகம்புரக்குங்காவலனையிரவலோருக்
கெவ்விரவும்விடிவிக்குமிருகரத்துவள்ளலையின்றிழந்தோமென்று
விவ்விரவுநறுமலர்த்தார்த்தருமன்முதலைவருந்தம்விழிநீர்சோர
வவ்விரவிலிமைப்பொழுதுந்தரியாமலழுதரற்றியலமந்தாரே.

(இ - ள்.) செவ் இரவி - செந்நிறமுடைய சூரியனது, திரு மகனை-சிறந்த குமாரனும், செகம் புரக்கும்-பூமிமுழுவதையும் ஆளுதற்குஉரிய, காவலனை-அரசனும், இரவலோருக்கு-யாசகர்க்கு, எ இரவும் விடிவிக்கும்-எந்தயாசகத்தையும் ஒழிவிக்கிற, இரு கரத்து-இரண்டுகைகளையுடைய, வள்ளலை-தானகுணமுடையவனுமான கர்ணனை, இன்று-இன்றைக்கு, இழந்தோம் - இழந்துவிட்டோம், என்று-என்றகாரணத்தால்,—வி விரவு நறு மலர் தார் தருமன் முதல் ஐவரும்- வண்டுகள் நெருங்கிமொய்க்கும் வாசனையுடைய பூமாலைகளைத் தரித்த தருமபுத்திரன்முதலிய ஐந்துபேரும், தம் விழி நீர் சோர - தங்கள்கண்களினின்று நீர் பெருக, அ இரவில் -அந்த இராத்திரியில், இமை பொழுதும் தரியாமல் - ஒரு நொடிப்பொழுதேனும் பொறுத்திராமல், அழுது - புலம்பி, அரற்றி-கதறி, அலமந்தார் - வருந்தினார்கள்; (எ - று.)

தங்களுக்குத் தமையனென்று தங்களால் முன்பு அறியப்படாதவனான கர்ணன் தங்களிலொருவனான அருச்சுனனாற் போரிற்கொல்லப்பட்டபிறகு குந்திதேவி அவன்மேல் விழுந்து அழுததனாலும், பின்பு கண்ணன் சொன்னதனாலும் தங்களுக்கு முன்பிறந்தவனென்று அறிந்ததனால், பாண்டவர்கள் இங்ஙனம் சோகிப்பாராயினர். மகனை, காவலனை, வள்ளலை என்ற மூன்றும் - ஒரு பொருளின்மேல் வந்த பலபெயர்கள்; இவை 'இழந்தோம்' என்னும் ஒரு வினை கொண்டன: [நன் - பொது-௬௪.] துரியோதனனினும் மூத்தவனான தருமனுக்கும் முன்பிறந்தவனாதலால் நீதிநூல்முறைப்படி நிலவுலகமுழுதையும் ஆளுதற்கு உரியவன் கர்ணனே யென்பார், 'செகம்புரக்குங்காவலன்' என்றார்; கீழ்ச்சருக்கத்தில் "கொற்றவேந்தாய், வீற்றிருந் திங் கைவேமுடிவருடப் புவியாள விதியிலாதாய்" என்றதுங் காண்க. கர மென்கிற சொல்லுக்கு -

வடமொழியில் கிரணமென்றுங் கையென்றும் பொருள்களுள்ளதனாலும், இரவு என்கிற தமிழ்மொழி-இராத்திரியென்றும் இரத்தலென்றும் பொருள் படுதலாலும், விடிதலென்ற வினை - உதித்தலென்றும் ஒழிதலென்றும் பொருள்படுதல்லாலும், இச்சொற்களில் சமத்காரங்கற்பித்து, தந்தையாகிய சூரியன் தனது ஆயிரங் கரங்களால் [கிரணங்களால்] இரவை விடிவிக்குமாறு போல, மைந்தனான கர்ணன் பலவகையிரவுகளையும் தனது இருகரங்களைக்கொண்டே விடிவிப்பவன் என்ற கருத்தைக் குறிப்பாற் புலப்படுத்துமாறு 'இரவலோருக்கு எவ்விரவும் விடிவிக்கும் இருகரத்து வள்ளல' என்குறெனக; இதனால், "பிதுச் சதகுணம் புத்ரः" என்றபடி தந்தையினும் பலமடங்குசிறந்தவன் கர்ணனென்பதும், கர்ணன் வேண்டினவர்களுக்கு வேண்டினதையெல்லாம் தவறாமல் இருகைகளாலும் எடுத்துக்கொடுத்து அந்தயாசகர்கள் மீண்டும் ஓரிடத்து இரத்தற்குச் செல்லவேண்டாமல் செல்வம்நிரம்பியவராய்த் திருப்தியடையும்படி கொடுக்கும் உதாரகுணமுடையவனென்பதும் இதில்விளங்கும். கர்ணனுக்குச் சூரியனை உபமானமாகக் கூறத்தொடங்கி, உபமானஉபமேயங்களை அபேதப்படுத்தி, இரவு, விடிவித்தல், கரம் என்ற பலபொருட்சொற்களின் உதவியால் உபமானமாகிய சூரியனைக்காட்டிலும் உபமேயமாகிய கர்ணனுக்கு உயர்வு கற்பித்துக் கூறியதனால், இது - சிலேடைமூலமான ஒற்றுமைநயத்தை அங்கமாகக்கொண்டு வந்த வேற்றுமையணி; வடநூலார் வ்யதிரேகாலங்காரத்தின்பாற் படுத்துவர்.

செவ்விரவி என்பதில், செம்மை - இனம்விலக்கவந்ததல்லாமல் இயற்கை பற்றிவந்த அடைமொழி; [நன் - பொது - ௫0.] ஜகத் என்ற வடசொல், சகம் என விகாரப்பட்டு, அது மோனைநோக்கிச் செகம் எனத் திரிந்தது. காவலன் - காத்தலில் வல்லவன். இரவலோர் - இரத்தலில்வல்லவர். இரவு - இராத்திரியைக் குறிக்கையில், இரா என்னுங் குறியதன்கீழ் ஆ குறுகி உகரமேற்றதும், இரத்தலைக்குறிக்கையில் தொழிற்பெயருமாம். வள்ளல் - வண்மையையுடையவன்: வண்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் வள் என நின்றது; அல் - பெயர் விகுதி. பறவைப்பொதுப்பெயராகிய 'வி' என்ற வடசொல்-இங்குச் சிறப்பாய், வண்டைக் குறித்தது; [பொதுப்பெயர் சிறப்புப்பொருளை யுணர்த்துதலும், சிறப்புப்பெயர் பொதுப்பொருளை யுணர்த்துதலும், ஒருவகைப்பாலஷநடை] இந்த 'வி' என்ற சொல்லே நீண்டு தமிழில் 'வீ' என்றும் நிற்கும். ஓசையின்பத்திற்காக 'வி்வ்விரவு' என உயிர்முன் இடையெழுத்து இரட்டிற்று. தருமத்தினின்றும் தவறினவர்களுக்குத் தக்கதண்டனைசெய்து தருமத்தைக் காத்தலால், யமனுக்குத் தருமனென்று பெயர்; 'தந்தையே மைந்தனாகிறான்' என்னும் நூல் வழக்குப்பற்றி, தருமபுத்திரனை 'தருமன்' என்றது. அலமந்தார், அலமா - பகுதி.

இதுமுதல் ஒன்பது கவிகள் - முதல்நான்குசீரும் காய்ச்சீர்களும், மற்றையிரண்டும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (கக)

## கர்ணனைக் கொன்றதனால் அருச்சுனன் கொண்ட சோகம்.

சாயைவெறுத்தனளவளிற்றலத்தேதவிமிகவெறுத்தாடபனனீ
ன்ற, சேயைவெறுத்துயிர்கவர்ந்தானுறவறியான்றெயித்தியர்போர்
செயித்தானென்று, மாயைவெறுத்திடவிளைத்தமாயோனைவெறுத்த
னன்வன்மனத்தியான,யாயைவெறுத்தனன்பின்னைவிதியைவெறுத்த
னன்வீமற்கிளையகோவே.

(இ-ள்.) தெயித்தியர் போர் செயித்தான் - அசுரர்களுடைய போரை வென்றவனான அருச்சுனன், உறவு அறியான் - (தங்களுக்குங் கர்ணனுக்கும்

உள்ள) உறவுமுறைமையை அறியாதவனாய், தபனன் ஈன்ற சேயை - சூரியன் பெற்ற குமாரனான கர்ணனை, வெறுத்து உயிர் கவர்ந்தான்- பகைத்துக் கொன்றான், என்று - என்றகாரணத்தால், சாயை வெறுத்தனள் - (சூரியன்மனைவியான) சாயாதேவி வெறுப்புக்கொண்டாள்; அவனின் - அவனைக்காட்டிலும், நலம் தேவி - பூமிதேவி, மிக வெறுத்தாள் - மிகவும்வெறுப்புக்கொண்டாள்; வீமற்கு இளைய கோ - வீமனுக்குஅடுத்ததம்பியான அருச்சுனன், வெறுத்திட மாயை விளைத்த மாயோனை - (பலரும்)வெறுக்கும்படி மிகுதியாக வஞ்சனையைச்செய்த கிருஷ்ணனை, வெறுத்தனன் - வெறுத்தான்: வல் மனத்தி ஆன - கடினசித்தமுடையவளான, யாயை - தன்தாயான குந்தியை, வெறுத்தனன்—; பின்னை - பின்பு, விதியை வெறுத்தனன் - (எல்லாவற்றுக்கும் முக்கியகாரணமான தனது) ஊழ்வினையைத் தானே வெறுத்துக்கொண்டான்; (எ - று.)

கண்ணனையுங் குந்தியையும் வெறுத்தது, இவ்வுறவுமுறைமையை அவர்கள் முன்னமே அறிந்திருந்தும் தங்களுக்கு வெளிப்படுத்தாமையால். கண்ணனை வெறுத்த விதத்தைக் கீழ்ச்சருக்கத்தில் "பேயுரைத்துத் தாலாட்ட முலைப்பாலோ டியிருண்ட பித்தா வீண்டை, நீயுரைத்த பிறகறிந்தோ மெம்முனையின் றமைக்கொண்டே நேர்செய்தாயே" என்றதுமுதலியனகொண்டும், தாயை வெறுத்த விதத்தை "கன்னியிளம்பருவத்தி லரியமா வெனுங் கடவுள் காதல் கூர, மன்னிய மந்திர மெமக்கு மின்றளவு முரைத்திலையால் மறந்தாய்கொல்லோ, பின்னியசெஞ்சடைக்குழலா யீதென்ன பேரறிவு பெற்றதாயின், அன்னியர் நன்றாயிருந்தது இப்படியே பிழைப்பிப்ப தறிந்திலோமே" என்றதுமுதலியனகொண்டும் அறிக. 'மாயை வெறுத்திட விளைத்த மாயோன்' என்றதனால், கண்ணன் தனதுபஞ்சப்பிராணன்களுக்குச் சமானரான பஞ்சபாண்டவர்க்கும் இவ்வுண்மையைக் கூறாமல் பூமிபாரநிவிருத்தியாகிய தனதுஅவதாரகாரியத்தையே முக்கியமாகக்கொண்டு இதனை அதிரகசியமாக மறைத்துவைத்த தந்திரம் விளங்கும். 'வன்மனத்தியான யாய்' என்றது, எப்படிப்பட்ட இரகசியத்தையும் ஒளித்துவைத்தற்கு உரியரல்லாத தன் அருமைமக்களுக்கும் இதனைக்கூறாமல் மனத்திலேயே அடக்கிவைத்து அதனால் கர்ணனுக்கு அழிவும் பாண்டவர்க்குப் பழியும் விளையப் பார்த்திருந்த கல்நெஞ்சினளென்றவாறு: இப்படி அவள்மறைத்துவைத்ததன் காரணம், கண்ணபிரான் தூதுவந்தபொழுது சொன்ன சூழ்ச்சியால் குந்தி கர்ணனைத் தன்மகனென்று அறிந்து அவனிடஞ் சென்று நாகாஸ்திரத்தை அருச்சுனன்மேல் இரண்டாம் முறை விடாதபடியும், மற்ற நால்வர் பாண்டவரையும் அவன்கொல்லாதபடியும் வரம் வேண்டிப் பெற்றபொழுது அவன் "உய்வருதிறல்வெம்போர் முடிப்பளவும் உமக்குநான்மகனெனுந்தன்மை, ஐவரும் அறியாவண்ணம் நீர் காப்பீர்" என்று எதிர்வரங்கேட்டதற்கு இவள்உடன்பட்டுவந்தமை.

சாயை வெறுத்தது - சூரியபுத்திரனான கர்ணனிடம் தான் புத்திரவாத்சல்லியம்வைத்திருந்ததனாலென்றும், பூமிதேவி மிகவும் வெறுத்தது - தன்னை அரசாளுதற்கு இயல்பில்உரியவனான கர்ணன் கொல்லப்பட்டதனாலு மென்க.

தைத்தியர்போர்சயித்தா னென்ற விவரம்:—அருச்சுனன், வனவாசத்தொடக்கத்தில் கைலாசத்திற்சென்று தவமியற்றிப் பரமசிவனிடத்தில் பாசுபதம் முதலியன பெற்றபின்பு அங்குவந்து தன்னையழைத்துப்போன தந்தையாகிய இந்திரனுடனே தேவலோகஞ்சேர்ந்து அங்குத் தேவர்களது வேண்டுகோளின்படி அவர்கட்குப் பகைவராய்ப் பலநாளாகப்பெருந்துன்பமியற்றிவந்த (கடலிடையிலுள்ள தோயமாபுரவாசிகளான) நிவாதகவசரென்னும் அசுரர் மூன்றுகோடிபேரையும், (அந்தரத்துள்ள இரணியபுரவாசிகளான) காலகேயரென்னும் அசுரர் அறுபதினாயிரவரையும் ஆங்காங்குச்சென்று போர்செய்து

அழித்து ஒழித்தன னென்பதாம். இதனால், இந்திராதிதேவர்க்கும் அழித்தற்கு அரிய அநேகம் அசுரரை அருச்சுனன் தனியேவென்ற சிறப்பு விளங்கும்.

சாயா, மாயா என்ற வடசொற்கள் ஆவீறு ஐயாயின. தேவி - ஈயீறு இகரமான வடசொல். ஸ்தலம், தபநன், தைத்யர், விதி, பீமன் - வடசொற்கள். தபநன் - உஷ்ணகிரணங்களால் தபிப்பவன். தைத்யர் - (காசியப முனிவனது மனைவியருள்) திதியென்பவளது புத்திரர். பீமன் - (பகைவர்களுக்குப்) பயங்கரனானவன். தெயித்தியர், செயித்தான் என்பவற்றில், அகரம் எகரமானது, மோனைத்தொடைக்காக. சேய் - ஆண்பாற்சிறப்புப்பெயர்; செம்மை யென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு முன்னின்றமகரமெய் யகரமாத்திரிந்து, சேய்என நின்றது; இந்த நிறத்தின் பெயர் - முதலில் செந்நிறமுடைய முருகக்கடவுளுக்குப் பண்பாகுபெயராய், அது பின்பு அவன் போலப் பலபராக்கிரமங்களிற் சிறந்த இளவீரனுக்கு (க் குமார னென்ற வடசொற் போல) உவமையாகுபெயராய் வழங்கும்: இருமடியாகுபெயர். மனத்தி - பெண்பாற்பெயர். பின்னை, ஐ - சாரியை. கோ - அரசன். (௧உ)

சூரியனுதித்தவுடன் வீமன் போர்க்களஞ்சேர்தல்.

அற்றையிராவிடிவளவுந்தனித்தனியேயாகுலமுற்றனிலன்மைந்தன், மற்றைநால்வரு மாலு மன்னவரும் வரூதினியு மருங்குசூழ, விற்றைநாள்வஞ்சினத்தின்குறைமுடிக்கவேண்டுமெனு மிதயத்தோடும், பிற்றைநாண்முரசதிரவளைமுழங்கக்களம்புகுந்தான்பிதாவைப்போல்வான்.

(இ - ள்.) அற்றை இரா - அந்தப்பதினேழாநாளின் இரவு, விடிவு அளவும் - கழியுமளவும், (பாண்டவர்ஐவரும்), தனி தனியே ஆகுலம் உற்று - தனித்தனியே விசனமடைந்து, (அதன்பின்)—, பிற்றை நாள் - அடுத்ததினமான பதினெட்டாநாளில்,—பிதாவை போல்வான் - தன்தந்தையானவாயுவையொப்பவனான, அனிலன் மைந்தன் - வாயுகுமாரனான வீமன்,—'வஞ்சினத்தின் குறை - (நான்முன்புசெய்த) சபதத்தின்குறையை, இற்றை நாள் - இன்றைத்தினத்திலே, முடிக்கவேண்டும் - (நான்) முடித்துவிடவேண்டும்', எனும்- என்றுஎண்ணுகிற, இதயத்தோடும் - மனத்துடனே,—மற்றை நால்வரும் - (தன்னுடன்பிறந்தவரான தருமன்முதலிய) மற்றைப் பாண்டவர் நான்குபேரும், மாலும் - கண்ணபிரானும், மன்னவரும் - மற்றைஅரசர்களும், வரூதினியும் - சேனையும், மருங்கு சூழ - பக்கங்களிலே சுற்றிலும்வரவும்,—முரசு அதிர - யுத்தபேரிகைகள் ஆரவாரிக்கவும், வளை முழங்க - சங்கங்கள் ஒலிக்கவும், களம் புகுந்தான் - போர்க்களத்திற் சேர்ந்தான்; (எ - று.)

'உற்று' என்ற செய்தெனெச்சத்தை 'உற' எனச் செயவெனெச்சமாகத் திரித்து, 'புகுந்தான்' என்ற முற்றோடு முடித்தல், இலக்கணநடைக்குஒத்த. "தந்தையரொப்பர் மக்கள்" என்றபடி வீமன் தந்தையான வாயுபோல மிக்க பொராற்றலுடையானாதலால், 'பிதாவைப்போல்வான் அனிலன்மைந்தன்' என்றார். வஞ்சின மென்றது, திரௌபதியைத் துகிலுரிந்தகாலத்தில் வீமன் 'துரியோதனுதியர்நூற்றுவரையும் யானே கொல்வேன்' என்று பிரதிஜ்ஞை செய்துபோந்தது. அந்தச்சபதத்தின்படி கீழ்ப் பதினேழுபோர்நாள்களில் நூற்றுவருள் தன்னாற்கொல்லப்பட்டவ ரொழிந்த மற்றையோரை இன்று கொன்றுதீர்க்கக் கருதின னென்க. இங்ஙனம் சபதம்முடிக்க விரைந்தமை பற்றியே, இங்கு இவனைத் தலைமையாக்கிக் கூறினார்.

அன்று, இன்று என்ற மென்றொடர்க்குற்றியலுகரங்கள் வன்றொடராய் ஐகாரச்சாரியைபெற்று அற்றை, இற்றை என நின்றன. ஆதலம், அனிலன்,

வருநீரீ, பிதா - வடசொற்கள். முரசு - முரஜ மென்ற வடசொல்லின் திரிபு. இற்றைநாள் - இன்றுகியநாளென இருபெயரொட்டு. பிற்லை ற - பின் என்ற இடைச்சொல்லின்மேல், து ஐ - சாரியைகள். வளை - உட்சுழியுடையது. வேண்டும் - 'உம்' விகுதிபெற்ற ஒருவகைவியங்கோள். (௧௩)

யாவரும் போர்க்களஞ்சேர்ந்து தருமனை யடுத்தல்.

விம்முபெரும்பணையொலியால்விண்டதுகொலண்டமெனவிண்ணோரஞ்சக், கைம்முகமாமுதலானகடுஞ்சேனைப்பாஞ்சாலன்காதன்மைந்த, னெம்முகமுந்தானாகியிரதமூர்ந்தணிவகுக்கவிளையோர்யாருந், தம்முனைவந்தடிவணங்கிப்புடைசூழ்ந்தார்சிறிதுமனஞ்சலிப்பிலாதார்.

(இ - ள்.) விம்மு - ஆரவாரஞ்செய்கிற, பெரு பணை ஒலியால் - பெரிய வாத்தியங்களின் ஓசையால், அண்டம் விண்டதுகொல் என - அண்டமுகடு அதிர்ந்து பிளந்திட்டதோ வென்று, விண்ணோர் அஞ்ச - தேவர்கள் பயப்பட,—கை முகம் மா முதல் ஆன - துதிக்கையையுடைய முகத்தையுடைய யானை முதலிய, கடு சேனை - கொடியசேனைசகுத்தலைவனுன, பாஞ்சாலன் காதல் மைந்தன் - பாஞ்சாலதேசத்தரசனுகிய துருபதனது அன்புள்ள புத்திரனுன திட்டத்துய்ம்மன், எ முகமும் தான் ஆகி இரதம் ஊர்ந்து - எல்லாப்பக்கங்களிலும் தானேயாகும்படி நாற்புறமும் விரைந்து தேரைநடத்தி, அணி வகுக்க - (தன்சேனையைப்) படைவகுக்க,—சிறிதும் மனம் சலிப்பு இலாதார்-சற்றும்மனந்தளர்தலில்லாதவர்களான, இளையோர் யாரும்-தம்பியரான (வீமன் முதலியோர்) எல்லோரும், வந்து - (அருகில்) வந்து, தம் முனை - தங்கள் தமையனுன தருமனை, அடி வணங்கி - பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து, புடை சூழ்ந்தார் - பக்கங்களிற் சூழ்ந்துநின்றார்கள்; (எ - று.)

முதலடி-அதிசயோக்திவகையால், வாத்தியகோஷத்தின்மிகுதியை விளக்கும். துதிக்கையுள்ள முகமுடைய விலங்கு எனவே, யானையாயிற்று. ஆகி - ஆக என எச்சத்தைத் திரிக்க. அண்டம், முகம், பாஞ்சாலன், ரதம், மநஸ் - வடசொற்கள். தம்முன் என்பதில், முன் என்றது - முன்னேபிறந்தவனுக்குக் காலவாகுபெயர். விண்டதுகொல் என்பதில், கொல் என்ற இடைச்சொல் - சங்கித்தற்பொருளைக் காட்டும். துரோணனைக்கொல்லுதற்கென்று ஒருபுத்திரனை வேண்டித் துருபதன் புத்திரகாமயாகஞ் செய்து அதில் பெற்ற அருமைப்புதல்வனென்பார், 'பாஞ்சாலன்காதல்மைந்தன்' என்றார். (௧௪)

சல்லியன் அஸ்திரவியூகம் வகுத்தமையும், தருமன் கண்ணனை வினவுதலும்.

அத்திரயூகமதாகவரும்பெருஞ்சேனையைவகுத்தாங்கதிபனாகி, மத்திரபூபதிநின்றவலியினைக்கண்டதிசயித்துமாலைநோக்கி, யித்திரமாகியபடையோடெப்படிநாஞ்சிலபடைகொண்டெதிர்ப்பதென்றான், குத்திரமாகியவினைகளொருகாலுந்திருவுளத்திற்குடிபுகாதான்.

(இ - ள்.) ஆங்கு - எதிர்ப்பக்கத்தில், மத்திர பூபதி - மத்திரதேசத்து அரசனுன சல்லியன், வரும் பெரு சேனையை - (தன்னிடம்) வந்த பெரிய சேனையை, அத்திரயூகமது ஆக வகுத்து - அஸ்திரமென்னும் வியூகமாக அணிவகுத்து, அதிபன் ஆகி நின்ற - சேனைத்தலைவனாய்நின்ற, வலியினை - வலிய நிலைமையை, கண்டு - பார்த்து, அதிசயித்து - ஆச்சரியப்பட்டு,—குத்திரம் ஆகிய வினைகள் திரு உளத்தில் ஒரு காலும் குடி புகாதான் - வஞ்சனையாகிய செயல்கள் தனதுசிறந்தமனத்திலே ஒருபொழுதும் வந்துதங்கப்பெறாத தருமபுத்திரன்,—மாலை நோக்கி - கண்ணபிரானைப் பார்த்து, 'இ திரம் ஆகிய படை

யோடு - இப்படி வலிமையாக அணிவகுக்கப்பட்ட பகைவர்சேனையுடன், நாம்—, சில படை கொண்டு - குறைவான (நமது) சேனையைக்கொண்டு, எதிர்ப்பது - எதிர்த்துப்போர்செய்யும்விதம், எப்படி - எவ்வாறு?' என்றான் - என்றுவினவினான்; (எ - று.)

வ்யூஹ மென்ற வடசொல், யூகமெனத் திரிந்தது; அதாவது-படைவகுப்பு: சேனை ஒருவடிவமமைய ஒழுங்குபட நிறுத்தப்படுவது. சேனைகளை அணிவகுக்கிற உத்தேசம், கண்டபடி தனித்தனிபிரிந்து பரவியிருத்தலினும் ஒருவடிவமமையத் திரண்டுநிற்கையில் வெல்லுதற்கரிதாய்ப் பகைவரை எளிதில் அழிக்குமென்பது. இச்செய்யுளினால், சல்லியன் அன்று அணிவகுத்த சிறப்பு விளங்கும். சர்வதோபத்ரம் என்னும் வியூகம் வகுக்கப்பட்டதென்று முதனூல் கூறும். 'படைகொண்டு' என்பதில், கொண்டு - மூன்றாம்வேற்றுமைச் சொல்லுருபு. அத்திரம், திரம், சுத்திரம் - அஸ்த்ரம், ஸ்த்ரம், க்ஷுத்ரம் என்ற வடசொற்கள் திரிந்தன. அதிபன், மத்ரபூபதி - வடசொற்கள். தருமன் கள்ளங்கபடமற்ற சுத்தசித்தமுடையவனென்பது, நான்காம்அடியில் வெளியாம். மால்-பெருமை அன்பு மாயை என்பவற்றை யுடையவன். முதலடியில், அரும் என்றும் எடுக்கலாம். (௧௫)

தருமன்வினவிற்குக் கண்ணன் ஏற்ற விடை கூறல்.

வீடுமனைச்சிலைக்குருவாம்வேதியனைநும்முனைமுன்வீடுசேர்த்த
நீடுமணிப்பொலங்கழலோர்நின்னருகேநிற்கின்றார்நிகரிலாய்கே
ளாடுதிரைக்கடனீந்தியேறினர்க்குக்கழிகடத்தலரியதொன்றோ
தோடவிழ்தார்ச்சல்லியனுக்கிளைப்பரோவெனமொழிந்தான்றுளபமாலே.

(இ - ள்.) நிகர் இலாய் - ஒப்பில்லாதவனே! கேள்-(யான்சொல்வதைக்) கேட்பாயாக:—வீடுமனை - பீஷ்மனையும், சிலை குரு ஆம் வேதியனை - வில்வித்தையில் ஆசிரியனான துரோணனையும், நும் முனை - உங்கள் தமையனான கர்ணனையும், முன் - முன்பு, வீடு சேர்த்த - அழிவடைவித்த, நீடு மணி பொலம் கழலோர் - நீண்டதும் இரத்தினங்கள்பதித்ததும் பொன்னினாலாகியதுமான வீரக்கழலையுடைய வீரர்கள், நின் அருகே நிற்கின்றார் - உன்பக்கத்திலே நிற்கிறார்கள்: (ஆதலால்),—ஆடு திரை கடல் நீந்தி ஏறினர்க்கு - எழுந்தசைகிற அலைகளையுடைய கடலை நீந்திக்கடந்து கரையேறினவர்களுக்கு, கழி கடத்தல் அரியது ஒன்றோ-(அதற்கு அப்பாலுள்ளதொரு) கழியைத் தாண்டுதல் அரியதொரு காரியமோ? (அவ்வாறே), தோடு அவிழ் தார் சல்லியனுக்கு இளைப்பரோ - (வீடுமன்முதலிய மகாவீரர்களை வென்றபின்பு) பூவிதழ்கள் மலர்ந்த மாலையையுடைய சல்லியனுக்காக மனஞ்சலிப்பவருண்டோ? என - என்று, துளபம் மால் - திருத்துழாய்மாலையையுடைய கண்ணன், மொழிந்தான் - கூறினான்.

மகாபலபராக்கிரமசாலிகளாய்ப் பிரசித்திபெற்ற வீடுமனையுந் துரோணனையுங் கர்ணனையும் போரில் முறையே ஒழித்திட்ட சிகண்டியும் திட்டத்துய்மனும் அருச்சுனனும் ஆகிய வீரர்கள் உன் அருகில் நிற்கையில் நீ அஞ்சுவானேன்? அத்துணைவல்லோரை வென்றபின் சல்லியனொருவனை வெல்லுதல் எளிதன்றோ வென்று கண்ணன் தைரியங்கூறினான். அளவற்றதாய் நிலைக்கொள்ளாததாய் அலைவீசி அச்சந்தருவதாயுள்ள கடலை நீந்திக் கரையேறினார்க்குக் கழியைக்கடத்தல் அரியதன்றே யென்ற பொருளைத் தரும் உபமானவாக்கியத்துக்கும், வீடுமன் முதலியோரை வென்றவர்க்குச் சல்லியனைவெல்லுதல் அரியதன்றே யென்றபொருளைத் தரும் உபமேயவாக்கியத்துக்கும் இடையில் உவமவுருபு கொடாமற் கூறியதனால், எடுத்துக்காட்டுவமையணி; த்ருஷ்டாந்தாலங்கார மென்பர்.

வீடுமன் - பீஷ்ம னென்ற வடசொல்லின் திரிபு; இப்பெயர்க்கு - பயங்கரனானவ னென்று உற்பத்தியருத்தம்: பயங்கரமானவிரதமுடையவ னென்று கருத்து. இவன், தனதுதந்தைக்கு யோசனகந்தியை இரண்டாவதுமணஞ்செய்வித்தற்கு அவளைவளர்த்ததந்தையான செம்படவன் இசைதற்பொருட்டு மூத்தவனுய்ப் பட்டத்துக்குரிய தனது இராச்சியத்தையும் மற்றையெல்லாச்செல்வங்களையும் தனக்குச்சிறியதாயாகவருமவளுக்குப் பிறக்கும் பிள்ளைக்கே கொடுப்பதாகவும், தான்மணஞ்செய்துகொள்வதில்லை யென்றும், இங்ஙனம், ஒழித்தற்கரிய மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்னும் மூவகையாசையையும் இளமையிலேயே யொழித்துக் கேட்போரஞ்சும்படியான சபதத்தைச் செய்ததனால், இவனுக்கு இப்பெயர்; தேவர்களுக்குமுன்னிலையில் இவ்விரதத்தை ஏற்படுத்திக்கொண்டதனால் தேவவிரத னென்றும், சந்தநுமைந்தனாதலால் சாந்தநவ னென்றும், கங்கைகுமாரனாதலால் காங்கேய னென்றும் இவனுக்குப் பெயர்களுண்டு.

குரு என்ற வடசொல் - (அஜ்ஞாநமாகிற) மனவிருளை யொழிப்பவ னென்று காரணப்பொருள்படும்; கு - இருள், ரு - ஒழிப்பவன். வேதியன் - வேதங்களை ஓதுதலும் ஓதுவித்தலு முடையவன். பொன் + கழல் = பொலங்கழல்; இப்புணர்ச்சிக்கு விதி - "பொன்னென்கிளவி யீறுகெட முறையின், முன்னர்த்தோன்றும் லகார மகாரம், செய்யுள் மருங்கிற் றொடரியலான" என்னுந் தொல்காப்பியச்சூத்திரம்: பிற்காலத்தார், பொலம் என்றே பொன்னுர்கு ஒருபெயர் கூறுவர். கழல் - வீரர்காலணி. துளபம் - துளஸீ என்ற வடசொல்லின் சிதைவு; இது திருமாலுக்கும், அப்பெருமானது திருவவதார மூர்த்திகளுக்கும் உரியது. (கரு)

இதுமுதல் மூன்று கவிகள் - கண்ணன் தருமனைநோக்கிக்கூறுவன.

வில்லியரில்வேலாளில்வாளெடுத்தோர்தம்மிலொருவேந்தரொவ்வார்
செல்லியல்வெம்பரியாளிற்கரியாளிற்றேராளிற்சிலர்வேறொவ்வார்
மல்லியல்பொற்றோள்வலிக்குந்தண்டுக்குமெதிர்ந்துபொரவல்லார்யார்
சல்லியனுக்கொப்பார்நின்றம்பியரிலிலரென்றுஞ்சாற்றினனே. [ரே

(இ - ள்.) வில்லியரில் - வில்வீரர்களிலும், வேலாளில் - வேல்வீரர்களிலும், வாள் எடுத்தோர்தம்மில் - வாள்வீரர்களிலும், ஒரு வேந்தர் - ஓரரசரும், ஒவ்வார் - (சல்லியனுக்கு) ஒப்பாகமாட்டார்: வேறு - மற்றும், செல் இயல் - (அழகிதாகச் செல்லுந்தன்மையுள்ள, வெம் - வேகத்தையுடைய, பரி - குதிரைமேலேறிய, ஆளில் - வீரர்களிலும், கரி ஆளில் - யானைவீரர்களிலும், தேர் ஆளில் - தேர்வீரர்களிலும், சிலர் ஒவ்வார் - எவரும் (அவனுக்கு) ஒப்பாகமாட்டார்: மல் இயல் - பலம்பொருந்தின, பொன் - அழகிய, தோள் - புயங்களின், வலிக்கும் - வலிமையாலும், தண்டுக்கும் - கதாயுதத்தாலும், எதிர்ந்து பொர வல்லார் - (சல்லியனை) எதிர்த்துப் போர்செய்யவல்லவர், யாரே - எவர் உள்ளார்? [எவருமில்லை யென்றபடி]; சல்லியனுக்கு ஒப்பார் - சல்லியனுக்குச் சமானமானவர், நின் தம்பியரில் இலர் - உனதுதம்பிமார்களிலும் இல்லை, என்றும் சாற்றினன் - என்றும் (கண்ணன்) கூறினன்; (எ - று.)

புஜபலத்திலும் கதாயுதப்பயிற்சியிலும் சல்லியன் மிகமேம்பட்டவனாதலால், அவனுக்குச் சமானமானவர் அறுவகைப்பட்ட வீரரிலு மில்லை; மிகச்சிறந்த உனது தம்பிமாரும் அவனுக்கு ஒப்பாகார் என்றன னென்பதாம். என்றது, நீயே அவனுக்குச் சமானமானவ னென்றவாறு; அத்தன்மை, அடுத்த கவியால் விளங்கும். செல் இயல் - (விரைவில்) மேகம்போன்ற தன்மையுள்ள என்றும் உரைக்கலாம். மல் இயல் - மற்போரிற் பயின்ற எனினுமாம். மல் -

ஆயுதமில்லாமலே தேகபலத்தால் உடம்பினுறுப்புக்களைக்கொண்டு எதிர்த்து மோதிச் செய்யும் போர். பொற்றோள் - பொன்னாபரணம் அணிந்த தோளுமாம்; பொன் - கருவியாகுபெயர். 'நின்தம்பியரில் இலர்' என்றது, அருத்தாபத்தியால், நீயே ஒப்பவ னென்பதைக் காட்டிற்று.

பரி - (பாரத்தைப்) பரிப்பது; பரித்தல் - சுமத்தல். கரம் - கை; இங்கே, துதிக்கை: அதனையுடையது கரி என வடமொழிக்காரணப்பெயர். இதற்கு - கருமைநிறமுடையதெனத் தமிழ்வகையாற் காரணப்பொருள் கூறலாகாது; வடசொல்லாதலின். தண்டு - தண்டமென்பதன் விகாரம். தம்பி - தமக்குப் பின்பிறந்தவன்; பி - முறைப்பொருள்விகுதி. வலிக்கும், தண்டுக்கும் என்றவற்றில், நான்கனுருபு மூன்றனுருபின் பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். தோள்வலிமையிலும் கதைப்போரிலும் மிகச்சிறந்த வீமனும் தனியே சல்லியனோடு எதிர்த்துப் போர்செய்து வெல்லவல்லவ னல்ல னென்பது, மூன்றாமடியின் உட்கோள். (கஎ)

அருவரையோரிரண்டிருபாலமைந்தனையதடம்புயங்கண்டவனி வேந்தர், வெருவருபோர்மத்திரத்தான் நீன்மேலன்றி யிருவருமேமுனைந்துமுனைந் திரவிகடல்விழுமளவுமிகல் செய்தாலு, மொருவரொருவரைவேறலொண்ணாதின் றுமக்கென்று முரைசெய்தானே.

(இ - ள்) அரு - அழித்தற்குஅரிய, வரை ஓர் இரண்டு - இரண்டுமலைகள், இரு பால் - இரண்டுபக்கங்களிலும், அமைந்து அனைய - பொருந்தினாற் போன்ற, தட புயம் - பெரிய (தனது) தோள்களை, கண்டு - பார்த்து, அவனி வேந்தர் - பூமியையாளுகிற அரசர்கள், வெருவரு - அஞ்சும்படியாகவுள்ள, போர் மத்திரத்தான் - போரில்வல்லவனான சல்லியன், இன்று - இன்றைக்கு, நின்மேல் அன்றி - உன்மேலல்லாமல், வேறு ஒருவர் மேல்—,செல்லான் - (போர்செய்தற்குச்) செல்லான்: இருவருமே - நீங்கள் இரண்டுபேருமே, முனைந்து முனைந்து - மிகவும்உக்கிரங்கொண்டு, இரவி கடல் விழும் அளவும் - சூரியன் மேல்கடலில்விழுந்து அஸ்தமிக்கும்வரையிலும், இகல் செய்தாலும் - போர்செய்தாலும், உமக்கு - உங்களுக்கு, ஒருவர் ஒருவரை வேறல் ஒண்ணாது - ஒருவர் மற்றொருத்தரை வெல்லுதல் முடியாது, என்றும் உரைசெய்தான் - என்றுங் கூறினான், (கண்ணன்); (எ - று.)

உன்னாலும் தனியே சல்லியனை யெதிர்த்துப் பொருது வெல்லமுடியாதென்பது, இதன் உட்கோள். வரை யென்னுங் கணுவின் பெயர், அதனையுடைய மூங்கிலுக்குச் சினையாகுபெயரும், அது பின்பு மூங்கில்விளையும் மலைக்குத் தானிபாகுபெயருமாதலால், இருமடியாகுபெயர். தோளுக்கு மலையுவமை, பருமைக்கும், ஆயுதங்களால் அழித்தற்குஅரிய வலிமைக்கு மென்க. முதலடி- உவமையணி. அவநி என்ற வடசொல் - காக்கப்படுதற்கு உரிய தென்று காரணப்பொருள்படும். வெருவரு - வெருவு வா என்ற இரண்டுபகுதிகளுஞ் சேர்ந்து ஒருசொல்தன்மைப்பட்ட வெருவா என்பதன் விகாரம். "முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலை" என்றபடி இருவிர் என முன்னிலையாக் கூறவேண்டுமிடத்து, இருவர் எனப் படர்க்கையாக் கூறினது - இடவழுவமைதி. சூரியனுதியோரது உதயஅஸ்தமனங்களைக் கீழ்கடலினின்று எழுந்து மேல்கடலில் மூழ்குவதாகக் கூறுதல், கவிமரபு. வேறல் - தொழிற்பெயர்; வெல் - பகுதி, முதல்நீண்டது; தல் - விகுதி: மற்றவை - சந்தி. ஒண்ணாது - ஒன்றாது என்றதன் மரூஉ. அமைந்து - எச்சத்திரிபு. முனைந்து முனைந்து - அடுக்கு, மிகுதிப்பொருளது. (கஅ)

பார்த்தனொருவனுஞ்சென்றுபரித்தாமாவுடன்மலையப்படைஞரோடு
மாத்திரிமைந்தரிலிளையோன்சௌபலனைவெல்லவிகன்மாவலோனு
மூத்தவன்மைந்தரைவெல்லமுனைப்பவனன்மைந்தனொடுமூண்டுவெம்போர்
கோத்தருமமத்திரத்தார்கோவையுயிர்கவர்தியெனக்கூறியிட்டான்.

(இ - ள்.) கோ தரும - தருமராசனே! பார்த்தன் ஒருவனும் சென்று - அருச்சுனனொருத்தன்மாத்திரம் தனியேபோய், பரித்தாமாவுடன் மலைய - அசுவத்தாமாவுடன் போர்செய்ய,—மாத்திரி மைந்தரில் இளையோன் - மாத்திரியின்புத்திரரிருவருள் இளையவனான சகதேவன், படைஞரோடும் - சேனைவீரர்களுடனே (சென்று), சௌபலனை வெல்ல - சகுனியைச் சயிக்க,—இகல் மாவலோனும் - வலியகுதிரைத்தொழிலிலே வல்லவனான நகுலனும், மூத்தவன் மைந்தரை வெல்ல - (உங்கள்) தமையனான கர்ணனது புத்திரர்களைச் சயிக்க,— (நீ), முனை பவனன் மைந்தனொடு - போர்வன்மையுடைய வாயுகுமாரனான வீமனுடனே, (சென்று), வெம் போர் மூண்டு - கொடிய யுத்தத்தை முயன்று செய்து, மத்திரத்தார் கோவை - மத்திரநாட்டார்க்கு அரசனான சல்லியனை, உயிர் கவர்தி - கொல்வாய், என - என்று, கூறியிட்டான் - (கண்ணன்) சொல்லிமுடித்தான்; (எ - று.)

அருச்சுனன் முதலிய மூவரையும் வெவ்வேறுவீரர்களுடன் போர்செய்யச் செலுத்திவிட்டு நீயும் வீமனும் ஒருங்கேசென்று சல்லியனை யெதிர்த்துப் பொருது உயிர்வாங்கவேண்டு மென்றான். பார்த்தன் - பிருதையின் மகன்; வடமொழித் தத்திதாந்தநாமம்; (பிருதை யென்பது - குந்தியின் இயற்பெயர்:) பார்த்தன் என்றது - சிறப்பாய், அருச்சுனனைக் குறிக்கும். பரி, அசுவம் என்பன - குதிரையாகிய ஒருபொருளைக் குறிப்பன வாதலால், அசுவத்தாமாவைப் பரித்தாமா வென்றார்; புரவித்தாமா, துரகத்தாமா, இவுளித்தாமா வென்றுங் கூறுவர். அசுவத்தாம னென்பது - குதிரையைப் பிறப்பிடமாகவுடையவ னென்று பொருள்படும். படைஞர், ஞ் - பெயரிடைநிலை. மாத்திரி - மத்திரதேசத்துஅரசன்மகள்; சௌபலன் - சுபலனென்னும்அரசனது குமாரன்; இவையும், வடமொழித் தத்திதாந்தநாமம். நகுலன் குதிரைத்தொழிலில் வல்லவனாதல், அஜ்ஞாதவாசத்திலும் பிரசித்தம். (௧௧)

வேறு.

திட்டத்துய்மன் அணிவகுத்தலும், இரண்டுசேனையும் போர்தொடங்கலும்.

கிருபையாலுயர்கேசவனிங்கிதக்கேள்விகளுணர்வுடன்கேட்டுத்
துருபதேயனுந்தன்பெருஞ்சேனையைத்துன்றியவியூகமாத்தொடுத்து
நிருபர்யாவருஞ்சூழ்வரத்தாழ்சலநிதியெனவிதியெனநின்றான் [வே.
பொருபதாகினியிரண்டினுமுனையுறப்போர்வல்லோர்தூசிகள்பொர

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) கிருபையால் உயர் - அருளினாற் சிறந்த, கேசவன் - கண்ணபிரானது, இங்கிதம் கேள்விகள் - குறிப்பான உபதேசவார்த்தைகளை, உணர்வுடன் கேட்டு - மனத்தெளிவோடு (தருமபுத்திரன்) கேட்டவுடன்,—துருபதேயனும் - துருபதராசகுமாரனான திருஷ்டத்யும்நனும், தன் பெரு சேனையை - தன்பக்கத்துப் பெரிய சேனையை, துன்றிய வியூகம் ஆ தொடுத்து - நெருங்கிய படைவகுப்பாக அணிவகுத்து, நிருபர் யாவரும் சூழ்வர - அரசர்களெல்லோரும் (தன்னைச்) சுற்றிலும் வர, (அவர்கள்நடுவில்), தாழ் சலநிதி என - ஆழ்ந்த கடல்போலவும், விதி என - பிரமன்போலவும், நின்றான் - (சிறப்பாக) நின்றான்; (பின்பு), பொரு பதாகினி இரண்டினும் - போருக்குச்சித்தமான இரண்டுசேனைகளிலும், போர் வல்லோர் தூசிகள் - போரில்வல்ல வீரர்களது

முன்னணிச்சேனைகள், முனை உற பொர - முற்படப் போர்செய்ய, (எ - று.) —அப்பொழுது சல்லியன் தருமன்மேல் வந்தான் என வருங்கவியில் முடியும்.

எதற்குங்கலங்காத கம்பீரமான தோற்றத்துக்கு ஆழ்ந்த கடலையும், ஒழுங்காகப்படைவகுத்த திறமைக்குப் படைத்தற்கடவுளான பிரமனையும் உவமை கூறினர். கேசவன் என்ற வடமொழித்திருநாமம் - பிரமனையும் சிவனையும் தன்அங்கத்திற் கொண்டவ னென்றும் [க - பிரமன், ஈச - சிவன்], மயிர்முடியழகுடையவ னென்றும் [கேசம் - தலைமயிர்முடி], கேசியென்னும்அசுரனைக் கொன்றவ னென்றுங் காரணப்பொருள்படும். இங்கிதம், ஜலநிதி, பதாகிநீ - வடசொற்கள். கேள்வி - கேட்டற்கு உரிய பொருள். த்ருபதேயன் - தத்திதாந்தநாமம். பெருஞ்சேனை - பெருமையையுடைய சேனை; அதிகமானசேனை யெனின், பதினெட்டாஞ்செய்யுளில் 'சிலபடை' என்றதோடு மாறுகொளக்கூறலாம். ஜலநிதி - நீர்நிறையுமிடம். பதாகா - கொடி; அதனையுடையது, பதாகிநீ. 'கேட்டு' என்பதை, கேட்க வென எச்சத்திரிபாக்கி, 'நின்றான்' என்பதனோடு முடிக்க. ஆ - ஆக வென்பதன் தொகுத்தல்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஈற்றுச்சீரும் மாச்சீர்களும், மற்றையைந்தும் விளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (உ0)

சல்லியன் தருமன்மேற் போருக்கு வருதல்.

ஆயபோதினிற்குருபதிபதாகினிக்கதிபதியாயபூபதியம் [ன்
மாயவன்புகல்மொழிப்படி தருமன்மாமதலைமேல்விரைவுடன்வந்தா
காயும்வெங்கனற்கண்ணினன்செவியுறக்கார்முகங்குனித்தசெங்கரத்
தீயவாகியசிலீமுகமுரனுறச்சொரிதருசிங்கவேறனையான். [தான்

(இ - ள்.) ஆய போதினில் - இவ்வாறான அச்சமயத்தில்,—குருபதி பதாகினிக்கு அதிபதி ஆய பூபதி - குருகுலத்துக்குத் தலைவனான துரியோதனனது சேனைக்குத் தலைவனாகிய சல்லியராசன்,—காயும் - கொதிக்கிற, வெம் - கொடிய, கனல் - நெருப்பைச்சொரிகிற, கண்ணினன் - கண்களையுடையவனும், செவி உற - தன்காதினை யளாவ, கார்முகம் குனித்த - வில்லைவளைத்து நாணியையிழுத்த, செம் கரத்தான் - சிவந்த கையையுடையவனும், தீய ஆகிய - கொடியவையான, சிலீமுகம் - அம்புகளை, உரன் உற - வலிமை பொருந்த, சொரிதரு - மிகுதியாகஎய்கிற, சிங்கம் ஏறு அனையான் - ஆண்சிங்கம்போன்றவனுமாய்,—அ மாயவன் புகல் மொழிப்படி தருமன் மா மதலைமேல் விரைவுடன் வந்தான் - கண்ணன் கீழ்ச்சொன்னவார்த்தையின்படியே சிறந்ததருமபுத்திரன்மேல் துரிதமாக வந்தான்; (எ - று.)

ஆய, ய் - இறந்தகாலஇடைநிலை. போது - பொழுது என்பதன் மரூஉ. பூபதி - பூமிக்குத் தலைவன். முதலடியில், 'தி' என்ற எழுத்துப் பலமுறை வந்தது, பிராசமென்னுஞ் சொல்லணியின்பாற்படும். கண்ணினன், கரத்தான், அனையான் என்ற மூன்றும் - குறிப்புமுற்றுவினையெச்சம். 'செவியுற' என்பதை 'செவ்வியுற' என்றதன் தொகுத்தலாக் கொண்டு, அழகுமிக என்றலும் ஒன்று. கார்முகம் என்ற வடசொல் - தொழிலிற் சிறந்த தென்றும் [கர்மம் - தொழில்], சிலீமுகம் என்றது - கூர்மையைநுனியிலுடைய தென்றும் [சிலீ - கூர்மை] காரணப்பொருள்படும். தீய - பெயர். ஏறு - ஆண்பாற்பெயர். வீரனுக்கு ஆண்சிங்கம் - பலபராக்கிரமங்களாலும், நடையாலும், உவமம். தற்காலத்தில் குருநாட்டையாள்பவன் துரியோதனனாதலால், குருபதி யெனப்பட்டான். சொரிதரு என்றதில், தா - துணைவினை. (உக)

தருமன் சல்லியனை யெதிர்த்துப் போர்தொடங்கல்.

எதிரிதேர்வரும்வன்மைகண்டிமிழ்முரசெழுதியகொடிநராதிப னுங்,கதிரினேழ்பரித்தேரினுங்கடியதன்கவனமான்றேரெதிர்கடவி, முதிரமேல்வருங்கணைகளைக்கணைகளான்முனைகொடுமுனைகொள்கார் விசும்பிற், பிதிர்படும்படிதொடுத்தனன்முடித்தடக்கையினிற்பிடித் தவிற்குனித்தே.

(இ - ள்.) எதிரி தேர் வரும் வன்மை கண்டு - (தன்னை) எதிர்ப்பவனான சல்லியனது தேர் வருகிற வலிமையைப் பார்த்து,—இமிழ் முரசு எழுதிய கொடி நர அதிபனும் - பேரொலிசெய்கிற முரசவாத்தியத்தின் வடிவத்தை யெழுதிய கொடியையுடைய தருமராசனும்—,கதிரின் ஏழ் பரி தேரினும் கடிய - ஏழுகுதிரைகளையுடைய சூரியனது தேரைக்காட்டிலும் விரைவுள்ள, தன் கவனம் மான் தேர் - விரைந்தநடையையுடைய குதிரைகள் பூட்டிய தனது தேரை,எதிர் கடவி-எதிரிலேசெலுத்தி,—தொடி தட கையினில் பிடித்த வில் குனித்து - தொடியென்னும்வளையையணிந்த பெரியதனதுகையிற்பிடித்த வில்லை வளைத்து,—முதிர மேல் வரும் கணைகளை - மிகுதியாகத் தன்மேல் வருகிற (சல்லியனது) அம்புகளை, கணைகளால் - (தனது) அம்புகளால், முனை கொடு முனை - நுனியால் நுனி, கார் கொள் விசும்பில் பிதிர் படும்படி - கரு நிறங்கொண்ட ஆகாயத்திலே பொடியாய்விடும்படி, தொடுத்தனன் - பாணப் பிரயோகஞ்செய்தான்; (எ - று.)

தனது அம்புகளால் எதிரியின்அம்புகளைத் தாக்கித் தனது அம்புமுனையைக் கொண்டு எதிரியின்அம்புமுனையை வழியிடையிலேயே பொடியாக்கும்படி அம்புசெலுத்தின னென்பதாம். எதிரி, இ - கர்த்தாப்பொருள்விகுதி. நர அதி பன் - மனிதர்க்குத் தலைவன்; வடமொழித்தொடர். கதிரின் ஏழ்பரி - காயத் ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என்னும் ஏழு சந் தசுகளின் வடிவமான ஏழுகுதிரைகள்; இனி, ஒருகுதிரைக்கே ஏழுபெய ரென் றலும், ஏழ் [ஸப்த] என்று பெயர்பூண்ட குதிரையொன்றே யென்றலும் உண் டு. கவனம் - கமந மென்ற வடசொல் திரிந்தது. மான், ன் - சாரியை; [நன் - உருபு-கூ.] கார் - கருமை யென்னும் பண்பு ஈறுபோய் ஆதிநீண்டு இடை உகரமுங்கெட்டது. (உஉ)

அவர்களதேர் நெருங்கியதை இதில் வருணிக்கிறர்.

கொடிஞ்சிமாவினெடுந்தேர்களிற்பூட்டியகுரகதக்குரம்படப்படம ண், ணிடிஞ்சுமேலெழுதூளிமுற்பகல்வருமிரவினைநிகர்த்ததவ்விரவு, விடிஞ்சதாமெனப்பரந்ததத்தேர்களின்மின்னியமணிகளின்வெயில் போய்ப், படிஞ்சதூளியோர்நடம்பயிலரங்கினிற்பரப்பியவெழினி போன்றதுவே.

(இ - ள்.) கொடிஞ்சி - கொடிஞ்சியென்னுமுறுப்பையுடைய, மால் - பெ ரிய, நெடு - உயர்ந்த, தேர்களில் - (அவ்விருவருடைய) இரதங்களில், பூட்டிய - பூட்டப்பட்டுள்ள, குரகதம் - குதிரைகளின், குரம் - குளம்புகள், பட பட - மேற்படுந்தோறும், மண் இடிஞ்சு - தரை இடிபடுதலால், மேல் எழு - மேலே கிளம்புகிற, தூளி - புழுதி, முன் பகல் வரும் இரவினை நிகர்த்தது - பகற்பொ ழுதுக்குமுன்னே வருகிற இராத்திரியைப் போன்றது; அ இரவு விடிஞ்சது ஆம் என - அந்தஇராப்பொழுது கழிந்து சூரியோதயமானதுபோல, அ தேர் களின் மின்னிய மணிகளின் வெயில் - அந்தத்தேர்களிலேவிளங்குகிற இரத் தினங்களின் வெவ்விய ஒளி, பரந்தது - பரவிற்று; போய் படிஞ்ச தூளி - (அவ்விரத்தினங்களின்மேற்) சென்றுபடிந்த புழுதி, ஓர் நடம் பயில் அரங்கி

னில் பரப்பிய எழினி போன்றது - கூத்தாடுமிடத்திற் பரப்பப்பட்ட தொரு திரைச்சீலையை யொத்தது; (எ - று.)

முதல்வாக்கியத்தில் - இருட்சியையுண்டாக்கும் புழுதிக்கு இருட்பொழுதான இராத்திரியையும், இரண்டாம்வாக்கியத்தில் - அப்புழுதியின்அடர்த்தியாலான இருட்சி தேர்களின்இரத்தினகாந்தியால் நீங்கினமைக்குச் சூரியகாந்தியால் இருள் ஒழிதலையும், மூன்றும் வாக்கியத்தில் – பின்பு அவ்விரத்தினங்களின்மேற்படிந்த புழுதிக்கு நர்த்தனசாலையில் மறைவுக்காகஇடப்படும் கரிய திரைச்சீலையையும் உவமைகூறினா ரென அறிக. உவமையணி. கொடிஞ்சி - தேரின் மேலுறுப்பு; இனி, தாமரைமலரின் வடிவமாகச் செய்து தேரின் முன்னிடத்து வைக்கப்படுவதோர் உறுப்பு என்றலும் உண்டு. தூரகத மென்ற வடசொல் - (ஒற்றைக்) குளம்புகளாற் செல்வ தென்று காரணப்பொருள்படும். படப்பட என்பதில், அடுக்கு - தோறுமென்னும்பொருளது. இடிஞ்சு, விடிஞ்சது, படிஞ்ச - இடிந்து, விடிந்தது, படிந்த என்றவற்றின் போலி. தூளீ, நடம்-வடசொற்கள். ஆம் - அசை. வெயில் - வெப்பமுடைய தெனக் காரணக்குறி: வெம்மையென்னும் பண்புப்பகுதி ஈறுபோய் முன்நின்ற மெய் திரிந்து வெய் எனநின்றது; இல் - பெயர்விகுதி. அரங்கு - ரங்க மென்ற வடசொல்லின் திரிபு. (௨௩)

இருவரும் சங்கநாதஞ்செய்தல்.

தன்பெருந்தனிச்சங்கினைமுழக்கினன் றருமன்மாமதலையுந்தனது, வன்பெரும்பணைச்சங்கினைமுழக்கினன்மத்திராதிபன்றிருமகனும்,
நன்பெருந்துளைச்சங்குகளெழுப்பியநாதம்வான்முகடுறநண்ணி,மின்
பெரும்புயலேழுமொத்ததிர்தலின்மிகுகுரற்றனிதமொத்துளதே.

(இ - ள்.) தருமன் மா மதலையும் - யமனது சிறந்த குமாரனான யுதிட்டிரனும், தன் பெரு தனி சங்கினை - தனது பெரிய ஒப்பில்லாத சங்கத்தை, முழங்கினன் - (வாயில்வைத்துஊதி) ஒலிப்பித்தான்; மத்திர அதிபன் திரு மகனும் - மத்திரதேசத்தரசனது சிறந்தபுத்திரனான சல்லியனும், தனது வல் பெரு பணை சங்கினை - தன்னுடைய வலிய பெருமையுள்ள பருத்த சங்கத்தை, முழங்கினன் - (வாயில்வைத்துஊதி) ஒலிப்பித்தான்: (இவ்வாறு), நல் பெரு துளை சங்குகள் - அழகிய பெரிய உள்துளையுள்ள சங்கங்கள், எழுப்பிய - உண்டாக்கின, நாதம் - ஓசை, வான் முகடு உற - ஆகாயத்தின் மேலிடத்தை யளாவ, நண்ணி - சேர்ந்து, மின் பெரு புயல் ஏழும் ஒத்து அதிர்தலின் மிகு குரல் தனிதம் ஒத்து உளது - மின்னுகிற பெரிய எழுவகைமேகங்களும் ஒருமித்து ஆரவாரித்தலால் மிக்க முழக்கத்தையுடைய இடியைப் போன்றுள்ளது; (எ - று.)

கற்பாந்தகாலத்தில் ஏழுமேகங்களும் ஒருங்கேயெழுந்து ஒலிக்கிற இடியின் முழக்கத்தைப் போன்றது அந்தச்சங்கநாத மென்பதாம். உவமையணி. வெற்றிக்கு அறிகுறியாகவும், போரில் உற்சாகம் நிகழ்தற்பொருட்டும், சங்கத்தொனிசெய்தல், இயல்பு. சங்கம் என்ற வடசொல், சங்கென விகாரப்பட்டது. நாதம், ஸ்தநிதம் - வடசொற்கள். புயலேழ் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புஷ்கலாவர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன. (௨௪)

இருவரும் விற்போர்செய்தல்.

வில்லெடுத்தனர்வலியுடைநிலையினர்வீக்கிநாண்விரல்களிற்றெறித்து, மல்லெடுத்ததோள்வலனுறவளைத்தனர்வடிக்கணைமுனையுற
வடசிச்,செல்லெடுத்தபேரிடியெனமுறைமுறைதொடுத்தனர்தேர்களுஞ்செலுத்திக், கல்லெடுத்தெதிர்மலைந்தவாலியுமணிக்கழுத்துடையவனுமேயனையார்.

(இ - ள்.) கல் எடுத்து - மலைகளைக் கையில் ஏந்திக்கொண்டு, எதிர் மலைந்த - (ஒருவரோடு ஒருவர்) எதிர்த்துப் போர்செய்த, வாலியும் மணி கழுத்து உடையவனுமே - வாலிசுக்கிரீவர்களையே, அனையார் - ஒத்தவராகிய தருமனும் சல்லியனும்,—தேர்களும் செலுத்தி - தங்கள் தேர்களை (ஒன்றோடு ஒன்று நெருங்கச்) செலுத்திக்கொண்டு, வில் எடுத்தனர் - (கையில்) வில்லையேந்தியவர்களாய், வலி உடை நிலையினர்-வலிமையுள்ள (விற்போர்க்குஉரிய) நிற்கும் நிலையையுடையவர்களாய், மல் எடுத்த தோள் வலன் உற வளைத்தனர் - பலம் மிக்க தோள்களின் வலிமை பொருந்த வில்லை வளைத்தவர்களாய், நாண் வீக்கி-நாணியை (வில்லிலே)பூட்டி, விரல்களின் தெறித்து - (அந்தவில்நாணியைச்) கைவிரல்களால் தெறித்து ஓசையுண்டாக்கி,வடி கணை மூனை உற அடசி-கூரிய அம்புகளைப் போர்க்குப்பொருந்துமாறு வில்லில்வைத்து, செல் எடுத்த பேர் இடி என - மேகங் கொள்ளுகிற பெரியஇடியைப்போல, முறை முறை தொடுத்தனர் - ஒருவர்மேல் ஒருவர் பிரயோகித்தார்கள்; (எ - று.)

நிலை - போரில்வில்வளைத்து அம்பினை யெய்வார்க்கு உரிய நிலை; அது - பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரதியாலீடம் என நான்குவகைப்படும்: இவற்றுள், ஒருகாலில்நின்று ஒருகால் முடக்கல் - பைசாசநிலை, இருகாலும் பக்கல் வளைய மண்டலித்தல் - மண்டலநிலை, வலக்கால்மண்டலித்து இடக்கால் முந்துறல் - ஆலீடநிலை, வலக்கால்முந்துற்று இடக்கால் மண்டலித்தல் - பிரதியாலீடநிலை. சாபத்தாற் பெண்வடிவமான ருக்ஷரஜஸ்என்கிற வானரராசனது வாலின்அழகைக் கண்டு காதல்கொண்ட இந்திரனுக்கு அப்பெண்குரங்கினிடம் பிறந்தவன் வாலி யென்றும்,அவ்வாறே அதன்கழுத்தினழகைக்கண்டு காமுற்ற சூரியனுக்கு அதனிடத்தில் தோன்றியவன்-சுக்கிரீவனென்றும் உணர்க. வாலீ-வாலில்வலிமையுடையவ னென்று காரணப்பொருள்படும்; அப்பெயர், ஈறு இகரமாயிற்று. வாலி வலியவாலுடையனாதலே, அவன் இராவணனை வாலினாற் கட்டியமைகொண்டும் உணர்க. சுகிரீவன் என்ற பெயர் - அழகியகழுத்துடையவ னென்று பொருள்படும்; அப்பெயரின்பொருளை மொழிபெயர்த்து 'மணிக் கழுத்துடையவன்' என்றார்: மணி - அழகு. உடன்பிறந்தவர்களான வாலிசுக்கிரீவருள் மூத்தவனாகிய வாலி தனதுவல்லமையால் வானரங்களையெல்லாம் அடக்கியாளும்அரசனாகிக் கிஷ்கிந்தாபட்டணத்தில் தனதுதம்பியான சுக்கிரீவனை இளவரசனாகக்கொண்டு தான் அரசாண்டுவரும்பொழுது, அவனிடம் வயிரங்கொண்ட மாயாவியென்னும் அசுரன் வந்துஎதிர்த்தான்; தன்னையெதிர்ந்தார்வலிமையிற் பாதி உடனே தன்னிடம்வந்துசேரும்படி வரம்பெற்றுள்ள வாலி அவனுடன் பொருகையில், அவன் முன்நிற்கமாட்டாமல் அஞ்சியோடும்போது வாலி துரத்திச்செல்ல, அசுரன் பிலத்துவாரவழியாய்ப் பாதாளலோகத்தினுட் புக்கான்; அப்பொழுது வாலி தன்னுடன்வந்தசுக்கிரீவனைப் பிலத்துவாரத்தின்வாயிலிற் காவல்வைத்துவிட்டு 'யான் அவ்வசுரனைப்பிடித்துக்கொண்டு வருவேன்' என்று சொல்லி அதனுள் இறங்கிப் பாதாளஞ்சேர்ந்து மாயாவியைத்தேடிக்கண்டுபிடித்துப் போர்செய்கையில் இருபத்தெட்டுமாதங்கழிந்தன; அவ்வளவுநாள்வரையிலும் வாலி மீண்டுவாராமைபற்றிச் சுக்கிரீவன் கவலைப்பட்டுக்கொண்டே வாயில்காவல்செய்கையில் பாதாளத்திலே வாலி மாயாவியைக் கொன்றாகை, அவனதுஇரத்தம் பிலத்துவாரமளவும் வந்தது; அதுகண்டு சுக்கிரீவன், மாயாவி வாலியைக்கொன்றிட்டானென்று மாறாக்கருதி மிக்கசோகங்கொண்டு, அவ்வசுரன் தன்னையுங் கொல்லுதற்கு நாடிவாராதவண்ணம் அப்பிலத்துவாரத்தைப் பெருங்கற்களால்மூடிவிட்டுக் கிஷ்கிந்தைசேர்ந்து மந்திரிகளின் வேண்டுகோளால் முடிசூடி அரசாண்டிருந்தான்; இப்படியிருக்கையில், மாயாவியைக்கொன்ற வாலி விரைவில்மீண்டுவந்து பிலத்துவாரத்தையடைத்த கற்களைக் காலாலுதைத்துத்தள்ளி வெளிப்பட்டுத் தம்பியைக்காணாமற் கோபங்

கொண்டு நகரஞ்சேர்ந்து செய்தியறிந்து சமீபிக்கையில், சுக்கிரீவன் எதிர்கொண்டுசென்று தனது பேதைமையையும் பிழையையுஞ் சொல்லி வணங்கிப் பொறுத்தருளும்படி மிகவேண்டவுங் கேளாமல் வாலி சுக்கிரீவனைப் போருக்கு அழைக்க, இருவரும் மலைகளைப் போர்க்கருவியாகக்கொண்டு நெடும்பொழுது போர்செய்தன ரென வரலாறு அறிக.

உடைய என்னுங் குறிப்புப்பெயரெச்சத்து அகரம் தொக்கு உடை என நின்றது. வலன் - பல மென்ற வடசொல்லின் திரிபு. செல் - (விரைந்து) செல்லுதல்பற்றி மேகத்துக்கு வந்த காரணப்பெயர். அடசி, அடசு - பகுதி; இது, போலியாய், அடைசி யெனவும் நிற்கும். ஈற்றடி - உவமையணி. (உ௫)

இருவரும் சிறிதுபொழுது சமமாகப் பொருதல்.

எய்தவம்புகளிருவர்மெய்யினும்படாதிடையிடையெஃகுடைத் தலைகள், கொய்தவம்புகளாகியேமுழுவதும்விழுந்தனகூறுவதென் கொல், கைதவம்புகலுதற்கிலாவெண்ணுடைக்கருத்தினர்திருத்தகு வரத்தாற், செய்தவம்புரையறப்பலித்தனையவர்திருக்கணுங்கைகளுஞ்சிவந்தார்.

(இ - ள்.) எய்த அம்புகள் - (இரண்டுபேரும்) செலுத்திய பாணங்கள், இருவர் மெய்யினும் படாது - இரண்டுபேருடைய உடம்பிலும் படாமல், இடை இடை - நடுவிலேநடுவிலே, எஃகு உடை தலைகள் கொய்த அம்புகள் ஆகி - கூர்மையுடைய நுனி துணிபட்ட பாணங்களாகி, முழுவதும் விழுந்தன - எங்குங் கீழ்விழுந்திட்டன; கூறுவது என் கொல் - (அவர்கள்போர்த்திறத்தைப்பற்றிச்) சொல்லவேண்டுவ தென்ன! கைதவம் புகலுதற்கு இலா எண் உடை கருத்தினர் - வஞ்சனையுள்ளதென்று சொல்லுதற்குச் சிறிதும்இடமில்லாத நல்லெண்ணமுடைய மனத்தையுடையவர்களும், திரு தகு வரத்தால் - மேன்மை பொருந்திய வரங்களைப் பெறும்படி, செய் - செய்த, தவம் - தபசு, புரை அற - பழுதுபடாமல், பலித்து அனையவர் - பயன்பட்டாற் போன்றவர்களுமான அவ்விருவரும், திரு கணும் கைகளும் சிவந்தார் - (யுத்தாவேசத்தால்) அழகிய தங்கள் கண்களும் கைகளும் செந்நிறமடையப் பெற்றார்கள்; (எ - று.)

வஞ்சகமான எண்ணம் சிறிதும்இல்லாதவர்களும், நற்றவப்பயன் சித்தி பெற்றாற்போல வேண்டியதுபெறவல்லவர்களு மான தருமனும் சல்லியனும் மிக்ககோபத்தாற் கண்சிவந்து இடைவிடாது விற்பிடித்து அம்புதொடுத்தலாற் கைசிவந்து பொருகையில் இருவரும் ஒருவர்மேலொருவர் எய்த அம்புகளெல்லாம் தம்மில் ஒன்றோடொன்று தாக்கி அழிந்து இடையிற் கீழ்விழுந்திட்டன; இப்படி குறிதவறாமல் எதிரெதிரே அம்புதொடுத்துப் பொருத வியப்புக் கூறுதற்கு அரிது என்பதாம்.

மெய்யின், இன் - ஏழனுருபு. கொல் - அசை. கைதவம், வரம், தபஸ் - வடசொற்கள். வரம் - வேண்டுவனபெறுதல். கைகளும் கண்களும் சிவந்தார் - உயர்திணைதொடர்ந்த அஃறிணைச்சினைப்பெயர் அவ்வுயர்திணைமுடிபையே கொண்ட திணைவழுவமைதி; [நன் - பொது - உ௩.] (உ௬)

சல்லியன் தருமனது பாகனையும் வில்லையும் குடையையும் அழித்தல்.

கிரித்தடங்குவடனையகேசரிநிகர்சல்லியன்முரசகேதனன்றன், பரித்தடந்தனித்தேர்விடும்பாகனைப்பாணமொன்றாற்றலைதுணித்து, வரித்தடஞ்சிலைநாணறுத்தொருமுனைவாளியால் வடிக்கணையொன்றால், விரித்ததண்குடைமகுடமுமொடித்தனன்வில்வலோரெவரினுமிக்கோன்.

(இ - ள்.) (பின்பு),—வில் வலோர் எவரினும் மிக்கோன் - விற்போரில் வல்லவர்யாவரினுஞ்சிறந்தவனாகிய, தட கிரி குவடு அனைய கேசரி நிகர் சல்லியன் - பெரியமலைச்சிகரத்தையொத்தவனும் ஆண்சிங்கம்போன்றவனுமான சல்லியன்,—முரசகேதனன்தன் - முரசவாத்தியத்தின்வடிவமெழுதிய கொடியையுடைய தருமனது, பரி தட தனி தேர் விடும் பாகனை - குதிரைகள்பூண்ட பெரிய ஒப்பற்ற தேரைச் செலுத்துஞ் சாரதியை,பாணம் ஒன்றால் தலை துணித்து - ஓரம்பினால் தலையை யறுத்து,—வரி தட சிலை நாண்-கட்டமைந்த பெரிய வில்லின் நாணியை, ஒரு முனை வாளியால் - கூர்நுனியையுடைய அம்பொன்றினால், அறுத்து—, வடி கணை ஒன்றால் - கூரிய அம்பொன்றினால், விரித்த தண் குடை மகுடமும் ஒடித்தனன் - பரந்த குளிர்ந்த குடையின் கலசத்தையுந் துணித்திட்டான்; (எ - று.)

'கிரித்தடங்குவடனைய', 'கேசரிநிகர்' என்ற இரண்டும் - சல்லியனுக்கு அடைமொழி. சலிப்பில்லாத உறுதிக்கும் வலிமைக்கும் மலையையும், பல பராக்கிரமங்களுக்கு ஆண்சிங்கத்தையும் உவமைகூறினார். இனி, பெரியமலைச் சிகரத்தையொத்த சிங்கத்தையொத்த சல்லியனென ஒன்றுக்கொன்றுஉவமையாம்படி யுரைத்தல் சிறப்பன்றென்பது, "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தால் விளங்கும். கேஸரம் - பிடரிமயிர்; அதனையுடையது கேஸரீ யெனக் காரணக்குறி. முரஜகேதநன், பாணம், மகுடம் - வடசொற்கள். அனைய - குறிப்புப்பெயரெச்சம்; ஐ - சாரியை. (உஎ)

அதுகண்டு வீமன் வந்து சல்லியனுக்கு மாறுசெய்தல்.

வலவன்வீழ்ந்ததுந் தனுவினாணற்றதுமனத்தழுக்கிலாவாய்மைப், புலவன்வெண்குடையொடிந்ததுமேல்வருபோற்றலனேற்றமும் பொறாமற், குலவுதிண்சிலைக்கணைசிலதம்முனைக்கொண்டவீரியமெலாங்கொடுத்தான், கலவமாமயிலொழிந்துபஞ்சாननமெழுதியதனிக்கொடிக்கந்தன்.

(இ - ள்.) மனத்து அழுக்கு இலா - மனத்திலே களங்கமில்லாத, வாய்மை - சத்தியத்தையுடைய, புலவன் - - தேர்ந்த அறிவுடையவனான தருமபுத்திரனது, வலவன் - தேர்ப்பாகன், வீழ்ந்ததும் - (சல்லியனம்புகளால்) தலையற்று விழுந்ததையும், தனுவின் நாண் - வில்லின் நாணி, அற்றதும் - அறுபட்டதையும், வெள் குடை - ஒற்றைவெண்கொற்றக்குடை, ஒடிந்ததும் - ஒடிபட்டதையும், மேல் வரு - மற்றும் தருமன்மேல் எதிர்த்துவருகிற, போற்றலன் - பகைவனான சல்லியனது, ஏற்றமும் - மேம்பாட்டையும், பொறாமல் - (பார்த்து) மனம் பொறுக்காமல்,—கலவம் மா மயில் ஒழிந்து பஞ்சாननம் எழுதிய தனி கொடி கந்தன் - தோகையையுடைய பெரிய மயிலின் வடிவத்தை நீக்கிச் சிங்கத்தின் வடிவத்தை யெழுதிய ஒப்பற்ற துவசத்தையுடைய முருகக்கடவுள் போன்ற வீமன்,—குலவு திண் சிலை கணை சில - விளங்குகிற வலிய தன்வில்லினின்று தொடுத்த சிலஅம்புகளால், தம்முனை கொண்ட வீரியம் எலாம் கொடுத்தான் - தனது தமையனான தருமனிடத்தினின்று (சல்லியன்) கவர்ந்துகொண்ட சிறப்புக்களையெல்லாம் உண்டாக்கினான்; (எ - று.)

என்றது, தன்தமையனது பாகுவிற்குடைகளை யொழித்திட்ட சல்லியனது தேர்ப்பாகனையும் வில்நாணையும் குடையையும் வீமன் தானெய்த அம்புகளால் அழித்து எதிர்செய்தனன் என்றவாறும்; சல்லியனால் தருமனுக்கு உண்டாக்கப்பட்ட வலிமைக்குறைவு இங்ஙனம் தருமனுக்கு வீமன் துணைவந்து சல்லியனுக்கு எதிர்செய்தலால் ஒழிதல்பற்றி,'தம்முனைக்கொண்ட வீரியமெலாங் கொடுத்தான்' என்றார் : இதற்கு - இங்ஙனமன்றி, தருமனுக்கு வீமன்

வேறு பாகனையும் வில்லையும் குடையையும் கொண்டுவந்துகொடுத்தா னென்று உரைத்தல் சிறப்பன்று; மேற்கவியில் வருகிற "தனதுதிண்கையிற் சரத்தினும் தம்பிகைச்சரம் விரைந்துடற்றலின்" என்பதுங் காண்க. வலவன் - வல்லவன். அழுங்கு - தீயசிந்தை. போற்றலன் - தன்னைவிரும்பி மதியாதவன்; எனவே, பகைவனும்; எதிர்மறை வினையாலணையும்பெயர். சுப்பிரமணியமூர்த்தி தனது கொடியில் மயில்வடிவையொழித்துச் சிங்கவடிவைக்கொண்டு வந்தாற் போன்ற வீமனென்றார், வீமனுக்குச் சிங்கக்கொடி யாதலின்; இதனால், பலபராக்கிரமங்களில் வீமன் குமாரக்கடவுள் போல்பவனென்ற பொருளோடு, அவனது மயிற்கொடியினும் இவனது சிங்கக்கொடி ஆற்றலுக்கேற்றதா மென்ற கருத்துந்தோன்றும். இதில், உபமேயமாகிய வீமனிடத்து உபமானமாகிய முருகக்கடவுளினது தன்மையை ஒற்றுமையால் ஏற்றிக்கூறுமிடத்து, உபமானத்துக்குஉள்ள மயிற்கொடியுடைமையினும் உபமேயத்துக்கு உள்ள சிங்கக்கொடியுடைமையாகிய உயர்வு தோன்றக் கூறியதனால், இது மிகையொற்றுமை யுருவகவணியின்பாற்படும்; வடநூலார் 'அதிகாபேதரூபகாலங்காரம்' என்பர். தநுஸ், வீர்யம், கலாபம், மஹா மயூரம், ஸ்கந்தன் என்ற வடசொற்கள் திரிந்தன. பஞ்சாநநம் என்ற பெயர்—பஞ்ச - விரிவான, ஆநநம் - முகத்தையுடையது என்று காரணப்பொருள்படும். புலவன், புலம் அல்லது புலமை - பகுதி. ஏற்றம் - ஏறுதல்; அம்விகுதிபெற்ற தொழிற்பெயர். எலாம் - விகாரம். (உஅ)

வீமனும் சல்லியனும் பொரும் விநோதத்தைத் தருமன் பார்த்துநிற்றல்.

தனதுதிண்கையிற்சரத்தினுந்தம்பிகைச்சரம்விரைந்துடற்றலி
ற்றடக்கைக், கனதனுத்தனையூன்றிநின்றிருவருங்கணக்கறமலையுமா
கண்டா, னெனதுதோள்களிலிளையவன்றனக்குவேறியாதெனுமெண்
ணுடைமனத்தான், வினதைகாளையோடுவமைகூர்வலியினன்வேந்தர்
யாரினும்புகழ்மிக்கோன்.

(இ - ள்.) விநதை காளையோடு - விநதையின்மகனான கருடனோடு, உவமை கூர் - ஒப்புமை மிக்க, வலியினன் - பலத்தையுடையவனும், வேந்தர் யாரினும் புகழ் மிக்கோன் - அரசர்களெல்லாரினுங் கீர்த்திமிக்கவனு மான தருமன்,—தனது திண் கையின் சரத்தினும் தம்பி கை சரம் விரைந்து உடற்றலின் - தன்னுடைய வலியகையினா லெய்யப்பட்ட அம்புகளினும் தனது தம்பியான வீமன் கையாலெய்யும் அம்புகள் துரிதமாகச்சென்று இலக்கையழித்தலால்,—எனது தோள்களில் இளையவன் தனக்கு வேறு யாது எனும் எண் உடை மனத்தான் - 'எனதுதோள்களினும் எனதுதம்பிக்கு வேறுபாடு என்ன?' என்னும் எண்ணமுடைய மனத்தையுடையவனாய்,—தட கை கன தனுத்தனை ஊன்றி நின்று - (தனது) பெரிய கையிற் பிடித்துள்ள வலிய (நாணற்ற)வில்லின் தண்டத்தை (ஊன்றுகோலாகக் கொண்டு) ஊன்றிநின்று, இருவரும் கணக்கு அற மலையும் ஆ கண்டான் - (வீமன் சல்லியன் என்ற) இரண்டுபேரும் அளவில்லாமற் போர்செய்யும் விதத்தைப் பார்த்தான்; (எ - று.)

கீர்த்திமிக்க தருமன், வலிமையிற் சிறந்தவனாயினும், தன்கையம்புகளினும் வீமன்கையம்பு விரைந்துசென்று பகைவனது சாரதிமுதலியவற்றை அழித்தலால், தான் சல்லியனோடு மீண்டும் போர்செய்யத்தொடங்காமல், தனதுகையிலுள்ள விற்கழுந்தை ஊன்றிக்கொண்டுநின்று, வீமன் சல்லியனோடு சமமாகப் பொரும் விநோதத்தைப் பார்த்திருந்தான்; இப்படி தன்னையழித்தவனைத் தான் எதிர்த்து அழிக்கத்தொடங்காமல் வேறொருவன் இடையில்வந்து தன் எதிரியோடு பொருதலைப் பார்த்துத் தான் சும்மாஇருத்தல் தருமனது பலத்துக்கும் புகழுக்குங் குறைவாகாதோ வெனின்,—தனது தோள்களோடு தம்பி

யோடு வாசியில்லை யென்று வீமனைத் தனதுதோளாகவே பாவித்து நிற்கும் அபிமானமுடையவனாதலால், அவன்பொருதலைத் தனதுதோள்பொருவதாக ஒற்றுமைநயப்படக் கருதிச் சும்மாவிருந்தமைபற்றி அது குறைவாகாது என்ப தாம். "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்றபடி லக்ஷ்மணன் இராமனுக்கு வலக் கையாக நின்றாற்போலத் தருமனுக்கு வீமனும் கையாக நிற்ப னென்பது விளங்கும். உறுப்பாகிய தோள்போலவே தம்பி சிறந்த அங்கமாய்ச் சமயம் அறிந்து விரைந்து உதவுந் தகுதியுடையா னென்க.

கருடன் - (காசியபமுனிவனது மனைவிமார்களுள்) விநதையினிடம் பிறந் தவன்; இதனால், இவனுக்கு, வைநதேயனென்று ஒருபெயர். தந்தை தந்த வரத் தின்படி வலிமைநிறைந்து பிறந்தவனும், பக்ஷிராசனும், திருமாலுக்கு வாகனமு மாகிய கருடன் பலத்திற்சிறந்தவ னென்பது பிரசித்த மாதலால், அவனைத் தருமனுக்கு வலிமையில் ஒப்புமைகூறினார்.

கைந்நது-வடமொழிப்புணர்ச்சியாதலின், வலிஇயல்பு; [நன் - மெய்-௯௯.] ஆ - ஆறு என்பதன் விகாரம். தோள்களில் என்றதில், ஐந்தனுருபு - எல்லைப் பொருளது; இது, உபமான உபமேய சம்பந்தத்தில் வந்ததனால், உறழ்பொரு வெனப்படும். வேறியாது - குற்றியலிகரம். காளை - இளமைவெருது; வீரனுக்கு உவமவாகுபெயர். விநதை, உவமை - விநதா, உபமா என்ற வடசொற்களின் திரிபு. எண் - எண்ணம்: முதனிலைத்தொழிற்பெயர். (௨௯)

வீமனும் சல்லியனும் சமமாகப் பொருதல்.

எந்தவெந்தவெஞ்சாயகமறையுடனிமையவர்முனிவரர்கொடுத்தா
ரந்தவந்தவெஞ்சாயகமடங்கலுமவரவர்முறைமையிற்றொடுத்தார்
முந்தமுந்தமற்றுள்ளவாயுதங்களுமுடிமுதலடியளவாக
வுந்தவுந்தவெங்குருதியுமூளையுமுகவுகவுடற்றினருரவோர்,

(இ - ள்.) எந்த எந்த வெம் சாயகம் - எந்தெந்தக் கொடிய அம்புகளை, மறையுடன் - வேதமந்திரத்துடனே, இமையவர் - தேவர்களும், முனி வரர் - சிறந்த இருடிகளும், கொடுத்தார் - (முன்பு தங்களுக்குக்) கொடுத்துள்ளார்க ளோ, அந்த அந்த வெம்சாயகம் அடங்கலும் - அந்தந்தக் கொடிய அம்புக ளெல் லாவற்றையும், அவர் அவர் - அவ்விரண்டுபேரும், முறைமையின் தொடுத்தார்- வரிசையாக (ஒருவர்மே லொருவர்) பிரயோகித்தார்கள்; முந்த முந்த - ஒருவரி னும் ஒருவர் முற்பட, மற்று உள்ள ஆயுதங்களும் - (அம்புதவிர) மற்றுமுள்ள ஆயுதங்களையும், முடி முதல் அடி அளவு ஆக - தலைமுதற் கால்வரையிலும், உந்த உந்த - மிகுதியாகத் தாக்கவும், (அதனால்), வெம் குருதியும் மூளையும் உக உக - வெவ்விய இரத்தமும் மூளையும் மிகுதியாகச் சிந்தவும், உரவோர் - வலிமையுடைய அவ்விருவரும், உடற்றினார்-உபயோகித்துப்போர்செய்தார்கள்.

ஸாயகம், முனிவரர், ஆயுதம் - வடசொல். மறை - பிரயத்தனபூர்வமாக மறைக்கத்தக்க தென்ற காரணம்பற்றி வந்த பெயர். இமையவர் - இமையில் (மூடாமையாகிய) விசேஷமுடையவர். முனி என்பதற்கு - தியானசிந்தையுடை யவ னென்று காரணப்பொருள்; கோபிப்பவ னென்று பொருள்கொள்ளுதல் பொருந்தாது; வடசொல்லாதலின். முடி - மயிர்முடியப்படுவ தெனக் காரணப் பெயர். (௩௦)

வீமன் கலங்கிக் கதையுடன் தேரினின்று இறங்கல்.

மத்திரப்பெயர்ச்சிங்கவேறனையவன்வன்கைவான்படைகளின் மயங்கிப், பத்திரப்பெயர்ப்பருத்தகைச்சிறுத்தகட்பாய்மதப்பகூஉப் பகடனையான், சித்திரக்கதிர்மணிமுடிப்பீடிகைத்திண்டிறற்றிகிரியங்

தேர்நின், றத்திரத்தைவிட்டொருதனிக்கதையுடனதிர்ந்துபோயவ
னியிலானான்.

(இ - ள்.) பத்திரம் பெயர்-பத்திரமென்ற பெயரையும், பருத்த கை-பரு த்ததுதிக்கையையும், சிறுத்த கண் - சிறியகண்களையும், பாய் மதம் - மிக்குவழி கிற மதநீரையுமுடைய, பருஉ பகடு - பருத்த ஆண்யானையை, அனையான்-ஒத் தவனான வீமன்,—மத்திரன் பெயர் சிங்கம் ஏறு அனையவன்-மத்திரராச னென் னும் பெயரையுடைய ஆண்சிங்கத்தைப் போன்ற வீரனது, வல் கை - வலிய கையால் வீசப்பட்ட, வான் படைகளின் - சிறந்தஆயுதங்களால், மயங்கி - சிறி துமனந்தடுமாறி,—அத்திரத்தை விட்டு - அஸ்திரங்களைக்கொண்டு போர்செய் தலை யொழிந்து, ஒரு தனி கதையுடன் - ஒப்பற்ற தனது (சத்துருகாதினியெ ன்ற) ஒரு கதாயுதத்துடனே,—சித்திரம் - ஆச்சரியகரமான, கதிர் - ஒளியை யுடைய, மணி - இரத்தினங்களைப் பதித்த, முடி - சிகரத்தையும், பீடிகை - அடிப்பீடத்தையும், திண் திறல் திகிரி - மிக்கவலிமையுடைய சக்கரங்களையு முடைய, அம் தேர்நின்று - அழகிய (தனது) தேரினின்று, அதிர்ந்து போய் அவனியில் ஆனான்-கர்ச்சித்துக்கொண்டு நிலத்தில் இறங்கிச்சென்றான்: (எ-று.)

சல்லியன் பிரயோகித்த வலியகொடிய மிக்கஆயுதங்களைக் கண்டு வீமன் இனி இவனோடு அம்புகளைக்கொண்டு போர்செய்து வெல்லமுடியா தென்று நிச்சயித்து உடனே தனக்குஉரியகதாயுதத்துடன் தேரினின்று தரையில் இழிந்தன னென்பதாம். கீழ்ப் பதினேழாங் கவியிற் கூறியபடி மிகவலிய வீமனினும் மேம்பட்டவன் சல்லிய னென்பது இங்கு விளங்குதலால், வீமனு க்கு யானையையும், சல்லியனுக்குச் சிங்கத்தையும் உவமைகூறினார். அத்திரம் - மந்திரபலத்தோடுகூடிய அம்பு. பத்திரம் என்பது - சிறந்தயானையின் சாதிப் பெயர்; இதன் இலக்கணம் - தேனின்நிறம்போன்ற நிறமுள்ள தந்தமும், மிக்க வலிமையும், ஒத்த அவயவமும், வட்டமான வடிவமும், அழகிய முகமும், அவயவச்சிறப்பும், எழுமுழம்உயரமும், எட்டுமுழநீளமும், பத்துமுழவயிற்றுச் சுற்றளவும், பசுமையான மதநீரும் உடையதா மென்று யானைநூல் கூறும்; "தீயுமிழ் சிறுகணுஞ் செம்புகரு முடைத்தாய்" என்ற அரசயானையின் இலக் கணத்தால்,யானைக்குக் கண்சிறுத்திருத்தல் உத்தமவிலக்கணமாத லறிக. பருஉ ப்பகடு=பருப்பகடு; குற்றெழுத்தளபெடை. சித்திரக்கதிர்மணி யென்றது, பீடிகைக்கும் அடைமொழி. பீடிகை - ஆசனம்.

பத்ரம், மதம், சித்ரம், கதா - வடசொற்கள். திண்திறல் - ஒருபொ ருட்பன்மொழி. தேர்நின்று, நின்று - ஐந்தாம்வேற்றுமைச்சொல்லுருபு; நீக் கப்பொருளது. சிறுத்த-பண்படியாகப் பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம். (௯௧)

வீமன் கதைகொண்டு தாக்கச் சல்லியன் தோமரத்தால் மோதுதல்.

பகைவனேறியதேர்விடும்வலவனுந்திகிரியும்பாய்பரிமாவும், பு
கையெழும்படியிமைத்தகண்விழிக்குமுன் பொடியெழவிடியெனப்பு
டைப்ப,வகைகொடார்முடிமத்திரத்தலைவனுமாமறத்தோமரப்படை
யான், மிகைகொள்வன்றிறல்வீமனைநெற்றியிலெற்றினன்வெற்றிகூ
ர்ந்திடவே.

(இ - ள்.) பகைவன் ஏறிய - எதிரியான சல்லியன் ஏறியுள்ள, தேர் - தேரை, விடும் - செலுத்துகிற, வலவனும் - பாகனும், திகிரியும் - தேர்ச்சக்க ரங்களும், பாய் பரிமாவும் - பாய்ந்துசெல்லுந்தன்மையுள்ள தேர்க்குதிரை களும், பொடி எழ - பொடியாய்ச் சிதறும்படி, (வீமன்), இமைத்த கண் விழி க்கும் முன் - ஒருமாத்திரைப்பொழுதினுள், இடி என - இடிபோல, புகை எழு ம்படி - புகைகிளம்பும்படி, புடைப்ப - (கதாயுதத்தால்) தாக்க,—வகை கொள்

தார் முடி மத்திரம் தலைவனும் - அழகுகொண்ட போர்மாலையைச் சூடிய முடியையுடைய சல்லியனும், மா மறம் தோமரம் படையால் - மிக்கவலிமையையுடைய தோமரமென்னும் ஆயுதத்தால், மிகை கொள் வல் திறல் வீமனை - மிகுதியாகக்கொண்ட கொடியவலிமையையுடைய வீமசேனனை, வெற்றி கூர்ந்திட - (தனக்குச்) சயம்மிகும்படி, நெற்றியில் எற்றினன் - நெற்றியில் தாக்கினான் ; (எ - று.)

தோமரம் - இருப்புலக்கை ; கைவேலுக்கும், பேரீட்டிக்கும் இப்பெயர் உண்டு. இமைத்தகண் விழிக்குமுன்-ஒருகால்மூடியகண்ணைத்திறக்குமளவுக்கு முன். தார் - இங்கே, தும்பைப்பூமாலை. பரிமா - குதிரையாகிய விலங்கு என இருபெயரொட்டு. வெற்றி - தொழிற்பெயர்; வெல்-பகுதி, றி-விகுதி. (௯௨)

வேறு.

வீமன் வலியழிதலும், இருசேனையும் பொருதலும்.

தோமரந்தன்னால்வாயுசுதனமரழிந்தபோதி
லேமருவரிவிற்றானையிருபெருஞ்சேனையோரு
மாமருதடந்தேர்வாசிமத்தவாரணங்களூர்ந்து
தீமருகானமென்னத்தனித்தனிசெருச்செய்தாரே.

(இ - ள்.) தோமரந்தன்னால் - (சல்லியனது) தோமராயுதத்தால், வாயுசுதன் - வாயுகுமாரனான வீமன், அமர் அழிந்த போதில் - போரில் வலிமையொழிந்தபொழுது,—ஏ மரு வரி வில் தானை - அம்புகள் பொருந்திய கட்டமைந்த விற்படையையுடைய, இரு பெரு சேனையோரும் - இரண்டுபக்கத்துப் பெரியசேனைவீரர்களும், மா மரு தட தேர் - குதிரைகள் பூண்ட பெரிய தேர்களையும், வாசி - குதிரைகளையும், மத்த வாரணங்கள் - மதயானைகளையும், ஊர்ந்து - செலுத்திக்கொண்டு, தீ மரு கானம் என்ன - நெருப்புப்பற்றிய காடென்னும்படி (உக்கிரமாக), தனி தனி செரு செய்தார் - தனித்தனியே (ஒருவரோடொருவர்) போர்செய்தார்கள் ; (எ - று.)

மருவு என்பது, மரு என விகாரப்பட்டது. தோமரம், வாயுஸுதன், வாஜி, மத்தவாரணம் - வடசொற்கள். அமர், கானம் - ஸமரம், காநநம் என்ற வடசொற்களின் திரிபு. தானை - இங்கே, ஆயுதம்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும் மற்றநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள்; இவற்றில், நான்குஆறுஞ்சீர்கள் தேமாச்சீர்களாகவே நிற்கும். (௯௩)

கர்ணன்புத்திரர் மூவரும் நகுலனோடு பொருது இறத்தல்.

தேரவன்மைந்தன்மைந்தர்சித்திரசேனனேனைச்
சூரியவன்மன்சித்ரகீர்த்திமுச்சுடரோடொப்பார்
வீரரில்வீரனானவெம்பரிநகுலனோடும்
போரில்வந்தெதிர்ந்துதாதைபோயுழிப்போயினாரே.

(இ - ள்.) முச் சுடரோடு ஒப்பார் - (சூரியன் சந்திரன் அக்கினி யென்னும்) மூன்றுசோதிகளோடு ஒப்பவர்களான, தேரவன் மைந்தன் மைந்தர் - சிறந்ததேரையுடைய சூரியனது மகனான கர்ணனது புத்திரர்களாகிய,சித்திரசேனன் ஏனை சூரியவன்மன் சித்ரகீர்த்தி - சித்திரசேனனும் மற்றைச் சூரியவன்மன் சித்திரகீர்த்தி யென்பவரும் ஆகிய மூன்றுபேரும்,—போரில் வந்து—,வீரரில் வீரன் ஆன வெம் பரி நகுலனோடும் - வீரர்களுட் சிறந்த வீரனான வெவ்விய குதிரைத்தொழிலில்வல்ல நகுலனுடனே, எதிர்ந்து - எதிர்

த்து, தாதை போயுழி போயினர் - தங்கள்தந்தையான கர்ணன் சென்றவிட த்துக்குச் சென்றார்கள்; (எ - று.)

நகுலனாற் கொல்லப்பட்டு இறந்து வீரசுவர்க்கஞ் சேர்ந்தன ரென்பதாம். முந்தினநாளில் தந்தையிறந்தாற்போல மறுநாளில் மைந்தர் இறந்தன ரென்க. மரணமடைந்தார்களென்ற பொருளை அதற்குரிய சொலலால் நேரிற்கூறாமல் 'தாதைபோயுழிப் போயினர்' என வேறொருவகையாற் கூறினதனால், பிறிதினவிற்சியணி; வடநூலார் பர்யாயோக்தாலங்கார மென்பர். தாதை - தாத என்ற வடமொழித் திரிபு. போயுழி-போயவுழி யென்பதன் தொகுத்தல்.

ஒற்றைத்தனியாழியையும் எழுகுதிரைகளையு முடையதாய் நாள்தோறுந் தவறாமல் உலகமுழுவதையுஞ் சுற்றிவருகிற வலியபெரியசிறந்த தேருடைமையால், சூரியன் 'தேரவன்' எனப்பட்டான்; அன்றி, 'தேரவன்மைந்தன்' என்பதற்கு - திருதராட்டிரனது தேர்ப்பாகனான அதிரதனென்பவன் எடுத்துவளர்த்த மகனான கர்ண னென்றும் பொருள்கொள்ளலாம். கர்ணபுத்திரர் மூவருள் சித்திரசேனன் பிரதான னென்பது தோன்ற, இடையில் 'ஏனை' என்ற சொற்கொடுத்துப் பிரித்துக்கூறினர், கீழ் ௬ - ஆம்கவியிலும் "தினகரன் கோமைந்தன் மைந்தன் இருவோரொடுஞ் சேனையைக் கொண்டுற" என இவ்வேறுபாடுதோன்றக் கூறியது காண்க. முறையே முச்சுடரை உவமைகூறியதில் முதற்சுடரான சூரியன் இவனுக்கு உவமையாக அமைகிற உயர்வையுங் கருதுக. சித்ரஸேநன் என்ற பெயர் - பலவகைப்பட்ட சேனையையுடையவ னென்றும், சூரியவர்மா என்ற பெயர் - சூரியன்போல் விளங்குங் கவசமுடையவனென்றும், சித்ரகீர்த்தியென்ற பெயர் - வியக்கத்தக்கபுகழையுடையவ னென்றும் பொருள்படும். சூரியவர்மா என்பதற்கு - சூரியனென்னும் பெயருடைய அரச னென்றும் பொருள்கொள்ளலாம்; [வர்ம என்பது - க்ஷத்திரியராதிக்கு உரிய பெயராம்.] முச்சுடருவமை - ஒளிமிகுதிக்கும், பகையிருளழித்தற்கு மென்க. 'சுடரே யொடாப்பார்' என்றவிடத்து, ஒப்புப்பொருள் மூன்றனுருபுக்கு வந்தது, வேற்றுமைமயக்கமாம்.

"நகுலன் பரியேறி னொன்றமூன்று,புவனங்களேழும் புடைபோய்—இகலும், அவனுடைய வில்லு மதிரதரு மெல்லாம். இவனுடைய முன்னில்லா ரீங்கு" என்றபடி நகுலன் குதிரையேறிப்பொருகையில் யாவரையுமவெல்லும் மகாவீரனாதலால் 'வீரரில்வீரனான வெம்பரி நகுலன்' என்றார். (௩௪)

சகுனியும், அவன்மக்களிருவரும் நகுலனோடு பொருது தோற்றல்.

தசையுறவளர்ந்தபொற்றோட்சகுனியுந்தனயராகி
யிசையுடன்வளர்ந்தவீரரிருவருமிரதமேலோர்
நிசையுறுமதமாவந்துநெருப்பெதிர்பட்டதென்ன
விசையனதிளவலோடுசெருச்செய்துவென்னிட்டாரே.

(இ - ள்.) தசை உற வளர்ந்த - சதை மிகுதியாக வளரப்பெற்ற, பொன் தோள்-அழகிய தோள்களையுடைய,சகுனியும்—,தனயர் ஆகி - (அவனது)புத்திரர்களாய், இசையுடன் வளர்ந்த-புகழோடு வளர்ந்த, வீரர் இருவரும்- (உலூகன் சைந்தவன் என்ற) வீரர்களிரண்டுபேரும், இரதம்மேலோர் - தேரின்மேலேறியவர்களாய், நிசை உறு மதம் மா நெருப்பு எதிர் வந்து பட்டது என்ன-முகபடாம்பொருந்திய மதயானைகள் நெருப்பெதிரிலே வந்து ஒடுங்கினாற்போல, விசையனது இளவலோடு செரு செய்து வென் இட்டார்-அருச்சுனனதுதம்பியான நகுலனுடன் போர்செய்து முதுகிட்டார்கள்; (எ - று.)

தசை=சதை; எழுத்துநிலைமாறிய இலக்கணப்போலி. 'தசையுறவளர்ந்த பொற்றோள்' என்ற அடைமொழியால், சகுனி கொழுத்தவ னென்பது விள

ங்கும். இது, படைக்கலத்தேர்ச்சிபெறுது வீணேவளர்ந்த தோளென்றற்குக் குறிப்புமாம். சகுனியின்மக்களை 'இசையுடன்வளர்ந்த வீரர்' என்றதனால், சகுனி பழிப்புடன் வளர்ந்த போர்வீர னென்பது தொனிக்கும். நிசை-நிஶா என்ற வடசொல் திரிந்தது; இதற்கு - இரவென்று பொருளுரைத்தல் சிறப்பன்று. நகுலனது ஆற்றல் தோன்ற, 'விசையனதிளவல்' என்றார். விசயன் என்ற வடசொல் திரிபு, எதுகைநோக்கி, விஸசயனென இடைப்போலிபெற்றது. தாயர் - வடசொல். இளவல், அல் - பெயர்விகுதி.

பற்குனன், பார்த்தன், கிரீடி, சுவேதவாகனன், பீபற்சு, விசயன், கிருஷ்ணன், சவ்வியசாசி, தனஞ்சயன், நரன் என்பன - அருச்சுனனது மறுபெயர்களாம். விஜயன் என்ற பெயர் - விசேஷமானவெற்றியையுடையவனென்று பொருள்படும்; தன்னைச்சயிப்பவரெவருமில்லாதவ னென்று பொருள்கொள்ளுதலும் ஒன்று. என்ன - உவமவுருபு. (ருரு)

துரியோதனன் கேதுநரனென்ற வீரனைக் கொல்லுதல்.

புயங்கவெம்பதாகைநச்சுப்பொங்கழற்புயங்கப்போல்வான்
றயங்குவெங்கழற்காற்கேதுதரனெனுந்தனுவலோனை
வயங்குவெஞ்சிறகர்ப்புங்கவயங்கொள்கூர்வாளியொன்றா
லியங்குகவானினூடென்றிமையவனாக்கினானே.

(இ - ள்.) புயங்கம் - பாம்பின்வடிவத்தையெழுதிய, வெம் - பயங்கரமான, பதாகை - கொடியையுடைய, நஞ்சு பொங்கு அழல் புயங்கம் போல்வான் - விஷத்தையும் சீறுகிறகோபத்தையு முடைய பாம்பு போல்பவனான துரியோதனன்,—தயங்கு - விளங்குகிற, வெம் - (பகைவர்க்கு) அச்சந்தருகிற, கழல் - வீரக்கழலையணிந்த, கால் - பாதத்தையுடைய, கேதுதரன் எனும் - கேதுதரனென்கிற, தனு வலோனை - வில்லில்வல்ல வீரனை,— வயங்கு - விளங்குகிற, வெம் - கொடிய, சிறகர் - இறகுள்ள, புங்கம் - சிறந்த, வயம் கொள் - வெற்றியைக் கொண்ட, கூர் - கூர்மையுள்ள, வாளி ஒன்றால் - ஓரம்பினால், வானினூடு இயங்குக என்று - சுவர்க்கலோகத்திற் செல்வாயென்று சொல்லி, இமையவன் ஆக்கினான் - தேவனாக்கினான்; (எ - று.)

என்றது, போரிலிறந்து வீரசுவர்க்கமடையும்படி செய்தன னென்றபடி. கொன்றா னென்ற பொருளை வேறுவகையாற் கூறியதனால், இதுவும் - பிறிதினவிற்சியணி. அன்றியும், 'இமையவனாக்கினான்' என்றது, மங்கலவழக்காகக் கூறியதுமாம். 'வானினூடு இயங்குக' என்றது, தனதுஆற்றலால் பிறனையிழித்துக்கூறுஞ் செருக்குமொழியாய் வீரவாதத்தின்பாற்படும். தனதுகொடுமைக்கும், நன்றியறிவின்மைக்கும், எப்பொழுதும் வக்கிரகதியிற்செல்லுந்தன்மைக்கும், நாவிரண்டுடைமைக்கும் அடையாளமாகத் துரியோதனன் பாம்பைக் கொடியிற் கொண்டன னென்பது முதலடியால் விளங்கும். கேதுதர னென்ற பெயர் - கொடியைத் தரித்தவ னெனப் பொருள்படும்.

புஜங்கமென்ற வடசொல்லுக்கு - மார்பினாற்செல்வ தென்றும், வளைந்து செல்வ தென்றுங் காரணப்பொருள் கொள்ளலாம். நஞ்சு - நச்சு என மென்றொடர் வன்றொடராயிற்று; [நன் - உயிர் - ருச.] சிறகர் - சிறகு என்னுங் குற்றியலுகரத்துக்கு, அர் - போலி. புங்கம் - அம்பின் அடியுமாம். (ருசு)

சல்லியன் மீண்டும் தருமன்மேற் போர்தொடங்கல்.

இருபெருஞ்சேனையோருமிப்படிச்செருச்செய்காலைத்
தருமன்மாமதலைதன்மேற்சல்லியன்றானுமீளப்
பொருபரித்தடந்தேருந்திப்புகைகெழுமுனைகொள்வாளி
யொருதொடைதன்னிலோரேழுரத்துடனுரத்தினானே.

(இ - ள்.) இரு பெரு சேனையோரும் - பெரியஇரண்டுசேனையிலுள்ள வீரர்களும், இ படி செரு செய் காலை - இப்படி போர்செய்தபொழுது,— சல்லியன் தானும் - சல்லியனும்,—மீள - மறுபடியும், பொரு பரி தட தேர் உந்தி - போருக்குஉரிய குதிரைகள் பூட்டிய பெரிய தனதுதேரைச் செலுத்தி,—புகை செழு முனை கொள் வாளி ஓர் ஏழ் - உக்கிரத்தாற் புகையெழும்பும் நுனியைக் கொண்ட ஏழுபாணங்களை, ஒரு தொடைதன்னில் - ஒரேபிரயோகத்தில், தருமன் மா மதலைதன்மேல் - சிறந்த தருமபுத்திரன்மீது, உரத்துடன் துரந்தினன் - வலிமையோடு செலுத்தினன்; (எ - று.)

காலம், காலை யென ஈறுதிரிந்தது. ஒருதொடைதன்னில் - தொடுக்குந்தர மொன்றில்; ஒரேதொடர்ச்சியாய் என்றபடி. (௯௭)

சல்லியன் பலரை வென்று சுமித்திரன்முதலியோரைக் கொல்லுதல்.

பின்னரும்விரைவினோடும்பெய்கணைமாரிசிந்தி
முன்னருமுனையினின்றோர்முதுகிடமுரண்டுசீறித்
துன்னருந்தடந்தேராண்மைச்சுமித்திரன்முதலாவுள்ள
மன்னரையிமைத்தகண்கண் மலருமுன்மடிவித்தானே.

(இ - ள்.) பின்னரும் - பின்பும், (சல்லியன்), விரைவினோடும் - வேகத்துடனே, பெய் கணை மாரி சிந்தி - மிகுதியாகஎய்கிற அம்புகளை மழைபோலச் சொரிந்து,—முன் அரு முனையில் நின்றோர் முதுகு இட - நினைத்தற்கும் அருமையான போர்முனையில் தன்னையெதிர்த்துநின்ற வீரர்கள் புறங்கொடுத்தோடும்படி, முரண்டு சீறி - (அவர்கள்மேல்) மாறுபாடுகொண்டு கோபித்து,—துன் அரு - (எவரும்) கிட்டுதற்கும் அருமையான, தட தேர் - பெரிய தேரையும், ஆண்மை - பராக்கிரமத்தையுமுடைய, சுமித்திரன் முதல் ஆ உள்ள மன்னரை - சுமித்திரன்முதலாகவுள்ள அரசர்களை, இமைத்த கண்கள் மலருமுன் மடிவித்தான்-ஒருமாத்திரைப்பொழுதினுள்ளே அழித்திட்டான்; (எ-று.)

கணைமாரி - பாணவர்ஷம். ஆ - ஆக வென்பதன் விகாரம். இமைத்தகண்கள் மலருமுன் - இயல்பில் ஒருகால் மூடினகண்களைத் திறப்பதற்குமுன்; இது, விரைவுவிளக்கும். முரண்டு என்ற இறந்தகாலவினையெச்சத்தில், முரண்-பகுதி;இதனடியாக, முரணியென்றும் வினையெச்சம் பிறக்கும். முன்னரு, துன்னரு என்றவற்றில், முன், துன் - முதனிலைத்தொழிற்பெயர்கள்: இவை நான்காம்வேற்றுமைத்தொகை; இவற்றின் இறுதியில் இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. ஸுமித்ரன் என்ற பெயர்-நல்ல நண்பனெனப் பொருள்படும். மன் - பெருமை; அதனையுடையவர், மன்னவர். காண்பது கண் எனக் காரணக்குறி. (௯௮)

சல்லியன் வீமன்மேல் அம்பு சொரிதல்.

தனக்கெதிர்தானேயானசல்லியன்றானுமீளச்
சினக்கனன்மூளவாளச்சிலம்பெனச்சிலையும்வாங்கிக்
கனக்குலமேழுஞ்சேரக்கன்மழைபொழிந்ததென்ன
முனைக்கடுங்கணையால்வீமன்வடிவெலாமூழ்கவெய்தான்.

(இ - ள்.) தனக்கு எதிர் தானே ஆன - (வேறு உவமை பெறுமையால்) தனக்குத் தானே ஒப்பான, சல்லியன்தானும் - சல்லியனும், மீள - மறுபடி, சினம் கனல் மூள - கோபாக்கினி (மனத்திற்) பற்றியெழ, வாளம் சிலம்பு என சிலையும் வாங்கி - சக்கரவாளமலைபோல (வட்டவடிவமாம்படி) வில்லைவளைத்து, கனம் குலம் ஏழும் சேர அல் மழை பொழிந்தது என்ன - மேகவர்க்கமேழும் ஒருசேரக் கல்மழையைச் சொரிந்ததுபோல, முனை கடு கணையால் - கூர்நுனி

யையுடைய கொடியஅம்புகளால், வீமன் வடிவு எலாம் மூழ்க - வீமசேனனது உடம்புமுழுவதும்மறையும்படி, எய்தான்-தொடுத்துப்போர்செய்தான்; (எ-று.)

முதலடியில், உபமானமும் உபமேயமும் ஒன்றேயாகக் கூறினது, இயை பின்மையணி; வடநூலார் அநந்வயாலங்கார மென்பர். அவனுக்கு ஒப்பான வன் வேறுஇல்லை யென்பது கருத்து. 'சினக்கனல்' - உருவகம்; மற்றவை - உவமை. வாளம் - சக்ரவாள மென்பதன் முதற்குறை; இது, பூமியைச் சூழ்ந்த கடலைச் சுற்றிலும் கோட்டைமதில்போலச் சூழ்ந்துநிற்ப தொரு மலை. சிலையும் வாங்கி யென்ற உம்மை - பின்வரும் அம்பெய்தலை நோக்கிய எதிரது தழுவிய எச்சப்பொருள தென்னலாம்; இசைநிறையென்றொழித்தல், எளிய வழி. கன்மழை யென்றவிடத்து 'கனன்மழை' என்று பாடமோதி, நெருப்பு மாரி யென்று உரைப்பாரும் உளர். வடிவெலாம் என்றதில், எலாம் என்றது- பொருளின்பன்மைகுறியாமல், ஒருபொருளின்பலவிடஙகுறித்துநின்றது.(௬௬)

வீமனும் சல்லியனும் பொருகையில் நகுலசகதேவரும் சாத்தகியும் வருதல்.

அறைகழல்வீமன்றானுமங்கர்கோன்பாகன்றானு
முறைமுறைபுரிந்தவெம்போர்மொழிவதற்கியாவர்வல்லார்
நறைகெழுதும்பைமாலைநகுலசாதேவரென்னு
மிறைவருஞ்செங்கண்மாயனிளவலுமிவன்மேற்சென்றார்.

(இ - ள்.) அறை கழல் - ஒலிக்கிற வீரகழலையுடைய, வீமன்தானும் - வீமனும், அங்கர் கோன் பாகன் தானும் - அங்கநாட்டிலுள்ளார்க்கு அரசனாகிய கர்ணனது சாரதியான சல்லியனும், முறை முறை புரிந்த-ஒருவரோடொருவர் செய்த, வெம் போர் - கொடிய போரை, மொழிவதற்கு - சொல்வதற்கு, யாவர் வல்லார் - எவர் வல்லவர்? [எவரும் வல்லரல்ல ரென்றபடி], (இங்ஙனம் இவ் விருவரும் மிகஉக்கிரமாகப் பொருகையில்),—நறை கெழு தும்பை மாலை - வாசனைவீசுகிற தும்பைப்பூமாலையையுடைய, நகுலசாதேவர் என்னும் இறைவரும் - நகுலசாதேவரென்னும் அரசர்களும், செம் கண் மாயன் இளவலும் - சிவந்த திருக்கண்களையுடைய கண்ணபிரானது தம்பியான சாத்தகியும், இவன் மேல் சென்றார் - சல்லியன்மேல் எதிர்த்துச்சென்றார்கள்; (எ - று.)—'தான்' இரண்டும் - அசை.

முறைமுறை=பரஸ்பரம். நறை கெழு - தேன் நிறைந்த எனினுமாம். தும்பைமாலை, போர்செய்வார்க்கு உரியது. நகுலசாதேவர் - பலர்பால்விகுதி பெற்ற உயர்திணையும்மைத்தொகை. இறைவர் - தலைவர்; இறைமையென் னும் பண்பி னடியாப் பிறந்த பெயர்: வ் - எழுத்துப்பேறு. செங்கண்மாயன் - செந்தாமரைக்கண்ணன்.

யதுகுலத்தரசர்களுள் வசுதேவனுக்கு உடன்பிறந்தமுறையாகிறவனும் சினியென்பவனது மகனு மாகிய சத்தியகனது குமாரனான சாத்யகி, பிராயத்தில் கண்ணனினும் இளையவ னாதலால், கண்ணனுக்குத் தம்பிமுறையாவன்: இல க்குமணன் இராமனிடத்துப்போல இவன் கண்ணனிடம் மிக்கஅன்புகொ ண்டு அவன்கருத்துக்குச் சிறிதும்மாறுபடாது நடப்பவன்; அன்றியும், இவன், அருச்சுனனிடம் வில்வித்தையைக் கற்றறிந்த மாணாக்க னாதலால், ஆசிரிய னா கிய அருச்சுனனிடத்தும் அதுசம்பந்தமாக மற்றைப்பாண்டவரிடத்தும் நீதி முறைவழுவாமல் அன்போடு ஒழுகுவன். இவனுக்கு யுயுதாநனென்றும், சை நேயனென்றும் பெயர்களுண்டு.

சிவபிரானாலெரிக்கப்பட்ட மன்மதனது அங்கம் [உடம்பு] விழுந்த இடம் ஆதலால் அங்கதேச மென்று பெயர். கீழ்ப் பதினேழாம்போர்நாளில் கர்ண னதுவிருப்பத்தின்படி துரியோதனன் வேண்டியதனால் சல்லியன் கர்ணனுக்குச்

சாரதியாய் நின்று தேர்செலுத்தியதனால், 'அங்கர்கோன்பாகன்' எனப்பட்டான். கோன், ன் - சாரியை. அருச்சுனனால் முந்தினநாளிலே கொல்லப்பட்ட கர்ணனது சாரதியானவன் என்றார், சல்லியனைத் தாழ்த்துதற்கு 'அறைகழல்' என்ற அடைமொழி கொடுத்தார், வீமனை உயர்த்துதற்கு யாவர் என்ற வினா-எதிர்மறைப்பொருளை விளக்கிற்று. தும்பை யென்னுஞ் செடியின்பெயர்-பூவுக்கு முதலாகுபெயராம். (௬௦)

நகுலசகதேவரும் சாத்தகியும் சல்லியனோடுவனோடு பொருதல்.

சென்றுவெஞ்சிலைகள்கோலிச்சிலீமுகமுறுப்புத்தோறு
மொன்றெனவநேகமேவியொருமுகமாகப்போர்செய்
தின்றிவனாவிகோறுமென்றுசல்லியன்மேற்றங்கள்
வன்றிறல்யாவுங்காட்டிமாறில்போர்மலைந்திட்டாரே.

(இ - ள்.) (கீழ்க்குறித்த மூன்றுபேரும்),'சென்று - (சல்லியன்மேலெதிர்த்துச்) சென்று, வெம் சிலைகள் கோலி - கொடிய தங்கள்விற்களை வளைத்து, உறுப்புத் தோறும் - (இவனது) அவயவங்களிலெல்லாம், அநேகம் சிலீமுகம்-பலஅம்புகளை, ஒன்று என ஏவி - ஒன்றுபோல இடைவிடாதுசெல்லும்படி தொடுத்து, ஒரு முகம் ஆக போர் செய்து - (நாமெல்லோரும் இவ்வொருவனுடன்) ஒரேமுகமாக நின்று யுத்தம்பண்ணி, இன்று - இப்பொழுது, இவன் ஆவி கோறும் - இவனுடைய உயிரை வாங்குவோம்,' என்று - என்றுநிச்சயித்து, தங்கள் வல் திறல் யாவும் காட்டி - தங்களுடைய கொடியவல்லமையெல்லாவற்றையும் உபயோகித்து, சல்லியன்மேல்—, மாறு இல் போர் மலைந்திட்டார் - ஒப்பில்லாத போரைச் செய்தார்கள்; (எ - று.)

கோறும் - கொல்வோம்: இவ்வினைமுற்றில், கொல் - பகுதி, முதல்நீண்டது; றும் - தன்மைப்பன்மைவினைமுற்றுவிகுதி; [நன் - வினை - ௧௩.] இவ்விகுதியே இங்குஎதிர்காலங்காட்டிற்று; [நன் - பத - ௧௪.] பகுதியீற்று லகரங் கெட்டது சந்தி. நித்தியமாய் என்றுமழியாத இயல்புள்ள உயிரைக் கொல்லுதலாவது, உடம்பினின்று ஒழித்தல். ஏகம் - ஒன்று, அதல்லாதது, அநேகம்: எனவே, பலவாம்; ந + ஏகம் = அநேகம்: வடசொல்; ந - எதிர்மறை குறிப்பது. மலைந்திட்டார் என்றதில், இடு என்றது - துணிவை விளக்கும். (௬௧)

சல்லியன் மூவரையும் அம்பினால் துளைத்தல்.

மதம்படுவேழமன்னமத்திரராசன்றானும்
விதம்படத்திரண்டுபோர்செய்வீரர்தம்மெய்களெல்லாஞ்
சதம்படுபகழியோரோர்தனுக்களினுருவியோட
விதம்படவெய்துநக்கானேவினுக்கிராமன்போல்வான்.

(இ - ள்.) ஏவினுக்கு - அம்புதொடுக்குந்தொழிலில், இராமன் போல்வான் - ஸ்ரீராமன்போலச்சிறந்தவனாகிய, மதம் படு வேழம் அன்ன மத்திர ராசன் தானும் - மதம்பிடித்தயானைபோன்ற சல்லியனும், திரண்டு விதம் பட போர் செய் வீரர்தம் மெய்கள் எல்லாம் - தம்மில்ஒருங்குகூடிப் பலவகையாகப் போர்செய்கிற மூன்றுவீரர்களுடைய உடம்புகளிலெல்லாம், சதம் படு பகழி - நூற்றுக்கணக்கான அம்புகளை, ஓர் ஓர் தனுக்களின் உருவி ஓட - ஒவ்வோருடம்பிலும் துளைத்துச்செல்லும்படி, இதம் பட எய்து - எளிமையாகப் பிரயோகித்து, நக்கான் - (அவர்கள் தளர்ச்சியை நோக்கி இகழ்ந்து) சிரித்தான்; (எ - று.)

வேறுதுணையில்லாமல் ஒருவனேயாய்நின்று பலருடன் ஏககாலத்தில் அம்புதொடுத்துப் பொருது வெல்லுதல்பற்றி, சல்லியனுக்கு இராமபிரானை உவமைகூறினார்: இராமன் அங்ஙனம் விற்றொழிலில் மிகவல்லவனாய்த் தனியே அரக்கர்பலரை எளிதிலழித்தமை, இராமாயணத்திற் பிரசித்தம். ஏவி

ற்கு என்பதில் நான்கனுருபு ஏழனுருபின்பொருளில் வந்தது, உருபுமயக்கம்; [ஈன் - பெய - சுo.] 'எ' என்ற ஓரெழுத்தொருமொழியின்மேல் இன், உ - சாரியைகள். ஹிதம், ஸுதம், ததஸ், ராமன் - வடசொற்கள். ராமனென்ற திரு நாமம் - தன்னிடத்தில் யாவரும் மனங்களித்திருக்கப்பெற்றவ னென்று பொருள்படும்; சகலசற்குணங்களும் பொருந்தினவ னென்பது கருத்து. நிலை யில்லாமையாற் பொய்யாகிய உடலை மெய்யென்றல், மங்கலவழக்கு. இதம்-ஹித மென்ற வடசொல்லின் திரிபு. நக்கான் என்ற வினைமுற்றில், நகு என் னும் குறிலிணைப்பகுதி ஒற்றிரட்டி இறந்தகாலங்காட்டிற்று. (சஉ)

அதுகண்டு வீமன் சல்லியனது கோடிமுதலியவற்றை யழித்தல்.

தம்பிமார்தளர்ச்சிகண்டுசமீரணன்புதல்வன்சீறித்
தும்பைமாமாலைவேய்ந்துதொடுகணைவலிதின்வாங்கி
வெம்புபோர்மத்திரேசன்வியன்கொடிபாகுவாசி
செம்புண்ணீர்சொரிகளத்திற்சிதறிடவறுத்துவீழ்த்தான்.

(இ - ள்.) தம்பிமார் தளர்ச்சி கண்டு - தனது தம்பியரான நகுலசக தேவரும் கண்ணனது தம்பியான சாத்தகியும் என்னும் இவரது தளர்ச்சியைப் பார்த்து, சமீரணன் புதல்வன் - வாயுபுத்திரனான வீமன், சீறி - கோபித்து, தும்பை மா மாலை வேய்ந்து - (போருக்குரிய) சிறந்த தும்பைப்பூமாலையைத் தரித்து, தொடு கணை வலிதின் வாங்கி - தொடுத்தற்குரிய அம்புகளை வலிமை யோடு பிரயோகித்து, வெம்பு போர் மத்திர ஈசன் - உக்கிரங்கொண்டபோரை யுடைய மத்திரதேசத்தரசனான சல்லியனது, வியன் கொடி - பெரிய துவசத் தையும், பாகு - சாரதியையும், வாசி - தேர்க்குதிரைகளையும், செம் புண் நீர் சொரி களத்தில் சிதறிட - சிவந்தஇரத்தம்பெருகுகிற போர்க்களத்திலே சிதறி விழும்படி, அறுத்து வீழ்த்தான் - துணித்துத்தள்ளினான்; (எ - று.)

தம்பிமார் என்பதில், மார் - பலர்பாற்பெயர்விகுதி. ஸமீரணன் என்ற வடசொல் - நன்றாகச்சஞ்சரிப்பவனென்று காரணப்பொருள்படும். மத்திர+ ஈசன்=மத்திரேசன்; வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி; 'அஆமுன் இஈவரின் இரண்டுங்கெட ஓர்ஏகாரந் தோன்றும்.' வெம்பு போர் - பகைவர் தவிக்கும்படி யான போர். வியன் - உரிச்சொல். பாகு - யானை தேர் குதிரைகளைச் செலு த்துந் தொழில்; இது, இலக்கணையாய், அத்தொழிலுடைய பாகனைக் குறித்தது; இதனை உயர்திணைப் பொருளில் வரும் அஃறிணைச்சொல் என்றலும் ஒன்று; அரசு, வேந்து, அமைச்சு, தூது, ஒற்று என்பனவும் இவ்வாறு நிற்கும். செம் புண்ணீர் - புண்ணினின்று வரும் செந்நீர். (சங)

சல்லியனது தேர்க்காவலாளரையும் சேனையையும் வீமன் அழித்தல்.

உற்றிருபுறத்துந்திண்டேர்க்குரனுறவுதவியாய
கொற்றவர்பலரும்வீழக்கொடிகுடைகவரிவீழச்
சுற்றியநேமிவாசிதுளைக்கரக்கோட்டுநால்வாய்ப்
பொற்றைறகடுணிந்துவீழப்புங்கவாளிகளுந்தொட்டான்.

(இ - ள்.) இரு புறத்தும் உற்று - (சல்லியனது) இரண்டுபக்கங்களிலும் பொருந்தி, திண் தேர்க்கு - (அவனுடைய) வலிய தேருக்கு, உரன் உற - உறுதி பொருந்த, உதவி ஆய - துணையாகவுள்ள, கொற்றவர் பலரும் - முன்புவெற்றி யையுடைய பலஅரசர்களும், வீழ - இறந்து கீழ்விழும்படியாகவும்,—கொடி - (அவனுடைய) துவசமும், குடை - குடையும், கவரி - சாமரமும், வீழ - துணி பட்டுக்கீழ்விழும்படியாகவும், சுற்றிய - (அவனைச்) சூழ்ந்துள்ள, நேமி - தேர் களும், வாசி - குதிரைகளும், துளை கரம் - உள்துளையுள்ள துதிக்கையையும்,

கோடு - தந்தங்களையும், நால் வாய் - வெளியேதொங்குகிற வாயையுமுடைய, பொற்றைகள் - மலைகள்போன்ற யானைகளும், துணிந்து வீழ - துண்டுபட்டுக் கீழ்விழும்படியாகவும், புங்கம் வாளிகளும்தொட்டான் - (மற்றும்) சிறந்தஅம்புகளைப் பிரயோகித்தான், (வீமன்); (எ - று.)

வாளிகளும் என்ற உம்மை - கீழ்க்கவியை நோக்கி இறந்ததுதழுவியஎச்சப் பொருளது. கவரி - சமரீ என்னும் வடசொல்லின் திரிபு; இந்த ஒருவகைப் பெண்மானின்பெயர்-இங்கு,அதன்வால்வெள்ளைமயிரினுற் செய்யப்பட்டதோர் இராஜசின்னத்துக்கு, இருமடியாகுபெயர். நேமி என்னுஞ் சக்கரத்தின் பெயர்-சினையாகுபெயராய்த் தேரைக் குறித்தது. நால்வாய் - வினைத்தொகை; நான்ற, நால்கின்ற, நாலும் என விரியும். பொற்றை என்ற மலையின் பெயர், யானைக்கு உவமவாகுபெயராம். (சச)

அனைவரும் போர்செய்தல்.

துருபதன்முதலாவுள்ளோர்சோமகர்முதலாவுள்ளோர்
நிருபர்தங்குலத்துளேனைநிருபர்களாகியுள்ளோர்
தருமன்மாமதலையோடுந்தம்பியரோடுங்கூடி
யொருமுகமாகிமேற்சென்றுறுசெருப்புரியும்வேலை.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) துருபதன் முதல் ஆ உள்ளோர் - துருபதராஜன்முதலாகவுள்ள அரசர்களும், சோமகர் முதல் ஆ உள்ளோர் - (அவன்பிறந்த) சோமககுலத்தார் முதலாகவுள்ள அரசர்களும், ஏனை நிருபர்தம் குலத்துள் - மற்றும்பலஅரசர்கள் குலங்களில்தோன்றிய, நிருபர்கள்ஆகியுள்ளோர் - அரசர்களும், தருமன் மா மதலையோடும் - சிறந்த தருமபுத்திரனுடனும், தம்பியரோடும் - (வீமன்முதலிய) தம்பிமார்களுடனும், கூடி - சேர்ந்து, ஒரு முகம் ஆகி - ஒரேமுகமாய், மேல் சென்று - பகைவர்மேலெதிர்த்துப்போய், உறு செரு புரியும் வேலை - மிக்க போரைச் செய்யும்பொழுதில், (எ - று.)—அருச்சுனன் அசுவத்தாமனுள்ளவிடத்துச் சென்றான் என் வருங்கவியோடு முடியும்.

த்ருபதன் - வடசொல்; இவன் - பாஞ்சாலதேசத்து அரசன்; திரௌபதியின் தந்தை: இவனுக்கு யாகசேனனென்றும் பெயர்வழங்கும். உறு - உரிச்சொல். வேலை - வேலா என்ற வடசொல் ஈறுதிரிந்தது. (சரு)

வேறு.

அருச்சுனன் அசுவத்தாமனை நெருங்குதல்.

அறுதியாகவின்றருஞ்சமர்முடித்துமென்றறத்தின்மைந்தனுக்கன்பா
லுறுதிகூறியபாகன்வெவ்விரைவுடனூர்ந்தவெம்பரித்தேரோன்
பெறுதியாகமாதவம்புரிசிலைமுனிபெற்றவீரனுக்கின்றே
யிறுதிநாளெனவாங்கவனணிந்தபேரிகலணியிடைச்சென்றான்.

(இ - ள்.) அரு சமர் - அரிய போரை, இன்று - இன்றைக்கு, அறுதி ஆக முடித்தும் - தீர முடித்துவிடுவோம், என்று—,அறத்தின் மைந்தனுக்கு - தருமபுத்திரனுக்கு, அன்பால் - அன்பினால், உறுதி கூறிய - துணிவுசொன்ன, பாகன் - சாரதியான கண்ணன், வெம் விரைவுடன் - கொடிய வேகத்துடனே, ஊர்ந்த - செலுத்திய, வெம் பரி - வேகமுள்ள குதிரைகள்பூண்ட, தேரோன் - தேரையுடையவனாகிய அருச்சுனன்,— தியாகம் பெறு - தானம்பெறுதற்கு உரியவனும், மா தவம் புரி - மிக்க தவத்தைச் செய்தவனுமான, சிலை முனி - வில்வித்தையில்வல்ல அந்தணனான துரோணன், பெற்ற - (புதல்வனாகப்)

பெற்ற, வீரனுக்கு - வீரனான அசுவத்தாமனுக்கு, இன்றே இறுதி நாள் - இன்றையதினமே அழியுந்தினமாம், என - என்று (கண்டவர்) சொல்லும்படி, ஆங்கு-எதிர்ப்பக்கத்தில், அவன் அணிந்த - அவ்வசுவத்தாமன் ஒழுங்காய்நின்ற, பேர் இகல் அணியிடை - பெரிய வலிய படைவகுப்பினிடத்து, சென்றான் - போனான்; (எ - று.)

பதினெட்டாநாளோடு போர்முடிந்திடு மென்று கண்ணன் தருமபுத்திரனுக்குத் தைரியங்கூறினதை, கீழ்ச்சருக்கத்தில் வந்த "இத்தின மிரவி சிறுவனும் விசய னேவினு லிறந்திடும் நாளைத், தத்தின புரவித் தேர்ச் சுயோதனனுஞ் சமீரணன்றனயனால் மடியும், அத்தினபுரியு மீரிருகடல்சூழவனியும் நின்னவா மென்றான், சித்தின துருவா யகண்டமுந் தானுஞ் செய்யகட் கருணையந் திருமால்" என்றதனால் அறிக; அன்றி, இச்சருக்கத்தின் கக - ஆங் கவி இங்குக் கொள்ளத்தக்கதன்று: அதில் துரியோதனனைக் கொல்லுதலைப்பற்றிக் கூறாமையால், அது 'அறுதியாக இன்று அருஞ்சமர் முடித்தும்' என்றதாகாமை யுணர்க. தேவர்களை இருதிணையாலுங் கூறலாமாதலால், இங்கு யமனை 'அறம்' என அஃறிணையாற் கூறினார். ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்ற அந்தணர்க்குரிய அறுதொழில்களுள் ஏற்றலும் ஒன்றாதலால், 'பெறுதியாகம்' என்றஅடைமொழியைத் துரோணனுக்குக் கொடுத்தார்; என்றது, அறிவொழுக்கங்களிற் சிறந்தவனாய்த் தானம்பெறுதற்குரிய சற்பாத்திர மாகுபவ னென்றவாறு. 'பெறுதியாகமாதவம்புரி சிலைமுனி' என்றதனால், துரோணன் அரசர்க்குரிய படையுரிமையைப் பெற்று அரசரையடுத்து அவர்க்குப் படைக்கலம்பயிற்றிப் போர்த்தொழில் நடத்தி நின்றவனாயினும் அந்தணர்க்குரிய நல்லொழுக்கங்களிற் குறைவிலா னென்பது விளங்கும். த்யாகம் - வடசொல். இனி, 'பெறுதியாகம்' என்பதைத் தவத்துக்கு அடைமொழியாக்கி, தியாகம்பெறு - வேண்டினவற்றை வேண்டினபடியேகொடுக்குந்தன்மைபெற்ற, மாதவம்-பெருந்தவமெனினுமாம்; "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம், ஈண்டு முயலப் படும்" என்ற திருக்குறளை யுணர்க. அறுதி, உறுதி, இறுதி - 'தி' விகுதி பெற்ற தொழிற்பெயர்கள். முடித்தும் - 'தும்' விகுதி பெற்ற தன்மைப்பன்மையெதிர்காலமுற்று.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும், ஈற்றுச்சீர் மாங்காய்ச்சீரும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (சக)

அசுவத்தாமன் அருச்சுனன்மேல் அம்புதொடுத்தல்.

சென்றுபோர்புரியளவையினருச்சுனன்செழுமணிமுழுநீலக்
குன்றுபோனிறம்பவளவான்குன்றெனக்குருதியிற்சிவப்பேற [ன்
வென்றுபோல்வனபிறைமுகக்கடுங்கணையொருபதுதொடுத்திட்டா
வென்றுபோர்புரியவுணரூர்நீறுசெய்வீரன்மைந்தனையொப்பான்.

(இ - ள்.) சென்று போர் புரி அளவையின் - போய்ப் போர்தொடங்கிய வளவில்,—அருச்சுனன் - அருச்சுனனது, செழு முழு நீலம் மணி குன்று போல் நிறம் - சிறந்தபெரிய நீலரத்தினமயமானதொரு மலைபோன்ற மார்பு, பவளம் வான் குன்று என - பவழமயமான பெரிய மலைபோல, குருதியின் - இரத்தப் பெருக்கால், சிவப்பு ஏற - செந்நிறம்மிகும்படி,—வென்று போர் புரி அவுணர் ஊர் நீறு செய் வீரன் மைந்தனை ஒப்பான் - வெற்றிகொண்டு போரைச்செய்கிற அசுரர்களுடைய திரிபுரத்தைச் சாம்பலாக்கின பராக்கிரமமுள்ள சிவபிரானது குமாரனான சுப்பிரமணியமூர்த்தியை யொப்பவனான அசுவத்தாமன்,—

ஒன்று போல்வன பிறைமுகம் கடு கணை ஒருபது - ஒன்றுபோலுள்ள கொடிய பத்து அர்த்தசந்திரபாணங்களை, தொடுத்திட்டான் - ஒருபிரயோகததில் எய்தான்; (எ - று.)

அருச்சுனன் - அர்ஜுநன் என்னும் வடசொல்லின் திரிபு; இதற்கு - வெண்ணிறமுடையவ னென்று பொருள்: இது - முதலில், இந்நிறமுடைய கார்த்தவீரியமகாராசனுக்குப் பெயராயிருந்து, பின்பு, அவனைப்போன்றசௌரியதைரியங்களையுடைய இப்பார்த்தனுக்கு இட்டுவழங்கப்பட்டது: இது உவமவாகுபெயரின்பாற்படும். பார்த்தன் கருநிறமுடையவனாதலால், அவனுக்கு அருச்சுனனென்பது - நிறம்பற்றிவந்த பெய ரென்றல் பொருந்தாது. இனி, "குருச்சுடர் மணிசெய் பச்சைக் கொழுந்துடற் பொலிவு நோக்கி, யருச்சுனனென்ப ரிதென் னரும்பெயர் வந்த பான்மை" என்னும் நல்லாப்பிள்ளைபாரதச் செய்யுளைக்கொண்டு, அருச்சுனனென்பது - பசுமைநிறம்பற்றிவந்த பெயரென்றலும் ஒன்று. அன்றியும், பார்த்தன் - (பார்வதிபோல) முதலிற் பிறந்தபொழுது வெண்ணிறமுடையவனாயிருந்து பின்பு கருநிறமடைந்தா னென்று கூறுவது முண்டு.

ஈற்றடியிற்குறித்த வரலாறு வருமாறு:—தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி தாரகாட்சன் கமலாட்சன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து மயனென்பவனால் சுவர்க்க மத்திய பாதாள மென்ற மூன்றிடங்களிலும் முறையே பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களால் அரணமைக்கப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந்தன்மையுடைய மூன்று பட்டணங்களைப் பெற்று, மற்றும்பலஅசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம்நினைத்தஇடங்களிற் பறந்து சென்று பல இடங்களையும் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால், சிவபெருமான் பூமியைத் தேராகவும்,சந்திரசூரியரைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்குவேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும்,மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு யுத்தசன்னத்தனாய்ச்சென்று போர்செய்ய யத்தனித்துப் புன்சிரிப்புச்செய்து அவ்வசுரரனைவரையும் பட்டணங்களோடு எரித்தருளின னென்பதாம்.

அசுவத்தாமன் சிவபிரானது குமாரனாதலாலும்,பலபராக்கிரமங்களிற் சிறந்தவனாதலாலும், அவனுக்குச் சிவகுமாரனான முருகக்கடவுளை உவமைகூறினர். முழுமணி - இலக்கணம்நிறைந்த உயர்ந்தசாதியிரத்தின மென்றபடி. பிறைமுகக்கணை - பிறைச்சந்திரன்போல வளைவாகநுனியமைந்த அம்பு. வென்று போர்புரி - போர்புரிந்துவெல் என விகுதிபிரித்துக் கூட்டினுமாம். அளவெனினும், அளவையெனினும் ஒக்கும்; ஐ - சாரியை. பிறப்பது பிறை யெனக் காரணப்பெய ரென்பர்; ஐ - கருத்தாப்பொருள் விகுதி. (சஎ)

அருச்சுனன் அசுவத்தாமனது சாரதிமுதலியவற்றை அழித்தல்.

தொடுத்தவம்பினையம்பினால்வானிடைத்துணித்திடைநணித்தாக
விடுத்தவம்பினன் மருவலன்பாகனும்வெம்பரிகளும்வில்லு
நடுத்தறிந்திடமார்பினுந்தோளினுநாலிருகணையெய்தா
னெடுத்தவெஞ்சிலைத்தறிதலுமவனுமாவிரதம்விட்டிழிந்தானே.

(இ - ள்.) தொடுத்த அம்பினை - அசுவத்தாமன் (தன்மேற்) பிரயோகித்த அம்புகளை, அம்பினால் - (தானெய்யும்) எதிரம்புகளால், வானிடை துணித்து - வானத்திலே [தன்னை நெருங்குதற்குமுன் இடைவெளியிலேயே] துண்டித்து

இடை நணித்து ஆக விடுத்த-அவனிடத்திலே சமீபித்ததாம்படி (மற்றும் தான்) செலுத்தின, அம்பினால் - பாணங்களால், மருவலன் - எதிரியான அவ்வசுவத்தாமனது, பாகனும் - சாரதியும், வெம் பரிகளும்-வெவ்விய தேர்க்குதிரைகளும், வில்லும்—, கடு தறிந்திட -இடையிலே துணிபடும்படி, (செய்து), மார்பினும் தோளினும்- (அவனுடைய) மார்பிலும் தோள்களிலும், நால் இரு கணை எய்தான் - எட்டு அம்புகளைத் தொடுத்தான்; அவனும் - அந்த அசுவத்தாமனும், எடுத்த வெம் சிலை தறிதலும் - கையிற்பிடித்த கொடிய வில் முறிந்தவளவிலே, மா இரதம் விட்டு இழிந்தான் - பெரிய (தனது) தேரை விட்டு இறங்கினான்.

நணித்து - நணிமையென்னும்பண்பினடியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர். மருவலன் - சேராதவன்; எனவே, பகைவனும்: எதிர்மறைவினையாலணையும்பெயர். நாலிருகணை - பண்புத்தொகைப் டன்மொழித்தொடர். தறிதலும் - 'உம்' விகுதி பெற்ற இறந்தகாலவினையெச்சம். இது பிற்பொருளைக் காட்டும். (சஅ)

மீண்டும்போருந்த அசுவத்தாமனை அருச்சுனன் வெல்லுதல்.

இழிந்துமீளவும்வேறொருவில்லெடுத்தெரிமூனைபுகைகாலப் [ன்
பொழிந்தவாளியோரளவிலவவற்றையும்பொடிபடுத்தினன்பார்த்த
கழிந்தநீர்க்கணைகோலிவந்தெதிர்ந்துதன்கார்முகக்கட்டாண்மை
யழிந்துபோயினன்முனிமகனெனவெழுந்தார்த்ததுபெருஞ்சேனை.

(இ - ள்.) இழிந்து - (அசுவத்தாமன் தேரைவிட்டு) இறங்கி, வேறு ஒரு வில் எடுத்து—, எரி மூனை புகை கால - நெருப்பையும் உக்கிரமான புகையையும் வெளிப்படுத்தும்படி, மீளவும் - மறுபடியும், பொழிந்த - (அருச்சுனன் மேற்) சொரிந்த, வாளி - அம்புகள், ஓர் அளவு இல - கணக்கில்லாதனவாம்; அவற்றையும் - அவையனைத்தையும், பார்த்தன் - அருச்சுனன், பொடி படுத்தினன் - (தனது அம்புகளால்) பொடிபடச்செய்திட்டான்: (அதனால்), 'முனி மகன் - துரோணபுத்திரனான அசுவத்தாமன், கழிந்த நீர்க்கு அணை கோலி - கடந்துசென்ற நீர்ப்பெருக்கைத் தடுப்பதற்கு அணையிடமுயல்பவன்போன்று, வந்து எதிர்ந்து - (அருச்சுனனை) வந்துஎதிர்த்து, தன் கார்முகம் கட்டு ஆண்மை அழிந்து போயினன் - தனதுவலியவிற்போர்த்திறமழிந்திட்டவனானான், என - என்று, பெரு சேனை - பெருமையுள்ள (பாண்டவ) சேனை, எழுந்து ஆர்த்தது - உற்சாகங்கொண்டு ஆரவாரித்தது; (எ - று.)

கழிந்தநீர்க்கு அணைகோலுதல் - வடமொழியில் 'கத ஜல சேது பந்தம்' எனப்படும். பெருகிச்சென்று தீர்ந்த வெள்ளத்துக்குப் பின்பு தடுத்துவைத்தற்பொருட்டு அணைகோலுதலிற் சிறிதும்பயனில்லாமைபோல, மிகமேலிட்ட அருச்சுனனை அசுவத்தாமன் மீண்டும் எதிர்த்தல் சிறிதும் பயன்படாது முடிதலால், 'கழிந்தநீர்க்கு அணைகோலி' என்றார். கீழ்ப் பதினான்காம்போர்ச்சருக்கத்தில் கர்ண அருச்சுனயுத்தத்தில் கர்ணனைக் குறித்து "கழிந்தநீர்க் கணைகோலுவான் கண்ணெதிருறச் சென்றான்" என்றமை காண்க. தன்கார்முகக்கட்டாண்மை யழிந்துபோயினன் - வில்லைக்கொண்டு அம்புதொடுத்து, எதிர்க்குந்திறமை நீங்கினானென்க. 'எரிமூனை புகைகால' என்பதற்கு - வெவ்விய துனிகள் புகையை வெளிப்படுத்த என்றலு மொன்று. (சக)

அசுவத்தாமன்வீசிய இருப்புலக்கையை அருச்சுனன் துணித்தல்.

செருப்புலக்கையாமுரலிடைவிருதராந்தினைக்குரல்களைச்சேர
மருப்புலக்கைகொண்டிடிக்கும்வெஞ்சினமனமத்தவாரணமன்னான்
பொருப்புலக்கையுற்றலமரவரிந்தவன்புதல்வன்மேலொருபார
விருப்புலக்கைகொண்டெறிந்தனனவனுமஃதிதண்மூறிபடவெய்தான்.

(இ - ள்.) செரு புலம் கை ஆம் - போர்க்களத்தின் அணிவகுப்பாகிய, உரலிடை - உரலிலே, விருதர் ஆம் - வீரர்களாகிய, தினை குரல்களை - தினைக் கதிர்களை, சேர - ஒருசேர, மருப்பு உலக்கை கொண்டு - (தனது) தந்தங்களாகிய உலக்கைகளால், இடிக்கும் - இடிக்கிற, வெம் சினம் மனம் - கடுங்கோபமுள்ள மனத்தையுடைய, மத்தம் வாரணம் - மதம்பிடித்த யானையை, அன்னான் - ஒத்தவனான அசுவத்தாமன்,—பொருப்பு - மலைகள், உலக்கை உற்று - அழிதலையடைந்து, அலமர - வருந்தும்படி, அரிந்தவன் - (அவற்றைச்) சிறகறுத்தவனான இந்திரனது, புதல்வன்மேல் - குமாரனான அருச்சுனன்மேல், ஒரு பாரம் இரும்பு உலக்கை கொண்டு எறிந்தனன் - கனமான ஓர்இரும்புலக்கையை எடுத்துவீசினான்: அவனும் - அருச்சுனனும், அஃது எண் முறி பட - அவ்வுலக்கை எட்டுத்துண்டுபடும்படி, எய்தான் - அம்புதொடுத்தான்; (எ - று.)

புலம் - இடம். கை - படைவகுப்பு. குரல் - தானியம். முதலிரண்டடி - உருவகத்தை அங்கமாகக்கொண்டு வந்த உவமையணி. உரலில் தினையை உலக்கையால் இடிப்பதுபோலப் போர்க்களத்தில் வீரரைத் தந்தத்தாற் குத்தும் யானை யென்க. "யானை, யறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" என்றபடி யானை கோபத்தை மறைத்துவைக்கவேண்டியகாலத்தே மறைத்துவைத்து வெளிப்படுத்தவேண்டியகாலத்தே வெளிப்படுத்தித் தீராக்கோபமுடைய தாதலால், 'வெஞ்சின மன மத்தவாரணம்' என்றார். அப்படிப்பட்டயானையை அசுவத்தாமனுக்கு உவமைகூறியது, தனதுதந்தையை எதிரிகள் கொன்றதனாலாகிய கோபத்தை இவன் மனத்திலே மாறாமல்வைத்துக்கொண்டு அதற்குப்பிரதி செய்யுங் கருத்துடையவனாதலால். 'வெஞ்சின மன மத்தவாரண மன்னான்' என்ற தொடரை "திருகுவஞ்சனக்களிறனைய சிற்றத்தான்" என்பதோடு ஒப்பிடுக. அசுவத்தாமனது மிக்கவலிமைக்குமுன் பலவீரர்களுஞ் சிறுமைப்படுந் தன்மையைக் கருதி, அவர்களிடத்துச் சிறுதானியமான தினையின் தன்மையையேற்றிக்கூறினார். மருப்புக்கும், உலக்கைக்கும் வலிமையோடு, வடிவிலும் ஒப்புமை. மத்தவாரணம் - வடமொழித்தொடர்.

முன்பொருகாலத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போல் இறகுடையனவாயிருந்து அவற்றால் உலகமெங்கும் பறந்துதிரிந்து பலஇடங்களின்மேலும் உட்கார்ந்து அவ்விடங்களையெல்லாம் பிராணிகளுடனே அழித்துவர, அதனை முனிவர்முதலியோரா லறிந்த தேவேந்திரன் சினந்து சென்று தனதுவச்சிராயுதத்தால் அவற்றின்இறகுகளை யறுத்துத்தள்ளிவிட்டனனாதலால், 'பொருப்பு உலக்கையுற்று அலமர வரிந்தவன்' என்றார். உலக்கை - உலத்தல்; அழிவு: 'கை' விகுதி பெற்ற தொழிற்பெயர். அலமர, அலமா - பகுதி. (ருo)

**பின்பு அசுவத்தாமன் எறிந்த கதாயுதத்தை அருச்சுனன் துணித்தல்.**

**உலக்கையெட்டுறுப்பானபின்னொருதனித்தண்டுகொண்டுயர்கேள்வி**
**யலக்கைவித்தகனிளவறேர்விடவருமருச்சுனன்றடந்தோளா**
**மிலக்கையுற்றிடவெறிந்தனனெறிதலுமிவனவனெறிதண்டை**
**வலக்கையிற்சிறுகணைகளாற்பலதுணியாகவில்வளைத்தானே.**

(இ - ள்.) உலக்கை எட்டு உறுப்பு ஆன பின் - உலக்கை எட்டுத்துண்டுகளானபின்பு, (அசுவத்தாமன்), ஒரு தனி தண்டு கொண்டு - ஒப்பற்றதொரு கதாயுதத்தை எடுத்து,—உயர் கேள்வி - சிறந்த நூற்கேள்வியையுடைய, அலம் கை வித்தகன் இளவல் - கலப்பையை ஆயுதமாகவேந்திய கையையுடைய வல்லமைசாலியான பலராமனுடைய தம்பியான கண்ணன், தேர் விட - (தனக்குப் பாகனாய் நின்று) தேர்செலுத்த, வரும் - வருகிற, அருச்சுனன் - அருச்சுனனது, தட தோள் ஆம் - பெரிய தோளாகிய, இலக்கை - குறியை, உற்றிட -

அடையும்படி, எறிந்தனன் - வீசினன்: எறிதலும் - வீசியவுடனே, இவன் - அருச்சுனன், அவன் எறி தண்டை - அந்தஅசுவத்தாமன் வீசிய கதாயுதத்தை, வலக்கையின் தொடு கணைகளால் - (தனது) வலக்கையால் தொடுக்கும் அம்புகளால், பல துணி ஆக - அநேகந்துண்டாகும்படி, வில் வளைத்தான் - வில்லை வளைத்துப் பொருதான்; (எ - று.)

அருச்சுனன் வில்லைவளைத்து வலக்கையால் அம்புதொடுத்து அசுவத்தாமனது கதைப்படையைப் பலதுண்டாக்கின னென்பதாம். அருச்சுனன் மற்றையோர்போல வலக்கையினால்மாத்திரமேயன்றி இடக்கையாலும் அம்புதொடுக்கவல்லவனாய்ச் சவ்வியசாசி யென்று ஒருபெயர் பெற்றுள்ளவனாதலால், இவன்விஷயத்தில் 'வலக்கையில்தொடு' என்ற அடைமொழி சும்மாவில்லாமல் இனம்விலக்கி நிற்பதேயாம்; இது - பிறிதினியைபுநீக்கிய விசேஷணம். அருச்சுனனது சவ்வியசாசித்தன்மையைத் தெரிவிக்கும்பொருட்டு, அவன்கணைக்கு இந்தஅடைமொழிகொடுத்தன ரென்க. 'உயர்கேள்வி' என்ற அடைமொழி - பலராமன், கண்ணன், அருச்சுனன் என்ற மூவர்க்கும் பொருந்தத்தக்கதாயினும், போர்த்தொடக்கத்தில் அருச்சுனன் கண்ணனிடம் கீதையுபதேசம்பெற்றவனாதலின், அவனுக்கு அடைமொழியாக்குதல் சிறக்கும். இலக்கு - லக்ஷ்யமென்ற வடசொல்லின் சிதைவு. துணி - துணிக்கப்பட்டது; செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்ட பெயர். உயர்கேள்வி - வினைத்தொகை. (௩௧)

பின்பு அசுவத்தாமன் வெறுத்துப் புறங்கொடுத்தல்.

பூத்தபைங்கொடியனையமெய்ப்பூணணிபொதுவியர்தனந்தோயுந்
தூர்த்தன்வெம்பரித்தேர்விடுமளவுமிச்சுரபதிமகனோடுங்
கோத்தவம்பினிற்பலபடைகளிலமர்கொளுத்துதலரிதென்று
பார்த்தன்முன்புநின்றமர்புரிந்திலன்கடற்பார்புகழ்பரித்தாமா.

(இ - ள்.) பூத்த பைங் கொடி அனைய - நிறையமலர்பூக்கப்பெற்ற பசிய பூங்கொடியை யொத்த, பூண் அணி மெய் - பலஆபரணங்களையணிந்த உடம்பையுடைய, பொதுவியர் - கோபஸ்திரீகளுடைய, தனம் - கொங்கைகளில், தோயும் - கலக்கிற, தூர்த்தன் - விடனான கண்ணன், வெம் பரி தேர் விடும் அளவும் - வெவ்வியகுதிரைகள்பூண்ட தேரை (இவனுக்குச்) செலுத்துமளவும், இ சுரபதி மகனோடும் - தேவராசனாகிய இந்திரனது குமாரனான இவ்வருச்சுனனுடனே, கோத்த அம்பினில் - தொடுக்கும் அம்புகளாலும், பல படைகளின் - மற்றும்பல ஆயுதங்களாலும், அமர் கொளுத்துதல் - போரை மூண்டு செய்தல், அரிது - முடியாது, என்று - என்றுநிச்சயித்து,—கடல் பார் புகழ் பரித்தாமா - கடல்சூழ்ந்த நிலவுலகத்திலுள்ளார் யாவரும் புகழப்பெற்ற அசுவத்தாமன், பார்த்தன் முன்பு நின்று அமர் புரிந்திலன் - அருச்சுனனெதிரில் நின்று போர்செய்யாதொழிந்தான்; (எ - று.)

புறங்கொடுத்தன னென்பதாம்; அடுத்தகவியில் "மற்றவன்தனை முதுகு கண்டு" என வருதல் காண்க. பலபராக்கிரமங்களில் அதிபிரசித்தனான அசுவத்தாமன் அருச்சுனன்முன் இங்ஙனமானது, அவனுக்கு உள்ள கிருஷ்ணசகாயத்தினாலே யென்பது இதில் விளங்கும். 'கடற்பார்புகழ் பரித்தாமா' என்று அவனைச் சிறப்பித்துக்கூறினதும் இதுபற்றியே.

ஆயர்மகளிரது மெல்லியதாய் ஒல்கியொசியும் உடம்பு கொடியையும், அதில் நிறையஅணிந்த சிறந்த ஆபரணங்கள் கொடியிற் பூத்த மலர்களையும் போலுதலால், 'பூத்தபைங்கொடியனையமெய்ப் பூணணி பொதுவியர்' என்றார். காடும் காடுசார்ந்தஇடமு மாகிய முல்லைநிலம் - நாடும் நாடுசார்ந்தஇடமு மாகிய மருதநிலத்துக்கும், மலையும் மலைசார்ந்த இடமு மாகிய குறிஞ்சிநிலத்துக்

கும் நடுவிடமாதலால், அப்பொதுவிடத்தி லுள்ள இடையர்க்கு 'பொதுவர்' என்றும், 'இடையர்' என்றும் காரணப்பெயர் நிகழும்; பொது - மத்தியஸ்தாநம்: பொதுவியர் - பொதுவ ரென்பதன் பெண்பால். தூர்த்தன் என்ற வடசொல்லுக்கு - வஞ்சகனென காமுக னென்று பொருள். கண்ணன் ஆயர் மங்கையர்பலரிடத்தும் ஒருங்கு காதலுடையனுதலை "கருமலர்க் கூந்த லொருத்திதன்னைக் கடைக்கணித்து ஆங்கே யொருத்திதன்பால், மருவிமனம் வைத்து மற்றொருத்திக்குரைத்து ஒருபேதைக்குப் பொய்குறித்துப், புரிகுழல் மங்கையொருத்திதன்னைப் புணர்தி யவளுக்கும் மெய்யனல்லை, மருதிறுத்தாயுன்வளர்த்தியூடே வளர்கின்றதா லுன்தன் மாயைதானே" என்ற பெரியோர் பாசுரத்தாலும் அறிக; கீழ் மூன்ருப்போர்ச்சருக்கத்திலும் 'விரவுகோவியர் தூர்த்தன்' என்ருர்.

தருமத்தை ஸ்தாபிக்க அவதரித்த எம்பெருமான் தருமவிரோதமாக இங்ஙனஞ்செய்வது ஒக்குமோ? அப்பெண்களுக்கும்இதனல்பாதகமுண்டாகாதோ? என்னின்:—அவ்வெம்பெருமான் தன்னைச்சேர்ந்தவர்களுடைய சகலபாவங்களையும் போக்கடிக்கும்படியான பரிசுத்தமுடையவனுகையாலும், அம்மங்கையர் வேதாந்தநிர்ணயத்தின்படி அன்புசெலுத்துமிடத்திலேயே அன்பைச்செலுத்தினர்களாகையாலும், அவர்களுக்குச் சகலபாவநிவிருத்தியேயல்லது பாவமுண்டாவதில்லை; எம்பெருமானுக்கோ, ஜீவாத்மாவுக்கு உண்டாவதுபோலே பாபபந்தமுண்டாகாது; ஏனெனில்,—பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்கிறபஞ்சபூதங்கள் எப்படி எல்லாப்பிராணிகளிலும் வியாபித்திருக்குமோ, அப்படியே, சுவாமி அந்தப்பெண்களிலும் அவர்களுடையபர்த்தாக்களிலும் மற்றுமுள்ள ஆத்மகோடிகளிலும் வியாபித்திருக்கும் பரமாத்துமா வாகையாலே, அவனுக்குப் புதிதாகஒருசம்பந்தம் வந்ததில்லை யென்க. இன்னும் பலவகையாகவும் ஏற்ற சமாதானங் கூறப்பட்டு வழங்கும்.

பசுமை+கொடி - பைங்கொடி; "ஈறுபோதல்" என்னுஞ் சூத்திர விதி. பூணப்படுவது பூணெனக் காரணக்குறி. ஸ்தநம், ஸுரபதி - வடசொற்கள். பாற்கடலினின்று உண்டான வாருணிபென்னும் சுரையை [ஒருவகைமதுவை] ப்பானஞ்செய்ததனல் தேவர்க்குச் சுரரென்றும், அதனைப் பெருமையால் மற்றொருதிறத்தார்க்கு அசுரரென்றும் பெயர்கள் நிகழ்ந்தன வென அறிக. (ருஉ)

அருச்சுனன் கிருபனையும் மற்றும்பலரையும் வென்று வீமனைச்சேர்தல்.

மற்றவன்றனேமுதுகுகண்டவன்றிருமாதுலன்கிருபப்பேர்க்
கொற்றவன்புறந்தரமலைந்தேனைவெங்கொடுஞ்சிலைக்குலவேந்தர்
முற்றும்வென்னிடப்பொருதுசல்லியனெடுமுனைபடவெதிர்மோதிச்
செற்றவன்புடையன்புடைத்தம்முனைத்தெம்முனைகெடச்சேர்ந்தான்.

(இ - ள்.) (இவ்வாறு அருச்சுனன்),—அவன்தனை முதுகு கண்டு - அவ்வசுவத்தாமனைப் புறமிடக் கண்டு [சயித்துஓட்டி யென்றபடி],—மற்று - பின்பு,—அவன் திரு மாதுலன் - அவனது சிறந்த மாமனுகிய, கிருபன் பேர் கொற்றவன் - கிருபனென்னும் பெயரையுடைய வெற்றிவீரன், புறம் தர - முதுகு கொடுக்கும்படி, மலைந்து - போர்செய்து,—ஏனை - மற்றுமுள்ள, வெம் கொடு சிலை குலம் வேந்தர் முற்றும் - கொடிய வளைந்த வில்லையுடைய உயர்குலத்துத் தோன்றிய வீரர்களெல்லோரும், வென் இட - முதுகுகொடுக்கும்படி, பொருது - போர்செய்து,—சல்லியனொடு முனை பட எதிர் மோதி செற்ற வன்பு உடை அன்பு உடை தம்முனை - சல்லியனுடன் உக்கிரமாக எதிரிலே போர்செய்து (அவனை) வென்ற வலிமையையுடையவனும் (தன்னிடத்து) அன்புள்ளவனுமாகிய தனக்குஅடுத்ததமையனுன வீமனை, தெவ் முனை கெட - பகைவர்போரழியும்படி, சேர்ந்தான்—; (எ - று.)

வீமன் சல்லியனை வென்றதைக் கீழ் ௪௨ - ஆங் கவியிற் காண்க. இங்கே 'தம்முனை' என்பதற்கு - தமையனாகிய தருமனை யென்றுரைத்தல், சந்தர்ப்பத்துக்குப் பொருந்தாது; அடுத்த இரண்டுகவிகளும், இதற்கு ஒரு சான்றும். மாதுலன் - வடசொல்; மாதாவினுடன்பிறந்தவன். முதுகுகண்டு, புறந்தர, வென்னிட என்றவற்றில் ஒருபொருளை மீண்டுவைத்ததனால், பொருட்பின்வருநிலையணி; வடநூலார் அர்த்தாவ்ருத்திதீபக மென்பர். கொலைமை - வலிவாதலை, 'கோதண்டம்' என்ற வில்லின்பெயரிலுங் காண்க. இனி, வெங்கொடு - மிகக்கொடிய என ஒருபொருட் பன்மொழியுமாம். செற்ற - செறு என்ற பகுதி ஒற்றிரட்டி இறந்தகாலங்காட்டிற்று. பொருதுசேர்ந்தானென இயையும். 'சல்லியனொடு முனைபட எதிர்மோதி' என்பதை அருச்சுனன்மே லேற்றியுரைத்தலும் இவ்விடத்துக்குப் பொருந்தாது. தெவ் - பகைமையுணர்த்தும் உரிச்சொல்; "தெவ்வுப் பகையாகும்" என்பது தொல்காப்பியம்: இது, பால்பகாஅஃறிணைப்பெயரின்பாற்பட்டுப் பண்பாகுபெயராய்ப் பகைவரையும் உணர்த்தும். தெவ் + முனை = தெம்முனை; "தெவ்வென்மொழியே (தொழிற்பெயரற்றே), மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்" என்னுஞ் சூத்திர விதி. நான்காமடியில், வன்புடை அன்புடை, தம்முனை தெம்முனை என்ற இடத்து, வந்த எழுத்துக்கள் மீண்டும் வந்தது, பிராசம் என்னுஞ் சொல்லணி; இது, தமிழில் மடக்கில் அடக்கப்படும். (௫௧)

வீமனால் தோற்ற சல்லியனுக்குத் துரியோதனன் உதவியாதல்.

தயங்குவெண்குடைச்சல்லியன்றண்டுடைச்சமீரணன்மகன்றன்னா
லுயங்குவெம்பரிபாகுதேர்வரிசிலையுயர்த்தவண்கொடியற்றுத்
தியங்குகின்றபேருறுதிகண்டுயங்குதல்சிந்தையிற்சிறிதற்ற|நாள்.
புயங்ககேதனன்கண்ணினுக்கிமையெனப்பொருபடையுடன்சேர்ந்

(இ - ள்.) தயங்கு - விளங்குகிற, வெள் குடை - வெண்கொற்றக்குடையையுடைய, சல்லியன் —, தண்டு உடை - கதாயுதத்தையுடைய, சமீரணன் மகன்தன்னால் - வாயுகுமாரனான வீமனால், உயங்கு வெம் பரி - வருத்தமடைகிற கொடியகுதிரைகளும், பாகு - சாரதியும், தேர் - தேரும், வரி சிலை - கட்டமைந்த வில்லும், உயர்த்த வண் கொடி - உயரநாட்டிய அழகிய கொடியும், அற்று - துணிபடப்பெற்று, இயங்குகின்ற பேர் உறுதி - (தனது இயல்பான) பெருவல்லமைசோர்தலை, கண்டு - பார்த்து,—உயங்குதல் சிந்தையில் சிறிது அற்ற புயங்க கேதனன் - மனத்திற் சோர்வு சிறிதுமில்லாத பாம்புக்கொடியனான துரியோதனன், கண்ணினுக்கு இமை என - கண்ணுக்கு இமை பாதுகாவலாதல்போல, பொரு படையுடன் சேர்ந்தான் - போர்செய்யவல்ல சேனையுடனே (சல்லியனுக்கு உதவியாய்) வந்துசேர்ந்தான்; (எ - று.)

இப்பாட்டு, கீழ்வந்த ௪௯ - ஆம் பாட்டோடு தொடர்ச்சியுடையதென அறிக. எதேனும் இடையூறு நேருஞ் சமயத்து விரைந்து அடுத்துநின்று பாதுகாத்தல்பற்றி, 'கண்ணினுக்கிமையென' என்று உவமைகூறினர். விசுவாமித்திரர் வேள்வியை இராமலக்குமணர் காத்தலைக் கூறுமிடத்துக் கம்பர் "கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்" என உவமைகூறியவாறுங் காண்க. இயங்குகின்ற பேருறுதி என்றவிடத்துச் சொற்களைமாற்றிக் கருத்துக்கொள்க. அன்றி, 'பேருறுதி' என்றது, இகழ்ச்சிக்குறிப்பாகவுமாம். (௫௨)

சல்லியன் மீளவும் போர்க்குச் சித்தனாதல்.

சாத்தகிப்பெயரவன்சமீரணன்மகனகுலன்வெஞ்சாதேவன்
பார்த்தனென்றிவரனைவருமிவர்பெரும்படைத்தலைவருஞ்சேர

வார்த்தெழுந்துமேல்வருதல்கண்டணிகழலாளியேறனையானும்
போர்த்துமுந்துறத்திருகினனரசொடும்பெரும்படையொடுமமமா.

(இ - ள்.) சாத்தகி பெயரவன் - சாத்தகியென்னும் பெயரையுடையவனும், சமீரணன் மகன் - வீமனும், நகுலன் - நகுலனும், வெம் சாதேவன் - (பகைவர்க்குக்) கொடிய சகதேவனும், பார்த்தன் - அருச்சுனனும், என்ற—, இவர் அனைவரும் இவர்களெல்லோரும், இவர் பெரு படை தலைவரும் - இவர்களுடைய பெரிய சேனைகளின் தலைவர்களும், சேர - ஒருசேர, ஆர்த்து எழுந்து - ஆரவாரஞ்செய்துகிளர்ந்து, மேல் வருதல் - தன்மேல்வருதலை, கண்டு—, அணி கழல் ஆளி ஏறு அனையானும் - அணிந்த வீரக்கழலையுடைய ஆண்சிங்கம்போன்ற சல்லியனும், அரசொடும் - துரியோதனராசனுடனும், பெரு படையொடும் - பெரிய சேனைகளுடனும், போர்த்தும் - மீளவும், முந்து உற திருகினன் - (போருக்கு) முற்படத் திரும்பிவந்தான்; (எ - று.)—அமமா - ஈற்றசை; வீமனாற் பலவாறு அழிந்தவன் மீண்டுந் துணிவுகொண்டு போருக்கு வந்த உறுதியை விளக்கும் வியப்பிடைச்சொல்லுமாம்.

சாத்தகி - ஸாத்யகி என்ற வடசொல் திரிந்தது; சத்யகனது புத்திரனெனப் பொருள்படுந் தத்திதாந்தநாமம். என்றிவர் என்பதில், பெயரெச்சவீறு தொகுத்தல். படைத்தலைவர் - திட்டத்துய்மனும், அவனுக்கு உள்ளடங்கிய சேனாபதிகளும். 'அரசொடும்' என்பதற்கு - அரசர்களுடனே யென்றும் பொருள்கொள்ளலாம்; அப்பொருளில், அரசு - சாதிப்பெயர். (௫௫)

சல்லியன் சாத்தகியையும் நகுலனையும் வெல்லுதல்.

தண்டுழாய்முடிமாயவன்றம்பியைச்சாயகம்பலகோடி
கொண்டுதேர்முதலியானையுமழித்துமெய்குலைந்திடும்படிமோதி
மண்டுபாய்பரிநகுலனையன்புடைமருகனென் றெண்ணுமற்
கொண்டல்வாயிடிநெருப்பெனச்சிற்சிலகூரவாளியினெய்தான்.

(இ - ள்.) (சல்லியன்), தண் - குளிர்ச்சியான, துழாய் - திருத்துழாய் மாலையைச் சூடிய, முடி - முடியையுடைய, மாயவன் - கண்ணனது, தம்பியை - தம்பியான சாத்தகியை, பல கோடி சாயகம் கொண்டு - அநேககோடிக்கணக்கான அம்புகளைக்கொண்டு, தேர் முதல் யாவையும் அழித்து - தேர் முதலிய எல்லா உபகரணங்களையும் அழியச்செய்து, மெய் குலைந்திடும்படி - உடம்பு நடுங்கும்படி, மோதி - தாக்கி—, மண்டு பாய் பரி நகுலனை - உக்கிரமான பாய்கிற குதிரையையுடைய நகுலனை, அன்பு உடை மருகன் என்று எண்ணுமல் - அன்புக்குரிய தன்மருமகனென்று நினையாமல், கொண்டல்வாய் இடி நெருப்பு என - மேகத்தினிடத்துத்தோன்றுகிற நெருப்புமயமான இடி போல, சிற் சில கூர வாளியின் - கூர்மையையுடைய சிலசில அம்புகளால், எய்தான்—; (எ - று.)

துழாய் - துளஸீ என்ற வடசொல்லின் சிதைவு. முதல்+யாவை= முதலியாவை: தன்னொழிமெய்ம்முன் யகரம்வர இகரந்தோன்றிற்று. [நன் - மெய் - ௯.] மாமனுக்கும் மருமகனுக்கும் பரஸ்பரம் இயல்பாகவுள்ள அன்புடைமை விளங்க 'அன்புடைமருகன்' என்றார்; "மாமனும் மருகனும்போலு மன்பின" என்ற சிந்தாமணி இங்கு அறியத்தக்கது. அன்புடைமருகனென்று எண்ணுமல் - பக்ஷபாதஞ்செய்யாமல் என்றபடி.. கொண்டல் - நீர்கொண்ட மேகத்துக்குத் தொழிலாகுபெயர்; இதில் கொள் - பகுதியும், தல் - தொழிற்பெயர்விகுதியும், ளகாரதகரங்கள் முறையே ணகாரடகரங்களானது சந்தியுமாம். வாய் - ஏழாம்வேற்றுமையுருபு; [நன் - பெயர் - ௪௫.] இனி, கொண்டலின்வாய்ந்த என வினைத்தொகையுமாம். சில+சில=சிற்சில; "பலசில"

என்னுஞ் சூத்திர விதி. கூர - குறிப்புப்பெயரெச்சம்; கூர் - பகுதி; இனி, க்ரூர என்னும் வடசொல் கூர என்றுதிரிந்ததெனக் கொண்டு, கொடிய என்று உரைக்கவுங்கூடும். (௩௬)

சல்லியன் சகதேவனை வென்று வீமனையும் அருச்சுனனையும் தருமனையும் எதிர்த்தல்.

ஒருகொடுங்கணைதொடுத்தலும்வென்கொடுத்தோடினன்சாதேவ
னிருகொடுங்கணைக்கிலக்கமாயினன்மருத்தீன்றவனிருதோளும்
பொருகொடுங்கணைமூன்றினாலருச்சுனன்புயமுமார்பமும்புண்செய்
தருகொடுங்குறநுதலின்மேலம்புநாலறத்தின்மைந்தனையெய்தான்.

(இ - ள்.) (சல்லியன்), ஒரு கொடு கணை - ஒருகொடியஅம்பை, தொடுத்தலும் - பிரயோகித்தவுடனே, சாதேவன் - சகதேவன், வென் கொடுத்து ஓடினன் - முதுகுகொடுத்துத் தோற்றோடினான்; மருத்து ஈன்றவன் - வாயுபெற்ற பிள்ளையான வீமன், இரு கொடு கணைக்கு இரு தோளும் இலக்கம் ஆயினன் - (சல்லியனெய்த) இரண்டுகொடியஅம்புகளுக்குத் தனது இரண்டுதோள்களும் லக்ஷ்யமாகப்பெற்றான்; (பின்பு சல்லியன்), பொரு கொடு கணை மூன்றினால்- போருக்குரிய கொடியமூன்றுஅம்புகளால், அருச்சுனன் புயமும் மார்பமும் புண் செய்து - அருச்சுனனது தோள்களிரண்டையும் மார்பையும் புண்படுத்தி, அருகு - சமீபத்திலுள்ள, அறத்தின் மைந்தனை - தருமபுத்திரனை, ஒடுங்குற - ஒடுங்கும்படி, நுதலின் மேல் - நெற்றியின்மேல், நால் அம்பு எய்தான் - நான்கு அம்புகளைத் தொடுத்தான்; (எ - று.)

சல்லியன் ஓரம்பினால் சகதேவனை வென்று இரண்டுஅம்புகளை வீமனது தோளிரண்டிலுஞ் செலுத்தி மூன்றுஅம்புகளை அருச்சுனனது இருதோள் மார்பு என்ற மூன்றுஉறுப்புக்களிலுந் தைக்குமாறு எய்து பின்பு தருமபுத்திரனது நெற்றியில் நான்குஅம்புகளைப் பிரயோகித்து அதனால் அவனை ஒடுங்கச் செய்பவனாயினனென்பதாம். மருத் - வடசொல். ஈன்றனன், ஈன் - பகுதி. மார்பம், அம் - சாரியை. மேன்மேலுயர்ச்சியணி தொனிக்கும். (௩௭)

அதுகண்டு வீமன் சல்லியனை மகுடபங்கஞ்செய்தல்.

அறத்தின்மைந்தனதானனங்குருதியாலருக்கன்மண்டலம்போல
நிறத்தவாறுகண்டருகுறககதைகொடுநின்றவாயுவின்மைந்தன்
மறத்தடம்புயவரிசிலைசசல்லியன்மணிமுடிகழன்றோடிப்
புறத்துவீழ்தரவெறிந்தனனெறிந்தமைபுயகககேதனன்கண்டான்.

(இ - ள்.) அறத்தின் மைந்தனது - தருமபுத்திரனது, ஆனனம் - முகம், குருதியால் - இரத்தத்தினால், அருக்கன் மண்டலம் போல - சூரியமண்டலம் போல, நிறத்த - செந்நிறமடைந்த, ஆறு - விதத்தை, கண்டு - பார்த்து,— அருகு உற கதை கொடு நின்ற வாயுவின் மைந்தன் - (அவனது) சமீபத்திலே பொருந்தக் கதாயுதத்தைக் கையிலேந்திக்கொண்டுநின்ற வாயுகுமாரனான வீமன்,—மறம் தட புயம் - வலிமையையுடைய பெரிய தோள்களையும், வரி சிலை - கட்டமைந்த வில்லையுமுடைய, சல்லியன் -சல்லியனது, மணி முடி - இரத்தினகிரீடம், கழன்று ஓடி புறத்து வீழ்தர - கழன்றுசென்று பின்னே விழும்படி, எறிந்தனன் - தனதுகதையினால் தாக்கினான்; எறிந்தமை - அவ்வாறு தாக்கியதனை, புயங்க கேதனன் கண்டான - பாம்புக்கொடியுடைய துரியோதனன் பார்த்தான்; (எ - று.)

சல்லியனெய்த நான்குபாணங்களால் தருமனது முகம் புண்பட்டு இரத்தஞ்சொரிந்ததைப் பார்த்த வீமன் சல்லியனைக் கதைகொண்டுதாக்கி அவனது

கிரீடம் கீழேவிழும்படி செய்திட்டதை அச்சல்லியனுக்குப் பாதுகாவலாக வந்துள்ள துரியோதனன் பார்த்தனனென்பதாம். அரசர், அரசன், மண்டலம் - வடசொற்கள். கொடு - கொண்டு என்பதன் தொகுத்தல். (௯அ)

வேறு.

வீமன்மேல் துரியோதனன் அம்புதொடுத்தல்.

தன்படைத்தலைவனைத்தண்டியாலெறி
வன்புடைத்தடம்புயமருத்தின் மைந்தன்மேன்
மின்படைத்தொருகணைவிசையினேவினான்
புன்படைப்பினிலயன்படைத்தபூபனே.

(இ - ள்.) தன் படை தலைவனை - தனது சேனைத்தலைவனான சல்லியனை, தண்டியால் எறி - கதாயுதத்தால் தாக்கின, வன்பு உடை தட புயம் மருத்தின் மைந்தனமேல் - வலிமையையுடைய பெரிய தோள்களையுடைய வாயுகுமாரனான வீமன்மேல்,—புன் படைப்பினில் அயன் படைத்த பூபன் - இழிவான சிருஷ்டிவருக்கத்திலே பிரமனால் சிருஷ்டிக்கப்பட்ட அரசனான துரியோதனன்,—மின் படைத்த ஒரு கணை - மின்னல்போன்ற ஒளியைப் பெற்ற ஓரம்பை, விசையின் ஏவினான் - வேகத்தோடு தொடுத்தான்; (எ - று.)

அசுராம்சமாய்த்தோன்றித் தீக்குணந்தீச்செயல்களையுடையராய் உலகத்துக்குக் கொடுமைவிளைத்துப் பூமிக்குப் பாரமாய்நின்ற பாதகர்களுள் துரியோதனன் ஒருவனாதலால், 'புன்படைப்பினில் அயனபடைத்த பூபன்' எனப்பட்டான். அயன் - அஜன் என்ற வடசொல்லின் திரிபு; திருமாலினிடத்தினின்று தோன்றியவனென்று காரணப்பொருள்படும்; அகாரம்-விஷ்ணுவைக் குறிக்கும். பூபன் - வடசொல்: பூமியைக் காப்பவன். படைத்தொரு - படைத்த ஒரு என்பதன் தொகுத்தல்.

இதுமுதல் ஆறு கவிகள் - மூன்றுஞ்சீர் ஒன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௯௧)

வீமன் துரியோதனன்மேல் அம்புதொடுத்தல்.

காமனைச்சம்பரன்கனன்றபோரென
வீமனைப்போர்செய்துவெல்லமுன்னிய
தீமனத்தரசனைச்சிலீமுகங்களின்
மாமுனைப்படுததினன்மறித்துவீமனே.

(இ - ள்.) காமனை - மன்மதனை, சம்பரன் - சம்பராசுரன், கனன்ற - கோபித்துஎதிர்த்துச்செய்த, போர் என - போர்போல, வீமனை போர் செய்து - வீமசேனனையெதிர்த்து யுத்தஞ்செய்து, வெல்ல முன்னிய - சயிக்க நினைத்த, தீ மனத்து அரசனை - கொடியஎண்ணத்தையுடைய துரியோதனராசனை, வீமன்—, மறித்து-தடுத்து, சிலீமுகங்களின் - (தனது) அம்புகளால், மாமுனை படுத்தினன் - பெரிய போருக்கு உள்ளாக்கினான்; (எ - று.)

சம்பரன என்னும் அசுரன் மன்மதனிடத்துப் பகைமைகொண்டு அவனையெதிர்த்துப் பலமுறைபொருது தோற்றதுமன்றிப் பின்பு அம்மன்மதனது அபராவதாரமான பிரத்யும்நனை யெதிர்த்துப் போரிட்டு அவனால் அழிவடைந்தன னென்பது சரித்திரம். இவனைக்கொன்றதனால் மன்மதனுக்கு 'சம்பராரி' என்ற ஒருபெயர். இங்கு வீமனை யெதிர்த்துப் போர்தொடங்கிய துரியோதனனுக்குக் காமனையெதிர்த்துப்பொருத சம்பரனை உவமைகூறியது, வெல்லக்கருதிய கருத்துச் சிறிதும் நிறைவேறாமல் எளிதிலழிதலை விளக்குதற்கென்க. காமன் -(யாவர்க்கும்) காமத்தை விளைப்பவன். கனன்ற, கனல்-பகுதி.

இதுமுதல்மூன்றுகவிகள் - துரியோதனனும்வீமனும்செய்யுந்தோந்தயுத்தம்.

யாளிகளிரண்டெதிர்ந்திகலுமாறுபோன்
மீளிகளிருவருங்குனித்தவில்லுமிழ்
வாளிகளிருவர்தம்வடிவிற்பாயுமுன்
றூளிகள்பட்டனதுணிந்துவானிலே.

(இ - ள்.) யாளிகள் இரண்டு - இரண்டு சிங்கங்கள், எதிர்ந்து - (ஒன்றோடொன்று) எதிர்த்து, இகலும் ஆறு போல் - போர்செய்யும் விதம்போல, மீளிகள் இருவரும் - பலசாலிகளான (துரியோதனன் வீமன் என்ற) இரண்டு பேரும், குனித்த - வளைத்த, வில் - விற்களினின்று, உமிழ் - வெளிப்படுத்தப்பட்ட, வாளிகள் - அம்புகள், இருவர்தம் வடிவில் பாயும் முன் - இவ்விருவருடைய உடம்புகளிற் பாய்தற்கு முன்னமே, வானிலே துணிந்து - ஆகாயத்திலேதானே துணிபட்டு, தூளிகள் பட்டன - பொடியாய்ச் சிதறின; (எ - று.)

குறித்த இலக்கிற் படுமுன்னமே இடையிலேஎதிரம்புதாக்குதலால் இருவரம்புகளும் ஒன்றொடொன்று துணிபட்டுச் சிதறின வென்பதாம். சிங்கம் - பலபராக்கிரமங்களுக்கு உவமை. யாளி-யாளியானையுமாம்; அது-சிங்கம்போல் வதும், யானையைக் கொல்வதும், துதிக்கையையுடையது மாகிய தொரு மிருகவிசேடம். மீளி - ஆண்பாற் சிறப்புப்பெயர். தூளீ-வடசொல். (௬௧)

தாண்முதன்முடியுறச்சரங்களேவியும்
வாண்முதற்படைகளான்மலைந்துமற்றவர்
தோண்முதலுறுப்பெலாஞ்சோரிகாலவே
நீண்முதற்றீபமேநிகருமாயினார்.

(இ - ள்.) தாள் முதல் முடி உற - கால்முதல் தலைவரையிலும், சரங்கள் ஏவியும் - (ஒருவர்மேல் ஒருவர்) அம்புகளைச் செலுத்தியும், வாள் முதல் படைகளால் - வாள் முதலிய ஆயுதங்களால், மலைந்தும - போர்செய்தும், அவர் - அவ்விரண்டுபேரும், தோள் முதல் உறுப்பு எலாம் சோரி கால - தோள்முதலிய அவயவங்களிலெல்லாம் இரத்தம்வழிய, நீள் முதல் தீபமே நிகரும் ஆயினார் - நீண்டபிழம்பையுடையவிளக்குபபோன்றவர்களு மானார்கள்; (எ - று.)

செந்நிறம்பற்றிய உவமை. இனி, நான்காமடிக்கு - நீண்ட அடியையுடைய சோதிவிருக்ஷம் போன்றனரென்றலு மொன்று. அது, இரவில் விளக்கொளிபோல் விளங்குதலால், இரவெரிமர மெனவும் படும். இனி, 'நீபம்' எனப் பாடங்கொண்டு, நீண்டதண்டையுடைய செங்கடப்பமரம் போன்றனரெனினு மமையும். கீழ்க் களப்பலியூட்டுசருக்கத்தில் "ஆனடலைக கன்னிமூல னவயவ மனைத்து மீந்து, காண்டக மலர்ந்த நீப மெனமுகங் கவினநின்றான்" எனவும், முதற்போர்ச்சருக்கத்தில் "பூபர் தஙகள் புயங்களு மார்பமும், சாப வெங்கணை தைத்துகு சோரியால், நீப மென்னவுஞ் செம்மலர்க் கோடுடை, நீப மென்னவு நின்றன ராண்மையால்" என்றும், பதினான்காம் போர்ச்சருக்கத்தில் "நீப மெங்கு மலர்ந்தென மண்டு செந் நீர் பரந்திட நின்று மூண்டெழு,பூபர் தங்க ளுடம்பு சிவந்தனர்" என்றும், வந்தவை, இங்கு ஒப்பு நோக்கத்தக்கன. சொரிவது சோரி யெனக் காரணக்குறி. மற்று - அசை.

வீமன் துரியோதனனது குதிரைமுதலியவற்றை யழித்தல்.

வன்பரிபாகுதேர்மதிநெடுங்குடை
மின்பொழிகணையுமிழ்வில்விலோதன
மென்பனயாவையுமிற்றுவீழுமா
றென்பதுபடவமருடற்றினனரோ.

(இ - ள்.) (துரியோதனனது), வல் - வலிய, பரி - தேர்க்குதிரைகள் நான்கும், பாகு - சாரதியும், தேர் - தேரும், மதி நெடு குடை - சந்திரன்போன்ற பெரியகுடையும், மின் பொழி கணை உமிழ் வில் - மின்னல்போன்ற ஒளியை மிகுதியாக வெளிப்படுத்துகிற அம்புகளைச் சொரிகிற வில்லும், விலோதனம் - கொடியும், என்பன யாவையும் - என்ற ஒன்பதுபொருள்களெல்லாம், இற்று வீழும் ஆறு - துணிபட்டுக் கீழ்விழும்படி, ஒன்பது பட - (தன்னுடைய) ஒன்பது அம்புகள் (அவற்றின்மேற்)படும்படியாக, அமர் உடற்றினன் - போர்செய்தான், (வீமன்); (எ - று.)—அரோ - ஈற்றசை.

இப்பாட்டுக்கு எழுவாய் வீமனென்பது, வருங்கவியின் முன்னிரண்டடியால் விளங்கும். குடைக்குச் சந்திரமண்டல வுவமை, வட்டவடிவுக்கும் வெண்மைக்கும் ஒளிக்கு மென்க. மதி - (யாவராலும்) மதிக்கப்படுவதெனக் காரணப்பொருள்படும். ஒன்பது - ஒன்பதுஅம்புகளுக்கு, எண்ணலளவையாகுபெயர். (௬௩)

துரியோதனன் தோற்கச் சல்லியன் போர்க்கு வரல்.

இரணவித்தகனிவனெறிந்தவேலினன்
முரணுடைச்சுயோதனன்முதுகுதந்தபி
னரணுடைப்படைக்கரசானமத்திரன்
மரணமிப்பொழுதெனவந்துமேவினன்.

(இ - ள்.) இரண வித்தகன் இவன் - போரில் வல்லவனான இவ்வீமன், எறிந்த - (மற்றும் துரியோதனன்மேல்) வீசின, வேலினால் - வேற்படையால், முரண் உடை சுயோதனன் - வலிமையையுடைய துரியோதனன், முதுகு தந்தபின் - தோற்றுப் புறங்கொடுத்தபின்பு,—அரண் உடை படைக்கு அரசு ஆன மத்திரன் - பாதுகாப்பையுடைய சேனைக்குத் தலைவனான மத்திரநாட்டரசனாகிய சல்லியன், மரணம் இடபொழுது என வந்து மேவினன் - மரணம் இப்பொழுதே யென்னும்படி வந்து (போர்க்கு)நெருங்கினான்; (எ-று.)

'மரணம் இப்பொழு தென' என்பது, இவன்வருகிற யுத்தாவேசத்தைப் பார்த்தவர்கள் எதிரிக்கு இவனால் தப்பாமல் மரணம் நேரு மென்று நிச்சயிக்கும்படி யென்றவாறு. இனி, இது இவனுக்கு உடனே நேரும் மரணத்துக்கு ஓரடையாளமாகவும் நிற்கும். இவன் இந்தமுறையில் இறந்தலை எஉ - ஆங் கவியிற் காண்க. ரணம் என்ற வடசொல் முதலில் இகரம்பெற்று இரணமென நின்றது; [நன் - பத - உக.] ஸுயோதநன் என்ற வடசொல்— ஸு - நல்ல, யோதநன் - போரையுடையவனென்று பொருள்படும். மரணம் - வடசொல். (௬௪)

வேறு.

பல வீரர்கள் வந்து சல்லியனுக்குத் துணையாதல்.

நேரிலாதகிருபப்பெயர்விறற்குருவு நீடுசாலுவனுமற்புயமணி
சிகர,வீரனானசகுனிப்பெயர்படைத்தவனும் வீறுசால்கிருதவற்ப
னுமெனப்புகலு,மாரமார்பினர்முதற்படைஞரிற்றலைவ ரானவீரது
ரகத்தினர்களிற்றினர்க,ளுநுமூருமிரதத்தினரெனப்பலரு மோதவா
ரியெனமத்திரனொடொத்தனரே.

(இ - ள்.) நேர் இலாத - ஒப்பில்லாத, கிருபன் பெயர் - கிருபனென்னும் பெயரையுடைய, விறல் குருவும் - வெற்றியையுடைய ஆசாரியனும், நீடு - பெரிய, சாலுவனும் - சாலுவதேசத்தரசனும், மணி - அழகிய, சிகரம் - மலைபோன்ற, மல் புயம் - வலிமையையுடைய தோள்களையுடைய, வீரன் ஆன - வீரனாகிய, சகுனி பெயர் படைத்தவனும் - சகுனியென்றபெயரைக்

கொண்டவனும், வீறு சால் - (வேறொருவர்க்கில்லாத) சிறப்பு மிக்க, கிருதவற்பனும் - கிருதவர்மாவும், என - என்று, புகலும் - சொல்லப்படுகிற, ஆரம் மார்பினர் - ஆரங்களையணிந்த மார்பையுடைய வீரர்கள், முதல - முதலாக, படைஞரில் தலைவர் ஆன-சேனைவீரர்களுட் சிறந்தவராகவுள்ள, வீர துரகத்தினர் - வலியகுதிரைகளையுடையவர்களும், களிற்றினர்கள் - யானையையுடையவர்களும், ஊரும் ஊரும் இரதத்தினர் - வேகமாகச்செல்லுந் தேரையுடையவர்களுமாகிய, எனை பலரும் - மற்றும்பலவீரர்களும், ஓதம் வாரி என - அலைகளையுடைய கடல்போல, மத்திரனொடு ஒத்தனர் - (கூட்டமாகத் திரண்டுவந்து) சல்லியனோடு சேர்ந்தார்கள்; (எ - று.)

ஸால்வன், ஹாரம், துரகம், வாரி-வடசொற்கள். மணிச்சிகரம்-இரத்தினமலையுமாம். கிருதவற்பன் - வடசொல் திரிபு. துரகம் - விரைந்துசெல்வது. ஊரும் ஊரும் - அடுக்கு, விரைவை விளக்கும். வாரி - நீர்: கடலுக்கு இலக்கணை. கிருபன்+பெயர்=கிருபப்பெயர்; "சிலவிகாரமா முயர்திணை."

இதுமுதல் எட்டுக்கவிகள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் தேமாச்சீர்களும் மற்றையாறும் கூவிளங்காய்ச்சீர்களு மாகிய எழுசீர்நெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச் சந்த விருத்தங்கள்.

தான தானனன தத்தனன தத்தனன தான தானனன தத்தனன தத்தனன என்பது, இவற்றிற்குச் சந்தக் குழிப்பாம். (௯௫)

பல வீரர்கள் வந்து தருமனுக்குத் துணையாதல்.

வீமசேனனுமவற்கிளையபச்சைமயில் வேளின்வானவர்குலப்பகைதொலைத்தவனு, மேமகூடநிகருத்தமவயப்புரவி யேறுவீரனுமவற்கிளையவித்தகனு, நாமமாயிரமுடைக்கடவுளுக்கிளைய ஞாயிறோடுவமைபெற்றொளிர்நிறத்தவனு, நேமிசூழ்தரணிபெற்றிட நினைந்தமர்செய் நீதிமானருகுசுற்றினர்துணைச்செயவே.

(இ - ள்.) வீமசேனனும் — , அவற்கு இளைய - அவனுக்கு அடுத்த தம்பியான, பச்சை மயில் வேளின் வானவர் குலம் பகை தொலைத்தவனும் — பசுநிறமுள்ள மயிலை வாகனமாகவுடைய முருகக்கடவுள்போலத் தேவர்கள்கூட்டத்துக்குப் பகைவரான அசுரர்களை அழித்தவனாகிய அருச்சுனனும், ஏமகூடம் நிகர் - ஏமகூடமலையையொத்த, உத்தமம் வய புரவி - நல்லிலக்கணமமைந்த வலியகுதிரையின்மீது, ஏறு-ஏறுகிற, வீரனும் - வீரனான நகுலனும், அவற்கு இளைய வித்தகனும் - அவனுக்கு இளையவனான தத்துவஞானமுள்ள சகதேவனும், நாமம் ஆயிரம் உடை கடவுளுக்கு - ஆயிரந்திருநாமங்களையுடைய கிருஷ்ணபகவானுக்கு, இளைய - தம்பியான, ஞாயிறோடு உவமை பெற்று ஒளிர் நிறத்தவனும் - சூரியனோடு ஒப்புமைபெற்று விளங்குகிற நிறத்தையுடைய சாத்தகியும், — நேமி சூழ் தரணி பெற்றிட நினைந்து அமர் செய் நீதிமான் அருகு - கடல்சூழ்ந்த நிலவுலகத்தைத் தன்னுடையதாகப் பெறுதற்கு எண்ணிப் போர்செய்கிற நீதியுள்ளவனான தருமனது சமீபத்தில், துணை செய சுற்றினர் - (அவனுக்கு) உதவிசெய்யும்பொருட்டு வந்துசூழ்ந்தார்கள்; (எ-று.)

பீமஸேநன் என்ற வடசொல்லுக்கு - வலியசேனையையுடையானென்று பொருள். தேவர்கள்வேண்டுகோளின்படி சிவபிரானாற் பெறப்பட்ட குமாரக்கடவுள் தேவர்களை வென்றிட்டவர்களான சூரபதுமன் முதலிய மிகப்பல அசுரர்களை வென்று தேவர்களுக்கு உதவினனாதலால், அவனை, தேவர்களை வென்ற நிவாதகவசர் காலகேயர் முதலிய அசுரர்களைத் தனியே சென்று எதிர்த்துப் பொருது அழித்துத் தேவர்க்குஉதவிசெய்த அருச்சுனனுக்கு

உவமைகூறினார். ஹேமகூடம் - வடசொல்; பொன்மயமான சிகரமுடைய தென்று காரணப்பொருள்படும்: ஹேமம் - பொன், கூடம் - சிகரம். குல பர்வதங்களுள் ஒன்றாதலால், இதனை யெடுத்துக்கூறினார். சகதேவன் தத்துவஞானமுடையவனாதல், பாரதத்திற் பலவிடங்களில் விளங்கும்; பழம்பொருத்துசருக்கம், கிருட்டிணன்றூதுசருக்கம், முகூர்த்தங்கேள்விச்சருக்கம் என்பவற்றிற் காணலாம்: மேல ௯௨ - ஆங்கவியில் "மதிகொள் ஞானி" என இவன் கூறப்படுமாறும் உணர்க. சகமமாயிரம் - ஸஹஸ்ரநாமம். நேமி - சக்ரவாளமலையுமாம். நீதிமான் - வடசொல்; இதில், மான் - பெயர்விகுதி. தருமன் எப்பொழுதும் நீதிதவறாமை, பிரசித்தம். முருகக்கடவுளால் வேல் கொண்டு பிளக்கப்பட்ட சூரபதுமனது உடம்பின் கூறு இரண்டும் மயில்வடிவமுங் கோழிவடிவமும் பெற்று அக்கடவுளருளால் அப்பிரானுக்கு வாகனமுங் கொடியுமாக வமைந்த சிறப்பைக் கருதி, 'மாமயில்' என்றார்.

பசுமை யென்னும் பண்புப்பெயர் ஈறுபோய்த் தன்னொற்றிரட்டி ஐகாரம் பெற்றுப் பச்சை யென நின்றது. 'வேலின்' என்பதில், ஐந்தாமுருபு - ஒப்புப்பொருளது. பகை - பகைவர்க்குப் பண்பாகுபெயர். உத்தமம், நாமம், நேமி, தரணி - வடசொற்கள். வய - வலிமையுணர்த்தும் உரிச்சொல்; "வய வலியாகும்" என்பது, தொல்காப்பியம். கடவுள் - (உலகசம்பந்தத்தைக்) கடந்தவன்; இது தொழிலாகுபெயரென்றும், இதில் உள் - தொழிற்பெயர் விகுதியென்றும் அறிக. தரணி - (எல்லாப்பொருள்களையுந்) தரிப்பது. (௯௯)

இருதிறத்துச்சேனையும் பொருதல்.

ஆடன்மாவுமலையொப்பனமதக்கரியு மாழிசேர்பவனமொத்த
விரதத்திரளு,நாடுபோரிலரியொத்தவனிகத்திரளு நாலுபாலுமெழ
லுற்றமருடற்றினார்க,ளோடியோடியெதிருற்றவர்முடித்தலைக ளூறு
சோரியுததிக்கிடைவிழுத்தினார்கள், கோடிகோடிதமரப்பறைமுழக்
கினொடு கோடுகோடுகளகுறித்தவிருபக்கமுமே.

(இ - ள்.) ஆடல் மாவும் - போர்வெற்றிக்குஉரிய குதிரைகளும், மலை ஒப்பன - மலைபோல்வனவான, மதம் கரியும் - மதயானைகளும், ஆழி சேர் பவனம் ஒத்த இரதம் திரளும் - சக்கரங்கள் பொருந்திய காற்றுப் போன்ற தேர்களின் கூட்டங்களும், நாடு போரில் அரி ஒத்த - (பகைவரைத்) தேடிச் சென்று செய்யும் போரிற் சிங்கங்களைப் போன்ற, அனிகம் திரளும் - காலாட்சேனைக்கூட்டமும், (ஆகிய நால்வகைப்படைகளிலு முள்ளவர்கள்), நாலு பாலும் எழல் உற்று - நான்குபக்கங்களிலும் எழுந்து, அமர் உடற்றினார்கள் - போர்செய்தார்கள்; (செய்து), ஓடி ஓடி எதிர் உற்றவர் முடி தலைகள் - மிகுதியாய் ஓடிவந்து எதிர்த்த வீரர்களது கிரீடமணிந்த தலைகளை, ஊறு சோரி உததிக்கு இடை விழுத்தினார்கள் - பெருகுகிற இரத்தக்கடலுக்கு இடையிலே துணித்துத் தள்ளினார்கள்; (அப்பொழுது), கோடி கோடி - மிகப்பலகோடிக் கணக்கான, தமரம் பறை - ஆரவாரத்தையுடைய போர்ப்பறைகளின், முழக்கினொடு - பேரொலியுடனே, கோடு கோடுகள் - வளைந்த சங்குகள், இரு பக்கமும் குறித்த - இரண்டுபக்கங்களிலும் ஊதப்பட்டன; (எ - று.)

உத்தமசாதிக்குதிரைக்கு 'ஆடன்மா' என்று ஒருபெயருண்டு. தேர்ச்சக்கரங்களோடு விரைந்துசெல்லுதலால், அதற்கு, சக்கரங்கள்பொருந்தியதொரு காற்றை இல்பொருளுவமையாகக் கூறினார். இனி, 'ஆழிசேர்' என்றதை இரதத்துக்கு அடைமொழியாக்கலும் ஒன்று. 'உடற்றினார்கள்' என்ற உயர்திணைவினைமுற்றுக்கு எற்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. நாலு - 'நான்கு' ஈறுகெட்டு, னகரம் லகரமாய், உகரச்சாரியை பெற்றது. ஓடி ஓடி - அடுக்கு,

மிகுதிப்பொருளது. உததி என்ற வடசொல் - நீர்தங்குமிடமெனக் காரணப் பொருள்படும்; உதம்=உதகம்: ஜலம். கோடிகோடி - மிகப்பல என்றமாத்திரமாய் நிற்கும். முழக்கு - முழங்கு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். கோடுகோடு - வினைத்தொகை; கோடுதல் - வளைதல். பக்கம் - பக்ஷமென்ற வடசொல் திரிந்தது. அலையொப்பன எனப் பிரித்து, அலைபோல்வன என்று உரைத்துக் குதிரைக்கு அடைமொழியாக்கினும் அமையும்; மதத்துக்கு விசேடணமாக்குதலும் ஒன்று. பவநம், அநீகம் - வடசொற்கள். உடற்றினர்கள், விழுத்தினர்கள் என்பவற்றில், கள் - விகுதிமேல்விகுதி. (௬௭)

அப்போரின் சிறப்பு.

ஆனபோதிருதளத்தினுமிகுத்தவிறலாண்மைவீரரொருவர்க்கொருவர்மெய்க்கவச, மானமேயெனநினைத்துவரிபொற்சிலையும் வாளும்வேலுமுதலெத்திறவிதப்படையு, மேனியூடுருவவெட்டியநிலைக்குவமைவேறுகூறவிரகெப்படிமலைத்தனராக,டானவானவருயுத்தமுமரக்கரொடு சாகைமாமிருகயுத்தமுநிகர்த்தனவே.

(இ - ள்.) ஆன போது - இவ்வாறாகிய அப்பொழுது, இரு தளத்திலும் - இரண்டுபக்கத்துச் சேனைகளிலும், மிகுத்த விறல் ஆண்மை வீரர் - மிக்க பலத்தையும் பராக்கிரமத்தையுமுடைய வீரர்கள், மெய் கவசம் மானமே என நினைத்து - தங்களுடம்பைக் கவசம்போலப்பாதுகாப்பது மானமேயென்று எண்ணி, வரி பொன் சிலையும் - கட்டமைந்த அழகிய வில்லும், வாளும்—, வேலும்—, முதல் - முதலிய, திறம் - வலிமையுடைய, எ விதம் படையும் - எல்லாவகைப்பட்ட ஆயுதங்களும், மேனி யூடு உருவ - (எதிரியின்) உடம்பில் ஊடுருவித் தும்படி, ஒருவர்க்கு ஒருவர்—, வெட்டிய - தாக்கிப்போர்செய்த, நிலைக்கு-நிலைமைக்கு, வேறு உவமை கூற விரகு எப்படி - வேறுஒப்புமைசொல்ல வகை யாது? மலைத்தனர்கள் - தம்மில்மாறுபாடுகொண்டவர்களான, தானவ வானவர் - அசுரர்களுக்கும் தேவர்களுக்கும் நடந்த, உயுத்தமும்-போரும், அரக்கரொடு - இராக்கதர்களுடனே, மா சாகை மிருகம் - சிறந்த குரங்குப்படைக்கு நேர்ந்த, யுத்தமும் - போரும், நிகர்த்தன - (இப்போருக்கு) ஒப்பாயின; (எ - று.)

அப்பொழுது கௌரவபாண்டவசேனைகள் எதிர்த்துச்செய்த போர்க்குத் தேவாசுரயுத்தமும் ராமராவணயுத்தமுமே ஒப்பாகுமென்பதாம். ஒருவர்க்கொருவர் - பரஸ்பரம். மானமாவது - எப்பொழுதும் தம்நிலையினின்று தாழாமையும், ஊழ்வினையால் தாழ்வுவந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். இதனையே பிரதானமாகக்கொண்டு என்பது, 'மெய்க்கவசம் மானமேயென நினைத்து' என்பதன் கருத்து. 'தானவவானவர்' என்பது, தானவானவரெனத் தொக்கது. யுத்தம், ரக்ஷஸ், சாகாம்ருகம் என்ற வடசொற்கள் உயுத்தம், அரக்கர், சாகைமிருகம் எனத் திரிந்தன. மரக்கிளைகளிற் சஞ்சரிக்கும் விலங்காதலால், சாகாமிருகமென்று குரங்குக்குப் பெயர்; சாகா - கிளை. தாநவர் - (காசியபமுனிவரது மனைவிமார்களுள்) தநுஎன்பவளிடம் பிறந்தவரெனக் காரணப்பொருள்படும் வடமொழித் தத்திதாந்தநாமம். தேவாசுரயுத்தம், பாற்கடல்கடைந்து அமிருதமெடுத்தகாலத்தும், மற்றும்பல சமயங்களிலும் நிகழ்ந்தது. இராவணனாற் சிறைகொள்ளப்பட்ட சீதையை மீட்டற்பொருட்டு இராமன் சுக்கிரீவனோடு நட்புக்கொண்டு அவனது எழுபது வெள்ளம் சேனைகளுடனே சென்று பொருது அரக்கரை அழித்தமை, பிரசித்தம். (௬௮)

தருமன் யாவரையும் விலக்கிச் சல்லியனைத் தான் எதிர்த்தல்.

வீமசேனனொடருச்சுனன்வயப்புரவி வீரமாநகுலனட்பினவனுக்கிளைய, தாமமீளியளிமொய்த்ததுளவப்புதிய தாரினனறுசன்விற்குரு

லைமுற்பொருத, சோமகேசபதிமெய்ப்புதல்வன்மற்றுமுள சூரரான
வரைமுற்றுறவிலக்கியுதிட்டிரன், மாமனாகியுமிகைத்துவருமத்திரனை வா
வெனவமர்தொடக்கினனுதிட்டிரனே.

(இ - ள்.) வீமசேனனொடு-வீமசேனனும், அருச்சுனனும் - அருச்சுனனும், வய புரவி - வலிய குதிரைத்தொழிலில் வல்ல, வீர மா நகுலன் - வீரத்தன்மையையுடைய சிறந்தநகுலனும், அவனுக்கு இளைய - அந்நகுலனுக்குத்தம்பியான, நட்பின் - சிநேக தருமத்தையுடைய, தாமம் மிளி - போர்மாலையையுடைய பலசாலியான சகதேவனும், அளி மொய்த்த - வண்டுகள் மொய்க்கப்பெற்ற, துளவம் - திருத்துழாயினாலாகிய, புதிய தாரினான் - புதியமாலையையுடைய கண்ணனது, அநுசன் - தம்பியான சாத்தகியும், வில் குருவை - வில்லாசிரியனான துரோணனை, முன் பொருத - முன்பு (பதினைந்தாநாட்போரிலே) போர் செய்து கொன்ற, சோமகேசபதி மெய் புதல்வன் - சோமககுலத்துத் தலைவர்களுக்குத் தலைவனான துருபதனது உண்மைப்புத்திரனான திட்டத்துய்மனும், மற்றும் உள சூரர் ஆனவரை - மற்றும்உள்ள வீரர்களும் ஆகிய எல்லோரையும், முற்றுற விலக்கி-முழுவதும் விலக்கி, உதிட்டிரன்-தருமபுத்திரன், மாமன் ஆகியும் எதிர் மிகைத்து வரு மத்திரனை - (தங்களுக்கு) மாமனாகஇருந்தும் (சோற்றுக்கடன்முறைபால்) எதிரிலே செருக்கிவருகிற சல்லியனை, வா என- 'வா'என்று உற்சாகத்தோடு சொல்லி, அமர் தொடக்கினன் - (அவனோடு) போரைத் தொடங்கினான்; (எ - று.)

தாமம், அளி, அநுஜன், ஸோமகேசபதி, சூரர், யுதிஷ்டிரன் - வடசொற்கள். துளவம் - துளஸீ என்ற வடசொல்லின் திரிபு. அநுஜன் - பின்பிறந்தவன். யுதிஷ்டிரன் என்ற பெயர் - யுதி ஸ்திரன் எனப் பிரிந்து, போரிற் பின்வாங்காது நிற்பவ னென்று பொருள்படும். மாமனாகியும், உம் - உயர்வுசிறப்பு. 'எதிர் மாமனாகியு மிகைத்துவரு மத்திரன்' என்ற தொடரை "மாதுலனாகிய மேதிலனாகிய வஞ்சன் கஞ்சன்" என்றதனோடு ஒப்பிடுக. அன்புக்கு உரியவனாயிருந்தும் அதனைவிட்டுப் பகைகொண்டவ னென்க. தனது தம்பியருள் நகுலசகதேவர்க்கு மாமனாதலையே ஒற்றுமையத்தால் இங்ஙனம் எடுத்துக்கூறினார். நட்பு - தொழிற்பெயர்; நள் - பகுதி, பு - விகுதி. (௯௧)

தருமன் சல்லியன்மேல் அம்புதொடுத்தல்.

வீரசாபமொரிமைப்பினில்வளைத்தெதிர்கொள் வேகசாயக
விதத்திறமெனைப்பலவு, மாரசாயகமெனச்சிகரமற்புயமு மார்புமூ
ழ்கவுடன்முற்றுமுளையிற்புதைய, வீரமானகுருதிப்பிரளயமெப்புற
மும் யாறுபோல்பெருகவெற்றுதலும்வெற்றிபுனை, சூரர்யாரினு
மிகுத்திருண்முடிக்கவரு சூரனாமெனவியப்புடையமத்திரனே.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) (தருமன்), வீர சாபம் - வலிய வில்லை, ஒர் இமைப்பினில் வளைத்து - ஒருநொடிப்பொழுதிலே வளைத்து, எதிர் கொள் - (பகையை) எதிர்த்தற்குஉரிய, வேகம் - விசைவுள்ள, சாயகம் விதம் திறம் எனை பலவும் - மிகப் பலவகைப்பட்ட பாணவர்க்கங்களெல்லாம், மார சாயகம் என - மன்மதபாணம்போல, சிகரம் மல் புயமும் - மலைச்சிகரம்போன்ற வலிமையையுடைய (சல்லியனது) தோள்களிலும், மார்பும் - மார்பிலும், மூழ்க - அழுந்தும்படியாகவும், உடல் முற்றும் - அவனுடம்புமுழுவதும், முளையின் புதைய - அம்புமுளைகளால் மறையும்படியாகவும், ஈரம் ஆன குருதி பிரளயம் - ஈரமுள்ள இரத்த வெள்ளம், எ புறமும் - எல்லாப்பக்கங்களிலும், யாறு போல் பெருக - நதி

போலப் பெருகும்படியாகவும், எற்று தனும் - தாக்கினவளவிலே, — வெற்றிபுனை சூரர் யாரினும் மிகுத்து - சயங்கொண்ட வீரர்களெல்லோரினும் மேம்பட்டு, இருள் முடிக்க வரு சூரன் ஆம் என - இருளையழித்தற்குவருகிற சூரியன்போல்வா னென்று கூறும்படி, வியப்பு உடைய - (யாவரும்) அதிசயிக்கத்தக்க குணமுள்ள, மத்திரன் - மத்திரநாட்டரசனான சல்லியன், (எ - று.) — 'கணை கள வவினான்' என வருங்கவியில் முடியும்.

மன்மதன் எய்யும் அம்புகள்போலக் குறித்தஇலக்குத்தவறாமற் பட்டுத் துளைக்குந் தருமனம்புக ளென்பார், அவற்றை உவமை கூறினார். சாபம், ப்ரளயம் - வடசொற்கள். இமைப்பு, வியப்பு - 'பு'விகுதிபெற்ற தொழிற்பெயர்கள்; இங்கே, இமைப்பொழுதுக்கும், வியக்கத்தக்க குணத்துக்குந் தொழிலாகு பெயராய் நின்றன. மாரன் என்ற வடசொல் - (பிராணிகளைக் காமநோயால்) மரணவேதனைப்படுத்துபவ னென்று காரணப்பொருள்பெறும். சூரனென்பது - வீரனென்றபொருளில் 'சூர' னென்ற வடசொல் திரிந்ததும், சூரியனென்ற பொருளில் 'ஸூர' னென்ற வடசொல் திரிந்ததுமாம். மிக்க இருளைத் தவறாமல் எளிதில் அழிக்குஞ் சூரியன் போல மிக்கபகைவரைத் தவறாமல் எளிதில் அழிப்பவன் சல்லிய னென்றார். மிகுந்து என்பது, சந்தவின்பம்நோக்கி 'மிகுத்து' என வலித்தது, செய்யுள்விகாரம். தாமரைமலர், அசோகமலர், மாமலர், மல்லிகைமலர், நீலோற்பலமலர் என்னும் ஐந்தும், மன்மதனது பஞ்சபாணங்களாம். 'யாறுபோல் பெருக' எனபதில், சந்தவின்பத்துக்காக லகரம் இயல்பாய் நின்றது. (௭௦)

சல்லியன் தருமனது கவசம்முதலியவற்றைத் துணித்தல்.

ஆரவாரமுரசக்கொடியுயர்த்தவனதாகமீதணிமணிக்கவசமற்றுவிழ, ஊருநேமியிரதத்தினுறுமச்சுருள வோடுவாசிதலையற்றிருநிலத்துருள, நேரிலாதவவனெற்றிதுளைபட்டுருவ நீடுநாணொடுபிடித்தகுனிவிற்றுணிய, வீரவாய்முனைநெருப்புமிழ்வடிக்கணைகளேவினானொருநொடிக்குளெதிரற்றிடவே.

(இ - ள்.) ஆரவாரம் - பெருமுழக்கத்தையுடைய, முரசம் - பேரிகைவாத்தியத்தின்வடிவத்தை யெழுதிய, கொடி - துவசத்தை, உயர்த்தவனது - உயரநாட்டியுள்ளவனான தருமனது, ஆகம் மீது - உடம்பின்மேல், அணி - அணியப்பட்டுள்ள, மணி கவசம் - இரத்தினம்பதித்த கவசம், அற்று விழ - துணிபட்டுவிழும்படியாகவும், ஊரும் - உருண்டுசெல்கிற, நேமி - சக்கரங்களையுடைய, இரதத்தின் - தேரில், உறும் - பொருந்திய, அச்சு—, உருள - துணிபட்டு உருளவும், ஓடு வாசி - விரைந்துவருந் தேர்க்குதிரைகள், தலை அற்று - தலையறுபட்டு, இரு நிலத்து உருள - பெரியபூமியிலே உருளவும், நேர் இலாத - ஒப்பில்லாத, அவன் - அத்தருமனது, நெற்றி—துளை பட்டு உருவ - (அம்பினால்) முழுதுந் துளைத்துச்செல்லப்பெறவும், பிடித்த குனி வில் - கையிற்பிடித்துள்ள வளைந்த வில், நீடு நாணொடு - நீண்ட நாணியுடனே, துணிய - துணிபடவும், — (சல்லியன்), ஒரு நொடிக்குள் - ஒருநொடிப்பொழுதினுள்ளே, எதிர் அற்றிட - (தனக்கு) எதிரில்லாதபடி, — வீர - (குறித்தஇலக்கைத் தவறாது) பிளக்குந்தலையுடைய, முனை வாய் - கூரிய நுனியினின்று, நெருப்பு உமிழ் - நெருப்பைச் சொரிகிற, வடி கணைகள் - கூரிய அம்புகளை, ஏவினான் - செலுத்தினான்.

கவசம் - வடசொல்; இரும்புமுதலியவற்றாலாகிய உடம்பின்மேற்சட்டை. அச்சு - அக்ஷ மென்ற வடசொல்லின் சிதைவு: சக்கரங்கோக்கும் மரம். நிலம் - (சலியாது) நிற்பது எனப் பூமிக்குக் காரணப்பெயர்; நில் - பகுதி, அம் - கருத்தாப்பொருள்விகுதி: அசலா, ஸ்திரா என்று வடமொழியிற் பூமிக்கு வழங்கும்

பெயர்கள் இப்பொருள் படுவன. ஈரொடு வில் துணிய - நாணியும் வில்லும் துணிய என்க. ஈர - ஈர் என்னும் முதனிலைத்தொழிற்பெயரின்மேற் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; ஈர்தல் - பிளத்தல், அ - பெயரெச்சவிகுதி: வீர வெனப் பதம்பிரித்து வலிய என்று உரைத்தல், மோனைத்தொடைக்கு முரணும். நொடிகைந்நொடிப்பொழுது. (௭௧)

தருமன் வேறுதேரேறி வேலினுற் சல்லியனைக் கொல்லுதல்.

வீறுசாலருளறத்தின்மகனப்பொழுதுவேறோர்தேர்மிசைகுதித்திமயவெற்பினிடை, யேறுகேசரியொடொத்துளநெருப்புமிழ வீறிலார்புரமெரித்தவனிகர்க்குமென, மாறிலாதவொருசத்தியையெடுத்துநெடுவாயுவாகுமெனவிட்டனனிமைப்பொழுதி,லாறுபாயருவிமுக்குவடிறுத்தசெயலானதான்முனைகொண்மத்திரன்முடித்தலையே.

(இ - ள்.) வீறு சால் - (வேறொருவர்க்கில்லாத) சிறப்பு மிக்க, அருள் - கருணையையுடைய, அறத்தின் மகன் - தருமபுத்திரன், அப்பொழுது—, வேறு ஓர் தேர்மிசை குதித்து-வேறொருதேரின்மேற் பாய்ந்து ஏறி, ஈறு இலார் புரம் எரித்தவன் நிகர்க்கும் என - அழிவற்றிருந்த அசுரர்களது முப்புரத்தை யெரித்திட்ட சிவபிரான் (தனக்கு) ஒப்பாவ னென்னும்படி, இமயம் வெற்பினிடை ஏறு கேசரியொடு ஒத்து - இமயமலையின்மேல் ஏறிய சிங்கத்தைப் போன்று, உளம் நெருப்பு உமிழ - மனம் கோபாக்கினியை வெளியிட, மாறு இலாதது ஒரு சத்தியை எடுத்து-ஒப்பில்லாததொரு வேலாயுதத்தை யெடுத்து, நெடு வாயு ஆகும் என - பெரிய காற்றாகு மென்னும்படி, விட்டனன் - வேகமாகவீசினன்; (அசனல்), இமை பொழுதில் - ஒருமாத்திரைப்பொழுதிலே, முனை கொள் மத்திரன் முடி தலை - முதன்மைகொண்ட சல்லியனது கிரீடமணிந்த தலை, ஆறு பாய் அருவி முக்குவடு இறுத்த செயல் ஆனது - நதிகளாகப்பெருகுகிற அருவிகளையுடைய மேருமலையின் மூன்றுசிகரம் (வாயுவினால்) ஒடிக்கப்பட்ட விதம் போன்றது; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

முக்குவடிறுத்த கதை:—முன்னொருகாலத்தில் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார்பலசாலி யென்று விவாதமுண்டாக, அதனைப் பரீக்ஷித்தறியும்பொருட்டு வாயுதேவன் மேருமலையின் சிகரத்தைப் பெயர்த்துத் தள்ளுவ தென்றும் ஆதிசேஷன் அதுபெயரவொட்டாமற் காத்துக்கொள்வ தென்றும் ஏற்பாடு உண்டாகி, அங்ஙனமே இருவரும் தேவர் முதலியோரது முன்னிலையில் தந்தம் வலிமையைக் காட்டத்தொடங்கிய பொழுது, ஆதிசேஷன் தனது ஆயிரம்படங்களாலும் மேருமலையின் ஆயிரஞ்சிகரங்களையும் கவித்துக்கொண்டு பெயரவொட்டாமல் வெகுநேரங்காக்க, பின்பு வாயுதேவன் தன்வலிமையால் அம்மலைச்சிகரங்களில் மூன்றைப் பெயர்த்துக் கொண்டுபோய்த் தென்திசையில் தள்ளிவிட்டனன் என்பதாம்.

ஓர் - ஒன்று என்பதன் விகாரமாகிய இது உகரம்பெறுமலும் முதல்நீளாமலும் நின்றது. இமயம் - பனிமலை; இது மலையரசனாதலாலும், எல்லாமலைகளினும் உயர்ந்ததாதலாலும், இதனை யெடுத்துக்கூறினர். கேஸரம் - பிடரிமயிர்; அதனையுடையது கேஸரீ என வடமொழிக்காரணப்பெயர்: ஆண்சிங்கம். தேர்க்கு மலையும், தருமனுக்குச் சிங்கமும் உவமை. எளிதிற்பகையழித்தற்குச் சிவபிரானை உவமைகூறினர். மாறு - எதிருமாம். ஶக்தி, வாயு-வடசொற்கள்.

வேறு.

சல்லியன் இறந்ததனால் கௌரவசேனை நிலைகுலைதல்.

தொட்டவரிசிலைத்தடக்கையிராமனென்னத் தொடுத்தகணைதப்பாமற்றெழாதவேந்த, ரிட்டகவசமுமார்பும்பிளந்தபின்ன ரெடுத்தவொ

ருவடிவேலாலிளையோனென்ன,மட்டவிழுந்தும்பையந்தார்த்தருமன் மைந்தன் வாகுவலியுடனெறியமத்திரேசன், பட்டனனென்றணிகுலை ந்துமுதுகிட்டோடிப்படாதுபட்டதுயர்த்தபணிப்பதாகன்சேனை.

இ - ள்.) தொட்ட - ஏந்திய, வரி - கட்டமைந்த, சிலை - (கோதண்ட மென்னும்) வில்லை யேந்திய, தட - பெரிய, கை - கையையுடைய, இராமன் என்ன - இராமன்போல, தொடுத்த கணை தப்பாமல் - எய்த அம்பு குறிதவறாத படி, தொழாத வேந்தர் இட்ட கவசமும் மார்பும் பிளர்த்த பின்னர் - வணங்காத பகையரசர்கள் தரித்துள்ள கவசத்தையும் அவர்கள்மார்பையும் (அம்புகளாற்) பிளந்தபின்பு,—எடுத்தது ஒரு வடி வேலால்-கையிலெடுத்ததொரு கூரியவேலா யுதத்தால், இளையோன் என்ன-முருகக்கடவுள்போல, மட்டு அவிழும் அம் தும் பை தார் தருமன் மைந்தன் - வாசனைவீசுகிற அழகிய தும்பைப்பூமாலையை யுடைய தருமபுத்திரன், வாகு வலியுடன் எறிய-தோள்வலிமையோடு வீச, (அத னால்), மத்திர ஈசன்-மத்திரநாட்டரசனான சல்லியன், பட்டனன்-இறந்தான், என்று-என்றகாரணத்தால், உயர்த்த பணி பதாகன் சேனை-உயரநாட்டிய பாம் புக்கொடியையுடைய துரியோதனனது சேனை, அணி குலைந்து-அணிவகுப்பின் ஒழுங்குகெட்டு, முதுகு இட்டு ஓடி - தோற்று ஓடி, படாது பட்டது-படாத பாடுபட்டது; (எ - று.)

வேலினெலறிதற்கு வேலனை முருகனை உவமை கூறினார். சுப்பிரமணி யன் சிவபிரானது இளையகுமார னாதலால், இளையோ னெனப்பட்டனன். இனி, 'இளையோனென்ன' என்பதற்கு-இராமன்தம்பியான இளையபெருமாள் [லக்ஷ்மணன்]போல என்று உரைப்பாரு முளர். படாதுபட்டது-ஒருநாளும் படாதமிக்கபாடு பட்டது. பணி-வடசொல்; பணத்தை யுடையது, பணம்-படம்.

இதுமுதற் பதினைந்து கவிகள் - பெரும்பாலும் ஒன்று இரண்டு ஐந்து ஆறு ஞ்சீர்கள் காய்ச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியவிருத்தங்கள். (எ௩)

சல்லியனைச் சேர்ந்த எழுநூறுவீரர்கள் தருமனை யெதிர்த்தல்.

மதிகண்டபெருங்கடல்போற்குந்திமைந்தர் வான்சேனையார்ப் பதுவுமன்னன்சேனை, நுதிகொண்டகனல்கொளுத்துமிராமபாண நுழைகடல்போனொந்ததுவுநோக்கிநோக்கிக், கதிகொண்டபரித் தடந்தேர்ச்சல்லியன்றன் கண்போல்வாரெழு நூறுகடுந்தோட்கள், விதிகொண்டபடைபோல்வெம்படைகளேவி வெம்முரசக்கொடிவே ந்தன்மேற்சென்றாரே.

(இ - ள்.) மதி கண்ட பெரு கடல் போல் - சந்திரனைக் கண்ட பெரிய கடல் பொங்குவதுபோல, குந்தி மைந்தர் வான் சேனை ஆர்ப்பதுவும்-பாண்ட வர்களது பெரிய சேனை (தருமன்வெற்றியைக் கண்டு மகிழ்ந்து) ஆரவாரிப் பதையும், மன்னன் சேனை - துரியோதனனுடைய சேனை, நுதி கொண்ட கனல் கொளுத்தும் இராம பாணம் நுழை கடல் போல் - கூர்மையைக்கொண் டதும் நெருப்பைமூட்டுவது மான இராமனது அம்பு தொடுக்கப்பெற்ற கடல் போல, நொந்ததுவும் - (சல்லியனிறந்தசோகத்தால்) வருந்தியதையும், நோக்கி நோக்கி - பார்த்துப்பார்த்து,—கதி கொண்ட பரி தட தேர் சல்லியன்தன் கண் போல்வார்-பலவகைநடைகளைக்கொண்டகுதிரைகளைப்பூட்டிய பெரியதேரை யுடைய சல்லியனுக்குக் கண்போல் இன்றியமையாத அங்கமாயுள்ள, எழுநூறு கடு தேர் ஆட்கள் - கொடிய தேர்வீரர் எழுநூறுபேர், விதி கொண்ட படை போல் வெம் படைகள் ஏவி-பிரமாஸ்திரம்போலக் கொடிய ஆயுதங்களைப் பிர

யோசித்துக்கொண்டு, வெம் முரசம் கொடி வேந்தன்மேல் சென்றார் - பயங்கரமான முரசக்கொடியையுடைய தருமராசன்மேல் (போர்க்குச்) சென்றார்கள்.

சந்திரன் எதிர்ப்பட்டவளவிலே கடல் பொங்குதல், இயல்பு. 'மதிகண்ட பெருங்கடல்' என்றவிடத்து 'கண்ட' என்பது - காணுதலைக் காண்பதுபோலச் சொன்ன மரபுவழுவமைதி; [நன் - பொது - ருஅ.] நகுலசகதேவர், மாத்திரியின் மக்களாயினும், குந்தியால் வளர்க்கப்பட்டதனாலும், குந்தியாலுபதேசிக்கப்பட்ட மந்திரத்தின் பலத்தால் மாத்திரியினிடம் பிறந்தவராதலாலும், 'குந்திமைந்தர்' என அடக்கப்பட்டனர். நதி, ராமபாணம், கதி - வடசொற்கள். தேராட்கள் - தேர்க்காவலராய நின்ற ஆட்களுமாம். விதிகொண்டபடை - பிரமனைத்தெய்வமாகக்கொண்ட அஸ்திரம். படை - படுத்தற்குக் கருவியானது; படுத்தல் - அழித்தல்: ஐ - கருவிப்பொருள்விகுதி.

இராவணனாற் கவர்ந்துபோகப்பட்ட சீதாபிராட்டி இலங்கையிலிருக்கிற செய்தியை அநுமான்சென்று அறிந்துவந்து சொன்னபின்பு இராமபிரான்வானரசேனையுடனேபுறப்பட்டுச்சென்று கடற்கரையையடைந்து, கடலைக்கடக்க உபாயஞ்சொல்லவேண்டுமென்று வருணனைப் பிரார்த்தித்து அங்குத் தருப்பசயனத்திலே படுத்து ஏழுநாள்வரையில் பிராயோபவேசமாகக்கிடக்க, கடலரசனாகிய வருணன் அப்பெருமானது மகிமையை யறியாமல் உபேக்ஷையாயிருக்க, சக்கரவர்த்தித்திருமகனார் அதனைக்கண்டு கோபங்கொண்டு, வானரர் நடந்துசெல்லும்படி கடலைவற்றச்செய்வேனென்று ஆக்கினேயாஸ்திரத்தைத் தொடுக்கத்தொடங்கவே, வருணன் அஞ்சிநடுங்கியோடிவந்து அப்பெருமானைச் சரணமடைந்து கடல்வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு ஒடுங்கிநின்றானென்பது, இராமாயணகதை. (எச)

துரியோதனன் சகுனிமுதலானோருடன் தருமனை யெதிர்த்தல்.

அவரளவோவாவரவுயர்த்தவரசன்றானு மாகுலத்தோடருஞ்சமரி
லரியேறென்னக், கவரிபுடைபணிமாறத்தவளக்கொற்றக் கவிகை
யொருதனிநிழற்றக்கரைகாணாதவுவரிநெடும்பெருஞ்சேனைவெள்ள
ஞ்சூழ வுயிரனையதுணைவருடன்மாமன்சூழத், தவர்முதலாம்படைக
ளொடுதன்னைவென்று தரணிகொளவருநிருபன்றன்னைச்சார்ந்தான்.

(இ - ள்.) அவர் அளவோ - அவ்வெழுநூறுபேர்மாத்திரமோ, அரவு உயர்த்த அரசன்தானும் - பாம்புக்கொடியை உயரநாட்டிய துரியோதனராசனும், ஆகுலத்தோடு - வருத்தத்துடனே, அரு சமரில் - அரிய போரில், அரி ஏறு என்ன - ஆண்சிங்கம்போல, கவரி புடை பணி மாற - சாமரங்கள் பக்கங்களில் வீசவும், ஒரு தனி தவளம் கொற்றம் கவிகை நிழற்ற - ஒப்பற்ற ஒற்றை வெண்கொற்றக்குடை நிழலைச்செய்யவும், கரை காணாத உவரி நெடு பெரு சேனை வெள்ளம் சூழ - கரைகாணவொண்ணாத கடல் போன்ற மிகப்பெரிய சேனைத்தொகுதி சூழ்ந்துவரவும், உயிர் அனைய துணைவருடன் மாமன் சூழ - தனது உயிர்போன்ற தம்பிமார்களுடன் மாமனான சகுனியும் சுற்றிலும் வரவும், தவர் முதல் ஆம் படைகளொடு - வில் முதலிய ஆயுதங்களுடனே, தன்னை வென்று தரணி கொள வரும் நிருபன் தன்னை சார்ந்தான் - தன்னைச்சயித்துப் பூமியைப்பெற்றுக்கொள்ளுதற்கு வருகிற தருமராசனை நெருங்கினான்; (எ - று.)

அரவு - பாம்பின்வடிவமெழுதிய கொடிக்கு, இருமடியாகுபெயர். அரசன் - ராஜன். ஆகுலம், தவளம் - வடசொற்கள். கவிகை - கவிந்துள்ளது; 'கை' விகுதிபெற்ற தொழிலாகுபெயர். உவரி - உப்புச்சுவையுடையது; இ - பெயர்விகுதி. தவர் - இடுகுறிப்பெயர். அரியேறென்னச் சார்ந்தானென இயையும். வெள்ளம் - ஒருபெருந்தொகை. (எரு)

வீமன் முதலியோர் பகைவர்களை யெதிர்த்தல்.

வீமன்முதற்றம்பியரும்பொருவிலாத வெஞ்சேனைத்தலைவரும் போர்வென்றிகூருஞ்சோமகருமுதலாயதறுகண்வீரர் தும்பிகளையரியினங்கடொடருமாபோற், றாமமணித்தடஞ்சிகரத்தோளுமார்புஞ் சரமுழுகத்தனுவணக்கிச்சாய்த்தசோரி, பூமுழுதும்பரந்துவரப்பொருதவீரம புலவோர்க்குமதிசயித்துப்புகலலாமோ.

(இ - ள்.) வீமன் முதல் - வீமசேனன் முதலான, தம்பியரும் - (தருமபுத்திரனது) தம்பிமார் நால்வரும், பொருவு இலாத - ஒப்பில்லாத, வெம் சேனைதலைவரும் - கொடிய சேனைத்தலைவர்களான திட்டத்துய்மன் முதலியோரும், போர் வென்றி கூரும் - போரில் வெற்றிமிகுகிற, சோமகரும் - சோமககுலத்துவீரர்களும், முதல் ஆய - முதலான, தறுகண் வீரர் - அஞ்சாமையையுடைய வீரர்கள், தும்பிகளை அரி இனங்கள் தொடரும் ஆ போல் - யானைகளைச் சிங்கக்கூட்டங்கள் (கொல்லுதற்குத்) தொடர்ந்துசெல்லும் விதம்போல, (பகைவரையெதிர்த்து),— தாமம் - (போர்) மாலையை யணிந்த, மணி - அழகிய, தட - பெரிய, சிகரம் - மலைச்சிகரம் போன்ற, தோளும் - அவர்களதோள்களிலும், மார்பும் - மார்பிலும், சரம் முழுக - அம்புகள் தைத்துஅழுந்தும்படி, தனு வணக்கி - வில்லை வளைத்து, சாய்த்த சோரி பூ முழுதும் பரந்து வர - (அவர்களுடம்பு) சொரிந்த இரத்தம் பூமிமுழுவதிலும் பரவிவரும்படி, பொருத - போர்செய்த, வீரம் - வீரத்தன்மை, புலவோர்க்கும் அதிசயித்து புகலல் ஆமோ - விசேஷஞானமுடைய தேவர்களுக்கும் கொண்டாடிச் சொல்லக்கூடியதோ? [அன்று என்றபடி]; (எ - று.)

பேரறிவுடைய தேவர்களும் வருணித்துச்சொல்லலாகாதவண்ணம் மிக்க வீரங்காட்டிப் பொருதன ரென்பதாம். புலம் அல்லது புலமை - அறிவு; அதனையுடையவர், புலவர்: விகுதியீற்றயலில் அகரம் ஓகாரமாய்ப் புலவோர் எனநின்றது. மிக்கஅறிவுடைமைபற்றி, தேவர்க்கு வடமொழியில் விபுதரென்று ஒரு பெயர்; புலவர் என்ற தமிழ்ப்பெயர் அதுபற்றிவந்தது. இனி, கல்வித்திறமுடைய வித்துவான்களுக்கும் வருணித்துச்சொல்லக்கூடிய அளவின தன்றென்று உரைப்பினும் அமையும். சோமகர்-துருபதனது குலத்தார். தாமம் மணி தட சிகரம் தோள் - ஒளியையுடைய இரத்தினங்களையுடைய பெரிய மலைகள் போன்ற தோள்க ளென்றலும் ஒன்று; இருபொருளிலும், தாமம் - வேறுவேறு வடசொல். பூ-பூமியைக் குறிக்கையில், வடமொழி. தும்பிகளை அரியினங்கள் தொடருமாபோல் - உவமையணி. ஆ - ஆறு என்பதன் தொகுத்தல். (எசு)

துரியோதனன்தம்பியர்கள் எழுவரை வீமன் கொல்லுதல்.

தன்றமையன்றனைப்பொருதுவெல்லவந்த தானையெலாநீறாக்கித் தரணியாளும், புன்றமையனெதிரவனுக்கிளையவீரர் பொரவந்தோரெழுவரையும்புவிமேல்வீழ்த்தி, யின்றமையுஞ்சமரமினிக்காண்டல்பாவமென்றிமையோரதிசயிப்பவிமயம்போல, நின்றமைகண்டானிலனைமகிழ்ந்துநோக்கி நெஞ்சுறவன்றென்செய்தானெடியமாலே.

(இ - ள்.) தன் தமையன்தனை - தனது தமையனான தருமனை, பொருது - எதிர்த்துப்போர்செய்து, வெல்ல வந்த - சயிப்பதற்கு வந்த, தானை எலாம் - பகைவர்சேனைகளையெல்லாம், நீறு ஆக்கி - பொடிபடுத்தி,— தரணி ஆளும் புன்தமையன் எதிர் - பூமியைஅரசாளுகிற அற்பகுணமுள்ள தமையனான துரியோதனனது எதிரிலே, பொர வந்தோர் அவனுக்கு இளைய வீரர் எழுவரையும் - (தன்னுடன்) போர்செய்யவந்தவர்களான அவனதுதம்பிமார் எழுபேரையும்,

புவிமேல் வீழ்த்தி - தரையிலே இறந்துவிழச்செய்து,—சமரம் இன்று அமையும் - 'போர் இன்றைநாளோடு போதும், இனி காண்டல் பாவம் - இனிமேலும் (இப்படிப்பட்ட கொடும்போரைப்) பார்த்தல் பாவமாம்,' என்று இமையோர் அதிசயிப்ப - என்று தேவர்கள் கொண்டாட,—இமயம் போல நின்றமை - இமயமலைபோல (வீமன்) சலியாது நின்றதை, கண்டு - பார்த்து, நெடியமால் - பெருமைக்குணமுள்ள திருமாலின் அவதாரமான கண்ணபிரான், அனிலனை - வாயுகுமாரனான அவ்வீமனை, நெஞ்சு உற - மனங் களிக்க, மகிழ்ந்து நோக்கி - மகிழ்ச்சிகொண்டு பார்த்து, அன்று - அப்பொழுது, என் செய்தான்- யாது செய்தான்? [மிக்கஆனந்தமடைந்தனன் என்பதாம்]; (எ - று.)

துரியோதனனுக்கு உதவியாய்த் தருமனைச் சயிக்கும்பொருட்டு வந்த சேனைகளை வீமன் சாம்பலாக்கித் துரியோதனன்கண்ணெதிரிலே அவன் தம்பிமார் எழுபேரையுங் கொன்று மிகஉக்கிரமாகப் போர்செய்து சிறிதும் சலிப்பில்லாது நின்ற திறத்தைக் கண்ணன் பார்த்து மனப்பூர்வமாய் அளவில்லாத ஆனந்தத்தை அடைந்தனன் என்பதாம். தனது திருவவதாரத்தின் காரியமான பூபாரநிவிருத்தி வீமனால் நிறைவேறிவருதலை நோக்கி எம்பெருமான் திருவுள்ளமுவந்தனனென்க. நெடியமால் - மகாவிஷ்ணு; திரிவிக்கிரமாவதார காலத்திலும் விசுவரூபசமயத்திலும் மற்றும்சிற்சிலபொழுதிலும் நெடியவடிவு கொள்ளும் நிலைமைபற்றி, 'நெடியமால்' என்றதெனினும் அமையும். தமையன் என்ற பெயர் - தம்ஐயன் எனப்பிரிந்து, தமக்குத்தந்தைபோல்வானெனக் காரணப்பொருள்படும். ''ஜ்யேஷ்டப்ராதா பித்ருஸம:'' [மூத்த உடன்பிறந்தவன் தந்தைபோல்வான்] என்பது நூற்கொள்கை. 'புன்தமையன்' என்றவிடத்து, தமையன் என்றது, வீமனுக்குத் துரியோதனன் முந்திப்பிறந்தவனென்பதை விளக்கும்; வீமன்பிறந்தநாளுக்கு முதல்நாளிரவிற் பிறந்தவன் துரியோதனனென்றும், வீமன்பிறந்தநாளிற் பிறந்தவன் துச்சாதனனென்றும், மற்றைத்தொண்ணூற்றெட்டுப்பேரும் அதற்குஅடுத்தநாட்களில் முறையே பிறந்தவரென்றும் அறிக. இனி, புன்தமையன் - துச்சாசனன்முதலியோர்க்குத் தமையனுமாம். எழுவர்பெயர், அடுத்தகவியில் விளங்கும். புவி - வடசொல்; இது அந்தப்பாஷையில் ஏழாம்வேற்றுமைவிரி: இது, தமிழிற் பெயர்மாத்திரமாய்நின்று பிறவேற்றுமையுருபுகளை மேலேற்கும். காணுதற்கரிய அப்போரின்மிக்கஉக்கிரத் தன்மையை விளக்குவார் 'இன்றமையுஞ் சமர மினிக் காண்டல் பாவ மென்றிமையோ ரதிசயிப்ப' என்றார். பாவம் = பாபம்: வடசொல். இமையோர் - கண்இமையாதவர்; எதிர்மறை வினையாலணையும்பெயர். அநிலன் - வாயுபுத்திரன்: வடமொழித் தத்திதாந்தநாமம்; அநிலன் - வாயு. 'பொரவந்தோர்' என்றவிடத்தில் 'போர்வேந்தர்' என்றும் பாடமுண்டு. (௭௭)

தம்பியர்இறந்ததற்குத் துரியோதனன் சோகமடைதல்.

செயகந்தன்செயவன்மன்செயசேனன் சேனாவிந்துசெயத்திர
தன்திறலார்விந்து, வயமொன்றுவிக்கிரமனென்போராவி வானாடு
புகுந்ததற்பின்மதங்களேழுங், கயமொன்றுசொரியவெதிர்நின்ற
தென்னக் களித்துவலம்புரிவீமன்முழக்கக்கண்டங், கயனின்றவலம்
புரித்தாரண்ணல்சோர்ந்தா னநுசர்மேலன்பெவர்க்குமாற்றலாமோ.

(இ - ள்.) செயகந்தன் - ஜயகந்தன், செயவன்மன் - ஜயவர்மா, செயசேனன் - ஜயஸேநன், சேனாவிந்து - ஸேநாவிந்து, செயத்திரதன் - ஜயத்ரதன், திறல் ஆர் விந்து - வெற்றிபொருந்திய ஜயவிந்து, வயம் ஒன்று விக்கிரமன் - சயம்பொருந்திய சயவிக்கிரமன், என்போர் - என்னும்ஏழுபேருடைய, ஆவி - உயிர், வான் நாடு புகுந்ததன்பின் - இறந்துவீரசுவர்க்கமடைந்தபின்பு,—கயம்

ஒன்று - ஒருயானை, மதங்கள் எழும் சொரிய -எழுவகைமதங்களும் பொழிய, எதிர் நின்றது என்ன - எதிரிலே நின்றது போல, வீமன் —, களித்து - களிப்படைந்து எதிரில்நின்று, வலம் புரி முழக்க - (வெற்றிக்குஅறிகுறியாகத் தனது) சங்கத்தை வாயில்வைத்து ஊதி ஆரவாரிக்க, கண்டு - பார்த்து, அங்கு அயல் நின்ற வலம்புரி தார் அண்ணல் - அவ்விடத்தில் அருகிலே நின்ற நஞ்சாவட்டைப்பூமாலையணிந்த அரசனான துரியோதனன், சோர்ந்தான் - மனந்தளர்ந்தான்: அநுசர்மேல் அன்பு எவர்க்கும் ஆற்றல் ஆமோ - தம்பியர்பக்கல் உள்ள அன்பு யாருக்கும் அடக்கமுடியுமோ? [முடியாது என்றபடி]; (எ - று.)

தம்பிமார்இறந்ததற்குத் துரியோதனன்சோகித்தானென்ற சிறப்புப்பொருளை, தம்பியர்பக்கல் அன்பு யார்க்குந் தணிக்கலாகாது என்ற பொதுப்பொருள்கொண்டு விளக்கியதனால், வேற்றுப்பொருள்வைப்பணி; வடநூலார் அர்த்தாந்தரந்யாஸாலங்கார மென்பர். மோனைப்பொருத்தத்திற்காக 'ஜய' என்பதை 'செய' எனத் திரித்தார். திறல்ஆர் விந்து - திறலென்னுஞ்சொல்லின் பொருள்கொண்டதொரு பரியாயநாமம் முந்தியமையப்பெற்ற விந்து வென்னும் பெயருடையா னென்க; இங்ஙனமே, வயமொன்று விக்கிரமன் - வயமென்னுஞ்சொல்லின் பரியாயநாமம் முன்அமைந்த விக்கிரம னென்னும் பெயருடையா னென்க. யானைக்கு எழுவகைமதம் - இரண்டுகண்கள், இரண்டுகன்னங்கள், துதிக்கைத்துளைகளிரண்டு, குறியொன்று ஆகிய ஏழிடத்தினின்றும் பெருகுவன. எழுபேரைக் கொன்றதனால் வீமன் எழுவகைஉற்சாகங்கொண்டதைவிளக்குவார்போல, 'மதங்களேழுங்கயமொன்று சொரிய எதிர்நின்றதென்னக் களித்து' என்றார். கயம் - கஜமென்ற வடசொல்லின் திரிபு. வலம்புரி-வலப்பக்கமாகஉட்சுழிந்துள்ளது; இந்தச்சாதிச்சங்கு இடம்புரியினும் ஆயிரமடங்கு சிறந்ததாம்: ["இப்பி யாயிரமே சூழ்ந்த திடம்புரி யென்று கூறும், ஒப்பில் சங் காயிரஞ் சூழுறும் வலம்புரி யென்றோதும், அப்படி யதுவுஞ் சூழ்ந்த சலஞ்சல மாகு மற்றைத், தப்பிலாச் சலஞ்சலங்கள் சார்ந்தது பாஞ்சசந்யம்" என்பதனால், சங்குகளின் வகையையும், அவற்றின் உயர்வில் உள்ள விதத்தையும் அறிக.] கவி பக்ஷபாதமில்லாமல் வீமன் துரியோதனன் என்றஇருவர்க்கும் வலம்புரிகூறுவார்போன்று சமத்காரத்தால் 'வலம்புரிவீமன்முழக்க, வலம்புரித் தாரண்ணல்' என்றார். அண்ணல் - பெருமையிற் சிறந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர்; இனி, தமையனென்றுமாம்: அண்ணல்=அண்ணன். முதலடியில் 'செயசே னன்சே னவிந்து' எனச் சீர்பிரிக்க. மாற்றலாமோ என எடுத்துரைத்தல், மோனைக்குச் சிறவாது. (எஅ)

வீமன் மற்றும் துரியோதனன்தம்பியரைவதை யெதிர்த்தல்.

தனக்குநிகர்தானானகிருதவன்மன் றம்பியர்களெழுவர்படத்தம்
முன்பட்ட, மனக்கவலையறிந்துபெருஞ்சேனையோடு மற்றவன்றம்பிய
ரைவரோடும்வந்து, சினக்கதிர்வேல்வீமனுயிர்செகுப்பானெண்ணிச்
செருச்செய்தானேனையர்கடிருகியோட, வெனக்கிவரேயமையுமெ
னப்புறக்கிடாத விளையவர்மேற்கடுங்கணையைத்தேவினானே.

(இ - ள்.) தம்பியர்கள் எழுவர் பட - தம்பிமார் எழுபேர் இறக்க, தம்முன் பட்ட - தமையனான துரியோதனன் அடைந்த, மனம் கவலை - மனக்கலக்கத்தை, அறிந்து - உணர்ந்து,—தனக்கு நிகர் தான் ஆன கிருதவன்மன் - (வேறு ஒப்புமையில்லாமையால்) தனக்குச்சமானம் தானேயாகிய கிருதவர்மன்,—பெரு சேனையோடும் - பெரிய சேனையுடனும், மற்று அவன் தம்பியர் ஐவரோடும் - அத்துரியோதனன்தம்பிமார்வேறுஐந்துபேருடனும், வந்து —, சினம் கதிர் வேல் வீமன் உயிர் செகுப்பான் எண்ணி - கோபத்தையும் ஒளியையுமுடைய வேலாயுதத்தையுமுடைய வீமனது உயிரைத் தொலைக்க நினைத்து, செரு செய்தான் -

போர்செய்தான்; (அப்பொழுது வீமன் எதிர்த்துப் போர்செய்து), ஏனையர்கள் திருகி ஓட - மற்றையவீரர்கள் மீண்டுபுறமிட்டோட, புறக்கு இடாத இளைய வர்மேல் - புறங்கொடாதுநின்ற துரியோதனன்தம்பியர் ஐவர்மேல், எனக்கு இவரே அமையும் என-எனக்கு இவர்களே போதுமென்று, கடு கணை ஐந்து ஏவினான் - கொடியஐந்துஅம்புகளைச் செலுத்தினான்; (எ - று.)

நூற்றுவருள் மூன்றுநாள்களில் இறந்தவர் போக மற்றையோரையெல் லாம் அன்றைக்கே கொன்றொழித்துத் தனது சபதத்தை நிறைவேற்றிவிடவே ண்டு மென்பது வீமன்கொண்ட சங்கற்பமாதலால், அதற்கு ஏற்ப, 'எனக்கு இவரேயமையுமென இளையவர்மேற் கணையேவினான்' என்றார். இந்தஐவர் பேர், அடுத்தகவியில் விளங்கும். இவரேயமையும் என்பதற்கு - இவர்களைக் கொல்லுதலேபோதுமென்று இலக்கணையாற் பொருள்கொண்டு, செய்யுமென் முற்று பலர்பாலுக்குவந்ததை வழுவமைதியாக்குக; இல்லாவிடின், "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற், செல்லாதாகுஞ் செய்யுமென் முற்றே" என்ற விதிக்கு முரணும். 'இவரே யமைவரென' என்பது வழாநிலை. கவலை- கவற்சி; ஐவிகுதிபெற்ற தொழிற்பெயர். கதிர் - கூர்நுனியுமாம். செகுப்பான் என்பதில், பான் - வினையெச்சவிகுதி; அதுவே எதிர்காலங்காட்டும். (எ௬)

அவ்வைவரும் வீமனால் இறத்தல்.

சித்திரவாகுவினோடு பலசேனன்போர்ச்செயசூரன்சித்திரனுத்தம
விந்தென்றே, யத்திரவில்லாண்மையினிற்றிகழாநின்ற வைவரிவர்
யாவரையுமடர்ப்பான்வந்தோர், சத்திரம்பாவையுமேவிச்சங்கமூதிச்
சமர்விளைத்தார்நெடும்பொழுதுசமீரணன்றன்,புத்திரனான்முன்சென்
றவெழுவரொடும்பொன்னுலகங்குடிபுகுந்தார்புலன்கள்போல்வார்.

(இ - ள்.) சித்திரவாகுவினோடு - சித்திரபாகுவும், பலசேனன் - பல சேநனும், போர் - போரில்வல்ல, செயசூரன் - ஜயசூரனும், சித்திரன்-சித்திர னும், உத்தமவிந்து - உத்தமவிந்துவும், என்று - என்றுபெயர்பெற்று, அத்திரம் வில் ஆண்மையினில் திகழாநின்ற - அஸ்திரங்களைப் பிரயோகித்தற்குஉரிய வில்லின்திறத்தில் சிறந்துவிளங்குகிற, புலன்கள் போல்வார் ஐவர் இவர் - ஐம் புலன்கள்போல் அடக்கவொண்ணாதவர்களான இவ்வைந்துபேரும், யாவரையும் அடர்ப்பான் வந்தோர்-எல்லோரையும் (போரில்) அழிக்க வந்து, சத்திரம் யா வையும் ஏவி-ஆயுதங்களையெல்லாம் செலுத்தி, சங்கம் ஊதி-சங்கத்தை முழக்கி, நெடு பொழுது சமர் விளைத்தார் - வெகுநேரம் போர்செய்து, (பின்பு), சமீர ணன்தன் புத்திரனால்-வாயுகுமாரனான வீமனால், முன் சென்ற எழுவரொடும் பொன் உலகம் குடி புகுந்தார் - முன்னேசென்ற ஏழுஉடன்பிறந்தாருடனே தாங்களும் பொன்மயமான வீரசுவர்க்கத்துக்குச் சென்றுசேர்ந்தார்கள் [இறந் தன ரென்றபடி]; (எ - று.)

அத்திரம், சத்திரம் - அஸ்த்ரம், சஸ்த்ரம் என்ற வடசொற்களின் திரிபு. அஸ்திரம் - மந்திரபலத்தோடு செலுத்தும் படைக்கலம், சஸ்திரம் - மந்திர பலமின்றிச் செலுத்தும் படைக்கலம் என்று வேறுபாடு கூறுவர். அஸ்திரம் - அம்புமுதலிய கைவிடுபடை, சஸ்திரம்-வாள்முதலிய கைவிடாப்படை யென் றலும் உண்டு. ஐம்புலன் - சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்த மென்னும் பஞ்சவிஷ யங்கள்; தமிழில் முறையே ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் எனப்படும். புல னைந்தும் பிராணிகளுக்கு இன்றியமையாத உறுப்பாயிருத்தல்போலத் துரியோ தனனுக்குத் தம்பியரைவர் இன்றியமையாச் சிறப்பின ரென்பார், 'புலன்கள் போல்வார்' என உவமைகூறினர். திகழாநின்ற, ஆநின்று - நிகழ்காலஇடை நிலை. அடர்ப்பான் - பானீற்று எதிர்காலவினையெச்சம். வந்தோர், விளைத்தார்-

முற்றெச்சங்கள். இவற்றில், வந்தோர் என்பதில், வினையீற்றயல் ஆகாரம் ஓகாரமாயிற்று. (௮௦)

அதுகண்டு சீறித் துரியோதனன் போர்தொடங்கல்.

ஏற்றிடைவெங்கனனுழைந்ததென்னமுன்ன மெழுவருடன்றம்பியரோரிவருஞ்சேரக், கூற்றிடையேகுதலுமிகக்கொதித்துநாகக்கொடிவேந்தன்முடிவேந்தர்பலருஞ்சூழ, நாற்றிசையுமெழுந்துபெருங்கடலைமோதி நடுவடவைக்கனலவித்துநவிலாநின்ற, காற்றெனவே பாண்டவர்தமுடலந்தோறுங்கணைமுழுகவில்விசயங்காட்டினானே.

(இ - ள்.) ஏற்றிடை-ஆயுதம்பாய்ந்த புண்ணிலே, வெம் கனல்-கொடிய நெருப்பு, நுழைந்தது என்ன - நுழைந்ததுபோல, முன்னம் எழுவருடன் - முன்பு இறந்த எழுதம்பிமாருடனே, தம்பியர் ஓர் இவரும்-இந்தஐந்துதம்பிமார்களும், சேர - ஒருசேர, கூற்றிடை ஏகுதலும் - யமனிடத்திற்குச் சென்றவுடனே [இறந்தவுடனே], மிக கொதித்து - மிகவுஞ்சீற்றங்கொண்டு, நாகம் கொடி வேந்தன் - பாம்புக்கொடியையுடைய துரியோதனராசன், முடி வேந்தர் பலரும் சூழ - கிரீடாதிபதிகளான அரசர்கள்பலரும் (தன்னைச்) சூழ்ந்துவர, நால் திசையும் எழுந்து பெரு கடலை மோதி நடு வடவை கனல் அவித்து நவிலா நின்ற காற்று எனவே - நான்குதிக்குக்களிலும் (ஏககாலத்தில்) கிளம்பிப் பெரியகடலைத் தாக்கி அதன்நடுவிலுள்ள படபாமுகாக்கினியைத் தணித்துப் பயிலுகிறதொரு கடுங்காற்றுப்போல [மிகவும்உக்கிரமாக], பாண்டவர்தம் உடலம்தோறும் கணை முழுக வில் விசயம் காட்டினான் - பாண்டவர்களுடையஉடம்புகளிலெல்லாம் அம்புகள் பாய்ந்துஅழுந்தும்படி (தனது) விற்போர்த்திறத்தைக் காட்டினான்; (எ - று.)

சிறப்பாக அம்புகளைச் சொரிந்தனனென்பதாம். "மருமத்தினெறிவேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும்புழையிற் கனல் நுழைந்தாலென," "மருமத்து வேல்தைத்த புண்மீது கனலுற்றதென" என்றவற்றோடு 'ஏற்றிடை வெங்கனல் நுழைந்ததென' என்பதை ஒப்பிடுக; இது, வருத்தத்தின்மேல் வருத்தம் விளைத்தற்கு உவமை. ஏறு என்பது - ஆயுதம்பாய்ந்தபுண்ணுதலை 'வாளேறு,' 'வேலேறு' என்பவற்றிலுங் காண்க; அதன்மேல் இடை - ஏழனுருபு. ஓர் - அசை; 'ஒரைவர்சேர' எனப்பாடங்கொள்ளுதலும் பொருந்தும். கூற்று - (பிராணிகளின் உடலையும் உயிரையும் பிரித்து வேறுவேறு) கூறுக்குபவன். நாகம் - நகத்தில் வாழ்வதென வடமொழிக்காரணக்குறி; நகம் - மலையும், மரமும். வடவை - படபா என்ற வடசொல்லின் திரிபு; படபா - பெண்குதிரை. கடலினிடையிலேயுள்ளதொரு பெண்குதிரையின் முகத்தில் எப்பொழுதும் தீ மூண்டெரிகிறதென்றும், அது மழைநீர்முதலியவற்றால் கடல்நீர்மிகாதபடி அதனை உறிஞ்சிநிற்பதென்றும் நூற்கொள்கை. பாண்டவர் - தத்திதாந்தநாமம். (௮௧)

சகதேவன் துரியோதனனையும் இவன்பக்கத்தார் அவன்பக்கத்தாரையும் வெல்லுதல்.

தன்கரத்தில்விற்றுணியவேறோர்வில்லாற்சாதேவன்வலம்புரிப்பூந்தாமவேந்தன், வன்கரத்துமார்பகத்துமுகத்துஞ்சேர வைவாளிகுளிப்பித்தான் மற்றுமற்று, முன்களத்துளெதிர்ந்துளோ ரிருசேனைக்கு முன்னெண்ணுந்திறலுடையோர்மூண்டுமூண்டு, பின்களத்தைச்சோரியினாற்பரவையாக்கிப் பிறங்கலுமாக்கினர்மடிந்தபிணங்களாலே.

(இ - ள்) தன் கரத்தில் வில் - தன் கையிலுள்ள வில், துணிய - (துரியோதனனெய்த அம்பினால்) துணிபட, வேறு ஓர் வில்லால் - வேறொரு வில்லைக்கொண்டு, சாதேவன் - சகதேவன், வலம்புரி பூ தாமம் வேந்தன் - நஞ்சாவட்டைப்பூமாலையையுடைய துரியோதனராசனது, வல் கரத்தும் - வலியகைகளிலும், மார்பு அகத்தும் - மார்பிலும், முகத்தும் - முகத்திலும், சேர - ஒருசேர, வை வாளி - கூரிய அம்புகளை, குளிப்பித்தான் - முழுகச்செய்தான்; மற்றும் மற்றும் - மேலும்மேலும், களத்துள் முன் எதிர்ந்துளோர் - போர்க்களத்தில் முற்பட்டு எதிர்த்துள்ளவர்களான, இரு சேனைக்கும் முன் எண்ணும் திறல் உடையோர் - இரண்டுசேனைகளிலும் முதன்மையாய் எண்ணத்தக்க வல்லமையுடைய பாண்டவசேனையார், மூண்டு மூண்டு - மிகஉக்கிரங்கொண்டு, பின் களத்தை - பின்னிடும்படியான கௌரவசேனையுள்ள இடத்தை, சோரியினால் பரவை ஆக்கி - இரத்தப்பெருக்கால் கடலாகச்செய்து, மடிந்த பிணங்களால் பிறங்கலும் ஆக்கினர் - இறந்தஉடம்புகளால் மலைகளையும் உண்டாக்கினார்கள்.

வை - உரிச்சொல்; "வையே கூர்மை" என்பது, தொல்காப்பியம். பரவை - பரவியது; ஐ - கருத்தாப்பொருள் விகுதி. பிறங்கல் - (உயர்ந்து) விளங்குவது; அல் - கருத்தாப்பொருள்விகுதி. பிறங்கலாக்கினர் - மலைபோலக் குவித்தன ரென்பதாம். முன்களம் - சகதேவன்சேனை. பின்களம் - துரியோதனன் சேனை. (அஉ)

பிறர் பின்னிட, துரியோதனன்தம்பியர் வீமனை யெதிர்த்தல்.

காந்துகனலுமிழ்சினவேற்கைக்காந்தாரர்காவலனாஞ்சகுனியுந் தன்கனிட்டனான, வேந்தனுமன்னவனுடன்பல்வேந்தரோடும் வெம் பனைக்கைப்பலகோடிவேழத்தோடு, மேந்துதடம்புயச்சிகரிவீமன்ற ன்னோ டிகன்மலைந்துதொலைந்திரிந்தாரிவரையல்லா, வூர்ந்தபணிய ணிக்கொடியோனிளைஞர்மீள வொன்பதின்மரவனுடன்வந்துடற்றி னாரே.

(இ - ள்.) காந்து - மூண்டெரிகிற, கனல் - நெருப்பை, உமிழ் - வெளிப்படுத்துகிற, சினம் - உக்கிரத்தன்மையையுடைய, வேல் - வேலையேந்திய, கை - கையையுடைய, காந்தாரர் காவலன் ஆம் சகுனியும் - காந்தாரதேசத்தார்க்கு அரசனான சகுனியும், தன் கனிட்டன் ஆன வேந்தனும் - அவனுக்குத்தம்பியான அரசனும், மன்னவனுடன் - துரியோதனராசனோடும், பல் வேந்தரோடும் - மற்றும்பல அரசர்களுடனும், வெம் பனை கை பல கோடி வேழத்தோடும் - கொடிய பனைமரம்போன்ற துதிக்கையையுடைய அநேககோடியானைகளுடனும் கூடி, ஏந்து தட புயம் சிகரி வீமன்தன்னோடு இகல் மலைந்து - உயர்ந்தபெரிய மலைகள்போலுந் தோள்களையுடைய வீமசேனனோடு போர்செய்து, தொலைந்து இரிந்தார் - தோற்றுஓடினார்கள்; இவரை அல்லால் - இவர்களையன்றி, ஊர்ந்த பணி அணி கொடியோன் இளைஞர் ஒன்பதின்மர் - ஊர்ந்துசெல்லும் பாம்பின்வடிவை யெழுதிய அழகியகொடியையுடைய துரியோதனனது தம்பிமார் ஒன்பதுபேர், மீள - மறுபடி, வந்து அவனுடன் உடற்றினர் - வந்து அவ்வீமனோடு போர்செய்தார்கள்; (எ - று.)

கனிஷ்டன் - வடசொல்: இளையவன். [இதன் எதிர்மொழி - ஜ்யேஷ்டன்; மூத்தவன்.] துதிக்கைக்குப் பனைமரம் உவமை, திரண்டுஉருண்டுநீண்ட கரிய பெரிய வடிவிற்கு. புயச்சிகரி யென உருவகம்போலக் கூறினும், சிகரிப்புயம் என உவமையாக்கி யுரைத்தலே தகுதி; தொடர்ச்சிதோன்றக் கூறுமையின். சிகரீ - வடசொல்; சிகரமுடையது எனப் பொருள். ஒன்பதின்மர்பெயர், அடுத்தகவியில் விளங்கும். (அக)

துரியோதனன்றம்பியர் ஒன்பதின்மரை வீமன் கோல்லுதல்..

பிறங்கியவுத்தமனுதயபானுகீர்த்தி பெலவன்மன்பெலவீமன்பிர பலதானன், மறங்கிளர்விக்கிரமவாகுசுசீலன்சீலன் வருபெயர்கொ ளொன்பதின்மர்வானிலேறத், திறங்கொள்கசரததுரகபதாதிகோடி சேரவொருகணத்தவியச்சிலைகால்வாங்கிக், கறங்கெனவேசூழ்வந்து பொருதான்வீமன் கட்டாண்மைக்கிவைபொருளோகருதுங்காலே.

(இ - ள்.) பிறங்கிய - விளங்குகிற, உத்தமன் —, உதயபானு—, கீர்த்தி—, பெலவன்மன் - பலவர்மா, பெலவீமன் - பலபீமன், பிரபலதானன் - ப்ரபலதானன், மறம் கிளர் - பராக்கிரமம்மிக்க, விக்கிரமவாகு - விக்ரமபாகு, சுசீலன் - ஸுசீலன், சீலன் —, வரு - என்றுசொல்லப்பட்டுவருகிற, பெயர் - பெயரை, கொள்-கொண்ட, ஒன்பதின்மர் - ஒன்பதுபேர், வானில் ஏற-வீரசுவர்க்கத்திற் சென்றேறும்படியாகவும்,-திறம் கொள்-வலிமைகொண்ட, கசரத துரக பதாதி- யானை தேர் குதிரை காலாட்கள், கோடி - கோடிக்கணக்கானவை, சேர - ஒரு சேர, ஒரு கணத்து அவிய - ஒருக்ஷணப்பொழுதிலே அழியும்படியாகவும், வீமன்—, சிலை கால் வாங்கி - வில்லை வளைத்து, கறங்கு என சூழ்வந்து - காற் றாடிபோலச் சுழன்றுவந்து, பொருதான்-போர்செய்தான்; கருதும்கால்- ஆலோ சிக்குமிடத்து, கட்டு ஆண்மைக்கு — (வீமனது) உறுதியான போர்த்திற மைக்கு, இவை பொருளோ - இப்பகைகள் ஒருபொருளாவனவோ? (எ - று.)

வீமனது அதிகபலபராக்கிரமத்துக்கு இவை ஒருபொருளாகா என்றதைப் பொதுப்பொருளாகவும் மற்றதைச் சிறப்புப்பொருளாகவும் நிறுத்திக் கூறின தனால், வேற்றுப்பொருள்வைப்பணி. கஜரததுரகபதாதி - பன்மைவிகுதிபெ ருத அஃறிணையும்மைத்தொகை. சிலைகால்வாங்குதல் - வில்லைக் கோடிகள் வளையச்செய்தல்; இனி, கால் - உபசர்க்கமுமாம். கறங்கு - சுழல்வது. (அச)

எஞ்சிநின்ற துரியோதனன்தம்பிகளும் வீமனால் இறத்தல்.

பாண்டவரில் வீமன்கைப்படையான்முன்னம் பட்டொழிந்தோரொ ழிந்தோர்கள்பலருங்கூடிக், காண்டரியகேசரிவெஞ்சாபமன்னார் கண் ணிலான்மதலையரக்களத்திலன்று, மூண்டுபொரும்பணித்துவசமுன் னோன்காண முனைந்தமர்செய்தவனியின்மேன்முடிகள்வீழத், தீண்ட ரியதிருமேனிதேரில்வீழச்சேணடைந்தாரரம்பையர்கள்சிந்தைவீழ.

(இ - ள்.) பாண்டவரில் - பாண்டவர்களுள், வீமன் - வீமசேனனது, கை - கையினால் பிரயோகிக்கப்பட்ட, படையால் - ஆயுதத்தால், முன்னம் பட்டு ஒழிந்தோர் - முன்புஇறந்தொழிந்தவர்கள், ஒழிந்தோர்கள் - நீங்கலாக வுள்ளவர்களான, காண்டரிய வெம் கேசரி சாபம் அன்னார் - காணுதற்குஅரிய உக்கிரத்தன்மையுள்ள சிங்கக்குட்டிகளைப் போன்றவர்களான, கண் இலான் மத லையர் பலரும் - பிறவிக்குருடனான திருதராட்டிரனது புத்திரர்கள் [துரியோத னன் தம்பிமார்] பலபேரும், கூடி - ஒருங்குசேர்ந்து, அ களத்தில் - அந்தப் போர்க்களத்தில், அன்று - அப்பொழுது, மூண்டு பொரும் பணி துவசம் முன் னோன் காண - உக்கிரங்கொண்டுபோர்செய்கிற பாம்புக்கொடியையுடைய தங் கள்தமையனான துரியோதனன் பார்க்க, முனைந்து அமர் செய்து - (வீமனோடு) முயன்றுபோர்செய்து, அவனியின்மேல் முடிகள் வீழ - தரையில் தங்கள்தலை கள் விழவும், தீண்டரிய திரு மேனி தேரில் வீழ - தொடுதற்கும்அருமையான [மிக்கவலிமையுள்ள] அழகிய தங்கள்உடம்பு தேர்களில் விழவும், அரம்பையர் கள் சிந்தை வீழ - தேவமாதர்களது மனம் தங்களைவிரும்பவும், சேண் அடைந் தார் - வீரசுவர்க்கஞ்சேர்ந்தார்கள்; (எ - று.)

போரி லிறந்து வீரசுவர்க்கஞ்சேர்பவரைத் தேவமாதர் மணத்தல் இயல்பாதலின், 'சேணடைந்தார் அரம்பையர்கள்சிந்தைவீழ' என்றார். வீழ்தல் என்பது - விரும்புத லென்னும் பொருளதாதலை "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலின்" என்ற திருக்குறளிலுங் காண்க. இனி, சிந்தைவீழ - மனம்தம்மிடத்துப் பதிந்தழுந்த என்னலுமாம். ரம்பா என்னும் வடமொழி அரம்பை யெனத் திரிந்தது; இது ஒரு தேவமாதின் பெயர்: இதன்பன்மையாகிய அரம்பைய ரென்பது - இலக்கணையால், தேவமகளிர்க்குப் பொதுவாய் வழங்கும். காண்டரிய - காண்டலரிய என்பதன் தொகுத்தல். நீண்டு - முதனிலைத்தொழிற்பெயர். சாபம்[శాబం] என்று குட்டிக்குப்பெயர்; வடசொல்: இதனைக் கீழ்வெளிப்பாட்டுச்சருக்கத்தில் "தெம்மைந்த ரென்னுங் களபங்களைச் சிங்க சாப, வெம்மைந்தின் வேறற்கமைந்து" என்றவிடத்தும், பன்னிரண்டாம்போர்ச்சருக்கத்தில் "உளைத்தனர்சிங்க சாபமென" என்றவிடத்துங் காண்க. இனி, இது - இளமைப்பெயராவதொரு வடசொல் என்று அறியாது, வெம் சாபம் கேசரி அன்னார் என மொழிமாற்றி, கொடிய வில்லையுடைய சிங்கம் போன்றவர்கள் என்று நலிந்துபொருள்கொண்டு இடர்ப்படுவாரு முளர். சேண் - வானம்; சுவர்க்கத்துக்கு இடவாகுபெயர். (அ௫)

அதனாற் சோகித்த துரியோதனனுக்குச் சகுனி தைரியங்கூறல்.

தனக்கிளையோர்தொண்ணூற்றொன்பதின்மர்தாமுஞ் சயவீமன்சரத்
தாலுந்தண்டினாலுங்,கனக்குடிலிற்குடியேறக்கண்டுகண்டு கைசோர
மெய்சோரக்கண்ணீர்சோர, வெனக்குறுதியுரைத்தவர்தம்முரைகே
ளாமலென்செய்தேனெப்பொருளுமிழந்தேனென்று,மனக்கவலையுறு
மன்னன்றன்னைநோக்கிமாமனுமற்றொருகோடிமாற்றஞ்சொன்னான்.

(இ - ள்.) தனக்கு இளையோர் தொண்ணூற்றொன்பதின்மர்தாமும் - தனது தம்பிகள் தொண்ணூற்றொன்பதுபேரும், சய வீமன்-வெற்றியையுடையவீமனது, சரத்தாலும் - அம்புகளாலும், தண்டினாலும் - கதையினாலும், கனம் குடிலில் குடி ஏற - மேகங்களுக்கு மேலுள்ளதான வீரசுவர்க்கத்திற் சென்றுசேர, கண்டு கண்டு - பார்த்துப் பார்த்து, (அதனால்), கை சோர - கைகள்சோர்வடையவும், மெய் சோர - உடம்பு சோர்வடையவும், கண் நீர் சோர - கண்ணீர்வழியவும், 'எனக்கு உறுதி உரைத்தவர்தம் உரை கேளாமல் - எனக்கு நன்மொழிகூறினவர்களது வார்த்தையைக் கேட்டு அதன்படி நடவாமல், என் செய்தேன் - என்னகாரியஞ்செய்தேன்! எ பொருளும் இழந்தேன் - எல்லாப்பொருளையும் இழந்துவிட்டேனே,' என்று-என்றுகழிவிரக்கங்கொண்டு, மனம் கவலை உறும் - மனத்திற் கவலையடைந்த, மன்னன்தன்னை நோக்கி - துரியோதனராசனைப் பார்த்து, மாமனும் - மாமனான சகுனியும், மற்று-பின்பு, ஒரு கோடி மாற்றம் சொன்னான் - ஒருகோடிவார்த்தைகளை (த்தேறுதலாக)க் கூறுபவனானான்;(எ-று.)—அவற்றில்இரண்டொன்றைஅடுத்தகவிகளிற்காட்டுகிறார்.

மேலுலகிலுள்ள தங்குமிட மென்ற பொருளை 'கனக்குடில்' என்ற சொல்லால் விளக்கினார். உறுதியுரைத்தவர் - வீடுமன் துரோணன் விதுரன் கண்ணன் முதலியோர் பற்பலர். ஒன்பது + பத்து = "தொண்ணூறு: ஒன்பானொடு பத்தும்" என்னுஞ் சூத்திர விதி. (அசா)

வேறு.

இதுவும், அடுத்தகவியும் - சகுனி துரியோதனனுக்குத் தைரியங்கூறுதல்.

அருகுசாயைபோல்வாழுமனுசர்யாரும்வானேற
வுருகிமாழ்கிநீசோகமுறினுமீளவாரார்கண்

மருகவாழிகேள்போரின்மடிவுறாதபூபாலர்
முருகவேளையேபோல்வர்முரணறாதகூர்வேலோய்.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்..

(இ - ள்.) அருகு - (உனது) அருகிலே, சாயை போல் - நிழல்போல, வாழும் - பிரியாதுவாழ்ந்திருந்த, அனுசர் யாரும் - தம்பிமாரெல்லோரும், வான் ஏற - வீரசுவர்க்கத்துக்குச் செல்ல, (அதனால்), நீ உருகி மாழ்கி சோகம் உறினும்-நீ மனமுருகி மயங்கி விசனப்பட்டாலும், மீள வாரார்கள் - (இறந்தஅவர்கள்) மறுபடி திரும்பிவரமாட்டார்கள்; மருக - மருமகனே! வாழி - வாழ்வாயாக; கேள் - (யான்சொல்லும் வார்த்தையைக்) கேட்டு நடப்பாயாக; முரண் அறாத கூர் வேலோய் - வலிமைநீங்காத கூரியவேலாயுதத்தை யுடையவனே! போரில் மடிவுறாத பூபாலர் - யுத்தத்தில் (இறந்தவர்போக) இறவாமலுள்ள அரசர்கள், முருக வேளையே போல்வர் - (பலபராக்கிரமங்களிற்) குமாரக்கடவுளையே போல்வார்கள்; (எ - று.)

முன்னிரண்டடி-"ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலும், மாண்டார் வருவரோ மாநிலத்தீர் - வேண்டா" என்ற உலகவியல்பையும், பின்னிரண்டடி - எஞ்சியுள்ள அரசர்களது பகையழிக்கும்வன்மையையுங் கூறியன. 'வாழி' என மாமன் மருமகனை வாழ்த்தினன். 'வாழிய' என்னும் யகரவீற்று வியங்கோள், ஈறுகெட்டு, வாழி யென நின்றது; [நன் - உயிர் - கஅ:] இதில், இ - சாரியை. பூபாலர் - பூமியைக் காப்பவர்; வடசொல். வேள் என்ற சொல் - விரும்பப்படுபவ னென்று பொருள்படும்; அழகியவ னென்று கருத்து: விரும்புதலென்று பொருள்தரும் 'வேள்' என்ற வினைப்பகுதி செயப்படுபொருள்விகுதிபுணர்ந்து கெடப் பெற்றதென்க. காமவேளை விலக்குதற்கு, 'முருகவேள்' என்றார். முருகன்+வேள்=முருகவேள்; "சிலவிகாரமா முயர்திணை:" முருகனாகிய வேள் என இருபெயரொட்டு. முருகு-அழகு இளமை தெய்வத்தன்மை; அவற்றை யுடையவன், முருகன். வேலோய் - வேலான் என்பதன் ஈறுதிரிந்தவிளியாகிய வேலாய் என்பதன் ஆ ஓவாயிற்று. வேல் - மற்றையாயுதங்களுக்கும் உபலக்ஷணம். அழித்தற்றொழிலில் வல்லவரான யமன் சிவபிரான் முருகவேள் இவர்க்கு வேல் படையாதலால், அதனைத் தலைமையாகக்கூறுதல், மரபு. வெல்வது வேல் எனக் காரணக்குறி. மாழ்கி, மாழ்கு - பகுதி.

இதுமுதற் பதினொரு கவிகள் - முதற்சீரும் நான்காஞ்சீரும் புளிமாச்சீர்களும், இரண்டாஞ்சீரும் ஐந்தாஞ்சீரும் தேமாச்சீர்களும், மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் தேமாங்காய்ச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியச்சந்தவிருத்தங்கள். தனன தான தானான் தனன தான தானன— என்பது இவற்றிற்குச் சந்தக்குழிப்பாம். (அஎ)

கிருதநாமனால்வேதகிருபனாதியோரான
நிருபர்சேனைசூழ்போதநிமிரவோடிமாறாது
பொருதுசீறிமேன்மோதுபுலியினேறுபோல்வாரை
முரசகேதுவோடோடமுரணுபோரின்மூள்வோமே.

(இ - ள்.) கிருத நாமன் - கிருதவர்மா வென்னும் பெயருடையவனும், நால் வேத கிருபன் - நான்குவேதங்களையும் அறிந்த கிருபாசாரியனும், ஆதியோர் ஆன - முதலியோராகிய, நிருபர் - அரசர்களும், சேனை - சேனைகளும், சூழ் போத - சூழ்ந்துவர, (நாம்), நிமிர ஓடி - நெருங்கச் சென்று, மாறாது பொருது - இடைவிடாமற் போர்செய்து,—சீறி மேல் மோது புலியின் ஏறு போல்வாரை - கோபங்கொண்டு பிறர்மேல்தாக்குகிற ஆண்புலிபோல்பவரான பகைவர்களை, முரச கேதுவோடு ஓட - முரசக்கொடியையுடைய யுதிட்டிர

னுடனே ஓடிப்போம்படி, முரணு - வலிமையாகச்செய்கிற, போரில் - போர்த்தொழிலில், மூள்வோமே - முயல்வோமே; (எ - று.)

ஈற்றுஏகாரம் - தேற்றவகையால், வலியப்போர்தொடங்கிச் செய்து பகைவரையோட்டுதல் எளிதென்ற கருத்தைக் காட்டும். நால்வேதம் - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம். முரச்கேது-முரசத்தைக் கொடியிலுடையானென வேற்றுமைத்தொகையன்மொழி; வடமொழிப்பெயர். முரணு என்ற வினைத்தொகையில், உ-சாரியை. சூழ்போத=சூழ; இதில், போது-துணைவினை. (அஅ)

சகுனி வீமனை யெதிர்க்க, வீமன் தேரினின்று இழிதல்.

எனமகீபன்வாடாமலினியவாய்மையேகூறி
யனிகராசியோடேகியமரில்வீமன்மேன்மோத
முனைகொள்வீமனுமாறுமுறுவல்வாணிலாவீச
மனனிலோடுதேர்மாறிவலிகொள்பாரிலானனே.

(இ - ள்.) என - என்று, மகீபன் வாடாமல் - துரியோதனராசன் வாட்டமொழியும்படி, இனிய வாய்மையே கூறி - இனிமையான வார்த்தைகளையே சொல்லி, (சகுனி), அனிகம் ராசியோடு ஏகி - சேனைத்தொகுதியுடனே சென்று, அமரில் - போர்க்களத்தில், வீமன்மேல் மோத - வீமன்மீது தாக்க,—முனை கொள் வீமன் - உக்கிரங்கொண்ட வீமன்,—முறுவல் வாள் நிலா வீச - (தனது) புன்சிரிப்பு ஒளியையுடைய சந்திரகாந்திபோன்ற காந்தியை வெளிவீச,—ஆம் ஆறு - சமயத்துக்கு ஏற்றபடி, மனனில் ஓடு தேர் மாறி வலி கொள் பாரில் ஆனன் - மனம்போல விரைந்துசெல்லுகிற தேரை விட்டு வலிமைகொண்ட தரையில் இறங்கினான்; (எ - று.)

வில்முதலிய படைக்கலங்களைக் கொண்டன்றித் தன்கைவலிமைகொண்டே போர்செய்து விரைவிற் பகையழிக்கக்கருதினனாதலால், அதற்குஏற்குமாறு தேரினின்று நிலத்திற்குதித்தனனென்பார், 'ஆமாறு தேர்மாறிப் பாரிலானன்' என்றார். சிரிக்குங்காலத்துப் பற்களின் வெள்ளொளி வெளித்தோன்றுதலை 'முறுவல்வாணிலா வீச'என்றார். வாள்-ஒளியை யுணர்த்துகையில், உரிச்சொல்; "வாள்ஒளியாகும்" என்பது தொல்காப்பியம். நினைத்தமாத்திரத்தில் மனம் எவ்வளவுதூரத்திலுள்ளபொருளினிடத்துஞ் சென்று சேர்தலால், மனோவேகம் எல்லாவேகத்திலுஞ் சிறந்த உவமையாம். மகீபன்-பூமியைக் காப்பவன்: வடசொல்; மஹீ - பூமி: பெரியது. அநீகராசி - வடசொல்தொடர். வாய்மை யென்பதில், வாய் என்பது-சொல்லுக்குக் கருவியாகுபெயராம்; அதன்மேல் 'மை' விகுதி - வேறுபொருளுணர்த்தாமையால், பகுதிப்பொருள்விகுதியாம். அமர் - போர்க்களத்துக்குத் தானியாகுபெயர். (அகூ)

சகுனியின்சேனை வீமனால் அழிதல்.

தரணிதாழுமாபோதுசகுனிசேனைவானேற
முரணுவாகுவான்மோதிமுடுகுநீள்கதாபாணி
யரணியாகவேயேனலடவியானதானீடு
மிரணபூமிமால்யானையிரதவாசிகாலாளே.

(இ - ள்.) தரணி தாழும் ஆ(று) - பூமி குழிபடும்படி, போது - மிகத்திரண்டுவருகிற, சகுனி சேனை - சகுனியின்சேனை, வான் ஏற - இறந்து வீரசுவர்க்கஞ்சேரும்படி, முரணு வாகுவால் மோதி - வலிமைகொண்ட தோள்களால் தாக்கி, முடுகும்-நெருங்கிச்செல்கிற, நீள் கதா பாணி - நீண்டகதையைக் கையிலுடைய வீமன், அரணி ஆக - தீக்கடைகோல்போல் ஆக,—நீடும் இரணபூமி - நீண்டபோர்க்களத்திலுள்ள, மால் யானை இரதம் வாசி காலாள் - பெரிய

யானைகளும் தேர்களும் குதிரைகளும் காலாள்களுமாகிய எதிர்ச்சேனை, எனல் அடவி ஆனது - தினைக்காடுபோலாயிற்று; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

மலைச்சாரல்களிலுள்ள காடுகளில் சிலமரங்கள் உராய்தலால் உண்டாகும் நெருப்பிற் பட்டுத் தினைக்கொல்லை எளிதில்அழிதல்போல, வீமன்கைப்பட்டுப் பகைச்சேனை எளிதில்அழிந்ததென்பதாம். 'தாழுமா' என்பதில், ஆ என்பது - ஆறு என்பதன் விகாரம். போதுசகுனி, நீள்கதாபாணி - வினைத்தொகைகள். வாகு - பாஹு என்ற வடசொல் திரிந்தது. கதாபாணி - வேற்றுமைத்தொகையன்மொழி; வடசொல். அரணி, அடவீ, ரணபூமி - வடசொற்கள். 'மால்யானையிரதவாசிகாலாள்' என்றது, சாதியுணர்த்தும் ஒருமைப்பெயராதலால், 'ஆனது' என்ற ஒன்றன்பால்முற்றைக் கொண்டது. உருவகவணி. (கூ0)

சகுனி மீளவும் துரியோதனனுடன் துணிவுகூறல்.

அலகில்வேலைபோல்சேனையதிபனுயிர்போமாறு
பலருமாகிமேல்மோதபடைஞர்சாயவேநாமு
மிலகுவாளம்வேனேமியெவருமேவுவேமாக
தலைவகேளெனுவீரசகுனிகூறினுன்மூள.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) 'அலகு இல் - அளவில்லாத, வேலை போல் - கடல்போன்ற, சேனை - (நமது) சேனைக்கு, அதிபன் - தலைவனாயிருந்த சல்லியனது, ஆவி - உயிர், போம் ஆறு - நீங்கும்படி, பலரும் ஆகி - பலவீரர்களாய் ஒருங்குதிரண்டு, மேல் மோத - மேலே தாக்கின, படைஞர் - (எதிர்ப்பக்கத்து) வீரர்கள், சாய - அழிந்திடும்படி, நாமும் எவரும் - நாமெல்லோரும் (ஒருங்குசேர்ந்து), இலகு - விளங்குகிற, வாளம் - வாளாயுதத்தையும், வேல் - வேலாயுதத்தையும், நேமி - சக்கரத்தையும், ஏவுவேம் ஆக - (அவர்கள்மேற்) செலுத்துவோமாக; தலைவ - தலைவனே! கேள் - (யான் சொன்னதைக்) கேட்டு நடப்பாய்; எனு கூறினன் - என்று (துரியோதனனை நோக்கிச்) சொல்லி, வீர சகுனி - வீரனாகிய சகுனி, மூள - உக்கிரங்கொண்டு போருக்குவர, (எ - று.)—அான்மேற் சகதேவன் தேர்செலுத்தி அம்புதொடுக்குமுன் என வருங்கவியோடு தொடரும்.

எதிரிகள்பலருஞ் சேர்ந்து நமது சேனைத்தலைவனையும் சேனையையும் அழித்தாற்போல, நாமும் ஒருங்குசேர்ந்து அவர்களையழிப்போமென்றான். வீரர் தொகையிற்குறையினும் உள்ளவர்ஒருங்குசேர்ந்துபோர்செய்யின் பகையையழித்திடலாகுமென்பது, உட்கோள். காலையிற் போர்தொடங்கியபொழுது நம்மினுந் தொகையிற்குறைபட்டிருந்த எதிர்ப்பக்கத்தார் பின்பு ஒருங்கு சேர்ந்து பொருததனுலாகிய ஒற்றுமைவலியால் நம்மை வென்றிட்டார்களாதலால், இப்பொழுது தொகைகுறைந்துள்ள நாமும் அவ்வழியை அனுசரித்து ஒருங்குதிரண்டு பொருதால் அவர்களைவென்றிடலாமென்றவாறு. வேலை - ஆவீறு ஐயான வடசொல். வாளம் - வடசொல்; இதுவே ஈறுகெட்டுத் தமிழில் வாள் என நிற்பது. ஏவுவேமாக - தன்மைப் பன்மை வியங்கோள். கூறினன் - முற்றெச்சம். (கூக)

சகுனியை யெதிர்த்த சகதேவன்மேல் துரியோதனன் வேலேவுதல்.

விரகருதகுதாடுவிடலைமீதுசாதேவ
னிரதமேவியோர்வாளியெழில்கொண்மார்பிலேவாமுன்
மருகனுனபூபாலன்மதிகொண்ஞானிபூண்மார்பி
லுருவவீசினுன்மாமனுதவியாவொர்கூர்வேலை.

(இ - ள்.) விரகு அருத - வஞ்சனை நீங்காத, சூது ஆடு விடலைமீது - சூதாடுதலில் வீரனான சகுனியின்மேல், சாதேவன் - சகதேவன், இரதம் ஏவி - (தனது) தேரைச்செலுத்தி, எழில்கொள் மார்பில் - அழகுகொண்ட (அவனது) மார்பிலே, ஓர் வாளி ஏவாமுன் - ஓரம்புதொடுத்தற்குமுன்னே,—மருகன் ஆன பூபாலன் - (அந்தச்சகுனியின்) மருமகனான துரியோதனராசன், மாமன் உதவி ஆ - தன்மாமனான சகுனிக்குச் சகாயமாக (வந்து), மதி கொள் ஞானி பூண் மார்பில் - (யாவரும்) மதித்தலைக் கொண்ட தத்துவஞானமுடையவனான சகதேவனது ஆபரணங்களையணிந்த மார்பிலே, உருவ - ஊடுருவிச்செல்லும்படி, ஓர் கூர் வேல் வீசினான் - கூரியதொரு வேலாயுதத்தை யெறிந்தான், (எ - று.)

'விரகருத' என்றது, விடலைக்கு அடைமொழி; சூதாக்குந் தகும். எழில் - வளர்ச்சியுமாம்: எழு என்ற பகுதியின்மேல், இல் - தொழிற்பெயர்விகுதி. மதி - முதனிலைத்தொழிற்பெயர். ஞானீ - வடசொல். பூணப்படுவது, பூண். விடலை - ஆண்பாற்சிறப்புப்பெயர். (௩௨)

அதுகண்டு வீமன் துரியோதனன்மேல் அம்புதொடுத்தது.

எதிரிலாததோளாண்மையிளவறேரின்மேல்விழ
வுதவியாகவேலவுலகுகாவலான்மார்பின்
முதுகிலோடவேநூறுமூழ்கவேவினான்வாளி
யதலபூமியூடாழியமுதமாரும்வாயானே.

(இ - ள்.) எதிர் இலாத - ஈடில்லாத, தோள் ஆண்மை - புயவலிமையையுடைய, இளவல் - (சகதேவனாகிய தனது) தம்பி, தேரின்மேல் விழ - (மூர்ச்சித்துத்) தேர்மேல் விழ,—(அங்ஙனம்விழும்படி), உதவி ஆக வேல் ஏவும் - (சகுனிக்குச்) சகாயமாக வேற்படையை யெறிந்த, உலகு காவலான் - நிலவுலகையாள்பவனான துரியோதனராசனது, மார்பில் - மார்பிலே,—ஆழி அமுதம் அதல பூமியூடு ஆரும் வாயான் - பாற்கடலினின்று தோன்றிய தேவாமிருதத்தைப் பாதாளலோகத்திலே (சென்று) பருகிய வாயையுடைய வீமன்,—முதுகில் ஓட - (ஊடுருவி) முதுகுவழியே செல்லும்படியாகவும், மூழ்க - தைத்து அழுந்தும்படியாகவும், நூறு வாளி ஏவினான் - நூறு அம்புகளைச் செலுத்தினான்; (எ - று.)

சகுனிக்குப் பரிந்து வந்து துரியோதனன் சகதேவன்மேல் வேலெறிந்ததனால் அவன் மூர்ச்சித்துத் தேரில்விழ, அதுகண்டு பரிந்துசென்று வீமன் துரியோதனன்மேற் பலஅம்புதொடுத்தனனென்பதாம். எதிர் - ஈடும், எதிரியும். உதவி - 'இ' விகுதி பெற்ற தொழிற்பெயர். உலகு - லோக மென்ற வடசொல்லின் திரிபு; இதனைத் தனியே தமிழ்மொழியென்றலும் உண்டு. அதலபூமி - அதலமாகிய உலக மென இருபெயரொட்டு. ஆழ்ந்தது, ஆழி; இ - கருத்தாப்பொருள்விகுதி. அமுதம் - அம்ருத மென்ற வடசொல்லின் திரிபு; மரணத்தைத் தவிர்ப்ப தென்பது, அதன் அவயவப்பொருள்.

நான்காமடியிற் குறித்த கதை:—பாண்டவரிடத்து இளமைப்பருவத்திலேயே பங்காளிக்காய்ச்சல்கொண்ட துரியோதனன் மிக்கபலசாலியான வீமனிடத்து அதிகவிரோதங்கொண்டு அவனைக் கொல்லும்பொருட்டுச் சகுனிமுதலானாரோடு ஆலோசித்து ஒருநாள் வீமனுக்கு விருந்துசெய்விப்பதென்று வியாசம் வைத்துச் சமையற்காரரைக்கொண்டு மிக்கவிஷங்கலந்தஉணவைக் கொடுத்து உண்பித்து அதனால் மயங்கியிருக்கிற சமயத்தில் அவனைக் கயிற்றாற்கட்டிக்கங்கைநீரிலே போகட்டுவிட, அதில்வீழ்ந்து பிலத்துவாரவழியாய்ப் பாதாளஞ்சேர்ந்த அவ்வீமனை அங்குள்ள சிறுநாகங்கள் கடிக்க, முந்தினவிஷம் இவ்விஷத்தால் நீங்கினவளவிலே, சயிற்றுக்கட்டையும்மெய்வலியால்துணித்திட்ட அவனுக்கு, வாசுகி வாயுகுமாரனென்ற அபிமானத்தோடு மிக உபசரித்து ஆங்

குள்ள அமிருதகலசங்களிற் சிலவற்றை யுண்பிக்க, வீமன் உண்டு அதனால் முன்னினும்மிக்கவலிமைகொண்டு மீண்டன னென்பதாம். (௬௩)

வீமன்மேல் வேலேவிய அசுவத்தாமனைச் சோழன் தாக்குதல்.

சமரில்வீமனேவோடுதலைவன்வீழவேபூமி
யமரனானதாமாவொரயிலைவீமன்மேலேவ
வெமர்களாவிபோல்வாெனாடிகல்செயாமலீசான
குமரனாவிபோமாறுகுடைதுநாமெனாவீரன்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) சமரில் - போர்க்களத்திலே, வீமன் ஏவோடு - வீமன் பிரயோகித்த பாணங்களுடனே, தலைவன் - முதல்வனான துரியோதனன், வீழ - கீழ் விழுந்திட, (அதுகண்டு), பூமி அமரன் ஆன தாமா - பூதேவனாகிய [அந்தணனான] அசுவத்தாமா, ஒர் அயிலை - ஒருவேலாயுதத்தை, வீமன்மேல்—, ஏவ - செலுத்த, (அதுகண்டு), 'எமர்கள் ஆவி போல்வானொடு இகல் செயாமல்-எமக்கெலலாம் உயிர்போல்பவனாகிய துரியோதனனுடன் போர்செய்யாமல், ஈசான குமரன் ஆவி போம் ஆறு - சிவகுமாரனான அசுவத்தாமனது உயிர் நீங்கும்படி, நாம் குடைதும் - நாம் (அவனை அம்புகளால்) துளைப்போம்', எனா-என்று சொல்லிக்கொண்டு, வீரன் - வீரனான சோழன், (எ - று.)—இக்கவியில், 'வீரன்' என்றதை, அடுத்தகவியில் வரும் 'மனுகுலேசன்' என்பதற்கு அடைமொழியாக்கி என்றுசொல்லிப் போர்செய்த வீரனான சோழனது விலவலிமை கூறவொண்ணாத தென்று முடிவுகாண்க.

நம்மைப்போல அரசகுலத்திற்பிறந்தவனென்ற அபிமானத்தாலும், பாண்டவர்க்கு அன்புசெய்தற்குவற்ற உடனபிறப்புமுறையுடையானென்ற தொடர்பினாலும், சோழன் வீமனம்பால்விழுந்துகிடக்கிற துரியோதனன்மேற் பரிவுகொண்டு, 'எமர்களாவிபோல்வானொ டிகல்செயாமல்' என்றதனால் அவன்மேல் அடுத்துப்பொருதலை விலக்கி, 'போருக்குத் தகுதியில்லாத அந்தணனாய் உறவுமுறையில்லாத அயலானுமாயுள்ள அசுவததாமனை அழிப்போம்'என்பான், 'ஈசானகுமரனாவிபோமாறு குடைதுநாம்' என்றான். பதினேழாம்போரில் சோழன் அசுவத்தாமனையெதிர்த்து "நீரின்மேலெழுத்தெனநிலையிலாண்மையாய்," "ஆர்ப்பன மறைமொழிந்து அனைவர் பாவமுந், தீர்ப்பன வேள்விகள் செய்வ தன்றியே, கூர்ப்பன பலபடை கொண்டுபோர்செயப், பார்ப்பன மாக்களும் பாரின் வல்லரோ", "தாதையைக் கொன்ற வெஞ் சாப வீரனைக், கோதைவிற் கணைகளாற் கொன்றிலாத நீ, ஊதைமுற் சருகுபோ லோட லல்லதை, மோதயிற் படைகொடு முனைய வல்லையோ" என்று இகழ்ந்துகூறியவை, இங்கு உணரற்பாலன. அமரன் - (அமிருதமுண்டதனால) மரணமில்லாதவ னென்று பொருள்படும்; வடசொல். பூமியில் தேவர்போலச் சிறப்புறுதலால் அந்தணர் பூசுரரெனப்படுதல்பற்றி, 'பூமியமரனான தாமா' என்றார். தாமா - முதற்குறையாகிய பெயர். எமர் என்ற முறைப்பெயரில், யாம் - பகுதி. ஈசாந னென்ற வடமொழிப்பெயர் - ஐசுவரியமுடையவ னென்று பொருள்படும். குடைதும்-தன்மைப்பன்மைமுற்று. (௬௪)

தனுவின்வேதநூல்வாசிதனயனானதாமாவை
முனைகொண்மார்பின்வாய்மூழ்கிமுதுகிலோடவேயமு
வினைகொள்வாளிமேலிவிதமதாகவேபோர்செய்
மனுகுலேசனேர்சாபவலிமைகூறவாராதே.

(இ - ள்.) தனுவின் வேதம் - தனுர்வேதமாகிய வில்வித்தையையும், நூல் - மற்றையநூல்களையும் அறிந்த, வாசி தனயன் ஆன தாமாவை - குன்றாயி

னிடம்பிறந்த குமாரனை அசுவத்தாமனை,—முனை கொள் மார்பின்வாய் மூழ்கி - வலிமைகொண்ட மார்பிலே அழுந்தி, முதுகில் ஓட - இருவி முதுகுகொழியே யோடும்படி, வினை கொள் எழு வாளி - போர்த்தொழிலைக் கொண்ட எழுஅம்புகளை, மேல் ஏவி - அவன்மேற் செலுத்தி, விதமது ஆகவே போர் செய் - பலவகையாக எதிர்த்துப்போர்செய்த, மனு குல ஈசன் - மனுவின்குலத்துக்குத் தலைவனான சோழனது, நீள் - நீண்ட, சாபம் - வில்லினது, வலிமை—, கூற வாராது - (யார்க்கும்) சொல்லமுடியாதது; (எ-று.)—ஏ - தேற்றம்.

தநுர்வேதமாவது - பகைவெல்லுதற்குரிய படைக்கலங்களிற் பயிலும் வகையையும், அஸ்திரசஸ்திரங்களைப்பிரயோகிக்கும்வகை முதலியவற்றையும் அறிவிக்கும் நூல்; இது, ஆயுதசாஸ்திர மென்றுஞ் சொல்லப்படும். இங்கே, நூல் என்றது, மற்றையவேதசாஸ்திரங்களை. பஞ்சினால் நூல் நூற்கப்படுதல் போலச் சொல்லால் அமைக்கப்படுதலாலும், மரம்முதலியவற்றின் கோணலைத் தீர்க்கும் எற்றுநூல்போல மனத்தின்கோணலை நீக்குதலாலும், நூலென்பது - சாஸ்திரத்துக்கு உவமைபற்றிவந்த பெயரெனப்படும். சோழன் சூரியகுலத்து மனுசக்கரவர்த்தியின் மரபில் உதித்தவனாதலால், 'மனுகுலேசன்' எனப்பட்டான். பதினேழாம்போர்ச்சருக்கத்திலும "மனுகுலசோழன்," "கோழியானெனுஞ்,சொற்கையா மனுகுலத்தோன்றல்"என்றமைகாண்க. குல+ஈச=குலேச: வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி. சோழன் இங்ஙனம் அசுவத்தாமனை வென்ற சிறப்பை,மேல் உ௬௫-ஆங் கவியிலும்"இரவிதன் திருக்குலத் திறைவன், பெருமையோடெழுந்தான் பகைவன்மேல் அவன் முன்பின்னிடப்பொருதிடும்பெரியோன்" எனப் புகழ்ந்துகூறுமாறுங் காண்க. இங்ஙனம் ஒருசோழராசன் பாண்டவர்க்குத் துணைவந்து பதினெட்டாநாட்போரளவும் இறவாதிருந்து பகைவென்று உதவியமை "தாங்கள் பாரத முடிப்பளவு நின்று தருமன்தன் கடற்படைதனக் குதவிசெய்த வவனும்" என்று கலிங்கத்துப்பரணியிலும் புகழப்பட்டவாறு உணர்க. "அண்டர்குலபதி பாம்விடைவாகனன் அம்பொன்முடிமலர் நாறிடுதோளினன், எண்டிசையுமனுநீதிசெய்கோலினன் எங்குமொருகுடையாலிடுநீழலன், மண்டுகிரணசிகாமணிமோலியன் வண்டுமதநுகர்தாதகிமாலையன், மிண்டுமுதுபுலியேறுபதாகையன் வென்றிவளவனையாரிகர்வீரரே" என்ற பதினேழாம்போர்ச்சருக்கத்துச்செய்யுளிலும் சோழனது ஒப்புயர்வற்ற சிறப்பு விளங்கும். (கூரு)

கிருபன் சோழனுக்குத் தோற்க, சகுனி போருக்கு மீளல்.

மருகன்வீழவேசாபமறைவலானுமார்மாலை
விருதனோடுபோராடிவெரிந்டாவிடாதோட
வருகுசூழுமாசூரரடையவோடவோடாது
திருகினராவேறுதிகழ்பதாகையான்மாமன்.

(இ - ள்.) மருகன் - (தனது) மருமகனாகிய அசுவத்தாமன், வீழ - (சோழனெய்த அம்புகளால் மூர்ச்சித்துக்) கீழேவிழுந்திட, (அதுகண்டு), சாபம் மறை வலானும் - வில்தொழிலிலும் வேதங்களிலும் வல்லவனான கிருபனும், ஆர் மாலை விருதனோடு போர் ஆடி - ஆத்திப்பூமாலையையுடைய வீரனான சோழனுடனே எதிர்த்துப் போர்செய்து, வெரிந் இடா விடாது ஓட - முதுகுகொடுத்து இடைவிடாது ஓடிச்செல்ல, (அதனால்), அருகு சூழும் மா சூரர் அடைய ஓட - அருகிற்சூழ்ந்துள்ள சிறந்தவீரர்களெல்லோரும் ஓடிச்செல்ல, (அப்பொழுது), அரா ஏறு திகழ் பதாகையான் மாமன் - பாம்பின்வடிவமெழுதிவிளங்கு [துரி]யோதனனது மாமனாகிய சகுனி, ஓடாது திருகி (போருக்கு) மீண்டான்; (எ - று.)

'சாபமறை' என்பதற்கு - தநுர்வேத மென்றும், சபித்தற்குரிய வேதமந்திரங்க ளென்றும் பொருள்கொள்ளலாம். சாபம் என்பது - இவ்விருபொருள் படுதலை, "சாபமே சபித்தல் வில்லாம்" என்ற நிகண்டினாலும் அறிக. சிலசாதியார்க்கும் பெண்பாலார்க்கும் ஓதுவிக்கவும் ஓதவும் கேட்கவும் ஆகாதென்று மறுக்கப்படுதலாலும், மறைந்தபொருளையுடைமையாலும், மறையென்று வேதத்துக்குப் பெயர்: முந்தினபொருளில், மறு - பகுதி, ஐ - செயப்படுபொருள் விகுதியும்; பிந்தினபொருளில், மறை என்னும் பகுதி கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்துகெட்டது மாம். ஆர் என்பது - ஆத்தியென்னும் பொருளதாதலை, "ஆர் கூர்மை ஆத்தி தேரின் ஐந்துருவாணியாகும் பேர்" என்ற நிகண்டினாலும் அறிக. இந்த மரத்தின் பெயர் - இங்கே, அதன்பூவுக்கு முதலாகுபெயர். சோழனுக்கு ஆத்திமாலை அடையாளப்பூமாலை யாதலால், 'ஆர்மாலைவிருதன்' என்றார்; ஆத்திமாலையை அடையாளமாகக்கொண்டவ னென்க; விருது - அடையாளம். இடா - உடன்பாட்டுவினையெச்சம். அருகு - அசுவத்தாமன், கிருபன் என்னும்இவர்களினருகில். சோழனுக்குமுன் எதிர்ப்பக்கத்து வீரர்பலரும் நிற்கமாட்டாமல் ஓடிப்போனதை மேல் கபகூ - ஆங் கவியிலும் "மதவெங்கயப்போர்வளவற்கு முதுகுதந்த,விதமண்டலீகர் புலிகண்ட மிருக மொப்பார்" எனக் கூறுமாறு காண்க. (கசு)

### சகதேவன் சகுனிமேல் வேலெறிதல்.

சகுனியாவிபோமாறுசபதவாய்மைகோடாமன்
மகிபனெவுவேல்போலவழுவுறுமன்மேலோட
வுகவையோடுமாமாயனுதவுகூரநீள்வேலை
யிகலொடேவினான்வீமனிளவலானபோர்மீளி.

(இ - ள்.) வீமன் இளவல் ஆன போர் மீளி - வீமனது தம்பியான போரில் வலிய சகதேவன்,—சகுனி ஆவி போம் ஆறு - சகுனியின் உயிர் நீங்கும்படி,—சபதம் வாய்மை கோடாமல் - (தான் முன்புகூறியுள்ள) சபதவார்த்தை தவறாமல்,—மகிபன் எவு வேல் போல வழுவுறாமல் - (கீழ்த்) துரியோதனராசன் (தன்மேல்) எறிந்த வேலாயுதம்போலக் கொல்லுதல்தவறாமல், மேல் ஓட - மேலே விரைந்து பாயும்படி, உகவையோடு மா மாயன் உதவு கூர நீள்வேலை - மகிழ்ச்சியுடனே சிறந்த கண்ணன் (தனக்குக்) கொடுத்ததொரு கூர்மையுடைய நீண்ட வேலாயுதத்தை, இகலொடு ஏவினான் - வலிமையோடு செலுத்தினான்.

திரௌபதியைத் துகிலுரிந்தகாலத்தில் சகதேவன் தான் சகுனியைக் கொல்வதாகச் சபதஞ்செய்துள்ளதனால் அதைத் தவறாது நிறைவேற்றுமாறு வேலெறிந்தன னென்பார், 'சபதவாய்மைகோடாமல்' என்றார். "சகுனிதனையிமைப்பொழுதிற் சாதேவன் துணித்திடுவேன் சமரி லென்றான்" எனக் கீழ்ச்சூதுபோர்ச்சருக்கத்தில் வந்தமை யுணர்க. (கீழ் கஉ, கூரு - கவிகளிற் கூறிய படி) சகுனிக்குப் பரிந்துவந்த துரியோதனன் சகதேவன்மேல் எறிந்த வேல் அவனுக்கு மூர்ச்சைமாத்திரத்தை விளைத்துக் கொல்லாதுவிட்டமைபோல, இப்பொழுது சகதேவன் சகுனிமேலெறியும் வேல் அவனைக்கொல்லாமல்விடுதலில்லை யென்பது, 'மகிபனேவுவேல்போல வழுவுறாமல் மேலோட' என்பதனால் விளக்கப்பட்டது. உகவை - (திருவுள்ளம்) உகத்தல்; தொழிற்பெயர்: உக - பகுதி, வை - விகுதி. 'மாமாயன்' என்றதனால், வஞ்சகச்சகுனியின் மாயையைத் தொலைத்தற் கேற்ற பெருமாயையுடையா னென்றவாறு. சகதேவனது பலபராக்கிரமங்களை விளக்கும்பொருட்டு, இங்கு 'வீமனிளவலான போர்மீளி' என்றார். சபதம் - வடசொல். (கஎ)

வேறு.

சகுனியிறந்ததனால் போரொழிந்து துரியோதனன் கலங்கல்.

தாவியவெம்பரிமானிரதத்திடைசாதேவ
னேவியவேலொடுசௌபலராயனிறந்தானென்
றோவியதெங்கணும்வெஞ்சமர்பார்முழுதுடையானு
மாவியழிந்தவுடம்பெனவன்மையழிந்தானே.

(இ - ள்.) சாதேவன் ஏவிய வேலொடு - சகதேவன் எறிந்த வேலாயுதத்துடனே, சௌபல ராயன் - சகுனி, தாவிய வெம் பரி மான் இரதத்திடை - தாவிச்செல்லும்வேகமுள்ள குதிரைகள்பூட்டிய தேரிலே, இறந்தான்—, என்று - என்றகாரணத்தால், எங்கணும் - எவ்விடத்தும், வெம் சமர் - கொடிய போர், ஓவியது - ஒழிந்தது; பார் முழுது உடையானும் - பூமிமுழுவதையுந் தனதாகக் கொண்டு ஆளுகிற துரியோதனனும், ஆவி அழிந்த உடம்பு என - உயிர்நீங்கிய உடல்போல, வன்மை அழிந்தான் - வலிமைகெட்டான்; (எ - று.)

வேலொடு இறந்தான் - வேல்பட்டமாத்திரத்தில் அதனோடு கீழ்விழுந்து இறந்தானென்க. இனி, ("ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்றவிடத்துப்போல) 'வேலொடு' என்றதிலுள்ள 'ஒடு' என்னும் மூன்றனுருபைக் கருவிப்பொருளில் வந்ததெனக் கொண்டு, வேலினால் என்று உரைப்பினும் அமையும். சௌபலராயன் - சுபலனென்னும் அரசனது மகனான அரசன்; ஸௌபலன் - வடமொழித்தத்திதாந்தநாமம். ராயன் - ராஜா என்ற வடசொல் திரிந்தது. 'பார்முழுதுடையானும்' என்ற உயர்வுசிறப்பும்மை, அவனுக்கு நேர்ந்த பரிதாபமான நிலையை நன்குவிளக்கும். நான்காமடியிற்கூறிய உவமையால், உடம்பு தொழில்செய்தற்கு உயிர் இன்றியமையாச்சிறப்பினதாயிருத்தல் போலத் துரியோதனனது செய்கைகளுக்கெல்லாம் சகுனியே மூலகாரணமென்பது நன்குவிளங்கும். அதுபற்றியே, இவனிறந்தவளவிற் போரொழிந்தது. பார் - (யாவராலும்) பார்க்கப்படுவது; அல்லது, பருமையுடையது. ஓவியது என்பதில், ஓவு - பகுதி; இது, ஒருவு என்பதன், மரூஉவெனப்படும்.

இதுமுதல் ஆறு கவிகள் - ஈற்றுச்சீரொன்று மாங்காய்ச்சீரும், மற்றை நான்கும் விளச்சீர்களு மாகிய நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள்; காப்பியக்கலித்துறை, விருத்தக்கலித்துறை யென்பதும் இது. (௯௮)

துரியோதனன் நிலைகலங்குதல்.

தும்பியில்வாசியினீடிரதத்திலொர்துணையின்றிப்
பம்பியசேனையழிந்துவரும்படிபாராதான்
றம்பியர்யாவருமாதுலனும்பலதமரும்போ
யம்பியிழந்தபெருங்கடல்வாணரினலமந்தான்.

(இ - ள்.) தும்பியில் - யானைகளிலும், வாசியில் - குதிரைகளிலும், நீடு இரதத்தில்-உயர்ந்ததேர்களிலும், ஓர் துணை இன்றி - (தனக்குத்) துணையாவது ஒன்றுமில்லாமல், பம்பிய சேனை அழிந்து வரும் படி - நிறைந்த (தனது) சேனை அழிந்து மீளும் விதத்தை, பாராதான் - (ஒருகாலும்) பார்த்திராத துரியோதனன்,—தம்பியர் யாவரும் - (தனது) தம்பிமாரெல்லோரும், மாதுலனும்-மாமனான சகுனியும், பல தமரும் - தனதுசுற்றத்தார்கள்பலரும், போய் - ஒழிந்ததனால், அம்பி இழந்த பெரு கடல் வாணரின் - மரக்கலத்தையிழந்த பெரியகடற்பிரயாணிகள்போல, அலமந்தான் - மிகவருந்தினான்; (எ - று.)

'பாராதான்' என்றது, இதுவரையில் ஒருநாளும் இப்படிப்பட்ட தன்சேனையழிவைப் பார்த்திராதவ னென்ற பொருளோடு, இப்படி தனக்கு ஒருகால் நேருமென்று எதிர்பாராதவ னென்ற கருத்தையும், இன்று நேர்ந்த அழிவைப் பார்த்துப் பொறுக்கமாட்டாதவனாயினு னென்ற தாற்பரியத்தையும் விளக்கும். போய் - போகவென;எச்சத்திரிபாகக்; [நன்-வினை-உ எ.] வாணர்-வாழ்நரென்பதன் மரூஉ. அலமந்தான், அலமா - பகுதி. உவமையணி. பலதமர் - சைந்தவன் வீமன் முதலிய உறவினர்களும், கர்ணன் பகதத்தன் முதலிய நண்பர்களும். நீடுஇரதம் - வினைத்தொகை. (கக)

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்: துரியோதனன் ஒருமந்திரபலத்தால் தன்பக்கத்தவரில் இறந்தவரையெல்லாம் பிழைப்பித்துப் போர்செய்யத் தந்துச் செல்லுதலைக் கூறும்.

ஒருமதிவெண்குடையிருகவரிக்குலமூருஞ்சீ
ரிரதமதங்கயமிவுளிபணிக்கொடிமுதலான
வரசர்பெருந்தகையரசடையாளமனைத்தும்போய்த்
திருநயனங்களினும்பதமலர்கள்சிவப்பேற.

(இ - ள்.) மதி - சந்திரமண்டலம்போன்ற, ஒரு வெள் குடை - ஒற்றை வெண்கொற்றக்குடையும், இரு கவரி குலம் - இரண்டு சாமரைக்கற்றையும், ஊரும் -ஏறிநடத்தப்படுகிற, சீர் - சிறப்பையுடைய, இரதம் மதங்கயம் இவுளி - தேரும் யானையும் குதிரையும், பணி கொடி - பாம்புக்கொடியும், முதல் ஆன - முதலாகிய, அரசு அடையாளம் அனைத்தும் - (தனக்குஉரிய) இராசசின்னங்களெல்லாம், போய் - நீங்க,—திரு நயனங்களினும் - அழகிய (தனது) கண்களினும், பதம் மலர்கள் - தாமரைமலர்போன்ற கால்கள், சிவப்பு ஏற - செந்நிறம் மிகப்பெற,—அரசர் பெருந்தகை - அரசர்களுக்கெல்லாம் அரசனான துரியோதனன், (எ - று.)— போய், ஏற என்ற எச்சங்கள் கoஉ - ஆங் கவியில் வரும் 'சென்றான்'என்ற முற்றைக் கொள்ளும். 'அரசர்பெருந்தகை'என்பதை, அக்கவியில் வருகிற 'தராபதி' என்பதற்கு அடைமொழியாக்குக.

நான்காமடியில், கோபத்தாலுள்ள கண்செம்மையை யெடுத்துக்காட்டி அதனினுங் கால்கள் மிகச்சிவக்க என்றது, தேர்முதலிய வாகன மொன்றுமின்றிக் கால்களால் விரைந்துநடந்து சென்றா னென்பதை விளக்கும். மதங்கயம் - மதங்கஜ மென்ற வடசொல்லின் திரிபு மதங்கரென்னும் முனிவரிடத்தினின்று ஒருகால் தோன்றியதனால், யானைக்கு ,மதங்கஜ மென்று காரணக்குறி. இனி, மதம் கயம் எனஎடுத்து, மதயானை யெனினுமாம். கயம் - கஜம். அரசர்பெருந்தகை - ராஜராஜன். பெருந்தகை - பெருமையாகிய குணத்தையுடையானெனப் பண்புத்தொகையன்மொழி. போய்=போக; எச்சத்திரிபு. நயநம், பதம் - வடசொற்கள். எல்லாமலர்களினுஞ் சிறத்தலால், தாமரை, அடைமொழிகொடாமல் மலரெனப்பட்டது. காலுக்குத் தாமரையுவமை - செம்மை மென்மையழகுகளுக்கு. சிவப்பு - செம்மையென்னும் பண்பினடி விகாரப்பட்டு வினைத்தன்மையபடைந்து, 'பு' என்னும்விகுதி யேற்றது. முதலடியில் ஒரு இரு என மாறுபட்ட சொற்கள் வந்தது, முரண்தொடையின்பாற்படும். பதமலர்=மலர்ப்பதம்: முன்பின்னாகத்தொக்க உவமத்தொகை. (௧00)

அயனிடையசுரர்குருப்பெறலுற்றதவன்பான்முன்
கயமுனிபெறவிமையோர்குருவிரகொடுகைக்கொண்டு
பயமுறமாமுனிவர்க்குரைசெய்ததுபார்மீதே
யுயர்மறையொன்றுளதம்மறையொருமுனியுரைசெய்தான்.

இறந்தவரைப் பிழைப்பிக்கும் மந்திரத்தின் வரன்முறை, இது.

(இ - ள்.) அயனிடை - பிரமனிடத்து, அசுரர் குரு - அசுரர்களுக்குக் குருவான சுக்கிராசாரியன், பெறல் உற்றது - பெற்றதும்,—அவன்பால் - அந்தச்சுக்கிரனிடத்து, முன் - முன்பு, கய முனி-கசனென்னும் முனிவன், பெற- பெற்றுக்கொள்ள, இமையோர் குரு - தேவகுருவாகிய பிருகஸ்பதி, விரகொடு கைக்கொண்டு - (தான்) தந்திரமாகக் கிரகித்துக்கொண்டு, பயம் உற - பயமடையும்படி, மா முனிவர்க்கு - சிறந்தமுனிவர்களுக்கு, உரைசெய்தது-சொன்னதுமாகிய, உயர் மறை ஒன்று - சிறந்த மந்திரமொன்று, பார்மீதே - உலகத்திலே, உளது - உண்டு; அ மறை - அந்த மந்திரத்தை, ஒரு முனி - ஒரு முனிவன், உரைசெய்தான் - (எனக்குக்) கூறியுள்ளான்; (எ-று.)—இக்கவி - தூரிபோதனனது உட்கோளாய் அடுத்த கவியோடு தொடரும்.

அஸுரரென்ற வடமொழிப்பெயர் - தேவர்க்கு எதிரானவரென்றும், (பாற்கடலினின்று தோன்றிய) மதுவைப் பானஞ்செய்யாதவரென்றும், (பகைவர்) உயிரைக் கவர்பவரென்றும் [அஸு - உயிர்] காரணப்பொருள்படும். கய முனி - கசமுநி; வடசொல்திரிபு.

முன்னொருகாலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பெரும்போர்நடந்தபொழுது அசுரர்களுக்குக்குருவும்புரோகிதனும்சேனாபதியுமான சுக்கிராசாரியன் தம்பக்கத்தில் தேவர்களாற்கொல்லப்பட்டவரனைவரையும் தான் பிரமனிடமிருந்து பெற்றுள்ள சஞ்சீவினியென்ற மந்திரத்தாற் பிழைப்பித்துவிட, தேவர்களுக்குக்குருவும்புரோகிதனும்சேனாபதியுமான பிருகஸ்பதி அம்மந்திரத்தைத் தான் அறியாமையால் தம்பக்கத்தில் அசுரர்களாற் கொல்லப்பட்டவர்களை அங்ஙனம் பிழைப்பிக்கமாட்டாது நின்றான். ஆகவே, தேவர்கள் துன்பமும் அச்சமும் உற்றுப் பிருகஸ்பதியின் மூத்தகுமாரனான கசனைச் சரணமடைந்து 'சுக்கிரனிடமுள்ள வித்தையை அறிந்துவந்து உதவி எங்களைப் பாதுகாக்கவேண்டும்' என்று வேண்ட, அவ்வேண்டுகோளுக்கு இரங்கிய அவன் சுக்கிரனிடஞ்சென்று சிஷ்யனாய் அமர்ந்து அந்தக்குருவினுடைய மனத்திற்கு விசேஷதிருப்தியை உண்டாக்கும்பொருட்டு அவனது அருமைமகளான தேவயானியையும் மலர் கனி முதலியவற்றால் மகிழ்வித்துவர, அவ்விளமங்கைக்கு அவ்விளமகனிடம் அன்பு நிகழ்ந்தது. இப்படி நெடுநாள்கழிந்தபின் அசுரர்கள் கசனை இன்னானென்றும் சஞ்சீவிமந்திரத்தை வஞ்சனையாற்கற்றுக்கொள்ள வந்தவனென்றும் அறிந்து அவனைப் பசுமேய்த்துக்கொண்டிருக்கையிற் கொன்று அவனுடலைச் சின்னபின்னமாக்கிச் செந்நாய்களுக்கு உணவாகக் கொடுத்திட்டார்கள். அதனையறிந்த தேவயானி மிக்கவருத்தத்தோடு தந்தையைப் பிரார்த்திக்க, சுக்கிரன் தன் மகளின்விருப்பத்தின்படி அவனைச் சஞ்சீவினிமந்திரங்கூறி அழைக்க, அவன் உடனே பிழைத்துச் செந்நாய்களின்உடம்பைப் பிளந்துகொண்டு வந்து பழையவடிவத்தோடு நின்றான். பின்பு அவன், ஒருகால் குருகன்னிகைக்குப் புஷ்பங்கொணரச் சென்றபோது அசுரர்கள் அவனைக் கொன்று அவனுடலைப் பிசைந்துகடலிற்போகட்டுவிட்டார்கள். உடனே மகளின்வேண்டுகோளால் சுக்கிரன் கசனை மறுபடிபிழைப்பித்தான். அதன்பின்பு அசுரர்கள் ஒருநாள்அவனைக் கொன்று அவனுடம்பை யெரித்துப் பொடியாக்கி அப்பொடியை மதுவிற்கலந்து சுக்கிரனுக்கே கொடுத்து உண்பித்துவிட, பின்பு மகளின் நிர்ப்பந்தத்தின்படி சுக்கிரன் அவனை மந்திரஞ்சொல்லியழைத்தபொழுது அவன் சுக்கிரனது வயிற்றினின்றுஒலிகாட்ட, அதுகொண்டு சுக்கிரன் மகளைநோக்கி 'யான் வயிறு பிளந்து இறந்தாலொழியக் கசன் பிழைக்கும்வழி யில்லையே' என்று சொல்ல, அவள் 'எவ்வுபாயத்தாலாவது இருவரும் இறவாதபடி செய்யவேண்டும்' என்று பிரார்த்திக்க, சுக்கிரன் தன்வயிற்றில் வடிவுநிரம்பி உயிர்பெற்ற சிஷ்ய

னுக்கு அம்மந்திரத்தை உபதேசித்து 'நீ என்வயிற்றைப்பிளந்து வெளிவந்தவுடன் என்னைப் பிழைப்பிக்கவேண்டும்' என்று கட்டளையிட, அங்ஙனமே அவன் அவ்வித்தையைக் கற்றுக்கொண்டவுடன் சுக்கிரன்வயிற்றைப்பிளந்துகொண்டு வெளிவந்து அம்மந்திரபலத்தால் அக்குருவைப் பிழைப்பித்தான். அப்பொழுது சுக்கிரன் மதுபானத்தை நிந்தித்து அசுரர்களையும் வெறுத்தனன். பின்பு நெடுங்காலங்கழித்தபின் கசன் சுக்கிரனிடம் விடைபெற்றுச் செல்லும்பொழுது தேவயானி அவனைத் தன்னைமணம்புணரும்படி வெகுவாக நிர்ப்பந்திக்க, அவன் உடன்படாமல் 'குருபுத்திரியாகிய உன்னை நீ இருந்த வயிற்றினின்றே வெளிவந்த காரணத்தால் உனக்கு உடன்பிறந்தமுறைமையையடைந்த நான் மணஞ்செய்தல் தருமமன்று' என்றுகூறி மறுத்துவிட, அவள் கோபங்கொண்டு 'உனக்குச் சஞ்சீவினிவித்தை பலிக்காமற்போகக்கடவது' என்று சபிக்க, இவனும் 'அதருமமாகக் காமத்தாற் கோபித்து என்னைச் சபித்த உன்னை முனிவனெவனும் மணஞ்செய்யாதொழிக; எனக்கு அவ்வித்தை பலிக்காமற்போயினும் என்னிடங்கற்றுக்கொள்வார்க்கு அதுபலிக்காமற்போகாது' என்று கூறிவிட்டுத் தேவலோகஞ்சென்றான். பின்பு கசனிடம் தேவகுருவான பிருகஸ்பதியும் தேவர்களும் அம்மந்திரத்தை உபதேசம்பெற்று மீண்டும் அசுரரையெதிர்த்து வெல்வாராயினர். அம்மந்திரத்தைப் பிற்காலத்தில் தேவர்களிடமிருந்து முனிவர்கள் தெரிந்துகொள்ள, ஒருமுனிவனிடமிருந்து துரியோதனன் பெற்றனனென்ன வரலாறு உணர்க.

இச்செய்யுளில் 'விரகொடுகைக்கொண்டு' என்றதன் விவரம், கீழ்க்காட்டியவாற்றால் வெளியாம். மூன்றாம்அடியில் 'பயமுற' என்றது, அம்மந்திரம் கசமுனிவனிடம்பயன்படாதுநின்றமையைக் குறிப்பிக்கும். (௧௦௧)

அந்நெடுமாமறையாலமரத்திடையழிசேனை
யின்னுயிர்பெற்றிடும்வகைகொடுமீளவுமிகல்வேனென்
றுன்னியுளந்தெளிவுற்றொருவர்க்குமிஃதுரையாதே
தன்னொருவெங்கதையோடுதராபதிதனிசென்றான்.

(இ-ள்.) அ நெடு மா மறையால் - அந்தச் சிறந்த மகாமந்திரத்தின் வலிமையால், அமரத்திடை அழி சேனை இன் உயிர் பெற்றிடும் வகை கொடு-போரில் அழிந்த (எனது) சேனைகள்யாவும் இனியஉயிரைப் பெற்றெழும்படி செய்துகொண்டு, மீளவும் இகல்வேன் - மறுபடியும் போர்செய்வேன், என்று—, உன்னி - எண்ணி, உளம் தெளிவு உற்று - மனம்தேறி, ஒருவர்க்கும் இஃது உரையாதே - ஒருவர்க்கும் இக்கருத்தைக் கூறாமலே, தன் ஒரு வெம் கதையோடு - தனது கொடிய ஒருகதாயுதமாத்திரத்துடனே, தரா பதி - பூமிக்குத்தலைவனான துரியோதனன், தனி சென்றான் - தனியே போயினான்; (எ - று.)

அமரத்திடை யென்பதில், அத்து - சாரியை. மூன்றாமடியில் ஆய்தம் மெய்போல் ஒலித்தது. வீமன்போலத் தானும் கதாயுதவுரிமையுடையவனாதலால், பின்பு அவனோடு போர்செய்தற்கு உபயோகப்படுமாறு தனதுகதையைக் கையிற்கொண்டே சென்றானென்க. (௧௦௨)

சென்ற துரியோதனன் ஒருதடாகத்தின் நீரினுள்ளே மூழுகுதல்.

தூயநலந்தருகங்கையெனப்பலசுரருந்தோய்
பாயதடந்தனின்மூழ்கினனம்மறைபயில்வேனென்
றாயுமனங்கொடுசேவடிமுன்பினதாவேகிச்
சேயவன்வெண்டிரைவாரியின்மூழ்கியசெயலொத்தான்.

(இ - ள்.) தூய - பரிசுத்தியுடையதும், நலம் தரு - எல்லாநன்மைகளையுந் தருவதுமான, கங்கை என - கங்காநதி போல, பல சுரரும் தோய் - தேவ

கள்பலரும் வந்துநீராடப்பெற்ற, பாய - பரவியுள்ள, தடந்தனில் - ஒருதடாகத்தில், மூழ்கினன் - மூழ்கிநின்று, அ மறை பயில்வேன் என்று - அந்தமந்திரத்தை ஜபிப்பே னென்று, ஆயும்-ஆராய்கிற, மனம் - எண்ணத்தை, கொடு - கொண்டு, சே அடி முன் பினது ஆ ஏகி - சிவந்த தன்கால்களை முன்பின்னாக மாறவைத்துச் சென்று, வெள் திரை வாரியில் சேயவன் மூழ்கிய செயல் ஒத்தான் - வெண்மையான அலைகளையுடைய கடலிலே சிவந்தஒளியையுடைய சூரியன் முழுகின செய்கையைப் போன்றான் [ஒருதடாகத்தின் நீரினுள்ளே மூழ்கி மறைந்தா னென்றபடி]; (எ - று.)

எவரும்அறியாமல் ஒருகுளத்திலுள்ளே மூழ்கி மறைந்துநின்று அந்தமந்திரத்தை உருவிட்டு ஜபித்து அதன்சித்தியைப் பெற்று மீண்டு அதனால் யாவரையும் பிழைப்பிப்பே னென்று ஒருகுளத்தினுள்ளே இறங்கின னென்பதாம். மனிதசஞ்சாரம் அதிகமாயில்லாததொரு வனதடாகத்தினுள்ளே தான் இறங்கியிருத்தலைப் பின்பு பகைவர்கள் தனது இறங்குமுகமாயுள்ள காலடிகளின் அடையாளத்தால் அறிந்திடக்கூடு மென்பதை ஆலோசித்து, அங்ஙனம்அறியவாகாதபடி வஞ்சிக்கும்பொருட்டுத் துரியோதனன் ஏறுமுகமாக அமையும்படி தன் கால்களை முன்பின்னாகத் திருப்பிவைத்துக்கொண்டு பின்முன்னாக நடந்து சென்று அந்நீர்நிலையினுள் இறங்கினனென்ற கருத்தை, 'சேவடி முன்பினதா வேகி' என்பதனால் வெளியிட்டார்; மேல் கககூ - ஆங் கவியில் "ஏறிய பாதம் போல விறங்கிய பாதம் நோக்கி" எனவருவதுங் காண்க. இதனால், துரியோதனனது தீர்க்காலோசனையும், வஞ்சனைக்கருத்தும் வெளியாம். நான்காமடியிற் கூறிய உவமையால், துரியோதனனுடம்பில் விளங்குகிற க்ஷத்திரியதேசின் மிகுதியோடு அந்நீர்நிலையின்பரப்பும் ஆழமும் நன்குவிளங்கும்.

திருமாலினது திருவடித்தீர்த்தமாகியகங்கை தன்னில் ஒருகால்மூழ்கியவரது அருவினையனைத்தையும் அழித்து அவர்க்கு இம்மைமறுமைவீடுகளின் நன்மைகளையெல்லாந் தருந்தன்மை விளங்க, 'தூயநலந்தரு கங்கை' எனப்பட்டது; "கங்கை கங்கை யென்ற வாசகத்தாலே கடுவினை களைந்திடுகிற்குங், கங்கை", "எழுமையுங் கூடி யீண்டிய பாவ மிறைப்பொழு தளவினி லெல்லாந், கழுவிடும் பெருமைக் கங்கை" என்ற பெரியாரருளிச்செயலுங் காண்க. கங்கை - ஆவீறு ஐபான வடசொல். சுரரும், உம் - உயர்வுசிறப்பு. பாய-பரவிய; இப்பெயரெச்சத்தில், பாவு - பகுதி, அது ஈறுதொக்கது: ய் - காலமுணர்த்தும் இடைநிலை, அ - விகுதி. மூழ்கினன் - தன்மையொருமை முற்றெச்சம். இனி, அம்மறை பயில்வேனென்று ஆயும்மனங்கொடு ஏகித் தடந்தனில் மூழ்கினன், சேயவன்மூழ்கியசெயலொத்தான் என இயைத்து உரைப்பினும் அமையும்; அப்பொழுது, மூழ்கினன் என்பது - படர்க்கை யாண்பால் வினையாலணையும் பெயர். செம்மை+அடி=சேவடி; பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு முன் நின்றமெய் திரிந்தது. சேயவன் - செந்நிறமுடையவன்; இப்பெயரில், செம்மையென்பது சேயென விகாரப்பட்டது: அ - சாரியை. வாரி - நீர்: வடசொல்; கடலுக்கு இலக்கணை. மனம் - கருத்துக்கு இலக்கணை. நலம் - அம் விகுதிபெற்ற பண்புப்பெயர். (கபரு)

வேறு.

இதுவும், அடுத்தகவியும் - துரியோதனன் தவஞ்செய்யும்வகை.

கம்பித்துவந்தபுலனைந்துங்கலக்கமாற
வெம்பித்தடங்கிமனஞ்சித்தொடுமேவல்கூரத்
தம்பித்தநீரயத்திடைவாயுவுந்தம்பமாகக்
கும்பித்துஞானப்பெருந்தீபங்கொளுத்தினானே.

(இ - ள்.) கம்பித்து வந்த-(இவ்வளவுநாளாய்ப் பலவிஷயங்களிலும்) சலநமடைந்துவந்த, புலன் ஐந்தும் - ஐம்பொறிகளும், கலக்கம் மாற - (இப்பொழுது) கலக்கமொழியவும்,—வெம் பித்து அடங்கி - கொடிய மயக்க மொழிந்து, மனம்—, சித்தொடு மேவல் கூர - அறிவுடன் பொருந்தவும்,—தம்பித்த தோயத்திடை - தம்பிக்கப்பட்ட நீரினிடையிலே,—வாயுவும் தம்பம் ஆக கும்பித்து - (தனது) பிராணவாயுவையும் அசையாமல் அடக்கிக்கொண்டு,—ஞானம் பெரு தீபம் கொளுத்தினன்-ஞானமாகிய பெரியவிளக்கை யேற்றினன்.

புலனையும் பொறியையும் ஒன்றாக்கொன்றாக மாறவைத்துக்கூறுதல், ஒருவகை உபசாரவழக்கு முதலடியினால், இவ்வளவுகாலமாய்க் கண்டபடி பலகொடியவிஷயங்களிலுஞ் செலுத்திவந்த பஞ்சேந்திரியங்களை இப்பொழுது அடக்கின அருமை தோன்றும். 'வெம்பித்து' என்றது, கண்டவிஷயங்களையுங் காதலிக்கும் மனத்தின் கொடியஆசையையாம். நீர்தளும்பி அசையவொட்டாதபடி மந்திரபலத்தால் துரியோதனன் ஜலஸ்தம்பஞ்செய்துகொண்டு நீர்நிலையினுள் மூழ்கியிருந்த தன்மையை 'தம்பித்ததோயத்திடை' என்றதனாலும், தனது சுவாசத்தை ரேசக பூரக கும்பகங்களால் அமைத்துப் பிராணயாமஞ்செய்த விதத்தை 'வாயுவுந் தம்பமாகக் கும்பித்து' என்றதனாலும் விளக்கினார். இவன் அங்கு ஜலஸ்தம்பஞ்செய்திருந்த தன்மை, ௧௧௬, ௧௧௫-கவிகளில் நன்குவெளியாம். (மூச்சைவெளிவிடுதல் - இரேசகம், உள்வாங்குதல் - பூரகம், கும்பகம்-பிராணவாயுவைச் சமப்படுத்திபடக்கல்.) கம்பித்து, தம்பித்த, கும்பித்து என்பன - கம்பம், ஸ்தம்பம், கும்பம் என்ற வடசொற்களினடியாப் பிறந்த தெரிநிலைவெச்சங்கள். தம்பித்தல்-அசைவற்றிருத்தல். கும்பித்தல்-வாயுவைப்போக்குவரவில்லாமல் நிறுத்துதல். ஞானப்பெருந்தீபங் கொளுத்துதல் - சிறந்தஅறிவின்சுடர்விளங்கச்செய்தல்; நல்லஞானம்பெறுதல். சித், தோயம்-வடசொற்கள்.

இதுமுதற் பத்துக்கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீரொன்று புளிமாங்கனிச்சீரும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய நெடிலடி நான்கு கொண்ட கலித்துறைகள். (௧௦௪)

பன்னாளும்யோகம்பயில்வோரிற்பதின்மடங்காத்
தன்னாகமுற்றுமெலிவின்றித்தயங்குமாறு
நன்னாளமூலநளினத்தைமலர்த்திநாவா
லுன்னாமலுன்னுமுரைமந்திரமோதினானே.

(இ - ள்.) பல் நாளும் யோகம் பயில்வோரின் - பலநாள்களாக யோகாப்பியாசஞ்செய்து பழகியவர்களினும், பதின் மடங்கு ஆ - பத்துமடங்குமேலாக, தன் ஆகம் முற்றும் மெலிவு இன்றி தயங்கும் ஆறு - தனதுஉடம்புமுழுவதும் இளைப்படையாமல்விளங்கும்படி,—நல் நாளம் மூலம் நளினத்தை மலர்த்தி-நல்ல நாளத்தோடு கூடிய (எல்லாவற்றுக்கும்) மூலாதாரமான (தனது இதயத்)தாமரையை மலரச்செய்து,—நாவால் - நாக்கினால், உன்னாமல் உன்னும் உரை மந்திரம் ஓதினான்-வெளிப்படையாகஉச்சரியாமல் அந்தரங்கமாக ஜபஞ்செய்தற்கு உரிய அந்தமந்திராக்ஷரத்தை ஜபித்தான்; (எ - று.)

"மெய்ச்சிரந்,தங்கிய வமுதினால் தண்ணெனும்படி, யிங்கிதத்தொடுக்கினனிதயந்தன்னையே," "வளர்ந்தபிங்கலையிடைநடுவழியுகுமதியின், விளைந்தவின்னமுதுண்டு," "அலர்மதிமண்டலத்தின், முகமார்க்க வமுதுடல முட்டத்தேக்கி முழுச்சோதி நினைந்திருந்தால்" என்றபடி சிரத்திற் பிங்கலையிடைநாடிகளுக்கு நடுவே புருவமத்தியிலே சிந்தும் அமுதத்தை யோகவகையால் உட்கொண்டு அதனால் உடம்பின் தாபம் ஒழியும் இயல்பை 'தன்னாகமுற்றுமெலிவின்றித் தயங்குமாறு' என்பதனாற் குறித்தார். இதயம் தாமரைமலர்வடிவானதொ

மாம்சாகாரமாய் இருத்தலாலும், அம்மனம் எல்லாச்செயல்களுக்கும் முக்கியகாரணமாதலாலும், 'மூலநளினம்' எனப்பட்டது. நாளம் - உள்துளையுள்ள பூந்தண்டு; இது, நளினத்துக்கு அடைமொழி. குவிந்து கவிந்துள்ள இதயகமலத்தை நிமிர்த்து மலரச்செய்யவேண்டுதலால், 'நளினத்தை மலர்த்தி' என்றார். முதலடியால், இவன் இன்று புதுமையாக யோகஞ்செய்யத் தொடங்கினாலும் அதனை மரபுமுறைபிறழாமல் ஒழுங்குபடச்செய்த அருமையைத் தெரிவித்தார். உன்னுமுன்னுதல் - ஒலிவெளிப்படாதபடி அகத்திலே ஜபித்தல். யோகம், நாளம், மூலம், நளினம், மந்த்ரம் - வடசொற்கள். யோகம்-நியமங்களோடு செய்யுந் தவம். (கO௫)

முன்பு சோழனுக்கு முதுகிட்ட வீரர்களின் நிலைமை.

இதயஞ்சிறிதுங்கலங்கா தவிறைவனிவ்வா
றுதகந்தனிற்புக்குயர்மந்திரமோதும்வேலை
மதவெங்கயப்போர்வளவற்குமுதுகுதந்த
விதமண்டலீகர்புலிகண்டமிருகமொப்பார்.

(இ - ள்.) இதயம் சிறிதும் கலங்காத - (எப்படிப்பட்டஆபத்திலும்) மனம் சிறிதுங் கலங்குதலில்லாத, இறைவன் - துரியோதனராசன், இ ஆறு - இப்படி, உதகந்தனில் புக்கு - நீரிலே புகுந்து, உயர் மந்திரம் ஓதும் வேலை - சிறந்த மந்திரத்தை ஜபித்துக்கொண்டிருக்கும்பொழுது,—மதம் - மதத்தையுடைய, வெம் - கொடிய, கயம் - யானையையும், போர் - போர்வல்லமையையுமுடைய, வளவற்கு - சோழனுக்கு, முதுகு தந்த - புறங்கொடுத்த, விதம் மண்டலீகர் - பலவகைப்பட்ட அரசர்கள், புலி கண்ட மிருகம் ஒப்பார் - புலியைக் கண்டு அஞ்சியோடும் மான் போல்வார்கள்; (எ - று.)—உவமையணி.

இக்கவி - கீழ் கூ௫, கூ௬ - ஆங் கவிகளின் தொடர்ச்சியுடையது. இறைவன் - இறைமையையுடையவன்; இறைமை - தலைமை, வ் - எழுத்துப்பேறு. உதகம், மிருகம் - வடசொற்கள். வளவன் - மிக்கவளமுடையவன். (கO௬)

அசுவத்தாமன் முதலியோர் வந்து சகுனியிறந்தமை காணுதல்.

பரபாவகமாம்பரித்தாமனும்பாய்பரித்தேர்க்
கிருபாரியனுங்கிருதப்பெயர்க்கேடிலோனு
மொருபாலிறைகொண்டொழிசேனையுந்தாமுமீண்டு
பொருபாரதப்போர்புரிசௌபலன்பொன்றல்கண்டார்.

(இ - ள்.) பர பாவகம் ஆம் - பகைவர்களுக்கு அக்கினி போன்றவனான, பரித்தாமனும் - அசுவத்தாமாவும், பாய் பரி தேர் - பாய்ந்துசெல்லுங் குதிரைகள் பூண்ட தேரையுடைய, கிருபஆரியனும் - கிருபாசாரியனும், கிருதன் பெயர் - கிருதவர்மனென்னும் பெயரையுடைய, கேடு இலோனும் - அழிவில்லாத அரசனும், (ஆகிய இவர்கள்),—ஒரு பால் இறை கொண்டு - ஒருபக்கத்தில் ஒதுங்கித்தங்கி, ஒழி - இறவாது நின்ற, சேனையும் - சேனைகளும், தாமும் - தாங்களுமாக, மீண்டு - திரும்பிவந்து, பொரு பாரதம் போர் புரி சௌபலன் பொன்றல் கண்டார் - தாக்கிச்செய்த பாரதயுத்தத்தை மூட்டிவிட்டவனான சகுனி இறந்துகிடத்தலைப் பார்த்தார்கள்; (எ - று.)

பரபாவகமாம் பரித்தாமன் - அகப்பட்ட பொருள்களைத் தீ அழித்தல்போலப் பகைவர்களைத் தவறாமல் அழிக்கும் அசுவத்தாமனென்க. பரபாவகம் - வடமொழித்தொடர்; பரர்-பிறர். தேவர்களை இருதிணையாலுஞ் சொல்லலாமாதலால், 'பாவகம்' என்று அஃறிணையாக் கூறினார். பாவகம் - பரிசுத்தமாகச்

செய்வது என்ற காரணம்பற்றி வந்தபெயர். இனி, 'பரபாவகமாம்' என்பதற்கு - பரம்பொருளினிடத்தில் மனஞ்செலுத்துதலையுடைய என்று உரைப்பாரு முளர்; பாவகம் - பாவனை, தியானம்: வடசொல். கேடு- கெடுதல்; முதனிலைதிரிந்த தொழிற்பெயர். ஒருபா லிறை கொண்டொழி சேனை - ஏதோ ஒரு மூலையில் ஒடிப்பதுங்கிக்கிடந்து அரிதில்உயிர்தப்பியசிறுசேனை யென்க.இலை.ற- இறுத்தல்; தங்குதல்: தொழிற்பெயர்; இறு - பகுதி, ஐ - விகுதி. துரியோதனனுக்குப் பலசமயங்களிற் பலவகையாகத் துர்ப்போதனைசெய்து மகாபாரதயுத்தத்தை மூட்டிவிட்டவ னாதலால், சகுனிக்கு 'பொருபாரதப்போர்புரி' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. (கOஎ)

கண்டஅவர்கள் கலக்கமும் வியப்பும் அடைதல்.

கண்டார்மிகவும்பரிவோடுகலக்கமுற்றார்
தண்டாரகைதோய்விசும்பொத்தசமரபூமி
கொண்டான்முரசக்கொடியோனெனக்கோபமிஞ்சி
விண்டார்மிகவும்வியந்தாரவர்வீரமம்மா.

(இ - ள்.) (கீழ்க்கூறியவர்கள்), கண்டார் - (சகுனியிறந்ததைக்) கண்டு, பரிவோடு கலக்கம் மிகவும் உற்றார் - விசனத்தையுங் கலக்கத்தையும் மிகுதியாக அடைந்தார்கள்; தண் தாரகை தோய் - குளிர்ச்சியான (ஒளியையுடைய) நக்ஷத்திரங்கள் நிறைந்த, விசும்பு - ஆகாயத்தை, ஒத்த - போன்ற, சமர பூமி- யுத்தகளத்தை, முரசம் கொடியோன் - முரசக்கொடியையுடைய தருமன், கொண்டான் - (வென்று) கைக்கொண்டான், என - என்று, கோபம் மிஞ்சி விண்டார் - கோபம்மிக்கு (ஒருவரோடொருவர்) வாய்விட்டுச் சொல்லிக்கொண்டு, அவர் வீரம் - அந்தப்பாண்டவர்களது பராக்கிரமத்தை, மிகவும் வியந்தார் - மிகவும் அதிசயித்துக் கொண்டாடினார்கள்; (எ - று.)—அம்மா-ஈற்றசை; பகைவருங்கொண்டாடும்படியான பாண்டவர்களதுபராக்கிரமத்தை விளக்கும் வியப்பிடைச்சொல்லுமாம்.

தாரகை - ஆவீறு ஐபான வடசொல். பலவீரர்களும் நிறைந்திருக்கும் விசாலமான யுத்தகளத்துக்கு,நக்ஷத்திரக்கூட்டம் நிறைந்த ஆகாயம் உவமைகூறப்பட்டது. சமரபூமிகொண்டான் - போர்க்களத்தில் வெற்றிகொண்டானென்றபடி. மிஞ்சி - விஞ்சி யென்பதன் மரூஉ. விண்டார் - பலர்பால் முற்றெச்சம்; விள்-பகுதி. இனி, விண்டாரவர் என எடுத்து, பகைவர்களான அவர்களது என்று உரைப்பாரு முளர்; அப்பொழுது, விண்டார் - வினையாலணையும் பெயர்: விள்ளுதல் - மனம்வேறுபடுதல். (கOஅ)

எந்தத் துரியோதனனைக் காணாமல் அவர்கள் பொலிவழிதல்.

பூணாரமார்பின்வலத்தேபுரிபூந்தண்மாலைக்
கோணார்சிலைக்கைந்நெடுநாகக்கொடிகொள்வேந்தைக்
காணார்களத்திலொருபாலுங்கருகியுள்ளம்
வாணாடருக்கன்குடிபோமகல்வாரெனுடொத்தார்.

(இ - ள்.) ஆரம் பூண் - இரத்தினமாலைகளைத தரித்த, மார்பின் - மார்பினிடத்து, வலத்தே புரி பூ தண் மாலை-நஞ்சாவட்டைமலர்களாலாகிய குளிர்ந்த மாலையையுடையவனும், கோண் ஆர் சிலை கை-வளைவு மிக்க வில்லை யேந்தியகையையுடையவனுமாகிய, நெடு நாகம் கொடி கொள் வேந்தை - நீண்டசர்ப்பக்கொடியைக் கொண்ட துரியோதனராசனை, களத்தில் ஒரு பாலும் காணார் - போர்க்களத்தில் ஒருபக்கத்திலுங் காணாதவர்களாய், உள்ளம் கருகி - மனந்தவித்து, வாள் நாடு அருக்கன் குடி போம் அகல் வாரெனுடு ஒத்தார் - ஒளிபொருந்

திபசூரியன் தங்காதுசீங்கப்பெற்ற பரந்தஆகாயத்தோடு சமமானுர்கள் [பொலிவிழந்தன ரென்றபடி]; (எ - று.)

ஹாரம், அர்க்கன் - வடசொற்கள். வலத்தேபுரிபூ=வலம்புரிப்பூ; வலப்பக்கமான இதழ்முறுக்குள்ள மல ரென்க. இனி, 'வலம்' என்பதை எழுனுருபாக்கி, மார்பின்வலத்தே - மார்பினிடத்திலே, புரி - தரித்த, பூந்தண்மாலை - குளிர்ந்தபூமாலையையுடைய என்பாருமுளர். வேந்து - உயர்திணைப்பொருளுணர்த்தும் அஃறிணைச்சொல்; இதனைப் பண்பாகுபெயரென்றலும் உண்டு. நாடு அருக்கன் - வினைத்தொகை. தண் மாலை - தேனினூற் குளிர்ந்த மாலை. உவமையணி. (௧0௯)

அவர்கள் சஞ்சயனைக் கண்டு விசாரித்தல்.

தனிவந்துதோன்றுதலுஞ்சஞ்சயனென்னும்வேத
முனிவன்றனைக்கண்டிருதாளின்முடிகள்சேர்த்தி
யனிகங்கெழும்போரரசன்றனையங்கைநெல்லிக்
கனிகண்டனையாயெவண்காண்டுநுங்காட்டுகென்றார்.

(இ - ள்.) சஞ்சயன் என்னும் வேதம் முனிவன் - சஞ்சயனென்னும் பெயரையுடைய வேதப்பொருள்வல்ல முனிவன், தனி வந்து தோன்றுதலும் - தனியேவந்து எதிர்ப்பட்டவளவிலே, தனை கண்டு - அவனைப்பார்த்து, (அசுவத்தாமன் முதலியோர்), இரு தாளில் முடிகள் சேர்த்தி - (அவனுடைய) இரண்டு பாதங்களிலும் தங்கள்தலைகளை வைத்து வணங்கி, (அவனைநோக்கி),—'அம் கை நெல்லி கனி கண்டனையாய் - உள்ளங்கையிலுள்ள நெல்லிப்பழத்தைக் காணுதல்போல (எல்லாப்பொருளையுங்) கண்டறிந்தவனே! அனிகம் கெழும் போர் அரசன்தனை - சேனைத்தொகுதியுடனே மிகுதியாகச்செய்யும் போரையுடைய துரியோதனராசனை, எவண் காண்டும் - எவ்விடத்தில் (நாங்கள்) பார்க்கப்பெறுவோம்: காட்டுக - காண்பிப்பாயாக,' என்றார் - என்றுசொன்னார்கள்.

சஞ்சயன் - திருதராட்டிரனுக்கு மிகவும்இஷ்டனான நண்பன்; இவன் - திருதராட்டிரனது தேர்ப்பாகரில் ஒருவனது மகனாதலால், அவனுக்குச் சிலசமயங்களில் தேர்செலுத்துதலும் உண்டு. சஞ்சய னென்ற பெயர் - (ஐம்பொறிகளை) நன்றாக வென்றவ னென்று காரணப்பொருள்படும். கவல்கண னென்பவனது குமார னாதலால், இவனுக்கு 'காவல்கணி' என்ற பெயரும் வடமொழியில் வழங்கும். இவன் போர்நாள்தோறும் நிகழுஞ்செய்திகளை இரவிற்சென்று திருதராட்டிரனுக்குக் கூறிவந்தான். இவன் வியாசமுனிவனது அருளால் அம்முனிவரிடம் தத்துவப்பொருள்களைக் கேட்டுணர்ந்த ஞானியாதலால், 'வேதமுனிவன்' என்றும், 'அங்கை நெல்லிக்கனி கண்டனையாய்' என்றுஞ் சிறப்பித்துக்கூறப்பட்டான்.

வேதம் என்ற வடசொல் - (நன்மைதீமைகளை) அறிவிப்ப தென்று காரணப்பொருள்படும்; வித் என்ற தாதுவினின்று [வினைப்பகுதியினின்று] பிறந்த பெயர். இரு தாளின் முடிகள் சேர்த்தி - சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு. அகம்+கை=அங்கை; "அக முனர்ச் செவி கை வரின் இடையன கெடும்" என்ற சூத்திர விதி. அங்கைநெல்லிக்கனி - வடமொழியில் 'கரதலாமலகம்' எனப்படும்; இது, எளிதில் நன்றாய் அகமும்புறமும் முழுவதும் அறியப்படுதற்கு உவமம். எவண் என்பதில், அண் - இடப்பொருள்காட்டும் விகுதி; அவண், இவண், நுவண் என்றவற்றிலும் இவ்வாறே. காண்டும் என்ற தன்மைப்பன்மையெதிர்காலமுற்றில், டு - சாரியை; தகரம் டகரமாகத் திரிந்தது. 'காண்குதும்' என்றபாடத்துக்கு, கு-சாரியை. காட்டுகென்றார் - தொகுத்தல். (௧௧0)

இதுமுதல் மூன்றுகவிகள் - குளக்ம்: சஞ்சயன் கூறும் விடை.

இவ்வோர்விரைவினிவன் றன்னைவினவவின்னோ
னவ்வோனுயிருக்கழிவில்லையமரின்மோதி
வெவ்வோடையானைவிறன்மன்னவர்வீயயாரு
மொவ்வோன்மறித்துமமர்மோதவுணர்தலுற்றான்.

(இ - ள்.) இவ்வோர் - (அசுவத்தாமன் முதலிய) இவர்கள், விரைவின் - விரைவாக, இவன்தன்னை - இந்தச்சஞ்சயனை, வினவ - (இவ்வாறு) வினவ,— (அதற்கு), இன்னோன் - இச்சஞ்சயன்,—'அவ்வோன் உயிருக்கு - அந்தத்துரியோதனனுயிருக்கு, அழிவு இல்லை - (இப்பொழுது) அபாய மில்லை: அமரில் மோதி - போரில் தாக்கி, வெம் ஓடை யானை விறல் மன்னவர் - கொடுமையையும் நெற்றிப்பட்டத்தையுமுடைய யானைச்சேனையையுடைய வலிமையுள்ள அரசர்கள், வீய - இறக்க, யாரும் ஒவ்வோன் - எவரும் (தனக்குச்) சமமாகப் பெறாத துரியோதனன், மறித்தும் அமர் மோத உணர்தல் உற்றான் - மீண்டும் (பாண்டவரோடு)போர்செய்ய ஆலோசித்தான்; (எ-று.)—இக்கவியில், 'வினவ' என்றது, கககூ-ஆங் கவியில் 'என' என்ற வினைஎச்சத்தைக் கொள்ளும்.

அமரில் மோதி மன்னவர் வீய - போரில் தாக்கிப் பலதுணையரசர்களும் இறந்தபின்பு என்றபடி; இனி, போரில்தாக்கப்பட்டுப் பாண்டவர்கள் இறக்குமாறு என்று உரைத்தலு மொன்று. இவ்வோர், அவ்வோன் என்பவை - இ அ என்னுஞ் சுட்டடியாப் பிறந்த உயர்திணைப்படர்க்கைப்பெயர்கள்; இவர், அவன் என்ற பெயர்கள், விரித்தல்விகாரமும், ஈற்றயல்அகரம் ஓகாரமாதலும் பெற்று, இவ்வோர் அவ்வோன் என நின்றன வென்க. இன்னோன் என்ற சுட்டுப்பெயரில், முன்நின்ற 'ன்' - சாரியை, பின்நின்ற 'ன்' - சந்தி, விகுதி முதல்ஆகாரம் ஓவாயிற்று. ஓடை - நெற்றிப்பட்டம்; [முகபடாம், சூழியெனப்படும்.] உணர்தலுற்றான் - ஒருசொல்லின் தன்மையதான தெரிநிலைமுற்று. (கககச)

ஈண்டுச்சமரினிறந்தோர்களெவருமின்றே
மீண்டுற்பவிக்கவிடுவித்துவிரகினோடும்
பாண்டுப்பயந்தோர்படையாவுமடியமோதப்
பூண்டுத்தமமாமறைகொண்டகன்பொய்கைபுக்கான்.

(இ - ள்.) (இங்ஙனம் ஆலோசித்து),—ஈண்டு - இவ்விடத்தில் [குருக்ஷேத்திரத்தில்], சமரின் இறந்தோர்கள் எவரும் - போரில் இறந்த தன்பக்கத்தாரெல்லோரும், இன்றே - இன்றைத்தினத்திலேயே, மீண்டு உற்பவிக்க - மறுபடி பிழைத்தெழும்படி, விரகினோடும் விடுவித்து - தந்திரமாக (அவர்கள்மரணத்தை) நீக்கி, பாண்டு பயந்தோர் படை யாவும் - பாண்டுமகாராசன்பெற்ற குமாரர்களான பாண்டவர்களது சேனைகளெல்லாம், மடிய - அழியும்படி, மோத - (தான்மீண்டும்) தாக்குவதாக, பூண்டு - நிச்சயஞ்செய்துகொண்டு, (துரியோதனன்), உத்தமம் ஆம் மறை கொண்டு - மிகமேலானதொரு மந்திரத்தை உதவியாகக் கொண்டு, அகல் பொய்கை புக்கான் - விசாலமானதொரு தடாகத்திற் பிரவேசித்தான்; (எ - று.)

உற்பவிக்க - உத்பவ மென்ற வடமொழிப்பெயரினடியாப் பிறந்த வினையெச்சம். அகல்+பொய்கை=அகன்பொய்கை; "குறில்செறியா லள" என்னுஞ் சூத்திரத்து 'பிற' என்றதனால், சிறுபான்மை நிலைமொழியீற்று லகரம் னகரமாயிற்று. அகன்பொய்கை என்ற தொடர் - பண்புத்தொகைபோலப் பொருள்பட்டாலும், சொல்நிலையால் வினைத்தொகையேயாம்; 'உயர்திணை' என்பது போல: அகல்என்றது வினைப்பகுதியாதலும், அகன்ற அகல்கிற அக

லும் என விரிதலுங் காண்க. பொய்கை-மானிடராக்காத நீர்நிலை; சரசு. 'விரகு' என்றது, மந்திரபலத்தை. இறந்தவரைப் பிழைப்பித்தலினும் மேம்பட்டது வேறு இல்லை யாதலால், 'உத்தமமாம்மறை' எனப்பட்டது; ௧0௬ - ஆங் கவியில், 'உயர்மந்திரம்' என்றதுங் காண்க. பாண்டுப்பயந்தோர் என உயர்திணைப்பெயரின்முன் வலிமிக்கது, ஓசையின்பம்நோக்கி யென்க. (௧௧௨)

என்னைத்துருபதெயனாதியர்கோறலெண்ணப்
பின்னைக்குவாய்த்தோன்பிழைப்பித்தனன்யானும்வந்தேன்
றன்னைக்குமூழ்கத்தடம்வாய்த்தமைதந்தையோடு
மன்னைக்குரைப்பேனெனப்போயினனந்தணாளன்.

(இ - ள்.) என்னை—, துருபதெயன் ஆதியர்-துருபதராசன்மகனான திட்டத்துய்மன் முதலியோர், கோறல் எண்ண-கொல்லுதற்கு எண்ணங்கொள்ள, பின்னைக்கு வாய்த்தோன் பிழைப்பித்தனன் - நப்பின்னைப்பிராட்டிக்கு (ஏற்ற கொழுநனாக)வாய்த்த கண்ணபிரான் (என்னை) உயிர்தப்புவித்தான்; (அதனால்), யானும் வந்தேன் - நானும் பிழைத்துவந்தேன்; தன்னைக்கு - தாய்போன்ற துரியோதனனுக்கு, மூழ்க - முழுகும்படி, தடம் வாய்த்தமை - தடாகம்நேர்ந்தமையை, தந்தையோடும் அன்னைக்கு உரைப்பேன் - (அவனது)தந்தையான திருதராட்டிரனுக்குந் தாயானகாந்தாரிக்கும் சொல்லுவேன், என - என்றுசொல்லி, அந்தணாளன் - முனிவனான சஞ்சயன், போயினன் - சென்றான்; (எ - று.)

த்ருபதேயன் - தத்திதாந்தநாமம்: குறுக்கல். பின்னை - ஓர்இடையர்தலைவன்மகள்; இவள் கண்ணபிரானது திருவுள்ளத்துக்கு மிகவுகப்பாக இருந்தனளாதலால், 'பின்னைக்கு வாய்த்தோன்' என்றார். எவராலும் அடக்கவொண்ணாதனவும் அசுரத்தன்மைபூண்டனவும் பெருவலியினவுமான எழெருதுகளைக் கண்ணபிரான் தன்வலிபால் அடக்கி வென்று அழித்து அவ்வெற்றியையே இவள்தந்தையின்சொற்படி கந்யாசுல்கமாக்கி இவளை மணஞ்செய்துகொண்டன னென்பது, பாகவதசரித்திரம். இவள், கண்ணபிரானது பட்டத்துத்தேவியர் எண்மருள் ஒருத்தி; இனி, பின்னை-இலக்குமியுமாம்; பாற்கடல்கடைந்தகாலத்து அதனினின்று முன்னே தோன்றிய மூதேவியின் பின்னே திருமகள் திருவவதரித்து இளையா ளெனப்படுவள்: பின்னை - பின்பிறந்தவள்; ஐ-விகுதி. பிழைப்பித்தனன் - ஒற்றரையும், முனிவரையும், போர்க்குவாராதாரையுங் கொல்லலாகா தென்று நீதிகூறிப் பிழைப்பித்தான் என்க. 'என்னை' என்பது - கோறல், பிழைப்பித்தனன் என்ற இரண்டுக்கும் செயப்படுபொருள்.

தன்னை யென்பது - தாயென்னும் பொருளதாதலை, "ஈன்றாள் தன்னை தா யென்ப" என்ற பிங்கலந்தையாலும் அறிக. தனக்கும் திருதராஷ்டிரனுக்குங் காந்தாரிக்கும் துரியோதனனிடத்து உள்ள அருமையன்பை விளக்குவான், சஞ்சயன் அவனை 'தன்னை' என்றான்; இது, அன்புபற்றிவந்தபால்வழுவமைதி. உலகுக்குத் தாய்போன்றவ னென்றுகொள்ளுதல், துரியோதனன்விஷயத்திற் சிறவாது; கொடுங்கோலரச னாதலால். இனி, இராசபரிவாரமாயுள்ளார் இராசனைத் தாயென்றுகூறும் மரபுபற்றி, சஞ்சயன் துரியோதனனைத் தன்னை யென்றானுமாம்; இதற்கு விதி - "அன்னை யென்னை யென்றலு முளவே" என்ற தொல்காப்பியச்சூத்திரத்து உரையிற் காண்க. மூழ்கத்தடம்வாய்த்தமை - தடாகத்தில் வாய்ப்பாக முழுகியமை. அந்தணாளன் - அழகியதண்மையை ஆளுபவன்; தண்மை - குளிர்ச்சியாகிய அருள். இது முனிவர்க்குக் காரணவிடுகுறிப்பெயராதலை "அந்தண ரென்போ ரறவோர் மற் றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுக லான்" என்ற திருக்குறள்கொண்டும் அறிக. (௧௧௩)

வேறு.

அசுவத்தாமன் முதலியோர் அந்த நீர்நிலையை அடைதல்.

வேதியன்வாய்மைகேட்டவேதியன்மகனுமற்றை
யோதியகிருபராகியுள்ளவர்தாமுமெய்தி
மாதுயரகற்றுமற்றவாய்மைகேட்டங்குஞான
வூதியம்பெற்றாலென்னவொடுங்கியவோடைகண்டார்.

(இ - ள்.) வேதியன் வாய்மை கேட்ட-வேதப்பொருள்வல்லவனான சஞ்சயமுனிவனது வார்த்தையைக் கேட்ட, வேதியன் மகனும் - வேதம்வல்ல துரோணாசாரியனது புத்திரனான அசுவத்தாமனும், மற்றை ஓதிய கிருபர் ஆகி உள்ளவர்தாமும் - (முன்சொல்லப்பட்ட) மற்றையரசர்களானவர்களும், எய்தி-சென்று சேர்ந்து, அங்கு-அவ்விடத்தில்,—மா துயர் அகற்றும் வாய்மை கேட்டு ஞானம் ஊதியம் பெற்றால் என்ன ஒடுங்கிய ஓடை கண்டார்-மிக்க துன்பத்தை நீக்கும்படியான உபதேசத்தைக் கேட்டு (அதனால்) ஞானலாபத்தைப் பெற்றாற் போல ஒடுங்கியிருந்த தடாகத்தைப் பார்த்தார்கள்; (எ - று.)—மூன்றாமடியில், மற்று, அ - அசைகள்.

துரியோதனன் ஜலஸ்தம்பஞ்செய்திருத்தலால் அப்பொய்கைநீர்அசையப் பெறாமல் அடங்கியிருந்த தன்மைக்கு, நல்லஉபதேசமொழிகளைச் சிறந்த ஆசிரியர்பக்கல் கேட்டு அதனால் தத்துவஞானம் உண்டாகப்பெற்றவர் மனமும் பொறியு மொடுங்கியிருக்குந்தன்மையை உவமைகூறினார். அவ்வோடையொடுங்கியநிலைமை, அடுத்தகவியில் விவரிக்கப்படும். ஓடை - நீரோடுவது. மற்றையோதிய கிருபர் - கிருபனும், கிருதனும். எய்தி, எய்து - பகுதி. உவமையணி.

இதுமுதற் பதினேழு கவிகள் - இச்சருக்கத்தின் முப்பத்துமூன்றாங் கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (கக௪)

அந்த ஜலஸ்தம்பத்தால் ஆகிய நிலையை அவர்கள் காணல்.

புள்ளியலரவங்காணார்பொருதெறிதரங்கங்காணார்
துள்ளியமீனங்காணார்சூழ்வருமனிலங்காணா
ரொள்ளியமலர்களெல்லாமுறங்குதலன்றிமன்றல்
வள்ளியதோடுதோறுமதுநுகர்வண்டுங்காணார்.

(இ - ள்.) (அசுவத்தாமன் முதலியோர் அக்குளத்தில்), புள் இயல் அரவம் - நீர்ப்பறவைகளாலாகும் ஓசையை, காணார் - காணாதவரானார்கள்; பொருது எறி தரங்கம் - (ஒன்றோடொன்று) மோதிவீசுகிற அலைகளை, காணார்—; துள்ளிய மீனம் - துள்ளுகிற மீன்களை, காணார்—; சூழ்வரும் அனிலம் - சுற்றி வீசுகிற காற்றை, காணார்—; ஒள்ளிய மலர்கள் எல்லாம் - ஒளியையுடைய நீர்ப்பூக்கள்யாவும், உறங்குதல் அன்றி - குவிந்துகிடத்தலேயல்லாமல், மன்றல் வள்ளிய தோடு தோறும் - பரிமளமுள்ள வளப்பமுடைய பூவிதழ்களிலெல்லாம், மது நுகர் - தேனைக்குடிக்கிற, வண்டும் - வண்டுகளையும், காணார்—.

புள்ளியலரவம்காணார் - பறவையொலியைக் கேளாரென்றபடி; ஒருபுலனை மற்றொருபுலனுக்குக் கூறிய உபசாரவழக்கு. ரவம் - ஒலியுணர்த்தும் வடசொல்; அது முதலில் அகரம்பெற்றது. தரங்கம், மீநம், அநிலம், மது - வடசொற்கள். அங்குக்காற்றெழாமையும், ஜலஸ்தம்பத்தின் காரியம்; அன்றி, கீழ் கo௪ - ஆங் கவியில் "வாயுவுந் தம்பமாகக் கும்பித்து" என்றதன் குறிப்பால், வாயுஸ்தம்பமுந் துரியோதனனாற் செய்யப்பட்டதென்றலும் ஒன்று. ஒள்ளிய, வள்ளிய - ஒண்மை, வண்மை யென்னும் பண்பினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சங்கள்; இ - சாரியை. வண்டும், உம் - இறந்ததுதழுவிய எச்சப்

பொருளது; அவ்வும்மையையுடைய சொல்லை இறுதியில்நிறுத்தவேண்டு மென்பது, இலக்கணக்கொள்கை. தன்மைநவிற்சியணி. (௧௧௫)

அவ்விடத்துநிலைகண்டவர்கள் துரியோதனனைக் கூப்பிடத்தொடங்கல்.

ஏறியபாதம்போலவிறங்கியபாதநோக்கிச்
சாறியலிரதமிஞ்சுந்தடம்புனலடங்கநோக்கி
மாறியல்வேந்தர்தம்மில்வாண்முகநோக்கிநோக்கிக்
கூறியவரசன்றன்னைக்கூவினரழைக்கலுற்றார்.

(இ - ள்.) ஏறிய பாதம் போல - (நீரினின்று கரையின்மேல்) ஏறிய அடிவைப்புக்கள்போல, இறங்கிய - (துரியோதனன் கால்களை முன்பின்னாகமாற வைத்துக்கொண்டு நீரில்) இறங்கிய, பாதம் - அடிவைப்புக்களை, நோக்கி - பார்த்தும், சாறு இயல் - கருப்பஞ்சாற்றை யொத்த, இரதம் - இனியநீர், மிஞ்சும் - மிகுதியாகப்பொருந்திய, தடம் - அத்தடாகத்தின், புனல் - நீர், அடங்க - அடங்கியிருக்க, நோக்கி - (அதனைப்) பார்த்தும், மாறு இயல் - மனம்மாறு படுதல் பொருந்திய, வேந்தர் - அரசர்கள்,—தம்மில் வான் முகம் நோக்கி நோக்கி - தங்களுக்குள்ளே ஒருவர் ஒருவருடைய ஒளியுள்ள முகத்தைப் பார்த்துக்கொண்டு, (பின்பு), கூறிய அரசன்தன்னை கூவினர் அழைக்கல் உற்றார் - மேற்கூறப்பட்ட துரியோதனராசனைக் கூவியழைக்கத் தொடங்கினார்கள்; (எ - று.)—அதனை அடுத்தஐந்துகவிகளிற் காண்க.

அத்தடாகத்தில் சலம் அசையாமல் தம்பித்திருத்தலையும், அதில் ஒற்றையடிவைப்புவரிசை நீரினின்று துரியோதனன் கரையேறி வெளியே சென்றிட்டானென்று தோன்றும்படி முன்பின்னாகஅமைந்திருத்தலையும் கண்டு அசுவத்தாமன்முதலிய சிறந்தவீரர்கள் பலவகையாகக் கவலைகொண்டு அக்கவலையால் ஒருவர்முகத்தை யொருவர் பார்த்துப் பின்பு எல்லோருமாகக் கரையில்நின்று சிலவார்த்தைகள்சொல்லி உரத்தகுரலோடு துரியோதனனை அழைப்பவரானார்கள் என்பதாம். கீழ் ௧0௯ - ஆம்கவியில் "சேவடி முன்பினதா வேகி" எனவந்த தன் கருத்தை, இக்கவியின்முதலடி நன்குவிளக்கும். இரண்டாமடியில், இயல் - உவமவுருபு. சாறு - ஸார மென்ற வடசொல்லின் திரிபு. இரதம் - நீரென்ற பொருளில், ரஸ மென்ற வடசொல் திரிந்தது. சாறியலிரதம் என்பதற்கு - கருப்பஞ்சாற்றின்தன்மையைக் கொண்ட நீரென்றும் பதவுரைகூறலாம். தடம் புனல் - வேற்றுமைத்தொகை; "வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும்" என்றமைகொண்டு மகரம் விகாரப்படாதுநின்றது. மாறு - மாறுதல்; முதனிலைத்தொழிற்பெயர். 'அடங்கநோக்கி' என்றபாடமும் பொருந்தும். (௧௧௬)

இதுமுதல் ஐந்து கவிகள் - அவர்கள் துரியோதனனை யழைத்தல்.

நின்கிளையாகிவந்தநிருபருந்துணைவர்யாரும்
வன்களிறிவுளிபொற்றேர்வாண்முதற்படைகள்யாவும்
புன்களமதனிற்சேரப்பொன்றினவிம்பரன்றோ
வென்கருதினைகொலையாவென்பெறற்கென்செய்தாயே.

(இ - ள்.) இம்பர் - இவ்வுலகத்தில், நின் கிளை ஆகி வந்த - உனக்கு உறவினராய்ப் பொருந்திய, நிருபரும் - அரசர்களும், துணைவர் யாரும் - (உனது) நண்பர்களெல்லோரும், வல் - வலிய, களிறு - யானைகளும், இவுளி - குதிரைகளும், பொன் தேர் - அழகியதேர்களும், வாள் முதல் படைகள் யாவும் - வாள் முதலிய எல்லாஆயுதங்களும், புல் களமதனில் - துன்பத்துக்கிடமான போர்க்களத்தில், சேர - ஒருசேர, பொன்றின அன்றோ - அழிந்திட்டனவன்றோ; ஐயா - ஐயனே! என் கருதினை கொல் - என்னநினைந்தாயோ? என் பெறற்கு -

யாதுபெறுதற்கு, என் செய்தாய் - என்னகாரியஞ்செய்தாய்? (எ - று.)—ஈற்று ஏகாரம் - இரக்கம்.

இந்த முதற்கவி, துரியோதனனது பந்துவர்க்கம் சிநேகிதவர்க்கம் சேனை வர்க்கம் ஆயுதவர்க்கம் என்ற யாவும் அழிந்திட்டதைப்பற்றி இரங்கிக்கூறிய வாறு. பகைவரான பாண்டவர்களைப் போரில் வென்றொழிக்குமாறு எண்ணிச் செய்த முயற்சியில் இப்படிப்பட்ட துன்பம்நேர்ந்ததனால், 'என்கருதினைகொல் ஐயா என்பெறற்கு என்செய்தாயே' என்றான்; அன்றி, உன்னைச்சேர்ந்தவர் யாவரும் உனக்காகப் போர்செய்து இறந்துபோய்விட, நீ போரினின்று ஓடி வந்திட்டமை மிக்க அவமானந்தருவ தாதலால், யாதுபெறும்பொருட்டு யாது நினைந்து இங்ஙனஞ்செய்தனையோ என்ற கருத்தாற் கூறினனுமாம். கிளை - மரத்தைக் கிளைபோல ஒருவனைத் தழுவிநிற்பதுபற்றி, உவமவாகுபெயராய் உறவினர்க்கு வழங்கும் பெயர். துணைவர்யாரும் என்பதற்கு - தம்பிமார்க ளெல்லாரும் என்றும் உரைக்கலாம். பொற்றேர் - பொன்மயமான தேரு மாம். 'புன்களம்' என வெறுத்துக் கூறியவாறு. முதல் மூன்றடியி லுள்ள வாக்கியத்தில் உயர்திணைப்பெயரும், அஃறிணைப்பெயரும் விரவிவந்து மிகுதி யினால் 'பொன்றின' என்ற அஃறிணைப்பன்மைமுடிபை யேற்றன; "திணை பால் பொருள் பல விரவின சிறப்பினும், மிகவினு மிழிபினு மொருமுடிபி னவே" என்னுஞ் சூத்திர விதி: கிருபர் துணைவர் என உயர்திணைப்பொருள் இரண்டேயாக, களிறு இவுளி தேர் படைகள் என அஃறிணைப்பொருள் நான்காதல், இங்கே மிகுதி. இம்பர் - இகரச்சுட்டடியாப் பிறந்த பெயர்; இதன் எதிர்மொழி - உம்பர். மேலுலகம். (அம்பரென்ற பெயரும் உண்டு) அன்றே - தேற்றம். அஃறிணையிருபாற்கும் பொதுவாகிய எவன் என்ற வினை வடிக்குறிப்புவினையாலணையும்பெயர், என் என விகாரப்பட்டது. கொல் - அசை. ஐயா என்றது, அன்புபற்றிய மரபுவழுவமைதி. ஆர்ய என்ற வட மொழி, ஐயனைத் திரியும்; சிறந்தவனென்று பொருள். (கசஎ)

இதுவும், அடுத்தகவியும் - அசுவத்தாமனென்பவனது வார்த்தை.

வீரியம்விளம்பல்போதாதாயினும்விளம்புகின்றேன்
போரியலமரிலென்னேர்பொருசிலையெடுத்துநின்றாற்
றேரியல்விசயனோடுநால்வருஞ்சேரவென்கை
மூரிவெங்கணைகளாலேமுடித்தலைதுணிவர்கண்டாய்.

(இ - ள்.) வீரியம் விளம்பல் போதாது - (தனது) பராக்கிரமத்தைத் தானேயெடுத்துச்சொல்லுதல் (பார்க்கும்) தகுதியன்று, ஆயினும் - ஆனாலும், விளம்புகின்றேன் - சொல்லுகிறேன்: போர் இயல் அமரில் - யுத்தம் பொருந் திய களத்தில், என் நேர் - எனது எதிரில், பொரு சிலை எடுத்து நின்றால் - போருக்குஉரிய வில்லை யேந்திநிற்பரானால், தேர் இயல் விசயனோடு - தேரிற் பொருந்திய வீரனான அருச்சுனனுடன், நால்வரும் - மற்ற நான்கு பாண்டவர் களும், (ஆக ஐவரும்), சேர - ஒருசேர, என் கை மூரி வெம் கணைகளாலே - எனதுகையாலெய்யப்படும் வலிய கொடிய அம்புகளாலே, முடி தலை துணிவர் - கிரீடத்தையணிந்ததங்கள்தலைஅறுபடுவார்கள்; (எ-று.)—கண்டாய் - தேற்றம்

என்னிடத்து நம்பிக்கை வைத்து என்னை நீ சேனாபதியாக்காததனால் இப்படிப்பட்ட எனதுதிறமையை யான் காட்டுதற்கு இடமில்லாமற்போயிற் றென்பது, உட்கோள். இப்படிப்பட்டதிறமை அசுவத்தாமனுக்கு இருந்ததை, "ஆசாரியன் புதல்வ னச்சுவத்தார்கோமாற்குச், சேனாபதிப்பட்டஞ் சேர்த்தி னால் - மீதவனை, வெல்லப் போர்செய் வகைக்கு வெண்டலையி லூனுகந்த, செல்வற்குந் தானரிதே செப்பு" என்ற பெருந்தேவனார்பாரதத்தாலும் அறிக. "தோன்று தோற்றித் துறைபல முடிப்பினுந், தான்றற்புகழ்தல் தகுதியன்றே"

என்ற பொதுவிதிக்கு, 'தன்னுடைஆற்றலுணராரிடையில் தன்னைப்புகழ்த லுந் தகும் வல்லோர்க்கு' என்ற விலக்கு உள்ளதனால், 'வீரியம் விளம்பல் போ தாது ஆயினும் விளம்புகின்றேன்' என்றான்; இனி, என்திறமை சொல்லிமுடி யுந் தரத்ததன்று, ஆயினும் ஒருவாறுசொல்லுகிறே னென்றும் பொருள்கொ ள்ளலாம். வீர்யம்-வடசொல். காண்டவதகனகாலத்தில் அக்கினிபகவானிட த்து அருச்சுனன் வலிய தேர் முதலியவற்றைப் பெற்றுள்ள சிறப்பைக் கருதி, 'தேரியல்விசயன்' என்றான்; இனி, தேர்ச்சிபொருந்திய அருச்சுன னெனினு மாம். பஞ்சபாண்டவருள் அருச்சுனன் வில்திறத்திற் சிறந்த வீரனாதலால், அவனைத் தனியேயெடுத்துக்கூறினான். 'யான் அவர்கள்தலையைத்துணிப்பேன்' என்று வினையைத் தன்மேலேற்றாமல் 'அவர்கள் தலை துணிபடுவார்கள்' என்று அவர்கள்மேல் ஏற்றிக் கூறியது, அலக்ஷ்யத்தைக் காட்டும். தலைதுணிவர் - "உயர்திணைதொடர்ந்த பொருள்முதலாறும், அதனொடு சார்த்தின் அத்திணை முடிபின"என்றபடி வந்த திணைவழுவமைதி. கண்டாய் என்ற இறந்தகாலவினை முற்று, இடைச்சொல்தன்மைப்பட்டுத் தேற்றப்பொருளை விளக்கும். (ககஅ)

இது - அசுவத்தாமன் செய்யும் சபதம்.

எல்லவன்வீழுமுன்னம்யாரையுந்தொலைத்துவேலைத்
தொல்லைமண்ணளித்திலேனேற்றுரோணன்மாமதலையல்லேன்
வில்லெனும்படையுந்தீண்டேன்விடையவன்முதலோர்தந்த
வல்லியகணையும்பொய்த்தென்மறைகளும்பொய்க்குமாதோ.

(இ - ள்.) எல்லவன் வீழும் முன்னம்- சூரியன் அஸ்தமித்தற்கு முன்னே, யாரையும் தொலைத்து - பகைவர்களெல்லோரையும் ஒழித்து, வேலை தொல்லை மண் - கடல்சூழ்ந்த பழமையான நிலவுலகமுழுவதையும், அளித்திலேனேல் - (உனக்கு நான்) கொடேனாயின், (யான்), துரோணன் மா மதலை அல்லேன் - துரோணனது சிறந்த குமாரனல்லேன்; (அன்றியும்), வில் எனும் படையும் தீண்டேன் - வில்லென்ற ஆயுதத்தையும் தொடேன்: (மேலும்), விடையவன் முதலோர் தந்த - விருஷபவாகனத்தையுடைய சிவபிரான் முதலான தேவர் கள் (எனக்குக்) கொடுத்துள்ள, வல்லிய கணையும் - வலிய அம்புகளும், பொய் த்து - வீணாய்விட, என் மறைகளும் பொய்க்கும் - எனக்குரிய வேதங்களும் பொய்யாய்விடும்; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசை.

எல் - ஒளி; அதனையுடையவன், எல்லவன்: குறிப்புவினையாலணையும்பெ யர்; அ - சாரியை. தொல்லை - பண்புப்பெயர்; ஐ - விகுதி: வேறுவிகுதிபெ றுகையில், தொன்மை, தொன்று என வரும். விடை-வ்ருஷ மென்ற வடசொ ல்லின் திரிபு. வல்லிய - வலிய என்பதன் விரித்தல். பொய்த்து - பொய்க்க வென எச்சத்திரிபு. முதலடியில், உம்மை - முற்றுப்பொருளது; இரண்டா மடியில், உயர்வுசிறப்போடு இறந்ததுதழுவியஎச்சம்; ஈற்றடியில் உள்ள இர ண்டுஉம்மைகள் - ஒன்றை நோக்கி ஒன்று எதிரதும் இறந்ததும் தழுவியஎச்ச மாம். "இன்றுவெம்பரிதிபோயிரவுறுமுனம், சென்றடலைவர்தஞ்சிரங்கொண் டெய்துவன், நன்றெனமேவுதிசமரிலையக, அன்றெனில் தேசிகன்மைந்தனல்ல னே" என்றார் நல்லாப்பிள்ளை பாரதத்திலும். (ககக)

மோதுமோகரப்போர்வென்றுமுடித்துமோவொன்றிலொன்றிற்
சாதுமோவிரண்டுமல்லாற்றாணிபர்க்குறுதியுண்டோ
யாதுமோதெளிதினின்போலேற்றமுள்ளவர்க்கிவ்வாறு
போதுமோபூண்டபூண்டபுகழெலாம்போய்விடாதோ.

(இ - ள்) ஒன்றில் - ஒருபக்ஷத்தில், மோதும் மோகரம் போர் - தாக்கிச் செய்யும் உக்கிரமான யுத்தத்தில், வென்று முடித்துமோ - (பகைவரைச்) சயி

த்துஒழிப்போமோ? (அன்றி), ஒன்றில் - மற்றொருபக்ஷத்தில், சாதுமோ - (அப்போரிற் பகைவரால் அடிபட்டு) இறப்போமோ? இரண்டும் அல்லால் - இவ்விரண்டுவிதமு மல்லாமல், தரணிபர்க்கு - அரசர்களுக்கு,உறுதி உண்டோ - துணியத்தக்கவிதம் வேறுஉளதோ? [இல்லை யென்றபடி]; யாதுமோ தெளிதி - (இவ்விரண்டுவிதத்தில்) எதையாயினும் ஒன்றை நிச்சயிப்பாய்; நின் போல் ஏற்றம் உள்ளவர்க்கு - உன்னைப்போல மேன்மையுள்ளவர்களுக்கு, இ ஆறு போதுமோ - (ஒடியொளித்தலாகிய) இந்தவிதம் தகுமோ? [தகாது என்றபடி]; பூண்ட பூண்ட புகழ் எலாம் - (நீ இதுவரையிலும்) அழகிதாக மிகவும்அடைந்த கீர்த்திமுழுதும், போய்விடாதோ - அழிந்துபோய்விடாதோ? (எ - று.)

புகழெலாம் போய்விடாதோ-ஒருமைப்பன்மைமயக்கம். போய்விடாதோ - போய்விடுமென்றே; இரண்டுஎதிர்மறை உடன்பாடுஉணர்த்தித் தேற்றத்தை விளக்கும். "படுப்ப தொன் றரிகளைப் பயன்படாதெனில், விடுப்பதொன்றே யுயர்வேந்தர்க் காவது, மடுத்துளோர் தொதுங்கி நீ மருவி வைகுதல், அடுப்பதோ நின்னையொப்பவருக் கண்ணலே" என்றார் நல்லாப்பிள்ளைபாரதத்தும். (௧௨0)

பாண்டவர்முடியவென்றிப்பாரெலாமுனக்கேதந்தான்
மாண்டவர்தம்மைநின்வாய்மறைமொழிதன்னைக்கொண்டு
மீண்டவராக்கிப்பின்னைவேறொருபகையுமின்றி
யாண்டவரிவரேயென்னத்துணைவரோடாளலாமே.

(இ - ள்.) பாண்டவர் முடிய வென்று - பாண்டவர் இறக்கும்படி (அவர்களைச்) சயித்து, இ பார் எலாம் உனக்கே தந்தால் - இந்தப்பூமிமுழுவதையும் உனக்கே (நாங்கள்) கொடுத்தால், (அதன்பின்பு நீ), மாண்டவர்தம்மை நின் வாய் மறை மொழிதன்னை கொண்டு மீண்டவர் ஆக்கி - (போரில்) இறந்த உன்பக்கத்தவரையெல்லாம் உனது வாயிலுள்ள வேதமந்திரத்தால் பிழைத்தவராகச்செய்து, பின்னை - பிறகு, வேறு ஒரு பகையும் இன்றி ஆண்டவர் இவரே என்ன - ஒருபகையுமில்லாதபடி (உலகத்தை) அரசாண்டவர் இவர்களே யென்று (கண்டோர்) கொண்டாடும்படி, துணைவரோடு ஆளல் ஆமே - (உனது) தம்பிமார்களுடன் கூடி அரசாட்சிசெய்யலாமே; (எ - று.)

நின் வாய் மறை மொழி - உனக்குச் சுவாதீனமாய்த் தெரிந்துள்ள இரகசியமான மந்திர மென்க. மாண்டவர், மாள் - பகுதி. (௧௨௧)

அதைக்கேட்டுச் சலியாமல் துரியோதனன் தவநிலைநிற்றல்.

என்றிவைபோல்வபன்னூறியம்பவுமிராசராச
னொன்றினுங்கவலைசெல்லாவுணர்வுடையுளத்தனாகி
யன்றிகல்வருணன்கூறுமாகுமென்றறிஞர்சொல்லத்
துன்றியவடிவத்தோடுமடங்கினன்றோயத்தூடே.

(இ - ள்.) என்ற இவை போல்வ - என்றஇவைபோல்வனவாகிய, பல் நூறு - பலநூறுவார்த்தைகளை, இயம்பவும் - (அசுவத்தாமன்முதலியோர்) கூறவும், இராசராசன் - அரசர்க்கரசனான துரியோதனன், ஒன்றினும் கவலை செல்லா உணர்வு உடை உளத்தன் ஆகி - ஒருவிஷயத்திலும் கவலைசெல்லாத அறிவையுடைய மனத்தையுடையவனாய், அன்று - அப்பொழுது, இகல் வருணன் கூறும் ஆகும் என்று அறிஞர் சொல்ல - வலிமையுடைய வருணனது அம்சமுமாவன் இவ னென்று அறிவுடையார் சொல்லும்படி, துன்றிய வடிவத்தோடும் தோயத்தூடே அடங்கினன் - பொருந்திய வடிவத்துடன் நீரினுள்ளே ஒடுங்கியிருந்தான்; (எ - று.)

வேறுபாடுதோன்றாதபடி யாதொருதுன்பமுமின்றி நீரில் ஒன்றிநின்றனனென்பார், இங்ஙனங்கூறினர்; 'வருணன் கூறுமாகும்' என்ற உம்மை - இவன்

இயல்பில் அசுராம்சமானவ னென்பதுபற்றி வந்த தாதலால், இறந்ததுசமுவிப எச்சத்தோடு இழிவுசிறப்புமுடையது. வருணன் - மேற்குத்திக்குப்பாலகன்; நீர்க்கடவுள். அரசர்கள் அஷ்டதிக்பாலகரது அம்சமும் கூடிப்பிறந்தவர் என்ற நூற்கொள்கையின்படி துரியோதனனிடத்து வருணனது அம்சம் அமைந்திருத்தல் இதனால் விளங்குகிறதென்று அறிவுடையார் கூற என மூன்றுமடிக்குக்கருத்துக்கொள்ளினுமாம். தோயம் - வடசொல். போல்வ - பெயர். என்றிவை - தொகுத்தல். மடங்கினன் என்றும் பதம்பிரிக்கலாம்.

இவைபோல்வ பன்னூறு:—"உலகெலாங் குடைநிழ லுட்படுத்தினை, அலகிலா வரசருக் கரச னுயினை, இலகுபோர் முனையினும் ஏற்றம் பெற்றனை, விலகிநீ யொளிப்பது விரும்பல் போதுமோ", "மறந்தவா வலியுளோர் மாய்ந்துளா ரினிச், சிறந்த மாற்றலர்க் கெதிர் செருவிலாரென,நிறந்தவா மன்னற நினைந்துவாய் கொலோ, அறந்தவா வெம்முடை யாற்றல் தேர்கிலாய்" என நல்லாப்பிள்ளைபாரதத்திற் கூறினாற்போல்வன. (கஉஉ)

பின்பு அசுவத்தாமன் முதலியோர் மீளுதல்.

உரைத்தனவுரைகட்கெல்லாமுத்தரமுரைசெய்யாத
வரைத்தடந்தோளானெஞ்சின்வலிமையைவலிதினெண்ணி
நிரைத்தவெங்கதிர்கொள்வாளிநெடுஞ்சிலைத்துரோணன்மைந்தன்
விரைத்தொடைக்கிருதனோடுமாதுலனோடுமீண்டான்.

(இ - ள்.) உரைத்தன உரைகட்கு எல்லாம் - (இவ்வாறு) சொன்னவையான வார்த்தைகளுக்கெல்லாம், உத்தரம் உரை செய்யாத-மறுமொழி கூறாத, வரை தட தோளான் - மலைபோன்ற பெரிய தோள்களையுடைய துரியோதனனது, நெஞ்சின் வலிமையை - மனத்தின் உறுதியை, வலிதின் எண்ணி - நன்றாக நினைத்து,—நிரைத்த - வரிசைப்பட்ட, வெம் - கொடிய, கதிர் கொள் வாளி - கூர்நுனியைக்கொண்ட அம்புகளை யெய்கிற, நெடு சிலை - நீண்டவில்லையுடைய, துரோணன் மைந்தன் - துரோணனது புத்திரனான அசுவத்தாமன், விரை தொடை கிருதனோடும் - நறுமணத்தையுடைய பூமாலையைத் தரித்த கிருதவர்மாவினுடனும், மாதுலனோடும் - தன்மாமனான கிருபாசாரியனுடனும், மீண்டான் - திரும்பிச்சென்றான்; (எ - று.)

உத்தரம் - வடசொல். தொடை - தொடுக்கப்படுவது ; ஐ - செயப்படுபொருள்விகுதி. எண்ணி மீண்டானென இயையும். (கஉ௩)

இனிப் பாண்டவர்செய்தி கூறுவார்.

பாண்டவர் துரியோதனன்சென்றவிடத்தையறியாமை.

மற்றவர்மீண்டபின்னர்மாதவக்குந்தியீன்ற
கொற்றவர்தாமுஞ்சேனைக்குழாத்தொடுந்தங்களோடுஞ்
செற்றவர்தம்மையெல்லாஞ்சேணுலகேறவேற்றிப்
பொற்றவரிராசராசன்புக்குழியறிவுறாமல்.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) அவர் - அந்த அசுவத்தாமன் முதலியோர், மீண்ட பின்னர் - திரும்பிச்சென்றபின்பு, மா தவம் குந்தி ஈன்ற கொற்றவர்தாமும் - மிக்க தவத்தையுடைய குந்தி பெற்ற குமாரர்களான வெற்றியையுடைய பாண்டவர்களும்,—சேனை குழாத்தொடும் தங்களோடும் செற்றவர்தம்மை எல்லாம் - தங்கள்சேனைக்கூட்டத்துடனும் தங்களோடும் பகைத்துப் போர்செய்த எதிர்ப்பக்கத்தாரையெல்லாம், சேண் உலகு ஏற ஏற்றி - வீரசுவர்க்கத்திற் சென்றேறும்படி செலுத்திவிட்டு [கொன்றொழித்து], பொன் தவர் இராசராசன் புக்க உழி அறிவுறாமல் - அழகிய வில்லையுடைய அரசர்க்கரசனான துரியோத

னன் போயொளித்த இடத்தை யறியாமல், (எ - று.)—'நின்றபொழுதில்' என வருங்கவியோடு தொடரும்; 'மீண்டபின்னர்' என்பதும் அதனோடு தொடர்தற்கு உரியதே. மற்று - அசை.

"என்ன நோன்பு நோற்றாள்கொலோ இவனைப் பெற்றவயிறுடையாள்", "செம்மலைப் பயந்த நற்றாய் செய்தவ முடைய ளென்பார்" என்றபடி மிக்க தவப்பயனாலன்றி இப்படிப்பட்ட சிறந்தபுத்திரரைப் பெறுதல் இயலா தென்பார், 'மாதவக்குந்தி' என்றார். புக்குழி - பெயரெச்சவீறு தொகுத்தல். (கஉச)

எங்குந்தேடுகையில் வேடர்சிலர் செய்தி கூறத்தொடங்கல்.

பாடியுங்களமுஞ்சூழ்ந்தபாங்கருமங்குமிங்குந்
தேடியுங்காண்கலாதசிந்தையாகுலத்தராகி
நீடுயிர்த்துயிர்த்துநின்றபொழுதினினிகழும்வேட்டை
யாடியவலைஞர்மீண்டோரானிலற்குரைசெய்வாரே.

(இ - ள்.) பாடியும் - படைவீட்டிலும், களமும் - போர்க்களத்திலும், சூழ்ந்த பாங்கரும் - சுற்றிலுமுள்ள இடங்களிலும், அங்கும் இங்கும் - பலவிடங்களிலுமாக, தேடியும் - தேடிப்பார்த்தும், காண்கலாத - (எங்குந் துரியோதனனைக்) காணாமையாலாகிய, சிந்தை ஆகுலத்தர் ஆகி - மனக்கவலையுடையவர்களாய், நீடு உயிர்த்து உயிர்த்து நின்ற பொழுதினில் - மிகுதியாகப் பெருமூச்சுவிட்டுநின்றபொழுதில்,—நிகழும் வேட்டை ஆடிய வலைஞர் - பொருந்தியவேட்டையாடிய வேடர் சிலர், மீண்டோர் - (துரியோதனன்சென்ற வனத்தினின்று) திரும்பிவந்தவர்கள், ஆனிலற்கு - வாயுகுமாரனான வீமனுக்கு, உரைசெய்வார் - (துரியோதனன்ஒளித்துள்ளவிடத்தைக்) கூறுபவரானார்கள்; (எ-று.)—அதனை அடுத்தகவியிற் காண்க.

"வினைபகை யென்றிரண்டி னெச்சம் நினையுங்கால், தீயெச்சம் போலத் தெறும்" என்றபடி சத்துருசேஷம் அக்கினிசேஷம்போலப் பின்புவளர்ந்து அழிவுசெய்யக்கூடிய தாதலின், அதனை மிச்சமாகவிடக்கூடா தென்பதுபற்றியும், வீமனது சபதம் ஒருபகுதிநிறைவேறாமற் குறைபடுதல்பற்றியும், இங்ஙனம் மிக்ககவலைகொள்வாராயினர். புண், கடன், தீ, பகை இவற்றின் மிச்சத்தை இனி இக்குறை என்செய்வ தென்று இகழ்ந்தொழியாமல் அறத்தொலைக்க வேண்டு மென்பது, நூல்துணிபு.

பாங்கர் - பாங்கு என்ற மென்றொடர்க்குற்றியலுகரத்துக்கு, அர் - போலி. காண்கலாத என்ற எதிர்மறைப்பெயரெச்சத்தில், கு - சாரியை, அல் ஆ என்ற இரண்டனுள் ஏதேனும் ஒன்றைச் சாரியையாகவும் மற்றதை எதிர்மறையிடைநிலையாகவுங் கொள்க. நீடு - வினைப்பகுதியே வினையெச்சப்பொருள்பட்டு வினையுரியாய் நின்றது. வேட்டை - வேடு என்ற நெடிற்றொடர்க்குற்றியலுகரம் தன்னொற்றிரட்டி ஐகாரச்சாரியைபெற்றது; [நன் - உயிர் - கூக; கூரு.] வலைஞர் - வலைகாரர்; ஞ் - பெயரிடைநிலை. 'வேட்டையாடிய வலைஞர்' என்பதற்கு - வலைவீசி மீன்வேட்டையாடும் செம்படவ ரென்று உரைத்தல் பொருந்தாது; கஉஎ - ஆங் கவியில் "மிருகமாக்கள்" என வருதல் காண்க. மீண்டோர் - பெயர். ஆநிலன் - அநிலன்மகன்; வடமொழித் தத்திதாந்தம்.

துரியோதனன்செய்தியை வேடர்கள் வீமனுக்குக் கூறல்.

தூவமிகுமுனிவரோடுசுரர்களுந்தோயுநன்னீர்த்
தவமுயல்பொய்கைதன்னிற்றண்டுடைக்கையனுகிப்
புவிமுழுதாண்டவேந்தன்புக்கனன்கண்டோமென்றார்
கவலையின்மனத்தனைகாற்றருள்கூற்றனற்கே.

(இ - ள்.) கவலையின் மனத்தன் ஆன - (தனக்குப்பழம்பகைவனான துரி யோதன னுள்ளவிடம் தெரியவில்லையே யென்று) கவலையையுடைய மனத்தை யுடையவனாகிய, காற்று அருள் கூற்று அனற்கு - வாயுவினாற்பெறப்பட்ட யமன்போன்ற வீமனுக்கு, (அவ்வேடர்கள்), 'துவம் மிகு முனிவரோடு - சத் துவகுணம்மிக்க முனிவர்களும், சுரர்களும் - தேவர்களும், தோயும் - நீராடப் பெற்ற, நல் நீர் - புண்ணியதீர்த்தத்தையுடைய, தவம் முயல் பொய்கைதன் னில் - தவஞ்செய்தற்குரிய தடாகத்தில், புவி முழுது ஆண்ட வேந்தன் - பூமி முழுவதையும் அரசாண்ட துரியோதனராசன், தண்டு உடை கையன் ஆகி - கதாயுதத்தையுடைய கையையுடையவனாய், புக்கனன் - பிரவேசித்தான்; கண் டோம் - (நாங்கள்) பார்த்தோம்,' என்றார் - என்றுசொன்னார்கள்; (எ - று.)

துவம் - சத்துவம் என்பதன் முதற்குறை. ஞானம் அருள் தவம் பொறு மை வாய்மை மேன்மை மௌனம் ஐம்பொறியடக்கல் என்பன, சத்துவகுண வகைகளாம். துவமென்பதற்கு - அசையாநிலை யென்று பொருள்கூறுதலும் உண்டு. 'கவலையின்மனத்தன்' என்றது, இரண்டாம்வேற்றுமையுருபும்பயனு முடன்தொக்கதொகை ; இதில், இன் - சாரியை. இல் எனப் பிரித்து, கவலை யில்லாத மனத்தையுடையவனென்று உரைப்பது, கீழ்க்கவியோடு மாறுகொ ளக்கூறலாம். வாயுகுமாரனுதலாலும், பகைவரைத் தவறாதுஅழித்தலில் யமன் போலுதலாலும், வீமனை, 'காற்றருள்கூற்றனன்' என்றார்; சூரியனது குமார னாகவுள்ள யமன்போ லன்றி வீமன் வாயுவினாற்பெறப்பட்ட ஒரு புதிய யமன் போல்வா னென்பதும் தோன்றும். (கஉ௬)

அச்செய்தியை வீமன் கண்ணன்முதலியோர்க்குக் கூறல்.

கருமுகிலனையமேனிக்கண்ணனும்பவளமேனித்
தருமனுமெவருங்கேட்பத்தாமவேல்வீமன்சொன்னான்
பொருமரவுயர்த்தோனின்றோர்பொய்கையிற்புகுந்தானென்று
தெருமருமிருகமாக்கள்செப்பினரென்றுகொண்டே.

(இ - ள்.) கரு முகில் அனைய மேனி - காளமேகத்தை யொத்த கரியதிரு மேனியையுடைய, கண்ணனும் - கிருஷ்ணபகவானும், பவளம் மேனி - பவழம் போலச் சிவந்த உடம்பையுடைய, தருமனும் - தருமபுத்திரனும், எவரும் - மற் றும்எல்லோரும், கேட்ப - கேட்கும்படி,—தாமம் வேல் வீமன் - ஒளியை யுடைய வேலாயுதத்தையுடைய வீமசேனன்,—'பொரும் அரவு உயர்த்தோன்- போர்செய்யவல்ல பாம்பின் வடிவ மெழுதிய கொடியை உயரவெடுத்தவனான துரியோதனன், இன்று - இப்பொழுது, ஓர் பொய்கையில் புகுந்தான் - ஒரு தடாகத்தினுட் பிரவேசித்துள்ளான், என்று—,தெருமரு மிருகம் மாக்கள்-(எங் கும்)திரியுந்தன்மையுள்ள விலங்குவேட்டைக்காரர்கள், செப்பினர் - சொன்ன ர்கள்,' என்று கொண்டு - என்று, சொன்னான்—;(எ - று.)

விவேகத்திற்குறைவுபட்டவரை மாக்க ளென்றும், அதில்மிக்கவரை மக்க ளென்றும் கூறுதல், மரபு. தெருமரு, தெருமா - பகுதி: அது குறுகி விரித் தல்விகாரம்பெற்றுத் தெருமரு எனநின்றது. தெருமரல் - சுற்றியலைதல். செப் பினர் என்பதில், செப்பு என்பதைத் தெலுங்கில்வழங்குந் திசைச்சொல் லென் பர். 'என்றுகொண்டு' என்பதில், கொண்டு - அசை; "என்றுகொண் டினைய கூறி" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க. கண்ணன், பவளம் - க்ருஷ் ணன், ப்ரவாளம் என்ற வடசொற்களின் திரிபு. தாமவேல் - போர்மாலையைத் தரித்த வேல் எனினுமாம். (கஉ௭)

இதுவும், வருங்கவியும் - குளகம்; கண்ணன் ஊக்கித்துக்கூறுதல்.

என்றலுந்தன்னைச்சேர்ந்தோரிடுக்கணுமிளைப்புமாற்ற
நின்றவெம்பெருமானேமிநெடியவனருளிச்செய்வா

னன்றயன்முகத்திறற்பெற்றநேகமாமுனிவர்தம்பா
னின்றமந்திரமொன்றுண்டுநிகரதற்கில்லைவேறே.

(இ - ள்.) என்றலும் - என்று (வீமன்) கூறியவளவிலே,—தன்னை சேர்ந்தோர் இடுக்கணும் இளைப்பும் மாற்ற நின்ற எம்பெருமான் - தன்னைச்சரணமடைந்தவர்களது துன்பத்தையும் மனச்சோர்வையும் நீக்குதற்பொருட்டு நின்ற எமது தலைவனான, நேமி நெடியவன்-சக்கராயுதத்தையுடைய பெரியோனான கண்ணபிரான், அருளிச்செய்வான் - கூறியருள்வான்: (எங்ஙனமெனின்),—அன்று - அக்காலத்தில் [முன்னாளி லென்றபடி], அயன் முகத்தினால் பெற்று-பிரமன்மூலமாகப் பெறப்பட்டு, அநேக மா முனிவர்தம்பால் - சிறந்த பல முனிவர்களிடத்தில், நின்ற - தங்கிய, மந்திரம் ஒன்று - ஒருமந்திரம், உண்டு-உளது; அதற்கு நிகர் வேறு இல்லை - அதற்குச்சமானம் (அதுவேயல்லது) வேறுஇல்லை; (எ - று.)

துன்பம்நேருங்காலத்துக் கண் மலர்ச்சியின்றி இடுங்குதலால், துன்பத்துக்கு இடுக்கணென்று பெயர்; இடுங்குகண் என்பது இடுக்கணென விகாரப்பட்ட தென்க. பெருமான் - பெருமையையுடையவன்; மான் - பெயர்விகுதி. 'எம்' என்ற பன்மை - எல்லாவுயிர்களையும் உளப்படுத்தியது. திருமாலினது சக்கரத்துக்குச் சுதர்சநமென்று பெயர். உண்டு, இல்லை, வேறு - இருதிணையைம்பால்மூவிடத்துக்கும் பொது; [நன் - வினை - உ௦.] (கஉஅ)

வெஞ்சமரிறந்தோரெல்லாமீண்டுயிர்பெறுவரந்த
வஞ்சகமறைமுன்பெற்றான்வலம்புரித்தாரினானு
நெஞ்சமர்வலிமையோடுநீரிடைமூழ்கிநீங்க
டுஞ்சிடப்பொருவானின்னஞ்சூழ்ந்தனன்போலுமென்றான்.

(இ - ள்.) வெம் சமர் இறந்தோர் எல்லாம் - கொடிய போரில் இறந்தவர் யாவரும், மீண்டு உயிர்பெறுவர் - (அம்மந்திரபலத்தால்) மறுபடியும் உயிர்பெறுவார்கள்; அந்த வஞ்சகம் மறை - அந்த இரகசியமான மந்திரத்தை, வலம்புரி தாரினானும் - நஞ்சாவட்டைப்பூமாலையையுடைய துரியோதனனும், முன் பெற்றான் - முன்பு பெற்றுள்ளான்: (ஆதலால்), நெஞ்சு அமர் வலிமையோடு - மனத்திற் பொருந்திய உறுதியுடனே, நீரிடை மூழ்கி - நீரினுள்ளே முழுகி (மறைந்துநின்று அதனை ஜபித்து இறந்தவர்களைப் பிழைப்பித்து), நீங்கள் துஞ்சிட இன்னம் பொருவான் - நீங்கள்இறக்கும்படி இன்னமும் போர்செய்தற்கு, சூழ்ந்தனன் போலும் - ஆலோசித்தான் போலும், என்றான் - என்று சொன்னான், (கண்ணன்); (எ - று.)

போலும் என்றது - ஒப்பில்போலியாய்,ஊகித்தற்பொருளில் நின்றது. நெஞ்சமர்வலிமை - மநோதைரியம். நீர் என்ற முன்னிலைப்பன்மைப்பெயர், நீம் எனத் திரிந்து, 'கள்' என்னும் விகுதியோடு சேர்ந்து, நீங்கள் என்று வழங்கும். துஞ்சுதல் - தூங்குதல்; இறத்தலைத் துஞ்சுத லென்பது, மங்கலவழக்கு: மீள எழுந்திராத பெருந்தூக்க மென்க. வஞ்சகமென்றதற்கு - இங்கே சந்தருப்பத்திற்குஏற்ப, இரகசியமெனப் பொருள்கொள்ளப்பட்டது; இனி, (பகைவரை) வஞ்சித்தற்குரிய எனினும் அமையும். (கஉக)

வீமன் அத்தூரத்தையடைந்து சிலகூறத்தொடங்கல்.

மாயவனுரைத்தமாற்றமாருதிகேட்டுத்தந்தை
யாயவன்றன்னைப்போலவப்பெரும்பொய்கையெய்தித்
தூயதண்டுளவினானுந்துணைவருஞ்சூழ்ந்துநிற்பத்
தீயெனத்தீயநெஞ்சன்செவிசுடச்சிலசொற்சொல்வான்.

(இ - ள்.) மாயவன் உரைத்த மாற்றம் கேட்டு - மாயையில்வல்ல கண்ணபிரான் சொன்ன அவ்வார்த்தையைக் கேட்டு, மாருதி - வாயுகுமாரனான வீமன், தந்தை ஆயவன்தன்னை போல - தனதுபிதாவான வாயுபகவானைப்போல [வெகுவிரைவாக], அ பெரு பொய்கை எய்தி - அந்தப் பெரிய தடாகத்தையடைந்து,—தூய தண் துளவினானும் துணைவரும் சூழ்ந்து நிற்ப - பரிசுத்தமான குளிர்ந்த திருத்துழாயையுடைய கண்ணனும் தன்னுடன்பிறந்தவர்நால்வரும் (அக்குளத்தைச்) சூழ்ந்துநிற்க, தீ என தீய நெஞ்சன் செவி சுட சில சொல் சொல்வான் - நெருப்புப்போலக் கொடிய மனமுடையவனான அத்துரியோதனனது காதுகள் வருந்தும்படி சிலவார்த்தைகளைக் கூறுபவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்த ஏழுகவிகளிற் காண்க. (௧௫௦)

வேறு.

இதுமுதல் ஏழுகவிகள் - துரியோதனனைக் குறித்து வீமன் கூறும் வார்த்தை.

கங்கைமகன்முதலாகக்காந்தாரன்முடிவாகக்களத்தில்வீழ்ந்த
துங்கமணிமுடிவேந்தர்சொல்லிமுடிப்பதற்கடங்கார்துரகமாவுஞ்
செங்கனகமணிக்கொடிஞ்சித்திண்டேரும்பெரும்பனைக்கைச்சிறுத்தசெங்கண்
வெங்கயமுமேறாமல்வீழ்கயத்திலேறினையோவேந்தாவேந்தே.

(இ - ள்.) வேந்தர் வேந்தே - இராசராசனே! கங்கை மகன் முதல் ஆக - வீடுமன்முதலாக, காந்தாரன் முடிவு ஆக - காந்தாரதேசத்தரசனாகிய சகுனி ஈறாக, களத்தில் வீழ்ந்த - போர்க்களத்தில் அழிந்துவிழுந்த, துங்கம் மணி முடி வேந்தர் - சிறந்தஇரத்தினகிரீடத்தையுடைய அரசர்கள், சொல்லி முடிப்பதற்கு அடங்கார் - (இன்னாரின்னாரென்றும் இத்தனைபேரென்றும்) விவரஞ்சொல்லிமுடித்தற்கு அடங்கார்கள் [எண்ணிறந்தவர்களென்றபடி]; (அவர்கள் அங்ஙனமாக, நீ), துரகம் மாவும் - குதிரையின்மேலும், செம் கனகம் மணி கொடிஞ்சி திண் தேரும் - செம்பொன்னினாற்செய்யப்பட்டு இரத்தினங்கள் பதித்த கொடிஞ்சி யென்னும் உறுப்பையுடைய வலியதேரின்மேலும், பெரு பனை கை சிறுத்த செம் கண் வெம் கயமும் - பெரிய பனைமரம்போன்ற துதிக்கையையும் சிறியசிவந்தகண்களையு முடைய வெவ்வியயானையின்மேலும், ஏறாமல் - ஏறுவதையொழித்து, வீழ் கயத்தில் ஏறினையோ - வீழ்தற்குரியதடாகத்திற் பாய்ந்திட்டாயோ? (எ - று.)

கயம் என்ற சொல் - யானையென்றுங் குளமென்றும், ஏறுதல் என்ற சொல் - மேலேறுதலென்றும் உட்செல்லுதலென்றும் பொருள்படுதலால், அச்சொற்களில் சமத்காரங்கற்பித்து, 'வெங்கயமுமேறாமல் வீழ்கயத்தி லேறினையோ' என்றா னென்க. இதில் மடக்கு என்னுஞ்சொல்லணியமைந்திருத்தல் காண்க. துரகமா - குதிரையாகிய விலங்கு என இருபெயரொட்டு. கனகம் - வடசொல். பெரும்பனைக்கைச் சிறுத்தசெங்கண் - பெரு சிறு என ஒன்றோடொன்று பொருள்மாறுபட்ட சொற்கள் வந்தது, முரண்தொடை.

கங்கைமகனென்ற விவரம்:—முன் ஒருகாலத்தில் தேவர்கள் யாவருங் கூடிய பிரமதேவனதுசபையிற் சென்று கங்காநதியின் பெண்தெய்வம் வணங்கியபொழுது, அங்குவந்திருந்த வருணன், அவளழகை உற்றுநோக்கிக் காதல்கொண்டான்; கங்கையும், அவன்மீது காதல்கொண்டு எதிர்நோக்கினாள்; அதனையறிந்த நான்முகக்கடவுள், வருணனைப் பூமியில் மானுடப்பிறப்பெடுக்கவும், கங்கையை மானுடமகளாய் அவனைச் சிலநாள் மணந்திருக்கவுஞ் சபித்திட்டான்; அங்ஙனமே வருணன் குருகுலத்திற் சந்தனுவாய்ப் பிறந்தான்; கங்கையும் ஓர்மனிதமகளாகி 'யான் எச்செந்தத்திச்செயல் செயினும் மறுக்கலாகாது' என்னும் ஏற்பாட்டினோடு அவனைமணஞ்செய்துகொண்டாள். இது நிற்க, பிர

பாச னென்னும் வசு தன்மனைவியின் சொல்லைக் கேட்டு வசிட்டனிடமுள்ள காமதேனுவைக் கொள்ளைகொள்ள எண்ணினான்; மற்றையேழுவசுக்களும் அவனுக்கு உதவிசெய்யவே, எண்மரும் இரவிற்சென்று பசுவைக்கவர்ந்தனர்; அதனையறிந்த வசிஷ்டமகாமுனிவன், அஷ்டவசுக்களையும் மானுடசன்மமெடுக்கவும், அவர்களுள் மனைவிசொற்கேட்ட பிரதானனான பிரபாசனைப் பூமியிற் பலநாள்வாழ்ந்து பெண்ணின்பமற்றிருக்கவும் சாபங்கொடுத்தான்: எட்டுவசுக்களும் சந்தனுவுக்குக் கங்கையின்வயிற்றிற் பிறந்தனர். முதலிற் பிறந்த ஏழு குழந்தைகளையும் தாய் பிறந்த அப்பொழுதே கங்காநதியில் எடுத்தெறிந்துவிட்டாள். எட்டாவதுபிள்ளை பிறந்தவுடனே தந்தை 'இக்குழந்தையைக் கொல்லலாகாது' என்றுமறுக்க, கங்கை கணவனைவிட்டு நீங்கினள். அவ்வெட்டாவது மகனே, இவ்வீடுமன்.

இதுமுதற் பதின்மூன்றுகவிகள் - இச்சருக்கத்தின் பதினோராங்கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (கஙக)

நெஞ்சறியநீயெமக்குநிலைநின்றபழியாகநெடுநாட்செய்த
வஞ்சகமும்பொய்ம்மொழியுமனுநீதிதவறியதுமறந்தாய்கொல்லோ
துஞ்சியநின்சேனையெல்லாமீண்டுவரநீயறையுஞ்சுருதியிற்றை
வெஞ்சமரமுடித்தன்றோவறைவதிவைவீரருக்குவீரமாமோ.

(இ - ள்.) நிலை நின்ற பழி ஆக - (எந்நாளும் அழியாமல்) நிலைநிற்குந் தன்மையதான பழிப்பு உண்டாம்படி, நெஞ்சு அறிய - மனப்பூர்வமாக, நீ எமக்கு நெடு நாள் செய்த - நீ எங்களுக்கு வெகுநாளாகச்செய்துவந்த, வஞ்சகமும் - வஞ்சனையையும், பொய் மொழியும்-(நீ கூறிய) பொய்வார்த்தைகளையும், மனு நீதி தவறியதும் - மனுதருமசாஸ்திரத்திற்சொல்லப்பட்ட நீதியினின்று நீ வழுவியதையும், மறந்தாய் கொல் ஓ - மறந்துவிட்டாயோ? துஞ்சிய - இறந்த, நின் சேனை எல்லாம்-உனதுசேனைகள்யாவும், மீண்டு வர - உயிர்பெற்றுத்திரும்பிவரும்படி, நீ அறையும் - நீஉச்சரிக்கிற,சுருதி-வேதமந்திரம்,இற்றை வெம் சமரம் முடித்து அன்றோ - இன்றையதினத்தின்கொடியபோரை முடித்தபின் பல்லவோ, அறைவது - உச்சரிக்கவேண்டுவது? (அங்ஙனம் இருக்க), இவை- (நீ செய்யும்) இச்செயல்கள், வீரருக்கு வீரம் ஆமோ-சுத்தவீரர்களுக்கு உரிய பராக்கிரமச்செயலாகுமோ? [ஆகா என்றபடி]; (எ - று.)

இவை - முதலிற் பலதீங்குகளைச் செய்தலும், அவற்றிற்காக நேர்ந்த போரில் முன்நிற்கமாட்டாமல் ஓடியொளித்துத் தவந்தொடங்குதலும். 'எமக்கு நிலைநின்ற பழியாக' எனஎடுத்து, எங்களுக்கு என்றும்நிலைப்பட்ட பழி யுண்டாம்படி யென வுரைப்பினும் அமையும். துரியோதனன் பாண்டவர்க்குச் செய்த வஞ்சகமும், கூறியபொய்ம்மொழியும் மிகப்பல; வீமனுக்கு நஞ்சூட்டியமை, அரக்குமாளிகையில் வைத்தமை, சூதாட்டம்,வனவாச அஞ்ஞாதவாசங்களின்பின் கொடுப்பேனென்று வாக்குத்தத்தஞ்செய்த இராச்சியத்தை மீண்டுங் கொடாமை முதலாக நூல்முழுவதிலுங் காண்க. நீதிதவறியது - "மூத்தானிருக்க இளையா னரசாடல் கோத்தருமமன்று" என்ற இராசநீதி தவறித் தருமனினும் இளையவனான தான் அரசுபெற்று ஆளுதல். சுருதி என்ற வடசொல் - கேள்வியில்வருவதென்று காரணப்பொருள்படும்;வேதம் எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்யக்கிரமத்திலே கர்ணபரம்பரையாக வழங்கிவந்தமைபற்றி, சுருதியெனப் பெயர்பெறும். இன்று + வெஞ்சமரம்=இற்றைவெஞ்சமரம். மனுநீதி - மனுவினாற்சொல்லப்பட்ட நீதி யென மூன்றும்வேற்றுமை யுருபும் பயனுமுடன் தொக்க தொகை. (கஙஉ)

அடிமாறிநீரிடைப்புக்கருமறைநீபுகன்றாலுமரவக்கைப்பொற்
கொடிமாறிக்குருகுலத்தார்கோவேநின்பேர்மாறிக்குலாவுமாலை

முடிமாறியொருதனிமாமுத்தநெடுங்குடைநிழற்கீழாளுமுந்நீர்ப்
படிமாறியொழியவிடேன்புறப்படாய்மறைபடவிப்பகல்போமுன்னே.

(இ - ள்.) குரு குலத்தார் கோவே - குருவம்சத்து அரசர்களுக்கு அரசனே! நீ—, அடி மாறி - அடிகளைமாற்றிவைத்து, நீரிடை புக்கு - நீரினுள்ளே புகுந்து, அரு மறை புகன்றாலும் - அருமையான மந்திரத்தை ஜபித்துக்கொண்டிருந்தாலும்,—நின் - உன்னுடைய, அரவம் பைம் பொன் கொடி - பாம்பின் வடிவமெழுதிய பசும்பொன்னிலமைந்த தண்டத்தையுடைய துவசம், மாறி - ஒழிந்து, பேர் மாறி - (உனது) பெயர் ஒழிந்து, குலாவும் மாலை முடி மாறி - விளங்குகிற மாலையைத் தரித்த தலை துணிபட்டொழிந்து, ஒரு தனி மா முத்தம் நெடு குடை நிழல் கீழ் ஆளும் முந்நீர் படி மாறி ஒழிய - ஒப்பற்ற தனித்த சிறந்தமுத்துக்களாலமைத்த பெரியஒற்றைவெண்கொற்றக்குடையின் நிழலிலிருந்து அரசாளுகிற கடல்சூழ்ந்த (உனது) இராச்சியமும் (உன்னைவிட்டு) நீங்கினொழிய, விடேன் - (உன்னை நான்) விடமாட்டேன்; (ஆதலால்), இ பகல் மறைபட போம் முன்னே - இந்தப்பகற்பொழுது மறையச்செல்லுதற்குமுன்னே, புறப்படாய் - வெளிப்பட்டுவருவாயாக; (எ - று.)

புகன்றாலும் விடேன் என இயையும். அரவம், அம் - சாரியை. பொன் - பொற்காம்புக்குக் கருவியாகுபெயர். குரு+குலம்= குருகுலம்; குரு என்பது உயிரீற்று உயர்திணைப்பெயராதலின், அதன்முன் வலிஇயல்பாயிற்று; இதற்கு "இடையுரிவடசொலினியம்பிய கொளாதவும்" என்னுஞ் சூத்திரவிதி பொருந்தாது; அது பொதுவிதிக்கு விலக்காயுள்ள இடத்திற்குமாத்திரமே உபயோகிக்கத்தக்கதாதலால். முந்நீர் - உலகத்தைப் படைத்தல் காத்தல் அழித்தலென்னும் மூன்றுநீர்மையையுடையது; கடல்: பண்புத்தொகையன்மொழி. இதற்கு - ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்றுநீர் [மழைநீர்] என்னும் மூவகைநீர்களையுடையதென்று காரணப்பொருள்கூறுவது முண்டு; அது சிறவாது: ஆற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீரிலே யடங்குதலால். 'முன்னீர்' என்பது பாடமாயின், பழையநீரென்க. புறப்படாய் - உடன்பாட்டொருமையேவல்; ஆய் - விகுதி. சூரியன் அஸ்தமிக்குமுன்னே யென்ற கருத்தை, 'மறைபட இப்பகல் போமுன்னே' என்று குறித்தார். நீர்சூழ்ந்தநிலவுலகை விட்டு நீ தொலைந்தாலொழிய உன்னைவிடக்கடவேனல்லாத நான் நீரிற்புகுந்தமாத்திரத்தால் விட்டிடுவேனோ வென்பான், 'நீரிடைப்புக்கு அருமறைபுகன்றாலும்' என்றும், 'முந்நீர்ப்படிமாறி யொழிய விடேன்' என்றுங் கூறினனென்க. (கஅ)

ஓதப்பைங்கடல்புடைசூழுலகாளுமுடிவேந்தருறுபோரஞ்சிப்
பாதத்தில்வீழ்வரோபாரரசர்கேட்டாலும்பழியேயன்றோ
மேதக்கவரமகளிர்கைப்பிடிக்கவிந்திரனும்விண்ணோர்தாமுங்
காதத்திலெதிர்கொள்ளக்கற்பகநீழலில்வைப்பன்கலங்கலம்மா.

(இ - ள்.) ஓதம் - அலைகளையுடைய, பைங் கடல் - பசியகடலினால், புடை சூழ் - எல்லாப்பக்கங்களிலுஞ் சூழப்பட்ட, உலகு - பூமியை, ஆளும் - அரசாளுகிற, முடி வேந்தர் - கிரீடாதிபதிகளான அரசர்கள், உறு போர் அஞ்சி - மிக்க போருக்குப் பயந்து, பாதத்தில் வீழ்வரோ - காலில் [நீரில்] விழுவார்களோ? பார் அரசர் கேட்டாலும் - (உன்னைப்போலப்) பூமியை ஆளுகிற அரசர் செவியுற்றாலும், பழியே அன்றோ - (இது) பழிப்பேயாகு மன்றோ? மேதக்க - மேன்மைபொருந்திய, அர மகளிர் - தேவமாதரது, கை - கையை, பிடிக்க - நீபிடிக்கும்படியாகவும், இந்திரனும் விண்ணோர்தாமும் காதத்தில் எதிர் கொள்ள - தேவேந்திரனும் தேவர்களும் காததூரத்தில் (உன்னை) எதிர்கொண்டுவந்து அழைத்து உபசரிக்கும்படியாகவும், கற்பகம் நீழலில் வைப்பன் - (உன்னைக்)

கல்பகவிருக்ஷங்களின் நிழலில் வைப்பேன்: கலங்கல் - (நீ) கலக்கமடையாதே; (ஏ - று.)—அம்மா - ஈற்றசை.

கற்பகநீழலில் வைப்பன் - வீரசுவர்க்கத்திற் செலுத்துவேன் என்றபடி. கற்பகம் - கல்பக மென்ற வடசொல்லின் திரிபு; வேண்டுவோர்க்கு வேண்டியன வற்றைக் கற்பித்தலால், கல்பக மென்று பெயர்: கல்பித்தல் - உண்டாக்கிக் கொடுத்தல்; சந்தாநம், மந்தாரம், பாரிஜாதம், கல்பகம், அரிசந்தந மெனக் கற்பகவிருக்ஷம் ஐந்தாம். தேவலோகத்தில் கற்பகவிருக்ஷத்தின்நிழல் இந்திரன் அரசாட்சிசெய்யுமிடமாதலே "இன்றளிர்க் கற்பக நறுந்தே னிடைதுளிக்கு நிழலிருக்கை" என்ற கம்பராமாயணத்தாலும் அறிக. நீழல் - நிழலென்பதன் நீட்டல். வைப்பன் என்பதில், அன்விகுதி தன்மையொருமைக்கு வந்தது. கலங்கல் - எதிர்மறையொருமையேவல்; எதிர்மறைவியங்கோளுமாம்: அல் - விகுதி. நிலவுலகத்து அரசாட்சியை யிழந்து ஒழிந்துவிடுகிறோமே யென்று கலங்காதே; இதனினுஞ் சிறந்த விண்ணுலகத்திற் செலுத்துவே னென்பான், 'கலங்கல்' என்றான்: இது, செருக்குமொழி. அரமகளிர் கைப்பிடிக்க - தேவ மாதர்களை அங்கு நீ மணஞ்செய்துகொள்ள என்றபடி; விவாககாலத்தில் கணவன் தனதுவலக்கையால் மனைவியின் இடக்கையைப் பிடித்தல் மரபு; அதனால், விவாகத்துக்கு, 'பாணிக்கிரகணம்' என்று ஒருபெயர் வழங்கும். இனி, 'கை பிடிக்க' என்றும் பாடமுண்டு. தேவமாதர்கள் வேட்கைமிகுதியோடு வந்து உன் கையை வலியப்பற்ற வென்று உரைத்தலு மொன்று. அரமகளிர் - அமரமகளிர், அல்லது அரம்பைமகளிர், அல்லது அப்ஸரமகளிர் என்பதன் விகாரம். காதம் - ஏழரைநாழிகைவழி; இங்கு, நெடுந்தூர மென்ற மாத்திரமாய் நின்றது.

ஓதம் - வெள்ளமுமாம். பசுமையையுங் கருமையையும் சிறிதுவேறுபாடு கருதாது அபேதமாக் கூறுதல் கவிசமயமாதலால், கருங்கடல், பைங்கடலென ப்பட்டது: இனி, பசுமை - குளிர்ச்சியுமாம். உறு - உரிச்சொல். பாதம் என்ற சொல் - காலென்றும், நீரென்றும் பொருள்படுதலால், அச்சொற் சிலேடை கொண்டு சமத்காரங்கற்பித்தவாறு. பாதமென்பது - நீரையுணர்த்துகையில், பாதஃ என்ற வடசொல்லின் திரிபு. போருக்கு அஞ்சிப் பாதத்தில் விழுதல் அரசர்க்குப் பெரும்பழிப்பென்பது பிரசித்தம். நீவெளிப்பட்டுவந்து என்னோடு போர்செய்து பழிப்புக்கு இடமின்றி வீரசுவர்க்கம் பெறுவா யென்றான்.

"அம்ம கேட்பிக்கும்" என்ற தொல்காப்பியத்தின்படி யான் கூறுகின்ற தனைக் கேளென்று பொருள்பட்டு உரையசையாய் நிற்கும் 'அம்ம' என்னும் இடைச்சொல் 'அம்மா' என நீண்டுவந்ததாகக் கொள்ளுதல் பொருந்தாது; அவ்விடைச்சொல் விளியோடன்றித் தனியேவாராதாதலின். 'அம்மவென்ற அகரவீற்று இடைச்சொல் கேட்பித்து உரையசையாயவிடத்து "உரைப்பொருட்கிளவி நீட்டமும் வரையார்" என்பதனால் நீண்டு அது பின்பு "அம்மவெ ன்னு மசைச்சொல் நீட்டம்......விளியொடு கொள்ப தெளியு மோரே" என்பதனால் அம்மாகொற்றா என்றவழிக் கொற்றனென்றது எதிர்முகமாக்கத் தான் கேளா யென்னும் பொருள் தந்து நின்றதாதலின், பிரிந்துநின்று விளியேலா தென்று உணர்க. இதனால், பிள்ளாயென விளித்தல் பொருந்தாது' என்ற நச்சினார்க்கினியருரைவாக்கியம் இங்கு அறியத்தக்கது. (௧௩௪)

களந்தனிலெத்தனைகவந்தங்கண்களிக்கக்கண்டனைநீகைத்தண் டோடிக், குளந்தனிலிக்கவந்தமுங்கண்டேகுதற்குப்புகுந்தனையோ கொற்றவேந்தே, வளந்தனிலிக்கோபமுமென்வஞ்சினமும்போகா துவந்துன்பாவி,யுளந்தனிலிக்கவலையைவிட்டுடற்றுதலல்லதுமற்றோருறுதியுண்டோ.

(இ - ள்.) கொற்றம் வேந்தே - வெற்றியையுடைய அரசனே! களத்தினில் - போர்க்களத்தில், எத்தனை கவந்தம் - எத்தனை கவந்தங்களை [தலையற்ற உடற்குறைகளை], நீ—, கண் களிக்க கண்டனை - கண்களிக்கப் பார்த்தாய்: இ குளந்தனில் - இக்குளத்திலேயுள்ள, இ கவந்தமும் - இந்தக் கவந்தத்தையும் [நீரையும்], கண்டு ஏகுதற்கு - பார்த்துச்செல்லுதற்கு, கை தண்டோடு புகுந்தனையோ - கையிலுள்ள கதாயுதத்தோடு இதனுட் பிரவேசித்தாயோ? வளந்தனில் - மிகுதியாகவுள்ள, இ கோபமும் - இந்த (எனது) கோபமும், என் வஞ்சினமும் - எனது சபதமும், போகாது - வீண்போகாது: உன் - உனது, பாவி உளந்தனில் - தீவினைக்கிடமான மனத்திலுள்ள, இ கவலையை - இந்தக்கவலையை, விட்டு - ஒழித்து, (நீ), வந்து - வெளிப்பட்டுவந்து, உடற்றுதல் அல்லது - போர்செய்தலே யல்லாமல், மற்று ஓர் உறுதி உண்டோ - (உனக்கு) வேறொரு நன்மை யுள்ளதோ? [எதுவு மில்லை யென்றபடி]; (எ-று.)

"புனலுஞ் செக்கும் புகன்றிடு கடியும், தலைக்குறைப்பிணமுங் கவந்தமாகும்" என்றபடி 'கவந்தம்' என்ற சொல் - உடற்குறையென்றும், நீரென்றும் பொருள்படுதலால், அப்பலபொருளொருசொல்லின் உதவியாற் சமத்காரங் கற்பித்தவாறு. 'வளந்தனில்' என்பதில், தன் இல் என்ற இரண்டும் - சாரியை. கோபமும் வஞ்சினமும் போகாது - இரண்டுஒருமைச்சொற்கள் ஓர்ஒருமை முற்றைக் கொண்டுமுடிந்தது, பன்மையொருமைமயக்கம்; தனித்தனி போகாது எனக்கூட்டிப் பொருள்காண்க. இனி, போகாது என்பதற்கு - போகாமல் என வினையெச்சமாகப் பொருள்கொள்ளுதலும் ஒன்று. பாவியுளம் - தீய சிந்தனைகளையே எண்ணும் மனம். (கரு)

இனத்திடைநின்றொருபதின்மேலெழுநாளுமொருவருடனிகல்
செய்யாமற், றனத்திடைநின் றுளமகிழும்புலையரைப்போன்மதத்துட
னே தருக்கிவாழ்ந்தாய்,சினத்திடைவெம்பொறிபறக்கச்செயிர்த்திரு
கண்சிவப்பேறச்செருச்செய்யாமல், வனத்திடைசென்றொளிப்பரோ
மண்முழுதுந்தனியாளுமன்னரானோர்.

(இ - ள்.) ஒருபதின் மேல் எழு நாளும் - (கீழ்ப் போர்நடந்த) பதினேழு நாள்களிலும், (நீ), ஒருவருடன் இகல் செய்யாமல் - ஒருத்தருடனும் தனியே எதிர்த்து உக்கிரமாகப்போர்செய்யாமல், இனத்திடை நின்று - கூட்டத்தினிடையிலே கலந்துநின்று, தனத்திடை நின்று உளம் மகிழும் புலையரை போல் - செல்வத்தினிடையே நின்று மனங்களிக்கிற நீசரைப்போல, மதத்துடனே தருக்கி வாழ்ந்தாய் - கொழுப்புடனே கர்வித்துவாழ்ந்துவந்தாய்; மண் முழுதும் தனி ஆளும் மன்னர் ஆனோர் - பூமிமுழுவதையுந் தனியே அரசாளும் அரசராயுள்ளோர், சினத்திடை வெம் பொறி பறக்க - கோபத்தினால் வெவ்வியநெருப்புப்பொறி பறக்க, செயிர்த்து - வலிமைகொண்டு, இரு கண் சிவப்பு ஏற - இரண்டுகண்களும் (மிக்ககோபத்தால்) செந்நிறம்மிக, செரு செய்யாமல் - போர் செய்யாமல், வனத்திடை சென்று ஒளிப்பரோ - காட்டிலே [நீரினுள்ளே] போய் மறைவார்களோ? (எ - று.)

செல்வத்தினிடையிலே யிருந்துகொண்டு அதன்வளத்தால் தங்களுக்குப் பிறரெவராலும் யாதொருதீங்கும் நேரிடாதபடி செய்துகொண்டு தனமதத்தால் செருக்கி வாழும் அற்பர்போல, நீ இனத்திடையிலே யிருந்துகொண்டு அதன்வளத்தால் உனக்குப் பிறரெவராலும் யாதொருதீங்கும் நேரிடாதபடி செய்துகொண்டு அதன்வலத்தால் இவ்வளவுநாளும் செருக்கிவாழ்ந்தா யென்றான். இதனால், அவனது போர்த்திறமையை யெடுத்துக்காட்டி யிகழ்ந்தவாறு. தநம் - வடசொல். "வனமே நீர் மிகுதி காடு" என்ற நிகண்டினால், வனமென்

பது - காட்டையும் நீரையும் உணர்த்துதலை யறிக. வநம் - வடசொல். புலை யர் என்பதிற் பகுதியாகிய புலை என்பது - 'ஐ' விகுதி பெற்ற பண்புப்பெயர்; புன்மை யென்று பொருள். சினத்திடை யென்பதில், ஏழனுருபு மூன்றனுரு பின்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். (கஙக)

திரிபுவனங்களுஞ்சேரச்செங்கோன்மைசெலுத்தியநின்சீர்த்தி யிந்த,விரிபுவனந்தனிலொளித்தான்மிகுவசையாய்ப்போகாதோவெ ருவலாமோ, புரிபுவனமுண்டுமிழ்ந்தோன்போரிலங்கைவழிகாணப் பொருதவாளி,யெரிபுவனநுகர்ந்ததுபோலித்தடமும்புகையாமுனெ ழுந்திராயே.

(இ - ள்.) திரி புவனங்களும் - மூன்றுஉலகங்களிலும், சேர - ஒருசேர, செங்கோன்மை செலுத்திய - ஆளுகையை நடத்திய, நின் சீர்த்தி - உனது புகழ், இந்த விரி புவனந்தனில் ஒளித்தால் - இந்தப்பரவியநீரிலே நீ ஒளித்துக் கொண்டதனால், மிகு வசை ஆய் போகாதோ - மிக்கபழிப்பாய்விடாதோ? வெருவலாமோ - (இவ்வாறு நீ) அஞ்சலாமோ? புரி புவனம் உண்டு உமிழ்ந் தோன் - தான்படைத்தஉலகங்களை விழுங்கியுமிழ்ந்தவனாகிய திருமால் [இராம பிரான்], போர் இலங்கை வழி காண - போர்செய்தற்குரிய இலங்கைக்குச் செல்லும்வழியைக் காணும்பொருட்டு, பொருத - (சமுத்திரராசன்மேற்) செலுத்திய,வாளி எரி - ஆக்நேயாஸ்திரம், புவனம் நுகர்ந்ததுபோல் - அக்கட லின்நீரை உறிஞ்சத்தொடங்கியதுபோல, இ தடமும் புகையா முன் - இந்தத் தடாகமும் (என்அஸ்திரத்தால்) புகைந்து எரிந்துபோவதற்கு முன்னமே, எழு ந்திராய் - வெளிப்பட்டுவருவாய்; (எ - று.)

நீ இப்பொழுது விரைவில் வெளிவாராயாயின் இராமபிரான் ஆக்நேயா ஸ்திரப்பிரயோகஞ்செய்து கடலை வற்றச்செய்யலுற்றாற்போல, யான் இப் பொய்கையை நீர்வற்றச்செய்து அதனுட் கிடக்கும் உன்னை யொழிப்பே னென்பதாம். இராமபாணம் கடலை வெதுப்பிய வரலாறு, கீழ் எசு - ஆங் கவியிற் கூறப்பட்டது. "உரவுத்திரைநீர்க்கடலடைப்பான் வருணற் பழிச்சி யுயர் கரையின், விரியுந் தருப்பசயனத்தின் மேவி யோரேழ்நாள் நோற்ப, வருணன் போதந்திலனாக வெகுண்டு வரிவெஞ்சிலையினொடும், புருவச் சிலைகால் குனித் திடலும் புகைந்த வோரேழ் புணரியுமே" என்ற கூர்மபுராணமுங் காண்க.

பிரமன்முதலிய பெருந்தேவர்களு முட்பட யாவும் அழிந்துபோகின்ற பிரளயகாலத்தில் திருமால் உலகங்களையெல்லாம் நலிவுபடாதபடி தனதுதிரு வயிற்றில் அடக்கிவைத்துப் பாதுகாத்துப் பிரளயம்நீங்கும்பொழுது அவற்றை மீட்டும் வெளிப்படுத்துகின்றனனென்பது, நூற்கொள்கை.

த்ரிபுவநம் - சுவர்க்கம் பூமி பாதாளம் என்பன; இது - வடமொழித்தொ டர். 'திரிபுவனங்களுஞ் சேரச் செங்கோல்செலுத்திய' என்றது, சீர்த்தி க்கு அடைமொழி. மூவுலகத்திலும் தடையறப் பரவிய புகழென்றபடி. இங்கே, செங்கோன்மைசெலுத்துதல் - தடையறச்சென்று நிலைபெறுதல். அன்றி, 'நின்' என்பதற்கு அடைமொழியாக்கி, மூன்றுஉலகங்களிலும் துரியோதனன் நீதிதவறுதஅரசாட்சியைச் செலுத்தினானென்பதற்கு இடமில்லாமை யுணர்க. "சீர்த்தி மிகுபுகழ்" என்ற தொல்காப்பியத்தால், சீர்த்தி யென்பது - பெரும் புகழை யுணர்த்துவதோர் உரிச்சொல்லா மென்றும், புகழ்மாத்திரத்தையுணர்த் தும் கீர்த்தியென்னும் வடசொல்லின் திரிபன் றென்றுங் கொள்க. இலங்கை- லங்காஎன்ற வடசொல்லின் திரிபு; கடலிடையிலே யுள்ள தீவு; இது, தென்கட லிடையே யுள்ளது. "புவனம் உலகும் புனலும் புவியுமாம்" என்ற பிங்கல ந்தையினால், புவனமென்பது - உலகமும் நீருமாகலை யறிக; புவநம் - வட சொல். (கஙஎ)

அதைக்கேட்டுத் துரியோதனன் நீரினின்று வெளியெழுதல்.

பாவனனிப்படியுரைத்தபழிமொழியுந்தனதுசெவிப்பட்டகாலைச்
சீவனமுற்றையும்விடுவோனிருக்குமோமாமறையுடனேசேரவிட்டா
னுவனமற்றறியாமலழிவனமற்றறியாமலடுத்தோராவி
வீவனமற்றறியாமனினையுநினைவினுக்குவமைவேறிலாதான்.

(இ - ள்.) பாவனன் - வாயுகுமாரனான வீமன், இ படி உரைத்த - இவ்வாறுசொன்ன, பழி மொழியும் - நிந்தனைச்சொற்கள்யாவும், தனது செவி பட்ட காலை - தன்னுடைய காதிற் பட்டபொழுது, ஆவன அறியாமல் - (தனக்கு) நன்மைவிளைப்பவை இன்னவையென்று அறியாமலும், அழிவன அறியாமல் - (தனக்குத்) தீமைவிளைப்பவை இன்னவையென்று அறியாமலும், அடுத்தோர் ஆவி வீவன அறியாமல் - தன்னைச்சார்ந்தவர்களது உயிர்கள் அழிந்துவிடுவனவென்பதையும் அறியாமலும், நினையும்-(தான் மனத்திலே மிகுதியாக) எண்ணுகிற, நினைவினுக்கு - தீயசிந்தனைகளுக்கு, வேறு உவமை இலாதான் - வேறு ஒப்புமை பெறாதவனான துரியோதனன்,—மறையுடனே சேர விட்டான் - மந்திர ஜபத்துடனே (நீரையும்) ஒருசேர விட்டிட்டான்: சீவனம் முற்றையும் விடுவோன் இருக்குமோ - சீவனம்முழுவதையும் விட்டொழியுமவன் (அச்சீவனத்தினுள்ளே) இருப்பானோ? [இரா னென்றபடி]; (எ - று.)

'ஜீவநம்' என்ற வடசொல் - உயிர்வாழ்க்கையென்றும் நீரென்றும் பொருள்படுதலால, 'அச்சொல்லில் சமத்காரங்கற்பித்து, 'சீவனம்முழுதையும் ஒழியுமவன் அச்சீவனத்தின் ஒருபகுதியிலே ஒளித்திருப்பானோ?' என்று கூறினான்; சிலேடையை அங்கமாகக்கொண்டு வந்த இப்பொதுப்பொருளால், துரியோதனன் நீரைவிட்டு எழுந்தானென்ற சிறப்புப்பொருளைச் சாதித்தலால்,வேற்றுப்பொருள்வைப்பணியாம். பாவநன் - பவநனது குமாரன்; வடமொழித் தத்திதாந்தநாமம்: பவநன் - வாயு; இப்பெயர் - வடமொழியில், பரிசுத்தமாக்குபவனென்றும், எங்குஞ்சஞ்சரிப்பவ னென்றுங் காரணப்பொருள்படும். 'மற்று' என வந்த மூன்றும்-அசை. பின்னிரண்டடிகளில், துரியோதனனது அவிவேகத்தையும், வரும்பொருளாராய்ச்சியின்மையையும், மூர்க்ககுணத்தையும், தீயசிந்தனையையும் வெளியிட்டார். (கரு அ)

துரியோதனன் நீர்நிலையினின்று வெளியெழுதலைப் பற்றிய வருணனை.

நீளமுறப்பரவையுறவானமுறக்கரைபரந்துநிமிர்ந்தநீத்த [வான்
நாளமலர்ப்பொய்கையினின்றெழுவான்மெய்ச்சுருதிமறைநவிலுநா
காளநிறக்கொண்டல்பெருங்கடன்முழுகிவெள்ளமெலாங்கவர்வுற்றண்ட
கோளமுறக்கிளர்ந்ததுபோற்றோன்றினான்மணியுரகக்கொடியினானே.

(இ - ள்) மெய் சுருதி மறை - சத்தியமானவேதமந்திரத்தை, நவிலும் - உச்சரிக்கிற, நாவான்-நாக்கையுடையனாயிருந்த, மணி உரகம் கொடியினான் - மாணிக்கத்தையுடைய பாம்பின் வடிவ மெழுதிய கொடியுடைய துரியோதனன்,—நீளம் உற - நீட்சிமிகவும், பரவை உற - பரப்புமிகவும், வானம் உற கரை பரந்து நிமிர்ந்த நீத்தம் - ஆகாயத்தையளாவக் கரையின்மேற் பரவியெழுந்துவழிகிற வெள்ளத்தையுடைய, நாளம் மலர் பொய்கையினின்று - உட்டுளையுள்ள தண்டையுடைய தாமரை நிறைந்த தடாகத்தினின்று, எழுவான் - மேலெழுபவன்,—பெரு கடல் முழுகி-பெரியகடலினுள்ளே மூழ்கி, வெள்ளம் எலாம் கவர்வுற்று - நீரை நிரம்பக்கிரகித்து, அண்ட கோளம் உற - ஆகாயமுகட்டையளாவ, கிளர்ந்தது-மேலெழுந்ததான, காளம் நிறம் கொண்டல் போல் - கருநிறமுடைய மேகம் போல, தோன்றினான் - காணப்பட்டான்; (எ - று.)

அக்குளத்தின் நீட்சி பரப்பு ஆழம் நீர்மிகுதி யென்பவையும் துரியோதனனது கருநிறமும் தோன்ற, துரியோதனன் அக்குளத்தினின்று வெளியெழுந்ததற்கு, காளமேகம் கடலினின்று வெளியெழுதலை உவமைகூறினர். உவமையணி. நீளம் - 'அம்' விகுதி பெற்ற தொழிற்பெயர். பரவை - 'ஐ' விகுதி பெற்ற தொழிற்பெயர். நீத்தம் - நீந்தப்படுவதென்று காரணப்பொருள்படும்; அம் - செயப்படுபொருள்விகுதி; வலித்தல்-விகாரம். மெய்ச் சுருதி மறை - பயன்தவறாத வேதமந்திர மென்க. இங்கே அண்டகோள மென்றது, உலகவுருண்டையின் மேலிடத்தை. உரக மென்ற வடசொல் - (காலின்றி) மார்பினாற் செல்வதென்று காரணப்பொருள்படும்; உரஸ் - மார்பு. (கசக)

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்; இப்பொழுது போர்செய்யும் விதம் எப்படியென்று துரியோதனன் வினவுதலும், கண்ணன் மறுமொழி கூறுதலும்.

தோன்றிநெடுங்கரையேறிக்கரைமுழுதுநெருக்கமுறச்சூழ்ந்துநின்ற
தேன்றிகழ்தாரைவரையுஞ்செந்திருமாலையுநோக்கிச்சேனையோடு
மான்றிகழ்தேர்முதலானவாகனங்களொடுநின்றீர்வலிகூரென்கை
யூன்றியதண்டுடனின்றேனொருதமியேனெப்படியேயுடற்றுமாறே.

(இ - ள்.) (துரியோதனன்), தோன்றி - (நீரினின்று) வெளித்தோன்றி, நெடு கரை ஏறி - பெரியஅக்குளத்தின்கரைமேல் ஏறி, கரை முழுதும் நெருக்கம் உற சூழ்ந்து நின்ற-அந்தக்கரைமுழுவதிலும் நெருக்கமாகச் சூழ்ந்துநின்ற, தேன் திகழ் தார் ஐவரையும் - தேன்விளங்கும்மாலையையுடைய பஞ்சபாண்டவரையும், செம் திரு மாலையும் - செந்நிறமுடைய திருமகளிடத்து ஆசைப்பெருக்கமுடையவனான கண்ணபிரானையும், நோக்கி-பார்த்து,—'(நீங்கள்),சேனையோடும்-சேனைகளுடனும், மான் திகழ் தேர் முதலான வாகனங்களொடும்-குதிரைகள்விளங்கப்பெற்ற தேர்முதலிய வாகனங்களுடனும், நின்றீர் - நின்றுள்ளீர்;ஒரு தமியேன்-(வேறு துணையில்லாத)தனிப்பட்ட யானொருவனே,— வலி கூர் - வலிமைமிக்க, என் கை ஊன்றிய தண்டுடன் - எனது கையிற்கொண்ட கதையுடனே, நின்றேன் - நின்றுள்ளேன்: உடற்றும் ஆறு எப்படி-(இப்பொழுது நாம்) போர்செய்யவேண்டும் விதம் எவ்வாறு? (எ - று.)

பலவகைவாகனங்களுடனும் பலவகைச்சேனையுடனும் பலவகையாயுதங்களுடனும் பலராய்த் திரண்டுநின்ற உங்களோடு வாகனமொன்றுமின்றித் துணையாவாருமின்றி வேறுபடைக்கலமுமின்றிக் கதாயுதமொன்றோடு தனியே நிற்கும் நான் போர்செய்யவேண்டும் வகை எப்படி? என்று வினவினனென்க. இக்கவியில் 'நோக்கி' என்பது, அடுத்தகவியில் 'என' என்பதைக் கொண்டு முடிந்து, குளகமாம். (கசo)

ஐவரினுமிப்பொழுதிங்காரென்னோடமர்மலைவாரறுகான்மொய்க்குங்
கொய்வருதார்ப்புயவீரர்கூறுமெனத்திருநெடுமால்கூறலுற்றான்
செய்வருசேலினம்பூகமடலொடிக்குந்திருநாடாசெருச்செய்வானிம்
மெய்வருசொற்றவறுதவீமசேனனையொழிந்தால்வேறுமுண்டோ.

(இ - ள்.) ஐவரினும் - பாண்டவர் ஐந்துபேருள்ளும், இப்பொழுது—, இங்கு - இவ்விடத்தில், என்னோடு அமர் மலைவார் - என்னுடன் போர்செய்பவர், ஆர் - எவர்? அறு கால் மொய்க்கும் - வண்டுகள்மொய்க்கின்ற, கொய் வரு தார் - (மலர்களைப்)பறித்துஉகந்து தொடுத்ததனு லாகிய (போர்)மாலையைத் தரித்த, புயம் - தோள்களையுடைய, வீரர் - வீரர்களே! கூறும் - சொல்வீராக', என - என்று (துரியோதனன்) வினவ,—திரு நெடு மால் - சிறந்தபெரியகண்ணபிரான், கூறல் உற்றான் - (அதற்கு விடை) கூறத்தொடங்கினன்; (எங்ஙன

மெனின்),—செய் வரு - கழனிகளிற் பொருந்திய, சேல் இனம் - சேல்மீன் களும் அவற்றின் இனமாகிய பிறமீன்களும், பூகம் மடல் ஒடிக்கும் - (பக்கத்திற் சோலைகளிலுள்ள) பாக்குமரங்களின் பாளைகளை (த் தாம்துள்ளியெழுந்து பாய் தலால்) ஒடிக்கிற, திரு நாடா - அழகியகுருநாட்டையுடையவனே! செரு செய் வான் - (உன்னோடு) போர்செய்தற்கு உரியவன், மெய் வரு சொல் தவறாத - உண்மைமொழியில் தவறுதலில்லாத, இ வீமசேனனை ஒழிந்தால் - இந்தவீம சேனனையன்றி, வேறும் உண்டோ - மற்றுமொருவன்உளனோ? [இல்லையென்ற படி]; (எ - று.)

'நானே உன்னைக் கொல்வேன்' என்று சபதஞ்செய்துள்ள வீமன்தானே அச்சபதத்தை நிறைவேற்றும்பொருட்டு இப்பொழுது உன்னோடுபோர்செய்வா னென்றான். ஆர் - யாரென்பதன் மரூஉ. அறுகால் - ஆறுகால்களையுடைய தெனப் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; இதனை அடையடுத்த சினையாகுபெய ரென்றே கொள்ளவேண்டு மென்பாரு முளர். வீரர் - அண்மைவிளியாதலின், இயல்பாய்நின்றது:[நன் - பெயர் - ருசு:] இனி, முன்னிலைக்குப் படர்க்கை வந்த இடவழுவமைதியுமாம்; [நன் - பொது - உகூ.] கூறும் - உம் விகுதி பெற்ற ஏவற்பன்மை. கழனியை 'செய்' என்பது - அரு வாநாட்டில் வழங்குந் திசைச்சொல்; இதனை 'நன்செய், புன்செய்' என வழங்கி லுங் காண்க. நீர்வளமிகுதியாற் கழனிகளி லுள்ள மீன்கள் அந்நீர்ச்செழுமை யாலாகிய கொழுமையால் துள்ளி நெடுந்தூரந்தாவிப் பாக்குமரத்தின்மடலை ஒடிக்கின்றனவென நாட்டுவளத்தை வருணித்தார். பூகம் - வடசொல். 'இளம் பூகம்' என்று பாடமோதி, இளமையான பாக்குமர மென்று உரைத்தல், சிறப் பன்று.

ஒருதொடராகிய நான்குகவிகளில், கீழ்க்கவியும், இக்கவியின் முன்னிரண் டடியும் - துரியோதனன்விறை வென்றும், இக்கவியின் பின்னிரண்டடியும், அடுத்த இரண்டுகவிகளும் - கண்ணபிரான்விடை யென்றுங் காண்க. (கசக)

இளம்பருவமுதலுனக்குமிவனுக்கும்வயிர்ப்பெண்ணிலெண்ணொ ணாதா, ளுளம்புகலவரசவையில்வஞ்சினமும்பலபடநின் றுரையாநின் றான், களம்புகுதுநின்னொழிந்ததுணைவரையுந்தனதுதடக்கையாற் கொன்றான், விளம்புவதோவேறொருவர்நின்னுடன்போர்மலைவரோ வேந்தர்வேந்தே.

(இ - ள்.) வேந்தர் வேந்தே - அரசர்க்கு அரசனே! இள பருவம் முதல் - இளமைப்பிராயம்முதலாக, உனக்கும் இவனுக்கும் வயிர்ப்பு - உனக்கும் இவ னுக்கும் உள்ள வயிரச்செயல், எண்ணில் - ஆலோசிக்குமிடத்து, எண் ஒணாது - கணக்கிடமுடியாததாம்; (அன்றியும்), உளம் புகல - மனம்ஊக்கந்தூண்ட, அரசு அவையில் - இராசசபையில், நின்று - எழுந்துநின்று, வஞ்சினமும் - சபதங்க ளையும், பல பட - அநேகமாக, உரையா நின்றான் - கூறிநின்றான்; (மேலும்), களம் புகுதும் - போர்க்களத்துக்கு வந்த, நின் ஒழிந்த துணைவரையும்-நின்னை யொருவனையொழிய மற்றுமுள்ள (உனது) தம்பிமாரெல்லோரையும், தனது தட கையால்-தன்னுடைய பெரியகையினால், கொன்றான் - கொன்றிட்டான்; (ஆதலால்), வேறு ஒருவர் நின்னுடன் போர் மலைவரோ - (இவனையொழிய) வேறொருவர் உன்னுடன் (இப்பொழுது) போர்செய்தற்கு உரியரோ? [அல்ல ரென்றபடி]; விளம்புவதோ - (இதைப்பற்றிச்) சொல்லவும் வேண்டுமோ? (எ - று.)—ஆல் - ஈற்றசை.

முதலடியிற் கூறியது, துரியோதனன் வீமனுக்கு நஞ்சூட்டியதும், அவ னைக் கயிறுகளாற்கட்டிக் கங்கையிலெறிந்ததும், கழுவேற்றத்தொடங்கியதும் முதலியவற்றையென்க. பர்வம் - வடசொல். வயிர்ப்பு - தொழிற்பெயர். 'எண்

ணில் எண்ணொணாது' என்பதற்கு - கணக்கினால் அளவிடமுடியா தென்றும், மனத்தில் நினைத்தற்குங் கூடாதபடி மிகக்கொடியதென்றும் பொருள்கொள்ள லாம். ஒணாது - ஒன்றாது என்பதன் மரூஉ. அரசுஅவை - வடசொல் திரிபு. திரௌபதியைத் துகிலுரிந்தகாலத்தில் வீமன் 'துரியோதனாதியர் நூற்றுவரை யும் யானே கொல்வேன்' என்றும், 'துச்சாதனனைக் கொன்று அவனுடம்பினிர த்தத்தைக் குடிப்பதன்முன் யான் கையினால் நீரையெடுத்துக் குடிப்பதில்லை' என்றும், 'அதிகதாகமாகுமானால் எனதுகதாயுதத்தால் நீரையடித்து அங்குத் தெறிக்குந் துளிகளையே உண்டு உயிர்வாழ்வேன்'என்றும் சபதஞ்செய்து போந் தனனென அறிக. புகுதும் என்ற பெயரெச்சத்தில், து - சாரியை. உரையாஅ - உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம். உரையாநின்றான் என்பதை இரு சொல்லாகக் கொள்ளாமல்,ஒருசொல்லாகக்கொண்டு, நிகழ்காலவினைமுற்றாக்கி யுரைத்தற்கு, இங்கே இயைபின்று. (கசஉ)

வில்லாலும்வாளாலும்வேலாலும்பரிநெடுந்தேர்வேழத்தாலுந்
தொல்லாண்மைதவறாமற்செருமலைந்தோர்சான்றாகச்சூழ்ந்துநிற்பப்
புல்லாரைப்புறங்காணும்போர்வேலோயிருவருநீர்பொருதுநும்மில்
வல்லார்கள்வென்றிபுனைந்தவனிதலம்பெறுமிதுவேவழக்குமென்றான்.

(இ - ள்.) புல்லாரை - பகைவர்களை, புறம் காணும் - வென்றுமுதுகுகா ணவல்ல, போர் வேலோய் - போர்த்தொழிற்குரிய வேல்வல்லமையுடையவ னே! வில்லாலும் - வில்லைக்கொண்டும், வாளாலும் - வாளைக்கொண்டும், வே லாலும் - வேலைக்கொண்டும், பரி நெடு தேர் வேழத்தாலும் - குதிரையும் பெரி யதேரும் யானையும் என்னும் இவற்றைக்கொண்டும், தொல் ஆண்மை தவறா மல் - தொன்றுதொட்டுவருகிற (தமது) பராக்கிரமந் தவறாமல், செரு மலைந் தோர் - போர்செய்த வீரர்கள், சான்று ஆக - சாட்சியாக, சூழ்ந்து நிற்ப - சுற் றிநிற்க, நீர் இருவரும் - நீங்கள் இரண்டுபேரும், பொருது - போர்செய்து, நும்மில் வல்லார்கள் வென்றி புனைந்து - உங்களுள் வல்லவர்கள் வெற்றியை யடைந்து, அவனிதலம் பெறும் - பூமியைப்பெற்றுக்கொள்ளுதலாகிய, இது வே - இச்செயலே, வழக்கும் - நீதியுமாம், என்றான் - என்று (கண்ணன்) கூறினான்; (எ - று.)

இன்னார் வெல்பவரென்பது துணியலாகா தென்னுங் கருத்துப்பட 'வல் லார்கள் வென்றிபுனைந்து' எனப் பன்மையாக் கூறினான். முதலடி-அறுவகைத் தானையையுங் கூறியது. புல்லார் - சேராதவரெனப் பொருள்படும் எதிர்மறை வினையாலணையும்பெயர். வென்றி-வெல்லுதல்: தொழிற்பெயர்; வெல்-பகுதி, றி - விகுதி, லகரம் னகரமானது - சந்தி: இதனைப் பண்புப்பெய ரென்றல் பொருந்தாது; வினைப்பகுதியின்மேற் பிறந்ததனால். வழங்குவது வழக்கு எனக் காரணக்குறி. உம்மை - இறந்ததுதழுவியஎச்சம். 'நீர் இருவரும்' என்றது, முன்னிலைப்படர்க்கைவழுவமைதி; 'நீரிருவிரும்' என்பது வழாநிலையாம். அவ னிதலம் - பூமியாகிய இடமென இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகவா வது, பூமியினுடைய இடமென ஒற்றுமைக்கிழமைப்பொருளில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகையாகவாவது கொள்ளத்தக்கது. துரியோதனனுக்குப் போரில் உற்சாகத்தை மூட்டும்பொருட்டு 'புல்லாரைப் புறங்காணும் போர் வேலோய்' என்றும், 'இருவருநீர் பொருது நும்மில்வல்லார்கள் வென்றிபுனைந் து அவனிதலம்பெறு மிது' என்றுங் கூறியருளினான்; கீழ்வந்த 'செய்வரு சே லினம் பூகமடலொடிக்குந் திருநாடா', 'வேந்தர் வேந்தே' என்ற விளிகளும் இந்நோக்கம்பற்றி வந்தன. 'பொருதுவென்றிபுனைந்து அவனிதலம் பெறு மிதுவே வழக்கும்' என்றதனால்,இதுவரையில் நீ வல்வழக்காய் அரசுமுழுவ துங் கைப்பற்றி யாண்டுவந்தது நீதியன்று என்றகருத்துந் தோன்றும். (கசங)

## வேறு.

### வீமனைநோக்கித் துரியோதனன் 'எந்த ஆயுதத்தாற்போர்செய்ய வேண்டும்? என்றல்.

கொண்டனிகர்திருமேனிக்கோபாலனிவையுரைப்ப
வண்டுபடிவலம்புரித்தார்வயவேந்தன்மனங்களித்துத்
திண்டிறல்வீமனைநோக்கிச்சிலைமுதலாம்படைகொண்டோ
தண்டெனுநின்படைகொண்டோசமர்விளைப்பாய்சாற்றென்றான்.

(இ - ள்.) கொண்டல் - நீர்கொண்ட காளமேகத்தை, நிகர் - போன்ற, திரு மேனி - திருவடிவத்தையுடைய, கோபாலன் - கண்ணபிரான், இவை உரைப்ப - இவ்வார்த்தைகளைச் சொல்ல,—வண்டு படி - வண்டுகள் படிந்து மொய்க்கிற,வலம்புரி தார்-நஞ்சாவட்டைமலர்மாலையையுடைய, வய வேந்தன்-வலிமையுள்ள துரியோதனராசன், மனம் களித்து - மனத்தில் உற்சாகங் கொண்டு, திண் திறல் வீமனை நோக்கி - மிக்கவல்லமையையுடைய வீமனைப்பார்த்து, 'சிலை முதல் ஆம் படை கொண்டோ - வில்முதலான ஆயுதங்களினாலோ, தண்டு எனும் நின் படை கொண்டோ - உனக்குரிய கதையென்னும் ஆயுதத்தினாலோ, சமர் விளைப்பாய் - (இப்பொழுது) போர்செய்வாய்? சாற்று-சொல்,' என்றான் - என்றுவினாவினான்; (எ - று.)

கோபாலன்-வடசொல்; பசுக்களைக் காப்பவனென்று பொருள்: பூமியைக் காப்பவனென்றும், உயிர்களைக் காப்பவனென்றும் பொருள்கள் கொள்ளலாம். வய - உரிச்சொல்; "வய வலியாகும்" என்பது தொல்காப்பியம். திண் திறல் - ஒருபொருட்பன்மொழி. வீமன் எல்லாவாயுதங்களினும் கதாயுதத்தில் மிகப்பயின்றவனாதலால், 'தண்டெனும் நின்படைகொண்டு' என்றான்; வீமனுக்குச் சத்துருகாதினியென்ற கதாயுதம் மயனென்ற அசுரத்தச்சனால் காண்டவதகனத்தின்பின் கொடுக்கப்பட்டதென அறிக.

இதுமுதல் இருபத்திரண்டுகவிகள் - பெரும்பாலும் நாற்சீர்களும் காய்ச்சீர்களாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள்; இவற்றை நாற்சீர் நாலடித்தரவுகொச்சக மென்றலு மொன்று. (௧௪௪)

### வீமன் கதாயுதத்தாற்போர்செய்யவேண்டுமென்றல்.

நினகரத்தின்மிசையேந்திநின்றதுநீள்கதையாகி
லெனகரத்திற்றண்டுகொண்டேயானுமுடற்றுவனென்றான்
றனகரற்குங்குமரற்குந்தண்டுழாய்முடியவற்குந்
தினகரற்குமேலானசிந்தையுடன்செருச்செய்தான்.

(இ - ள்.) தன கரற்கும் - குபேரனுக்கும், குமரற்கும் - முருகக்கடவுளுக்கும், தண் துழாய் முடியவற்கும் - குளிர்ந்த திருத்துழாய்மாலையைச் சூடிய திருமுடியையுடைய கண்ணனுக்கும், தினகரற்கும் - சூரியனுக்கும், மேலான-நன்குமதிக்கத்தக்க, சிந்தையுடன் - மனவுறுதியுடனே, செரு செய்தான்-போர் செய்தவனாகிய வீமன், (துரியோதனனை நோக்கி), 'நின கரத்தின்மிசை - உன்னுடைய கையிலே, ஏந்தி நின்றது - தரிக்கப்பட்டுள்ளது, நீள் கதை ஆகில் - நீண்டகதாயுதமேயாதலால், என கரத்தில் தண்டு கொண்டே - என்னுடைய கையிலுள்ள கதாயுதத்தைக்கொண்டே, யானும் உடற்றுவன் - நானும் போர் செய்வேன்,' என்றான் - என்று விடைகூறினான்; (எ - று.)

வீமன் புஷ்பயாத்திரையாக அளகாபுரிக்குச்சென்று அங்குப்பூஞ்சோலைக்குக் காவலாகவுள்ளவரும் தன்னையெதிர்த்துப் போர்செய்தவர்களுமான யக்ஷர் வித்தியாதரர் அரக்கர் முதலிய பல தேவசாதியாரைத் தான்தனியேபொருது

அழித்து வென்றிட்டபொழுது அவனது பலபராக்கிரமங்களைக் குறித்து யக்ஷ ராசனான குபேரன் மிக்கவியப்பையடைந்தனனாதலாலும், அசுரர்களைக்கொல்லு தற்கென்றே தேவர்களின் வேண்டுகோளால் சிவகுமாரனாய்த் திருவவதரித்து அங்ஙனமே சூரபதுமன் முதலிய அசுரர்களையெல்லாம் அழித்த முருகக்கட வுளும் வியக்கும்படி வீமன் தவறாது எளிதிற்பகையழித்துவருதலாலும், வீமன் அலக்ஷ்யமாகச்செய்த சராசந்தவதம் முதலியவற்றை அருகிலிருந்து கண்டும் சடாசுரன்வதை மணிமான்வதை கீசகன்வதை முதலியவற்றைக் கேட்டும் கண்ணபிரான் வீமனது பலபராக்கிரமங்களைக்குறித்து மிகவும் ஆனந்தமடை தல்பற்றியும், கருமசாக்ஷியும் உலகத்துக்கெல்லாங் கண்ணுமான இருட்டொகு தியையழிக்கிறசூரியனும் அதிசயிக்கும்படி அவனினுஞ்சிறப்பாக வீமன் பகை யிருளை வேரறஒழித்துவந்தமைபற்றியும், 'தனகரற்குங் குமரற்குந் தண்டுழாய் முடியவற்குந் தினகரற்கு மேலான சிந்தையுடன் செருச்செய்தான்' என்றார். தநகரன் - பொருளைச் சேர்ப்பவனெனக் காரணப்பொருள்படும்; வட சொல். குமரன் - குமாரன் என்ற வடசொல்லின் குறுக்கல்; குமாரனென்ற பெயர் - கு மாரன் எனப்பிரிந்து, (கு - குற்சிதம், மாரன் - மன்மதன்) மன்மத னையுங் குற்சிதரூபமுடையவனாக்கவல்ல கட்டழகுடையான் என்று பொருள் படும்.

நின, என என்பவற்றிலுள்ள அ் - சாரியை; ஆறனுருபாகக்கொள்ளினுந் தவறன்று; "ஆற னொருமைக் கதுவு மாதுவும், பன்மைக்கு அவ்வு முருபாம்" என்ற வரையறை இலக்கியங்களில் நியதிப்பட்டுவருவதில்லை. (கசரு)

எங்குப்போர்செய்வதென்று துரியோதனன் கேட்கக் கண்ணன் விடைகூறத்தொடங்குதல்.

எவ்விடைவீமனும்யானுமிகல்புரிதற்கிடமென்று
பொய்விடையேழடர்த்தோனைப்புயங்ககேதனன்கேட்ப
மெய்விடையானிரைப்பின்போய்வேயூதுந்திருநெடுமா
லவ்விடையாங்கிருவருக்குமாம்பரிசாலருள்புரிந்தான்.

(இ - ள்) 'வீமனும் யானும்—, இகல் புரிதற்கு - போர் செய்வதற்கு, இடம்-உரியஇடம், எ இடை-எந்தஇடம்?' என்று—, புயங்ககேதனன் - பாம்புக் கொடியையுடைய துரியோதனன், பொய் விடை ஏழ் அடர்த்தோனை-வஞ்சனை யமைந்த எருதுகளேழைப் பொருதுஅழித்தவனான கண்ணபிரானை, கேட்ப - கேட்க,—மெய் விடை ஆன் நிரை பின் போய் - உண்மையான எருதுகளோடு கூடியபசுக்கூட்டங்கள்என்னுமிவற்றின்பின்னே சென்று, வேய் ஊதும் - புள் ளாங்குழலை ஊதின, திரு நெடு மால் - சிறந்தபெரிய கண்ணபிரான், ஆங்கு - அப்பொழுது, இருவருக்கும் ஆம் பரிசால் - (துரியோதனன் வீமன் என்ற) இரண்டுபேருக்கும் இசையும்விதமாக, அ இடை - (போருக்குரிய) அந்த இடம் இன்னதென்பதைக் குறித்து, அருள்புரிந்தான் - சொல்லியருள்பவ னானான்; (எ - று.)

அருள்புரிதல் - அருளிச்செய்தல். அருள்புரிந்தான் - சொல்லத்தொடங்கி னான் என்றபடி;சொன்னானென்று உரைத்தல் பொருந்தாது: அடுத்தகவியையும், கருஉ, கருஈ, கருச - ஆம் கவிகளையுங் காண்க. எ+இடை=எவ்விடை, அ+ இடை=அவ்விடை; எகரவினாமுன்னும் அகரச்சுட்டின்முன்னும் உயிர்வர வக ரந் தோன்றிற்று: [நன்-உயிர்-கரு.] மாயையால் அசுரர்கள் ஆவேசிக்கப்பெற்ற எருதுகளாதலின், 'பொய்விடையேழ்' என்றார். சிலவற்றை 'பொய்விடை' என் னவே, பிறவற்றை 'மெய்விடை' என்னவேண்டிற்று. புயங்கம் - புஜங்க மென்ற வடசொல்லின் திரிபு; அது - மார்பினாற் செல்வதென்றும், வளைந்து செல்வதென்றும் காரணப்பொருள்படும்.

விடையேழடர்த்த விவரம்:—கண்ணன் நப்பின்னைப்பிராட்டியைத் திருமணஞ் செய்துகொள்வதற்காக, அவள்தந்தையினேற்பாட்டின்படி, யாவர்க்கும்அடங்காத அசுராவிஷ்டமான ஏழெருதுகளையும் ஏழுதிருவுருக்கொண்டு சென்று வலியடக்கித் தழுவின னென்பதாம். இவ்வரலாற்ருல், கண்ணனது துஷ்டநிக்கிரகசக்தி விளங்கும்.

கண்ணன் இளமையில் கன்றுகாலிகளை மேய்த்துச்செல்லும்பொழுது அவற்றை உத்ஸாகப்படுத்தும்பொருட்டும்,ஒருங்குசேர்த்தற்பொருட்டும் வேய்ங்குழலூதிவந்தமை, பிரசித்தம். வேய் - மூங்கில்; அதனாலாகிய குழலுக்குக் கருவியாகுபெயர். (கசுசு)

அப்பொழுது அங்குப் பலராமனும் விதுரனும் வருதல்.

அரும்பெறலாயோதனமற்றவனுரைக்கும்வேலையினி
லிரும்புனலாடுதற்ககன்றோரிருவரும்வந்தவணெய்தக்
கரும்புயலேயனையானுங்காவலருங்கண்களித்து
விரும்பிமனங்களிகூரமேதகவேயெதிர்கொண்டார்.

(இ - ள்.) பெறல் அரு - கிடைத்தற்குஅருமையான [மிகச்சிறந்த என்றபடி], ஆயோதனம் - போர்செய்தற்கு உரிய இடத்தை, அவன்-அந்தக்கண்ணபிரான், உரைக்கும் வேலையினில் - சொல்லத்தொடங்குஞ்சமயத்தில்,—இரு புனல் ஆடுதற்கு அகன்றோர் இருவரும் அவண் வந்து எய்த - பெரிய [சிறந்த] புண்ணியதீர்த்தங்களில் நீராடும்பொருட்டு (த் தீர்த்தயாத்திரை) சென்றுள்ளவரான (விதுரன் பலராமன் என்ற) இரண்டுபேரும் அவ்விடத்தில் வந்துசேர,—கரு புயல் ஏ அனையானும் - காளமேகத்தையேஒப்பவனாகிய கண்ணனும், காவலரும் - (மற்றும் பாண்டவர் முதலிய) அரசர்களும், கண் களித்து - (அவர்களைப்பார்த்ததனால்) கண்கள்ஆனந்தமடையப்பெற்று, மனம் விரும்பி களி கூர - மனம் மகிழ்ந்து களிப்புமிக, மேதக எதிர்கொண்டார் - மேன்மைபொருந்த எதிர்சென்று அழைத்து உபசரிப்பவரானார்கள்; (எ - று.)—மற்று - அசை.

பலராமன் - கண்ணனுக்குத் தமையன்; திருமாலின் எட்டாம்அவதாரம். இவனிடத்து ஆதிசேஷனது அம்சமும் கலந்திருந்தது. வசுதேவருடைய பத்தினிகளுள் தேவகியின் கருப்பத்தில் ஆறுமாசமும் ரோகிணியின்கருப்பத்தில் ஆறுமாசமும் இருந்து பிறந்தவன் இவன். இவனிடத்துத் துரியோதனனும் வீமனும் கதாயுதப்பயிற்சியை விசேஷமாகக்கற்றுக்கொண்டபொழுது தேகபலத்தின்மிக்கவீமனினும் துரியோதனன் தொழில்வகையிற்சிறந்துநின்றதனால், இவனுக்குத் துரியோதனனிடம் மிக்க அன்புநிகழ்ந்தது. அதுபற்றி, தனதுதங்கையான சுபத்திரையைத் துரியோதனனுக்கும், பின்பு தனதுமகளான வற்சலையைத் துரியோதனனது மகனான லக்ஷணகுமாரனுக்கும் மணஞ்செய்விக்குமாறு இவன் அவ்வக்காலத்திற் கருதியிருந்தஎண்ணம் நிறைவேறாதபடி கிருஷ்ணன் சுபத்திரையை அருச்சுனனுக்கும், வற்சலையை அருச்சுனகுமாரனான அபிமந்யுவுக்கும் அப்பொழுதப்பொழுது தந்திரமாக மணஞ்செய்துவைத்தும் இவனுக்குப் பழையஅபிமானம் துரியோதனனிடத்தில் நீங்காதிருந்தது. அங்ஙனமிருந்தும் பாண்டவசகாயனான கண்ணனுக்கு மாறாகத் தான் எதிர்ப்பக்கத்தில் இருந்து போர்செய்தல் தகாதென்றும், துரியோதனன் அழிதலைத் தான் அருகிலிருந்து கண்ணுற்பார்க்க மனமில்லாமலும் புறப்பட்டுத் தீர்த்தயாத்திரை போய்விட்டனன் இவ னென்க.

விதுரன் - பாண்டவர்க்கும் துரியோதனாதியர்க்கும் சிற்றப்பன்முறையாகிறவன்; வீமன் அருச்சுனன் முதலிய சிறந்தவீரர்பலரையும் ஒருங்கேஎதிர்த்து வெல்லவல்லபடி வில்முதலிய படைத்தொழில்களில் மற்றைபாவரினும் மிகவல்லவன். இவனை யமதர்மராசனது அம்சமென்றும், பரமபாகவதர்களி

லொருவனென்றும் நூல்கள் கூறும். கண்ணன் பாண்டவர்க்குத் தூதாய்வந்தமைபற்றி அவனையும், அவனுக்குத் தன்வீட்டில் இடங்கொடுத்து விருந்து செய்துஉபசரித்தமைபற்றி விதுரனையும் துரியோதனன் பலவாறு இராசசபையில் தூஷிக்க, விதுரன் கடுங்கோபங்கொண்டு 'பாதகனாகிய உன்பொருட்டுப் போர்செய்யேன்; இத்தனைநாளாய் உன்சோற்றையுண்டமைபற்றி, உனக்குஎதிராகப் பாண்டவரோடுசேர்ந்தும் பொரேன்' என்றுசொல்லித் தனதுவில்லை இரண்டுதுண்டாகமுறித்துப் போகட்டுவிட்டுப் பாரதயுத்தம்நடக்கையில் அங்கு இராமல் பலராமனுடன் தீர்த்தயாத்திரைசென்றிட்டன னென்க.

"மருங்குநின்ற இராமனும் பின்மதித்தபோர்முடிவளவும் யான், பொருங்கடும்புனல் நதிக ளாடுவ னென்று நண்பொடு போயினான்", "போனவெம்பல பத்திரன் பொருபூசலிற் புகுதே னெனா, மான வெஞ்சிலை முன்னிறுத்த விதுரனோடு மகிழ்ந்துபோய்க், கானகங்களில் வரையில்வாழ் முனிகணம் விரைந்தெதிர் கொள்ளவே, ஞானமெங்கணுமாடுவா னிருநாலுதிக்கிலு நண்ணினான்" என்று கீழ்அணிவகுப்புச்சருக்கத்தில் வந்தமை உணரத்தக்கது.

ஆயோதநம் - வடசொல்; இந்தப் போரின் பெயர், இங்கே போர்க்களத்துக்குத் தானியாகுபெயராம். அகன்றோர் - இவ்விடத்தைவிட்டு நீங்கிச்சென்றவர். எய்த என்ற வினையெச்சத்தில், எய்து-பகுதி. (இது எப் என்னும் பகுதியடியாப் பிறந்த இறந்தகாலப்பெயரெச்சமாய், பிரயோகித்த என்று பொருள்படுமிடமும் உண்டு.) காளமேகம் - கரியதிருநிறத்திலமாத்திரமேயன்றி, கைம்மாறுகருதாது கருணைமழை பொழியுந் தன்மையிலும் எம்பெருமானுக்கு உவமையாம். மேதக எதிர்கொள்ளுதல் - மிக்கமரியாதையுடன் விசேஷஉபசாரங்களைச் செய்து எதிர்கொள்ளுதல். (கசஎ)

கண்ணனும் மற்றையோரும் அவர்களிவரைப் பாராட்டுதல்.

மதுரைநகர்க்கரசான மாயனுந்தம்முனைவணங்கி
விதுரனையுமெய்தழுவவேல்வேந்தரனைவோருங்
கதிரவரோரிருவரையுங்கண்டுகளிப்பவர்போல
வெதிரெதிர்போய்க்கைதொழுதாரிகலாண்மைக்கெதிரில்லார்.

(இ - ள்.) மதுரை நகர்க்கு அரசு ஆன - மதுராபுரிக்குத்தலைவனான, மாயவனும் - கண்ணபிரானும், தம் முனை வணங்கி - தனதுதமையனான பலராமனை நமஸ்கரித்து, விதுரனையும் மெய் தழுவ - விதுரனை உடம்பை ஆலிங்கனஞ் செய்தருள, இகல் ஆண்மைக்கு எதிர் இல்லார் - பலபராக்கிரமங்களில் தமக்குச்சமமில்லாதவர்களாகிய, வேல் வேந்தர் அனைவோரும் - வேல்முதலிய ஆயுதங்களில் வல்ல அரசர்களெல்லோரும்,கதிரவர் ஓர் இருவரையும் கண்டு களிப்பவர் போல-ஒளியையுடையவரான (சந்திரன் சூரியன் என்ற) இரண்டுபேரையும் பார்த்து மகிழ்பவர்போலப் பலராமனையும் விதுரனையுந் தரிசித்ததனால் மனமகிழ்ந்து), எதிர் எதிர் போய் கைதொழுதார் - (தாம்தாம்) எதிர்கொண்டு சென்று கைகூப்பிவணங்கினார்கள்; (எ - று.)

இங்கே மதுரை யென்றது, வடமதுரையை. அதில் அரசாண்டுநின்ற கம்சனைக் கொன்று கண்ணன் அந்நகர்க்குத்தலைமைபெற்றன னென அறிக. மதுஎன்பவனால் ஏற்படுத்தப்பட்டதனாலும், அழகியதாயிருத்தலாலும், அந்நகர்க்கு, 'மதுரா' என்று வடமொழியிற் பெயர்; அது மதுரையென ஈறுதிரிந்தது. விதுரன் என்ற பெயர் - வடமொழியில், ஞானமுடையவ னென்று காரணப்பொருள்படும். தம்மினும் மேலோரை வணங்குதலும், கீழோரை ஆசீர்வதித்தலும், சமமானவரைத் தழுவியணைத்தலும், மரியாதை. இகல் ஆண்மை - உம்மைத்தொகை; அஃறிணையாதலின், பன்மைவிகுதிபெறாது நின்றது. (கசஅ)

தீர்த்தயாத்திரைவரலாற்றை அவ்விருவருங் கூறுதல்.

அன்றுமுதலேகியநாளளவாகவிருவோருங்
குன்றிடமுங்கடலிடமுங்குறித்தநதிகளினிடமுஞ்
சென்றுசுரரும்படியுந்தீர்த்தங்கடிசைதோறு
மொன்றுபடமகிழ்ந்தாடிமீண்டவாறுரைசெய்தார்.

(இ - ள்.) அன்று முதல் - (பிரயாணம்புறப்பட்டுச் சென்ற) அந்நாள்முதல், ஏகிய நாள் அளவு ஆக - மீண்டுவந்த இந்நாள்வரையிலும், திசைதோறும் - ஒவ்வொருதிக்கிலும், குன்று இடமும் - மலைகளினிடங்களிலும், கடல் இடமும் - கடல்களினிடங்களிலும், குறித்த நதிகளின் இடமும் - (சிறந்தவை யென்று) குறிக்கப்பட்ட நதிகளினிடங்களிலும், சென்று - போய், சுரரும் படியும் தீர்த்தங்கள் - மேலுலகிலுள்ள தேவர்களும் வந்து நீராடப்பெற்ற புண்ணிய தீர்த்தங்களில், ஒன்றுபட-ஒருசேர, மகிழ்ந்து ஆடி-மனமகிழ்ச்சியோடு நீராடி, மீண்ட ஆறு - திரும்பிவந்த வரலாற்றை, இருவோரும் - அவ்விரண்டுபேரும், உரைசெய்தார் - (மற்றையோர்க்கு) எடுத்துக்கூறினார்கள்; (எ - று.)

இங்கே தொகுத்துக்கூறப்பட்ட தீர்த்தயாத்திரைவரலாறு வியாசபாரதத்தில் இருபது அத்தியாயங்களில் வெகுஅழகாகவும் விரிவாகவுங் கூறப்பட்டுள்ளது. சுரரும், உம் - உயர்வுசிறப்பு. (கசுக)

பதினெட்டுநாளைப்போர்வரலாற்றைக் கண்ணன் அவ்விருவர்க்குங் கூறல்.

அறந்தருகாளையுமுகுரவானனன்காளையும்புரிந்த
மறந்தருபோர்வெங்களத்துமன்னவர்களனைவோரு
மிறந்தநிலையுந்தினங்களீரொன்பானினுந்தோன்ற
மறந்திகழ்தோளிருவருக்குமாமாயன்கட்டுரைத்தான்.

(இ - ள்.) அறம் தரு காளையும் - தருமதேவனை யமன் பெற்ற பிள்ளையாகிய யுதிஷ்டிரனும், முகுர ஆனனன் காளையும் - கண்ணாடிபோலும் முகமுடைய திருதராட்டிரனது பிள்ளையாகிய துரியோதனனும், புரிந்த - செய்த, மறம் தரு போர் வெம் களத்து - கொலைநிகழ்தற்குஉரிய கொடிய போர்க்களத்தில், தினங்கள் ஈர் ஒன்பானிலும் - பதினெட்டுநாள்களிலும், மன்னவர்கள் அனைவோரும் - அரசர்கள்பலரும், இறந்த நிலையும் - மரித்த தன்மையையும், மா மாயன் - சிறந்தமாயையையுடைய கண்ணபிரான், மறம் திகழ் தோள் இருவருக்கும் - வலிமைவிளங்குந் தோள்களையுடைய (பலராமன் விதுரன் என்ற) அவ்விரண்டுபேருக்கும், தோன்ற கட்டுரைத்தான் - தெளிவாகக் கூறினான்.

அறந்தருகாளை - தருமபுத்திரன். தேவர்களை இருதிணையாலுங் கூறலாமாதலால், தருமராசனை 'அறம்' என அஃறிணையாற் கூறினர். காளை - இளவெருது; வீரனுக்கு உவமையாகுபெயர்; நடை வலிமை மேலானதோற்றம் இவற்றில் உவமம். 'முகுரவானனன்' என்றது - கண்ணாடி தான் பிறராற்காணப்பட்டுப் பிறரைத் தான்காணும் உணர்ச்சி யில்லாததுபோல, தான் பிறராற் காணப்பட்டுப் பிறரைத் தான்காணாத முகத்தையுடையவனென்றவாறு; பிறவிக்குருடனென்பது கருத்து. இனி, கண்ணாடிபோல விளக்கமுடைய முகமுடையவனென்பாருமுளர். அன்றியும், கண்ணாடிபுறங்காட்டாதவாறுபோல வீரத்தால் முதுகுகாட்டாத முகமுடையவனென்றலும் ஒன்று; திருதராட்டிரன் அங்ஙனந் தோர்க்கவீரனாதலைச் சம்பவச்சருக்கத்தால் அறியலாம். இனி, பிறவிக்குருடனைக் கண்ணாடிபோலு முகமுடையானென்ன இகழ்ச்சிபற்றிய பெயருமாம். முகுரம், ஆநநம் - வடசொற்கள். (கசுo)

பலராமன் இரங்கத்தோடு 'இப்பொழுது என்னஉத்தேசம்?' என்றல்.

கேட்டருளிநெடுந்தாலகேதனன்மாமனந்தளர்வுற்
றாட்டரவமுடையவற்கோவழிவுவருவதுபோரி
னாட்டமினியெதென்றுநராந்தகனைவினவுதலு
மீட்டுமவற்குரைசெய்தான்விரிதிரைநீர்மறந்தானே.

(இ - ள்.) நெடு தால கேதனன் - நீண்ட பனைமரத்தின்வடிவத்தை யெழுதிய கொடியையுடைய பலராமன், கேட்டு அருளி - (கண்ணன் கூறிய போர் வரலாறுகளைக) கேட்டு, மா மனம் தளர்வுற்று - (தனது) சிறந்தமனம்தளர்ந்து, 'ஆட்டு அரவம் உடையவற்கோ போரில் அழிவு வருவது - படமெடுத்தாடுந் தன்மையுள்ள பாம்பின்வடிவ மெழுதிய கொடியையுடைய துரியோதனனுக்கோ யுத்தத்தில் அழிவுஉண்டாவது! இனி - இப்பொழுது, நாட்டம் எது - குறிக்குந்தொழில் யாது'' என்று,—நராந்தகனை வினவுதலும் - கண்ணபிரானை வினவியவளவிலே,—விரி திரை நீர் மறந்தான் - பரவுகிற அலைகளையுடைய திருப்பாற்கடலில் யோகநித்திரைசெய்தலை விட்டு இங்குத் திருவவதரித்த திருமாலாகிய கண்ணபிரான், மீட்டும் அவற்கு உரைசெய்தான் - மறுபடியும் அந்தப்பலராமனுக்குக் கூறுபவனானான். (எ - று.)

உபசாரமாக 'கேட்டருளி' என்றார், பெரியோர்கள்செய்யும் ஒவ்வொரு தொழிலும் அருளுடன்கூடியதென்பது கொள்கையாதலால், இங்ஙனங் கூறுதல், மரபு. ஆட்டு - ஆடு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். அரவம் - அரா என்பது குறியதன்கீழ்ஆக் குறுகி 'அம்' சாரியை பெற்றது. 'ஆட்டரவமுடையவற்கோ அழிவுவருவது போரில்' என்றதனால், அவனதுமாமனம்தளர்வுற்றகாரணம் தானே விளங்கும்; தனதுசிறந்தமாணாக்கனுக்கு அழிவுநேர்வதுபற்றி, மனந்தளர்ந்தன னென்க. துரியோதனனது பகையழிக்கத் தவறாத பராக்கிரமம் விளங்க, 'அரவமுடையவன்' என்ற பெயராற் கூறினார். ஓகாரம் - அவனது உயர்வையும், அவனுக்கு அழிவுவருவது தகுதியன்றென்ற கருத்தையும் விளக்கும். நாட்டம்-நாடுதல்: தொழிற்பெயர்; நாடு - பகுதி, அம்-விகுதி, விரித்தல்-விகாரம்: ஆகுபெயராய், உத்தேசிக்கப்பட்ட காரியத்தைக் குறிக்கும். 'இனி'என்ற இடைச்சொல், இங்கே,இப்பொழுதென்ற பொருளில் வந்தது. நராந்தகன் - நரகாந்தகன் என்பதன் விகாரம்; நரக னென்னும் அசுரனுக்கு அழிவுசெய்தவன்; அல்லது. அவனுக்கு யமனானவ னென்று பொருள்.

நரகனைக் கொன்ற கதை:—திருமால் வராகாவதாரஞ்செய்து பூமியைக் கோட்டாற்குத்தியெடுத்தபொழுது அத்திருமாலினது பரிசத்தாற் பூமிதேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும், அசமயத்திற்சேர்ந்து பெறப்பட்டவனாதலால் அசுரத்தன்மை பூண்டவனுமான நரகனென்பவன், பிராக்சோதிஷமென்னும் பட்டணத்தி லிருந்துகொண்டு, சகலபிராணிகளையும் மிகஉபத்திரவித்து, தேவர் சித்தர் கந்தருவர் முதலானவர்களுடைய கன்னிகைகளையும் ராஜாக்களுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபகரித்துக் கொண்டுபோய்த் தான்மணம்புணர்வதாகக்கருதித் தன்மாளிகையிற் சிறைவைத்து, வருணனுடையகுடையையும் மந்தரகிரிச்சிகரமானரத்தினபருவதத்தையும் தேவர்தாயான அதிதிதேவியின் குண்டலங்களையுங் கவர்ந்துபோனதுமன்றி, இந்திரனுடைய ஐராவதயானையையும் அடித்துக்கொண்டுபோகச் சமயம்பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளால், கண்ணபிரான்,கருடனை வரவழைத்து, பூமிதேவியம்சமான சத்தியபாமையுடன் தான் கருடன்மேலேறி, அந்நகரத்தை அடைந்து, சக்கராயுதத்தைப் பிரயோகித்து, அவன்மந்திரியான முரன் முதலிய பல அசுரர்களையும் இறுதியில் அந்நரகாசுரனையும் அறுத்துத்தள்ளியழித்திட்டனன் என்பதாம்.

'விரிதிரைநீர்மறந்தான்' என்றது, திருப்பாற்கடல்நாதனாகிய திருமால் தேவர்களின் வேண்டுகோளால் அங்குநின்று கண்ணனாக வந்து தோன்றினனாதலின், "பனிக்கடலுட் பள்ளிகோளைப் பழகவிட் டோடிவந் தென், மனக்கடலில் வாழவல்ல மாய மணாள நம்பி" என்றாற்போல, 'விரிதிரைநீர் மறந்தான்' என்றார்: இங்ஙனங் கூறினது, உபசாரவழக்கு: திருப்பாற்கடலிலுள்ள வியூகநிலையினின்று விபவாவதாரஞ் செய்த சௌலப்பியத்தில் [அடியார்க்கெளிமையில்] ஈடுபட்டு இங்ஙனங் கூறின ரென்க; இங்ஙனங்கூறினராயினும் "ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்து இங்குப்பிறந்த, வேதமுதல்வன்" என்றபடி திருப்பாற்கடலில் தனதுமூலகாரணமான வடிவம் நிற்க அதனினின்று அம்சமாய் இங்கு அவதரித்தவ னென்றே கருத்து: இங்ஙனங்கூறியது, அம்சாவதாரங்களுள்ளும் கிருஷ்ணாவதாரம் பூர்ணாவதார மென்பதை விளக்கும். நீர் - கடலுக்கு இலக்கணை. பாற்கடல் நீரெனப்படுகலை "தாழி தரையாகத் தண்டயிர் நீராக" எனப் பிறவிடத்துங் காண்க. நீர் - நீர மென்னும் வடசொல்லின் விகார மென்பர். (கருக)

அதற்குப் பலராமன் கூறும் விடை.

வீமனுக்கும்வீமனுடன்வெகுண்டமர்செய்வலம்புரித்தார்த்
தாமனுக்குமமர்புரியுந்தலமேதென்றுயாவுகின்றேம்
நீமனத்தினிகழ்ந்தபடிநிகழ்த்துகெனநிலவொளியாற்
சோமனுக்குநிகராமேனிளவலைநீசொல்லென்றான்.

(இ - ள்) 'வீமனுக்கும்—, வீமனுடன் வெகுண்டு அமர் செய் - வீமனோடு கோபித்துப்போர்செய்யும், வலம்புரி தார் தாமனுக்கும் - நஞ்சாவட்டைப்பூமாலையையுடைய துரியோதனனுக்கும், அமர் புரியும் - போர்செய்யத்தக்க, தலம் - இடம், ஏது - எது? என்று - என்பதைக்குறித்து, உயாவுகின்றேம் - ஆராய்ச்சிசெய்கிறோம்; நீ மனத்தில் நிகழ்ந்த படி நிகழ்த்துக - (அதைக்குறித்து) உன்மனத்திலுள்ள கருத்தை நீகூறுவாய்,' என - என்று (கண்ணன்) பலராமனை நோக்கிக்) கூற,—நிலவு ஒளியால் சோமனுக்கு நிகர் ஆனோன் - விளங்குகிற தனது வெண்ணிறமான தேககாந்தியால் சந்திரனுக்கு ஒப்பான பலராமன், இளவலை - தனதுதிருத்தம்பியான கண்ணபிரானை நோக்கி, நீ சொல் என்றான் - நீயே உன்கருததின்படி கூறுவா யென்றான்; (எ - று.)

பலராமன் வெண்ணிறமுடையவனாதலால், 'நிலவொளியாற் சோமனுக்கு நிகரானோன்' என்றார் அவன் வெள்ளைநிறமுடைமை பிரசித்தம்: இதுபற்றி, 'வெள்ளை' என்றே அவனுக்கு ஒருதிருநாமம் நிகண்டுகளிற் கூறப்பட்டுள்ளது. தார் - இங்கே, மலர். உயாவுதல்—உசாவுதல், நிகழ்த்துகென - தொகுத்தல். ஸோமன் - வடசொல். (கருஉ)

இதுவும், வருங்கவியும் - குளகம்; கண்ணன் போர்க்களங்குறித்தல்.

தாவெழுமாமணிநெடுந்தேர்த்தபனனிகர்மழுப்படையோன்
மூவெழுகான்முடிவேந்தரனைவரையுமுடிப்பித்து
நாவெழுபான்மையினுடையோன்களிக்கநரமேதஞ்செய்
பூவெழுதீவினுஞ்சிறந்துபொன்னுலகோடொத்துளதால்.

(இ - ள்.) தாவு - தாவிச்செல்லுகிற, எழு மா - ஏழுகுதிரைபூண்ட, மணி நெடு தேர் - அழகியபெரியதேரையுடைய, தபனன் - சூரியனை, நிகர் - ஒத்து விளங்குகிற, மழு படையோன் - கோடாலியை ஆயுதமாகவுடைய பரசுராமன், மூ எழு கால் - இருபத்தொருதலைமுறை, முடி வேந்தர் அனைவரையும் - கிரீடாதிபதிகளான அரசர்களெல்லாரையும், முடிப்பித்து - அழியச்செய்து, நா எழு பான்மையின் உடையோன் களிக்க - நாக்கைஏழுகுதியாகவுடைய அக்

இனிதேவன் மகிழும்படி, நரமேதம் செய் - நரமேதம்பண்ணின, பூ - இடம், எழு தீவினும் சிறந்து - ஏழுதீவுகளுள்ளுஞ் சிறப்புற்று, பொன் உலகோடு ஒத்து உளது - சுவர்க்கலோகத்தோடு ஒத்துள்ளது; (எ-று.)—ஆல் - ஈற்றசை.

சந்திரவம்சத்துப்பிறந்த அரசனும் பலபராக்கிரமங்களிற்சிறந்தவனும் ஆயிரந்தோள்களுடையவனும் இராவணனை ஒருகால்வென்றிட்டவனுமான கார்த்தவீரியார்ச்சுனன் ஜமதக்கிமுனிவனது ஓமதேனுவைக் கவர்ந்ததுகாரணமாக அம்முனிவனது குமாரனான பரசுராமன் அக்கார்த்தவீரியார்ச்சுனனைக் கொன்றுவிடவே, அவனதுகுமாரர்கள் பழிக்குப்பழிவாங்கவேண்டுமென்று நிச்சயித்துப் பரசுராமனில்லாதசமயம்பார்த்துப்பர்ணசாலையினுட்சென்று சமதக்கினிமுனிவனைத் தலைதுணித்துப்போக, பின்புவந்த பரசுராமன் பெருஞ்சினங்கொண்டு சென்று அவ்வர்ச்சுனகுமாரர்களையும் உலகத்திலுள்ள செருக்குக்கொண்ட அரசர்கள்பலரையும் அழித்தொழித்துச் சகலக்ஷத்திரியவம்சவிநாசகாரணனாயினன். ஜமதக்கிமுனிவனது தலையைக் கார்த்தவீரியார்ச்சுனகுமாரர் துணித்திட்டபோது, அவனதுமனைவியான ரேணுகாதேவி இருபத்தொருமுறை தன் மார்பில் அடித்துக்கொண்டு புலம்பினதுபற்றி அரசர்களை இருபத்தொருதலைமுறை பரசுராமன் ஒழித்திட்டானென்றும், பரசுராமன் தான் முதலில் வீரவாதமாகப்பிரதிஜ்ஞைசெய்தபடி அவ்வரசர்களது இரத்தவெள்ளத்தால் ஸ்யமந்தபஞ்சகமென்ற ஐந்துதடாகங்களை யேற்படுத்தி அவற்றில் தந்தைக்கு ஜலதர்ப்பணஞ்செய்திட்டானென்றும், தன்னாற்கொல்லப்பட்ட அரசர்களது தலைகளை ஆகுதியாக நெருப்பிற்பெய்து ஒருவேள்விச்சடங்கைமுடித்து அவ்யாகத்தின்முடிவில் தனக்குச் சுவாதீனமாகவுள்ள பூமிமுழுவதையுங் காசியபமுனிவனுக்குத் தானஞ்செய்துவிட்டு மகேந்திரமலைக்குச் சென்றிட்டானென்றும் வரலாறு உணர்க. நரமேதம் - மனிதரைக் கொன்று செய்யும் யாகம். அக்கினிக்கு உள்ள எழுவகைக்கிரணங்களை எழுநாக்குக்களாகக் கூறுதல் மரபாதலின், 'நா வெழுபான்மையி னுடையோன்' என்றார்: "அமிழ்தென எழுநாவெச்சில் மெச்சி நாளும் விண்ணோர் மிசைகுவர்" என்றவிடத்தில் 'எழுநா' என்றதுங் காண்க, வடமொழியில் 'ஸப்தஜிஹ்வா' என்று பெயர்.

'தபனனிகர்' என்ற அடைமொழி - மழுவுக்கும், பரசுராமனுக்கும் பொருந்தும். மூவெழுகால் - பண்புத்தொகை. பூ - வடசொல். தீவு - த்வீபமென்ற வடசொல்லின் திரிபு. ஏழுதீவு - ஜம்பூ, பிலட்சம், குசம், கிரௌஞ்சம், சாகம், சால்மலி, புஷ்கரம் என்பன. பொன்னுலகு-பொன்மயமாயுள்ள உலகம். (கருங)

அந்நிலமேயிருவருக்குமமர்புரியலானவிட
மன்னவர்தம்முடற்சோரிவழிந்துசமந்தபஞ்சகமா
மென்னநிலைபெற்றதடங்களுமங்கேயங்கேயுண்
டுன்னிலெதிரிலதனுக்கொலிகடல்சூழ்நிலத்தென்றான்.

(இ - ள்.) அந்நிலமே - (பரசுராமன் நரமேதஞ்செய்த) அந்தஇடமே, இருவருக்கும் - இவ்விரண்டுபேருக்கும், அமர் புரியல் ஆன இடம் - போர்செய்தற்குத் தக்க இடமாம்: மன்னவர்தம் - (பரசுராமனாற்கொல்லப்பட்ட) அரசர்களுடைய, உடல் சோரி - உடம்பின் இரத்தம், வழிந்து - பெருகியதனால், சமந்தபஞ்சகம் ஆம் என்ன நிலைபெற்ற - ஸ்யமந்தபஞ்சகமென்று பிரசித்தமாக நிலைபெற்றுள்ள, தடங்களும் - (ஐந்து) தடாகங்களும், அங்கே அங்கே உண்டு - அவ்விடத்தில் அடுத்தடுத்துஉள்ளன; உன்னில் - ஆலோசிக்குமிடத்து, ஒலி கடல் சூழ் நிலத்து - ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த நிலவுலகத்தில், அதனுக்கு - அந்தஇடத்துக்கு, எதிர் இல் - ஒப்பானஇடம் வேறில்லை, என்றான் - என்று (கண்ணன்) கூறியருளினான்; (எ - று)

வழிந்து - வழிய என்னும் எச்சத்தின் திரிபு. (கருச)

கன்னர் கூறியவுடன் யாவரும் அவ்விடஞ் செல்லுதல்.

அத்தலத்தின் றிசைநோக்கியனீகினியுமனைவோரு
முத்தநெடுங்குடைநிழற்றமூவகைவாகனமேறிக்
கொத்துடனேநெறிபடரக்கொற்றவர்கொற்றவன்றானுங்
கைத்தலமுந்தண்டமுமாக்கால்வேகமுறச்சென்றான்.

(இ - ள்.) அ தலத்தின் திசை நோக்கி-அந்தஇடமுள்ளதிக்கைக்குறித்து, அனீகினியும் - சேனைகளும், அனைவோரும் - (பாண்டவர் முதலிய அரசர்கள்) எல்லோரும், முத்தம் நெடு குடை நிழற்ற - முத்துக்களாலாகிய பெரிய வெண்கொற்றக்குடை நிழலைச்செய்ய, மூவகை வாகனம் ஏறி - (யானை தேர் குதிரை என) மூன்றுவகைப்பட்ட வாகனங்களிலேறிக்கொண்டு, கொத்துடனே நெறி படர-கூட்டமாக வழிச்செல்ல, கொற்றவர் கொற்றவன்தானும் - இராச ராசனான துரியோதனனும், கைத்தலமும் தண்டமும் ஆ - கையுங் கதையுமாக, கால் வேகம் உற சென்றான்-கால்களால் வேகமாக நடந்துசென்றான்; (எ-று)

துரியோதனனுக்குச் சேனையுந் துணையும் வாகனமு மில்லாமை, நான்கா மடியில் விளங்கும். 'கால்வேகமுற' என்பதற்கு - காற்றின்வேகமாக என்றும் பொருள்கொள்ளலாம். அனைவர் - அனைவோர் என ஈற்றயல் அகரம் ஓகா யிற்று. வாஹநம் - வகிப்பது; வடசொல்: வகித்தல் - சுமத்தல். (கடு)

தருமனைப்பார்த்துத் துரியோதனன் பொறாமைப்படுதல்.

தம்பியர்கள்புடைசூழத்தருமன்மகன்பல்லியமும்
பம்பியெழநடக்கின்றபரிசுதனைமுகநோக்கி
யெம்பியருமெங்கிளையுமிறக்கவிருந்தனமென்றே
வெம்பிமனமிகத்தளர்ந்தான்விதிதனக்குவிதிபோல்வான்.

(இ - ள்.) தம்பியர்கள் புடை சூழ - தம்பியர்நால்வரும் பக்கங்களிலே சூழ்ந்துவரவும், பல் இயமும் பம்பி எழ -பலவகைப்பட்டவாத்தியங்களும் நெருங்கி மிக்கொலிக்கவும், தருமன் மகன் - தருமபுத்திரன், நடக்கின்ற - சிறப்பாகச்செல்லுகிற, பரிசுதனை - விதத்தை, முகம் நோக்கி - எதிரிலே பார்த்து,— விதிதனக்கு விதி போல்வான் - ஊழ்வினைக்கும் ஓர்ஊழ்வினை போல்பவனான துரியோதனன்,—'எம்பியரும் - எமதுதம்பிமார்களும், எம் கிளையும் - எமது பந்துவர்க்கமும், இறக்க—, இருந்தனம் - (நாம்மாத்திரம் தனித்து) நின்றோம்,' என்றே - என்றுஎண்ணியே, மிக மனம் வெம்பி தளர்ந்தான் - மிகவும் மனந் தவித்துத் தளர்ச்சியடைந்தான்; (எ - று.)

பல்லியம் - கொட்டுவன ஊதுவன முதலியன. கிளை - மரத்தைக் கிளை போல ஒருவனைத் தழுவிநிற்குஞ் சுற்றத்தார்; உவமவாகுபெயர். இருந்தனம் - உயர்வுபற்றிய தனித்தன்மைப்பன்மை; இப்படிப்பட்ட எளியநிலைமையை யடைந்த சமயத்திலும் 'இருந்தனம்' என உயர்வுபற்றிவந்த தன்மைப்பன்மை யாற் கருதுதலில், துரியோதனனது மிக்கசெருக்கு விளங்கும். 'விதிதனக்கு விதிபோல்வான்' என்றது, ஊழ்வினையின்படி தான் தொழில்செய்கின்றவ னென்பதின்றித் தனதுசெயலின்படி ஊழ்வினைநிகழ்வ தென்னும்படி தான் நினைத்தவாறெல்லாம் இதுவரையில் தொழில்செய்து தடையறமுடித்துவந்தவ னென்றவாறு; அன்றி, யாவரையும் வருத்துகிற ஊழும் அஞ்சத்தக்க தீச்செயலையுடையவனென்பாருமுளர். விதியாவது - இருவினைப்பயன் செய்தவுயிரையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி. 'விதிதனக்கு' என்பதில் உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது; அது, அதனது தவறுதலுறாநிலையை விளக்கும். 'முகநோக்கி' என்பதற்கு - கண்ணாற்பார்த்து என்று கூறி, முகம் என்றதை இடவாகுபெயரென்றலும் ஒன்று. (கஙச)

தருமன் துரியோதனனுக்குச் சமாதானங் கூறத்தொடங்கல்.

முடிக்குலமன்னவர்தத்தமுடிகளினாற்சிவக்கின்ற
வடிக்கமலநடந்துசிவப்பாவதேயெனவிரங்கிக்
கொடிக்கண்முரசெழுதியவக்கோவேந்தன்கொடித்தேர்விட்
டிடிக்குமுரசெனப்புகல்வானிராசராசனுக்கம்மா.

(இ - ள்.) 'முடி - கிரீடத்தையுடைய, குலம் மன்னவர்தத்தம் - சிறந்த குலத்துஅரசர்களுடைய, முடிகளினால் - கிரீடங்கள்படுவதனால், சிவக்கின்ற - செந்நிறமடைகிற, அடி கமலம் - (துரியோதனனது) தாமரைமலர்போன்ற பாதம், நடந்து சிவப்பு ஆவதே - நடந்து அதனாற் செந்நிறமடைவதா?' என இரங்கி - என்றுஎண்ணி (மனத்தில்) இரக்கங்கொண்டு,—கொடிக்கண் முரசு எழுதிய அ கோ வேந்தன் - தனதுதுவசத்தில் முரசவாத்தியத்தின்வடிவத்தை யெழுதியுள்ள அந்தச் சிறந்தஅரசனான தருமபுத்திரன், கொடி தேர் விட்டு - கொடிகட்டியதனதுதேரைவிட்டுஇறங்கி(ச்சென்று), இராசராசனுக்கு - அரசர்க்குஅரசனான துரியோதனனுக்கு, இடிக்கும் முரசு என புகல்வான் - முழங்குகிற முரசவாத்தியம் போல (க்கம்பீரமானகுரலுடன் சிலவார்த்தை) கூறுவான்; (எ - று.)—அவற்றை, அடுத்தஇரண்டுகவிகளிற் காண்க.

அரசர்கள்பலரும் தங்களுக்கு அரசனான துரியோதனனது கால்களில் தம்தமதுதலைபடும்படி சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்கும்பொழுது அவர்களது கிரீடம் படுதலால் இவனது கால் சிவக்கு மென்க. பாதத்துக்குத் தாமரை மலர், செம்மைமென்மையழகுகளில் உவமம். தத்தம் - தந்தம் என்பதன் விகாரம்; தங்கள்தங்களுடைய என்று பொருள். சிவப்பு-செம்மை யென்னும் பண்பினடி விகாரப்பட்டு வினைத்தன்மையடைந்து 'பு' விகுதி பெற்றது. ஆவதே என்ற ஏகாரம் - இரக்கத்தை விளக்கும். மிகக்கொடிய அளவிறந்த தீங்குகளைத் தங்களுக்குச் செய்துவந்த பகைவனான துரியோதனன்பக்கல் தருமனுக்கு இங்ஙனம்இரக்கம்நிகழ்ந்த தென்பதனால், அவனது மிக்ககருணை புலப்படும். கொடிக்கண், கண் - ஏழனுருபு. தருமன் விரைவில் அரசுபெறும் நிலையிலுள்ளமை தோன்ற, 'கோவேந்தன்' என்றார். அம்மா என்ற இடைச்சொல் - தருமனது கருணையைப்பற்றி வியந்தவாறு. (கடுஎ)

தருமன் துரியோதனனுக்கு அரசுகொடுப்பேனென்றல்.

என்றுணைவருடன்யானுமேவியநின்றொழில்புரிந்து
வன்றுணையாய்ச்சேவிப்பமடங்கலாசனமேறி
யின்றுணைவர் குருகுலத்தாரெனுமிசைபோய்த்திசையேற
நன்றுணைவாவாளுதியோஞாலமெலாநின்குடைக்கீழ்.

(இ - ள்.) நல் துணைவா - நல்ல தம்பியே! என் துணைவருடன் - எனது தம்பிமார்களுடன், யானும் - நானும், ஏவிய நின் தொழில் புரிந்து - உன்னாற் கட்டளையிடப்படுங் குற்றேவல்களைச் செய்துகொண்டு, வல் துணை ஆய் சேவிப்ப - வலிய துணைவீரராய் (உனக்கு) ஊழியஞ்செய்ய, மடங்கல் ஆசனம் ஏறி - (நீ) சிங்காசனத்தில் ஏறிவீற்றிருந்து, குரு குலத்தார் இன் துணைவர் எனும் இசை போய் திசை ஏற - குருகுலத்தில் தோன்றிய அரசர்கள் (ஒருவர்க்கொருவர்) இனியதுணைவராயினரென்னும் புகழ் சென்று எல்லாத்திக்குகளிலும் மிக்குப்பரவ, ஞாலம் எலாம் - பூலோகம்முழுதையும், நின் குடைக்கீழ் - உனதுஒற்றைவெண்கொற்றக்குடையின்கீழ், ஆளுதியோ - ஆளுவையா? (எ-று.)

போரையொழித்துப் பகைமையின்றிச் சமாதானத்தில் மீண்டும் அரசுபெற்றுவாழ உனக்குப் பிரியமா? என்று வணங்காமுடிமன்னனைக் கருணைவள்ளல்

வினவினன். மடங்கலாசனம் - சிங்கத்தின்வடிவம் சிறிதுசிறிதுதோன்றச் சித்திரித்துச்செய்யப்பட்ட பீடம். ஆளுதி என்ற முன்னிலையொருமைமுற்றில், த்-எழுத்துப்பேறு; இகரவிகுதியே எதிர்காலங்காட்டிற்று: [நன்-பத-கஅ.] ஓ - வினா. அரசாட்சியைக் குடையென்றல், மரபு. 'நன்துணைவா' என விளித்தான், அஜாதசத்துருவான தனக்கு அவனிடம் பகைமை இன்றாதலால். (கஙஅ)

**தருமன்கூறின சமாதானத்துக்குத் துரியோதனன் உடன்படாமை.**

தப்பாதென்மொழியென்று தருமன்மாமதலைமுகி
லொப்பானதிருமேனியும்பர்பிரான்சான்றாகச்
செப்பாதவாய்மையெலாஞ்செப்பினன்செப்பவுமக்
கைப்பானவன்னெஞ்சக்கடுங்கண்ணன் கண்மறுத்தான்.

(இ - ள்.) என் மொழி தப்பாது - யான்சொன்ன இவ்வார்த்தை தவறாது, என்று,—தருமன் மா மதலை - சிறந்த தருமபுத்திரன், முகில் ஒப்பு ஆன திரு மேனி உம்பர் பிரான் சான்று ஆக - மேகத்துக்குச்சமானமான கரியதிருமேனியையுடைய தேவாதிதேவனான கண்ணபிரான் சாட்சியாக, செப்பாத வாய்மை எலாம் செப்பினன் - (இதுவரையில் எவரும் என்றும்) சொல்லியிராத உறுதிவார்த்தைகளையெல்லாம் கூறினன்: செப்பவும் - அவ்வாறு சொல்லவும், அ கைப்பு ஆன வல் நெஞ்சம் கடு கண்ணன் - வெறுப்புக்குஉரிய வலியமனத்தையும் கொடியதன்மையையுமுடைய அந்தத்துரியோதனன், கண்மறுத்தான்- (உடன்படாமல்) தாக்ஷிணியமின்றித் தடுத்திட்டான்; (எ - று.)

என்மொழிதப்பாது, அங்ஙனமே நிறைவேற்றுவேன் என்று கிருஷ்ண சாட்சியாகத் தருமன் பலவாறு பிரமாணங்கூறினா னென்பது, முதல்வாக்கியத்தின் கருத்து. உம்பர் என்ற மேலிடத்தின் பெயர் - அங்குள்ள தேவர்க்கு இடவாகுபெயராம்; இதன் எதிர்மொழி, இம்பர். பிரான்-ப்ரபு என்ற வடசொல்லின் சிதைவு என்பர். கண்மறுத்தான் - கண்ணோட்டமில்லாதவனானா னென்றவாறு; அன்றி, கண் என்பதை உபசர்க்கமாகக் கொள்ளினும் அமையும். (கஙக)

**துரியோதனன் கூறும் விடை.**

எங்கிளைஞரென்றுணைவரென்பொருட்டாலிறந்தேக
வுங்களருள்பெற்றிருக்குமுயிர்வாழ்வினினிதன்றே
வங்கமெலாம்வேறுபடவாறுபடுகுருதியின்வாய்க்
கங்கமுங்காகமுங்கொத்தக்களத்தவிந்தானெனும்பெயரே.

(இ - ள்.) எம் கிளைஞர் - எமதுசுற்றத்தார்களும், என் துணைவர் - எனது தம்பிமார்களும், என்பொருட்டால் - எனக்காக, இறந்து ஏக - மாண்டொழிய, உங்கள் அருள் பெற்று இருக்கும் - உங்கள்கருணையைப்பெற்று அதனால் நான் வாழும், உயிர் வாழ்வின் - உயிர்வாழ்க்கையைக்காட்டிலும்,—அங்கம் எலாம் வேறு பட - உடம்பினுறுப்புக்களெல்லாம் தனித்தனி துணிபடவும், ஆறு படு குருதியின் வாய்-ஆறாக இரத்தம்பெருகும் புண்வாயில், கங்கமும் காகமும் கொத்த-கழுகுகளும் காக்கைகளும் மூக்கினாற்கொத்திக்கிளறவும், களத்து அவிந்தான் - போர்க்களத்தில் இறந்திட்டான், எனும் பெயர் - என்கிற பிரசித்தியை யடைதல், இனிது அன்றே - இனிமையானதன்றோ? (எ - று.)—அன்று ஓ=அல்லவா; தேற்றம்.

கிளைஞர் - கிளைபோல்பவர்; ஞ்-பெயரிடைநிலை. பொருட்டு - நான்காம் வேற்றுமைச் சொல்லுருபு. ஆல் - அசை. எனும்பெயர் - என்னும்வார்த்தையென்றபடி. தனதுதம்பிமாரையும் உளப்படுத்தி, 'எம்கிளைஞர்' எனப் பன்மையாற் கூறினன். அவிந்தான் - தன்னைப் பிறன்போற் கூறியது; தன்மைப் படர்க்கை. காகம் - காஎன்றுகத்துவது; காரணக்குறி. (கஙஉ)

பின்பு பலநும் விரைந்து செல்லுதல்.

எனத்தருமன்வார்த்தைதனக்கிசையாமலிவனேக
வனைத்துவரூதினிகளொடுமைவருமாங்குடனேகக்
கனத்தில்வடிவுடையோனுங்காதலுறுமுன்னோனும்
வினைத்தடந்தேர்விதுரனொடும்விரைவுடனேகினரம்மா.

(இ - ள்.) என - என்றுசொல்லி, தருமன் வார்த்தைதனக்கு இசையாமல் - யுதிஷ்டிரனது வார்த்தைக்கு இணங்காமல், இவன் ஏக - துரியோதனன் செல்ல,—அனைத்து வரூதினிகளொடும் - எல்லாச்சேனைகளுடனும், ஐவரும் - பஞ்சபாண்டவர்களும், ஆங்கு உடன் ஏக - அவ்விடத்திற் கூடச்செல்ல,— கனத்தில் வடிவு உடையோனும் - மேகம்போலத் திருமேனியையுடைய கண்ணனும், காதல் உறு முன்னோனும் - (அவனிடத்து) ஆசை மிக்க தமையனான பலராமனும், வினை தட தேர் விதுரனொடும் - தொழில்முற்றிய பெரியதேரையுடைய விதுரனுடன், விரைவுடன் ஏகினர் - துரிதமாகச் சென்றார்கள்; (எ - று.)— அம்மா - ஈற்றசை.

காதல் உறு - (துரியோதனனிடத்து) அன்புமிக்க எனினுமாம்; அன்றி, வேட்கைமிக்க என்றலும் ஒன்று: 'காமபாலன்' என்ற பலராமனபெயராலும், அவன் மிக்ககாதலுடையா னென்பது அறிக. முன்னோன் - முன்பிறந்தவன். சிறந்த தேர்வீரன் [அதிரதாதிபன்] என்பது தோன்ற, 'வினைத்தடந்தேர்விதுரன்' என்றார். வினையென்பதை விதுரனுக்கு அடைமொழியாக்கி, போர்த்தொழிலிற் சிறந்த வென்றும் உரைக்கலாம். கனத்தில், இல்-ஐந்தனுருபு,ஒப்பு.

யமுனைகடந்து சமந்தபஞ்சகஞ்சேர்ந்து போர்தொடங்கல்.

கலங்கள்பலவினமேறிக்காளிந்திக்கரையேறித்
தலங்களினற்றலமானசமந்தபஞ்சகமெய்தி
வலங்கொள்படைத்தலைவரெலாம்வளைத்தகடலெனவாளம்
விலங்கலெனச்சூழ்நிற்பவெஞ்சமரந்தொடங்கினரே.

(இ - ள்.) பல இனம் கலங்கள் ஏறி - பலவகைப்பட்ட மரக்கலங்களிலேறி, காளிந்தி கரை ஏறி - யமுனாநதியைக் கடந்து அதன் அக்கரையில் ஏறி, தலங்களில் நல் தலம் ஆன சமந்தபஞ்சகம் எய்தி - புண்ணியஸ்தலங்களுள் சிறந்த தலமான சியமந்தபஞ்சகத்தை யடைந்து,—வலம் கொள் படை தலைவர் எலாம் - வலிமைகொண்ட சேனைத்தலைவர்களெல்லோரும், வளைத்த கடல் என - (பூமியைச்)சூழ்ந்துள்ள கடல்போலவும்,வாளம் விலங்கல் என - (அக்கடலைச் சூழ்ந்துள்ள) சக்கரவாளகிரிபோலவும், சூழ் நிற்ப - சூழ்ந்துநிற்க, வெம் சமரம் தொடங்கினர் - (துரியோதனனும் வீமனும்) கொடியபோரைச் செய்யத்தொடங்கினார்கள்; (எ - று.)

சூழ்நிற்ப என்பதில், சூழ் என்ற பகுதியே சூழ்ந்து என வினையெச்சப் பொருள்பட்டது; இதில் வினையெச்சவிகுதி முதலியன புணர்ந்துகெட்டனெனக. இனி, நில் என்பதைத் துணைவினையெனக் கொண்டு, சூழ்நிற்ப - சூழ எனினுமாம். கலங்கள்பலஇனம் - பெரும்படகு சிறுபடகு தோணி முதலியன. காளிந்தி - களிந்த மென்னும் மலையினின்று உண்டாவது என்க் காரணப்பொருள்படும் வடமொழிப்பெயர். வலம் - வெற்றியுமாம். படைத்தலைவர் - திட்டத்துய்மனுதியர். சக்கரவாளம் என்பது, வாளமென முதற்குறையாய் நின்றது. விலங்கல் - (ஒருபுறத்தே) விலகிநிற்ப தென்பதுபற்றிய காரணப்பெயர்.

இருவரும் போர்க்குச் சித்தராய்ச் சிங்கநாதஞ்செய்தல்.

பூங்கவனத்துட்புகுந்துபூணனைத்துந்திருத்திமணி
யோங்கலிவையிரண்டுயிர்பெற்றுடற்றுகின்றதெனவுரைப்ப

வாங்கியதண்டமுந்தோளுமலர்க்கரமும்வலிகூர
வாங்குலகுசெவிடுபடவடலரிநாதமுஞ்செய்தார்.

(இ - ள்.) பூங்கவனத்துள் புகுந்து - (அங்குள்ளதொரு) பூஞ்சோலையி னுள்ளே சென்று, பூண் அணைத்தும் திருத்தி - (தந்தமது) ஆபரணங்களையெல் லாம் ஒழுங்குபட அமைத்துக்கொண்டு, மணி ஓங்கல் இவை இரண்டு உயிர் பெற்று உடற்றுகின்றது என உரைப்ப - அழகியமலைகளிரண்டு உயிர்பெற்றுப் போர்செய்கிற விதமென்று உவமைகூறும்படி, வாங்கிய தண்டமும் தோளும் மலர் கரமும் வலி கூர-கைக்கொண்ட கதாயுதமும் தோள்களும் தாமரைமலர் போன்ற கைகளும் வலிமைமிக, ஆங்கு - அப்பொழுது, (அவ்விருவரும்),உலகு செவிடு பட - உலகமுழுதும் (ஒலிமிகுதியைப் பொறுக்கமாட்டாமற்) செவி டாம்படி, அடல் அரிநாதமும் செய்தார் - வலிமைக்குரிய சிங்கநாதத்தையுஞ் செய்தார்கள்; (எ - று.)

சிங்கநாதஞ்செய்தல் - சிங்கம்கர்ச்சிப்பதுபோலக் கர்ச்சித்தல். பூண்திருத் துதல், போர்செய்கையில் தடையாகாமைப்பொருட் டென்க. பூங்கவனம் - பூங்காவன மென்பதன் குறுக்கல். ஓங்கல் - உயர்ச்சி; அதனை யுடைய மலைக்குத் தொழிலாகுபெயர். செவிடுபடுதல் - செவிப்புலனிழத்தல். (கசுரு)

இதுவும், அடுத்தகவியும் - வீமனது வீரவாதம்.

கந்தநறுமலர்க்கூந்தற்காந்தாரிபுதல்வனையக்
குந்திமகன்முகநோக்கிக்கொடுஞ்சொற்கள்சிலசொல்வான்
கந்தருவரன்றுன்னைக்கட்டியதோள்வலிகொண்டோ
சிந்தைதனின்வலிகொண்டோசெருச்செயநீபுகுந்தாயே.

(இ - ள்.) கந்தம் - இயற்கைமணமுள்ளதும், நறு மலர் - பரிமளமுள்ள பூக்களைச் சூடியதுமான, கூந்தல் - தலைமயிரையுடைய, காந்தாரி - காந்தாரியி னது, புதல்வனை - புத்திரனான துரியோதனனை, அ குந்தி மகன் - குந்திதேவி யின்குமாரனான அவ்வீமன், முகம் நோக்கி-முகத்தைப் பார்த்து, கொடு சொற் கள் சில சொல்வான் - கொடியசிலவார்த்தைகளைக் கூறுவான்; (அவை யாவை யெனின்),— அன்று-முன்னொருசமயத்தில், உன்னை—, கந்தருவர் - (சித்திர சேனன் முதலிய) கந்தர்வர்கள், கட்டிய - (கயிறுகொண்டு) கட்டின, தோள் வலி கொண்டோ - தோள்களின்வலிமையைக்கொண்டுதானோ, அன்றி - சிந் தைதனின் வலி கொண்டோ-மனததிலுள்ள துணிவுகொண்டுதானோ, நீ செரு செய புகுந்தாய் - நீ (என்னோடு) போர்செய்யத்தொடங்கினாய்? (எ - று)

எம்மால் எளிதில் வெல்லப்பட்ட சித்திரசேனன் முதலியோரால் எளிதிற் கட்டப்பட்ட தோள்களையுடையை யாதலால், நீ என்னோடு போர்செய்தற்கு ஏற்ற புஜபல முடையாயல்லை; ஆராய்ச்சியில்லாத உன்மனத்தில் விடாப்பிடி யாகக்கொண்டுள்ள துணிவினாலேயே போர்தொடங்குகின்றாய்போலு மென இகழ்ந்தவாறு. சிந்தைதனின்வலி - மனோபலம், தைரியம். உத்தமசாதிமக ளிரின் கூந்தலில் இயற்கைநறுமண முண்டென்றல், மரபு. காந்தாரி - காந்தார தேசத்து அரசன் மகள்; வடமொழித் தத்திதாந்தநாமம். கந்தருவர் - பதினெட் டுத்தேவகணங்களுள் ஒருசாதியார்.

மூன்றுமடியிற் குறித்த கதை:—பாண்டவர் வனவாசஞ்செய்கையில் ஒரு கால், துரியோதனன் தன்பெருமையைக்காட்டிப் பாண்டவரை அழுங்கச்செ ய்யவேண்டுமென்று தீயசிந்தனைகொண்டு வெகுஆடம்பரத்துடனே குடும்பத் தோடுஞ் சென்று அவர்கள்வசிக்கிற இடத்துக்கு அருகில் ஒருகுளத்தின்கரையி லே தங்கி உண்ணுதல் பூசுதல் ஆடல்பாடல்களைநடப்பித்தல் முதலிய பலவிளை யாட்டுக்களைச் செய்துகொண்டு களித்திருந்தபோது, இந்திரனேவலால் சித்திர

சேனனென்னுங் கந்தருவராசன் மற்றும்பலதேவசாதியாருடனே வந்து துரியோதனனைக் கயிற்றாற்கட்டி வானத்தில் தூக்கிக்கொண்டுபோகப் பிரயத்தனப்பட, அப்பொழுது கர்ணன்முதலாயினோர் எதிர்த்துப்பொருது தோற்றோட, பின்பு துரியோதனனது பரிதாபமானநிலைமையை அவனது பரிவாரத்தால் அறிந்த தருமபுத்திரனது கட்டளையால் வீமன் அருச்சுனனோடுசென்று கந்தருவரை வென்று துரியோதனனை மீட்டுக் கட்டவிழ்த்துவிடுவித்தனன் என்பது, ஆரணியபருவத்து வரலாறு. (கசுச)

இடிப்பதுமின்றிருகதையுமென்கதையாலிடியுண்டு
துடிப்பதுமின்றுன்னுடலமுயிர்துறக்கங்குடியேற
முடிப்பதுமின்றழற்பிறந்தாண்முகிலோதிமுகில்பொழிநீர்
குடிப்பதுமின்றொருவேனின்குருதிநீர்குடித்தாலே.

(இ - ள்.) இரு கதையும்-(நம்இருவரது கையிலுள்ள) கதாயுதங்கள்இரண்டும், இடிப்பதும் - தாக்குவதும், இன்று - இன்றைக்கே: என் கதையால் இடியுண்டு - எனதுகதையினால் தாக்கப்பட்டு, உயிர் துறக்கம் குடி ஏற - (உனது) உயிர் வீரசுவர்க்கத்தில் ஏறிச்செல்ல, உன் உடலம் துடிப்பதும்-உனதுஉடம்பு துடிப்பதும், இன்று - இன்றைக்கே: அழல் பிறந்தாள் - யாகாக்கினியினின்று தோன்றியவளான திரௌபதி, முகில் ஓதி - மேகம்போலக் கரிய கூந்தலை, முடிப்பதும் - முடித்துக்கொள்வதும், இன்று - இன்றைக்கே: ஒருவேன் - ஒப்பற்றவனான நான், நின் குருதி நீர் குடித்தாலே-உனது இரத்தப்பெருக்கைக் குடித்தபின்பே, முகில் பொழி நீர் குடிப்பதும்-மேகம்பொழிகிற தண்ணீரைக் குடிப்பதும், இன்று - இன்றைக்கே; (எ - று.)

"அரசவையி லெனை யேற்றி யஞ்சாமல் துகில்தீண்டி யளகந்தீண்டி, விரைசெ யளியினம் படி தார் வேந்தரெதிர் தகாதனவே விளப்பு வோரைப், பொருசமரில் முடி துணித்துப் புலால்நாறு வெங்குருதி பொழிய வெற்றி, முரசறையும் பொழுதல்லால் விரித்தகுழ லினியெடுத்து முடியே னென்றாள்", "பாஞ்சாலிக் கரசவையிற் பழுதுரைத்தோ னுடலெனது படையா லேழி, போஞ்சாலி னிணஞ்சொரியத் துணைவரொடு குலயாளப் பொருவேன் யானே, தீஞ்சாலிவிளைபழனத் திருநாட்டோர் கேண்மி னெனச் செந்தீமூள, வேஞ்சாலி னறுநெய்போல் வெஞ்சினத்தான் வஞ்சினமும் விளம்புவானே", "வண்டாருங் குழல்பிடித்துத் துகிலுரிந்தோ னுடற்குருதி வாரியள்ளி, யுண்டாகங் குளிர்வதன்மு னிக்கரத்தாற் புனலுண்ணே னொருகாலென்கைத், தண்டால் வெம் புனலெற்றி மீதெழுந்துவிழுந்திவலை தண்ணீராகக், கொண்டாவி புரந்திடுவெனிதுவிரத மெனவெனவுங் கூறினனே" என்று கீழ்ச் சூதுபோர்ச்சருக்கத்திற்கூறியபடி திரௌபதியும் வீமனும்சபதஞ்செய்துள்ளாராதலால்,இங்ஙனம் வீமன் வீரவாதங்கூறினான்.

கீழ்க்காட்டிய கவிகளுள் மூன்றாவதில் 'குழல்பிடித்துத்துகிலுரிந்தோன்'என்றது இரட்டுறமொழிதலால் - இயற்றுதற்கருத்தாவின்மேலும் ஏவுதற்கருத்தாவின்மேலும் நின்று, கூந்தலைப்பற்றித் துகிலுரிந்த துச்சாதனனையும், அங்ஙனஞ்செய்வித்த துரியோதனனையும் ஒருங்கேபுணர்த்து மென நுண்ணிதின் உணர்க; இங்ஙனங் கொள்ளாவிடின், இங்கு 'நின்குருதிநீர்குடித்தாலே முகில்பொழிநீர் குடிப்பதும்' என்றது இயையாதாம்.

திரௌபதியை 'அழற்பிறந்தாள்' என்ற விவரம்:—அங்கிவேசமுனிவனிடத்தில் துரோணாசாரியனுடன் வில்வித்தையைக் கற்றுவந்தபொழுது 'எனக்கு இராச்சியங்கிடைத்தபின் பாதி உனக்குப் பங்கிட்டுக் கொடுப்பேன்' என்று அவனுக்கு வாக்குத்தத்தஞ்செய்திருந்த பாஞ்சாலராசனாகிய துருபதன், பின்பு ஒருகாலத்தில் அவன்வந்து தன்குழந்தைக்குப் பாலுக்காகப் பசுவேண்டுமென்று

கேட்டபொழுது, முகமறியாதவன்போல 'நீ யார்?' என்றுவினவிச் சிலபரிகாச வார்த்தைகளைச்சொல்லிச் சபையிற் பங்கப்படுத்த, அப்பொழுது, துரோணன் 'என்மாணாக்கனாகிய இராசகுமாரனைக்கொண்டு உன்னைவென்று கட்டிக்கொணரச்செய்து உன் அரசையுங் கைக்கொள்வேன்' என்று சபதஞ்செய்துவந்து, பின் அங்ஙனமே அருச்சுனனைக்கொண்டு பங்கப்படுத்தி அப்பிரதிஜ்ஞையை நிறைவேற்றிவிட, துருபதன் துரோணன்மீது மிகக்கறுக்கொண்டு, அவனைக் கொல்லும்பொருட்டு ஒருபுத்திரனும், அருச்சுனனது பலபராக்கிரமங்களைக் கண்டு மகிழ்ந்து அவனுக்கு மணஞ்செய்துகொடுக்கும்பொருட்டு ஒருபுத்திரியும் உதித்தல்வேண்டு மென்று புத்திரகாமயாகஞ்செய்விக்க, அவ்வோமத்தீயினின்று திருஷ்டத்யும்நனும் திரௌபதியும் தோன்றின ரென்பதாம்.

வீரவாதமாதலால், 'ஒருவேன்' என்று தற்புகழ்ச்சியாக் கூறினன். இடியுண்டு என்பதில், உண் - செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் விகுதி: 'படு' என்பதுபோல. உடலம், அம் - சாரியை. துறக்கம் - (இவ்வுலகத்தைத்)துறந்து செல்லு மிடமெனக் காரணப்பெய ரென்பர்; இனி, சுவர்க்க மென்ற வடமொழி துறக்கமெனச் சிதைந்த தென்பாரும் உளர். முகிலோதி - உவமைத்தொகை. இன்று - இகரச்சுட்டடிப்பாப் பிறந்து ஏழாம்வேற்றுமை யிடப்பொருளுணர்த்திநின்ற இடைச்சொல். (கஙரு)

வேறு.

துரியோதனன் வீமனைப் போர்தொடங் கென்றல்.

இனிவிடுமேன்மேலுரைக்கும்வாசக மெனதுயிர்நீகோறலிற்றை
நாளிடை,யுனதுயிர்வானேறவிட்டுநானுல கொருகுடைமாநீழல்வை
த்தலேதுணி,வனிகமுமாயோனடத்துதேருடை யநுசனும்வாளாண்
மையற்றமூவரு, நினைவுடனேகாணவச்ரவாயுத நிகர்கதைவீமாவெடு
த்திநீயென.

இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்.

(இ - ள்.) 'வீமா - வீமனே! இனி - இனிமேல், மேல் மேல் உரைக்கும் வாசகம் - மிகுதியாகச்சொல்லும் வீரவாதங்களை, விடு - விட்டுவிடு; இற்றை நாளிடை - இன்றைத்தினத்திலே, எனது உயிர் நீ கோறல்-என்னுடையஉயிரை நீ கொல்லுதல், (அல்லது), நான்—, உனது உயிர் வான் ஏற விட்டு - உன்னுடையஉயிரை வீரசுவர்க்கத்தின்மீது ஏறிச்செல்லுமாறு அனுப்பிவிட்டு [உன்னைக்கொன்று என்றபடி], உலகு - பூலோக முழுவதையும், ஒரு குடை மா நீழல்-(எனது)ஒற்றைவெண்கொற்றக்குடையின் பெரியநிழலில், வைத்தலே- வைத்தல் (ஆகிய இரண்டிலொன்று), துணிவு-நிச்சயம்; அனிகமும் - (உனது) சேனையும், மாயோன் நடத்து தேர் உடை அநுசனும் - மாயவனாகண்ணனாற் செலுத்தப்படுந் தேரையுடைய உன்தம்பியான அருச்சுனனும், வாள் ஆண்மை அற்ற மூவரும் - ஆயுதத்தேர்ச்சியில்லாத (தருமன் நகுலன் சகதேவன் ஆகிய உன்னுடன்பிறந்தவர்) மற்றைமூன்றுபேரும், நினைவுடனே காண - (யாவர்வெல்வரோ வென்னுஞ்) சிந்தையுடனே பார்க்க, வச்ர ஆயுதம் நிகர் கதை நீ எடுத்தி - வச்சிராயுதத்தையொத்த கதாயுதத்தை நீ (போர்செய்தற்கு) எடுத்துக்கொள்வாய்,' என - என்று (துரியோதனன்) சொல்ல, (எ - று.)

வீணாக மேன்மேற் பலவார்த்தைசொல்லுதலிற் பயனென்னை? தொழிலில் திறமைகாட்டுதலே தகுதி யென்பான், 'இனி விடு மேன்மேலுரைக்கும் வாசகம்' என்றான். என்றும்அழியா நித்தியமாகிய உயிருக்குக் கொல்லுதலென்றது, உடம்பினின்று ஒழித்தலேயாம். உலகு ஒருகுடைமாநீழல் வைத்தல் - பூமிமுழுதையுந் தனியே அரசாளுதல். நீழல் - நிழலென்பதன் நீட்டல்விகா

ரம். அநீக மென்ற வடசொல், அனிகமெனத் திரிந்தது. மூன்றாமடியால், துரியோதனன் பஞ்சபாண்டவருள் வீமனை யொழிய மற்றையோரை ஒரு பொருளாகச் சிறிதும்மதியாமை நன்குவெளியாம்; இதுபற்றியே, வீமனைக் கொன்றமாத்திரத்தால் பிறரையழித்து அரசுரிமைமுழுவதும் பெறுதல் எளிதென்பதுபட இரண்டாமடியிற் கூறியவாறு. உன்உடன்பிறந்தார் நால்வருள் அருச்சுனனிடத்து மதிக்கப்படுகிற சிறிதுபலபராக்கிரமமும் அவனுக்கு இயல்பாய அமைந்ததன்று; கண்ணன் தேர்செலுத்துதலா லாகிய செயற்கையாற்றலேயாம்: அந்தக்கண்ணன்தானும் நேர்பட நின்று வெற்றிகாட்டுந் திறமுடையானல்லன்; மாயையை மேற்கொண்டே தொழில்செய்யுந் தரமுடையானென்று பழிப்பான், 'மாயோ னடத்து தேருடை யநுசன்' என்றான். அநுஜன் - வடசொல்; பின்பிறந்தவ னென்று பொருள். வாளாண்மை - ஆயுதங்களாற்செய்யுந் திறமை; வாள் - இங்கே, ஆயுதப்பொது. மூவர் - தொகைக்குறிப்பு. வஜ்ரம் - வடசொல். வச்சிராயுதம், இந்திரனுக்கு உரியது; நூறுகூர்நுனியுடையது. அது மலைகளையும் இறகறுத்த வலிமையுடையதாதலால், அதனை உவமையாக எடுத்துக்கூறினான்.

இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் கருவிளச்சீர்களும், இரண்டாஞ்சீரும் ஆறாஞ்சீரும் தேமாச்சீர்களும், மூன்றாஞ்சீரும் ஏழாஞ்சீரும் புளிமாச்சீர்களும், நான்காஞ்சீரும் எட்டாஞ்சீரும் கூவிளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச் சந்தவிருத்தங்கள்.

தனதன தானா தனத்த தானன தனதன தானா தனத்த தானன—என்பது, இவற்றிற்குச் சந்தக்குழிப்பாம். (கசுசு)

## இருவரும் போர்தொடங்கல்.

நடையொழியாதோன்விறற்குமாரனு நயனமிலாதோன்முதற் குமாரனு,மடலொடுகார்வானிடிக்குமாறென வதிர்வுறவேயோடிமத் தவாரணம், விடையரிமாவேறெனப்ரதாபமும் விசயமுமேன்மேன் மிகுத்துமேலிடு, கடையுகநாள்வாயுவொத்துநீடிய கதைகெழுபோ ராதரித்துமூளவே.

(இ - ள்.) நடை ஒழியாதோன் - (எப்பொழுதும்) சஞ்சரித்தல் இடையறாதவனான வாயுதேவனது, விறல் குமாரனும் - வெற்றியையுடைய மகனான வீமசேனனும், நயனம் இலாதோன்-கண்களில்லாதவனான திருதராட்டிரனது, முதல் குமாரனும் - முதல்மகனான துரியோதனனும்,—அடலொடு கார் வான் இடிக்கும் ஆறு என - வலிமையோடு கார்காலத்துமேகம் இடியிடிக்கும் விதம் போல, அதிர்வு உற - அதிர்ச்சியுண்டாக, ஓடி - விரைந்துவந்து நெருங்கி,—மத்தம் வாரணம் (என) - மதயானைகள்போலவும், விடை (என) - விருஷபங்கள்போலவும், அரி மா ஏறு என - ஆண்சிங்கங்கள்போலவும், ப்ரதாபமும் விசயமும் மேல் மேல் மிகுத்து - பராக்கிரமமும் வெற்றியும் மேன்மேல் அதிகமாகப்பெற்று,—யுகம் கடை நாள் மேல் இடு வாயு ஒத்து - கற்பாந்தகாலத்தில் மிகுதியாகவீசுகிற ஊழிப்பெருங்காற்றைப் போன்று [மிகஉக்கிரமாய்], நீடிய கதை கெழு போர் ஆதரித்து மூள - நீண்ட கதாயுதங்களைக்கொண்டு செய்யும் போரை விரும்பிமுயல, (எ - று.)

நடை - நடத்தல்; 'ஐ'விகுதிபெற்ற தொழிற்பெயர்; நட என்ற பகுதியின் ஈற்றுஅகரம் தொக்கது. வாயு,சதாகதியாதலால், 'நடையொழியாதோன்' எனப்பட்டான். கார் - கருமை யென்னும் பண்பின் விகாரம்; இது - அங்கிறமுடைய மேகம் மழைபொழியுங் காலத்துக்கு இருமடியாகுபெயராம். மத்தவாரணம், ப்ரதாபம் - வடசொற்கள். (கசுஎ)

இனி ஐந்துகவிகள் - இருவருஞ்செய்யும் கதைப்போர்த்திறம்.

ஒருமணிநீலாசலத்தினோடெதி ரொருமுழுமாநீலவெற்புநீடமர் [ர்க
புரிவதுபோன்மேலசைத்துமீமிசை பொறியெழுமாறுமலொத்தவீர
ளிருவருமாகாயமுட்டநாகர்க ளிறைகொளநாலுநாதிக்குநாகரும்
வெருவரநீணாகருட்கவீசினர் விசையுடனேபோர்விறற்கதாயுதம்.

(இ - ள்.) ஒரு மணி நீல அசலத்தினோடு - நீலரத்தினமயமான ஒருமலை யுடனே, எதிர் - எதிரில், ஒரு முழு மா நீலம் வெற்பு - பெரியசிறந்த நீலரத்தி னமயமான மற்றொருமலை, நீடு அமர் புரிவது போல் - மிக்கபோரைச் செய்வ துபோல,—மாறு மல் ஒத்த வீரர்கள் இருவரும் - மாறுபடாமல் (ஒருவரையொ ருவர் வலிமையால்)ஒத்த வீரர்களாகிய (வீமன் துரியோதனன் என்ற)இரண்டு பேரும்,—போர் விறல் கதாஆயுதம்-போருக்குரிய வலிமையையுடைய தங்கள் கதாயுதங்களை, மீமிசை பொறி எழ மேல் அசைத்து-ஆகாயத்தின்மேல் நெருப் புப்பொறிபறக்கும்படி மேலெடுத்து அசைத்து,—ஆகாயம் முட்ட - மேலுலகத் தைத் தாக்கும்படியாகவும், நாகர்கள் இறை கொள - (அங்குள்ள) தேவர்கள் சிதறும்படியாகவும், நால் நாலு திக்கு நாகரும் வெருவர - எட்டுத்திசையிலுள்ள (திக்குப்பாலகர்களாகிய) தேவர்களும் அஞ்சும்படியாகவும், நீள் நாகர் உட்க - நீண்டபாதாளலோகத்தார் அஞ்சும்படியாகவும், விசையுடனே வீசினர்-வேகத் தோடு சுழற்றினார்கள்; (எ - று.)

நீலாசலம் - தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர்; 'ஒருமணிநீளாசலத் தினோடு' என்று பாடமோதி, நீண்டஒரு மாணிக்கமலையினோடு என்று உரைப் பாருமுளர்; அப்பொழுது, அசலமென்பது ஆசல மென நீட்டல்விகாரம்பெற்ற தென்க. முழுநீலம் - உத்தம இலக்கணம் முழுவதும் அமைந்த நீலரத்தினம். நீலமென்பது - நீலநிறமுள்ள இரத்தினத்தைக் குறிக்கும்போது, பண்பாகுபெய ரென்பது, தமிழர்கொள்கை: வடநூலின்படி அது ஆகுபெயரன்றி, உரியபெய ரேயாம்; விசேடணச்சொல் விசேடியவாசகமாய் நின்றதென்க. மீமிசை - ஒரு பொருட்பன்மொழி. இருவரும் பதினாயிரம்யானைபலங்கொண்ட குருகுலத்து அரசர்களாதலால், 'மாறுமலொத்தவீரர்கள்' என்றார். ஆகாசம் - வடசொல். கம் - சுகம், அது அல்லாதது, அகம்; அதாவது - துக்கம்: அது இல்லாதஇடம்- நாகம்; எனவே, சுவர்க்கமாம்: அங்குஉள்ளார், நாகர். இறைகொள - இறைய; கொள் - துணைவினை; இனி, நோய்கொள்ள என்றும் பொருள்கொள்ளலாம். நாலுநாலு - உம்மைத்தொகை; நாலும் நாலும். அஷ்டதிக்பாலகர் - கிழக்குமுத லாக முறையே இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபே ரன், ஈசானன் எனக் காண்க. (ககூஎ)

உகவையினாலேசிரிப்பர்நீள்சின முறுதலினாலேமடிப்பர்வாய்மலர்
புகையெழவேதீவிழிப்பர்மார்பொடு புனைகிரிபோலேதடிப்பர்தோளிணை
யிகல்புரிநூலோடுகற்றசாரிகை யிடம்வலமேபோவர்வட்டமாகுவர்
முகடுறமீதேகுதிப்பர்பார்மகண் முதுகுறநேரேகுதிப்பர்மீளவே.

(இ - ள்.) (இரண்டுபேரும்), உகவையினாலே - (போர்செய்தலிலுள்ள) உற்சாகத்தினாலே, சிரிப்பர் - சிரிப்பார்கள்; நீள் சினம் உறுதலினாலே - மிக்க கோபம்பொருந்துதலினாலே, வாய் மலர் மடிப்பர் - தாமரைமலர்போன்ற தங் கள்வாயிதழ்களை மடிப்பார்கள்; புகை எழ - புகைகிளம்பும்படி, தீ விழிப்பர் - நெருப்புப்புறப்பட உக்கிரமாகக் கண்விழித்துப்பார்ப்பார்கள்; புனை கிரி போ லே-அழகியமலைகள்போலுள்ள, மார்பொடு - மார்பும், தோள் இணை- இரண்டு தோள்களும், தடிப்பர் - பருத்துப்பூரிப்பார்கள்; இகல் புரி நூலோடு - போர் செய்யும்வகையைக் கூறுகிற நூல்களின்படி, கற்ற - தாம் பயின்ற, சாரிகை -

சஞ்சாரக்கிரமத்தால், இடம் வலமே போவர் - இடசாரியும் வலசாரியுமாகச் செல்வார்கள்; வட்டம் ஆகுவர் - மண்டலமாகச் சுழன்றுவருவார்கள்; முகடு உற - ஆகாயமுகட்டையளாவ, மீதே குதிப்பர் - மேலெழும்புவார்கள்; பார் மகள் முதுகு உற - பூமிதேவியினது முதுகு வருந்தும்படி, மீள - மீண்டும், நேரே குதிப்பர் - நேராகவே குதிப்பார்கள்; (எ - று.)

உகவை - உகத்தல், மனங்களித்தல்; தொழிற்பெயர்: உக - பகுதி, வை - விகுதி. நீள்சினம் - வினைத்தொகை. "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே" என்றபடி, எல்லாமலர்களுள்ளுஞ் சிறந்ததாகிய தாமரை, அடைமொழிகொடாமல் 'மலர்' எனப்பட்டது. வாய்க்குத் தாமரைமலர், செம்மைமென்மையழகுகளால் உவமம். இனி, மலர் - ஆம்பல்மலருமாம்; அதனையும் வாய்க்கு உவமை கூறுதலுண்டு. மார்பொடு தோளிணை தடிப்பர் - "உயர்திணைதொடர்ந்த பொருள்முத லாறும், அதனொடு சார்த்தின் அத்திணைமுடிபின" என்றபடி உயர்திணையைச்சார்ந்த அஃறிணையாகிய சினைப்பெயர் அவ்வுயர்திணைமுடிபையேகொண்ட திணைவழுவமைதி. சாரிகை - நடைவிகற்பம். வலசாரி - வலப்புறமாகச் செல்லுதல். இடசாரி - இடப்புறமாகச் செல்லுதல். வட்டம - மண்டலமாகச் சுற்றிவருதல். வட்டம் - வ்ருத்த மென்ற வடசொல்லின் சிதைவு. ஆகுவர் என்பதில், ஆ - பகுதி, கு - சாரியை; ஆகு - பகுதி யென்றலும் உண்டு; 'போகு' என்பதிலும் இவ்வாறே. உற - ஊறுடைய. (கசுகூ)

ஒருகையினாலேசுழற்றிவான்முகடுடைபடமேலேகிளப்பிநீள்கதை
யிருநிலமீதேமறித்துவீழுமுனிருகையினாலேதரிப்பர்சார்பொடு
விரைவுடனேதாளமொத்தியோடுவர் விசையுடனேகாலொதுக்கிமீளுவர்
பரிதிகள்போலேவிருத்தமாமுறை பவுரிகொளாவீசிநிற்பர்வீரரே.

(இ - ள்.) வீரர் - அவ்விரண்டுவீரர்களும், நீள் கதை - நீண்டகதாயுதங்களை, ஒரு கையினாலே சுழற்றி - ஒருகையாற் சுற்றி, வான் முகடு உடைபட மேலே கிளப்பி - அண்டகோளத்தின்மேல்முகடு உடைபடும்படி அதனை மேலேவீசி, இரு நிலம்மீதே மறித்து வீழுமுன் - பெரியதரையின்மேல்மீண்டுவிழுவதற்குமுன்பே, இரு கையினாலே சார்பொடு தரிப்பர் - (தமது) இரண்டுகைகளாலும் ஆதாரமாக ஏந்திக்கொள்வார்கள்: விரைவுடனே - வேகத்தோடு, தாளம் ஒத்தி - தாளவடைவு போட்டுக்கொண்டு, ஓடுவர் - விலகியோடுவார்கள்: விசையுடனே - வேகத்துடனே, கால் ஒதுக்கி - கால்களை ஒதுங்கவைத்துக்கொண்டு, மீளுவர் - திரும்புவார்கள்: பரிதிகள் போலே - பரிவேஷங்கள்போல, விருத்தம் ஆம் முறை - வட்டமாகியநிலைமையுண்டாம்படி, பவுரி கொளா - சுழற்சியைக் கொண்டு, வீசி நிற்பர் - (கதைகளைச்) சுழற்றிக்கொண்டு நிற்பார்கள்; (எ - று.)

பவுரிகொள்ளுதல் - தாம்சுழலுதல். பரிதி - சூரியனைச்சூழ்ந்து அருகில் தோன்றும் வட்டம்; ஊர்கோளெனப்படும்; வடசொல். சுழன்றுகொண்டே கதையைச் சுழற்றும்போது கதைச்சுழற்சியின் வட்டத்துக்குப் பரிவேஷமும், சுழற்றும் வீரனுக்குச் சூரியனும் உவமை யெனக் காண்க. வ்ருத்தம் - வடசொல். பரிதி - சூரியமண்டலமுமாம். (கஎ0)

மலரடிதாளூருவட்டமார்தனம் வயிறுமனோகரபற்பமார்பொடு
குலகிரிநேர்தோள்கழுத்துநீடணல் குறுநகைகூர்வாய்கதுப்புவார்குழை
யிலகுபுருவநனெற்றியானன மெனவடைவேகூறுறுப்பியாவையு
முலைவுறமென்மேன்மிகுத்தமூளையு முதிரமுமாறுதுகுக்கமோதியே.

(இ - ள்.) மலர் அடி - தாமரைமலர்போன்ற பாதங்களும், தாள் - கால்களும், ஊரு - துடைகளும், வட்டம் ஆர் தனம் - வட்டவடிவாயமைந்த தனப்பிரதேசமும், வயிறு - வயிறும், மனோகர பற்பம் - அழகியதாகவுள்ள நாபீகம

ல்மும், மார்பொடு - மார்பும், குல கிரி நேர் தோள் - குலபருவதங்களையொத்த புயங்களும், கழுத்து - கழுத்தும், நீடு அணல் - நீண்ட கீழ்வாயும், குறு நகை கூர் வாய் - புன்சிரிப்பு மிக்க வாயும், கதுப்பு-கன்னமும், வார் குழை - தொங்குகிற குண்டலத்தையுடைய காதுகளும், இலகு புருரம் - விளங்குகிற புருவமும், நல நெற்றி - அழகியநெற்றியும், ஆனனம் - முகமும், என-என்று, அடையே கூறு - முறையே சொல்லப்பட்ட, உறுப்பு யாவையும் - உறுப்புக்களெல்லாம், உலைவு உற - சிதைவடையவும், மேல் மேல் மிகுத்த மூளையும் - மேலு மேலும் அதிகப்பட்ட மூளைகிணமும், உதிரமும்-இரத்தமும், மாறாது உகுக்க-இடையறாதுசிந்தவும், மோதி - (கதாயுதத்தால்) தாக்கி, (எ - று.)—'இருவரும் போர்செய்தார்கள்' எனச் சொல்வருவித்துமுடிக்க.

ஊறு, ஸ்தநம், மநோஹரம், குலகிரி - வடசொற்கள். பற்பம், புரூரம், உதிரம் - பத்மம், ப்ரூ:, ருதிரம் என்ற வடசொற்களின் சிதைவு. மநோஹரம் - (அழகினாற்) காண்பவர்மனத்தைக் கவர்வது. பற்பம் - தாமரைமலர். குலகிரி - சிறந்தமலைகள்; அவை - இமயம், மந்தரம், நிஷதம், விந்தியம், ஹேமகூடம், கைலை, நீலம், கந்தமாதநம் எனப்படும். வார்குழை - அடையடுத்த தானியாகு பெயராகவாவது, வினைத்தொகை யன்மொழியாகவாவது காதைக் குறிக்கும்.

கதைகதையோடேயடிக்குமோதைகொல் கதையுடையோர்தா
நகைக்குமோதைகொ,லெதிர்மொழியோவாதிசைக்குமோதைகொ
லிணையுடலூடேயிடிக்குமோதைகொல், பதயுகமாறுடிவைக்குமோ
தைகொல் பணைபலசூழ்போதமொத்துமோதைகொ, றிதியொடுவா
னூடுசெற்றும்வானவர் செவிசெவிடாமாறதிர்க்குமோதையே.

(இ - ள்.) திதியொடு - நிலையாக, வானூடு-மேலுலகில்,செற்றும் - நிறைந்துள்ள, வானவர் - தேவர்களுடைய, செவி - காதுகள், செவிடு ஆம் ஆறு - செவிடுபடும்படி, அதிர்க்கும் - ஆரவாரிக்கிற, ஓதை - ஓசை,—கதை கதையோடே அடிக்கும் ஓதைகொல் - ஒருகதை மற்றொருகதையோடு தாக்குதலா லாகும் ஓசையோ, கதை உடையோர் தாம் நகைக்கும் ஓதைகொல் - கதையையுடையவராகியஇருவீரரும் சிரித்தலா லாகும் ஓசையோ? ஓவாது எதிர் மொழி இசைக்கும் ஓதைகொல் - இடைவிடாமல் (ஒருவர்க்கொருவர்) எதிரிலே வீரவாதமானவார்த்தைகளைக் கூறுதலாலாகும் ஓசையோ? இணை உடலூடே இடிக்கும் ஓதைகொல் - இரண்டு உடம்புகளிலும் தாக்குதலி னாலாகிய ஓசையோ? பத யுகம் மாறுடி வைக்கும் ஓதைகொல் - இரண்டுகால்களையும் ஒன்றுமாறி யொன்று அடைவுபட வைத்தலா லாகும் ஓசையோ? பல பணை சூழ்போத மொத்தும் ஓதைகொல் - பலவகை யுத்தவாத்தியங்கள் சுற்றிலும்அடிக்கப்படுதலா லாகிய ஓசையோ? (எ - று.)

இங்ஙனம் ஐயவணிபட விகற்பித்துக்கூறினராயினும்,'கதைகதையோடேயடிக்கு மோதை' முதலிய ஓசைகளெல்லாம் அங்குத் தேவர்செவிகளும் செவிடாம்படி மிக்குமுழங்கின வென்றே கருத்துக்கொள்க. 'கொல்' என்ற இடைச்சொல் - ஐயப்பொருளில் வந்தது. ஓவாது என்பதில், ஓவு - பகுதி; இது, ஒருவு என்பதன் மரூஉவெனப்படும். பதயுகம் - வடமொழித்தொடர். திதி - ஸ்திதி என்ற வடசொல் திரிந்தது. இங்குக்கூறிய நகை, வீரத்தினெழுந்த வெகுளி நகை. உடலூடு, ஊடு - ஏழனுருபு. சூழ்போத - சூழ; போத - துணைவினை.

"இருவரும் புயங்களினப்பிமொத்தின ரிகல்புரிந்துதண்டிறுகப்பிடித்தனர், மருவியொன்றொடொன்றனல்கக்கமொத்தினர் வலமிடங்கொள்மண்டல முற்பயிற்றின, ரருகுசென்றுசென்றடிவைத்தடுத்தன ரகலின்றின்றொரிமைப்பின்முட்டினர், திருகுவெஞ்சினத்திடியொத்துரப்பினர் திசையின்மண்

டிபக்கிரிசிந்தியிட்டவே," "வெகுளிகொண்டுகொண்டெதிர்கொக்கரித்தனர் விசையுடன் கிளர்ந்துயரக்குதித்தன, ருகனைவிஞ்சவெங்கதையைச்சுழற்றின ருயர்விசும்பெறிந்தொருகைப்பிடித்தனர், முகமலர்ந்துநின்றதிரச்சிரித்தனர் முதிரவஞ்சினம்பலசுட்டுரைத்தனர்,மகிபர்கண்டகண்டவர்சித்தமுட்கிடவரை யிரண்டுவெஞ்சமர்கற்பதொக்கவே," "இகலிவெங்கொடுங்கதையொத்துமொ த்தொலி யிடியின்வெங்கொடுங்குரலொத்தொலித்தன, மகிதலம்பிளந்ததுசற்ப வற்கமும் வயிறழன்றுநஞ்சுகள்கக்கியிட்டன, திகிரியந்தடங்கிரிபக்குநெக்கது செவிடுகொண்டதிர்ந்ததுதிக்கயக்குல, முகவிண்டதண்டமுமப்புறத்தற முகி ல்களும்பெருங்குலைபுக்கொளித்தவே","விழிகளுஞ்சிவந்தனநெற்றியிற்பொறி வெயர்வுவந்தரும்பினவிப்பிமுத்தென, மொழிகளுங்கிளம்பினநெட்டிடிப்பென முரிமுரிந்தவண்புருவச்சிலைத்துணை, யெழிலுடன்பரந்திறுகத்தடித்தன விமய மந்தரங்களொடொத்தபொற்புய, மழியுமங்கமென்றுருசற்றிளைத்தில ரமரி லன்றருங்கதையிட்டடிக்கவே" என்று கீழ்ச்சருக்கத்தில் வீமனுக்கும் துச்சா சனனுக்கும் நடந்த கதாயுத்தத்தை வருணித்துள்ள செய்யுட்கள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கன. (கஎஉ)

துரியோதனன் வீமனை 'உனது உயிர்நிலை கூறு' என்றல்.

அரிவயமாவேறுயர்த்தசூரனு மழல்விடநாகேறுயர்த்தவீரனு
மிருவருமேவாலிசுக்கிரீவர்க ளெனவமர்மோதாவிளைத்தகாலையில்
வரைமுடிமேனாளொடித்தகாளைதன் மதலையையேழ்பாரடர்த்தகோமக
னுரைதடுமாறாவுயிர்த்துநீயுன துயிர்நிலைகூறாயெனக்கெனாமுனம்.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) வய - வலிமையையுடைய, அரிமா ஏறு - ஆண்சிங்கவடிவமெ ழுதிய கொடியை, உயர்த்த - உயரநாட்டியுள்ள, சூரனும் - வீரனான வீமனும், அழல் - நெருப்புப்போலக் கொடிய, விடம் - விஷத்தையுடைய, நாக ஏறு - சிறந்தபாம்பின்வடிவமெழுதிய கொடியை, உயர்த்த - உயரநாட்டியுள்ள, வீர னும் - வீரனான துரியோதனனும், இருவரும் - ஆகிய இரண்டுபேரும், வாலி சுக்கிரீவர்கள் என - வாலியும் சுக்கிரீவனும் போல, அமர் மோதா - தாக்கிப் போர்செய்து, இளைத்த காலையில் - இளைப்படைந்த சமயத்தில், ஏழ் பார் அடர்த்த கோமகன் - ஏழுதீவுகளாகவுள்ள பூமிமுழுதையும் வென்ற அரசனான துரியோதனன், உரை தடுமாறா - சொற்குழறி, உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, வரை முடி மேல் நாள் ஒடித்த காளைதன் மதலையை - மேருமலைச்சிகரத்தை முன்பொருகாலத்தில் முறித்தெறிந்த வீரனான வாயுவினது குமாரனாகிய வீம னை நோக்கி, உனது உயிர்நிலை நீ எனக்கு கூறாய் எனா முனம் - 'உன்னுடைய உயிர் பிரதானமாக நிற்குமிடமான மர்மஸ்தாநத்தை நீ எனக்குச் சொல்வாய்' என்று வினவுமுன்னே, (எ - று.)—'வீமன் சிரத்திலே யென வுரைத்தபோது' என்று வருங்கவியோடு தொடரும்.

துரியோதனன்வினவியவுடனே சிறிதுங்காலதாமதஞ்செய்யாமல் வீமன் விடைகூறினானென்பதை நன்குவிளக்குதற்கு 'என்றுவினவாதமுன்னே' என் றார். இப்படி காரியவிரைவைக் காட்டும்பொருட்டுக் காரணத்தைப் பின்னும் காரியத்தைமுன்னும் நிகழ்ந்தனவாக, காரணகாரியங்களின் முன்பின்நிகழ்தலா கிய முறையில் முறைபிறழ்வை யேற்றிக்கூறுதல், மிகையுயர்வுநவிற்சியணி யாம்; வடநூலார் 'அத்யந்தாதிசயோக்தி' என்பர். உயிர்நிலை - எந்தஇடத்தில் தாக்குண்டால் உயிர் நிலைகுலையுமோ அப்படிப்பட்ட முக்கியத்தானமென்றபடி. உரைதடுமாறியதும், உயிர்த்ததும், போரிளைப்பால். கூறாய் - உடன்பாட்டு ஏவலொருமை. நாகேறு - நாகஏறு என்பதன் தொகுத்தல். வாலிசுக்கிரீ வர் - பன்மைவிகுதிபெற்ற உயர்திணையும்மைத்தொகை. சிறந்ததையும் பெரி

யதையும் 'ஏறு' என்றல், மரபு. வாலிசுக்கிரீவர் அமர்மோதியவரலாறு - உடு - ஆங் கவியிலும், வரைமுடியொடித்த வரலாறு-எஉ - ஆங்கவியிலும் கூறப்பட்டன.

வீமன் உயிர்நிலைகூற அதில் துரியோதனன் தாக்கல்.

இருவினைகூறுவறத்தின்மாமக னிளவல்விதாதாவொடொத்தகே ள்விய,னுரைதவறுதான்மறைக்குமோவென துயிர்துணைவாகேள்சிர த்திலையென, வரிமகவாேனுரைத்தபோதிவ னவன்முடிமேலேபு டைக்கவீமனு, முருமுறுமாமேருவெற்பதாமென வுரைதடுமாறுவுழ ற்றினனரோ.

(இ - ள்.) இரு வினை கூறு - மாறுபட்டதொழிலை வாயாற்சொல்லுதலு மில்லாத, அறத்தின் மா மகன் - சிறந்ததருமபுத்திரனது, இளவல் - தம்பியும், விதாதாவொடு ஒத்த கேள்வியன் - பிரமதேவனுக்குச்சமமான நூற்கேள்விகளை யுடையவனும், உரை தவறுதான் - வாய்மைதவறுதவனும் ஆகிய, அரி மகவு ஆனேன் - வாயுகுமாரனன வீமன், மறைக்குமோ - (உண்மையை) மறைப் பானே? (மறைபான் ஆதலால்), துணைவா-உடன்பிறந்தவனே! கேள் - (யான் சொல்லுகிறேன்) கேட்பாயாக; எனது உயிர் சிரத்திலே - என்னுடைய உயிர் நிலை எனது தலையிலேயாம்,' என - என்று, உரைத்த போது-சொன்னபொ ழுது, இவன் - துரியோதனன், அவன் முடிமேலே புடைக்க - வீமனது சிர சின்மேல் தாக்க, (அதனால்), வீமனும்—, உரும் உறும் மா மேரு வெற்பு அது ஆம் என - இடிவிழப்பெற்ற மகாமேருமலை போல, உரை தடுமாறு உழற்றி னன் - சொற்குழறிச் சுழன்றுவிழுந்தான்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

இருவினை - 'மனம்வேறு சொல்வேறு மன்னுதொழில்வேறு' ஆனவை. விதாதா - விதிக்குங்கடவுள்; வடமொழிப்பெயர். கேள்வி - கேட்டற்குஉரிய நூற்பொருள்களை அறிந்தார்கூறக் கேட்டல்; தருமோபதேசம்பெறுதல்; இது கல்வியினும் மேம்பட்டதாதலின், தலைமையாக எடுத்துக்கூறப்பட்டது. ஆதி காலத்தில் திருமால் அன்னவடிவங்கொண்டு அருமறைகளை உபதேசிக்க, பிர மன் கேட்டறிந்த மாட்சிமையுடையா னதலின், அவனை நூற்கேள்விக்கு உவ மையெடுத்துக் கூறின ரென்க. வீமன் வாய்மைதவறுதவ னென்பதை, "தெம் முனையினுஞ் செவ்விமென்போகமாமகளிர், தம்முனையினு நாத்தவறு வடல் வீமன்" என்று கீழ்ப் புட்பயாத்திரைச்சருக்கத்துக் கூறியதனாலும் உணர்க. வீமன் துரியோதனனுக்கு உள்ளபடி உயிர்நிலையைக் கூறின னென்ற சிறப்புப் பொருளை 'இருவினைகூறுவறத்தின்மாமகனிளவல் விதாதாவொடொத்தகேள் வியன் உரைதவறுதான் மறைக்குமோ'என்ற பொதுப்பொருள்கொண்டு விள க்கவைத்ததனால், வேற்றுப்பொருள்வைப்பணி; வடநூலார் அர்த்தாந்தர ந்யாஸாலங்காரம்' என்பர்.உள்ளத்திலொன்றும் உதட்டிலொன்றுமாகக் கூறுத யுதிஷ்டிரனது தம்பி, பிரமதேவன்போல நூற்கேள்வியிற் சிறந்தவன், எப்படி ப்பட்டஅரிய சமயத்திலும் சொல்தவறுதவன் என்ற விசேஷணவாக்கியங் கள் வீமன்உண்மைமறைக்கஉரியனல்ல னென்னுங் கருத்தை விளக்குதலால், இங்குக் கருத்துடையடையணியும் அமைந்திருக்குமாறு உணர்க. ஹரி என்ற வடசொல்லின் திரிபாகிய அரி யென்னும் பலபொருளொருசொல், இங்கே வாயுவைக் குறித்தது; இச்சொல்லுக்கு, மிகப்பல பொருள்கள் உண்டு: இடம் நோக்கியுணர்க. உழன்றன் என்ற பொருளில், உழற்றினன் எனநின்றது, தன்வினைப்பொருளில்வந்த பிறவினையாம். (கஎச)

வீமன் துரியோதனனை உயிர்நிலைவினவ அவன் மாற்றிக்கூறல்.

மகிதலமேல்வீழ்தலுற்றுமீளவும் வலியுடனேபோர்குறித்துமேல்வரு பகைவனைநீயாவிநிற்பதேதார்நிலை பகரெனமாறுசேர்ப்பகேதுவு

மிகனுதலூடேயெனக்குமாருயி ரெனமதியாதேயுருத்துவீமனு
முகுதருசெந்நீர்பரக்கமோதின னுயர்கதையாலேசிரத்தின்மேலுமே.

(இ-ள்.) மகிதலம்மேல் வீழ்தல் உற்றும் - தரையிற்சுழன்றுவிழுந்தும், மீளவும் - பின்பு, வலியுடனே போர் குறித்து - (சிறிதுஇளைப்புத்தீர்ந்து) வலிமையுடனே போர்செய்யக்கருதி, வீமனும்—, மேல் வரு பகைவனை - தன்மேல் எதிர்த்து வருகிற பகைவனான துரியோதனனை நோக்கி, நீ ஆவி இருப்பது ஓர் நிலை பகர் என - 'உனது உயிர்நிலைத்தானத்தை நீ சொல்வாய்' என்று சொல்ல,—மாசுறு சர்ப்பகேதுவும் - உண்மைதவறுந்தன்மையுள்ள பாம்புக்கொடியனான துரியோதனனும், எனக்கும் ஆர் உயிர் இகல் நுதலூடே என - 'எனக்கும் அரியஉயிர்நிலை வலியநெற்றியினிடத்தே' என்றுசொல்ல, மதியாதே - (அதைப் பொய்யென்று) கருதாமலே [நம்பி என்றபடி], (வீமனும்), உருத்து - உக்கிரங்கொண்டு, உகுதரு செந்நீர் பரக்க - சிந்துகிறஇரத்தம் எங்கும்பரவும்படி, உயர் கதையாலே - சிறந்த தனதுகதாயுதத்தால், சிரத்தின்மேலும் மோதினன் - (அவனது) தலைமேல் தாக்கினான்; (எ - று.)

துரியோதனன் பொய்ம்மைபேசுபவனென்பது பிரசித்தம்; "பொய்வளர்ந்த மொழிமன்னன்" என்றார், கீழ் உத்தியோகபருவத்திலும். தனது உயிர்நிலை தொடையிலாகவும் அதனைமறைத்துத் துரியோதனன் மாறுபாடாக நெற்றியிலென்று பொய்கூறியதனால், 'மாசுறு சர்ப்பகேது' என்றார். இவனது உயிர்நிலை தொடையிலென்பதை, கஅஉ - ஆங் கவியாலும் உணர்க. 'மாசுறு சர்ப்பகேது' என்ற தொடரில், தனக்குக் கொடியில் அடையாளமாகவிருக்கும் பாம்புபோலவே துரியோதனன் நாவிரண்டுடையா னென்ற கருத்துத் தொனிக்குமாறு உணர்க. வீமன் கபடமற்றவனாதலால், தன்னைப்போலவே பகைவனையும் உண்மைகூறியவனாகக் கருதினனென்பதை 'மதியாதே' என்பதனால் விளக்கினார்; அவன்சொன்னது உண்மையோ அன்றோவென்று ஆராய்ச்சி செய்யாமலே யென்றவாறு 'குறித்து' என்ற வினையெச்சம் 'என' என்பதைக் கொள்ளும்.                    (கஎரு)

துரியோதனன் போரில் நிலைகுலைய, வீமன் 'இளைப்பாறு' என்றல்.

உரியகதாபாணியர்க்குளோதவொருவமையிலாதானடித்தபோதுயர்
சிரமுடியூடேபிளக்கநாலிரு திசையினும்வார்சோரிகக்கிவீழ்தர
விருநிலமீதேபதைத்துவீழ்தலு மிரிதரமோதாமல்விட்டுநீயினி[னே.
விரைவுடனாறாறெனத்தனாண்மையை விருதர்முன்மேன்மேல்விளக்கவீம

இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்.

(இ-ள்.) உரிய கதாபாணியர்க்குள் - (போருக்கு) உரிய கதாயுதத்தை யேந்திய கையையுடைய வீரர்களுள், ஓத - எடுத்துச்சொல்லுதற்கு, ஓர் உவமை இலாதான் - ஓர்ஒப்புமையில்லாதவனான வீமன், அடித்த போது - கதைகொண்டு தாக்கியபொழுது, உயர் சிரம் - உயர்ந்த தலை, முடியூடே பிளக்க - உச்சியிலே பிளவுபட, நால் இரு திசையினும் - எட்டுத்திக்குக்களிலும், வார் சோரி - மிக்க இரத்தம், கக்கி வீழ்தர - வெளிப்பட்டுவழிய, இரு நிலம்மீதே பதைத்து வீழ்தலும் - பெரிய தரையிலே (துரியோதனன்) துடித்துவிழுந்தவளவிலே, வீமன்—, இரிதர மோதாமல் விட்டு - அழியும்படி (அச்சமயத்துத்) தாக்காமலொழிந்து, நீ இனி விரைவுடன் ஆறு ஆறு என - 'நீ இப்பொழுது விரைவாக இளைப்பாறு இளைப்பாறு' என்று பலமுறைகூறி, தன் ஆண்மையை விருதர் முன் மேல் மேல் விளக்க - தனது பராக்கிரமத்தை வீரர்கள்முன்னிலையிலே மிகுதியாக விளங்கச்செய்ய, (எ - று.)—'வருகளையாறு' என வருங்கவியோடு தொடரும்.

துரியோதனன் இளைப்புற்றநிலையில் வீமன் அவனைத் தாக்கிக் கொன்றிடாமற் போரைநிறுத்தி 'நீ விரைவில் இளைப்பாறு' என்று கூறினது, தழிஞ்சி யென்னும் புறப்பொருள் துறையின்பாற்படும்; அது, சாய்ந்தவர்மேற் செல்லாமல் தழுவுவது; இது, வஞ்சியென்னும் புறப்பொருள் திணைக்கு உரிய துறைகளில் ஒன்று: இராவணன் முதல்நாட்போரில் தன்சேனைமுழுதும் அழியப் படைக்கலமும்ஒழிந்து நின்ற நிலைமையை நோக்கி இராமபிரான் 'இன்று போய் நாளை நின்சேனையோடு போர்க்கு வா' என்றுகூறி விட்டதும் இது. இளைத்து விழுந்த சமயத்தில் மேலும் அடிக்காமல் இப்படிகூறியதனால் வீமனது போர்த்திறமை நன்குவிளங்குதல்பற்றி, 'எனத் தன் ஆண்மையை விருதர்முன் மேன்மேல் விளக்க வீமன்' என்றார். வீமன் ஒப்பில்லாதவனெனவே, உயர்வில்லாதவனென்பது தானேபெறப்படும். இரீதர, தா - துணைவினை. கதாபாணி - வடமொழித்தொடர். (௧௭௬)

துரியோதனன் சிறிதுதெளிந்து வீமனைத் தாக்கல்.

வருகளையாறுவுயிர்ப்புறுவிழி மலர்திறவா நாவறட்சிபோயுகு
குருதியுகாமேதுடைத்துவீழ்தரு குருகுலபூபாலனுக்ரவேகமொ
டுருமெறிமாமேகமொத்தகாயமு முதறிமனோவீரமுற்றுமீளவு
மருகொருபான்மேவிநிற்கும்வீமனை யடுகதையாலோடிமுட்டிமோதவே.

(இ - ள்.) வீழ்தரு - (வீமன் கதையால் அடிபட்டுக்) கீழ்விழுந்த, குருகுல பூபாலன் - குருகுலத்து அரசனாகிய துரியோதனன், வரு களை ஆற - உண்டாகியமூர்ச்சைதணிந்து, உயிர்ப்பு உற - மூச்சுவிடுநிலையடைந்து, விழி மலர் திறவா - தாமரைமலர்போன்ற கண்களைத் திறந்து, நா வறட்சி போய் - நாக்கு வறண்டுபோகுந்தன்மைநீங்கி [நாவில் நீர்சுரக்கப்பெற்று], உகு குருதி உகாமே துடைத்து - பெருகுகிறஇரத்தத்தை வழியாதபடி துடைத்துக்கொண்டு, உக்ர வேகமொடு - கொடிய வேகத்துடனே, உரும் எறி மா மேகம் ஒத்த காயமும் உதறி - இடியிடிக்கிற கரிய காளமேகத்தை யொத்த தனது உடம்பையும் உதறிக்கொண்டு, மனோ வீரம் உற்று - மனத்தைரியத்தையடைந்து, மீளவும் - மறுபடியும், அருகு ஒரு பால் மேவி நிற்கும் வீமனை - சமீபத்தில் ஒருபக்கத்திற் பொருந்திநிற்கிற வீமசேனனை, அடு கதையால் - கொல்லுதற்குரிய கதாயுதத்தினால், ஓடி முட்டி மோத - விரைந்துசென்று நெருங்கித் தாக்க, (எ-று.)—'அமராடினர்' என வருங்கவியோடு முடியும்.

களை - களைத்தல்; இளைப்பு; முதனிலைத்தொழிற்பெயர். உயிர்ப்பு-உயிர்த்தல்; 'பு' விகுதிபெற்ற தொழிற்பெயர். வறட்சி - வறளுதல்; 'சி' விகுதிபெற்ற தொழிற்பெயர். உகாமே - 'மே' விகுதி பெற்ற எதிர்மறைவினையெச்சம். உதறுதல் - சிதறஅசைத்துவீசுதல். உக்ரவேகம், மேகம், காயம், மனோவீரம் - வடசொற்கள். மாமேகமொத்தகாயம்—நிறத்தில் உவமம். 'வரட்சி' என்றும், 'அருகொருபார்மேவி' என்றும் பாடமுண்டு; பொருள் அதுவே. பூபாலன் - பூமியைக் காப்பவன். (௧௭௭)

வேறு.

இருவரும் கடும்போர்செய்தல்.

ஓமவுண்டிகொள்பேரழலோடட லாதைவெஞ்சமராடியவாறென
வாமரங்களினுன்மதியாதம ராடுகின்றநிசாசரராமென
வீமனுந்துரியோதனநாமனும் வேகமொன்றியவீரியராயடு
சேமவன்கதையாலமராடினர் தேறிநின்றனர்வாள்விழிமூடவே.

(இ - ள்.) ஓமம் உண்டி கொள் - (மந்திரபூர்வமாக) ஓமஞ்செய்யப்படும் (ஹவிஸ் ஆகிய) உணவை உட்கொண்டு வளருந்தன்மையுள்ள, பேர் அழலோடு-

பெரியநெருப்புடனே, அடல் ஊதை - வலிமையையுடைய காற்று, வெம் சமர் ஆடிய ஆறு என - கொடிய போரைச் செய்தாற்போலவும்,—மதியாது - லட்சியஞ்செய்யாமல் [அலட்சியமாக], ஆ மரங்களினால் அமர் ஆடுகின்ற - ஆச்சாமரங்களைக்கொண்டு போர்செய்கிற, நிசாசரர் ஆம் என - அரக்கர்கள்போலவும்,— வீமனும் துரியோதன நாமனும் - வீமசேனனும் துரியோதனனென்னும் பேரையுடையவனும், வேகம் ஒன்றிய வீரியர் ஆய் - உக்கிரம்பொருந்திய பராக்கிரமமுடையவராய், தேறி நின்றவர் வாள் விழி மூட - பார்த்துக்கொண்டுநின்ற வீரர்கள் (காணுதற்குக்கூசி) ஒளியுள்ள தங்கள்கண்களை மூடிக்கொள்ளும்படி, அடு சேமம் வல் கதையால் அமர் ஆடினர் - பகையழிப்பனவும் காவலாகவுள்ளனவுமான வலிய கதாயுதங்களாற் போர்செய்தார்கள்; (எ - று.)

நெருப்புங் காற்றும் ஒன்றோடொன்று போர்செய்தாற்போல என்பது, முதலடியின் பொருள். ஓமவுண்டி - நெய்முதலிய தேவருணவுகள். ஹோமம் - வடசொல்: மந்திரஞ்சொல்லி நெருப்பிலிடப்படுவது. உண்டி - உண்ணப்படுவது; இ - செயப்படுபொருள்விகுதி, ட் - எழுத்துப்பேறு; அல்லது, து-சாரியை, உகரம்கெட்டு, டகரமாத் திரிந்தது. பெரியமரமாதலின், ஆச்சாமரத்தைக் கூறினார். ஆ - ஓரெழுத்தொருமொழி. ஆம் மரங்களினால் எனப் பதம்பிரித்து, கிடைத்த மரங்களைக்கொண்டு என்றுஉரைத்தலும் ஒன்று. நிசாசரர் - இரவில் (வலிமைகொண்டு) சஞ்சரிப்பவர்; வடசொல்: அரக்கர்க்குப் பகலினும் இரவில் வலிமை மிகுதியாதலின், இப்பெயர். ஆம் - அசை. சேமம் - தமது பாதுகாப்பிலுள்ள எனினுமாம். தேறிநின்றவர் - சாட்சியாகப் பார்த்துநின்ற கண்ணன் பலராமன் முதலியோர். வாள் - உரிச்சொல்.

இதுமுதல் எட்டுக்கவிகள்-முதற்சீர் தேமாச்சீரும், இரண்டு மூன்று நான்காஞ் சீர்கள் கூவிளச்சீர்களுமாய் நேரசைமுதலதாதலின் ஒற்றொழித்துப் பதினோரெழுத்துப்பெற்றுவந்தது அரையடியாகவும், அஃது இரட்டிகொண்டது ஓரடியாகவும்நின்ற கழிநெடிலடி நான்குகொண்ட சந்தக் கட்டளைக்கலிப்பாக்கள். கீழ்வந்த கசுகூ-ஆம் கவி முதலியன, இங்ஙனமே நிரையசைமுதலதாய் அரையடிக்கு ஒற்றொழித்து எழுத்துப்பன்னிரண்டுபெற்று வந்தனவாயினும், முதலில் மாச்சீர்பெற்று வாராமையால் கட்டளைக்கலிப்பாவாகக்கொள்ளப்படாமல் எண்சீராசிரியவிருத்தமாகக் கொள்ளப்பட்டனவென்க.

தான தந்தன தானன தானன தான தந்தன தானன தானன—என்பது, இவற்றிற்குச் சந்தக்குழிப்பாம். (கஎஅ)

அந்த உக்கிரயுத்தத்தால் உலகத்திலுண்டான குழப்பம்.

மேவுசிங்கவியாளவிலோதனர் வீசுகின்றகதாரவமேலிட
வாவுவெம்பரியாதபனுந்தடு மாறிநின்றனன்வானவர்தானவர்
நாவடங்கினர்மாமுனிவோரொடு நாகரஞ்சினர்நான்முகனாதிய
மூவருஞ்செயலேதெனநாடினர் மோனமுகொண்டனமூடியகோளமே.

(இ - ள்.) மேவு - பொருந்திய, சிங்க வியாள விலோதனர் - சிங்கத்தின் வடிவத்தையும் பாம்பின்வடிவத்தையும் முறையேஎழுதிய கொடியையுடைய வீமனும் துரியோதனனும், வீசுகின்ற - வீசித்தாக்குகிற, கதா-கதாயுதங்களின், ரவம் - ஓசை, மேல் இட - அதிகப்படுதலால்,—வாவு வெம் பரி ஆதபனும் - தாவிச்செல்லுகிற வெவ்வியதேர்க்குதிரைகள் பூண்ட சூரியனும், தடுமாறி நின்றனன் - தடுமாற்றமடைந்து நின்றான்; வானவர் தானவர் - தேவர்களும் அசுரர்களும், நா அடங்கினர் - பேச்சுஒடுங்கினார்கள்; மா முனிவோரொடு - சிறந்த முனிவர்களும், நாகர் - பாதாளலோகத்தவரும், அஞ்சினர் - பயப்பட்டார்கள்; நான்முகன் ஆதிய மூவரும் - பிரமன் முதலிய திரிமூர்த்திகளும், செயல் ஏது என நாடினர் - செய்தற்குரியது யாதென்று ஆலோசித்தார்கள்; மூடிய

கோளம் - (உலகத்தைக்) கவித்துமூடியுள்ள அண்டகோளம், மோழை கொண்டது - (ஒருபுறத்தில்) வெடிப்பையடைந்தது; (எ - று.)

வ்யாளம், சதாரவம், கோளம் - வடசொற்கள். நாவலர்-நாவின்மக்கள். நான்முகன் - நான்குதிசையையும் நோக்கிய நான்குமுகமுடையவன். மூவர் - பிரமவிஷ்ணுருத்திரர். செயல் - இதற்குப்பரிகாரமாகச் செய்யுந் தொழில். இனி, செயல் ஏது என நாடினர் - இங்ஙனங்குழப்பமுண்டாதற்குக் காரணமான செய்கை யாதென்று நோக்குவாராயினர் எனினுமாம். மோழைகொண்டது-உடைந்தது என்றபடி. முனிவர்-முனிவோர் என, ஈற்றயல்அகரம் ஓகாரமாயிற்று. இது, உயர்வுநவிற்சியணி. (௧௪௯)

துரியோதனனைக்கொல்லும்வகையாதென்றுஅருச்சுனன்கண்ணனைவினவல்.

தார்வலம்புரியானொடுபோரழி தாழ்வுகண்டனன்வீமனைவாசிகொ
டேர்விடுந்திருமாலடிநீண்முடி சேரநின் றுரையாடினன்மாருதி
நேர்தளர்ந்தனன்யாதுகொலோசெய னீமொழிந்தருள்வாயெனவானவ
ரூர்புரந்தவனோதமுராரியு மோதினன்பரிவோடவனோடிவை.

(இ - ள்.) தார் வலம்புரியானொடு - நஞ்சாவட்டைப்பூமாலையையுடைய துரியோதனனோடு செய்கிற, போர் - யுத்தத்தில், வீமன் - வீமசேனன், அழி-வலிமைகுறைகிற, தாழ்வை - சிறுமையை, கண்டனன் - பார்த்து, வானவர் ஊர் புரந்தவன்- தேவர்களுடைய உலகத்தைப் பாதுகாத்தவனான அருச்சுனன், வாசி கொள் தேர் விடும் திரு மால் அடி நீள் முடி சேர நின்று - குதிரைகள் பூண்ட தனதுதேரைச் செலுத்தும் சாரதியான கண்ணபிரானது திருவடிகளிலே நீண்டதனதுகிரீடம் படும்படி (சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து) நின்று, உரை ஆடினன் - பேசுபவனாய், 'மாருதி நேர் தளர்ந்தனன் - வாயுகுமாரனான வீமன் துரியோதனனெதிரில் நிற்கத் தளர்ந்தான்: செயல் யாதுகொலோ - (இப்பொழுது) செய்தற்குஉரியது யாதோ? நீ மொழிந்தருள்வாய் - நீ கூறியருளுவாய்,' என - என்று, ஓத - சொல்ல,—முராரியும் - கண்ணனும், பரிவோடு- அன்புடன், அவனோடு - அவ்வருச்சுனனோடு, இவை - இந்தவார்த்தைகளை, ஓதினன்-சொன்னான்; (எ - று.)—அவற்றை அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

தார்வலம்புரியான் - வலம்புரித்தாரான் எனச் சொல்மாறுக. வீமனையழிதாழ்வுகண்டனன் - வீமன்அழிதாழ்வைக் கண்டனன் என உருபுபிரித்துக் கூட்டப்பட்டது. அக்கினிபகவானால் அருச்சுனனுக்குக் காண்டவதகனகாலத்திற் கொடுக்கப்பட்ட சிறந்த தேர் அந்தத்தேவனாற் கொடுக்கப்பட்ட தெய்வத்தன்மையுள்ள நான்கு வெள்ளைக்குதிரைகள் பூண்ட மேன்மையுடைய தாதலின், 'வாசிகொள் தேர்' எனப்பட்டது. வினாவடியாப்பிறந்த 'யாது' என்னுங் குறிப்புமுற்றின்மேல், கொல் ஓ - அசைகள். இந்திரன்முதலிய தேவர்களால் வெல்லமுடியாத நிவாதகவசர் காலகேயரென்னும் அசுரர்களை அருச்சுனன் பொருதுஅழித்துத் தேவர்களைச் சுவர்க்கத்தில் இடையூறின்றி இனிதுவாழவைத்தனனாதலாலும், அப்பொழுது அருச்சுனன் தேவலோகத்திற்சென்று இந்திரனால் அருத்தாசனங்கொடுக்கப்பட்டு அதில்வீற்றிருந்து தேவலோகத்து இளவரசுமுடிசூட்டப்பெற்றவனாதலாலும், 'வானவரூர்புரந்தவன்' எனப்பட்டான். முராரி யென்ற வடமொழித்திருநாமம் - முர + அரி எனப்பிரிந்து, முரனென்னும் அசுரனுக்குப் பகைவனென்று பொருள்படும்: இவ்வசுரன், நரகாசுரனுக்கு மந்திரி; இவனைக் கண்ணபிரான் கொன்றதும் அவனைக்கொன்ற காலத்திலேயாம்: வரலாறு, கருக - ஆங் கவியிற் கூறப்பட்டது. (௧௫௦)

துரியோதனனைக்கொல்லும்வகையைக் கண்ணன் கூறல்.

நீநயந்தனைகேளுறுபோரிடை நேர்மலைந்திடுவோரிருவோரினு
மாநிலம்பலவானதிலேமுகு ரானனன்றருசேய்வினையாதிக

ஞானியம்பறகாதிவராயிர நாண்மலைந்தனராயினும்வீவொடு
வானகம்புகுதாரிருவோர்களும் வாசவன்றருபூணணிமார்பனே.

இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) வாசவன் தரு - இந்திரன் கொடுத்த, பூண் - ஆரமாகிய ஆபரணத்தை, அணி - அணிந்த, மார்பனே - மார்பையுடையவனே! நீ நயந்தனை கேள் - (நான்சொல்வதை) நீ விரும்பிக்கேள்: உறு போரிடை - நேர்ந்துள்ள போரிலே, நேர் மலைந்திடுவோர்-எதிர்த்துநின்று போர்செய்பவர்களான, இருவோரினும் - இரண்டுவீரர்களுள்ளும், அநிலன் - வாயுகுமாரனான வீமன், பலவான் - பலசாலி; முகுர ஆனனன் தரு சேய் - திருதராட்டிரன் பெற்ற புத்திரனான துரியோதனன், அதிலே வினை ஆதிகன் - வீமசேனனுடையதனினும் போர்த்தொழிற்றிறம் மேம்பட்டவன்: நான் இயம்பல் தகாது - நான் ஒன்றையுஞ்சொல்லுதல் தகுதியன்று: இவர் இருவோர்களும் - இவ்விரண்டுபேரும், ஆயிரம் நாள் மலைந்தனர் ஆயினும் - மிகப்பலநாள் போர்செய்தாராயினும், வீவொடு-மரணத்தோடுகூடி, வானகம் புகுதார் - சுவர்க்கலோகத்தைச் சேரார்.

நயந்தனை - முன்னிலையொருமையிறந்தகாலமுற்றெச்சம். அநிலன் - அநிலன்மகன்; தத்திதாந்தநாமம். பலவாந் - வடசொல்; தேகபலத்தை மிகுதியாகவுடையவன். அதில் என்பதில், இல் என்பது - ஐந்தனுருபு, எல்லைப்பொருளது. ஆதிகன் - அதிக னென்பதன் நீட்டல். வாஸவன் என்ற வடசொல் - அஷ்டவசுக்களுக்குத் தலைவனென்றும், ஐசுவரியமுடையவனென்றும் (வசு - செல்வம்) காரணப்பொருள்படும். இந்திரன் அருச்சுனனைத் தன்னுலகத்துக்கு அழைத்துப்போனபொழுது அவனுக்கு ஆரம்முதலிய ஆபரணங்களைக் கொடுத்ததை "ஆடையுங் கலனு மந்த்ரத்துட னடற்படையு நல்கி, யேடவி ழலங்கலானோராசனந் திருத்தி யென்றூந், தேடுதற்கரிய தூயவமுது செம்பொற்கலத்திற், கூடவுண் டமரர்க்கெல்லாங் குரிசிலாஞ்சிறப்புச் செய்தான்" என்று கீழ் நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்கததில் வந்ததனால் உணர்க. வீவு-தொழிற்பெயர்; வு - விகுதி; உ-விகுதியெனின், வ்-எழுத்துப்பேறு. இரண்டுவீரர் எதிர்த்துத் தொந்தயுத்தஞ்செய்கையில் மத்தியஸ்தராய் நிற்பாருள் ஒருவன் இடையில் ஒன்றுறச்சொல்லுதல் அநீதியென்பான், 'நானியம்பல்தகாது' என்றான். (கஅக)

மாறுகொண்டவராவிகொணீள்கதை மாருதன்சுதனோடிவணோருரை
கூறலிங்கிதமேயலவோருரை கூறில்வஞ்சகமாமிவனாண்மையி
னூறுமைந்தரினாதிபனாகிய நூனலந்திகழ்மார்பனையாருயி
ரீறுகண்டிடலாமவனூருவை யேறுபுண்படவேயெதிர்மோதிலே.

(இ - ள்.) மாறு கொண்டவர் - பகைமைகொண்டவர்களது, ஆவி - உயிரை, கொள் - வாங்குகிற, நீள் கதை - நீண்ட கதாயுதத்தையுடைய, மாருதன் சுதனோடு - வாயுகுமாரனான வீமனுடன், இவண் - இவ்விடத்தில் [அல்லது இப்பொழுது], ஓர் உரை கூறல் - (நான்) ஒருவார்த்தைசொல்லுதல், இங்கிதமே அல - இனிமையானதன்று: ஓர் உரை கூறில் - (அன்றி) ஒருவார்த்தையைச் சொன்னாலோ, வஞ்சகம் ஆம் - (அது) வஞ்சனைக்கு இடமாம்; இவன் - வீமன், ஆண்மையின் - (தனது) பராக்கிரமத்தால், அவன் ஊருவை - துரியோதனனது தொடையை, ஏறு புண் பட - மிக்கவிரணப்படும்படி, எதிர் மோதில் - எதிரிலேதாக்கினால், நூறு மைந்தரின் ஆதிபன் ஆகிய - (திருதராட்டிர) குமாரர் நூற்றுவருள் தலைவனான, நூல் நலம் திகழ் மார்பனை - சாமுத்திரிகசாஸ்திரத்திற்கூறிய நல்லிலக்கணம் விளங்கும் மார்படையுடைய துரியோதனனை, ஆர் உயிர் ஈறு கண்டிடல் ஆம் - அரிய உயிர் அழியச் செய்திடலாம்.

வீமன்கதைக்குரிய சத்துருகாதினியென்ற பெயரின் பொருளை விவரித்து, 'மாறுகொண்டவராவிகொள்ளீர்கதை' எனப்பட்டது. இங்கு இதம் என்று பிரித்து, இப்பொழுது நன்மையன்று என்று உரைப்பினுமாம்; இதம் - ஹிதம். அல - அல்ல வென்பதன் தொகுத்தல்; அது - வேறு இல்லை உண்டு என்பன போல ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவான குறிப்புமுற்று: இங்குப் படர்க்கையொன்றன்பாலுக்கு வந்தது. ஆதிபன் - அதிப னென்பதன் நீட்டல். நூனலம் - உத்தமவிலக்கணமாகிய மூன்றுஇரேகை முதலியன; இனி, 'நூல் நலந்திகழ் மார்பன்' என்பதற்கு-முப்புரிநூல் நன்குவிளங்கும் மார்பையுடையவனென்று உரைப்பாருமுளர். ஆருயிர் என்பதில், அருமை யென்னும் பண்பு ஆர் என விகாரப்பட்டது. ஈறு - இறுதல், இறுதி; இறு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். கண்டிடலாம் என்பதில், காணுதலென்பது - செய்தலென்னும் பொருளில் வந்தது. ஸூதன் - வடசொல். இவண் ஓர் உரை கூறல்- இப்பொழுது ஒருவார்த்தைசொல்லுதல், இங்கிதமே அல-குறிப்பினுற் செய்யத்தக்கதேயன்றி, ஓர் உரை கூறில் - (வெளிப்படையாக) ஒருவார்த்தையெடுத்துச்சொன்னால், வஞ்சகம் ஆம்-வஞ்சனையாய்முடியும் என்று உரைப்பாரும் உளர். இங்கிதம் - குறிப்பால்நிகழும் உறுப்பின் தொழில்; கண் கை கால் முதலிய உறுப்புக்களின் சைகையால் ஏதேனும் ஒருகருத்தைப் பிறர்க்குத்தெரியாதபடி அவனுக்குக்குறிப்பாகப் புலப்படுத்திற் படுத்தலாமேயன்றி, வாயால் ஒன்றும் வெளிப்படையாக்கூறுதல் தகுதியன் றென்பது, உட்கோள். (௧௪௨)

அருச்சுனன் வீமனுக்குக் குறிப்பால் உபாயம் உணர்த்தல்.

ஏழ்பெருங்கடல்சூழ்புவிபாரமு மேதமுங்கெடவேதமில்லவரும்
வாழவன்றுயர்நாரணனார்திரு வாய்மலர்ந்தசொலான்மகிழாமிக
ஆழினும்புரிதாள்வலிதேயென ஆருவின்புடைசேர்கரநாண்மலர்
காழ்நெடுங்கிரியேயனையான்விழி காணநின்றனன்வானரிகானையே.

(இ - ள்.) ஏழ் பெரு கடல் சூழ் - ஏழு பெரிய கடல்களாற் சூழப்பட்ட, புவி - பூமியினது, பாரமும் - சுமையும், ஏதமும் - (அதனாலாகிய) துன்பமும், கெட - அழியும்படியாகவும், ஏதம் இல் - குற்றமில்லாத, ஐவரும் - (பாண்டவர்) ஐந்துபேரும், வாழ - உயிர்வாழும்படியாகவும், அன்று - அப்பொழுது, உயர் நாரணனார் - (யாவரினுஞ்சிறந்த) கண்ணபிரான், திரு வாய் மலர்ந்த - அழகிய வாய்மலரைத் திறந்து கூறிய, சொலால் - வார்த்தையினால், மிக மகிழா - மிகவும்மகிழ்ந்து, வான் அரி கானை - தேவலோகத்தையாளுகிற இந்திரனது புத்திரனான அருச்சுனன், புரி தாள் ஊழினும் வலிதே என - செய்யும்முயற்சி விதிப்பயனினும் வலிமையுடையதேயா மென்று எண்ணி, ஊருவின் புடை சேர் கரம் நாள் மலர் - (தனது) தொடையினிடத்து வைத்த அன்றுமலர்ந்த தாமரைப்பூப்போன்ற (தனது) கையை, காழ் நெடு கிரியே அனையான் விழி காண-வலியபெரியமலையையே யொத்த வீமனது கண்கள் காணும்படி, நின்றனன் - நின்றான்; (எ - று.)

துரியோதனனைக் கொல்லும் உபாயத்தைக் கண்ணன் கூறியவுடனே கேட்டு மகிழ்ந்து, அருச்சுனன், முயற்சி வீண்படாதாதலின் அதனை நாம்செய்ய வேண்டுவ தென்று துணிந்து, வீமன் கண்காணும்படி தனதுதொடையிற்கை வைத்துநின்றன னென்பதாம். கண்ணன்கூறிய உபாயத்தை அருச்சுனன் இங்கிதத்தால் வீமனுக்குப் புலப்படுத்தின னென்க. கொடியதுஷ்டனான துரியோதனனது நாசம் பூமிபாரந் தீரகிவிருத்தியாதற்கும், பாண்டவரதுவாழ்க்கைக்கும் காரணமாதலால், 'புவிபாரமும் ஏதமுங் கெட ஏதமில் ஐவரும் வாழத் திருவாய்மலர்ந்த சொல்' எனப்பட்டது. ஊழினும் என்ற உம்மை - உயர்வுசிறப்பு; அது "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான் முந்துறும்"

என்றபடி ஊழ்வினைக்குள்ள தவறாத உறுதிநிலையை விளக்கும். 'ஊழினும் புரிதான் வலிதே' என்பதை "ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித், தாழா துஞற்று பவர்" என்ற திருக்குறளினாலும் அறிக; 'ஊழ் ஒருகாலாக இருகாலாக அல்லது விலக்கலாகாமையின், பலகால்முயல்வார் பயனெய்துவர்', 'தெய்வத்தான் இடுக்கண்வரினும், முயற்சி விடற்பாலதன்று' என்ற அதனுரைவாக்கியங்கள் உணரற்பாலன.

ஏழ்கடல் - உவர்நீர், கருப்பஞ்சாறு, கள், நெய், தயிர், பால், நன்னீர் என்னும் இவற்றின்மயமானவை. நாரணன் - நாராயண னென்பதன் விகாரம்; 'ஆர்' என்ற பலர்பால்விகுதி, உயர்வுப்பொருளில் வந்தது. கூறி யென்ற பொருளில் 'திருவாய்மலர்ந்து' என்பது, உபசாரம். வலிதே, ஏ - தேற்றம். பின்னிரண்டடிகளுக்கு - ஊழ்வினையினும் முயற்சியே வலிமையுடையது என்று வாயாற்சொல்லிக் கையால் தொடையைத் தட்டினான் என்று உரைப்பாருமுளர்; 'ஊழினும் புரிதான் வலிதே' என்றது, முயற்சியைக் கைவிடாது மேன்மேலும் போர்செய் என்று வீமனுக்கு உறுதிகூறியவாறு. (கஅங)

அந்நிலையறிந்து வீமன் துரியோதனன்தொடையில் தாக்கல்.

ஞானபண்டிதன்வாயுகுமாரனு நாரணன்பணியாலிளையோன்மொழி
மோனவண்குறிதானுணராவெதிர் மோதினன்கதைபூபதியூருவின்
மானகஞ்சுகனாறடியேழடி மாறிநின்றிடவேபிழைபோதலின்
மேன்முழங்கினவானவர்தூரிய மேல்விழுந்ததுபூமழைசாலவே.

(இ - ள்.) ஞான பண்டிதன் - அறிவுவல்லவனான, வாயு குமாரனும்-வாயுவின் மகனான வீமனும், நாரணன் பணியால் இளையோன் மொழி மோனம் வண் குறி தான் உணரா - கண்ணபிரானது வார்த்தையினால் தனது தம்பியான அருச்சுனன் தெரிவித்த மௌனமான நல்லகுறிப்பைத் தான் அறிந்துகொண்டு, பூபதி ஊருவின் - துரியோதனராசனது தொடையிலே, கதை - தனது கதாயுதத்தால், எதிர் மோதினன் - எதிர்த்துத்தாக்கினான்; (தாக்கவே), மான கஞ்சுகன் - மானத்தையே கவசமாகக்கொண்ட துரியோதனன், ஆறு அடி ஏழு அடி மாறி நின்றிட - ஆறு அல்லது ஏழடிதூரம் கால்கள்நிலைபெயர்ந்து பின்னிட்டு நிற்க, பிழை போதலின்- (உறுதிநிலை) தப்பிப்போனதனால், வானவர் தூரியம்- தேவதுந்துபிவாத்தியங்கள், மேல் முழங்கின - வானத்தில் மிகஒலித்தன; பூமழை - (தேவர்கள்சொரிந்த) புஷ்பவர்ஷம், சால - மிகவும், மேல் விழுந்தது - வீமன்மேலே விழுந்தது; (எ - று.)

கண்ணன்சொற்படி அருச்சுனன் காட்டிய குறிப்பை யுணர்ந்து வீமன் துரியோதனனது உயிர்நிலைத்தானமான தொடையிலே தாக்கவே, அவன் அத்தாக்குதல்பொறுமற் பின்னிட்டனனாக, அதுகண்ட தேவர்கள் இவன் அழிதலும் பாண்டவர் வெல்லுதலும் தவறாவென்று கருதிக் களித்துத் துந்துபிமுழக்கித் தேவலோகத்துக் கற்பகமலர்களை வீமன்மேல் மழைபோல மிகுதியாகச் சொரிபவராயினர் என்பதாம். சமயத்திற் குறிப்பறிந்துகொண்ட நுட்பத்தைப் பாராட்டி, 'ஞானபண்டிதன்' எனக் கொண்டாடினார். மொழி மோன வண்குறி- வாயினாற்பேசாமல் தெரிவித்த நல்ல குறிப்பு. மொழி - பேசாதது பேசினது போலச் சொல்லப்பட்டது; மரபுவழுவமைதி; [நன்-பொது-ருஅ.] "முன்னம் முகம்போல முன்னுரைப்பதில்" என்றவிடத்தில், 'உரைப்பது' என்பதற்குப் போல, இங்கே 'மொழி' என்றதற்கு - தெரிவித்த என்று பொருள். மௌநம் என்ற வடசொல், மோனம் என விகாரப்பட்டது; கௌசிகன் - கோசிகன், கௌதமன் - கோதமன், கௌசல்யை - கோசலை, மௌலி - மோலி என்பன போல. துரியோதனன் மானத்தையே தனதுஉயிர்க்காவலாகப் பாவித்து அத

னைக் கைவிடாதுநின்றதனால், 'மானகஞ்சுகன்' எனப்பட்டான். மாநகஞ்சுகன், தூர்யம் - வடசொற்கள். (கஅச)

மீண்டும் வீமன் துரியோதனனது தொடையில் தாக்கல்.

மாறிநின்றசுயோதனன்மீளவும் வாயுமைந்தனைவாகுவுமார்பமு
நீறெழும்படிசாடியபோதவ னீணிலந்தனிலோடிவிழாதுத
னூறின்மிஞ்சியபேருடலோடெதி ரோடிவன்றொடைகீறிடமாறடும்
வீறுகொண்டகதாயுதம்வீசினன் வீரனம்புவிமீதுறவீழவே.

(இ - ள்.) மாறி நின்ற-(ஆறுஎழுஅடி பின்னிட்டு) நிலைமாறிநின்ற, சுயோதனன் - துரியோதனன், மீளவும் - மறுபடியும், வாயு மைந்தனை - வீமனை, வாகுவும் மார்பமும் நீறு எழும்படி சாடிய போது-தோள்களும் மார்பும் பொடிபடும்படி (கதைகொண்டு) தாக்கியபொழுது, அவன்- வீமன், நீள் நிலந்தனில் ஓடி விழாது - நீண்டநிலத்தில் ஒடிவிழாதபடி (அரிதில் நின்று), தன் - தனது, ஊறின் மிஞ்சிய பேர் உடலோடு-வலிமையால்மிக்க பெரியஉடம்புடன், எதிர் ஓடி - எதிரில் ஓடிவந்து, வல்தொடை கீறிட - (துரியோதனனது) வலியதொடை பிளக்கும்படியாகவும், வீரன் அம் புவிமீது உற வீழ - வீரனான துரியோதனன் அழகியதரையிலே பொருந்த விழும்படியாகவும், மாறு அடும் வீறு கொண்ட கதா ஆயுதம் - பகைவரையழிக்கும மேன்மையைக் கொண்ட தனதுகதாயுதத்தால், வீசினன் - வேகத்தோடு தாக்கினான்; (எ - று.)

வாகு - பாஹு என்ற வடசொல் திரிந்தது. ஸுயோதநன் என்ற பெயர்-நல்லபோரையுடையவனென்று பொருள்படும்; வெற்றிநிகழும்படிபோர்செய்ய வல்லவனென்க. 'ஊறின்மிஞ்சிய பேருடல்' என்பதற்கு - துரியோதனன் தாக்கியதனாலாகிய தழும்புகளால் மிக்க பெரியஉடம்பு என்று பொருளுரைப்பினுமாம். மாறு - மாறானார்க்குப் பண்பாகுபெயர். மாறடும்வீறுகொண்ட கதாயுதம் - சத்துருகாதினி. அம்புவியென்று பூமிக்குப் பொலிவுடைமை கூறினார், அது பாரந்தீர்ந்து இன்பமுறுஞ் சமயமாதலின். இங்ஙனம் கண்ணபிரான் கூறியருளிய குறிப்பைக்கொண் டன்றி வீமனால் நேரிற்கொல்லலாகாத துரியோதனனது ஆற்றலை விளக்குவார், 'வீரன்' என்றார். ஊறின், இன் - ஐந்தனுருபு, ஏது. (கஅரு)

வேறு.

வீமன் துரியோதனனை நெருக்கி மார்பிற்குத்தல்.

அரிப்பதாகனுரகப்பதாகனையதிர்த்துமேலுறவடர்த்துநீ
டுருப்பினோடதிசயிக்கவூருவையொடிக்கவேயவனுடற்றலு
நெருப்புறுவிழிசிவத்துவார்கடைநிமிர்ப்புறுதபுருவத்தனாய்
மருப்புநாலுறுமதத்தமாவெனமதத்துமார்பின்மிசைகுத்தினான்.

(இ - ள்.) அரி பதாகன் - சிங்கக்கொடியுடையவனான வீமன், உரகம் பதாகனை - பாம்புக்கொடியுடையவனான துரியோதனனை, அதிர்த்து-அதட்டி, மேல் உற அடர்த்து - மேற்கொண்டு நெருக்கி, நீடு உருப்பினோடு - மிக்க கோபத்துடனே, அதிசயிக்க - (கண்டவர்) வியக்கும்படி, ஊருவை ஒடிக்கவே- தொடையை முறிக்கவே,—அவன் - அத்துரியோதனன், உடற்றலும்-பெருங் கோபங்கொண்டு மீட்டும் போர்தொடங்கியவளவில்,—(வீமன்), விழி சிவத்து நெருப்பு உறு - கண்கள்சிவந்து நெருப்பின்தன்மை யடையப்பெற்று, வார் கடை நிமிர்ப்பு உறுத புருவத்தன் ஆய் - நீண்ட கோடிகள் வளைவுமாறுத புருவங்களையுடையவனாய், மருப்பு நால் உறு மதத்த மா என - நான்கு தந்தங்கள் பொருந்திய மதம்பிடித்த ஐராவதயானை போல, மதத்து - கோபாவேசங்கொ

ண்டு, மார்பின் திசை குத்தினன் - (துரியோதனனது) மார்பின்மேற் குத்தினன்; (எ - று.)

உருப்பு - உருத்தல்; 'பு' விகுதிபெற்ற தொழிற்பெயர். அதிசயிக்க - அதிசயமென்னும் வடசொல்லினடியாப் பிறந்த செயவெனெச்சம். சிவத்து - சிவந்து என்பதன் வலித்தல். கடைநிமிர்ப்புருத புருவத்தனாய் - புருவத்தை நெறிவுபடவளைத்தவனாய். 'மருப்பு நாலுறு மதத்த மா வென மதத்து' என்றது, வீமனுக்குச்சேரும்; அன்றி, ஐராவதயானைபோலும் வலிமையுடைய மார்பின்மேல் என்று மார்புக்கு அடைமொழியாக்கலும் ஒன்று; "மதவே மடனும் வலியு மாகும்" என்ற தொல்காப்பியத்தால், மதவென்பது - வலிமைபுணர்த்துவதோர் உரிச்சொல்லாத லறிக; அதன்மேல் அத்துச்சாரியைவருகையில், நிலைமொழியீற்று அகரத்தின்முன் சாரியைமுதல் அகரம் கெட்டது; [நன் - உருபு - கரு.]

இதுமுதல் ஐந்துகவிகள் - பெரும்பாலும் முதற்சீர் புளிமாச்சீரும், மூன்று ஐந்தாஞ் சீர்கள் தேமாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறாஞ் சீர்கள் கூவிளங்காய்ச்சீர்களும், ஏழாஞ்சீர் கூவிளச்சீருமாகிய கழிநெடிலடி நான்கு கொண்டவெழுசீராசிரியச்சந்தவிருத்தங்கள்.

தனத்த தானனன தத்த தானனன தத்த தானனன தத்தனா—என்பது, இவற்றிற்குச் சந்தக்குழிப்பாம். (கஅசு)

வீமன் துரியோதனனைச் சிதைத்துவீசுதல்.

கதுப்பும்வாயுநெரியக்கதாயுதகரத்தினனிகலக்கின [னெ
னெதிர்த்தயானையையடர்த்தகேசரியெனப்பொன்மௌலியையிருத்
னுதைத்துமேலிருபதத்தினலவனுரத்தைவாகுவையொடித்துநீள்
விதத்தினலிருநிலத்தின்மீதுடல்விதிர்த்துவீசினன்வியக்கவே.

(இ - ள்.) கதுப்பும் - (துரியோதனனது) கன்னமும், வாயும்—, நெரிய - நொருங்கும்படி, (வீமன்), கதாயுத கரத்தினல் - கதாயுதத்தையேந்திய தனது கையால், நனி கலக்கினன் - மிகவுங்கலங்கச்செய்து,— எதிர்த்த யானையை அடர்த்த கேசரி என - எதிர்த்துநின்ற யானையை நெருக்கிப் பொருதழிக்கிற சிங்கம்போல, பொன் மௌலியை - பொன்மயமான (அவனது) கிரீடத்தை, இருத்தினன் - தரையிலே அழுந்தப்பண்ணி,—மேல் - மேலே, இரு பதத்தினல் - (தனது) இரண்டுகால்களாலும், உதைத்து—, அவன் - அத்துரியோதனனுடைய, உரத்தை - மார்பையும், வாகுவை - தோள்களையும், ஒடித்து - முறித்து, நீள் விதத்தினல்-மிக்கபலவகைகளால், உடல் விதிர்த்து - அவனுடம்பை உதறி, வியக்க - (காண்பவர்) அதிசயிக்கும்படி, இரு நிலத்தின் மீது - பெரிய தரையிலே, வீசினன் - எறிந்தான்; (எ - று.)

நனி - மிகுதிப்பொருளுணர்த்தும் விசேடித்த உரிச்சொல். சிங்கம் யானையை மத்தகத்திற் பாய்ந்து அழித்தல் இயல்பாதலின், வீமன் துரியோதனனது முடியை யழுத்துதற்கு உவமைகூறப்பட்டது. (கஅஎ)

இதுவும், அடுத்தகவியும் - துரியோதனன் கண்ணனைப் பழித்தல்.

நிறத்தநீலகிரியொக்கவேயிருநிலத்தின்வீழ்குருகுலத்தினே
னுறைத்துமீளவுமுயிர்த்துமாயனெடுருத்துவாசகமுறச்சொல்வான்
குறிப்பினல்விசயனைக்கொடாருயிர்குதிக்கமாமதிகொளுத்தின
யறத்தினலடன்மறத்தினீர்மையினையற்பராயரறிகிற்பரோ.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நிறத்த - நிறம்விளங்கப்பெற்ற, நீல கிரி ஒக்க - நீலரத்தினமயமானதொரு மலை போல,இரு நிலத்தின் வீழ் - பெரியதரையிலே விழுந்திட்ட, குரு குலத்தினேன்-குருவம்சத்து அரசனான துரியோதனன், மீளவும்-பின்பு,

உறைத்து - உறுதிபெற்று, உயர்ந்து - பெருமூச்சுவிட்டு, உருத்து - கோபங்கொண்டு, மாயனொடு - கண்ணபிரானுடன், வாசகம் - வார்த்தைகளை, உற சொல்வான் - அதிகமாகப் பேசுபவனானான்; (அவை யாவையெனின்):— (நீ), குறிப்பினால் - குறிப்பாக, விசயனை கொண்டு - அருச்சுனனைக்கொண்டு, ஆர் உயிர் குடிக்க மா மதி கொளுத்தினாய் - (எனது) அரிய உயிர் (உடம்பினின்று) நீங்குமாறு (வீமனுக்குச்) சிறந்த அறிவை உண்டாக்கினாய்; அறத்தினால் அடல் - தருமத்தோடு போர்செய்கிற, மறத்தின் - பராக்கிரமத்தின், நீர்மையினை - தன்மையை, அற்பர் ஆயர் - இழிந்தவர்களான இடையர்கள், அறிகிற்பரோ - அறிய மாட்டுவார்களோ? [அறியமாட்டார்களென்றபடி], (எ - று.)

நீ க்ஷத்திரியசாதியிற் பிறந்தவனாயினும் ஆசாரியரிடத்தில் வளராமல் இழிவான இடையர்கள்குழாத்தில் வளர்ந்தவனாதலால், தருமயுத்தஞ்செய்யும் முறைமையின்பெருமையைச் சிறிதுமறியாய்: ஆனதுபற்றி, யானும் வீமனும் எதிர்த்துச் சமமாகத் தொந்தயுத்தஞ் செய்கையில் இங்ஙனம் வஞ்சனையாக அருச்சுனனைக்கொண்டு வீமனுக்கு எனதுஉயிர்நிலையைப் புலப்படுத்தி என்னை யழித்தா யென்று இகழ்ந்தான். உயர்ந்தசந்திரகுலத்தில் வசுதேவகுமாரனாய்த் தேவகியயிற்றிற் பிறந்திருந்தும் தாழ்ந்தஇடையர்குலத்தில் யசோதைபக்கலும் நந்தகோபன்மனையில் வளர்ந்ததுமாத்திரத்தைக்கொண்டு கண்ணனைத் துரியோதனன் இடையனென இகழ்ந்தான். வடமதுரையில் வசுதேவனும் தேவகியும் கம்சனால் சிறையிலிருத்தப்பட்டுத் தளைபூண்டிருக்கையில், திருமால் தேவகியினிடம் எட்டாவதுகருப்பத்தில் கண்ணனாய் அவதரிக்க, அக்குழந்தையைக் கம்சன் முன்னையகோட்பாட்டின்படி கொன்றுவிடுவானே யென்கிற அச்சத்தால் தாய்தந்தையர் அத்தெய்வக்குழவியின் அநுமதிபெற்று அந்தச்சிசுவை அது பிறந்த நடுராத்திரியிலேயே கோகுலத்திலே நந்தகோபனது கிருகத்திலே ரகசியமாகக் கொண்டுசேர்த்துவிட்டு அங்கு அப்பொழுது யசோதைக்கு மாயையின் அம்சமாய்ப் பிறந்திருந்ததொரு பெண்குழந்தையை யெடுத்துக்கொண்டு வந்துவிட, அதுமுதல் கம்சனைக் கொல்லுகிறவரையில் இளம்பருவத்திலெல்லாம் கண்ணபிரான் அவ்வாய்ப்பாடியிலேயே பலவகைத் திருவிளையாடல்களைப் புரிந்து வளர்ந்தனனென்பது வரலாறு.

ஆயர் - பசுக்களையுடையவரான இடையர்க்குக் காரணப்பெயர், ஆ - பகுதி, பசு; அர் - விகுதி. ய் - எழுத்துப்பேறு. அறிகிற்பர் என்பதில், கில - துணிவுணர்த்தும் இடைநிலை. துரியோதனனுக்கு மேருகிரி-திறத்திலும் பருமை வலிமைகளிலும் உவமம். வாசகம் - வடசொல். எற்று ஓகாரம் - எதிர்மறை. அற்பர் - அல்பரென்ற வடசொல்லின் திரிபு. கொளுத்துதல் - கொள்ளச்செய்தல்; இங்கே, கொளுத்து-கொள் என்பதன் பிறவினை; இதில், உ - சாரியை, து - பிறவினைவிகுதி. தீப்பற்றவைத்த லென்ற பொருளில், கொளுந்து என்ற தன்வினைப்பகுதி மெல்லொற்று வல்லொற்றாகிய பிறவினையாம். (கஉச)

மலைத்தபோர்தொறுமெனக்குநீசெய்பிழைமற்றுளோர்செயநினைப்
குலத்திலேயிழிகுலத்தரானவர்குறிப்பிலாதிவைபிறக்குமோ [பரோ
சலத்தினால்வினையியற்றுவார்முடிதரித்தகாவலரொடொப்பரோ
நிலத்தில்வாழ்வவர்பெறக்கொடாயினிநினைத்தகாரியமுடித்தியே.

(இ - ள்.) மலைத்த போர் தொறும் - எதிர்த்துச்செய்த யுத்தந்தோறும், எனக்கு நீ செய் பிழை - எனக்கு நீ செய்த துரோகங்களை, மற்று உளோர் - பிறர், செய நினைப்பரோ - செய்யக்கருதுவார்களோ? [கருதார் என்றபடி]; குலத்திலே இழி குலத்தர் ஆனவர் குறிப்பு இலாது - குலங்களுள் இழிகுலத்திற்பிறந்தவர்களது இங்கிதக்குறிப்பு இல்லாமல், இவை பிறக்குமோ இப்படிப்

பட்ட அக்கிரமச்செய்கைகள் உண்டாகுமோ? [உண்டாகா என்றபடி]; சலத்தி னால் வினை இயற்றுவார் - வஞ்சனையாகத் தொழில்செய்பவர்கள், முடி தரித்த காவலரோடு ஒப்பரோ-கிரீடந்தரித்துஅரசாளும் சிறந்தஅரசர்களுக்குச் சமான மாவர்களோ? [ஆகார் என்றபடி]; இனி - (இங்ஙனம் நீ பற்பலதுரோகங்கள் செய்த) பின்பு, நிலத்தில் வாழ்வு அவர் பெற கொடாய் - இந்தநிலவுலகத்தில் அரசுபெற்றுவாழும்வாழ்க்கையை அந்தப்பாண்டவர்கள்பெறும்படி கொடுத்திடு; நினைத்த காரியம முடித்தி-நீஎண்ணியகாரியங்களை முடித்துக்கொள்; (எ-று.)

முதல்மூன்றடிகளிற் கூறியது நிந்தைவார்த்தையும், நான்காமடியிற் கூறியது நிட்டூரவார்த்தையுமாம். இப்படிபிழைசெய்தாலொழிய என்னைக்கொன்று பாண்டவர்க்கு வாழ்க்கைகொடுக்கவும், நீஎண்ணியகாரியத்தைமுடிக்கவும் ஆகா தென்னுங் கருத்துத் தோன்ற, 'நிலத்தில்வாழ்வு அவர்பெறக் கொடாய், இனி நினைத்தகாரியம் முடித்தி' என்றான். 'நினைத்தகாரியம்' என்றது, துரியோதனாதியர் நூற்றுவரையும் பற்றறத் தொலைத்தல்; பூமிபாரநிவிருத்தியுமாம். போர்தோறும் கண்ணன் துரியோதனனுக்குச் செய்த பிழைபாவன - போர்த்தொடக்கத்தில் துரியோதனனுக்குப் போர்ப்பலியாதற்கு உடன்பட்டிருந்த இராவானைப் பாண்டவர்க்குப் போர்ப்பலியாகுமாறு செய்தமை, துரியோதனன் போர்ப்பலிசெலுத்துதற்கு நாட்கொண்டிருந்த அமாவாசையை முந்தினநாளிலேயே வருவித்து அதிற் பாண்டவர்போர்ப்பலிசெலுத்தச்செய்தமை, மூன்றாம்போரில் எதிர்ப்பவரில்லையாம்படி கடும்போர்செய்த வீடுமனை யழித்தற்குச் சக்கரமேந்திக்கொண்டு சென்றமை, பத்தாம்போரில் வீடுமன்முன் சிகண்டியைக்கொண்டுநிறுத்தி அவனையும்அம்புகளுடன் அருச்சுனனையும் அம்புசெலுத்தச் சொல்லி அவற்றால் வீடுமனைச் சிதைத்தமை, பன்னிரண்டாம்போரில் பகதத்தன் அருச்சுனன்மேல் எறிந்த தனதுவேற்படையைத் தான்முன்னின்று மார்பிலேற்றுப் பயன்படாதாக்கினமை, பதின்மூன்றாம்போர்நாளிரவில் மறுநாட்செயப்போகும் சைந்தவவதத்திற்காக அருச்சுனனைக் கயிலைக்குஅழைத்துக்கொண்டுபோய் அவனுக்குச் சிவபிரானையேவேண்டி சிறந்தபலஆயுதங்களைக் கொடுப்பித்தமை, பதினான்காம்போரில் சுதாயு அருச்சுனன்மேலெறிந்த வரம்பெற்ற கதாயுதத்தைத் நிராயுதனாகிய தான் மார்பிலேற்று அதனால் அவனைக் கொல்வித்தமை, அருச்சுனனுக்கு ஒருமந்திரமுபதேசித்து அதன்பலத்தால் அவன் ஆயிரவாகுவைக் கொலைச் செய்தமை, அருச்சுனன் போர்செய்தற்குச் சோரும் சமயத்தில் தான் பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கத்தை வாயில்வைத்தூதி அதன்பெருமுழக்கத்தாற் சேனையை மூர்ச்சிக்கச்செய்தமை, சூரியாஸ்தமனத்துக்கு முந்தியே சூரியனைச் சக்கரத்தால் மறைத்து அப்பொழுது வெளிப்பட்ட சயத்திரதனையும் அவன்தந்தையையும் ஒருங்கே அருச்சுனனைக் கொண்டு கொல்வித்தமை, பதினைந்தாம்போரில் அசுவத்தாமா இறந்ததாகத் தருமனைக்கொண்டு கற்பித்துவார்த்தை கூறுவித்து அதுகேட்டதனால் துரோணன் படைக்கலமொழிந்து அழியச் செய்தமை, தந்தையிறந்ததனால் அசுவத்தாமன் கோபங்கொண்டு நாராயணாஸ்திரத்தைப் பிரயோகித்தபொழுது பாண்டவரை நிராயுதராய் வாகனமொழிந்து கீழ்நின்று வணங்கச்செய்து அதனினின்றுங் காத்தமை, பதினேழாம்போரில் கர்ணன் நாகாஸ்திரம்பிரயோகித்தபொழுது அருச்சுனனதுதேரைப் பன்னிரண்டுஅங்குலம் நிலத்திலழுந்தும்படி அழுத்தி அதனால் அது அருச்சுனன்தலையாகிய இலக்கைத் தவறி அவனதுகிரீடத்தை யிடறியமாத்திரத்தோடு செல்லச் செய்தமை முதலியன காண்க.

இங்கே, 'இழிகுலம்' என்றது, இடைச்சாதியை. சந்திரகுலத்தில் நகுஷனது குமாரனான யயாதி சுக்கிரசாபத்தால் கிழத்தனமடைந்து தனதுமூத்த குமாரனான யதுவையும் அடுத்தகுமாரர்களான துர்வசு துர்க்கியு அநு என்பவர்களையும் தனித்தனி 'உன்இளமையைக்கொடுத்து என்முதுமையைக் கைக்

கொள்' என்று வேண்டி, அவர்கள் அதற்கு உடன்படாதொழிந்தபின் கடைசிக்குமாரனான பூருவை வேண்ட, அவன் அதற்கு இணங்கி மூப்பைப்பெற்றுக் கொண்டு யௌவநத்தைக் கொடுத்ததனால், அரசன் மகிழ்ந்து தன்கருத்துக்கு இசையாத யது முதலிய மூத்தமக்கள்நால்வர்க்கும் முடிசூடியரசாளுஞ்சிறப்பு இல்லையாகச்செய்து சிற்றரசராக்கி இளையமகனான பூருவைச் சகலபூமண்டலத்துக்கும் அதிபதியாகநிறுத்தி முடிசூட்டிப் பட்டாபிஷேகஞ்செய்துவைத்திட்டான்; அக்குமாரர்களுள் மூத்தவனும்த் தனக்குரிய அரசாட்சியைத் தந்தையின்சாபத்தால் இழந்த யதுவின் குலத்திற் பிறந்தவன் கிருஷ்ணன். இளையவனும்த் தனக்குரியதல்லாத அரசாட்சியைத் தந்தையின் அனுக்கிரகத்தாற் பெற்ற பூருவின் குலத்திற் பிறந்தவன், துரியோதனன்; ஆகவே, முடிதரித்தரசாளுஞ் சிறப்புத் துரியோதனன்குலத்தார்க்கு உண்டு: அச்சிறப்புக் கண்ணன்குலத்தார்க்கு இல்லை; இந்தஉயர்வுதாழ்வுகளை உள்ளத்திற்கொண்டு, 'சலத்தினால் வினையியற்றுவார் முடிதரித்தகாவலரொ டொப்பரோ' என்றான்.

மலைத்த - மலைந்த என்பதன் வலித்தல். நீசெய்தாற்போலப் பிறர்செய்யாரென்பதே யன்றி, செய்யநினைக்கவும்மாட்டா ரென அந்தத்துரோககாரியங்களின் இழிவை விளக்கினான். சலம் - வடசொல். கொடாய், முடித்தி - ஏவலொருமைமுற்றுக்கள். (கஅகூ)

வீமன் துரியோதனனை உதைக்கப் பலராமன் சீறுதல்.

எனச்சில்வாசகமிழற்றிமீளவுமெதிர்ப்பதாகியெழலுற்றபோ
தனற்சகாயன்முனளித்தகாளைதனடற்சரோருகபதத்தினா [கவே
லுனக்குவாழ்வினியெனக்கொலாமெனவுதைத்துமௌலியையுடைக்
சினத்தலாயுதனிறத்தவாள்விழிசிவக்கவாய்மைசிலசெப்புவான்.

(இ - ள்.) என - என்று, சில் வாசகம் - சிலவார்த்தைகளை, மிழற்றி - வாய்குழறச்சொல்லி, (துரியோதனன்), மீளவும் எதிர்ப்பது ஆகி எழல் உற்றபோது - மறுபடியும் (வீமனைத் தான்) எதிர்த்துப்பொருவதாகக் கருதி யெழுந்திருக்கத் தொடங்கியபொழுது,—அனல் சகாயன் முன் அளித்த காளை - அக்கினிக்குத்துணைவனான வாயுதேவன் முன்புபெற்ற புத்திரனான வீமன், இனி உனக்கு வாழ்வு என கொல் ஆம் என - 'இன்னமும் உனக்கு வாழ்க்கை என்னோ?' என்று (துரியோதனனைநோக்கிச்) சொல்லி, தன் அடல் சரோருக பதத்தினால் - வலிமையையுடையதும் (செம்மையிலும் மென்மையிலும்) தாமரைமலர்போல்வதுமான தனது கால்களால், உதைத்து—, மௌலியை உடைக்க - தலையைஉடைக்க, (அப்பொழுது), சினத்து அலாயுதன் - கோபகுணமுடைய பலராமன், நிறத்த வாள் விழி சிவக்க - நிறத்தையுடைய ஒளியுள்ள கண்கள் (கோபத்தாற்) சிவக்க, சில வாய்மை செப்புவான் - சிலவார்த்தைகளைக் கூறுபவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்தஇரண்டுகவிகளிற் காண்க.

மிழற்றுதல் - நிரம்பாதசொற்கூறுதல். காற்றையும் நெருப்பையும் ஒருவர்க்கொருவர் நண்பராக்கூறுதல், மரபு. ஸஹாயன், ஸரோருஹம், ஹலாயுதன், மௌலி - வடசொற்கள். சரோருக மென்றது - குளத்தில் முளைப்பதென்று காரணப்பொருள்படும்; தாமரைக்குக் காரணவிடுகுறிப்பெயர் ஹல+ஆயுதன்=ஹலாயுதன்; கலப்பையைப் படைக்கலமாக வுடையவன். எவன் என்ற அஃறிணைப்பொது வினாவினைக்குறிப்புமுற்று, வகரம்கெட்டு அகரச்சாரியைபெற்று 'என்ன'என நிற்கவேண்டுவது, தொகுத்தலாய்,எனவென நின்றது. அதன்மேல் 'கொல்' என்ற அசைநிலையிடைச்சொல்லின் முதல்வலி 'எனக்கொல்' எனஇரட்டி வந்தது, சந்தவின்பம்நோக்கிய விரித்தல்விகாரத்தினாலாம்.

## வேறு.

### பலராமன் கோபித்துக் கண்ணனோடு சிலகூறுதல்.

எம்பிரானைமுராரியைமாயனை யிம்பரேழ்கடல்சூழ்புவிமேலொரு
தம்பியாவுடையானவனோடெதிர் சந்தியாவெகுளாவிழிதீயெழ
நம்பிகேளரியோடுடன்மேவிய நஞ்சுபோலுநரேசர்முன்னேயுடல்
கம்பியாவிழவூருவின்மோதுதல் கண்டபோதெனதாருயிர்போனதே.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) எம் பிரானை - எமக்கெல்லாந் தலைவனும், முர அரியை - முரனென்னும்அசுரனுக்குப் பகைவனானவனும், மாயனை - மாயையையுடையவனுமான கண்ணபிரானை, எழ் கடல் சூழ் புவிமேல் - ஏழுவகைக்கடல்களாற்சூழப்பட்ட பூலோகத்தில், இம்பர்-இத்திருவவதாரத்தில், ஒரு தம்பி ஆ உடையான்-ஒப்பற்ற தம்பியாகப் பெற்றுள்ளவனான பலராமன், அவனோடு-அக்கண்ணபிரானுடனே, எதிர் சந்தியா - எதிரிலேசமீபித்து, விழி தீ எழ வெகுளா - கண்களில் நெருப்புப்பொறிகிளம்பக் கோபித்து,— 'நம்பி கேள்-தம்பீ! (நான்சொல்வதைக்) கேட்பாயாக; அரிபோடு உடன் மேவிய-பாம்புடன்கூடவேபொருந்திய, நஞ்சு போலும் - விஷம்போன்ற, நரேசர் முன்னே - அரசர்களுக்கு எதிரிலே, உடல் கம்பியா விழ - உடம்புநடுநடுங்கிவிழும்படி, ஊருவில் மோதுதல் - (வீமன் துரியோதனனைத்) தொடையிலே தாக்கியதனை, கண்ட போது - பார்த்தபொழுது, எனது ஆர் உயிர் போனது-எனது அரியஉயிர்(உடம்பைவிட்டு) நீங்கும்நிலையடைந்தது; (எ - று.)—ஈற்றுஏகாரம் - தேற்றத்தோடு இரக்கம். இக்கவியில், உடையான் சந்தியா வெகுளா என்ற சொற்கள், அடுத்தகவியில் வரும் 'ஓடினன்' என்ற முற்றைக் கொண்டு முடியும்.

கொடியஅக்கிரமச்செய்கையைக் கண்ணெதிரிற் கண்டால் பெரியோர் மனம் பொறுக்காதலாலும், அவர்க்கு மரணவேதனைக்குச்சமானமான வருத்தம் விளையுமாதலாலும், 'எனதுஉயிர் நீங்கினாற்போலாயிற்று' என்றான். அரியோடுடன் மேவிய நஞ்சுபோலு நரேசர் - பகையழித்தலில்தவறாத பராக்கிரமத்தாற் கொடியவரென்றபடி; யாவரிடத்தாயினும் குற்றங்கண்டபோது கண்ணோட்டமின்றித் தண்டிப்பதில் கடியவரென்றவாறுமாம். அரி - ஹரி; அகப்பட்டபொருளை யழிப்பது. எம் என்ற தன்மைப்பன்மை - எல்லாவுயிர்களையும் உளப்படுத்தியது. எம்பிரானை, முராரியை, மாயனை என்ற ஒருபொருட்பலபெயர்கள் - 'உடையான்' என்ற ஒருமுடிக்குஞ்சொல்லைக் கொண்டன. திருமாலினது அம்சமும் ஆதிசேஷனது அம்சமுங் கூடிப்பிறந்த பலராமன், பரமபதத்தில் எம்பெருமானது திருமேனியில் ஐக்கியமும், அப்பெருமானுக்குச் சகலவிதகைங்கரியங்களையுஞ் செய்யும் நித்தியத்தொண்டனாயிருந்த நிலைமையும், இதற்கு முந்தியதான இராமாவதாரத்தில் அப்பெருமானுக்குத் தான் தம்பியாகப்பிறந்திருந்த தன்மையும் போலன்றி இப்பிறப்பில் தமையனாகத்தோன்றியுள்ள சிறப்புடையவனென்பார் 'மாயனை யிம்பரேழ்கடல்சூழ்புவிமேலொருதம்பியாவுடையான்' என்றார். சந்தியா - அருகில்வந்து. நம்பி - அண்மைவிளி; ஆதலின், இயல்பாய் நின்றது; [நன் - பெயர் - ருசு.] நம்பி-ஆண்பாற்சிறப்புப்பெயர்: ஆடவரிற்சிறந்தவனென்று பொருள்; இதற்கு- 'நம்முதனிலையாக நமக்கு இன்னானென்னும் பொருள்பட வருவதோர் உயர்ச்சிச்சொல்' என்று பொருளும் இலக்கணமுங் கூறியுள்ளார் ஆசிரியர் நச்சினார்க்கினியர்: இப்பொருளில், பி - முறைப்பெயர்விகுதி. இனி, யாவராலும் நம்பிச்சரணமடையத்தக்கவனென்றும் பொருள்கொள்ளலாம்; இப்பொருளில், இ - செயப்படுபொருள்விகுதி. இச்சொல்லுக்கு-பூர்ணனென்று பொருள்கூறுதல், சம்பிரதாயம். நரேசர் - நர +

ஈசர்; மனிதர்க்குத் தலைவர். கம்பியா - கம்ப மென்னும் வடமொழிப்பெயரி னடியாப் பிறந்த இறந்தகாலவினையெச்சம்; நடுங்கி யென்று பொருள்.

இச்செய்யுள் - கீழ் கஎஅ-ஆங் கவி போன்ற கட்டளைக்கலிப்பா. தந்த தானன தானன தானன தந்த தானன தானன தானன—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பு. (௧௧௧)

வேறு.

பலராமன் வீரவாதங்கூறி வீமனோடு போர்செய்யத் தொடங்குதல்.

கதையெடுத்துடற்றுமாடவர்கள் கடிதடந்தனக்குமேலொழிய
வதிர்வுறப்புடைப்பரோதொடையி லடிபடத்துதைப்பரோமுடியி
லெதிரியைச்சலத்திறலென்விழி யெதிர்வழக்கழித்தபாவனனை
முதுகிடப்புடைப்பல்யானுமென முசலகைத்தலத்தொடோடினனே.

(இ - ள்.) கதை எடுத்து - கதாயுதத்தையேந்தி, உடற்றும் - போர்செய்கிற, ஆடவர்கள் - வீரர்கள், கடிதடந்தனக்கு மேல் ஒழிய - இடைக்குமேல் அடிப்பதே யல்லாமல், தொடையில—, அதிர்வு உற - நடுப்புண்டாம்படி, புடைப்பரோ-அடிப்பார்களோ? [அடியாரென்றபடி]: (அன்றியும்), முடியில் - தலையில், அடி பட-கால் படும்படி, துதைப்பரோ-உதைப்பார்களோ? [உதையார் என்றபடி]; (அங்ஙனமன்றி இப்பொழுது தொடையிலடித்தும் முடியிலுதைத்தும்), எதிரியை - தன்பகைவனான துரியோதனனை, சலத்திறல்-மாறுபாடு கொண்ட வயிரத்தால், என் விழி எதிர் - எனது கண்ணெதிரிலே, வழக்கு அழித்த - நீதியின்றிஅழித்திட்ட, பாவனனை-வாயுகுமாரனான வீமனை, முதுகு இட யானும் புடைப்பல்-புறங்கொடுக்கும்படி நான் தாக்குவேன், என-என்று சொல்லி, (பலராமன்), முசல கைத்தலத்தொடு - உலக்கையைஆயுதமாகவேந்திய கையுடன், ஓடினன் - (வீமன்மேல்) விரைந்துசென்றான்; (எ - று.)

பலராமனுக்குக் கலப்பையேயன்றிஉலக்கையும் உரியஆயுதமெனவுணர்க. ஆடவர் - ஆண்மையையுடையவர். கடிதடம் - வடசொல். அதிர்வுற -நடுங்க. அடிபட - ஊறுபட எனினுமாம். வழக்கழித்த - யுத்ததருமத்தை அழியச்செய்த. பாவநன் - பவநன்மகன்; தத்திதாந்தநாமம். புடைப்பல், 'அல்' - தன்மையொருமைவிகுதி; இது எதிர்காலஇடைநிலையோடு மாத்திரமே வரும். யானும் என்ற உம்மை - உயர்வுசிறப்பாய், இந்தப்போரில் தலையிடுவதில்லை யென்று ஒழிந்து தீர்த்தயாத்திரைசென்ற யானும் என்றவாறும். எதிரி-எதிர்த்தவன்; இ - கருத்தாப்பொருள்விகுதி.

இச்செய்யுள் - முதற்சீரும் நான்காஞ்சீரும் கருவிளச்சீர்களும், இரண்டாஞ்சீரும் ஐந்தாஞ்சீரும் புளிமாச்சீர்களும், மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் கூவிளங்காய்ச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியச் சந்தவிருத்தம். தனனனத் தனத்த தானனன தனனனத் தனத்த தானனன—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பு. (௧௧௨)

வேறு.

பலராமனுக்குக் கண்ணன் சமாதானங்கூறத் தொடங்குதல்.

மதியிரவியோடுபோர்செயுமாறென வலியதிறல்வீமன்மேலிவ
னோடலு,மிதயமலர்தோறுமேவருநாயக னிவனைவிரைவோடுபோய்
விலகாவிரு,பதுமநிகரானதாள்பணியாமிகு பரிவினொடுசீறுமாண்மை
தகாதென,வதிமதுரவாய்மையால்வெகுளாவகை யடிகளிவைகேண்
மினோவெனவோதினன்.

(இ - ள்.) மதி - சந்திரன், இரவியோடு - சூரியனுடனே, போர் செயும் ஆறு என - போர்செய்யச்செல்லும்விதம்போல, இவன் - பலராமன், வலிய

திறல் வீமன்மேல் - வலிய வெற்றியையுடைய வீமன்மீது, ஓடலும் - (போர் செய்தற்கு)விரைந்தோடுந்தவளவிலே,—இதயம்மலர் தோறும் மேவுருநாயகன்- (பிராணிகளுடைய) உள்ளத்தாமரைமலர்களிலெல்லாம் பொருந்தியுள்ள தலைவனான கண்ணபிரான், விரைவோடு போய் - துரிதமாகச் சென்று, இவனை விலகா - இந்தப்பலராமனைத் தடுத்து, பதுமம் நிகர் ஆன இரு தாள் பணியா - தாமரைமலருக்கு ஒப்பான இரண்டுபாதங்களிலும் விழுந்து நமஸ்கரித்து, வெகுளா வகை - (அவன்) கோபங்கொள்ளாதபடி, அதி மதுரம் வாய்மையால் - மிகவும்இனிமையான வார்த்தைகளால், மிகு பரிவினொடு சீறும் ஆண்மை தகாது என - '(துரியோதனன்பக்கலுள்ள) மிக்கஅன்போடு நீகோபங்கொள்ளுந்திறம் தகுதியன்று' என்றுசொல்லி, அடிகள் இவை கேண்மினோ என - 'பெரியோய்! இவற்றைக்கேளும்' என்றுங்கூறி, ஓதினன் - (சில)சொல்பவனானான், (எ - று.)—அவற்றை அடுத்தஇரண்டுகவிகளிற் காண்க.

பலராமனது வெண்ணிறமும், அவனினும் வீமன் மிக்கவலிமையுடையானென்பதும் தோன்ற, பலராமன் வீமனொடுபோர்தொடங்குதற்குச் சந்திரன் சூரியனோடு போர்தொடங்குதலை உவமைகூறினார்; இல்பொருளுவமை. இதய மலர் - ஹ்ருதயகமலம். "மலர்மிசை யேகினான்" என்றபடி. எல்லோருள்ளத்திலும் எம்பெருமான் குடிகொண்டிருப்பவனென்க. விலகா=விலக்கா; பிறவினைப்பொருளில் வந்த தன்வினை. மிகுபரிவு - வரம்புகடந்தஅன்பு. மிகுபரிவினோடு சீறும் என இயையும். மிகுபரிவினோடு ஓதினன் எனஇயைத்துப் பாண்டவர்பக்கல் மிக்ககருணையுடனே கண்ணன் கூறினானெனினும் அமையும். பத்மம், அதிமதுரம் - வடசொற்கள். வாய்மை - உண்மையான சொல். அடிகள் - பாதா: என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பாய் நின்று, பெரியோரைக் குறிக்கும். அடிகள்கேண்மின் என்றது, உயர்வுப்பன்மை.

இச்செய்யுள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் கருவிளங்காய்ச்சீர்களும், இரண்டாஞ்சீரும் ஆறாஞ்சீரும் தேமாச்சீர்களும், மற்றைநான்கும் கூவிளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தம். தனனன தான தானன தானன தனனனன தான தானன தானன—என்பது,இதற்குச் சந்தக்குழிப்பு. (கககக)

வேறு.

இதுவும், அடுத்தகவியும் - கண்ணன்கூறும் சமாதானவார்த்தைகள்.

முகுரானனன்மைந்தனும்வீமனுமே முடியாதபெரும்பகையாளர்கள்காண், மகிபாலர்திருந்தவையூடுரையா வழுவாதனவஞ்சினமோதிநனி, யிகல்வார்சிலையின்குருவானவர்தா மிடுசாபமுமுண்டு திரௌபதியார், பகர்சாபமுமுண்டதனாலிதுவே படுமேயிவன்வெங் கதையாலவனே.

(இ - ள்.) முகுர ஆனனன் மைந்தனும் - கண்ணாடிபோலும் முகத்தையுடையனான திருதராட்டிரனது புத்திரனாகிய துரியோதனனும், வீமனும்—, (ஆகிய இருவரும்), முடியாத பெரு பகையாளர்கள் காண் - (ஒருவரோடொருவர்) முடிவில்லாத மிக்கபகையையுடையவர்களன்றோ? (அன்றியும்), மகிபாலர் திருந்து அவையூடு - அரசர்கள்அழகிதாகக்கூடியுள்ள சபையிலே, உரையா - சொல்லுதற்குஅரிய, வழுவாதன - தவறுதலையான, வஞ்சினம் - சபதவார்த்தைகளை, நனி - மிகுதியாக,ஓதி - (வீமன்) கூறியுள்ளதனால், இகல்வார் - (இவ்விரண்டுபேரும்) மாறுபட்டுப் பொருவார்கள்: (அன்றியும்), சிலையின் குரு ஆனவர்தாம் - வில்வித்தையில்தேர்ந்த ஆசிரியரான மைத்ரேயர், இடு - (துரியோதனனுக்கு) இட்ட, சாபமும்—,உண்டு - உள்ளது; (அதுவுமல்லாமல்), திரௌபதியார் பகர் சாபமும் உண்டு- திரௌபதிதேவி கூறியுள்ள சாபமும் உள்ளது;

அதனால் - ஆதலால், இவன் வெம் கதையால் - வீமனது கொடியகதாயுதத்தால், அவன் - துரியோதனன், எதிரே படுமே - எதிரிலே இறந்தேதீர்வான், (எ-று.)

துரியோதனனும் வீமனும் இளமைதொடங்கி ஒருவர்க்கொருவர் தீராத வைரமுடையவ ரென்பது பிரசித்தமென்பதை முதலடி விளக்கும். வீமனுமே, ஏ - அசை. காண் என்ற ஏவலொருமைமுற்று, இடைச்சொல்தன்மைப்பட்டுத் தேற்றப்பொருளை விளக்கும். மஹீபாலர் - வடசொல்; பூமியைக் காப்பவர். ஒதி - ஓத என்னும் எச்சத்தின் திரிபு குசிலவமுனிவரது குமாரரும் பராசரமுனிவரது மாணாக்கருமான மைத்திரேயமுனிவர் பாண்டவர்கள் காமியவனத்தில் வசித்தபொழுது அவர்களிடத்தினின்று வந்து துரியோதனனுக்கு இதோபதேசஞ்செய்ய அவன் அதனைக்கேளாமல் அவரைப் பரிகசித்தனனாதலால், அவர் மிகவுங்கோபித்து 'வீமனுடைய கதையி னடியால் தொடைமுறிந்து இறப்பாய்' என்று சபித்துச்சென்றன ரென்பது.வரலாறு. துரோணர் கிருபர் பரசுராமர் என்பவர்போல இம்முனிவர் வில்வித்தையில் தேர்ந்தவ ரென்பது விளங்க, 'சிலையின்குரு' எனப்பட்டார். அன்றி, துரோணர் சபித்ததாகவும் கூறுவதுண்டு. ஆனவர் - முதல்வேற்றுமைச்சொல்லுருபு. இடுசாபம், பகர்சாபம் - இறந்தகாலவினைத்தொகைகள். திரௌபதி துரியோதனனைச் சபித்ததை, கீழ்ச் சபாபருவத்தில் "தந்தைவிழியிருள்போலத் தருமனத்தோனுந் துச்சாதனனைநோக்கிப்,பைந்தொடியைக் கொணர்ந் தினி யென் மடியின் மிசை யிருத்துகெனப் பணித்திட்டானே," "புன்றொழிலோன் யானிருக்கக் காட்டிய தன்றொடைவழியே புள்வாய் குத்தச்,சென்றிடுக வாருயி ரென் றெவரும் வெருவுறச் சபித்தாள் தெய்வமன்னாள்" என்றவற்றால் அறிக. படுமே, ஏ - தேற்றம். த்ரௌபதீ - வடசொல்: தத்திதாந்தநாமம்; துருபதன்மகள்.

இச்செய்யுள் - எல்லாச்சீர்களும் புளிமாச்சீர்களாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச் சந்தவிருத்தம். தனனா தனதந் தனனா தனனா தனனா தனதந் தனனா தனனா—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பு. இனி, இதனை முதற்சீரும் நான்காஞ்சீரும் புளிமாங்கனிச்சீர்களும், இரண்டாஞ்சீரும் ஐந்தாஞ்சீரும் கூவிளச்சீர்களும், மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் கூவிளங்காய்ச்சீர்களுமாகக் கொண்ட அறுசீராசிரியச்சந்தவிருத்தமாக்கி, தனனானன தந்தன தானனனா தனனானன தந்தன தானனனா எனச் சந்தக்குழிப்புக் காட்டுதலும் ஒன்று. (கககச)

வேறு.

வெஞ்சிலைவிதுரனவனுநீவிரு மிஞ்சியபுனல்கள்படியவேகினிர்
பஞ்சவர்களொடுவயிரியாயொரு பண்பறவினைசெய்சமரபூமியில்
வஞ்சனைவழியிலொழியநேர்பட வன்பொடுமறமுமறமதாம்வகை
யெஞ்சியபதினெண்வகைகொணாளினுமின்றமர்பொருததுரககேதுவே.

(இ - ள்.) வெம் - (பகைவர்க்குக்) கொடிய, சிலை - வில்லில் தேர்ந்த, விதுரனவனும் - விதுரனும், நீவிரும் - நீரும், மிஞ்சிய புனல்கள் படிய - மிக்க புண்ணியதீர்த்தங்களிலே ஸ்நாநஞ்செய்வதற்கு,ஏகினிர் - சென்றீர்கள்; (இங்கு), பஞ்சவர்களொடு - பஞ்சபாண்டவர்களுடன், வயிரி ஆய் - தீராப்பகைமை கொண்டவனாய், ஒரு பண்பு அற - தகுதி சிறிதுமில்லாமல், வினை செய் - போர்த்தொழிலைச் செய்த, சமர பூமியில் - யுத்தகளத்தில், உரக கேது - பாம்புக்கொடியனான துரியோதனன், வஞ்சனை வழியில் ஒழிய - வஞ்சகவழியினல்லாமல், நேர்பட - நேராக, வன்பொடு - வலிமையோடு, மறமும் - பராக்கிரமமும், அறமது ஆம் வகை - தருமமாக அமையும்படி, அமர் பொருதது - போர்செய்தது,எஞ்சிய பதினெண் வகை கொள் நாளினும் - கழிந்தபதினெட்டு நாள்களுள்ளும், இன்றே - இப்பொழுதுமாத்திரமேயாம்; (எ - று.)

"விதுரனும் நீரும் இங்குப் போர்க்கு நில்லாமல் தீர்த்தயாத்திரைசென்று இப்பொழுதே மீண்டுவந்தீர்கள்" என்றதனால், இவ்வளவுநாளாய் இங்குநடந்த போர்வகைகளின் நிலைமையை நீங்கள் அறியீர்; இங்கு உடனிருந்துகண்ட நானே அறிவேன் என்றவாறு. இப்பொழுது உங்கள்கண்காணத் துரியோதனன் செய்த போரொன் றொழிய இதுவரையிலும் பதினெட்டுநாள்களிலும் அவன் செய்தும் செய்வித்தும் வந்த போர்களெல்லாம் அநீதிநிறைந்தனவே யெனக்கூறிக் கண்ணன் பலராமனைச் சமாதானப்படுத்துபவனானான். இவ்வளவு நாளாய் அவன்செய்த அக்கிரமங்கள்பலவற்றையும் நோக்குமிடத்து இவ்வளவு நாளாய்த் தருமயுத்தமேசெய்துவந்த பாண்டவருள் வீமன் இன்று ஒருபொழுது சிறிதுமுறைபிறழச் செய்த இது பெரும்பிழையாகப் பாராட்டற்பாலதன்று என்பதாம். செய்யுளிறுதியிலுள்ள பிரிநிலையேகாரம், பிரித்து 'இன்று' என்ற இடைச்சொல்லோடு கூட்டப்பட்டது. இனி, 'இன்று' என்பதை எதிர்மறையொன்றன்பாற்குறிப்புமுற்றாக்கொண்டு, துரியோதனன் பதினெட்டுநாள்களிலுந் தருமயுத்தஞ்செய்ததில்லை யென்று உரைத்தல், அத்துணையாச்சிறவாது.

"வெற்றிவிதுரன்கை வில்லிருக்க மேதினியில், மற்றவனை வெற்றிகொள்ளு மாறுண்டோ" என்றபடி விதுரன் வில்வித்தையில் ஒப்புயர்வற யாவரினும் வல்லவனாதலால், 'வெஞ்சிலைவிதுரன்' எனப்பட்டான். விதுரனவன், அவன்- முதல்வேற்றுமைச்சொல்லுருபு. நீவிர் முதல்வேற்றுமையில் மாத்திரமே வரும் முன்னிலைப்பன்மைப்பெயர்; [நன் - பெயர் - கூஎ.] மிஞ்சிய - விஞ்சிய என்பதன் மரூஉ. விதுரனும் நீவிரும் ஏகினிர் - "முன்னிலைகூடியபடர்க்கையும் முன்னிலை" என்றபடி வந்த இடவழுவமைதி. பஞ்சவர் - பஞ்ச என்னும் வடசொல்லினடியாப் பிறந்த பலர்பாற்பெயர்; இங்கே, தொகைக்குறிப்பு: பஞ்ச - ஐந்து. வைரீ, ஸமரபூமி - வடசொற்கள். வயிரி - முதற்போலி. திருக்குறளில் பரிமேலழகர் 'பண்பாவது - பெருமைசான்றாண்மைகளில் தாம்வழுவாது நின்றே எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்தொழுகுதல்' என உரைத்தது, இங்கு அறியத்தக்கது. உரககேது - வேற்றுமைத்தொகையன்மொழி; வடசொல்.

இச்செய்யுள் - ஒன்று இரண்டு ஐந்து எட்டாஞ் சீர்கள் கூவிளச்சீர்களும், மற்றைநான்கும் புளிமாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்குகொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தம். தந்தன தனன தனன தானன தந்தன தனன தனன தானன—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பாம். (கசூ௫)

## வேறு.

### பலராமன் செல்ல, துரியோதனன் குற்றுயிராய்க் கிடத்தல்.

வெற்றிபுனைபலபத்ரராமனு மெய்த்துணைவனிவைசொற்றகாலையின்
மற்றையநுசனொடுற்றநீள்களம் வட்டமிட்டொரிமைப்பினேகினன்
அற்றையடலமரிற்சுயோதன னற்பவுயிர்நிலைநிற்பநீடுடன்
முற்றுமுகுகுருதிக்கண்மூழ்குற மொய்த்தகழுகினிழற்கண்மேவினன்.

(இ - ள்.) வெற்றி புனை - சயத்தை அழகிதாகக்கொண்ட, பலபத்ரராமனும் - பலராமனும், மெய் துணைவன் இவை சொற்ற காலையில் - உண்மையன்புடைய தம்பியான கண்ணன் இவ்வார்த்தைகளைச் சொன்னவளவில், மற்றை அநுசனொடு - மற்றொருதம்பியான சாத்தகியுடனே, உற்ற நீள் களம் வட்டம் இட்டு ஓர் இமைப்பின் ஏகினன் - பொருந்தியபெரியபோர்க்களமாகிய அந்தச் சமந்தபஞ்சகத்தைப் பிரதக்ஷிணஞ்செய்து ஒருமாத்திரைப்பொழுதிலே விலகிச்சென்றான்; அற்றை அடல் அமரில்-அன்றைத்தினத்தில்நடந்த வலிய போரில், சுயோதனன் - துரியோதனன், அற்பம் உயிர் நிலை நிற்ப - தனதுஉயிர் உடம்பிற் சிறிதளவே நிலைபெற்றிருக்க, நீடு உடல் முற்றும்-நீண்டஉடம்பு முழுவதும், உகு குருதிக்கண் மூழ்குற-பெருகுகிற இரத்தத்திலே முழுகும்படி, மொ

ய்த்த கழுகின் நிழற்கண் - (அங்குவந்து) சூழ்ந்த கழுகுகளின் நிழலிலே, மேவினன் - கிடந்தான்; (எ - று.)

சிறந்த புண்ணியக்ஷேத்திரமாதலின், சியமந்தபஞ்சகத்தை வலஞ்செய்து சென்றன னென்க. பலபத்ர னென்ற திருநாமம் - வடமொழியில், வலிமையினால் விளங்குகிறவ னென்று காரணப்பொருள்படும். சொற்ற என்ற இறந்த காலப்பெயரெச்சத்தில், ற் - இடைநிலை. அல்பம் - வடசொல்.

இச்செய்யுள்-ஒன்று மூன்று ஐந்து ஏழாஞ் சீர்கள் தேமாச் சீர்களும், இரண்டு ஆறாஞ் சீர்கள் கருவிளச்சீர்களும், நான்கு எட்டாஞ் சீர்கள் கூவிளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தம். தத்த தனனன தத்த தானன தத்த தனனன தத்த தானன—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பாம். (கஙகூ)

## வேறு.

### சூரியன் அஸ்தமித்தலும், பாண்டவர் படைவீட்டுக்கு மீளுதலும்.

மைந்திறற்பெரியோனெனும்வாயுவின் மைந்தனாற்றுரியோதனன்மாமுடி, சிந்தவார்த்தனர்நீடிசைகாவலர் சிந்திவாழ்த்தினர்பூமழைதேவர்கண், முந்தவோட்டியதேரொடுகாய்கதிர் மொய்ம்பன்மேற்கடன்மூழ்கினன்மாலைகொ, ளந்திவாய்த்தமபாசறைமேவின ரைந்துபார்த்திவரானவர்தாமுமே.

(இ - ள்.) மைந்திறல் பெரியோன் எனும் - வலிமையினாற் பெரியவனென்று சொல்லப்படுகிற, வாயுவின் மைந்தனால் - வாயுகுமாரனான வீமனால், துரியோதனன் மா முடி சிந்த-துரியோதனனது பெரியதலை சிதைய, (அதுகண்டு), நீள் திசை காவலர்- நீண்டதிக்குக்கள்தோறும் நின்று காவல்செய்கிற திக்பாலகர்கள், ஆர்த்தனர் - மகிழ்ந்துஆரவாரித்தார்கள்; தேவர்கள்—, பூ மழை சிந்தி வாழ்த்தினர்-(வீமன்மேல்) பூமாரிசொரிந்து வாழ்த்துக்கூறினார்கள்; காய் கதிர் மொய்ம்பன் - தபிக்கிற கிரணங்களின் வலிமையையுடைய சூரியன், முந்த ஓட்டிய தேரொடு - விரைந்துசெலுத்துந் தேருடனே,மேற்கடல் மூழ்கினன் - மேற்குக்கடலில் முழுகினான் [அஸ்தமித்தா னென்றபடி]; மாலை கொள் அந்தி வாய் - அந்த அந்திமாலைப்பொழுதில், ஐந்து பார்த்திவர்ஆனவர்தாமும் - பாண்டவரைவரும், தம பாசறை மேவினர்-தமதுபடைவீட்டுக்குத் திரும்பிவந்தனர்.

பாசறை - பகைமேற்சென்றோர் உறையுமிடம்; பாடிவீடெனவும்படும். வீமன் பதினாயிரம்யானைபலங்கொண்டவனாதலால், 'மைந்திறற் பெரியோனெனும்' என்ற அடைமொழி அவனுக்குக் கொடுக்கப்பட்டது; அன்றி, இவ்வடைமொழி, கீழ் கஅக-ஆங் கவியில் "ஆனிலன் பலவான்" என்றதைக் குறிப்பதுமாம். இவ்வடைமொழி, வாயுவோடு இயைத்தற்குந் தகும். முச்சுடர்களுள் முதற்சுடராகிய சூரியன் மற்றையிருசுடராகிய சந்திரஅக்கினியர்போலப் பதினாறுஎழுகிரணங்களையே யுடையனாகாமல் ஆயிரங்கிரணங்களோடுங் கூடி அவற்றுட் சிலவற்றை அவ்விருசுடர்க்குங் கொடுத்துவாங்குந் தன்மையனாய்ச் சிறத்தலால்,'காய்கதிர்மொய்ம்பன்'எனப்பட்டான்.மேற்கு+கடல்=மேற்கடல்; "திசையொடு திசையும்" என்னுஞ் சூத்திர விதி. சிலப்பதிகாரத்தில் 'அந்திமாலைச்சிறப்புச்செய்காதை' என்றாற்போல, 'மாலைகொளந்தி' என்றார்; அங்கு அந்திமாலை என்பதற்கு-'அந்திக்காலத்துமாலை' என்று பொருள்கூறியுள்ளார் அடியார்க்குநல்லார். மாலையென்ற சிறப்புப்பெயர் முன்வந்ததனால், பின்வந்த அந்தியென்ற சிறப்புப்பெயரைப் பொதுப்பெயர்ப்பொருளதாய்க் காலமென்பது மாத்திரமாக்கி மாலைப்பொழுதெனப் பொருளுரைக்க. அந்தி - ஸந்த்யா என்ற வடசொல்லின் சிதைவு; இது, காலைச்சந்திக்கும் பொதுவாதலால், 'மாலைகொ

ளந்தி' என்பது இனம்விலக்கவந்த அடைமொழி யென்றல், நேர். வாய் - ஏழ னுருபு. தம, அ-ஆறனுருபு; "ஆறனொருமைக்கு அதுவும் ஆதுவும், பன்மைக்கு அவ்வும் உருபாம்" என்ற வரையறை நியதியன் றாதலால், இங்கு அகரவுருபு, பாசறையென வருமொழி ஒருமையாயிருக்கையில் வந்தது; இனி, இங்கு, அ- சாரியையென்றலும் ஒன்று. பார்த்திவர் - பிருதிவியை ஆள்பவர்; வடமொழித் தத்திதாந்தநாமம்: பிருதிவி - பூமி; பிருதுவென்னும் அரசனாற் சீர்திருத்தப் பட்டது: இதுவும் தத்திதாந்தநாமமே.

இச்செய்யுள் - கீழ் கஎஅ - ஆங் கவி போன்ற சந்தக்கட்டளைக்கலிப்பா. தந்த தாத்தன தானன தானன தந்த தாத்தன தானன தானன—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பு. (ககள)

வேறு.

பாண்டவர்களைக் கண்ணன் வேறுஇடத்திற்கு அழைத்துச்செல்லுதல்.

மிடன்மிஞ்சுமேவலர்வானிடைபோதர வினைவென்றகாவலர்பா சறைசேருதல், கடனன்றெனாமுனிமாமகன்வாள்வலி கருதுந்தனீர் மையைவேறறியாவகை, யடல்கொண்டசேனையெலாமவண்வாழ்வுற வவரைந்துவீரருமேவரவேயொரு; புடைதங்குகானிடைபோயினனு னனி பொழிகொண்டல்போறிருமேனிமுராரியே.

(இ - ள்.) 'மிடல் மிஞ்சு - வலிமை மிக்க, மேவலர் - பகைவர்கள், வானிடை போதர - விண்ணுலகத்திலே செல்லும்படி [இறந்துவீரசுவர்க்கமடையும் படி], வினை வென்ற - போர்த்தொழிலில் வெற்றிகொண்ட, காவலர் - அரசர் கள், பாசறை சேருதல் - (அன்றைத்தினத்திற்) படைவீடுசேர்ந்து அங்குவசி த்தல், கடன் அன்று - முறைமையன்று', எனா - என்றுகூறி,—நனி பொழி கொண்டல் போல் திரு மேனி முராரி-மிகுதியாகமழைபொழிகிற நீர்கொண்ட காளமேகம்போன்ற அழகியவடிவத்தையுடைய கண்ணபிரான்,—முனி மா மகன் வாள் வலி கருதும் தன் நீர்மையை வேறு அறியா வகை - சிறந்த துரோ ணகுமாரனான அசுவத்தாமனது வாட்படையின் வலிமையைத் தான்சிந்தித் தறிந்த தனது நன்மையைப் பிறரெவரும் அறியாதபடி (மறைத்து),—அடல் கொண்ட சேனை எலாம் அவண் வாழ்வு உற - வெற்றிகொண்ட சேனைகள்யா வும் அப்பாசறையினிடத்தே தங்கியிருக்க, அவர் ஐந்து வீரருமே வர - அந்தப் பாண்டவவீரரைவர்மாத்திரமே (தன்னோடு)வர, புடை தங்கு ஒரு கானிடை போயினன் - பக்கத்திலே பொருந்தியதொரு காட்டினிடத்துச் சென்றான்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

துரியோதனன் தொடைமுறிந்து விழுந்துகிடப்பதைக் கண்டு இரங்கும் அசுவத்தாமன், மனம்மிகக்கொதித்து, துரியோதயத்துக்குமுன் பாண்டவர்பா சறையிற்புகுந்து அவர்களையும் அவர்களைச்சேர்ந்தவ ரனைவரையும் அழித்து மீள்வே னென்று துரியோதனனெதிரில் வீரவாதங்கூறிக் கிருபாசாரியனையுங் கிருதவர்மாவினையுந் துணையாகக்கொண்டு சென்று தான் சிவபெருமானிடம் பெற்றதொரு வாட்படையால் அனைவரையும் கொல்லக் கருதுவான்; அதனைத் தனதுதெய்வத்தன்மையால் முந்தியுணர்ந்த கண்ணன் பூமிபாரநிவிருத்திக்காக மற்றையோரையெல்லாம் அழிக்கவும், தனதுபஞ்சபிராணன்களுக்கீடான பா ண்டவரைவரைமாத்திரமே அழியாதுமிகுத்தவும், திருவுள்ளங்கொண்டவனாத லால், அந்த அசுவத்தாமன்செய்தியை எவர்க்குங் கூறாமலே மறைத்துவிட்டுத் தான் வேறுவியாஜங்கூறிப் பாண்டவரைமாத்திரம் பிறிதிடத்திற்கு அழைத்துச் சென்றன னென்பதாம். இங்ஙனம் பாண்டவர்பக்கல் வரம்புகடந்த திருவருளு டைமையும் விளங்க,'நனிபொழிகொண்டல்போல் திருமேனி முராரி'என்றார்.

மேவலர் - விரும்பிச்சேராதவர்; எதிர்மறை வினையாலணையும்பெயர்; மே வு - பகுதி, அல் - எதிர்மறையிடைநிலை, அர் - பலர்பால்விகுதி. 'ஐந்து வீர ருமே' என்பதில், உம்மை - முற்றுப்பொருளது; ஏகாரம் - பிரிநிலை. வீரரும் மேவர எனப்பதம்பிரித்து, வீரர்களுந் தன்னோடு பொருந்திவர என்று உரைக் கவும் இடமுண்டு.

இச்செய்யுள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் புளிமாங்காய்ச்சீரும், மற்றை யாறும் கூவிளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச் சந்தவிருத்தம். தனதந்த தானன தானன தானன தனதந்த தானன தானன தானன—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பு. (சகஅ)

## வேறு.

### அசுவத்தாமன் துரியோதனனுள்ளவிடஞ் சார்தல்.

ஆனகமலமலர்வாவியிடையேமுழுகி யாவியுதவுமறையோக பரனாகிமொழி, மானகவசவரராசதுரியோதனனை வாயுகுமரன்முதிர் போரிலெதிர்வீழும்வகை, தானகரடகரிமாவையரிமாபொருத தாய மெனவுழறினனெனுமுன்வேதமுனி, ஞானசரிதகுருவாகியதுரோ ணன்மக னாடுகளமணுகினனொருவிநாழிகையில்.

(இ - ள்.) ஆன - அழகியவையான, கமலம் - தாமரைகள், மலர் - மலரப் பெற்ற, வாவியிடையே - தடாகத்திலே, முழுகி—, யோக பரன் ஆகி - யோ கப்பயிற்சியில் ஊன்றியவனாய், ஆவி உதவு மறை - (இறந்தவர்க்கு மீண்டும்) உயிரைத்தருகிற சஞ்சீவிநிமந்திரத்தை, மொழி - ஜபித்த, மான கவச வர ராச துரியோதனனை - மானத்தையே (தன்னைப்பாதுகாக்குங்) கவசமாகக் கருதுகிற சிறந்தஅரசனாகிய துரியோதனனை, முதிர் போரில் - மிக்கபோரிலே, எதிர் வீழும் வகை - எதிரில்வீழ்ந்திடும்படி, தான கரட கரிமாவை அரிமா பொருத தாயம் என - மதசலத்தையுடைய கன்னங்களையுடைய யானையைச் சிங்கம் எதிர்த்தழித்தவகைபோல, வாயு குமரன் - வீமன், உழறினன் - கலக்கினன், எனும் முன்-என்று (சிலர்)சொல்லுமுன்னே,—வேதம் முனி ஞான சரித குரு ஆகிய துரோணன் மகன்-வேதம்வல்லமுனிவனும் தத்துவஞானத்தையும் நல் லொழுக்கத்தையு முடைய வில்லாசிரியனுமான துரோணனது புத்திரனாகிய அசுவத்தாமன், ஒரு விநாழிகையில் - ஒருவிநாழிகைப்பொழுதிலே, நாடு களம் அணுகினன் - ஆராய்ந்துகுறிக்கப்பட்ட அப்போர்க்களத்தை யடைந்தான்.

சிங்கம் வீமனுக்கும், யானை துரியோதனனுக்கும் உவமை; எளிதில்அழித் தலும் அழிக்கப்படுதலு மாகிய இயல்பை விளக்கும். துரியோதனனது நிலைமை யைக் கேட்டவுடனே சிறிதுங்காலதாமசஞ்செய்யாமல் ஓடிவந்து அவ்விடஞ் சேர்ந்தன னென்பதை அக்கிரமாதிசயோக்தி [முறையிலுபர்வுநவிற்சி] யலங் காரவகையால், 'உழறினனெனுமுன் நாடுகளம் அணுகினன்' என்றார். இப்பொ ழுது போர்செய்தற்குரியஇடம்யாதென்று துரியோதனன் வினவக் கண்ணன் ஆராய்ந்துகூறிய சிறந்தஇட மாதலின், சியமந்தபஞ்சகம் 'நாடுகளம்' எனப்பட் டது. வாவி, விநாழிகை - வாபீ, விநாடிகா என்ற வடசொற்களின் திரிபுகள். விநாழிகை - ஒருநாழிகைப்பொழுதின் அறுபதில் ஒருபங்கு. காலநுட்பத்தைக் காட்டுதற்கு, இதனை யெடுத்துக்கூறினர். "நிச்சயமெனுங் கவசந்தான் நிலை நிற்பதன்றி, யச்சமென்னுமீ தாருயிர்க் கருந்துணை யாமோ" என்றாற்போல இவன் மானத்தையே எல்லாவற்றினும்முக்கியமாகக்கொண்டுள்ள இராசராச னாதலால், 'மானகவச வரராச துரியோதனன்' என்றார். 'வேதமுனி' என்பது, துரோணன்மகனுக்குஞ் சேர்க்கத்தகும். உழறினன்=உழற்றினன்; தன்வினை பிறவினைப்பொருளில் வந்தது; சுழற்றிவருத்திப் புரட்டினா னென்றபடி. யோக

பரன், மாநகவசவரராஜதுர்யோதநன், தாநகரடகரி, தாயம், வேதமுநி, ஞ்ஞாந சரிதகுரு - வடசொற்கள். சரிதம் - நடத்தை.

இச்செய்யுள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் தேமாச்சீர்களும், இரண்டாஞ் சீரும் ஆறாஞ்சீரும் கருவிளங்காய்ச்சீர்களும், மற்றைநான்கும் கூவிளங்காய்ச் சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தம். தான தனனனன தானனன தானனன தான தனனனன தானனன தானனன என்பது, இதற்குச் சந்தக்குழிப்பாம். (கசுகூ)

வேறு.

அசுவத்தாமன் துரியோதனனைக் கண்டு எடுத்துச் சோகித்தல்.

உரகதுவசனயர்கின்றவாவியினுணர்வொடுதுயில்வதுகண்டுபேருடல்
கரதலமலர்மிசைகொண்டுவார்புனல்கலுழ்தருவிழியினனன்பினலமர்
பொருகளனிடைதனதந்தைவீடியபொழுதினுமனமிகநொந்துளானுயிர்
சுரர்களுமுருகவிரங்கினான்வரிதொடுசிலைவிசயதுரங்கதாமனே.

(இ - ள்.) உரக துவசன் - பாம்புக்கொடியனான துரியோதனன், அயர்கின்ற ஆவியின் - தளர்கின்ற உயிருடனே [குற்றுயிரோடு], உணர்வொடு துயில்வது-சிறிது அறிவோடு உறங்குவதை, கண்டு-பார்த்து,—வரி தொடு சிலை விசய துரங்க தாமன் - கட்டமைந்த அம்புதொடுத்தற்குரிய வில்லின்தொழிலில் வெற்றியையுடைய அசுவத்தாமன்,—பேர் உடல்-(அவனது) பெரியஉடம்பை, கரதலம் மலர்மிசை - தாமரைமலர்போன்ற தனதுகைகளினால், கொண்டு - எந்திக்கொண்டு,—வார் புனல் கலுழ்தரு விழியினன் - மிக்கநீர்பெருகுகிற கண்களையுடையவனாய்,—நண்பினால் - (அவனிடத்துஉள்ள) சிநேகத்தால், அமர் பொரு களனிடை தன தந்தை வீடிய பொழுதினும் மனம் மிக நொந்துளான்- போர்செய்யுங்களத்திலே தன்னுடையதந்தையாகியதுரோணன் இறந்தபொழுது தான் அடைந்த வருத்தத்தினும் அதிகமாக இப்பொழுது மனம்வருந்தியவனாய், சுரர்களும் உயிர் உருக இரங்கினான் - (காண்கிற) தேவர்களும் உயிர்கரையும்படி அழுதான்; (எ - று.)

துயில்வது - மூர்ச்சித்துக்கிடப்பது என்றபடி; இது மங்கலவழக்கின்பாற்படும். நண்பினால் மனம்மிகநொந்துளா னென இயையும்.

இச்செய்யுள் - ஒன்று இரண்டு ஐந்து ஆறாஞ் சீர்கள் கருவிளச்சீர்களும், மூன்று ஏழாஞ் சீர்கள் தேமாச்சீர்களும், நான்கு எட்டாஞ் சீர்கள் கூவிளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தம். தனதன தனனன தந்த தானன தனனன தனனன தந்த தானன—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பாம். (உ௦௦)

வேறு.

இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்; பாண்டவரை இன்றிரவிற் கொல்வேனென்று கூறி அசுவத்தாமன் துரியோதனனிடம் விடைபெறுதல்.

முனைத்தலையழிந்துடல்சோரவும்யான்வினை முடிப்பனெனுநெஞ்
சுடைவாள்வயவீரனே, யனைத்துலகினுங்குருவானசராசனனளித்தமு
னியன்புறமார்புதழீஇனை, னினைத்தநினைவின்படியேமிகுபோர்செய்
து நினக்கவனிதந்திடநீதலைநாளினி, லெனைத்தனிதெளிந்திலையாதவ
ன்மாயையி னெனப்பரிவுகொண்டுசில்வாய்மைகள்கூறியே.

(இ - ள்.) முனைத்தலை - போர்க்களத்திலே, உடல் அழிந்து சோரவும் - உடம்பு சிதைந்து தளரவும், யான் வினை முடிப்பன் எனும் - 'நான்கருதியதொழிலை [பாண்டவரைக்கொல்லுதலை] நிறைவேற்றக்கடவேன்' என்று எண்ணு

கிற, நெஞ்சு உடை - வன்மனத்தையுடைய, வாள் வய வீரனை - ஆயுதவலி மையையுடைய வீரனான துரியோதனனை, அனைத்து உலகினும் குரு ஆன சராசனன் அளித்த முனி - எல்லாவுலகங்களிலும் குருவென்று பிரசித்திபெற்ற வில்வித்தையில்வல்லவனாகிய துரோணன்பெற்ற புதல்வனான அசுவத்தாமன், அன்பு உற - அன்புமிக, மார்பு தழீஇனன் - மார்பிலே அணைத்துக்கொண்டு,— 'நினைத்த நினைவின் படியே - நீ எண்ணிய எண்ணத்தின்படியே, மிகு போர் செய்து - மிக்கபோரைச் செய்து, நினக்கு அவனி தந்திட-உனக்கு (நான்) பூமி முழுதையும் உரியதாகக்கொடுத்திடும்படி, நீ—,தலை நாளினில் - முற்காலத்தில், எனை - என்னை, யாதவன் மாயையின் - கண்ணன்செய்த மாயையால், தனி தெளிந்திலை - தனியே நம்பினாயில்லை,' என-என்று, பரிவு கொண்டு சில் வாய்மைகள் கூறி - அன்புகொண்டு சிலவார்த்தைகள் சொல்லி, (எ - று.)—'கூறி' யென்ற வினையெச்சம், உ0௬-ஆங் கவியில் மூன்றும் அடியில் வரும் 'என' என்ற வினையெச்சத்தைக் கொள்ளும்.

அசுவத்தாமனைத் துரியோதனன் சேனாபதியாக்கினால் அவனையழித்தல் எவராலுமாகாதே யென்று பாண்டவர் கவலைப்பட்டதைத் திருவுளத்திற்கொண்டு, கண்ணன், துரியோதனனிடந் தூதுசென்று மீளும்பொழுது, (விசுவரூபத்தின்பின்), சபையாரனைவருங் காண அசுவத்தாமனைத் தனியேயழைத்துச் சென்று அவனோடு சிலபேசிக்கொண்டிருக்கையில் தனதுகைம்மோதிரத்தைக் கீழேநழுவவிட, அதனை அவனெடுத்துக்கொடுக்கையில் கண்ணன் 'சூரியனைப் பரிவேஷம் சூழ்ந்துள்ளது பார்' என்றுசொல்லி அவன் சூரியனைப் பார்த்த பின் மோதிரத்தை வாங்கிக்கொண்டான்: இதனால், பிறன்கைம்மோதிரத்தைத் தான்வாங்கிப் பூமியைத்தொட்டு ஆகாயத்தைநோக்கிச் சூரியன்சாட்சியாகச் செய்துகொடுப்பதாகிய ஒரு பிரதிஜ்ஞையை அசுவத்தாமன் கண்ணனுக்குச் செய்துகொடுத்ததாகப் பார்ப்பவர்க்குத் தோன்றிற்று; அதனால், துரியோதனாதியர்யாவர்க்கும் அசுவத்தாமனிடத்தில் நம்பிக்கை போய்விட்டது. இங்ஙனம் கண்ணன் அப்பொழுது செய்த சூழ்ச்சியைக் குறித்து இங்கு அசுவத்தாமன் 'நீ தலைநாளினில் எனைத் தனிதெளிந்திலை யாதவன் மாயையின்' என்றான். "தனிவந் தகலுந் தூதனைப் போய்த்தானே யணுகித்தடஞ்சாப, முனிவன்புதல்வன் மோதிரந்தொட் டருஞ்சூள் முன்னர்மொழிகின்ற, னினிவந் துறவாய் நின்றானுமெங்ஙன் தெளிவதிவனையெனத், துனிவந் தரசர்முகநோக்கிச் சொன்னானிடியேறன்னானே" என்ற கிருட்டிணன்றூதுசருக்கத்துச்செய்யுள் இங்கேகாணத்தக்கது. நீ என்னிடத்து நம்பிக்கைகொண்டு என்னைச் சேனாதிபதியாக்கியிருந்தால் நான் எனதுதிறமைமுழுதையுங் காட்டி மிக்கவூக்கத்தோடு பெரும்போர்செய்து யாவரையும் அழித்து அரசாட்சிமுழுவதையும் உனக்கே நிலைநிறுத்தியிருப்பேன் என்றுகூறினான். பரிவு - கழிவிரக்கமுமாம். முதலடியால், துரியோதனனது தீராப்பகைமையும் அடங்காத்துணிவும் விளங்கும்.

ஶராஸநம் என்ற வடமொழிப்பெயர் - சர அஸந மெனப் பிரிந்து அம்புகளைத் தள்ளுவ தென்றும், சர ஆஸந மெனப்பிரிந்து அம்புகளுக்கு இடமாவதென்றுங் காரணப்பொருள்படும். தழீஇனன் - தழுவினன் என்பதன் அளபெடை; சொல் விகாரப்பட்டு அளபெடுத்ததனால், இது சொல்லிசையளபெடை. மாயை - வஞ்சனை. யாதவன் - சந்திரவம்சத்தில் யதுவென்னும் அரசனது குலத்திற் பிறந்தவன்; வடமொழித்தத்திதாந்தநாமம். சோரவும், உம் - இழிவுசிறப்பு.

இச்செய்யுள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் கருவிளங்காய்ச்சீர்களும், மற்றையாறும் கூவிளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தம். தனத்தனன தந்தன தானன தானன தனத்தனன தந்தன தானன தானன—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பாம். (உ0௪)

## வேறு.

அருளுறவழக்கழிவுறாதவோர்மாற்றமு மறனுடனழுக்காறணு
குறாவேற்றமு, மிருநிலமதித்திடவினிதுகோலோச்சுத லியல்புநிருப
ர்க்கெனுமுறைமையோபார்த்திலை, நரைகெழுமுடித்தலையென்பிதா
மீப்படு நதிமகன்முறித்தவில்விதுரனேபோற்பல, குரவருமுரைத்த
சொலுறுதிநீகேட்டிலை குருமரபினுக்கொருதிலகமாமூர்த்தியே.

(இ - ள்.) குரு மரபினுக்கு - குருகுலத்துக்கு, ஒரு திலகம் ஆம் - ஒருதில கம்போல அழகுசெய்து சிறக்கிற, மூர்த்தியே - பெருமையுடையவனே! அருள் உற - கருணைபொருந்த, வழக்கு அழிவு உறாதது - இராசநீதி அழியப்பெறாத தான, ஓர் மாற்றமும் - ஒப்பற்ற சொல்லையும், அறனுடன் - தருமத்தோடுகூடி, அழுக்காறு அணுகுறா - பொறாமைஅணுகப்பெறாத, ஏற்றமும் - உயர்வையும், இரு நிலம் மதித்திட - பெரியஉலகத்திலுள்ளார் கொண்டாடும்படி, இனிது கோல் ஓச்சுதல் - (யாவர்க்கும்) இனிமையாகச் செங்கோல்செலுத்தல், நிருபர்க்கு இயல்பு - அரசர்களுக்குரிய இயற்கை, எனும் - என்கிற, முறைமையோ - ஒழுங்கையோ, பார்த்திலை - சிறிதும்நோக்கினாயில்லை; நரை கெழு முடி தலை - நரைத்தல்பொருந்திய மயிர்முடியையுடைய தலையையுடைய, என் பிதா - எனது தந்தையான துரோணனும், மீ படு நதி மகன் - மேலுலகத்திற்பொருந்திய ஆகாசகங்காநதியின் குமாரனான பீஷ்மனும், முறித்த வில் விதுரனே - ஒடித் தெறிந்த வில்லையுடைய விதுரனும், போல் - என்னும்இவர்போன்ற, பல குரவரும் - மற்றும்பல பெரியோர்களும், உரைத்த - சொன்ன, சொல் உறுதி - உறுதி மொழிகளை, நீ கேட்டிலை - நீ கேட்டு அவற்றின்படி நடந்தாயில்லை; (எ - று.)

அருள் நீதி முறைமை இன்சொல் அறம் என்னும் இவை அடைதற்கு உரி யவை யென்றும், கடுஞ்சொல் அதருமம் பொறாமை கொடுங்கோன்மை என் னும் இவை அடைதற்குரியவையல்ல வென்றும் சிறிதும்உணராமல் நீ அரு ளின்றி நீதியழிந்து கடுஞ்சொற்கூறி அறத்தைக் கைவிட்டுப் பொறாமைபூண்டு பழிப்படைந்து கொடுங்கோல்செலுத்தினாய்: இங்ஙனம் தானறியாமையோடு அறிவுடைய பெரியோர்பலர் நீதிபோதிக்கக் கேட்டு அவற்றின்படி நடவாமல் அவற்றை யிகழ்தலுஞ்செய்தாய்; ஆதலின், இப்படிப்பட்ட இழிவானநிலைமை யை யடைந்தா யென்றபடி. அறிவினாலும் ஒழுக்கத்தாலுமாகிய முதிர்ச்சியோடு பிராயமுதிர்ச்சியையு முடைமையைக் காட்டுவான், 'நரைகெழுமுடித்தலை' என்ற அடைமொழிகொடுத்தான். இந்தஅடைமொழி, துரோணன் வீடுமன் விது ரன் என்ற மூவர்க்கும் உரியது.

அருளாவது - தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்களின்மேலும் செல்வதாகிய கருணை. வழங்குவது வழக்கு என ஏதுப்பெயர். அழுக்காறெனி னும், அழுக்கறுத்தலெனினும்ஒக்கும்; அழுக்காறு-அழுக்கறுஎன்றமுதனிலைதிரிந் ததொழிற்பெயர். அழுக்கறு - ஒருசொல்; அழுக்கு அறு எனப்பிரித்து, குற்றத் தை நீக்குதலெனப் பொருள்தரக்கூடிய இது குற்றமுடையனாதலென்ற பொ ருளை யுணர்த்துதலை எதிர்மறையிலக்கணையென்றலு முண்டு. "கொடுப்பதழுக் கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ, முண்பதூஉ மின்றிக் கெடும்" என்றபடி அழுக்காறு தன்னையுடையாரையே யன்றி அவரைச் சார்ந்தாரையும் அழிக்கும் மிக்ககொடுங்குண மாதலால், இது சமீபத்திலும் வரவொட்டாதபடி அஞ்சப் படுவதென்பது தோன்ற, 'அழுக்காறணுகுறாவேற்றம்' எனப்பட்டது. நிலம் - இடவாகுபெயர். அரசனாற்செய்யப்படும் நிஷ்பக்ஷபாதமான முறைமை ஒரு பாற்கோடாது செவ்வியகோல்போலுதலால், கோலென்றும், செங்கோலென் றுங் கூறப்படும்; வடநூலாரும் தண்ட மென்றார். முறைமையோ, ஓ-உயர்வு

சிறப்போடு, கழிவிரக்கம். நரை-மயிர்வெளுத்தல்; முதனிலைத்தொழிற்பெயர். முறித்தவில்விதுரன் - வில்முறித்த விதுரன். குரவர் - குரு என்பதன் பன்மையான குரவஃ என்னும் வடசொல்லின் திரிபு. சொல்உறுதி - சொற்களிலுள்ள நல்லநீதி. திலகம் - நெற்றிப்பொட்டு: வடசொல். திலகமாம்மூர்த்தி - திலகரூபமாயிருப்பவ னென்க.

இச்செய்யுள் - நான்காஞ்சீரும் எட்டாஞ்சீரும் கூவிளச்சீர்களும், மற்றையாறும் கருவிளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச்சந்தப்போலிவிருத்தம்.

தனனன தனத்தன தனனனு தாத்தன தனனன தனத்தன தனனனு தாத்தன—என்ற சந்தக்குழிப்பு 'உருதநோர்', 'அழுக்காறு', 'என்பிதா' என்ற இடங்களில் ஒத்துவராததால், இது சந்தமாகாது சந்தப்போலியாயிற்று. 'உறவிலோர்', 'அழுக்கறவணுகுரு', 'எனபிதா'என்று பாடங்கொள்ளின் சந்தத்துக்கு ஒக்கும். (உ0உ)

வேறு.

அசுவத்தாமன் சபதஞ்செய்யத் துரியோதனன் சிகாமணியளித்தல்.

இடியிடித்திடுசிகரிகளாமெனவெறிமருச்சுதன்முதலிகலோர்தலை
துடிதுடித்திடவவரவர்சேனைகடுணிபடப்பொருதெழுபுவிநீபெற
விடிவதற்குமுன்வருகுவன்யானெனவிடைகொடுத்தனனரவவிலோதனன்
முடியுடைத்தனதுடையசிகாமணிமுனிமகற்கினிதருள்செய்துமீளவே.

(இ - ள்.) இடி இடித்திடு சிகரிகள் ஆம் என - இடிவிழப்பெற்ற மலைகள்போல, எறி மருத் சுதன் முதல் இகலோர் தலை துடிதுடித்திட - கதாயுதங்கொண்டுதாக்குகிற வாயுகுமாரனான வீமன் முதலிய பகைவர்களுடைய தலைகள் பதைபதைத்துவிழும்படியாகவும், அவர் அவர் சேனைகள் துணிபட - அந்தந்தப்பகைவீரர்களுடைய சேனைகள் துண்டுபடும்படியாகவும், எழு புவி நீ பெற - ஏழுதீவுகளாகவுள்ள பூமிமுழுவதையும் நீபெறும்படியாகவும், விடிவதற்கு முன் - இவ்விரவுகழிவதற்குமுன்னே, பொருது - போர்செய்து, யான் வருகுவன் - நான் மீண்டுவருவேன், என - என்று (அசுவத்தாமன்) சொல்ல,—அரவம் விலோதனன்-பாம்புக்கொடியையுடையவனான துரியோதனன், தனது உடைய முடி உடை சிகாமணி - தன்னுடையகிரீடத்தின்மேலணிவதான சிரோரத்தினத்தை, முனி மகற்கு - துரோணபுத்திரனான அசுவத்தாமனுக்கு, இனிது அருள் செய்து - மகிழ்ச்சியோடு கொடுத்து, மீள விடை கொடுத்தனன் - (போய் வெற்றியோடு) திரும்பிவரும்படி அநுமதிகொடுத்தனுப்பினான்;(எ-று.)

இவ்விரவுகழிவதற்குமுன் நான் சென்று போர்செய்து பகைவர்யாவரையும் அழித்துப் பாண்டவர்தலையைக் கொய்துவருவேன்; நீ பின்பு நிலவுலகமுழுவதையுந் தனியரசாட்சிசெய்யலாம் என்று அசுவத்தாமன் கூறக் கேட்டுத் துரியோதனன் மகிழ்ச்சிகொண்டு தனதுதலையிலணிவதொரு சிறந்தஇரத்தினாபரணத்தை அவனுக்கு வெகுமதியாகக் கொடுத்து அனுப்பினனென்பதாம். சிகரம் - உச்சி; அதனையுடையது, சிகரீ; வடசொல். ஆம் - அசை. மருத்ஸுதன் என்ற வடசொல், திரிந்தது. துடிதுடித்தல் - இரட்டைக்கிளவி. தனதுடைய என்பதில் 'உடைய' என்பது - உருபுமேல் உருபு. சிகாமணி - வடசொல்.

இச்செய்யுள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் புளிமாச்சீர்களும், மூன்றாஞ்சீரும் ஏழாஞ்சீரும் கருவிளச்சீர்களும், மற்றைநான்கும் கூவிளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தம். தனனதத்தன தனனன தானன தனன தத்தன தனனன தானன—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பு. (உ0௩)

வேறு.

அசுவத்தாமனும் கிருபனும் கிருதனும் பாண்டவர்பாசறை சேர்தல்.

பூசுரர்பெருந்தகைபரித்தாமாவிரியல் போனகிருபன்கிருதவன்மன்மூவருமுன், வாசவன்விரிஞ்சனுமைபாகனிவர்முதல வானவர்வழங்கியவிதப்போர்வாளிகளி, லாசுகன்மகன்றனையுமப்போதேதுணைவரானவரையுந்தலைதுணிப்பமெனநாடியவர், பாசறைபுகுந்தனர்பரித்தேரியானையொடு பாரதமுடிந்தபதினெட்டாநாளிரவே. 1

(இ - ள்.) பூசுரர் பெருந்தகை - அந்தணர்தலைவனான, பரித்தாமா - அசுவத்தாமனும், இரியல் போன-(முன்பு பகைவர்க்குத்) தோற்றோடின, கிருபன்-கிருபாசாரியனும், கிருதவன்மன் - கிருதவர்மாவும், மூவரும் - ஆகிய மூன்று பேரும்,—முன் - முன்பு, வாசவன் - இந்திரனும், விரிஞ்சன் - பிரமனும், உமை பாகன் - உமாதேவியை இடப்பக்கத்திலுடைய சிவபிரானும், இவர் முதல - (என்னும்)இவர்கள் முதலிய, வானவர் - தேவர்கள், வழங்கிய - கொடுத்துள்ள, விதம் - பலவகைப்பட்ட, போர் வாளிகளின்-போர்செய்யவல்ல அம்புகளால் [அஸ்திரங்களால்], ஆசுகன் மகன்தனையும் - வாயுகுமாரனான வீமனையும். துணைவர் ஆனவரையும்- (அவனது) உடன்பிறந்தவரான மற்றைய பாண்டவர்களையும், அப்போதே - அப்பொழுதே, தலை துணிப்பம் - தலையறுத்துவிடுவோம், என நாடி - என்று எண்ணி, பரி தேர் யானையொடு பாரதம் முடிந்த பதினெட்டாம் நாள் இரவு - குதிரைகள் தேர்கள் யானைகள் என்பவைகளோடு பாரதயுத்தம் முடிந்த பதினெட்டாம்போர்நாளின் இராத்திரியில், அவர் பாசறை புகுந்தனர் - அந்தப்பாண்டவர்களுடைய படைவீட்டைச் சேர்ந்தார்கள்.

'பரித்தேரியானையொடு பாரதம் முடிந்த பதினெட்டாநாளிரவு' என்றதனால், அப்பொழுது பாண்டவர்பக்கத்தில் கஜரததுரகங்களாகிய சேனைகள் யாவும் ஒழிந்திட வீரர்கள்மாத்திரமே சிலர் மிச்சமாயுள்ளாரென விளங்கும். பூசுரர்- பூமியில் தேவர்போலச் சிறப்பவர்; வடமொழிக் காரணக்குறி. பெருந்தகை - பெருமையாகிய குணத்தை யுடையவன்; பண்புத்தொகையன்மொழி. தகை - தகுதி, சற்குணம்: இது, வினைப்பகுதியடியாப்பிறந்ததாயினும் பொருளாற் பண்புப்பெயர்; இதில், தகு - பகுதி, ஐ - விகுதி. விரிஞ்சி - வடசொல்; பஞ்சபூதங்களையும் படைப்பவனென்றும், அன்னப்பறவையாற் சுமக்கப்படுபவனென்றும் அவயவப்பொருள்படும். ஆசுகன் - விரைந்துசெல்பவன்.

உமா என்ற வடசொல், உமையெனத் திரிந்தது; பார்வதிதேவி ஐந்து பிராயமானவுடனே பரமசிவனை மணஞ்செய்வதற்குத் தவஞ்செய்யவிரும்பியவளாய்த் தன்கருத்தைப் பெற்றோர்க்குத் தெரிவிக்கையில், இமயமலையரையனும் அவன்மனைவியான மேனையுமாகிய அத்தந்தைதாயர்களால் "அன்னைகேள் எம் மின்நீங்கி அருந்தவமாற்றற்கு ஒத்ததுஇன்னதோர்பருவமன்றால் யாண்டுமோரைந்தே சென்ற, நின்னுடல் பொறாதா லீண்டு இந்நிலைமையைத் தவிர்தி" என்றுகூறி முதலில் மறுக்கப்பட்டதனால், அவளுக்கு உமையென்று ஒருபெயருண்டாயிற்று; உ, மா என்பதற்கு-அம்மா,வேண்டாம் என்று பொருள்.உமைபாகன் - அம்பிகைக்குத் தன்வடிவத்தில் இடப்பக்கத்தைக் கொடுத்துத் தான் வலப்பக்கத்தைமாத்திரங் கொண்டு அர்த்தநாரீசுவரனாகியவன். இங்ஙனம் ஆனவிவரம்:—பிருங்கியென்னும்மகாமுனி பரமசிவனைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்யக் கண்ட பார்வதிதேவி,தன்பதியை நோக்கி 'முனிவர் என்னைப்பிரதக்ஷிணஞ் செய்யாமைக்கு ஏது என்ன ?' என்று வினவ, உருத்திரமூர்த்தி 'இஷ்டசித்தி பெறவிரும்புபவர் உன்னையும், மோக்ஷம்பெறவிரும்புபவர் என்னையும் வழிபடுவர்' என்ன, அதுகேட்ட தேவி பெருமானோடு பிரியாதிருக்குமாறு தவம் புரிந்து வாமபாகம்பெற்றனள் என்பதாம்.

இச்செய்யுள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரும் ஏழாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றையாறும் காய்ச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எண்சீராசிரியச் சந்தப்போலிவிருத்தம். தானனன தந்தன தத்தா தானனன தானனன தந்தன தத்தா தானனன—என்ற சந்தக்குழிப்பு பெரும்பாலும் ஒத்துச் சிறுபான்மை ஒவ்வாமையால், இது சந்தமாகாது சந்தப்போலியாம்.(உ.0௪)

சல்லியபருவம்

முற்றுப்பெற்றது.

---

பத்தாவது

# சௌப்திகபருவம்.

பாண்டவரைச் சேர்ந்த படைவீரர்கள் படைவீட்டில் தூங்கிக்கொண்டிருக்கையில் அவர்களை அசுவத்தாமன் கொன்ற செய்தியைக் கூறும் பாகம். ஸுப்தி - தூக்கம்: அதில்நிகழுஞ்செயல் - சௌப்திகம்; இது, வடமொழித் தத்திதாந்தநாமம்.

வேறு.

அசுவத்தாமன் முதலிய மூவரும் காலமறிதல்.

வேலமர்தடக்கைவீரரிப்பாடிவீடுசென் றணைதலும்புறத்தோ
ராலமர்சினையிற்பல்பெருங்காகமருப்பகல்கழித்தகூகையினாற்
சாலவுமிடருற்றலமரக்கண்டுதம்மிலேமுகமுகநோக்கிக்
காலமுமிடனுமறிந்தமர்செருத்தல்கடனெனக்கருதினரன்றே.

(இ - ள்.) வேல் அமர் - வேலாயுதம்பொருந்திய, தட கை - பெரியகையையுடைய, வீரர் - வீரர்களான அசுவத்தாமன்முதலியோர், இ பாடிவீடு சென்று அணைதலும் - பாண்டவர்களுடைய படைவீட்டைப் போய்ச்சேர்ந்தவளவிலே,—புறத்து - (அப்படைவீட்டுக்கு) வெளியில், ஓர் ஆல் அமர் சினையில் - ஒருஆலமரத்திற் பொருந்திய கிளையிலே, பல் பெரு காகம் - பலபெரியகாக்கைகள், அரு பகல் கழித்த கூகையினால் - அருமையாக [வருத்தத்தோடு]பகற்பொழுதைக்கழித்த கோட்டானினால், சாலவும் இடர் உற்று அலமர - மிகவுந் துன்பமடைந்து வருந்த, கண்டு - (அதனைப்) பார்த்து,—தம்மிலே முகம் முகம் நோக்கி- தங்களுள்ளே (ஒருவர் ஒருவருடைய)முகத்தைப் பார்த்துக்கொண்டு, காலமும் இடனும் அறிந்து அமர் செருத்தல் கடன் என கருதினர்-'காலத்தையும் இடத்தையும் அறிந்து போரிற் பகையழித்தல் கடமை' என்று அறிந்துகொண்டார்கள்; (எ - று.)—அன்றே - ஈற்றசை; அப்பொழுதே எனினுமாம்.

இரவில் தாங்கள்செல்லும்வழியில் ஒருமரத்தின்மேல் பலகாக்கைகளைக் கோட்டான் காலமறிந்து அழித்தலைக் கண்ணுற்று அதனால், பகைவெல்லும் வீரர்க்கு அதற்கேற்ற காலம் இன்றியமையாதென்பதை மனத்திற்கொண்டனரென்பதாம். காக்கை தன்னினும் வலிய கோட்டானைப் பகற்பொழுதில் அதற்குக் கண்தெரியாதாதலால் அச்சமயம்நோக்கி வெல்லுதலும், காக்கைக்கு இரவிற்கண்தெரியாதாதலால் அச்சமயம்நோக்கிக் கோட்டான் காக்கையை வெல்லுதலும் இயல்பு; "பகல்வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்லும், வேந்தர்க்கு வேண்டும் பொழுது" என்ற திருக்குறள் இங்கு அறியத்தக்கது. இன

மாதலின், இடமறிதலும் உடன்கூறினர். பகைவர்யாவரும் சிந்தையின்றித் துயிலும் இரவில் அவர்களைப் படைவீட்டிலேயே அழித்திடுதற்குத் துணிந்தன ரென்றவாறு. சாகம் - சா என்று கத்துவது; வடசொல். கூகை - கூக மென்ற வடசொல்லின் திரிபு; கூ என்று கூவுவது.

இதுமுதற் பதினேழு கவிகள் - பெரும்பாலும் இரண்டு நான்கு எழாஞ்சீர் கள் மாச்சீர்களும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (௨0௩)

ஒருபூதம் இவர்களை வலியழித்துத் துரத்திவிடுதல்.

உரத்துவாரணங்கண்மதமிகுத்தென்னவூக்கமோடொன்றையுமதியார்
புரத்துவாரத்துப்புகுதலும்வெகுண்டுபொங்கழல்போல்வதோர்பூதம்
பரத்துவாசனையுமாதுலனகிருதபன்மனென்றிவரையுமுனைந்து
கரத்துவார்சிலையுங்கணைகளுமுறித்துக்கடவுதிண்டேர்களுங்கலக்கி.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) உரத்து - (இயல்பில்மிக்க) வலிமையையுடைய, வாரணங்கள் - யானைகள், மதம் மிகுத்து என்ன - மதம்மிகப்பெற்றாற்போல, ஊக்கமோடு - மிக்கபோர்க்களிப்புடன், ஒன்றையும் மதியார் - யாதொன்றையும் லக்ஷியஞ் செய்யாதவர்களாய், (அசுவத்தாமன் முதலிய மூவரும்), புரம் துவாரத்து புகுதலும் - அப்படைவீட்டின்வாயிலிலே நுழையுமளவில்,—பொங்கு அழல் போல்வது ஓர் பூதம் - தாவியெரிகிற நெருப்புப் போல்வதொரு [மிககொடிய] பூதமானது, வெகுண்டு - கோபங்கொண்டு (வந்து), பரத்துவாசனையும் - பரத்துவாசகுலத்துப்பிறந்தவனான அசுவத்தாமனையும், மாதுலன் கிருதபன்மன் என்ற இவரையும் - (அவனது) மாமனான கிருபன் கிருதவர்மா என்ற இவர்களையும், முனைந்து - எதிர்த்துப்பொருது, கரத்து - அவர்கள்கைகளிலுள்ள, வார் - நீண்ட, சிலையும் - விற்களையும், கணைகளும் - அம்புகளையும், முறித்து - ஒடித்தெறிந்து, கடவு திண் தேர்களும் - (அவர்கள்) நிச்செலுத்திவந்த வலிய தேர்களையும், கலக்கி - நிலைகுலையச்செய்து [சிதைத்து], (எ - று.)—'மலைந்து' என அடுத்த கவியோடு இயையும்.

வாரணம், த்வாரம் - வடசொற்கள். ஊக்கம் - ஊக்குதல்; அம் விகுதி பெற்ற தொழிற்பெயர்; உற்சாகங்கொள்ளுதல். அகப்பட்டதைத் தவறாது அழித்தற்கு, அழலுவமை கூறினர். பரத்துவாசனதுகுலத்திற்பிறந்தவனென்று பொருள்படும் பாரத்வாஜ னென்ற வடமொழிப்பெயர், எதுகைப்பொருத்தம் நோக்கி, பரத்துவாச னெனக் குறுகிற்று; அன்றி, பேரனைப் பாட்டன்பெயராற் குறித்ததோர் உபசாரவழக்குமாம். கிருதவன்மன் என்பது, கிருதபன்ம னெனத் திரிந்தது,மோனைக்காக. புரம்-பட்டணம், இங்கே சேனைதங்குமிடம்.

முன்புகுவிசயமுனிமகன்றன்னைமுரணெடுந்தோள்களுமுரனு
மென்புடனிணமுந்தசைகளுஞ்சிந்தவிணைக்கருஞ்சிறுகுறுங்கரத்தால்
வன்புகையெழுமாறுள்ளுறமலைந்துமற்றுமேளார்கொற்றமுமழித்துப்
பின்புகலறுமாதுரந்ததப்பூதப்பெருமையாய்பேசுறுந்தகைத்தே.

(இ - ள்.) முன் புகு - (அம்மூவரில்) முந்திவந்து (பாசறையினுள்) நுழைய லுற்ற, விசய முனி மகன்தன்னை - போர்வெற்றியையுடைய துரோணாசாரியனது புத்திரனான அசுவத்தாமனை, முரண் நெடு தோள்களும் - வலிமையையுடைய நீண்டதோள்களும், உரனும் - மார்பும், என்புடன் நிணமும் தசைகளும் சிந்த - எலும்பையும் கொழுப்பையும் சதைகளையும் வெளிச்சிந்தும்படி, இணை கரு சிறு குறு கரத்தால் - கரிய சிறுத்த குள்ளமான (தனது) இரண்டுகைகளா லும், வல் புகை எழும் ஆறு - (உக்கிரத்தால்) மிக்க புகை கிளம்பும்படி, உள் உற

மலைந்து - ஊக்கத்தோடு எதிர்த்துப்போர்செய்து, மற்று உளோர் கொற்றமும் அழித்து-மற்றையிருவருடைய திறமையையும் அழியச்செய்து, பின் புகல் அறும் ஆ துரந்தது - பின்புஉட்செல்லுதலொழியும்படி துரத்திவிட்டது; அப்பூதம் பெருமை யாம் பேசுறும் தகைத்தோ - அந்தப்பூதத்தினது மகிமை நாம் சொல்லக்கூடிய தன்மையையுடையதோ? [அன்றென்றபடி]; (எ - று.)

'அப்பூதப்பெருமை யாம்பேசுறுந்தகைத்தோ' என்றது, கவிக்கூற்று; இந்தப் பொதுப்பொருளால் வேற்றுப்பொருள்வைப்பணி யென்னலாம். புகல் - புகுதல், தொழிற்பெயர். ஆ - ஆறு என்பதன் விகாரம். பூதமாதலின், 'கருஞ்சிறுகுறுங்கரம்' என்றார். 'முரணும்' என்ற பாடத்துக்கு - வலிமையு மென்க. அசுவத்தாமன் தலைமையான வீர னென்பது தோன்ற, அவனுக்கு 'விசயம்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. (உ௪எ)

## மூவரும் மீண்டு ஆலமரத்தினடியிற் சேர்தல்.

மாதவன்விதியாலகன்பெரும்பாடிமாநகர்காவல்கொண்டுற்ற
பூதமேபொருதுதுரத்தலின்மீண்டுபோய்வடதருநிழற்புகுந்து
பேதுறவெருவோடிருந்தனர்கரியபெரியவக்கங்குலிற்றுரோண
சாதனன்மதலையென்செய்துமென்னத்தன்மனத்தெத்தனைநினைந்தான்.

(இ - ள்.) மாதவன் விதியால் - கண்ணபிரானது கட்டளையால், அகல் பெரு பாடி மா நகர் காவல் கொண்டு உற்ற-பரந்த பெரிய சிறந்த படைவீட்டைக் காவல்செய்யுந்தொழிலை ஏற்றுக்கொண்டு பொருந்திய, பூதமே - பூதந்தானே, பொருது துரத்தலின் - போர்செய்து துரத்திவிட்டதனால், (அம்மூவரும்), மீண்டு போய் - திரும்பிச்சென்று, வட தரு நிழல் புகுந்து - ஆலமரத்தின்நிழலிலே சேர்ந்து, பேது உற - மனக்கலக்கமுண்டாக, வெருவோடு - அச்சத்தோடு, இருந்தனர் - இருந்தார்கள்; கரிய பெரிய அ கங்குலில் - (இருளினாற்) கருமைநிறமுடைய பெரிய அவ்விராத்திரிகாலத்திலே, துரோணசாதனன் மதலை - துரோணாசாரியனது குமாரனான அசுவத்தாமன், என் செய்தும் என்ன தன் மனத்து எத்தனை நினைந்தான்-'இனி என்னசெய்வோம்' என்று தன்மனத்தில் எவ்வளவோ நினைத்தான் [மிகப்பலவாறு சிந்தித்தனன் என்றபடி]. (எ-று.)

மாதவ னென்ற பெயர்—மா - இலக்குமிக்கு, தவன் - கணவன் என்று பொருள்படும். காவல் - தொழிற்பெயர். பூதமே யென்ற ஏகாரம் - பிரிநிலையோடு இழிவுசிறப்புப்பொருளையும் உணர்த்தி, படைவீட்டினுள் இருக்கின்ற வீரர்கள் போர்செய்யவேண்டாதபடி அதற்குக்காவலாகவுள்ளதுதானே பொருது வெளியிலேயே துரத்திவிட்ட தென்ற கருத்தை விளக்கும். வடதரு என்ற இருபெயரொட்டுப்பண்புத்தொகை, வடநூல்முடிபு. பேது - பேத மென்ற வடசொல்லின் விகாரம்; மாறுபடுதலென்று பொருள். வெருவு - முதனிலைத்தொழிற்பெயர். மனத்திலுண்டான சிந்தையால் பொழுது நீள்வதாக அவர்களுக்குத் தோன்றுதல் விளங்க, 'பெரியகங்குல்' என்றார்: அன்றி, பகையழித்தற்குச் சிறந்தகால மென்பதுபற்றி, கங்குலுக்கு 'பெரிய' என்ற அடைமொழி கொடுத்தாருமாம். ஸாதநம் - பயிற்சி; கல்விப்பயிற்சிசெய்விப்பவனாதலால், சாதனனென்று ஆசிரியனுக்குப் பெயர்; அன்றி, எத்தொழிலையும் நினைத்தபடி சாதிக்கவல்லா னென்னும் பொருளதுமாம். துரோணஜாதன்நல்மதலையெனக் கொண்டு, துரோணனிடத்தினின்று தோன்றியவனான நல்லமகனென்று உரைத்தல் சிறப்பன்று. செய்தும் - தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று.

## அசுவத்தாமனது சிந்தை.

எஞ்சினநிருபனுயிரினைநிறுத்தியிவ்விரவகல்வதன்முன்னர்
வெஞ்சினமுறச்சென்றுன்பகைமுடித்துமீளுதுமெனப்பலபடியும்

வஞ்சினமுரைத்துவந்தனமின்னம்வன்குறட்பாரிடந்தன்னாற்
றுஞ்சினமெனினுமமையுமென்றெண்ணந்துணிந்தனன்றுயிலறுகண்ணான்.

(இ - ள்.) 'இ இரவு அகல்வதன் முன்னர் - இந்தஇராத்திரி கழிவதன் முன், வெம் சினம் உற சென்று - கொடிய கோபம் மிகப் போய், உன் பகை துணித்து - உனதுபகைவர்களை யொழித்து, மீளுதும் - திரும்பிவருவோம்,' என - என்று, பல படியும் - பலவகைகளாலும், வஞ்சினம் உரைத்து - சபத வார்த்தைகளைக் கூறி, எஞ்சின நிருபன் உயிரினை நிறுத்தி - வலியொடுங்கிய துரியோதனராசனது உயிரை ஒழியாதுநிற்கச்செய்து, வந்தனம் - வந்தோம்: (ஆதலால்), இன்னம் - இனி, வல் குறள் பாரிடந்தன்னால் - வலிய குறுகிய வடிவமுடைய பூதத்தால், துஞ்சினம் எனினும் - நாம் இறந்துவிட்டோமாயினும், அமையும் - தகுதியாம், என்று—, துயில் அறு கண்ணான் - தூக்கமொழிந்த கண்களையுடையவனாய், (அசுவத்தாமன்), எண்ணம் துணிந்தனன் - மனத்தில் நிச்சயித்தான்; (எ - று.)

பொழுதுவிடிவதற்குள் பகையழித்து மீள்வதாகத் துரியோதனனெதிரிற் பலசபதங்களைச்சொல்லி அவனுக்கு ஆசையையூட்டி அதனால் அவன் அரிதில்உயிர்தரித்திருக்குமாறு செய்துவந்த நாம்சும்மாவிருத்தல் சிறிதுந்தகுதியன்றாதலின், மீண்டுஞ்சென்று பாசறையுள் நுழையமுயல்வோம்; அங்கு அப்பூதத்தால் முன்போல ஊறுபட்டு மீளாமல் இனி இறக்கநேரினும் நேர்க என்று அசுவத்தாமன் இரவிற் கண்ணுறக்கமின்றிச் சிந்தித்தனனென்பதாம். செய்த சபதத்தை நிறைவேற்றாது உயிர்வாழ்தலினும் இறத்தலே தகுதி யென்று கருதினனென்க. எஞ்சின நிருபன் - குற்றுயிராய்க்கிடக்கிற அரசன்; அன்றி, உற்றாரியாவரும் இறக்கத்தான்மாத்திரமே மிச்சமாயுள்ள அரசனெனினுமாம்.

மீளுதும் என்ற தன்மைப்பன்மைமுற்றில், உ - சாரியை. இன்னம் - இடைச்சொல். குறள் - குறுமை; 'அள்' விகுதிபெற்ற பண்புப்பெயர்; ஆகுபெயராய்க் குறுகியவடிவத்தைக் குறிக்கும். துயில் - முதனிலைத்தொழிற்பெயர்.

அசுவத்தாமன் சிவபூசை செய்தல்.

எண்ணியகருமமுடியினுமுடியாதொழியினுமீசனைத்தொழுதல்
புண்ணியமெனுமாறுன்னியாங்கொருதண்பொய்கையிற்புனல்படிந்தேறிப்
பண்ணியலிசையின்படிவமாந்தெரிவைபங்கனைப்பங்கயமலர்கொண்
டண்ணியகருத்திலிருத்தியஞ்செழுத்தாலாகமப்படியடிபணிந்தான்.

(இ - ள்.) எண்ணிய கருமம் முடியினும் - நினைத்த காரியம் (நினைத்தபடியே)முடிவதானாலும், முடியாது ஒழியினும் - (அது அப்படி) முடியாமற்போவதானாலும், ஈசனை தொழுதல் புண்ணியம் - சிவபிரானைப் பூசித்தல் நற்றொழிலேயாம், எனும் ஆறு உன்னி - என்ற விதத்தை ஆலோசித்து, ஆங்கு ஒரு தண் பொய்கையில் புனல் படிந்து ஏறி - அவ்விடத்திலுள்ளதொரு குளிர்ந்த தடாகத்தில் நீராடிக் கரையேறி, பண் இயல் இசையின் படிவம் ஆம் தெரிவை பங்கனை - சுவரங்களின்வடிவமாயமைந்த சங்கீதத்தின் சொரூபமாகிய உமாதேவியை இடப்பக்கத்தில்உடையவனான சிவபிரானை, அண்ணிய கருத்தில் இருத்தி - பொருந்திய தன்மனத்திலே நாட்டி, பங்கயம் மலர் கொண்டு - தாமரைமலர்களை (அருச்சனைப்பொருளாக)க் கொண்டு, அஞ்சு எழுத்தால் - பஞ்சாக்ஷர மகாமந்திரத்தைச் சொல்லிக்கொண்டு, ஆகமம் படி - சைவாகமமுறைமைப்படி, அடி பணிந்தான் - திருவடிகளில் விழுந்து வணங்கினான்; (எ - று.)

இம்மையில் நினைத்தகாரியத்தை முடித்தலாகிய காமியபலசித்தி அழித்தற்கரிய பிராரப்தகருமத்தால் ஒருகால் தடைப்படினும் மறுமையில் பேரின்பமனுபவித்தலாகிய பயன் தவறாதாதலின் கடவுளைப்பூசித்தல் தகுதியே யென்று கருதினனென்க. ஈசனென்ற பெயர் - ஐசுவரியமுடையவனென்று பொருள்

படும். புண்பம், ஆகமம் - வடசொற்கள். 'இசையின்படி வமாம்' என்ற அடைமொழி - தெரிவைக்கும், தெரிவைபங்கனுக்குந் தகும். தெரிவை யென்னும் பெயர் - இங்கே பருவப்பெயராகாமல் பெண்ணென்றமாத்திரமாய் நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை - இருபத்தாறுமுதல் முப்பத்தொன்றளவும். மனம் எப்பொருளையும் நினைத்தமாத்திரத்தில் அணுகக்கூடிய இயல்பினதாதலும், கடவுள் அன்பால்நினைவாரது உள்ளக்கமலத்தில் அவர்நினைத்தவடிவத்தோடு விரைவிற்சென்று வீற்றிருக்குந்தன்மையனாதலும் தோன்ற, கருத்துக்கு 'அண்ணிப' என்று அடைமொழி கொடுக்கப்பட்டது. கருத்தில் இருத்தி - மனத்தில் தியானித்துப் பிரதிஷ்டைசெய்து; "மார்வமென்பதோர் கோயி லமைத்து மாதவனென்னுந் தெய்வத்தை நாட்டி" என்றாற்போலக் கொள்க. ஆகமம்-ஒருகாலத்தில் சிவபிரானது திருமுகத்தினின்று தோன்றியவையும், சிவபிரானைப்பூசித்தல் முதலிய விதங்களை விவரமாகக்கூறுபவையுமான காமியம் முதலிய இருபத்தெட்டுநூல்கள். அஞ்சு-ஐந்துஎன்பதன் மழூஉ. (உகo)

சிவபிரான் பிரசன்னமாய் அவனுக்கு ஆயுதமளித்தல்.

அன்றவன்மறையின்முறையினாற்புரிந்தவருச்சனைதனையுவந்தருளி
நின்றனன்விழியுமிதயமுங்களிப்பநீறுடையேறுடைக்கடவுள்
வன்றிறன்முனிவன்மதலையும்விதலைமாறிமாறடர்ப்பதோர்படைநல்
கென்றனனென்றவுரைமுடிவதன்முனேதியொன்றீசனுமீந்தான்.

(இ - ள்.) அன்று - அப்பொழுது, அவன் - அசுவத்தாமன், மறையின் முறையினால் - வேதங்களிற்கூறியுள்ள முறைமைப்படி, புரிந்த-செய்த, அருச்சனைதனை - பூசையை, நீறு உடை ஏறு உடை கடவுள் - விபூதியையுடையவனும் ருஷபத்தையுடையவனுமான சிவபிரான், உவந்து அருளி - ஏற்றுக்கொண்டு மகிழ்ந்து கருணைகொண்டு, விழியும் இதயமும் களிப்ப நின்றனன்-(அசுவத்தாமனது) மனமும் கண்களும் களிப்படையும்படி (அவனுக்குத் தரிசனந் தந்து) நின்றான்; (அப்பொழுது), வல் திறல் முனிவன் மதலையும் - கொடிய வலிமையையுடைய அந்தணனாகிய துரோணாசாரியனது குமாரனான அசுவத்தாமனும், விதலை மாறி - மனக்கலக்கமொழிந்து, மாறு அடர்ப்பது ஓர் படை நல்கு என்றனன் - 'பகைவர்களைத் தவறாமல்அழிப்பதொரு ஆயுதத்தை (எனக்குக்) கொடுத்தருள்வாய்' என்று வேண்டினான்; என்ற உரை முடிவதன் முன்- என்று இங்ஙனம் பிரார்த்தித்த வார்த்தை முடிவதற்குமுன் [உடனே என்றபடி], ஈசனும் - சிவபிரானும், ஏதி ஒன்று - ஓராயுதத்தை, ஈந்தான் - கொடுத்தருளினான்; (எ - று.)

சிறப்புநூலாகிய ஆகமத்திலும் பொதுநூலாகிய ஆரணத்திலும் ஆக இரண்டிலும் கூறப்பட்டுள்ள விதிமுறை வழுவாமற் பூசித்தமை தோன்ற, கீழ்க் கவியில் 'ஆகமப்படி யடிபணிந்தான்' என்றும், இக்கவியில் 'மறையின்முறையினாற்புரிந்த வருச்சனை' என்றுங் கூறினர். அர்ச்சநா-வடசொல். சிவபிரான் தரிசனந்தந்தமாத்திரத்தில் தான் அப்பிரானருள்பெற்றுத் தனதுசபதத்தை நிறைவேற்றிவிடலா மென்று தைரியங்கொண்டமை தோன்ற, 'விதலைமாறி' என்றார். மாறு-மாற்றார்க்குப் பண்பாகுபெயர். குமாரனான பக்தனது வேண்டுகோளின்படி கடவுள் கருணைசெய்த விரைவை விளக்குவார், 'என்ற வுரை முடிவதன்முன் ஈந்தான்' என்றார். ஏதி - ஹேதி என்ற வடசொல்லின் விகாரம். சிவபிரானுக்கு நீறு, தரிக்கப்படும் பொருள்; ஏறு, வாகனம். (உகக)

பின்பு பூதம் அசுவத்தாமனுக்குத் தோற்றல்.

பாதிமெய்நீலமாகியபவளப்பருப்பதம்விருப்புடனளித்த
வேதிபெற்றுவகையுடனிமைப்பளவினிருந்தவவ்வீரருந்தானும்

வீதிகொள்பாடிவீடுறப்பூதமீளவந்தடர்த்திவன்கரத்தி
லாதிநல்கியவெம்படையினாலஞ்சியாவிகொண்டோடியதன்றே.

(இ - ள்.) பாதி மெய் - பாதிவடிவம் [இடப்பக்கம்], நீலம் ஆகிய - நீல நிறமடைந்துள்ள, பவளம் பருப்பதம்-பவழமயமான மலைபோன்ற சிவபிரான், விருப்புடன் அளித்த - அன்போடு தந்தருளிய, எதி - ஆயுதத்தை, பெற்று - பெற்றுக்கொண்டு, (அசுவத்தாமன்), உவகையுடன் - மகிழ்ச்சியுடனே, இமைப்பு அளவின் - ஒருமாத்திரைப்பொழுதிலே, இருந்த அ வீரரும் தானும் - (தன்வரவைஎதிர்பார்த்து இருந்த அந்த வீரர்களான கிருபனும் கிருதவர்மாவும் தானுமாக, வீதி கொள் பாடி வீடு உற-நெடுந்தெருக்களைக்கொண்டபடைவீட்டை மீண்டும்சேர,—பூதம்-(அங்குக்காவலாய்நின்ற)பூதம், மீள வந்து அடர்த்து-மறுபடிவந்து போர்செய்து, இவன் கரத்தில் ஆதி நல்கிய வெம் படையினால் அஞ்சி - இவன்கையில் தலைவனான சிவபிரான் கொடுத்துள்ள கொடிய ஆயுதத்தைக் கண்டு அதனால் பயந்து, ஆவி கொண்டு ஓடியது- அரிதில் உயிர்பிழைத்து ஓடிப்போயிற்று; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

சிவபிரானது அர்த்தநாரீசுவரவடிவத்திற் பார்வதிரூபமான இடப்பக்கம் நீலநிறமாயிருக்க, சிவரூபமான வலப்பக்கம்மாத்திரமே தனக்குரிய செந்நிறத்தோடு இருத்தலால், 'பாதிமெய்நீலமாகிய பவளப்பருப்பதம்' என்றார்; "வலப்பாகஞ் செழும்பவளச் சோதி யென்ன வாணீலச் சோதி யென்ன மற்றைப்பாகம்,கலப்பான திருமேனி யணிந்த நீற்றுக் கதிர்முத்தின் சோதி யென மேனையீன்ற, குலப்பாவையுடன் கயிலைக்குன்றில் வாழ் விற்குன்றுடையோன் திருக்கோலம்" எனக் கீழ் அருச்சுனன்தவநிலைச்சருக்கத்திலும், "பங்கெலா மரகதமாம் பவளநிறப் பொருப்பு" எனக் கீழ்ப் பதின்மூன்றாம் போர்ச்சருக்கத்திலும் வந்தமை காண்க. பாதி - பகுதி யென்பதன் மரூஉ. பவளம், பருப்பதம் - ப்ரவாளம், பர்வதம் என்ற வடசொற்களின் சிதைவுகள். பருப்பதம் - இங்கே உவமவாகுபெயர். அளக்கலாகாத பேரளவும், அளவிறந்த பொருளுடைமையும், எப்பொழுதும் சலித்தலில்லாத நிலைமையும், கம்பீரமான தோற்றமும்பற்றி, சிவபிரானை 'பருப்பதம்' என்றார்; முன்னொருசமயத்தில் பெரியஅக்கினிவடிவமாய் நின்றமைபற்றியுமாம். சிவபிரான் பூதநாத னாதலால், அவன்படைக்கலத்துக்குப் பூதம் அஞ்சிற்று; இத்தன்மையை 'ஆதி' என்ற சொல்லின் குறிப்பினாற் புலப்படுத்தினர். ஓடிச்செல்லாமல் உறுதிகொண்டு முன்னேநின்று பொருதால்,உயிர்அழிந்திடும்; அங்ஙனமன்றி உயிர்தப்பியோடிய தன்மை விளங்க, 'ஆவிகொண்டோடியது' எனப்பட்டது. (உகஉ)

**அசுவத்தாமன் படைவீட்டினுள் திட்டத்துய்மனைத் தலைதுணித்தல்.**

பருவரலகற்றியிருவர்வீரரையும்பாசறைவாயிலினிறுத்தி
மருவருங்கமலமாலையான்கடப்பமாலையானெனமனங்களித்துப்
பொருவருமுனைக்குக்குரிசிலாயெல்லாப்போரினும்புறமிடாதடர்த்த
துருபதன்மதலைவரிசிலைத்திட்டத்துய்மனைமணித்தலைதுணித்தான்.

(இ - ள்.) பருவரல் அகற்றி - (பூதத்தின்தடையினாலாகிய) துன்பத்தை (இவ்வாறு) நீக்கி,—இருவர் வீரரையும் - (கிருபன் கிருதன் என்ற) இரண்டு வீரர்களையும், பாசறை வாயிலில் நிறுத்தி - அப்படைவீட்டின்வாயிலிலே நிற்கவைத்து,—மரு வரும் கமல மாலையான்-வாசனைபொருந்திய தாமரைமலர்மாலையையுடைய அசுவத்தாமன்,—கடப்பம் மாலையான் என - கடப்பம்பூமாலையையுடைய முருகக்கடவுள்போல, மனம் களித்து - மனத்தில் உற்சாகங்கொண்டு, (படைவீட்டினுள்ளே தான்சென்று),— பொருவரு முனைக்கு குரிசில் ஆய் - எதிர்த்துப் போர்செய்துவந்த பகைவர்சேனைக்குத் தலைவனாய், எல்லாப் போ

ரினும் புறம் இடாது அடர்த்த - பதினெட்டுநாட்போர்களிலும் முதுகுகொடாமல் நெருக்கிப்போர்செய்துவந்த, துருபதன் மதலை — துருபதராசனது குமாரனாகிய, வரி சிலை திட்டத்துய்மனை - கட்டமைந்தவில்லையுடைய த்ருஷ்டத்யும்நனை, மணி தலை துணித்தான் - அழகிய தலையை அறுத்திட்டான்; (எ - று.)

தனதுதந்தையான துரோணனைக்கொன்றவனாகிய திட்டத்துய்மன்மேல் அசுவத்தாமன் கறுக்கொண்டு அவனைத் தூங்கிக்கொண்டிருக்கையில் முதலில் தலைதுணித்துப் பழிதீர்த்துக்கொண்டனன் என்பதாம். படைவீட்டினுள்ளேயுள்ளவர்கள் வெளிச்சென்று தப்பிஉய்ந்துபோகாதவண்ணம் தடுத்தற்பொருட்டு இருவரையும் வாயிலிற் காவலாகநிறுத்தினனென்க. தாமரைமலர்மாலை அந்தணர்க்கு உரியதாதலால், 'கமலமாலையான்' என்றார்; இனி, தாமரைமணிமாலையுமாம். அசுவத்தாமன் சிவாநுக்கிரகத்தாற் பிறந்தவனாதலால், அவனுக்குச் சிவகுமாரனான முருகக்கடவுளைப் பலபராக்கிரமங்களில் உவமைகூறினார். கடப்பமலர்மாலை முருகனுக்கு அடையாளப்பூமாலை யாதலால், அவனுக்கு 'கடம்பன்' என்று ஒருபெயர் வழங்கும்.

பருவரல், பருவா - பகுதி வாயில் - இல்வாய் என்பது முன்பின்னாகமாறிய இலக்கணப்போலி, வீட்டின்முன்னிடமென்று பொருள்படும். கடப்பு என்ற மென்றொடர், வன்றொடராய் 'அம்' சாரியைபெற்று, கடப்பம் என நின்றது. குரிசில்-பெருமையிற் சிறந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர்; இதனை 'குருஸ்ரீ' என்ற வடசொல்லின் சிதை வென்பர். (உகரு)

அதனையறிந்து பாஞ்சாலர் பலர் அசுவத்தாமனை யெதிர்த்தல்.

கயில்புரிகழற்காற்றந்தையைச்செற்றகாளையைப்பாளையத்திடையே
துயில்புரியமையத்திமைக்குமுன்சென்னிதுணித்தனன்சுதனெனக்கலங்கி
வெயில்புரிவதன்முன்வல்லிருளிடையேயுணர்ந்தவர்வெருவுடனரற்றப்
பயில்புரிசிலைக்கைச்சிகண்டியைமுதலோர்பலரும்வந்தனர்கள்பாஞ்சாலர்.

(இ - ள்.) கயில் புரி - கயிலென்னும்உறுப்பு அமைந்த, கழல் - வீரக்கழலையணிந்த, கால் - பாதத்தையுடைய, தந்தையை-(தனது தந்தையான துரோணனை, செற்ற - கொன்ற, காளையை - இளவீரனான திட்டத்துய்மனை, பாளையத்து இடையே - படைவீட்டினுள்ளே, துயில் புரி அமையத்து - தூக்கங்கொண்டிருக்குஞ்சமயத்தில், இமைக்கு முன் - நொடிப்பொழுதினுள், சுதன் - துரோணபுத்திரனான அசுவத்தாமன், சென்னி துணித்தனன் - தலையறுத்திட்டான், என - என்றுஅறிந்து, கலங்கி - மனங்கலங்கி, வெயில் புரிவதன் முன் வல் இருளிடையே உணர்ந்தவர் - சூரியனுதிப்பதன்முன் வலிய இருட்பொழுதிலேயே தூக்கம்விழித்துள்ளவர்கள், வெருவுடன் - அச்சத்தோடு, அரற்ற - கதறியொலிக்க,— பயில் புரி சிலை கை சிகண்டியை முதலோர் - பழகுதல்பொருந்திய வில்லையேந்திய கையையுடைய சிகண்டிமுதலானவர்களான, பாஞ்சாலர் பலரும் - பாஞ்சாலதேசத்துஅரசர்கள் பலரும், வந்தனர்கள் - (அவனையெதிர்த்து) வந்தார்கள்; (எ - று.)

இயல்பாக நடுராத்திரியில் தூக்கம்விழித்துள்ளவர்கள் சிலர் அசுவத்தாமன் திட்டத்துய்மனைத் தலைதுணித்ததைக் கண்டு நிலைகுலைந்து அஞ்சி ஆரவாரஞ்செய்ய,அத்திட்டத்துய்மனது உடன்பிறந்தவரான சிகண்டி முதலிய பாஞ்சாலதேசத்து வீரர்கள் அநேகர் அசுவத்தாமனை வந்துஎதிர்த்தார்கள் என்பதாம். கயில்-ஆபரணக்கடைப்புணர்வு. அமையம் - ஸமய மென்ற வடசொல்லின் திரிபு. வெயில்புரிவதன்முன் - வெயில்புறப்படுவதன்முன் என்றபடி. சிகண்டி-துருபதனதுகுமாரரில்ஒருவன்; காசிராசனதுபெண்கள்மூவரையுந் தன்தம்பியான விசித்திரவீரியனுக்கு மணம்புரிவிக்கும்பொருட்டுச் சுயம்வரத்தில் வீடுமன் வலி

யத்தேரேற்றிக் கொண்டு செல்லுகையில், அரசர்கள் பலர் வந்து பொருது தோல்வியடைய, அவர்களுள் சிறிதுபோரில்முன்னிட்ட சாலுவனிடத்து அம்பையென்பவள் மனத்தைச்செலுத்தி வீடுமனினின்று நீங்கிச் சாலுவனிடம் சென்று சேர, அவன் 'பகைவர்கவர்ந்துபோன உன்னை யான் தொடேன்' என்று மணம்மறுத்துவிட்டதனால், அவள் பின்பு வீடுமனை மணஞ்செய்யும்பொருட்டுப் பலவாறுமுயன்றும பயன்படாமையால், வனஞ்சென்று தவஞ்செய்து வரம்பெற்று அவ்வீடுமனைக்கொல்லுமாறு சிகண்டியென்னும் அலியுடிவாகத் துருபதனிடத்துப் பிறந்து அங்ஙனமே பத்தாநாட்போரில வீடுமன் அழிதற்குக் காரணமாய் முன்னின்றன ளென அறிக. அளவிறந்த அழிவற்ற செல்வவொளிகளுக்கு, சிகண்டம என்று பெயர்; அதனையுடையவன், சிகண்டி: இது திருமாலின் ஆயிரநாமங்களுள் ஒன்று; அதுவே இவனுக்குப் பெயராக இடப்பட்டதுபோலும். (உகச)

அசுவத்தாமன் பலரையுங் கொன்று உபபாண்டவரை யடுத்தல்.

உத்தமௌசாவுமுதாமனுமுதலிட்டுள்ளவர்யாவரும்பிறருந்
தத்தமோகையினாலவந்தெதிர்மலைந்தோர்தலைகளாற்பலமலையாக்கி
மெத்தமோகரித்துப்பாரதமுடித்தவீரரைத்தேடிமேல்வெகுளுஞ்
சித்தமோடெங்குந்திரிந்துளானவர்தஞ்சிறுவரைவரையுமுன்சேர்ந்தான்.

(இ - ள்.) உத்தமௌசாவும் - உத்தமௌஜஸ் என்பவனும், உதாமனும் - யுதாமந்யு என்பவனும், முதல் இட்டு - முதலாக, உள்ளவர் யாவரும் - உள்ள பாஞ்சாலராசர்களெல்லோரும், பிறரும் - மற்றும்பலவீரர்களும், தத்தம் ஓகையினால் வந்து எதிர் மலைந்தோர் - தமதமது ஊக்கத்தோடு வந்து எதிரிற்போர் செய்தனராக அவர்களுடைய, தலைகளால் - தலைகளைத் துணித்துத்தள்ளி அவற்றால், பல மலை ஆக்கி - அநேகமலைகளையுண்டாக்கி, மெத்த மோகரித்து - மிகவும்வீராவேசங்கொண்டு, - பாரதம் முடித்த வீரரை தேடி - பாரதப்போரை முடித்த வீரர்களான பாண்டவர்களைத் தேடிக்கொண்டு, மேல் வெகுளும் சித்தமோடு - மேன்மேற்கோபங்கொள்ளும் மனத்துடனே, எங்கும் திரிந்துளான் - அப்படைவீடுமுழுவதிலும் திரிந்துவருபவனான அசுவத்தாமன், (அங்கொருபக்கத்தில்படுத்துள்ள), அவர்தம் சிறுவர் ஐவரையும் முன் சேர்ந்தான் - அப்பாண்டவர்களுடைய புத்திரர்கள் ஐந்துபேரையும் எதிரிற்கண்டு சமீபித்தான், (எ-று.)

உத்தமௌசா - உத்தமௌஜா: என்ற வடசொல் திரிந்தது; அது உத்தம ஓஜஸ் எனப்பிரிந்து, மேலானஒளியுடையானெனப் பொருள்படும். இவன்பெயர் உத்தமபானுவென்று வழங்குதலும் உண்டு; பொருள் இதுவே. உதாமன் - யுதாமந்யு என்ற வடசொல் திரிந்தது; அதற்கு - போரிற்கோபமுடையானென்று பொருள். இவ்விருவரும், துருபதனுக்கு உறவினரான பாஞ்சாலராசர். பாஞ்சாலவீரரிற் சிறந்தவர்; ஓகை - போரிலுற்சாகம்; உவகை யென்பதன் மரூஉ. பஞ்சபாண்டவர்க்குத் திரௌபதியினிடம் பிறந்த குமாரரைவரும் உபபாண்டவ ரெனப்படுவர். இவர்கள்பெயர்-முறையே விந்தன், சோமன், வீரகீர்த்தி, புண்டலன், சயசேனன் என்பன; பிரதிவிந்தியன், சுதசோமன், சுருதகீர்த்தி, சதாநீகன், சுருதசேனன் என்று பெயர் வழங்குதலும் உண்டு. இவர்கள் வடிவத்தில் தம்தம் தந்தையை முற்றிலும் ஒத்திருப்பர். (உகரு)

உபபாண்டவர்கள் அசுவத்தாமனைக் காணுதல்.

பூதலமுழுதுங்கவர்ந்ததந்தையர்கள்புறத்திடைப்போயதுந்துயின்ற
மாதுலன்முனிவன்மதலைகைப்படையான்மடிந்திடத்தடிந்ததுமுணரார்
தாதலரலங்கற்சமரவான்முனியைத்தழலிடைவருபெருந்தையல்
காதலம்புதல்வர்கண்டுயில்புரிவோர்கனவுகண்டனரெனக்கண்டார்.

(இ - ள்.) பூதலம் முழுதும் கவர்ந்த - நிலவுலகமுழுவதையும் (தங்களுடையதாகக்) கைப்பற்றிய, தந்தையர்கள் - தங்கள்தகப்பன்மாரான பாண்டவர்கள், புறத்திடை போயதும் - (படைவீட்டினுள் இல்லாமல் கண்ணபிரானுடன்) வெளியிலே சென்றதையும்,—துயின்ற மாதுலன் - தூங்கிக்கொண்டிருந்த (தங்கள்) மாமனான திட்டத்துய்மன், முனிவன் மதலை கை படையால் மடிந்திட - துரோணபுத்திரனான அசுவத்தாமனது கையிலுள்ள ஆயுதத்தால் இறக்கும்படி, தடிந்ததும் - (திட்டத்துய்மனை அசுவத்தாமன்) தலையறுத்திட்டதையும், உணரார் - அறியாதவர்களாய், கண் துயில புரிவோர் - கண்மூடித்தூங்கங்கொண்டிருந்தவர்களான, தழலிடை வரு பெரு தையல் காதல் அம் புதல்வர் - (துருபதராசனது) ஓமாக்கினியிலே தோன்றிய சிறந்தமகளான திரௌபதியின் அன்புக்குரிய அழகியபிள்ளைகளான உபபாண்டவர்கள், தாது அலர் அலங்கல் சமரம் வாள் முனிவை பூவிற்கள் மலர்ந்த போர்மாலையைத் தரித்த போருக்குரிய வாளாயுதத்தையேந்திய அந்தணனான அசுவத்தாமனை, கனவு கண்டனர் என கண்டார் - கனாக்கண்டாற்போலத் தூக்கத்திற் சிறிது கண்டார்கள்; (எ - று.)

பூதலமுழுதுங் கவர்ந்த - பகைவரை முற்றிலும் வென்று அவர்களுடைய இராச்சியமுழுவதற்கும் உரிமைபூண்ட. போயது என்ற தொழிற்பெயரில், ய் - இறந்தகாலவிடைநிலை. திரௌபதி பஞ்சகன்னிகைகளுள் ஒருத்தியென்னும்படி அடைந்துள்ள சிறப்புத்தோன்றவும், அவள் மற்றைச் சாதாரணமனிதர்போல ஒருதாயின் கருப்பத்தின்வாய்ப்பட்டுப் பிறவாமல் பரிசுத்தமான அக்கினியினின்று வரமாகத்தோன்றிய உயர்வு விளங்கவும், 'பெருந்தையல்' என்றார். தையல் - அழகு, அதனையுடையாளுக்குப் பண்பாகுபெயர். கனவு - கனா என்பது குறுகி உகரமேற்றது; [நன் - உயிர் - ௨௨.] (௨௯)

அவர்களைப் பாண்டவரென்று கருதி அசுவத்தாமன் அழித்தல்.

கண்டவர்தம்தம்படையெடுப்பதன்முன்காசினிமுழுவதும்வென்று
கொண்டவரிவரென்றெண்ணியேசுடரிற்கொளுத்தியசுடரனையாரைத்
திண்டவர்தமக்குச்சிகாமணியனையான்சிக்குறக்கலங்கிவண்டேற
லுண்டவர்தமைப்போன்மதத்தினால்வாளாவொருநொடியினிற்றலைதுணித்தான்.

(இ - ள்.) கண்டவர் - (இங்ஙனம்) பார்த்த பாண்டவகுமாரர்கள், தம் தம் படை எடுப்பதன் முன் - (போர்செய்தற்குத்) தம்தமக்குஉரிய ஆயுதத்தை எடுத்துக்கொள்வதன்முன், சுடரில் கொளுத்திய சுடர் அனையாரை - ஒருவிளக்கினின்று ஏற்றிய மற்றொருவிளக்குப்போல விளங்குகிற அவர்களை, திண் தவர் தமக்கு சிகாமணி அனையான் - வலியதவத்தையுடைய முனிவர்களுக்குத் தலையிலணியும்இரத்தினம்போலச் சிறந்தவனாய் விளங்குகிற அசுவத்தாமன்,—காசினி முழுவதும் வென்று கொண்டவர் இவர் என்று எண்ணியே - பூலோகமுழுவதையும் சயித்துத் தங்களுடையதாக்கிக்கொண்ட பாண்டவர்கள் இவர்களே யென்று நினைத்து, சிக்கு உற கலங்கி - பிழைபாடாகத் தடுமாறி, வண் தேறல் உண்டவர்தமை போல் - முதிர்ந்தகள்ளைக் குடித்தவர்போல, மதத்தினால் - களிப்புமயக்கங்கொண்டு அதனால், வாளா - வீணாய், ஒரு நொடியினில் - ஒருமாத்திரைப்பொழுதிலே, தலை துணித்தான் - தலையறுத்திட்டான்; (எ - று.)

பாண்டவர்களைக் கொன்றிருந்தால் இவனது சபதம் நிறைவேறுதல்மாத்திரமாவது நிகழக்கூடும்; உபபாண்டவரைக் கொன்றிட்டது அங்ஙனமும் உதவாமல் அவர்கள்குலத்தை நாசம்பண்ணுவதாய்முடிந்து பெரியபழியையும் பாவத்தையுமே தருகிற கொடுமை விளங்க, 'வாளா தலைதுணித்தான்' என்றார். வாளா - சும்மா; இது - பயனின்மைப்பொருளை யுணர்த்துவதோர் இடைச்சொல். 'தந்தையரொப்பர் மக்கள்' என்றபடி தந்தையரோடு மைந்தர் வடிவத்திற் சிறிதும்வேறுபாடின்றி விளங்குதற்கு 'சுடரிற்கொளுத்திய சுடரனையார்'

என உவமைகூறினர். தவத்துக்குத் திண்மை - எப்பொழுதும் மனநிலைகலங்காமை. காசினி - காச்யபீ என்ற வடசொல்லின் திரிபு. முன்னொருகாலத்திற் பரசுராமரால் கசியபமுனிவர்க்குத் தானஞ்செய்யப்பட்டமைபற்றி, பூமிக்குக் காச்யபீ என்று ஒருபெயர். கொளுத்திய என்பதில், கொளுந்து என்பதன் பிறவினையான கொளுத்து - பகுதி. (உகஎ)

அப்பொழுது சோழன் அசுவத்தாமன்மேற் போருக்கு எழுதல்.

துருபதன்மைந்தரனைவரும்பஞ்சத்திரௌபதியருந்துயில்பொழுதிற், புரவியந்தாமாநினைவறப்புகுந்துபொன்றுவித்தனனெனப்புலம்ப, விரவிடையமர்மற்றென்னைகொலென்னாவிரவிதன்றிருக்குலத்திறைவன், பெருமையோடெழுந்தான்பகைவன்மேலவன்முன்பின்னிடப்பொருதிடும்பெரியோன்.

(இ - ள்.) துருபதன் மைந்தர் அனைவரும் - துருபதராஜனது புத்திரர்களெல்லோரும், பஞ்ச திரௌபதியரும் - திரௌபதியினிடத்திற்பிறந்த உபபாண்டவர்களைந்துபேரும், துயில் பொழுதில் - தூங்கும்பொழுதில், அம் புரவி தாமா - அழகிய அசுவத்தாமன், நினைவு அற புகுந்து - நினைத்தற்கும் இடமில்லாமல் (பாடிவீட்டினுள்) நுழைந்து, பொன்றுவித்தனன் - (அவர்களை) அழித்திட்டான், என - என்று, புலம்ப - (கண்டவர் யாவரும்) கதறியழ, (அதுகேட்டு),—இரவிடை அமர் என்னைகொல் என்னா - 'இராத்திரியிற் போர் என்னடா?' என்றுசொல்லி யதட்டிக்கொண்டு, அவன் முன் பின் இட பொருதிடும் பெரியோன் - அந்தஅசுவத்தாமன் முன்பு தோல்வியடையும்படி போர் செய்த பெருமையையுடையவனாகிய, இரவிதன் திரு குலத்து இறைவன் - சூரியனது மேலானகுலத்தில் தோன்றிய அரசனான சோழன், பெருமையோடு - பராக்கிரமத்துடனே, பகைவன்மேல் - பகைவனான அந்தஅசுவத்தாமனமேல், எழுந்தான் - (போர்செய்யப்) புறப்பட்டான் (எ - று.)—மற்று - வினைமாற்று.

இப்படி ஒருசோழன் பதினெட்டுநாட்போரிலும் இறவாமல் பாண்டவர்க்கு உதவிசெய்த சிறப்பை "தாங்கள் பாரத முடிப்பளவு நின்று தருமன் தன் கடற்படைதனக் குதவிசெய்த வவனும்" என்று கலிங்கத்துப்பரணியில் இராசபாரம்பரியத்துக் கூறியமைகொண்டும் உணர்க. இச்சோழன் அசுவத்தாமனை முன்பு வென்றிட்டதை இச்சருக்கத்தின் கசு - ஆங் கவியிற் காண்க. பதினேழாம்போர்ச்சருக்கத்தில் கஉ0 - ஆங் கவிமுதல் பதினொருகவிகளிலுங் காணலாம். இவன் அசுவத்தாமனிடம் பகைமைகொண்டமை, இச்சருக்கத்தின் கசு - ஆங் கவியால் விளங்கும். கீழ்ச்சருக்கத்திலும் அதனை விளங்கக் கூறியுள்ளார். ஆகிய இத்தன்மைபற்றியே, இங்கு 'எழுந்தான் பகைவன்மேல் அவன் முன் பின்னிடப் பொருதிடும் பெரியோன்' என்றார்.

த்ரௌபதீயர் - வடமொழித்தத்திதாந்தநாமம். 'புரவித்தாமா' என்ற பெயரினிடையில் அம் என வந்தது சாரியையெனவொதுக்குதல் நேர். நினைவறப் புகுந்து - எவரும்எதிர்பாராதவண்ணம் பிரவேசித்து. பெருமை - பெருமிதம். (உகஅ)

சோழன் பரிவாரத்தோடு அசுவத்தாமனைப் பொருதல்.

பொன்னிநன்னதியுநேரியம்பொருப்பும்புகாரெனுநகரியும்படைத்த
சென்னியுமவன்றன்சேனையின்விதமுஞ்சேனைமண்டலீகருஞ்சேர
முன்னிபசிலைக்கைம்முனிமகனுடன்போய்மோதியவேதியான்மடிந்தார்
பின்னியசடையோன்வழங்கியபடைமுன்பிழைத்தவர்யாவரேபிழைத்தார்.

(இ - ள்.) பொன்னி நல் நதியும் - சிறந்தகாவேரிநதியையும், நேரி அம் பொருப்பும் - நேரியென்னும் அழகியமலையையும், புகார் எனும் நகரியும் - காவி

ரிப்பூம்பட்டினமென்ற நகரத்தையும், படைத்த - தனக்கு உரியனவாகக் கொண்ட, சென்னியும் - சோழனும், அவன்தன் சேனையின் விதமும் - அவனுடைய சேனையின் வகைகளும், சேனை மண்டலீகரும் - அச்சேனையிலுள்ள மண்டலாதிபதிகளான அரசர்களும், சேர - ஒருசேர, முன்னிய சிலை கை முனி மகனுடன் போய் - (யாவராலும்) கருதிக்கொண்டாடப்படுகிற வில்லையேந்திய கையையுடைய துரோணாசாரியனது புத்திரனான அசுவத்தாமனோடு (போர் செய்யச்) சென்று, மோதிய எதியால் மடிந்தார் - அவன்தாக்கிய ஆயுதத்தினால் இறந்தார்கள்; பின்னிய சடையோன் வழங்கிய படை முன் - திரித்துவிட்ட சடையையுடைய சிவபிரான் கொடுத்த அந்த ஆயுதத்திற்குமுன், பிழைக்தவர் யாவரே பிழைத்தார் - (முன்பு போரில்) உய்ந்த வீரருள் எவர்தாம் தப்பிப்பிழைத்தவர்? [எவருமிலர் என்றபடி]; (எ - று.)

பதினெட்டுநாட்போர்களிலும் தமதுதிறமையாற் பகைவென்று தாம் இறவாது உயிர்வாழ்ந்த வீரர் யாவரும் அழித்தற்றொழிற்கடவுளான சிவபிரான் தந்த ஆயுதத்தால் இறந்தொழிந்தார்கள் என்ற பொதுப்பொருளைக்கொண்டு சோழனும் அவன்சேனையோரும் அசுவத்தாமனால் கொல்லப்பட்டார்களென்ற சிறப்புப்பொருளைச் சாதித்தலால், வேற்றுப்பொருள்வைப்பணி. பொன்னைக் கொழித்துக்கொண்டுவருதலால், காவேரிக்கு 'பொன்னி' என்று பெயர்; இப்பெயர்விகுதி காவிரிக்கு நன்மை - தன்னில் ஒருகால் மூழ்கினார்க்கும் அருவினையழித்து உயர்பதம்அளித்தல். சென்னி - தலை; உத்தமாங்கமாகிய தலைபோல யாவரினுஞ்சிறப்பவனென்ற பொருளால், சோழனுக்குச் சென்னியென்று பெயர் வந்ததென்பர். சென்னியும், சேனையின்விதமும், மண்டலீகரும் மடிந்தார் - உயர்திணையும் அஃறிணையும் விரவிஎண்ணிச் சிறப்பினாலும் மிகுதியாலும் உயர்திணைமுடிபை பெற்றது; திணைவழுவமைதி; [நன் - பொது - உஎ.] முன்னுதல் - முற்படுதலுமாம். (உகக)

அசுவத்தாமன் தனியே அனைவரையும் அழித்த திறமை.

புகலரும்பதினெண்பூமிமுற்றுடையபூபதிகளுமவர்படைத்த
இகலருந்தந்திதேர்பரிகாலாளென்பனயாவையுஞ்சேரப்
பகலருஞ்சமரிற்பதின்மடங்காகப்பாதிநாளிரவினிற்படுத்தான்
றகலருங்கேள்வித்தாமனேதாமச்சடையவன்றனயனாதலினால்.

(இ - ள்) தகல் அரு கேள்வி - தகுதியான அரியநூற்கேள்விகளையுடைய, தாமனே - அசுவத்தாமனொருவனே, — (தான்), தாமம் சடையவன் தனயன் ஆதலினால் - (கொன்றை) மாலையைத் தரித்த (கபர்த்த மென்னுஞ்) சடையையுடைய சிவபிரானது குமாரனாதலால், — புகல் அரு பதினெண் பூமி முற்று உடைய பூபதிகளும் - வருணித்துச் சொல்லுதற்கரிய பதினெட்டுவகைநாடுகள் முழுவதையுந் தமதாகவுடைய அரசர்களையும், அவர் படைத்த - அவர்கள் (தமதாகப்) பெற்றுள்ள, இகல் அரு தந்தி தேர் பரி காலாள் என்பன யாவையும் - எதிர்த்தற்கு அரிய யானைகள் தேர்கள் குதிரைகள் பதாதிகள் என்னும் நால்வகைச்சேனைகளெல்லாவற்றையும், சேர - ஒருசேர, பகல் அரு சமரில் பதின் மடங்கு ஆக - பகற்பொழுதில் நடந்த அரியபோரினும் பத்துமடங்கு அதிகமாக, பாதி நாள் இரவினில் - அந்நாளின் நடுராத்திரியிலே, படுத்தான் - அழித்திட்டான்; (எ - று.)

அழித்தற்றொழிற்கடவுளான சிவபிரானது குமாரனாதலால், அசுவத்தாமனொருவன் தானே மிகப்பலவீரர்களையும் அவர்களுடைய அளவிறந்த சேனைகளையும் அழித்திட்டனனென்பதாம். கீழ்நடந்த பதினெட்டுநாட்பகற்போர்களிலும் பலபகைவர் திரண்டுகூடிப்பொருதும் அழித்திடப்படாதவரை அன்றையொருநாளிரவின் ஒருபகுதியில் ஒருவன் அழித்த திறத்தைக் கூறுவார்,

'பகலருஞ்சமரிற் பதின்மடங்காகப் பாதிநாளிரவினிற் படுத்தான்' என்றார். பதினெண்பூமி - சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளுவம் குடகம் கொங்கணம் கன்னடம் கொல்லம் தெலுங்கம் கலிங்கம் வங்கம் கங்கம் மகதம் கடாரம் கௌடம் கோசலம் திரவிடம் என்பன; இவையே பதினெட்டுப்பாஷைகள் வழங்குந் தேயங்களாம். இதற்கு வெவ்வேறுவகை கூறலும் உண்டு. தந்தமுடையது தந்தீ யெனக் காரணக்குறி. காலாள் - (வாகனமின்றிக்) கால்களால் நடக்கும் ஆடவரென மூன்றும்வேற்றுமையுருபும்பயனு முடன்றொக்கதொகை. தகல் - அல்விகுதிபெற்ற தொழிற்பெயர். தாமம் - ஒளியுமாம். சடை - ஜடா என்ற வடசொல் திரிந்தது. தநயன் - வடசொல். (௨௨௦)

**அசுவத்தாமன் உபபாண்டவர்தலைகளுடன் துரியோதனனை யடைதல்.**

உள்ளியபடியேகடுஞ்சினங்கன்றியுள்ளவர்யாரையுமுருக்கித் [டித்
துள்ளியவிடைபோற்செருக்கியப்புரத்தின்றுவாரநின்றவரையுங்கூட்
டெள்ளியகுமரர்சென்னியைந்தினையுந்தேவருந்திகைத்திடத்தூக்கி
வெள்ளியங்குருவந்தெழுமுனேகுருவின்மிகுகுலவேந்தைவந்தடைந்தான்.

(இ - ள்.) (அசுவத்தாமன்), உள்ளிய படியே - தான்நினைத்தபடியே, கடுசினம் கன்றி - மிக்ககோபம் வெதும்பப்பெற்று, உள்ளவர் யாரையும் முருக்கி - (அப்படைவீட்டில்) உள்ளாரெல்லாரையும் அழித்து, துள்ளிய விடை போல் செருக்கி - துள்ளிக்குதிக்குந்தன்மையுள்ள காளையெருதுபோலக் களிப்புக்கொண்டு, அ புரத்தின் துவாரம் நின்றவரையும் கூட்டி - அந்தப்படைவீட்டின் வாயிலிற் காத்துநின்றுள்ள கிருபனையும் கிருதனையுங் கூட அழைத்துக்கொண்டு, தெள்ளிய குமரர் சென்னி ஐந்தினையும் - தெளிவுள்ள பாண்டவகுமாரர்களுடைய தலைகளைந்தையும், தேவரும் திகைத்திட தூக்கி - தேவர்களுங் கண்டு பிரமிக்கும்படி (கைகளால்) தூக்கிக்கொண்டு,—வெள்ளி அம் குரு வந்து எழுமுனே - அழகிய (அசுர) குருவான சுக்கிரன் வந்துஉதிக்கும் முன்னே [இரவின் கடைப்பொழுதிலேயே], குருவின் மிகு குலம் வேந்தை - குருவென்னும்அரசனது சிறப்புமிக்ககுலத்திலே பிறந்த துரியோதனராசனை, வந்து அடைந்தான் - வந்துசேர்ந்தான்; (எ - று.)

அசுவத்தாமன் தான் பாண்டவர்தலைகளைக் கொய்திட்டதாகக் கருதிக் களிப்புறுந்தன்மை விளங்க, 'உள்ளியபடியே கடுஞ்சினங் கன்றி யுள்ளவர் யாரையும் முருக்கித் துள்ளியவிடைபோற் செருக்கி' என்றார். முருக்கி, முருங்கு என்பதன் பிறவினையான முருக்கு - பகுதி. வெண்ணிறமுடைமையால், சுக்கிரனுக்கு வெள்ளி யென்று பெயர்; இ - பெயர்விகுதி. கிழக்கில் சுக்கிரனது தோற்றம் இரவின் இறுதிப்பாகத்திலே உளதாவது. (௨௨௧)

வேறு

**அசுவத்தாமன் தனதுதிறமையைக் கூறுதல்.**

வந்தனனையமாதவனேவலான்
முந்துபூதமுதுகிடமாமுடி
சிந்தயாரையுஞ்செற்றகன்பாசறை
யைந்துவீரர்தம்மாவியுங்கொண்டரோ.

(இ - ள்.) ஐய - தலைவனே! மாதவன் ஏவலால் - கண்ணனுடைய கட்டளையால், முந்து - முற்பட்டுப் போருக்கு வந்த, பூதம் - பூதமானது, முதுகு இடபுறங்கொடுக்கும்படி (செய்து), அகல் பாசறை - பரந்தபடைவீட்டினுள்ளே, மா முடி சிந்த - பெரிய தலைகள் சிதறும்படி, யாரையும் செற்று - யாவரையுங் கொன்று, ஐந்து வீரர்தம் ஆவியும் கொண்டு - பஞ்சபாண்டவர்களது உயிர்க

ளையுங் கவர்ந்துகொண்டு, வந்தனேன்-இதோ வந்து சேர்ந்திட்டேன், (நான்); (எ - று.)—அரோ - ஈற்றசை; தேற்றமுமாம்.

இங்ஙனம் தான் துரியோதனன்முன்னிலையிற் சபதஞ் செய்தபடி அவனது தொன்றுதொட்ட பகைவர்களை வேரறத்தொலைத்துவந்த களிப்பை அசுவத்தாமன் அவனெதிரிற் கூறி அவனுக்கு மகிழ்ச்சியை விளைப்பவனானான். வந்தனேன், அன் - சாரியை.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் கூவிளச்சீர்களுமாகிய அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (௨௨௨)

அசுவத்தாமன் தான்கொணர்ந்த தலைகளைத் துரியோதனனுக்குக் காட்டல்.

சொன்னசிங்கத்துவசனையாதியா
மன்னரைவருமாண்டனர்மற்றவர்
சென்னியென்றுசிறுவர்தஞ்சென்னியை
முன்னர்வைத்தனனன்முனிமைந்தனே.

(இ - ள்.) சொன்ன சிங்கம் துவசனை ஆதி ஆ-(யாவராலுஞ் சிறப்பித்துக்) கூறப்பட்ட சிங்கக்கொடியையுடைய வீமனை முதலாகவுள்ள, மன்னர் ஐவரும் - பாண்டவராசர்கள் ஐந்துபேரும், மாண்டனர் - இறந்தொழிந்தார்கள்; அவர் சென்னி - அவர்களுடைய தலைகளாகும் (இவை), என்று - என்றுசொல்லி, முனி மைந்தன் - துரோணபுத்திரனான அசுவத்தாமன், சிறுவர்தம் சென்னியை - அவர்கள்குமாரர்களுடைய தலைகளை, முன்னர் வைத்தனன் - துரியோதனனெதிரிலே வைத்தான்; (எ - று.)—மற்று, ஆல் - அசைகள்.

சொன்ன - உனக்குப் பழம்பகைவனென்று சொல்லப்பட்ட எனினுமாம்.

துரியோதனன் அவற்றை நோக்கிப் பாண்டவர்தலைகளல்ல வென்றல்.

வைத்தசென்னியைநோக்கிவயாவுறு
சித்தமன்னவன்றேறிச்சிறார்முகந்
தத்தமன்புடைத்தந்தையர்வாண்முக
மொத்தவாகுமிஃதுண்மையென்றோதினான்.

(இ - ள்.) வயா உறு சித்தம் - ஆசைமிக்கமனத்தையுடைய, மன்னவன்- துரியோதனன், தேறி - (அசுவத்தாமன்வார்த்தையைக் கேட்டவுடனே சிறிது) தேறுதலடைந்து,வைத்த சென்னியை நோக்கி- (அவன் தன்னெதிரிலே) வைத்த தலைகளைப் பார்த்து, (உடனே அவனை நோக்கி), சிறார் முகம் - (இவை அப்பாண்டவர்களுடைய) புத்திரர்களது முகங்களே; தத்தம் அன்பு உடை தந்தையர் வாள் முகம் ஒத்த ஆகும்- தந்தமது அன்புள்ளதகப்பன்மார்களது ஒளியுள்ள முகங்களைப் போன்றுள்ளனவாம்: இஃது உண்மை - இது மெய், என்று ஓதினான் - என்றுசொன்னான்; எ - று.)

துரியோதனன் உயிர்போகுமளவும் தனியரசாட்சிசெய்வதில் மிககவிருப்பங்கொண்டிருந்தமையும், அப்படி தணியாதபேராசையுடையவன் அசுவத்தாமன்வார்த்தையைக் கேட்டு மரணவேதனையிலுஞ் சிறிதுதேறுதலடைந்தமையுந் தோன்ற, 'வயாவுறுசித்த மன்னவன் தேறி' என்றார். (௨௨௪)

இதுமுதல் ஐந்து கவிகள் - துரியோதனன் இரங்கல்.

ஓதும்வேந்துக்கொருமொழியுஞ்சொலான்
வேதபண்டிதனிற்கவவ்விரனைப்
பாதகஞ்செய்கைபார்ப்பனமாக்களுக்
கேதமேதமிதென்செய்தவாறெனு.

(இ - ள்.) ஓதும் வேந்துக்கு - (இவ்வாறுஉண்மையை எடுத்துக்) கூறின துரியோதனராசனுக்கு, ஒரு மொழியும் சொலான் - யாதோர்எதிர்மொழியுஞ் சொல்லமாட்டாதவனுப், வேத பண்டிதன் நிற்க-வேதங்களில்வல்லவனான அசுவத்தாமன் மௌனமாய்நிற்க, அ வீரனை - அந்தவீரனான அசுவத்தாமனைப் பார்த்து, 'பாதகம் செய்கை-தீவினைசெய்தல், பார்ப்பனமாக்களுக்கு-அந்தணர்களுக்கு.ஏதம் ஏதம்- மிக்ககுற்றமாம்; (அங்ஙனமாக),இது செய்த ஆறு என்- (நீ)இதனைச் செய்தவிதம் என்னை?' என - என்றுசொல்லி, (எ - று.)—இக்கவியில் 'என' என்றது,மேல் உ௩0-ஆம் கவியில் 'என்று பன்மொழி கூறி'என்றதனைக் கொண்டுமுடிதலால், இதுமுதல் அதுவரையிலும் ஆறுகவிகள் - குளகமாம்.

'ஓதும்வேந்து' என்பதில், மகரவொற்று வகரத்தின்முன் வந்ததனால், மகரக்குறுக்கமாம்; [நன்—எழுத்து—௯௧.] இதற்கு மாத்திரை கால்; [நன் - எழுத்து—௯௯.] பார்ப்பனமாக்கள் - பார்ப்பாராகிய மனிதரென இருபெயரொட்டு. ஏதம் ஏதம் - அடுக்கு, மிகுதிவிளக்கும் இது - குமாரரைக் கொன்றது. தூங்கிக் கொண்டிருக்கையில் கொன்றிட்ட வீரமிலாதானை வீரனென்றது, இகழ்ச்சி. வீரனை என என்று இயையும். (உஉரு)

துன்னுபாரதந்தோன்றியநாண்முதன்
மன்னரோடமலைந்தனைவாளியாற்
சொன்னபாலர்மகுடந்துணித்ததின்
றென்னவீரியமென்னினைந்தென்செய்தாய்.

(இ - ள்.) துன்னு - நெருங்கிய, பாரதம் - பாரதயுத்தம், தோன்றிய நாள் முதல் - தொடங்கியநாள் முதலாக, (பதினெட்டுநாள்களிலும்), மன்னர் - (பலபகை) அரசர்கள், ஓட - தோற்று ஓடும்படி, வாளியால் - அம்புகளால், மலைந்தனை - போர்செய்தாய்; (அப்படிப்பட்ட நீ), இன்று - இன்றைத்தினத்தில், சொன்ன - கீழ்க்குறிக்கப்பட்ட, பாலர் - பாண்டகுமாரர்களது, மகுடம் - தலையை, துணித்தது - அறுத்திட்டது, என்ன வீரியம் - என்னபராக்கிரமம்? என் நினைந்து என் செய்தாய் - என்னஎண்ணமெண்ணி என்னகாரியஞ்செய்தாய்? (எ - று.)

முதலிரண்டடி - அசுவத்தாமனது பலபராக்கிரமங்களை யெடுத்துக் கூறி அவனைப் புகழ்ந்து கொண்டாடியவாறு. இரண்டாவது வாக்கியத்தால், நீசெய்த காரியம் பாலஹத்திதோஷமாக முடிந்ததே யென்றவாறுமாம். என் நினைந்து என்செய்தாய - தொன்றுதொட்டுத் தீராப்பகைவராயுள்ள பாண்டவரைக் கொல்வதாகக்கருதி யாதொருகளங்கமுமில்லாத அவர்மக்களைக் கொன்றிட்டாயே! என்று இரங்கினன். மகுடம் - வடசொல்; இந்தக் கிரீடத்தின் பெயர், இங்கே தானியாகுபெயராய்த் தலையைக் குறித்தது. (உஉசு)

இருகுலத்திலெமக்குமவர்க்குமிங்
கொருகுலத்தினுமுண்டெனவில்லையாற்
குருகுலத்தின்கொழுந்தினைக்கிள்ளினை
வருகுலத்தொருமாசறுமைந்தனீ.

(இ - ள்.) இரு குலத்தில் - (திருதராட்டிரகுமாரர் பாண்டுகுமாரர் என்கிற) இரண்டு மரபுகளுள், எமக்கும் - (திருதராஷ்டிரகுமாரராகிய) எங்களுக்கும், அவர்க்கும் - (பாண்டுகுமாரராகிய) அவர்களுக்கும், ஒரு குலத்தினும் - ஒருவம்சத்திலும், இங்கு - இம்மையில் [இவ்வுலகத்தில்], உண்டு என - அடையாளமுண்டென்று சொல்லும்படி, இல்லை - (சந்ததி) இல்லையாயிற்று; வரு குலத்து ஒரு மாசு அறு மைந்தன் - பிறந்துவளர்ந்த குலத்திலே ஒருகுற்றமுமில்லாத குமாரனாகிய, நீ—, குரு குலத்தின் கொழுந்தினை - குருவம்சத்தின் இளமுளையை, கிள்ளினை - கிள்ளிவிட்டாய்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

'குருகுலத்தின்கொழுந்து' என்றது, உபபாண்டவரை. 'வருகுலம்' எனப்பட்டது, துரோணனது பரத்துவாசகுலம். (உஉஎ)

ஆற்றினீர்விளையாடியநாண்முதற்
காற்றின்மைந்தனொடெத்தனைகன்றினேன்
சாற்றினென்வினைதானென்னையேசுடக்
கூற்றின்வாய்ப்புகுந்தேற்கென்னகூற்றையா.

(இ - ள்.) ஐயா - ஐயனே! ஆற்றின் நீர் விளையாடிய நாள் முதல் - கங்காநதியின்சலத்திலே விளையாடினநாள்முதற்கொண்டு, காற்றின் மைந்தனொடு எத்தனை கன்றினேன் - வாயுகுமாரனான வீமனுடன் எவ்வளவு வயிரங்கொண்டேன்; சாற்றின் - ஆராய்ந்துகூறுமிடத்து, என் வினை தான் என்னையே சுட - யான்செய்த தீவினையே என்னை வருத்த, கூற்றின் வாய் புகுந்தேற்கு - யமனுடையவாயில் நுழைந்திட்ட எனக்கு, என்ன கூற்று - (சொல்லத்தக்க) வார்த்தை என்ன இருக்கிறது? (எ - று.)

துரியோதனாதியரும் பாண்டவரும் இளம்பிராயத்தில் ஒருநாள் கங்கையில் நீர்விளையாடி அதன் துறையில் ஒருசார் இன்னுணவுண்டு களித்துக் கண்டுயில, அவ்விரவில் துரியோதனன் வீமனைக் கொல்லும்பொருட்டுச் சகுனிமுதலானோரோடு ஆலோசித்து அவனை வலியகயிறுகளாற் கைகால்களைக்கட்டி அப்பெருநதியில் எறிந்துவிட்டதும், அதில் விழுந்து துயிலுணர்ந்த வீமன் தன் உடல்வலிமையால் அக்கட்டுக்களைத் துணித்துக்கொண்டு கரையேறிப் பிழைத்ததனையறிந்து மற்றொருநாள் கங்கைத்துறையில் எழுவினாலும் இரும்பினாலும் செம்மரத்தாலும் கூரியபலகழுக்களை நீரின்மேல் தோன்றாதபடி நாட்டச்செய்து வீமனை 'நீரில்விளையாட வா' என்று வஞ்சனையாக அழைத்துப்போய் 'இங்கிருந்து நீ நீரில் குதிக்கிறையா பார்ப்போம்' என்று சொல்லி அவனை அதிற் குதிக்கும்படி தூண்டியதும், அப்பொழுது கண்ணன் கருவண்டின் உருவங்கொண்டு கழுமுனைதோறும் உட்கார்ந்திருக்க, வீமன் அதனை நோக்கி 'இது என்ன? நீரோட்டத்தில் வண்டுகள் உட்கார்ந்திருக்கின்றனவே' என்று உற்றுப்பார்க்கும்போது மூன்று அங்குலத்தின்கீழ் வரிகள் நாட்டியிருக்கக் கண்டு தன்சங்கேதப்படி அவைநாட்டியிராதவிடம் பார்த்துக் குதித்துக் கரையேறி மீண்டிட, அதுகண்டு துரியோதனன் வேறொருநாள் வீமனுக்கு விருந்துசெய்விக்கிற வியாசமாகச் சமையற்காரரைக் கொண்டு விஷங்கொடுத்து உண்பித்து அதனால் மயங்கிய அவனைக் கட்டிக் கங்கையிற் போகட, அவன் பாதாளஞ்சேர்ந்து நாகங்களின் உதவியாற் பிழைத்து மீண்டமையும் ஆகிய இளம்பிராயத்துச்செய்திகளைக் கருதிக் கழிவிரக்கங்கொண்டு, துரியோதனன், 'ஆற்றினீர் விளையாடிய நாள்முதல், காற்றின்மைந்தனொடெத்தனை கன்றினேன்' என்றான்.

ஆறு - யாறு என்பதன் மரூஉ. எத்தனை யென்றது, மிகுதியைக் காட்டும். ஐயா - பூசிக்கத்தக்கவனே! (உஉஅ)

பணைநெடுங்கைப்பகட்டுவெஞ்சேனைசூ
ழிணைதருஞ்சொற்கிளைஞர்கள்யாரையுந்
துணைவர்யாரையுந்தோற்றுநின்றேனெனக்
கிணையர்பார்மிசையாருளரெண்ணிலே.

(இ - ள்.) பணை - பருத்த, நெடு - நீண்ட, கை - துதிக்கையையுடைய, பகடு - ஆண்யானைகளையுடைய, வெம் - கொடிய, சேனை - சேனைகள், சூழ் - சூழப்பெற்ற, இணைதரும் சொல் - பொருந்திய புகழையுடைய, கிளைஞர்கள் யாரையும் - உறவினர்களெல்லோரையும், துணைவர் யாரையும் - நண்பர்களெல்லோரையும், தோற்று நின்றேன் - (போரில்) இழந்து நின்றேன், (யான்); எண்

ணில் - ஆலோசிக்குமிடத்து, பார்மிசை - பூமியில், எனக்கு இணையர் யார் உளர் - எனக்கு ஒப்பானவர் எவர் இருக்கின்றார்? [யாருமில்லை யென்றபடி].

பகடு - யானையின் ஆண்பாற்பெயர். இணைதரும், தா - துணைவினை. சொல் - புகழாதலை "சொன்மாண் பமைந்த குழு" எனச் சிந்தாமணியிலுங் காண்க. இனி, 'இணைதருஞ்சொல்' என்பதற்கு - எனக்கு அனுகூலமாக இணங்கிப்பேசும் பேச்சையுடைய என்றும் உரைக்கலாம்; 'இணைதருஞ்சொல்' என்ற பாடத்துக்கு - முரசவாத்தியத்தின் ஒலியை யொத்துக் கம்பீரமாக ஒலிக்கிற சொற்களையுடைய வென்க. துணைவர் - தம்பிமாருமாம். (உஉக)

துரியோதனன் அசுவத்தாமனுக்கு விடைகொடுத்து அனுப்புதல்.

என்றுபன்மொழிகூறியிம்மைந்தரைக்
கொன்றுவந்தகுமரனைப்போர்தொறு
நின்றதீவினைநீங்கிடநீதவ
மொன்றிவாழ்கென்றுயர்விடைநல்கினான்.

(இ - ள்.) என்று பல் மொழி கூறி - என்று இவ்வாறு பல வார்த்தைகளைச் சொல்லி, இ மைந்தரை கொன்று வந்த குமரனை - இப்பிள்ளைகளை [உபபாண்டவரை] வதைத்துவந்த துரோணகுமாரனான அசுவத்தாமனை, (நோக்கி), 'போர் தொறும் நின்ற தீவினை நீங்கிட - போர்களில் நின்றதனாலாகிய பாவம் நீங்கும்படி, நீ தவம் ஒன்றி வாழ்க - நீ தவத்திற்பொருந்தி வாழ்வாயாக,' என்று - என்று சொல்லி, உயர் விடை நல்கினான் - சிறந்த அனுமதியை (அவனுக்குக்) கொடுத்து அனுப்பினான்; (எ - று.)

அரசர்க்குப்போல அந்தணர்க்குப் படைக்கல மேந்திப் போர்செய்தலும், அதில் பற்பலரையழித்தலும் சாதிதருமமல்ல வாதலால், 'போரில்வந்த பாவந் தொலையத் தவஞ்செய்து உய்ந்திடுவாய்' என்று உறுதிமொழிகூறினான். இங்ஙனங் கூறியதனால், துரியோதனனுக்கு அந்திமதசையிலுண்டான நல்லெண்ணம் வெளியாம். வாழ்கென்று - விகாரம். உயர்விடைநல்குதல் - மரியாதையோடு அனுமதிகொடுத்து அனுப்புதல். விடை - விடுதல், ஐ விகுதி பெற்ற தொழிற்பெயர். நல்கினான், நல்கு - பகுதி. (உஉ0)

கிருதனும் கிருபனும் சென்றபின் துரியோதனன் சஞ்சயனோடு பேசுதல்.

வெஞ்சராசனவீரனுமாமனு
நெஞ்சமாழ்குறநின்றவர்போனபின்
கஞ்சநாண்மலர்க்கண்புனல்சோர்வருஞ்
சஞ்சயாரியன்றன்னொடுகூறுவான்.

(இ - ள்.) வெம் சராசன வீரனும் - கொடியவில்வல்ல வீரனான கிருதவர்மாவும், மாமனும் - (அசுவத்தாமனது) மாதுலனான கிருபாசாரியனும், நெஞ்சம் மாழ்குற நின்றவர் - மனங்கலங்க நின்றவர்களாய், போன பின் - (அவ்விடம்விட்டுச்) சென்றபின்பு,—நாள் கஞ்சம் மலர் - அன்று மலர்ந்த [புதிய] தாமரைமலர்போன்ற, கண் - கண்களினின்று, புனல் சோர்வரும் - நீர் பெருகப்பெற்ற, சஞ்சய ஆரியன்தன்னொடு - சஞ்சய முனிவனுடனே, கூறுவான் - (துரியோதனன் சிலவார்த்தை) சொல்பவனானான்; (எ - று.)— அவற்றை, அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

கீழ்க்கவியினால் அசுவத்தாமன் துரியோதனனிடம் விடை பெற்றுச் சென்றமை பெறப்பட்டதனால், மற்றைய கிருதனும் கிருபனும் சென்றதனை இதிற் கூறினார். கீழ்க்கவியில் அசுவத்தாமனது பிரஸ்தாபம் வந்ததனால், இக்கவியில் 'மாமன்' என்றது, அவனுடைய மாமன்மேல் நின்றது. இனி, 'வெம் சராசனவீரன்' என்பதற்கு-அசுவத்தாமனென்றே உரைத்து, கிருதவர்மாவை

உபலக்ஷணத்தாற் பெறவைத்தலும் உண்டு. நெஞ்சம், அம் - சாரியை. மாழ்குற என்பதில், மாழ்கு என்ற பகுதியின்மேல் உறு - துணைவினை. சஞ்சம் - சம் ஜம் எனப்பிரிந்து, நீரினின்று பிறப்பதெனப் பொருள்படும் காரண விடுகுறி. சோர்வரும் = சோரும்: வா - துணைவினை. (உ௯௧)

இதுவும், அடுத்த கவியும் - சஞ்சயனை நோக்கித் துரியோதனன் கூறியன.

யாயொடெந்தையிரக்கமுறுவகை
யாயவின்சொலினாற்றுயராற்றிட
நீயெழுந்தருணின்மொழிவல்லபந்
தூயசிந்தைச்சுரர்களும்வல்லரோ.

(இ - ள்.) யாயொடு - (எனது) தாயும், எந்தை - (எனது) தந்தையும், இரக்கம் உறு வகை - (யாங்கள் இறந்ததனால்) விசனம் மிகாதபடி, ஆய இன் சொலினால் - பொருந்திய இனியவார்த்தைகளால், துயர் ஆற்றிட - (அவர்களுடைய) துன்பங்களைத் தணிப்பதற்கு, நீ எழுந்தருள் - நீ சென்றருள்வாயாக; நின் மொழி வல்லபம் - பேசுவதில் உனக்குள்ள வல்லமையை, தூய சிந்தை சுரர்களும் வல்லரோ - பரிசுத்தமான மனத்தையுடைய தேவர்களும் உடையரோ? [அல்ல ரென்றபடி]; (எ - று.)

யாய் - காந்தாரி. எந்தை - திருதராஷ்டிரன். ஆய இன்சொல் - பயனில் நன்மையானவையும் சமயத்துக்கு ஏற்றவையும், கேட்பதற்கு இனியவையுமான வார்த்தைகள். பின்னிரண்டடி-விசேஷஞானமுடைய தேவர்களும் உன்னைப்போலப்பேசுவதில் தேர்ந்தவர்களல்ல ரென்று கொண்டாடியவாறு. (உ௯௨)

யானுமெம்பியருமிறந்தோமெனு
மானபங்கமறந்துதன்னெஞ்சினுக்
கானதம்பியளித்தவர் தம்மொடுங்
கோனிலம்புரக்கும்படிகூறுவாய்.

(இ - ள்.) யானும் - நானும், எம்பியரும் - (எனது) தம்பிமார்களும், இறந்தோம் - இறந்துவிட்டோம், எனும் - என்ற காரணத்தாலாகிய, மானபங்கம் - அவமானத்தை, மறந்து—, தன் நெஞ்சினுக்கு ஆன தம்பி அளித்தவர் தம்மொடும் - தனது மனத்துக்குப் பிரியனாயிருந்த தம்பியான பாண்டுவினாற் பெறப்பட்ட தருமன் முதலியோருடனே, கோல் நிலம் புரக்கும் படி - செங்கோல்கொண்டு இராச்சியம் ஆளும்படி, கூறுவாய் - (திருதராட்டிரனுக்கு நீ) சொல்லியருள்வாய்; (எ - று.)

யானும் எம்பியரும் இறந்தோம் - தன்மையும் படர்க்கையும் விரவித் தன்மைப்பன்மைமுற்றுக் கொண்டது, உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. மானபங்கம் - வடமொழித்தொடர்; மானக்கேடு. 'தன்நெஞ்சினுக்கான தம்பி' என்றதனால், திருதராட்டிரனுக்கும் பாண்டுவுக்கும் இருந்த ஒற்றுமை விளங்கும். கோல் - இராசநீதி; ஒருபாற்கோணாது செவ்விய கோல்போறுதலால், கோல் என்பது - உவமையாகுபெயராய் வந்த பெயர்: வடநூலாரும் தண்ட மென்றார்.

சஞ்சயனை யனுப்பிவிட்டுத் துரியோதனன் உயிர்நீத்தல்.

என்னவம்முனிதன்னிணைத்தாண்மலர்
சென்னிமீதும்விழியினுஞ்சேர்த்திடா
வுன்னிலாண்மைக்குவமையில்லாதவன்
பொன்னிலத்திணுணர்வொடும்போயினன்.

(இ - ள்.) உன்னில் - ஆலோசிக்குமிடத்து, ஆண்மைக்கு உவமை இல்லாதவன் - பராக்கிரமத்தில் (தனக்கு) ஒப்பில்லாதவனான துரியோதனன்,— என்ன - என்றுசொல்லி, அ முனி தன் - அந்தச் சஞ்சயமுனிவனது, இணை

தாள் மலர் - தாமரைமலர்போன்ற உபயபாதங்களை, சென்னிமீதும் விழியினும் சேர்த்திடா - (தனது) தலையின்மேலும் கண்களிலுங் கொண்டு [தனது முடி அவனடியிற் படும்படி சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து அவனது பாதங்களைத் தனது கண்களில் ஒற்றிக்கொண்டு], (பின்பு), உணர்வொடும் - நல்லறிவுடனே, பொன் நிலத்தின் போயினன் - பொன்மயமான வீரசுவர்க்கத்திற் சென்றான் [இறந்தான் என்றபடி]; (எ - று.) (உகூச)

## வேறு.

### துரியோதனனது மரணம்.

வயிரஞ்செறிதருமனனும்வாய்மையும்வலியும்பொருபடைவினை
யுமேல்வரு,செயிருந்திகழ்தருகுருகுலபதிதிறல்வெஞ்செருமுனை
யதனின்மேதகு, மயிர்நுண்குழலரமடநல்லார்பலரளிகொண்டெதிர்
கொளவமரனபின், னுயிர்கொண்டதுசுரருறையும்வானுலகுடல்
கொண்டதுதனதுடையபூமியே.

(இ - ள்.) வயிரம் செறிதரு - தீராப்பகைமை பொருந்திய, மனனும் - எண்ணமும், வாய்மையும் - (அதற்கு ஏற்ற) சொற்களும், வலியும் - பலமும், பொரு படை வினையும் - போர்செய்தற்கு உரிய ஆயுதங்களின் தொழிலும், மேல் வரு செயிரும் - மேன்மேற் பொங்கிவருகிற கோபமும், திகழ்தரு - விளங்கப்பெற்றுள்ள, குருகுல பதி - குருவென்னும் அரசனது குலத்திற் பிறந்த அரசனான துரியோதனன், திறல் வெம் செரு முனையதனில் - பல பராக்கிரமங்களுக்கு உரிய கொடிய போர்க்களத்தில், மேதகும் மயிர் நுண் குழல் அர மட நல்லார் பலர் அளி கொண்டு எதிர் கொள - மேன்மை பொருந்திய நுண்மணல்போல மெல்லியனவாயுள்ள கூந்தலையுடைய மடமைக்குணமுள்ள தேவமாதர்கள் பலர் அன்புகொண்டு எதிர்கொண்டு உபசரிக்க, அமரன் ஆன பின் - (இறந்து) தேவனானவுடன், உயிர் - (அவனுடைய) உயிர், சுரர் உறையும் வான் உலகு கொண்டது - தேவர்கள் வசிக்கும் சுவர்க்கலோகத்தைச் சேர்ந்தது; உடல் - அவனுடம்பு, தனது உடைய பூமியே - அவனுக்கு உரியதாயிருந்த நிலவுலகத்தை, கொண்டது - சேர்ந்தது; (எ - று.)

உயிர் வீரசுவர்க்கஞ்செல்ல, உடல் கீழ்க்கிடந்திட்டது என்றபடி. உயிரை வானுலகம் கொண்டது, உடலைப் பூமிகொண்டது என்று பதவுரை கூறினுமாம். 'வயிரஞ்செறிதரு' என்ற அடைமொழியை வாய்மைக்குங் கூட்டுக. வாய்மையென்பதற்கு - சத்தியமென்று உரைத்தல், இங்குப் பொருந்தாது; துரியோதனன் பொய்யனாதலால். அரநல்லார் - அமரநல்லார் அல்லது அரம்பைநல்லார், அப்ஸரநல்லார் என்பதன் விகாரம். நல்லார் - அழகியவர் மடமை - யாவும் அறிந்தும் ஒன்றும் அறியாதுபோ லிருக்குந் தன்மை; 'கொண்டது விடாமை' என்றும் உரைப்பர்: "பேதைமையென்பது மாதர்க் கணிகலம்," "நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும் பேதைமைத்தே" என்றபடி இக்குணம் மகளிர்க்கு உரியதாதலால், 'மடநல்லார்' என்றார்; இது மகளிர் உக்குணம் நான்கினுள் ஒன்றும். இது - நாணம் அச்சம் பயிர்ப்பு என்னும் மற்றைப்பெண்குணங்களுக்கும் உபலக்ஷணம். நித்தியமாய் என்றும் அழியாததான உயிரை வேற்றுலகங் கொள்ள, அவனுக்கு வெகுகாலமாய்ச் சொந்தமாயிருந்த இவ்வுலகம் நிலையற்றதும் பயனில்லாததுமான உடம்பை மாத்திரமே கொண்டதென்ற வேறுபாடு ஈற்றடியில் விளங்குதல் காண்க. வலி - தேகபலம் ஆயுதபலம் சேனாபலம் புத்திபலம் மனோபலம் முதலியன. பொருபடை - வினைத்தொகை. அயிர்க்குழல் - உவமைத்தொகை. வயிரம் - வைர மென்ற வடசொல்லின் போலி. வயிரம்செறிதரு மனம் - எந்நிலையிலுங் கலங்காத உறுதிநிறைந்த மன மெனினுமாம்.

இச்செய்யுள் - ஒன்று மூன்று ஐந்து ஏழாஞ் சீர்கள் புளிமாச்சீர்களும், இரண்டு ஆறாஞ்சீர்கள் கருவிளச்சீர்களும், நான்கு எட்டாஞ்சீர்கள் கூவிளச்சீர்களுமாகிய கழிநெடிலடிநான்குகொண்ட எண்சீராசிரியச்சந்தவிருத்தம்.

தனதந் தனனன தனன தானன தனதந் தனனன தனன தானன—என்பது, இதற்குச் சந்தக்குழிப்பு. 'குருகுலபதிபதி' என்ற பாடம், சந்தத்திற்குப் பொருந்தாது. (௨௫)

வேறு.

இதுவும் அது.

கிடந்தவுடல்வானவர்தங்கிளைசொரிந்தபூமழையாற்செழுமுற்றோங்க, நடந்தவுயிர்புத்தேளிரரமகளிர்விழிமலரானலனுற்றோங்க, அடர்ந்தவளிகண்மொகுமொகெனுமாமோதவலம்புரித்தாரண்ணல்யாரு, மிடைந்துமிடைந்தெதிர்கொள்ளவீரருறைபேருலகமேவினானே.

(இ - ள்.) கிடந்த உடல் - (போர்க்களத்திலே) விழுந்துகிடந்த உடம்பு, வானவர்தம் கிளை சொரிந்த பூ மழையால் - தேவர்களுடையகூட்டம் பொழிந்த புஷ்பவர்ஷத்தால், செழுமுற்று ஓங்க - நிறைந்துஉயரவும்,—நடந்த உயிர் - மேற்சென்ற உயிர், புத்தேளிர் அரமகளிர் விழி மலரால் - தேவசாதியரான அப்ஸரஸ்திரீகளின் மலர்போன்ற கண்களின்நோக்கத்தால், நலன் உற்று ஓங்க - இன்பமடைந்துசிறக்கவும்,—அளிகள் அடர்ந்து மொகுமொகு எனும் ஆமோதம் வலம்புரி தார் அண்ணல் - வண்டுகள்நெருங்கிமொய்த்து மொகுமொகென்று ஒலிக்கப்பெற்ற மிகுமணமுள்ள நஞ்சாவட்டைப்பூமாலையையுடைய துரியோதனன்,—யாரும் மிடைந்து மிடைந்து எதிர்கொள்ள - (தேவர்களும் தேவமாதர்களு மாகிய) எல்லோரும் நெருங்கிநெருங்கிவந்து எதிர்கொண்டு உபசரிக்க, வீரர் உறை பேர் உலகம் மேவினான் - (போரிற்பின்னிடாது இறந்த) வீரர்கள் வசிக்குமிடமான பெரியவீரசுவர்க்கலோகத்தை யடைந்தான்; (எ - று.)

முதலிரண்டடிகளில் உடல் உயிர் என்ற இரண்டுக்கும் ஒருங்கே மலர்மேல்விழப்பெறுதல் கூறினார். செழுமுற்று என்பதில், செழுமு என்ற வினைப்பகுதிமேல், உறு-துணைவினை. 'புத்தேளிர் அரமகளிர்' என்பதை, 'யாரும்' என்பதனோடுங் கூட்டுக. அளி - வடசொல். மொகுமொகெனும் - ஈரடுக்கு ஒலிக்குறிப்பு; இரட்டைக்கிளவி. ஆமோதம்-மிக்கவாசனை: களிப்புமாம்: வடசொல்.

இதுமுதல் நான்முடியுமளவும் பதினைந்து கவிகள் - இச்சருக்கத்தின் பதினோராங்கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (௨௬)

அசுவத்தாமன் முதலியோர் வியாசரைக் கண்டு செய்திகூறல்.

கேள்வியுடைவரிசிலைக்கைம்முனிமகனுமாதுலனுங்கிருதனென்னும், வாள்விறல்கூர்நரபதியுங்குருபதிதன்வாய்மையினான்மாழ்கியேகி, வேள்வியருங்கனன்மூன்றுமொருவடிவாய்ப்பிறந்தனையவியாதற்கைவர், தோள்வலியுந்தஞ்செயலுந்தொழாமுடியோன்றுஞ்சியதுந்தொழுதுசொன்னார்.

(இ - ள்.) கேள்வி உடை - நூற்கேள்விகளையுடையவனும், வரி சிலை கை - கட்டமைந்த வில்லை யேந்திய கையையுடையவனுமான, முனி மகனும் - துரோணனது புத்திரனான அசுவத்தாமனும், மாதுலனும் - அவன்மாமனாகிய கிருபனும், கிருதன் என்னும் - கிருதவர்மா வென்ற, வாள் விறல் கூர் நரபதியும் - ஆயுதவலிமைமிக்க அரசனும்,—குருபதிதன் வாய்மையினால் - குருகுலத்தலைவனான துரியோதனனது வார்த்தையால், மாழ்கி ஏகி - வருத்தப்பட்டுக்கொண்டு சென்று,—வேள்வி அரு கனல் மூன்றும் ஒரு வடிவு ஆய் பிறந்து அனைய வியாதற்கு - யாகத்துக்குரிய அருமையான மூவகைஅக்கினிகளும் ஒருமுனிவடி

வுங்கொண்டு பிறந்தாற்போன்ற வேதவியாசமுனிவனுக்கு,—ஐவர் தோள் வலியும் - பாண்டவர்களுடைய புயபலத்தையும், தம் செயலும் - தங்கள்செய்கையையும், தொழா முடியோன் துஞ்சியதும் - (எவரையும் எக்காலத்தும்) வணங்காத முடியையுடைய மன்னனான துரியோதனன் இறந்ததையும், தொழுது சொன்னார் - வணங்கிக் கூறினார்கள்; (எ - று.)

கேள்வி - உபதேசம்பெறுதல். நரபதி - மனிதர்தலைவன்; வடசொல். குருபதிதன்வாய்மை - உஉச - ஆங் கவிமுதல் ஆறுகவிகளிற் கூறியவை. கனல் மூன்று - காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினி யென்பன அக்கினியிற் பிரிவு இடவேற்றுமையாலும் மந்திரபேதத்தாலும் தொழில்வகையாலும் நிகழ்வதென்க. மிக்கபரிசுத்தியுடையனான வியாசன் ஒப்புயர்வற்ற திவ்வியவொளியையுடையனா யிருத்தலால், அத்தன்மையை விளக்குதற்கு, மூவகையக்கினிகளும் ஒருவடிவாய்ப் பிறந்தாற்போன்றவ னென்றார். வ்யாஸ னென்ற வடசொல் - (பலவாறாகக்கலந்துகிடந்த வேதங்களை இருக்குமுதலிய நான்குவகையாக), வகுத்தவ னென்று காரணப்பொருள்படும்; வ்யஸ் - பிரித்தல். தம்செயல் - பகைவர்பலரைத் தாங்குகையிற் கொன்றமை முதலியன. (உகஎ)

வியாசன் மூவர்க்கும் விடைகொடுத்து அனுப்புதல்.

புரிதவத்திற்கானவனங்கிருபனுக்குந்துரோணமுனிபுதல்வனா
ன, துரகததாமனுக்குமமைத்திவ்வுழிநீரிருத்திரெனசொன்னபின்
னார், கிருதனுக்குவிடைகொடுத்தானிவருமவன்மொழிப்படியேகிரி
சூழ்கானிற், றருநிலத்தோரதிசயிப்பச்சிவபெருமான்றனைநினைந்துத
வஞ்செய்தாரே.

(இ - ள்.) (வேதவியாசமகாமுனிவன்), கிருபனுக்கும் - கிருபாசாரியனுக்கும், துரோணமுனி புதல்வன் ஆன துரகததாமனுக்கும்-துரோணாசாரியனது புத்திரனான அசுவத்தாமனுக்கும்,புரி தவத்திற்கு ஆன வனம் - தவஞ்செய்வதற்குத்தக்கதான அரணியத்தை, அமைத்து - (இன்னதென்று) நியமித்து, இ உழி நீர் இருத்திர் என சொன்ன பின்னர் - இவ்விடத்தில் நீங்கள் (தவஞ்செய்துகொண்டு) இருப்பீர்களென்று சொன்னபின்பு, கிருதனுக்கு விடை கொடுத்தான் - கிருதவர்மாவுக்கு (த்தன்ஊர்க்குச் செல்லும்படி) அனுமதிகொடுத்தனுப்பினான்; இவரும் - (கிருபன் அசுவத்தாமன் என்ற) இவ்விருவரும், அவன் மொழி படியே-அம்முனிவனது சொல்லின்படியே, கிரி சூழ் கானில் - மலைசூழ்ந்த காட்டில், தரு நிலத்தோர் அதிசயிப்ப - (கற்பக) விருட்சங்களையுடைய இடமான சுவர்க்கலோகத்திலுள்ள தேவர்கள் ஆச்சரியப்படும்படி, சிவபெருமான்தனை நினைந்து தவம் செய்தார் - சிவபிரானைத்தியானித்துத் தவஞ்செய்பவரானார்கள்; (எ - று.)

'கிரிசூழ்கான்' என்ற தொடர்- மலையைச்சூழ்ந்த காடென்றும், மலையாற் சூழப்பட்ட காடென்றும் இருவகையாகப் பொருள்படும். கிரி, தரு - வடசொற்கள். கான் - கானந மென்ற வடசொல்லின் திரிபு. சிவன்- (அடியார்க்கு) மங்களத்தைச் செய்பவன்; சிவம் - சுபம். பெருமான் - பெருமையையுடையவன்; மான் - பெயர்விகுதி. (உகஅ)

திருதராட்டிரனுக்குங் காந்தாரிக்கும் சஞ்சயன் செய்திகூறல்.

நாடியசொற்சுருதிநிகழ்நாவினான்சஞ்சயனுநள்ளென்கங்கு, லோ
டியொளித்திடுகதிரோனுதிப்பதன்முன்விலோசனநீருகுப்பவெய்தி,
யாடிமுகத்தரசினுக்குமையிருபதரசரையுமளித்துவாழ்ந்து, வாடிய
மெய்ச்சவுபலைக்குமுற்றதெல்லாம்வாய்மலர்ந்தான்வாய்மைவல்லான்.

(இ - ள்.) நாடிய சொல் - ஆராய்ந்து அறியத்தக்க சொற்களையுடைய, சுருதி - வேதங்கள், திகழ் - பொருந்திய, நாவினன் - நாக்கை யுடையவனும், வாய்மை வல்லான் உண்மையையே பேசவல்லவனும் ஆகிய, சஞ்சயனும்—, நள் என் கங்குல் - நடுராத்திரியில், ஓடி - விரைந்துசென்று,—ஒளித்திடு கதிரோன் உதிப்பதன் முன் - அஸ்தமித்த சூரியன் மீண்டும் உதயமாவதன்முன், விலோசனம் நீர் உகுப்ப எய்தி - கண்கள் நீர்சொரிய அருகிற்சேர்ந்து,—ஆடி முகத்து அரசினுக்கும் - கண்ணாடிபோலும் முகத்தையுடைய திருதராட்டிர ராசனுக்கும், ஐயிருபது அரசரையும் அளித்து வாழ்ந்து வாடிய மெய் சவுபலைக்கும் - (துரியோதனன் முதலிய) நூறு அரசர்களையும் பெற்று வாழ்ந்து மெலிந்த வுடம்பையுடைய சுபலராசன்மகளான காந்தாரிக்கும், உற்றது எல்லாம் வாய் மலர்ந்தான் - நடந்தசெய்தியையெல்லாங் கூறினான்; (எ - று)

நள்ளென் கங்குல் - நள்ளிரவு; நள் - நடு. இங்கே 'நள்ளென்கங்குல்' என்றது, பொழுதுவிடிதற்குமுந்தியே யென்றவாறு; உசப - ஆங் கவியில் 'பானாள்' என்பதும் இப்படியே. ஒளித்திடுகதிரோன் உதிப்பதன்முன் - "விழுந்த ஞாயிறு எழுவதன்முன்". விலோசநம் - வடசொல். சௌபலை யென்ற பெயர் சவுபலை யெனப் போலிபெற்றது, ஸௌபலா - வடமொழித் தத்திராந்த நாமம். காந்தாரி கருவுற்றிருக்கையில் குந்திக்குத் தருமபுத்திரன் பிறந்தசெய்தியை யறிந்து பொறாமைகொண்டு உடனே கல்லினால் தன்வயிற்றை யிடித்துக் கொள்ள, அதனால் கருப்பம் குழம்பிப் பலகூறுகளாகி வெளிவிழுந்திட, வியாசமுனிவர் வந்து அநுக்கிரகஞ்செய்து அக்கருப்பபிண்டக்கூறுகள் நூறையும் நூறுகுடங்களிலும் எஞ்சியசிதறலைச் சேர்த்து ஒருகுடத்திலுமாகவைத்து அடைகாத்துவரச் சொல்ல, பின்பு அவற்றினின்று துரியோதனாதியர்நூற்றுவர் மைந்தரும், துச்சளையென்னும் மாதும் தோன்றினரென வரலாறு உணர்க இப்படி அருமையாக வருந்தி நூறுமக்களைப் பெற்றும் அத்தனைபேரையும் இழந்த இரங்கற்பாடு தோன்ற, 'ஐயிருபதரசரையு மளித்து வாழ்ந்து வாடிய மெய்ச் சவுபலை' என்றார். சுருதிதிகழ்நா - வேதம்பயின்ற நா. (௨௬௧)

துரியோதனன்இறந்தமையறிந்து காந்தாரி வருந்தல்.

சேனாவிந்துவைமுதலாந்திருமைந்தரைவரும்வான்சென்றநாட்டொட்
டானாமற்சொரிகண்ணீராறுபெருங்கடலாகவழுதுசோர்வாள்
பானாள்வந்தருண்முனிவன்பகருமொழிவிடஞ்செவியிற்பட்டதாகத்
தூநாகமுருமொலிகேட்டயர்வதுபோல்வீழ்ந்தழுதாள்சுபலன்பாவை.

(இ - ள்.) சேனாவிந்துவை முதல் ஆம் திரு மைந்தர் ஐவரும் வான் சென்ற நாள் தொட்டு - சேனாவிந்துஎன்பவனை முதலாகவுடைய சிறந்த தனது புத்திரர்கள் ஐந்துபேரும் இறந்து மேலுலகத்துக்குச் சென்ற தினம் முதற்கொண்டு, ஆனாமல் சொரி கண்ணீர் ஆறு பெரு கடல் ஆக அழுது சோர்வாள் - (புத்திரசோகத்தால்) அடங்காமல் மேன்மேல்வழிகிற கண்ணீர்ப்பெருக்குப் பெரியகடல்வெள்ளம்போலாம்படி புலம்பித் தளர்ந்துவருபவளான, சுபலன் பாவை - சுபலராசனது மகளான காந்தாரி, பால் நாள் வந்து அருள் முனிவன் பகரும் மொழி விடம் செவியில் பட்டது ஆக - பாதியிரவில்வந்தருளிய சஞ்சயமுனிவன் கூறிய வார்த்தையாகிய விஷம் காதிற் பட்டவளவில், தூ நாகம் உரும் ஒலி கேட்டு அயர்வது போல் - நல்லபாம்பு இடியோசையைக் கேட்டுத் தளர்வதுபோல, வீழ்ந்து அழுதாள் - கீழ்விழுந்து புலம்பினாள்; எ - று.)

. துரியோதனாதியருள் சோவித்து சுதக்கணன் பிங்கலசன் சலாசந்தன் வீமவாகு என்ற ஐவர் பாரதயுத்தம் நடந்த பதினெட்டுநாள்களுள் நான்காம் போர்நாளில் வீமனாற் கொல்லப்பட, அதனாற் காந்தாரி அன்றையதினம் புதிதாகப் புத்திரசோகத்தை யடைந்தாளென்றும், அதுமுதற் பலபோர்நாள்களில்

புலகுமாரர்கள் இறந்தவுடு அவற்றால் நாள்தோறும் மேன்மேல் அச்சோகம் மிகப்பெற்றுவந்தாளென்றும் உணர்க; "வீரன் கற்பின் மின்னனையாளை யிறல் மைந்தர், ஏறு மன்றி லேற்றவு மாமன் றென்றுதாள், ஊறுவன்பிற் கண்ணறை மன்ன னொருதேவி, ஆறு வெள்ளத் தன்புற வன்றே யடியிட்டாள்" என்ற நான்காம்போர்ச்சருக்கத்துச்செய்யுள், இங்கே நோக்குதற்கு உரியது. துரி யோதனனது மரணத்தைத் தெரிவிக்கிற கடுஞ்சொல் மிக்கவருத்தந்தந்ததை விளக்குவார் 'முனிவன்பகரும் மொழிவிடம் செவியிற் பட்டதாக' என்றார். கண்ணில்லாதாரிடத்து அன்புகொண்டு நாள்தோறும் நிகழுஞ்செய்திகளை அறி ந்துவந்து கூறியமை தோன்ற, சஞ்சயனுக்கு 'வந்தநன்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இடியொலிகேட்டு அஞ்சியொடுங்குவது நாகத்தின் இயல் பாதலை "விரிகிற நாகம் விடருள தேனு, முருமின் கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" என்ற நாலடியாரினாலும் அறிக. தூ-தூய்மை யென்ற பண்புப்பெயர் ஈறுபோய் இடையகரமுங் கெட்டுநின்றது; இனி, தூ - வெண்ணிறமுமாம். பாவை-கண்மணிப்பாவையும், சித்திரப்பதுமையும்; அவைபோல் அழகியவளும் அரியவளுமான மகளுக்கு உவமவாகுபெயராம். (உ௪0)

## திருதராட்டிரனது சோகம்.

மருத்தின்மகனெனுஞ்சண்டமருத்தனையபுயவலியோன்வன்கைத்தண்டா
லுருத்தமரினுடன் றும்பரூர்புகுந்தான்வாளரவமுயர்த்தோனென்று
வருத்தமுடனுயங்கிமிகமயங்கிநிலமிசைவீழ்ந்துவயிரமான
கருத்தினுடனலமந்தானழுதுபெரும்புனல்சொரியக்கண்ணிலாதான்.

(இ - ள்.) வாள் அரவம் உயர்த்தோன் - கொடியபாம்பின்வடிவமெழுதிய கொடியை உயரநாட்டிய துரியோதனன், உருத்து அமரின் உடன்று - கோபித் துப் போரில் பகைத்து, மருத்தின் மகன் எனும் - வாயுவின்குமாரனான வீம னென்கிற, சண்ட மருத்து அனைய புயம் வலியோன் - கடும்பெருங்காற்றை யொத்த தோள்வலிமையையுடைய வீரனது, வல் கை தண்டால் - வலியகை யிலுள்ள கதாயுதத்தால், உம்பர் ஊர் புகுந்தான் - வீரசுவர்க்கஞ்சேர்ந்தான், என்று - என்றுகேட்டு, கண் இலாதான்-திருதராட்டிரன், வருத்தமுடன்-சோ கத்துடனே, உயங்கி - தளர்ந்து, மிக மயங்கி - மிகவும்மூர்ச்சைகொண்டு, நில மிசை வீழ்ந்து - தரையில் விழுந்து, வயிரம் ஆன கருத்தினுடன் - பகைமை கொண்ட மனத்துடனே, அழுது - புலம்பி, பெரு புனல் சொரிய - மிக்ககண் ணீர் பெருக, அலமந்தான் - கலங்கினான்: (எ - று.)

வாள் - ஒளியுமாம். திருதராட்டிரனது வைரமான கருத்தின் தன்மை, மேல் உ௪க-ஆங் கவியில் நன்குவிளங்கும். அலமந்தான், அலமா-பகுதி. (உ௪க)

## சூரியோதயமும், பாண்டவர்செய்திகூறத்தொடங்குதலும்.

இப்பான்மற்றிவரிரங்கவெப்பாலுமிருளொளிப்பவிரவியானுந்
துப்பார்செங்கொடிகளெனவுதயகிரிமிசைப்படர்ந்துதோற்றஞ்செய்யத்
தப்பாமனிலமடந்தைதன்பாரமகற்றுவித்தசார்ங்கபாணி
யப்பாலப்பாண்டவர்களைவரொடும்புரிந்தசெயலறைதுமம்மா.

(இ - ள்.) இப்பால் - இந்தப்பக்கத்தில், இவர்-திருதராட்டிரனும் காந்தா ரியும், இரங்க - (இவ்வாறு) விசனப்பட,—எ பாலும் இருள் ஒளிப்ப - எவ்வி டத்தும் இருள்விலகிச்செல்லும்படி, இரவியானும்-சூரியனும், துப்பு ஆர் செம் கொடிகள் என உதயகிரிமிசை படர்ந்து தோற்றம் செய்ய - பவழமயமாயமை ந்த சிவந்த கொடிகள்போல உதயபருவதத்தின்மேல் (தனது) சிவந்தஆயிரங் கிரணங்களாற் பரவி யுதிக்க,—அப்பால் - அந்தப்பக்கத்தில், நிலமடந்தைதன் பாரம் தப்பாமல் அகற்றுவித்த சார்ங்கபாணி - பூமிதேவியின்பாரத்தைத் தவறு

மல் தீர்த்திட்ட சார்ங்க மென்னும் வில்லை யேந்திய கையையுடைய கண்ண பிரான், அ பாண்டவர்கள் ஐவரோடும் புரிந்த செயல்-அப்பஞ்சபாண்டவர்களு டன் செய்த செய்கையை, அறைதும் - இனிக் கூறுவோம்; (எ - று.)—அம் மா - ஈற்றசை. மற்று - அசை. இச்செய்யுள் - கவிக்கூற்று.

இரவியான் - இரவி யென்ற பொதுப்பெயரோடு 'ஆன்' என்ற ஆண்பால் விகுதி சேர்த்து அதனை உயர்திணையாக்கிற்று. பவழக்கொடி - சூரியகிரணத் துக்கு, நிறத்தில் உவமம். தப்பாமல் - பூமிதேவியின் வேண்டுகோளும், தேவர் களின் பிரார்த்தனையும், தனதுசங்கல்பமும் தவறாமல்; பூமிபாரமாய் நின்ற கொடியவர்களுள் ஒருவரும் தப்பியுய்ந்திடாமல். சார்ங்கம்-திருமால்வில்.(உசசு)

வெளித்தங்கிய பாண்டவர் படைவீடுசேர்ந்து செய்தியையறிதல்.

ஐந்துபெரும்பார்த்திவரோடாரணியம்புகுந்தபிரானரியகங்குற் சிந்துதினகரனுதயஞ்சேருமுனம்பாசறையிற்சென்றுநோக்க விந்திரனேநிகர்நிருபர்முடித்தலைகள்வெவ்வேறாயிடையேசிந்த மைந்தருடற்குறைதழுவியாகுலித்துமெலிந்தரற்றுமானைக்கண்டார்.

(இ - ள்.) அரிய கங்குல் - (தப்பிப்பிழைத்தற்கு) அரிய (அப்பதினெட்டா நாள்) இரவிலே, ஐந்து பெரு பார்த்திவரோடு - பெருமையையுடைய பாண்ட வர்களாகிய ஐந்துஅரசர்களுடன், ஆரணியம் புகுந்த பிரான் - (அருகிலுள்ள தொரு) வனத்திற் சேர்ந்துதங்கிய கண்ணபிரான், சிந்து தினகரன் உதயம் சேருமுனம் - (கீழ்) கடலிற் சூரியன் உதித்தலையடையுமுன் [சூரியனுதிக்குமள விலே யென்றபடி]. பாசறையில் சென்று நோக்க - (தமது) படைவீட்டிற் போய்ப் பார்க்க, (அங்கு), இந்திரனே நிகர் நிருபர் முடி தலைகள் - தேவேந் திரனையேபோன்ற சிறந்தஅரசர்களுடைய கிரீடமணிந்த தலைகள், வெவ்வேறு ஆய் இடையே சிந்த - தனித்தனிதுணிபட்டு இடந்தோறுஞ் சிந்திக்கிடக்க, மைந்தர் உடல் குறை தழுவி- (தனது) புத்திரர்ஐவரது தலையற்றஉடல்களைத் தழுவிக்கொண்டு, ஆகுலித்து - அழுது, மெலிந்து - வருந்தி, அரற்றும் - கதறுகிற, மானை-மான்பார்வைபோலுங் கண்பார்வையையுடைய திரௌபதியை, கண்டார் - (பாண்டவரும் கண்ணனும்) பார்த்தார்கள்; (எ - று.)

பாண்டவர் கண்ணனுடன் அங்குச்சென்று சேருமுன்னமே திரௌபதி செய்தியறிந்து அங்குவந்து புலம்பலானா ளென்ன இதனால் விளங்கும். ஆரணி யம் - அரண்ய மென்ற வடசொல்லின் விகாரம். தோற்றம்மாத்திரத்தைக் கொண்டு, சூரியன் கடலில் உதிப்பதாகக் கூறினர். இனி, அரியகங்குல் தினகரன் எனஎடுத்து, அழித்தற்கரிய இரவினிருளைச் சிதறடிக்குந்த ஞான சூரியனெனினும் அமையும். முந்தினபொருளில், ஸிந்து - வட( பெயர்; இப்பொருளில், சிந்து - தமிழ்வினைப்பகுதி, வினைத்தொகை. ... பகலைச் செய்பவன்; வடசொல். இந்திரனே, ஏ - உயர்வுசிறப்பு. உபபாண்ட வர்தலைகளை அசுவத்தாமன் கைக்கொண்டு சென்றதனால், அதில்லாத கவந்தங் களை அங்குக் கிடந்தன. மான்-உவமவாகுபெயர். வேறு + வேறு=வெவ்வேறு; மரூஉ. மைந்து-இளமை வலிமை அழகு;அவற்றை யுடையவர்,மைந்தர்.(உசரு)

சீற்றங்கொண்ட வீமனையும் அருச்சுனனையும் கண்ணன் தடுத்தல்.

கண்டவுடன்மனமெலிவுற்றிவ்வண்ணமெலங்கொலெனக்கரியமேனிக் கொண்டலுரைத்தனன்றுரகதாமவின்வினைகளெலாங்கூற்றுமுட்க வண்டமுகடதிரவுருத்தருச்சுனனுமாருதியுமவன்றனாவி யுண்டலதுதவிரோமென்றுரைத்தோடமாறடுத்தேயுரைக்குமன்றே.

(இ - ள்.) கண்ட உடன் - (திரௌபதியின் நிலைமையைப்) பார்த்தவுட னே, (பாண்டவர்கள்), மனம் மெலிவுற்று-மனந்தளரப்பெற்று, இ வண்ணம்

என்கொல் என - இவ்வாறு எதனாலாகியதென்று (கண்ணனை) வினவ,—கரிய மேனி கொண்டல் - கருநிறமுடைய நீர்கொண்டமேகம்போன்ற கண்ணபிரான், துரகதாமாவின் வினைகள் எலாம் - அசுவத்தாமனது செயல்களையெல்லாம், உரைத்தனன் - கூறினான்; (அதுகேட்டு), அருச்சுனனும்—, மாருதியும்- வாயுகுமாரனான வீமனும், கூற்றும் உட்க - யமனும் அஞ்சும்படியாகவும், அண்டம் முகடு அதிர - அண்டகோளத்தின் மேல்முகடும் அதிர்ச்சியடையும்படியாகவும், உருத்து - கோபித்து, அவன்தன் ஆவி உண்டு அலது தவிரோம் என்று உரைத்து - 'அவ்வசுவத்தாமனது உயிரைக் கவர்ந்தன்றி விடோம்' என்று வீரவாதங்கூறி, ஓட - விரைந்துசெல்ல, (அப்பொழுது), மால் தடுத்து உரைக்கும் - கண்ணபிரான் (அவர்களைத்) தடுத்துக் கூறுவான்; (எ - று.)— அன்று, ஏ-ஈற்றசை கண்ணன்வார்த்தைகளை, அடுத்த மூன்றுகவிகளிற் காண்க.

மாருதி - மருத்தின்மகன்; தத்திதாந்தநாமம். (உசச)

இதுமுதல் மூன்று கவிகள் - கண்ணன் சமாதானங் கூறல்.

பாரிடமொன்றினைப்புரத்திபாசறையையெனப்புகன்றுபரிவிற்சென்றேம்
வீரருக்குமுனைத்தாமன்சுயோதனற்குச்சூளுரைத்துமீண்டானைவ
ராரமணிமுடிகொய்துதரணியெலாமுன்குடைக்கீழமைப்பனின்றே
காரிருக்குமலரளகக்காந்தாரிசுதவுள்ளங்களித்தியென்றே.

இதுமுதல் ஐந்துகவிகள் - குளகம்.

(இ - ள்.) பாரிடம் ஒன்றினை-ஒருபூதத்தை (நோக்கி), பாசறையை புரத்தி என புகன்று - 'படைவீட்டைப் பாதுகாப்பாய்' என்று சொல்லிவிட்டு,பரிவின் சென்றேம் - விருப்பத்தோடு (யாம் வேறிடத்திற்குப்) போனோம்; வீரருக்கு முனை தாமன் - போர்வீரர்களுக்கு முன்நிற்பவனான அசுவத்தாமன், (துரியோதனனை நோக்கி), 'கார் இருக்கும் மலர் அளகம் காந்தாரி சுத - கருநிறந்தங்கிய தம்பூக்களைச்சூடியதுமான கூந்தலையுடைய காந்தாரியின் குமாரனே!இன்றே- இப்பொழுதே, (யான் சென்று),ஐவர் ஆரம் மணி முடி கொய்து-பஞ்சபாண்டவர்களுடைய முத்தும் இரத்தினங்களும் பொருந்திய கிரீடத்தைத் தரித்த தலைகளைத் துணித்து, தரணி எலாம் உன் குடை கீழ் அமைப்பன் - பூமிமுழுவதையும் உனது ஆளுகையின்கீழ் வைத்திடுவேன்; உள்ளம் களித்தி - மனங்களிப்பாய்', என்று - என்றுசொல்லி, சுயோதனற்கு சூள் உரைத்து - அத்துரியோதனனுக்குச் சபதஞ்செய்துகொடுத்து, மீண்டான் - இங்கு வந்தான்; (எ - று.)

புரத்தி, களித்தி - ஏவலொருமை. தாமன் - முதற்குறையாகிய பெயர். காந்தாரி - காந்தாரராசன் மகள்; தத்திதாந்தம். (உசரு)

திருகுசினத்தொடுங்கடுகிப்பாசறையிற்புகுதலுமேசெங்கட்பூதம்
பெருகுவிழிநீர்சொரியவடர்த்தலும்பின்னிட்டரனைப்பெட்பிற்போற்றி
முருகிதழிச்சுடராருளும்படைக்கலம்பெற்றிவ்வண்ணமுடித்தானம்மா
குருகுகிரியெறிந்தோனைநிகர்த்தவன்றன்விறலெவர்க்குங்கூறலாமோ.

(இ - ள்.) (இவ்வாறு துரியோதனனெதிரில் உறுதிமொழிகூறிய அசுவத்தாமன்), திருகு சினத்தொடும் - உக்கிரங்கொண்ட கோபத்துடனே, கடுகி - விரைந்து, பாசறையில் புகுதலுமே - (நமது) படைவீட்டில் நுழையுமளவிலே, செம் கண் பூதம் - (அதற்குக்காவலாக நம்மால் நிறுத்தப்பட்ட கோபத்தாற்) சிவந்தகண்களையுடைய பூதம், விழி பெருகு நீர் சொரிய - கண்களினின்று மிக்கநீர் வழியும்படி [மிக்கவருத்தமுண்டாகும்படி], அடர்த்தலும் - நெருங்கிப் பொருதவளவிலே, (அசுவத்தாமன்), பின் இட்டு - புறங்கொடுத்து, (பின்பு), அரனை பெட்பின் போற்றி - சிவபிரானை அன்போடு பூசித்து, முருகு இதழி சுடர் அருளும் படைக்கலம் பெற்று - வாசனையையுடைய கொன்றைப்பூமா

லையையுடைய சோதிவடிவமான அப்பரமசிவத்தாற் கொடுத்தருளப்பட்ட ஆயுதத்தைப் பெற்று, இ வண்ணம் முடித்தான் - (அதனுதவியால் யாவரையும்) இவ்வாறு அழித்தல்செய்திட்டான்; குருகு கிரி எறிந்தோனை நிகர்த்தவன்தன் விறல் - கிரௌஞ்சமலையை வேல்கொண்டு பிளந்தவனான முருகக்கடவுளை யொத்தவனான அசுவத்தாமனது வல்லமை, எவர்க்கும் கூறல் ஆமோ - யாவருக்குஞ் சொல்லிமுடிக்கக்கூடிய அளவினதோ? [அன்றென்றபடி]; (எ - று.)

அம்மா - வியப்பிடைச்சொல்; அசுவத்தாமனது செய்வினைத்திறத்தையும், ஆற்றலையும் வியந்தவாறு. பெட்பு - விரும்புதல், தொழிற்பெயர்; பெள் - பகுதி, பு - விகுதி. முருகு - தேனும், தெய்வத்தன்மையுமாம். இதழி - கொன்றை; அதன் பூமாலைக்கு,இருமடியாகுபெயர். குருகு என்ற தமிழ்மொழியும் கிரௌஞ்சமென்ற வடமொழியும் பரியாயநாமமாதலால், கிரௌஞ்சமலையை, 'குருகுகிரி' என்றார். சிவகுமாரனாதலால், அசுவத்தாமனுக்கு முருகக்கடவுள் உவமை.

குருகுகிரி யெறிந்த கதை:—சிவபிரானது இளையகுமாரனைத் தேவர்கள் வேண்டுகோளால் அசுரர்களை யொழித்தற்குத் தேவசேனாபதியாம்பொருட்டு அவதரித்த முருகக்கடவுள் சூரபதுமனைப் பொருது அழித்தற்குச் செல்லும் வழியிடையே பெரியமலைவடிவங்கொண்ட கிரௌஞ்ச னென்னும் அசுரன் அவனை நலியக்கருதிப் பலவிதமாயைசெய்ய, அதன்மேல் அப்பெருமான் தனது தெய்வத்தன்மையுள்ள வேற்படையை யேவி அதனைப் பிளந்து அழித்திட்டன னென்பதாம். பரசுராமனும் சுப்பிரமணியனும் பரமசிவனிடம் வில்முதலிய ஆயுதப்பயிற்சியைச் செய்துமுடித்தபின்பு இவர்களுள் உயர்வு தாழ்வு அறியும் பொருட்டுச் சிவபிரான் உமாதேவியின் முன்னிலையிலே இவர்களுக்குக் கிரௌஞ்சமலையைச் சுட்டிக்காட்டி 'இதனிடத்து உங்கள்படைக்கலத்திறத்தைக் காட்டும்' என்று நியமிக்க, பரசுராமபிரான் அம்பெய்து அதனைத் துளையிட்டுத் தனது விற்றிறத்தைக் காட்ட, முருகக்கடவுள் வேலாயுதத்தை வீசி அம்மலையைப் பிளந்து தனது வேற்றிறத்தைக் காட்டின னென்றும் கதைகூறப்படும்.(உ௬௪)

என்றுபினுமபாண்டவியமெனும்படையுந்துரந்தான்மற்றெவரேகாப்பார்
அன்றுநுமதுயிரைந்துமளிப்பனெனும்வாய்மையினலகன்றேனின்னும்
வென்றியுமதுழியடையிற்சொல்வன்யான்விடுமினெனமின்னனாளைத்
துன்றிவிதியினைவெல்பவரேவெனெடுத்தருளிச்சூழ்ச்சிவல்லான்.

(இ - ள்.) சூழ்ச்சி வல்லான் - தந்திரங்களில் வல்லவனான கண்ணன், என்று - என்றுசொல்லி, பினும் - மற்றும், 'அபாண்டவியம் எனும் படையும் துரந்தால் - அபாண்டவமென்ற அஸ்திரத்தையும் (அசுவத்தாமன்) எய்வானானால், காப்பார் எவரே - (அதினின்றும் உங்களைப்) பாதுகாப்பார் யாவர்? [எவருமில்லை யென்றபடி]; அன்று - அந்நாளில் [முற்காலத்தில்], நுமது உயிர் ஐந்தும் அளிப்பன் எனும - 'உங்கள்ஐந்துபேருடைய உயிரையும் பாதுகாப்பேன்' என்று வாக்குத்தத்தஞ்செய்த, வாய்மையினால் - உண்மைமொழியின்படி, அகன்றேன் - (உங்களைப் பாதுகாக்கும்பொருட்டு நேற்றிரவு உங்களை அழைத்துக்கொண்டு) பிறிதிடஞ் சென்றேன்; இன்னும் - இன்னமும், வென்றி - வெற்றி, உமது உழி அடையின் - உங்களிடத்து நிலையாகச்சேர்ந்திட்டால், சொல்வன் யான் - (அப்பொழுதே) நான் நம்பிக்கையாகச் சொல்வேன்; (இங்ஙனமாதலால்), விடுமின்-(அசுவத்தாமனைத்) தொடராமல் விட்டிடுங்கள்,' என - என்றுஞ்சொல்லி, மின் அனாளை துன்றி-மின்னல்போல மெல்லியளாய்விளங்குகின்றவளான திரௌபதியை யடைந்து, விதியினை வெல்பவர் எவரே என்று - 'விதியை வெல்வார் யார் உளர்? [எவருமில்லையென்றபடி]' என்றுசொல்லி, எடுத்து அருளி - (கீழ்விழுந்து புரளுகிற அத்திரௌபதியைக்) கருணையோடு எடுத்து, (எ - று.)—'எனத் துயரந்தவிர்த்து' என அடுத்தகவியோடுதொடரும்.

இனி நீங்கள் அசுவத்தாமனை யெதிர்த்துப் போர்செய்வீராளுல் அப்பொழுது அவன் உங்கள்மேல் அபாண்டவாஸ்திரத்தைச் செலுத்தினால் அதனைத் தடுத்து உங்களைக்காத்தல் அரிதாதலின், அது உங்களைத் தவறாமல் அழித்திடக்கூடு மென்றும், உங்களை நான் பாதுகாப்பதாக முந்திக்கூறியுள்ளபடி தந்திரமாக வேற்றிடத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் வைத்துக்கொண்டிருந்த தனாலன்றோ நீங்கள் ஐவர்மாத்திரமேனும் உயிர்பிழைத்தீர்கள் என்றும், நீங்கள் இப்பொழுது வெற்றியடைந்திட்டதாகச் செருக்குக்கொள்ளவேண்டா, அவ்வெற்றி அசுவத்தாமனை யெதிர்ப்பின் ஒழியினுமொழியு மென்றும் நயபயங்களாகத் தந்திரவார்த்தைகள்கூறிக் கண்ணன் பாண்டவரைச் சமாதானப்படுத்தின னென்பதாம். அசுவத்தாமன்மேல் அடங்காதகோபங்கொண்டு வீமனும் அருச்சுனனும் அவனை யெதிர்த்துவென்று கட்டி அவன்தலையைக் கொய்தற்கு ஈடாக அவனதுதலையிலுள்ள சிகாமணியை அறுக்கத்தொடங்கியவளவில், அவன் வெகுண்டு அபாண்டவாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அது பாண்டவர் மேல் வந்ததைக் கண்டு கண்ணன் சக்கராயுதத்தால் தடுத்துக் காத்தவளவில், அந்தஅஸ்திரம் விலகி, அபிமந்யுவின்மனைவியான உத்தரையின் வயிற்றிலுள்ள கர்ப்பத்தை அழிக்கும்பொருட்டு அங்குச் செல்ல, அங்கும் அதனைக் கண்ணன் காத்தருளின னென்று வடநூல் கூறும். "மலர்ந்த செங்கதிர் மாமணி யிழந்தவன் மலர்விழி சிவப்பூர, வலர்ந்த தாமரைப் பொகுட்டுறை யயன்படை யபாண்டவமெனத் தூண்ட, வுலங்கலந்த தோ ளைவர்த முயிர்பிழிந்துண்ண வந்துறல் பாரா, விலங்கு மாழிலைய நோக்கினன் மறைமுத லிரிந்த தப்படை மாதோ" என்பர் பாகவதத்தும். அபாண்டவியம்=அபாண்டவம்; பாண்டவரைக் கருவறுப்பது; இதனைப்பிரமசிரோஸ்திர மென்றும், ஐஷீகாஸ்திரமென்றுங் கூறுவர்.

கண்ணன் தூதுசெல்லுதற்குமுன் பாண்டவரைவரையுஞ் சபைகூட்டித் தனித்தனி 'உங்கள்கருத்தைக் கூறுங்கள்' என்றுசொல்லி அவரவர்கருத்தைக் கேட்டு வரும்போது, சகதேவன் தனதுதத்துவஞானத்தைப் புலப்படுத்த, அது கண்டு கிருஷ்ணன் திருவுள்ளமுவந்து 'வேண்டிய வரங்கேள்'என்றுநியமிக்க, சகதேவன் 'எங்களைவரையும் போரிற் பாதுகாக்கவேண்டும்' என்று பிரார்த்திக்க, அவ்வரத்தை எம்பெருமான் கொடுத்தருளினான். இதனை "வன்பாரதப் போரில் வந்தடைந்தே மைவரையும், நின்பார்வையாற் காககவேண்டு நெடுமாலே", "என்றென்றிறைஞ்சி யிருதாமரைத்தாளி, லொன்றுங் கதிர்முடியாற் கோமென் றுரைத்தருளி" என்ற கிருட்டிணன்தூதுசருக்கத்துச் செய்யுள்களால் அறிக. அத்தன்மையே இங்கு 'அன்று நுமதுயிரைந்து மளிப்ப னெனும் வாய்மையினால்' என்று கண்ணபிரானாற் குறிக்கப்பட்டது.

'உயிரைந்தும்' என்பதற்கு - பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் என்னும் ஐந்துபிராணவாயுக்களை யென்று உரைத்தல், இங்குச் சிறப்பன்று. விதியினை எவரே வெல்பவர்—"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான் முந்துறும்" எனக் காண்க. மற்று - அசை. (உசஎ)

கண்ணன் திரௌபதியைத் தேற்ற, தருமன் இறந்தார்க்குக் கிரியைசெய்தல்.

மைந்தருயிர்க்கிரங்குவதென்மலர்க்குழலாயுன்கொழுநர்வாழ்தற்கியான்செய்
தந்திரமற்றொருகோடியுரைக்கடங்காவெனத்துயரந்தவிர்த்துத்தன்மன்
கொரந்தலருமுகநோக்கிக்கன்னன்முதல்யாவருக்குங்குலவுமீமத்
தந்தமுறுகடன்கழித்துமெனவுநுகன்சொற்படிநின் றளித்தபின்னர்.

(இ - ள்.) 'மலர் குழலாய் - பூக்களைச்சூடிய கூந்தலையுடையவளே! மைந்தர் உயிர்க்கு இரங்குவது என்- (உனது)புத்திரர்களுடைய உயிர் ஒழிந்ததற்காக நீ விசனப்படுவது என்னே? உன் கொழுநர் வாழ்தற்கு - உனதுகணவர்கள் இறவாது)உயிர்வாழும்பொருட்டு, யான் செய் - நான் செய்த, தந்திரம் - தந்தி

ரங்களோ, ஒரு கோடி - மிகப்பலவாம்: உரைக்கு அடங்கா - (அவை) சொல்லுக்கு அடங்குவனவல்ல', என - என்றுசொல்லி, துயரம் தவிர்த்து - (திரௌபதியினுடைய) துன்பத்தைத் தணித்து, (கண்ணபிரான்), தன்மன் கொந்து அலரும் முகம் நோக்கி - தருமபுத்திரனது மலர்போல மலர்ச்சி பெற்றுள்ள முகத்தைப் பார்த்து, கன்னன் முதல் யாவருக்கும் - கர்ணன் முதலிய எல்லோருக்கும், குலவும் ஈமத்து அந்தம் உறு கடன் கழித்தும் என - பொருந்திய மயானசம்பந்தமான கடமையாகச்செய்யவேண்டிய அந்திமகிரியைகளைச் செய்துமுடிப்போமென்று சொல்ல, உலூகன் சொல் படி நின்று-உலூகனென்னும் அந்தணன் கூறிய முறைப்படி நின்று, (தருமன்), அளித்த பின்னர் - (அக்கடமைகளை இறந்தார்க்குச்) செலுத்தியபின்பு, (எ - று.)—கண்ணன் பாண்டவர்களுடன் அத்தினபுரிசென்று என வருங்கவியோடு தொடரும்

"குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும், பெற்றுக்கொளலாம் பெறலாமோ - கொற்றவனே, கோக்காதலனைக் குலமகளுக்கு" என்றபடி கற்புடைமங்கையர்க்கு மக்களினுங் கணவரே முக்கியமென்பது நூற்கொள்கையாதலால், நீ உன்கணவர் வாழ்ந்ததற்காக மகிழவேண்டுமேயன்றி மைந்தர்இறந்ததற்காக வருந்தலாகா தென்பான், இங்ஙனங் கூறினன். கொந்து - கொத்து என்பதன் மெலித்தல்; இந்தப் பூங்கொத்தின் பெயர், இங்கே ஆகுபெயராய் மலரை யுணர்த்திற்று. இனி, கண் செவி வாய் மூக்கு என்ற உறுப்புக்கள் ஒவ்வொன்றும் மலர்போலிருத்தலால், அவற்றையுடைய முகம் பூங்கொத்துப் போன்றதெனக் கூறப்பட்டதென்பாருமுளர். 'தன்மன் கொந்தலருமுகம்' என்றதனால், கண்ணன்கூறிய சமாதானவார்த்தையைக்கேட்டுத் தருமபுத்திரன் சோகந்தணிந்தனனென விளங்கும். இனி, தருமன் வினைப்பயனை யுணர்ந்தவனாதலால், எப்பொழுதும் முகமலர்ச்சிகொண்டிருந்தனனென்பதை விளக்குவதுமாம்.

கன்னன் - கர்ணனென்பதன் திரிபு; இப்பெயர், கர்ணகுண்டலங்களோடு பிறந்தமைபற்றியது. காதின்வழியே பிறந்ததனால் வந்தபெயரென்றுங் கூறுவர். கர்ணம் - காது. அந்தமுறுகடன்-இறுதியிற்செய்யும் சடங்கு; அந்திமக்கிரியை. கண்ணன் 'கழித்தும்' எனத் தன்மைப்பன்மையாற் கூறினது, பாண்டவரிடத்துள்ள அபிமானத்தாலாகிய ஒற்றுமைநயம்பற்றியதாம். 'கழித்தி' என முன்னிலையாகப் பாடங்கொள்ளினுமாம். உலூகன் - ஒருபுரோகிதன்; பாண்டவர்களால் துரியோதனனிடம் முதலில் தூதனு யனுப்பப்பட்டவன்.

### திருதராட்டிரனது பெருங்கோபம்.

அத்தினபுரியதனிலைவருடன்சென்றரியுமந்தன்முன்னர்ப்
பத்தியினலிறைஞ்சிடமற்றெவர்சொலெனத்தருமன்முதற்பாலரென்ன
வித்தகனுமாசிசொற்றுச்சதாகதிசேயினைத்தழுவவேண்டுமென்ன
வத்தனத்துணளித்தருளத்தழுவிநெரித்தனன்றுகள்களாயதம்மா.

(இ - ள்.) அரியும் - கண்ணபிரானும், ஐவருடன் - பஞ்சபாண்டவர்களுடனே, அத்தினபுரியதனில் சென்று - அஸ்தினாபட்டணத்திற் போய், அந்தன் முன்னர்-பிறவிக்குருடனான திருதராட்டிரன் முன்னிலையில், பத்தியினால் இறைஞ்சிட - பக்தியோடு வணங்க, (அப்பொழுது திருதராட்டிரன்), எவர் சொல் என - (வணங்குபவர்) யாவரென்று வினவ, தருமன் முதல் பாலர் என்ன- (அதற்குக் கண்ணன்) 'தருமபுத்திரன்முதலிய குமாரர்கள்'என்று கூற, வித்தகனும் - சதுரனான திருதராட்டிரனும், ஆசி சொற்று - (அவர்களுக்கு) ஆசீர்வாதஞ்சொல்லி,சதாகதி சேயினை தழுவ வேண்டும் என்ன - 'வாயுகுமாரனை வீமனை யான் கட்டிக்கொள்ளவேண்டும்' என்றுசொல்ல, அத்தன்-(யாவர்க்கும்) தலைவனான கண்ணன், அதுன் அளித்தருள - பெரியதோர் இருப்புத்தூ

லைக் கொணர்ந்துகொடுத்தருள, தழுவி நெரித்தனன் - (அதனைத் திருதராட்டிரன் வீமனென்று கருதி) அணைத்துநொருக்கினான்; (அம்மாத்திரத்தால்), தூகள்கள் ஆயது - (அத்தூண்) பொடியாய்விட்டது; அம்மா - ஆச்சரியம்! (எ - று.)

அம்மா - வியப்பிடைச்சொல்; திருதராட்டிரனது மிக்கவலிமையையும், அதிகவைரத்தையும், கோபாவேசத்தையும் வியந்தார். "கராசலம் பதினாயிரம் பெறுவலிக் காயமொன்றினிற் பொற்றோ, னிராசகுஞ்சரம் பிறந்திடும் விழிப்புல னில்லை மற் றதற் கென்றான்" என்றபடி திருதராட்டிரன்பதினாயிரம்யானை பலங்கொண்டவ னாதலாலும், கோபாவேசத்தாலும், இருப்புத்தூணைத் தழுவி நெரிப்பவனானான். பாண்டவர் கண்ணனுடன் திருதராட்டிரனைச் சேர்ந்துவணங்கியபொழுது, தன்புத்திரரைக்கொன்ற அவர்களிடத்து உள்வயிரமுடைய திருதராட்டிரன் அவர்களை அன்போடுதழுவுவான்போல அருகிலழைத்து முதலில் தருமபுத்திரனையணைத்து நல்வார்த்தைகூறிவிட்டு உடனே வீமனைக் கொல்லுங் கருத்தோடு அவனை அழைகக, அப்பொழுது முழுதுணர்கடவுளான கண்ணன் அவனுடைய உட்கருத்தை யறிந்து வீமனைத்தடுத்து வீமன்வடிவமுடையதோர் இரும்புமயமான பிரதிமையைக் கொணர்ந்துசெலுத்த, திருதராட்டிரன் அதனை வீமனென்றே கருதி வலியத்தழுவியதனால், அந்த இருப்புருவம் பொடிப்பொடியாய்விட, பின்பு திருதராட்டிரன் கண்ணனால் உண்மைகூறி நல்லறிவுபுகட்டப்பட்டவுடன் கோபசாந்தியையடைந்து பிறகு வீமன்முதலிய நால்வரையுந் தழுவின னென விவர முணர்க. துரியோதனன் வீமனிடத்துள்ள விரோதத்தால் தனதுமாளிகைவாயிலில் அவன்போன்ற ஒருஇருப்புப்பாவையை அமைத்துநிறுத்தி அதனைப் பலவாறு விகாரமாக அலங்கரித்து அதன்தலையின்மேல் தான் உபரிகையினின்று எச்சிலுமிழ்ந்து இங்ஙனம் தன்பகைமையையுங் கொடுமையையும் வெளிக்காட்டிவந்தன னென்றும், அந்தப்பிரதிமையே இங்குக் கண்ணனாற் கொணர்ந்துகொடுக்கப்பட்டதென்றும் அறிக. ஆனது பற்றியே, 'அத்தூண்' எனச் சுட்டிக் கூறினார். தூண் - தூண்போல நீண்ட பெரியவடிவ மென்க. திருதராட்டிரனது தீயசிந்தனையைத் தனது உண்மையுணர்வால் உணர்ந்து அதற்கேற்ற பரிகாரஞ் செய்த அருளுடைமையில் ஈடுபடுவார், இங்கே கண்ணனை 'அத்தன்' என்றார்; யாவர்க்குந்தந்தைபோல்வா னென்றபடி. "முன்னர் மேவுமா றுணர்ந்த மூலகாரணன் பகுத், தன்ன வீமனுக்கு வேறமைத்த பஞ்சலோக மொன், றுன்னு முன்னர் கொணருவித் துடனடந்து நேர்புக" என்று நல்லாப்பிள்ளைபாரதத்துக் கூறியவாறும் உணர்க.

ஹஸ்திநாபுரீ என்ற வடமொழிப்பெயர் - ஹஸ்தீ என்ற சந்திரகுலத்தரசனால் அமைக்கப்பட்ட நகர மென்றும், யானைகளை மிகுதியாகவுடைய நகர மென்றும் காரணப்பொருள்படும். ஹஸ்தம் - கை, இங்கே துதிக்கை; அதனையுடையது ஹஸ்தீ என யானைக்குக் காரணக்குறி. அரி - ஹரி; வடசொல்; (அடியவர்துயரை) அழிப்பவ னென்று பொருள்படும். அந்தன், பக்தி - வடசொற்கள். தான்கொண்ட மநுஷ்யாவதாரத்துக்கு ஏற்ப, கண்ணனும் பாண்டவருடன் திருதராட்டிரனை அன்போடு வணங்குபவனானான். வித்தகன் - தந்திரம்வல்லவன்; வஞ்சக னென்றபடி. ஸதாகதி யென்ற வடமொழிப்பெயர் - எப்பொழுதும் சஞ்சரித்தலையுடையானென்று பொருள்படும். அதிகபலபராக்கிரமசாலிகளான தன்மக்கள்நூற்றுவரையுந் தனியேயழித்திட்ட வலிமையைக் கொண்டாடுவான் போன்று, திருதராட்டிரன், வீமனை 'வாயுகுமாரன்' என்றான். வேண்டும் - உம்விகுதிபெற்ற ஒருவகைவியங்கோள். (௨௪௧)

கண்ணன் தருமனுக்கு அரசளித்துத் துவாரகை சேர்தல்.

இனியூழிவாழ்தியெனவினைஞரொருநால்வருடனறத்தின்மைந்தன்
றனையிருத்திமீள்வலெனச்சாத்தகியுமலாயுதனுந்தன்னைச்சூழ

வினையகற்றும்பசுந்துளவோன்றுவரைநகர்த்திசைநோக்கிமீண்டான்சீர்த்தி
தழைத்திடப்பாரளித்தவருமறநெறியேகருதிவாழ்ந்தார்.

(இ - ள்.) வினை அகற்றும் - (தன்னைச்சார்ந்தவர்களது) தீவினைகளை ஒழிக்கின்ற, பசுந் துளவோன் - பசுமைநிறமுடைய திருத்துழாய்மாலையையுடைய கண்ணபிரான், — இனி வாழி வாழ்திர் என - 'இனி நெடுங்காலம் அரசாண்டு வாழ்வீர்கள்' என்று சொல்லி, அறத்தின் மைந்தன்தனை - தருமபுத்திரனை, இளைஞர் ஒரு நால்வருடன் - (வீமன் முதலிய) நான்கு தம்பிமார்களுடனே, இருத்தி - (அஸ்திநாபுரியிலே) தாபித்து, மீள்வல் என - (யான் என்னூர்க்குச்) செல்வேனென்றுசொல்லி, — சாத்தகியும் அலாயுதனும் தன்னை சூழ - சாத்தகியும் பலராமனும் தன்னையடுத்துவர, — துவரை நகர் திசை நோக்கி மீண்டான் - துவாரகாபுரியின் எல்லையை நோக்கி மீண்டுவந்தருளினான்; அவரும் - அப்பாண்டவர்களும், சீர்த்தி - மிக்கபுகழுடன், கலை கடல் பார் அளித்து - ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட பூமியைப் பாதுகாத்து, அறம் நெறியே கருதி - தருமமார்க்கத்தையே சிந்தித்து, அ நகரின் - அந்த அத்தினபுரியிலே, வாழ்ந்தார் —.

துவரை - த்வாரகா, அல்லது த்வாரவதீ என்ற வடசொல்லின் சிதைவு. கண்ணன் வடமதுரையில் தலைமைபூண்டு வீற்றிருக்கையில், சராசந்தன் காலயவனன் என்ற இரண்டுபெருவீரர் ஏககாலத்திற் பகையாய் எதிர்க்க இருப்பதை யறிந்து, ஜநங்களுக்கு நாசமுண்டாகக்கூடுமே யென்று சிந்தித்து, சமுத்திரராசனைப் பன்னிரண்டுயோசனை இடம்விடும்படி கேட்டு அந்நடுக்கடலில் பகைவர் உட்புகவொண்ணாதபடி மிக்கபாதுகாப்புடையதான துவாரகாபுரியை நிருமித்து, மதுரையிலுள்ள சனங்களையெல்லாம் அப்படியே அந்நகரத்திற் கொண்டுசேர்த்து அதுமுதல் அவ்விடத்திலேயே வாழ்ந்திருந்ததுபற்றி, 'துவரைநகர்த்திசைநோக்கி மீண்டான்' என்றார். கீழ் ககூ - ஆங் கவியில் பலராமனும் சாத்தகியும் சென்றமை கூறியவர் இங்கு 'சாத்தகியு மலாயுதனுந் தன்னைச் சூழ' என்றதனால், மீண்டும் அவ்விருவரும் தருமனது பட்டாபிஷேகத்தின்பொருட்டு வந்தன ரென வுணர்க. பூமிபாரத்தைத் தொலைத்தமைதோன்ற, 'வினையகற்றும் பசுந்துளவோன்' என்றார். சீர்த்தியென்பது, மூன்றும்வேற்றுமைத்தொகையாய் 'அளித்து' என்பதனைக் கொள்ளும். இனி, பாருக்கு உடைமொழியாக்கி, பாரந்தீர்ந்ததனாற் புகழ்பெற்ற பூமி யெனினுமாம்.

''மலைதரு திணிதோள் மன்னர் மணிமுடி துகளதாகச், சிலைகடை குழைத்த பார்த்தன் செழுமணித் தடந்தேர்ப் பாகன், பலர்புகழ் தருமன்றன்னைப் பகர்பெருந் தாதை சொல்லா, லலர்தலை யவனி காப்ப வரியணை யிருத்தினனால்'', ''மழைவளஞ் சிறந்தன வளங்கள் மிக்கன, குழைவொடு பிணிகளுங் குலைந்து சாய்ந்தன, விழைவொடு நல்லறம் வேர்படைத்தன, தழைபுக ழொடு புவி தருமன் காக்கவே'', ''நான்மறையாளர் வாழ்த்த நகுமுடி யரசர் தாழ, மீனுயர் கொடியோ னாதி வெந்திறற் குமர ரெல்லாந், தானையோ டிறைஞ்சச் சிற்பத் தாமரை மலரின் வாழுந், தேனவாந் தெரியல் மார்பன் திருநகர் சென்று புக்கான்'' என்ற பாகவதச்செய்யுள்கள் இங்கு நோக்கற்பாலன. (உ௱ப)

பதினெட்டாம்போர்ச்சருக்கம் முற்றிற்று.

---

சௌப்திகபருவம் முற்றுப்பெற்றது.

---

வில்லிபுத்தூரார்பாரதம் முடிந்தது.

---